# தமிழ் – தமிழ் அகரமுதலி

தொகுப்பாசிரியர் :

**மு. சண்முகம் பிள்ளை**

மேலாய்வாளர்கள் :

பேரா. அ. ச. ஞானசம்பந்தன்

பேரா. அ. மு. பரமசிவானந்தம்

பேரா. கொண்டல் சு. மகாதேவன்



தமிழ்நாட்டுப்

**பாடநூல் நிறுவனம்**

சென்னை

# தமிழ் – தமிழ் அகரமுதலி

தொகுப்பாசிரியர் :

**மு. சண்முகம் பிள்ளை**

மேலாய்வாளர்கள் :

பேரா. அ. ச. ஞானசம்பந்தன்

பேரா. அ. மு. பரமசிவானந்தம்

பேரா. கொண்டல் சு. மகாதேவன்



தமிழ்நாட்டுப்

**பாடநூல் நிறுவனம்**

சென்னை

# அணிந்துரை

தமிழ்மொழியின் பழங் கலைகளுள் ஒன்று அகராதிக் கலை (அகரமுதலிக் கலை). தொல்காப்பியர் காலத்திலேயே வித்தூன்றப்பட்ட இக் கலை ஏனைய பழங் கலைகளைப் போலல்லாமல் என்றும் நிலைத்து நிற்கும் புத்தம் புதிய கலையாய் வளர்ச்சி பெற்றுக் கொண்டிருக்கிறது. மொழி வளர்ச்சி என்னும் மாளிகையின் மேற்கட்டுமானமாக இருப்பவை காவியங்கள் என்றால் அதன் அடித்தளமாக அமைவது அகராதிக் கலை எனலாம். எனவேதான், மொழி வளர்ச்சிக்கு ஆதாரமான இந்தக் கலையில் இன்று உலகிலுள்ள எல்லா மொழியாளர்களும் பெருமளவில் ஆர்வமும் அக்கறையும் காட்டிவருகிறார்கள்.

தமிழ்மொழியைப் பொறுத்தமட்டிலும் இன்று சிலபல அகரமுதலிகள் வழக்கில் இருப்பது உண்மைதான். எனினும் மாணவர்கள், ஆசிரியர்கள், கல்வித்துறையினர், தமிழ் ஆய்வாளர்கள் என்னும் அனைத்துப் பிரிவினருக்கும் பயன்படத்தக்க, அடக்கமான ஓர் அகராதி தேவை என்று உணரப்பட்டது. இந்தப் புதிய தேவையினை நிறைவுசெய்யும் பணியில் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் ஈடுபட்டது. கல்வித் துறையில் தமிழ்மொழிக்கு ஆக்கமும் ஊக்கமும் நல்கப் பாடுபட்டுவரும் பாடநூல் நிறுவனம் இப் பணியிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருப்பது எல்லா வகையிலும் பொருத்தமானது. இப் பணி இன்று நிறைவுபெற்றுத் தமிழ்மக்களின் கைகளில் தவழவிருக்கிறது. தமிழ்மொழியின் அண்மைக்கால வளர்ச்சி இந்த அகரமுதலியில் பக்கத்துக்குப் பக்கம் எதிரொலிப்பதை நாம் நன்கு காணமுடிகிறது. 64,048 சொற்களடங்கிய இவ் வகரமுதலி தமிழ்மொழியில் திறமைபெற விரும்புகிற அனைவருக்கும் உறுதுணையாக இருந்து கைகொடுக்கும் என்பது திண்ணம்.

இவ் வகரமுதலியை உருவாக்கும் பணியில் ஈடுபட்ட அனைவரும் தமிழ்மக்களின் பாராட்டுக்கு உரியவர்களாகிறார்கள். இதனைத் தமிழ்மொழியின் மேம்பாட்டுக்காகத் தமிழ்கூறும் நல்லுலகம் நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்பதே என் வேண்டுகோள்.

சென்னை-600 009
23—11—1984

**செ. அரங்கநாயகம்**
தமிழகக் கல்வியமைச்சர்

# பதிப்புரை

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் தலையாய பொறுப்புத் தமிழ்நாட்டு மாணவர்களுக்குத் தரமான பாடநூல்களை நியாயமான விலையில் உரிய காலத்தில் கிடைக்கச் செய்வது. இப் பொறுப்புடன் இயன்ற வகைகளிலெல்லாம் தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பணியாற்றுவதும் இந் நிறுவனத்தின் கடமையாகவுள்ளது.

இந் நிறுவனத்தின் தமிழ்வளர்ச்சிப் பணி கல்லூரி நிலையில்தான் பெரிதும் மையங் கொண்டிருக்கிறது. தமிழ்வளர்ச்சிக்கு உரமூட்டும் வகையில் பாடநூல்கள் அல்லாத பிற சிறப்பு வெளியீட்டு நூல்களையும் நிறுவனம் வெளியிட்டுவருகிறது. இச் சிறப்பு வெளியீட்டு வரிசையில் தமிழ்மொழி வளர்ச்சிக் கண்ணோட்டத்தில் முதலிடம் வகிப்பது 'தமிழ்ச் சுருக்கெழுத்து அகராதி'. இந்திய மொழிகளுள் இப்படியோர் அகராதி வெளியிடப் பட்டிருப்பது தமிழில் மட்டுமே.

இப்போது தமிழ்மொழி வளர்ச்சி என்னும் உயரிய இலட்சியத்தினை நோக்கிய பிறிதொரு முயற்சியாக இத் 'தமிழ்—தமிழ் அகரமுதலி'யை நிறுவனம் உங்கள்முன் வைக்கிறது. பள்ளி மாணவர் முதல் தமிழர் அனைவருக்கும் பயன்படும்வண்ணம் இவ் வகரமுதலி ஆழமாகவும் அகலமாகவும் தொகுக்கப்பட்டிருக்கிறது. அகரமுதலிக் கலையில் பட்டறிவு சான்ற புலவர் மு. சண்முகம் பிள்ளை அவர்களின் தொகுப்புப் பணியும் தமிழறிஞர்கள் அ. ச. ஞானசம்பந்தன், அ. மு. பரமசிவானந்தம், கொண்டல் சு. மகாதேவன் ஆகியோரின் மேலாய்வுப் பணியும் பாராட்டுக்குரிய தமிழ்ப் பணிகளாக மிளிர்கின்றன.

தமிழ்மொழி வளர்ச்சிக்காக எத்தனையோ திட்டங்களைத் தீட்டி அவற்றை முனைப் பாகச் செயற்படுத்தி வருபவர் **மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவர்** அவர்கள்; தந்தை பெரியார் அவர்களின் தமிழ்மொழியை அறிவியல் யுகத்துக்கும் பொருத்தமான மொழியாக்கும் முயற்சியில் எழுத்துச் சீர்திருத்தம் கண்டார். அந்தச் சீர்திருத்தத்தைத் தமிழக அரசின் திட்டமாகவே ஏற்றுச் செயற்படுத்திக் கொண்டிருப்பவர் மாண்புமிகு தமிழக முதல்வர். சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பழைய பாரம்பரியத்துக்கு இணங்கத் தமிழ்மொழிக்கு என்று தனிப் பல்கலைக்கழகம் கண்டிருப்பவர் அவர்.

இவ்வாறு தமிழ்மொழி வளர்ச்சிக்கும் தமிழ்மக்களின் மேம்பாட்டுக்கும் என்றே தம்மை அர்ப்பணித்துக் கொண்டிருக்கும் மாண்புமிகு முதல்வர் அவர்களுக்கு இந் நூலினைப் படைப்பதில் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் பெருமை கொள்கிறது.

சென்னை-600 006
10—5—1985

**ஈ. வெ. கி. சுலோசனா சம்பத்**
மேலாண்மை இயக்குநர்,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்



மாண்புமிகு தமிழக முதல்வர்

டாக்டர் **எம். ஜி. இராமச்சந்திரன்** அவர்களுக்கு

# முகவுரை

## (தொகுப்பாசிரியர்)

அகரவரிசை தொல்காப்பியர் நாளிலேயே தொடக்கமாயிற்று. ''எழுத்தெனப் படுப அகரமுதல் னகர இறுவாய் முப்பஃது என்ப'' என்று எழுத்துகளைத் தொகைசுட்டி முதற்கண் அவர் அறிவிக்கின்றார்; பின்னர், சொற்களின் புணர்ச்சி கூறத் தொடங்குமிடத்து மொழிமுதல் எழுத்து மொழியிறுதி எழுத்துகளை வரையறுத்துக் காட்டியுள்ளார். மொழிமரபில் விளக்கிய மெய்ம் மயக்க மரபுகளை நினைவுகூர வைக்கும் வகையில் உயிர்மயங்கியல், புள்ளிமயங்கியல் என உயிரீற்றுச் சொற்கள், புள்ளியீற்றுச் சொற்களுடன் பிற சொற்கள் புணரும் முறைமை காட்டும் பகுதிகளுக்குப் பெயரிட்டுள்ளார். இவ்விரு இயல்களிலும் அவ்வச் சொற்களின் ஈறுகளை அகரவரிசை முறையில் அமைத்துச் சொற்புணர்ச்சி இலக்கணம் உரைக்கின்றார்.

**அகரவரிசை**

திருக்குறளும் அகரமுதல் னகர இறுவாய் அமைப்புமுறையை நினைவூட்டும் வகையில் காட்சிதருகிறது. ''அகர முதல எழுத்தெல்லாம்'' என்று தொடங்கிய வள்ளுவப் பெருந்தகை ''கூடி முயங்கப் பெறின்'' (1330) என னகர ஈற்றுச் சொல்லால் நூலைத் தலைக்கட்டு கிறார்.

திருநாவுக்கரசர் அருளிய சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை (தேவா. 5. பதி.211) அகரவரிசை முறையில் அமைந்த பாடல்களைக் கொண்டுள்ளது.

தமிழ் நெடுங்கணக்கு எழுத்துமுறையை வேறு சிலரும் சுட்டியபோதிலும், 'அகராதி' என இன்று வழங்கும் பொருளில் நூலாக்கம் செய்தவர் சிதம்பரம் இரேவணசித்தரேயாவார். இவரை இரேவணாத்திரியர் என்றும் குறிப்பது உண்டு. இவர் கி.பி. 1594-ல் தாம் இயற்றிய நிகண்டிற்கு 'அகராதி நிகண்டு' எனப் பெயர் சூட்டினார். பெயருக்கு ஏற்பச் சொற்கள் அகரவரிசையில் அமைய நூற்பாக்களை முறைப்படுத்தியுள்ளார். எனவே, இவருடைய நிகண்டு நூலினை 'அகராதி சூத்திரம்' என்றும் குறிப்பிடுவது உண்டு.

**அகராதி நிகண்டு**

இன்று நாம் கருதுவதுபோலச் சொற்களின் அகரவரிசை முறை—அதாவது சொல்லின் இரண்டாம் மூன்றாம் முதலிய எழுத்துகளையும் நோக்கி அமைக்கும் முறை—அந் நாளில் இல்லை. அகரமுதலிய எழுத்துவருக்கச் சொற்கள் அவ்வப் பகுதியில் இடம்பெறுதல் காணலாம். இதனினும் சற்று வளர்ச்சிபெற்ற அகர நிரல்முறை, அகராதி மோனைக் ககராதி யெதுகை, பல்பொருட் சூடாமணி, பொதிகை நிகண்டு ஆகியவற்றில் காணப்படுகின்றன.

**அகரவரிசை அமைந்த வகை**

செய்யுள் வடிவிலேயே வழங்கிவந்த நிகண்டுநூற் பொருள்களை உரைநடையில் அகர நிரலில் அமைத்துத்தர முற்பட்ட முதல்வர் வீரமாமுனிவர் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற பெஸ்கி பாதிரியாரேயாவார். சொற்பொருள் உணர்த்தும் நூலுக்கு 'அகராதி' என்னும் பெயரை வழங்கியவரும் இவரே. கி.பி. 1732-ல் பெஸ்கி பாதிரியார் தாம் தொகுத்து அமைத்த நூலுக்குச் 'சதுரகராதி' என்னும் பெயரினைச் சூட்டினார். அதுமுதலாகச் சொற்களுக்கு உரைவழி விளக்கம் தரும் நூல்கள் எல்லாம் 'அகராதி' என்னும் பெயரினைப் பெறுவதாயின.

**அகராதிப் பெயர்**

வள்ளுவர் வழங்கிய வான்மறையின் முதற்குறட்பா,

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு''

என்பது. இதன் முதலடியில், 'அகரம்' – 'ஆதி' என்னும் இருசொற்களும் இடம்பெறுகின்றன.

இவற்றை இணைத்தால், 'அகராதி' என்னும் பெயர் கிட்டுகிறது. இத் தொடரே இரேவணசித்தருக்கும் பெயராக்கத் தூண்டுகோலாய் இருந்திருக்கலாம்.

'அகராதி' என்பதில் 'ஆதி' வடசொல். வடசொற் கலந்த பெயரை நாம் வழங்குதல் முறையோ? அப் பொருள்பயக்கும் தமிழ்ப்பெயர் ஆக்கலாமே என்னும் எண்ணம் தமிழறிஞ ரிடையே எழுவதாயிற்று. பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் தாம் இயற்றி, 1906-ல் பதிப்பித்த 'சேந்தன் செந்தமிழ்' என்னும் நூலில் அகரநிரலில் தரப்பட்டுள்ள பகுதியை 'அகரமுதல்' என்று குறிப் பிட்டுள்ளார்கள். 'அகரமுதல் னகர இறுவாய்' என எழுத்துகளை அறிமுகப்படுத்திய தொல்காப்பியரின் தொடரை எடுத்தாண்டுள்ளார் என்று கருதலாம். மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் 'அகரமுதலி' என்னும் பெயரைத் தமிழுலகில் நடையாடவிட்டார். அகரத்தை முதலாகக்கொண்டு அமைவதுதானே சொற்பொருள் உணர்த்தும் அகராதி நூல். இவர் முதற்குறளின் முதலிரு சீர்களாகிய 'அகர முதல' என்பதனை முன்னோடியாகக் கொண்டே 'அகரமுதலி' என்னும் அழகிய தமிழ்ப்பெயரை ஆக்கியுள்ளார். தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிடும் இந்தத் **தமிழ் - தமிழ் அகரமுதலி** என்னும் சொற்பொருள் விளக்கப் பெருந்தொகுதியே இப் பெயரைப் பெறும் முதல் நூலாகும். நடைமுறை எழுத்து வடிவங்களைப் பெற்று வெளிவரும் தன்மையிலும் இது முதலாவதாகும்.

**அகரமுதலி**

'அகரமுதலியாவது' அகரத்தை முதலாகக்கொண்டு நெடுங்கணக்கு முறையில் அமையும் சொற்பொருள் விளக்க நூல் என்பதனைத் தெளிவுறத் தெரிவிக்கும். 'அகராதி' என்னும் பெயருக்கும் பொருள் இதுவே*. வரலாற்று முறையில் 'அகரமுதலி' என்னும் பெயர் இருபதாம் நூற்றாண்டில் பிறந்ததொரு புதுப்பெயர்; புத்தாக்கப்பெயர்; அகராதி என்பதற்கு ஏற்புடைய மாற்றுப்பெயர்; தமிழ்ப்பெயர்.

**அகரமுதலி விளக்கம்**

அகரமுதலி, கற்பார்க்குத் துணைநின்று உரிய பொருள் தெரிந்துகொள்ள வழிவகுத்து உதவுகிறது. ஆதலால், கல்வி கற்பிக்கும் ஆசானின் நிலையில் உள்ளது அகராதி என்னலாம். ஆசான் ஒருவரை அடுத்துக் கல்விப்பயன் பெறுவதுபோல அகராதியின் துணையால் அறிவுவிளக்கம் பெறலாம். ஓர் ஆசிரியர் உரிய பொருள் களையும் கருத்து நுட்பங்களையும் எடுத்துரைத்து, மாணவரின் ஐயம் அகற்றி, அரும்பொருளை அவர் அறியச் செய்திடுவார். அகராதியும் தன்னைப் பயன் படுத்துவாருக்கு அத்தகு நற்பயனை அளிக்கவல்லது. இதுபற்றியே அகராதியை 'மவுனகுரு', 'மவுனாச்சாரி', 'மவுனவாசான்' என அறிஞர் போற்றுவாராயினர். சதுரகராதியைப் போற்றிப் புகழும் ஒருவர்,

**மவுனகுரு**

''ஓர்மொழியும் ஓதாது உரைசெய் துணர்த்துவதால்
கூர்மவுனாச் சாரியெனக் கொள்''

என்றும்,

''பேசா துணர்த்திப் பிரித்துரைப்ப தால்மவுன
வாசான் நமக்கென்றும் ஆம்''

என்றும் உரைப்பது ஈண்டுச் சிந்தித்தற்குரியது. இதனால் அகராதிகளின் பெருஞ்சிறப்பும் பயன்பாடும் தெள்ளென விளக்கமாகும்.

---

* அகராதி என்பதற்கு விளக்கம் மானிப்பாய் அகராதியில்தான் முதன்முதல் தரப்படுகிறது.

அகராதி — அகரமுத லெழுத்துக்களாற் றொடங்குஞ் சொற்கோவை (மானிப்பாய் அகராதி). இந்த விளக்கமே கா. இராமசாமி நாயுடுவின் பேரகராதி, பி. இராமநாதனின் இருபதாம் நூற் றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி முதலியவற்றிலும் காணப்படுகிறது.

அகரமுதலியின் பயன் ஒரு சொல்லுக்கு உரிய பல பொருள்களையும் பொருள்களுக்குரிய பெயர் விளக்கங்களையும் எண்ணிய மாத்திரத்தில் எளிதில் அறிவிப்பதேயாம். சொற்பொருள் உணர்த்தும் மரபைத் தொடங்கிவைத்த முதல்வர் தொல்காப்பியரே யாவார் இவர் தாம் ஆக்கிய பெருநூலாகிய தொல்காப்பியச் சொல்லதிகார உரியியலில் 120 உரிச்சொற்களின் பொருளை நூற்பாவில் அறிவித்துள்ளார். இதனால் இவரே சொற்பொருள் காட்டும் 'உரிச்சொற் பனுவல்கள்' தோன்ற அடிகோலியவராகிறார்.

**சொற்பொருள் உணர்த்தும் மரபு**

இவருடைய நூலின் பிற பகுதிகளிலும் சொற்பொருள் சுட்டும் இடங்கள் பலவாகும். வழக்குமொழி, செய்யுள்மொழி என்னும் இரண்டன் மரபுகளையும் எடுத்துரைப்பதோடு அவ் விருவகை வழக்கில் மட்டுமே தனித்துவரும் சிறப்பு மரபுகளையும் ஆங்காங்கே சுட்டிச் செல்லுகின்றார்.

தமிழ்மொழியில் உள்ள பெயர், வினை, இடை, உரி என்னும் நால்வகைச் சொற்களையும் நன்கனம் விளக்கியுள்ளார். இச் சொற்கள் இயற்சொற்கள், திரிசொற்களாய் அமைந்துகிடக்கும் பான்மையையும் எடுத்துரைத்துள்ளார். உருவம் சிதைந்து மாறிவரும் மரூஉ வழக்குகளையும் அவர் சுட்டிக்காட்டத் தவறவில்லை. தமிழ்நாட்டினைச் சுற்றியுள்ள பிற நாடுகளிலிருந்து வந்து புகுந்த வேற்றுமொழிச் சொற்களையும் 'திசைச்சொல்' என்று ஏற்றுக்கொள்கிறார்.

அந் நாளிலேயே சமசுகிருதம் எனப்படும் வடமொழி வழக்குகள் தமிழ்வழக்கில் வந்து புகுந்தமையால் அவற்றையும் செய்யுட்குரிய சொல்லாக ஏற்றுக்கொண்டு அவற்றை வடசொல் என இனங்கண்டு கூறுகிறார். அவ் வடசொற்கள் தமிழில் வருங்கால் அமையும் நெறிமுறைகளையும் வகுத்து உரைக்கின்றார்.

தொல்காப்பியரின் வழிமுறையைத் தழுவிய நூல்கள் சில அவர் காலத்தை அடுத்தும் பின்னரும் தோன்றியிருக்கலாம். எனினும், கி பி. எட்டாம் நூற்றாண்டில் திவாகரர் ஆக்கிய 'திவாகரமே' தொல்காப்பியரின் வழியில்வந்த முதற்பெரும் நூலாக நமக்குக் கிட்டியுள்ளது. இந் நூல் சொற்பொருள்களையும் பொருள்களுக்குரிய பல பெயர்களையும் வகுத்தும் தொகுத்தும் தொகைப் பெயர் விளக்கங்களைச் சேர்த்தும் பன்னிரு தொகுதிகளில் விளக்கம் தருகின்றது.

**திவாகரம்**

உரிச்சொற் பொருளைத் தொல்காப்பியர் விளக்கியமையை அடியொற்றியே சொற்பொருள் விளக்கமாக அமைந்த நூல்களும் நூற்பா முதலிய பாவகைகளில் விளக்க முற்பட்டமையால் அவ்வகை நூல்களை 'உரிச்சொல்' என்றும், 'உரிச்சொற் பனுவல்' என்றும் பின்னையோர் போற்றுவாராயினர்.

**உரிச்சொற் பனுவல்**

''இன்னது இன்னுழி இன்னணம் இயலும்
என்றிசை நூலுள் குணகுணிப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலின்; பிங்கலம் முதலா
நல்லோர் உரிச்சொலின் நயந்தனர் கொளலே'' (நன். 460)

என நன்னூலில் பவணந்திமுனிவர் பரந்துபட்ட பெயர்களை அறியவேண்டின், 'பிங்கலம்' முதலாக வந்துள்ள உரிச்சொல் – தொகுதிகளில் காண்க என்கிறார். திவாகரத்தை அடுத்து வந்த சொற்பொருள் விளக்கப் பெருநூல் பிங்கலமுனிவர் ஆக்கித்தந்த பிங்கலம். இந்த இரு நிகண்டுகளும் நூற்பாவினால் இயன்றவை.

பின்னாளில் மண்டலபுருடர் என்பார் 'சூடாமணி நிகண்டு' என்னும் உரிச்சொற் பனுவலை விருத்தப்பாவில் ஆக்கியளித்தார். நிகண்டுநூல்களை மனப்பாடம்செய்து போற்றி வந்த முன்னையோர் இவர் எடுத்துக்கொண்ட விருத்தப்பாவகை மனனம் செய்ய எளிமையாயிருந்தமையின், இந் நிகண்டினையே மிகுதியும் போற்றிக் கற்றுவரலாயினர். மண்டலபுருடர் தம் நூலின் பாயிரத்தில், 'நிகண்டு சூடாமணி என ஒன்று சொல்வன்' என்று உரிச்சொற் பனுவல்களை 'நிகண்டு' என்னும் புதுப்பெயரால் சுட்டலாயினார்.

**நிகண்டு**

'நிகண்டு' என்னும் வடசொல்லுக்குத் 'தொகுதி' என்பது பொருள். தெய்வப்பெயர், மக்கட்பெயர் முதலியவாகத் தொகுத்து விளக்கம் தருவது என்பதாம். சூடாமணி நிகண்டு கற்றாரிடையே மிகுதியும் போற்றப் பெற்றமையால் ஏனைய உரிச்சொற் பனுவல்களையும் 'நிகண்டு' எனச் சுட்டும் வழக்கம் மிகுதியாயிற்று.

நிகண்டுகள், ஒரு பொருளுக்கு உரிய பல பெயர்களையும் தெய்வப்பெயர், மக்கட்பெயர், விலங்குப்பெயர் முதலியனவாக வகுத்தும் தொகுத்தும் தருகின்றன. இவற்றோடு ஒரு சொல்லுக்குரிய பல பொருள்களையும் விளக்கும் பகுதி ஒன்றும் காணப்பெறும். இதுவே அகராதிநிலையில் பயன்பாடுள்ள பகுதி. இதனால் சூடாமணி நிகண்டில் ஒருசொற் பல்பொருள் உரைக்கும் பதினொன்றாம் தொகுதியைப் 'பதினொராம் நிகண்டு' எனத் தனியாகவும் அச்சிட்டுப் போற்றுவாராயினர். அகராதிமுறை வழக்கிற்கு வந்தபோது இத் தொகுதிச் சொற்களை அகராதியாக மாற்றி அமைத்துச் 'சொற்பொருள் விளக்கம்' என்னும் ஒரு நூலை 1850-ல் அண்ணாசாமிப் பிள்ளை என்பார் வெளியிட்டார்.

**நிகண்டுகளின் உள்ளுறை**

இருசுடர், முக்குணம் என்றாற்போல வரும் தொகைப்பெயர் விளக்கமாயும் நிகண்டு களில் ஒரு பகுதி அமைகின்றது. ஆகவே, நிகண்டுகளில் ஒருபொருட் பல்பெயர், ஒருசொற் பல்பொருள், தொகைப்பெயர் என்னும் மூன்று பெரும் பாகு பாடுகளைக் காணலாகும். மேலே சுட்டிய மூவகைப் பொருள்களை யுங்கொண்ட நூல்களும் அவற்றுள் ஒவ்வொரு பகுதியை மட்டும் எடுத்து விளக்கும் நூல்களும் காலப்போக்கில் பலவாக வந்துள்ளன.

**பல்வகை நிகண்டுகள்**

மூவகையான சொற்கோவைகளையும்கொண்ட நிகண்டுகள் **திவாகரம், பிங்கலம், உரிச் சொல் நிகண்டு, கயாதரம், பாரதி தீபம், ஆசிரிய நிகண்டு, கைலாச நிகண்டு, பல்பொருட் சூடா மணி, தமிழ் உரிச்சொற் பனுவல்** முதலியனவாம்.

ஒருபொருட் பல்பெயர்களை மட்டும் தனியாக எடுத்துக்காட்டும் நிகண்டு **நாமதீப நிகண்டு** மட்டுமே.

ஒருசொற் பல்பொருள் விளக்கமாக அமைந்த தனி நிகண்டுகள் **அகராதி நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு, நாநார்த்த தீபிகை** என்பனவாம்.

தொகைப்பெயர் விளக்கமாகத் தனிப்பட அமைந்த நிகண்டுநூல் **பொருட்டொகை நிகண்டு** ஒன்றுமே.

இவ்வாறாக உரிச்சொற் பனுவல்கள் திவாகரம் முதற்கொண்டு 1984-ல் கவிராசபண்டித இராமசுப்பிரமணிய நாவலரின் தமிழ் உரிச்சொற் பனுவல்வரை 25 நூல்களுக்கு மேற்பட உள்ளன. இலக்கண நூல்கள் பல பல்வேறு காலத்தில் தோன்றியதுபோல உரிச்சொற் பனு வல்களும் பலவாக ஆக்கப்பெற்று வந்துள்ளன என்பது தெரியவரும். இதனால் சொற் பொருள் காணும் முறைமையான வளர்ச்சியையும் நிகண்டுநூல்கள் சுட்டிக்காட்டி நிற்கின்றன.

**நிகண்டுகளில் அமைந்த பாவகை**

நூற்பா, வெண்பா, ஆசிரியவிருத்தம், பிறவகை விருத்தம், கட்டளைக்கலித்துறைப் பாக்களிலும் நிகண்டுகள் ஆக்கப்பட்டிருக்கின்றன. ஆயினும், நூற்பாவினால் அமைந்த நிகண்டுகளே மிகுதியாகக் காணப்படுகின்றன. திவாகரம், பிங்கலம், அகராதி நிகண்டு, பல்பொருட் சூடாமணி, பொதிகை நிகண்டின் இரண்டாம் பகுதி, கைலாச நிகண்டு, பொருட்டொகை நிகண்டு, தமிழ் உரிச்சொற் பனுவல் என்னும் எட்டு நூல்கள் நூற்பாவினால் அமைந்துள்ளன. வெண்பாவினால் ஆன நிகண்டுகள் உரிச்சொல் நிகண்டும் நாமதீப நிகண்டும். கட்டளைக்கலித்துறைப்பாவினால் இயன்றவை கயாதரம், பாரதி தீபம், நவமணிக் காரிகை நிகண்டு என்னும் மூன்றுமாம். ஆசிரியவிருத்தம் முதலிய விருத்தப் பாக்களினால் அமைக்கப்பெற்ற நிகண்டுகள் நூற்பாவினாலான நிகண்டுகளின் தொகை அளவை எட்டுகின்றன. நிகண்டு சூடாமணி, வேதகிரியார் சூடாமணி, ஆசிரிய நிகண்டு, பொதிகை நிகண்டின் முதற் பகுதி, அரும்பொருள் விளக்க நிகண்டு, சிந்தாமணி நிகண்டு,

விரிவு நிகண்டு, அபிதானந் தனிச்செய்யுள் நிகண்டு, நாநார்த்த தீபிகை என்னும் நூல்கள் விருத்த வகைகளினால் அமைந்தன*.

**நிகண்டுகளும் அகராதிகளும்**

நிகண்டுகள் மனப்பாடம்செய்து போற்றுவதற்காகவே அமைந்தவை. எனவேதான், அவையெல்லாம் பல்வேறு வகையான பாடல்களில் அமைக்கப்பெற்றன. இவற்றில் ஒரு சொல்லின் பொருளை அறியப் பாடல்களின் சொற்பொருள்களும் நன்கு உணரப்படவேண்டும். சொற்பொருளை மட்டுமல்லாது பாடல்களில் ஓசை நிரப்புவதற்காகச் சேர்த்த அடைமொழிகள் அசைச் சொற்கள் முதலியனவும் இடைப்பிறவரல்போன்று தடையாய் நிற்கும். மனப்பாடம் செய்யும் பழக்கம் குறைந்துவரவே நிகண்டுகளைக் கற்றுப்போற்றுவதும் குறைந்துபோயிற்று.

நிகண்டுகளில் தெய்வப்பெயர், மக்கட்பெயர் முதலியவாகப் பல்வேறு தொகுதிகளில் சொற்பொருள்கள் விரவிக் கிடக்கின்றன. ஆதலால், ஒரு சொல்லுக்குப் பொருள் தெரிய வேண்டுமாயின் அச் சொல் எந்தத் தொகுதியைச் சேர்ந்தது என்பது தெரியவேண்டும். அவ்வாறு தெரிந்த பின்னும் குறிப்பிட்ட தொகுதியிலுள்ள பாடல்களையெல்லாம் துருவிப்பார்த்தே அச் சொல்லைக் காணவேண்டும். நிகண்டு மனப்பாடம் இல்லாவிடின் குறித்த ஒரு சொல்லையோ பொருளையோ அத்துணை எளிதில் கண்டுகொள்ள இயலாது. இத்தகு பெருமுயற்சி நிகண்டுவழிச் சொற்பொருள் காண்பதற்கு வேண்டியிருக்கிறது. அகராதியோ அப்படியன்று. ஒவ்வொரு சொல்லும் அ, ஆ முதலிய நெடுங்கணக்கு வரிசையிலேயே அமைக்கப்பட்டிருக்கும். எனவே, எழுத்துநிரல் தெரிந்தார் அகராதிகளில் சொற்பொருள்களை எளிதில் கண்டு கொள்ளலாம். எனவேதான், நிகண்டுகள் இருக்கவும் அகரமுதலிகள் சிறியவும் பெரியவுமாய்ப் பல தோன்றலாயின.

**முதல் உரைநடை அகரமுதலி**

முதன்முதலாக உரைநடையில் சொற்பொருள் விளக்கங்களைக்கொண்டு தோன்றிய அகரமுதலி **சதுரகராதி**. இதனை ஆக்கியவர் இத்தாலி தேசத்திலிருந்து கிறித்தவ சமயம் பரப்பத் தமிழ்நாட்டுக்கு வந்த பெஸ்கி பாதிரியாராவார். இவர் தமிழ் நாட்டுக்கு வந்தபின் தமிழைத் தக்க புலவர் துணையுடன் கற்றுப் பெரும்புலவராய்ச் செய்யுளிலும் உரைநடையிலும் தம் சமயச் சார்பான பல நூல்களை இயற்றினார். மேலைநாட்டிலிருந்து இங்கு வரும் பாதிரிமார்களுக்கு நல்ல தமிழ்நடையையும் பேச்சுவழக்கு முறையினையும் அறிவுறுத்த முறையே செந்தமிழ், கொடுந்தமிழ் என்னும் நூல்களை ஆக்கியுள்ளார். பிறமொழியாளர் தமிழ் கற்கும் வகையில் தமிழ்-இலத்தீன் அகராதி, தமிழ்-போர்ச்சுகீசு அகராதிகளையும் தொகுத்து அமைத்தார். தேம்பாவணிக் காவியத்தையும், திருக்காவலூர்க் கலம்பகம், கித்தேரி அம்மாள் அம்மானை முதலிய சிற்றிலக்கியங்களையும், தொன்னூல் விளக்கம் என்னும் ஐந்திலக்கண நூலையும் தமிழில் படைத்தளித்தார். உரைநடை நூல்கள் மிகுதியாயில்லாத அந் நாளில் கிறித்தவ சமய விளக்கமான பல நூல்களையும் படைத்துள்ளார். 'அவிவேக பூரண குரு கதை' என்னும் நகைச்சுவை நிரம்பிய கதைநூலையும் தந்துள்ளார். இதிலுள்ள கதைகள் இளைஞரும் முதியரும் கற்று இன்புறுதற்குரியன.

இவ்வாறாகத் தமிழுக்குப் பலவகையான ஆக்கப்பணிகள் புரிந்துவந்த பெஸ்கி பாதிரியார் **தமிழ் – தமிழ் அகரமுதலி** ஒன்றையும் படைத்தளித்துள்ளார். நிகண்டுகளிலே செய்யுள் வடிவில் அமைந்திருந்த சொற்பொருள் விளக்கங்களை உரைநடையில் மாற்றி அகராதியாக 1732ஆம் ஆண்டு அமைத்தார். திவாகரம், பிங்கலம், உரிச்சொல் நிகண்டு, சூடாமணி நிகண்டு முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டுள்ள இவர், தாம் தொகுத்து முறைப்படுத்திய அகராதிக்குச் 'சதுரகராதி' எனப் பெயரிட்டார்.

---

* இங்குச் சுட்டிய நிகண்டுகளின் விரிவான வரலாற்றை யான் எழுதிய 'நிகண்டுச் சொற்பொருட்கோவை-தெய்வப்பெயர்' என்னும் நூலினுள் காணலாம். மதுரைக் காமராசர் பல்கலைக்கழக வெளியீடு—1982.

சதுரகராதி என்றால் நான்கு வகையான அகராதிகள் அடங்கிய தொகுதி என்பது பொருள். முதலாவது உள்ளது பெயரகராதி. இதில் ஒரு சொல்லுக்குரிய பல பொருள்களும் தரப்பட்டுள்ளன. இரண்டாவது பொருளகராதி. இதில் தெய்வப் பெயர், மக்கட்பெயர் முதலிய பொருட்பெயர்களை அகரநிரலில் வைத்து அவ்வப் பொருட்கு உரிய பல பெயர்களும் அகரநிரலில் சுட்டப்பட்டுள்ளன. மூன்றாவதாகத் தொகையகராதியில் இருசுடர், முக்குணம் என்றாற் போல எண்தொகையாய் வரும் பொருள்களுக்குரிய விளக்கங்கள் அகரநிரலில் அமையக் காணலாம்.

**சதுரகராதி**

நான்காவதான தொடையகராதியில் செய்யுள்களில் வரும் எதுகைத் தொடர்களை அகரநிரலில் தருகின்றார். இதில் குறிற்கீழெதுகை, நெடிற்கீழெதுகை என இருபகுதி உண்டு. இவற்றில் படித்தல், பிடித்தல், பொடித்தல், வடித்தல், முடித்தல் என்றாற்போலவும் ஊராண்மை, ஏராண்மை, பேராண்மை என்றாற்போலவும் சொற்களை அமைத்துப் பொருளும் சுட்டியுள்ளார். இப் பகுதி சூடாமணி நிகண்டில் ககர எதுகை முதல் னகர எதுகை வரையிலும் சொற்களை எதுகையடைவில் கோத்துப் பொருள் விளக்கிய பான்மையில் உள்ளது.

இந்தச் சதுரகராதி 18ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டபோதிலும் முழுமையாய் அச்சில் வந்தது 19ஆம் நூற்றாண்டில் 1824ஆம் ஆண்டிலேயே ஆகும். இந்த அகராதிக்குக் காலந்தோறும் பல பதிப்புகள்—பத்துப் பதிப்புகளுக்கு மேல்—வந்துள்ளன. பின்னால் வளர்ந்து பெருகிய தமிழ்–தமிழ் அகரமுதலிகளுக்கு எல்லாம் மூலநூலாய் விளங்குவது சதுரகராதியே.

சதுரகராதிக்கு அடுத்துவைத்துப் போற்றத்தக்க பேரகராதி, 1842ஆம் ஆண்டில் வெளி வந்த 'யாழ்ப்பாணத்து அகராதி' என்றும் 'மானிப்பாய் அகராதி' என்றும் சொல்லப்பெறும் அகராதியாகும். இதனைத் தொகுத்து அளித்தவர் சந்திரசேகர பண்டிதராவார். இவர் தம் அகராதிக்குப் 'பெயரகராதி' என்றே பெயர் சூட்டினார். ஏனென்றால், இது சதுரகராதியின் முதல் அகராதியாகிய பெயரகராதியின் விரிவேயாகும். இந்த அகராதி யாழ்ப்பாணத்துக்குச் சேர்ந்த மானிப்பாய் அமெரிக்க மிசியோன் அச்சுக்கூடத்தில் அச்சிற் பதிப்பிக்கப்பட்ட காரணத்தால்தான் ஊர்ப்பெயரை முன்னிட்டு முன்னர்ச் சுட்டியவாறு இந்த அகராதியை வழங்கலாயினர்.

**மானிப்பாய் அகராதி**

இதில் சதுரகராதி முழுமையிலும் இடம்பெற்ற சொற்களைவிட நான்கு மடங்குச் சொற்கள் – 58,500 சொற்கள்—அடங்கியுள்ளன. எனவே, இஃது ஒரு பெரிய அகராதியேயாகும். இதில் பொருள், தொகை, தொடை அகராதிகள் இல்லை. ஆயினும், பின்னர் அச்சிட்டோர் சதுரகராதியில் உள்ளபடி அவற்றையும் அச்சிட்டுச் சேர்த்து இணைப்பாராயினர். பின்னர் வந்த தமிழ் – தமிழ் அகரமுதலிகள் பெயரகராதியை விரிவுபடுத்தியபோதிலும் ஏனைய மூன்று பகுதிகளையும் விரிவுபடுத்தாது சதுரகராதியிற் கண்டபடியே உடன்சேர்த்துத் தருவாராயினர்.

பின்வந்த தமிழ் – தமிழ் அகரமுதலிகள் எல்லாம் மானிப்பாய் அகராதியின் விரிவே யாகும். மானிப்பாய் அகராதிக்குக் களத்தூர் சாமி வேதகிரி முதலியார் ஓர் அனுபந்த அகராதியைச் சேர்த்தார். இதில் ஏறத்தாழ 6,500 சொற்கள் காணப் படுகின்றன. இதன்பின் காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு மானிப்பாய் அகராதியுடன் வேதகிரி முதலியாரின் அனுபந்த அகராதியையும் சேர்த்து விரிவுபடுத்தினார்; தாமும் பற்பல புதுச் சொற்களை உடன் சேர்த்தார். இவர் தொகுத்த அகரமுதலி 'பேரகராதி' என்னும் பெயருடன் 1893ஆம் ஆண்டுக்குள் இருபதிப்புகளைப் பெற்றுள்ளது.

**பின்வந்த தமிழ் – தமிழ் அகரமுதலிகள்**

யாழ்ப்பாணத்து மேலைப் புலோலி வித்துவான் நா. கதிரைவேற்பிள்ளை என்பார் 1899-ல் 'தமிழ்ப் பேரகராதி' என்னும் பெருந்தொகுப்பினைக் கொண்டுவந்தார். இது இராமசாமி நாயுடுவின் பேரகராதியின் விரிவு. இவர் முந்திய அகராதிகளில் இடம்பெறாத பல நூல்களிலிருந்து தெரிந்தெடுத்த புதுச் சொற்களுக்கு உடுக்குறி (*) இட்டுக் காட்டியுள்ளார்.

இதனை மேலும் புதுக்கித் தமிழ்ப் பேரகராதியை 1901-ல் இவர் மீண்டும் வெளியிட்டார். 1905-ல் இரண்டாம் பதிப்பும் வந்துள்ளது.

தமிழ்ப் பேரகராதியை 1901-ல் வெளியிட்ட பி. வே. நமசிவாய முதலியார் காஞ்சி நாகலிங்க முதலியாரைக்கொண்டு மேலும் பல சொற்களை இணைத்துத் திருத்தியும் விளக்கியும் பேரகராதியை வளப்படுத்தினார். 1911-ல் வெளிவந்த இந்த அகராதிக்கு நாகலிங்க முதலியாரின் விருப்பப்படி 'தமிழ்மொழி யகராதி' எனப் பெயரை மாற்றினார். மேன்மைதங்கிய ஐந்தாம் சார்ச்சு மன்னரும் மேரி அரசியாரும் அந்த ஆண்டு தில்லியில் முடிசூடிக்கொண்ட நிகழ்ச்சியை நினைவுகூரும் வண்ணம் 'காரனேசன் தமிழ் டிக்சனரி' என்னும் பெயரிட்டார். இந்த அகராதிக்கு வரவேற்பு மிகுதியும் இருந்தது எனவே, இது மேலும் பல பதிப்புகளை அடுத்தடுத்துப் பெற்றது. இதன் ஏழாம் பதிப்பு 1935-ல் வெளிவந்ததாகத் தெரியவருகிறது. இதன் ஆறாம் பதிப்பை அப்படியே நிழற்படம் எடுத்து மறுதோன்றிப் பதிப்பாகத் தில்லி, ஆசியன் பதிப்பகத்தார் நான்காண்டுகளுக்குமுன் (1980) வெளியிட்டுள்ளனர்.

**தமிழ்மொழி யகராதி**

பி. இராமநாதன் என்பார் புலவர் சிலர் துணையுடன் இருபதாம் நூற்றாண்டுத் தமிழகராதி என்னும் பெயரிலே 1909-ல் இருபகுதிகள் கொண்ட பேரகராதியை வெளியிட்டுள்ளார். இது நா. கதிரைவேற்பிள்ளையின் தமிழ்ப் பேரகராதி முதலிய முந்திய அகராதிகளில் இடம்பெறாத 10,000 சொற்களை மிகுதியாகக் கொண்டுள்ளது. சதுரகராதிக்குப் பின்னர் வந்த தமிழ்–தமிழ் அகரமுதலிகளில் நா. கதிரைவேற்பிள்ளை அகராதி வரையில் சதுரகராதியில் உள்ளபடி பொருள், தொகை, தொடை அகராதி ஆகியவற்றையும் சேர்த்து வந்தனர். இந்த இருபதாம் நூற்றாண்டுத் தமிழகராதியிலும் மேற்படி மூவகைச் சேர்க்கைகள் உண்டு. ஆயினும், இவர் சதுரகராதி தந்தவற்றைக் காட்டிலும் அதிகமான சொற்களை உடன்சேர்த்து விளக்கப் பகுதிகளிலும் பல மாறுதல்களைச் செய்துள்ளார். அன்றியும் பொருள்விளக்கும் முறையிலும் தெளிவு காணப்படுகிறது. அங்கங்கே பொருள்விளக்கமான சிறிய படங்களையும் உடன் சேர்த்திருப்பது இந்த அகராதிக்குரிய தனிச் சிறப்பாகும்.

**இருபதாம் நூற்றாண்டுத் தமிழகராதி**

தமிழ் – தமிழ் அகரமுதலிகளுள் மிகவும் பெரியது தமிழ்ச்சங்க அகராதி. இது மூன்று பெருந்தொகுதிகளாக வெளிவந்துள்ளது. சொற்பொருள் விளக்கம் தவிரப் பொருள், தொகை, தொடை அகராதி என்னும் சேர்க்கை இந்த அகராதியில் இல்லை. இந்த அகராதியைப் பல்லாண்டுகள் உழைத்து உருவாக்கியவர் யாழ்ப்பாணம் நீதிபதி கு. கதிரைவேற்பிள்ளையாவார். இவர் சதுரகராதி, மானிப்பாய் அகராதி, சென்னை அகராதிகள், வின்சுலோ அகராதி, வைத்திய அகராதி என்னும் இவற்றில் இல்லாத புதுச் சொற்களைத் திரட்டி விளக்கம் தந்துள்ளார். இதனை முற்றுமாய் வெளியிடும் முன்னர் இவர் காலமானார்.

**தமிழ்ச்சங்க அகராதி**

பின்னர் அப்பொழுது மதுரைத் தமிழ்ச்சங்கத் தலைவராக விளங்கிய பொன். பாண்டித்துரைத் தேவரவர்கள் அகராதிப் படிவங்களைக் கதிரைவேற்பிள்ளையின் குமாரர் பாலசிங்கம் என்பவரிடமிருந்து பெற்றார்; மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்களைக் கொண்டு பரிசோதித்து அச்சிட்டு வெளியிடப் பணித்தார். சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர் முதலிய பலரும் பல்லாண்டுகள் உழைத்து இந்த அகராதியை மூன்று பகுதிகளாக 1910, 1912, 1923 ஆம் ஆண்டுகளில் வெளியிட்டு முற்றுவித்தனர்.

நீதிபதி கு. கதிரைவேற்பிள்ளை சூட்டிய 'தமிழ்ச் சொல்லகராதி' என்னும் பெயருடன் இந்த அகரமுதலி வெளிவந்த போதிலும் மதுரைத் தமிழ்ச்சங்கம் வெளியிட்டமையால் 'தமிழ்ச்சங்க அகராதி' எனக் குறிப்பதே பெருவழக்காயிற்று.

ஒருசொற் பல்பொருள்களுக்கு விளக்கம் தரும்போது பொருள்களை 1, 2 என எண் குறியிட்டுக் காட்டியிருப்பது புதுமை. இதனால் ஒரு சொல்லுக்கு எத்தனை பொருள்கள் உண்டு என்பதும் தெளிவுபடுகிறது. மேலும், சொற்பொருளுக்கு அடிப்படை ஆதாரமான

நூற்சான்றுகளையும் உதாரணம் என எடுத்துக்காட்டியது புதுமுயற்சி. சொற்பொருளுக்கு இலக்கிய இலக்கணம் முதலிய நூல்களிலிருந்து மேற்கோள் எடுத்துத் தந்த முதல் தமிழ்–தமிழ் அகராதி இதுவே. இவர் 344 நூல்களிலிருந்து மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளார். சொல் மூலங்களைக் காட்டியதோடு வடசொற்கள், இந்துஸ்தானிச் சொற்கள், தெலுங்குச் சொற்கள் முதலியவற்றையும் இனஞ்சுட்டிக் காட்டியுள்ளார். இந்த அகரமுதலியில் முந்திய அகர முதலிகளில் இல்லாத பல சொற்களும் திருந்திய விளக்கங்களும் காணப்படுகின்றன. தமிழ் – தமிழ் அகரமுதலிகளுள் கால அடைவில் விரிவுபெற்ற பேரகராதி இதுவே.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் லெக்சிகன் என்னும் தமிழ்ப் பேரகராதி நிறைவுறும் நிலையெய்திய காலத்தில், 1935ஆம் ஆண்டிலே இரு பேரகராதிகள் தோன்றின. ஒன்று

**லெக்சிகனை அடுத்துவந்த பேரகராதிகள்**

நெல்லை எஸ். சங்கரலிங்க முதலியார் தொகுத்தளித்த **ஜூபிலித் தமிழ்ப் பேரகராதி**. மற்றொன்று ஆனந்தவிகடன் அகராதி. **ஜூபிலித் தமிழ்ப் பேரகராதி**யை வெளியிட்டவர் பி. அரங்கசாமி நாயகர் ஆவார். இந்தப் பேரகராதி யாழ்ப்பாண அகராதி முதலிய பல அகராதிகளைக் கொண்டு புதுக்கியும் திருத்தியும் விளக்கியும் செம்மை செய்யப்பெற்றது; சதுரகராதியின் அமைப்பை அடியொற்றியது. சென்னைப் பல்கலைக்கழக லெக்சிகன் பதிப்பாசிரியர் ச. வையாபுரிப்பிள்ளையவர்கள் இதற்கு முன்னுரை அளித்துள்ளார்கள்.

இந்த அகராதி வெளிவந்த 1935ஆம் ஆண்டிலேயே ஆனந்தவிகடன் ஆசிரியர் **ஆனந்த விகடன் அகராதி** என்னும் பெருந்தொகுதியை வெளிப்படுத்தினார். ஆனந்தவிகடனில் போட்டிப் பந்தயங்கள் தொடர்ந்து வெளிவந்த காலம். இப் போட்டிக்குப் பயன்படும் நோக்கில் எழுந்ததாயினும் முந்திய பேரகராதியில் உள்ள சொற்கள் இதிலும் உண்டு. வழக்குச் சொற்கள், மரூஉச் சொற்கள், வட்டார வழக்கான பல குறைச்சொற்கள், வேற்று மொழி வழக்குகள் முதலியவற்றை மிகுதியாகக் கொண்டுள்ளது; 2,040 பக்கங்கள் கொண்டது; அடுத்தடுத்து 1937, 1938ஆம் ஆண்டுகளில் இரண்டாவது, மூன்றாவது பதிப்புகளையும் பெற்றுள்ளது. எனவே, இந்த அகராதி எத்துணையளவாக நாட்டு மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தது என்பது புலப்படும்.

சதுரகராதியின் அமைப்பில் நான்கு வகையான அகராதிகளைக் கொண்டு அமைந்த பெருநூல், **மதுரைத் தமிழ்ப் பேரகராதி**. இவ்வகை நான்கு கூறுபாடுகளுடன் அமைந்த அகராதிகளுள் இதுவே இறுதியானது. பண்டிதர் பலர் இதனை உருவாக்குவதில் துணை புரிந்துள்ளனர். மதுரையில் பெரிய புத்தக வெளியீட்டாளரும் புத்தக வணிகருமாக விளங்கிய இ. மா. கோபாலகிருட்டினக் கோனார் 1937-ல் இதனை அச்சிட்டு உலகிற்கு வழங்கினார்.

இதுகாறும் வெளிவந்த யாழ்ப்பாண அகராதி, ஆனந்தவிகடன் அகராதி முதலிய பல அகராதிகளைக் கொண்டு புதுக்கியும், திருத்தியும், விளக்கியும் அவைகளில் விடுபட்டுள்ள பல்லாயிரக்கணக்கான சொற்களைப் பற்பல நூல்களினின்றும் ஆராய்ந்து எடுத்துத் தந்துள் ளார். கற்றுத்தேர்ந்த பண்டிதர் பலரால் தொகுக்கப்பெற்றது; மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்திய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதிய முன்னுரையுடன் கூடியது. பெயரகராதி 605 பக்கம்; பொருளகராதி 149 பக்கம் (606—754); தொகை யகராதி 89 பக்கம் (755—843), தொடையகராதி 108 பக்கம் (844 – 951). இவற்றிற்கு மேலும் இணைப்பாகத் தமிழ்மொழியில் வழங்கிவரும் உருது, அராபி முதலிய சொற்கள் தனிப்படத் தொகுத்துக் காட்டப்பட்டும் உள்ளன.

பிறமொழியார் தமிழ் பயிலத் தமிழுடன் பிறமொழி விளக்கமும் தரும் அகரமுதலிகள் வேண்டியிருந்தன. இருமொழி அகராதிகள் ஆக்குவதில் ஈடுபட்டவர்கள் பெரும்பாலும்

**இருமொழி அகராதிகள்**

பாதிரிமார்களேயாவர். வீரமாமுனிவரே இருமொழி அகராதிகளும் ஆக்கி முதலில் வழிகாட்டினார் என்பதனை முன்னர்க் கண்டோம். அவருடைய அடிச்சுவட்டைப் பின்பற்றித் தமிழ் – ஆங்கில அகராதிகள் அதிகமாகத் தொகுத்து வெளியிடப்பெற்றன.

பெப்ரிசியசு என்பார் 1779-ல் 185 பக்கங்கள்கொண்ட தமிழ்-ஆங்கிலச் சிற்றகராதி ஒன்றை வெளியிட்டார். இதில் 9000 சொற்கள் இடம்பெற்றிருந்தன. இதன் பின்னர் இராட்லர் நான்கு பகுதிகளாகத் தம் தமிழ் – ஆங்கில அகராதியை அச்சிட்டார் (1834, 1837, 1839,1841). வின்சுலோ அகராதி 1862-லும் தரங்கம்பாடி அகராதி 1897-லும் வெளி வந்தன.

தமிழ்–ஆங்கில அகராதிகளில் தமிழ்ச்சொற் பொருளை முதலில் ஆங்கிலத்தில் தந்து அடுத்துத் தமிழ் விளக்கமும் சேர்த்து அமைப்பாராயினர்; பெயர், வினை முதலிய சொற்பாகு பாடுகளை இனஞ்சுட்டும் குறிப்புகளும் உடன்சேர்த்துத் தந்துள்ளனர். சில அகராதிகளில் ஒரு சொல்லோடு தொடர்புடைய பிற சொற்கள், தொடர்கள் ஆகியவற்றையும் உடன் இணைத்து அமைக்கலாயினர்.

தமிழ்–ஆங்கில அகராதிகளுள் வின்சுலோ அகராதிதான் 67000 சொற்களைக் கொண்ட பேரகராதியாய் விளங்குகிறது. இதில் விடுபட்டுப்போன பல சொற்கள், பொருள் களைப் போப்புப் பாதிரியார் தம்முடைய படியில் குறித்துவைத்திருந்தார். இவருடைய அகராதிப்படியை அடிப்படையாக வைத்துப் பல்வேறு புதுச் சேர்க்கைகளுடன் அமைந்ததே **தமிழ் லெக்சிகன்** எனப்படும் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட தமிழ்ப் பேரகராதி. தமிழில் வந்த மிகப் பெரிய இருமொழி அகராதி இதுவே. அறிஞர் பலர் கூடிப் பல்லாண்டு கள் உழைத்து உருவாக்கப்பெற்றது இந்த அகரமுதலி. இதன் ஆறு தொகுதிகளையும், இணைப்புத் தொகுதியையும் பேராசிரியர் **ச. வையாபுரிப் பிள்ளையவர்கள்** பதிப்பித்து 1939-ல் முற்றுவித்தார்கள். இஃது உலகப் புகழ்பெற்ற ஒரு பேரகராதியாக இப்பொழுது விளங்கிவருகிறது.

**தமிழ் லெக்சிகனின் சிறப்பு நிலை**

தமிழ் – தமிழ் அகராதி, தமிழ் – ஆங்கில அகராதிகள் பலவாக வளர்ந்துவந்த போதிலும் அவற்றில் பல குறைபாடுகள் நீக்கப்பட வேண்டியனவாயிருந்தன. இதுகுறித்துப் பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளையவர்கள் தெரிவிக்கும் கருத்துரை வருமாறு :

**முதலாவது**, சங்க இலக்கியம் முதலிய ஆதார நூல்கள் பல வின்சுலோவுக்குப் பின்னரே அச்சில் வெளிவந்துள்ளன. அவற்றை நன்கு பயன்படுத்துவது அவசியமாயிற்று.

**இரண்டாவது**, சொற்களுக்குப் பொருள் எழுதுவதில் வின்சுலோ முதலியோரது அகராதிகள் ஒன்வொன்றிலும் ஒவ்வொரு நயமிருந்தது. இந் நயங்கள் அனைத்தையும் ஒருங்குகொணர்ந்து அவற்றை இன்னும் ஒழுங்காக விருத்திசெய்வது அவசியமாயிருந்தது.

**மூன்றாவது**, சொற்பொருள்களை அமைப்பதில் சில நியமங்களைக் கையாளுவதும் அவசியமாயிற்று. தமிழ் அகராதி நூல்கள் பலவும் பொருள்களையுங்கூட அகராதிக் கிரமத்தில் அமைத்தன. இது தவறாகும். வரலாற்று முறையிலும் இயலாத இடங்களில் கருத்துத் தொடரும் முறையிலும் இவற்றை அமைக்கவேண்டுவது இன்றியமையாத தாகும்.

**நான்காவது**, சொல்லுக்குப் பொருளாகப் பரியாயச் சொற்களைக் கொடுப்பது போதாது. சொல்லுக்கு உரிய பொருளின் லட்சணத்தையும் வரையறை செய்ய வேண்டும். இவ்வாறு செய்யும் வழக்கமே தமிழ் அகராதிகளில் பெரும்பாலும் இல்லாம லிருந்தது. பரியாயச் சொல்லைக் கூறுவதுதான் லட்சணமாகக் கருதப்பட்டது. தமிழ்– ஆங்கில அகராதிகளில் கொடுக்கப்பட்டுள்ள லட்சணங்களும் ஒவ்வொரு வகையில் பிழைபாடு உடையனவாயிருந்தன. இக் குறைகள் எல்லாம் நீக்கவேண்டுவது அவசிய மாயிற்று.

**ஐந்தாவது**, சொல்லின் பிறப்பைக் குறித்து அகராதியாளர்கள் பெரும்பாலும் கவனஞ் செலுத்தியதே இல்லை. வடமொழி மூலங்கள் சிலவற்றிற்குத் தரப்பட்டிருந்தன. பிற திராவிட மொழிகளினின்று பிறப்பொத்த சொற்கள் சுட்டப்பெறவில்லை.

ஆறாவது, மேற்கோள் காட்டுவதில் தகுதியான நியமங்கள் கையாளப்படவில்லை. தக்க நியமங்களை அடிப்படையாகக் கொண்டு மேற்கோள் கொடுப்பது அவசியமாயிருந்தது.

மேற்குறித்த அம்சங்களிளெல்லாம் திருத்தமெய்தியது சென்னை சர்வ கலா சங்கத்தார் வெளியிட்டுள்ள 'தமிழ் லெக்சிகன்' ஆகும்.*

இத்தனை சிறப்புடைய தமிழ் லெக்சிகன் தமிழுணர்ந்தார்க்கேயன்றிப் பிறமொழியாளர்க்கும் பெரிதும் பயன்படும் பேரகராதியாக விளங்கிவருகிறது. இதனினும் மேம்பட்ட சிறப்புடைய பேரகராதி இனித்தான் தோன்றவேண்டும்.

பேரகராதிகள் பலவாக வளர்நிலையுற்றபோதிலும் ஆங்கிலத்தில் இருப்பதுபோலப் பல்வேறு படிநிலையாளர்க்கும் ஏற்றவகையில் இயற்றப்பட்ட அகராதிகள் சென்ற நூற்றாண்டில் அதிகமாயில்லை சூடாமணி நிகண்டின் பதினோராம் தொகுதியில் உள்ள ஒருசொற் பலபொருள்களை அகராதியாக மாற்றி அமைக்கும் முயற்சி சென்ற நூற்றாண்டின் மத்தியில் தோற்றமாயிற்று. அண்ணாசாமிப் பிள்ளை என்பவர், 'ஒருசொற் பலபொருள் விளக்கம்' என்னும் அகராதியை 1850-ல் வெளியிட்டார் இதில் அத் தொகுதியில் உள்ள 1575 சொற்களும் அகரவரிசையில் தரப்பெற்று அவற்றிற்கு நிகண்டாசிரியர் தந்த பொருளும் அதற்கு விளக்கமும் சேர்த்துத் தரப்பட்டுள்ளன. இஃது இலக்கிய மாணவர்க்கு ஒரு சிற்றகராதியாகப் பயன்படத்தக்கது.

**ஒருசொற் பல பொருள் விளக்கம்**

சென்ற நூற்றாண்டில் பள்ளியிற் பயிலும் மாணவர்க்கு ஏற்றதாகச் செய்து அளிக்கப் பெற்ற சிறிய அளவிலான நூல், 'அகராதிச் சுருக்கம்'. இது கோ விஜயரங்க முதலியாரால் 1883-ல் வெளியிடப்பெற்றது. இதற்கு அவர் தந்த ஆங்கிலத் தலைப்பு 'தமிழ் பாக்கெட் டிக்ஷனரி' (Tamil Pocket Dictionary) என்பதாகும்.

**அகராதிச் சுருக்கம்**

இதன் ஆசிரியர், மாணவர்க்கு ஆங்கிலமும் தமிழும் பயிற்றுவிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். ஆங்கிலத்தில் மாணவர் படிநிலைகளுக்குத் தக்கவண்ணம் பல்வேறு தரங்களில் அகராதிகள் இருப்பது கண்டு, தமிழ் மாணவர்க்காக இத் தொகுப்பினை ஆக்க முற்பட்டார். ஆங்கில அகராதிகளின் போக்கினைப் பின்பற்றி அகரவருக்கம் முதல் வகரவருக்கம் வரை 3615 சொற்களுக்குத் தெளிவான முறையில் பொருள்விளக்கமும் தந்துள்ளார். ஒவ்வொரு பக்கத்திலும் அமைந்த எழுத்து வருக்கத்தில் தொடங்கும் குறட்பா ஒன்றையும் தலைப்பில் சேர்த்துள்ளார்.

இந்த அகராதித் தொகுப்பைச் சென்னைச் சர்வ கலாசாலைத் தமிழ்த் தலைமைப் புலவர் கோ. இராசகோபாலப் பிள்ளை பரிசோதித்துத் தந்துள்ளார் என்பதும் தெரிய வருகிறது. அகராதியின் முடிவில் பெயரும் வினையுமாய்ப் பொருள்தரும் சொற்களும் (237) அகரவரிசையில் அமைக்கப்பெற்று அவற்றிற்குரிய பெயர் வினைப் பொருள்களும் ஓர் அட்டவணைபோலச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இப் பகுதி, மாணவர்க்குச் சொல்நிலை தெரிந்து பொருள்காணவேண்டும் என்னும் பெற்றியை விளக்குவதாகும்.

இலக்கியச்சொல்லகராதியை ஆக்கியவர் சுன்னாகம் அ. குமாரசுவாமிப் பிள்ளை யாவார். இவர் செய்யுளும் உரைநடையும் வல்ல பெரும்புலவர். சில நூல்களைத் தம் புத்துரையுடன் பதிப்பித்துமுள்ளார். புத்தாக்கமாக இவர் இயற்றிய இலக்கணச்சந்திரிகை, வினைப் பகுபத விளக்கம் என்னும் இருநூல்களும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இவை தமிழ் மாணவர் இலக்கணப்புலமை நிரம்பக் கற்கவேண்டிய விளக்க நூல்களாகும். இவர் நீதிபதி கு. கதிரைவேற்பிள்ளையின் பேரகராதிக்கும் துணைநின்றவர். இத்தகு பெரும்

**இலக்கியச் சொல்லகராதி**

---

* இலக்கியச் சிந்தனைகள்-முதற் பதிப்பு— பக்கம் 163-164.

புலமையும் பெரும் பயிற்சியுமுடைய இப் புலவர்பெருமான் 1914ஆம் ஆண்டில் இந்த அகராதியை வெளியிட்டார்.

பெயருக்கு ஏற்றாற்போல இலக்கியச் சொற்களே இதில் பெரும்பாலும் தரப் பட்டுள்ளன. இலக்கியத்துள் பயின்றுவரும் அருஞ்சொற்களைக் கொண்டது இத் தொகுப்பு.

நிகண்டு நூல்களிலும் பிற பெயர்த்தொகுதிகளிலும் பாரதம், இராமாயணம், கலித் தொகை, சிந்தாமணி முதலிய இலக்கியங்களிலுமிருந்து புதியனவாகச் சொற்களைத் தொகுத்துத் தந்துள்ளார். சொற்களேயன்றிப் பொருள்களும் புதியனவாகச் சேர்க்கப் பட்டிருக்கின்றன. பொருள்களுக்குச் சான்றாகவுள்ள இலக்கிய மேற்கோள்களையும் எடுத்துத் தந்திருப்பது இந்த அகராதியின் தனிச் சிறப்பாகும். இஃது இலக்கியம் கற்கும் மாணவர்க்குப் பயன்படத்தக்க சிறப்பு அகராதி; ஒரு சிற்றகராதி.

சென்ற நூற்றாண்டிலே 1883-ல் கோ. விஜயரங்க முதலியார் தொகுத்து வெளியிட்ட பள்ளியிற் பயிலும் மாணவர்க்கான 'அகராதிச் சுருக்கம்' மாணவர் பொருட்டாகவே இயற்றப் பெற்றது. அதன்பின் 1920ஆம் ஆண்டுவரை மாணவர்க்கான அகராதிகளை ஆக்குவதில் அறிஞர் பெருமக்கள் ஈடுபட்டிலர். இந்த வகையில் இருபதாம் நூற்றாண்டில் மாணவர்க்காகவே செய்யப் பெற்ற முதல்நூல் என்று போற்றத்தக்கது 'மாணவர் தமிழகராதி'. இதனைத் தொகுத்து அளித்தவர் தமிழ்ப் பெரும் பேராசிரியர் எஸ். அனவரதவிநாயகம் பிள்ளையவர்களாவார். 1921ஆம் ஆண்டிலே சென்னை ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ் புத்தக வெளியீட்டாளர் இதனை வெளியிட்டனர். இஃது ஏறத்தாழ 26000 சொற்கள் கொண்டதொரு சிற்றகராதியாகும். இது பள்ளியிற் பயிலும் மாணவர்க்குப் பெரும் பயனுடையது.

**மாணவர் தமிழகராதி**

இதன் பின்னர் மாணவர்க்கென ஆக்கப்பெற்ற அகராதிகள் பல ஒன்றன்பின் ஒன்றாக அடுத்தடுத்து வெளிவரலாயின. இவற்றின் எண்ணிக்கை இதுநாள் வரை ஏறத்தாழ 20-க்கு மேலாக உள்ளன. இவற்றைப் பின்வரும் காலமுறை அட்டவணை விளக்கும். அடுத்துள்ள அட்டவணையிற் சுட்டிய அகராதிகளுள் முதல் நான்கு அகராதிகள் முற்பட விளக்கப் பெற்றன. இனி, ஏனைய அகராதிகள் பற்றிய வரலாறுகளைக் காண்போம்.

**மாணவர்க்கான சிற்றகராதிகள்**

'சொற்பொருள் விளக்கம் என்னும் தமிழகராதி' 1924-ல் யாழ்ப்பாணத்தில் பிறந்தது. இது கிட்டத்தட்ட குமாரசாமிப் பிள்ளையின் இலக்கியச் சொல்லகராதி போன்றது எனலாம். இதன் பெயர்க்கு ஏற்பச் சொற்களின் பொருளில் தெளிவுற அமைந்த விளக்கங்களைக் காணலாம். பிரபந்தங்களின் இலக்கணங்களும் மற்றும் பல சிறப்புப் பெயர்களும் சிறப்பாக எடுத்துத் தக்கமுறையில் விளக்கப்பெற்றுள்ளன. இதுவும் இலக்கிய மாணவர்க்கே தனித்துரிய ஒரு சிறப்புச் சிற்றகராதி எனலாம்.

**சொற்பொருள் விளக்கம்**

மாணவர் அகராதிக்குப்பின் வந்த மாணவர்க்குப் பெரும்பயனுடைய அகராதி 'தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி'. பெரும்பான்மை கருதி இப் பெயரிடப்பட்டதே யன்றி முன்னைத் தமிழ்ச் சொற்களையும் இது கொண்டுள்ளது. இதனைத் தொகுத்து அளித்தவர் ச. பவானந்தம் பிள்ளையாவார். காவல்துறைப் பணியி லிருந்த இவர் தமிழில் நல்ல புலமை பெற்றிருந்தார்; நன்னூற் காண்டிகை, தொல்காப்பியப் பொருளதிகார உரை, இறையனா ரகப்பொருளுரை, யாப்பருங்கல விருத்தியுரை முதலியவற்றைப் பதிப்பித்த பதிப்பாசிரியரும் ஆவார். 'பவானந்தர் கழகம்' என்னும் நிறுவனம் கண்டு அதன்வழிப் பல நூல்களை வெளி யிட்டார் இவர் தொகுத்த இந்த அகராதியை மாக்மில்லன் கம்பெனியார் அழகுற அச்சிட்டு வெளியிட்டனர். இந்த அகராதியில் பற்பல தகவல்களும் வகைப்பட அமைத்துத் தரப்பட்டுள்ளன. இந்த அகராதியின் தொகுப்பும் அமைப்பும் குறித்து ஆசிரியர் வழங்கிய முகவுரைச் செய்திகளை இங்கே காண்போம்.

**தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி**

| எண் | ஆண்டு | நூற்பெயர் | ஆசிரியர் | வெளியீட்டாளர் | பக்கம் | சொற்றொகை |
|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
| 1. | 1850 | ஒருசொற் பலபொருள் விளக்கம் | அண்ணாசாமிப் பிள்ளை | — | 186 | 1575 |
| 2. | 1883 | அகராதிச் சுருக்கம் | கோ. விஜயரங்க முதலியார் | — | — | 3615 |
| 3. | 1914 | இலக்கியச் சொல்லகராதி | அ. குமாரசாமிப் பிள்ளை | — | 205 | |
| 4. | 1921 | மாணவர் தமிழகராதி | எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை | ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ் | | 26000 |
| 5. | 1924 | சொற்பொருள் விளக்கம் என்னும் தமிழகராதி | ச. சுப்பிரமணிய சாஸ்திரி | கலாநிதி அச்சியந்திர சாலை, யாழ்ப்பாணம் | 288 | |
| 6. | 1925 | தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி | ச. பவானந்தம் பிள்ளை | மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை | 38+ 476 | 33270 |
| 7. | 1928 | இளைஞர் தமிழ்க் கையகராதி | மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை | இந்தியன் பப்ளிஷிங் கம்பெனி, சென்னை | 160 | 8500 |
| 8. | 1935 | நவீன தமிழ் அகராதி | சீ. கிருஷ்ணசாமிப்பிள்ளை | ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ் | | 20500 |
| 9. | 1939 | தமிழறிஞர் அகராதி | சீ. கிருஷ்ணசாமிப்பிள்ளை | ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை | | |
| 10. | 1939 | தமிழமிழ்த அகராதி | | ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை | | |
| 11. | | விக்டோரியா தமிழ் அகராதி | எஸ். குப்புஸ்வாமி | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 12. | 1940 | கழகத் தமிழ்க் கையகராதி | சேலை சகதேவ முதலியார் காழி சிவ கண்ணுசாமிப் பிள்ளை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை | 312 | 12500 |
| 13. | 1949 | கார்த்திகேயினி புதுமுறை அகராதி | எஸ். நடராசன் | கார்த்திகேயினி பிரசுரம், இராமச்சந்திரபுரம் | | |
| 14. | 1950 | செந்தமிழ் அகராதி | ந. சி. கந்தையாப்பிள்ளை | ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை | | |
| 15. | 1951 | கம்பர் தமிழ் அகராதி | வே. இராமச்சந்திர சர்மா | | | |
| 16. | 1955 | சுருக்கத் தமிழ் அகராதி | | சென்னைப் பல்கலைக் கழகம் | | |
| 17. | 1955 | கோனார் தமிழ்க் கையகராதி | ஐயன்பெருமாள் கோனார் | பழனியப்பா பிரதர்ஸ் | | 16500 |
| 18. | 1957 | தமிழ் இலக்கிய அகராதி | பாலூர் து. கண்ணப்ப முதலியார் | சென்டரல் புக் டிப்போ, சென்னை | | |
| 19. | 1964 | கழகத் தமிழகராதி | கழகப் புலவர் குழு | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | 882 | |
| 20. | 1969 | லிப்கோ தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி | | | | |
| 21. | 1977 | மரபுத் தொடர்களும் சொற்றொடர்களும் | புலவர் பூந்துறையான் | அசோகன் பதிப்பகம், சென்னை | | |
| 22. | 1979 | மணிமேகலைத் தமிழகராதி | | மணிமேகலைப் பிரசுரம், சென்னை | | |

''தொன்மொழியாம் தென்மொழியிற் சதுரகராதி முதலிய பற்பல வகராதிகள் இருப்பினும் அவைகளெல்லாம் பெருவாரியாய்ப் பள்ளிப் பிள்ளைகட்கும் பிறர்க்கும் எளிதிற் பயன்தருவன அல்ல. அன்றியும் அவைகளின் விலை ஏற்றமும் உருவத் தோற்றமும் எல்லாரும் எளிதிற் பெற்று உபயோகிக்க அனுகூலமானவைகளல்ல. ஆகையால், வீணாக விரித்தும் மிகச் சுருக்கியும் பயனற்றதாக்காமல் இதனைத் தற்காலத் தமிழ் மாணவரும் பிறரும் நயமாக வாங்கி நவீன முறையால் உபயோகித்து நலம் அடையுமாறு நல்லெழுத்திலும் நற்காகிதத்திலும் அச்சிட்டிருக்கின்றோம்.

''இன்னும் இம் மொழியில் வந்து வழங்கும் வடசொற்களில் இன்றியமையாதவைகளையும், திசைச்சொற்களில் அரசாங்க முறையிலும், அதிகார முறையிலும், வர்த்தக முறையிலும், சாஸ்திர சாம்பிரதாய இலௌகீக முறைகளிலும் உள்ள எத்தனையோ சொற்களையும் இதில் புதுவனவாகச் சேர்த்திருக்கின்றோம். 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையி னானே' என்ற ஆன்றோர் மொழிப்படி அவைகள் தகையாம் அன்றி மிகையாகா.

'' 'அரச னெவ்வழி அவ்வழி குடிகள்' என்ற பழமொழியைப் புதுமொழியாக்க, 'அரசன் எவ்வழி ஆசாரம் அவ்வழி' என்று ஆக்கிவிடலாம் என்றெண்ணும்படி அநேக நவீன இலௌகீக ஆசாரங்கள் பிரவர்த்தித்திருக்கும் இந் நாளில் முன்னாளைய வழக்கத்தை அனுசரித்த தமிழகராதியைப்போன்ற தொன்றே போதாமையை அனுபவத்தில் உணர்ந்த யாம், இதில் அநுபந்தங்களாகப் பஞ்சாங்கப் பெயர்களில் பக்ஷங்களின் பெயரையும், பஞ்சபக்ஷி பெயர்களையும், அவைகளின் தொழில்களையும், வாரசூலையின் வாரநாழிகைகள், பரிகாரங்கள் முதலியவைகளையும், கிரகணங்கள், பரதகண்டவாசிகளின் பண்டிகைகள், முகம்மதியர் பண்டிகைகள், உருஸுகள், கிறித்தவர்களின் முக்கியப் பண்டிகைகள், திருநாட்கள், அச்சுப்பிழை திருத்தி அச்சுக்கூடத்துக் கனுப்புவதற்கு வேண்டிய திருத்தக்குறிகள், அவைகளின் விளக்கங்கள், இங்கிலீஷ் நாணய வழக்கப்பெயர்கள், பரதகண்ட நாணய வழக்கப் பெயர்கள், புகைவண்டியில் ஏற்றும் சாமான்களின் நிறைஅளவின் பெயர்கள், சென்னை முகத்தலளவை, பரதகண்ட கால அளவைகளின் பெயர்கள், இங்கிலீஷ் கால அளவைகளின் பெயர்கள், லீப் வருஷக் குறிப்பு, இங்கிலீஷ் நீட்டலளவைப் பெயர்கள், நிறுத்தலளவைப் பெயர்கள், இங்கிலீஷ் முகத்தலளவைப் பெயர்கள், தானிய தவச அளவுப் பெயர்கள், எண்வாய்பாட்டுப் பெயர்கள், இங்கிலீஷ் நிறுத்தலளவைகள் (பொன், வெள்ளி முதலியன), இங்கிலீஷ் மருந்து நிறுத்தலளவைப் பெயர்கள், இங்கிலீஷ் நீட்டலளவைப் பெயர்கள், இங்கிலீஷ் சதுர அளவைப் பெயர்கள், வாக்கியங்கள் அர்த்தமாவதற் கனுகூலமான அடையாளப் பெயர்கள் முதலியவைகளையும் முறையாகச் சேர்த்திருக்கின்றோம்.

''அன்றியும் அனுபந்தம் ஒன்றில் அசல், அலாதி என்பவைகளைப்போன்ற உருது பாஷைப் பதங்கள், அலமாரி, கிராம்பு போன்ற போர்த்துகேசியச் சொற்கள், எச்சரிக்கை, வாடிக்கைபோன்ற தெலுங்கு பதங்கள், பயங்காளி, விரயம் போன்ற கிராமியச் சொற்கள், ஏராளம், தாராளம் முதலிய வழக்கச் சொற்கள், கவர்ன்மெண்ட், கவர்னர் முதலிய இங்கிலீஷ் பதங்கள் முதலியவைகளையும்—

''அனுபந்தம் இரண்டில் அக்ரிமெண்ட், அங்குஸ்தான் முதலிய அன்னிய வியாபாரக் கூட்டு சம்பந்தமான மொழிகளையும், பிறமத சம்பந்தமான மொழிகளையும், நவீன சாஸ்திர சம்பந்தமான மொழிகளையும் இன்னும் பற்பல புதுச் சொற்களையும்—

''அனுபந்தம் மூன்றில் வருஷங்கள், மாதங்கள், வாரங்கள், இராகுகால நாழிகைகள், கிரகங்களின் பெயர்கள், நக்ஷத்திரங்களின் பெயர்கள், இலக்கினங்களின் பெயர்கள், திதிகளின் பெயர்கள், யோகங்கள், கரணங்கள், மூன்றாம் பிறை, இராசிகளின் பெயர்கள் ஆகியவைகளைக் குறிக்கும் சொற்களையும் நவீன முறையாக யாவரும் நலம்பெறப் புகுத்தி வெளியிட்டிருக்கின்றோம்.'' (பக்கம் xxxvi—xxxviii)

'இளைஞர் தமிழ்க் கையகராதி' என்பது மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்களால் தொகுத்துப் பள்ளி மாணவர்க்கெனவே படைக்கப்பெற்றது. ஏறத்தாழ 8500 சொற்களைக் கொண்டது. திரு. பிள்ளையவர்கள் குழந்தைகளுக்கான நூலாக்கத்தில் ஈடுபட்டிருந்தவர்கள். பல்வேறு பதிப்பக நூல்களும் இவர் கண்பார்த்துச் செம்மைபெற்றன. பண்டை இலக்கிய இலக்கணங்களைச் சீரிய முறையில் கூர்ந்தாய்ந்து பதிப்பிப்பதில் ஒப்புயர்வின்றி விளங்கியவர். மாணவர்க்கான பாடநூல்களில் பல நாள் ஈடுபட்ட தம் பயிற்சியின் விளைவாக உயர்நிலைப்பள்ளி மாணவர்க்குத் துணைநிற்கும் வகையில் இந்தக் கையகராதியைத் தொகுத்து வெளியிட்டார். இது சென்ற நூற்றாண்டில் தோன்றிய 'அகராதிச் சுருக்கம்' நூலை அடியொற்றியது. இது 1928-ல் மலர்ந்தது; பின்னும் சில பதிப்புகளைப் பெற்றது. இவையிரண்டுமே சட்டைப்பையில் வைத்துக்கொள்ளத்தக்க சிறிய ஆங்கில அகராதி போன்றனவாகும்.

**கையகராதிகள்**

தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி சொற்பொருள்களோடு பல்வேறு வகையான செய்திகளின் விளக்கங்களையும் கொண்டு விளங்கும் புத்தகராதி என்பது தெரியவரும். தற்காலத் தமிழ்ச் சொல்லகராதியின் அமைப்பையும் போக்கையும் ஒட்டி 1935-ல் வெளியானது இந்த நவீன தமிழ் அகராதி. இதனை ஆக்கியவர் புரசைப்பாக்கம் தமிழ்ப் பண்டிதர் சீ கிருஷ்ணசாமிப் பிள்ளையாவார். இவர் தாம் தொகுத்த அகராதியைக் குறித்துப் பின்வருமாறு சுட்டியுள்ளார்:

**நவீன தமிழ் அகராதி**

> ''நமது தமிழ்மொழியில் அகராதிகளும் நிகண்டுகளும் சொற்பொருளாராய்ச்சி செய்யாது குறைபாடுடையனவா யிருக்கின்றன. ஆகவே, தற்காலத்தில் பல நாடுகளிலுமுள்ள பல நூறாயிரம் மக்கள் தாங்கள் கற்கப் புகும் தமிழ்நூல்களுள் வரும் கடினமொழிகளின் பொருள்களை எளிதில் உணரும்வண்ணம் வீணில் பெருக்கியும் அழகு குன்றச் சுருக்கியுமிராமல் இன்றியமையாத சொற்களனைத்தையும் திரட்டித் தக்க இடங்களில் மொழிகளுக்கேற்ற பொருள்களை இலக்கியங்களினின்றும் உதாரண முகத்தால் விளக்கிக் காட்டியும், எழுத்துப் பிழையில்லாமலும், வழக்காற்றிலுள்ள மொழிகளுக்கு உடுக்குறியும்* ஒரு மொழியின் பொருள்கள் உலக வழக்கிலிருப்பின் அவற்றைப் பிராக்கெட்டுக்கு [ ] முன்னதாகவும் அமைத்து இதற்கு 'நவீன தமிழ் அகராதி' என்னும் பெயரைத் தந்து பதிப்பித்தனன்.''

இலக்கியச் சொற்கள், வழக்காற்றுச் சொற்கள், பொருள்கள் ஆகியவை எந்தவகையில் இதில் தரப்பட்டுள்ளன என்பது தெளிவாகிறது. மாணவர் அகராதியை வெளியிட்ட ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ் நிறுவனத்தாரே இதனையும் வெளியிட்டுள்ளனர். பெரும்பான்மையும் மாணவர் அகராதியைத் திருத்தியும் புதுக்கியும் வெளியிட்ட ஒரு பதிப்புப் போன்றதே இந்த அகராதி.

இவற்றை வெளியிட்டோரும் ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ் நிறுவனத்தாரே யாவர். தற்காலத் தமிழ்ச் சொல்லகராதியில் அனுபந்தமாகச் சேர்க்கப்பெற்ற பல பொருள்களும் இவற்றில் வகைப்படுத்தப்பெற்று வளப்படுத்தப்பட்டுள்ளன. மாணவர்களுக்குப் பிறமொழிச் சொற்களையும், எழுத்துப் பேதத்தால் பொருள் மாறுபடும் சொற்கள் முதலியவற்றையும் அறிய இவை பயன்படும்.*

**தமிழமிழ்த அகராதி-தமிழறிஞர் அகராதி**

---

* இவற்றின் பொருளடக்க விரிவை 'மொழியியல் அகராதிகள்' என்னும் தலைப்பின்கீழ்ப் பின்னர்க் காண்க—பக்கம் xxii-xxiii.

இளைஞர் தமிழ்க் கையகராதிக்கு அடுத்த நிலை. இதில் உள்ள சொற்களைவிடவும் ஒன்றரை மடங்குச் சொற்களைக் கொண்டது இந்த அகராதி; இதில் 12500 சொற்கள் இடம்பெற்றுள்ளன. இதனைத் தொகுத்து அளித்தோர் சேலை சகதேவ முதலியாரும் காழி சிவ. கண்ணுசாமிப் பிள்ளையவர்களுமாவர். இதனைத் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் 1940-ல் வெளியிட்டுள்ளனர். எனவேதான் இதற்குக் 'கழகத் தமிழ்க் கையகராதி' எனப் பெயரிடலாயினர். இதுவும் சட்டைப்பையில் அடங்கும்படியான அளவினதே.

**கழகத் தமிழ்க் கையகராதி**

வித்துவான் ஐயன்பெருமாள் கோனார் திருச்சிராப்பள்ளியில் பள்ளித் தமிழாசிரியராக விளங்கியவர்; பள்ளியிறுதி வகுப்புப் பாடநூல்கள், கல்லூரித் தமிழ்ப் பாடநூல்கள் ஆகிய வற்றிற்குப் பல ஆண்டுகளாய் உரைநூல் வெளியிட்டுவந்தவர். எனவே, மாணவர்களுக்கான பாடநூல்களில் பயின்றுவரும் சொற்பரப்பினை நன்கு தெரியும் வாய்ப்பினைப் பெற்றிருந்தார். இவர் எழுதிய உரைநூல்களை வெளியிட்டுவந்த பழனியப்பா சகோதரர் நிறுவனத்தார் பள்ளி, கல்லூரிகளில் பயிலும் மாணவர்களுக்கு ஏற்றவகையில் ஓர் அகராதி ஆக்கக் கோனார் அவர்களுக்கு ஊக்கம் தந்தனர். இவருடைய அகராதித் தொகுப்பை இவர் பெயரையிட்டுக் 'கோனார் தமிழ்க் கையகராதி' என்னும் பெயரில் 1955-ல் வெளியிட்டனர். 'இஃது இளைஞர் கையகராதியினும் பார்க்க இருமடங்குச் சொற்கள், அதாவது 16500 சொற்கள் கொண்ட சிற்றகராதியாக உள்ளது.

**கோனார் தமிழ்க் கையகராதி**

கோனார் தமிழ்க் கையகராதியை அடுத்து 1957-ல் வெளிவந்தது 'தமிழ் இலக்கிய அகராதி'. இதனை எழுதித் தொகுத்தவர் வித்துவான் பாலூர் து. கண்ணப்ப முதலியாராவார். இவர் உயர்நிலைப்பள்ளியிலும் கல்லூரியிலும் தமிழ் பயிற்றுவித்தவர். இந்த அகராதியைச் சொல் அகராதி, தொகை அகராதி, பிரபந்த அகராதி, நூல் அகராதி, புலவர் அகராதி என ஐந்து கூறாக அமைத்துத் தந்துள்ளார். சதுரகராதி என்றாற்போல இதனைப் 'பஞ்சக அகராதி' என்று சுட்டலாம். இந்த அகராதியின் அமைப்பும் சிறப்புத் தன்மையும் குறித்துத் தொகுப்பாசிரியர் முன்னுரையில் தரும் விளக்கவுரை வருமாறு:

**தமிழ் இலக்கிய அகராதி**

> ''தமிழ் இலக்கிய அகராதி என்னும் இந் நூல் கல்லூரிகளிலும், உயர்நிலைப் பள்ளிகளிலும், இடைநிலைப் பள்ளிகளிலும் பயிலும் மாணவர்கட்குப் பாடநூலாக வரும் இலக்கியங்களிலும் உரைநடைகளிலும் காணப்படும் சொற்களுக்குரிய பொருள்களை நன்கு உணர்தற்கான வழிகளில் தொகுத்து எழுதப்பெற்றுள்ளது. இலக்கிய மொழிகளையன்றி உலகவழக்கு மொழிகளுக்குரிய பொருள்களையும் இது தன்னகத்துக் கொண்டுள்ளது. அடிக்கடி நூல்களின் வாயிலாகவும் பேச்சுவழக்கின் வாயிலாகவும் காணப்படுகின்ற வடசொற்களுக்கும் சாஸ்திர சம்பந்தமான சொற்களுக்கும் பொருள் அறிய இது துணைசெய்ய வல்லது. இவ் வகராதி கையகத்திருப்பின் சொற்களின் பொருளை முட்டின்றிப் பிறர் உதவியின்றி அறிந்துகொள்ளலாம்.
>
> இந் நூல் சொற்களுக்குரிய பொருளை அறிதற்குத் துணை செய்வதோடு நில்லாமல் தொகைச்சொற்கள், தொடர்மொழிகளின் விளக்கங்கள், தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்கட்குரிய விளக்கங்கள், நூல்கள் பலவற்றினைப்பற்றியும் புலவர்களில் பலரைப் பற்றியும் குறிப்புக்கள் கொண்டு திகழ்கிறது. ஆகவே, தமிழ்நூல்களைப் பற்றியும் ஆசிரியர்களைப் பற்றியும் ஒருங்கே அறிதற்கு இந் நூல் பெருந்துணை செய்வது.''

இதுவும் கையகராதி நிலையில் உள்ளதே. இவர் இந்த அகராதியை ஐந்து பகுதிகளாகப் பகுத்து அமைத்தது ஒரு புதுமை.

லிப்கோ நூல் வெளியீட்டு நிறுவனம் பள்ளிகளுக்கான பாடநூல், உரைநூல், பொது மக்களுக்கான பலவகை நூல்களை வெளியிட்டு வருவது. இதன் சார்பில் அமைந்த இந்த அகராதியில் தமிழ்–தமிழ்ப் பொருளோடு ஆங்கிலப் பொருளும் சேர்த்துத் தரப்பட்டிருக்கிறது. இது பள்ளி மாணவரைக் குறியாகக்கொண்டு வெளியிடப்பெற்ற ஒரு சிற்றகராதி.

**லிப்கோ–தமிழ்–தமிழ்–ஆங்கில அகராதி**

'கல்கண்டு' என்னும் வார இதழை வெளியிட்டுவந்த தமிழ்வாணனார் முயற்சியில் முகிழ்த்தது இந்த அகராதி. அவர் தாம் படைத்த பல நூல்களையும் 'மணிமேகலைப் பிரசுரம்' என்னும் பெயரில் அமைந்துள்ள தம் பதிப்பகத்தின் வழியே வெளியிட்டுவந்தார். இப் பதிப்பகத்தில் அதன் பெயரைத் தாங்கி 1979-ல் வெளிவந்தது இந்த அகராதி. இது தோற்றத்தில் ஓரளவு கோனார் தமிழ்க் கையகராதிபோலக் காணப்படுகிறது. என்றாலும் இதில் அதைவிடவும் அதிகமான சொற்பொருள்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

**மணிமேகலைத் தமிழகராதி**

தொடக்கநிலைச் சிற்றகராதி, கையகராதி, சிற்றகராதி போலாது நடுத்தர அளவிலான அகராதிகள் சிலவும் உருவாகி வெளிவந்து உலவின. **செந்தமிழ் அகராதி, கம்பர் தமிழ் அகராதி** என்னும் இரண்டும் இவ்வகையில் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவை. 'செந்தமிழ் அகராதி' ந. சி. கந்தையாப் பிள்ளையால் தொகுக்கப் பெற்று ஆசிரியர் நூற்பதிப்புக் கழகத்தாரால் 1950-ல் வெளியிடப் பெற்றது. இதனை அடுத்து 1951-ல் வந்த கம்பர் தமிழ் அகராதியைத் தொகுத்தவர் வே. இராமச்சந்திர சர்மா என்பவராவார். இவை பள்ளிகளிலும் கல்லூரி களிலும் பயிலும் மாணவர்க்கு ஏற்றவகையில் திட்டமிட்டுத் தொகுக்கப்பெற்றன.

**நடுத்தர அகராதிகள்**

மேலே சுட்டிய இரண்டு அகராதிகளினும் இருமடங்கு பெருக்கமுற்றுத் தோன்றிய அகராதி கழகத் தமிழ் அகராதி. இது திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரால் 1964-ல் வெளியிடப்பெற்றது. இதனைக் கழகப் புலவர் குழுவினர் தொகுத்துச் சீர்தூக்கிச் செம்மைப்படுத்தி அமைத்துள்ளனர். இதனை நடுத்தர அகராதிகளினும் விரிவுபெற்ற சிறப்பகராதி என்னலாம். பள்ளி, கல்லூரிகளில் பயில்வார்க்கும் புலவர்களுக்கும் பயன்படும் வகையில் இது காணப்படுகிறது.

**கழகத் தமிழ் அகராதி**

சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட தமிழ்ப் பேரகராதி உலகமறிந்த ஒரு பெரும் பேரகராதி. 1913-ல் தொடங்கித் தக்க அறிஞர் பெருமக்கள் பலரால் வளர்க்கப்பெற்று, 1932-ல் முற்றுவிக்கப்பெற்றது. ஆறு பெருந்தொகுதிகளையும் இணைப்புத் தொகுதி ஒன்றையும் கொண்டுள்ளது. அண்மையில் இது நிழற்பட அச்சில் மறுபதிப்புப் பெற்றுள்ளது. இந்தப் பேரகராதியின் சுருக்கமே 'சுருக்கத் தமிழ் அகராதி' (Concise Tamil Lexicon) என்னும் பெயரில் வெளியிடப்பெற்றது. தமிழ்ப் பேரகராதியை அச்சிட்ட சென்னை லா-ஜர்னல் பிரஸ் அதிபரே இச் சுருக்க அகராதியையும் பதிப்பிக்க முன்வந்தார். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறையினரின் மேற்பார்வையில் சுருக்க அகராதி வேலை நடைபெற லாயிற்று.

**சுருக்கத் தமிழ் அகராதி**

அப்பொழுது தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவராயிருந்த பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளையவர்கள் சுருக்கத் தமிழ் அகராதிக்கு உரிய திட்டமொன்றை வகுத்து அளித்தார். சுருக்கப் பதிப்பில் பேரகராதியில் உள்ள சொற்களுள் பின்வரும் வகையிலான சொற்கள் விடுபட வேண்டியவை எனத் திட்டம் செய்தார்:

1. கலைச்சொற்கள் (Scientific and Technical terms).
2. இலக்கண பரிபாஷைச் சொற்கள் (Terms relating to grammar).
3. எளிதில் பொருள்விளங்கும் சொற்கள் (Common words).
4. பேச்சுவழக்குச் சொற்களும் கொச்சைச் சொற்களும் (Colloquialisms and slangs).

5. இலக்கியத்தில் பயின்று வழங்காத வடசொற்கள்.
6. சிறப்புப் பெயர்கள் (Proper names).
7. தொடர்மொழிகள் (Compound words).
8. சிதைவுச் சொற்களும் குறிப்புமொழிகளும்.
9. இலக்கியத்தில் பயின்றுவராத நிகண்டுச் சொற்கள்.

இத் திட்டத்தின்படி பேரகராதியின் சொற்களைப் பார்வையிட்டபோது **சமய பரிபாஷைச் சொற்களையும் நவீனமாக ஆக்கப்பெற்ற சொற்களையும் விட்டுவிடலாம்** என்று பின்னர் முடிவுசெய்தனர்.

இம் முடிவுகளின்படி சுருக்க அகராதியின் பதிப்பாசிரியராய்த் திரு. மொ. ஸ்ரீ செல்வம் ஐயர், எம்.ஏ.,எல்.டி. பேரகராதியிலிருந்து சொற்களைத் தெரிந்தெடுத்தார். தமிழ்ப் பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களும் தமிழாராய்ச்சித் துறையின் தலைமைத் தமிழ் விரிவுரையாளர் திரு. மோ. அ. துரை அரங்கசாமி அவர்களும் பதிப்பாசிரியருடனிருந்து ஆராய்ந்து திட்டமிட்டபடி விலக்க வேண்டியவற்றை விலக்கிச் சுருக்கத் தமிழகராதியை உருவாக்கினர். 1955-ல் வெளிவந்த இந்தச் சுருக்க அகராதி மாணவர்க்கும் பொது மக்களுக்கும் பயனுடையதாகும் என்று கருதப்படுகிறது.

ஆனால், இந்த அகராதி ஏழு தொகுதிகளில் அமைந்த பேரகராதிக்கு ஏற்புடைய சுருக்க அகராதியாக அமையவில்லை; 154 பக்கம் கொண்டதொரு சிற்றகராதியாகப்போயிற்று. இதனால்தான் இது மிகுதியாக அறிஞரிடையே வழங்கப்பெறாமல் முதற்பதிப்புடனேயே நின்றுபோயிற்று.

**விக்டோரியா தமிழ் அகராதி**

இது ஏனைய தமிழ் அகராதிகள்போலாது தனி நோக்குடன் சொற்களைப் பாகு படுத்தித் தொகுத்துத் தருவது. பத்திரிகைகளும் பருவ இதழ்களும் போட்டிப் பரிசுக்கான நுண்பொருள்களைத் தாங்கிவரும் நிலை தோன்றியது. அத்தகைய போட்டிகளுக்கு விடை கண்டறிவதற்கு ஏற்புடைய சொற்களைக் கொண்ட அகராதி அவசியமாயிற்று. இந்த அகராதியை ஆக்கியவர் எஸ். குப்புஸ்வாமி என்பவராவார்.

இவ் வகராதியை ஆக்க ஆசிரியருக்குத் தூண்டுகோலாயிருந்தது டைம்ஸ் ஆப் இந்தியா பத்திரிகையில் வெளியான ஆங்கிலப் பரிசுச் சொற்போட்டியே யாகும். மேலும், அந்நாளில் ஆனந்தவிகடனில் வெளிவந்த போட்டிப் பந்தயக் குறிப்புகளும் சித்திரங்களும் இந்த அகராதிக்கு உதவியுள்ளன. போட்டிப் பந்தயங்களுக்குப் பயன்படும் வகையில் அகராதி ஒன்று தமிழ்மொழிக்கு இன்றியமையாதது என இவர் கண்டார்.

இந்த அகராதியில் ஓரெழுத்து முதல் ஆறெழுத்து வரையில் உள்ள சொற்களைத் தொகுத்து அகராதியாக்கித் தந்துள்ளார். அபிதான கோசம், அபிதான சிந்தாமணி, பிங்கல நிகண்டு, சூடாமணி நிகண்டு, சொல்லகராதி, பொருளகராதி முதலிய நூல்களின் துணை கொண்டு ஒத்திட்டு இதனைத் தொகுத்ததாக ஆசிரியர் தெரிவித்துள்ளார்.

ஒரு சொல்லுக்குரிய பல பொருள்களையும் ஒருசேரத் திரட்டி ஓரிடத்தில் காணுமாறும் அமைத்துள்ளார். இதனுள் ஆங்காங்குச் சொற்களுக்கு ஏற்றவாறு 300 விளக்கப் படங்களை யும் இணைத்துள்ளார். இந்த அகராதியின் முகவுரையில் தொகுப்பாசிரியர்,

> ''இது தமிழ்மொழி வளர்ச்சியில் விருப்புற்றவர்களுக்குத் தமிழ்த் தினசரி முதலிய சஞ்சிகைகளில் வெளிவரும் விடுகதை, பந்தனம், சித்திரப் போட்டிகள் முதலிய மனம் குதூகலமடையக்கூடிய போட்டிப் பந்தயங்களில் கவர்ச்சியுள்ளவர்களுக்கும் இலகுவாக விடைகளைத் தெரிந்துகொள்வதற்குத் தகுந்த சாதனமளிக்கக்கூடிய தமிழ் அகராதி யாகும். இதுகாறும் இவ்விதமான அகராதிகள் வெளிவராமல் தமிழ்ப் போட்டிப் பந்தயங்களில் வெற்றி பெறுவதற்குத் தமிழன்புடையோர் பட்ட கவலைகள் இதனால் நிவர்த்திக்கப்படும். ஆதலால், தமிழ்ப்பற்றுடைய அன்பர்கள் ஒவ்வொருவரும் இவ்வரிய தமிழ்ப் போட்டிப் பந்தய நூதன அகராதியை ஆதரிப்பார்கள் என்று நம்புகிறோம்,''

என்று தெரிவித்துள்ளார். இந்த அகராதி வெளிவந்த ஆண்டு தெரியவில்லை. ஆனந்த விகடன் முதலிய பருவ இதழ்களில் போட்டிப் பந்தயங்கள் வந்த காலத்தை ஒட்டியதாய் இருத்தல் வேண்டும்.

**பலதுறை அகராதி**

சோதிடமும் மருத்துவமும் தமிழ்ச் சமுதாயத்தோடு இணைந்துவருவன. அந்நாளில் தமிழ்ப் புலவர்களுள் பலர் சோதிடம், மருத்துவம் ஆகியவற்றிலும் வல்லவராயிருந்தனர். சங்ககாலத்தில் கணியன் பூங்குன்றனார், மருத்துவன் தாமோதரனார் என்னும் பெயர்கள் இவ்விரு கலைகளிலும் முறையே சிறந்தமைபற்றி வந்த சிறப்புப் பெயர்களாகும். மருத்துவத்தில் ஈடுபட்டாரையும் 'பண்டிதர்' என்றே வழங்கத் தலைப்பட்டனர். எனவே, இவைபற்றிய கருவிநூல்களும் அகராதிகளும் சென்ற நூற்றாண்டில் தோன்றலாயின. கால நிகண்டு, பதார்த்தகுண சிந்தாமணி, அறுபது வருட பலன், காலசக்கரம் போன்ற நூல்கள் குறிப்பிடத் தக்கன. சோதிடம் தொடர்பான சொற்கோவைகளையும் செய்திகளையும் விளக்கிச் 'சோதிடக்கட லகராதி' என ஓர் அகராதி நூல் சென்ற நூற்றாண்டில் அச்சில் வந்தது. வடலூர் இராமலிங்க வள்ளலார் 'ஔஷதகுண அகராதி' என்னும் நூலை இயற்றியுள்ளார். ஏமதத்துவம் என்னும் பஞ்சகாவிய 'நிகண்டு' என்னும் ஒரு மருத்துவ நிகண்டும் உள்ளது. 'தட்சநாயனார் வைத்திய அட்டவணை', 'வைத்திய மலையகராதி,' 'மூலிகையகராதி', 'வாகட அகராதி' என்பன மருத்துவம்பற்றிய அகராதிகளாகும்.

இந்த நூற்றாண்டில் தோன்றிய மருத்துவ அகராதிகளுள் மிகப் பெரியது டி. வி. சாம்பசிவம் பிள்ளை என்பார் தொகுத்து வெளியிட்ட மருத்துவக் கலைச்சொல் அகராதி. இஃது ஐந்து பெருந்தொகுதிகளாக உள்ளது. இதில் தமிழ் மருத்துவ நூல்களுள் வரும் சொற்கள், மருத்துவப்பெயர்களை எல்லாம் அகரவரிசையில் தந்து அவைபற்றிய விளக்கம் எழுதியுள்ளார். இரண்டு பத்தியாக நூலை அமைத்துத் தமிழிலும் ஆங்கிலத்திலுமாக அடுத்தடுத்து விளக்கம் அமைத்துத் தந்துள்ளார். தமிழ் மருத்துவ நூல்களை ஆராய்வார்க்கு இந்த அகராதி கலங்கரைவிளக்கமாய்க் காட்சி தருகிறது. **சம்பிரதாய அகராதி** என்பது வைணவ சமூகத்தினரிடையே வழங்கப்பெறுகிற சொற்களின் பொருள்களை விளக்கும் ஓரகராதியாகும். மேலும், குழூஉக்குறி போன்ற குறியீடுகளை உள்ளடக்கிப் **பரிபாஷையகராதி** என ஓரகராதியும் வெளிவந்ததாகத் தெரியவருகிறது. கிறித்தவ சமயச் சார்பாக வந்துள்ள 'கிறிஸ்தவ சமய பரிபாஷை', 'இறையியல் சொல்லகராதி' என்பனவும் குறிப்பிடத்தக்கன.

**பழமொழி அகராதி**

தமிழ்நாட்டில் சங்ககாலம் தொடங்கி இந்நாள்வரை மக்களின் வாய்ப்பிறப்பாக வழிவழி வழங்கிவரும் பழமொழிகள் பல்லாயிரக்கணக்கானவை. பதினெண்கீழ்க்கணக்கில் ஒன்றாகிய முன்றுறையரையனார் இயற்றிய பழமொழி நானூறு, நானூறு பழமொழிகளின் விளக்கமாய் அமைந்ததே. திருநாவுக்கரசர் அருளிய பழமொழித் திருநேரிசைப் பதிகத்துள் (4 : 5) பத்துப் பாடல்களிலும் பழமொழிகளை அமைத்துப் பாடியுள்ளார். தண்டலையார் சதகம் என்னும் பின்னாளைய நூறு பாக்கள்கொண்ட நீதிசதகமும் பழமொழி விளக்க நூலே. பெரும்புலவர் காவியங்களில் பழமொழிகளும் ஆங்காங்கே பயிலக் காண்கிறோம்.

ஜான் லாசரஸ் என்பார் தமிழகப் பழமொழிகளைத் தொகுத்து அகராதி அடைவில் தந்து ஆங்கில விளக்கமும் உடன்சேர்த்து 1894-ல் வெளியிட்டார். இந்தத் 'தமிழ்ப் பழமொழி அகராதி' ஒரு பழமொழிக் களஞ்சியமாகும்.

இதன்பின் ஹெர்மன் ஜான்ஸர் என்பார் பழமொழிகளைப் பொருள் அடைவில் வகைப் படுத்தித் தொகுத்து வெளியிட்ட தமிழ்ப் பழமொழிகள் என்னும் நூல் 1897-ல் வெளிவந்தது.

திருமணம் செல்வக்கேசவராய முதலியார் 'உவமச்சொல் அகராதி' என்னும் பெயரில் சிறப்பான பழமொழிகளைத் தொகுத்து அவற்றிற்கு இணையான ஆங்கிலப் பழமொழி களுடன் சிற்றகராதி ஒன்றைத் தந்துள்ளார்.

ஐம்பது ஆண்டுகளுக்குமுன் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராய் விளங்கிய எஸ். அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள் பன்னீராயிரம் பழமொழிகள்கொண்ட

அகராதித் தொகுப்பினை நல்கியுள்ளார். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரும் பழமொழித் தொகுப்பு ஒன்று தந்துள்ளனர். அண்மையில் (1984) திருமதி மீனாட்சிசுந்தரம் என்பவர் 'கொங்குப் பழமொழிகள்—ஓர் ஆய்வு' என்னும் நூலை வெளியிட்டுள்ளார். இதில் கொங்குநாட்டில் வழங்கும் 1263 பழமொழிகள் அகரவரிசையில் ஆங்கில விளக்கங்களுடன் அமைத்துத் தரப்பட்டுள்ளன.

**இலக்கியத் தொடர்பான அகராதிகள்**

இலக்கியங்களில் வரும் சொற்பொருள்களை விளங்கிக்கொள்வதற்கு அவ்வவ் இலக்கியத்தில் பயின்றுவரும் அருஞ்சொற்பொருள்கள் அறியப்படவேண்டும். டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பித்த நூல்களில் சிறப்புக்கூறாக அமைந்து காணப்படுவது 'அரும்பதம் முதலியவற்றின் அகராதி' என்னும் இணைப்புப் பகுதி யாகும். இவர் பதிப்பித்த சீவகசிந்தாமணி, புறநானூறு, பத்துப் பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களில் உள்ள அகராதிகள் இங்குக் கருதத்தக்கன. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியின் தொடக்கமுதல் அந்த அகராதி நிறைவேறு வதுவரை தலைமைத் தமிழ்ப் பண்டிதராக விளங்கியவர் பேராசிரியர் மு. இராகவையங்கார் ஆவார். இவர் குறுந்தொகை, இறையனாரகப்பொருள் முதலிய சில நூல்களிலுள்ள அரும் பதங்களையும் பொருள்களையும் அகராதியின் பயன்பாட்டிற்காகத் தொகுத்து வந்தார். இவர் தொகுத்த இந்த அகராதிச் சொற்களை உள்ளடக்கி வெளியிடப் பெற்றது 'பொருட் குறிப்பகராதி' என்னும் நூல்.

சங்கநூல்களுக்குப் பதப்பிரிப்புக் குறியீட்டு விளக்கங்களுடன் குறைந்த விலையில் கண்கவர் வனப்புடன் அழகுற அச்சிட்டு வழங்கிய மர்ரே ராஜம் அவர்கள் அவற்றில் இடம் பெற்ற அருஞ்சொற்களுக்கான விளக்கங்களையும் சிற்சில பொருள் அடைவுகளையும் கொண்ட 'பாட்டும் தொகையும்' என்னும் தொகுதியை வெளியிட்டார். இது 'சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்' என்று போற்றத்தக்க சிறப்புடன் திகழ்கிறது.

பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் அருளிய 'சேந்தன் செந்தமிழ்' நூலுள் 'அகரமுதல்' என ஒரு பகுதி உள்ளது. இதில் நூலுட் கண்ட 2456 சொற்களுக்கு அகரவரிசையில் பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது.

இந் நூல் தமிழின் தனிப்பெருஞ் சிறப்பை எடுத்துக்காட்டும் பொருட்டு அடிகளாரால் இயற்றப்பெற்றது. இந் நூலின் இரண்டாம் பதிப்பு (1965) முகவுரையில் டாக்டர் மு. வரதராசனார் அடிகளாரின் நோக்கத்தை நன்கு தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

> 'மங்கலம்' என்பது வடசொல். வடமொழியின் சொற்கள் கலவாமலே 'சேந்தன் செந்தமிழ்' என்ற நூலும் அதன் உரையும் அமையவேண்டும் என்று விரும்பியது அடிகளின் திருவுளம். அதற்கு ஏற்பவே 'மங்கலம்' என்ற வடசொல்லை நீக்கி 'நல்' என்ற சொல்லை அமைத்து, 'நல்வழக்கு' என்று எழுதியுள்ளார். இந் நோக்கம் அடிகளின் முன்னுரையைக் கற்போருக்குத் தெளிவாகும். இவ்வாறு ஒரு நூலும் உரையும் அமைந்த அமைப்பு இது வரையில் தமிழ்மொழி வரலாற்றில் இல்லை எனலாம்.
>
> 'நடுநிலைமை இன்றி, தவறானதொரு பற்றுக்கொண்டு, வடமொழியே உயர்ந்தது என்றும், தெய்வத்தன்மை உடையதென்றும் சிலர் மயங்கித் தடுமாறி எழுதியும் பேசியும் வந்த போக்கை உணர்ந்த அடிகள் அவர்களைத் திருத்தவும், அவர்களின் மயக்கத்திற் சிக்காமல் பிறரைக் காக்கவும் விழைந்து முன்வந்து செய்த புலமைத் தொண்டு இது.'

**பொருள்விளக்க அகராதிகள்**

தமிழ் நூல்களில் வரும் சிறப்புப் பெயர்களின் விளக்கமாய் அமைந்த அகராதிகளும் சில உள. இவற்றுள் முதலாவதாகக் குறிப்பிடத்தக்க நூல் யாழ்ப்பாணம் ஆ. முத்துத் தம்பிப் பிள்ளை 1902-ல் வெளியிட்ட அபிதான கோசம். அபிதானம் என்றால் பெயர் என்பது பொருள்; கோசம்-தொகுப்பு. சிறப்புப் பெயர்களின் விளக்கங்கொண்ட நூல் என்பதாம். விநாயகர், கலைமகள், திருமகள் முதலிய தெய்வங்களின் பெயர்களையும் பல்வேறு நூல்களி லிருந்து எடுத்து அகர வரிசையில் வெளியிட்டுள்ள திரு. மு. சதாசிவனாரின் 'விநாயகர் அருட்செல்வம்', 'கலைமகள் அருட்செல்வம்', 'திருமகள் அருட்செல்வம்' என்பனவும் இவ்வகையினைச் சார்ந்தனவே.

சிறப்புப் பெயர்களுக்கு என வெளிவந்த தனியான ஒரு பெரிய அகராதி ஈக்காடு இரத்தினவேலு முதலியார் தொகுத்தளித்த 'சிறப்புப் பெயர் அகராதி' ஆகும். 1908-ல் இந்த அகராதி வெளிவந்தது.

தமிழ்ப் பண்டிதர் ஆ. சிங்காரவேலு முதலியார் சிறப்புப் பெயர்கள்பற்றிய விரிவான விளக்கங்கள் அமைந்த ஒரு பெருநூலை 'அபிதான சிந்தாமணி' என்னும் பெயரில் தொகுத்து அமைத்தார். இந் நூற்பெயர் 'அபிதான கோசம்' என்னும் முன்னூலை அடியொற்றிய தாகும்.

அபிதான சிந்தாமணியைக் 'கதையகராதி' என்றும் அறிஞர் புகழ்ந்து போற்றினர். இதன் சிறப்பினை உணர்ந்து மதுரைத் தமிழ்ச்சங்கத் தலைவராய் விளங்கிய பொன். பாண்டித்துரைத் தேவரவர்கள் மதுரைத் தமிழ்ச்சங்க வெளியீடாக 1910-ல் வெளிவரச் செய்தார். இதன்பின் நூலாசிரியர் சேர்த்த பொருள்களும் புதுவிளக்கங்களும் கொண்ட இதன் இரண்டாம் பதிப்பினைச் சென்னை ஸி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ் வெளியீட்டாளர் 1934-ல் அழகுற அச்சிட்டு வெளிப்படுத்தினர். இப் பெருநூல் இப்பொழுது தில்லி ஆசியன் பதிப்பகத்தாரால் ஒளிப்படப் பதிப்பாக வெளியிடப்பெற்று உலவிவருகின்றது.

இந்த வகையில் நவீன முறையில் வந்த பெருநூல் 'தமிழ் வளர்ச்சிக் கழகம்' வெளியிட்ட பத்துத் தொகுதிகளையுடைய 'தமிழ்க் கலைக்களஞ்சியம்' ஆகும். மேலும், இவர்கள் அடுத்து வெளியிட்ட 'குழந்தைகள் கலைக்களஞ்சியமும்' பத்துத் தொகுதிகள் கொண்டுள்ளது. இவ்விரு தொகுப்புகளும் தமிழுக்குப் பெருமை சேர்த்த பெரும் படைப்புகளாகும்.

**தொகைப் பெயர் விளக்கம்**

தொகைப்பெயர் விளக்கமான ஓர் அகராதியை வீரமாமுனிவர் 1732ஆம் ஆண்டிலேயே தாம் படைத்த சதுரகராதியில் மூன்றாவது அகராதியாக அமைத்தார். இப் பகுதி பின்னர் வந்த தமிழகராதிகளிலும் தொடர்ந்து வந்து இருபதாம் நூற்றாண்டுத் தமிழகராதி முதலியவற்றில் மேலும் பெருக்கமும் விளக்கமும்பெற்றது. குடுமியாமலைச் சுப்பிரமணிய பாரதி 'பொருட்டொகை நிகண்டு' என நூற்பாவினால் ஒரு நூலைப் படைத்தார். இதனை மதுரைத் தமிழ்ச் சங்கத்தின்வழிச் சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர் வெளியிட்டுள்ளார்.

இத்தகைய முந்திய நூல்களை அடியொற்றி உரைநடையில் 'தொகை அகராதி' என்னும் தொகுதியைச் சு. அ. இராமசாமிப் புலவர் ஆக்கியுள்ளார். இதனை 1969-ல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் வெளியிட்டனர்.

**இலக்கியத் தனியகராதிகள்**

பொதுவான அகராதிகள் ஒருபாலாகத் தனித்தனி இலக்கியங்களுக்கு முழுமையான அகராதிகளும் பல வெளிவந்துள்ளன. புறநானூறு, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு முதலிய சங்கநூல்கள் தனித்தனி அகராதித் தொகுப்புகளாகப் பொருள் விளக்கங்களுடன் வெளிவந்துள்ளன. சங்கநூல்கள் முழுமைக்குமான ஒரு சொல்லடைவை மகாவித்துவான் முதுமுனைவர் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் தொகுத்து அமைத்தார். 'சங்க இலக்கியச் சொற்களஞ்சியம்' என்னும் பெயரில் 'அ' முதல் 'ஒள' வரையிலான முதற்பகுதி மட்டும் வெளிவந்தது. பிற்பகுதிகள் அச்சுருப் பெறவில்லை.

புதுச்சேரியிலுள்ள பிரெஞ்சுக் கலைக்கழகம் 'பழந்தமிழ்ச் சொல்லடைவு' என்பதை மூன்று தொகுதிகளாக வெளியிட்டுள்ளது. இது சங்க நூல்களாகிய பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, தொல்காப்பியம், இறையனார் களவியல், முத்தொள்ளாயிரம், சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் நாற்பத்தொரு நூல்களிலும் இடம்பெற்ற அனைத்துச் சொற்களுக்குமான பெருந்தொகுப்பாகும்.

திருக்குறளுக்கு மார்க்கசகாயஞ்செட்டியார் என்பார் முதன்முதலாகச் சொல்லகராதி தொகுத்து வெளியிட்டார். இவர் ஆக்கிய 'திருக்குறள் சொற்குறிப்பு அகராதி' 1924-ல் வெளிவந்தது. திருக்குறள் உரைவளம், திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு என்பவற்றை முறையே மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அவர்களும் கலைமகள் ஆசிரியர் கி. வா. ஜகந்நாதன் அவர்களும் சிறப்புறப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்கள். இவர்கள்

தத்தம் பதிப்புகளில் திருக்குறட் சொல்லடைவு, பொருளடைவுகளைத் தொகுத்து அகரவரிசையில் தந்துள்ளனர்.

திரு. ந. சி. கந்தையாப்பிள்ளை 'திருக்குறள் அகராதி' என்னும் பெயரில் அமைந்த கையடக்க நூலை ஆசிரியர் நூற்பதிப்புக் கழகத்தின் வழியாக வெளியிட்டுள்ளார். தஞ்சைத் திருவாளர் சாமி. வேலாயுதம் பிள்ளையவர்கள் வெளியிட்ட 'திருக்குறட் சொல்லடைவு' திருக்குறளுக்கு அமைந்த இலக்கண விளக்கங்களோடுகூடிய விளக்கமான ஓர் அகராதியாகும்.

முந்திய மார்க்கசகாயரின் திருக்குறள் அகராதியைப் பயன்படுத்திச் சொற்பொருளும் சேர்த்துத் 'திருக்குறள் சொற்பொருள் அகரவரிசை' என்னும் கையடக்கமான தொகுப்பைத் திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அமைத்தார். இதனைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் 1969-ல் தமது 1354ஆம் வெளியீடாகத் தமிழுலகுக்கு அளித்தனர். நாலடியார் உரைவளப் பதிப்பில் சொல்லடைவும் சேர்ந்திருக்கக் காணலாம்.

திவ்வியப் பிரபந்தத்தில் வரும் சொற்பொருள்களை விளக்கும் 'திவ்வியப் பிரபந்தச் சிற்றகராதி' ஒன்றை அரசாங்கக் கீழ்த்திசைச் சுவடிநிலையம் வெளியிட்டுள்ளது. திருவரங்கத்திலிருந்து 'தேவஸ்தான பத்திரிகை' என்பதனை முன்பு வெளியிட்டு வந்த பார்த்தசாரதி ஐயங்கார் திவ்வியப் பிரபந்தச் சொற்கள், வியாக்கியானங்களில் இடம்பெற்ற அருஞ்சொற்கள் எல்லாவற்றையும் தொகுத்து ஏற்ற விளக்கங்களுடன் வெளியிட்டுள்ள 'திவ்வியப் பிரபந்த அகராதி' (1963), இத் தொகைநூலுக்கு அமைந்த பெரிய அகராதியாகும்.

கம்பராமாயணம் என்னும் தமிழ்ப் பெருங்கடலுக்குச் சொற்பொருளகராதி தொகுத்து முற்றுவித்தவர் அ. சே. சுந்தரராஜன் என்பவராவார். இவர்தம் தொகுப்பிற்கு 'ஸ்ரீமத் கம்பராமாயண அகராதி' என்பது பெயர்.

தமிழ் விவிலிய நூலுக்கு விளக்க அகராதி ஒன்றை ஏ. சி. கிலேற்றன் ஐயர் தொகுத்துத் தந்துள்ளார். வேத அகராதி என்னும் பெயரில் ஐந்து பாகங்கள்கொண்டதாய் இது உள்ளது. இதனைக் கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ளது.

பல்கலைக்கழகங்களில் முதுகலை, எம். பில்., டாக்டர் பட்டங்களுக்கான ஆய்வேடுகள் தரப்பட்டுவருகின்றன. இங்கெல்லாம் ஆய்வுப்பொருளாகத் தமிழ்நூல்கள் பலவற்றை எடுத்துக்கொண்டு ஆய்ந்தவர்கள் அந்தந்த நூல்களுக்கான அகராதிகளும் தொகுத்து அமைத்துள்ளனர் என்பது தெரியவருகிறது.

**மொழியியல் அகராதிகள்**

சிற்சில மொழிக்கூறுகளை தனிப்படப் பிரித்துத் தொகுத்து அடைவுபடுத்த முயன்றனர் பலர். 1883-ல் வெளிவந்த அகராதிச் சுருக்கம் என்னும் நூலில் 'பெயரும் வினையுமாய்ப் பொருள்தரு சொற்களின் அகராதி' பின் இணைப்பாகக் காணப்படுகிறது. தற்காலத் தமிழ்ச் சொல்லகராதியில் இந்துஸ்தானிச் சொற்கள் முதலியன தனித்தனி பின்னிணைப்புகளாகக் காணப்படுகின்றன. 1939-ல் வெளிவந்த 'தமிழறிஞர் அகராதி' என்பதில் பின்வரும் தனித் தொகுப்பு அகராதிகள் காணப்படுகின்றன. 1. சமஸ்கிருத வழக்கில் வரும் பொருளும் வேறுபாடான பொருளும் தரும் தமிழ் வழக்காற்றுச் சொற்கள்; 2. தமிழ் இலக்கிய வழக்கில் அருகியும் பேச்சுவழக்கில் மலிந்தும்வரும் தெலுங்குச் சொற்கள்; 3. தென்னிந்தியாவில் முகம்மதியர் வருகைக்குப் பிறகு தமிழில் வழங்கிவரும் உருது, இந்துஸ்தானி, பாரசீகம், அரபுச் சொற்கள்; 4. தமிழ்மக்கள் தற்காலத்திய நாகரிகத்தின் வன்மையால் பெரும்பாலும் பேச்சுவழக்கில் உபயோகிக்கும் ஆங்கிலச் சொற்கள்; 5. தமிழ்ப் பேச்சுவழக்கில் சிறுபான்மை வழங்கிவரும் போர்த்துகீசிய மொழிகள்; 6. தமிழ்ப் பேச்சுவழக்கில் சிறுபான்மை வழங்கிவரும் பிரெஞ்சு மொழிகள்; 7. தமிழ்ப் பேச்சுவழக்கில் சிறுபான்மை வழங்கிவரும் டச்சுச் சொற்கள்; 8. தமிழ்ப் பேச்சுவழக்கில் சிறுபான்மை வழங்கிவரும் கிரீக் மொழிகள்; 9. தமிழ்ப் பேச்சு வழக்கில் சொற்பமாக வழங்கும் டர்க்கிச் சொற்கள்; 10. தமிழ்ப் பேச்சுவழக்கில் சொற்ப மாறுபாடுடன் வழங்கிவரும் இந்துஸ்தானி மொழிகள்; 11. பேச்சுவழக்கிலும் இலக்கிய வழக்கிலும் ஆங்கிலத்தில் வழங்கும் சில தமிழ்மொழிகள்; 12. இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மாறுதலான பொருள்களைத் தரும் தமிழ்மொழிகள்; 13. கொச்சை மொழிகளும்

அவற்றிற்கீடான சரியான தமிழ்ச் சொற்களும்; 14. தெளிவுடைய தமிழ்ச் சொற்களும் அவற்றிற்கீடான கொச்சைச் சொற்களும்; 15. மக்கள், விலங்கு, புள்ளினம் முதலியவற்றின் பெயர்த்தொகுதிபோல வழங்கும் மூலிகை வகைகளைக் குறிக்குஞ் சொற்கள்; 16. மக்கள், விலங்கு, பொருள்கள் முதலியவற்றின் பெயர்த்தொகுதிபோல் வழங்கும் வானசாஸ்திரப் பொருட்களைக் குறிக்கும் சொற்கள்; 17. ரகர றகர எழுத்துக்கள் உண்மையால் பொருள் வேறுபடும் தமிழ்மொழிகள்; 18. ணகர னகர எழுத்துக்கள் உண்மையால் பொருள் வேறுபடும் தமிழ்மொழிகள்; 19. லகர ளகர எழுத்துக்கள் உண்மையால் வேறுபடும் தமிழ்மொழிகள்; 20. முறையே லகரத்துக்கு ளகரத்தையும், ரகரத்திற்கு றகரத்தையும், ணகரத்துக்கு னகரத்தையும், நகரத்துக்கு னகரத்தையும் மாறுபாடாக உபயோகிக்கினும் ஒரே பொருளைத் தருபவையான தமிழ்மொழிகள்; 21. எதிரிடையான பொருள்களைத் தரும் தமிழ்ச் சொற்கள்; 22. சொல்லத்தகாத வார்த்தைகளை நயம்படவுரைக்கும் தமிழ்ச் சொற்கள்; 23. அமங்கல சந்தர்ப்பங்களையும் பொருள்களையும் மங்கலமாகக் கூறுந் தமிழ்ச்சொற்கள்; 24. பல்வேறு கூட்டத்தார் மொழியும் மறைபொருட் சொற்கள்; 25. ஓரெழுத்து மொழிகள்; 26. ஒரு சொல்லின் முதல் இடை கடைகளில் ஒரெழுத்துக்கு ஈடாக மற்றோரெழுத்துவரினும் இலக்கண முடையதாகவே வழங்குவன; 27. எழுத்துக்கள் மாறுபடினும் பொருள் வேறுபடாத சொற்களின் அட்டவணை; 28. அடிக்கடி கையாளும் பழஞ்சொற்களின் மரூஉச் சொற்கள்.

இவ்வாறு தமிழில் வழங்கும் சொற்களை இனம்பிரித்துத் தொகுத்துத் தருவதால் செந்தமிழ்ச் சொற்களையும், பிறமொழிச் சொற்களையும், நடைமுறைச் சொற்களையும் பயில்வார் காண இயலும்.

சென்னை ஸி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ் நிறுவனத்தார் இந்த வகையில் 4 பகுதிகளைக்கொண்ட **'தமிழமிழ்த அகராதி'** என்னும் சிற்றகராதியையும் வடித்துத் தந்துள்ளனர். இதன் முற்பகுதி இரண்டு பொருளோ, இரண்டுக்கு மேற்பட்ட பொருளோ தரும் சொற்களின் அகராதியாகும். சொற்பொருளுடன் வழக்காட்சி காட்டும் எடுத்துக் காட்டும் உடன் தரப்பட்டுள்ளது.

இரண்டாவது பகுதி ஒரு சொல்லைப் பிரித்தால் இரண்டு அல்லது மேற்பட்ட பொருள்களைத் தரும் சொற்களின் தொகுப்பு.

'எழுத்தியல் திரியா பொருள்திரி புணர்மொழி
இசைத்திரி பால்தெளிவு எய்தும் என்ப' — (நன். 391)

எனப் பவணந்திமுனிவர் குறிப்பிடும் தகைமையுடைய சொற்களே இவை. இசைத்திரிபாவது சொற்களை இசையறுத்துப் படித்து வேறுபாடு காண்டலாகும். 'செம்பொன்பதின்றொடி' என்பதனைச் செம்பொன் பதின் றொடி என்றும், செம்பு ஒன்பதின் தொடி என்றும் இசையறுத்துப் பிரிக்கலாம். இவ்வாறு கவர்பொருள்பட வருவனவற்றைச் சிலேடைச் சொற்கள் என்பர்.

மூன்றாவது பகுதி பெயரும் வினையுமாக வழங்கிவருகின்ற தமிழ்ச் சொற்களின் தொகுப்பு ஆகும்.

நான்காவது பகுதி அகக்கூத்து இரண்டு, அரண் நான்கு என்றாற்போல வரும் தொகைப் பெயர் விளக்கம் தருவது.

இங்ஙனமாகச் சொற்பொருள்களை நான்கு கூறுபடுத்தி உரைக்கும் இந்தச் சிற்றகராதியைச் சதுரகராதி என்றாற்போல 'நான்மைச் சொல்லகராதி' என்று குறிப்பிடலாம்.

இவ்வகையிலேயே சிற்சில மொழிக்கூறுகளைத் தனித்தனியாகத் தொகுத்து அகராதி யாக அமைத்த நூல்களும் சில உள. எஸ். நடராசன் என்பார் தொகுத்த 'கார்த்திகேயினி புதுமுறை அகராதி' ண, ன பேதங்கள், ர, ற பேதங்கள், ல, ழ, ள பேதங்கள் என்னும் முத்திறப் பகுப்பின் எடுத்துக்காட்டுகளுடன் விளக்கும் சிறப்பு அகராதியாகும். அறிஞர் மு. சதாசிவம் என்பார் எதிர்ப்பத அகராதி, ஒலிக்குறிப்பு அகராதி, அடுக்குமொழி அகராதி, ஐம்பொறி அகராதி முதலியவற்றை வெளியிட்டுள்ளார்.

திருமதி நீலாம்பிகை அம்மையாரின் 'வடசொற் றமிழ் அகரவரிசை' வழக்கில் நடையாடும் வடசொற்களுக்கு இணையான தூய தமிழ்ச்சொற்களைக் கொண்டதொரு சிற்றகராதியாம்.

மொழிமரபு சொற்பொருள் மரபுகளை விளக்கும் நூல்கள் சிலவற்றையும் அறிஞர்கள் அவ்வப்போது வழங்கியுள்ளனர். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் விரிவுரையாளராய் முன்பு விளங்கிய கே. என். சிவராஜபிள்ளை புறநானூற்றில் வரும் 79 சொற்களின் உண்மைப் பொருளை விளக்கிய 'சில தமிழ்ச்சொல் ஆராய்ச்சி' என்னும் நூல் முற்படக் குறிக்கத்தக்கது (1968). சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் விரிவுரையாளராயிருந்த வே. வேங்கடராஜுலு ரெட்டியார் 'நுண்பொருள் விளக்கம்' என்னும் சொல்லிலக்கண நூலைத் தந்துள்ளார் (1963).

பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளையவர்களின் 'சொற்களின் சரிதம்' என்னும் நூல் சிற்சில சொற்களின் உருமாற்றம், பொருள் வளர்ச்சி, பொருள் மாற்றம் முதலியவற்றை விவரிக்கிறது. ஒரு சொல்லின் பிறப்புத் தொடங்கி மொழியில் அது வளர்ந்துவந்த சரிதம் அறிதற்கான வழிகாட்டும் முன்னோடி நூலாக இது திகழ்கிறது (1956).

புலவர் பூந்துறையான் என்பவர் 'மரபுத் தொடர்களும் சொற்றொடர்களும்' என ஓர் அகராதியைத் தக்க எடுத்துக்காட்டுகளுடன் அமைத்துத் தந்துள்ளார் (1977).

அறிஞர் மு. அருணாசலம் அவர்கள் தமிழ் இலக்கிய வரலாற்றை நூற்றாண்டு வரிசையில் தந்துள்ளார். இவர் தாம் இலக்கிய வரலாற்று ஆராய்ச்சி செய்த காலத்தில் கண்ட சில மொழி வரலாற்றுச் செய்திகளை அகரவரிசையில் அமைத்துச் 'சொற்சுவை' என்னும் நூலாகத் தந்துள்ளார் (1978). இதனுள் 133 சொற்கள் ஆராயப்பட்டுள்ளன.

**இலக்கிய வரலாற்று அகராதி**

தமிழில் பல நூல்களை ஆக்கி வெளிப்படுத்திய ந. சி. கந்தையாப்பிள்ளை 'தமிழ் இலக்கிய அகராதி' (1952), 'தமிழ்ப் புலவர் அகராதி' (1960) என்னும் இரு தொகுப்புகளை வெளியிட்டுள்ளார். இவை தமிழிலக்கியப் பரப்பினையும் தமிழ்ப் புலவர்களின் வரலாற்றையும் அறியத் துணைநிற்கும் கருவி நூல்களாகும். இவரே 'காலக் குறிப்பகராதி' என்னும் வரலாற்றுச் சிறுநூல் ஒன்றும் ஆக்கியளித்துள்ளார். ஆசிரியர் நூற்பதிப்புக் கழகத்தின்வழி மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்கள் 'இலக்கிய வரலாற்றுப் பொருட் குறிப்பகராதி' என்னும் நூலை 1956-ல் வெளியிட்டார். இது பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் 'இலக்கிய வரலாறு' என்னும் நூலுக்கான அகராதியாகும்.

தமிழில் அச்சில் வந்த நூல்களுக்கான விளக்கக் குறிப்புகளுடன்கூடிய ஒரு தொகுப்பை ஆங்கிலத்தில் ஜான் மர்டாக் என்பவர் 1865-ல் வெளியிட்டார். இந்தத் தொகுப்பிலிருந்து அந்த ஆண்டுவரையில் அச்சேறிய பல்துறை நூல்களைப்பற்றிய விவரங்கள் தெரிய வருகின்றன.

தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறையில் தமிழ்நூல் விவர அட்டவணைகளின் தொகுப்பாசிரியனாய் நான் பணிபுரிந்தபோது அத் துறை வெளியீடாக மர்டாக்கின் இந் நூலட்டவணையை 1968-ல் மறுபதிப்பாகக் கொண்டுவந்தேன். இதில் பல்வேறு நூல் தொகுப்புகளைப்பற்றிய விவரங்களை உடன் இணைத்துத் தரலானேன். 1900 ஆண்டுவரை வந்த தமிழ்நூல் விவரங்களையும் உடன் இணைத்தேன். எனவே, இந்த இரண்டாம் பதிப்புச் சென்ற நூற்றாண்டுவரை அச்சான தமிழ்நூல் விவரங்களை அறியக் கருவி நூலாயிற்று.

தமிழ் வளர்ச்சித் துறை 1867-ல் முதல் அச்சான தமிழ் நூல்களுக்கு விவர அட்டவணைகள் தொகுத்துப் பல தொகுதிகளாக வெளியிட்டு வருகின்றது. இத் தொகுதிகளின் வாயிலாக நூல்கள்பற்றியும் நூலாசிரியர்பற்றியும் பலவகை இலக்கிய இலக்கண வரலாற்றுச் செய்திகள் குறித்தும் அரிய பல செய்திகள் தெரியவருகின்றன. இலக்கிய வரலாற்று ஆய்வாளருக்கு இவை மிகவும் பயனுடையன ஆகும்.

நம் பாரதநாடு விடுதலை பெற்றபின் பல்வேறு துறைகளிலும் புத்தெழுச்சியும் புத்தாக்கங்களும் மலர்வதாயின. பாரதநாட்டு மொழிகள் உயிர்பெற்று எழலாயின.

**கலைச்சொல் அகராதிகள்**

மொழிவழி நாட்டுப் பிரிவினைமூலம் அந்தந்த மொழிபேசும் மக்கள் வாழும் நிலப்பரப்புகள் எல்லைகோலப்பட்டன. நாட்டு மொழிகளை வளப்படுத்த ஒவ்வொரு மொழியாளரும் முற்படலாயினர்.

தமிழ்நாட்டிலே 'எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்' என்னும் கொள்கை வரவர வளர்ந்து வளம்பெற்றுக் கொண்டிருக்கிறது. கல்விநிலையங்களிலும் ஆட்சிமுறையிலும் தமிழ் தனக்குரிய சிறப்பிடத்தை அடையலாயிற்று. நீதிமன்றங்களிலும் அரியணை வீற்றிருக்கத் தமிழன்னை புகுந்துவிட்டாள். இந்நிலையில் ஒவ்வொரு துறைக்கும் வேண்டிய தமிழ்ச்சொற் கருவூலங்களைத் தொகுத்துப் போற்றும் முனைப்புத் தோன்றலாயிற்று.

அறிவியல் முதலிய கலைகளையும் தமிழில் பயிற்றுவிக்கலாயினர். அப்பொழுது கலைகளுக்கு ஏற்புடைய சொல்லாக்கங்களைத் தொகுத்து வெளியிட அரசு ஆவன செய்து வந்துள்ளது. இதன் விளைவாகக் கலைச்சொல் லகராதிகள் பல்வேறு துறைகளுக்கும் தனித்தனி ஆக்கப்பெற்றன.

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் 1971-ல் வேதியியல், பொருளாதாரம், உளவியல், விலங்கியல், அரசியல், வரலாறு, புள்ளியியல், கணிதம், இயற்பியல், வாணிகவியல், தாவரவியல் ஆகிய துறைகளுக்குரிய கலைச்சொல் தொகுதிகளையும் 1973-ல் புவியியல், பொறியியல், தொழில்நுட்பவியல், வேதியியல் ஆகிய துறைகளுக்குரிய அகராதிகளையும் தனித்தனி வெளியிட்டுப் பரப்பியுள்ளது. பள்ளிகளுக்கான பாடநூல்களோடு கல்லூரிகளுக்கும் பயன்படத்தக்க பற்பல நூல்களையும் வெளியிட்டுப் பெரும்பணி புரிந்துவருகின்றது.

தமிழக அரசு தமிழ்ச் சுருக்கெழுத்து அகராதி, ஆட்சிச்சொல் லகராதி, சட்டச்சொல் அகராதி என்னும் முப்பெருந் தொகுப்புகளை வெளியிட்டு ஆட்சித் துறையினருக்குப் பயன்பட வழங்கியுள்ளது. வேளாண்மைப் பல்கலைக்கழகம் வேளாண்மைத் தொடர்பான சொல்லகராதிகளை வெளியிட்டுள்ளது. பொறியியல், மருத்துவவியல் போன்ற அறிவியல் துறைக்கான சொற்களும் அவ்வத்துறை வாயிலாகவும் துறை வல்லுநர்களாலும் தொகுத்துப் பயன்படுத்தும் நிலை தோன்றி வளர்ந்துவருகிறது. முத்தமிழாயிருந்துவந்த நம் முன்னைத் தமிழ் இன்று பல்வேறு கலைத் துறைகளிலும் அறிவுத்துறைகளிலும் வளம்பெற்று வருவதால் தமிழ்ச்சொற் கருவூலம் மிகமிக நாள்தோறும் பெருகி வந்து கொண்டே யிருக்கிறது.

தமிழ்ச்சொற்களின் மூலங்களை ஆராய்ந்து விளக்கம் தரும் அகராதி முயற்சிகளும் தோன்றியதுண்டு. யாழ்ப்பாணம் எஸ். ஞானப்பிரகாசம் பாதிரியார் 'சொற்பிறப்பு ஒப்பியல் தமிழ் அகராதி' ஒன்றை ஆக்க முனைந்தார். அகரவருக்கத்தில் சில சொற்களுக்கு மாதிரிப்படிவம் ஒன்றையும் அச்சிட்டு (1939) வெளியிட்டார். ஆனால், இவர் முயற்சி வளர்ச்சியுறாது நின்று போயிற்று. இதே வகையில் வேறு சிலர் தொடங்கிய முயற்சியும் உருப்பெறவில்லை. பேராசிரியர் பரோவும் எமனோவும் சேர்ந்து ஆக்கிய **திராவிடமொழிச் சொற்பிறப்பகராதி** இங்குக் குறிப்பிடத்தக்கது.

**சொற்பிறப்பு அகராதி**

தமிழ்ச்சொல் மூலங்காண்பதில் முனைந்துநின்றவர் **ஞா. தேவநேயப் பாவாணராவார்.** இவர் வேர்ச்சொற்கள் பற்றிய கட்டுரைகளும் நூல்களும் வெளியிட்டுள்ளார். இவர் தலைமையில் அரசாங்கம் அமைத்த 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி' ஆக்கம் அவர் காலத்திற்குப் பின்பும் நடந்துவருகிறது. அதில் முதற்பகுதி வெளிவந்துள்ளது.

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி**

தமிழ்-ஆங்கில அகராதிகளும் சில உள. இந்த வகையில் போப்புப் பாதிரியார் 1859-ல் வெளியிட்ட அகராதி 'Pope's Compendious Tamil-English Dictionary' முதலாவதாகக்

குறிப்பிடத்தக்கது. அதன்பின் 1870-ல் விசுவநாதபிள்ளை இவ்வகையில் 'Classical Tamil-English Dictionary', என்னும் ஒரு பெரிய அகராதியை உருவாக்கி வெளியிட்டுள்ளார்.

**தமிழ்-ஆங்கில, ஆங்கிலத்-தமிழ் அகராதிகள்**

'பிராஞ்சகராதி' என்பது இரு தொகுதிகளாக 1984-ல் மறுபதிப்பாக வெளிவந்துள்ளது. ஆங்கில-தமிழ்ச் சிற்றகராதிகள் பல வந்துள்ளன. டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியாரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட ஆங்கில-தமிழ் அகராதி ஒரு பேரகராதியாகும். இது சுருக்க ஆக்சுபோர்டு ஆங்கில அகராதியை ஒட்டி அமைக்கப்பெற்றது. 1223 பக்கங்கள்கொண்ட இந்த அகராதியை 1963-ல் தொடங்கி 1965-ல் முற்றுவித்தது ஒரு பெருஞ்சாதனையாகும்.

**தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்**

இதுவரை சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் தோன்றிய அகரமுதலிகளின் வரலாறுகளையும் அவற்றின் தன்மை, பயன்பாடு முதலியவற்றையும் பார்த்தோம். இனி, அண்மையில் உருவாகி இப்பொழுது வெளியிடப்பெறுகின்ற **தமிழ்-தமிழ் அகரமுதலி** தோன்றி வளர்ந்து நிறைவு எய்திய பின்புல வரலாற்றை நோக்குவோம்.

தொடக்க காலத்தில் தமிழக அரசின் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் ஒரு பணியாக நூல் வெளியீடு தொடங்கியது. பின்னர்ப் பள்ளிகள் கல்லூரிகளுக்கான பாடநூல் தேவைகளை நிறைவேற்றும் பெரும்பணி சாரவே, அதனின்றும் கிளைத்துப் பாடநூல் நிறுவனம் தோற்றுவிக்கப்பெற்றது. பள்ளிகள் கல்லூரிகளுக்கான பாடநூல்களையும் பொதுமக்கள் பயில்வதற்கான தரமான கலை, அறிவியல் நூல்களையும் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகின்றது. பள்ளி கல்லூரிகளில் பயில்வார்க்கும் தாமே முயன்று கற்பார்க்கும் துணைநிற்கும் வகையில் **தமிழ்-தமிழ் அகரமுதலி** ஒன்றைத் தொகுப்பித்து வெளியிட இந் நிறுவனம் அவாக் கொண்டது.

**தமிழ்-தமிழ் அகரமுதலியின் தோற்றம்**

மாண்புமிகு நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் கல்வி அமைச்சராயும், பேராசிரியர் சு. ந. சொக்கலிங்கம் அவர்கள் மேலாண்மை இயக்குநராயும், திரு பா. மாணிக்கம் அவர்கள் செயலாளராயும் இருந்த காலத்திலே 1975-ல் இந்தத் தமிழ்-தமிழ் அகரமுதலிக்கு வித்திடப் பெற்றது. இதனை ஆக்குவதற்கு ஊக்க மளித்து ஆணை பிறப்பித்த நாவலர் அவர்களுக்கும் செயற்படுத்திய ஏனையோர்க்கும் என் நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**அகரமுதலியின் தொகுப்புப் பணி**

தமிழ் வளர்ச்சித் துறையில் வெளியிடத் தொடங்கிய காலமுதல் பல்லாண்டுகளாகப் பல நூல்களைப் பதிப்பித்து வந்ததோடு தமிழ்நூல் விவர அட்டவணைக்கான திட்டமிட்டுப் பல தொகுதிகளையும் நான் உருவாக்கி வெளிப்படுத்தியதைத் தமிழ் வளர்ச்சித் துறையினர் நன்கு அறிவர். பாடநூல் நிறுவன வெளியீடுகள் பலவற்றின் பதிப் பாசிரியனாயும், ஒன்பது பத்தாம் வகுப்புகளுக்கான பாடநூல் தொகுப்பாசிரியனாயும், தொடக்கப்பள்ளி நூல்களுக்கு மேலாய் வாளனாயும் பல பணிகளில் நிறுவனத்தோடு தொடர்பு கொண்டிருந்தேன்; மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை, பேராசிரியர் அ. கி. பரந்தாமனார் முதலியோருடன் சில நிறுவன ஆய்வுக்குழுக்களில் பணிசெய்யும் வாய்ப்பும் பெற்றிருந்தேன். என் பணி நேர்மையை நன்கு அறிந்திருந்த தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் செயற்குழு, அகரமுதலி தொகுக்கும் பணியினை எனக்கு அளித்தது. நிறுவனத்தின் செயற் குழுவுக்கு நான் பெரிதும் கடப்பாடுடையேன்.

எனக்குத் துணையாக இரண்டு பதிப்பாசிரியர்களையும் அலுவலக உதவியாளர் ஒருவரையும் அமர்த்திக்கொண்டு அகரமுதலிப் பணியை ஓராண்டிற்குள் நிறைவேற்றித் தருமாறு 15-2-1975-ல் ஆணை பிறப்பித்தனர். அப்பொழுது நான் சென்னைப் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆராய்ச்சித் துறைக்குத் தலைவனாயிருந்தமையால் பல்கலைக்கழகத்தாரின் இசைவினையும் பெற்றேன். என் பிற பணிகளுக்கிடையில் அகரமுதலித் தொகுப்பினையும் கவனித்து ஆவன செய்துவரலானேன்.

சென்னையிலே மேலை மாம்பலத்தில் உள்ள என் இல்லமாகிய 'கவிமணி நிலைய'த்தில் என் நூலகப் படிப்பறையை அலுவலக அறையாகவும் அமைத்துக்கொண்டேன். முதுகலைப் பட்டம் பெற்றவர்களாகிய திரு. சிவ. பச்சையப்பன் என்பவரும் திரு. அ. நாகலிங்கம் என்பவரும் பதிப்பாசிரியர்களாக அமைந்தனர். திருமதி கலையரசி அலுவலகப் பணிகளை-குறிப்பாக எழுத்துப்பணி ஒப்புநோக்கும் பணி களைச் செய்துவரலானார். பாடநூல் நிறுவனப் பதிப்பாசிரியர் நிறுவனச் சார்பில் அவ்வப்போது அகரமுதலிப் பணியைக் கண்காணித்து வந்ததோடு அதனை நெறிப்படுத்தி ஆக்குதற்கும் உறுதுணையாயிருந்தார்.

**அலுவலகம்**

அகரமுதலிப் பணிக்காக முன்னர் வெளிவந்த சதுரகராதி தொடக்கமான பல பேரகராதிகளையும் சிற்றகராதிகளையும், மாணவர்க்கு என வெளிவந்த கையகராதி முதலியவற்றையும் ஒருங்குதிரட்டி வைத்துக்கொண்டேன். இவற்றுள் விலைக்குக் கிட்டிய நூல்களை வாங்கியும் பிறவற்றை நண்பர்களிட மிருந்து பெற்றும் நிரப்பிக்கொண்டேன். மாணவர்க்காக நிறுவனம் வெளியிட்ட பாடநூல்களையும் கலைச்சொற்கள் போன்ற சிறு வெளி யீடுகளையும் சேர்த்து வைத்துக்கொண்டேன்.

**கருவிநூல்கள் தொகுத்தல்**

அகரமுதலிக்கான அமைப்புத் திட்டம் ஒன்றை வகுத்தமைத்து நிறுவனத்தின் ஒப்புதலையும் பெற்றேன். இத் தொகுப்பிற்கென வரையறுத்துக்கொண்ட விதிமுறைகள் வருமாறு: இத் தொகுப்பில் பொதுவகையான எல்லார்க்கும் பயன் படத்தக்க சொற்களே எடுக்கப்பெற்றன. இலக்கிய இலக்கண வழக்குச் சொற்களும் எல்லாத் துறைகளுக்கும் பயன்படத்தக்க பொதுமைச் சொற்களும் எடுத்துக்கொள்ளப்பெற்றன.

**அமைப்புத் திட்டம்**

இன்றைய வழக்குச் சொற்களுள் பல வெளிப்படையாய் எல்லார்க்கும் பொருள் விளங்கும் எனக் கருதப்படினும் தமிழ்ப் பயிற்சியில் தொடக்கநிலையில் உள்ளார்க்கும், கல்விபயிலும் மாணவர்க்கும், பிறமொழியாளர்க்கும் அவை அறிமுகமில்லாத சொற்களா யிருக்கும். எனவே, இயற்சொற்களுள்ளும் இன்றைய எளிய செஞ்சொல் வழக்குகளும் சேர்த்துக்கொள்ளப்பெற்றன.

கொச்சைச் சொற்களாகிய திருந்தாப் பேச்சும் சிதைவுச் சொற்களும் மாணவர் உள்ளத்தில் புகாமல் தடுத்தால்தான் உண்மைச் சொல்லுருவம் காண்பதில் ஊக்கம் கொள்வர். எனவே, இதில் கொச்சைப் பேச்சு, சிதைவுச் சொற்கள் ஆகியவை எடுத்துக்கொள்ளப் பெறவில்லை.

வினைச்சொற்கள் முந்திய அகரமுதலிகளிற்போலவே தொழிற்பெயர் வடிவிலேயே தரப்பெற்றுள்ளன. வினையும் பெயருமாய்ப் பொருள்பயக்கும் சொல் வடிவங்களும் பல உண்டு. அத்தகு இடங்களில் பெயர்ச்சொற் பொருளை முன்வைத்து அடுத்து வினைப் பொருள் காட்ட அச் சொல்லினை அடுத்து வளைவுக் குறிக்குள் (வி) என்னும் குறிப்புத் தந்து தனிப்பட விளக்கம் தரப்பட்டுள்ளது.

வினைவடிவ வேறுபாடுகள் எல்லாம் எடுத்துக்கொள்ளப்பெறவில்லை. என்றாலும் பயன்பாடு கருதி ஒருசில எச்சவினை முதலியன எடுத்துக்கொள்ளப்பெற்றன.

தமிழில் பயின்றுவந்துள்ள வடசொற்களுள் இலக்கிய ஆட்சி பெற்றனவும் இன்றைய வழக்கில் தமிழுருவில் மாறி வழங்குவனவுமான சொற்கள் எடுத்தாளப்பட்டுள்ளன.

நூற்பெயர், ஆசிரியர் பெயர், காவிய மாந்தர் பெயர், ஊர்ப்பெயர் முதலிய இடப் பெயர்கள் போல்வனவாகிய சிறப்புப் பெயர்கள் சேர்க்கப்படவில்லை.

ஆயினும் காரணவகையால் வந்து சொற்பொருள் விளக்கவேண்டும் நிலையில் உள்ள 'அகத்தியம்' போன்ற சில சிறப்புப் பெயர்கள் மட்டும் தேர்ந்துகொள்ளப்பட்டன. 'அகத்தியம்' என்பது அவசியம், இன்றியமையாதது என்னும் பொருளில் வரும் ஒரு பெயர். இதுவே அகத்தியரால் இயற்றப்பெற்ற நூலுக்குப் பெயராகவும் அமைகிறது. இவ்வாறு பொதுப் பெயராயும் சிறப்புப் பெயராயும் வரும் பெயர்கள் எடுத்துக்கொள்ளப்பட்டன.

சிறப்புப் பெயர்களுள் வேறுவேறு ஏதுக்களால் பெயர்பெறும் காரணப்பெயர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டன. காகுத்தன், பற்குனன், மைதிலி போன்றவற்றை வடமொழியில் 'தத்திதாந்த நாமம்' என்பர்.

அன்றியும் குறுகி வழங்கும் மரூஉ வழக்கான சில சிறப்புப் பெயர்களும் சேர்க்கப் பெற்றன. 'மயிலை' என்பது மயிலாப்பூரைக் குறிக்கும். 'முகவை' என்பது இராமநாத புரத்திற்குரிய மாற்றுப் பெயர். இவைபோல்வனவும் தழுவப்பெற்றன.

நிகண்டு ஆட்சி மட்டுமேயுடைய சொற்கள் நீக்கப்பெற்றன.

கலைச்சொற்களுள் இன்றியமையாத பொதுச்சொற்கள் ஏற்றுக்கொள்ளப்பெற்றன. கலைச்சொற்போலவே ஏற்புடைய புத்தாக்கச் சொற்களும் எடுத்துக்கொள்ளப்பெற்றன.

தொகைப்பெயர்கள் பெருவழக்குடைய இருசுடர், முத்தீ என்றாற்போல்வன சேர்த்துக் கொள்ளப்பெற்றன.

தனிப்பொருள் சுட்டும் தொடர்மொழிகளும் இணைக்கப்பட்டுள்ளன.

கைலை – கயிலை, வைத்தியன் – வயித்தியன் என்பவற்றுள் ஐகாரமும் அகரமும் ஒத்திருக்கின்றன. நிலம் – நிலன், அறம் – அறன், பந்தல் – பந்தர், கொம்பு – கொம்பர் போல்வனவான வடிவ வேறுபாடுகளும் கருதப்பெற்றன. இவைபோன்றே உணா–உண–உணவு; நிலா–நில–நிலவு; முழா–முழ–முழவு என ஆகார ஈற்றுச் சொல்லின் வடிவ வேற்றுமையும் உரிய இடங்களில் சுட்டப்பெற்றன.

இவ்வாறாகச் சொற்களைத் தேர்ந்தெடுப்பதில் மிகு கவனம் செலுத்தப்பெற்றது. தமிழ் லெக்சிகனில்போல அகரவரிசையில் மெய் முன்னும் உயிர்மெய் பின்னுமாக வரும் வரிசைமுறை தழுவப்பட்டுள்ளது.

ஒவ்வொரு சொல்லுக்கும் உரிய பொருள்கள் தனித்தனி சீட்டுகளில் பதிவு செய்யப் பெற்றன.

**செய்ம்முறை**

தமிழ் பயில்வார் அனைவர்க்கும் பள்ளியிற் பயிலும் மாணவர் தொடக்கமாகப் பல்கலை பயிலும் முதுகலை மாணவர், ஆசிரியர் முதலியோர்க்கெல்லாம் இது பயன்படத்தக்க வண்ணம் உருவாக்குவதை முதன்மை நோக்கமாகக்கொண்டது ஆதலின், பாடப்புத்தகங்களிலிருந்தே சொல் தொகுப்புத் தொடங்கப் பெற்றது. தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுள்ள தமிழ்ப் பாடநூல்களில் தரப்பெற்ற அருஞ்சொற்கள் முதலில் எடுத்துக்கொள்ளப்பெற்றன.

அடுத்து மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் பயன்படும் வகையில் வெளிவந்த சிற்றகராதிகளுள் எட்டுத் தெரிந்துகொள்ளப்பெற்றன. அவையாவன: அகராதிச்சுருக்கம், இளைஞர் தமிழ்க் கையகராதி, தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி, கழகத்தமிழ்க் கையகராதி, மாணவர் தமிழகராதி, நவீன தமிழகராதி, கழகத் தமிழகராதி, கோனார் தமிழ்க் கையகராதி என்பன. இந்த அகராதிகளுள் ஒவ்வொன்றையும் முறையே எடுத்து ஏற்கெனவே எழுதப்பெற்றிராத சொற்கள், புதிய பொருள்கள் ஆகியவை இணைத்துக்கொள்ளப் பெற்றன. இவ்வாறாக இந்த அகராதிகளில் இடம்பெற்ற சொற்பொருள்கள் அனைத்தும் எடுத்து எழுதிக்கொள்ளப்பெற்றன.

தமிழ்–தமிழ் அகராதிகளுள் மிகப் பெரியது யாழ்ப்பாணம் கு. நீதிபதி கதிரைவேற் பிள்ளை தொகுத்த தமிழ்ச்சங்க அகராதி எனப்படும் தமிழ்ச் சொல்லகராதி. இதனினும் பெரிதாக உள்ள இருமொழித் தமிழ்ப் பேரகராதி சென்னைப் பல்கலைக்கழக வெளியீடான தமிழ் லெக்சிகன். இவ்விரு பேரகராதிகளையும் உடன்வைத்து ஏற்கெனவே தொகுத்து அமைத்த சொற்பொருள்களைச் சரிபார்த்துச் செப்பம் செய்தும், அவற்றில் இடம்பெறாத இன்றைய வழக்கிற்கேற்பப் பயனுடைய புதிய சொற்பொருள்களை இணைத்தும் இந்த அகராதி உருவாக்கப்பெற்றது.

இதுகாறும் வெளிவந்துள்ள அகராதிகள் பலவற்றையும் நோக்கினால் அவை ஒவ்வொன்றும் அவ்வக் காலத் தமிழின் வளர்நிலையைப் படம்பிடித்துக் காட்டும்;

தமிழறிஞர்களின் உளப்பாங்கையும் உணர்த்தும். அவ்வகையில் இந்த இருபதாம் நூற்றாண்டின் இறுதிக் காற்பகுதியில் எழுந்துள்ள இந்த அகரமுதலியும் இக்காலத் தமிழ் வளர்ச்சியைக் குறிக்கோளாகக்கொண்டு தொகுக்கப்பெற்றுள்ளது. அறிஞர் பெருமக்களின் கருத்துகளையும் அவர்தம் நோக்கையும் போக்கையும் அடியொற்றி இந்தத் தமிழ்-தமிழ் அகரமுதலி ஆக்கப்பெற்றுள்ளது.

இந்த அகரமுதலியைத் தொகுப்பதற்கு ஓர் ஆண்டுக்காலமே ஒதுக்கப்பெற்றது. எனினும், பணி வளர்ந்துவந்த நிலையில் அந்தக் கால அளவு போதவில்லை. பின்னர் ஆறுமாதமும், அடுத்து நான்கு மாதமும் வேண்டிப்பெற்று ஓராண்டு பத்துத் திங்களில் இப் பணியினை நிறைவு செய்தேன்.

**பணிக்காலமும் அகரமுதலி வளர்ச்சியும்**

பணியின் முன்னேற்றம் குறித்து மூன்று மாதங்களுக்கு ஒருமுறை அறிக்கைகளும் அனுப்பிவைக்கப்பெற்றன. நிறுவனப் பதிப்பாசிரியர் அவ்வப்போது அகரமுதலியின் வளர் நிலையைக் கண்காணித்து நிறுவனத்திற்கு விவரம் அறிவித்துவந்தார். கடைசியாகப் பணி முன்னேற்றத்தை முற்றுமாய்க் கவனித்துப் பார்த்து ஆய்வு செய்வதற்காக அப்பொழுது தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநராயிருந்த திரு. கொண்டல் சு. மகாதேவன் அவர்கள் நிறுவனத்தாரால் கேட்டுக் கொள்ளப்பெற்றார். திரு. மகாதேவன் அவர்கள் 29-11-76-ல் நேரில் வந்து பார்த்துப் பணிநிலை வளர்ச்சிகளை ஆராய்ந்து தம் பரிந்துரையை நிறுவனத்திற்குத் தந்தார். 'அ' முதல் 'வெள' வரையிலான அகரமுதலியின் 3092 பக்கங்களில் அமைந்த கையெழுத்துப்படியை 31 தொகுதிகளாக அமைத்து 30-12-1976-ல் நிறுவனத்தில் ஒப்படைத்தேன்.

**மேலாய்வுக்குழு**

அகரமுதலிப்படிகளை ஒப்படைத்தும் மூன்று ஆண்டுகளுக்குமேல் அப்படியே இருந்து வந்தது. திரு. குழந்தைவேல் அவர்கள் மேலாண்மை இயக்குநராய் வந்தபின் அகராதிப் படிகளை ஆராய்வதற்கு மேலாய்வுக் குழு ஒன்றை அமைத்தனர். இக் குழுவில் பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன், பேராசிரியர் அ. மு. பரம சிவானந்தம், தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் கொண்டல் சு. மகாதேவன் மூவரும் இடம்பெற்றனர். இவர்கள் அகராதிப் படிகளைப் பார்வையிட்டு ஆராய்ந்து ஒருசில மாற்றங்களையும் திருத்தங்களையும் செய்யவேண்டும் என்று பரிந்துரைத்தனர். அவ்வாறே முற்றுமாய் மறு ஆய்வுசெய்து குழுவின்முன் மீண்டும் வைத்தேன். அதன்பின் அகரமுதலியைக் கூர்ந்து ஆராய்வதற்காக நான்கு முறைகளுக்குமேல் கூடினர். ஒவ்வொரு முறையும் நான்கைந்து நாள்கள் தொடர்ந்து குழுக்கூட்டம் நடைபெற்றது. யானும் உடனிருந்து குழுவினர் எழுப்பிய வினாக்கள், ஐயப்பாடுகள் முதலியவற்றிற்கு விளக்கம் தந்தும் திருத்தங்களை முறைப்படி அமைத்தும் வந்தேன். குழுவினர் பக்கம் பக்கமாய்ப் பார்வையிட்டு முற்றுவித்தனர். அதன்பின்பே அகரமுதலியின் அச்சுப்பணி தொடங்கப் பெற்றது.

**அகரமுதலியின் அச்சுப்பணி**

அகரமுதலியின் அச்சுப்பணி நிறுவனப் படி-பதிப்பாசிரியர் மேற்பார்வையில் நடைபெற லாயிற்று. நான் வெளியூர்களில் பணி ஏற்று வந்துள்ளதால் சென்னையிலே பறங்கிமலையில் உள்ள பகத் அச்சுக்கூடத்தில் நடைபெறத் தொடங்கிய அச்சுப்பணியை உடனிருந்து கவனிக்க இயலாததாயிற்று. இதற்கெனப் புலவர் சா. சங்கரலிங்கம் அவர்களைப் பகுதிநேரப் படிதிருத்துநராக அமர்த்தி அச்சுப்படி பார்க்கச்செய்தனர். அவர் பார்த்தபின் ஒவ்வொரு நிலையிலும் முற்றுமாய் மீண்டும் ஆழ்ந்து பார்வையிட்டுப் படி-பதிப்பாசிரியர் அவர்கள் இதனை அழகுற அச்சிடுவித்தார்கள். இவர்களுடைய தமிழ்க் காதலும் பற்றும் அகரமுதலியைச் செப்பமுறப் பதிப்பிக்கப் பெருந்துணையாயின. இவர்களுடைய பணி பெரிதும் பாராட்டுக்குரியது.

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிடும் இந்தத் தமிழ்-தமிழ் அகரமுதலி 1016 பக்கங்களில் அமைந்த ஒரு பேரகராதியாகவே ஆயிற்று. இதன்கண் 64,048 சொற்கள் இடம்பெற்றுள்ளன.

எழுத்து வருக்க அடிப்படையில் சொல்தொகை பின்வருமாறு :

| | | |
|---|---|---|
| அ | வருக்கம் | 4678 |
| ஆ | ,, | 2019 |
| இ | ,, | 2921 |
| ஈ | ,, | 223 |
| உ | ,, | 2160 |
| ஊ | ,, | 399 |
| எ | ,, | 1014 |
| ஏ | ,, | 544 |
| ஐ | ,, | 174 |
| ஒ | ,, | 655 |
| ஓ | ,, | 324 |
| ஔ | ,, | 33 |
| ஃ | ,, | 1 |
| க | ,, | 10749 |
| ங | ,, | 3 |
| ச | ,, | 7538 |
| ஞ | ,, | 180 |
| த | ,, | 6545 |
| ந | ,, | 4253 |
| ப | ,, | 8336 |
| ம | ,, | 5743 |
| ய | ,, | 321 |
| ர | ,, | 6 |
| வ | ,, | 5229 |
| | | 64,048 |

**சொல் – பொருள் அமைப்பு முறை**

சொற்களின் அகரநிரலில் இரண்டாம் எழுத்தில் உயிர்மெய்க்கு முன் மெய்வரும் முறையே தழுவப்பட்டிருக்கிறது. தலைச்சொற்கள் தடித்த எழுத்தில் தரப்பட்டுள்ளன. தொடர்ந்து இணைப்புக் குறி (–) இட்டுப் பொருள்விளக்கம் அமைக்கப்பட்டுள்ளது.

பொருள் வரையறுக்கும்போது கூடியவரையில் சொற்களுக்குரிய நேர்பொருள், தொடர்புபொருள், கருத்துப்பொருள் என்னும் வகையில் அடைவு செய்யப்பட்டுள்ளன.

பொருள்விளக்கம் சுருக்கமாயும் விளக்கமாயும் அமையவும் சொல்லின் உண்மையுருவைப் புலப்படுத்தவும் வளைவுக் குறிகளுக்குள் அவை கொடுக்கப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாக, 'அ' என்பது அஃறிணைப் பன்மை விகுதியாகவும், வியங்கோள் விகுதியாகவும், எச்ச விகுதியாகவும் வரும் இயல்பினது. இதனை விளக்க, விகுதி (அஃறிணைப் பன்மை, வியங்கோள், எச்சம்) எனக் காட்டப்பட்டிருத்தல் காணலாம்.

கூட்டுச்சொல் தொடரின் பொருள்நிலை விளங்கத் தலைச்சொல்லை அடுத்து, அத் தொடரினைப் பிரித்துக் காட்டுதலும் உண்டு. எடுத்துக்காட்டு: அஃதான்று (அஃது – அன்று), அஃறிணை (அல் – திணை) போல்வன காண்க:

ஒருபொருள் தரும் சொல்வடிவங்கள் அகரவரிசையில் அடுத்தடுத்து வரும்பொழுது இணைப்பு வளைவுக் குறியீட்டால் சேர்த்துக்காட்டி, அவற்றிற்கு ஒருசேரப் பொருள்விளக்கம் அமைக்கப்பட்டுள்ளது.

(எ-டு) **அக்காரடலை, அக்காரவடிசில்** } – சருக்கரைப்பொங்கல்.

**ஆலமர்கடவுள், ஆலமர்செல்வன்** } – கல்லால மரத்தின்கீழ்த் தென்முகக் கடவுளாய் வீற்றிருக்கும் சிவன்.

**இடக்கரடக்கல், இடக்கரடக்கு** } – பலர்முன் கூறத்தகாத சொற்களை மறைத்துக்கூறல்.

**உயிரளபு, உயிரளபெடை** } – தனக்குரிய மாத்திரையின் மிக்கொலிக்கும் நெட்டுயிரெழுத்து.

ஒருபொருள் குறித்த வடிவ வேறுபாடுடைய சொற்கள் அகரவரிசை முறையில் வெவ்வேறிடங்களில் அமைதல் இயல்பு. இவ்வகையான பொருள் தொடர்புடைய சொற்களுள் முதல் மூலச்சொல்லுக்கு மட்டும் பொருள் தரப்பட்டிருக்கும். ஏனைய மாற்று வடிவங்களைத் தரும்போது அவற்றின் பொருளுக்கு முதற்சொல்லைக் 'காண்க' என்று குறிப்பிடப்பட்டிருக்கும்.

(எ-டு) **அச்சாரம்** — காண்க: **அச்சகாரம்.**

**அல்லம்** — காண்க: **இஞ்சி.**

**ஆட்டாங்கள்ளி** — காண்க: **திருகுகள்ளி.**

**உருவங்காட்டி** — காண்க: **உருக்காட்டி.**

ஓரெழுத்தால் வடிவம் வேறுபடும் ஒருபொருள் குறித்த சொற்கள் வரும்போது அகர வரிசையில் மாற்றெழுத்து வளைவுக்குறிக்குள் தரப்பட்டிருக்கும். இதனால் வேற்றெழுத்து மாற்றமுடைய தனி வடிவத்தைச் சுருக்கிக் காட்டும் தன்மை காணப்படுகிறது.

(எ-டு) **அங்கி(கீ)காரம்,**

**அடைக்கலக்(ங்)குருவி,**

**அமிர்(ழ்)து,**

**காண்டி(டீ)ப(வ)ம்**

போல்வன காண்க. இதனால் அடுத்தடுத்து ஓரெழுத்து மாற்றச் சொல்வடிவம் தரப்படுதல் தவிர்க்கப்படுகிறது. 'காண்க:' என்று அடுத்தடுத்து எடுத்துக்காட்டும் நிலைமையும் தவிர்க்கப்படுகிறது.

பொருள் உரைக்குமிடத்து ஒரு தலைச்சொல் குறைச்சொல்லாயின் அதன் முழுவடிவமும் முதலில் தந்து, பின் பொருள் விளக்கப்பட்டிருத்தலும் உண்டு. (எ-டு) **அக்களிப்பு** – அகக் களிப்பு, மனமகிழ்ச்சி.

ஆண் பெண் வேறுபாட்டை விளக்கிக்காட்ட அவ்விருபால் விகுதிகளும் உடன் இட்டுக் காட்டப்பெறுகின்றன. (எ-டு) செருக்குள்ளவன்(ள்).

வினைச்சொற்கள் ஏனைய அகராதிகளிற்போலத் தொழிற்பெயர் வடிவிலேயே தரப் பட்டிருக்கின்றன. வினையடியாய் வரும் ஒரு சொல்லும் அதே வடிவமுடைய பெயரும் தனித்தனி சொற்களாகக் காட்டப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக அடி என்பது பாதம், காற்சுவடு, முதல், கடவுள் என்று இவ்வாறு பலபொருள் தரும் பெயர்ச்சொல். இப் பெயர்ச்சொல்லை அடுத்து அடி என்னும் வினைப்பகுதித் தலைச்சொல் வரும்போது சொல்லின்பின் (வி) என்பது வினை என்பதனைக் குறிப்பதற்காக வளைவுக் குறிக்குள் தந்து இனம்பிரித்துக் காட்டப்பட்டுள்ளன.

பொருள்விளக்கப் பகுதியில் தரப்பெறும் குறியீடுகளும் அவ் விளக்கங்களுக்கு ஏற்பக் கொடுக்கப்பட்டுள்ளன. ஒரு சொல்லுக்குரிய வெவ்வேறு பொருள்கள் அரைப்புள்ளியிட்டுக் காட்டப்பட்டுள்ளன. ஒரு பொருளை விளக்க மேலும் அதே பொருளுடைய வேறு எளிய சொல் தரும்பொழுது **காற்புள்ளி** தரப்பெற்றிருக்கும்.

(எ-டு) **அக்கச்சி** – அக்காள், தமக்கை.

**அக்கரன்** – அறிவில்லாதவன்; எங்கும் நிறைபொருள், கடவுள்.

ஒரு பொருளின் விரிவு அல்லது விளக்கம் காட்ட முக்காற்புள்ளி தரப்பட்டிருக்கும்.

(எ-டு) **இமையவல்லி** – காண்க: **இமையவதி.**

**உகாய்** – காண்க: **உகா.**

ஒவ்வொரு தலைச்சொல்லின் பொருளும் முற்றுப்பெறும் இடத்தில் முற்றுப்புள்ளி பெறும்.

அகரமுதலியில் ஒவ்வொரு பக்கமும் இரண்டு பத்தியாக அமைக்கப்பட்டு அகரநிரலில் தலைச்சொற்களும் அவற்றின் பொருள்களும் காட்டப்பட்டுள்ளன. அவ்வப் பக்கத்தில் வரும் முதற் பத்தியின் தொடக்கத் தலைச்சொல்லும் இரண்டாம் பத்தியின் இறுதித் தலைச் சொல்லும் அவ்வப் பத்தியின் மேல் உள்ள கோட்டின் மேலாகத் தலைப்புப்போலத் தரப்பட்டிருக்கும். இவற்றால் குறித்ததொரு பக்கத்தில் எது முதல் எது வரையில் உள்ள சொற்கள் அடங்கியுள்ளன என்பது பயன்படுத்துவாருக்கு எளிதில் தென்பட வாய்ப்பாக உள்ளது. பக்க எண், முதல்-இறுதிச் சொற்குறிப்புகளின் மையமாகத் தரப்பட்டிருக்கிறது.

சென்னைத் தமிழ்ப் பேரகராதியில் பிழைபடத் தந்த பொருள்களுள் சில திருத்தமுற இதில் அமைக்கப்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக, **பிண்டம்** என்பதற்கு எட்டாவது பொருளாக, 'சூத்திரம், இயல், ஒத்து என்ற மூன்றுறுப்புக்கொண்ட நூல்' என்பது காணப் படுகிறது. இங்கே இயல், ஒத்து என்னும் இரண்டும் ஒரு பொருளனவே. 'சூத்திரம், ஒத்து, படலம் என்னும் மூன்றுறுப்புக்கொண்ட நூல்' என்று இவ் வகரமுதலி முந்தையோர் இலக்கண மரபையொட்டித் தந்துள்ளது.

மேலும், பேரகராதியில் இடம்பெறாத பல புதுச் சொற்களும் இவ் வகரமுதலியில் சேர்க்கப்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக ஊதாம்பை, ஏருந்து, கதிகால், நேர்காணல், பரிந்துரை, பேருந்து, போருந்து, மார்க்சியம், விளத்தம் போல்வன குறிப்பிடத்தக்கன.

நாம் ஒரு நூலைப் படித்துவரும்பொழுது விளங்காப் பொருட்பகுதிகள் தென்பட்டால் தக்கவர்களை அடுத்து விளக்கம் பெற்றுக்கொள்ளுகிறோம். அங்ஙனமே தொடர்ப்பொருள் சொற்பொருள்களையும் நாம் கற்றுவல்லார் வழியாகப் பொருள் விளக்கம் பெறுகிறோம். இப்படித் தெரியாத சொற்பொருள்களுக் காக எப்பொழுதும் அறிந்த ஒருவரை நாடிச்செல்ல வேண்டுவதில்லை. எண்ணியஉடனேயே பொருள் சொல்லக்கூடிய கருவிநூல்கள் பலவாகத் தமிழில் உள்ளன. அவைதாம் நிகண்டுகளும் அகராதிகளும் ஆகும். இவைபற்றிய வரலாறு களை முற்பகுதியில் பார்த்தோம்.

**அகரமுதலியின் பயன்**

தெரியாத சொற்பொருளை மேலே காட்டிய நூல்களால் எளிதில் தெரிந்து கொள்ளலாம். நிகண்டுகள், கற்றுவல்ல புலவர்களாலேயே பயன்படுத்தத்தக்க அமைப் புடையன. ஆனால், அகரமுதலிகளோ எல்லோராலும் எளிதில் பார்த்துப் பயன்பெறத்தக்க அமைப்புடையன. சொற்கள் எல்லாம் அகரநிரலில் அமைத்துப் பொருள் தரப்பட்டிருப்பதால் அகரமுதலிகளில் நாம் கருதிய சொற்பொருள்களை எளிதில் கண்டுகொள்ளலாம்.

அகராதி பார்ப்பதற்குத் தமிழ் எழுத்துவரிசை முறையைத் தெரிந்துகொள்ளுதல் இன்றியமையாததாகும். ஆங்கில மொழியில் உள்ள 26 எழுத்துகளும் சொல்லுக்கு முதலில் வருதலை யாவரும் அறிவர்.

நம் தமிழ்மொழியில் அப்படியன்று. உயிர், மெய், உயிர்மெய், ஆய்தம் உட்பட 247 எழுத்துகள் தமிழில் உள்ளன. இந்த எழுத்துகளனைத்தும் சொல்லுக்கு முதலாக வருதல்

இல்லை. நூற்றைந்து எழுத்துகளே சொல்லுக்கு முதலாக வரும் ஆற்றல் பெற்றன. எனவே, நூற்றைந்து எழுத்துகளைக் கொண்ட சொற்களே தமிழ் அகரமுதலிகளில் காணப்பெறும். மொழிமுதலில் வரும் 105 எழுத்துகளைப் பின்வரும் அட்டவணையால் எளிதில் கண்டு கொள்ளலாம்.

## மொழிக்கு முதலில் வரும் எழுத்துகள் : 105

**உயிர் எழுத்து : 12**

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ | 12 |

**உயிர்மெய் எழுத்து : 93**

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ | 12 |
| 2. | ங | | | | | | | | | | | | 1 |
| 3. | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ | 12 |
| 4. | ஞ | ஞா | ஞி | | | | ஞெ | ஞே | | ஞொ | | | 6 |
| 5. | ட | | | | | | | | | | | | 0 |
| 6. | ண | | | | | | | | | | | | 0 |
| 7. | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ | 12 |
| 8. | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ | 12 |
| 9. | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ | 12 |
| 10. | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ | 12 |
| 11. | ய | யா | | | யு | யூ | | | | | யோ | யௌ | 6 |
| 12. | ர | | | | | | | | | | | | 0 |
| 13. | ல | | | | | | | | | | | | 0 |
| 14. | வ | வா | வி | வீ | | | வெ | வே | வை | | | வௌ | 8 |
| 15. | ழ | | | | | | | | | | | | 0 |
| 16. | ள | | | | | | | | | | | | 0 |
| 17. | ற | | | | | | | | | | | | 0 |
| 18. | ன | | | | | | | | | | | | 0 |

மொழிக்கு முதலாக வரும் 105 எழுத்துகளின் வரிசைமுறையில் அகராதிச் சொற்கள் இடம்பெறினும் ஒரு சொல்லில் பின்வரும் எழுத்துகளிலும் அகரநிரல் முறைகொண்டு அவை முறைப்படுத்தப்பெறும். அகரவரிசையை எடுத்துக்கொண்டால் அகரத்தின் பின் ககரம் முதல் னகரம் ஈறான 18 மெய்வருக்க எழுத்துகளும் வரும். இவை ககரம் முதலிலும் னகரம் ஈற்றிலும் அமையுமாறு எழுத்து வரிசை முறையில் அடைவு செய்யப்பெற்றிருக்கும்.

இரண்டாம் எழுத்தாகக் ககர வருக்கம் முதல் னகர வருக்கம் வரை மெய்யும் உயிர்மெய்யும் வருதல் இயல்பு. இவற்றுள் எதனை முதலில் வைப்பது என்பதனையும் கவனித்தல் வேண்டும். சதுரகராதி முதல் சென்ற நூற்றாண்டில் வந்த அகராதிகள் எல்லாம் உயிர்மெய்யை முதலில்கொண்டு மெய்யை ஈற்றில் அமைத்து வந்துள்ளன. தமிழ்ச்சங்க அகராதி எனப்படும் தமிழ்ச் சொல்லகராதி என்னும் பேரகராதியை ஆக்கிய நீதிபதி கு. கதிரைவேற்பிள்ளை இரண்டாம் எழுத்தாக முந்திய அகராதிகள் கொண்ட முறையை விடுத்து, மெய் முன்னாகவும் உயிர்மெய் பின்னாகவும் அமையுமாறு முறைப்படுத்தினார். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வழிகாட்டிய இவர்தம் அகரநிரல் முறையையே இந்த நூற்றாண்டில் வந்த அகராதிகள் பலவும் பின்பற்றலாயின. சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்ட தமிழ்ப் பேரகராதி கதிரைவேற்பிள்ளை முறையைப் பின்பற்றியது.

பெரும் பேராசிரியர்களாக விளங்கிய டாக்டர் உ. வே. சாமிநாதையர், பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளை முதலியோரும் இம் முறையையே பின்பற்றித் தாம் பதிப்பித்த நூல்களில் அகரநிரல் அமைத்துள்ளனர். இந்தத் தமிழ்-தமிழ் அகரமுதலியிலும் இரண்டாம் எழுத்தில் மெய் முன்னாக உயிர்மெய் பின்னாக வரும் முறைமையே தழுவப்பட்டுள்ளது.

இரண்டாம் எழுத்து மட்டுமன்று; அதன்பின் தொடரும் எழுத்துகளிலும் மூன்று, நான்கு, ஐந்தாம் எழுத்துவரையிலுங்கூட அகரநிரல் முறைப்படி சொற்கள் அடுக்கப் பெற்றிருக்கும். எடுத்துக்காட்டாக அருள், அருள்வாக்கு, அருள்(ளு)தல், அருளகம், அருளம், அருளரசி, அருளல், அருளவம், அருளறம், அருளாழி, அருளாழிவேந்தன், அருளிச்செயல், அருளிப்பாடு எனவரும் சொற்கோவையை உற்றுநோக்கின் மேற்குறித்த அகரநிரல்முறை விளக்கமாகும்.

நாம் விரும்பும் சொற்களை எளிதில் பார்த்தறிவதற்காகவே அகராதியின் ஒவ்வொரு பக்கத்திலுமுள்ள இரண்டு பத்தியின் தலைப்பிலும் இரண்டு சொற்கள் தரப்பட்டிருக்கும். முதற்பத்தியின் தலைப்பில் இருப்பது தலைமொழி அல்லது முடிமொழி எனப்படும். அது அப் பத்தியின் தொடக்கமாக அமையும் சொல்லாகும். இரண்டாம் பத்தியின் தலைப்பில் இருப்பது கடைமொழி அல்லது வால்மொழி எனப்படும். இது இரண்டாம் பத்தியின் இறுதிச் சொல்லாக இருக்கும். தலைமொழிக்கும் கடைமொழிக்கும் இடையே அவற்றிற்குட்பட்ட அகரவரிசைச் சொற்கள் இடம்பெற்றிருக்கும். எடுத்துக்காட்டாக, 'உருவத்திருமேனி' என்பது தலைமொழியாகவும் 'உரைகோள்' என்பது கடைமொழியாகவும் இத் தமிழ்-தமிழ் அகரமுதலியின் 168ஆம் பக்கத்தில் வருவது காண்க. அவ் விரண்டிற்கும் இடைப்பட்டுத் தரப்பட்டுள்ள அகரநிரல் சொற்களையும் நோக்கி அகரவரிசையின் முறைவைப்பைக் காணலாம். உருவம், உருவாணி, உருவொளி, உருளரிசி, உருளை, உரை, உரைகல் முதலிய சொற்களைக் காணவேண்டுமாயின் இவ் விரண்டு தலை கடைமொழிகளைக் கொண்ட பக்கத்தில் எளிதில் காணலாம் என்பதனை அறிதல் வேண்டும்.

மேலும், எழுத்து வேறுபாடுகளைக் கருதியும் அகரநிரல் பார்க்கவேண்டிய இடங்களும் உள. இதுகுறித்துத் தமிழாசிரியர் சே. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் தெரிவிக்கும் கருத்துரை வருமாறு :

> ''அருஞ்சொற்பொருள் தேடுகையில் ரகர றகர பேதத்தையும், லகர ளகர பேதத்தையும், ணகர னகர பேதத்தையும், குறில் நெடில் பேதத்தையும், பெயர் வினை பேதத்தையும் அறிதல் மிகவும் அவசியம். உதாரணமாக இறை என்னுஞ் சொற்பொருள் தேடுகையில் இரை என்னுஞ் சொற்கும் பொருள் தேடவேண்டும்; தாள் என்னும் மொழிக்குப் பொருள் பார்க்கையில் தால் என்னும் பதத்திற்கும் பொருள் பார்க்க வேண்டும்; தெண் என்னும் வார்த்தைக்குப் பொருள் பார்க்கையில் தென் என்னும் பதத்திற்கும் பொருள் பார்க்கவேண்டும். களை என்னும் மொழிக்குப் பொருள் பார்க்கையில் காளை என்னும் பதத்திற்கும் பொருள் பார்க்கவேண்டும். இம் முறைப்படி அகராதி பார்த்தாற்றான் அகராதி பார்த்தலால் எய்தவேண்டிய பயனை எய்தலாம்.''

(தமிழ் வியாசம், பக். 148)

இவர்கள் கூறுமாறு அகரமுதலியில் தொடர்புடைய சொற்களையும் பொருள்களையும் பார்த்துவந்தால் மொழியறிவு பெருகும்; பிழையின்றி எழுதும் ஆற்றல் மிகும். ஒருவர் தம்முடைய பேச்சிலும் எழுத்திலும் ஏற்புடைய சிறப்பான சொற்களைப் பயன்படுத்துவதற்கு இத்தகு அகரமுதலிப் பயிற்சி கைகொடுத்து உதவும். ஆகவே, மாணவர் முதல் ஆசிரியர் ஈறாக மொழித்திறம் பெற விழைவார்க்கு எல்லாம் கைகொடுத்து உதவும் அருந்துணைவனாக அகரமுதலிகள் விளங்குகின்றமை காணலாம். தமிழ்க் கல்வியில் மேன்மைபெற விரும்புவார் எல்லார்க்கும் இந்தத் தமிழ்-தமிழ் அகரமுதலி உற்ற துணையாய் உதவும் என நம்புகிறேன்.

அகரமுதலிப் பெரும்பணியை அறிவாற்றல்களில் எளியனாகிய யான் தொகுத்து நிறைவு செய்யத் துணைநின்றவை சான்றோர்களின் அருள்நோக்கும் எனக்குப் பயிற்சி அளித்த பேராசிரியப் பெருமக்களின் வாழ்த்துமேயாகும். இப் பெரியார்களை இங்கு நினைவுகூர்ந்து

இம் முகவுரையை முற்றுவிப்பது எனது கடமையாகும். இளமையிலே, 'தமிழ் படிக்கச் செல் முன்னுக்கு வருவாய்' என்று அருள்நோக்குடன் ஆசிவழங்கிய கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் எனக்கு எப்பொழுதும் தெய்வமாகவே காட்சிதருபவர்களாவார்.

நன்றியுரை

திருவையாற்று அரசர் கல்லூரியில் எனக்குத் தமிழறிவுறுத்திய பேராசிரியர் பெருமக்கள் பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார், கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம் பிள்ளை, ச. சோமசுந்தர தேசிகர், ரா. புருடோத்தம நாயுடு, இ. கோவிந்தசாமிப்பிள்ளை, சுந்தரராகவாச்சாரியார் ஆகியோர் இன்று மறைந்து தெய்வமாகிவிட்டார்கள். இவர்களையெல்லாம் என் நெஞ்சாரப் பணிந்து போற்றுகிறேன்.

தமிழ் வித்துவான் தேர்வில் மாநிலத்தில் முதலாவது இடத்தைப் பெற்ற என்னை—தமிழகத்தின் தென்குமரியெல்லையை அடுத்திருந்த என்னை — சென்னைமாநகருக்கு அன்போடு அழைத்தவர் பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளை யவர்களாவார். 'உன் கல்வியும் பணியும் சென்னையில் அமைதல் நன்றாயிருக்கும்' என்று அவர்கள் அறிவித்த வுடனேயே 1941ஆம் ஆண்டு சென்னையை நோக்கி வந்தேன். நான் அந் நகரில் ஆசிரியப் பணி பெறவும் அவர்கள் உதவினார்கள். தாம் பணிபுரிந்த சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையிலேயே இரண்டு ஆண்டுகள் ஆராய்ச்சி மாணவனாக ஏற்றுப் பயிற்சி தந்தார்கள். சென்னை வந்த நாள்முதல் அவர்களின் இறுதிக்காலம் வரையில் அவர்களின் நிழலோடு நிழலாய்ச் சார்ந்து வாழும் பேறுபெற்றேன். இதனால் பதிப்புத்துறையிலும் அகரமுதலி ஆக்கப் பணிகளிலும் பயிற்சி பெறலானேன்; தமிழ்ப் பெரியார்களையும் அறிஞர் பலரையும் தெரிந்து பழகும் வாய்ப்பும் பெற்றேன். பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளையவர்களின் கீழிருந்து நான் பெற்ற பயிற்சியே அவர்கள் காலத்திற்குப் பிறகும் அவர்கள் வழியைப் பின்பற்றிப் பற்பல தமிழ்ப்பணிகளைச் செய்ய ஊக்குவித்தது. பேராசிரியர் அவர்களுக்கு நான் எழுமையும் நன்றிக் கடப்பாடுடையேன்.

தமிழ்-தமிழ் அகரமுதலியின் தொகுப்பாசிரியனாக என்னைத் தேர்ந்தெடுத்த தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனச் செயற்குழுவிற்கு என் நன்றியும் வணக்கமும் உரியனவாகுக.

அகராதியின் ஆக்கத்திற்கு உடனிருந்து உதவிய துணைவர்கள் திரு. சிவ. பச்சையப்பன், எம்.ஏ., டாக்டர் அ. நாகலிங்கம், திருமதி கலையரசி நாகலிங்கம் ஆகியோருக்கு நன்றி தெரிவிப்பது ஒருபாலாக, இளைஞர்களாகிய இவர்கள் நல்வாழ்வு பெற வாழ்த்துகிறேன்.

அகரமுதலியின் மேலாய்வுக் குழுவினராய் அமர்ந்து எனக்கு ஊக்கம் தந்து நெறிப் படுத்திச் செம்மையாக அமைக்கத் துணைபுரிந்த பேராசிரியப் பெருமக்கள் மூவரையும் அடுத்து நினைவுகூர்தல் முறையாகும். பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன், பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம், பேராசிரியர் கொண்டல் சு. மகாதேவன் ஆகியோருக்கு என் உளமார்ந்த நன்றியையும் வணக்கத்தையும் செலுத்திக்கொள்கிறேன்.

அகரமுதலியின் வளர்ச்சியில் எனக்குக் கைகொடுத்து நல்ல பல கருத்துகளை நல்கி உதவிய நிறுவனப் பதிப்பாசிரியர் அவர்களுக்குப் பெரிதும் நன்றிக் கடப்பாடுடையேன்.

மாண்புமிகு அமைச்சர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் வித்திட்ட இந்த அகரமுதலி இன்று கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் காலத்தில் நிறைவுறுகிறது. மேலாண்மை இயக்குநர்களாக இருந்த பேராசிரியர் சு. ந. சொக்கலிங்கம் அவர்கள் காலத்தில் இப் பணி தொடங்கப்பெற்று, திரு. குழந்தைவேல் அவர்கள் காலத்தில் மேலாய்வு செய்யப்பெற்றுச் செம்மையுற்று, தத்துவமேதை டி. கே. சீனிவாசன் அவர்கள் காலத்தில் அச்சுப்பணி தொடங்கப்பெற்று, திருமதி ஈ. வெ. கி. சுலோசனா சம்பத் அவர்கள் காலத்தில் நிறைவுபெற்று வெளிவருகிறது.

அகரமுதலியின் அச்சுப்பணியைச் சென்னை, ஆலந்தூரிலுள்ள பகத் அச்சுக்கூடத்தார் அழகுற அச்சிட்டுள்ளமை பெரிதும் பாராட்டுக்குரியது.

இவ்வாறாக இந்த அகரமுதலி வெளிவரப் பல்லாற்றானும் துணைநின்ற பெரு மக்களுக்கு எல்லாம் உளமார்ந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*
*தஞ்சாவூர்,*
*1—5—84*

**மு. சண்முகம் பிள்ளை**

# தமிழ் - தமிழ் அகரமுதலி

## அ



**அ** – தமிழ் எழுத்துகளுள் முதல் உயிர் எழுத்து; சுட்டெழுத்து; விகுதி (அஃறிணைப் பன்மை, வியங்கோள், எச்சம்); ஆறாம் வேற்றுமைப் பன்மை உருபு; சாரியை; எட்டு என்னும் எண்ணின் குறி; எதிர்மறை இடைச்சொல்; அழகு; கடவுள் (சிவன், திருமால், பிரமன்).

**அஆ** – விட்டிசைச்சொல்; வியப்புக் குறிப்பு; இரக்கக் குறிப்பு.

**அஃகம்** – தானியம்; விலைப்பொருள்; ஊறுநீர்; முறைமை.

**அஃகரம்** – வெள்ளெருக்கு.

**அஃகல்** – காண்க: **அஃகுதல்**.

**அஃகாமை** – குறையாமை; சுருங்காமை.

**அஃகான்** – 'அ' என்னும் முதல் எழுத்து (அ-கான், கான் எழுத்துச்சாரியை).

**அஃகு** – ஊறுநீர்.

**அஃகுதல்** – குறைதல்; சுருங்குதல்; நுணுகுதல்; குவிதல்; நெருங்குதல்; வற்றுதல்; கழிதல்.

**அஃகுல்லி** – உக்காரி என்னும் சிற்றுண்டி; பிட்டு.

**அஃகுள்** – காண்க: **அக்குள்**.

**அஃகேனம்** – ஆய்த எழுத்து, மூன்று புள்ளி (ஃ) வடிவினது; முள்ளில்லாப் பன்றி.

**அஃதான்று** – (அஃது-அன்று) அதுவுமன்றி.

**அஃது** – அஃறிணை ஒருமைச்சுட்டு; அது; அப்படி.

**அஃதை** – அகதி, கதியிலி, திக்கற்றவர், ஆதரவில்லாதவர்.

**அஃபோதம்** – நிலாமுகிப்புள், சகோரம்; புறா.

**அஃறிணை** – (அல்-திணை) உயர்திணையல்லாதவை; பகுத்தறிவற்ற உயிர்களும் உயிரற்றனவும்; மக்கள், தேவர், நரகர் அல்லாத மற்றப் பொருள்கள்.

**அக்கக்காய்** – துண்டுதுண்டாய்.

**அக்கச்சி** – அக்காள், தமக்கை.

**அக்கசாலை** – கம்மியர் தொழிற்சாலை, உலோக வேலை செய்யும் களம், அணிகலன் ஆக்குமிடம்; கம்பட்டசாலை, நாணயச்சாலை.

**அக்கசாலையர்** – கம்மியர், தட்டார்.

**அக்கட** – அவ்விடம்.

**அக்கடா** – ஓய்வைக் குறிக்கும் ஓர் இடைச்சொல்; எதுபற்றியும் கவலையில்லாமை; வியப்புக் குறிப்பு.

**அக்கடி** – அலைவு; பயணத்தொல்லை.

**அக்கணா** – தான்றிமரம்.

**அக்கதம், அக்கதை** – காண்க: **அட்சதை**.

**அக்கந்து** – தூற்றுகையில் தானியங்களின் பக்கத்தில் திரளும் பதர்.

**அக்கப்பறை** – அலைந்து திரிகை.

**அக்கப்பாடு** – நிலையழிவு; குழப்பம், அல்லோல கல்லோலம்; பொருள் அழிவு; மரக்கல அழிவு.

**அக்கப்போர்** – அலப்புதல்; வம்புப்பேச்சு; கலகம்.

**அக்கம்** – தானியம்; பொன்; கண்; உருத்திராக்கம்; பாம்பு; கயிறு; பக்கம்.

**அக்கம்பக்கம்** – அண்டை அயல்; முன்னும் பின்னும்; அண்மைச் சூழல்.

**அக்கமணி** – உருத்திராக்கமணி.

**அக்கமாலை, அக்கவடம்** – உருத்திராக்கமாலை, செபமாலை.

**அக்கர(ரா)காரம்** – மருந்துவேர், மருந்துப்பூண்டு.

**அக்கரம்** – எழுத்து; அழியாதது; மாமரம்; வெள்ளெருக்கு; வாய்நோய்.

**அக்கரன்** – அழிவில்லாதவன்; எங்கும் நிறை பொருள், கடவுள்.

**அக்கரை** – எதிர்க்கரை, நீர்நிலையின் மறுகரை.

**அக்கரைச்சீமை** – கடல் கடந்த நாடு.

**அக்கரைப்பச்சை** – பொய்த்தோற்றம்.

**அக்களிப்பு** – அகக்களிப்பு, மனமகிழ்ச்சி.

**அக்கறை** – ஈடுபாடு; கருத்து, கவனம்.

**அக்கன்** – தமக்கை; கருடன்; பிறவிக்குருடன்; நாய்.

**அக்கா(ள்)** – தமக்கை, முன்பிறந்தாள்; மூதேவி.

**அக்காணி** – பருவுடல்.

**அக்காத்தான்** – தான்றிமரம்.

**அக்காரடலை, அக்காரவடிசில்** – சருக்கரைப் பொங்கல்வகை.

**அக்காரம்** – சருக்கரை; வெல்லம்; கரும்பு; சீலை; மாமரம்.

**அக்காரை** – ஒருவகைச் சிற்றுண்டி.
**அக்கானி** – பதநீர்.
**அக்கி** – அக்கினி; வெப்பு; அக்கினிக்கரப்பான் என்னும் நோய்; கொப்புளம்; பூச்சி வகையுள் ஒன்று; கண்; தேர்.
**அக்கிக்கல்** – மாணிக்கத்துள் ஒன்று; படிகவகையுள் ஒன்று.
**அக்கிச்சூர், அக்கிப்படலம்** – கண்நோய்.
**அக்கியாதம்** – காண்க: **அஞ்ஞாதம்.**
**அக்கியாதவாசம்** – காண்க: **அஞ்ஞாதவாசம்.**
**அக்கியானம்** – காண்க: **அஞ்ஞானம்.**
**அக்கியெழுதுதல்** – அக்கிப்புண் ஆறும்பொருட்டுச் செங்காவிக் கல்லாலான குழம்பினால் சிங்கம் நாய் போன்ற உருவங்களை எழுதுதல்.
**அக்கிரகண்ணியன்** – அவையில் முதல்வனாக மதிக்கத்தக்கவன்.
**அக்கிரகாரம்** – பார்ப்பனர் கூடிவாழும் இடம்.
**அக்கிரசந்தானி** – உயிர்களின் நன்மை தீமைகள் எழுதிவைக்கப்படும் எமனுடைய குறிப்பேடு.
**அக்கிரசம்பாவனை** – முதல் மரியாதை; முதல் வரவேற்பு.
**அக்கிரதாம்பூலம்** – முதல் தாம்பூலம்.
**அக்கிரபூசனை, அக்கிரபூசை** – முதலில் செய்யும் வழிபாடு.
**அக்கிரசன், அக்கிரசன்மன்** – முதலில் பிறந்தோன், மூத்த தமையன்.
**அக்கிரம்** – நுனி; உச்சி; முதன்மை; தொடக்கம்.
**அக்கிரமம்** – முறையின்மை, வரம்புமீறிய செய்கை; ஒழுங்கின்மை; கொடுமை.
**அக்கிராசனம்** – அவைத்தலைமை.
**அக்கிலிப்பிக்கிலி** – குழப்பம்.
**அக்கினி** – தீ; தீக்கடவுள்; செங்கொடிவேலி; நவச்சாரம்; மூத்திரம்; வெடியுப்பு.
**அக்கினிக்கட்டு** – நெருப்புச் சுடாமல் செய்யும் வித்தை.
**அக்கினிக்கருப்பன்** – நெருப்பிலிருந்து தோன்றியவன், முருகன்.
**அக்கினிகாரியம்** – ஓமத்தீ வளர்த்துச் செய்யும் சடங்கு.
**அக்கினிகோணம்** – தென்கிழக்கு மூலை.
**அக்கினிகோத்திரம்** – நாள்தோறும் செய்யும் தீவேள்வி.
**அக்கினிசகன், அக்கினிசகாயன்** – அக்கினி நண்பன், காற்று.
**அக்கினிசாந்தி** – வேள்வி, ஓமம்.
**அக்கினிட்டி** – நெருப்பிடு கலம்.
**அக்கினிட்டோமம்** – சோமவேள்வி; தேவர் பொருட்டுச் சோமரசம் அளிக்கும் வேள்வி வகை.
**அக்கினித்தம்பனம்** – நெருப்புச்சுடாமல் செய்யும் வித்தை.
**அக்கினித்திராவகம்** – தீப் போலப் பட்ட இடத்தை வேகச் செய்யும் ஒருவகை நீர்மப் பொருள், நைட்ரிக் அமிலம்.
**அக்கினிதிசை** – தென்கிழக்கு.
**அக்கினிதேவன்** – தீக் கடவுள்.
**அக்கினிநட்சத்திரம், அக்கினிநாள்** – கார்த்திகை நட்சத்திரம்; சித்திரை வைகாசி மாதங்களில் வெப்பம்மிகுந்த காலப் பகுதி.
**அக்கினிப்பிரவேசம்** – தீப்பாய்தல்; உடன்கட்டையேறுதல்.
**அக்கினிப்பிழம்பு** – நெருப்புச்சுடர், தீக்கொழுந்து, தீத்திரள்.
**அக்கினிபாதை** – தீயால் விளையும் கேடு.
**அக்கினிமணி** – காண்க: **சூரியகாந்தக்கல்.**
**அக்கினிமரம்** – காட்டுப்பலா.
**அக்கினிமாந்தம்** – ஒருவகை நோய்.
**அக்கினிமுகம்** – சேங்கொட்டை.
**அக்கினிமூலை** – காண்க: **அக்கினிதிசை.**
**அக்கீம்** – முகம்மதிய மருத்துவன்.
**அக்கு** – எலும்பு; சங்குமணி; எருதின் திமில்; பலகறை; கண்; உருத்திராக்கம்; உரிமை; எட்டிமரம்.
**அக்குசை** – சமணக் கைம்பெண் துறவி.
**அக்குத்தொக்கு** – ஒட்டுப்பற்று, தொடர்பு.
**அக்குதார்** – உரிமையாளன்.
**அக்குரு** – விரல்; கைந்நுனி.
**அக்குரோணி** – பெரும்படையின் ஒரு கூறு; 21,870 தேரும், 21,870 யானையும், 65,610 குதிரையும், 1,09,350 காலாளும் கொண்ட படைத் தொகுப்பு.
**அக்குல்லி** – காண்க: **அஃகுல்லி.**
**அக்குவடம்** – சங்குமணிமாலை.
**அக்குள்** – கக்கம், கமுக்கட்டு, தோளின் பொருத்து உள்ளிடம்.
**அக்குளு** – அக்குள்; கூச்சம்.
**அக்குளுத்தல்** – கூச்சமுண்டாக்குதல்.
**அக்கை** – காண்க: **அக்கா(ள்).**
**அக்கோ** – வியப்பு இரக்கச் சொல்.
**அக்கோடம்** – கடுக்காய்.
**அக்கோலம்** – தேற்றாங்கொட்டை.
**அகக்கண்** – உள்ளறிவு; ஞானம்.
**அகக்கரணம்** – உள்ளம், மனம்.
**அகக்களி** – மனமகிழ்ச்சி.
**அகக்காழ்** – மரத்தின் உள்வயிரம்; ஆண்மரம்.
**அகக்கூத்து** – முக்குணம் சார்ந்த நடிப்பு.
**அகங்கரித்தல்** – செருக்குக்கொள்ளுதல்.
**அகங்கரிப்பு** – செருக்கு, அகங்காரம்.

**அகங்காரக்கிரந்தி** – ஆணவமறைப்பு; தத்துவங்களைத் தான் எனக் கொள்ளும் உயிரின் தொடர்பு.

**அகங்காரம்** – 'நான்' என்னும் செருக்கு, ஆணவம்; உட்கரணம் நான்கனுள் ஒன்று.

**அகங்காரி** – செருக்குள்ளவன்(ள்).

**அகங்காழ்** – காண்க: **அகக்காழ்.**

**அகங்கை** – (அகம்-கை) உள்ளங்கை.

**அகச்சமயம்** – சைவசமயத்தின் உட்பிரிவுகள்; அவை: பாடாணவாத சைவம், பேதவாத சைவம், சிவசமவாத சைவம், சிவசங்கிராந்தவாத சைவம், ஈசுர அவிகாரவாத சைவம், சிவாத்துவித சைவம்.

**அகச்சுட்டு** – சொல்லின் முதனிலையாய்ப் பிரிவின்றி இணைந்து நிற்கும் சுட்டு.

**அகச்சுவை** – அகப்பொருள் நெறிக்குரிய சுவை; சத்துவம் முதலிய முக்குணம் வெளிப்பட நடிக்கும் நடிப்பு.

**அகசன்** – கேது என்னும் கோள்.

**அகசியம்** – ஏளனச்சிரிப்பு; வேடிக்கை; பகடி.

**அகசு** – பொழுது; பகல்; இராப்பகல் கொண்ட நாள்.

**அகசை** – மலையில் பிறந்தவள், பார்வதி.

**அகடச்சக்கரம்** – வயிற்றைச் சுற்றிக் கட்டும் உதரபந்தனம் என்னும் அணி, இடுப்பணி, அரைப்பட்டிகை; கொடுங்கோல் மன்னன்.

**அகடம், அகடியம்** – பொல்லாங்கு; அநீதி; கபடம்.

**அகடவிகடம்** – சிரிக்கவைக்கும் பேச்சு; வேடிக்கை; தட்டுமாற்று; இரண்டகம்; வஞ்சகம்; தந்திரம்.

**அகடிதகடனாசாமர்த்தியம்** – செய்யக்கூடாதனவற்றைச் செய்விக்கும் வன்மை.

**அகடிதம்** – நிறைவேற்றற்கரியது.

**அகடு** – உள்; வயிறு; நடு; மேடு; நடுவுநிலை; பொல்லாங்கு.

**அகடூரி** – வயிற்றால் ஊர்ந்து செல்வது, பாம்பு.

**அகண்** – அண்மை, பக்கம்.

**அகண்டபரிபூரணம்** – எங்கும் நிறைந்திருக்கை; வேறுபாடின்றி எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருள்.

**அகண்டம், அகண்டிதம்** – துண்டிக்கப்படாதது; பிளவுபடாதது; முழுமை, முழுப்பொருள்; பெரிய அகல்விளக்கு; கடவுள்.

**அகண்டதீபம்** – எப்பொழுதும் எரியும் விளக்கு, நந்தாவிளக்கு.

**அகண்டாகண்டன்** – பரம்பொருள்; எதற்கும் அஞ்சாதவன்.

**அகண்டாகாரஞானம்** – முற்றறிவு.

**அகண்டாகாரம்** – அளவுபடாத வடிவம், பெருவடிவம்; பெருவெளி.

**அகண்டி** – ஓர் இசைக்கருவி.

**அகண்டிதன்** – பிளவுபடா இயல்பினன்; முழுமையன், கடவுள்.

**அகணி** – உள்; உட்பட்டது; நம்பத்தக்க நட்பினர்; தெங்கு, பனை முதலியவற்றின் மட்டைகளின் அகவாயிலிருந்து உரிக்கும் நார்; வயல்; மருதநிலம்.

**அகணிப்பாய்** – மூங்கிலாலான பாய்.

**அகத்தடிமை** – இறைவன் அருகிலிருந்து செய்யும் அணுக்கத் தொண்டு; வீட்டுப் பணியாளர்.

**அகத்தடியாள்** – வீட்டு வேலைக்காரி.

**அகத்தமிழ்** – அகத்திணைபற்றிய இலக்கியம்.

**அகத்தாழம்** – மாலைப்பொழுது.

**அகத்தான்** – உள்ளிடத்தில் இருப்பவன்; மனத்தில் தங்கி இருப்பவன்; இல்வாழ்வான்; உறவினன்; முற்றுகைக்குட்பட்டவன்; மதில் காத்து உள்ளிருப்பவன்.

**அகத்திடுதல்** – செருகுதல்; உள்ளிடுதல்; கையால் உள்ளணைத்தல்.

**அகத்திணை** – அகவொழுக்கம், உள்ளொழுக்கம்; கணவன் மனைவியரிடையே உள்ளத்தே நிகழும் இன்பவொழுக்கம்; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப்படும் ஐந்திணை ஒழுக்கம்.

**அகத்திணைப்புறம்** – இன்ப வாழ்க்கைக்கு மாறுபட்டது; கைக்கிளை பெருந்திணை ஒழுக்கங்கள்.

**அகத்தியம்** – கட்டாயம்; அகத்தியர் செய்த ஓர் இலக்கண நூல்.

**அகத்தியல்** – உள்ளத்து இயற்கை, மனப்பாங்கு.

**அகத்திருத்துவம்**—செயலின்றி நிற்கும் கடவுள் தன்மை.

**அகத்தீடு** – உள்ளீடு; எண்ணம்; அன்பு; கையால் உள்ளணைக்கை; உள்ளடக்குதல்.

**அகத்துரைப்போன்** – கடவுள்; மனச்சாட்சி.

**அகத்துவங்கொள்ளுதல்** – அடிப்படைக்காகத் தோண்டுதல்.

**அகத்துழிஞை** – கோட்டையின் அகத்து உள்ளாரைப் புறத்தார் வெல்லும் புறத்துறை.

**அகத்தொண்டர்** – வீட்டுப்பணிபுரிவோர்.

**அகத்தோர்** – உள்ளிருப்போர்; ஊரார்; ஒத்த உள்ளத்தராம் நண்பர்.

**அகததாரன்** – மருத்துவன்.

**அகதம்** – அழிவற்றது; குளிகை; மருந்து; இன்பம்.

**அகதன்** – நோயிலி.

**அகதி** – போக்கற்றவன், கதியிலி; வறியவன்; தில்லைமரம்; வேலமரம்.

**அகதேசி** – உள்ளூரிலுள்ளவன்; உள்நாட்டுப் பிச்சைவாங்கி.

**அகந்தை** – காண்க: **அகங்காரம்.**

**அகநகர்** – கோட்டைக்குள் அடங்கிய நகரப் பகுதி; அந்தப்புரம்.

**அகநகை** – உட்சிரிப்பு; இகழ்ச்சிச் சிரிப்பு.

**அகநாடக உரு** – அகக்கூத்திற்குரிய இசைப் பாட்டு வகை; அவை: கந்தம் முதல் பிரபந்தம் ஈறாக இருபத்தெட்டு.

**அகநாடு** – உள்நாடு; மருதம்.

**அகநாழிகை** – கருவறை, உண்ணாழிகை.

**அகநிலை** – உட்பட்டநிலை; உள்ள நிலை; உள் நகர்; ஊர்; நால்வகைத் தலைமைப் பண்களுள் ஒன்று.

**அகப்பகை** – உட்பகை.

**அகப்பட்டி** – சிறுதீங்கு செய்வோன்; காவலின்றித் திரிவோன்.

**அகப்படுதல்** – உட்படுதல்; பிடிக்கப்படுதல்; சிக்கிக்கொள்ளுதல்; கிட்டுதல்.

**அகப்படை** – அணுக்கப்படை, மூலப்படை.

**அகப்பணி** – மனச்சிந்தனை; வீட்டுவேலை.

**அகப்பத்தியம்** – மனவடக்கம்; இணைவிழைச்சு இல்லாமை.

**அகப்பரம்** – வீட்டைச் சார்ந்த மேடை; திண்ணை, வேதிகை.

**அகப்பரிசாரம், அகப்பரிவாரம்** – வீட்டுவேலைக்காரர்; அரண்மனைப் பணியாளர்.

**அகப்பற்று** – 'நான்' என்னும் உளப்பற்று; மனவிருப்பு.

**அகப்பா** – கோட்டை உள்மதில்; மதிலுள் மேடை; அகழி; அகத்திணைப் பாட்டு.

**அகப்பாட்டண்மையன்** – மனமொத்த நண்பன்; பிடிபடுந்தொலைவில் உள்ளவன்.

**அகப்பாட்டு** – அகப்பொருள் பற்றிய பாட்டு; அகநானூறு என்னும் நூல்.

**அகப்பாட்டுவண்ணம்** – இறுதியடி முற்றுப் பெறாது இடையடி போன்று வரும் சந்தம்.

**அகப்பாட்டுறுப்பு** – அகப்பொருட் பாடல்களுக்குரிய பன்னிரண்டு உறுப்புகள்; அவை: திணை, கைகோள், கூற்று, கேட்போர், இடம், காலம், பயன், முன்னம், மெய்ப்பாடு, எச்சம், பொருள்வகை, துறை.

**அகப்பாடு** – உள்நிகழ்ச்சி; நெருங்கியிருக்கை.

**அகப்பு** – ஆழம்; தாழ்வுப்பகுதி; படுகுழி.

**அகப்புறக்கைக்கிளை** – காமம் நிரம்பாத இளமையோளை ஒருவன் அடுத்து அவளுடைய குறிப்பறியாது மேலும் மேலும் பேசுவது.

**அகப்புறச்சமயம்** – சைவசித்தாந்தத்திற்குப் புறம்பான மதங்கள்; அவை: பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கியவாத சைவம்.

**அகப்புறத்தலைவன்** – கைக்கிளை, பெருந்திணை ஒழுக்கங்களுக்குரிய தலைவன்.

**அகப்புறத்திணை** – காண்க: **அகத்திணைப்புறம்.**

**அகப்புறமுழவு** – மத்திமமான வாத்தியம்; எழுவகை முழவுகளுள் ஒன்று. அது தண்ணுமை, தக்கை, தகுணிச்சம் முதலாகப் பலவகைப் படும்.

**அகப்பூ** – உள்ளத்தாமரை; மனமகிழ்ச்சி.

**அகப்பூசை** – உள்ளத்தால் நினைந்து வழிபடுகை.

**அகப்பை** – குழிந்த கரண்டி, சட்டுவம்.

**அகப்பைக்கணை** – அகப்பையின் காம்பு, அகப்பைப் பிடி.

**அகப்பைக்குறி** – அகப்பையளவு; நெல்லுக் குவியலின் மேலிடும் சாணிப்பால் குறி.

**அகப்பைக்கூடு** – அகப்பைகளைச் செருகி வைக்கும் சட்டம்.

**அகப்பொருட்கோவை** – அகப்பொருள் துறைகளைத் தொடர்புபடுத்திக் கூறும் கோவை நூல்.

**அகப்பொருள்** – உட்பொருள்; சிற்றின்பம்; அகவொழுக்கமாகிய பொருள்; வீட்டில் உள்ள பொருள்.

**அகம்** – இருப்பிடம்; பூமி; மனை; வீடு; உள்; மனம்; அகப்பொருள்; 'நான்' என்னும் அகங்காரம்; பாவம்; அகம்பாவம்; மார்பு; ஏழாம் வேற்றுமையுருபு.

**அகம்படி** – உள்ளிடம்; மனம்; அகத்தொண்டு; ஒருவகைச் சாதி; அடிவயிறு.

**அகம்படித்தொண்டு, அகம்படிமை** – அணுக்கத் தொண்டு.

**அகம்படியர்** – உள்வேலைக்காரர்; ஊழியம் செய்வோர்; ஒருவகைச் சாதியார்.

**அகம்பன்** – அசைவற்றவன்.

**அகம்பாடு, அகம்பாவம்** – 'நான்' என்னும் எண்ணம்; உள்ளச்செருக்கு; உள்ள நினைவு.

**அகம்பிரமம்** – 'நானே பிரமம்' எனக் கூறல்.

**அகம்பு** – உள்.

**அகம்மியம்** – ஒரு பேரெண்; பத்துலட்சங்கோடி; கோடாகோடி; அணுகக்கூடாதது; அறியக் கூடாதது.

**அகம்மியை** – இழிகுலப்பெண்; பொதுமகள்.

**அகமகிழ்ச்சி** – உள்ளக்களிப்பு; மனமகிழ்ச்சி.

**அகமடல்** – அகவிதழ்; பாளை.

**அகமணை, அகமணைத்தட்டு** – வண்டியின் உட்பலகை; படகின் உட்கட்டை.

**அகமதி** – காண்க: **அகந்தை.**

**அகமம்** – மரம்; மலை.

**அகமருடணம், அகமருடம்** – பாவ நீக்கத்தின் பொருட்டு நீருக்குள் நின்று உச்சரிக்கும் மந்திரம்.
**அகமலர்ச்சி** – மனமகிழ்ச்சி, இன்பம்.
**அகமாட்சி** – இல்லறத்திற்குரிய நற்பண்புகள்.
**அகமார்க்கம்** – முக்குணம் பற்றிவரும் மெய்த் தொழிலாற் செய்யும் கூத்து; மந்திரமுறை; அருமையிற் பாடுதல்; உள்வழி.
**அகமிசைக்கிவர்தல்** – கோட்டைமதில்களின்மேல் ஏறிநின்று போர்புரிதல்.
**அகமுகமாதல்** – உள்நோக்குதல்.
**அகமுடையாள்** – வீட்டுக்குடையவள்; மனைவி.
**அகமுடையான்** – வீட்டுக்காரன், கணவன்; நில முடையவன்.
**அகமுணல்** – தெளிதல்; மனத்திற் கொள்ளல்.
**அகர்க்கணனம்** – கலியுகாதி தொடங்கிக் குறித்த காலம்வரை கணித்தெடுத்த நாள்களின் எண் தொகை.
**அகர்ணம்** – செவிடு; பாம்பு.
**அகர்த்தவியம்** – செய்யத்தகாதது.
**அகர்நிசம்** – பகலும் இரவும், நாளெல்லாம்.
**அகர்முகம்** – வைகறை, விடியற்காலம்.
**அகரம்** – 'அ' என்னும் எழுத்து (கரம் சாரியை); மருதநிலத்தூர்; பார்ப்பனர் சேர்ந்து வாழும் இடம்; பாதரசம்.
**அகரமுதலி** – காண்க: **அகராதி.**
**அகரமேற்றுதல்** – அந்தணரைக் குடியேற்றுதல்.
**அகராதி** – அகரம் முதலாக நெடுங்கணக்கு அடைவில் அமைக்கப்பெறும் சொற்கோவை; சொற்களஞ்சியம்; சொற்பொருட்களஞ்சியம், சொற்பொருள் விளக்கநூல்.
**அகராதிக்கிரமம்** – அகரம் முதலாக வரும் முறைமை.
**அகராதிபடித்தவன்** – மிகுந்த கல்வியாளன்; பிறர் கருத்தைக் கேளாது தன் போக்கில் செல்லுபவன்.
**அகரு** – அகில்மரம்.
**அகருதம்** – வீற்றிருக்கை.
**அகல்** – விளக்குத் தகழி; சட்டி; விரிவு; ஓர்அளவு; வெள்வேல் மரம்.
**அகல் (வி)** – விலகு, நீங்கு.
**அகல்லியமாமிசம்** – சமைக்கப்படாத இறைச்சி.
**அகல்வு** – விரிவு, அகலம்; நீக்கம்.
**அகலக்கட்டை** – அகலம் குறைந்தது; பரப் பில்லாதது.
**அகலக்கவி** – நாற்கவியுள் ஒன்றான வித்தார கவி; விரித்துக் கவிபாடும் புலவன்.
**அகலக்கால்வைத்தல்** – அளவுகடந்துபோதல்.
**அகலத்தேடுதல்** – நீங்க வகைபார்த்தல்; விரிவாய் ஆராய்தல்.
**அகலம்** – விரிவு; பரப்பு; இடம்; பூமி; மார்பு; விருத்தியுரை; வித்தாரகவி; பெருமை.
**அகலம்புகுதல்** – மார்பிடத்தே தழுவுதல்; அடைக்கலமாதல்.
**அகலவுரை** – விரிவாக எழுதும் உரை, விருத்தி யுரை.
**அகலறை** – பாசறை; மலைப்பக்கம்.
**அகலன்** – நீங்கிவாழ்வோன்; தீண்டாதவன்; ஏழை; கடவுள்; பெருத்தவன்; பெருமை யுடையவன்.
**அகலாங்கு** – நிலநடுக்கோட்டுக்கு இருபக்கமும் கிழக்குமேற்கில் செல்லும் சமதொலைக்கோடு.
**அகலிடம்** – பூமி, நிலவுலகம்.
**அகலுதல்** – நீங்குதல், பிரிதல்; கடத்தல்;விரிதல்.
**அகலுள்** – அகலம்; ஊர்; தெரு; பூமி; நாடு; பெருமை.
**அகவடி** – உள்ளங்கால்; அடிச்சுவடு.
**அகவயிரம்** – காண்க: **அகக்காழ்.**
**அகவர்** – மங்கலப் பாடகர், புகழ் பாடுவோர், சூதர்; நாட்டில் வாழ்வோர்; வீட்டிலிருப்பவர்.
**அகவல்** – அழைத்தல், கூவுதல்; மயிலின் குரல்; இசைத்தல்; பாடுதல்; கூத்து; கூத்தாடல்; ஆசிரியப்பாவுக்குரிய ஓசை; ஆசிரியப்பா.
**அகவல் உரிச்சீர்** – ஈரசை கொண்டு வரும் நேர் நேர், நிரை நேர், நிரை நிரை, நேர் நிரை என்னும் சீர்வகை.
**அகவல் விருத்தம்** – அறுசீரடி முதலாகப் பல சீரடி நான்கு கொண்ட பாவகை.
**அகவலன்** – பாடும் பாணன்.
**அகவலைப்படுத்தல்** – வலையில் அகப்படுத்தல்.
**அகவலோசை** – ஆசிரியப்பாவிற்கு உரிய ஓசை.
**அகவற்பா** – ஒருவரை அழைத்துக் கூறும் முறை யில் பாடப்படுவது; நால்வகைப் பாக்களுள் ஒன்று, ஆசிரியப்பா.
**அகவற்றுறை** – நான்கடி கொண்டதாய் முதல் ஈற்றடிகள் ஒத்து இடையடிகள் குறைவுபட்டு வருவது.
**அகவன் மகள்** – பிறரை விளித்துப்பாடும் பெண்; பாண்மகள்.
**அகவாட்டி** – இல்லக்கிழத்தி, மனைவி.
**அகவாய்** – உள்ளிடம்; கதவுநிலை.
**அகவாயில்** – உள்வாயில்; மனம்.
**அகவாளன்** – வீட்டுக்குரியோன்; கணவன்; தலைவன்.
**அகவிதழ்** – உள் இதழ்; அல்லி.
**அகவிரல்** – விரலின் உட்பகுதி.
**அகவிருள்** – உள்ளிருள்; அறியாமை; மெய்யறி வின்மை.
**அகவிலை** – மலரின் உள்ளிதழ்; தவசவிலை.

**அகவுதல்** – அகவல்; குரல் எழுப்புதல்; ஒலித்தல்; அழைத்தல்; பாடுதல்; ஆடல்.

**அகவுநர்** – பாடுவோர்; ஆடுவோர்.

**அகவுயிர்** – உடம்பினுள் உயிர்.

**அகவை** – உட்பட்டது; உட்பொருள்; உள்ளிடம்; உட்பட்ட வயது; ஆண்டு; பருவம்; ஏழாம் வேற்றுமை உருபு.

**அகழ்** – அகழி, மதில்சூழ் கிடங்கு, கிடங்கு; குளம்.

**அகழ்தல்** – தோண்டுதல், கல்லுதல்; உழுதல்.

**அகழான்** – வயல் எலி.

**அகழி** – கோட்டையைச் சுற்றியுள்ள ஆழமான நீர்நிலை, மதில்சூழ் கிடங்கு; ஓடை; கயம்; கேணி; கிடங்கு; வாயகன்ற பாண்டம்.

**அகளங்கம்** – குற்றமின்மை; தூய்மை.

**அகளங்கன்** – மாசிலான்; கடவுள்; சோழன்.

**அகளம்** – தாழி; மிடா; சாடி; யாழின் பத்தர்; நீர்ச்சால்; களங்கமின்மை.

**அகளி** – தாழி; மிடா; பாண்டம்.

**அகற்சி** – அகலம்; நீங்குதல், பிரிவு; துறவறம்.

**அகற்பவிபூதி** – இயற்கையில் உண்டான திருநீறு.

**அகற்பன்** – ஒப்பில்லாதவன்.

**அகற்றம்** – அகலம், விரிவு.

**அகற்றல், அகற்றுதல்** – நீக்குதல்; துரத்துதல்; அகலப் பண்ணுதல், விரிவாக்கல்.

**அகறல்** – அகலல்; கடத்தல்; நீங்குதல்; விரிதல்; அகலம்.

**அகன்மணி** – அகன்ற மணி; உயர்ந்த முத்து; தெய்வமணி.

**அகன்றிசைப்பு** – யாப்பு முறையிலிருந்து மாறி ஒலிக்கும் குற்றம்.

**அகன்றில்** – ஆணன்றில், ஆண் கிரவுஞ்சம்.

**அகன்னம்** – காதற்றது; செவிடு.

**அகனைந்திணை** – குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து திணை.

**அகாடி** – குதிரையின் முன்னங்காற் கயிறு.

**அகாத்தியம்** – பொல்லாங்கு, வஞ்சனை; பாசாங்கு; உண்ணத்தகாதது.

**அகாதம்** – ஆழம்; மிகுந்த பள்ளம்; நீந்துபுனல்; தொளை; வஞ்சகம்.

**அகாமவினை** – தன்னிச்சையின்றி நிகழும் செயல்; தன்னறிவின்றிச் செய்யும் செயல்.

**அகாரணம்** – காரணமின்மை; தற்செயல்.

**அகாரம்** – 'அ' என்னும் எழுத்து (காரம் சாரியை); வீடு.

**அகாரி** – கடவுள்; இடி; இந்திரன்.

**அகாரியம்** – காரியமல்லாதது; தகாத செய்கை.

**அகாலம்** – காலமல்லாத காலம், முறைமை அல்லாத காலம், பருவமின்மை; பஞ்சகாலம்.

**அகாலமிருத்து** – அகால மரணம்; இளமைச்சாவு; அநியாய மரணம்.

**அகி** – இரும்பு; பாம்பு; கதிரவன்; பகைவன்; இராகு; வச்சிரப்படை; தீ; ஈயம்.

**அகிஞ்சனன்** – வறியவன்.

**அகிஞ்சை** – காண்க: **அகிம்சை.**

**அகிதம்** – இதமின்மை; நன்மையல்லாதது, தீமை; இடையூறு.

**அகிதலம்** – பாதாளம்; நாகலோகம்.

**அகிதன்** – பகைவன்.

**அகிம்சை** – கொல்லாமை; பிற உயிருக்குத் தீங்கு செய்யாமை, வருத்தாமை.

**அகிருத்தியம்** – அக்கிரமம், தவறான செய்கை.

**அகில்** – ஒரு வாசனை மரம்; ஒரு மணப்பொருள்; புகைக்கப்படும் பொருள்களுள் ஒன்று.

**அகிலம்** – உலகம், பூமி; எல்லாம்; முழுமை.

**அகிலாண்டகோடி** – எண்ணுக்கு அடங்காத கணக்கற்ற உலகங்கள்.

**அகிலாண்டம்** – எல்லா உலகும்.

**அகிலாண்டநாயகி, அகிலாண்டவல்லி** – உலகம் முழுதுடையாள், பார்வதி.

**அகிற்கூட்டு** – சந்தனம், கருப்பூரம், காசுக்கட்டி, தேன், ஏலம் சேர்ந்த கலவை; கூந்தலின் ஈரம் போக்கி மணமூட்டுவது; கூந்தலை உலர்த்தப் பயன்படுவது.

**அகுசலவேதனை** – துன்ப உணர்ச்சி.

**அகுட்டம்** – மிளகு.

**அகுடம்** – கடுகுரோகிணிப்பூண்டு.

**அகுணம்** – குணமின்மை; குற்றம்; அழகின்மை; தீக்குணம்.

**அகுணி** – தீயோன்; உறுப்புக்குறையுடையோன்.

**அகுதார்** – உரிமையாளி.

**அகுதி** – காண்க: **அகதி.**

**அகுரு** – அகில்மரம்; வெட்டிவேர்; எளிதானது; குருவல்லாதவன்.

**அகுவைக்கட்டி** – அரையாப்பு.

**அகுளுதி** – வேம்பு.

**அகூடகந்தம்** – பெருங்காயம்.

**அகூபாரம்** – ஆமை; கடல்; பாறையாலான மலை.

**அகை** – கூறுபாடு; வருத்தம்; தளர்ச்சி; தகை; மலர்; கிளை.

**அகை (வி)** – வருத்து; எரி; தடு.

**அகைத்தல்** – வருத்தல்; முறித்தல்; அறுத்தல்; உயர்த்தல்; அடித்தல்; ஓட்டுதல்; எழுதல்; தழைத்தல்; கிளைத்தல்.

**அகைதல்** – எரிதல்; ஒடிதல்; வருந்துதல்; தளிர்த்தல்; மலர்தல்; தாழ்தல்; காலந் தாழ்த்தல்.

**அகைப்பு** – அகைத்தல்; எழுச்சி; மதிப்பு; இடைவிட்டுச் செல்லுகை.

**அகைப்புவண்ணம்** – இருபது வண்ணங்களுள் ஒன்று; அறுத்தறுத்து ஒழுகும் நடையை உடையது; விட்டுவிட்டுச் செல்லும் சந்தம்.

**அகைமம்** – புல்லுருவி; கருந்தாளிமரம்.

**அகையாறு** – கிளையாறு.

**அகைவாய்க்கால்** – கிளைவாய்க்கால்.

**அகோ** – ஒரு வியப்புச் சொல்; அழைப்பு, உடன்பாடு, புகழ்ச்சி, இகழ்ச்சி, பொறாமை, துன்பம், இரக்கம், ஐயம் முதலிய பொருள்களுள் ஒன்றை உணர்த்தும் குறிப்புச்சொல்.

**அகோசரம்** – அறியப்படாமை, புலன்களுக்குப் புலப்படாமை; புலப்படாதது.

**அகோடம்** – கமுகமரம்.

**அகோரம்** – மிக்க கொடுமை; வெப்பம்; சிவன் ஐம்முகத்துள் ஒன்று; ஞானம்.

**அகோராத்திரம்** – இரவும் பகலும், இராப்பகல்.

**அகோரை** – இரண்டரை நாழிகைக் காலம்; வெயில் மிகுந்த நாள்; அஞ்சத்தக்கவன்.

**அகோவனம்** – தரிசு.

**அங்கக்கிரியை** – மெய் உறுப்புகளால் செய்யப்படும் நடிப்புத் தொழில்.

**அங்ககணிதம்** – எண்கணக்கு.

**அங்கசங்கம்** – பகட்டு; புணர்ச்சி.

**அங்கசம்** – குருதி; மயிர்; நோய்; காமம்.

**அங்கசன்** – மன்மதன்; மகன்.

**அங்கசாலை** – குடிகள் செலுத்தும் வரிவகை.

**அங்கசாலைக்காரன்** – ஊர்ப்பணிபுரிவோன்.

**அங்கசேட்டை** – உடம்பின் இயக்கம்; கை மெய் காட்டுதல்; கோரணி; குறும்பு.

**அங்கண்** – அவ்விடம்; அழகிய இடம்; கண்ணோட்டம்.

**அங்கணம்** – சேறு; முற்றம்; இருதூண் நடுவிடம்; சாக்கடை; மதகு; நீர்த்தாரை.

**அங்கணன்** – கடவுள்; சிவன்; திருமால்; அருகன்.

**அங்கணாளன்** – கண்ணோட்டமுடையவன்; கடவுள்.

**அங்கணி** – அழகிய கண்ணையுடையவள்; பார்வதி; கற்றாழை.

**அங்கத்தவர்** – அவையின் உறுப்பினர்.

**அங்கத்தி** – காண்க: **அங்குத்தை.**

**அங்கதச்செய்யுள், அங்கதப்பாட்டு** – வசைப்பாட்டு.

**அங்கதம்** – பாம்பு; தோளணி; பழிச்சொல்; யானையுணவு; வசைப்பாட்டு; மார்பு.

**அங்கதர்** – வசைகூறுவோர்.

**அங்கதி** – கொடை; தீ; நோய்; பார்ப்பான்; வாயு; தீக்கடவுள்.

**அங்கதேவதை** – பெருந்தெய்வத்திற்குப் பணிசெய்யும் சிறுதெய்வம்.

**அங்கதை** – தென்திசை யானைக்குப் பெண் யானை.

**அங்கநியாசம்** – உடம்பின் ஒவ்வோர் உறுப்பையும் தொட்டு மந்திரம் ஓதுகை.

**அங்கநூல்** – வேத விளக்கமான துணைநூல், வேதாங்கம்; அங்காகமம்.

**அங்கப்பால்** – முலைப்பால்.

**அங்கப்பிரதக்கிணம், அங்கப்பிரதட்சிணம்** – உருண்டு கோயிலை வலம் வரல்; உடலுறுப்புகள் தரையில் படியுமாறு புரண்டு கோயிலை வலம் வரல்.

**அங்கப்பிராயச்சித்தம்** – உடலின் தூய்மைக்காகச் செய்யும் ஒரு கழுவாய்.

**அங்கப(வ)டி** – குதிரைமேல் சேணத்தோடு இடப்படும் காலூன்று படி, குதிரைமேல் ஏற உதவும் படி.

**அங்கம்** – உறுப்பு; உடம்பு; எலும்பு; கட்டில்; பாவனை; அடையாளம்; வேதாங்கம்; அரசாங்கம்; நாடக உறுப்பு; அறமே பொருளாக வரும் நாடகம்; ஒரு நாடு; ஒரு மொழி.

**அங்கமணி** – மகளுக்குக் கொடுக்கும் சீர்ப்பொருள், சீதனம்.

**அங்கமாலை** – எலும்பு மாலை; உடலுறுப்புகளை முறையாக எடுத்து விளக்கும் ஒரு நூல்; அடிமுதல் முடி, முடிமுதல் அடியாகப் பாடப்படும் நூல்வகை.

**அங்கயற்கண்ணம்மை, அங்கயற்கண்ணி** – அழகிய கயல்மீன் போன்ற கண்ணுடையாள்; மதுரையில் கோயில் கொண்டுள்ள மீனாட்சியம்மை.

**அங்கயோகம்** – எண்வகை யோகத்துள் ஒன்று.

**அங்கர்** – அங்க நாட்டினர்.

**அங்கர்கோமான்** – அங்கநாட்டுக்குத் தலைவன்; கன்னன்.

**அங்கரக்கன்** – மெய்காவலன்.

**அங்கரக்கா** – மெய்ச்சட்டை; நீண்ட சட்டை.

**அங்கரட்சணி** – போர்க்கவசம்.

**அங்கலாய்த்தல்** – கலங்குதல்; புலம்புதல்; துயருறுதல்; இச்சித்தல்; பொறாமைப்படுதல்.

**அங்கலாய்ப்பு** – கலக்கம்; புலப்பம்; அருவருப்பு; பேராசை.

**அங்கலி** – விரல்; முலை.

**அங்கலிங்கம்** – வீரசைவர்கள் மார்பில் அணியும் லிங்கம்.

**அங்கவத்திரம்** – மேலாடை.

**அங்கவிட்சேபம்** – அபிநயம்; சாடை, குறி.

**அங்கவீனம்** – உறுப்புக்குறை.

**அங்கன்** – மகன்.

**அங்கனம்** – அங்ஙனம்.

**அங்கனி** – கற்றாழை; படரும் முட்செடி.

**அங்கனை** – பெண்.
**அங்காகமம்** – சமண வேதாகமம் மூன்றனுள் ஒன்று.
**அங்காங்கிபாவம்** – உறுப்பு உறுப்பிகளின் தொடர்பு.
**அங்காடி** – கடை; கடைத்தெரு; சந்தை.
**அங்காடிக்கூலி** – கடை, சந்தைகளிலிருந்து பெறும் வரி.
**அங்காடிபாரித்தல்** – மனக்கோட்டை கட்டுதல்.
**அங்காத்தல்** – வாயைத் திறத்தல்; கொட்டாவி விடல்.
**அங்காமினி** – காண்க: **ஆகாசகாமினி.**
**அங்காரகம்** – கரி; உடலிற் பூசும் மணப்பொருள்; மேலே பூசும் வாசனைக் குழம்பு.
**அங்காரகன்** – செவ்வாய்; நெருப்பு; செந்நீர் முத்து.
**அங்காரம்** – நெருப்பு; கரி; மாத்துவர் நெற்றியில் இடும் கரிக்கோடு.
**அங்காரவல்லி** – சிறுதேக்கு.
**அங்காரன்** – செவ்வாய்.
**அங்காரி** – வெண்காரம்.
**அங்காரிகை** – கரும்பு; நன்னாரி.
**அங்காளம்மை, அங்காளி** – காளி; ஓர் ஊர்த்தேவதை.
**அங்கி** – அக்கினிதேவன்; நெருப்பு; கார்த்திகை நாள்; அத்த நாள்; சட்டை; அங்கத்தை யுடையது.
**அங்கி(கீ)கரித்தல்** – சம்மதித்தல், உடன்படுதல், ஏற்றுக்கொள்ளுதல்.
**அங்கி(கீ)காரம்** – சம்மதம், ஏற்றுக்கொள்ளுகை, உடன்பாடு.
**அங்கிகை** – கச்சு; இரவிக்கை.
**அங்கிசகம்** – அன்னப் பறவை.
**அங்கிசம்** – மரபு, வமிசம்; கூறு, பங்கு; தாய பாகம்; தோட்பட்டை; உபநிடதம் முப்பத்திரண்டனுள் ஒன்று.
**அங்கிட்டு** – அவ்விடத்தில்.
**அங்கிட்டோமம்** – காண்க: **அக்கினிட்டோமம்.**
**அங்கிடுதத்தி, அங்கிடுதுடுப்பன்** – நாடோடி; நிலைகெட்டவன்.
**அங்கிடுதொடுப்பி** – கோள் சொல்பவன்.
**அங்கிதம்** – உடல்மேலுள்ள தழும்பு; அடையாளம்; கணக்கிடப்பட்டது; பாட்டுடைத் தலைவன்.
**அங்கிநாள்** – கார்த்திகை நாள்; அத்த நாள்.
**அங்கிரி** – கால்; மரவேர்; மரம்.
**அங்கீகரணம்** – காண்க: **அங்கி(கீ)காரம்.**
**அங்கு** – அவ்விடம்.
**அங்குசதாரி, அங்குசபாசதரன், அங்குசபாசமேந்தி** – விநாயகன்.
**அங்குசபாணி** – விநாயகன்; காளி.
**அங்குசம்** – யானையை அடக்கும் கருவியாகிய தோட்டி; வாழை.
**அங்குசரோசனம்** – கூகைக்கிழங்கின் மாவு.
**அங்குசோலி** – அறுகம்புல்.
**அங்குட்டம்** – பெருவிரல்; பெருவிரலளவு; குறளுரு.
**அங்குடம்** – தாழக்கோல், திறவுகோல்.
**அங்குத்தை** – அவ்விடம்; தாங்கள் என்னும் பொருளில் தம்பிரான்களை விளிக்கும் சொல்.
**அங்குமிங்கும் பாடி** – இரண்டு கட்சியிலும் தொடர்பு கொண்டவன், நம்ப இயலாதவன்.
**அங்குரகம்** – கூடு; பறவைகள் தங்குமிடம்.
**அங்குரம்** – முளை; தளிர்; இரத்தம்; மயிர்; குப்பைமேனி; நீர்; நங்கூரம்.
**அங்குரார்ப்பணம்** – பாலிகை தெளிக்கை, முளையிடுதல்; தொடங்குகை.
**அங்குரி** – விரல்.
**அங்குரித்தல்** – முளைத்தல்; வெளிப்படுதல்.
**அங்குலம்** – கைவிரல்; விரலகலம், ஒரு விரற்கனு அளவு; ஓரடியின் பன்னிரண்டில் ஒரு பங்கு, 2.5 சென்டிமீட்டர்.
**அங்குலி** – விரல்; யானைத்துதிக்கை நுனி; மோதிரம்; யானைக்குக் கட்டும் மணி; ஐவிரலிச்செடி.
**அங்குலிக(ய)ம்** – விரலணி, மோதிரம்.
**அங்குஸ்தான்** – தையற்காரர் விரலிலே அணியும் கூடு, விரலுறை.
**அங்கூடம்** – அம்பு; கீரி; அழகிய கூடம்.
**அங்கூரம்** – காண்க: **அங்குரம்.**
**அங்கே** – அங்கு.
**அங்கை** – அகங்கை, உள்ளங்கை.
**அங்கையில்வட்டு** – அடைதற்கு எளியது.
**அங்கோலம்** – அழிஞ்சில்மரம்.
**அங்ஙன், அங்ஙனம்** – அத்தன்மை; அவ்விதம்; அவ்விடம்.
**அச்சகம்** – நூல்களை அச்சிடும் இடம், அச்சுக்கூடம்.
**அச்சகாரம்** – அச்சாரம், ஆயத்தப் பணம், முன்பணம்.
**அச்சடி ஓலை** – முத்திரையிட்ட ஓலையாவணம்.
**அச்சடித்தல்** – காகிதத்திலோ, துணி முதலியவற்றிலோ எழுத்துகளையும் பிறவற்றையும் பதிப்பித்தல்.
**அச்சடியன்** – சாயப்புடைவை.
**அச்சடையாளம்** – உடலுறுப்பு ஒப்புமை; முத்திரையச்சு.
**அச்சணம்** – அக்கணம், அந்த நேரம்.
**அச்சத்தி, அச்சத்திரி** – கத்தரிச்செடி.

**அச்சந்தெளித்தல்** – அறுகும் அரிசியும் இடல்.
**அச்சபரம்** – நாணல்.
**அச்சபல்லம்** – கரடி.
**அச்சம்** – பயம்; மகளிர் நாற்குணத்துள் ஒன்று; தகடு; இலேசு; அகத்திமரம்; சரிசமானம்; பளிங்கு.
**அச்சமம்** – ஒருவகைப் புல்; முயிற்றுப்புல்.
**அச்சமாடல்** – அச்சமுண்டாகப் பேசுதல்.
**அச்சயன்** – அழிவில்லாதவன், கடவுள்.
**அச்சரம்** – நாக்கில் தோன்றும் ஒரு நோய்; எழுத்து.
**அச்சன்** – தந்தை; கடவுள்.
**அச்சனம்** – நெய்வார் கருவி வகையுள் ஒன்று; வெள்ளுள்ளி.
**அச்சாணி** – கடையாணி, ஊர்திகளின் இருசில் சக்கரம் கழலாமல் செருகப்படும் ஆணி.
**அச்சாப்பொங்கா** – அச்சோ பெண்காள் என்பதன் மரூஉ; மகளிர் ஆட்டவகை.
**அச்சாரம்** – காண்க: **அச்சகாரம்.**
**அச்சாறு** – ஊறுகாய்.
**அச்சானம்** – அறியாமை.
**அச்சானியம்** – தீக்குறி முதலியவற்றால் நேரும் மனக்கலக்கம்; அமங்கல நினைவு.
**அச்சி** – நாயர்குலப் பெண்; தாசி; ஒரு பெண் பால் விகுதி.
**அச்சிநறுவிலி** – நறுவிலிமரம்.
**அச்சியந்திரசாலை** – காண்க: **அச்சகம்.**
**அச்சியர்** – ஆரியாங்கனைகள்; சமணசமயத் தவப்பெண்டிர்.
**அச்சிரம்** – முன்பனிக்காலம்.
**அச்சு** – அடையாளம்; உயிரெழுத்து; வண்டியச்சு; எந்திரவச்சு; கட்டளைக்கருவி; உடம்பு; வலிமை; அச்சம்; துன்பம்.
**அச்சுக்கட்டி** – ஆடையில் அச்சு வேலை செய்வோன்.
**அச்சுக்கட்டு** – நெசவுக் கருவிவகை; அச்சடித் தற்காகத் துணியை மடித்தல்; வரம்பு கட்டிய வயல்.
**அச்சுக்கட்டை** – அச்சுமரம்.
**அச்சுக் கம்பி** – துப்பாக்கி மருந்து இடிக்கும் இருப்புக் கருவி; துப்பாக்கி மருந்திடிக்கும் மரத் தண்டு.
**அச்சுக்கூடம்** – காண்க: **அச்சகம்.**
**அச்சுத்தாலி** – காசுமாலை; வார்ப்புத் தாலி.
**அச்சுத்திரட்டுதல்** – வண்டியச்சுச் செப்பஞ் செய்தல்.
**அச்சுதம்** – கெடுதலின்மை; அழிவற்றது; அறுகும் அரிசியும் கூட்டி அணிவது; அட்சதை.
**அச்சுதன்** – அழிவில்லாதவன், கடவுள்; திருமால்; அருகன்; சிவன்; முருகன்.
**அச்சுதை** – அழிவில்லாதவள், பார்வதி.
**அச்சுப்பலகை** – நெய்வார் பயன்படுத்தும் கருவி வகை.
**அச்சுமரம்** – வண்டியில் உருள் கோக்கும் மரம்.
**அச்சுரம்** – நெருஞ்சில்; முருங்கை.
**அச்சுருவாணி** – தேர் நடுவில் செறி கருவி.
**அச்சுலக்கை** – துலாவைத் தாங்கும் கட்டை.
**அச்சுறுகொழுந்தொடர்** – யானையின் கழுத்தில் இடும் இருப்பாணி தைத்த மரச்சட்டம்.
**அச்சுறுதல்** – அஞ்சுதல், பயப்படுதல்.
**அச்சுறை** – உயிர் உறையும் உடல்.
**அச்சை** – வேதவாக்கியம்.
**அச்சோ** – ஒரு வியப்பு இரக்கச் சொல்; குழந்தையை அணைத்தல்.
**அச்சோப்பருவம்** – தாய் குழந்தையை அணைக்க அழைக்கும் பருவம்.
**அசக்கியம்** – இயலாதது, கூடாதது.
**அச(ய)க்குதல்** – ஆட்டுதல், அசைத்தல்.
**அசகசாந்தரம்** – ஆட்டுக்கும் யானைக்கும் உள்ள வேறுபாடு.
**அசகண்டா** – தைவேளை.
**அசகம்** – மலையாடு.
**அசகரம்** – மலைப்பாம்பு.
**அசகாயசூரன்** – வேறு துணை வேண்டாது பகை வரை வெல்லும் வீரன்.
**அசகியம்** – தாங்கக்கூடாதது; தூய்மையின்மை; அருவருப்பு.
**அசங்கதம்** – இகழ்ச்சி; ஒழுங்கின்மை; பொருத்த மில்லாதது; பொய்.
**அசங்கதி** – பொருத்தமின்மை; தொடர்பின்மை யணி.
**அசங்கதியாடுதல்** – எள்ளி நகையாடல், பரிகசித்தல்.
**அசங்கம்** – பற்றின்மை.
**அசங்கமம்** – இகழ்ச்சி; ஒற்றுமையின்மை; கூடுத லின்மை; புலவி; கோள்கள் சூரியனுக்கு எதிராக நிற்கை.
**அசங்கன்** – பற்றற்றவன், ஒட்டாதவன்; அசடன்.
**அசங்கியம்** – அருவருப்பு; தூய்மையின்மை; கணக்கில்லாதது, எண்ணிறந்தது.
**அசங்கியாதம்** – எண்ணிக்கையற்றது.
**அசங்குதல்** – அசைதல்; நடுங்குதல்.
**அசங்கை** – மதிப்பின்மை; அச்சமின்மை; ஐய மின்மை.
**அசங்கையன்** – ஐயமில்லாதவன்.
**அசசரம்** – காண்க: **அச்சுரம்.**
**அசஞ்சலம்** – அசைவின்மை; நெஞ்சுரம்.
**அசஞ்சலன்** – அசைவற்றவன், சலியாதவன்.

**அசட்டன்** – கீழ்மகன், இழிந்தோன்; குற்றமுடையவன்.

**அசட்டாட்டம்** – புறக்கணிப்பு.

**அசட்டி** – ஓமம்.

**அசட்டை** – மதியாமை, பராமுகம், புறக்கணிப்பு.

**அசடன்** – கீழ்மகன், சோம்பேறி, மூடன்.

**அசடு** – குற்றம்; கீழ்மை; மூடத்தன்மை; பழுது; உலோகம் முதலியவற்றில் பெயரும் பொருக்கு.

**அசத்தல்** – அயர்த்தல்; மறத்தல்.

**அசதி** – சிரித்துப் பேசுதல்; எள்ளி நகையாடல்; சடுதி; சோர்வு; மறதி; கற்பில்லாதவள்.

**அசதிக்கிளவி** – கிண்டல்மொழி.

**அசதியாடுதல்** – சிரித்துப்பேசுதல்; வேடிக்கையாகப் பேசுதல்.

**அசநவேதி** – சீரகம்.

**அசப்பியம்** – அவைக்குப் பொருந்தாத பேச்சு.

**அசப்பு** – பராக்கு; அசதி.

**அசபம், அசபா** – 'அசபா' என்னும் ஒரு மந்திரம்.

**அசபாநலம்** – அசபையாகிய அக்கினி.

**அசம்** – ஆடு; மூவாண்டு பழகிய நெல்; வெங்காயம்; ஆன்மா; பிறவாதது; சந்தனம்.

**அசம்பாதை** – படை செல்லும் வழி.

**அசம்பாவிதம்** – நேரக்கூடாதது; பொருத்தமற்றது.

**அசம்பி** – காண்க: **அசம்பை.**

**அசம்பிரேட்சித(ய)ம்** – ஆராய்ச்சியின்மை; ஆராய்ந்துபாராமை.

**அசம்பிரேட்சியகாரித்துவம்** – ஆராயாது செய்கை.

**அசம்பை** – பயணிகளின் தோட்பை.

**அசம்மதம், அசம்மதி** – சம்மதமின்மை, உடன்படாமை.

**அசமஞ்சன்** – தீயவன்.

**அசமடம், அசமதாகம்** – ஓமம்.

**அசமந்தம்** – மந்தகுணம்; தொடர்பின்மை; மலையத்தி.

**அசமந்தன்** – சோம்பேறி.

**அசமந்திபம்** – மலையத்தி.

**அசமவாயி** – ஒற்றுமையில்லாதது.

**அசமாருதம்** – அத்தி.

**அசமோதம், அசமோதகம்** – காண்க: **அசமடம்.**

**அசமோதை** – ஓமம்; இலவம்பிசின்.

**அசர்** – அசறு; தலைச்சுண்டு; பொடுகு.

**அசர்தல்** – தளர்ந்துபோதல்; பிந்துதல்.

**அசரம்** – இயங்காப்பொருள்; அசைவில்லாதது; நிலைத்திணை, நிலையியற்பொருள்.

**அசராதி(து)** – கொன்றை.

**அசரீரி** – வானொலி, ஆகாயவாணி; சரீரமில்லாதது.

**அசருதல்** – காண்க: **அயர்தல்.**

**அசரை** – அயிரைமீன்.

**அசல்** – முதல்; மூலம்; முதற்படி; உயர்ந்தது; அருகு; அயல்; கொசு; சீலை; பூமி.

**அசல்குறிப்பு** – நாளேடு; தினசரிக் குறிப்பு.

**அசலக்கால்** – தென்றல்.

**அசலகன்னிகை** – மலைமகள், உமாதேவி.

**அசலம்** – அசைவின்மை; அசையாநிலை; அசையாதது; பூமி; மலை.

**அசலலிங்கம்** – வழிபாட்டிற்குரிய கோபுரம் முதலியவை.

**அசலன்** – அசைவில்லாதவன், கடவுள்.

**அசலிடுதல்** – எல்லை கடத்தல்.

**அசலை** – அசையாதது; உமாதேவி; நிலம்; மீன்வகை.

**அசவல்** – அசறு; சேறு; கொசு.

**அசவாகனன்** – ஆட்டை ஊர்தியாக உடையவன், அக்கினிதேவன்.

**அசற்காரியவாதம்** – உற்பத்திக்கு மூலம் இல்லாமலே காரியம் தோன்றும் என்னும் கொள்கை.

**அசற்சரக்கு** – முதல் தரமான பண்டம், கலப்பற்ற பண்டம்.

**அசற்பிரதி** – மூலப்படி.

**அசறு** – அசர்; ஒருவகைச் செடிப்பூச்சி; ஆட்டுச்சொறி; சேறு.

**அசறுபாய்தல்** – அசும்பொழுகுதல்; பொசிந்து பரவுதல்.

**அசன்** – பிறப்பிலி, கடவுள்.

**அசனசாலை** – உணவுவிடுதி.

**அசனம்** – சோறு; உணவு; பகுதி; அளவு; சிரிப்பு; வேங்கைமரம்; வெள்ளுள்ளி.

**அசனவேதி** – சீரகம்; உணவைச் செரிக்கச் செய்வது.

**அசனி** – இடி; வச்சிரப்படை; சாம்பிராணி இலை; தீச்சட்டி.

**அசனிபாதம்** – இடியின் வீழ்ச்சி.

**அசா** – தளர்ச்சி; வருத்தம்; துயர்.

**அசாக்கிரதை** – விழிப்பின்மை, கவனக்குறைவு, சோம்பல்.

**அசாகளத்தனம்** – ஆட்டின் கழுத்தில் தொங்கும் தசை.

**அசாசி** – கருஞ்சீரகம்.

**அசாணிமூலி** – வேலிப்பருத்தி.

**அசாதசத்துரு** – பகைவரால் வெல்லப்படாதவன்; வம்புதும்பற்றவன்; தருமபுத்திரன்; புத்தர் காலத்திலிருந்த ஓர் அரசன்.

**அசாதாரணம்** – பொதுவின்மை, சிறப்பு.

**அசாயசூரன்** – காண்க: **அசகாயசூரன்.**

**அசாரம்** – சாரமற்றது; ஆமணக்கு; அரசவை மண்டபம்.

**அசாரவாசி** – அரசனது வாயில் காப்பவன்.

**அசாவாமை** – தளராமை.

**அசாவிடுதல்** – இளைப்பாறுதல்.

**அசாவுதல்** – இளைப்படைதல்; தளர்தல்.

**அசாவேரி** – ஒரு பண்.

**அசி** – படைக்கலம்; அம்பு; வாள்; இகழ்ச்சி நகை, ஏளனம்; ஆன்மா.

**அசிகை** – நகைத்துப் பேசும் பேச்சு.

**அசிங்கம்** – தகாத பேச்சு; அழகற்றது; ஒழுங்கற்றது.

**அசித்தம்** – முடிக்கப்படாதது.

**அசித்தல்** – உண்டல்; அழித்தல்; சிரித்தல்.

**அசித்திரன்** – கள்வன்.

**அசித்து** – அறிவற்ற பொருள், சடப்பொருள்.

**அசிதம்** – கருமை; சனி; ஒரு சிவாகமம்; வெல்லக்கூடாதது; சிரிப்பது; மலர்வது.

**அசிதன்** – வெல்லற்கு அரியோன்; சிவன்; திருமால்; புத்தன்; தந்தை; சனி.

**அசிதாரு** – ஒரு நரகம்.

**அசிதை** – அவுரி; சிவசத்தியின் நால்வகைப் பிரிவுகளுள் ஒன்று.

**அசிந்தம்** – சிந்திக்கப்படாதது; ஒரு பேரெண்; இறப்பு.

**அசிந்திதன்** – சிந்திக்கப்படாதவன்; மனத்துக்கு எட்டாதவன்.

**அசிந்தியம்** – சிந்தைக்கு எட்டாதது; ஒரு பேரெண்.

**அசிப்பு** – ஏளனச் சிரிப்பு.

**அசிபத்திரகம்** – கரும்பு.

**அசிபதம்** – 'தத்துவமசி' என்னும் பேருரையின் மூன்றாம் சொல்.

**அசிர்த்தல்** – காண்க: **அயிர்த்தல்.**

**அசிரத்தை** – அக்கறையின்மை; கவனிப்பு இல்லாமை; ஊக்கமின்மை.

**அசிரம்** – உடல்; அற்பகாலம்; காற்று; தவளை; முன்றில்; தலையற்றது, முண்டம்; தீ.

**அசிரவணம்** – செவிடு, காதுமந்தம்.

**அசிரன்** – அக்கினி; சூரியன்; கவந்தன்.

**அசினம்** – விலங்கின் தோல்; மானின் தோல்; தோலிருக்கை.

**அசீதி** – எண்பது; ஆனி புரட்டாசி மார்கழி பங்குனி மாதங்களின் பிறப்பு.

**அசீரணம்** – செரியாமை; பசியின்மை; அழிவுபடாதது.

**அசீரியம்** – அழியாதது.

**அசு** – மூச்சு; உயிர்வளி; துன்பம்.

**அசுக்காட்டுதல்** – எள்ளல், பரிகசித்தல்.

**அசுகுசுத்தல்** – அருவருத்தல்; ஐயுறுதல்.

**அசுகுணி** – செடிப்பூச்சி வகையுள் ஒன்று; காதில் வரும் கரப்பான்.

**அசுகை** – அருவருப்பு; ஐயம்.

**அசுசி** – தூய்மையின்மை, அழுக்கு; அருவருப்பு.

**அசுணம், அசுணமா** – இசையறியும் ஒருவகைப் புள்; கேகயப் புள்; ஒருவகை விலங்கு.

**அசுணன்** – வெள்ளை வெங்காயம்.

**அசுத்ததத்துவம்** – தத்துவவகை மூன்றனுள் ஒன்று.

**அசுத்தப்பிரபஞ்சம்** – கலாதத்துவம் முதல் பிருதிவி தத்துவம் ஈறாகிய தத்துவம்.

**அசுத்தமாயை** – அசுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற் காரணமான மாயை.

**அசுத்தி** – தூய்மையின்மை, அழுக்கு; ஆணவ மலம்.

**அசுத்தை** – அழுக்குடையவள்.

**அசுப்பு** – சடுதி, விரைவு.

**அசுபக்கிரகம்** – தீக்கோள்.

**அசுபக்கிரியை** – இறந்தார்க்குச் செய்யும் சடங்கு.

**அசும்பு** – கிணறு; சேறு; நீர்ப்பொசிவு; சிறு திவலை; வழுக்குநிலம்; அசைவு; ஒளிக்கசிவு; பற்று; குற்றம்; களை.

**அசும்புதல்** – நீர் ஊறுதல்.

**அசுமம்** – இடியேறு; கல்; தீத்தட்டிக்கல்; முகில்; மணமற்ற மலர்.

**அசுமாற்றம்** – சாடை; ஐயம்.

**அசுமானகிரி** – மேற்கட்டி; பந்தலின் மேலே கட்டப்படும் துணி விதானம் முதலியன.

**அசுரகுரு** – அசுரர்களின் ஆசிரியனான சுக்கிரன்.

**அசுரசந்தி** – அந்திப்பொழுது; இரணிய வேளை.

**அசுரநாள்** – மூலநாள்.

**அசுரம், அசுரமணம்** – எண்வகை மணங்களுள் வில் லேற்றுதல், ஏறு தழுவுதல் முதலிய வீரச்செயல் புரிந்து செய்துகொள்ளும் மணம்.

**அசுரமந்திரி** – காண்க: **அசுரகுரு.**

**அசுரர்** – அவுணர், நிசிசரர், தேவர்களின் பகைவர், இராக்கதர்; பதினெண்கணத்துள் ஒரு பிரிவினர்.

**அசுரவாத்தியம்** – முரசு முதலிய பேரொலி எழுப்பும் இசைக்கருவி.

**அசுரவைத்தியம்** – அறுவைச் சிகிச்சை.

**அசுரை** – இராசி; இருள்; பொதுமகள்; அரக்கியர்.

**அசுவகதி** – குதிரை நடை; அவை: மல்லகதி, மயூரகதி, வானரகதி, சசகதி, சரகதி.

**அசுவகந்தி** – அமுக்கிரா என்னும் ஒரு மருந்துச் செடி.

**அசுவத்தம்** – அரசமரம்; அத்திமரம்.

**அசுவத்தை** – நெட்டிலிங்கம்; நெடுநாரை.

**அசுவதாட்டி** – குதிரையின் வேகம்; தங்குதடையின்மை.

**அசுவதாட்டியாதல்** – பேச்சு முதலியன தட்டுத் தடையில்லாமை.

**அசுவதி** – காண்க: **அசுவினி.**

**அசுவம்** – குதிரை; தூய்மையற்றது; அமுக்கிராக் கிழங்கு.

**அசுவமேதம்** – குதிரையைக்கொண்டு நடத்தும் ஒரு வேள்வி.

**அசுவவாரியர்** – குதிரையைச் செலுத்துவோர்.

**அசுவாமணக்கு** – சிறுபூளை; நடைவழியில் முளைக்கும் ஒருவகைப் பூடு.

**அசுவினி** – இருபத்தேழு விண்மீன்களுள் முதலாவது.

**அசுவினிதேவர்** – இரட்டையராயிருக்கும் தேவ மருத்துவர்.

**அசுவுணி** – செடிப்பூச்சிவகை.

**அசுழம்** – நாய்.

**அசூயை** – பொறாமை; அவதூறு.

**அசூர்** – சமுகம், முன்னிலை.

**அசேடம்** – மிச்சம் இல்லாமை; முழுவதும்.

**அசேதனம்** – அறிவின்மை; அறிவில்லாதது.

**அசை** – செய்யுள் உறுப்புகளுள் ஒன்று; இசைப் பிரிவு; ஆடுமாடுகள் மீட்டு மெல்லும் இரை; அசைநிலை; செயலறவு; சுவடித்தூக்கு; தொங்கு தூக்கு.

**அசை (வி)** – அசை என்னும் ஏவல்; ஆட்டு; தூக்கு; மெல்லப்போ.

**அசைகொம்பு** – கட்டுகொம்பு.

**அசைச்சீர்** – ஓரசைச் சீர்.

**அசைச்சொல்** – சார்ந்து வரும் இடைச்சொல்.

**அசைத்தல்** – ஆட்டுதல்; கட்டுதல்; சொல்லுதல்; இயக்குதல்; வருத்துதல்.

**அசைதல்** – ஆடுதல்; உலாவுதல்; இயங்குதல்; கலங்குதல்; வருந்தல்; பிணித்தல்; கிளைத்தல்; சோம்புதல்; இருத்தல்; இளைப்பாறுதல்; தளர்தல்; ஓய்தல்.

**அசைதன்னியம்** – அறிவில்லாதது; ஞானக்குருடு.

**அசைநிலை** – காண்க: **அசைச்சொல்.**

**அசைநிலையளபெடை** – அசைகொள்வதற்காக அமைத்த அளபெடை.

**அசைப்பு** – அசைத்தல்; சொல்; இறுமாப்பு.

**அசைபோடல்** – ஆடுமாடு முதலியவை விழுங்கிய இரையை மீட்டு மெல்லுதல்; மீட்டும் நினைத்தல்; மெல்ல மெல்ல நடத்தல்.

**அசையடி** – கலிப்பாவின் உறுப்புகளுள் ஒன்றான அம்போதரங்கம்.

**அசையாப்பொருள்** – நிலையியற் பொருள், தாவரம்.

**அசையாமணி** – ஆராய்ச்சி மணி, முக்கியமான வேளைகளில் அடிக்கும் மணி.

**அசையும்பொருள்** – இயங்கியற் பொருள், சங்கமம்.

**அசைவு** – ஆட்டம்; சலனம், அசைதல்; சஞ்சலம்; சோர்வு, தளர்வு; வருத்தம்; உண்கை.

**அசைவுசெய்தல்** – உண்ணுதல்.

**அசோகம்** – அசோக மரம், பிண்டி மரம், நெட்டி லிங்கம்; மன்மதன் ஐங்கணையுள் ஒன்று; மருது; வாழை; துயரமின்மை.

**அசோகன்** – அருகன்; மன்மதன்; துயரற்றவன்; ஒரு மன்னன்.

**அசோகு** – காண்க: **அசோகம்.**

**அசோண்டி** – குறட்டை.

**அஞ்சதி** – காற்று.

**அஞ்சப்படுதல்** – மதிக்கப்படுதல்.

**அஞ்சம்** – அன்னப்பறவை; அசபா மந்திரம்; ஒருவகைச் சன்னியாசம்.

**அஞ்சல்** – அஞ்சுதல், கலங்கல், மருளல்; தோல்வி; தபால்.

**அஞ்சலகம்** – தபால் நிலையம்.

**அஞ்சலர்** – பகைவர்.

**அஞ்சலார்** – தபால்காரர்.

**அஞ்சலி** – வணக்கம், கும்பிடுகை; வௌவால்; காட்டுப்பலா; ஆடுதின்னாப்பாளை; சங்கங் குப்பி.

**அஞ்சலிகை** – வௌவால்.

**அஞ்சலித்தல்** – கைகூப்பித் தொழுதல்.

**அஞ்சலினவர்** – பாஞ்சராத்திர மதத்தவர்.

**அஞ்சளித்தல்** – ஆதரவு தருதல், அடைக்கலங் கொடுத்தல்.

**அஞ்சற்குளச்சி** – நச்சுப்பொருள்வகையுள் ஒன்று; குங்கும பாடாணம்.

**அஞ்சறைப்பெட்டி** – ஐந்து அறைகளை உடைய பெட்டி; கறிப்பொருள் வைக்கும் அறைப் பெட்டி.

**அஞ்சன்** – மன்மதன்; திருமால்; உயர்ந்தோன்; பரமான்மா.

**அஞ்சனக்கலிக்கம்** – மறைபொருளைக் காட்டும் மந்திர மை.

**அஞ்சனக்காரன்** – மந்திரக்காரன்; மந்திர மையிடுவோன்.

**அஞ்சனத்திரயம்** – மறைபொருளைக் காட்டும் ஆற்றல் வாய்ந்த பூதாஞ்சனம், சோராஞ்சனம், பாதாளஞ்சனம் என்னும் மூவகை மைகள்.

**அஞ்சனதார்** – காண்க: **அஞ்சனாதார்.**

**அஞ்சனம்** – மை; கண்ணுக்கிடும் மை; கறுப்பு; இருள்; ஆணவமலம்; திசையானை எட்டனுள் மேற்றிசையானை.

**அஞ்சனவண்ணன்** – கருநிறத்தன்; திருமால்.

**அஞ்சனவித்தை** – மறைந்த பொருளை மையிட்டுக் காண்பிப்பது.

**அஞ்சனவெற்பு** – திருவேங்கடமலை.

**அஞ்சனா** – விளைச்சல் மதிப்பீடு.

**அஞ்சனாதார்** – விளைச்சலை மதிப்பிடுபவர்.

**அஞ்சனாவதி** – வடகீழ்த்திசை யானைக்குப் பெண்யானை.

**அஞ்சனி** – காயாமரம்; நாணற்புல்.

**அஞ்சனை** – அனுமன் தாய்; வடதிசை யானைக்குப் பெண்யானை.

**அஞ்சாமை** – பயப்படாமை, திண்மை.

**அஞ்சாரப்பெட்டி** – காண்க: **அஞ்சறைப்பெட்டி.**

**அஞ்சி** – தபால்; அதியமான் நெடுமான் அஞ்சி; தலைவன்.

**அஞ்சிக்கை** – அச்சம்.

**அஞ்சிகம்** – கண், விழி; நாணயம்.

**அஞ்சித்தல்** – பூசை புரிதல்; அடைதல்.

**அஞ்சிதம்** – உண்டாதல்; தலை சாய்த்தல்; நல்லறிவு; பூசித்தல்; பொருந்தல்; வணக்கம்.

**அஞ்சிதமுகம்** – வருத்தம் பொறாது இருதோள் மீது தலை சாய்த்தல்.

**அஞ்சில்** – அழகிய தகட்டு வடிவான பொன் அணிகலன்.

**அஞ்சிலோதி** – அழகிய சிலவாகிய கூந்தல்.

**அஞ்சு** – ஐந்து; அச்சம்; ஒளி.

**அஞ்சுகம்** – கிளி.

**அஞ்சுதகுதல்** – அச்சமுண்டாதல்.

**அஞ்சுதல்** – பயப்படுதல்.

**அஞ்சுபதம்** – காண்க: **அஞ்செழுத்து.**

**அஞ்சுபயம்** – குடிகளுக்கு அரசனாலும், அவன் உறவினராலும், பகைவராலும், திருடராலும், விலங்கு முதலிய உயிர்களாலும் உண்டாகும் ஐவகை அச்சம்.

**அஞ்சுமாலி(ன்)** – சூரியன்.

**அஞ்சுருவாணி** – காண்க: **அச்சாணி.**

**அஞ்சுவர்ணத்தோன்** – துத்தநாகம்; ஐந்துவகையான நிறங்கொண்டவன்.

**அஞ்செவி** – அகஞ்செவி, உட்செவி; அழகிய காது.

**அஞ்செழுத்து** – பஞ்சாக்கரம், 'நமசிவாய' என்னும் ஐந்தெழுத்து மந்திரம்.

**அஞ்ஞதை** – அறியாமை.

**அஞ்ஞன்** – அறிவில்லாதவன்.

**அஞ்ஞாதசுகிருதம்** – தன்னை அறியாமல் வந்த புண்ணியம்.

**அஞ்ஞாதம்** – பிறர் அறியாமை, மறைவு, அறியப்படாதது.

**அஞ்ஞாதவாசம்** – பிறர் அறியாமல் மறைந்து வாழ்தல்.

**அஞ்ஞானம்** – அறிவின்மை; ஆணவமலம்.

**அஞ்ஞானி** – அறிவிலி.

**அஞ்ஞை** – அன்னை, தாய்; அறிவில்லான்.

**அஞர்** – துன்பம்; நோய்; சோம்பல்; வழுக்கு நிலம்; அறிவிலார்.

**அஞல், அஞலம்** } – கொசு; மின்மினி; நுளம்பு.

**அஞன்** – காண்க: **அஞ்ஞன்.**

**அட்கெனல்** – கடிய ஓசைக் குறிப்பு.

**அட்சதை** – அக்கதை; மங்கலவரிசி; அறுகரிசி; வாழ்த்தப் பயன்படும் மஞ்சளரிசி.

**அட்சம்** – உருத்திராக்கம்; கண்; பூகோள இடக்கணக்கு.

**அட்சய** – அறுபதாண்டுக் கணக்கில் இறுதி ஆண்டு.

**அட்சயதூணி** – அம்பு குறைவின்றி இருக்கும் உறை; அருச்சுனன் அம்புக் கூடு.

**அட்சயபாத்திரம்** – இரக்கும் கலன்; அள்ள அள்ளக் குறையாத உணவுக்கலம்.

**அட்சயம்** – கேடின்மை, அழியாத் தன்மை.

**அட்சயன்** – அழிவற்றவன், அமரன்; கடவுள்.

**அட்சரகணிதம்** – இயற்கணிதம்; எண்களுக்குப் பதிலாகக் குறியீடுகளை வழங்கும் கணக்கு முறை.

**அட்சரசுத்தி** – எழுத்துத் திருத்தம்; ஒலிப்புத் திருத்தம்.

**அட்சரதேவி** – கலைமகள்.

**அட்சரம்** – காண்க: **அக்கரம்.**

**அட்சரன்** – காண்க: **அக்கரன்.**

**அட்சராப்பியாசம், அட்சராரம்பம்** } – எழுத்துப் பயில்விக்கும் சடங்கு; கல்வி கற்கத் தொடங்கல்.

**அட்சாம்சம்** – பூகோள இடக்கணக்கைப் பற்றிய பகுதி.

**அட்சி** – கண்; கண்ணுடையாள்.

**அட்டக்கரி, அட்டக்கறுப்பு** } – மிகவும் கறுப்பு.

**அட்டகம்** – எட்டன் கூட்டம், எட்டன் தொகுதி கொண்டது; சிற்றிலக்கியங்களுள் ஒன்று.

**அட்டகருமக்கரு** – மாயவித்தைக் கூட்டுச் சரக்குகள்.

**அட்டகாசம்** – பெருஞ்சிரிப்பு; ஆரவாரம்; ஆர்ப்பாட்டம்.

**அட்டகிரி** – எட்டுமலைகள்; அவை: இமயம், மந்தரம், கயிலை, விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம்.

**அட்டகுணம்** – காண்க: **எண்குணம்.**

**அட்டசித்தி** – காண்க: **அட்டமாசித்தி.**

**அட்டணங்கால்** – காண்க: **அட்டணைக்கால்.**

**அட்டணை** – குறுக்கு, மடித்தல்.

**அட்டணைக்கால்** – மடித்த கால்; குறுக்காக மடக்கி வைக்கும் கால்; கால்மேலிடும் கால்.

**அட்டதாது** – எண்வகை உலோகம்.

**அட்டதிக்கயம்** – எட்டுத் திக்கு யானை.

**அட்டதிக்கு** – எண்திசை; அவை: கிழக்கு, தென் கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு.

**அட்டதிக்குப்பாலகர்** – எட்டுத்திக்குக் காவலர்; அவராவார்: இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்.

**அட்டநேமிநாதர்** – பொன்னெயில் வட்டத்தில் இருக்கும் சமணப் பெரியோர்.

**அட்டபந்த(ன)ம்** – கற்சிலைகளைப் பீடத்துடன் அசைவின்றி இருக்கப் பயன்படும் கூட்டுச் சாந்து; தீங்கு வாராமல் தடுக்கத் திக்குத் தேவதைகளை மந்திரத்தால் எட்டுத் திசை களிலும் நிறுத்துகை.

**அட்டபரிசம்** – எட்டுவகைத் தொடுகை முறை; அவை: தட்டல், பற்றல், தடவல், தீண்டல், குத்தல், வெட்டல், கட்டல், ஊன்றல்.

**அட்டபாதம்** – எண்காற் பறவை.

**அட்டபுட்பம்** – எட்டுவகைப் பூ; அவை: புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவட்டம், குவளை, பாதிரி, அலரி, செந்தாமரை.

**அட்டம்** – எட்டு; குறுக்கு; அருகிடம்; அண்மை; பக்கம்; மேல்வீடு; நேர்; சாதிக்காய்; பகை.

**அட்டமங்கலம்** – எட்டுவகை மங்கலப் பொருள்; அவை: கவரி, நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைக் கயல்; நூல்வகைகளுள் ஒன்று.

**அட்டமம்** – எட்டாவது.

**அட்டமாசித்தி** – எண்வகைச் சித்திகள்; அவை: அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்.

**அட்டமி** – எட்டாம் நாள்.

**அட்டமூர்த்தம்** – சிவனின் எட்டுவகை வடிவம்; அவை: நிலம், நீர், தீ, காற்று, வான், சூரியன், சந்திரன், இயமானன்.

**அட்டயோகம்** – எட்டுவகை யோகநிலை; அவை: இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி.

**அட்டரக்கு** – உருக்கிய அரக்கு.

**அட்டல்** – அழித்தல்; காய்ச்சுதல்; வார்த்தல்.

**அட்டலக்குமி** – எட்டு இலக்குமி; அவர்களாவார்: தனலக்குமி, தானியலக்குமி, தைரியலக்குமி, சௌரியலக்குமி, வித்தியாலக்குமி, கீர்த்தி லக்குமி, விசயலக்குமி, இராச்சியலக்குமி.

**அட்டலோககற்பம்** – பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், தரா, வங்கம், துத்த நாகம் என்னும் எட்டு உலோகங்கள் சேர்ந்த கலவைப் பொடி.

**அட்டவசுக்கள்** – தேவதைகளுள் ஒரு பிரிவினரான எட்டு வசுக்கள்; அவர்களாவார்: அனலன், அனிலன், ஆபன், சோமன், தரன், துருவன், பிரத்தியூடன், பிரபாசன்.

**அட்டவணை** – வரிசைக் குறிப்பு, தொகுத்துச் சேர்க்கப்பட்டது, பொருட்குறிப்பு.

**அட்டவணைக்கணக்கன்** – அட்டவணைக்காரன், பேரேடு எழுதும் கணக்கன்.

**அட்டவணைச்சாலை** – கணக்குவேலை பார்க்கும் இடம்.

**அட்டவணைப்பிள்ளை** – காண்க: **அட்டவணைக் கணக்கன்.**

**அட்டவிஞ்சதி** – இருபத்தெட்டு.

**அட்டவிகாரம்** – காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம், இடும்பை, அசூயை என்னும் எண்வகைத் தீக்குணங்கள்.

**அட்டவீரட்டம்** – சிவபெருமான் வீரம் வெளிப் படுத்திய எட்டு இடங்கள்; அவை: கண்டியூர், கடவூர், அதிகை, வழுவூர், பறியலூர், கோவலூர், குறுக்கை, விற்குடி.

**அட்டவெற்றி** – வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை எனப்படும் எண்வகைப் போர் வெற்றி.

**அட்டன்** – எண்வகை மூர்த்தியான சிவபெருமான்.

**அட்டனம்** – சக்கராயுதம்.

**அட்டாக்கரம்** – திருமாலை வழிபடும் 'ஓம் நமோ நாராயண' என்னும் எட்டெழுத்து மந்திரம்.

**அட்டாங்கம்** – எண்வகை உறுப்பு; அவை: இரு கால், இருகை, இருதோள், மார்பு, நெற்றி.

**அட்டாணி** – கோட்டை மதில்மேல் மண்டபம்.

**அட்டாதுட்டி** – மிக்க துடுக்குத்தனம்; அடாவடி, தாறுமாறு; குறும்பு.

**அட்டால(ள)கம், அட்டாலம், அட்டலி(ளி)கை, அட்டாலை** – கோட்டை மதில்மேலுள்ள காவற்கூடம்; மேல்மாடி, மேல்வீடு.

**அட்டாவதானம்** – ஒரே வேளையில் எட்டுச் செயல்களில் கவனம் செலுத்துகை.

**அட்டாவதானி** – ஒரே சமயத்தில் எண்வகை நினைவாற்றல் உள்ளவன்.

**அட்டாளை** – ஒரு மரம்.

**அட்டி** – அதிமதுரம்; செஞ்சந்தனம்; எட்டி; பருப்பு; தாமதம்; தடை; கப்பலின் பின்பக்கம்; பீப்பாயின் மேல் கீழ்ப் பக்கம்.

**அட்டி** (வி) – இட்டு, தடைந்து.

**அட்டிகை** – மகளிர் கழுத்தணிவகை.

**அட்டிப்பேறு** – தான சாசனத்தால் கொடுக்கப் பட்ட உரிமை.

**அட்டிமை** – ஓமம்; சீரகம்.

**அட்டியல்** – காண்க: **அட்டிகை.**

**அட்டில், அட்டிற்சாலை** – சமையலறை, அடுக்களை, மடைப்பள்ளி, வேள்விச் சாலை.

**அட்டு** – பனாட்டு, பனைவெல்லம்; சமைக்கப் பட்டது.

**அட்டுதல்** – அழித்தல்; குற்றுதல்; இடுதல்; அள்ளுதல்; எடுத்தல்; வடிதல்; வடித்தல்; சமைத்தல்; வார்த்தல்; சொரிதல்; சுவைத்தல்; செலுத்துதல்; தான சாசனம் அளித்தல்.

**அட்டுப்பு** – காய்ச்சப்பட்ட உப்பு.

**அட்டும்** – 'வரட்டும்' என்றாற்போல வரும் ஒரு வியங்கோள் விகுதி.

**அட்டூழியம்** – தகாத செய்கை; தீம்பு, கொடுமை.

**அட்டை** – நீர்வாழ் உயிர்களுள் ஒன்று; செருப்பினடி; காகித அட்டை; மிகுகனமுள்ள தாள்; புத்தக மேலுறை.

**அட்டையாடல்** – உடல் துண்டிக்கப்பட்டாலும் அட்டைபோல வீரனின் உடல் வீரச் செயல் காட்டி ஆடுதல்.

**அட்டோலகம்** – உல்லாசம்; பகட்டு.

**அடக்கம்** – மனமொழிமெய்கள் அடங்குகை; கீழ்ப்படிவு; பணிவு; அடங்கிய பொருள்; மறை பொருள்; கொள்முதல்; **பிணம்** அடக்கம் செய்தல்.

**அடக்கம்பண்ணுதல்** – உள்ளடக்கி வைத்தல், மறைத்தல்; சேமஞ்செய்தல்; புதைத்தல்; பிணம் முதலியவற்றைப் புதைத்தல்.

**அடக்கல்** – மறைத்தல்; கீழ்ப்படுத்துதல்; உட் படுத்துதல்; ஒடுக்கல்; பணியச் செய்தல்.

**அடக்கியல்வாரம்** – சிலவகைக் கலிப்பாவின் இறுதியில் வரும் சுரிதகம் என்னும் உறுப்பு.

**அடக்குமுறை** – அடக்கியாளும்முறை; கண்டித்து அடக்குகை.

**அடகு** – இலை; இலைக்கறி, கீரை; ஈட்டுப் பொருள்; கொதுவை; மகளிர் விளையாட்டு வகை.

**அடங்கல்** – எல்லாம்; முழுதும்; தங்குமிடம்; பயிர்செய்கைக் கணக்கு; செய்யத்தக்கது.

**அடங்கல்முறை** – முதல் ஏழு தேவாரத் திரு முறைகளைக் கொண்ட நூல்; சம்பந்தர், அப்பர், சுந்தரர் என்னும் மூவர் பாடிய பக்திப் பாடல்கள்.

**அடங்கலன்** – அடங்காதவன்; பகைவன்; மன மடக்க மற்றவன்.

**அடங்கலும்** – அனைத்தும், முழுதும்; எல் லோரும்.

**அடங்காப்பிடாரி** – எவர்க்கும் அடங்காதவள்.

**அடங்காவாரிதி** – கடலுப்பு; மூத்திரம்.

**அடங்குதல்** – அமைதல்; நெருங்குதல்; கிடத்தல்; கீழ்ப்படிதல்; சுருங்குதல்; நின்றுபோதல்; படிதல்; மறைதல்; புலன் ஒடுங்குதல்; உறங்கு தல்; சினையாதல்.

**அடசுதல்** – செறிதல்; சிறிது விலகுதல்.

**அடஞ்சாதித்தல்** – வன்மங்கொள்ளுதல்.

**அடடா** – வியப்புக்குறிப்பு; இகழ்ச்சிக் குறிப்பு; இரக்கக் குறிப்பு.

**அடத்தி** – வாசி, வட்டமாகக் கழிக்கும் காசு; தரகு; மொத்த வணிகம்.

**அடதாளம்** – ஏழுவகைத் தாளங்களுள் ஒன்று.

**அடப்பங்கொடி** – கொடிவகை.

**அடப்பம்** – காண்க: **அடைப்பம்.**

**அடப்பம்விதை** – வாதுமைப் பருப்பு.

**அடப்பன், அடப்பனார்** – பரவர் பட்டப்பெயர்.

**அடம்** – ஈனம்; சஞ்சாரம்; பொல்லாங்கு; பிடி வாதம்; கொட்டைப்பாசி.

**அடம்பு** – அடப்பங்கொடி; கடம்பு; கொன்றை.

**அடயோகம்** – நால்வகை யோகங்களுள் ஒன்று.

**அடர்** – தகடு; தகட்டு வடிவம்; நெருக்குகை; செறிவு, நெருக்கம்; பூவிதழ்.

**அடர்த்தல்** – நெருக்குதல்; அமுக்குதல்; வருத்து தல்; போர் புரிதல்; தாக்குதல்; கொல்லுதல்; கெடுத்தல்.

**அடர்த்தி** – நெருக்கம், செறிவு.

**அடர்தல்** – மிகுதல்; செறிதல்; நெருங்கல்; வருந் தல்; பொருதல்; துன்புறுதல்; தட்டி உரு வாக்குதல்.

**அடர்ப்பம், அடர்பு(வு)** – காண்க: **அடர்த்தி.**

**அடர்மை** – நொய்ம்மை.

**அடரடிபடரடி** – பெருங்குழப்பம்.

**அடல்** – வலிமை; வெற்றி; போர்; கொலை; பகை; மீன்வகை.

**அடலம்** – மாறாமை; விகாரமடையாமை.

**அடலார்** – பகைவர்; போர்வீரர்.

**அடலி** – அடுக்களை வேலை பார்க்கும் ஏவற் பெண்.

**அடலை** – சாம்பல்; திருநீறு; துன்பம்; சுடுகாடு; போர்; போர்க்களம்.

**அடலைமுடலை** – வீண்பேச்சு.

**அடவாதி** – பிடிவாதக்காரன்; தீராப் பகை யுள்ளவன்.

**அடவி** – காடு; சோலை; நந்தவனம்; திரள், கூட்டம், தொகுதி.

**அடவிக்கொல், அடவிச்சொல்** – காண்க: **கோரோசனை.**

**அடவியில்திருடி** – சதுரக்கள்ளி.
**அடா** – இகழ்ச்சி வியப்புகளின் குறிப்பு.
**அடாசு** – மட்கின பொருள்.
**அடாசுதல்** – விலகுதல்; திணித்தல்.
**அடாணா** – ஒரு பண்வகை.
**அடாத்தியம்** – அடாதது; பொருந்தாதது; முறையற்றது.
**அடாதது, அடாது** – தகாதது, பொருந்தாதது; சமைக்கப்படாதது.
**அடாதுடி** – தீம்பு, தீச்செயல்.
**அடாநிந்தை** – ஆதாரமற்ற பழிச்சொல்; பொறுக்கக்கூடாத பழிச்சொல்.
**அடாநெறி** – தகாத வழி.
**அடாப்பழி** – தகாத நிந்தை.
**அடார்** – விலங்குகளை அகப்படுத்தும் பொறி; ஒருவகைப் பொறி; தரிசு.
**அடார்வெளி** – தரிசுநிலம்.
**அடாவடி** – கொடுஞ்செயல்.
**அடாவந்தி** – அநியாயம், இட்டேற்றம், துன்பம்.
**அடாற்காரம்** – வலாற்காரம்.
**அடி** – பாதம்; காற்சுவடு; முதல்; கடவுள்; பாட்டின் அடி; அடிப்பீடம்; அண்மை; மரபுவழி; அளவு; கீழ்; மகடூஉ முன்னிலை.
**அடி (வி)** – அடி என் ஏவல்; புடை; தாக்கு; வீசு; மோது; கொல்லு.
**அடிக்கட்டை** – வெட்டிய மரத்தின் அடி; பாய் மரத்தின் அடிப்பகுதி.
**அடிக்கடி** – பலமுறை; திரும்பத்திரும்ப; மறுபடியும் மறுபடியும்; அடிபெயர்க்குந்தோறும்.
**அடிக்கணை** – கணைக்கால்.
**அடிக்கயில்** – தேங்காயின் அடிப்பாகம்.
**அடிக்கலம்** – சிலம்பு, காலணி; கப்பல் தளம்.
**அடிக்கழஞ்சுபெறுதல்** – பெருமதிப்புப் பெறுதல்.
**அடிக்கீழ்** – அடியுறை மாக்கள்; வணக்கமொழி; ஆதரவின்கீழ்.
**அடிக்குச்சி** – குச்சியின் அடிப்பகுதி; அளவுகோல்.
**அடிக்குடி(ல்)** – அடிமைக்குலம்; அடிச்சேரி; பணியாளர் இருப்பிடம்; வேடர் இருக்கும் ஊர்; நகர்ப்புறம்; சிற்றூர்.
**அடிக்குள்** – உடனே; அருகில்.
**அடிக்கொருகால்** – அடிக்கடி.
**அடிக்கொள்ளுதல்** – தோன்றுதல்; தொடங்குதல்.
**அடிக்கோல்** – காண்க: **அடிக்குச்சி.**
**அடிகள்** – கடவுள்; தலைவி; மூத்தோன்; பெரியோர் பெயருடன் வழங்கும் மொழி; முனிவர்; சுவாமி; குரு; பெருமாட்டி.
**அடிகாரன்** – உணவுக்காகக் கால்நடைகளைக் கொல்பவன்; சிலம்பம் வீசுவோன்.
**அடிகாற்று** – பெருங்காற்று, சண்டமாருதம்.
**அடிகோலுதல்** – தொடங்குதல்; முயலுதல்; அடிப்படையிடுதல்.
**அடிச்சால்** – உழவின் முதற்சால்.
**அடிச்சி** - அடியவள்; அடிமைப்பெண், குற்றேவல் மகள்; வேலைக்காரி.
**அடிச்சிரட்டை** – தேங்காயின் அடிக்கொட்டாங்கச்சி.
**அடிச்சீப்பு** – வாழைக்குலையின் முதல் சீப்பு.
**அடிச்சுவடு** – அடித்தடம்; காலடிச் சுவடு, காலடியின் அடையாளம்.
**அடிச்சூடு** – பாதத்தில் உறைக்கும் வெப்பம்; உட்சூடு.
**அடிச்சேரி** – அடிமைகள் குடியிருப்பிடம்; அயலூர்; நகரவெல்லையில் இருக்கும் ஊர்; ஊர்ப்பணியாளர் குடியிருப்பு.
**அடிசாய்தல்** – நிலைகுலைதல்; அடியின் நிழல் சாய்தல்.
**அடிசில்** – உணவு, சோறு.
**அடிசிற்சாலை, அடிசிற்பள்ளி, அடிசிற்றளி** – அன்னசத்திரம்; மடைப்பள்ளி.
**அடிசிற்புறம்** – உணவுக்காக விடப்பட்ட இறையிலி நிலம்.
**அடிஞானம்** – முத்திக்குரிய ஞானம்; சிவஞானம்.
**அடித்தடம்** – காண்க: **அடிச்சுவடு.**
**அடித்தல்** – புடைத்தல்; தாக்குதல்; ஆணி முதலியன அறைதல்; முத்திரையிடல்; தண்டித்தல்; வீசுதல்; சிறகடித்தல்; துடித்தல்; விளையாடுதல்.
**அடித்தலம்** – கீழிடம்; கால்; அடிப்படை.
**அடித்தழும்பு** – அடிபட்ட தழும்பு; காற்சுவடு.
**அடித்தளம்** – அடிமட்டம்; அடிவரிசை; கீழ்ப்படை; பின்னணி.
**அடித்தாறு** – அடிச்சுவடு; காலடி இரேகை.
**அடித்தி** – காண்க: **அடிச்சி;** வணிகப் பேராளர்.
**அடித்திப்பை** – ஆதாரம்.
**அடித்திவியாபாரம்** – மொத்த வணிகம்.
**அடித்துக்கொண்டு போதல்** – வாரிக்கொண்டு போதல்; கொள்ளையிட்டுப் போதல்.
**அடித்துக்கொள்ளுதல்** – அறைந்துகொள்ளுதல்; சண்டையிடுதல்.
**அடித்துகளாற்றல்** – காலைத் தூய்மைசெய்தல்; விருந்தோம்பும் முறையில் ஒன்று; கால் அலம்ப நீர் உதவுதல்.
**அடித்தூறு** – மரத்தின் அடிக்கட்டை; மரத்தின் வேர்ப்பகுதி.
**அடித்தொடை** – தொடையின் மேற்பாகம்; தொடையின் பின்புறம்.
**அடித்தொழில்** – குற்றேவல்.

**அடித்தொழும்பு** – குற்றேவல்; பாதப்பணிவிடை.
**அடித்தோழி** – தலைமைத்தோழி.
**அடிதடி** – சண்டை; அடிக்குங்கோல்.
**அடிதண்டம்பிடிதண்டம்** – முழுமையாகவசப்பட்ட பொருள்.
**அடிதண்டா** – மண்வெட்டி; கதவை இறுக்கும் நீண்ட தாழ்.
**அடிதலை** – கீழ்மேல்; அடிமுடி; வரலாறு.
**அடிதாளம்** – கைகளால் போடும் தாளம்.
**அடிதாறு** – அடிச்சுவடு.
**அடிதோறும்** – அடிக்கடி; ஒவ்வோர் அடியிலும்.
**அடிநகர்தல்** – இடம்விட்டுப் பெயர்தல்.
**அடிநா** – நாவின் அடி; உள்நாக்கு.
**அடிநாய், அடிநாயேன்** – பெரியோர்முன் தன்னைத் தாழ்த்திக் கூறும் சொல்; ஒரு வகை வணக்கமொழி.
**அடிநாள்** – முதல்நாள்; ஆதிகாலம்; தொடக்கம்.
**அடிநிலை** – மரவடி என்னும் பாதக்குறடு, காலணி; அடிப்படை.
**அடிநீறு** – பாததூளி, காலில் படிந்த துகள்.
**அடிப்பட்ட சான்றோர்** – வழிவழிப் பெரியோர்; பண்டைப் புலவர்.
**அடிப்பட்ட வழக்கு** – பழைய வழக்கம்.
**அடிப்படுத்துதல்** – கீழ்ப்படுத்துதல்; பழக்குதல்; நிலைபெறச் செய்தல்.
**அடிப்படுதல்** – அடிச்சுவடு படுதல்; கீழ்ப்படுதல்; பழகுதல்; அடிமைப்படுதல்.
**அடிப்படை** – ஆதாரம்; மூலம்; அடியிற் கிடப்பது; அடித்தளம்; படையில் தலைமை யாக உள்ள பகுதி.
**அடிப்பணி** – காண்க: **அடித்தொழும்பு.**
**அடிப்பதறுதல்** – கால் நடுங்குதல்; நிலை தவறுதல்; மனங்கலங்குதல்.
**அடிப்பந்தி** – முதற்பந்தி; உண்போரின் முதல் வரிசை.
**அடிப்பலம்** – மூலவலிமை.
**அடிப்பலன்** – முதற்பயன்.
**அடிப்பற்றுதல்** – தீய்ந்துபோதல்; பாண்டத்தின் அடியில் பிடித்தல்; திருவடியைப் பற்றுதல்.
**அடிப்பாடு** – பழக்கம்; பாதை; அடிச்சுவடு; அடிப்பட்ட வழி; வழக்கு; உறுதிநிலை; வரன் முறை; வரலாறு; திருவடியில் ஈடுபாடு.
**அடிப்பாய்தல்** – தாவிக் குதித்தல்.
**அடிப்பாரம்** – அடிக்கனம்; அடிப்படை; சிரங்கின் வீக்கம்.
**அடிப்பிச்சை** – முதலில் பெறும் பிச்சை; பிச்சைக் குப் போவோர் கலத்தில் இட்டுக்கொள்ளும் பொருள்; சிறு மூலதனம்.
**அடிப்பிடித்தல்** – அடிச்சுவட்டைக்கண்டுபிடித்தல்; முதலிலிருந்து தொடங்குதல்; பின்தொடர்தல்; காலைப் பிடித்து வேண்டுதல்; குறிப்பறிதல்; துப்பறிதல்; கறி முதலியன பாண்டத்தில் பற்றுதல்.
**அடிப்பிரதட்சிணம்** – அடியடியாய்ச் சென்று கோயிலை வலம்வருகை.
**அடிப்புக்கூலி** – கதிரடிக்கும் கூலி.
**அடிப்போடுதல்** – தொடங்குதல்.
**அடிபடுதல்** – தாக்குண்ணுதல், அடிக்கப்படுதல்; நீக்கப்படுதல்; பழைமையாதல்; வழங்குதல்; எட்டுதல்.
**அடிபணிதல்** – காலில் விழுந்து வணங்குதல், தண்டனிடுதல்.
**அடிபறிதல்** – வேரோடு பெயர்தல்.
**அடிபாடு** – மாடு முதலியவற்றின் உழைப்பு.
**அடிபார்த்தல்** – நிழலை அளந்து பொழுது காணல்; ஏற்றசமயம் நோக்குதல்.
**அடிபிடி** – சண்டை.
**அடிபிழைத்தல்** – நெறிதவறி நடத்தல்; பெரியவர் களுக்குத் தவறு செய்தல்.
**அடிபிறக்கிடுதல்** – பின்வாங்குதல்; புறங்காட்டு தல், தோல்வியுறல்.
**அடிபுதையரணம்** – செருப்பு, மிதியடி.
**அடிபெயர்த்தல்** – காலை நகர்த்தி வைத்தல்; விலகுதல்.
**அடிமடக்கு** – பொருள் வேறுபட்டோ படா மலோ செய்யுளின் அடி மீண்டும்மீண்டும் வருதல்.
**அடிமடி** – உள்மடி; ஆடையின் உள்மடிப்பு.
**அடிமடை** – முதல்மடை.
**அடிமடையன்** – முழுமூடன்.
**அடிமண்** – கீழ்மண்; காலடியில் ஒட்டிய மண்.
**அடிமணை** – ஆதாரம்; அடிமணைத்தட்டு; படகின் உட்பலகை; வண்டியினுள் பொருத் திய பலகை; கால்வைக்கும் பலகை.
**அடிமயக்கு** – அடிகள் தடுமாறுதல்; பாவடிகள் முன்பின்னாதல்.
**அடிமரம்** – கிளைக்கும் வேருக்கும் இடைப்பட்ட மரத்தின் பாகம்; பாய்மரத்தின் அடிப்பாகம்.
**அடிமறிமண்டிலம்** – அகவற்பா வகையுள் ஒன்று; எல்லா அடிகளும் ஒத்து முன்பின் மாற்றினும் பொருள் பொருத்தமுற அமையும் ஆசிரியப்பா.
**அடிமறிமாற்று** – பொருள்கோள் எட்டனுள் ஒன்று; செய்யுளடிகளைப் பொருளுக்கு ஏற்றபடி கொண்டுகூட்டுவது.
**அடிமனை** – சுற்றுச் சுவர்; கட்டடத்தின் முதன் மைச் சுவர்.
**அடிமாடு** – கொல்லுதற்குரிய மாடு.
**அடிமாண்டுபோதல்** – அறவே ஒழிதல், முற்றும் அழிதல்.
**அடிமுட்டாள்** – காண்க: **அடிமடையன்.**

**அடிமுடி** – ஆதியந்தம்; கீழ்மேல்; கால்முதல் தலைவரை; வரலாறு.

**அடிமுண்டம்** – வெட்டிய மரத்தின் அடிப்பாகம்; பயனற்றவன்(ள்).

**அடிமுந்தி** – அடிமுன்றானை.

**அடிமை** – தொண்டுபடும் தன்மை; அடிமையாள்; தொண்டன்.

**அடிமைப்படல்,**
**அடிமைபூணல்** } – அடிமையாதல்.

**அடிமையோலை** – அடிமைப் பத்திரம்.

**அடிமோனைத்தொடை** – அடிகள்தோறும் முதல் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது.

**அடியடியாக** – ஒவ்வோர் அடியாக; தலைமுறை தலைமுறையாக.

**அடியந்திரம்** – திருமணம் முதலிய சிறப்பு நிகழ்ச்சிகள்.

**அடியல்** – கதிரடிக்கை; சொரிகை; தொடர்கை.

**அடியவன்** – அடிமை, தொண்டன்.

**அடியளபெடைத்தொடை** – அடிகள்தோறும் முதலில் அளபெடைவரத் தொடுப்பது.

**அடியறிதல்** – முதற்காரணம் தெரிதல்.

**அடியறுக்கி** –மட்கலம் அறுக்கும் கருவி.

**அடியறுத்தல்** – அடியோடு களைதல், முற்றும் நீக்குதல்.

**அடியனாதி** – தொன்மைக்காலம், தொன்று தொட்டுள்ளது.

**அடியாகுஎதுகை** – காண்க: **அடியெதுகை.**

**அடியாட்டி** – அடியாள், அடிமை வேலை செய்பவள்.

**அடியாள்** – குற்றேவல் செய்வோன்(ள்); எதிரியை அடிப்பதற்காகக் கூலிக்கு அமர்த்தப் படும் ஆள்.

**அடியான்** – தொண்டன்; ஏவலாளன்; பண்ணை யாள்.

**அடியிடுதல்** – தொடங்குதல்; அடியெடுத்து வைத்தல், கால்வைத்தல்; கூடை முதலியன முடைதற்கு அடியமைத்தல்.

**அடியியைபுதொடை** – செய்யுளின் அடிதோறும் இறுதி ஒன்றிவரத் தொடுப்பது.

**அடியிலேயுறைதல்** – வழிபடுதல்; எண்ணெய் முதலியவற்றின் கசடு கீழ்ப்பகுதியில் தங்கிக் கெட்டிப்படுதல்.

**அடியீடு** – அடியிட்டு நடத்தல்; தொடக்கம்.

**அடியுணி** – அடிபட்டவன்.

**அடியுரம்** – முன்பு இட்ட எரு; மரத்தைச் சுற்றி யிடும் எரு; ஆற்றல்; முந்தையோர் சொத்து.

**அடியுறை** – பாதகாணிக்கை; வழிபட்டுறைகை; ஒரு வணக்கமொழி; தொண்டன்.

**அடியெடுத்தல்** – அப்பாற்போதல்; அடிவைத்தல்.

**அடியெதுகை** – அடிதோறும் முதலெழுத்து அளவொத்து நிற்க இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது.

**அடியேன்** – அடியவனாகிய நான் என்னும் பொருளில் வரும் ஒரு வணக்கமொழி.

**அடியொட்டி** – காலடியை எடுக்கவொட்டாமல் பிடிப்பது; காலில் தைக்கும்படி நட்டுவைக்கும் கருவி.

**அடியொத்த காலம்** – தன் நிழல் தன் அடியிலேயே விழும் பொழுது, நடுப்பகல்.

**அடியொற்றுதல்** – பின்பற்றுதல்.

**அடியோடு** – முழுவதும்.

**அடிவட்டம்** – காலடி அளவு; நாகசுரத்தின் அடிப்பூண்.

**அடிவயிறு** – கீழ்வயிறு.

**அடிவரலாறு** – காரணம்; பழைய வரலாறு; குலமுறை.

**அடிவரவு** – பாட்டின் முதற்குறிப்பு.

**அடிவருடல்** – கால்பிடித்தல்.

**அடிவரையறை** – அடியெல்லை; அடிக்கணக்கு.

**அடிவாரம்** – மலைச்சாரல், மலையின் அடிப்பகுதி.

**அடிவானம்** – திசைமுடிவு, கீழ்வானம்; அடிப் படை.

**அடிவிரிதல்,**
**அடிவிள்ளுதல்** } – அடிப்பகுதி விரிசல் காணல்; பாண்டத்தினடி பழுதாதல்.

**அடிவினை** – ஆடை வெளுத்தல்; சூழ்வினை; மாறாட்டம்; களவு.

**அடிவீழ்ச்சி** – அடிசாய்தல்; வணக்கம்.

**அடிவீழ்தல்** – தண்டனிடுதல், காலில் விழுந்து வணங்கல்.

**அடிவெண்குருத்து** – இறகினடி; பாங்குருத்து, இளங்குருத்து.

**அடிவைத்தல்** – காலடி வைத்தல்; தொடங்குதல்; நடக்கப் பழகுதல்; தலையிடல்.

**அடு** (வி) – சமை, தீயிற் பாகமாக்கு; சேர்.

**அடுக்கடுக்காய்** – வரிசை வரிசையாய்.

**அடுக்கம்** – ஒன்றன்மேல் ஒன்றாய் அமைந்தது; குவிக்கை; செறிவு; படுக்கை; மலைப்பக்கம், பக்கமலை; வரிசை; மரநெருக்கம்; சோலை.

**அடுக்கல்** – அடுக்கு; அடுக்கப்பட்டது; ஒன்றன் மேல் ஒன்றாய் வைத்தல்; மலை; பாறை; படுக்கை; குவித்தல்; தொகுத்தல்.

**அடுக்கலிடுதல்** – நெல் முதலியவற்றை இரண் டாம் முறை குற்றுதல்.

**அடுக்களை** – சமையலறை, மடைப்பள்ளி.

**அடுக்களைகாணுதல்** – திருமணத்தை யடுத்துத் தாய் தன் மகளின் இல்லத்திற்கு முதன் முறையாகச் செல்லுகை.

**அடுக்கு** – அடுக்கப்பட்டது; ஒழுங்கு; வரிசை; அடுக்குச் சொல்.

**அடுக்குக்குலைதல்** – நிலையழிதல்.

**அடுக்குத்தொடர்** – ஒரேசொல் அடுக்கி வருவது.

**அடுக்குதல்** – அடுக்கல்; ஒன்றன்மேல் ஒன்றாக வைத்தல்; வரிசைப்பட வைத்தல்.

**அடுக்குப்பாத்திரம்** – ஒன்றனுள் ஒன்றாய்ச் செருகப்பட்ட பாண்ட அடுக்கு.

**அடுக்குமெத்தை** – ஒன்றன்மேல் ஒன்றாய் உள்ள பல மாடிக் கட்டடம்; அடுக்கடுக்காய் உள்ள பஞ்சணை.

**அடுகலம்(ன்)** – சமையற் பாண்டம்.

**அடுகளம்** – போர்க்களம், சண்டை செய்யுமிடம்.

**அடுகிடைபடுகிடை** – நினைத்தது பெறுமளவும் நீங்காது படுத்துக்கிடக்கை; நோய்வாய்ப் படுகை.

**அடுகுவளம்** – உணவு; அடுக்கிவைக்கப்பட்ட உணவுப்பெட்டி.

**அடுகை** – காண்க: **அடுதல்.**

**அடுகைமனை** – காண்க: **அடுக்களை.**

**அடுங்குன்றம்** – யானை.

**அடுசில்** – காண்க: **அடிசில்.**

**அடுசிலைக்காரம்** – செந்நாயுருவி.

**அடுத்தடுத்து** – ஒன்றன்மேல் ஒன்றாய்; அடிக்கடி.

**அடுத்தணித்தாக** – அண்மையாக.

**அடுத்தல்** – கிட்டல்; சேர்தல்; மேன்மேல் வருதல்; சார்தல்; ஏற்றதாதல்; அடைதல்; பொருத்தல்.

**அடுத்துமுயல்தல்** – இடைவிடாது முயலுதல்.

**அடுத்துவரலுவமை** – உவமைக்கு உவமை கூறல்.

**அடுத்தூண்** – வாழ்வுக்கு விடப்பட்ட நிலம்.

**அடுத்தேறு** – மிகை.

**அடுதல்** – கொல்லுதல்; தீயிற் பாகமாக்குதல்; சமைத்தல்; வருத்துதல்; போராடுதல்; வெல்லுதல்; காய்ச்சுதல்; குற்றுதல்; உருக்குதல்.

**அடுநறா** – காய்ச்சிய சாராயம்.

**அடுப்ப(பா)ங்கரை** – அடுப்பின் பக்கம்; அடுக்களை.

**அடுப்பம்** – கனம்; நெருங்கிய உறவு.

**அடுப்பு** – சேர்க்கை; பரணி நாள்; நெருப்பு எரியும் அடுப்பு.

**அடுப்பூதி** – சமையல் செய்பவன்(ள்).

**அடும்பு** – அடம்பு; அடப்பங்கொடி.

**அடை** – இலை; வெற்றிலை; கனம்; அப்பம்; கரை; முளை; வழி; பண்பு; பொருந்துகை; அடைகாக்கை; அடைக்கலம்; அடுத்து நிற்பது; பொருளுணர்த்தும் சொல்லை அடுத்து நின்று சிறப்பிக்கும் சொல்.

**அடைக்கலக்(ங்)குருவி, அடைக்கலாங்குருவி** – சிட்டுக்குருவி.

**அடைக்கப்புடைக்க** – விரைவாக.

**அடைக்கலம்** – புகலிடம்; கையடை; அடைக்கலப் பொருள்.

**அடைக்கலம்புகல்** – சரணம்புகல்; அடிமையாதல்.

**அடைக்காய்** – பாக்கு; தாம்பூலம்.

**அடைகட்டுதல்** – நீரைத் தடுக்க வரம்பு உண்டாக்குதல்; வண்டி நகராதபடி சக்கரத்தின்முன் தடை வைத்தல்; ஊர்திகளின் சக்கரத்தைத் தூக்க முட்டுக்கொடுத்தல்.

**அடைகடல்** – கடற்கரை.

**அடைகரை** – கரைப்பக்கம்.

**அடைகல்** – பட்டடைக்கல்; அடிப்படைக் கல்; மதகு அடைக்கும் கல்.

**அடைகாத்தல்** – கோழி முதலியவை குஞ்சு பொரிக்க முட்டையை அணைத்துக் காத்தல், பறவைகள் அவயம் காத்தல்.

**அடைகாய்** – காண்க: **அடைக்காய்.**

**அடைகிடத்தல்** – காண்க: **அடைகாத்தல்;** தங்கியிருத்தல்.

**அடைகுடி** – சார்ந்த குடும்பம்; பயிரிடும் குடி.

**அடைகுத்துதல்** – அடைமானம் வைத்தல்.

**அடைகுளம்** – வாய்க்கால் இல்லாத குளம்; நீர் தேங்கிக் கிடக்கும் குளம்.

**அடைகுறடு** – கம்மியர் பட்டடை; பற்றுக்குறடு.

**அடைகொள்ளுதல்** – ஒற்றியாகப் பெறுதல்; அடைக்கலப் பொருளைக் காக்க ஒருப்படுதல்.

**அடைகொளி** – அடையைப் பெற்ற பெயர், அடைச்சொல்லைக்கொண்டு நிற்கும் சொல்.

**அடைகோழி** – அடைகாக்கும் கோழி.

**அடைச்சுதல்** – செருகுதல்; மலர்சூட்டல்; உடுத்துக் கொள்ளுதல்; பொத்துதல்; அடைவித்தல்.

**அடைசல்** – பொருள் நெருக்கம்; காண்க: **அடைசுதல்.**

**அடைசாரல்** – பருவகாலத்து அடைமழை.

**அடைசீலை** – பாளச்சீலை.

**அடைசுதல்** – ஒதுங்குதல்; கிட்டுதல்; செருகுதல்; நெருங்குதல்; பொருந்துதல்; நிறைவாதல்; ஒதுக்குதல்; கதுப்புக்குள் வைத்துக்கொள்தல்.

**அடைசுபலகை** – செருகுபலகை, கதவுநிலைகளின்மேல் வைக்கும் சூரியப்பலகை.

**அடைசொல்** – காண்க: **அடைமொழி;** சொல்லின் இறுதிநிலையாகிய விகுதி.

**அடைத்த குரல்** – கம்மிய குரல்.

**அடைத்தது** – இட்ட கட்டளை.

**அடைத்தல்** – சேர்த்தல்; தடுத்தல்; பூட்டல்; அடைக்கப்படுதல்; மறைத்தல்; சாத்துதல்; சிறைவைத்தல், காவல் செய்தல்; வேலியடைத்தல்.

**அடைத்து** – முழுவதும்.

**அடைத்துப் பெய்தல்** – மேக மூட்டமாய் விடாது பெய்தல்.

**அடைதல்** – சேருதல்; பெறுதல்; கூடுதல்; ஒதுங்குதல்; அடுத்தல்; சரண்புகுதல்.

**அடைதூண்** – தயிர்கடை தறி, மத்தைக் கோத்துக் கயிறிட்டுக் கடையப் பயன்படுத்தும் சிறுதூண்.

**அடைந்தோர்** – அடைக்கலம் புகுந்தவர்; சுற்றத்தார்.

**அடைநிலை** – கலிப்பாவின் உறுப்பாகிய தனிச் சொல்.

**அடைநேர்தல்** – மகளைக் கொடுத்தற்கு ஒருப்படுதல்.

**அடைப்பகம்** – நாற்புறமும் காப்புள்ள இடம்; சிறைச்சாலை.

**அடைப்பம்** – அம்பட்டனின் ஆயுத உறை; வெற்றிலை பாக்குப் பை.

**அடைப்ப(பா)ன்** – தடுக்கும் பொருள்; மூடி; மாடுகளுக்குத் தொண்டையில் உண்டாகும் ஒரு வகை நோய்.

**அடைப்பு** – மறைப்பு; வேலி; படற்கதவு; குத்தகை.

**அடைப்புக்குறிகள்** – சொல், எண் முதலியவற்றின் இருபக்கமும் இடும் வளைவுக் குறியீடுகள்.

**அடைப்புண்ணுதல்** – ஒன்றனுள் அடங்குதல்.

**அடைப்பை** – வெற்றிலைப் பை.

**அடைப்பைக்காரன், அடைப்பையான்** – வெற்றிலைப் பை வைத்திருக்கும் ஏவலாளன்; வெற்றிலையை மடித்துக் கொடுக்கும் ஊழியக்காரன்.

**அடைபுடை** – இராப்பகல்; அக்கம்பக்கம்.

**அடைமண்** – கலப்பையில் ஒட்டும் மண்; வண்டல் மண்.

**அடைமதிற்படுதல்** – முற்றுகையிடப்படுதல்.

**அடைமழை** – விடாமழை.

**அடைமாங்காய்** – மாங்காய் வற்றல்; மாங்காய் ஊறுகாய்.

**அடைமானம்** – ஈடு; வழிவகை; உவமை.

**அடைமொழி** – ஒன்றன் சிறப்பை உணர்த்த அடுத்து வரும் சொல்; சிறப்புச் சொல்.

**அடைய** – சேர; முழுவதும், எல்லாம்.

**அடையலர்** – பகைவர்.

**அடையாண்கிளவி** – அடையாளச் சொல்.

**அடையார்** – பகைவர்.

**அடையாள்** – வேலையாள்.

**அடையாளம்** – சின்னம்; அறிகுறி; முத்திரை; குறிப்பு; மாதிரி.

**அடையுண்ணுதல்** – அடைபடுதல்.

**அடையெழுதுதல்** – கணக்கில் தாக்கல் செய்தல்.

**அடையோலை** – அடைமானப் பத்திரம்.

**அடைவு** – ஈடு; முறை; தகுதி; வரிசைமுறை; அட்டவணை; வழி; துணை; புகலிடம்; வரலாறு; எல்லாம்.

**அடைவுகேடு** – முறைகேடு.

**அடைவுபடுதல்** – ஒழுங்காதல்.

**அடைவே** – முறையே; நெடுக.

**அண்** – மேல்; வேட்டைநாயின் உருவுகயிறு; தடியில் வெட்டிய வரை.

**அண்டகடாகம், அண்டகபாலம்** – அண்ட கோளத்தின் மேல் ஓடு; நிலவுருண்டையின் ஓடு.

**அண்டகம்** – குப்பைமேனி.

**அண்டகூடம்** – காண்க: **அண்டகோளகை.**

**அண்டகோசம்** – காண்க: **அண்டகடாகம்.**

**அண்டகோளகை, அண்டகோளம்** – உலகவுருண்டை.

**அண்டங்காக்கை** – உடல் முழுமையும் கருநிறமுடைய காகம், காக்கையில் ஒருவகை; உலகத்தைக் காத்தல்.

**அண்டச்சுவர்** – காண்க: **அண்டகடாகம்.**

**அண்டசம்** – முட்டையிலிருந்து பிறப்பன, முட்டையில் பிறக்கும் உயிர்கள்.

**அண்டப்பித்தி** – காண்க: **அண்டகடாகம்.**

**அண்டப்புத்தேள்** – விராட்புருடன், உலகங்களின் உருவமான பரப்பிரமம்.

**அண்டப்புரட்டன்** – பெருமோசக்காரன்.

**அண்டப்புளுகன்** – பெரும்பொய்யன்.

**அண்டபகிரண்டம்** – உலகமும் அதன் புறத்தேயுள்ள ஏனைய உலகங்களும்.

**அண்டபிண்டம்** – பிரமாண்டமும் தேகமும், உலகமும் உடம்பும்.

**அண்டபேரண்டப் பட்சி** – காண்க: **அண்டரண்டப் பட்சி.**

**அண்டம்** – வானம்; முட்டை; பீசம், வித்து; உலகம்; வானம்; மேலுலகம்.

**அண்டமுகடு** – உலகத்தின் உச்சி; வானத்தின் உச்சி.

**அண்டயோனி** – முட்டையிற் பிறப்பது; சூரியன்.

**அண்டர்** – தேவர்; இடையர்; பகைவர்.

**அண்டர்பிரான்** – தேவர்தலைவன்; சிவன்; திருமால்.

**அண்டரண்டப்பட்சி** – பெரும்பறவை; கழுகு.

**அண்டரண்டம்** – தேவருலகு; ஒருவகைப் பறவை.

**அண்டல்** – காண்க: **அண்டுதல்.**

**அண்டல(லா)ர்** – பகைவர்.

**அண்டவாணன்** – ஆகாயவாசி; தேவன்; கடவுள்.

**அண்டவாதம், அண்டவாயு** – விரைவாதம்; ஒரு நோய்.

**அண்டவிருத்தி** – பீசநோய் வகை.

**அண்டன்** – கடவுள்.

**அண்டா** – பெரும் பாண்டம்.

**அண்டாகாரம்** – முட்டைவடிவம்.

**அண்டார்** – காண்க: **அண்டல(லா)ர்.**

**அண்டிக்கொட்டை** – முந்திரிக்கொட்டை.

**அண்டிகம்** – செந்நாய்.

**அண்டி(டு)தள்ளுகை** – ஒரு நோய்.

**அண்டில்** – மாடு முதலியவற்றின் கண்ணில் பற்றும் ஒரு பூச்சி.

**அண்டினவன்** – நம்பிச் சேர்ந்தவன்.

**அண்டுதல்** – நெருங்குதல்; பொருந்துதல்; ஒதுங்குதல்.

**அண்டை** – அண்மையிடம், பக்கம்; முட்டு; வரம்பு.

**அண்டைகொள்ளுதல்** – பக்கத்துணை கொள்ளுதல்.

**அண்டைபோடுதல்** – ஒட்டுப்போடுதல்.

**அண்டையயல்** – அக்கம்பக்கம்.

**அண்டைவெட்டுதல்** – வரப்பு வெட்டுதல்.

**அண்ணணி** – மிகவும் நெருக்கம்.

**அண்ண(ணா)ந்தாள்** – மாடு முதலியவற்றின் கழுத்துக்கும் காலுக்கும் பூட்டும் கயிறு; தண்டனைவகை; கழுத்தைப் பிணைக்குங் கயிறு.

**அண்ணம்** – மேல்வாய்; மேல்வாய்ப்புறம்; உள்நாக்கு; கீழ்வாய்ப்புறம்.

**அண்ணல்** – பெருமை; பெருமையுடையவர், பெருமையிற் சிறந்தவர்; அடிகள்; தலைமை; தலைவன்; தமையன்; அரசன்; கடவுள்; முல்லைநிலத் தலைவன்.

**அண்ணன்** – முன்பிறந்தவன், மூத்தோன், தமையன்.

**அண்ணா** – உள்நாக்கு; அண்ணன் என்பதன் விளி; அண்ணாமலை.

**அண்ணாக்கு** – உள்நாக்கு.

**அண்ணாத்தல்** – வாய்திறத்தல்; தலைதூக்கல், தலையெடுத்தல்; மேல்நோக்குதல்.

**அண்ணாமலை** – நெருங்க இயலாத மலை; திருவண்ணாமலை.

**அண்ணார்** – பகைவர்; தமையர்.

**அண்ணாவி** – கற்பிக்கும் ஆசிரியன்; நட்டுவன்; தமையன்; புலவன்.

**அண்ணி** – அண்ணன் மனைவி; தாய்.

**அண்ணித்தல்** – கிட்டுதல்; பொருந்துதல்; இனித்தல்; அனுகியருள்புரிதல்.

**அண்ணிப்பான்** – பக்கத்திலிருப்பவன்; இனிமை செய்வான்.

**அண்ணியன்** – பக்கத்தில் இருப்பவன்; நெருங்கிய உறவினன்.

**அண்ணுதல்** – அணுகுதல்; பொருந்துதல், சார்தல், அடுத்தல்; பற்றுதல்; ஒதுங்குதல்.

**அண்ணை** – அறிவிலி; பேய்.

**அண்பல்** – மேல்வாய்ப் பல்; அடிப்பல்.

**அண்பினார்** – அண்டினவர்.

**அண்பு(மு)தல்** – அண்ணுதல்; கிட்டுதல்.

**அண்மை** – அருகு, பக்கம்.

**அண்வருதல்** – பக்கத்திலிருத்தல்.

**அணக்குதல்** – வருத்தல்.

**அணங்கயர்தல்** – விழாக் கொண்டாடுதல்.

**அணங்காடல்** – வெறியாடல்; தெய்வமேறியாடல்.

**அணங்கியோன்** – வருத்தியவன்.

**அணங்கு** – தீண்டி வருத்தும் தெய்வப்பெண்; தெய்வப்பெண்; பத்திரகாளி; தேவர்க்காடும் கூத்து; அழகு; விருப்பம்; மயக்க நோய்; அச்சம்; வருத்தம்; கொலை; கொல்லிப் பாவை; பெண்; வடிவு.

**அணங்குடையாட்டி** – தெய்வ வெறிகொண்டு ஆடுபவள்.

**அணங்குதல்** – கொல்லுதல்; வருந்துதல்; இறந்துபடுதல்; அஞ்சுதல்; விரும்புதல்; ஒலித்தல்.

**அணங்குதாக்கு** – தெய்வப்பெண் தீண்டுகை; மோகினிப்பிசாசு பிடிக்கை.

**அணத்தல்** – தலையெடுத்தல், மேலோங்குதல், மேல்நிமிர்தல்; பொருந்துதல்.

**அணம்** – காண்க: **அண்ணம்.**

**அணர்** – மேல்வாய்ப்புறம்.

**அணர்தல்** – மேல்நோக்கி எழுதல்.

**அணரி** – காண்க: **அணர்.**

**அணரிடுதல்** – கொக்கரித்தல்.

**அணல்** – கீழ்வாய்; தாடி; அலைதாடி; கழுத்து.

**அணவரல்** – அண்ணாத்தல், மேலே நோக்குதல்; சேர்த்தல்; மேலெடுத்தல்; தூக்குதல்; விரும்புதல்.

**அணவல்** – அணவுதல், சார்தல், கிட்டல், நெருங்குதல்; புணர்தல், சேர்தல், இணைதல்.

**அணவன்** – பொருந்தியவன்; தக்கவன்.

**அணவி** – பொருந்தியவள்.

**அணவு** – நடுவு.

**அணவு (வி)** – சார் என்னும் ஏவல்; நடு; பொருந்து, சேர்.

**அணவுதல்** – கிட்டுதல், பொருந்தல்; மேல்நோக்கிச் செல்லுதல்.

**அணற்காளை** – தாடியையுடைய வீரன்.

**அணன்** – காண்க: **அணவன்.**

**அணாப்பல்,**
**அணாப்புதல்** } – ஏய்த்தல், ஏமாற்றுதல்.

**அணார்** – கழுத்து.

**அணாவுதல்** – கிட்டுதல், சேர்தல்.

**அணி** – வரிசை; ஒழுங்கு; ஒப்பனை; அழகு; அணிகலன்; முகம்; படைவகுப்பு; செய்யுளணி; இனிமை; அன்பு; கூட்டம்; அடுக்கு; அண்மை; ஓர் உவம உருபு.

**அணி (வி)** – அணி என்னும் ஏவல்; தரி, பூண், அலங்கரி.

**அணிகம்** – அணிகலம்; அணிகலப் பெட்டி; ஊர்தி; சிவிகை.

**அணிகயிறு** – குதிரையின் வாய்க்கயிறு.

**அணிகலச்செப்பு** – ஆபரணப் பெட்டி; ஒரு சமண நூற்பெயர்.

**அணிகலம்(ன்)** – நகை.

**அணிஞ்சில்** – அழிஞ்சில்; கொடிவேலி; நொச்சி; முள்ளி.

**அணித்து** – அருகில் உள்ளது.

**அணிதல்** – சூடல்; சாத்துதல்; புனைதல்; அழகாதல்; அலங்கரித்தல்; உடுத்தல்; பூணுதல்; பொருந்துதல்; படைவகுத்தல்; சூழ்தல்.

**அணிந்தம்** – கோபுரவாயிலின் முகப்புமேடை.

**அணிந்துரை** – பாயிரம், முகவுரை; சிறப்புரை.

**அணிநிலைமாடம்** – பல அடுக்கு மாடிவீடு.

**அணிநுணா** – சீத்தா என்னும் மரம்.

**அணிமலை** – திரண்ட மலை.

**அணிமா** – சித்தி எட்டனுள் ஒன்றாகிய அணுப் போல் ஆகுதல், பெரியதைச் சிறியதாக்குதல்.

**அணிமுகம்** – அலங்காரமான வாயில் முகப்பு.

**அணிமை** – அண்மை, பக்கம்; நுட்பம்.

**அணியம்** – படைவகுப்பு; கப்பலின் முற்பக்கம்; ஆயத்தம்.

**அணியல்** – அணிதல்; அழகுசெய்தல்; மாலை; வரிசை; கழுத்தணி.

**அணியவர்** – அழகினையுடையவர்; அண்மையில் உள்ளவர்.

**அணியன்** – நெருங்கினவன்.

**அணியியல்** – அணியிலக்கணம்.

**அணியொட்டிக்கால்** – தலைப்பக்கம் வேலைப் பாடமைந்த கோயில் கல்தூண்.

**அணில்** – அணிற்பிள்ளை.

**அணில்வரிக்கொடுங்காய்** – வெள்ளரிக்காய்.

**அணில்வரியன்** – வெள்ளரி வகை; வரிப்பலாப் பழம்; ஒருவகைப் பட்டு.

**அணிலம்** – காண்க: **அணில்.**

**அணிவகுத்தல்** – படைவகுத்தல்.

**அணிவடம்** – கழுத்தில் அணியும் மாலை.

**அணிவிரல்** – மோதிர விரல்.

**அணிவில்** – பேரேடு.

**அணிவிளக்குதல்** – அலங்கரித்தல், ஒப்பனை செய்தல்.

**அணு** – உயிர்; நுட்பம்; சிறுமை; நுண்ணியது; நுண்பொருள்; பொடி; மிகச்சிறியது; நுண்ணுடம்பு.

**அணுக்கச்சேவகம்** – அரசர் முதலியோரை அடுத்திருந்து புரியும் தொண்டு.

**அணுக்கத்தொண்டன்** – அடுத்திருந்து பணிசெய்யும் அடியான்; அந்தரங்கப் பணியாளன்.

**அணுக்கம்** – அணிமை, பக்கம்.

**அணுக்கன்** – அண்மையில் இருப்பவன்; நெருங்கிப் பழகுவோன்; அந்தரங்கமானவன்; தொண்டன்; நண்பன்; குடை.

**அணுக்கன் திருவாயில்** – கருவறை வாயில்; தன்னை அடைந்தாரைச் சிவன் அருகிருக்கச் செய்யும் வாயில்.

**அணுக்கு** – காண்க: **அணுக்கம்.**

**அணுகம்** – நுண்ணியது; செஞ்சந்தனம்.

**அணுகலர்,**
**அணுகார்** } – பகைவர்.

**அணுகுதல்** – கிட்டுதல், நெருங்குதல்.

**அணுசதாசிவர்** – சாதாக்கிய தத்துவத்தில் இன்பம் துய்க்கும் ஆன்மாக்கள்.

**அணுத்துவம்** – அணுத்தன்மை; சிறுமை.

**அணுமை** – அணிமை, பக்கம்; கருதல் அளவை.

**அணுரூபி** – கடவுள்; ஆன்மா.

**அணுவலி** – ஆன்மசக்தி.

**அணை** – படுக்கை; மெத்தை; கரை, வரம்பு; அணைக்கட்டு; பாலம்; முட்டு; தறி; இருக்கை; தலையணை.

**அணை (வி)** – புணர் என்னும் ஏவல்; சேர்.

**அணைக்கட்டு** – செய்கரை; நீரைத் தடுத்து அமைக்கும் கரை; நீர்த்தேக்கம்.

**அணைக்கல்** – அணையிலுள்ள குத்துக்கல்.

**அணைக்கை** – அணைத்தல்.

**அணைகயிறு** – பசுவைப் பால் கறக்கப் பின்னங் கால்களைக் கட்டும் கயிறு, கறவைகளின் கால் பிணை கயிறு.

**அணைகோலுதல்** – நீர்ப்பெருக்கைத் தடுக்க அணைபோடுதல்; முன்னெச்சரிக்கையாய் இருத்தல்.

**அணைசு** – குழல் வாத்தியத்தின் முகப்பில் அமைப்பது.

**அணைத்தல்** – சேர்த்தல், தழுவுதல்; அவித்தல்.

**அணைதல்** – சார்தல்; சேர்தல்; அடைதல்; புணர்தல்; பொருந்துதல்; அவிதல்.

**அணைதறி** – யானை கட்டும் தூண்.

**அணைப்பு** – தழுவுகை; ஓர் உழவுச்சால் அளவு.

**அணைப்புத்தூரம்** – ஓர் உழவுச்சால் தூரம்.

**அணைமரம்** – கன்று இழந்த பசுவைக் கறத்தற்கு அணைக்கும் கணைமரம்.

**அணையல்** – காண்க: **அணைதல்.**

**அணையாடை** – பிள்ளைக்கு இடும் துணிப் படுக்கை; ஏணைத் துகில், தொட்டிலுக்கான துணி.

**அணையார்** – பகைவர்.

**அணைவு** – சேர்கை, தழுவுகை.

**அணோக்கம்** – மரம்.

**அத்தக** – அதற்கு ஏற்ப; அத்தன்மையதாக; அழகு பொருந்த.

**அத்தகடகம்** – கைவளை.

**அத்தகம்** – ஆமணக்கு; கருஞ்சீரகம்; கணக்கன்.

**அத்தகிரி** – (சூரியன் மறையும் இடமான) மேற்கு மலை.

**அத்தகோரம்** – நெல்லி.

**அத்தங்கார்** – அத்தைமகள்.

**அத்தப்பிரகரம்** – அரைச்சாமம், ஒரு நாளில் பதினாறில் ஒரு பங்கு கொண்ட நேரம்; ஓர் யாமம்.

**அத்தப்பிரகரன்** – துணைக்கோள்களுள் ஒன்று, புதன்கோளைச் சார்ந்தது.

**அத்தம்** – கண்ணாடி; பொன்; பொருள்; சொற் பொருள்; பாதி; வழி; அருநெறி; மேற்குமலை; கை; காடு; அத்த நாள்; சிவப்பு; ஆண்டு.

**அத்தமனம்** – மறைவு; சூரியன் மறையுங்காலம்.

**அத்தமித்தல்** – மறைதல், படுதல்; உட்புகுதல்; அற்றுப்போதல், இல்லாமற்போதல்.

**அத்தர்** – கடவுளர்; முனிவர்; காடுறை மாந்தர்; பூக்களிலிருந்து எடுக்கும் நறுமணத் தைலம்.

**அத்தவாளம்** – போர்வை; மேலாடை; முன் றானை; காடு.

**அத்தன்** – தகப்பன்; தலைவன்; கடவுள்; மூத்தோன்; குரு; உயர்ந்தோன்; செல்வன்.

**அத்தனை** – அவ்வளவு.

**அத்தாட்சி** – சான்று, சாட்சி; அறிகுறி.

**அத்தாணி** – காண்க: **அத்தாணிமண்டபம்.**

**அத்தாணிச்சேவகம்** – அரசனுக்கோ தெய்வத் துக்கோ செய்யும் பணிவிடை.

**அத்தாணிமண்டபம்** – அரசன் கொலுமண்டபம்; அரசவை மண்டபம்; திருஓலக்க மண்டபம்.

**அத்தாயம்** – கடைசற் சக்கரத்தின் மிதிதடி; அந்தரம்.

**அத்தாழம்** – காண்க: **அகத்தாழம்.**

**அத்தாளம்** – இரவு உணவு.

**அத்தான்** – அக்காள் கணவன்; அத்தை மகன்; அம்மான் மகன்; மனைவியின் முன்னோன்; உடன்பிறந்தாள் கணவன்; கணவன்.

**அத்தி** – அத்திமரம்; எலும்பு; யானை; கொலை; கடல்; திப்பிலி; பாதி; உள்ளது; தமக்கை; கண்ணில் ஓடும் ஒரு நாடி; பெண்பால் விகுதி; ஆசை; இரவலன்.

**அத்தி** (வி) – செய் என் ஏவல்; பாதிசெய்.

**அத்திக்கனி** – கரிசாலை; வெருகமரம்.

**அத்திகாயம்** – காண்க: **பஞ்சாஸ்திகாயம்.**

**அத்திகோலம்** – அழிஞ்சில்.

**அத்திசஞ்சயம்** – தகனத்தின்பின் புண்ணிய தீர்த் தத்தில் போடும்படி எலும்பு திரட்டுகை.

**அத்திசுரம்** – எலும்பைப்பற்றின காய்ச்சல்.

**அத்தித்திப்பிலி** – யானைத்திப்பிலி.

**அத்திநாத்தி** – 'உண்டு இல்லை' என்னும் சமண சமயக் கொள்கை.

**அத்திபஞ்சரம்** – எலும்புக்கூடு, முழு எலும்பு.

**அத்திபாரம்** – காண்க: **அத்திவாரம்.**

**அத்திபேதி** – ஒரு மருந்து, யானையின் பேதி மருந்து.

**அத்திம்பேர்** – அத்தை கணவன்; தமக்கை கணவன்.

**அத்திமண்டூகி** – முத்துச்சிப்பி.

**அத்தியக்கம்** – காண்டல் அளவை.

**அத்தியக்கன்** – தலைவன்; மேற்பார்வைக்காரன்; அதிகாரி.

**அத்தியசணம்** – மீதூண்; அளவுகடந்து உண்ணல்.

**அத்தியட்சன்** – காண்க: **அத்தியக்கன்.**

**அத்தியந்தம்** – ஓர் எண்; மிகவும்; அளவில் மிக்கது; அறவே.

**அத்தியந்தாபாவம்** – முழுதுமின்மை.

**அத்தியயம்** – அத்தியாயம்; அழிவு; குற்றம்; ஒரு பொருளின் மாறுபாட்டை ஐயத்துடன் நோக்குதல்; மீறுதல்.

**அத்தியயனம்** – வேதம் ஓதல், படித்தல்.

**அத்தியவசாயம்** – மனப்போக்கு; பொருள் துணிவு; உறுதி.

**அத்தியற்புதம்** – பெருவியப்பு.

**அத்தியாகாரம்** – மிகை ஊண்; அவாய்நிலையால் வருவித்த சொல்; தருக்கம்.

**அத்தியாசம்** – ஆரோபம், ஏறுதல்; ஒன்றன் குணத்தை மற்றொன்றன்மேல் ஏற்றுதல்; மாறுபாட்டுணர்வு.

**அத்தியாசனம்** – ஈமச்சடங்கில் ஒரு பகுதி.

**அத்தியாசை** – மிகுந்த விருப்பம்.

**அத்தியாத்துமம்** – பரமாத்மா.

**அத்தியாத்துமிகம்** – தன்னால் வரும் துன்பம்; கடவுட்கு அடுத்தது.

**அத்தியாபகன்** – வேதமுரைப்போன்; உபாத்தி யாயன், ஆசிரியன்.

**அத்தியாபனம்** – ஓதுவித்தல், படிப்பித்தல்.

**அத்தியாயம்** – நூலின் கூறுபாடு, நூற்பிரிவு; இலக்கியச் செய்யுட்பகுதி; வேதம்.

**அத்தியாரோகணம்** – ஏறுதல்.

**அத்தியாரோபம்** – மாறுபாட்டு உணர்ச்சி; ஒன்றன் இயல்பை ஒன்றன்மேல் ஏற்றுதல்.

**அத்தியாவசியகம், அத்தியாவசியம்** – இன்றியமையாதது.

**அத்தியாவாகனிகம்** – கணவன் வீட்டுக்குச் செல்லுங்கால் பெண் பெறும் சீர்ப்பொருள்.

**அத்தியான்மிகம்** – ஆன்மாவுக்குரியது; சைவாகமங்களுள் ஒரு பகுதி; ஆன்மா பிறரால் அடையும் துன்பம்.

**அத்திரசத்திரம்** – அம்பும் வாளும்; கைவிடும் படையும் கைவிடாப் படையும்.

**அத்திரம்** – அம்பு; கழுதை; குதிரை; மலை; நிலையற்றது; கைவிடும் படை; கடுக்காய்ப்பூ.

**அத்திராசம்** – அச்சமின்மை.

**அத்திரி** – கழுதை; கோவேறு கழுதை; வானம்; மலை; ஒட்டகம்; குதிரை; அம்பு; உலைத் துருத்தி; வீண்.

**அத்திரு** – அரசமரம்.

**அத்திலை** – செருப்படைக்கொடி.

**அத்திவாரம்** – அடிப்படை; அடியுரம்.

**அத்தினி** – நால்வகைப் பெண்டிருள் ஒருத்தி; பெண்யானை.

**அத்து** – இசைப்பு; சிவப்பு; செவ்வை; துவர்; அரைஞாண்; அரைப்பட்டிகை; தைப்பு; அசைச் சொல், ஒரு சாரியை.

**அத்து (வி)** – தை; ஒட்டு; ஒத்து.

**அத்துகம்** – ஆமணக்கு.

**அத்துகமானி** – அரசமரம்.

**அத்துணை** – அவ்வளவு.

**அத்துதல்** – அடைதல்; இசைத்தல்; பொருத்தல்; ஒருநிலைப்படுத்துதல்.

**அத்துமம்** – அரத்தை.

**அத்துமானி** – காண்க: **அத்துகமானி.**

**அத்துலாக்கி** – கருஞ்சீரகம்.

**அத்துவசுத்தி** – தீக்கை நிகழ்ச்சியில் ஆசாரியன் அத்துவாக்களில் எஞ்சியிருந்த மூலவினைகளை எல்லாம் போக்குகை.

**அத்துவம்** – காண்க: **அத்துவா.**

**அத்துவயம்** – இரண்டன்மை.

**அத்துவரியு** – வேள்விப் புரோகிதன்; செயலில் தலைமை வகிப்பவன்.

**அத்துவலிங்கம்** – தத்துவ வடிவமான இலிங்கம்.

**அத்துவா** – கதியடைவிக்கும் வழி; வழி; மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணாத்துவா, புவனாத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என்னும் ஆறு அத்துவாக்கள்; இரண்டு ஒன்றாயிருப்பது; ஒன்றிப்பு; சிவப்பு.

**அத்துவாக்காயம்** – காண்க: **அத்துலாக்கி.**

**அத்துவாந்தம்** – காலை மாலை வெளிச்சம்.

**அத்துவானம்** – பாழ்ங்காடு; பாழிடம்; செவ்வானம்.

**அத்துவிதம், அத்துவைதம்** – இருவிதம் ஆகாமை; இரண்டற்றது; பரமான்மாவும் சீவான்மாவும் ஒன்று என்னும் மதம்.

**அத்துவைதி** – அத்துவைத மதத்தைச் சார்ந்தவன்; ஏகாத்மவாதி.

**அத்தூரம்** – மரமஞ்சள்.

**அத்தேயம்** – களவு செய்ய நினையாமை; திருடாமை.

**அத்தை** – தந்தையுடன் பிறந்தாள்; மனைவியின் தாய்; மாமி; கணவனின் தாய்; தலைவி; குருவின் மனைவி; தாய்; கற்றாழை; முன்னிலை அசைச்சொல்.

**அத்தைப்பாட்டி** – பாட்டனுடன் பிறந்தாள்.

**அத்தொய்தன்** – ஒப்பற்றவன்.

**அத்தோ** – வியப்பு இரக்கச்சொல்.

**அத்தோதயம்** – ஒரு சிறப்பு நாள், அறுபது ஆண்டிற்கு ஒருமுறை தை மாதத்து ஞாயிற்றுக் கிழமையில் வரும் அமாவாசையில் சூரியன் மகரராசியிலும், சந்திரன் திருவோண நாளிலும் ஒன்றாய்த் தோன்றும் நாள்.

**அதக்குதல்** – கசக்குதல்; குதப்புதல்; கெடுத்தல்; அடக்குதல்.

**அதகம்** – மருந்து; சுக்கு.

**அதகன்** – வலிமையுள்ளவன்.

**அதங்கம்** – ஈயம்.

**அதட்டம்** – அரவுயிர்ப்பு; பாம்பின் நச்சுப்பல், பாம்பின் கீழ்வாய்ப் பல்.

**அதட்டு** – வெருட்டும் உரத்தசொல்.

**அதட்டுதல்** – அதட்டல்; உறுக்குதல்; வெருட்டுதல்; ஒலித்து உரப்புதல்; கண்டித்தல்.

**அதடம்** – செங்குத்து.

**அதப்பு** – வணக்கம்; மரியாதை; செருக்கு.

**அதம்** – இறங்குதல்; தாழ்வு; பள்ளம்; பாதலம்; கேடு, அழிவு; அத்திமரம்.

**அதம்புதல்** – காண்க: **அதட்டுதல்.**

**அதமதானம்** – கடைப்படுதானம்; கைம்மாறு; அச்சம் முதலியவற்றின் ஏதுவாகச் செய்யப்படுவது.

**அதமம்** – கடைத்தரம்; கடைப்பட்டது; இழிந்தது.

**அதமருணிகன்** – கடன்பட்டவன்.

**அதமன்** – தாழ்ந்தவன், கடையானவன்.

**அதமாங்கம்** – கால்.

**அதமாதமம்** – மிகவும் கடைப்பட்டது.

**அதமாதமன்** – மிகக் கீழானவன்.

**அதர்** – வழி; முறைமை; புழுதி; நுண்மணல்; ஆட்டின் கழுத்திலே தொங்கும் உறுப்பு.

**அதர்கோள்** – வழிப்பறி.

**அதர்ப்படுதல்** – வழியில் தோன்றுதல்; நெறிப் படுதல்.

**அதர்மணிகன்** – வாங்கின கடனைத் தராதவன்; கடன் வாங்கிக் கெட்டவன்.

**அதர்மம்** – அறமல்லாதது, பாவம்.

**அதர்வணம், அதர்வம்** – நான்காம் வேதம்.

**அதர்வை** – வழி; கொடிவகை.

**அதரம்** – உதடு; இழிவு; கீழ்; கீழுதடு; மஞ்சள்.

**அதரிகொள்ளுதல்** – கதிரைக் கடாவிட்டு உழக்கு தல்; பகையழித்தல்.

**அதரிடைச்செலவு** – வீரர் நிரைமீட்சிக்குப் புறப் படும் புறத்துறை.

**அதரிதிரித்தல்** – காண்க: **அதரிகொள்ளுதல்.**

**அதலகுதலம்** – கலகம், குழப்பம்.

**அதலம்** – கீழ் ஏழு உலகங்களுள் முதலாவது; பள்ளம்; பின்பு.

**அதலன்** – கடவுள், இறை.

**அதவம்** – அத்திமரம்; நெய்த்துடுப்பு.

**அதவா** – அல்லாமல்; அல்லது.

**அதவு** – காண்க: **அதவம்.**

**அதவுதல்** – எதிர்த்து நெருக்குதல்; கொல்லுதல்.

**அதவை** – கீழ்மகன், அற்பன்.

**அதழ்** – பூவிதழ்.

**அதள்** – தோல்; மரப்பட்டை.

**அதளி** – அமளி, குழப்பம்.

**அதளை** – ஒருவகைப் பெரும் பாத்திரம்; புளி யுருண்டை; வயல்வெளிக் காவற்குடிசை; நிலப்பீர்க்கு.

**அதற்கொண்டு** – அக்காலம் தொடங்கி, அது முதலாக.

**அதனப்பிரசங்கி** – காண்க: **அதிகப்பிரசங்கி.**

**அதான்று** – அதுவல்லாமலும்.

**அதி** – வலைச்சாதி; மிகுதிப்பொருளைத் தரும் ஓர் இடைச்சொல்; அதிகம்; அப்பால்; மேன்மை; சிறப்பு முதலிய பொருள்தரும் ஒரு வடமொழி முன்னொட்டு.

**அதிக்கண்டம்** – செய்யுட்சீர்.

**அதிக்கிரமம்** – நெறிதவறல்; கடத்தல்; தப்பிப் போதல்; மேற்படுதல்; மீறுதல்.

**அதிக்கிராந்தம்** – கடந்தது.

**அதிகண்டம்** – இறப்புத் துன்பம்; யோகம் இருபத்தேழனுள் ஒன்று.

**அதிகநாரி** – காண்க: **கொடிவேலி.**

**அதிகப்படி** – அளவுக்குமேல்.

**அதிகப்பிரசங்கம்** – அளவுக்குமீறிய பேச்சு; தன் மேம்பாட்டுரை.

**அதிகப்பிரசங்கி** – அடங்காதவன், அகங்காரி.

**அதிகம்** – இலாபம்; மிகுதி; பொலிவு; ஏற்றம்; மேன்மை; படை; குருக்கத்தி.

**அதிகரணம்** – நிலைக்களம், ஆதாரம்; நூற் பொருட் கூறுபாடு.

**அதிகரித்தல்** – மிகுதிப்படுதல்; மேற்படல்; பெருகுதல்; அதிகாரம் செய்தல்; கற்றல்.

**அதிக(ய)ன்** – மேலானவன்; மேம்பட்டவன்; மகான், பெரியோன்; பரம்பொருள்; கடை யெழு வள்ளல்களுள் ஒருவன்.

**அதிகாசம்** – பெருநகை.

**அதிகாந்தம்** – மணிவகை; செவ்வானம்.

**அதிகாரம்** – அதிகரித்தல்; தலைமை; தொடக் கம்; நூற்பிரிவு; அலுவல்; ஒழுங்கு; ஆட்சி; ஆளுந்தன்மை.

**அதிகாரமுறை** – நூற்பிரிவின் முறைவைப்பு.

**அதிகாரன்** – மகேசுரன்; அதிகாரி.

**அதிகாரி** – தலைவன்; கண்காணிப்பவன்; தொடர்புடையவன்; நூல் செய்வித்தோன்; பக்குவன்; உரியவன்; நூல்கேட்டற்குரியோன்.

**அதிகாலங்காரம்** – பெருமையணி.

**அதிகாலை** – விடியற்காலம்.

**அதிகுணன்** – சிறந்த குணமுள்ளவன்; கடவுள்; அருகன்.

**அதிங்கம்** – காண்க: **அதிமதுரம்.**

**அதிசயம்** – புதுமை, வியப்பு; அலங்காரம்; மிகுதி; மேம்பாடு; சிறப்பு.

**அதிசயமொழி** – வியப்புச்சொல்.

**அதிசயன்** – அருகன்.

**அதிசயித்தல்** – வியப்புறுதல்.

**அதிசயோத்தி** – உயர்த்திக் கூறுதல்; உயர்வு நவிற்சியணி.

**அதிசரம்** – நெட்டுயிர்ப்பு.

**அதிசாரணம்** – காண்க: **மாவிலிங்கம்.**

**அதிசாரம்** – வயிற்றுப்போக்கு; கோள்களின் மீறிய நடை; அதிமதுரம்; கல்லுப்பு.

**அதிட்டம்** – நற்பேறு; பார்க்கப்படாதது; நல் வினைப்பயன்; நல்லனுபோகம்; இன்ப துன்பங் களுக்குக் காரணமானது; மிளகு.

**அதிட்டாத்திரு, அதிட்டாதா** – தலைமை தாங்குபவன்; ஆளும் தலைவன்.

**அதிட்டானம்** – நிலைக்களம்; நிலைபெறும் இடம்.

**அதிட்டித்தல்** – ஆவாகனமாதல்; நிலைக்கள மாகக் கொள்ளுதல்.

**அதிதல்சிலேட்டுமம்** – ஒருவகைச் சிலேட்டும நோய்.

**அதிதனச்செல்வன்** – குபேரன்.

**அதிதனு** – பொன்.

**அதிதாரம்** – இலந்தைமரம்.
**அதிதானம்** – கொடை; பெருங்கொடை.
**அதிதி** – விருந்து; விருந்தினர்; புதியவன்; தேவரை ஈன்றாள்.
**அதிதிசேவை** – விருந்தோம்பல், விருந்தினரைப் போற்றுதல்.
**அதிதிநாள்** – காண்க: **புனர்பூசம்.**
**அதிதிபூசை** – விருந்தோம்பல்; பரதேசிக்கு அன்னமிடல்.
**அதிதெய்வம்** – மேலான தெய்வம்; ஆளும் தெய்வம்.
**அதிதேசம், அதிதேசித்தல்** – ஒன்றற்குரியதை மற்றொன்றற்கு ஏற்றிக்கூறுதல்; ஒப்புமை காட்டி உணர்த்துவது.
**அதிதேவதை** – அதிகார தேவதை; குலதெய்வம், உரிய தெய்வம்.
**அதிபதி** – அரசன்; தலைவன்; சண்பகம்.
**அதிபம்** – வேம்பு.
**அதிபலை** – காண்க: **பேராமுட்டி**; விசுவாமித்திரர் இராமனுக்குக் கற்பித்த மந்திரம்.
**அதிபறிச்சம்** – காண்க: **வாலுளுவை.**
**அதிபன்** – தலைவன்; எப்பொருட்கும் இறைவன்; அரசன்.
**அதிபாதகம்** – மிகுகொடுஞ்செயல்.
**அதிபாதகன்** – பெருந்தீங்கு புரிவோன்.
**அதிபாரகன்** – மிகு வல்லுநன்.
**அதிபாவம்** – பெரும்பாவம்.
**அதிபானம்** – மதுபானம்.
**அதிபூதம்** – பிரகிருதி மாயை; பரமாத்மா; மேலான பொருள்.
**அதிமதுரம்** – மிகு இனிமை; ஒரு மருந்துச் சரக்கு; வெண்குன்றி.
**அதிமலம்** – மாவிலிங்கமரம்.
**அதிமிதம்** – அளவில் மிக்கது, அளவு கடந்தது.
**அதிமுத்தம்** – குருக்கத்தி.
**அதிமுத்தி** – சாயுச்சிய முத்தி.
**அதிமேற்றிராணியார்** – கிறித்தவக் கண்காணியாருள் முதன்மையானவர்.
**அதியர்** – அதியமான்வழித் தோன்றியவர்.
**அதியரையன்** – மீன்வலைஞர் தலைவன்.
**அதியாச்சிரமம்** – ஆசிரமங்களைக் கடந்த நிலை.
**அதியாமம்** – முயற்புல்; அறுகம்புல்.
**அதியோகம்** – நற்கோள் நிலையுள் ஒன்று.
**அதிர்** – ஒலி; நடுக்கம், அச்சம்.
**அதிர்ச்சி** – ஆரவாரம்; குமுறல்; நடுங்குதல்.
**அதிர்த்தல்** – அதட்டல்; சொல்லுதல்; முழங்குதல்; கலங்குதல்.
**அதிர்தல்** – முழங்கல்; கலங்கல்; நடுங்கல்; தளர்தல்; குமுறுதல்; எதிரொலித்தல்.
**அதிர்ப்பு** – அச்சம், நடுக்கம்; ஆரவாரம்; தாக்கி ஒலிக்கை; எதிரொலி.
**அதிர்வு** – நடுக்கம், அதிர்ச்சி.
**அதிர்வெடி** – மிகுந்த ஒலியையுடைய வெடி; குழாய்வெடி; சிறுபீரங்கி.
**அதிர்வேட்டு** – காண்க: **அதிர்வெடி.**
**அதிரசம்** – மிக்க இனிமை; பணியார வகையுள் ஒன்று; உப்பு; ஒரு பானம்.
**அதிரடி** – பெருங்கலகம்; மிரட்டு; அளவுக்கு மிஞ்சியது.
**அதிரதன்** – கணக்கற்ற தேர்வீரரை எதிர்த்துப் போரிடும் வன்மையுடையவன்.
**அதிரல்** – மிகுதூறு, விரிதூறு; காட்டு மல்லிகை; மோசிமல்லிகை; புனலிக்கொடி; காண்க: **அதிர்தல்.**
**அதிராகம்** – கந்தகம்.
**அதிராத்திரம்** – வேள்வி இருபத்தொன்றனுள் ஒன்று; சோமவேள்வி வகை.
**அதிராயம்** – வியப்பு.
**அதிரித்தம்** – அதிகமானது.
**அதிருசயன்** – கடவுள்.
**அதிருசியம்** – காணப்படாதது; அறுபத்து நான்கு கலையுள் தன்னைக் காணாமல் மறைக்கும் வித்தை.
**அதிருத்(ப்)தி** – மனநிறைவின்மை.
**அதிரேகம்** – மிகுதி; மாறுபாடு; வியப்பு; மேன்மை, மேம்பாடு.
**அதிரேகமாயை** – பெருமயக்கம்.
**அதிரோகம்** – எலும்புருக்கிநோய், சயரோகம், இளைப்பிருமல், ஈளைநோய்.
**அதிலுத்தன்** – பிறர் பொருளில் மிக்க விருப்பமுடையவன்.
**அதிலோகம்** – உலோகம், இரசகருப்பூரம்.
**அதிலோபம்** – தன் பொருளைப் பிறர்க்குக் கொடுக்க விரும்பாமை; மிக்க பொருளாசை.
**அதிவருணாச்சிரமி, அதிவன்னாச்சிரமி** – வருணாசிரமங்களைக் கடந்த ஆத்மஞானி.
**அதிவாசம்** – சிராத்தத்திற்கு முதல்நாள் கடைப்பிடிக்கும் நோன்பு; ஆரம்பச் சடங்கினுள் ஒன்று; மிக்க மணம்.
**அதிவாதம்** – புனைந்துரை.
**அதிவிடயம், அதிவிடை, அதிவிடையம்** – ஒரு மருந்துச் செடி.
**அதிவியாத்(ப்)தி** – இலக்கணம் இல்லாததற்கும் இலக்கணம் சொல்லும் குற்றம்.
**அதிவிருஷ்(ட்)டி** – பெருமழை; அளவுக்கு மிஞ்சிய மழை.
**அதிவினயம்** – அதிகக் கீழ்ப்படிவு, மிகு வணக்கம்.
**அதீதகாலம்** – இறந்தகாலம்.

**அதீதம்** – எட்டாதது; கடந்தது; கடவுள் தன்மைகளுள் ஒன்று.

**அதீதன்** – கடந்தவன்; பாசத்தினின்று விடுவிக்கப்பட்டவன்; மேலோன்; முனிவன்; ஞானி.

**அதீந்திரியம்** – புலனுக்கு எட்டாதது.

**அதீனம்** – உரிமை; சார்பு; வசம்.

**அது** – அஃது; அஃறிணை ஒருமைச் சுட்டுப் பெயர்; ஆறாம் வேற்றுமை ஒருமையுருபு.

**அதுக்கல்** – அடித்தல்; அடைசுதல்; கடித்தல்; வாயிலடக்குதல்; அடைத்தல்; பிசைதல்.

**அதுங்குதல்** – அமுங்குதல்; ஒதுங்குதல்; குழிதல்.

**அதும்புதல்** – மொய்த்தல்.

**அதுலம்** – உவமையின்மை; ஓர் எண்.

**அதுலன்** – உவமையில்லான், ஒப்பில்லாதவன், கடவுள்; அசைவின்மை.

**அதுலிதம்** – ஒப்பாக்கப்படாதது; நிறுக்கப்படாதது; அசைவின்மை.

**அதேந்து** – அஃது என்ன என்று அருளொடு கேட்கும் குறிப்பு; அஞ்சாதே எனப் பொருள்படும் ஒரு மொழி.

**அதைத்தல்** – தாக்கிமீளல்; விங்குதல்; செருக்குதல்.

**அதைப்பு** – தாக்கிமீளுகை; வீக்கம்; நீர்க்கோப்பு.

**அதைரியம்** – ஊக்கமின்மை, திட்பமின்மை.

**அதோ** – சேய்மைச்சுட்டு; படர்க்கைச்சுட்டு; சுட்டிக் கவனிக்கச்செய்தற் குறிப்பு; கீழ்.

**அதோகதி** – இறங்குகை; தாழ்நிலை; பள்ளம்; நரகம்.

**அதோமாயை** – காண்க: **அசுத்தமாயை.**

**அதோமுகம்** – கீழ்நோக்கிய முகம்; தலைகீழான நிலை; ஆற்றுநீர்க் கழிமுகம்.

**அதோளி** – அவ்விடம்.

**அந்** – இன்மை; எதிர்மறை காட்டும் ஒரு வடமொழி முன்னொட்டு.

**அந்தக்கரணம்** – உட்கருவி; அவை: மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

**அந்தக்கேடு** – அழகின்மை; சீர்கேடு.

**அந்தக்கேணி** – மறைகிணறு, கரப்புநீர்க்கேணி.

**அந்தகம்** – ஆமணக்கு; ஒரு சன்னிநோய்.

**அந்தகன்** – அழிப்போன்; குருடன்; சனி; யமன்; புல்லுருவி; சவர்க்காரம்.

**அந்தகாரம்** – இருள்; அறியாமை; மனவிருள்.

**அந்தகாரி** – அந்தகாசுரன் அல்லது யமனுக்குப் பகைவன், சிவன்.

**அந்தகாலம்** – இறுதிக்காலம், முடிவுகாலம்.

**அந்தகோ** – இரக்கச்சொல்.

**அந்தகோர(ல)ம்** – காண்க: **நெல்லி.**

**அந்தண்(ண)மை** – அழகிய அருள்; பார்ப்பனத் தன்மை, அந்தணர் இயல்பு.

**அந்தணத்துவம்** – அந்தணனாகும் தன்மை.

**அந்தணநாபி** – நஞ்சு போக்கும் மருந்து.

**அந்தணர்வாக்கு** – வேதம்.

**அந்தணன்** – வேதத்தின் அந்தத்தை அறிபவன்; அழகிய தட்பத்தினையுடையவன், செந்தண்மையுடையவன்; பெரியோன்; முனிவன்; கடவுள்; பார்ப்பான்; சனி; வியாழன்.

**அந்தணாளன்** – அழகிய அருளுடையவன்; முனிவன்; பார்ப்பான்.

**அந்ததரம்** – சித்தாந்தம்.

**அந்தந்த** – அந்த அந்த; ஒவ்வொன்றினுடைய.

**அந்தப்புரம்** – அரசியிருக்கை, அரசன் மனைவி இருக்குமிடம்; அரண்மனையில் பெண்கள் தங்குமிடம்; பெண்டிர் தங்குமிடம்.

**அந்தம்** – அழகு; கடை; கத்தூரி; குருடு; முடிவு; சாவு; எல்லை; அறியாமை.

**அந்தமந்தம்** – உறுப்புக்கேடு; செப்பமின்மை; அழகின்மை.

**அந்தர்** – உள்; மறைவு; கீழ்மக்கள்; தலைகீழாய்ப் பாயும் செயல்; நூற்றுப்பன்னிரண்டு ராத்தல் கொண்ட நிறுத்தல் அளவை (ஆங்கிலம்).

**அந்தர்க்கதம்** – மறைந்திருக்கை; உள்ளானது.

**அந்தர்த்தானம்** – மறைவிடம்; மறைகை; மறைவு.

**அந்தர்பூதம்** – உள்ளிருப்பது, உள்ளடங்கியது.

**அந்தர்முகம்** – உள்நோக்குகை.

**அந்தர்வேதி** – நடுவேயுள்ள சமபூமி.

**அந்தரங்கம்** – மனம்; உள்ளானது; உட்கருத்து; கமுக்கம், இரகசியம்; ஆலோசனை.

**அந்தரங்கன்** – மிகவும் விரும்பப்பட்டவன்; உற்ற நண்பன்; நம்பத்தகுந்தவன்.

**அந்தரத்தாமரை** – ஆகாயத்தாமரை.

**அந்தரத்தானம்** – ஆகாயநிலை.

**அந்தரதுந்துபி(மி)** – ஓர் இசைக்கருவி; தேவ வாத்தியம்.

**அந்தரநாதன்** – வானுலகத் தலைவன், இந்திரன்.

**அந்தரப்பல்லியம்** – காண்க: **அந்தரதுந்துபி.**

**அந்தரம்** – வானம்; உள்; வெளி; இடை; நடு; நடுவுநிலை; அளவு; இருள்; தனிமை; முடிவு; வேறுபாடு; தீமை; தேவர்கோயில்.

**அந்தரர்** – தேவர்.

**அந்தரவல்லி** – கொல்லங்கொவ்வை; கருடன் கிழங்கு.

**அந்தரவாசம்** – ஒரு மருந்துப் பூடு.

**அந்தரவாசி** – ஆகாயகமனம் செய்பவன்; வானுலகில் வாழ்பவன்.

**அந்தராத்துமா** – உயிர்களுக்கு உயிராய் இருப்பவன்; மனத்துள் இருக்கும் கடவுள்.

**அந்தராயம்** – தீமை, இடையூறு, துன்பம்.

**அந்தராளம்** – நடு; இடைக்காலம்; இடையிடம்; மூலத்தானத்தை அடுத்த மண்டபம்.

**அந்தரான்மா** – காண்க: **அந்தராத்துமா.**

**அந்தரி** - பார்வதி; கொற்றவை; ஆகாயவாணி; தோற்கருவிவகை.

**அந்தரிட்சம்** – வானம்; நற்கதி.

**அந்தரித்தல்** – நிலைகெடுதல்; மனந்தடுமாறல்; தனித்திருத்தல்; உதவியற்றிருத்தல்; இரண்டு அளவுகளைக் கழிப்பதால் வரும் மிச்சம்.

**அந்தரிதம்** – கழித்தலால் உண்டாகும் மிச்சம்.

**அந்தரிப்பு** – உதவியின்மை.

**அந்தரியம்** – காண்க: **அந்தக்கரணம்.**

**அந்தரியாகபூசை, அந்தரியாகம்** – மனத்தால் செய்யும் பூசை, உட்பூசை.

**அந்தரியாமி** – உள்ளே நின்று நடத்துவோன்; கடவுள்; உயிர்.

**அந்தரியாமித்துவம்** – ஆன்மாவோடு கலந்திருத்தல்; உள் இருக்குந்தன்மை.

**அந்தரீபம்** – தீவு.

**அந்தரீயம்** – உள்ளாடை; அரையில் கட்டும் வேட்டி.

**அந்தரேணம்** – நடுவிடம்.

**அந்தலை** – முடிவு; சந்திப்பு; மேடு; பேறு.

**அந்தளகத்தாளார்** – கவசம் தரித்த வீரர்.

**அந்தளகம், அந்தளம்** – கவசம்; பல்லக்கு.

**அந்தளி** – தேவர்கோயில்.

**அந்தன்** – யமன்; சனி; அழகன்; குருடன்; அறிவிலான்; கடுக்காய்.

**அந்தா** – ஒரு வியப்புச் சொல்; அதோ.

**அந்தாக** – அப்படியே யாகுக.

**அந்தாதி** – முதலும் முடிவும்; கடவுள்; முதல் பாட்டின் இறுதி அசை, சொல், தொடர், அடி ஆகியவற்றுள் ஏதேனுமொன்றை அடுத்த பாட்டின் முதலாகக் கொண்டு பாடப்படும் செய்யுள் நூல்.

**அந்தாதிஉவமை** – ஓர் அடியின் இறுதிச்சொல்லை அடுத்த அடியின் முதலாகக்கொண்டு உவமை பெறக் கூறும் அணி.

**அந்தாதித்தல்** – அந்தாதியாகத் தொடுத்தல்.

**அந்தாதித்தொடை** – அடிதோறும் இறுதிக்கண் உள்ள சீரோ அசையோ எழுத்தோ அடுத்த அடிக்கு முதலாக வரத் தொடுப்பது.

**அந்தாமம்** – பரமபதம்.

**அந்தாலே** – அங்கே.

**அந்தாளி, அந்தாளிக்குறிஞ்சி** – ஒரு பண்; குறிஞ்சி யாழ்த் திறவகை.

**அந்தாளிபாடை** – ஒரு பண்; பாலையாழ்த் திறவகை.

**அந்தி** – பகலும் இரவும் கூடும் நேரம்; மாலைக் காலம்; சந்தியாவந்தனம், காலை மாலை வழிபாடு; இரவு; செவ்வானம்; முடிவுகாலம்; தில்லைமரம்; சந்திப்பு; முச்சந்தி; பாலையாழ்த் திறவகை; ஓர் அசைச்சொல்.

**அந்தி (வி)** – பொருந்து என்னும் ஏவல்.

**அந்திக்கடை** – மாலைக்கடை.

**அந்திக்காப்பு** – தீங்கு அண்டாவண்ணம் குழந்தைகளுக்கு மாலைக்காலத்தில் செய்யப்படும் காப்பு; மாலைக்காலத்தில் கடவுளுக்குச் செய்யும் சடங்கு.

**அந்திக்காலம்** – மாலைவேளை; இறுதிக்காலம்.

**அந்திக்கோன்** – காண்க: **அந்திகாவலன்.**

**அந்திகம்** – அயல்.

**அந்திகாசிரயம்** – நிலையியற்பொருள், தாவரம்.

**அந்திகாவலன்** – சந்திரன்; மாலையில் திரியும் காவல்தெய்வம்.

**அந்திகூப்புதல்** – சந்தியாவந்தனம் செய்தல்.

**அந்திகை** – கபடம்; சித்தம்; இரவு; பெண்; அக்காள்; அடுப்பு.

**அந்திசந்தி** – காலைமாலை.

**அந்தித்தல்** – சந்தித்தல்; நெருங்குதல்; பொருந்துதல்; முடித்துவைத்தல்; முடிவுசெய்தல்.

**அந்திநட்சத்திரம்** – மாலை வெள்ளி.

**அந்திப்பூ** – காண்க: **அந்திமந்தாரை.**

**அந்திபகல்** – இராப்பகல்.

**அந்திம(ய)காலம், அந்திமதசை** – இறக்குந்தறுவாய்; முடிவு காலம்.

**அந்திமந்தாரம், அந்திமந்தாரை, அந்திமல்லி, அந்திமல்லிகை, அந்திமலர்ந்தான்** – மாலையில் பூக்கும் பூச்செடி வகை.

**அந்திமாலை** – மாலைப்பொழுது; மாலைக்கண்; கண்ணோய் வகை.

**அந்தியக்கிரியை, அந்தியகருமம்** – இறுதிச்சடங்கு.

**அந்திய(ச)ன்** – கடைக்குலத்தான், புலையன்.

**அந்தியதீபம்** – கடைநிலை விளக்கு என்னும் அணி.

**அந்தியம்(ன்)** – மரணகாலம்; முடிவுகாலம்; கடைப்பட்டது; ஒரு பேரெண்.

**அந்தியுழவு** – கோடையில் அந்தி நேரத்தில் உழுகை.

**அந்தியேட்டி** – இறுதிச்சடங்கு, இறுதிக்கடன்.

**அந்தியேட்டிக் குருக்கள்** – இறுதிச் சடங்கைச் செய்விக்கும் புரோகிதன்.

**அந்திரக்கண்மணி** – நீலக்கல்.

**அந்திரக்கொடிச்சி** – கந்தகம்.

**அந்திரம்** – சிறுகுடல்.

**அந்திரர்** – ஆந்திரநாட்டவர்.

**அந்திரவசனம்** – கொட்டைப்பாக்கு.
**அந்திரன்** – தேவன்; வேடன்; கடவுள்.
**அந்திரி** – பார்வதி; காளி.
**அந்தில்** – இடம்; அவ்விடம்; ஓர் அசைச்சொல்; இரண்டு; வெண்கடுகு.
**அந்திவண்ணன்** – மாலைவானம் போன்ற நிற முடையவன், சிவன்.
**அந்து** – நெற்பூச்சி; பாதகிண்கிணி; யானைக் காற் சங்கிலி; கிணறு; தொகை; பூச்சிவகை; முடிவு; அப்படி.
**அந்துக்கண்ணி** – பீடை நிரம்பிய கண்ணாள்.
**அந்துகம்** – யானைச்சங்கிலி; பாதகிண்கிணி.
**அந்துப்போதிகை** – யானையைக் கட்டுங் குறுந் தறி.
**அந்துவாசம்** – கொட்டைப்பாசி.
**அந்தூல்பல்லக்கு** – பல்லக்கு வகை.
**அந்தேசம்** – கதியின்மை.
**அந்தேசாலம்** – தேற்றாமரம்.
**அந்தேவாசி** – மாணாக்கன்.
**அந்தை** – ஒரு நிறைவகை.
**அந்தோ** – அதோ; வியப்பு, இரக்கக் குறிப்புச் சொல்.
**அந்தோர்** – காண்க: **நெல்லி.**
**அநந்தசொரூபி** – எண்ணிலா உருவுடையான், கடவுள்.
**அநபாயம்** – அழிவின்மை.
**அநபாயன்** – அழிவில்லாதவன்; சிவன்; ஒரு சோழன்.
**அநவத்தானம்** – தவறான நிலை.
**அநவத்திதம்** – நிலையற்றது.
**அநாகாலம்** – பஞ்சகாலம்.
**அநாசாரிதம்** – பற்றுக்கோடற்றது.
**அநாசாரியன்** – ஆசிரியனல்லாதவன்.
**அநாத்துமா** – ஆத்துமாவல்லாத பொருள்.
**அநாதபம்** – குளிர்மை; நிழல், வெயிலின்மை.
**அநாதரட்சகர்** – திக்கற்றோரைக் காப்பவர்; கடவுள்.
**அநாதன்** – கடவுள்; திக்கற்றவன்.
**அநாதிமலமுத்தர்** - இயல்பாகவே பற்றுகளினின்று நீங்கியவர்.
**அநாமதேயம்** – பெயரில்லாதது.
**அநாமதேயன்** – நன்கு அறியப்படாதவன்.
**அநாமிகை** – மோதிரவிரல்.
**அநாயகம்** – அரசின்மை; தலைமையின்மை.
**அநிகம்** – படை.
**அநித்தம்** – நிலையின்மை; சிவசத்திபேதம்.
**அநித்தியம்** – நிலையாமை; நிலையற்றது; பொய்.
**அநிதம்** – அளவுகடந்தது.
**அநிமிடன்** - இமையா நாட்டத்தவன், தேவன்.
**அநியாயம்** – நீதியின்மை, முறையின்மை; வீண்.
**அநிர்வசனம், அநிர்வசனீயம்** – மாயை; சரியாக மெய்ப்பிக்க முடியாதது.
**அநிருத்தம்** – மெய்ப்பிக்கப்படாதது.
**அநிருத்தன்** – தடையற்றவன்; அடங்காதவன்; மன்மதன் மகன்; ஒற்றன்.
**அநிருதம்** – மாயை; பொய்.
**அநிலாசனம்** – காற்றை உண்ணுதல்; நோன்பு.
**அநிவாரிதம்** – தடுக்கப்படாதது.
**அநீதம், அநீதி** – நியாயமின்மை.
**அப்சரசு** – அப்ஸரஸ், தெய்வப் பெண்டிருள் ஒரு வகையார்.
**அப்தபூர்த்தி** – ஆண்டுநிறைவு.
**அப்தம்** – ஆண்டு.
**அப்தா** – வாரம்.
**அப்ப** – காண்க: **அப்படா.**
**அப்பச்சி** – தந்தை; சிற்றப்பன்; பாட்டன்; சிற்றுண்டி.
**அப்பட்டம்** – கலப்பற்றது; வெளிப்படையானது; உள்ளது உள்ளபடியே.
**அப்படா** – ஒரு வியப்புக் குறிப்புச் சொல்.
**அப்படி** – அவ்வாறு.
**அப்பணை** – கட்டளை; பிணை; ஆதாரம்.
**அப்பத்தாள்** – அக்காள்; தந்தையின் தாய்.
**அப்பதி** – கடல்.
**அப்பம்** – சிற்றுண்டி; அடை.
**அப்பர்** – ஆண் ஆடு; ஆண்குரங்கு; திருநாவுக்கரசு நாயனார்; வயது முதிர்ந்தோர்; உயர்ந்தோர்.
**அப்பல்** – காண்க: **அப்புதல்.**
**அப்பழுக்கு** – தூய்மையின்மை; குற்றம்.
**அப்பளக்காரம்** – உறைப்பும் உவர்ப்பும் கூடிய ஒரு பொருள்.
**அப்பளம்** – அப்பவருக்கத்துள் ஒன்று, ஒருவகைப் பணியாரம்.
**அப்பன்** – தகப்பன்; பெரிய தகப்பன்; வள்ளல்; ஓர் அன்புரை.
**அப்பாட்டன்** – தந்தையின் பாட்டன், முப்பாட்டன்.
**அப்பாத்தாள்** – தந்தையைப் பெற்ற பாட்டி.
**அப்பாத்தை** – தமக்கை.
**அப்பாயி** – தந்தையின் தாய்; பையன்; பேதை.
**அப்பால்** – அதன்மேல்; அப்பக்கம்.
**அப்பாவி** – பேதை.
**அப்பி** – தமக்கை; தலைவி; அருமை குறித்தற்கு வழங்கும் சொல்.
**அப்பிகை** – காண்க: **ஐப்பசி.**
**அப்பிச்சன்** – தகப்பன்.
**அப்பியங்கம், அப்பியங்கனம்** – எண்ணெய் தேய்த்துக் கொள்ளுதல்.

**அப்பியசித்தல்** – பழகல்.
**அப்பியந்தம்** – தாமதம்; பின்போடுதல்.
**அப்பியந்தரம்** – இடையூறு.
**அப்பியம்** – தேவர்க்கிடப்படும் உணவுவகை.
**அப்பியாகதன்** – பழக்கமுள்ள விருந்தினன்.
**அப்பியாகமம்** – அடித்தல்; எழும்புதல்; கொலை; சந்தித்தல்; பகை; போர்; வந்துசேர்தல்.
**அப்பியாகமனம்** – சந்தித்தல்; எதிர்வருதல்.
**அப்பியாகாரம்** – களவு.
**அப்பியாசம்** – பயிற்சி, பழக்கம்.
**அப்பியாசி** – பயில்பவன்.
**அப்பியாசித்தல்** – பழகல்.
**அப்பிரகம்** – ஒருவகைக் கனிப்பொருள், மைக்கா.
**அப்பிரகாசம்** – விளக்கமின்மை; அசித்து; இருள்.
**அப்பிரசித்தம்** – வெளிப்படையாகாதது, அறியப்படாதது.
**அப்பிரதட்சிணம்** – இடம்வருதல், வலப்பக்கத்திலிருந்து இடப்பக்கமாக வருதல்.
**அப்பிரதாபம்** – எளிமை; மங்கல்.
**அப்பிரதானம்** – முதன்மையல்லாதது.
**அப்பிரபுத்தன்** – கூர்ந்துணர்வில்லாதவன்.
**அப்பிரம்** – மேகம்; தேவருலகம்; வானம்.
**அப்பிரமாணம்** – பிரமாணமல்லாதது, ஆதாரமற்றது; பொய்ச்சத்தியம்; எல்லைக்குட்படாதது.
**அப்பிரமாணிக்கம்** – ஆதாரமற்றது, உண்மைக்கு மாறுபட்டது.
**அப்பிரமேயம்** – அளக்கமுடியாதது; ஒருபேரெண்.
**அப்பிரமேயன்** – கடவுள்.
**அப்பிரமை** – கீழ்த்திசைப் பெண்யானை.
**அப்பிரயோசனம்** – பயனின்மை.
**அப்பிராகிருதம்** – இயற்கைக்கு மாறுபட்டது.
**அப்பிராணி** – பேதை; ஆற்றலற்றவன்.
**அப்பிராப்பியம்** – அடைதற்கரியது; அடையத்தகாதது.
**அப்பிராமணன்** – பிராமணனல்லாதவன்;போலிப் பிராமணன்.
**அப்பிரியம், அப்பிரீதி** – வெறுப்பு; வெறுப்பான செயல்.
**அப்பு** – நீர்; கடல்; பாதிரி என்னும் மரவகை; துடை; கடன்; தந்தை; வேலைக்காரன்; முட்டாள்; பூராடநாள்; விளி.
**அப்பு (வி)** – கனக்கப் பூசு.
**அப்புக்கட்டு** – அம்புகளின் கூடு.
**அப்புதல்** – ஒற்றுதல்; பூசுதல்; திணித்தல்; தாக்குதல்.
**அப்புது** – யானையைப் பாகர் அதட்டுகையில் கூறும் ஒரு குறிப்புச்சொல்.
**அப்புலிங்கம்** – திருவானைக்காவிலுள்ள இலிங்கம்; நீர்த்திரள்.
**அப்புறப்படல்** – குறித்த இடத்திற்கு அப்பாற் போதல்; வெளியேறுதல்.
**அப்புறப்படுத்துதல்** – இடம் மாற்றுதல்; வெளியேற்றுதல்.
**அப்புறம்** – அந்தப் பக்கம்; அதன்பின்.
**அப்பூச்சி** – ஒளித்து நின்று திடீரென்று தோன்றி மகிழ்விக்கும் விளையாட்டு.
**அப்பை** – அப்பைக்கோவை, கொடிவகை; சரக்கொன்றை; சிறுமீன்வகை.
**அப்பொழுது, அப்போது** – அக்காலத்தில்.
**அப்போதைக்கப்போது** – அவ்வக்காலத்தில்; உடனுக்குடனே.
**அப** – இன்மை; எதிர்மறை முதலிய பொருள்களைத் தரும் ஒரு வடமொழி முன்னொட்டு.
**அபக்கியாதி** – இகழ்ச்சி; பழி.
**அபக்குவம்** – முதிர்ச்சியின்மை; பக்குவப்படாமை.
**அபக்குவி** – முதிர்ச்சியில்லாதவன்; பக்குவமடையாதவன்.
**அப(வ)கடம்** – வஞ்சகம்.
**அபகம்** – இறப்பு.
**அபகமம்** – புறப்பட்டுப் போதல்; மறைந்து போதல்; சாதல்.
**அபகரணம்** – தீயொழுக்கம்.
**அபகரித்தல்** – கவர்தல்.
**அபகாரம்** – தீமை; கவர்கை.
**அபகாரி** – தீமைசெய்வோன்.
**அபகீர்த்தி** – இகழ்ச்சி.
**அபங்கம்** – கோளகபாடாணம்; மராத்தியப் பக்திப் பாடல்.
**அபங்கன்** – குறைவில்லாதவன்.
**அபங்குரன்** – திண்ணியன்.
**அபசகுனம்** – சகுனத்தடை; தீக்குறி.
**அபசப்தம்** – வழூஉமொழி; வெற்றுரை.
**அபசயம்** – வலிந்து கவர்தல்; தோல்வி; கேடு.
**அபசரணம்** – பின்னிடுகை; புறப்பாடு.
**அபசரிதம்** – தீயொழுக்கம்.
**அபசவ்வியம்** – இடப்பக்கம்; வலப்பக்கம்; மாறுபாடு.
**அபசாரம்** – மரியாதைக்குறைவு.
**அபசாரி** – காண்க: **அபிசாரி.**
**அபசித்தாந்தம்** – போலி முடிவு; தோல்வி நிலையுள் ஒன்று.
**அபசுமாரம்** – கால்கை வலிப்பு; வெறுக்கத்தக்கது.
**அபட்கை** – பாம்பின் கீழ்வாய் நச்சுப்பல்.
**அபட்சணம்** – பட்டினி, நோன்பு.
**அபட்சம்** – வெறுப்பு; பட்சமின்மை.
**அபட்சியம்** – உண்ணத்தகாதது.

**அபத்தம்** – வழு; பொய்; நிலையாமை; மோசம்.
**அபத்தியசத்துரு** – நண்டு.
**அபத்தியம்** – பத்தியத்தவறு; பிள்ளை; மனித இனம்.
**அபதானம்** – பெருஞ்செயல்.
**அபதேசம்** – புகழ்; நிமித்தம்; சாக்குப்போக்கு; குறி; இடம்.
**அபதேவதை** – கேடு விளைக்கும் சிறுதெய்வம்; பிசாசு.
**அபநயனம்** – கடனிறுக்கை; கைப்பற்றுதல்; அழித்தல்; குருட்டுக்கண்.
**அபமிருத்தியு, அபமிருத்து** – காண்க: **அகாலமிருத்து.**
**அபயதானம்** – அடைக்கலம் தருதல்.
**அபயம்** – அடைக்கலம்; அச்சமின்மை; அருள்; ஓலம்.
**அபயமிடுதல்** – அடைக்கலம் தரும்படி கூவுதல்; முறையீடு.
**அபயமுத்திரை** – அடைக்கலமளித்தலைக் காட்டும் கைக்குறி.
**அபயர்** – வீரர்.
**அபயவத்தம்** – இணைக்கைவகை.
**அபயவாக்கு** – அஞ்சல் என்னும் சொல், ஆறுதல் உரை.
**அபயன்** – அச்சமற்றவன்; சோழன்; அருகன்; கடுக்காய் வகை.
**அபயாத்தம்** – அடைக்கலம் அருளும் கை; அச்சந் தீரக் காட்டும் கை.
**அபரக்கிரியை** – பிணச்சடங்கு; நீத்தார்கடன்.
**அபரகாத்திரம்** – கால்; பின்கால்.
**அபரசன்** – பின்பிறந்தோன், இளவல்.
**அபரஞ்சி** – புடமிட்ட பொன்.
**அபரஞானம்** – நூலறிவு.
**அபரபக்கம், அபரபட்சம்** – தேய்பிறை.
**அபரம்** – பின், முதுகு; யானையின் பின்புறம்; கவசம்; பொய்; மேற்கு; நரகம்; நீத்தார் கடன்; அமரம் என்னும் படகைத் திருப்பும் தண்டு.
**அபராங்கம்** – உடலின் பிற்பகுதி.
**அபராசிதன்** – வெல்லப்படாதவன்; சிவன்; திருமால்; ஒரு பல்லவ மன்னன்.
**அபராணம்** – பிற்பகல்.
**அபராதம்** – குற்றம்; தண்டம்.
**அபராதி** – குற்றவாளி.
**அபராந்தம்** – மேனாடு; பிற்பகல்.
**அபராந்தர்** – மேனாட்டார்.
**அபரான்னம்** – காண்க: **அபராணம்.**
**அபரிச்சின்னம்** – பகுக்கப்படாமை; அளவிட முடியாதது.
**அபரிமிதம்** – அளவின்மை.
**அபரியந்தம்** – மட்டில்லாமை, எல்லையற்றது.
**அபரூபம்** – மூளி.
**அபரோட்சஞானம், அபரோட்சம்** – காட்சி அறிவு.
**அபலம்** – பயனின்மை; வலியின்மை; காய்ப்பு நின்ற மரம்; இழப்பு; திமிங்கிலம்; கொழு.
**அபலன்** – வலியற்றவன்.
**அபலை** – பெண்; துணையற்றவள்.
**அபவர்(ரு)க்கம்** – முத்தி, வீடுபேறு.
**அபவருத்தனம்** – அகற்றுதல்; சுருக்குதல்.
**அபவாதம்** – பழிச்சொல்; வீண்பழி.
**அபவேட்டிதம்** – அபிநயவகை.
**அபாக்கியம்** – பேறின்மை.
**அபாங்கம்** – கடைக்கண் பார்வை; நெற்றிக் குறி.
**அபாண்டம்** – பொய்க்குற்றம்; இடுநிந்தை.
**அபாத்திரம்(ன்)** – தகுதியற்றவன்; பரிசுபெறத் தகாதவன்.
**அபாம்பதி** – கடல்.
**அபாமார்க்கம்** – நாயுருவி என்னும் பூடுவகை.
**அபாயம்** – கேடு, ஆபத்து.
**அபாரசக்தி** – அளவிலா ஆற்றல்.
**அபாரணை** – உண்ணாமை.
**அபாரம்** – அளவற்றது.
**அபாவம்** – இன்மை; ஓர் அளவை.
**அபானம்** – கடுக்காய் மரம்; மலவாய்.
**அபானவாயு** – கீழ்நோக்கிச் செல்லும் காற்று.
**அபானன்** – பத்து வாயுக்களுள் ஒன்று.
**அபானியம்** – கடுக்காய்.
**அபி** – அதட்டல், கண்டித்தல், கேள்வி, ஐயம், அதிகம் முதலிய பொருள்களை உணர்த்தும் ஒரு வடமொழி முன்னொட்டு.
**அபிகதம்** – அருகடைதல்.
**அபிகாதம்** – அடித்தல்; வருத்தம்.
**அபிகாயம்** – சூம்புகை; காசநோய்வகை.
**அபிசரன்** – தோழன்.
**அபிசாதன்** – உயர்குலத்தோன்.
**அபிசார ஓமம்** – இறப்பைக் கருதிச் செய்யும் வேள்வி.
**அபிசாரகம்** – மந்திரத்தால் கொல்லல்.
**அபிசாரம்** – தீங்கு விளையச் செபிக்கும் மந்திரம்; சூனியம் வைத்தல்.
**அபிசாரி** – வேசி, விலைமகள்.
**அபிசித்து** – பகல் முகூர்த்தம் பதினைந்தனுள் எட்டாவது.
**அபிட்டம்** – பாதரசம்.
**அபிடேகம்** – திருமுழுக்கு; பட்டஞ்சூட்டும் சடங்கு; திருமுடி.
**அபிதா** – ஆபத்தில் முறையிட்டுக் கூறும் சொல்.
**அபிதானம்** – பெயர்; மறைவு.

**அபிதேயம்** – செஞ்சொல்லால் சொல்லத்தக்கது.
**அபிநயம்** – நடிப்பு.
**அபிநயன்** – கூத்தன்.
**அபிநயித்தல்** – நடித்தல்.
**அபிநவம்** – புதியது.
**அபிநிவேசம்** – கிளர்ச்சி; உள்ளார்வம், விருப்பம்.
**அபிப்பிராயம்** – நோக்கம், கருத்து.
**அபிமதம்** – விருப்பம்; இணக்கம்.
**அபிமந்திரித்தல்** – மந்திரங்களை உருவேற்றி நிலைக்கச் செய்தல்.
**அபிமானபுத்திரன்** – வளர்ப்பு மகன்; வைப்பாட்டி மகன்.
**அபிமானம்** – தன்மதிப்பு; உள்ளக்களிப்பு; பற்று; அறிவு; கொலை.
**அபிமானி** – பற்றுடையோன்.
**அபிமானித்தல்** – மதித்தல்; ஆதரித்தல்.
**அபிமுகம்** – நேர்முகம்; சன்னிதி.
**அபிமுகி** – எதிர்நோக்கிய முகமுடையது; நேர்முகமாயிருப்பது.
**அபியுக்தன்** – அறிஞன்.
**அபியோகம்** – இடித்துரை; போருக்கழைக்கை; முறையீடு.
**அபியோகி** – ஊறுசெய்ய ஊக்குவோன்; குறை கூறுவோன்; முறையீடு செய்வோன்; வாதி.
**அபிரட்சை** – முழுப் பாதுகாப்பு; நிறைவான பாதுகாப்பு.
**அபிராமம்** – அழகு.
**அபிராமன்** – மனத்துக்கு இனியவன்.
**அபிராமி** – அழகுள்ளவள்; பார்வதி.
**அபிருசி** – பெருவிருப்பம்.
**அபிரூபன்** – மிக்க அழகுள்ளவன்.
**அபிலாசம், அபிலாசை** – விருப்பம்.
**அபிவாதனம்** – பெரியோரிடம் தன்னை அறிவித்துத் தொழுகை.
**அபிவியத்தி** – வெளிப்படுதல்.
**அபிவிருத்தி** – மிகுதியாய்ப் பெருகுதல், வளர்ச்சி.
**அபின்** – கசகசாச் செடியின் பால்; ஒரு மருந்து; ஒரு போதைப் பொருள்.
**அபின்னம்** – வேறுபடாதது; சிதைவின்மை.
**அபின்னாசக்தி** – சிவத்தினின்றும் வேறுபடாத சக்தி.
**அபினி** – காண்க: **அபின்.**
**அபீட்டம்** – மிகுவிருப்பம்.
**அபுத்திபூருவம்** – அறியாமல் நிகழ்ந்தது.
**அபுதன்** – மூடன்.
**அபூதம்** – இல்பொருள்.
**அபூதவுவமை** – இல்பொருளுவமை.
**அபூபம்** – அப்பவகை.
**அபூர்(ரு)வம்** – புதியது; அரியது; அருமை.
**அபேட்சகர்** – காண்க: **வேட்பாளர்.**
**அபேட்சித்தல்** – விரும்புதல்.
**அபேட்சிதம்** – விரும்பப்பட்டது.
**அபேட்சை** – விருப்பம், வேட்பு.
**அபேதம்** – வேற்றுமையின்மை.
**அபோச்சியம்** – உண்ணத்தகாதது.
**அபோதம்** – அறியாமை.
**அம்** – அழகு; நீர்; மேகம்; விகுதி; சாரியை.
**அம்சம்** – கூறு; உரிமைப்பங்கு; அன்னப்பறவை.
**அம்பகம்** – கண்; எழுச்சி; கட்டளை; செம்பு; நடிப்புக் கூலி.
**அம்பட்டச்சி, அம்பட்டத்தி** – நாவிதப்பெண்.
**அம்பட்டன்** – நாவிதன்.
**அம்படம்** – புழுக்கொல்லிச் செடி; ஆடுதின்னாப் பாளை.
**அம்படலம்** – அம்மி; தேர்; ஈயம்; வெள்ளி; மரக்கால்; ஓடம்.
**அம்பணத்தி** – துர்க்கை.
**அம்பணம்** – நீர்; மரக்கலம்; பவளம்; யாழ்வகை; மரக்கால்; துலாக்கோல்; வாழைத்தண்டு.
**அம்பணவர்** – பாணர்.
**அம்பர்** – அவ்விடம்; ஓர் ஊர்; ஒருவகைப் பிசின்; ஓர்க்கோலை.
**அம்பரம்** – ஆடை; வானம்; கடல்; துயிலிடம்; திசை; சித்திரை நாள்; மஞ்சள்.
**அம்பரவாணம்** – எட்டுக்கால் பறவை.
**அம்பரைநாதம்** – அப்பிரகம் என்னும் கனிப்பொருள்.
**அம்பல்** – சிலர் அறிந்து தம்முட் புறங்கூறல்; பழிச்சொல்; பூ அலர்தற்குச் சிறிது முன்னுள்ள நிலை.
**அம்பலக்கூத்தன்** – சிவபிரான்.
**அம்பலகாரன்** – ஊர்த்தலைவன்; ஊர்ச் சபைத் தலைவன்; கள்ளர், வலையர் பட்டப்பெயர்.
**அம்பலச்சாவடி** – ஊர்ப் பஞ்சாயத்து மண்டபம்.
**அம்பலத்தாடி** – சிவபிரான்.
**அம்பலத்தி** – தான்றி; தில்லைமரம்.
**அம்பலம்** – பலர்கூடும் வெளியிடம்; ஊர்ச்சபை; கழகம்; தில்லையம்பலம்; அம்பலகாரன்.
**அம்பலவாணன்** – சிதம்பரத்தில் கோயில்கொண்டிருக்கும் சிவபிரான்.
**அம்பலவிருட்சம்** – தில்லைமரம்.
**அம்பலி** – களி; முட்டைவெள்ளை; ஒரு வாச்சியம்.
**அம்பறாத்தூணி** – அம்புக்கூடு.
**அம்பாயம்** – மகப்பேற்றுவலி, பிரசவவேதனை.
**அம்பா ஆடல்** – தைந் நீராடல்.
**அம்பாள்** – தாய்; பார்வதி.

**அம்பாரம்** – நெற்குவியல்; களஞ்சியம்.
**அம்பாரி** – யானைமேல் அமைத்த இருக்கை.
**அம்பால்** – தோட்டம்.
**அம்பாலிகை** – தருமதேவதை; பாண்டுவின் தாய்.
**அம்பாவனம்** – சரபப் பறவை.
**அம்பி** – தெப்பம், தோணி; மரக்கலம்; தாம்பு; இறைகூடை; கள்; காராம்பி; ஓர் ஊர்; தம்பி.
**அம்பிகாபதி** – அம்பிகை கணவனாகிய சிவபிரான்; கம்பர் மகன்.
**அம்பிகை** – பார்வதி; தருமதேவதை; துர்க்கை; திருதராட்டிரன் தாய்; தாய்; அத்தை.
**அம்பிகைதனயன்** – விநாயகன்.
**அம்பிகைபாகன்** – சிவபிரான்.
**அம்பு** – நீர்; கடல்; மேகம்; விண்; உலகம்; மூங்கில்; கணை; எலுமிச்சை; பாதிரி; திப்பிலி; வெட்டிவேர்; வளையல்; சரகாண்டபாடாணம்.
**அம்புக்கட்டு** – அம்புகளின் கட்டிய தொகுதி; அம்பறாத்தூணி.
**அம்புக்குதை** – அம்பின்நுனி.
**அம்புக்கூடு** – அம்பறாத்தூணி.
**அம்புச(ய)ம், அம்புசா(யா)தம்** – காண்க: **தாமரை;** நீர்க்கடம்பு.
**அம்புசாதன்** – பிரமன்.
**அம்புடம்** – ஆடுதின்னாப்பாளை.
**அம்புதம்** – மேகம்; கோரை; தாமரை.
**அம்புதி** – கடல்; கால்வாய்.
**அம்புநிதி** – கடல்.
**அம்புப்புட்டில்** – காண்க: **அம்புக்கூடு.**
**அம்புமுது, அம்புமுதுபாடன், அம்புமுதுவரை** – ஒருவகை முத்து.
**அம்புயன்** – காண்க: **அம்புசாதன்.**
**அம்புயை** – திருமகள்.
**அம்புரம்** – கீழ்வாயிற்படி.
**அம்புராசி** – கடல்; அம்புத்திரள்.
**அம்புரோகிணி** – தாமரை.
**அம்புலி** – சந்திரன்; அம்புலிப் பருவம்; சோளக்கூழ்.
**அம்புலிப் பருவம்** – குழந்தையுடன் விளையாட வருமாறு சந்திரனை அழைக்கும் நிலை; பிள்ளைத்தமிழ் உறுப்புகளுள் ஒன்று.
**அம்புலிமணி** – காண்க: **சந்திரகாந்தக்கல்.**
**அம்புலியம்மான்** – சந்திரன்.
**அம்புவாகம்** – மேகம்.
**அம்புவாசினி** – எலுமிச்சை; பாதிரி.
**அம்புவி** – பூமி.
**அம்புளி** – இனிய புளிப்பு.
**அம்பேல்** – விளையாட்டில் தடை நிகழ்த்தப் பிள்ளைகள் கூறும் சொல்.
**அம்பை** – பார்வதி; வெட்டிவேர்; கொக்குமந்தாரை.
**அம்போசன்** – சந்திரன்.
**அம்போதரங்கம்** – அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா உறுப்புகளுள் ஒன்று; நீர்த்திரைபோல் நாற்சீரடியும் முச்சீரடியும் இருசீரடியுமாய்க் குறைந்து வருவது; ஒத்தாழிசைக் கலிப்பா வகை.
**அம்போதரம்** – மேகம்; கடல்.
**அம்போதி** – கடல்; பாட்டின் உட்பொருள்.
**அம்போருகத்தாள்** – திருமகள்.
**அம்போருகம்** – தாமரை.
**அம்போருகன்** – பிரமன்.
**அம்ம** – கேட்டல் பொருளைத் தழுவிவரும் ஓர் இடைச்சொல்; ஒரு வியப்புச் சொல்; ஓர் உரையசைச் சொல்.
**அம்மகோ** – ஓர் இரக்கக் குறிப்புச் சொல்.
**அம்மங்கார்** – ஆசாரியன் மனைவி; அம்மான் மகள்.
**அம்மட்டு** – அவ்வளவு.
**அம்மண்டார்** – தாய்மாமன்.
**அம்மணக்கட்டை, அம்மணக்குண்டி** – ஆடை கட்டாத ஆள்.
**அம்மணத்தர்** – சமணர்.
**அம்மணத்தோண்டி** – காண்க: **அம்மணக்கட்டை.**
**அம்மணம்** – ஆடையில்லாமை; இடை; விபசாரம்; தகாத பேச்சு.
**அம்மணி** – பெண்ணைக் குறிக்கும் மரியாதைச் சொல்.
**அம்மந்தி** – அம்மான் மனைவி.
**அம்மம்** – முலை; குழந்தை உணவு.
**அம்மன்** – அம்மை; தேவதை.
**அம்மன்கட்டு** – கூகைக்கட்டு.
**அம்மன்கொடை** – அம்மனுக்காகச் செய்யப்படும் ஊர்த் திருவிழா.
**அம்மன்கொண்டாடி** – மாரியம்மன் கோயில் பூசாரி.
**அம்மனே** – ஒரு வியப்புக் குறிப்பு.
**அம்மனை** – தாய்; தலைவி; அம்மானை விளையாட்டு; அம்மானையாடும் கருவி.
**அம்மனைப்பாட்டு** – அம்மானை ஆட்டத்தில் மகளிர் பாடும் பாட்டு.
**அம்மனைமடக்கு** – கலித்தாழிசையால் வினா விடையாக மகளிர் இருவர் இருபொருள்படக் கூறுவதாக இயற்றும் பாட்டு.
**அம்மனையோ, அம்மனோ** – ஓர் அவலக் குறிப்பு.
**அம்மா** – தாய்; தாய்போல் மதிக்கப்படுபவள்; வியப்பு இரக்கக் குறிப்பு; ஓர் உவப்புக் குறிப்பு; ஓர் அசைச்சொல்.

**அம்மாச்சன்** – தாய்மாமன்.
**அம்மாச்சி** – தாயைப் பெற்ற பாட்டி.
**அம்மாஞ்சி** – அம்மான் சேய் என்பதன் மரூஉ; அம்மான் மகன்; மூடன்.
**அம்மாஞ்சிமதனி** – அம்மான் மகனின் மனைவி.
**அம்மாட்டி** – கொட்டிக்கிழங்கு.
**அம்மாடி** – வியப்பு இரக்க இளைப்பாறுதற் குறிப்பு.
**அம்மாத்தாள்** – காண்க: **அம்மாச்சி.**
**அம்மாத்திரம்** – அவ்வளவு.
**அம்மாமி** – அம்மான் மனைவி.
**அம்மாய்(யி)** – காண்க : **அம்மாச்சி.**
**அம்மார், அமார்** – கப்பல் கயிறு.
**அம்மாள்** – தாய்.
**அம்மாறு** – பெருங்கயிறு, வடம்.
**அம்மான்** – தாயுடன் பிறந்தவன்; அத்தை கணவன்; பெண் கொடுத்தவன்; தந்தை; கடவுள்.
**அம்மான்பச்சரிசி** – செங்கழுநீர்; செடிவகை.
**அம்மானார்** – அம்மானை ஆட்டம்; அம்மானை நூல்.
**அம்மானை** – ஒருவித மகளிர் விளையாட்டு; அம்மனை; ஒருவகைப் பாடல்; அம்மானைப் பருவம்; கலம்பகவுறுப்புள் ஒன்று.
**அம்மானைப்பருவம்** – பெண்பால் பிள்ளைத் தமிழ்ப் பருவங்களுள் ஒன்று; சிறுமியர் கூடி அம்மானை விளையாடும் நிலை.
**அம்மானை வரி** – மகளிர் அம்மானையாடும்போது பாடும் பாட்டு.
**அம்மி** – அரைகல்.
**அம்மிக்கல்** – அரைகல்; அம்மிக்குழவி.
**அம்மிக்குழவி** – அம்மியில் அரைக்கப் பயன்படும் நீண்ட திரள்கல்.
**அம்மிமிதித்தல்** – திருமணத்தில் மணமகள் அம்மி மேல் கால்வைத்தல்.
**அம்மியம்** – கள்; காளம் என்னும் சிறு சின்னம்.
**அம்மிரம்** – மாமரம்.
**அம்மிலம்** – புளிப்பு; புளியமரம்; புளிவஞ்சி.
**அம்மிலிகை** – புளி.
**அம்முக்கள்ளன்** – வஞ்சகன்.
**அம்முதல்** – வெளிக்காட்டாது ஒளித்தல்; அமுக்குதல்; மேகம் மந்தாரமாதல்.
**அம்மெனல்** – நீர்ததும்பல் குறிப்பு; ஓர் ஒலிக் குறிப்பு.
**அம்மேயோ** – ஒரு துன்பக் குறிப்பு.
**அம்மை** – தாய்; பாட்டி; பார்வதி; தரும தேவதை; சமணசமயத் தவப்பெண்; நோய் வகை; அழகு; அமைதி; வருபிறப்பு; கடுக்காய்; நூல்வனப்புள் ஒன்று; மேலுலகம்.
**அம்மைகுத்தல்** – அம்மைநோய் வாராது தடுக்கும் அம்மைப்பாலை உடலில் குத்திச் சேர்க்கை.
**அம்மைப்பால்** – அம்மை குத்துதற்குரிய பால்.
**அம்மைமுத்து** – வைசூரிக் கொப்புளம்.
**அம்மையப்பன்** – தாயும் தந்தையும்; சிவனும் சக்தியும் இணைந்த வடிவம், உமாபதி.
**அம்மையார்** – முதியவள்; பெண்களைக் குறிக்கும் மரியாதைச் சொல்.
**அம்மையார் கூந்தல்** – பூண்டுவகை.
**அம்மையோ** – ஒரு வியப்புச்சொல்.
**அம்மைவடு** – அம்மைத் தழும்பு.
**அம்மைவார்த்தல், அம்மைவிளையாடுதல்** – அம்மை போடுதல்.
**அம்மோ** – இரக்கக் குறிப்புச்சொல்.
**அமங்கலம்** – மங்கலம் அல்லாதது, இழவு.
**அமங்கலி(லை)** – கைம்பெண்.
**அம(மி)ஞ்சி** – கூலியில்லா வேலை.
**அமஞ்சியாள்** – கூலியில்லாமல் வேலைசெய்பவன்.
**அமட்டு** – அதட்டு; ஏய்ப்பு.
**அமட்டுதல்** – சிக்கவைத்தல்; அச்சுறுத்தல்; மயக்குதல்.
**அமடு** – சிக்குதல்.
**அமண்** – சமணசமயம்; சமணர்; அரையில் ஆடையின்மை; வரிக்கூத்து வகை.
**அமண்டம்** – காண்க: **ஆமணக்கு.**
**அமண்பாழி** – சமணர் பள்ளி.
**அமணம்** – சமணசமயம்; அரையில் ஆடையின்மை; இருபதினாயிரம் கொட்டைப்பாக்கு.
**அமணர்** – சமணர்.
**அமணானைப்படுதல்** – காமவேறுபாடு அடைதல்.
**அமதி** – அமிழ்து; காலம்; சந்திரன்.
**அமந்தி** – நாட்டுவாதுமை.
**அம(மை)யம்** – பொழுது; ஏற்ற சமயம்; உரிய காலம்.
**அமர்** – விருப்பம்; கோட்டை; போர்; போர்க் களம்; மூர்க்கம்.
**அமர் (வி)** – பொருந்து; போராடு; மாறுபடு.
**அமர்க்களம்** – போர்க்களம்; ஆரவாரம்.
**அமர்த்தல்** – அமரச்செய்தல்; ஏற்படுத்தல்; மாறுபடுதல்; பொருதல்.
**அமர்த்தன்** – திறமையற்றவன்.
**அமர்த்துதல்** – அமைதியாய் இருக்கச் செய்தல்; அடக்குதல்; திட்டப்படுத்துதல்; நிலைநிறுத்துதல்; பெருமிதம்பட நடித்தல்.
**அமர்தல்** – உட்காருதல்; இளைப்பாறல்; அடங்குதல்; பொருந்தல்; விரும்புதல்.
**அமர்வு** – இருப்பிடம்.
**அமரகம்** – போர்க்களம்.

**அமரத்துவம்** – அழியாமை.
**அமரநாயகம்** – தண்டத் தலைமை; தண்டத் தலைவனுக்கு விடப்படும் நிலம்.
**அமரபக்கம்** – காண்க : **அபரபக்கம்.**
**அமரம்** – அபரம்; கண்ணோய்; படகைத் திருப்பும் தண்டு; ஆயிரம் காலாளை ஆளுகை; அமர கோசம்.
**அமரமாதர்** – தெய்வப்பெண்டிர்.
**அமரர்** – பகைவர்; வானோர்.
**அமரர்கோன்** – தேவர்களின் அரசன், இந்திரன்.
**அமரர்பதி** – அமரர்கோன்; தேவருலகம்.
**அமரல்** – பொலிவு; பீடு; மிகுதி; நெருக்கம்.
**அமரன்** – தேவன்; போர்செய்வோன்.
**அமராங்கனை** – தெய்வப்பெண்.
**அமராசயம்** – இரைப்பை; கருப்பை.
**அமராஞ்சனம்** – சந்தனம்.
**அமராடல்** – போர்புரிதல்.
**அமராபகை** – விண்ணாறு, வான்கங்கை.
**அமராபதி, அமராபுரம்** } – இந்திரனின் தலைநகர்.
**அமரார்** – பகைவர்.
**அமராவதி** – காண்க: **அமராபதி;** பொறுமைக் குணமுடையவள்.
**அம(மு)ரி** – அமிழ்தம்; இந்திரனுலகம்; தெய்வப் பெண்; துர்க்கை; சிறுநீர்; நஞ்சு; கற்றாழை.
**அமரிக்கை** – அமைதி.
**அமரிதம்** – கடுக்காய்.
**அமரியம்** – குருந்தம்; சண்பகம்.
**அமரியள்** – விரும்பியவள்.
**அம(மு)ரியுப்பு** – சிறுநீர் உப்பு.
**அமரியோன்** – போர்வீரன்.
**அமரிறை** – இந்திரன்.
**அமரேசன்** – இந்திரன்; வியாழன்.
**அமரை** – அமராவதி; துர்க்கை; கருப்பை; கொப்பூழ்க்கொடி; அறுகம்புல்; தூண்; சீந்தில்.
**அமரோர்** – தேவர்.
**அமல்** – நிறைவு; அதிகாரம்; விசாரணை.
**அமல்செய்தல்** – அதிகாரம் செலுத்துதல்; நடைமுறைக்குக் கொண்டுவரல்.
**அமல்தல்** – நெருங்குதல்; பரவுதல்; மிகுதியாதல்.
**அம(மி)ல்தார்** – வரிப்பணம் வாங்கும் அரசாங்க ஊழியன்.
**அமலகம்** – காண்க : **ஆமலகம்.**
**அமலகமலம்** – கோசலம், பசுவின் சிறுநீர்.
**அமலம்** – மாசற்றது; அழுக்கின்மை; அழகு; வெண்மை; அப்பிரகம்; மரமஞ்சள்; நெல்லி.
**அமலர்** – மாசற்றவர்; கடவுள்; நெல்லிமுள்ளி.
**அமலன்** – குற்றமற்றவன், கடவுள்.
**அமலுதல்** – மிகுதல்; நெருங்கல்; பொருந்தல்.
**அமலை** – ஆரவாரம்; சோற்றுத்திரளை; கடுக்காய்; நெல்விமரம்; பூவந்திமரம்; கட்டி; கொப்பூழ்க்கொடி; போரில்பட்ட அரசனை நெருங்கி வீரர் திரண்டு பாடும் பாட்டு; மாசற்றவள்; பெண்தெய்வம்.
**அமலைதாரம்** – அரிதாரம்.
**அமளி** – ஆரவாரம்; கட்டில்; படுக்கை அறை; மிகுதி.
**அமளிகுமளி** – பேராரவாரம்.
**அமளிபண்ணுதல்** – கலகம் விளைத்தல்.
**அமளை** – ஒருவகைப் பூண்டு; கடுகுரோகிணி; மரவகை.
**அமளைக்கண்ணி** – கொள்ளு என்னும் தவசவகை.
**அமன்** – பன்னிரு சூரியர்களுள் ஒருவன், அரியமன்.
**அமனி** – தெரு.
**அமாத்தியன்** – அமைச்சன்; ஆலோசனை சொல்வோன்; அருகில் இருப்போன்.
**அமார்க்கம்** – வழியல்லாதது; சமயநெறி அல்லாதது.
**அமாவசி, அமாவசியை, அமாவாசை** – சூரியனும் சந்திரனும் கூடும் நாள்; இடைபிங்கலைகளில் சந்தியைப் பிராணன் கூடும் காலம்.
**அமாவாசைக்கண்டம்** – நோய்மிக்கார்க்கு அமாவாசையன்று உண்டாகும் கேடு.
**அமாவாசைக்கருக்கல்** – அமாவாசை இருட்டு.
**அமானத்து** – ஒப்படைத்த பொருள்; வைப்புநிதி.
**அமானத்துச்சிட்டா** – பொதுக்குறிப்பேடு.
**அமானம்** – அளவின்மை.
**அமானி** – பொறுப்பு; புறம்போக்குநிலம்; புளியாரைப்பூண்டு.
**அமிசகம்** – நாள்; பங்கு.
**அமிசகன்** – பங்காளி.
**அமிசம்** – பங்கு; தாயபாகம்; பின்னம்; அன்னப்பறவை; புயம்; செல்வாக்கு; பெருவாழ்வு.
**அமிசு** – அணு; சூரியன்; பிரபை.
**அமிசுகம்** – இலை; ஒளி; மெல்லிய ஆடை.
**அமிசை** – அமைப்பு; தலையெழுத்து, ஊழ்வினை.
**அமித்திரன்** – பகைவன்; ஒரு முனிவன்.
**அமிதம்** – அளவின்மை.
**அமிதவாதி** – முனைப்பாளன், தீவிரவாதி.
**அமிர்தக்கொடி** – சீந்தில்.
**அமிர்தகலை** – சந்திரகலை.
**அமிர்தகிரணன்** – சந்திரன்.
**அமிர்தசஞ்சீவி, அமிர்தசஞ்சீவினி** } – உயிர்தரும் ஒரு மூலிகை.

**அமிர்(ரு)தம்** – உணவு; ஆவின்பால்; நெய்; மோர்; நீர்; மழை; தேவருணவு; வேள்விப் பொருள்களில் மிஞ்சியவை; இரவாது வந்த பொருள்; நஞ்சு போக்கும் மருந்து; இனிமை; அழிவின்மை; வீடுபேறு; நஞ்சு; பாதரசம்.

**அமிர்தயோகம்** – நற்செயல்களுக்கு ஏற்ற வாரமும் நட்சத்திரமும் கூடிய நேரம்.

**அமிர்தர்** – அமுதமுண்பவர்; தேவர்.

**அமிர்தவல்லி** – சீந்திற்கொடி.

**அமிர்தன்** – தன்வந்திரி என்னும் ஒரு தேவ மருத்துவன்.

**அமிர்(ழ்)து** – காண்க: **அமிர்(ரு)தம்.**

**அமிர்தை** – பார்வதி; யோகினிகளுள் ஒருத்தி; நெல்லி; வெள்ளைப் பூண்டு; அமிர்தக் கடுக்காய்; திப்பிலி; துளசி; கள்; சீந்தில்.

**அமிழ்த்தல்** – ஆழச்செய்தல்.

**அமிழ்தம்** – காண்க: **அமிர்(ரு)தம்.**

**அமிழ்தல்** – ஆழ்தல்; தோய்தல்.

**அமினா** – காண்க: **அமீனா.**

**அமீர்** – முகமதியச் செல்வன்; முகமதியத் தலைவன்.

**அமீன், அமீனா** – பணம் வசூல் செய்யும் ஓர் அலுவலன்; உரிமையியல் நீதிமன்றக் கட்டளைகளை நிறைவேற்றுகின்ற ஓர் அலுவலன்; அந்தரங்க அலுவலன்.

**அமுக்கடி** – மந்தாரம், மூட்டமாயிருத்தல்; மக்கள் நெருக்கம்.

**அமுக்கன், அமுக்கி** – மறைவாகக் காரியம் செய்வோன், கபடன்; உறக்கத்தில் அமுக்கும் ஆவி எனப்படும் ஒரு நோய்.

**அமுக்கிரா, அமுக்கிரி, அமுக்குரா** – அமுக்கனங்கிழங்கு; ஒரு செடி.

**அமுக்குதல்** – அழுத்துதல்; அமிழ்த்துதல்; ஒடுக்குதல்;

**அமுங்குதல்** – அழுந்துதல்; அமர்தல்; நெரிபடுதல்.

**அமுசம்** – சிறு செருப்படைப் பூண்டு; அன்னப் பறவை.

**அமுசு** – ஒட்டடை.

**அமுத்தம்** – நெல்லி; வச்சநாபி; கையாயுதம்.

**அமுதகடிகை** – நற்செயல்களுக்குரிய நாழிகை.

**அமுதகதிரோன்** – சந்திரன்.

**அமுதகம்** – அமிர்தம்; பாற்கடல்; கொங்கை; நீர்.

**அமுதகிரணன்** – காண்க: **அமிர்தகிரணன்.**

**அமுதகுண்டம், அமுதகுண்டை** – இரப்போர் கலம்.

**அமுதகுலர்** – இடையர்; சான்றோர்.

**அமுதங்கம்** – காண்க: **சதுரக்கள்ளி.**

**அமுதசம்பூதன்** – சந்திரன்.

**அமுதசருக்கரை** – சீந்திற்கிழங்கிலிருந்து செய்த சருக்கரை.

**அமுதசாரணி** – வெள்வேல மரம்.

**அமுதசுரபி** – எடுக்க எடுக்கக் குறையாது உணவு தரும் கலன்; மணிமேகலை கையிலிருந்த ஓர் உணவுப் பாண்டம்; பிச்சைப் பாண்டம்.

**அமுததரம்** – மஞ்சிட்டிச் செடி.

**அமுததாரணை** – உணவின்றி நிட்டையிலிருக்கும் மௌனயோகிக்கு ஆதரவாகத் தலையினுள்ளிருந்து பெறும் அமிர்த ஒழுக்கு.

**அமுதப்பார்வை** – இனிய நோக்கு.

**அமுதபுட்பம்** – சிறுகுறிஞ்சாக்கொடி.

**அமுதம்** – அமிர்தம்; சோறு; நீர்; சுவை; உப்பு; தயிர்; பூமிச்சருக்கரை; காட்டுக்கொஞ்சி; விந்து; திரிபலை; திரிகடுகம்; வீடுபேறு.

**அமுதர்** – அழிவில்லாதவர்; கடவுள்; தேவர்; இடையர்.

**அமுதவல்லி** – அமிர்தவல்லி, திருமாலின் மகள்; சீந்தில்.

**அமுதவெழுத்து** – மங்கல வெழுத்து; அ, இ, உ, எ, க், ச், த், ந், ப், ம், வ் என்பன. காப்பியத்தின் முதற்செய்யுள் முதன் மொழியிலும் தசாங்கத்தயலிலும் வருதற்குரிய நல் எழுத்து.

**அமுதவேணி** – கங்கையாற்றைத் தலையில் கொண்டிருக்கும் சிவன்.

**அமுதன்** – அழிவில்லாதவன், கடவுள்.

**அமுதாசனர்** – தேவர்.

**அமுதாரி** – பூனைக்காலி.

**அமுது** – அமிர்தம்; படையல்; அமுத கடிகை; நிலாக்கதிர்.

**அமுதுகுத்துதல்** – உறைமோர் ஊற்றுதல்.

**அமுதுசெய்தல்** – உண்ணுதல்.

**அமுதுபடி** – அரிசி.

**அமுதுபடைத்தல்** – உணவு பரிமாறுதல்.

**அமுதுமண்டபம்** – கோயில் மடைப்பள்ளி.

**அமுதூட்டுதல்** – பிள்ளைக்கு ஏழாமாதத்தில் சோறூட்டுதல்.

**அமூர்த்தம்** – உருவமின்மை, அருவநிலை.

**அமூர்த்தன், அமூர்த்தி** – வடிவம் இல்லாத சிவன்.

**அமூலம்** – காரணம் இல்லாதது.

**அமேத்திய நாறி** – ஒரு பூண்டு; ஒரு மரம்; பீநாறிச் சங்கு.

**அமேத்தியம்** – மலம்; மூங்கில்.

**அமேயம்** – அளவிட முடியாதவன்.

**அமை** – அமைவு; அழகு; தினவு; மூங்கில்; நாணல்; அமாவாசை; சந்திரனுடைய பதினாறாங்கலை.

**அமை (வி)** – அமர்த்து; பொருத்து.

**அமைச்சன்** – மந்திரி; வியாழன்.
**அமைச்சு** – அமைச்சன்; அமைச்சு இயல்.
**அமைத்தல்** – படைத்தல்; பதித்தல்; சேர்த்தல்; சமைத்தல்.
**அமைதல்** – உண்டாதல்; தகுதியாதல்; பொருந்தல்; அடங்குதல்; நிறைதல்; உடன்படுதல்; முடிதல்.
**அமைதி** – பொருத்தம்; தன்மை; நிறைவு; காலம்; செய்கை; அடக்கம்; சாந்தம்; மாட்சிமை; உறைவிடம்.
**அமைப்பு** – நியமிப்பு; விதி; ஊழ்வினை; நிறுவனம்.
**அமையம்** – காண்க: **அம(மை)யம்**; இலாமிச்சை.
**அமைவடக்கம்** – பண்பட்ட ஒழுக்கம்.
**அமைவரல்** – மனங்கொளல்.
**அமைவன்** – முனிவன்; அருகன்; கடவுள்.
**அமைவு** – அமைதி; ஒப்பு.
**அமோகப்படை** – மருள் அகற்றும் படை.
**அமோகபாணம்** – குறிதவறாத அம்பு.
**அமோகம்** – மோகமின்மை; மிகுதி; குறிதவறாமை; ஒரு வாயு.
**அமோகன், அமோகி** – மயக்கம் அற்றவன்.
**அய்யங்கார்** – காண்க: **ஐயங்கார்.**
**அய்யர்** – காண்க: **ஐயர்.**
**அய்யவி** – காண்க: **ஐயவி.**
**அய்யன்** – காண்க: **ஐயன்.**
**அய்யா** – காண்க: **ஐயா.**
**அயக்களங்கு** – இரும்புத்துரு.
**அயக்கம்** – நோயின்மை.
**அயக்கல்** – அசக்கல்.
**அயக்காந்தச் சிந்தூரம்** – இரும்பும் கந்தகமும் சேர்ந்த சிந்தூரம்.
**அயக்காந்தம்** – ஒரு மருந்து; ஊசிக்காந்தம்.
**அயகம்** – சிறுகுறிஞ்சாக்கொடி; வசம்பு.
**அயச்சிந்தூரம்** – இரும்புச் சிந்தூரம்.
**அயசு** – இரும்பு; எஃகு; வழுக்குநிலம்.
**அயசுபடில்** – வெள்ளீயமணல்.
**அயணம்** – செலவு, பயணம்.
**அயபற்பம்** – இரும்புத்தூள்.
**அயம்** – ஐயம்; நீர்; சுனை; குளம்; சேறு; நிலம்; அயசு; சிறுபூலா; அலரிச்செடி; ஆடு; குதிரை; முயல்; விழா; பாகம்; நல்வினை; இரும்பு; அரப்பொடி.
**அயமகம்** – காண்க: **அசுவமேதம்.**
**அயமரம்** – அலரிமரம்.
**அயமி** – வெண்கடுகு.
**அயமுகம்** – ஓர் இருக்கைவகை.
**அயமேதம்** – காண்க: **அசுவமேதம்.**
**அயர்** – வாட்டம்.
**அயர்ச்சி** – மறதி; சோர்வு, வருத்தம்; வெறுப்பு.
**அயர்த்தல்** – மறத்தல்.
**அயர்தல்** – அயர்ச்சி; செலுத்துதல்; விரும்புதல்; வழிபடுதல்; விளையாடுதல்.
**அயர்தி, அயர்ப்பு, அயர்வு** – சோர்வு; மறதி.
**அயல்** – இடம்; அருகு; வெளியிடம்; காரம்.
**அயலகம்** – அடுத்த வீடு.
**அயலவன்** – பக்கத்தான்; அன்னியன்.
**அயலார்காட்சி** - நேர்நின்று பார்த்தவர்களின் காட்சி.
**அயலான்** – காண்க: **அயலவன்; பகைவன்.**
**அயலி** – வெண்கடுகு.
**அயலுரை** – இயைபில்லாத பேச்சு; அயலார் ஒருப்பட்டவுரை.
**அயவணம்** – ஒட்டகம்.
**அயவாகனன்** – ஆட்டை ஊர்தியாகவுடையவன், அக்கினிதேவன்.
**அயவாரி** – வசம்பு.
**அயவி** – காண்க: **சிற்றரத்தை.**
**அயவெள்ளை** – இரும்புத்தூள்.
**அயற்படுதல்** – நீங்கிப்போதல்.
**அயறு** – புண்வழலை; புண்ணீர் கசிந்து பரவுதல்.
**அயன்** – பிரமன்; மகேச்சுரன்; அருகன்; தசரதன்; தந்தை; அரசுநிலம்.
**அயன்சமா** – அரசாங்கம் வசூலிக்க வேண்டிய மொத்த வரி; பிற வரிகள் நீங்கிய தனி நிலவரி.
**அயன்சமாபந்தி** – ஆண்டு நிலவரித் தணிக்கை.
**அயன்தரம்** – நிலத்தின் முதல் மதிப்பு.
**அயன்தீர்வை** – நிலவரி.
**அயன்நிலம்** – அரசாங்கத்தாருக்கு நேராக வரி செலுத்துதற்குரிய நிலம்.
**அயன்மணம்** – எண்வகை மணங்களுள் ஒன்று; காண்க: **பிரசாபத்தியம்.**
**அயன்மை** – அன்னியம்.
**அயனகாலம்** – கோள்களிடையே நிகழும் காலம்.
**அயனப்பிறப்பு** – உத்தராயண தட்சணாயனங்களின் தொடக்கம்.
**அயனம்** – வரலாறு; ஆண்டில் பாதி சூரியன் நிலநடுக்கோட்டுக்கு வடக்கிலாவது தெற்கிலாவது போகும் காலம்; ஆண்டுப்பிறப்பு; வழி; வீடு.
**அயனாள்** – உரோகிணிநாள்; பிரமன் பிறந்த நாள்; பிரமன் வாழ்நாள்.
**அயா** – தளர்ச்சி.
**அயாசகம்** – கேளாது கிடைக்கும் பிச்சை.

**அயாசிதபிச்சை** – இருந்த இடத்திலேயே வந்த உணவை வாங்கிப் புசிக்கும் பிச்சை.

**அயாவுதல்** – வருந்துதல்.

**அயாவுயிர்த்தல்** – வருத்தம் தீர்தல்; இளைப்பாற்றுதல்; நெட்டுயிர்த்தல்; கொப்புளித்தல்.

**அயிக்கம், அயிக்கியம்** – ஐக்கியம், ஒன்றாந்தன்மை.

**அயிகம்** – ஊமத்தை.

**அயிங்கிதை** – கொல்லாமை; வருத்தாமை.

**அயிச்சுரியம், அயிச்சுவரியம், அயிச்சொரியம்** – காண்க: ஐசுவரியம்.

**அயிஞ்சி** – காண்க: நிலப்பனை.

**அயிணம்** – மான்தோல்.

**அயித்திரம்** – கருங்காணம்.

**அயிந்திரதிசை** – கிழக்கு.

**அயிந்திரம்** – காண்க: ஐந்திரம்.

**அயிநார்** – ஈளை.

**அயிர்** – ஐய உணர்வு; நுண்மை; நுண்மணல்; கண்டசருக்கரை; புகைக்கும் மணப்பொருள் வகை; யானைக்காஞ்சொறி; சிறுநீர்.

**அயிர்த்தல்** – ஐயமுறுதல்; மறைத்தல்.

**அயிர்த்துரைத்தல்** – தலைமகளுடைய கண்சிவப்பு முதலியவற்றைத் தோழி கண்டு ஐயங்கொள்வதைக் கூறும் அகத்துறை.

**அயிர்ப்பு** – ஐயமுறுதல்; மறைத்தல்; குறிஞ்சி யாழ்த் திறவகை.

**அயிரம்** – கண்டசருக்கரை.

**அயிராணி** – இந்திராணி; பார்வதி.

**அயிராப(வ)தம்** – இந்திரன் யானை; கயிலாயத்தி லுள்ள ஒரு யானை; பட்டத்து யானை.

**அயிராவதன்** – இந்திரன்; சூரியனுடைய தேரைச் செலுத்தும் நாகருள் ஒருவன்.

**அயிரி** – நெட்டிலைப் புல்; மீன்முள்ளரியும் கத்தி.

**அயிரியம்** – காண்க: நெட்டி.

**அயிரை** – நொய்ம்மீன்; நுண்மணல்; சேர நாட்டில் உள்ள மலை; சேரநாட்டு ஆறு.

**அயில்** – இரும்பு; கூர்மை; அறுவை செய்யும் கத்தி; வேல்; கலப்பை; கோரை; விரை; முசுமுசுக்கை; அழகு; உண்ணல்.

**அயில்தல்** – உண்ணுதல்.

**அயிலவன், அயிலான்** – வேற்படை உடையவன், முருகக் கடவுள்.

**அயிலுழவன்** – வீரன்.

**அயிற்பெண்டு** – வரிக்கூத்துவகை.

**அயின்றாள்** – அன்னை.

**அயினி** – உணவு; நீராகாரம்.

**அயினிநீர்** – மஞ்சளும் சுண்ணாம்பும் கலந்த ஆலத்திநீர்.

**அயுக்(த்)தம்** – தகுதியின்மை.

**அயுக்(த்)தி** – பொருத்தமின்மை.

**அயுதம்** – பதினாயிரம்; பிரிவின்மை.

**அயோக்கியதை** – தகுதிக்குறைவு; தீயநடை.

**அயோக்கியம்** – தகுதியின்மை.

**அயோக்கியன்** – நாணயம் அற்றவன்.

**அயோசனம்** – பிரிவு.

**அயோமலம்** – பானை; இரும்புக்கிட்டம்.

**அயோற்கம்** – அரப்பொடி, இரும்புத்தூள்.

**அயோனிசன்** – யோனியில் பிறவாதவன்.

**அர்க்கபந்து** – தாமரை.

**அர்க்கம்** – தேவருக்கு அல்லது பெரியோருக்கு வணக்கத்தோடு கொடுக்கும் பொருள்; எருக்கு; நீர்க்காக்கை; பொன்; செம்பு; பளிங்கு; விலைப்பொருள்; பூகோளத்தில் குறுக்குக்கோடு, அகலாங்கு.

**அர்க்காதிபன்** – செல்வன்.

**அர்க்கியம்** – தேவர்களுக்கும் அதிதிகளுக்கும் நீரால் செய்யும் ஒருவகை வரவேற்பு.

**அர்ச்சகன்** – பூசாரி; அத்தியயனபட்டர்.

**அர்ச்சனியம்** – வணக்கம்.

**அர்ச்சனை** – ஆராதனை; வழிபாடு.

**அர்ச்சித்தல்** – பூசித்தல்; வழிபடுதல்; ஒருவருக்காகக் கடவுள் திருப்பெயர் கூறி மலர் முதலியன இடுகை.

**அர்ச்சிதன்** – பூசிக்கப்படுவோன்.

**அர்ச்சியசிட்டர்** – பூசிக்கத்தக்கவர்; தூயவர்.

**அர்ச்சுனம்** – காண்க: மருது.

**அர்ச்சை** – வழிபாட்டுக்குரிய தெய்வத்திருமேனி.

**அர்த்தசந்திரபாணம்** – பிறைவடிவான அம்பு.

**அர்த்தசந்திரம்** – அணிவகுப்புகளுள் ஒன்று; திருவாசியின் மேல்வளைவு.

**அர்த்தசந்திரன்** – பாதிச்சந்திரன்; நகக்குறி; ஒருவகை நெற்றிக்குறி.

**அர்(ரு)த்தசாத்திரம்** – பொருள்நூல்.

**அர்(ரு)த்தசாமம்** – நடு இரவு.

**அர்த்ததாயம்** – வாரிசாகப் பெறும் பங்குப் பொருள்.

**அர்(ரு)த்த நாரீச(சுர)ன்** – பாதி உடம்பு பெண் வடிவான சிவன், உமையொருபாகன்.

**அர்(ரு)த்தமண்டபம்** – கருவறையை அடுத்த மண்டபம்.

**அர்த்தரதன்** – போர்புரிந்து பின்னடையும் தேர் வீரன்.

**அர்(ரு)த்தராத்திரி** – நள்ளிரவு.

**அர்த்தவாதம்** – பயனைச் சொல்லல்; புகழ்தல்.

**அர்(ரு)த்தாங்கீகாரம்** – பாதிக்கு ஒப்புதளித்தல்; இருதிறத்தாருள் ஒருசாரார் மட்டும் உடன்படுகை.

**அர்(ரு)த்தாபத்தி** – ஓர் அளவை, சொல்லியது கொண்டு சொல்லப்படாத பொருளைப் பெறுதல்.

**அர்த்தித்தல்** – இரத்தல்; இரண்டு சமபாகங் களாகப் பிரித்தல்.

**அர்ப்பணம்** – உரிமைப்படுத்துதல்; காணிக்கை செலுத்துகை; படைத்தல்.

**அர்ப்பித்தல்** – உரியதாக்குதல்.

**அர்ப்பிதம்,**– உரியதாக்கப்பட்டது.

**அர** – காண்க: **அரா.**

**அரக்கம்** – நன்னாரி; அகில்; அவலரக்கு; குருதி; பாதுகாப்பு.

**அரக்கன்** – இராக்கதன்; சூடு போடுதற்குரிய மாடு.

**அரக்காம்பல்** – செவ்வாம்பல்.

**அரக்கி** – இராக்கதப் பெண்; நஞ்சு.

**அரக்கிலச்சினை** – அரக்காலிடும் முத்திரை.

**அரக்கு** – செம்மெழுகு; சிவப்பு; சாதிலிங்கம்; சாராயம்; கஞ்சி; எள்ளின் காயில் காணும் ஒருவகை நோய்.

**அரக்குக்காந்தம்** – ஒருவகைக் காந்தக்கல்.

**அரக்குச்சாயம்** – துணிகளுக்கு ஊட்டும் கருஞ் சிவப்புச் சாயம்.

**அரக்குத்தைலம்** – கொம்பரக்கு முதலியவற்றால் வடிக்கும் ஒருவகைத் தைலம்.

**அரக்குதல்** – தேய்த்தல்; அமுத்தல்; வருத்துதல்; சிதைத்தல்; முழுதும் உண்ணுதல்; இருப்பு விட்டுப் பெயர்த்தல்.

**அரக்குநீர்** – சாதிலிங்கம் கலந்த நீர்; ஆலத்திநீர்; குருதி.

**அரக்குமஞ்சள்** – கருஞ்சிவப்பு மஞ்சள்; பூசு மஞ்சள்.

**அரகர** – 'சிவசிவ' எனப் பொருள்படும் ஓரடுக்கு மொழி.

**அரங்க** – முழுதும்.

**அரங்கநாதன்** – அவைத்தலைவன்; திருவரங்கத் தில் வீற்றிருக்கும் திருமாலின் பெயர்.

**அரங்கபூசை** – இடவழிபாடு; போர், பந்தயம், நாடகம் ஆகியன தொடங்கும்போது செய்யும் பூசை.

**அரங்கபூமி** – போர்க்களம்; திரையரங்கம், நாடக மேடை.

**அரங்கம்** – நாடகமேடை; போர்க்களம்;சூதாடும் இடம்; படைக்கலக் கொட்டில்; அவை; ஆற்றிடைக்குறை; திருவரங்கம்; தரா.

**அரங்கமேடை** - நாடகமேடை; சொற்பொழிவு மேடை.

**அரங்கன்** – காண்க: **அரங்கநாதன்.**

**அரங்கி** – வஞ்சகம் உடையவள்; நடிகை.

**அரங்கு** – அரங்கம்; கருப்பம்; உள்வீடு.

**அரங்குதல்** – தைத்தல்; அழிதல்; அழுந்துதல்; வருத்துதல்; உருகுதல்.

**அரங்கவீடு** – உள்ளறை.

**அரங்கேசன்** – காண்க: **அரங்கநாதன்.**

**அரங்கேற்றம், அரங்கேற்று** – புதுநூல், நடனம் முதலிய வற்றை முதன்முறை சபைக் குக் காட்டும் செய்கை.

**அரங்கேற்றுதல்** – புதுநூல், நடனம் முதலிய வற்றை முதன்முறை சபையில் ஏற்கச் செய்தல்.

**அரசங்கம்** – அரசனுக்குத் துணைசெய்யும் அமைப்பு.

**அரசச்சின்னம்** – அரசாங்க அடையாளம்.

**அரசண்மை** – பகையரசன் அணித்தாக இருக்கை.

**அரசநீதி** – அரசியல் கூறும் நூல்; அரசியல் கோட்பாடு.

**அரசப்பிரதட்சிணம்** – அரசமரத்தை வலம்வருகை.

**அரசம்** – சுவையில்லாதது; மூலநோய்.

**அரசமரம்** – மரவகையுள் ஒன்று.

**அரசமுல்லை** – அரசன் தன்மை கூறும் புறத் துறை.

**அரசர் அறுகுணம்** – அரசனின் வெளிநாட்டுக் கொள்கையில் ஆறு தன்மைகள்; அவை: நட்பு, பகை, செலவு, இருக்கை, கூடினரைப் பிரித்தல், கூட்டல்.

**அரசர் அறுதொழில்** – அரசர்க்குரிய ஆறு தொழில்கள்; அவை: ஓதல், வேட்டல், ஈதல், படைக்கலம் பயிறல், பல்லுயிரோம்பல், பகைத்திறம் தெறுதல்.

**அரசர்பா** – காண்க: **ஆசிரியப்பா.**

**அரசவாகை** – அரசன் இயல்பு கூறும் புறத் துறை.

**அரசவாரியன்** – குதிரை நடத்துவோரில் சிறந்தவன்.

**அரசவிலை முருகு** – காதணிவகை.

**அரசளித்தல்** – காண்க: **அரசாளுதல்.**

**அரசன்** – நாடாள்வோன்; துருசு; வன்னியன்; வியாழன்; பூவரசு; கோவைக்கொடி.

**அரசன்விருத்தம்** – நூல்வகை.

**அரசன்விரோதி** – கோவைக்கொடி; பூவரசமரம்.

**அரசாங்கம்** – அரச உறுப்பு; அரசியல் துறைகள்; அரசாட்சி.

**அரசாட்சி** – அரசு நிருவாகம்.

**அரசாணி** – அரசங்கொம்பு; மணப்பந்தலில் அரசங்கால் நடும் மேடை; அரசி; அம்மி.

**அரசாணிக்கால்** – அரசங்கொம்பு.

**அரசாணிமேடை** – அரசங்கால் நட்ட திருமண மேடை.

**அரசாளுதல்** – அரசு செய்தல்.

**அரசானம்** – அரசமரம்; அரத்தைப் பூண்டு.
**அரசி** – அரசன் மனைவி; அரசாளுபவள்.
**அரசிகன்** – சுவையறியாதவன்.
**அரசியல்** – அரசாளும் முறை; காண்க: **அரசங்கம்.**
**அரசிருக்கை** – அரசன் வீற்றிருக்கும் அவை; அரியணை.
**அரசிலை** – அரசமரத்தின் இலை; விலங்குகளுக்கு இடும் அரசிலைக்குறி; அரைமூடி.
**அரசிறை** – அரசாங்க வரி; அரசர்க்கு அரசன்.
**அரசு** – அரசன்; இராச்சியம்; அரசியல், அரசாட்சி; அரசமரம்; திருநாவுக்கரச நாயனார்.
**அரசுகட்டில்** – அரியணை.
**அரசுவா** – பட்டத்து யானை.
**அரசோனம்** – காண்க: **வெள்ளைப்பூண்டு.**
**அரட்சி** – மனக்குழப்பம்.
**அரட்டடக்கி** – செருக்குள்ளவர்களை அடக்குபவன்.
**அரட்டம்** – பாலைநிலம்; பொழுதுவிடிகை.
**அரட்டமுக்கி** – காண்க: **அரட்டடக்கி;** குறும்பர்களை ஒடுக்குபவன்; திருமங்கையாழ்வார்.
**அரட்டல்புரட்டல்** – நோய் முற்றலால் நிகழும் நோவு.
**அரட்டன்** – குறும்பன்; சிற்றரசன்; மிடுக்கன்; கொள்ளையடிப்பவன்; வீண்பேச்சுப் பேசுவோன்.
**அரட்டி** – அச்சம்.
**அரட்டு** – ஆணவம்; மிடுக்கு; குறும்பர்; குறும்பு; அச்சம்.
**அரட்டுதல்** – அச்சுறுத்தல்.
**அரட்டையடித்தல்** – வீண்பேச்சுப் பேசுதல்.
**அரண்** – பாதுகாப்பு, காவல்; கோட்டை; சுற்றுமதில்; காவற்காடு; கவசம்; வேலாயுதம்; செருப்பு; அழகு; அச்சம்.
**அரண்மனை** – மதிலால் காவல் செய்யப்பட்ட மாளிகை; அரசன் இருப்பிடம்.
**அரணம்** – அரண், கொத்தளம்; பாதுகாப்பு, காவல்; கவசம்; செருப்பு; கருஞ்சீரகம்: மஞ்சம்; தொடுதோல்.
**அரணம்வீசுதல்** – கவசம் அணிதல்.
**அரணி** – முன்னைமரம்; தீக்கடைகோல்; நெருப்பு; சூரியன்; கவசம்; கோட்டைமதில்; வேலி; காடு.
**அரணித்தல்** – காவல் செய்தல்; அலங்கரித்தல்; கடினப்படுதல்.
**அரணியம்** – காடு.
**அரணியன்** – காட்டிலிருப்பவன்; அடைக்கலமானவன்.
**அரணியா** – காட்டுக் கருணைக்கிழங்கு.
**அரணை** – பல்லி போன்ற ஓர் உயிர்வகை, பாம்பரணை.
**அரத்தகம்** – செம்பஞ்சு.
**அரத்தம்** – குருதி; சிவப்பு; செம்பஞ்சு; அரக்கு; செங்குவளை; செம்பரத்தை; நீலோற்பலம்; தாமரை; நெற்றித்திலகம்; பவளம்; பொன்; கடுக்காய்; ஒத்த காதல்.
**அரத்தன்** – செவ்வாய்க் கோள்.
**அரத்தை** – ஒரு மருந்துச் செடிவகை; முடக்கொற்றான்; குறிஞ்சியாழிசை.
**அரத்தோற்பலம்** – செங்குவளைக் கொடி; காண்க: **செவ்வாம்பல்.**
**அரதனம்** – இரத்தினம்; மிருதபாடாணம்.
**அரதனாகரம்** – கடல்; தனுக்கோடிக்குக் கிழக்கேயுள்ள கடல்.
**அரதி** – வேண்டாமை; துன்பம்.
**அரதேசி** – உள்நாட்டுப் பிச்சைக்காரன்.
**அரந்தை** – துன்பம், வருத்தம்; குறிஞ்சிப்பண்; நீர்நிலை.
**அரப்பிரியை** – சிவனுக்கு விருப்பமான உமை.
**அரப்பு** – எண்ணெய்க் குளியலுக்குத் தேய்த்துக் கொள்ளும் சிகைக்காய் முதலியன.
**அரப்பொடி** – இரும்புத்தூள்.
**அரபி** – காண்க: **கடுக்காய்;** ஒரு நாடு; ஒரு மொழி.
**அரபுத்தமிழ்** – அரபுச் சொற்களைத் தமிழில் எழுதிய குரான்; அரபுச் சொற்கள் கலந்து வழங்கும் தமிழ்.
**அரம்** – இரும்பைத் தேய்க்கப் பயன்படும் கருவி; விரைவு; வண்டி; பாதலம்; தோல்.
**அரம்பன்** – குறும்பு செய்வோன்.
**அரம்பு** – குறும்பு; விரும்பியதை நிறைவேற்றும் ஆற்றல்.
**அரம்பை** – காண்க: **ஓமம்;** வாழைமரம்; தேவருலகத்துள்ள நாடகமகளிருள் ஒருத்தி.
**அரம்பையர்** – தெய்வமகளிர்.
**அரமகள்** – தெய்வப்பெண்.
**அரமனை** – காண்க: **அரண்மனை**
**அரமாதர்** – தெய்வப்பெண்டிர்.
**அரமாரவம்** – காண்க: **நாயுருவி.**
**அரமி** – கடுக்காய்.
**அரமியம்** – அரண்மனை; நிலாமுற்றம்; பிரமிப் பூண்டு; நாயுருவி.
**அரயன்** – அரசன்.
**அரரி** – கதவு.
**அரலை** – கழலைக்கட்டி; கடல்; மரற்செடி; கற்றாழை; விதை; கொடுமுறுக்கு; பொடிக்கல்; கனி; குற்றம்; கோழை.
**அரவக்கிரி** – வேங்கடமலை.
**அரவக்கொடியோன்** - துரியோதனன்.

**அரவங்கலக்கம்** – சாகுங் காலத்துண்டாகும் அறிவுத் தெளிவு; முகப்பொலிவு.

**அரவணிந்தோன்** – பாம்புகளை அணிந்திருக்கும் சிவன்.

**அரவணை** – பாம்புப் படுக்கை; திருமால் கோயில்களில் இரவில் படைக்கும் சருக்கரைப் பொங்கல்.

**அரவணைச்செல்வன்** – பாம்புப் படுக்கையில் பள்ளிகொள்ளும் திருமால்.

**அரவணைத்தல்** – தழுவுதல்; ஆதரித்தல்.

**அரவணையான்** – காண்க: **அரவணைச்செல்வன்.**

**அரவதண்டம்** – யமதண்டனை.

**அரவப்பகை** – பாம்புக்குப் பகையான கருடன்.

**அரவம்** – பாம்பு; ஆயிலிய நாள்; இராகுகேதுக்கள்; ஆரவாரம்; பரலுள்ள சிலம்பு; படையெழுச்சி; பதஞ்சலிமுனிவர்; குங்குமம்; அதிமதுரம்; மரமஞ்சள்; வில்லின் நாண்.

**அரவன்** – பாம்புகளை அணிந்துள்ள சிவன்.

**அரவாட்டிப்பச்சை** – தொழுகண்ணிச்செடி.

**அரவாபரணன்** – காண்க: **அரவன்.**

**அரவாய்க் கடிப்பகை** – அரம் போன்ற விளிம்புடைய வேப்பிலை.

**அரவித்தல்** – ஒலியெழுப்பல்.

**அரவிந்தப்பாவை** – தாமரையில் வீற்றிருக்கும் திருமகள்.

**அரவிந்தம்** – தாமரை; இரசம்.

**அரவிந்தராகம்** – பதுமராகம்.

**அரவிந்தலோசனன்** – தாமரைக் கண்ணன், திருமால்.

**அரவிந்தன்** – தாமரையிலிருந்து தோன்றிய பிரமன்.

**அரவிந்தை** – காண்க: **அரவிந்தப்பாவை.**

**அரவு** – பாம்பு; ஒலி; உடைப்பு அடைக்கும் வைக்கோல் பழுதை; நாகமரம்; ஆயிலியம்; தொழிற்பெயர் விகுதி.

**அரவுயர்த்தோன்** – காண்க: **அரவக்கொடியோன்.**

**அரவுரி** – பாம்புத்தோல்; பாம்புச் சட்டை.

**அரவுருட்டுதல்** – வைக்கோற் புரியை உடைப்பிற் செலுத்துதல்.

**அரளி** – அலரி; பீநாறிமரம்.

**அரளுதல்** – பிரமித்தல், திகைத்தல்; மிக அஞ்சுதல்.

**அரற்றல்** – அரற்றுதல்; யாழ்நரம்போசை.

**அரற்று** – புலம்பல்; குறிஞ்சி யாழ்த்திறவகை.

**அரன்** – பதினோர் உருத்திரருள் ஒருவரின் பெயர்; எப்பொருட்கும் இறை; அழிப்போன்; அரசன்; நெருப்பு; மஞ்சள்.

**அரன்தோழன்** – சிவனின் தோழனான குபேரன்.

**அரன்நாள்** – சிவனுக்குரிய நாள், திருவாதிரை.

**அரன்மகன்** – முருகக் கடவுள்; விநாயகன்; வீரபத்திரன்.

**அரன்வெற்பு** – சிவபெருமான் வீற்றிருக்கும் கைலாயமலை.

**அரனிடத்தவள்** – சிவபெருமானின் இடப்பக்கத்திலிருக்கும் உமை.

**அரனெறி** – திருவாரூரில் உள்ள ஒரு சிவாலயம்.

**அரா** – பாம்பு; ஆயிலியநாள்; நாகமல்லி.

**அராக்கோள்** – இராகு கேதுக்கள்.

**அராகம்** – கலிப்பாவின் ஓர் உறுப்பு; தக்கராகம்; பாலையாழ்த்திற வகை; ஆசை; சிவப்பு; பொன்.

**அராகித்தல்** – இடையறாது கடுகிச் செல்லுதல்.

**அராசகம்** – நாட்டில் அரசியல் இல்லாக் காலத்தில் நிகழும் குழப்பம்.

**அராட்டுப்பிராட்டு** – போதியதும் போதாதது மானது.

**அராத்துதல்** – அராவுதல், மிண்டுதல்.

**அராதி** – பகைவன்.

**அராந்தானம்** – சமணப்பள்ளி.

**அராநட்பு** – வேண்டாவெறுப்பு.

**அராபதம்** – வண்டு.

**அராமி** – கொடியன்(ள்).

**அராமுனிவர்** – பதஞ்சலிமுனிவர்.

**அராவாரம்** – காண்க: **கொடிமுந்திரி.**

**அராவுதல்** – அரத்தால் தேய்த்தல்; உராய்தல்; மாறுபடுதல்.

**அராவைரி** – கருடன்; மயில்; கீரி.

**அராளகடகாமுகம்** – நிருத்தக்கை முப்பதனுள் ஒன்று.

**அராளம்** – காண்க: **இருவாட்சி;** குங்கிலியம்; இணையா வினைக்கை வகை.

**அரி** – வண்டு; மென்மை; கண்வரி; கண்; சிலம்பினுட் பரல்; சிலம்பு; உள்துளை; மூங்கில்; சோலை; தேர்; மக்கள் துயிலிடம்; கட்டில்; கடல்; தகட்டு வடிவு; கூர்மை; வலிமை; மரவயிரம்; அரியப்பட்ட கைப்பிடிக் கதிர்; அரிசி; கள்; குற்றம்; நீர்த்திவலை; ஆயுதம்; பகை; நிறம்; அழகு; பொன்னிறம்; திருமால்; சிவன்; இந்திரன்; யமன்; காற்று; ஒளி; சூரியன்; சந்திரன்; சிங்கம்; குதிரை; குரங்கு; பாம்பு; தவளை; கிளி; திருவோணம்; துளசி; நெல்; நெற்கதிர்.

**அரிக்கஞ்(ண்)சட்டி** – அரிசி களையும் சட்டி.

**அரிக்காரன்** – தூதன்; கட்டியங் கூறுவோன்.

**அரிகண்டம்** – கழுத்தில் மாட்டப்படும் ஓர் இரும்பு வட்டம்; ஒருவித வேடம்; தொல்லை.

**அரிகண்டம் பாடுதல்** – கழுத்தில் கத்தியைக் கட்டிக்கொண்டு எதிரி கொடுக்கும் குறிப்புக்கு ஏற்பப் பாடுதல்.

**அரிகயிறு** – தொட்ட கையை அரியும் நூற்பொறி.

**அரிகரகுமரன், அரிகரபுத்திரன்** – ஐயனார்.

**அரிகரன்** – திருமாலும் சிவனும் கூடிய மூர்த்தி.

**அரிகல்** – மேருமலை.

**அரிகால்** – காண்க: **அரிதாள்.**

**அரிகிணை** – மருதநில வாத்தியம்.

**அரிகுரல்** – கரகரத்த குரல்.

**அரிகூடம்** – கோபுரவாயில் மண்டபம்.

**அரிகேசரி** – பாண்டிய மன்னரின் பட்டப்பெயர்.

**அரிச்சாவி** – காண்க: **அரிசா.**

**அரிச்சிகன்** – சந்திரன்.

**அரிச்சுவடி** – அகரச் சுவடி என்பதன் மரூஉ; பிள்ளைகளின் தொடக்க நூல்; எழுத்துக் கற்பிக்கும் புத்தகம்; அரிவரியேடு; நெடுங் கணக்கு எழுதப்பட்ட புத்தகம்.

**அரிசந்தனம்** – தேவருலக ஐந்து மரங்களுள் ஒன்று; செஞ்சந்தனம்; தாமரைப் பூந்தாது; மஞ்சள்; நிலவு.

**அரிசம்** – அமாவாசை மிகுதியாகவும் பிரதமை குறைவாகவும் கூடியிருக்கும் நாள்; மகிழ்ச்சி; மிளகு.

**அரிசய(ல)ம்** – சரக்கொன்றை; எலுமிச்சை.

**அரிசனம்** – காண்க: **மஞ்சள்;** தாழ்த்தப் பட்டோர்.

**அரிசா** – பெருங்குமிழமரம்.

**அரிசி** – உமி நீக்கப்பட்ட தானியவகை; தானிய மணி; மூங்கிலரிசி முதலியன; மஞ்சள்; கடுக்காய்.

**அரிசிக்கம்பு** – கம்புப் பயிர்வகை.

**அரிசிக்காடி** – புளித்த கஞ்சி.

**அரிசிப்பல்** – சிறுபல்.

**அரிசிப்புல்** – செஞ்சாமை. காண்க: **மத்தங்காய்ப் புல்.**

**அரிசு** – மிளகு; வேம்பு.

**அரிட்டம்** – கேடு; பிள்ளை பெறும் இடம்; நன்மை; சாக்குறி; மிளகு; வெள்ளுள்ளிப் பூண்டு; கடுகுரோகிணிப் பூண்டு; வேப்பமரம்; மோர்; கள்; முட்டை; காகம்.

**அரிட்டித்தல்** – கொல்லல்.

**அரிட்டை** – தீங்கு; கடுகுரோகிணிப் பூண்டு.

**அரிடம்** – காண்க: **அரிட்டம்.**

**அரிணம்** – மான்; யானை; பொன்; சந்தனம்; வெண்மை; சிவப்பு.

**அரிணி** – அழகிய பெண்; பெண்மான்; அப்சரசு களுள் ஒரு சாரார்; பச்சை நிறத்தினள்; வஞ்சிக்கொடி.

**அரிணை** – கள்.

**அரித்தல்** – தினவெடுத்தல்; மேய்தல்; கொழித் தெடுத்தல்; தூசு போக்கல்; கூட்டுதல்; நீர் அறுத்துச் செல்லுதல்; நீரில் கழுவிப் பிரித்தல்; பூச்சி தின்னுதல்; வருத்துதல்; இடைவிடுதல்; சிறிது சிறிதாகக் கவர்தல்.

**அரித்திரம், அரித்திராபம்** – மஞ்சள்; பொன்னிறம்; சுக்கான்.

**அரித்து** – பசுமை; பசும்புல்; பசும்புரவி; சிங்கம்; சூரியன்.

**அரித்தை** – நடுக்கம்; துன்பம்.

**அரித்தை (வி)** – அரித்தாய் எனப் பொருள்படும் ஒரு முன்னிலை வினைமுற்று.

**அரிதகி** – காண்க: **கடுக்காய்.**

**அரிதட்டு** – சல்லடை.

**அரிதம்** – பசும்புரவி; மஞ்சள்; பூமி.

**அரிதல்** – அறுத்தல்.

**அரிதாட்புள்ளி** – கதிர் அறுத்த தாளைக்கொண்டு கணிக்கும் தானிய மதிப்பு.

**அரிதாரம்** – தாளகபாடாணம்; கத்தூரி; மஞ்சள்; திருமகள்.

**அரிதாலம்** – பொன்னரிதாரம்; மஞ்சள் நிறமான ஒருவகைப் புறா.

**அரிதாள்** – கதிரறுத்த தாள்; திருமால் திருவடி.

**அரிதாளம்** – நவதாளத்துள் ஒன்று; பொன்னரி தாரம்.

**அரிதினம்** – ஏகாதசி.

**அரிது** – அருமை; பசுமை.

**அரிதொடர்** – தொட்டால் கையை அரியும் சங் கிலிப் பொறி.

**அரிந்தமன்** – பகைவரையடக்குவோன்; திருமால்.

**அரிநூற்பொறி** – தொட்ட கையை அறுக்கும் நூற்பொறி.

**அரிப்பரித்தல்** – கொழித்து எடுத்தல்.

**அரிப்பறை** – செவிப்பறையைத் தாக்கும் ஒலியையுடைய பறை.

**அரிப்பன்** – காண்க: **அரிப்புக்காரன்.**

**அரிப்பனி** – இடைவிட்ட துளி.

**அரிப்பிரியம்** – கடம்பு; கடுகுரோகிணி; சங்கு.

**அரிப்பிரியை** – திருமாலால் விரும்பப்பட்டவள், திருமகள்.

**அரிப்பு** – பிரித்தெடுக்கை: குற்றம்; சினம்; தினவு.

**அரிப்புக்காரன்** – அரித்துப் பொருள் தேடுவோன்.

**அரிப்புக்கூடை** – சல்லடை.

**அரிப்புழுக்கல்** – அரிசிச்சோறு.

**அரிப்பெட்டி** – சல்லடை.

**அரிபாலுகம்** – தக்கோலச்செடி.

**அரிமஞ்சரி** – குப்பைமேனிப் பூண்டு.

**அரிமணல்** – நுண்மணல்.

**அரிமணி** – மரகதம்.
**அரிமந்திரம்** – சிங்கம்வாழ் குகை.
**அரிமருகன்** – கணபதி; முருகக்கடவுள்.
**அரிமா** – சிங்கம்.
**அரிமாநோக்கம்** – சிங்கத்தின் பார்வை; முன்னும் பின்னும் பார்த்தல்; சூத்திர நிலையுள் ஒன்று.
**அரிமுகவம்பி** – சிங்கமுக ஓடம்.
**அரிய** – அருமையான.
**அரியகம்** – காற்சரியென்னும் அணி; கொன்றை மரம்.
**அரியசம்** – காண்க: **சரக்கொன்றை.**
**அரியசாரணை** – மாவிலிங்கமரம்.
**அரியணை** – சிங்காதனம்.
**அரியணைச்செல்வன்** – அருகன்.
**அரியம்** – வாத்தியம்.
**அரியமா** – பன்னிரு ஆதித்தருள் ஒருவர்; சூரியன்.
**அரியமான்** – பிதிரர் தலைவன்.
**அரியல்** – அரிதல்; கள்.
**அரியாசம்** – ஒரு மணப்பொருள்.
**அரியாசனம்** – காண்க: **அரியணை.**
**அரியாயோகம்** – அரைப்பட்டிகை; மருந்து.
**அரியுண்மூலம்** – கோரைக்கிழங்கு.
**அரியெடுப்பு** - ஊர்த் தொழிலாளருக்குக் களத்தில் கொடுக்கும் இருகை அளவுத் தானியம்.
**அரியேறி** – சிங்கத்தை ஊர்தியாகவுடைய கொற்றவை.
**அரியேறு** – ஆண்சிங்கம்.
**அரில்** – பிணக்கம்; பின்னல்; குற்றம்; குரல்; கூந்தல்; சிறுகாடு; மூங்கில்; பாயல்; பலா; பரல்.
**அரிவரி** – காண்க: **நெடுங்கணக்கு.**
**அரிவருடம்** – ஒன்பது கண்டங்களுள் ஒன்று.
**அரிவாள்** – வெட்டறுவாள்; நெல் முதலியன அரியும் கருக்கறுவாள்.
**அரிவாள்மணை** – காய்கறிகளை அரியும் கருவி.
**அரிவாள்முனைப்பூண்டு** – ஒருவகைப் பூண்டு.
**அரிவிமயிர்** – வீரர் வேல்நுனியில் அணியும் பறவை மயிர்.
**அரிவை** – இருபது முதல் இருபத்தைந்து ஆண்டு வரை உள்ள பெண்.
**அரீடம்** – கடுகுரோகிணிப் பூண்டு.
**அரு** – உருவமற்றது; கடவுள்; மாயை; சித்த பதவி; அட்டை; புண்.
**அருக்கம்** – எருக்கஞ்செடி; நீர்க்காக்கை; சுக்கு; செம்பு; பளிங்கு; சூரியன்; சுருக்கம்.
**அருக்களித்தல்** – அஞ்சுதல்; அருவருத்தல்.
**அருக்களிப்பு** – அருவருப்பு.
**அருக்கன்** – சூரியன்; இந்திரன்; தமையன்; எருக்கு; சுக்கு.
**அருக்காணி** – அருமை; அழுத்தம்.
**அருக்கு** – காண்க: **அருமை**; எருக்கு; அருக்காணி; அஞ்சுகை.
**அருக்கு (வி)** – அருக்கு என் ஏவல்.
**அருக்குதல்** – சுருக்குதல்; காய்ச்சுதல்; விலக்குதல்; அருமை பாராட்டுதல்; அழித்தல்.
**அருகசரணம்** – அருகனைச் சரண்புகுதல்.
**அருகசனி** – பேரேலப்பூண்டு.
**அருகனி** – பிரண்டைக்கொடி.
**அருகணை** – நுழைவாயிலின் பக்கம்.
**அருகந்தர்** – அருக சமயத்தார்.
**அருகந்தாவத்தை** – முத்திநிலை.
**அருகம்** – சமணசமயம்; தகுதி; பக்குவம்; அகில்; அண்மை; சீந்தில்.
**அருகர்** – அருகசமயத்தவர்; பக்குவ நிலையிலுள்ளவர்; நிலையாமை; அண்மை.
**அருகல்** – அருகு; அருமை; குறைதல்; சாதல்; அணைதல்.
**அருகன்** – அருகக் கடவுள்; சமணசமயத்தான்; தக்கவன்; தோழன்; பக்குவி.
**அருகன் எண்குணம்** – கடையிலா அறிவு, கடையிலாக் காட்சி, கடையிலா ஆற்றல், கடையிலா இன்பம், பெயர் இன்மை, குலம் இன்மை, ஆயுவின்மை, அழியாவியல்பு.
**அருகன் எண்சிறப்பு** – அருகதேவனுக்குரிய எட்டு மங்கலப் பொருள்கள்; அவை: தூபதீபக் காட்சி, தேவதுந்துபி, தெய்வத்துவனி, சிங்காதனம், பிண்டி, வெண்சாமரை, புட்பமாரி, மும்மைக்குடை.
**அருகனைத்தரித்தாள்** – தருமதேவதை.
**அருகாழி** – கால்விரல் மோதிரம்.
**அருகி** – கள்.
**அருகி (வி)** – சிறிது சிறிதாகி, குறைந்து.
**அருகியரத்தம்** – பூனைக்காலிப் பூண்டு.
**அருகியல்** – சாதிப் பெரும்பண்வகை.
**அருகியவழக்கு** – குறைந்த வழக்கு, மிகுதியாய்ப் பயன்படுத்தப்படாதது.
**அருகு** – அண்மை; பக்கம்; ஓரம்; இடம்; தீவட்டி.
**அருகு (வி)** – அருகு என் ஏவல்; குறை.
**அருகுகால்** – கதவுநிலை.
**அருகுதல்** – குறைதல்; அருமையாதல்; கிட்டல்; பெருகுதல்; அறிதல்; குறிப்பித்தல்; நோவுண்டாதல்; அஞ்சுதல்.
**அருங்கதி** – வீடுபேறு.
**அருங்கலச்செப்பு** – அணிகலப்பேழை; ஒரு சமணநூல்.
**அருங்கலம்** – அணிகலன்; அழகு செய்யும் பொருள்; நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் என்னும் மும்மணிகள்.

**அருங்கலைவிநோதன்** – நூலாராய்ச்சியையே பொழுதுபோக்காக உடையவன்.

**அருங்கிடை** – கடும்பட்டினி; நோய்வாய்ப்பட்டிருக்கை.

**அருங்கு** – அருமை.

**அருங்கோடை** – கடுவெயிற்காலம்; முதுவேனில்; வறட்சிக்காலம்.

**அருச்சகன்** – கோயில்பூசை செய்வோன், பூசாரி.

**அருச்சனை** – காண்க: **அர்ச்சனை.**

**அருச்சி** – பூசி; ஒளி; தீக்கொழுந்து; கதிர்.

**அருச்சிக்கை** – காண்க: **அருச்சித்தல்.**

**அருச்சிகன்** – சந்திரன்.

**அருச்சித்தல்** – பூசித்தல்; கடவுளின் திருப்பெயர் சொல்லி மலர் முதலியன இடுதல்.

**அருச்சுனம்** – எருக்கஞ்செடி; மருதமரம்; புல்; பொன்; பந்து; வெள்ளையரிசியோடு அறுகையும் சேர்த்து இடுகை; வெண்மை; மயில்.

**அருச்சுனன்** – ஒரு தாய்க்கு ஒரு பிள்ளை; நெல் வகை; பஞ்சபாண்டவருள் ஒருவன்; கார்த்த வீரியன்.

**அருச்சுனி** – பசு; உஷாதேவி; ஓர் ஆறு; அடிமைப் பெண்.

**அருச்சை** – பூசை.

**அருசி** – சுவையின்மை; விருப்பின்மை.

**அருஞ்சிறை** – கடுங்காவல்; நரகம்.

**அருஞ்சுரம்** – நிழலற்ற நீளிடம்.

**அருஞ்சோதி** – ஒருவகை நெல்.

**அருட்குடையோன்** – அருள் தன்மையைக் குடையாக உடையவன்; அருகன்; கடவுள்.

**அருட்குறி** – சிவலிங்கம்.

**அருட்சித்தி** – பாதரசம்.

**அருட்செல்வம்** – கருணையாகிய செல்வம்; இரக்க உணர்வு; கடவுளின் அருள்.

**அருட்சோதி** – கடவுள்; கௌரிபாடாணம்.

**அருட்டம்** – கடுகுரோகிணி; வேம்பு; மிளகு.

**அருட்டி** – அச்சம்; நடுக்கம்.

**அருட்டுதல்** – எழுப்புதல்; அச்சுறுத்தல்; மயக்குதல்.

**அருட்பா** – கடவுளின் அருள்பெற்றோர் பாடிய பாடல்கள்; இராமலிங்க அடிகள் அருளிய பாடல்களின் தொகுதி.

**அருட்புரி** – குறிஞ்சியாழ்த் திறவகை.

**அருணகிரி** – திருவண்ணாமலை; அருணகிரி நாதர்.

**அருணம்** – சிவப்பு; பொன்; செவ்வானம்; சிந்தூரம்; ஒரு மொழி; ஒரு நாடு; எலுமிச்சை; முதிராத மாதுளை; செம்மறி ஆடு; யானை; மான்; நீர்; செங்குட்டநோய்; வெண்மை.

**அருணமணி** – மாணிக்கம்.

**அருணவம்** – கடல்.

**அருணவூரி** – இந்திரகோபப் பூச்சி.

**அருணன்** – சூரியன்; சூரியனின் தேர்ப்பாகன்; புதன்.

**அருணாசலம்** – திருவண்ணாமலை.

**அருணி** – மான்சாதிப் பெண்.

**அருணினம்** – நன்னாரி; திருநாமப்பாலைக் கொடி.

**அருணை** – காண்க: **அருணாசலம்.**

**அருணோதயம்** – சூரியனின் தோற்றம்; விடியற் காலம்.

**அருத்தபாகம்** – பாதிப் பங்கு.

**அருத்தபாகை** – வேத நூற்பொருள் வகை.

**அருத்தம்** – சொற்பொருள்; கருத்து; சாத்திரம்; செல்வப் பொருள்; பொன்; விவகாரம்; காரணம்; முறை; நீக்கல்; பயன்; பாதி; குங்கிலியம்.

**அருத்தயாமம்** – காண்க: **அர்(ரு)த்தசாமம்**; நடு இரவு.

**அருத்தலக்கணை** – காண்க: **விட்டும் விடாத இலக்கணை.**

**அருத்தி** – ஆசை; விருப்பப் பொருள்; செல்வன்; இரவலன்; பணியாளன்; உண்பி; கள்; கூத்து.

**அருத்தித்தல்** – இரத்தல்; வேண்டுதல்; பாதியாக்கல்.

**அருத்தியன்** – விருப்பம் உடையவன்.

**அருத்து** – சொற்பொருள்.

**அருத்துதல்** – உண்பித்தல்; நுகரச் செய்தல்.

**அருந்ததி** – வசிட்டரின் மனைவி; ஒரு நட்சத்திரம்.

**அருந்தல்** – அருமை; பருகுதல்.

**அருந்திறல்** – அரிய திறமை உடையவன்; அரிய திறமை.

**அருந்துதல்** – உண்ணுதல்; குடித்தல்; விழுங்குதல்; அனுபவித்தல்.

**அருந்துதன்** – வேதனை செய்வோன்.

**அருந்துதி** – காண்க: **அருந்ததி.**

**அருநிலை** – கடந்து செல்லற்கரிய நிலை; ஆழமான நீர்நிலை.

**அருநெல்லி** – சிறுநெல்லிமரம்.

**அருநெறி** – செல்லுதற்கரிய வழி; மனைவாயில்; நரகம்; பாலைவனம்.

**அருப்பம்** – அருமை; அற்பம்; துயரம்; ஒரு நோய்; திண்மை; வழுக்குநிலம்; மருதநிலத் தூர்; மலைஅரண்; காட்டரண்; சோலை; நெற்கதிரின் கரு; தொடரிச் செடி; கள்; மோர்; மா; முதலில் முளைக்கும் மீசை; பனி.

**அருப்பலம்** – அனிச்சமரம்.

**அரும்பதம்** – சிறந்த உணவு; அரிய செவ்வி; விளங்கற்கு அரிய சொல்.

**அரும்பதவுரை** – கடின சொல்லுக்குத் தரப்படும் உரை.

**அரும்பர்** – காண்க: **அரும்பு.**

**அரும்பல்** – முளைத்தல்.

**அரும்பாடு** – கடினமான உழைப்பு.

**அரும்பாலை** – பாலைப்பண் வகை.

**அரும்பாவி** – மிகக் கொடியவன்.

**அரும்பிஞ்சு** – மிக இளங்காய்.

**அரும்பித்தல்** – தோன்றுதல்.

**அரும்பு** – மொட்டு; அணிகளின் அரும்பு வேலை; முகத்தில் தோன்றும் இளமயிர்; அரிசி.

**அரும்புதல்** – சிறிதாகத் தோன்றுதல்; முகிழ்த்தல்.

**அரும்புவளையம்** – உருத்திராக்கம் முதலியவற்றின் இடையிலே கோக்கப்படும் வளையம்.

**அரும்பூட்டு** – வருந்திப் பூட்டுவது; இயல்பிலாத் தொடர்ச்சி.

**அரும்பெறல்** – பெறுதற்கு அரியது.

**அரும்பொருள்** – முயன்று உணரும் இயல்புடைய சொற்பொருள்; பெறுதற்கு அரிய பொருள்.

**அருமணவன்** – ஒரு தீவு; அருமணத் தீவின் யானை; அகில்வகை.

**அருமதாளம்** – ஒன்பது தாளத்துள் ஒன்று.

**அருமந்த, அருமந்தன்ன** – அருமையான.

**அருமருந்து** – பெறுவதற்கு அரிய மருந்து, அமிழ்தம்.

**அருமவதி** – பண்வகை.

**அருமிதம்** – அளவின்மை.

**அருமை** – அரிய தன்மை; பெருமை; கடினம்; எளிதிற் கிட்டாமை; சிறுமை; இன்மை.

**அருமைசெய்தல்** – பேராண்மை காட்டுதல்; அருமை பாராட்டுதல்.

**அருவம்** – உருவமின்மை; அருமை.

**அருவர்** – தமிழர்.

**அருவருத்தல்** – மிக வெறுத்தல்.

**அருவருப்பு** – மிகுவெறுப்பு.

**அருவல்** – துன்பம்; ஒருவகை நோய்.

**அருவா** – அருவாநாடு; கொடுந்தமிழ் நாடு பன்னிரண்டனுள் ஒன்று.

**அருவாட்டி** – அருவாநாட்டுப் பெண்.

**அருவாணம்** – செப்புத் தட்டு; கோயில் பிரசாதம்.

**அருவாவசு** – கதிரவன் கதிர்களுள் ஒன்று.

**அருவாளர்** – ஒரு சாதியார்.

**அருவி** – மலைவீழ் நீர்; நீரூற்று; கழிமுகம்; நீர்; ஒழுங்கு; உருவமில்லாதது; பயிரின் தாள்; தினைத் தாள்; அறுத்த ஒருபிடிக் கதிர்; ஆறு; மலை.

**அருவுடம்பு** – நுண்ணுடல், சூக்குமவுடல்.

**அருவுதல்** – அறுத்தொழுகுதல்; மெல்லெனச் செல்லுதல்; கிட்டுதல்; துன்பப்படுத்துதல்.

**அருவுருவம்** – அரு என்றும் உரு என்றும் சொல்லத்தகாதது.

**அருள்** – சிவசத்தி; கருணை; பொலிவு; முதிர்ந்த மாதுளை மரம்; நல்வினை; ஏவல்.

**அருள்வாக்கு** – இறைவன் அருள் பெற்றவரின் வாக்கு.

**அருள்(ளு)தல்** – காண்க: **அருளல்;** கருணை காட்டுதல்; கொடுத்தல்; பணித்தல்; மகிழ்தல்; அச்சமுறுதல்.

**அருளகம்** – வெள்ளெருக்கஞ்செடி.

**அருளம்** – பொன்.

**அருளரசி** – வெட்பாலை மரம்; குடசப்பாலை.

**அருளல்** – பெருங்கொடை; காத்தல்; கொடுத்தல்; படைத்தல்; இரங்குதல்.

**அருளவம்** – அழிஞ்சில்மரம்; பெருமரம்.

**அருளறம்** – அருளாகிய அறம்.

**அருளாழி** – அறச்சக்கரம்.

**அருளாழிவேந்தன்** – அருகன்; கடவுள்.

**அருளாளன்** – அருளை உடையவன்.

**அருளிச்செய்தல்** – சொல்லுதல்.

**அருளிச்செயல்** – கட்டளை; அடியார் பாடல்.

**அருளிப்பாடு** – அருளப்பட்ட ஆணை; ஆணை; கட்டளை.

**அருளுறுதி** – வேம்பு.

**அருளொடுநீங்கல்** – உலகின் துயரைக் கண்டு பற்று நீங்கும் புறத்துறை.

**அரூபம்** – உருவம் இன்மை, அருவம்.

**அரூபமாதல்** – பாழடைதல்.

**அரூபி** – உரு இல்லாதது; கடவுள்; சிவன்; அசரீரி; கருப்பூரம்.

**அரேசகண்டு** – கருணைக்கிழங்கு.

**அரேசிகம்** – வாழைமரம்.

**அரேணு** – குலப்பெண்; வால்மிளகு; கடலை.

**அரேணுகம்** – காண்க: **வால்மிளகு;** காட்டுமிளகு; கடுமரவேர்.

**அரை** – பாதி; இடம்; இடை; தொடையின் மேற்பாகம்; வயிறு; அல்குல்; ஒரு மரம்; மரத்தின் அடிப்பக்கம்; தண்டு; அரசியல்.

**அரைக்கச்சு** – இடையில் அணியும் சிறப்பு உடை.

**அரைக்காசுத்தொண்டன்** – மிகவும் எளியவன்.

**அரைக்காணி** – ஓர் அளவை; நூற்றறுபதில் ஒரு பங்கு.

**அரைக்கால்** – ஓர் அளவை; எட்டில் ஒரு பங்கு.

**அரைகல்** – அம்மி.

**அரைகுலையத் தலைகுலைய** – மிக விரைவாய்.

**அரைகுறை** – முற்றுப்பெறாமை.

**அரைச்சதங்கை** – குழந்தைகளின் இடைஅணி.

**அரைசிலை** – அம்மி.

**அரைசெலவு** – கறிக்கூட்டுப் பொருள்.
**அரைஞா(நா)ண்** – இடுப்பில் கட்டும் கயிறு; வெள்ளிக் கயிறு; கிணற்றின் செங்கல் வரை.
**அரைத்தல்** – மாவாக்கல்; தேய்த்தல்; கொட்டை நீக்குதல்; அழித்தல்.
**அரைதல்** – தேய்த்தல்; அரைபடல்.
**அரைநாள்**– பாதிநாள்; நடுநாள்; நள்ளிரவு.
**அரைப்பட்டிகை** – மாதர் இடையில் கட்டும் அணிவகை.
**அரைப்படிப்பு** – நிரம்பாக் கல்வி.
**அரைப்பணம்** – அல்குல்; பாதிக்காசு.
**அரைப்பை** – இடுப்பில் கட்டும் நீண்ட பணப்பை; அல்குல்.
**அரைமதியிரும்பு** – பாதித் திங்களைப் போன்ற ஒருவகை அங்குசம்.
**அரைமனிதன்** – பெருமை குறைந்தவன்.
**அரைமூடி** – பெண்குழந்தைகளின் அரையில் கட்டும் அரசிலை வடிவ அணி.
**அரையர்** – திருமால் திருக்கோயில்களில் திவ்வியப் பிரபந்தம் பாடித் தொண்டு செய்பவர்.
**அரையன்** – அரசன்; ஒரு பழைய பட்டம்.
**அரையாப்பு** – தொடையிடுக்கில் உண்டாகும் கட்டி.
**அரையிருள்** – நள்ளிரவு.
**அரைவட்டம்** – வட்டத்தில் பாதி; காண்க: **அரைமூடி**.
**அரைவடம்** – காண்க: **அரைஞாண்**.
**அரைவாசி** – பாதி.
**அரைவாய்** – குறைபட்ட வாய்.
**அரைவைரக்கண்** – தட்டார் கருவியுள் ஒன்று.
**அரோ** – ஓர் அசைச்சொல்.
**அரோகதிடகாத்திரம்** – சுகமும் வலிமையுமுள்ள உடல்.
**அரோகம்** – நோயின்மை.
**அரோகி** – நோய் இல்லாதவன்; சுகமுடையவன்.
**அரோச(சி)கம்** – பசியின்மை; அருவருப்பு.
**அரோசனம்** – அருவருப்பு.
**அரோசித்தல்** – அருவருத்தல்.
**அல்** – இரவு; இருள்; மாலை; சூரியன்; வெயில்; மதில்; சுக்கு; மெய்யெழுத்து; மயக்கம்; எதிர்காலத் தன்மை ஒருமை விகுதி; வியங்கோள் விகுதி; தொழிற்பெயர் விகுதி; ஒரு சாரியை; ஆண்பால் பெயர் விகுதி; எதிர்மறைக் குறிப்பு வினைப்பகுதி; எதிர்மறை ஏவல் ஒருமை விகுதி; எதிர்மறை வினை இடைநிலை.
**அல்கந்தி** – அந்திப்பொழுது.
**அல்கல்** – தங்குகை; குறைதல்; வறுமை; இரவு; நாள்.
**அல்கா** – இழிவான; குதிரைச் சேணத்தில் கழுத்து வளையத்துக்குக் கீழிடும் மெத்தை.
**அல்கு** – இரவு; பிற்பகல்; தங்குகை.
**அல்குகழி** – உப்பங்கழி; சிற்றாறு.
**அல்குதல்** – அல்கல்; தங்குதல்; நிலைத்து நிற்றல்; சேருதல்; அழிதல்; சேமித்து வைத்தல்.
**அல்குல்** – பக்கம்; அரை; பெண்குறி, நிதம்பம்.
**அல்பொருள்** – பாவம்; உவமானம்.
**அல்லகண்டம்** – துன்பம்.
**அல்லகம்** – உற்பலம்; செந்தாமரை; கோவணம்.
**அல்லகுறி** – தலைமகனால் அன்றிப் பிறிதொன்றினால் நிகழும் குறி.
**அல்லகுறிப்படுதல்** – இரவுக் குறியிடத்துக் குறியல்லாத குறியில் மயங்குதல்.
**அல்லங்காடி** – மாலைக்கடை.
**அல்லது** – தீவினை; தவிர.
**அல்லதூஉம்** – அல்லாமலும்.
**அல்லதேல்** – அல்லாமற்போனால்.
**அல்லதை** – அல்லாமல்.
**அல்லம்** – காண்க: **இஞ்சி**.
**அல்லல்** – துன்பம்.
**அல்லவை** – தீயவை; பயனின்மை.
**அல்லறைசில்லறை** – மிச்சத்தொகை; சிறு துன்பங்கள்.
**அல்லா** – வருத்தம்; மகமதியர் வழிபடும் கடவுளின் பெயர்.
**அல்லாட்டம்** – அலைச்சல்.
**அல்லாடுதல்** – அலைதல்; தொல்லைப்படுதல்.
**அல்லாத்தல்** – துன்பம் அடைதல்; மகிழ்தல்.
**அல்லாத** – மாறான; மாறானவை.
**அல்லாதார்** – ஒழிந்த பிறர்; தீயார்.
**அல்லாப்பண்டிகை** – இசுலாமியரின் விழாக்களுள் ஒன்றான மொகரம்.
**அல்லாப்பு** – வருத்தம்.
**அல்லாமல்** – தவிர.
**அல்லாமலும்** – மேலும்.
**அல்லாமை** – தீக்குணம்.
**அல்லாரி** – வெள்ளாம்பல்; சுவரின் ஆரல் தாங்கும் முளை; அடர்த்தியின்மை.
**அல்லால்** – அல்லாமல்.
**அல்லி** – ஆம்பல்; வெள்ளாம்பல்; தாமரை; காயாம்பூ; அகவிதழ்; பூந்தாது; அல்லியரிசி; இளவேர்; இரவு; அலி.
**அல்லிகம்** – பேய்க்கொம்மட்டிக் கொடி.
**அல்லித்தாமரை** – செங்கழுநீர்க் கொடி.
**அல்லித்தாள்** – அகவிதழ் உறுப்புவகை.
**அல்லிப்பாவை** – அல்லியக்கூத்தில் ஆட்டும் பொம்மை.
**அல்லிப்பிஞ்சு** – இளம்பிஞ்சு.
**அல்லிமாதர்** – திருமகள்.

**அல்லிமூக்கு** – சில்லிமூக்கு; இரத்தம் ஒழுகும் மூக்கு.
**அல்லியம்** – மாயோன் ஆடலுள் ஒன்று; இடையர் ஊர்; கலப்பை; அழகின்மை.
**அல்லியரிசி** – அல்லிப்பூவின் உட்கொட்டையிலுள்ள சிறு விதை.
**அல்லியன்** – தன் குழுவைப் பிரிந்த யானை.
**அல்லியாமரம்** – படகு வலிக்கும் தண்டு.
**அல்லியான்** – பிரமன்.
**அல்லிருள்** – இரவில் இருளின் செறிவு; இரவின் செறிந்த இருள்.
**அல்லுச்சில்லுப்படுதல்** – சிறிது சிறிதாகக் கெடுதல்.
**அல்லுதல்** – முடைதல்; பின்னிக்கொள்ளுதல்.
**அல்லும்பகலும்** – இரவும் பகலும், எப்பொழுதும்.
**அல்லுழி** – அல்லாத இடத்து.
**அல்லூரம்** – வில்வமரம்.
**அல்லை** – அல்லிக்கொடி; தாய்.
**அல்லைதொல்லை** – மிக்க துன்பம்.
**அல்லோலகல்லோலம்** – பேராரவாரம்.
**அல்லோன்** – சந்திரன்; ஒழிந்தோன்.
**அல்வழக்கு** – தகாத ஒழுக்கம்.
**அல்வழி** – நெறி அல்லாத நெறி; தகாத வழி; அல்வழிப் புணர்ச்சி.
**அல்வழிப் புணர்ச்சி** – வேற்றுமை அல்லாத நிலையில் சொற்கள் சேரும் நிலை; அவை 14: வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத் தொகை, உம்மைத்தொகை, அன்மொழித் தொகை, எழுவாய்த்தொடர், விளித் தொடர், தெரிநிலை வினைமுற்றுத் தொடர், குறிப்பு வினைமுற்றுத் தொடர், பெயரெச்சத் தொடர், வினையெச்சத் தொடர், இடைச் சொற்றொடர், உரிச் சொற் றொடர், அடுக்குத்தொடர்.
**அல்வான்** – வண்ணத்துணி.
**அலக்கண்** – துன்பம்.
**அலக்கலக்காய்** – தனித்தனியாய்.
**அலக்கழித்தல்** – அலைத்து வருத்துதல்; கெடுத்தல்; அழகு காட்டுதல்.
**அலக்கழிதல்** – வருந்துதல்.
**அலக்கு** – வரிச்சு; துறட்டுக்கோல்; தனிமை; எலும்பு; கிளை; கோட்டை.
**அலக்குத்தடி** – வேலி அடைக்கும் மரக்கிளை; துறட்டுக்கோல்.
**அலக்குதல்** – அசைத்தல்; துணி முதலியன வெளுத்தல்.
**அலக்குப்போர்** – சேவகர் ஈட்டிகளை ஒன்றோ டொன்று எதிர்த்து வைக்கை.
**அலக்கைச்சுரம்** – கீழ்க்காய்நெல்லி.
**அலக்கொடுத்தல்** – ஊறு செய்தல்.
**அலக்கொடுப்பு** – ஊறு.
**அலகம்** – காண்க : **ஆனைத்திப்பிலி**; வேப்பலகு.
**அலகம்பு** – அம்புவகை.
**அலகரி** – பெரிய அலை.
**அலகிடல், அலகிடுதல்** – அளவிடுதல்; செய்யுளில் அசை, சீர் பிரித்துக் காட்டல்; துடைப்பத்தால் பெருக்குதல்.
**அலகின்மாறு** – துடைப்பம், விளக்குமாறு.
**அலகு** – எண்; அளவு; அளவுகருவி; பலகறை; மகிழம் விதை; நென்மணி; பயிர்க்கதிர்; ஆயுதம்; ஆயுதத்தினலகு; கூர்மை; பறவை மூக்கு; தாடை; உயிர்களின் கொடிறு; கைம் மரம்; நூற்பாவின் அலகு; துடைப்பம்; பொன்னாங்காணி; அறுகு; நுளம்பு; இலட்சம் பாக்கு; ஆண்பனை; அகலம்; குற்றம்.
**அலகுகட்டுதல்** – மந்திரத்தால் வாயைக் கட்டுதல்; வாளின் வெட்டை மந்திரத்தால் வீணாக்குதல்; கணக்குத் தீர்த்தல்.
**அலகுகட்டை** – வண்டிச்சக்கர வட்டை.
**அலகுகழித்தல்** – கணிதத்தில் விதை முதலிய வற்றைக் கொண்டு தொகை குறைத்தல்.
**அலகுகிட்டுதல்** – சன்னியால் பல்லுக் கிட்டுதல்.
**அலகுசோலி** – காண்க: **அறுகு**.
**அலகுஞ்சம்** – மின்மினி; நுளம்பு.
**அலகுநிறுத்தல்** – திரௌபதியின் விழா விற்குமுன் வாள் நாட்டும் சடங்கு.
**அலகுபருப்பு** – பட்டாணிக்கடலை.
**அலகுபனை** – ஒருவகை மடற்பனை.
**அலகுபூட்டு** – வேண்டுதலுக்கென்று இடப்படும் வாய்ப்பூட்டு.
**அலகுபோடுதல்** – வேண்டுதலுக்காக நா முதலிய உறுப்புகளில் வேற்கம்பிகளைக் குத்திக் கொள்ளுதல்.
**அலகை** – பேய்; பேய்க்கொம்மட்டிக் கொடி; காட்டுக் கற்றாழை; அளவு.
**அலகைக்கொடியாள்** – பேய் உருவம் பொறித்த கொடியையுடைய காளி.
**அலகைத்தேர்** – பேய்த்தேர்.
**அலகைமுலையுண்டோன்** – பேயின் முலைப்பா லுடன் அவளுயிரை மாய்த்த கண்ணபிரான்.
**அலங்கடை** – அல்லாதவிடத்து.
**அலங்கம்** – அரண்; கொத்தளம்; ஆற்றிடைக் குறை.
**அலங்கமலங்க** – பொறிகலங்க.
**அலங்கரணம்** – ஒப்பனை.
**அலங்க(கா)ரித்தல்** – அழகுபடுத்துதல்.
**அலங்கல்** – பூமாலை; மயிர்ச்சூட்டு மாலை; தளிர்; அசையுங்கதிர்; துளசி; ஒழுங்கு; ஒளி; அசைதல்; மனங்கலங்கல்.
**அலங்கனாரி** – முத்துச்சிப்பி.

**அலங்காரசாத்திரம்** – அணியிலக்கண நூல்.
**அலங்காரப்படுத்தல்** – ஒப்பனை செய்தல்.
**அலங்காரப்பிரியன்** – திருமால்.
**அலங்காரப்பேச்சு** – சிங்காரப்பேச்சு; புனைவுரை.
**அலங்காரபஞ்சகம்** – வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம், சந்தவிருத்தம் ஆகிய இவ்வைந்தும் அந்தாதியாக வரப் பாடப் படும் நூல்.
**அலங்காரம்** – சிங்காரம்; அழகு; அணிகலன்; செய்யுள் அணி; சங்கீத உறுப்புவகை; பெருமாள் கோயில்களில் படைக்கப்படும் சோறு, குழம்பு முதலிய உணவு; வெடிகாரம்.
**அலங்காரி** – அழகு செய்யப்பெற்றவள்.
**அலங்கிருதம், அலங்கிருதி** } – சிங்காரம்.
**அலங்குதல்** – அசைதல்; மனம் தத்தளித்தல்; இரங்குதல்; ஒளிசெய்தல்.
**அலங்கை** – துளசி.
**அலங்கோலம்** – சீர்கேடு.
**அலசடி** – துன்பம்.
**அலசம்** – ஒரு மரம்; சோம்பு; மந்தம்; கால்விரல்களுக்கு இடையே உண்டாகும் சேற்றுப்புண்.
**அலசல்** – இழை விலகியிருக்கை; இழை நெருக்கமில்லாத ஆடை; சிதறுண்ட பொருள்; பயனற்ற வேலை; சோம்பல்.
**அலசி** – நத்தைவகை.
**அலசுதல்** – அலைதல்; சோர்தல்; வெட்கும்படி பலபடப் பேசுதல்; வருந்துதல்; நீரில் கழுவுதல்.
**அலஞ்சரம்** – மட்குடுவை.
**அலட்சியம்** – கவனமின்மை; மதிப்பின்மை.
**அலட்டு** – வீண் சொற்களை மேன்மேலும் கூறுகை; தொந்தரை; பிதற்றுகை.
**அலட்டுச்சன்னி** – பிதற்றுங் குணமுடைய சன்னிநோய்.
**அலட்டுதல்** – பிதற்றுதல்; அங்கலாய்த்தல்; தொந்தரை செய்தல்.
**அலத்தகம்** – செம்பஞ்சுக்குழம்பு; செம்பருத்தி.
**அலத்தம்** – செம்பருத்தி; சூரியகாந்தி.
**அலத்தல்** – அலைதல்; ஆசைப்படுதல்; துன்பப் படுதல்.
**அலத்தி** – மின்மினி; நுளம்பு.
**அலதரன்** – கலப்பையைக் கொண்டவன்; உழவன்; பலராமன்.
**அலதிகுலதி** – அலங்கோலம்.
**அலந்தம்** – மெய்யீறு.
**அலந்தல்** – மயிலடிக் குருந்து; செங்கத்தாரிப் பூண்டு.
**அலந்தலை** – துன்பம்; கலக்கம்.
**அலந்தை** – துன்பம்; நீர்நிலை.
**அலந்தோன்** – துன்பமுற்றோன்.
**அலப்படை** – கலப்பை ஆயுதம்.
**அலப்பல்** – உளறுதல், பிதற்றல்; கலப்புக் கட்டோசை.
**அலப்பன்** – வீண்பேச்சுக்காரன்.
**அலப்பாட்டுதல்** – மனம் சுழலுதல்.
**அலப்பு** – மனக்கலக்கம்.
**அலப்புதல்** – வீண்பேச்சுப் பேசுதல்; உளறுதல்; அலைத்தல்.
**அலபதுமம்** – நிருத்தக்கை முப்பதனுள் ஒன்று.
**அலம்** – துன்பம்; தேள்; விருச்சிகராசி; அமைவு; போதும்; திருப்தி; கலப்பை; நீர்.
**அலம்பல்** – ஆரவாரம்; எதிர்பாரா விளம்பரம்; இடையூறு; கொள்ளைநோய்; அலக்குத்தடி; வளார்.
**அலம்பு, அலம்புடை** } – பத்து நாடிகளுள் ஒன்று.
**அலம்புதல்** – ஒலித்தல்; ததும்புதல்; தவறுதல்; அலைதல்; கழுவுதல்; அலைத்தல்; கலத்தல்.
**அலம்வருதல்** – அமைவுண்டாதல்; மனம் சுழலுதல்.
**அலமரல்** – சுழற்சி; மனச்சுழற்சி; வருத்தம்; அச்சம்.
**அல(ள)மருதல்** – சுழலுதல்; மனம் சுழலுதல்; அஞ்சுதல்; வருந்துதல்; அசைதல்.
**அலமலத்தல்** – அங்கலாய்த்தல்; கலங்குதல்.
**அலமலத்துதல்** – கலக்கமுறச் செய்தல்.
**அலமாப்பு** – துன்பம்.
**அலமாரி** – பேராசையுள்ளவன்; சுவர் அடுக்கு மாடம்; நிலைப்பேழை.
**அலமுகம்** – கலப்பை நுனி; கொழுமுனை.
**அலமுகவிரும்பு** – கலப்பைக்கொழு.
**அலர்** – பழிச்சொல்; மலர்ந்த பூ; மகிழ்ச்சி; நீர்; மஞ்சள்; மிளகுகொடி.
**அலர்த்துதல்** – மலரச்செய்தல்.
**அலர்(ரு)தல்** – மலர்தல்; பரத்தல்; பெருத்தல்; விளங்குதல்; சுரத்தல்.
**அலர்மகள், அலர்மேல்மங்கை** } – திருமகள்.
**அலரவன்** – பிரமன்.
**அலரி** – பூ; ஒரு பூச்செடி; நீர்வாவி; கண்வரி; அழகு; சூரியன்; தீ; தேனீ; கோதுமை; கோமாரி; ஆற்றுப்பாலை.
**அலரோன்** – காண்க: **அலரவன்.**
**அலவர்** – உழுதொழிலாளர், உழவர்.
**அலவல்** – இழை விலக்கமாய் நெய்யப்பட்டது; அலமரல்; கந்தைச்சீலை; விபசாரம்.
**அலவலை** – ஆராயாது செய்வது; விடாது பேசுவோன்; மனச் சஞ்சலம்.
**அலவன்** – நண்டு; ஆண்நண்டு; பூனை; கற்கடக ராசி; நிலா.

**அலவாங்கு** – கடப்பாரை.
**அலவாட்டு** – வழக்கம்.
**அலவான்** – பல்லாங்குழியாட்டத்தில் கூடும் காய்கள்.
**அலவு** – மனத்தடுமாற்றம்.
**அலவுதல்** – வருந்துதல்; சிந்துதல்.
**அலவை** – அல்லவை; விடாது பிதற்றுபவள்; விபசாரம்.
**அலற்றுதல்** – இடைவிடாமலும் முறையில்லாமலும் பேசுதல்.
**அலறல்** – புலம்புதல், கதறுதல்.
**அலறுதல்** – அலறல்; மிக்கொலித்தல்; மாடு, ஆந்தை முதலியன கதறுதல்; உரத்தழுதல்; வருந்துதல்; விரிதல்; காய்தல்.
**அலன்** – கலப்பைப் படையையுடைய பலராமன்.
**அலன்றல்** – சாவு.
**அலாதம்** – கடைக்கொள்ளி; மரம்சுட்ட கரி.
**அலாதி(து)** – தனியானது.
**அலாபத்திரம்** – இணையா வினைக்கை வகை.
**அலாபம்** – இலாபமின்மை; தீது.
**அலாயுதன்** – காண்க: **அலன்.**
**அலாரிதா** – அலரிச்செடி.
**அலாரிப்பு** – நாட்டிய ஆரம்பத்தில் பாடும் சொற்கட்டு.
**அலாவு** – சுரைக்கொடி.
**அலி** – ஆண்பெண் அல்லாதது; பலராமன்; யமன்; உழவன்; காகம்; குயில்; தேன்; விருச்சிகராசி; நறுவிலிமரம்; வயிரம் இல்லா மரம்; தீ; சோறு.
**அலிக்கிரகம்** – சனி, புதன் என்னுங் கோள்கள்.
**அலிக்கை** – அலிச்செயல் காட்டும் அபிநயக்கை.
**அலிகம்** – நெற்றி.
**அலிப்பேடு** – அல்லியம் என்னும் கூத்து.
**அலிபகம்** – கருவண்டு; தேள்; நாய்.
**அலிமரம்** – வயிரமில்லாத மரம்; பாலும் நாரும் முள்ளும் உள்ள மரம்.
**அலியன்** – கடுக்காய்மரம்.
**அலியெழுத்து** – ஆய்தவெழுத்து.
**அலீகன்** – தலை.
**அலுக்குத்து** – முகமதியப் பெண்கள் காதணி.
**அலுக்குதல்** – சிறிது அசைத்தல்; பிலுக்குப் பண்ணல்; பகட்டித் திரிதல்; ஆடம்பரங் காட்டி மயக்குதல்.
**அலுசிலும்பல்** – குழப்பம்.
**அலுப்(த்)தசத்தி** – பேரருளுடைமை.
**அலுத்தல்** – சோர்தல்; தளர்தல்; களைத்தல்.
**அலுத்தன்** – பற்றற்றவன்.
**அலுப்பு** – தளர்வு; சோர்வு; களைப்பு.
**அலுவல்** – தொழில்.
**அலுவீகம்** – வில்வமரம்.

**அலேகம்** – எழுதப்படாத வெள்ளேடு; உலோக மணல்.
**அலை** – நீர்த்திரை; கடல்; திரையடித்தொதுக்கிய கருமணல்; நிலம்; மது; கண்டனம்; வருத்துகை; மிகுதி; கொலை.
**அலைக்கழித்தல்** – அலைத்து வருத்துதல்.
**அலைக்கழிதல்** – அலைந்து வருந்துதல்.
**அலைக்கழிவு** – உலைவு; அலைந்து வருந்தும் வருத்தம்.
**அலைகாற்று** – பெருங்காற்று.
**அலைகுலையாக்குதல்** – நிலைகுலையச் செய்தல்.
**அலைச்சல்** – திரிகை; தொந்தரவு.
**அலைசடி(டை)** – சோர்வு.
**அலைசல்** – அலைகை; துன்பம்; சோம்பல்.
**அலைசுதல்** – ஆடை முதலியவற்றை நீரில் அலைத்துக் கழுவுதல்; குலுக்குதல்; கலக்குதல்; சோம்புதல்.
**அலைசோலி** – அலைச்சல்; தொந்தரவு.
**அலைத்தல்** – அசைத்தல்; அலையச் செய்தல்; நீரைக் கலக்குதல்; வருத்துதல்; அடித்தல்; நிலைகெடுத்தல்; உருட்டுதல்; அலைமோதுதல்.
**அலைத்திடல்** – காண்க: **அலைத்தல்.**
**அலைதரல்** – அலைதல்; அலையச் செய்தல்.
**அலைதல்** – திரிதல்; வருந்துதல்; சோம்புதல்; ஆடுதல்.
**அலைதாங்கி** – அலையைத் தடுக்கும் செய்கரை.
**அலைதாடி** – ஆடுமாடுகளின் கழுத்தில் புடைத்துத் தொங்கும் தசை.
**அலைநீர்** – கடல்.
**அலைப்படுதல்** – வருந்துதல்.
**அலைப்பு** – அசைக்கை; வருத்தம்.
**அலைமகள்** – திருமகள்.
**அலையல்** – திரிகை; சோர்வு; சோம்பல்.
**அலைவாய்** – கடல்; திருச்செந்தூர்.
**அலைவு** – அசைகை; கலக்கம்.
**அலோகம்** – காணப்படாத உலகம்.
**அலௌகிகம்** – உலகநடைக்கு மாறானது.
**அவ்** – சுட்டுச்சொல்; அவை.
**அவ்வது** – அவ்வாறு.
**அவ்வாய்** – அழகிய இடம்.
**அவ்வாறு** – அப்படி; தனித்தனி ஆறு.
**அவ்விடம்** – அங்கு.
**அவ்வித்தல்** – பொறுமை இழத்தல்; மனம் கோணச்செய்தல்.
**அவ்விதழ்** – அழகிய பூவிதழ்.
**அவ்வியக்(த்)தம்** – அறியப்படாத எண்; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; மூலப்பிரகிருதி; பீடத்தோடுகூடிய சிவலிங்கம்; ஆன்மா.

**அவ்வியத்தன்** – கடவுள்; அறிவிலி.
**அவ்வியம்** – மனக்கோட்டம்; பொறாமை, வஞ்சகம்; தேவர்க்கிடும் பலி; காண்க: **அவ்வியயம்.**
**அவ்வியயம்** – அழியாதது; இடைச்சொல்.
**அவ்வியயன்** – அழிவில்லாதவன், கடவுள்.
**அவ்வை** – தாய்; கிழவி; தவப்பெண்; காண்க: **ஔவை.**
**அவ்வோன்** – அவன்.
**அவ** – கீழ் முதலிய பொருள்களைக் குறித்து வரும் ஒரு வடமொழி முன்னொட்டு; எதிர்மறை முதலியவற்றைக் குறிக்க வரும் ஒரு வடமொழி முன்னொட்டு.
**அவக்கவக்கெனல்** – விரைவுக் குறிப்பு; ஓர் ஒலிக் குறிப்பு.
**அவக்கிரகம்** – தடை; மழையின்மை; யானை நெற்றி.
**அவக்கிரசம்** – காடி.
**அவக்குறி** – கேடு காட்டும் குறி.
**அவக்கொடை** – தகுதியற்றவர்க்குத் தரும் பொருள்; பயனற்ற அறம்.
**அவகடம்** – வஞ்சகம்; தீச்செயல்; தீவினை.
**அவகதவாய்** – கீழ்க்காய்நெல்லிப் பூண்டு.
**அவகதி** – தாழ்ந்தநிலை.
**அவகாசம்** – சமயம்; இடம்; திராணி; உரிமை.
**அவகாசமுறி** – பாகபத்திரம்.
**அவகாயம்** – வானம்.
**அவகாரம்** – முதலை ; போர் முதலியவற்றில் இளைப்பாறுகை; சூது; களவு; கொள்ளை; பொருள்; அழைப்பு.
**அவகிருத்தியம்** – கெட்ட செய்கை.
**அவகீதம்** – பலர் பழித்தது; அபவாதம்; வசைப் பாட்டு.
**அவகீர்த்தி** – புகழ்க்கேடு.
**அவகுண்டனம்** – மூடுகை; முகத்தை மறைக்கும் துணி.
**அவகுணம்** – தீக்குணம்.
**அவகேசி** – பூத்தும் காயாத மரம்.
**அவகேடு** – பெருந்தீங்கு.
**அவச்சாவு** – காண்க : **அகாலமிருத்து.**
**அவச்சின்னம்** – குறிப்பிட்டு வேறுபடுத்தப் பட்டது.
**அவச்சுழி** – தீவினை.
**அவச்சேதகம்** – வேறுபடுத்தும் தன்மை.
**அவச்சொல்** – பழிச்சொல்.
**அவசகுனம்** – தீநிமித்தம்.
**அவசங்கை** – அவமரியாதை.
**அவசத்தம்** – அமங்கல ஒலி; பிழைச் சொல்.
**அவசம்** – தன்வசப்படாமை.
**அவசர்ப்பிணி** – வாழ்நாள், போகம் முதலியவை சுருங்கும் காலம்.
**அவசரக்குடுக்கை** – பதற்றக்காரன்.
**அவசரம்** – சமயம்; விரைவு; இன்றியமையாமை; கோலம்; மழை; ஆண்டு; அரசாங்கப் பதவிகளுள் ஒன்று.
**அவசன்** – தன்வசம் இழந்தவன்.
**அவசானம்** – எல்லை; முடிவு; இறப்பு.
**அவசித்தாந்தம்** – தவறான முடிவு.
**அவசியம்** – இன்றியமையாமை ; கட்டாயம் ; உறுதி.
**அவ(வி)டி** – இடுதிரை.
**அவடு** – பிடர்; குழி; கிணறு.
**அவண்** – அவ்விடம்; அவ்விதம்.
**அவணம்** – இருபதினாயிரம் கொட்டைப்பாக்கு.
**அவணன்** – திண்ணியன்; செல்வாக்குடையவன்.
**அவணி** – நன்மை.
**அவத்தம்** – காண்க: **அபத்தம்**; பயனற்றது; கேடு; நாய்வேளைப் பூண்டு.
**அவத்தன்** – பயனற்றவன்.
**அவத்தியம்** – குற்றம்.
**அவத்திரியம்** – ஆபத்து, கேடு.
**அவத்துறை** – தீயவழி.
**அவத்தை** – நிலை ; வேதனை; மனநிலை; ஆன்மாவுக்குண்டாகும் சாக்கிர முதலிய நிலை ;பாலிய முதலிய மானிடப் பருவங்கள்.
**அவத்தைப்பிரயோகம்** – அறுபத்து நான்கு கலையுள் சூனியம் வைத்துக் கொல்லும் வித்தை.
**அவதஞ்சம்** – செவிமலர்ப்பூ; தலைமாலை.
**அவதந்திரம்** – சூழ்ச்சி, சதியோசனை.
**அவதரம்** – சமயம்.
**அவதரித்தல்** – பிறத்தல்; தங்குதல்.
**அவதாதம்** – தூய்மை; பொன்மை; வெண்மை; அழகு.
**அவதாரணம்** – அவதாரம்; தேற்றம்; உறுதி; முகவுரை.
**அவதாரம்** – இறங்குகை; உயர்பிறப்பு; பிரிக்கை; தீர்த்தத்துறை.
**அவதாரிகை** – முகவுரை, முன்னுரை.
**அவதானம்** – மேன்மைச் செயல்; கவனம்; நினைவாற்றல்; சாதுரியம்; பிரிவு; ஒரே சமயத்தில் பல பொருள்களைக் கவனிக்கை; வரம்பு மீறுகை; மனஒருமைப்பாடு; முடிவு.
**அவதானி** – கருத்துள்ளவன்; வேதங்களில் தேர்ச்சியுள்ளவன்; அவதானம் செய்வோன்.
**அவதி** – துன்பம்; எல்லை; தவணை; அளவு; கணக்கு; ஐந்தாம் வேற்றுமை எல்லைப் பொருள்; அவதிஞானம்; பரிச்சேதம்; காலம்; குழி; விடுமுறை.

**அவதிகத்தம்** – கடல்நுரை.
**அவதிகாரகம்** – நீக்கப் பொருளைக் காட்டும் உருபுடைப் பெயர்.
**அவதிஞானம்** – முற்பிறப்பை அறியும் அறிவு; சேய்மையில் உள்ளவற்றைப் பொறி உதவியின்றி உணரும் உணர்ச்சி; முக்காலத்தையும் அறியும் அறிவு.
**அவதும்பரம்** – அத்திப்பழம்.
**அவதூதம்** – நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; முழுத் துறவு; அம்மணம்.
**அவதூதன், அவதூதி** – முற்றத் துறந்தவன்; நிர்வாண சன்னியாசி.
**அவதூறு** – பழிச்சொல்.
**அவந்தரை** – சீர்கேடு; பயனின்மை; அநாத நிலை.
**அவந்தன்** – பயனற்றவன்.
**அவந்தி** – முக்திநகர் ஏழனுள் ஒன்றாகிய உச்சயினி; காடி; கிளி; பிள்ளை பெற்றவள்; காய்க்கும் மரம்; ஈற்றுப்பசு; கோவைக்கொடி.
**அவந்திக்கண்ணி** – வெருகஞ்செடி.
**அவந்திகை** – உச்சயினி; கிளி.
**அவந்திசோமம்** – காடி; புளித்த கஞ்சி.
**அவந்தன்** – தலைகுனிந்து வணங்குவோன்.
**அவநாசி** – கலைமகள்.
**அவநியாயம்** – அநியாயம், நீதியின்மை.
**அவநீதன்** – நீதியற்றவன்.
**அவநுதி** – ஒன்றன் தன்மையை மறுத்து வேறொன்றன் தன்மையை ஏற்றிக் கூறும் அணி; புகழ்தல்.
**அவநெறி** – தீயவழி, பாவவழி.
**அவப்படுதல்** – பயனின்றாதல்.
**அவப்பலம்** – தீப்பயன்.
**அவப்பிரசவம்** – ஆறு மாதத்துக்குமேல் நிகழும் கரு அழிவு.
**அவப்பிரஞ்சம், அவப்பிரஞ்சனம்** – ஒருவகைப் பிராகிருத மொழி; இழிசினர் பேசும் வடமொழி.
**அவப்பேர்** – இகழ்மொழி.
**அவப்பொழுது** – வீண்காலம்.
**அவபத்தி** – பத்தி இன்மை; மூடபத்தி.
**அவபத்தியம்** – பத்தியக்கேடு.
**அவபிர(ரு)தம்** – வேள்வி முடிவில் நீராடுகை.
**அவபுத்தி** – கெடுமதி.
**அவம்** – வீண்; பயனின்மை; கேடு; ஆணை; அழைப்பு; வேள்வி; ஆகாயத்தாமரை.
**அவமதி** – அவமானம்; நிந்தனை; இகழ்ச்சி.
**அவமதிச்சிரிப்பு** – இகழ்ச்சி நகை.
**அவமதித்தல்** – இகழ்தல்.
**அவமதிப்பு** – இகழ்ச்சி.
**அவமரணம்** – காண்க : **அகாலமிருத்து.**
**அவமரியாதை** – மரியாதைக் குறைவு.
**அவமழை** – கேடு விளைக்கும் மழை.
**அவமாக்குதல்** – வீணாக்குதல்.
**அவமானம்** – காண்க : **அவமதிப்பு.**
**அவமானித்தல்** – இகழுதல்.
**அவமிருத்து** – காண்க : **அகாலமிருத்து.**
**அவயங்காத்தல்** – காண்க : **அடைகாத்தல்.**
**அவயம்** – அடைக்கலம் புகுவோன்; புகலிடம்; அடைகாக்கை; வெட்டிவேர்; இரைச்சல்.
**அவயவம்** – உடலின் உறுப்பு; அங்கம்; இலாமிச்சைச் செடி.
**அவயவி** – உறுப்புள்ளது; உடல்; அவை உறுப்பினன்.
**அவயோகம்** – தீய நிகழ்ச்சி.
**அவர்** – அவன், அவள் என்பதன் பன்மைச் சொல்; ஒருவரைக் குறிக்கும் பன்மைச் சொல்.
**அவர்கள்** – காண்க : **அவர்;** ஒருவர் பெயரை அடுத்து வழங்கும் மரியாதைச் சொல்.
**அவர்ணியம்** – உவமானம்.
**அவர்வயின்விதும்பல்** – பிரிவின்கண் தலைமகனும் தலைமகளும் வேட்கை மிகுதியால் ஒருவரிடம் ஒருவர் செல்ல விரைதல்.
**அவரகாத்திரம்** – கால்.
**அவரசன்** – தம்பி.
**அவரசை** – தங்கை.
**அவரம்** – பிந்தியது; யானையின் பின்னங்காற்புறம்.
**அவராகம்** – இச்சையின்மை.
**அவராத்திரி** – வீணான இரவு.
**அவரூபம்** – உருவக்கேடு, விகாரவடிவம்.
**அவரை** – அவரைக்கொடி.
**அவரைப்பிராயம்** – குழந்தைப்பருவம்.
**அவரோகணம், அவரோகம்** – இறங்குகை; விழுது; இசை முறையில் வரும் கமகம் பத்தனுள் ஒன்று; வேதத்தைத் திருப்பிச் சொல்லுகை.
**அவரோகி** – ஆலமரம்.
**அவரோதம், அவரோதனம்** – அந்தப்புரம்; அரண்மனை; மறைவு; வேலி; முற்றுகை.
**அவரோபணம்** – இறக்குதல்; வேரோடு பிடுங்கல்.
**அவல்** – நெல் இடியல்; விளைநிலம்; பள்ளம்; குளம்.
**அவலச்சுவை** – ஒன்பான் சுவைகளுள் ஒன்று, துன்பச்சுவை.
**அவலச்சுழி** – தீவினை.
**அவலட்சணம்** – அழகின்மை.
**அவலம்** – துன்பம்; வறுமை; பலவீனம்; கவலை; கேடு; குற்றம்; நோய்; அழுகை; அவலச்சுவை; மாயை; பயன்படாது ஒழிதல்; இடப்பக்கம்.
**அவலம்பம்** – சார்பு; பற்றுக்கோடு.

**அவலம்பித்தல்** – சார்ந்து நிற்றல்; பற்றுதல்.
**அவலன்** – குற்றமுள்ளவன்; பயனற்றவன்.
**அவலி** – பூனைக்காலிச் செடி.
**அவலிடி** – வரிக்கூத்துவகை.
**அவலித்தல்** – வருந்துதல்; அழுதல்; பதறுதல்.
**அவலுப்பு** – அவுரியினின்று எடுக்கும் உப்பு.
**அவலேசம்** – அற்பம்; அவமானம்.
**அவலை** – கடுப்பு; காடு.
**அவலோகம், அவலோகனம்** – பார்வை.
**அவலோகித்தல்** – நோக்குதல்.
**அவவாதம்** – காண்க: **அபவாதம்**; ஆணை; நம்பிக்கை.
**அவவு** – காண்க: **அவா**.
**அவள்** – பெண்பால் சுட்டுப் பெயர்.
**அவளம்** – தீமை.
**அவளைதுவளை** – கதம்ப உணவு.
**அவற்கம்** – கஞ்சி.
**அவன்** – ஆண்பால் சுட்டுப் பெயர்.
**அவனி** – உலகம், பூமி.
**அவனிகேள்வன்** – நிலமகளின் கணவனான திருமால்.
**அவனிகை** – இடுதிரை.
**அவனிபன்** – அரசன்.
**அவனிபார(ல)கன், அவனிபாலன்** – அரசன்.
**அவா** – எனக்கு இது வேண்டும் என்னும் எண்ணம்; பெருவிருப்பம்; இறங்குகை.
**அவாச்சியம்** – சொல்ல முடியாதது.
**அவாச்சியன்** – குறிப்பிடத்தகாதவன்.
**அவாசி, அவாசீனம்** – தென்திசை.
**அவாதிதம்** – கண்டிக்கப்படாதது.
**அவாந்தரப்பிரளயம்** – இடையில் உண்டாகும் உலக அழிவு.
**அவாந்தரம்** – இடையில் உள்ளது; வெறுவெளி; உதவியின்மை; அழிவு.
**அவாந்தரபேதம்** – உட்பிரிவு.
**அவாந்தரவெளி** – வெட்டவெளி.
**அவாய்நிலை** – ஒன்றை வேண்டிநிற்கும் நிலை, ஒரு சொல் தன்னோடு பொருந்திப் பொருள் முடிதற்குரிய மற்றொரு சொல்லை வேண்டி நிற்கும் நிலை.
**அவாயம்** – காண்க: **அபாயம்**.
**அவாரபாரம்** – கடல்.
**அவாரி** – சிறுநீர்; தடையின்மை.
**அவாவல்** – காண்க: **அவாவுதல்**.
**அவாவறுத்தல்** – ஆசையை ஒழித்தல்.
**அவாவன்** – ஆசை உடையவன்.
**அவாவுதல்** – விரும்புதல், பற்றுச்செய்தல்; ஒன்றை வேண்டி நிற்றல்.
**அவி** – வேள்வித்தீயில் இடும் கடவுளர்க்குரிய உணவு; உணவு; சோறு; நெய்; நீர்; ஆடு; கதிர்; கதிரவன்; காற்று; மேகம்; மலை; மதில்; பூப்பினள்.
**அவி (வி)** – தணி; அழி.
**அவிக்கினம்** – இடையூறு இன்மை.
**அவிக்கை** – அவித்தல்.
**அவிகம்** – வைரம்.
**அவிகாரம்** – விகாரம் அற்றது, மாறாதது; கடவுள்.
**அவிகாரன்** – கடவுள்; ஆட்டுக்காரன்.
**அவிகாரி** – விகாரம் அற்றது; மாறாதவன்; கடவுள்.
**அவிச்சன்** – தந்தை.
**அவிச்சின்னம்** – இடைவிடாமை; பிரிக்கப் படாமை.
**அவிச்சை** – காண்க: **அவித்தை**.
**அவிசல்** – அவிந்துபோனது.
**அவிசல்நாற்றம்** – அழுகிய காய் முதலியவற்றின் தீநாற்றம்.
**அவிசற்பல்** – சொத்தைப்பல்.
**அவிசாரம்** – ஆராய்ச்சியில்லாமை; கவலை இல்லாமை; காண்க: **அபிசாரம்**.
**அவிசாரி** – விபசாரி; கவலையற்றவன்(ள்).
**அவிசு** – வேள்வித்தீயில் தேவர்க்குக் கொடுக்கும் உணவு; நெய்; கஞ்சிவடியாது சமைத்த சோறு.
**அவிசுவாசம்** – நம்பிக்கையின்மை; நன்றி இன்மை.
**அவிஞ்சன்** – அறியாமை உடையோன், போதிக் கப்படாதவன்.
**அவிஞ்சை** – காண்க: **அவித்தை**.
**அவிட்டம்** – இருபத்துமூன்றாம் நட்சத்திரம்.
**அவித்தல்** – வேகச்செய்தல்; அணைத்துவிடுதல்; அடக்குதல்; கெடுத்தல்; துடைத்தல்; நீக்குதல்.
**அவித்துருமம்** – இருப்பை மரம்.
**அவித்துவையல்** – பச்சடி.
**அவித்தை** – அறியாமை; மாயை; ஆணவம்; ஐவகைத் துன்பங்களுள் ஒன்று; மோகம்.
**அவிதல்** – பாகமாதல்; இறுக்கத்தால் புழுங்குதல்; ஒடுங்குதல்; ஒய்தல்; அணைந்துபோதல்; குறைதல்; பணிதல்; அழிதல்; காய்கனி முதலியன சூட்டால் வெதும்புதல்; சாதல்.
**அவிதா** – ஆபத்தில் முறையிட்டுக் கூறும் சொல்.
**அவிநயக்கூத்து** – பாடற்பொருளைக் கையால் காட்டி ஆடும் கூத்து.
**அவிநயம்** – காண்க: **அபிநயம்**; ஓர் யாப்பிலக் கணம்.

**அவிநயர்** – கூத்தர்; அவிநய யாப்பிலக்கண நூலின் ஆசிரியர்.

**அவிநாசவாதி** – பொருள் அழியாதது என்னும் கொள்கையை உடையவன்.

**அவிநாசி** – கடவுள்.

**அவிப்பலி** – தேவர்க்குக் கொடுக்கும் உணவு; வீரன் சூளுரைத்துத் தன்னைத் தீக்குப் பலி கொடுக்கை.

**அவிப்பாகம்** – தேவர் உணவின் பங்கு.

**அவிப்பிணம்** – உவர்மண்ணை எடுத்துக் காய்ச்சும் உப்பு.

**அவிபக்த குடும்பம்** – பிரிக்கப்படாத சொத்துள்ள குடும்பம்.

**அவிபாகம்** – பிரிக்கப்படாதது.

**அவிமுத்தம்** – காசி நகரம்.

**அவியல்** – பாகஞ் செய்கை; உணவு; கறிவகை; வெப்பம்; புழுக்கம்; வாய்ப்புண்.

**அவிர்** – ஒளி.

**அவிர்தல்** – ஒளிர்தல்; பீறுதல்.

**அவிர்ப்பாகம்** – காண்க: **அவிப்பாகம்.**

**அவிரதம்** – என்றும், எப்பொழுதும்.

**அவிருகம்** - அதிவிடயப் பூண்டு.

**அவிருத்தம்** – பகையில்லாதது.

**அவிரோதம்** – மாறு இன்மை; நட்பு.

**அவிவாதம்** – மாறுபாடு இல்லாமை; இசைவு.

**அவிவு** – ஒழிவு.

**அவிவேகம்** – பகுத்தறிவு இன்மை.

**அவிவேகி** – பகுத்தறிவு இல்லாதவன்.

**அவிழ்** – பருக்கை, சோறு.

**அவிழ்த்தல்** – கட்டு நீக்குதல்; மலரச்செய்தல்; விடுகதைப் பொருளை விடுத்தல்.

**அவிழ்த்துக் கொடுத்தல்** – சொந்தப் பொருளி லிருந்து எடுத்துக் கொடுத்தல்.

**அவிழ்தம்** – மருந்து, ஔடதம்.

**அவிழ்தல்** – நெகிழ்தல்; மலர்தல்; உதிர்தல்; சொட்டுதல்; இளகுதல்; பிரிதல்.

**அவிழிகம்** – மலர்ந்த பூ.

**அவின்** – காண்க: **அபின்.**

**அவினயம்** – அடக்கம் இல்லாமை.

**அவினாபாவம்** – விட்டு நீங்காது உடன் நிகழும் தன்மை.

**அவினாபாவி** – பிரிக்க முடியாதது.

**அவினாபூதம்** – நீக்கமின்றி இருப்பது.

**அவீசி** – தூமகேதுவகை; திரை இல்லாதது.

**அவீரை** – பிள்ளை இல்லாக் கைம்பெண்.

**அவுக்கவுக்கெனல்** – காண்க: **அவக்கவக்கெனல்.**

**அவுசனம்** – காண்க: **ஔசனம்; உசனம்.**

**அவுசு** – ஒழுங்கு.

**அவுசுக்காரன்** – ஆடையில் விருப்பமுள்ளவன்.

**அவுண்** – அசுரசாதி.

**அவுணன்** – அசுரன்.

**அவுத்திரி** – காண்க: **ஔத்திரி.**

**அவுதா** – அம்பாரி.

**அவுரி** – நீலிச்செடி; மீன்வகை.

**அவுரிச்சால்** – வாயகன்ற பெரிய சால்.

**அவுரிப்பச்சை** – பச்சைக் கருப்பூரம்.

**அவுல்தார்** – சிறுபடைக்குத் தலைவன்.

**அவுனியா** – வவ்வால் மீன்.

**அவுனுதம்** – பித்தநோய்வகை; கிரந்திநோய வகை.

**அவேத்தியன்** – அறியப்படாதவன்.

**அவை** – மாந்தர் கூட்டம்; அறிஞர் கூட்டம்; சபா மண்டபம்; புலவர்; நாடக அரங்கு; பன்மைச்சுட்டு; அப் பொருள்கள்.

**அவைக்களம்** – சபை கூடும் இடம்.

**அவைத்தல்** – நெல் முதலியவற்றைக் குற்றுதல்; கையால் குத்துதல்; அவித்தல்; நெரித்தல்.

**அவைப்பரிசாரம்** – சபை வணக்கம்.

**அவைப்பு** – குற்றப்பட்ட அரிசி.

**அவையடக்கம், அவையடக்கு** – சபையோர்க்கு வழிபடு கிளவி கூறுகை.

**அவையம்** – அறிஞர் கூட்டம்; நியாயம் உரைக்கும் சபையோர்; அவைக்களம்; இலாமிச்சை.

**அவையம்போடுதல்** – சத்தமிடுதல்.

**அவையர்** – சபையோர்.

**அவையல்** – குற்றலரிசி; திரள்; அவல்.

**அவையல்கிளவி** – சபையில் உரைக்கத் தகாத சொல்.

**அவையலும் துவையலும்** – நெல் முதலியன குற்றப் பட்டுக் கிடக்கும் நிலை; செயல் முற்றுப் பெறாமை.

**அவையறிதல்** – சபையின் இயல்பை அறிதல்.

**அவையாவரிசி** – கொழியல் அரிசி.

**அவையிற்றின்** – அவற்றின்.

**அழக்கு** – காண்க: **ஆழாக்கு.**

**அழக்குடம்** – பிணக்குடம்.

**அழக்கொடி** – பேய்ப்பெண்.

**அழகங்காட்டுதல்** – காண்க: **அழகுகாட்டுதல்.**

**அழகச்சு** – நாணயவகை.

**அழகப்பன்காளை** – பெருமாள் மாடு.

**அழகம்** – பெண்டிர் கூந்தல்.

**அழகர்** – திருமாலிருஞ்சோலைத் திருமால்; காண்க: **வெள்ளெருக்கு.**

**அழகர்மலை** – அழகர் கோயில்கொண்டுள்ள மலை, திருமாலிருஞ்சோலை.

**அழகன்** – திருமால்; அழகுடையவன்; சுந்தரன்.

**அழகாரம்** – அழகான பேச்சு; வீண்புகழ்ச்சிப் பேச்சு.

**அழகி** – அழகுள்ளவள்.

**அழகிதழகிது** – மிக நன்று.

**அழகியமணவாளன்** – திருவரங்கத்திலிருக்கும் மணமகனாகிய அரங்கநாதன்.

**அழகியவாணன்** – நெல்வகை.

**அழகிய(யா)ன்** – அழகுடையவன்.

**அழகு** – வனப்பு; நூல் வனப்புள் ஒன்று; சுகம்; சிறப்பு; நற்குணம்; கண்டசருக்கரை.

**அழகுகாட்டுதல்** – உடை முதலியவற்றான் ஆய சிறப்பினைக் காண்பித்தல்; கை கால்களால் பரிகசித்தல்.

**அழகுகாமாலை** – காமாலைவகை.

**அழகுகுளிசம்** – கழுத்தணிவகை.

**அழகுசெண்டேறுதல்** – விளையாட்டுக்காகச் சாரி வருதல்: அழகைக் காட்டுதல்.

**அழகுதுரைப்பெண்** – இந்திரபாடாணம்.

**அழகுதேமல்** – தேமல்வகை.

**அழகோலக்கம்** – தன் அழகு தோற்றக் கொலு விருக்கை.

**அழத்தியன்** – காண்க: **பெருங்காயம்.**

**அழல்** – நெருப்பு; தீக்கொழுந்து; எரிவு; வெப்பம்; கோபம்; நஞ்சு; உறைப்பு; கார்த்திகை மீன்; கேட்டை; செவ்வாய்; கள்ளி; எருக்கஞ்செடி; கொடிவேலிச்செடி; நரகம்.

**அழல்சேர்குட்டம்** – கார்த்திகை பரணி.

**அழல்(லு)தல்** – எரிதல்; ஒளி வீசுதல்; காந்துதல்; உறைப்பாதல்; கோபம் கொள்ளுதல்; பொறாமை கொள்ளுதல்.

**அழல்வண்ணன்** – நெருப்பு வண்ணத்தனாகிய சிவன்.

**அழல்விதை** – நேர்வாளவித்து.

**அழல்விரியன்** – காண்க: **எரிவிரியன்.**

**அழல்விழித்தல்** – கோபத்தோடு நோக்குதல்.

**அழலம்பூ** – தீம்பூமரம்.

**அழலவன்** – அக்கினிதேவன்; சூரியன்; செவ்வாய்.

**அழலாடி** – கையில் நெருப்புடன் ஆடும் சிவன்.

**அழலி** – நெருப்பு.

**அழலிக்கை** – எரிச்சல்; பொறாமை.

**அழலூட்டுதல்** – தீயுண்ணச் செய்தல்.

**அழலேந்தி** – கையில் நெருப்போடு இருக்கும் சிவன்.

**அழலை** – தொண்டைக் கரகரப்பு; களைப்பு.

**அழலோம்புதல்** – அக்கினிகாரியம் செய்தல்.

**அழலோன்** – அக்கினிதேவன்.

**அழவணம்** – காண்க: **மருதோன்றி.**

**அழற்கடவுள்** – காண்க: **அழலோன்.**

**அழற்கண்ணன்** – நெற்றியில் தீக்கண்ணையுடைய சிவன்.

**அழற்கண்வந்தோன்** – சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றியவன்; முருகன்; **வீரபத்திரன்.**

**அழற்கதிர்** – சூரியன்.

**அழற்கரத்தோன்** – நெருப்பைக் கையில் ஏந்தியிருக்கும் சிவபிரான்.

**அழற்காமாலை** – காமாலை நோய்வகை.

**அழற்காய்** – காண்க: **மிளகு.**

**அழற்குட்டம்** – காண்க: **கார்த்திகை.**

**அழற்சி** – உறைப்புச் சுவை; எரிவு; சினம்; அழுக்காறு; கால்நடைகளுக்குச் சுரம் உண்டாக்கும் ஒரு நோய்.

**அழற்பால்** – எருக்கஞ்செடி.

**அழற்பித்தம்** – பித்தநோய்வகை.

**அழற்பிரவை** – நரகவகை.

**அழற்புண்** – சிவந்து இரத்தம் வடியும் புண்.

**அழற்புற்று** – வெள்ளை விழியில் எரிசதையை உண்டாக்கும் ஒரு நோய்.

**அழற்றடம்** – தீக்காய் கலம்.

**அழற்றி** – அழலச்செய்வது; எரிவு; அழுக்காறு; சினம்.

**அழற்றுதல்** – வெம்மை செய்தல்.

**அழறு** – சேறு.

**அழன்** – பிணம்; பேய்.

**அழனம்** – பிணம்; வெம்மை; தீ.

**அழனாகம்** – ஒருவகை நச்சுப் பாம்பு.

**அழனிறக்கடவுள்** – காண்க : **அழல்வண்ணன்.**

**அழாஅல்** – அழுகை.

**அழாந்தை** – அழானுக்குத் தந்தை.

**அழி** – கேடு; வைக்கோல்; வைக்கோலிடும் கிராதி; கிராதி; வண்டு; மிகுதி; வருத்தம்; கழிமுகம்; இரக்கம்.

**அழிகட்டு** – பொய்ச்சீட்டு; வீண் போக்கு; தடை; மந்திரம்; நஞ்சு முதலியவற்றிற்கு மாற்று.

**அழிகடை** – அறக்கெட்டது.

**அழிகண்டி** – இவறலன், உலோபி.

**அழிகரப்பான்** – படர்தாமரை நோய்.

**அழிகரு** – கரு அழிவு.

**அழிகன்று** – விலங்குகளின் வயிற்றினின்று சிதைந்து விழும் கரு.

**அழிகால்** – முதிர்ச்சியால் அழிக்க வேண்டியதான வெற்றிலைத் தோட்டம்.

**அழிகாலி** – வீண்செலவு செய்வோன்.

**அழிகிரந்தி** – கிரந்திநோய்வகை.

**அழிகுட்டி** – காண்க : **அழிகன்று.**

**அழிகுரன்** – தோற்றவன்.

**அழிகை** – அழிவு; சிதைவு.

**அழிகொடிக்கால்** – காண்க : **அழிகால்.**

**அழிச்சாட்டம்** – காண்க : **அழிச்சாட்டியம்.**

**அழிச்சாட்டியக்காரன்** – தீம்புள்ளவன்; பொய் வழக்கை எழுப்புவோன்.

**அழிச்சாட்டியம்** – தீம்பு; கேடு.
**அழிசெய்தல்** – கெடுத்தல்.
**அழிசெலவு** – தோட்டவிருத்தி முதலியவற்றிற்கு ஆகும் செலவு.
**அழிஞ்சில், அழிஞ்சு** – ஒரு மரம்.
**அழிஞ்சுக்காடு** – பாலைநிலம்.
**அழித்தல்** – செலவழித்தல்; கெடுத்தல்; கலைத்தல்; குலைத்தல்; உள்ளதை மாற்றுதல்; மறப்பித்தல்; தடவுதல்; நீக்குதல்; நிந்தித்தல்; விடைகாணுதல்.
**அழித்தழித்து** – திரும்பத்திரும்ப.
**அழித்து** – மீட்டும்; மாறுபாடாய்.
**அழித்துச்சொல்** – இழித்துக்கூறல்.
**அழித்துரை** – இழித்துரை.
**அழிதகவு** – துன்பம்.
**அழிதகன்** – தீநெறி நடப்போன்.
**அழிதகை** – தகுதிக்கேடு.
**அழிதல்** – நாசமாதல்; சிதைவுறுதல்; தவறுதல்; நிலைகெடுதல்; தோற்றல்; மனம் உருகுதல்; வருந்துதல்; மனம் உடைதல்; பெருகுதல்; பரிவுகூர்தல்; செலவாதல்.
**அழிதலை** – தலையோடு.
**அழிதூஉ** – அலி.
**அழிந்தோரை நிறுத்தல்** – நிலைதாழ்ந்தாரை மீண்டும் நிலைபெறச் செய்தல்; வேளாண் மாந்தர் இயல்புகளுள் ஒன்று.
**அழிநோய்** – குட்டம்.
**அழிப்படுத்தல்** – கதிரைக் கடாவிட்டு உழக்குதல்.
**அழிப்பன்** – சங்கரிப்பவன்; துன்புறுத்துபவன்.
**அழிப்பாங்கதை** – விடுகதை.
**அழிப்பாளன்** – தட்டான்.
**அழிப்பாளி** – வீண்செலவு செய்வோன்.
**அழிப்பு** – சங்காரம்; குற்றம்.
**அழிபசி** – மிக்க பசி.
**அழிபடர்** – மிகுந்த துன்பம்.
**அழிபடுதல்** – சிதைதல்; செலவாதல்.
**அழிபயல்** – தீநெறியில் நடக்கும் பையன்.
**அழிபாடு** – அழிவு.
**அழிபு** – கேடு; தோல்வி.
**அழிபுண்** – அழுகு இரணம்.
**அழிபெயல்** – மிக்க மழை.
**அழிம்பன்** – தீம்பு செய்பவன்.
**அழிம்பு** – தீம்பு; வெளிப்படையான பொய்; அவதூறு; நீதியற்ற வழக்கு.
**அழிமதி** – கெடுமதி; அழிமானம்.
**அழிமேய்ச்சல்** – பயிர் முழுதும் அழியக் கால்நடைகளைத் தின்னும்படி விடுகை.
**அழியமாறுதல்** - தன்நிலையை அழித்துவேறாதல்.
**அழியல்** – மனக்கலக்கம்.
**அழியாமுதல்** – நிலையான மூலநிதி; கடவுள்.
**அழியாமை** – அழிவின்மை; மனம் கலங்காமை.
**அழியாவியல்பு** – அருகன் எண்குணத்துள் ஒன்று.
**அழியாவிளக்கு** – நந்தாவிளக்கு.
**அழிவது** – கெடுதி.
**அழிவழக்கு** – அக்கிரம விவகாரம்; வீண்வாதம்; இழிந்தோர் வழக்கு.
**அழிவாய்** – சங்கமுக மணல்மேடு.
**அழிவி** – கழிமுகம்.
**அழிவு** – கேடு; தீமை; செலவு; வறுமை; வருத்தம்; மனவுறுதியின்மை; தோல்வி; கழிமுகம்.
**அழிவுகாலம்** – கெட்ட காலம்; ஊழி.
**அழிவுபாடு** – அழிவு.
**அழுக்ககற்றி** – வண்ணான் காரநீர்.
**அழுக்கடித்தல்** – அழுக்குப் போக்குதல்.
**அழுக்கணவன்** – இலை தின்னும் புழு.
**அழுக்கம்** – கவலை.
**அழுக்கறுத்தல்** – பொறாமை கொள்ளுதல்.
**அழுக்கறுதல்** – மாசு போதல்; பொறாமை நீங்குதல்.
**அழுக்கறுப்பான்** – பொறாமை கொள்பவன்.
**அழுக்கன்** – ஈயாதவன், உலோபி.
**அழுக்காமை** – காண்க: **அழுங்காமை.**
**அழுக்காறாமை** – பொறாமை கொள்ளாமை.
**அழுக்காறு** – பிறர் ஆக்கம் பொறாமை; மனத்தழுக்கு.
**அழுக்கு** – மாசு; மனமாசு; பொறாமை; ஆணவ முதலிய பாசம்; வெளுத்தற்குரிய மாசுபடிந்த ஆடை; மலசலாதிகள்; பிள்ளைப்பேற்றின் பின் வடியும் ஊனீர்; ஆமைவகை.
**அழுக்குத்தேமல்** – அழுக்கினால் உடலில் தோன்றும் புள்ளிகள்.
**அழுக்குமூட்டை** – பழைய வழக்க ஒழுக்கங்களைப் பின்பற்றுபவன்; வெளுத்தற்குரிய மாசுபடிந்த ஆடைகள்.
**அழுக்கெடுத்தல்** – பற்றிய மாசுகளைப் போக்குதல்; அழுக்குத் துணிகளைப் பெற்றுச் செல்லுதல்.
**அழுகண்** – கண்ணோய் வகை.
**அழுகண்ணி** – பூண்டுவகை.
**அழுகல்** – பதனழிந்தது; தூய்மையில்லாதது.
**அழுகள்ளன்** – பாசாங்கு செய்வோன்.
**அழுகற்சரக்கு** – அழுகின பண்டம்; அழுகுதற்குரிய பண்டம்; அழுகக்கூடிய சரக்குகளுக்கு விதிக்கும் வரி.
**அழுகற்சிரங்கு** – நீர்கசியும் சிரங்கு.
**அழுகற்புண்** – அழுகின இரணம்.

**அழுகற்றூற்றல்** – விடாத சிறுமழை.
**அழுகிச்சேதம்** – வெள்ளத்தால் உண்டாகும் பயிர்ச் சேதத்திற்குச் செய்யும் வரிக்குறைப்பு.
**அழுகுகால்** - நீர்ப்பெருக்கால் அழுகிய நெற்பயிர்.
**அழுகுசப்பாணி** – காண்க: **அழுகுசர்ப்பம்;** அழுகு சர்ப்பம் நக்குதலால் உண்டாகும் நோய்.
**அழுகுசர்ப்பம்** – ஒரு நச்சுயிரி.
**அழுகுசிறை** – அவிந்து சாகத்தக்க சிறை.
**அழுகுணி** – அழுகிற குணம் உள்ளவன்; சொறி சிரங்கு வகை.
**அழுகுதல்** – பதனழிதல்.
**அழுகுபுண்குட்டம்** – குட்டநோய் வகை.
**அழுகுமூலம்** – மூலநோய் வகை.
**அழுகை** – காண்க: **அவலம்.**
**அழுங்கல்** – துன்பம்; கேடு; நோய்; அச்சம்; சோம்பல்; இரக்கம்; ஆரவாரம்; யாழின் நரம்போசை.
**அழுங்காமை** – கடல் ஆமைவகை.
**அழுங்கு** – விலங்குவகை; கற்றாழை; பாலை யாழ்த்திறவகை.
**அழுங்குதல்** – வருந்துதல்; துன்பப்படுதல்; அஞ்சுதல்; உரு அழிதல்; கெடுதல்; சோம்புதல்; தவிர்த்தல்; ஒலித்தல்; அழுதல்.
**அழுங்குப்பிடி** – விடாப்பிடி.
**அழுங்குவித்தல்** – விலக்குதல்; துன்புறுத்துதல்.
**அழுத்தக்காரன்** – பொருள் இறுக்கமுடையவன்; அழுக்கன்.
**அழுத்தம்** – இறுக்கம்; கடினம்; உறுதி; பிடிவாதம்; உலோபம்; ஆழ்ந்து அறியும் குணம்.
**அழுத்து** – அழுத்துகை; பதிவு.
**அழுத்துதல்** – அழுந்தச் செய்தல்; பதித்தல்; அமிழ்த்துதல்; எய்தல்; வற்புறுத்துதல்; உறுதியாக்குதல்.
**அழுந்து** – நீராழம்; வெற்றிலை நடும் வரம்பு.
**அழுந்துதல்** – அழுக்குண்ணுதல் ; உறுதியாகப் பற்றுதல்; உறுதியாதல்; பதிதல்; அமிழ்தல்; அனுபவப்படுதல்; வருந்துதல்.
**அழுந்துபடுதல்** – தொன்றுதொட்டு வருதல்.
**அழுந்தை** – அழுந்தூர்.
**அழுப்பு** – சோறு.
**அழுப்புகம்** – தேவலோகம்.
**அழும்பு** – தீம்பு.
**அழும்புதல்** – செறியக் கலத்தல்.
**அழுவம்** – பரப்பு; நாடு; துர்க்கம்; காடு; போர்; முரசு; குழி; ஆழம்; கடல்; மிகுதி; பெருமை; நடு; நடுக்கம்.
**அழுவிளிப்பூசல்** – ஒப்பாரி வைத்தழும் பேரொலி.
**அழுவை** – யானை.
**அழைத்தல்** – கூப்பிடுதல்; பெயரிட்டுக் கூப்பிடுதல்; வரச்செய்தல்; கதறுதல்.
**அழைப்பு** – கூப்பிடுகை; பொருள் புணரா ஓசை.
**அழைப்புச்சுருள்** – திருமணத்துக்கு அழைக்கும் போது மணமக்களுக்கும் உறவினர்க்கும் தாம் பூலத்துடன் கொடுக்கும் பணமுடிப்பு.
**அழைப்புத்தூரம்** – கூப்பிடு அளவான 1000 கஜ தூரம் (914 மீ.).
**அழைப்புப்பத்திரம்** – அழைப்புக்கடிதம்; கிறித்தவ சபைக்குக் குருவாகும்படி அழைக்கும் பத்திரம்.
**அழையுறுத்தல்** – கூவுதல்.
**அள்** – அள்ளப்படுவது; செறிவு; வன்மை; வண்டி வில்லைத் தாங்கும் கட்டை; பற்றிரும்பு; கூர்மை; பூட்டு; நீர்முள்ளி; அள்ளு மாந்தம்; காது; பெண்பால் விகுதி.
**அள் (வி)** – அள்ளு; நெருங்கு.
**அள்வழுப்பு** – காதுகுறும்பி.
**அள்ளல்** – நெருக்கம்; சேறு; இசைக்கரணங்கள் எட்டனுள் ஒன்று; எழுநரகத்துள் ஒன்று; அள்ளுதல்; கொய்தல்; சேர்த்தெடுத்தல்.
**அள்ளாடித்தள்ளாடி** – தளர்ந்த நடையாய்.
**அள்ளாடுதல்** – செறிதல்; தளர்தல்.
**அள்ளாத்தி** – மீன்வகை.
**அள்ளாயமானியம்** – அள்ளு சுதந்தரம்.
**அள்ளி** – வெண்ணெய்.
**அள்ளிக்குத்துதல்** – செடி முதலியவற்றின்மேல் நீர் தெளித்தல்; கஞ்சி முதலியவற்றைச் சிறுகக் கொடுத்தல்.
**அள்ளிக்கொட்டுதல்** – பரவுதல்; மிகச் சம்பாதித்தல்; மிகக் கொடுத்தல்.
**அள்ளிக்கொண்டுபோதல்** – வேகமாய் ஓடுதல்; நோய் கடுமையாகக் கொள்ளை கொள்ளுதல்.
**அள்ளித்துள்ளுதல்** – மிகச் செருக்குதல்.
**அள்ளியிறைத்தல்** – அளவிற்குமேல் செலவிடுதல்.
**அள்ளிருள்** – கும்மிருட்டு; செறிந்த இருட்டு.
**அள்ளிவிடுதல்** – மிகுதியாகக் கொடுத்தல்.
**அள்ளு** – காது; கன்னம்; கூர்மை; பற்றிரும்பு; நெருக்கம்; ஒரு நோய்; அளவு கூலியாகக் கையால் அள்ளிக்கொள்ளும் தானியம்; விலா எலும்பு.
**அள்ளுக்கட்டுதல்** – பெட்டி முதலியவற்றை இரும்புத் தகட்டால் இறுக்குதல்; பலப்படுத்துதல்.
**அள்ளுக்காசு** – கூடைக்காரரிடமிருந்து வசூலிக்கும் பணம்.
**அள்ளுகொண்டை** – மகளிர் மயிர் முடிவகை.
**அள்ளுகொள்ளை** – பெருங்கொள்ளை.
**அள்ளுச்சீடை** – சிறு சீடைவகை.

**அள்ளுதல்** – செறிதல்; கையால் முகத்தல்; திரளாய் எடுத்தல்; வாரிக்கொண்டு போதல்; எற்றுதல்; நுகர்தல்.

**அள்ளுமாந்தம்** – குழந்தைகளுக்கு உண்டாகும் ஒருவகை நோய்.

**அள்ளூறுதல்** – வாயூறுதல்.

**அள்ளெடுக்கிறவன்** – ஒவ்வோர் அளவிலும் ஒவ்வொரு பிடி பெற்றுக்கொண்டு நெல் அளப்பவன்.

**அள்ளெடுத்தல்** – கையால் வாருதல்.

**அள்ளை** – பேய்; விலாப்புறம்.

**அள்ளைப்புறம்** – வீட்டின் ஒரு பகுதி.

**அளக்கர்** – கடல்; நிலம்; சேறு; உப்பளம்; நீள்வழி; கார்த்திகை நாள்.

**அளக்கல்** – அளத்தல்.

**அளக்காய்** – காண்க: **வெள்ளெருக்கு.**

**அளகத்தி** – கூந்தலுடையவள்.

**அளகபந்தி** – கூந்தலின் ஒழுங்கு.

**அளகபாரம்** – கூந்தல் தொகுதி.

**அளகம்** – பெண்மயிர்; மயிர்க்குழற்சி; பன்றிமுள்; மழைநீர்; நீர்; காண்க: **வெள்ளெருக்கு.**

**அளகளப்பு** – காண்க: **அளவளப்பு;** சேர்க்கை.

**அளகவல்லி** – மயிர்மாட்டி.

**அளகாதிபதி(ன்), அளகாபதி** – அளகைநகர்த் தலைவனாகிய குபேரன்.

**அளகாபுரி** – குபேரனின் நகரம்; தஞ்சாவூர்.

**அளகு** – கோட்டான், கோழி, மயில் இவற்றின் பெண்; சேவல்; கார்த்திகை நாள்.

**அளகேசன்** – குபேரன்.

**அளகை** – அளகாபுரி; தஞ்சை; எட்டிற்கு மேலும் பத்திற்குக் கீழுமான வயதுடைய பெண்.

**அளகையாளி** – காண்க: **அளகேசன்.**

**அளத்தல்** – அளவிடுதல்; வரையறுத்தல்; பிரமாணம் கொண்டு அறிதல்; கொடுத்தல்; கலத்தல்; எட்டுதல்; கருதுதல்; அளவளாவுதல்; வீண்பேச்சுப் பேசுதல்.

**அளத்தி** – நெய்தல்நிலப் பெண்; உப்பு அமைப்போனின் பெண்.

**அளத்தியம்** – சவர்க்காரம்; நீலபாடாணம்.

**அளத்துநிலம்** – களர்நிலம்.

**அளத்துப்பச்சை** - கடற்கரையையடுத்துக் காணும் மருக்கொழுந்துச் சக்களத்தி என்னும் பூண்டு.

**அளத்துப்புல்** – காண்க: **முயிற்றுப்புல்.**

**அளத்துப்பூளை** – செடிவகை.

**அளப்பம்** – அளக்கை; வழி; ஊழ்; அலப்பு.

**அளப்பளத்தல்** – அலப்புதல்; முறுமுறுத்தல்.

**அளப்பறிதல்** – உட்கருத்தைத் தந்திரமாய் அறிதல், ஒருவனுடைய எண்ணத்தை ஆராய்ந்து அறிதல்.

**அளப்பன்** – வீணாகப் பேசுவோன்.

**அளப்பு** - அளக்கை; எல்லை; ஆராய்ந்து அறிகை; அலப்புகை; முறுமுறுக்கை; ஆலோசனை.

**அளப்புக்கு** – முடக்கொற்றான் கொடி.

**அளபு** – அளவு; அளபெடை.

**அளபெடுத்தல்** – எழுத்து மாத்திரை மிக்கு ஒலித்தல்.

**அளபெடை** – பாட்டில் ஓசை மிகுந்து ஒலிக்கும் அளவு.

**அளபெடைவண்ணம்** – அளபெடை பயின்றுவரும் சந்தம்.

**அளம்** – உப்பளம்; நெய்தனிலம்; கடல்; களர் நிலம்; செறிவு.

**அளம்படுதல்** – வருந்துதல்.

**அளம்பல்** – வெடங்குறுணிமரம்.

**அளம்பற்றுதல்** – உப்புப்பூத்தல்.

**அளமம்** – பொன்.

**அளர்** – நீர்; மஞ்சள்; உவர்.

**அளர்க்கம்** – காண்க: **தூதுவளை.**

**அளர்(வ)நிலம்** – களர்நிலம்.

**அளர்ப்பூளை** – காண்க: **அளத்துப்பச்சை.**

**அளவடி** – நாற்சீரான் வரும் அடி.

**அளவடிவிருத்தம்** – கலிவிருத்தம்.

**அளவப்பொட்டல்** – காண்க: **அளர்நிலம்.**

**அளவம்** – ஒருவனைப்போல் நடித்துப் பரிகசித்தல்.

**அளவர்** – உப்பமைப்போர்; உழுது பயிரிடுவோர் வகையினர்; மதிப்பிடுவோர்.

**அளவழிச்சந்தம்** – நான்கு முதல் இருபத்தாறு எழுத்துவரை வந்து அளவொவ்வாத அடிகளுடைய செய்யுள்வகை.

**அளவழித்தாண்டகம்** – இருபத்தேழெழுத்து முதலாக வந்து அளவொவ்வாத அடிகளுடைய செய்யுள்வகை.

**அளவளப்பு** – அளவளாவுகை.

**அளவளாவு** – மனக்கலப்பு.

**அளவளாவுதல்** – கலந்து பேசுதல்.

**அளவறுத்தல்** – அளந்தறிதல்; வரையறுத்தல்.

**அளவன்** – தானியம் அளப்போன்; உப்பமைப்போன்; சோரபாடாணம்.

**அளவாக்குதல்** – மட்டமாக்குதல்.

**அளவி** – அளவு.

**அளவிடுதல், அளவிடை** – ஆராய்ந்து அறிதல்; அளத்தல்; மதிப்பிடுதல்.

**அளவியல்** – பாவின் அடிவரையறை.

**அளவியற்சந்தம்** – நான்கு முதல் இருபத்தாறு எழுத்துவரை அளவொத்து வரும் அடிகளுடைய செய்யுள்வகை.

**அளவியற்றாண்டகம்** – இருபத்தேழு எழுத்து முதலாக வரும் அளவொத்த அடிகளுடைய செய்யுள் வழக்கு.

**அளவில்** – மட்டில்.

**அளவிறத்தல்** – எண்ணிலவாதல்; அளவு கடத்தல்.

**அளவினார்** – நேர்வாளம்; சிறுமரவகை.

**அளவு** – பரிமாணம்; தருக்க அளவை; தாளத்தில் மூன்று மாத்திரைக் காலம்; மாத்திரை; நில அளவு; சமயம்; தன்மை; ஞானம்; மட்டும்; தொடங்கி.

**அளவுக்கல்** – நீரேற்றம் காட்டும் கல்; எல்லைக் கல்.

**அளவுகருவி** – பொருள்களை அளவிட்டு அறியப் பயன்படும் கருவி.

**அளவுகாரன்** – நெல் முதலியன அளப்பவன்.

**அளவுகூடை** – குறித்த அளவுள்ள தானியம் அளக்கும் கூடை.

**அளவுகோல்** – அளக்கும் தடி.

**அளவுதல்** – கலப்புறுதல்; கலத்தல்; உசாவுதல்.

**அளவுநாழி, அளவுபடி** – முத்திரைப் படி.

**அளவுபடுத்தல்** – வரையறை செய்தல்.

**அளவுபடை** – சிறுசேனை.

**அளவுவர்க்கம்** – ஒரு பழைய வரி.

**அளவெடுத்தல்** – ஒன்றன் நீளம் அகலம் முதலியவற்றை அளந்தறிதல்.

**அளவெண்** – நாற்சீர் ஓரடியாய் வரும் அம்போதரங்க உறுப்புவகை.

**அளவை** – அளவு; அளவுகருவி; தருக்க அளவை; எல்லை; சமயம்; நாள்; தன்மை; அறிகுறி.

**அளவைக்கால்** – மரக்கால் என்னும் முகத்தலளவைக் கருவி.

**அளவைநூல்** – தருக்கநூல்.

**அளவையாகுபெயர்** – எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் அளவைப் பெயர் அவ்வவ் அளவுகொண்ட பொருளுக்கு ஆகிவருவது.

**அளவை வடிவம்** – உருவத்தைக் காட்டுதற்கு வரைந்த படம்.

**அளவைவாதி** – பிரமாண வாதம் செய்பவன்.

**அளவொழுகு** – ஊரின் நிலபுலங்களின் அளவுகளைப் பதிவு செய்த புத்தகம்.

**அளறு** – குழைசேறு; குழம்பு; காவிக்கல்; நீர்; நரகம்.

**அளறுதல்** – சிதறி வெடித்தல்; நெரிதல்; பிளத்தல்.

**அளறுபடுதல்** – சேறாதல்; நிலைகலங்குதல்.

**அளாய்குளாய்** – பரபரப்பான செய்கை.

**அளாவன்** – கலப்பு.

**அளாவுதல்** – கையால் அளைதல்; துழாவுதல்; கலத்தல்; சென்று பொருந்துதல்; கலந்து பேசுதல்.

**அளி** – அன்பு; அருள்; ஆசை; வரவேற்பு; எளிமை; குளிர்ச்சி; கொடை; காய்; வண்டு; தேன்; வண்டுகொல்லி; கருந்தேனீ; மாட்டுக் காடி; தேள்; கிராதி; மரவுரிமரம்.

**அளி (வி)** – கொடு; காப்பாற்று.

**அளி(ளீ)கம்** – நெற்றி; பொய்; நெல்லி; வெறுப்பு.

**அளித்தல்** – காத்தல்; கொடுத்தல்; படைத்தல்; ஈனுதல்; அருள்செய்தல்; விருப்பம் உண்டாக்குதல்; சோர்வை நீக்குதல்; செறித்தல்; சொல்லுதல்.

**அளித்து, அளிது** – அளிசெய்யத்தக்கது.

**அளிந்தம்** – கோபுரவாயில் திண்ணை.

**அளிந்தார்** – அன்புடையோர்.

**அளிப்பாய்ச்சுதல்** – கிராதியிடுதல்.

**அளிம்பகம்** – குயில்; தவளை; இருப்பை; தாமரைப் பூந்தாது.

**அளியர்** – காண்க: **மைத்துனர்**; இரங்கத்தக்கவர்.

**அளியன்** – அன்புமிக்கவன்; காக்கப்படத் தக்கவன்.

**அளிலாமயம்** – வாதநோய்.

**அளுக்குதல்** – குலைதல்; அஞ்சுவித்தல்.

**அளுங்கு** – காண்க: **அழுங்கு.**

**அளேசுவெப்பம், அளேசுவெப்பு** – அதிவிடய வேர்.

**அளேரியம்** – வெங்காயம்.

**அளேறுகம்** – காண்க: **தூதுவளை.**

**அளை** – தயிர்; மோர்; வெண்ணெய்; புற்று; பொந்து; குகை; ஏழாம்வேற்றுமையுருபு.

**அளை (வி)** – துழாவு; கல; தழுவு.

**அளைச்சல்** – வயிற்றுளைச்சல்; சீதபேதி.

**அளைதல்** – துழாவுதல்; கலத்தல்; சூடுதல்; தழுவுதல்; கூடியிருத்தல்; அனுபவித்தல்; வயிறு வலித்தல்.

**அளைமறிபாப்பு** – பாட்டின் ஈற்றில் நின்ற சொல் இடையிலும் முதலிலும் சென்று பொருள் கொள்ளப்படும் முறை.

**அளையெடுத்தல்** – வளை தோண்டுதல்; புரை வைத்தல்.

**அளைவு** – சோறு முதலியன குழைகை; கலப்பு.

**அற்கத்தி** – காண்க: **திப்பிலி.**

**அற்கம்** – அடக்கம்; வெண்துளசி; பொருள் விலை; பூசைவிதி.

**அற்களம்** – கதவின் தாழ்; பேரவை.

**அற்கன்** – அருக்கன்; சூரியன்.

**அற்காமை** – நிலையாமை.

**அற்கி** – காண்க: **ஓரிலைத்தாமரை.**

**அற்குதல்** – நிலைபெறுதல்; தங்குதல்.

**அற்சிரம், அற்சிரை** – காண்க: **அச்சிரம்.**

**அற்பக்கியன்** – சிற்றறிவுடையவன்.

**அற்பகதன்** – வாழை.

**அற்பகந்தம்** – காண்க : **செந்தாமரை.**

**அற்பகேசி** – காண்க : **வசம்பு.**

**அற்பசங்கை** – சிறுநீருக்குப் போகை.

**அற்பசி** – காண்க : **ஐப்பசி;** அசுவினி.

**அற்பத்தனம்** – இழிகுணம்.

**அற்பத்திரம், அற்பபத்திரம்** – துளசி; திருநீற்றுப்பச்சை.

**அற்பதுமம், அற்பபதுமம்** – செந்தாமரை.

**அற்பம்** – சிறுமை; இழிவு; இலேசு; நாய்; பஞ்சு; புகை.

**அற்பமாரி, அற்பமாரிடம்** – சிறுகீரை.

**அற்பர்** – கீழ்மக்கள்.

**அற்பரம்** – மக்கட் படுக்கை.

**அற்பருத்தம்** – வாழை.

**அற்பாசனம், அற்பாசமனம்** – மூத்திரம் பெய்கை.

**அற்பாயு, அற்பாயுசு(ள்)** – குறைந்த வாழ்நாள்.

**அற்புத்தளை** – அன்புப் பிணைப்பு.

**அற்புதக்கண்** – அபிநயக் கண்வகை.

**அற்புதம்** – ஒன்பான் சுவையுள் ஒன்று; வியப்பு; அறிவு; அழகு; சூனியம்; ஆயிரங்கோடி; சிதம்பரம்; தசைக்கணு.

**அற்புதமூர்த்தி** – கடவுள்.

**அற்புதவாதம், அற்புதவாயு** – இசிவுநோய்வகை.

**அற்புதன்** – கடவுள்; கம்மாளன்; புதியது புனைவோன்; கண்ணாளன்.

**அற்றகாரியம்** – தீர்ந்த பொருள்; முடிந்த வேலை.

**அற்றகுற்றம்** – இழப்பு.

**அற்றப்படுதல்** – கவனத்தின் இடையறவுபடுதல்; இல்லாமையாதல்.

**அற்றபேச்சு** – முடிவான பேச்சு.

**அற்றம்** – அழிவு; துன்பம்; இறுதி; சோர்வு; வறுமை; இடைவிடுகை; அவகாசம்; அவமானம்; அறுதி; விலகுகை; சுற்று; மறைக்கத்தக்கது; நாய்; பொய்; உண்மை.

**அற்றவன்** – பற்றற்றவன்; பொருளற்றவன்.

**அற்றார்** – பொருள் இல்லாதவர்; முனிவர்.

**அற்று** – அத் தன்மையது; அதுபோன்றது; ஓர் உவம உருபு; ஒரு சாரியை.

**அற்றுப்போதல்** – முழுதும் ஒழிதல்; இடைமுறிதல்; முழுதும் கைவருதல்.

**அற்றூரம்** – காண்க : **மரமஞ்சள்.**

**அற்றேல்** – அப்படியானால்.

**அற்றை** – அந்நாட்குரிய; அன்றன்றைக்குரிய; அற்பமான.

**அற்றைக்கூலி** – நாட்கூலி.

**அற்றைக்கொத்து** – நாள்தோறும் தானியமாகக் கொடுக்கும் கூலி.

**அற்றைநாள்** – அன்று; அந்த நாள்.

**அற்றைப்படி** – நாள்தோறும் உணவுக்காக அளிக்கும் பண்டம் அல்லது பணம்.

**அற்றைப்பரிசம்** – விலைமாதர் அன்றன்று பெறும் கூலி.

**அற்றைப்பிழைப்பு** – அன்றன்று செய்யும் சீவனம்; அன்றாடங்காய்ச்சி.

**அற** – முழுவதும்; மிகவும்; தெளிவாக; செவ்வையாக.

**அறக்கட்டளை** – நிலைபெற்ற அறச்செயல்கள் நடப்பதற்காக ஒதுக்கப்பெறும் மானியம் முதலியன.

**அறக்கடவுள்** – யமன்; தருமதேவதை.

**அறக்கடை** – பாவம்.

**அறக்கப்பறக்க** – விழுந்து விழுந்து; விரைவாக.

**அறக்கப்பாலை** – திருநாமப்பாலை.

**அறக்கருணை** – அனுக்கிரக ரூபமான அருள்.

**அறக்கழிவு** – அறநெறிக்கு மாறுபட்ட செயல்.

**அறக்களவழி** – வேளாண் தொழிலைக் கூறும் புறத்துறை.

**அறக்களவேள்வி** – வேள்விச்செயல்.

**அறக்கற்பு** – அமைதிநிலை பொருந்திய கற்பு.

**அறக்காடு** – சுடுகாடு.

**அறக்குளாமீன்** – சூரைமீன்.

**அறக்கூர்மை** – மிக்க கூர்.

**அறக்கூழ்ச்சாலை** – அன்னசத்திரம்; கஞ்சிமடம்.

**அறக்கொடி** – பார்வதி; உமை.

**அறக்கொடிபாகன்** – சிவன்.

**அறங்(ன்)கடை** – பாவம்.

**அறங்காவல்** – கோயில் சைத்தியம் முதலாயின காக்கும் தொழில்; நற்பொறுப்பு.

**அறங்கூறவையம்** – நீதிமன்றம்.

**அறச்சாலாபோகம்** – அறச்சாலைகளுக்கு விட்ட மானியம்.

**அறச்சாலை** – தருமசாலை.

**அறச்செட்டு** – கடுஞ்செட்டு.

**அறச்செல்வி** – தருமதேவதை; உமாதேவி.

**அறச்சோலை** – கோயினுட்சோலை.

**அறசம்** – கத்தரி.

**அறசோகணக்கு** – காட்டுக்கருணை; கருணைக் கிழங்கு.

**அறத்தவிசு** – நீதிபதியின் இருக்கை.
**அறத்தளி** – அந்தப்புரம்.
**அறத்தின்செல்வி** – காண்க: **அறச்செல்வி.**
**அறத்தின்சேய்** – தருமன்.
**அறத்தின்மூர்த்தி** – தருமதேவதை; பார்வதி; திருமால்.
**அறத்துணைவி** – தருமபத்தினி.
**அறத்துப்பால்** – திருக்குறள், நாலடியார் நூல்களின் முப்பால்களுள் முதலானதும் அறத்தைப் பற்றிக் கூறுவதுமான பகுதி.
**அறத்துறுப்பு** – அறத்தினது கூறு; அவை: ஐயப்படாமை, விருப்பின்மை, வெறுப்பின்மை, மயக்கமின்மை, பழியை நீக்கல், அழிந்தோரை நிறுத்தல், அறம் விளக்கல், பேரன்புடைமை.
**அறத்துறை** – அறவழி.
**அறத்தைக்காப்போன்** – ஐயனார்.
**அறத்தொடுநிலை, அறத்தொடுநிற்றல்** – களவினைத் தலைவி முதலானோர் தமர்க்கு முறையே அறிவுறுத்துகை.
**அறதேயன்** – அறங்களை நடத்துவோன்.
**அறநிலை** – பிரமமணம்; அறங்களைப் பாதுகாத்தற்குரிய நிலையம்.
**அறநிலைப்பொருள்** – நெறிப்படி அரசன் பெறும் இறைப்பொருள்.
**அறநிலையறம்** – நால்வகைக் குலத்தாரும் தத்தம் நெறியில் பிழையாது அரசன் பாதுகாக்கை.
**அறநிலையின்பம்** – ஒத்த கன்னியை மணந்து இல்லறத்தினின்று நுகரும் இன்பம்.
**அறநீர்** – அருநீர்; நீரின் அளவு குறைந்த நிலை; தவணைப்படி பாசனத்துக்கு விடப்படும் நீர்.
**அறநூல்** – நீதி கூறும் நூல்.
**அறநெறி** – அறவழி.
**அறப்பரிகா(சா)ரம்** – துறந்தோர் முதலியவர்க்குச் செய்யும் பணிவிடை.
**அறப்பாடல்** – கேடு விளைக்கும் சொற்பயிலும் பாட்டு.
**அறப்பாடுபடுதல்** – பாடுபட்டு வேலை செய்தல்.
**அறப்பார்த்தல்** – தீர ஆராய்தல்; அழிக்க வழி தேடுதல்.
**அறப்புறங்காவல்** – அறத்திற்கு விடப்பட்ட நிலங்களைப் பாதுகாக்கை.
**அறப்புறம்** – பாவம்; அறத்துக்கு விடப்பட்ட இறையிலி நிலம்; அறச்சாலை; வேதம் ஓதும் பள்ளி.
**அறப்போர்** – அறவழியில் செய்யும் கிளர்ச்சி.
**அறம்** – தருமம்; புண்ணியம்; அறச்சாலை; தருமதேவதை; யமன்; தகுதியானது; சமயம்; ஞானம்; நோன்பு; இதம்; இன்பம்; தீப்பயன் உண்டாக்கும் சொல்.
**அறம்பகர்ந்தோன்** – புத்தன்.
**அறம்பாடுதல்** – தீச்சொற்பட்டுத் தீப்பயன் உண்டாகப் பாடுதல்; வசைக்கவி பாடுதல்.
**அறல்** – அறுகை; அறுத்துச் செல்லும் நீர்; அரித்தோடுகை; நீர்; சிறுதூறு; நுண்மணல்; கருமணல்; நீர்த்திரை; மயிர் நெறிப்பு; கொற்றான்; திருமணம்; விழா.
**அறவன்** – தருமவான்; கடவுள்; புத்தன்; முனிவன்; அறத்தைக் கூறுவோன்; பார்ப்பனன்.
**அறவாணன்** – கடவுள்.
**அறவாய்போதல்** – காண்க: **அறுவாய்போதல்.**
**அறவாழி** – தருமசக்கரம்; அறக்கடல்.
**அறவாளன்** – தருமவான்.
**அறவி** – அறம்; புண்ணியத்தோடு கூடியது; பெண்துறவி; பொதுவிடம்.
**அறவிடுதல்** – முற்றும் நீக்குதல்; விற்றல்.
**அறவிய** – அறத்தோடுகூடிய.
**அறவியங்கிழவோன்** – புத்தன்.
**அறவியான்** – அறத்தில் நிற்பவன்.
**அறவிலை** – முழுமையும் விலைப்படுதல்.
**அறவிலை வாணிகன்** – பொருளை விலையாகக் கொடுத்து அறம் கொள்வோன்.
**அறவினை** – நற்செயல்.
**அறவு** – ஒழிகை.
**அறவுபதை** – அமைச்சரைத் தேர்ந்தெடுக்கும் சூழ்ச்சி நான்கனுள் ஒன்று; தருமநெறியைக் கூறி ஆராய்தல்.
**அறவுரை** – நீதிநெறி உரைத்தல்; நீதிமொழி.
**அறவுளி** – உடல் நலம்பெறச் செய்யும் மந்திரம்.
**அறவூதுதல்** – புடமிடுதல்.
**அறவை** – உதவியற்ற நிலை; தீமை; அறநெறி.
**அறவைச்சிறை** – கடுஞ்சிறை.
**அறவைச்சோறு** – உறவற்றவர்க்கு அளிக்கும் உணவு.
**அறவைத்தல்** – காண்க : **அறவூதுதல்.**
**அறவைத்தூரியம்** – உறவற்றவர்க்கு அளிக்கும் உடை.
**அறவைப்பிணஞ்சுடுதல்** – உறவற்ற பிணத்துக்கு ஈமக்கடன் செய்தல்.
**அறவைப்பு** – புடம்வைக்கை.
**அறவோர்பள்ளி** – சமண பௌத்த ஆலயம்.
**அறவோலை** – இனாம் சாசனம்.
**அறவோன்** – அறநெறியாளன்; புத்தன்.
**அறளை** – நச்சுத் தொந்தரை; ஒரு நோய்.
**அறன்** – வேள்வி முதல்வன்; அறக்கடவுள்.
**அறனில்பால்** – தீவினை.
**அறனிலாளன்** – அறவுணர்வு அற்றவன்.
**அறனையம்** – காட்டுக்கருணை.
**அறனோம்படை** – தருமம் பாதுகாக்கை; தருமம் பாதுகாக்கும் இடம்; தருமம் போதிக்குமிடம்.

**அறாக்கட்டை** – மூடன்; கஞ்சன்.

**அறாட்டுப்பறாட்டு** – காண்க : **அராட்டுப்பிராட்டு;** போதியதும் போதாததுமானது.

**அறாம்பை** – காண்க : **அறாமை.**

**அறாமி** – கொடுமை இயல்பு உள்ளது; இடக்குப் பண்ணுகிற குதிரை.

**அறாமை** – கவிழ்தும்பைப் பூண்டு.

**அறாயிரம்** – ஆறாயிரம்.

**அறாவட்டி** – அதிக வட்டி; கடுவட்டி.

**அறாவிலை** – அளவுக்கு மேற்பட்ட விலை.

**அறாவுதல்** – அடித்தல்.

**அறி** – அறிவு.

**அறிக்கை** – அறிவிப்பு; குற்றத்தை ஒப்புக் கொள்கை; பயிற்றுகை.

**அறிக்கைப்பத்திரம்** – எழுத்து மூலமான விளம்பரம்; வரலாறு குறிக்கும் பத்திரிகை.

**அறிக்கைபண்ணுதல், அறிக்கையிடுதல்** – விளம்பரப்படுத்துதல்; குற்றத்தை ஒப்புக் கொள்ளுதல்.

**அறிக்கைவாசித்தல்** – திருமண விளம்பரம் செய்தல்; பள்ளி நிறுவனம், சங்கம் போன்ற அமைப்புகளின் நடவடிக்கையைக் கூட்டத்தில் படித்தல்.

**அறிகண்ணி** – எருக்கங்கிழங்கு.

**அறிகரி** – நேர்சாட்சி.

**அறிகருவி** – உணர்வுப்பொறி.

**அறிகுறி** – அடையாளம்.

**அறிசலம்** – நெஞ்சறிந்த குற்றம்.

**அறிசா** – ஒருவகை மீன்.

**அறிஞன்** – அறிவுடையோன்; புலவன்; முனிவன்; புத்தன்; புதன்.

**அறிதல்** – உணர்தல்; நினைத்தல்; மதித்தல்; பயிலுதல்; அனுபவித்தல்; உறுதிசெய்தல்; புதிதாய்க் கண்டுபிடித்தல்.

**அறிதுயில்** – யோகநித்திரை; தூங்காமல் தூங்கும் நிலை.

**அறிதுயிலமர்ந்தோன்** – திருமால்.

**அறிநன்** – அறிபவன்.

**அறிப்பலம்** – காண்க: **திப்பிலி.**

**அறிப்பு** – உணர்கை.

**அறிபொருள்வினா** – அறியப்பட்ட பொருளை ஒரு பயன்நோக்கிக்கேட்கும் கேள்வி.

**அறிமடம்** – அறிந்தும் அறியாது போன்று இருக்கை; விளையாடும் பருவத்து நிகழும் அறியாமை; நினைவின்மை; அறிந்தபடி நடக்க இயலாமை.

**அறிமுகம்** – தெரிந்த முகம்; பழக்கம்.

**அறியக்கொடுத்தல்** – தெரிவித்தல்; குற்ற மேற்றுதல்.

**அறியல்** – மூங்கில்.

**அறியலுறவு** – அறிதற்கண் விருப்பம்.

**அறியாக்கரி** – பொய்ச்சாட்சி.

**அறியாமை** – அறியாத்தன்மை; மடமை.

**அறியாவினா, அறியான்வினா** – தெரியாதது ஒன்றைத் தெரிந்து கொள்வதற்குக் கேட்கும் கேள்வி.

**அறியுநன்** – உணருகிறவன்.

**அறிவர்சிறப்பு** – இறைவர் பூசனை.

**அறிவரன்** – அறிவில் சிறந்தவன்; அருகன்.

**அறிவழி** – கள்; பேய்.

**அறிவறிவாக** – விளக்கமாகத் தெரிந்து கொள்ளும்படி.

**அறிவறைபோதல்** – அறிவு கீழற்றுப் போதல்.

**அறிவன்** – அறிவுடையவன்; அருகன்; புத்தன்; கணி; கம்மாளன்; செவ்வாய்; புதன்; உத்தரட்டாதி.

**அறிவனாள்** – உத்தரட்டாதி.

**அறிவாகரன்** – அறிவிற்கு இருப்பிடமாக உள்ளவன்.

**அறிவாளி** – புத்திசாலி.

**அறிவிக்கை** – விளம்பரம்.

**அறிவித்தல்** – தெரிவித்தல்; வெளிப்படுத்துதல்.

**அறிவிப்பு** – காண்க: **அறிவிக்கை.**

**அறிவியல்** – விஞ்ஞானம்.

**அறிவிலி** – மூடன்.

**அறிவினா** – அறிந்து கேட்கும் கேள்வி.

**அறிவீனம்** – மடமை.

**அறிவீனன்** – அறிவுக்குறையுடையோன்; மூடன்.

**அறிவு** – ஞானம்; புத்தி; பொறியுணர்வு; அறிய வேண்டியவை; கல்வி; ஆன்மா.

**அறிவுகேடன்** – ஞானமற்றவன்.

**அறிவுகொளுத்துதல்** – புத்தி புகட்டுதல்.

**அறிவுடைமை** – உண்மை அறிவுடையவனாதல்.

**அறிவுநூல்** – ஞான சாத்திரம்.

**அறிவுபிறத்தல்** – ஞானம் உண்டாதல்; மூர்ச்சை தெளிதல்.

**அறிவுபுகட்டுதல்** – அறிவூட்டுதல்.

**அறிவுமடம்படுதல்** – அறிந்தும் அறியான்போன்று இருத்தல்.

**அறிவுமயங்குதல்** – நினைவு தவறுதல்; திகைத்தல்.

**அறிவுவரம்பிகந்தோன்** – மிகுந்த அறிவினையுடையவன், அருகன்.

**அறிவுறால்** – அறிவுறுத்துகை.

**அறிவுறுத்துதல்** – தெரிவித்தல்; அறிவு புகட்டுதல்.

**அறிவுறுதல்** – அறிதல்; துயில் எழுதல்.

**அறிவை** – ஞானம்.

**அறிவொப்புக்காண்டல் வினா** – தான் அறிந்ததைப் பிறன் அறிவோடு ஒப்புநோக்கக் கேட்கும் கேள்வி.

**அறுக்கணக்கு** – சரக்கறைக் கணக்கு.

**அறுக்கரிவாள்** – கருக்கறுவாள்.

**அறுக்கன்** – தலைவன்; நெருக்கமான நண்பன்.

**அறுகடி** – அறுகு பற்றிய நிலம்.

**அறுகரிசி** – அறுகம்புல்லோடு கூடிய மங்கல அரிசி, அட்சதை.

**அறுகால்** – வண்டு; பாம்பு; இல்லாதபோது.

**அறுகாலன்** – பாம்பு.

**அறுகாழி** – மோதிரவகை.

**அறுகாற்பீடம்** – ஆறு கால்கள் அமைந்த இருக்கை.

**அறுகிடுதல்** – திருமணத்தில் அறுகு இட்டு வாழ்த்துதல்.

**அறுகிலிப்பூடு** – பூண்டுவகை.

**அறுகீரை** – காண்க: **அறைக்கீரை.**

**அறுகு** – அறுகம்புல்; சிங்கம்; புலி; யானையாளி; யானை; வெளித்திண்ணை; தெருப்பந்தல்.

**அறுகுணன்** – ஆறு குணங்களோடு கூடியவன்; பகவன்.

**அறுகுதராசு** – சிறு தராசு.

**அறுகுவெட்டுத் தரிசுகூலி** – தரிசு நிலத்திலுள்ள காடுகளை வெட்டிச் செம்மை செய்து உழவுக்குக் கொண்டுவந்தவர்க்கு அதுபற்றி அந்நிலத்தில் ஏற்பட்ட அனுபோக உரிமை.

**அறுகுறை** – கவந்தம், முண்டம்.

**அறுகெடுத்தல்** – அறுகிட்டு வாழ்த்தல்; பூசித்தல்.

**அறுகெழுந்தபடுதரை** – அறுகு முளைத்து உழவுக்குப் பயன்படாத தரிசுநிலம்.

**அறுகை** – அறுகம்புல்.

**அறுகோணம்** – ஆறு மூலைகொண்ட வடிவம்.

**அறுசமயம்** – ஆறு வகையான வைதிக மதங்கள்; அவை : சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காணபத்தியம், கௌமாரம்.

**அறுசரம்** – யாழ்.

**அறுசுவை** – கைப்பு, இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு. உவர்ப்பு, கார்ப்பு என்னும் ஆறு வகையான சுவைகள்.

**அறுசூலை** – ஆறுவகையான நோய்; அவை : பித்தசூலை, வாதசூலை, சிலேட்டுமசூலை, வாதபித்த சூலை, சிலேட்டுமபித்த சூலை, ஐயகணச்சூலை.

**அறுத்தல்** – அரிதல் ; ஊடறுத்தல்; செங்கல் அறுத்தல்; தாலியறுத்தல்; இடைவிடுதல்; பங்கிட்டுக் கொடுத்தல்; முடிவு செய்தல்; வளைதோண்டல்; வருத்துதல்; நீக்குதல்; இல்லாமற் செய்தல்; வெல்லுதல்; செரித்தல்.

**அறுத்தவள்** – கைம்பெண்.

**அறுத்திசைப்பு** – வேற்றிசை கலந்து வரும் ஒரு வகை யாப்புவழு.

**அறுத்திடல்** – அவாவறுக்கை.

**அறுத்துக்கட்டுதல்** – தாலி நீங்கியபின் மறுதாலி கட்டி மணத்தல்.

**அறுத்துப்பேசுதல்** – தீர்மானமாகப் பேசுதல்.

**அறுத்துமுறி** – மனைவியைத் தள்ளிவிடுகை.

**அறுத்துரைத்தல்** – வரையறுத்துச் சொல்லுதல்; பிரித்துச்சொல்லுதல்.

**அறுத்துவிட்டவள்** – காண்க: **அறுத்தவள்.**

**அறுத்தோடி** – அரித்தோடும் நீரோட்டம்.

**அறுதல்** – கயிறு முதலியன இறுதல்; இல்லாமற் போதல்; தீர்தல்; பாழாதல்; செரித்தல்; தங்குதல்; நட்புச்செய்தல்; கைம்பெண்.

**அறுத(தா)லி** – கைம்பெண்.

**அறுதி** – முடிவு; வரையறை; இல்லாமை; அழிவு; உரிமை; அறுதிக் குத்தகை; காண்க: **அறுதிக்கிரயம்.**

**அறுதிக்கரை** – நிலங்களைச் சமுதாயத்தில் வைக்காமல் தனித்தனியாய் உரிமையுள்ளவர்களுக்குப் பிரித்துக்கொடுக்கும் முறை.

**அறுதிக்களநடை** – ஆண்டிறுதி நெற்கணக்கு.

**அறுதிக்கிரயம்** – முடிவான விலை.

**அறுதிச்சாசனம், அறுதிச்சீட்டு** – விலையாவணம்.

**அறுதிப்பங்கு** – சமுதாயத்தில் இல்லாத சொந்த நிலம்; கடன் தீர்ப்பதில் கடைசித் தவணையாகக் கொடுக்கும் தொகை.

**அறுதிப்பட்டு, அறுதிப்பரிய(வ)ட்டம்** – கோயில் மரியாதையாகத் தலையில் கட்டிக் கொடுத்துவிடும் பட்டு.

**அறுதிப்பாடு** – முடிவுபேறு.

**அறுதிமுறி** – தீர்ந்த கணக்குச் சீட்டு.

**அறுதியிடுதல்** – முடிவுக்குக் கொண்டுவருதல்; காலங்குறித்தல்; தீர்மானித்தல்.

**அறுதியுறுதி** – அறுதிச் சீட்டு.

**அறுதொழில்** – அந்தணர்க்குரிய ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.

**அறுந்தருணம், அறுந்தறுவாய்** – அவசர சமயம்.

**அறுந்தொகை** – மிச்சமின்றிப் பிரிக்கப்படும் எண்.

**அறுநீர்** – விரைவில் வற்றிப்போகும் நிலையிலுள்ள நீர்.

**அறுப்படிகணக்கு** – பேறு இழப்புகளை வகுத்துக் காட்டும் கணக்கு.

**அறுப்பம்புல்** – புல்வகை.

**அறுப்பன்பூச்சி** – தானியப் பூச்சிவகை.

**அறுப்பின்பண்டிகை** - விளைவு காலத்துக்குப்பின் காணிக்கை செலுத்தும் கிறித்தவர் சிறப்பு நாள்.

**அறுப்பு** – கதிரறுக்கை; தாலியறுக்கை; புண்ணை அறுத்த இடம்; மரத்தின் அறுத்த பக்கம்; கண்டனம்.

**அறுப்புக்காலம்** – கதிர் அறுக்கும் பருவம்.

**அறுப்புக்கூலி** – கதிர் அறுக்கும் கூலி; மரம் முதலியன அறுக்கும் கூலி; வாழ்க்கை உதவி; கைம்பெண் பெறும் வாழ்க்கைப் பணம்.

**அறுப்புக்கோடி** – தாலி அறுத்தவளுக்குச் சுற்றத்தார் இடும் புதுத்துணி.

**அறுப்புச்சீட்டு** – கதிர் அறுக்கக் கொடுக்கும் ஆணை.

**அறுப்புச்சுகம்** – கைம்பெண்ணுக்குக் கொடுக்கும் வாழ்க்கை உதவி.

**அறுப்புச்சொம்மு** – பிள்ளையில்லாத கைம் பெண்ணுக்குப் புக்ககத்தார் வாழ்க்கைக்காக மொத்தமாய்க் கொடுக்கும் தொகை.

**அறுபகை** – ஆறுவகை உட்பகை; அவை: காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம்.

**அறுபடுதல்** – அறுக்கப்படுதல்.

**அறுபத்துநாலுகலை** – அறுபத்து நான்கு வகையான பயிற்சியுடைமை.

**அறுபத்துமூவர்** – பெரியபுராணத்தில் கூறப்பட்ட தனியடியார்.

**அறுபத்தை** – கையாந்தகரை.

**அறுபதம்** – வண்டு; கையாந்தகரைப் பூண்டு.

**அறுபதாங்கலியாணம்** – அறுபதாம் ஆண்டு நிறைவுவிழா, மணிவிழா.

**அறுபதாங்கேழ்வரகு** – அறுபது நாளில் விளையும் கேழ்வரகுவகை.

**அறுபதாங்கொட்டை** – பேராமணக்கு.

**அறுபான்** – அறுபது.

**அறுபொருள்** - பரம்பொருள்; ஐயமற்ற பொருள்.

**அறுபொழுது** – ஒரு நாளில் ஆறு பகுப்பான காலம்; அவை: மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு.

**அறும்பன்** – தீம்பு செய்வோன்.

**அறும்பு** – பஞ்சம்; குறும்புத்தனம்; தீம்பு.

**அறுமணை** – அரிவாள்மணை; அழகற்றவள், சீர்கேடி.

**அறுமான்** – புழுவகை.

**அறுமீன்** – ஆறுமீன் தொகுதியாகிய கார்த்திகை.

**அறுமீன்காதலன்** – முருகக்கடவுள்.

**அறுமுகன்** – ஆறுமுகங்களை உடையவன், முருகக் கடவுள்.

**அறுமுறி** – உடன்படிக்கைப் பத்திரம்.

**அறுமுறைவாழ்த்து** – முனிவர், பார்ப்பார், ஆனிரை, மழை, முடியுடைவேந்தர், உலகு என்னும் ஆறனையும்பற்றிக் கூறும் வாழ்த்து.

**அறுமை** – நிலையின்மை; ஆறு.

**அறுவகைச் சக்கரவர்த்திகள்** – அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புரூரவன், சகரன், கார்த்தவீரியன்.

**அறுவகைத் தானை** - வேற்றானை, வாட்டானை, விற்றானை, தேர்த்தானை, பரித்தானை, களிற்றுத்தானை.

**அறுவகைப் படை** – மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை.

**அறுவகைப் பருவம்** – கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில். இவை முறையே ஆவணி முதல் இரண்டிரண்டு மாதங்களில் அமைவன.

**அறுவகையரிசி** – அருணாவரிசி, உலூவாவரிசி, ஏலவரிசி, கார்போகரிசி, விளவரிசி, வெட்பாலையரிசி.

**அறுவகையுயிர்** – மக்கள், தேவர், பிரமர், நரகர், விலங்கு, பேய்; ஓரறிவுயிர் முதலாக உள்ள ஆறுவகை உயிர்.

**அறுவடை** – கதிரறுப்பு.

**அறுவடைமேரை** – கிராம ஊழிய சுதந்தரம்.

**அறுவரி** – தவணையில் செலுத்தும் வரி.

**அறுவாக்குதல்** – முடித்தல்; சேகரித்தல்.

**அறுவாதல்** – செலவழிந்துபோதல்; முடிதல்; சேகரிக்கப்படுதல்.

**அறுவாய்** – வாள் முதலியவற்றால் அறுபட்ட இடம்; குறைவிடம்; கார்த்திகை நாள்.

**அறுவாய்போதல்** – முற்றுஞ் செலவாதல்.

**அறுவிடுதல்** – வசூலித்துவிடுதல்.

**அறுவிதி** – தீர்ப்பு.

**அறுவு** – முழுமை; நீர்வற்றிய கால்; கடைசிப் பகுதி.

**அறுவை** – ஆடை; சித்திரை நாள்; தோளிலிடும் உறி.

**அறுவையர்** – ஆடை நெய்வோர்.

**அறை** – அடி; மோதுகை; வெட்டுகை; ஓசை; சொல்; விடை; அலை; உள்வீடு; வீடு; பெட்டியின் உட்பகுதி; வகுத்த இடம்; பிள்ளைபெறும் அறை; சதுரங்கம் முதலியவற்றின் கட்டம்; மலைக்குகை; சுரங்கம்; பாத்தி; வஞ்சனை; பாறை; அம்மி; சல்லி; துண்டம்; பாசறை; அறுகை.

**அறைக்கட்டளை** – கோயிலில் நித்தியப் படித்தரப் பண்டங்கள் வைக்கும் இடம்; சிலகாலம் அனுபவித்துப் பின் கோயிலுக்கு விடும்படி அளிக்கப்பட்ட இறையிலி நிலம்.

**அறைக்கட்டு** – வீட்டின் உட்பகுதி; விழாப் பந்தல்.

**அறைக்கீரை** – பாத்திக் கீரைவகை.

**அறைக்கீரைக்காய்** – வெள்ளரிக்காய்.

**அறைக்குழந்தை** – ஈனில்லைவிட்டு நீங்காத குழந்தை.

**அறைகழித்தல்** – மகப்பேற்றுக்குப் பின் அறையினின்று வெளிவருவதற்குரிய சடங்கு.

**அறைகாரன்** – கோயில் சரக்கறைக்கு உரியவன்.

**அறைகுறை** – அறுத்தலும் குறைத்தலுமாக உள்ள நிலை; முற்றுப்பெறாமை; தேவை; துன்பம்.

**அறைகுறைபார்த்தல்** – செப்பனிடுதல்.

**அறைகூவு(று)தல்** – போருக்கு அழைத்தல்; வலிய அழைத்தல்.

**அறைதல்** – அடித்தல்; மோதுதல்; சொல்லுதல்; கடாவுதல்; ஒலித்தல்; பறை முதலியன கொட்டுதல்; மண்ணெறிந்து கட்டுதல்.

**அறைநன்** – அறுப்பவன்; அடிப்பவன்; சொல்லுவோன்.

**அறைப்பிள்ளை** – காண்க: **அறைக்குழந்தை.**

**அறைப்புரை** – அறைவீடு.

**அறைபோக்கு** – அற்றுப்போதல் ; ஒதுங்குகை ; கெட்டழிகை.

**அறைபோதல்** – கீழறுக்கப்படுதல்; கெட்டழிதல்.

**அறைமுறையிடுதல்** – குறை தெரிவித்தல்; இல்லாமை சொல்லி முறையிடுதல்.

**அறையல்** – அறைதல், சொல்லல்.

**அறையிடுதல்** – அறைகூவுதல்.

**அறையினாம்** – கோயில் அறைகாரனுக்கு விட்ட மானியம்.

**அறையுண்ணல்** – அடிக்கப்படுதல்; அறுக்கப்படுதல்.

**அறையோ** – முறையிடும் மொழி; வெற்றிக் களிப்புப்பற்றி வரும் குறிப்புச் சொல்; ஒரு வஞ்சினமொழி.

**அறையோலை** – வரையறை செய்யும் ஆவணம்.

**அறைவகுத்தல்** – புரையோடுதல்.

**அறைவாசல்** – கோயில் சரக்கறை; அறையின் வாயில்.

**அறைவாய்** – கணவாய்.

**அறைவீடு** – மடைப்பள்ளி; அறை; உள்ளறை.

**அன்** – ஆண்பால் வினை விகுதி; தன்மை யொருமை விகுதி; ஆண்பால் பெயர் விகுதி; ஆண்பால் வினையாலணையும் பெயர் விகுதி; சாரியை; எதிர்மறை காட்டும் வடமொழி முன்னொட்டுத் திரிபுசொல்.

**அன்பகம்** – சமுத்திரப் பாலைக்கொடி; அன்பு நிலையம்; அன்புமனம்.

**அன்பகர்** – சமுத்திரப்பாலை.

**அன்பன்** – தோழன்; கணவன்; பக்தன்.

**அன்பிலி** – அன்பில்லாதவன்.

**அன்பு** – தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்று; நேயம்; அருள்; பக்தி.

**அன்புகூர்தல்** – பற்றுக்கொள்ளுதல்.

**அன்புடைக் காமம்** – ஐந்திணைபற்றி நிகழும் ஒத்த காமம்.

**அன்புவைத்தல்** – பற்றுக்கொள்ளுதல்; அபிமானங் காட்டுதல்.

**அன்புறல்** – நேசத்தில் அழுந்தல்.

**அன்மயம்** – மாறு; ஐயம்.

**அன்மை** – அல்லாமை; தீமை.

**அன்மொழி, அன்மொழித்தொகை** – ஐந்தொகை மொழி மேல் பிறதொக்குவரும் தொகை.

**அன்யாபதேசம்** – உள்ளுறை அல்லாத வெளிப்படைப் பொருள்; சாக்கிட்டுச் சொல்லும் சொல்.

**அன்வயத்தார்** – சுற்றத்தார்.

**அன்வயம்** – காண்க: **அன்னுவயம்;** தாதான்மிய குணம்; இயைபு.

**அன்வயித்தல்** – செய்யுளிலும் உரைநடையிலும் ஒரு மொழியை மற்றொன்றோடு பொருட் பொருத்தமுறப் பொருத்துதல்; ஒரு சொல் மற்றொன்றோடு இயைதல்.

**அன்வாதேயம்** – திருமணத்தின் பின்பு தாய்வழி தந்தைவழிச் சுற்றத்தார் கணவன் குலத்தினர் முதலியோரால் பெண்ணுக்குக் கொடுக்கப்படும் சீர்ப்பொருள்.

**அன்றமை** – காற்று.

**அன்றன்று, அன்றாடகம், அன்றாடம்** – நாள்தோறும்.

**அன்றாடங்காய்ச்சி** – நாட்கூலிபெற்று வாழ்வோர்.

**அன்றாடு** – காண்க: **அன்றன்று.**

**அன்றாடுகாசு** – வழங்குகிற நாணயம்.

**அன்றாள்கோ** – அப்பொழுது ஆளும் அரசன்.

**அன்றி, அன்றிக்கே** – அல்லாமல்.

**அன்றியனைத்தும்** – அவையெல்லாம்.

**அன்றியில்** – அன்றி.

**அன்றியும்** – அல்லாமலும்.

**அன்றியுரைத்தல்** – மாறுபட்டுச் சொல்லுதல்.

**அன்றில்** – கிரவுஞ்சப் பறவை; மூலநட்சத்திரம்; மயில்.

**அன்றினார்** – பகைவர்.

**அன்று** – அந்நாள்; மாறுபாடு; ஓர் அசைச்சொல்.

**அன்றுதல்** – சினத்தல்.

**அன்றுமுதல்** – அந்நாள் தொடங்கி.

**அன்றை** – அந்நாள்.

**அன்றைக்கன்று** – அன்றன்று; ஒவ்வொரு நாளும்.

**அன்றைக்கு, அன்றைத்தினம், அன்றைநாள்** – *அந்த நாள்.*

**அன்ன** – *அத்தன்மையானவை; ஓர் அஃறிணைப் பன்மைக் குறிப்பு வினைமுற்று; ஓர் உவம உருபு.*

**அன்னக்களை** – *பசி அல்லது மிக்க உணவால் வரும் சோர்வு.*

**அன்னக்காவடி** – *அன்னப்பிச்சை ஏந்தும் காவடி; வறியவன்; அன்னப்பிச்சை எடுத்துப் பிச்சைக் காரருக்குப் பங்கிடுபவருக்கு ஏற்பட்ட இனாம்.*

**அன்னக்கொடி** – *அன்னம் இடுவதைக் குறிக்கக் கட்டும் கொடி.*

**அன்னக்கொடியோன்** – *பிரமன்.*

**அன்னக்கொண்டி** – *அன்ன வடிவாகச் செய்த பாத்திரம்.*

**அன்னக்கொப்பு** – *அன்னப் பறவையின் வடிவம் செதுக்கிய மகளிர் காதணிவகை.*

**அன்னங்கோருதல்** – *அன்னம் பிடித்தல்; நென் மணி உருவாதல்.*

**அன்னசத்திரம்** – *அறக்கூழ்ச்சாலை.*

**அன்னசாரம்** – *கஞ்சி.*

**அன்னசிராத்தம்** – *பாகம் பண்ணிய உணவு கொண்டு செய்யும் சிராத்தம்.*

**அன்னசுத்தி** – *நெய்; அன்னத்தின்மீது சுத்திக் காகச் சிறிது நெய் இடுகை.*

**அன்னணம்** – *அவ்விதம்.*

**அன்னத்துரோகம்** – *உண்ட வீட்டுக்கு இரண்டகம் பண்ணுகை.*

**அன்னத்துவேடம்** – *உணவில் வெறுப்பு.*

**அன்னத்தூவி** – *அன்னப்புள்ளின் இறகு.*

**அன்னதாதா** – *உணவு கொடுத்து ஆதரிப்போன்.*

**அன்னதாழை** – *காண்க:* **அன்னாசி.**

**அன்னதானக்குறுவை** – *மூன்று திங்களில் விளையும் ஒருவகை நெல்.*

**அன்னதானச் சம்பா** – *சம்பா நெல்வகை.*

**அன்னதானம்** – *சோறு வழங்குகை; காண்க:* **அன்னதானக்குறுவை.**

**அன்னதீபம்** – *அன்னவடிவான கோயில் விளக்கு வகை.*

**அன்னநீர்** – *நீருணவு.*

**அன்னப்பால்** – *அரிசி கொதிக்கும்பொழுது எடுக்கும் கஞ்சி; நோயாளிக்காகக் காய்ச்சும் கஞ்சி.*

**அன்னப்பால்வைத்தல்** – *கஞ்சிகாய்ச்சுதல்.*

**அன்னப்பிராசனம்** – *காண்க:* **சோறூட்டல்.**

**அன்னப்பூ** – *மகளிர் தலையிலணியும் அன்னம் போன்ற அணிவகை.*

**அன்னபக்கம்** – *அபிநயக் கைகளுள் ஒன்று.*

**அன்னபம்** – *ஆலமரம்.*

**அன்னபானம்** – *சோறும் நீரும்.*

**அன்னபிட்சை** – *அன்னமாக வாங்கும் பிச்சை.*

**அன்னபூரணி** – *துர்க்கையின் திருக்கோலங்களுள் ஒன்று.*

**அன்னபே(வே)தி** – *மருந்துச் சரக்குவகை.*

**அன்னபோதம்** – *பாதரசம்.*

**அன்னம்** – *சோறு; புள்வகை; கவரிமா; நீர்; உணவு அருந்திய இடம்; பூமி; ஒருவகை அணி; தங்கம்; மலம்.*

**அன்னம்பாறுதல்** – *புலம்புதல்.*

**அன்னம்பிடித்தல்** – *நென்மணி பால் பற்றுதல்.*

**அன்னமயகோசம்** – *பூதவுடலாகிய உறை; ஐந்து உறையுள் ஒன்று.*

**அன்னமழகியரி, அன்னமழகியரிசி** – *அரிசிவகை.*

**அன்னமுயர்த்தோன்** – *காண்க :* **அன்னக்கொடியோன்.**

**அன்னயம்** – *ஆலமரம்.*

**அன்னரசம்** – *அன்னசத்து.*

**அன்னல்** – *காண்க :* **அனல்;** *புகை.*

**அன்னவசம்** – *வயிறார உண்டதால் வரும் உறக்கம்.*

**அன்னவத்திரம்** – *உணவு உடைகள்.*

**அன்னவம்** – *கடல்.*

**அன்னவன்** – *அத்தன்மையன்; ஒத்தவன்.*

**அன்னவாகி** – *தொண்டை அடியினின்று இரைப் பைக்குச் செல்லும் குழல்.*

**அன்னவாய்க்கை** – *அபிநயக் கைவகை.*

**அன்னவில்லை** – *தலையணிவகை.*

**அன்னவூசல்** – *ஊஞ்சல்வகை.*

**அன்னவூர்தி** – *அன்னவாகனம்; பிரமன்.*

**அன்னவூறல்** – *வடிகஞ்சி.*

**அன்னவட்டி** – *சோறு பரிமாறுவதற்குரிய கரண்டி.*

**அன்னன்** – *அப்படிப்பட்டவன்.*

**அன்னாசயம்** – *வயிறு.*

**அன்னாசி** – *பழச்செடிவகை.*

**அன்னாசு** – *பெருஞ்சீரகம்.*

**அன்னாதரம்** – *உணவில் விருப்பு.*

**அன்னாபிடேகம்** – *கடவுளுக்கு அன்னத்தால் செய்யும் திருமுழுக்கு.*

**அன்னாய்** – *ஓர் அசைநிலை.*

**அன்னார்** – *கல்நார்.*

**அன்னால(லா)த்தி** – *ஆலத்திவகை; தெய்வம், மணமக்கள் இவர்களின் முன்பு சுழற்றும் மஞ்சள், சோறு கலந்த ஆலத்தி; சோற்றினால் அமைத்த விளக்கை ஏற்றித் தெய்வம், மண மக்கள் இவர்களின் முன்பு சுற்றும் ஆலத்தி.*

**அன்னான்** – *அன்னவன்; அவன்.*

**அன்னியக்குடி** – *புறக்குடி.*

**அன்னியகுணசகனம்** – பிறர் குணத்தை அழுக்காறின்றிப் பொறுக்கையும், பிறர் குற்றம் பொறுக்கையும்.

**அன்னியதரம்** – இரண்டிலொன்று.

**அன்னியதா** – வேறாக.

**அன்னியதாக்கியாதி** – புகழ் ஐந்தனுள் ஒன்று.

**அன்னிதாஞானம்** – மாறுபட்ட அறிவு, விபரீத ஞானம்.

**அன்னியநாமகரணம்** – இரவல் பேர்.

**அன்னியபரம்** – வேறொன்றைப் பற்றியது.

**அன்னியபரன்** – வேறோர் இடத்து மனம் பற்றியவன்.

**அன்னியபாவம்** – வேறாயிருக்கை.

**அன்னியபிருதம், அன்னியபுட்டம்** – குயில்.

**அன்னியம்** – வேறாகை; வேறானது; அயல்நாட்டுள்ளது; அயல்; குயில்.

**அன்னியமுட்டுதல்** – சந்ததியற்றுப் போதல், மரபற்றுப் போதல்.

**அன்னியன்** – புறம்பேயுள்ளவன்; பிறன்; அயலான்; பிறநாட்டான்.

**அன்னியாபதேசம்** – வெளிப்படையான பொருள்.

**அன்னியாயக்காரன்** – வாதி, வழக்குத் தொடுப்போன்.

**அன்னியாயம்** – அநியாயம்; பிராது.

**அன்னியோன்னியபாவம்** – ஒன்று மற்றொன்று ஆகாமை.

**அன்னியோன்னியம்** – ஒற்றுமை.

**அன்னியோன்னியாச்சிரயம்** – ஒன்றையொன்று பற்றுதல் என்னும் குற்றம்.

**அன்னியோன்னியாலங்காரம்** – ஒன்றற்கொன்று உதவியணி.

**அன்னுவயம்** – சம்பந்தம்; காரணகாரியங்களின் நியதசம்பந்தம்; சாதன சாத்தியங்களின் உடனிகழ்ச்சி; கொண்டுகூட்டு; குலம்.

**அன்னுவயம்பண்ணுதல்** – பொருத்தமுறச் சொற்களைக் கொண்டுகூட்டுதல்.

**அன்னுவயித்தல்** – பின்பற்றுதல்; செய்யுளில் தொடரைப் பொருட் பொருத்தமுற ஒழுங்கு படுத்துதல்.

**அன்னுழி** – அப்பொழுது.

**அன்னுழை** – அவ்விடம்.

**அன்னை** – தாய்; தமக்கை; தோழி; பார்வதி.

**அன்னோ** – ஓர் இரக்கக் குறிப்பு; ஒரு வியப்புக் குறிப்பு.

**அன்னோன்** – அத்தன்மையன்.

**அன்னோன்றி** – வலியற்றவன்.

**அனகம்** – பாவமற்றது; புண்ணியம்; அழுக்கில்லாதது; அழகு; சாந்தம்; புல்லுருவி.

**அனகன்** – பாவமில்லாதவன்; குற்றமில்லாதவன்; அழகுள்ளவன்; கடவுள்.

**அனகை** – பாவமற்றவள்.

**அனங்கத்தானம்** – காமன்கோட்டம்.

**அனங்கம்** – உடலில்லாதது; மல்லிகை; இருவாட்சி; வானம்; உள்ளம்.

**அனங்கன், அனங்கு** – மன்மதன்.

**அனங்காகமம்** – காமநூல்.

**அனசனம், அனசனவிரதம்** – சமணரின் உண்ணாநோன்பு.

**அனசூயம்** – பொறாமையின்மை.

**அனத்தம்** – பயனற்றது; பொல்லாங்கு.

**அனத்தியயனம்** – வேதம் முதலியன ஓதாது நிறுத்துகை; வேதம் முதலியன ஓதத் தகாத காலம்.

**அனதிகாரி** – உரிமை பெறாதவன்.

**அனந்தசத்தி** – வரம்பிலா ஆற்றல்.

**அனந்தசதுட்டயம்** – ஆன்மாவின் முத்திக்குரிய நான்கு சாதனங்கள்; அவை: அனந்த ஞானம், அனந்த தரிசனம், அனந்த வீரியம், அனந்த சுகம்.

**அனந்தசதுர்த்தசி** – திருமாலைப் பூசித்தற்குரிய சாந்திர பாத்திரபதம் எனப்படும் புரட்டாசி மாத வளர்பிறை பதினான்காம் நாள்.

**அனந்தசயனம்** – ஆதிசேடனாகிய திருமால் படுக்கை; பாம்புப் படுக்கை; திருவனந்தபுரம்.

**அனந்தசயனன், அனந்தசாயி** – அனந்தன் என்னும் பாம்பின் மேல் பள்ளிகொண்டவன்.

**அனந்தபீதம்** – மருக்கொழுந்து.

**அனந்தம்** – அளவின்மை; அளவற்றது; அழிவின்மை; வானம்; ஒரு பேரெண்; பொன்; மயிற்சிகை; அறுகு; குப்பைமேனி; சிறுகாஞ்சொறி; நன்னாரி; வேலிப்பருத்தி; கோளக பாடாணம்.

**அனந்தமுடிச்சு** – காதணிவகை.

**அனந்தர்** – உறக்கம்; மயக்கம்; பருத்தி; அனந்தல்; உணர்ச்சி; மனத்தடுமாற்றம்; தீர்த்தங்கரருள் ஒருவர்; உருத்திரருள் ஒருவர்.

**அனந்தரத்திலவன்** – அடுத்த வழித்தோன்றல்.

**அனந்தரம்** – பின்பு; வேலிப்பருத்தி; சிலாவி என்னும் கட்டட உறுப்பு.

**அனந்தரவன்** – மருமக்கள்தாயக் குடும்பத்தில் காரணவனுக்கு இளையவன்.

**அனந்தரவாரிசு** – அடுத்த உரிமை உள்ளவன்.

**அனந்தல்** – தூக்கம்; மயக்கம்; மந்தவொலி.

**அனந்தலோசனன்** – கணக்கற்ற கண்களையுடைய புத்தன்.

**அனந்தவாசி** – 'பல' என்னும் பொருளைக் குறிக்கும் சொல்.

**அனந்தவிபவை** – பார்வதி.

**அனந்தவிரதம்** – பாத்திரபதம் எனப்படும் புரட்டாசி மாத வளர்பிறை பதினான்காம் நாளில் திருமாலை வணங்கி நோற்கும் ஒரு நோன்பு.

**அனந்தவீரியம்** – கடையிலா ஆற்றல்.

**அனந்தற்பத்தி** – கொடிபடர்ந்த பந்தல்.

**அனந்தன்** – ஆதிசேடன்; கடவுள்; அருகன்; சிவன்; திருமால்; பிரமன்; வாசுகி என்னும் நாகம்; பலராமன்; வெடியுப்பு; பதஞ்சலி; சோரபாடாணம்.

**அனந்தன்சம்பா** – பொங்கற்சம்பா என்னும் நெல்வகை.

**அனந்தாழ்வான்** – ஆதிசேடன்; இராமாநுசரின் சீடரான ஒரு வைணவ ஆசாரியர்; ஒரு பழைய நாணயம்.

**அனந்தை** – பூமி; திருவனந்தபுரம்; சிவசக்திகளுள் ஒன்று; பதினாறு கலையுள் ஒன்றான யோகத்தானம்; கொற்றான்; கடுமரம்; செங்காந்தள்; சிறுகாஞ்சொறி; நன்னாரி; குப்பைமேனி; சீந்தில்; அறுகு.

**அனயகம்** – இருவாட்சி; மல்லிகை.

**அனயம்** – தீவினை; கேடு; நன்மையின்மை; துன்பம்.

**அனர்த்தப்படுதல்** – துன்பப்படுதல்; குழப்பமாய் இருத்தல்.

**அனர்த்தபரம்பரை** – துன்பத் தொடர்ச்சி.

**அனர்த்தம்** – பொருளல்லாதது; பயனற்றது; துன்பம்; கேடு.

**அனர்வன்** – காண்க: **அனரவன்**.

**அனரசம்** – பண்ணியவகை.

**அனரவன்** – காந்தள்.

**அனல்** – தீ; வெப்பம்; இடி; கொடிவேலி.

**அனல்காலி** – காண்க : **சூரியகாந்தக்கல்**.

**அனல்(லு)தல்** – அழலுதல்.

**அனல்வீசுதல்** – வெக்கையடித்தல்.

**அனல்வென்றி** – தங்கம்.

**அனலகம்** – பேய்க்கொம்மட்டி.

**அனலடுப்பு** – கூண்டடுப்பு.

**அனலநட்சத்திரம்** – செவ்வாய் நின்ற நாளுக்கு ஏழு, பதினான்கு, பதினாறு, இருபத்தைந்தாம் நாள்கள்.

**அனலம்** – நெருப்பு; காண்க : **அனலநட்சத்திரம்**; கொடிவேலி.

**அனலன்** – அக்கினிதேவன்; எட்டு வசுக்களுள் ஒருவன்.

**அனலாச்சியம்** – நரகவகை.

**அனலாடி** – சிவன்.

**அனலி** – நெருப்பு; சூரியன்.

**அனலிமுகம்** – சூரியபுடம்.

**அனலேறு** – இடி.

**அனவத்தை** – முடிவுபெறாமைக் குற்றம்.

**அனவரததானன்** – நெல் முதலியன அளக்கும் மரக்கால்வகை.

**அனவரதம்** – எப்பொழுதும்.

**அனற்கல்** – சிக்கிமுக்கிக்கல்.

**அனற்குவை** – நெருப்பிடு கலம்.

**அனற்சுக்கிரன்** – கண்ணோய் வகை.

**அனற்பொறி** – தீப்பொறி.

**அனற்றுதல்** – எரித்தல்; தகித்தல்; சினத்தல்; வீணே உதவுதல்; வயிறுளைதல்; முணங்குதல்.

**அனன்னியம்** – வேறன்மை; பிரிப்பற்ற தன்மை.

**அனன்னியன்** – தான் கொண்ட புகலிடத்தைத் தவிர வேறு கதியைத் தேடாதவன்.

**அனன்னுவயம்** – சாதனை சாத்தியம் தம்மில் கூட்ட மாத்திரம் சொல்லாதே இரண்டன் உண்மையைக் காட்டும் திருட்டாந்த ஆபாசம்.

**அனன்னுவயாலங்காரம்** – இயைபின்மையணி.

**அனனிலம்** – அனல்நிலம்; பாலைநிலம்.

**அனனுபாடணம்** – தோல்வித் தானங்களுள் ஒன்று.

**அனாகதநாதம்** – பராசக்தி.

**அனாகதம்** – காண்க: **அனாகதவெடுப்பு**; ஆறு ஆதாரங்களுள் ஒன்று; நிகழாத செய்தி; எதிர்காலம்; புதிய சீலை.

**அனாகதவெடுப்பு** – தாளம் முன்னும் பாட்டுப் பின்னுமாக வரும் எடுப்புவகை.

**அனாகுலன்** – கவலையற்றவன்.

**அனாசக்தன்** – பற்றில்லாதவன்.

**அனாசக்தி** – பற்றின்மை.

**அனாசாரம்** – ஒழுக்கமின்மை.

**அனாசி** – அன்னாசி.

**அனாசிரயம்** – பற்றுக்கோடு அற்றது.

**அனாசிருதன்** – பிறரைச் சார்ந்திராதவன்; சிவபேதம்.

**அனாசிருதை** – பதினாறு கலையுள் ஒன்றான யோகத்தானம்; அனாசிருதனின் சக்தி.

**அனாதரம்** – புறக்கணிப்பு.

**அனாதரவு** – உதவியின்மை.

**அனாதரித்தல்** – புறக்கணித்தல், ஏற்றுக் கொள்ளாது தள்ளுதல்.

**அனாதன்** – திக்கற்றவன்.

**அனாதி** – தொடக்கமில்லாதது; தொடக்கம் தெரியாதது; கடவுள்; சிவபிரான்; பார்வதி; அனாதித்திட்டு.

**அனாதிக்கரம்பு** – காண்க: **அனாதித்தரிசு**.

**அனாதிகாரணம்** – மூலகாரணம்.

**அனாதிசித்தன்** – அனாதியே சித்தனாயிருப்பவன்.

**அனாதிசைவன்** – சதாசிவமூர்த்தி.

**அனாதித்தரிசு, அனாதித்திட்டு** – நெடுங்காலம் பயிரிடப்படாத நிலம்.

**அனாதிநித்தம்** – என்றும் நித்தியமாயுள்ளது.

**அனாதிப்பஞ்சர்** – காண்க: **அனாதித்தரிசு.**

**அனாதிபந்தம்** – இயல்பாகவே உள்ள பாசக் கட்டு.

**அனாதிபாழ்** – நெடுங்காலம் பாழடைந்துள்ள இடம்.

**அனாதிபீடு** – காண்க: **அனாதித்தரிசு.**

**அனாதிபெத்தசித்துரு** – ஆன்மா.

**அனாதிபெத்தன்** – சீவான்மா.

**அனாதிபோதம்** – இயல்பாகவே பாசங்களினின்று நீங்குகை.

**அனாதிமுத்தன்** – கடவுள்.

**அனாதேயம்** – பிரகிருதி தத்துவவகை.

**அனாமத்து** – தனியான; வேறுபட்ட.

**அனாமத்துச்சிட்டா** – காண்க: **அமானத்துச் சிட்டா.**

**அனாமயம்** – நோயின்மை.

**அனாமயன்** – நோயற்றவன்; அருகன்.

**அனாயம்** – முறைகேடு; வீண்.

**அனாயாசம்** – வருத்தமின்மை.

**அனாரதம்** – எப்போதும்.

**அனாரியதித்தம்** – காண்க: **நிலவேம்பு.**

**அனாவசியகம், அனாவசியம்** – தேவையல்லாதது.

**அனாவிதம்** – வீணைவகை.

**அனாவிருட்டி** – மழையின்மை.

**அனாவிலன்** – சுக்கிரன்.

**அனான்மவாதம்** – ஆன்மா இல்லையென்று கூறும் வாதம்.

**அனான்மா** – ஆன்மாவின் வேறான அசித்து.

**அனி** – நெற்பொரி; பெரிய பெட்டி.

**அனிகம்** – சிவிகை; படை; கூட்டம்.

**அனிச்சம்** – மோந்தால் வாடும் பூவகை.

**அனிச்சை** – நாகமல்லி; விருப்பின்மை.

**அனிச்சைப் பிராரத்தம்** – விருப்பின்றி இன்ப துன்பம் நுகரும் பழவினை.

**அனிசம்** – எப்பொழுதும்.

**அனிஞ்சில்** – வில்வம்.

**அனிட்டம்** – வெறுப்பானது.

**அனித்தம்** – காண்க: **அனிச்சம்**; சந்தனம்; நிலையில்லாதது.

**அனித்தியம்** – பொய்; நிலையில்லாதது; சந்தனம்.

**அனிதம்** – கணக்கற்றது.

**அனிருதம்** – பொய்; அநித்தியம்; உழவு.

**அனிலச்சூலை** – வாதசூலை.

**அனிலநாள்** – காண்க: **சுவாதி.**

**அனிலம்** – காற்று; வாதரோகம்; பிறக்கை; அச்சம்.

**அனிலன்** – வாயுதேவன்; பிராணவாயு; எட்டு வசுக்களுள் ஒருவன்.

**அனிழம்** – காண்க : **அனுடம்.**

**அனீகம்** – படை; அக்குரோணியில் பத்தில் ஒரு பங்கு; போர்.

**அனீகனி** – தும்பை.

**அனீகினி** – படை.

**அனீச்சுரத்துவம்** – ஈசத்துவமின்மை.

**அனீசுவரவாதி** – கடவுளில்லை என்போன்.

**அனீசு** – காண்க: **பெருஞ்சீரகம்;** நட்சத்திரச் சீரகம்.

**அனு** – பிரதிச் செயல்; பிரதி; மோனையெழுத்து; தொடர்ச்சி; ஒழுங்கு; அண்மை; நோய்; தாடை; முகம்; நாகணம் என்னும் மணப்பொருள் தரும் மரம்; வடமொழி முன்னொட்டுகளுள் ஒன்று; மஞ்சள்; ஆயுதம்; இறப்பு.

**அனுக்கம்** – வருத்தம்; அச்சம்; பலவீனம்; முணக்கம்; கம்மித இசை; பாலநோய்; சந்தனம்.

**அனுக்கல்** – ஒன்றோடு ஒன்று முட்டச் செய்தல்; கெடுத்தல்; வருத்துதல்.

**அனுக்காட்டுதல்** – சிறிது தோன்றுதல்; குறிப்புக் காட்டுதல்.

**அனுக்கிரகம்** – அருள்; ஐந்தொழிலுள் ஒன்று.

**அனுக்கிரகித்தல்** – அருள்செய்தல்.

**அனுக்கிரமணி, அனுக்கிரமணிகை** – பொருள் அட்டவணை; நூற்பதிகம்.

**அனுக்கிரமம்** – ஒழுங்குமுறை.

**அனுக்குசிரம்** – சிர அபிநயவகை.

**அனுக்குதல்** – வருத்துதல்; கெடுத்தல்; யாழ்ப்பாணத்திலுள்ள கொக்கான் முதலிய விளையாட்டில் தொடக்கூடாததைத் தொடுதல்.

**அனுக்கை** – அனுமதி.

**அனுகதம்** – தொடர்ந்து வருவது.

**அனுகம்** – காண்க: **செஞ்சந்தனம்.**

**அனுகம்பம்** – இரக்கம்.

**அனுகமனம்** – உடன்கட்டையேறுகை.

**அனுகரணம்** – ஒன்றன் செயல்போலச் செய்கை.

**அனுகரணவுபயவோசை** – இரட்டை ஒலிக் குறிப்பு.

**அனுகரணவோசை** – ஒலிக்குறிப்பு.

**அனுகரித்தல்** – ஒன்றனைப்போல் ஒழுகுதல்.

**அனுகற்பம்** – மந்தையினின்று எடுத்த பசுவின் சாணத்தைக் கொண்டு முறைப்படி உண்டாக்கிய திருநீறு.

**அனுகன்** – கணவன்; பின் தொடர்வோன்; வேலைக்காரன்; காமுகன்.
**அனுகாரம்** – ஒன்றைப்போலச் செய்கை.
**அனுகுணம்** – ஏற்ப உள்ளது.
**அனுகுணாலங்காரம்** – தன்குணமிகையணி.
**அனுகூலசத்துரு** – அடுத்துக் கெடுக்கும் பகை.
**அனுகூலம்** – உதவி; காரியசித்தி; நன்மை.
**அனுகூலன்** – இதமாக நடப்பவன்; உதவுவோன்.
**அனுகூலி** – அனுகூலமாயிருப்பவன்(ள்).
**அனுகூலித்தல்** – பயன்படுதல்; குணமாதல்; உதவி செய்தல்.
**அனுச்சை** – அனுமதி.
**அனுசங்கம்** – சம்பந்தம்.
**அனுசந்தானம்** – சிந்திக்கை; இடையறாது ஓதுகை.
**அனுசந்தித்தல்** – சிந்தித்தல்; சொல்லுதல்.
**அனுசயம்** – பெரும்பகை; வழக்காடுகை; கழிவிரக்கம்; அனுபந்தம்.
**அனுசரணம்** – சார்ந்தொழுகுதல்.
**அனுசரணை** – சார்ந்தொழுகுகை; உதவி.
**அனுசரித்தல்** – பின்பற்றுதல்; ஆமோதித்தல்; வழிபடுதல்; கொண்டாடுதல்.
**அனுசரிப்பு** – பின்பற்றுகை; இணக்கம்.
**அனுசன்** – தம்பி.
**அனுசாகை** – கிளைக்குள் கிளை.
**அனுசாசனம்** – அறவுரை; அறிவுரை.
**அனுசாரணை** – வீணையின் பக்க நரம்பு.
**அனுசாரம்** – கோள் பின்னோக்கிச் செல்லும் கதி; ஒத்தபடி.
**அனுசாரி** – பின்பற்றுவோன்; சீடன்.
**அனுசிதம்** – தகாதது; வாயிலெடுத்தல்; பொய்; கெடுதி.
**அனுசுருதி** – ஒத்த சுருதி.
**அனுசூதம்** – இடைவிடாதது.
**அனுசூதன்** – விடாது தொடர்ந்திருப்பவன்.
**அனுசை** – தங்கை.
**அனுசைவர்** – சிவதீட்சை பெற்ற சத்திரியர்; வைசியர்.
**அனுஞ்ஞாலங்காரம்** – வேண்டலணி.
**அனுஞ்ஞை** – அனுமதி.
**அனுட்டணம்** – வெப்பமின்மை; சோம்பல்.
**அனுட்டயம்** – அனுட்டிக்கப்படுவது.
**அனுட்டாதா** – அனுட்டிக்கிறவன்; தொழில் முயன்று செய்வோன்:
**அனுட்டானம்** – ஒழுக்கம்; வழக்கம்; சந்தியா வந்தனம்.
**அனுட்டானித்தல், அனுட்டித்தல்** – ஒழுகுதல்; ஆசரித்தல்; கைக்கொள்ளுதல்; பின்பற்றுதல்.

**அனுட்டுப்பு** – ஒரு வடமொழிச் சந்தம்.
**அனுடம்** – பதினேழாம் நாள்மீன்.
**அனுத்தமம்** – தனக்குமேல் இல்லாதது.
**அனுத்துருதபஞ்சமம்** – குறிஞ்சியாழ்த் திறவகை.
**அனுதபித்தல்** – கழிந்ததற்கு இரங்குதல்; பிறர் இன்ப துன்பங்களில் அவரோடு ஒன்றுகை.
**அனுதாத்தம்** – படுத்தலோசை.
**அனுதாபம்** – இரக்கம்; கழிவிரக்கம்; பிறர் இன்ப துன்பங்களில் அவரோடு ஒன்றுகை.
**அனுதாரம்** – காப்பு.
**அனுதானம்** – தாளவகை.
**அனுதினம், அனுதினாதினம்** – நாள்தோறும்.
**அனுநாசிகம்** – மெல்லெழுத்து.
**அனுநாதம்** – எதிரொலி.
**அனுப்படி** – கையிருப்பு; காரியங்கள்; கடந்த ஆண்டுவருவாய்.
**அனுப்படிபாக்கி** – கையிருப்பு.
**அனுப்படியிறக்குதல்** – பழைய பாக்கியைப் புதுக் கணக்கிற்குக் கொண்டுவருதல்.
**அனுப்பிரவேசம்** – தொடர்ந்து புகுகை.
**அனுப்பிராசம்** – வழியெதுகை.
**அனுப்புதல்** – போகச்செய்தல்; வழிவிடுதல்.
**அனுபந்தசதுட்டயம்** – இலக்கியத்தின் இன்றியமையா நாற்கூறுகள்; அவை : பொருள், தொடர்பு, பயன், அதிகாரி.
**அனுபந்தம்** – உறவின்முறை; நூலின்பின் சேர்க்கப்படும் துணைச்செய்தி; பிற்சேர்க்கை; தடை; உதவி.
**அனுபந்தன்** – தீமைக்கு உடன்படுபவன்.
**அனுபத்தி** – பொருத்தமின்மை.
**அனுபந்தி** – விக்கல்; தாகம்.
**அனுபமம்** – நிகரில்லாதது, மிகச் சிறந்தது.
**அனுபமன்** – ஒப்பில்லாதவன்.
**அனுபமை** – ஒப்பில்லாதது; தென்மேற்றிசைப் பெண்யானை; மிகச் சிறந்தது.
**அனுபல்லவி** – கீர்த்தனத்தில் பல்லவியை அடுத்து வரும் இரண்டாம் உறுப்பு.
**அனுபவக்காட்சி** – நேராகக் கண்டறியும் அறிவு.
**அனுபவசாலி** – பட்டறிவு மிக்கவன்.
**அனுபவம்** – நுகர்ச்சி; பட்டறிவு.
**அனுபவி** – இன்பமாய் வாழ்பவன்; ஆன்மஞானி.
**அனுபவித்தல்** – துய்த்தல்; உரிமையாகக் கையாளுதல், இன்ப நுகர்தல்; அனுபவபூர்வமாய் அறிதல்.
**அனுபவை** – பார்வதி.
**அனுபாடணம்** – கூறியது கூறல்.
**அனுபாதம்** – சரணங்களில் ஒன்று; கணக்குவகை.
**அனுபாலனம்** – பாதுகாப்பு.

**அனுபாவம்** – கருத்தை விளக்கும் நடிப்பு; திட எண்ணம்; உயர்வு.

**அனுபானம்** – மருந்துக்குத் துணையானது.

**அனுபூதி** – பட்டறிவு.

**அனுபூதிமான்** – ஞானி.

**அனுபோகம்** – இன்பநுகர்ச்சி; கையாட்சி; பழக்கம்; நுகர வேண்டிய தீவினைப் பயன்.

**அனுபோகி** – சுகானுபவம் உடையவன்.

**அனுமக்கொடியோன்** – அனுமன் உருவம் பொறித்த கொடியையுடைய அருச்சுனன்.

**அனுமதம்** – வீணைவகை.

**அனுமதி** – சம்மதம்; சதுர்த்தசியோடு கூடிய முழுமதி; முழுமதி.

**அனுமதை** – ஒருவகைப் புல்.

**அனுமந்தச்சம்பா** – சம்பா நெல்வகை.

**அனுமந்தன்** – அனுமான்.

**அனுமரணம்** – உடன்கட்டையேறுதல்.

**அனுமனித்தல்** – கனைத்தல்.

**அனுமாசக்காய்** – காண்க: **பொன்னாங்காணி.**

**அனுமானப்பிரமாணம்** – கருதலளவை.

**அனுமானபலன்** – நியாய விசாரணையில் ஐயத்தால் கிடைக்கும் நன்மை.

**அனுமானம்** – கருதலளவை; ஐயம்.

**அனுமானித்தல்** – அனுமானப் பிரமாணத்தால் அறிதல்; உத்தேசித்தல்; ஐயப்படுதல்; கனைத்தல்.

**அனுமானிதம்** – குதிரைக் கனைப்பு.

**அனுமித்தல்** – அனுமானித்தறிதல்.

**அனுமிதி** – அனுமானத்தால் உண்டாகும் அறிவு.

**அனுமேயம்** – அனுமானத்தால் அறியத்தக்கது.

**அனுமோனை** – இனவெழுத்தால் வரும் மோனைத்தொடை.

**அனுயாத்திரை** – கடவுள் பெரியோர் என்றிவரது புறப்பாட்டில் உடன்செல்லுகை.

**அனுயோகம்** – வினா.

**அனுரதம்** – ஆசையாயிருத்தல்.

**அனுரதி** – அன்பு; மதிப்பு.

**அனுராகம்** – அன்பு; காமப்பற்று.

**அனுராகமாலை** – பிரபந்த வகை.

**அனுரூபம்** – ஏற்றது.

**அனுவசனம்** – ஒத்த வாக்கியம்.

**அனுவட்டம்** – ஒருவகை உருண்டை முத்து.

**அனுவ(வா)தித்தல்** – திரும்பச்சொல்லுதல்.

**அனுவயித்தல்** – காண்க: **அன்னுவயித்தல்.**

**அனுவர்த்தனம்** – காண்க: **அனுசரிப்பு.**

**அனுவர்த்தித்தல்** – காண்க: **அனுசரித்தல்.**

**அனுவழி** – புதன்.

**அனுவாகம்** – வேதத்தின் உட்பகுப்பு.

**அனுவாதம்** – முன்னர்ப் பெறப்பட்டதொன்றனைப் பின்னரும் எடுத்தோதுகை.

**அனுவாதவொற்றி** – மறுஒற்றி.

**அனுவாதிசுவரம்** – இணக்கமுள்ள இசையொலி.

**அனுவிருத்தி** – தொடர்ச்சி; கூடவிருக்கை.

**அனுவுரு** – ஒத்த உருவம்.

**அனுவெழுத்து** – மோனையெழுத்து.

**அனூபம்** – சதுப்புநிலம்; படுகை நிலம்; எருமைக் கடா.

**அனூரு** – முடவன்; சூரியன்; புதன்.

**அனேகம்** – பல; காலம்.

**அனேகமாய்** – பெரும்பாலும்; பலபடியாக.

**அனேகன்** – ஆன்மா.

**அனேகாந்தவாதி** – ஆருகதன்.

**அனேகாந்திகம்** – பலவிதம்; காண்க: **அனைகாந்திகம்.**

**அனேகான்மவாதம்** – ஆன்மாக்கள் பல உண்டு என்னும் கொள்கை.

**அனை** – அன்னை; அந்த; ஒருவகை மீன்.

**அனைக்கியம்** – ஒற்றுமையின்மை.

**அனைகாந்திகம்** – ஏதுப்போலிகளுள் ஒன்று; பல முடிவுடையது.

**அனைத்து** – அவ்வளவு; அத்தன்மையது; எல்லாம்.

**அனைத்தும்** – எல்லாம்.

**அனைய** – அத்தன்மையான; ஒத்த.

**அனையன்** – அன்னவன்.

**அனைவரும்** – எல்லாரும்.

# ஆ

**ஆ** – இரண்டாம் உயிரெழுத்து; குரலிசையின் எழுத்து; பெற்றம், மரை, எருமை இம் மூன்றன் பெண்பாற் பெயர்; இடபம்; ஆன்மா; காண்க: **ஆச்சா;** விதம்; ஆகுகை; ஆவது; ஓர் இரக்கக்குறிப்பு; வியப்புக்குறிப்பு; இகழ்ச்சிக் குறிப்பு; புழுக்கக்குறிப்பு; நினைவுக் குறிப்பு; ஈற்றில் வரும் வினாவிடைச்சொல்; எதிர் மறையைக் குறிக்கும் சாரியை; எதிர்மறை இடைநிலை; பலவின்பால் எதிர்மறை வினை முற்று விகுதி; உடன்பாட்டு இறந்தகால வினையெச்ச விகுதி; தொடங்கி அல்லது வரையும் எனப் பொருள் தரும் ஒரு வடமொழி இடைச்சொல்.

**ஆஅ** – வியப்பு, இரக்கம், அவலம் இவற்றின் குறிப்பு.

**ஆக்கக்கிளவி** – ஆக்கம் உணர்த்தும் சொல்; செயற்கையை உணர்த்தும் ஆயினான், ஆயினாள் முதலியனவாய் வழங்கும் சொல்.

**ஆக்கங்கூறுதல்** – வாழ்த்துதல்.

**ஆக்கச்சொல்** – காண்க: **ஆக்கக்கிளவி.**

**ஆக்கஞ்செப்பல்** – தன் நெஞ்சில் வருத்தம் மிகுகின்றபடியைப் பிறர்க்கு உரைக்கை.

**ஆக்கணாங்கெளிறு** – கெளிற்று மீன்வகை.

**ஆக்கதம்** – முதலை.

**ஆக்கந்திதம்** – குதிரை நடைவகையுள் ஒன்று.

**ஆக்கப்பாடு** – பேறு.

**ஆக்கப்பெயர்** – காரணக் குறியினாலாவது இடுகுறியினாலாவது இடையில் ஆக்கப்பட்ட பெயர்; மரபுவழிப் பெயருக்கு மாறுபட்டது.

**ஆக்கப்பெருக்கம்** – வருமானம்.

**ஆக்கப்பொருள்** – ஆகுபெயர்ப் பொருள்.

**ஆக்கம்** – காண்க: **ஆக்கக்கிளவி;** அமைத்துக் கொள்ளுகை; கைகூடுகை; உண்டுபண்ணுகை; படைப்பு; செல்வம்; பொன்; பெருக்கம்; இலாபம்; ஈட்டம்; கொடிப்படை; திருமகள்; மங்களகரம்; வாழ்த்து.

**ஆக்கமகள்** – திருமகள்.

**ஆக்கர்** – படைக்கப்பட்ட தேவர்; திரிந்து கொண்டே துணி முதலியவை விற்போன்; துறப்பணம்.

**ஆக்கரிவாள்** – அறுவாள்வகை; தோட்டவேலைக்குதவும் கத்தி.

**ஆக்கல்** – காண்க: **ஆக்குதல்.**

**ஆக்கவினை** – வளர்ச்சிப்பணி; ஆக்கத்தால் வரும் வினைச்சொல்.

**ஆக்கவினைக்குறிப்பு** – ஆக்கச் சொல்லைக் கொண்டிருக்கும் வினைக்குறிப்புச் சொல்.

**ஆக்கவும்மை** – சொல்லின் பொருள் பிறிதொன்றுமாயிருத்தலைக் குறிப்பிடும் 'உம்' இடைச்சொல்; பாலுமாயிற்று எனின் அதுவே மருந்துமாயிற்று என்பதைக் குறிப்பது போல்வது.

**ஆக்கன்** – செயற்கையானது.

**ஆக்காட்டுதல்** – வாயைத்திறத்தல்.

**ஆக்கியரிவாள்** – வெற்றிலைக் காம்பரியும் கத்தி.

**ஆக்கியாதம்** – சொல்லப்பட்டது; அறிவிக்கப்பட்டது; வினைச்சொல்.

**ஆக்கியானம்** – கட்டுக்கதை; வெளிப்படுத்துதல்; பேசுதல்.

**ஆக்கியோன்** – படைத்தோன்; நூல்செய்தவன்.

**ஆக்கிரகம்** – விடாப்பிடி; கடுஞ்சினம்; கைக்கொள்ளுகை; கட்டாயம்; அருளுகை.

**ஆக்கிரகாயணி** – புது நெல்லைக்கொண்டு மிருகசீரிடப் பூரணையில் செய்யப்படும் ஒருவகை ஓமம்; மார்கழி மாத மதிநிறை நாள்; மிருகசீரிடம்.

**ஆக்கிரகித்தல்** – பலவந்தமாயெடுத்தல்; வெல்லல்.

**ஆக்கிரந்திதம்** – குதிரை நடைவகை ஐந்தனுள் ஒன்றான விரைவு நடை.

**ஆக்கிரமணம்** – வலிந்து கவர்கை.

**ஆக்கிரமம்** – அடைதல்; கடந்து போதல்; மேலெழுச்சி; வீரம்.

**ஆக்கிரமித்தல்** – வலிந்து கவர்தல்; உள்ளே அடக்கிக்கொள்ளுதல்; மேற்கொள்ளுதல்.

**ஆக்கிராணப்பொடி** – மூக்குத்தூள்.

**ஆக்கிராணம்** – மோந்துபார்க்கை; மூக்கு; மூக்கில் இடும் மருந்துப்பொடி.

**ஆக்கிராணித்தல்** – மோத்தல்.

**ஆக்கிராந்தம்** – கைக்கொள்ளப்பட்டது; பாரமேற்றப்பட்டது; மறைக்கப்பட்டது; மேலிடப்பட்டது; வெல்லப்பட்டது.

**ஆக்கினாசக்கரம்** – சக்கரம்போல் எங்கும் சுழலும் அரசன் ஆணை.

**ஆக்கினாசத்தி** – அரசனாணையின் வன்மை.

**ஆக்கினாபங்கம்** – ஆணை மீறுகை.

**ஆக்கினேயம்** – அக்கினிக்குரியது; தென்கீழ்த்திசை; காண்க: **ஆக்கினேயாத்திரம்;** ஆக்கினேய புராணம்; சிவாகமத்துள் ஒன்று; திருநீறு.

**ஆக்கினேயாத்திரம்** – அக்கினியைத் தேவதையாகக் கொண்ட அம்பு.

**ஆக்கினை** – தண்டனை; கட்டளை; கட்டைவிரல்.

**ஆக்கினைப்பத்திரம்** – அரசனது எழுத்து மூலமான கட்டளை.

**ஆக்கு** – படைப்பு.

**ஆக்குத்தாய்** – அநீதியாய்.

**ஆக்குதல்** – செய்தல்; படைத்தல்; சமைத்தல்; அமைத்துக்கொள்ளுதல்; மாற்றுதல்; உயர்த்துதல்.

**ஆக்குப்புரை** – சமையற் பந்தல்.

**ஆக்கும்** – போலும்.

**ஆக்குரோசம்** – கடுஞ்சினம்.

**ஆக்குவயம்** – பெயர்.

**ஆக்கெளுத்தி** – கெளிற்று மீன்வகை; கடல் கெளிற்றுவகை.

**ஆக்கேபம்** – காண்க: **ஆட்சேபம்.**

**ஆக்கை** – யாக்கை; உடம்பு; நார்.

**ஆக்கையிலி** – காண்க: **அனங்கன்.**

**ஆக்கொத்துமம்** – காண்க: **சரக்கொன்றை.**

**ஆக்கொல்லி** – ஒரு புழு; தில்லைமரம்.

**ஆக்ஞை** – ஆணை.

**ஆக்வானம்** – தேவதைகளை வேண்டி அழைக்கை.

**ஆக** – மொத்தமாய்; முழுவதும்; அவ்வாறாக; விகற்பப் பொருள் தரும் இடைச்சொல்; நான்காம் வேற்றுமை உருபுடன் வரும் துணைச்சொல்; செய்தி குறிக்கும் இடைச் சொல்; முற்றோடு சேர்ந்து செயவென் எச்சப் பொருள் தரும் இடைச்சொல்; ஓர் அசைச் சொல்.

**ஆகக்கூடி** – ஆகவே; மொத்தத்தில்.

**ஆகக்கொள்ள** – ஆகையால்.

**ஆகச்செய்தே** – ஆகவே.

**ஆகசி** – திப்பிலி.

**ஆகசு** – தவறு; இழிந்தது; பாவம்.

**ஆகட்டு** – ஆகட்டும் என்னும் பொருளில் வரும் சொல்.

**ஆகட்டும்** – ஆம்; ஆகுக.

**ஆகடியம்** – பரிகாசம்; பொல்லாங்கு.

**ஆகண்டலன்** – இந்திரன்.

**ஆகத்தினெய்** – புருவநடு.

**ஆகதம்** – கமகம் பத்தனுள் ஒன்று; கந்தை; பெருக்கிவந்த தொகை; பொய்; அடிக்கை; வருகை.

**ஆகதர்** – சமணர்.

**ஆகதி** – அடையவேண்டியது.

**ஆகந்துகசுரம்** – அருந்துகின்ற உணவு நிமித்த மாயல்லாமல் வேறு ஒட்டுவா ரொட்டி முதலாய காரணங்களால் உண்டாகும் சுரவகை.

**ஆகந்துகம்** – இடையில் வந்தேறியது.

**ஆகந்துகமலம்** – ஆன்மாவிடத்து இயல்பாக வன்றி இடையே தோன்றும் மாயை கன்மங் களாகிய இரண்டு மலங்கள்.

**ஆகப்பாடு** – மொத்தம்.

**ஆகம்** – உடல்; மனம்; மார்பு; சுரை.

**ஆகம்பிதசிரம்** – சிர அபிநயவகை.

**ஆகம்பிடதம்** – மேலும் கீழுமாகத் தலையசைத் தல்; சம்மதிக்குறி காட்டும் முகம்.

**ஆகம்பிதமுகம்** – சம்மதித்தற்கு அறிகுறியாக மேல்கிழாகத் தலையாட்டுகை.

**ஆகமங்களோதினோன்** – சிவபிரான்.

**ஆகமசாத்திரம்** – சைவ வைணவ சாக்த சமண சமய நூல்கள்.

**ஆகமப்பிரமாணம்** – காட்சியினாலும் அனுமானத் தினாலும் அறியப்படாத பொருளையும் அறிவிக்கும் உண்மையுரையாகிய சாத்திரம்.

**ஆகமம்** – வேதசாத்திரங்கள்; முதல்வன் வாக்கு; வருகை; தோன்றல் விகாரத்தால் வரும் எழுத்து.

**ஆகமமலைவு** – ஆகமவிதிக்கு முரண்; சாத்திரப் பிரமாணத்திற்கு மாறாக வருவது.

**ஆகமவளவை** – காண்க: **ஆகமப்பிரமாணம்.**

**ஆகமனம்** – வருகை.

**ஆகமாந்தம்** – ஆகமங்களில் முடிவாகக் கொள்ளப் படும் சைவசித்தாந்தம்.

**ஆகரம்** – இரத்தினச் சுரங்கம்; உறைவிடம்; அடி நிலை; கூட்டம்; காலாங்கபாடாணம்.

**ஆகரன்** – குடியிருப்போன்; கிண்டுவோன்; சுந்தர மூர்த்தி நாயனார்.

**ஆகரி** – ஒரு பண்; திப்பிலி; சிறுகட்டுக்கொடி.

**ஆகரித்தல்** – தருவித்தல்.

**ஆகருடணம்** – இழுக்கை; அழைக்கை; அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று.

**ஆகருடம்** – விற்பழக்கம்; சூதாடுகை; சூதாடு பலகை; கவறு; இழுக்கை.

**ஆகவனம்** – பிணிக்கை; விரும்புகை; எண்பெருக் கல்.

**ஆகலாகல்** – காண்க: **ஆகவாக.**

**ஆகலூழ்** – ஆகூழ்; நல்வினைப் பயன்.

**ஆகவபூமி** – போர்க்களம்.

**ஆகவம்** – போர்; வேள்வி.

**ஆகவனம்** – பலி.

**ஆகவனீயம்** – வேதாக்கினிவகை மூன்றனுள் ஒன்று.

**ஆகவாக** – உடம்படாமை ஆதாரமின்மை களைக் குறிக்கும் அசைநிலை.

**ஆகவியன்** - போர்வீரன்.

**ஆகவும்** – ஆகுக.

**ஆகவே** – ஆதலால்.

**ஆகளமாய்** – இடைவிடாது.

**ஆகளரசம்** – அபின்; பாதரசம்.

**ஆகளவாய்** – இருக்கும் அளவுக்கு.

**ஆகன்மாறு** – ஆகையால்.

**ஆகனாமி** – அவரை.

**ஆகனிகம்** – மண்ணகழ் கருவி; பன்றி; பெருச் சாளி.

**ஆகா** – வியப்புக்குறிப்பு; உடன்பாட்டுக் குறிப்பு; ஒரு கந்தருவன்.

**ஆகாசக்கத்தரி** – காண்க: **வெண்டை.**

**ஆகாசக்கப்பல்** – ஆகாயவிமானம்.

**ஆகாசக்கரை,**
**ஆகாசக்கட்டு** } – மனோராச்சியம்.

**ஆகாசக்கல்** – விண்ணிற் பறக்கும் அணு.

**ஆகாசக்கோட்டை** – மனோராச்சியம்.

**ஆகாசகங்கை** – மந்தாகினி; பால்வீதி மண்டலம்; பனிநீர்; சிறுநீர்.

**ஆகாசகபாலி** – புரளிக்காரன்; மிக வல்லவன்.

**ஆகாசகமனம்** – அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று; ஆகாயத்தே செல்லுதல்.

**ஆகாசகரடம்** – புகைப்படை.

**ஆகாசகருடன்** – கொல்லன்கோவை; சீந்தில்; பேயத்தி.

**ஆகாசசாமி** – பறந்துசெல்லும் ஆற்றலுடையோன்; பறக்கும் குதிரை.

**ஆகாசகாமினி** – விண்ணிற் பறந்து செல்வதற்கு உதவும் மந்திரம்.

**ஆகாசசபை** – காஞ்சிபுரத்து நடராச சபை.

**ஆகாசத்தாமரை** – காண்க : **ஆகாயத்தாமரை.**

**ஆகாசத்துவனி** – வானொலி, அசரீரி.

**ஆகாசதீபம்** – உயர்ந்த கம்பத்தில் வைக்கப்படும் விளக்கு; கார்த்திகைத் திருநாளின்போது சொக்கப்பனையின்மேல் வைக்கும் விளக்கு.

**ஆகாசதுந்துமி** – தேவதுந்துபி.

**ஆகாசப்பந்தல், ஆகாசப்பாலம்** } – கற்பனை உலகு.

**ஆகாசப்புரட்டன்** – பெருமோசக்காரன்.

**ஆகாசபட்சி** – காண்க: **சாதகபட்சி;** வானம்பாடி.

**ஆகாசபலம்** – விண்வீழ்கொள்ளி.

**ஆகாச(ய)ம்** – ஐம்பூதத்துள் ஒன்று, வானம்; வளிமண்டலம்.

**ஆகாசமண்டலம்** – வானவெளி; நாட்டிய வகையுள் ஒன்று.

**ஆகாசமார்க்கம்** – வானவழி.

**ஆகாசலிங்கம்** – பஞ்சலிங்கத்துள் சிதம்பரத்தில் உள்ளது.

**ஆகாசவல்லி** – சீந்தில்; ஒரு பூண்டு.

**ஆகாசவாணம்** – அந்தரத்தில் செல்லும் சீறு வாணம்.

**ஆகாச(ய)வாணி** – வானொலி, அசரீரி.

**ஆகாத்தியம்** – பாசாங்கு; பொல்லாங்கு.

**ஆகாத** – கெட்ட; வெறுப்புக்குரிய.

**ஆகாதிலை** – மரவகையுள் ஒன்று; கொடியார் கூந்தல்.

**ஆகாதே** – அல்லவா?

**ஆகாமியம்** – அதிக்கிரமம்; மூவகைக் கன்மங்களுள் ஒன்று; இப்பிறப்பில் செய்யும் புண்ணிய பாவங்கள்.

**ஆகாயக்கக்கரி** – கக்கரிவகை.

**ஆகாயகங்கை** – மந்தாகினி.

**ஆகாயகணம்** – செய்யுள் கணத்துள் ஒன்று; கருவிளங்காய்ச் சீராய் அமைவது.

**ஆகாயகமனம்** – அறுபத்துநாலு கலையுள் வானத்தில் நடந்துசெல்லும் வித்தை.

**ஆகாயச்சக்கரம்** – சித்திரகவிவகை.

**ஆகாயச்சொல்** – எதிரில் இல்லாதான் ஒருவனை முன்னிலைப்படுத்திக் கூறும் பேச்சு.

**ஆகாயசாரிகள்** – வானத்தில் திரிவோர், சாரணர்.

**ஆகாயசூலை** – குதிரை நோய்வகை.

**ஆகாயத்தாமரை** – பூண்டுவகை; குளிர்தாமரை; இல்பொருள்; கொட்டைப்பாசி.

**ஆகாயப்பிரவேசம்** – காண்க: **ஆகாயகமனம்.**

**ஆகாயப்பூ** – காண்க: **ஆகாயத்தாமரை.**

**ஆகாயப்பூரிதம்** – பேய்முசுட்டை.

**ஆகாயமாஞ்சி** – காண்க: **சிறுசடாமாஞ்சில்.**

**ஆகாயவாசிகள்** – பதினெண் கணத்துள் ஒரு சாரார்.

**ஆகாரசமிதை** – வேள்வி செய்வதற்குக் குறித்துள்ள இடத்தின் தென்கிழக்கிலும் வடகிழக்கிலும் வைக்கப்படும் சுள்ளி.

**ஆகாரசன்னை** – நால்வகை முரசுகளுள் ஒன்று.

**ஆகாரம்** – உருவம்; உடம்பு; 'ஆ' என்னும் எழுத்து; உணவு; நெய்; குறிப்பு.

**ஆகாரி** – உயிர்; பூனை.

**ஆகிய** – பண்புருபு.

**ஆகிரந்தம்** – புன்கமரம்.

**ஆகிரிநாட்டை** – பண்வகை; காண்க: **ஆகரி.**

**ஆகிருதி** – உருவம்; உடல்; அடிதோறும் ஒற்று நீங்கிய இருபத்திரண்டு உயிரெழுத்துக் கொண்டதும் நான்கு அடியை உடையதுமாய் வரும் சந்தம்.

**ஆகிருநந்தனம், ஆகிருநனந்தம்** } – காண்க: **ஆகிரந்தம்.**

**ஆகிலியர்** – ஆகாதொழிக.

**ஆகிவருதல்** – நன்றாகக் கூடிவருதல்.

**ஆகின்று** – ஆகாநின்றது, அமைந்தது; ஆயிற்று.

**ஆகு** – கவரி; கொப்பூழ்; எலி; பெருச்சாளி; பன்றி; கள்ளன்; சாமரம்.

**ஆகுகன்** – பெருச்சாளி ஊர்தியனாகிய விநாயகன்.

**ஆகுஞ்சனம்** – சுருக்குகை.

**ஆகுதல்** – ஆதல்.

**ஆகு(வு)தி** – அக்கினியில் மந்திர பூர்வமாகச் செய்யும் ஓமம்; பலி; ஒருவகைப் பறை.

**ஆகுபுக்கு** – பூனை.

**ஆகுபெயர்** – ஒன்றன் பெயராயிருந்தும் அதனோடு தொடர்புடைய மற்றொன்றற்குத் தொன்றுதொட்டு ஆகிவரும் பெயர்.

**ஆகுயர்த்தோன்** – பெருச்சாளி உருப்பொறித்த கொடியுடையவனான கணபதி.

**ஆகுரதன்** – காண்க: **ஆகுகன்.**

**ஆகுலச்சொல்** – ஆரவாரப்பேச்சு.

**ஆகுலம்** – மனக்கலக்கம்; ஆரவாரம்.

**ஆகுலி** – காண்க: **சிற்றரத்தை;** ஆவிரைவகை.

**ஆகுலித்தல்** – துன்புறுதல்.

**ஆகுவாகனன்** – காண்க: **ஆகுகன்.**

**ஆகுளி** – ஒருவகைச் சிறுபறை.

**ஆகுனி** – வாதநோய்வகை.

**ஆகூழ்** – நல்வினை; ஆக்கத்திற்குக் காரணமான வினை; முன்னேற்றத்திற்குக் காரணமான வினை.

**ஆகேடகம், ஆகேடம்** – வேட்டை.

**ஆகேருகம்** – தண்ணீர்விட்டான் கொடி.

**ஆகேவகமுள்ளி** – காட்டுமுள்ளி.

**ஆகேறு** – காண்க: **சரக்கொன்றை.**

**ஆகை** – ஆதல்; உயருதல்; நிகழுகை.

**ஆகைச்சுட்டி** – ஆகையால்.

**ஆகையர்** – முடிவு; கூட்டிவந்த மொத்தத் தொகை.

**ஆகையால்** – ஆதலால்.

**ஆகோசனம்** – கோரோசனை.

**ஆகோள்** – போரில் பகைவரின் பசுக்களைக் கவர்ந்துகொள்ளுகை.

**ஆங்க** – அங்ஙனே எனப் பொருள்படும் உரையசை; வினையுவம வாய்பாடுகளுள் ஒன்று.

**ஆங்கண்** – அவ்விடத்து.

**ஆங்கனம்** – அவ்விதம்.

**ஆங்காங்கு** – அங்கங்கு.

**ஆங்காரம்** – பற்று; காண்க : **அகங்காரம்;** செருக்கு; கரித்திரள்:

**ஆங்காரி** – அகங்காரம் உள்ளவன்(ள்).

**ஆங்காரித்தல்** – காண்க: **அகங்கரித்தல்.**

**ஆங்காலம்** – நற்காலம்.

**ஆங்கிலம்** – ஆங்கிலமொழி.

**ஆங்கீரச** – அறுபதாண்டுக் கணக்கில் ஆறாம் ஆண்டு.

**ஆங்கு** – அவ்விடம்; அக்காலத்தில்; அப்படி; ஓர் உவம உருபு; ஏழன் உருபு; ஓர் அசைநிலை.

**ஆங்குதல்** – போதியதாதல்.

**ஆங்ஙனம்** – காண்க: **அங்ஙனம்.**

**ஆச்சமரம்** – சங்கஞ்செடி.

**ஆச்சமாதிகம்** – மலைவெற்றிலை.

**ஆச்சரியம்** – வியப்பு.

**ஆச்சல்** – பாய்ச்சல்; வண்டிப் பாதையில் உண்டாகும் பள்ளம்.

**ஆச்சன்** – காண்க: **அச்சன்.**

**ஆச்சனை** – முழுதும் செலவழிக்கை.

**ஆச்சா, ஆச்சாசினி** – சாலமரம்; கள்ளி.

**ஆச்சாசோபிகம்** – பெருங்கிலுகிலுப்பை.

**ஆச்சாட்டு** – சிற்றீரம்.

**ஆச்சாட்டுப்பயிர்** – சிற்றீரமுள்ள நிலத்துப்பயிர்.

**ஆச்சாதம்** – உறை; சீலை; மூடி; மேலாடை.

**ஆச்சாதனபலம், ஆச்சாதனபலை** – பருத்திக்கொட்டை.

**ஆச்சாதனம்** – ஆணவமலம்; அஞ்ஞானம்; மறைப்பு; ஆடை.

**ஆச்சாள்** – தாய்.

**ஆச்சான்** – ஆசாரியன்.

**ஆச்சி** – தாய்; பாட்டி; மூத்த தமக்கை; சிறப்பு வாய்ந்த பெண்டிரைக் குறிக்குஞ் சொல்; குரு பத்தினி.

**ஆச்சிபூச்சி** – விளையாட்டுவகை.

**ஆச்சியம்** – நெய்; எள்ளத்தக்கது; கட்டணம்; தேவதாருவின் பிசின்.

**ஆச்சியாடு** – மற்ற ஆட்டு மந்தையிலிருந்து இரந்து பெறப்பட்ட ஆடு.

**ஆச்சிர(ரா)மம்** – காண்க : **ஆசிரமம்.**

**ஆச்சிரமி** – நால்வகை ஆசிரமங்களுள் ஒன்றில் இருப்பவன்.

**ஆச்சிரயம்** – பகை வெல்லுதற்குப் பலமுள்ளான் ஒருவனை அடைகை; பாதுகாப்பு; கொளுகொம்பு; புகலிடம்.

**ஆச்சிரயாசித்தம்** – பட்சத்தில் இல்லாத ஏதுவைக் கூறும் ஏதுப்போலி.

**ஆச்சிரவம்** – சூள்; கீழ்ப்படிகை; வருத்தம்; கன்மத்தொடர்ச்சி; ஆன்மா பொறிவழிச் சேறல்.

**ஆச்சிலை** – கோமேதகம்.

**ஆச்சு** – ஆயிற்று, முடிந்தது; ஒருவகை உரையசை.

**ஆச்சுக்காசி** – மஞ்சட்கோங்கு.

**ஆச்சுரிதகம்** – சிரிப்பு; நகக்குறிவகை.

**ஆச்சுவாசம்** – சாக்காடு; அத்தியாயம்.

**ஆசங்கித்தல்** – ஐயுறுதல்; மறுத்தல்.

**ஆசங்கை** – ஐயம்; மறுப்பு.

**ஆசட்சு** – கண்; பண்டிதன்.

**ஆசடை** – நீளவாட்டத்தில் அமைக்கும் வீட்டின் முகட்டுத் தூலம்.

**ஆசத்தி** – விருப்பம், பற்று.

**ஆசந்தி** – சவம் கொண்டுபோகும் பாடை; பெரிய வெள்ளிக்கிழமையன்று சிலுவையில் அமைந்த இயேசுநாதர் திருவுருவத்தை ஊர்வலம் செய்விக்கை; சிறுகட்டில்; பிரம்பாலான இருக்கை.

**ஆசந்திரதாரம்** – சந்திரனும் நட்சத்திரங்களும் உள்ளவரை.

**ஆசந்திரார்க்கம்** – சந்திர சூரியர்கள் உள்ளவரை.

**ஆசம்** – சிரிப்பு.

**ஆசமனம்** – காண்க: **ஆசமித்தல்.**

**ஆசமனீயம்** – ஆசமனநீர்.

**ஆசமித்தல்** – வலக்குடங்கையால் மந்திர பூர்வமாக நீரை மும்முறை உட்கொள்ளுதல்.

**ஆசயம்** – உறைவிடம்; உடலின் உட்பை; மனம்; கருத்து; உழை; பலா.

**ஆசர்** – ஆயத்தம்; நேர்வந்திருத்தலைக் குறிக்கும் சொல்.

**ஆசர்ப்பட்டி** – வருகைப் பதிவேடு.

**ஆசரணம்** – பழக்கம்; வழக்கம்; |அனுட்டானம்.
**ஆசரணை** – காண்க: **ஆசரணம்**; தூய்மை.
**ஆசரித்தல்** – அனுட்டித்தல்; கைக்கொள்ளுதல்; வழிபடுதல்.
**ஆசல்** – மதிப்பு.
**ஆசலம்** – மிக்க சஞ்சலம்; குற்றமும் துன்பமும்.
**ஆசலை** – ஆடாதோடை.
**ஆசவம்** – கள்.
**ஆசவுசம்** – தீட்டு.
**ஆசற** – குறையற.
**ஆசறுதல்** – குற்றமின்மை; முடிதல்.
**ஆசறுதி** – கடைசி.
**ஆசறுதிப்பல்** – கடைவாய்ப் பல்.
**ஆசன்னம்** – அண்மையானது.
**ஆசனக்கிருமி** – மலப்புழுவகை.
**ஆசனக்குளிகை** – மலவாய்வழியாய்ச் செலுத்தும் மாத்திரை.
**ஆசனந்திருத்துதல்** – பெரியோர்க்கு இருக்கை அமைத்தல்.
**ஆசனபவுத்திரம்** – பகந்தரம், மலவாயில் புரை வைத்த புண்.
**ஆசனம்** – பீடம் முதலிய தவிசு; இருக்கைநிலை; மலவாய்; உரிய காலம் வரும்வரை பகைமேற் செல்லாதிருக்கை.
**ஆசனவாய்** – மலவாய்.
**ஆசனவெடிப்பு** – நோய்வகை.
**ஆசனி** – பலாவகை; பெருங்காயம்.
**ஆசாசி** – சீந்தில்.
**ஆசாசித்தல்** – வாழ்த்துதல்.
**ஆசாட்டம்** – தெளிவற்ற தோற்றம்.
**ஆசாடபூதி** – தோற்றத்திற்கு ஏற்ற பண்பற்றவன்; துரோகி; வஞ்சகன்.
**ஆசாடம்** – முருக்கு; ஆடிமாதம்; மரக்கொம்பு; தவசியின் கைக்கோல்.
**ஆசாபங்கம்** – விரும்பியது பெறாமை.
**ஆசாபந்தம்** – நம்பிக்கை; சிலந்திவலை.
**ஆசாபாசம்** – ஆசையாகிய பற்று.
**ஆசாபைசாசம்** – ஆசையாகிய பேய்.
**ஆசாம்பரன்** – திசைகளையே ஆடையாகக் கொண்டவன், சிவன்.
**ஆசாமி** – ஆள்.
**ஆசாமிக்களவு**, **ஆசாமிசோரி** } – ஆளைத் திருடுகை.
**ஆசாமிவாரி** – இனவாரி.
**ஆசாமிவாரி இசாபு** – அடங்கல் கணக்கு.
**ஆசாமிவாரிச் சிட்டா** – இனவாரி வரிக்கணக்கு.
• **ஆசார்யாபிடேகம்** – குருவாதற்குச் செய்யப்படும் சடங்கு.
**ஆசாரக்கணக்கு** – கோயிலில் ஆசாரங்களைக் குறித்து வைக்கும் புத்தகம்.
**ஆசாரக்கள்ளன்** – ஒழுக்கம் உள்ளவன்போல் நடிப்பவன்.
**ஆசாரக்கள்ளி** – ஒழுக்கமுடையாள்போல் நடிப்பவள்.
**ஆசாரங்கூட்டுதல்** – தூய்மையாகச் செய்தல்.
**ஆசாரச்சாவடி** – பொதுச்சாவடி; கொலுமண்டபம்.
**ஆசாரஞ்செய்தல்** – ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தல்.
**ஆசாரப்பிழை** – ஒழுக்கத்தவறு.
**ஆசாரபரன்** – ஒழுக்கத்தில் ஊக்கமுள்ளவன்.
**ஆசாரபோசன்** – பகட்டுத் தோற்றமுள்ளவன்.
**ஆசாரம்** – சாத்திர முறைப்படி ஒழுகுகை; நன்னடை; காட்சி; வியாபகம்; சீலை; படை; அரசர்வாழ் கூடம்; தூய்மை; பெருமழை; உறுதிப்பொருள்; முறைமை.
**ஆசாரம்பண்ணுதல்** – உபசாரஞ்செய்தல்.
**ஆசாரலிங்கம்** – சிவலிங்க பேதங்களுள் ஒன்று.
**ஆசாரவாச(யி)ல்** – தலைவாசல்; கோயிலின் நுழைவாயில், கொலுமண்டப வாசல்.
**ஆசாரவீனன்** – ஒழுக்கங்கெட்டவன்.
**ஆசாரவீனி(னை)** – ஒழுக்கங்கெட்டவள்.
**ஆசாரவுபசாரம்** – காண்க: **ஆசாரோபசாரம்**.
**ஆசாரி** – மாத்துவ ஸ்ரீவைணவப் பார்ப்பனர் பட்டப்பெயர்; கம்மாளர் பட்டப்பெயர்; குரு; ஒழுக்கமுள்ளவன்.
**ஆசாரியசம்பாவனை** – நல்ல காலங்களில் ஆசாரியருக்குக் கொடுக்கும் காணிக்கை.
**ஆசாரியப்பட்டம்** – குருவாக அபிடேகமாகும் பொழுது தாங்கும் பட்டம்.
**ஆசாரியபக்தி** – குருபக்தி.
**ஆசாரியபூசனை** – குருக்களுக்குரிய காணிக்கை.
**ஆசாரியபோகம்** – ஆசாரியன் அனுபவிக்கும் மானியம்.
**ஆசாரியன்** – குரு; சமயத்தலைவன்; ஆசிரியன்.
**ஆசாரியன் திருவடியுடைதல்** – இறந்து நற்கதி அடைதல்.
**ஆசாரியாபிடேகம்** – குருவாக அமர்த்தும் சடங்கு.
**ஆசாரோபசாரம்** – மிக்க மரியாதை.
**ஆசாள்** – குருபத்தினி; தலைவி.
**ஆசான்** – ஆசிரியன்; புரோகிதன்; மூத்தோன்; வியாழன்; அருகன்; முருகக்கடவுள்; பாலையாழ்த்திறவகை; காந்தாரம், சிகண்டி, தசாக்கரி, சுத்தகாந்தாரம் என்னும் நால்வகைப் பண்ணியல்.
**ஆசான்றிறம்** – குரலுக்குரிய திறம்; பாலையாழ்த் திறம்.
**ஆசானங்கை**– காட்டாமணக்கு.

**ஆசானுபா(வா)கு** – முழந்தாளளவு நீண்ட கையுடையோன்.
**ஆசி** – வாழ்த்து; வாழ்த்தணி; ஒத்த தரை; போர்.
**ஆசிக்கல்** – காகச்சிலை.
**ஆசிகம்** – முகம்.
**ஆசிடுதல்** – பற்றாசு வைத்தல்; நேரிசை வெண்பாவில் காணும் முதற்குறளின் இரண்டாம் அடி இறுதிச் சீர்க்கும் தனிச்சொல்லுக்கு மிடையே விட்டிசைப்பின் ஓரசையேனும் ஈரசையேனும் சேர்த்தல்; எதுகையில் ய, ர, ல, ழ என்னும் நான்கிலொன்றை ஆசாக இடுதல்.
**ஆசிடை** – வாழ்த்து; கூட்டம்; ஆடை.
**ஆசிடையெதுகை** – காண்க: **ஆசெதுகை.**
**ஆசிடைவெண்பா** – நேரிசை வெண்பாவில் முதற்குறளின் இறுதிச்சீர்க்கும் தனிச் சொல்லுக்கும் இடையில் கூட்டப்பட்டு அசையுடன் வருவது.
**ஆசித்தல்** – விரும்புதல்.
**ஆசிதகம்** – இருத்தல்.
**ஆசிதம்** – ஒருவண்டிப் பாரம்; இருநூறு துலாங் கொண்ட பாரம்; வாழுமிடம்; நகரம்.
**ஆசிமொழி** – வாழ்த்தணி.
**ஆசியக்காரன்** – விகடம் செய்வோன்.
**ஆசியசீரகம்** – கருஞ்சீரகம்.
**ஆசியநாடகம்** – நகைச்சுவையுள்ள நாடகம்.
**ஆசியம்** – வாய்; முகம்; சிரிப்பு; முகத்திற் குரியது; பரிகாசம்; ஒன்பான் சுவையுள் ஒன்று.
**ஆசிரமம்** – முனிவர் உறைவிடம்; பன்னசாலை; வாழ்க்கைநிலை.
**ஆசிரமி** – ஆசிரமநிலையில் நிற்பவன்; சன்னியாசி.
**ஆசிரயணம், ஆசிரயம்** } – சார்ந்து நிற்கை.
**ஆசிரயித்தல்** – சார்தல்.
**ஆசிரிதம்** – சார்ந்திருக்கை.
**ஆசிரிதன்** – சார்ந்திருப்பவன்.
**ஆசிரியக்கல்** – தன்னைக் காத்துதவும்படி பிறனுக்கு எழுதிவைக்கும் கல்வெட்டு.
**ஆசிரியச்சீர்** – காண்க: **அகவல் உரிச்சீர்.**
**ஆசிரியச் சுரிதகம்** – அகவலால் ஆகிய சுரிதகம் என்னும் பாவுறுப்பு.
**ஆசிரியத்தளை** – மாமுன் நேரும் விளமுன் நிரையும் வரத் தொடுக்கும் செய்யுள் தளை.
**ஆசிரியத்தாழிசை** – ஆசிரியப்பா இனத்துள் ஒன்று; ஒத்த சீர்கொண்ட மூன்றடியுடைய தாய்த் தனித்தோ, மூன்று சேர்ந்தோ ஒரு பொருள்மேல் வருவது.
**ஆசிரியத்துறை** – காண்க: **அகவற்றுறை.**
**ஆசிரியப்பா** – காண்க: **அகவற்பா.**
**ஆசிரியப்பிரமாணம்** – ஒருவன் தன்னைக் காப்பாற்றும்படி எழுதிக்கொடுக்கும் முறி.
**ஆசிரியம்** – காண்க: **அகவற்பா;** ஆசிரியக்கல்.
**ஆசிரியவசனம்** – மேற்கோள்.
**ஆசிரியவிருத்தம்** – காண்க: **அகவல்விருத்தம்.**
**ஆசிரியவுரிச்சீர்** – காண்க: **அகவல்உரிச்சீர்.**
**ஆசிரியன்** – குரு; போதகாசிரியன்; நூலாசிரியன்; உரையாசிரியன்; புலவன்.
**ஆசினி** – ஈரப்பலா; மரவயிரம்; மரப்பொதுப் பெயர்; மரவுரி; வானம்; சிறப்பு.
**ஆசீயம்** – கருஞ்சீரகம்.
**ஆசீர்வசனம்** – வாழ்த்துரை.
**ஆசீர்வதித்தல்** – வாழ்த்துதல்.
**ஆசீர்வாதம்** – வாழ்த்து.
**ஆசீல்** – மதிப்பு.
**ஆசீல்கட்டுதல்** – மதிப்பிடுதல்.
**ஆசீவகப்பள்ளி** – ஆசீவகத் தவத்தோர் உறைவிடம்.
**ஆசீவகன்** – சமணருள் ஒரு பிரிவினன்; சமணத் துறவி.
**ஆசு** – குற்றம்; ஆணவமலம்; புல்லிது; நுட்பம்; ஐயம்; துன்பம்; பற்றுக்கோடு; வாளின் கைப்பிடி; கவசம்; கைக்கவசம்; பற்றாசு; நேரிசை வெண்பாவின் முதற்குறளின் இறுதிச்சீர்க்கும் தனிச்சொற்கும் இடையில் கூட்டப்படும் அசை; எதுகை இடையில் வரும் ய், ர், ல், ழ் என்னும் ஒற்றுகள்; நூலிழைக்கும் கருவிகளுள் ஒன்று; இலக்கு; விரைவு; ஆசுகவி; இடைக் கார்நெல்வகை; அச்சு.
**ஆசுக்காயம்** – நரிவெங்காயம்.
**ஆசுகம்** – காற்று; அம்பு; பறவை.
**ஆசுகவி** – கொடுத்த பொருளை அடுத்த பொழுதில் பாடும் பாட்டு; ஆசுகவி பாடும் புலவன்.
**ஆசுகன்** – காற்று; சூரியன்.
**ஆசுகி** – பறவை.
**ஆசுசுக்கணி** – நெருப்பு.
**ஆசுணம்** – காண்க: **அசோகம்;** அரசு.
**ஆசுபத்திராமரம்** – மரவகை.
**ஆசுபொதுமக்கள்** – சமணருள் ஒரு சாரார்.
**ஆசுமணை** – நெய்தற் கருவிகளுள் ஒன்று.
**ஆசுரம்** – அசுர சம்பந்தமானது; காண்க: **அசுரம்;** தலைமகட்குப் பொன் சூட்டிச் சுற்றத்தார்க்கும் வேண்டுவன கொடுத்துக் கொள்ளும் மணம்; கேழ்வரகு; வெள்ளைப்பூண்டு; இஞ்சி; நாளிகம் முதலிய கருவிகளால் செய்யப்படும் போர்.
**ஆசுரவைத்தியம்** – அறுவை மருத்துவம்.
**ஆசுராப்பண்டிகை** – மொகரம் பண்டிகை.
**ஆசுரி** – அசுரப்பெண்.

**ஆசுவடிமக்கள்** – காண்க: **ஆசுபொதுமக்கள்.**

**ஆசுவம்** – குதிரைக்கூட்டம்; குதிரை இழுக்குந் தேர்; குதிரை சம்பந்தமுடையது; ஆசீவகர் உணவு.

**ஆசுவயம்** – விரைவு; வேதநுட்பம்.

**ஆசுவயுசி** – ஒருவேள்வி; ஐப்பசி மாத முழுநிலா.

**ஆசுவாசம்** – இளைப்பாறுகை.

**ஆசுவிகன்** – காண்க: **ஆசீவகன்.**

**ஆசுவிமக்கள்** – காண்க: **ஆசுபொதுமக்கள்.**

**ஆசுவினம், ஆசுவீசம்** – ஐப்பசி, சாந்திரமாதத்துள் ஏழாவது.

**ஆசு** – நரக வாதை; அமஞ்சிவேலை.

**ஆசூசம்** – தீட்டு.

**ஆசூரம்** – காண்க: **வெள்வெண்காயம்.**

**ஆசெதுகை** – ய், ர், ல், ழ் என்னும் மெய் யெழுத்துகளுள் ஒன்று அடியெதுகை இடையே ஆசாக வருவது.

**ஆசெறூண்** – ஆசெல்தூண், ஆதீண்டுகுற்றி.

**ஆசேகம்** – நனைக்கை.

**ஆசேதம்** – அரசன் ஆணையை மேற்கொண்டு தடைசெய்கை.

**ஆசை** – வேண்டலுறும் பொருட்கண் செல்லும் விருப்பம்; விருப்பம்; பொருளாசை; காம விச்சை; அன்பு; பேற்றில் நம்பிக்கை; பொன்; திசை; பொன்னூமத்தை.

**ஆசைக்காரணர்** – திக்குப் பாலகர்.

**ஆசைகாட்டுதல்** – தன்வசமாகும் பொருட்டு இச்சை உண்டாக்குதல்.

**ஆசைநாயகி** – அன்புக்குரியாள்; வைப்பாட்டி.

**ஆசைப்படுதல்** – விரும்புதல்.

**ஆசைப்பதம்** – வசீகரப் பேச்சு.

**ஆசைப்பாடு** – விருப்பம்.

**ஆசைப்பேச்சு** – இச்சகம்; வசமாக்கும் பேச்சு.

**ஆசைபிடித்தல்** – இச்சை மிகுதல்.

**ஆசைபூட்டுதல்** – ஆசையில் சிக்கச்செய்தல்.

**ஆசைமருந்து** – தன்வசமாகக் கூட்டும் மருந்து.

**ஆசைவார்த்தை** – நம்பிக்கை உண்டாகச் சொல்லும் சொல்.

**ஆசோதை** – இளைப்பாறுகை; வேலை முடிந்த பின் கொள்ளும் ஓய்வு.

**ஆசௌசம்** – தீட்டு.

**ஆஞ்சனேயன்** – அஞ்சனாதேவியின் மகனான அனுமான்.

**ஆஞ்சான்** – மரக்கலப் பாயை இழுக்கும் கயிறு; பாரந் தூக்கும் கயிறு; இளமரத்தின் தண்டு; தண்டனைக்குரிய கோதண்டம்.

**ஆஞ்சான்கயிறு** – கப்பற் பாய்களை அல்லது கொடிகளை ஏற்றவும் இறக்கவும் உதவும் கயிறு.

**ஆஞ்சான்பற்றி** – மரக்கலக் கூம்பு.

**ஆஞ்சி** – அச்சம்; அலைவு; கூத்து; சோம்பு; ஏலம்.

**ஆஞ்சிக்காஞ்சி** – போர்க்களத்தில் இறந்த கண வனது வேல்வடுவைக் கண்டு மனைவி அஞ்சிய புறத்துறை; போர்க்களத்தில் கணவனுடன் தீயில் மூழ்கும் மனைவியின் பெருமை கூறும் புறத்துறை.

**ஆஞ்சித்தாழை** – மஞ்சள் நிறமுள்ள தாழை வகை.

**ஆஞ்சிரணம்** – காட்டுத்துளசி.

**ஆஞ்சில், ஆஞ்சிறிகம்** – சங்கஞ்செடி.

**ஆஞ்ஞாசக்கரம்** – அரசாணையாகிய சக்கரம்.

**ஆஞ்ஞாபனம், ஆஞ்ஞாபித்தல்** – கட்டளையிடுதல்.

**ஆஞ்ஞை** – கட்டளை; ஆறாதாரங்களுள் ஒன்று.

**ஆஞா, ஆஞான்** – தந்தை.

**ஆட்கடியன்** – பாம்புவகை; முதலை.

**ஆட்காசு** – ஆள் உருவம் பொறித்த பழங்காசு வகை.

**ஆட்காட்டி** – சுட்டுவிரல்; பறவைவகை; ஆள் களுக்கு வழி முதலியவற்றைக் குறித்துக் காட்டும் அடையாளப் பலகை.

**ஆட்கால்** – சதுரங்கக் கட்டத்துள் காலாட் காயால் வெட்டக்கூடிய அறை.

**ஆட்கூலி** – ஒரு வேலைக்காரனுக்குரிய கூலி.

**ஆட்கொல்லி** – கொலைஞன்; பணம்; தில்லை மரம்.

**ஆட்கொள்ளுதல்** – அடிமை கொள்ளுதல்.

**ஆட்சி** – உரிமை; ஆளுகை; அதிகாரம்; ஆன் றோர் வழக்கு; அனுபவம்; தாயமுறையில் வந்த உரிமை; மக்கள் அணையலாகாதெனக் கட்டளையிடப்பட்ட இடம்; கோள்நிலை; கிழமை.

**ஆட்சிவீடு, ஆட்சித்தானம்** – கோள்களின் சொந்த வீடு.

**ஆட்சிப்படுதல்** – உரிமையாதல்.

**ஆட்சிராசி** – ஒரு கோளுக்குச் சொந்தமான வீடு.

**ஆட்சுமை** – ஓராள் தூக்கும் பாரம்.

**ஆட்செய்தல்** – தொண்டுசெய்தல்.

**ஆட்சேபசமாதானம்** – தடைவிடை.

**ஆட்சேபணம், ஆட்சேபம்(னை)** – தடை, மறுத்துக் கூறுதல்.

**ஆட்சேபித்தல்** – தடைசெய்தல், மறுத்தல்.

**ஆட்சேவகம்** – ஒருவன் தன் உடம்பால் செய்யும் ஊழியம்; ஊழியம்.

**ஆட்சை** – கிழமை.

**ஆட்டக்கச்சேரி** – சதிர்.

**ஆட்டகம்** – திருமஞ்சன சாலை, குளியல் அறை.

**ஆட்டத்துவெளி** – குதிரையை ஓட விடுகின்ற வெளியிடம்; குதிரைப் பந்தயத் திடல்.

**ஆட்டபாட்டம்** – ஆடல்பாடல்; ஆர்ப்பாட்டம்.

**ஆட்டம்** – அசைவு; அலைவு; சஞ்சாரம்; விளையாட்டு; விளையாட்டில் தொடங்குமுறை; கூத்தாட்டு; சூது; அதிகாரம்; ஓர் உவம உருபு.

**ஆட்டமடித்தல்** – விளையாட்டில் வெல்லுதல்; கிட்டிப்புள் விளையாட்டு.

**ஆட்டமெடுத்தல்** – விளையாட்டில் வெல்லுதல்; வழிதேடுதல்.

**ஆட்டாங்கள்ளி** – காண்க: **திருகுகள்ளி.**

**ஆட்டாங்கொடி** – சோமக்கொடி.

**ஆட்டாங்கொறுக்கு** – மலைத்துவரை.

**ஆட்டாங்கோரை** – கோரைவகை.

**ஆட்டாண்டு** – ஒவ்வோராண்டும்.

**ஆட்டாம்பிழுக்கை** – ஆட்டின் மலம்.

**ஆட்டாள்** – ஆட்டிடையன்.

**ஆட்டாளி** – செயலாளன்.

**ஆட்டி** – பெண்; மனைவி; பெண்பால் விகுதி.

**ஆட்டிடையன்** – ஆடுமேய்க்கும் இடையன்.

**ஆட்டிறைச்சி** – ஆட்டுக்கறி.

**ஆட்டினி** – காட்டுப்பூவரசு.

**ஆட்டீற்று** – ஆண்டுதோறும் ஈனுகை.

**ஆட்டு** – கூத்து; விளையாட்டு.

**ஆட்டுக்கசாலை** – ஆட்டுக்கிடை.

**ஆட்டுக்கடா** – ஆணாடு.

**ஆட்டுக்கல்** – அரைக்குங் கல்லுரல்; ஆட்டுரோசனை.

**ஆட்டுக்காதுக்கள்ளி** – காண்க: **ஆட்டுச்செவிக்கள்ளி.**

**ஆட்டுக்கால்** – காண்க: **பூமருது;** ஆட்டுக்கால் அடம்பு.

**ஆட்டுக்காலடம்பு** – அடப்பங்கொடி.

**ஆட்டுக்கிடாய்** – காண்க: **ஆட்டுக்கடா.**

**ஆட்டுக்கிடை** – ஆடுகளைக் கூட்டுமிடம்.

**ஆட்டுக்கிறை** – காண்க: **ஆட்டுவரி.**

**ஆட்டுக்கொம்பவரை** – அவரைவகை.

**ஆட்டுக்கொம்பொதி** – ஆட்டுக்கொம்பு போன்ற காயையுடைய ஒரு மரம்.

**ஆட்டுச்சக்கரணி** – மஞ்சள் அலரி.

**ஆட்டுச்சதை** – காண்க: **ஆடுசதை.**

**ஆட்டுச்செவிக்கள்ளி** – கள்ளிவகை.

**ஆட்டுச்செவிப்பதம்** – தேங்காயின் வழுக்கைப் பதம்.

**ஆட்டுகம்** – காண்க: **ஆடாதோடை.**

**ஆட்டுத்துழாய்** – காட்டுத்துளசி.

**ஆட்டுத்தொட்டி** – காண்க: **ஆட்டுக்கிடை.**

**ஆட்டுதப்பி** – ஆடு அசையிடுமிரை.

**ஆட்டுதல்** – அசைத்தல்; துரத்துதல்; அலைத்தல்; வெல்லுதல்; ஆடச்செய்தல்; நீராட்டுதல்; அரைத்தல்.

**ஆட்டுப்பட்டி** – காண்க: **ஆட்டுக்கிடை.**

**ஆட்டுப்பலகை** – செக்கின்கீழுள்ள சுற்றுமரம்.

**ஆட்டுமந்தை** – ஆட்டின் கூட்டம்; ஆடு கூடுமிடம்.

**ஆட்டுமயிர்ச்சரக்கு** – கம்பளித்துணி.

**ஆட்டுமுட்டி** – அதிமதுரம்.

**ஆட்டுரல்** – ஆட்டுக்கல்.

**ஆட்டுலா** – காண்க: **ஆட்டுக்காலடம்பு.**

**ஆட்டுவரி** – ஆட்டுக்கு விதிக்கப்படும் தீர்வை.

**ஆட்டுவாகனன்** – ஆட்டை ஊர்தியாகவுடைய அக்கினிதேவன்.

**ஆட்டுவாணிக(ய)ன்** – ஆட்டு வியாபாரி; ஆட்டிறைச்சி விற்போன்.

**ஆட்டுவிப்போன்** – நட்டுவன்.

**ஆட்டூரவேம்பு** – மலைவேம்பு.

**ஆட்டை** – விளையாட்டில் தொடங்குமுறை; ஆண்டு.

**ஆட்டைக்காணிக்கை** – பழங்கால வரிகளுள் ஒன்று.

**ஆட்டைக்கோள்** – ஆண்டுதோறும் செலுத்த வேண்டும் தொகை.

**ஆட்டைச்சம்மாதம்** – வரிவகை.

**ஆட்டைத்திதி, ஆட்டைத்திவசம்** – முதலாண்டு நினைவுநாள், தலைத்திவசம்.

**ஆட்டைப்பாழ்** – ஆண்டு முழுவதும் தரிசு கிடந்த நிலம்.

**ஆட்டைவட்டம்(ன்)** – ஆண்டுதோறும்.

**ஆட்டைவாரியர்** – ஊராட்சியை ஆண்டுதோறும் மேற்பார்வையிடும் சபையார்.

**ஆட்டைவிழா** – ஆண்டுத் திருவிழா.

**ஆட்டோசை** – ஆட்டுக்குரலையொத்த தார விசையின் ஓசை.

**ஆட்படுத்தல்** – அடிமைகொள்ளுதல்.

**ஆட்படுத்துதல்** – காண்க: **ஆட்படுத்தல்;** வளர்த்து ஆளாக்குதல்; முன்னுக்குக் கொண்டு வருதல்.

**ஆட்படுதல்** – அடிமையாதல்; உயர்நிலை அடைதல்; உடல்நலமுறுதல்.

**ஆட்பலி** – நரபலி; தெய்வத்தின் பொருட்டு மனிதனைப் பலியாகக் கொடுக்கை.

**ஆட்பழக்கம்** – மனிதப் பழக்கம்.

**ஆட்பார்த்தல்** – வேற்றாள் வராமல் நோக்குதல்; ஆள்தேடுதல்.

**ஆட்பாலவன்** – அடியான்.

**ஆட்பிடியன்** – முதலை.

**ஆட்பிரமாணம்** – ஆள்மட்ட அளவு.
**ஆடகக்குடோரி** – மயிலடிக்குருந்து.
**ஆடகச்சயிலம்** – மேருமலை.
**ஆடகத்தி** – குங்குமபாடாணம்.
**ஆடகம்** – காண்க: **துவரை;** நால்வகைப் பொன்னுள் ஒன்று, சிறந்த பொன், உலோகக்கட்டி; சிறுநாகப்பூ; ஐந்து பிரத்தங்கொண்ட நிறை; நானாழி.
**ஆடகன்** – பொன்னிறமுடைய இரணியகசிபு.
**ஆடகி(கை)** – காண்க: **துவரை.**
**ஆடகூடம்** – செம்புமலை.
**ஆடங்கம்** – துன்பம்; தாமதம்.
**ஆடம்** – ஓரளவு; காண்க: **ஆமணக்கு.**
**ஆடம்பரம்** – பகட்டுத் தோற்றம்; பல்லிய முழக்கம்; யானையின் பிளிற்றொலி; ஆவேசம்.
**ஆடமணக்கு** – காண்க: **ஆமணக்கு.**
**ஆடமாகிதம்** – பெருங்காஞ்சொறி.
**ஆடல்** – அசைகை; கூத்து; துன்பம்; செய்கை; ஆளுகை; விளையாட்டு; புணர்ச்சி; சொல்லுகை; நீராடல்; போர்; வெற்றி.
**ஆடல்கொடுத்தல்** – இடங்கொடுத்தல்; துன்பம் அனுபவித்தல்.
**ஆடலிடம்** – அரங்கம்.
**ஆடலை** – பூவாத மரம்; அரசு.
**ஆடவர்பருவம்** – பாலன், காளை, குமாரன், ஆடவன், மூத்தோன், முதியோன்.
**ஆடவல்லான்** – நடராசப்பெருமான்; இராசராசன் ஆட்சியில் எடுத்தல், முகத்தல் அளவை கட்கு இட்ட பெயர்.
**ஆடவலபெருமான்** – திருவாரூரில் கோயில் கொண்ட சிவபெருமான்.
**ஆடவள்** – பெண்.
**ஆடவன்** – ஆண்மகன்; இளைஞன்; நான்காம் பருவத்தினன்.
**ஆடவை** – நடனசபை; மிதுனராசி.
**ஆடற்கூத்தியர்** – அகக்கூத்தாடும் கணிகையர்.
**ஆடற்றரு** – கூத்துப்பாட்டு வகை.
**ஆடனூல்** – நாட்டிய நூல்.
**ஆடா** – கால்களில் கட்டியைப் போல் உண்டாகும் குதிரைநோய்.
**ஆடாகாவிகம்** – மரவுரி.
**ஆடாதிருக்கை** – ஆடுவாலன் திருக்கை; அசையாதிருத்தல்.
**ஆடாதோடை** – ஒரு மருந்துச் செடி.
**ஆடி** – கூத்தாடுபவன்; கண்ணாடி; பளிங்கு; நான்காம் மாதம்; உத்தராட நாள் பகலில் பன்னிரண்டு நாழிகைக்குமேல் இரண்டு நாழிகை கொண்ட முகூர்த்தம்; நாரை; ஆணிவகை.
**ஆடிக்கரு** – ஆடி மாதத்து நீருண்ட மேகம்.
**ஆடிக்கழைத்தல்** – மணத்துக்குப் பின் முதல் ஆடி மாதத்தில் பெண்ணைப் பிறந்த வீட்டுக்கு அழைத்தல்.
**ஆடிக்கால்** – வெற்றிலைக்கொடி படரும் நோக்கோடு வயலில் ஆடி மாதத்தில் நடும் அகத்தி.
**ஆடிக்குறுவை** – நெல்வகை.
**ஆடிக்கோடை** – ஆடிமாதத்தில் அறுவடையாகும் நெல்.
**ஆடிச்சி** – கழைக்கூத்தாடிப் பெண்.
**ஆடிடம்** – விளையாடுமிடம்.
**ஆடிப்பட்டம்** – விதையிடுதற்குரிய பருவம்.
**ஆடிப்பண்டிகை** – ஆடி மாதப் பிறப்புக் கொண்டாட்டம்.
**ஆடிப்பால்** – ஆடிமாதப் பிறப்பில் செய்யும் விருந்தில் பயன்படுத்தும் தேங்காய்ப் பாலுணவு.
**ஆடிப்பூரம்** – ஆடிமாதத்துப் பூரநாளில் நிகழும் அம்மன் திருவிழா.
**ஆடிப்பெருக்கு** – பதினெட்டாம் பெருக்கு; ஆடிமாதத்தில் காவேரிப் பெருக்கினைக் குறித்து எடுக்கப்படும் கொண்டாட்டம்.
**ஆடிப்போதல்** – கட்டுக்குலைந்துபோதல்.
**ஆடியகூத்தன்** – தில்லைமரம்.
**ஆடியறவெட்டை** – ஆடிமாதத்தில் உண்டாகும் பொருள்முடை.
**ஆடு** – வெற்றி; விலங்குவகை; மேடராசி; கூத்து; கூர்மை; கொல்லுகை; சமைக்கை; காய்ச்சுகை.
**ஆடுகால்** – ஏற்றத்தில் துலாத்தாங்கு மரம்.
**ஆடுகொப்பு** – மகளிர் காதணிவகை.
**ஆடுகொம்பு** – கட்டுகொம்பு.
**ஆடுசதை** – முழங்காலின் கீழ்த்தசை.
**ஆடுஞ்சரக்கு** – வெப்பத்தால் காற்றாய்ப் போகும் இரசம் முதலிய பொருள்கள்; மருந்துச் சரக்கு.
**ஆடுதல்** – அசைதல்; கூத்தாடுதல்: விளையாடுதல்; நீராடுதல்; பொருதல்: சஞ்சரித்தல்; முயலுதல்; பிறத்தல்; சொல்லுதல்; செய்தல்; அனுபவித்தல்; புணர்தல்; பூசுதல்; அளைதல்; தடுமாறுதல்; எந்திர முதலியவற்றில் அரைபடுதல்; விழுதல்; செருக்குதல்.
**ஆடுதலி** – அதிகாரியோடுகூட இருக்கும் ஊழியன்.
**ஆடுதின்னாப்பாளை, ஆடுதீண்டாப்பாளை** } – புழுக்கொல்லிப் பூண்டு.
**ஆடுதுடை** – சதைப்பற்றுள்ள தொடைப் பகுதி.
**ஆடுதோடா** – காண்க: **ஆடாதோடை.**
**ஆடுநர்** – கூத்தர்.
**ஆடும்பாத்திரம்** – நாட்டியப் பெண்.

**ஆடுமறிகூலி** – ஆட்டுக்கிடை வைக்கத் தருங் கூலி.
**ஆடுமாடு** – கால்நடை.
**ஆடுமாலை** – உல்லாசமுள்ள குமரிப்பெண்.
**ஆடூஉ** – ஆண்மகன்.
**ஆடூஉக்குணம்** – ஆண்மகனுக்குரிய பண்புகள்; அவை: அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி.
**ஆடூஉமுன்னிலை** – ஆண்பாலரை முன்னிலைப் படுத்திக் கூறுகை.
**ஆடூஉவறிசொல்** – ஆண்பாற்கிளவி.
**ஆடூர்ந்தோன்** – முருகன்; அங்கியங்கடவுள்.
**ஆடெழும்புநேரம்** – காலைப் பத்து நாழிகை.
**ஆடை** – உடை; சித்திரை நாள்; கண்படலம்; பால் முதலியவற்றின்மேல் எழும் ஏடு; பனங் கிழங்கின் உள்ளிருக்கும் தோல்.
**ஆடைக்காதி** – கோங்கிலவு.
**ஆடைக்குங்கோடைக்கும்** – எல்லாப் பருவத்தும்.
**ஆடைக்குறி** – வண்ணாரிடுந் துணிக்குறி.
**ஆடைத்தயிர்** – ஏடெடாத தயிர்.
**ஆடைமேல்** – கழுத்து.
**ஆடையொட்டி** – பூண்டுவகை; சீலைப்பேன்.
**ஆடையொட்டிநீர்** – சுக்கிலம்.
**ஆடைவீசுதல்** – மகிழ்ச்சிக் குறியாக ஆடையை மேலே வீசுதல்.
**ஆடோபம்** – செருக்கு; வீக்கம்.
**ஆண்** – ஆண்பாற் பொது; வீரியம்; தலைமை; வீரன்; காண்க: **ஆண்மரம்.**
**ஆண்கடன்** – ஆண்மக்கள் கடமை.
**ஆண்கிரகம்** – செவ்வாய்; வியாழன்; சூரியன்.
**ஆண்கும(றி)ஞ்சான்** – காண்க: **குங்கிலியம்.**
**ஆண்குறி** – ஆடவர் குறி.
**ஆண்கை** – ஆண்பாற் செயல்காட்டும் அபிநயக் கை.
**ஆண்சந்ததி** – ஆண்மகவு.
**ஆண்சரக்கு** – கல்லுப்பு; வெடியுப்பு.
**ஆண்சாவி** – துளையில்லாத திறவுகோல்.
**ஆண்சிரட்டை** – தேங்காயின் அடிப்பாதி ஓடு.
**ஆண்செருப்படை** – செருப்படைவகை.
**ஆண்சோடனை** – ஆண்கூத்துக்குச் செய்யும் ஒப்பனை.
**ஆண்டகை** – ஆண்தன்மை; பெருமையிற் சிறந்தவன்.
**ஆண்டகைமை** – வீரம்.
**ஆண்டலை** – கோழி; ஆண்மகன் தலைபோன்ற தலையுடைய ஒரு பறவை; பூவாது காய்க்கும் மரம்.
**ஆண்டலைக்கொடி** – முருகக்கடவுளின் சேவற் கொடி; ஆண்மகன் தலையும் பறவையின் உடலுமாக எழுதின பறவைக்கொடி.
**ஆண்டலைப்புள்** – ஆண்மகன் தலைபோன்ற வடிவங்கொண்ட பறவை.
**ஆண்டலையடுப்பு** – ஆண்டலைப்பறவை வடிவமாகச் செய்து பறக்கவிடும் மதிற்பொறி.
**ஆண்டவரசு** – திருநாவுக்கரசு நாயனார்.
**ஆண்டவன்** – உடையவன்; கடவுள்.
**ஆண்டளப்பான்** – வியாழன்.
**ஆண்டார்** – உடையோர்; தேவர்; அடியார்.
**ஆண்டாள்** – சூடிக்கொடுத்த நாச்சியார்.
**ஆண்டாள்மல்லிகை** – மல்லிகைவகை.
**ஆண்டான்** – ஆண்டவன்.
**ஆண்டான்வெட்டு** – பழைய நாணயவகை.
**ஆண்டி** – பண்டாரம்; பரதேசி; ஏழை; வரிக் கூத்துவகை.
**ஆண்டிச்சி** – ஆண்டியின் பெண்பாற் பெயர்.
**ஆண்டிசமாதி** – சன்னியாசியாய் இறந்தவரது சமாதியில் பூசை செய்வதற்கென்று இனாமாக விடப்பட்ட நிலம்.
**ஆண்டித்தாரா** – 'தாரா' என்னும் பறவைவகை.
**ஆண்டு** – அகவை; அவ்விடம்.
**ஆண்டுகள்ளடவு** – ஆண்டு வருமானம்.
**ஆண்டுமாறி, ஆண்டுமூஞ்சி** – ஒரு வசைச்சொல்.
**ஆண்டுமுய்தல்** – விருத்தியறுதல்.
**ஆண்டுவருதல்** – பயன்பாட்டுக்குப் போதிய தாதல்; பயன்படுத்தி வருதல்.
**ஆண்டெழுத்துத்தேவை** – பழைய வரிவகையுள் ஒன்று.
**ஆண்டை** – தலைவன்; அவ்விடம்; அவ்வுலகம்; தேட்கொடுக்கி; அழிஞ்சில்.
**ஆண்டைச்சிகை** – ஆண்டுப் பாக்கிக் கணக்கு.
**ஆண்டையர்** – மனிதர்.
**ஆண்டொழில்** – வீரச்செய்கை.
**ஆண்டோன்** – தலைவன்; தேவன்; மானிடன்.
**ஆண்தண்டு** – வலக்காதின் தண்டு.
**ஆண்பனை** – காயாப் பனை.
**ஆண்தருப்பை** – புல்வகை.
**ஆண்பாடு** – ஆண்மக்களின் முயற்சி.
**ஆண்பாத்தி** – உப்புப்பாத்திவகை.
**ஆண்பால்** – ஆண்சாதி; ஐம்பாலுள் ஒன்று.
**ஆண்பாலெழுத்து** – அ, இ, உ, எ, ஒ என்னும் குற்றெழுத்துகள்.
**ஆண்பாற் பிள்ளைக்கவி, ஆண்பாற் பிள்ளைத்தமிழ், ஆண்பாற் பிள்ளைப்பாட்டு** – காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்னும் பத்துப் பருவங்களில் ஓர் ஆண்மகனின் குழந்தைமைச் செயல்களை விளக்கும் பிரபந்தம்.

**ஆண்பிள்ளை** – ஆண்குழந்தை; ஆண்மகன்; கணவன்; வீரன்; கெட்டிக்காரன்.
**ஆண்பெண்** – ஆணும் பெண்ணும்; கணவன் மனைவி.
**ஆண்மக்கட்பருவம்** – காளைப் பருவம்.
**ஆண்மகன்** – ஆண் குழந்தை; கணவன்; ஆணிற் சிறந்தோன்.
**ஆண்மரம்** – உள்வயிரமுள்ள மரம்; காண்க: **சேமரம்; அழிஞ்சில்.**
**ஆண்மாரி** – அடங்காக் குணமுள்ளவள்.
**ஆண்மை** – ஆளுந்தன்மை; ஆண்தன்மை; வெற்றி; வலிமை; அகங்காரம்; உடைமை; வாய்மை.
**ஆண்மைத்தனம்** – ஆண்மைத்தன்மை.
**ஆண்மைப் பொதுப்பெயர்** – உயர்திணை ஆண் பாலையும் அஃறிணை ஆண்பாலையும் ஏற்கும் பொதுப்பெயர்.
**ஆண்மையாளர்** – வலிமையுற்றோர்; திறம் படைத்தவர்; வீரர்.
**ஆண்மையிலி** – பெண்தன்மை உடையவன்; ஆளும் தன்மை இல்லாதவன்.
**ஆண்வசம்பு** – சிலும்பலுள்ள வசம்பு.
**ஆண்வழி** – ஆண் சந்ததியிலிருந்து உண்டான பரம்பரை.
**ஆணகம்** – சுரைக்கொடி.
**ஆணங்காய்** – ஆண்பனையின் பாளை; பனம்பூ.
**ஆணத்தி** – கட்டளை.
**ஆணம்** – நேயம்; பற்றுக்கோடு; கொள்கலம்; குழம்பு; குழம்பிலுள்ள காய்; சிறுமை.
**ஆணர்** – பாணர்; பாடகர்.
**ஆணலி** – ஆண்தோற்றம் மிக்க அலி.
**ஆணவம்** – செருக்கு; காண்க: **ஆணவமலம்; கோளகபாடாணம்.**
**ஆணவமலம்** – மும்மலங்களுள் ஒன்று; மூலமலம்; உடம்பை 'யான்' என்று இருக்கை.
**ஆணவமறைப்பு** – ஆணவ மலத்தால் உயிருக்கு உண்டாகும் அறியாமை.
**ஆணழகன்** – அழகு வாய்ந்தவன்.
**ஆணன்** – ஆண்மையுடையவன்; அன்புடையோன்.
**ஆணாடுதல்** – விருப்பப்படி நடத்தல்.
**ஆணாப்பிறந்தோன்** – மனிதன்; ஆவிரை.
**ஆணாள்** – ஆண் நட்சத்திரங்கள்; அவை: பரணி, கார்த்திகை, உரோகிணி, புனர்பூசம், பூசம், அத்தம், அனுடம், திருவோணம், பூரட்டாதி, உத்திரட்டாதி.
**ஆணாறு** – மேற்குநோக்கி ஓடும் ஆறு.
**ஆணி** – இரும்பாணி; அச்சாணி; எழுத்தாணி; மரவாணி; உரையாணி; புண்ணாணி; மேன்மை; ஆதாரம்; ஆசை; சயனம்; பேரழகு; எல்லை.
**ஆணிக்கல்** – பொன் நிறுக்கும் கல்.
**ஆணிக்குருத்து** – பனையின் அடிக்குருத்து.
**ஆணிக்கை** – உறுதி.
**ஆணிக்கொள்ளுதல்** – இருப்பிடத்தை நிலைபெறச் செய்து கொள்ளுதல்; இறக்குங் காலத்தில் விழி அசையாது நிற்றல்.
**ஆணிக்கோவை** – உரையாணி கோத்த மாலை.
**ஆணிச்சவ்வு** – விழிப்படலம்.
**ஆணிச்சிதல்** – சீப்பிடித்த புண்ணாணி.
**ஆணித்தரம்** – முதல்தரம்; உறுதி.
**ஆணிதைத்தல்** – பொருத்த ஆணியடித்தல்; கால் முதலியவற்றில் ஆணிபாய்தல்.
**ஆணிப்புண்** – உள்ளாணியுள்ள சிலந்தி.
**ஆணிப்பூ, ஆணிப்பூடு** – கண்ணில் விழும் வெள்ளை; கண் நோய்.
**ஆணிப்பொன்** – உயர் மாற்றுப் பொன்.
**ஆணிமலர்** – ஆணியின் தலை.
**ஆணிமலர்திருப்பி** – திருப்புளி.
**ஆணிமுத்து** – உயர்தரமான முத்து.
**ஆணியச்சு** – ஆணியுண்டாக்கும் அச்சு.
**ஆணியம்** – நாட்படி.
**ஆணியிடுதல்** – கண் நிலைக்குத்துதல்.
**ஆணிவேர்** – மூலவேர்.
**ஆணு** – நேயம்; இனிமை; நன்மை; இரசம்.
**ஆணுடம்பு** – ஆண்குறி.
**ஆணெழுத்து** – உயிரெழுத்து.
**ஆணை** – கட்டளை; அதிகாரம்; நீதிமன்றம் முதலிய விடங்களில் கூறும் உறுதிமொழி; சூளுரை; மெய்; தடுக்கை; இலாஞ்சனை; வெற்றி; ஆன்றோர் மரபு; சிவபிரான்து சிற்சத்தி.
**ஆணையிடுதல்** – கட்டளையிடுதல்; சூளுரைத்தல்.
**ஆணையோலை** – கட்டளைத் திருமுகம்.
**ஆணைவழிநிற்றல்** – அரசர் கட்டளைப்படி நடத்தல்; வேளாண் மாந்தர் ஒழுக்கங்களுள் ஒன்று.
**ஆணைவிடுதல்** – சூளுறவை நீக்குதல்.
**ஆணொழிமிகுசொல்** – இருதிணையிலும் பெயர் அல்லது தொழிலினால் பெண்பாலாகப் பால் பிரியுஞ்சொல்.
**ஆத்தம்** – விருப்பம்; குருவுக்குச் செய்யும் பணிவிடை; அன்பு.
**ஆத்தல்** – யாத்தல்; அமைத்தல்; கட்டுதல்.
**ஆத்தவாக்கியம்** – நட்பாளர் மொழி; வேத சாத்திரங்கள்.
**ஆத்தன்** – விருப்பமானவன்; அருகன்; நம்பத் தக்கோன்.

**ஆத்தாடி** – வியப்புக் குறிப்பு; இளைப்பாறற் குறிப்பு.
**ஆத்தாரமுத்தாள்** – பூனைக்காலிக்கொடி.
**ஆத்தா, ஆத்தாள்** – தாய்; பார்வதி.
**ஆத்தானம்** – அரசவை; கோபுரவாயில்.
**ஆத்தி** – மரவகை; திருவாத்தி; செல்வம்; அடைகை; சம்பந்தம்; இலாபம்; பெண்பால் விகுதி; அச்ச வியப்புக்குறிப்பு.
**ஆத்திகம்** – கடவுள் உண்டென்னும் கொள்கை; யானைக்கூட்டம்.
**ஆத்திகன்** – கடவுள் உண்டென்னும் கொள்கை உடையவன்.
**ஆத்திசூடி** – ஆத்திமாலை சூடிய சிவபெருமான்; ஔவையார் செய்த நீதிநூல்களுள் ஒன்று.
**ஆத்திசூலை** – குதிரை நோய்வகை.
**ஆத்திட்டி** – நீர்முள்ளி.
**ஆத்தியந்தம்** – காண்க : **ஆதியந்தம்.**
**ஆத்தியந்திகபிரளயம்** – பிரளயத்தால் உலகம் முடியும் காலம்.
**ஆத்தியாத்துமிகம், ஆத்தியான்மிகம்** – தன்னைப்பற்றி வரும் துன்பம்.
**ஆத்தியை** – துர்க்கை.
**ஆத்திரக்காரன்** – அவசரப்படுபவன்.
**ஆத்திரகம்** – இஞ்சி.
**ஆத்திரம்** – பரபரப்பு; சினம்.
**ஆத்திரேயன்** – சந்திரன்; அத்திரி குலத்தில் பிறந்தவன்.
**ஆத்திரேயி** – பூப்புள்ளவள்; ஓர் ஆறு.
**ஆத்திரை** – காண்க : **யாத்திரை;** சுற்றுலா.
**ஆத்திரையன்** – அத்திரி குலத்தில் பிறந்தவன்.
**ஆத்திறைப்பாட்டம்** – கால்நடை வரி.
**ஆத்தின்னி** – பாணன்.
**ஆத்துமகத்தியை** – தற்கொலை.
**ஆத்துமகுப்தா** – காண்க: **பூனைக்காலி.**
**ஆத்துமசக்தி** – ஆன்மாவுக்குரிய ஆற்றல்.
**ஆத்துமசன்** – மகன்.
**ஆத்துமசிநேகிதன்** – உயிர்த்தோழன்.
**ஆத்துமசுத்தி** – ஆத்துமாவின் தூய்மை; காண்க : **ஆன்மசுத்தி.**
**ஆத்துமஞானம்** – தன்னையறியும் அறிவு.
**ஆத்துமஞானி** – தன்னையறிந்தவன்.
**ஆத்துமதரிசனம்** – ஆன்மாவின் நிலையை அறிகை; காண்க: **ஆன்மதரிசனம்.**
**ஆத்துமநாசம்**–தன்னைக் கெடுத்துக்கொள்ளுகை.
**ஆத்துமநிவேதனம்** – உயிர்ப்பலி; தன்னை அர்ப்பணஞ் செய்கை.
**ஆத்துமபந்து** – ஆன்மாவின் உறுதிச் சுற்றம்; அத்தை மகன், அம்மான் மகன் முதலிய உறவுகள்.
**ஆத்துமபுத்தி** – தன் அறிவு.
**ஆத்துமபோதம்** – காண்க: **ஆத்துமஞானம்.**
**ஆத்துமம்** – உயிர்; உயிரி; அரத்தை; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.
**ஆத்துமராமன்** – ஆத்ம திருப்தியுடையவன்.
**ஆத்துமரூபம்** – ஆன்மலாபம்; காண்க : **ஆன்மரூபம்.**
**ஆத்துமலாபம்** – உயிர் உய்கை; சொந்த இலாபம்; தன்னையறிகை.
**ஆத்துமவதம்** – காண்க : **ஆத்துமகத்தியை.**
**ஆத்துமவதிகாசனம்** – நல்லிருக்கை என்னும் யோகாசனம்.
**ஆத்துமவிசாரம்** – ஆத்துமாவை அறியும் சிந்தனை.
**ஆத்துமவிரக்கங்காட்டுதல்** – மனப்பூர்த்தியாக அன்பும் அருளும் காட்டுதல்.
**ஆத்துமா** – உயிர்; சீவான்மா; உயிரி.
**ஆத்துமாபகாரம்** – ஆத்துமாவின் இயல்பினை வேறாக நினைக்கை; பரதந்திரனான சீவனைச் சுதந்திரனாக நினைக்கை.
**ஆத்துமார்த்தம்** – ஆத்தும இலாபத்திற்குரியது; தன்பொருட்டு; மிக்க நட்பு.
**ஆத்துமானந்தம்** – தனக்குள் மகிழ்கை; தற்போதத்தால் நிகழும் மகிழ்ச்சி.
**ஆத்துமானுபவம்** – தன்னைத் தான் அனுபவிக்கை.
**ஆத்துமிகம்** – காண்க : **ஆத்தியாத்துமிகம்;** ஆன்மா சம்பந்தமுடையது.
**ஆத்தை** – தாய்; வியப்பு அச்ச இரக்கங்களைக் குறிக்கும் சொல்.
**ஆத்மா** – காண்க : **ஆத்துமா.**
**ஆதங்கம்** – நோய்; அச்சம்; துன்பம்; முரசின் ஓசை.
**ஆதண்** – நோய் வருத்தம்.
**ஆதண்டை** – காண்க : **ஆதொண்டை.**
**ஆததாயிகள்** – கொடியோர்; அவராவார்: தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில் விழைவார்.
**ஆதபத்திரம்** – குடை; வெண்குடை.
**ஆதபம்** – வெயில்; பிரகிருதிகளுள் ஒன்று.
**ஆதபயோகம்** – வெயிற்கடுமை தாங்கும் யோக நிலை.
**ஆதபன்** – சூரியன்.
**ஆதம்** – அன்பு; ஆதரவு; கூந்தற்பனை.
**ஆதம்பேதி** – செப்புநெருஞ்சில் பூண்டு.
**ஆதமிலி** – ஆதரவற்றவன், திக்கற்றவன்.
**ஆதர்** – அறிவில்லாதவர்; குருடர்.
**ஆதரணை** – ஆதரவு.

**ஆதரம்** – அன்பு; ஆசை; உபசாரம்; ஓடக்கூலி; சிலம்பு.

**ஆதரவு** – அன்பு; உதவி; தோற்றுகை; ஆதாரம்.

**ஆதரவுச்சீட்டு** – பற்றுச்சீட்டு.

**ஆதரவுசொல்லுதல்** – தேறுதல்சொல்லுதல்.

**ஆதராதிசயம்** – அன்புமிகுதி.

**ஆதரிக்கை** – அன்புசெய்தல்; பேணுதல்.

**ஆதரிசம், ஆதரிசனம்** – கண்ணாடி; உரை; மூல ஏடு.

**ஆதரித்தல்** – ஆசைகூர்தல்; உபசரித்தல்; பாதுகாத்தல்; உதவிசெய்தல்; தழுவிப் பேசுதல்.

**ஆதல்** – ஆவது எனப் பொருள்படும் இடைச்சொல்; நூல்; கூத்து; தரிசனம்; நுணுக்கம்; ஆசை; உண்டாதல்; நிகழ்தல்; முடிதல்; இணக்கமாதல்; வளர்தல்; அமைதல்; ஒப்பாதல்.

**ஆதலால்** – ஆகையால்.

**ஆதவம்** – காண்க: **ஆதபம்;** ஒளி; கொன்றைப்பூ.

**ஆதவன்** – காண்க : **ஆதபன்;** வேதியன்; சூரியகாந்தி.

**ஆதளை** – காண்க : **ஆமணக்கு;** காட்டாமணக்கு வகை; மாதுளை; பெருந்துன்பம்.

**ஆதளைமாதளை** – மயக்கம்; வருத்தம்.

**ஆதன்** – ஆன்மா; அறிவில்லாதவன்; குருடன்; பழைய காலத்து மக்கள் இயற்பெயர் வகை; அருகன்; ஆரியன்; வாதனை.

**ஆதன்மை** – பேதைமை.

**ஆதன்மையால்** – ஆகையால்.

**ஆதனம்** – காண்க : **ஆசனம்;** யோகாசனம்; பிருட்டம்; பீடம்; தரை; சீலை; சொத்து; யானைக்கழுத்து.

**ஆதனமூர்த்தி** – படிமம்; இலிங்கம்.

**ஆதாபாதா** – மகமதியர்களிடையே வரவேற்குங் காலத்தில் சொல்லும் உபசாரவார்த்தை.

**ஆதாயஞ்செலவு** – வரவுசெலவு.

**ஆதாயப்பங்கு** – இலாபப் பங்கு.

**ஆதாயம்** – இலாபம்; இலக்கினத்திற்குப் பதினோராம் இடம்.

**ஆதாரசக்தி** – சிவசக்தி.

**ஆதாரசிலை** – கற்சிலையைத் தாங்கும் அடிக்கல்.

**ஆதாரணை** – ஆராதனை செய்யும்போது உண்டாகும் தெய்வ ஆவேசம்.

**ஆதாரதண்டம்** – முதுகெலும்பு.

**ஆதாரநிலை** – பற்றுக்கோடு.

**ஆதாரபீடம்** – காண்க : **ஆதாரசிலை.**

**ஆதாரம்** – பற்றுக்கோடு; ஆதரவுச்சாதனம்; பிரமாணம்; உடல்; மழை; ஆறாதாரம்; மூலம்; அடகு; ஏரி; பாத்தி; அதிகரணம்.

**ஆதாரலக்கணை** – இடவாகுபெயர்.

**ஆதாளி** – பேரொலி; கலக்கடி; வீம்புப் பேச்சு.

**ஆதாளிக்காரன்** – வீம்பு பேசுகின்றவன்.

**ஆதாளித்தல்** – ஆயாசப்படுதல்.

**ஆதாளிமன்னன்** – கரடி.

**ஆதாளை** – காண்க : **ஆதளை.**

**ஆதானம்** – வைக்கை; பற்றுகை; குதிரையணி.

**ஆதானும்** – எதுவாயினும்.

**ஆதி** – தொடக்கம்; தொடக்கமுள்ளது; காரணம்; பழைமை; கடவுள்; எப்பொருட்கும் இறைவன்; சூரியன்; சுக்கிரன்; திரோதான சக்தி; காண்க : **ஆதிதாளம்;** அதிட்டானம்; ஒற்றி; காய்ச்சற்பாடாணம்; மிருதபாடாணம்; நாரை; ஆடாதோடை; குதிரையின் நேரோட்டம்; மனநோய்.

**ஆதிக்கடுஞ்சாரி** – நவச்சாரம்.

**ஆதிக்கப்பேறு** – வரிவகை.

**ஆதிக்கம்** – தலைமை; அரசாளிடம்; உரிமை; மிகுதி.

**ஆதிக்கற்பேதம், ஆதிக்கன்னாதம்** – அன்னபேதி.

**ஆதிக்கன்** – சிறப்புடையோன்; மரபோன்.

**ஆதிக்கியம்** – தலைமை; மேன்மை; உரிமை; காண்க : **ஆதிக்கம்.**

**ஆதிக்குடி** – சவர்க்காரம்.

**ஆதிக்குரு** – பூவழலை.

**ஆதிகம்** – சிறுகுறிஞ்சாக்கொடி முதலியன.

**ஆதிகவி** – முதற்புலவன்; வான்மீகி முனிவர்.

**ஆதிகாரணம்** – முதற்காரணம்.

**ஆதிகாலம்** – பண்டைக்காலம்.

**ஆதிகாவியம்** – முதலில் தோன்றிய காவியம், வால்மீகி இராமாயணம்.

**ஆதிச்சனி** – காண்க : **மகம்.**

**ஆதிச்சுவடி** – காண்க : **அரிச்சுவடி.**

**ஆதிசத்தி** – பஞ்ச சத்திகளுள் ஒன்று; ஆதியாகிய சத்தி.

**ஆதிசேடன்** – பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கிறது எனக் கூறும் 'அனந்தன்' என்கிற பாம்பு.

**ஆதிசைவம்** – சைவ சமயப் பிரிவுகள் பதினாறனுள் ஒன்று.

**ஆதிசைவர்** – சிவாலயங்களில் பூசை புரியும் அதிகாரிகளாகிய குருக்கள்.

**ஆதிட்டம்** – கட்டளையிடப்பட்டது, சொல்லப்பட்டது; உண்டுகழிந்த மிச்சில்.

**ஆதித்தநோக்கு** – சூரியனுடைய பார்வை.

**ஆதித்தபுடம்** – சூரிய நிலையைக் குறிக்கும் இராசிபாகை.

**ஆதித்தபுத்தி** – சூரியனது நாட்கதி.

**ஆதித்தம்** – காவிக்கல்; துரிசு.

**ஆதித்தமண்டலம்** – சூரிய வட்டம்; இதயத்திலுள்ள ஒரு யோகத்தானம்; சூரிய உலகம்.

**ஆதித்தர்** – தேவர்; பன்னிரு சூரியர்.

**ஆதிவாரம், ஆதித்தவாரம்** – ஞாயிற்றுக்கிழமை.

**ஆதித்தன்** – சூரியன்; உவர்மண்.

**ஆதித்தியம்** – விருந்தோம்பல்; ஒரு சோதிடநூல்.

**ஆதித்தியன்** – சூரியன்; விருந்தோம்புவோன்.

**ஆதிதாசர்** – சிவபெருமானின் அணுக்கத் தொண்டர், சண்டேசுவரர்.

**ஆதிதாளம்** – தாளவகை.

**ஆதிதிராவிடர்** – தமிழகப் பழங்குடி மக்கள்.

**ஆதிதேயம்** – உண்டி, நீர் முதலியன அளித்து வழிபடல்.

**ஆதிதேயன்** – விருந்தினரைப் போற்றுவோன்; தேவன்.

**ஆதிதேவன்** – கடவுள்.

**ஆதிதைவிகம்** – தெய்வத்தால் வருந்துன்பம்.

**ஆதிநாடி** – ஆதாரமாயுள்ள நாடி.

**ஆதிநாதர்** – நவநாத சித்தருள் ஒருவர்; முதல் தீர்த்தங்கரராகிய விருஷபதேவர்.

**ஆதிநாதன்** – கடவுள்.

**ஆதிநாராயணன்** – திருமால்; வயிரக்கல்.

**ஆதிநாள்** – வாரத்தின் முதல் நாளாகிய ஞாயிற்றுக்கிழமை.

**ஆதிநித்தியர்** – படைக்கப்பட்டும் ஒரு நாளும் அழியாதவர்.

**ஆதிநூல்** – முதனூல்; வேதம்.

**ஆதிபகவன்** – கடவுள்.

**ஆதிபத்தியம்** – தலைமை; இராசிச் சக்கரத்துள் குறிப்பிட்ட வீட்டுக்குடையவன்.

**ஆதிபரன்** – கடவுள்.

**ஆதிபலம்** – சாதிக்காய்.

**ஆதிபன்** – இறைவன்.

**ஆதிபுங்கவன்** – கடவுள்; அருகன்.

**ஆதிபுரி** – திருவொற்றியூர்.

**ஆதிபூதன்** – பிரமன், முன்பிறந்தவன், முன்னுள்ளவன்.

**ஆதிபூமி** – திருமண வேள்வி நடத்தும் இடம்.

**ஆதிபௌதிகம்** – பஞ்ச பூதங்களாலும் தன்னை ஒழிந்த உயிரினங்களாலும் உண்டாகும் துன்பம்.

**ஆதிமகாகுரு** – துரிசு.

**ஆதிமகாநாதம்** – உலோகமணல்.

**ஆதிமடக்கு** – அடியின் முதலில் சொல் மடங்கி வருவது.

**ஆதிமருந்து** – திரிகடுகம்; சுக்கு, மிளகு, திப்பிலி.

**ஆதிமலை** – இமயமலை.

**ஆதிமீன்** – காண்க : **அசுவினி.**

**ஆதிமுத்தன்** – ஆணவமலம் மட்டும் உள்ள ஆன்மா.

**ஆதிமூர்த்தி** – முதற் கடவுள்.

**ஆதிமூலபுத்தகம்** – அரிச்சுவடி.

**ஆதிமூலம்** – முதற்காரணம், மூலகாரணமானது.

**ஆதிமொழி** – முதன்மொழி, தமிழ்மொழி; வடமொழி.

**ஆதியங்கடவுள்** – முதற்கடவுள்; அருகன்.

**ஆதியந்தகாலநாடி, ஆதியந்தகாலம்** – நாழிகை விநாடிகளில் சொல்லிய கிரகணத்தின் கால அளவு.

**ஆதியந்தணன்** – பிரமதேவன்.

**ஆதியந்தம்** – முதலும் முடிவும், அடிமுடி.

**ஆதியரிவஞ்சம்** – போகபூமிவகை.

**ஆதியாகமம்** – பகுசுருதியாகமம்; விவிலிய நூலில் முதற்பகுதி.

**ஆதியாமம்** – சங்கஞ்செடி.

**ஆதியூழி** – கிருதயுகம்.

**ஆதியெழுத்து** – முதலெழுத்துகள்; உயிர் 12, மெய் 18.

**ஆதிரசாலை** – காண்க : **ஆதுலர்சாலை.**

**ஆதிரம்** – நெய்; நெய்ச்சிட்டி.

**ஆதிரவிச்சிலை** – செங்கழுநீர்க்கல்.

**ஆதிரன்** – பெரியோன்.

**ஆதிரை** – திருவாதிரை நாள்; மணிமேகலைக் காப்பியத்தில் வரும் சாதுவன் மனைவி.

**ஆதிரை முதல்வன், ஆதிரையான்** – சிவன்.

**ஆதிவராகம்(ன்)** – பன்றிப் பிறப்பு எடுத்த திருமால்.

**ஆதிவாகியம்** – நுண்ணுடம்பு.

**ஆதிவாரம்** – ஞாயிற்றுக்கிழமை.

**ஆதிவிந்து** – கார்முகில்பாடாணம்.

**ஆதிவிராகன்** – சோரபாடாணம்.

**ஆதிவிராட்டியன்** – சூதபாடாணம்; சோரபாடாணம்.

**ஆதிவேதனிகம்** – கணவன் இரண்டாந் தாரம் கொள்ளும்போது மூத்தாளுக்கு உரிமையாக்கும் பொருள்.

**ஆதீண்டுகுற்றி** – ஆவுரிஞ்சுதறி, பசுக்கள் உராய்ந்து தினவு தீர்க்க நடப்படும் கல்தூண்.

**ஆதீனகர்த்தன்** – நிலக்கிழார்.

**ஆதீனகர்த்தா** – சைவ மடாதிபதி.

**ஆதீனத்தர்** – காண்க : **ஆதீனகர்த்தா.**

**ஆதீனம்** – சைவமடம்; உரிமை; வசம்.

**ஆது** – பாகர் யானையைத் தட்டிக் கொடுக்கையில் கூறும் ஒரு குறிப்புச் சொல்; ஆறாம் வேற்றுமையுருபு; தெப்பம்.

**ஆதும்** – ஒன்றும், சிறிதும்.

**ஆதுமம்** – அரத்தை.

**ஆதுரசாலை** – அறச்சாலை.

**ஆதுரம்** – பரபரப்பு; அவா; நோய்.
**ஆதுரன்** – நோயுற்றோன்; ஆசையுற்றோன்.
**ஆதுலசாலை, ஆதுலர்சாலை** – ஆற்றலற்றோருக்கும் ஏழையருக்கும் உண்டியும் உறைவிடமும் அளிக்கும் சாலை.
**ஆதுலன்** – ஆற்றலற்றவன்; வறியோன்.
**ஆதுவம்** – கள்.
**ஆதுனிகன்** – இக்காலத்தவன்.
**ஆதேசம்** – கட்டளை; திரிந்த எழுத்து; காண்க : **ஆதேயம்.**
**ஆதேயம்** – தாங்கப்படுவது.
**ஆதொண்டை** – காற்றோட்டிக் கொடி; காற்றோட்டிச் செடி.
**ஆதோரணன்** – யானைப்பாகன்.
**ஆந்தரங்கம்** – காண்க : **அந்தரங்கம்.**
**ஆந்தரம்** – உள்ளேயிருப்பது; மறைபொருள்.
**ஆந்தராளிகன்** – நடுநிலையாளன்.
**ஆந்திரம்** – குடல்; தெலுங்கு நாடு; தெலுங்கு மொழி.
**ஆந்தை** – பறவைவகை; பேராமுட்டி; ஓர் இயற்பெயர்.
**ஆந்தைக்காதல்** – ஆந்தை கூவுதல்; ஆந்தை நூல்.
**ஆந்தோளம்** – இசையில் இடம்பெறும் கமகம் பத்தனுள் ஒன்று.
**ஆந்தோளி, ஆந்தோளிகம்** – சிவிகை.
**ஆநிலை** – பசுக்கொட்டில்.
**ஆநின்று** – நிகழ்கால இடைநிலை.
**ஆப்தசேவை** – குருவுக்குச் செய்யும் தொண்டு.
**ஆப்தம்** – நட்பு.
**ஆப்தவாக்கியம்** – பெரியோர்களின் வாக்கியங்கள்.
**ஆப்தன்** – நம்பத்தக்கோன்; உற்ற நண்பன்.
**ஆப்திகம்** – தலைத்திவசம்.
**ஆப்பம்** – அப்பம்; ஒருவகைத் தின்பண்டம்; கும்பராசி.
**ஆப்பி** – பசுவின் சாணி.
**ஆப்பிடுதல்** – அகப்படுதல்.
**ஆப்பியந்தரம்** – உள்ளானது.
**ஆப்பியாயனம்** – மனநிறைவு.
**ஆப்பு** – முளை; காண்க : **எட்டி;** நொய்; உணவு; கட்டு; உடல்.
**ஆப்புத்தள்ளி** – அச்சுக்கூடக் கருவிகளிலொன்று.
**ஆப்புலுதம்** – குதிரையின் நடைவகை.
**ஆப்புளண்டம்** – காண்க : **கரிசலாங்கண்ணி.**
**ஆபகம், ஆபகை** – ஆறு; கங்கை.
**ஆபணியம்** – அங்காடிச் சரக்கு; அங்காடி வீதி.
**ஆபத்சகாயன்** – துன்பத்தில் உதவுவோன்.
**ஆபத்சன்னியாசம்** – இறக்குங்கால் பெறும் துறவு.
**ஆப(வ)த்தனம்** – எய்ப்பினில் வைப்பு, முடைப்பட்ட காலத்து உதவும் பொருள்.
**ஆப(வ)த்து** – விபத்து, கேடு.
**ஆபத்துசம்பத்து** – தாழ்வு வாழ்வு.
**ஆபதம்** – காண்க : **ஆபத்து.**
**ஆபதமறுத்தல்** – கேடு நீக்குதல்.
**ஆபதுத்தாரணம்** – கேட்டை நீக்கிக் காத்தல்.
**ஆபதுத்தாரணன்** – துன்பத்தினின்றும் காப்போன்.
**ஆபந்தம்** – அலங்காரம்; கட்டு; நுகக்கயிறு.
**ஆபம்** – நீர்; தீவினை.
**ஆபயன்** – பால்.
**ஆபரணச்செப்பு** – அணிகலப் பேழை.
**ஆபரணம்** – அணிகலம்; அலங்காரம்.
**ஆபற்காலம்** – ஆபத்துச் சமயம்.
**ஆபற்சன்னியாசம்** – காண்க : **ஆபத்சன்னியாசம்.**
**ஆபனம்** – காண்க : **மிளகு.**
**ஆபாசம்** – போலி; எதிரொளி; தூய்மையின்மை; முறைத்தவறு; அவதூறு.
**ஆபாசித்தல்** – உண்மையான பொருளைப் போலத் தோன்றுதல், எதிரொளித்தல்.
**ஆபாடம்** – பாயிரம்.
**ஆபாத்** – போர்வீரருக்குரிய தளவாடங்கள் சேகரிக்கக்கூடிய ஊர்.
**ஆபாத்செய்தல்** – குடியேற்றி வளஞ்செய்தல்.
**ஆபாதகேசம்** – உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை.
**ஆபாதசூடம்** – அடிமுதல் முடிவரை.
**ஆபாதம்** – நிகழ்காலம்; விழுகை; காண்க : **ஆபாதகேசம்.**
**ஆபாதமத்தம், ஆபாதமத்தகம்** – காண்க : **ஆபாதகேசம்.**
**ஆபாதன்** – தீயவன்.
**ஆபாலகோபம், ஆபாலகோபாலம்** – எல்லோரும்; குழந்தைகள் பசுக்கள் உட்பட அனைவரும்.
**ஆபாலவிருத்தர்** – சிறுவர் முதல் முதியோர்வரை உள்ளவர்.
**ஆபாலி** – பேன்.
**ஆபானம்** – மதுக்கடை.
**ஆபிசாரம்** – காண்க : **அபிசாரம்;** பகைவன் இறக்குமாறு செய்யும் ஒரு கொடுந்தொழில்.
**ஆபிமுக்கியம்** – அனுகூலமாயிருக்கை.
**ஆபீரம்** – ஆயர்வீதி.
**ஆபீரவல்லி** – இடைச்சேரி.
**ஆபீரன்** – இடையன்.
**ஆபீலம்** – துன்பம்; அச்சம்.
**ஆபீனம்** – பசுவின் மடி.
**ஆபூபிகம்** – அப்பவரிசை.

**ஆபூபிகன்** – அப்பஞ்சுடுவோன்; அப்பம் விற்போன்.
**ஆபை** – அழகு; ஒளி; தோற்றம்; நிறம்.
**ஆபோக்கிலிமம்** – இலக்கினத்திற்கு மூன்று, ஆறு, ஒன்பது, பன்னிரண்டாம் இடங்கள்.
**ஆபோகம்** – கீதவுறுப்புள் ஒன்று; எத்தனம்; நிறைவு; வருணன் குடை.
**ஆபோசனம்** – விழுங்குகை; உண்ணுதலுக்கு முன்னும் பின்னும் மந்திரபூர்வமாக நீரை உட்கொள்ளுகை.
**ஆம்** – நீர்; ஈரம்; வீடு; மாமரம்; அழகு; சம்மதங் காட்டும் சொல்; கேள்விப்பட்டதைக் குறிக்கும் சொல்; இகழ்ச்சிக் குறிப்பு; அனுமதி, தகுதி, ஊக்கம் குறிக்கும் சொல்; ஆவது; ஆகிய; சாரியை; அசைநிலை; தன்மைப் பன்மை விகுதி; உளப்பாட்டுத் தன்மைப் பன்மை விகுதி.
**ஆம்பரியம்** – மின்சாரம்.
**ஆம்பல்** – அல்லி; காண்க : **ஆம்பற்குழல்;** பண்வகை; மூங்கில்; ஊதுகொம்பு; யானை; கள்; ஒரு பேரெண்; துன்பம்; அடைவு; சந்திரன்; நெல்லிமரம்; புளியாரைப்பூண்டு; பேரொலி.
**ஆம்பலரி** – கதிரவன்; முதலை.
**ஆம்பலா** – புளியாரைப்பூண்டு.
**ஆம்பற்குழல்** – குமுத வடிவாக அணைசு பண்ணிச் செறித்த ஓர் இசைக்கருவி.
**ஆம்பாறுதல்** – செழிப்புக் குறைதல்.
**ஆம்பி** – காளான்; பன்றிப்பத்தர்; ஒலி.
**ஆம்பிகேயன்** – முருகக்கடவுள்; திரிதராட்டிரன்.
**ஆம்பியம்** – பாதரசம்.
**ஆம்பிரம்** – காண்க : **தேமா; புளிமா;** கள்; புளிப்பு.
**ஆம்பிலம்** – புளிப்பு; புளியமரம்; கள்; சூரை; உப்பிலி.
**ஆம்பு** – காண்க : **காஞ்சொறி.**
**ஆம்புகு** – சூரை; புளியமரம்.
**ஆம்புடை** – உபாயம்.
**ஆம்புலம்** – காண்க : **சூரை.**
**ஆம்பூறு** – சூரைச்செடி.
**ஆம்மிரம்** – ஒரு பலம் எடை.
**ஆமக்கட்டி** – சுரக்கட்டி.
**ஆமக்கழிச்சல்** – சீதபேதி.
**ஆமக்கள்(ன்)** – கணவன்.
**ஆமகணம்** – குழந்தைகட்குச் சீதவழும்பு விழும் நோய்.
**ஆமசன்னி** – செரியாமையால் வரும் சன்னி.
**ஆமசிராத்தம்** – சமைக்காத உணவுப்பொருளைக் கொண்டு செய்யுஞ் சிராத்தம்.
**ஆமசுரம்** – செரியாமையால் குழந்தைகளுக்கு வரும் சுரம்.
**ஆமசூலை** – செரியாமையால் வரும் வயிற்றுவலி.
**ஆமடி** – எட்டிமரவகை.
**ஆமண்டம், ஆமணக்கு** – விளக்கெண்ணெய் விதைதரும் செடி.
**ஆமணக்குநெய்** – கொட்டைமுத்தெண்ணெய், விளக்கெண்ணெய்.
**ஆமணக்குமுத்து** – கொட்டைமுத்து.
**ஆமணக்கெண்ணெய்** – காண்க : **ஆமணக்குநெய்.**
**ஆமணத்தி** – கோரோசனை.
**ஆமதி** – நண்டு.
**ஆமந்திரிகை** – இடக்கை வாத்தியம்.
**ஆமநாயம்** – வழக்கம்; ஆகமம்; குலன்.
**ஆமம்** – பக்குவஞ் செய்யப்படாதது; செரியாமை; சீதபேதி, காளான்; கடலை; துவரை.
**ஆமயம்** – பசுவின் சாணி; நோய்.
**ஆமரகோளம்** – கடுக்காய்ப்பூ.
**ஆமரம்** – எட்டிமரம்.
**ஆமரி** – சொல்.
**ஆமரிகம்** – காண்க: **ஆமலகம்.**
**ஆமல்** – காண்க : **மூங்கில்; விடமூங்கில்.**
**ஆமலகம்** – நெல்லி.
**ஆமலகமலம்** – காண்க : **கொட்டைப்பாசி.**
**ஆமலகி** – நெல்லி.
**ஆமவாதரோகம்** – வாதநோய் வகை.
**ஆமளம்** – சிவத்துதிவகை.
**ஆமா** – காட்டுப் பசு; பால்கொடுக்குந் தாய்; ஆமாம்.
**ஆமாகோளா** – காண்க : **ஆமரகோளம்.**
**ஆமாசயம்** – இரைப்பை.
**ஆமாத்தியன்** – அமைச்சன்; படைத்தலைவன்; மருத்துவன்.
**ஆமாத்திரர்** – அமைச்சர்; மருத்துவர்.
**ஆமாம்** – ஒரு சம்மதக் குறிச்சொல்.
**ஆமாம்போடுதல்** – எதற்கும் ஒத்துக் கூறுதல்.
**ஆமாறு** – வழி.
**ஆமான்** – காட்டுப்பசு.
**ஆமான்புகல்வி** – ஆமான் ஏறு.
**ஆமானவன்** – சிறந்தவன்.
**ஆமிசம்** – ஊன்; கைக்கூலி; புணர்ச்சி; போகத்திற்குரிய பொருள்.
**ஆமிடம்** – உணவு; கண்டுமுதல்; விளைவுமதிப்பு.
**ஆமிநாயம்** – காண்க : **ஆமநாயம்.**
**ஆமிரம்** – மாமரம்; புளிப்பு.
**ஆமிரேசர்** – மாமரத்தின்கீழ்க் கோயில் கொண்டுள்ளவர், ஏகாம்பரநாதர்.
**ஆமிலம்** – புளிப்பு; புளியமரம்.
**ஆமிலிகை** – புளிப்பு.
**ஆமிலை** – காண்க : **புளியாரை.**

**ஆமின்** – காண்க : **அமீன்.**

**ஆமுகம்** – தொடக்கம்.

**ஆமுகர்** – நந்திதேவர்.

**ஆமென்** – அப்படியே ஆகுக.

**ஆமேற்பல்லூரி** – கோரோசனை.

**ஆமை** – கூர்மம்; ஓர் உயிரினம்; ஒரு நோய்; மணம்.

**ஆமைத்தாலி** – ஆமை வடிவுள்ள தாலி.

**ஆமைதவழி** – ஆமை சஞ்சரித்தலால் ஆகாதென்று விலக்கிய நிலம்.

**ஆமைப்பலகை** – ஆமை உரு அமைத்த மணை.

**ஆமைப்பூட்டு** – பூட்டுவகை.

**ஆமைமடி** – பால் நிரம்பச் சுரக்கும் சிறுமடி.

**ஆமையாழ்** – செவ்வழி யாழ்வகை.

**ஆமையோட்டுக்கட்டி** – பெரும் புண்கட்டி.

**ஆமையோடு** – ஆமையின் முதுகோடு.

**ஆமோசனம்** – கட்டுதல்; ஒளிவீசுதல்; விடுதலை செய்தல்.

**ஆமோதம்** – மகிழ்ச்சி; மிகுமணம்.

**ஆமோதனம்** – எடுத்து மொழிந்ததற்கு உட்படுகை, முன்மொழிந்ததற்கு உட்படுகை.

**ஆமோதித்தல்** – உடன்பட்டதைத் தெரிவித்தல்.

**ஆய்** – அழகு; நுண்மை; சிறுமை; மென்மை; வருத்தம்; இடைச்சாதி; தாய்; கடைவள்ளல்களுள் ஒருவன்; மலம்; பொன்; அருவருப்புக் குறிப்பு; முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி; ஏவலொருமை விகுதி; ஆக; ஒரு விளியுருபு.

**ஆய்க்குடி** – இடைச்சேரி.

**ஆய்(ய)க்குழல்** – புல்லாங்குழல்.

**ஆய்ச்சல்** – வேகம்; முறை; பாட்டம்.

**ஆய்ச்சி** – தாய்; பாட்டி; பெண்; இடைச்சி.

**ஆய்ஞன்** – ஆராய்பவன்.

**ஆய்த்தி** – காண்க : **ஆய்ச்சி.**

**ஆய்த்து** – ஆயிற்று.

**ஆய்தக்குறுக்கம்** – மாத்திரை குறுகிய ஆய்தம்.

**ஆய்தப்புள்ளி** – ஆய்தவெழுத்து.

**ஆய்தம்** – மூன்று புள்ளி (ஃ) வடிவினதாகிய ஓரெழுத்து, சார்பெழுத்துகளுள் ஒன்று.

**ஆய்தல்** – நுணுகுதல்; வருந்துதல்; அழகமைதல்; அசைதல்; சோதனை செய்தல்; பிரித்தெடுத்தல்; ஆலோசித்தல்; தெரிந்தெடுத்தல்; கொண்டாடுதல்; கொய்தல்; காம்பு களைதல்; குத்துதல்.

**ஆய்தூவி** – சூட்டுமயிர்; தலைமேலுள்ள மெல்லிய இறகு.

**ஆய்ந்தோர்** – அறிஞர்; புலவர்; பார்ப்பார்.

**ஆய்ப்பாடி** – காண்க : **ஆயர்பாடி.**

**ஆய்ப்பு** – ஒடுங்குகை.

**ஆய்மலர்** – தாமரை.

**ஆய்மா** – காண்க : **ஆவிமா**; சாரப்பருப்பு.

**ஆய்மை** – ஆராயுந்தன்மை; நுண்ணிய பொருள்.

**ஆய்வரல், ஆய்வருதல்** – ஆராய்தல்; கூடிவருதல்.

**ஆய்வாளர்** – ஆராய்ச்சியாளர்.

**ஆய்வு** – ஆராய்கை; அகலம்; வருத்தம்; நுணுக்கம்.

**ஆய்வை** – துயிலிடம்.

**ஆயக்கசுரம்** – முறைக்காய்ச்சல்.

**ஆயக்கட்டு** – குளப்புரவு; ஊரின் மொத்த நில வளவுக் கணக்கு; பொய்ம்மொழி.

**ஆயக்கட்டுமானியம்** – அரசாங்கச் சட்டத்தின்படி (சாசனப்படி) ரொக்கமாக வசூலிக்கும் பணம்.

**ஆயக்கர்** – ஊர்ப்பணியாளருள் ஒருவகையார்.

**ஆயக்கல்** – காரக்கல்.

**ஆயக்காரன்** – சுங்கம் முதலிய வரிவாங்குவோன்.

**ஆயக்காரி** – பொதுமகள்.

**ஆயக்கா(கோ)ல்** – வாகனத்தைத் தாங்கும் முட்டுக்கால்; முட்டுக்கட்டை; சிவிகைதாங்கி.

**ஆயச்சாவடி** – சுங்கத்துறை.

**ஆயசம்** – இருப்பாயுதம்; இரும்புச்சட்டை; இரும்பினாற் செய்யப்பட்டது.

**ஆயசூரி** – கடுகு.

**ஆயத்தம்** – முன்னேற்பாடு; அணியம், சித்தம்; போருக்குத் தயார்; கூர்மை; கோபம்; தள்ளுகை; இசைக்கிளையில் ஒன்று.

**ஆயத்தலம்** – மறைவிடம்; காண்க : **ஆயத்துறை.**

**ஆயத்தார்** – தோழியர் கூட்டம்.

**ஆயத்தி** – நாள்; எல்லை; அன்பு; வலி; யாவரையும் தன்வயப்படுத்தி நிற்குந் தன்மை.

**ஆயத்துறை** – சுங்கச்சாவடி.

**ஆயதம்** – நீளம்; அகலம் குறைந்து நீளமாயிருக்கும் வடிவம்; அளவிற்பெருமை.

**ஆயதனம்** – ஆலயம்; இடம்; வீடு.

**ஆயதி** – வருங்காலம்; நீட்சி; பெருமை; பொருந்துகை.

**ஆயந்தி** – அண்ணன் மனைவி.

**ஆயந்தீர்த்தல்** – வரி செலுத்துதல்.

**ஆயப்பாலை** – பாலைப்பண்வகை.

**ஆயம்** – கமுக்கம்; தோழியர் கூட்டம்; வருத்தம்; மேகம்; மல்லரிப்பறை; 34 அங்குல ஆழமுள்ள குழி; வருவாய்; குடியிறை; கடமை; சூதுகருவி; கவற்றிற்றாயம்; சூதாட்டம்; பசுத்திரள்; நீளம்; மக்கள் தொகுதி; பொன்.

**ஆயமானம்** – உயிர்நிலை; இரகசியம்.

**ஆயமுற்கரவலன், ஆயமுற்கரவன்** – குபேரன்.

**ஆயமேரை** – ஊர்ப்பணியாளர்களுக்குக் கொடுக்கும் தானியப் பகுதி.

**ஆயர்பாடி** – இடைச்சேரி.

**ஆயலோட்டல்** – பயிர் சேதமாகாதபடி மகளிர் பறவைகளை விரட்டுகை.
**ஆயவன்** – அத்தகையவன்.
**ஆயவியயம்** – வரவுசெலவு.
**ஆயன்** – இடையன்.
**ஆயனம்** – ஆண்டு; நெல்வகை; கிரணம்.
**ஆயனி** – துர்க்கை.
**ஆயா** – மரவகை; பாட்டி; தாதி.
**ஆயாசம்** – களைப்பு; மனவருத்தம்; முயற்சி.
**ஆயாமம்** – அடக்குகை; நீளம்; அகலம்.
**ஆயாள்** – தாய்; பாட்டி; முதியவள்.
**ஆயான்** – தந்தை; தமையன்.
**ஆயானம்** – இயற்கைக் குணம்; வருதல்.
**ஆயி** – தாய்; ஆயா; ஒரு சத்தி; ஒரு மரியாதைச் சொல்.
**ஆயிட்டு** – ஆகையால்.
**ஆயிடை** – அவ்விடம்; அக்காலத்து.
**ஆயிரக்கால் மண்டபம்** – ஆயிரம் தூண்களுள்ள கோயில் மண்டபம்.
**ஆயிரக்காலி** – மரவட்டை; துடைப்பம்.
**ஆயிரக்கிரணன்** – சூரியன்.
**ஆயிரங்கண்ண(ணோ)ன்** – இந்திரன்.
**ஆயிரங்கண்ணுப் பானை** – கலியாணத்தில் பயன் படுத்தும் வண்ணப்பானை.
**ஆயிரங்கதிரோன்** – காண்க : **ஆயிரக்கிரணன்.**
**ஆயிரங்காய்ச்சி** – மிகுதியாகக் காய்க்கும் தென்னை, பலா, மாப் போன்ற மரங்கள்; துடைப்பம்.
**ஆயிரங்காற்சடை** – துடைப்பம்.
**ஆயிரஞ்சோதி** – சூரியன்.
**ஆயிரநாமன்** – ஆயிரம் திருப்பெயர்களையுடைய வன்; சிவன்; திருமால்.
**ஆயிரம்** – ஓர் எண்.
**ஆயிரம்பெயரோன்** – காண்க : **ஆயிரநாமன்.**
**ஆயிரமுகத்தோன்** – வீரபத்திரன்.
**ஆயிரவருக்கம்** – உடற்கவசம்.
**ஆயிரவாரத்தாழியன்** – திருவடிகளில் ஆயிரம் வரி கொண்ட சக்கரத்தையுடையவன்; புத்தன்.
**ஆயில்** – மதகரிவேம்பு; செவ்வகில்; அசோகு; ஆயிலிய நாள்.
**ஆயிலியம்** – ஒன்பதாம் மீன்.
**ஆயிழை** – தெரிந்தெடுத்த அணிகலன்; கன்னியா ராசி; அரிவாள்நுனி.
**ஆயின்** – ஆனால்; ஆராயின்.
**ஆயின்மேனி** – மரகதவகை.
**ஆயின்று** – ஆயிற்று.
**ஆயினும்** – ஆனாலும்; ஆவது; உம்மைப் பொருளில் வரும் எண்ணிடைச் சொல்.
**ஆயு** – ஆயுள்; எண்குற்றங்களுள் வாழ்நாளை வரையறுப்பது.
**ஆயுகம்** – வாழ்நாள்.
**ஆயுசகன்** – வாயு.
**ஆயுசு** – வாழ்நாள்.
**ஆயுசுகாரகன்** – சனி.
**ஆயுசுமான்** – நீண்ட ஆயுளுடையவன்; யோகம் இருபத்தேழனுள் ஒன்று.
**ஆயுட்கோள்** – சாதகனுடைய ஆயுளைக் கணிப்ப வனாகக் கருதப்படும் சனி.
**ஆயுட்டானம்** – சன்மலக்கினத்திலிருந்து எட்டா மிடம்.
**ஆயுட்டோமம்** – நீண்ட வாணாளின் பொருட்டுச் செய்யும் வேள்வி.
**ஆயுதசாலை** – படைக்கலக் கொட்டில்.
**ஆயுதப்பயிற்சி** – படைக்கலம் பயில்கை.
**ஆயுதபாணி** – கையில் ஆயுதம் கொண்டவன்.
**ஆயுதபூசை** – நவராத்திரியின் இறுதிநாளில் ஆயுதங்களுக்குச் செய்யும் பூசை.
**ஆயுதம்** – படைக்கலம்; கருவி; ஆயத்தம்; இசைக் கிளையில் ஒன்று.
**ஆயுதிகன்** – பதினாயிரம் காலாட் படைக்குத் தலைவன்.
**ஆயுநூல்** – காண்க : **ஆயுர்(ள்)வேதம்.**
**ஆயுர்ப்பாவம்** – வாணாளின் போக்கு.
**ஆயுர்(ள்)வேதம்** – மருத்துவ நூல்.
**ஆயுர்வேதாக்கினி** – கமலாக்கினி, தீபாக்கினி, காடாக்கினி என்னும் மூன்று தீ.
**ஆயுவின்மை** – அருகன் எண்குணத்துள் ஒன்று.
**ஆயுள்** – வாழ்நாள்; அப்பொழுது.
**ஆயுள்வேதர், ஆயுள்வேதியர்** – ஆயுள்வேதம் வல்லார்.
**ஆயெறும்பு** – எறும்புவகை.
**ஆயோகம்** – நீர்க்கரை; துறைகளில் மரக் கலங்களைக் கட்டும் பந்தி; அர்ச்சனை.
**ஆயோதம், ஆயோதனம்** – மோர்; வேட்டம்.
**ஆயோர்** – அவர்கள்; ஆனோர்.
**ஆர்** – நிறைவு; பூமி; கூர்மை; அழகு; மலரின் பொருத்துவாய்; காண்க: **ஆத்தி**; திருவாத்தி; ஆரக்கால்; தேரின் அகத்தில் செறிகதிர்; அச்சு மரம்; செவ்வாய்; சரக்கொன்றை; அண்மை; ஏவல்; பலர்பால் படர்க்கை வினைமுற்று விகுதி; மரியாதைப் பன்மை விகுதி; ஓர் அசை; அருமையான.
**ஆர்க்கங்கோடன்** – காண்க : **கொல்லங்கோவை.**
**ஆர்க்கம்** – இலாபம்; காண்க: **ஆரகம்**; ஆரக்கம்; சந்தனம்; பித்தளை.
**ஆர்க்கு** – இலைக்காம்பு; கிளிஞ்சில் வகை; எருக்கு; ஒரு மீன்.
**ஆர்க்குவதம்** – கொன்றைமரம்.
**ஆர்க்கை** – வாரடை; கட்டுகை; துரும்பு.

**ஆர்கதி** – திப்பிலி.
**ஆர்கலி** – கடல்; மழை; வெள்ளம்; திப்பி.
**ஆர்கோதம்** – காண்க : **சரக்கொன்றை.**
**ஆர்ச்சவம்** – ஒத்த நோக்கம்.
**ஆர்ச்சனம், ஆர்ச்சனை** – பொருளீட்டுகை; அருச்சிக்கை.
**ஆர்ச்சி** – ஆத்தி.
**ஆர்ச்சித்தல்** – காண்க : **ஆர்ச்சனம்.**
**ஆர்ச்சிதம்** – சம்பாத்தியம்; கைப்பற்றப்பட்டது.
**ஆர்த்தப(வ)ம்** – மகளிர் பூப்படைதல்; மகளிர் தீட்டு.
**ஆர்த்தம்** – துன்பம் அடைந்தது.
**ஆர்த்தர்** – எளியவர்; நோயுற்றோர்; பெரியோர்.
**ஆர்த்தல்** – ஒலித்தல்; போர்புரிதல்; தட்டுதல்; அலர்தூற்றுதல்; கட்டுதல்; பூணுதல்; மறைத்தல்; மின்னுதல்.
**ஆர்த்தன்** – நோயுற்றோன்; துன்புறுவோன்; சான்றோன்.
**ஆர்த்தார்க்கோன்** – சோழன்.
**ஆர்த்தி** – வேதனை; வில்லின் நுனி; ஆர்வம்; சிவசத்தியுள் ஒன்று.
**ஆர்த்திகை** – துன்பம்.
**ஆர்த்தியம்** – காட்டுத் தேன்.
**ஆர்த்திரகம்** – இஞ்சி.
**ஆர்(ரு)த்திராதரிசனம்** – மார்கழித் திருவாதிரை நாளில் சிதம்பரத்தில் இறைவனைக் காணும் காட்சி.
**ஆர்த்திரை** – திருவாதிரை.
**ஆர்த்துதல்** – ஊட்டுதல்; நிறைவித்தல்; நுகர்வித்தல்; கொடுத்தல்.
**ஆர்த்துப(வ)ம்** – பேரரத்தை.
**ஆர்தல்** – நிறைதல்; பரவுதல்; பொருந்துதல்; தங்குதல்; உண்ணுதல்; துய்த்தல்; ஒத்தல்; அணிதல்; பெறுதல்.
**ஆர்ப்பரவம்** – ஆரவாரம்; போர்.
**ஆர்ப்பரித்தல்** – ஆரவாரித்தல்.
**ஆர்ப்பரிப்பு** – ஆரவாரம்.
**ஆர்ப்பாட்டம்** – ஆரவாரம்; வீண்பேச்சு.
**ஆர்ப்பு** – பேரொலி; சிரிப்பு; மகிழ்ச்சி; போர்; மாத்திரை கடந்த சுருதி; கட்டு; தைத்த முள்ளின் ஒடிந்த கூர்.
**ஆர்பதம்** – வண்டு; உணவு; நிழல்; அரத்தை.
**ஆர்பதன்** – உணவு.
**ஆர்மதி** – கற்கடக ராசி; நண்டு.
**ஆர்மை** – கூர்மை; மதில்.
**ஆர்வம்** – அன்பு; விருப்பு; நெஞ்சு கருதின பொருள்கள்மேல் தோன்றும் பற்றுள்ளம்; பக்தி; ஏழு நரகத்துள் ஒன்று.
**ஆர்வமொழி** – உள்ளத்து நிகழும் அன்பை மிகுதியாக வெளிப்படுத்தும் ஓரலங்காரம்.

**ஆர்வலன்** – அன்புடையவன்; கணவன்; பரிசிலன்.
**ஆர்வலித்தல்** – அன்புகூர்தல்.
**ஆர்வு** – நிறைவு; உண்ணுகை; ஆசை.
**ஆர்வை** – கோரைப்பாய்.
**ஆர** – ஓர் உவமச்சொல்; மிக.
**ஆரக்கம்** – செஞ்சந்தனம்; அகில்.
**ஆரக்கழுத்தி** – கழுத்தில் தீயரேகையுள்ள பெண்.
**ஆரக்கால்** – சக்கரத்தின் ஆரம்.
**ஆரக்குவதம்** – சரக்கொன்றை.
**ஆரகந்தி** – திப்பிலி.
**ஆரகம்** – வகுக்குமெண்; குருதி.
**ஆரகன்** – அழிப்போன்; கள்வன்; கபடன்.
**ஆரகு(கூ)டம்** – பித்தளை.
**ஆரகோதம்** – காண்க : **சரக்கொன்றை.**
**ஆரசகம்** – அகில்மரம்.
**ஆரங்கம்பாக்கு** – பாக்குவகை.
**ஆரஞ்சு** – கிச்சிலி.
**ஆரண்ணியகம்** – வேதத்தின் ஒரு பகுதி.
**ஆரணங்கு** – தெய்வப்பெண்; பேரழகி.
**ஆரணத்தான்** – வேதங்களை அருளிய பிரமன்.
**ஆரணம்** – காண்க : **ஆரண்ணியகம்;** வேதம்.
**ஆரணவாணன்** – அந்தணன்.
**ஆரணவுருவன்** – சிவபெருமான்.
**ஆரணன்** – பிரமன்; சிவன்; திருமால்; பார்ப்பான்.
**ஆரணி** – மாகாளி; பார்வதி; சிவசத்திபேதம்; ஓர் ஊர்.
**ஆரணியகன்** – காட்டில் வாழ்வோன்.
**ஆரணியசஷ்டி** – மகப்பேற்றுக்காகப் பெண்டிர் ஆடிமாத வளர்பிறையில் நோற்கும் ஒரு நோன்பு.
**ஆரத்தி** – ஆலத்தி; தீபாராதனை.
**ஆரதக்கறி** – மரக்கறி.
**ஆரதம்** – சைவ உணவு.
**ஆரதி** – காண்க : **ஆரத்தி;** ஆலத்திப்பாட்டு.
**ஆரதிகர்ப்பூரம்** – கருப்பூரவகை.
**ஆரநாளம்** – காடி.
**ஆரபடி** – பொருள் பொருளாக வீரன் தலைவனாக வரும் நாடக விருத்தி.
**ஆரபி** – ஒரு பண்.
**ஆரம்** – சந்தனமரம்; ஒருவகை மணப்பொருள்; சந்தனக்குழம்பு; காண்க : **கடம்பு;** தோட்டம்; அஞ்சன பாடாணம்; காண்க: **காட்டாத்தி, ஆரக்கால்;** பித்தளை; மணிவடம்; பூமாலை; முத்து; பதக்கம்; அணிகலன்; பறவைக் கழுத்துவரி; ஆடுமாடுகளின் கழுத்தில் தொங்கும் தசை; காளிதம்; கோணம்; சனி; செவ்வாய்.

**ஆரம்பக்கொசு** – சமுத்திராப்பழம்.
**ஆரம்பசூரன்** – தொடக்கத்தில் சுறுசுறுப்புக் காட்டுவோன்.
**ஆரம்பம்** – தொடக்கம்; முயற்சி; பாயிரம்; பெருமிதம்; பதற்றம்; கொலை.
**ஆரம்பவாதம்** – முதற்காரணம் இல்லாமலே காரியம் தோன்றுமென்னும் கொள்கை.
**ஆரம்பித்தல்** – தொடங்குதல்; ஒலித்தல்.
**ஆரல்** – நெருப்பு; கார்த்திகைமீன்; ஆரால்மீன்; மதில்; சுவர்மேல் மறைக்கப்படும் மறைப்பு; செவ்வாய்.
**ஆரவடம்** – முத்துவடம்.
**ஆரவம்** – ஒலி; பகை.
**ஆரவமர** – காண்க: **ஆறவமர.**
**ஆரவலர்** – காட்டாத்திப்பூ.
**ஆரவாரம்** – பேரொலி; பகட்டு; துன்பம்.
**ஆரவாரித்தல்** – மிக்கொலித்தல்.
**ஆரவை** – கொந்தளிப்பு.
**ஆரற்சுவர்** – மேலே மறைப்புடைய சுவர்.
**ஆராக்கியம், ஆராக(வ)ரியம்** } – அரசமரம்.
**ஆராட்சி** – பழைய வரிவகை; ஆள் நடமாட்டம்.
**ஆராட்டுதல்** – தாலாட்டுதல்.
**ஆராத்தியர், ஆராத்திரியர்** } – வீரசைவப் பார்ப்பனர்.
**ஆராத்தொட்டி** – மினிக்கி என்னும் மரம்.
**ஆராதகர்** – அருச்சகர்.
**ஆராதனம்** – பூசை; சித்திக்கை; உவப்பிக்கை; சமைக்கை; பெறுகை; ஆவேசம்.
**ஆராதனை** – பூசனை; இறந்த சன்னியாசிகளுக்கு ஆண்டுதோறும் செய்யும் சடங்கு; கிறித்தவர் கோயில் வழிபாடு.
**ஆராதித்தல்** – பூசை செய்தல்; உபசரித்தல்.
**ஆராதூரி** – ஊதாரி; அழிப்புக்காரன்.
**ஆராப்பத்தியம்** – கடும்பத்தியம்; அற்பம்.
**ஆராமம்** – உபவனம்; மலைச்சோலை; தான்றி.
**ஆராமை** – நிரம்பாமை; பேரன்பு.
**ஆராமைசோராமை** – தள்ளாமை.
**ஆராய்ச்சி** – ஆய்வு; பரிசீலனம்; சோதனை; தலையாரி.
**ஆராய்ச்சிமணி** – முறை வேண்டுவோர் அசைக்கும்படி அரண்மனை வாயிலில் கட்டப்படும் மணி.
**ஆராய்ச்சியார்** – கணக்குத் தணிக்கையாளர்; கொலைத்தண்டனை நிறைவேற்றுவோர்; நீதி மன்றத்தில் நாசர் உத்தியோகம் வகிப்பவர்.
**ஆராய்ச்சியாளன்** – ஏதேனும் ஒரு பொருளைக் கூர்ந்து ஆராய்பவன்.
**ஆராய்தல்** – சோதித்தல்; சூழ்தல்; தேடுதல்; சுருதி சேர்த்தல்.
**ஆரார்** – பகைவர்.
**ஆரால்** – மீன்வகை; சேற்றாரால்.
**ஆராவம்** – பேரொலி, சத்தம்.
**ஆராவமுதம்** – தெவிட்டாத அமிர்தம்.
**ஆராவமுது** – காண்க : **ஆராவமுதம்.**
**ஆரி** – அருமை, மேன்மை; அழகு; சோழன்; கதவு; துர்க்கை; பார்வதி; பார்ப்பனி; தோல்வி.
**ஆரிடம்** – வழுக்குநிலம்; முனிவர் சம்பந்தமானது; ஆவையும் காளையையும் அலங்கரித்து அவற்றிடையே மணமக்களை நிறுத்தி நீர்வார்த்துக் கொடுக்கும் மணம்; ஆவும் ஆனேறும் பரிசமாகப் பெற்றுக்கொண்டு கன்னியைத் தீமுன்னர்க் கொடுக்கும் மணம்; முனிவர் அருளிய நூல்; ஆகமம்.
**ஆரிடர்** – முனிவர்.
**ஆரிடலிங்கம்** – முனிவர்களால் அமைக்கப்பெற்ற சிவலிங்கம்.
**ஆரிடை** – அரியவழி.
**ஆரிப்படுகர்** – அரிதாய் ஏறி இறங்கும் வழி.
**ஆரிய** – சிறிய; மேலோரை விளிக்கும் சொல்.
**ஆரியக்கூத்து** – கழைக்கூத்து.
**ஆரியகுச்சரி** – மருத யாழ்த்திறவகை.
**ஆரியச்சி** – ஆரியப்பெண்.
**ஆரியசத்தை** – பௌத்தருக்குரிய மேலான உண்மைகள்.
**ஆரியத்திரிவு** – காண்க: **தற்பவம்.**
**ஆரியப்பாவை** – பாவைக்கூத்துவகை.
**ஆரியப் பூமாலை** – அடங்காப் பெண்; காத்தவராயன் மனைவி.
**ஆரியபூமி** – காண்க: **ஆரியாவர்த்தம்.**
**ஆரியம்** – கேழ்வரகு; ஆரியாவர்த்தம்; சமஸ்கிருதம்.
**ஆரியமொழி** – வடமொழி.
**ஆரியவராடி** – ஒரு பண்; வராடிவகை.
**ஆரியவாசியம்** – காண்க: **ஓமம்.**
**ஆரியவேள(ளா)ர் கொல்லி** – செவ்வழி யாழ்த்திற வகையுள் ஒன்று.
**ஆரியன்** – ஆரிய வகுப்பினன்; ஆரியாவர்த்த வாசி; பெரியோன்; ஆசாரியன்; அறிவுடையோன்; ஆசிரியன்; ஐயனார்; மிலேச்சன்; ஆதித்தன்.
**ஆரியாங்கனை** – இல்லறத்தினின்று துறவுபூண்ட சமணத் தவப்பெண்.
**ஆரியாவர்த்தம்** – இமயத்துக்கும் விந்தத்துக்கும் இடையே ஆரியர் குடியேறிய இடம்.
**ஆரியை** – பார்வதி; துர்க்கை; உயர்ந்தோள்; ஆசாள்; வடமொழி யாப்புவகை.
**ஆரீதம்** – பச்சைப் புறா; கரிக்குருவி; ஆரீதரால் செய்யப்பட்ட ஸ்மிருதி.

**ஆருகதம்** – சமணமதம்; நாவல்மரம்.

**ஆருகதன்** – சமணன்.

**ஆருத்திரை** – திருவாதிரை.

**ஆருப்பியம்** – வங்கமணல்.

**ஆருபதம்** – பித்தளை.

**ஆருயிர் மருந்து** – உணவு.

**ஆருவம்** – நீர்.

**ஆருழலைப்படுதல்** – வெப்பத்தால் தகிக்கப்படுதல்; நீர்வேட்கையால் வருந்துதல்.

**ஆரூடம்** – ஏறியது; கேட்பானது இராசிநிலை கொண்டு நினைத்த காரியம் கூறும் சோதிடம்.

**ஆரூடன்** – ஊர்தி முதலியவற்றில் ஏறினவன்; சீவன்முத்தன்.

**ஆரூபம்** – ஒவ்வாமை; நீங்காமை.

**ஆரூர்** – திருவாரூர்.

**ஆரூர்க்கால்** – கருப்பூரவகை.

**ஆரூரன்** – சுந்தரமூர்த்தி நாயனார்.

**ஆரேவதம்** – காண்க: **சரக்கொன்றை.**

**ஆரை** – நீராரை; காண்க: **ஆத்தி;** கோட்டை மதில்; புற்பாய்; அச்சுமரம்; தோல் வெட்டும் உளி; ஆரக்கால்.

**ஆரைக்காலி** – கோரைவகை.

**ஆரைக்கீரை** – நீராரைக் கீரை.

**ஆரைபற்றி** – உடும்பு.

**ஆரொட்டி** – கூவைக்கிழங்கு.

**ஆரோக்கியசாலை** – மருத்துவவிடுதி, மருத்துவமனை.

**ஆரோக்கியம்** – நோயின்மை; நலம்.

**ஆரோகணம்** – ஏறுகை; கமகம் பத்தனுள் ஒன்று; கற்படி; தாழ்வாரம்; வெளிப்போகை; முன்வாயில்; ஏணி.

**ஆரோகணித்தல்** – எழும்புதல்; ஏறுதல்.

**ஆரோகம்** – வேதம் ஓதும் முறைகளுள் ஒன்று; ஏறுகை; உயர்ச்சி; நீட்சி; நிதம்பம்; முளை.

**ஆரோகி** – இசையின் வர்ணபேதங்களுள் ஒன்று.

**ஆரோசை** – ஏற்றிப் பாடும் இசை.

**ஆரோணம்** – மீக்கோள்.

**ஆரோதமடித்தல்** – அருளால் கொடுஞ்செயலினின்றும் மனநெகிழ்தல்.

**ஆரோபணம், ஆரோபம், ஆரோபித்தல்** – ஒன்றன்மேல் மற்றொன்றன் தன்மையை ஏற்றிக் கூறுதல்.

**ஆரோபிதம்** – ஏற்றப்பட்டது; கற்பிக்கப்பட்ட குற்றம்.

**ஆல்** – அகற்சட்டி; மரவகை; நீர்; வெள்ளம்; கார்த்திகை; நஞ்சு; ஆமெனல்; வியப்பு, இரக்கம், தேற்றம் இவற்றைக் குறிக்கும் இடைச்சொல்; ஓர் அசைநிலை; மூன்றாம் வேற்றுமையுருபு; தொழிற்பெயர் விகுதி; எதிர்மறை வியங்கோள் விகுதி; எதிர்கால வினையெச்ச விகுதி.

**ஆல்(ல)வாட்டுதல்** – சிறிது காயச்செய்தல்.

**ஆல்வு** – அகன்றது.

**ஆலக்கச்சி** – அரிதாரம்.

**ஆலக்கட்டி** – துரிசு.

**ஆலக்கரண்டி** – அகன்ற கரண்டி.

**ஆலக்கொடிச்சி** – காண்க : **ஆலக்கச்சி.**

**ஆலகண்டன்** – கழுத்தில் நஞ்சுகொண்ட சிவன்.

**ஆலகம்** – காண்க: **ஆமலகம்.**

**ஆலகாலம்** – பாற்கடலில் தோன்றிய நஞ்சு; நிலவாகை.

**ஆலகாலி** – காளி.

**ஆலகிரீடை** – காண்க: **அலரி.**

**ஆல(லா)ங்கட்டி** – கல்மழை.

**ஆலங்காட்டாண்டி** – வரிக்கூத்துவகை.

**ஆலச்சுவர்** – சார்புசுவர்; ஆள்மட்டச் சுவர்.

**ஆலசம்** – சோம்பு.

**ஆலசியம்** – சோம்பு; தாமதம்; கவனக்குறைவு.

**ஆலத்தி** – காண்க: **ஆரத்தி.**

**ஆலத்தியெடுத்தல், ஆலத்திவழித்தல்** – ஆலத்தி சுற்றுதல்.

**ஆலதரன்** – நஞ்சைக் கழுத்தில் தாங்கியிருப்பவனான சிவன்.

**ஆலந்தை** – ஒரு சிறுமரம்.

**ஆலம்** – நீர்; கடல்; மழை; மரவகை; ஆகாயம்; அகலம்; மலர்; கலப்பை; நஞ்சு; கருமை; உலகம்; புன்கு, மாவிலிங்கம்; ஈயம்; துரிசு.

**ஆலம்பம், ஆலம்பனம்** – பற்றுக்கோடு; தொடுகை; கொல்லுகை.

**ஆலம்பலிகிதம்** – எழுத்துக்கூட்டிலக்கணம்.

**ஆலம்பி** – அரிதாரம்.

**ஆலமர்கடவுள், ஆலமர்செல்வன்** – கல்லால மரத்தின்கீழ்த் தென்முகக் கடவுளாய் வீற்றிருக்கும் சிவன்.

**ஆலமரம்** – மரவகை.

**ஆலமுடையோன்** – துரிசு.

**ஆலமுண்டோன்** – பாற்கடலில் தோன்றிய நஞ்சையுண்டவனாகிய சிவன்.

**ஆலயம்** – தேவாலயம்; தங்குமிடம்; நகரம்; யானைக்கூடம்.

**ஆலயவிஞ்ஞானம்** – சாகும் வரை நிற்கும் உணர்ச்சி.

**ஆலல்** – ஒலி; மயிற்குரல்.

**ஆலலம்** – திருமணத்தின்போது மணமகன் மணமகட்குக் கொடுக்கும் கூறைப் புடைவை.

**ஆலவட்டம்** – பெருவிசிறி; விசிறி.

**ஆலவன்**– ஆலிலையில் பள்ளிகொள்ளும் திருமால்; கடலில் தோன்றிய சந்திரன்.

**ஆலவாய்** – பாம்பு; மதுரை.
**ஆலவாலம்** – மரத்தின்கீழ்ப் பாத்தி; விளைநிலம்.
**ஆலவிருட்சம்** – ஆலமரம்; ஆதொண்டை.
**ஆலா** – கடற்கரைப் பறவைவகை.
**ஆலாகலம்** – காண்க: **ஆலகாலம்.**
**ஆலாசியம்** – மதுரை; ஆண்முதலை.
**ஆலாட்டு** – சிறிது உலரவைத்தல்.
**ஆலாட்டுதல், ஆலவாட்டுதல்** – தானியங்களை இள வெயிலிலோ நிழலிலோ காய வைத்தல்.
**ஆலாத்தி** – காண்க: **ஆலத்தி.**
**ஆலாத்து** – கப்பலின் பெருங்கயிறு.
**ஆலாதாடை** – அவுரி.
**ஆலாப்பறத்தல்** – திண்டாடுதல்.
**ஆலாபம்** – உரையாடல்.
**ஆலாபனம், ஆலாபித்தல்** – இராகத்தை நீட்டித்துப் பாடுகை; உரையாடுகை.
**ஆலாபினி** – சுரபேதம்.
**ஆலாலம்** – துரிஞ்சில்; கடலில் பிறந்த நஞ்சு.
**ஆலாவர்த்தம்** – காண்க: **ஆலவட்டம்.**
**ஆலி** – மழைத்துளி; ஆலங்கட்டி; தலைப் பெயல் மழை; காற்று; பூதம்; கள்.
**ஆலிகை** – அகலிகை.
**ஆலிங்கனம்** – தழுவுகை.
**ஆலிடம்** – தெருச்சிறகு.
**ஆலித்தல்** – ஒலித்தல்.
**ஆலிநாடன்** – திருமங்கையாழ்வார்.
**ஆலிப்பு** – ஆரவாரம்.
**ஆலிம்** – அறிந்தவன்.
**ஆலியதம்** – காண்க: **சிறுகுறிஞ்சா.**
**ஆலீடம்** – இடக்கால் முந்துற்று வலக்கால் மண்டலிக்கும் வில்லோர் நிலை; காலுக்குக் கால் பன்னிரண்டங்குலம் இடைவிட்டு மண்டலமாக இருக்கும் யோகாசனவகை.
**ஆலீனகம்** – துத்தநாகம்.
**ஆலுதல்**–ஒலித்தல்; களித்தல்; ஆடுதல்; தங்குதல்.
**ஆலூகம்** – காண்க: **வில்வம்.**
**ஆலேகனம்** – எழுதுதல்; சித்திரித்தல்.
**ஆலேகனி** – எழுதுகோல், எழுத்தாணி.
**ஆலேபனம்** – பூசுகை.
**ஆலேபூலேயெனல்** – பொருளின்றிப் பேசுதற் குறிப்பு.
**ஆலை** – கரும்பாலை; கரும்பு; கள்; கூடம்; யானைக்கூடம்; நீராரை; கருப்பஞ்சாறு; ஒரு வகைக் கிட்டித் தண்டனை.
**ஆலைக்குழி** – கரும்பாலையில் சாறேற்கும் அடிக்கலம்.
**ஆலைத்தொட்டி** – கருப்பஞ்சாறு காய்ச்சும் சால்.
**ஆலைபாய்தல்** – ஆலையாட்டுதல்; அலைவுறுதல்; மனஞ் சுழலுதல்.
**ஆலைமாலை** – தொந்தரை; மயக்கம்.
**ஆலோகம்** – பார்வை; ஒளி.
**ஆலோகனம்** – பார்க்கை.
**ஆலோசனை** – ஆய்வுரை; சிந்திப்பு; பார்வை.
**ஆலோசித்தல்** – சிந்தித்தல்; ஆராய்தல்.
**ஆலோபம்** – வருத்தம்.
**ஆலோலம்** – நீரொலி; புள்ளோச்சும் ஒலிக் குறிப்பு; தடுமாற்றம்.
**ஆலோலிதமுகம்** – ஆசையால் மலர்ந்த முகத்தோடு ஒருவனை அழைக்கும் அபிநயவகை.
**ஆலோன்** – சந்திரன்.
**ஆவ** – இரக்கக் குறிப்பு; அபயக் குறிப்பு.
**ஆவகம்** – எழுவகைக் காற்றுகளுள் ஒன்று.
**ஆவச்சீவாளம்** – முழு நிலைமை.
**ஆவசியகம், ஆவசியம்** – இன்றியமையாதது.
**ஆவஞ்சி** – இடக்கை என்னும் தோற்கருவி.
**ஆவட்டங்கொட்டுதல்** – இல்லையென்று சொல்லித் திரிதல்.
**ஆவட்டைசோவட்டை** – சோர்வு.
**ஆவடதர்** – தேவசாதியார்வகை.
**ஆவணக்களம்(ரி)** – பத்திரப் பதிவுச்சாலை.
**ஆவ(ப)ணம்** – கடைவீதி; தெரு; உரிமை; அடிமைத்தனம்; உரிமைப்பத்திரம்; காண்க: **புனர்பூசம்**; பூந்தட்டு; தேர் மொட்டுப் பொருந்திய பீடம்.
**ஆவணமாக்கள்** – உறுதிமொழி வாங்குவோர்.
**ஆவணி** – ஐந்தாம் மாதம்; காண்க: **அவிட்டம்.**
**ஆவணி அவிட்டம்** – ஆவணித்திங்கள் அவிட்ட வோரையில் பார்ப்பனர் வேதவிதிப்படி பூணூல் அணியும் சடங்கு; மதுரையில் முற்காலத்து நடந்த ஒரு திருவிழா.
**ஆவணிமுழக்கம்** – ஆவணி மாதத்திலுண்டாகும் இடிமுழக்கம்.
**ஆவது** – ஆகவேண்டியது, விகற்பப் பொருள் தரும் ஓரிடைச்சொல்; விவரம் பின்வருதலைக் குறிக்குஞ்சொல்; எண்ணொடு வருஞ்சொல்.
**ஆவதை** – திரும்பக் கூறுகை.
**ஆவநாழி, ஆவநாழிகை** – காண்க: **அம்பறாத்தூணி.**
**ஆவம்** – அம்பறாத்தூணி; வில்நாண்; குங்கும மரம்; சாப்பிரா மரம்; கபிலப்பொடி.
**ஆவயின்** – அவ்விடத்தில்.
**ஆவர்** – யாவர்.
**ஆவர்த்தம்** – எழுவகை மேகங்களுள் நீர் பொழிவது; தடவை; சுழல்; நீர்ச்சுழி; சிந்தனை.
**ஆவர்த்தனம்** – மறுமணம்; காண்க: **ஆவர்த்தம்.**
**ஆவர்த்தி** – தடவை.
**ஆவர்த்தித்தல்** – முதல் மனைவி இறந்தபின் மறுமணம் செய்துகொள்ளுதல்.

**ஆவரணச்சுவர்** – கோயில் திருமதில்.
**ஆவரணசக்தி** – மாயை.
**ஆவரணம்** – மறைப்பு; ஆடை; சட்டை; கோட்டை; தடை; பிராகாரம்; அணி; ஆணவ மலம்; கேடகம், ஈட்டி.
**ஆவரணமூர்த்தி** – கோயிலில் கருவறையைச் சுற்றி இருக்கும் பக்கத் தேவதைகள், உட்சுற்று மாளிகைத் தேவதைகள்.
**ஆவரணி** – பார்வதி.
**ஆவரணீயம்** – மறைப்பது.
**ஆவரி** – அம்பு.
**ஆவரித்தல்** – மறைத்தல்.
**ஆவல்** – ஆசை; வளைவு.
**ஆவல்லி** – சீந்திற்கொடி.
**ஆவலங்கொட்டுதல்** – ஆர்த்து வாய்கொட்டுதல்.
**ஆவலம்** – வாயினாலிடும் ஒலி; கொல்லை; கூறை; படைமரம் என்னும் நெசவுக்கருவி.
**ஆவலர்** – உற்றார்; கணவர்; காதலர்.
**ஆவலாதி** – குறைகூறுகை; அவதூறு.
**ஆவலாதிக்காரன்** – போக்கிரி; குறைகூறுவோன்; முறையிடுவோன்.
**ஆவலி** – காண்க: **ஆவளி.**
**ஆவலித்தல்** – அழுதல்; கொட்டாவிவிடுதல்; செருக்குதல்.
**ஆவலிப்பு** – செருக்கு.
**ஆவளி** – வரிசை; மரபுவழி; உறுதியின்மை; இரேகை; வளி என்னும் சிறு காலவளவு.
**ஆவளிச்சேவகம்** – உறுதியற்ற வேலை.
**ஆவளித்தல்** – ஒழுங்குபடுத்துதல்.
**ஆவற்காலம்** – ஆபத்துண்டாங் காலம்; இறுதி நாள்.
**ஆவறியாவறியெனல்** – பேராசைக் குறிப்பு.
**ஆவா** – இரக்க வியப்பு ஆனந்தக் குறிப்பு.
**ஆவாகனம்** – அக்கினிக்குப் பலி கொடுத்தல்; அழைத்தல்; எழுந்தருளும்படி மந்திரத்தால் தெய்வத்தை அழைக்கை.
**ஆவாகனமுத்திரை** – முத்திரை வகை; வழிபாட்டுக் காலத்தில் கைகளினால் காட்டும் குறிப்பு.
**ஆவாகித்தல்** – எழுந்தருளும்படி மந்திரத்தால் தெய்வத்தை அழைத்தல்.
**ஆவாகை** – காண்க: **நில்வாகை.**
**ஆவாசம்** – நகரம்; மருதநிலத்தூர்.
**ஆவாதம்** – காண்க: **ஆகதம்;** கமகம் பத்தனுள் ஒன்று.
**ஆவாபம்** – விதைப்பு; பாத்தி; பானவகை; பாண்டசுத்தி; வளையல்.
**ஆவாபனம்** – நூல்சுற்றும் பரிவட்டம்; நெய்பவர் தறி.
**ஆவாய்கத்துதல்** – இல்லையென்று சொல்லித் திரிதல்.
**ஆவாரம், ஆவாரகம்** – மறைப்பு.
**ஆவாரம்பூச்சம்பா** – சம்பாநெல்வகை.
**ஆவாரைப் பஞ்சகம்** – ஆவாரஞ் செடியின் இலை, பூ, வித்து, பட்டை, வேர் என்பன.
**ஆவாலம்** – மரத்தினடியிற் கோலிய பாத்தி; வௌவால்.
**ஆவாலை** – பாட்டுவகை.
**ஆவாளஞ்சீவாளம்** – காண்க: **ஆவச்சீவாளம்.**
**ஆவி** – உயிர்ப்பு; நெட்டுயிர்ப்பு; கொட்டாவி; ஆன்மா; மணம்; வலிமை; உயிரெழுத்து; நீராவி; பிட்டு; புகை; புகையிலை; நறுமணம்; பரிசுத்த ஆவி; நீர்நிலை; வேளிர் தலைவருள் ஒருவன்.
**ஆவிகம்** – ஆட்டுமயிர்க் கம்பளம்.
**ஆவிகாட்டுதல்** – நிவேதனஞ் செய்தல்.
**ஆவிகை** – பற்றுக்கோடு.
**ஆவிடை, ஆவிடையார்** – காண்க: **ஆவுடையார்.**
**ஆவித்தல்** – வாய்விடுதல்; பெருமூச்சு விடுதல்; கொட்டாவி விடுதல்; வெளிவிடுதல்.
**ஆவித்தைலம்** – நீராவியால் வடிக்கும் தைலம்.
**ஆவிதம்** – காண்க: **மரை;** திருகூசி.
**ஆவிநீர்** – நீராவி குளிர்தலால் உண்டாகும் நீர்.
**ஆவிபத்தம், ஆவிபதம்** – பேராமுட்டிப் பூண்டு.
**ஆவிபத்திரம்** – புகையிலை.
**ஆவிபறிதல்** – நீராவி எழும்புதல்; மரித்தல்.
**ஆவிபிடித்தல்** – நீராவியால் வேது கொள்ளுதல்.
**ஆவிமா** – மரவகை.
**ஆவியர்** – வேளாவியின் மரபினர்; வேளாளர்; வேடர்.
**ஆவிர்தம்** – சுழற்சி.
**ஆவிர்ப்பவித்தல்** – வெளிப்படுதல்.
**ஆவிர்ப்பாவம்** – வெளிப்படுகை.
**ஆவிர்ப்பூதம்** – தோன்றியது, வெளிப்பட்டது.
**ஆவிரம்** – இடையரூர்; நரகவகை.
**ஆவிருத்தி** – தடவை; திரும்பத் திரும்ப ஓதுகை.
**ஆவிருத்தியலங்காரம்** – பின்வருநிலையணி.
**ஆவிருதம்** – மறைக்கப்பட்டது.
**ஆவிருதி** – ஆணவமலம்.
**ஆவிருந்து** – நிகழ்காலம் காட்டும் ஓர் இடைநிலை.
**ஆவிரை** – செடிவகை.
**ஆவிலம்** – கலங்கல் நீர்.
**ஆவிலியர்** – வேளாளர்; வேடர்.
**ஆவிவாங்குதல்** – உயிர் கவர்தல்; வருத்துதல்.
**ஆவிவிடுதல்** – சாதல்; உயிர்விடத் துணிதல்.

**ஆவினன்குடி** – முருகக் கடவுளின் படைவீடு களுள் ஒன்றான பழனி.
**ஆவு** – காண்க: **குன்றி.**
**ஆவுடையார்(ள்)** – சத்தியைக் குறிக்கும் இலிங்க பீடம்.
**ஆவுதல்** – விரும்புதல்.
**ஆவுதி** – ஆகுதி; ஓமத்தில் இடப்படும் உணவு.
**ஆவுரிஞ்சி,**
**ஆவுரிஞ்சுதறி** } – காண்க: **ஆதீண்டுகுற்றி.**
**ஆவெனல்** – அழுகைக் குறிப்பு; இரக்கக் குறிப்பு; வாய்திறத்தற் குறிப்பு.
**ஆவேகி** – காண்க: **ஆடுதின்னாப்பாளை.**
**ஆவேசசமவாதம்** – காண்க: **காபாலமதம்.**
**ஆவேசநீர்** – வெறியூட்டும் கள் முதலியன.
**ஆவேசம்** – தெய்வமேறுகை; பேய்; கோபம்.
**ஆவேசவாதி** – காபாலிக மதத்தான்; உணர்ச்சி வயப்பட்டு விவாதிப்பவன்.
**ஆவேசனம்** – உலோகவேலை செய்வோர் வீதி; பணிக்கூடம்; புகுகை; ஆவேசிக்கை.
**ஆவேசாவதாரம்** – ஒரு நிமித்தம்பற்றித் தன் ஆற்றலை ஒருவர்பால் ஏறிட்டு நிகழ்த்தும் தெய்வப் பிறப்பு.
**ஆவேசி** – காண்க: **ஆவேகி.**
**ஆவேசித்தல்** – உட்புகுதல்; தெய்வமேறுதல்.
**ஆவேதனம்** – அறிக்கை.
**ஆவேலம்** – தம்பலம்.
**ஆவேலி** – தொழுவம்.
**ஆவேறு** – காளை, இடபம்.
**ஆவோ** – வியப்பு இரக்கச் சொல்.
**ஆழ்கடற்றுயின்றோன்** – திருமால்.
**ஆழ்த்துதல்** – அமிழ்த்துதல்.
**ஆழ்தல்** – மூழ்குதல்; அழுந்துதல்; விழுதல்; பதிதல்; சோம்புதல்; ஆழமாதல்; வருந்துதல்; அகழ்தல்.
**ஆழ்வள்ளி** – மரவள்ளி, கிழங்குவகை.
**ஆழ்வார்** – பகவத் குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுவோர்; திருமாலடியார் பன்னிருவர்; சமண பௌத்தப் பெரியோர்; சுவாமி.
**ஆழ்வார்கன்மி** – திருமால்கோயில் அருச்சகன்.
**ஆழ்வார்திருநாள்** – திருநாள் தொடக்கத்துக்கு முன் நடைபெறும் ஆழ்வார் திருவிழா.
**ஆழ்வான்** – சூரியன்.
**ஆழ்வி** – தலைவன்; தலைவி.
**ஆழ்வு** – ஆழம்.
**ஆழங்கால்** – பலகை தாங்கச் சுவரில் பதிக்கும் கட்டை; அதிக ஆழமில்லாத நீர்நிலை.
**ஆழங்காற்படுதல்** – அழுந்துதல், ஈடுபடுதல்.
**ஆழம்** – ஆழ்ந்திருக்கை; ஆழ்ந்த கருத்து.
**ஆழம்பார்த்தல்** – ஆழத்தை அளந்தறிதல்; ஒருவன் அறிவு முதலியவற்றைச் சோதித்தல்.
**ஆழமுடைத்தாதல்** – நுண்பொருள் பொதிந் திருத்தல்; நூலழகுகளுள் ஒன்று.
**ஆழரம்** – அத்தி.
**ஆழல்** – காண்க: **கறையான்.**
**ஆழாக்கு** – அரைக்காற்படி.
**ஆழாங்கு** – காண்க: **ஆழங்கால்.**
**ஆழாடக்கிழங்கு** – தண்ணீர்விட்டான் கிழங்கு.
**ஆழாத்தல்** – ஈடுபடுதல்.
**ஆழாரம்** – பழைய காலத்து வழங்கிய ஒருவகை வட்டமான புதைகுழி.
**ஆழி** – சக்கரப்படை; ஆணைச்சக்கரம்; கட்டளை; வட்டம்; மோதிரம்; சக்கரம்; குயவன் திகிரி; யானைக் கைந்நுனி; கடல்; கடற்கரை; காண்க: **ஆளி;** குன்றி; கணவனைப் பிரிந்த மகளிர் இழைக்கும் கூடற்சுழி.
**ஆழிக்கொடி** – பவளம்.
**ஆழிக்கடல்விழுது** – கடலின் பேராழத்தை அறிய உதவும் கயிறு.
**ஆழித்தல்** – ஆழமாய்த் தோண்டுதல்.
**ஆழித்தீ** – வடவையனல்.
**ஆழித்தேர்** – சக்கரப்படை வடிவான திருவாரூர்த் தேர்.
**ஆழிதிருத்துதல்** – கூடலிழைத்தல்.
**ஆழிதொட்டான்** – ஏனாதி மோதிரம் தரித்த படைத்தலைவன்.
**ஆழிமால்வரை** – சக்கரவாளகிரி.
**ஆழிமுரசோன்** – கடலை முரசாகவுடைய மன்மதன்.
**ஆழிமூழையாய்** – மிக விரைவாய்.
**ஆழியான்** – திருமால்; அரசன்.
**ஆழியிழைத்தல்** – கூடலிழைத்தல், வட்டமாக இடப்படும் விரற்குறி.
**ஆழிவலியான்மணி** – மிளகு.
**ஆழிவித்து** – முத்து.
**ஆழிவிரல்** – மோதிரவிரல்.
**ஆழும்பாழுமாய்** – சீர்கேடாய்; வீணாக.
**ஆள்** – ஆண்மகன்; திறமையுடையோன்; வீரன்; காலாள்; கணவன்; தொண்டன்; ஆட்செய்கை; வளர்ந்த ஆள்; ஆள்மட்டம்; அரசு; தொட்டால் வாடி; பெண்பாற் பெயர் விகுதி; பெண்பால் வினைமுற்று விகுதி.
**ஆள்காட்டிவேலை** – ஏமாற்று வேலை.
**ஆள்கை** – ஆளுதல்.
**ஆள்திட்டம்** – ஓர் ஆளுக்குரிய அளவு; ஓர் ஆளின் உடலடையாளம்.
**ஆள்மட்டச்சுவர்** – கைப்பிடிச் சுவர்; மதிற்சுவர்.
**ஆள்மட்டம்** – ஒரு மனிதன் உயரவளவு.
**ஆள்மாகாணம்** – ஒரு கச்சேரியிலுள்ளார் கூட்டம்; மக்கட்கட்டு.

**ஆள்மாறாட்டம்** – வேற்றாளாகத் தன்னைக் காட்டி வஞ்சிக்கை.

**ஆள்வணங்கி** – அரசமரம்; காண்க: **தொட்டாற் சுருங்கி, கல்லித்தி**; மாமரம்; ஆத்தி.

**ஆள்வரி** – தலைவரி.

**ஆள்வார்** – சுவாமி.

**ஆள்வாரம்** – பண்ணையாளுக்குக் கொடுக்கும் பங்கு.

**ஆள்வாரி** – காண்க: **ஆளோடி**; குளத்து மதிலின் உட்புறமாகவுள்ள மக்கள் நடமாடும் வழி.

**ஆள்வாரிநிலம்** – கோட்டை உள்மதிற்புறமாக ஆள்கள் சுற்றிவருதற்குச் செய்த வழி.

**ஆள்வாரில்லா மாடு, ஆள்வாரிலி மாடு** – பட்டிமாடு.

**ஆள்விடுதல்** – தூதனுப்புதல்.

**ஆள்வினை** – முயற்சி; மகிழ்ச்சி.

**ஆள்வினை வேள்வி** – விருந்து புறந்தருகை.

**ஆள்வீதம்** – ஒவ்வோர் ஆளுக்குங் கொடுக்கும் அளவு; ஆள் விழுக்காடு.

**ஆளகம்** – சுரைக்கொடி.

**ஆளடிமை** – அடியான்(ள்).

**ஆளத்தி, ஆளம்** – ஆலாபனம், இசை விரித்துப் பாடுகை.

**ஆளமஞ்சி** – கூலியின்றி வாங்கும் வேலை.

**ஆளரவம்** – மனித நடமாட்டத்தால் உண்டாகுஞ் சந்தடி.

**ஆளரி** – ஆண் சிங்கம்; நரசிங்கமூர்த்தி.

**ஆளல்** – ஆளுதல்; மீன்வகை.

**ஆளறுதி** – தனிமை.

**ஆளன்** – ஆளுபவன்; கணவன்; அடிமை; ஊரில் பரம்பரையாகப் பாகவுரிமை உள்ளவன்.

**ஆளாதல்** – அடிமையாதல்; பூப்படைதல்; பெருமையடைதல்.

**ஆளாபம்** – காண்க: **ஆலாபனம்.**

**ஆளாழம்** – ஒரு முழு மனிதனின் அளவுள்ள ஆழம்.

**ஆளானம்** – யானை கட்டுந் தறி.

**ஆளி** – ஆள்வோன்; செடிவகை; கிளிஞ்சில் வகை; யானையாளி; சிங்கம்; கீரைவகை; சிறுமுட்டை; வழுக்கல்; வைப்பகம்; தூய்மையான கருத்து; பாங்கி; பாலம்; பயனின்மை; ஒழுங்கு.

**ஆளிட்டான் காசு** – பழைய நாணயவகை.

**ஆளிடுதல்** – பதிலாளை அமர்த்துதல்.

**ஆளியூர்தி** – துர்க்கை.

**ஆளிவிதை(ரை)** – சிறு சணல்வித்து.

**ஆளுகை** – ஆட்சி; ஆளுதல்.

**ஆளுங்கணத்தார்** – ஊர்ச்சபை அதிகாரிகள்.

**ஆளுங்கணம்** – ஊரையாளும் சபை.

**ஆளுடையதேவர்** – திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

**ஆளுடைய நம்பி** – சுந்தரமூர்த்தி நாயனார்.

**ஆளுடைய பிள்ளையார்** – திருஞானசம்பந்தர்.

**ஆளுடையவரசு** – திருநாவுக்கரசு நாயனார்.

**ஆளுடையான்** – அடிமை கொண்டவன்; ஆளு தலையுடையான்; சுவாமி.

**ஆளெழுத்துச் சேலை** – சித்திரம் எழுதிய சேலை வகை.

**ஆளெனல்** – நாயின் கதறல் குறிப்பு.

**ஆளை** – காண்க: **அறுகு.**

**ஆளையடிச்சான்** – புளியமரம்.

**ஆளொட்டி, ஆளொதுங்கி** – காவற்கட்டு.

**ஆளோட்டி** – வேலை வாங்குவோன்.

**ஆளோடி** – வீட்டின் முன்புறத்தில் கட்டப்பட்ட தளவரிசை இட்ட தரை; தடாகத்தில் ஆள்கள் நடப்பதற்குக் கட்டிய வழி.

**ஆளோலை** – அடிமைப்பத்திரம்.

**ஆற்கந்திதம்** – குதிரை நடைவகை.

**ஆற்பணம்** – விருப்பம்; உரியதாகக் கொடுத்தல்.

**ஆற்பதம்** – பற்றுக்கோடு.

**ஆற்பனேபதம்** – வடமொழி வினைவகை.

**ஆற்போடம்** – காக்கணம்.

**ஆற்போதம்** – எருக்கு; விஷ்ணுகிராந்தி; காட்டு மல்லிகை.

**ஆற்ற** – மிக; முற்ற.

**ஆற்றங்கரைத்தேவை** – வரிவகை.

**ஆற்றங்கால்** – காண்க: **காட்டுப்பூவரசு.**

**ஆற்றடம்பு** – அடம்புவகை.

**ஆற்றமாட்டாமை** – முடியாமை; தாங்க முடியாமை.

**ஆற்றரசு** – காண்க: **ஆற்றுப்பூவரசு.**

**ஆற்றல்** – சக்தி; முயற்சி; மிகுதி; கடைப்பிடி; பொறை; ஆண்மை; வெற்றி; வாய்மை; அறிவு; இன்னசொல் இன்ன பொருள் உணர்த்தும் என்னும் நியதி; சாகசம்.

**ஆற்றலரி** – காண்க: **கோடைச்சவுக்கு**; பூடுவகை; முதலைப் பூண்டு; காண்க: **சேங்கொட்டை மரம்.**

**ஆற்றறுத்தல்** – இடையிற் கைவிடுதல்; வலி **யழித்தல்.**

**ஆற்றாச்சண்டி** – வறுமையால் விடாது பிச்சை கேட்பவன்.

**ஆற்றாமை** – தாங்கமுடியாமை; தளர்ச்சி; மாட்டாமை; கவலை.

**ஆற்றான்** – வலிமையற்றவன்; வறிஞன்.

**ஆற்றிக்கொடுத்தல்** – சூட்டைக் குறைத்துக் கொடுத்தல்; துணையாக உதவுதல்.

**ஆற்றிடைக்குறை** – ஆற்றினிடையேயுள்ள திட்டு.
**ஆற்றித்தேற்றுதல்** – சமாதானப்படுத்துதல்.
**ஆற்றிலுப்பை** – மரவகை.
**ஆற்றிறால்** – இறால் மீன்வகை.
**ஆற்றின்வித்து** – கற்பூர சிலாசத்து.
**ஆற்றுக்கால்** – ஆற்றிலிருந்து பாசனத்திற்காக வெட்டிய கால்வாய்.
**ஆற்றுக்காலாட்டியர்** – மருதநிலப் பெண்டிர்.
**ஆற்றுக்காலேரி** – ஆற்றிலிருந்து பிரியும் கால் வாய் நீரால் நிரம்பும் ஏரி.
**ஆற்றுக்கால் பாய்ச்சல்** – ஆற்றிலிருந்து வரும் நீர்ப்பாய்ச்சல்.
**ஆற்றுக்குலை** – ஆற்றின் கரை; வரிவகை.
**ஆற்றுக்கெண்டை** – ஒருவகைச் சிறுமீன்.
**ஆற்றுக்கொடி** – பேய்க்கொம்மட்டி.
**ஆற்றுச்சஞ்சலை** – காண்க: **மலைவட்டை.**
**ஆற்றுச்சவுக்கு** – காண்க: **கோடைச்சவுக்கு;** செடிவகை.
**ஆற்றுச்செருப்படி** – பூடுவகை.
**ஆற்றுணா** – கட்டுச்சோறு; வழியுணவு.
**ஆற்றுத்தும்மட்டி** – காண்க: **ஆற்றுக்கொடி.**
**ஆற்றுத்துவரை** – செடிவகை.
**ஆற்றுதல்** – வலியடைதல்; கூடியதாதல்; போதியதாதல்; உய்தல்; உவமையாதல்; செய்தல்; தேடுதல்; உதவுதல்; நடத்துதல்; கூட்டுதல்; சுமத்தல்; பசி முதலியன தணித்தல்; துன்பம் முதலியன தணித்தல்; சூடு தணித்தல்; ஈரமுலர்த்துதல்; நூல் முறுக்காற்றுதல்; நீக்குதல்.
**ஆற்றுநர்** – செயல்புரிபவர்; உதவி செய்வார்; வன்மையுடையார்.
**ஆற்றுநெட்டி** – காண்க: **நீர்ச்சுண்டி.**
**ஆற்றுப்பச்சை** – நாகபச்சைக்கல்.
**ஆற்றுப்படுகை** – ஆற்றினுள் கரைசார்ந்த நிலப் பகுதி; ஆற்றுப் பாய்ச்சலுள்ள நிலம்.
**ஆற்றுப்படுத்தல்** – வழிச்செலுத்துதல்; போக்கு தல்.
**ஆற்றுப்படை** – பரிசில் பெற்றான் ஒருவன் அது பெறக் கருதியவனை ஒரு தலைவனிடத்துச் செலுத்துவதாகப் பாடப்படும் நூல்வகை.
**ஆற்றுப்பாசி** – நீர்ப்பூடுவகை.
**ஆற்றுப்பாட்டம்** – வரிவகை.
**ஆற்றுப்பாய்ச்சல்** – காண்க: **ஆற்றுக்கால் பாய்ச் சல்.**
**ஆற்றுப்பாய்ச்சி** – ஆற்றில் கப்பல் செலுத்து வோன்.
**ஆற்றுப்பாலை** – மரவகை.
**ஆற்றுப்பித்தல்** – ஆற்றோரம்.
**ஆற்றுப்புரவு** – ஆற்றுநீரால் பயிரிடப்படும் நிலம்.
**ஆற்றுப்பூத்தான்** – காண்க: **பூனைக்காலி.**
**ஆற்றுப்பூவரசு** – மரவகை.
**ஆற்றுப்பொடி** – ஆற்றிலுள்ள சிறுமீன்.
**ஆற்றுமரி** – நீருமரிச்செடி; காண்க: **ஆற்றுக் கொடி.**
**ஆற்றுமல்லிகை** – நீர்ப்பூடுவகை.
**ஆற்றுமுள்ளங்கி** – முள்ளங்கிவகை.
**ஆற்றுமுள்ளி** – காண்க: **கண்டங்கத்தரி;** கழுதை முள்ளி.
**ஆற்றுமேலழகி** – பூடுவகை.
**ஆற்றுல்லம்** – உல்ல மீன்வகை.
**ஆற்றுவரி** – ஆற்றை முன்னிலைப்படுத்திப் பாடும் ஒருவகை வரிப்பாடல்.
**ஆற்றுவாய்முகம்** – ஆறு கடலொடு கலக்குமிடம்.
**ஆற்றுவாளை** – ஏரி வாளைமீன்.
**ஆற்றுவைப்பு** – ஆற்றின் ஒதுக்கத்தால் பயிரிடத் தகுதியாகும் நிலம்.
**ஆற்றொழுக்கு** – ஆற்றின் நீரோட்டம்; இடை யறவுபடாத நடை; சூத்திர நிலையுள் ஒன்று.
**ஆறக்கட்டுதல்** – பேய்க்கோளை மேற்செல்ல வொட்டாமல் தடுத்தல்.
**ஆறகோரம்** – கொன்றை.
**ஆறங்கம்** – வேதாங்கம் ஆறு; அவை: சிட்சை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோ பிசிதம், சோதிடம் என்பன; அரசர்க்குரிய படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் ஆறுறுப்பு.
**ஆறத்தணிய** – காண்க: **ஆறவமர.**
**ஆறதீகம்** – கல்நார்.
**ஆறப்போடுதல்** – காலந்தாழ்த்தல்.
**ஆறல்பீறல்** – பயனற்றது.
**ஆறலை** – வழிப்பறி.
**ஆறலைத்தல்** – வழிப்பறி செய்தல்.
**ஆறவமர** – அமைதியாய், நிதானமாக.
**ஆறவிடுதல்** – காண்க: **ஆறப்போடுதல்.**
**ஆறறிவுயிர்** – ஐம்பொறியுணர்வோடு மனவுணர் வுடைய மக்கள்.
**ஆறன்மட்டம்** – தாளவகை.
**ஆறாட்டம்** – நோயுற்றோர் படும் துயரம்.
**ஆறாட்டு** – தீர்த்தவாரித் திருவிழா.
**ஆறாடி** – நிலைகெட்டவன்.
**ஆறாடுதல்** – தீர்த்தவாரி மூழ்குதல்.
**ஆறாதாரம்** – உடம்பினுள் தத்துவவழி கூறும் ஆறிடம்: மூலாதாரம், சுவாதிட்டானம், மணி பூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை.
**ஆறாதூறு** – காண்க: **அவதூறு.**
**ஆறாமீன்** – கார்த்திகை.
**ஆறாமீனறவோட்டு** – கார்த்திகையில் சூரியன் புகும் காலம்.

**ஆறாயிரப்படி** – ஆறாயிரம் கிரந்தம் கொண்ட உரை நூல்; திருவாய்மொழி விரிவுரைகளுள் முந்தியது.

**ஆறாரைச்சக்கரம்** – மிறைக்கவியுள் ஒன்று.

**ஆறியகற்பு** – அறக்கற்பு.

**ஆறிலொன்று** – அரசனுக்குரிய ஆறிலொரு பாகம்.

**ஆறு** – நதி; வழி; பக்கம்; பயன்; சமயம்; அறம்; சூழ்ச்சி; விதம்; இயல்பு; ஓர் எண்ணிக்கை; தலைக்கடை.

**ஆறுகட்டி** – ஆறு பற்களுக்குமேல் முளையாத மாடு; சைவர் காதில் அணியும் உருத்திராக்க மணிவடம்.

**ஆறுகட்டுதல்** – ஆற்றில் அணை கட்டுதல்; ஆற்றிற்குக் கரையிடுதல்.

**ஆறுகாட்டி** – வழிகாட்டி.

**ஆறுசூடி** – கங்கையைத் தலையில் அணிந்துள்ள சிவன்.

**ஆறுதல்** – தணிதல்; சூடு தணிதல்; அமைதியாதல்; புண் காய்தல்; அடங்குதல்; மனவமைதி.

**ஆறுபரியான்** – இராகு; கேது.

**ஆறுமணிப்பூ** – மாலையில் மலரும் மலைப்பூ வகை.

**ஆறுமாசக் கடன்காரன், ஆறுமாசமுட்டைக்காரன்** – ஆறுமாதத் தவணைக்குக் கடனாகப் பண்டங்களை விற்கும் வணிகன்.

**ஆறுமாதக்காடி** – மிகப் புளிக்க வைத்த காடி மருந்து.

**ஆறெழுத்து** – ஆறெழுத்து மந்திரம்; 'நமக்குமாராய' என்னும் முருகக் கடவுள் மந்திரம்.

**ஆறெறிபறை** – வழிப்பறி செய்வோர் கொட்டும் பறை.

**ஆறை** – ஆற்றூர்.

**ஆன்** – பெற்றம், எருமை, மரை இவற்றின் பெண்; காளை; அவ்விடம்; மூன்றனுருபு; ஆண்பாற் பெயர் வினைகளின் விகுதி; ஒரு சாரியை.

**ஆன்காவலன்** – வைசியன்.

**ஆன்பொருந்தம்** – ஆன்பொருநை ஆறு, தாமிரபரணியாறு.

**ஆன்மசுத்தி** – பத்துச் செயலுள் ஒன்று; ஐந்து சுத்தியுள் ஒன்று; தாந்திரிக பஞ்ச சுத்தியுள் ஒன்று.

**ஆன்மஞானம்** – ஆன்மாவைப் பற்றிய அறிவு; ஆன்மாவின் அறிவு.

**ஆன்மதத்துவம்** – காண்க: **அசுத்ததத்துவம்.**

**ஆன்மதரிசனம்** – தன்னையுணரும் அறிவு; பத்துச் செயலுள் ஒன்று.

**ஆன்மபூ** – மன்மதன்; பிரமன்.

**ஆன்மபோதம்** – உயிருணர்வு.

**ஆன்மமந்திரம்** – காண்க: **அசபா.**

**ஆன்மயோனி** – காண்க: **ஆன்மபூ.**

**ஆன்மரூபம்** – பத்துச் செயலுள் ஒன்று.

**ஆன்மலாபம்** – ஆத்மாவின் பேறு.

**ஆன்மவீரன்** – விறலோன்; மைத்துனன்; புதல்வன்; கற்றோன்.

**ஆன்மா** – உயிர்; முயற்சி; ஊக்கம்; மணம்; அறிவு; உடல்; பரமான்மா; வாயு; இயல்பு; சூரியன்; நெருப்பு.

**ஆன்மாச்சிரயம்** – தன்னைப் பற்றுதல் என்னும் குற்றம்.

**ஆன்மாதீனன்** – ஆன்மவீரன்; பிராணாதாரன்.

**ஆன்மார்த்தபூசை** – தன் மனமொன்றிய வழிபாடு.

**ஆன்மார்த்தம்** – தற்பொருட்டு.

**ஆன்மெழுக்கு** – பசுவின் சாணம்.

**ஆன்வல்லவர், ஆன்வல்லோர்** – முல்லைநில மாக்கள்.

**ஆன்ற** – மாட்சிமைப்பட்ட; பரந்த; அடங்கிய; இல்லாமற்போன.

**ஆன்றமைதல்** – அடங்கியமைதல்.

**ஆன்றல்** – அகலம்; நீங்கல்; மாட்சிமை; மிகுதி.

**ஆன்றவர், ஆன்றா(றோ)ர்** – அறிஞர்; தேவர்; பெரியோர்; பண்புள்ளோர்.

**ஆன்று** – நிறைந்து; விரிந்து; நீங்கி.

**ஆன்றோள்** – மாண்புடையாள்.

**ஆன்னிகம்** – நாட்கடன்.

**ஆன** – அந்த; ஆகிய.

**ஆனகதுந்துபி** – முரசுவகை; வாசுதேவர்.

**ஆனகம்** – படகம்; துந்துபி; தேவதாரு; சுரை; கற்பகம்; மேகமுழக்கம்.

**ஆனஞ்சு** – பஞ்சகவ்வியம்; பசுவின் பால், தயிர், நெய், சிறுநீர், சாணம் சேர்ந்த கலவை.

**ஆனத்தவாயு** – வாதநோய்வகை.

**ஆனத்தேர்** – விடத்தேர்ச்செடி.

**ஆனதம்** – சமணரது கற்பலோகங்களுள் ஒன்று.

**ஆனது** – எழுவாய்ச் சொல்லுருபு.

**ஆனதும்பி** – மீன்வகை.

**ஆனந்த** – அறுபதாண்டுக் கணக்கில் நாற்பத்தெட்டாம் ஆண்டு.

**ஆனந்தக்கண்ணீர்** – மகிழ்ச்சி மிகுதியால் வரும் கண்ணீர்.

**ஆனந்தக்கரப்பான்** – ஒருவகைக் கரப்பான் நோய்.

**ஆனந்தகரந்தம்** – மருக்கொழுந்து.

**ஆனந்தகரம்** – மகிழ்ச்சி தருவது.

**ஆனந்தக்களிப்பு** – பெருமகிழ்ச்சி; மகிழ்ச்சி மிகுதியால் பாடும் ஒருவகைப் பாடல்.

**ஆனந்தகானம்** – காசி.

**ஆனந்தகுறுவை** – நெல்வகை.

**ஆனந்ததாண்டவம்** – நடராசர் புரியும் நடனம்.

**ஆனந்ததீர்த்தர்** – மத்துவாசாரியார்.

**ஆனந்தநித்திரை** – யோகநித்திரை.

**ஆனந்தநிருத்தம்** – காண்க: **ஆனந்ததாண்டவம்.**

**ஆனந்தப்பையுள்** – கணவன் இறப்ப மனைவி வருந்தும் புறத்துறை.

**ஆனந்தபரவசம்** – மகிழ்ச்சியால் தன்னை மறக்கை.

**ஆனந்தபைரவம்** – சிந்தூரவகை.

**ஆனந்தபைரவி** – ஒரு பண்.

**ஆனந்தம்** – பேரின்பம்; சாக்காடு; பாக் குற்றங்களுள் ஒருவகை; அரத்தை.

**ஆனந்தமயகோசம்** – உயிருக்குள்ள ஐந்து உறையுளுள் ஒன்று.

**ஆனந்தமயம்** – இன்பம் நிறைந்தது; காண்க: **ஆனந்தமயகோசம்.**

**ஆனந்தமூலி** – கஞ்சா.

**ஆனந்தரியம்** – இவை ஆராய்ந்தபின் இது கேட்கற்பாற்று என்னும் யாப்பு.

**ஆனந்தவருவி** – இன்பத்தால் வரும் கண்ணீர்ப் பெருக்கு.

**ஆனந்தவல்லி** – பார்வதி; தைத்திரிய உபநிடதத்தின் ஒரு பாகம்.

**ஆனந்தவுவமை** – மிகவும் இழிந்த பொருளோடு ஒப்பிடுதலாகிய உவமைக் குற்றம்.

**ஆனந்தவோமம்** – ஒருவர் இறந்த பத்தாம் நாளில் தீட்டுக் கழியச் செய்யும் சடங்கு.

**ஆனந்தன்** – சிவன்; அருகன்.

**ஆனந்தான்மவாதி** – ஆன்மா ஆனந்தமடைவதே வீடுபேறென்று வாதிப்பவன்.

**ஆனந்தி** – பார்வதி; தாமிரபரணியாறு; மகிழ்ச்சியுடையவன்; அரத்தை.

**ஆனந்தித்தல்** – மகிழ்வடைதல்.

**ஆனந்தை** – உமாதேவி; குறிஞ்சியாழ்த்திறத்துள் ஒன்று; காண்க: **கொட்டைக்கரந்தை.**

**ஆனம்** – எழுத்துச்சாரியை; கள்; தெப்பம்; மரக்கலம்.

**ஆனமட்டும்** – கூடியவரை.

**ஆனயம், ஆனயனம்** – கொண்டுவருகை; பூணூல்சடங்கு.

**ஆனர்த்தகம்** – போர்; நாடகசாலை; ஒரு நாடு.

**ஆனவர்** – இடையர்.

**ஆனவன்** – நண்பன்; எழுவாய் வேற்றுமைச் சொல்லுருபு.

**ஆனவாள்** – கோயிற் காரியங்களை நடத்தி வைக்கும் அரசாங்க அலுவலன்.

**ஆனனம்** – முகம்.

**ஆனா** – நீங்காத; கெடாத; அடங்காத; அளவு கடந்த; மஞ்சள்நாறி.

**ஆனாகம்** – நீட்சி; வயிற்றுப்பொருமல் நோய்.

**ஆனாங்குருவி** – குருவிவகை.

**ஆனாமை** – நீங்காமை; தணியாமை; கெடாமை; உத்தராடம்.

**ஆனாயகலை** – கண்ணறைத்தசை.

**ஆனாயம்** – வாயுக்கண்ணறை.

**ஆனாயன்** – மாட்டிடையன்.

**ஆனால்** – ஆயின்; ஆகையால்.

**ஆனாலும்** – ஆயினும்.

**ஆனி** – மூன்றாம் மாதம்; காண்க: **மூலம்;** உத்தராடம்; ஆன்பொருநை; கேடு; இந்துப்பு.

**ஆனிக்கருந்தலை** – ஆனிமாதக் கடைசி.

**ஆனித்தூக்கம்** – ஆனி மாதத்தில் கடலின் அமைதி.

**ஆனியம்** – நாள்; நட்சத்திரம்; பருவம்; பொழுது; நாட்படி; கருஞ்சீரகம்.

**ஆனிரை** – பசுக்கூட்டம்.

**ஆனிலன்**–வாயு புதல்வனாகிய அனுமான்; பீமன்.

**ஆனிலை** – பசுக்கொட்டில்; கருவூர்ச் சிவாலயம்.

**ஆனிலையுலகம்** – காண்க: **ஆனுலகு.**

**ஆனீர்** – கோமூத்திரம்.

**ஆனுகூலியம்** – அனுகூலமுடைமை.

**ஆனுதல்** – நீங்குதல்.

**ஆனும்** – ஆயினும்; ஆவது.

**ஆனுலகு** – கோலோகம்.

**ஆனெய்** – பசுவின் நெய்.

**ஆனேறு** – எருது.

**ஆனை** – யானை; காண்க: **அத்தி;** ஆத்தி.

**ஆனைக்கசடன்** – நெல்வகை.

**ஆனைக்கண்** – அளிந்த பழத்தில் விழும் கறுப்புப் புள்ளி.

**ஆனைக்கரடு** – ஆனையறுகு படர்ந்த கரட்டு நிலம்.

**ஆனைக்கள்ளிமுளையான்** – பூடுவகை.

**ஆனைக்கற்றலை** – கடல்மீன்வகை.

**ஆனைக்கற்றாழை** – ஒருவகை நீண்ட கற்றாழை.

**ஆனைக்காசு** – நாணயவகை.

**ஆனைக்காயம்** – காண்க: **ஆனைப்பெருங்காயம்.**

**ஆனைக்காரன்** – யானைப்பாகன்.

**ஆனைக்காரை** – காண்க: **ஒதிமரம்.**

**ஆனைக்கால்** – பெருங்கால்; பெரிய நீர்த்தூம்பு.

**ஆனைக்குப்பு** – சதுரங்க விளையாட்டு.

**ஆனைக்குரு** – மரவகை.

**ஆனைக்குருகு** – அன்றில்.
**ஆனைக்குழி** – யானை பிடிக்குமிடம்.
**ஆனைக்குன்றிமணி** – காண்க: **மஞ்சாடிமரம்.**
**ஆனைக்கூடம்** – யானை கட்டுமிடம்; பழைய வரிவகை.
**ஆனைக்கெளுத்தி** – மீன்வகை.
**ஆனைக்கொம்பன்** – ஆறுமாதத்தில் விளையும் ஒருவகை நெல்; வாழைவகை.
**ஆனைக்கொம்பு** – யானைத் தந்தம்.
**ஆனைக்கோடன்சுரை** – சுரைவகை.
**ஆனைக்கோரை** – கோரைவகை.
**ஆனைச்சப்பரம்** – அம்பாரி.
**ஆனைச்சாத்தான்** – காண்க: **கரிக்குருவி.**
**ஆனைச்சிரங்கு** – ஒருவகைப் பெரும்புண்.
**ஆனைச்சிலந்தி** – புண்கட்டி வகை.
**ஆனைச்சீரகம்** – காண்க: **பெருஞ்சீரகம்.**
**ஆனைச்சுண்டை** – மலைச்சுண்டை என்னும் சுண்டைவகை.
**ஆனைச்செவியடி** – பூடுவகை.
**ஆனைச்சேவகன்** – யானை வீரன்; யானைப் படைத் தலைவன்.
**ஆனைச்சொறி** – பெருஞ்சொறிசிரங்கு.
**ஆனைசேனை** – மிகுதி.
**ஆனைத்தடிச்சல்** – படர்கொடிவகை; காண்க: **புளிநறளை.**
**ஆனைத்தடிப்பு** – ஒரு பூடு.
**ஆனைத்தாள்** – மதகு.
**ஆனைத்திசை** – வடதிசை.
**ஆனைத்திப்பிலி** – கொடிவகை.
**ஆனைத்தீ, ஆனைத்தீநோய்** – பெரும்பசியை விளைப்பதொரு நோய்.
**ஆனைத்தும்பிக்கை** – துதிக்கை; காண்க: **ஆனைத்தூம்பு.**
**ஆனைத்தும்பை** – பெருந்தும்பை.
**ஆனைத்தூம்பு** – யானை வடிவாயமைந்த நீர் விழுங் குழாய்.
**ஆனைத்தெல்லு** – படர்கொடி வகை.
**ஆனைத்தேர்** – விடத்தேர்.
**ஆனைத்தொழில்** – பெருஞ்செயல்.
**ஆனைத்தோட்டி** – அங்குசம்.
**ஆனைந்து** – காண்க: **ஆனஞ்சு.**
**ஆனைநார்** – மரவகை.
**ஆனைநெருஞ்சி** – பெருநெருஞ்சி.
**ஆனைப்படுவன்** – வெப்புநோய்வகை.
**ஆனைப்பார்வை** – கீழ்நோக்கிய பார்வை.
**ஆனைப்பிச்சான்** – ஒரு பூடு.
**ஆனைப்புல்** – காண்க: **ஆனைக்கோரை.**
**ஆனைப்புளி** – பப்பரப்புளி.
**ஆனைப்பெருங்காயம்** – ஒருவகைப் பெருங்காயக் கலவை.
**ஆனைப்பேன்** – கத்தரிச் செடியில் உண்டாகும் ஒருவகைப் பூச்சி.
**ஆனைமஞ்சள்** – ஒரு பூடு.
**ஆனைமயிர்க்காப்பு** – யானையின் வால்மயிரால் செய்தணியும் காப்பு.
**ஆனைமீக்குவம்** – கருமருது.
**ஆனைமீன்** – பெருமீன்வகை.
**ஆனைமுகன்** – விநாயகன்; ஓர் அசுரன்.
**ஆனையச்சு** – ஒருவகைப் பொற்காசு.
**ஆனையடி** – சதுரங்க ஆட்டத்தில் யானை செல்லும் கதி.
**ஆனையடிச் செங்கல்** – வட்டமான செங்கல்.
**ஆனையடியப்பளம்** – கலியாணத்தில் பயன் படுத்தப்படும் பெரிய அப்பளம்.
**ஆனையர்க்குளா** – கடல்மீன்வகை.
**ஆனையரசாணி** – மணமேடையில் வைக்கப்படும் யானை முதலிய உருவங்கள்.
**ஆனையறுகு** – அறுகுவகை.
**ஆனையறையும் புள்** – காண்க: **ஆனையிறாஞ்சிப் புள்.**
**ஆனையாடுதல்** – குழந்தைகள் உடம்பை ஆட்டுதல்.
**ஆனையாள்** – யானைவீரன்.
**ஆனையிலத்தி** – யானையின் மலம்.
**ஆனையிறாஞ்சிப்புள், ஆனையுண்குருகு** – ஒரு பெரும்பறவை.
**ஆனையுண்ட விளங்கனி** – விளாம்பழத்தில் தோன்றும் ஒரு நோய்.
**ஆனையுரித்தோன்** – சிவன்.
**ஆனையூர்தி** – இந்திரன்; ஐயனார்.
**ஆனையேற்றம்** – ஆனைமேலேறி நடத்தும் தொழில்.
**ஆனையோசை** – உழைப்பண்.
**ஆனைவசம்பு** – அரத்தை.
**ஆனைவணங்கி** – காண்க: **தேட்கொடுக்கி;** பெருநெருஞ்சி.
**ஆனைவாயன்கற்றலை** – ஆனைக்கற்றலைமீன்; பொருவாக்கற்றலைமீன்.
**ஆனைவாழை** – நீண்ட குலைகொண்ட ஒருவித வாழை; குளங்கோவை நெல்.
**ஆனைவேக்கட்டான்** – நெல்வகை.
**ஆனோன்** – காண்க: **ஆனவன்.**

**இ** – மூன்றாம் உயிரெழுத்து; பஞ்ச பட்சிகளுள் ஆந்தையைக் குறிக்கும் எழுத்து; அண்மைச் சுட்டு; இருதிணை முக்கூற்று ஒருமை விகுதி; வினைமுதல் பொருள் விகுதி; செயப்படு பொருள் விகுதி; கருவிப்பொருள் விகுதி; எதிர் கால முன்னிலை ஒருமை விகுதி; ஏவல் ஒருமை விகுதி; வியங்கோள் விகுதி; வினையெச்ச விகுதி; தொழிற்பெயர் விகுதி; பகுதிப் பொருள் விகுதி.

**இஃது** – இது; அஃறிணை ஒருமை அண்மைச் சுட்டு.

**இக்கட்டு** – இடுக்கண்; நெருக்கடி; வெல்லக்கட்டி.

**இக்கணம்** – இப்பொழுது.

**இக்கரை** – இந்தக் கரை; இந்துப்பு.

**இக்கவம்** – கரும்பு.

**இக்கன்** – கரும்பு வில்லை உடையவனான மன்மதன்.

**இக்கிடைஞ்சல்** – இடையூறு.

**இக்கிரி** – முட்செடிவகை.

**இக்கு** – இடை; சீலையை இறுக்கிக் கட்டும் முடிச்சு; ஆபத்து; கரும்பு; கள்; கூட்டில் வைத்த தேன்; ஒரு சாரியை.

**இக்குக்கந்தை** – நீர்முள்ளி; நெருஞ்சி; நாணல்; வெள்ளிருளிச் செடி.

**இக்குக்கொட்டுதல்** – ஒலிக்குறிப்பினால் ஒன்றை அறிவித்தல்.

**இக்குதம்** – கருப்பஞ்சாற்றுக் கடல்.

**இக்குமுடிச்சு** – சீலையை இறுக்கிக் கட்டும் முடிச்சு.

**இக்குரம்** – நீர்முள்ளி.

**இக்குவாகு** – குந்துருக்கம் பிசின்; சூரியகுலத்து முதலரசன்.

**இக்குவிகாரம்** – சருக்கரை.

**இக்குவில்லி, இக்குவில்லோன்** – கரும்பை வில்லாகவுடைய மன்மதன்.

**இக்கெனல்** – விரைவுக் குறிப்பு.

**இக்கோ** – வியப்பு இரக்கச்சொல்.

**இக** – முன்னிலை அசைச்சொல்.

**இகசுக்கு** – காண்க: **நீர்முள்ளி.**

**இகணை** – ஒரு மரம்.

**இகத்தல்** – தாண்டுதல்; கடத்தல்; அடக்குதல்; கைப்பற்றுதல்; பிரிதல்; பொறுத்தல்; போதல்; நீங்குதல்; புடைத்தல்; காழ்த்தல்; நெருங்குதல்.

**இகத்தாளம்** – பரிகாசம், கிண்டல்.

**இகந்துழி** – தூரமான இடம்.

**இகந்துபடுதல்** – விதியைக் கடத்தல்.

**இகபரம்** – இம்மை மறுமை.

**இகபோகம்** – இவ்வுலக இன்பம்.

**இகம்** – இம்மை.

**இகமலர்** – விரிமலர்.

**இகரக்குறுக்கம்** – குற்றியலிகரம்.

**இகரம்** – 'இ' என்னும் எழுத்து.

**இகல்** – பகை; போர்; வலிமை; சிக்கு; அளவு; புலவி.

**இகல** – ஒருவமைச் சொல்.

**இகலன்** – பகைவன்; படைவீரன்; நரி; கிழநரி.

**இகலாட்டம்** – வாதாட்டம்; போட்டி.

**இகலா(லோ)ன்** – பகைவன்.

**இகலி** – காண்க: **பெருமருந்து.**

**இகலியார்** – பகைவர்.

**இகலுதல்** – மாறுபடுதல்; போட்டிபோடுதல்; ஒத்தல்.

**இகலோகம்** – இவ்வுலகம்.

**இகழ்** – இகழ்ச்சி.

**இகழ்ச்சி** – அவமதிப்பு; குற்றம்; விழிப்பின்மை; வெறுப்பு.

**இகழ்ந்துரை** – இகழ்ச்சிச் சொல்.

**இகழ்வார்** – அவமதிப்பவர்.

**இகழ்வு** – நிந்தை.

**இகழற்பாடு** – இகழப்படுகை.

**இகழாஇகழ்ச்சி** – புகழ்வதுபோலப் பழித்துக் கூறும் அணி.

**இகழுநர்** – எள்ளி நகையாடுபவர்; பகைவர்.

**இகளை** – வெண்ணெய்.

**இகன்மகள்** – துர்க்கை.

**இகன்றவர்** – பகைவர்.

**இகனி** – காண்க: **வெற்றிலை.**

**இகா** – முன்னிலையசை.

**இகாமுத்திரபலபோகவிராகம்** – இம்மை மறுமை இன்பங்களில் அவாவற்றிருத்தல்.

**இகுசு** – காண்க: **மூங்கில்.**

**இகுடி** – காண்க: **காற்றோட்டி.**

**இகுத்தல்** – கொல்லுதல்; வீழ்த்துதல்; தாழ்த்துதல்; சொரிதல்; ஓடச்செய்தல்; அறைதல்; வாத்தியம் வாசித்தல்; அழைத்தல்; கொடுத்தல்; விரித்தல்; ஒலித்தல்; மறித்தல்; தாண்டுதல்; எறிதல்; துன்புறுத்துதல்; துடைத்தல்.

**இகுதல்** – கரைந்து விழுதல்; தாழ்ந்து விழுதல்.

**இகுப்பம்** – திரட்சி; தாழ்வு.

**இகும்** – முன்னிலையசை.

**இகுரி** – மரக்கலம்; வழக்கு.

**இகுவை** – வழி.

**இகுள்** – இகுளை; இடி; ஆரால்மீன்.

**இகுளி** – இடி; கொன்றை.

**இகுளை** – தோழி; சுற்றம்; நட்பு.

**இகூஉ** (வி) – இகுத்து, வீழ்த்தி.
**இங்கண்** – இவ்விடம்.
**இங்கம்** – குறிப்பு; அங்கசேட்டை; சங்கமப் பொருள்; அறிவு.
**இங்கலம்** – கரி.
**இங்கிட்டு** – இங்கு.
**இங்கித்தை** – இவ்விடத்தில்.
**இங்கிதக்களிப்பு** – காமக்குறிப்போடு கூடிய களிப்பு.
**இங்கிதக்காரன்** – பிறன் குறிப்பறிந்து அதற் கிசைய நடப்பவன்.
**இங்கிதகவி** – பாட்டுடைத் தலைவன் கருத்தை விளக்கும் பாடல்; இனிமை தரும் கவிபாடு வோன்.
**இங்கிதம்** – குறிப்பு; கருத்து; இனிமை; சமயோசித நடை; போகை; புணர்ச்சி.
**இங்கிரி** – கத்தூரி; செடிவகை.
**இங்கிற்றி** – காண்க: **இங்குத்தி.**
**இங்கு** – இவ்விடம்; பெருங்காயம்.
**இங்குசக்க(கா)ண்ட(டா)ன்** – நீர்முள்ளி; நெருஞ்சி.
**இங்குடுமம்** – பெருங்காயம்.
**இங்குத்தி** – ஒரு மரியாதைச் சொல்.
**இங்குத்தை** – இவ்விடம்.
**இங்குதல்** – தங்குதல்; அழுந்துதல்.
**இங்குதாரி** – ஒருவகை உலோகமண்.
**இங்குதாழி** – பீதரோகிணி.
**இங்குதி** – மரவகை.
**இங்குராமம்** – காண்க: **இங்குடுமம்.**
**இங்குலியம்** – சாதிலிங்கம்; சிவப்பு.
**இங்குளி** – காண்க: **இங்குடுமம்.**
**இங்ஙன்** – இங்ஙனம், இப்படி; இவ்விடம்.
**இங்ஙனம்** – இங்கு; இவ்வாறு.
**இச்சகம்** – முகமன்; நேரில் புகழ்கை; பெறக் கருதிய தொகை.
**இச்சம்** – விருப்பம்; பத்தியோடு புரியும் தொண்டு; வினா; அறியாமை; பொய் கூறுகை.
**இச்சாசத்தி** – விருப்பாற்றல், சிவனுடைய ஐந்து சத்திகளுள் ஒன்று; முதல்வன் ஆன்மாக்களுக்கு மலபந்தத்தை நீக்கிச் சிவத்தையளித்தற்கண் உள்ளதாகிய அருள்.
**இச்சாப்பிராரத்தம்** – தனக்கே துன்பமென அறிந் திருந்தும் அதைச் செய்விக்கும் பிராரத்த கரும வகை.
**இச்சாபத்தியம்** – மருந்துண்ணுங் காலத்தில் புணர்ச்சி தவிர்கை; கடுகு, நல்லெண்ணெய் முதலியவற்றை நீக்கியுண்ணும் பத்தியம்.
**இச்சாபோகம்** – விரும்பியபடி இன்பம் நுகர்தல்.
**இச்சாரோகம்** – போகாதிக்கத்தால் வரும் நோய்.
**இச்சி** – காண்க: **கல்லிச்சி**; மரவகை; பெண்பால் விகுதி.
**இச்சிச்சிச்செனல்** – பறவை முதலியவற்றை வெருட்டும் ஒலிக்குறிப்பு.
**இச்சித்தல்** – விரும்புதல்.
**இச்சியல்** – கடுகுரோகிணி.
**இச்சியால், இச்சில்** – இத்திமரம்.
**இச்சியை** – கொடை; வேள்வி; பூசனை.
**இச்சுக்கொட்டுதல்** – பறவை ஒலித்தல்; ஒலிக் குறிப்பினால் மறுமொழி கூறுதல்.
**இச்சை** – விருப்பம்; பத்தியோடு புரியும் தொண்டு; வினா; அறியாமை.
**இச்சைசெய்தி** – காண்க: **திரோபவம்**; மறைப்பு; மயக்கம்.
**இச்சையடக்கம்** – ஆசையை அடக்கிக் கொள் ளுகை.
**இசக்கி, இசக்கியம்மன்** – துர்க்கையின் மாற்றுரு; ஊர்த் தெய்வம்.
**இசக்குபிசக்கு, இசகுபிசகு** – முறைகேடு; குழப்பம்.
**இசங்கு** – சங்கஞ்செடி.
**இசங்குதல்** – போதல்.
**இசடு** – பொருக்கு.
**இசப்புதல்** – ஏமாற்றுதல்.
**இசருகம்** – காண்க: **தும்பை.**
**இசல்(லு)தல்** – மாறுபடுதல்; வாதாடுதல்.
**இசலாட்டம்** – காண்க: **இகலாட்டம்.**
**இசலி** – பிணங்குபவள்.
**இசலிப்புழுக்குதல்** – கலகப்படுதல்.
**இசவில்** – காண்க: **கொன்றை.**
**இசாபு** – கணக்கு.
**இசி** – உரிக்கை; ஒடிக்கை; சிரிப்பு.
**இசிகப்படை** – ஒருவகை அம்பு.
**இசிகர்** – காண்க: **கடுகு.**
**இசித்தல்** – நரம்பிழுத்தல்; நோவுண்டாதல்; இழுத்தல்; முறித்தல்; உரித்தல்; சிரித்தல்.
**இசிப்பு** – இழுக்கை; நரம்புவலி; சிரிப்பு.
**இசிபலம்** – காண்க: **பேய்ப்புடல்.**
**இசிவு** – நரம்பிழுப்பு; மகப்பேற்று வலி.
**இசிவுநொப்பி** – சன்னியைத் தடுக்கும் மருந்து.
**இசின்** – இறந்தகால இடைநிலை; அசைநிலை.
**இசுதாரு** – காண்க: **கடம்பு.**
**இசுப்பு** – காண்க: **இழுப்பு.**
**இசும்பு** – வழுக்கு; ஏற்றவிறக்கங்கள் மிகுந்த கடுவழி; நீர்க்கசிவு; எட்கசிவு.
**இசை** – இசைவு; பொன்; ஊதியம்; ஓசை; சொல்; புகழ்; இசைப்பாட்டு; நரம்பிற் பிறக்கும் ஓசை; இனிமை; ஏந்திசை, தூங்கிசை, ஒழுகிசை; சீர்; சுரம்; வண்மை; திசை.

**இசைக்கரணம்** – இசைக்கருவியில் காட்டும் தொழில்.

**இசைக்கருவி** – தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக்கருவி, கஞ்சக்கருவி என ஐவகைப்படும் வாத்தியம்; வாத்தியம்.

**இசைக்கிளை** – ஆயத்தம், எடுப்பு, உற்சாகம், சஞ்சாரம், இடாயம் என்னும் ஐவகை இசை.

**இசைக்குரற் குருவி** – குயில்.

**இசைக்குழல்** – குழற்கருவி; ஊதுகுழல்.

**இசைகடன்** – நேர்த்திக்கடன்.

**இசைகாரர்** – பாடுவோர்; பாணர்.

**இசைகுடிமானம்** – நாட்டுக்கோட்டைச் செட்டிமார் கலியாணத்தில் எழுதப்படும் சாட்சிப் பத்திரம்.

**இசைகேடு** – இகழ்; இசைபாடுதலில் தவறு; சீர்கெட்ட நிலை; எக்கச்சக்கம்; தவறான நிலை; ஒழுங்கின்மை; பொருத்தமின்மை; கெடுதி.

**இசைச்சுவை** – குரல் முதலிய ஏழிசைக்குரிய சுவைகள்: பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளங்கனி.

**இசைத்தமிழ்** – முத்தமிழுள் ஒன்று.

**இசைத்தல்** – யாழ் முதலியன ஒலித்தல்; சொல்லுதல்; அறிவித்தல்; உண்டுபண்ணுதல்; கட்டுதல்; ஒத்தல்; மிகக் கொடுத்தல்; புணர்தல்.

**இசைதல்** – பொருந்துதல்; ஒத்துச்சேர்தல்; உடன்படுதல்; கிடைத்தல்; இயலுதல்.

**இசைநாள்** – உத்தரட்டாதி; பூரட்டாதி.

**இசைநிறை** – செய்யுளில் இசை நிறைத்தற்கு வருஞ் சொல்; அவை: ஒடு, தெய்ய முதலியன.

**இசைநிறையசைச்சொல்** – செய்யுளோசையை நிறைத்தற்பொருட்டு வரும் அசைச்சொற்கள்; அவை: ஏ, ஒ, உம், அம்ம, அரோ, குரை என்பன.

**இசைநூபுரம்** – வீரன் அணியும் கழல்.

**இசைநூல்** – இசைக்கலை.

**இசைப்பா** – இசையோடு சேர்ந்த பாக்களில் ஒருவகை; நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் இயற்பா ஒழிந்த ஏனையவை; திருவிசைப்பா (ஒன்பதாந் திருமுறை).

**இசைப்பாட்டு** – பண்ணுடன் பாடும் பாட்டு.

**இசைப்பாடு** – கீர்த்தி மிகுதி.

**இசைப்பாணர்** – பாணருள் ஒருவகையார்.

**இசைப்பு** – சொல்; யாழ் முதலியன வாசிக்கை; இசைவு; பொருத்துகை.

**இசைப்புள்** – அன்றிற்பறவை; குயில்.

**இசைப்பொறி** – செவி.

**இசைபேதம்** – காண்க: **இசைகேடு.**

**இசைமகள், இசைமடந்தை** – கலைமகள்.

**இசைமணி** – வீரகண்டை.

**இசைமறை** – சாமவேதம்.

**இசைமுட்டி** – காண்க: **செருந்தி.**

**இசைமூடி** – கிரந்திநாயகம் என்னும் செடி.

**இசைமை** – புகழ்; ஒலி.

**இசையறிபறவை** – காண்க: **அசுணம்.**

**இசையறுத்தல்** – ஓசை வேறுபடப் பிரித்தல்.

**இசையின்செல்வி** – புகழ்மகள்.

**இசையெச்சம்** – வாக்கியத்தில் சொற்கள் எஞ்சிய பொருளுணர்த்தி வருவது.

**இசையெடுத்தல்** – பாடுதல்.

**இசையோர்** – கந்தருவர்.

**இசையோலை** – ஒப்பந்த ஓலை.

**இசையோன்** – இசைகாரன்.

**இசைவல்லோர்** – கந்தருவர்; பாடகர்.

**இசைவாணர்** – இசைவல்லோர்; பாடகர்.

**இசைவு** – பொருந்துகை; தகுதி; உடன்பாடு; ஏற்றது; ஒட்டம்.

**இசைவுகுலைவு, இசைவுகேடு** – பொருத்தமின்மை; காரியத் தவறு.

**இசைவுதீட்டு** – உடன்படிக்கைப் பத்திரம்.

**இசைவுபிறழ்வு** – ஒழுங்கின்மை; இசைவுகேடு.

**இஞ்சக்கம்** – பரிதானம், கையூட்டு, இலஞ்சம்.

**இஞ்சம்** – வெண்காந்தள்.

**இஞ்சாகம்** – இறால்மீன்.

**இஞ்சி** – கோட்டை; பூடுவகை; கொற்றான்.

**இஞ்சிச்சுரசம்** – இஞ்சிச் சாற்றாலாய கழாயம்.

**இஞ்சித்தேறு** – இஞ்சித்துண்டு.

**இஞ்சிப்பாகு** – இஞ்சி இளகவகை.

**இஞ்சிப்பாவை** – இஞ்சிக்கிழங்கு.

**இஞ்சிமாங்காய்** – இஞ்சிவகை.

**இஞ்சிவேர்ப்புல்** – காண்க: **சுக்குநாறிப்புல்.**

**இஞ்சுசாரை** – வெல்லம்.

**இஞ்சுதல்** – சுவறுதல்; சுண்டுதல்; இறுகுதல்; வற்றுதல்.

**இஞ்சை** – துன்பம்; கொலை.

**இட்டகந்தம்** – நறுமணம்.

**இட்டகாமியம்** – மனம் மிக விரும்பியது; விரும்பியதைப் பெறும்பொருட்டுச் செய்யும் செயல்.

**இட்டங்கட்டுதல்** – இராசிநிலை வரைதல்.

**இட்டசட்டம்** – தன்னிச்சை.

**இட்டசித்தி** – விரும்பியதை அடைகை.

**இட்டடுக்கி** – காதணிவகை.

**இட்டடை** – இட்டிடை; துன்பம்.

**இட்டடைச்சொல்** – தீச்சொல்.

**இட்டதெய்வம், இட்டதேவதை** – வழிபடு கடவுள்.

**இட்டபோகம்** – விரும்பினபடி நுகர்தல்.

**இட்டம்** – விருப்பம்; அன்பு; நட்பு; கோள் நிலையாலாகும் பலாபலன்; துருவத்திற்கும் இராசியின் அங்கத்திற்கும் இடையேயுள்ள வேறுபாடு; யாகம்; யோகம்.

**இட்டம்பண்ணுதல்** – அடிமைத்தனத்தை விலக்குதல்.
**இட்டலி** – சிற்றுண்டிவகை.
**இட்டலிக்கொப்பரை** – இட்டலி அவிக்கும் பாத்திரம்.
**இட்டலிங்கம்** – மாணவனுக்கு ஆசிரியனால் கொடுக்கப்படும் அன்றாட வழிபாட்டிற்குரிய ஆன்மார்த்த லிங்கம்.
**இட்டவழக்கு** – சொன்னது சட்டமாயிருக்கை.
**இட்டவை** – வழி.
**இட்டளப்படுதல்** – சிறிய இடத்தில் திரண்டு தேங்குதல்.
**இட்டளம்** – நெருக்கம்; வருத்தம்; தளர்வு; பொன்.
**இட்டளர்** – மனவருத்தமுள்ளவர்.
**இட்டறுதி** – குறித்த எல்லை; இக்கட்டான நிலை; வறுமை.
**இட்டறை** – யானையை வீழ்த்தும் குழி.
**இட்டன்** – விருப்பமானவன்; நண்பன்; தலைவன்.
**இட்டாதெய்வம்** – காண்க: **இட்டதெய்வம்.**
**இட்டி** – ஈட்டி; வேள்வி; சங்கிரகச் செய்யுள்; கொடை; பூசை; இச்சை; செங்கல்.
**இட்டிகை** – செங்கல்; இடுக்குவழி; கூட்டுமெழுகு.
**இட்டிகைவாய்ச்சி** – செங்கற்களைச் செதுக்கும் கருவி.
**இட்டிடை** – சிறுகிய இடை; அற்பம்; இடையூறு; கடைசற் கருவியின் ஒருறுப்பு.
**இட்டிடைஞ்சல்** – துன்பம்; வறுமை.
**இட்டிது** – சிறிது; அண்மை.
**இட்டிமை** – சிறுமை; ஒடுக்கம்.
**இட்டிய** – சிறிய.
**இட்டியம்** – யாக சம்பந்தம்; வேள்வி.
**இட்டீடு** – விவாதம்.
**இட்டீடுகொள்ளுதல்** – வார்த்தையிட்டு வார்த்தை கொள்ளுதல்.
**இட்டீறு** – செருக்கால் செய்யும் செயல்.
**இட்டு** – தொடங்கி; காரணமாக; ஓர் அசை; சிறுமை.
**இட்டுக்கட்டிப் பேசுதல்** – இல்லாததைக் கற்பித்துப் பேசுதல்.
**இட்டுக்கட்டுதல்** – இல்லாததை ஏற்றிச் சொல்லுதல்; கற்பனை செய்தல்.
**இட்டுக்கொடுத்தல்** – ஏற்றிக் கொடுத்தல்; புலாலுணவு படைத்தல்.
**இட்டுக்கொண்டுபோதல்** – கூட்டிக்கொண்டு செல்லுதல்.
**இட்டுக்கொண்டுவருதல்** – உடன் அழைத்து வருதல்.
**இட்டுநீர்** – தாரை வார்க்கும் நீர்.
**இட்டுப்பிரிதல்** – அண்மையில் தலைவன் பிரிதல்.
**இட்டுப்பிரிவு** – அண்மை இடத்தில் தலைவன் பிரியும் பிரிவு.
**இட்டுப்பிறத்தல்** – ஒரு செயலுக்காகப் பிறத்தல்.
**இட்டுரைத்தல்** – சிறப்பித்துச் சொல்லுதல்.
**இட்டுவட்டி** – அன்னவட்டி.
**இட்டுவருதல்** – அழைத்து வருதல்; கொடுத்து விட்டு வருதல்.
**இட்டுறுதி** – கண்டிப்பு; ஆபத்துக்கால உதவி.
**இட்டேற்றம்** – பொய்யாகக் குற்றஞ் சாட்டுகை; கொடுமை.
**இட்டேறி** – வயல்களின் இடையே செல்லும் வரப்புப் பாதை; வண்டிப் பாதை.
**இட்டேறுதல்** – கூடியதாதல்; போதியதாதல்.
**இட்டோடு** – ஒற்றுமையின்மை.
**இடக்கயம்** – கொடி.
**இடக்கர்** – அவையில் சொல்லத்தகாத சொல்; குடம்; மீதூர்கை.
**இடக்கரடக்கல், இடக்கரடக்கு** – பலர்முன் கூறத்தகாத சொற்களை மறைத்துக் கூறல்; தகுதி வழக்குள் ஒன்று.
**இடக்கரிசை** – செய்யுட் குற்றத்துள் ஒன்று.
**இடக்கல்** – தோண்டுதல், அகழ்தல்.
**இடக்கன்** – தாறுமாறு செய்பவன்.
**இடக்கியம்** – தேர்க்கொடி.
**இடக்கு** – சொல்லத்தகாத சொல்; வீண்வாதம்; முரண்செயல்.
**இடக்குதல்** – விழுதல்.
**இடக்கும(மு)டக்கு** – தாறுமாறு; தொல்லை.
**இடக்கை** – இடப்பக்கத்திலுள்ள கை; இடக்கையால் கொட்டும் ஒரு தோற்கருவி; பெருமுரசுவகை.
**இடகண்** – இடப்பக்கத்தவன்.
**இடகலை** – காண்க : **இடைகலை.**
**இடங்கசாலை** – அக்கசாலை.
**இடங்கட்டுக்கொம்பு** – மாட்டுக்குற்றவகை.
**இடங்கணம்** – வெண்காரம்.
**இடங்கணி** – சங்கிலி; காண்க: **இடங்கணிப்பொறி;** உளி.
**இடங்கணிப்பொறி** – கோட்டை மதிலில் வைக்கப்படும் இயந்திரங்களுள் ஒன்று.
**இடங்கம்** – உளி; இரத்தினம் நிறுக்கப் பயன்படுவதும் 24 இரத்தி கொண்டதுமான நிறைகல்; மண்தோண்டும் படை; வாளினுறை; கணைக்கால்; பொரிகாரம்; கோபம்; செருக்கு; கற்சாணை.
**இடங்கர்** – கயவர்; முதலைவகை; நீர்ச்சால்; குடம்; சிறுவழி.
**இடங்கரம்** – மகளிர் சூதகத்தால் உண்டாகும் தீட்டு.

**இடங்கழி** – எல்லை கடக்கை; காமமிகுதி; மீதூர்கை; மரப்பாத்திரம்; இராகவேகம்; ஒரு படியளவு.

**இடங்கழியர்** – காமுகர்; கயவர்.

**இடங்காரம்** – மத்தளத்தின் இடப்பக்கம்; வில்லின் நாணோசை.

**இடங்கெட்டவன்** – அலைபவன்; தீயன்.

**இடங்கேடு** – வறுமை; தாறுமாறு; நாடு கடத்துகை; எக்கச்சக்கம்.

**இடங்கை** – இடக்கை.

**இடங்கொடுத்தல்** – கண்டிப்பின்றி நடக்க விடுதல்; பிடிகொடுத்தல்.

**இடங்கொள்ளுதல்** – பரவுதல்; இடம்பற்றுதல்; வாழுமிடமாகக் கொள்ளுதல்.

**இடங்கோலுதல்** – ஊன்ற இடஞ்செய்துகொள்ளுதல்; ஆயத்தம் பண்ணுதல்.

**இடச்சுற்று** – இடப்புறமாகச் செல்லும் வளைவு; இடஞ்செல்லுகை.

**இடசாரி** – இடப்பக்கமாக வரும் நடை.

**இடஞ்சுழி** – இடப்பக்கம் நோக்கியிருக்கும் சுழி.

**இடத்தகைவு** – எதிர்வழக்காடுவோனைக் குறிப்பிட்ட இடம்விட்டுப் போகாமல் வழக்காடுவோன் அரசாணை சொல்லித் தடுக்கை.

**இடத்தல்** – பிளவுபடுதல்; உரிதல்; தோண்டுதல்; பிளத்தல்; பெயர்த்தல்; குத்தியெடுத்தல்; உரித்தல்.

**இடத்துமாடு, இடத்தை** – நுகத்தின் இடப்பக்கத்தில் பூட்டப்படும் மாடு.

**இடது** – இடப்புறமான.

**இடந்தலைப்பாடு** – இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த இடத்தில் இரண்டாமுறை தலைவனும் தலைவியும் எதிர்ப்படுதல்.

**இடநாகம்** – அடைகாக்கும் நல்லபாம்பு.

**இடநாள்** – உரோகிணி, மகம், விசாகம், திருவோணம் முதலாக மும்மூன்று நட்சத்திரங்கள்.

**இடநிலைப்பாலை** – பண்வகை.

**இடப்படி** – ஓர் அடிவைப்பு.

**இடப்பு** – பெயர்த்த மண்கட்டி; பிளப்பு.

**இடப்புக்கால்** – அகலவைத்த கால்.

**இடப்பெயர்** – இடத்தைக் குறிக்கும் பெயர்ச் சொல்.

**இடப்பொருள்** – ஏழாம் வேற்றுமைப் பொருள்.

**இடபக்கொடியோன்** – காளைக் கொடியையுடைய சிவன்.

**இடபகிரி** – அழகர்மலை.

**இடபதீபம்** – கோயில் மூர்த்தியின் முன்பு எடுக்கும் அலங்கார தீபவகை.

**இடபம்** – ஏறு; பொலிகாளை; நந்தி; இரண்டாம் இராசி; வைகாசி; மதயானை; முக்கியப் பொருள்; ஏழு சுரத்துளொன்று; செவித் துளை; ஒரு பூண்டு.

**இடபவாகனன்** – சிவன்.

**இடபவீதி** – மீனம், மேடம், கன்னி, துலாம் என்னும் இராசிகளடங்கிய சூரியன் இயங்கும் நெறி.

**இடபன்** – இடபசாதி மானுடன்; உருத்திரர்களுள் ஒருவர்.

**இடபி** – பூனைக்காலி; ஆண்வடிவப் பெண்; கைம்மை.

**இடம்** – தானம்; வாய்ப்பு; வீடு; காரணம்; வானம்; விரிவு; இடப்பக்கம்; அளவு; ஆடையின் அகலமுழம்; பொழுது; ஏற்ற சமயம்; செல்வம்; வலிமை; மூவகையிடம்; படுக்கை; தூரம்; ஏழனுருபு; இராசி.

**இடம்பகம்** – பேய்.

**இடம்படுதல்** – விரிவாதல்; பரந்து இருத்தல்; மிகுதியாதல்.

**இடம்பண்ணுதல்** – பூசை, உணவு முதலியவற்றிற்கென்று இடத்தைத் தூய்மைசெய்தல்.

**இடம்பம்** – பகட்டு; தற்பெருமை.

**இடம்பாடு** – விரிவு; பருமை; செல்வம்.

**இடம்பார்த்தல்** – இடந்தேடுதல்; சமயமறிதல்.

**இடம்புதல்** – ஒதுங்குதல், விலகுதல்.

**இடம்புரி** – இடப்புறம் சுழியுள்ள சங்கு; இடப் பக்கம் திரித்த கயிறு; பூடுவகை.

**இடம்பூணி** – காண்க: **இடத்துமாடு.**

**இடம்பெறவிருத்தல்** – ஓலக்கமிருத்தல்.

**இடமயக்கம்** – ஒரு திணைக்குரிய உரிப் பொருளைப் பிறிதொரு திணைக்குரியதாகக் கூறும் இடமலைவு.

**இடமலைவு** – ஓரிடத்துப் பொருளை மற்றோரிடத்துள்ளதாகச் சொல்லும் வழு.

**இடமற்ற பிள்ளை** – நற்பேறற்ற பிள்ளை.

**இடமானம்** – பரப்பு; மாளிகை; பறைவகை.

**இடமிடைஞ்சல், இடமுடங்கு** – நெருக்கடி.

**இடர்** – துன்பம், வருத்தம்; வறுமை.

**இடர்ப்படுதல்** – வருத்தமுறுதல்; நலிந்துகொள்ளுதல்.

**இடர்ப்பாடு** – இடர்ப்படுதல்; துன்புறுகை.

**இடர்ப்பில்லம்** – கண்நோய்வகை.

**இடரெட்டு** – நாட்டிற்கு வரக்கூடிய எண்வகைத் தீமை; விட்டில், கிளி, யானை, வேற்றரசு, தன்னரசு, இழப்பு, பெரும் வெயில், காற்று இவற்றால் வருவது.

**இடலம்** – விரிவு, அகலம்.

**இடலை** – மரவகை; துன்பம்.

**இடவகம்** – மா பனைகளின் பிசின்; இலவங்கம்.

**இடவகை** – வீடு, இல்லம்.

**இடவயின்** – இடத்து.
**இடவழு** – தன்மை முதலிய மூவகையிடங்களைப் பிறழக் கூறுகை.
**இடவன்** – மண்ணாங்கட்டி; நுகத்தின் இடப் பக்கத்து மாடு; கூட்டெருது; பிளக்கப்பட்ட பொருள்.
**இடவாகுபெயர்** – இடப்பெயர் அவ்விடத்துள்ள பொருளுக்கு ஆவது.
**இடவிய** – பரந்துள்ள; வேகமாக; சார்ந்த.
**இடவியது** – அகலமுள்ளது; விரைவுள்ளது.
**இடவை** – வழி; பாதை.
**இடவோட்டம்** – இராகுகேதுக்களின் இடப்பக்க மாகச் செல்லும் போக்கு.
**இடவோட்டு நாள்** – காண்க: **இடநாள்.**
**இடற்சம்** – செம்போத்து.
**இடறல்** – கால் தடுக்குகை; தடை; பழி; தண்டனை.
**இடறு** – தடை; துன்பம்.
**இடறுகட்டை** – தடையாயிருப்பது.
**இடறுதல்** – கால் தடுக்குதல்; துன்பப்படுதல்; மீறுதல்; ஊறுபடுத்துதல்; தடுத்தல்.
**இடன்** – அகலம்; நல்ல நேரம்; இடப்பக்கம் இருப்பவன்.
**இடனறிதல்** – அரசன் வினை செய்தற்குரிய இடத்தைத் தெரிதல்.
**இடனறிந்தொழுகல்** – வணிகர் குணங்களுள் ஒன்று; இருக்கும் இடம் நோக்கி அதற்கிசைய நடத்தல்.
**இடா** – இறைகூடை; ஓர் அளவு.
**இடாகினி** – காளியேவல் செய்வோள்; சுடுகாட்டில் பிணங்களைத் தின்னும் பேய்.
**இடாகு** – புள்ளி; குறி.
**இடாகுபோடுதல்** – கால்நடைகளுக்குச் சூடு போடுதல்.
**இடாசுதல்** – நெருக்குதல்; மோதுதல்; மேற்படுதல்; இகழ்தல்.
**இடாடிமம்** – காண்க: **தாதுமாதுளை.**
**இடாதனம்** – யோகாசனவகை.
**இடாப்பு** – அட்டவணை.
**இடாப்புதல்** – காலை அகலவைத்தல்.
**இடாம்பிகன்** – பகட்டுக்காரன்.
**இடாமிடம்** – ஒழுங்கற்ற பேச்சு.
**இடாமுடாங்கு** – ஒழுங்கின்மை.
**இடாயம்** – இசைத்துறை ஐந்தனுள் ஒன்று.
**இடார்** – இறைகூடை; எலிப்பொறி.
**இடாரேற்றுதல்** – எலிப்பொறியைத் தயார் செய்து வைத்தல்.
**இடால்** – கத்தி.
**இடாவு** – காண்க: **இடைகலை.**
**இடாவேணி** – அளவிடப்படாத எல்லை.
**இடி** – தாக்குகை; மா; சிற்றுண்டி; பொடி; இடியேறு; பேரொலி; கழறுஞ்சொல்; குத்து நோவு; அக்கினி; உறுதிச்சொல்; ஆட்டுக்கடா.
**இடிக்கடை** – காண்க: **இடுக்கடி.**
**இடிக்கொடியோன்** – இடியைக் கொடியாக வுடைய இந்திரன்.
**இடிக்கொள்ளு** – காட்டுக்கொள்.
**இடிகம்** – காண்க: **பெருமருந்து.**
**இடிகரை** – ஆறு முதலியவற்றின் அழிந்த கரை.
**இடிகொம்பு** – கழியில் அடித்துள்ள அதிர்வேட்டுக் குழாய்.
**இடிச்சக்கை** – பலாப்பிஞ்சு.
**இடிச்சொல்** – உறுதிச்சொல்.
**இடிசல்** – நொறுங்கின தானியம்; அழிவு; நொய் யரிசி.
**இடிசாந்து** – இடித்துத் துவைத்த சுண்ணாம்பு.
**இடிசாப(ம)ம்** – கெடுகாலம்; நிந்தை.
**இடிஞ்சில்** – காண்க: **இடுக்காஞ்சட்டி.**
**இடித்தடு** – பிட்டு.
**இடித்தல்** – முழங்குதல்; இடியிடித்தல்; நோதல்; தாக்கிப்படுதல்: மோதுதல்; கோபித்தல்; தூளாக்குதல்; தகர்த்தல்; நசுக்குதல்; தாக்குதல்; முட்டுதல்; கழறிச் சொல்லுதல்; கொல்லுதல்; தோண்டுதல்; கெடுத்தல்.
**இடித்துக்கூறல்** – உறுதிச் சொல்லுரைத்தல்.
**இடித்துரை** – கழறிக் கூறுஞ்சொல், உறுதிச் சொல்.
**இடிதல்** – தகர்தல்; உடைதல்; சரிதல்; கரை யழிதல்; திகைத்தல்; முனை முரிதல்; வருந்துதல்.
**இடிதலைநோய்** – நோய்வகை.
**இடிதாங்கி** – கட்டடத்தின்மீது இடி விழாதபடி காக்கவைக்கும் காந்தக்கம்பி.
**இடிப்பணி** – குறிப்புரை.
**இடிப்பு** – இடி; ஒலி; வீரமுழக்கம்.
**இடிபடுதல்** – நெருக்கப்படுதல்; தாக்கப்படுதல்; நொறுங்குதல்; வெடிபடுதல்; துன்பப்படுதல்.
**இடிபூரா** – வெள்ளைச் சருக்கரை.
**இடிம்பம்** – கைக்குழந்தை; பெருந்துன்பம்; மண் ணீரல்; பறவை முட்டை; ஆமணக்கு.
**இடிம்பு** – அவமதிப்பு; இழிவு.
**இடிமரம்** – உலக்கை; அவல் இடிக்கும் ஏற்ற வுலக்கை.
**இடிமருந்து** – சூரணமருந்து.
**இடிமாந்தம்** – பொய்யான குற்றச்சாட்டு.
**இடிமீன்** – மீன்வகை.
**இடிமுழக்கம்** – இடியொலி.
**இடிமேலிடி** – மாட்டுக்குற்றம்; துன்பத்திற்கு மேல் துன்பம்.

**இடிய(யா)ப்பம்** – சிற்றுண்டிவகை.
**இடியம்பு** – காண்க : **இடிகொம்பு**.
**இடியல்** – பிட்டு.
**இடியேறு** – பேரிடி.
**இடிவு** – அழிவு; இடிந்து விழுகை.
**இடுக்கடி** – துன்பம்.
**இடுக்கண்** – மலர்ந்த நோக்கமின்றி மையல் நோக்கம்பட வரும் இரக்கம்; துன்பம்; வறுமை.
**இடுக்கணழியாமை** – துன்பக் காலத்து மனங் கலங்காமை.
**இடுக்கணி** – இடுக்கான இடம்.
**இடுக்கம்** – ஒடுக்கம்; துன்பம்; நெருக்கம்; வறுமை.
**இடுக்கல்** – சந்து.
**இடுக்காஞ்சட்டி** – விளக்குத் தகழி.
**இடுக்கி** – குறடு; எலிப்பொறி; கடும்பற்றுள்ளன்; நண்டு முதலியவற்றின் கவ்வும் உறுப்பு.
**இடுக்கிச்சட்டம்** – கம்பிச்சட்டம்.
**இடுக்கிடை** – நெருக்கம்.
**இடுக்கு** – முடுக்கு; மூலை; இடுக்கிக் கொள்ளக் கூடிய இடம்; கவ்வும் உறுப்பு; சங்கடம்; இவறல்.
**இடுக்குத்தடி** – கள்ளூறும்படி பாளையை நெருக்கிப் பிடிக்கவைக்கும் இரட்டைத் தடி.
**இடுக்குத் திருத்துழாய்** – திருமால் கோயிலில் மரியாதையாகத் திருவடிநிலையினிடையில் வைத்துக் கொடுக்கும் துளசி.
**இடுக்குதல்** – கவ்வுதல்; அணைத்தல்; நெருக்குதல்.
**இடுக்குப்பனை** – கள்ளும் பதநீரும் உண்டாக்கும் பனை.
**இடுக்குப்பிள்ளை** – கைக்குழந்தை.
**இடுக்குப்பொட்டணி** – கக்கப்பாளம், கக்கத்தில் இடுக்கிச் செல்லத்தக்க பொருள்.
**இடுக்குமரம்** – கடவை மரம், வேலித்திறப்பில் தாண்டிச் செல்லக்கூடிய தடைமரம்; செக்கு வகை.
**இடுக்குமுடுக்கு** – மூலைமுடுக்கு; முட்டுச்சந்து; சங்கடம்.
**இடுக்குவழி** – சந்து வழி, மிகக் குறுகலான பாதை.
**இடுக்குவாசல்** – சிறு நுழைவாசல், திட்டிவாசல்.
**இடுக்குவார் கைப்பிள்ளை** – காண்க : **எடுப்பார் கைப்பிள்ளை**.
**இடுகடை** – பிச்சையிடும் வீட்டுவாயில்.
**இடுகளி** – அதிமதுரத் தழை முதலியவற்றை யானைக்கு இடுதலால் அதற்கு உண்டாகும் மதம்.
**இடுகறல்** – விறகு.
**இடுகாடு** – பிணம் புதைக்கும் இடம்; சுடுகாடு.
**இடுகால்** – பீர்க்கு.
**இடுகிடை** – சிற்றிடை; சிறுவழி.
**இடுகு** – ஒடுக்கம்.
**இடுகுதல்** – ஒடுங்குதல்; சிறுகுதல்; சுருங்குதல்.
**இடுகுறி** – இடுகுறிப்பெயர்; பெற்றோர் இடும் பெயர்; முற்காலத்தில் நெல்லைச் சேமித்து வைக்கும்படியாக ஒருவரிடம் ஒப்புவிக்கும் பத்திரம்.
**இடுகுறிப்பெயர்** – காரணம் பற்றாது வழங்கி வரும் பெயர்.
**இடுகுறிமரபு** – இடுகுறியாகத் தொன்றுதொட்டு வரும் பெயர்.
**இடுகுறியாக்கம்** – இடுகுறியாக ஒருவன் கொடுத்த அல்லது ஆக்கிக்கொண்ட பெயர்.
**இடுகை** – ஈகை, கொடை.
**இடுங்கலம்** – கொள்கலம், குதிர்.
**இடுங்கற்குன்றம்** – செய்குன்று.
**இடுங்குதல்** – உள்ளொடுங்குதல்; சுருங்குதல்.
**இடுசிவப்பு** – செயற்கைச் சிவப்பு.
**இடுதங்கம்** – புடமிட்ட தங்கம்; இழைப்புத் தங்கம்.
**இடுதண்டம்** – அபராதம்.
**இடுதல்** – வைத்தல்; போகடுதல்; பரிமாறுதல்; கொடுத்தல்; சொரிதல்; குத்துதல்; அணிவித்தல்; உவமித்தல்; குறியிடுதல்; ஏற்றிச் சொல்லுதல்; சித்திரமெழுதுதல்; உண்டாக்குதல்; முட்டையிடுதல்; கைவிடுதல்; புதைத்தல்; பணிகாரம் முதலியன உருவாக்குதல்; தொடுத்து விடுதல்; செய்தல்; தொடங்குதல்; வெட்டுதல்; ஒரு துணைவினை.
**இடுதி** – அம்புக் கூடு.
**இடுதிரை** – திரைச்சீலை.
**இடுதேளிடுதல்** – பொய்க்காரணங் காட்டிக் கலங்கப்பண்ணுதல்.
**இடுநெறி** – புதிய நெறி.
**இடுப்பு** – இடை, அரை, ஒக்கலை; மறைவுறுப்பு.
**இடுப்புக்கட்டுதல்** – சண்டை பிடிக்க முந்துதல்.
**இடுப்புவலி** – இடுப்பு நோவு; மகப்பேற்றின் போது உண்டாகும் வலி.
**இடுபலம்** – பேய்ப்புடல்.
**இடுபெயர்** – இடுகுறிப்பெயர்.
**இடுபொருள்** – பிறர் வரவிட்ட பொருள்.
**இடும்பர்** – ஒருவகைக் சாதியார்; இராக்கதர்; செருக்கர்; துயர் செய்வோர்.
**இடும்பன்** – செருக்குள்ளவன்; ஓர் அரக்கன்; முருகக் கடவுளின் கணத் தலைவன்.
**இடும்பி** – செருக்குடையவள்; ஓர் அரக்கி.
**இடும்பு** – அகந்தை; கொடுஞ்செயல்; குறும்பு.

**இடும்பை** – துன்பம்; தீமை; நோய்; வறுமை; அச்சம்.
**இடுமம்** – குயவன் சக்கரத்தைப் பூமியில் பொருத்துதற்கு இடும் மண்கட்டி.
**இடுமயிர்** – சவுரிமயிர்.
**இடுமருந்து** – ஒருவரைத் தன்வயமாக்கும் மருந்து; வசிய மருந்து.
**இடுமுள்** – வேலியாக இடும் முள்.
**இடுமோலி** – ஒருவகை மரம்.
**இடுலி** – பெண்ணாமை.
**இடுவந்தி** – குற்றம் செய்யாதவர்மேல் குற்றத்தைச் சுமத்துதல்.
**இடுவல்** – இடுக்கு; வழி.
**இடுவை** – சந்து.
**இடை** – நடு; மத்திய காலம்; அரை; மத்திய தரத்தார்; இடைச்சாதி; இடையெழுத்து; இடைச்சொல்; இடம்; இடப்பக்கம்; வழி; தொடர்பு; சமயம்; காரணம்; நீட்டல் அளவையுள் ஒன்று; துன்பம்; இடையீடு; தடுக்கை; தச நாடியுள் ஒன்று; பூமி; எடை; நூறு பலம்; பொழுது; நடுவுநிலை; வேறுபாடு; துறக்கம்; பசு; வாக்கு; ஏழனுருபு.
**இடைக்கச்சு(சை)** – அரைக்கச்சை.
**இடைக்கட்டு** – அரைக்கச்சு; ஓர் அணிகலன்; இடைகழி; வீட்டின் நடுக்கட்டு; சமன் செய்வதற்குரிய நிறை.
**இடைக்கணம்** – இடையினவெழுத்துகள்.
**இடைக்கருவி** – 'சல்லி' என்னும் தோற்கருவி; மத்தளத்திற்கும் உடுக்கைக்கும் இடைத்தரமான ஒலியுள்ளது.
**இடைக்கலம்** – மட்பாண்டம்.
**இடைக்கார்** – நெல்வகை.
**இடைக்காற்பீலி** – பரதவ மகளிர் அணியும் கால் விரல் அணிவகை.
**இடைக்கிடப்பு** – இடைப்பிறவரல்.
**இடைக்கிடை** – ஊடேயூடே, நடுநடுவே; ஒன்றைவிட்டு ஒன்று; நிறைக்கு நிறை.
**இடைக்குலநாதன்** – இடையர்களின் தலைவன்; கண்ணன்.
**இடைக்குழி** – இடை எலும்பு இரண்டுக்கும் இடையிலுள்ள பள்ளம்.
**இடைக்குறை** – தனிச்சொல்லின் இடைநின்ற எழுத்துக் குறைந்து வரும் செய்யுள் விகாரம்; ஆற்றிடைக் குறை.
**இடைக்கொள்ளை** – ஊடுதட்டு; நடுக்கொள்ளை; கொள்ளைநோயால் வரும் அழிவு.
**இடைகலை** – தச நாடியுள் ஒன்று; இட மூக்கால் வரும் மூச்சு; சந்திரகலை.
**இடைகழி** – இடைக்கட்டு; வெளிவாயிலை அடுத்த உள்ளிடப் பாதை.
**இடைச்சம்பவம்** – தற்செயல்.
**இடைச்சரி** – தோள்வளை.
**இடைச்சன்** – இடையிலே பிறந்தவன்; இரண்டாம் பிள்ளை.
**இடைச்சனி** – பூரநாள்.
**இடைச்சி** – முல்லைநிலப் பெண்; இடைச் சாதிப் பெண்; இடுப்புடையவள்.
**இடைச்சியார்** – இடைச்சியின்மேல் காமம் பற்றிப் பாடும் கலம்பக உறுப்பு.
**இடைச்சீலை** – திரைச்சீலை.
**இடைச்சுரிகை** – உடைவாள்.
**இடைச்சுவர்** – இரண்டு சுவர்களுக்கு மத்தியில் உள்ள சுவர்; இடையூறு.
**இடைச்செருகல்** – ஒருவருடைய செய்யுள் நூலின் இடையில் பிறர் வாக்கைப் புகுத்தல்; ஒருவருடைய படைப்பை இடையிடையே மாற்றியமைத்தல்.
**இடைச்செறி** – 'குறங்குசெறி' என்னும் அணிவகை; துணைமோதிரம்.
**இடைச்சேரி** – இடையர் குடியிருப்பு.
**இடைச்சொல்** – பெயர்வினைகளைச் சார்ந்து வழங்கும் சொல்.
**இடைச்சொற்பகாப்பதம்** – நால்வகைப் பகாப்பதங்களுள் ஒன்று; மற்று, ஏ, ஓ என்பனபோல வருவது.
**இடைச்சோழகம்** – தென்றல் வீசும் பருவத்தின் இடைக்காலம்.
**இடைசுருங்குபறை** – துடி, உடுக்கை.
**இடைசூரி** – அரும்பு வளையம்; உருத்திராக்கம் முதலியவற்றின் இடையில் கோக்கும் மணி.
**இடைஞ்சல்** – நெருக்கம்; தடை; இடையூறு.
**இடைத்தட்டு** – இடைக்கொள்ளை.
**இடைத்தரம்** – நடுத்தரம்.
**இடைத்தீனி** – சிற்றுண்டி.
**இடைத்தொடர்க் குற்றுகரம்** – இடையின வொற்றைத் தொடர்ந்து வரும் குற்றியலுகரம்.
**இடைதல்** – சோர்தல்; மனந்தளர்தல்; பின் வாங்குதல்; விலகுதல்; தாழ்தல்; பூமி; சீலை.
**இடைதெரிதல்** – செவ்வியறிதல்; தக்க சமயமறிதல்.
**இடைநரை** – அங்கும் இங்கும் சிறிது மயிர் வெளுத்திருத்தல்.
**இடைநாடி** – காண்க: இடைகலை.
**இடைநாழிகை** – கோயிலில் அர்த்த மண்டப மகாமண்டபங்கட்கு இடைப்பட்ட இடம்.
**இடைநிகராதல்** – நடுத்தரமான நிலையிலிருத்தல்.

**இடைநிலை** – நடுவில் நிற்கை; பெயர் வினை களில் பகுதி விகுதிகளுக்கு இடையில் நிற்கும் ஓர் உறுப்பு; எச்சம் முதலியன கொண்டு முடியும் சொற்களின் இடையில் ஏற்ற பிற சொல் வருகை.

**இடைநிலைத்தீவகம்** – விளக்கணி வகை; செய் யுளின் இடையில் வரும் ஒரு சொல் முன்பின் வரும் சொற்களோடு இயைந்து பொருள் தருவது.

**இடைநிலைப்பாட்டு** – தாழிசை; கலிப்பாவின் ஓர் உறுப்பு.

**இடைநிலை மயக்கு, இடைநிலை மெய்ம்மயக்கு** – சொல்லினகத்து வரும் மெய் யெழுத்துகள் ஒன்றோடு ஒன்று கூடும் கூட்டம்; உடனிலை, வேற்றுநிலை என இருவகைத் தாம்.

**இடைநிலை விளக்கு** – காண்க : **இடைநிலைத் தீவகம்.**

**இடைநீரினிற்றல்** – நிலைக்குத்தாய் நீந்துதல்.

**இடைநேரம்** – சிற்றுண்டி கொள்ளும் சமயம்; ஒரு நிகழ்ச்சியின் இடையில் விடப்படும் ஒய்வு நேரம்.

**இடைப்படி** – ஓர் அளவு.

**இடைப்படுதல்** – மையமாதல்; இடையில் நிகழ் தல்.

**இடைப்படுதானம்** – மத்திமதானம்; இடைத்தர மான கொடை.

**இடைப்பழம்** – காய்க்குலையில் இடையிடையே பழுத்திருப்பது.

**இடைப்பாட்டம்** – பழைய வரிவகை.

**இடைப்பால்** – ஆடலரங்கிற்குரிய நிலம்.

**இடைப்பிறவரல்** – எழுவாய் முதலியன கொண்டு முடியும் பெயர் வினைகளினிடையில் ஏற்ற பிறசொல் வருதல்.

**இடைப்புணரளபெடை** – நடுவிரு சீர்க்கண்ணும் அளபெடை வருவது.

**இடைப்புழுதி** – காய்ந்தும் காயாமலுமுள்ள புழுதிநிலம்.

**இடைப்பூட்சி** – காண்க : **இடைப்பாட்டம்.**

**இடைப்பூட்டு** – அரைக்கச்சு.

**இடைப்போகம்** – இடைக்காலத்து விளைவு.

**இடைபாடு** – அலுவல்; வணிகம் முதலியவற்றின் நிமித்தமாக இருவரிடை நிகழும் செய்தி.

**இடைமகன்** – இடையன்.

**இடைமடக்கு** – பேச்சினடுவே தடுக்கை; மடக் கணி வகை.

**இடைமடுத்தல்** – இடைச்செருகுதல்; இடையிலே புகுத்துதல்.

**இடைமருது** – திருவிடைமருதூர்.

**இடைமிடைதல்** – நடுவே கலத்தல்.

**இடைமுள்** – புண்ணிலே தோன்றும் மறுமுள்; கரப்பான் வகை.

**இடைமேடு** – இடையிடையே சிறிது மேடான பாகமுள்ள வயல்.

**இடைமை** – காண்க: **இடைக்கணம்.**

**இடையல்** – பின்னிடல்; தாழல்; ஒதுங்குதல்; வருந்தல்.

**இடையறவு** – இடைவிடுதல்; நடுவே தொடர்பு விட்டுப்போதல்.

**இடையறாமை** – இடைக்காலத்து அழியாமை; இடையீடின்றி இருத்தல்.

**இடையறுத்தல்** – படை முதலியவற்றை ஊடறுத் துச் சென்று பிரித்தல்.

**இடையறுதல்** – நடுவே முடிந்துபோதல்; தடைப் படுதல்.

**இடையன்** – ஆடுமாடு மேய்ப்பவன்; முல்லை நிலத்தவன்; இடைச் சாதியான்.

**இடையன்கால்வெள்ளி** – பரணி.

**இடையாகெதுகை** – அடிதோறும் முதலெழுத்து அளவொத்து நிற்க இரண்டாம் எழுத்து ஒன்றே ஒன்றிவரத் தொடுப்பது.

**இடையாட்டம்** – காரியம், செயல்.

**இடையாந்தரம்** – நடு; இடைப்பட்ட காலம் அல்லது இடம்.

**இடையாயார்** – மத்திமர், நடுத்தரமானவர்.

**இடையிட்டுமொழிதல்** – தவம் செய்வார்க்குரிய நியமங்கள் எட்டனுள் ஒன்று.

**இடையிடுதல்** – இடையில் நிகழ்தல்; இடையில் ஒழிதல்; நடுவில் இடுதல்; மறித்தல்.

**இடையிடை** – ஊடேயூடே, நடுநடுவே.

**இடையியற்சொல்** – உலக வழக்கினும் செய்யுள் வழக்கினும் தன் பொருளைத் தெற்றென விளக்கும் இடைச்சொல்.

**இடையினம்** – காண்க: **இடைக்கணம்.**

**இடையினமோனை** – இடையினத்துள் யகர வக ரங்கள் ஒன்றற்கொன்று மோனையாக வருதல்.

**இடையினவெதுகை** – இடையினத்துள் வந்த எழுத்தன்றி அவ்வினத்து வேறெழுத்து இரண்டாமெழுத்தாய் நிற்கவரும் எதுகை.

**இடையீட்டெதுகை** – ஒவ்வோரடி இடையிட்டு வரும் எதுகை.

**இடையீடு** – இடையில் தோன்றுவது; குறுக்கீடு; வேறுபாடு; சமாதானம்; நடுவே விடுகை; அர சாங்க உரிமையாயிருந்து பிறருக்கு மாற்றப் படும் நிலம்.

**இடையுவா** – முழுமதி.

**இடையூறு** – இடர், துன்பம்.

**இடையூறுகிளத்தல்** – அகப் பொருளில் தலைவி நாணிக் கண் புதைத்ததனால் உண்டான துன்பத்தைக் கூறுதல்.

**இடையெடுத்தல்** – நிறுத்துப் பார்த்தல்; உறுதிப் படுத்தல்.

**இடையெண்** – முச்சீர் ஓரடியாய் வரும் அம்போ தரங்க வகை.

**இடையெழுஞ்சனி** – பூரநாள்.

**இடையெழு வள்ளல்கள்** – இடைக்காலத்து வாழ்ந்த கொடையாளிகள்; அவராவார்: அக்குரன், சந்திமான், அந்திமான், சிசுபாலன், வக்கிரன், கன்னன், சந்தன்.

**இடையொடிவு** – முடிவு நெருங்குமுன்னே இடையில் அழிந்துபடுகை.

**இடையொடு கடைமடக்கு** – ஓர் அணி.

**இடையொத்து** – தாளவகை.

**இடைவட்டை** – நடுவிலுள்ளது.

**இடைவண்ணம்** – இசைவகை.

**இடைவரி** – வரிவகை; நிறைக்காக வாங்கும் வரி.

**இடைவழக்காளி** – வாதி பிரதிவாதிகளுக்கு இடையில் தனி வழக்குக் கொண்டுவருவோன்.

**இடைவழக்கு** – வழக்கின் நடுவே பிறரால் கொண்டுவரப்படும் விவகாரம்.

**இடைவழி** – செல்லும் வழியின் நடுவிடம்; பாதி வழி; வெளிவாயிலையடுத்த இடைகழி.

**இடைவிடாமல்** – ஓயாமல்; எப்போதும்.

**இடைவிடுதல்** – நடுவில் ஒழிதல்.

**இடைவிலக்கல்** – நடுவிலே வந்து தடுத்தல்.

**இடைவீடு** – நடுவில் விட்டுவிடுகை.

**இடைவு** – தோல்வி; நீக்கம்; வெளி.

**இடைவெட்டிலே** – தற்செயலாய்.

**இடைவெட்டு** – இடையிலே பெற்ற பொருள்; நடுவிலே வந்த பொருள்.

**இடைவெட்டுப் பணம்** – மாற்று முத்திரை விழுந்த பணம்; வேறு வழியாகக் கிடைத்த இலாபம்.

**இடைவெட்டுப் பேச்சு** – நிந்தனை; பரிகாச வார்த்தை.

**இடைவெளி** – நடுவெளி; வெளிப்பரப்பு; பிளப்பு.

**இண்டஞ்செடி** – செடிவகை.

**இண்டம்பொடி** – சவ்வரிசி நொய்.

**இண்டர்** – இடையர்; சுற்றம்; சண்டாளர்.

**இண்டனம்** – விளையாட்டு; புணர்ச்சி; ஊர்தி.

**இண்டிகன்** – சிறைச்சாலையின் வெளிப்புறம் காப்போன்; சோதிடன்.

**இண்டிடுக்கு** – சந்துபொந்து.

**இண்டிறுக்கெனல்** – குறட்டைவிடுங் குறிப்பு.

**இண்டு** – கொடிவகை; தொட்டாற்சுருங்கி; செடிவகை; புலிதொடக்கி.

**இண்டை** – தாமரை; மாலை வகை; கொடி வகை; புலிதொடக்கி; தொட்டாற்சுருங்கி; ஆதொண்டை.

**இண்டைச்சுருக்கு** – மாலைவகை.

**இணக்கம்** – இசைப்பு; பொருத்தம்; நட்பு; சம்மதம்; திருத்தம்.

**இணக்கு** – இசைவு, உடன்பாடு.

**இணக்குதல்** – உடன்படுத்தல்.

**இணக்குப்பார்வை** – பார்வை விலங்கு.

**இணக்கோலை** – உடன்படிக்கைப் பத்திரம்.

**இணகு** – உவமை.

**இணங்கர்** – ஒப்பு.

**இணங்கல்** – உடன்படுதல்; பொருந்தல்; செட்டி மார் வழக்கில் 'எட்டு' என்னும் எண்.

**இணங்கலர்** – பகைவர்.

**இணங்கன்** – நண்பன்; வெடியுப்பு.

**இணங்கார்** – காண்க: **இணங்கலர்.**

**இணங்கி** – தோழி.

**இணங்கு** – இணக்கம்; ஒப்பு; பேய்; நண் பினன்(ள்).

**இணங்குதல்** – உடன்படுதல்; மனம் பொருந்து தல்.

**இணர்** – பூங்கொத்து; பூ; பூவிதழ்; பூந்தாது; சுடர்; குலை; ஒழுங்கு; தொடர்ச்சி; கிச்சிலி மரம்; மாமரம்.

**இணர்தல்** – நெருங்குதல்; விரிதல்.

**இணரோங்குதல்** – வழிவழியாக உயர்தல்.

**இணாட்டு** – மீன் செதிள்; ஓலைத்துண்டு.

**இணாப்புதல்** – ஏய்த்தல், ஏமாற்றுதல்.

**இணி** – எல்லை; ஏணி; கண்ணாறு.

**இணுக்கு** – கைப்பிடியளவு; வளார்; கிளை முதலியவற்றின் இடைச்சந்து; அழுக்கு.

**இணுக்(ங்)குதல்** – இசித்தல்; பறித்தல்; கிளையி லுள்ள தளிர் முதலியவற்றை உருவிப் பறித்தல்.

**இணை** – இசைவு; ஒப்பு; இரட்டை; உதவி; கூந்தல்; எல்லை; இணைத்தொடை.

**இணை** (வி) – சேர்; கூட்டு.

**இணைக்கயல்** – இரண்டு கெண்டைமீன்களின் வடிவாக உள்ளது; எட்டு மங்கலங்களுள் ஒன்று; மச்சரேகை.

**இணைக்கல்லை** – இரண்டு இலைகளால் தைக்கப் பட்ட உண்கலம்.

**இணைக்குறள் ஆசிரியப்பா** – ஈற்றடியும் முதலடி யும் அளவடியாக இடையடிகள் பல குறளடி யானும் சிந்தடியானும் வரும் அகவற்பாட்டு.

**இணைக்கை** – இரண்டு கைகளால் புரியும் அபிநயம்.

**இணைக்கொடைப் பொருள்** – திருமணக் காலத் தில் மணமக்களுக்கு உற்றார், நண்பர் முதலி யோர் கொடுக்கும் பொருள்.

**இணைக்கோணத்தடை** – 'மூக்கிரட்டை இலை' எனப் பொருள்படும் ஒரு குறிப்புமொழி.

**இணைக்கோணம்** – மூக்கிரட்டை.

**இணைத்தகோதை** – இதழ்பறித்துக் கட்டின மாலை.
**இணைத்தல்** – சேர்த்தல்; கட்டுதல்; தொடுத்தல்.
**இணைத்தொடை** – அளவடியுள் முதலிரு சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது.
**இணைத** – சேர்தல்; ஒத்தல்; இசைதல்.
**இணைப்படம்** – இரண்டுபுறமும் ஒத்த படம்.
**இணைப்பு** – இசைப்பு; சேர்ப்பு; ஒப்பு.
**இணைபிரியாமை** – விட்டுப்பிரியாதிருக்கை.
**இணைமட்டப்பலகை** – இரட்டைக்கோடு காட்டும் கருவி.
**இணைமணிமாலை** – பிரபந்த வகை; வெண்பா அகவல் இணைந்தோ, வெண்பா கட்டளைக் கலித்துறை இணைந்தோ நூறு பாடல்கள் அந்தாதியாய் வரும் சிறு நூல்வகை.
**இணைமுரண்** – ஓரடியின் முதலிரு சீரும் முரண்பட இணைந்து வரும் தொடை.
**இணைமோனை** – ஓரடியின் முதலிரு சீரினும் மோனை இயைந்து வரும் தொடை.
**இணையசை** – நிரையசை.
**இணையடிகால்** – முட்டுக்கால், மாட்டுக் குற்ற வகை.
**இணையடித்தல்** – முட்டுக்கால் தட்டுதல்.
**இணையணை** – பலவான அணை.
**இணையல்** – இணைதல், சேர்தல்.
**இணையளபெடை** – முதலிரு சீரினும் அளபெடை இயைந்து வரும் தொடை.
**இணையாவினைக்கை** – ஒரு கையால் புரியும் அபிநயம்.
**இணையியைபு** – ஓரடியின் ஈற்றுச் சீர் இரண்டும் இணைந்து வரும் தொடை.
**இணையீரோதி** – கடையொத்த நெய்ப்பினையுடைய கூந்தல்.
**இணையெதுகை** – ஓரடியின் முதலிரு சீரினும் எதுகை இயைந்து வரும் தொடை.
**இணையெழுத்து** – போலியெழுத்து.
**இணைவன்** – இணைந்திருப்பவன்.
**இணைவிழைச்சி(சு)** – புணர்ச்சி.
**இணைவு** – ஒன்றிப்பு; கலப்பு; புணர்ச்சி.
**இத்தனை** – இவ்வளவு; சில.
**இத்தால்** – இதனால்.
**இத்தி** – கல்லால மரம்; கல்லித்தி மரம்; பூனை.
**இத்திநடையம்** – நத்தை.
**இத்தியாதி** – இவை முதலானவை.
**இத்துணை** – இவ்வளவு.
**இத்துமம்** – வசந்தம்; விறகு; ஒருவகைச் சுள்ளி; காமம்.
**இத்து, இத்துரா** – காமாட்சிப்புல்.
**இத்துவரம்** – எருது.
**இத்துவரன்** – கயவன், தீயோன்; வழிச்செல்வோன்; வறியன்.
**இத்தை** – முன்னிலை அசைச்சொல்; இதனை.
**இதக்கை** – பனங்காயின் தலையிலுள்ள தோடு; செவுள்.
**இதசத்துரு** – வெளிநட்புக் காட்டும் பகைவன்.
**இதஞ்சொல்லுதல்** – புத்தி கூறுதல்.
**இதடி** – பெண்ணெருமை; நீர்.
**இதண், இதணம்** – காவற்பரண்.
**இதம்** – இன்பமானது; நன்மை; இதயம்; இது; ஞானம்.
**இதமித்தல்** – இதஞ்செய்தல்; பற்றுச்செய்தல்.
**இதமியம்** – இன்பம்; இதப்படுதல்; இனிமை; மனநிறைவு.
**இதயகமலம், இதயபதுமம்** – உள்ளத்தாமரை.
**இதயம்** – இருதயம்; மனம்; மார்பு, நெஞ்சு.
**இதயவாசனை** – அணிவகை.
**இதரம்** – வேறு; பகை; கீழ்மை.
**இதரவிதரம்** – உவமைகளுள்ள இரண்டு வாக்கியங்களுள் முதலாவதன் உபமேய உபமானங்கள் முறையே இரண்டாவதன் உபமான உபமேயங்களாகத் தொடர்ந்து வருமாறு இரண்டு வாக்கியமாகச் சொல்லப்படும் ஒருவகையணி.
**இதரன்** – அன்னியன்; பாமரன்; கீழ்மகன்.
**இதரேதரம்** – காண்க: **இதரவிதரம்.**
**இதரேதராச்சிரயம்** – அன்னியோன்னியாச்சிரயம், ஒன்றனை ஒன்று பற்றிநிற்றல் என்னும் குற்றம்.
**இதல்** – கவுதாரி; காடை; சிவல்.
**இதலை** – கொப்பூழ்.
**இதவிய** – நன்மையான.
**இதவு** – இதம், நன்மை.
**இதழ்** – பூவின் தோடு; உதடு; கண்ணிமை; பனையேடு; மாலை; பாளை; சாதிபத்திரி; கதவின் இலை; புத்தகத்தின் தாள்; ஓரிதழ்த் தாமரை.
**இதழ்குவிதல்** – மலர் கூம்புதல்; இமைகூடுதல்; மேலுதடும் கீழுதடும் குவிந்து நிற்றல்.
**இதழ்விள்ளல்** – பேசல்; மலர்தல்; வாய்திறத்தல்.
**இதழலர்தல்** – பேச வாய்திறத்தல்.
**இதழி** – கொன்றை.
**இதள்** – பாதரசம்.
**இதளை** – கொப்பூழ்.
**இதன்** – நன்மையுள்ளவன்.
**இதா(தோ)** – இங்கே பார்.
**இதாகிதம்(இதம்-அகிதம்)** – நன்மை தீமை.
**இதாசனி** – சுகாசனத்தில் இருப்பவன்.
**இதி** – இறுதி; பேய்; உறுதி; ஒளி.

**இதிகாசம்** – பழங்காலத்துச் சரித்திரம்; இராமாயண பாரதங்கள் போன்றவை; ஐதிகப் பிரமாணம்; அறிவு; எடுத்துக்காட்டு; மேற்கோள்.

**இது** – அஃறிணை ஒருமை அண்மைச் சுட்டுப் பெயர்; இந்த.

**இதை** – கப்பற்பாய்; காராமணி; கலப்பை; புதுக்கொல்லை.

**இதோபதேசம்** – நல்லறிவூட்டடல்; ஒரு நூல்.

**இதோள்(ளி)** – இவ்விடம்.

**இந்த** – அண்மைப் பொருளைச் சுட்டுஞ் சொல்.

**இந்தப்படிக்கு** – காண்க : **இப்படிக்கு**.

**இந்தம்** – புளியமரம்; விறகு.

**இந்தம்வரம்** – காண்க: **இந்தீவரம்.**

**இந்தளங்குறிஞ்சி** – ஒரு பண்.

**இந்தளம்** – மருத யாழ்த்திறவகை; தூபமுட்டி, கும்மட்டிச் சட்டி.

**இந்தனம்** – விறகு; புகை.

**இந்தனோடை** – மேலாடை.

**இந்தா** – ‘இதோ’, ‘இங்கே வா’ என்னும் குறிப்பு மொழி; ‘இதை வாங்கிக் கொள்’ என்னும் குறிப்பு மொழி.

**இந்தி** – பூனை; திருமகள்; இந்திய மொழிகளுள் ஒன்று; இந்தியத் தேசிய மொழி.

**இந்திகை** – அபரநாதசத்திகள் ஐந்தனுள் ஒன்று.

**இந்திகோபம்** – ஈயம்.

**இந்திடம்** – இவ்விடம்.

**இந்தியம்** – காண்க: **இந்திரியம்.**

**இந்தியன்** – இந்திய நாட்டைச் சேர்ந்தவன்.

**இந்தியா** – பரதகண்டம்.

**இந்திரகணம்** – செய்யுட் கணத்துள் ஒன்று; முதற் செய்யுளின் முதற் சீரைத் தேமாங்காய் வாய்பாடாகப் பாடுவது.

**இந்திரகம்** – சபாமண்டபம்.

**இந்திரகாந்தச் சேலை** – புடைவைவகை.

**இந்திரகெந்தம்** – காண்க: **இந்திரசுகந்தம்.**

**இந்திரகோடணை** – இந்திரவிழா.

**இந்திரகோபம்** – தம்பலப்பூச்சி.

**இந்திரசாபம்** – இந்திரனுடைய வில்; வானவில்.

**இந்திரசாலம்** – மாயவித்தை; அற்புதங்களைக் காட்டும் கண்கட்டு வித்தை; ஏய்ப்பு.

**இந்திரசாலி** – அழிஞ்சில்; இந்திரசால வித்தைக் காரன்.

**இந்திரசித்து** – இந்திரனை வென்றவன்; இராவணனுடைய மூத்த மகன்; கருடன்; கிருட்டிணன்.

**இந்திரசிறப்பு** – வைசுவதேவம், மதிய உணவிற்கு முன் இந்திரன் முதலிய தேவர்களுக்குப் பார்ப்பனர் செய்யும் நற்செயல்.

**இந்திரசுகந்தம்** – நன்னாரி.

**இந்திரஞாலம்** – காண்க: **இந்திரசாலம்**; வஞ்சகச் சொல்; சூரபதுமன் தேர்.

**இந்திரதந்திரம்** – காண்க: **இந்திரசாலம்.**

**இந்திரதரு** – மருது.

**இந்திரதனு** – காண்க: **இந்திரவில்.**

**இந்திரதிசை** – கிழக்கு.

**இந்திரதிருவன்** – இந்திரனைப்போல் செல்வம் உடையவன்.

**இந்திரநகரி** – திருத்தணிகை; தேவலோகம்.

**இந்திரநாள்** – கேட்டை நாள்.

**இந்திரநீலம்** – சிறந்த நீலமணி.

**இந்திரப்பிரியம்** – பொதியமலைச் சந்தனம்.

**இந்திரபதம்(வி)** – துறக்கம்; இந்திரனாயிருக்கும் நிலை.

**இந்திரபம்** – வெட்பாலை.

**இந்திரபுட்பம்,** }
**இந்திரபுட்பி** } – வெண்தோன்றி.

**இந்திரபுரி** – இந்திரன் தலைநகராகிய அமராவதி.

**இந்திரபுரோகிதன்** – தேவகுருவாகிய வியாழன்.

**இந்திரம்** – மேன்மையானது; இந்திரியம்; இந்திர பதவி.

**இந்திரர்** – தேவர்.

**இந்திரலோகம்** – துறக்கம்; பரமபதம்.

**இந்திரவணி** – சங்கநிதி, பதுமநிதி.

**இந்திரவம்** – காண்க : **இந்தீவரம்.**

**இந்திரவர்ணப்பட்டு** – பட்டுப்புடைவைவகை.

**இந்திரவல்லி** – பிரண்டை; முடக்கொற்றான்; கொற்றான்.

**இந்திரவாச(ம)ம்** – நெய்தல்.

**இந்திரவாருணி** – பேய்க்கொம்மட்டி.

**இந்திரவிகாரம்** – காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த ஒரு பௌத்தப் பள்ளி.

**இந்திரவில்** – வானவில்.

**இந்திரவிழவு,** }
**இந்திரவிழா** } – இந்திரனுக்குச் சிறப்பு செய்யும் திருநாள்; காவிரிபூம்பட்டினத்தில் முன்னாளில் நிகழ்ந்த ஒரு பெருவிழா.

**இந்திரன்** – தேவேந்திரன்; தலைவன்; கேட்டை; மிருகசீரிடம்; அந்தரான்மா; சூரியன்.

**இந்திரன்மைந்தன்** – சயந்தன்; அருச்சுனன்; வாலி.

**இந்திரன்திசை** – கீழ்த்திசை.

**இந்திரன் நாள்** – கேட்டை.

**இந்திரனூர்** – பொன்னாங்காணி.

**இந்திரா** – திருமகள்.

**இந்திராக்கம்** – குதிரைச் செவியின் அடியில் காணப்படும் சுழிவகை.

**இந்திராணம்** – நொச்சி.

**இந்திராணி** – இந்திரன் மனைவி; ஏழு மாதருள் ஒருத்தி; நொச்சி; சுரதவகை.

**இந்திராணிகாணி** – பொன்னாங்காணி.

**இந்திராபதி** – திருமால்.
**இந்திரி** – கிழக்கு; செடிவகை; நன்னாரி.
**இந்திரியக் காட்சி** – ஆன்மா, பொறி பூதங் களுடனே கூடி வேறுபாடின்றித் தெளிவாய் அறியும் அறிவு.
**இந்திரியக்கொடி** – சுண்டி.
**இந்திரியகிராமம்** – ஐம்பொறிக் கூட்டம்.
**இந்திரியகோசரம்** – புலனுக் கெட்டியது.
**இந்திரியஞானம்** – காண்க: **இந்திரியக் காட்சி.**
**இந்திரியநிக்கிரகம்** – பொறியடக்கம்.
**இந்திரியநுகர்ச்சி** – ஐம்புல நுகர்ச்சி.
**இந்திரியம்** – பொறி; சுக்கிலம்.
**இந்திரியவம்** – வெட்பாலையரிசி.
**இந்திரியவொழுக்கு** – சுக்கிலம் தானே வெளிப் படும் நோய்.
**இந்திரேபம்** – வெட்பாலை என்னும் மரவகை.
**இந்திரேயம்** – பாவட்டைச் செடி.
**இந்திரை** – திருமகள்; கடாரை; நாரத்தை; அரிதாரம்.
**இந்திரைக்கு மூத்தாள்** – இலக்குமியின் தமக்கை, மூதேவி.
**இந்தீவரம்** – கருங்குவளை; கருநெய்தல்.
**இந்து** – சந்திரன்; கருப்பூரமரம்; மிருகசீரிடம்; இந்துப்பு; சிந்துநதி; இந்து மதத்தான்; கௌரி பாடாணம்; எட்டி; கரடி; கரி.
**இந்துகமலம்** – வெண்டாமரைப்பூ.
**இந்துகாந்தம்** – காண்க : **சந்திரகாந்தக்கல்.**
**இந்துகை** – காண்க : **இந்திகை.**
**இந்துசிகாமணி, இந்துசேகரன்** – பிறைச்சந்திரனைத் தலையில் சூடியவன், சிவன்.
**இந்துதேசம்** – இந்திய நாடு, பரத கண்டம்.
**இந்துப்பு** – மருந்து உப்புவகை.
**இந்துமதி** – பூரணை; 'அசன்' என்னும் அரச னுடைய மனைவி; விதர்ப்பராசன் சகோதரி; சந்திரமதி.
**இந்துமராம்** – கடம்பு.
**இந்துரத்தினம்** – முத்து.
**இந்துரம்** – எலி.
**இந்துரவிகூட்டம்** – சந்திர சூரியர் ஒருங்கிணையும் நாள், அமாவாசை.
**இந்துரே(லே)கை** – சந்திரகலை.
**இந்துலோகம்** – வெள்ளி.
**இந்துவி** – இந்திமொழி.
**இந்துவோடிரவிகூட்டம்** – காண்க : **இந்துரவி கூட்டம்.**
**இந்துள்(ளி)** – நெல்லிமரம்.
**இந்துளம்** – கடப்பமரம்; நெல்லிமரம்.
**இந்துறு** – இலந்தை.
**இந்துஸ்தானம்** – நருமதை நதிக்கு வடபாலுள்ள இந்தியப் பகுதி, வட இந்தியா.
**இந்தோ** – இதோ.
**இந்தோளம்** – மாலைப் பண்வகை; ஊசல்.
**இப்படி** – இவ்விதம்; தண்டத் தீர்வை.
**இப்படிக்கு** – இங்ஙனம்.
**இப்பந்தி** – கலப்புச் சாதி; சங்கடம்; பேடி; மூடன்.
**இப்பர்** – வணிகசாதி வகையார்; கோவைசியர்.
**இப்பாடு** – இவ்விடம்.
**இப்பால்** – இவ்விடம்; பின்பு.
**இப்பி** – சிப்பி; கிளிஞ்சில்; சங்கு.
**இப்பியை** – வெள்ளைக் குங்கிலியம்; பெண் யானை.
**இப்பிவெள்ளி** – கிளிஞ்சிலை வெள்ளி என்றெண் ணும் மயக்கவுணர்ச்சி.
**இப்புறம்** – இவ்விடம்.
**இப்பேர்ப்பட்ட** – இத்தன்மையதான.
**இப்பை** – காண்க: **இருப்பை.**
**இப்பொழுது, இப்போது** – இந்நேரம்.
**இப்போதே** – இந்த நொடியிலே.
**இபங்கம்** – புளிமா.
**இபம்** – மரக்கொம்பு; யானை.
**இபாரி** – சிங்கம்.
**இபுதார்** – நோன்புக்குப் பின் செய்யும் பாரணை.
**இபுனு** – வழித்தோன்றல்.
**இம்பர்** – இவ்விடம்; இவ்வுலகம்; பின்.
**இம்பர(ரா)ர்** – இவ்வுலகத்தவர்.
**இம்பரும்பர்** – இவ்வுலகில் தேவராக மதிக்கப் படுபவர், பூசுரர்.
**இம்பல்** – பலகைச் சுருக்கத்தால் தோன்றும் இடைவெளி.
**இம்பி** – கருந்தினை.
**இம்பில்** – பண்டைக் காலத்து விளையாட்டு வகை.
**இம்புறாவேர், இம்பூறல்** – சாயவேர்.
**இம்மட்டும்** – இதுவரையும்.
**இம்மடி** – யானை.
**இம்மி** – மத்தங்காய்ப் புல்லரிசி; அணு; ஒரு சிற்றெண்; ஒரு சிறு நிறை; பொய்ம்மை; புலன்.
**இம்மிக்கணக்கு** – கீழ்வாயிலக்கக் கணக்கு.
**இம்மியளவு** – தேர்த்துகள் எட்டு மடங்கு கொண்ட ஓர் அளவு.
**இம்மெனல்** – விரைவுக் குறிப்பு; ஓர் ஒலிக்குறிப்பு; 'இம்' என்னும் ஒலிக்குறிப்பு.
**இம்மை** – இப்பிறப்பு; இவ்வுலக வாழ்வு.
**இமகரன், இமகிரணன்** – குளிர்ந்த கதிர்களையுடைய வனாகிய சந்திரன்.
**இமகிரி** – இமயமலை.

**இமசலம்** – பனிநீர்.
**இமசானு** – இமயமலை, இமயமலையின் மேற் பரப்பு.
**இமப்பிரபை** – மிகக் குளிர்ச்சியாயுள்ள ஒரு நரகம்.
**இமம்** – பனி; சந்தனம்; சீதளம்.
**இமயம்** – இமயமலை; மந்தரமலை; மேருமலை; பொன்.
**இமயவதி** – இமவான் மகள், பார்வதி.
**இமயவரம்பன்** – இமயமலை எல்லைவரை வெற்றி கொண்டு அரசாண்டவன்; ஒரு சேரமன்னன்.
**இமயவல்லி** – காண்க: **இமயவதி.**
**இமயவில்** – மேருமலையாகிய வில்.
**இமயவில்லி** – மேருமலையை வில்லாகவுடைய வன், சிவன்.
**இமலம்** – மரமஞ்சள்.
**இமவந்தம்** – இமயமலை.
**இமவாலுகை** – பச்சைக் கருப்பூரம்.
**இமவான்** – இமயமலை; இமயமலையரசன்.
**இமழி** – யானை.
**இமாசலம்** – காண்க: **இமவந்தம்.**
**இமாசலை** – பார்வதி.
**இமாம்** – பள்ளிவாசலில் தொழுகையை நடத்து பவர்.
**இமாலயம்** – பனிக்கு இருப்பிடமான இமயமலை.
**இமிர்தல்** – ஒலித்தல்; ஊதுதல்; மொய்த்தல்.
**இமில்** – எருத்தின் திமில்; கொண்டை.
**இமிலை** – ஓர் இசைக்கருவி.
**இமிழ்** – ஒலி; பந்தம்; கயிறு; இனிமை; இசை.
**இமிழ்த்தல்** – ஒலித்தல்; கட்டுதல்; சிமிட்டுதல்.
**இமிழ்தல்** – ஒலித்தல்; யாழொலித்தல்; தழைத் தல்; கட்டுதல்; மிகுதல்.
**இமிழி** – இசை.
**இமிழிசை** – இயமரம்; ஒருவகைப் பறை.
**இமை** – கண்ணிமை; கண்ணிமைக்கை; கண் ணிமைப் பொழுது; கரடி; மயில்.
**இமைக்குரு** – இமையில் உண்டாகும் சிறுகட்டி.
**இமைகொட்டுதல்** – இமைத்தல், கண்ணிதழ் சேர்தல்.
**இமைத்தல்** – இமைகொட்டுதல்; ஒளிவிடுதல்; சுருங்குதல்; தூங்குதல்.
**இமைப்பளவு** – கண்ணிமைப்பொழுது.
**இமைப்பிலர்** – காண்க: **இமையவர்.**
**இமைப்பு** – இமைப்பளவு; விளக்கம்.
**இமைப்பொழுது** – கண் இமைக்கும் நேரம், கணப்பொழுது.
**இமைபிறத்தல்** – இமைத்தல்.
**இமைபொருந்துதல்** – உறங்குதல்.
**இமையம்** – காண்க: **இமயம்.**
**இமையவர்** – தேவர்.
**இமையாடுதல்** – கண்கொட்டுதல்.
**இமையா(யோ)ர்** – காண்க: **இமையவர்.**
**இமையிலி** – கருடன்.
**இயக்கசத்துவம்** – பத்துச் சத்துவங்களுள் இயக்க சாதிப் பெண்ணின் சத்துவம்.
**இயக்கம்** – இயங்குகை; குறிப்பு; வழி; இசைப் பாட்டுவகை; சுருதி; பெருமை; மலசலங்கள்; வடதிசை; கிளர்ச்சி; பரப்புகை.
**இயக்கர்** – கந்தருவர், பதினெண் கணத்துள் ஒரு கணத்தார்.
**இயக்கர்கோமான், இயக்கர்வேந்தன்** – இயக்கர்களின் அரசன், குபேரன்.
**இயக்கன்** – இயக்க கணத்தான்; குபேரன்; தலைமையாக நின்று நடத்துபவன்.
**இயக்கி** – யட்சப் பெண்; கந்தருவப் பெண்; குபேரன் மனைவி; தருமதேவதை.
**இயக்கினி** – கண்டங்கத்தரி.
**இயக்குதல்** – செலுத்துதல்; தொழிற்படுத்துதல்; பழக்குதல்; ஒலிப்பித்தல்; நடத்திவருதல்; போக்குதல்.
**இயங்காத்திணை** – தானாக இடம்விட்டுப் பெயர இயலாத நிலைத்திணைப் பொருள்.
**இயங்கியற்பொருள்** – இடம்விட்டு இடம்செல்லும் உயிர்ப்பொருள், சரப்பொருள்.
**இயங்கு** – செல்லுகை; முட்செடி வகை.
**இயங்குதல்** – அசைதல்; போதல்; உலாவுதல்; ஒளிசெய்தல்.
**இயங்குதிசை** – மூச்சு இயங்கும் மூக்குத்துளை.
**இயங்குதிணை** – காண்க: **இயங்கியற்பொருள்.**
**இயங்குநர்** – வழிப்போவோர்.
**இயங்குபடையரவம்** – பகையரணை முற்றுதற்கு எழுந்த படையின் செலவால் உண்டாகும் ஆரவாரத்தைக் கூறும் புறத்துறை.
**இயசுரு** – யசுர்வேதம்.
**இயத்தல்** – கடத்தல்; நிகழ்தல்.
**இயந்தா** – யானைப் பாகன்; சாரதி.
**இயந்திரம்** – ஆலை; தேர்; மதிலுறுப்பு; சக்கரம்; பாண்டவகை; வலை.
**இயந்திரமயில்** – மயிற்பொறி.
**இயந்திரி** – இத்திமரம்.
**இயந்திரித்தல்** – எந்திரம் அமைத்தல்; எந்திரத்தில் ஆட்டுதல்.
**இயந்தை** – மருத யாழ்த்திறம்; செவ்வழி யாழ்த்திறவகை.
**இயபரம்** – இம்மை மறுமை, இகபரம்.
**இயம்** – சொல்; ஒலி; வாத்தியம்; மிருதாரசிங்கி எனும் மூலிகை; ஈ.
**இயம்பல்** – சொல்; பழமொழி.
**இயம்புணர் தூம்பு** – நெடுவங்கியம் என்னும் இசைக்கருவி.

**இயம்புதல்** – ஒலித்தல்; வாச்சியம் ஒலித்தல்; சொல்லுதல்; துதித்தல்; கூப்பிடுதல்.

**இயமகணம்** – யமகிங்கரர், யமனின் தூதர்.

**இயமகம்** – யமகம்; ஒரெழுத்து முதல் பத்தெழுத் தீறாய் ஒரடிபோல நான்கடியும்வரப் பாடுவது.

**இயமகிங்கரர்** – காண்க: **இயமகணம்.**

**இயமங்கியர்** – பரசுராமர்.

**இயமதூதி** – பாம்பினது நச்சுப்பற்களுள் ஒன்றாகிய யமதூதன்.

**இயமபடர்** – யமதூதர்.

**இயமம்** – யோகத்திற்குரிய எட்டுறுப்புகளுள் ஒன்று; கொலை, களவு முதலியவற்றை நீக்கிப் புலனடக்குதல்; தடை.

**இயமரம்** – பறைவகை.

**இயமன்** – யமன், கூற்றுவன்.

**இயமனூர்தி** – எருமைக்கடா.

**இயமான்** – காண்க: **இயமானன்.**

**இயமானகணம்** – இந்திரகணம்; மூன்று நேரசையால் வரும் சீர்.

**இயமானன்** – வேள்வித் தலைவன்; குடும்பத் தலைவன்; இந்திரன்; ஆன்மா; உயிர்.

**இயர்** – வியங்கோள் விகுதி.

**இயல்** – தன்மை; தகுதி; சுகுமாரதை; ஒழுக்கம்; உழுவலன்பு; செலவு; ஒப்பு; இயற்றமிழ்; இலக்கணம்; நூல்; நூலின் பகுதி; திவ்வியப் பிரபந்தத்தைக் குழுவாக நின்று ஓதுகை; மாறுபாடு; சாயல்; பெருமை.

**இயல்பளவை** – சொல்லின் பொருளைச் சந்தர்ப் பத்தினால் துணிந்து உணர்கை.

**இயல்பாயிருத்தல்** – இயற்கையாய் உள்ளபடி அமைந்திருத்தல்; செல்வாக்கோடு இருத்தல்.

**இயல்பு** – தன்மை; இலக்கணம்; ஒழுக்கம்; நற்குணம்; நேர்மை; முறை; வரலாறு; பிரமாணம் பத்தனுள் ஒன்று.

**இயல்புகணம்** – உயிர்க்கணம் மென்கணம் இடைக் கணங்கள்.

**இயல்புநயம்** – ஒற்றுமை முதலிய நயங்கள் நான் கனுள் ஒன்று.

**இயல்புபுணர்ச்சி** – மாறுபாடின்றிச் சொற்கள் ஒன்றோடொன்று இயைந்து நிற்றல்.

**இயல்புவழக்கு** – எப்பொருளுக்கு எப்பெயர் இயல்பில் அமைந்ததோ அப் பெயராலேயே அப் பொருளைக் கூறுகை.

**இயல்பு விளி** – பெயர் ஈறு திரியாது நிற்கும் விளிவேற்றுமை.

**இயல்புளி** – முறைப்படி.

**இயல்பூதி** – வில்வம்; நாய்வேளை.

**இயல்வாகை** – பெருங்கொன்றை.

**இயல்வாணர்** – புலவர்.

**இயல்வு** – இயல்பு; பெறுகைக்குத் தக்க வழி.

**இயலசை** – நேரசை; நிரையசை.

**இயலடி** – இயற்சீரால் அமைந்து வரும் பாவடி.

**இயலணி** – இயற்கையழகு.

**இயலறிவு** – சொற்களின் பயிற்சி.

**இயலாசிரியன்** – நாட்டிய நூல் கற்பிப்போன்.

**இயலாமை** – கூடாமை.

**இயலுதல்** – கூடியதாதல்; நேர்தல்; பொருந்து தல்; தங்குதல்; செய்யப்படுதல்; அசைதல்; நடத்தல்; உலாவுதல்; உடன்படுதல்; அணுகுதல்; ஒத்தல்; போட்டிபோடுதல்; சித்திர முதலியன எழுதுதல்.

**இயலொழுக்கம்** – நல்லொழுக்கம்.

**இயவம்** – தவசவகை; நெல்; வாற்கோதுமை.

**இயவன்** – தோற்கருவியாளன்; வாச்சியக்காரன்; கீழ்மகன்.

**இயவனன்** – யவனன்; கம்மாளன்; ஓவியன்.

**இயவானி** – ஓமம்.

**இயவு** – வழி; செலவு; காடு; ஊர்.

**இயவுள்** – தலைமை; எப்பொருட்கும் இறைவன்; தெய்வம்; புகழாளன்; வழி; பிள்ளை.

**இயவை** – வழி; காடு; மலைநெல்வகை; மூங்கி லரிசி; துவரை.

**இயற்காட்சி** – நற்காட்சி; சரியாக உணர்கை; நல்ல நம்பிக்கை.

**இயற்குணப் பெயர்** – தொழிலை அன்றிப் பண்பே குறிக்கும் பெயர்.

**இயற்கை** – இயல்பான தன்மை; வழக்கம்; இலக் கணம்; நிலைமை; கொள்கை.

**இயற்கை அறிவு** – இயல்பாக அமைந்த அறிவு.

**இயற்கைக்குணம்** – ஒன்றன் உடனாய் அமைந்த தன்மை.

**இயற்கைப் புணர்ச்சி** – தலைவனும் தலைவியும் தெய்வத்தால் கூடும் முதற் கூட்டம்.

**இயற்கைப் பொருள்** – தோன்றிய காலம் தொடங்கி ஒருநிலையவாகிய பொருள்.

**இயற்கையளபெடை** – இசை, விளி, பண்டமாற்று முதலிய இடங்களில் நிகழும் அளபெடை.

**இயற்கையின்பம்** – இயற்கைப் புணர்ச்சியால் நேரும் இன்பம்; இயற்கை தரும் இன்பம்.

**இயற்கையுணர்வினனாதல்** – இறைவன் எண் குணங்களுள் ஒன்று.

**இயற்சீர்** – அகவல் உரிச்சீர்.

**இயற்சீர் வெண்டளை** – மாமுன் நிரையும் விளமுன் நேரும் வரும் தளை.

**இயற்சொல்** – எல்லார்க்கும் பொருள் விளங்கும் சொல்.

**இயற்படமொழிதல்** – இயல்பு பொருந்தச் சொல் லுதல்; தலைவன் குணங்களைத் தலைவி புகழ்ந்து கூறும் அகத்துறை.

**இயற்பலகை** – சங்கப் பலகை.
**இயற்பழித்தல்** – தலைவன் குணங்களைத் தோழி இகழ்ந்து கூறும் அகத்துறை.
**இயற்பா** – இயல்பான ஓசையுடைய பாட்டு; வெண்பா; திவ்வியப் பிரபந்தத்துள் ஒரு பகுதி.
**இயற்பெயர்** – வழங்குதற்கு இடப்பட்ட சிறப்புப் பெயர்; விரவுப் பெயர், உயர்திணை அஃறிணைகளுக்குப் பொதுவாய் வரும் பெயர்.
**இயற்றமிழ்** – செந்தமிழ்; இலக்கியத் தமிழ்; முத்தமிழுள் ஒன்று.
**இயற்றல்** – செய்தல்; முயற்சி.
**இயற்றளை** – காண்க: **இயற்சீர்வெண்டளை.**
**இயற்றி** – முயற்சி; ஆற்றல்; உதவி; திறமை.
**இயற்றியான்** – செய்தவன்.
**இயற்று** – பாத்திரம்.
**இயற்றுதல்** – செய்தல்; நடத்துதல்; சம்பாதித்தல்; தோற்றுவித்தல்; நூல் செய்தல்.
**இயற்றுதற்கருத்தா** – தொழில் புரிபவன்; பயனிலைச் செயலை நேரே செய்யும் வினைமுதல்.
**இயற்றும்வினை** – தன்வினை.
**இயறல்** – முத்தி; போதல்.
**இயன்ஞானம்** – நல்லறிவு.
**இயன்மகள்** – கலைமகள்.
**இயன்மணம்** – இயற்கையான மணம்.
**இயன்மொழிவாழ்த்து** – தலைவன் குலத்தோர் செய்திகளை அவன்மே லேற்றி வாழ்த்தும் புறத்துறை; 'இன்னார் இன்னது கொடுத்தார்; அவர்போல நீயுங் கொடுப்பாயாக' என யாவரும் அறியக்கூறும் புறத்துறை; அரசன் தன்மையினைப் புகழ்ந்து சொல்லும் புறத்துறை.
**இயனம்** – கள்ளிறக்குவோனது கருவிபெய் புட்டில்.
**இயனெறி** – நல்லொழுக்கம்.
**இயாகதம்** – சிற்றகத்தி.
**இயாகம்** – கொன்றை; பாண்டம்; வேள்வி.
**இயுசாவியம்** – கொன்றைமரம்.
**இயேசு** – கிறிஸ்துநாதரின் பெயர்.
**இயை** – அழகு; புகழ்; இசைப்பு; வாழை.
**இயை** (வி) – சேர்.
**இயைத்தல்** – பொருத்துதல்.
**இயைதல்** – பொருந்துதல்; இணங்குதல்; நிரம்புதல்; ஒத்தல்.
**இயைந்துரை** – பல பொருள்களின் வரையறைப் பட்ட தொகுதி.
**இயைபிலிசைக்குறி** – இடைப்பிறவரலாக வரும் சொற்களை **அடைக்கும்** குறிகள், வளைவுக் குறிகள்.
**இயைபின்மை நீக்கம்(ல்)** – தன்னோடு இயைபின்மை நீக்கும் **அடைமொழி;** செஞ்ஞாயிறு **என்றாற்போல்வன.**
**இயைபின்மையணி** – பொருள் தனக்குத் தானே உவமை என்று உரைக்கும் அணி.
**இயைபு** – சேர்க்கை; பொருத்தம்; தொடர்ச்சி; 'இது கேட்டபின் இது கேட்கத் தக்கது' என்னும் யாப்பு; இயைபுத் தொடை; நூல் வனப்புள் ஒன்று.
**இயைபுத்தொடை** – ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது.
**இயைபுருவகம்** – பல பொருளையும் தம்முள் இயைபுடையனவாக வைத்து உருவகம் செய்வது; உருவக அணியுள் ஒன்று.
**இயைபுவண்ணம்** – இடையெழுத்துகள் மிகுந்து வரும் சந்தம்.
**இயைபுவனப்பு** – ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள் என்னும் பதினொரு மெய்களை ஈற்றில் கொண்டு முடியும் நெடும் பாடல்.
**இயைபுளன்** – புகழாளன்.
**இயைமே** – வாழைமரம்.
**இயைய** – ஓர் உவம உருபு.
**இயைவது** – தக்கது.
**இயைவு** – இணக்கம்; பொருத்தம்; சேர்க்கை.
**இர்** – முன்னிலைப் பன்மை விகுதி; படர்க்கைப் பன்மை விகுதி; கேளிர்; பெண்டிர்.
**இர** – இரவு; இரத்தல்.
**இரக்கக்குறிப்பு** – ஒன்றன் துயரம் முதலியன கண்டு இரங்கிக் கூறும் மொழி.
**இரக்கம்** – அருள்; மனவுருக்கம்; மனவருத்தம்; ஒலி; ஈடுபாடு.
**இரக்கித்தல்** – காண்க: **இரட்சித்தல்.**
**இரக்கை** – காண்க: **இரட்சை.**
**இரகசியம்** – கமுக்கம், மறைபொருள், அந்தரங்கம்.
**இரகிதம்** – இட்டம்; விடப்பட்டது; நீக்கப் பட்டது.
**இரகுநாதன்** – இரகு குலத்தில் சிறந்த இராமன்.
**இரகுவமிசம்** – இரகுவின் வழிவந்தவர்; ஒரு தமிழ் நூல்.
**இரங்கல்** – அழுகை; நெய்தல்; உரிப்பொருள்; ஒலி; யாழ் நரம்போசை.
**இரங்கற்பா** – ஒருவரின் மறைவு குறித்து வருந்திப் பாடும் பாட்டு, கையறுநிலை.
**இரங்குகெளிறு** – கெளிற்று மீன்வகை.
**இரங்குசொல்** – இழுமென இசைக்கும் சொல்.
**இரங்குதல்** – வருந்துதல்; அருளல்; மனமழிதல்; அழுதல்; கழிவிரக்கம் கொள்ளல்; ஒலித்தல்; யாழொலித்தல்; கூறுதல்; ஈடுபடுதல்.
**இரங்கூன்மல்லி** – ஒருவகைப் பூங்கொடி.
**இரங்கொலி** – முறையீடு.
**இரங்கேசன்** – அரங்கநாதன்; திருவரங்கத்தில் கோயில்கொண்டிருக்கும் கடவுள்.

**இரச்சு** – கயிறு.
**இரச்சுப்பொருத்தம்** – பத்துவகைக் கலியாணப் பொருத்தங்களுள் ஒன்று.
**இரச்சுலம்** – கவண்.
**இரச்சுவம்** – குற்றெழுத்து.
**இரச்சை** – மலை மரவகை; காப்புநாண்.
**இரசக்கட்டு** – இறுகச் செய்த பாதரசம்.
**இரசக்களிம்பு** – புண் ஆற்றும் மருந்துவகை.
**இரசக்கிணறு** – காண்க: **இரசக்குழி.**
**இரசக்குடுக்கை** – பாதரசம் அடைக்கும் குப்பி.
**இரசக்குழி** – பாதரசம் எடுக்கும் சுரங்கம்.
**இரசகந்தாயம்** – வரி; நிலக்கொழுமை.
**இரசகம்** – பீர்க்கு.
**இரசகருப்பூரம்** – ஒருவகை மருந்துச் சரக்கு.
**இரசகன்** – வண்ணான்.
**இரசகி** – வண்ணாத்தி.
**இரசகுண்டு** – அலங்காரமாகத் தொங்கவிடும் இரசம் பூசிய கண்ணாடி உருண்டை.
**இரசகுளிகை** – இரசத்தினால் செய்த மாத்திரை; சித்தர் குளிகை.
**இரசச்சுண்ணம்** – பூச்சுமருந்துவகை.
**இரசசுத்தி** – ஈயம்.
**இரசதகிரி** – வெள்ளிமலையாகத் தோற்றம் பெறும் கைலாயமலை.
**இரசதசபை** – வெள்ளியம்பலம், மதுரையிலுள்ள நடராச சபை.
**இரசதம்** – வெள்ளி; இராசதம்; அரைப்பட்டிகை; பாதரசம்; நட்சத்திரம்; யானைத் தந்தம்; வெள்ளை; முத்துமாலை; வெண்மலை; பொன்; அரத்தம்.
**இரசதமணல்** – வெள்ளி கலந்த மணல்.
**இரசதாது** – பாதரசம்.
**இரசதாரை** – அன்னரசம் செல்லும் குழாய்.
**இரசதாளி** – ரஸ்தாளி, ஒருவகை வாழை.
**இரசநாதன்** – காண்க: **இரசதாது.**
**இரசப்பிடிப்பு** – முடக்குவாதம்.
**இரசப்புகை** – பாதரசத்தின் ஆவி.
**இரசபலம்** – இனிய நீரைக்கொண்ட காய்களையுடையது; தென்னை.
**இரசபுட்பம்** – காண்க: **இரசகருப்பூரம்.**
**இரசம்** – சுவை; செய்யுட்சுவை; சாறு; பாதரசம்; மிளகு நீர்; இன்பம்; வாயூறு நீர்; வாழைவகை; மாமரம்.
**இரசமணி** – நோய் முதலியவை நீங்கக் காப்பாக அணியப்படும் பாதரசங் கட்டிய மணி.
**இரசமுறித்தல்** – பாதரசம் செய்தல்; உடம்பிலிருந்து பாதரச நஞ்சை நீக்குதல்.
**இரசலிங்கம்** – சாதிலிங்கம்; சிவலிங்கவகை.
**இரசவாதம்** – தாழ்ந்த உலோகங்களை உயர்ந்த உலோகமாக்கும் வித்தை.
**இரசவாதி** – உலோகங்களைப் பேதிப்போன், ஓர் உலோகத்தைப் பிறிதொன்றாக மாற்றுபவன்.
**இரசவாழை** – பேயன்வாழை.
**இரசவைப்பு** – இரசத்தால் ஆகிய மருந்து முதலியன.
**இரசனம்** – பொன்; வெள்ளி; நஞ்சு; பிசின்; பழம்; கழாயம்; இலைச் சாறு; ஒலி; உணவு; நேயம்; பல்.
**இரசனா** – அரத்தைவகை.
**இரசனி** – இரவு; மஞ்சள்; அவுரி; செம்பஞ்சு.
**இரசனிமுகம்** – மாலை நேரத்தில் நேரும் பிரதோஷ காலம்; சூரியன் மறைவிற்கு முன்னும் பின்னும் உள்ள மூன்றே முக்கால் நாழிகை.
**இரசனை** – சுவை; மலர் முதலியவற்றைத் தொடுக்கை; படையின் அணிவகை; பதினாறு கோவையுள்ள அரைப்பட்டிகையான காஞ்சி.
**இரசாதலம்** – கீழேழ் உலகத்துள் ஒன்று.
**இரசாதிபதி** – இரசப் பொருள்களுக்கு அதிகாரியான கோள்.
**இரசாபாசம்** – சுவைக்கேடு; சீர்கேடு.
**இரசாயனநூல்** – வேதியியல் நூல், இயைபியல் நூல்.
**இரசாயனம்** – இரசவாதம்; வேதியியல், இயைபியல்; காயசித்தி மருந்து; நஞ்சு.
**இரசாலம்** – மாமரம்; கரும்பு; பலா; கோதுமை; குந்துருப் பிசின்; போளம்.
**இரசாலை** – அறுகு; சம்பாரத் தயிர்; நா; வெள்ளீறில் என்னும் மரவகை.
**இரசிகம்** – குதிரை; கயமைத் தன்மை; யானை.
**இரசிகன்** – சுவைஞன்; காமுகன்.
**இரசிகை** – காமுகி; நா; மாதர் இடையணி.
**இரசித்தல்** – சுவைத்தல்; இனித்தல்; விரும்புதல்.
**இரசிதநாள்** – வெள்ளிக்கிழமை.
**இரசிதம்** – வெள்ளி; பொன்னின் பூச்சு; ஒலி; முழக்கம்.
**இரசுவம்** – குறுகிய அளவு; குற்றெழுத்து.
**இரசேந்திரியம்** – சுவையுணர் உறுப்பு, நாக்கு.
**இரசை** – பங்கம்பாளை; பூமி; ஆனைவணங்கி; தினை; நா.
**இரசோகுணம்** – இராசதகுணம், முக்குணத்துள் ஒன்று; மத்திமமான அறிவு.
**இரசோபலம்** – இருள்; முத்து.
**இரசோனகம்** – வெள்ளுள்ளி.
**இரஞ்சகம்** – துப்பாக்கியின் பற்றுவாய் மருந்து; துப்பாக்கிக் காது; மகிழ்ச்சி தருவது.
**இரஞ்சகன்** – இயக்குகிறவன்; சாயமூட்டுகிறவன்; விருப்பம்வரச் செய்கிறவன்.
**இரஞ்சனம்** – மகிழ்ச்சி தருவது; செஞ்சாந்து.
**இரஞ்சனி** – மஞ்சிட்டை; கவுள்; அவுரி; கம்பில்லம்.

**இரஞ்சிதம்** – இன்பமானது; சித்திரிக்கப்பட்டது.
**இரட்சகம்** – இரட்சிப்பு; மீட்பு; காத்தல்.
**இரட்சகன்** – காப்பாற்றுபவன்; உய்விப்பவன்.
**இரட்சணம்** – காண்க: **இரட்சகம்.**
**இரட்சணியசேனை** – கிறித்தவ சபையில் ஒரு பிரிவு.
**இரட்சணியம்** – காப்பு; மீட்பு.
**இரட்சனை** – காண்க: **இரட்சகம்.**
**இரட்சாபந்தனம்** – காப்புக்கட்டல்; மந்திராட்சர யந்திரக் காப்பு.
**இரட்சாபோகம்** – பாதுகாவல் வரி.
**இரட்சாமூர்த்தி** – காப்புக் கடவுள், திருமால்.
**இரட்சித்தல்** – காத்தல்; மீட்குதல்.
**இரட்சிப்பு** – காப்பாற்றுகை; உய்வு; மீட்பு.
**இரட்சை** – காப்பு; காப்பாக இடுவது; திருநீறு.
**இரட்டகத்துத்தி** – கத்தூரிவெண்டை.
**இரட்டர்** – இராட்டிரகூட அரசர்.
**இரட்டல்** – இரண்டாதல்; அசைத்தல்; மாறி மாறி ஒலித்தல்; யாழ் நரம்போசை.
**இரட்டாங்காலி** – இரட்டையாகக் கிளைக்கும் மரம்.
**இரட்டி** – இருமடங்கு; இணைக்கை.
**இரட்டித்தல்** – இருமடங்காக்குதல்; திரும்பச் செய்தல்; ஒன்று இரண்டாதல்; மீளவருதல்; மாறுபடுதல்; இகழ்தல்.
**இரட்டித்துச் சொல்லுதல்** – மீட்டுங் கூறுதல்; இரு பொருள்படச் சொல்லுதல்.
**இரட்டிப்பு** – இருமடங்கு.
**இரட்டு** – இரட்டையாயிருக்கை; ஒருவகை முருட்டுத்துணி; ஒலி.
**இரட்டுதல்** – இரட்டித்தல்; மாறியொலித்தல்; ஒலித்தல்; அசைதல்; வீசுதல்; கொட்டுதல்; தெளித்தல்.
**இரட்டுமி** – பறைவகை.
**இரட்டுறக்காண்டல்** – ஐயக் காட்சி; ஒன்றை இரு வேறு பொருளாகப் பார்க்கும் பார்வை.
**இரட்டுறமொழிதல்** – ஓர் உத்தி; இருபொருள் படச் சொல்லல்.
**இரட்டுறல்** – சிலேடை; இருபொருள்படுகை.
**இரட்டுறுதல்** – இருபொருள்படுதல்; ஐயுறுதல்; மாறுபடுதல்.
**இரட்டை** – இணை; கணவன் மனைவியர்; இரட்டைப் பிள்ளைகள்; இரண்டு ஒன்றானது; இரட்டை எண்; அரையாடை மேலாடைகள்; துப்பட்டி; மிதுனராசி; ஆனி மாதம்; வேதம் ஓதும் முறைகளுள் ஒன்று; முத்துவகை.
**இரட்டைக்கத்தி** – இரண்டு அலகுள்ள கத்தி.
**இரட்டைக்கதவு** – இரண்டு பிரிவாயுள்ள கதவு.
**இரட்டைக்கிளவி** – ஒலிக்குறிப்பில் வரும் இரட்டை மொழி; இரட்டையாக நின்றே பொருள் உணர்த்துஞ் சொல், விறுவிறுப்பு என்றாற்போல வருவது.
**இரட்டைக்குச்சி** – சிலம்ப வித்தைவகை.
**இரட்டைக் குண்டட்டிகை** – கழுத்தணிவகை.
**இரட்டைக் குறுக்கு** – மாட்டுக் குற்றவகை.
**இரட்டைக்கை** – காண்க: **இணைக்கை.**
**இரட்டைச்சிரட்டை** – இரட்டைக் கொட்டாங் கச்சி.
**இரட்டைச் சின்னம்** – இரட்டையான ஊதுகுழல் வகை.
**இரட்டைச் சுழி** – இரு சுழி; ஐகாரவொலியைக் குறிக்கும் 'ை' என்னும் சுழி.
**இரட்டைச்சொல்** – இரட்டையாக வரும் குறிப்புச் சொல்.
**இரட்டைத் தவிசு** – இருவர் இருத்தற்குரிய இருக்கை.
**இரட்டைத் தாளம்** – தாளவகை.
**இரட்டைத்தொடை** – ஓரடி முழுவதும் ஒரு சொல்லே வரத் தொடுப்பது.
**இரட்டை நாகபந்தம்** – சித்திரகவிவகை.
**இரட்டை நாடி** – மிகப் பருத்த உடம்பு.
**இரட்டைப் படை** – இரட்டிப்பு; இரட்டைப்பட்ட எண்.
**இரட்டைப் பாக்கு** – இரு கண்ணுள்ள பாக்கு.
**இரட்டைப் பிள்ளை** – ஒரே கருப்பத்தினின்றும் தனித்தனியாக ஒரு சமயத்துப் பிறந்த இருவர்; இரட்டையாகக் கிளைக்கும் தென்னை அல்லது கமுகு.
**இரட்டைப் பூட்டு** – இருமுறை பூட்டும் பூட்டு; பாதுகாப்புக்காக இடும் இருவேறு பூட்டு.
**இரட்டைப் பூரான்** – சதங்கைப் பூரான்.
**இரட்டை மணி** – அணிவகை.
**இரட்டைமணிமாலை** – பிரபந்த வகை; வெண்பா, கலித்துறை இரண்டும் மாறிமாறி இருபது பாடல்கள் அந்தாதியாய் வரும் சிறுநூல்வகை.
**இரட்டையர்** – இரட்டைப் பிள்ளைகள்; நகுல சகதேவர்; இரட்டைப் புலவர்களான இளஞ் சூரியர் முதுசூரியர் என்ற புலவர்.
**இரட்டையாட்சி** – இருதிறத்தார் பகுத்துக் கொண்டு செய்யும் அரசாட்சி.
**இரட்டையேணி** – கவை ஏணி; ஒன்றன்மேல் ஒன்று வைத்துக் கட்டப்பட்ட ஏணி.
**இரட்டைவரி** – ஒரே நிலத்துக்காக அரசினருக்கும் ஊராட்சி நிறுவனங்களுக்கும் செலுத்தும் வரி.
**இரட்டை விருத்தம்** – பதினொரு சீர்க்கு மேற் பட்ட சீரான் வரும் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.
**இரண்டகம்** – இருமனம், துரோகம்.

**இரண்டறக்கலத்தல்** – இருபொருள் பேதமின்றி ஒன்றாதல்; ஆன்மா இறைவனுடன் ஐக்கியமாதல்; முத்தியடைதல்.
**இரண்டாகுதல்** – இரு துண்டாதல்.
**இரண்டாங்கட்டு** – வீட்டின் இரண்டாம் பகுதி.
**இரண்டாங்காலம்** – கோயிலில் அந்திக்காப்புக்கும் அர்த்தசாமத்திற்கும் நடுவில் நடக்கும் பூசை.
**இரண்டாட்டுதல்** – இருநெறிப்படுதல்.
**இரண்டாந்தரம்** – முக்கியம் அல்லாதது; நடுத்தரம்; இடைவேளை உணவு.
**இரண்டாநிலம்** – மேன்மாடம்.
**இரண்டாம் பாட்டன்** – பாட்டனின் தந்தை.
**இரண்டாம்போகம்** – இரண்டாம் முறைப் பயிர் விளைவு.
**இரண்டிகை** – காண்க: **இண்டை.**
**இரண்டு** – ‘இரண்டு’ என்னும் எண்; சில; உகர எழுத்து; மலசலம்.
**இரண்டுக்குப் போதல்** – மலங்கழித்தல்.
**இரண்டுக்குற்றது** – இதுவோ, அதுவோ என்னும் நிலை.
**இரண்டுங்கெட்டநேரம்** – அந்திப்பொழுது.
**இரண்டுடை** – இருவேறு வகையான ஆடை; மாற்று உடை; ‘கருவேல் வெள்வேல்’ என்னும் உடைமரங்கள்.
**இரண்டுபடுதல்** – வேறுபடுதல்; ஒற்றுமையின்மை; ஐயுறுதல்.
**இரண்டுவவு** – மதி மறைவும் மதி நிறைவும்.
**இரண்டெட்டில்** – விரைவில்.
**இரண்டை** – கைம்பெண்.
**இரண்டொன்று** – சில.
**இரணகள்ளி** – கள்ளிவகை.
**இரணகளம்** – போர்க்களம்; பெருங்குழப்பம்.
**இரணகாளம்** – போரை நிறுத்த ஊதும் எக்காளம்.
**இரணகெம்பீரம்** – போரில் ஆரவாரித்தல்.
**இரணங்கொடுத்தல்** – அடித்தல்.
**இரணங்கொல்லி** – ஆடுதின்னாப்பாளை; தும்பை.
**இரணசங்கம்** – போர் வென்று ஊதும் சங்கு; வெற்றுச் சங்கு.
**இரணசன்னி** – புண்களால் உண்டாகும் சன்னி.
**இரணசிகிச்சை** – காண்க: **இரணவைத்தியம்.**
**இரணசுக்கிரன்** – கண்ணோய்வகை.
**இரணசூரன்** – போர்வீரன்.
**இரணத்தொடை** – காண்க: **முரண்தொடை.**
**இரணதூரியம்** – காண்க: **இரணபேரி.**
**இரணபத்திரகாளி** – துர்க்கை, போரில் வெற்றி தரும் கொற்றவை.
**இரணபாதகம்** – கொலை; நம்பிக்கைத் துரோகம்.
**இரணபாதகன்** – கொலைத்தொழிற் கொடியோன்.
**இரணபேரி,**
**இரணபேரிகை** } – போர்ப்பறை.
**இரணம்** – கடன்; போர்; புண்; பொன்; மாணிக்கம்; சுக்கிலம்; பலகறை.
**இரணரங்கம்** – போர்க்களம்.
**இரணவஞ்சம்** – போகபூமியுள் ஒன்று.
**இரணவாதம்** – நோய்வகை.
**இரணவீரன்** – போர்வீரன்; அங்காளம்மை கோயிலின் பரிவார தெய்வம்.
**இரணவைத்தியம்** – அறுவை மருத்துவம்.
**இரணவைத்தியன்** – அறுவை மருத்துவன்.
**இரணிய கர்ப்பதானம்** – பொற்பசுவின் வயிற்றினுள் புகுந்து வெளிவந்து அப் பசுவையே கொடையாக அளித்தல்.
**இரணியகர்ப்பம்** – ஒரு வேள்வி; பொன்னால் செய்த பசு வயிற்றினூடாகப் புகுந்து வெளிவரும் சடங்கு.
**இரணியகர்ப்பமதம்** – பிரமாவே முதற்கடவுள் என்னும் சமயம்.
**இரணியகர்ப்பர்** – பிராணனே ஆத்துமா என்னும் சார்வாகருள் ஒருசாரார்.
**இரணியகர்ப்பன்** – பொன்முட்டையிலிருந்து பிறந்தவன், பிரமன்.
**இரணியகன்** – பொன்னுடையவன்.
**இரணியசிராத்தம்** – பொன் கொடுத்துச் செய்யும் சிராத்தம்.
**இரணியதானம்** – பொன்னைக் கொடையாகக் கொடுக்கை.
**இரணியநேரம்** – அந்திநேரம்.
**இரணியம்** – பொன்; பணம்.
**இரணியமரம்** – மரவகை.
**இரணியவேளை** – காண்க: **இரணியநேரம்.**
**இரத்தக்கட்டி** – புண்கட்டிவகை.
**இரத்தக்கட்டு** – உதிரம் சுரக்கை.
**இரத்தக் கண்ணன்** – கோபக் கண்ணுடையவன்.
**இரத்தக்கலப்பு** – நெருங்கிய உறவு.
**இரத்தக்கவிச்சு** – உதிர நாற்றம்.
**இரத்தக்கழிச்சல்** – பேதிவகை.
**இரத்தக்கனப்பு** – இரத்தக் கொழுப்பு.
**இரத்தக்காணிக்கை** – போரில் இறந்த வீரரின் மைந்தர்க்குக் கொடுக்கும் மானியம்.
**இரத்தக்கிராணி** – காண்க: **இரத்தக்கழிச்சல்.**
**இரத்தக்கொதி** – துக்கம் முதலியவற்றால் உண்டாகும் இரத்தக் கொதிப்பு; காமக் கிளர்ச்சி.
**இரத்தக்கொழுப்பு** – இரத்த நிறைவு; மதம்; செருக்கு.
**இரத்தக்கோமாரி** – மாட்டுக்கு வரும் இரத்தக் கழிச்சல் நோய்.
**இரத்தகம்** – குசும்பாப்பூ; சிவப்புச் சீலை.
**இரத்தகமலம்** – செந்தாமரை.

**இரத்தகுமுதம்** – செவ்வாம்பல்; செந்தாமரை.
**இரத்தகைரவம்** – செவ்வாம்பல்.
**இரத்தச்சிலந்தி** – புண்கட்டிவகை.
**இரத்தச்சுரப்பு** – இரத்த மிகுதி; இரத்தவூறல்; செருக்கு.
**இரத்தைச்சுருட்டை** – சுருட்டைப் பாம்புவகை.
**இரத்தசந்தனம்** – செஞ்சந்தனம்.
**இரத்தசந்தியகம்** – செந்தாமரை.
**இரத்தசம்பந்தம்** – காண்க: **இரத்தக்கலப்பு.**
**இரத்தசாகம்** – செங்கீரை.
**இரத்தசாட்சி** – சத்தியத்தின் பொருட்டுக் கொல்லப்படுகை; சத்தியத்தின் பொருட்டுக் கொல்லப்படுபவன்.
**இரத்தசாரம்** – கருங்காலி.
**இரத்தசூறை** – மீன்வகை.
**இரத்ததிருட்டி** – சன்னிவகை.
**இரத்தந்ததும்புதல்** – முகம் சிவந்து காட்டுதல்; கோபத்தால் முகம் சிவத்தல்.
**இரத்தநரம்பு** – இரத்தக் குழல்.
**இரத்தப்பலம்** – ஆலமரம்; ஆலம்பழம்.
**இரத்தப்பழி** – கொலை; கொலைக்குக் கொலை.
**இரத்தப்பிரமேகம்** – காண்க: **இரத்தவெட்டை.**
**இரத்தப்பிரவாகம்** – உதிரப் பெருக்கு.
**இரத்தப்பிரியன்** – கொலை விருப்புடையோன்.
**இரத்தப்புடையன்** – பாம்புவகை.
**இரத்தப்பெருக்கு** – காண்க: **இரத்தப்பிரவாகம்.**
**இரத்தபலி** – உதிர நைவேத்தியம்; கொலை.
**இரத்தபலை** – கோவைப்பழம்.
**இரத்தபாரதம்** – சாதிலிங்கம்.
**இரத்தபிண்டம்** – சீனமல்லிகை.
**இரத்தபித்தம்** – உதிரம் கெட்டொழுகும் ஒரு நோய்; ஆடாதோடை.
**இரத்தபிந்து** – வயிரக்குற்றவகை; இரத்த விந்து.
**இரத்தபீனசம்** – மூக்கிலிருந்து இரத்தம் காணும் நோய்.
**இரத்தபூடம்** – முள்ளிலவு.
**இரத்தபோளம்** – ஒருவகை மணப்பண்டம்.
**இரத்தம்** – உதிரம்; சிவப்பு; ஈரல்; பவளம்; குங்குமம்; கொம்பரக்கு; தாம்பிரம்.
**இரத்தமடக்கி** – உதிரம் கட்டு மருந்து.
**இரத்தமண்டலம்** – இரத்தம் பரவியிருக்கும் பகுதி; செந்தாமரை.
**இரத்தமண்டலி** – நச்சுப்பாம்பு வகை.
**இரத்தமாரணம்** – காவிக்கல்.
**இரத்தமேகம்** – காண்க: **இரத்தவெட்டை.**
**இரத்தல்** – குறையிரத்தல்; பிச்சை கேட்டல்; வேண்டுதல்.
**இரத்தவடி** – அம்மைநோய்.
**இரத்தவழலை** – நச்சுப்பாம்புவகை.
**இரத்தவள்ளி** – செவ்வள்ளி என்னும் வள்ளிக் கொடிவகை.
**இரத்தவிந்து** – மாணிக்க வகையாகிய குருவிந்தம்.
**இரத்தவிரியன்** – பாம்புவகை.
**இரத்தவீசம்** – மாதுளை.
**இரத்தவுதிரி** – மாட்டு நோய்வகை.
**இரத்தவெட்டை** – இரத்தம் கலந்து மூத்திரம் வெளிப்படும் நோய்வகை.
**இரத்தவோட்டம்** – இரத்தம் உடலெங்கும் செல்லுகை.
**இரத்தாசயம்** – இதயம்.
**இரத்தாட்சி** – அறுபதாண்டுக் கணக்கில் ஐம்பத்தெட்டாம் ஆண்டு.
**இரத்தாதிசாரம்** – சீதபேதிவகை.
**இரத்தாம்பரம்** – செவ்வாடை; மரவகை.
**இரத்தி, இரத்திரி** – இத்தி; மரவகை; இலந்தை.
**இரத்தினகசிதம்** – மணி இழைக்கப்பட்டது.
**இரத்தினகம்பளம், இரத்தினகம்பளி** – சித்திரக் கம்பளம்.
**இரத்தினச்சுருக்கம்** – சில சொற்களால் பெரும் பொருளை விளக்குதல்; அழகுறச் சுருங்கியது.
**இரத்தினசபை** – திருவாலங்காட்டில் நடராசர் எழுந்தருளியிருக்கும் மணியம்பலம்.
**இரத்தினசிரசு** – 393 சிகரங்களையும் 50 மேல் நிலைக் கட்டுகளையுமுடைய கோயில்.
**இரத்தினத்திரயம்** – சமண சமயத்தார் போற்றும் மும்மணிகள்; அவை: நல்லறிவு, நற்காட்சி, நல்லொழுக்கம்.
**இரத்தினதீவம்** – இலங்கை.
**இரத்தினப்பிரத்தம்** – கைலாயத்தின் தாழ்வரை.
**இரத்தினப்பிரபை** – ஏழு நரகத்துள் ஒன்று; மகளிர் அணிவகையில் ஒன்று.
**இரத்தினப்பரீட்சை** – அறுபத்து நான்கு கலையுள் மணிகளின் இயல்பறியும் வித்தை.
**இரத்தினம்** – மணி; அரத்தை.
**இரத்தினமாலை** – மணிவடம்.
**இரத்தினாகரம்** – மணிகளுக்கு இருப்பிடமானது; கடல்; தனுக்கோடிக்கு வடக்கிலுள்ள கடல்.
**இரத்தினி** – பிடிமுழம்; முன்கைப் பேரெலும்பு.
**இரத்துதல்** – காண்க: **இரற்றுதல்.**
**இரத்தை** – சத்திமூர்த்தங்களுள் ஒன்று; மஞ்சிட்டி வேர்.
**இரத்தோற்பலம்** – செங்குவளை; செந்தாமரை.
**இரதகம்** – இத்திமரம்.
**இரதகுளிகை** – காண்க: **இரசகுளிகை.**
**இரதசத்(ப்)தமி** – மாசிமாதத்து வரும் வளர்பிறை ஏழாம் நாள்.
**இரதபதம்** – புறா.
**இரதபந்தம்** – சித்திரகவிவகை, தேர்போல அமையும் பாட்டு.

**இரதபரீட்சை** – தேர் செலுத்தும் கலை, அறுபத்துநான்கு கலையுள் ஒன்று.
**இரதம்** – புணர்ச்சி; தேர்; பல்; சாறு; அன்னரசம்; சுவை; இனிமை; வாயூறு நீர்; வண்டு; பாதரசம்; இரசலிங்கம்; பாவனை; அரைஞாண்; மாமரம்; கால்; உடல்; வஞ்சிமரம்; வாகனம்; எழுதுவகை; அனுராகம்; நீர்; ஏழு தாதுக்களுள் ஒன்று; வலி; நஞ்சு; இத்தி.
**இரதரேணு** – பரமாணு நான்கு கொண்ட நீட்டலளவை.
**இரதன்** – கண்; கிளி.
**இரதனம்** – அரைஞாண்.
**இரதனை** – அரத்தை; நா.
**இரதாங்கம்** – தேர்க்கால்; சக்கரவாகப் புள்.
**இரதாரூடன்** – தேரூர்வோன்; தேர் செலுத்துவோன்.
**இரதி** – இலந்தை; காந்தன்; விருப்பம்; புணர்ச்சி; மன்மதன் மனைவி; பெண்யானை; பித்தளை.
**இரதிக்கிரீடை** – புணர்ச்சி.
**இரதிகன்** – தேரோட்டுவோன்; தேர்க்குரியவன்.
**இரதிகாதலன்** – மன்மதன்.
**இரதித்தல்** – காண்க: **இரசித்தல்.**
**இரதிபதி** – காண்க: **இரதிகாதலன்.**
**இரதோற்சவம்** – தேர்த்திருவிழா.
**இரந்திரம்** – துளை; வெளி; ஜன்மலக்கினம்; இரகசியம்; சுருங்கை.
**இரந்துண்ணி** – பிச்சைக்காரன்.
**இரந்தை** – காண்க: **இலந்தை.**
**இரப்பாளன், இரப்பாளி(ன்)** – பிச்சையெடுப்பவன்; இரவலன்.
**இரப்பு** – வறுமை; பிச்சை; யாசிக்கை.
**இரப்புணி** – காண்க: **இரந்துண்ணி.**
**இரம்பக்கல்** – குருந்தக்கல்.
**இரம்பம்** – கத்தூரி விலங்கு; மரமறுக்கும் வாள்.
**இரம்பிக(ல)ம்** – மிளகு.
**இரம்பை** – இரம்பம்; கத்தூரி விலங்கு; தேவருலகப் பெண்டிருள் ஒருத்தி.
**இரம்மியம்** – மகிழ்ச்சி தருவது; விரும்பத்தக்கது; அழகிது.
**இரமடம்** – பெருங்காயம்.
**இரமணம்** – இன்புறச் செய்கை; இன்பம் விளைப்பது; கழுதை; காமசேட்டை; சுரதவிளையாட்டு.
**இரமணன்** – கணவன்; தலைவன்; மன்மதன்.
**இரமணியம்** – இன்பஞ்செய்வது; சரச விளையாட்டு.
**இரமணீயம்** – இன்பஞ்செய்வது; அழகுள்ளது.
**இரமதி** – காகம்; காமி; காலம்; துறக்கம்; மன்மதன்.
**இரமா** – திருமகள்; இன்பந்தருபவள்.
**இரமாப்பிரியம்** – தாமரை.
**இரமாபதி** – திருமால்.
**இரமித்தல்** – மகிழ்தல்; புணர்தல்.
**இரமியம்** – மனநிறைவு; அழகு.
**இரமியவருடம்** – உலகின் பகுதிகளுள் ஒன்று, ஒன்பான் கண்டத்துள் ஒன்று.
**இரமை** – திருமகள்; செல்வம்; மனைவி.
**இரலை** – கலைமான்; புல்வாய்; துத்தரி என்னும் ஊதுகொம்பு; அசுவினி நாள்.
**இரவச்சம்** – மானந்தீரவரும் இரத்தலுக்கு அஞ்சுகை.
**இரவணம்** – ஒட்டகம்; குயில்; வண்டு; கழுதை கத்துகை; வெண்கலம்; பரிகாசம் பண்ணுதல்; வெப்பம்.
**இரவதம்** – குயில்.
**இரவம்** – ஒலி; இருள்மரம்.
**இரவரசு** – சந்திரன்.
**இரவல்** – யாசகம்; திருப்பித் தருவதாகக் கொண்ட பொருள்.
**இரவலன், இரவாளன்** – பரிசில் விரும்புவோன்; யாசகன்.
**இரவற்குடி** – குடிக் கூலியின்றிக் குடியிருக்கும் குடும்பம்; அடுத்து வாழுங் குடும்பம்.
**இரவற்சோறு** – பிறரைச் சார்ந்து பிழைக்கும் பிழைப்பு; ஒட்டுண்ணிப் பிழைப்பு.
**இரவறிவான்** – சேவற்கோழி.
**இரவன்** – சந்திரன்.
**இரவி** – சூரியன்; மூக்கின் வலத்தொளை; மலை; எருக்கு; வாணிகத் தொழில்.
**இரவிக்கை** – முலைக்கச்சு; மாதர் உடைவகை.
**இரவிகன்னம்** – பூமிக்கும் சூரியனுக்குமுள்ள தொலைவு.
**இரவிகாந்தம்** – சூரியகாந்தக்கல்; தாமரை.
**இரவிகுலம்** – சூரியமரபு.
**இரவிகேந்திரம்** – அணித்தான பாதையில் வரும் சூரியனுக்கும் கோளுக்கும் உள்ள தொலைவு.
**இரவிநாள்** – இரேவதி நாள்.
**இரவிமது** – வெள்ளி.
**இரவிமைந்தர்** – அசுவினிதேவர்.
**இரவில்திரிவோன்** – அரக்கன்.
**இரவிவாரம்** – ஞாயிற்றுக்கிழமை.
**இரவிவிக்கேபம்** – கிரகணத்தில் சூரியன் சாய்வு வழியில் இருத்தல்.
**இரவு** – இராத்திரி; மஞ்சள்; இருள்மரம்; இரத்தல்; இரக்கம்; பன்றிவாகை.
**இரவுக்குறி** – இரவிலே தலைவனும் தலைவியும் சேரும்படி தோழியால் குறிக்கப்படும் இடம்.
**இரவுத்திரம்** – காண்க: **இரௌத்திரம்.**
**இரவுத்திரியம்** – சிவதீக்கை.

**இரவுபகல்** – இராக்காலமும் பகற்காலமும்.
**இரவுரவம்** – காண்க: **இரௌரவம்.**
**இரவெரி** – சோதி விருட்சம், இரவில் ஒளிமயமாக விளங்குகின்ற ஒரு மரவகை.
**இரவேசு** – தளிர் வெற்றிலை.
**இரவை** – நுட்பமான பொருள்; கோதுமைக் குறு நொய்; வயிரம்; துப்பாக்கியில் இடும் ஈயக் குண்டு.
**இரவைக்கு** – இராப்பொழுதுக்கு.
**இரவைசல்லா** – மெல்லிய துணி.
**இரவோன்** – இரவலன்; சந்திரன்.
**இரளி** – கொன்றை.
**இரற்றுதல்** – அரற்றுதல்; பேசலால் எழும் ஒலி; ஒலித்தல்; சத்தமிடுதல்.
**இரா** – இரவு.
**இராக்கடைப்பெண்டிர்** – பொதுமகளிர்.
**இராக்கதம்** – எண்வகை மணங்களுள் ஒன்று, தலைமகளை வலிதிற் கொள்ளும் மணம்.
**இராக்கதன்** – அரக்கன்.
**இராக்கதி** – அரக்கி; சன்னக் கச்சோலம்.
**இராக்கதிர்** – சந்திரன்.
**இராக்கிடைப்பெண்டிர்** – காண்க: **இராக்கடைப் பெண்டிர்.**
**இராக்கினி** – அரசன் மனைவி; அரசி.
**இராக்குருடு** – மாலைக்கண்.
**இராகங்கலத்தல்** – ஒரு பண் மற்றொன்றோடு சேர்தல்.
**இராகதத்துவம்** – அராக தத்துவம்; சுத்தாசுத்த தத்துவங்களுள் ஒன்று.
**இராகப்புள்** – கின்னரப் பறவை.
**இராகம்** – பண்; ஆசை; இராக தத்துவம்; நிறம்; சிவப்பு; கீதம்.
**இராகம்விராகம்** – விருப்பு வெறுப்பு, வேண்டு தல் வேண்டாமை.
**இராகமாலிகை** – ஒரு பாடலில் பல பண்களும் தொடர்ந்துவரப் பாடும் பண்தொகுதி.
**இராகமெடுத்தல்** – ஆலாபனஞ் செய்தல்.
**இராகவம்** – திமிங்கிலத்தை விழுங்கவல்ல பெரிய மீன்.
**இராகவர்த்தனி** – முப்பத்திரண்டாவது மேள கர்த்தா.
**இராகவன்** – இரகு வம்சத்தில் தோன்றியவனான இராமன்.
**இராகவி** – ஆனைநெருஞ்சி.
**இராகவிண்ணாடகம்** – சரக்கொன்றை.
**இராகவிராகம்** – வேண்டுதல் வேண்டாமை.
**இராகவேகம்** – ஆசை மிகுகை.
**இராகாதனம்** – யோகாசனவகை.
**இராகி** – பற்றாசு; கேழ்வரகு.

**இராகினி** – வெற்றிலை.
**இராகு** – ஒன்பது கோள்களுள் ஒன்று; கரும் பாம்பு; கோமேதகம்.
**இராகுகாலம்** – இராகுவுக்குரிய வேளை; ஒவ்வொரு நாளும் மூன்றே முக்கால் நாழிகை யளவு கொண்டுவரும் தீய நேரம்.
**இராகுமண்டலம்** – பூமியின் சாயை.
**இராகூச்சிட்டம்** – வெண்காயவகை.
**இராச்சியபரிபாலனம்** – நாட்டை ஆளுகை; அரசாட்சி.
**இராச்சியபாரம்** – அரசாளும் பொறுப்பு.
**இராச்சியம்** – அரசாளும் நாடு; உலகு; ஆளுகை.
**இராச்சியலட்சுமி** – அரசச் செல்வம்.
**இராச்சொல்லாதது** – ஊசி; வசம்பு; பாம்பு.
**இராச்சொல்லாதவன்** – அம்பட்டன்.
**இராசக்கிருகம்** – அரண்மனை.
**இராசகரம்** – அரண்மனை; அரசாங்கம்.
**இராசகற்பனை** – அரசனின் ஆணை.
**இராசகன்னி** – அரசிளம்பெண், இளவரசி.
**இராசகனி** – எலுமிச்சம்பழம்.
**இராசகாரியம்** – அரசியல்; அரசர்க்குச் செய்யும் ஊழியம்; மேலான செயல்.
**இராசகீயம்** – அரசனுக்குரியது; அரசாங்கத் தொடர்புடையது.
**இராசகீரி** – வெண்கீரி.
**இராசகுஞ்சரம்** – அரசுவா; அரசர் தலைவன்.
**இராசகுமாரன்** – அரசன் புதல்வன்; இளவரசன்.
**இராசகுலம்** – அரச குடும்பம்.
**இராசகேசரி** – சோழ மன்னர்களுள் சிலர் கொண்டிருந்த பட்டப் பெயர்; சோழர் காலத்து அளவு கருவி.
**இராசகோலம்** – அரசன் திருவோலக்க உடை.
**இராசகோழை** – காசநோய்வகை.
**இராசசக்கரம்** – அரசாணை.
**இராசசபை** – அரசவை.
**இராசசம்** – காண்க: **இரசோகுணம்.**
**இராசசாரசம்** – மயில்.
**இராசசிங்கம்** – அரசரேறு.
**இராசசின்னம்** – அரசர் சின்னம்; அரசனுக்குரிய முடி, குடை, முரசு, கொடி முதலிய உறுப்புகள்.
**இராசசூயம்** – வெற்றி வேந்தனால் செய்யப்படும் வேள்வி; தாமரை.
**இராசசேகரன்** – அரசர் தலைவன்.
**இராசசேவை** – அரசனுக்குச் செய்யும் பணி; அரசனை நேரிற்காணல்.
**இராசத்துவம்** – அரசன் தன்மை.
**இராசத்துவாரம்** – அரண்மனைவாயில்; அரசவை.
**இராசதண்டம்(னை)** – அரசனால் விதிக்கப்படும் தண்டனை.

**இராசதந்தம்** – முன்வாய்ப் பல்.
**இராசதந்திரம்** – அரசியல்; அரசியல் நூல்.
**இராசதபுராணம்** – பிரமனைத் துதிக்கும் புராணத் தொகுதி; அவையாவன: பிரமம், பிரமாண்டம், பிரம வைவர்த்தம், மார்க்கண்டேயம், பவிடியம், வாமனம்.
**இராசதம்** – காண்க : **இரசோகுணம்;** அரச பதவி.
**இராசதாலம்** – கமுகு.
**இராசதானம்** – தலைநகர்.
**இராசதானி** – தலைநகர்; மாநிலம்.
**இராசதுரோகம்** – அரசர்க்கு எதிராகச் செய்யும் செயல்.
**இராசநாகம்** – நாகப்பாம்புவகை.
**இராசநீதி** – அரசன் அறநெறி.
**இராசநோக்கம்** – அரசன் மனப்போக்கு; அரசன் கருணை.
**இராசநோக்காடு** – கடைசியான மகப்பேற்று வலி.
**இராசப்பிரதிநிதி** – அரசனுக்குப் பதிலாள்.
**இராசபக்தி** – அரசரிடம் வைக்கும் உண்மை அன்பு.
**இராசபஞ்சகம்** – இராச பயம்.
**இராசபட்டம்** – இராசாதிகாரம்; ஒருவகைத் தலைப்பாகை; முடிசூட்டு.
**இராசபத்திரம்** – அரசனுடைய ஆணை.
**இராசபத்தினி** – அரசி, அரசன் மனைவி.
**இராசபதவி** – அரசனிலை.
**இராசபாட்டை, இராசபாதை** – போக்குவரத்துக்குரிய பெருவழி.
**இராசபாவம்** – அரசத் தன்மை.
**இராசபிளவை** – முதுகிலுண்டாகும் பெரும் புண்.
**இராசபுத்தி** – கூர்த்த அறிவு; தனிச் சிறப்பான அறிவு.
**இராசபுத்திரன்** – அரசன் மகன், கோமகன்.
**இராசபோகம்** – அரசன் நுகர்தற்குரிய இன்பம்; அரசர்க்குரிய பாதுகாவல் வரி.
**இராசமகிஷி** – அரசன் மனைவி.
**இராசமண்டலம்** – அரசர் கூட்டம்.
**இராசமணி** – நெல்வகை.
**இராசமாநகரம்** – அரசன் வாழும் பேரூர்; தலைநகரம்.
**இராசமாநாகம்** – கருவழலைப் பாம்பு.
**இராசமாமந்தம்** – ஒருவகைப் பாம்பு.
**இராசமார்க்கம்** – காண்க: **இராசபாட்டை.**
**இராசமாளிகை** – அரசன் அரண்மனை.
**இராசமானியம்** – அரசனால் விடப்பட்ட இறையிலி நிலம்.
**இராசமுடி** – அரசன் முடி; தெய்வச்சிலைகளுக்குச் சாத்தும் சாயக்கொண்டை.
**இராசமுத்திரை** – அரசன் இலச்சினை, அரசனின் அடையாளக் குறி.
**இராசமோடி** – அரச மிடுக்கு.
**இராசயுகம்** – பாலை.
**இராசயோகம்** – அரசனாவதற்குரிய கோள்நிலை; அரசனுக்குரிய இன்ப வாழ்வு; யோகநிலை வகையுள் ஒன்று.
**இராசராசன்** – மன்னர்மன்னன், பேரரசன், சக்கரவர்த்தி; குபேரன்; இராசராசசோழன்.
**இராசராசேச்சரம்** – இராசராசன் கட்டிய சிவன் கோயில், தஞ்சாவூர்ப் பெரியகோயில்.
**இராசராசேச்சுவரி** – உமை வடிவங்களுள் ஒன்று.
**இராசரிகம்** – அரசாட்சி.
**இராசரிஷி** – அரசனாயிருந்து முனிவனானவன்.
**இராசருகம்** – அகில்; வெள்ளைத் தும்பை.
**இராசலட்சணம்** – அரசனுக்குரிய உடற்குறி.
**இராசலட்சுமி** – எட்டு லட்சுமிகளுள் ஒருத்தி, அரசுரிமையாகிய செல்வம்; அரசருடைய ஆளுகையைத் துலங்கச் செய்பவள்.
**இராசவசித்துவம், இராசவசியம்** – அரசனை வசமாக்கல்.
**இராசவட்டம்** – அரசியற் செய்தி; இராச தோரணை.
**இராசவத்தனம்** – வைடூரியவகை.
**இராசவமிசம்** – அரசர் குலம்.
**இராசவர்க்கம்** – அரச மரபு; அரச குலத்தார்.
**இராசவரிசை** – அரசர்க்குச் செய்யும் சிறப்பு.
**இராசவல்லபன்** – அரசனிடத்துச் செல்வாக்குள்ளவன்.
**இராசவள்ளி** – கொடிவகை; வள்ளிவகை.
**இராசவாகனம்** – அரசன் ஊர்தி; சிவிகை; கோவேறு கழுதை.
**இராசவாய்க்கால்** – தலைமையான நீர்க்கால்.
**இராசவாழை** – குலை ஒன்றுக்கு ஆயிரம் காய்கள் காய்க்கும் வாழைவகை.
**இராசவிசுவாசம்** – அரச பக்தி.
**இராசவிரணம்** – காண்க: **இராசபிளவை.**
**இராசவிருட்சம்** – கொன்றைமரம்.
**இராசவீதி** – அரசர் உலாவருவதற்குரிய பெருந்தெரு.
**இராசவைத்தியம்** – பத்தியம் இல்லாத மருத்துவம்.
**இராசன்** – அரசன்; சந்திரன்; தலைவன்; இந்திரன்; இயக்கன்.
**இராசனை** – வெள்ளைப்பூண்டு.
**இராசா** – அரசன்; ஒரு தெலுங்கச் சாதி.
**இராசாக்கினை** – அரசன் ஆணை; அரச தண்டனை.
**இராசாங்கம்** – அரசுக்குரிய உறுப்புகள்; அரசாட்சி.
**இராசாணி, இராசாத்தி** – அரசி.
**இராசாதனம்** – முருக்கு; முரள்; அரியணை; கிங்கிணிப்பாலை.

**இராசாதிகாரம்** – அரசனுக்குரிய அதிகாரம்.
**இராசாமந்திரி** – ஒரு விளையாட்டு.
**இராசாவர்த்தம்** – காண்க: **இராசவத்தனம்.**
**இராசாளி** – பறவைவகை; வல்லூறு, பைரி; பறவைமாநாகம்.
**இராசாளியார்** – கள்ளர்குலப் பட்டப்பெயருள் ஒன்று.
**இராசான்னம்** – ஒருவகை உயர்ந்த நெல்.
**இராசி** – வரிசை; கூட்டம்; குவியல்; இனம்; மொத்தம்; அதிட்டம்; மேட முதலிய இராசி; சுபாவம்; பொருத்தம்; இராசிக் கணக்கு; சமாதானம்; இராசி 12: மேடம், இடபம், மிதுனம், கற்கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம்.
**இராசிக்கணக்கு** – அசல்தொகை, காலம் ஆகிய வற்றை இராசிமுறையில் பெருக்கியும் வகுத்தும் கணக்கிடும் கணக்குவகை.
**இராசிக்காரன்** – அதிட்டமுள்ளவன், நற்பேறு உடையான்.
**இராசிகட்டுதல்** – தவச விளைவு முன்மதிப் பளவுக்கு வருதல்.
**இராசிகம்** – இயற்கணிதம்; அமிசம்; அரசனால் வருவது; ஓர் இராசி; குவியல்; நரம்பு; வரி.
**இராசிகாணுதல்** – கண்டுமுதற்கணக்குக்கட்டுதல்; காண்க: **இராசிகட்டுதல்.**
**இராசிகூடுதல்** – காண்க: **இராசிகாணுதல்.**
**இராசிகை** – வயல்; இரேகை; ஒழுங்கு; கேழ் வரகு.
**இராசிசக்கரம்** – இராசி மண்டலம்; இராசிகளை எழுதியடைத்த சக்கரம்.
**இராசிநாமா** – உடன்படிக்கைப் பத்திரம்; உத்தி யோகத்தினின்று விலகிக் கொள்வதற்காக எழுதும் பத்திரம்.
**இராசிப்படுதல்** – மனம்பொருந்துதல்.
**இராசிப்பணம்** – தனித்தனி எண்ணாமல் மொத்த அளவில் எண்ணும் பணம்.
**இராசிப்பிரிவு** – கோள்கள் இராசியைக் கடக்கை.
**இராசிப்பொருத்தம்** – திருமணப் பொருத்தம் பத்தனுள் ஒன்று.
**இராசிப்பொன்** – கலப்பற்ற பொன்.
**இராசிபண்ணுதல்** – சமாதானம் செய்தல்.
**இராசிபுடம்** – இராசிகளில் கோள் நிற்கும் நிலையைச் சரிவரப் பார்க்கை.
**இராசிமண்டலம்** – கோள்கள் செல்லும் வீதி.
**இராசியடி** – பொலியடித் தவசம்; அளந்த பின் கிடக்கும் களநெல்.
**இராசியத்தானம்** – மறைவிடம்.
**இராசியதிபதிப்பொருத்தம்** – திருமணப் பொருத் தம் பத்தனுள் ஒன்று.
**இராசியம்** – மறைவு; பெண்குறி; தாமரை.
**இராசியளத்தல்** – குவித்த தவசத்தை அளத்தல்.
**இராசியெழுத்து** – குறியீட்டெழுத்துவகை.
**இராசிலம்** – சாரைப்பாம்பு.
**இராசிவட்டம்** – காண்க: **இராசிமண்டலம்.**
**இராசீகம்** – அரசனால் வருவது.
**இராசீவம்** – தாமரை; வரைக்கெண்டை; மான் வகை.
**இராசை** – திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சங்கரநயினார்கோயில் என்னும் தலம்.
**இராசோத்துங்கன்** – அரசருள் சிறந்தவன்.
**இராட்சச** – அறுபதாண்டுக் கணக்கில் நாற்பத் தொன்பதாம் ஆண்டு.
**இராட்சசம்** – காண்க: **இராக்கதம்.**
**இராட்சசன்** – அரக்கன்.
**இராட்டிரம்** – நாடு; நகரிலுள்ளமக்கள்; உற்பாதம்.
**இராட்டினஞ்சுற்றுதல்** – நூல் நூற்றல்; சுழல் தேரைச் சுற்றுதல்.
**இராட்டினத்தொட்டி** – இராட்டினம்போலச் சுழலும் தொட்டி.
**இராட்டினம்** – நூற்கும் பொறி; நீரிறைக்கும் கருவி; நூல் சுற்றும் கருவி; பஞ்சரைக்கும் கருவி; ஏறி விளையாடும் சுழல்தேர்.
**இராட்டினவாழை** – வாழைவகை.
**இராட்டினவூஞ்சல்** – சுழலும் ஊசல்.
**இராட்டு** – இராட்டினம்; தேன்கூடு.
**இராடம்** – வெண்காயம்; கழுதை; இலாடம்; பெருங்காயம்.
**இராணம்** – இலை; மயிலின் தோகை.
**இராணி** – அரசி.
**இராணிவாசம்** – அரசியின் அந்தப்புரம்.
**இராணுவம்** – படை.
**இராணுவமோடி** – அணிவகுப்பு.
**இராத்திரி** – இரவு; மஞ்சள்.
**இராத்திரிகாசம்** – வெள்ளாம்பல்.
**இராத்திரிவேதம்** – சேவல்.
**இராதம்** – கடைக்கொள்ளி.
**இராதாரி** – சங்கத்தின் அனுமதிச் சீட்டு.
**இராதினி** – சல்லகிமரம்; ஓர் ஆறு; வச்சிரப் படை; மின்னல்; இடி.
**இராதை** – கண்ணன் காதலித்த கோபிகைகளுள் ஒருத்தி; விசாகம்; விஷ்ணுகிராந்தி; நெல்லி; மின்னல்; கன்னனின் செவிலித்தாய்.
**இராந்து** – இடுப்பு.
**இராந்துண்டு** – இலந்தை.
**இராப்பண்** – இராக்காலத்தில் பாடுதற்குரிய பண்கள்.
**இராப்பத்து** - திருமால் கோயில்களில் ஏகாதசியை ஒட்டி இரவில் நடைபெறும் சாற்றுமுறை விழா.

**இராப்பாடி** – விடியுமுன் இரவில் வீட்டுக்கு வீடு வந்து பாடுபவன்.
**இராப்பாடிக்குருவி** – இரவில் பாடும் குருவிவகை.
**இராப்பாலை** – மரவகை.
**இராப்பிச்சை** – சந்திப்பிச்சை; முன்னிரவில் வரும் பிச்சைக்காரன்.
**இராப்பிரமாணம்** – கோளின் மறைவிலிருந்து உதயம் வரையுள்ள பொழுதின் அளவு.
**இராப்பூ** – இரவில் மலரும் மலர்கள்; ஆம்பல் முதலியன.
**இராப்போசனம்** – இராச் சாப்பாடு; கிறித்தவ சபைச் சடங்குகளுள் ஒன்று.
**இராமக்கன், இராமகன்** – சிச்சிலுப்பை வகை.
**இராமக்கிரி** – குறிஞ்சிப் பண்வகை.
**இராமக்கோவை** – கற்கோவை என்னும் கொடி வகை.
**இராமக்கோழி** – நீர்க்கோழி.
**இராமகவி** – ஒரு பண்.
**இராமசீத்தா** – மரவகை.
**இராமசேது** – இராமர் அணை.
**இராமடங்கா** – ஒருவகைப் பொன் நாணயம்.
**இராமடம்** – பெருங்காயம்.
**இராமதுளசி** – துளசிவகை.
**இராமதூதன்** – அனுமன்.
**இராமநவமி** – சித்திரை மாதத்து வளர்பிறையில் வரும் நவமி திதி; இராமன் பிறந்த நாள்.
**இராமநாதன்** – இராமேச்சரத்தில் இராமனால் வழிபடப்பட்ட லிங்கம்.
**இராமநாதன்சம்பா** – சம்பா நெல்வகை.
**இராமப்பிரியா** – ஒரு பண்.
**இராமபாணம்** – இராமர் அம்பு; ஏட்டுச் சுவடிகளைத் துளைத்துக் கெடுக்கும் ஒரு பூச்சி; பாச்சைவகை; மல்லிகைவகை; ஒருவகை மருந்து.
**இராமம்** – அழகு; விரும்பத்தக்கது; வெண்மான்; வெண்மை; கருமை.
**இராமமுழியன்** – கடல்மீன்வகை.
**இராமராச்சியம்** – இராமனுடைய அரசாங்கம் போன்ற சிறந்த அரசாங்கம்; நல்லரசாட்சி.
**இராமலிங்கம்** – இராமனால் வழிபடப்பட்ட இராமேச்சரத்துச் சிவபிரான்; ஆறு படி கொண்ட மரக்கால்.
**இராமவாசகம்** – தவறாத வாக்கு.
**இராமன்** – சந்திரன்; பரசுராமன்; தசரதராமன்; பலராமன்.
**இராமன்சம்பா** – சம்பாவகை.
**இராமாயணம்** – இதிகாசங்களுள் ஒன்று; திருமால் அவதாரமான இராமனது வரலாற்றைக் கூறும் நூல்.
**இராமாலை** – கருக்கல் நேரம்; இருளடைந்த மாலை நேரம்.
**இராமாவதாரம்** – தசரத ராமனாக அவதரித்த திருமால் பிறப்பு; கம்பராமாயணம்.
**இராமாறு** – இராத்தோறும்.
**இராமானம்** – தினந்தோறும் உள்ள இரவின் அளவு; இரவு.
**இராமானுசகூடம்** – வைணவ வழிப்போக்கர்கள் தங்கும் சாவடி.
**இராமானுச தரிசனம்** – விசிஷ்டாத்துவைதம், இராமானுசரால் நிறுவப்பட்ட தத்துவம்.
**இராமானுசம்** – வைணவர் பயன்படுத்தும் ஒரு வகைச் செப்புப் பாத்திரம்.
**இராமானுசீயர்** – இராமனுசர் மதத்தைப் பின் பற்றுவோர், ஸ்ரீவைணவர்.
**இராமிலன்** – கணவன்; மன்மதன்.
**இராமேசுரம் வேர்** – சாயவேர்.
**இராமேசுவரம்** – இராமனால் நிறுவப்பட்ட ஒரு சிவத்தலம்.
**இராமை** – மன்மதநூல் கற்றவள்; சிறுவழுதலை.
**இராயசக்காரன்** – எழுத்து வேலைக்காரன்; எழுத்தன்.
**இராயசம்** – எழுத்து வேலை; எழுத்து வேலைக்காரன்; ஆணைப் பத்திரம்.
**இராயணி** – அரசி.
**இராயர்** – விசயநகர அரசர் பட்டப்பெயர்; மகாராட்டிர மாத்துவப் பிராமணர் பட்டப்பெயர்.
**இராயன்** – அரசன்; பழைய நாணயவகை.
**இராயிரம்** – இரண்டாயிரம்.
**இராவடம்** – அசோகு; அராவுந்தொழில்.
**இராவடி** – ஏலம்; பேரேலம்.
**இராவண சன்னியாசி** – தவ வடிவிலிருந்து அவச் செயல் செய்பவன்; மோசடிக்காரன்.
**இராவணம்** – விளக்கு; அழுகை.
**இராவணன்** – கடவுள்; இலங்கையை ஆண்ட மன்னன்.
**இராவணன் புல், இராவணன் மீசை, இராவணன் மோவாய்ப்புல்** – கடற்கரையில் உள்ள ஒருவகைக் கூரிய புல்.
**இராவணாகாரம்** – பயங்கர வடிவம்.
**இராவணாசுரம்** – வீணைவகை.
**இராவணாத்தம்** – ஒருவகைச் சிறு வீணை.
**இராவணி** – இராவணன் மகனான இந்திரசித்து.
**இராவதம்** – சூரியன் குதிரை; மேகலோகம்.
**இராவதி** – ஒரு கொடி; ஓர் ஆறு; யமபுரம்.
**இராவிரேகு** – தலையணிகளுள் ஒன்று; அரசிலைச் சுட்டி; அரைமூடி.
**இராவுத்தராயன்** – குதிரைச் சேவகரின் தலைவன்.
**இராவுத்தன்** – குதிரை வீரன்; தமிழ் முகம்மதியருள் ஒரு பிரிவினரின் பட்டப்பெயர்.

**இராவுத்தாங்கம்** – ஒருவகைக் கொண்டாட்டம்.
**இராவுதல்** – அராவுதல்.
**இராவைக்கு** – காண்க: இரவைக்கு.
**இராவோன்** – சந்திரன்.
**இரிக்கி** – பெருங்கொடிவகை.
**இரிகம்** – இதயம், மனம்.
**இரிசல்** – பிளவு; மனமுறிவு.
**இரிசால்** – காண்க : இருசால்.
**இரிசியா** – பூனைக்காலி.
**இரிஞ்சி** – மகிழ்.
**இரிஞன்** – பகைவன்.
**இரிட்டம்** – நன்மை; வாள்; தீமை; பாவம்.
**இரிணம்** – உவர்நிலம்.
**இரித்தல்** – தோற்றோடச் செய்தல்; கெடுத்தல்; ஓட்டுதல்.
**இரித்தை** – சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி என்னும் திதிகள்; நாழிகை.
**இரிதல்** – கெடுதல்; ஓடுதல்; விலகுதல்; வடிதல்; அஞ்சுதல்.
**இரிப்பு** – அச்சுறுத்தல்; ஓட்டுதல்; தோல்வியுறச் செய்தல்.
**இரிபு** – அச்சம்; ஓடுதல்; தோல்வி; பகை; பகைவன்; வெறுப்பு.
**இரிபேரம்** – வெட்டிவேர்.
**இரிமான்** – எலிவகை.
**இரியல்** – அச்சத்தால் நிலைகெடுகை; விட்டுப் போதல்; விரைந்து செல்கை; அழுகை.
**இரியல்போக்குதல்** – சாய்ந்துகொடுத்தல்.
**இரியல்போதல்** – தோற்றோடுதல்.
**இரீதி** – பித்தளை; இயற்கைக் குணம்; இரும்புக் கறை; எல்லை; கிட்டம்; நாட்டு வழக்கம்; நீர் பொசிந்தொழுகல்; பாரம்பரியமான வழக்கம்; பித்தளைப் பஸ்பம்.
**இரு** – பெரிய; கரிய; இரண்டு.
**இருக்கணை** – சித்திரவேலைக்குதவும் மரவகை.
**இருக்கம்** – நட்சத்திரம்; கரடி; இராசி.
**இருக்கமாலி** – 766 முழ அகலமும் உயரமும் உள்ளதாய் 766 சிகரங்களோடு 96 மேனிலைக் கட்டுகள் கொண்ட கோயில்.
**இருக்கன்** – இருக்குவேதமுணர்ந்தவன்; பிரமன்.
**இருக்காழி** – இரண்டு விதைகளையுடைய காய்.
**இருக்கு** – வேதமந்திரம்; இருக்குவேதம்.
**இருக்குக்குறள்** – சிறிய பாவகை.
**இருக்குகை, இருக்குதல்** – இருத்தல்.
**இருக்குவேதம்** – முதல் வேதம்.
**இருக்கை** – உட்கார்ந்திருக்கை; ஆசனம்; இருப்பிடம்; குடியிருப்பு; கோள்கள் இருக்கும் இராசி; ஊர்; கோயில்; அரசர் போர்புரியக் காலம் கருதியிருக்கும் இருப்பு.
**இருகண்** – ஊனக்கண் ஞானக்கண்.
**இருகரையன்** – இரண்டு நோக்குள்ளவன்.
**இருகால்** – அரை; இருமுறை; இரண்டு பாதம், கவறாட்டத்தில் குறித்த ஓர் எண்.
**இருகுரங்கின்கை** – முசுமுசுக்கை.
**இருகுறள் நேரிசைவெண்பா** – இரண்டு குறட்பாக்களைக் கொண்ட நேரிசைவெண்பாவகை.
**இருகை** – இரண்டு கைகள்; இருபக்கம்.
**இருகோட்டறுவை** – முன்னும் பின்னும் தொங்கலாக விடும் துகில்.
**இருங்கரம்** – பதக்கு.
**இருசகம்** – மாதுளை.
**இருசாதி** – கலப்புச் சாதி.
**இருசால்** – தண்டற்பணம் செலுத்துகை; கருவூலத்துக்கு அனுப்பும் பணம்.
**இருசி** – பூப்படையும் தன்மையில்லாப் பெண்; ஒரு பெண்பிசாசு.
**இருசீர்ப்பாணி** – இரட்டைத் தாளம்.
**இருசு** – நேர்மை; வண்டியச்சு; மூங்கில்.
**இருசுகந்தபூண்டு** – மருக்கொழுந்து.
**இருசுடர்** – சந்திரசூரியர்.
**இருசுழி** – இரட்டைச்சுழி.
**இருஞ்சிறை** – காவல்; மதில்; நரகம்.
**இருட்கண்டம்** – கழுத்தணிவகை.
**இருட்கண்டர்** – சிவபெருமான்.
**இருட்சரன்** – இருட்டில் திரிவோன்; இராக்கதன்.
**இருட்சி** – இருள்; இருட்டு; மயக்கம்.
**இருட்டு** – இருள்; அறியாமை.
**இருட்டுதல்** – இருளடைதல்; மந்தாரமிடுதல்.
**இருட்பகை, இருட்பகைவன்** – சூரியன்.
**இருட்படலம், இருட்பிழம்பு** – இருளின் தொகுதி.
**இருட்பூ** – ஒருவகை மரம்.
**இருடி** – ஆந்தை; முனிவன்; வேதம்.
**இருடி(டீ)கம்** – இந்திரியம்.
**இருடி(டீ)கேசன்** – திருமால்.
**இருண்டி** – சண்பகம்.
**இருண்மதி** – தேய்பிறைச் சந்திரன்; அமாவாசை.
**இருண்மலம்** – ஆணவமலம்.
**இருண்மை** – இருளுடைமை; இருண்டிருக்கும் தன்மை.
**இருணபாதகன்** – கடன் தீர்க்காமல் மோசம் செய்பவன்.
**இருணம்** – உவர்நிலம்; கடன்; கழிக்கப்படும் எண்; கோட்டை; நிலம்; நீர்.
**இருணாள்** – இருள் நாள்; தேய்பிறைப் பக்கத்து நாள்.
**இருணி** – பன்றி.
**இருணிலம்** – நரகம்.

**இருத்தல்** – உளதாதல்; நிலைபெறுதல்; உட்காருதல்; உள்ளிறங்குதல்; உயிர் வாழ்தல்; அணியமாயிருத்தல்; உத்தேசித்தல்; ஒரு துணை வினை; முல்லை உரிப்பொருள்.
**இருத்தி** – சித்தி; வட்டி.
**இருத்திப்பேசுதல்** – அழுத்திச் சொல்லுதல்.
**இருத்திப்போடுதல்** – நிலைக்கச்செய்தல்; அசையாமல் செய்தல்.
**இருத்தினன்** – இருத்துவிக்கு; யாக புரோகிதன், வேள்வி செய்து வைப்பவன்.
**இருத்து** – வயிரக்குற்றங்களுள் ஒன்று; நிலையான பொருள்; அமுக்குகை.
**இருத்துதல்** – உட்காரச் செய்தல்; தாமதிக்கச் செய்தல்; அழுத்துதல்; அடித்து உட்செலுத்துதல்; நிலைபெறச் செய்தல்; கீழிறக்குதல்.
**இருத்துவிக்கு** – காண்க: **இருத்தினன்.**
**இருத்தை** – சேங்கொட்டை; சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி எனப்படும் நான்கு, ஒன்பது, பதினான்காம் பக்கங்கள்; இருபத்து நான்கு நிமிடங் கொண்ட ஒரு நாழிகை; நாழிகை வட்டில்.
**இருதம்** – காண்க: **உஞ்சவிருத்தி;** நீர்; மெய்ம்மை.
**இருதயகமலம்** – உள்ளத்தாமரை.
**இருதயத்துடிப்பு** – மார்பு படபடவென்று அடித்துக்கொள்ளுகை.
**இருதயம்** – இதயம்; மனம்; நேசத்துக்கு உறைவிடமான இடம்; கருத்து; நடு.
**இருதலை** – இருமுனை.
**இருதலைக்கபடம்** – விலாங்குமீன்.
**இருதலைக்கொள்ளி** – இரு முனையிலும் தீயுள்ள கட்டை; எப்பக்கத்தும் துன்பஞ் செய்வது.
**இருதலை ஞாங்கர்** – இருதலையும் கூருள்ள முருகன் வேல்.
**இருதலைநோய்** – எழுஞாயிறு என்னும் நோய்.
**இருதலைப் பகரங்கள்** – எழுத்துகளை உள்ளடக்கி நிற்கும் [ ] என்னும் குறியீடுகள்.
**இருதலைப்பாம்பு, இருதலைப்புடையன்** – இருதலை மணியன், மண்ணு(ணி)ளிப் பாம்பு.
**இருதலைப்புள்** – இரண்டு தலைகளுள்ள பறவை.
**இருதலைமணியம்** – நண்பன்போல் நடித்து இருவரிடையே கலகம் விளைவிக்கும் தொழில்.
**இருதலைமணியன்** – பாம்பில் ஒருவகை; கோள் சொல்லுவோன்.
**இருதலை மாணிக்கம்** – ஒரு மந்திரம்; முத்தி பஞ்சாட்சரம்.
**இருதலைமூரி** – காண்க: **இருதலைப்பாம்பு.**
**இருதலைவிரியன்** – பாம்புவகை.
**இருதாரைக் கத்தி** – இருபக்கமும் கூர்மையுள்ள கத்தி.
**இருதிணை** – உயர்திணை அஃறிணை; இயங்குதிணை நிலைத்திணை.
**இருது** – ருது; இரண்டு மாத பருவம்; மகளிர் பூப்பு; முதற் பூப்பு; தக்க காலம்; கடவுளின் முத்தொழில்; பிரபை.
**இருதுகாலம்** – மாதவிடாய்க் காலம்; கருத்தரிக்கும் காலம்.
**இருதுசங்கமனம்** – பூப்புற்ற நாளில் முதன் முதலாகத் தலைவன் தலைவியரைக் கூட்டுதற்குச் செய்யுஞ் சடங்கு.
**இருதுசந்தி** – இரண்டு பருவங்கள் சந்திக்கும் காலம்.
**இருதுசாந்தி** – பூப்புற்ற பெண்ணுக்குத் தீங்கு நேரிடாதபடி செய்யும் சடங்கு; சோபன கலியாணம்; சாந்திக் கலியாணம்.
**இருதுநுகர்பு** – பருவங்கட்குரிய அனுபவம்.
**இருதுமதி** – பூப்படைந்த பெண், கருத்தரித்தற்குரிய நிலையிலிருப்பவள்.
**இருதுவலி** – இருதுகாலகுன்மம் என்னும் நோய்.
**இருதுவாதல்** – பெண் பூப்படைதல்.
**இருந்த திருக்கோலம்** – திருமாலின் வீற்றிருக்கும் இருப்பு.
**இருந்ததேகுடியாக** – எல்லாருமாக.
**இருந்தாற்போல்** – திடீரென்று.
**இருந்தில்** – காண்க: **இருந்தை.**
**இருந்து** – காண்க: **இருந்தை;** ஐந்தாம் வேற்றுமைச் சொல்லுருபு.
**இருந்துபோதல்** – செயலறுதல்; கீழே அழுந்துதல்; விலைபோகாது தங்குதல்.
**இருந்தும்** – ஆகவும்.
**இருந்தேத்துவார்** – அரசனை உட்கார்ந்தே புகழ்வார், மாகதர்.
**இருந்தை** – கரி.
**இருநடுவாதல்** – இடைமுரிதல்.
**இருநா** – பிளவுபட்ட நாக்கையுடையது; உடும்பு; பாம்பு.
**இருநிதி** – சங்கநிதி பதுமநிதி.
**இருநிதிக்கிழவன், இருநிதிக்கோன்** – சங்கநிதி பதுமநிதிக்கு உரியவன், குபேரன்.
**இருநியமம்** – இருவேறு கடைகள்; அல்லங்காடி நாளங்காடி.
**இருநிலம்** – பெரிய பூமி.
**இருநிறமணிக்கல்** – இரத்தினவகை.
**இருநினைவு** – இரண்டுபட்ட எண்ணம்.
**இருநீர்** – பெருநீர்ப்பரப்பு, கடல்.
**இருப்பணிச்சட்டம்** – வண்டியோட்டுவோன் இருத்தற்குரிய முகப்புச் சட்டம்.
**இருப்பவல்** – ஒரு மருந்துப் பூண்டு.
**இருப்பன** – நிலைத்திணைப் பொருள்கள்.
**இருப்பாணி** – இரும்பினால் செய்த ஆணி.

**இருப்பிடம்** – வாழும் இடம்; இருக்கை; பிருட்டம்.

**இருப்பு** – இருக்கை; மலவாய்; இருப்பிடம்; குடியிருப்பு; நிலை; கையிருப்பு; பொருண்முதல்.

**இருப்புக்கச்சை** – வீரர் அணியும் இருப்புடை.

**இருப்புக்கட்டி** – வரிவகை.

**இருப்புக்கட்டை** – சாவியின் தண்டு; சுத்தியல்.

**இருப்புக்கம்பை** – வண்டி ஓட்டுபவனுக்கு வண்டியின்முன் அமைக்கப்பட்ட இருக்கை.

**இருப்புக்காய்வேளை** – இரும்புக்காய்வேளை என்னும் செடி.

**இருப்புக்கிட்டம்** – இரும்பு உருகிய கட்டி.

**இருப்புக்கொல்லி** – சிவனார்வேம்பு.

**இருப்புக்கோல்** – நாராசம்; அறுவை மருத்துவனின் கருவியுள் ஒன்று.

**இருப்புச்சட்டம்** – காண்க: **இருப்பணிச்சட்டம்.**

**இருப்புச்சலாகை** – இரும்பினால் ஆன நீண்ட கோல்.

**இருப்புச்சிட்டம்** – காண்க: **இருப்புக்கிட்டம்.**

**இருப்புச்சில்** – சிறுவர் விளையாட்டுக் கருவி.

**இருப்புச்சீரா,**
**இருப்புச்சுவடு** } – இரும்பினாலான சட்டை.

**இருப்புச்சுற்று** – இரும்புப் பூண்.

**இருப்புத்தாள்** – இருப்புக்கோல்.

**இருப்புத்திட்டம்** – செலவு நீக்கி மீதியுள்ள தொகை.

**இருப்புநகம்** – வெற்றிலை கிள்ளும் கருவி.

**இருப்புநாராசம்** – ஓர் இரும்பு ஆயுதம்; ஓலையில் கோக்கப்படும் இருப்புக்கோல்.

**இருப்புநெஞ்சு** – இரக்கமில்லாத நெஞ்சு, வன்மனம்.

**இருப்புப்பத்திரம்** – இரும்புத் தகடு.

**இருப்புப்பாதை** – இரயில் பாதை, தண்டவாள வழி.

**இருப்புப்பாரை** – குழி தோண்டுங் கருவி.

**இருப்புப்பாளம்** – இரும்புக்கட்டி.

**இருப்புமணல்** – இரும்பு கலந்த மண்.

**இருப்புமுள்** – தாறு; யானை அல்லது குதிரையைக் குத்தும் கோல்.

**இருப்புமுறி** – செடிவகை.

**இருப்புயிர்** – நரகர் உயிர்.

**இருப்புலக்கை** – இரும்பாலான உலக்கை.

**இருப்புலி** – துவரை.

**இருப்பூறல்** – இரும்புக் கறை.

**இருப்பூறற்பணம்** – கலப்பு வெள்ளிநாணயம்.

**இருப்பெழு** – உழலை; குறுக்காக இடும் இரும்புக் கம்பி.

**இருப்பை** – இலுப்பைமரம்.

**இருப்பைப்பூச்சம்பா** – நெல்வகை.

**இருபது,**
**இருப∴து** } – இரண்டு பத்து.

**இருபன்னியம்** – சேங்கொட்டை.

**இருபால்** – இருமை; இம்மை மறுமை; இரண்டு பக்கம்.

**இருபாவிருப∴து** – பிரபந்தவகை, வெண்பா அகவல் மாறிமாறி இருபது பாடல் அந்தாதியாய் வருவது; மெய்கண்ட சாத்திரத்துள் ஒன்று.

**இருபான்** – இருபது.

**இருபிறப்பாளன்** – பார்ப்பனன்; உபநயனத்திற்கு முன் ஒரு பிறப்பும் பின் ஒரு பிறப்புமாகவுள்ளவன்; சந்திரன்; சுக்கிரன்.

**இருபிறப்பு** – இரண்டு வகையான பிறப்பு; பல்; பார்ப்பனர்; சந்திரன்; பறவை.

**இருபிறவி** – இருசாதி சேர்ந்து பிறக்கும் உயிரினம்.

**இருபுட்சன்** – இடியேறு; இந்திரன்; துறக்கம்.

**இருபுட்சி** – இந்திரன்.

**இருபுடைமெய்க்காட்டு** – ஒன்றே இருவேறு வகையாகத் தோற்றுவது.

**இருபுரியாதல்** – மாறுபாடாதல்.

**இருபுலன்** – மலசலங்கழிநிலை.

**இருபுறவசை** – வசைபோன்ற வாழ்த்து.

**இருபுறவாழ்த்து** – வாழ்த்துப்போன்ற வசை.

**இருபுனல்** – கீழ்நீர் மேல்நீர்கள்.

**இருபூ** – இருபோகம், ஆண்டுக்கு இருமுறை பெறும் விளைச்சல்.

**இருபூலை** – பூலா; வெள்ளைப் பூலாஞ்சி.

**இருபெயரொட்டு** – பொதுவும் சிறப்புமாக வரும் இரு பெயர்கள் 'ஆகிய' என்னும் பண்புருபு இடையே தொக்குநிற்ப இணைந்து வருவது.

**இருபேருரு** – இரு வேறு வடிவம் ஒருங்கிணைந்து காண்பது; குதிரை முகமும் ஆள் உடலுங் கொண்ட சூரன்; நரசிங்கன்; ஆண்டலைப் புள்; மாதொருகூறன்.

**இருபொருள்** – கல்வியும் செல்வமும்; வெவ்வேறு வகையான இரண்டு கருத்து.

**இருபோகம்** – இருமுறை விளைவு; நிலமுடையோனுக்கும் குடிகளுக்கும் உரிய பங்கு.

**இருபோது** – காலை மாலைகள்.

**இரும்** – இரும‌ல்; பெரிய; கரிய.

**இரும்ப(பி)லி** – செடிவகைகளுள் ஒன்று.

**இரும்பன்** – அகமெலி.

**இரும்பாலை** – பாலை மரவகை; இரும்புத் தொழிற்சாலை.

**இரும்பினீர்மை** – இழிந்தநிலை.

**இரும்பு** – கரும்பொன்; ஆயுதம்; பொன்; செங்காந்தள்; கிம்புரி; கடிவாளம்.

**இரும்புக்காய்வேளை** – வேளைவகை.

**இரும்புக்கொல்லன்** – கருங்கொல்லன்.

**இரும்புச்சலாகை** – அறுவைச் சிகிச்சைக் கருவி வகை; இருப்பு நாராசம்.

**இரும்புத்துப்பு, இரும்புத்துரு** – மண்டூரம்; இருப்புக்கிட்டம்.
**இரும்புப்பெட்டி** – உருக்கால் அமைந்த பேழை.
**இரும்புப் பொடி** – அரப்பொடி.
**இரும்புயிர்** – நரகருயிர்.
**இரும்புலி** – ஒருவகைச் செடி; துவரை.
**இரும்புள்** – மகன்றில் பறவை.
**இரும்புளி** – மரவகை.
**இரும்பை** – காண்க: இருப்பை; குடம்; பாம்பு.
**இரும்பொறை** – மிகுந்த பொறுமை; சேரர் பட்டப் பெயர்களுள் ஒன்று.
**இருமடங்கு** – இரட்டித்த அளவு.
**இருமடி** – இருமடங்கு; இருவேறு முறையில் மாறி வருகை.
**இருமடியாகுபெயர்** – ஆகுபெயர்வகை; 'கார்' என்னும் கருமையின் பெயர் முதலில் மேகத்தையும், பின் அம் மேகம் மழை பொழியும் கார் காலத்தையும் உணர்த்துதல் போல்வது.
**இருமடியேவல்** - ஈரேவல்; பிறவினையின்மேற் பிறவினை; 'கற்பிப்பி' என்றாற்போல வருவன.
**இருமரபு** – தாய்வழி தந்தை வழிகள்.
**இருமருந்து** – சோறும் தண்ணீரும்.
**இருமல்** – கக்கல்; காசம்; ஆட்டு நோய்வகை.
**இருமனப்பெண்டிர்** – பரத்தையர்.
**இருமனம்** – வஞ்சகம்; துணிபின்மை.
**இருமா** – பத்தில் ஒரு பங்கு.
**இருமாவரை** – அரைக்கால், எட்டில் ஒரு பங்கு.
**இருமான்** – எலிவகை.
**இருமிமலைத்தகி** – பூனைக்கண் குங்கிலியம்.
**இருமு** – இருமல்.
**இருமுதல்** – கக்குதல்.
**இருமுதுகுரவர், இருமுதுமக்கள்** – பெற்றோர்.
**இருமுற்றிரட்டை** – ஒரு செய்யுளில் ஓரடி முற்றெதுகையாய் மற்றையடி மற்றொரு முற்றெதுகையாய் வருவது.
**இருமுறி** – இருப்புமுறி என்னும் செடி.
**இருமை** – பெருமை; கருமை; இருதன்மை; இருபொருள்; இம்மை மறுமைகள்.
**இருலிங்கவட்டி** – சாதிலிங்கம்.
**இருவகை அறம்** – இல்லறம் துறவறம்.
**இருவகை ஏது** – ஞாபகஏது காரகஏது.
**இருவகைக் கூத்து** – சாந்தி விநோதம்.
**இருவகைத்தோற்றம்** – இயங்கும்பொருள் இயங்காப் பொருள், சரம் அசரம்.
**இருவகைப்பொருவு** – உறழ்பொருவு உவமைப் பொருவு.
**இருவகைப்பொருள்** – கல்விப்பொருள் செல்வப் பொருள்.
**இருவணைக்கூட்டை** – வண்டியின் முகவணை.
**இருவயிற்பற்று** – அகப்பற்று புறப்பற்று.
**இருவருந்தபுநிலை** – எயிலின் அகத்தும் புறத்தும் நின்ற வேந்தரிருவரும் பொருது வீழ்ந்தமை கூறும் புறத்துறை.
**இருவல் நொரு(று)வல்** – இடிந்தும் இடியாதது; நன்றாக மெல்லப்படாத உணவு.
**இருவாட்சி** – கருமுகைச் செடி.
**இருவாட்டித்தரை** – மணலும் களியுமான நிலம்.
**இருவாடி** – காண்க: இருவாட்சி.
**இருவாம்** – நாமிருவரும்.
**இருவாய்க்குருவி** – ஒருவகை மலைப்பறவை.
**இருவாய்ச்சி** – காண்க: இருவாட்சி.
**இருவாரம்** – மேல்வாரமும் குடிவாரமும்.
**இருவி** – தினை முதலியவற்றின் அரிதாள்; வச்சநாபி என்னும் நச்சுப்பூண்டு.
**இருவிக்காந்தம்** – ஒரு நச்சு மூலிகை.
**இருவில்** – கரிய ஒளி.
**இருவிள** – பனையோலை; வேணாட்டகத்து ஓர் ஊர்; கருவூரினகத்து ஒரு சேரி.
**இருவினை** – நல்வினை தீவினைகள்.
**இருவினையொப்பு** – புண்ணிய பாவங்களை ஒரு தன்மையாகச் செய்துவிடுகை.
**இருவீடு** – ஒருவகை மரம்.
**இருவுதல்** – இருக்கச்செய்தல்.
**இருவேம்** – இருவராகிய நாம்.
**இருவேரி(லி)** – வெட்டிவேர்.
**இருவேல்** – பர்மா நாட்டு மரவகை.
**இருள்** – அந்தகாரம்; கறுப்பு; மயக்கம்; அறியாமை; துன்பம்; நரகவிசேடம்; பிறப்பு; குற்றம்; மரகதக்குற்றம் எட்டனுள் ஒன்றாகிய கருகல்; மலம்; யானை; இருவேல்; இருள் மரம்.
**இருள்(ளு)தல்** – ஒளிமங்குதல்; கறுப்பாதல்; அறியாமை கொள்ளுதல்.
**இருள்பாலை** – ஏழிலைப் பாலை.
**இருள்மரம்** – ஒருவகைப் பெரிய மரம்.
**இருள்வட்டம்** – எழுநரகத்துள் ஒன்று.
**இருள்வரை** – கிரௌஞ்சமலை.
**இருள்வலி** – சூரியன்.
**இருள்வாசி** – காண்க: இருவாட்சி.
**இருள்வீடு** – நூக்கமரம்; சோதிவிருட்சம்.
**இருள்வேல்** – காண்க: இருவேல்.
**இருளடித்தல்** – இருளால் தீங்குண்டாதல்; வெளிப்படாது மறைத்தல்.
**இருளடைதல்** – பொலிவின்றியிருத்தல்.
**இருளல்** – காண்க: இருள்(ளு)தல்.
**இருளறை** – ஆணவமலம்.
**இருளன்** – ஒருசார் வேடச் சாதியான்; ஒரு சிறு தேவதை; வரிக்கூத்துவகை.

**இருளி** – பன்றி; கருஞ்சீரகம்; இருசி, பூப்படையும் தன்மையில்லாப் பெண்; நாணம்.
**இருளுலகம்** – நரகம்.
**இருளுவா** – அமாவாசை.
**இருளை** – நாணம்.
**இருளோவியகரை** – முத்தி.
**இரேக்கு** – தங்கத்தாள்; பூவிதழ்; ஒருவகைச் சல்லா.
**இரேகம்** – அச்சம்; ஐயம்; தவளை; உடல்; வயிற்றுக்கழிச்சல்.
**இரேகழி** – காண்க: **இடைகழி.**
**இரேகாம்சம்** – பூமியைத் தென்வடலாக 360 சம பங்குகளாய்ப் பிரிக்கப்பட்டவற்றுள் ஒரு பாகம்.
**இரேகி** – ஒன்றுபடு; நற்பேறுடையவன்(ள்); கீழ்மகன்(ள்).
**இரேகித்தல்** – ஒன்றுபடுதல்; எழுதுதல்; சேருதல்; பழகுதல்.
**இரேகுத்தி** – ஒரு பண்வகை.
**இரேகை** – வரி; கைகால் முகம் முதலியவற்றி லுள்ள வரை; வரை; எழுத்து; சந்திரகலை; அரசிறை; தராசு, படி முதலியவற்றின் அளவு கோடு; இடையறா ஒழுங்கு; வஞ்சம்; சித்திரம்.
**இரேசககுணா** – கடுகு.
**இரேசகம்** – பிராணாயாமம்; காற்றை மூக்கால் புறத்தே கழிக்கை; பேதிமருந்து.
**இரேசகி** – கடுக்காய்; சீந்தில்.
**இரேசகித்தல்** – மூச்சுக் காற்றை வெளிவிடுதல்.
**இரேசம்** – இதள், சூதம், பாதரசம்.
**இரேசன்** – வெள்ளைப்பூண்டு; அரசன்; வருணன்; திருமால்.
**இரேசனம்** – விரேசனம்; குறைத்தல்; மூக்கின் ஒரு தொளையிலிருந்து காற்றை வெளி விடுதல்; வெறுமையாக்கல்.
**இரேசனி** – சிவதை; ஞாழல்; நேர்வாளவித்து; மனோசிலை என்னும் நஞ்சுவகை.
**இரேசித்தல்** – மூச்சை வெளியே விடுகை.
**இரேசிதம்** – குதிரை நடையுள் ஒன்று; குதிரை வட்டமாய் ஓடல்; நாட்டியவகை.
**இரேசுதல்** – செரியாமை.
**இரேணு** – துகள்; பூந்துகள்; பற்பாடகப் புல்.
**இரேணுகை** – காட்டுமிளகு; தவிடு; தக்கோலம்; பரசுராமன் தாய்.
**இரேதசு** – விந்து, சுக்கிலம்.
**இரேபன்** – கொடியன்; நிந்திக்கத்தக்கவன்.
**இரேயம்** – காய்ச்சி வடித்த சாராயம்; கள்.
**இரேவடம்** – சூறைக்காற்று; வலம்புரிச் சங்கு; மூங்கில்.
**இரேவதி** – ஒரு நட்சத்திரம்; பலராமன் மனைவி.
**இரேவற்சின்னி** – நாட்டு மஞ்சட் சீனக்கிழங்கு; மரவகை.
**இரேவு** – ஆயத்துறை; இறங்குதுறை.
**இரேவை** – நருமதை ஆறு; அவுரி.
**இரை** – ஒலி; பறவை, விலங்கு முதலியவற்றின் உணவு; உண்ட உணவு; நாக்குப்பூச்சி; பூமி; நீர்; கள்; வாக்கு.
**இரைக்குடல்** – இரைப்பை.
**இரைக்குழல்** – உணவு செல்லுங்குழல்.
**இரைகொள்ளி** – இரையொதுக்கும் பறவையின் மிடறு; பெருந்தீனி தின்போன்(ள்).
**இரைச்சல்** – ஆரவாரம், ஒலி.
**இரைசல்** – மாணிக்கக் குற்றவகை; சுரசுரப்பு.
**இரைத்தல்** – ஒலித்தல்; சீறுதல்; மூச்சுவாங்குதல்; வீங்குதல்.
**இரைத்து** – இரண்டு; புலிதொடக்கி.
**இரைதல்** – ஒலித்தல்; கூச்சலிடுதல்.
**இரைதேர்தல்** – உணவு தேடுதல்.
**இரைதேறுதல்** – உணவு செரியாமல் தங்குதல்.
**இரைப்பற்று** - செரியாத உணவு.
**இரைப்பு** – இரைச்சல்; மூச்சு வாங்குகை; இரைப்புநோய்; மோகம்; கரப்பான்பூச்சி.
**இரைப்புமாந்தம்** – மாந்தவகை.
**இரைப்பூச்சி** – நாக்குப்பூச்சி.
**இரைப்பெட்டி** – பறவை இரையொதுக்கும் மிடற்றுப்பை; பிச்சை வாங்கும் பெட்டி.
**இரைப்பெலி** – இழுப்புண்டாக்கும் எலி.
**இரைப்பை** – இரைக்குடல்.
**இரைமீட்டல்** – அசைபோடுதல்.
**இரையெடுத்தல்** – பறவை, பாம்பு முதலியன உணவுகொள்ளுதல்; உணவு தின்னுதல்; அசை போடுதல்.
**இரௌத்தன்** – காண்க: **இராவுத்தன்.**
**இரௌத்திரம்** – பெருஞ்சினம்; ஒன்பான் சுவை யுள் ஒன்று; பகலிரவுகளுக்குத் தனித்தனியே உரிய பதினைந்து முழுத்தங்களுள் முதலாவது.
**இரௌத்திரி** – அறுபதாண்டுக் கணக்கில் ஐம்பத்து நாலாம் ஆண்டு; ஒரு சிவசித்தி.
**இரௌரவம்** – ஒரு நரகம்; சிவாகமத்துள் ஒன்று.
**இல்** – இடம்; வீடு; இல்லறம்; மனைவி; மருத முல்லை நிலங்களின் தலைவியர்; குடி; இராசி; தேற்றாங்கொட்டை; இன்மை; சாவு; எதிர் மறை இடைநிலை; ஐந்தாம் வேற்றுமை உருபு; ஏழாம் வேற்றுமை உருபு.
**இல்பொருள்** – அசத்து; இல்லாத பொருள்.
**இல்பொருள் உவமை** – இல்லாத ஒன்றனைக் கற்பித்துக்காட்டும் உவமை, அபூத உவமை.
**இல்லக்கிழத்தி** – மனைவி.
**இல்லகம்** – வீடு.

**இல்லடை** – அடைக்கலம்; அடைமானப் பொருள்; ஒட்டடை; பண்டசாலை; இல்லுவமம்.
**இல்லடைக்கலம்** – அடைக்கலப் பொருள்; அடைமானப் பொருள்.
**இல்லத்துப்பிள்ளை** – ஈழவர் பட்டப்பெயர்.
**இல்லது** – பிரகிருதி; இல்லாதது; கிடைக்காதது; இல்பொருள்; மனையிலுள்ளது; மனைவியினுடையது.
**இல்லம்** – வீடு; மனைவி; இல்வாழ்க்கை; தேற்றா மரம்.
**இல்லல்** – நடக்கை; கடத்தல்; போகுதல்.
**இல்லவள்** – மனைவி; வறியவள்.
**இல்லவன்** – கணவன்; தலைவன்; வறிஞன்.
**இல்லவை** – இல்லாதவை; மனையில் உள்ளவை.
**இல்லறம்** – இல்வாழ்க்கை, இல்லத்தில் மனையாளோடு கூடிவாழும் ஒழுக்கம்; இல்வாழ்வார் கடமை.
**இல்லாக்குடி** – வறுமைக் குடும்பம்.
**இல்லாக்குற்றம்** – வறுமை; அபாண்டம்.
**இல்லாண்முல்லை** – பாசறைத் தலைவனை இல்லாள் நினையும் புறத்துறை; தலைவி கணவனை வாழ்த்தி விருந்தோம்பும் இல்லின் மிகுதியைக் கூறும் புறத்துறை.
**இல்லாண்மை** – குடியினை ஆளும் தன்மை; தன் குடியிலுள்ளாரை உயரச்செய்து தன்வழிப் படுத்தல்.
**இல்லாத்தனம்** – வறுமை.
**இல்லாததும்பொல்லாததும்** – பொய்யும் தீங்கு விளைப்பதும்.
**இல்லாதபொய்** – முழுப் பொய்.
**இல்லாதவன்** – வறியவன்.
**இல்லாமை** – இன்மை, வறுமை.
**இல்லாவாட்டி** – வறியவள்.
**இல்லாள்** – மனைவி; மருத முல்லை நிலங்களின் தலைவியர்; வறுமையுடையவள்.
**இல்லாளன், இல்லாளி** – இல்லறத்தான்; கணவன்.
**இல்லி** – சில்லி, பொள்ளல், ஒட்டை; தேற்றா மரத்தின் இலை; வால்மிளகு; ஒருவகைப் புழு.
**இல்லிக் கண்ணன்** – மிகச் சிறிய கண்ணுடையான்; கூச்சக் கண்ணுள்ளவன்.
**இல்லிக்காது** – சிறிய துளையையுடைய காது.
**இல்லிக்குடம்** – ஓட்டைக் குடம்.
**இல்லிடம்** – வீடு; ஊர்.
**இல்லிமூக்கு** – சில்லிமூக்கு; இரத்தம் வடியும் மூக்கு.
**இல்லிறத்தல்** – பிறன் மனையாளை விழைதல்.
**இல்லுவமம், இல்லுவமை** – உவமஅணியுள் ஒன்று, உலகத்தில் இல்லாத ஒன்றனை உவமையாக எடுத்துச் சொல்லுதல்.
**இல்லுறைகல்** – அம்மிக்கல்.
**இல்லுறைதெய்வம்** – வீட்டில் வாழும் தெய்வம்.
**இல்லெலி** – வீட்டெலி.
**இல்லெனல்** – இல்லையென்று சொல்லி மறுத்தல்; பொருள் இல்லை என்று சொல்லுதல்; இறந்து போனான் என்று சொல்லுதல்; சூனியமாகுகை.
**இல்லை** – உண்டு என்பதன் எதிர்மறை; இன்மைப் பொருளை உணர்த்தி ஐம்பால் மூவிடத்திலும் வரும் ஒரு குறிப்பு வினைமுற்று; சாதலை உணர்த்தி ஐம்பால் மூவிடத்திலும் வரும் ஒரு குறிப்பு வினைமுற்று.
**இல்லைசெய்தல்** – மறுத்தல்.
**இல்லொடுவரவு** – குடிப்பிறப்பு.
**இல்லொழுக்கம்** – காண்க : **இல்லறம்.**
**இல்வழக்கு** – பொய்வழக்கு; இல்லதனை இல்லையென்கை.
**இல்வாழ்க்கை** – மனையாளோடு கூடிவாழ்கை; இல்லறத்தில் வாழ்கை.
**இல்வாழ்பேய்** – பொருந்தா மனைவி.
**இல்வாழ்வான்** – இல்லறத்தோடு கூடி வாழ்பவன்.
**இல்வாழ்வு** – காண்க: **இல்வாழ்க்கை.**
**இல** – இலவு, இலவமரம்; 'ஏடீ' என்னும் பொருளில் வரும் விளிப்பெயர்.
**இலக்கணக்கருமம்** – சாமுத்திரிகம்; அங்கு இலக்கண நூல்.
**இலக்கணச்சிதைவு** – இலக்கண நூலிலே விதித்த விதிகளுக்கு விலக்காகச் சிதைந்து வழங்கும் சொல்; தவறாய் வழங்கும் சொல்.
**இலக்கணச்சுழி** – குதிரைகளுக்கு உடையனவாகச் சொல்லப்படும் நல்ல சுழி.
**இலக்கணச்சொல்** – காண்க: **இலக்கணமுடையது.**
**இலக்கணநூல்** – ஒரு மொழியைப் பேசுதற்கும் எழுதுதற்கும் உரிய முறையைக் கற்பிக்கும் நூல்; ஏதாயினும் ஒரு பொருளின் இயல்பை விளக்கும் நூல்.
**இலக்கணப்போலி** – இலக்கணம் உடையதுபோல் அடிப்பட்ட சான்றோராலே தொன்று தொட்டு வழங்கப்படும் சொல்.
**இலக்கணம்** – சிறப்பியல்பு; இயல்பு; அடையாளம்; நல்வாழ்வை உரைக்கும் உடற்குறி; அழகு; ஒழுங்கு; இலக்கியத்தினமைதி; எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், யாப்பிலக்கணம், அணியிலக்கணம் என்னும் ஐவகை இலக்கணம்.
**இலக்கணமுடையது** – இலக்கண வழியால் வரும் சொல்.
**இலக்கண வழக்கு** – இலக்கண நடை.
**இலக்கண வழு** – இலக்கணப் பிழை.

**இலக்கணி** – இலக்கணம் அறிந்தவன்; அழகன்.
**இலக்கணை** – ஒரு பொருளை நேரே உணர்த்தும் சொல், அப் பொருளை உணர்த்தாது அதனோடு இயைபுடைய மற்றொரு பொருளை உணர்த்துவது.
**இலக்கம்** – விளக்கம்; குறிப்பொருள்; நூறாயிரம்; எண்; எண்குறி; இலக்கு; காணுதல்.
**இலக்கமடைத்தல்** – எப்படிக் கூட்டினும் மொத்த எண் ஒன்றேயாகும்படி எண்களைக் கட்டங்களில் அடைத்தல்.
**இலக்கமிடுதல்** – எண் குறித்தல்; கணக்கிடுதல்.
**இலக்கர்** – இலக்கமென்னும் தொகையினர்; ஆடை; கந்தை; சீலை.
**இலக்காந்தரம்** – இடையிலக்கம்.
**இலக்காரம்** – சீலை; ஆடை.
**இலக்கித்தல்** – உருவரைதல்.
**இலக்கிதம்** – இலட்சிதம், குறிக்கப்பட்டது.
**இலக்கியம்** – இலக்கணம் அமையப் பெற்ற பொருள்; ஆன்றோர் நூல்; எடுத்துக்காட்டு; குறி.
**இலக்கியார்த்தம்** – இலக்கணையால் அறியும் பொருள்.
**இலக்கினச்சட்டுவருக்கம்** – இராசிக்குரிய ஆறு செயல்கள்; அவை: ஓரை, சுடர்ச் செலவு, திரேக்காணம், நவாம்சம், துவாதசாமிசம், கோட்கூறு என்பன.
**இலக்கினம்** – இராசியின் உதயம்; நல்ல வேளை.
**இலக்கினாதிபதி** – இலக்கினத்திற்கு உடையவன்.
**இலக்கு** – குறிப்பொருள்; அம்பெய்யும் குறி; அடையாளம்; இடம்; நாடிய பொருள்; எதிரி; அளவு; சமயம்; அசாதாரண தருமம்.
**இலக்குதல்** – அடையாளம் இடுதல்; இலங்கப் பண்ணுதல்; வரைதல்.
**இலக்குப் பார்த்தல்** – குறிபார்த்தல்; சமயம் பார்த்தல்.
**இலக்குமணை** – சாரசப் பறவையின் பேடு.
**இலக்குமி** – திருமால் தேவி; செல்வம்; மஞ்சள்; முத்து; அழகு.
**இலக்குவைத்தல்** – குறிவைத்தல்.
**இலக்கை** – ஆடை; மாதச்சம்பளம்; பாதுகாவல்.
**இலகடம்** – யானைமேலிடும் இருக்கை, அம்பாரி.
**இலகம்** – ஊமத்தைப் பூண்டு.
**இலகரி** – கத்தூரி; மது; பெருந்திரை; மகிழ்ச்சி; வெறி.
**இலகல்** – எழுத்து; அகில்; நொய்ம்மை.
**இலகாம்(ன்)** – கடிவாளம்.
**இலகிமா** – எண்வகைச் சித்திகளுள் நொய்மையதாகும் ஆற்றல்.
**இலகிரி** – மயக்கமூட்டும் பொருள்கள்; அபின்; கஞ்சா; சாதிக்காய்; சாதிபத்திரி.
**இலகு** – எளிது; சிறுமை; காலவகை; தணிவு; குற்றெழுத்து.
**இலகுசம்** – ஈரப்பலாமரம்.
**இலகுத்துவம்** – நொய்ம்மை, கனமற்ற தன்மை.
**இலகுதல்** – விளங்குதல்; மிகுதல்; ஒளிசெய்தல்.
**இலகுநட்சத்திரம்** – நுட்பமான நட்சத்திரம்; அசுவினி, பூசம், அஸ்தம் என்னும் நட்சத்திரங்கள்.
**இலகுபதனன்** – எளிதாகப் பறப்பவன்.
**இலகுவியாக்கியானம்** – சிற்றுரை.
**இலகுளீசன்** – சிவபிரான் கூறான ஒரு குருமூர்த்தம்.
**இலகோட்டா** – மரவகை.
**இலங்கடை** – இல்லாதபோது.
**இலங்கண(ன)ம்** – தடை; கடக்கை; பட்டினி கிடக்கை.
**இலங்கம்** – கூடுகை; எறும்பு; கூட்டம்; மூடம்; களரி.
**இலங்கர்** – நங்கூரம்.
**இலங்காபுரம், இலங்காபுரி** – இராவணனின் தலைநகரம்.
**இலங்கிகன்** – துறவி.
**இலங்கிசார்** – அலைக்கழிவு; இடைஞ்சல்.
**இலங்கித்தல்** – குதித்தல்; கடத்தல்.
**இலங்கு** – குளம்.
**இலங்குதல்** – ஒளிசெய்தல்; விளக்கமாகத் தெரிதல்.
**இலங்குபொழுது** – படுஞாயிறு; சூரியன் மறையும் வேளை.
**இலங்கேசன்** - இலங்கைத் தலைவன்; இராவணன்.
**இலங்கை** – ஆற்றிடைக்குறை; ஈழ மண்டிலம்; இராவணன் தலைநகர்; தொண்டைநாட்டின் ஓர் ஊரான மாவிலங்கை.
**இலங்கோடு** – கீழுடை; சல்லடம்; சன்னியாசிகளுடைய உடை.
**இலச்சித்தல்** – நாணுதல்.
**இலச்சினை** – அடையாளம்; முத்திரை; முத்திரை மோதிரம்.
**இலச்சை** – கூச்சம்; நாணம்.
**இலச்சைகெட்ட மரம்** – சுண்டிமரம்; கல்தேக்கு மரம்.
**இலச்சைப்படுதல்** – நாணுதல்.
**இலசுனம்** – வெள்ளைப் பூண்டு; மாணிக்கக் குணத்துள் ஒன்று.
**இலசுனி** – மாணிக்கக் குணத்துள் ஒன்று.
**இலஞ்சம்** – பரிதானம், கைக்கூலி.
**இலஞ்சி** – வாவி; ஏரி; கொப்பூழ்; குணம்; சாரைப்பாம்பு; மகிழமரம்; மதில்; புன்கு; மாமரம்; சவுக்கம் என்னும் ஆடைவகை.

**இலஞ்சியம்** – கீழ்காய்நெல்லிப் பூண்டு.
**இலஞ்சிலி** – ஏலம்.
**இலட்சணம்** – காண்க: **இலக்கணம்.**
**இலட்சம்** – அடையாளம்; இலக்கம், நூறாயிரம்.
**இலட்சயம்** – எண்ணத்தக்கது.
**இலட்சாதிகாரி, இலட்சாதிபதி** – பெருஞ்செல்வன்.
**இலட்சாதிலட்சம்** – பெருந்தொகை.
**இலட்சிதம்** – இலக்கணம் அமைக்கப்பட்டது; காணப்பட்டது; குறியினாலே விளக்கப் பட்டது.
**இலட்சியம்** – குறி; குறிக்கோள், நோக்கம்; மதிப்பு.
**இலட்சியார்த்தம்** – காண்க: **இலக்கியார்த்தம்.**
**இலட்சுமணம்** – மரவகை; தாளிப்பூண்டு.
**இலட்சுமி** – காண்க: **இலக்குமி.**
**இலட்சுமி வண்டு** – கரப்பான்பூச்சி.
**இலட்சோபலட்சம்** – காண்க: **இலட்சாதிலட்சம்.**
**இலட்டு, இலட்டுக(வ)ம்** – உருண்டை வடிவமான தித்திப்புப் பணிகார வகை; கொழுக்கட்டை; அப்பவருக்கம்; தோசை.
**இலட்டை** – அப்பம்.
**இலண்டம்** – இலத்தி; குதிரை, யானை முதலிய வற்றின் மலம்.
**இலணை** – அரசமரம்.
**இலத்தி(தை)** – காண்க: **இலண்டம்.**
**இலதை** – படர்கொடி; வள்ளிக்கொடி; வால் மிளகுகொடி; இலந்தை; முள்மரவகை; மரக்கொம்பு; நூற்கும் நூல்; இணையா வினைக்கை வகை; ஒருவகை ஒலி.
**இலதைக்கை** – பிண்டிக்கை முப்பத்து மூன்றனுள் ஒன்று.
**இலந்தை** – முள்மரவகை; ஒரு பழமர வகை; நீர்நிலை.
**இலந்தைத்தம்பலம்** – இலந்தைப்பட்டையில் பூச்சி களாலான புடைப்பு.
**இலபனம்** – வாய்.
**இலபித்தல்** – சித்தித்தல், வாய்த்தல், கைகூடுதல்.
**இலபிதம்** – நேர்வது; உண்பது; பேச்சு; பேசப் பட்டது; பேறு; விதி.
**இலபிப்பு** – சித்திப்பு.
**இலம்** – இல்லம்; இல்லறம்; வறுமை.
**இலம்பகம்** – நூலின் உட்பிரிவு; மாலை; தலைக் கோலம் என்னும் நுதலணி.
**இலம்படுதல்** – வறுமையடைதல்.
**இலம்படை** – இடுக்கண்; வறுமை.
**இலம்பம்** – தொங்கல்; மாலை; நிறுதிட்டம்; வானநூலில் கூறும் ஒரு பாகை அளவு; உயர்வு; அகலம்; கைக்கூலி.
**இலம்பமானம்** – கழுத்தில் தொங்கும் தாழ் வடம்.
**இலம்பனம்** – காண்க: **இலம்பம்.**
**இலம்பாட்டோன்** – வறியவன்.
**இலம்பாடி** – ஒரு சாதி; வறியவன்(ள்).
**இலம்பாடு** – வறுமை; துன்பம்.
**இலம்பிகை** – அண்ணாக்கு, உள்நாக்கு.
**இலம்பிலி** – மரவகை.
**இலம்பு** – தொங்குகை.
**இலம்பை** – வறுமை; இடுக்கண்; அவலநிலை.
**இலம்போதரன்** – பெருவயிறன்; விநாயகக் கடவுள்.
**இலமலர்** – இலவமலர்.
**இலயகாலம்** – அழியுங்காலம், ஊழிக்காலம்.
**இலயசக்தி** – அருவ சிவனின் சத்தி.
**இலயசிவன்** – அறிவிலும் ஆற்றலிலும் கலந்திருக் கும் அருவ சிவன்.
**இலயஞானம்** – சுருதி ஒப்புமை காணும் அறிவு; கீத ஞானம், இலய ஞானம், சுருதி ஞானம், தாள ஞானம் என்னும் நால்வகைக் கேள்வி களுள் ஒன்று.
**இலயத்தானம்** – ஒடுங்குமிடம்.
**இலயதத்துவம்** – ஊழிக் காலத்துத் தன் தொழில் கள் எல்லாம் ஒடுங்கிக் காரண மாத்திரையாய் நிற்கும் இறைவன் நிலை.
**இலயம்** – அழிவு; இரண்டறக் கலக்கை; அறிவு மட்டுமே திருமேனியாக உள்ள கடவுள் நிலை; ஒழிவு; தாளவறுதி; சுருதிலயம்; கூத்து வேறு பாடு.
**இலயமாதல்** – ஒன்றாதல்; அழிதல்.
**இலயமுத்தி** – பரம்பொருளொடு இரண்டறக் கலக்கையாகிய முத்தி.
**இலயன், இலயி** – காண்க: **இலயம்**; சிவன்.
**இலயித்தல்** – ஒடுங்குதல்; இரண்டு பொருள் வேற்றுமையறக் கலத்தல், ஒன்றாதல்; அழிதல்.
**இலயை** – தாளப் பிரமாணம் பத்தனுள் ஒன்று.
**இலலாடம்** – நெற்றி.
**இலலாடலிபி** – தலையெழுத்து.
**இலலாடிகை** – சந்தன முதலியவற்றால் நெற்றி யில் இடும் பொட்டு; நெற்றியில் அணியும் சுட்டி.
**இலலாமம்** - அடையாளம்; அரசச்சின்னம்; அழகு; அணிகலன்; இரேகை; குதிரை; கொடி; கொம்பு; தன் சாதியில் உயர்ந்தது; நெற்றியணி; நெற்றிக்குறி; பிடர்மயிர்; பெருமை; வால்.
**இலலிதபஞ்சமி** – ஒரு பண்வகை.

**இலலிதம்** – அழகு; அபிநயம்; உபசாரம்; ஒரு பண் விகற்பம்; காமக்குறி; பரிகாசம்; மகளிர் விளையாட்டு; இனிமை.

**இலலிதை** – முப்பத்திரண்டு பண்களுள் ஒன்று; பார்வதி; பெண்; மான்மதம்.

**இலவங்கச் சுருட்பாக்கு, இலவங்கச் சூர்ப்பாக்கு** – பாக்குவகை.

**இலவங்கப்பட்டை** – கருவாப்பட்டை; தாளிச பத்திரி.

**இலவங்கப்பூ** – கிராம்பு; காதணிவகை.

**இலவங்கபத்திரி** – ஒரு மருந்திலை.

**இலவங்கம்** – கிராம்பு; கருவாமரம்.

**இலவச(ய)ம்** – விலையில்லாதது.

**இலவணம்** – உப்பு.

**இலவண வித்தை** – மாயவித்தைகளுள் ஒன்று.

**இலவந்தி, இலவந்திகை** – இயந்திர வாவி; வாவியைச் சூழ்ந்த வசந்தச் சோலை.

**இலவந்தீவு** – ஏழு தீவுகளுள் ஐந்தாவது.

**இலவம்** – இலவு; இலவந் தீவு; அற்பம்; கால வகை; ஒரு கால அளவு; இலவங்கம்; கிராம்பு; சாதிக்காய்; பசு, ஆடு முதலியவற்றின் மயிர்; பூசை.

**இலவம்பஞ்சு** – இலவமரத்துப் பஞ்சு.

**இலவலேசம்** – மிகச் சிறியது.

**இலவித்திரம்** – அரிவாள்.

**இலவு** – இலவமரம்; தேற்றாமரம்.

**இலவுகிகம்** – உலகியல்; மரபு; உலகப்போக்கை உணர்ந்து நடத்தல்.

**இலளித பஞ்சகம்** – ஓர் இசை விகற்பம்.

**இலளிதம்** – இச்சை; பொருளின் தெளிவு; அழகியது; ஒரு பண்; சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று; விரும்பப்பட்டது.

**இலளிதை** – பார்வதி; ஒருவகை முத்தாரம்; கத்தூரி; முப்பத்திரண்டு பண்களுள் ஒன்று.

**இலாக்கா** – ஆட்சிப்பிரிவு, ஆட்சித்துறை.

**இலாக்கிரி** – செம்மெழுகு.

**இலாக்கை** – செம்பஞ்சு; அரக்கு.

**இலாகவம்** – திறமை; உடல்நலம்; கவனமின்மை; எளிமை; நிந்தனை; சுருக்கம்; விரைவு.

**இலாகன்** – மீன்வகை.

**இலாகிரி** – மதர்ப்பு; மதுக்களிப்பு.

**இலாகு** – தாங்கல்.

**இலாகுளம்** – சைவப் பிரிவுகளுள் ஒன்று; பாசுபத சமயப் பிரிவுகளுள் ஒன்று.

**இலாகை** – விதம்.

**இலாங்கலம்** – பூவகை; பூனை; கலப்பை; கொடுங்கை.

**இலாங்கலி** – கலப்பை; தென்னை; செங்காந்தள்; செங்கரந்தைப் பூண்டு; வெண்தோன்றிப் பூண்டு; பாம்பு; பலராமன்.

**இலாங்கூலம்** – விலங்கின் வால்; ஆண்குறி.

**இலாங்கூலி** – குரங்கு.

**இலாச்சம்** – தானிய அளவைவகை; ஒரு நில அளவை.

**இலாச்சி** – செருகுபெட்டியின் அறை.

**இலாசடி(டை)** – வருத்தம்; தொல்லை.

**இலாசம்** – நனைத்த தவசம்; பொரி.

**இலாசவோமம்** – திருமணத்தில் பொரியால் செய்யப்படும் ஓமம்.

**இலாசிகை** – கூத்தாடுபவள்.

**இலாசியம்** – கூத்து.

**இலாஞ்சலி(னை), இலாஞ்சனம்** – அடையாளம்; முத்திரை; உருத்தோன்ற அச்சுக் கட்டின படம்; மதிப்பு; கூச்சம்.

**இலாஞ்சி** – ஏலம்.

**இலாஞ்சினைப் பேறு** – பழைய வரிவகை.

**இலாட்சை** – செவ்வரக்கு.

**இலாடசங்கிலி, இலாடசிங்கி** – கழற்றுதற்கரிய ஒருவகைப் பின்னல் சங்கிலி.

**இலாடசிந்தூரம்** – குதிரைக் காலிரும்பை நீற்றிச் செய்த பொடி.

**இலாடம்** – பரத கண்டத்தில் ஒரு நாடு; வங்காள தேசப்பகுதி; நெற்றி; புளியமரம்; காளை குதிரைகளின் கால் இலாடம்; ஒரு மொழி; சேலை; மூல நட்சத்திரத்திற்கும் சூரியனுக்கும் உள்ள தூரத்தை ஒட்டிக் கணிக்கும் நாள்.

**இலாடவி** – அகில்மரம்.

**இலாடன்** – இலாட நாட்டான்; பைராகி.

**இலாடன் பருத்தி** – பருத்திச் செடிவகை.

**இலாபகரம்** – ஊதியம் தருவது.

**இலாபத்தானம்** – இலக்கினத்திற்குப் பதினோராம் இடம்.

**இலாபநட்டம்** – பேறும் இழப்பும்.

**இலாபம்** – ஊதியம்; பயன்; ஆதாயம்; தானிய அளவையில் முதல் எண்ணுக்கு வழங்கும் சொல்.

**இலாபாந்தராயம்** – குறித்த பேற்றை இடைநின்று விலக்கும் கருமத்தடை.

**இலாமச்சம், இலாமச்சை, இலாமிச்சு(சை)** – ஒருவகை மணமுள்ள வேர்.

**இலாயம்** – ஏலவரிசி; குதிரைப் பந்தி, குதிரைச் சாலை.

**இலாலனம், இலாலனை** – நயஞ்செய்கை; அன்பு பாராட்டுதல்; சீராட்டுதல்; செல்லம் காட்டுதல்.

**இலாலி** – இச்சக வார்த்தை; ஏமாற்றுவோன்; காமி; தீமைக்கு உட்படுத்துவோன்; ஒரு வாழ்த்து; மங்கலப் பாடல்.

**இலாவண்ணியார்ச்சிதம்** – சீதனவகை.
**இலாவணம்** – போர்வீரர்களின் பட்டி; பெயர்ப் பதிவு; மரபின்படி வரும் உத்தியோகத்துக்குக் கொடுக்கும் ஆணை; வீடுதோறும் இனவாரி வழங்கும் அரிசி; உப்பு; உரையாடல்.
**இலாவணமெழுதுதல்** – படைக்கு ஆள் சேர்த்தல்.
**இலாவணியம்** – அழகு; உப்புந்தன்மை.
**இலாவிருதம்** – நவகண்டத்துள் ஒன்று.
**இலாளன்** – இல்லாதவன்.
**இலாளனை** – காண்க: **இலாலனை.**
**இலாளிதம்** – அழகு.
**இலி** – இல்லாதவன்(ள்); இல்லாதது.
**இலிகம், இலிகனம்** – எழுதுகை.
**இலிகி** – எழுத்து; எழுதுகை.
**இலிகிதம்** – எழுதப்பட்டது; கடிதம்; எழுதப் பட்ட புத்தகம்; அறுபத்து நான்கு கலையுள் ஒன்றான எழுதுவதில் திறமை.
**இலிகிதன்** – எழுத்தாளன்.
**இலிகுசம்** – எலுமிச்சை மரம்.
**இலிங்கக்கட்டு** – சாதிலிங்கக் கட்டு, இஃது ஒரு வைப்பு மருந்துச் சரக்கு.
**இலிங்கக்கல்** – வளைவுக் கட்டடத்தின் நடுக்கல்.
**இலிங்ககவசம்** – ஆண்குறியின் மேல்தோல்; சிவ லிங்கத்திற்குச் சாத்தப்படும் மேலாடை.
**இலிங்கங்கட்டி** – இலிங்கத்தைக் கழுத்தில் கட்டி யிருப்பவன், வீரசைவன்.
**இலிங்கசரீரம்** – நுண்ணுடல்; ஆன்மாவோடு கருப்பத்திலே கூடப்பதிந்தும் பருவுடலை விட்டுப் போகும்பொழுது கூடப்போயும் வீடு வரை பின்தொடர்வதான உடல்.
**இலிங்கசுத்தி** – ஐந்துவகைத் தூய்மையுள் ஒன்று.
**இலிங்கசூலை** – ஆண்குறியைப் பற்றிவரும் ஒரு நோய்.
**இலிங்கத்தாரணம்** – இலிங்கம் அணிகை.
**இலிங்கத்தாரணத்தலம்** - இலிங்கம் தரிக்கும் தலம்.
**இலிங்கதாரி** – காண்க: **இலிங்கங்கட்டி.**
**இலிங்கப்புடோல்** – ஐவிரலிக் கொடி; கோவைக் கொடி.
**இலிங்கப்புற்று** – ஒரு மேகநோய்.
**இலிங்கப்பொருத்தம்** – மணப் பொருத்தம் பத்தனுள் ஒன்று.
**இலிங்கபற்பம்** – நீற்று மருந்துவகை.
**இலிங்கம்** – அடையாளம்; ஆண்குறி; ஏது; வடமொழிப் பெயர்ச்சொற்குரிய பால்; சிவலிங்கம்; சாதிலிங்கம்; இலிங்க புராணம்; பிரகிருதி; உபநிடதம் முப்பத்திரண்டனுள் ஒன்று; கருவிழியின் நடுவிலிருக்கிற பாவை; கறை; நோய்க்குறி.
**இலிங்கமுத்திரை** – பூசை செய்யும்போது காட்டும் முத்திரைவகை.
**இலிங்கமெழுகு** – ஒருவகை மருந்து.
**இலிங்கரோகம்** – ஆண்குறியில் வரும் ஒருவகைப் புண்.
**இலிங்கவட்டம்** – கிணறு இடியாமல் வைக்கும் மரச்சுவர்.
**இலிங்கவிரணம்** – ஆண்குறி நோய்வகை.
**இலிங்கவிருத்தி** – வெளிவேடம் போட்டுப் பிழைப்பவன்.
**இலிங்காங்கம்** – ஆண் உறுப்பு.
**இலிங்காயதர்** – காண்க: **இலிங்கங்கட்டி.**
**இலிங்கி** – அடையாளத்தை உடையது; சிவலிங்க பூசை செய்வோன்; இருடி; துறவி; கபட சன்னியாசி; யானை.
**இலிங்கியர்** – அனுமானத்தை முக்கியமாகக் கொண்டு வாதிக்கும் தருக்க நூலாளர்.
**இலிங்கு** – மாவிலங்கைமரம்.
**இலிங்கோத்தாரம்** – பூசித்தலின்பொருட்டுக் குரு முகமாகச் சிவலிங்கம் பெறுதல்.
**இலிங்கோற்பவர்** – சிவமூர்த்தங்களுள் ஒன்று.
**இலிந்தகம்** – கருங்குவளை.
**இலிபி** – இலக்கம்; எழுத்து; விதி; மெழுகுதல்.
**இலிபித்தல்** – எழுதுதல்; அனுகூலமாதல்; நியமித்தலை விதித்தல்.
**இலிர்த்தல்** – சிலிர்த்தல்; தளிர்த்தல்; பொடித்தல்.
**இலிற்றுதல்** – சுரத்தல்; துளித்தல்; சொரிதல்.
**இலீக்கை** – காண்க: ஈர்; ஒரு நீட்டலளவை.
**இலீலாவதி** – அழகிய பெண்; இலீலை உடையவள்; காமச்சேட்டை உடைய பெண்; துர்க்கை.
**இலீலை** – விளையாட்டு; தெய்வம் முதலியவற் றின் விளையாடல்; சுரத விளையாட்டு; பரி காசம்; சரசம்; மகளிர் மோக விளையாட்டு; புணர்ச்சி.
**இலீனம்** – அழிவு; அடக்கம்.
**இலுதை** – அணில்.
**இலுப்பை** – காண்க: **இருப்பை.**
**இலுப்பைக்கட்டி** – இலுப்பைப் பிண்ணாக்கு.
**இலுப்பைக்கடுகு** – இலுப்பெண்ணெயின் அடியில் படியும் வண்டல்; இலுப்பெண்ணெய்க் கசடு; இலுப்பைப் பருப்பு.
**இலுப்பை நெய், இலுப்பைப் பால்** – காண்க: **இலுப்பையெண்ணெய்.**
**இலுப்பைப்பூச்சம்பா** – நெல்வகை.
**இலுப்பையெண்ணெய்** – இலுப்பைக் கொட்டையி லிருந்து எடுக்கும் எண்ணெய்.

**இலேககன்** – எழுதுவோன்; சித்திரகாரன்.

**இலேகம்** – காண்க : **இளகம்.**

**இலேகர்** – தேவர்.

**இலேகனம்** – எழுத்து; பூர்ச்சமரத்தின் பட்டை; வெட்டுகை; நாவழித்தல்; பனையோலை.

**இலேகனி** – எழுத்தாணி, எழுதுகோல்.

**இலேகித்தல்** – எழுதுதல்; சித்திரித்தல்.

**இலேகியம்** – காண்க : **இளகம்,** பாகாகக் கிண்டிய மருந்து; நக்கப்படுவது.

**இலேகை** – எழுத்து; பூமி; தழும்பு; ஓரம்; சித்திரம்.

**இலேசம்** – அற்பம்; இலேசவணி; இரண்டு கலை கொண்ட ஒரு கால அளவு; நொய்ம்மை; மிகை.

**இலேசவணி** – குறிப்பை வெளிப்படுத்தும் மெய்ப் பாடு வேறொன்றால் நிகழ்ந்ததாக மறைத்துச் சொல்லும் அணி; குணத்தைக் குற்றமாகவும் குற்றத்தைக் குணமாகவும் சொல்லும் அணி.

**இலேசு** – நொய்ம்மை; எளிது; அற்பம்; விதப்புச் சொல்.

**இலேசுணம்** – அரிதாரம்.

**இலேஞ்சி** – சவுக்கம்.

**இலேபகன்** – சாந்து பூசுகிறவன்.

**இலேபம்** – வால்மிளகு கொடி; பூச்சு; கறை; சாந்து; மெழுகுதல்; உணவு; தீநெறி.

**இலேபனம்** – பூச்சு; பூச்சு மருந்து; மணத் தைலம்.

**இலேலிகம்** – பாம்பு; வயிற்றில் வளரும் கீரைப் பூச்சி.

**இலேவாதேவி** – பண்டமாற்றல்; கொடுக்கல் வாங்கல்.

**இலேவுந்து** – கல்லுப்பு; கந்தகவுப்பு.

**இலை** – மரம் செடிகளின் இலை; பூவிதழ்; வெற்றிலை; கதவின் இலை; படலை மாலை; அணிகளின் இலைத்தொழில்; பச்சிலை; சக்கரத்தின் ஆரம்; ஆயுதவலகு.

**இலைக்கதவு** – இலைபோல் மரத்தட்டுகள் தொடுக்கப்பட்ட கதவு.

**இலைக்கம்மம்** – இலைவடிவாக அணியில் அமைக் கும் தொழில்.

**இலைக்கறி** – கீரை.

**இலைக்குரம்பை** – தழைக்குடில், பன்னசாலை.

**இலைக்கொடி** – வெற்றிலைக்கொடி.

**இலைச்சித்தல்** – முத்திரையிடுதல்.

**இலைச்சினை** – காண்க: **இலச்சினை.**

**இலைச்சுமடன்** – வெற்றிலை விற்போன்; மூடன்.

**இலைச்சுமி** – பதுமராகமணியின் குற்றங்களுள் ஒன்று.

**இலைச்சுருளி** – ஒருவகைப் பூண்டு.

**இலைச்சை** – நிறம்.

**இலைஞெமல்** – இலைச் சருகு.

**இலைத்தல்** – சோர்தல்; சுவை குறைதல்; சார மின்மை; தன்மை குன்றுதல்; பச்சை நிற மாதல்.

**இலைப்பசளி** – பெரும்பசளிக்கொடி.

**இலைப்பணி** – இலை வடிவாகச் செய்யும் தொழில் அமைந்த அணி.

**இலைப்பாசி** – ஒரு பூண்டு; பாசிவகை.

**இலைப்பி** – இலைச்சாம்பல்.

**இலைப்புரைகிளைத்தல்** – எங்குந்தேடுதல்.

**இலைப்பொல்லம்** – இலை தைக்கை; வாழை யிலைத் துண்டு.

**இலைபோடுதல்** – உணவுக்கு இலைக்கலம் இடுதல்.

**இலைமறைகாய்** – மறைபொருள்.

**இலைமுகப் பைம்பூண்** – வெற்றிலைச் சரப்பணி.

**இலைமூக்கரிகத்தி** – வெற்றிலைக் காம்பு அரியும் கத்தி.

**இலையடை** – அப்பவருக்கம்.

**இலையம்** – காண்க: **இலயம்.**

**இலையமுதிடுவார்** – வெற்றிலை விற்பார்.

**இலையமுது** – வெற்றிலை.

**இலையான்** – ஈ என்னும் பறவை.

**இலையுதிர்ப்பு** – இலையுதிர்கை; முதுகாடு.

**இலைவாணிக(ப)ம்** – வெற்றிலை முதலிய இலை விற்றல்.

**இலைவாணிக(ப)ர், இலைவாணியர்** – வெற்றிலை விற்போர், இலை வாணியர்; வெற்றிலை பயிர்செய்யும் சாதியார்.

**இலைவேல்** – இலைத் தொழில்களாற் சிறந்த வேல்.

**இலௌகிகம்** – உலகிற்கு உரியது; உலகநடை.

**இவ்** – இவை; சுட்டுச்சொல்.

**இவ்விரண்டு** – இந்த இரண்டு; தனித்தனி இரண்டு.

**இவக்காண்** – இங்கே; இந்நேரமளவும்.

**இவண்** – இவ்விடம்; இம்மை.

**இவ்ணர்** – இவ்வுலகத்தார்.

**இவர், இவர்கள்** – இவன், இவள் என்பவற்றின் பன்மை; ஒருவரைக் குறிக்கும் மரியாதைப் பன்மைச்சொல்.

**இவர்தல்** – உயர்தல்; செல்லுதல்; உலாவுதல்; பார்த்தல்; ஏறுதல்; செறிதல்; பாய்தல்; பொருந்துதல்; மேற்கொள்ளுதல்; விரும்புதல்; ஒத்தல்; எழும்புதல்; நடத்தல்; கலத்தல்.

**இவர்வு** – ஏறுதல்.

**இவரித்தல்** – எதிர்த்தல்.

**இவவு** – இழிவு; தாழ்வு.

**இவறல்** – விருப்பம்; பேரவா; கடும்பற்றுள்ளம், ஈயாமை; மறதி.

**இவறலன்** – தானும் துய்யான் பிறருக்கும் ஈயான், கடும்பற்றுள்ளன்.

**இவறன்மை** – கடும்பற்றுள்ளம்; அசட்டை; ஆசை.

**இவறியார்** – கைவிடாதவர்; ஆசைப்பட்டோர்.

**இவறுதல்** – ஆசையுறல்; விரும்புதல்; மறத்தல்; மிகுதல்; உலாவுதல்; கைவிடாதிருத்தல்; வேண்டும்வழிப் பொருள் கொடாமை.

**இவனட்டம்** – மிளகு.

**இவுளி** – குதிரை; மாமரம்.

**இவுளிமறவன்** – குதிரைவீரன்.

**இவை** – அண்மையிலுள்ள பொருள்களைச் சுட்டு தற்குரிய சொல்.

**இழத்தல்** – தவறவிடுதல்; சாகக் கொடுத்தல்; கைவிடுதல்.

**இழந்தநாள்** – பயனின்றிக் கழிந்த நாள்.

**இழப்பு** – இழக்கை, நட்டம்; பொருளழிவு.

**இழப்புணி** – இழந்தவன்(ள்).

**இழவு** – இழப்பு; கேடு; சாவு; எச்சில்; வறுமை.

**இழவுக்கடித்தல்** – சாவுவீட்டில் மார்பில் அடித்து அழுதல்; வீணுக்கு முயலுதல்.

**இழவுகொடுத்தல்** – வீணிலே வருத்தல்.

**இழவுசொல்லுதல்** - சாவுச்செய்தியை அறிவித்தல்.

**இழவுவிழுதல்** – சாவு நேர்தல்; கேடு உண்டாதல்.

**இழவூழ்** – கேடு தரும் வினைப்பயன்.

**இழவோலை** – சாவோலை, சாவையறிவிக்குங் கடிதம்.

**இழி** (வி) – இறங்கு.

**இழிகடை** – மிக இழிந்தது.

**இழிகண்** – எப்பொழுதும் பீளைநீர் ஒழுகும் கண்.

**இழிகுலம்** – தாழ்ந்த குடி.

**இழிகை** – கைச்சுரிகை; கையீட்டி; இறங்குதல்.

**இழிங்கு**:– ஈனம்; வடு.

**இழிச்சல்வாய்** – திறந்த வாய்.

**இழிச்சுதல்** – இழிவுபடுத்தல்; இறக்குதல்; கீழ்ப் படுத்தல்; அவமதித்தல்; இடித்தல்; தள்ளிக் கொடுத்தல்.

**இழிசினர்மொழி** – கீழ்மக்கள் பேச்சு.

**இழிசினன், இழிஞன்** } – புலைமகன்; தாழ்ந்தோன்.

**இழிசொல்** – பழிச்சொல்; பொய்ம்மொழி; கடுஞ் சொல்; பயனில்சொல்.

**இழித்தல்** – இறக்குதல்; இகழுதல்.

**இழித்துரை** – இழிவாகக் கூறும் சொல்.

**இழிதகவு** – இழிவு, எளிமை.

**இழிதகன்** – இழிந்தவன்; பிறர் பழிக்கத்தக்க செயலையுடையவன்.

**இழிதல்** – இறங்குதல்; விழுதல்; இழிவுபடுதல்; தாழ்தல்; வெளிப்படுதல்.

**இழிதிணை** – காண்க: **அஃறிணை.**

**இழிந்தேறும்வழி** – படுகர்; ஏற்ற இறக்கமான பாதை.

**இழிந்தோர்** – தாழ்ந்தநிலையில் இருக்கின்றவர்.

**இழிநீர்** – வடியுநீர்.

**இழிப்பு** – நிந்திக்கை; இகழ்வு; இழிப்புச் சுவை.

**இழிபாடு** – இழிவு.

**இழிபிறப்பினோன்** – இழிசினன், கீழ்மகன்.

**இழிபு** – இழிவு; தாழ்வு; பள்ளம்; கீழ்மை; சிறுமை.

**இழிபுனல்** – வடிந்த நீர்; மலையினின்று விழு கின்ற அருவி.

**இழிய** – ஒழுக.

**இழியற்கண்** – இமை திறந்த கண்.

**இழியினன்** – காண்க: **இழிசினன்.**

**இழிவரவு** – காண்க: **இளிவரவு.**

**இழிவழக்கு** – இழிசினர் வழக்கு.

**இழிவு** – தாழ்வு; இகழ்ச்சி, நிந்தை; குறைவு; குற்றம்; கேடு; பள்ளம்; தீட்டு.

**இழிவுசிறப்பு** – இழிந்த தன்மையை மிகுத்து உரைத்தல்.

**இழின், இழினெனல்** } – ஒருவகை ஒலிக்குறிப்பு.

**இழு** (வி) – ஈர்; பின்வாங்கு; வசமாக்கு; உறிஞ்சு.

**இழுக்கடித்தல்** – அலையவைத்தல்.

**இழுக்கம்** – பிழை; ஒழுக்கந் தவறுகை; தீய நடத்தை; ஈனம்; தளர்வு; தாமதம்.

**இழுக்கல்** – வழுக்குகை; வழுக்குநிலம்; தளர்வு; தவறுதல்.

**இழுக்காமை** – மறவாமை.

**இழுக்காறு** – தீநெறி, தீயொழுக்கம்.

**இழுக்கு** – குற்றம்; பொல்லாங்கு; நிந்தை; தாழ்வு; மறதி; வழுக்கு; தவறு.

**இழுக்குதல்** – தவறுதல்; வழுக்குதல்; இழத்தல்; தளர்தல்; துன்புறுதல்; தள்ளிவிடல்; மறத் தல்; பின்வாங்கல்.

**இழுகுணி** – சோம்பேறி; பிசினாறி.

**இழுகுதல்** – பூசுதல்; பரத்தல்; படிதல்; தாமதித் தல்.

**இழுங்கு** – நீங்குகை; ஈனம், வழு.

**இழுத்தல்** – உறிஞ்சுதல்; ஈர்த்தல்; வலித்தல்; வச மாக்கல்; காலம் நீட்டித்தல்; சுழித்து வாங்குதல்; பின்வாங்குதல்; புறத்திலுள்ள நிறைகுறைகளை வெளிப்படுத்தல்; ஒலியை நீட்டுதல்; சுரம் பாடுதல்.

**இழுத்துவிடுதல்** – செயலை நீட்டித்துவிடுதல்; வலிந்து தொடர்புண்டாக்குதல்; வெளிப்படுத்தல்; புதிதாய் உண்டாக்குதல்.

**இழுது** – வெண்ணெய்; நெய்; நிணம்; தேன்; கள்; குழம்பு; சேறு; தித்திப்பு.

**இழுதுதல்** – கொழுத்தல்; நெய்த்தல்.

**இழுதை** – பேய்; அறிவின்மை; அறிவிலி; பொய்.

**இழுப்பாட்டம்** – காலம் நீட்டித்தல்; உறுதியின்மை.

**இழுப்பாணி** – கலப்பையின் ஏர்க்காலை நுகத்திலே பூட்டும் முளை; காலங்கடத்துவோன்.

**இழுப்பு** – இழுக்கை; கவர்ச்சி; இசிவுநோய்; நீரிழுப்பு; காலத்தாழ்வு; குறைவு; உறுதியின்மை.

**இழுப்புண்ணுதல்** – இழுக்கப்படுதல்.

**இழுப்புப்பறிப்பாதல்** – போராட்டமாதல்; போதியதும் போதாததும் ஆதல்.

**இழுப்புமாந்தம்** – ஒரு நோய், மாந்தவகை.

**இழுபறி** – தொல்லை; பிணக்கு; போராட்டம்; வாது.

**இழுபறிப்படுதல்** – தொல்லைப்படுதல்.

**இழும்** – இனிமை; உவப்பு; ஓர் ஒலிக்குறிப்பு; மென்மை.

**இழுமு** – தித்திப்பு; களிப்பு; இனிமை.

**இழுமெனல்** – அனுகரணவோசை; இனிய ஓசைக்குறிப்பு; இனிமை; சீர்மை; வழுவழுப்பு.

**இழுவல்** – இழுக்கை; காலந்தாழ்த்தல்; சுறுசுறுப்பில்லாதவன்; குறைவு; உறுதியின்மை.

**இழுவை** – இழுப்பு; இழுக்கப்படும் பொருள்; வடம்; இழுத்த தடம்; ஒரு முட்செடி.

**இழை** – நூல்; நூலிழை; அணிகலன்; கையிற்கட்டுங்காப்பு.

**இழைக்கயிறு** – நூற்கயிறு; காப்புநூல்.

**இழைக்குளிர்ச்சி(த்தி)** – துணியின் மென்மை; புடைவையின் மென்மை.

**இழைக்கை** – இழைத்தல்.

**இழைகொள்ளுதல்** – தைத்தல்.

**இழைத்த நாள்** – விதித்த நாள், ஏற்படுத்தப்பட்ட கால அளவு.

**இழைத்தல்** – செய்தல்; குழைத்தல்; தூற்றல்; செதுக்குதல்; வரைதல்; மூச்சிரைத்தல்; கூறுதல்; நுண்ணிதாக ஆராய்தல்; பூசுதல்; வஞ்சினங் கூறுதல்; கலப்பித்தல்; அமைத்தல்; இழையாக்குதல்; மாத்திரை முதலியன உரைத்தல்; பதித்தல்.

**இழைத்துணர்தல்** – நுட்பமாக ஆராய்ந்துணர்தல்.

**இழைதல்** – நூற்கப்படுதல்; உராய்தல்; சோறு முதலியன குழைதல்; கூடுதல்; நெருங்கிப்பழகுதல்; உள்நெகிழ்தல்; மூச்சுச் சிறுகுதல்; குறுமூச்சு விடுதல்; மனம் பொருந்துதல்.

**இழைந்தவர்** – கூடினவர்.

**இழைநெருக்கம்** – இழைக்குளிர்ச்சி, ஆடையின் மென்மை.

**இழைப்பு** – இழைத்தல்.

**இழைப்புடைவை** – நல்லாடை.

**இழைப்புளி** – சீவுளி; இழைக்குந் தச்சுக்கருவி.

**இழைபிடித்தல்** – காயத்தை மூடித்தைத்தல்.

**இழைபு** – நூலழகுகளுள் ஒன்று, வல்லெழுத்துச் சேராது வருவது.

**இழைபோடல்** – புடைவை பொத்துதல்; இழையிட்டுத் தைத்தல்.

**இழையா(யி)டுதல்** – இழையிட்டுத் தைத்தல்.

**இழையூசி,**
**இழைவாங்கி** } – மெல்லிய ஊசி.

**இளஃகுதல்** – தளிர்த்தல்.

**இளக்கம்** – இளகிய தன்மை; நெகிழ்ச்சி; தளர்ச்சி; மென்மை; தணிவு.

**இளக்கரித்தல்** – வேகந்தணிதல்; செயலில் கவனமின்றியிருத்தல்; தளர்தல்; இளகிப் பின்னிடுதல்.

**இளக்காரம்** – இளக்கம்; மனநெகிழ்ச்சி; தாழ்நிலை; குறைவு.

**இளக்குதல்** – நெகிழச்செய்தல்; அசைத்தல்.

**இளக்கும்**– அசைக்கும்.

**இளகம்** – இலேகியம், மருந்து வகை.

**இளகல்,**
**இளகுதல்** } – நெகிழ்தல்; குழைதல்; அசைதல்; தழைத்தல்; மென்மையாதல்; உருகுதல்; தணிதல்.

**இளங்கதிர்** – பயிரின் இளங்கதிர்; இளங்கிரணம்; உதயசூரியன்.

**இளங்கம்பு** – கம்புவகை.

**இளங்கலையான்** – ஒரு நெல்வகை.

**இளங்கள்** – புதிய கள்.

**இளங்கற்றா** – இளங்கன்றையுடைய பசு.

**இளங்கன்று** – சிறுகன்று; மரக்கன்று; முதிராத கன்று.

**இளங்காய்** – முதிராத காய்.

**இளங்கார்** – கார்நெல்.

**இளங்கால்** – தென்றல்; வெற்றிலையிளங்கொடி; இளமைப் பருவம்.

**இளங்காலை** – அதிகாலை; இளமைப் பருவம்.

**இளங்காற்று** – மெல்லிய காற்று, தென்றல்.

**இளங்கிடை** – ஊர்மாடுகள் எல்லாம் திரளும் வரை சேர்ந்த மாடுகளை மேய்ப்போன் நிறுத்தி வைக்கும் இடம்.

**இளங்கிளை** – தங்கை; இளமைச் சுற்றம்.

**இளங்குரல்** – சிறுகுரல்; பயிரிளங்கதிர்.

**இளங்குருத்து** – முதிராத குருத்து.
**இளங்கேள்வி** – துணை மேலாளன்.
**இளங்கொடி** – சிறுகொடி; பசுவின் நஞ்சுக்கொடி; பெண்.
**இளங்கொம்பு** – வளார்.
**இளங்கொற்றி** – இளங்கன்றையுடைய பசு.
**இளங்கோ** – இளவரசன்; பூவணிகன்.
**இளங்கோயில்** – திருப்பணிக்காக மூர்த்தியை வேறிடத்தில் வைக்குமிடம்.
**இளசு** – காண்க: **இளைது**.
**இளஞ்சூடு** – சிறு சூடு.
**இளஞ்சூல்** – பயிரின் இளங்கரு; முதிராப் பிண்டம்.
**இளஞாயிறு** – உதயசூரியன்.
**இளந்தண்டு** – முளைக்கீரை.
**இளந்தலை** – இளமைப் பருவம்; எளிமை; கனமின்மை; மரத்தின் முற்றாத பாகம்.
**இளந்தாரி** – இளைஞன், வாலிபன்.
**இளந்தென்றல்** – சிறு தென்றல்.
**இளந்தேவி** – அரசனின் இளைய மனைவி.
**இளந்தை** – இளவயதுடையது; இளமை; குழந்தை.
**இளந்தோயல்** – உறைந்துவருந் தயிர்; ஆயுதங்களைப் பதமிடும் தோய்ச்சல்.
**இளநகை** – புன்சிரிப்பு.
**இளநலம்** – இளைய வடிவு; இளமை இன்பம்.
**இளநாக்கடித்தல்** – உறுதியில்லாமற் பேசல்; உடன்படாததுபோற் காட்டுதல்.
**இளநாள்** – இளவேனில்.
**இளநிலா** – அந்திநிலா, பிறைச்சந்திரன்.
**இளநீர்** – இளந்தேங்காய்; தெங்கின் இளங்காயிலுள்ள நீர்; மணியின் இளநிறம்; வெள்ளொளி.
**இளநீர்க்கட்டு** – உள்நாக்கு நோய்.
**இளநீர்க்குழம்பு** – இளநீரால் செய்யப்படும் கண் மருந்துவகை.
**இளநீர்த்தாதல்** – தேய்ந்து மெலிதல்.
**இளநீரமுது** – வழிபாட்டில் படைக்கும் இளநீர்.
**இளநீலம்** – வெளிறிய நீலம்.
**இளநெஞ்சன்** – கோழை மனமுடையவன்; இளகின மனமுடையவன், இரக்கமுள்ள மனமுடையவன்.
**இளநெஞ்சு** – இளகின மனம், இரக்கமுள்ள மனம்; கோழை மனம்.
**இளநேரம்** – மாலை.
**இளப்பம்** – திடமின்மை, உறுதியின்மை; தாழ்வு; மென்மை.
**இளம்பச்சை** – நன்றாகப் பற்றாத பச்சை நிறம்.
**இளம்பசி** – சிறுபசி.
**இளம்படியார்** – இளம்பெண்கள்.
**இளம்பதம்** – இளமை முற்றாநிலை; இளம்பாகம்; உருகுபதம்; வேகாப்பதம்; நெல் முதலியவற்றின் காய்ச்சற் குறைவு.
**இளம்பருவம்** – இளவயது; மெல்லிய பதம்.
**இளம்பாக்கு** – பாக்குவகை; பச்சைப் பாக்கு.
**இளம்பாகம்** – காண்க: **இளம்பதம்.**
**இளம்பாடு** – இளமையிற்படும்பாடு; இளம்பதம்; முற்றாமை.
**இளம்பாலாசிரியன்** – இளம்பாலர்க்குக் கற்பிக்கும் ஆசிரியன்.
**இளம்பிள்ளைவாதம்** – குழந்தைகளுக்கு வரும் ஒருவகை வாதநோய்.
**இளம்பிறை** – பிறைச்சந்திரன்; இணையா வினைக்கைவகை.
**இளம்புல்** – முதிராத புல்; அறுகு.
**இளம்பெண்** – இளம்பருவத்துப் பெண்; கற்றாழை.
**இளமட்டம்** – கீழ்மையும் இளமையும் உடையது; குறுமட்டக் குதிரை; காண்க: **இளவட்டம்.**
**இளமண்** – மணல்கொண்ட தரை.
**இளமணல்** – குருத்துமணல்.
**இளமரக்கா** – வயல் சூழ்ந்த சோலை; இளஞ் சோலை.
**இளமழை** – பயன்படுவதாகிய மேகம்; சிறு பெயலுள்ள முகில்.
**இளமார்பு** – கருப்பூரவகை.
**இளமுறை** – பின்வழிமுறை.
**இளமை** – இளமைப் பருவம்; சிறு பருவம்; மென்மை; அறிவு முதிராமை; ஒன்றை வேறொன்றாக மயங்கும் மயக்கம்; காமம்.
**இளமைச்செவ்வி** – சிறுபருவம்; கோமளம்.
**இளமையாடுதல்** – திரிபுணர்ச்சியுறுதல்.
**இளவட்டம்** – இளமட்டம், இளம்பருவத்தினர்.
**இளவணி** – காலாட்படை.
**இளவரசன்** – பட்டத்துக்குரிய அரசகுமாரன்; இளம் பருவத்து அரசன்; இராச குமாரன்.
**இளவரசு** – அரசகுமாரன்; பட்டத்துக்குரிய பிள்ளை; இளமையான அரசமரம்.
**இளவல்** – தம்பி; குமாரன்; இளைஞன்; முதிராதது.
**இளவழிபாடு** – சிறுபிள்ளைக் கல்வி.
**இளவாடை** – மெல்லிய வாடைக்காற்று.
**இளவாளிப்பு** – ஈரம்.
**இளவுச்சி** – உச்சிக் காலத்துக்கு அணித்தான முற்பொழுது.
**இளவுடையான்** – காண்க: **இளவரசு.**
**இளவுறை** – இளந்தயிர்.
**இளவெந்நீர்** – சிறு சூடான நீர்.
**இளவெயில்** – காலை வெயில்; முதிராத வெயில்.

**இளவேனில்** – வசந்த காலம், சித்திரை வைகாசி மாதங்கள்.
**இளாவிருதம்**– நன்னீர்க் கடலாற் சூழப் பெற்ற நிலப்பகுதி, ஒன்பது கண்டத்துள் ஒன்று.
**இளி** – இகழ்ச்சி; குற்றம்; சிரிப்பு; இகழ்ச்சிக் குறிப்பு; நகை; யாழின் நரம்புகளுள் ஒன்று; ஒருவகைச் சுரம்; இழிவு.
**இளிகண்** – பீளைக்கண்.
**இளிச்சகண்ணி** – காமக் குறிப்போடு பிறரை நோக்கும் தன்மையுடையாள்.
**இளிச்சவாயன்** – எப்போதும் பல்லைக் காட்டுவோன்; எளிதில் ஏமாற்றப்படுபவன்; அப்பாவி; நுட்ப புத்தியில்லாதவன்.
**இளிச்சற்கண்** – காண்க: **இளிகண்.**
**இளித்தல்** – பல்லைக் காட்டுதல்; பல்லைக் காட்டிச் சிரித்தல்; கேலி செய்தல்.
**இளித்தவாய்ப் பட்டம்** – இளித்தவாயன் எனப் படுகை.
**இளித்தவாயன்** – காண்க: **இளிச்சவாயன்.**
**இளிதல்** – இணுங்குதல்; உரித்தல்; இகழப்பட்டு எளியனாதல்.
**இளிந்தகாய்** – இணுங்கின காய்; பாக்கு.
**இளிப்படுதல்** – அகப்படுதல்; எளிமையாதல்.
**இளிப்பு** – பல்லிளிக்கை; பல் காட்டுதல்; இழிவு; நிந்தை.
**இளிம்பு** – திறமையின்மை.
**இளிவரல்** – இழிப்புச்சுவை; இழிவு.
**இளிவரவு** – இகழ்ச்சி; சிறுமை; இழிதொழில்.
**இளிவு** – இழிவு; இகழ்ச்சி; இழிதகவு; அருவருப்பு; அவலச்சுவை நான்கனுள் ஒன்று; நிந்தை.
**இளை** – தலைக்காவல்; காவற்காடு; கட்டுவேலி; பூமி; இளமை; இளையாள்; தம்பி; தங்கை; மேகம்; பசு; திருமகள்; காவல்.
**இளைச்சி** – தங்கை.
**இளைஞன்** – இளவல்; தம்பி; சிறுவன்; இளையோன்.
**இளைத்தல்** – சோர்தல், தளர்தல்; மெலிதல்; இரங்கல்; பின்னிடுதல், தோற்றுப்போதல்; வளங்குன்றுதல்.
**இளைத்தோர்** – எளியவர்.
**இளைது** – இளையது, முதிராதது.
**இளைப்படுதல்** – வலையில் அகப்படுதல்.
**இளைப்பம்** – காண்க: **இளப்பம்.**
**இளைப்பாற்றி** – களைப்பைப் போக்குவது.
**இளைப்பாற்றுதல்** – இளைப்பாறச் செய்தல்; களைப்பைப் போக்குதல்; ஓய்ந்திருத்தல்.
**இளைப்பாறுதல்** – விடாய் தீர்த்தல்; களைப்பு நீங்கல்; ஓய்ந்திருத்தல்.
**இளைப்பாறு மண்டபம்** – வசந்த மண்டபம்.
**இளைப்பு** – களைப்பு; சோர்வு; வருத்தம்; மெலிவு; தொய்வு.
**இளைமை** – காண்க: **இளமை.**
**இளைய தம்பி** – இளையவனுக்கு இளையவன்.
**இளைய பிள்ளையார்** – முருகக் கடவுள்.
**இளையபெருமாள்** – இலக்குமணன்.
**இளையர்** – இளைஞர்; பணியாளர்.
**இளையவர்** – இளம்பெண்கள்.
**இளையவள்** – இளமைத் தன்மையுடையவள்; தங்கை; திருமகள்; இளைய மனைவி.
**இளையவன்** – ஆண்டில் குறைந்தவன்; தம்பி; முருகன்.
**இளைய(யா)ள்** – தங்கை; திருமகள்; பெண்; இளைய மனைவி.
**இளைய(யா)ன்** – இளையவன், தம்பி.
**இளையார்** – பெண்கள்; தோழியர்.
**இளையாழ்வார்** – இராமானுசர்; இலக்குவன்.
**இளையெள்** – முற்றாத எள்.
**இளையோன்** – காண்க: **இளையவன்.**
**இளைவலி** – கரிக்காடு.
**இற்கடை** – வீட்டுவாயில்.
**இற்கிழத்தி** – இல்லக் கிழத்தி, மனையாள்.
**இற்செறித்தல்** – தலைவியின் அகவை முதிர்ச்சி நோக்கிப் பெற்றோர் அவளை வீட்டிலேயே தங்கியிருக்கச் செய்தல்.
**இற்செறிப்பார்** – வீட்டில் சேர்ப்பார்.
**இற்செறிப்புணர்த்தல்** – தலைவி இல்லக் காவலில் வைக்கப்பட்டிருத்தலைத் தோழி தலைவனுக்கு உணர்த்துதல்.
**இற்செறிப்பு, இற்செறிவ்** } – காண்க: **இற்செறித்தல்.**
**இற்பரத்தை** – காமக்கிழத்தியாகக் கொண்ட பரத்தை.
**இற்பாலர்** – நற்குடியிற் பிறந்தவர்.
**இற்பிறப்பு** – நல்ல குடியிற் பிறத்தல்; உயர்குடிப் பிறப்பு.
**இற்புலி** – பூனை.
**இற்றி** – காண்க: **இத்தி.**
**இற்றிசை** – இல்லறம்.
**இற்று** – இத்தன்மைத்து; ஒரு சாரியை.
**இற்றுப்போதல்** – நைந்துபோதல்; அழுகிப் போதல்; முரிந்துபோதல்.
**இற்றும்** – இன்னும், மேலும்.
**இற்றுவிழுதல்** – நைந்து கெட்டுவிடுதல்; முரிந்து விழல்.
**இற்றை** – இன்றைக்கு; இன்று; இந்நாள்.
**இற்றைத்தினம், இற்றைநாள்** } – இன்று.

**இறக்கம்** – இறங்குகை; சரிவு; இறங்குதுறை; விலங்குகள் செல்வழி; அம்மை முதலிய இறக்கம்; நிலை தவறுகை; உணவு முதலியன உட்செல்லுகை; இறப்பு.

**இறக்கல்** – காண்க: **இறக்குதல்.**

**இறக்கிடல்** – இறங்கச்செய்தல்; தலைகுனிதல்; கீழ்ப்படுத்தல்; தாழ்த்தல்.

**இறக்குதல்** – இறங்கச்செய்தல்; கீழ்ப்படுத்தல்; தாழ்த்தல்; தைலம் முதலியன வடித்தல்; கெடுத்தல்; சாதல்.

**இறக்குதுறை** – பண்டம் இறக்கும் துறைமுகம்.

**இறக்குமதி** – வேற்று நாடுகளிலிருந்து தருவிக்கப் படும் சரக்கு; துறைமுகத்திலிருந்து சரக்கு இறக்குகை; இறக்கும் துறைமுகச் சரக்கு.

**இறக்கை** – சிறகு; கிணற்றின் இருபுறங்களிலு முள்ள துணைச்சுவர்; இறத்தல்.

**இறக்கைச் சுவர்** – துணைச் சுவர்.

**இறகர்** – பறவையிறகு; சிறகு.

**இறகு** – சிறகு; பறவையிறகு; மயிற்பீலி.

**இறகுபேனா** – இறகாலான எழுதுகோல்.

**இறகுளர்தல்** – சிறகடித்துக் கொள்ளுதல்.

**இறங்கண்டம்** – ஒருவகை அண்டநோய்.

**இறங்கர்** – குடம்.

**இறங்கல், இறங்கல்மீட்டான்** – ஒருவகை நெல்.

**இறங்குகிணறு** – உள்ளே இறங்கிச் செல்வதற்குப் படி வரிசையுள்ள கிணறு.

**இறங்குதல்** – இழிதல்; தாழ்தல்; தங்குதல்; கீழ்ப்படுதல்; சரிதல்; தாழ்வடைதல்; நிலை குலைதல்; நாணுதல்.

**இறங்குதுறை** – மக்கள் இறங்கிப் பயன்படுத்தும் நீர்த்துறை.

**இறங்குபொழுது** – பிற்பகல்.

**இறங்குமுகம்** – தணியும் நிலைமை.

**இறங்குவெயில்** – பிற்பகல் வெயில்.

**இறங்கொற்றி** – அனுபவ ஒற்றி.

**இறஞ்சி** – ஆடைவகை; அவுரி.

**இறட்டுதல்** – முகந்து வீசுதல்.

**இறடி** – தினை; கருந்தினை.

**இறத்தல்** – கடத்தல்; கழிதல்; நெறிகடந்து செல்லுதல்; சாதல்; மிகுதல்; வழக்குவீழ்தல்; நீங்குதல்.

**இறந்தகாலம்** – சென்ற காலம்.

**இறந்துவிலக்கல்** – முப்பத்திரண்டு தந்திர உத்தி களுள் ஒன்று, நூல் செய்வோன் இறந்து போன வழக்காறுகளை நீக்குதல்.

**இறந்தன்று** – மிக்கது; சிறந்தது.

**இறந்தவழக்கு** – வீழ்ந்த வழக்கு.

**இறந்திரி** – இத்திமரம்.

**இறந்துபடுதல்** – சாதல்.

**இறந்துபாடு** – இறந்துபடுகை; சாவு.

**இறப்ப** – மிகவும், மேன்மேலும்.

**இறப்பு** – அதிக்கிரமம்; மிகுதி; போக்கு; இறப்பு; உலர்ந்த பொருள்; வீடுபேறு; வீட்டின் இறப்பு; இறந்த காலம்.

**இறப்பை** – இமையிதழ்.

**இறல்** – ஒடிதல்; கெடுதல்; இறுதி; சிறு தூறு; கிளிஞ்சில்.

**இறலி** – இத்திமரம்; மருதமரம்; கொன்றை; ஏழு தீவுள் ஒன்று.

**இறவம்** – இறால்மீன்.

**இறவாரம்** – தாழ்வாரம்; தாழ்வாரத்துக் கூரை யின் முன்பாகம்.

**இறவானம்** – தோற்கருவிவகை; காண்க: **இறவாரம்.**

**இறவி** – சாவு; இறத்தல்.

**இறவின்மை** – அழியாமை, இறைவன் எண் குணங்களுள் ஒன்று.

**இறவு** – சாவு; முடிவு; நீக்கம்; மிகுதி; இறால் மீன்; தேன்கூடு; வீட்டிறப்பு; எல்லை.

**இறவுள்** – குறிஞ்சிநிலம்.

**இறவுளர்** – குறிஞ்சிநில மாக்கள்.

**இறவை** – ஏணி; இறைகூடை; விரற்புட்டில்.

**இறா** – காண்க: **இறவம்.**

**இறாஞ்சுதல்** – பறவை பறந்து பாய்தல்; பறித்தல்; தட்டியெடுத்தல்.

**இறாட்டாணியம்** – இடுக்கண், துன்பம், வருத்தம்.

**இறாட்டுதல்** – உரைசுதல்; பகைத்தல்.

**இறாட்டுப்பிறாட்டு** – சச்சரவு.

**இறாத்தல்** – ஒரு நிறையளவு, ஆறு பலங் கொண்ட நிறை; மீன் தீர்வைத் துறை.

**இறாய்த்தல்** – பின்வாங்குதல்.

**இறால்** – இறால்மீன்; வெள்ளிறால்; இடபராசி; கார்த்திகை நாள்; தேன்கூடு; எருது.

**இறாவுதல்** – வதக்கி மயிர்போகச் சீவுதல்.

**இறுக்கம்** – நெகிழாத்தன்மை; அழுத்தம்; நெருக்கம்; ஒழுக்கம் கையழுத்தம்; முட்டுப் பாடு; புழுக்கம்.

**இறுக்கர்** – பாலை நிலத்தவர்.

**இறுக்கன்** – ஈயாதவன், கடும்பற்றுள்ளன்.

**இறுக்கு** – இறுக்கிய கட்டு; இறுக்கிய முடிச்சு; ஒடுக்குகை; கண்டிக்கை.

**இறுக்குதல்** – அழுந்தக் கட்டுதல்; இறுக உடுத்தல்; ஒடுக்குதல்; உள்ளழுத்துதல்; உறையச் செய்தல்.

**இறுக்குவாதம்** – உடலை வளைத்துக்கொள்ளும் ஒருவகை வாதநோய்.

**இறுகங்கியான்** – கரிசலாங்கண்ணி.

**இறுகநீக்குதல்** – கைவிடுதல்.
**இறுகரை** – இடிகரை.
**இறுகல்** – சுருங்குகை; கடினமாதல்; பதுமராக மணியின் குற்றங்களுள் ஒன்று.
**இறுகால்** – ஊழிக்காற்று.
**இறுகுதல்** – அழுத்தமாதல்; கெட்டியாதல்; உறைதல்; நெருங்குதல்; உறுதியாதல்; நிலை பெறுதல்; மூர்ச்சித்தல்; மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்று.
**இறுங்கு** – சோளவகை, காக்காய்ச் சோளம்.
**இறுத்தருதல்** – வருதல்.
**இறுத்தல்** – தங்குதல்; ஒடித்தல்; சொல்லுதல்; வடித்தல்; விடைகூறல்; முடித்தல்; வெட்டல்; கடன் செலுத்தல்; அழித்தல்; வீழ்த்துதல்; எறிதல்; வினாதல்; தைத்தல்.
**இறுதல்** – ஒடிதல், முறிதல்; கெடுதல்; அழிதல்; முடிதல்; தளர்தல்; முடிவுறுதல்; சாதல்.
**இறுதி** – முடிவு; சாவு; வரையறை.
**இறுதிக்காலம்** – இறப்புக்காலம்; ஊழிக்காலம்.
**இறுதிநிலைத்தீப(வ)கம், இறுதிவிளக்கு** – கடைநிலை விளக்கு, ஒரு சொல் இறுதியிலே நின்று முன்வருஞ் சொற்கள் பலவற்றோடும் பொருந்திப் பொருள் விளைப்பது.
**இறுதிவேள்வி** – அந்தியேட்டி; ஈமக்கடன் செய்கை.
**இறுநாகம்** – காண்க: **இலாமிச்சை.**
**இறுப்பு** – தங்குகை; குடியிறை; கடன் செலுத்துகை.
**இறும்பி** – எறும்பு.
**இறும்பு** – குறுங்காடு; சிறுதூறு; சிறுமலை; தாமரைப்பூ; காந்தட் பூண்டு; வியப்பு.
**இறும்பூது** – வியப்பு; பெருமை; மலை; தளிர்; சிறுதூறு; தாமரைப்பூ.
**இறுமாத்தல்** – பெருமை பாராட்டுதல்; செருக்கடைதல்; நிமிர்தல்; மிக மகிழ்தல்.
**இறுமாப்பு** – பெருமிதம்; பெருமை பாராட்டுகை; செருக்கு; நிமிர்ச்சி.
**இறுமுறி** – கிழிந்துபோன பத்திரம்; தீர்ந்துபோன பத்திரம்.
**இறுவதஞ்சாமை** – இழிப்புக்கு அஞ்சாதிருத்தல்; வணிகர் குணங்களுள் ஒன்று.
**இறுவரை** – முடிவு; அழியுங்காலம்; பெரிய மலை; பக்கமலை; மலையின் அடிவாரம்.
**இறுவரையம்** – எல்லை; தற்சமயம்.
**இறுவாக** – இறுதியாக.
**இறுவாய்** – முடிவு; ஈறு; இறப்பு.
**இறை** – உயரம்; தலை; கடவுள்; தலைவன்; அரசன்; உயர்ந்தோன்; மூத்தோன்; பெருமையிற் சிறந்தோன்; கணவன்; பறவையிறகு; கடன்; வீட்டிறப்பு; மறுமொழி; மணிக்கட்டு; குடியிறை; சிறுமை, அற்பம்; காலவிரைவு; சிவன்; பிரமன்; மாமரம்.
**இறை** (வி) – இறைத்துவிடு; தூவு; எறி, வீசு; தங்கு.
**இறைக்கட்டு** – வரி.
**இறைக்கள்ளன்** – காண்க: **இறைப்பிளவை.**
**இறைக்காசான்** – முருகக்கடவுள்.
**இறைகுடி** – வரி கொடுப்போன்.
**இறைக்குத்து** – சாகுந்தறுவாயில் கண்விழி அசைவற்று இருக்கை.
**இறைகாவல்** – தலையாரிக்குரிய வரி.
**இறைகிழவன்** – அரசனாதல் தன்மையை உடையவன்.
**இறைகுத்துதல்** – மதிப்பிடுதல்; விரலிறையால் அளவிடுதல்.
**இறைகூடுதல்** – அரசாளுதல்.
**இறைகூடை** – நீரிறைக்குங் கூடை.
**இறைகூர்தல்** – தங்குதல்.
**இறைச்சி** – மாமிசம்; இறைச்சிப் பொருள்; கருப்பொருள்; விருப்பமானது.
**இறைச்சிப்பொருள்** – கருப்பொருளினுள்ளே கொள்ளும் பொருள்; புறத்துச் செல்லும் குறிப்புப் பொருள்.
**இறைச்சிப்போர்** – உடம்பு.
**இறைசூதன்** – நான்முகன்.
**இறைஞ்சலர், இறைஞ்சார்** – பகைவர்.
**இறைஞ்சி** – மரவுரி.
**இறைஞ்சு** (வி) – வளை; வணங்கு.
**இறைஞ்சுதல்** – தாழ்தல்; கவிழ்தல்; வளைதல்; வணங்குதல்.
**இறைத்தல்** – சிதறுதல்; நீர் பாய்ச்சுதல்; நிறைத்தல்; மிகுதியாகச் செலவிடுதல்.
**இறைதல்** – சிதறிப்போதல், சிந்துதல்; வணங்குதல்.
**இறைதிரியல்** – அரசநீதி திறம்பல்.
**இறைப்பாரம்** – உயிர்களைக் காக்கும் அரசனுடைய பொறுப்பு.
**இறைப்பிணைப்படுதல்** – ஒருவன் செலுத்த வேண்டும் வரிக்குப் பிணைகொடுத்தல்.
**இறைப்பிளவை** – கைவிரலிடுக்கில் வரும் ஒரு வகைப் புண்.
**இறைப்பு** – நீர் இறைக்கை.
**இறைப்புப்பட்டரை** – கிணற்றுப் பாய்ச்சலுள்ள இடம்.
**இறைபயப்பது** – குறிப்பாகப் பொருளை விளக்கும் விடை.
**இறைமகள்** – தலைவி; அரசன் மகள்; துர்க்கை.
**இறைமகன்** – அரசன்; அரசன் மகன்.

**இறைமரம்** – இறைகூடை தாங்கும் மரம்; ஏற்ற மரம்.

**இறைமாட்சி** – அரசியல்; அரசனின் நற்குண நற்செயல்கள்.

**இறைமை** – தலைமை; அரசாட்சி; தெய்வத் தன்மை.

**இறைமையாட்டி** – தலைவி; அரசி.

**இறைமொழி** – மறுமொழி; இறைவன் அருளிய ஆகமம்.

**இறையமன்** – யமனுக்கு மூத்தோன், சனி.

**இறையவன்** – கடவுள்; தேவர் தலைவன்; தலைவன்.

**இறையாயிரங் கொண்டான்** – ஒரு விரல் இறைக்கு ஆயிரங் கல நெற்கொள்ளும் களஞ்சியம்.

**இறையான்** – சிவன்.

**இறையிலி** – வரி நீக்கப்பட்ட நிலம்.

**இறையிழித்துதல்** – வரி நீக்குதல்.

**இறையுணர்வு** – பதிஞானம், இறைவனையறியும் அறிவு.

**இறையெண்ணுதல்** – விரலிறையால் கணக்கிடுதல்.

**இறையோன்** – கடவுள்; சிவன்; குரு; அரசன்; தலைவன்.

**இறைவரை** – கணப்பொழுது.

**இறைவன்** – தலைவன்; கடவுள்; சிவன்; திருமால்; அரசன்; பிரமன்; குரு; மூத்தோன்; கணவன்; சிவனார்வேம்பு.

**இறைவன்வேம்பு** – சிவனார்வேம்பு.

**இறைவனெண்குணம்** – கடவுளுக்குரிய எட்டுத் தன்மைகள்: பிறப்பின்மை, இறப்பின்மை, பற்றின்மை, பெயரின்மை, உவமையின்மை, வினையின்மை, குறைவில் அறிவுடைமை, குலமின்மை.

**இறைவி** – தலைவி; உமை; துர்க்கை.

**இறைவை** – இறைகூடை, நீர் இறைக்கும் மரப் பத்தல்; ஏணி; புட்டில்.

**இறைவைமரம்** – தண்ணீர் இறைக்கப் பயன்படும் மரத்தால் செய்த ஓடம் போன்ற கருவி.

**இன்** – இனிய; ஐந்தாம் வேற்றுமை உருபு; சாரியை; இறந்தகால இடைநிலை.

**இன்கண்** – இன்பம்; கண்ணோட்டம்.

**இன்கவி** – மதுரகவி; இன்னோசை தரும் பாக்களைப் பாடும் புலவன்.

**இன்சொல்** – இனிமை பயக்கும் சொல்.

**இன்பக்கொடி** – காண்க: **காமவல்லி.**

**இன்பச்செலவு** – உல்லாசப் பயணம், சுற்றுலா.

**இன்பம்** – மனமகிழ்ச்சி; இனிமை; ஒன்பான் சுவைகளுள் ஒன்று; சிற்றின்பம், காமம்; திருமணம்; நூற்பயன்களுள் ஒன்று.

**இன்பவுபதை** – அரசன் தன் அமைச்சரைத் தெரிந்து தெளியக் கொள்ளும் சோதனை நான்கனுள் ஒன்று; அதாவது, இன்பவுணர்வை எடுத்துரைத்துச் சோதித்தல்.

**இன்பன்** – கணவன்.

**இன்பித்தல்** – மகிழ்ச்சியூட்டுதல்.

**இன்பு** – காண்க: **இன்பம்.**

**இன்புறவு** – மகிழ்கை.

**இன்புறா, இன்பூறல்** – காண்க: **சாயவேர்.**

**இன்மை** – இல்லாமை; வறுமை; உடைமைக்கு மறுதலை; அறுவகை வழக்கினுள் ஒன்று.

**இன்மைவழக்கு** – காண்க: **இல்வழக்கு,** இல்லதனை இல்லை என்கை.

**இன்றி** – இல்லாமல்.

**இன்றிய** – இல்லாத.

**இன்றியமையாமை** – இல்லாமல் முடியாமை, அவசியம்.

**இன்று** – இலை; இந்த நாள்; ஓரசைச்சொல்.

**இன்றைக்கு** – இந்த நாளுக்கு.

**இன்றையதினம்** – இந்த நாள்.

**இன்ன** – இத்தன்மையான; இப்படிப்பட்டவை; ஓர் உவமவுருபு.

**இன்னணம்** – இன்ன வண்ணம் என்பதன் மரூஉ; இவ்விதம், இவ்வாறு.

**இன்னது** – இத்தன்மையது; இது.

**இன்னம்** – இத்தன்மையுடையேம்; காண்க: **இன்னும்;** இனிமேலும்.

**இன்னமும்** – காண்க: **இன்னும்.**

**இன்னயம்** – உபசார மொழி.

**இன்னர்** – இத்தன்மையர்; உற்பாதம்.

**இன்னல்** – துன்பம்; தீமை; குற்றம்.

**இன்னன்** – இப்படிப்பட்டவன், இத்தன்மையன்.

**இன்னா** – துன்பம்; தீங்கு தருபவை; கீழ்மையான; இகழ்ச்சி; வெறுப்பு.

**இன்னாங்கு** – தீமை; துன்பம்; கடுஞ்சொல்.

**இன்னாங்கோசை** – கடுமையான ஓசை.

**இன்னாது** – தீது; துன்பு.

**இன்னாப்பு** – துன்பம்.

**இன்னாமை** – இனியவாகாமை; துன்பம், துயரம்; தீமை.

**இன்னார்** – பகைவர்.

**இன்னாரினியார்** – பகைவரும் நண்பரும்.

**இன்னாரினையார்** – இத்தன்மை உடையவர்.

**இன்னாலை** – இலைக் கள்ளிமரம்.

**இன்னாவிசை** – செய்யுட் குற்றம் இருபத்தேழனுள் ஒன்று.

**இன்னான்** – இத்தன்மையன்; துன்பம் செய்பவன்.

**இன்னிசை** – இன்ப ஓசை; பண்; ஏழு நரம்புள்ள வீணை; இனிய பாட்டு; இன்னிசை வெண்பா.
**இன்னிசைக்காரர்** – இசைபாடுவார், பாணர்.
**இன்னிசை வெண்பா, இன்னிசை வெள்ளை** – நான்கடியாய்த் தனிச்சீர் இன்றிவரும் வெண்பா.
**இன்னியம்** – இசைக்கருவிகள்.
**இன்னியர்** – பாணர்.
**இன்னிலை** – இல்லற நிலை; பதினெண் கீழ்க் கணக்கு நூலுள் ஒன்று என்ப.
**இன்னினி** – இப்பொழுதே.
**இன்னும்** – இவ்வளவு காலம் சென்றும்; மறு படியும்; மேலும்; அன்றியும்.
**இன்னுமின்னும்** – மேன்மேலும்.
**இன்னுழி** – இன்ன இடத்து.
**இன்னே** – இப்பொழுதே; இவ்விடத்தே; இவ்வித மாகவே.
**இன்னோன்** – இப்படிப்பட்டவன்.
**இனக்கட்டு** – பந்துக்கட்டு; உறவினர்களிடையே உள்ள நெருக்கம், இனக் கூட்டம்; முறைமை.
**இனங்காப்பார்** – கோவலர், ஆயர்.
**இனஞ்சனம்** – உற்றார் உறவினர்.
**இனத்தான்** – உறவினன்.
**இனம்** – வகை; குலம்; சுற்றம்; சாதி; கூட்டம்; திரள்; அரசர்க்கு உறுதிச்சுற்றம்; அமைச்சர்; உவமானம்.
**இனமாற்றல்** – ஓரினக் கணக்கை மற்றோரினக் கணக்காக மாற்றுகை.
**இனமுறை** – ஒத்த சாதி.
**இனமொழி** – எண்வகை விடைகளுள் ஒன்று.
**இனமோனை** – இனவெழுத்தால் வரும் மோனை.
**இனவழி** – மரபுவழி, வமிச பரம்பரை.
**இனவழிக் கணக்கு** – பேரேடு.
**இனவாரி** – இனம் இனமாய்.
**இனவெதுகை** – இனவெழுத்தால் வரும் எதுகை.
**இனவெழுத்து** – தானம், முயற்சி, அளவு, பொருள், வடிவு முதலிய ஏதுக்களினால் ஒரு வகைப்பட்டுவரும் எழுத்துகள்; முயற்சிவகை யால் ஒன்றற்கொன்று இனமான எழுத்துகள்.
**இனன்** – சூரியன்; உறவினன்; ஒத்தவன்; ஆசிரியர்.
**இனாப்பித்தல்** – துன்பமுண்டாக்குதல்.
**இனாம்** – பயனோக்கா ஈகை; நன்கொடை; மானியம்.
**இனாம்தார்** – மானிய நிலத்துக்குரியவர்.
**இனி** – இப்பொழுது; இனிமேல்; பின்பு; இப்பால், இதுமுதல்.
**இனித்தல்** – தித்தித்தல்; இன்பமாதல்.
**இனிது** – இன்பந்தருவது; நன்மையானது; நன்றாக.
**இனிப்பு** – இனிமை, தித்திப்பு; மகிழ்ச்சி.
**இனிப்புக்காட்டுதல்** – ஆசைகாட்டுதல்; சுவை யாதல்.
**இனிமேல்** – இதற்குப் பிற்பாடு; இதுமுதல்; வருங் காலத்து.
**இனிமை**– இனிப்பு, தித்திப்பு; இன்பம்;
**இனியர்** – இன்பம் தருபவர்; மகளிர்.
**இனும்** – இன்னும்.
**இனை** – இன்ன; இத்தனை; வருத்தம்.
**இனைத்தல்** – வருத்துதல்; கெடுத்தல்.
**இனைத்து** – இத்தன்மைத்து; இவ்வளவினது.
**இனைதல்** – வருந்துதல்; இரங்குதல்; அஞ்சுதல்.
**இனைய** – இத்தன்மைய; இதுபோல்வன.
**இனைவரல்** – வருந்துதல், இரங்குதல்.
**இனைவு** – வருத்தம்; இரக்கம்.

# ஈ

**ஈ** – நான்காம் உயிரெழுத்து; துத்த இசையின் எழுத்து; ஈ என்னும் பறவை; தேனீ; வண்டு; முன்னிலை அசைச்சொல்; சிறகு; அழிவு; அம்பு; அரைஞாண்; இந்திர வில்; குகை; கொசு; தாமரை; நரி; பாம்பு; பார்வதி; திருமகள்; வியப்புக்குறிப்பு.
**ஈ (வி)** – ஈயென் ஏவல்; பகிர்ந்து கொடு; தா; சொரி.
**ஈக்குடி** – சாவிக் கதிர்.
**ஈக்கை** – புலிதொடக்கிக் கொடி; உப்பிலி.
**ஈகம்** – விருப்பம்; சந்தனமரம்; தியாகம்.
**ஈகாமிருகம்** – செந்நாய்.
**ஈகுதல்** – கொடுத்தல்; படைத்தல்.
**ஈகை** – கொடை; பொன்; கற்பகம்; இண்டு; புலிதொடக்கி; காடை; காற்று; மேகம்; கற்பகமரம்; இல்லாமை; ஈதல், கொடுத்தல்.
**ஈகையன், ஈகையாளன்** – கொடையாளன்.
**ஈங்கண்** – இவ்விடம்.
**ஈங்கம்** – சந்தனமரம்.
**ஈங்கன், ஈங்கனம்** – இங்ஙனம்; இவ்விடம்; இவ்வாறு.
**ஈங்கிசை** – கொலை; வருத்தம்; இகழ்ச்சி.
**ஈங்கு** – இவ்விடம்; இண்டங்கொடி; இவ்வுலகம்; இப்படியே; சந்தனம்.
**ஈங்கை** – இண்டங்கொடி; இண்டம்பூ; உப்பிலி.

**ஈச்சப்பி** – கடும்பற்றுள்ளன், ஈயாதவன்.
**ஈச்சு** – ஈந்து, ஈச்சமரம்.
**ஈச்சுக்கொட்டுதல்** – சீழ்க்கையடித்தல்.
**ஈச்சுர** – காண்க: ஈசுவர.
**ஈச்சுரம்** – சிவதத்துவம் ஐந்தனுள் ஒன்று, அது ஞானங் குன்றிக் கிரியை உயர்ந்தது.
**ஈச்சுரன்** – ஈசுவரன், கடவுள்; சிவன்.
**ஈச்சுவரன்** – தலைவன்; கடவுள்; சிவன்.
**ஈச்சோப்பி** – ஈப்பிணி; ஈயோட்டி; சிலந்தி.
**ஈசத்துவம்** – எண்வகைச் சித்திகளுள் ஒன்று; செலுத்துகை; யாவர்க்கும் தேவனாகுதல்.
**ஈசதேசாத்தி** – பெருமருந்துக் கொடி.
**ஈசல்** – சீழ்க்கை; செட்டைக் கறையான், சிறகு முளைத்த கறையான்.
**ஈசன்** – எப்பொருட்கும் இறைவன்; சிவன்; தகப்பன்; அரி; குரு; அரசன்; தலைவன்; மூத்தோன்; பச்சைக் கருப்பூரம்; கௌரி பாடாணம்.
**ஈசன்மைந்தன்** – முருகன்; விநாயகன்; வீரபத்திரன்; வைரவன்.
**ஈசன்றார்** – கொன்றைமாலை.
**ஈசனாள்** – திருவாதிரை நாள்.
**ஈசானகோணம், ஈசானதிசை** – காண்க: ஈசானியம்.
**ஈசானம்** – வடகீழ்த்திசை; சிவனுடைய ஐந்து முகங்களுள் ஒன்று; ஒரு சைவ மந்திரம்.
**ஈசானன்** – சிவன்; வடகீழ்த்திசைப் பாலகன்.
**ஈசானியம், ஈசானியமூலை** – வடகீழ்த்திசை, சனிமூலை.
**ஈசி** – ஓர் இகழ்ச்சிக் குறிப்பு.
**ஈசிதை** – காண்க: ஈசத்துவம்.
**ஈசுரமூலி** – பெருமருந்துக் கொடி, தராசுகொடி; பெருங்கிழங்கு.
**ஈசுரலீலை** – கடவுள் திருவிளையாடல்.
**ஈசுரன்** – காண்க: ஈச்சுரன்.
**ஈசுரார்ப்பணம்** – கடவுளுக்கு உரியதாக்குகை.
**ஈசுவர** – அறுபதாண்டுக் கணக்கில் பதினோராம் ஆண்டு.
**ஈசுவரத்துவம்** – ஈசுவரனாயிருக்கும் தன்மை.
**ஈசுவரவிந்து** – பாதரசம்.
**ஈசுவரன்** – காண்க: ஈச்சுவரன்.
**ஈசுவரி** – பார்வதி, உமை.
**ஈசுவரி நாதம்** – கந்தகம்.
**ஈசுவரிவிந்து** – கந்தகம்; பாதரசம்.
**ஈசை** – ஏர்க்கால்; பார்வதி.
**ஈஞ்சு** – ஈச்சமரம்; பேரீந்து; காட்டீஞ்சு; சிற்றீஞ்சு.
**ஈஞ்சை** – கொலை; இம்சை; இகழ்ச்சி.
**ஈட்டம்** – மிகுதி; திரள்; கூட்டம்; தேட்டம்; பொருளீட்டுகை; வலிமை.
**ஈட்டி** – குந்தம், வேல், ஈட்டி; தோதகத்திமரம்; சவளம்; கழுக்கடை; கழுமுள்; சலாகை.
**ஈட்டுக்கீடு** – சரிக்குச்சரி.
**ஈட்டுத்தொகை** – உதவித்தொகை.
**ஈட்டுதல்** – கூட்டுதல்; சம்பாதித்தல்.
**ஈட்டுப்பத்திரம்** – அடைமான சாசனம்.
**ஈடகம்** – மனத்தைக் கவர்வது.
**ஈடணம்** – புகழ்.
**ஈடணாத்திரயம், ஈடணை** – ஆசை; புதல்வன், மனைவி, பொன் மூன்றிலும் விருப்புறுகை; துன்பம்.
**ஈடழிதல்** – வலிமை பெருமைகள் கெடுதல்.
**ஈடறவு** – பெருமைக்கேடு, மேன்மைக்கேடு.
**ஈடன்** – பெருமையுடையவன்; ஆற்றலுடையவன்; வலிமை பொருந்தியவன்.
**ஈடாட்டம்** – போட்டி; பணப்புழக்கம்; நெகிழ்ச்சி; ஏழைமை நிலை.
**ஈடாதண்டம்** – ஏர்க்கால்.
**ஈடிகை** – அம்பு; தூரிகை, எழுதுகோல்.
**ஈடு** – ஒப்பு; உவமை; வலி; பெருமை; பிரதி; கைம்மாறு; அடகு; தகுதி; நேராகுகை.
**ஈடுகட்டுதல்** – பிணை கொடுத்தல், பிணையாதல்; பொருளிழப்பிற்கு ஈடுசெய்தல்; பேரன்பு கொள்ளுதல்.
**ஈடுகொடுத்தல்** – எதிர்நிற்றல்; நிகராதல்; மனநிறைவு செய்வித்தல்; போட்டி போடுதல்; பதிலளித்தல்.
**ஈடுகொள்ளுதல்** – மனங்கனிதல்.
**ஈடுபடுதல்** – அகப்படுதல்; துன்பப்படுதல்; மனங்கவிதல்; வலியழிதல்.
**ஈடுபாடு** – தொடர்பு; மனங்கவிகை; இலாப நட்டம்; சங்கடம்.
**ஈடேற்றம்** – உய்வு; பேரின்ப வாழ்வு; கடைத்தேற்றம்; மீட்பு.
**ஈடேற்றுதல்** – உய்வித்தல்.
**ஈடேறுதல்** – உய்யப்பெறுதல், கடைத்தேறுதல், வாழ்வடைதல்.
**ஈடை** – புகழ்ச்சி; ஏர்க்கால்.
**ஈண்டல்** – நெருங்குதல், கூடுதல்; நிறைதல்; விரைதல்.
**ஈண்டு** – இவ்விடம்; இவ்வண்ணம்; இம்மை; விரைவு; புலிதொடக்கிக் கொடி; இப்பொழுது.
**ஈண்டுதல்** – கூடுதல்; செறிதல், நெருங்குதல்; பெருகுதல்; விரைதல்; தோண்டுதல்.
**ஈண்டுநீர்** – கடல்.
**ஈண்டை** – இங்கு, இவ்விடம்.

**ஈண்டையான்** – இவ்விடத்தான்.

**ஈணி(ணை)** – காண்க: **அகணி.**

**ஈதல்** – கொடுத்தல்; வறியவருக்குத் தருதல்; சொரிதல்; படிப்பித்தல்.

**ஈதா** – இந்தா.

**ஈதி** – மிகுந்த மழை, மழையின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை என்னும் ஆறினாலும் நாட்டுக்கு வருங் கேடு.

**ஈது** – இது; முகம்மதியர் திருநாள்களுள் ஒன்று, பக்ரீத் திருநாள்.

**ஈதை** – துன்பம், வருத்தம்.

**ஈந்து** – ஈச்சமரம்.

**ஈப்பிணி** – காண்க: **ஈச்சப்பி.**

**ஈப்புலி** – ஈயைக் கொல்லும் பூச்சி, ஒருவகைச் சிறு சிலந்தி; பதினைந்தாம் புலி விளையாட்டு.

**ஈம்** – காண்க: **ஈமம்.**

**ஈமக்கடன்** – சுடுகாட்டில் செய்யப்படும் பிணச் சடங்கு.

**ஈமத்தாடி** – சுடுகாட்டில் ஆடும் சிவன்.

**ஈமத்தாழி** – முதுமக்கட்டாழி, இறந்தவரை இட்டுப் புதைக்கும் பெருஞ்சால்.

**ஈமப்பறவை** – கழுகு; காகம்; பருந்து.

**ஈமம்** – சுடுகாடு; பிணஞ்சுடு விறகடுக்கு; பாதிரி மரம்.

**ஈமவனம்** – சுடுகாடு.

**ஈமவாரி** – வசம்பு.

**ஈமான்** – கொள்கை.

**ஈயக்கொடி** – இண்டங்கொடி; புலிதொடக்கிக் கொடி.

**ஈயம்** – பஞ்சலோகத்துள் ஒன்று, வெள்ளீயம்; பாதிரி.

**ஈயல்** – ஈசல்; தம்பலப்பூச்சி; சிறகு முளைத்த கறையான்; ஈதல், கொடுத்தல்.

**ஈயவெள்ளை** – மரம் முதலியவற்றிற்குப் பூசும் ஒருவகை வெள்ளை மை; தூள்வகை.

**ஈயன்மூதா, ஈயன்மூதாய்** – இந்திரகோபம், தம்பலப்பூச்சி.

**ஈயை** – இஞ்சி; இண்டு; புலிதொடக்கி.

**ஈயோட்டி, ஈயோப்பி** – ஈயை ஓட்டுங் கருவி.

**ஈர்** – பேன் முட்டை; முன்னிலைப் பன்மை விகுதி; இரண்டு; ஈரம்; நெய்ப்பு; பசுமை; இனிமை; நுண்மை; ஈர்க்கு; இறகு; கரும்பு; கதுப்பு.

**ஈர்க்கில்** – காண்க: **ஈர்க்கு.**

**ஈர்க்கிறால்** – இறால் மீன்வகை.

**ஈர்க்குச்சம்பா** – சம்பா நெல்வகை.

**ஈர்க்கு** – அம்பின் இறகு; ஓலையின் நரம்பு.

**ஈர்கொல்லி** – ஈரைக் கொல்லும் கருவி, ஈர்வலி; உப்பிலி.

**ஈர்கோலி** – காண்க: ஈர்வலி.

**ஈர்ங்கட்டு** – கார்காலத்து உடை, குளிர்கால உடை.

**ஈர்ங்கதிர்** – குளிர்ந்த கதிர்; சந்திரன்.

**ஈர்ங்கை** – உண்டு கழுவிய கை.

**ஈர்த்தல்** – அறுத்தல்; இழுத்தல்; உரித்தல்; பிளத்தல்; எழுதுதல்.

**ஈர்தல்** – அரிதல்; அறுத்தல்; இழுக்கப்படுதல்.

**ஈர்ந்தமிழ்** – தண்டமிழ், கேட்டற்கு இனிய தமிழ்.

**ஈர்ப்பு** – இழுப்பு; இசிவுநோய்.

**ஈர்மை** – இனிமை; பெருமை; நுண்மை; குளிர்ச்சி; வருத்தம்.

**ஈர்வடம்** – பனையீர்க்குக் கயிறு.

**ஈர்வலி, ஈர்வாங்கி, ஈர்வாரி** – ஈருருவுங்கருவி, ஈர் வாங்கும் கருவி.

**ஈர்வாள்** – இரம்பம், மரம் அறுக்கும் வாள்.

**ஈரங்கொல்லி** – வண்ணான்.

**ஈரசைச்சீர்** – இரண்டு அசைகொண்ட சீர்; அது தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்னும் வாய்பாட்டால் வரும்.

**ஈரடி** – இரண்டு அடி, இணையடி; ஈரப்பதம்; ஈரொட்டு, ஐயம்; இரண்டாம் போகம்.

**ஈரடிப்பயன்** – கவர்பொருள்; ஐயம்; கபடம்; மாறுபாடு.

**ஈரடிவருக்கம்** – ஒவ்வோரடியிலும் முதலாம் எழுத்தும் நடுவெழுத்தும் ஒன்றாயிருக்குமாறு இரண்டடியுடையதாய்ச் செய்யப்படும் செய்யுள்.

**ஈரடிவெண்பா** – குறள்வெண்பா.

**ஈரடுக்கொலி** – இரட்டையாக அடுக்கிவரும் ஒலிக்குறிப்புச் சொல்.

**ஈரணம்** – வெறுநிலம்; களர்நிலம்; கள்ளி.

**ஈரணி** – நீராடும்போது மகளிர் அணியும் ஆடை.

**ஈரணை** – இரண்டு அணை; இரண்டு சோடி மாடு.

**ஈரந்துவட்டுதல்** – ஈரமெடுத்தல்; நீராடியபின் ஈரத்தைத் துடைத்தல்.

**ஈரநா** – புறங்கூறும் நாக்கு.

**ஈரப்பசை** – ஈரக்கசிவு; இரக்கம்; செல்வம்.

**ஈரப்பலா** – ஒருவகைப் பலா, ஆசினிப் பலா.

**ஈரப்பற்று** – ஈரக்கசிவு; இரக்கம்.

**ஈரப்பாடு** – ஈரமாயிருக்கை; மனநெகிழ்ச்சி.

**ஈரம்** – நீர்ப்பற்று; பசுமை; குளிர்ச்சி; அன்பு; அருள்; அழகு; அறிவு; குங்குமப்பூ; பகுதி; கரும்பு; வெள்ளரி.

**ஈரல்** – ஈருள், மண்ணீரல்; கல்லீரல்; வருத்துகை.

**ஈரல்கருகுதல்** – வேதனை மிகுதல்; மிகவும் அஞ்சுதல்.

**ஈரவன்** – சந்திரன்.
**ஈரவிதைப்பு** – புழுதி விதை; ஈரநிலத்தில் விதைக்கை; ஈரநிலத்தில் உண்டான பயிர்.
**ஈரவுள்ளி** – காண்க : **ஈருள்ளி.**
**ஈரற்குலை** – ஈரலின் கொத்து.
**ஈராட்டி** – இரண்டு மனைவியர்; காற்று மாறி அடிக்கை; காற்று அமைதி; நிலையின்மை.
**ஈராடி** – ஈரம்; மழைக்குணம்.
**ஈரி** – கந்தை; ஏழாங்காய் விளையாட்டின் ஓர் உறுப்பு, பலாக்காய்த் தும்பு; மனக்கனிவு உள்ளவன்(ள்).
**ஈரிணம்** – களர்நிலம்; பாழடைந்த நிலம்.
**ஈரித்தல்** – ஈரமாதல்; குளிர்தல்.
**ஈரிப்பு** – குளிர்மை; நட்பு.
**ஈரிய** – ஈரத்தையுடைய; குளிர்ந்த; அன்புடைய.
**ஈரிழை** – ஆடையின் இரட்டை நூல்.
**ஈருயிர்க்காரி** – சூல்கொண்டவள்.
**ஈருயிர்ப்பிணவு** – சூல்கொண்ட பெட்டை.
**ஈருள்** – மண்ணீரல், பித்தமிருக்குமிடம்.
**ஈருள்ளி** – உள்ளிப்பூண்டு; ஈரவெங்காயம்.
**ஈரெச்சம்** – இருவகை வினைக்குறை, பெயரெச்சம் வினையெச்சம்.
**ஈரொட்டு** – உறுதியின்மை, இரண்டுக்குற்றது; ஐயம்.
**ஈரொற்றுவாரம்** – தாளத்து இரண்டு மாத்திரை பெற்றுவரும் செய்யுள்.
**ஈலி** – கைவாள், சுரிகை.
**ஈவிரக்கம்** – மனக்கசிவு; இரக்கக்கொடை.
**ஈவு** – கொடை; நன்கொடைப் பொருள்; பங்கிடுகை; பிரித்துக் கண்ட பேறு; ஒழிகை.
**ஈவுக்கணக்கு** – பங்கிடுதல்; பிரிவுக்கணக்கு · வகுத்தற் கணக்கு.
**ஈவுசோர்வு** – சமயாசமயம்.
**ஈவோன்** – கொடுப்பவன், கொடையாளி; கற்பிப்பவன்.
**ஈழக்குலச்சான்றார்** – சான்றார்குல வகுப்பு; சாணார்; ஏனாதி நாயனார்.
**ஈழங்கிழங்கு** – பெருவள்ளி.
**ஈழத்தலரி** – ஒருவகை அலரி; பெருங்கள்ளி.
**ஈழதண்டம்** – ஏர்க்கால்.
**ஈழநாடு** – இலங்கை.
**ஈழம்** – இலங்கை; உலோகக்கட்டி; கள்ளி; கள்; பொன்.
**ஈழமண்டலம்** – இலங்கை;
**ஈழ(ழு)வன்** – மலையாள நாட்டில் கள்ளிறக்கும் சாதியார்.
**ஈளை** – கோழை; இளைப்பு; காசநோய்.
**ஈளைத்தரை** – ஈரத்தரை.
**ஈற்றசை** – பாட்டின் முடிவில் நிற்கும் அசை.
**ஈற்றம்** – ஈனுகை.
**ஈற்றயல்** – இறுதிக்கு முந்தையது.
**ஈற்றா** – ஈற்றுப் பசு, கன்றீன்ற பசு.
**ஈற்று** – ஈனுதல்; ஈனப்பட்டது; மரக்கன்று.
**ஈற்றேறுதல்** – கதிர் விடுதல்; கதிர் முற்றுதல்.
**ஈறல்** – துன்பம்; நெருக்கம்.
**ஈறிலான், ஈறிலி** – கடவுள்.
**ஈறு** – முடிவு; உப்பளம்; இறப்பு; பல்லீறு; விகுதி; எல்லை.
**ஈறுதப்பினபேச்சு** – தகாதமொழி, எல்லைகடந்த சொல்.
**ஈன்** – இவ்விடம்; இவ்வுலகம்; ஆச்சா.
**ஈன்றணி(ணு)மை** – அண்மையில் ஈனப்பட்டமை, புனிறு.
**ஈன்றல்** – ஈனல்; உண்டாதல்.
**ஈன்றவள்**– தாய்.
**ஈன்றவன்** – தந்தை; நான்முகன்.
**ஈன்றார்** – பெற்றோர்.
**ஈன்றாள்** – காண்க : **ஈன்றவள்.**
**ஈன்றோன்** – காண்க: **ஈன்றவன்.**
**ஈனசுரம்** – தாழ்ந்த குரல், தாழ்ந்த ஓசை.
**ஈனத்தார்** – கொன்றை.
**ஈனதை** – இழிவு, கீழ்மை, தாழ்வு.
**ஈனம்** – இழிநிலை; குறைபாடு; கீழ்மை, தாழ்வு, புன்மை; கள்ளி; சரிவு; முயல்.
**ஈனல்** – காய்த்தல்; பெறுதல்; கதிர்.
**ஈனவன், ஈனன்** – இழிந்தோன்.
**ஈனனம்** – வெள்ளி.
**ஈனாயம்** – நிந்தை, அவமதிப்பு, இழிவு.
**ஈனில்** – கருவுயிர்க்குமிடம், பேற்றுக்குரியவிடம், மகப்பேறு நிலையம்.
**ஈனுதல்** – கருவுயிர்த்தல்; உண்டாக்குதல்; குலைவிடுதல்; தருதல்.
**ஈனை** – இலை நரம்பு; சித்திரக் குறிப்பு; ஒரு நோய்.
**ஈனை எழுதுதல்** – சித்திரக் குறிப்பு வரைதல்.
**ஈனோர்** – இவ்வுலகத்தோர்.

உ – ஐந்தாம் உயிரெழுத்து; இரண்டு என்னும் எண்ணின் குறி; சுட்டெழுத்துள் ஒன்று; பின், மேல் முதலிய மறைவிடங்களைக் காட்டும் ஒரு சுட்டு; சிவபிரான்; நான்முகன்; உமையவள்; ஓர் இடைச்சொல்; ஒரு சாரியை; தொழிற்பெயர் விகுதியுள் ஒன்று; பண்புப் பெயர் விகுதியுள் ஒன்று; 'செய்து' என்னும் வினையெச்ச விகுதியுள் ஒன்று; வியப்பு.

**உஃது** – ஒன்றன் படர்க்கைச் சுட்டுப் பெயர், உது.

**உக்கம்** – ஆலவட்டம்; ஏறு; பசு; கோழி; மருங்கு, இடை; நெருப்பு; பொன்; தலை; கட்டித் தூக்கி எடுக்கும் கயிறு.

**உக்கரித்தல்** – எருதுபோல உங்காரம் போடல்; கக்குதல்.

**உக்கல்** – பதனழிவு; உளுத்தது; பக்கம்.

**உக்கலை** – இடுப்பின் பக்கம்.

**உக்களம்** – இராக்காவல்; தலைக்காவல்; பாளையஞ் சூழ் கழி.

**உக்களி** – இனிய பணிகாரவகை.

**உக்கா** – கஞ்சா முதலியவற்றின் புகை குடிக்குங் கருவி, கஞ்சாக் குடுக்கை; கள்.

**உக்காக்கம்** – அரைஞாண்.

**உக்காரம்** – கக்குதல்; ஒலி செய்கை.

**உக்காரி(ரை)** – அஃகுல்லி என்னுஞ் சிற்றுண்டி, பிட்டு.

**உக்கி** – தோப்புக்கரணம்; தண்டனைவகை; அம்மனைக் காய்.

**உக்கிடர்** – சிலந்திப்பூச்சி.

**உக்கிடு** – நாணத்தைக் காட்டுங் குறிப்புச் சொல்.

**உக்கிரகந்தம், உக்கிரகந்தி** – வெள்ளுள்ளி; பெருங்காயம்; வசம்பு; வேம்பு; கருவேம்பு; கரும்பு.

**உக்கிர நட்சத்திரம்** – புதன் நின்ற நாளுக்குப் பதினெட்டாம் நாளும் இருபத்து நான்காம் நாளும்; மகம் பூரம் பரணி நாள்கள்; அக்கினி நட்சத்திரம்.

**உக்கிரம்** – சினம்; கொடுமை; ஊக்க மிகுதி; இலாமிச்சை; முருங்கை மரம்; கீதவுறுப்பினுள் ஒன்று.

**உக்கிரமம்** – சுடர், சுவாலை.

**உக்கிரன்** – சிவமூர்த்தங்களுள் ஒன்று, வீரபத்திரன்.

**உக்கிராணக்காரன்** – களஞ்சியம் காப்பவன்; சரக்கறை மேற்பார்ப்போன்.

**உக்கிராணம்** – பண்டசாலை; வீட்டுச் சரக்கறை.

**உக்கிராந்தி** – இறுதிக்காலத்தில் செய்யும் கோதானம்.

**உக்கிருட்டம்** – மேன்மை; மிகுதி.

**உக்கிரை** – கருவசம்பு; ஏழாம் சுருதியின் பேதங்களுள் ஒன்று.

**உக்கு** – இலவங்கம்.

**உக்குதல்** – மக்கிப்போதல்; மெலிதல்; இற்றுப் போதல்; அஞ்சுதல்.

**உக்குமம்** – தூண்டுகை; கட்டுப்பாடு.

**உக்குளான்** – சருகு தின்னும் முயல்.

**உக்குறள்** – குற்றியலுகரம்.

**உகக்கனல்** – வடவைத் தீ, ஊழித் தீ.

**உகட்டுதல்** – தெவிட்டுதல்; அருவருப்பாதல்.

**உகத்தல்** – மகிழ்தல்; விரும்புதல்; உயர்தல்; உயரப் பறத்தல்.

**உகந்தது** – விருப்பமானது; ஒப்புக்கொள்ளப் பட்டது.

**உகந்தவன்** – தகுந்தவன்; பிரியமானவன், விரும்பப்பட்டவன்.

**உகந்தார்** – நண்பர்.

**உகந்துடைமை** – கணவனுடைய சொத்தில் மனைவிக்குரிய பாகவுரிமை.

**உகப்பிரளயம்** – காண்க: **உகமுடிவு.**

**உகப்பு** – உயர்ச்சி; மகிழ்ச்சி; விருப்பம்; விரும்பி வாழிடம்.

**உகம்** – நாள்; பூமி; பாம்பு; இரண்டு; தலைப்பாட்டு; ஊழி; நுகம்.

**உகமகள்** – நிலமகள்.

**உகமுடிவு** – ஊழியிறுதி, யுகத்தினது இறுதி.

**உகரக்குறுக்கம்** – காண்க: **உக்குறள்.**

**உகரம்** – ஐந்தாம் உயிரெழுத்து.

**உகலுதல்** – தாவுதல்; உதறுதல்.

**உகவல்லி** – நாகமல்லிமரம்.

**உகவை** – விருப்பம்; அனுகூலம்; உகவைப் பொன்.

**உகளம்** – இரண்டு; விருப்பம்.

**உகளி** – பிசின்.

**உகளித்தல்** – குதித்தல்; மகிழ்ச்சி மிகுதல்.

**உகளுதல்** – தாவுதல்; ஓடித்திரிதல்; துள்ளுதல்; பிறழுதல்; நழுவி விழுதல்.

**உகா** – உகாமரம்; ஓமைமரம்.

**உகாதி** – அருகன்; யுகாதி, தெலுங்கர் கன்னடர் முதலியோரின் ஆண்டுப் பிறப்பு.

**உகாந்தம்** – காண்க: **உகமுடிவு.**

**உகாய்** – காண்க: **உகா.**

**உகார உப்பு** – கல்லுப்பு.

**உகாரம்** – காண்க: **உகரம்.**

**உகிர்** – நகம்.

**உகிர்ச்சுற்று** – நகச்சுற்று, நகத்தைச் சுற்றி உண்டாகும் புண்.

**உகிர்நிலைப் பசாசம்** – மூவகைப் பசாசக்கைகளுள் ஒன்று, சுட்டு விரலிலும் பெரு விரலிலும் உகிர்நுனை கவ்வி நிற்பது.

**உகிரம்** – இலாமிச்சம் புல்.

**உகின்,**
**உகினம்** } – புளிமா.

**உகுணம்** – மூட்டுப்பூச்சி.

**உகுத்தல்** – சிந்துதல், சிதறுதல்; சொரிதல்; உதிர்த்தல்; வெளியிடுதல்.

**உகுதல்** – உதிர்தல்; சிந்துதல், சிதறுதல்; கெடுதல்; சாதல்; நிலைகுலைதல்; சுரத்தல்; கரைந்து தேய்தல்; மறைதல்.

**உகுவு** – சிந்துதல்; சொரிதல்.

**உகைத்தல்** – செலுத்துதல்; எழுப்புதல்; பதித்தல்; எழுதல்; உயரவெழும்புதல்; அம்பு முதலியவற்றை விடல்.

**உகைதல்** – எழுதல்; செல்லுதல்.

**உகைப்பு** – எழுப்புகை; செலுத்துகை.

**உங்கண்** – காண்க: **உங்கு.**

**உங்கரித்தல்** – உம்மென்றொலித்தல்.

**உங்கனம்** – உவ்வாறு; உவ்விடம்.

**உங்காரம்** – வண்டொலி; முழங்குதல்; அச்சுறுத்தும் ஒலி.

**உங்கு** – உவ்விடம்.

**உங்குணி** – பெருங்கிளிஞ்சில்.

**உங்கை** – உம் தங்கை.

**உங்஧ன்,**
**உங்஧னம்** } – காண்க: **உங்கனம்.**

**உச்சக்கிரகம்** – உச்சநிலையடைந்த கோள்; மேடத்தில் சூரியனும், இடபத்தில் சந்திரனும், கடகத்தில் வியாழனும், கன்னியில் புதனும், துலாத்தில் சனியும், விருச்சிகத்தில் இராகு கேதுக்களும், மகரத்தில் செவ்வாயும், மீனத்தில் சுக்கிரனும் உச்சக்கோள்களாம்.

**உச்சட்டம்** – இலக்கு; நேர்மை.

**உச்சத்தானம்** – கோளின் உயர்நிலை.

**உச்சதரு** – தென்னை.

**உச்சந்தம்** – விலையுயர்ச்சி; தணிவு.

**உச்சந்தலை** – தலையின் உச்சி.

**உச்சம்** – உயரம்; தலைக்கு நேரான வான்முகடு; உச்சந்தலை; சிறப்பு; வல்லிசை; கோள் நிலையுள் ஒன்று; அறுதியளவு; எண்வகைப் பாடற் பயன்களுள் ஒன்று; புணர்ச்சி வகையுள் ஒன்று.

**உச்சம்போழ்து** – நடுப்பகல்.

**உச்சயிச்சிரவம்** – காண்க: **உச்சைச்சிரவம்.**

**உச்சரித்தல்** – பலுக்குதல், இதழ் முதலியவற்றின் தொழில்களால் எழுத்துகளைப் பிறப்பித்தல்; சொல்லுதல்.

**உச்சரிப்பு** – பலுக்குகை; மந்திரோச்சாரணை; எழுத்தின் ஓசை.

**உச்சலம்** – மனம்.

**உச்சவம்** – திருவிழா; செல்வம்.

**உச்சவீடு** – உச்சராசி; உதயத்துக்கு ஏழாமிடம்.

**உச்சாகம்** – காண்க: **உற்சாகம்.**

**உச்சாசனம்** – கொலை.

**உச்சாடனம்** – ஓட்டுந்தொழில்; பேய் முதலியவற்றை ஏவுகை; பேயோட்டுகை.

**உச்சாணி** – உச்சி; மிகுந்த உயரம்.

**உச்சாயம்** – உற்சாகம்; உயர்வு.

**உச்சாரணம்,**
**உச்சாரணை,**
**உச்சாரம்** } – உச்சரிப்பு.

**உச்சி** – உச்சந்தலை; தலை; குடுமி; நடுப்பகல்; நாய்; வான்முகடு; எல்லை; புல்லுருவி.

**உச்சிக்கடன்** – நண்பகற் கடன்.

**உச்சிக்கரண்டி** – சிறுகரண்டி; குழந்தைகள் உச்சியில் எண்ணெய் விடும் சிறிய கரண்டி.

**உச்சிக்காலம்** – நண்பகல்; கோயிலின் மத்தியானப் பூசை.

**உச்சிக்கிழான்** – சூரியன், கதிரவன்.

**உச்சிக்குழி** – தலைநடு, சிறுகுழந்தையின் தலையுச்சிப் பள்ளம்.

**உச்சிக்கொண்டை** – உச்சிமுடி; சேவல் முதலியவற்றின் தலைச்சூட்டுறுப்பு.

**உச்சிக்கொம்பன்** – உச்சியில் கொம்புள்ள மாடு; காண்டாமிருகம்.

**உச்சிகுளிர்தல்** – மகிழ்வடைதல்.

**உச்சிச்சுட்டி** – குழந்தைகளின் தலையணிவகை.

**உச்சிச்செடி** – புல்லுருவிப் பூண்டு.

**உச்சிட்டம்** – எச்சில், சேடம்; மீதி.

**உச்சித்தம்** – மகரக்கை, அபிநயக் கைவகை.

**உச்சித்திலகம்** – செம்மலர் உள்ள ஒருவகைப் பூஞ்செடி.

**உச்சிதம்** – அரியது; உசிதம்; கொடை; அழகு; மேன்மை; தகுதி; உயர்ச்சி; நெருஞ்சி, நெருஞ்சிப் பூண்டு.

**உச்சிப்படுதல்** – உச்சமாதல்.

**உச்சிப்பிளவை** – உச்சந்தலையில் வரும் பிளவை நோய்.

**உச்சிப்பூ** – குழந்தைகளின் தலையணிகளுள் ஒன்று.

**உச்சிப்பொழுது** – நடுப்பகல்.

**உச்சிமலை** – மலையுச்சி; செங்குத்தான குன்று.

**உச்சிமோத்தல்** – உச்சந்தலையை மோந்து அன்பு பாராட்டுதல்.

**உச்சியாட்டம்** – ஒருவகை விளையாட்டு.

**உச்சியார்** – தேவர்.

**உச்சிரதம்** – பிரண்டைக்கொடி.

**உச்சிரயம்** – உயர்நிலை; உயரம்; முக்கோணத்தின் செங்குத்துக்கோடு.

**உச்சிவினை** – உச்சிக்கடன்.

**உச்சிவீடு,**
**உச்சிவெளி(றி)** – உச்சிவேளையில் மழை விட்டிருக்கை, இடைவிடுகை.
**உச்சிவேர்** – மூலவேர், ஆணிவேர்.
**உச்சீவனம்** – உய்தல், பிழைத்தல்.
**உச்சீவித்தல்** – பிழைத்தல்; இறப்பினின்று தப்பிப் பிழைத்தல்; ஈடேறுதல்.
**உச்சுக்காட்டுதல்** – நாயை ஏவல்.
**உச்சுக்கொட்டுதல்** – வெறுப்புக்குறி காட்டுதல்.
**உச்சுதல்** – இலக்கில் காய் முதலியன எறிதல்; சூழ்ச்சியால் வெல்லுதல்; பிறர் பொருளைக் கவர்தல்.
**உச்சுவாசம்** – மூச்சை உள்ளே வாங்குகை, மூச்சை உள்ளிழுத்தல்.
**உச்சூடை** – கொடிக்கம்பத்தின் நுனி.
**உச்சைச்சிரவம்** – இந்திரன் குதிரை.
**உசகம்** – ஆமணக்கஞ் செடி.
**உசம்** – நகரம்.
**உசரிதம்** – நெருஞ்சில்.
**உசவு** – மசகு, வைக்கோற் கரியும் எண்ணெயும் சேர்ந்த கலவை; இயந்திரங்களுக்கு இடும் மைக்குழம்பு.
**உசவுதல்** – காண்க: **உசாவுதல்.**
**உசற்காலம்** – வைகறை, சூரியன் உதிப்பதற்கு முன் ஐந்து நாழிகைக் காலம்.
**உசனன்,**
**உசனார்** – சுக்கிரன், வெள்ளியாகிய கோள்.
**உசா** – ஆராய்ச்சி, ஆலோசனை, ஒற்றன்; ஒற்றர் சூழ்ச்சி; வினா; மூக்குத்தி.
**உசாக்கையர்** – ஆராய்வோர்; ஆலோசனை செய்வோர்.
**உசாத்துணை** – உற்ற துணைவர்.
**உசாதல்** – காண்க: **உசாவுதல்.**
**உசாவுதல்** – ஆராய்தல்; வினாவுதல், கேட்டல்.
**உசார்** – விழிப்பு.
**உசி** – கூர்மை; விருப்பம்.
**உசிதம்** – தகுதி; மேன்மை; உயர்ந்தது; அழகு; வளைகை; கூப்பிடுகை; நீர்.
**உசிதன்** – பாண்டியன்.
**உசிப்பித்தல்** – சேர்த்தல்.
**உசிர்** – உயிர்.
**உசிரம்** – செவ்வியம்; இடபம்; கதிர்; மிளகு; இலாமிச்சை வேர்.
**உசில்,**
**உசிலம்** – காண்க: **உசிலை.**
**உசிலித்தல்** – கூட்டுப்பொடி கலந்து தாளித்தல்.
**உசிலை** – சீக்கிரிமரம்.
**உசீரம்** – இலாமிச்சை வேர்; வெட்டிவேர்.
**உசு** – உளு என்னும் புழு.
**உசுப்புதல்** – எழுப்புதல்; வெருட்டுதல்.
**உசும்புதல்** – அசைதல்; அதட்டுதல்.
**உசுவாசநிசுவாசம்** – மூச்சுப் போக்குவரவு.
**உசுவாசம்** – உட்சுவாசம், மூச்சை உள்ளே இழுத்தல்.
**உசூர்** – அரசியல் நடத்தும் இடம்.
**உஞ்சட்டை** – மெலிவு.
**உஞ்சம்** – காண்க: **உஞ்சவிருத்தி.**
**உஞ்சல்** – ஊஞ்சல்.
**உஞ்சவிருத்தி** – உதிர்ந்த நெல் முதலானவற்றைப் பொறுக்கிச் சேர்த்து வாழ்தல்; அரிசிப் பிச்சையெடுத்து நடத்தும் வாழ்க்கை.
**உஞ்சு** – நாயைக் கூப்பிடும் ஒலிக்குறி.
**உஞற்று** – ஊக்கம்; முயற்சி; இழுக்கு; வழக்கு.
**உஞற்றுதல்** – முயலுதல்; செய்தல்; தூண்டுதல்.
**உட்கட்டு** – வீட்டின் உட்பகுதி; அந்தப்புரம்; சிறுமியர் குழந்தைப் பருவத்தில் அணியும் ஒரு வகைச் சிறுதாலி; மாதர் கழுத்திற் கட்டும் ஒரு மணிவடம், உட்கட்டுமணி.
**உட்கண்** – அறிவு, ஞானம்.
**உட்கதவு** – திட்டிக் கதவு.
**உட்கந்தாயம்** – நிலக்கிழாருக்குக் கட்டும் வரி.
**உட்கரணம்** – காண்க: **அந்தக்கரணம்.**
**உட்கரு** – உள்ளே அடங்கியிருக்கும் பொருள்.
**உட்கருத்து** – உட்பொருள்; கருத்துரை; ஆழ்ந்த கருத்து; மனக்கருத்து.
**உட்கருவி** – அந்தக்கரணம்; அவை: மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.
**உட்கள்ளம்** – உள் வஞ்சகம்; புண்ணினுள் நஞ்சு.
**உட்காய்ச்சல்** – உள்ளாக அடிக்கும் சுரம்; உள்ளெரிச்சல்.
**உட்கார்** – பகைவர்.
**உட்கார்(ரு)தல்** – அமர்தல், வீற்றிருத்தல்.
**உட்கிடக்கை** – காண்க: **உட்கருத்து.**
**உட்கிடை** – உட்கருத்து; பேருருள் அடங்கிய சிற்றூர்.
**உட்கிராந்துதல்** – வேரூன்றுதல்; மெலிதல்.
**உட்கு** – அச்சம்; நாணம்; மிடுக்கு; மதிப்பு.
**உட்குத்தகை** – கீழ்க்குத்தகை.
**உட்குற்றம்** – காண்க: **உட்பகை.**
**உட்குறிப்பு** – உள்ளக் குறிப்பு, மனக்குறிப்பு.
**உட்கூதல்** – உட்குளிர், உடம்பினுள்ளாக உண்டாகும் குளிர்.
**உட்கை** – உள்உளவாள்; உட்பக்கம்; உள்ளங்கை; உட்கைச்சுற்று.
**உட்கைச்சுற்று** – நாட்டியத்தில் இடக்கைப் புறமாகச் சுற்றுகை.
**உட்கொள்ளல்,**
**உட்கொள்ளுதல்** – தன்னகத்துக் கொள்ளுதல்; உட்கருதுதல்; உண்ணுதல்; உள்ளிழுத்தல்.
**உட்கோட்டை** – உள் அரண்.
**உட்கோபம்** – வெளியிலே தோன்றாமல் உள்ளடங்கிய சினம்.

**உட்கோயில்** – கோயில் கருவறை.

**உட்கோள்** – உட்கருத்து; கோட்பாடு; ஓர் அணி.

**உட்சமயம்** – சைவசமயத்துள்ள உட்பிரிவுகள்; காண்க: **அகச்சமயம்.**

**உட்சாத்து** – அரைக்கச்சை.

**உட்சூத்திரம்** – பொறியின் மூலக்கருவி; உட்குறிப்பு; கணிதத்தில் குறுக்குவழி; எளியவழி; உள்ளுபாயம்.

**உட்செல்** – நெஞ்சொடு கூறல்.

**உட்செலுத்துதல்** – உள்ளே செலுத்துதல்; தந்திரமாக உள்ளே புகுவித்தல்; இலஞ்சம் கொடுத்தல்.

**உட்சேபணம்** – எழும்புதல்; எறிதல்; விசிறி.

**உட்டணம்** – வெப்பம்; முதுவேனில்; மிளகு; உறைப்பு.

**உட்டணித்தல்** – வெப்பங்கொள்ளுதல்.

**உட்டிரம்** – களர்நிலம்; தேட்கொடுக்கிப் பூண்டு. முட்செவ்வந்தி.

**உட்டினீடம்** – தலைப்பாகை.

**உட்டீனம்** – பறவைகளின் கதிச் சிறப்புகளுள் ஒன்று.

**உட்டுளை** – குழல், புரை.

**உட்டுறவு** – உள்ளத்துறவு.

**உட்டெளிவு** – உள்ளத்தெளிவு; வடித்த சாறு; உள்வயிரம்; உட்பக்க அளவு.

**உட்டை** – விளையாட்டுக்காய்.

**உட்பகை** – நட்புப் பாராட்டிக் கெடுக்கும் பகை; உள்ளாகி நிற்கும் பகை; அறுபகை; குடிகளின் எதிர்ப்பு.

**உட்பகைஆறு** – காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்னும் ஆறு குற்றங்கள்.

**உட்பட** – உள்ளாக.

**உட்படி** – தராசில் இடும் படிக்கல் எவ்வளவு குறைகின்றது என்பதை அறிய இடும் சிறு படிக்கல் முதலியன.

**உட்படுத்தல்** – அகப்படுத்தல், உள்ளாகச் செய்தல்; உடன்படுத்தல்.

**உட்படுதல்** – உள்ளாதல்; கீழாதல்; அகப்படுதல்; உடன்படுதல்; சேர்தல்.

**உட்பந்தி** – அகப்பந்தி, விருந்தில் தலைவரிசை.

**உட்பலம்** – அக வலிமை; அவை: படைவலிமை, பொருள்வலிமை, துணைவலிமை, உடல் வலிமை, அகவலிமை, மூலப்படை என்பன.

**உட்பற்று** – **அகப்பற்று.**

**உட்புகுதல்** – உள்ளே நுழைதல்; ஆழ்ந்து நோக்குதல்.

**உட்புரவு** – அரசாங்கத்தைச் சாராத அறப்புறம்.

**உட்புரை** – உட்டுளை; உள்மடிப்பு; அந்தரங்கம்.

**உட்பூசை** – மானச பூசை, உள்ளத்தே தியான முறையில் செய்யப்படும் வழிபாடு.

**உட்பொருள்** - உண்மைக் கருத்து; மறைபொருள்.

**உடக்கரித்தல்** – காண்க: **உடற்கரித்தல்.**

**உடக்கு** – திருகாணிச் சுரையின் உட்சுற்று; உடல்; உள்ளீடின்மை.

**உடக்குதல்** – செலுத்தல்; நாணிற் செறிதல்; எய்தல்; உள்ளீடின்றி இருத்தல்.

**உடக்கெடுத்துப்போதல்** – உடம்பு மிக மெலிதல்.

**உடங்கு** – பக்கம்; ஒத்து; ஒருபடியாக; சேர; உடனே.

**உடசம்** – இலைக்குடில்; வீடு; வெட்பாலை.

**உடந்தை** – கூட்டுறவு; சேர்க்கை; துணை; உறவு.

**உடப்பு** – துறட்டுமுள்ளிச்செடி; துறட்டுமுள்.

**உடம்** – இலை; புல்; விடியற்காலம்; வேலமரம்.

**உடம்படல்** – உடன்படல்.

**உடம்படிக்கை** – உடன்படிக்கை; பொருத்தச் சீட்டு.

**உடம்படுதல்** – சம்மதப்படுதல், மனம் ஒத்தல்.

**உடம்படுமெய்** – நிலைமொழி ஈற்றிலும் வருமொழி முதலிலும் உள்ள இரண்டு உயிர்களைச் சேர்க்கும் மெய்களாகிய ய், வ்.

**உடம்பாடு** – ஒற்றுமை; சம்மதம்; மனப் பொருத்தம்.

**உடம்பிடி** – வேலாயுதம்.

**உடம்பு** – உடல், உயிர்நிலை; மெய்யெழுத்து; ஆண் அல்லது பெண்ணின் குறி.

**உடம்புக்கீடு** –கவசம்.

**உடம்புரட்டல்,**
**உடம்புரட்டுதல்** – உடலிலிருந்து அழுக்கைத் திரட்டியெடுத்தல்; குழந்தை புரளுகை.

**உடம்பெடுத்தல்** – பிறத்தல்; செயலுடையனாதல்.

**உடம்பை** – கலங்கல் நீர்.

**உடம்பொடு புணர்தல்** – நூலுக்குரிய உத்திவகையுள் ஒன்று, கூறும் இலக்கியத்திலேயே சொல்ல வேண்டியதொன்றை உய்த்துணர வைத்தல்.

**உடர்** – உடல்.

**உடல்** – உடம்பு; மெய்யெழுத்து; பிறவி; உயிர் நிலை; சாதனம்; பொன்; பொருள்; ஆடையின் கரையொழிந்த பகுதி; மாறுபாடு.

**உடல்வாசகம்** – நடுச்செய்தி; கடிதம், உறுதிப் பத்திரம் முதலியவற்றின் முன்னுரையும் இறுதியுரையும் நீங்கிய பகுதி.

**உடலந்தம்** – உடலின் அழிவு, இறப்பு.

**உடலம்** – உடம்பு.

**உடலவருத்தனை** – மெய்யாற் செய்யும் அபிநயம்.

**உடலிலான்** – உருவில்லாத காமன்.

**உடலுதல்** – சினத்தல்; மாறுபடுதல்; போர் புரிதல்; ஆசையால் வருத்தமுறல்.

**உடலுநர்** – பகைவர்.

**உடலுருக்கி** – கணைச்சூடு.

**உடலெடுத்தல்** – பிறத்தல்; உடல் நன்றாகத் தேறுதல்; உடல் கொழுத்தல்.

**உடலெழுத்து** – மெய்யெழுத்து.

**உடலோம்பல்** – உடம்பை நன்முறையில் வளர்த்தல், உடலைப் போற்றுதல்.

**உடற்கரித்தல்** – தோள்தட்டுதல்.

**உடற்கருவி, உடற்காப்பு, உடற்காவல்** – மெய்காப்பணி, கவசம்.

**உடற்குறை** – உறுப்புக் குறை; தலையற்ற உடல், கவந்தம்.

**உடற்கூறு** – உடலிலக்கணம்.

**உடற்கொழுப்பு** – குடற்கொழுப்பேறுதல்; உணவில் வெறுப்புண்டாக்கும் ஒருவகை நோய்.

**உடற்சி** – கோபம்; பெருஞ்சினத்தோடு பொருதல்; பகைத்தல்.

**உடற்றல்** – பெருஞ்சினம்.

**உடற்றுதல்** – வருத்துதல்; சினமூட்டுதல்; போரிடுதல்; கெடுத்தல்; செலுத்துதல்.

**உடறுதல்** – சினத்தல்.

**உடன்** – ஒக்க, ஒருசேர; அப்பொழுதே; மூன்றாம் வேற்றுமையின் சொல்லுருபு.

**உடன்கட்டையேறுதல்** – இறந்த கணவனுடன் மனைவியும் ஈமத்தீயில் புகுந்து இறத்தல்.

**உடன்கற்றல்** – ஒருவருடன் கற்றல்; ஒரு சாலையில் ஒருங்கு கற்றல்; ஒரு வகுப்பில் ஒருங்கு கற்றல்.

**உடன்கூட்டத்ததிகாரி** – சோழர் காலத்து ஊர்ச்சபைத் தலைவன்.

**உடன்கூட்டாளி** – கூட்டுப்பங்காளி; ஒத்தநிலையுடையவன்.

**உடன்கூட்டு** – ஒன்றுகூட்டு; பங்காளியாயிருத்தல்.

**உடன்கையில்** – உடனே.

**உடன்சேர்வு** – ஒன்றனோடு சேர்வது; அனுபந்தம், பின்னிணைப்பு.

**உடன்பங்கு** – சரிபங்கு; கூட்டுப்பங்கு.

**உடன்படல்** – காண்க: **உடன்படுதல்,** நூல் மதங்கள் ஏழனுள் ஒன்று.

**உடன்படிக்கை** – ஒப்பந்தம், சம்மதப் பத்திரம்; உறுதிப்பாடு.

**உடன்படுத்துதல்** – இணக்குதல்.

**உடன்படுதல்** – இசைதல், சம்மதித்தல்.

**உடன்பாட்டுவினை** – விதிவினை.

**உடன்பாடு** – மனப்பொருத்தம்; இசைவு.

**உடன்பாடுவான்** – பக்கப்பாட்டுக்காரன்.

**உடன்பிறந்தான்(ள்)** – கூடப்பிறந்தவன்(ள்).

**உடன்பிறப்பு** – கூடப்பிறக்கை, ஒரு வயிற்றில் பிறத்தல், சகோதரத்துவம்.

**உடன்புணர்ப்பு** – சமவாயம், சம்பந்தம், கூட்டம்.

**உடன்போக்கு** – கூடப்போதல்; களவில் தலைவி தன் பெற்றோர் அறியாமல் தலைவனுடன் செல்லுதல்.

**உடன்மாணாக்கன்** – ஓர் ஆசிரியரிடம் ஒருவனோடு சேர்ந்து கற்பவன்.

**உடன்வந்தி** – கூடவே வருவது.

**உடன்வயிற்றோர், உடன்வயிறு** – ஒரு தாய் வயிற்றில் பிறந்தவர், உடன்பிறந்தவர்.

**உடன்றல்** – சினத்தல்; போர்.

**உடனடி** – உடனே.

**உடனாதல்** – கூடிநிற்றல்.

**உடனாளி** – கூட்டாளி; சொத்துள்ளவன்.

**உடனிகழ்ச்சி, உடனிகழ்தல்** – ஒருங்கு நடைபெறுதல்.

**உடனிகழ்வான்** – துணைவன்.

**உடனிகழ்வு** – காண்க : **உடனிகழ்ச்சி.**

**உடனிலை** – கூடி நிற்கை, கூடியிருத்தல்; உடனிருந்த இருவரைப் பாடும் ஒரு புறத்துறை; தம்முள் இயைந்து நிற்றல்; வேற்றுநிலை இல்லாதது.

**உடனிலைச் சிலேடை** – ஒரு பாட்டு நேரே வரும் பொருளையன்றி வேறு ஒரு பொருளும் கொண்டு நிற்கும் அணி.

**உடனிலைச் சொல்** – காண்க : **ஒப்புமைக் கூட்டம்.**

**உடனிலைமெய்ம்மயக்கம்** – ர, ழ என்பவை ஒழிந்த பதினாறு மெய்களுள் ஒவ்வொன்றும் தன்னுடன் தான் நின்று மயங்குகை.

**உடனுக்குடன்** – அப்போதைக்கப்போது.

**உடனுறை** – கூடி வாழ்தல்; ஒரு நிலத்தில் உடனுறைகின்ற கருப்பொருளால் பிறிதுபொருள் பயப்ப மறைத்துக்கூறும் இறைச்சிப்பொருள்.

**உடனுறைவு** – ஒன்றாக வாழ்தல்; புணர்ச்சி.

**உடனே** – தாமதமின்றி; ஒருசேர; முழுக்க.

**உடனொத்தவன்** – சமானமானவன்.

**உடு** – விண்மீன்; அகழி; அம்பு; அம்புத்தலை; அம்பினிறகு; ஓடக்கோல்; சீக்கிரிமரம்; ஆடு.

**உடுக்கு** – ஒருவகைச் சிறு பறை, இடைசுருங்கு பறை.

**உடுக்கை** – இடைசுருங்கு பறை; சீலை; உடுத்தல்.

**உடுக்கோன்** – விண்மீன்களுக்கு அரசனான சந்திரன்.

**உடுகாட்டி** – காண்க: **பொன்னாங்காணி.**

**உடுண்டுகம்** – வாகைமரம்.

**உடுத்தாடை** – சிற்றாடை.

**உடுத்துதல்** – ஆடையணிவித்தல்.

**உடுப்பு** – ஆடை, அங்கி முதலியன.

**உடுப்பை** – காண்க : **உசிலை.**
**உடுபதம்** – வானம், ஆகாயம்.
**உடுபதி** – காண்க: **உடுக்கோன்**; மரமஞ்சள்.
**உடுபம்** – தெப்பம்.
**உடுபன்** – காண்க: **உடுக்கோன்.**
**உடுபாதகம்** – பனைமரம்.
**உடும்பு** – பல்லிவகையைச் சேர்ந்த ஊரும் ஓர் உயிரினம், பிளவுபட்ட நாக்குள்ள ஓர் உயிரினம்.
**உடும்பு நாக்கன்** – பொய்யன், மாறுபடப் பேசுபவன்; வஞ்சகன்.
**உடுமடி** – ஆடை.
**உடுமாற்று** – உடைமாற்றுகை; நடைபாவாடை.
**உடுமானம்** – உடை; நிலைமைக்குத் தகுந்த உடை.
**உடுவம்** – அம்பின் ஈர்க்கு.
**உடுவேந்தன்** – காண்க: **உடுக்கோன்.**
**உடுவை** – அகழி; நீர்நிலை.
**உடை** – ஆடை; செல்வம், உடைமை; குடை வேல மரம்; சூரியன் மனைவி.
**உடை** (வி) – ஒடி, தகர், உடை என்னும் ஏவல்.
**உடைக்கல்** – காவிக்கல்.
**உடைகுளம்** – இருபதாம் நட்சத்திரமாகிய பூராட நாள்; மூளி ஏரி.
**உடைகொல்** – உடைமரம்; வேலமரம்.
**உடைஞா(நா)ண்** – உடைமேல் தரிக்கும் கயிறு.
**உடைத்தல்** – தகர்த்தல்; அழித்தல்; வருத்துதல்; தோற்கச் செய்தல்; வெளிப்படுத்துதல்; குட்டுதல்; பிளத்தல்; கரை உடைத்தல்; புண் கட்டியுடைதல்; முறுக்கவிழ்த்தல்.
**உடைதல்** – தகர்தல்; உலைதல்; கெடுதல்; மலர் தல்; பிளத்தல்; முறுக்கவிழ்தல்; எளிமைப் படுதல்; புண்கட்டியுடைதல்; ஆறு முதலியன கரையுடைதல்; அவிழ்தல்; தோற்றோடுதல்; வெளிப்படுதல்.
**உடைப்படை** – நிலைப்படை.
**உடைப்பு** – உடைகை, உடைந்துவிடுதல்; உடைந்த அறுவாய், பிளப்பு.
**உடைப்பெடுத்தல்** – வெள்ளத்தாற் கரையழிதல்.
**உடைப்பொருள்** – உடைமைப் பொருள், ஒருவருக்கு உடைத்தாகிய பொருள்.
**உடைமணி** – குழந்தைகளின் அரையணி; மேகலை.
**உடைமை** – உடையனாகும் தன்மை; உடைமைப் பொருள்; செல்வம்; அணிகலன்; உரிமை; உரியவை.
**உடைய** – ஆறாம் வேற்றுமைச் சொல்லுருபு.
**உடையநம்பி** – சுந்தரமூர்த்தி நாயனார்.
**உடைய பிள்ளையார்** – திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.
**உடையவர்** – ஆன்மாக்களை அடிமையாக உடையவர்; சுவாமி; ஆன்மார்த்தலிங்கம்; செல்வர்; இராமானுசர்.
**உடையவரசு** – திருநாவுக்கரச நாயனார்.
**உடையவன்** – உரியவன்; பொருளையுடையவன்; கடவுள்; செல்வன்; தலைவன்.
**உடையார்** – செல்வர்; சுவாமி; சில வகுப்பார் களின் பட்டப் பெயர்; இலங்கையில் ஒரு கிராம அலுவலர்.
**உடையார்சாலை** – கோயிலில் உள்ள அன்ன சாலை.
**உடையாள்** – உமாதேவி; உடைமையாகக் கொண்டவள்.
**உடையாளி** – கடவுள்.
**உடையான்** – உடையவன், உரிமைக்காரன்; அரசன்; தலைவன்; கடவுள்.
**உடைவாரம்** – மொத்த விளைவு, முழு விளைவு.
**உடைவாள்** – இடைக்கச்சில் செருகும் குறுவாள்.
**உடைவு** – தகர்கை; உடைப்பு; கேடு; தளர்வு; தோற்றோடுகை; மனநெகிழ்ச்சி; களவு.
**உடைவேல்** – குடைவேல மரம்.
**உண்கண்** – மை தீட்டிய கண்.
**உண்கலம்(ன்)** – உணவு கொள்ளும் பாண்டம், உண்ணும் ஏனம்.
**உண்டறுத்தல்** – புசித்துச் செரிப்பித்துக் கொள்ளுதல்; அனுபவித்து முடித்தல்; நன்றி மறத்தல்; ஈடுசெய்து தீர்த்தல்.
**உண்டாக்குதல்** – படைத்தல்; தோன்றச் செய்தல்; விளைவித்தல்; வளர்த்தல்.
**உண்டாக** – காலம் பெற; கருத்தரிக்க; மிகுதியாக.
**உண்டாட்டம்** – விளையாட்டு.
**உண்டாட்டு** – கள்ளுண்டு களித்து விளையாடல்; கள்ளுண்டு மகிழ்தலைத் தெரிவிக்கும் புறத் துறை; பெருங்காப்பியவுறுப்புள் ஒன்று; பலர் கூடியுண்ணும் விழா; மகளிர் விளையாட்டு வகை.
**உண்டாத்தா** – கள்ளிமரம்.
**உண்டாதல்** – விளைதல்; செல்வச் செழிப்பாதல்; உளதாதல்; நிலையாதல்; கருக்கொள்ளுதல்.
**உண்டாயிருத்தல்** – சூல்கொண்டிருத்தல்.
**உண்டானவன்** – செல்வமுள்ளவன்.
**உண்டி** – உணவு; சோறு; இரை; பறவை, விலங்கு இவற்றின் உணவு; உண்டிச் சீட்டு; கருவூலம்; மாற்றுச்சீட்டு; காணிக்கைப் பெட்டி; கோயிலுக்குக் கொடுக்கும் பணம்; நுகர்ச்சி; கொட்டைக்கரந்தை.
**உண்டிகை, உண்டியல்** – காணிக்கைக் கலம்; மாற்றுச் சீட்டு.

**உண்டியற்புரட்டு** – பணமோசம்.

**உண்டு** – உள்ள தன்மையை உணர்த்தும் ஐம்பால் மூவிடத்திற்கும் உரிய ஒரு குறிப்பு வினை முற்றுச் சொல்; ஓர் உவம உருபு; அற்பத்தைக் குறிக்கும் சொல்; ஊன்றுகோல்.

**உண்டுகம்** – பெருவாகை மரம்.

**உண்டுபடுத்துதல்** – உண்டாக்குதல், படைத்தல்; கட்டிவிடுதல்.

**உண்டுபடுதல்** – உண்டாதல்; தோன்றுதல்; வளர்தல்.

**உண்டுபண்ணுதல்** – உண்டாக்குதல்.

**உண்டுருட்டி** – முன்னோர் தேடிவைத்த பொருள்களைத் தின்றழிப்பவன்.

**உண்டுறையணங்கு** – நீர் உண்ணுந் துறையிலுள்ள தெய்வப்பெண்.

**உண்டை** – உருண்டை, திரட்சி; திரண்ட வடிவுள்ளது; வில்லுண்டை; கவளம்; சூதுகருவி; சிற்றுண்டி; குறுக்கிழை; படைவகுப்பு; கூட்டம்; ஒருவகைச் சருக்கரை; கஞ்சாவுண்டை.

**உண்டைக்கட்டி** – கோயிலில் தரும் சோற்றுருண்டை.

**உண்டைநூல்** – நாலுருண்டை; நெசவின் குறுக்கிழை.

**உண்டைவிடுதல்** – குத்துதல்.

**உண்டைவில்** – சுண்டுவில், காய்ந்த களிமண் உருண்டையை வைத்துத் தெறிக்கும் சிறு வில்.

**உண்ணம்** – வெப்பம்; உடைமரம்.

**உண்ணா, உண்ணாக்கு** – உள்நாக்கு; அண்ணத்துள்ள சிறுநாக்கு; அண்ணம், மேல்வாய்.

**உண்ணாட்டம்** – ஆராய்ச்சி; உட்கருத்து.

**உண்ணாமுலை** – பாலுண்ணாத முலை; திருவண்ணாமலையில் கோயில்கொண்டிருக்கும் உமை.

**உண்ணாவிரதம்** – பட்டினிநோன்பு.

**உண்ணாழிகை** – கோயிலுள் இறைவன் திருமேனியுள்ள இடம், கருவறை.

**உண்ணாழிகையார்** – கோயில் கருவறையில் வீற்றிருக்கும் கடவுள்.

**உண்ணாழிகையுடையார்** – கருவறையில் பணிபுரிவோர்.

**உண்ணாழிகை வாரியம்** – கோயில் மேற்பார்வைக் குழு.

**உண்ணி** – விலங்குகளின் உடலில் இருப்பதொரு பூச்சிவகை; பாலுண்ணி; உண்பவன்.

**உண்ணியப்பம்** – உருண்டை வடிவான இனிப்புப் பணியாரவகை.

**உண்ணீர்** – குடிக்கும் நீர்.

**உண்ணீர்க்கொக்கு** – ஒருவகைக் கொக்கு.

**உண்ணுதல்** - உணவு உட்கொள்ளுதல்; பொருந்துதல்; நுகருதல், அனுபவித்தல்; இசைவாதல்.

**உண்ணோக்கல்** – சிந்தித்தல்; தியானித்தல்.

**உண்பலி** – பிச்சை.

**உண்மடம்** – அறிவின்மை; உணவு கொள்ளும் இடம்; உள்ளிடத்து மடம்.

**உண்மடை** – உள்வாய்க்கால்; அடி மதகின் திறப்பு; கோயிற்குள்ளிடும் படையல்.

**உண்மலம், உண்மாசு** – மனமாசு, மனக்குற்றம்.

**உண்மிடறு** – அணல், உட்கண்டம்.

**உண்முகம்** – மனத்தால் உட்புறம் நோக்கும் நோக்கு.

**உண்முடிச்சு** – உட்கள்ளம், உள்ளாகச் செய்யும் வஞ்சகம்.

**உண்மூக்கு** – மூக்கின் உட்புறத்தின் மேற்பாகம்.

**உண்மூலம்** – உட்பக்கமாக உண்டாகும் மூலநோய்.

**உண்மை** – உள்ளது; இயல்பு, உள்ள தன்மை; மெய்ம்மை; நேர்மை; ஊழ்.

**உண்மைஞானம்** – மெய்யுணர்வு, மெய்யான அறிவு, தத்துவஞானம்.

**உண்மைத்துரோகம்** – நம்பிக்கைத் துரோகம்; பொய்.

**உண்மைப்படுத்துதல்** – மெய்ப்பித்தல்.

**உண்மைப்படுதல்** – மெய்யாதல்; உறுதியாதல்.

**உண்மைப்பிடி** – உறுதியான கொள்கைப் பற்று.

**உண்மைப் பொருள்** – கடவுள்; சரியான விளக்கம்; மறுக்க இயலாதபடியுள்ள பொருள்.

**உண்மையறிவு** – மெய்யான அறிவு, தத்துவ ஞானம்; ஊழால் உளதாகிய அறிவு.

**உண்மை வழக்கு** – உள்வழக்கு, உள்ளதை உள்ளது என்கை.

**உண** – உணவு.

**உணக்கம், உணக்கு** – உலர்ந்த தன்மை, வாட்டம்.

**உணக்குதல்** – உலர்த்துதல், வாட்டுதல்; கெடுத்தல்.

**உணக்குப்பொருள்** – காய்கறிகளின் வற்றல்.

**உணங்கல்** – உலர்ந்த பொருள்; உலர்த்திய தவசம்; வற்றலிறைச்சி; உணவு; உலர்ந்த பூ.

**உணங்குதல்** – உலர்தல்; மெலிதல்; காய்தல்; வாடல்; சிந்தை மெலிதல்; செயலறுதல்.

**உணத்துதல்** – உலர்த்தல், காயவிடுதல்; வற்றுவித்தல்.

**உணப்பாடு** – உண்ணப்படுகை.

**உணர்ச்சி** – உணர்வு; அறிவு; மனம்.

**உணர்த்தல்** – அறிவித்தல்; துயிலெழுப்புதல்; ஊடல் தீர்த்தல்; நினைப்பூட்டுதல்; கற்பித்தல்.

**உணர்த்தி** – உணர்ச்சி; நினைவு.
**உணர்த்துதல்** – காண்க: **உணர்த்தல்.**
**உணர்தல்** – அறிதல்; நினைதல், கருதுதல்; ஆராய்தல்; இயல்புணர்தல்; ஊடல் நீங்குதல்; தெளிதல்; துயிலெழுதல்; பகுத்தறிதல்; நுகர்தல்; தொட்டறிதல்; பாவித்தல்.
**உணர்ந்ததையுணர்தல்** – ஓரளவை; முன் அறிந்துள்ள ஒன்றைப் பின்னும் அறிதல்.
**உணர்ப்பு** – தெளிவிக்கப்படுகை; ஊடல் தீர்த்தல்.
**உணர்வு** – அறிவு; தெளிவு; துயில் நீங்குகை; கற்றுணர்கை; ஒழிவு; ஆன்மா; புலன்.
**உணர்வெழுத்து** – குறியினால் உணரப்படும் ஒருவகை எழுத்து.
**உணராமை** – அறியாமை; நெகிழாமை; மயக்கம்.
**உணரார்** – அறியார், மூடர்.
**உணல்** – உண்ணல்.
**உணவின்பிண்டம்** – உடம்பு.
**உணவு** – சோறு; உணவுப்பொருள்; மழை.
**உணா** – உணவு; சோறு.
**உணை** – மெலிவு; உள்மெலிவு.
**உணைதல், உணைவு** } – நைதல், மெலிதல்.
**உத்கிருட்டம்** – சிறந்தது, மேன்மையானது.
**உத்கீதம்** – ஓங்காரம்; சாமவேதம் பாடுதல்.
**உத்கோசம்** – பெருமுழக்கம்; காணிக்கை; சினம்; இலஞ்சம்.
**உத்தஞ்சம்** – செவிப்பூண்; சூட்டுமாலை.
**உத்தண்டம்** – அச்சம் விளைப்பது; கொடுமை; வீரம்; மகத்துவம்; துணிவு; வலிமை; இறுமாப்பு; அதிகாரம்; கொடை.
**உத்தண்டமணி, உத்தண்டமாலை, உத்தண்டால்** } – பொன் மணியாலாய கழுத்தணி; மாதர் கழுத்தணி வகைகளுள் ஒன்று.
**உத்தம்** – கொட்டை முந்திரிகை; சாமவேதம்; புகழுரை; பித்தேறுகை.
**உத்தம்பிரி** – கொத்துமல்லி; உயர்சாதிக் குதிரை.
**உத்தமதாளி** – வேலிப்பருத்தி.
**உத்தமதானம்** – நல்வழியில் சேர்த்த பொருளைத் தக்கார்க்கு வழங்குகை; பாக்கு வெற்றிலைகளைத் தானமாகக் கொடுக்கை.
**உத்தமதானி** – கோயிலில் வைக்கும் ஒருவகை விளக்கு.
**உத்தமபட்சம்** – முதல் தரம்.
**உத்தமபலம்** – முந்திரிகைப் பழம், கொட்டை முந்திரி.
**உத்தமபாத்திரம்** – தானம் பெறுவதற்குரிய பெரியோர்.
**உத்தமபுருடன்** – உயர்ந்த குறிகளுடையவன்; நன்னெறி நடப்போன்; நற்குணமுடையவன்; கடவுள்.
**உத்தமம்** – எல்லாவற்றுள்ளும் சிறந்தது; முதன்மை, மேன்மை; உயர்வு; நன்மை; அரத்தை.
**உத்தமர்ணன்** – கடன் கொடுப்பவன்.
**உத்தமன்** – காண்க: **உத்தமபுருடன்.**
**உத்தமாகாணி** – காண்க: **உத்தமதானி.**
**உத்தமாங்கம்** – தலை; ஆண்குறி; பெண்குறி; கருடன்; வீடு.
**உத்தமி** – உயர்ந்தவள்; கற்புடையவள்; பார்வதி.
**உத்தமை** – உத்தமி; சிறந்தவள்; பதுமினி சாதிப் பெண்; ஊசிப்பாலை.
**உத்தரக் கற்கவி** – கதவுநிலைக்குமேல் சித்திரம் எழுதப்பட்ட பலகை.
**உத்தரகமனம்** – மகாப்பிரஸ்தானம், உயிரைமாய்க்க வடதிசை நோக்கிச் செல்லுகை, வடக்கிருத்தல்.
**உத்தரகன்மம்** – இறுதிக்கடன், உத்தரகிரியை.
**உத்தரகாலம்** – எதிர்காலம்.
**உத்தரகிரியை** – பின்செயல்; இறந்தபின் செய்யும் சடங்கு; அந்தியேட்டி முதலிய அபரக்கிரியை.
**உத்தரகுடுமி** – முன்குடுமி.
**உத்தரகுரு** – போகபூமி; போகபூமி ஆறனுள் ஒன்று; அருந்ததி; பாண்டவர்.
**உத்தரகுருக்கள்** – போக பூமியில் வாழ்பவர்.
**உத்தரகுருவம்** – காண்க: **உத்தரகுரு.**
**உத்தரகோளார்த்தம்** - நிலவுருண்டையின் வடபாதி.
**உத்தரசைவம்** – சித்தாந்த சைவம்.
**உத்தரட்டாதி** – இருபத்தாறாம் நட்சத்திரம்.
**உத்தரணி** – பஞ்சபாத்திரக் கரண்டி, தீர்த்தம் எடுத்தற்குரிய சிறுகரண்டி; சுருவை.
**உத்தரத்திரயம்** – உத்தரம் எனத் தொடங்கும் மூன்று நட்சத்திரம்; உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி என்பன.
**உத்தரபற்குனி** – உத்தரம், பன்னிரண்டாம் நட்சத்திரம்.
**உத்தரபாகம்** – பிற்பாகம்.
**உத்தரபூமி** – வடசீதள பூமி.
**உத்தரபூருவம்** – வடகிழக்கு.
**உத்தரம்** – மறுமொழி, எதிர்மொழி, விடை; எதிர்வாதம்; பின்நிகழ்வது; மேற்பட்டது; உயர்ச்சி; வடக்கு; வடவைத் தீ, ஊழித் தீ; உத்தராயனம்; பன்னிரண்டாம் நட்சத்திரம்; அருந்ததி.
**உத்தரமீமாஞ்சை** – ஒரு வித்தை; பிரம சூத்திரம் முதலிய நூல்கள்.
**உத்தரமீன்** – வடமீன், அருந்ததி.
**உத்தரவாணி** – கண்டங்கத்தரி.
**உத்தரவாதம்** – உறுதி; எதிர்வாதம்; பொறுப்பு; ஈடு, பிணை.

**உத்தரவாதி** – பதில் சொல்வோன், பொறுப்பாளி; பிணையாளி; எதிரி.

**உத்தரவு** – அனுமதி; விடுதலை; கட்டளை; விடை; தெய்வக் கட்டளை; மறுமொழி; தெய்வ சம்மதம்.

**உத்தரவு கொடுத்தல்** – போகச் சொல்லல்; விடை தரல்; அனுமதியளித்தல்; கட்டளை கொடுத்தல்; ஏவல்.

**உத்தரவுச் சீட்டு** – அனுமதிப் பத்திரம், நுழைவுச் சீட்டு; அதிகாரப் பத்திரம்.

**உத்தரவேதம்** – வேதத்திற்கு மேற்பட்ட வேதமாகிய திருக்குறள்.

**உத்தராசங்கம்** – காண்க: **உத்தரி(ரீ)யம்.**

**உத்தராடம்** – இருபத்தொன்றாம் நட்சத்திரம்.

**உத்தராதி** – வடக்கு; வடநாட்டான்.

**உத்தராபதம்** – வடநாடு.

**உத்தராபோசனம்** – உணவின் முடிவில் மந்திர பூர்வமாக நீர் உட்கொள்ளுதல்.

**உத்தராயனம்** – சூரியன் வடக்கு நோக்கிச் செல்லுங் காலம்; தை முதல் ஆனிவரையுள்ள ஆறு மாத காலம், சூரியன் வடக்கில் தைமுதல் ஆனி மட்டும் இயங்குங் காலம்; தை மாதப் பிறப்பு.

**உத்தரார்த்தம்** – பிற்பாதி.

**உத்தரி** – குதிரை; பாம்பு; யானை; பருத்திச் செடி.

**உத்தரிக்கும்தலம்** – இறப்பின்பின் உயிர் தூய்மை பெறும் வேதனையுலகம்.

**உத்தரிகம்** – காண்க: **உத்தரி(ரீ)யம்.**

**உத்தரித்தல்** – அழுந்தல்; அனுப்பித்தல்: ஈடு செய்தல்; கடன் செலுத்துதல்; பொறுத்தல்; உடன்படல்; சொற்போரிடல்; மறுமொழி சொல்லுதல்.

**உத்தரி(ரீ)யம்** – மேற்போர்வை, மேலாடை.

**உத்தரோத்தரம்** – மேலும் மேலும்; மறுமொழிக்கு எதிர்மொழி.

**உத்தளம்** – உத்தூளிதம், மத்தள பேதம்.

**உத்தாபம்** – மிகு வெப்பம்; தவிப்பு; முயற்சி.

**உத்தாபலம்** – இசங்குச் செடி.

**உத்தாபனம்** – குழந்தையைப் பிறந்த அறையினின்று வெளிக்கொணருஞ் சடங்கு.

**உத்தாபனி** – தசைவகை.

**உத்தாமணி** – வேலிப்பருத்தி.

**உத்தாரணம்** – தீங்கினின்றும் மீட்கை; எடுத்து நிறுத்துகை.

**உத்தாரம்** – மறுமொழி; கட்டளை; அனுமதி; ஒழுங்காகக் கொடுக்கும் நிலையான வருவாய்.

**உத்தாலகம்** – ஒருவகைச் சோளம்.

**உத்தாலம்** – நறுவிலிமரம்.

**உத்தானம்** – அடுப்பு; உயிர்த்தெழுகை; இசைப்பு; ஊழித் தீ; படைப்பு; எழும்புதல்; நிமிர்ந்து கிடத்தல்; காண்க: **உத்தாபனம்;** அடக்குகை; இடை; உயர்ந்தெழுகை.

**உத்தானி** – காண்க: **உத்தாபனி.**

**உத்தி** – சொல்; சூழ்ச்சி; செல்வம்; சீதேவி உருவம் பொறித்த தலையணி; தேமல்; பாம்பின் படப்பொறி; தந்திரவுத்தி; அறிவு; கருதலளவை; சேர்க்கை; இணக்கம்; தக்க தன்மை; ஆபரணத் தொங்கல்; அபின்.

**உத்திட்டம்** – எதிர்பார்க்கை; சொல்லுகை சிறப்பிக்கைக் குறிப்பு.

**உத்தியம்** – வேள்விவகை, வேள்வி இருபத்தொன்றனுள் ஒன்று.

**உத்தியாபனம்** – முடித்தல்; நோன்பு முடிக்கை.

**உத்தியானம், உத்தியானவனம்** – சோலை, நந்தவனம், பூந்தோட்டம், சிங்கார வனம்; அரசர் விளையாடுங் காவற்சோலை.

**உத்தியுத்தன்** – அருவுருவத் திருமேனி கொண்ட சிவன்; மிகவும் பயன்படுபவன்; ஊக்கமுள்ளவன்.

**உத்தியோகம்** – முயற்சி; வேலை, தொழில்.

**உத்திரதம்** – விட்டம்; சிறுவலை; அச்சுருவாணி.

**உத்திரம்** – காண்க: **உத்தரம்;** மஞ்சள்; மரமஞ்சள்; பன்னிரண்டாம் நட்சத்திரம்; சூரிய நாள்; வீட்டின் உத்தரம்; விட்டம்.

**உத்திராபன்னி** – சணல்செடி.

**உத்திரி** – அருச்சனை; தியானம்; மந்திரம்; பருத்திச்செடி.

**உத்தீபகம்** – எழுச்சியுண்டாக்கல்; ஒளிவிடல்; மலையெறும்பு.

**உத்தீபனம்** – விகாரமூட்டல்; எழுச்சியுண்டாக்கல்.

**உத்தீயம்** – எழுவகைச் சோமவேள்விகளுள் ஒன்று.

**உத்து** – சான்று, சாட்சி; துப்பு.

**உத்துங்கம்** – உயர்ச்சி; உயர்ந்தது; நெடுமை; மேன்மை; மிருது.

**உத்துவாகிதமுகம்** – அண்ணாந்து பார்க்கை, தலைநிமிர்ந்து நோக்கல்.

**உத்துவாசனம்** – அனுப்பிவிடுகை; அகற்றுதல்; கொல்லுதல்.

**உத்துவேகம்** – மிகு விரைவு; அச்சம்; திருமணம்; பாக்கு.

**உத்து(தூ)ளம், உத்தூளனம், உத்தூளித்தல், உத்தூளிதம்** – திருநீற்றை நீரில் குழையாது உடம்பு முழுதும் வரியின்றிப் பூசுதல்.

**உத்தேசம்** – நோக்கம்; மதிப்பு; பின்னே விளக்கற்பொருட்டு முன் பெயர் மாத்திரையாற் சொல்லுதல்; விருப்பம்.

**உத்தேசித்தல்** – கருதுதல்; மதித்தல்.
**உத்பிரேட்சை** – தற்குறிப்பேற்ற அணி.
**உதக்கு** – வடக்கு; பின்னானது; மேலானது.
**உதகசுத்தி** – தேற்றாமரம்.
**உதகஞ்சிதறி** – மழை.
**உதகம்** – நீர்; பூமி.
**உதகமூலம்** – தண்ணீர்விட்டான் கிழங்கு; பச்சை வேர்.
**உதகரணம்** – உதைத்து அமுக்குகை.
**உதகரித்தல்** – உதாரணங்காட்டி விளக்கல்.
**உதகவன்** – நெருப்பு; கொடிவேலி.
**உதகு** – புன்கமரம்.
**உதகும்பம்** – நீர்க்குடம்.
**உதசம்** – சாபம்; நீரிற் பிறந்த பொருள்; பசுமடி.
**உதடு** – இதழ்; பானை முதலியவற்றின் விளிம்பு; வெட்டுவாய்.
**உதண், உதணம்** – மொட்டம்பு, கூரற்ற அம்பு.
**உததி** – கடல்; நீர்க்குடம்; மேகம்.
**உதப்பி** – தெறிக்குமெச்சில்; ஈரல்; செரியாத இரை.
**உதப்பிவாயன்** – எச்சில் தெறிக்கப் பேசுகிறவன்.
**உதப்புதல்** – கடிந்து பேசுதல்; இகழ்ந்து நீக்குதல்; குதப்புதல்; பேசுகையில் எச்சில் தெறித்தல்.
**உதம்** – உதகம், நீர்; ஓமம்; அழைத்தல்; கேட்டல்.
**உதம்புதல்** – அதட்டுதல்; கடிந்து கொள்ளல்; அச்சுறுத்துதல்.
**உதயகாலம், உதயகாலை** – சூரிய சந்திர நட்சத்திரங்கள் தோன்றும் காலம்; சூரியன் உதிக்கும் காலம்.
**உதயகிரி** – சூரியன் உதிப்பதாகக் கருதப்படும் மலை; செம்பாலையிற் பிறக்கும் ஒரு பண், குறிஞ்சி யாழ்த்திறவகை.
**உதயதாரகை** – விடிவெள்ளி.
**உதயம்** – தோற்றம்; நட்சத்திரம் முதலியன கீழ்வானடியில் தோன்றுதல்; காலை; பிறப்பு; சீர்பேறு; வெளிச்சம்.
**உதயராகம்** – காலைப்பண்.
**உதயராசி, உதயலக்கினம்** – குழந்தை பிறக்கும்போது உதயமாயுள்ள ராசி.
**உதயன்** – சூரியன்.
**உதயனம்** – உதித்தல், தோன்றல்.
**உதயாத்தமனம்** – சூரியன் முதலியவற்றின் தோற்றமும் மறைவும்; காலை மாலைகள்.
**உதயாதிபன்** – சூரியன், உதயராசியை ஆளும் கோள்.
**உதரக்கொதி** – மிகு பசி; வயிற்றுத் துடிப்பு.
**உதரகம்** – சோறு.
**உதரகோமதம்** – பாலடைப் பூண்டு.
**உதரத்துடிப்பு** – மிகு பசி.
**உதரப் பிரிவினர்** – ஒருகுடிப் பிறந்தார்.
**உதரபந்தம், உதரபந்தனம்** – அரைப்பட்டிகை, ஒட்டியாணம்.
**உதரம்** – வயிறு; கருப்பம்; கீழ்வயிறு.
**உதரவணி** – கண்டங்கத்தரிச் செடி.
**உதராக்கினி** – பசித் தீ, பசி.
**உதவகன்** – காண்க : **உதகவன்.**
**உதவடுத்தல்** – உதவிசெய்தல்.
**உதவரக்(ங்)கெட்டது** – மிகவும் இழிந்தது; முற்றும் கெட்டது.
**உதவல்** – காரியத்திற்கு ஆதல்; உதவி செய்தல்; ஈதல்.
**உதவாக்கட்டை, உதவாக்கடை(ரை)** – பயனற்றவன்.
**உதவாப்பட்சம்** – தவறினால்.
**உதவி** – துணை; கொடை.
**உதவு** – கூரைவேயுங் கழி.
**உதவுதல்** – கொடுத்தல்; துணைசெய்தல்; தடுத்து நிற்றல்; சொல்லுதல்; கூடியதாதல்; பயன் படுதல்.
**உதள்** – ஆட்டுக்கடா; ஆடு; வெள்ளாட்டுக்கடா; மேடராசி.
**உதளிப்பனை** – காண்க: **கூந்தற்பனை.**
**உதளை** – காட்டலரிவகை; ஆற்றரளிச் செடி.
**உதறிமுறிப்பான்** – விஷ்ணுகரந்தைச் செடி.
**உதறுகாலி** – உதைநாற் பசு; காலையிழுத்து நடப்பவள்.
**உதறுதல்** – சிதற வீசுதல், விதிர்த்தல்; நடுங்கு தல்; விலக்குதல், இடங்கொடாமல் தள்ளுதல்.
**உதறுவலி, உதறுவாதம்** – நடுக்குவாதம்.
**உதனம்** – சிறிது.
**உதாகரணம்** – எடுத்துக்காட்டு, உதாரணம்.
**உதாகரிகன்** – எடுத்துக்காட்டாக உள்ளவன்.
**உதாகரித்தல்** – உதாரணங்காட்டி விளக்கல்.
**உதாசனன்** – அக்கினி; அக்கினிதேவன்; கண் குத்திப் பாம்பு; இகழ்பவன், நிந்திப்பவன்.
**உதாசனி** – கொடியவள்.
**உதாசனித்தல்** – இகழ்தல், நிந்தித்தல்.
**உதாசி(சீ)னம்** – பொருட்படுத்தாமை; நிந்தை; விருப்பு வெறுப்பில்லா நடுநிலை; இகழ்வு.
**உதாசீனன்** – விருப்பு வெறுப்பின்றிப் பொதுமை யாயிருப்பவன்; இல்லறக் கடனை முடித்து உவர்ப்புப் பிறந்த நிலையுடையான்.
**உதாத்தம்** – செல்வவுயர்ச்சியையோ மனப்பெரு மையையோ உயர்த்திக் கூறும் ஓர் அணி; எடுத்தலோசை; பெருமை; உதவிக்கொடை.
**உதாத்தன்** – சிறந்தவன்; வள்ளல்.

**உதாரகுணம்** – வள்ளன்மை, பெருங்கொடைத் தன்மை.

**உதாரணம்** – எடுத்துக்காட்டு, மேற்கோள்; எதிர் நியாயம்; துணைக் காரணம்.

**உதாரத்துவம்** – கொடுக்குங் குணம், பெருங் கொடைத்தன்மை.

**உதாரதை** – உதாரத் தன்மை; பெருங்கொடை, காண்க: **உதாத்தம்.**

**உதாரம்** – தருமம், ஈகை, கொடை; மேம்பாடு, பெருமை; குறிப்பினால் ஒரு பொருள் சிறப்புப் படத் தோன்றுவதாகிய குணம்; தாராளம்; மேட்டிமை.

**உதாரன், உதாரி** – கொடையாளி; பேச்சுத்திறமை உள்ளவன்.

**உதாவணி** – கண்டங்கத்தரிச் செடி.

**உதானன்** – தசவாயுவுள் ஒன்று, நாபியில் நிற்கும் வாயு.

**உதி** – காண்க: **ஒதி**; வித்தை; உலைத்துருத்தி.

**உதி** (வி) – பிற, உதித்தலைச் செய்; உதயமாகு; அவதரி; காலந்தொடங்கு.

**உதிட்டிரன்** – போர்த்திறமுள்ளவன்; தருமபுத்திரன்.

**உதித்தல்** – உதயமாதல், தோன்றுதல்; பிறத்தல்; பருத்தல்.

**உதிதன்** – தோன்றினவன்; பாண்டிய மன்னன்.

**உதிப்பு** – தோற்றம், பிறப்பு; அறிவு.

**உதியன்** – சேரன்; பாண்டியன்.

**உதிர்** – கோரைக்கிழங்கு; துகள்.

**உதிர்த்தல்** – உதிரச் செய்தல்; வீழ்த்துதல்; பொடியாக்கல்; உதறுதல்.

**உதிர்தல்** – கீழ்விழுதல்; சிந்துதல்; சொரிதல்; பிதிர்தல்; அழிதல்; சாதல்; குலைதல்.

**உதிரக்கட்டு** – இரத்தத்தை நிறுத்துகை; பூப்புப் படாமை.

**உதிரக்கல்** – மாணிக்கவகை.

**உதிரக்குடோரி** – கருடன்கிழங்கு.

**உதிரங்களைதல்** – இரத்தம் வடிதல்; இரத்தம் நீக்குதல்.

**உதிரசூலை** – கருப்ப நோய்வகை.

**உதிரபந்தம்** – மாதுளை.

**உதிரம்** – இரத்தம்.

**உதிரமண்டலி** – நச்சுயிரிவகை.

**உதிரல்** – உதிர்ந்த பூ.

**உதிரன்** – செவ்வாய்.

**உதிரி** – உதிர்ந்தது; கதிரிலிருந்து உதிர்ந்த நெல்; பெரியம்மை நோய்; பிட்டு; சிறுகீரை; செவ்வாழை.

**உதிரிக்குத்து** – பெரியம்மையால் உண்டாகும் நோவு.

**உதிரித்தழும்பு** – அம்மைவடு.

**உதீசம்** – குறுவேர்.

**உதீசி** – வடக்கு.

**உது** – உஃது, சேய்மைக்கும் அண்மைக்கும் நடுவிலுள்ளதைக் குறிக்கும் ஒரு சுட்டுப் பெயர்; முன்னிலையானிடமுள்ள பொருள்.

**உதும்பரம்** – அத்திமரம்; எருக்கஞ்செடி; செம்பு; நெற்களம்; வாயிற்படி; செங்குட்ட நோய்.

**உதூகலம்** – உரல்.

**உதை** – அடி; முட்டுக்கால்.

**உதைகால்** – தாங்கு; முட்டுக்கால்; உதைக்குங் கால்; முட்டுக்கால்.

**உதைகாலி** – உதைக்கும் குணமுள்ள மாடு.

**உதைகொடுத்தல்** – உதைத்தல்; முட்டுக்கொடுத்தல்; ஊஞ்சலை ஆட்டிக் கொள்ளுதல்.

**உதைசுவர்** – முட்டுச்சுவர், அணைசுவர்.

**உதைத்தல்** – காலாலெறிதல்; தாக்கல்; பொருட்படுத்தாமை; செலுத்துதல்; அடித்தல்; மாறுபடுதல்; நடுங்குதல்.

**உதைப்பளவு** – கைந்நொடிப் பொழுதளவு.

**உதைப்பான்** – தள்ளுகருவி.

**உதைப்பு** – உதைக்கை; தாக்குகை; அச்சம்; திகில்.

**உதைபு** – கதவு, புதவு.

**உதைமானம்** – முட்டு; உதைகால்.

**உதோள்(ளி)** – உவ்விடம், மத்திமம்.

**உந்த** – உங்கேயுள்ள.

**உந்தரம்** – வழி; எலி.

**உந்தல்** – உயர்ச்சி; யாழ்நரம்பு தடவுகை.

**உந்தி** – கொப்பூழ்; வயிறு; நீர்ச்சுழி; உயர்ச்சி; யாற்றிடைக்குறை; கடல்; தேருருளை; மகளிர் விளையாட்டுவகை; யாழினுறுப்பு; நீர்; ஆன்கோட்டம்; பரப்பு; யாழ்ப் பத்தர்; நடு; ஆறு; துணை; பறப்பன.

**உந்திச்சுழி** – கொப்பூழ்ச்சுழி; நீர்ச்சுழி.

**உந்திடம்** – உவ்விடம்.

**உந்திநாளம்** – கொப்பூழ்க் கொடி.

**உந்திபறத்தல்** – உந்தி விளையாட்டு ஆடுதல், மகளிர் கூடிக் குதித்துப் பாடி விளையாடுதல்.

**உந்திபூத்தோன்** – உந்தியில் தாமரையுடையான், திருமால்; பிரமன்.

**உந்தியில் வந்தோன், உந்தியிலுதித்தோன்** – திருமாலின் கொப்பூழ்த் தாமரையில் தோன்றியவன், பிரமன்.

**உந்து** – பசுவையழைக்கும் ஒரு குறிப்புச் சொல்; கச்சோலம்; ஒரு விகுதி; உம்மின் திரிபு; ஏலக்காய்த் தோல்.

**உந்துதல்** – தள்ளுதல்; வீசியெறிதல்; அம்பு முதலியன செலுத்துதல்; வீழ்வித்தல்; யாழ் நரம்பு தெறித்தல்; கடைதல்; நகர்தல்; ஒளி வீசல்; பொருந்துதல்; நீங்குதல்; அனுப்புதல்.

**உந்துரு** – பெருச்சாளி; எலி.

**உந்தூழ்** – பெருமூங்கில், மலைமூங்கில்.

**உந்தை** – உம் தந்தை, உம் அப்பன்.

**உப்பக்கம்** – உந்தப்பக்கம், புறப்பக்கம்; முதுகு, பின்பக்கம்.

**உப்பங்கழி** – காயல்; உப்பளம்.

**உப்பங்காற்று** – கடற்காற்று.

**உப்பசம்** – காண்க: **உப்புசம்.**

**உப்பட்டி** – அரிக்கட்டு.

**உப்பர்** – உப்பு அமைப்போர், உமணர், உப்பு வாணிகர்.

**உப்பரம்** – வயிற்றுப் பொருமல்.

**உப்பரவர்** – குளம் முதலியன அகழ்வோர்; குறவரில் ஒரு வகுப்பார்.

**உப்பரிகை** – மேல்மாடம், மேல்மாடி.

**உப்பல்** – உப்புதல், ஊதிப்பருத்தல்.

**உப்பளம்** – உப்பு விளைநிலம்; கழிநிலம்.

**உப்பளவன்** – உப்பு விளைப்போன்.

**உப்பளறு** – களிமண்ணும் மணலும் கலந்த களர் நிலம்.

**உப்பறுகு** – உவர்நிலத்திலுள்ள ஒருவகை அறுகு.

**உப்பாணி** – உப்புச் சுமப்பவன், விளையாட்டில் தோல்வியடைந்து வென்றவனைச் சுமப்பவன்.

**உப்பாரக்காரன்** – சுண்ணாம்பு பூசும் வேலைக் காரன்.

**உப்பால்** – உப்பக்கம்; மேலிடம்; புறம்பு; முதுகு.

**உப்பிசம்** – காண்க: **உப்புசம்.**

**உப்பில்லாப்பேச்சு** – பயனற்ற பேச்சு.

**உப்பிலி** – இண்டங்கொடி; ஈர்கொல்லிக் கொடி; காண்க: **புலிதொடக்கி**; உப்பில்லாதது.

**உப்பு** – உவர்ப்பு; உவர்ப்புள்ள பொருள்; உவர்க் கடல்; இனிமை; பெண்கள் விளையாட்டு; மணற்குவியல்; அன்பு.

**உப்பு (வி)** – வீங்கு; பொங்கு; ஊது; பொருமு.

**உப்புக்கண்டம்** – உப்புச் சேர்த்துக் காயவைத்த இறைச்சித் துண்டம்; உலர்த்திய இறைச்சி.

**உப்புக்கரித்தல்** – உப்பு மிகுதல்.

**உப்புக்காகிதம்** – மரங்களை மெருகிடும் ஒரு வகைத் தாள்.

**உப்புக்கீரை** – ஒருவகைக் கீரை.

**உப்புக்குத்தி** – பறவைவகை, ஒரு குருவி.

**உப்புக்கொள்ளுதல்** – ஒரு விளையாட்டுவகை.

**உப்புக்கோடு** – கிளித்தட்டு விளையாட்டு.

**உப்புச்சீடை** – ஒரு பலகாரம்.

**உப்புச்சுமத்தல்** – ஒருவகை விளையாட்டில் வென்றவனைத் தோற்றவன் முதுகில் தூக்கல்; உப்புத் தூக்குகை.

**உப்புசம்** – வயிற்று வீக்கம்; வயிற்றுப் பொருமல்; வயிற்றில் வாயு நிரம்பல்; நுரையீரல் நோய்.

**உப்புத்திரி** – மலங்கழிக்க ஏற்றுந் திரி; முள் தைத்த இடத்தில் சுடுவதற்கு உப்பிட்டுப் பயன்படுத்தும் திரி.

**உப்புதல்** – பருத்தல்; பொங்குதல்; ஊதுதல்; வீங்குதல்.

**உப்புப்பால்** – ஈன்றணிமையுள்ள தாயின் பால்.

**உப்புப்பூத்தல்** – உப்புப் பற்றுதல்; உடம்பில் உப்புப் படர்தல்; உப்பங்காற்றால் இற்றுப் போதல்.

**உப்புமண்** – உவர்மண்; உவர்நிலம்.

**உப்புமா** – ஒருவகைச் சிற்றுண்டி; உடம்பில் பூக்கும் உப்பு.

**உப்புமாறுதல்** – உப்பு விற்றல்; வஞ்சித்தல்.

**உப்புவாடி** – உப்புக் கொட்டும் மேடை.

**உப்பேறி** – ஒருவகைக் கறி, பொரியல்வகை.

**உப** – ஒரு வடமொழி முன்னொட்டு; இரண்டு.

**உபக்கிரமணம்** – தொடக்கம்; அணுகுகை; முயலுகை.

**உபகதை** – கிளைக்கதை; சிறிய கதை; கட்டுக் கதை.

**உபகமம்** – ஏற்பு; அணுகுகை.

**உபகரணம்** – துணைக்கருவி; துணைப்பொருள்; துணைக்காரணம்.

**உபகரித்தல்** – உதவுதல்.

**உபகற்பம்** – திருநீறு, காட்டுத்தீ முதலியவற்றால் வெந்த சாம்பலைக் கொண்டு முறைப்படி அமைத்த திருநீறு.

**உபகாரகன்** – உதவிசெய்வோன்.

**உபகாரம்** – ஈகை; உதவி; காணிக்கை; மகிழ்ச்சி.

**உபகிரகம்** – பெருங்கோளைச் சுற்றியோடுஞ் சிறுகோள்; சிறை.

**உபகிரமணிகை** – முகவுரை; பாயிரம்.

**உபகிரமம்** – தொடக்கம்; முயற்சி செய்தல்; ஆராய்ந்து தெளிதல்; அணுகுதல்; விக்கிரமம்.

**உபகிருதம்** – உதவி.

**உபகிருதன்** – உதவி செய்யப் பெற்றவன்; தானாகவே ஒருவனிடம் தத்துப் புகுந்தவன்.

**உபகிருதி** – காண்க: **உபகிருதம்.**

**உபகுஞ்சிகை** – கருஞ்சீரகம்; ஏலம்.

**உபகுல்லம்** – சுக்கு.

**உபகுல்லியை** – திப்பிலி; அகழி; கிளை வாய்க் கால்.

**உபசங்காரம்** – முடிவு; அழிவு; ஒடுக்கம்; சுருக்கம்; மீட்டுக்கொள்ளுதல்; விலக்குதல்; அத்திரத்தைத் தடுக்கும் மந்திரம்.

**உபசத்தி** – ஒன்றாந்தன்மை, ஐக்கியம்; உதவி; ஈகை; ஊழியம்.

**உபசந்தி** – சந்தி வேளைக்குச் சற்று முந்தின காலம்.

**உபசம்மாரம்** – காண்க: **உபசங்காரம்.**

**உபசமனம்** – அமைதி.

**உபசமித்தல்** – உபசாந்தமடைதல்.

**உபசயசரீரம்** – பருவுடல்.

**உபசர்க்கம்** – காண்க: **உபசருக்கம்;** நோய்வகை; துன்பம்.

**உபசரணை** – உபசாரம்; வழிபாடு.

**உபசரித்தல்** – வழிபாடு செய்தல்; மரியாதை செய்தல்.

**உபசருக்கம்** – வடமொழி முதனிலையடை; ஆரிய மொழிகளின் அடையுருபு; பெயர் வினைகளுக்கு முன்வரும் இடைச்சொல்.

**உபசல்லியம்** – ஊரின் அண்மை; புலைச்சேரி, பறையர் சேரி.

**உபசாகை** – கிளையிலுள்ள கிளை, சிறு கிளை; உட்பிரிவு.

**உபசாந்தம், உபசாந்தி** – மனவமைதி; தணிகை; ஓய்வு; அருள்.

**உபசாபம்** – வேறுபாடு; துரோகம்; ஒற்றுமையின்மை.

**உபசாரக்கை** – இரண்டு கைகளையுங் குவித்து மார்போடணைத்து உபசாரமாகக் காட்டும் இணைக்கைவகை.

**உபசாரகன்** – மரியாதை செய்வோன்.

**உபசாரஞ் சொல்லுதல்** – முகமன் கூறுதல்; துக்கம் விசாரித்தல்.

**உபசாரபத்திரம்** – ஒருவரைப் போற்றிப் படித்துக் கொடுக்கும் பாராட்டு இதழ்.

**உபசாரம்** – மரியாதை; புகழ்மொழி; வாழ்த்து, உபசார வழக்கு; ஊழியம்; வழிபாடு; காண்க : **உபசாரவழக்கு;** போற்றுகை; உதவி; சேவை; காணிக்கை.

**உபசாரம்கேட்டல்** – துக்கம் வினாவல்.

**உபசாரவசனம்** – புகழ்மொழி.

**உபசாரவழக்கு** – ஒன்றன் தன்மையை மற்றொன்றன்மேல் ஏற்றிக் கூறுவது.

**உபசாரன், உபசாரி** – காண்க: **உபசாரகன்.**

**உபசாரிகம்** – காண்க : **உபசாரவழக்கு.**

**உபசீவனம்** – பிறரைச் சார்ந்து வாழ்கை; வாழ்க்கைக்குரிய பொருள்.

**உபசீவித்தல்** – உயிர் பிழைக்கல்; பிறரையோ பிறிதொன்றையோ சார்ந்திருத்தல்.

**உபசுருதி** – இரவிலே கேட்கும் வானொலி.

**உபத்தம்** – பிறப்புறுப்பு, பெண்குறி.

**உபத்தாயம்** – உபாயம்; தவறு; துன்பம்.

**உபத்தானம்** – சந்தியாவந்தன முடிவில் செய்யும் மந்திரத் துதி.

**உபத்திரம், உபத்திரவம்** – இடுக்கண், துன்பம், வேதனை; கொடுமை; தொந்தரவு; வருத்தம்; வலுக்கட்டாயம்.

**உபதாது** – பொன் முதலிய உலோகங்களைப் போலத் தோற்றமளிக்கும் தாழ்ந்த ஏழு உலோகங்கள்: சுவர்ணமாட்சிகம், தாரமாட்சிகம், துத்தம், காஞ்சியம், ரீதி, சிந்தூரம், சிலாசத்து.

**உபதாளம்** – ஐந்து சிறுதாளங்கள்: ஆதி தாளம், பார்வதி லோசனம், குடுக்கம், சிங்கநந்தம், திரிமாத்திரை.

**உபதானம்** – துணைக் காரணம்; அடிப்படை; கடமை; தலையணை; நோன்பு.

**உபதி** – சக்கரத்தின் ஆரம்; அச்சம்; வஞ்சனை.

**உபதிருட்டன்** – உடனிருந்து பார்ப்பவன்; புரோகிதன்.

**உபதேசகலை** – ஆகமவளவைவகை மூன்றனுள் ஒன்று, மத தத்துவ போதனைமுறை.

**உபதேசம்** – கடவுளின் தன்மையைக் கூறுதல், சமயபோதகம்; ஞான போதனை; சமயாசார உபதேசம்; மந்திரோபதேசம்; நன்மை கூறல்; புத்தி புகட்டல்.

**உபதேசி** – போதகன், குரு.

**உபதேசித்தல்** – போதித்தல்; மந்திரத்தை அறிவுறுத்தல்.

**உபதேசியார்** – உபபோதகர்.

**உபதை** – அமைச்சர் முதலியோரை அமர்த்துவதற்குமுன் அரசன் செய்யுஞ் சோதனை: அறவுபதை, பொருளுபதை, இன்பவுபதை, அச்சவுபதை; ஒருவன் மன இயல்பை ஆராய்ந்து தெளிதல்; தணிக்கை; ஈற்றயலெழுத்து; பரிதானம்; காணிக்கை.

**உபநதி** – பேராற்றில் வந்துவிழும் சிற்றாறு.

**உபநயம்** – அடைதல்; அனுமான உறுப்புகள் ஐந்தனுள் ஒன்று; கொண்டுவருதல்; பூணூல் தரிக்கும் சடங்கு.

**உபநயனம்** – பூணூல் தரிக்கும் சடங்கு, பூணூல் கலியாணம்; மூக்குக்கண்ணாடி; வழிநடத்துதல்.

**உபநாக(ய)ம்** – புண்ணுக்கிடும் மருந்து; புண்கட்டிகளில் வைத்துக் கட்டும் மா முதலியன.

**உபநிட்கிராமணம்** – பிறந்த நான்காமாதம் பிள்ளையை முதன்முதல் வெளிக்கொண்டு செல்லும் சடங்கு.

**உபநிடதம், உபநிடம்** – வேத நுட்பம், வேதத்தின் ஞான காண்டம்; வேதம்; தருமம்; மறைபொருள்.

**உபநிதி** – தக்கவனிடத்தில் முத்திரையிட்டு அடைக்கலமாக வைக்கும் பொருள்.

**உபநியாசம்** – சொற்பொழிவு; சொல்லத் தொடங்கல்; முகவுரை.

**உபபத்தி** – சொல்லும் பொருளை நிறுவக்காட்டும் சான்று; எடுத்துக்காட்டு; சாதனம்; ஏது; செய்கை; சேவகம்; நியாயம்; சொத்து.

**உபபதி** – இரண்டாம் அதிகாரி; சோர நாயகன்.

**உபபலம்** – துணைவலி.

**உபபாதகம்** – சிறுபாதகம்.

**உபபிரமா** – பத்துப் பிரமருள் ஒருவர், தக்கன்.

**உபபுராணம்** – அப்பிரதான புராணம், பதினெண் புராணங்களிலிருந்து எடுத்துச் சொல்லப்பட்ட பதினெண் சார்பு புராணங்கள்; மகாபுராணங் களுக்கு அடுத்து வைத்து எண்ணப்படும் சிறு புராணங்கள் 18.

**உபபுராணம் 18** – நாரசிங்கம், சனற்குமாரம், நாரதீயம், சிவதன்மம், துருவாசம், நந்திகேச்சுரம், அவுசனம், காளிகம், வாருணம், சாம்பேசம், பராசரம், பார்க்கவம், காபிலம், வாசிட்டலைங்கம், சவுரம், மாரிசம், ஆங்கிரம், மானவம்.

**உபம்** – இரண்டு.

**உபமலம்** – மனமாசு.

**உபமானம்** – உவமை, உவமிக்கும் பொருள்; ஓர் அளவை; யாதேனும் ஒரு பொருளுக்கு ஒப்புமை கூறுதல்.

**உபமானரகிதம்** – உவமையற்றது, ஒப்பில்லாதது.

**உபமிதி** – உபமானம் பிரமாணத்தினால் வரும் அறிவு.

**உபமேயம்** – உவமிக்கப்படும் பொருள், உவமானத்தால் அறிவிக்கப்படும் பொருள்.

**உபமை** – உவமை.

**உபயகவி** – இருமொழிகளில் பாப்புனைய வல்லவன்.

**உபயகுலம்** – இருமரபு, தாய் தந்தை மரபுகள்.

**உபயம்** – இரண்டு; கோயில் முதலியவற்றிற்குச் செய்யும் தருமம்; கோயிற்காணிக்கை; உதவி; பழைய சுவர்ணாதாயவகை.

**உபயமாதம்** – உபய ராசிக்கு உரிய மாதம்; அவை: ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி.

**உபயர்** – இருவர்.

**உபயராசி** – இயக்கம், நிலை என்னும் இருவகைக் கும் ஏற்ற இராசி; அவை: மிதுனம், கன்னி, தனுசு, மீனம்.

**உபயவாதிகள்** – இருபுறத்தாரையுஞ் சார்ந்து நிற்போர்; வாதஞ்செய்யும் இருதிறத்தார், வாதிபிரதிவாதிகள்; தருக்கவாதம் செய்யும் இருதிறத்தார்.

**உபயவிபூதி** – லீலாவிபூதி நித்திய விபூதிகள்; முடிவிலின்ப முத்தி உலகு; உலகியலின்ப முடைய நிலவுலகு.

**உபயவேதாந்தம்** – வடமொழி, தென்மொழி வேதங்களின் முடிவு.

**உபயவோசை** – ஈரடுக்கு ஒலி.

**உபயாத்தம், உபயார்த்தம்** – இரு பொருள்.

**உபயோகம்** – உதவி; உதவிப் பொருள்; பயன்; இலக்கினத்திலும் 2, 3, 4ஆம் இடங்களிலும் ஏழு கோள்களும் நிற்பதாகிய ஒரு யோகம்.

**உபயோகி** – பயனுடையது; பயனுடையவன்.

**உபயோகித்தல்** – காரியத்திற்கு ஏற்பித்தல், பயன்படுத்துதல்.

**உபரசம்** – இழிந்த தாது; கல்லுப்பு.

**உபரசன்** – தம்பி.

**உபரதம்** – வெடியுப்பு.

**உபரதி** – வெறுத்துத் தள்ளுதல்; குடும்பப் பற்றின்மை; செயலொழிகை; பற்றொழிகை; இறுதி.

**உபராகம்** – கிரகணம்; இராகு; நிந்தை.

**உபராசன்** – இளவரசன்.

**உபரி** – மேல்; அதிகம்; ஒரு மீன்; காண்க: உபரிசுரதம்.

**உபரிகை** – காண்க: உப்பரிகை.

**உபரிசரர்** – மேலே திரிவோர்.

**உபரிசுரதம்** – புணர்ச்சிவகை, ஆண் கீழும் பெண் மேலுமாகப் புணர்தல்.

**உபலக்கணம், உபலட்சணம்** – ஒரு சொல் ஒழிந்த தன்னினத் தையுந் தழுவல்; இலட்சியத் தைப் பக்கவுதவியைக் கொண்டு உணர்த்தும் இலட்சணம்.

**உபலம்** – கல்; சிறுகல்; பளிங்கு.

**உபலம்பம்** – தோற்றுகை.

**உபலாலனை** – கொண்டாடுகை.

**உபலாளனம்** – உபலாலனை; தூய்தாக்குகை.

**உபலேபனம்** – சாணியால் மெழுகுகை.

**உபலோத்திரம்** – விளாம்பிசின்.

**உபவசித்தல்** – பட்டினியிருத்தல்.

**உபவம்** – சீந்திற்கொடி.

**உபவனம்** – நந்தவனம், பூங்கா, ஊர்சூழ் சோலை; காஞ்சொறி.

**உபவாசம்** – உண்ணாநோன்பு, உணவொழிக்கை, உணவின்றி இருத்தல்.

**உபவாசி** – பட்டினி நோன்பு இருப்பவன்.

**உபவீதம்** – பூணூல்; இடத்தோளிலிருந்து வலப் பக்கமாய்ப் பூணூல் அணிகை.

**உபவேட்டனம்** – கூத்தின் அங்கக் கிரியைகளுள் ஒன்று.

**உபவேட்டிதம்** – கைவட்டணை நான்கனுள் ஒன்று, அபிநயவகை.

**உபவேதம்** – அப்பிரதான வேதம்; நான்கு வேதங்களை அடுத்து மதிக்கப்பெறும் ஆயுர்வேதம் முதலிய நான்கு வேதங்கள்; அவை: ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்தவேதம்.

**உபாக்கியானம்** – கதை சொல்லுகை; முற்காலத்திலே நிகழ்ந்ததை அறிவிக்கும் கதை; கிளைக்கதை; இதிகாசம்.

**உபாகமம்** – மூல ஆகமங்களின்வழித் தோன்றிய சைவ ஆகமங்கள்; சார்பாகமம்; பழைய ஏற்பாட்டில் ஐந்தாவது புத்தகம்.

**உபாகிதம்** – உற்கை; எரிகொள்ளி; நெருப்பினால் வரும் அழிவு.

**உபாங்கதாளம்** – தாளவகை.

**உபாங்கம்** – சார்புறுப்பு; வேதாகமங்களுக்கு அங்கமாகிய நூல்கள்; மார்க்கத்துக்குரிய குறி; ஒருவகைத் தோற்கருவி; பக்க வாத்தியம்; உபாங்க தாளம்.

**உபாங்கராகம்** – ஒரு பண்வகை.

**உபாசகன்** – உபாசனை செய்வோன்; தெய்வ வழிபாடு உடையவன்; பௌத்தருள் இல்லறத்தான்.

**உபாசகை** – பௌத்தருள் இல்லறத்தாள்.

**உபாசங்கம்** – காண்க: **அம்பறாத்தூணி.**

**உபாசனம், உபாசனை** – ஆராதனை வழிபாடு; வில்வித்தை.

**உபாசி** – தெய்வ வழிபாட்டால் அருள் பெற்றவன்.

**உபாசித்தல்** – வழிபடுதல்.

**உபாஞ்சு** – ஏகாந்தம்; இரகசியம்; மந்தமாகச் செபித்தல்.

**உபாத்தி, உபாத்தியாயன்** – ஆசிரியன், கற்பிப்போன்; புரோகிதன்.

**உபாத்தியாயினி** – ஆசிரியை, கற்பிப்பவள்.

**உபாதாயம்** – பற்றப்படுவது.

**உபாதாயவுரு** – வலி, இரதம், வன்னம், சந்தம் என்னும் நால்வகைப்பட்ட உருவவகை.

**உபாதானகாரணம்** – முதற்காரணம்.

**உபாதானம்** – முதற்காரணம்; அரிசிப்பிச்சை; அன்னதானம்; ஐம்புலனடக்குகை; பற்று.

**உபாதி** – கடமை; வேதனை, வாதை; நோய்; இடையூறு; வருத்தம்; தடை; பாதை.

**உபாதேயம்** – ஏற்றுக்கொள்ளத்தக்கது.

**உபாந்தியம்** – கடைக்கண்; ஈற்றயல்; அண்மை.

**உபாம்சு** – ஏகாந்தம்; மந்தமாகச் செபித்தல்; தனது செவி கேட்க வாய்க்குட் செபிக்கை.

**உபாயம்** – வழி; சூழ்ச்சி; சொற்பம்; அரசர்க்குரிய உபாயம். அவை: இன்சொற் கூறல், வேறுபடுத்தல், ஈதல், ஒறுத்தல் (சாமம், பேதம், தானம், தண்டம்) முறைகளால் செயல் முடித்தல்.

**உபாயி** – சூழ்ச்சியுள்ளவன்.

**உபாலம்பனம்** – இகழ்தல், நிந்திக்கை.

**உபானம், உபானவரி** – கோபுரத்தின் அடிச் சித்திர வரிசை; மிதியடி.

**உபுக்குதல்** – பெருகுதல்.

**உபேட்சித்தல்** – பொருட்படுத்தாமை; வெறுத்து விடுதல்; கைவிடல்.

**உபேட்சை** – புறக்கணிப்பு, அசட்டை; அருவருப்பு.

**உபேந்திரன்** – இந்திரனுக்குத் தம்பி, திருமால்.

**உபோதம்** – பேய்ப்பசளைக்கீரை, பேய்ப்பசளை.

**உபோற்காதம்** – தொடக்கம், ஆரம்பம்; பாயிரம்; நூன்முகம்.

**உம்** – ஓரிடைச்சொல்; அசைநிலை; விகுதி.

**உம்கொட்டுதல்** – உடன்படல்; ஒப்புக்கொள்ளல்; 'உம்'மொலி எழுப்பிப் பிறர் கூறுவதைக் கேட்டல்.

**உம்பர்** – மேலிடம்; வானம்; தேவர், வானோர்; தேவலோகம்; உயர்ச்சி; பார்ப்பார்.

**உம்பரான்** – உயர்ந்தோன்; உயர்நிலையிலிருப்பவன்; காமதேனு.

**உம்பல்** – வழித்தோன்றல்; குலம்; குடி; ஆண் விலங்கு; யானை; எழுச்சி; ஆணாடு; வலிமை; புதல்வன்; முறைமை.

**உம்பளம்** – உப்பளம்; மன்னனால் கிடைத்த பொருள்; உதவி; கொடை; முற்றூட்டு, மானியநிலம்.

**உம்பன்** – உயர்ந்தோன்; கடவுள்.

**உம்பி** – உம் தம்பி.

**உம்பிடிக்கோல்** – நில அளவுகோல்வகை.

**உம்பிளிக்கை** – மானியம், அரசனாற் கொடுக்கப்பட்ட இறையிலி நிலம்; இலவசப் பொருள்.

**உம்மச்சு** – கம்பியிழுக்கும் சட்டம்.

**உம்மாண்டி** – பூச்சாண்டி; வெருட்டுஞ்சொல்.

**உம்மெனல்** – சம்மதத்தைக் காட்டும் ஒலிக் குறிப்பு, சினக்குறிப்பு; ஓர் அனுகரண ஓசை.

**உம்மை** – 'உம்' என்னும் இடைச்சொல்; முற்பிறப்பு; வருபிறப்பு; உங்களை; மறுமை.

**உம்மைத்தொகை** – 'உம்' என்னும் இடைச்சொல் தொக்குவருந் தொடர்.

**உமட்டியர்** – நுளைச்சியர், உப்பு விற்கும் மகளிர், உமணச் சாதிப் பெண்மக்கள்.

**உமண்** – உமணர், உப்பு விளைக்கும் சாதியர்.

**உமண்பகடு** – உப்பு வாணிகரது மூட்டை சுமந்து செல்லும் எருது.

**உமணத்தி** – உமணப்பெண், உப்பு விற்கும் மகள்.
**உமணன்** – உப்பமைப்போன், உப்பு விற்கும் ஆடவன்; உப்பு வாணிகன்.
**உமம்** – கப்பற் சரக்குகளை இறக்குமிடம்; நகரம்.
**உமர்** – உம்மவர்; குதிர்; இகழ்ச்சிச்சொல்.
**உமரி** – ஒரு பூண்டு; பவளப் பூண்டு; நத்தை.
**உமரிக்காசு** – பலகறை, தூரி.
**உமரிக்கீரை** – கோழிப்பசளை.
**உமல்** – ஓலைப் பை, மீன் பிடிக்கிறவர்களின் ஓலைப் பை.
**உமலகம்** – அரிதாரம்.
**உமற்கடம்** – தருப்பைப் புல்.
**உமா** – குன்றிக்கொடி.
**உமாகடம்** – சணற்கொத்து.
**உமாதசி** – சணல்.
**உமாபட்சி** – ஒருவகைப் பறவை.
**உமாபதி** – சிவன்.
**உமாமகேசன், உமாமகேசுவரன்** – உமையோடு கூடி விளங்கும் ஈசனாகிய சிவன்.
**உமி** – தவசங்களின் மேல்தோல்.
**உமிக்கரப்பான்** – குழந்தைகட்கு வருஞ் சிரங்கு.
**உமிக்கரி** – உமி எரிந்ததனாலாகிய கரி.
**உமிக்காந்தல்** – உமியினால் உண்டாகும் தழல், உமி எரிந்த துகள்.
**உமிக்கூர்** – உமிமூக்கு.
**உமிச்சிரங்கு** – சிறுசிரங்கு.
**உமித்தல்** – பதராதல்; சாரமறுத்தல்; கொப் புளங் கொள்ளுதல்; அழிதல்.
**உமித்தேக்கு** – பெருங்குமிழ்.
**உமிதல்** – கொப்புளித்து உமிழ்தல்; துப்புதல்; உறிஞ்சுதல்.
**உமிநகம்** – மெல்லிய நகம்.
**உமியல்** – வசம்பு.
**உமிரி** – உமரிப் பூண்டு, உமரிச் செடி; நத்தை.
**உமிவு** – உமிழ்நீர்; துப்புகை.
**உமிழ்தல்** – கொப்புளித்தல்; துப்புதல்; கக்கல், சத்திபண்ணுதல்; வெளிப்படுத்தல்; சொரிதல்; தெவிட்டுதல்; காறுதல்.
**உமிழ்நீர்** – வாயில் ஊறும் நீர்; துப்பல்.
**உமிழ்வு** – உமிழப்படுவது; துப்புகை.
**உமேசன்** – சிவன்.
**உமேதுவார்** – சம்பளமின்றி வேலை பழகுவோன்; விண்ணப்பதாரன்.
**உமை** – பார்வதி; மஞ்சள்; புகழ்; காந்தி; நெல் வகை; சணல்.
**உமைகரநதி** – பார்வதியின் கையிலிருந்து வருவ தாகிய கங்கை.
**உமைத்தல்** – தினவு; வருந்துதல்; நிரம்புதல்; தின்னுதல்.

**உமையவள், உமையாள்** – பார்வதி; சவர்க்காரம்; மயிலிறகு.
**உய்கதியால்** – உண்டாகும் தடி, உய்தடி.
**உய்கை** – துன்பம் நீங்குதல்; உய்தி; ஈடேறுதல்.
**உய்த்தல்** – செலுத்துதல்; கொண்டுபோதல்; சேர்த்தல்; நடத்துதல்; அமிழ்த்தல்; நுகர்தல்; கொடுத்தல்; அனுப்புதல்; குறிப்பித்தல்; அறி வித்தல்; ஆணை செலுத்துதல்; ஆயுதத்தைச் செலுத்துதல்; உய்யச் செய்தல்; நீக்குதல்.
**உய்த்தலில்பொருண்மை** – ஓர் அணி, கருதிய பொருள் தெளிவாகப் புலப்படுமாறு எளிய சொல்லுடைமையாகிய குணம்.
**உய்த்தறிதல்** – உய்த்துணர்தல், ஊகித்தறிதல்.
**உய்த்துக்கொண்டுணர்தல்** – முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று, ஒரு பொருளைச் சொல்லும்போது அதனிடமாக மற்றொரு பொருளையும் விளங்கச்செய்தல்.
**உய்த்துணர்தல்** – காண்க: **உய்த்தறிதல்.**
**உய்த்துணர்மொழி** – செய்யுட் குற்றங்களுள் ஒன்று.
**உய்த்துணரவைப்பு** – காண்க: **உய்த்துக்கொண் டுணர்தல்.**
**உய்தடி** – உண்டாகுந் தடி, கிளைக்கும் வேலிக் கொம்பு.
**உய்தல்** – உயிர்வாழ்தல்; பிழைத்தல்; ஈடேறுதல்; நீங்குதல்; தப்புதல்.
**உய்தி** – ஈடேற்றம்; உயிர் வாழ்தல்; தப்பிப் பிழைத்தல்; நீங்குகை.
**உய்யக்கொண்டான்** – பிழைக்குமாறு அருள் செய் தவன்; எருமைமுல்லை; கொய்யாமரம்; ஓர் ஆறு.
**உய்யல்** – ஏறுதல்; செல்லல்; கேட்டல்; வாழ்தல்.
**உய்யானம்** – உத்தியானம், பூந்தோட்டம், சோலை, சிங்காரவனம், அரசர் விளையாடுஞ் சோலை.
**உய்வனவு** – ஈடேற்றம்; பிழைப்பு; வாழ்வு.
**உய்விடம்** – பிழைக்குமிடம்.
**உய்வு** – உய்தி; உயிர் தப்புகை; பிழைப்பு; ஈடேற்றம்; இடுக்கண்களினின்றும் நீங்கும் வாயில்; உய்தல்.
**உயக்கம்** – வருத்தம், வாட்டம், துன்பம்.
**உயங்குதல்** – வருந்துதல்; வாடுதல், துவளுதல்; மெலிதல்; மனந்தளர்தல்.
**உயர்** – உயர்ச்சி; குன்றிக்கொடி.
**உயர் (வி)** – உயர்என் ஏவல்; வளர்; மேலெழு; மேன்மையுறு; இறுமாப்புறு.
**உயர்குடி, உயர்குலம்** – மேற்குலம், மேலான குடும்பம்.
**உயர்ச்சி** – உயரம்; மேன்மை, ஏற்றம்.

**உயர்சொல்** – உயர்த்துக் கூறும் சொல், மேன்மைப்படுத்திச் சொல்லும் சொல்.

**உயர்த்தல்** – உயர்த்துதல்; அதிகப்படுத்தல்; மேல் நிலைக்குக் கொணர்தல்.

**உயர்த்தி** – உயர்ச்சி, மேன்மை.

**உயர்த்துதல்** – உயரச்செய்தல்; அதிகப்படுத்துதல்; உயர எடுத்தல்; மேன்மைப்படுத்துதல்; தூக்குதல்; இசையெடுத்தல்; மேலாகச் செய்தல்; முடித்தல்; அவித்தல்.

**உயர்தல்** – அதிகப்படல்; ஏறுதல்; நிமிர்தல்; மேற்படல்; மேலெழுதல்; வளர்தல்; இறுமாப்பு அடைதல்; மேன்மையடைதல்.

**உயர்திணை** – உயர்வாகிய சாதி; மேற்குலம், உயர்ந்த குலம்; மானிடர், தேவர், நரகர் ஆகியோரைக் குறிக்கும் சொல்.

**உயர்ந்தவன்** – சிறந்தவன்; நெடியோன்; காமன்.

**உயர்ந்தோர்** – உயர்ந்தவர்; அறிஞர்; சான்றோர்; வானோர்; முனிவர்.

**உயர்நிலத்தவர்** – தேவர்.

**உயர்நிலம்** – மேடு; தேவருலகம்; உபரிகை.

**உயர்நிலை** – உயர்நிலம்; மேலான பதவி; மேன்மை; மேன்மாடம்; தெய்வத்தன்மை; துறக்கம், தேவருலகம்.

**உயர்வு** – மிகுதியாதல்; உயர்ச்சி; உயரம்; விருத்தி; மேன்மை; வருத்தம்; உயர்வு நவிற்சியணி.

**உயர்வுநவிற்சியணி** – ஒரு பொருளைக் குறித்துக் கூறும் அளவிறந்த கற்பனை, அதிசயோக்தி அலங்காரம்.

**உயரம்** – அடியிலிருந்து மேல்நோக்கி எழுந்த அளவு; மிகுதி; மேல்; உயர்ச்சி; உச்சம்.

**உயராடு** – வெள்ளாடு.

**உயரி** – உயரமானது; உயர்ச்சி.

**உயல்** – தப்புகை; உளதாதல்; உயிர்வாழ்தல்.

**உயலுதல்** – அசைதல்.

**உயவல்** – நினைவு; துன்பம்; வருத்தம்.

**உயவற்பெண்டிர்** – கைம்பெண்கள், கைம்மை நோன்பினால் வருந்தும் மகளிர்.

**உயவு** – உயிர் பிழைக்கச் செய்யும் வழி; வாழச் செய்யும் மருந்து; சஞ்சீவி; வருத்தம்.

**உய(யா)வுத்துணை** – நட்புத்துணை; காண்க: **உசாத்துணை.**

**உயவுதல்** – வருந்துதல்; உசாவுதல், வினாவுதல்; வண்டிச் சக்கரத்திற்கு மையிடுதல்.

**உயவுநெய்** – வண்டிக்கு இடும் எண்ணெய், மசகு.

**உயவை** – காக்கணங்கொடி; வெண்கருவிளை; முல்லைக் கொடி; காட்டாறு; துன்பம்; மேகம்.

**உயா** – உயங்கல், வருத்தம்.

**உயிர்** – காற்று; உயிர்வளி; சீவன், ஆதன்; ஓரறிவுயிர் முதலிய உயிரினம்; உயிரெழுத்து; ஓசை; ஒரு நாழிகையில் 4320-ல் ஒரு கூறு; சன்ம லக்கினம்.

**உயிர்க்கட்டை** – உடல், உடம்பு.

**உயிர்க்கணம்** – உயிரெழுத்துக் கூட்டம்.

**உயிர்க்கயிறு** – உறுதியுள்ள கயிறு.

**உயிர்க்கழு** – கழுவில் ஒருவகை.

**உயிர்க்கிழவன்** – கணவன்.

**உயிர்க்குயிர்** – கடவுள்.

**உயிர்க்கொலை** – உயிர்வதை, உயிரினங்களைக் கொல்லுகை.

**உயிர்குடித்தல்** – உயிரைப் போக்குதல், கொல்லல்.

**உயிர்ச்சூது** – சூதாடலில் ஒருவகை; ஆடு, கோழி முதலியவற்றைப் போர் செய்யுமாறு விட்டு விளையாடுகை.

**உயிர்த்தல்** – உயிர்பெற்றெழுதல்; தொழிற்படுதல்; மூச்செறிதல்; மூச்சுவிடல்; ஈனுதல்; மோத்தல்; கூறுதல்; வெளிப்படுத்துதல்: இறந்துபடுதல்; சொரிதல்; இளைப்பாறல்.

**உயிர்த்தறுவாய்** – உயிருக்குக் கேடுவரு நிலை, ஆபத்துச் சமயம்.

**உயிர்த்துணை** – கேட்டில் உதவுவோன், ஆருயிர் நண்பன்; கணவன்; மனைவி; கடவுள்.

**உயிர்த்துணைவன்** – உயிர்த்தோழன், நண்பன்; கணவன்.

**உயிர்த்துணைவி** – உயிர்த்தோழி; மனைவி; கலைமகள்.

**உயிர்த்தெழுதல்** – மூர்ச்சித்துப்போன உயிர் வரப் பெற்று எழுதல்; செத்தவன் மீட்டும் உயிர் பெற்றெழுதல்.

**உயிர்த்தோழன்** – ஆருயிர் நண்பன்.

**உயிர்த்தோழி** – உற்ற துணைவி; நம்பிக்கையான பாங்கி.

**உயிர்த்தோற்றம்** – உயிரினங்களின் பிறவி: முட்டையிற் பிறப்பன, வியர்வையிற் பிறப்பன, வித்து வேரிலிருந்து பிறப்பன, கருப்பையிற் பிறப்பன என்னும் நால்வகைப் பிறப்புகள்.

**உயிர்தருமருந்து** – இறப்பைப் போக்கும் மருந்து.

**உயிர்நிலை** – உடல், உயிர்தங்கும் இடம்; உயிரின் உண்மை வடிவம்; பிராணாயாமம்; உட்கருத்து.

**உயிர்ப்பலி** – உயிர்களைத் தெய்வங்களின் பொருட்டுப் பலிகொடுக்கை; சீவபலி; வீரன் தன் தலையைக் கொற்றவைக்குக் கொடுக்கும் பலி; உயிர்ப் பிச்சை.

**உயிர்ப்பழி** – உயிர்க் கொலை; உயிர்க் கொலை செய்த குற்றம்; கொலை செய்தவனைத் தொடரும் பழி, பிரமகத்தி.

**உயிர்ப்பனவு** – உயிரின் தன்மை; செழிப்பு, பச் சென்றிருக்கும் தன்மை.

**உயிர்ப்பாங்கி** – விட்டு நீங்காத தோழி, அணுக்க மாகப் பழகும் தோழி.

**உயிர்ப்பித்தல்** – பிழைப்பித்தல்.

**உயிர்ப்பு** – உயிர்த்தெழுதல்; புதுவன்மை யடைதல்; தெய்வத்திருமேனியினுள் தெய்வ ஆற்றலை வருவிக்கை; மூச்சு; காற்று; நறுமணம்; இளைப்பாறுகை.

**உயிர்ப்புவீங்குதல்** – நெட்டுயிர்ப்பு, பெருமூச்சு விடுதல்.

**உயிர்ப்புனல்** – குருதி, இரத்தம்.

**உயிர்ப்பொறை** – உடம்பு.

**உயிர்மருந்து** – சோறு, உணவு.

**உயிர்மெய்** – ஒற்று முன்னும் உயிர் பின்னுமாய் இணைந்து ஒலிக்கும் எழுத்து, 'க' முதல் 'னௌ' ஈறான 216 எழுத்து.

**உயிர்வாழ்க்கை** – உயிரோடு கூடிவாழும் வாழ்க்கை, சீவனம்.

**உயிர்வாழ்தல்** – உயிரோடு கூடியிருத்தல், சீவித் தல்.

**உயிர்விடுதல்** – ஒருவருக்காகவோ ஒரு நற்செய லுக்காகவோ ஒருவன் தன் உயிரைத் தானே விடுதல்; மிகப் பாடுபடுதல்.

**உயிர்விளக்கம்** – ஆன்ம வடிவத்தை அறிகை.

**உயிர்வேதனை** – உயிருக்குத் துன்பம் விளைவிப் பவை; அவை பன்னிரண்டு ஏதுக்களால் நேரும்: அனல், குளிர்ச்சி, இடி, புனல், காற்று, ஆயுதம், நஞ்சு, நச்சுமருந்து, பசி, நீர்வேட்கை, பிணி, முனிவு அறாமை.

**உயிர்வைத்தல்** – இறத்தல்.

**உயிரடங்குதல்** – மூச்சு ஒடுங்குதல், இறத்தல்.

**உயிரவை** – உயிர்த் தொகுதி, உயிர்களின் கூட்டம்.

**உயிரளபு, உயிரளபெடை** – தனக்குரிய மாத்திரையின் மிக்கொலிக்கும் நெட்டுயி ரெழுத்து.

**உயிரிலங்கி** – உயிர்த் தீ.

**உயிருண்ணுதல்** – உயிரைப் போக்குதல்; பரவசப் படுதல்.

**உயிருதவி** – கேட்டில் உதவுகை, பெருந்துன்ப மடைந்தபொழுது செய்யும் உதவி; உயிர் கொடுத்து உதவுகை.

**உயிரெடுத்தல்** – உயிரை வாங்கிவிடுதல்; துன் புறுத்துதல்.

**உயிரெழுத்து** – உயிர்போல் தனித்து இயங்கக் கூடிய எழுத்து: 'அ' முதல் 'ஔ' ஈறான 12 உயிரெழுத்துகள்.

**உயிரைவாங்குதல்** – கொலைசெய்தல்; துன்பப் படுத்தல்.

**உயிரொடுங்குதல்** – உயிராற்றல் குறைதல்; சாதல்.

**உயில்** – சாவு முறி, மரண சாசனம்.

**உயிறு** – இலாமிச்சம்புல்.

**உரககேதனன், உரககேது** – பாம்புக் கொடியையுடைய வனாகிய துரியோதனன்.

**உரகடல்** – கொந்தளிக்கும் கடல்.

**உரகதம்** – பாம்பு.

**உரகம்** – பாம்பு; நாகமல்லிகை.

**உரகமல்லி** – நாகமல்லிகை.

**உரகர்** – நாகர், நாக சாதியார்; சமணர்.

**உரகவல்லி** – வெற்றிலைக்கொடி.

**உரகன்** – பாம்பு; ஆதிசேடன்.

**உரகாதிபன்** – ஆதிசேடன்.

**உரகாரி** – கருடன்; மயில்.

**உரகேந்திரன்** – காண்க: **உரகாதிபன்.**

**உரங்காட்டுதல்** – அன்பு பாராட்டல்; வலி காட்டல்.

**உரங்குத்துதல்** – மரத்தைச் சுற்றி மண் கெட்டித் தல்.

**உரங்கொள்ளுதல்** – கெட்டியாதல், பலமாதல்; மிகுதல்; கடினமாதல்.

**உரசுதல், உரஞ்சுதல்** – உராய்தல்; தேய்த்தல்; துடைத் தல்.

**உரஞ்செய்தல்** – உறுதிகொள்ளுதல்; வலியுறுதல்.

**உரஞ்சொல்லுதல்** – உறுதிகூறுதல்.

**உரண்டம், உரண்டை** – காகம்.

**உரணம்** – ஆட்டுக்கடா; முகில்.

**உரத்தல்** – இறுகுதல்; பலத்தல்; வலியுறல்; கொந்தளித்தல்; மிகுதல்; முருடாதல்; கடுமை யாதல்; எடுப்பாதல்.

**உரப்பம்** – பெருங்காயம்.

**உரப்பல்** – உரப்புதல், சத்தமிட்டு அதட்டுதல்; அடரொலி; திரட்டோசை.

**உரப்பித்தல்** – பலமுறச் செய்தல்.

**உரப்பியடித்தல்** – பேச்சால் வெல்லுதல்.

**உரப்பிரம்** – வெள்ளாடு.

**உரப்பு** – பேரொலி; அதட்டு; கடினம்; முருடு; வலி; மனத்திண்மை.

**உரப(பி)டி** – உரப்பு, திடம்.

**உரம்** – வலிமை; திண்மை; திடம்; மரவயிரம்; எரு; மார்பு; அறிவு; ஊக்கம்; படைவகுப்பின் முன்னணி; குழந்தைகளுக்கு விழும் சுளுக்கு வகை; மதில்; உள்ளத்தின் மிகுதித் தன்மை; விரைவு.

**உரம்போடுதல்** – எருப்போடுதல்; பலப்படுத்தல்; திடப்படுத்தல்.

**உரம்விழுதல்** – கைக்குழந்தை தரையில் புரளுவதனால் உண்டாகும் ஒரு பிடிப்புநோய்; கவனமின்றிக் குழந்தையைத் தூக்குவதால் குழந்தைக்கு உண்டாகும் சுளுக்கு.

**உரமடித்தல்** – பயிரிடும் நிலத்திற்கு வேண்டும் உரங்களைக் கொண்டுசேர்த்தல்.

**உரமெடுத்தல்** – குழந்தையின் சுளுக்கைப் போக்குதல்.

**உரல்** – நெல் முதலியன குற்றும் உரல்; இடிப்பதற்குரிய கருவி; இடியப்பம், தேன்குழல் முதலிய பணிகாரம் பிழியும் அச்சு.

**உரலடி** – யானை.

**உரலாணி** – உரலின் அடிக்கிடும் மரவாணி, உரலின் அடிக்கிடும் மரத்துண்டு; உலக்கை.

**உரவக்காடு** – மலைப்பயிர்.

**உரவம்** – வலிமை; அறிவு.

**உரவர்** – வலியுடையோர்; அறிவுடையோர்; சமணர்.

**உரவன்** – வலியோன்; அறிஞன்; அருகன்.

**உரவு** – வலிமை; மனவலிமை; மிகுகை; நஞ்சு.

**உரவுதல்** – உலாவுதல்; வலியடைதல்.

**உரவுநீர்** – கடல்; ஆறு.

**உரவோன்** – வலிமையுடையவன்; மூத்தோன்; சாவில்லான்; ஊக்கமுடையோன்.

**உரற்கட்டை** – உரல்; உரலமைப்பதற்குரிய மரக்கட்டை.

**உரற்கல்** – வெற்றிலை பாக்கு இடிக்கும் சிறிய உரல்.

**உரற்களம்** – அறிஞரவை, அறிஞர் கூடிப் பேசுமிடம்; நெல் முதலிய தவசங்களை உரலிவிட்டுக் குற்றுமிடம்.

**உரற்குழி** – உரலில் குற்றும் குழி; குற்றுதற்குத் தரையில் அமைத்த குழி.

**உரற்குற்றி** – காண்க: **உரற்கட்டை.**

**உரற்பணை, உரற்பெட்டி** – அரிசி தீட்டல், மாவிடித்தல் காலங்களில் வெளியில் சிந்தாதபடி உரலின்மேல் வைக்கும் கூடு, உரலின்மேல் வைக்கும் வாய்க்கூடு.

**உரற்றுதல்** – பேரொலி செய்தல், முழங்குதல்.

**உரறுதல்** – முழங்குதல்; ஒலித்தல்; சினங்கொள்ளல்.

**உரன்** – திண்மை; பற்றுக்கோடு; வெற்றி; வலி; ஊக்கம், உள்ள மிகுதி; மார்பு; அறிவு.

**உரனர்** – உரனுடையோர், மனவலியுடையோர்.

**உராஞ்சுதல்** – ஒன்றோடொன்று நெருங்கி அழுத்துதல், உரிஞ்சுதல், தேய்த்தல்.

**உராய்ஞ்சல்** – உராய்ஞ்சுதல், உரைதல்.

**உராய்தல்** – காண்க: **உராஞ்சுதல்.**

**உரால்** – உலாவுதல்; ஓடுதல்; விரைந்து செல்லல்.

**உராவுதல்** – பரவுதல்; இடம்விட்டுப் பெயர்தல்; செல்லுதல்; வலியடைதல்; பரத்தல்.

**உரி** – தோல்; மரப்பட்டை; உரிச்சொல்; அரைநாழி; கொத்துமல்லி; நாயுருவி.

**உரி (வி)** – உரிதலைச் செய் என்னும் ஏவல்; களை; கழற்று.

**உரிச்சீர்** – மூவசைச் சீர்.

**உரிச்சொல்** – நால்வகைச் சொற்களுள் ஒன்று; காண்க: **திரிசொல்**; பெயர் வினைகளைச் சிறப்பிக்கும் அடைமொழி; குறைச்சொல், வேர்ச்சொல்; சொற்பொருள் விளக்கும் நிகண்டு நூல்.

**உரிசை** – சுவை; தீஞ்சுவை.

**உரிஞ்சல்** – தேய்த்தல்; உராய்கை.

**உரிஞ்சுதல்** – உராய்தல்; தேய்த்தல்; பூசுதல்; இழுத்தல்; வற்றச் செய்தல்.

**உரித்தல்** – ஒரு பொருளில் ஒட்டியிருக்கும் போர்வையைப் பிரித்தெடுத்தல்; தோல், பட்டை முதலியவற்றைக் கழற்றுதல்; களைதல்.

**உரித்தாளி** – உரித்தானவன், சொத்துக்குரியவன்.

**உரித்திரம்** – மஞ்சள்; மரமஞ்சள்.

**உரித்து** – உரியது; உரிமை; உற்ற நட்பு.

**உரித்துவைத்தல்** – வெளிப்படுத்தி வைத்தல்; நேரொப்பாதல்.

**உரிதல்** – தோல் முதலியவை கழலுதல்; ஆடைகளைதல்; பறித்தல்.

**உரிப்பொருட்டலைவன்** – கிளவித்தலைவன், அகப்பாடலில் கூற்று நிகழ்த்துவோன்.

**உரிப்பொருள்** – ஐந்திணைகளுக்குமுரியனவான புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் ஆகியவையும் அவற்றின் நிமித்தங்களும்.

**உரிமை** – உரிய தன்மை; ஒருவனுடைய பொருளை அவனுக்குப்பின் அடைதற்காகுந் தன்மை; மனைவி; நட்புப்பற்றிய சுதந்தரம்; அடிமை; கடமை; பாத்தியதை; பிரியம்; சொத்து.

**உரிமைக்கஞ்சி** – சாகுந்தறுவாயில் வார்க்குங் கஞ்சி; ஒருவர் இறந்த அன்று அவருடைய சுற்றத்தாருக்குப் படைக்கும் உணவு.

**உரிமைக்கட்டு** – இனக்கட்டுப்பாடு; திருமணத்திற்கு உரிய இனமுறை உறவு.

**உரிமைக்கடன்** – உரிமைபற்றிச் செய்யும் கடமை; பிணத்திற்குரியவர்கள் செய்யுங்கடமை.

**உரிமைக்காணி** – தாய பாகமாக வந்த நிலம்.

**உரிமைக்காரன்** – சொத்துக்குரியவன்; பொறுப்பு ஏற்றற்குரியவன்.

**உரிமைச்சுற்றம்** – அடிமைக் கூட்டம்.

**உரிமைசெப்புதல்** – மணம் பேசுதல்.

**உரிமைசெய்தல்** – கடமை செலுத்தல்; இறுதிக் கடன் செய்தல், சாவுச்சடங்கு செய்தல்; அடிமைத் தொழில் செய்தல்.
**உரிமைப்பள்ளி** – அந்தப்புரம்.
**உரிமைப்பாடு** – உரித்து; உரிய கடமை.
**உரிமைப்பிள்ளை** – தத்தெடுத்த குழந்தை.
**உரிமைப்பெண்** – திருமணம் செய்வதற்கு உரிமையான பெண், முறைப்பெண்.
**உரிமைபாராட்டுதல்** – பாத்தியதை கொண்டாடல்.
**உரிமைமண்** – சவக்குழியில் உரிமைக்காரர் போடும் மண்.
**உரிமைமாணகர்** – காண்க: **உரிமைப்பள்ளி.**
**உரிமையாட்சி** – முன்னோரால் வந்த பொருளைச் சுதந்தரமாகப் பெறுகை.
**உரிமையிடம்** – வீட்டில் மனைவி உறையுமிடம்.
**உரிமையில்** – காண்க: **உரிமைப்பள்ளி.**
**உரிமைவழி** – உரிமை காரணமாய் வருவது; சம்பந்த முறை.
**உரியசை** – நேர்பு நிரைபு அசைகள்.
**உரியவன்** – இனத்தான்; கணவன்; உரிமையுள்ளவன்; அதிகாரி.
**உரியள்** – மனைவி, உரிமையானவள்.
**உரியன்** – காண்க: **உரியவன்.**
**உரியாள்** – காண்க: **உரியள்.**
**உரியியற்சொல்** – இயற்சொல்லாய் வரும் உரிச்சொல்.
**உரியோன்** – உரியவன்; கணவன்; நண்பன்.
**உரிவை** – தோல்; பட்டை, மரவுரி; உரிக்கை.
**உரு** – வடிவழகு; தெய்வத் திருமேனி; நிறம்; அச்சம்; அட்டை; பலமுறை சொல்லுகை; பருமை; தோணி; உடல்; எலுமிச்சை; இசைப் பாடல்; நோய்; உருவமுள்ளது; உளியாற் செய்த சிற்ப வேலை; தாலி முதலியவற்றில் கோக்கும் உரு; தன்மை; அகலம்.
**உருக்கம்** – அன்பு; இரக்கம்; மனநெகிழ்ச்சி; உருகுகை.
**உருக்கல்** – இறந்த வீரனது உருச் செதுக்கிய கல், நடுகல்; கோயில் கட்டியவருடைய உரு.
**உருக்கன்** – உடம்பை வாட்டும் நோய்.
**உருக்காங்கல்** – உருகிப்போன செங்கல்.
**உருக்காட்டி** – கண்ணாடி.
**உருக்காட்டுதல்** – தோன்றுதல்; உருவெளியாகத் தோன்றுதல்.
**உருக்கிவார்த்தல்** – உருக்கின உலோகங்களைக் கருவில் வார்த்தல்.
**உருக்கு** – எஃகு; உருக்கின பொருள்.
**உருக்கு (வி)** – உருக்கு என்னும் ஏவல்; தீயிற்கரை; வாட்டு; வருத்து; அழி.
**உருக்குத்தட்டார்** – பொற்கொல்லர்.
**உருக்குத்துதல்** – உருவம் அமைய வார்ப்படம் செய்தல்; அம்மை குத்துதல்.
**உருக்குதல்** – இளகி விழச்செய்தல்; மனம் நெகிழ்த்துதல்; மெலியச் செய்தல்; அழித்தல்; வருத்துதல்.
**உருக்குமணல்** – அயமணல்.
**உருக்குமணி** – காதணிவகை.
**உருக்குமம்** – உருக்கு; பொன்.
**உருக்குருக்கு** – கருப்பூரவகை.
**உருக்குலைதல்** – வடிவங்கெடுதல்; முன்னுருவம் மாறுதல்; உடம்பு மெலிதல்.
**உருக்கொள்ளுதல்** – வடிவமெடுத்தல்; கருவில் உருவாதல்; வளர்ச்சியடைதல்; ஆவேசம் கொள்ளல்.
**உருகுதல்** – இளகுதல்; மனநெகிழ்தல்; மெலிதல்.
**உருகை** – புல்லூரி; அறுகம்புல்.
**உருங்குதல்** – உண்ணுதல்.
**உருசகம்** – மாதுளை; கோரோசனை; விளங்கம்; சந்தவின்பம்; கதிர்; காந்தி; உருசியாதனம், யோகாசன வகையுள் ஒன்று.
**உருசி** – சுவை; இன்சுவை; இனிமை; விருப்பம்.
**உருசு** – சான்று, ஆதாரம்.
**உருசை** – சுவை.
**உருட்சி** – உருளுகை, திரட்சி.
**உருட்டித்தைத்தல்** – துணியைச் சுருட்டித் தைத்தல்.
**உருட்டிப்பார்த்தல்** – சினக் குறிப்புடன் பார்த்தல்.
**உருட்டிப்போடுதல்** – பேச்சால் மருட்டி வெல்லுதல்; அழித்துவிடுதல்; சாகச் செய்தல்.
**உருட்டு** – திரட்சி; சக்கரம்; மோதிரவகை.
**உருட்டு (வி)** – புரட்டு; வெருட்டு; உருளச்செய்; நரம்பை வருடு.
**உருட்டுதல்** – உருளச் செய்தல்; இசைக்கரணங்கள் எட்டனுள் ஒன்று; உருண்டையாகச் செய்தல்; வருத்துதல்; இசை நரம்பை வருடுதல்; மத்தளத்தை விரைவாக அடித்தல்; கவறெறிதல்; தருக்கம் பேசிப் பிதற்றல்; புரட்டித் தள்ளல்; மருட்டுதல்; வெல்லுதல்.
**உருட்டுவண்ணம்** – இருபது வண்ணங்களுள் ஒன்று, உருட்டிச் சொல்லப்படும் அராகம் தொடுத்து வரும் சந்தம்.
**உருடை** – வண்டி.
**உருண்டுபோதல்** – சாதல்.
**உருண்டை** – உண்டை; திரட்சி; கவளம்.
**உருத்தரித்தல்** – வடிவங்கொள்ளல்.
**உருத்தல்** – மிகச் சினங்கொள்ளுதல்; சினக் குறிப்புக் காட்டுதல்; வெப்பமுறச் செய்தல்; முதிர்தல்; ஒத்தல்; சுரத்தல்; தோற்றுதல்; முளைத்தல்.

**உருத்திதம்** – உரிய பொருள்; தொழிலில் இலாபம்; ஊதியம்; வட்டி; வளர்ச்சி; முன்னேற்றம்; வளர்தல்.

**உருத்திரகணம்** – சிவகணம்; சிவனடியார்.

**உருத்திரகணிகை** – தேவரடியார்.

**உருத்திரசடை** – திருநீற்றுப்பச்சை; சிவதுளசிப் பூண்டு.

**உருத்திரசாதனம்** – உருத்திராக்கமாகிய சிவ சின்னம்.

**உருத்திரபஞ்சமம்** – ஒரு பண்வகை.

**உருத்திரபூமி** – சுடுகாடு, மயானம்.

**உருத்திரம்** – பெருஞ்சினம்; வெகுளிச் சுவை; சீருத்திரம் என்னும் ஒரு மந்திரம்; மஞ்சள்.

**உருத்திரமணி** – காண்க: **அக்கமணி.**

**உருத்திரர் பதினொருவர்** – அரன், மாதேவன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன் என்போர்.

**உருத்திரரோகம்** – மாரடைப்பு.

**உருத்திரவீணை** – யாழ்வகை.

**உருத்திரன்** – சிவன்; பதினோர் உருத்திரர்களுள் ஒருவன்; சிவகணத்தோன்; சிவகுமாரன்; அக்கினிதேவன்.

**உருத்திராக்கம்** – உருத்திராக்க மரத்தின் மணி; மரவகை.

**உருத்திராகாரம்** – பெருஞ்சினத்தோற்றம்.

**உருத்திராட்சம்** – ஒரு மரம்; உருத்திராட்ச மரத்தின் காய்; சிவசின்னமாகிய உருத்திராக்க மணி.

**உருத்திராணி** – ஏழு மாதருள் ஒருத்தி; உருத் திரை; துர்க்கை; பார்வதி.

**உருத்திரிதல்** – உருமாறுதல்; மாறுவேடங் கொள்ளுதல்; வடிவம் மாறுபடுதல்.

**உருத்திரை** – உருத்திராணி; உமை, பார்வதி.

**உருத்திரோற்காரி** – அறுபதாண்டுக் கணக்கில் ஐம்பத்தேழாம் ஆண்டு.

**உருது** – சேனை; பாசறை; வட இந்திய மொழி களுள் ஒன்று.

**உருநாட்டு** – சித்திரம்; தெய்வத் திருமேனி.

**உருப்பசி** – உமை; ஊர்வசி, தெய்வப் பெண்டிருள் ஒருத்தி.

**உருப்படி** – கணக்கிடக்கூடிய பொருள்; பொருள்; இசைப் பாட்டு.

**உருப்படியாதல், உருப்படுதல்** } – உருவாதல்; சீர்ப்படுதல்.

**உருப்பம்** – சினம்; வெப்பம்; மிகுதி; தினைமா.

**உருப்பாத்தி** – கடல்மீன்வகை.

**உருப்பிடித்தல்** – படம் பிடித்தல்.

**உருப்பிணி** – உருக்குமிணி.

**உருப்பிரமம்** – ஆட்டுக்கொம்பு.

**உருப்பு** – வெப்பம்; சினம்; கொடுமை; மிகுதி.

**உருப்போடுதல்** – மனப்பாடஞ் செய்தல்; மந்திரஞ் செபித்தல்.

**உருபகதீவகம்** – ஓர் அணிவகை.

**உருபா** – ரூபா, நாணயமதிப்பு, நூறு காசுகள் கொண்டது.

**உருபு** – வடிவம்; நிறம்; வேற்றுமை முதலிய வற்றைக் காட்டும் இடைச்சொல்; நோய்.

**உருபு புணர்ச்சி** – வேற்றுமையுருபுகள் நிலை மொழியோடும் வருமொழியோடும் சேர்ந்து நிற்கும் நிலை.

**உருபுமயக்கம்** – ஒரு வேற்றுமையுருபு தன் பொருள் கொடாது பிறிதொரு வேற்றுமை உருபின் பொருளைத் தந்து நிற்றல்; ஒரு வேற்றுமைக்குள் ஓர் உருபு அவ் வேற்றுமைக் குரிய வேறோர் உருபோடு மயங்குகை.

**உரும்** – இடி; அச்சம்.

**உரும்பரம்** – செம்பு; பெருங்காயம்; பாம்பு.

**உரும்பு** – கொடுமை; கொதிப்பு.

**உருமகாலம்** – கோடைக்காலம்.

**உருமணி** – கருவிழி.

**உருமம்** – வெப்பம்; உச்சிவேளை, நடுப்பகல்.

**உருமலைவாரி** – உலோக மணல்.

**உருமவிடுதி** – நண்பகலில் வேலை நிறுத்துதல்.

**உருமாறுதல்** – வேற்றுருக் கொள்ளுதல்; உடல் வேறுபடுகை; தோற்றம் வேறாதல்.

**உருமானம்** – உருவம்; முற்றினது.

**உருமித்தல்** – வெப்பங்கொள்ளல், வெப்பமாதல்.

**உருமு** – காண்க: **உரும்;** இந்திரனது கொடி; புலி உறுமுதல்.

**உருமுதல்** – முழங்குதல்; முறுமுறுத்தல்; இரைதல்; குமுறல்.

**உருமேறு** – இடியேறு, பேரிடி.

**உருமேனி** – மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் இவற்றையுடைய வடிவம்; இறைவன் உயிர்கள் காணும்படி எடுக்கும் வடிவம்.

**உருவ** – நன்றாக; திரும்பத் திரும்ப.

**உருவகப்படுத்துதல்** – உவமேயத்தை உவமானத் தோடு வேற்றுமையின்றிக் கூறல்.

**உருவகம், உருவகவணி** } – உவமான உவமேயங்களை ஒற்றுமைப்படக் கூறும் அணி.

**உருவகித்தல்** – உருவகப்படுத்துதல்.

**உருவங்காட்டி** – காண்க: **உருக்காட்டி.**

**உருவசாத்திரம்** – அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று; உறுப்பமைதிநூல், உறுப்பமைதியால் உளதாகும் உயர்விழிவுகளைக் கூறும் நூல்.

**உருவசி** – உருப்பசி, ஊர்வசி, தேவருலக நடன மாதருள் ஒருத்தி.

**உருவத்திருமேனி** – வடிவுடையராகக் கருதப்படும் கடவுள்.

**உருவபாவனை** – இறைவனை உருவமுடைய வனாக வழிபடுகை.

**உருவம்** – வடிவம்; உடல்; அழகு; நிறம்; வேடம்; சிலை; மந்திரவுரு; கூறு; தெய்வத் திருமேனி.

**உருவரை** – செழிப்புள்ள நிலம், நல்ல நிலம்.

**உருவல்** – ஒருவகைக் காதணி.

**உருவழிதல்** – உருக்கெடுதல்; மேனி வேறாதல், அழகு கெடுதல்; முழுதும் சிதைதல்.

**உருவறை** – உடலழகற்றவன்; உருவழகற்றவன்.

**உருவாக்குதல்** – உண்டுபண்ணுதல்; உருவமுடை யதாகச் செய்தல்; சீர்ப்படுத்தல்.

**உருவாணி** – அச்சாணி; மெலிந்தவுடல்; தேய்ந்து போனது.

**உருவாணிபற்றுதல்** – தேய்ந்துபோதல்; மெலி வடைதல்.

**உருவாதல்** – வடிவுறுதல்; சீர்ப்படுதல்.

**உருவாரச்சம்மட்டி** – வீழிச்செடி.

**உருவாரம்** – பிரதிமை; வெள்ளரி.

**உருவி** – நாயுருவிச்செடி; புல்லுருவி; செம்முள்ளி; உருவுடையது.

**உருவியழுதல்** – விம்மியழுதல்.

**உருவிலாளன், உருவிலாளி, உருவிலி** – மன்மதன், காமன்.

**உருவினகோலம்** – கதியற்ற நிலைமை.

**உருவு** – உருவம்; வடிவு; அழகு; அச்சம்.

**உருவு** (வி) – உருவு என்னும் ஏவல்; ஊடுருவு.

**உருவுசுருக்கு, உருவுதடம்** – சுருக்கு முடிச்சு.

**உருவுதல்** – உறை கழித்தல்; கையால் பொருள் வரும்படி உருவுதல்; ஊடுருவுதல்; அழுத்தித் தடவுதல்; துளைத்தல்; தப்பித்துக் கொள்ளுதல்.

**உருவுள்ளு** – கொள்ளுப்பூண்டு.

**உருவெழுத்து** – வரிவடிவுள்ள எழுத்து.

**உருவெளிக்காட்சி, உருவெளித்தோற்றம், உருவெளிப்பாடு** – இடைவிடா நினைப் பினால் ஒரு பொருள் எதிரில் காணப்படுவது போல் தோன்றும் போலித் தோற்றம்; மனத்தி லுள்ள பொருளின் மருட்சித் தோற்றம்.

**உருவேற்றுதல்** – மந்திரத்தைப் பலமுறை உருவேற்றல்; மனப்பாடம் செய்தல்; ஆவேச மேற்றுதல்; தீயவுரை செய்தல்.

**உருவேறுதல்** – மந்திர எண்ணிக்கை மிகுதிப் படல்; தெய்வ ஆவேசம் ஏறல்.

**உருவை** – சூரைச்செடி; முள்ளிப்பூண்டு.

**உருவொளி** – கண்ணாடி முதலியவற்றிற் காணும் நிழல்.

**உருள்** – தேருருளை; வண்டி; உரோகிணி; வட்டம்.

**உருள்** (வி) – புரள்; உருட்டு; திரள்; அழி.

**உருள்வண்டு** – பீவண்டு.

**உருளரசி** – கொத்துமல்லி.

**உருளாயம்** – சூதாட்டம்; கவற்றினால் பெற்ற வரவு; சூதாட்டத்தால் வரும் இலாபம்.

**உருளி** – உருளை; வட்டம்; எலும்பு மூட்டு; வட்ட வடிவான வெண்கலப் பாண்டம்; உரோகிணி நாள்; தேருருளை; எந்திரத்தினது மேற்கல்.

**உருளிபுரளுதல், உருளிபெயர்தல்** – எலும்புப் பொருத்து விலகுதல்.

**உருளுதல்** – புரளுதல்; உருண்டையாகத் திரளுதல்; அழிதல்; செல்லுதல்.

**உருளை** – உருண்டை; சக்கரம்; உரோகிணி நாள்; திரண்டு உருண்ட பொருள்; முட்டை.

**உருளைக்காந்தம்** – ஒருவகைக் காந்தக்கல்.

**உரூட்சம்** – மொந்தன் வாழைக் கிழங்கு.

**உரூடி** – இடுகுறி; பெயர்பெற்றது; காரியத்தைக் கொண்டு காரணத்தைத் தீர்மானித்தல்.

**உரூப்பியம்** – அழகுள்ளது; வெள்ளி; வெள்ளி நாணயம்; வெள்ளி நகை; வெள்ளை.

**உரூபகம்** – உருவகம்; உரூபகதாளம்; சான்று.

**உரூபகாரப்படுத்துதல்** – மெய்ப்பித்தல்.

**உரூபகாரம்** – சான்று; மேற்கோள்.

**உரூபம்** – உருவம்; வடிவம்; அடையாளம்; விக்கிரகம்; நிறம்; அழகு; நிலை; சாயை.

**உரூபா** – காண்க: உருபா.

**உரூபாவதி** – அழகுடையவள்.

**உரூபிகரம்** – உருவமெடுக்கை.

**உரூபித்தல்** – மெய்ப்பித்தல்.

**உரை** – உரைக்கை; சொல்; பொருள் விளக்கம்; ஒலி; பேச்சு; மொழி; முழக்கம்; ஆசிரிய வசனம்; ஆகமப்பிரமாணம்; மாற்றுரை; விடை; பொன்; புகழ்; தேய்வு; எழுத்தின் ஒலி; புகழுரை; விரிவுரை.

**உரை** (வி) – தேய்; ஒலி; சொல்; பேசு.

**உரைக்கிழத்தி** – கலைமகள்.

**உரைக்கை** – விரித்துச் சொல்லுகை.

**உரைக்கோள்** – உரைகாரன் கருத்து.

**உரைகட்டுதல்** – நூலுக்கு உரைசெய்தல்; விளக்கங் கூறுதல்.

**உரைகல்** – பொன்னின் மாற்று அறிதற்காக அதனை உரைக்கும் சிறு கல்.

**உரைகலங்குதல்** – பேச்சுத் தடுமாறுதல்.

**உரைகாரன்** – உரையாசிரியன்.

**உரைகோள்** – நூலுக்குரிய உரையில் சொல்லப் படுவன: சொற்பிரிப்பு, சொற்பொருள், தொடர்மொழியை விளக்குதல், குறிப்புப் பொருள், வினா விடை முதலியன.

**உரைகோளாளன்** – உரையை விரைவில் ஏற்கும் அறிவுடையோன்.

**உரைச்சூத்திரம்** – உரையினிடையே உரைகாரர் ஒரு கூறாக இயற்றிய நூற்பா.

**உரைச்செய்யுள்** – கட்டுரை; உரைப்பாட்டு.

**உரைசல்** – உரைசுதல், உராய்கை; தேய்கை.

**உரைசுதல்** – உரிஞ்சுதல்; தேய்தல்; தேய்த்தல்.

**உரைசெய்யல்** – சொல்லுதல்; விளக்கவுரை தரல்.

**உரைஞ்சுதல்** – காண்க: **உரைசுதல்.**

**உரைத்தல்** – ஒலித்தல்; சொல்லுதல்; தேய்த்தல்; மாற்றறியத் தேய்த்தல்; மெருகிடுதல்; பூசுதல்.

**உரைத்தாம் என்றல்** – நூல் உத்திகள் முப்பத்து இரண்டனுள் ஒன்று, முன்னே கூறியுள்ள ஒரு செய்தி பின்னரும் வருமிடத்து முன்னர்ச் சொல்லியமை சுட்டல்.

**உரைத்தீவார்** – கூறுவார்.

**உரைத்தும் என்றல்** – முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று, ஒரு செய்தியைப் பின்னர் ஏற்ற இடத்தில் விளக்குவோம் எனக் குறித்தல்.

**உரைதல்** – தேய்தல்; வீணாதல்.

**உரைநடை** – பேச்சுநடை; வசனநடை.

**உரைநூல்** – உரை எழுதப்பெற்ற நூல்; உரையாகிய நூல்.

**உரைப்பாட்டு** – உரைச் செய்யுள்; கட்டுரை நடை.

**உரைப்பு** – தேய்ப்பு; மாற்றறிய உரைக்கை; சொல்லுகை.

**உரைப்பொருள்** – விரித்துரைக்கும் மெய்யுரை.

**உரைபாடம்** – மூலமும் உரையும்.

**உரைபெறுகட்டுரை** – காப்பியங்களுள் உரை நடையில் அமைந்த தொடர்.

**உரைமானம்** – தேய்ப்பு.

**உரைமுடிவு** – முறைத் தீர்ப்பு, நியாயத் தீர்ப்பு.

**உரையசை** – பெரும்பான்மை ஆற்றலிழந்த இடைச்சொல்.

**உரையசைக்கிளவி** – ஒருவனை எதிர்முகமாக்கும் சொல்.

**உரையல்** – உரைத்தல்; தேய்தல்; சொல்லுகை.

**உரையளவை** – நூற்சான்று.

**உரையாசிரியர்** – நூலுக்கு உரை செய்வோர்; தொல்காப்பிய முதல் உரைகாரர் எனப்படும் இளம்பூரணர்.

**உரையாடுதல்** – பேசுதல், சொல்லுதல்; ஒருவர்க் கொருவர் உரையாடல்; ஒரு பொருள்பற்றிச் சிலர் கலந்து பேசுகை.

**உரையாணி** – மாற்றறியும் ஆணி.

**உரையிடுதல்** – நூலுக்கு உரை செய்தல்; ஒருவர்க் கொருவர் தருக்கஞ் செய்தல்.

**உரையிலக்கணம்** – நூலுரைக்கு வேண்டும் இலக்கணம்: பாடம், கருத்து, சொல்வகை, சொற்பொருள், தொகுத்துரை, உதாரணம், வினா, விடை, விசேடம், விரிவு, அதிகாரம், துணிவு, பயன், ஆசிரியவசனம் எனப் பதினான்கு வகைத்து.

**உரையிற்கோடல்** – மூலத்திற் சொல்லாதவற்றை உரையில் சொல்லும் ஓர் உத்தி.

**உரையேடு** – காண்க: **உரைபாடம்.**

**உரைவன்மை** – பேச்சு வல்லமை.

**உரைவாணன்** – உரை கூறவல்ல புலவன்.

**உரைவு** – தேய்வு.

**உரொக்கம்** – கையிருப்புப் பணம்.

**உரோகதி** – நாய்.

**உரோகம்** – நோய்; தளிர்; பூவரும்பு; ஏறுகை; உயர்தல்; இறங்குகை; ஒளியின்மை.

**உரோகிணி** – உரோகிணி நாள், நான்காம் நட்சத்திரம்; பலராமன் தாய்; கடுகுரோகிணி; பீதரோகிணி; கடுக்காய்; ஒன்பான்ஆண்டுப் பெண்; பெருங்குமிழ்.

**உரோகிணி புதல்வன்** – பலராமன்.

**உரோகிதம்** – செந்நிறம்; செம்மரம்; மஞ்சள்; குங்குமம்; இந்திரவில்.

**உரோங்கல்** – உலக்கை.

**உரோசம்** – மானம்; சினம்; வெட்கம்; முலை.

**உரோசனகம்** – எலுமிச்சை.

**உரோசனம்** – முள்ளிலவு; கோரோசனம்.

**உரோசனி** – கடுகு; செந்தாமரை.

**உரோசனை** – கோரோசனை; செந்தாமரை; கடுகு.

**உரோஞ்சுதல்** – காண்க: **உரிஞ்சுதல்.**

**உரோடணம்** – இதள், பாதரசம்; உவர்நிலம்.

**உரோடம்** – சினம்.

**உரோணி** – உரோகிணி; ஒருவகை நோய்.

**உரோதம்** – நீர்க்கரை; தடை.

**உரோதனம்** – அழுதல்; அழுகை.

**உரோதனி** – சிறுகாஞ்சொறி.

**உரோதனை** – தொந்தரவு; அழுகை.

**உரோதித்தல்** – அழுதல்.

**உரோபம்** – அம்பு.

**உரோமக்கட்டு** – நிறைமயிர், மயிரடர்த்தி.

**உரோமக்கிழங்கு** – வசம்பு.

**உரோமகூபம்** – மயிர்ச்சிலிர்ப்பு, உரோம புளகம்.

**உரோமண்டலி** – நிருத்தக்கை முப்பதனுள் ஒன்று.

**உரோமத்துவாரம்** – மயிர்க்கால், மயிர்த்துளை.

**உரோமப்பொடிப்பு, உரோமபுளகம், உரோமபுளகிதம்** – மயிர்ச் சிலிர்ப்பு.

**உரோமம்** – மயிர்ப்பரப்பு; புறமயிர்.

**உரோமரேகை** – மயிரொழுக்கு.

**உரோமாஞ்சம்,**
**உரோமாஞ்சிதம்** } – மயிர்ச் சிலிர்ப்பு.

**உரோருகம்** – முலை.

**உல்** – தேங்காயுரிக்கும் கருவி; கழு.

**உல்கு** – தீர்வை, ஆயம், சுங்கவரி.

**உல்குசெய்தல்** – சுங்கம் கொள்ளுதல், சுங்கம் வாங்குதல்.

**உல்குபொருள்** – சுங்கப்பொருள், மரக்கலம் வண்டி முதலியவற்றில் வரும் பண்டங்களுக்கு வாங்கும் இறைப்பொருள்.

**உல்லங்கணம்** – கடக்கை, மீறுகை; அவமதிப்பு, நிந்தை.

**உல்லடைப்பு** – மரத்தால் ஆற்றிற்கிடும் அணை.

**உல்லம்** – கடல்மீன்வகை.

**உல்லரி** – தளிர்.

**உல்லாகன்** – திறமையுள்ளவன்; நோயுற்று நீங்கியவன்.

**உல்லாசக்காரன்** – மகிழ்ச்சிமேல் நாட்டமுடையோன்; பகட்டுக்காரன்.

**உல்லாசத்தலம்** – மாளிகைகளில் மகிழ்வுடன் பொழுதுபோக்குவதற்குரிய இடம்.

**உல்லாசப்படுத்துதல்** – களிக்கச்செய்தல்; உபசரித்தல்.

**உல்லாசப்பயணம்** – இன்பச்செலவு.

**உல்லாசப்பேச்சு** – விநோதப் பேச்சு, வேடிக்கைப் பேச்சு.

**உல்லாசம்** – உள்ளக்களிப்பு, மனமகிழ்ச்சி; சரசக் களிப்பு; மேலாடை.

**உல்லாசன்** – காண்க: **உல்லாசக்காரன்.**

**உல்லாடி** – மெலிந்த ஆள்.

**உல்லாபம்** – நிரம்பா மென்மொழி; நலிந்த மொழி; மழலைச் சொல்; மேற்கட்டி.

**உல்லாபன்** – நோய்நீங்கி நலம்பெற்று வருபவன்.

**உல்லி** – ஒல்லி; மெலிந்த ஆள்; மெல்லியது; வெங்காயப்பூ; மதில்.

**உல்லியம்** – கிணறு; இறைகிணறு.

**உல்லியர்** – கூவநூலார், கிணறு எடுப்பதற்கு உரிய இடம் கண்டு கூறுவார்.

**உல்லு** – காண்க: **உல்.**

**உல்லுகம்** – கொள்ளி.

**உல்லேகம்** – உச்சரிப்பு; பலபடப் புனைவணி, புனைந்துரை.

**உல்லேற்றுதல்** – கழுவேற்றுதல்.

**உல்லோசம்** – மேற்கட்டி; கூடாரம்.

**உல்லோலம்** – கடலலை; பேரலை; கூத்தின் உறுப்புச் செயல்களுள் ஒன்று.

**உலக்கை** – உரோங்கல், தவசம் முதலியன குற்றும் கருவி; ஓர் ஆயுதம்; திருவோணம்; கடல்; அழிவு; வெருகன்கிழங்கு.

**உலக்கைக்கழுந்து** – உலக்கைப்பூண்.

**உலக்கைக்கொழுந்து** – உலக்கை நுனி; உலக்கை நுனிபோலக் கூர்மையற்றது; அறிவுக் குறையுள்ளோன்.

**உலக்கைத்திங்கள்** – உலக்கைப் பெயர்கொண்ட திருவோண மீனின் அடிப்படையில் அமைந்த ஆவணித் திங்கள்.

**உலக்கைப்பாட்டு** – வள்ளைப்பாட்டு, தவசம் குற்றும்போது மகளிர் தலைவனைப் புகழ்ந்து பாடும் பாட்டு.

**உலக்கைப்பாலை** – பாலைமரவகை.

**உலக்கைப்பிடங்கு** – உலக்கைக் கணை, உலக்கைப் பூண்; தேய்ந்துபோன உலக்கை நுனி.

**உலக்கையாணி** – பூட்டின் நடுவாணி.

**உலககர்த்தா** – உலகைப் படைத்த கடவுள்.

**உலகங்காத்தாள்** – அவுரிச்செடி.

**உலகசஞ்சாரம்** – உலகத்தைச் சுற்றிவருதல்; உலக வாழ்வு.

**உலகசயன்** – புத்தன்.

**உலகஞானம்** – உலகத்தைப்பற்றிய அறிவு, உலகத்தின் நடைமுறை அறிவு; கருவிநூலறிவு.

**உலகத்தார்** – உலகிலுள்ளோர், உலக மக்கள்; உயர்ந்தோர்; உலகப்பற்றுடையார்.

**உலகநடை** – உலகத்தார் ஒழுகும் ஒழுக்கம், அறிவுடையவர் ஒழுக்கம்; உலக இயற்கை; உலக வழக்கு.

**உலகநாதன்** – உலகத் தலைவன்; அரசன்; கடவுள்; பிரமன்.

**உலகநீதி** – உலகநடை; நன்னெறி; இயல்பான நீதி, நாட்டியற்கை நீதி; ஓர் அறநூல்.

**உலகநூல்** – உலக வாழ்க்கைக்கு உகந்த வழி காட்டி நூல்; அறிவு நூல்.

**உலகநோன்பிகள்** – துறவாது விரதம் காப்போர்; சமண பௌத்தருள் இல்லறத்தார்.

**உலகநோன்பு** – துறவாது விரதங்காத்தல்.

**உலகப்பற்று** – உலகப் பொருள்களில் கொண்டுள்ள ஆசை; உலகியல் நிகழ்ச்சிகளில் வைக்கும் பேரீடுபாடு.

**உலகப்பிரசித்தி** – உலகமெங்கும் பரந்த புகழ்.

**உலகப்புரட்டன்** – மிகு புரளிக்காரன், பெருமோசக் காரன்.

**உலகபத்ததி** – உலக நடைமுறை, உலகத்தார் ஒழுகும் வழி.

**உலகபாலர்** – உலோகபாலர், திக்குப்பாலகராகிய தேவர், எட்டுத்திக்கிலும் நின்று உலகைப் புரப்போர்: இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் எண்மர்; அரசர்.

**உலகம்** – உலகு, உலகப்பொது, பூமி; நிலப் பகுதி; உலகுயிர்கள்; திக்கு; மக்கள்தொகுதி; உலகிலுள்ள உயர்ந்தோர் ஒழுக்கம்; உயர்ந் தோர்; உயர்குணம்; வானம்.

**உலகமரியாதை** – உலக வழக்கம்.

**உலகமலையாமை** – நூலுக்குரிய பத்து அழகினுள் ஒன்று, உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறு படாமை.

**உலகமலைவு** – நூற்குற்றங்களுள் ஒன்று, உலக ஒழுகலாற்றோடு இசையாமையாகிய குற்றம்; உலகத்து ஒழுகலாற்றோடு மாறுபட்ட ஒழுக்கம் நிகழ்ந்ததாகக் கூறுதல்.

**உலகமளந்தான்** – வாமனாவதாரத்தில் தன் காலால் உலகை அளந்த திருமால்.

**உலகமாதா** – உலகத்தின் தாய்; கலைமகள்; அலைமகள்; மலைமகள்; செம்மணித்தக்காளி.

**உலகமீன்றாள்** – பார்வதி.

**உலகமுண்டோன்** – ஊழியிறுதியில் உலகை விழுங்கித் தன் வயிற்றில் அடக்கிய திருமால்.

**உலகர்** – உலகத்தார்; பாண்டியர்.

**உலகவழக்கம்** – உலக நடைமுறை, உலகத்தார் ஒழுக்கம்.

**உலகவழக்கு** – உலகவழக்கம்; உலகத்தார் வழங்குவது, உலக வழக்குச் சொல்.

**உலகவறவி** – எல்லா இனத்தாரும் வந்து தங்கு வதற்குரிய அறச்சாலை.

**உலகவறிவு** – உலகியல் வழக்கம் பற்றிய அறிவு, இலௌகிக அறிவு.

**உலகவாதம்** – மரபுவழி வழக்கு.

**உலகவிடைகழி** – ஊர்வாயில்; நகரத்தின் பெரு வாயில்.

**உலகவிருத்தம்** – உலக வழக்கோடு மாறுபடுகை.

**உலகவேடணை** – உலக ஆசை, ஏடணாத்திரயத் தொன்று.

**உலகளந்தான்** – காண்க: **உலகமளந்தான்.**

**உலகாசாரம்** – உலக வழக்கம், உலகவொழுக்கம்.

**உலகாயதம்** – உலோகாயத மதம், கடவுளில்லை என்னும் சமயம்; உலகவின்பமே மேலானது என்னும் காட்சி வாதம்.

**உலகாயதன்** – உலோகாயத சமயத்தோன்.

**உலகிகம்** – காண்க: **உலகியல்.**

**உலகிதன்** – காண்க: **உலகாயதன்.**

**உலகியல்** – உலகநடை; உலகவழக்கம்; உலகியற்கை.

**உலகியல்வழக்கு** – உலக வழக்கம்.

**உலகியற்கை** – காண்க: **உலகியல்.**

**உலகியற்சொல்** – உலக வழக்குச்சொல், செய்யுள் வழக்கில் இல்லாது உலக வழக்கிலே வழங்கும் சொல்.

**உலகு** – உலகம், பூமி; நாடு; உலகத்தார் (இட வாகு பெயர்), உயர்ந்தோர், சான்றோர்; திசை; மங்கலச் சொற்களுள் ஒன்று.

**உலகுடையபெருமாள்** – அரசன்.

**உலகுரை** – உலக வாதம், உலக வழக்கம், ஐதிகம்.

**உலகேடணை** – உலகப் பொருள்களில் கொள்ளும் பற்று.

**உலகோர்** – உலகர்; பெரியோர்.

**உலங்கலம்** – கற்பாண்டம்.

**உலங்காரணை** – அவுரிச்செடி.

**உலங்கு** – உலம், திரண்ட கல்; கொசு; புழு.

**உலண்டம், உலண்டு** – பட்டுநூலை உண்டாக்குங் கோற் புழு; கோற்புழு; பட்டு.

**உலத்தல்** – அழிதல்; காயவைத்தல்; கழிதல்; நீங்குதல்; குறைதல்; சாதல்; முடிவு பெறுதல்.

**உலப்பு** – அழிவு; முடிவு; சாவு; குறைவு; அளவு; உதவுகை.

**உலப்பேரி** – திருத்தப்பட்ட நிலம்.

**உலபம்** – நெருங்கிப் படர்ந்த கொடித் திரள்; விழற்புல்.

**உலம்** – திரண்ட கல்; திரட்சி; வலிமை; துன்பம்; பிணம்; பட்டாடை; வாசல்; நீர்; காற்று; அகற்சி.

**உலம்பல், உலம்புதல்** – ஒலித்தல்; பேரொலி செய்தல்; ஆரவாரம்; அலப்புதல்.

**உலம்வருதல்** – நெஞ்சு உழலுதல்.

**உலமரல்** – அலமரல், சுழற்சி; துன்பம், வருத்தம்; அச்சக்குறி காட்டுதல்.

**உலமருதல்** – காண்க: **உலம்வருதல்.**

**உலர்ச்சி, உலர்த்தி** – காய்வு; வாட்டம்.

**உலர்த்து சூலை** – சூலைநோய்வகை.

**உலர்த்துதல்** – காயச்செய்தல்; வாட்டல்.

**உலர்தல்** – காய்தல்; வாடுதல்; அழிதல்.

**உலர்ந்தம்** – தண்டு.

**உலர்ப்பெலி** – ஓர் எலிவகை.

**உலரி** – ஒலரி, சிறுமீன்வகை.

**உலவம்** – அயலார் முன்பு மனக்கூச்சம்; இவறல்.

**உலவாக்கிழி** – எடுக்க எடுக்கக் குறைவுபடாத பொன்முடிப்பு.

**உல(லா)வுதல்** – இயங்குதல்; பரத்தல்; சூழ்தல்; பவனிவருதல்; திரிதல்.

**உலவை** – காற்று; மரக்கொம்பு; தழை; விலங்கின் கொம்பு; முல்லைநிலக் கான்யாறு; விறகு; வள்ளிக்கொடி; உடைமரம்; கிலு கிலுப்பை; மரப்பொந்து; மரச்செறிவு; குடை வேல்; ஓடை; ஆசை.

**உலவையான்** – காற்றுக் கடவுள், வாயுதேவன்.

**உலவைராசி** – திப்பிலி.

**உலறுதல்** – காய்தல்; வற்றுதல்; சிதைதல்; பொலிவழிதல்; சினத்தல்; உரை தடுமாறல்; வருந்துதல்.

**உலா** – ஊர்வலம், பவனி; உலா வருவதைப் பாடும் நேரிசைக் கலிவெண்பாவாலாய ஒரு சிற்றிலக்கியவகை.

**உலாங்கம்** – உலாகுமம், மனோசிலை.

**உலாங்கிலி, உலாங்கு** – காவட்டம்புல்; கிலுகிலுப்பை.

**உலாஞ்சுதல்** – அசைந்தாடுதல்; தலைசுற்றுதல்.

**உலாத்து** – உலாவுகை.

**உலாத்துக்கட்டை** – கதவு நின்றாடும் சுழியாணி, முளையாணி, கதவின் குடுமி.

**உலாத்துக்கதவு** – பிணையல் கதவு.

**உலாத்துதல்** – உலாவுதல்; உலாவச்செய்தல்; பரவச்செய்தல்.

**உலாப்போதல்** – ஊர்வலம் வருதல்.

**உலாம்** – ஓர் உவமச்சொல்.

**உலாமடல்** – ஒரு சிற்றிலக்கியவகை, ஒரு பெண்ணைக் கனவில் கூடியவன் விழித்தபின் அவள் பொருட்டு மடலூர்வதாகக் கலி வெண்பாவினால் பாடப்படும் ஒரு சிற்றிலக்கிய வகை.

**உலாவருதல், உலாவுதல்** – சஞ்சரித்தல்; ஊர்வலம் வருதல்; இயங்குதல்; ஓடிப்பரவுதல்; சூழ்தல்; சாரிபோதல்; மெல்ல நடத்தல்; அசைதல்.

**உலிமணி** – நாயுருவி.

**உலிற்கள்** – வெண்கலம்.

**உலு** – தினை முதலியவற்றின் பதர்.

**உலுக்குதல்** – குலுக்குதல்; அசைத்தல்; நடுங்குதல்.

**உலுக்குமரம்** – மிண்டிமரம்; நெம்புகட்டை.

**உலுங்குதல்** – 'கணீர்' என்று ஒலித்தல்.

**உலுத்தத்தனம், உலுத்தம்** – கடும்பற்றுள்ளம், உலோப குணம்.

**உலுத்தன்** – பொருளாசைக்காரன், உலோபி; புல்லன்; வேடன்.

**உலுத்துதல், உலுப்புதல்** – உதிர்த்தல்.

**உலுப்பை** – உணவுப்பண்டம்; கோயில் முதலியவற்றிற்கு அனுப்பும் காணிக்கை; பெரியவர்களுக்கு அனுப்பும் ஊண்பண்டம்; அடைந்தோர்க்கு அளிக்கும் பண்டம்; சிறுகாய்; பண்டம் வைக்கும் பை.

**உலுவம்** – வெந்தயம்.

**உலுவா** – காண்க: **உலுவம்**; பெருஞ்சீரகம்.

**உலுவாவரிசி** – தவசவகை.

**உலூகம்** – கோட்டான், கூகை, பேராந்தை; ஒரு வகைப் பரி; உரல்; குங்கிலியம்.

**உலூகலம்** – உரல்; மரஉரல்; குங்கிலியம்; கல்லாலமரம்.

**உலூதம், உலூதை** – எறும்பு; சிலந்திப்பூச்சி.

**உலை** – உலைக்களம், கொல்லனுலை; நெருப்பு உள்ள அடுப்பு; பாகஞ்செய்ய வைக்கும் நீருலை; கம்மியர் உலை; உலைப்பாண்டம்; உலைதல்; உலைச்சாலை; அரிசியிடுவதற்கு அடுப்பில் வைக்கும் நீர்; மனநடுக்கம்.

**உலை (வி)** – உலைஎன் ஏவல்; அழி; கெடு; கலை; வருத்து.

**உலைக்களம்** – கொல்லன் உலைக்கூடம்; உலோகங்கள் உருக்குமிடம்.

**உலைக்குறடு** – கம்மியர் கருவியுள் ஒன்று, உலைமுகத்தில் இரும்பு எடுக்கும் இடுக்கி.

**உலைச்சல்** – அலைவு; கலக்கம்.

**உலைசல்** – கெடுதல், கேடு.

**உலைத்தண்ணீர்** – காண்க: **உலைநீர்.**

**உலைத்தல்** – அலைத்தல்; அழித்தல்; கெடுத்தல்; கலைத்தல்; முறியடித்தல்; மனத்தைக் கலக்கல்.

**உலைத்துருத்தி** – கொல்லன் உலையில் உள்ள அடுப்பு ஊதும் துருத்தி.

**உலைதல்** – அலைதல்; நிலைகுலைதல்; அழிதல்; கெடுதல்; பலங்குறைதல்; மனங்கலங்கல்; வருந்துதல்; அஞ்சுதல்; கலைந்துபோதல்.

**உலைநீர்** – சோறு சமைப்பதற்குக் கொதிக்க வைக்கும் நீர்; காய்ந்த இரும்பைத் தோய்க்கும் நீர்.

**உலைப்பு** – அலைப்பு; முறியடிக்கை; வருத்துகை; அழிவு.

**உலைமுகம்** – கொல்லன் உலைக்கூடம்.

**உலைமூக்கு** – கொல்லன் உலையில் துருத்தி வைக்கும் தொளை.

**உலைமூடி** – உலைப்பானையின் மேல்மூடி.

**உலையாணிக்கோல்** – உலைமுகத் திருப்புக்கோல், சூட்டுக்கோல்.

**உலையேற்றுதல்** – உலைவைத்தல், உலைப் பானையை அடுப்பில் வைத்தல்.

**உலைவு** – அழிவு; நடுக்கம்; வறுமை; கலக்கம்; தோல்வி; அலைவு; ஊக்கக்குறைவு.

**உலைவைத்தல்** – உலையேற்றுதல், உலைப் பானையை அடுப்பில் வைத்தல்; பிறனுக்குக் கேடு சூழ்தல்.

**உலோகக்கட்டி** – உலோகங் கலந்த கட்டி; பஞ்சலோகத்தையுருக்கிக் கூட்டிய கட்டி.

**உலோகபாலர்** – காண்க: **உலகபாலர்.**

**உலோகம்** – உலகம்; மாழை; பஞ்சலோகம்; பொன் முதலிய தாதுப்பொருள்; கனிப் பொருள்.

**உலோகமணல்** – இரும்புமணல், அயமணல்.

**உலோகரூடம்** – உலகவளமை.

**உலோகவாதம்** – உலகுரை, ஐதிகப் பிரமாணம்.

**உலோகவிருத்தம்** – உலக வழக்கிற்கு மாறுபட்டது.

**உலோகாயதம்** – பொருள்முதல் வாதக்கொள்கை.

**உலோகாயதன்** – காண்க: **உலகாயதன்.**

**உலோகிதம்** – சிவந்தது; சந்தனம்; சூதாட்டவகை.

**உலோகிதன்** – செவ்வாய்.

**உலோச்சு** – தன் தலைமயிரைத் தன் கையாற் பறிக்கை.

**உலோசம்** – ஒருவகைக் காதணி; சுட்டியணி.

**உலோசனம்** – கண்.

**உலோசி** – பேய்ப்பசளைப் பூண்டு.

**உலோசிதம்** – சந்தனமரம்.

**உலோட்டம்** – இரும்புக்கிட்டம்; மண்கட்டி; ஓடு.

**உலோட்டி** – தொந்தரவு; சாராயச் சாரம்.

**உலோத்திரம்** – வெள்ளிலோத்திர மரம்.

**உலோபம்** – இவறல், பேராசை, கடும்பற்றுள்ளம்; அகப்பட்ட பொருளைக் கைவிடாமை; தானும் நுகராமல் பிறரையும் நுகரச் செய்யாமல் தடுத்தலாகிய குணம்; ஈயாமை; குறைவு; கெடுதல் விகாரம்.

**உலோபன்,** **உலோபி** – கடும்பற்றுள்ளன், இவறலன், பேராசையுள்ளவன், பிசுனன், ஒருவருக்கும் ஒன்றுங் கொடாதவன்.

**உலோமசம்** – சடாமாஞ்சில்.

**உலோமம்** – புறமயிர்; வால்; அலைகை.

**உலோலம்** – அசைவு; அலைகை; ஆசைப் பெருக்கம், விருப்பம்.

**உலோலிதம்** – அசைவு.

**உலோலிதமுகம்** – ஆழ்ந்த சிந்தையால் ஒரு தோள்மேல் சாய்ந்து நிற்குமுகம்.

**உலோவுதல்** – கொடாது மறுத்தல், உலோபத்தனம்.

**உவ்** – உவை, அஃறிணைப் பன்மைப் படர்க்கைச் சுட்டுப்பெயர்.

**உவ்வி** – தலை; வரிவகை.

**உவ்வு** – தவம்.

**உவ** *(வி)* – விரும்பு; மகிழ், இன்பமாயிரு.

**உவக்காண்** – உங்கே, உவ்விடம்; உங்கே பார்.

**உவகுருவாணன்** – இல்லறம் அடைதற்குரிய நிலையிலுள்ள பிரமசாரி.

**உவகுலம்** – திப்பிலி; திரிபலை.

**உவகை** – மகிழ்ச்சி; களிப்பு; அன்பு; காமம்; இன்பச்சுவை.

**உவகைக்கலுழ்ச்சி** – வாளேறுபட்டுப் புண்மிகுந்த கணவனைக் கண்டு மனைவி மகிழ்ந்து கண்ணீர் சொரியும் புறத்துறை.

**உவகைச்சொல்** – முகமன், உபசாரமொழி.

**உவகைப்பறை** – மங்கலப்பறை, மகிழ்ச்சியைக் குறிக்கும் பறை.

**உவச்சக்காணி** – கோயிலில் கொட்டுழியத்திற்காக உவச்சனுக்குத் தரும் மானியம்.

**உவச்சன்** – பூசாரிச் சாதியான்; சோனகன்.

**உவட்சி** – துவளுகை.

**உவட்டி,** **உவட்டு** – அருவருப்பு; குமட்டுகை; நீர்ப் பெருக்கு; கெடு.

**உவட்டுதல்** – அருவருத்தல், வெறுப்புறுதல்; தெவிட்டுதல்; குமட்டுதல்; புரளுதல்; மிகுதல்.

**உவட்டெடுத்தல்** – பெருக்கெடுத்தல்.

**உவண்** – உவ்விடம், மேலிடம்.

**உவணகேதனன்** – கருடக்கொடியையுடைய திருமால்.

**உவணம்** – உயர்ச்சி, உயர்வு; கருடன்; கழுகு; பருந்து.

**உவணமுயர்த்தோன்** – காண்க: **உவணகேதனன்.**

**உவணவூர்தி** – கருடனை ஊர்தியாகக் கொண்ட திருமால்.

**உவணன்** – கருடன்.

**உவணி** – வாள்.

**உவணை** – தேவருலகம், துறக்கம்; உவ்விடம்.

**உவத்தல்** – மகிழ்தல்; விரும்புதல்; பிரியமாதல்; அன்புசெய்தல்.

**உவதி** – இளம்பெண், யுவதி, பதினாறாட்டைப் பருவத்தாள்.

**உவதை** – மலையின்வீழ் பேரருவி.

**உவப்பு** – மகிழ்ச்சி, களிப்பு; பொலிவு; விருப்பம்; உயரம்; விளையாட்டு; மேடு.

**உவமம்** – உவமை, ஒரு பொருளோடு பிறிதொரு பொருளை ஒப்பிட்டுக் காணல்; ஒப்புமை அளவை.

**உவமவாசகம்** – உவமவுருபு.

**உவமவுருபு** – உவமானத்தைச் சார்ந்து ஒப்புமை விளக்கவரும் இடைச்சொல்; அன்ன, ஒப்ப, ஏய்ப்ப என்றாற்போல வருபவை.

**உவமன்** – ஊமன்; உவமை.

**உவமாநிலம்** – சுவர்.

**உவமானம்** – உபமானம், ஒப்பு, சமானம்; ஒரு பொருளுக்கு ஒப்பாக உரைக்கத்தக்க உயர் பொருள்.

**உவமித்தல்** – உவமைப்படுத்தல், ஒப்புமை காட்டிக் கூறுதல்.

**உவமேயம்** – உபமேயம், உவமிக்கப்படும் பொருள்.

**உவமை** – உவமம்; ஒப்புமை; **உவமையணி;** வினை, பயன், மெய், உரு என்பவை காரணமாக ஒரு பொருளோடு மற்றொரு பொருளை ஒப்புமை புலப்படப் பேசுகை.

**உவமைத்தொகை** – உவமையுருபுதொக்கதொடர் மொழி; மதிமுகம், கயற்கண் என்றாற்போல வருவது.
**உவமையாகுபெயர்** – உவமையான பொருளின் பெயர் உவமேயத்திற்கு ஆகிவருவது; 'பாவை வந்தாள்' என்பதுபோல வருவது.
**உவமையின்மை** – ஒப்பின்மை, இறைவன் எண் குணங்களுள் ஒன்று.
**உவமையுருபு** – காண்க: உவமவுருபு.
**உவர்** – உப்பு; உப்புச்சுவை; களர்நிலம்; உழை மண்; கடல்; இனிமை; உயர்திணைப் பலர் பாலில் வரும் ஒரு சுட்டுப்பெயர்.
**உவர்க்கடல்** – உப்புநீர்க் கடல்.
**உவர்க்கம்** – கடற்கரை.
**உவர்க்களம்** – காண்க: **உவர்நிலம்.**
**உவர்க்காரம்** – சவர்க்காரம்.
**உவர்ச்சங்கம்** – முட்சங்குப்பூண்டு.
**உவர்த்தரை** – காண்க: **உவர்நிலம்.**
**உவர்த்தல்** – உப்புக்கரித்தல்; துவர்த்தல்; அருவருத்தல்; வெறுத்தல்.
**உவர்நிலம்** – களர்நிலம்; உப்பளம்.
**உவர்நீர்** – உப்புநீர், உப்புச்சுவையுள்ள நீர்.
**உவர்ப்பு** – உப்புச்சுவை; துவர்ப்பு; இகழ்ச்சி; வெறுப்பு; அவாவின்மை; உயிரால் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளுள் இனி நுகரக் கிடக்கும் வினையின் பயன்கள்.
**உவர்மண்,** **உவரகம்** – உப்புச்சேர்ந்த மண், உழைமண்; களர்நிலம்.
**உவராகம்** – மறைப்பு, கிரகணம்; மறைப்புக் காலம்.
**உவரி** – உவர்நீர், உப்புநீர்; கடல்; சிறுநீர்.
**உவருண்டான்** – களர்நிலத்தில் பயிரிடப்படும் ஒருவகை நெல்.
**உவரோதம்** – உவர்க்கடல்; இடையூறு.
**உவல்** – தழை; சருகு.
**உவலை** – தழை; சருகு; மரக்கொம்பு; இழிவு; துன்பம்; வம்புச்சொல்.
**உவவனம்** – உபவனம், சோலை, உய்யானம், பூந்தோட்டம்.
**உவவு** – உவப்பு; நிறைமதி; மறைமதி.
**உவள்** – உயர்திணைப் பெண்பாலில் வரும் ஒரு சுட்டுப்பெயர்; அவளுக்கும் இவளுக்கும் இடையில் உள்ளவள்; முன் நிற்பவள்.
**உவளகம்** – அந்தப்புரம்; சிறைச்சாலை; காவற் கூடம்; மதில்; ஒருபக்கம்; அகழி; பள்ளம்; வாயில்; குளம்; உப்பளம்; இடைச்சேரி; விரிவு; நீர்நிலை; பிரித்தல்.
**உவளித்தல்** – தூய்மை செய்தல், துப்புர வாக்கல்.
**உவளுதல்** – துவளுதல்; நடுங்குதல்; பரத்தல்.
**உவற்றுதல்** – சுரக்கச் செய்தல்.
**உவறுதல்** – ஊறுதல், சுரத்தல்.
**உவன்** – உயர்திணை ஆண்பாலில் வரும் ஒரு சுட்டுப்பெயர்; அவனுக்கும் இவனுக்கும் இடையில் உள்ளவன்; முன் நிற்பவன்; பின்புறத்துள்ளவன்.
**உவன்றி** – நீர்நிலை.
**உவனாயம்** – துவைத்துக் கட்டும் மருந்து.
**உவனித்தல்** – அம்பெய்யத் தொடங்குதல்; தூய்மை செய்தல்; ஈரமாதல்.
**உவனிப்பு** – ஈரம்.
**உவா** – வெள்ளுவா, முழுமதிநாள்; காருவா, அமாவாசை; கடல்; உகாமரம்.
**உவாத்தி,** **உவாத்திகன்** – கற்பிப்போன், ஆசிரியன், உபாத்தியாயன்; வேதமோதுவிப்போன்.
**உவாத்திமை** – கற்பிக்கும் தொழில்.
**உவாத்தியாயன்** – காண்க: **உவாத்தி.**
**உவாத்தியாயனி** – ஆசிரியை.
**உவாத்து** – காண்க: **உவாத்தி.**
**உவாதி** – எல்லை; கடுந்துன்பம், பெருந்துன்பம்.
**உவாந்தம்** – காருவா, அமாவாசை; வெள்ளுவா, பௌர்ணிமை.
**உவாய்** – ஒரு மரம், உவாத்தேக்கு.
**உவாலம்பம்,** **உவாலம்பனம்** – பழிப்பு, தூடணை.
**உவாவுதல்** – நிறைதல்.
**உவாளி** – பூட்டை; அறுகு.
**உவித்தல்** – அவித்தல்.
**உவிதல்** – சாதல்; அவிதல், நீர்வற்றி யவிதல்; காற்றில்லாமல் புழுங்கல்.
**உவியல்** – சமைத்த கறி.
**உவை** – அஃறிணைப் பன்மைப் படர்க்கைச் சுட்டுப் பெயர்; உங்குள்ளவை, உவ்விடத் துள்ளவை.
**உழக்கு** – காற்படி; மிதிப்பு; கவறு உருட்டும் உழக்கு; சிலம்பம்.
**உழக்கு (வி)** – கலக்கு; மிதி; சிலம்பம் பழகு.
**உழக்குதல்** – கலக்குதல்; மிதித்தல்; உழுதல்; விளையாடுதல்; கொன்று திரிதல்; வெல்லுதல்.
**உழக்குருட்டுதல்** – சூதாடுதல்.
**உழக்கோல்** – உழவுக்கம்பு, தாற்றுக்கோல்.
**உழத்தல்** – செய்தல்; பயிலுதல், பழகுதல்; முயலுதல்; வெல்லுதல்; வருந்துதல்; பட்டனுபவித்தல்; துவைத்தல்.
**உழத்தி** – உழவர்சாதிப் பெண், மருதநிலப்பெண்.
**உழத்திப்பாட்டு** – உழவுபற்றிய செய்திகளைக் கூறும் ஒருவகைச் சிற்றிலக்கியவகை.
**உழப்பன்** – கள்ள நியாயம் பேசுகிறவன்.
**உழப்பு** – முயற்சி, ஊக்கம்; வருத்தம்; பழக்கம்; வலிமை.

**உழப்புதல்** – மழுப்புதல்; குழப்பிப் பேசுதல்; போலிவாதஞ் செய்தல்; காலங்கடத்துதல்.

**உழம்புதல்** – பல ஒலிகள் கலந்தொலித்தல்; குழம்புதல்.

**உழமண்** – உவர்மண், அழுக்கெடுக்கும் மண்.

**உழல்(லு)தல்** – அசைதல்; அலைதல்; சுழலுதல்; சுற்றித்திரிதல்; நிலைகெடுதல்.

**உழலை** – தாபம்; உழலைமரம்; கதவின் குடுமி; செக்கினுறுப்பாகிய பிழிமரம்; குறுக்கு மரம்; கணையமரம்; பெருவேட்கை; ஒரு நோய்.

**உழலைமரம்** – மாட்டின் கழுத்திற் கட்டும் கட்டை; செக்குலக்கை; குறுக்குமரம்.

**உழலைவேலி** – வழிநடைப்பட்டுப் போகிறவர் களுக்கு இடங்கொடுத்துப் பின் உழன்று கொண்டு தன் நிலையில் நிற்கும் உழலைமரம் பொருந்திய வழியினையுடைய வேலி.

**உழவடை** – உழவு நிலத்தின் குடியுரிமை; குடிப் பாத்தியம்.

**உழவடைத்தல்** – உழுவதற்காக நிலத்தை ஒப்படைத்தல்.

**உழவன்** – உழுபவன்; மருதநிலத்தவன்; உழவு மாடு; வீரன்.

**உழவாரப்படை, உழவாரம்** – புல் செதுக்குங் கருவிவகை.

**உழவு** – நிலத்தை உழும்தொழில், வேளாண்மை; உடம்பினால் உழைக்கை.

**உழவுகட்டி** – உழும்போது பெயரும் மண்கட்டி.

**உழவுகட்டுதல்** – முதற்சால் போதல்; உழுதல்.

**உழவுகுண்டை** – உழவுமாடு, உழவெருது.

**உழவுகோல்** – தாற்றுக்கோல்; குதிரைச் சம்மட்டி.

**உழவுசால்** – உழவிடும் வளையம், உழுகலப்பை யினால் கீறப்பட்ட பிளவு.

**உழவுமழை** – உழுதற்கு வேண்டிய பருவமழை.

**உழவோன்** – உழவன்.

**உழற்சி** – சுழற்சி; மனச்சுழற்சி; சுற்றித்திரிகை; ஆடுகை; வருத்தம்.

**உழற்றல்** – நீர்வேட்கை.

**உழற்றி** – சுழற்சி; மிகுதாகம்; வருத்தம்.

**உழற்று** (வி) – சுழற்று; கைகாலுழற்று; காலத்தை வருத்தத்தோடு கழி; வருந்திப் புரள்.

**உழற்றுதல்** – உழலச்செய்தல்; அலையச்செய்தல்; சுழற்றுதல்; உடம்பு நோயாற் புரளுதல்; வருந்துதல்.

**உழறுதல்** – கலங்குதல்; அளைதல்; கலக்குதல்; சுழலுதல்; உலாவல்; மோதும்படி தள்ளுதல்; உருக்காட்டுதல்.

**உழன்றறுத்தல்** – கடினவேலை செய்தல்; பழகித் தேர்ச்சிபெறல்.

**உழன்றி** – மாட்டின் கழுத்தில் மாட்டும் கட்டை.

**உழால்** – உழுதல், கிண்டுதல்.

**உழி** – இடம்; பக்கம்; ஏழனுருபு; பொழுது; அளவு

**உழிஞ்சில்** – வாகைமரம்; உன்னமரம்.

**உழிஞை** – சிறுபூளை; கொற்றான்; பகைவரது அரணை வளைப்போர் சூடும் மாலை; உழிஞைத் திணை.

**உழிதரல்** – அலைதல், திரிதல்; சுழலல்.

**உழு** – பிள்ளைப்பூச்சி; உழவு.

**உழு** (வி) – ஏருழு; நிலத்தைக் கிளை.

**உழுத்தமா** – உழுந்திலிருந்து எடுத்த மா.

**உழுத்தல்** – பதனழிதல்.

**உழுத்து** – ஓர் அணிகலம்.

**உழுதல்** – நிலத்தைக் கிளைத்தல்; கிண்டுதல்; மயிரைக் கோதுதல்.

**உழுதுண்போர்** – வேளாளருள் தாமே பயிரிட்டு உண்ணும் ஒருவகையார்.

**உழுதூண்** – பயிர்த்தொழில் செய்து வாழ்தல்.

**உழுந்து** – உளுந்து.

**உழுநர்** – உழவர்.

**உழுபடை** – கலப்பை.

**உழுவம்** – எறும்பு.

**உழுவல்** – முறைமை; குணம்; இடைவிடாத அன்பு, எழுமையுந் தொடரும் அன்பு; புணர்ச்சி.

**உழுவலன்பு** – பல பிறப்புகளில் தொடர்ந்து வந்த அன்பு, எழுமையும் தொடர்ந்த அன்பு.

**உழுவளைப்பு** – தொகுப்பு; உழவின் சால்வளைவு.

**உழுவான்** – பிள்ளைப்பூச்சி.

**உழுவித்துண்போர்** – வேளாளருள் பிறரைக் கொண்டு பயிர் செய்வித்து வாழ்வோர்.

**உழுவை** – புலி; ஒரு மீன்வகை; நன்னீர் உளுவை மீன், குண்டலவுழுவை; தும்பிலி.

**உழை** – இடம்; பக்கம்; யாழின் ஒரு நரம்பு; மான்; பசு; பூவிதழ்; ஏழனுருபு; உவர்மண்; விடியற்காலம்; கதிரவன் மனைவியருள் ஒருத்தி; வாணாசுரன் மகள்; இடைச்சுரம்.

**உழை** (வி) – உழை என்னும் ஏவல், பாடுபடு.

**உழைக்கலம்** – பொன், வெள்ளி முதலியவற்றால் செய்த ஆளும் பாண்டங்கள்.

**உழைச்சுற்றாளன்** – பக்கத்தில் நின்று ஏவல் கேட்போன்.

**உழைச்செல்வான்** – நோயாளியின் பக்கத்தி லிருந்து மருந்து முதலியன கொடுப்போன்; மருத்துவனோடு உதவிக்குச் செல்பவன்.

**உழைத்தல்** – வருந்தல்; பாடுபடுதல்; ஈட்டுதல்; பேசலால் எழும் ஒலி.

**உழைத்துக்கொடுத்தல்** – பணி செய்து பொருள் ஈட்டிக் கடன் முதலியன தீர்த்தல்; பெற்றோர் முதலியோரைப் பேணுதல்; வீணாகப் பாடு படுதல்.

**உழைதல்** – துன்பமுறல்; இரைதல்.

**உழைப்பறித்தல்** – சேற்றில் உழலுதல்; வருந்தி முயலுதல்.

**உழைப்பாளி** – உழைப்பவர்; முயற்சியுள்ளவர்.

**உழைப்பு** – முயற்சி; வருந்திப் பாடுபடுகை; வருந்தியீட்டுகை; சம்பாத்தியம்.

**உழைமண்** – காண்க: **உழமண்.**

**உழையர்** – பக்கத்தார்; ஏவலாளர்; அமைச்சர், மந்திரிமார்; ஒற்றர்.

**உழையிருந்தான்** – உடனிருப்போன்; அமைச்சன்; நோயாளிக்கு உதவிபுரிபவன்.

**உழையோர்** – உழையர்; மந்திரிகளின் நட்பாளர்.

**உழைவு** – யாழின் உள்ளோசை.

**உள்** – உள்ளிடம்; உள்ளம்; மனம்; இடம்; மறை; மனவெழுச்சி; ஒரு குறிப்புவினைப் பகுதி; தொழிற்பெயர் விகுதி; ஏழாம் வேற்றுமை உருபு; உள்ளான் என்னும் பறவை.

**உள்குதல்** – உள்ளுதல், நினைத்தல்; உள்ளழிதல்; மடிதல்.

**உள்படுதல்** – மனமொப்பி நடத்தல்; அறிதல்; அடங்கியிருத்தல்.

**உள்பொருள்** – உள்ள பொருள், உலகத்தில் உளவாயிருக்கும் பொருள்.

**உள்மருந்து** – உள்ளுக்கு அருந்தும் மருந்து.

**உள்மனை** – ஊர்க் குடியிருப்பு மனை.

**உள்மானம்** – சிற்றெல்லை.

**உள்வட்டம்** – நாணயமாற்றில் பெறும் ஊதியம்.

**உள்வணக்கம்** – மனவணக்கம், மானதபூசை; அந்தரங்க வழிபாடு.

**உள்வயிரம்** – மரங்களின் உட்பக்கத்து வயிரம், அகக்காழ்; மனத்தில் நெடுங்காலமாக உள்ள சினம், உட்பகை, செற்றம்.

**உள்வரி** – வேற்று வடிவம், மாறுவேடம்; சிறிய அளவுள்ள வரி; சிற்றாயம்.

**உள்வலிப்பு** – ஒருவகை நோய்.

**உள்வழக்கு** – உள்ளதை உண்டு என்பது.

**உள்வழிகடந்தோன்** – கடவுள்.

**உள்வளைவு** – உட்கவிவு.

**உள்வாங்குதல்** – உள்ளே மீளுதல்; உள்ளுக்கு இழுத்தல்; தோற்றுவித்தல்.

**உள்வாசல்** – முற்றம்.

**உள்வாய்** – உட்பக்கம்; வாயின் உட்பகுதி; ஏரியின் உட்பக்கம்.

**உள்வாரம்** – மனவிருப்பம்; அந்தரங்கச் சார்பு; மேல்வாரம், விளைச்சலில் நிலமுடையானுக்கு வரும் பங்கு.

**உள்விழுதல்** – உள்ளாதல்; குறைதல்; சுருங்குதல்; அடங்குதல்; உள்ளே போதல்; காரியத்தின் பொருட்டு நட்புச்செய்தல்; உள்வீழ்தல்.

**உள்வீழ்தல்** – சுருங்குதல்; குறைதல்.

**உள்வெக்கை** – உள்ளே பற்றியுள்ள வெப்பம்.

**உள்வெட்டு** – உயர்ந்த மாற்றுப்பொன்; உரையாணியின் உள்வெட்டுக் குறி; மரத்தின் உட்பகுதிப் பலகை.

**உள்வெண்டயம்** – அரசர் ஏறும் குதிரைக்குக் காலில் அணியும் பித்தளை வளையம்; பொதி மாட்டின் முதுகில் வைக்கும் அணை.

**உள்வெதுப்பு** – காண்க: **உள்வெக்கை.**

**உள்ள** – உண்டாயிருக்கிற; உண்மையான.

**உள்ளக்கருத்து** – மனத்தினுள்ளம், உள்நோக்கம்; உள்ளத்தில் கருதும் எண்ணங்கள்.

**உள்ளக்களிப்பு** – மனமகிழ்ச்சி.

**உள்ளக்காட்சி** – மானதக் காட்சி, எண்ணத்திரையில் காணும் பொருள்கள்.

**உள்ளக்குறிப்பு** – காண்க: **உள்ளக்கருத்து.**

**உள்ளகம்** – நெஞ்சு, மனம்.

**உள்ளங்கால்** – உள்ளடி, காலடியின் கீழ்ப்பாகம்.

**உள்ளங்கை** – அகங்கை, கையின் நடுப்பகுதி.

**உள்ளங்கைநெல்லிக்கனி** – பொருள்தெளிவு.

**உள்ளடக்கம்** – எண்ணங்களை வெளிவிடாமை; உள்ளே மறைத்துவைத்த பொருள், உட்பொதி பொருள்.

**உள்ளடக்குதல்** – உட்படச்செய்தல்; மறைத்தல்.

**உள்ளடங்குதல்** – உட்பட்டிருத்தல்.

**உள்ளடி** – உள்ளங்கால்; அண்மை; கமுக்கம்; நெருங்கிய சுற்றம்.

**உள்ளடிக்குள்** – வீட்டில் உள்ளவர்களுக்குள்ளே.

**உள்ளடிநிலம்** – மதகடிநிலம்; ஏரியை அடுத்துள்ள நிலம்.

**உள்ளடை** – உள்ளீடாக இடப்படும் பொருள்.

**உள்ளது** – உள்பொருள்; உண்மை, மெய்; உண்மைப்பொருள்; ஆன்மா; ஏற்பட்டது, விதிக்கப்பட்டது.

**உள்ளந்தண்டு** – கழுத்தெலும்பு.

**உள்ளந்தாள்** – உள்ளங்கால்.

**உள்ளநாள்** – வாழ்நாள், ஆயுட்காலம்; ஓரிடத்தில் இருக்கும் காலம்.

**உள்ளநிகழ்ச்சி** – மனக்கருத்து.

**உள்ளநெறி** – சம்பவப் பிரமாணம், பொருளின் இயற்கைக் குணத்தைச் சுட்டிச் சொல்வதாகிய ஓர் அளவை.

**உள்ளநோய்** – மனநோய், மனக்கவலை.

**உள்ளப்புணர்ச்சி** – தலைவனும் தலைவியும் உள்ளத்தால் கூடும் கூட்டம், இருவருள்ளமும் ஒன்று படுகை.

**உள்ளபசுமை** – ஐயமற்ற உண்மை; மெய்வாழ்வு.

**உள்ளபடி** – உண்மையாக; தக்க அளவு, உண்டான அளவு.

**உள்ளபிள்ளை** – செல்வக்குழந்தை.

**உள்ளம்** – மனம்; உள்ளக்கருத்து; சொற்றொடரின் கருத்து, எண்ணம்; ஞானம்; அகச்சான்று; ஆன்மா; ஊக்கம்; முயற்சி; உல்லம்; உல்ல மீன்வகை.

**உள்ளமட்டும்** – இருக்கிறவரையில்.

**உள்ளமிகுதி** – ஊக்கம், மனவெழுச்சி.

**உள்ளமை** – உண்மை, உளதாயிருக்கும் தன்மை.

**உள்ளரங்கம்** – அந்தரங்கம், உள்ளிடம்.

**உள்ளல்** – உள்ளான் குருவி; உள்ளான் மீன்; உள்ளுதல், நினைத்தல், எண்ணுதல்; மகிழ்தல்; கருதல்; எண்ணியிரங்கல்.

**உள்ளலார்** – பகைவர்.

**உள்ளவன்** – உடையவன்; பொருளுடையவன், செல்வன்.

**உள்ளழிதல்** – மனம் அழிதல்.

**உள்ளளவும்** – காண்க: **உள்ளமட்டும்.**

**உள்ளறை** – உள்வீடு; பெட்டியின் உள்ளறை; அந்தரங்க அறை.

**உள்ளன்** – உள்ளேயிருப்பவன்; உற்ற நட்பினன்; போரடிக்கும் தலைமாடு.

**உள்ளாக்குதல்** – உட்படச்செய்தல், வசப்படுத்தல்.

**உள்ளாடுசத்துரு** – உற்றவன்போல நடிக்கும் பகைவன், உட்பகைஞன்.

**உள்ளாடுதல்** – உடன் கலந்து திரிதல்; உளவு அறிய உள்ளே பயிலல்.

**உள்ளாடை** – மகளிர் அணியும் உள்ளுடை.

**உள்ளாதல்** – உள்ளாகுதல், உட்படுதல், வசப்படுதல்; உடன்படுதல்.

**உள்ளாந்தரங்கம்** – மிகுந்த அந்தரங்கம்.

**உள்ளாயுதம்** – தடிக்குள் அடங்கிய கத்தி.

**உள்ளார்** – இருப்போர்; உடையவர்; பகைவர்; செல்வர்.

**உள்ளால்,** / **உள்ளாலை** – உட்பக்கம்.

**உள்ளாள்** – உள்ளாகப் பயிலும் ஆள், உளவறிவோர்.

**உள்ளாளம்,** / **உள்ளாளனம்** – இசைவகை, ஒற்றின் மாத்திரை தோன்ற உள்ளே இசைக்கும் ஆளத்தி; கூத்து வேறுபாடு.

**உள்ளான்** – உளவறிபவன்; ஒரு பறவைவகை; உற்றவன்; போரடிக்குந் தலைமாடு.

**உள்ளி** – வெள்ளைப்பூண்டு; வெங்காயம்.

**உள்ளிட்டார்** – கூட்டாளிகள்; தொகைக்கு உட்பட்டவர்; முதலானவர்.

**உள்ளிடுதல்** – உட்படுதல், உள்ளடக்குதல்; தொகைக்கு உட்படுதல்.

**உள்ளிடை** – உள்ளிடம்; உட்கருத்து, மறை.

**உள்ளிடையானவன்** – இனத்தான்.

**உள்ளித்திரி,** / **உள்ளிப்பல்** – உள்ளிப்பூண்டின் உள்ளிருக்கும் பகுதி, உள்ளிப்பரல்.

**உள்ளிப்பூண்டு** – பூண்டுவகை, வெள்ளைப் பூண்டு; வெங்காயம்.

**உள்ளிருப்பு** – வைத்திருக்கும் செல்வம், வைப்பு நிதி, சேமிப்பு நிதி.

**உள்ளிவிழா** – பண்டைக்காலத்திலே கருவூரில் நிகழ்ந்த திருவிழா.

**உள்ளீடு** – உள்ளிருக்கும் சத்துப்பொருள்; உள்ளே இடப்பட்டது; உட்கருத்து; உறுதியான உட்பக்கம்; அறிவு; உடன்படிக்கை; கமுக்கம்; உள்ளே இடுவது.

**உள்ளு** – உள்ளான் பறவை.

**உள்ளுக்குக்கொடுத்தல்** – உண்ணும்படி மருந்து கொடுத்தல்.

**உள்ளுக்குள்ளே** – உள்ளே, மனத்துக்குள்.

**உள்ளுச்செல்லுதல்** – நினைவோடுதல்.

**உள்ளுடன்** – உள்ளே கிடப்பது; பணியாரத்தின் உள்ளீடு.

**உள்ளுடை** – மேலே அணியும் ஆடைக்கு உள்ளாகக் கட்டும் உடை; உள்வேட்டி; கோவணம்.

**உள்ளுடைதல்** – மனம் முரிதல்; முழுதும்சிதைதல்.

**உள்ளுதல்** – நினைதல்; ஆராய்தல்; நன்கு மதித்தல்; மீண்டும் நினைத்தல்; இடைவிடாது நினைத்தல்.

**உள்ளுயிர்** – உள்ளே கலந்திருக்கும் ஆன்மா ஆகிய கடவுள்.

**உள்ளுயிர்க்குன்று** – நத்தை.

**உள்ளுருக்கி** – கணைநோய்.

**உள்ளுருகுதல்** – மனங்கரைதல்.

**உள்ளுளவு** – உடந்தை.

**உள்ளுறுத்தல்** – உட்செலுத்துதல்; உட்கருதுதல்; உள்ளிடுதல், உட்புகுத்தல்; நினைக்கச் செய்தல்.

**உள்ளுறுதல்** – உட்படுதல், உள்ளாதல்.

**உள்ளுறை** – உட்பொருள்; உட்கருத்து, உள்ளெண்ணம்; உள்ளிருக்கும் பொருள்; மறைபொருள்; உள்ளுறையுவமம்; பொருளடக்கம்.

**உள்ளுறையுவமம்** – வெளிப்படையல்லாத உவமம், வெளிப்படையாகக் கூறாமல் குறிப்பாகக் கருப்பொருண்மேல் ஏற்றிக் கூறும் உவமம்.

**உள்ளூர்** – ஊர்நடு; சொந்த ஊர்.

**உள்ளூர்ச்சரக்கு** – சொந்த ஊரில் விளையும் பொருள்.

**உள்ளெரிச்சல்** – பொறாமை.

**உள்ளேபோடுதல்** – தன்வசப்படுத்தல்.

**உள்ளொடுக்கம்** – தன்னடக்கம்.

**உள்ளொற்றுதல்** – உள்நிகழ்வை உய்த்துணர்தல்.

**உள்ளோசை** – உள்ளொலி, அகவொலி; நுணுக்கம்; மெல்லோசை.

**உளகு** – யாழின் ஓர் உறுப்பு, யாழின் தண்டு; ஊர் ஒழுகு; ஊர்நிலத்தின் கணக்கு வழக்கு.

**உளங்கு** – உளகு; ஊர்நிலத்தின் கணக்கு வழக்கு.

**உளதாதல்** – உண்டாதல், தோன்றியிருத்தல்; இருத்தல்.

**உளது** – இருப்பது, உண்மை.

**உளப்படுத்துதல்** – உட்படுத்துதல்; மனங் கொள்ளுதல்.

**உளப்படுதல்** – உள்ளடங்குதல்; உட்படுத்தல்; உரியதாதல்; உடன்படல், ஒப்புக்கொள்ளுதல்.

**உளப்பாட்டுத்தன்மை** – முன்னிலையாரையும் படர்க்கையாரையும் தனித்தேனும் சேர்த்தேனும் தன்னுடன் கூட்டியுரைக்கும் தன்மையிடம்.

**உளப்பாட்டுமுன்னிலை** – படர்க்கையாரை உடன் கூட்டுரைக்கும் முன்னிலை.

**உளப்பாடு** – உட்படுகை; உட்படுத்துகை; எண்ணம்; உளம் படும் பாடு, மனத்துன்பம்; உண்மைநிலை; சம்மதம், உடன்படுகை.

**உளப்பு** – நடுக்கம்.

**உளம்** – மனம்; மார்பு; உட்பக்கம்; ஆதன், ஆன்மா.

**உளம்புதல்** – அலைத்தல்; ஓலமிடுதல்.

**உளமை** – உண்மை.

**உளர்** – உடந்தை; உடையவர்; வாழ்கின்றோர்.

**உளர்தல்** – கிண்டுதல்; கோதுதல்; மயிர்கோதல்; அசைத்தல்; சிதறுதல்; சிந்துதல்; தடவுதல்; யாழ் முதலியன மீட்டுதல்; கலக்குதல்; பூசுதல்; காலந்தாழ்த்தல்; சுழலுதல்; பரப்புதல்; உறுதியற்றாடுதல்.

**உளர்ப்பு** – உதிர்ப்பு; அலைக்கை.

**உளர்வு** – அசைகை; யாழ் மீட்டுகை; சுழலுகை.

**உளவன்** – உளவு அறிபவன், துப்பாள்.

**உளவாடம்** – முன்பணம், அச்சாரம்.

**உளவு** – கமுக்கம், இரகசியச் செய்தி; உட்செயல்; வேவு; ஒற்றன்; உபாயம்; உள்ள தன்மை.

**உளவுகாரன்** – உளவன்.

**உளறல்** – பேச்சு, குளறுபடியான பேச்சு; தடுமாறிப் பேசுதல்; பேரொலி.

**உளறுதல்** – உளறல், தடுமாறிப் பேசுதல்; ஆரவாரித்தல்; பிதற்றல், குழறுபடையான மொழி; கனாக்கண்டு பிதற்றுதல்.

**உளறுபடி** – குழறுகை; கலக்கம்; பேச்சிலுண்டான குழப்பம்.

**உளறுபடை** – உளறப்பட்டது; பேச்சிற்குழறுகை.

**உளறுவாயன்** – விடாது பேசுவோன்; பிதற்றுவோன்.

**உளி** – தச்சுக் கருவிகளுள் ஒன்று; நகஞ்சீவி; கணிச்சி; சித்திரிக்குங் கருவி; இடம்; ஓரிடைச் சொல்; ஏழாம் வேற்றுமையுருபு; ஒரு பகுதிப் பொருள் விகுதி.

**உளிக்குத்து** – கை முட்டியால் குத்தும் குத்து.

**உளித்தலைக்கோல்** – இருப்புப்பாரை.

**உளியம்** – கரடி.

**உளிவைத்தல்** – மரத்தை உளிவைத்துப் பிளத்தல்.

**உளு** – மரத்தை அரிக்கும் புழுவகை; உளுத்தது.

**உளுக்கு** – சுளுக்கு.

**உளுக்குதல்** – சுளுக்குதல்; மெருகிடுதல்; நெளிதல்.

**உளுத்தல்** – மரம் முதலியன புழுவால் அரிக்கப்பட்டுக் கெடுதல்; சிதைந்துபோதல்.

**உளுந்து** – காண்க: **உழுந்து**.

**உளுப்புத்தாவுதல்** – உளுக்கத்தொடங்குதல்.

**உளுவை** – ஒரு மீன்வகை; ஆற்று மீன்வகை; கடல் மீன்வகை.

**உளை** – குதிரை, சிங்கம் முதலியவற்றின் பிடரிமயிர்; குதிரைத் தலையாட்டம் என்னும் அணி; தலை; ஆண் மயிர்; சேறு; பேசலால் எழும் ஒலி; அழுகை; எடுத்தலோசை.

**உளை (வி)** – உளைஎன் ஏவல்; அழுகை.

**உளைக்கால்** – மயிர்க்கால்.

**உளைத்தல்** – வருத்துதல்; வெறுத்தல்; அழைத்தல்; ஊளையிடுதல்.

**உளைதல்** – மனம் வருந்தல்; வயிறு உளைதல்; குடைச்சல் நோவடைதல்; பிரசவ வேதனைப்படுதல்; சிதறிப்போதல்; அழிதல்; தோற்றல்; ஊளையிடுதல்.

**உளைந்து பேசுதல்** – மனம்நொந்து பேசுதல்.

**உளைப்பு** – வயிற்றுவலி; உடம்புக் குடைச்சல்; வருத்தம்; அழைப்பு; ஒலிப்பு.

**உளைமயிர்** – பிடரிமயிர்.

**உளைமாந்தை** – கடுநோய்; உட்புண்.

**உளைவு** – வருத்தம்; வலிப்பு; வயிற்றுளைவு; குடைவு, குடைச்சல் நோவு.

**உளைவெடுத்தல்** – நோவுண்டாதல்.

**உற்கட்டிதம்** – ஓர் இருக்கைவகை.

**உற்கடம்** – செருக்கு; கடுமை; மதயானை; நன்னாரி; இலவங்கம்.

**உற்கடிதம்** – ஐவகைத் தாளத்துள் ஒன்று; ஐவகை நிருத்த பாதங்களுள் ஒன்று.

**உற்கம்** – கடைக்கொள்ளி; தீத்திரள்; விண்வீழ் கொள்ளி; ஊழித் தீ.

**உற்கரி (வி)** – சினத்தோடு பேசு.

**உற்கரிகை** – பாலும் நெய்யும் சேர்த்துச் செய்யப்பட்ட ஒருவகைப் பலகாரம்.

**உற்கரித்தல்** – சினத்து ஆர்த்தல், சினத்தோடு பேசுதல்.

**உற்காதா** – சாமவேத கீதம் பாடுபவன்; வேள்வி செய்யும் ஆசிரியருள் ஒருவன்.

**உற்காரம்** – கக்குதல்; ஏப்பமிடுதல்; அதிர்ச்சி; தூற்றுந் தவசம்.

**உற்கிருட்டம்** – மேன்மை; மிகுதி.

**உற்கிருதி** – வடமொழிச் சந்தவகை, அடி ஒன்றுக்கு இருபத்தாறு அசைகளைக் கொண்ட நான்கு அடிகளையுடையது.

**உற்குரோசம்** – நீர்வாழ் பறவை; சத்தம்.

**உற்கை** – கடைக்கொள்ளி; விண்வீழ்கொள்ளி; விண்மீன்.

**உற்சங்கம்** – இணைக்கைவகை; உற்சங்கக் கை.

**உற்சர்ப்பிணி** – வாழ்நாள்; போகம் முதலியன பெருகுங் காலம்.

**உற்சவம்** – திருவிழா; விருப்பம், ஆசைப் பெருக்கம்; கொண்டாட்டம்; திருமணம்.

**உற்சவமூர்த்தி, உற்சவர்** – திருவிழாவில் எழுந்தருளப் பண்ணும் தெய்வத்திருமேனி.

**உற்சாகப்பிழை** – ஊக்கமின்மை.

**உற்சாகபங்கம்** – ஊக்கக்கேடு.

**உற்சாகம்** – முயற்சி, ஊக்கம்; மகிழ்ச்சி, மனப் பூரிப்பு.

**உற்சாகமருந்து** – களிப்புண்டாக்கும் மருந்து.

**உற்பத்தி** – பிறப்பு; கருவுண்டாகுகை; தோற்றம்.

**உற்பலசாசனன், உற்பலசானன்** – பெருங்காயம்.

**உற்பலம்** – கருங்குவளைப்பூ; கருநெய்தல்; செங்குவளை, செங்கழுநீர்ப்பூ.

**உற்பலவரை** – திருத்தணிகை மலை.

**உற்பவம்** – காண்க: **உற்பத்தி.**

**உற்பவித்தல்** – தோன்றுதல், உற்பத்தியாதல்; பிறப்பித்தல்.

**உற்பன்னம், உற்பனம்** – தோன்றியது; தோற்றம்; பிறப்பு; உண்மை; உயர்வு; கல்வி; நிமித்தம்.

**உற்பாதபிண்டம்** – கருவில் திருவுடையார், மேதாவி.

**உற்பாதம்** – கொடுமை; தீ நிமித்தம், பின்வரும் தீமைகளை முன் அறிவிக்குங் குறி: விண்வீழ் கொள்ளி, நிலநடுக்கம் முதலியன; நுண்ணறிவு.

**உற்பிச்சம்** – நால்வகைத் தோற்றத்துள் ஒன்று, வித்து வேர் முதலியவற்றினின்றும் தோன்றுவன.

**உற்பிரேட்சை** – தற்குறிப்பேற்ற அணி.

**உற்பீசம்** – காண்க: **உற்பிச்சம்.**

**உற்றது** – நேர்ந்தது, நிகழ்ந்த செயல்; உண்மை; இடுக்கண்.

**உற்றதுரைத்தல்** – எண்வகை விடைகளுள் ஒன்று, தனக்கு நேர்ந்துள்ளதைக் கூறும்முகத்தால் மறுப்பதைத் தெரிவிக்கும் விடை.

**உற்றபடி** – நிகழ்ந்தவாறு.

**உற்றவன்** – சுற்றத்தான்; நண்பன்; நோயாளி.

**உற்றவிடம்** – கேடுகாலம்; நட்பான இடம்.

**உற்றளவு** – சரியளவு; உள்ளளவு; உண்மைச் செய்தி.

**உற்றறிதல்** – தொட்டறிதல், பயின்றறிதல்.

**உற்றறிவு** – தொட்டுப்பார்த்து அறிகை, தொடுவுணர்ச்சி.

**உற்றாண்மை** – நெருங்கிய உரிமை.

**உற்றாண்மை பேசுதல்** – பரிந்து பேசுதல்.

**உற்றார்** – உறவினர், சுற்றத்தார்; நண்பர்.

**உற்றான்** – கணவன்.

**உற்றிடம்** – உற்ற சமயம்; துன்பம்நேர்ந்த காலம்; அடைக்கலம்.

**உற்றுக்கேட்டல்** – கூர்ந்து கேட்டல், கருத்துடன் கேட்டல்.

**உற்றுநோக்குதல், உற்றுப்பார்த்தல்** – குறித்து நோக்குதல், கவனமாய்க் காணுதல்.

**உற்றுழி** – துன்பம் நேர்ந்த காலம்; துன்புற்ற இடம்.

**உற்றோர்** – காண்க: **உற்றார்.**

**உற** – கிட்ட; ஓர் உவமவுருபு.

**உறக்கம்** – தூக்கம்; ஒடுக்கம்; இறப்பு; சோர்வு.

**உறக்கு** – உறக்கம்.

**உறக்குதல்** – தூங்கச் செய்தல்; இமையை மூடச் செய்தல்; நாசப்படுத்துதல்; கிள்ளுதல்; விரலால் பிதுக்கியெடுத்தல்.

**உறகுதல்** – உறங்குதல்.

**உறங்காவில்லி** – தூக்கமின்றி விற்பிடித்துக் காப்போன், இலக்குமணன்.

**உறங்குதல்** – தூங்குதல்; ஒடுங்குதல்; சோர்தல்; தங்குதல்; மயக்கமுறுதல்.

**உறட்டலன்** – வறண்டவன், உடல் மெலிந்தவன்.

**உறட்டு** – கரட்டுநிலம்.

**உறட்டுதல்** – வறட்டுதல்.

**உறட்டை** – தீ நாற்றம்.

**உறட்டையடித்தல்** – தீ நாற்றம் வீசுதல்.

**உறண்டுதல்** – வறளுதல்.

**உறண்டை** – முரட்டுத்தனம்; தொந்தரவு செய்கை; கெட்ட நாற்றம்.

**உறத்தல்** – கிள்ளியெடுத்தல்; பிளத்தல்; அழுத்துதல்; உறிஞ்சுதல்; சிறிதாதல்; செறிதல்; ஒட்டக் கறத்தல்; முற்றுங்கவர்தல்.

**உறந்தை** – உறையூர்.

**உறப்பு** – செறிவு.

**உறமுறையார்** – காண்க: **உறவின் முறையார்.**

**உறல்** – அடைகை; உறவு; பரிசம் உறுதல்; பொருந்தல்; கிட்டல்; வருதல்; அடைதல்; அணைதல்.

**உறவன்** – உறவுடையவன்.

**உறவாக்குதல்** – உறவினனாகச் செய்தல்; சமாதானப்படுத்துதல்.

**உறவாடுதல்** – உறவு கொண்டாடுதல்; நட்புச் செய்தல்.

**உறவாளி** – உறவாகக் கொண்டவன், உறவினன்.

**உறவி** – எறும்பு; உறவு; உயிர்; உலைக்களம்; நீர் ஊற்று; கிணறு; மலைமுருங்கை.

**உறவின்முறையார்** – உறவினர், சுற்றத்தார்.

**உறவு** – உறுகை; பொருத்தம்; சேர்க்கை; சம்பந்தம்; சுற்றம்; நட்பு; ஒற்றுமை; விருப்பம்.

**உறவுகலத்தல்** – புதிய உறவு உண்டாதல்; உறவு பாராட்டுதல்; இனத்தாருடன் சேர்ந்திருத்தல்.

**உறவுமுரிதல்** – நட்புக் கெடுதல்.

**உறவுமுறை** – ஒருவர்க்கொருவர் உள்ள தொடர்பு.

**உறழ்கலி** – கலிப்பாவகை.

**உறழ்குறித்தல்** – வாது செய்யக் கருதல்.

**உறழ்ச்சி** – உறழ்வு, மாறுபாடு, திரிதல்; பெருக்கல்.

**உறழ்தல்** – ஒத்தல்; மாறுபாடு; விகற்பித்தல்; செறிதல்; பெருக்குதல்; மிகுதல்; திரிதல்; இடையிடுதல்; உவமித்தல்; வீணையில் ஒரு நரம்பை விட்டு ஒரு நரம்பைத் தெறித்தல்; எண் கூட்டிப் பெருக்கல்; எதிராதல்.

**உறழ்ப்பு** – காந்தார பஞ்சமம்; நெருக்கம்.

**உறழ்பொரு** – உவமையினும்பொருளை மிகுத்துக் கூறும் ஒப்புமைவகை.

**உறழ்பொருள்** – ஒப்பு மாறுபடக் கூறுவது; ஒப்புமை கூறாது மாறுபடக் கூறப்படும் பொருள்.

**உறழ்வு** – உறழ்ச்சி; மாறுபாடு, பகை; போர்; இடையீடு; ஒப்பு; செறிவு; காலம்; எண் பெருக்குகை; உணர்வு.

**உறழ** – ஓர் உவமவுருபு.

**உறன்முறை** – உறவுமுறை, உறவுமுறைத் தன்மை.

**உறாதவன்** – நொதுமலன், பகையும் நட்பும் இல்லாதவன்.

**உறாமை** – பொருந்தாமை; விருப்பு வெறுப் பின்மை; தகாத செய்கை.

**உறார்** – பகைவர்.

**உறாவரை** – முற்றூட்டு; பிறர் உள்ளே வாராத எல்லையை உடைய நிலம்.

**உறாவுதல்** – சோர்தல்; வருத்தம்.

**உறி** – பண்டங்களை வைக்கத் தொங்கவிடும் கயிறு; தூக்கு.

**உறிக்கா** – இரு பக்கமும் உறி தொங்கிய காவடி.

**உறிச்சமணர்** – சமணமுனிவருள் ஒரு சாரார்.

**உறிஞ்சுதல்** – வாய்க்குள் இழுத்தல்; மூக்கால் உறிஞ்சுதல்; உள்ளிழுத்தல், உள்ளே வாங்கல்.

**உறிதல்** – உறிஞ்சுதல், உள்ளே வாங்கல்.

**உறியடி** – கண்ணன் பிள்ளைப் பருவத்தில் உறி வெண்ணெய் எடுத்ததைக் கொண்டாடுந் திருநாள்.

**உறு** – மிகுதி; மிக்க; பகை; போர்.

**உறுக்காட்டம், உறுக்காட்டியம்** – உறுக்குதல், அதட்டுதல்; உறுக்கிப் பேசும் முறை; அதிகாரம் செலுத்துகை.

**உறுக்கு** – அதட்டுகை, அதட்டு.

**உறுக்குதல்** – அதட்டுதல்; சினத்தல்; ஒறுத்தல்; தாண்டுதல்.

**உறுகண்** – துன்பம்; நோய்; வறுமை; அச்சம்.

**உறுகணாளன்** – வறிஞன்; தீவினையாளன்.

**உறுகோள்** – நிகழ்ச்சி, சம்பவம்; பற்றுக்கோடு.

**உறுசுவை** – சாராலங்காரம், பல இன்கவிகளின் பிழிவாய் ஒரு பொருளை உயர்த்திக் கூறல்.

**உறுத்தல்** – உறுத்துதல்; மிகுக்கை; ஒற்றுகை.

**உறுத்தருதல்** – நெருக்குதல்.

**உறுத்துதல்** – உண்டாக்குதல்; அமைத்தல்; அடைவித்தல்; ஒற்றுதல்; பதித்தல்; நாட்டுதல்; அழுத்துதல்; வருத்துதல்; மிகுத்தல்; விரித்தல்; செலுத்துதல்; பொருத்துதல்; சேர்த்தல்; சீறுதல்.

**உறுத்தை** – அணில்.

**உறுதல்** – உண்டாதல்; மிகுதல்; சேர்தல்; இருத்தல்; பொருந்தல்; கூடல்; நேர்தல்; பயனுறல்; கிடைத்தல்; வருந்தல்; தங்கல்; அடைதல்; நன்மையாதல்; உறுதியாதல்; நிகழ்தல்.

**உறுதி** – திடம்; திரம்; வலிமை; நன்மை; இலாபம்; கல்வி; மேன்மை; சன்மார்க்க உபதேசம்; உறுதி; தளராமை; ஆட்சிப் பத்திரம்; பிடிவாதம்; விடாப்பிடி; பற்றுக் கோடு; நல்லறிவு; வழக்கின் திடம்; பயன்.

**உறுதிக்கட்டுரை** – கழறல், இடித்துக் கூறுகை.

**உறுதிச்சீட்டு** – உறுதிப்படுத்தி எழுதித் தரும் ஆவணம்.

**உறுதிச்சுற்றம்** – உற்ற துணைவர்.

**உறுதிச்சொல்** – உறுதிமொழி; நல்லுபதேசம்; கண்டிப்பு, இடித்துரை.

**உறுதிப்படுதல்** – நிலைப்படுதல்; பலப்படுதல்; சாதன முடித்தல்.

**உறுதிப்பத்திரம்** – எழுத்துறுதி, உறுதிச்சீட்டு; நம்பிக்கைப் பத்திரம்.

**உறுதிப்பாடு** – திடம், வல்லமை; வாக்குறுதி.

**உறுதிப்பொருள்** – கடவுள்; அறிவு; உண்மைப் பொருள்; நன்மை பயக்கும் பொருள்.

**உறுதிமொழி** – உறுதிச்சொல்; பிரமாணமாகச் சொல்லும் வார்த்தை.

**உறுதியோர்** – தூதர்.

**உறுதுணை** – உற்ற துணை; பெருந்துணை; நம்பிக்கையான துணை.

**உறுநன்** – சேர்ந்தவன்.

**உறுப்படக்கி** – ஐந்துறுப்புகளையும் அடக்குகின்ற ஆமை.

**உறுப்பணங்கெட்டவன்** – உறுப்புக் குறையுடையவன்; மூடன்.

**உறுப்பறை** – உறுப்புக் குறைந்தவன்; உறுப்புக் குறைவு.

**உறுப்பா** – கப்பல் கட்டுதற்குப் பயன்படும் மரவகை.

**உறுப்பில்பிண்டம்** – உறுப்புக்குறை எட்டனுள் ஒன்று, உறுப்பற்ற தசைத்திரள், கருவில் வடிவுறுமுன் சிதைந்த பிண்டம்.

**உறுப்பு** – சினை, அவயவம்; உடல்; நெருக்கம்; பங்கு; மிகுதி; மரக்கொம்பு; மேல்வரிச் சட்டம்; காணியாட்சிப் பத்திரம்; பாலை யாழ்த்திறம்; உடல் அழகு.

**உறுப்புத்தோல்** – பூணூலிற் கட்டிய மான்தோல்.

**உறுப்புள்ளவன்** – உடல் அழகுள்ளவன்; ஒழுக்கமுள்ளவன்; திறமையுடையவன்.

**உறுபு** – பாலை யாழ்த்திறம்; செறிவு; மிகுதி.

**உறுபூசல்** – கை கலந்த போர்.

**உறுபொருள்** – தானே வந்தடையும் பொருள், உடையார் இல்லாமையால் ஒருவனுக்குக் கிடைக்கும் பொருள், வைத்தார் இறந்துபோக நெடுங்காலம் மறைந்து கிடந்ததும் தாயத்தார் பெறாததுமாகிய பொருள்.

**உறும்பு** – உலர்ந்த கரம்பை; மண்ணின் கூரிய சிறு கட்டி.

**உறும்புதல்** – உறுமுதல்.

**உறுமால், உறுமாலை** – உருமால், தலைச்சாத்து, தலைச்சீலை, தலைப்பாகை; மேல் வேட்டி.

**உறுமி** – ஒருவகைத் தோற்கருவி, பறை.

**உறுமுதல்** – உறுமென்று ஒலித்தல்; முறுமுறுத்தல்; குமுறுதல்; சினத்தல்; இரைதல்; முழங்குதல்; எழும்புதல்.

**உறுவது** – வரற்பாலது; இலாபம்; ஒப்பது; தருவது.

**உறுவதுகூறல்** – எண்வகை விடையுள் ஒன்று, ஒன்றைச் செய்வாயா என்று வினாவியவனிடத்து நேர்வது கூறுமுகத்தால் மறுப்பதைத் தெரிவிக்கும் விடை.

**உறுவதுதெரிதல்** – பின்வருவன அறிதல் என்னும் வணிகர் குணம்.

**உறுவரர்** – தேவர்.

**உறுவல்** – உறுவேன் என்னும் பொருள்படும் ஒரு தன்மை வினைமுற்று; துன்பம்.

**உறுவலி** – மிக்க வலிமை; மிக்க வலிமையுடையவன்.

**உறுவன்** – அடைந்தோன்; மிக்கோன்; எதிர்த்து நிற்போன்; பெரியோன்; முனிவன்; அருகன்; ‘உறுவேன்’ என்னும் பொருள்படும் ஒரு தன்மை வினைமுற்று.

**உறுவித்தல்** – பொருத்துதல்; நுகர்தல்.

**உறை** – பெருமை; நீளம்; உயரம்; பொருள்; மருந்து; உணவு; வெண்கலம்; பெய்யுறை; ஆயுதவுறை; நீர்த்துளி; மழை; காரம்; போர்வை; உறுப்பு; இருப்பிடம்; பாலிடு பிரை; ஓர் இலக்கக் குறிப்பு; வாழ்நாள்; துன்பம்; கிணற்றின் அடியில் வைக்கும் மர வளையம்; பொன்; பாம்பின் நச்சுப்பை.

**உறைக்கப் பார்த்தல்** – உற்றுநோக்குதல்.

**உறைக்கிணறு** – சுடுமண் உறையிட்ட கிணறு.

**உறைகாலம்** – மழைக்காலம்; வாழ்நாள்.

**உறைகுத்துதல்** – பாலுக்குப் பிரைமோர் இடுதல்.

**உறைகோடுதல்** – பருவமழை பெய்யாது ஒழிதல், பெய்யவேண்டும் காலத்து மழை பெய்யாமை.

**உறைச்சாலை** – மருந்தகம், மருந்துச் சாலை.

**உறைத்தல்** – துளித்தல்; பெய்தல்; உதிர்தல்; நீர் சொரிதல்; உறுதியடைதல்; தாக்கிப் பயன் விளைத்தல்; மோதுதல்; மிகுதல்; அதட்டுதல்; அமுக்குதல்; ஒத்தல்; காரமாயிருத்தல்; உறுத்தல்; எரிதல்; அழுந்தல்.

**உறைதல்** – தோய்தல்; தங்குதல்; வாழ்தல்; ஒழுகுதல்; இறுகுதல்; செறிதல்; உறுதியாதல்.

**உறைநாழி** – வெட்டியான் மானியம்.

**உறைப்பன்** – வலியன், திண்ணியன்.

**உறைப்பு** – காரம்; எரிவு; சுவைக் கூர்மை; அழுத்தம்; வாய்ப்பு; கொடுமை; வேதனை; மழைபெய்தல்; தாக்குதல்; மிகுதி; பதிவு; உறுதி.

**உறைபதி** – உறைவிடம், இருப்பிடம்.

**உறைபோதல்** – உறையிட முடியாதொழிதல்; எண்ண முடியாது போதல்.

**உறைமோர்** – பாலில் இடும் பிரைமோர்.

**உறையல்** – பிணக்கு, மாறுபாடு.

**உறையுள்** – உறைகை; தங்குமிடம்; வீடு; நாடு; துயிலிடம்; மக்கட்படுக்கை; ஊழி; உறைகாலம், ஆயுள், வாழ்நாள்.

**உறைவி** – உறைபவள்.

**உறைவிடம்** – இருப்பிடம், வாழுமிடம்; பொருள்கள் இருக்கும் இடம், களஞ்சியம்.

**உறைவு** – தங்குகை; சிறு குகை; உறைதல்; இருப்பிடம்.

**உன்மணி** – உயர்ந்த மணி.

**உன்மத்தகம்** – ஊமத்தை.

**உன்மத்தகி** – குறிஞ்சாக்கொடி.
**உன்மத்தம்** – மயக்கம்; வெறி, பைத்தியம்; காமன் கணைகளுள் ஒன்றன் செயல்; ஊமத்தை.
**உன்மத்தன்** – பித்தன், வெறியன்; மயக்க முடையோன்.
**உன்மத்தை** – காண்க: ஊமத்தை.
**உன்மதம்** – மதிமயக்கம்; மிக்க காமம்.
**உன்மனி, உன்மனை** – உடலிலே உள்ள ஒரு யோகத் தானம்.
**உன்மாதம்** – மயக்கம்; வெறி.
**உன்மானம்** – நிறுக்கை; பொருள்களை நிறுத்துப் பார்த்து அளவிடல்.
**உன்முகம்** – முன்னோக்குதல்; மேல்நோக்கிய முகம், மேல்நோக்கம்; அண்ணாந்து பார்க்கை; ஒன்றிற் கருத்தாயிருக்கை; அனுகூலமாய் இருத்தல்.
**உன்முகன், உன்முகி** – கருத்தாயிருப்பவன்.
**உன்மேதை** – கொழுப்பு; புலால்.
**உன்மை** – தசை பிடுங்குங் குறடு.
**உன்னதம்** – உயர்ச்சி; மேன்மை.
**உன்னநிலை** – போர்க்குமுன் உன்னமரத்தால் நிமித்தம் அறியும் புறத்துறை.
**உன்னம்** – நினைவு, கருத்து; தியானம்; மனம்; நிமித்தம் குறிக்கும் ஒரு மரம்; அன்னம்; நீர்வாழ் பறவை; தசை பிடுங்குங் குறடு; அபிநயக்கைவகை.
**உன்னயம்** – உயர்த்துகை; உயர்வு; குதிரை சாத்திர நூல்களுள் ஒன்று.
**உன்னல்** – நினைத்தல்; ஆராய்வாக நினைத்தல்; சிந்தித்தல்; விரைந்தெழும்புதல்; மனம்.
**உன்னலர்** – பகைவர்.
**உன்னாயங்கொடி** – ஒரு கொடிவகை.
**உன்னி** – குதிரை; அழிஞ்சில்; செடிவகை; தியானத்திற்குரிய பொருள்.
**உன்னித்தல்** – உயர்தல்; தியானித்தல்.
**உன்னிப்பு** – கவனிப்பு; ஊகிப்பு; அறிவுக்கூர்மை; குறிப்பு; உயரம்; முயற்சி; மதிப்பு.
**உன்னியம்** – ஒற்றுமை; உரிமை, சொந்தம்.
**உன்னியர்** – சுற்றத்தார், உறவினர்.
**உன்னு** – விரைந்தெழும்புகை; இழுக்கை.
**உன்னுதல்** – நினைத்தல்; பேச வாயெடுத்தல்; எழும்புதல்; முன்னங்கால் விரலையூன்றி நிமிர்தல்.
**உனகன்** – இழிந்தவன்.
**உனினம்** – சிறுபூளை.

## ஊ

**ஊ** – ஆறாம் உயிரெழுத்து; நெட்டுயிரெழுத்துள் ஒன்று; வினையெச்ச விகுதியுள் ஒன்று; ஒரொலிக்குறிப்பு; 'கைக்கிளை' என்னும் இசையின் எழுத்து; ஊன், இறைச்சி; உணவு.
**ஊக்கப்பாடு** – ஊக்கங்கொள்கை.
**ஊக்கம்** – உள்ளக் கிளர்ச்சி, மனவெழுச்சி; உள்ளத்தின் மிகுதி; முயற்சி; வலிமை; உயர்ச்சி; மேற்கொண்ட எண்ணம்; உண்மை.
**ஊக்கல்** – முயலுகை; மிகுதி.
**ஊக்கலர்** – முயற்சியுடையவர்.
**ஊக்கு** – ஊக்கம், முயற்சி; கொக்கி.
**ஊக்கு (வி)** – முயல்; எழுப்பு; ஏறு.
**ஊக்குணா** – நிலப்பனை.
**ஊக்குதல்** – ஆட்டுதல்; நெகிழ்த்துதல்; தப்புதல்; ஆர்வமூட்டுதல்; முயலுதல்; கற்பித்தல்; நினைத்தல்; ஏறுதல்; நோக்குதல்.
**ஊகடன்** – முருங்கைமரம்; முருங்கை; காட்டு முருங்கை.
**ஊகத்தாதனம்** – யோகாசனவகை.
**ஊகம்** – எண்ணி அறிதல்; ஆராய்ச்சி; நினைவு; தியானம்; படைவகுப்பு; குரங்கு; கருங்குரங்கு; புலி; ஒரு புல்வகை; ஊமத்தை; நீதி.
**ஊகனம்** – நியாயஞ் சொல்லுகை; காரணங் காட்டுகை; ஊகம்; துணிபு.
**ஊகனி** – துடைப்பம்.
**ஊகாஞ்சிதம்** – தற்குறிப்பேற்றவணி, ஒரு பொருளிடத்து இயல்பாக நிகழும் தன்மையை ஒழித்துக் கவிஞன் அதற்கு வேறோர் ஏதுவைக் கற்பித்து உரைத்தல்.
**ஊகாமுள்** – ஊகம் புல்லின் முள்.
**ஊகாரம்** – 'ஊ' என்னும் எழுத்து.
**ஊகி** – ஊகிப்பவன்(ள்); நுண்ணறிவுடையவன்(ள்).
**ஊகி (வி)** – நினை, எண்ணு, உத்தேசி.
**ஊகித்தல்** – உத்தேசித்தல்; தருக்கித்து ஆராய்தல்; ஆலோசித்தல்; ஆராய்ந்தறிதல்.
**ஊகை** – ஊகம், யூகை; கல்வி.
**ஊங்கண்** – உவ்விடத்து, முன்பு.
**ஊங்கணோர்** – முன்னுள்ளோர்.
**ஊங்கு** – சிறந்தது; மிகுதி; முன்; உவ்விடம்; விசேடம்.
**ஊங்குதல்** – ஆடுதல்.
**ஊச்சில்** – தசைநோய்.
**ஊச்சு** – அச்சம்.

**ஊச்சுதல்** – உறிஞ்சுதல்.

**ஊசரம்** – உவர்நிலம்; உவர்மண்.

**ஊசல்** – அசைவு; ஊஞ்சல்; மனத்தடுமாற்றம்; பதனழிதல்; ஒரு சிற்றிலக்கிய வகை; ஊசற் பருவம்; கலம்பக உறுப்புகளுள் ஒன்று; ஊழல்; கடும்பற்றுள்ளம், இவறல்.

**ஊசல்வரி** – ஊஞ்சற் பாட்டு.

**ஊசலாடுதல்** – ஊஞ்சலாடுதல்; அசைதல்; ஊசல் போல முன்பின் அசைந்து இருதலைப்பட்டு நிற்றல்; அடிக்கடி போக்குவரத்தாயிருத்தல்.

**ஊசா** – மூக்குத்திக் கொடி.

**ஊசாட்டம்** – உலாவித் திரிகை; ஊசலாட்டம்; களவு.

**ஊசாடுதல்** – ஊசலாடுதல்; உலாவித் திரிதல்.

**ஊசாலி** – மீன்பிடி கூடை.

**ஊசி** – இழைவாங்கி; துணி தைக்கும் ஊசி; எழுத்தாணி; குண்டூசி; நிறைகோலின் நடுமுள்; கடிகாரத்தின் முள்; கூர்மை; சிறுமை; ஊசிப்பொறி; குயவர் மட்கலத்தை அறுக்கும் கருவி; வடதிசை.

**ஊசிக்கண்** – சிறு கண்.

**ஊசிக்கப்பல்** – புகையிலைவகை.

**ஊசிக்களா** – முள்ளுக் களாச்செடி.

**ஊசிக்காது** – ஊசித்துளை; நுனித்தறியும் செவிப்பயன்.

**ஊசிக்காந்தம்** – இரும்பிழுக்குங் காந்தக்கல்.

**ஊசிக்காய்** – ஒருவகைத் தேங்காய்.

**ஊசிக்கால்** – மச்சுக்கால்; நடுக் குத்துக்கால்.

**ஊசித்தூற்றல்** – சிறு மழை.

**ஊசித்தொண்டை** – ஊசிபோல ஒடுங்கிய தொண்டை, சிறு தொண்டை.

**ஊசிப்புழு** – ஒருவகைப் புழு.

**ஊசிமல்லிகை** – ஒரு மல்லிகைவகை; முல்லை.

**ஊசிமிளகாய்** – கொச்சி மிளகாய், காந்தாரி மிளகாய்.

**ஊசிமுல்லை** – காண்க: **ஊசிமல்லிகை.**

**ஊசியோடுதல்** – ஊசித் தையல் செல்லுதல்.

**ஊசிவெடி** – பட்டாசு வெடிவகை.

**ஊசிவேர்** – சிறுவேர், சல்லிவேர்.

**ஊசுதல்** – சீவுதல்; தைத்தல்; அழுகுதல்; சுவை கெடுதல்: நாறுதல்.

**ஊஞ்சல்** – ஊசல்; ஊஞ்சற்பாட்டு.

**ஊஞ்சற்பாட்டு** – ஊஞ்சலாடும்போது மகளிர் பாடும் பாட்டு.

**ஊட்டம்** – உண்டி, உணவு; செழிப்பு.

**ஊட்டல்** – உண்பிக்கை; ஊட்டுதல், அடைவிக்கை, கன்று முதலியன பால் குடித்தல்.

**ஊட்டி** – உணவு; மழை; குரல்வளை; பறவை விலங்குகளின் தீனி.

**ஊட்டித்தல்** – தாளியடித்தல்; வயலை மட்டஞ் செய்தல்.

**ஊட்டிமரம்** – தேட்கொடுக்கிப் பூண்டு.

**ஊட்டு** – உண்பிக்கை; உணவு; ஊட்டுங் கவளம்; காளி முதலிய தெய்வங்களுக்கு இடும் படையல்.

**ஊட்டுணை** – தலையாட்டம்.

**ஊட்டுதல்** – உண்ணல்; உண்பித்தல்; வாயிலிடு தல்; புகட்டுதல்; கன்று பால் குடித்தல்; சாய மேற்றுதல்; அகிற்புகை, செம்பஞ்சு, மை முதலியன ஊட்டுதல்; நினைப்பூட்டுதல்; நுகரச் செய்தல்.

**ஊட்டுந்தாய்** – ஐவகைத் தாயருள் ஒருத்தி, சோறூட்டுபவள்.

**ஊட்டுப்புரை** – உணவளிக்கும் சாலை.

**ஊட்டுவான்** – சமையற்காரன்.

**ஊடகம்** – ஊடே, இடையில்; விடியற்காலம்; ஒரு கடல்மீன்வகை.

**ஊடடித்தல்** – களை போக்கவும் கிளைத்தற்காகப் பயிரைக் கலப்பிக்கவும் கலப்பையை மேலே கட்டி உழுதல்.

**ஊடணம்** – கருமிளகுகொடி; சுக்கு.

**ஊடணை** – திப்பிலி.

**ஊடரம்** – பூவழலை, உவர்நிலம்.

**ஊடல்** – ஊடுதல், தலைவன் தலைவியருள் உண்டாகும் பிணக்கு, பொய்ச்சினம்; பகைத்தல்; வெறுத்தல்.

**ஊடறுத்தல்** – ஊடுருவுதல், நடுவே புகுந்து செல்லுதல்; வழக்குத் தீர்த்தல்; இடையில் அடைத்தல்.

**ஊடாட்டம்** – பழகுகை, பலகாற் பயிலுகை.

**ஊடாடுதல்** – நடுவே திரிதல்; பலகாற் பயிலுதல்; கலத்தல்; கலந்து பழகுதல்; பெருமுயற்சி செய்தல்.

**ஊடான்** – கடல்மீன்வகையுள் ஒன்று.

**ஊடு** – உள்; நடு, இடை; நெசவின் தார்நூல்; ஏழனுருபு; குறுவையும் ஒட்டடையும் கலந்து விதைத்துச் செய்யும் சாகுபடி.

**ஊடு** (வி) – பிணங்கு; பிரி; பகைகொள்; வெறு.

**ஊடு சாகுபடி** – இருவகைத் தவசங்களைக் கலந்து பயிரிடுகை.

**ஊடுசெல்லுதல்** – நடுவில் போதல், இடையே போதல்.

**ஊடுதட்டு** – இருவர் வேலையினிடையே இடையிற் புகுந்து பெறும் ஊதியம்.

**ஊடுதல்** – புலத்தல்; வெறுத்தல்; பிணங்குதல்; ஊடுருவுதல்.

**ஊடுதாக்குதல்** – பின்னிடாமல் எதிர்நிற்றல்; ஆற்றலை ஆராய்ந்து பார்த்தல்; இரண்டு பொருள்களின் வலியை ஒப்பிடுதல்.

**ஊடுபற்றுதல்** – உள்ளே பற்றியெரிதல், விளக்கினுள் படர்ந்து எரிதல்.

**ஊடுபோக்குதல்** – ஊடுருவச் செய்தல், இடையே போகச் செய்தல்; நடுவறுத்தல்; வழக்குத் தீர்த்தல்.

**ஊடுருவுதல்** – ஊடறுத்தல்; நுழைதல்; துளைத்தல்; இடையிற் புகுந்து செல்லுதல்.

**ஊடூடே** – இடையிடையே; அடிக்கடி; இங்குமங்கும்; அப்போதைக்கப்போது.

**ஊடை** – தார்நூல்; ஆடையின் குறுக்கிழை; மணமான இளம்பெண்.

**ஊடையம்** – நீரரண்.

**ஊண்** – உண்கை; உணவு; ஆன்மாவின் இன்ப துன்ப நுகர்வு.

**ஊண்சாலை** – அன்ன சாலை.

**ஊண்டழல்** – வயிற்றுத் தீ.

**ஊண்பாக்கு** – உணவுண்டபின் தின்னும் வெற்றிலை பாக்கு.

**ஊணம்** – ஒரு நாடு.

**ஊணன்** – மிகவுண்போன்; ஊண நாட்டான்; மிலேச்சன்.

**ஊணா** – சடைச்சிமரம்.

**ஊணி** – உணவு கொள்பவன்(ள்); நட்டுவைக்கும் சிறு கோல்; மாடு முதலியன கட்டும் சிறு தறி.

**ஊணிக்கம்பு** – கட்டை வண்டியின் இரு பக்கத்தும் ஊன்றப்படும் கம்புகள்.

**ஊணுதல்** – ஊன்றுதல், நடுதல்; உணவு கொடுத்துப் பேணுதல்.

**ஊத்தங்காய்** – புதைத்துப் பழுக்கவைத்த காய்.

**ஊத்தப்பம்** – அப்பவகை.

**ஊத்தம்** – வீக்கம்; காய்களைப் பழுக்க வைக்கப் புதைத்தல்.

**ஊத்து** – ஊதுவகை; காகளத் தொனி; குழந்தைகள் ஊதும் விளையாட்டுப் பொருள்; உடம்பு ஊதுதல்.

**ஊத்தை** – அழுக்கு, உடம்பில் சேரும் அழுக்கு; பல்லில் சேரும் அழுக்கு; நாற்றம்; புலால்.

**ஊத்தைக்குடியன்** – ஒரு பிசாசு.

**ஊத்தைநாறி** – தீநாற்றமுடையவன்(ள்); பீநாறி மரம்.

**ஊத்தைப்பிணம்** – நாறிய பிணம்.

**ஊதம்** – யானைக் கூட்டம்; போர் செய்ய அழைத்தல், போருக்கு வருமாறு கேட்டல்.

**ஊதல்** – குளிர்காற்று; வீக்கம்; வாதரோகம்; ஆரவாரம்; மிகுதி; ஊதுகருவி.

**ஊதல்போடுகை, ஊதல்போடுதல்** – புகைபோட்டுப் பழுக்கச் செய்தல்; பெருச்சாளி போன்றவை பொந்தினின்றும் வெளியேறப் புகைமூட்டுதல்.

**ஊதற்காற்று** – ஊதைக் காற்று, பனிக்காலத்துக் குளிர்காற்று.

**ஊதா** – செம்மை கலந்த நீலநிறம், மங்கல் நிறம்.

**ஊதாங்குழல்** – நெருப்பூதுங் குழாய்.

**ஊதாம்பை** – காற்றூதல், பலூன்.

**ஊதாரி** – வீண்செலவுக்காரன், செல்வத்தை வீணாய் அழிப்போன்; பயனிலி.

**ஊதாரிபடுதல்** – கேடுறுதல்.

**ஊதிகை** – முல்லைக்கொடி.

**ஊதிப்பார்த்தல்** – மந்திரித்தல்; புடமிட்டுச் சோதித்தல்.

**ஊதிப்போடுதல்** – எளிதில் வெல்லுதல்.

**ஊதியம்** – இலாபம்; கல்வி; பயன்.

**ஊதிலி** – பாம்பாட்டிகள் ஊதும் மகுடிக் குழல்; குழந்தைகள் ஊதும் கருவி.

**ஊது** – ஊதுகுழல்; வண்டு.

**ஊது (வி)** – வாயால் ஊது; வீங்கு; வீசு.

**ஊதுகட்டி** – சொக்கவெள்ளி, தூய வெள்ளி.

**ஊதுகணை** – கணைநோய்வகை, குழந்தைகள் நோய்வகை.

**ஊதுகரப்பான்** – குழந்தைகளுக்கு வரும் ஒருவகைக் கரப்பான் நோய்.

**ஊதுகாமாலை** – காமாலை நோய்வகை.

**ஊதுகுழல்** – ஊதும் இசைக்குழல்; நெருப்பூதுங் குழாய்.

**ஊதுகொம்பு** – ஊதிடு கொம்பு; கொம்பு வாத்தியவகை.

**ஊதுதல்** – குழாய் முதலியவற்றை ஊதுதல்; தீயெரிய ஊதுதல்; புடம்போடுதல்; விளக்கு முதலியன அணைய ஊதுதல்; காற்று நொய்தாய் வீசுதல்; நோவு தீர ஊதுதல்; வண்டு முதலியன ஒலித்தல்; துருத்தியால் காற்றை எழுப்புதல்; பெருமுதல்; வீங்கல்; பொருத்தல்; துளைத்தல்; நுகர்தல்.

**ஊதுமாக்கூழ்** – ஓர் இனிப்புக் கூழ்.

**ஊதுமாந்தம்** – குழந்தைகளுக்கு மாந்தத்தால் வயிறு விம்மும் நோய்.

**ஊதுவத்தி** – மணப் பொருளாகிய குச்சி; சாம்பிராணித் திரி.

**ஊதுவழலை** – ஒரு பாம்புவகை.

**ஊதுவாரம்** – வெள்ளி.

**ஊதுவிரியன்** – தீண்டுவதனால் உடம்பை வீங்கச் செய்யும் ஒருவகை விரியன் பாம்பு.

**ஊதை** – காற்று; குளிர்காற்று, வாடைக்காற்று; வாதநோய்.

**ஊந்து** – கச்சோலம், ஒருவகை மணப்பண்டம்.

**ஊபம்** – போரின் அணி; குறைத்தலையுடல்.

**ஊம்** – ஊமை; மவுனம்.

**ஊம்புதல்** – சூப்புதல், சப்புதல்.

**ஊமச்சி** – ஊமைப்பெண்; ஒருவகை நத்தை.

**ஊமணை** – பேசுந்திறனற்றவர்; அழகற்றது.

**ஊமணைச்சட்டி** – சூளையில் நன்றாக வேகாத சட்டி.

**ஊமணைச்சி** – அழகில்லாதவள்.

**ஊமத்தங்கூகை** – ஊமைக்கோட்டான்.

**ஊமத்தம், ஊமத்து, ஊமத்தை** – செடிவகையில் ஒன்று; வெள்ளூமத்தை; கருவூமத்தை; உன்மத்தம்.

**ஊமல்** – கிழங்கு கழிந்த பனங்கொட்டை; பனங் கொட்டையின் புறவோடு.

**ஊமற்கச்சி** – உலர்ந்த பனங்கொட்டையின் பாதி.

**ஊமற்கரி** – பனங்கொட்டைக் கரி.

**ஊமன்** – ஊமையன்; பேசத் தெரியாதவன்; கூகை, கோட்டான்.

**ஊமாண்டி** – பூச்சாண்டி; பிள்ளைகள் விளையாட்டுள் ஒன்று; ஊமை; பிச்சையெடுக்கும் ஊமை எனப் பொருள்படும் ஒரு வசவுச்சொல்.

**ஊமாண்டிகாட்டுதல்** – பிள்ளைகளை அச்சுறுத்துதல்.

**ஊமிள்** – சிறுபூளை.

**ஊமை** – மூங்கைத்தன்மை, பேச இயலாமை; ஒலிக்குறைவு; ஒலியின்மை; ஒரு வாத்தியம்; கீரி; உறுப்புக்குறை எட்டனுள் ஒன்று.

**ஊமைக்கட்டி** – முகங்கொள்ளாத சிலந்திக்கட்டி; பொன்னுக்குவீங்கி.

**ஊமைக்காய்** – உள்ளீடில்லாத காய், பருப்பற்ற காய்.

**ஊமைக்காயம்** – முரட்டடியால் வெளியில் காயம் தெரியாது உண்டாகும் உள்வீக்கம்.

**ஊமைக்கிளாத்தி** – கடல்மீன்வகை.

**ஊமைக்கூறன்** – ஊமையன் பேச்சு.

**ஊமைக்கோட்டான்** – கோட்டான்; பேசத்தெரியாமல் விழிப்பவர்.

**ஊமைக்கோட்டான்வெயில்** – காண்க : **ஊமைவெயில்.**

**ஊமைச்சி** – காண்க: **ஊமச்சி**; கடல்மீன்வகை.

**ஊமைத்தசும்பு** – வாயில்லாத குடம்.

**ஊமைத்தேங்காய்** – நீராடாத தேங்காய், உள்ளே ஒன்றுமில்லாத தேங்காய்.

**ஊமைமணி** – நாக்கில்லாத மணி.

**ஊமையடி** – அரத்தக் காயமுண்டாக்காத அடி.

**ஊமையன்** – பேச இயலாதவன், மூங்கையன்.

**ஊமையெழுத்து** – ஒலியற்ற எழுத்து, மெய்யெழுத்து; 'ஓம்' என்னும் பிரணவம்.

**ஊமை விளையாட்டு** – குழந்தைபோலச் சைகை செய்து விளையாடுகை.

**ஊமைவீக்கம்** – காண்க: **ஊமைக்காயம்.**

**ஊமைவெயில்** – மேகமூட்டகாலத்தில் உறைக்கும் வெயில்.

**ஊய்தல்** – பதனழிதல், ஊசுதல்.

**ஊர்** – கிராமம், மக்கள் சேர்ந்து வாழும் இடம்; இடம்; ஊரிலுள்ளோர்; சந்திரசூரியரைச் சூழ்ந்த பரிவேடம்.

**ஊர்** (வி) – தவழ்; பரவு; தினவுறு; ஏறு; செலுத்து.

**ஊர்க்கலாபம்** – மக்களுக்குள் உண்டாகும் கலகம்.

**ஊர்க்கற்செம்மை** – புடமிட்ட நிலை.

**ஊர்க்காரியம்** – ஊர்ப் பொதுச்செயல்.

**ஊர்க்காறுபாறு** – ஊர்க்காரியம்; ஊர் விசாரணை, ஊர் விசாரிப்பு; அயலாருடைய காரிய விசாரிப்பு.

**ஊர்க்குருவி** – காண்க: **அடைக்கலக்(ங்)குருவி.**

**ஊர்க்கொள்ளை** – ஊரில் நடக்கும் கொள்ளை; அதிகாரிகளின் கொடுமை; ஊரில் பரவும் கொள்ளைநோய்.

**ஊர்காவல்** – தலையாரி.

**ஊர்கூடுதல்** – ஊரவர் திரளுதல்.

**ஊர்கொலை** – பகைமேற் செல்வோர் நிரை கொள்ளுமுன் நிரைகாக்கும் காவலரைக் கொல்லும் புறத்துறை.

**ஊர்கொள்ளுதல்** – பரந்து ஒளிர்தல், பரிவேடித்தல்.

**ஊர்கோலம்** – காண்க: **ஊர்வலம்.**

**ஊர்கோள்** – பரிவேடம், சந்திர சூரியரைச் சூழ்ந்த ஒளிவட்டம்.

**ஊர்ச்சம்** – ஊக்கம்; மூச்சு; வல்லமை; கார்த்திகை மாதம்.

**ஊர்ச்சிதம்** – உறுதி; நிலைபேறு, நிலைப்படுதல்; ஐயத்திற்கிடமில்லாத முடிவு.

**ஊர்ச்சுற்று** – நகச்சுற்று; ஊருக்குப் புறம்பான வெளியிடம்; ஊரின் சுற்றுப்புறம்.

**ஊர்சுற்றி** – ஊரைச் சுற்றித் திரியும் இயல்புடையது, கழுதை; பல ஊர்களுக்கும் சென்று வருபவன்.

**ஊர்ணநாபி** – சிலந்திப்பூச்சி.

**ஊர்ணம்** – ஆடு முதலியவற்றின் மயிர்; நூலிழை; புருவநடுவிலுள்ள சுழி.

**ஊர்த்தம்** – காண்க: **ஊர்த்துவம்.**

**ஊர்த்தலைமை** – நாட்டாண்மை.

**ஊர்த்துவகதி** – மேனோக்கிச் செல்லுகை.

**ஊர்த்துவ கலிகை** – கூத்தின் உறுப்புச் செய்கைகளுள் ஒன்று.

**ஊர்த்துவ காமினி** – மேல்நோக்கிச் செல்லும் குதிரை.

**ஊர்த்துவ சுவாசம்** – மேல்மூச்சு.

**ஊர்த்துவ தாண்டவம்** – ஒரு காலை மேலே தூக்கியாடும் நடனம்.

**ஊர்த்துவம்** – மேல்; மேல்நோக்கம்; மேற்புறம்; சைவபேதம் பதினாறனுள் ஒன்று.

**ஊர்த்துவலோகம்** – மேலுலகம்.

**ஊர்த்துவாங்கம்** – அரைக்கு மேற்பட்ட உறுப்பு.

**ஊர்தருதல்** – ஊர்தல்; வீசுதல்; மிகுதல்.

**ஊர்தல்** – நகருதல்; பரவுதல்; தினவுறுதல்; நெருங்குதல்; வடிதல்; ஏறிச் செல்லுதல்; கழலுதல்; ஏறுதல்.

**ஊர்தி** – ஏறிச் செலுத்தப்படுவது, வாகனம்; எருது, குதிரை, சிவிகை, வண்டி முதலிய வாகனங்கள்; விமானம்; ஆரூடம்.

**ஊர்நத்தம்** – ஊரில் வீடுகள் கட்டுவதற்காக விடப்பட்டுள்ள இடம்; குடியிருப்பு; ஊர்.

**ஊர்நேரிசை** – பாட்டுடைத் தலைவனது ஊரைச் சிறப்பித்து நேரிசை வெண்பாவினால் பாடப்படும் சிற்றிலக்கியவகை.

**ஊர்ப்பட்டது** – மிகுந்தது.

**ஊர்ப்பன்றி** – நாட்டுப்பன்றி.

**ஊர்ப்பாக்கு** – திருமண அழைப்புக்காக வைக்கும் தாம்பூலம்.

**ஊர்ப்பாடு** – பிறருடைய வேலை.

**ஊர்ப்புகைச்சல்** – ஊரில் கெட்ட நிமித்தமாகத் தோன்றும் புகை நிறம்; ஊர் வதந்தி.

**ஊர்ப்புரட்டு** – பெரும்பொய்.

**ஊர்ப்புரளி** – ஊர்க்குழப்பம்; ஊர்ப்புரட்டு, பெரும்பொய்.

**ஊர்ப்புல்** – கோரைவகை.

**ஊர்ப்புலம்** – ஆமணக்கு.

**ஊர்ப்புள்** – காண்க: **ஊர்க்குருவி.**

**ஊர்ப்பொருத்தம்** – ஊர்ப்பெயரின் முதலெழுத்துக்கும் குறிகேட்போன் பெயரின் முதலெழுத்துக்கும் அமையும் பொருத்தம்.

**ஊர்மச்சி** – காண்க: **ஊமைச்சி.**

**ஊர்மணியம்** – ஊர் மேற்பார்வை; ஊரை மேற்பார்ப்பவன்.

**ஊர்மன்றம், ஊர்மன்று** – ஊரிலேயுள்ள மன்றம், ஊர்ப் பொதுவிடம்.

**ஊர்மானியம்** – ஊர்ப் பொது ஊழியத்துக்காக விடப்பட்ட நிலம்.

**ஊர்மி** – அலை.

**ஊர்முகம்** – படைகள் போர் செய்யுமிடம்.

**ஊர்வசி** – காண்க: **உருப்பசி.**

**ஊர்வரப்பன்** – வெள்ளரி.

**ஊர்வரை** – யானை.

**ஊர்வலம்** – ஊரை வலப்பக்கமாகச் சுற்றி வருதல்; உலாவருதல்.

**ஊர்வன** – எழுவகைப் பிறப்புள் ஒன்று, ஊர்ந்து செல்லும் இயல்புடைய உயிரிகள்.

**ஊர்வாரி** – ஊர்ச் சலதாரை.

**ஊர்வாரியம்** – சிற்றூர்ச் சபை, கிராம சபை.

**ஊர்வெண்பா** – பாட்டுடைத் தலைவனது ஊரினைப் பத்து வெண்பாவினால் சிறப்பித்துரைக்கும் சிற்றிலக்கியவகை.

**ஊரண்டினார்** – கள்ளி.

**ஊரணி** – காண்க: **ஊருணி.**

**ஊரதிச்யங்காட்டி** – ஊரிலுள்ள அரிய பொருள்களைப் புதியோர்க்குக் காட்டுபவன், வழிகாட்டி.

**ஊரமை** – ஊர்ப் பொதுச்செயல்களை நிருவகிக்கை.

**ஊரல்** – ஊர்வது; கிளிஞ்சில்; குளுவை என்னும் ஒரு நீர்ப்பறவை; தினவு; ஊறுதல்; தேமல் வகை; படர்தாமரை நோய்; ஈரம்; பசுமை; காய்ந்து வருகிற புண்; உரிஞ்சல்; ஊர்தல்.

**ஊரவர்** – ஊரார்.

**ஊரற்புண்** – ஆறாப்புண், காய்ந்துவரும் புண்.

**ஊரறுகு** – அறுகுவகை.

**ஊரன்** – மருதநிலத் தலைவன்; சுந்தரமூர்த்தி நாயனார்.

**ஊரா** – ஊர்ப்பசு.

**ஊராட்சி** – ஊர் ஆளுகை; ஒரு பழைய வரி.

**ஊராண்மை** – ஊரை ஆளும் தன்மை; உபகாரியாந் தன்மை, ஒப்புரவு; மிக்க செயல்; ஊரின்கண் மேம்பாடுடைமை; பகைமேற் செல்லுகை.

**ஊராநற்றேர்** – வானவூர்தி, ஆகாயவிமானம்.

**ஊரார்** – ஊரவர்; அயலார்.

**ஊராளன்** – ஊராட்சி செய்யும் ஓர் அதிகாரி.

**ஊராளி** – ஊரதிகாரி; உழவுத் தொழில் புரிவோன்; ஒரு மலைச்சாதி; வரிக்கூத்து வகை.

**ஊரி** – புல்லுருவி; சங்கு; இளமை; மேகம்; நத்தைவகை.

**ஊரிடுவரிப்பாடு** – ஊரார் விதித்துக்கொண்ட நிலவரி.

**ஊரிலிகம்பலை** – ஊர்கலிகம்பலை; ஊர்க்கலகம்.

**ஊரின்னிசை** – தலைவனுடைய ஊரை இன்னிசை வெண்பாவினால் சிறப்பித்துரைக்கும் சிற்றிலக்கியவகை.

**ஊரு** – தொடை.

**ஊருகட்டி** – ஊரவை கூடுவதற்கு மரத்தைச் சுற்றி அமைக்கும் திண்ணை.

**ஊருகால்** – நத்தை; சங்கு.

**ஊருசன்** – வைசியன்.

**ஊருடை, ஊருடைமுதலியார், ஊருடைமூலி** – முருங்கைமரம்.

**ஊருடையான்** – ஊருக்கு உரிமையுடைய தலைவன்; ஊர்க்கணக்கன்.

**ஊருணி** – ஊரினருக்கு உண்ணும் நீர் உதவும் நீர் நிலை; ஊரையடுத்த குளம்; ஊரார் நீர் முகக்கும் குளம்.
**ஊருணை** – புருவநடுச் சுழி.
**ஊருத்தம்பம்** – தொடையில் உண்டாகும் ஒரு வகை வாதநோய்.
**ஊருத்தம்பை** – வாழைமரம்.
**ஊருவாரக்கொடி** – வெள்ளரி.
**ஊரெழுச்சி** – ஊரார் திரண்டெழுகை; ஊர்க் கலகம்.
**ஊரெறிதல்** – ஊரைக் கொள்ளையிடுதல்.
**ஊரெறிபறை** – பாலைநிலத்துப் பறை.
**ஊரேறு** – ஊர்ப்பன்றி; பட்டிமாடு.
**ஊரை** – மலைநெல்.
**ஊரோசம்** – ஊரில் பரந்த புகழ்.
**ஊலுகம்** – காண்க: **உலூகம்.**
**ஊழ்** – பழைமை; பழவினை; தலைவிதி, பழ வினைப்பயன்; முறைமை; குணம்; தடவை; முதிர்ச்சி; மலர்ச்சி; முடிவு; வெயில்; சூரியன்; பகை.
**ஊழ்குதல்** – எண்ணுதல், நினைத்தல், தியானித்தல்.
**ஊழ்த்தசை** – புலால்.
**ஊழ்த்தல்** – இறைச்சி; முடைநாற்றம்; நரகம்; பருவம்; முதிர்தல்; பதங்கெடல்; நினைத்தல்; உதிர்தல்; மூடுதல்; சிந்துதல்.
**ஊழ்த்துணை** – மனைவி.
**ஊழ்தல்** – முதிர்தல்.
**ஊழ்பாடு** – முடிவுபடுகை.
**ஊழ்முறை** – நியதி, வினைப்பயன்முறை.
**ஊழ்மை** – முறைமை.
**ஊழ்விதி** – பழவினைப் பயன்.
**ஊழ்வினை** – பழவினை; உழுவலன்பு.
**ஊழ்வினைப்பயன்** – கருமபலன்.
**ஊழகம், ஊழம்** – வைகறை.
**ஊழல்** – அருவருப்பானது, ஆகாதது; நரகம்; தாறுமாறு; கெட்டது; குழப்படி செய்கை; பணமோசடி செய்கை.
**ஊழலத்தி, ஊழலாற்றி** – ஒரு மரவகை.
**ஊழலித்தல்** – பதனழிதல்; அருவருத்தல்; இளைத்தல், மெலிதல்; சோர்தல்; நாற்ற மடைந்து கெடுதல்.
**ஊழற்சதை** – பெருகித் தளர்ந்த சதை.
**ஊழனிலம்** – சேற்றுநிலம்.
**ஊழி** – முடிவுகாலம்; யுகமுடிவு, கடல் பெருகி உலகம் அழியும் காலம்; நெடுங்காலம்; பூமி; விதி; முறைமை; வாழ்நாள்.
**ஊழிக்காய்ச்சல்** – தொற்றுக்காய்ச்சல்.
**ஊழிக்காரம்** – இதள், பாதரசம்.
**ஊழிக்கால்** – ஊழிக்காற்று, உலகமுடிவுக் காலத்தில் தோன்றும் காற்று.
**ஊழிக்காலம்** – உலகம் அழியும் காலம்.
**ஊழிக்காற்று** – உலகம் அழியும் காலத்துத் தோன்றும் பெருங்காற்று; நச்சுக்காற்று.
**ஊழித்தீ** – வடவையனல், உலக முடிவுக் காலத்தில் தோன்றும் நெருப்பு.
**ஊழிநாயகன்** – உலகை அழிக்கும் கடவுள்; ஊழிக் காலத்தும் அழியாது இருக்கும் இறைவன்.
**ஊழிநோய்** – பெருவாரிநோய், தொற்றுநோய்.
**ஊழிமுதல்வன்** – கடவுள்.
**ஊழியக்காரன்** – வேலைக்காரன்; அடியான்.
**ஊழியம்** – தொண்டு; சிறைப்பட்டோர் செய்யும் வேலை.
**ஊழியமறியல்** – கடுங்காவல்.
**ஊழிய மானியம்** – பொதுப்பணி செய்வார்க்காக விடப்படும் நிலம்.
**ஊழியன்** – அடிமை; பணியாள்.
**ஊழியான்** – நெடுங்கால வாழ்க்கையுடையான்; கடவுள்.
**ஊழில்** – அருவருப்பைக் கொடுக்கும் சேறு.
**ஊழிலை** – இலைச்சருகு.
**ஊழுறுதல்** – குடைதல்.
**ஊழை** – பித்தம்.
**ஊழைக்குருத்து** – துளசிப்பூண்டு.
**ஊளன்** – நரி; ஆண் நரி.
**ஊளா** – நெடுவாய்மீன்.
**ஊளான்** – நரி; கடல்மீன்வகை.
**ஊளி** – நெடுவாய்மீன்; சத்தம்; நாய் நரி முதலியன கத்தும் ஒலி; பசி.
**ஊளை** – நரி முதலியவற்றின் கூப்பீடு; தீ நாற்றம்; ஊத்தை.
**ஊளைக்காது** – சீழ்வடியும் காது.
**ஊளையிடுதல்** – நாய் நரி முதலியவை கூக்குர லிடுதல்.
**ஊற்காரம்** – கக்குதல், வாயாலெடுத்தல்.
**ஊற்றங்கால்** – வயல், தோட்டம் முதலியவற்றில் நீர் வடியும்படி இடும் சிறு கால்வாய்.
**ஊற்றங்கோல்** – காண்க: **ஊன்றுகோல்.**
**ஊற்றம்** – பற்றுக்கோடு; அசைவின்றி நிற்றல்; வலிமை; மனவெழுச்சி; மேம்பாடு; பழக்கம்; இடையூறு; கேடு; தொடுவுணர்ச்சி; புகழ்; அறிவு.
**ஊற்றருகி** – நீர்.
**ஊற்றாணி** – கலப்பையுறுப்புள் ஒன்று.
**ஊற்றாம்பெட்டி** – காண்க: **ஊற்றுப்பெட்டி.**
**ஊற்றால்** – மீன் பிடிக்கும் கூடு; கோழிக் குஞ்சுகளை அடைக்குங் கூடை; உரோகிணி நாள்.

**ஊற்று** – சுரக்கை; கசிவு; நீரூற்று; ஊன்றுகோல்; பற்றுக்கோடு, ஆதரவு.

**ஊற்று (வி)** – ஊற்றுஎன் ஏவல்; சிந்து; எண்ணெயூற்று; வார்; சுர.

**ஊற்றுக்கண்** – ஊற்றுத்துளை; நிலத்தடியில் நீர் ஊற்றுள்ள இடம்; கண்களிலிருந்து எப்போதும் நீர் வடிந்துகொண்டிருக்கும் மாட்டு நோய் வகை.

**ஊற்றுக்களம்** – பலரும் வந்துசேரும் இடம்.

**ஊற்றுக்குழி** – ஊற்றுப் பள்ளம், நீர் ஊறுதலையுடைய குழி.

**ஊற்றுக்கோல்** – காண்க: ஊன்றுகோல்.

**ஊற்றுண்ணுதல்** – நீர் ஒழுகி வடிதல்.

**ஊற்றுத்துளை** – நீர்நிலை; நீர் இறைக்கும் துரவு.

**ஊற்றுத் தோண்டுதல்** – ஊற்று உண்டாவதற்காகத் தோண்டுகை.

**ஊற்றுதல்** – வார்த்தல்; வடித்தல்; வெளியே விடுதல்.

**ஊற்றுப்பட்டை** – நீர் இறைக்கும் பட்டை.

**ஊற்றுப்பறி** – மடு முதலியவற்றில் மீன்பிடிக்குங் கருவி.

**ஊற்றுப்பூ** – தேங்காய்ப் பிண்ணாக்கு.

**ஊற்றுப்பெட்டி** – எண்ணெய் ஊற்றுதற்குக் கருவியான பெட்டி, எண்ணெய் ஊற்றும் கூடை.

**ஊற்றுப் பெயர்தல்** – ஊற்றுத் திரும்புதல்.

**ஊற்றுப்போடுதல்** – ஆற்றில் ஊற்றுக்குழி தோண்டுதல்.

**ஊற்றுமரம்** – எண்ணெயூற்று மரம், செக்குலக்கை.

**ஊற்றெடுத்தல்** – ஊற்றுத் தோன்றுதல்; ஊற்றுத் தோண்டுதல்.

**ஊற்றெண்ணெய்** – வடித்தெடுக்கும் எண்ணெய்.

**ஊற்றெழுதல்** – ஊற்றுப் பெயர்தல்.

**ஊறணி** – ஊற்று; கசிவுநிலம்; சேற்றுநிலம்; வருவாய்.

**ஊறல்** – ஊறுதல்; நீரூற்று; சாறு; பால் முதலியன சுரத்தல்; மருந்திலூறல்; மருந்தின் சாரம்; பஞ்சலோகக் கலப்பு; களிம்பு; வருவாய்; நீர்வற்றாப் பசுமை; தோலின் மீதுண்டாகும் ஒரு நோய்.

**ஊறவைத்தல்** – ஊறும்படி வைத்தல்; நீரில் பதம் பெறச் செய்தல்.

**ஊறற்பதம்** – பச்சைப் பதம்.

**ஊறற்பாக்கு** – நீரில் ஊறிய பாக்கு.

**ஊறு** – உறுகை; தொடுஉணர்வு; இடையூறு; கொலை; உடம்பு; காயம்; வல்லூறு; நாசம்.

**ஊறுகறி, ஊறுகாய்** – உப்பு முதலியன சேர்த்து ஊற வைக்கும் காய்; உப்பு, காரம் இவற்றில் பதப்படுத்தும் உணவுவகை; அடைகாய்.

**ஊறுகோள்** – காயம், புண்; கொலை.

**ஊறுதல்** – நீரூறுதல்; கசிதல்; செவ்வியுறுதல்; சுரத்தல்; பெருகுதல்; தேறுதல்; சாரமேறுதல்; பால் முதலியன சுரத்தல்; நீர் பெருகுதல்; மெலிந்தவுடல் தேறுதல்; வாய் ஊறுதல்; பல வழியினும் பொருள் வந்தடைதல்; உள்ளிறங்கல்; நனைதல்; இடைவிடாது சுரத்தல்; ஊறுகாய்ப் பதமாதல்.

**ஊறுபாடு** – துன்பம்; தீமை; புண்படுகை; காயம்; சேதம்.

**ஊறுபுண்** – ஆறிவரும் புண்.

**ஊறெண்ணெய்** – உச்சியில் ஊறும் எண்ணெய்.

**ஊறை** – சவ்வரிசி.

**ஊன்** – தசை, இறைச்சி; கொழுப்பு; உடம்பு.

**ஊன்கணார்** – மாந்தர்; அறிவில்லாதவர்.

**ஊன்செய்கோட்டம்** – உடல்.

**ஊன்றக்கட்டுதல்** – பலப்படுத்தல்.

**ஊன்றி** – ஒரு பாம்புவகை.

**ஊன்றிக்கேட்டல்** – உன்னிப்பாய்க் கேட்டல், கருத்தாய்ச் செவிகொடுத்தல், மிகக் கருத்தாகக் கேட்டல், உற்றுக்கேட்டல்; அழுத்தி வினாதல்.

**ஊன்றிக்கொள் (வி)** – நிலைபெறு; சார்ந்திரு.

**ஊன்றிச்சொல்லுதல்** – தெளிவாய்ப் பேசுதல்; உறுதியாய்ச் சொல்லுதல்.

**ஊன்றித்தாங்குதல்** – கோலை ஊன்றித் தோணியைத் தள்ளுதல்.

**ஊன்றி நடத்தல்** – உறுதியாய் நடத்தல்; கோலை ஊன்றி நடத்தல்.

**ஊன்றிப்படித்தல்** – கருத்துப் பதியுமாறு மனத்தை ஒருவழிப்படுத்திப் படித்தல்; நிறுத்திப் படித்தல்.

**ஊன்றிப்பார்த்தல்** – கருத்தாய்ப் பார்த்தல்; உற்றுநோக்குதல்; ஆராய்ந்து பார்த்தல்.

**ஊன்றிப்பெய்தல்** – விடாமல் ஓங்கிப் பெய்தல்.

**ஊன்று** – சார்பு.

**ஊன்று (வி)** – வேரூன்று; நிறுத்து; நடு; தாங்கு; அழுத்து; நிலைபெறு; இறுகப் பிடி.

**ஊன்றுகட்டு** – ஊன்றும்படி கட்டிய விறகுகட்டு.

**ஊன்றுகால்** – உதைகால், நடுகால்; தாங்கும் முட்டுக்கால்.

**ஊன்றுகோல்** – பற்றுக்கோடு; கைத்தடி.

**ஊன்றுதல்** – நிலைபெறுதல்; சென்று தங்குதல்; நடுதல்; நிலைநிறுத்துதல்; பற்றுதல்; தீண்டுதல்; தாங்குதல்; முடிவுசெய்தல்; அமுக்குதல்; தள்ளுதல்; உறுத்துதல்; குத்துதல்.

**ஊனக்கண்** – தசையால் ஆன கண்; கட்பொறி; குருட்டு விழி; உயிரைப்பற்றிய அறிவு; குறையுணர்வு.

**ஊனகத்தண்டு** – கருவண்டு; அடைகுறடு.

**ஊனகாரகன்** – இழிதொழில் செய்விப்போன்.

**ஊனம்** – குறைவு; குற்றம்; தீமை; பிணம்; அழிவு; பழி; இறைச்சி கொத்தும் குறடு.

**ஊனமர்குறடு** – இறைச்சி கொத்தும் பட்டடை மரம்.

**ஊனவன்** – மாந்தன்.

**ஊனன்** – குறையுள்ளோன்; உடல் குறைபாடு உடையவன்.

**ஊனாயம்** – விரகு, தந்திரம்.

**ஊனி** – மாமிச உடலிலுள்ளவன்; அமுக்கிரா.

**ஊனுருக்கி** – இருமல்நோய், சயரோகம்.

**ஊனேறி** – கருப்பம்.

**ஊனொட்டி** – உடும்பிறைச்சி.

## எ

**எ** – ஏழாம் உயிரெழுத்து; ஏழ் என்னும் தமிழெண்; வினாவெழுத்து; பஞ்சபட்சிகளுள் கோழியைக் குறிக்கும் எழுத்து.

**எஃகம்** – கூர்மை; ஆயுதப் பொது; ஈட்டி; வேல்; சக்கரப்படை; வாள்; பிண்டிபாலம்; சூலம்.

**எஃகு** – கூர்மை; உருக்கு; ஆயுதப்பொது; வேற்படை; கத்தரிகை; கத்தி; மதிநுட்பம்; வேல்.

**எஃகு (வி)** – எஃகுஎன் ஏவல்; நெகிழ்; நீள்; அவிழ்; எதிர்தாக்கு; தாழ்ந்தெழும்பு; எட்டு; உதைத்தேறு; பஞ்சு முதலியன கொட்டு; ஆராய்.

**எஃகுகோல்** – பஞ்சு கொட்டும் வில்.

**எஃகுச் செவி** – நுனித்தறியுஞ் செவி.

**எஃகுதல்** – பஞ்சு முதலியன பன்னுதல், பஞ்சு கொட்டுதல்; பஞ்சு பறித்தல்; ஆராய்தல்; எட்டுதல்; ஏறுதல்; நெகிழ்தல்; அவிழ்தல்; நிமிர்தல்; தாழ்ந்தெழும்பல்.

**எஃகுபடுதல்** – இளகிய நிலையை அடைதல்.

**எஃகுறுதல்** – அறுக்கப்படுதல்; பன்னப்படுதல்.

**எஃது** – எது.

**எக்கச்சக்கம்** – தாறுமாறு, ஒழுங்கின்மை; இசகு பிசகு.

**எக்கண்டப்பரப்பு** – ஒன்றான முழுத் துண்டு.

**எக்கண்டம்** – முழுக்கூறு; கண்ணோட்டமின்மை.

**எக்கம்** – ஒற்றை நரம்பு கட்டிய நரம்புக் கருவி, ஏகதந்திரி; தாளம்; ஒருதலைப் பறைவகை.

**எக்கமத்தளி** – ஒரு முழவுவகை.

**எக்கர்** – இடுமணல்; நுண்மணல்; மணற்குன்று; இறுமாப்புடையவர்; அவையல் கிளவி.

**எக்கரணம், எக்கரவம்** – முக்காரம், தமக்குள் மோதும் எருதுகளின் உரப்பொலி.

**எக்கல்** – எக்கர், இடுமணல்; நுண்மணல்; மணற்குன்று; நெருக்கம்; எட்டல்; ஏறுதல்; குவித்தல்; சொரிதல்; பொருதல்; வயிற்றை உள்ளிழுத்தல், வயிற்றையெக்கல்.

**எக்களித்தல்** – குதூகலித்தல், மிக மகிழ்தல்; குமட்டுதல்.

**எக்களிப்பு** – செருக்கோடுகூடிய மிகுமகிழ்ச்சி.

**எக்காளம்** – மகிழ்ச்சி ஆரவாரம்; ஓர் ஊதுகுழல்; காகளம்; செருக்கு; ஏளனம்.

**எக்கி** – நீர் முதலியன வீசுங்கருவி.

**எக்கியம்** – வேள்வி.

**எக்கியோபவீதம்** – பூணூல்.

**எக்குத்தக்கு** – காண்க: **எக்கச்சக்கம்.**

**எக்குதல்** – குவிதல்; மேலே செல்ல வீசுதல்; எட்டுதல்; ஊடுருவிச் செல்லுதல்; வயிற்றை உள்ளிழுத்தல்.

**எக்கே** – வருத்தக் குறிப்பு.

**எகடம்** – தென்னை.

**எகத்தாளம், எகத்தாளி** – ஏளனம், பரிகாசம்.

**எகரம்** – 'எ' என்னும் எழுத்து.

**எகனை** – காண்க: **எதுகை;** பொருத்தம்.

**எகிருதல்** – துள்ளுதல்.

**எகின்** – அன்னம்; கவரிமா; அழிஞ்சில்மரம்; செம்மரம்; புளியமரம்; நீர்நாய்; நாய்.

**எகினப்பாகன்** – பிரமன்.

**எகினம்** – காண்க: **எகின்.**

**எகினன்** – பிரமன்; நாய்.

**எகுன்று** – குன்றிக்கொடி.

**எங்கண்** – எவ்விடம்.

**எங்கணும்** – எங்கும்.

**எங்கித்தை** – எவ்விடத்தில்.

**எங்கு, எங்குத்தை** – எவ்விடம்.

**எங்கும்** – எல்லாவிடத்தும், யாண்டும்.

**எங்கே** – எங்கு, எவ்விடம்.

**எங்கை** – எம் தங்கை.

**எங்ஙன், எங்ஙனம், எங்ஙனே** – எத்தன்மை, எவ்விதம், எவ்வாறு; எப்படி; எவ்விடம்.

**எச்சம்** – எஞ்சி நிற்பது, மிச்சம்; கால்வழி, மக்கள்; மகன்; எச்சில்; பறவை மலம்; ஒரு மணப்பண்டம்; குறைவு; பிறப்பிலே வரும் குறை: குருடு, ஊமை, செவிடு, கூன், குறள், மா, மருள், உறுப்பில் பிண்டம் என்னும் எட்டு வகை ஊனம்; எக்கியம், வேள்வி செல்வம்; முன்னோர் வைப்பு; தொக்கி நிற்பது;

உருபு முற்று எச்சங்கள் கொண்டு முடியும் பெயர் வினைகள்; பெயரெச்ச வினையெச் சங்கள்.

**எச்சமிடுதல்** – பறவைகள் மலங்கழித்தல்.

**எச்சரிக்கை** – சாக்கிரதை; விழிப்பாய் இருக்கு மாறு குறிப்பிடுதல்; முன்னறிவிப்பு; அமைதி யாயிருக்கச் சொல்லுகை; புத்தி சொல்லுகை; கண்டிப்பு; எச்சரிக்கை கூறுகை; எச்சரிக்கைப் பாட்டு.

**எச்சரித்தல்** – முன்னறிவித்தல்; விழிக்கப் பண்ணு தல்; தூண்டுதல்; கண்டித்தல்; புத்தி சொல்லுதல்.

**எச்சரிப்பு** – எச்சரித்தல்; முன்னறிவிப்பு.

**எச்சவனுமானம்** – காரியங் கொண்டு காரண மறிதல், ஆற்றில் நீர்வரக் கண்டவன் மலைக் கண் மழையுண்டெடன அறிதல் போல்வது.

**எச்சவாய்** – குதம், எருவாய், மலவாய்.

**எச்சவும்மை** – மறைந்து நிற்கும் தொடர்புடைய பொருளை விளக்கும் உம்மை, 'சாத்தனும் வந்தான்' என்றாற்போல வரும் உரை.

**எச்சன்** – வேள்வி செய்வோன்; வேள்வித் தலைவன்; அக்கினி, தீக்கடவுள்; யாக தேவதை; வேள்வியின் அதிதேவதையான திருமால்.

**எச்சில்** – உமிழ்நீர்; உமிழ்நீர் பட்டுத் தூய்மை கெடும் பொருள்; உண்டு கழிந்த மிச்சில்; மிச்சம்; மலசலம் முதலியன; வேள்வித் தீயிலிடும் அரிசி மாவாலாகிய ஓமப் பொருள்; உச்சிட்டம்.

**எச்சில் மாற்றுதல்** – எச்சிலிலையை எடுத் தெறிந்துவிட்டு இடத்தைத் துப்புரவு செய்தல்.

**எச்சிலன்** – கடும்பற்றுள்ளன், பிசுனன்.

**எச்சிலாக்குதல்** – ஒருபொருளின்மேல் வாயெச்சில் படுதல்; ஒன்றன் தூய்மையைக் கெடுத்தல்.

**எச்சிலார்** – எச்சிலுடையவர்; இழிந்தோர்.

**எச்சிலிடுதல்** – உண்ட இடத்தைச் சாணமிட்டு மெழுகுதல்.

**எச்சிலிலை** – உணவுண்டு எச்சிலான இலை.

**எச்சிற்கல்லை** – உண்ட தையல் இலைக்கலம், எச்சிலிலை.

**எச்சிற்கலப்பு** – கணவன் எச்சிலை மனைவி உண்ணும் சடங்கு; மணமக்கள் ஒருவர்பின் ஒருவர் ஒரு கலத்தில் பாலுண்கை.

**எச்சிற்கிதம் பாடுதல்** – இழிந்த பொருளுக்காக ஒருவரைப் புகழ்ந்து கூறுதல்; தகாத நோக்கத் தோடு குற்றத்திற்கு இணங்குதல்.

**எச்சிற்படுத்தல்** – எச்சிலாக்குதல்; புண்படுத்து தல்; கன்னிமை கெடுத்தல்.

**எச்சிற்படுதல்** – உமிழ்நீர் பட்டுத் தூய்மை கெடுதல்.

**எச்சிற் புரட்டுதல்** – எச்சிலிடுதல்.

**எச்சிற்பேய்** – ஒருவகைப் பேய்; கொடுமையான சிறுதெய்வம்; பெருந்தீனிக்காரன்.

**எச்சிற்றழுதணை, எச்சிற்றழும்பு, எச்சிற்றேமல்** – எச்சில் தழும்பு, படர் தாமரை என்னும் நோய்.

**எச்சு** – உயர்வு; மிகுதி; உயர்ந்த ஓசை; குறைவு; இசையில் நீண்ட ஓசை; ஒரு வாத்தியக் கருவி.

**எசகுபிசகு** – முறைகேடு, தவறான வழி.

**எசப்புச் செலவு** – தரகு கொடுத்தற்குப் பிடிக்குஞ் செலவு.

**எசம்** – நரம்பு, நாடி.

**எசமாட்டி** – தலைவி; குடும்பத் தலைவி.

**எசமான், எசமானன்** – தலைவன்; கணவன்; வேள்வித் தலைவன்.

**எசமானி** – காண்க: **எசமாட்டி.**

**எசமானிக்கை** – தலைமை.

**எசர்** – உலைநீர்.

**எசர்கட்டுதல்** – உலைநீர் வைத்தல்.

**எசு, எசுர்வேதம்** – எசுர், நான்மறைகளுள் ஒன்று, இரண்டாம் மறை.

**எஞ்சணி** – சொல்லலங்கார வகையுள் ஒன்று, சொல் வெளிப்படாமல் எஞ்சி நிற்பது; எஞ்சி நிற்கும் சொல்.

**எஞ்சலார்** – புதியவர்.

**எஞ்சலித்தல்** – குறைவு செய்தல்.

**எஞ்சாமை** – குறையாமை, ஒழியாமை, முழுமை.

**எஞ்சிநிற்றல்** – குறைந்து நிற்றல், தொக்கு நிற்றல், ஒழிந்து நிற்றல்.

**எஞ்சியசொல்லி னெய்தக் கூறல்** – நூல் உத்திகள் முப்பத்திரண்டனுள் ஒன்று, சொன்னவற்றால் சொல்லாதவற்றையும் உய்த்தறியுமாறு கூறுகை.

**எஞ்சுதல்** – குறைதல்; கெடுதல்; இறத்தல், சாதல், ஒழிதல்; மிஞ்சுதல்; தொக்கு நிற்றல்; கடத்தல்; செய்யாதொழிதல்; தனக்குப்பின் உரிமையாக வைத்தல்.

**எஞ்ஞும்** – எக்கியம், ஓமம், வேள்வி.

**எஞ்ஞான்றும்** – எக்காலமும், எப்பொழுதும், எப்போதும்.

**எட்கசி, எட்கசிவு** – எள்ளால் செய்யப்பட்ட உணவு, எள்ளுருண்டை.

**எட்கிடை** – எள்ளுக்கிடத்தற்கு வேண்டிய இடம், எள்ளளவு.

**எட்கை** – தென்னை.

**எட்கோது** – எள்ளுக்காய்த் தோல்.

**எட்சத்து** – நல்லெண்ணெய்.

**எட்சிணி** – காண்க: **யட்சிணி.**

**எட்சி** – எழுச்சி, உதயம்.

**எட்சித்தோஷம்** – குழந்தை நோய்வகை.

**எட்ட** – தொலைவாக, தூரமாக.

**எட்டக்கட்டுதல்** – நெருங்கி வாராதிருத்தல்.

**எட்டக்கரம்** – அட்டாட்சர மந்திரம், எட்டு எழுத்துடைய ஒரு மந்திரம்; 'ஓம் நமசிவாய நம' எனச் சைவரும், 'ஓம் நமோ நாராயணாய நம' என வைணவரும் கொள்ளும் மந்திரம்.

**எட்டடிப்பறவை** – காண்க: **எண்காற்புள்.**

**எட்டடிவிரியன்** – ஒரு விரியன்பாம்புவகை.

**எட்டம்** – நீளம்; தொலைவு; அடைதற்கு எளிதாந் தன்மை.

**எட்டம்பற்றுதல்** – கிடைத்தல்.

**எட்டமன்** – எட்டையபுரம் சமீன்தார்களின் பட்டப்பெயர்.

**எட்டர்** – மங்கலப் பாடகர்; மூடர்.

**எட்டன்** – எட்டமன்; மூடன், அறிவிலான்.

**எட்டன்மட்டம்** – தாளவகை.

**எட்டாக்கை** – தொலைவான இடம்.

**எட்டார(ரை)ச்சக்கரம்** – மிறைக்கவி, எட்டு ஆரமுள்ள சக்கரத்துள்ளே எழுத்தெல்லாம் அமையப் பாடும் சித்திரகவி.

**எட்டி** – காஞ்சிரைமரம்; வணிகர் பெறும் பட்டம்; வணிக மாதர் பெறும் பட்டம்; வணிகச் சாதி.

**எட்டிகம்** – ஒரு குருவிவகை; சீந்திற்கொடி.

**எட்டிநோக்குதல்** – அண்ணாந்து பார்த்தல்; தாவிப் பார்த்தல்.

**எட்டிப்புரவு** – வாணிகத்தாற் சிறந்தோர்க்கு அரசன் கொடுக்கும் நிலம்.

**எட்டிப்பூ** – எட்டிப்பட்டம் பெற்ற வணிகர்க்கு அரசர் கொடுக்கும் பொற்பூ.

**எட்டிவிரியன்** – ஒரு பாம்புவகை.

**எட்டிற்பத்தில்** – இடையிடையே.

**எட்டினர்** – நட்பினர், சிநேகிதர்.

**எட்டு** – எட்டு என்னும் எண்; ஆசை; இறந்தவர்களுக்குச் செய்யும் எட்டாம் நாள் சடங்கு.

**எட்டு** *(வி)* – எட்டுஎன் ஏவல்; தொடு; அடை; விலகு.

**எட்டுக்கண் விட்டெறிதல்** – எங்குந் தன் ஆணை செல்லுதல்.

**எட்டுக்காற்பூச்சி** – சிலந்திப்பூச்சி.

**எட்டுக்கொண்டார்** – அட்டமூர்த்தி, சிவபெருமான்.

**எட்டுச்சித்தி** – அட்டசித்திகள், எண் வகைப் பேறுகள்: அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்.

**எட்டுணை** – எள்ளளவு.

**எட்டுத்திக்கு, எட்டுத்திசை** – எண் திசை: கிழக்கு முதலிய நான்கு பெருந்திசையும், தென்கிழக்கு முதலிய நான்கு கோணத்திசையும்.

**எட்டுத்தொகை** – சங்க காலத்தில் தொகுக்கப் பட்ட எட்டு நூல்கள்: நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன.

**எட்டுதல்** – கிட்டுதல், நெருங்குதல், அகப்படுதல்; புலப்படுதல்; தாவிப் பாய்தல்; விலகுதல்; நீளம் போதியதாதல்.

**எட்டுமூர்த்தி** – அட்டமூர்த்தி: நிலம், தீ, நீர், காற்று, வானம், சூரியன், சந்திரன், இயமானன் என்னும் எண்வகை வடிவுகளில் பரந்து விளங்கும் இறைவன்.

**எட்டுவரி விரியன்** – காண்க: **எட்டிவிரியன்.**

**எடாதவெடுப்பு** – செய்ய இயலாத செயல், அரிய செயல்; தகாத செயல்.

**எடார்** – வெளிநிலம், மைதானம், பெரும்பரப்பு நிலம்.

**எடு** *(வி)* – தூக்கு; ஒன்றிலிருந்தெடு; தொடங்கு; அங்கீகரி; ஆராய்ந்தெடு; இசையெடு; தெரிந்துகொள்; சும; வாந்தியெடு.

**எடுக்கல்** – தூக்கல்; அளவிட்டறிதல்.

**எடுகூலி** – சுமைகூலி, சுமை கொண்டு போதற்குத் தரும் கூலி.

**எடுகூறு** – பாகப்பிரிவு, பங்குப்பிரிவு.

**எடுத்தடிமடக்கு** – ஒருவர் சொன்னதைக் கொண்டே மறுத்துரைத்தல்; முன்சென்று தடுக்கை; இடையில் தடுத்துப் பேசுகை; அஞ்ச வேண்டியதற்கு அஞ்சாமை.

**எடுத்தடிவைத்தல்** – மெள்ள அடிபெயர்த்து வைத்தல், தளர்நடையாய் நடத்தல்.

**எடுத்தபடி** – முன் ஆயத்தமின்றி, உடனே.

**எடுத்தமொழி** – எடுத்துக்காட்டு.

**எடுத்தமொழியின் எய்தவைத்தல்** – நூல் உத்திகள் முப்பத்திரண்டனுள் ஒன்று: அதாவது தான் சொல்லும் இலக்கணம் தான் எடுத்துக் காட்டிய சொற்களுக்கே பொருந்தவைத்தல், தான் கூறும் இலக்கியத்திலேயே இலக்கணம் அமைந்திருப்பதைக் காட்டுதல்.

**எடுத்தல்** – நிறுத்தலளவு; எடுத்தலோசை; உயர்த்துதல்; சுமத்தல்; தூக்குதல்; நிறுத்தல்; திரட்டுதல்; உரத்துச் சொல்லுதல்; குரலெடுத்துப் பாடுதல்; மேம்படுத்திச் சொல்லுதல்; பாதுகாத்தல்; எழுப்புதல்; தொடங்கல்; ஏற்றுக்கொள்ளுதல்; எடுத்து வீசுதல்; வீடு முதலியன கட்டல்; இடங்குறித்தல்; கைக்கொள்ளுதல்; தாங்குதல்.

**எடுத்தலளவை** – நிறை, நிறுத்தலளவை.

**எடுத்தலளவையாகுபெயர்** – எடுத்தலளவைப் பெயர் அதனோடு இயைபுடைய பிறிதின் பொருள் உணர்த்துகை, இரண்டு கிலோ என்பது இரண்டு கிலோ அளவுள்ள பொருளைக் குறித்தல் போல்வது.

**எடுத்தலோசை** – உயர்த்திக் கூறும் ஓசை.

**எடுத்தளவு** – நிறை; ஒரு பழைய வரி.

**எடுத்தன்** – பொதிமாடு.

**எடுத்தாட்சி** – எடுத்தாளுதல்; வழக்கு.

**எடுத்தாளுதல்** – கைக்கொண்டு வழங்குதல்.

**எடுத்தியல்கிளவி** – சான்று, திருட்டாந்தம்.

**எடுத்து** – சுமை, பொதி.

**எடுத்துக்கட்டி** – சுவரின் தலைவரிக் கட்டு; கைப்பிடிச் சுவர்.

**எடுத்துக்கட்டுதல்** – உயர்த்திக் கட்டுதல்; இல்லாத செயலைப் புனைந்து கூறல்; கற்பிதம்; பின்னல் மயிரைச் சுருட்டிக் கட்டுதல்; கட்டுக்கதை கூறல்; பொய் சொல்லுதல்; தாலியை அறுத்துக் கட்டுதல்.

**எடுத்துக்காட்டு** – மேற்கோள், உதாரணம்.

**எடுத்துக்காட்டுதல்** – நூல் உத்திகள் முப்பத்திரண்டனுள் ஒன்று, தான் சொல்லும் இலக்கணத்திற்குத் தானே இலக்கியத்தை எடுத்துக் காட்டுதல்.

**எடுத்துக்காட்டுவமை** – உபமானம், உபமேயம் என்னும் இரண்டும் தனித்தனியே ஒவ்வொரு தொடராய் உவம உருபின்றி வரும் அணி.

**எடுத்துக்காரர்** – பொதிமாட்டுக்காரர்.

**எடுத்துக்கூட்டுதல்** – சிதறியவற்றை ஒருங்கு திரட்டி வைத்தல், ஒழுங்குபடுத்தல்.

**எடுத்துக்கைநீட்டி** – கோயில் அருச்சகனுக்குப் பூசைக் கருவிகளை எடுத்துக் கொடுப்பவன்.

**எடுத்துக்கைநீட்டுதல்** – கைத்தொண்டு செய்தல்.

**எடுத்துக்கொள்ளுதல்** – ஏற்றுக்கொள்ளல்; தனதாக்கிக் கொள்ளல்; தத்தெடுத்துக் கொள்ளுதல்; தூக்கிக் கொள்ளுதல்; சாவால் கடவுள் தம்மிடம் அழைத்துக்கொள்ளுதல்.

**எடுத்துக்கோள்** – மேற்கோள், திருட்டாந்தம்; மேற்கோள் வரி.

**எடுத்துக்கோள்வரி** – கையறவெய்தி வீழ்தலைக் கண்டு பிறர் எடுத்துக்கொள்ளும்படி நடிக்கும் நடம்.

**எடுத்துச்செலவு** – படையெடுத்துச் செல்லுகை.

**எடுத்துச் சொல்லுதல்** – சிறப்பித்துக் கூறுதல்; விளக்கமாகக் கூறுதல்; புத்திசொல்லுதல்.

**எடுத்துத் தொடுத்தல்** – இல்லாததைக் கட்டிக் கூறுதல்; பொய்வழக்கிடுகை.

**எடுத்துநிலை** – போனதை மீட்டு நிறுத்துகை.

**எடுத்துப்பேசுதல்** – துதித்தல்; ஒருவனுக்காக வழக்குப் பேசுதல்; ஒரு பொருள்குறித்து விளக்குதல்; புகழ்ந்து கூறுதல்; பிறர் குற்றங்களை எடுத்துத் தூற்றுதல்.

**எடுத்துப்போடுதல்** – நீக்குதல்; திடுக்கிடச் செய்தல்.

**எடுத்துமொழிதல், எடுத்துரைத்தல்** } – விளங்கச் சொல்லுதல்.

**எடுத்துரைமலைவு** – செய்யுட் குற்றங்களுள் ஒன்று.

**எடுத்துவளர்த்தல்** – தத்து எடுத்து வளர்த்தல்; வீட்டு உயிரினங்களை எடுத்து வளர்த்தல்.

**எடுத்துவிடுதல்** – படையெடுத்தல்; படையை விட்டு நீங்குதல்; குழந்தையை முலையுண்ணச் செய்தல்.

**எடுத்தெறிதல்** – பறை முழக்குதல்; பொருட்படுத்தாதிருத்தல், மதிப்பின்றி நடத்தல்.

**எடுத்தேத்து** – எடுத்துப் புகழ்தல், புகழ்ச்சி.

**எடுத்தேற்றம்** – குறிப்பின்மை; இணக்கமின்றியிருப்பது; இல்லாததைப் பேசுவது.

**எடுத்தேற்றி** – இணக்கமின்றியிருப்பது, மதியாமை.

**எடுத்தேறு** – காண்க: **எடுத்தெறிதல்.**

**எடுத்தோத்து** – எடுத்து ஓதுவது; எடுத்துக் கூறும் விதி.

**எடுப்பல்** – எடுப்புதல், எழுப்புதல்; அகற்றல்.

**எடுப்பார்கைப்பிள்ளை** – யாவர்க்கும் வசப்படக் கூடியவன், சூதறியாதவன்.

**எடுப்பானவன்** – உயரமானவன்; தோற்றப் பொலிவுடையவன்; இறுமாப்புள்ளவன்.

**எடுப்பித்தல்** – எடுக்கச் செய்தல்.

**எடுப்பு** – இறுமாப்பு; உயர்வு, ஏற்றம்; புதையல்; நிந்தை; தொடங்குதல்; எடுத்தல்; நிந்தித்தல்; தூக்குகை; எழுப்புகை.

**எடுப்புச்சாய்ப்பு** – ஒப்புரவான நடை, தராதரம் அறிந்து நடக்கும் நடை; உயர்வு தாழ்வு.

**எடுப்புத்தேர்** – சுமந்து செல்லும் தேர்.

**எடுப்புதல்** – எழுப்புதல், துயிலெழுப்புதல்; இசையெழுப்புதல்; போக்குதல்.

**எடுப்பெடுத்தல்** – சூழ்ச்சியை மேற்கொள்ளுதல்; படையெடுத்துப் பொருதல்; அரியதை முயலுதல்; செருக்குக்கொள்ளுதல்.

**எடுபட்டவள்** – கற்பழிந்து குடும்பத்தினின்று வெளிப்போந்தவள்; நிலையில்லாதவள்.

**எடுபட்டவன்** – ஒழுக்கக்கேட்டால் விலக்கப்பட்டவன்; நிலையில்லாதவன்.

**எடுபடுதல்** – நீக்கப்படுதல்; நிலைபெயர்தல்; அதிர்தல்; விற்றழித்தல்; நிலைதவறுதல்; அழிந்துபோதல்; வெளிவருதல்; கைக்கொள்ளப்படுதல்; மேம்படுதல்.

**எடுபாடு** – செல்வாக்கு; பகட்டு; உயர்ச்சி, மேட்டிமை; நிலையின்மை; குலைவு; அழிகை.

**எடுபிடி** – முயற்சி; விருது; மதிப்பு; குற்றேவலாள்.

**எடுவுதல்** – எடுத்தல்.

**எடை** – எடுத்தல், தூக்குதல்; நிறை; நிறுக்கை, நிறையிடல்; எழுப்புகை; மிகுதல்.

**எடைக்கட்டு** – நிறுக்கப்படும் பொருளுக்கு ஆதாரக்கலத்தின் கழிவு நிறை, எடைகட்டுதல்.

**எண்** – எண்ணிக்கை; கணக்கிடுதல்; எண்ணம்; ஆலோசனை; அறிவு; மனம்; கவலை; மதிப்பு; இலக்கம்; கணக்கு; சோதிடநூல்; இலக்கியம்; வரையறை; தருக்கம்; மாற்று; மந்திரம்; அம்போதரங்கம்; எளிமை; வலி; எள்.

**எண் (வி)** – எண் என்னும் ஏவல்; நினை, கருது.

**எண்கண்ணன்** – பிரமன்.

**எண்காற்புள்** – சிம்புள், சரபப்பறவை.

**எண்கு** – கரடி.

**எண்குணத்தான்** – எட்டுக் குணங்களையுடைய கடவுள்; அருகன்; சிவன்.

**எண்குணம்** – கடவுளின் எட்டுக் குணங்கள்: தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்கல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை.

**எண்குணன்** – காண்க: **எண்குணத்தான்.**

**எண்குற்றம்** – அறிவைக் கெடுக்கும் எட்டுவகைக் குற்றங்கள்: இவற்றைச் சமணர் ஞானாவரணீயம், தரிசனாவரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயு, நாமம், கோத்திரம், அந்தராயம் என்று குறிப்பிடுவர்.

**எண்கோணம்** – எட்டுக்கோணம்; எட்டுமூலையையுடைய உருவம்.

**எண்கோவை** – காஞ்சி என்னும் அரையணி.

**எண்சிறப்பு** – அருகனுக்குச் செய்யப்படும் எண்வகைச் சிறப்புகள்: தூபதீபக் காட்சி, தேவதுந்துபி, தெய்வத்துவனி, சிங்காதனம், பிண்டி, வெண்சாமரை, புட்பமாரி, முக்குடை.

**எண்சிறப்புள்ளோன்** – அருகன்.

**எண்சுவடி** – கணக்கேடு, பெருக்கல் வாய்பாட்டு நூல்.

**எண்சுவை** – எட்டுச் சுவைகள்: நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை.

**எண்செய்யுள்** – எண்ணாற் பெயர்பெறும் நூல், பத்து முதல் ஆயிரம் அளவும் பாடிப் பாடல் எண் அளவால் பெயர்பெறும் இலக்கியம்.

**எண்டிக்கு, எண்டிசை** – எட்டுத்திக்கு: கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு.

**எண்டோளன்** – எட்டுத் தோள்களுடையோன்; சிவன்; திருமால்.

**எண்டோளி** – எட்டுக் கைகளையுடையாள், காளி; கொற்றவை, துர்க்கை.

**எண்ணக்குறிப்பு** – நோக்கம்.

**எண்ணங்குலைதல்** – மனம் கலங்குதல்; எண்ணம் வீணாதல்; மதிப்புக்கெடுதல்.

**எண்ணங்கொண்டிருத்தல்** – நோக்கங்கொண்டிருத்தல்; நம்பி எதிர்பார்த்தல்; கவலைப்படுதல்; சிந்தித்தல்.

**எண்ணத்தப்பு, எண்ணத்தவறு** – நினைவு மயக்கம்; மதிகேடு; மதியாமை; ஏமாறுகை; கெட்ட எண்ணம்.

**எண்ணப்படுதல்** – கணிக்கப்படுதல், மதிக்கப்படுதல்.

**எண்ணம்** – நினைப்பு; நோக்கம்; நாடிய பொருள்; மதிப்பு; இறுமாப்பு; நம்பிக்கை; சூழ்ச்சி; கவலை; கருத்து; ஆலோசனை; குறிப்பு; கணிதம்.

**எண்ணர்** – மந்திரியர்; கணிதர்; தருக்கம் செய்பவர்.

**எண்ணல்** – தேர்ச்சி; கருத்து; கணக்கிடுகை; எண்ணலளவை; ஆலோசனை; எண்ணுதல்; நினைத்தல்; குறித்தல்; மதித்தல்; இறுமாத்தல்; கணக்கிடுதல்; கவலைப்படல்.

**எண்ணலங்காரம்** – ஒன்று இரண்டு முதலாக எண்ணுப்பெயர்கள் முறையே வரும் அணி.

**எண்ணலர்** – எண்ணார், மதியாதவர், பகைவர்.

**எண்ணலளவை** – இலக்கத்தால் எண்ணும் அளவு.

**எண்ணலார்** – காண்க: **எண்ணலர்.**

**எண்ணவி** – நல்லெண்ணெய்.

**எண்ணாட்டிங்கள்** – எட்டாம் பிறை, அட்டமிச் சந்திரன்.

**எண்ணாதகண்டன், எண்ணாதநெஞ்சன்** – துணிவுள்ளவன், அஞ்சா நெஞ்சன்; அஞ்சவேண்டுவதற்கு அஞ்சாதவன்.

**எண்ணாதவன்** – எதனையும் ஆராய்ந்து பாராதவன்; எதனையும் பொருட்படுத்தாதவன்; கவலையற்றவன்.

**எண்ணாப்பு** – இறுமாப்பு.

**எண்ணிக்கை** – எண்; கணிப்பு; மதிப்பு; எச்சரிக்கை.

**எண்ணிடுதல்** – கணக்கிடுதல்.

**எண்ணிடைச்சொல்** – எண்ணுப் பொருளைக் காட்டும் இடைச்சொல்: உம், ஏ முதலியன.

**எண்ணியற்பெயர்** – எண்ணாகிய இயல்புபற்றி வரும் உயர்திணைப் பெயர்.

**எண்ணியார்** – எண்ணங்கொண்டவர், நோக்கங்கொண்டவர்.

**எண்ணில்கண்ணுடையோன்** – யாண்டும் நோக்குகின்ற கண்ணுடைய கடவுள்; புத்தன்.

**எண்ணிலார்** – காண்க: **எண்ணலர்.**

**எண்ணிலி** – எண்ணில் அடங்காதது, அளவற்றது.

**எண்ணிறந்த** – எண்ண முடியாத.

**எண்ணுதல்** – எண்ணல், நினைத்தல்; ஆலோசித்தல்; மதித்தல்; தியானித்தல்; முடிவுசெய்தல்; கணக்கிடுதல்; மதிப்பிடுதல்; துய்த்தல்.

**எண்ணும்மை** – எண்ணுப்பொருளில் வரும் உம்மை இடைச்சொல்: நிலனும் தீயும் நீரும் என்றாற்போல வருவது.

**எண்ணுவண்ணம்** – இருபது வண்ணங்களுள் ஒன்று, எண்ணிடைச்சொல் பயின்றுவரும் சந்தம்.

**எண்ணுறுத்தல்** – உறுதிப்படுத்துதல்.

**எண்ணூல்** – கணிதநூல்; தருக்கநூல்.

**எண்ணெய்** – எள்ளின் நெய், நல்லெண்ணெய்; எண்ணெய்ப் பொது; ஒரு மரவகை.

**எண்ணெய்க் கறுப்பு** – மினுக்கான கறுப்பு நிற வகை.

**எண்ணெய்க்காப்பு** – எண்ணெய் முழுக்கு; சாத்தும் எண்ணெய்.

**எண்ணெய்க்காரன்** – எண்ணெய் வாணிகன், எண்ணெய் விற்போன்.

**எண்ணெய்க்காரை** – கருவேம்பு.

**எண்ணெய்ச்சாயம்** – எண்ணெய் சேர்த்துச் செய்யப்படும் சாயம்; எண்ணெயில் தோய்த்து ஏற்றும் சாயம்.

**எண்ணெய்ச்சிக்கல்** – எண்ணெய் வயிற்றில் தங்குதலால் வரும் செரியாமை; மயிரிலிருந்து எண்ணெய் நீங்காமையால் ஏற்படும் சிக்கல்; எண்ணெய் நாற்றம்; ஒரு பொருளின்மேல் தோய்ந்த எண்ணெய் அழுக்கு.

**எண்ணெய்ச் சீலை** – எண்ணெயில் நனைத்த துணி; மெழுகுசீலை.

**எண்ணெய்த்தண்டு** – எண்ணெய் பெய்து வைக்கும் குழாய்.

**எண்ணெய்தடவுதல்** – மருந்தெண்ணெய் பூசுதல்.

**எண்ணெய்ப்பற்று** – எண்ணெய்ச் சிக்கு.

**எண்ணெய்ப்பனையன்** – பனைவிரியன் பாம்பு.

**எண்ணெய்ப்பிசுக்கு** – காண்க: **எண்ணெய்ப்பற்று.**

**எண்ணெய்ப்புல்லிடுதல்** – நெசவுப் பாவுக்கு எண்ணெயிடுதல்.

**எண்ணெய்பொருத்துதல்** – மருந்தெண்ணெய் பூசுதல்.

**எண்ணெய் மணி** – ஒருவகை அணிகலன், கழுத்தணி.

**எண்ணெய் வடித்தல்** – எண்ணெய் ஊற்றுதல்.

**எண்ணெய் வழுக்கு** – எண்ணெய் மினுக்கு.

**எண்ணெய் வாணிகன்** – எண்ணெய் விற்போன், செக்கான்.

**எண்ணெழுத்து** – எண்ணும் எழுத்தும்; இலக்கம்; எண்ணுக் குறியீடான எழுத்து; இலக்கிய இலக்கணம்.

**எண்ணேகாரம்** – எண்ணுப் பொருளில் வரும் ஏகார இடைச்சொல்.

**எண்ணேயம்** – நல்லெண்ணெய்.

**எண்ணோகாரம்** – எண்ணுப் பொருளில் வரும் ஓகார இடைச்சொல்.

**எண்படுதல்** – அகப்படுதல்.

**எண்பதம்** – எளிய செவ்வி, தக்க காலம்; எண் வகைத் தவசம்: நெல், புல், வரகு, தினை, சாமை, இறுங்கு, துவரை, கேழ்வரகு.

**எண்பது** – எட்டுப்பத்து, எட்டுமுறை பத்து.

**எண்பித்தல்** – மெய்ப்பித்தல், சான்று காட்டி நிறுவுதல்.

**எண்பெருந்துணைவர்** – காண்க: **எண்பேராயம்,** அரசர்க்குரிய எட்டுவகை ஆயத்தார்.

**எண்பேராயம்** – எண்பெருந்துணைவர்; கரணத்தியலவர், கருமவிதிகள், கனகச் சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானைவீரர், இவுளி மறவர்; அரசர்க்குச் சாந்து, பூ, கச்சு, ஆடை, பாக்கு, வெற்றிலை, கஞ்சுகம், நெய் ஆகியவற்றை ஆராய்ந்து கொடுப்போர்.

**எண்பொருள்** – எளிதில் அடையும் பொருள்; வேர் முதல் வித்து ஈறான எட்டுப்பொருள்: வேர், கிழங்கு, பட்டை, பிசின், இலை, பூ, கனி, வித்து.

**எண்மயம்** – எண்வகைப் பெருமிதம்: பிறப்பு, குலம், கல்வி, செல்வம், வனப்பு, சிறப்பு, தவம், உணர்வு.

**எண்மர்** – எட்டுப் பேர்; கணிதர்.

**எண்மானம்** – எண்ணை எழுத்தால் எழுதுதல்.

**எண்மை** – எளிமை, தாழ்மை; கனிசம்.

**எண்மையன்** – எளியவன்.

**எண்வகைக்காட்சி** – ஐயுறாமல் அறஞ்செயல், அவாவின்மை, உவர்ப்பில் அறிவுடைமை, மூடமறுத்தல், மிகப் பழி மறுத்தல், அழிந்தோரை நிறுத்தல், அறம் விளக்கல், அறுசமயத்தவரன்பு.

**எண்வகைத்துணைவர்** – காண்க: **எண்பேராயம்.**

**எண்வகைப்பத்தி** – சிவத்தொண்டருக்கு உரிய எட்டுப் பக்திச் செயல்கள்: தொண்டரடி தொழுதல், சிவபூசை மகிழ்ச்சி, சிவார்ச்சனை, சிவப் பணிவிடை, சிவசரிதம் கேட்டல், பத்தியால் புளகமுறல், சிவன்புகழ் சிந்திக்கை, திருப்பணிப் பொருளைக் கவர்ந்து கொள்ளாமை.

**எண்வகை மணம்** – எட்டுவகையான திருமண நிகழ்ச்சிகள்: பிரம மணம், பிரசாபத்திய மணம், ஆரிட மணம், தெய்வ மணம், காந்தருவ மணம், ஆசுர மணம், இராக்கத மணம், பைசாச மணம்.

**எண்வகை மாலை** – போர்க்காலத்து அணியும் எட்டுவகை மலர்மாலை: வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை.

**எண்வகைவிடை** – எண்ணிறை, எட்டுவகையான பதிலுரை: சுட்டுவிடை, மறைவிடை, நேர் விடை, ஏவல்விடை, வினாவிடை, உற்ற துரைத்தல் விடை, உறுவது கூறல் விடை, இனமொழி விடை.

**எணம்** – மதிப்பு.

**எத்தன்** – ஏமாற்றுவோன், விரகுள்ளவன்; இதஞ் சொல்லி வஞ்சிப்போன்.

**எத்தனம்** – முயற்சி; ஆயத்தம்; கருவி.

**எத்தனித்தல்** – முயலுதல்.

**எத்தனை** – அளவின் மிக்கன என ஒழிந்த பொருளை அவாவி நிற்கும் ஒரு வினாமொழி, எவ்வளவு; பல.

**எத்தாப்பு** – ஆடை; வேட்டி.

**எத்தி** – ஏமாற்றுபவள்.

**எத்து** – வஞ்சகம், உபாயம்.

**எத்து** (வி) – வஞ்சி, இதஞ்சொல்லி வஞ்சி.

**எத்துக்கண்ணி** – புல்லுருவி.

**எத்துணை** – எவ்வளவு.

**எத்துதல்** – வஞ்சித்தல், இதஞ்சொல்லி மோசம் செய்தல்.

**எத்தும்** – எத்திறத்தும், எவ்வகையாலும்.

**எத்துவாதம்** – எதிர்ப் பேச்சு; ஏமாற்றுப் பேச்சு.

**எதளா** – புளியமரம்.

**எதா** – எப்படி, எவ்வாறு.

**எதாசக்தி** – தன் வலிமைக்குத் தக்கபடி, கூடிய வரை, இயன்றவரை.

**எதாப்பிரகாரம்** – வழக்கம்போல.

**எதார்த்தம்** – உண்மை.

**எதி** – துறவி, சன்னியாசி.

**எதிர்** – வருங்காலம்; எதிரிடை; முன்; முன்னுள்ளது; முரண்; கைம்மாறு; இலக்கு; போர்.

**எதிர்** (வி) – எதிர் என்னும் ஏவல்.

**எதிர்க்கட்சி** – எதிரான கூட்டம்; மறுபக்கம்.

**எதிர்க்கடை** – போட்டியாயுள்ள கடை; எதிர்ப்பு.

**எதிர்க்களித்தல்** – குமட்டுதல்.

**எதிர்(ரு)க்கெடுத்தல்** – குமட்டுதல், உண்ட உணவு மேலே திரும்புதல்.

**எதிர்க்கை** – மேற்கூரையின் எதிர்மரம்; பகைத்தல்.

**எதிர்கழறுதல்** – மாறு கூறுதல்; ஒத்தல்.

**எதிர்காலம்** – வருங்காலம், வினைச்சொல்லின் காலவகை.

**எதிர்காற்று** – நோக்கிச் செல்லும் திசையிலிருந்து மாறாக வரும் காற்று; நேர்காற்று; எதிர்த்து அடிக்கும் காற்று.

**எதிர்கொள்ளுதல்** – வந்தவர்க்கு முன்சென்று அளவளாவுதல், வரவேற்றல்; ஏற்றுக் கொள்ளுதல்.

**எதிர்கோள்** – எதிர்கொள்ளுகை.

**எதிர்ச்சாட்சி** – மாறான சான்று; எதிர் வழக்காடி யின் சாட்சி.

**எதிர்ச்சி** – எதிர்க்கை.

**எதிர்ச்சீட்டு** – காண்க: **எதிரிடை முறி.**

**எதிர்ச்செட்டு** – போட்டி வாணிகம்; வாங்கி விற்கும் வாணிகம்.

**எதிர்செய்குறை** – ஒருவர் செய்த உதவிக்குச் செய்யும் மாற்றுதவி, கைம்மாறு.

**எதிர்செலவு** – வரவேற்க எழுந்து செல்லுதல்.

**எதிர்சோழகம்** – நேர்தெற்கிலிருந்து வீசும் காற்று.

**எதிர்த்தட்டு** – எதிர்ப்பக்கத்துத் தராசின் தட்டு; எதிரிடை.

**எதிர்த்தல்** – சந்தித்தல்; மாறுபடுதல்; தாக்குதல்; தடுத்தல்.

**எதிர்த்தலை** – எதிர்த்தட்டு.

**எதிர்த்துத் தருதல்** – ஒத்துக்கொடுத்தல்.

**எதிர்த்துப்பேசுதல்** – மாறு சொல்லுதல்; அடங் காமல் பேசுதல்.

**எதிர்தல்** – தோன்றுதல்; உண்டாதல்; முன்னா தல்; மலர்தல்; மாறுபடுதல்; சந்தித்தல்; தம்மிற்கூடுதல்; எதிர்காலத்து வருதல்; எதிர்த் தல், மலைதல்; பொருந்துதல்; கொடுத்தல்; ஏற்றுக்கொள்ளுதல்; பெறுதல்.

**எதிர்ந்தோர்** – பகைவர்.

**எதிர்நடை** – மூலப்படி; மாறுபட்ட ஒழுக்கம்.

**எதிர்நடைக்கணக்கு** – கூட்டாளிகளின் தனிக் கணக்கு.

**எதிர்நாள்** – எதிர்நோக்கு நட்சத்திரம்.

**எதிர்நிரனிறை** – முறை மாறி வரும் நிரல்நிறை.

**எதிர்நிலை** – எதிர்நிற்றல்; மாறுபட்டு நிற்றல்; கண்ணாடி.

**எதிர்நிலையணி** – உவமான உபமேயங்களை மாற்றிச் சொல்லும் அணி; உவமானத்திற்குக் குறைவுதோன்றச் சொல்வது.

**எதிர்நிற்றல்** – முன்னிற்றல்; மாறுபட்டு நிற்றல்; போர் செய்தல்; எதிர்த்து நிற்றல்.

**எதிர்நீச்சு** – வெள்ளப் போக்கிற்கு எதிராக நீந்துகை; செய்தற்கு அரிய செய்கை.

**எதிர்நூல்** – பிறர் கொள்கையை மறுக்கும் நூல், தன்கோள் நிறுவிப் பிறன்கோள் மறுப்பது.

**எதிர்ப்படுதல்** – முன்தோன்றுதல்; சந்தித்தல்; ஒப்பாதல்; நேரிடுதல், நேரே வருதல்.

**எதிர்ப்பாடு** – நேரிடுதல், சந்திக்கை.

**எதிர்ப்பாய்ச்சல்** – எதிராகப் பாய்கை; எதிரான நீரோட்டம்.

**எதிர்ப்பு** – எதிர்க்கை; சகுனம்.

**எதிர்ப்பை** – காண்க: **குறியெதிர்ப்பை.**

**எதிர்பார்த்தல்** – ஒன்றை நோக்கியிருத்தல்; வரவு பார்த்திருத்தல்; பிறருதவி நோக்கல்.

**எதிர்மலர்** – புதிய மலர்.

**எதிர்மறுப்பு** – முன்னொடுபின் முரணக் கூறுகை.

**எதிர்மறை** – எதிர்மறுப்பு, உடன்பாட்டிற்கு மாறானது, முரண்.

**எதிர்மறையிடைநிலை** – எதிர்மறைப்பொருளைக் காட்டும் ஆ, அல், இல் என்னும் இடைநிலைகள்.

**எதிர்மறையிலக்கணை** – தனக்கு எதிர்மறையாகிய பொருளைக் குறிப்பாலுணர்த்துவது.

**எதிர்மறையும்மை** – எதிர்மறைப் பொருளில் வரும் உம் என்னும் இடைச்சொல்.

**எதிர்மறைவினை** – உடன்பாட்டிற்கு மாறாக வரும் வினைச்சொல்.

**எதிர்மீன்** – நீர்ப்பாய்ச்சலுக்கு எதிரே வரும் மீன்.

**எதிர்முகம்** – நேரெதிர், முன்னிலை.

**எதிர்முகவேற்றுமை** – விளிவேற்றுமை.

**எதிர்முறி** –காண்க: **எதிரிடைமுறி.**

**எதிர்மூச்சுப்போடுகை** – எதிரெதிராக நின்று மூச்சு வாங்க நெற்குற்றுகை.

**எதிர்மை** – எதிர்காலத்தில் நிகழ்வது.

**எதிர்மொழி** – மறுமொழி; மறுப்புரை; வழக்கில் எதிர்வழக்காடி கொடுக்கும் பதிலுரை.

**எதிர்வ** – முன்னே வருவன.

**எதிர்வட்டி** – செலுத்தும் மூலத்தொகைக்கு ஏற்பக் கழிக்கும் வட்டி.

**எதிர்வரவு** – பிற்காலத்து வருகை.

**எதிர்வழக்காடி** – வழக்குத் தொடுத்தோனுக்கு எதிராக வழக்காடுபவன், பிரதிவாதி.

**எதிர்வழக்கு** – எதிர்வாதம், பிரதிவாதம்.

**எதிர்வாக்கு, எதிர்வார்த்தை** } – பதிலுரை.

**எதிர்வாதம்** – பிரதிவாதியின் வாதம்; மாறுபடக் கூறுகை.

**எதிர்வாதி** – எதிர் வழக்காடி, வழக்கிற் பிரதிவாதி; தன் பக்கத்துக்கு எதிராக வாதிப்பவன்; எதிர்க்கட்சி பேசுவோன்.

**எதிர்வாய்** – ஏரியின் முன்வாய்.

**எதிர்விற்பனை** – போட்டி வாணிகம்.

**எதிர்வினை** – எதிர்காலத்துச் செய்கை, எதிர்காலத்தில் நேரவிருக்கும் செயல்கள்; எதிர்மறை வினை.

**எதிர்வு** – எதிர்ப்படுகை; எதிர்காலம்; நேரவிருப்பது.

**எதிர்வெட்டு** – மறுதலை, மறுப்பு.

**எதிர்வைத்தல்** – சரிவைத்தல்.

**எதிர** – ஓர் உவமவுருபு.

**எதிரடையோலை** – அடையோலை எழுதித் தருபவருக்குக் கொடுக்கும் ஆதரவுச்சீட்டு.

**எதிரதாக்காத்தல்** – வரக்கடவதாகிய ஒன்றை முன்னே அறிந்து அதன் காரணத்தை விலக்குதல்.

**எதிரதுதழீஇய எச்சவும்மை** – எதிர்காலச் செயலை விளக்கி நிற்கும் இடைச்சொல்: ‘சாத்தனும் வருவான்’ என்றால் ‘கொற்றனும் வருவான்’ என்பது வெளிப்படுதல் போல்வது.

**எதிரது தழுவுதல், எதிரது போற்றல்** } – உத்தி முப்பத்திரண்டனுள் ஒன்று, முன்னில்லாதன வாயினும் தற்கால வழக்காயின் அவற்றை ஏற்றுக் கொள்ளுதல்.

**எதிரம்பு கோத்தல்** – ஒருவர் எய்யும் அம்பிற்கு எதிராக அம்பு விடுகை; எதிர்த்து நிற்றல்.

**எதிரழற்சி** – எரிப்புண்டாக்கும் மருந்து.

**எதிராசன்** – துறவிகளுள் சிறந்தவராகிய இராமானுசர்.

**எதிராப்பு** – கழலாதபடி வைக்கும் ஆப்பு.

**எதிராளி, எதிரி** } – பகைவன்; எதிர்வழக்காடி, பிரதிவாதி; எதிரிடைக்காரன், போட்டி போடுபவன்; சமமாயிருப்பவன்.

**எதிரிடுதல்** – எதிர்ப்படுதல்; எதிர்த்தல்; மாறுபடுதல்.

**எதிரிடை** – எதிர்க்கை; பகை; போட்டி; சமமாயிருப்பது; எதிரிடை முறி.

**எதிரிடைச்சீட்டு, எதிரிடைமுறி** } – காண்க: **எதிரடையோலை.**

**எதிரிலி** – எதிரில்லாதவன், எதிர்ப்பார் எவரும் இல்லாதவன்; ஒப்பில்லாதவன்.

**எதிருத்தரம்** – மறுமொழி.

**எதிருரைத்தல்** – எதிர்த்துப் பேசுதல்; மறுமொழி உரைத்தல்.

**எதிரூன்றுதல்** – எதிரூன்றல், போருக்கு உறுதியாய் எதிர்நிற்றல்.

**எதிரெடுத்தல்** – காண்க: **எதிர்(ரு)க்கெடுத்தல்.**

**எதிரேவல்** – ஒருவன் செய்த ஏவலின்பொருட்டு மாறாக அவன்மீது ஏவுகை; ஏவலையெடுக்கச் செய்கை.

**எதிரேற்றம்** – மாறாக எதிரே போதல்; போருக்கு எதிரேறிச் செல்லுகை.

**எதிரேற்றல்** – எதிர்கொள்ளுதல், எதிர்கொண்டு வரவேற்றல்; பிறன்மேல் வருவதைத் தானேற்றல்; எதிர்த்தல்; எதிரேவல்; தடுத்தல்.

**எதிரேறு** – வலிமை; எதிர்கொள்ளல்.

**எதிரொலி** – மாற்றொலி.

**எதிரொலித்தல்** – பிரதித்தொனி செய்தல், எதிரொலி காணல்.

**எது** – யாது.

**எதுகுலகாம்போதி** – ஒரு பண்வகை.

**எதுகுலம்** – யதுகுலம், யதுவின் மரபுவழி.

**எதுகை, எதுகைத்தொடை** – எதுகைத்தொடை, செய்யுளடிகளிலாயினும் சீர்களிலாயினும் முதலெழுத்து அளவொத்து நிற்க இரண்டாமெழுத்து ஒன்றிவருவது; பொருத்தம்.

**எதோள், எதோளி** – எவ்விடம்.

**எந்த** – வினா, வினாப் பொருளில் வரும் பெயர்ச் சொல்லுக்கு முன்வரும் ஓர் இடைச்சொல்.

**எந்திரக்கிணறு** – நீரை நிறைத்தற்கும் வடித்தற்குமுரிய பொறியையுடைய கிணறு.

**எந்திரகாரன்** – சூத்திரக்காரன்.

**எந்திரநாழிகை** – நீர் வீசும் ஒருவகைக் கருவி.

**எந்திரப்பொருப்பு** – பல்வகைப் பொறிகள் அமைக்கப்பட்ட செய்குன்று.

**எந்திரம்** – சூத்திரப்பொறி; மதிலுறுப்பு; கரும்பு ஆலை; தேர்ச்சக்கரம்; குயவன் திரிகை; பஞ்சு கொட்டும் எந்திரம்; செக்கு; தீக்கடைகோல்; மந்திரச் சக்கரம்.

**எந்திரவாவி** – எந்திரக் கிணறு, நீரை நிரப்பவும் வடிக்கவும் உரிய பொறியையுடைய நீர்நிலை.

**எந்திரவில்** – தானே எய்யும் விற்பொறி.

**எந்திரவூசல்** – பிறராட்டாத நிலையில் தானே ஆடும் பொறியமைந்த ஊசல்.

**எந்திரவூர்தி** – சூத்திரத்தால் தானே இயங்கும் ஊர்தி.

**எந்திரவெழினி** – பொறியினால் எழவும் விழவும் கூடியபடி அமைக்கப்பட்ட திரை.

**எந்திரன்** – தேர்.

**எந்திரி** – பாவையை ஆட்டுவிப்போன்.

**எந்து** – என்ன; எப்படி; ஏன்.

**எந்தை** – எம் தந்தை; எம் தலைவன்; எம் தமையன்.

**எந்தைபெயரன்** – எம் தந்தையின் பெயர் தாங்கிய என் மகன்.

**எப்படி** – எவ்வண்ணம், எவ்விதம், எவ்வாறு.

**எப்பொழுது** – எக்காலம், எப்போது.

**எப்பொழுதும்** – எக்காலமும், எல்லாக் காலமும்.

**எப்போது** – காண்க: **எப்பொழுது.**

**எப்போதும்** – காண்க: **எப்பொழுதும்.**

**எப்போழ்து** – காண்க: **எப்பொழுது.**

**எப்போழ்தும்** – காண்க: **எப்பொழுதும்.**

**எம்** – 'யாம்' என்பது பொருள் வேற்றுமைப்பட வரும்பொழுது திரியும் நிலை; எம்முடைய; உளப்பாட்டுத் தன்மைப் பன்மை விகுதி.

**எம்பர்** – எவ்விடம்.

**எம்பரும்** – எவ்விடத்தும்.

**எம்பி** – எமக்குப்பின் பிறந்தவன், எம் தம்பி, இளையவன்.

**எம்பிராட்டி** – எங்கள் தலைவி.

**எம்பிரான்** – எங்கள் தலைவன்; எங்கள் தேவன்; கடவுள்.

**எம்புகம்** – நிலக்கடம்பு.

**எம்பெருமான்** – காண்க: **எம்பிரான்.**

**எம்பெருமான்வெட்டு** – ஒரு பழைய நாணயவகை.

**எம்பெருமானார்** – இராமானுசர்.

**எம்மர், எம்மவர்** – எம்முடையோர், எமது சுற்றத்தார்.

**எம்மனை** – எம் தாய், தாய்.

**எம்மனோர்** – எம்மை ஒத்தவர், எம்மோடொத்தவர்; நாங்கள்.

**எம்மான்** – எம் தந்தை; எம் கடவுள்; எம் மகன்.

**எம்முன்** – எம் தமையன்.

**எம்மை** – எப்பிறப்பு; எம் தலைவன்; எவ்வுலகு.

**எம்மையோர்** – காண்க: **எம்மவர்.**

**எம்மோன்** – எம் தலைவன்.

**எமகணம்** – எமனுடைய கூட்டத்தார்.

**எமகாதகன்** – பெருந்திறல் படைத்தவன்.

**எமகிங்கரன்** – எமனுடைய ஏவல் செய்வோன், எமனுடைய வேலையாள்.

**எமதங்கி** – சமதக்கினி, பரசுராமனின் தந்தை.

**எமதருமன்** – யமன்.

**எமதூதன்** – யமனுடைய தூதன்; நல்லபாம்பின் நச்சுப் பற்களுள் ஒன்று.

**எமதூதி** – நாகப்பாம்பின் நச்சுப் பற்களுள் ஒன்று.

**எமநாகம், எமநாமம்** – ஊமத்தை; ஓமம்.

**எமபாசம்** – யமனுடைய கயிறு.

**எமபுரம்** – யமனுடைய தலைநகர், வைவச்சுத நகரம்.

**எமர்** – எம்மவர்; எம்போலியர்.

**எமரங்கள்** – எம்மவர்கள், எம் சுற்றத்தவர்கள்.

**எமரன்** – எம்மைச் சேர்ந்தவன்; எமன்.

**எமராசன்** – யமன்.

**எமன்** – யமன்; எம்முடையன், சுற்றத்தான்.

**எமி** – தனிமை; கூடியிருப்போன்(ள்).
**எமுனை** – யமுனையாறு.
**எய்** – முள்ளம்பன்றி; அம்பு; ஓர் உவமவுருபு.
**எய் (வி)** – எய்என் ஏவல், அம்பு செலுத்து.
**எய்த்தல்** – இளைத்தல்; குறைவடைதல்; மெய் வருந்துதல்; ஒய்தல்; வறுமையடைதல்; காலூன்றி நிற்கும்படி நீர் ஆழமில்லாது இருத்தல்; அறிதல்.
**எய்த** – நன்றாக; நிரம்ப.
**எய்தல்** – அடைதல், சேர்தல்; அம்பைச் செலுத்தல்; நிகழ்தல், சம்பவித்தல்; பெறுதல்.
**எய்துதல்** – அணுகுதல்; அடைதல், சேர்தல்; பணிதல்; நீங்குதல்; பொருந்துதல்; நிகழ்தல்; உண்டாதல்; போதியதாதல்; பயன் நுகர்தல்.
**எய்ப்பன்றி** – முள்ளம்பன்றி.
**எய்ப்பாடி** – வேடர் ஊர்.
**எய்ப்பினில்வைப்பு** – கேட்டில் உதவும் பொருள், இளைத்த காலத்தில் உதவுதற்காகச் சேர்த்து வைக்கும் பொருள், சேமநிதி; தான் தளர்ந்தும் பிறரைத் தாங்குவது.
**எய்ப்பு** – இளைப்பு, தளர்ச்சி, ஒடுக்கநிலை; வறுமைக்காலம்.
**எய்ப்போத்து** – ஆண் முள்ளம்பன்றி.
**எய்ம்மான்** – காண்க: எய்ப்பன்றி.
**எய்யாமை** – அறியாமை.
**எயில்** – மதில்; ஊர்; நகரம்.
**எயில்காத்தல்** – அகத்தோன் உள்ளிருந்து கோட்டையைக் காத்து நிற்பக் கூறும் புறத்துறை.
**எயிற்றம்பு** – அலகம்பு.
**எயிற்றி** – எயினச்சாதிப் பெண், பாலைநிலப் பெண், வேட்டுவப் பெண்.
**எயிற்றுவலி** – பல்லீறு வளர்தலால் உண்டாகும் நோவு.
**எயிறதைப்பு** – பல்லின் அடிவீக்கம்.
**எயிறலைத்தல்** – பற்கடிப்பு, பல்லைக் கடித்தல்; சினத்தால் பல்லைக் கடித்தல்.
**எயிறிலி** – சூரியன்.
**எயிறு** – பல்; பல்லின் விளிம்பு; யானைக்கோடு; பன்றிக்கொம்பு; கணு.
**எயிறுதின்றல்,** / **எயிறுதின்னுதல்** } – பற்கடித்தல்; சினத்தால் பல்லைக் கடித்தல்.
**எயின்** – வேடச்சாதி, பாலைநில மக்கள், மறவர்.
**எயின்கடன்** – பலிக்கடன்.
**எயின்சேரி** – வேடரது ஊர்.
**எயினன்** – வேடன்.
**எரங்காடு** – பாழ்நிலம்; பருத்தி விளைதற்குரிய செழித்த புன்செய் நிலம்.
**எரி** – நெருப்பு; வேள்வித் தீ; தீக்கடைகோல்; ஒளி; அக்கினிதேவன்; நரகம்; கார்த்திகை; புனர்பூசம்; கந்தகம்; இடபராசி; கேட்டை; வால்மீன்வகை.
**எரி (வி)** – எரிஎன் ஏவல்; ஒளிர்; அழல்; பொறாமைகொள்; சினங்கொள்; வயிறெரி.
**எரிக்கொடி** – நெருப்பின் கொழுந்து; முடக்கொற்றான்; சோதிக்கொடி.
**எரிகதிர்** – சுடுகதிர்; கதிரவன், சூரியன்.
**எரிகரும்பு** – விறகு.
**எரிகறி** – சுண்டற்கறி.
**எரிகாசு** – காசுக்கட்டி.
**எரிகாலி** – காட்டாமணக்கு.
**எரிகுஞ்சி** – செம்மயிர்.
**எரிகுட்டம்** – குட்டநோய்வகை.
**எரிகுடல்** – எரிவயிறு, மிகு பசி.
**எரிகுடலன்** – மிகுந்த பசியுடையவன்.
**எரிகும்பவாயு** – வயிற்றுநோய்வகை.
**எரிகுன்மம்** – குன்மநோய்வகை.
**எரிகொள்ளி** – கொள்ளிக்கட்டை, கடைக்கொள்ளி.
**எரிச்சல்** – எரிவு; அழற்சி; உறைப்பு; சினம்; பொறாமை; பெருங்காயம்; வெறுப்பு.
**எரிசனம்** – நரகர், நிரயத்திருப்போர்.
**எரிசாலை** – மருந்துப் பூண்டுவகை.
**எரிசுடர்** – எரியும் நெருப்பு; மிக்க ஒளி; செவ்வொளி; தீ; விளக்கு.
**எரித்தல்** – தீயில் வேகச்செய்தல்; அழற்றுதல்; செரிக்கச் செய்தல்; விளக்கை எரியச்செய்தல்; மருந்து முதலியன புடமிடுதல்.
**எரிதல்** – சுடருண்டாதல்; ஒளிவிடுதல்; எரிச்சலுண்டாதல்; பொறாமைகொள்ளுதல்; சினத்தல்; துயரமடைதல்.
**எரிதுரும்பு** – காண்க: **எரிகரும்பு.**
**எரிதூவுதல்** – தீப்பற்றுதல்.
**எரிதைலம்** – கடைச்சரக்கிட்டுக் காய்ச்சிய எண்ணெய்.
**எரிந்துவிழுதல்** – சினமாகப் பேசுதல்; மூர்க்கங் காட்டுதல்.
**எரிநகை** – வெட்சிமலர்.
**எரிநரகம்** – காண்க: **எரிபரல்வட்டம்.**
**எரிப்பு** – கார்ப்புச் சுவை; பொறாமை; நெஞ்செரிப்பு; எரிக்கை.
**எரிப்புறம்** – நரகம்.
**எரிப்பூ** – எரிபோலும் நிறமுள்ள பூ.
**எரிபடுவன்** – பிளவை நோய்வகை.
**எரிபந்தம்** – தீவட்டி; உடலெரிச்சல்.
**எரிபரல்வட்டம்** – ஏழு நரகத்துள் ஒன்று.
**எரிபிடாரி** – எரிச்சலுடையவள்; உக்கிரமாகாளி, கொற்றவை.
**எரிபுழு** – தொட்டால் எரிச்சலுண்டாக்கும் புழு கம்பளிப்பூச்சி.
**எரிபொத்துதல்** – நெருப்பு மூட்டுதல்.

**எரிபொழுது** – மாலைவேளை; செவ்வானப் பொழுது.

**எரிமணி** – ஒளியுள்ள மணி, மாணிக்கம்.

**எரிமருந்து** – எரித்தெடுக்கும் மருந்து; உறைப்பான மருந்து; வெடிமருந்து.

**எரிமலர்** – முருக்கமலர்; செந்தாமரை.

**எரிமலை** – நெருப்பைக் கக்கும் மலை.

**எரிமுகி** – சேங்கொட்டை மரம்.

**எரியல்** – எரிவு; ஒளிவிடுகை; எரிந்தது.

**எரியவிட்ட மருந்து** – நீற்றின பற்பம்.

**எரியவிழித்தல்** – சினத்தோடு நோக்குதல்.

**எரியாடி** – ஊழித்தீயில் நின்று ஆடுவோன், அழலைக் கையிலேந்தி ஆடுபவன், சிவன்.

**எரியூட்டுதல்** – தீக்கொளுத்துதல், நெருப்புக்கு இரையாக்குதல்; வேள்வித் தீ வளர்த்து வழிபடல்.

**எரியோம்புதல்** – வேள்வி செய்தல்.

**எரியோன்** – அக்கினிதேவன், தீக்கடவுள்.

**எரிவட்டம்** – காண்க: **எரிபரல்வட்டம்.**

**எரிவண்டு** – எரிச்சலுண்டாக்கும் வண்டு, பட்ட இடம் எரியும் வண்டு; கண்ணில் அடிக்கும் வண்டு.

**எரிவந்தம்** – எரிச்சல்; சினம்.

**எரிவளர்ப்போர்** – வேள்வித்தீ வளர்ப்போர்.

**எரிவனம்** – சுடுகாடு.

**எரிவிரியன்** – எரிச்சலை உண்டாக்கும் விரியன் பாம்புவகை.

**எரிவிழித்தல்** – தீக்கண்ணாற் பார்த்தல், சினந்து நோக்குதல்.

**எரிவிளக்குறுத்தல்** – நடைவிளக்கெரித்துத் தண்டித்தல், குற்றவாளியின் தலைமேல் எரியும் விளக்கை வைத்து நகரைச் சுற்றிவரச் செய்யும் தண்டனை.

**எரிவு** – எரிகை, உடலெரிச்சல்; பொறாமை; சினம்.

**எரு** – உரம்; சாணி; வறட்டி; பசளை; மலம்.

**எருக்கட்டுதல்** – பயிரிடும் நிலத்தில் எருவிடும் பொருட்டு ஆடு மாடு முதலியவற்றைக் கிடைவைத்தல்.

**எருக்கட்டு** – கிடைவைத்த கொல்லை.

**எருக்கட்டுதல்** – கிடைவைத்தல்; சாணம் சேர்த்தல்.

**எருக்கம்** – எருக்கஞ்செடி; எருக்கம்பூமாலை.

**எருக்கழித்துக் கொடுத்தல்** – வைக்கோலில் சாணியிட்டுக் கொடுத்து மாட்டின் விற்பனையை உறுதிப்படுத்துதல்.

**எருக்களம்** – எருவிருக்குமிடம், எருச் சேமிக்கும் இடம்.

**எருக்கு** – எருக்கஞ்செடி; வெள்ளெருக்கு; துன்பம்.

**எருக்குதல்** – வருத்துதல்; கொல்லுதல்; வெட்டுதல்; தாக்குதல், அடித்தல்; அழித்தல்; சுமத்துதல்; தாக்கி ஒலியெழச் செய்தல்.

**எருக்குரல்** – தாக்குதலால் ஏற்படும் ஒலி.

**எருக்கொடுத்தல்** – காண்க: **எருக்கழித்துக் கொடுத்தல்.**

**எருச்சாட்டி** – எருவிட்ட நிலம்.

**எருத்தடி** – செய்யுளின் ஈற்றயலடி.

**எருத்தம்** – கழுத்து; பிடர்; தோள், கலிப்பாவின் உறுப்புகளுள் ஒன்றாகிய தரவு; செய்யுளின் ஈற்றயலடி.

**எருத்தன்** – காளைபோன்ற வலிமையுடையவன்.

**எருத்து** – கழுத்து; தரவு என்னும் கலிப்பாவின் முதலுறுப்பு; செய்யுளின் ஈற்றயலடி.

**எருத்துக்காளை** – இளவெருது.

**எருத்துத்திமில்** – மாட்டுக்கொண்டை, விடையின் முரிப்பு, மாட்டின் முசுப்பு.

**எருத்துப்புரை** – மாட்டுக்கொட்டில்.

**எருத்துப்பூட்டு** – ஏர்ப்பூட்டு; நல்ல நாளில் ஏர் பூட்டி உழத் தொடங்குதல்.

**எருத்துமாடு** – எருது, காளை; பொதிமாடு.

**எருத்துவாலன்** – நீண்ட வாலுள்ள ஒரு குருவி வகை; கோரைக்கிழங்கு.

**எருதடித்தல்** – உழுதல்; சூடடித்தல், நெற்கதிரைக் கடாவிட்டுத் துவைத்தல்.

**எருது** – இடபம், காளைமாடு; இடபராசி.

**எருதுகட்டி** – சல்லிக்கட்டில் காளையை மடக்குவோன்.

**எருதுகட்டு** – சல்லிக்கட்டு.

**எருதுமறித்தல்** – பசுவுடனே காளை சேர்த்தல், எருது பொலிதல்.

**எருந்தி** – இப்பி, கிளிஞ்சில்.

**எருந்து** – உரல்; காண்க: **எருந்தி.**

**எருமணம்** – செங்குவளை; சாணி நாற்றம்.

**எருமன்றம்** – எருக்குவித்து வைக்கும் இடம்; இடையர் சேரியிலுள்ள அம்பலம்.

**எருமுட்டை** – காய்ந்த சாணம், வறட்டி.

**எருமை** – எருமைமாடு, காரான்; எருமைமறம்; யமன்.

**எருமைக்கடா** – ஆண் எருமை.

**எருமைக்கடாரி** – பெண் எருமை.

**எருமைக்கப்பல்** – புகையிலைவகை.

**எருமைக் கற்றாழை** – ஒருவகைக் கற்றாழை.

**எருமைக் காஞ்சொறி** – ஒருவகைக் காஞ்சொறிப் பூடு.

**எருமைக்கொற்றான்** – ஒருவகைக் கொற்றான் கொடி.

**எருமைச்சுறா** – ஒரு மீன்வகை.

**எருமைத் தக்காளி** – சீமைத் தக்காளி, பெருந் தக்காளி.

**எருமைநாக்கள்ளி** – கள்ளிவகை.
**எருமைநாக்கி** – ஒரு மீன்வகை; சனகிப் பூடு.
**எருமைநாக்கு** – ஒரு மீன்வகை.
**எருமைப்போத்து** – எருமைக்கடா.
**எருமைமறம்** – பகைவர் படையைத் தனியனாய் நின்று வீரனொருவன் தாக்குகை, வீரன் ஒருவன் தன் படை முதுகிடவும் பகைவர் படையைத் தான் அஞ்சாது எதிர்த்து நிற்கும் புறத்துறை.
**எருமைமுல்லை** – ஒருவகை முல்லை.
**எருமைமுன்னை** – முன்னைமரவகை.
**எருமையின்றிசை** – யமன் திக்கு, தெற்கு.
**எருவண்டு** – எருவிலிருந்து உண்டாகும் ஒருவகை வண்டு.
**எருவறட்டி** – காண்க: **எருமுட்டை.**
**எருவாரம்** – எரு உரம் இட்டதற்காகக் கொடுக்கும் தவசப் பங்கு.
**எருவை** – பருந்து; கழுகு; கொறுக்கச்சி; பஞ்சாய்க் கோரை; கோரைக்கிழங்கு; செம்பு; அரத்தம்; கழுதை.
**எல்** – ஒளி; சூரியன்; வெயில்; பகல்; இரவு; நாள்; பெருமை; இகழ்ச்சி, இகழ்மொழி.
**எல்கை** – எல்லை.
**எல்ல** – எல்லா, ஏல, ஏடி, தோழி முன்னிலைப் பெயர்.
**எல்லம்** – இஞ்சி.
**எல்லரி** – கைம்மணி; ஒருவகைப் பறை, சல்லி என்னும் வாத்தியம்.
**எல்லவரும்** – காண்க: **எல்லாரும்.**
**எல்லவன்** – சூரியன்; சந்திரன்.
**எல்லா** – விளிப்பெயர்; முன்னிலைப் பெயர்.
**எல்லாம்** – முழுதும்.
**எல்லார்** – தேவர்.
**எல்லாரும்** – யாவரும்.
**எல்லி** – சூரியன்; பகல்; இரவு; இருள்.
**எல்லிநாதன், எல்லிநாயகன், எல்லிப்பகை, எல்லிமன்** – கதிரவன்; சந்திரன்.
**எல்லிமனை** – சூரியன் மனைவி, தாமரை.
**எல்லியறிவன்** – இரவுப்பொழுதை அறியும் கோழிச்சேவல்.
**எல்லிருள்** – விடியற்காலத்திருள்; இரவின் இருள்.
**எல்லினான்** – எல்லோன், கதிரவன்.
**எல்லீரும்** – நீவிர் யாவிரும், எல்லார் நீங்களும், நீங்களெல்லாம்.
**எல்லுதல்** – ஒளி மழுங்குதல்.
**எல்லே** – தோழியை விளிக்கும் சொல், ஒரு வியப்பு இரக்கச் சொல்; வெளிப்படையாக; வெளியே.
**எல்லேமும்** – எல்லார் நாங்களும், நாமெல்லாரும்.
**எல்லேலெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**எல்லை** – வரம்பு; அளவு; அவதி; வரையறை; தறுவாய்; முடிவு; ஐந்தாம் வேற்றுமைப் பொருள்; சூரியன்; பகல்வேளை; நாள்; இடம்; கூப்பிடு தொலைவு.
**எல்லைக்கட்டு** – கட்டுப்பாடு; வரம்பு.
**எல்லைக்கல், எல்லைக்காவல்** – எல்லையறிய நாட்டி வைக்கும் கல்.
**எல்லைக்காவல்** – ஊர்ப்புற எல்லைக்காவல்.
**எல்லைக்குறிப்பு** – எல்லை அடையாளம்; வழி அளவைக் காட்டுங் குறி.
**எல்லைகட்டுதல்** – தீர்த்தல்; வரம்பு வைத்தல்; முடிவு செய்தல்; வரையறுத்தல்; கட்டுப் படுத்துதல்.
**எல்லைகடத்தல்** – வரம்புமீறுதல், அளவிறத்தல்; நியாயம் மீறுதல்.
**எல்லைகுறித்தல்** – எல்லைகட்டுதல்; வரம்பேற் படுத்துதல்.
**எல்லைச்சதிரி** – பெருஞ்சமர்த்தன்.
**எல்லைத்தரிசு** – ஊர் ஓரங்களிலுள்ள கரம்பு நிலம்.
**எல்லைத்தீ** – ஊழித்தீ, வடவைத்தீ.
**எல்லைப்படுத்துதல்** – எல்லை கட்டுதல்; முடிவு படுத்துதல்.
**எல்லைப்பத்திரம்** – எல்லை வழக்குத் தீர்த்து எழுதும் பத்திரம்.
**எல்லைப்பிடாரி** – ஊர்ப்புற எல்லைக் காவல் பெண் தெய்வம்.
**எல்லைமால்** – நான்கு எல்லை.
**எல்லைமானம்** – எல்லை; அளவு.
**எல்லையின்மை** – அளவின்மை.
**எல்லையோடுதல்** – எல்லையைச் சுற்றிவருதல்.
**எல்லைவிருத்தி** – ஊரெல்லையைக் காக்கும் பணி.
**எல்லோ** – ஒரு வியப்பிரக்கச் சொல்.
**எல்லோமும்** – காண்க: **எல்லேமும்.**
**எல்லோரும்** – எல்லாரும், அனைவரும்.
**எல்லோன்** – சூரியன்.
**எல்வளி** – பெருங்காற்று.
**எல்வை** – காண்க: **ஏல்வை,** காலம், பொழுது, நாள்.
**எலா** – நண்பினரை விளிக்கும் ஒரு விளிப்பெயர்.
**எலாம்** – எல்லாம், முற்றும்.
**எலி** – ஒரு சிறு நாற்கால் உயிரி; பெருச்சாளி; கள்ளிமரம்; பூரநாள்; கள்.
**எலிக்காது** – காண்க: **எலிச்செவி.**
**எலிக்குச்சிப்புல், எலிக்குஞ்சப்புல்** – காண்க: **இராவணன்புல்.**

**எலிச்செவி** – எலியின் செவி போன்ற இலையை உடைய ஒரு செடிவகை, சவரியார் கூந்தல் என்னும் ஒருவகைப் பூண்டு; கொடியாள் கூந்தல் என்னும் கொடி.
**எலிச்செவிக்கள்ளி** – கள்ளிவகை.
**எலிச்செவித்துத்தி** – எலிச்செவிப் பூண்டு.
**எலித்திசை** – வடமேற்கு.
**எலித்துருமம்** – தான்றிமரம்.
**எலித்துன்** – எலி தோண்டிய பொந்து.
**எலிப்பகை** – பூனை.
**எலிப்பயல்** – காண்க: **எலியன்.**
**எலிப்பயறு** – வயல் வரப்பில் காணப்படும் காட்டுப் பயறுவகை.
**எலிப்பாகம்** – எலியாமணக்கு, காட்டாமணக்கு.
**எலிப்பிடுக்கன்** – ஒரு பூண்டுவகை.
**எலிப்புலி** – காண்க: **எலிப்பகை.**
**எலிப்பொந்து** – காண்க: **எலிவளை.**
**எலிப்பொறி** – எலியைப் பிடிக்கும் எந்திரம்.
**எலியளை** – காண்க: **எலிவளை.**
**எலியன்** – பொடியன், சிறு பையன்.
**எலியாமணக்கு, எலியால்** – காண்க: **எலிப்பாகம்.**
**எலியாலங்காய்** – காட்டாமணக்கு விதை.
**எலியிடுக்கி** – காண்க: **எலிப்பொறி.**
**எலியெலும்பன்** – குறைந்த வலிமையுடையவன்.
**எலியொட்டி** – ஒட்டொட்டி; ஒட்டங்காய்ப் புல்.
**எலியோட்டி** – குருக்குப் பூண்டு.
**எலியோடி** – நடுமுகட்டிலே வைக்கும் உருட்டு மரம்.
**எலிவளை** – நிலத்தினடியில் தங்க எலி தோண்டும் புரை.
**எலிவாணம்** – வாணவகை.
**எலு** – கரடி; பிஞ்சு; தோழமை.
**எலும்பன்** – எலும்பு தோன்ற மெலிந்தவன்.
**எலும்பி** – எலும்பு தோன்ற மெலிந்தவள்; ஒரு மரவகை, காட்டுமஞ்சரி.
**எலும்பிலி** – ஒரு மரவகை; புழு முதலிய எலும்பில்லாத உயிரினம்.
**எலும்பு** – உடலுக்கு உரம் தரும் உள்ளுறுப்பு, அஸ்தி.
**எலும்புக்கூடு** – எலும்புக் கோவை, கங்காளம்.
**எலும்புக்கோறை** – எலும்புத் துளை.
**எலும்புச்சீப்பு** – தந்தச் சீப்பு; விலாவெலும்பு.
**எலும்புப்பிசகல்** – எலும்பின் பொருத்து நிலை மாறுகை.
**எலும்புமுரிவு** – எலும்பு ஒடிகை.
**எலும்புருக்கி** – உடம்பை வாட்டி எலும்பை வற்றச் செய்யும் ஒரு நோய், சயரோகம்; கருப்பமேகம், ஒருவகைப் பூடு; ஒரு மரவகை.
**எலும்புவிரணம்** – எலும்பைப்பற்றிய புண்.
**எலும்புவீக்கம்** – எலும்பைச் சுற்றிய தசையின் வீக்கம்.
**எலுமிச்சந்துளசி** – பெருந்துளசி.
**எலுமிச்சம்பழச்செண்டு** – எலுமிச்சம்பழத்தைத் தலையிலுடைய செண்டுவகை.
**எலுமிச்சம்பழச்சோறு** – எலுமிச்சம்பழத்தின் சாறுவிட்டுப் பிசைந்த சோறு.
**எலுமிச்சம்பழவுப்பு** – உப்புவகை.
**எலுமிச்சை** – ஒரு மரவகை, எலுமிச்சைவகை; எலுமிச்சம்பழம்; தித்திப்பெலுமிச்சை.
**எலுவ** – தோழன்; முன்னிலைப் பெயர்.
**எலுவல், எலுவன்** – தோழன்.
**எலுவை** – தோழி.
**எவ்** – எவை.
**எவ்வது** – எவ்விதம், எவ்வாறு.
**எவ்வம்** – துன்பம்; தீராநோய்; குற்றம்; இகழ்ச்சி, இழிவு; இளிவரவு; இழிவான சொல்; மானம்; கவடம்; வெறுப்பு.
**எவ்வரும்** – யாவரும்.
**எவ்வளவு** – எத்துணை, எம்மட்டு.
**எவ்வனம்** – இளமை.
**எவ்வாறு** – எவ்வழி; எப்படி.
**எவ்வுதல்** – எழும்புதல்; செலுத்துதல்; தாவுதல்; துன்பமிழைத்தல்.
**எவ்வெலாம்** – உள்ளனவெல்லாம்.
**எவ்வெவர்** – எவரெவர்.
**எவ்வெவை** – எவையெவை.
**எவ்வேழு** – ஏழேழு; தனித்தனி ஏழு.
**எவ்வை** – எம் தங்கை; கவலை.
**எவட்சாரம்** – வெடியுப்பு.
**எவண்** – எவ்விடம்; எவ்வண்ணம், எப்படி.
**எவரும்** – யாரும், எல்லாரும்.
**எவள்** – யாவள்.
**எவற்றையும்** – எல்லாவற்றையும்.
**எவன்** – யாவன்; எவ்வண்ணம்; எப்படி; யாது; யாவை; என்ன; ஏன்; வியப்பு இரக்கச் சொல்.
**எவை** – யாவை.
**எவையும்** – யாவையும்.
**எழல்** – எழும்பல்; கிளர்ச்சி; தோன்றுதல்; புறப்படுதல்; உதித்தல்; மேற்பட்டு வருதல்; துயரம்.
**எழவாங்குதல்** – தொலைவிற்போதல்.
**எழாநிலை** – யானை கட்டும் கூடம்.
**எழால்** – புல்லூறு என்னும் பறவை; யாழ்; யாழ் எழும் இன்னிசை; மக்கள் மிடற்றிசை.
**எழில்** – அழகு; இளமை; வண்ணம்; தோற்றப் பொலிவு; உயர்ச்சி; பருமை; குறிப்பு; சாதுரிய வார்த்தை; வலி.
**எழில்காட்டுதல்** – காண்க: **அழகு காட்டுதல்,** நொடித்துக் காட்டுதல்.

**எழில்சொல்லுதல்** – குறிப்பிற் சொல்லுதல்.

**எழில்நலம்** – வடிவழகு.

**எழில்பிடித்தல்** – மணம் பிடித்தல்.

**எழிலி** – மேகம்.

**எழிலிய** – அழகுபொருந்திய.

**எழிற்கை** – அழகுபெறக் காட்டுங்கை.

**எழினி** – இடுதிரை, திரைச்சீலை; உறை; கடையேழு வள்ளல்களுள் ஒருவன்.

**எழு** – தூண்; படைக்கலவகை; கதவை உள் வாயிற்படியில் தடுக்கும் மரம்.

**எழுகடல்** – உப்பு, நீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் இவற்றை உடைய ஏழு வகைக் கடல்கள்.

**எழுகளம்** – போர்க்களம்.

**எழுகூற்றிருக்கை** – சித்திரகவி வகையுள் ஒன்று, ஒன்று முதல் ஏழு வரையும் எண்கள் முறையே ஒவ்வொன்றாக ஏறியும் இறங்கியும் வருமாறு கூறப்படும் மிறைக்கவிவகை.

**எழுச்சி** – ஊக்கம், முயற்சி; இறுமாப்பு; எழுகை, எழும்புகை; பள்ளியெழுச்சிப் பாட்டு; காதிலெழும்பும் புண்; கண்ணோயுள் ஒன்று; புறப்பாடு; உற்பத்தி; ஆதி.

**எழுச்சிக்கண்ணோவு** – கண் கூச்சமுண்டாக்கும் நோய்.

**எழுச்சிக்கொட்டுதல்** – புறப்பாட்டுக்கு உரிய வாத்தியம் முழக்குதல்.

**எழுச்சிக்கொடி** – கண்ணோய்வகை, கண்ணிற் படருமொரு நோய்.

**எழுச்சிபாடுவான்** – அரசர் முதலியோருக்கு பள்ளியெழுச்சி பாடுவோன்.

**எழுச்சிமுரசம்** – பள்ளியெழுச்சி முரசம்; புறப்பாட்டு முரசம்.

**எழுச்சியிலை** – கண்ணோய்க்குரிய மருந்திலை.

**எழுஞாயிறு** – கதிரவன் தோற்றம்; உதய சூரியன்; ஒருவகைத் தலைநோய்.

**எழுத்தச்சு** – அச்சிட உதவும் எழுத்தமைந்த உரு.

**எழுத்தடைத்தல்** – எழுத்துகளை அறைவகுத்து அடைத்தல்; மந்திரங்களின் எழுத்துகளை அவ்வவற்றிற்குரிய சக்கரங்களின் அறைக்குள் பொருத்தி எழுதுதல்.

**எழுத்ததிகாரம்** – எழுத்திலக்கணம் கூறும் பகுதி.

**எழுத்தந்தாதி** – ஒரு செய்யுளின் ஈற்றெழுத்து அடுத்த செய்யுளின் முதலெழுத்தாகவோ ஓரடியின் ஈற்றெழுத்து அடுத்த அடியின் முதல் எழுத்தாகவோ வரத் தொடுப்பது.

**எழுத்தலங்காரம்** – எழுத்தணி; எழுத்தைக் கூட்டல் குறைத்தல் மாற்றங்களால் தோன்றும் அழகு.

**எழுத்தலிசை** – எழுத்தோசையாகாத முற்கு, வீளை, செருமுதல் முதலியவை.

**எழுத்தறப்படித்தல்** – எழுத்தோசை தெளிவாகப் படித்தல், எழுத்துகள் நன்றாகப் புலப்படும் படி படித்தல்.

**எழுத்தாணி** – ஓலையில் எழுதுதற்குரிய கருவி, ஓலையில் எழுதும் இரும்பாணி; ஒருவகைப் பூண்டு.

**எழுத்தாணிக்கள்ளன்** – கள்ளக் கணக்கு எழுதுவோன்.

**எழுத்தாணிக்குருவி** – மரங்கொத்திக் குருவி.

**எழுத்தாணிப்பூச்சி** – பூச்சிவகையுள் ஒன்று.

**எழுத்தாளன்** – எழுதுவோன்; புலவன்.

**எழுத்தானந்தம்** – பாடப்படுவோன் பெயரைச் சார்த்தி எழுத்தளபெழப் பாடுவதாகிய செய்யுட் குற்றம்.

**எழுத்தியல்** – எழுத்திலக்கணம் கூறும் நூற்பிரிவு.

**எழுத்திலாஓசை** – எழுத்தலிசை, தனக்கு அறிகுறியாக எழுத்துகள் அமையப் பெறாத ஒலி.

**எழுத்தின்கிழத்தி** – கலைமகள்.

**எழுத்து** – அக்கரம்; கல்வி; எழுதப்பட்ட தாள், கடிதம்; கையெழுத்து; ஆதாரச் சீட்டு; கைரேகை; உடன்படிக்கைச் சீட்டு; இலக்கணம்; அட்டவணை; சித்திரம்.

**எழுத்துக்கிறுக்கு** – உடன்படிக்கை எழுதுகை; உடன்படிக்கைப் பத்திரம்.

**எழுத்துக்குற்றம்** – எழுத்திலக்கண வழு.

**எழுத்துக்கூட்டுதல்** – எழுத்துகளைத் தனித் தனியே ஒலித்துப் படித்தல்.

**எழுத்துச்சந்தி** – எழுத்துப் புணர்ச்சி.

**எழுத்துச்சாரியை** - எழுத்துகளைச் சொல்லுகின்ற போது சேர்க்கப்படுகிற சாரியைச் சொற்கள்: கரம், காரம், கான் போன்றவை.

**எழுத்துச்சிற்றாடை** – சித்திரவேலைப்பாடு அமைந்த சிற்றாடைவகை.

**எழுத்துச்சீலை** – சித்திரம் தீட்டிய சீலை.

**எழுத்துச்சுதகம்** – அக்கரச்சுதகம்.

**எழுத்துச்சுருக்கம்** – சொல்லின் எழுத்துச் சுருங்குவதற்காக இடையிற் சிறு கோடிட்டு முதல் இறுதி எழுத்துகளை மட்டும் எழுதுவது, முழுப் பெயர்களைச் சுட்டும் சுருக்க முதற்குறிப்புகள், அக்கரச்சுதகம்.

**எழுத்துநடை** – எளிய இனிய நடை.

**எழுத்துப்படிதல்** – கையெழுத்து ஒருநிலைப் படுதல்.

**எழுத்துப்பானை** - ஓவியம்தீட்டப்பெற்ற பானை.

**எழுத்துப்பிசகு,** **எழுத்துப்பிழை** – எழுத்திலக்கண வழு, எழுத்துத் தவறு.

**எழுத்துப்புடைவை** – சித்திரச்சேலை.

**எழுத்துப்பொருத்தம்** – ஒரு காப்பியத்தின் தொடக்கச் செய்யுளின் முதல் மொழி ஒற்றெழுத்துட்பட மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது

என்னும் எழுத்துகள் கொண்ட ஏதேனும் ஒன்றைப் பெற்றுவரும் செய்யுள் முதல் மொழிப் பொருத்தம்; பிறந்த நட்சத்திரங்களுக்குரிய எழுத்துகளில் ஒன்றோடு தொடங்கப் பெயரிடுதல்.

**எழுத்துமடக்கு** – சொல்லணி மடக்கு வகையுள் ஒன்று, ஓரெழுத்தையே பின்னும் மடக்கிக் கூறுதல்.

**எழுத்துமறைவேளை** – மாலைப்பொழுது.

**எழுத்து வருத்தனம்** – ஓரெழுத் தொருமொழியாய்ப் பின் அதனோடு எழுத்துகள் ஒவ்வொன்றாய்ச் சேர வேறு வேறு பொருள் தந்து நிற்கை.

**எழுத்து வாங்குதல்** – அடிமையாவதற்கு அறிகுறியாக ஆண்டான் பெயரை மார்பில் எழுதிக் கொள்ளுதல்; கையெழுத்து வாங்குதல்.

**எழுத்துவாசனை** – எழுத்துநடை; எழுதவும் படிக்கவும் அறிதல்.

**எழுத்துவெட்டுதல்** – எழுத்துப் பொறித்தல்; கல், உலோகம், பாண்டம் முதலியவற்றில் எழுத்துச் செதுக்குகை.

**எழுத்துவேலை** – இராயசம்; சீலைச் சித்திரத் தொழில்.

**எழுத்தூசி** – எழுத்தாணி.

**எழுத்தெண்ணிப்படித்தல்** – ஒன்றும் விடாமல் படித்தல்; நன்றாகப் படித்தல்; எழுத்துக் கூட்டிப் படித்தல்.

**எழுதகம், எழுதம்** – சிற்ப வேலையில் ஒன்று; சித்திர வேலை; தூணின் அடிக்கல்.

**எழுதல்** – எழுந்திருத்தல்; மேல் எழும்புதல்; தோன்றுதல்; புறப்படுதல்; தொழிலுறுதல்; பெயர்தல்; மனங் கிளர்தல்; மிகுதல்; வளர்தல்; உயிர்பெற்றெழுதல்; துயிலெழுதல்; பரவுதல்; தொடங்குதல்.

**எழுதாக்கிளவி, எழுதாக்கேள்வி** – மறை, வேதம்.

**எழுதாவெழுத்து** – அச்செழுத்து.

**எழுதிக்கொள்ளுதல்** – பதிவுசெய்தல்; அடிமையாக்குதல்; விண்ணப்பம் செய்தல்.

**எழுதிவைத்தல்** – சாசனம் செய்துவைத்தல்.

**எழுதீவு** – நாவல், இறலி, இலவம், கிரவுஞ்சம், குசை, தேக்கம், புட்கரம் என்னும் ஏழு தீவுகள்.

**எழுதுகொடி** – முலைமேல் எழுதும் தொய்யில்.

**எழுதுகோல்** – தூரியக்கோல், ஓவியம் வரையும் கோல்; எழுத்து வரையும் கோல்.

**எழுதுதல்** – எழுத்து வரைதல்; ஓவியம் வரைதல்; இயற்றுதல்; விதியேற்படுத்துதல்; பாவை முதலியன ஆக்குதல்; அழுந்தப் பதித்தல்; பூசுதல்.

**எழுதுபடம்** – துணிமேல் எழுதிய படம்.

**எழுதுவரிக்கோலம், எழுதுவரிகோலம்** – மகளிர் ஆகத்து எழுதுங் கோலம்.

**எழுந்தபடி** – நிலைத்தபடி, நேரிட்டபடி, கண்டபடி.

**எழுந்தருள்படி** – தெய்வத் திருமேனிப் புறப்பாடு; பெரியோர் வருகை.

**எழுந்தருளியிருத்தல்** – தெய்வம் குடிகொண்டருளுதல்; பெரியோர் வீற்றிருத்தல்.

**எழுந்தருளுதல்** – வருதல்; புறப்படுதல்; தோன்றல், சிலை முதலியவற்றினிடமாகத் தெய்வம் வெளிப்படுதல்.

**எழுந்தருளுந்திருமேனி, எழுந்தருளுநாயகர்** – உற்சவமூர்த்தி, திருவிழாவில் எழுந்தருளப் பண்ணும் தெய்வத் திருமேனி.

**எழுந்திருத்தல்** – எழுதல்; இருக்கையை விட்டு எழுதல்; எழுந்து பின் இருத்தல்.

**எழுந்திருப்பு** – எழும்புதல்; எழுந்து நிற்கை.

**எழுந்தேற்றம்** – இறுமாப்பு; துணிவு; எழுந்தமானம்; கவனிப்பின்மை; பெருமை; விழாவில் சாமி புறப்பாடு.

**எழுநகரம்** – சிறப்புடைய ஏழு புண்ணிய நகரங்கள்: அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை.

**எழுநயம்** – சமணர் கூறும் எழுவகை வாதமுறை, இதனை வடமொழியில் சப்தபங்கி நியாயம் என்பர்.

**எழுநரகம்** – எழுவகையான நரகங்கள்: அள்ளல், இரௌரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத் தானம், பூதி, மாபூதி; (சமணர் கருத்துப்படி) பெருங்களிற்று வட்டம், பெருமணல் வட்டம், எரிபரல் வட்டம், அரிபடை வட்டம், புகை வட்டம், பெருங்கீழ் வட்டம், இருள் வட்டம் என்பன.

**எழுநா** – ஏழு நாக்கு; ஏழு நாவையுடையதாகிய அக்கினி, நெருப்பு; கொடிவேலி.

**எழுநாயிறு** – காண்க: **எழுஞாயிறு.**

**எழுநிலைக்கோபுரம்** – ஏழடுக்குக் கட்டடமாய் ஒன்றன்மேல் ஒன்றாய் அமைக்கப்பட்ட கோபுரம்.

**எழுநிலைமாடம்** – ஏழடுக்கு மாளிகை.

**எழுப்பம்** – எழும்புகை, எழுகை; உயர்வு; கிளர்ச்சி.

**எழுப்பு** (வி) – துயிலெழுப்பு; தூக்கு; உயிரோடெழுப்பு; சண்டைமூட்டு; கிளப்பிவிடு; வீடெழுப்பு; இசையெழுப்பு.

**எழுப்புதல்** – எழும்பச்செய்தல்; துயில் எழுப்புதல்; உயிர்பெற்றெழச் செய்தல்; ஒலியெழுப்புதல்; ஊக்கம் உண்டாக்குதல்; கலகம் முதலியன மூட்டுதல்.

**எழுபவம்** – உயர்பிறப்பு; எழுவகைப் பிறவி.

**எழுபிறப்பு** – எழுவகைப்பிறப்பு: தேவர், மனிதர், விலங்கு, பறப்பன, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்; மேல்வரும் பிறப்பு.

**எழுபோது** – விடியற்காலம், உதயகாலம்.

**எழும்பல்** – நில விவரம்பற்றிய கைக்குறிப்புப் புத்தகம்.

**எழும்புதல்** – உயர்தல்; உறக்கம்விட்டெழுதல்.

**எழுமதம்** – நூலாசிரியருக்குரிய எழுவகைக் கொள்கைகள்; அவை: உடன்படல், மறுத்தல், பிறர்தம் மதம் மேற்கொண்டு களைதல், தான் ஒன்றனை நாட்டி அதனை நிலை நிறுத்தல், இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு; பிறர்நூற் குற்றங் காட்டல், பிறர் மதத்தைக் கொள்ளல் என்பன; யானைமதம்: கன்னம் இரண்டு, கண் இரண்டு, கைத்துளை இரண்டு, குறி ஒன்று ஆகிய ஏழிடத்திலிருந்து தோன்றும் மதநீர்.

**எழுமலை** - கதிரவன் தோன்றும் மலை, உதயகிரி; ஏழு பெருமலைகள்: கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி.

**எழுமான்,**
**எழுமான்புலி** } – எழுமான் பூண்டு.

**எழுமீன்** – ஏழு நட்சத்திரங்கள், சப்தரிஷி மண்டலம்.

**எழுமுகனை** – தொடக்கம்.

**எழுமுடி** – வெல்லப்பட்ட ஏழரசர் முடியாற் செய்த சேரன் மாலை.

**எழுமுரசு** – எழுச்சி முரசு, அரசன் பயணத்தை அறிவிக்கும் முரசு.

**எழுமுனிவர்** – இருடிகள் எழுவர்: அகத்தியன், புலத்தியன், அங்கிரசு, கௌதமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டன் எனப் பிங்கல நிகண்டு கூறும்; வடமொழி நூல்களுள் அத்திரி, பிருகு, குச்சன், வசிட்டன், கௌதமன், காசிபன், அங்கிரசு என்றும் மரீசி, அத்திரி, அங்கிரசு, புலத்தியன், புலகன், சிரது, வசிட்டன் என்றும் வெவ்வேறாக உரைப்பர்.

**எழுமை** – உயர்ச்சி; ஏழ்வகை; ஏழுவகைப் பிறப்பு; ஏழுமுறை பிறக்கும் பிறப்பு.

**எழுவகை அளவை** – நிறுத்தளத்தல், பெய்தளத்தல், சார்த்தியளத்தல், நீட்டியளத்தல், தெறித்தளத்தல், தேங்க முகந்தளத்தல், எண்ணியளத்தல் என்பன.

**எழுவகைத் தாது** – உடம்பில் உள்ள எழுவகைப் பொருள்கள்: இரதம், குருதி, எலும்பு, தோல், இறைச்சி, மூளை, சுக்கிலம்.

**எழுவகை நதி** – ஏழு புண்ணிய ஆறுகள்: கங்கை, குமரி, யமுனை, நருமதை, காவிரி, சரசுவதி, கோதாவரி.

**எழுவகைப் பிறப்பு** – காண்க: எழுபிறப்பு.

**எழுவகைப் பெண்பருவம்** – பெண்களின் வளர்ச்சியில் உள்ள ஏழு நிலைகள்: பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண். இவற்றின் அகவை முறையே *7, 11, 13, 19, 25, 31, 40* ஆகும்.

**எழுவகை மேகம்** – சம்வர்த்தம், ஆவர்த்தம், துரோணம், புட்கலாவர்த்தம், காளமுகி, சங்காரித்தம், நீலவருணம் என்பன. இவை பொழிவன முறையே மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ.

**எழுவரைக் கூடி** – ஒருவகைப் பாடாணம், சவ்வீரம் என்னும் நஞ்சு.

**எழுவாய்** – தொடக்கம், உற்பத்தி; முதல்; முதல் வேற்றுமை; கருத்தா.

**எழுவாய் வேற்றுமை** – முதலாம் வேற்றுமை, பெயர் வேற்றுமை, பெயர் தோன்றிய துணையால் உருபும் விளியும் ஏலாது பிறிதொன்றனொடு தொகாது நிற்கும் நிலைமை.

**எழுவாயெழுஞ்சனி** – மகநாள்.

**எழுவான்** – கிழக்குத் திசை.

**எழுவுதல்** – எழுப்புதல், எழச்செய்தல்; ஓசையுண்டாக்குதல்.

**எள்** – ஒருவகைச் செடி, ஒரு தவசம்; ஒரு சிறிய அளவு; நிந்தை.

**எள் (வி)** – எள்ளென் ஏவல், நிந்தி, இகழ்.

**எள்குதல்** – இகழ்தல்; அஞ்சுதல்; ஏய்த்தல்; கூசுதல்; வருந்துதல்.

**எள்ள** – ஓர் உவமவுருபு.

**எள்ளல்** – இகழ்தல், நிந்தித்தல், இழிவாகப் பேசல்; தள்ளல்; சிரித்தல்.

**எள்ளளவும்** – சிறிதளவும்.

**எள்ளற்பாடு** – இகழ்ச்சி, நிந்தை; நகைப்பு.

**எள்ளிடை** – எள்ளளவு.

**எள்ளு** – எள்.

**எள்ளுக்கட்டை** – எள்ளுத்தாள்.

**எள்ளுச்செவி** – ஒரு பூண்டுவகை.

**எள்ளுண்டை** – எள்ளுருண்டை, எள்ளும் வெல்லமும் கலந்து செய்யப்படும் சிற்றுண்டி.

**எள்ளுதல்** – இகழ்தல், இழிவாகப் பேசுதல்; தள்ளுதல்; ஒப்பாதல்.

**எள்ளுநர்** – இகழ்பவர்.

**எள்ளுப்பிண்ணாக்கு** – எண்ணெய் ஆட்டி எடுத்த எள்ளின் சக்கை.

**எள்ளுருண்டை** – காண்க: **எள்ளுண்டை.**

**எள்ளுரை** – இகழ்ச்சியுரை.

**எள்ளோரை** – எள்ளுச்சோறு, எள்ளோதனம்.

**எளிஞர்** – எளியவர்; செல்வம் முதலியன குறைந்தவர்; வறிஞர்; நல்லூழில்லாதவர்.

**எளித்தல்** – தாழ்த்திக் கூறுதல்.

**எளிதரவு** – தாழ்மை; வறுமை.
**எளிதல்** – எளிமையடைதல்.
**எளிதாதல்** – இலகுவாதல்; சுலபமாகத் தருதல்.
**எளிது** – எளியது; இலேசு; சுலபம்; அருமையற்றது; இலகு; தாழ்ந்தது.
**எளிமை** – இலகு; தாழ்வு; தளர்வு; அறியாமை; வறுமை; தனிமை; வலியின்மை; அடிமை.
**எளியன், எளியவன்** – வறியவன்; இலகுவாய் அடையப்படுபவன்; வலியில்லாதவன்; அறிவில்லாதவன்; குணத்தில் தாழ்ந்தவன்.
**எளிவருதல்** - இலகுவாதல், சுலபமாதல்; எளிதிற் கிட்டுதல்; இழிவடைதல்.
**எளிவிலையன்** – விலை குறைந்த பண்டம்.
**எளிவு** – எளிவரவு, சுலபம்.
**எற்செய்வான்** – சூரியன்.
**எற்சோறு** – பழைய காலத்திலிருந்த ஒரு வரி.
**எற்பாடு** – பிற்பகல், மாலைப் பொழுதுக்குமுன் பத்துநாழிகை நேரம்; மாலை; காலை.
**எற்பு** – என்பு, எலும்பு.
**எற்புச்சட்டகம்** – உடல்.
**எற்றம்** – மனத்துணிவு.
**எற்றப்பட்டை** – இறைகூடை.
**எற்றன்மரம்** – நீர் இறைக்கும் கருவிவகை; தோணி மரம்.
**எற்றித்தல்** – இரங்குதல்.
**எற்று** – எற்றுகை; எத்தன்மையது; வியப்பிரக்கக் குறிப்புச்சொல்.
**எற்றுண்ணுதல்** – எறியப்படுதல்.
**எற்றுதல்** – அடித்தல், புடைத்தல்; உதைத்தல்; மோதுதல்; எறிதல்; குத்துதல்; வெட்டுதல்; கொல்லுதல்; உடைத்தல்; நீக்குதல்; நூல் தெறித்தல்; இறங்குதல்; எழுப்புதல்; நீங்குதல்.
**எற்றுநூல்** – மரக்கோட்டம் பார்க்கும் நூல், மரம் அறுக்க அடையாளம் காட்டும் நூல்.
**எற்றுள்ளும்** – எவற்றுள்ளும்.
**எற்றே** – ஒரு வியப்புமொழி; ஓர் இரக்கச் சொல்; எத்தன்மைத்து.
**எற்றைக்கும்** – என்றென்றைக்கும், எந்நாளும்.
**எற்றோ** – எற்று, எத்தன்மைத்து; வியப்பிரக்கச் சொல்.
**எறட்டுதல்** – வீசி இறைத்தல்.
**எறி** – குத்து; தள்ளு; அறை; அடி; வெட்டு; வீச்சு; உதை; அடிக்கை; குறிப்பாகச் சொல்லுகை.
**எறிகால்** – பெருங்காற்று.
**எறிகாலி** – உதைகாற் பசு, காலால் உதைக்கும் பசு.
**எறித்தல்** – ஒளிவீசுதல்; வெயிற்காலம்; தைத்தல்; உறைத்தல்; பரத்தல்.
**எறிதல்** – உதைத்தல்; வீசுதல்; வெட்டுதல்; முறித்தல்; அறுத்தல்; பறித்தல்; அழித்தல்; ஓட்டுதல்; குத்தல்; அடித்தல்.
**எறிப்பிடைச்செய்யுள்** – செய்யுள் வகையுள் ஒன்று, இதனைப் 'பிபீலிகா மத்திமம்' என்று வழங்குவர்.
**எறிப்பு** – ஒளிசெய்தல், வெயிலெறிக்கை; கடு வெயில்.
**எறிபடுதல்** – ஒதுக்கப்படுதல்; உதைபடுதல்.
**எறிபடை** – கைவிடுபடை: வேல்; ஈட்டி.
**எறிபாவாடை** – தெய்வங்கள், பெரியோர்களுக்கு முன் விரிக்கும் பாவாடை விருது.
**எறிபுல(ன)ம்** – வெட்டிச் சுட்ட கொல்லை நிலம்.
**எறிமணி** – சேமக்கலம், சேகண்டி.
**எறிமுத்து** – சிறிய அம்மை.
**எறியல்** – கோடரி.
**எறியாயுதம்** – காண்க: எறிபடை.
**எறியால்** – ஒரு மீன்வகை.
**எறியுப்பு** – கல்லுப்பு.
**எறிவ** – எறியப்படுவன, எறியப்படும் ஆயுதங்கள்.
**எறிவல்லயம்** – கை விட்டெறியும் ஓர் ஆயுதம்.
**எறிவளையம்** – உருளை; சக்கரப்படை.
**எறும்பி** – யானை; எறும்பு.
**எறுழ்**–வலிமை; தண்டாயுதம்; தடி; தூண்; செந்நிறப் பூவுடைய குறிஞ்சி நிலத்து மரவகை.
**எறுழ்வலி** – மிகுந்த வலிமை; மிக்க வலிமையுடையோன்.
**எறுழம்** – எறுழ்மரம்.
**எறுழி** – பன்றி, காட்டுப் பன்றி.
**என்** – என்ன; வினா வினைக்குறிப்பு; ஐயக்கிளவி; இகழ்ச்சிக் குறிப்பு; 'எது' அல்லது 'எதை' எனப் பொருள்படும் இடைச்சொல்; தன்மை ஒருமைச் சொல்; யான் என்பது வேற்றுமைப் பொருளில் அடையும் திரிபு; ஓர் அசைச்சொல்.
**என்கை** – என்று சொல்லுகை.
**என்ப** – என்று சொல்லப்படுவன; என்று சொல்லுவர்; ஓர் அசைச்சொல்.
**என்பவன், என்பான்** – என்று சொல்பவன்; என்று சொல்லப்படுபவன்.
**என்பித்தல்** – என்று சொல்லுவித்தல்; விளக்கமுறச் செய்தல்; சான்றுகாட்டி நிறுவுதல்.
**என்பிலது, என்பிலி** – எலும்பில்லாத உயிரி, புழு.
**என்பு** – எலும்பு; எலும்புக்கூடு; உடம்பு; புல்.
**என்புதின்றி** – கழுதைக்குடத்திப் பூண்டு.
**என்புருக்கி** – எலும்புருக்கிநோய்.

**என்மர், என்மனார்** – என்ப, என்று சொல்வர்.

**என்ற** – ஓர் உவமவுருபு.

**என்றவன்** – என்று சொன்னவன்; என்று சொல்லப் பட்டவன்; சூரியன்.

**என்றா** – ஓர் எண்ணிடைச் சொல்.

**என்றாலும்** – என்று சொன்னாலும், எனினும்; ஆயினும், ஆனாலும்.

**என்றிய** – எதற்காக; எப்படி.

**என்று** – எந்த நாள், எப்போது, என்றைக்கு; என்று சொல்லி; ஓர் இடைச்சொல்; சூரியன்.

**என்றும்** – என்றைக்கும், எந்நாளும், எப்போதும்.

**என்றுமபாவம்** – என்றும் இன்மை, ஒருபோதும் இல்லாமையைத் தெரிவிக்கும் தன்மை.

**என்றூழ்** – சூரியன்; வெயில்; கோடைக்காலம்.

**என்றூழி** – என்றைக்கும், எப்போதும்.

**என்றென்றைக்கும்** – எக்காலத்தும்; ஒரு நாளும்; ஒருபொழுதும்.

**என்றைக்கு** – எந்நாள், எப்போதைக்கு.

**என்றைக்கும்** – காண்க: **என்றென்றைக்கும்.**

**என்ன** – யாது; என்ன பயன்; ஓர் உவமவுருபு.

**என்னணம்** – எவ்வண்ணம், எவ்வாறு, எவ்வகை யாக; எப்படி.

**என்னதும்** – சிறிதும்.

**என்னம்பு, என்னம்புது** – என்னது.

**என்னர்** – யாவர்; எத்தன்மையினர், எத்தகை யினர்; சிறிதும்.

**என்னவன், என்னன்** – யாவன்; எப்படிப்பட்டவன்; என்னைச் சேர்ந்தவன், எனக்குரியவன்.

**என்னாங்கு** – என்னிடத்து.

**என்னுக்கு** – எதற்கு.

**என்னுங்காட்டில்** – என்பதைக் காட்டிலும்.

**என்னும்** – யாவும், எல்லாம்; என்று சொல்லப் படும்; யாதும்; சிறிதும்.

**என்னே** – ஒரு வியப்பிரக்கக் குறிப்பு.

**என்னை** – என் தந்தை; என் தாய்; என் தலைவன்; என் இறைவன்; யாது; என்ன; ஓர் இகழ்ச்சிக் குறிப்பு.

**என்னோ** – காண்க: **என்னே.**

**என்னோரும்** – எத்தன்மையோரும்; எல்லாரும், யாவரும்.

**என** – என்னுடைய; என்ன; என்று; ஓர் உவம உருபு.

**எனவ** – என்னுடையவை.

**எனா** – என்று, ஓர் எண்ணிடைச் சொல்.

**எனின்** – என்றால், என்று சொல்லின்; என்கையால்.

**எனினும்** – என்று சொல்லினும்; ஆனாலும்.

**எனும்** – என்கின்ற; சிறிதும்.

**எனை** – என்ன; எவ்வளவு; எல்லாம்.

**எனைத்து** – எத்தன்மைத்து; எத்தனை; எவ் வளவு.

**எனைத்துணை** – எவ்வளவு.

**எனைத்தும்** – சிறிதும்; எவ்வளவும்; எவ்வள வாயினும்; எல்லாம், முழுதும்.

**எனைப்பல** – எத்தனையோ பல.

**எனையதும்** – சிறிதும்.

**எனையவர்** – எத்தனை பேர்; யாவர்.

**எனையவன், எனையன்** – எத்தன்மையன்; எவன்.

**எனைவன்** – யாவன்.

## ஏ

**ஏ** – எட்டாம் உயிரெழுத்து; பெருக்கம்; அடுக்கு; மேல்நோக்குகை; இறுமாப்பு; உழையிசையின் எழுத்து; எய்யும் தொழில்; அம்பு; பிரிநிலை, வினா, எண், தேற்றம், ஈற்றசை, இசை நிறை என்னும் பொருள்களில் வரும் ஓர் இடைச்சொல்; விளிக்குறிப்பு; இகழ்ச்சிக் குறிப்பு.

**ஏஎ** – சாமவேதம்; விளிக்குறிப்பு; இரக்கக் குறிப்பு.

**ஏஏ** – உரக்கக் கூப்பிடும் விளியுருபு; இகழ்ச்சிக் குறிப்பு.

**ஏக்கம்** – விரும்பியது பெறாமையாலுண்டாகும் துன்பம்; அச்சம்; ஆசை.

**ஏக்கம்பிடித்தல்** – துன்பம் மிகுதல்.

**ஏக்கர்** – *43,560 சதுர அடி (4047 சதுர மீட்டர்)* கொண்ட நிலப்பரப்பு அளவை.

**ஏக்கழுத்தம், ஏக்கழுத்து** – தலையெடுப்பு; இறுமாப்பு; வீற்றிருக்கை.

**ஏக்கறவு** – இச்சை; ஒன்றைப் பெற விரும்பித் தாழ்ந்து நிற்கும் நிலை.

**ஏக்கறுதல்** – இளைத்து இடைதல்; ஆசையால் தாழ்ந்து நிற்றல்; விரும்புதல்.

**ஏக்கன்போக்கன், ஏக்கிபோக்கி** – எளியவன்; ஒன்றுக்கும் உதவாதவன்.

**ஏக்கிரிபோக்கிரி** – திக்கற்றவன்.

**ஏக்கெறிதல்** – கவலையொழிதல்; அச்சமுறுதல்.

**ஏக்கை** – இகழ்ச்சி.

**ஏககண்டமாய்** – ஒரே குரலாய்.

**ஏககுடும்பம்** – பங்கிடப்படாத சொத்துள்ள குடும்பம்.

**ஏககுண்டலன்** – ஒற்றைக் காதணியுடையோன்; குபேரன்; ஆதிசேடன்; பலராமன்.

**ஏககுரு** – உடன்கற்றோன்.

**ஏகசக்கரவர்த்தி** – தனியாணை செலுத்துவோன்; பொதுநீக்கி யாளுவோன்.

**ஏகசக்கராதிபத்தியம்** – தனியரசாட்சி.

**ஏகசக்கராதிபதி** – தனியாணை செலுத்தும் அரசன்.

**ஏகசந்தக்கிராகி** – ஒரே தடவையில் மனத்திற் பற்றிக்கொள்பவன்.

**ஏகசமன், ஏகசமானம்** – ஒருநிகர்.

**ஏகசரம்** – காண்டாமிருகம்.

**ஏகசிந்தை** – ஒரே எண்ணம், ஒரே நினைவு; ஒத்த மனம்; ஒன்றிலேயே செல்லும் சிந்தை.

**ஏகசிருங்கம், ஏகசிருங்கி** – ஒற்றைக் கொம்புடைய காண்டாமிருகம்.

**ஏகசுபாவம்** – ஒரே தன்மை; ஒத்த தன்மை.

**ஏகத்துவம்** – அத்துவிதம், ஒன்றாயிருக்கும் தன்மை.

**ஏகத்தொகை** – முழுத் தொகை.

**ஏகதண்டி** – துறவியருள் ஒருவகையார், ஒற்றைக் கோல் தாங்கும் துறவி.

**ஏகதந்தன்** – ஒற்றைக் கொம்புடைய விநாயகன்.

**ஏகதார்** – ஒற்றை நரம்புடைய வாத்தியம்.

**ஏகதாரவிரதன்** – ஒருத்தியையே மனைவியாகக் கொள்ளும் உறுதியுள்ளவன்.

**ஏகதாளம்** – ஏழு தாளத்துள் ஒன்று, ஓர் ஒத்து உடைய தாளம்.

**ஏகதேசம்** – ஒருசார், ஒருபுடை; சிறுபான்மை; அருமை; மாறுபாடு; வேற்றுமை; ஒவ்வாமை; நிந்தை; குறைவு.

**ஏகதேசவறிவு** – சிலவற்றைமட்டும் அறியும் அறிவு, சிற்றுணர்வு.

**ஏகதேசவுருவகம்** – இரு பொருள்களுள் ஒரு பொருளை உருவகமாக்கியும் இயைபுடைய பிறிதொன்றை உருவகப்படுத்தாமலும் உரைக்கும் அணிவகை.

**ஏகதேசி** – ஓரிடத்து இருப்புக்கொண்டது.

**ஏகதேவன்** – கடவுள்; புத்தன்.

**ஏகப்பசலி** – ஒருபோக நிலம்.

**ஏகப்பட்ட** – மிகுதியான.

**ஏகப்பிரளயம்** – ஒரே நீர்ப்பெருக்கு, பெரு வெள்ளம்.

**ஏகப்பிழை** – முழுதும் பிழை.

**ஏகபத்திரிகை** – வெண்டுளசி.

**ஏகபத்தினிவிரதம்** – ஒருத்தியையே மனைவியாகக் கொள்ளும் உறுதி.

**ஏகபந்தனம்** – ஒன்றிப்பு; ஒரே கூட்டமாய்க் கூடுதல்.

**ஏகபாதம்** – ஒரு கால்; நான்கடியும் ஒரே வகையாய் வரும் ஒருவகைச் சித்திரகவி; ஓர் இருக்கை; ஒற்றைக்கால் உயிரி.

**ஏகபாவம்** – ஒரே தன்மை; ஒத்த எண்ணம்,

**ஏகபாவனை** – ஒரே பாவனை, ஒருமையாகப் பாவிக்கை.

**ஏகபிங்கலன்** – பசப்படைந்த ஒற்றைக் கண்ணையுடைய குபேரன்.

**ஏகபுத்திரன்** – ஒரே மகன்; ஒரு மகனுடையவன்.

**ஏகபோகம்** – தனக்கே உரிய அனுபவம்; இருவருக்கும் ஒத்த போகம்; ஒருபோகம் விளைவது.

**ஏகம்** – ஒன்று; ஒப்பற்றது; தனிமை; வெண்கலம்; மொத்தம்; மிகுதி; வீடு; திப்பிலி; அக்குரோணி எட்டுப் பங்கு கொண்ட படை.

**ஏகம்பம்** – காஞ்சியில் உள்ள சிவன்கோயில்.

**ஏகமாயிருத்தல்** – ஒன்றாயிருத்தல்; மிகுதியாய் இருத்தல்.

**ஏகராசி** – காருவா, அமாவாசை.

**ஏகரூபன்** – கடவுள்.

**ஏகல்** – உயர்ச்சி.

**ஏகலபுச்சன்** – பைத்தியக்காரன்.

**ஏகவசனம்** – ஒருமை, ஒருமைப்பால்; ஒரே மொழி; மெய்; அவர், நீர் என்று பேசாது அவன், நீ என்று பேசுகை, மரியாதைக் குறைவான பேச்சு.

**ஏகவட்டம், ஏகவடம், ஏகவல்லி** – ஒற்றை வடம், ஒற்றைச்சர மாலை.

**ஏகவாணை** – பொதுவற ஆளுகை; தனியரசு.

**ஏகவாரம்** – ஏகாவலி, ஒற்றை வடம்; ஒரு பொழுது உண்கை.

**ஏகவீரன்** – தனிவீரன், ஒப்பற்ற வீரன்.

**ஏகவெளி** – மறைவிலாப் பகுதி, பெருவெளி.

**ஏகவேணி** – ஒற்றைச் சடை; ஒற்றைச் சடையுடைய மூதேவி.

**ஏகன்** – ஒருவன்; தனக்கு உவமையில்லாச் சிறப்புடையோன்; கடவுள்.

**ஏகாக்கிரசித்தம், ஏகாக்கிரதை, ஏகாக்கிரம்** – ஒன்றிலே ஊன்றிய மனம், ஒன்றிலே மனம் ஊன்றியிருக்கை; வளமான சாப்பாடு.

**ஏகாகம்** – இறந்தவர்பொருட்டுப் பதினோராம் நாளில் செய்யும் சடங்கு.

**ஏகாகாரம்** – மாறாத உருவம்; ஒருபடி; பொன்.

**ஏகாகி** – தனியாயிருப்போன்.

**ஏகாங்கம்** – ஒரே உறுப்பு; தனிமை; சந்தனம்.

**ஏகாங்கி** – தனிமையாயிருப்பவன்; குடும்பமில்லாதவன்; பிரமசாரி; திருமால் அடியாருள் ஒரு வகையார்; சன்னியாசி.

**ஏகாசம்** – மேலாடை; போர்வை.

**ஏகாட்சரி** – பிரணவம்; சத்தி; ஒருவகைச் செய்யுள்; ஓரெழுத்தாலாய மந்திரம்.

**ஏகாட்சி** – ஒற்றைக் கண்ணன்; ஒற்றைக் கண்ணி; காகம்; சுக்கிரன்.

**ஏகாடம்** – ஏளனம், பரிகாசம்.

**ஏகாண்டம்** – வானம்; முழுக் கூறு.

**ஏகாதசம்** – பதினொன்று; ஒருவர் பிறந்த இலக்கினத்திற்குப் பதினோராம் இடம்.

**ஏகாதசர்** – பதினோர் உருத்திரர்; பதினோராம் இடத்தில் உள்ள கோள்.

**ஏகாதசருத்திரர்** – உருத்திரர் பதினொருவர்: மாதேவன், சிவன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன்.

**ஏகாதசி** – உவாநாளுக்குப்பின் பதினோராம் நாள்.

**ஏகாதசிவிரதம்** – வைணவ சமய நோன்புகளுள் ஒன்று; ஏகாதசி நாளில் இருக்கும் பட்டினி நோன்பு.

**ஏகாதிபத்தியம்** – தனியரசாட்சி.

**ஏகாதிபதி** – தனியாட்சி புரிவோன், பேரரசன்.

**ஏகாந்தசேவை** – தனிச் சேவை; சில திருவிழாக்களிலே இரவில் தனியாக நிகழும் கடவுள் வழிபாடு.

**ஏகாந்தநித்திரை** – இரவில் கவலையில்லாத தூக்கம், அமைதியான உறக்கம்.

**ஏகாந்தம்** – தனிமை; தனியிடம்; ஒருவரும் இல்லாத இடம்; கமுக்கம், இரகசியம்; உறுதி; நாடிய ஒரே பொருள்.

**ஏகாந்தவாதி** – ஆருகதரல்லாத சமயி.

**ஏகாந்தவாழ்வு** – தனி வாழ்க்கை; துறவியின் வாழ்க்கை.

**ஏகாந்தன்** – அந்தரங்க பக்தன்; அணுக்கத் தொண்டன்.

**ஏகாம்பரன்** – ஏகம்பன், சிவன்; காஞ்சிபுரத்தில் திருக்கோயில் கொண்டுள்ள சிவபெருமான்.

**ஏகாயம்** – ஏகாசம், உத்தரியம், மேலாடை; மேற்போர்வை.

**ஏகாயனர்** – முத்தியின்பொருட்டுத் திருமாலை மட்டுமே வணங்குபவர், மாத்துவர்.

**ஏகார்க்களம்** – ஏர் பூட்ட நாள் பார்க்கை; தீய நாள் அறிவதற்குரிய சக்கரம்.

**ஏகார்ணவம்** – ஊழிப் பெருவெள்ளம்.

**ஏகாரவல்லி** – பலா; பாகல்; பழுபாகல்.

**ஏகாலத்தி, ஏகாலத்தியம்** – வழிபாட்டில் இறைவனுக்கு முன் சுற்றும் ஒற்றைச் சுடர் விளக்கு.

**ஏகாலி** – வண்ணான்; சவர்க்காரம்.

**ஏகாவல்லி, ஏகாவலி** – காண்க: **ஏகவல்லி.**

**ஏகான்மவாதம்** – பிரமம் ஒன்றைத் தவிர வேறொன்றும் இல்லையென்னும் மதம்.

**ஏகி** – கணவனை இழந்து தனித்திருப்பவள், கைம்பெண்.

**ஏகீபவித்தல்** – ஒன்றித்தல், ஒன்றாகப் பொருந்துதல், சேருதல்; ஒரே தன்மையாதல்.

**ஏகீபாவம்** – ஒருதன்மை; ஒருமைப் பாவனை; ஒன்றுபடுகை; கூடியிருத்தல்.

**ஏகீயன்** – ஒருவன்; தோழன்.

**ஏகுதல்** – செல்லுதல், போகுதல், நடத்தல்; கழலுதல்.

**ஏகை** – உமை; வயிரக்குற்றங்களுள் ஒன்று.

**ஏகோதிட்டம்** – இறந்தவர்க்குப் பதினோராம் நாளில் செய்யும் சிராத்தச் சடங்கு.

**ஏகோபித்தல்** – ஒன்றுபடுதல், ஒன்றாதல்; ஒரு மனப்படுதல்; சேர்தல்.

**ஏங்கல்** – அழுதல்; மயிற்குரல்; யாழ்நரம்பின் ஓசை; ஆரவாரிக்கை; குழந்தைகளுக்கு வரும் காசநோய்.

**ஏங்கிப்போதல்** – ஏக்கம் பிடித்தல்.

**ஏங்குதல்** – ஒலித்தல்; அழுதல்; இரங்குதல்; திகைத்தல்; மனம் வாடுதல்; அஞ்சுதல்; கவலைப்படுதல்; இளைத்தல்.

**ஏச்சு** – வைவு; இகழ்ச்சி, பழிப்பு.

**ஏச்சுரை** – பழிப்புரை.

**ஏச்சோறு** – தண்டச்சோறு.

**ஏசம்** – வெண்கலம்.

**ஏசல்** – இகழ்தல்; வைதல்; பழிமொழி, பழிச்சொல்; ஒருவரையொருவர் பரிகாசம் செய்து கொள்ளும் பாட்டுவகை.

**ஏசறவு** – விருப்பம்; அன்பு; புகழ்மொழி.

**ஏசறுதல்** – வருந்துதல்; ஆசைகொள்ளுதல்; பழித்தல்.

**ஏசாதவர்** – இகழ்ச்சி செய்யாதவர்; குற்றம் இல்லாதவர்; தேவர்.

**ஏசிடாவகம்** – அதிமதுரம்.

**ஏசு** – இகழ்ச்சி; குற்றம்; இயேசு.

**ஏசுதல்** – இகழ்தல், வைதல்; செலுத்துதல்.

**ஏட்சி** – உதயம்; திடம்.

**ஏட்டிக்குப்போட்டி** – எதிருக்கெதிர்; ஆமென்பதற்கு அன்றெனல், விதண்டாவாதம்.

**ஏட்டுச்சுரைக்காய்** – உலகவனுபவம் அற்ற கல்வி அறிவு; வெறும் நூலறிவு மட்டும் உள்ளவர்.

**ஏட்டுப்படிப்பு** – உலகவனுபவம் இல்லாத கல்வி.

**ஏட்டுப்பொறி** – ஓலைப் பத்திரத்தில் பதித்த முத்திரை.

**ஏட்டை** – ஆசை, விருப்பம்; வறுமை; இளைப்பு, தளர்வு; ஒருசார் விலங்கேற்றின் பெயர்.

**ஏடகணி** – ஓலையீர்க்கு.

**ஏடகம்** – பூவிதழ்; பூ; தென்னைமரம்; பனைமரம்; பலகை; ஆட்டுக்கடா; ஒருவகைத் துகில்; வையையாற்றில் ஏடு கரையேறிய ஒரு சிவத்தலம், திருவேடகம்.

**ஏடணாத்திரயம்** – மூவகையான விருப்பம்: உலகம், பொன், புதல்வன் என்னும் மூன்றன் மேல் கொள்ளும் பற்று.

**ஏடணை** – ஆசை, விருப்பம், பற்று.

**ஏடமூகன்** – ஆற்றலற்றவன், கோழை.

**ஏடல்** – கருத்து, எண்ணம்; மனம்; விருப்பம்.

**ஏடலகம்** – அதிமதுரம்; குன்றி.

**ஏடன்** – தோழன்; தொழும்பன்; செவிடன்.

**ஏடா** – தோழன் முன்னிலை; தாழ்ந்தவரை விளிக்கும் சொல்.

**ஏடாகு(கூ)டம்,**
**ஏடாகோடம்** } – தாறுமாறு, ஒழுங்கின்மை; ஏற்றத்தாழ்ச்சியான நடை.

**ஏடாசிரியன்** – ஆசிரியன் இன்றி ஏட்டின் உதவி கொண்டே கற்றோன்.

**ஏடி** – தோழி முதலிய பெண்பாலரை விளிக்கும் சொல்; இழிந்தாளை விளிக்கும் சொல்.

**ஏடு** – இதழ்; பூவிதழ்; மலர்; பனையேடு; ஏட்டுப்புத்தகம்; புத்தகவிதழ்; கண்ணிமை; வாழையிலைத் துண்டு; உடல்; பாலாடை, பாலேடு; மேன்மை; குற்றம்; உலகம்; பாதத்தின் அடிப்பக்கம்.

**ஏடுகம்** – கல்லறை.

**ஏடுகோளாளன்** – கணக்கன்.

**ஏடுசேர்த்தல்** – பனையோலைகளை ஏடுகளாகச் சீவிப் புத்தகமாக்குதல்.

**ஏடுதூக்குதல்** – ஆசிரியரிடம் ஏட்டையெடுத்துப் படித்தல்.

**ஏடுபடுதல்** – பாலில் ஆடை உண்டாதல்; பாசி படிதல்.

**ஏடுவாருதல்** – ஓலை வாருதல், எழுதும் பொருட்டுப் பனையோலைகளைச் சீவிச் செப்பஞ்செய்தல்.

**ஏடை** – ஆசை, விருப்பம்.

**ஏண்** – எல்லை; வலிமை; திண்மை; உயர்ச்சி; செருக்குப் பேச்சு, பெருமைப் பேச்சு; வளைவு.

**ஏண்கோண்** – ஒழுங்கின்மை, நேரின்மை.

**ஏண்டாப்பு** – இறுமாப்பு.

**ஏணகம்** – கருமை நிறம் கொண்ட ஒருவகை மான்; ஒருவகை மருந்துச் சரக்கு.

**ஏணம்** – மான்; மான்தோல்; வலிமை; நிலைபேறு.

**ஏணல்** – வளைவு, கோணல்.

**ஏணல்கோணல்** – ஒழுங்கின்மை.

**ஏணி** – எண்; அடுக்கு; ஏறுதற்குரிய கருவி; எல்லை; நாடு; மான்; மான்கன்று.

**ஏணிக்காணம்** – மரத்தீர்வை.

**ஏணிச்சீகு** – ஒரு புல்வகை.

**ஏணிப்படி(டு)கால்** – மேகலை என்னும் அணி.

**ஏணிப்பந்தம்** – தோளில் சுமக்கும் ஒருவகைத் தீவட்டி.

**ஏணிப்பழு** – ஏணிப்படி, கண்ணேணியில் பொருத்தப்பட்டுள்ள குறுக்குக் கழி.

**ஏணிமயக்கம்,**
**ஏணிமிசைமயக்கம்** } – கோட்டைக்கு உள்ளும் புறமும் உள்ளார் ஏணி மிசை நின்று போர் செய்தலைக் கூறும் புறத்துறை.

**ஏணுக்குக்கோண்** – எதிரிடையான பேச்சு.

**ஏணை** – புடைவைத் தொட்டில்; நிலை; ஆடு.

**ஏணைக்குக்கோணை** - காண்க: **ஏணுக்குக்கோண்.**

**ஏத்தம்வாழை** – நேந்திரம் வாழை.

**ஏத்தாளி,**
**ஏத்தியலாளன்** } – புகழ்வோன்.

**ஏத்திரி** – சாதிபத்திரி.

**ஏத்திவாபாசம்** – ஏதுப்போலி, எடுத்துக்கொண்ட நோக்கத்திற்கு இயைபில்லாத ஏதுக்களைக் கூறுதல்.

**ஏத்துதல்** – துதித்தல், புகழ்தல், உயர்த்திக் கூறுதல்; வாழ்த்துதல்.

**ஏதடை** – எதிரிடை, போட்டி; பகைமை.

**ஏதண்டை** – பலகைத் தூக்கு; கட்டடங்களுக்குக் கட்டும் சாரம்; நீர்த்துறையில் கட்டும் பரண்.

**ஏதப்பாடு** – குற்றம்; குற்றம் உண்டாகுகை.

**ஏதம்** – துன்பம்; குற்றம்; கேடு.

**ஏதர்** – தீயோர், கெட்டவர்கள், குற்றமுடையோர்.

**ஏத(தி)லன்** – பகைவன்.

**ஏதலிடுதல்** – பொறாமையாய்ப் பேசுதல்.

**ஏதன்** – மூலகாரணன், ஆதிகாரணன், முதல்வன், கடவுள்.

**ஏதனம்** – மூச்சுவிடுதல்.

**ஏதி** – ஆயுதப்பொது; வாள்; துண்டம்.

**ஏதில(லா)ர்** – அயலார்; பகைவர்; பரத்தையர்.

**ஏதிலாள்** – பிற மாது; மாற்றாள், சக்களத்தி.

**ஏதிலாளன்** – அயலான், பிறன்.

**ஏதின்மை** – அயலாந்தன்மை, அன்னியம்; பகைமை.

**ஏதீடு** – காரணமிட்டுரைத்தல்; தோழி அறத்தொடு நிற்கையில் தலைவி தலைவனை மணத்தற்கு அவன் செய்த உதவிகளைக் காரணமாக இட்டுரைக்கை.

**ஏது** – யாது; காரணம்; ஏன்; எங்கிருந்து; எப்படி; முதற்காரணம்; துணைக்காரணம்; ஏதுநிகழ்ச்சி; ஏதம்; நிமித்தம்; ஓரணி; செல்வம்; எடுத்துக்காட்டு; சம்பந்தம்.

**ஏதுக்கருத்தன், ஏதுக்கருத்தா** – ஏவுதற் கருத்தா.

**ஏதுகரப்படுதல்** – பயனுடையதாதல்.

**ஏதுகரம்** – வழி, வகை; ஆயத்தம்; சாதனம்.

**ஏதுங்கெட்டவன்** – பயனற்றவன்.

**ஏதுநிகழ்ச்சி** – கன்மங்களாகிய காரணங்கள் தத்தம் பயனைக் கொடுத்தற்குத் தோற்றுகை.

**ஏதுப்பண்ணுதல்** – வகைசெய்தல்.

**ஏதுப்போலி** – ஏதுவுக்கு உரிய இலக்கணம் இன்றி ஏதுப்போலத் தோன்றுவது.

**ஏதும்** – யாதொன்றும், சிறிதும்; எதுவும்.

**ஏதுவின் முடித்தல்** – முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று, காரணங்காட்டி முடித்தல், முன்னர் முடிவு விளங்கப் பெறாததைப் பின்னர்க் காரணத்தால் முடியவைத்தல்.

**ஏதை** – பேதை; வறியன்.

**ஏந்தல்** – உயர்ச்சி; மலை; மேடு; பெருமையிற் சிறந்தோன்; தேக்கம்; அரசன்; ஆழமின்மை; முதல்; இளமை; எளிதில் செய்து முடிக்கும் தன்மை, ஏந்துதல், தாங்குதல்; கையேந்துதல்.

**ஏந்தல் வண்ணம்** – விளக்கத்தின் பொருட்டும் வற்புறுத்தற் பொருட்டும் ஒரு சொல்லே மிகுந்து வருஞ் சந்தம்.

**ஏந்தி** – தாங்குபவன்.

**ஏந்திசை** – செய்யுளோசை.

**ஏந்திசைச் செப்பல்** – வெண்சீர் வெண்டளையாற் பிறக்கும் ஓசை.

**ஏந்திசைத் துள்ளல்** – கலித்தளையால் பிறக்கும் ஓசை.

**ஏந்திசைத் தூங்கல்** – ஒன்றிய வஞ்சித்தளையால் பிறக்கும் ஓசை.

**ஏந்திசையகவல்** - நேரொன்றாசிரியத் தளையால் பிறக்கும் ஓசை.

**ஏந்திரம்** – எந்திரம்: மா அரைக்கும் திரிகை; கரும்பாலை; கண்கட்டு வித்தை; மதிலுறுப்பு.

**ஏந்திரவச்சு** – வண்டியச்சு; திரிகையச்சு.

**ஏந்திலை** – வேல்.

**ஏந்திழை** – அழகிய அணிகலன்.

**ஏந்து** – வசதி, சௌகரியம்.

**ஏந்து (வி)** – ஏந்து என் ஏவல்; கையேந்து; தாங்கு.

**ஏந்துகுழந்தை** – கைக்குழந்தை.

**ஏந்துகொம்பன்** – வளைந்த கொம்புடைய யானை; நிமிர்ந்து முன்வளைந்த :கொம்புள்ள மாடு.

**ஏந்துகொம்பு** – யானைக்கொம்பு; தாங்கு கொம்பு.

**ஏந்துதல்** – கைந்நீட்டுதல்; கையில் எடுத்தல்; தாங்குதல்; பூணுதல்; மிகுதல்; சுமத்தல்.

**ஏந்தெழில்** – மிகுந்த அழகு.

**ஏப்பம், ஏப்பம்விடுதல்** – தேக்கெறிவு, எதிரெடுத்தல், ஏப்பமிடல்.

**ஏப்பாடு** – அம்புவிழும் எல்லை.

**ஏப்பியன்** – பேதை, அறிவில்லாதவன்.

**ஏப்புழை** – அம்பெய்வதற்காக மதிலில் அமைக்கப் படும் துளை.

**ஏம்** – இன்பம், மகிழ்ச்சி, களிப்பு; மயக்கம்; பொன்.

**ஏம்பல்** – ஆரவாரம்; மகிழ்ச்சி; வருத்தம்.

**ஏம்பலித்தல்** – மிகுந்த அவாக் கொள்ளுதல், பேராசை கொள்ளுதல்; அங்கலாய்த்தல்.

**ஏம்புதல்** – களித்தல்; மனம் கலங்குதல், வருந்து தல்; மயக்கமடைதல்.

**ஏமகரம்** – பொன்.

**ஏமகூடம்** – எண்வகை மலைகளுள் ஒன்றாகிய பொன்மலை, மேருமலை.

**ஏமங்கோலா** – ஒரு மீன்வகை.

**ஏமசிங்கி** – மிருதாரசிங்கி என்னும் நஞ்சு.

**ஏமத்தி** – பொற்றொட்டிப் பாடாணம்.

**ஏமத்தூரி** – பொன்னூமத்தை.

**ஏமதவஞ்சம்** – போகபூமி ஆறனுள் ஒன்று.

**ஏமந்தம்** – பனி; பனிக்காலம், ஏமந்த ருது.

**ஏமந்த ருது** – பனிக்காலம்; முன்பனிப் பருவம்.

**ஏமந்தாசலம்** – இமயமலை.

**ஏமபத்திரம்** – மலையாத்திமரம்.

**ஏமபுட்பம்** – அசோகமரம்; செண்பகமரம்; பொன் முல்லை.

**ஏமபுட்பி** – ஆவிரை.

**ஏமம்** – இன்பம், களிப்பு; மயக்கம்; காவல்; இரவு; பொன்; திருநீறு; இடுதிரை; பாது காவல்; வலிமை; சேமநிதி.

**ஏமமணல்** – பொன்மணல்.

**ஏமருதல்** – திகைத்தல்; களிப்புறுதல்; காக்கப் படுதல்.

**ஏமல்** – முதிரை; மனக்கலக்கம்.

**ஏமவஞ்சம்** – காண்க: **ஏமதவஞ்சம்.**

**ஏமவதி** – கடுக்காய்; வசம்பு.

**ஏமன்** – யமன்.

**ஏமாங்கம்** – கருடன்; சிங்கம்; பொன்னிறம்; மேருமலை.

**ஏமாசலம்** – மேருமலை.

**ஏமாத்தல்** – அரணாதல், பாதுகாவலாதல்; விரும்புதல்; இன்புறுதல்; செருக்கடைதல்; கலக்கமடைதல்; உறுதிசெய்தல்.

**ஏமாந்த கொங்கை** – விம்மிய முலை.

**ஏமாந்துபோதல்** – ஏமாறுதல், மோசம்போதல்; இழப்படைதல்; எச்சரிக்கையின்றியிருத்தல்.

**ஏமாப்பு** – பாதுகாப்பு; அரணாதல், வலியாகுதல்; செருக்கு; கருத்து.

**ஏமார்த்தல்** – ஏமஞ்செய்தல், காப்புச் செய்தல், பலப்படுத்தல்.

**ஏமார்தல்** – மனங்கலங்குதல், ஏங்கல்.

**ஏமாளி** – பேதை, அறிவிலி.

**ஏமாற்றம்** – எத்து, வஞ்சகம், வஞ்சகத்துள்ளாதல்; மனக்கலக்கம்.

**ஏமாற்றுதல்** – வஞ்சித்தல்; ஏமஞ்செய்தல்.

**ஏமாறுதல்** – தடுமாறல், அலமருதல்; மோசம் போதல்.

**ஏமிலாந்தி** – அலமந்து பார்ப்போன், திகைத்து நிற்பவன், மயக்கமுடையவன்; மதிகேடன்.

**ஏமிலாந்துதல்** – திகைத்து நிற்றல், மயங்கி நிற்றல், மனந்தடுமாறுதல், நினைவு சிதறுதல்.

**ஏமிலாப்பு** – அலமலப்பு, மனத்தடுமாற்றம்.

**ஏமின்கோலா** – பறவைக்கோலா என்னும் மீன்.

**ஏமுறுதல்** – மகிழ்வுறுதல், களிப்புறல்; தன்மை திரிதல்; வருந்துதல், மனங்கலங்குதல்; மயக்கமுறுதல்; பொருத்தமுறுதல்.

**ஏய்த்தல்** – ஒத்தல்; உவமித்தல்; இசையப் பண்ணுதல், பொருந்தச் சொல்லுதல்; வஞ்சித்தல்.

**ஏய்தல்** – ஒத்தல், பொருந்தல், தகுதல்; எதிர்ப்படுதல், சந்தித்தல்.

**ஏய்ப்ப** – ஓர் உவமவுருபு.

**ஏய்ப்பிலேவட்டன்** – மதிகேடன்.

**ஏய்ப்பு** – வஞ்சகம்.

**ஏய்வு** – இயைபு; உவமை.

**ஏய** – ஓர் உவமவுருபு.

**ஏயம்** – தள்ளத்தக்கது.

**ஏயான்** – இசையான், ஒவ்வான்; தொழில் செய்யத் தகாதவன், பொருத்தமற்றவன்.

**ஏயி** – மகள்.

**ஏயில்** – இசை, ஒருவகைப் பாட்டு.

**ஏயே** – எள்ளி நகையாடல் குறிப்பு, இகழ்ச்சிக் குறிப்பு.

**ஏர்** – உழுபடை, கலப்பை; உழவுமாடு; உழவுத் தொழில்; எழுச்சி; தோற்றப்பொலிவு; அழகு; நன்மை; ஒப்பு; ஓர் உவமவுருபு.

**ஏர்க்களம்** – நெற்களம், கதிரடிக்குமிடம்.

**ஏர்க்களவுருவகம்** – போர்க்களத்தை ஏர்க்களமாக உருவகப்படுத்தும் புறத்துறை.

**ஏர்க்கால்** – எருது பூட்டிய நுகத்தில் கொளுவும் கலப்பையின் உறுப்பு; வண்டியின் ஓர் உறுப்பு.

**ஏர்கட்டுதல்** – உழவுமாட்டைப் பூட்டி உழத் தொடங்குதல்.

**ஏர்ச்சீர்** – உழவுத் தொழிலுக்குரிய கருவிகள்; வேளாண்மையால் வரும் செல்வச் சிறப்பு.

**ஏர்த்தாயம்** – பருவகாலத்து உழவு.

**ஏர்நாழி** – கலப்பையின் ஓர் உறுப்பு.

**ஏர்ப்ப** – ஓர் உவமவுருபு.

**ஏர்ப்பண்** – பூட்டாங்கயிறு; ஏர்ச்சீர்.

**ஏர்ப்பு** – ஈர்ப்பு.

**ஏர்ப்பூட்டு** – முதலுழவு.

**ஏர்பு** – எழுச்சி; வனப்பு, அழகு; கோள்நிலை.

**ஏர்பூட்டுதல்** – பொன்னேர் பூட்டுதல்; ஏரில் மாட்டைக் கட்டுதல்.

**ஏர்மங்கலம்** – பொன்னேர் பூட்டிப் பாடும் மங்கலப்பாட்டு.

**ஏர்வாரம்** – ஏருக்காகக் கொடுக்கும் விளைச்சற் பங்கு.

**ஏர** – ஓர் உவமவுருபு.

**ஏரகம்** – திருவேரகம் என்னும் ஊர், சுவாமி மலை; மலைநாட்டிலுள்ள முருகன் தலம்.

**ஏரங்கம்** – ஒரு மீன்வகை.

**ஏரடம்** – இடி.

**ஏரடித்தல்** – ஏரால் உழுதல்.

**ஏரண்டம்** – ஆமணக்கஞ்செடி; கண்டபேரண்டம் என்னும் செடி; இருதலைப்புள்; சித்திரம்.

**ஏரண்டி** – திப்பிலி.

**ஏரணம்** – தருக்கநூல்.

**ஏரம்பன்** – விநாயகன், ஆனைமுகக் கடவுள்.

**ஏரல்** – கிளிஞ்சில்; நத்தை.

**ஏரா** – நீராழம்; மயக்கம் தாராத கள்; கப்பலின் அடிப்பொருத்து மரம்.

**ஏராண்மை** – உழவு.

**ஏராப்பலகை, ஏராமரம்** – கப்பலின் அடிமரம்.

**ஏராளம்** – மிகுதி.

**ஏராளர்** – உழவர்.

**ஏரி** – நீர்நிலை, பெரிய குளம்; கொழுத்துள்ள பிடர்; எருத்துத் திமில்.

**ஏரிசா** – கடற்கொந்தளிப்பு.

**ஏரிப்பாய்ச்சல்** – ஏரிநீர்ப் பாசனம், ஏரிநீர் பாய்ந்து விளையும் நிலப்பகுதி.

**ஏரிப்பாய்ச்சி** – மீன்பிடி வரி.

**ஏரிவாரியத்தார்** – ஏரியை மேற்பார்வையிடும் சபையார்.

**ஏருந்து** – எந்திரக் கலப்பை.

**ஏருழவர்** – ஏர்கொண்டு உழுபவர், உழவர்.

**ஏரோட்டுதல்** – உழுதல்.

**ஏரோர்** – உழுவோர், உழவர்.

**ஏல்** – பொருத்தம்; உணர்ச்சி, மனவெழுச்சி; கிளிஞ்சில்; ஒப்புக்கொளல்; ஒரு விகுதி.

**ஏல்வை** – காலம்; நாள்; பொழுது; நீர்நிலை; வரிவகை.

**ஏல** – முன்னமே; மிக.

**ஏலக்காய்** – ஒரு மணமுடைய காய்வகை.
**ஏலக்கோலம்** – அணியம், ஆயத்தம்.
**ஏலப்பாட்டு** – 'ஏலே ஏலேலோ' எனப் படகு வலிப்போர் பாடும் பாட்டு.
**ஏலபிலி** – கடுகு.
**ஏலம்** – செடிவகை; மணப்பொருள்; மயிர்ச் சாந்து; சடாமாஞ்சில்; சங்கஞ்செடி; முதிரை; மணம்; போட்டியிற் பலர்முன் ஏற்றும் விலை.
**ஏலரிசி, ஏலவரிசி** – ஏலக்கொட்டை, ஏலக்காயின் உள்ளீடு.
**ஏலவாலுகை** – பேரேலம்.
**ஏலவே** – ஏற்கெனவே.
**ஏலா** – தோழன் தோழியரை முன்னிலைப் படுத்தும் சொல்.
**ஏலாதான்** – இயலாதவன்; பகைவன்.
**ஏலாதி** – ஏலம், இலவங்கப்பட்டை முதலிய மருந்துச்சரக்கு; பதினெண்கீழ்க்கணக்கு நூல் களுள் ஒன்று.
**ஏலாதிகடுகம்** – ஒரு மருந்துவகை.
**ஏலாதி சூரணம்** – ஏலம் முதலியன கலந்து செய்த மருந்துப்பொடி.
**ஏலாதி மாத்திரை** – மருந்து மாத்திரைவகை.
**ஏலாப்பு** – துன்பம், வருத்தம்.
**ஏலாபத்திரம்** – தக்கோலம்.
**ஏலாபர்ணி** – ஒருவகைப் பூண்டு, பறங்கிச்சக்கை.
**ஏலாமை** – பொருந்தாமை; இயலாமை.
**ஏலி** – கள்.
**ஏலு** – சங்கஞ்செடி.
**ஏலுதல்** – இயலுதல்; பொருந்துதல், தகுதி யாதல்; கூடுதல்.
**ஏலேலம், ஏலேலோ** – ஏலப்பாட்டில் வருமொரு சொல், படகு முதலியன தள்ளுவோர் பாடும் பாட்டில் வரும் ஒரு சொல்.
**ஏலை** – ஏலம்.
**ஏவங்கம்** – இனவழிக் கணக்கு.
**ஏவங்கேட்டல்** – ஒருவருக்காக ஏவி விடப்பட்டுப் போய் அதட்டல்; இடைபுகுந்து விசாரணை செய்தல்.
**ஏவதும்** – எதுவும்; ஒவ்வொன்றும்; எல்லாமும்.
**ஏவம்** – இவ்விதம்; ஏவல்; ஒருவருக்காக ஏவி விடப்பட்டு வருதல்; குற்றம்.
**ஏவருகன்** – அதிமதுரம்.
**ஏவரும்** – யாவரும், எல்லாரும்.
**ஏவல்** – ஏவுகை, தூண்டுகை; கட்டளை; ஏவல் வினைமுற்று; ஓதுகை; பணிவிடை; பணி யாள்; பிசாசை ஏவிவிடுகை; வறுமை.
**ஏவல்கேட்டல்** – ஏவிய பணிசெய்தல்.
**ஏவல்கூவல் பணி** – ஏவிய சிறு பணிகள், குற் றேவல்.
**ஏவல்கொள்ளுதல்** – வேலைவாங்குதல், தொண்டு செய்வித்தல்.
**ஏவல்விடை** – கேட்கும் வினாவுக்கு எதிராக மறுக்கும் வகையில் எதிர் ஏவலாய்க் கூறும் விடை; 'சாத்தா இது செய்வாயா?' என்ற விடத்து 'நீ செய்' என்பது போன்று தரப்படும் விடை.
**ஏவல்வினா** – ஏவும் நோக்கத்தோடு கேட்கும் வினா.
**ஏவல்வினை** – முன்னின்றாரை ஏவும் வினை; சூனியத் தொழில்.
**ஏவலன், ஏவலாள்** – பணிவிடை செய்வோன்.
**ஏவற்காரப்பேய்** – ஏவற்பேய்; காளிதேவிக்கு ஏவல் செய்யும் பேய்.
**ஏவற்காரன்** – காண்க : ஏவலன்.
**ஏவற்சிலதி** – குற்றேவல் செய்யும் பெண்.
**ஏவற்பணி** – கட்டளையிடப்பட்ட தொழில்.
**ஏவற்பேய்** – தூண்டிவிடப்பட்ட பேய்; பெரிய பேய்க்கு ஊழியம் செய்யும் குட்டிப்பிசாசு.
**ஏவறை** – ஏப்புழை, மறைந்து அம்பு எய்தற்குரிய மதில் உறுப்பு.
**ஏவன்** – எவன், யாவன்.
**ஏவாகனம், ஏவாங்கம், ஏவாங்கனம்** – அசமதாகம், ஓமவித்து.
**ஏவிளம்பி** – அறுபதாண்டுக் கணக்கில் முப்பத் தோராம் ஆண்டு.
**ஏவு** – ஏ, அம்பு; வருத்தம்.
**ஏவு** (வி) – கட்டளையிடு; தூண்டு; எய், செலுத்து; அனுப்பு.
**ஏவுண்ணுதல்** – அம்பு பாயப்பெறுதல்.
**ஏவுதல்** – கட்டளையிடுதல்; தூண்டிவிடுதல்; செலுத்துதல்; சொல்லுதல்; அனுப்புதல்.
**ஏவுதற்கருத்தா** – வேறொருவரை ஏவி ஒன்றைச் செய்விக்கிறவன், கட்டளையிடும் தலைவன்; செய்விக்கும் வினைமுதல்.
**ஏழ்சுரம்** – சட்ஜம், ரிடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்பன.
**ஏழ்நரம்பு** – குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழு நரம்புகள்.
**ஏழ்பரி** – சூரியன் தேரில் பூட்டப்படும் ஏழு குதிரைகள்: காயத்திரி, திருட்டுபு, செகதி, அனுட்டுபு, பந்தி, பிரகதி, முட்டிணுகு.
**ஏழ்பரியோன்** – சூரியன்.
**ஏழ்பருவம்** – காண்க: **எழுவகைப் பெண்பருவம்.**
**ஏழ்புழை** – வேய்ங்குழல்வகை.
**ஏழ்மை** – ஏழு; வறுமை.
**ஏழகத்தார்** – படைவகுப்பாருள் ஒருவகையார்.
**ஏழகம்** – ஆடு; செம்மறிக்கடா.
**ஏழமை** – காண்க: **ஏழைமை.**

**ஏழரையாண்டுச்சனி** – சந்திர லக்கினத்தில் 12, 1, 2ஆம் தானங்களில் ஏழரையாண்டு இருந்து துன்பம் செய்யும் சனி.

**ஏழாங்கால்** – கலியாணத்துக்கு ஏழு நாளைக்கு முன் நடும் பந்தற்கால்.

**ஏழாநீர்ச்சடங்கு** – திருமணமான ஏழாம் நாள் மணமக்கள் எண்ணெய் தேய்த்து முழுகும் சடங்கு.

**ஏழாம்பொருத்தம்** – தீராப்பகைமை, ஓயாச் சண்டை.

**ஏழிசை** – காண்க: **ஏழ்நரம்பு.**

**ஏழிசைவாணர்** – கந்தருவர்; இசை பாடுவோர்.

**ஏழில்** – ஏழிலைப்பாலை, இசை; நன்னன் என்பானுக்குரிய ஒரு மலை.

**ஏழிலைக்கிழங்கு** – மரவள்ளிக்கிழங்கு.

**ஏழிலைப்(ம்)பாலை** – மகளிரால் மலரும் மரம் பத்தனுள் ஒன்று. இதன் மணம் களிறுகளுக்கு ஆகாதாம்.

**ஏழு** – ஓர் எண்.

**ஏழுநரகம்** – காண்க: **எழுநரகம்.**

**ஏழுபெண்பருவம்** – காண்க: **எழுவகைப் பெண் பருவம்.**

**ஏழுமலை** – ஏழு மலைக் கூட்டங்களுடைய திருவேங்கடம்.

**ஏழுலகம்** – மேலேழுலகம்; கீழேழுலகம்.

**ஏழை** – அறியாமை; அறிவிலான்(ள்); வறியவன்; பேதை; பெண்.

**ஏழைக்குறும்பு** – வறுமையைக் காட்டி மோசஞ் செய்கை; பேதைபோலக் காட்டிச் செய்யும் குறும்பு.

**ஏழைத்தன்மை** – அறியாமையாகிய குணம்; வறுமைநிலை.

**ஏழைமை** – அறியாமை, பேதைமை; வறுமை.

**ஏழைமைகாட்டுதல்** – கோழைத்தனமாதல்.

**ஏழையாளன்** – வறுமையுடையான்.

**ஏழொத்து** – தாளவகை.

**ஏளனம், ஏளிதம்** – எளிமை; இகழ்ச்சி, கேலி, அவமதிச் சிரிப்பு, பரிகாசம்.

**ஏற்க, ஏற்கவே** – பொருந்த; இணங்க, இசைவாயிருக்க; எதிர்க்க; பிச்சைவாங்க; முன்னமே.

**ஏற்கெனவே** – ஏற்கவே, முன்னமே.

**ஏற்ப** – தக்கபடி, பொருந்த; ஓர் உவமவுருபு.

**ஏற்படுத்துதல்** – உண்டுபண்ணுதல்; இணங்கச் செய்தல்; உறுதிப்படுத்துதல்; ஆயத்தப் படுத்துதல்; அமர்த்துதல்.

**ஏற்படுதல்** – உண்டாதல்; தலைப்படுதல்; உடன் படுதல்.

**ஏற்பாடு** – ஒழுங்கு; நியமனம்; உடன்படிக்கை; விவிலியத்தில் புதிய பழைய ஏற்பாடுகள்.

**ஏற்பு** – பொருத்தம், தகுதி; ஏற்றுக்கொள்கை.

**ஏற்புடைக்கடவுள்** – ஒரு நூலுக்கு உரிமை பூண்டுள்ள கடவுள்; வழிபடுகடவுள்.

**ஏற்புழி** – ஏற்குமிடத்து.

**ஏற்புழிக்கோடல்** – நூல் உத்திகளுள் ஒன்று, ஒரு விதியைப் பொருந்தும் இடங்களில் அமைத்துக் கொள்ளுகை.

**ஏற்போன்** – இரப்பவன், யாசிப்பவன்.

**ஏற்றக்கால்** – துலாவைத் தாங்குங்கால்; தூண்.

**ஏற்றக்குறைச்சல்** – உயர்வு தாழ்வு; ஒவ்வாமை.

**ஏற்றக்கோல்** – துலாமரத்தில் நீர் முகக்கும் கழி.

**ஏற்றச்சால்** – துலாச் சால், நீரிறைக்குஞ் சால், நீர் மொள்ளும் பாத்திரம்.

**ஏற்றணை** – அரியணை, அரசுகட்டில்.

**ஏற்றத்தாழ்ச்சி, ஏற்றத்தாழ்வு** – உயர்வுதாழ்வு, வேற்றுமை; பெருமை சிறுமை; மேடு பள்ளம்.

**ஏற்றது** – இயன்றது; பொருந்தியது; விருப்பமானது; தக்கது.

**ஏற்றப்பட்டரை** – ஏற்றமிட்டு இறைக்கும் கிணற்றைச் சூழ்ந்த விளைநிலம்.

**ஏற்றப்பாட்டு** – நீரிறைக்கும்போது பாடும் பாட்டு.

**ஏற்றபடி** – இசைந்தவாறு, விரும்பியவாறு; தக்கவாறு.

**ஏற்றம்** – மேலே ஏறுகை; மேடு; புகழ்; உயர்ச்சி; மிகுதி; மேன்மை; நினைவு; துணிவு; பெருக்கம்; நீரேற்றம்; நீர்ப்பெருக்கு; ஏற்ற மரம்; நீரிறைக்குங் கருவி.

**ஏற்றம்போடுதல்** – துலாமரம் அமைத்தல்; தோப்புக்கரணம் போடுதல்.

**ஏற்றமரம்** – துலாமரம்.

**ஏற்றரவு** – மிகக் கிட்டின காலம்; முதல்.

**ஏற்றல்** – இசைவாதல், இணங்கல்; ஏற்றுதல்; இரத்தல்; எதிர்த்தல்; எதிர்த்துப் போர் செய்தல்; அடுக்கல்; வாங்குதல்; ஏந்தல், நடத்தல்; பொருந்தச்செய்தல்.

**ஏற்றவாறு** – காண்க: **ஏற்றபடி.**

**ஏற்றார்** – பகைவர்.

**ஏற்றியல்** – ஏறுதலின் இயல்பு; இடபராசி.

**ஏற்றியிறக்குதல்** – கண்ணூறு கழிக்கும் சடங்கு நிகழ்த்துகை.

**ஏற்றிழிவு** – உயர்வுதாழ்வு; பெருமை சிறுமை; மேடுபள்ளம்.

**ஏற்று** – மரத்தினாற் செய்த மேடை.

**ஏற்று (வி)** – எழும்பு; உணர்த்து; பாரமேற்று; உள்ளேற்று; கற்பி; புகழ்.

**ஏற்றுக்கொள்ளுதல்** – ஒப்புக்கொள்ளுதல், உடன் படுதல், அங்கீகரித்தல்; மேற்கொள்ளுதல்.

**ஏற்றுத்தொழில்** – யானை முதலியவற்றை நடத்துந்தொழில்.

**ஏற்றுதல்** – தூக்குதல்; மிகுதிப்படுத்துதல்; சுமத்துதல்; ஏறச்செய்தல்; அடுக்குதல்; மேம்படுத்துதல்; குடியேற்றுதல்; ஏற்படுத்துதல்; உட்செலுத்துதல்; உயர்த்துதல்; ஏற்றுமதி செய்தல்; நினைத்தல்; ஒருங்குமுடித்தல்; சுடர் கொளுத்துதல்.

**ஏற்றுதுறை** – துறைமுகம், கப்பலில் சரக்கு ஏற்றும் துறை.

**ஏற்றுப்பனை** – காண்க: **ஏற்றைப்பனை.**

**ஏற்றுமதி** – கப்பலிற் பண்டமேற்றுகை; வெளி நாட்டுக்குச் சரக்கை அனுப்புதல்; வெளி நாட்டுக்கு அனுப்பும் சரக்கு.

**ஏற்றுமுதல்** – தோணி முதலியவற்றில் ஏற்றப் படும் சரக்கு.

**ஏற்றுவாகனன்** – காளையை ஊர்தியாகவுடைய சிவன்.

**ஏற்றூண்** – இரந்துண்ணுமுணவு, பிச்சையுணவு.

**ஏற்றெழுதல்** – மயக்கம் தீர்தல்; துயிலினின் றெழுதல்; சோம்பல்விட்டெழுதல்; ஓங்கி எழும்புதல்; மேற்செல்லுதல்.

**ஏற்றை** – விலங்கின் ஆண், ஆற்றலோடு கூடிய ஆண்பால் விலங்கு; அரியேறு; ஆண் கரடி.

**ஏற்றைப்பனை** – ஆண்பனை.

**ஏற** – அதிகமாக, மிகுதியாக; உயர; முழுவதும்; முற்பட.

**ஏறக்கட்டுதல்** – உயரக்கட்டுதல்; பலப்படுத்துதல்; விலையேறுவதற்காகச் சரக்கை விற்காமல் வைத்தல்; மழை முதலியன பெய்யாதிருத்தல்; இறைந்த தவசம் முதலியவற்றைக் கூட்டிச் சேர்த்தல்; அடியோடு நிறுத்துதல்.

**ஏறக்குறைய** – ஏறத்தாழ, முன்பின்னாக, சுமார், முன்பின்.

**ஏறங்கோட்பறை, ஏறங்கோள்** – காண்க: **ஏறுகோட்பறை.**

**ஏறடுதல்** – மேல்வைத்தல்; மேற்கொள்ளுதல்; ஏற்றுக்கொள்ளுதல்.

**ஏறத்தாழ** – காண்க: **ஏறக்குறைய.**

**ஏறப்பறத்தல்** – உயரப் பறத்தல்; ஏலாதவற்றைச் செய்ய முயலுதல்.

**ஏறப்போதல்** – குறித்துச் செல்லுதல், குறித்துப் போதல்.

**ஏறவாங்குதல்** – முழுதும் விலைக்குப் பெறுதல்; விலகியிருத்தல்; நயமாக வாங்குதல்; சுளுக்குதல்.

**ஏறவிடுதல்** – மேலே ஏறும்படி விடுதல்; மரக் கலத்தைக் கரைக்குத் தொலைவாக விடுதல்; மேற்போகவிடுதல்.

**ஏறவிறங்கப் பார்த்தல்** – தலைமுதல் கால்வரை பார்த்தல், மேலும் கீழும் பார்த்தல்.

**ஏறன்** – சிவன்.

**ஏறாங்கடை** – ஒவ்வாச் செயல்.

**ஏறாங்கடைசி** – அறமுடிவு.

**ஏறாண்முல்லை** – ஆண்மை மிகுந்த வீரக்குடியின் ஒழுக்கத்தைப் புகழும் புறத்துறை.

**ஏறாந்தலை** – ஏரியில் நீர்ப்பிடி இறுதி.

**ஏறாவழக்கு** – அறாவழக்கு, அடா வழக்கு.

**ஏறாவேணி** – கோக்காலி, ஒருவகைப் பரண்.

**ஏறாளர்** – படைவீரர்.

**ஏறான்** – பள்ளிக்கூடத்துக்கு முதன்முதல் வருபவன்.

**ஏறிட்டுப்பார்த்தல்** – நிமிர்ந்து பார்த்தல்; உற்று நோக்கல், கவனித்தல்.

**ஏறிடுதல்** – ஏற்றுதல்; நாணேற்றுதல்; உயர்த்து தல்; தூக்குதல்; புகப்பண்ணுதல்.

**ஏறியவீரி** – சவ்வீர பாடாணம்.

**ஏறு** – எருது; இடபராசி; எருமைக்கடா; சங்கு; அசுவினி நட்சத்திரம்; விலங்கின் ஆண்; உயர்ச்சி; ஆண் சுறா; ஆண்சங்கு; பனை முதலிய மரத்தின் ஆண்; கவரி, பன்றி, மான் இவற்றின் ஆண்; விலங்கேற்றின் பொது; நந்தி தேவர்; தழும்பு.

**ஏறு** (வி) – இவர்; எறி; அடி; அழி; வாகனமேறு; கப்பலேறு; நஞ்சேறு; உயர்; தொகை முதலியன அதிகரி.

**ஏறுக்குமாறு** – ஏட்டிக்குப்போட்டி, தாறுமாறு.

**ஏறுகடை** – கடைசி முடிவு.

**ஏறுகுதிரை** – ஏறுங்குதிரை, சவாரிக்குதிரை.

**ஏறுகோட்பறை** – முல்லைநிலப் பறை, முல்லைநில மக்கள் ஏறுதழுவும் பொருட்டு அடிக்கும் ஒரு வகைப் பறை.

**ஏறுகோள்** – ஒரு பெண்ணை மணஞ்செய்தற் பொருட்டு ஏறுதழுவுதல்; காண்க: **ஏறுகோட் பறை.**

**ஏறுசலாகை** – கைம்மரங் கோக்குஞ் சட்டம்.

**ஏறுசெடி** – அடர்ந்த செடி.

**ஏறுசேவகன்** – உயர்ந்த வீரன்.

**ஏறுண்ணுதல்** – அறுக்கப்படுதல்; அம்பு தைக்கப் படுதல்; தள்ளப்படுதல்.

**ஏறுதல்** – உயர்தல், மேலே செல்லுதல்; உட் செல்லுதல்; முற்றுப்பெறுதல்; வளர்தல்; மிகுதல்; பரவுதல்; ஆவேசித்தல்; குடியேறு தல்; ஏற்றிவைக்கப்படுதல்; கடத்தல்.

**ஏறுதழுவுதல்** – ஏறு தழுவல்; ஆயர்குலக் காளையர் மணமுடிக்கும் பொருட்டு எருதைத் தழுவிப் பிடித்தல்.

**ஏறுதுறை** – காண்க: **ஏற்றுதுறை.**

**ஏறுநெற்றி** – அகன்ற நெற்றி.

**ஏறுபடி** – அதிகப்படி; தாழ்வாரம்.

**ஏறுபெட்டி** – மரமேறிகள் அரையிற் கட்டிக் கொள்ளும் கருவிப்பெட்டி.

**ஏறுபொழுது** – முற்பகல், காலைநேரம்.

**ஏறுமாறு** – தாறுமாறு, குழப்பம்.

**ஏறுமிராசி** – சூரியன் உத்தராயணத்தில் சஞ்சரிப்பதற்கு இடமாய் மகரமுதல் மிதுனம் வரையுமுள்ள ஆறு இராசிகள்.

**ஏறுமுகஉருத்திராட்சம், ஏறுமுகக்கண்டிகை** – உருத்திராட்ச மணிகளின் முகங்கள் அதிகம் பெறுமாறு கோக்கப்படும் மாலை.

**ஏறுமுகம்** – வளரும் நிலை.

**ஏறுவட்டம்** – நட்சத்திரம் முதலியன நாழிகை ஏறும் முறை; பங்கின் அளவுக்கு அதிகமான நிலம் முதலியவை.

**ஏறுவாசி** – ஏற்றம், உயர்ந்துசெல் நிலை; உத்தரம் முதலியன சுவரின் உட்செல்வதற்கான அளவு.

**ஏறுவால்** – நீண்ட வால்.

**ஏறுவிடுதல்** – ஆயர் தம் மகளை மணம் புரியத் தக்கோர் தழுவிப் பிடிக்கும் பொருட்டு எருதுகளை ஓடவிடுதல்.

**ஏறுவெயில்** – காலை வெயில், முற்பகல் வெயில்.

**ஏறுழவன்** – படைவீரன்.

**ஏறூர்ந்தோன்** – காளையூர்தியையுடைய சிவன்.

**ஏறெடுத்தல்** – மேலெடுத்தல், நிமிர்தல்.

**ஏன்** – எதற்கு, என்ன, என்ன காரணம், என்னை; இரக்கப்பொருளைத் தரும் இடைச்சொல்; தன்மையொருமை விகுதி; பன்றி.

**ஏன்றுகொள்ளுதல்** – ஏற்றல், ஏற்றுக்கொள்ளல்; பிறரைத் தாங்குதல்; எதிர்த்து நிற்றல்.

**ஏன்றுகோள்** – ஆதரிக்கை, காப்பாற்றுகை.

**ஏன** – ஏனைய, பிற, மற்றைய, வேறான.

**ஏனக்கோடு** – பன்றிக்கொம்பு; வெதுப்படக்கி.

**ஏனப்படம்** – பன்றிமுகக் கேடகம்.

**ஏனப்பானம்** – தட்டுமுட்டு.

**ஏனம்** – பன்றி; காட்டுப்பன்றி; கருவி; பாத்திரம்; பாவம்; குற்றம்; எழுத்தின் சாரியை; ஓலைக்குடை; அணிகலன்.

**ஏனல்** – கதிர்; கருந்தினை; தினைப்புனம்; செந்தினை.

**ஏனவாயன்** – பேதை; தீங்கு பேசுவோன்.

**ஏனாதி** – மறவன்; நாவிதன்; படைத்தலைவன்; ஒரு பட்டப்பெயர்; அமைச்சன்; ஒரு பழைய சாதியார்; சாணாரில் ஒரு வகுப்பு; ஓர் இளகம், இலேகியம்.

**ஏனாதிமோதிரம்** – ஏனாதிப் பட்டத்தார்களுக்கு அரசன் அளிக்கும் மோதிரம்.

**ஏனும்** – ஒரு வினையெச்ச விகுதி; என்றாலும்.

**ஏனென்னுதல்** – இடுக்கணுக்கு உதவ வினாதல், ஆபத்தில் உதவ முற்படுதல்.

**ஏனை** – ஒழிபு, மற்றையெனும் இடைச்சொல்; ஒழிந்த; மற்று; எத்தன்மைத்து; மலங்குமீன்.

**ஏனையுவமம்** – வெளிப்படை உவமம்.

**ஏனோதானோவெனல்** – பராமுகமாயிருத்தல், பிடிப்பின்றியிருத்தல்.

# ஐ

**ஐ** – ஒன்பதாம் உயிரெழுத்து; முன்னிலை யொருமை விகுதி; சாரியை; தொழிற்பெயர் விகுதி; பண்புப்பெயர் விகுதி; வியப்பிடைச் சொல்; இரண்டாம் வேற்றுமை உருபு; அழகு; கோழை; இருமல்; இளி என்னும் இசையின் எழுத்து; யானையைப் பாகரதட்டும் ஓசை; தலைவன்; கணவன்; ஆசான்; அரசன்; தந்தை; கடவுள்; அம்பு; நுண்மை; ஐந்து; ஐயம்; கடுகு; சருக்கரை.

**ஐக்கம்** – ஐக்கியம், ஒன்றுபடுகை, ஒற்றுமை; ஒன்றிப்பு.

**ஐக்கவாதம்** – பரமான்மாவும் சீவான்மாவும் ஒன்றெனக் கூறும் மதம்.

**ஐக்கியநாணயசங்கம்** – கூட்டுறவால் நிதி பெருக்கும் நிறுவனம்.

**ஐக்கியபாவம்** – ஒற்றுமைத் தன்மை.

**ஐக்கியம்** – ஒற்றுமை, ஒன்றுபடுகை; ஒன்றாந் தன்மை, ஒன்றிப்பு; ஒன்றியம்.

**ஐக்குஞ்சு** – தண்ணீர்விட்டான்கிழங்கு.

**ஐககண்டியம்** – கருத்தொத்திருக்கை.

**ஐகமத்தியம்** – ஒற்றுமை.

**ஐகாந்திகம்** – பொதுமை நீங்கியது; நிறைவு; முடிவுடையது.

**ஐகாரக்குறுக்கம்** – சார்பெழுத்துகளுள் ஒன்று; இரண்டு மாத்திரையில் குறுகி ஒலிக்கும் ஐகாரம்.

**ஐகாரம், ஐகான்** – 'ஐ' என்னும் எழுத்து.

**ஐகிகம்** – இகத்துக்குரியது; இம்மை, இம்மைக் குரியது; இவ்வுலகம்.

**ஐங்கணை** – மன்மதனுக்குரிய ஐந்து அம்புகள் : தாமரை மலர், அசோக மலர், குவளை மலர், மாம்பூ, முல்லை மலர்.

**ஐங்கணைக்கிழவன்** – மன்மதன், காமன்.

**ஐங்கணையவத்தை** – தாமரை-சுப்பிரயோகம் (சொல்லும் நினைவும்), அசோகம்-விப்பிர

யோகம் (பெருமுச்சு விட்டு இரங்கல்), குவளை-சோகம் (வெதும்பி உணவை வெறுத்தல்), மா-மோகம் (அழுது பிதற்றல்), முல்லை-சாதல் (மயங்கலும் சாதலும்).

**ஐங்கணைவில்லி** – காமன்.

**ஐங்கதி** – குதிரையின் ஐவகையான நடை: மல்ல நடை, மயில் நடை, குரக்கு நடை, முயல் நடை, மனநடை (மல்லகதி, மயூரகதி, வானரகதி, சசகதி, சரகதி).

**ஐங்கரன்** – ஐந்து கைகள் உள்ளவன், விநாயகன்.

**ஐங்கனி** – சிறப்புடைய ஐந்து பழங்கள்: எலுமிச்சம் பழம், நாரத்தம் பழம், மாதுளம் பழம், தமரத்தம் பழம், குளஞ்சிப் பழம்.

**ஐங்காயத்தூள்** – பிள்ளைப் பேற்றிற்குப்பின் கொடுக்கப்படும் ஐந்து சரக்குகள் சேர்ந்த ஒருவகை மருந்து.

**ஐங்காயம்** – ஐந்து காயம்: கடுகு, ஓமம், வெந்தயம், உள்ளி, பெருங்காயம். இவற்றுள் கடுகு, ஓமம் என்பனவற்றிற்குப் பதிலாக மிளகு, சுக்குச் சேர்த்தும் சிலர் கூறுவர்; 'இயேசு நாதர் உடம்பிலுள்ள ஐந்து வடு; தலைப் பிள்ளைக் கரு.

**ஐங்காலம்** – பிராத காலம், சங்கவ காலம், மத்தியான காலம், அபரான்ன காலம், சாயான்ன காலம். இவை சூரியோதயம் முதல் முறையே அவ்வாறு நாழிகை கொண்ட காலப்பகுதி யாகும்.

**ஐங்குரவர்** – ஐவகைப் பெரியர்: அரசன், ஆசிரியன், தாய், தந்தை, தமையன்.

**ஐங்கூந்தல்** – ஐந்து வகையாக ஒப்பனை செய்யப் படும் மகளிர் தலைமயிர்: கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள் என்பன.

**ஐங்கோலம்** – இருப்பை வித்து, ஓமம், கடுகு, கருஞ்சீரகம், வேப்ப வித்து ஆகிய ஐந்து மருந்துச் சரக்குகள்.

**ஐச்சுவரியம்** – செல்வம்.

**ஐசிலம்** – இருள்மரம், சிறுநாகம்.

**ஐசுவரியம்** – செல்வம், பேறு; மேன்மை; ஆற்றல்; கடவுள் தன்மை.

**ஐஞ்சந்தி** – ஐந்து தெருக்கள் கூடும் இடம்.

**ஐஞ்சிறப்பு** – அருக தேவருக்குச் செய்யப்படும் பஞ்ச கலியாண பூசை.

**ஐஞ்சிறு காப்பியம்** – நீலகேசி, சூளாமணி, யசோதர காவியம், உதயணகுமார காவியம், நாககுமார காவியம்.

**ஐஞ்சுத்தி** – ஐவகைத் தூய்மை செய்கை: ஆன்ம சுத்தி, தானசுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி.

**ஐஞ்ஞீலம்** – கற்பூரம்; இலவங்கம்; சாதிக்காய்; தக்கோலம்.

**ஐஞ்னூறு** – ஐந்து நூறு, ஐந்நூறு.

**ஐஞ்ஞை** – அறிவுகேடன்; அழகு; ஆடு.

**ஐணம்** – மான்தோல்.

**ஐதிகப்பிரமாணம்** – உலகுரையாகிய அளவை.

**ஐதிகம்** – ஐதிகப்பிரமாணம்; செவிவழிச் செய்தி, உலகுரை, தொன்றுதொட்டு வரும் கேள்வி.

**ஐது** – அழகுடையது; அழகு; மெல்லியது; நுண்ணியது; வியப்புடையது; இளகிய தன்மை; செறிவில்லாதது.

**ஐது நொய்தாக** – மிக எளிதாக.

**ஐந்தடக்குதல்** – ஐம்பொறிகளையும் அடக்குதல்.

**ஐந்தரம்** – அழகுள்ளது; நெருக்கமின்மை; பனை; மந்தம்.

**ஐந்தரு** – தேவலோகத்து ஐந்து மரங்கள்: சந்தானம், தேவதாரம், கற்பகம், மந்தாரம், பாரிசாதம்.

**ஐந்தருச்செல்வி** – இந்திரன் மனைவியாகிய இந்திராணி.

**ஐந்தருநாதன்** – ஐந்து மரங்களுக்குத் தலைவனான இந்திரன்.

**ஐந்தலை நாகம்** – ஐந்து தலைகளையுடைய ஒரு வகைப் பாம்பு.

**ஐந்தலைமணி** – ஐந்து மணிகளையுடைய கொத்து மணி.

**ஐந்தவத்தை** – ஐந்து வகை நிலை: சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்; உடம்பினுட்பட்ட ஆன்மா அனுபவிக்கும் ஐவகை நிலை.

**ஐந்தவம்** – சாந்திர மதம்; மிருகசீரிட நாள்.

**ஐந்தவித்தல்** – ஐம்புலனடக்கல்; ஐந்து பொறி களையும் அடக்குதல்.

**ஐந்தறிவுயிர்** – மக்கள்; விலங்கு.

**ஐந்தனுருபு** – இன், இல் என்னும் ஐந்தாம் வேற்றுமை உருபு.

**ஐந்தாங்கால்** – திருமணத்திற்கு ஐந்து நாள் முன்ன தாக நடும் பந்தற்கால்; ஒருவகை விளையாட்டு.

**ஐந்தாம்வேதம்** – பாரதம்.

**ஐந்தார்** – பனைமரம்.

**ஐந்தானம்** – மிருகசீரிடம்.

**ஐந்திணை** – ஐவகை நிலம்: குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை; அன்புடைக்காமம் பற்றிக் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தலாகிய ஐவகை நிலத்திலும் நிகழும் ஆடவர் மகளிர் ஒழுக்கம்.

**ஐந்திணைச் செய்யுள்** – உரிப்பொருள் தோன்ற ஐந்திணையையும் கூறும் நூல்.

**ஐந்திரம்** – இந்திரனாற் செய்யப்பட்ட இலக்கண நூலாகிய ஐந்திர வியாகரணம்; கிழக்கு; யோக வகை; சிற்ப நூல்.

**ஐந்திரி** – கிழக்கு.

**ஐந்து** – மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள்; ஐந்தென்னும் எண்; பஞ்சாங்கம்.

**ஐந்துகில்போர்ப்போர்** – ஐந்து துணிகொண்டு போர்த்துக்கொள்பவராகிய பௌத்தர்.

**ஐந்துண்டி** – ஐந்து வகை உணவு: கடித்தல், நக்கல், பருகல், மெல்லல், விழுங்கல்.

**ஐந்துப்பு** – பஞ்ச லவணம்: இந்துப்பு, கல்லுப்பு, கறியுப்பு, வளையலுப்பு, வெடியுப்பு.

**ஐந்துபா** – ஐந்து வகையான செய்யுள்: வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா.

**ஐந்துமுகத்தோன்** – ஐந்து முகங்களுடைய சிவன்.

**ஐந்துருவாணி** – தேரகத்துச் செறிகதிர், தேரின் அச்சாணி.

**ஐந்துவிரை** – ஐவகை மணப்பொருள்கள்: கோட்டம், துருக்கம், தகரம், அகில், சந்தனம்.

**ஐந்துறுப்படக்கி** – நான்கு கால்களையும் தலையையும் தனக்குள்ளே ஒடுக்கிக்கொள்ளும் இயல்புள்ள ஆமை.

**ஐந்தெழுத்து** – பஞ்சாக்கர மந்திரம், 'நமசிவாய' என்னும் ஐந்தெழுத்து மந்திரம்; தமிழின் சிறப்பெழுத்துகளான எ, ஒ, ழ, ற, ன என்னும் ஐந்தெழுத்துகள்.

**ஐந்தை** – சிறுகடுகு.

**ஐந்தொகை** – விடுமுதல், வரவு, செலவு, ஆதாயம், இருப்பு இவற்றின் விவரமடங்கிய கணக்கு.

**ஐந்தொகைவினா** – ஒருவகைக் கணக்கு.

**ஐந்தொழில்** – இறைவனின் ஐந்து தொழில்கள்: படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்.

**ஐந்தொழிலன்** – ஐந்து தொழில்களையுடைய சிவன்.

**ஐந்நூறு** – ஐந்து நூறு.

**ஐப்பசி** – ஏழாம் மாதம்; அசுவினி நாள்.

**ஐப்பசி முழுக்கு** – துலாக்காவேரி முழுக்கு.

**ஐம்படை** – பஞ்சாயுதம், திருமால் தரிக்கும் ஐந்தாயுதங்கள்: சங்கு, சக்கரம், வில், வாள், தண்டு. இவை முறையே பாஞ்சசன்னியம், சுதரிசனம், சார்ங்கம், நாந்தகம், கௌமோதகி எனப் பெயர்பெறும்; காண்க: **ஐம்படைத்தாலி.**

**ஐம்படைத்தாலி** – கழுத்திலே பிள்ளைகள் அணியும் திருமாலின் ஐம்படை உருவமைந்த அணி.

**ஐம்படைப்பருவம்** – ஐம்படைத்தாலி அணிவதற்குரிய குழந்தைப்பருவம்.

**ஐம்பது** – ஒரெண், ஐந்து பத்துக்கொண்டது.

**ஐம்பால்** – இலக்கண நூல் கூறும் ஐந்து பகுப்பு: ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின் பால்; பெண் கூந்தல்; காண்க: **ஐங்கூந்தல்.**

**ஐம்பால்முடி** – காண்க: **ஐங்கூந்தல்.**

**ஐம்புலத்தவர்** – தென்புலத்தாராம் பிதிரர், தெய்வம், விருந்து, சுற்றத்தவர், தான்.

**ஐம்புலம்(ன்)** – ஐந்து பொறிகளுக்குரிய உணர்ச்சிகள்: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

**ஐம்புலம்வென்றோன்** – ஐம்புல உணர்ச்சிகட்கு ஆட்படாத முனிவன்; அருகன்.

**ஐம்பூதம்** – ஐந்து மூலப்பொருள்கள்: நிலம், நீர், தீ, வளி, வான்.

**ஐம்பெருங்காப்பியம்** – சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி.

**ஐம்பெருங்குழு** – அரசர்க்குரிய ஐந்து கூட்டத்தார்: அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதுவர், சாரணர்.

**ஐம்பெரும்பாதகம்** – பஞ்சமாபாதகம்: பொய், கொலை, களவு, கள்ளூண், குருநிந்தை.

**ஐம்பெரும்பூதம்** – காண்க: **ஐம்பூதம்.**

**ஐம்பெருவேள்வி** – காண்க: **ஐவகை வேள்வி.**

**ஐம்பொறி** – ஐந்துவகை இந்திரியங்கள்: மெய், வாய், கண், மூக்கு, செவி.

**ஐம்பொன்** – ஐந்துவகை முக்கிய மாழைகள்: பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம்.

**ஐம்மீன்** – அத்த நாள்; உரோகிணி.

**ஐம்முகம்** – சிவனது ஐந்து முகங்கள்: ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம்.

**ஐம்முகன்** – ஐந்து முகங்களையுடைய சிவன்.

**ஐம்முகி** – ஆமணக்கு.

**ஐம்மை** – தகட்டு வடிவம்; நொய்ம்மை; நெருக்கம்.

**ஐமவதி** – பார்வதி.

**ஐமிச்சம்** – ஐயம் கலந்த அச்சம்.

**ஐய** – வியக்கத்தக்க; நொய்ய; அழகிய; நுண்ணிய; இரக்கக் குறிப்பு; வியப்புக் குறிப்பு; விளிச்சொல்.

**ஐயக்கடிஞை** – பிச்சை வாங்கும் கலம், பிச்சைப் பாத்திரம்.

**ஐயக்கணச்சூலை** – சூலைநோய்வகை.

**ஐயக்காட்சி** – தோன்றின ஒரு பொருளை அதுவோ இதுவோ என்று இரண்டுறக் கருதுகை.

**ஐயகோ** – ஐயோ; இரக்கக் குறிப்பு; அவலக் குறிப்பு.

**ஐயங்கவீனம்** – வெண்ணெய்.

**ஐயங்கன், ஐயங்காய்ச்சி** – பேய், ஒரு பெண்பேய்.

**ஐயங்கார்** – வைணவப் பார்ப்பனர் பட்டப்பெயர்.

**ஐயஞ்சு** – நிலப்பனை, நிலப்பனங்கிழங்கு; இருபத்தைந்து.

**ஐயநாடி** – சிலேட்டும நாடி.
**ஐயப்படுதல்** – சந்தேகப்படுதல்.
**ஐயப்பாடு** – ஐயம், சந்தேகம்.
**ஐயபூமி** – பருமணல்.
**ஐயம்** – சந்தேகம்; அகப்பொருள் துறைகளுள் ஒன்று, ஐயக்காட்சி; ஐயவணி; இரப்போர் கலம்; பிச்சை; சிலேட்டுமம்; சிறுபொழுது; குற்றம்; மோர்.
**ஐயம்புகுதல்** – இரத்தல், பிச்சையெடுத்தல்.
**ஐயமறுத்தல்வினா** – சந்தேகம் போக்குவதற்காகக் கேட்கப்படும் கேள்வி.
**ஐயர்** – தந்தையர்; பார்ப்பார்; முனிவர்; உயர்ந்தோர்; வானோர்; பெருமையிற் சிறந்தோர்; பெரியோர்; வீரசைவர் பட்டப் பெயர்; வேதியர் பட்டப் பெயர்; பாதிரிமார் பட்டப் பெயர்.
**ஐயவி** – கடுகு; வெண்சிறு கடுகு; ஒரு நிறை; துலாமரம்; கடுக்காய்; அம்புகளின் கட்டு.
**ஐயவித்துலாம்** – தலைதிருகு மதிற்பொறி, தலைகளைப் பிடித்துத் திருகும்படி நெருக்கும் ஒரு மதிற்பொறி.
**ஐயவிலக்கு** – ஓர் அணி, ஐயுற்றதனை விலக்குதல்.
**ஐயவினா** – காண்க: **ஐயமறுத்தல் வினா.**
**ஐயவுணர்வு** – உறுதியில்லாத அறிவு.
**ஐயவுவமை** – ஓர் அணி. அஃது உவமையையும் பொருளையும் ஐயுற்றுரைப்பது.
**ஐயள்** – வியத்தற்குரிய அழகுடையவள்.
**ஐயறிவுயிர்** – ஐம்புலன்களாலும் அறியும் உயிர்.
**ஐயன்** – தலைவன்; மூத்தோன்; முனிவன்; ஆசான்; உயர்ந்தோன்; தந்தை; அரசன்; கடவுள்; ஐயனார்; பார்ப்பான்.
**ஐயன்பாழி** – சாத்தன்கோயில்.
**ஐயனார்** – அரியர புதல்வன்; சாத்தன், ஐயப்பன்.
**ஐயா** – மரியாதை விளிப்பெயர்; தலைவன், ஐயன்; ஓர் இரக்கக் குறிப்புச் சொல்.
**ஐயானனம்** – சிங்கம்; சிங்கராசி.
**ஐயிதழ்** – ஒரு துத்திப் பூண்டு.
**ஐயுணர்வு** – ஐயவுணர்வு; ஐம்புலவறிவு; புலன்கள் வேறுபாட்டால் ஐந்தாகிய உணர்வு.
**ஐயுறவு** – ஐயப்பாடு, சந்தேகம்.
**ஐயுறுதல்** – சந்தேகித்தல்.
**ஐயெனல்** – வியப்புக் குறிப்பு; விரைவுக் குறிப்பு; வருத்தக் குறிப்பு; உடன்பாடற் குறிப்பு; அதட்டற் குறிப்பு.
**ஐயே** – ஐயன் என்பதன் விளி; ஓர் ஒலிக் குறிப்பு.
**ஐயை** – தலைவி; காளி; தவப்பெண்; குருபத்தினி; மகள்; பார்வதி; துர்க்கை; இடைச்சி.
**ஐயோ** – வியப்பிரக்கச் சொல்; துன்பக்குறிப்பு.
**ஐயோன்** – நுண்ணியன்.
**ஐராவணம்** – இந்திரன் யானை, கீழ்த்திசை யானை; சிவன் யானை; பட்டத்து யானை.
**ஐராவணன்** – இந்திரன்.
**ஐராவதம்** – இந்திரனுடைய யானை, கீழ்த்திசை யானை.
**ஐவகைச்சயனம்** – ஐந்துவகைப் படுக்கைகள்: அன்னத்தூவி, இலவம் பஞ்சு, செம்பஞ்சு, மயில்தூவி, வெண்பஞ்சு ஆகியவற்றால் அமைவது.
**ஐவகைச்சிறுபொழுது** – மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல் என்பன.
**ஐவகைச்சுற்றம்** – அரசர்க்குரிய ஐவகைச் சுற்றத்தார்: நண்பர், போர்வீரர், சகுனம் சொல்லுவோர், ஆயுர்வேதர், பார்ப்பனர்.
**ஐவகைத்தற்கிழமை** – தன்னோடு ஒற்றுமையுடைய பொருளின் ஐவகை இயைபு: பண்புத் தற்கிழமை, ஒன்றன்கூட்டத் தற்கிழமை, பலவினீட்டத் தற்கிழமை, ஒன்று திரிந்துபட்டு ஒன்றாய தற்கிழமை.
**ஐவகைத்தாயர்** – ஐந்துவகைத் தாய்மார்: ஈன்ற தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய்.
**ஐவகைத்திரவியம்** – ஐந்திடங்களில் கிட்டும் செல்வங்கள்; அவை: மலைபடுபொருள், நாடுபடு பொருள், காடுபடுபொருள், நகர்படுபொருள், கடல்படுபொருள்.
**ஐவகைத்தெய்வமணி** – சிந்தாமணி, சூளாமணி, சிமந்தகமணி, சூடாமணி, கௌத்துவமணி.
**ஐவகைத்தொழில்** – எண்ணல், எழுதல், இலைகிள்ளல், மலர்தொடுத்தல், யாழ்மீட்டல்.
**ஐவகைமயிர்முடி** – காண்க: **ஐம்பால்முடி.**
**ஐவகைமன்றம்** – சிவன் நடமிடும் ஐந்து சபைகள்: திருவாலங்காட்டு மணியம்பலம், தில்லைப் பொன்னம்பலம், மதுரை வெள்ளியம்பலம், திருநெல்வேலித் தாமிர அம்பலம், குற்றாலம் சித்திர அம்பலம்; புகாரிலிருந்த வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம், பூதசதுக்கம், பாவை மன்றம்.
**ஐவகைமெய்க்குற்றம்** – குறுகுறுத்தல், கொட்டாவி விடுதல், நெட்டை, கூன்கிடை, நட்டு விழுதல்.
**ஐவகையாகம்** – ஐந்துவகை வேள்விகள்: கரும யாகம், தவயாகம், செபயாகம், தியான யாகம், ஞானயாகம்.
**ஐவகைவினா** – அறியான் வினாவல், அறிவு ஒப்புப் பார்த்தல், ஐயமறுத்தல், அவனறிவு தான்கொளல், அவனுக்கு உண்மை காட்டல்.
**ஐவகைவேள்வி** – கடவுள் வேள்வி, பிரம வேள்வி, பூத வேள்வி, மானிட வேள்வி, தென்புலத்தார் வேள்வி.

**ஐவண்ணம்** – மருதோன்றி; சௌகந்திகப் பதுமராகம்; செம்மை, கருமை, வெண்மை, பொன்மை, பசுமை என்னும் ஐந்து நிறங்கள்.

**ஐவணி** – மருதோன்றி.

**ஐவர்** – பஞ்சபாண்டவர்; ஐம்பொறிகள்; ஐம்புலன்கள்.

**ஐவர்ணம்** – பரவ மகளிர் கால்விரல்களிற் பூணும் அணி: நகமுடி, சலங்கை முன்தாங்கி, மயிலடி, இடைக்காற் பீலி, நகரை மீன்.

**ஐவனம்** – மலைநெல்; காட்டுநெல்.

**ஐவாய்மான்** – அரிமா, சிங்கம்.

**ஐவாய் மிருகம்** – கரடி; சிங்கம்.

**ஐவிரல்** – அத்தநாள்.

**ஐவிரலி** – ஐவேலிக் கொடி; கொவ்வை.

**ஐவேசு** – கையிருப்பு; சொத்து; வழிவகை.

**ஐவேலி** – காண்க: ஐவிரலி.

**ஐவைந்து** – ஐயைந்து; ஐந்து விதம்.

## ஒ

**ஒ** – பத்தாம் உயிரெழுத்து; ஒவ்வு என்பதன் பகுதி; ஐம்பறவைகளுள் மயிலைக் குறிக்கும் எழுத்து.

**ஒஃகுதல்** – பின்வாங்குதல், ஒதுங்குதல்.

**ஒக்க** – ஒருமிக்க, கூட, ஒருசேர; சமமாயிருக்க, நிகர்க்க; பொருந்த; மிகுதியாக; தகுதியாயிருக்க.

**ஒக்கடித்தல்** – தாளங்கொட்டுதல்; செப்பனிடுதல்.

**ஒக்கநோக்குதல்** – ஒருநிகராகப் பார்த்தல், சரிசமமாகப் பார்த்தல்.

**ஒக்கப்பண்ணுதல்** – செப்பனிடுதல்.

**ஒக்கப்பாடுதல்** – பிறன் கூற்றுக்கு ஒத்துக்கூறுதல்.

**ஒக்கம்** – ஊர்; பட்டினம்; ஓமம்; எழுச்சி; அகலம்; பொலிவு; கரை; அற்பம்.

**ஒக்கல்** – உறவினர், சுற்றத்தார்; குடி, குடும்பம்; மூட்டுகை; இடைப்பக்கம்; ஒக்கலை.

**ஒக்கலிடுதல்** – ஒக்கலித்தல், இனத்தாரைத் தழுவுதல்.

**ஒக்கலித்தல்** – ஆவலங்கொட்டுதல்; ஆரவாரித்தல்; உறவினரோடு கலந்து பேசுதல்; உறவினரைப் பாதுகாத்தல்; சமாதானமாதல்.

**ஒக்கலை** – இடுப்பு; இடுப்பின் பக்கம், மருங்கின் பக்கம்; சுற்றத்தான்(ள்); ஒவ்வாய்.

**ஒக்காதிக்கொடி** – புலிநகக்கொன்றை.

**ஒக்கிடுதல்** – பழுதுபார்த்தல், செப்பனிடுதல்.

**ஒக்குதல்** – ஒத்திருக்கை; கொப்புளித்தல்; பிற்படவிடல்.

**ஒக்கோலை** – அம்பர், கடல்படு பொருள்களுள் ஒன்று, ஒரு மணப்பண்டம்.

**ஒகரம்** – ‘ஒ’ என்னும் எழுத்து; மயில்.

**ஒச்சம்** – கூச்சம், நாணம்; கவனிப்பு; பழுது, குறைவு.

**ஒச்சித்தல்** – வெட்கப்படுதல்; குறைதல்.

**ஒச்சியம்** – கூச்சம்; பரிகாசம்; சரசமொழி, காதல் பேச்சு; உச்சம்; நிந்தை.

**ஒச்சை** – உற்றுக்கேட்கை; காந்தற் சோறு.

**ஒசித்தல்** – அசைத்தல்; முறித்தல், ஒடித்தல்; கொடுத்தல்.

**ஒசிதம்** – கற்றாழை.

**ஒசிதல்** – முறிதல், ஒடிதல்; துவளல், நுடங்குதல்; சாய்தல்; நாணுதல்; வருந்துதல்; ஒய்தல்; தளர்தல்.

**ஒசிந்த நோக்கு** – ஒதுங்கிப் பார்க்கும் பார்வை.

**ஒசியல்** – கிளை முறிக்கப்பட்ட மரம்.

**ஒஞ்சட்டை** – ஒல்லி.

**ஒஞ்சரித்தல்** – ஒரு பக்கமாய்ச் சாய்தல்; கதவை ஒருபக்கம் சாத்துதல்; ஒரு பக்கமாய்ப் போதல்.

**ஒஞ்சி** – முலை.

**ஒஞ்சித்தல், ஒஞ்சுதல்** – நாணுதல்; மனத்தையடக்கல்.

**ஒட்ட** – அடியோடு; கிட்ட; இறுக; அணுக; போல.

**ஒட்டகப்பாரை** – ஒட்டாம்பாரை, கடல்மீன்வகை.

**ஒட்டகம், ஒட்டகை** – ஒட்டை, அசைபோடும் இனத்தைச் சார்ந்த விலங்குவகை.

**ஒட்டங்காய்ப்புல்** – ஆடையில் ஒட்டும் ஒருவகைப் புல்.

**ஒட்டங்கி** – உலையாணிக் கோல்; கன்னார் கருவியுள் ஒன்று.

**ஒட்டச்சி** – பூவழலை, உவர்மண்; ஒட்டச்சாதிப் பெண்.

**ஒட்டடை** – ஒட்டறை, நூலாம்படை; புகையுறை; சிலந்திக்கூடு; சிலந்தி வலையும் தூசும்; நெல்வகை.

**ஒட்டணி** – உவமையால் உவமேயத்தைப் பெற வைக்கும் அணி.

**ஒட்டத்தி** – ஒட்டுத்துத்திப் பூண்டு.

**ஒட்டப்போடுதல்** – தன்னைத் தானே பட்டினி போடுதல்; பட்டினி கிடக்கச் செய்தல்.

**ஒட்டம்** – பந்தயம்; இகலாட்டம்; பந்தயப் பொருள்; உடன்படிக்கை; சூள்மொழி; ஒரு நாடு; வெட்டளவு காட்ட வைக்குந் திடர், தோண்டலளவைத் திடர்.

**ஒட்டர்** – ஒட்ட நாட்டார்; மண்வேலை செய்வோர்.
**ஒட்டரம்** – ஒரு நாடு, ஒரிசா நாட்டின் பழைய பெயர்.
**ஒட்டல்** – ஒட்டுதல்; ஒன்றுசேர்த்தல்; உடன்பாடு; தாக்குதல்; கிடைத்தல்; வைத்தல்; குறுகல்; வற்றல்; பந்தயம்; உள்ளொடுங்குகை.
**ஒட்டலன்** – உடன்பாடில்லாதவன்; பகைவன்; மெலிந்தவன்.
**ஒட்டற்காது** – சுருங்கிய செவி; ஒட்டவைத்த காது.
**ஒட்டன்** – மண்வேலை முதலியன செய்யும் ஒருவகைச் சாதியான்; ஒருவகை நெல்.
**ஒட்டாக்கொற்றி** – கன்றை அணுகவிடாத பசு; அன்பில்லாதவள்.
**ஒட்டாம்பாரை** – காண்க: **ஒட்டகப்பாரை.**
**ஒட்டார்** – பகைவர்.
**ஒட்டாரங்காட்டுதல்** – பிடிவாதம் பண்ணுதல்.
**ஒட்டாரம்** – பிடிவாதம், முரட்டுத்தனம்.
**ஒட்டி** – ஒட்டி நிற்கும் பொருள்; ஒட்டொட்டிப் பூண்டு; ஒரு கடல்மீன்வகை.
**ஒட்டிக்கிரட்டி** – ஒன்றுக்கு இரண்டு பங்கு.
**ஒட்டிக்கொடுத்தல்** – உறுதிபண்ணித் தருதல்.
**ஒட்டிடுதல்** – பந்தயம் போடுதல்; சத்தியஞ் செய்தல், ஆணையிடுதல்.
**ஒட்டியக்கரு** – சூனிய வித்தை.
**ஒட்டியத்தோட்டி** – குப்பை வாருவோன்.
**ஒட்டியம்** – ஒரு மந்திர வித்தை; ஒரு நாடு; ஒட்டர மொழி; ஒரு மாந்திரிக நூல்.
**ஒட்டியமேளம்** – ஒட்டார் இசைக்கும் ஒருவகை வாத்தியம்.
**ஒட்டியன்** – ஒட்டிய நாட்டான்; ஒட்டரநாட்டு அரசன்.
**ஒட்டியாணம்** – யோகப்பட்டை; மாதர் இடையணிகளுள் ஒன்று.
**ஒட்டியாதேவி** – ஒட்டியக் காளி; சூனியக்காரர் வழிபடும் தேவதை.
**ஒட்டிரட்டி** – காண்க : **ஒட்டிக்கிரட்டி.**
**ஒட்டினர்** – நண்பர்.
**ஒட்டு** – இணைக்கப்பட்டது; இணைப்பு; சார்பு; நட்பு; மரப்பட்டை; மரவொட்டு; ஓரம்; பறவை பிடிக்கும் கண்ணி; ஒட்டுக்கடுக்கன்; ஒட்டுத்திண்ணை; படை வகுப்பு; அற்பம்; நற்சமயம்; சூள்; துணை; இகலாட்டம்; ஓரணி.
**ஒட்டுக்கடுக்கன்** – சிறுகடுக்கன்.
**ஒட்டுக்கண்** – இமை ஒட்டும் நோயுள்ள கண்.
**ஒட்டுக்கணவாய்** – ஒரு மீன்வகை.
**ஒட்டுக்காய்ச்சல்** – தொற்றுசுரம்; உடம்போடு ஒட்டிய காய்ச்சல்.
**ஒட்டுக்குஞ்சு** – சிறுகுஞ்சு; பேன்குஞ்சு.
**ஒட்டுக்குடி** – ஒதுக்குக் குடி, பிறரை அண்டியிருக்குங் குடி.
**ஒட்டுக்குடுமி** – உச்சிச் சிறுகுடுமி.
**ஒட்டுக்கும்** – முழுதும்.
**ஒட்டுக்கேட்டல்** – காண்க: **ஒற்றுக்கேட்டல்.**
**ஒட்டுக்கொடுத்தல்** – அணுக இடங்கொடுத்தல்; கேட்டது கொடுத்தல்; உறுதிபண்ணித் தருதல்.
**ஒட்டுச்சல்லடம்** – குறுங்காற் சட்டை.
**ஒட்டுச்செடி** – ஒட்டொட்டிச் செடி, ஒட்டுக்கட்டி உண்டாக்கும் செடி.
**ஒட்டுடந்தை** – ஒட்டுப்பற்று; சிறுதொடர்பு; தூரவுறவு.
**ஒட்டுத்தரவு** – சுற்றறிக்கை.
**ஒட்டுத்திண்ணை** – சிறு திண்ணை, வீட்டைச் சார்ந்த சிறு திண்ணை; மிகச் சிறிய தெருத் திண்ணை.
**ஒட்டுத்துணி** – ஒட்டு வைத்துத் தைக்கப்படும் துணித்துண்டு.
**ஒட்டுத்துத்தி** – துத்திப்பூண்டுவகை; செடிவகை.
**ஒட்டுத்தையல்** – ஒட்டுத் துணியிட்டுத் தைக்கும் தையல்.
**ஒட்டுதல்** – ஒட்டவைத்தல்; பொருத்துதல்; சார்தல்; பந்தயம் கட்டுதல்; துணிதல்; கிட்டுதல்; கூட்டுதல்; இணைத்தல்; தாக்குதல்; உடன்படுதல்; ஆணையிடுதல்; நட்பாக்குதல்; வஞ்சினங்கூறல்; பதுங்கி நிற்றல்; அடைகொடுத்தல்; சுருங்குதல்; வற்றுதல்.
**ஒட்டுநர்** – நண்பர், மித்திரர்.
**ஒட்டுப்பழம்** – ஒட்டுமரத்தின் பழம்.
**ஒட்டுப்பற்று** – ஒட்டுடன்பாடு; ஆசாபாசம்; ஒட்டுடந்தை; ஒட்டுரிமை; சிறு உறவு.
**ஒட்டுப்புதவம்** – இரட்டைக் கதவு.
**ஒட்டுப்புல்** – சார்ந்த பொருள்களின் மேல் தொற்றிக்கொள்ளும் புல்வகை.
**ஒட்டுப்புழு** – புறாமுட்டி என்னும் செடிவகை.
**ஒட்டுப்பொறுக்குதல்** – சிந்தினவற்றைத் திரட்டுதல்.
**ஒட்டுப்போடுதல்** – துண்டு வைத்து இணைத்தல்; சமயம் பார்த்தல்.
**ஒட்டுமயிர்** – குடுமியுடன் கூடாத மயிர், காண்க: **இடுமயிர்.**
**ஒட்டுமொத்தம்** – முழுமொத்தம், முழுமையும்.
**ஒட்டுரிமை** – ஒட்டுடன்பாடு, உடந்தை, சிறு தொடர்பு; நட்பு.
**ஒட்டுவட்டில்** – ஆராதனை வட்டில்.
**ஒட்டுவாரொட்டி** – ஒட்டுநோய், தொற்றுநோய்.
**ஒட்டுவிடுதல்** – பொருத்து நீங்குதல்; பற்றுவிடுதல்.

**ஒட்டுவித்தை** – இடத்தைவிட்டுப் பெயராது இருக்கச் செய்யும் வித்தை.

**ஒட்டுவைத்தல்** – ஆணையிடல்; பறவைகளைப் பிடிக்க ஒட்டுப் பிசின் வைத்தல்; கண்ணி வைத்தல்; அகழி தோண்டுதல்.

**ஒட்டுறவு** – உரித்துறவு; நெருங்கிய சம்பந்தம்.

**ஒட்டை** – ஒட்டகம்; ஒட்டைச்சாண்; பத்து விரற்கிடை; சமானம்; விளையாட்டில் உதவுவோன்.

**ஒட்டைத்திருக்கை** – திருக்கை மீன்வகை.

**ஒட்டொட்டி** – காண்க: **ஒட்டங்காய்ப்புல்.**

**ஒட்டோலக்கம்** – பெருங் கூட்டம்; பகட்டு, இடம்பம்; வெற்றி.

**ஒட்பம்** – அறிவு; அழகு; நன்மை; மேன்மை.

**ஒடி** – கவண்; காட்டுப்புதர்.

**ஒடிசல்** – முறிந்தது; ஒல்லியாயிருப்பவன்(ள்).

**ஒடிசில்** – காண்க: **ஒடி.**

**ஒடித்தல்** – முரித்தல், அழித்தல்; தகர்த்தல்; ஒளி செய்தல்.

**ஒடிதல்** – முரிதல்; கெடுதல்; அழிதல்; இடையறுதல்.

**ஒடிபு** – முறிகை; கெடுகை; குறைவு; குற்றம்; அழிவு; தவிர்வு.

**ஒடியல்** – முறிகை; முரிதல்; பனங்கிழங்கின் காய்ந்த பிளவு.

**ஒடியல்மா** – பனங்கிழங்கின் மா.

**ஒடியெறிதல்** – காட்டுப்புதர்களை அழித்தல்; மரக்கொம்பைப் பாதி குறைத்தல்; குற்றுயிராக்கல்; வலைவீசல்.

**ஒடிவு** – இடைமுறிகை; இடைமுறிபட்டது.

**ஒடு** – ஒடுமரம்; நிலப்பாலை; முதுபுண்; புடைகொண்ட புண்; எண்ணுப் பொருளில் வரும் ஓரிடைச் சொல்; காண்க: **ஒடுக்கட்டி;** மூன்றாம் வேற்றுமையுருபு.

**ஒடுக்கட்டி** – அக்குட்புண்; கழலைக் கட்டி.

**ஒடுக்கத்தம்பிரான்** – அணுக்கர், சைவ மடாதிபதிக்கு உட்காரியம் பார்க்கும் தம்பிரான்.

**ஒடுக்கம்** – அடக்கம்; குறுக்கம்; சுருக்கம்; புழுக்கம்; சிறிது சிறிதாகக் குறைதல்; நெருக்கமான இடம்; பதுக்கம்; மறைவிடம்; தனியிடம்; வழிபாடு; முடிவு; ஒன்றில் அடங்குகை; இடைஞ்சல்.

**ஒடுக்கிடம்** – மறைவிடம்; சுருக்கமான இடம்; தனியிடம்.

**ஒடுக்கு** – அடக்கம்; இடுக்குமூலை; ஒடுக்கமாயிருப்பது; நெளிவு.

**ஒடுக்குச்சீட்டு, ஒடுக்குத்துண்டு** – பணம் செலுத்தியவருக்குக் கொடுக்கும் பற்றுச்சீட்டு.

**ஒடுக்குதல்** – அடக்குதல்; வருத்துதல்; குறைத்தல்; சிறுகுதல்; செறித்தல்; சுருங்கப் பண்ணுதல்; உடம்பையொடுக்கல்; இறையிறுத்தல்; கீழ்ப்படுத்துதல்.

**ஒடுக்குப்படி** – ஒரு பழைய வரி.

**ஒடுக்குமாடு** – கொள்ளைப் பொருள்.

**ஒடுக்குவாய்** – ஒடுங்கின வாய், கோணல் வாய்.

**ஒடுக்கெடுத்தல்** – நெளிவெடுத்தல்.

**ஒடுகு** – ஒடுமரம்; நிலப்பாலை.

**ஒடுங்க** – ஓர் உவமவுருபு.

**ஒடுங்கல்** – அடங்கல்; சுருங்குதல்.

**ஒடுங்கி** – ஆமை.

**ஒடுங்குதல்** – அடங்குதல்; குறைதல்; சுருங்குதல்; குவிதல்; சோர்தல்; கீழ்ப்படிதல்; பதுங்கல்; ஒதுங்குதல்; ஒளி மங்குதல்.

**ஒடுத்தங்குதல்** – புண்ணிற் சீழ் தங்குதல்.

**ஒடுதடங்கல்** – நெளிவு, வளைவு.

**ஒடுப்பை** – நிலப்பாலை.

**ஒடுவடக்கி** – குப்பைமேனி; திராய்மரம்; பெருந்தும்பை.

**ஒடுவை** – ஒடுமரம்.

**ஒடை** – உடைமரம், குடைவேலமரம்.

**ஒண்டன்** – நரி; ஆண் நரி.

**ஒண்டி** – ஒன்றி, தனிமை; துணையில்லாதவன்(ள்); ஊற்றாணி என்னும் கலப்பை உறுப்பு.

**ஒண்டிக்கட்டை, ஒண்டிக்காரன்** – தனிமையானவன்.

**ஒண்டி(டு)க்குடி** – மற்றொரு குடும்பத்தோடு ஒட்டி வாழ்தல், ஒட்டுக் குடித்தனம்.

**ஒண்டியாணி** – கலப்பையில் கொழுப் படிவதற்காக அடிக்கப்படும் இருப்பாணி.

**ஒண்டுக்கேட்டல்** – காண்க: **ஒற்றுக்கேட்டல்.**

**ஒண்டுதல்** – சார்தல்; பதுங்குதல்; சரண்புகுதல்; ஒன்றுதல்.

**ஒண்ணுதல்** – இயலுதல்; தக்கதாதல்; கூடுதல்; ஒளியுடைய நெற்றி.

**ஒண்மை** – விளக்கம்; இயற்கையழகு; நன்மை; மிகுதி; ஒழுங்கு; நல்லறிவு.

**ஒத்தணம்** – காண்க: **ஒற்றடம்.**

**ஒத்தது** – ஒப்பானது; தகுதியானது.

**ஒத்தபடி** – ஏற்றவாறு.

**ஒத்தபண்புரைப்போர்** – தூதர்.

**ஒத்தமலங்கொட்டுதல்** – இடக்குச் செய்தல்.

**ஒத்தல்** – நடு; பொருத்தல்; ஒத்துதல்; தகுதியாதல்; ஒற்றுமைப்படுதல்; கேள்வியால் தெளிந்தவற்றில் மனம் ஊன்றி நிற்கை.

**ஒத்தவழி** – ஏற்றவழி, தக்கநெறி, நேர்வழி.

**ஒத்தறுத்தல்** – தாளம் போடுதல்; தாள வரையறை செய்தல்.

**ஒத்தன்** – ஒருத்தன்.

**ஒத்தாங்கு** – ஒப்ப, ஒத்தபடி.

**ஒத்தாசை** – உதவி.
**ஒத்தாப்பு** – ஒதுக்கு, மறைவு; குடில்.
**ஒத்தாழிசை** – கலிப்பாவின்வகை.
**ஒத்திக்கை, ஒத்திகை** – ஒத்திருக்கை; நாடகத்தை முன் ஆடிப்பார்க்கை; உதவி.
**ஒத்திசை** – ஒத்த இசை; விட்டிசையாதிருக்கும் பண்.
**ஒத்திபோடுதல்** – தள்ளிவைத்தல்.
**ஒத்து** – தாளவொற்று; ஓரிசைக் குழல், நாகசுரத்தில் சுருதிகூட்டும் ஓர் ஊதுகுழல்; அந்தரக் கொட்டு; ஒத்திசை; கையணிவகை.
**ஒத்து (வி)** – தாளம்போடு; விலகு.
**ஒத்துக்கொடுத்தல்** – பொறுப்பேற்றல்; கணக்கு கட்கு வகைசொல்லுதல்.
**ஒத்துக்கொள்ளுதல்** – சம்மதித்தல்; பிழையை ஒப்புக்கொள்ளுதல்; கணக்கி லேற்றுக்கொள்ளுதல்; இணங்குதல்; ஏற்றதாதல்.
**ஒத்துதல்** – தாளம் போடுதல்; தாக்குதல்; ஒற்றுதல்; விலகுதல்.
**ஒத்துநடத்தல்** – ஒரே மாதிரியாய் நடத்தல், இசைந்தொழுகுதல்.
**ஒத்துப்பாடுதல்** – இசையப் பாடுதல்; பிறர் சொல்லுவன எல்லாவற்றையும் உடன்பட்டு உரைத்தல்.
**ஒத்துப்பார்த்தல்** – சரிபார்த்தல்.
**ஒத்துப்பிடித்தல்** – ஒத்தூதுதல்.
**ஒத்துப்போடுதல்** – தாளம் போடுதல்.
**ஒத்துவருதல்** – இணங்கி வருதல்.
**ஒத்துவாக்கியம்** – ஒத்த சொற்றொடர், சொல்லிலாயினும் பொருளிலாயினும் ஒத்திருக்கும் வேறு சொற்றொடர்.
**ஒத்துவாழ்தல்** – மனமொத்து வசித்தல்.
**ஒத்துழைக்கை, ஒத்துழைத்தல், ஒத்துழைப்பு** – பலர்கூடி மனமொத்து வினை செய்தல்.
**ஒத்துழையாதார்** – பிற கொள்கையாரோடு இணங்கி நடவாதவர்.
**ஒத்துழையாமை** – பிற கொள்கையாரோடு இணங்கி நடவாமை.
**ஒத்தெழுத்திடுதல்** – யாவரும் மனமொத்து கையெழுத்திடுதல்.
**ஒதளை** – காசுக்கட்டி, ஒரு மருந்து.
**ஒதி, ஒதிமரம்** – ஒதியமரம்.
**ஒதுக்கம்** – மறைவிடம்; தனிமை; பதுங்குகை; பின்னிடுகை; நடை; ஒழுக்கம்; சாவடி; மகளிர் பூப்பு; ஓர் அபசுரம், தாழ்மை; இருப்பிடம்.
**ஒதுக்கல்** – ஒதுங்கச்செய்தல்; கணக்கு வழக்குத் தீர்த்தல்; நீக்கல்; எழுச்சி.
**ஒதுக்கிடம்** – ஒதுங்கும் இடம், மறைவிடம்; புகலிடம், அண்டி வாழுமிடம்.
**ஒதுக்கிப்போடுதல்** – தீர்த்துவிடுதல்; ஓரமைப்பிலிருந்து நீக்கிவிடுதல்; விசாரணையைத் தள்ளி வைத்தல்; சொத்தை மறைத்து வைத்தல்.
**ஒதுக்கு** – மறைப்பு; விலகியிருப்பது; ஒண்டியிருத்தல்; புகலிடம்; நடை.
**ஒதுக்குக்கடல்** – குடாக்கடல்; இயற்கையில் அமைந்த துறைமுகம்.
**ஒதுக்குதல்** – ஒதுங்கச் செய்தல்; விலக்குதல்; புடைவை முதலியன ஒதுக்குதல்; தீர்த்தல்; தனியாகச் செய்தல்; மறைத்தல்; காத்தல்; சேர்த்தல்; கொல்லுதல்.
**ஒதுக்குப்பச்சை** – புழுங்கலில் வேகாத நெல்.
**ஒதுக்குப்புறம்** – ஒதுங்கும் வெளியிடம், மறைவு; தனித்த இடம்.
**ஒதுக்குப்பொதுக்குப்பண்ணுதல்** – ஒரு பொருளை மோசஞ்செய்தல்; ஒன்றை மறைத்துவைத்தல்.
**ஒதுங்குதல்** – விலகுதல்; கரையிற் சார்தல்; பின்னடைதல்; சரணம் புகுதல், அடைக்கலம் புகுதல்; பதுங்கல்; சாதல்; நடத்தல்; ஒடுங்குதல்; வறுமைப்படுதல்; தீர்தல்.
**ஒதுப்புறம்** – காண்க: **ஒதுக்குப்புறம்.**
**ஒப்ப** – ஓர் உவமவுருபு, போல.
**ஒப்பக்கதிர்** – கம்மக் கருவிகளுள் ஒன்று, பணியை ஒப்பனை செய்யும் கருவி, அணிகலன்களை மெருகிடும் கருவி.
**ஒப்பங்கூறு** – பாகப்பத்திரம்.
**ஒப்பங்கொடுத்தல்** – அழுத்துதல்; கட்டளை கொடுத்தல்.
**ஒப்படி** – ஓரிருக்கை; அறுவடை; ஒருவகைக் கூட்டு நிதி.
**ஒப்படியிருக்கை** – இருக்கைவகை ஒன்பதனுள் ஒன்று.
**ஒப்படை** – ஒப்புக்கொடுக்கை; கட்டளையை நிறைவேற்றுகை.
**ஒப்படைத்தல்** – ஒப்புக்கொடுத்தல்; சேர்ப்பித்தல்; ஈடுகொடுத்தல்; பரிந்துரைத்தல்.
**ஒப்பணி** – உவமையணி.
**ஒப்பணிதல்** – அலங்கரித்தல்.
**ஒப்பந்தம்** – உடன்படிக்கை; இசைவு; ஒப்புரவு; மத்திமம்; கட்டுப்பாடு; சமன்; ஒப்பாக.
**ஒப்பம்** – ஒப்பு; ஒருதன்மை; சமம்; மெருகு; அலங்காரம்; கையொப்பம்; கைச்சாத்து; கட்டளை; அழைப்புப் பத்திரம்; அதிகாரப் பத்திரிகை.
**ஒப்பமிடுதல்** – சமமாக்குதல்; மணி முதலியன துலக்குதல்; அழகு செய்தல்; கையெழுத்துப் போடுதல்; அதிகாரப் பத்திரிகையில் ஒப்பம் வைத்தல்.

**ஒப்பளவை** – உவமானப் பிரமாணம், உவமையினால் உவமேயத்தை அறிவது.
**ஒப்பன்** – மெருகிடப்பட்டது.
**ஒப்பனை** – அழகு செய்தல்; அலங்காரம்; உவமை; சமம்; சான்று.
**ஒப்பனைகாட்டுதல்** – ஒப்புக்காட்டுதல்; சான்று காட்டுதல்.
**ஒப்பாதல்** – உவமையாதல், நேராதல்.
**ஒப்பாரி** – ஒப்பு; ஒத்த பாவனை; போலி; அழுகைப்பாட்டு.
**ஒப்பாரித்தல்** – ஒத்தல்.
**ஒப்பாரியிடுதல், ஒப்பாரிவைத்தல்** – செத்தாரை நினைத்துப் புலம்பி அழுதல்.
**ஒப்பான்** – ஒத்த இயல்புடையவன்.
**ஒப்பிடுதல்** – உவமித்தல்; ஒத்துப் பார்த்தல்.
**ஒப்பித்தல்** – உவமித்தல்; ஒப்படைத்தல்; ஒப்பனை செய்தல்; ஒத்துக்கொள்ளச் செய்தல்; ஏற்கச் செய்தல்; பகிர்ந்து கொடுத்தல்; மனப்பாடம் செய்து கூறுதல்.
**ஒப்பிதம்** – பொருத்தம்; இணக்கம்; இசைவு; சமம்; சம்மதம்; வழுவின்மை; ஒவ்வுதல்; சம்மதித்தல்.
**ஒப்பில்போலி** – ஒப்புமைப் பொருளைத் தாராத போல் என்னும் உவமச்சொல்.
**ஒப்பின்முடித்தல்** – ஒன்றனது இலக்கணத்தை அதுபோன்ற வேறொன்றற்கும் முடிவு செய்தலாகிய உத்தி.
**ஒப்பின்மை** – நிகரின்மை; வேறுபாடு.
**ஒப்பு** – பொருத்தம்; ஒருதன்மை; ஒப்புமை; உவமை; தகுதி; சமம்; இசைவு; அழகு; கவனம்; ஒப்பாரி; சாயல்; உடன்படுகை.
**ஒப்புக்கழுதல்** – போலியாக அழுதல்; மனமின்றிச் செய்தல்.
**ஒப்புக்கு** – மனத்தோடு பொருந்தாமல், போலியாக.
**ஒப்புக்கொடுத்தல்** – ஏற்பித்தல், ஒப்புவித்தல்.
**ஒப்புக்கொப்பாரம்** – விருந்தினரைப் போற்றுதல்.
**ஒப்புக்கொள்ளுதல்** – ஏற்றுக்கொள்ளுதல்; ஒத்துக் கொள்ளுதல்; மனத்துக்குப் பிடித்தல்.
**ஒப்புதல்** – சம்மதித்தல், உடன்படல்.
**ஒப்புப்பொருவு** – உவமப்பொரு; ஒன்றை ஒப்பாகக் கூறும் உவமை.
**ஒப்புமுறி** – ஒப்புக்கொண்டதைக் குறிக்கும் சீட்டு.
**ஒப்புமை** – சமானம்; உவமானம்; ஒத்திருத்தல்.
**ஒப்புமைக் கூட்டம்** – புகழ்தலினும் இகழ்தலினும் ஒன்றை அதனினும் மிக்க வேறொன்றோடு உவமிக்கும் ஓர் அணி.
**ஒப்புமொழி** – உடன்படிக்கை.
**ஒப்புரவறிதல்** – உலக நடையினை அறிந்து ஒழுகல்; உலக ஒழுக்கத்தை உணர்ந்து நடத்தல்.
**ஒப்புரவு** – உலகநடை, உலகவொழுக்கம்; முறைமை; ஒற்றுமை; உதவி செய்தல்; சமம்; சமாதானம்.
**ஒப்புவித்தல்** – ஒப்புக்கொடுத்தல்; ஏற்கும்படி சேர்த்தல்; மெய்ப்பித்தல்; சான்று காட்டுதல்; கடன் சாட்டுதல்; பாடம் ஒப்புவித்தல்.
**ஒம்மல்** – ஒமல்; பேச்சுப் பரத்தல்; ஊர்ப்பேச்சு.
**ஒம்மெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**ஒமை** – மாமரம்.
**ஒய்** – யானையைப் பாகர் வையும் ஆரிய மொழி.
**ஒய்தல்** – இழுத்தல்; செலுத்துதல்; போக்குதல்; கொடுத்தல்; தப்புதல்; விட்டொதுங்குதல்.
**ஒய்யல்** – செலுத்துதல்; கொடுத்தல்; உயர்ச்சி.
**ஒய்யாரக்காண்** – ஆடம்பரம் உள்ளவன்.
**ஒய்யாரம்** – ஒயில்; பகட்டு, உல்லாச நிலை; அலங்காரம்.
**ஒய்யென** – விரைவாக, கடுக; மெல்ல.
**ஒயில்** – ஒய்யாரம்; சாயல்; அலங்காரம்; உல்லாச நிலை; ஒருவகைக் கூத்து.
**ஒயில்வண்டி** – இன்பப் பயணத்திற்கு ஏற்ற வண்டி, இன்பச் செலவூர்தி.
**ஒயிற்கும்மி** – ஒயிலாட்டத்தில் பாடும் பாட்டு.
**ஒரணை** – ஓரிணை, இரட்டை.
**ஒராங்கு** – ஓராங்கு; ஒருசேர; ஒருபுடை; ஒருபடியாக.
**ஒரால்** – ஒருவுகை, நீங்குகை.
**ஒரானொரு** – ஏதோவொன்று.
**ஒரித்தல்** – ஒற்றுமையாயிருத்தல்; விருப்பமாய் இருத்தல்.
**ஒரு** – ஒன்று என்பதன் திரிபு; ஒற்றை; ஒப்பற்ற; ஆடு; அழிஞ்சில்.
**ஒருக்க** – எப்பொழுதும்; ஒவ்வொன்றுக்கும்.
**ஒருக்கடுத்தல்** – ஒருநிகராகக் கருதுதல்; ஒப்பாக நினைத்தல்.
**ஒருக்கணித்தல்** – ஒருச்சாய்தல்; ஒரு பக்கமாய்ச் சாய்தல்.
**ஒருக்கம்** – மனவொடுக்கம்; ஒருதன்மை; ஒற்றுமை.
**ஒருக்கல்** – ஒருப்படுதல்; ஒற்றுமை செய்தல்; அழித்தல்; ஓர் அபசுரம்.
**ஒருக்களித்தல்** – காண்க: **ஒருக்கணித்தல்.**
**ஒருக்குதல்** – ஒன்றுசேர்த்தல்; ஒருப்படுத்தல்; அடக்குதல்; அழித்தல்.
**ஒருகட்பகுவாய், ஒருகட்பறை** – பதலை என்னும் பறைவகை.
**ஒருகண்ணுக்குறங்கல்** – ஒருசிறிது உறங்கல்.
**ஒருகால்** – ஒருமுறை; ஒருவேளை; சிலவேளை; ஒற்றைக்கால்.

**ஒருகாலில் நிற்றல்** – உறுதியாயிருத்தல்.
**ஒருகாலிலி** – குபேரன்; சனி.
**ஒருகாலும்** – எந்தக் காலத்திலும்.
**ஒருகிடை** – கிடந்த கிடை, படுத்த படுக்கை; ஒரு பக்கமாய் சாய்ந்து படுக்கை.
**ஒருகுடி** – தாயத்தார்.
**ஒருகுழையவன்** – பலராமன்.
**ஒருகுறி** – ஒருமுறை.
**ஒருகூட்டு** – ஒருசேர்க்கை, ஒருசேர்மானம், ஒன்றிப்பு.
**ஒருகை** – ஒரு கட்சி; ஒரு பக்கம்; ஒற்றுமைப்பட்ட குழு.
**ஒருகை பார்த்தல்** – வெல்ல முயலுதல்.
**ஒருகையாயிருத்தல்** – எதிர்க்கட்சிக்குப் பகைமை யாய் ஒன்றுபட்டிருத்தல்.
**ஒருகோலுடையார்** – ஒரு கோலை ஏந்திய துறவி யார்.
**ஒருங்கியல் அணி** – புணர்நிலையணி; வினை, பண்பு என்பவை காரணமாக இரு பொருளுக்கு முடிக்கும் சொல் ஒன்றாகப் புணர்ந்து நிற்கச் சொல்லும் அணி.
**ஒருங்கு** – முழுமை; முழுதும், எல்லாம்; எல்லாங் கூடி நிற்கை; அடக்கம்; ஒரு காலத்தில்; ஒரு சேர; ஒருதன்மை; அழிவு.
**ஒருங்குதல்** – ஒருபடியாதல்; ஒன்றுகூடுதல்; ஒருவழிப்படல்; ஒதுங்குதல்; ஒடுங்குதல்; அழிதல்.
**ஒருங்கே** – முழுதும், ஒருசேர.
**ஒருச்சரித்தல்** – ஒரு பக்கமாய்ச் சாய்த்தல்; ஒரு பக்கமாய்ச் சாய்தல்.
**ஒருச்சாய்த்தல்** – ஒரு பக்கமாய்ச் சாய்த்தல், ஒரு பக்கமாய்ச் சாயப்பண்ணல்.
**ஒருசந்தி** – ஒருவேளை, ஒரு பொழுதுண்ணல், ஒரு நாளைக்கு ஒருமுறை மட்டும் உணவு கொள்ளும் வழக்கம்.
**ஒருசாய்வு** – ஒருபக்கம்; ஒருமிக்க; இடை விடாமை.
**ஒருசாயல்** – உரு ஒப்பு, வடிவால் ஒத்திருத்தல்.
**ஒருசார்** – ஒரு பக்கம், பட்சபாதம்; ஒரு கட்சி.
**ஒருசாராசிரியர்** – ஆசிரியருள் ஒரு கொள்கை யினர்.
**ஒருசாரார்** – ஒருபுடையார், ஒருபக்கத்தவர்; சிலர்.
**ஒருசாலுழுதல்** – ஒரு முறை உழுதல்.
**ஒருசாலைமாணாக்கர்** – ஒரே பள்ளியிற் பயின்ற மாணாக்கர்.
**ஒருசிறிது** – மிகச் சிறிது, அற்பம்.
**ஒருசிறை** – ஒரு பக்கம்; ஒரு பகுதி; ஒதுக்கிடம்; வேறிடம்.
**ஒருசிறைநிலை** – சொல்லப்பட்ட பொருள் ஒரு வழி நிற்கப் பாடல் அமைந்துள்ள முறை.
**ஒருசீரானவன்** – ஒரே தன்மையாக இருப்பவன்.
**ஒருசேர** – ஒருமிக்க.
**ஒருசொல்** – உறுதிச்சொல்; பல சொல்லாயிருந் தும் ஒரு சொல் நீர்மைப்பட்டது.
**ஒருசொல் வாசகன்** – சொன்னசொல் தவறாத வன்.
**ஒருசொன்னீர்மை** – சொற்கள் இணைந்து ஒரு பொருளே தருந்தன்மை.
**ஒருத்தல்** – ஆண்விலங்கு; யானை, எருமை, கவரி, புலி, புல்வாய், மரை, மான் இவற்றின் ஆண்.
**ஒருத்தன்** – ஒருவன்; ஒப்பற்றவன்.
**ஒருத்தி** – ஒரு பெண்.
**ஒருத்து** – மனவொருமைப்பாடு.
**ஒருதரம்** – ஒருமுறை, ஒரு தடவை; ஒரேவிதம்.
**ஒருதலை** – இன்றியமையாமை; கட்டாயம், நிச்சயம்; ஓரிடம்; ஒருசார்பு; ஒரு பக்கம்.
**ஒருதலைக் காமம்** – ஒரு பக்கமான காதல், ஆண் பெண் இருவருள் ஒருவர்மட்டுங் கொள்ளுங் காதல்.
**ஒருதலை துணிதல்** – ஒன்றுக்கொன்று மாறுபா டான இரண்டு கொள்கைகளில் ஒன்றை ஏற்ற லாகிய உத்தி.
**ஒருதலை நோவு** – ஒற்றைத் தலைவலி.
**ஒருதலைப்படுதல்** – ஒரு முடிவுபெறுதல்.
**ஒருதலையுள்ளுதல்** – அவத்தை பத்தனுள் ஒன்றாகிய இடைவிடா நினைவு.
**ஒருதலை வழக்கு** – ஒரு பக்கத்தைப்பற்றிய நியா யம், பட்சபாதமான தீர்ப்பு.
**ஒருதன்மை** – ஒருவிதம்; ஒப்பற்ற தன்மை; மாறாத் தன்மை; மாறாமை.
**ஒருதனி** – ஒப்பில்லாத தனி; தன்னந்தனி.
**ஒருதாரை** – ஒரேநிலை; ஒருமிக்க; இடையீடில் லாத நீரொழுக்கு; ஒருபக்கக் கூர்மை.
**ஒருதிறம்பற்றுதல்** – ஒருபக்கமாக இருத்தல்.
**ஒருநாயகம்** – ஒரே ஆட்சி, தனி ஆட்சி.
**ஒருநாளைக்கொருநாள்** – நாள் செல்லச் செல்ல.
**ஒருநெறிப்படுதல்** – ஒருவழிப்படுதல்.
**ஒருப்படுத்துதல்** – ஒன்றுகூட்டுதல்; வழிவிடுதல்; முடிவுசெய்தல்; உடன்படச் செய்தல்.
**ஒருப்படுதல்** – ஒருதன்மையாதல்; ஒன்றுகூடுதல்; துணிதல்; முயலுதல்; பிறர் கருத்துக்கு உடன் படுதல்; நட்புக் கொள்ளுதல்.
**ஒருப்பாடு** – ஒருமைப்படுகை; ஒருதன்மையாதல்; மனமொன்றுபடுகை; முயற்சி; மனத்திண்மை; ஒன்றிநிற்கை; உடன்பாடு.
**ஒருபடம்** – இடுதிரை, படுதா, மறைப்பு.

**ஒருபடி** – ஒருவகை, ஒருவாறு, ஒருவிதம்.

**ஒருபடித்தாய்** – ஒரேவிதமாய்; பிரயாசமாய்; இருக்கவேண்டிய நிலைக்குச் சிறிது மாறுதலாய்.

**ஒருபது** – பத்து.

**ஒருபாட்டம்** – ஒருதடவை; ஒருபாறல் மழை, ஒருமுறை பெய்யும் மழை.

**ஒருபான்** – காண்க: **ஒருபது**.

**ஒருபிடி** – கைப்பிடி யளவு, ஒருகை யளவு; ஒரே பற்று; விடாப்பிடி, உறுதிப்பிடி; உறுதி; பிடிவாதம்.

**ஒருபுடை** – ஏகதேசம்; ஒருபக்கமாய்.

**ஒருபுடையுவமை, ஒருபுடையொப்புமை** – முழுவதும் ஒப்பாகாமல் சில தன்மையில் மட்டும் ஒத்திருக்கும் உவமை.

**ஒரு பூ** – ஒருபோகம்.

**ஒருபொருட்கிளவி** – ஒரு பொருளைத் தரும் பல சொற்கள், பரியாயச் சொற்கள்.

**ஒருபொருட்பன்மொழி** – ஒரு பொருளைத் தரும் பல சொற்கள், மீமிசைச் சொல்.

**ஒருபொருள்** – ஒரே கருத்து; உண்மை; கடவுள்.

**ஒருபொழுது** – ஒரு காலம்; ஒருசந்தி.

**ஒருபோக்கன்** – தனிப் போக்குடையவன், வேறுபட்ட நடையுள்ளவன்.

**ஒருபோக்காய்ப்போதல்** – திரும்பிவாராது போதல்.

**ஒருபோக்கு** – ஒருவிதம், ஒருமாதிரி; மாறான நடை.

**ஒருபோகு** – ஒருபடித்தான நிலம்; கொச்சகக் கலிப்பாவினுள் ஒன்று; ஒத்தாழிசைக் கலிவகையுள் ஒன்று.

**ஒருபோது** – ஒருவேளை, ஒருபொழுது; ஒரு சமயம்; ஒரு முறை உண்டு நோன்பிருக்குங் காலம்.

**ஒருமட்டம், ஒருமட்டு** – ஒத்த அளவு; ஒருவாறு; ஒரேசரி.

**ஒருமடைசெய்தல்** – ஒருமுகமாக்குதல்.

**ஒருமனப்படுதல்** – ஐம்புலனடக்கல், மனத்தை ஒருவழிப்படுத்தல், ஓர் எண்ணமாதல், மனவடக்கம்.

**ஒருமனப்பாடு** – மனவிணக்கம்; மனத்தை ஒன்றிற் செலுத்துகை; மனவடக்கம்.

**ஒருமா** – இருபதில் ஒரு பங்கு.

**ஒருமாதிரி** – ஒருவிதம்; தனிப் போக்கு.

**ஒருமாரை** – ஒரு மா அரை, ஒரு மாவும் அரை மாவும் சேர்ந்த இலக்கம்.

**ஒருமிக்க** – ஒருசேர, ஏகமாய்.

**ஒருமித்தல்** – ஒன்றுசேர்தல்; உடன்படல், ஒருமைப்படல்.

**ஒருமிப்பு** – ஒன்றிப்பு, ஒற்றுமைப்படுகை; இசைவு; மனத்தை ஒன்றிற் செலுத்துகை.

**ஒருமுகம்** – நேர்வழி; ஒற்றுமை; ஒருபுறம்; ஒரு கூட்டம்; ஒரு கட்சி.

**ஒருமுகமாய்ப்பேசுதல்** – ஒருமிக்கப் பேசுதல், எல்லாரும் ஒரேபடித்தாய்ப் பேசுதல்.

**ஒருமுகவெழினி** – ஒருவகைத் திரை.

**ஒருமுற்றிரட்டை** – ஓரடி முற்றெதுகையாய் வருவது.

**ஒருமை** – ஒரே தன்மை; ஒற்றுமை; தனிமை; ஒப்பற்ற தன்மை; மனமொருமிக்கை; ஒருமையெண்; மெய்ம்மை; ஒரு பிறப்பு; இறையுணர்வு; வீடுபேறு.

**ஒருமைப்படுதல்** – ஒற்றுமைப்படல்; மனம் ஒருமுகப்படுதல்; உடன்படல்.

**ஒருமைப்பாடு** – ஒற்றுமைப்படுகை; மனத்தை ஒருவழிப்படுத்தல்; ஒற்றுமை உணர்வு; ஒன்றிப்பு.

**ஒருமை பன்மை மயக்கம்** – தொடருள் ஒருமை பன்மைகள் ஒன்றற்கொன்று மாறி வழங்குகை.

**ஒருமை மகளிர்** – பிற ஆடவர்பால் செல்லாத மனமுடைய மாதர், கற்புடைய மாதர்.

**ஒருமொழி** – ஆணை; பல சொற்களாய்ப் பிரிக்க முடியாத சொல்; ஒரு பொருளைத் தரும் ஒரு சொல்.

**ஒருவண்ணம்** – ஒருவாறு.

**ஒருவந்தம்** – உறுதி, ஒருதலை; நிலைபேறு; சம்பந்தம்; ஒற்றுமை; தனியிடம்.

**ஒருவயிற்றோர்** – உடன்பிறந்தார்.

**ஒருவர்** – ஓராள்; ஒருவன் அல்லது ஒருத்தியைச் சிறப்புப்பற்றிப் பன்மையில் வழங்கும் பெயர், மரியாதைப் பன்மை.

**ஒருவர்க்கொருவர்** – இருவரும் ஒத்த தன்மையராயிருக்கை, பரஸ்பரம்.

**ஒருவழித்தணத்தல்** – அலர் அடங்குதற் பொருட்டுத் தலைமகன் சிலநாள் வேறிடத்திற்குச் சென்று உறையும் அகத்துறை.

**ஒருவழிப்படுதல்** – ஒருமுகப்படுதல்; நேர்படுதல்; ஒற்றுமைப்படுதல்.

**ஒருவழியுறுப்பு** – ஏகதேசம்.

**ஒருவன்** – ஓர் ஆண்மகன்; ஒப்பற்றவன்; கடவுள்.

**ஒருவாக்காக** – ஒரேபடியாக, ஒரேமாதிரி; ஒரே முறையில்; ஒருசேர.

**ஒருவாக்கு** – ஒருமுகமாகச் சொல்லும் சொல்; உறுதிமொழி.

**ஒருவாமை** – பிறழாமை, நீங்காமை.

**ஒருவாய்க்கோதை** – காண்க: **ஒருகட்பறை**.

**ஒருவாற்றான்** – ஒருவாறு, ஒருவிதமாக, ஓரளவாக; ஒருசேர.

**ஒருவியாழவட்டம்** – குரு சூரியனைச் சுற்றிவருகிற காலம், பன்னிரண்டு ஆண்டு.

**ஒருவு** – ஆடு; நீங்குகை.

**ஒருவுதல்** – விடுதல்; நீங்குதல்; கடத்தல்; ஒத்தல்.

**ஒருவேளை** – ஒருபொழுது, ஒருமுறை.

**ஒரூஉ** – ஒருவு, நீங்குகை; செய்யுளடியில் முதற் சீரிலும் நான்காம் சீரிலும் மோனை முதலியன அமையும் தொடை.

**ஒரூஉத்தொடை** – அளவடியுள் நடுவிரு சீர்கள் ஒழிய முதற் சீர்க்கண்ணும் நான்காஞ் சீர்க் கண்ணும் மோனை முதலியன வரத் தொடுப்பது.

**ஒரூஉவண்ணம்** – யாற்றொழுக்காகப் பொருள் கொண்டு செல்லுஞ் சந்தம்.

**ஒரே** – ஒன்றேயான.

**ஒரோவழி** – ஒவ்வோரிடம், சிறுபான்மை.

**ஒரோவொருவர்** – தனித்தனி ஒவ்வொருவர்.

**ஒரோவொன்று** – ஒவ்வொன்று.

**ஒல்** – முடிவிடம்; ஒலிக்குறிப்பு.

**ஒல்குதல்** – தளர்தல்; மெலிதல்; குழைதல்; நுடங்குதல்; சுருங்குதல்; அசைதல்; ஒதுங்கு தல்; அடங்குதல்; வளைதல்; குறைதல்; வறுமைப்படுதல்; மேலே படுதல்; மனமடங்கு தல்; கெடுதல்; நாணுதல்; எதிர்கொள்ளுதல்.

**ஒல்லட்டை** – ஒல்லியானவன்(ள்).

**ஒல்லல்** – ஒல்லுதல், இயலுதல்; பொருந்துதல், இசைதல்; ஊடல் தீர்க்கை.

**ஒல்லாங்கு** – பொருந்தும் வழி, பொருந்துமாறு.

**ஒல்லாடி** – ஒல்லியானவன்; இயலாதவன்.

**ஒல்லாதவர்** – பகைவர்.

**ஒல்லாமை** – இயலாமை; பொருந்தாமை, இசை யாமை; இகழ்ச்சி, வெறுப்பு; அவாவின்மை.

**ஒல்லார்** – பகைவர்.

**ஒல்லி** – மெலிவு; மெலிந்த தோற்றம்; மெலி வுற்றவன், ஒல்லியானவன்; மென்மை; உள்ளீடு குறைந்த தேங்காய்; துடைப்பம்.

**ஒல்லிக்காய்ச்சி** – உள்ளீடில்லாத காயுள்ள தென்னை.

**ஒல்லித்தேங்காய்** – உள்ளீடில்லாத தேங்காய்.

**ஒல்லுதல்** – பொருந்துதல்; இயலுதல்; உடன் படுதல்; தகுதல்; ஆற்றுதல்; ஓலைப்பெட்டி பொத்துதல்; ஒலித்தல்; விரைதல்; கூடுதல்; பொறுத்தல்; நிகழ்தல்.

**ஒல்லுநர்** – நண்பர்; ஆற்றலுடையவர்; நூலுரை யுணர்வோர்.

**ஒல்லென** – விரைவாக; வெளியாக.

**ஒல்லெனல்** – ஒலிக்குறிப்பு.

**ஒல்லே** – விரைவாக.

**ஒல்லை** – விரைவு, வேகம்; காலவிரைவு; சீக்கிரம்; பழைமை; தொந்தரவு.

**ஒல்வது** – இயல்வது.

**ஒல்வழி** – பொருந்திய இடத்து; பொருந்திய காலத்து.

**ஒலரி** – சிறுமீன்வகை.

**ஒலி** – ஓசை, ஆரவாரம்; இடி; காற்று; எழுத் தொலி; சொல்.

**ஒலிசை** – மணமகனுக்குக் கொடுக்கும் கொடை, மணமகளின் சுற்றத்தார் திருமணத்தில் மண மகனுக்குக் கொடுக்கும் சீர்வரிசை.

**ஒலித்தல்** – ஓசையுண்டாக்கல், ஆரவாரித்தல்; ஆடை வெளுத்தல்; விளக்குதல்; தழைத்தல்; சந்தித்தல்.

**ஒலிதல்** – தழைத்தல்.

**ஒலிப்பு** – பேரொலி, பெருஞ்சத்தம்.

**ஒலிமுகம், ஒலிமுகவாச(யி)ல்** – நகரம் அல்லது கோயிலின் முன்புற வாயில்; கோட்டையின் முன்புற வாயில்.

**ஒலியல்** – தழைக்கை; தளிர்; மாலை; ஈயோட் டுங் கருவி; மேலாடை; தோல்; தெரு; ஆறு; ஒலியடிப்படை.

**ஒலியற்கண்ணி** – தளிர்மாலை; பச்சிலை மாலை.

**ஒலியன்** – ஆடை; எழுத்தொலி.

**ஒலியெழுத்து** – மொழி முதற்காரணமாகிய அணுத்திரள்; ஒலி வடிவான எழுத்து.

**ஒலிவு** – ஒரு மரவகை.

**ஒலுகு** – சாய்வு, திண்டு.

**ஒலுங்கு** – கொசு; பெருங்கொசு.

**ஒலோவுதல்** – குறைவாதல்.

**ஒவ்வாப்பக்கம்** – தருக்கத்தில் பொருந்தாத பக்கம்.

**ஒவ்வாமை** – இயலாமை; பொருந்தாமை, இசை யாமை; தகுதிக் குறைவு; ஒப்பாகாமை.

**ஒவ்வுதல்** – இணங்குதல், பொருந்துதல், இசை தல்; ஒத்திருத்தல்.

**ஒவ்வுறுதல்** – பொருத்தமுறல்; ஒப்பாதல்.

**ஒவ்வொன்று** – ஒன்றொன்று, வகைக்கொன்று, ஒன்றுவீதம்; சில.

**ஒவ்வோர்க்குழி** – நிலத்திலே சிறுவர் விரலால் எழுதும் அரிக்குழி.

**ஒவ்வோன்** – ஒப்பில்லாதவன்.

**ஒழிகடை** – ஈறு பெரும்பான்மை முடிந்த நிலை.

**ஒழிச்சுதல்** – போக்குதல்; வெறுமையாக்குதல், அழித்தல்.

**ஒழித்தல்** – நீக்குதல்; முடித்தல்; அழித்தல்; ஒதுக்குதல்; குறைத்தல்; தவிர்த்தல்; தீர்த்தல்; கொல்லுதல்; காலிசெய்தல்.

**ஒழித்துக்காட்டணி** – ஒரு பொருள் ஓர் இடத்தில் இல்லையென மறுத்து, மற்றோர் இடத்தில் உண்டென்று ஏற்படுத்திக் காட்டும் அணி.

**ஒழிதல்** – அழிதல்; சாதல்; நீங்கல்; தவிர்தல்; விடுதல்; வெறுமையாதல்; எஞ்சுதல்; தங்குதல்; ஓய்தல்.
**ஒழிந்தார்** – ஏனையோர், தவிர்ந்தோர், மற்றவர்.
**ஒழிப்பணி** – பலவற்றைச் சுருக்கிக் காட்டும் அணிவகை.
**ஒழிப்பு** – விலக்கு, தவிர்ப்பு.
**ஒழிபியல்** – நூலின்கண் முன் இயல்களிற் சொல்லாதொழிந்தவற்றைக் கூறும் இயல், பொதுவியல்.
**ஒழிபு** – மிச்சம், எச்சம்.
**ஒழிபொருள்** – எச்சில்.
**ஒழிய** – தவிர, நீங்க; கெட.
**ஒழியாவிளக்கம், ஒழியாவிளக்கு** – விடிவிளக்கு.
**ஒழியிசை** – ஒழிந்த பொருள்தரும் சொற்களைத் தருவது.
**ஒழிவு** – மிச்சம்; நீக்கம்; முடிவு; பற்றின்மை; மறைவு; குறைவு; ஒழிகை.
**ஒழுக்கம்** – நடை, முறைமை; நன்னடத்தை, ஆசாரம், சீலம்; உலகம் ஓம்பிய நெறி; உயர்ச்சி; தன்மை; குலம்.
**ஒழுக்கல்** – ஒழுக்குதல்; வடிதல்; வார்த்தல்; ஊற்றுதல்; வரிசையாக வைத்தல்; எழுச்சி.
**ஒழுக்கவணக்கம்** – நல்லொழுக்கம்.
**ஒழுக்கவி** – கோயிலில் நாள்தோறும் படைக்கும் சமைத்த உணவு.
**ஒழுக்கு** – ஒழுகுகை; நீர் முதலியன ஓடுகை, நீரோட்டம்; வரிசை; நடைமுறை; நன்னடை, ஆசாரம்.
**ஒழுக்குதல்** – ஒழுகச் செய்தல்; நடப்பித்தல், வார்த்தல்; நீள இழுத்தல்; துளித்தல்.
**ஒழுக்குநீர்ப்பாட்டம்** – ஆற்றுக்கால் பாசன வரி.
**ஒழுக்குப்பீளை** – கண்ணிலிருந்து பீளைதள்ளும் நோய்.
**ஒழுக்குமாற்றுதல்** – நீர் ஒழுகும் ஓட்டையை அடைத்தல்.
**ஒழுக்குவிழுதல்** – ஓட்டைவழி நீர் சொட்டுதல்; நீர் ஒழுகும்படியான பொள்ளல் ஏற்படல்.
**ஒழுக்கெறும்பு** – ஒன்றன்பின் ஒன்றாய்த் தொடர்ந்து செல்லும் எறும்பு.
**ஒழுக்கை** – முடுக்குத்தெரு; சந்து.
**ஒழுக** – மெதுவாக; சிறிது சிறிதாக; சொரிய; வடிய; ஓட.
**ஒழுகல்** – ஒழுகுதல், நடத்தல்; பாய்தல்; உயர்ச்சி; நீளம்; முறையாக நடத்தல்; வளர்தல்; இளகுதல்.
**ஒழுகலாறு** – ஒழுக்கநெறி, நடத்தை, நன்னெறி.
**ஒழுகிசை** – மெல்லிசை, வெறுத்திசையில்லாமல் செவிக்கினிய மெல்லிசையுடைமையாகிய குணம்.
**ஒழுகிசைச்செப்பல்** – இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை இரண்டும் விரவிவரும் வெண்பாவின் ஓசை.
**ஒழுகிசைத்துள்ளல்** – வெண்டளையும் கலித்தளையும் விரவிவரும் கலிப்பாவின் ஓசை.
**ஒழுகிசையகவல்** – நேரொன்றாசிரியத்தளையும் நிரையொன்றாசிரியத்தளையும் விரவிவரும் அகவலோசை.
**ஒழுகிப்போதல்** – நீர்ப்பொருள் சிந்துகை; மனம் கரைந்து உருகுகை.
**ஒழுகு** – உயரம்; ஒழுங்கு; நீளம்; நிலவரலாறு கூறும் கணக்கு; கோயில் நடைமுறை வரலாறுகளை விளக்கும் நூல்; வண்டி; வரிசை.
**ஒழுகுசங்கிலி** – தொடர்சங்கிலி.
**ஒழுகுதல்** – நீர் பாய்தல்; நீர்ப்பொருள் சொட்டுதல்; ஓடுதல்; பரத்தல்; ஒழுங்குபடுதல்; நடத்தல்; நீளுதல்; வளர்தல்; போதல்; பெருகியோடுதல்.
**ஒழுகுநீட்சி** – நேராக நீண்டிருக்கை.
**ஒழுகுமாடம்** – உடம்பு.
**ஒழுகுவண்ணம்** – ஒழுகியலோசையால் செல்லும் சந்தம்.
**ஒழுகை** – வண்டி; சகடவொழுங்கு.
**ஒழுங்கரம்** – ஒருவகை அரம்.
**ஒழுங்கல்** – நிரல்படல், வரிசையாயிருத்தல்.
**ஒழுங்கீனம்** – சீர்கேடு.
**ஒழுங்கு** – வரிசை, நிரை; நேர்மை; முறை; நன்னடை; விதி, கட்டளை; திரள்; அளவு முதலியன காட்டும் நிலவிவரக் கணக்கு.
**ஒழுங்குகட்டுதல்** – விதி ஏற்படுத்துதல்.
**ஒழுங்குபடுத்துதல்** – நேராக்குதல், முறைப்படுத்துதல்.
**ஒழுங்கை** – ஒடுங்கிய வழி, இடுக்கு வழி; கட்டட முகப்பு.
**ஒள்ளி** – செம்பொன்; சுக்கிரன்.
**ஒள்ளிமை** – அறிவு விளக்கம்.
**ஒள்ளியன்** – அறிவுடையோன்; புகழுடையவன்; சிறந்தவன்; நல்லவன்.
**ஒள்ளியோன்** – ஒளி செய்வோன்; சுக்கிரன்; அறிவுடையோன்.
**ஒள்ளொளி** – மிகுந்த ஒளி.
**ஒளி** – சோதி, விளக்கம்; சூரியன்; சந்திரன்; விண்மீன்; மின்னல்; வெயில்; கண்மணி; பார்வை; அறிவு; மதிப்பு; தோற்றம்; அழகு; நன்மதிப்பு; கடவுள்; புகழ்.
**ஒளிக்கடல்** – பற்கள்.
**ஒளிச்சித்திரப்படம்** – ஒளிப்படம், புகைப்படம், நிழற்படம்.

**ஒளிசெய்தல்** – விளங்குதல்.

**ஒளித்தல்** – மறைத்தல்; மனத்திலடக்குதல்; பதுங்குதல்.

**ஒளித்துத்திரிதல்** – மறைந்து திரிதல்; மறைந்து வாழ்தல்.

**ஒளித்துவிளையாடுதல்** – கண்பொத்திவிளையாடுதல்.

**ஒளிதல்** – மறைதல்; தவிர்தல்.

**ஒளிப்பிடம்** – மறைவிடம்.

**ஒளிப்பு** – மறைவு; பதுங்கி மறைகை, ஒளிக்கை; மனத்துள் அடக்குகை.

**ஒளிப்புடம்** – சூரியபுடம்.

**ஒளிமங்குதல்** – ஒளிகெடுதல், வெளிச்சம் குறைதல்.

**ஒளிமரம்** – சோதி விருட்சம்.

**ஒளிமழுங்குதல்** – வெளிச்சம் குறைதல்.

**ஒளிமறைவு** – ஒளித்துத் திரிகை; இரகசியம்.

**ஒளியர்** – அறிவுடையவர்; ஒளிநாட்டுவேளாளர்; ஒளி நாட்டார்.

**ஒளியவன்** – சூரியன்.

**ஒளியிருத்தல்** – பதுங்கியிருத்தல், மறைவிடத் திருத்தல்.

**ஒளியுருவிய கல்** – வைடூரியம்.

**ஒளியோன்** – காண்க: **ஒளியவன்.**

**ஒளிர்த்தல்** – ஒளிரச் செய்தல்.

**ஒளிர்தல்** – ஒளி செய்தல்; விளங்குதல்.

**ஒளிர்மருப்பு** – யானைக் கொம்பு.

**ஒளிர்முகம்** – வைரக்கல்; அழகிய முகம்.

**ஒளிர்வு** – ஒளிர்தல்; ஒளி.

**ஒளிவட்டம்** – கண்ணாடி; சக்கரப்படை; பிரபை; சந்திரன்.

**ஒளிவட்டி** – பச்சைக் கருப்பூரம்.

**ஒளிவளவாய்** – மறைவாய், கமுக்கமாய், இரகசியமாய்.

**ஒளிவிடுதல்,**
**ஒளிவீசுதல்** } – ஒளிர்தல்.

**ஒளிவு** – ஒளிர்வு; மறைவிடம்.

**ஒளிவுமறைவின்மை** – வெளிப்படை.

**ஒளிவைத்தல்** – கண்ணி வைத்தல்; விலங்குகளை அகப்படுத்த மறைப்பு வைத்தல்; பார்வை விலங்கு வைத்தல்.

**ஒளிவைத்துப்பார்த்தல்** – கண்ணிவைத்துக் காத்திருத்தல்; கைவிளக்கு வைத்துக் கூர்ந்து பார்த்தல்.

**ஒளிறு** – விளக்கம், பிரகாசம்.

**ஒளிறுதல்** – விளங்குதல், பிரகாசித்தல்.

**ஒற்கம்** – தளர்ச்சி; வறுமை; குறைவு; அடக்கம்; பொறுமை.

**ஒற்குதல்** – குறைதல்; தளர்தல்.

**ஒற்றடம்** – சூடுபட ஒற்றுதல்.

**ஒற்றளபெடை** – தனக்குரிய மாத்திரையில் மிகுந்தொலிக்கும் மெய்யெழுத்து: ங், ஞ், ண், ந், ம், ன், வ், ய், ல், ள், ஃ என்னும் மெல்லின இடையின ஆய்த எழுத்துகள் மாத்திரை மிகுதல்.

**ஒற்றறுத்தல்** – தாளத்தை அறுதியிடுதல்.

**ஒற்றன்** – தூதன்; வேவுகாரன், உளவு பார்ப்பவன்.

**ஒற்றாடல்** – ஒற்றரை ஆளுதல்; வேவு பார்த்தல்; வேவுகாரரைக் கொண்டு வினைசெய்தல்.

**ஒற்றாள்** – ஒற்றன், வேவுகாரன்.

**ஒற்றி** – நிலவடைமானம்; உரிமையடைமானம்; ஈட்டடைமானம்; ஒற்றியூர்.

**ஒற்றிக்கரணம்,**
**ஒற்றிக்கலம்** } – காண்க: **ஒற்றிச்சீட்டு.**

**ஒற்றிக்காணி** – அடைமான நிலம்.

**ஒற்றிக்கொள்ளுதல்** – உடலில் படும்படி அழுத்துதல்; வசப்படுத்திக் கொள்ளுதல்.

**ஒற்றிச்சீட்டு** – ஒற்றிப்பத்திரம்.

**ஒற்றிடுதல்** – ஒற்றடமிடுதல்.

**ஒற்றித்தல்** – ஒற்றையாயிருத்தல்; ஒற்றைப்படவெண்ணல்; ஒற்றுமைப்படுதல்; வேவு பார்த்தல்.

**ஒற்றிநறுக்கு** – பனையோலையில் எழுதிய அடைமானக் குறிப்பு.

**ஒற்றிப்போதல்** – விலகிச் செல்லுதல்.

**ஒற்றிமீட்டல்** – அடைமானம் திருப்புதல்.

**ஒற்றியிருத்தல்** – விலகியிருத்தல்.

**ஒற்றியெடுத்தல்** – ஒற்றி ஈரம் வாங்குதல்.

**ஒற்றிவைத்தல்** – அடைமானம் வைத்தல்; தூரத்தே வைத்தல்; தள்ளி வைத்தல்.

**ஒற்று** – மெய்யெழுத்து; தூது; தூதன்; வேவு; வேவுகாரன்; ஒற்றடம்.

**ஒற்றுக்கேட்டல்** – பிறர் பேச்சை மறைந்துநின்று கேட்டல்.

**ஒற்றுதல்** – ஒன்றிற்படச் சேர்தல்; அடித்தல்; தாளம் போடுதல்; அமுக்குதல்; தாங்குதல்; தீண்டுதல்; தழுவுதல்; துடைத்தல்; தள்ளுதல்; அடுத்தல்; கட்டுதல்; வீழ்த்துதல்; தத்துதல்; காற்று வீசுதல்; ஒட்டிக்கொள்ளுதல்; மோதுதல்; ஒற்றடம் போடுதல்; நினைதல்; உய்த்துணர்தல்; மறைதல்; உளவறிதல்.

**ஒற்றுப்பெயர்த்தல்** – ஒருவகைச் சித்திரகவி, ஒரு மொழியும் தொடர்மொழியுமாக நின்று வெவ்வேறு பொருள் தருவதாகப் பாடப்படுவது.

**ஒற்றுமை** – ஒன்றாயிருக்கும் தன்மை, ஒன்று சேர்ந்திருக்கும் தன்மை; ஒருநிலைப்படுதல்,

மனம் ஒருநிலைப்படுகை; ஒருமை, வேறன்மை; உரிமை; கலப்பு; செல்வம்; தகுதி.

**ஒற்றுமைகோடல்** – பிறரோடு ஒன்றித்து வாழ்தல்; வேளாண்மாந்தர் இயல்புகளுள் ஒன்று.

**ஒற்றுமைநயம்** – ஒற்றுமைத்தன்மை, ஒருமித்த தன்மை; காரண காரியங்கள் ஒன்றாயிருக்கை.

**ஒற்றுவன்** – ஒற்றன்; தூதுவன்.

**ஒற்றுவித்தல்** – ஒற்றுமூலமாய் நிகழ்ந்தனவற்றை அறிதல்.

**ஒற்றுறுப்பு** – யாழின் உறுப்புவகை; ஒற்றாகிய உறுப்பு.

**ஒற்றெழுத்து** – மெய்யெழுத்து.

**ஒற்றை** – ஒன்று; ஒற்றைப்பட்ட எண்; தனிமை, தன்னந்தனி; தனியேடு; ஒப்பின்மை; ஒருதுளை வாத்தியம்.

**ஒற்றைக்கண்ணன்** – ஒரு கண் தெரிந்தவன்; சுக்கிரன்; குபேரன்.

**ஒற்றைக்காலினிற்கை** – விடாது முயல்கை.

**ஒற்றைக்குச்சி** – சிலம்ப வித்தை.

**ஒற்றைக்கை** – ஒரு கையால் காட்டும் அபிநயம்.

**ஒற்றைக்கொம்பன்** – விநாயகன்; ஒற்றைக் கொம்புள்ள யானை.

**ஒற்றைச்சேவகன்** – தனி வீரன்.

**ஒற்றைத்தலைவலி** – ஒரு பக்கத் தலைவலி, ஒற்றைத் தலைநோய்.

**ஒற்றைத்தாலி** – தாலி மாத்திரமுள்ள கழுத்தணி.

**ஒற்றைநாடி** – ஒல்லியான உடம்பு; மாட்டுக் குற்றவகை.

**ஒற்றைநின்றாள்** – கைம்பெண்.

**ஒற்றைப்படை** – ஒற்றையான எண்.

**ஒற்றையடிப்பாதை** – நடந்த கால்தடம் பட்டு அமைந்த பாதை.

**ஒற்றையலகுசாகுபடி** – ஒற்றையாக நாற்றுகளை நட்டுப் பயிர்செய்கை.

**ஒற்றையாழித்தேர்** – ஒற்றைச் சக்கரமுடைய சூரியனின் தேர்.

**ஒற்றையாழித்தேரா(ரோ)ன், ஒற்றையாழியன்** – சூரியன்.

**ஒற்றையாள்** – தனியாள், சுற்றத்தார் எவருமில்லாதவன்.

**ஒற்றையிதழ்ப் பூ** – ஓரிதழ் உள்ள மலர்.

**ஒற்றையிரட்டை பிடிக்கை** – ஒருவகை விளையாட்டு.

**ஒறுத்தல்** – தண்டித்தல்; கடிதல்; வெறுத்தல்; இகழ்தல்; அழித்தல்; துன்புறுத்தல், வருத்துதல்; ஒடுக்குதல்; நீக்கல்; குறைத்தல்; அலைத்தல்; நோய் செய்தல்; உலோபம் பண்ணுதல்.

**ஒறுப்பு** – தண்டிப்பு, தண்டனை; வெறுப்பு; கடிந்து பேசுகை; உடல் வருத்துகை; குறைவு; பொருளின் அருமை, கிராக்கி.

**ஒறுவாய்** – கதுவாய், சிதைவடைந்த வாய்; கொறுவாய்; மூளிவாய்; ஒடிந்த விளிம்பு; வடு; சிதைவு.

**ஒறுவாய்ப்பல்** – சிதைவடைந்த பல்வரிசை.

**ஒறுவாய்ப்பானை** – விளிம்பு சிதைந்த பானை.

**ஒறுவாயன்** – உதடு சிதைந்த வாயையுடையவன்.

**ஒறுவினை** – நீங்காத் துன்பம், தீரா வருத்தம்.

**ஒறுவு** – வருத்தம், துன்பம்.

**ஒறுவுகலம்** – காண்க: ஒறுவாய்ப்பானை.

**ஒன்** – ஒரு சாரியை.

**ஒன்பதின்மர்** – ஒன்பது பேர்.

**ஒன்பது** – ஒரெண், பத்தில் ஒன்று குறைந்த எண்.

**ஒன்பதொத்து** – ஒருவகைத் தாளம்.

**ஒன்பான்** – ஒன்பது.

**ஒன்ற** – ஓர் உவமைச்சொல்.

**ஒன்றடிமன்றடி** – குழப்பம்.

**ஒன்றரைக்கண்ணன்** – ஒரு பக்கஞ் சரிந்த பார்வையாளன்.

**ஒன்றல்** – ஒன்றுதல், பொருந்துதல்.

**ஒன்றலர்** – சேராதவர், பகைவர்.

**ஒன்றறவாடம்** – ஒன்றுவிட்டு ஒரு நாள்.

**ஒன்றறிசொல்** – ஒன்றன்பாற்சொல்.

**ஒன்றறியாதவன்** – ஏதும் அறியாதவன்.

**ஒன்றன்கூட்டம்** – ஒரே பொருளின் கூட்டம்.

**ஒன்றன்பால்** – அஃறிணையொருமைப்பால்.

**ஒன்றாக** – ஒரு பொருளாக; நிச்சயமாக; ஒருமிக்க.

**ஒன்றாதல்** – ஒற்றுமைப்படுதல், ஐக்கியப்படுதல்; முதலாதல்; இணையின்றாதல்.

**ஒன்றாதவஞ்சித்தளை** – நிரையீற்று உரிச்சீரின் முன் நேரசை வரும் தளை, கனிச்சீர் முன் நேரசை வரும் தளை.

**ஒன்றாமை** – சேராமை; பொருந்தாமை; பகைமை.

**ஒன்றாய்** – ஒருசேர, ஒருமிக்க.

**ஒன்றார்** – சேரார், பொருந்தார், பகைவர்.

**ஒன்றாவொன்றும்** – யாதொன்றினாலும்.

**ஒன்றி** – ஒற்றை; தனிமை; தனித்த ஆள்; தனித்தது; பிரமசாரி.

**ஒன்றிக்காரன்** – குடும்பமில்லாதவன், மனைவி மக்களற்றவன், தனியாள்.

**ஒன்றித்தல்** – பொருந்துதல்; ஒருமைப்படுதல்.

**ஒன்றிப்பு** – ஒருமிப்பு.

**ஒன்றியவஞ்சித்தளை** – நிரையீற்று உரிச்சீரின் முன் நிரையசை வரும் தளை, கனிச்சீர் முன் நிரையசை வரும் தளை.

**ஒன்றியார்** – உள்ளாயினார், தன்னைச் சேர்ந்தவர்.

**ஒன்றியாள்** – ஒற்றையாள்; மனைவியில்லாதவன்.

**ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்** – ஒரு பொருளைக் கூறி முடிக்கையில் அதற்கு இன மான பொருளையும் அங்குத்தானே கூறுகை.

**ஒன்றினொன்றபாவம்** – ஒன்றில் ஒன்று இன்மை.

**ஒன்று** – ஒன்று என்னும் எண்; மதிப்பிற்குரிய பொருள்; வீடுபேறு; ஒற்றுமை; வாய்மை; அறம்; அஃறிணையொருமை.

**ஒன்றுக்கிருத்தல், ஒன்றுக்குப்போதல்** – சிறுநீர் கழித்தல்.

**ஒன்றுக்குமற்றவன்** – பயனற்றவன்.

**ன்றுக்கொன்று** – ஒன்றோடொன்று; ஒன்றுக்கு மாறாய் ஒன்று, ஏட்டிக்குப் போட்டி.

**ஒன்றுகட்டுதல்** – சரிப்படுத்தல்.

**ஒன்றுகுடி** – ஒதுக்குக்குடி, ஒட்டுக்குடி.

**ஒன்றுகூட்டு** – ஒரு சேர்க்கை.

**ஒன்றுகூடுதல்** – ஒன்றாய்ச் சேர்தல்; ஒற்றுமைப் படுதல்.

**ஒன்றுகை** – ஒன்றுதல், இசைகை.

**ஒன்றுதல்** – பொருந்துதல், நெருங்குதல், ஒன்றா தல்; மனங்கலத்தல்; சம்மதித்தல்; உவமை யாதல்; ஒருமுகப்படுதல்.

**ஒன்றுநன்** – நண்பன்.

**ஒன்றுபடுத்தல்** – ஒப்புரவாக்கல், ஒருமைப் படுத்தல்.

**ஒன்றுபடுதல்** – கூடுதல்; பொருந்துதல்; ஒரு தன்மையாதல்; இணக்கமாதல்.

**ஒன்றுபாதி** – பாதி; ஏறக்குறையப் பாதி; நடுச் சாமம்.

**ஒன்றும்** – சிறிதும்.

**ஒன்றுமற்றவன்** – பயனில்லாதவன்; வறியவன்.

**ஒன்றுமொழிதல்** – வஞ்சினங்கூறுதல், சூளுரைத் தல்.

**ஒன்றுவிட்ட** – உறவு முறையில் ஒரு தலைமுறை விட்ட.

**ஒன்றொழிபொதுச்சொல்** – இருதிணை ஆண் பெண்ணுள் ஒன்றனையொழிக்கும் பொதுச் சொல்.

**ஒன்றோ** – எண்ணிடைச்சொல்; விகற்பப் பொருள் தரும் இடைச்சொல்; வியப்பிரக்கச் சொல்.

**ஒன்னப்பூ** – மாதர் காதணியுள் ஒன்று.

**ஒன்னலன்** – பகைவன்.

**ஒன்னாதோர், ஒன்னார்** – பகைவர்.

**ஒன்னுதல்** – பொருந்துதல்; பொறுத்தல்.

## ஓ

**ஓ** – பதினோராம் உயிரெழுத்து; வினாவெழுத்து; விளரி என்னும் இசையின் எழுத்து; நீக்கம்; ஒழிவு; சென்று தங்குகை; மதகுநீர் தாங்கும் பலகை; உயர்வு இழிவு சிறப்புக் குறிப்பு; மகிழ்ச்சிக் குறிப்பு; வியப்புக் குறிப்பு; தெரிதல் குறிப்பு; நினைவுக் குறிப்பு; கொன்றை; பிரமன்; ஒழியிசை, வினா, சிறப்பு, எதிர்மறை, தெரிநிலை, பிரிநிலை, ஐயம், அசைநிலை இவற்றைக் காட்டும் ஓர் இடைச்சொல்.

**ஓஓ** – வியப்புக் குறிப்பு.

**ஓக்கம்** – உயர்ச்சி; எழுச்சி; பருமை; பெருமை; பெருக்கம்.

**ஓக்காளம்** – ஓங்காளம், வாயாலெடுத்தல், கக்குதல்.

**ஓக்காளித்தல்** – வாந்திக் குணமுண்டாதல்; வாந்தி செய்தல்.

**ஓக்காளிப்பு** – வாந்திக் குணம்.

**ஓக்கியம்** – ஏற்றது, தகுந்தது.

**ஓக்குதல்** – உயர்த்துதல், எழும்பச்செய்தல்; அறுதியிடுதல்; தருதல்; எறிதல்; ஆக்குதல்.

**ஓகணம், ஓகணி** – பேன்; மூட்டுப்பூச்சி.

**ஓகம்** – பெருங்கூட்டம்; பெருக்கு; வெள்ளம்; புகலிடம், அடைக்கலம்; ஒரு குருவி.

**ஓகாரம்** – ‘ஓ’ என்னும் உயிரெழுத்து; மயில்.

**ஓகாரவுரு** – பிரணவ வடிவம், கடவுள்.

**ஓகுலம்** – அப்பம்.

**ஓகை** – உவகை, மகிழ்ச்சி; இனிய மொழி; ஆர வாரம்; ஆறு; நீர்ப்பெருக்கு.

**ஓகோ** – வியப்பு முதலிய மனநிலை காட்டும் சொல்.

**ஓகோதனி** – ஓகணம், மூட்டுப்பூச்சி.

**ஓங்கல்** – உயர்ச்சி; மேடு; மலை; மலையுச்சி; எழுச்சி; மூங்கில்; யானை; மரக்கலம்; வலியோன்; தலைவன்; அரசன்; வழித்தோன் றல்; சாதகப்புள்; ஒருவகை நீர்ப்பறவை.

**ஓங்கார உப்பு** – கல்லுப்பு.

**ஓங்காரம்** – பிரணவம், ஓம்.

**ஓங்காரவுரு** – கடவுள்; கௌரிபாடாணம்.

**ஓங்காரன்** – ஓங்காரவுருவன், கடவுள்.

**ஓங்காரி** – பிரணவப் பொருளானவள், சக்தி.

**ஓங்காரித்தல்** – ஓங்காரத்தை உச்சரித்தல்; உறுக் குதல்; வாந்தி செய்தல்.

**ஓங்காளம்** – காண்க: **ஓக்காளம்.**

**ஓங்கிப்பார்த்தல்** – உன்னிப் பார்த்தல்.
**ஓங்கிப் பிடித்தல்** – எழும்பிப் பிடித்தல்.
**ஓங்கியடித்தல்** – உயர்த்தித் தாக்குதல்; பிறன் சொல்வது ஓங்காமல் மறுத்துக் கூறல்.
**ஓங்கில்** – ஒரு கடல்மீன்வகை.
**ஓங்குதல்** – உயர்தல்; வளர்தல்; பரவுதல்; பெருமையடைதல்; பெருகுதல்; மேலே பறிதல்; ஒக்காளித்தல்.
**ஓங்குவித்தல்** – ஓங்கச்செய்தல், உயரச்செய்தல்.
**ஓச்சம்** – உயர்வு, புகழ்.
**ஓச்சல்** – உயர்வு; தளர்ச்சி.
**ஓச்சன்** – பிடாரிகோயில் பூசாரி; கணக்காயன்; ஆசான்.
**ஓச்சன் கத்தி** – பலி வெட்டும் அறுவாள்.
**ஓச்சுதல்** – எறிதல்; பாய்ச்சுதல்; செலுத்துதல்; வீசுதல்; உயர்த்துதல்; ஓட்டுதல்; தூண்டி விடுதல்.
**ஓச்சை** – வறையல், வறுத்த உணவு.
**ஓசம்** – ஒளி; மிகுபுகழ்; நிமித்தம்; சமர்த்து; ஆதாரம்; வலிமை; ஆண்குறி.
**ஓசரம்** – நிமித்தம், பொருட்டு.
**ஓசரி** – கேடு; வியப்புக் குறிப்பு; துன்பக் குறிப்பு.
**ஓசழக்கு** – அழகு; வருத்தமின்மை, சிரமமின்மை.
**ஓசன்** – ஆசாரியன்.
**ஓசனித்தல்** – பறவை சிறகடித்தல்; போதற்கு முயலுதல்.
**ஓசனை** – யோசனையளவு, நான்கு காதம்.
**ஓசி** – இரவல்; ஆசிரியன் மனைவி.
**ஓசிவனம்** – பிழைப்பு.
**ஓசு** – புகழ்; வலி; சும்மா கிடைப்பது.
**ஓசுநன்** – வலியோன்; எண்ணெய் வாணிகன்; பரவசாதியான்; மீகாமன்.
**ஓசை** – ஒலி; எழுத்தோசை; செய்யுளோசை; வான் என்னும் பூதம் தோன்றுவதற்குக் காரணமாகிய ஏழு தன்மாத்திரை; புகழ்; இரைச்சல்; மிடற்றொலி; சொல்; பேச்சு; இயம்; பாம்பு; வாழை.
**ஓசைசெய்தளை** – காலணிவகை.
**ஓசையுடைமை** – இன்னோசையுடைமை, நூலழகு பத்தனுள் ஒன்று.
**ஓசையுண்ணுதல்** – செய்யுளோசை இசைதல்.
**ஓசையூட்டுதல்** – செய்யுள் ஓசையை இசையச் செய்தல்; செய்யுளோசை வாய்பாட்டால் அளந்தறிதல்.
**ஓட்டக்காரன்** – அஞ்சற்காரன்.
**ஓட்டகம்** – பாடல் முழுதும் இதழ் குவிந்தும் கூடியும் இயலும் எழுத்துகளேயுள்ள சித்திரகவி.
**ஓட்டங்காட்டுதல்** – ஓடுவதுபோல நடித்தல்; முன்னோடிக் காட்டுதல்; ஏமாற்றுதல்.
**ஓட்டசாட்டம்** – தடபுடல்.
**ஓட்டடுக்கு வீடு** – ஓடு வேய்ந்த மனை.
**ஓட்டடை** – அப்பவகை.
**ஓட்டத்தி** – ஒட்டுத் துத்திச்செடி.
**ஓட்டப்பம்** – காண்க: **ஓட்டடை.**
**ஓட்டம்** – ஓடல்; மேலுதடு; உதடு; நீரோட்டம்; ஓடுமோட்டம்; வருவாய்; தோல்வி; உருக்கித் தூய்மை செய்கை; மனம் செல்லுகை.
**ஓட்டம்பிடித்தல்** – தப்பி ஓடுதல்.
**ஓட்டன்** – நடந்து செல்லும் தூதன்; பாட்டனுக்குப் பாட்டன்.
**ஓட்டாங்கச்சி** – சிரட்டை, தேங்காய் ஓடு; மட்கலவோட்டின் துண்டு.
**ஓட்டாங்கிளிஞ்சில்** – ஒருவகை மீன்; உடைந்த சிப்பி.
**ஓட்டாண்டி** – இரந்துண்பவன், பிச்சைக்காரன்.
**ஓட்டாம்பாரை** – காண்க: **ஒட்டாம்பாரை.**
**ஓட்டி** – ஓட்டுகிறவன்; ஓட்டும்பொருள்; பாட்டிக்குப் பாட்டி; கொவ்வைக் கனி.
**ஓட்டியம்** – காண்க: **ஓட்டகம்.**
**ஓட்டிரம்** – ஒரு நாடு; ஒரிசா என வழங்கும் உற்கல நாடு.
**ஓட்டு** – ஓடுகை; புறங்காட்டியோடுகை; கப்பலோட்டம்; நூலிழையோட்டுகை.
**ஓட்டுக்கொடுத்தல்** – ஓடிவிடுதல்.
**ஓட்டுத்துத்தி** – ஒருவகைப் பூண்டு.
**ஓட்டுதல்** – செலுத்துதல்; நீங்கச்செய்தல்; புகுத்துதல்; செய்துமுடித்தல்; அழித்தல்; காலந்தாழ்த்துதல்; நூலால் இழையிடுதல்; கட்டடத்தில் பூசிய சாந்தை வழுவழுப் பாகத் தேய்த்தல்; கலத்தல்.
**ஓட்டுமுத்து** – சிப்பியில் ஒட்டிய முத்து.
**ஓட்டெடுத்தல்** – விரைந்தோடுதல்.
**ஓட்டெழுத்து** – தலையெழுத்து.
**ஓட்டை** – சில்லி; சிதைவு; துளை; ஒடுப்பொருளை உணர்த்தவரும் மூன்றாம் வேற்றுமையுருபு; உடனொத்த.
**ஓட்டைக்கை** – பொருள் தங்காத கை.
**ஓட்டைச்செவி** – கேள்வி பற்றாத செவி.
**ஓட்டைநெஞ்சு** – அறைபோன மனம், வெறுமை மனம்.
**ஓட்டைப்பல்** – சிதைவுற்ற பல், மூளிப் பல்.
**ஓட்டைமனம்** – ஒன்றும் தாங்காத மனம்; இள நெஞ்சு.
**ஓட்டையுடைசல்** – சிதைந்த பாண்டங்கள்.
**ஓட்டைவாயன்** – உளறுவாயன்; மறையினை வெளியிடுபவன்.
**ஓட** – உவமவுருபு.

**ஓடக்காரன்** – ஓடமோட்டி; பாய்பின்னும் இனத்தான்.

**ஓடக்கோல்** – படகுதள்ளுங் கழி.

**ஓடதி** – மருந்து மூலிகை; மருந்துச்செடி; ஆண்டில் ஒருமுறை காய்த்து அழியும் செடி.

**ஓடதிநாதன்** – சந்திரன்.

**ஓடம்** – தெப்பம், படகு; மிதவை; நெசவுநாடா; ஓடப்பாட்டு; செங்கருங்காலி; மகநாள்.

**ஓடல்** – ஓடுதல்; குலைதல்; கெடுதல்; ஒரு மரம்; ஆமெனல்.

**ஓடவிடுதல்** – புடமிடுதல்.

**ஓடவைத்தல்** – புடமிடுதல்; உறுதிப்படுத்தல்.

**ஓடன்** – ஆமை.

**ஓடாணி** – அணிகலக் கடைப்பூட்டாணி.

**ஓடாவி** – மரக்கலம் செய்வோன்; தச்சன்; ஓவியன்.

**ஓடி** – ஒருவகை நிலம்; வனநெல்.

**ஓடிகை** – வனநெல், காட்டில் விளையும் ஒருவகை நெல்.

**ஓடித்திரிதல்** – அலைதல்; பெருமுயற்சி செய்தல்.

**ஓடிப்போதல்** – விட்டு நீங்குதல்; ஓட்டமெடுத்தல்.

**ஓடியம்** – பரிகாசம்; சபைக்குத் தகாத பேச்சு.

**ஓடியவோடம்** – கிளிஞ்சில்.

**ஓடியாடிப்பார்த்தல்** – பெருமுயற்சி செய்தல்.

**ஓடியாடுதல்** – ஓட்டமும் ஆட்டமுமாயிருத்தல்.

**ஓடியுறைதல்** – படிப்படியாய் இறுகுதல்.

**ஓடிவிறைத்தல்** – உடல் முழுவதும் விறைத்தல்.

**ஓடிவெளித்தல்** – வெளிவாங்குதல்; நன்கு வெளிப்படுதல்.

**ஓடு** – ஆமை முதலியவற்றின் ஓடு; சிப்பி; தட்டோடு வேயும் ஓடு; செங்கல்; உடைந்த பானையோடு; மண்டையோடு; இரப்போர் கலம்; மூன்றனுருபு.

**ஓடுகரப்பான்** – கரப்பான்வகை.

**ஓடுகால்** – நீரோடுங் கால்வாய்.

**ஓடுகாலி** – வீட்டில் தங்காத பெண்.

**ஓடுதல்** – ஓட்டமாய்ச் செல்லுதல்; செல்லுதல்; நீர் முதலியன ஓடுதல்; மிகுதியாதல்; மனம் பற்றுதல்; நீளுதல்; வருந்துதல்; நேரிடுதல்; பிறக்கிடுதல்; கழலுதல்; பொருந்துதல்; எண்ணஞ்செல்லுதல்; பரத்தல்; மதிப்பிற்குரியதாதல்; தீர்மானிக்கப்படுதல்.

**ஓடுதாவடி** – அவசரங்களில் நேரும் குழப்பம்.

**ஓடுதிருப்புதல்** – ஓடுமாற்றிப் புதுப்பித்தல்.

**ஓடுபடம்** – இடுதிரை.

**ஓடுபந்தல்** – நடைப்பந்தல்.

**ஓடும்** – ஓர் அசைச்சொல்.

**ஓடுவாயு** – வாதநோய்வகை.

**ஓடுவிப்புருதிக்கட்டி** – புரையோடும் புண்வகை; அரித்தரித்துச் செல்லும் புண்.

**ஓடை** – நீரோடை; குளம்; அகழி; மலைவழி; நெற்றிப்பட்டம்; யானையின் நெற்றிப்பட்டம்; சந்தனம் வைக்கும் மடல்; ஒருவகைப் படர்கொடி; கிலுகிலுப்பைச் செடி; உலவை மரம்; குடைவேலமரம்.

**ஓணப்பிரான்** – ஓணநாளுக்குரிய திருமால்.

**ஓணம்** – ஆறு; இருபத்திரண்டாம் நட்சத்திரமான திருவோண நாள்; ஒரு விழா.

**ஓணான்** – ஓர் ஊரும் உயிரி, ஓந்தி.

**ஓணான்குத்தி** – ஒருவகை இராசாளி.

**ஓத்தி** – காண்க: **ஓந்தி**.

**ஓத்திரம்** – ஓமத்திற்குரிய பொருள்.

**ஓத்திரி** – வேள்விசெய்வோன்.

**ஓத்தின்சாலை** – வேதம் கற்பிக்கும் இடம்.

**ஓத்து** – ஓதுகை, ஓதப்படுவது; வேதம்; ஓரினப் பொருளை ஒருவழி வைத்திருக்கும் இயல், நூற்பிரிவு; விதி.

**ஓத்துமுறை வைப்பு** – இயல் முதலியவற்றை முறைப்படி அமைத்தலாகிய உத்திவகை.

**ஓத்துரைப்போன்** – வேதமோதுவோன்; உபாத்தியாயன்.

**ஓதக்கால்** – பெருங்கால், ஆனைக்கால்.

**ஓதப்புரோதம்** – நெசவின் நெட்டிழை, குறுக்கிழைகள்.

**ஓதம்** – ஈரம்; வெள்ளம், நீர்ப்பெருக்கு; கடல் அலை; ஒலி; பெருமை; அண்டவாதநோய்; சோறு.

**ஓதல்** – ஓதுதல்; படித்தல்; சொல்லல்; கல்வி பயிலுதல்; போதித்தல்; மந்திரஞ் செபித்தல்; ஒழிதல்.

**ஓதவனம்** – கடல்.

**ஓதளை** – காசுக்கட்டி, காவிக்கட்டி.

**ஓதன்மை** – ஓதல் தன்மை; பாடல்.

**ஓதனம்** – உண்டி; சோறு; பெருமை; போர்.

**ஓதா** – வேள்வி செய்யும் ஆசிரியருள் ஒருவன்.

**ஓதி** – அறிவு; கல்வி; ஓதுபவன்; ஓந்தி; செறிவு; பெண்மயிர்; நெருங்கித் தாக்குகை; அன்னம்.

**ஓதிஞானம்** – அவதி ஞானம், மெய்யறிவு.

**ஓதிமம்** – அன்னம்; கவரிமான்; மலை; புளிய மரம்.

**ஓதிமமுயர்த்தோன்** – அன்னக்கொடியுடைய பிரமன்.

**ஓதிமவாகனன்** – அன்னத்தை ஊர்தியாகவுடைய பிரமன்.

**ஓதிமவிளக்கு** – அன்னப் பறவை வடிவாகச் செய்யப்பட்ட விளக்கு.

**ஓதிமன்** – காண்க: **ஓதிமவாகனன்.**

**ஓதியிடுதல்** – திருமணம் முதலியவற்றில் மொய்யிடுதல், திருமணம் முதலியவற்றில் தரும் அன்பளிப்பு.

**ஓதியிறைத்தல்** – மந்திரநீர் தெளித்தல்.

**ஓதியுடைத்தல்** – மந்திரித்துத் தேங்காய் உடைத்தல்.

**ஓதுதல்** – படித்தல்; சொல்லுதல்; கற்பித்தல்; இரகசியமாய்ப் போதித்தல்; செபஞ்செய்தல்; மந்திரம் உச்சரித்தல்; பாடுதல்; தோடம் நீங்குவதற்காக அன்னம் முதலியவற்றிலே மந்திரஞ்சொல்லி உருவேற்றுதல்.

**ஓதுவார்** – கோயிலில் தேவாரம் முதலிய அருட் பாக்கள் பாடுவோர்; வேதசாத்திரம் படிப் போர்.

**ஓதுவார்க்குணவு** – கற்பவர்க்கு உணவிடுதல், முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று.

**ஓதுவான்** – ஆசான்; படிப்பவன், மாணாக்கன்; திருப்பாட்டுப் பாடுவோன்.

**ஓதுவித்தல்** – படிப்பித்தல்; வேதசாத்திரம் கற் பித்தல்.

**ஓதை** – ஓசை; பேரொலி, ஆரவாரம்; எழுத் தொலி; மலை; காற்று; மதில்; மதிலின்மேல் வழி.

**ஓதைவாரி** – சிறகு; வீட்டின் வரிசை; ஒலியுள்ள கடல்.

**ஓந்தி** – ஓணான்.

**ஓநாய்** – கோநாய், ஒருவகை நாய்.

**ஓப்படியாள்** – காண்க: **ஓர்ப்படியாள்.**

**ஓப்புதல்** – ஓட்டுதல், துரத்துதல்; நீக்குதல்; உயரவெடுத்தல்.

**ஓபாதி** – கூறு, அம்சம்; அவித்தை.

**ஓபு** – கதவு.

**ஓம்** – ஆமென்னும் உடன்பாட்டை உணர்த்தும் ஓர் இடைச்சொல்; தன்மைப் பன்மை விகுதி; பிரணவம்.

**ஓம்படுத்தல்** – பாதுகாக்குமாறு சேர்த்தல்; பரி கரித்தல்; உறுதிகூறுதல்.

**ஓம்படுதல்** – உடன்படுதல்.

**ஓம்படை** – காவல், பாதுகாப்பு; பாதுகாக்கு மிடம்; கையடை; போதிக்குமிடம்; கழுவாய், பரிகாரம்; மறவாமை.

**ஓம்படைக்கிளவி** – பெரியோர் கூறும் அறிவுரை; தலைவியைப் பாதுகாத்துக்கொள் எனத் தலைவற்குத் தோழி கூறும் கூற்று.

**ஓம்புதல்** – காப்பாற்றுதல், பாதுகாத்தல், பேணு தல்; வளர்த்தல்; தீங்கு வாராமற் காத்தல்; போற்றுதல், உபசரித்தல்; சீர்தூக்குதல்; பரிகரித்தல்; தவிர்த்தல், விலக்கல், நீக்குதல்; உண்டாக்குதல்.

**ஓமகுண்டம்** – வேள்விக்குழி.

**ஓமசாந்தி** – நெருப்பு வளர்த்துச் சாந்தி பண்ணுகை.

**ஓமசாலை** – வேள்விச்சாலை.

**ஓமத்திரவியம்** – வேள்விக்குரிய துணைப்பொருள், ஓமம் செய்யும் பொருள்.

**ஓமத்திராவகம்** – ஓமச்சத்துக் கலந்த நீர்.

**ஓமப்பொடி** – ஓமம் செய்த சாம்பல்; திருநீறு; ஓமமிட்ட ஒருவகைத் தின்பண்டம்; ஓம மருந்து.

**ஓமம்** – வேள்விவகை; ஒரு மருந்துச் சரக்கு; அப்பிரகம்.

**ஓமம்வளர்த்தல்** – வேள்வி செய்வதற்காகத் தீ வளர்த்தல்; வேள்வி செய்தல்.

**ஓமமண்டபம்** – வேள்விச்சாலை.

**ஓமல், ஓமலிப்பு** – ஊர்ப்பேச்சு; வசைப்பேச்சு; அலர் எங்கும் பரவுகை.

**ஓமவல்லி, ஓமவள்ளி** – கருப்பூரவல்லிப் பூண்டு.

**ஓமறத்தல்** – ஒழிவறுதல்.

**ஓமாக்கினி** – வேள்வித் தீ.

**ஓமாலிகை** – நறும்புனலில் இடும் மணப்பொருள் கள்: இலவங்கம், பச்சிலை, கச்சோலம், ஏலம், நாகணம், கோட்டம், நாகம், மதாவரிசி, தக்கோலம், நன்னாரி, வெண்கோட்டம், கத்தூரி, வேரி, இலாமிச்சை, கண்டில், வெண்ணெய், கடு, நெல்லி, தான்றி, துத்தம், வண்ணக் கச்சோலம், அரேணுகம், மாஞ்சி, சயிலேகம், புழுகு, புன்னை, நறுந்தாது, புலியுகிர், சரளம், தமாலம், வகுளம், பதுமுகம், கொடிவேலி, நுண்ணேலம்.

**ஓமான்** – காண்க: **ஓந்தி.**

**ஓமி** – வேள்வி செய்கிறவன்; தீ; நீர்; நெய்.

**ஓமிடி** – கேடு, அழிவு, துன்பம்.

**ஓமிடிதல்** – கேடுறுதல், அழிதல்.

**ஓமித்தல்** – ஓமஞ்செய்தல், வேள்வி செய்தல்.

**ஓமியம்** – ஓமம், வேள்வி.

**ஓமுடிதல்** – காண்க: **ஓமிடிதல்.**

**ஓமை** – ஒரு பாலைநிலத்து மரம்; உகாமரம்; மா மரம்.

**ஓய்** – ஒரு விளியிடைச்சொல்; ஒருமையிலே வரும் ஒரு விளியுருபு; ஒரு விளிக்குறிப்பு.

**ஓய்ச்சல்** – ஓய்வு; தளர்ச்சி.

**ஓய்ச்சலொழிவில்லாமை** – சிறிதும் ஓய்வில்லாமை.

**ஓய்தல்** – தளர்தல்; முடிதல்; முற்றுந் தேய்தல்; முன்னிலை சுருங்கல்; உள்ளதன் நுணுக்கம்; மாறுதல்; இளைப்பாறுதல்; அழிதல்.

**ஓய்ந்திருத்தல்** – ஆறியிருத்தல்; வேலையொழிந் திருத்தல்; சோம்பியிருத்தல்.

**ஓய்வு** – ஒழிவு; தளர்வு; முடிவு; சாதல்.

**ஓய்வுகரை** – அளவு முடிவு; ஓய்வு எல்லை.

**ஓர்** – ஒன்று; ஓர் அசைச்சொல்.

**ஓர் (வி)** – ஆராய்; தெளி.

**ஓர்க்கோலை** – அம்பர், ஒரு மணப்பண்டம்.

**ஓர்கட்புள்** – ஒருகண் பார்வையுடைய காகம்.

**ஓர்குடி மணாளன், ஓர்குடியிற்கொண்டோன்** – ஒருகுடியிற் பெண் கொண்டோன், ஓரகத்தன், சகலன்.

**ஓர்குண்டலன்** – ஒரு காதில் குண்டலமணிந்த பலராமன்.

**ஓர்ச்சி** – ஆராய்ச்சி; உணர்ச்சி; அறிவு.

**ஓர்சல்** – ஓரிசு; தீர்மானம்; சமாதானம்.

**ஓர்த்தல்** – ஆராய்தல்; தெரிந்தெடுத்தல்; நினைத்தல்; கூர்ந்து கேட்டல்.

**ஓர்தல்** – ஆராய்தல்; எண்ணுதல்; உணர்தல், அறிதல்; தெளிதல்.

**ஓர்ப்படி, ஓர்ப்படியாள்** – கணவனுடன் பிறந்தானின் மனைவி.

**ஓர்ப்பு** – கருமமுடிக்குந் துணிவு; பொறுமை; ஆடூஉக் குணம் நான்கனுள் ஒன்று, துணிவு; நினைவு; தெளிவு.

**ஓர்பு** – ஆராய்கை; எண்ணுகை, சிந்திக்கை.

**ஓர்மம்** – மனத்திட்பம்.

**ஓர்மித்தல்** – மனந்திடப்படுதல்.

**ஓர்மை** – ஒருமை; ஒற்றுமை; துணிவு; நினைவு; ஆடம்பரம்.

**ஓர்வம்** – ஒருபாற் சார்கை.

**ஓர்வு** – காண்க: **ஓர்பு.**

**ஓரக்கண்ணன், ஓரக்காரன்** – சாய்ந்த பார்வையுடையவன்; ஒருதலைப் பட்சமாய் நடப்பவன்.

**ஓரகத்தன்** – மனைவியுடன் பிறந்தாள் கணவன், சகலன்.

**ஓரகத்தாள், ஓரகத்தி** – காண்க: **ஓர்ப்படியாள்.**

**ஓரசைச்சீர்** – ஓர் அசையே சீர்நிலை பெற்று வருகை, தனித்து நேரசையோ நிரையசையோ சீர்நிலை பெறல், அசைச்சீர்.

**ஓரட்டும்** – எல்லாம், முழுதும்.

**ஓரடி** – ஒருபோகம்.

**ஓரடிக்கோரடி** – அடிக்கடி; நெருக்கமாக.

**ஓரடிப்பதம்** – ஒருவகை இசைப்பாட்டு.

**ஓர(ரெ)டை** – ஒரு சிற்றளவு.

**ஓரம்** – விளிம்பு; பக்கம்; ஒருபக்கம் சார்ந்து பேசுதல்; பெண்குறி.

**ஓரம்பேசல்** – ஒருபக்கம் சார்ந்து பேசல்.

**ஓரவாரம்** – ஓரவஞ்சனை, நெறி தவறி ஒருபக்கத்திலே பற்றுவைத்தல், பட்சபாதம்.

**ஓரற்று** – ஒருதன்மையானது.

**ஓரறிவுயிர்** – புல் மரம் முதலியன.

**ஓரன்மை** – ஒருதன்மையல்லாமை.

**ஓரா** – ஒரு மீன்வகை.

**ஓராங்கு** – ஒருசேர; ஒன்றுபோல; இடைவிடாமல்.

**ஓராட்டுதல்** – தாலாட்டுதல்.

**ஓராட்டுப்பட்டோலை** – சதுர்ப்பட்டோலை.

**ஓராண்காணி** – ஒருவனுக்கே உரிய நிலம்.

**ஓராண்வழி** – ஒரு தொடராய் வரும் பரம்பரை.

**ஓராயம்** – சேர்க்கை; சாய்வு; தோணியின் சாய்ந்த ஒருபுறம்; இணைப்பு.

**ஓரானொரு** – ஏதோவொன்று.

**ஓரி** – ஆண்நரி; ஆண்முசு; விலங்கேற்றின் பொது; ஆண்மயிர்; கடையெழு வள்ளல்களுள் ஒருவன்; ஓரியின் குதிரை; தேன்முதிர்நிறம்; விலங்கின் படுக்கை; நீலநிறம்; திருமணமாகாதவன்; கணவனுடன் பிறந்தான் மனைவி.

**ஓரிசு** – தீர்மானம்; சமாதானம்; இசைவு.

**ஓரிதழ்த்தாமரை** – ஓரிதழுடைய சிறு பூண்டு.

**ஓரிபூத்தல்** – தேடாமற் கிடத்தல்.

**ஓரிலைத்தாமரை** – காண்க: **ஓரிதழ்த்தாமரை.**

**ஓரிலைத்துத்தி** – துத்திவகை.

**ஓரீற்றா** – ஒருமுறை ஈன்ற பசு.

**ஓரு** – நொடி.

**ஓரும்** – ஓர் அசைச்சொல்.

**ஓருள்ளிப்பூடு** – பல பல்லில்லாத உள்ளி.

**ஓரெழுத்துமடக்கு** – வந்த எழுத்தே மடங்கிவரும் சொல்லணி.

**ஓரை** – மாதர் கூட்டம்; மகளிர் விளையாட்டு; விளையாடிடம்; குரவை; இராசி; ஒரு முகூர்த்தம்; நேரம்; சித்திரான்னம்; கூகை; இரண்டரை நாழிகைப் பொழுது; அணிகலன்.

**ஓரைப்பாவை** – மகளிர் விளையாட்டுப் பாவை.

**ஓரையயர்தல்** – ஓரைப்பாவையை வைத்துக் கொண்டு மகளிர் விளையாடுதல்.

**ஓரொட்டு** – முழுதும்; சராசரியாக.

**ஓரொற்றுவாரம்** – தாளத்து ஒரு மாத்திரை பெற்றுவருஞ் செய்யுள்.

**ஓரொன்று** – ஒவ்வொன்று.

**ஓரோவழி** – ஒருசார்; சிறுபான்மையாய்.

**ஓல்** – ஒலி; தாலாட்டு; ஒரு விளியுருபு.

**ஓலக்கச்சூளை** – அத்தாணியிற் சேவை செய்யும் பரிவாரம்.

**ஓலக்கம்** – சபை; சபை கூடுமிடம்; சபா மண்டபம்; அத்தாணிக் காட்சி.

**ஓலக்கமண்டபம்** – அத்தாணி மண்டபம், சங்க மண்டபம், சபா மண்டபம்.

**ஓலம்** – ஒலி; கடல்; பாம்பு; அபயக்குரல்; அடைக்கலம்.

**ஓலமிடுதல்** – முறையிடுதல்; முழங்குதல்; அழுதல்; அபயங்கூறுதல்.

**ஓலாட்டுதல்** – தாலாட்டுதல்.

**ஓலிடுதல்** – அலறுதல்; முழங்குதல்.

**ஓலுதல்** – முழங்குதல்.

**ஓலுறுத்தல்** – இன்னோசையுண்டாக்குதல்; தாலாட்டுதல்.

**ஓலுறுதல்** – ஒலி பொருந்துதல்; கூவுதல்.

**ஓலை** – பனை, தென்னை முதலியவற்றின் ஓலை; தாழையோலை; எழுதுமோலை; திருமுகம்; ஆவண ஓலை; சீட்டு; ஓலைச் சுருள்; பேய்முன்னை; ஓலைப்படல்; ஓலைக் குடை; ஓலைக்குடல்; காதணி.

**ஓலைக்கண்** – ஓலைச்சட்டம்; ஓலைச்சட்டத்தில் விழும் துளை.

**ஓலைக்கணக்கர்** – பள்ளியிற் படிப்போர், மாணவர்கள்.

**ஓலைக்காந்தல்** – ஓலையின் நெருப்புக் கனிவு.

**ஓலைக்கிணாட்டு** – ஓலைத்துண்டு.

**ஓலைக்கிளிஞ்சில்** – சங்குவகை; கிளிஞ்சில்வகை.

**ஓலைக்கு(கூ)டை** – ஓலையால் மழை வெயில் தாங்க முடையப்படும் கூடு.

**ஓலைக்கோள்** – கடிதப் போக்குவரத்து.

**ஓலைச்சுருள்** – ஓலைக் கடிதம்.

**ஓலைச்சுவடி** – ஓலையால் அமைந்த நூல்; ஒரு மீன்வகை.

**ஓலைத்தூக்கு** – சீட்டுக்கவி.

**ஓலைதீட்டுதல்** – ஓலையில் எழுதுதல்.

**ஓலைதீட்டும்படை** – எழுத்தாணி.

**ஓலைநாயகம்(ன்)** – சோழருடைய தலைமைக் காரிய நிருவாகி.

**ஓலைப்பாசு(யி)ரம்** – கடிதச் செய்தி, சீட்டுக்கவி.

**ஓலைப்புறம்** – கட்டளை.

**ஓலைப்பூ** – தாழம்பூ.

**ஓலைபோக்குதல்** – ஓலையில் செய்தி எழுதி அனுப்புதல்.

**ஓலைமுகப்பாசுரம்** – கடிதத் தொடக்கத்தில் எழுதும் வக்கணை.

**ஓலைமுத்திரை** – ஓலை முகப்பில் இடும் முத்திரை.

**ஓலைமுறி** – ஓலைச்சீட்டு.

**ஓலையெழுத்து** – இராயசம்.

**ஓலையெழுதுதல்** – சீட்டெழுதுதல்; சீதனவுறுதி யெழுதுதல்; கடிதம் அனுப்புதல்.

**ஓலைவாங்குதல்** – சாதல், இறத்தல்.

**ஓலைவார்தல்** – எழுதுதற்கு உதவுமாறு ஓலை சீவுதல்.

**ஓலைவாலன், ஓலைவாளை** – வாளைமீன்வகை.

**ஓவம்** – ஓவியம், சித்திரம்; உயரம்.

**ஓவர்** – கம்மாளர்; ஓவியர், சித்திரகாரர்; ஏத்தாளர்.

**ஓவருதல்** – ஒழிதல்.

**ஓவன்** – ஓவியன், சித்திரகாரன்.

**ஓவாமை** – நீங்காமை, ஒழியாமை, இடைவிடாமை.

**ஓவாய்** – பற்கள்போனவாய்; மூளியானகலத்தின் வாய்.

**ஓவி** – ஓவியம், சித்திரம்.

**ஓவியகாயம்** – அழகிய வரிகளையுடைய புலி.

**ஓவியப்பேச்சு** – இனியமொழி.

**ஓவியம்** – சித்திரம்; சித்திரத் தொழில்; அழகு; பிரதிமை.

**ஓவியன்** – சித்திரம் வரைபவன், சித்திரகாரன்; சிற்பி, பிரதிமைசெய்வோன்; சிற்ப நூலோன்.

**ஓவு** – காண்க: **ஓவி.**

**ஓவுதல்** – ஒழிதல், நீங்குதல்; நீக்குதல்; முடிதல்.

**ஓவெனல்** – ஒரொலிக் குறிப்பு; ஓவென்றொலித் தல்; ஓவென்று முறையிடல்; முழு இருட்டா தல் குறிப்பு.

**ஓளி** – ஒழுங்கு; யானையின் கூட்டம்.

**ஓற்பலம்** – கோங்கு.

**ஓனம்** – எழுத்தின் சாரியை.

# ஔ

**ஔ** – பன்னிரண்டாம் உயிரெழுத்து; தாரவிசை யின் எழுத்து; பூமி; அநந்தன் என்னும் பாம்பு; விளித்தல், அழைத்தல், வியப்பு, தடை இவற்றைக் காட்டும் ஒரு முன்னொட்டு.

**ஔக்குறுக்கம்** – ஔகாரக் குறுக்கம், ஔகாரம் தனக்குரிய மாத்திரையில் குறைந்து ஒலித்தல்.

**ஔகம்** – இடைப்பாட்டு.

**ஔகாரம்** – ‘ஔ’ என்னும் எழுத்து.

**ஔசனம்** – உபபுராணம் பதினெட்டனுள் ஒன்று.

**ஔசித்தியம்** – தகுதி, உசிதமாந்தன்மை.

**ஔசீரம்** – இருக்கை, ஆசனம்; கவரிமான் மயிர்; படுக்கை.

**ஔடணம்** – மிளகுசாறு.

**ஔடதம்** – மருந்து; மாற்று மருந்து.

**ஔடதவாதி** – மூலிகையிலிருந்து உயிர் உற்பத்தி யாயிற்று என்று கூறுவோன்.

**ஔடவம், ஔடவராகம்** – ஐந்து சுரமட்டும் பயன்படுத் தப்படும் பண்.

**ஔத்தமர்ணிகம்** – வட்டியோடு தருவதாக வாங் கிய பொருள்.

**ஔத்தால(லி)கம்** – புற்றுத்தேன்.

**ஔத்திரி,**
**ஔத்திரிதீட்சை** } – சிவதீட்சை ஏழனுள் ஒன்று.

**ஔதசியம்** – பால்.

**ஔதநிகன்** – சமையற்காரன்.

**ஔதா** – அம்பாரி, யானைமேற் பீடம்.

**ஔதாரியம்** – பெருந்தன்மை, உதாரத்துவம், உதாரகுணம்.

**ஔபசாரிகம்** – உபசாரமான வார்த்தை; ஒன்றன் தன்மையை மற்றொன்றில் ஏற்றிக் கூறுவது.

**ஔபாசனம்** – வேள்வித் தீயோம்புகை; இல்லறத்தார் காலையிலும் மாலையிலும் செய்யும் வேள்விச் சடங்கு.

**ஔபாசனை** – வைதிகச் சடங்கு நடத்தல்.

**ஔரசபுத்திரன்,**
**ஔரச(த)ன்** } – குலமொத்த கன்னியைத் தீவேட்டுப் பெற்ற புதல்வன்; தான் பெற்ற பிள்ளை; உரிமை மகன்.

**ஔலியா** – இசுலாமிய அடியார்கள்.

**ஔவித்தல்** – பொறாமைப்படுதல், அழுக்காறு கொள்ளல்.

**ஔவியம்** – அழுக்காறு, பொறாமை; தேவர்களுக்குச் செய்யும் சடங்கு.

**ஔவுதல்** – வாயால் பற்றுதல்; கடித்துப் பிடித்தல்; அழுந்தியெடுத்தல்.

**ஔவை** – தவப்பெண், ஆரியாங்கனை; தாய்; ஔவையார்.

**ஔவைநோன்பு** – செவ்வாய்க் கிழமையில் பெண்கள் நோற்கும் ஒரு நோன்பு.



**ஃ** – ஆய்தவெழுத்து, முப்பாற்புள்ளி எழுத்து; குற்றெழுத்தின் முன்னர் உயிரோடு கூடிய வல்லெழுத்தாறனுள் ஒன்றன் மேலதாய் இடைவரும் இயல்பினது.

## க

**க** – முதலாம் உயிர்மெய்யெழுத்து (க் + அ); ஒன்று என்னும் எண்ணின் குறி; காந்தாரம் ஆகிய கைக்கிளை இசையின் எழுத்து; வியங்கோள் விகுதியுள் ஒன்று; ஆன்மா; உடல்; காற்று; அக்கினி; பிரமன்.

**கஃகான்** – 'க' என்னும் எழுத்து.

**கஃசு** – காற்பலம் கொண்ட நிறுத்தல் அளவு.

**கஃறெனல்** – கறுப்பாதல்; கறுத்துள்ளமை காட்டும் குறிப்பு.

**கக்கக்கெனல்** – ஒலிக்குறிப்பு; சிரித்தற் குறிப்பு.

**கக்கக்கொடுத்தல்** – உணவை மிதமிஞ்சி ஊட்டுதல்.

**கக்கசம்** – கடினம்; முயற்சி.

**கக்கட்டமிடுதல்** – உரத்த சத்தமாய்ச் சிரித்தல்.

**கக்கடி** – துத்திச்செடி.

**கக்கதண்டம்** – அக்குளில் இடுக்கி நடக்கும் கழி.

**கக்கப்பாளம்** – துறவிகள் கக்கத்தில் இடுக்கும் கலம் அல்லது மூட்டை.

**கக்கப்பிக்கவெனல்** – மனக்குழப்பத்தால் உளறுதற் குறிப்பு.

**கக்கப்பை** – காண்க: **கக்கப்பாளம்.**

**கக்கப்பொட்டணம்** – கக்கத்தில் இடுக்கிய துணி மூட்டை.

**கக்கம்** – அக்குள், கைக்குழியின் கீழிடம்; எண்ணெய்க் கடுகு; அயனக் கணக்குவகை.

**கக்கரி,**
**கக்கரிகம்** } – ஒரு கொடி; முள்வெள்ளரி, வரிகளோடுகூடிய வளைந்த காய்.

**கக்கல்** – கக்குதல், வெளிப்படுத்துதல்; கக்கப்பட்டது; கதிரீனுதல்.

**கக்கல்கரைசல்** – கலங்கல் நீர்; கரைந்த மலம்.

**கக்கலாத்து** – கரப்பான் பூச்சி.

**கக்கலும்விக்கலுமாய்** – கதிர் ஈன்றதும் ஈனாததுமாய்.

**கக்கவைத்தல்** – நெருக்கி வாங்குதல்.

**கக்கார்** – தேமா, இனிப்பு மாங்காய்.

**கக்கிக்கொடுத்தல்** – தன் வாயிற் கொண்டதை மற்றொன்றற்கு ஊட்டி வளர்த்தல்.

**கக்கிருமல்,**
**கக்கு** } – காண்க: **கக்குவான்.**

**கக்கு (வி)** – நஞ்சு கால்; ஆணி முதலியன எதிரெழு; நீர் கக்கு; கதிர் ஈனு; மிக இருமு.

**கக்குசு** – மலசலம் கழிக்கும் இடம்.

**கக்குதல்** – வாயாலெடுத்தல், வெளிப்படுத்தல்; ஆணி முதலியன பதியாமல் எதிரெழல்; கதிர் ஈனுதல்; சாரம் இறங்குதல்; கசிதல்; பெருக்கெடுத்தல்.

**கக்குரீதி** – காண்க: **கக்கசம்.**

**கக்குவான்** – ஒருவகை இருமல் நோய்.

**ககணி** – வானநூலறிந்தோன்.

**ககபதி** – பறவைகளின் தலைவனான கருடன்.

**ககம்** – அம்பு; பறவை; வளி; தெய்வம்; பாணம்; வெட்டுக்கிளி; மணித்தக்காளி; சரகாண்ட நஞ்சு.

**ககமாரம்** – மணித்தக்காளி.
**ககரம்** – 'க' என்னும் எழுத்து.
**ககராசன்** – காண்க: **ககபதி.**
**ககவசுகம்** – ஆலமரம்.
**ககனசாரி** – விண்ணில் இயங்குவோர்.
**ககனசாரிகை** – விண்ணில் இயங்குகை; பரத நாட்டிய உறுப்புள் ஒன்று.
**ககனம்** – வானம்; வளிமண்டலம்; துறக்கம்; காடு; படை; பறவை.
**ககனாக்கிரகம்** – அண்டமுகடு.
**ககனாரவிந்தம்** – வான்தாமரை; கொட்டைப் பாசி.
**ககு** – தீச்செய்கை உள்ளவன், கொடியவன்.
**ககுஞ்சலம்** – காண்க: **சாதகப்புள்.**
**ககுத்து** – திமில்; எருத்துத் திமில்; எருத்தின் பிடர்.
**ககுதி** – முத்திரை குத்தின எருது.
**ககுபம்** – திசை; மருதமரம்; கருமருது.
**ககுளம்** – ஒருவகை இசையளவை.
**ககேசன், ககேசுரன், ககேந்திரன்** – கருடன்; சூரியன்.
**ககோதரம்** – பாம்பு.
**ககோளசாத்திரம்** – வானநூல்.
**ககோளம்** – வானவட்டம், வானமண்டலம்.
**கங்கடகம், கங்கடம்** – கவசம், சட்டை.
**கங்கணங்கட்டுதல்** – ஒரு செயலை முடித்தற்கு முனைந்து நிற்றல்; விருது கட்டுதல்; காப்புக் கட்டுதல்.
**கங்கணம்** – காப்புநாண்; கடகம்; கைவளை; நீர்வாழும் பறவைவகை.
**கங்கதம்** – சீப்பு.
**கங்கபத்திரம்** – அம்பு; பருந்தின் இறகு.
**கங்கம்** – சீப்பு; தீப்பொறி; பருந்து; கழுகு; பெருமரம்; வேள்வித்தூண்; வரம்பு; கோளக பாடாணம்; தமிழ்நாட்டை அடுத்துள்ள ஒரு நாடு.
**கங்கர்** – பருக்கைக் கல்; சுக்கான் கல்; ஓர் அரச குலத்தார்.
**கங்கரம்** – மோர்.
**கங்கவி** – பருந்து.
**கங்கன்** – சீயகங்கன் என்னும் அரசன்; பிறவிச் சீர்பந்த பாடாணம்.
**கங்காசுதன்** – கங்கையின் புதல்வன்: முருகன்; வீடுமன்.
**கங்காணம்** – காண்க: **கண்காணம்.**
**கங்காணி** – காண்க: **கண்காணி.**
**கங்காதரன்** – கங்கையைத் தலையிலே தாங்கி யிருக்கும் சிவன்.
**கங்காதேவி** – கங்கையாற்றுக்குரிய தெய்வம்.
**கங்காநீலன்** – நீலநிறமுள்ள குதிரைவகை.
**கங்காபட்டாரகி** – கோயில்களில் சிவனுக்கணியும் கங்கை வடிவமான தலையணி.
**கங்காளம்** – எலும்பு; முழுவெலும்பு; தசை கழிந்த எலும்புக்கூடு; பெருங்கலம்; பிணம்.
**கங்காளமாலி** – எலும்புகளை மாலையாக அணிந்த சிவன்.
**கங்காளன்** – சிவன்; துருசு.
**கங்காளி** – காளி; பார்வதி; ஏழை.
**கங்கானம்** – குதிரை.
**கங்கில்** – காளசின்னத்தின் உறுப்பு.
**கங்கு** – வயலின் வரம்பு; வரம்பின் பக்கம்;கரை; எல்லை; அணை; வரிசை; தீப்பொறி; தீப் பற்றிய துரும்பு; பனைமட்டையினடிப்புறம்; ஒருவகை விளையாட்டிற் குறிக்கும் எல்லை; கழுகு; பருந்து; கருந்தினை.
**கங்குகரை இல்லாமை** – அளவின்மை.
**கங்குமட்டை** – பனைமட்டையின் அடிக்கருக்கு.
**கங்குரோகம்** – கொப்புள நோய்வகை.
**கங்குல்** – இரவு, இருள்; இடையாமம்; பரணி நாள்.
**கங்குல்வாணர்** – இரவில் திரியும் பழக்கமுடைய வர், அரக்கர்.
**கங்குல்விழிப்பு** – கூகை.
**கங்குவடலி** – அடிக்கருக்கு மட்டையுள்ள பனை மரம்.
**கங்கை** – ஏழு புண்ணிய ஆறுகளுள் ஒன்று; சிவன் மனைவி; நவச்சாரம்.
**கங்கைக்குணன்** – நவச்சாரம்.
**கங்கைக்குலம், கங்கைகோத்திரம்** – வேளாளர்மரபு,வேளாளர் குலம்.
**கங்கைதனயன்** – காண்க: **கங்காசுதன்.**
**கங்கைதூவி** – மேகம்.
**கங்கைபெற்றோன்** – முருகன்; வீடுமன்;விநாயகன்.
**கங்கைமாத்திரர்** – சிறுவர் விளையாட்டில் வழங் கிய ஒரு பெயர்.
**கங்கைமைந்தன்** – காண்க: **கங்காசுதன்.**
**கங்கையோன்** – துருசு.
**கங்கைவேணியன்** – கங்கையைச் சடையில் வைத் திருக்கும் சிவன்.
**கச்சகம்** – குரங்கு.
**கச்சங்கட்டுதல்** – கச்சை கட்டுதல்; ஒரு செயலை முடிக்க முனைந்து நிற்றல்.
**கச்சங்கம்** – ஒப்பந்தம்.
**கச்சட்டம்** – உடைமடிப்பு; கோவணம்.
**கச்சடா** – இழிவு; போக்கிரித்தன்மை.
**கச்சந்தி** – கோணிப்பை.
**கச்சந்தியவிழ்த்தல்** – பொய்மூட்டை அவிழ்த்தல்.
**கச்சபம்** – ஆமை; நவநிதியுள் ஒன்று; மற்போர் நிலையுள் ஒன்று.

**கச்சபீ** – கலைமகளின் வீணை.

**கச்சம்** – அளவு; ஓர் எண்ணுப்பெயர்; இலட்சம்; மரக்கால்; ஒப்பந்தம்; துணிவு; இறகு; கடுகு ரோகிணி; ஒரு மீன்; வார்க்கச்சு; முன்றானை; ஆடைச்சொருக்கு, யானைக் கழுத்திடு கயிறு; ஆமை; குதிரை அங்கவடி; பக்கம்; காய்ச்சற் பாடாணம்.

**கச்சல்** – மிகவும் இளம்பிஞ்சு; ஒல்லி; கசப்பு; வெறுப்பு; பிஞ்சு வாழைக்காய்.

**கச்சலாட்டம்** – சச்சரவு.

**கச்சவடக்காரன்** – வணிகன்.

**கச்சவடம்** – வணிகம்; குழப்புகை.

**கச்சளம்** – இருள்; கண்ணிலிடு மை; கரிப்புகை.

**கச்சற்கருவாடு** – கருவாட்டுவகை; மீன்பொடி.

**கச்சற்கோரை** – நெய்தல் நிலத்துப் புல்வகை.

**கச்சன்** – ஆமை.

**கச்சா** – தாழ்மை; ஒரு நிறை.

**கச்சாச்சேர்** – எட்டுப்பலம் கொண்ட நிறை.

**கச்சாத்து** – நிலவரி முதலிய கணக்கு; நிலவரி செலுத்தியதற்குரிய பற்றுச்சீட்டு.

**கச்சாயம்** – ஒருவகைச் சிற்றுண்டி; கடலருகான முனை.

**கச்சாரம்** – பாய்முடையும் தொழில்.

**கச்சால்** – மீன்பிடிக்குங் கூடு.

**கச்சாலம்** – காய்ச்சற் பாடாணம்.

**கச்சாலை** – கச்சாலயம்; காஞ்சிபுரத்திலுள்ள சிவாலயங்களுள் ஒன்று.

**கச்சான்** – மேல்காற்று; மேற்குத்திசை.

**கச்சான்கோடை** – தென்மேல் காற்று.

**கச்சி** – காஞ்சிபுரம்; சீந்திற்கொடி; கொட்டாங்கச்சி, சிரட்டை; சின்னிப்பூடு.

**கச்சிதம்** – ஒழுங்கு, தக்கபடி அமைகை.

**கச்சிப்பேடு** – கச்சி என்னும் காஞ்சிபுரம்.

**கச்சு** – அரைப்பட்டிகை; கச்சைப்பட்டை; முலைக்கச்சு; கச்சை; மேலாடை; நெருப்பு; மீன்.

**கச்சுக்கச்செனல்** – ஓயாது பிதற்றுதல்.

**கச்சுகோரம்** – பாண்டவகை.

**கச்சுதல்** – கடித்தல்.

**கச்சுப்பிச்செனல்** – தாறுமாறாகப் பேசுதல்.

**கச்சுரி** – நெருப்பு.

**கச்சுரை** – காண்க: **கச்சூர்க்காய்**; பெருங்காஞ்சொறி.

**கச்சூர்க்காய்** – பேரீச்சம்பழம்; தின்பண்ட வகை.

**கச்சூரம்** – கழற்சிக்கொடி; கழற்காய்; பேரீந்து.

**கச்சேரி** – உத்தியோக சாலை, அலுவற் கூடம்; ஆடல் பாடல் நிகழ்ச்சி; ஆடல் பாடல் முதலிய வற்றிற்காகக் கூடும் கூட்டம்.

**கச்சை** – கயிறு; கவசம்; தழும்பு; அரைக்கச்சு, அரைப்பட்டிகை; யானைக் கழுத்திடு கயிறு; யானைக் கீழ்வயிற்றுக் கயிறு; முழுப் புடைவை; வார்; கோவணம்; கிண்கிணி.

**கச்சைக்கட்டுதல்** – அரையில் கட்டுதல்; தாறு பாய்ச்சிக் கட்டுதல்; ஆடையை இறுகக் கட்டுதல்; ஒன்றைச் செய்ய முற்படுதல்.

**கச்சைக்கொடியோன்** – யானைக் கழுத்திடு கயிற்றைக் கொடியிற் கொண்டவன், கன்னன்.

**கச்சோடி** – வெள்ளை; வெற்றிலை.

**கச்சோணி** – தாம்பூலத்தோடு சேரும் மணப் பண்டம்.

**கச்சோதம்** – மின்மினி.

**கச்சோரம்** – கிச்சிலிக் கிழங்கு; பூலாங்கிழங்கு.

**கச்சோலம்** – காண்க: **கச்சோரம்**; ஏலக்காய்த் தோல்; ஒருவகை மணப் பொருள்; சிறு பாண்டம்.

**கசக்கல்** – கசக்குதல், கசங்கச் செய்தல்.

**கசக்கார்** – இனிமையான மாங்காய்.

**கசக்கால்** – ஊற்றுக்கால்.

**கசக்குதல்** – கசங்கச் செய்தல்; துணியைக் கும்முதல்; வருத்துதல்; குழையச் செய்தல்; நெருக்குதல்; கைப்புச்சுவையாதல்.

**கசகசத்தல்** – இறுக்கத்தால் உடம்பு வியர்த்தல்; ஒலித்தல்.

**கசகசவெனல்** – ஒலிக்குறிப்பு; இறுக்கக் குறிப்பு; செழிப்புக் குறிப்பு.

**கசகசா** – அபினிச் செடி; கசகசா விதை.

**கசகம்** – வெள்ளரிக்கொடி.

**கசகர்ணம்** – யானைபோல் காதாட்டும் வித்தை; பெரு முயற்சியால் ஆகவேண்டிய செயல்.

**கசகர்ணம்போடுதல்** – பெருமுயற்சி செய்தல்.

**கசகர்ணி** – வெருகஞ்செடி; மெருகன் கிழங்கு முதலியவற்றால் வடிக்கும் ஒருவகைத் தைலம்.

**கசகரிகம்** – கக்கரி, முள்வெள்ளரி.

**கசகன்னம்** – காண்க: **கசகர்ணம்.**

**கசகன்னி** – வெருகஞ்செடி.

**கசகுதல்** – பின்வாங்குதல்; ஐயத்தால் தளர்தல்; நெருக்குதல்.

**கசங்கு** – ஈந்து; ஓலை நீக்கிய ஈந்தின் கசங்கிய மட்டை.

**கசங்குதல்** – நிலைகெடுதல்; தளர்தல், இளைத்தல்; குழைதல்; மனம் நோகுதல்; வேலையினால் இளைத்தல்.

**கசட்டம்புல்** – சுக்குநாறிப்புல்.

**கசட்டை** – துவர்ப்பு.

**கசட்டைத்தயிர்** – ஆடைநீக்கின தயிர்.

**கசடன்** – கீழ்மகன்; குற்றம் செய்தவன்.

**கசடு** – குற்றம்; அழுக்கு, மாசு; தழும்பு; ஐயம் திரிபுகளாகிய குற்றங்கள்; வடு; அடிமண்டி; குறைவு.

**கசத்தல்** – கைப்புச் சுவையாதல்; கைத்தல், வெறுப்படைதல்.

**கசதி** – துன்பம், வருத்தம்.

**கசப்பி** – வேம்பு; காசித்தும்பை; பேய்த்தும்பை; மயிற்சிகை; வல்லாரை.

**கசப்பு** – கைப்பு, ஒரு சுவை; வெறுப்பு.

**கசபம்** – கோரை, அறுகு முதலிய சிறுபுல்.

**கசபரீட்சை** – அறுபத்துநான்கு கலையுள் யானை இலக்கணம் அறியும் வித்தை.

**கசபுடம்** – இரண்டு முழக் கன அளவுக்கு ஆயிரம் எருமுட்டை வைத்து எரிக்கும் புடம்; நூறு எரு முட்டை இட்டு எரிக்கும் புடம்; மருந்து புடம் வைப்பதற்கு வெட்டிய பள்ளம்.

**கசம்** – யானை; கயம்; ஓரளவு; தாமரை; தலை மயிர்; இரண்டுமுழ அளவு; கயரோகம்; நீரூற்று; ஆழமான நீர்நிலை; இரும்பு; தாதுப் பொருள்; மாசு.

**கசமடையன்** – பெருமூடன்.

**கசமாது** – ஊமத்தஞ்செடி.

**கசர்** – சிவப்புக் கல்லின் குற்றம்; குறைவு; மீதப் பட்டது.

**கசர்ப்பம்** – மஞ்சள்.

**கசரத்து** – உடற்பயிற்சி.

**கசரை** – காலேயரைக்காற் பலம்.

**கசரோகம்** – கயரோகம், எலும்புருக்கி நோய்.

**கசவம்** – கடுகு.

**கசவிருள்** – பேரிருள்.

**கசவு** – கசா என்னும் செடிவகை.

**கசனை** – ஈரம்; பற்று; உப்புப்பற்று; சூட்டுக்குறி.

**கசா** – செடிவகை.

**கசாக்கிரம்** – மயிர்நுனி; ஒரு சிற்றளவு.

**கசாகூளம்** – தாறுமாறு; கடைப்பட்டோர்; பல சாதிக் கலப்பு; குப்பை.

**கசாது எழுதுதல்** – திருமணப்பதிவு செய்தல்.

**கசாப்பு** – ஆடுமாடுகளைக் கொல்லுதல்; இறைச்சி விற்போன்.

**கசாப்புக்கிடங்கு** – ஆடுமாடுகள் அடிக்கும் இடம்.

**கசாயம்** – கிழாயம், கஷாயம், மருந்துச் சரக் கோடு கொதித்து வற்றிய நீர்.

**கசாலை** – கோக்காலி; சுவர்மேல் ஆரல்; அடுக்களை.

**கசானனன்** – விநாயகன், ஆனைமுகக் கடவுள்.

**கசானா** – கருவூலம், கஜானா, பொக்கிஷசாலை, நிதிச்சாலை.

**கசிதம்** – பதிக்கை; பூச்சு; துடுப்பு; சிறு அகப்பை; ஊறுகை; ஈரமுறுகை; வியர்க்கை; இளகுகை; அழுகை.

**கசிதல்** – நெகிழ்தல்; ஈரமுறுதல்; வியர்த்தல்; உப்பு முதலியன இளகுதல்; அழுதல்; கவலைப் படுதல்.

**கசிவு** – ஊறுகை; ஈரம்; மனநெகிழ்கை; வியர்வை; வருத்தம்.

**கசு** – காண்க: கஃசு.

**கசுகசுப்பு** – ஒட்டு ஈரத்தன்மை.

**கசுகுசெனல்** – மெதுவாகப் பேசுதல், காதுக்குள் மெதுவாகப் பேசும் குறிப்பு.

**கசுமாலர்** – அழுக்குடையோர்; கெட்ட நடத்தை யுடையோர்; போரிடுவோர்.

**கசுமாலி** – அழுக்குடையோள்; சண்டைக்காரி.

**கசூர்** – அசட்டை.

**கசேந்திர ஐசுவரியம்** – பெருஞ்செல்வம்.

**கசேந்திரன்** – இந்திரன் யானையாகிய ஐராவதம்; அரச யானை; சிறந்த யானை; திருமாலால் மீட்கப்பட்ட யானை.

**கசேருகம்** – தமரத்தை; கொட்டி.

**கசை** – பசை; அடிக்கும் சவுக்கு; மயிர்மாட்டி; கவசம்; கடிவாளம்.

**கசைமுறுக்கி** – தட்டான்குறடு; கயிறு திரிப்பவன்.

**கசையடி** – சவுக்கால் அடிக்கும் தண்டனை.

**கசைவளையல்** – பொற்கம்பி வளை.

**கசைவேலை** – பொற்கம்பி வேலை.

**கசைவைத்த புடைவை** – சரிகைக்கரைச் சீலை.

**கஞ்சக்கருவி** – தாளம் முதலிய வெண்கல வாத்தியம்.

**கஞ்சகம்** – கறிவேம்பு; கச்சின் தலைப்பு; முன்றானை; கண்ணிலிடும் ஒரு மருந்து.

**கஞ்சகாரன்** – கன்னான்.

**கஞ்சங்குல்லை** – கஞ்சாங்கோரை; ஒரு பூச்செடி.

**கஞ்சம்** – அப்பவருக்கம்; கஞ்சா; துளசி; வெண் கலம்; கைத்தாளம்; பாண்டம்; தாமரை; நீர்; வஞ்சனை.

**கஞ்சரன்** – சூரியன்; பிரமன்.

**கஞ்சரி** – வாத்தியவகை.

**கஞ்சரீடம்** – வலியான்குருவி.

**கஞ்சல்** – கூளம், குப்பை; பயனற்றது; தாழ்ந்த தரமுள்ள பொருள்.

**கஞ்சவாதம்** – நொண்டி நடக்கச்செய்யும் வாத நோய்.

**கஞ்சன்** – கடும்பற்றுள்ளன், ஒன்றுங் கொடா தவன்; பிரமன்; முடவன்; குறளன்; கண்ண பிரானின் மாமனாகிய கம்சன்.

**கஞ்சனம்** – கரிக்குருவி; கண்ணாடி; கைத்தாளம்.

**கஞ்சனை** – கண்ணாடி; கலசப்பானை; தூப கலசம்; சிறுபானை.

**கஞ்சா** – ஒருவகைச் செடி; கள்; சாராயம்.

**கஞ்சாக்குடுக்கை** – கஞ்சாப்புகை குடிக்கும் கருவி, உக்கா.

**கஞ்சாகம்** – தவிடு; பொடி; மூட்டை.

**கஞ்சாங்கொற்றி** – கனமற்றது; பாலற்றது; பெருமையில்லாதவன்.

**கஞ்சாங்கோரை** – ஒருவகைப் பூண்டு; திருநீற்றுப் பச்சை; நாய்த்துளசி.

**கஞ்சாச்சிலுகை** – காண்க: **கஞ்சாக்குடுக்கை.**

**கஞ்சாஞ்சிகம்** – சேம்பு.

**கஞ்சாப்பிடித்தல்** – கஞ்சாப்புகை குடித்தல்.

**கஞ்சாரி** – கம்சனுக்குப் பகைவனான கண்ணன்.

**கஞ்சி** – சோற்றின் வடிநீர்; அன்னப்பால்; நீர்கலந்த உணவு; கஞ்சிப்பசை; காய்ச்சி நீராய்க் கரைந்த உணவு; காஞ்சிபுரம்.

**கஞ்சிகை** – குதிரைபூட்டிய தேர்; இரத்தினச் சிவிகை, பல்லக்கு; சீலை, ஆடை; இடுதிரை, உருவுதிரை, திரைச்சீலை.

**கஞ்சிகையாள்** – பல்லக்குத் தூக்குவோன்.

**கஞ்சித் தண்ணீர்** – வடிகஞ்சி; நீர்கலந்த உணவு.

**கஞ்சித்தண்ணீர்குடித்தல்** – சாவுச் சடங்குகளுள் ஒன்று.

**கஞ்சித்தெளிவு** – இறுத்த கஞ்சி.

**கஞ்சித்தொட்டி** – ஏழைகளுக்குக் கஞ்சிவார்க்கும் இடம்.

**கஞ்சித்தொந்தி** – செல்வத்தினால் பெருத்த வயிறு.

**கஞ்சிப்பொழுது** – உச்சிவேளை, நடுப்பகல்.

**கஞ்சிரா** – சிறு கைப்பறைவகை, ஒரு வாத்தியம்.

**கஞ்சிவார்த்தல்** – உணவளித்தல்; காப்பாற்றுதல்.

**கஞ்சு** – கம்சன்.

**கஞ்சுகம்** – சட்டை; பாம்புச்சட்டை; சீலை; அதிமதுரம்; சிலந்திக் கோரை; முருங்கைமரம்.

**கஞ்சுகன்** – சட்டையணிந்த வேலையாள்; காவற்காரன்; மெய்காப்பாளன்; வயிரவன்.

**கஞ்சுகி** – மெய்காப்பாளன்; பாம்பு; சட்டை; திரைச்சீலை.

**கஞ்சுளி** – சட்டை; பரதேசியின் பொக்கணம்.

**கஞலுதல்** – நெருங்குதல்; எழுப்புதல்; விளங்குதல்; மிகுதல்; சிறப்படைதல்; சினங்கொள்ளுதல்; சிறிதாதல்.

**கஞற்றுதல்** – நிரப்புதல்; செய்தல்.

**கஞறம்** – கள்.

**கட்கண்** – ஊனக்கண்; அங்கங்கே.

**கட்கண்டு** – கண் இமையிற் கட்டி.

**கட்கத்தம்பம்** – அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று, வாள் வீச்சை வலியறச் செய்தல்.

**கட்கம்** – கக்கம், அக்குள்; வாள்; கத்தி; காண்டா மிருகத்தின் கொம்பு.

**கட்கா** – இசைப்பாவகை.

**கட்காஞ்சி** – அரசன் வீரர்கட்கு உண்ண மதுவளிக்கும் புறத்துறை.

**கட்காதாரம்** – வாளுறை.

**கட்கிலி** – கண்ணுக்குப் புலப்படாதவன்.

**கட்குத்திக் கள்வன்** – விழித்திருக்கும்போதே ஏமாற்றுபவன்.

**கட்சபுடம்** – வழி.

**கட்சம்** – எண்ணெய் மண்டி; மந்திர சாத்திரம்; ஒரு நூல்; சங்கபாடாணம்.

**கட்சாந்திரம்** – அந்தப்புரம்; வீட்டின் ஒரு பகுதி.

**கட்சாபடம்** – கோவணம்.

**கட்சி** – காடு; புகலிடம்; பறவைக்கூடு; மக்கள் துயிலிடம்; பக்கம்; சார்பு; முனையிடம், போர்க்களம்; பிரிவு; வழி; உடல்; அரசியல் கட்சி.

**கட்சிக்காரன்** – விவாதப்பட்ட பிரிவினன்; வழக்கில் வாதி அல்லது பிரதிவாதி.

**கட்சிகட்டுதல்** – ஒன்றன்பொருட்டு முரணி நிற்றல்.

**கட்சிமாறி** – நிலைமாறுபவன், தடுமாற்றமுள்ளவன்.

**கட்சியார்** – ஒரு சாரார்; கட்சிக்காரர்.

**கட்செவி** – பாம்பு; ஆயிலிய நட்சத்திரம்.

**கட்டகம்** – காந்தக்கல்; சித்திர வேலைப்பாடு.

**கட்டங்கம்** – கட்டுவாங்கம், மழுவாயுதம்; மாத்திரைக்கோல், தண்டு.

**கட்டங்கன்** – மழுவாயுதம்கொண்ட சிவன்.

**கட்டசீவி** – ஆயக்காரன்; ஆயத்துறைக் காவற்காரன்; அரிதில் உயிர்வாழ்பவன்.

**கட்டடங்க** – முழுதும்.

**கட்டடம்** – வீடு முதலிய கட்டடம்; புத்தகக் கட்டடம்; பொன்னில் கற்பதித்துச் செய்யும் வேலைப்பாடு.

**கட்டடித்தல்** – அறுத்த நெற்கதிர்களை அடித்தல்.

**கட்டணம்** – கட்டடம்; செலுத்தும் பணம், கட்டுந்தொகை; கட்டில்; பல்லக்குப் பாடை.

**கட்டதரம்** – மிகக் கொடியது.

**கட்டப்படுதல்** – சம்பந்தத்திற்குள்ளாதல்; பிணிக்கப்படுதல்; வருத்தப்படுதல்.

**கட்டம்** – துன்பம், பீடை; மலம்; காடு; கவறாட்டத்து அறை; நீராடுந்துறை; துறைமுகம்; மோவாய்; பகுதி; கதாசந்தர்ப்பம்.

**கட்டம்பலம்** – வரி வசூலிக்கும் உத்தியோகம்.

**கட்டமுது** – கட்டுச்சோறு.

**கட்டர்** – துன்பம் அடைவோர்.

**கட்டரம்** – சேறு.

**கட்டல்** – களை பிடுங்குதல்; களவு; பிடுங்கல்; உடுத்தல்.

**கட்டவிழ்தல்** – முறுக்கு நெகிழ்தல்; ஒற்றுமை நீங்குதல்.

**கட்டழகி** – பேரழகுள்ளவள்.

**கட்டழகு** – பேரழகு.
**கட்டழல்** – மிகுந்த நெருப்பு, பெருநெருப்பு.
**கட்டழித்தல்** – காவலைக் கெடுத்தல்; நிலை கெடுத்தல், நெறியழித்தல்; முற்றுமழித்தல்.
**கட்டழிதல்** – நெறிதப்புதல், நிலைகெடுதல்; கட்டுக்குலைதல்.
**கட்டளை** – அளவு; செங்கலச்சு; உருவங்கள் வார்க்கும் கருவி; ஒன்றைப்போல அமைக்கும் உரு; உவமை; துலாம்; நிறையறி கருவி; துலாராசி; விதி; முறை; தரம்; கோயில் தருமம்; உரைகல்; ஒழுங்கு; எல்லை; குதிரைக்குப் பூட்டும் கடிவாளம் முதலியன; ஆணை; கட்டுப்பாடு; சமய மூலதத்துவம் உணர்த்தும் நூல்.
**கட்டளைக்கல்** – பொன்னை உரைத்து மாற்றறியப் பயன்படும் உரைகல்; நிறைகல், படிக்கல்.
**கட்டளைக்கலி** – எல்லா அடிகளும் ஒற்று நீங்க எழுத்து ஒத்துவரும் கலிப்பா.
**கட்டளைக்கலித்துறை** – கலிப்பா இனவகை.
**கட்டளைக்கலிப்பா** – கலிப்பா இனத்துள் ஒன்று.
**கட்டளைக்கோல்** – நியாயப் பிரமாணம்.
**கட்டளைகேட்டல், கட்டளைச்சட்டம்** – நீதிமன்றத் தீர்ப்பை நிறைவேற்ற இசைவு கேட்டல்.
**கட்டளைச்சுவாமி, கட்டளைத்தம்பிரான்** – சைவ மடத்தைச்சார்ந்த கோயில்களை மேற்பார்க்கும் சைவத்துறவி.
**கட்டளையடி** – எழுத்துக் கணக்கில் அமைந்த செய்யுளடி.
**கட்டளையாசிரியம்** – எல்லா அடிகளும் ஒற்று நீங்க எழுத்து ஒத்துவரும் அகவல்.
**கட்டளையிடுதல்** – பணித்தல், ஆணையிடல்.
**கட்டளைவஞ்சி** – எல்லா அடிகளும் ஒற்று நீங்க எழுத்து ஒத்துவரும் வஞ்சிப்பா.
**கட்டளை வலித்தல்** – அவரவர் தன்மையை உறுதிப்படுத்துதல்.
**கட்டனை மரம்** – திமிசுக்கட்டை.
**கட்டாக்காலி** – பட்டிமாடு.
**கட்டாகட்டி** – விடாத்தன்மை, விடாப்பிடி.
**கட்டாகட்டிமை** – மிகுந்த உலோபத்தன்மை; மிகுந்த கட்டுப்பாடு.
**கட்டாஞ்சி** – முள்வேலமரம்.
**கட்டாட்டம்** – பல்லாங்குழி ஆட்டத்தில் ஒருவகை.
**கட்டாடி** – குறிசொல்வோன்; வண்ணான்; வண்ணார் தலைவன்.
**கட்டாடியார்** – கோயிற் பூசாரி.
**கட்டாண்மை** – பேராண்மை, பெருவீரம்.
**கட்டாணி** – உலோபி; வல்லவன், பலசாலி; கடைப்பூட்டாணி; கயவன்; பேராசைக்காரன்.
**கட்டாந்தரை** – வெட்டாந்தரை, வெறுந்தரை; வறண்டு இறுகிய தரை.
**கட்டாப்பு** – வேலியடைத்த நிலம், காவல் நிலம்.
**கட்டாம்பாரை** – கடல்மீன்வகை.
**கட்டாயம்** – வலாற்காரம், பலாத்காரம்; நெருக்கம்; கட்டுப்பாடு; அவசியம்; ஒரு பழைய வரி.
**கட்டார்ச்சிதம்** – வருந்தித் தேடிய பொருள்.
**கட்டாரம்** – குத்துவாள், கட்டாரி.
**கட்டாரி** – குத்துவாள்; சூலம்; எழுத்தாணிப் பூண்டு.
**கட்டாவணி** – கதிர் அறுப்பு.
**கட்டான்** – கட்டங்களுள் காய் வைத்து ஆடும் ஒருவகை விளையாட்டு.
**கட்டி** – இறுகின பொருள்; மண்கட்டி முதலியன; கருப்பண்டம்; சருக்கரைக் கட்டி; கருப்புக் கட்டி; கற்கண்டு; திரளை; புண்கட்டி; பிளவை; பொன்; திரண்ட மாத்திரளை; வெல்லம்; ஒரு புள்; அகமகிழ்ச்சி.
**கட்டிக்காத்தல்** – கவனித்துப் பாதுகாத்தல்; விடாது அணுகிக் கீழ்ப்படிந்து நடத்தல்.
**கட்டிக்கொடுத்தல்** – திருமணம் செய்து கொடுத்தல்; பொதிந்து தருதல்; ஈடுசெய்தல்; மிகவும் உதவுதல்.
**கட்டிக்கொள்ளுதல்** – அடிப்படுத்துதல்; தழுவுதல்; திருமணஞ் செய்துகொள்ளுதல்; வசமாக்குதல்; ஏற்றுக்கொள்ளுதல்; உடுத்தல்; பறித்தல்; இலஞ்சங்கொடுத்து வசப்படுத்தல்; சமாதானஞ் செய்தல்.
**கட்டிச்சுருட்டுதல்** – பொருளைச் சுருட்டிக் கட்டுதல்; கவர்ந்த பொருளைத் திரட்டுதல்; செய்தொழிலை நிறுத்துதல்.
**கட்டிப்பிடித்தல்** – இறுகத் தழுவுதல்; செலவை மிகச் சுருக்குதல்.
**கட்டிப்புகுதல்** – கைம்பெண் மறுமணம் செய்து கொள்ளுதல்.
**கட்டிப்புகுந்தவள்** – மறுமணம் செய்துகொண்டவள்.
**கட்டிப்புழுக்கு** – வெல்லத்துடன்கூடிய அவரை முதலியவற்றின் புழுக்கு.
**கட்டிபடுதல்** – கட்டியாதல்.
**கட்டிமேய்த்தல்** – கால்நடைகளைக் கட்டி மேயச் செய்தல்; அடக்கி நடத்துதல்.
**கட்டிமை** – உலோபம், பிசுனத்தன்மை; கட்டுப்பாடு.
**கட்டியக்காரன்** – புகழ்வோன்; அரசனின் சீர்த்தியைப் புகழ்வோன்; கட்டியம் கூறிப் புகழ்வோன்; கூத்தில் வரும் கோமாளி.
**கட்டியங்காரன்** – கட்டியக்காரன்; புகழ்வோன்; சீவகன் தந்தையாகிய சச்சந்தனுக்கு அமைச்சன்.

**கட்டியங்கூறுதல்** – புகழ்சொல்லுதல்.
**கட்டியம்** – புகழ்மொழி; அரசர் முதலியோரைக் குறித்துச் சொல்லும் புகழ்த் தொடர்; ஒரு வகைக் கூத்து.
**கட்டியன்** – காண்க: கட்டியக்காரன்.
**கட்டில்** – மஞ்சம்; அரசுகட்டில், அரியணை; பாடை.
**கட்டிலேற்றுதல்** – புது மணமக்களை மணவறைக் கட்டிலில் பள்ளிகொள்ள வைத்தல்.
**கட்டிலேறுதல்** – அரியணையேறுதல்; மணவறைக் கட்டிலில் பள்ளிகொள்ளுதல்.
**கட்டிவராகன்** – பொன்நாணயம்.
**கட்டிவருதல்** – ஊதியங் கூடிவருதல்.
**கட்டிவிடுதல்** – செலுத்துதல்; விலக்கிவைத்தல்; பொய்ச் செய்தியைப் பரப்புதல்.
**கட்டிளமை** – மிக்க இளமை; காளைப் பருவம்.
**கட்டு** – உறுதி; காவல்; அரண்; ஆணை; உறவின் கட்டு; தடைக்கட்டு; யாக்கை; மூட்டை; குறி; வரம்பு, கட்டுப்பாடு; மிகுதி; மலைப்பக்கம்; பொய்யுரை; வளைப்பு; திருமணப்பற்று; வீட்டின் பகுதி.
**கட்டு** (வி) – பந்தி, தளை, பிணி; வீடு முதலியன கட்டு; தழுவு; மணஞ்செய்; தடைகட்டு; கதைகட்டு; சரக்குக்கட்டு; அடக்கு; இறுகு; மூடு.
**கட்டுக்கட்டுதல்** – மூட்டை முதலியன கட்டுதல்; பொய்யாகப் புனைந்துரைத்தல்; புண்ணுக்கு மருந்து வைத்துக் கட்டுதல்.
**கட்டுக்கடத்தல்** – வரம்பு கடத்தல்.
**கட்டுக்கடுக்கன்** – மணி பதித்த கடுக்கன்.
**கட்டுக்கதை** – பொய்க் கதை, கற்பனைக் கதை.
**கட்டுக்கரப்பான்** – சிறு பிள்ளைக்கு வரும் ஒரு வகைக் கரப்பான் நோய்.
**கட்டுக்கரை** – சரக்கு இறக்கும் துறை.
**கட்டுக்கழுத்தி** – சுமங்கலி, மங்கலியம் அணிந்தவள்; மனைவி.
**கட்டுக்காடை** – நீர்ப்பறவைவகை; பாற்குருவி.
**கட்டுக்காரன்** – குறிசொல்வோன்; கட்டியங் கூறுவோன்.
**கட்டுக்காவல்** – கட்டான காவல், கடுங்காவல்.
**கட்டுக்கிடை, கட்டுக்கிடையன்** – நாட்பட்ட சரக்கு; தேக்கம்; நெடுநாளாய்க் கிடக்கிற பொருள்; ஓடாமல் தேங்கிய நீர்.
**கட்டுக்குத்தகை** – உத்தேசமாய் ஒரு தொகைக்குக் கொடுக்குங் குத்தகை; காலம் நீட்டித்து விடும் மொத்தக் குத்தகை; விளைவுக்காகக் கொடுக்கும் மொத்தத் தொகை; தோணிக் குத்தகை.
**கட்டுக்கூட்டு** – கட்டுக்கதை; எழுத்து மாறியெழுதல்.
**கட்டுக்கொடி** – ஆடுமாடுகளைக் கட்டும் கயிறு; ஒரு பூண்டு.
**கட்டுக்கோப்பு** – அமைப்பு; கட்டடம்; புனைந்துரை; மேற்கூரை; காவல் உள்ள பகுதி.
**கட்டுங்காவலுமாதல்** – பெருங்காவலுடையதாதல்.
**கட்டுச்சரக்கு** – மொத்தமாக விற்கப்படும் பண்டம்; நாட்பட்ட பொருள்.
**கட்டுச்சாட்சி** – பொய்ச்சாட்சி.
**கட்டுச்சொல்** – பொய்யுரை.
**கட்டுச்சொல்லுதல்** – குறிசொல்லுதல்.
**கட்டுச்சோறு** – வழிப்பயணத்துக்குக் கொண்டு செல்லும் சோறு.
**கட்டுசூலை** – சூலைக்கட்டு; குதிரை நோய் வகை.
**கட்டுடைத்தல்** – தபால் கட்டிய பையை உடைத்தல்; கருத்தை வெளிப்படுத்துதல்; கரைகடத்தல்; அணையுடைத்தல்; புண்ணுடைதல்.
**கட்டுடைதல்** – உடல் தளர்வுறுதல்; பூமுறுக்கு அவிழ்தல்.
**கட்டுண்கை, கட்டுண்ணல்** – கட்டுப்படுதல்.
**கட்டுண்ணி** – கட்டுப்பட்டுப் பேசுபவன்.
**கட்டுத்தறி** – விலங்குகளைக் கட்டும் தூண்; யானை, மாடு முதலியன கட்டும் தூண்.
**கட்டுத்திரவியம்** – பொற்கிழி.
**கட்டுத்தோணி** – கடற்கரையருகில் ஆழமில்லா நீரில் செல்லவிடும் ஒருவகைப் படகு.
**கட்டுதல்** – பிணித்தல்; அமைத்தல்; செலுத்துதல்; கற்பித்துச் சொல்லுதல்; சேர்த்தல்; தடுத்தல்; இயற்றுதல்; போலுதல்; இறுகுதல்; வெல்லுதல்; நிமித்தமாதல்; அடக்குதல்; எழுப்புதல்; தழுவுதல்; திருமணம் பண்ணுதல்; பிடுங்குதல்; கதை கட்டல்; வீடு முதலியன கட்டல்; உரை கட்டுதல்; களவு செய்தல்; உகுத்தல்; சூடுதல்; வசப்படுத்தல்; முடித்தல்.
**கட்டுதிட்டம்** – சட்டதிட்டம்; ஒழுங்கு, வரையறை.
**கட்டுப்படகு** – கட்டுத்தோணி.
**கட்டுப்படி** – இழப்பு இல்லாமல் சிறிது இலாபகரமாக அமைதல்.
**கட்டுப்படுத்தல்** – அடக்கிக்கொள்ளுதல்; எல்லைப்படுத்துதல்; கட்டுவித்தியினிடம் குறிகேட்டல்.
**கட்டுப்படுதல்** – கட்டுக்குள் அடங்குதல்; மந்திர முதலியவற்றாற் கட்டுப்படல்; அடங்கியிருத்தல்; தடைபடுதல்.

**கட்டுப்பண்ணுதல்** – கட்டுப்பாடு பண்ணுதல்; நிபந்தனை விதித்தல்.
**கட்டுப்பவளம்** – பவளத்தாலான கையணி.
**கட்டுப்பனை** – பதநீருக்கு என்று பாளை சீவிக் கட்டப்படும் பனை.
**கட்டுப்பாக்கு** – வாய்ச் சூடுபடத் துணியாலிடும் ஒற்றடம்.
**கட்டுப்பாடு** – கட்டுப்படுகை; பந்துக்கட்டு, சமூக ஏற்பாடு; கட்சி நிபந்தனை; இணக்கம்; ஆணை; காவல்; ஒன்றுபடுதல்; ஒப்பந்தம்.
**கட்டுப்பாளை** – காண்க: **கட்டுப்பனை.**
**கட்டுப்புணை** – காண்க: **கட்டுமரம்.**
**கட்டுப்பூட்டு** – அணிகலன்.
**கட்டுப்பெட்டி** – ஒருவகைப் பெட்டி; பிரம்பு, ஓலை, மூங்கிற்பற்றை முதலியவற்றால் முடைந்த பெட்டி; நாகரிகமறியாத தன்மை.
**கட்டுபடி** – காண்க: **கட்டுப்படி.**
**கட்டுமட்டு** – அளவாய்ச் செலவிடுகை; ஒத்த தன்மை; சொல் அடக்கம்; திறமை.
**கட்டுமரம்** – மிதவை; மீன் பிடிக்க மரங்களில் பிணிக்கப்படும் மிதவை.
**கட்டுமலை** – செய்குன்று.
**கட்டு மா** – ஒட்டுமாமரம்.
**கட்டுமாந்தம்** – மலச்சிக்கலால் குழந்தைகளுக்கு வரும் நோய்.
**கட்டுமானம்** – கட்டிப் பேசும் பொய்; வீடு முதலியன கட்டுகை; நகைகளில் மணி பதிக்கும் வேலை.
**கட்டுமுகனை** – அதிகாரம்; மேல்விசாரணை; கண்டிப்பு; அடக்கம்; சிக்கனம்.
**கட்டுமுட்டு** – அமைதி; கட்டுமட்டு; தேகக்கட்டு.
**கட்டுமை** – கட்டுப்பாடு.
**கட்டுரை** – வாக்குறுதி; உறுதிச்சொல்; பொருள் நிரம்பிய சொல்; பழமொழி; புனைந்துரை; பொய்; வியாசம், ஒரு பொருள்பற்றி எழுதும் உரைநடை; விளங்கச் சொல்லல்; தொகுப்பு உரை.
**கட்டுரைத்தல்** – உறுதிப்படச் சொல்லுதல்; தெளிவாகச் சொல்லுதல்.
**கட்டுரைப்போலி** – ஒருவகை உரைநடை.
**கட்டுவடம்** – மணிமாலை, இரத்தினவடம்.
**கட்டுவம்(ன்)** – மாதர் காலணியுள் ஒன்று; மாதர் காலின் நான்காம் விரலில் அணியும் காலாழி.
**கட்டுவாங்கம்** – கட்டங்கம், மழு; யோகியர் தண்டு; தடி; ஒருவகைத் தைலம்.
**கட்டுவாங்கன்** – சிவன்; விநாயகன்.
**கட்டுவாயில்** – மேல்வளைவு இட்டுக் கட்டப்படும் வாயில்.
**கட்டுவார்த்தை** – பொய்யாகக் கற்பித்த பேச்சு.
**கட்டுவிச்சி** – குறிகாரி, குறிசொல்பவள்.
**கட்டுவிடல்** – பலக்குறைவாதல்; மொட்டு அவிழ்தல்.
**கட்டுவிடுதல்** – கட்டவிழ்தல்; உடற்பொருத்து விடுதல்; உடல் பலவீனப்படுதல்.
**கட்டுவித்தி** – காண்க : **கட்டுவிச்சி.**
**கட்டுவிரியன்** – விரியன்பாம்புவகை.
**கட்டுவை** – கட்டில்.
**கட்டுறவி** – கட்டெறும்பு.
**கட்டூண்** – களவுசெய்து உண்கை; களவுசெய்து வாழ்தல்; கட்டுச்சோறு.
**கட்டூர்** – பாசறை.
**கட்டெலி** – கடித்தால் இறப்புண்டாக்கும் எலிவகை.
**கட்டெறும்பு** – எறும்புவகை, பெரிய கறுப் பெறும்பு.
**கட்டேறுதல்** – ஆவேசம் வருதல்.
**கட்டை** – குற்றி; கடாவு முளை; விறகு; உடல்; பிணம்; மரக்கட்டை; குட்டை, நீளங் குறைந்தது; தேய்ந்தது; குறைவு; மயிர்க் கட்டை; திப்பி; கழற்சிக்காய்; ஒருவகை இசைக்குற்றம்; ஆர்மோனியத்தின் இசை யெழுப்புங் கருவி; திண்ணையுடன் சேரக்கூடிய அணை.
**கட்டைக்கரி** – அடுப்புக்கரி.
**கட்டைக்காப்பு** – செப்புக்கட்டைமேல் பொன் தகடு வேய்ந்த காப்பு.
**கட்டைக்காரை** – முட்செடிவகை.
**கட்டைக்காலி** – குறுகிய கால் உள்ளவன்(ள்); குறுகிய காலுள்ளது; கரடி.
**கட்டைக்குரல்** – அமர்ந்த குரல், தடித்த குரல்.
**கட்டைக்குருத்து** – வாழையின் ஈற்றிலை, கண்ணாடியிலை.
**கட்டைக்கொக்கான்** – மகளிர் விளையாட்டு வகை.
**கட்டைகட்டுதல்** – கொண்டிப் பசுவுக்குத் தடி கட்டுதல்; மணம் புரிவித்து வாழவைத்தல்.
**கட்டைச்சுவர்** – கைப்பிடிச்சுவர்; சிறுசுவர்.
**கட்டைப்பயிர்** – முதிர்ந்த பயிர்.
**கட்டைப்பாரை** – காண்க: **கடப்பாரை.**
**கட்டைப்புத்தி** – தடிப்புத்தி, மந்தபுத்தி.
**கட்டைப்பொன்** – மட்டமான பொன்.
**கட்டைபோடுதல்** – தடைசெய்தல்; மூர்ச்சித்தல்; திமிசு போடுதல்; சாதல்.
**கட்டையவிழ்த்தல்** – பொய்கூறத் தொடங்குதல்.
**கட்டையன்** – குள்ளன்.
**கட்டைவண்டி** – வில் இல்லாத வண்டி; பார வண்டி.
**கட்டைவாக்கு** – மணியின் மங்கலொளி.

**கட்டைவிரல்** – பெருவிரல்.
**கட்டோசை** – பேரொலி.
**கட்டோடு** – முழுதும்.
**கட்டோர்** – திருடர்.
**கட்படாம்** – யானைமுகத் தணியாடை, யானை முகத்து அணியும் முகமூடி.
**கட்பலம்** – தான்றி; தேக்கு.
**கட்புலம்(ன்)** – கண்ணாகிய புலன், பார்வை.
**கட்போன்** – களவுசெய்வோன்.
**கடக்காரி** – கடன்காரி; தண்டச் செலவுக்குக் காரணமானவள்.
**கடக்கை** – வாத்தியவகை.
**கடகடத்தல்** – கடகடென்றொலித்தல்; நெகிழ் வடைதல்; ஆட்டங்கொடுத்தல்.
**கடகடவெனல், கடகடெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; விரைவுக் குறிப்பு.
**கடகத்தண்டு** – சிவிகை.
**கடகநாதன்** – படைத்தலைவன்.
**கடகம்** – வட்டம்; கங்கணம்; மதில்; படை; படைவீடு; கேடகம்; மலைப்பக்கம்; கற்கடக ராசி; நாட்டியத்தில் கைகாட்டும் வகை; பனையோலைப் பெட்டி; ஆடி; நண்டு; யானைத்திரள்.
**கடகன்** – கடகராசியிற் பிறந்தவன்; காரியத் தைக் கைகூடச் செய்பவன்; வல்லவன்; நடுவன்.
**கடகாவருத்தம்** – இரண்டு கையும் கடகமாய் மணிக்கட்டுக்கு ஏற இயைந்து நிற்கும் இணைக்கை.
**கடகு** – கேடகம்; பாதுகாப்பு.
**கடங்கரம்** – உமி; பதர்; வைக்கோல்.
**கடசடக நியாயம்** – ஒன்று மன்றொன்றிலிருந்து காரியப்படுவதை விளக்கும் நெறி.
**கடத்தல்** – கடந்துபோதல்; தாண்டல்; நடத்தல்; மேற்படுதல்; மீறுதல்; அளத்தல்; நீங்குதல்; வெல்லுதல்; நாட்போக்கல்; அழித்தல்; கழிதல்; வஞ்சியாது எதிர்நிற்றல்; போர் செய்தல்; ஓர் ஓசையான தன்மை நீங்கிப் பல ஓசையாய் வருதல்.
**கடத்தி** – கழப்புகிறவன், கழப்புணி.
**கடத்து** – தோணி.
**கடத்து (வி)** – செலுத்து; விலக்கு; தவணை சொல்; நெடுக விடு; நாட்போக்கு.
**கடத்துதல்** – கடக்கச் செய்தல்; செலுத்துதல்; காலம் போக்குதல்; கழப்புதல்; நாட் போக்குதல்; நெடுகவிடுத்தல்; வேறிடம் கொண்டுசெல்லல்.
**கடதாசி** – காகிதம்; கடிதம்; விளையாடும் சீட்டு.
**கடதீபம்** – குடவிளக்கு.
**கடந்தேறுதல்** – கடந்துபோதல்; இடையூறு கடத்தல்; நற்கதி அடைதல்.
**கடந்தை** – திருப்பெண்ணாகடம் என்னும் ஊர்; கொட்டும் குளவிவகையுள் ஒன்று; பெருந்தேனீ.
**கடப்பநெல்** – கருங்குறுவை நெல், குறுவைவகை.
**கடப்பழி** – ஒழுக்கமில்லாதவன்; ஈகையில் லாதவன்.
**கடப்பாட்டாளன்** – கடமையறிந்து அதனைச் செய்பவன்; ஒப்புரவாளன்.
**கடப்பாடு** – கடமை; முறைமை; கொடை; ஒப்புரவு; அதிகப்படுதல்.
**கடப்பாரை** – இருப்புப்பாரை, இரும்பினாலாகிய ஓர் ஆயுதம்.
**கடப்பு** – கடக்கை; இடுக்குமரம்; மிகுதியானது; கருங்குறுவை நெல்.
**கடப்புக்கால்** – வளைந்த கால்; ஊனமுள்ள கால்; தொழுவம் முதலியவற்றில் மாடுகள் புகாமல் தடுப்பதற்கு உழலை இழுத்துப் போடும்படி துளையிட்டு நிறுத்தியிருக்கும் மரம்.
**கடபடமெனல்** – ஒலி வேறுபாட்டினால் மருட்டிப் பேசுதற் குறிப்பு.
**கடம்** – கடமை; உடல்; காடு; துன்பமான வழி; தோட்டம், குடம்; வாள்; கயிறு; யானை மதம்; யானைக் கவுள்; சுடுகாடு; கடன்; குடமுழா, கடவாத்தியம்; காணிக்கை; அருநெறி; மலைப்பக்கம், மலைச்சாரல்; தெய்வக்கடன்; முறைமை, நீதி.
**கடம்பகோரக நியாயம்** – கடப்ப மரத்தின் அரும்புகள் ஒரே காலத்திற் பூப்பதுபோலப் பல செய்திகளும் ஒரே காலத்தில் நிகழ்வதைக் குறிக்கும் நியாயம்.
**கடம்படுதல்** – நேர்ந்துகொள்ளுதல்; கோபங் கொள்ளுதல்.
**கடம்பம்** – கடப்பமரம்; வெண்கடம்பு; வாலுளுவை.
**கடம்பல்** – குமிழமரம்.
**கடம்பவனம்** – மதுரை.
**கடம்பன்** – குமாரக்கடவுள், முருகன்; ஒரு பழங்குடி, முரடன்.
**கடம்பி** – கெட்டவள்; வேட்டுவப்பெண்.
**கடம்பு** – கடம்புப்பால், கடும்பு, கன்றை ஈன்றதும் சுரக்கும் பால்; கடப்பமரம்; தீங்கு.
**கடம்பை** – குளவிவகை; கடமா, ஒரு காட்டு விலங்கு; தென்னைநார்; கடம்பூர்.
**கடமணை** – தேர் அல்லது வண்டியின் முன்னுறுப்பு.
**கடமா** – காட்டுப்பசு; மதயானை.
**கடமாதம்** – மாசி மாதம்.

**கடமான்** – காண்க : **கடமா.**
**கடமுடெனல்** – வயிறிரைதல்; ஒலிக்குறிப்பு.
**கடமுனி** – அகத்தியர்.
**கடமை** – கடப்பாடு; ஒவ்வொருவருக்கும் உரிய பணி; முறை; கடன்; தகுதி; குடிகள் அரசர்க்குச் செய்யும் உரிமை; காட்டுப்பசு; ஒருவகை மான்; பெண்ணாடு; குடியிறை.
**கடமைக்கால்** – அரசினரால் ஏற்படுத்தப்பெற்ற மரக்கால்.
**கடயம்** – அத்தகடகம்; இந்திராணி ஆடும் கூத்து.
**கடரி** – மரமஞ்சள்; குச்சிமஞ்சள், அரிசனம்.
**கடல்** – சமுத்திரம்; ஒரு பேரெண்; இராக சின்னத்துள் ஒன்று; சதயநாள்; மிகுதி.
**கடல்கட்டி** – வலைஞன்; நீர் தடுப்போன்; கடல் வாழ் உயிர்கள்; தீங்கு செய்யாமல் மந்திரத்தால் கட்டுவோன்.
**கடல்கலக்கி** – பேய்முசுட்டைக்கொடி.
**கடல்கோத்தல்** – கடல் பொங்கி எங்கும் பெருகுதல்.
**கடல்நாய்** – விலங்குவகை.
**கடல்படுபொருள்**– கடலில் உண்டாகும் பொருள்கள் : உப்பு, பவளம், முத்து, சங்கு, ஓர்க்கோலை முதலியன.
**கடல்முனை** – கடலுள் நீண்டு கூர்த்த முனை போல் உள்ள நிலப்பகுதி.
**கடல்வண்டு** – குடைவண்டு.
**கடல்வண்ணன்** – திருமால்; ஐயனார்.
**கடல்வாய்க்கால்** – உப்பங்கழி.
**கடல்வாழைக்காய்** – மீன்.
**கடல்விராஞ்சி** – செடிவகை.
**கடல்விளையமுதம்** – கடல்படு பொருள், உப்பு.
**கடல்விறால்** – பெரிய கடல்மீன்வகை.
**கடலகம்** – ஊர்க்குருவி; ஆமணக்கு; பூமி; கடற்கரை இல்லம்.
**கடலஞ்சிகம்** – தருப்பை.
**கடலட்டை** – அட்டைவகை.
**கடலடக்கி** – கடல்கலக்கி; பேய்முசுட்டை.
**கடலடம்பு** – ஒருவகை அடப்பங்கொடி.
**கடலடி** – இலவங்கம்.
**கடலடைத்தான்** – அபின்; கஞ்சா.
**கடலமிர்து** – காண்க: **கடல்விளையமுதம்.**
**கடலர்** – நெய்தல்நில மக்கள்.
**கடலாடி** – நாயுருவி; ஓர் ஊர்.
**கடலாத்தி** – பாதிரி.
**கடலாமணக்கு** – காட்டாமணக்கு.
**கடலாமை** – ஆமைவகை.
**கடலி, கடலிப்பூ** } – பூமருது.
**கடலிற்குருவி** – காண்க: **கடற்குருவி.**
**கடலிறைஞ்சி** – கடற்கரை மரவகை.
**கடலிறைவன்** – வருணன்.
**கடலுடும்பு** – கடல்மீன்வகை.
**கடலுப்பு** – கறியுப்பு.
**கடலுராய்ஞ்சி** – கடற்பறவைவகை.
**கடலெடுத்தல்** – கடல் ஏற்றம், கடல்நீர் மிகுகை.
**கடலெல்லை** – உலகம்.
**கடலெலி** – ஒரு மீன்வகை.
**கடலெள்** – ஒருவகை எள்ளு.
**கடலை** – ஒருவகைப் பயறு, ஒரு தவசம், நவதானியத்துள் ஒன்று; சிறு மரவகை.
**கடலைக்காய், கடலைக்கொட்டை** } – நிலக்கடலை.
**கடலைப்பட்டாணி** – பட்டாணிக் கடலை; புடைவைவகை.
**கடலைப்பணியாரம்** – கடலை மாவாலான காரமில்லாத பணியாரவகை; பருப்புத் தேங்காய் என்னும் பணியாரம்.
**கடலைமணி** – கடலை வித்துப்போலும் பொன் மணிகளாலான கழுத்தணிவகை.
**கடலோசை** – கடல் முழக்கம்; வெற்றோசை, வீண் ஆரவாரம்.
**கடலோடி** – கடற்பயணி, கடற்பயணக்காரன்.
**கடலோடுதல்** – கடலிற் பயணம் செய்தல்.
**கடவது** – செய்யவேண்டுவது.
**கடவன்** – கடமைப்பட்டவன்; தலைவன்; கடன் கொடுத்தவன்.
**கடவாத்தியம்** – குடவாத்தியம், இசைக்கருவியாகப் பயன்படுத்தும் மட்குடம்.
**கடவான்** – துளை; செய்வரப்பில் கழிவுநீர் செல்லுதற்கு வெட்டப்பட்ட நீர்மடை.
**கடவு** – தணக்குமரம்; வழி; எருமைக்கடா; ஆட்டுக்கடா; பக்கம்.
**கடவு (வி)** – செலுத்து; முடுக்கு; கேள்.
**கடவுட்கணிகை** – தேவருலகத்து ஆடல்மகள்.
**கடவுட்சடை** – வரிக்கூத்துவகை.
**கடவுட்டீ** – ஊழித் தீ.
**கடவுட்பணி** – ஆதிசேடன்; கடவுள் ஊழியம், தேவர் தொண்டு.
**கடவுட்பள்ளி** – பௌத்தர் திருக்கோயில், பௌத்த சைத்தியம்.
**கடவுட்பொறையாட்டி** – தேவராட்டி.
**கடவுண்மங்கலம்** – தெய்வத்தை நிலைநிறுத்துதல், தெய்வப் பிரதிட்டை.
**கடவுண்மண்டலம்** – சூரியன், கதிரவன்.
**கடவுண்மை** – கடவுள் தன்மை, தெய்வத் தன்மை.
**கடவுணதி** – கங்கையாறு.

**கடவுதல்** – செலுத்துதல்; முடுக்குதல்; வினாவுதல், கேட்டல்; தகுதியாதல்.
**கடவுநர்** – செலுத்துவோர்.
**கடவுள்** – இறைவன்; வானவன்; முனிவன்; குரு; நன்மை; மேன்மை; தெய்வத்தன்மை.
**கடவுள்எழுதுதல்** – தெய்வ வடிவைச் சமைத்தல்.
**கடவுள்தாரம்** – தேவதாரு மரம்.
**கடவுள்வாழ்த்து** – தெய்வ வணக்கம்; மும்மூர்த்திகளுள் ஒருவரை உயர்த்திச் சொல்லும் புறத்துறை.
**கடவுள்வேள்வி** – தேவயாகம், தேவர்பொருட்டு ஓமத்தீயில் செய்யும் வேள்வி.
**கடவுள(ளா)ர்** – தேவர், தேவகணத்தார்.
**கடவை** – கடக்கை; வழி; வாயில்; ஏணி; கடப்புமரம்; தணக்குமரம்; குற்றம்.
**கடவைப்படுதல்** – நீங்குதல்; காணாமற்போதல்.
**கடற்கரை** – கடலருகு, கடல் ஓரம், கடலின் எல்லை.
**கடற்காக்கை** – கடற்காகம் என்னும் பறவை; கடலிறஞ்சி மரம்.
**கடற்காளான்** – கடலின் ஒருவகைப் பாசி.
**கடற்காற்று** – கடலினின்று நிலத்தை நோக்கி வீசும் காற்று.
**கடற்கிடந்தோன்** – கடலில் பள்ளிகொண்டிருக்கும் திருமால்.
**கடற்குதிரை** – ஒரு மீன்வகை.
**கடற்குருவி** – காண்க: **கல்லுப்பு.**
**கடற்கொஞ்சி** – ஒரு மரவகை, சீமைக்கொஞ்சி.
**கடற்கொடி** – தும்பை.
**கடற்கொழுப்பை** – எழுத்தாணிப்பூண்டு.
**கடற்கொள்ளை** – கப்பற்கொள்ளை.
**கடற்கொள்ளைக்காரன்** – கப்பற் கொள்ளைக் காரன்.
**கடற்கோ** – வருணன், கடலரசன், கடல்தெய்வம்.
**கடற்கோடு** – கடற்கரை.
**கடற்சார்பு** – நெய்தல்நிலம்.
**கடற்சில்** – கடல்மரக்கொட்டை.
**கடற்செலவு** – கடற்பயணம்.
**கடற்சேர்ப்பன்** – நெய்தல்நிலத் தலைவன்.
**கடற்பக்கி** – காண்க: **கடற்பட்சி.**
**கடற்பச்சை** – காண்க: **கடற்பாலை.**
**கடற்பஞ்சு** – கடற்காளான்.
**கடற்பட்சி** – கிளிஞ்சில்.
**கடற்படை** – கப்பற்படை.
**கடற்பன்றி** – ஒரு கடல்விலங்கு, பெருமீன்வகை.
**கடற்பாசி** – ஒருவகைக் காளான், கடற்பூடு.
**கடற்பாம்பு** – கடலில் வாழும் நச்சுப் பாம்புவகை.
**கடற்பாய்ச்சி** – கடலில் கப்பற் செலுத்துவோன்.
**கடற்பாலை** – சோழி.
**கடற்பிணா** – நெய்தல்நிலப் பெண்.
**கடற்பிறந்தாள்** – பாற்கடலில் தோன்றிய திருமகள்.
**கடற்புறம்** – ஆறுகள் கடலுடன் கூடும் முகத்தில் உள்ள மணல் அடைப்பு; கடற்கரைப் பகுதி.
**கடற்பூ** – செம்மருது.
**கடற்பெருக்கு** – கடலில் நீரேற்றம்.
**கடற்றாமரை** – பெருந்தாமரை.
**கடற்றாழை** – கொந்தாழை; வாட்டாழை.
**கடற்றுறை** – துறைமுகம்.
**கடற்றெங்கு** – தென்னைவகை.
**கடற்றெய்வம்** – வருணன்.
**கடறு** – காடு; அருவழி; பாலைநிலம்; மலைச்சாரல்; வாளுறை.
**கடன்** – முறைமை; இருணம்; இரவற்பொருள்; இயல்பு; வைதிகக் கிரியை; விருந்தோம்பல்; மரக்கால்; குடியிறை; மானம்; இறுதிக்கடன்; பின்னர்த் தருவதாக வாங்கிய பொருள்; கடப்பாடு.
**கடன்கட்டாய்ப்பேசுதல்** – கடுமையாய்ப் பேசுதல்.
**கடன்கழித்தல்** – கடமையைச் செய்தல்; பிதிர் கருமஞ் செய்தல்; நித்திய கருமஞ் செய்தல்; கடனைத் தீர்த்தல்; கரிசனமற்ற வேலை செய்தல்; மனமின்றிச் செய்தல்.
**கடன்காரன்** – கடன்பட்டவன்; கடன் கொடுத்தவன்; அகால மரணம் அடைந்தவன்.
**கடன்காரி** – கடன்பட்டவள்; கடன் கொடுத்தவள்; அகால மரணம் அடைந்தவள்.
**கடன்கேட்டல்** – கடன் கொடுக்கும்படி கேட்டல்; கொடுத்த கடனைக் கேட்டல்.
**கடன்கோடல்** – பணத்தைக் கடனாகக் கொள்ளுகை, வழக்குப் பதினெட்டனுள் ஒன்று.
**கடன்சீட்டு** – கடன்பத்திரம்.
**கடன்படுதல்** – கடன்வாங்குதல்; கடனுக்குள்ளாதல்.
**கடன்பத்திரம்** – கடன்சீட்டு.
**கடன்பற்று** – கடனாகப் பெற்ற பொருள்.
**கடன்பற்றுதல்** – கொடுத்த கடனை வாங்கிக் கொள்ளுதல்.
**கடன்மரம்** – மரக்கலம், கப்பல்.
**கடன்மல்லை** – மாமல்லபுரம்.
**கடன்முரசோன்** – காமன், மன்மதன்.
**கடன்முள்ளி** – கத்தரிவகை.
**கடன்முறி** – காண்க: **கடன்சீட்டு.**
**கடன்முறை** – பெரியோர் வழிபாடு, பெரியோர்க்குச் செய்யும் மரியாதை.
**கடன்மை** – தன்மை; முறைமை.
**கடனம்** – தாழ்வாரம்; முயற்சி; ஊக்கம்.
**கடனாய்** – கடலில் வாழும் நீர்நாய்.

**கடனாளி** – கடன்பட்டவன்; கடமையுடையவன்.

**கடனிறவண்ணன்** – திருமால்; ஐயனார்.

**கடனிறுத்தல்** – கடனைக் கொடுத்தல்; கடமையைச் செய்தல்.

**கடனுரை** – ஒருவகைக் கடல்மீன் ஓடு; ஒருவகைப் பணியாரம்; ஒரு மருந்துச் சரக்கு.

**கடா** – ஆட்டின் ஆண்; ஆட்டின் பொது; எருமைக்கடா; சருக்கரை காய்ச்சும் பாண்டம்; வினா, கேள்வி.

**கடாக்களிறு** – மதயானை.

**கடாக்கன்று** – ஆண் எருமைக்கன்று.

**கடாக்குட்டி** – ஆண்குட்டி.

**கடாகம்** – அண்டகோளகை; கடாரம், பெருங் கொப்பரை; கிணறு.

**கடாகாசம்** – குடத்தில் தோன்றும் ஆகாசம், குடத்தினுள் காற்று.

**கடாகு** – பறவை.

**கடாச்சங்காத்தம்** – மடத்தனம்; மதியாத்தன்மை.

**கடாசலம்** – யானை.

**கடாசுதல்** – ஆணி ஆப்பு முதலியன அடித்தல்; எறிதல்.

**கடாஞ்செய்தல்** – மதஞ்சொரிதல்.

**கடாட்சம்** – கடைக்கண்; கடைக்கண் பார்வை, அருள்.

**கடாட்ச வீட்சணம்** – கடைக்கண் பார்வை.

**கடாட்சித்தல்** – அருளுடன் நோக்குதல், கிருபை செய்தல்.

**கடாத்தன்மை** – கீழ்ப்படியாமை; திருத்தமின்மை; சுறுசுறுப்பின்மை.

**கடாதல்** – கடாவுதல், வினாவுதல்.

**கடாம்** – யானைமதம் தோன்றும் துளை; யானை மதநீர்; பத்துப்பாட்டுள் ஒன்றாகிய மலைபடு கடாம்.

**கடாய்** – கடா; வாணலி, பொரிக்கும் சட்டி, கொப்பரை.

**கடாரம்** – காழகம், பர்மா நாடு; பெருநாரத்தை; கொப்பரை.

**கடாரி** – ஈனாத இளம் பசு.

**கடாரை** – கடார நாரத்தை.

**கடாவல்** – வினாவல்; செலுத்தல்; ஆணி முதலியன அடித்தல்; குட்டுதல்; கேட்டல்.

**கடாவிடுதல்** – பிணையடித்தல், நெற்போர் முதலியவற்றைக் கடாக்கொண்டு மிதிப் பித்தல்.

**கடாவுதல்** – செலுத்துதல்; ஆணி முதலியன அறைதல்; குட்டுதல்; வினாவுதல்; தூண்டுதல்; விடுதல்.

**கடாவுவட்டி** – வட்டிக்கு வட்டி.

**கடி** – காவல்; விரைவு; கூர்மை; மணம்; கால நுட்பம்; கலியாணம்; விளக்கம்; அச்சம்; பேய்; ஐயம்; நீக்கம்; வியப்பு; புதுமை; மிகுதி; இன்பம்; கரிப்பு; கடுமை; இடுப்பு; குறுந்தடி.

**கடி** (வி) – கடி; விலக்கு.

**கடிக்கை** – கருக்குவாய்ச்சிமரம்.

**கடிகண்டு** – பூனைக்காலிச் செடி.

**கடிகம்** – கைமுட்டி.

**கடிகாசூத்திரம்** – நாழிகை வட்டில்; அரைஞாண்.

**கடிகாரம்** – நாழிகை வட்டில், நேரங்காட்டுங் கருவி, மணிப்பொறி.

**கடிகுரங்கு** – குரங்கு வடிவினதாகச் செய்யப் பட்டுள்ளதும் சேர்ந்தாரைக் கடிப்பதுமாகிய மதிற்பொறி.

**கடிகை** – நாழிகை; கதவிடு தாழ்; துண்டம்: அரையாப்பு; கரகம்; உண்கலம்; குத்துக் கோல்; தோள்வளை; ஊர்ச்சபை; மங்கலப் பாடகன்; முகூர்த்தம் பார்ப்பவன்; கேடகம்; திரைச்சீலை; கட்டுவடம்; சோளங்கிபுரம்; சமயம்.

**கடிகைமாக்கள்** – நாழிகை அறிவிப்போர்; நாழிகைக் கவி சொல்வோர்; மங்கலப் பாடகர்.

**கடிகையார்** – அரசனுக்குச் சென்ற நாழிகையைச் சொல்வோர்; பறைமூலம் அரசன் ஆணையை அறிவிப்போர்.

**கடிகைவெண்பா** – நாழிகை வெண்பா, தேவரிடத்தும் அரசரிடத்தும் நிகழுஞ் செயல் கடிகையளவிலே தோன்றி நடப்பதாக முப்பத்திரண்டு வெண்பாவாற் சொல்லப்படுவது.

**கடிகொள்ளுதல்** – விளக்குதல்; காவல்புரிதல்.

**கடிகோல்** – நாயின் கழுத்திலே கட்டும் தடி; பறவையோட்டுங் கழி.

**கடிச்சை** – கடிச்சைமீன்; ஒருவகைப் பூண்டு; ஒரு மரவகை.

**கடிசரி** – கூத்துநிலைகளுள் ஒன்று.

**கடிசு** – கடுமை; நிமிர்வு.

**கடிசூத்திரம்** – காண்க: **அரைஞாண்.**

**கடிசை** – பாய்மரந்தாங்கி.

**கடிஞை** – பிச்சைப் பாத்திரம், இரப்போர் கலம்; மட்கலம்.

**கடித்தகம்** – கேடகம்.

**கடித்தல்** – பல்லாற் கடித்தல்; வடுப்படுத்துதல், தழும்புபடுத்தல்; துண்டித்தல்; கயிறு முதலியன இறுக்கிப் பிடித்தல்; விடாது பற்றுதல்.

**கடிதடம்** – அரை; நிதம்பம், பெண்குறி.

**கடிதம்** – பசை பூசிய துணி; காகிதம், ஏடு; ஓலை, திருமுகம்; பிசின்.

**கடிதல்** – ஓட்டுதல், நீக்குதல்; அழித்தல்; கண்டித்தல்; கோபித்தல்; விரைதல்; கொல்லுதல்; வெட்டுதல்; அடக்குதல்.

**கடிது** – கடுமையானது; விரைவாய்; மிக.

**கடிந்தமன்** – குயவன்.

**கடிந்தோன்** – முனிவன்.

**கடிநகர்** – காவல் உள்ள நகரம்; மணமனை.

**கடிப்பகை** – வேம்பு; கடுகு; வெண்கடுகு; வெண் சிறுகடுகு.

**கடிப்பம்** – காதணி; அணிகலச் செப்பு; கெண்டி.

**கடிப்பா, கடிப்பான்** – ஊறுகாய்; கறி.

**கடிப்பிணை** – காதணிவகை.

**கடிப்பிரதேசம்** – இடுப்பு.

**கடிப்பு** – குறுந்தடி; துருத்தியின் கைப்பிடி; காதணி; ஆமை; குமிழ்; கடிபட்ட தழும்பு.

**கடிப்பேறு** – முரசினை அடிகோலால் அடிக்கை.

**கடிப்பை** – வெண்சிறுகடுகு.

**கடிபடி** – சண்டை; கடுமையான ஆணை.

**கடிமரம்** – காவல்மரம்; பகைவர் அணுகாவண்ணம் வளர்த்துக்காக்கப்படும் காவல்மரம்.

**கடிமனை** – திருமண வீடு; காவலிடம்.

**கடிமாடம்** – காவலமைந்த கன்னிமாடம்.

**கடிமுரசம்** – அரசாங்கத்திற்குரிய முரசம்.

**கடிமூலம்** – முள்ளங்கிச் செடி.

**கடியடு** – சிற்றரத்தை.

**கடியல்** – தோணியின் குறுக்குமரம்; மரக்கலங்களின் குறுக்குமரம்.

**கடியறை** – மணவறை.

**கடியன்** – கடுமையுள்ளவன், கடின சித்தமுடையவன்.

**கடியாரம்** – காண்க: **கடிகாரம்.**

**கடியிரத்தம்** – மூக்கிரட்டைப் பூண்டு.

**கடியிருக்கை** – திருமண மண்டபம்.

**கடிரோமம்** – கோரைக்கிழங்கு.

**கடிலா** – காண்க: **கடியிரத்தம்.**

**கடிவட்டு** – வட்டுடை.

**கடிவாய்** – பல் பட்ட இடம், கடித்த இடம்.

**கடிவாள், கடிவாளம்** – குதிரையின் வாய்வடம், குதிரையின் வாயில் மாட்டும் இரும்புக் கருவி.

**கடிவை** – யானை.

**கடினம்** – வன்மை, மென்மையின்மை; கொடுமை; அருமை.

**கடினை** – உரப்பாய் விழியகத்தேயுள்ள வெளிச்சவ்வு.

**கடு** – கடுக்காய்மரம்; கசப்பு; நஞ்சு; முள்; கார்ப்பு; துவர்ப்பு; முதலை; பாம்பு.

**கடுக்கம்** – விரைவு.

**கடுக்கன்** – ஆடவர் காதணி; ஒட்டுப்புல்.

**கடுக்காய்** – கடுமரத்தின் காய், திரிபலையுள் ஒன்று; ஒரு மருந்துச் சரக்கு.

**கடுக்காய் கொடுத்தல்** – ஏமாற்றுதல்.

**கடுக்கிரந்தி** – இஞ்சி.

**கடுக்குதல்** – முலாம் பூசுதல்; சினக்குறி காட்டுதல்; சுளித்தல்; மேலே ஒதுக்குதல்.

**கடுக்கும்** – ஒக்கும், ஓர் உவமவுருபு.

**கடுக்கெனல்** – கடுமைக் குறிப்பு.

**கடுக்கை** – கொன்றைமரம்; சரக்கொன்றை; மருதமரம்.

**கடுக** – கடிதில்; விரைய; விரைவில்.

**கடுகடுத்தல்** – உறைத்தல்; சினக்குறிப்புக் காட்டுதல்; வெடுவெடுத்தல்; விறுவிறுப்போடு வலித்தல்.

**கடுகடுப்பு** – வெறுப்பு; சினக்குறிப்பு; மிக்க உறைப்பு; குத்துவலி.

**கடுகம்** – கார்ப்பு; கடுகுரோகிணி; சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் திரிகடுகங்களுள் ஒன்று; திரிகடுகம் என்னும் நூல்; மோதிரம்; குடம்.

**கடுகலாத்தி** – கண்ணூறு நீங்கக் கடுகினாற் சுற்றும் ஆலத்தி.

**கடுகி** – சுண்டைச்செடி.

**கடுகு** – கடுகுபூண்டு; குன்றிக்கொடி; எண்ணெய்க் கசடு.

**கடுகுடுத்தல்** – தெளிவின்றிப் பேசுதல்; சினமாய்ப் பேசுதல்.

**கடுகுடுத்தான்** – துடிப்புள்ளவன்.

**கடுகுதல்** – விரைதல்; மிகுதல்; அணுகுதல்; குறைதல்.

**கடுகுதிரளுதல்** – காய்ச்சும்போது எண்ணெய்க் கடுகு கூடுதல்.

**கடுகுபதம்** – மருந்தெண்ணெய்ப் பதங்களுள் ஒன்று.

**கடுகுமணி** – வெண்கடுகு; கழுத்தில் அணியும் சிறுமணி.

**கடுகுரோகிணி** – ஒரு மருந்துச் சரக்கு.

**கடுகெண்ணெய்** – கடுகு நெய், கடுகின் தைலம்.

**கடுகென** – விரைவாக.

**கடுகோரை** – கடுகும் நெய்யும் கலந்து சமைத்த சித்திரான்னம்.

**கடுங்கண்** – தறுகண்மை, அஞ்சாமை.

**கடுங்கணாளன்** – வன்கணாளன், கொடியோன்.

**கடுங்கதிர்** – சூரியன்.

**கடுங்கருத்து** – கூரிய கருத்து; நேரே பொருளைத் தாராத கருத்து.

**கடுங்கவி** – ஆசுகவி வல்லான்.

**கடுங்காந்தி** – வைப்புப் பாடாணத்துள் ஒன்று.

**கடுங்காய்** – சாதிக்காய்; பழுக்கும் பருவம் சிறிதும் பெறாத காய்.

**கடுங்காய்ச்சல்** – மிகுந்த சுரம்; அதிகமாக உலர்கை.
**கடுங்காய்நுங்கு** – முதிர்ந்த நுங்கு.
**கடுங்காரநீர்** – முட்டை.
**கடுங்காரம்** – ஒருவகை எரிமருந்து; ஒருவகை உப்பு; சாதிபத்திரி; மிக்க உறைப்பு.
**கடுங்கால்** – பெருங்காற்று, புயல்.
**கடுங்காலம்** – கொடிய காலம்; பஞ்ச காலம்; வெப்பமான காலம்.
**கடுங்காவல்** – மிகுந்த காவல், வன்சிறை.
**கடுங்குடி** – மிதமிஞ்சின குடி.
**கடுங்கூர்மை** – மிக்க கூர்மை, அறக்கூர்மை; பலவகை உப்பு.
**கடுங்கை** – கடுமை; வருந்துகின்ற கை.
**கடுங்கோடை** – முதுவேனில்.
**கடுங்கோபம்** – மிகுசினம்.
**கடுசரம்** – கடுகுரோகிணி.
**கடுசாரம்** – காசிச்சாரம், ஒருவகை உப்பு.
**கடுசித்தாழை** – அன்னாசி.
**கடுஞ்சாரி** – நவச்சாரம்.
**கடுஞ்சிநேகம்** – மிகுந்த நட்பு.
**கடுஞ்சினப்பூமி** – உவர்மண்.
**கடுஞ்சுண்ணத்தி** – சீனக்காரம்.
**கடுஞ்சூல்** – முதற்கருப்பம்.
**கடுஞ்செட்டு** – மிக்க சிக்கனம்; அநியாய வணிகம்.
**கடுஞ்சொல்** – இன்னாச் சொல், கடுமையான சொல்; இழிசொல்.
**கடுடம்** – மருக்காரைச்செடி.
**கடுத்தம்** – அழுத்தம்; சோனகருடைய சீதன உடன்படிக்கை; உலோபம்; தோல் முதலிய வற்றால் சேர்த்த புத்தகம்; கடிதம்; கடுமை.
**கடுத்தல்** – கடுத்தவாயெறும்பு; ஒரு மீன்வகை.
**கடுத்தலூசி** – கல்லைத் துளைக்கும் ஓர் இருப்புக் கருவி.
**கடுத்தலை** – வாள்.
**கடுத்தவாயெறும்பு** – கடுத்தானெறும்பு, கட்டெறும்பு.
**கடுத்திறவாலி** – இறக்கை முளைத்த எறும்பு வகை.
**கடுத்துவாய்** – காண்க: **கடுத்தவாயெறும்பு.**
**கடுத்தேறு** – குளவி.
**கடுதாசி** – கடதாசி, காகிதம்; நிருபம், சீட்டு; விளையாடும் சீட்டு.
**கடுந்தழற்பூமி** – காண்க: **கடுஞ்சினப்பூமி,** உழமண்.
**கடுந்தி** – நாயுருவி.
**கடுந்திலாலவணம்** – அமரியுப்பு, எள்ளுப்பு.
**கடுந்தோய்ச்சல்** – ஆயுதங்களை நன்றாகத் தீயில் காயவைத்துச் செம்மையாக்கல்.
**கடுநகை** – பெருஞ்சிரிப்பு; எள்ளல் பற்றிய பெருநகை, ஏளனச் சிரிப்பு.
**கடுநட்பு** – மிக்க நட்பு.
**கடுநடை** – வேகமான நடை; தொல்லையை உண்டாக்கும் நடை; கடினமான எழுத்து நடை.
**கடுநிம்பம்** – நிலவேம்பு.
**கடுப்ப** – ஒப்ப, ஓர் உவமவுருபு.
**கடுப்படக்கி** – எருமுட்டைப் பீநாறி, வெதுப் படக்கி.
**கடுப்பு** – நோவு; சினம்; விரைவு; ஒப்பு; செருக்கு, அகங்காரம்; முகம்சுளிக்கை; கருவூமத்தை; கடுக்காய் வேர்.
**கடுப்புக்கழிச்சல்** – சீதபேதி.
**கடுப்புமரம்** – எண்ணெய் ஊற்றும் இடுக்குமரம்; எள் முதலியன ஆட்டும் ஆலை.
**கடுப்பை** – வெண்கடுகு.
**கடுபத்திரம்** – சுக்கு.
**கடுபலம்** – இஞ்சிப் பூண்டு; கருணைக்கிழங்கு; காறாக்கருணை.
**கடும்பகல்** – உச்சிவேளை.
**கடும்பச்சை** – நாகப்பச்சைக்கல்.
**கடும்பசி** – மிகுந்த பசி.
**கடும்பத்தியம்** – உப்பு, புளி முதலியனசேர்க்காமல் உண்ணும் பத்தியம்.
**கடும்பலம்** – இஞ்சிக்கிழங்கு; கருணைக்கிழங்கு.
**கடும்பு** – சுற்றம்; சும்மாடு; சீம்பால்; கூட்டம்.
**கடும்புப்பால்** – சீம்பால், காய்ச்சித் திரட்டிய சீம்பால்.
**கடும்பை** – காண்க: **கடுப்பை.**
**கடுமரம்** – எட்டிமரம்; கடுக்காய்மரம்.
**கடுமழை** – கனத்த மழை, பெருமழை.
**கடுமா, கடுமான்** – சிங்கம்; புலி.
**கடுமீன்** – சுறா.
**கடுமுடுக்கு** – வேகமாய் நடக்கை; முடுக்கான அதிகாரம்.
**கடுமுடெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**கடுமுள்** – ஆயுதப் பொது; பேராயுதம்; கண்டங் கத்தரி; நச்சுமுள்.
**கடுமை** – கொடுமை; கண்டிப்பு; கடினம்; வன்மை; மிகுதி; விரைவு; வெம்மை; மூர்க்கம்; சினம்.
**கடுமொடெனல்** – காண்க: **கடுமுடெனல்.**
**கடுமொழி** – கடுமையான சொல், வன்சொல்.
**கடுரம்** – மோர்.
**கடுரவம்** – தவளை.

**கடுவங்கம்** – இஞ்சி.
**கடுவட்டி** – அதிக வட்டி.
**கடுவரல்** – விரைந்து வருதல்.
**கடுவரை** – செந்தூக்கான மலை.
**கடுவல்** – வன்னிலம்; கடுங்காற்று.
**கடுவழி** – கடத்தற்கு அரிய வழி.
**கடுவளி** – சூறாவளி, பெருங்காற்று.
**கடுவன்** – ஆண்குரங்கு; ஆண்பூனை; படை நோய்; மாவிலங்கைமரம்.
**கடுவன்பன்றி** – ஆண்பன்றி.
**கடுவன்பூனை** – ஆண்பூனை.
**கடுவன்முசல்** – ஆண்முயல்.
**கடுவாய்** – கழுதைப்புலி; நாய்; காவிரியின் கிளையாறுகளுள் ஒன்று; முரசம், கடுவாய்ப் பறை.
**கடுவாய்ப்பறை** – ஒருவகைப் போர்ப்பறை.
**கடுவாயன்** – கழுதை; பாம்பு; பேச்சால் எரிந்து விழுவோன்.
**கடுவான்கரப்பன்** – ஒருவகைக் கரப்பான் நோய், குழந்தைகளின் முழந்தாளுக்கும் கால்பரட்டுக் கும் இடையில் வரும் ஒருவகைச் சிரங்கு.
**கடுவிதித்தம்** – கடுகுரோகிணிப் பூண்டு.
**கடுவிலை** – அதிக விலை.
**கடுவினை** – தீவினை; கொடிய துன்பம்.
**கடுவு** – வேளை.
**கடுவுப்பு** – மாமிசபேதி; வளையலுப்பு.
**கடுவெளி** – வெறுவெளி, நிழலற்ற வெளியிடம்; வானம்.
**கடுவை** – ஒருவகைப் பறை.
**கடூரம்** – கொடுமை; கடினம்.
**கடூழியச்சிறை** – கடுங்காவல்.
**கடேரியம்** – மரமஞ்சள்; கடம்.
**கடை** – முடிவு; இடம்; எல்லை; அங்காடி; கீழ்மை; தாழ்ந்தோன்; வாயில்; புறவாயில்; பக்கம்; பணிப்பூட்டு; காம்பு; ஒரு வினையெச்ச விகுதி; ஏழனுருபு; பின்; கீழ்; சோர்வு; வழி; பெண்குறி.
**கடை (வி)** – குடை; சிலுப்பு; தயிர்கடை; பருப்பு முதலியன கடை; மரம் முதலியன கடை; தீக்கடை.
**கடைக்கண்** – கண்ணின் கடை; கண்ணின் ஓரப் பார்வை, அருள்.
**கடைக்கண்பார்வை** – குறிப்போடு சாய்த்து நோக்குகை; அருள்நோக்கம்.
**கடைக்கணித்தல்** – அருளுதல்; கடைக்கண்ணாற் பார்த்தல்.
**கடைக்கணோக்கம்** – காண்க: **கடைக்கண் பார்வை.**
**கடைக்கருவி** – உடுக்கை.
**கடைக்கனல்** – ஊழித் தீ.
**கடைக்காணுதல்** – மேற்பார்த்தல்.
**கடைக்காப்பு** – பதிகத்தி னிறுதிப் பாட்டு, இறுதி யான முத்திரைப் பாட்டு.
**கடைக்கால்** – அடிப்படை; இறுதிக் காலம்; ஊழிக்காற்று; பின்வருங் காலம்; தாழ்ந்த இடம்.
**கடைக்குட்டி** – கடைசிப் பிள்ளை.
**கடைக்குறை** – சொல்லின் இறுதி குறைந்து வரும் செய்யுள் விகாரம்.
**கடைக்குளம்** – உத்தராட நாள்.
**கடைக்கூட்டன்** – செயலாளன், காரிய நிருவாகி.
**கடைக்கூட்டு** – இறக்குந் தறுவாய்; மேலாண்மை செய்தல், காரிய நிருவாகம்.
**கடைக்கூட்டுத் தானத்தார்** – கோயில் அதிகாரிகள்.
**கடைக்கூட்டுதல்** – செய்துமுடித்தல்; ஒருப் படுத்துதல்; சம்பாதித்தல்; இறுதியடை வித்தல்; நடைமுறையிற் கொணர்ந்து சேர்த்தல்.
**கடைக்கூடுதல்** – கைகூடுதல்; சம்மதித்தல்.
**கடைக்கூழை** – அளவடியுள் முதற்சீர் ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் வரும் தொடைவகை; பின்னணியாகச் செல்லும் படைவகுப்பு.
**கடைக்கொம்பு** – ஏரியின் கோடியிலுள்ள கரை; விலங்கின் அடிக்கொம்பு.
**கடைக்கொள்ளி** – குறைக்கொள்ளி, நுனியில் எரியும் கொள்ளிக்கட்டை.
**கடைக்கொள்ளுதல்** – உறுதியாகக் கொள்ளுதல்; பின்செல்லுதல்; சேர்த்தல்; முடிவுபெறுதல்.
**கடைக்கோடி** – அறக்கடைசி, இறுதி எல்லை.
**கடைகட்டுதல்** – காரியத்தை நிறுத்திவிடுதல்; கடையை மூடுதல்.
**கடைகண்ணி** – கடை.
**கடைகழிமகளிர்** – பொதுமகளிர்.
**கடைகாப்பாளன்** – வாயிற்காவலன்.
**கடைகால்** – பால் கறக்கும் மூங்கிற் குழல்; கொக்கியின் ஓர் உறுப்பு; அடிப்படை.
**கடைகாவலன்** – காண்க: **கடைகாப்பாளன்.**
**கடைகூடுதல்** – கைகூடுதல்.
**கடைகெடுதல்** – மிக இழிவடைதல்.
**கடைகேடு** – மிக்க இழிவு.
**கடைகொள்ளுதல்** – முடிவுபெறுதல்.
**கடைகோல்** – தீக்கடைகோல்.
**கடைச்சரக்கு** – பலசரக்கு; கடையில் விற்கப்படும் மருந்துச் சரக்கு.
**கடைச்சரி** – முன்கைவளை.
**கடைச்சல்** – கடைதல்; மரம் முதலியவற்றைக் கடைதல்; கடையப்பட்ட பொருள்.
**கடைச்சற்காரன்** – கடைசல்வேலை செய்வோன்.

**கடைச்சன்** – கடைசிப் பிள்ளை; இளைய மகன்.

**கடைச்சி** – மருதநிலத்துப் பெண்; இளைய பெண்; கடைசியாகப் பிறந்த பெண்; நெட்டி.

**கடைச்சித்தாழை** – பறங்கித்தாழை, அன்னாசி.

**கடைச்சீர்** – வஞ்சிச்சீர்.

**கடைசல்** – காண்க: **கடைச்சல்**; மெருகிடுகை.

**கடைசல்பிடித்தல்** – மரம் முதலியவற்றைக் கடையும்வேலை செய்தல்.

**கடைசார்** – காரியம்; புறக்கடை.

**கடைசாரம்** – காரிய முடிவு.

**கடைசாரி** – கடைகெட்டவள், கற்பழிந்தவள்.

**கடைசால்** – கடைசாரம், செயல் முடிவு; கப்பலின் பின்பக்கம்; கடைசி உழவு.

**கடைசாலொதுக்குதல்** – கைவேலையை முடித்தல்.

**கடைசி** – முடிவு; கடைசிப் பெண்; மருதநிலப் பெண்.

**கடைசோரி** – அப்பக்கடை.

**கடைஞன்** – மருதநிலத்தான்; இழிகுணமுடையவன், குணக்கேடன்.

**கடைத்தடம்** – வாயில்.

**கடைத்தரம்** – கீழ்த்தரம்.

**கடைத்தலை, கடைத்தலைவாயில்** – முதல்வாயில், தலைவாயில், மாளிகையின் புறத்தலை வாயில்.

**கடைத்தெரு** – ஆவணவீதி, கடைவீதி.

**கடைத்தேற்றம், கடைத்தேறுதல்** – ஈடேறுதல், உய்தல்.

**கடைதல்** – மத்தாற் கடைதல்; மரம் முதலியன கடைதல்; மசித்தல்; கலக்குதல்; மிகச் செய்தல்; அரித்தல்; கடைவது போன்ற ஒலியுண்டாதல்.

**கடைதலைப்பூட்டு, கடைதலைவிற்பூட்டு** – பூட்டுவிற் பொருள்கோள்.

**கடைதிறப்பு** – கதவு திறத்தல்; பரணி என்னும் சிற்றிலக்கியத்தில் வரும் முதல் உறுப்பு.

**கடைதுடிப்பு** – செய்யுளின் ஈற்றடி சிறந்து நிற்றல்; கடைக்கண் துடித்தல்.

**கடைநன்** – கடைசல்வேலை செய்வோன்.

**கடைநாள்** – இறுதிநாள்; இறக்கும் நாள்; அழிவு காலம், ஊழிக்காலம்; இரேவதி நாள்.

**கடைநிலை** – புறவாயில்; முடிவு; ஈற்றெழுத்து, விகுதி; சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று; ஒரு புறத்துறை, சான்றோர் தம் வரவினைத் தலைவனுக்கு உணர்த்துமாறு வாயிற்காவலற்குக் கூறுவது.

**கடைநிலைத்தீப(வ)கம்** – விளக்கணி வகைகளுள் ஒன்று, இறுதியில் நிற்கும் சொல் முன்னர்ச் சென்று பொருளை விளக்குவது.

**கடைநிலையெழுத்து** – இறுதியில் உள்ள எழுத்து, சொல்லின் ஈற்றெழுத்து.

**கடைப்படி** – ஓர் அளவை.

**கடைப்படுதல்** – இழிவாதல்; முடிதல், நிறைவேறுதல்.

**கடைப்படுதானம்** – கைம்மாறு கருதிக் கொடுக்கப் பெறுவது; அச்சம், புகழ் முதலியவற்றின் ஏதுவாகத் தரப்படுவது.

**கடைப்பந்தி** – கடைசி வரிசை; இறுதியில் உண்ணும் விருந்தின் கூட்டம்.

**கடைப்பாடு** – தீர்மானம், முடிவு; இழிவு.

**கடைப்பான்மை** – இழிந்த தன்மை.

**கடைப்பிடி** – உறுதி; தெளிவு, தேற்றம்; மறவாமை; சித்தாந்தம்; கொள்கை; அபிமானம்.

**கடைப்பிடித்தல்** – உறுதியாகப் பற்றுதல்; தெளிவாய் அறிதல்; விடாதொழுகுதல்; மறவாதிருத்தல்; சேர்த்துவைத்தல்.

**கடைப்புணர்வு** – அணிகலனின் கடைப்பூட்டு.

**கடைப்புத்தி** – மூடத்தனம்; பின்புத்தி.

**கடைப்பூ** – நிலத்தின் கடைசிப் போகம்.

**கடைப்பூண்** – அணிகலனின் பூட்டுவாய்.

**கடைபோடுதல்** – கடை வைத்தல், வாணிகம் செய்தல்; வம்பளத்தல்.

**கடைபோதல்** – முற்றுப்பெறுதல், நிறைவேறல்; நிலைநிற்றல்.

**கடைமடக்கு** – அடிகளின் இறுதியில் வரும் மடக்கு.

**கடைமடை** – கடைசி மதகு; வாய்க்காலின் நீர் கடைசியாகப் பாயும் நிலம்.

**கடைமணி** – ஆராய்ச்சிமணி; வேல் முதலியவற்றின் பூண்; கண்மணியின் கடைப்பக்கம்; பரதவ மகளிர் கையணிவகை; தாலியுடன் சேர்த்து அணியும் மணி.

**கடைமரம்** – கடையும் தறி, கடைச்சற்பட்டை.

**கடைமீன்** – இரேவதி நாள்.

**கடைமுகம்** – தலைவாயில், வாயிலிடம்; ஐப்பசித் திங்கள் இறுதி நாள்.

**கடைமுரண்** – அடிதோறும் இறுதிச்சீர் முரணாக வருவது.

**கடைமுழுக்கு** – ஐப்பசி மாதத்துக் கடைசி நாளன்று காவிரியில் நீராடுகை.

**கடைமுளை** – நுகக்காற் குச்சி.

**கடைமுறை** – கடைசி முறை; முடிவு; இழிநிலை.

**கடைமை** – கீழ்மை.

**கடைமோனை** – அடிகளின் இறுதியிலே வரும் மோனை.

**கடையகம்** – முன்வாயில்.

**கடையடைக்காய்** – ஒரு பழைய வரி.

**கடையந்தரம்** – கடைசி எல்லை.

**கடையம்** – கடைசிக் கூத்து, இந்திராணி ஆடிய கூத்து; கடகம்.

**கடையர்** – கீழானவர், இழிந்தோர்; மருதநிலத்தவர்; வாயிற்காப்போர்; பள்ளருள் ஒரு வகுப்பார்.

**கடையல்** – கடைதல், கடையும் வேலை; அலைத்தல்.

**கடையழித்தல்** – தேய்த்தல்; மிகக் கெடுத்தல்.

**கடையழிதல்** – வருந்துதல்; வறுமையுறுதல்; தேய்தல்; கேடுறுதல்.

**கடையளபெடை** – அடியின் இறுதிக்கண் அளபெடை வரத் தொடுப்பது.

**கடையனல்** – ஊழித் தீ.

**கடையாகுஎதுகை** – இனவெழுத்து எதுகையாக வருந் தொடை.

**கடையாட்டம்** – வருத்தம், உலைவு; கடைசி விளையாட்டு.

**கடையாணி** – பூட்டாணி; அச்சாணி.

**கடையாந்தரம்** – கடைசி, முடிவு; தாழ்ந்தோர்.

**கடையால்** – கடைசால்; பால் கறக்கும் மூங்கிற் குழாய்; தோணியின் பின்புறம்.

**கடையிணைத்தொடை** – மோனை முதலியவை அடிகளின் ஈற்றிரண்டு சீர்களில் வரத் தொடுப்பது.

**கடையிலாஅறிவு** – அனந்தஞானம், அருகன் எண் குணங்களுள் முடிவில்லா அறிவுடைமை.

**கடையிலாஇன்பம்** – அருகன் எண்குணங்களுள் முடிவில்லா ஆனந்தமுடைமை.

**கடையீடு** – இழிந்தது; கடைத்தரமான நிலம்; கீழதிகாரியின் கட்டளை; அரசனது முடிவான ஆணை.

**கடையுகம்** – காண்க: **கடையூழி.**

**கடையுணி** – கீழ்மகன்(ள்).

**கடையுவா** – காருவா, அமாவாசை.

**கடையுற** – முழுதும்.

**கடையுறுநோக்கு** – மெய்யுணர்வு.

**கடையூழி** – இறுதியுகம், கலியுகம்.

**கடையூறு** – செயல்முடிவில் நீக்க முடியாமல் வரும் தடை.

**கடையெதுகை** – அடிதோறும் இறுதிக்கண் வரும் எதுகை.

**கடையெழுஞ்சனி** – உத்தரநாள்.

**கடையெழுத்து** – கையொப்பம்.

**கடையெழுவள்ளல்கள்** – கடை வள்ளல்கள், புகழ்ந்து பாடினோர்க்கு வேண்டியாங்கு அளித்த கொடையாளிகள்: பாரி, காரி, ஓரி, ஆய், அதியமான், நள்ளி, பேகன்.

**கடையேடு** – சாவோலை, மரணச்சீட்டு.

**கடையொடுக்குதல்** – வாணிகத்தைச் சுருக்குதல்; வாணிகத்தை நிறுத்திவிடுதல்.

**கடைவழி** – இறந்தபின் உயிர் செல்லும் வழி.

**கடைவள்ளல்** – கேட்டபின் கொடுப்போன்; பல்காலுங் கேட்க மறுத்துத் தருபவன்.

**கடைவாசல்** – காண்க: **கடைவாயில்.**

**கடைவாய்** – வாயருகு; வாயின் கடை; புகுவழி.

**கடைவாய்நக்கி** – காண்க: **உலோபி.**

**கடைவாயில்** – தலைவாயில், புறவாயில்.

**கடைவிரித்தல்** – வாணிகச் சரக்குகளைப் பரப்புதல்; பலர்முன் தன்னாற்றலைப் பேசுதல்.

**கடைவீதி** – கடைத்தெரு.

**கடோரம்** – கடினம்; கொடுமை.

**கடோரன்** – கொடியவன்.

**கண்** – விழி; கண்ணோட்டம்; பீலிக்கண்; கணு; மரக்கணு; தொளை; மூங்கில்; முரசடிக்குமிடம்; மூட்டுவாய்; பெருமை; இடம்; ஏழனுருபு; அறிவு; பற்றுக்கோடு; உடம்பு; அசை; உடலூக்கம்.

**கண்கட்டி** – கண்ணில் உண்டாகும் பரு; கண்ணைக் கட்டிக்கொண்டு விளையாடும் ஒருவகை விளையாட்டு.

**கண்கட்டி(டு)வித்தை** – ஒரு காருட வித்தை, தந்திரவித்தை, சாலவித்தை.

**கண்கட்டு** – கண்ணைப் பொத்துகை.

**கண்கண்டதெய்வம்** – கண் எதிரிலே தோன்றி வரந்தரும் தெய்வம்.

**கண்கண்ணி** – குறுங்கண்ணி.

**கண்கயில்** – உடைத்த தேங்காயின் மேல்மூடி.

**கண்கரித்தல்** – கண்காந்துதல்; பொறாமை.

**கண்கலக்கம்** – கண்ணிலுறு துன்பம்; வருத்தம்.

**கண்கலத்தல்** – எதிர்ப்படுதல்; ஒருவரையொருவர் பார்த்தல்.

**கண்கலவி** – காதற் குறிப்போடு தலைவனும் தலைவியும் முதன்முறை பார்த்தல்.

**கண்கழுவுதல்** – முகம் அலம்பித் தூய்மை செய்தல்; இளம்பயிருக்கு நீர்பாய்ச்சுதல்.

**கண்களவுகொள்ளுதல்** – ஒருவர் பார்ப்பதை மற்றொருவர் காணாதவாறு எதிர்எதிர் மறைவில் பார்த்தல்.

**கண்காசம்** – கண்ணின் படலநோய்.

**கண்காட்சி** – பார்வை; வியப்பு; கண்ணுக்கு மகிழ்ச்சி தருவது; விநோதக் காட்சி.

**கண்காட்சிச்சாலை** – அரும்பொருட் காட்சி மண்டபம், அருங்காட்சியகம்.

**கண்காட்டி** – அழகுள்ளவர்; செயலாளர்.

**கண்காட்டிவிடுதல்** – சாடையால் ஏவிவிடுதல்.

**கண்காட்டுதல்** – குறிப்பாகக் கண்சிமிட்டுதல்.

**கண்காட்டுவோன்** – குருடர்களுக்கு வழிகாட்டுவோன்.

**கண்காணக்காரன், கண்காணச்சேவகன்** – காவற்காரன்.

**கண்காணம்** – மேல்விசாரணை; பயிர்க்காவல்; கதிர் அறுக்கக் கொடுக்கும் ஆணை; ஒப்படி மேல்விசாரணைச் சம்பளம்.

**கண்காணி** – கண்ணால் நோக்கி அறிபவன்; மேல் விசாரிப்புக்காரன், மேற்பார்வையாளன்; ஒப்படி உத்தியோகஸ்தன்; கூலியாள்களை மேற்பார்ப்போன்.

**கண்காணித்தல்** – மேல்விசாரணை செய்தல்; கண்ணால் கூர்ந்து கவனித்தல்.

**கண்காணிப்பு** – மேற்பார்வை, காவல்.

**கண்காந்தல்** – கண்ணெரிவு.

**கண்காரன்** – மேற்பார்ப்போன்; நோட்டக்காரன், குறிப்பறியத்தக்கவன்; குறிசொல்லுவோன் முன்னிருந்து வினாவிய செய்தியைக் கண்டுபிடிக்கவேண்டி அஞ்சனத்தைப் பார்ப்பவன்.

**கண்குத்திக்கள்வன்** – கண்முன்னேயே மறைவில் கொள்வோன்.

**கண்குத்திப்பாம்பு** – ஒருவகைப் பாம்பு, பச்சைப் பாம்பு.

**கண்குவளை, கண்குழி** – கண்கூடு.

**கண்குழிதல்** – கண் உள்ளடங்குதல்.

**கண்குழிவு** – எளிமை.

**கண்குளிர்ச்சி** – கண்களிப்பு, மனமகிழ்ச்சி.

**கண்குளிர்தல்** – கண்களித்தல்.

**கண்குறைத்தல்** – கண்ணைப் பறித்திடுதல்.

**கண்கூச்சம்** – ஒளியாற் கண் கூசுகை; வெளிச்சத்தைப் பார்க்கக்கூடாமை.

**கண்கூடு** – கண்குழி, கண்குவளை; எதிரே காணல்; நேராக அறிதல்; வெளிப்படை; நெருக்கம்; காட்சித்துறை.

**கண்கூடுதல்** – ஒன்றுகூடுதல்; நெருங்குதல்.

**கண்கூடுவரி** – ஒருவர் கூட்டவன்றித் தலைவன் தலைவியர் தாமே சந்திக்கும் நிலைமையை நடித்துக்காட்டும் நடிப்பு.

**கண்கூலி** – கண்காணிப்பாளனுக்குத் தரும் கூலி; இழந்த பொருளைக் கண்டெடுத்துக் கொடுப்பதற்குத் தரும் அன்பளிப்பு; சீட்டு நடத்துவோர் எடுத்துக்கொள்ளும் தொகை.

**கண்கெடச்செய்தல்** – அறிந்து தீமைசெய்தல்.

**கண்கெடப்பேசுதல்** – கண்டொன்று சொல்லுதல்.

**கண்கெடுதல்** – பார்வையழிதல்; அறிவழிதல்.

**கண்கொட்டுதல்** – கண்ணிமைத்தல்.

**கண்கொதி** – காண்க: **கண்ணேறு.**

**கண்கொழுப்பு** – அகங்காரம்.

**கண்கொள்ளாக்காட்சி** – அடங்காத காட்சி, வியத்தற்குரிய தோற்றம்.

**கண்சமிக்கினை, கண்சமிக்கை** – காண்க: **கண்சாடை.**

**கண்சவ்வு** – விழியின் ஓரச் சதை.

**கண்சாடை** – கண்ணாற் குறிப்பித்தல்; அறிந்தும் அறியார் போன்றிருத்தல்.

**கண்சாத்துதல்** – அன்பொடு நோக்குதல்; வேண்டுதலுக்காகத் தெய்வத்துக்குக் கண்மலர் சாத்துதல்.

**கண்சாய்தல்** – அறிவு தளர்தல்; அன்பு குறைதல்.

**கண்சாய்ப்பு** – கண்சாடை; குறிப்பாகக் காட்டும் அருள்; வெறுப்பான பார்வை; சம்மதப் பார்வை; கண்ணூறு.

**கண்சிமிட்டுதல்** – கண்ணிமைத்தல்; கண்ணாலே குறிப்புக் காட்டுதல்.

**கண்சிவத்தல்** – சினத்தல்; நோய் முதலியவற்றால் கண் செந்நிறமடைதல்.

**கண்சுருட்டுதல்** – அழகு முதலியவற்றால் தன் வயப்படுத்தல்; கண்ணுறங்குதல்.

**கண்சுழலுதல்** – விழிகள் மயங்குதல்.

**கண்செம்முதல்** – கண் பொங்குதல்.

**கண்செருகுதல்** – விழிகள் உள்வாங்குதல்.

**கண்செறியிடுதல்** – விழுங்கிவிடுதல்; முழுதும் பரவி அடைத்துக்கொள்ளுதல்.

**கண்டக்கட்டு** – பாவகை.

**கண்டக்கரப்பன்** – கரகரப்பு, புகைச்சல் முதலியன உண்டாக்கும் ஒருவகைத் தொண்டைநோய்.

**கண்டக்கருவி** – மிடற்றுக் கருவி.

**கண்டக்குருகு** – கழுத்துநோய்வகை.

**கண்டக சங்கம்** – முட்சங்குச்செடி.

**கண்டகண்** – கண்ணோட்டமில்லாதவன், கொடியோன்; அசுரன்; பகைவன்.

**கண்டகத்துவாரம்** – முள்ளெலும்புத் தொளை, வீணாதண்டத்தின் நடுவே செல்லும் தொளை.

**கண்டகபலம்** – பலாப்பழம்.

**கண்டகம்** – முள்; நீர்முள்ளிச் செடி; காடு; உடைவாள்; வாள்; கொடுமை; மூங்கில்.

**கண்டகாசனம்** – ஒட்டகம்.

**கண்டகாந்தாரம்** – பண்வகை.

**கண்டகாரி** – காண்க: **கண்டங்கத்தரி.**

**கண்டகி** – தாழை; ஒருவகை மூங்கில்; இலந்தை; முதுகெலும்பு; தீயவள்; காசிக்கருகேயுள்ள ஓர் ஆறு.

**கண்டகிக்கல், கண்டகிச்சிலை** – சாளக்கிராமம்.

**கண்டகூணிகை** – வீணை.

**கண்டகோடரி** – ஒருவகைக் கோடாலி, பரசு, மழு, துறவியருள் ஒருசாரார் தாங்கிச் செல்லும் கைக்கோடாலி.
**கண்டங்கணம்** – திப்பிலி.
**கண்டங்கத்தரி** – முள்ளுள்ள ஒருவகைக் கத்தரி, சிறுபஞ்சமூலத்துள் ஒன்று, தசமூலத்துள் ஒன்று.
**கண்டங்கருவழலை, கண்டங்கருவிலி** – ஒருவகைப் பாம்பு.
**கண்டங்காலி** – காண்க: **கண்டங்கத்தரி.**
**கண்டங்கி** – காண்க: **கண்டாங்கி.**
**கண்டச்சுருதி** – சாரீரம்.
**கண்டசர்(ரு)க்கரை** – ஒருவகைச் சருக்கரை.
**கண்டசரம்** – கழுத்தணிவகை.
**கண்டசருக்கரைத்தேறு** – கற்கண்டுக் கட்டி.
**கண்டசி(சு)த்தி** – ஆசுகவி சொல்லும் வல்லமை.
**கண்டசூலை** – கழுத்துநோய்வகை, கழுத்தைச் சுற்றிவரும் புண்.
**கண்டத்திரை** – பலநிறத் திரைச்சீலை.
**கண்டதிப்பிலி** – வங்காளத் திப்பிலி, ஒரு கொடி வகை.
**கண்டது** – காணப்பட்ட பொருள்; சம்பந்தமற்ற செய்தி.
**கண்டதுங்கடியதும்** – நல்லதும் கெட்டதும்.
**கண்டதுண்டம்** – பல துண்டம்.
**கண்டநாண்** – கழுத்தணிவகை.
**கண்டநாளம்** – தொண்டைக்குழி.
**கண்டப்படை** – கட்டடத்தின் அடிப்படை.
**கண்டப்பனி** – கால்நடைகளுக்கு ஆகாத கொடும் பனி.
**கண்டப்புற்று** – தொண்டைப் புண்வகை.
**கண்டபடி** – பார்த்தவாறு, மனம்போன விதம்.
**கண்டபத்திரம்** – வழக்கைத் தீர்த்து எழுதும் சீட்டு.
**கண்டபதம்** – மண்ணுளிப்பாம்பு; பூநாகம்.
**கண்டபலம்** – இலவு.
**கண்டபேரண்டம்** – யானையையும் தூக்கிச் செல்லவல்ல இருதலைப் பறவை.
**கண்டம்** – கழுத்து; இடுதிரை; நிலத்தின் பெரும் பிரிவு; துண்டம்; நவகண்டம்; கண்ட சருக்கரை; எழுத்தாணி; குரல்; கவசம்; வாள்; கள்ளி; ஓர் யோகம்; குன்றிவேர்; யானைக் கழுத்து; சாதிலிங்கம்; கோயில் முகமண்டபம்; அக்குரோணி; கண்டாமணி.
**கண்டம்பயறு** – காராமணி.
**கண்டமட்டும்** – மிகுதியாய்.
**கண்டமண்டலம்** – குறைவட்டம்.
**கண்டமாலை** – கழுத்தைச் சுற்றியுண்டாகும் புண்; ஒருவகைக் கழுத்தணி.
**கண்டயம்** – வீரக்கழல்.
**கண்டர்** – துரிசு.
**கண்டரை** – ஆதார நாடி, ஒரு நரம்பு, இதயத்தின் கீழறைகள் இரண்டில் வலப்புறத்திலிருந்து செல்லும் பெருநாடி என்னும் பெரிய குழல்.
**கண்டல்** – தாழை, ஒரு மரவகை ; முட்செடி; நீர்முள்ளி; கடல்மீன்வகை.
**கண்டவன்** – படைத்தவன்; பார்த்தவன்; தொடர்பில்லாதவன்.
**கண்டவிகாரம்** – கற்கண்டு.
**கண்டற்குயம்** – தாழைவிழுது.
**கண்டறை** – கற்புழை, மலைக்குகை.
**கண்டறை வைத்தல்** – மரத்தை வெட்டுமிடத்தை வரையறை செய்தல்.
**கண்டன்** – வீரன்; சோழர் பட்டப்பெயர்; கணவன்; தலைவன்; கழுத்துடையவன்; கொடியோன்.
**கண்டனம், கண்டனை** – கண்டிக்கை; மறுப்பு.
**கண்டனைக்காரன்** – நூல்முதலியவற்றில் குற்றம் காண்பவன்.
**கண்டாங்கி** – ஒருவகைச் சீலை; சாயப்புடைவை.
**கண்டாஞ்சி** – மரவகை: முள்வேல், குடைவேல்.
**கண்டாபரன்** – குதிரைக் கழுத்துச் சுழிகள்.
**கண்டாமணி** – பெருமணி; யானைக் கழுத்திற் கட்டுமணி; மிக்க ஓசையுள்ள மணி; வீரக்கழல்.
**கண்டாய்** – ஒரு முன்னிலையசை.
**கண்டார்** – தோற்றுவித்தவர்; தொடர்பில்லாதவர்.
**கண்டாரவம்** – ஓர் இசை; மணியின் ஓசை.
**கண்டால்** – அன்றி; ஓர் அசைச்சொல்.
**கண்டாலம்** – ஒட்டகம்; கடப்பாரை; போர்.
**கண்டாலி** – வெள்ளறுகு.
**கண்டாவளி** – கழுத்தில் அணியும் முத்துமாலை, கழுத்துமாலை.
**கண்டாவிழ்தம், கண்டாவுடதம்** – ஒருவகை மருந்து.
**கண்டாள எருது** – பொதிமாடு.
**கண்டாளம்** – எருதின் மேலிடும் பொதி.
**கண்டி** – எருமைக்கடா; மந்தை; மீன் பிடிக்க அடைக்குங் கருவி; கண்டிக்கல்; கழுத்தணி வகை; உருத்திராக்க மாலை; நிறையளவு; இருபத்தெட்டுத் துலாம் கொண்ட அளவு; இருபது பறைகொண்ட அளவு; இலங்கையில் உள்ள ஓர் ஊர்; சிறுகீரை.
**கண்டி (வி)** – கடி; ஒரு சார்பின்றிப் பேசு; துண்டி, வெட்டு; பகிர்; தண்டி.
**கண்டிகம்** – கண்டி; பாரம் என்னும் நிறையளவு ; கடலை.

**கண்டிகும் (வி)** – கண்டேம்; காண்போமாக.

**கண்டிகை** – கழுத்தணி; உருத்திராக்கம்; சிறுகீரை; பதக்கம்; வாகுவலயம்; நிலப்பிரிவு; அணிகலச்செப்பு.

**கண்டிசின் (வி)** – கண்டேன்; பார்ப்பாயாக.

**கண்டித்தல்** – கடிந்துரைத்தல்; துண்டித்தல்; முடிவுகட்டிப் பேசுதல்; பருத்தல்.

**கண்டிதக்காரன்** – கண்டிப்புள்ளவன்; முன்கோபக்காரன்.

**கண்டிதம், கண்டிப்பு** – கடிந்து கூறுதல்; வரையறை; அழிவு; உறுதி; துண்டிப்பு.

**கண்டியர்** – பாணர்; புகழ்வோர்; பாடுவோர்; கள்ளர்குலப் பட்டப்பெயருள் ஒன்று.

**கண்டிருத்தல்** – தோன்றியிருத்தல்; குறிக்கப்படுதல்.

**கண்டில்** – கண்டி, இருபத்தெட்டுத் துலாம் கொண்ட அளவு.

**கண்டில் வெண்ணெய்** – ஒரு பூண்டு; பெருஞ்சீரகம்; குறிஞ்சிநிலத்துள்ள ஒரு மரம்.

**கண்டீர்** – ஒரு முன்னிலையசை.

**கண்டீரவம்** – சிங்கம்; சதுரக்கள்ளி.

**கண்டீரை** – செவ்வியம், ஒருவகைக் கருமிளகு.

**கண்டு** – கற்கண்டு; நூற்பந்து; கண்டங்கத்தரி; கட்டி; கழலைக்கட்டி; ஓர் அணிகல உரு; அக்கி; வயல்.

**கண்டுகம்** – மஞ்சிட்டிச் செடி.

**கண்டுகழித்தல்** – வெறுப்புண்டாக்கும் அளவுக்கு நுகர்ந்து மறுத்தல்; தானே சமைத்தல் முதலியவற்றால் பசி மந்தமாதல்.

**கண்டுகாணுதல்** – கவனமாய்ப் பார்த்தல்.

**கண்டுகொள்ளுதல்** – நேரில் காணுதல்; அறிந்து கொள்ளுதல்.

**கண்டுங்காணாமை** – பார்த்தும் பாராது போலிருத்தல்; போதியதும் போதாததும்; கண்ணாற் கண்டும் பொருளறிய இயலா திருத்தல்.

**கண்டுசருக்கரை** – புகைத்தற்குரிய ஒருவகை மணப்பண்டம்; கண்டசருக்கரை; கற்கண்டு.

**கண்டுசெய்தல்** – ஒன்றைப்போல் பாவித்தல்.

**கண்டுதுத்தி** – ஒரு பூண்டு.

**கண்டுநூல்** – உருண்டை நூல்.

**கண்டுபாரங்கி** – சிறுதேக்கு; பஞ்சமூலத்துள் ஒன்று; சிறுகாஞ்சொறி.

**கண்டுபிடித்தல்** – தேடியறிதல், ஆராய்ந்து அறிதல்.

**கண்டுமுட்டு** – கண்டதனால் உண்டாகும் தீட்டு; வைதிகரைக் கண்டால் சமணர்கள் மேற்கொள்ளும் தீட்டு.

**கண்டுமுதல்** – அடித்து முதலான தவசம்; கண்டமுதல், மொத்த வரவு.

**கண்டுமுதல்செய்தல்** – அறுத்து ஒப்படிசெய்தல்.

**கண்டுமூலம்** – சிறுதேக்கு; திப்பிலி.

**கண்டுயிலுதல்** – தூங்குதல்; பார்வை மங்குதல்.

**கண்டுழவு** – அரசனுடைய சொந்த நிலம்.

**கண்டூதி** – தினவு; காஞ்சொறி.

**கண்டூயம், கண்டூயை** – காண்க: **கண்டூதி**; ஆதீண்டுகுற்றி.

**கண்டூரம்** – கண்டௌடதம்; காஞ்சொறி; பூனைக்காலி.

**கண்டூரை** – பூனைக்காலி; கண்டௌடதம்.

**கண்டெடங்கடத்தி** – சமயத்திற்குத் தகுந்தபடி பேசுகிறவன்.

**கண்டெடுத்தல்** – பார்த்து எடுத்துக்கொள்ளுதல்; தேர்ந்தெடுத்தல்.

**கண்டை** – பெருமணி; எறிமணி; யானைமணி; வீரக்கழல்; சிறுதுகில்; சரிகை; சரிகைக்கரை; நூற்கண்டை; நெசவுத்தாறு; தோற்கருவி வகை; ஓர் அசைநிலை.

**கண்டோக்தி** – வெளிப்படையான சொல்.

**கண்டோட்டு** – தண்ணீர் தட்டானபோது முறைப்படி நீர்பாய்ச்சுகை.

**கண்டௌடதம்** – சன்னி மிக்க காலத்துக் கொடுக்கும் ஒருவகைக் கூட்டுமருந்து.

**கண்ண** – விரைவாக, வேகமாக; கண்ணையுடையன; நினைக்க.

**கண்ணகப்பை** – தேங்காய்ச் சிரட்டையால் செய்த அகப்பை; இருப்புச் சட்டுவம்.

**கண்ணகற்றுதல்** – துயில்நீங்கி விழித்தல்.

**கண்ணசாரம்** – கலைமான்; சதுரக்கள்ளி; நூக்கமரம்.

**கண்ணஞ்சனம்** – கண்ணிடு மை; துரிசு.

**கண்ணஞ்சுதல்** – பயப்படுதல்.

**கண்ணடி** – கண்ணாடி.

**கண்ணடித்தல்** – கண்சாடை காட்டுதல்.

**கண்ணடைத்தல்** – இடத்தை மறைத்தல்; துளை இறுகுதல்; வழியடைத்தல்; தூங்குதல்.

**கண்ணடைதல்** – ஊற்றடைதல்; துளை இறுகல்; பயிர் குருத்தடைதல்; திரிந்து கேடுறுதல்.

**கண்ணடைந்த பால்** – திரிந்து கெட்ட பால், நெடுநேரம் வைத்திருந்து கெட்டுப்போன பால்.

**கண்ணமரம்** – கண்சூட்டு நோய்.

**கண்ணமுது** – பாயசம்.

**கண்ணயத்தல்** – விரும்புதல், மோகங் கொள்ளுதல்.

**கண்ணயர்தல்** – உறங்குதல், தூக்கநிலையடைதல்.

**கண்ணராவி** – துன்பநிலை, துயரம்; கேவலநிலை.

**கண்ணரிதல்** – நீக்குதல்.

**கண்ணரிப்பு** – கண்ணோய்வகை.
**கண்ணவர்** – அமைச்சர்.
**கண்ணழற்சி** – கண்ணெரிச்சல்; பொறாமை.
**கண்ணழித்தல்** – பாட்டிலுள்ள சொற்களைப் பிரித்தல்; சொற்பொருளுரைத்தல்.
**கண்ணழித்துரை** – சொற்பொருள்.
**கண்ணழிப்பு, கண்ணழிவு** – சொற்பொருள் கூறுகை; குறைவு; காலத்தாழ்ப்பு, தாமதம்.
**கண்ணழுத்தங்கோல்** – வலிய கணுக்களுடைய மூங்கில்; ஓவியம் எழுதுங்கோல்.
**கண்ணளி** – கண்ணாற் செய்யும் அருள்.
**கண்ணறுதல்** – கண்ணோட்டம் இல்லாமை, அருளில்லாமற் போதல்; நட்புக் குலைதல்.
**கண்ணறை** – அகலம்; குருடு; வன்னெஞ்சு; சிறு அறை; வட்டத்துளை; வலை முதலியவற்றின் கண்.
**கண்ணறையன்** – கண்ணோட்டம் அற்றவன், வன்னெஞ்சன்; குருடன்.
**கண்ணன்** – கண்ணுடையவன்; கிருட்டினன்; திருமால்; கையாந்தகரை.
**கண்ணனான்** – கண்போன்றவன்; புரோகிதன்.
**கண்ணா** – ஒரு மரவகை; திப்பிலி.
**கண்ணாட்டி** – அன்பானவள், காதலி, மனையாட்டி.
**கண்ணாடி** – உருவங்காட்டி, எண்வகை மங்கலப் பொருள்களுள் ஒன்று, முகம் பார்க்கும் கண்ணாடி; மூக்குக் கண்ணாடி; மின்மினி.
**கண்ணாடிச்சால்** – திடர் இடைவிட்டு உழும் உழவு, குறுக்கும் நெடுக்குமாக உழும் உழவில் நடுவில் விடப்படும் திடர்.
**கண்ணாடிச் சுவர்** – அடுப்பையடுத்த சுவர்.
**கண்ணாடிப் பலகை** – பார்ப்பதற்கு ஏற்ற துளையுள்ள பலகை.
**கண்ணாடியிலை** – வாழையின் ஈற்றிலை, தாறு விடுமுன் வாழைமரம் விடும் சிறிய இலை.
**கண்ணாடிவிரியன்** – விரியன்பாம்புவகை.
**கண்ணாணி** – கருவிழி; உரையாணி; மலவாய்.
**கண்ணாணை** – ஒரு சூளுரை.
**கண்ணாதல்** – கருத்து வைத்தல்; அருமையாதல்.
**கண்ணாம்பூச்சி, கண்ணாம்பொத்தி** – கண்கட்டி ஆடும் பிள்ளை விளையாட்டுவகை; கண் மயக்கம்.
**கண்ணாமண்டை** – கண்மண்டை, கண்மேலுள்ள எலும்பு.
**கண்ணாயிருத்தல்** – உற்றுப்பார்த்திருத்தல்; காவலாயிருத்தல்; விழிப்பாயிருத்தல்; அருமையாயிருத்தல்.
**கண்ணார்** – பகைவர்.
**கண்ணார்வித்தல்** – கண்ணுக்கு இன்பமூட்டுதல்.
**கண்ணாரக்காணுதல்** – வெளிப்படையாகக் காணுதல்; ஆசைதீர நோக்குதல்.
**கண்ணாள்** – கலைமகள், நாமகள்.
**கண்ணாளர்** – கம்மாளர்; ஓவியர்; கணவர், நாயகர்; தோழர்.
**கண்ணாளன்** – அன்பன்; கணவன்; தலைவன்; கம்மாளன்; ஓவியன்.
**கண்ணாற்சுடுதல்** – கண்ணேறுபடப் பார்த்தல்.
**கண்ணாறு** – பாசன வாய்க்கால்; நன்செய்ப் பிரிவு; சிறு பாலம்.
**கண்ணி** – பூமாலை; பூங்கொத்து; சூடும் பூமாலை; தலைமாலை; போர்ப்பூ; புட்படுக்குங் முடிப்புக்கயிறு; பூட்டாங்கயிறு; கயிறு; தாமணி; ஓர் இசைப்பாட்டு; கரிசலாங்கண்ணி.
**கண்ணிக்கயிறு** – நெய்வோரது விழுதுக்கயிறு; பூட்டாங்கயிறு.
**கண்ணிக்கால்** – கிளைவாய்க்கால்.
**கண்ணிக்கொடி** – ஒரு படர்கொடிவகை, கருங் காக்கணம்.
**கண்ணிகட்டுதல்** – அரும்புகொள்ளுதல்; வலை கட்டுதல்.
**கண்ணிகண்ணுதல்** – சூடிய போர்க்கண்ணிக்கு ஏற்ப வினைசெய்யக் கருதுதல்.
**கண்ணிகம்** – மணித்தக்காளிச் செடி.
**கண்ணிகுத்துதல்** – கண்ணிவைத்தல்; சுருக்குக் கயிறு வைத்தல்.
**கண்ணிகை** – பூவரும்பு; தாமரைக்கொட்டை.
**கண்ணிதழ்** – கண்மடல், கண்ணிமை.
**கண்ணிமாங்காய்** – மாவடு.
**கண்ணிமை** – கண்ணிதழ்; ஒரு மாத்திரைக் கால அளவு.
**கண்ணிமைத்தல்** – இமைகொட்டல்.
**கண்ணிமையார்** – தேவர்.
**கண்ணியம்** – கனம், மதிப்பு; மேன்மை; மர மஞ்சள்.
**கண்ணியன்** – கண்ணியமுடையவன், நாகரிகன்; வேடன்.
**கண்ணிரங்குதல்** – ஒலித்தல்; அருள்செய்தல்.
**கண்ணிலன்** – குருடன்; கண்ணோட்டம் இல்லாதவன்.
**கண்ணிலி** – கண்ணில்லாதவன், குருடன்; எறும்பு.
**கண்ணிற்றல்** – எதிரே நிற்றல்.
**கண்ணிறுக்கம்** – கண்ணோய்வகை.
**கண்ணிறை** – தூக்கம்.
**கண்ணினளவு** – ஒரு மாத்திரையளவு.
**கண்ணீர்** – கண்ணிலிருந்து வழியும் நீர்.
**கண்ணுக்கரசன்** – துரிசு.
**கண்ணுக்கினியான்** – கரிசலாங்கண்ணி; பொன்னாங்காணி.

**கண்ணுக்குக் கண்ணாதல்** – மிகப் பாராட்டப்படுதல்; அந்தரங்கமாயிருத்தல்.

**கண்ணுகம்** – குதிரை.

**கண்ணுங்கருத்துமாய்** – மிக ஆவலாய்; முழுக் கவனிப்புடன்.

**கண்ணுடைமூலி** – விட்டுணுக்கிராந்தி.

**கண்ணுதல்** – நெற்றியில் கண்ணையுடையவன், சிவன்; கருதுதல், குறித்தல்; பொருந்துதல்; பார்த்தல்.

**கண்ணுமை** – காட்சி.

**கண்ணுருகுதல்** – கண்ணீர் வார்தல்.

**கண்ணுவம்** – கம்மியர் தொழில்.

**கண்ணுள்** – கூத்துவகை; அரும்புத் தொழில்; கண்ணிற்குள்.

**கண்ணுள் வினைஞன்** – ஓவியன்; கம்மாளன்.

**கண்ணுளன்** – கண்ணுளாளன், கூத்தன்; கம்மாளன்.

**கண்ணுளாளன்** – கூத்தன்; குழல் ஊதுவோன்.

**கண்ணுறக்கம்** – தூக்கம்.

**கண்ணுறுத்துதல்** – கண்ணோதல்; பொறாமை உண்டாதல்.

**கண்ணுறுதல்** – பார்த்தல்; எதிர்ப்படல்; கிட்டுதல்; இயலுதல்.

**கண்ணுறை** – கறி; மசாலை; மேலே தூவுவது; கண்ணாற்கண்டு அஞ்சும் அச்சம்.

**கண்ணூடு** – கவனம்.

**கண்ணூறு, கண்ணெச்சில்** } – காண்க: **கண்ணேறு.**

**கண்ணெடுத்துப்பார்த்தல்** – கவனித்துப் பார்த்தல்; அருள்செய்தல்.

**கண்ணெரிவு** – கண்ணழற்சிநோய், தூக்கமின்மை முதலியவற்றால் வரும் கண்ணெரிச்சல்.

**கண்ணெழுத்தாளன்** – அரசனது திருமுகம் எழுதுவோன்.

**கண்ணெறி** – கண்ணூறு; தோற்கருவிகளை வாசித்தல்; நேத்திரப்புண்.

**கண்ணெறிதல்** – விரும்புதல்; கடைக்கண்ணால் பார்த்தல்.

**கண்ணேணி** – கணுக்களிலே அடிவைத்து மலை முதலியவற்றில் ஏறிச்செல்லும்படி அமைத்துள்ள மூங்கில், கணுக்களைப் படிகளாகக் கொண்ட மூங்கிலேணி.

**கண்ணேறு** – கண் பார்வையால் வரும் தீங்கு.

**கண்ணைக்காட்டுதல்** – கண்சாடை காட்டுதல்.

**கண்ணைப்பறித்தல்** – பார்வையைக் கவர்தல்; பார்வை மழுங்குதல்.

**கண்ணைப்பிசைதல்** – கண்ணைக் கசக்குதல்.

**கண்ணொட்டுதல்** – கண் தூக்கநிலையடைதல்.

**கண்ணொடையாட்டி** – கள் விற்கும் பெண்.

**கண்ணொளி** – கண்ணிலிருக்கும் ஒளி, பார்வை.

**கண்ணோக்கு** – அருட்பார்வை; பார்வை.

**கண்ணோக்குதல்** – பார்த்தல்; அருளோடு பார்த்தல்.

**கண்ணோட்டம்** – கண்பார்வை; இரக்கம், கடைக்கண் பார்வை, அருள்காட்டுதல்; பார்வையிடுதல்.

**கண்ணோடுதல்** – இரங்குதல்; விரும்பிய பொருள் மேல் பார்வை செல்லுதல்; மேற்பார்வை பார்த்தல்.

**கண்ணோய்** – கண்ணோவு; கண்வலி.

**கண்திட்டம்** – பார்வையாலிடும் மதிப்பு.

**கண்திட்டி** – காண்க: **கண்ணேறு.**

**கண்திறத்தல்** – கண்ணை விழித்தல்; சிலை முதலியவற்றிற்குக் கண்ணமைத்தல்; இளநீர், நுங்கு முதலியவற்றின் கண்ணைத் திறத்தல்; பிறந்த குட்டிகள் கண்விழித்தல்; அறிவு உண்டாக்குதல், கல்வி கற்பித்தல்; அருள் புரிதல்; வானம் மேகமூட்டம்விட்டு வெளியாதல்.

**கண்தெரியாதவன்** – குருடன்.

**கண்தெறித்தல்** – பெரு வெளிச்சத்தால் கண்ணொளி மழுங்குதல்.

**கண்பசத்தல்** – கண்ணின் நிறம் மாறுதல்.

**கண்பஞ்சடைதல்** – கண்ணொளி மழுங்குதல்; இறப்புக்குறியாகக் கண் ஒளியறுதல்.

**கண்படுத்தல்** – கிடத்தல்; உறங்குதல்; பதிக்கப் பட்டிருத்தல்.

**கண்படுதல்** – நித்திரை செய்தல்; பரவுதல்; கண்ணோடுதல்; கண்ணேறுபடுதல்.

**கண்படை** – உறக்கம்; மனிதர் துயிலிடம், படுக்கை.

**கண்படைநிலை** – ஒருவகைச் சிற்றிலக்கியம், அரசன் துயில்கொள்ளுதலைக் கருதி மருத்துவர் முதலியோர் கூறும் புறத்துறை.

**கண்பரிதல்** – மூட்டறுதல்.

**கண்பறைதல்** – கண்ணொளி குறைதல்.

**கண்பாடு** – கண் இமை பொருந்துதல், உறக்கம்.

**கண்பார்த்தல்** – இரங்குதல், அருள்காட்டுதல்; ஆராய்ந்து பார்த்தல்.

**கண்பார்வை** – மேற்பார்வை; மதிப்பு.

**கண்பிசைதல்** – தூக்கத்தால் கண்ணைக் கசக்குதல்.

**கண்பிடி** – ஒரு காம்பில் பெருங்காயோடு கூடிய சிறுகாய்கள்.

**கண்பிதுங்குதல்** – வேலை மிகுதியால் வருத்தம் மிகுதல்.

**கண்பீலி** – கால்விரலின் அணிவகை.

**கண்பு** – சம்பங்கோரை.
**கண்புகைச்சல்** – கண்மங்கல்; கண்ணோய்வகை.
**கண்புதைத்தல்** – கண்பொத்துதல்; மறைத்தல்.
**கண்புரை** – கண்ணில் வளரும் படலம்.
**கண்புளிச்சை** – கண்பீளை.
**கண்பூத்தல்** – கண் மயங்கல்; கண்ணொளி குன்றுதல்.
**கண்பெறுதல்** – பார்வையடைதல்; பெரியோர்களுடைய அருள்நோக்கிற்கு இலக்காதல்; அறிவுபெறல்.
**கண்பொங்குதல்** – சூட்டின் மிகுதியால் காணும் குறி தெரிதல்.
**கண்பொத்துதல்** – கண்ணை மூடி விளையாடுதல்.
**கண்பொறிதட்டுதல்** – கண்பொறி கலங்குதல்; கண்ணொளி மழுங்குதல்.
**கண்போடுதல்** – ஒன்றின்மேல் தனிநோக்குக் கொள்ளல், மனம்வைத்தல், கண்ணெச்சிற் படுத்தல்.
**கண்மங்குதல்** – கண்ணொளி குறைதல்.
**கண்மங்குலம்** – பார்வை மங்குதல், வெள்ளெழுத்து.
**கண்மட்டம், கண்மட்டு** – கண்மதிப்பு.
**கண்மடல்** – இமை.
**கண்மடை** – சிறுமடை.
**கண்மண்டை** – கண்ணெலும்புக்கூடு.
**கண்மணி** – கண்ணின் கருமணி; உருத்திராக்கம்.
**கண்மயக்கு** – கண்களாற் கவருதல்; மாயத் தோற்றம்.
**கண்மயிர்** – இமைமயிர்.
**கண்மருட்சி(டு)** – கண்ணால் மயக்குகை.
**கண்மருந்து** – கண்ணுக்குப் போடும் மருந்து; கண்ணுக்கு இடும் மை.
**கண்மலர்** – மலர்போன்ற கண்; ஓர் அணிகலன்; விக்கிரகங்கட் கணியும் விழிமலர்.
**கண்மலர்தல்** – விழித்தல்.
**கண்மாயம்** – கண்கட்டு வித்தை; கண்ணேறு.
**கண்மாறுதல்** – தோன்றி மறைதல்; நிலைகெடுதல்; புறக்கணித்தல்.
**கண்மிச்சில்** – காண்க: **கண்ணேறு.**
**கண்மின்னுதல்** – கண் பொறிதட்டுதல், கண்ணொளி மழுங்குதல்.
**கண்முகப்பு** – கண்ணின் முன்னிடம், எதிரில்.
**கண்முகிழ்** – இமை.
**கண்முகிழ்த்தல்** – கண்மூடுதல், தூங்குதல்.
**கண்மூக்கி** – எறும்பு.
**கண்மூடி** – கவனமில்லாதவன்; அறிவீனன்; குருடன்.
**கண்மூடித்தனம்** – கவனமின்மை.
**கண்மூடுதல்** – இமை குவித்தல்; தூங்குதல்; சாதல்.
**கண்மை** – கண்ணுக்கிடும் மை.
**கண்வட்டக்கள்ளன்** – கள்ளநாணயம் அடிப்பவன்.
**கண்வட்டம்** – பார்வைக்கு உட்பட்ட இடம்; நாணயச்சாலை.
**கண்வரி** – வெள்விழியிலுள்ள சிவந்த கோடு.
**கண்வலிப்பூ** – நந்தியாவட்டம்; காந்தட்பூ.
**கண்வழுக்குதல்** – கண்கூசுதல்.
**கண்வளர்தல்** – தூங்குதல்; குவிதல்.
**கண்வளையம்** – மத்தளத்தின் கண்ணைச் சுற்றியுள்ள வட்டம்.
**கண்வாங்குதல்** – கண்ணைக் கவர்தல்; நோக்கம் ஒழிதல்; தூர் எடுத்தல்.
**கண்வாய்** – மதகு.
**கண்வாருதல்** – கிணறு தூர் எடுத்தல்.
**கண்வாளன்** – கணவன்; கம்மாளன்.
**கண்விடுத்தல்** – கண்திறத்தல், விழித்துப் பார்த்தல்.
**கண்விடுதல்** – ஊசி முதலியவற்றின் காது ஒடிதல்; வெண்ணெய் திரளுதல்; துளை விடுதல்; வெள்ளி முதலியன உருகுதல்.
**கண்விடுதூம்பு** – ஒருவகைத் தோற்கருவி.
**கண்விதுப்பழிதல்** – தலைவனைக் காணவேண்டுமென்னும் துடிப்பால் தலைவியின் கண்கள் வருந்துதல்.
**கண்விழி** – கண்மணி.
**கண்விழித்தல்** – கண்திறத்தல்; உறக்கம் நீங்குதல்; தூங்காதிருத்தல்; வாடின பயிர் மீண்டும் செழித்தல்.
**கண்விழிப்பு** – விழித்திருக்கை; எச்சரிக்கை; கருத்துடன் இருத்தல்.
**கண்விளிம்பு** – இமை.
**கண்வினைஞன், கண்வினையாளன்** – கம்மாளன்.
**கண்வைத்தல்** – அருளுதல்; விரும்பிப் பார்த்தல்; புண்ணிற் சந்துவிடல்; கண்ணேறுபடுத்துதல்.
**கணக்கட்சரம்** – குறியீட்டு எழுத்து.
**கணக்கப்பிள்ளை** – ஊர்க்கணக்கன்; ஒரு சாதியான்.
**கணக்கழிவு** – முறைகேடு.
**கணக்கன்** – கணக்கெழுதுவோன்; கணக்குப் பார்ப்பவன்; கணக்கில் வல்லவன்; எழுத்துக்காரன்; ஒரு சாதியான்; சாத்திரம் வல்லோன்; சண்பகமரம்; புதன்.
**கணக்கன்கோடாலி** – கணக்கில் திறமையுடையவன்.
**கணக்காசாரம்** – கணக்குப்படி.
**கணக்காய்** – மாதிரி; சரியாய்.
**கணக்காய்ச்சல்** – கணைச்சூடு என்னும் நோய்.

**கணக்காயர்** – நூலோதுவிப்போர், ஆசிரியர்; அறிஞர்; பொருந்தச் சொல்வோர்; பாவலர்.
**கணக்காயன்** – பாவலன்; ஆசிரியன்.
**கணக்கிடுதல்** – அளவிடுதல்.
**கணக்கு** – எண்; கணக்கு; கணக்குக் குறிப்பு; அளவு; முறைமை; எழுத்து; தொகை, முடிவு; செயல்; சூழ்ச்சி; கணிதநூல்; நூல்; ஒழுங்கான தன்மை.
**கணக்குக்காட்டுதல்** – கணக்கு ஒப்புவித்தல்.
**கணக்குச்சுருணை** – கணக்கோலைக் கற்றை.
**கணக்குச்சொல்லுதல்** – கணக்கு விவரம் சொல்லுதல்.
**கணக்குப்பிள்ளை** – காண்க: **கணக்கப்பிள்ளை.**
**கணக்குப்பூட்டுதல்** – கணக்கைப் பேரேட்டுக்குக் கொண்டுவருதல்.
**கணக்குமானியம்** – கணக்கனுக்குக் கொடுக்கும் இறையிலி நிலம்.
**கணக்குருவம்** – அறுதியிட்ட கணக்குக் குறிப்பு.
**கணக்குவழக்கு** – முறைமை; அளவு; அலுவல்; கொடுக்கல் வாங்கல்.
**கணக்கொப்புவித்தல்** – கணக்கைப் பிறர் ஏற்க விவரித்தல்.
**கணக்கோலை** – கணக்கு எழுதப்பெற்ற ஓலை.
**கணகணத்தல், கணகணப்பு** – வெப்பமுறுதல், உரத்த சூடு, உடம்பு சூடுறுதல்; ஒலித்தல்.
**கணகணெனல்** – ஒலிக்குறிப்பு; மிக்கு எரிதல் குறிப்பு; சூட்டுக்குறிப்பு.
**கணகம்** – படையிலொரு தொகை, தனித்தனி இருபத்தேழு தேர்யானைகளும், எண்பத்தொரு குதிரைகளும், நூற்று முப்பத்தைந்து காலாள்களும் உள்ள படைப்பிரிவு.
**கணகன்** – கணக்கன்; சோதிடன்.
**கணச்சூடு** – காண்க: **கணைச்சூடு.**
**கணத்தார்** – ஊர்க்காரிய நிருவாகிகள்.
**கணத்தி** – செங்கடம்பு; ஒருவகை வைப்பு அரிதாரம்.
**கணதீபம்** – எருக்கு.
**கணந்துள்** – ஒருவகைப் பறவை.
**கணநாதன்** – சிவகணங்கட்குத் தலைவன்; விநாயகன்; கணநாத நாயனார்.
**கணப்பறை** – தோற்கருவிவகை.
**கணப்பு** – சூடு; குளிர்காயுந் தீ; தீச்சட்டி.
**கணப்புச்சட்டி** – குளிர்காய்தற்குரிய தீப்பெய் கலம்.
**கணப்பெருமக்கள்** – ஊராட்சி மன்றத்தார்.
**கணப்பொருத்தம்** – செய்யுள் முதன்மொழிப் பொருத்தவகை; கலியாணப்பொருத்தங்களுள் ஒன்று.
**கணப்பொழுது** – நொடிப்பொழுது.
**கணபங்கம்** – கணந்தோறும் தோன்றியழிதல், நொடியில் தோன்றி அழிவது.
**கணபங்கவாதி** – பிரபஞ்சம் கணந்தோறும் தோன்றியழியும் என்று வாதிப்பவன்.
**கணபதி** – சிவகணத் தலைவன், விநாயகன்.
**கணபதியணி** – அறுகம்புல்.
**கணபன்** – கணநாதன், கணங்களைக் காப்பவன்.
**கணம்** – காலநுட்பம்; கூட்டம்; விண்மீன் கூட்டம்; ஒரு நோய்; பேய்; சிறுமை; திரட்சி; ஒருவகைப் புல்.
**கணம்புல்** – புல்வகை.
**கணவம்** – அரசமரம்.
**கணவர்** – கூட்டத்தார்.
**கணவன்** – கொழுநன்; தலைவன்.
**கணவாட்டி** – கணவாளச் சாதிப்பெண்.
**கணவாய்** – மலைகளுக்கிடையே அமையும் வழி; சிப்பிவகை.
**கணவாளம்** – ஒரு சாதி.
**கணவீரம்** – அலரிச்செடி; செவ்வலரி.
**கணன்** – கள்ளன்; தொகுதி.
**கணனம்** – எண்ணுதல்; கோள்நடை முதலியன கணிக்கை.
**கணனை** – எண்.
**கணா** – திப்பிலி.
**கணாதன்** – தார்க்கிகன்; ஒரு மதாசாரியன்; ஒரு முனிவன்.
**கணாதிபன்** – குழுத் தலைவன்; விநாயகன்.
**கணி** – கணிப்போன்; நூல்வல்லோன்; சோதிடன்; கலை; வேங்கைமரம்; மருதநிலம்; சண்பகம்; ஒரு சாதி; அணிகலன்.
**கணி (வி)** – கணக்கிடு, குணி, எண்ணு; அளவு குறி; மதி.
**கணிக்காரிகை** – குறிசொல்லும் பெண்.
**கணிகம்** – நூறுகோடி; காலநுட்பம்; கணப்பொழுது இருக்கக்கூடியது; தாற்காலிகப் பூசைக்குரியதாய்ச் செய்யப்படும் இலிங்கம்.
**கணிகவெற்பு** – திருத்தணிகைமலை.
**கணிகன்** – சோதிடன், கணியன்.
**கணிகாரம்** – கோங்கு.
**கணிகை** – பொதுமகள்; முல்லை.
**கணிச்சி** – மழு, கோடரி; தோட்டி; உளி; குந்தாலி; வெற்றிலை மூக்கரிகத்தி.
**கணிச்சியோன்** – மழுவேந்தியவன், சிவன்.
**கணிசம்** – மதிப்பு; மேம்பாடு; அளவு; மிகுதி; சத்தம்.
**கணிசம்பார்த்தல்** – மதிப்பிடுதல்; கையால் நிறையறிதல்; தகுதியறிதல்.
**கணிசித்தல்** – சிந்தித்தல்; விரும்புதல்; மதித்தல்; உய்த்துணர்தல்.

**கணித்தல்** – எண்ணுதல், கணக்கிடுதல்; வரையறுத்தல், அளவுகுறித்தல்; மதித்தல், படைத்தல்; உண்டாக்குதல்; மனத்துக்குள்ளே கணக்கிடல்.

**கணிதம்** – எண்ணுகை; இலக்கம்; கணிக்கப்பட்டது; கணிதநூல்; கணக்குவகை; சோதிடம்.

**கணிதன்** – கணக்கறிந்தோன்; கணக்கெழுதுவோன்; சோதிடன்.

**கணிப்பு** – கணக்கிடுகை; அளவிடுகை; மதிப்பிடுகை.

**கணியான்** – கூத்தாடி; ஒரு சாதியான்.

**கணிலெனல்** – காண்க: **கணீரெனல்.**

**கணிவன்முல்லை** – சோதிடநூல் வல்லவனது சீர்த்தியைச் சொல்லும் புறத்துறை.

**கணீர்கணீரெனல்** – ஈரடுக்கொலிக்குறிப்பு.

**கணீரெனல்** – ஒலிக்குறிப்பு.

**கணு** – மூங்கில் முதலியவற்றின் கண்; மரங்களின் கணு; எலும்புக்கணு; உறுப்புப்பொருத்து.

**கணுக்கால்** – பரடு, கணைக்கால், முழந்தாளின் கீழே பரட்டின் மேலே உள்ள பாகம்.

**கணுக்கிரந்தி** – பொருத்துகளில் வரும் ஒரு நோய்.

**கணுக்கை** – மணிக்கட்டு.

**கணுப்பாலை** – கடும்பாலைமரம், ஏழிலைப் பாலை.

**கணுமாந்தம்** – நகச்சுற்று.

**கணுவட்டு** – சிறுவாழைக் குலை.

**கணுவை** – ஒருவகைத் தோற்கருவி.

**கணேசுரர் எண்மர்** – நந்தி, மகாகாளர், பிருங்கி, கணபதி, இடபம், கந்தர், பார்வதி, சண்டர் என்னும் சிவகணத் தலைவராயுள்ளவர்.

**கணை** – திரட்சி; அம்பு; அம்பின் அலகு; பூரநாள்; வளைதடி, காம்பு; மூங்கில்; சிவிகையின் வளைந்த கொம்பு; கரும்பு; திப்பிலி; ஒலி; ஒரு நோய்.

**கணைக்கட்டு** – அம்புக்கட்டு.

**கணைக்கால்** – முழங்காலின்கீழ் பரட்டின் மேலுள்ள பாகம்; திரண்ட கால்; திரண்ட நாளம்.

**கணைக்கை** – முன்கை.

**கணைக்கொம்பன்** – கட்டைக் கொம்புள்ள எருது.

**கணைகாடு** – துன்பம்.

**கணைச்சூடு** – குழந்தை நோய்வகை.

**கணைப்புல்** – ஒட்டுப் புல்.

**கணைமூங்கில்** – பொன்னாங்காணி.

**கணையம்** – தண்டாயுதம்; வளைதடி; யானைத் தூண்; காவற்காடு; கணையமரம்; குறுக்கு மரம்; போர், வாத்தியவகை; பொன்; ஒரு சுரப்பி.

**கணையமரம்** – கோட்டை வாயிற்கதவின் குறுக்கு மரம்.

**கணையாழி** – மோதிரம்; முத்திரைமோதிரம்.

**கணைவெட்டை** – ஒருவகை வெட்டைநோய்.

**கத்தக்காம்பு** – புகையிலைக் காம்பு.

**கத்தணம்** – சட்டை, கவசம்.

**கத்தபம்** – கழுதை.

**கத்தம்** – தோள், புயம்; கதை; பொல்லாங்கு; மலச்சேறு.

**கத்தராளி** – தலைவன்.

**கத்தரி** – கத்தரிச் செடி, வழுதுணை; கத்தரிக்கோல்; எலிப்பொறி; ஒரு பாம்புவகை; வேனிற் காலத்துக் கடுங்கோடையாகிய சித்திரை மாதம் இருபத்துமூன்றாம் தேதி முதல் வைகாசி மாதம் ஏழாம் தேதி வரையிலுள்ள அக்கினி நட்சத்திரம்.

**கத்தரி** (வி) – கத்தரியால் வெட்டு; எண்ணம் வேறுபடு; நெருப்புப் பற்றாமற் போ; புழுவரி.

**கத்தரிக்கட்டு** – கத்தரிக்கோல்போல வீட்டு முகட்டுக் கைகளைச் சேர்க்கை.

**கத்தரிக்கோல்** – கத்தரிக்குங் கருவி.

**கத்தரிகை** – கத்தரிக்கோல், கத்தரிக்குங் கருவி; இணையா வினைக்கைவகை.

**கத்தரிகைப்பூட்டு** – காண்க: **கத்தரிக்கட்டு.**

**கத்தரித்தல்** – கத்தரியால் வெட்டிப் பிரித்தல்; அறுத்தல்; சிதறியதறிதல்; புழுவரித்தல்; மாறுபடுதல்; எண்ணம் வேறுபடுதல்.

**கத்தரிநாயகம்** – யானைச் சீரகம்; பெருஞ்சீரகம்.

**கத்தரிமணியன்** – ஓர் எலிவகை; ஒருவகைப் பாம்பு.

**கத்தரிவிரியன்** – கண்ணாடிவிரியன்.

**கத்தரை** – கோத்திரம்.

**கத்தலை(ளை)** – ஒரு மீன்வகை.

**கத்தன், கத்தா** – கர்த்தா, செய்பவன், ஆக்குவோன்; முதலாளி; முதல்வன், கடவுள்.

**கத்தி** – வெட்டுக்கத்தி; வாள்; கப்பியடிக்க உதவும் கட்டை.

**கத்திகட்டி** – போர்வீரன்; கத்திகட்டி ஆடுபவர்.

**கத்திகை** – மாலைவகை; சிறுகொடி; துகிற் கொடி; குருக்கத்தி; கருக்குவாய்ச்சி.

**கத்திதீட்டுதல்** – வெட்டுங் கருவிகளைக் கூராக்குதல்; பகைத்தல்; கெடுதிசெய்யச் சமயம் பார்த்தல்.

**கத்திதீட்டுவோன்** – வெட்டுங் கருவிகளைக் கூராக்கும் தொழிலாளி.

**கத்திநுணா** – நிலவேம்பு.

**கத்திமுனையாதல்** – மிகக் கண்டிப்பாயிருத்தல்.

**கத்தியம்** – சிறு துகில்; நல்லாடைவகை; சொல்லத் தக்கது; உரைநடை; இலக்கணமின்றி இலக்கணப் பாட்டுப்போற் சொல்வது.

**கத்தியோதம்** – மின்மினிப்பூச்சி.

**கத்திரம்** – கீரிப்பிள்ளை.

**கத்திரி** – ஒருவகைப் பறை, தலைவிரி பறை; பாம்பு; கத்தரிவெயில், அக்கினி நட்சத்திரம்.

**கத்திரிகம்** – கால்மாறி நிற்கை.

**கத்திரிசால்** – மெழுகுவத்தி நின்று எரிவதற்கு ஆதாரமான கருவி; சரவிளக்கின் தண்டு.

**கத்திரியம்** – ஆடுதின்னாப்பாளை.

**கத்திரியன்** – அரசன், சத்திரியன்.

**கத்திரு** – கர்த்தா.

**கத்திருவம்** – குதிரை.

**கத்து** – சந்து, உடற்பொருத்து; சடைவு; கடிதம்; கூப்பிடுகை; பிதற்றுகை.

**கத்து** (வி) – கூவு; விலங்கு, பறவை முதலியன போல் கத்து; பிதற்று; முழங்கு.

**கத்துதல்** – ஒலித்தல்; பறவை முதலியன ஒலித்தல்; கூவுதல்; பிதற்றுதல்; முழங்குதல்; சொல்லுதல்; ஓதுதல்.

**கத்துரு** – கர்த்தா; ஆளுவோன்; படைப்போன்; ஆதிசேடன் தாய்.

**கத்துருவம்** – குதிரைப்பற் பாடாணம்.

**கத்தூரி** – கத்தூரி விலங்கு; மான்மதம்.

**கத்தூரிகை** – தக்கோலப் பொட்டு; வால்மிளகு.

**கத்தூரிப்பிள்ளை** – கத்தூரிநாவி, ஒரு விலங்கு.

**கத்தூரிப்பொட்டு** – நெற்றிக்கிடும் கத்தூரி திலகம்.

**கத்தூரிமஞ்சள்** – ஒருவகை மஞ்சள்.

**கத்தூரிமான்** – கத்தூரி உண்டாகும் மான்வகை.

**கத்தூரியெலுமிச்சை** – எலுமிச்சைவகை.

**கத்தை** – கழுதை.

**கத்தோயம்** – கள்.

**கத்தோலிக்கன்** – கிறித்தவமதத்தின் ஒருபிரிவைச் சார்ந்தவன்.

**கதகதெனல்** – வெப்பமாதல் குறிப்பு; ஒலிக் குறிப்பு.

**கதகம்** – தேற்றாமரம், தேற்றாங்கொட்டை; சொல்லுதல்.

**கதண்டு** – கருவண்டு.

**கதநம்** – கடுப்பு; கலக்கம்; கொலை; பேசுதல்; போர்.

**கதம்** – சினம்; பஞ்சம்; பாம்பு; அடைகை; சென்றது; ஓட்டம்.

**கதம்பகம்** – கூட்டம்; கலவை; கடுகு.

**கதம்பம்** – மேகம்; நறுமணப்பொடி; கடப்பமரம்; கலவை; கலப்புணவு; கூட்டம்; கானாங்கோழி; பலவகைப் பூக்கள்; பசுமந்தை; பச்சிலை; வேர்களால் தொடுக்கப்பட்ட மாலை.

**கதம்பமுகுளநியாயம்** – மழைபெய்தபோது கதம்ப மொட்டுகள் ஒருசேரப் பூத்தல்போலச் செயல்கள் ஒருங்கே நிகழ்வதாகிய நெறி.

**கதம்பு** – கடம்பு; கூட்டம்.

**கதம்பை** – தேங்காயின் மேல்மட்டை; தேங்காய் நார்த் தும்பு; ஒருவகைப் புல்; வைக்கோல்.

**கதர்** – கைராட்டை நூலால் செய்த ஆடை.

**கதலம்** – வாழை.

**கதலி** – கதலிவாழை; துகிற்கொடி; காற்றாடி; தேற்றாமரம்.

**கதலிகை** – கதலிவாழை; துகிற்கொடி; ஓர் அணிகல உறுப்பு.

**கதலிச்சி** – கருப்பூரம்.

**கதலிப்பூ** – வாழைப் பூ; பச்சைக் கருப்பூரம்.

**கதலிபாகம்** – செய்யுள் அமைதிகளுள் ஒன்று.

**கதவம்** – கதவு; காவல்.

**கதவாக்கியம்** – சோதிட சாத்திரத்தின் ஆண்டு இறுதியைக் குறிக்கும் ஒரு தொடர்.

**கதவு** – மறைவு; காவல்; சினம்.

**கதவுக்குடுமி** – கதவு தாங்கும் கொம்மை.

**கதவுதல்** – சினத்தல்.

**கதழ்தல்** – சினத்தல்; பிளத்தல்; ஓடுதல்; விரைதல்; மிகுதல்; கடுமையாதல்; கோணுதல்.

**கதழ்வு** – விரைவு; கடுமை; மிகுதி; பெருமை; உவமைச்சொல்; ஒப்பு; சினம்.

**கதழ்வுறுதல்** – கலங்கிக் கூப்பிடுதல், அச்சத்தால் கலங்கிக் கூச்சலிடுதல்.

**கதறுதல்** – உரக்க அழுதல்; விலங்கு முதலியன கத்துதல்.

**கதனம்** – கடுமை; கடுப்பு; கலக்கம்; போர்; வேகம்.

**கதாசித்து** – இடைவிட்ட காலம்; சிலவேளை; கதைக்கொத்து; அரிதாய்.

**கதாப்பிரசங்கம்** – புராண சரித்திரஞ் சொல்லல்.

**கதாமஞ்சரி** – கதைக்கொத்து, கதைகளின் தொகுதி.

**கதாயுதம்** – தண்டாயுதம்.

**கதாயுதன்** – தண்டாயுதமுடையோன்; வீமன்; வயிரவன்.

**கதாவணி** – கணக்குப் புத்தகம்.

**கதாவுதல்** – சொல்லுதல்.

**கதி** – நடை; குதிரை நடை; போக்கு; விரைவு; வழி; தேவகதி; அறிவு; பரகதி, வீடுபேறு; நிலை; ஆற்றல்; படலம்; சாதனம்; புகலிடம்.

**கதிக்கும்பச்சை** – நாகப்பச்சை, பச்சைக்கல்.

**கதிக்கை** – அதிகரிப்பு; கருக்குவாளிமரம்.

**கதிகால்** – காண்க: **ஊணிக்கம்பு**

**கதித்தல்** – செல்லுதல்; எழுதல்; நடத்தல்; விரைதல், மிகுதல்; பருத்தல்; அறிதல்; கதியடைதல்.

**கதித்தவிலை** – மிகுந்த விலை, அநியாய விலை.

**கதிதம்** – சொல்லப்பட்டது.

**கதிப்பு** – கதித்தல், இறுகல்.

**கதிமி** – தலைமைக் குடியானவன்.

**கதிமை** – பருமை, கனம்; கூர்மை.

**கதிமோட்சம்** – கழுவாய், பரிகாரம்; மீளும் நிலை.

**கதியற்றவன்** – திக்கற்றவன், மிக வறியவன்.

**கதியால்** – வேலியில் நாட்டுங் கிளை.

**கதிர்** – ஒளிக்கதிர், சூரிய கிரணம்; ஒளி; வெயில்; சூரியசந்திரர்; நெற்கதிர், இருப்புக்கதிர், நூல் நூற்குங் கருவி; சக்கரத்தின் ஆரக்கால்; தேரினுட்பரப்பின் மரம்.

**கதிர்க்கட்டு** – நெல்லரிக் கட்டு.

**கதிர்க்கடவுள்** – சூரியன்.

**கதிர்க்கம்பி** – கதிர்க்கோல், நூற்கும் கருவி; தட்டார் கருவிவகை.

**கதிர்க்குஞ்சம்** – கதிர்க்கற்றை.

**கதிர்க்குடலை** – மணிபிடியாத கதிர்.

**கதிர்க்கோல்** – நூல் நூற்கும் கருவி; தட்டார் கருவிவகை.

**கதிர்ச்சாலேகம்** – இரும்புக் கம்பிகளையுடைய சாளரம்.

**கதிர்ச்சிலை** – சூரியகாந்தக் கல்.

**கதிர்செய்தல்** – ஒளிவிடுதல்.

**கதிர்த்தல்** – ஒளிர்தல், ஒளிவீசுதல்; வெளிப்படுதல்; மிகுதல்; இறுமாத்தல்.

**கதிர்த்தாக்கம்** – கதிர் முதிர்ந்து சாய்கை.

**கதிர்நாள்** – உத்தரநாள்.

**கதிர்ப்பகை** – இராகுகேதுக்கள்; அல்லி; குவளை.

**கதிர்ப்பயிர்** – இளங்கதிர்த் தவசம்.

**கதிர்ப்பாரி** – தாமரை.

**கதிர்ப்பு** – ஒளி.

**கதிர்ப்புல்** – ஒருவகைப் புல்.

**கதிர்மகன்** – சூரியன் புதல்வன்: யமன்; சனி; சுக்கிரீவன்; கன்னன்.

**கதிர்மடங்கல்** – அறுவடை முடிவு.

**கதிர்மண்டபம்** – தேரைப்போல அலங்கரிக்கப் பட்ட மணவறை அல்லது மண்டபம்.

**கதிர்முத்து** – ஆணிமுத்து, சிறந்த முத்து.

**கதிர்வட்டம்** – சூரியன்.

**கதிர்வாங்குதல்** – ஒளிவிடுதல்; கதிர் ஈனுதல்.

**கதிர்வால்** – பயிர்க்கதிரின் நுனி.

**கதிர்விடுதல், கதிர்வீசுதல்** – ஒளிவீசுதல்; கதிர்வாங்குதல், கதிர் ஈனுதல்.

**கதிரடித்தல்** – போரடித்தல்.

**கதிரம்** – அம்பு; கருங்காலி, ஒருவகைப் பிசின் மரம்.

**கதிரவன்** – சூரியன்.

**கதிரவன் புதல்வி** – யமுனை.

**கதிரி** – நாயுருவி.

**கதிரீனுதல்** – கதிர்வாங்குதல், கதிர் வெளிப்படுதல்.

**கதிரெழுதுகள்** – சூரிய கிரணத்து எழும் துகளாகிய ஒரு நுட்ப அளவு.

**கதிரை** – கதிர்காமம்; நாற்காலி.

**கதிரோன்** – சூரியன்.

**கது** – வடு; வெடிப்பு, மலைப்பிளவு.

**கதுக்கு** – இராட்டினத்தில் நூலைப் பற்றும் உறுப்பு.

**கதுக்குதல்** – அதக்குதல்; பெருந்தீனி கொள்ளுதல்.

**கதுப்பு** – கன்னம், தாடை; தலைமயிர், கூந்தல்; பழத்தின் நடுவேயுள்ள கொட்டையை நீக்கி அறுத்த துண்டம்; பசுக் கூட்டம்.

**கதுப்புளி** – முக்கவருள்ள சூட்டுக்கோல்.

**கதுமுதல்** – உறுமுதல்; கடிந்துகொள்ளுதல்; பிடிவாதம் செய்தல்.

**கதுமெனல்** – விரைதல்; விரைவுக்குறிப்பு.

**கதுமை** – காண்க: **கதிமை.**

**கதுவாய்** – குறைதல்; வடுப்படுதல்; மேற்கதுவாய், கீழ்க்கதுவாய் என்னும் தொடை விகற்பம்.

**கதுவுதல்** – பற்றுதல்; வலிந்திழுத்தல், நீங்காது பற்றல்; கலங்குதல்; அழித்தல்; எதிரொளித்தல்; வாங்குதல்; சினத்தல்.

**கதை** – பெரிய சரிதம்; வரலாறு; கட்டுக்கதை; இதிகாச புராணங்கள்; பெருங்கதை; பொய்ச் செய்தி; சொல்; உரையாடல்; விதம்; தடி; தண்டாயுதம்.

**கதைகட்டுதல்** – கதையுண்டாக்குதல்; பொய்ச் செய்தி எழுப்புதல்.

**கதைகாரன்** – கதை சொல்லுவோன்; வாயாடி, வீண்பேச்சுக்காரன்; தந்திரமுள்ளவன்.

**கதைகாவி** – குறளை கூறுவோன், கோட் சொல்லுவோன்.

**கதைத்தல்** – சொல்லுதல்; கதை சொல்லுதல்; பேசுதல்; வளவளவென்று பேசுதல், வீண் பேச்சுப் பேசுதல்.

**கதைதல்** – சிறப்பித்துச் சொல்லுதல்.

**கதைபடித்தல்** – புராணம் படித்தல்; பொய் கூறுதல்.

**கதைபண்ணுதல்** – கட்டிப் பேசுதல்; கதாகாலட்சேபம் செய்தல்.

**கதைபிடுங்குதல்** – பிறர் வாயினின்றும் இரகசியம் வெளிவரும்படி செய்தல்.

**கதைமாறுதல்** – பொருள் பலபடப் பேசுதல்.

**கதையறிதல்** – உளவறிதல்.

**கதையெடுத்தல்** – ஒரு பொருளை அறிவிக்கத் தொடங்குதல்.

**கதைவளர்த்தல்** – பேச்சை விவரித்தல்.

**கதைவிடுதல்** – பொய்ச்செய்தி எழுப்புதல்; இரகசியம் வெளிப்படும்படி தந்திரமாய்ச் சொல்லுதல்.

**கந்தகட்பலம்** – தான்றிமரம்.

**கந்தகதைலம்** – சொறிக்கிடும் கந்தகக் கலப்புள்ள எண்ணெய்.

**கந்தகப் பூ** – மருந்துச் சரக்குவகை.

**கந்தகபூமி** – கந்தக சம்பந்தமுள்ள நிலம்; காங்கையான நாடு.

**கந்தகம்** – ஒருவகைத் தாதுப்பொருள்; ஒரு மருந்து; உள்ளி; முருங்கைமரம்; ஒருவகைத் தவச அளவை.

**கந்தக விரைப்பாடு** – ஐந்து ஏக்கர் அளவுள்ள நிலம்.

**கந்தகாப்பிரகம்** – மஞ்சள் அப்பிரகம்.

**கந்தகாரி** – ஆடுதின்னாப்பாளை.

**கந்தங்குவளம்** – கழுகு.

**கந்தசட்கம்** – தமரத்தைமரம்.

**கந்தசட்டி** – ஐப்பசி மாதத்தின் அமாவாசைக்குப் பின் வரும் சட்டி திதி, முருகக் கடவுள் சூரபதுமனை வென்றதைக் குறித்து ஐப்பசி மாதச் சட்டி திதியில் நடத்தப்படும் திருநாள்.

**கந்தசாரம்** – சந்தனம்; பனிநீர்.

**கந்தசாலி** – ஒருவகை உயர்ந்த செந்நெல்.

**கந்தடித்தல்** – சூடு மிதித்தபின் கதிர்த்தாளைக் கோல்கொண்டு அடித்தல்.

**கந்தடைத்தல்** – களத்தைச் சுற்றி வைக்கோலால் வேலி கட்டுதல்.

**கந்தநாகுலி** – செவ்வியம்; மிளகு; மிளகுகொடி.

**கந்தநாகுலியம்** – பேரரத்தை.

**கந்தப்பொடி** – மணப்பொடி.

**கந்தபத்தம்** – புழுகுசம்பா நெல்.

**கந்தபாடாணம்** – கந்தகம்.

**கந்தபுட்பி** – மெருகன்கிழங்குச் செடி.

**கந்தபுட்பை** – அவுரி.

**கந்தம்** – மணம்; சந்தனம்; வசம்பு; கந்தகம்; கிழங்குப்பொது; கழுத்தடி; வெள்ளைப் பூண்டு; கருணைக்கிழங்கு; இந்திரியம்; மணப் பூடு; தூண்.

**கந்தமாதனம்** – ஒரு மலை, குலகிரி எட்டனுள் ஒன்று.

**கந்தமூடிகம்** – கத்தூரி விலங்கு; மூஞ்சூறு.

**கந்தமூலபலம்** – கிழங்கு வேர் கனிகள்.

**கந்தமூலி** – சிறு இண்டஞ்செடி.

**கந்தர்** – கந்தன், முருகக்கடவுள்.

**கந்தர்ப்ப நகரம்** – கந்தருவ நகரம்.

**கந்தர்ப்பர்** – கந்தருவர்.

**கந்தர்ப்பன்** – மன்மதன்.

**கந்தரக்காட்டம்** – வெள்ளைப் பாடாணம்.

**கந்தரசம்** – சந்தனம்.

**கந்தரசு** – சாம்பிராணி.

**கந்தரம்** – கழுத்து; மேகம்; மலைக்குகை; புன முருங்கைமரம்; கடற்பாசி; கற்கடக பாடாணம்; தீமுறுகற் பாடாணம்.

**கந்தரமுட்டி** – நேரே அம்பெய்வதற்கு வில்லைப் பிடிக்கை.

**கந்தராசம்** – ஒருவகை மணமுள்ள மரம், சந்தனம்.

**கந்தருவம்** – இசை, பண்; இசைப்பாட்டு; எண் வகை மணத்துள் ஒன்று, தலைவனும் தலைவியும் தாமே மணத்தல்; தேவசாதியுள் ஒன்றான கந்தருவ சாதி; குதிரை.

**கந்தருவர்** – பதினெட்டுத் தேவசாதியுள் ஒரு வகையார்; இசைவல்ல சிறகுடைத் தேவ குலத்தார்.

**கந்தருவவேதம்** – இசைநூல், சாமவேதத்தின் ஒருபாகம்.

**கந்தல்** – கேடு, ஒழுக்கக்கேடு; அறியாமையால் விளையும் குற்றம்; பீறல், கிழிந்த ஆடை.

**கந்தவகம்** – மோப்பம்; மூக்கு.

**கந்தவகன்** – காற்று, வாயுதேவன்.

**கந்தவடி** – மணத்தயிலம்.

**கந்தவருக்கம்** – மணப்பொருள்கள்.

**கந்தவாகன்,**<br>**கந்தவாகனன்** } – காண்க: **கந்தவகன்.**

**கந்தவாரம்** – அரண்மனையிலுள்ள அந்தப்புரம், அரசன் தேவியிருக்கை.

**கந்தவுத்தி** – கந்தவருக்கம், சேர்த்தற்குரிய மணப் பண்டங்கள்.

**கந்தழி** – பரம்பொருள், ஒரு பற்றுக்கோடும் இன்றி அருவாகித் தானே நிற்கும் தத்துவங் கடந்த பொருள், கடவுள்; கண்ணன் வாணனது சோநகரத்தை அழித்ததைக் கூறும் புறத்துறை; மதிலையழித்தலாகிய புறத் துறை.

**கந்தளம்** – கவசம், சட்டை; கதுப்பு; பொன்; முளை; தளிர்; போர்.

**கந்தன்** – முருகக்கடவுள்; அருகதேவன்; சீர்பந்த பாடாணம், சூதபாடாணம்.

**கந்தாடை** – ஒரு பார்ப்பனக் குடி.

**கந்தாயம்** – ஆண்டில் மூன்றில் ஒரு பாகம்; தவணை; ஆதாயம்; அறுவடைக்காலம்; கந்தாய வரி கொடுக்குங் காலம்.

**கந்தார்த்தம்** – ஓர் இசைப்பாட்டு.

**கந்தாரம்** – கள்; காந்தாரம், ஓர் இசைப்பாட்டு.

**கந்தாலி** – கச்சோலம்.

**கந்தாவகன்** – காண்க: **கந்தவகன்.**

**கந்தி** – மணப்பொருள்; ஆரியாங்கனை என்னும் தவப்பெண், கமுகு; துவரை; மரகதம்; கந்தகம், கந்தக பாடாணம்.

**கந்திகை** – சிறுதேக்கு.

**கந்தித்தம்** – சீலை.

**கந்தித்தல்** – மணத்தல்.

**கந்திரி** – ஒரு முகமதியப் பண்டிகை, நாகூரில் துருக்கர் கொண்டாடும் சிறப்புப் பண்டிகை; பிச்சைக்காரன்; வண்டி.

**கந்திருவர்** – கந்தருவர், யாழ்வல்லோர்.

**கந்திவாருணி** – பேய்த் தும்மட்டி.

**கந்திற்பாவை** – தூணில் பெண் வடிவாய் அமைந்த தெய்வம்.

**கந்து** – தூண்; யானை கட்டும் தறி; ஆதீண்டு குற்றி; தெய்வம் உறையும் தூண்; பற்றுக் கோடு; யாக்கையின் மூட்டு; சந்து; கழுத்தடி; வண்டியுளிரும்பு; வண்டி இருசு; வண்டி; மாடு பிணைக்குந் தும்பு; வைக்கோல் வரம்பு; பொலிப் புறத்தடையும் பதர்.

**கந்துகட்டுதல்** – காய்கறிகளைக் கொதிக்கவைக் கும்போது நீரில் அவை ஒதுங்கி மிதத்தல்; களத்தைச் சுற்றி வைக்கோல் சேர்தல்.

**கந்துகம்** – பந்து; குதிரை; குறுநில மன்னரின் குதிரை.

**கந்துகவரி** – மகளிர் பந்தாட்டுப் பாட்டு.

**கந்துகளம்** – நெல்லும் பதரும் கலந்த களம்.

**கந்துகன்** – தான்றிமரம்.

**கந்துதல்** – கெடுதல்; கூச்சமடைதல்.

**கந்துமாறிக்கட்டுதல்** – நுகத்தில் மாடுகளை மாற்றிக்கட்டுதல்; தந்திரம்செய்துபுரட்டுதல்.

**கந்துமாறுதல்** – இணைத்ததை மாற்றிவிடல், நுகத்திற் பூட்டிய மாடுகளை வலமிடம் மாற்றிக் கட்டுதல்.

**கந்துவட்டி** – பிடிப்புவட்டி.

**கந்துவான்** – பிணைகயிறு.

**கந்துள்** – கரி.

**கந்துளம்** – பெருச்சாளி.

**கந்தேறு** – கோடகசாலை என்னும் ஒருவகைப் பூடு.

**கந்தை** – கிழிந்த ஆடை, பீற்றல் துணி; சிறு துகில்; கருணைக்கிழங்கு.

**கந்தோடம்** – குவளைவகை.

**கந்தோதம்** – தாமரை; குவளை.

**கப்பங்கட்டுதல்** – திறைசெலுத்தல்.

**கப்பச்சு** – கம்மாளர் கருவியுள் ஒன்று.

**கப்படம்** – கந்தைச்சீலை; சீலை, ஆடை.

**கப்படா** – அரைக்கச்சை.

**கப்படி** – கொடுக்கு.

**கப்படிமரம்** – வேரில் இருந்து கிளைத்தெழும்பும் ஒருவகை மரம்.

**கப்பணம்** – இரும்பால் ஆனைநெருஞ்சி முள் போலப் பண்ணிய கருவி; ஒருவகைக் கழுத் தணி; கைவேல்; காப்புக்கயிறு; கொச்சைக் கயிறு.

**கப்பம்** – திறைப்பொருள், சிற்றரசர் பேரரச ருக்குக் கொடுக்கும் திறை; கற்பம்.

**கப்பரை** – பிச்சைக் கலம்; மட்கலம்; திருநீற்றுக் கலம்; கிடாரம்.

**கப்பல்** – மரக்கலம்.

**கப்பல்மிளகு** – மிளகாய்.

**கப்பல்வாழை** – ரசதாளி, வாழைவகை.

**கப்பலேற்றுதல்** – தண்டனையாகத் தொலைவி லுள்ள நாட்டிற்கு அனுப்புதல், நாட்டைவிட்டு வெளியேற்றுதல்; அம்பலப்படுத்துதல்.

**கப்பலோட்டி** – மாலுமி; கப்பலின் வேலையாள்.

**கப்பலோட்டுதல்** – மரக்கலஞ் செலுத்துதல்.

**கப்பலோடுதல்** – நாவாய் செல்லுதல்; கடல் கடந்து வாணிகம் செய்தல்.

**கப்பற்கடலை** – பட்டாணிக்கடலை.

**கப்பற்கதலி** – வாழைவகை.

**கப்பற்காரன்** – கப்பல் தலைவன்; கப்பலில் வேலை செய்வோன்.

**கப்பற்கால்** – படகு.

**கப்பற்படை** – கடற்படை; கப்பலுக்குரிய பொருள்.

**கப்பற்பாட்டு** – கப்பற்காரர் பாடும் ஓடப்பாடல், ஏலேலோப் பாட்டு.

**கப்பற்பாய்** – கப்பலிற் காற்றை வாங்குவதற் காகச் சீலையால் அமைந்த பாய்.

**கப்பறை** – தாய விளையாட்டில் ஒரு கணக்கு.

**கப்பாசு** – தூய்மை செய்யாத பருத்தி.

**கப்பி** – தவசம்; சிறுநொய்; கயிறிழுக்குங் கருவி; நெய்வோர் கருவியுள் ஒன்று; பொய்யுரை; சல்லி.

**கப்பிக்காய்** – பருவமல்லாக் காலத்தில் காய்க்கும் காய்.

**கப்பித்தல்** – கிளைவிடல்; பெருத்தல்; முகை யரும்பல்.

**கப்பிப்பிஞ்சு** – இளம்பிஞ்சு; பருவம் அல்லாக் காலத்தில் தோன்றிய பிஞ்சு.

**கப்பிப்பூ** – உரிய காலத்தில் ஒருசேர இலுப்பைப்பூ விழுகை.

**கப்பியம்** – உண்ணத்தக்கது.

**கப்பியல்** – கயிறிழுக்குங் கருவி.

**கப்பு** – கவர்கொம்பு; கிளை; பிளவு; சிறுதூண்; தோள்; ஆதாரம்; கவர்ச்சி; சாயத்தின் அழுத் தம்; செஞ்சாயவகை; மயிர்க்கு ஊட்டுஞ் சாயம்; கமுக்கம்; உயரம்.

**கப்புக்கால்** – வளைகால், முட்டுக்கால்.

**கப்புக்குனையறுத்தல்** – இழையோட்டுதல்.

**கப்புச்சிப்பெனல்** – பேச்சின்றி அடங்குகைக் குறிப்பு.

**கப்புத்தோள்** – வலத்தோளும் இடத்தோளுமாக மாறிக் காவுகை.

**கப்புதல்** – மூடிக்கொள்ளல்; விரைவாய் விழுங்குதல்; உண்ணல்.

**கப்புமஞ்சள்** – கொச்சியிலிருந்து கிடைக்கும் ஒருவகை உயர்ந்த மஞ்சள், குளிமஞ்சள்.

**கப்புரம்** – கருப்பூரம்.

**கப்புவலை** – வலைவகை.

**கப்புவிடுதல்** – கிளைவிடுதல்; புரட்டுப் பேசுதல்.

**கப்பைக்காலன்** – வளைந்த காலை உடையவன்.

**கபக்கட்டு** – சளி நெஞ்சில் திரண்டிருக்கை.

**கபகபவெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; பசி முதலியவற்றால் வயிறெரிகைக் குறிப்பு.

**கபட்டு நாக்கு** – வஞ்சம் பேசும் நா.

**கபட்டுப் படிக்கல்** – கள்ள நிறைகல்.

**கபடக்காரன்** – வஞ்சகன்.

**கபடநாடகம்** – மிகத் தந்திரமான செய்கை; வஞ்சக நடிப்பு; போலி நடிப்பு.

**கபடம்** – வஞ்சகம்.

**கபடவித்தை** – மாயவித்தை.

**கபடன்** – வஞ்சகன், கள்ளன்.

**கபடி** – கபடன்; வஞ்சகி; தந்திரசாலி; சடுகுடு விளையாட்டு.

**கபடு** – சூது, வஞ்சனை.

**கபந்தம்** – தலையற்ற உடல், முண்டம்; அறிவிலி.

**கபநாசம்** – கண்டங்கத்தரி.

**கபநாசனி** – தேற்றாங்கொட்டை.

**கபம்** – கோழை, சிலேட்டுமம், சளி, மார்ச்சளி.

**கபம்பம்** – வாலுளுவை.

**கபர்த்தம்** – சிவபிரான் சடை.

**கபர்த்தி** – சடையையுடைய சிவன்.

**கபரி** – பெருங்காயம்.

**கபரோகம்** – சிலேட்டும நோய், காசநோய்வகை.

**கபவாதசுரம்** – சிலேட்டுமவாதங்களின் சேர்க்கையால் தோன்றும் சுரநோய்.

**கபவிரோதி** – சிற்றரத்தை.

**கபாடக்கட்டி** – வசம்பு.

**கபாடபந்தனம்** – கதவடைப்பு.

**கபாடம்** – கதவு; காவல்; பொதி.

**கபாய்** – நிலையங்கி, மேற்சட்டை.

**கபால்** – கபாலம், தலையோடு.

**கபாலக்கரப்பான்** – தலையில் வரும் ஒரு நோய்.

**கபாலக்குத்து, கபாலச்சூலை** } – கடுந்தலைவலி.

**கபாலசாந்தி** – ஆவிரை.

**கபாலதரன்** – பிரமன் தலையோட்டைக் கையிலும் தலையோடுகளை மாலையாகக் கழுத்திலும் கொண்ட சிவன்.

**கபாலநீர்** – தலையிலேறிய கெட்ட நீர்.

**கபாலபாணி** – கபாலத்தைக்கையிலேந்திய சிவன்.

**கபாலம்** – மண்டையோடு; இரப்போர் கலம்; சிவன் ஐயமேற்கும் பாத்திரம்; கடுந்தலைவலி; நீர்க்குடத்தின் ஒரு பகுதி; முட்டையின் ஒரு பகுதி.

**கபாலமூர்த்தி** – காண்க: **கபாலதரன்.**

**கபாலரேகை** – தலையெழுத்து.

**கபாலவாசல்** – தலையின் உச்சித்தொளை.

**கபாலவாடை** – தலைநோய்.

**கபாலவாயு** – கபாலக்குத்து, நரம்புத் தலைவலி.

**கபாலன்** – சிவன்; சீர்பந்த பாடாணம்.

**கபாலி** – கபாலத்தையுடைய சிவன்; வயிரவன்; உமாதேவி; பதினோர் உருத்திரருள் ஒருவர்.

**கபி** – குரங்கு; கயிறிழுக்குங் கருவி.

**கபிஞ்சலம்** – காடை; சாதகப்புள்; ஆந்தை; சிச்சிலிப்பறவை; ஒரு புண்ணிய சிவத்தலம்.

**கபித்தம்** – விளாமரம்; அபிநயவகை, சுட்டுவிரல் நுனியும் பெருவிரல் நுனியும் நகங்கள் கௌவப் பிடித்து ஏனைய மூன்று விரலும் மெல்லெனப் பிடிப்பது; கொட்டிக்கிழங்கு.

**கபிதம்** – கருஞ்சீரகம்.

**கபிலப்பொடி** – மரவகை.

**கபிலம்** – புகர்நிறம், கருமை கலந்த பொன்மை; உபபுராணங்கள் பதினெட்டனுள் ஒன்று; கரிக்குருவி; கபிலப்பொடி.

**கபிலமதம்** – கபிலரால் ஏற்படுத்தப்பட்ட சாங்கிய மதம்.

**கபிலர்** – உருத்திரர்; ஒரு புலவர்.

**கபிலை** – எருதுகளைப் பூட்டி நீரிறைக்கும் ஏற்றம்; கருமை கலந்த பொன்மை; காராம் பசு; தெய்வப்பசு, காமதேனு; தென்கீழ்த் திசைப் பெண்யானை; ஓர் ஆறு; மணப்பண்டவகை.

**கபுக்குக்கபுக்கெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**கபோதகத்தலை** – கொடுங்கையைத் தாங்குதலையுடைய பலகை.

**கபோதகம்** – புறா; சிற்பவுறுப்புகளுள் ஒன்று.

**கபோதம்** – புறா; கரும்புறா; புறாமுட்டிச் செடி; கொடுங்கை; பெருவிரல் விட்டு நிமிர மற்றை நான்கு விரல்களும் ஒட்டி நிமிரும் இணையா வினைக்கை; இரண்டு கைகளையும் கபோதையாகக் கட்டுவது.

**கபோதி** – குருடன்; அறிவிலி; பெண்புறா.

**கபோலம்** – கன்னம், தாடை.

**கம்** – வானம்; காற்று; மேகம்; வெண்மை; உயிர்; தலை; நீர்; ஆடு; தொழில்; கம்மியர் தொழில்; வீட்டின்பம்; மண்டையோடு; பிரமன்.

**கம்பக்கணை** – மனஞ்சலியாதவன்.

**கம்பக்(ங்)கூத்தாடி** – கழைக்கூத்தன்.

**கம்பக்கூத்து** – கழைக்கூத்து.

**கம்பங்களி** – கம்புமாவாற் சமைத்த களி.

**கம்பங்கொளுத்துதல்** – கம்பவாணத்துக்கு நெருப்புவைத்தல்.

**கம்பங்கோரை** – ஒருவகைப் புல்.

**கம்பசூத்திரம்** – குறிப்புப் பொருள் அடங்கிய கம்பன் கவி; விடுவிக்க இயலாத புதிர்.

**கம்பசேவை** – கம்பத்தில் திருவிளக்கு ஏற்றிச் செய்யும் பூசை.

**கம்பஞ்சம்பா** – சம்பா நெல்வகை.

**கம்பட்டக்காரன்** – காசு செய்வோன்.

**கம்பட்டக்கூடம்** – நாணயசாலை.

**கம்பட்டம்** – காசு, நாணயம்.

**கம்பட்டமுளை** – நாணய முத்திரை.

**கம்படி** – ஊர்ப்புறத்துக் கம்பு விளைவிக்கும் நிலம்.

**கம்பத்தக்காரன்** – நிலச் சொந்தக்காரன்; செல்வன்.

**கம்பத்தம்** – சொந்த வேளாண்மை, வேளாண்மை.

**கம்பத்து** – தோணியின் ஓட்டை; கப்பலில் விழும் ஓட்டை; பகட்டு.

**கம்பத்துப்பார்த்தல்** – கப்பலின் ஓட்டையை அடைத்தல்.

**கம்பதாளி** – ஒருவகை நோய்.

**கம்பபா(வா)ணம்** – நீண்ட கம்பத்தில் இணைத்துக் கொளுத்தப்படும் வாணம்.

**கம்பம்** – தூண்; விளக்குத்தண்டு; கொடிமரம்; அசைவு; நடுக்கம்; கச்சி யேகம்பர்கோயில்; பாய்மரம்.

**கம்பம்புல்** – புல்வகை.

**கம்பரிசி** – கம்புத்தவசம்.

**கம்பல்** – ஆடை; ஆரவாரம்.

**கம்பலம்** – கம்பளி; இரத்தினக் கம்பளம்; செவ்வாடை; மேற்கட்டி; கம்பலை, ஆரவாரம்.

**கம்பலை** – நடுக்கம்; அச்சம்; துன்பம்; சச்சரவு; ஆரவாரம்; மருதநிலம்; யாழோசை.

**கம்பலைகட்டுதல்** – சச்சரவு செய்தல்.

**கம்பலைத்தல்** – ஆரவாரித்தல்.

**கம்பலைப்படுதல்** – சண்டை செய்தல்.

**கம்பலைமாரி** – சினமுடையவள்; ஒரு பெண் தெய்வம்.

**கம்பளத்தான்** – ஒரு சாதியான்.

**கம்பளம்** – ஆட்டுமயிரினாற் செய்யப்பட்ட போர்வை முதலியன; கம்பளிப் போர்வை; செவ்வாடை; செம்மறிக்கடா; மயிர்ப்படாத் தாலாகிய இருக்கை; தொட்டியச் சாதி; சருக்கரைப் பூசணி.

**கம்பளர்** – மருதநில மாக்கள்; தொட்டியச் சாதியார்.

**கம்பளி** – ஆட்டுமயிரினாற் செய்யப்பட்ட ஆடை முதலியன; ஆட்டின் மயிர்; ஒருவகை ஆடு; கம்பளிச்செடி; தாறுமாறு; ஒருவகைப் பூச்சி.

**கம்பளிச்செடி** – முசுக்கட்டை.

**கம்பளிப்பூச்சி** – உடலில் மயிருள்ள ஒருவகைப் புழு.

**கம்பளியாடு** – குறும்பாடு.

**கம்பன்** – காஞ்சிபுரத்துச் சிவபிரான்; தமிழில் இராமாயணம் இயற்றிய பெரும்புலவர்.

**கம்பனம்** – அசைவு; நடுக்கம்.

**கம்பாகம்** – கப்பற்கயிறு.

**கம்பி** – பொன், இரும்பு முதலியவற்றின் கம்பி; காதணிவகை; கடிவாளம்; ஆடையின் ஓரச் சிறுகரை; சித்திரக் கம்பி; வெடியுப்பு; காசு; நீண்ட கொம்பு; ஒருவகை மரம்; கம்பளிப் பிசின்; அபின்; தந்தி.

**கம்பிகட்டுதல்** – ஆடைக்குச் சாயக்கரை யிடுதல்; எழுதகவேலை செய்தல்; கம்பியால் அணிகலன் கட்கு முத்து முதலியவை கட்டுதல்; குடைக் கம்பி கட்டுதல்.

**கம்பிகாட்டுதல்** – காண்க: கம்பிநீட்டுதல்.

**கம்பித்தல்** – அசைதல்; நடுங்குதல்; முழங்குதல்; அசைத்தல்; நடுங்கச் செய்தல்.

**கம்பிதம்** – அசைவு, நடுக்கம்; கமகம் பத்தனுள் ஒன்று.

**கம்பிநீட்டுதல்** – ஓடிவிடுதல், ஓடிமறைதல்.

**கம்பியச்சு** – கம்பியிழுக்கும் தட்டார் கருவி.

**கம்பிலி** – கம்பி; ஒரு மரவகை.

**கம்பிவாங்குதல்** – கம்பியை நீட்டமாக்கல்; ஓடி விடுதல்.

**கம்பிவிளக்கு** – மின்சாரவிளக்கு.

**கம்பீரம்** – ஆழம்; ஆழ்ந்த அறிவு; வீறு; செருக்கு.

**கம்பீரவாக்கு** – பொருளாழ்ந்த செய்யுள்; எடுப் பான குரல்.

**கம்பீரித்தல்** – எடுப்பான குரலாற் பேசுதல்.

**கம்பு** – ஒருவகைத் தவசம்; கம்பம்; சிறு தடி; கழி; மரக்கொம்பு; செடிகொடிகளின் சிறு தண்டு; அளவுகோல்; கட்டுத்தறி; சங்கு.

**கம்புகட்டி** – நீர் பாய்ச்சுவோன்;

**கம்புகம்** – அபின்.

**கம்புள்** – சங்கு; சம்பங்கோழி, நீர்ப்பறவை; வானம்பாடி.

**கம்பை** – கதவு முதலியவற்றின் சட்டம்; ஏட்டுச் சுவடிச் சட்டம்; அதிகார வரம்பு.
**கம்மக்குடம்** – கம்மியர் செய்த குடம்.
**கம்மக்கை** – கடினவேலை.
**கம்மகாரர்** – கப்பலோட்டிகள்.
**கம்மத்தம்** – காண்க: **கம்பத்தம்.**
**கம்மம்** – கம்மியர் தொழில்.
**கம்மல்** – மகளிர் காதணியுள் ஒன்று; குரலடைப்பு; மங்கல்; மந்தாரம்; குறைவு.
**கம்மாட்டி** – கம்மாளப்பெண்.
**கம்மாணன்** – கம்மாளன்.
**கம்மால்(லை)** – உலோகவேலை செய்யுமிடம்.
**கம்மாளச்சி** – கம்மாளச்சாதிப் பெண்.
**கம்மாளன்** – உலோகவேலை செய்வோன்: தட்டான், கன்னான், சிற்பன், தச்சன், கொல்லன், பொன்வேலை முதலிய தொழில் செய்யுஞ் சாதியான்.
**கம்மாறர்** – மரக்கல மோட்டுவோர்.
**கம்மி** – தொழிலாளி; குறைவு.
**கம்மியம்** – கைத்தொழில்; கம்மாளத்தொழில்.
**கம்மியன்** – தொழிலாளி; கம்மாளன்; நெய்பவன்.
**கம்முதல்** – குரல் குன்றல்; ஒளி குறைதல்.
**கம்மெனல்** – தெளிவின்றி ஒலித்தற் குறிப்பு; ஓசையடங்கற் குறிப்பு; மணத்தற் குறிப்பு; விரைவுக் குறிப்பு.
**கம்மை** – சிறுகீரை.
**கமக்காரன்** – உழவன்.
**கமகம்** – இசை வேறுபாடு அறியுங் குறிப்பு; ஒன்றையறிதற்கு ஏதுவாயுள்ள குறிப்பு.
**கமகமத்தல்** – மிக மணத்தல்.
**கமகமவெனல்** – மணத்தற் குறிப்பு.
**கமகன்** – நுண்ணறிவினாலும் கல்விப் பெருமையினாலும் கல்லாத நூற்பொருளையும் எடுத்துரைக்கவல்லவன்.
**கமங்கட்டுதல்** – சொந்த நிலத்தில் வேளாண்மை செய்தல்.
**கமஞ்சூல்** – நீர் நிறைந்த மேகம்.
**கமடம்** – ஆமை.
**கமண்டலம், கமண்டலு** – பிரமசாரிகளும் முனிவரும் வைத்திருக்கும் ஒருவகை நீர்ப் பாத்திரம், கரகம்.
**கமத்தல்** – நிறைதல்.
**கமத்தொழில்** – உழவுத்தொழில்.
**கமம்** – நிறைவு; உழவுத்தொழில்; வயல்.
**கமம்புலம்** – நிலமும் புலமும்.
**கமர்** – நிலப்பிளப்பு.
**கமரதம்** – மணித்தக்காளி.
**கமரிப்புல்** – ஒருவகைப் புல்.
**கமல்** – வெட்பாலை.

**கமலக்கண்ணன்** – தாமரைக் கண்களையுடைய திருமால்.
**கமலகுண்டலமாய்** – தலைகீழாய்.
**கமலகோசிகம்** – கைகுவித்து ஐந்து விரலும் அகல விரித்துக்காட்டும் இணையா வினைக்கை.
**கமலத்தேவி** – தாமரையை இருப்பிடமாகக் கொண்ட திருமகள்.
**கமலத்தோன்** – பிரமன்.
**கமலநிருத்தம்** – கூத்தின் விகற்பம்.
**கமலபாந்தி** – சூரியன்.
**கமலம்** – தாமரை; நீர்; ஒருவகைத் தட்டு; ஒரு பேரெண்; பட்டை தீர்ந்த வயிரம்; செம்படாம்; கன்றிழந்த பசு.
**கமலமனோகரி** – ஒரு பண்வகை.
**கமலயோனி** – தாமரையில் பிறந்த பிரமன்.
**கமலரேகை** – பதுமரேகை, தாமரை வடிவமைந்த கோடு.
**கமலவருத்தனை** – தொழுதற்கு அறிகுறியாகத் தாமரைமொட்டைப்போலக் கைகளைக் குவித்தல்.
**கமலவல்லி** – காண்க: **கமலத்தேவி.**
**கமலவூர்தி** – தாமரையை ஊர்தியாகவுடைய அருகக் கடவுள்.
**கமலவைப்பு** – தாமரையுள்ள நீர்நிலை.
**கமலன்** – காண்க: **கமலயோனி.**
**கமலா** – கிச்சிலிவகை.
**கமலாக்கினி** – இரண்டு விரல் கனமுள்ள இரண்டு விறகாலெரிக்குந் தீ.
**கமலாசனம்** – பதுமாசனம், தாமரைமலர் வடிவில் அமைந்த இருக்கை.
**கமலாசனன்** – தாமரையை இருப்பிடமாகக் கொண்டவன்; பிரமன்; அருகன்.
**கமலாசனி** – காண்க: **கமலத்தேவி.**
**கமலாலயம்** – திருவாரூர்க் குளத்தின் பெயர்.
**கமலாலயன்** – பிரமன்.
**கமலி** – குங்கும பாடாணம்.
**கமலிப்பட்டு** – பட்டாடைவகை.
**கமலினி** – உமாதேவியின் தோழியருள் ஒருத்தி.
**கமலை** – திருமகள்; திருவாரூர்.
**கமவாரம்** – உழவுக் கருவிகளுக்காக வாங்கும் வாரம்.
**கமழ்தல்** – மணம்வீசுதல்; தோன்றுதல்; பரத்தல்.
**கமறுதல்** – மிகவொலித்தல்; மிக அழுதல்; மிக வேகுதல்; நெடியுண்டாதல்.
**கமனகுளிகை** – நினைத்தவிடத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்கும் மருந்து, இரசகுளிகை.
**கமனசித்தி** – வானவெளியே நினைத்த இடம் செல்லுந்திறன்.
**கமனம்** – செல்லுகை, போதல், நடை.

**கமனித்தல்** – போதல்.
**கமி** – மிளகு.
**கமித்தல்** – நடத்தல்; பொறுத்தல், தாங்குதல்.
**கமுக்கக்காரன்** – அடக்கமுள்ளவன்.
**கமுக்கட்டு** – அக்குள்.
**கமுக்கம்** – அடக்கம், குறையை வெளிப்படுத் தாமை; இரகசியம்.
**கமுகம்பூச்சம்பா** – ஒருவகை நெல்.
**கமுகமடல்** – கமுகம்பட்டை.
**கமுகு** – பாக்குமரம்.
**கமுனை** – மாதுளை.
**கமை** – பொறுமை; மலை.
**கமைத்தல்** – பொறுத்தல், தாங்குதல்.
**கமைதல்** – நிரம்புதல்.
**கமைப்பு** – பொறுமை, அடக்கம்.
**கய** – பெரிய; மெல்லிய.
**கயக்கம்** – வாட்டம்; இடையீடு; கலக்கம்.
**கயக்கால்** – ஊற்றுக்கால்.
**கயக்கு** – மனக்கலக்கம், சோர்வு.
**கயக்குதல்** – கசக்கச்செய்தல்; கலக்குதல்.
**கயங்குதல்** – கசங்குதல்; சோர்தல்; கலங்குதல்.
**கயத்தம்** – துளசி.
**கயத்தல்** – வெறுத்தல், கைத்தல்.
**கயத்தி** – கீழ்மகள்; கொடியவள்.
**கயந்தலை** – மெல்லிய தலை; யானைக்கன்று; மனத்துயர்; குழந்தை.
**கயப்பினை** – வங்கமணல்.
**கயப்பு** – கசப்பு.
**கயப்பூ** – நீர்ப்பூ.
**கயம்** – மென்மை; பெருமை; இளமை; கீழ்மை; கீழ்மக்கள்; கரிக்குருவி; நீர்நிலை; நீர்; கடல்; ஆழம்; அகழி; யானை; தேய்வு; குறைபாடு; கேடு; காசநோய்.
**கயமுகன்** – யானைத்தலையையுடைய விநாயகன்; ஓரசுரன்.
**கயமுனி** – யானைக்கன்று.
**கயமை** – கீழ்மை.
**கயல்** – கெண்டைமீன்.
**கயவஞ்சி** – உலுத்தன்.
**கயவளாகம்** – கீழுலகம்.
**கயவன்** – கீழ்மகன்; கொடியவன்.
**கயவாய்** – கழிமுகம்; கரிக்குருவி; எருமை; பெரிய வாய்.
**கய(யா)வாளி** – பேராசைக்காரன்; அயோக்கியன்; கயையிற் செய்யும் சிராத்தத்தில் உண்ணுதற்குரிய அந்தணன்.
**கயவு** – பெருமை; மென்மை; கழிமுகம்; களவு; கரிக்குருவி; கீழ்மை.
**கயற்கெண்டை** – கெண்டைமீன்வகை.
**கயிங்கரியபரர்** – ஏவல் செய்வார்.
**கயிங்கரியம்** – கைங்கரியம், ஊழியம், ஏவல் தொழில்.
**கயிப்பு** – இலாகிரி.
**கயிரம்** – அலரிச்செடி.
**கயிரவம்** – ஆம்பல்: செவ்வாம்பல்; வெள்ளாம்பல்.
**கயிரிகம்** – காவிக்கல்.
**கயில்** – தேங்காய்ப்பாதி; அணிகலக் கடைப் புணர்வு; பிடரி.
**கயிலாச(ய)ம்** – காண்க: **கயிலை.**
**கயிலாயன்** – கயிலாய மலைக்குரிய சிவன்.
**கயிலி** – பலவண்ண உடை; கையொலி.
**கயிலை** – கைலாயமலை.
**கயிலையாளி** – காண்க: **கயிலாயன்.**
**கயிலையிற்கடுங்காரி** – மாமிசபேதி.
**கயிற்கடை** – கொக்குவாய்.
**கயிற்றரவு** – கயிற்றில் தோன்றும் பாம்புணர்ச்சி.
**கயிற்றளவு** – தவசக் குவியல் முதலியவற்றைக் கயிறுகொண்டு குறிக்கும் அளவு.
**கயிற்றுக்கோல்** – ஒருவகைத் தராசு, காய்கறி முதலியன நிறுக்கும் ஒருவகை நிறைகோல்.
**கயிற்றுக்கோலாட்டம்** – பின்னற் கோலாட்ட விளையாட்டு.
**கயிற்றுப்பொருத்தம்** – கலியாணப் பொருத்தங்களுள் ஒன்றான இரச்சுப் பொருத்தம்.
**கயிற்றுவலை** – ஒருவகை மீன்வலை.
**கயிற்றேணி** – நூலேணி.
**கயிறடித்தல்** – அறுக்கும் மரங்களுக்கு நூல் வைத்துக் காவி முதலியவற்றாற் குறி தட்டுதல்.
**கயிறு** – நூல் முதலியவற்றால் முறுக்கித் திரித்த வடம், பாசம்; மங்கலநாண்; நூல்; சாத்திரம்.
**கயிறுகட்டிவிடுதல்** – பொய்ச்செய்தி உண்டாக்கிப் பரப்புதல்.
**கயிறுகட்டுதல்** – இல்லாததை உண்டாக்கிச் சொல்லுதல்; நாட்கழித்தல்; பாசாங்கு செய்தல்; வஞ்சித்தல்.
**கயிறுசாத்துதல்** – சாத்திரம் பார்க்க ஏட்டிலே கயிறிடுதல்.
**கயிறுதடி** – நெய்வோர் கருவியுள் ஒன்று.
**கயிறுதிரித்தல்** – கயிறு முறுக்குதல்; கற்பித்துச் சொல்லுதல்.
**கயிறுபிடித்தல், கயிறுபிடித்தறிதல்** – கட்டடம் முதலியவற்றுக்காகக் கயிறுபிடித்து நேர்மையறிதல்.
**கயிறுமாறுதல்** – மாடு குதிரை போன்றவற்றை விற்பவர் கயிற்றைப் பிடித்து வாங்குவோர் கையில் கொடுத்தல்.

**கயிறுமுறுக்குதல்** – காண்க: கயிறுதிரித்தல்.
**கயிறுருவிவிடுதல்** – எருது முதலியவற்றை அவிழ்த்துவிடுதல்; தூண்டிவிடுதல்.
**கயிறுவெட்டுப்புண்** – வடத்தால் அறுபட்ட புண்.
**கயினி** – அத்தநாள்; கைம்பெண்.
**கர்க்கசம்** – கடினமானது.
**கர்க்கடக சங்கிராந்தி** – ஆடிமாதப் பிறப்பு.
**கர்க்கடகசிங்கி** – கடுக்காய்ப்பூமரம்.
**கர்க்கடகம்** – நண்டு; ஓர் இராசி.
**கர்க்கரி** – கரகம்; தயிர்கடை தாழி.
**கர்ச்சித்தல்** – முழங்குதல்.
**கர்ச்சிதம்,** **கர்ச்சிப்பு** – முழக்கம்; மேகம்; யானை முதலியவற்றின் முழக்கம்.
**கர்ச்சினை** – பேரொலி.
**கர்ச்சூர்,** **கர்ச்சூரம்** – பேரீந்து; கழற்கொடி.
**கர்ணகடு(டோ)ரம்** – செவிக்குக் கடுமையானது.
**கர்ணகூசிகை** – காதுநோய்வகை.
**கர்ணசூலை** – காதுக் குத்து.
**கர்ணநாதம்** – காதிரைச்சல் நோய்.
**கர்ணபத்திரம்** – ஓலையென்னும் காதணி; தெய்வத் திருமேனிகட்குச் சாத்தும் காது போன்ற அணி.
**கர்ணபரம்பரை** – செவிவழியாக வந்த செய்தி.
**கர்ணம்** – காது; ஊர்க்கணக்கு வேலை; ஊர்க் கணக்கன்.
**கர்ணமந்திரம்** – காதோடு சொல்லும் இரகசியம்; இரகசியம் பேசிப் பெறுஞ் செல்வாக்கு; இறக்கும் நிலையில் இறப்பவரின் காதில் செபிக்கும் வேதமந்திரம்.
**கர்ணவேத(ன)ம்** – காதுகுத்தல்.
**கர்ணா** – ஒருவகை வாத்தியம்.
**கர்ணிகம்** – சன்னிவகை.
**கர்ணிகை** – தாமரைப் பொகுட்டு.
**கர்த்தத்துவம்** – கர்த்திருத்துவம், கடவுள் தன்மை; தொழில் நடாத்து முதன்மை.
**கர்த்த துரோகம்** – அரச துரோகம்.
**கர்த்தப(வ)ம்** – கழுதை.
**கர்த்தமம்** – சேறு; பாவம்; இறைச்சி.
**கர்த்தரிப் பிரயோகம்** – செய்வினை வழக்கு.
**கர்த்தவியம்** – செய்யத்தக்கது.
**கர்த்தன்,** **கர்த்தா** – செய்வோன், வினைமுதல்; கடவுள்; தலைவன்.
**கர்த்தாக்கள்** – படைப்பு முதலிய தொழில்புரியும் ஐங்கடவுளர்; மதுரை நாயக்க அரசர் பட்டப் பெயர்.
**கர்நாடகம்** – கன்னடம், ஒரு மாநிலம்; தென்னாட்டு இசை; ஒரு பண்; பழைய மாதிரி.
**கர்ப்பக்கிருகம்** – கருவறை, ஆலயத்திலுள்ள மூலத்தானம்.
**கர்ப்பக்குழி,** **கர்ப்பகோசம்,** **கர்ப்பகோளகை** – காண்க: கர்ப்பப் பை.
**கர்ப்பங்கரைதல்,** **கர்ப்பங்கலங்குதல்** – கருச் சிதைதல்; அச்ச மிகுதல்.
**கர்ப்பச்சடங்கு** – கருக்கொண்டவளுக்கு இரண்டா மாதம் முதல் பத்தா மாதம்வரை செய்யுஞ் சடங்குகள்.
**கர்ப்பச்சூடு** – பெற்றோர் வழியாக வரும் குழந்தை நோய்வகை; அச்சரம்.
**கர்ப்பசிராவம்** – கருச்சிதைவு; வெள்ளைநோய்.
**கர்ப்பசீமான்** – பிறவிச் செல்வன்.
**கர்ப்பசூலை** – சூதகத் தடை; கருப்பையில் வேதனை.
**கர்ப்பந்தரித்தல்** – கருக்கொள்ளுதல்.
**கர்ப்பப் பை** – கருத்தங்கும் உறுப்பு.
**கர்ப்பம்** – கரு; கருக்கொள்கை; உட்கொண்டது; நாடகச் சந்தி ஐந்தனுள் ஒன்று; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.
**கர்ப்பமேகம்** – வெள்ளைநோய்.
**கர்ப்பவதி** – கருவுற்ற பெண், கர்ப்பிணி.
**கர்ப்பவாசம்** – கருப்பத்தில் தங்குகை.
**கர்ப்பவாதை** – மகப்பேற்று வலி.
**கர்ப்பவாயு** – சூதகவாயு, குழந்தை பிறக்கும் காலத்தில் ஏற்படும் ஒருவகை நோய்.
**கர்ப்பவோட்டம்** – கருக்கொள்ளும் மேக வோட்டம், மார்கழி மாதத்தில் கருக்கொண்ட மேகத்தின் தென்சார்பான ஓட்டம்.
**கர்ப்புரை** – சாம்பிராணி.
**கர்ப்பூரசிலாசத்து** – ஒருவகை மருந்துக்கல்.
**கர்ப்பூரத்துளசி** – கருப்பூர மணமுள்ள துளசி வகை.
**கர்ப்பூரத்தைலம்** – மணமுள்ள பூச்சுமருந்து, கருப்பூரத்தினின்று எடுக்குந் தைலம்.
**கர்ப்பூரதீபம்** – கருப்பூரத்தினின்று எரியும் விளக்கு.
**கர்ப்பூரப்புல்** – ஒருவகை மணப்புல்.
**கர்ப்பூரமரம்** – கருப்பூரம் உண்டாதற்குரிய மரம்; மரவிசேடம்.
**கர்ப்பூரவல்லி,** **கர்ப்பூரவள்ளி** – ஒருவகை மருந்துச் செடி; ஒருவகை மணந்தருஞ் செடி.
**கர்ப்பூரவாழை** – வாழைவகை.
**கர்ப்பூரவிலை** – கோயில் நிலங்களுக்குக் கொடுக்கும் விலை.
**கர்ப்பூரவெற்றிலை** – வெற்றிலைவகை.
**கர்ப்போட்டம்** – காண்க: **கர்ப்பவோட்டம்.**
**கர்மணிப்பிரயோகம்** – செயப்பாட்டுவினை வழக்கு.
**கர்மம்** – செயல், கருமம்.
**கர்மாந்தரம்** – இறந்தவர் பொருட்டுப் பதினாறாம் நாள் செய்யும் சடங்கு.
**கர்மிகள்** – தொழிலாளிகள்; காண்க: உலோபி.

**கர்லாக்கட்டை** – உடற்பயிற்சிக்காகச் சுழற்றுந் திரண்டு கனத்த மரக்கட்டை.

**கர்வடம்** – மலையும் ஆறுஞ் சூழ்ந்த ஊர்; நானூறு ஊருக்குத் தலையூர்.

**கர்வம்** – செருக்கு; இலட்சங்கோடி; குபேரனுடைய நிதியுள் ஒன்று.

**கர்வி** – செருக்குள்ளவன்.

**கர்வித்தல்** – செருக்குதல்.

**கர்விதன்** – காண்க: **கர்வி.**

**கர** – அறுபதாண்டுக் கணக்கில் இருபத்தைந்தாம் ஆண்டு.

**கரகம்** – கமண்டலம்; ஆலங்கட்டி; நீர்த்துளி; நீர்; கங்கை; தாதுமாதுளை; வேண்டுதலுக்காக எடுக்கும் பூங்குடம்.

**கரகமாடுதல்** – வேண்டுதலுக்காகப் பூங்குடமெடுத்து ஆடுதல்.

**கரகமுக்கு** – நீர் விழும் கெண்டியின் உறுப்பு.

**கரகரணம்** – கையினாற் செய்யும் அபிநயம்.

**கரகரத்தல்** – உறுத்துதல்; சீதளம் முதலியவற்றால் தொண்டையில் அரிப்புண்டாதல்; கடித்தற்குக் கரகரப்பாதல்; விடாமல் வேண்டுதல்; அலைக்கழித்தல்.

**கரகரப்பிரியா** – ஒரு பண்வகை.

**கரகரப்பு** – தொண்டையரிப்பு; குரல் கனத்திருக்கை; ஓயாது வேண்டுகை; அலைக்கழிப்பு.

**கரகரெனல்** – தொண்டையரித்தற் குறிப்பு; வருத்துதற் குறிப்பு; கடிப்பதற்குக் கரகரப்பாயிருத்தற் குறிப்பு; பலாத்காரமாய் இழுத்த ஒலிக்குறிப்பு.

**கரசம்** – புலித்தொடக்கி; கூரிய நுனியுடைய ஓர் ஆயுதம்; யானை.

**கரசரணாதி** – கைகால் முதலியன.

**கரசை** – கரணம் பதினொன்றனுள் ஒன்று; கரிசை, 400 மரக்கால் கொண்ட ஓரளவு.

**கரஞ்சம்** – புன்கமரம்.

**கரட்டரிதாரம்** – அரிதாரவகை, ஒரு மருந்து.

**கரட்டான்** – ஓணான்வகை.

**கரட்டுக்கரட்டெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**கரட்டுக்கல்** – செப்பனிடப்பெறாத முருட்டுக்கல்.

**கரட்டுத்தரை** – மேடுபள்ளமான நிலம்; கரிசற்பூமி.

**கரட்டுவாதம்** – கழலை; விதண்டாவாதம்.

**கரட்டுவிரியன்** – செந்நிறமுள்ள விரியன்பாம்புவகை.

**கரட்டோணான், கரட்டோந்தி** – கரட்டு நிலத்தே வாழும் ஓணான்.

**கரடகம், கரடகம்பம்** – கபடம், வஞ்சனை.

**கரடகன்** – விரகன், தந்திரி.

**கரடம்** – காக்கை; யானையின் மதம்; யானைக் கவுளினின்றும் மதம்பாயுந் தொளை.

**கரடி** – ஒரு விலங்கு; கரடிப்பறை; கரடிக்கூடம்; புரட்டு; முத்து; சிலம்பம்.

**கரடிக்கூடம்** – அரங்கம், மல் சிலம்பம் முதலியன பயிலுஞ் சாலை.

**கரடிகை, கரடிப்பறை** – கரடி கத்துவதுபோல் ஓசையுண்டாக்கும் பறை.

**கரடிவிடுதல்** – பொய்யைக் காட்டிக் கூறுதல், தொடர்பில்லா ஒன்றைக் கூறிக் கலங்கச் செய்தல்.

**கரடிவித்தை** – சிலம்பவித்தை.

**கரடு** – முருடு; முருட்டுக் குணம்; சிறுகுன்று; காற்பரடு; மரக்கணு; புற்கரடு; வளர்ச்சியற்றது; ஒருவகை முத்து; யானையின் மதவெறி.

**கரடுமுரடு** – செம்மையற்றது, ஒழுங்கின்மை.

**கரண்** – காய்கறிகளின் முண்டு; புண்வடு; புல்லுடன் கூடிய மண்ணாங்கட்டி.

**கரண்டகம்** – சுண்ணாம்புச் செப்பு; தென்னை ஓலையால் முடைந்த பூக்கூடை.

**கரண்டம்** – நீர்க்காக்கை; அணிகலச்செப்பு; கமண்டலம்; கரண்டகம்.

**கரண்டி** – உலோகத்தாலாகியதும் காம்புள்ளதுமாகிய முகத்தற் கருவி; சிறு அகப்பை.

**கரண்டிகை** – பூக்கூடை; முடியின் ஓர் உறுப்பு.

**கரண்டிகைச்செப்பு** – கரண்டகம், சுண்ணாம்புச் செப்பு.

**கரண்டுதல்** – சுரண்டுதல்.

**கரண்டை** – கற்பாழி, முனிவர் வாழிடம்; பறவையின் கதிவிசேடம்; கமண்டலம்.

**கரண்டைக்காய்மோதிரம்** – பரவ மகளிர் ஒரு விரலுக்கு நாலைந்து வீதம் ஐந்து விரலிலும் அணியும் மோதிரம்.

**கரண்டைக்கை** – முன் கை.

**கரணகளேபரம்** – பொறிகளும் உடலும்.

**கரணத்தான்** – கணக்கன்.

**கரணத்தியலவர்** – அரசர்க்குரிய எண்பெருந் துணைவருள் ஒருவராகிய கணக்கர்.

**கரணம்** – கைத்தொழில்; இந்திரியம்; அந்தக் கரணம்; மனம்; உடம்பு; மணச்சடங்கு; கல்வி; கூத்தின் விகற்பம்; தலைகீழாகப் பாய்கை; கருவி; துணைக்கருவி; காரணம்; எண்; பஞ்சாங்க உறுப்புகளுள் ஒன்று; சாசனம்; கணக்கன்; கருமாதிச் சடங்குக்குரிய பண்டங்கள்.

**கரணம்பாய்தல்** – கூத்தாடுதல்; கரணம் போடுதல்.

**கரணம்போடுதல்** – தலைகீழாகப் பாய்தல்; கெஞ்சுதல்; தன்னால் இயன்றதெல்லாம் செய்தல்.

**கரணவாதனை** – உடலுறுப்புகளின் பழக்கவறிவு.
**கரணன்** – கணக்கன்.
**கரணி** – மருந்து; செய்பவன்.
**கரணிக்கசோடி** – கணக்கர் வரி.
**கரணிகம்** – அந்தக்கரணம்; கூத்தின் விகற்பம்; கலவி; ஊர்க்கணக்கு வேலை.
**கரணியமேனிக்கல்** – கரும்புள்ளிக்கல்.
**கரணை** – கொத்துக்கரண்டி; கரும்பு முதலியவற்றின் துண்டு; வீணைத் தண்டு; புண்வடு; கருணை; பாவட்டை; ஒரு செடி; கிழங்குவகை.
**கரத்தல்** – மறைத்தல்; கவர்தல்; கெடாதிருத்தல்; அழித்து முதற்காரணத்தோடு ஒடுக்குதல்; கெடுதல்.
**கரத்தை** – வண்டி.
**கரதபத்திரம்** – அரசிறையைக் கணிக்கும் பத்திரம்.
**கரதலப்பாடம்** – கடைதலைப் பாடம், தலைகீழாகப் பாடம் பண்ணுகை.
**கரதலம்** – கைத்தலம், கை.
**கரதாளம்** – பனைமரம்; கைத்தாளம்.
**கரந்தகற்படை, கரந்துபடை** } – மதகு; கற்படுத்து மூடப்பட்ட நகரின் நீர்க்கால்.
**கரந்துவரலெழினி** – நாடகத் திரைச்சீலை.
**கரந்துறை** – கரந்த கற்படை.
**கரந்துறைகிளவி** – உள்ளக் குறிப்பை மறைத்துச் சொல்லும் மொழி.
**கரந்துறைகோள்** – இராகு, கேது, பரிவேடம், வால்வெள்ளி, வானவில் போன்று மறைந்து சிறுபான்மையாகக் காணப்படும் கோள்கள்.
**கரந்துறைச்செய்யுள், கரந்துறைப்பாட்டு** } – சித்திரகவி வகையுள் ஒன்று. அஃது ஒவ்வோரெழுத்து இடைவிட்டுப் படிக்கும்போது வேறு ஒரு செய்யுள் தோன்றும்படி எழுத்துகள் அமைத்துப் பாடப்பெறுவது.
**கரந்தை** – திருநீற்றுப்பச்சை; கொட்டைக் கரந்தை; ஒரு பூண்டு; நிரைமீட்போ ரணியும் பூ; மரவகை; நீர்ச்சேம்புச் செடி; கரந்தைத் திணை; குரு; தவணை.
**கரந்தைத்திணை** – பகைவர் கவர்ந்த ஆநிரையை மீட்டலைக் கூறும் புறத்திணை.
**கரந்தையார்** – பகைவர் கவர்ந்த ஆநிரையை மீட்கும் மறவர்.
**கரநியாசம்** – தேவர்களை மந்திராட்சர பூர்வமாக விரல்களில் வைக்கும் கிரியை.
**கரப்பறை** – ஒளிந்திருத்தற்குரிய அறை.
**கரப்ப(பா)ன்** – சொறிப்புண்வகை.
**கரப்பான்கட்டு** – கரப்பான் நோய்வகை.
**கரப்பான்கொல்லி** – கரப்பானைப் போக்கும் மருந்து.
**கரப்பான்பூச்சி** – கரப்புப் பூச்சி.
**கரப்பிரசாரம்** – ஒருவகை அபிநயம்.
**கரப்பு** – மறைக்கை; களவு; வஞ்சகம்; மீன் பிடிக்குங் கூடை, பஞ்சரம் முதலியன; மத்து; கரப்பான் பூச்சி.
**கரப்புக்குடில்** – சிறுகுடிசை.
**கரப்புக்குத்துதல்** – கூடுவைத்து மீன்பிடித்தல்.
**கரப்புநீர்க்கேணி** – மறைகிணறு.
**கரப்பொறி** – குரங்குபிடிக்கும் ஒருவகைப் பொறி.
**கரபத்திரம்** – ஈர்வாள், வாள்.
**கரபம்** – மணிக்கட்டிலிருந்து விரல்வரை உள்ள பகுதி; யானை; கழுதை.
**கரபல்லவம்** – கைவிரல்.
**கரபவல்லபம்** – விளாமரம்.
**கரபாகம்** – சூடுபட்டு மென்மையான குளிகை போல் திரளுகிற மருந்துப்பாகம்.
**கரபாத்திரம்** – கையையே பாண்டமாகக்கொண்டு உணவு உண்கை; பிச்சை பெறுவதற்கான ஓடு.
**கரம்** – கை; முழம்; துதிக்கை; ஓலைக்கொத்தின் திரள்; ஒளிக்கதிர்; ஒளி; குடிவரி; செய்வது; வெப்பம்; அழிவு; சிறுமை; திடம்; இடுமருந்து; விலையேற்றம்; கழுதை; நஞ்சு; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.
**கரம்பதிவு, கரம்பதிவுக்கணக்கு** } – வரிப்பதிவுப் புத்தகம்.
**கரம்பு** – சாகுபடி செய்யாத நிலம், தரிசு.
**கரம்பை** – வண்டல் பரந்த பூமி; வறண்ட களிமண் நிலம்; தரிசு, கரம்பு; சிறுகளா.
**கரமசாலை** – காரமான மசாலை.
**கரமஞ்சரி** – நாயுருவி.
**கரமர்த்திகை** – திராட்சை.
**கரமாலம்** – புகை.
**கரமுகிழ்த்தல்** – கைகூப்புதல்.
**கரமை** – யானை.
**கரமொழிவு** – வரி நீக்கம்.
**கரலட்சணம்** – கையாற்புரியும் அபிநயம்.
**கரவடநூல்** – களவைப்பற்றிக் கூறும் நூல்.
**கரவடம்** – வஞ்சகம்; களவு.
**கரவடர்** – திருடர்; வஞ்சகர்.
**கரவடி** – தங்க நகைக்கிடும் மெருகுவகை.
**கரவதம்** – காக்கை.
**கரவம்** – காட்டீச்சை மரம்.
**கரவர்** – கள்வர்.
**கரவல்** – கொடாது மறைத்தல்.
**கரவாகம்** – காக்கை.
**கரவாதி** – அரிவாள் கத்தி, சூரிகைக் கத்தி.
**கரவாபிகை** – சிறுவாள்.
**கரவாரம்** – கையை எடுத்து உயர வீசுதல்.
**கரவாலம்** – நகம்.
**கரவாள், கரவாளம்** } – வாள், கைவாள்.

**கரவிந்தை** – களாச்செடி.
**கரவீரம்** – அலரிச்செடி.
**கரவு** – மறைவு; வஞ்சனை; களவு; பொய்; முதலை.
**கரவை** – கம்மாளர் கருவியுள் ஒன்று; கூத்து.
**கரளம்** – நஞ்சு; எட்டிமரம்.
**கரளை** – வளர்ச்சியின்மை; குள்ளன்; வளர்ச்சியற்றது; பருக்காத காய்.
**கரன்** – நிலையுள்ளவன்; ஓர் அரக்கன்.
**கரா** – முதலை; ஆண்முதலை.
**கராக்கி** – கிராக்கி, விலையதிகம், விலையேற்றம்.
**கராகண்டிதம்** – கண்டிப்பாய்ப் பேசுகை.
**கராசலம்** – யானை.
**கராசனம்** – புலி.
**கராடம்** – மருக்காரைச் செடி; தாமரைக் கிழங்கு.
**கராத்தரி** – யானை.
**கராம்** – காண்க: **கரா**.
**கராம்பு** – இலவங்கம்.
**கராமம்** – வெண்கடம்பு.
**கரார்நாமா** – உறுதிப்பத்திரம்.
**கராலகம்** – கருந்துளசி.
**கராளம்** – தீக்குணம்; பயங்கரம்.
**கராளன்** – சிவகணத் தலைவருள் ஒருவன்.
**கராளி** – தீக்குணம்; அக்கினி பகவானின் ஏழு நாக்குகளுள் ஒன்று.
**கராளை** – காண்க: **கரளை**.
**கரி** – அடுப்புக்கரி; நிலக்கரி; கரிந்தது; கருமையாதல்; மிளகு; நஞ்சு; மரவயிரம்; யானை; பெட்டைக் கழுதை; சான்று கூறுவோன்; சான்று; விருந்தினன்; பயிர் தீய்கை; வயிரக் குற்றங்களுள் ஒன்று.
**கரிக்கட்டை** – எரிந்த கட்டை; மரவகை.
**கரிக்கண்டு** – கரிசலாங்கண்ணிப் பூடு.
**கரிக்கணை** – யானைத் திப்பிலி.
**கரிக்காத்தாள்** – அங்காளம்மன்.
**கரிக்காந்தல்** – கருகிக் காந்தினது; கலத்தில் அடிப்பற்றின உணவு.
**கரிக்காப்பு** – ஓலையெழுத்து விளங்கக் கரிபூசுகை; தெய்வத்திருமேனியைச் சுத்திசெய்யும் புற்கரி.
**கரிக்காரன்** – கரி விற்பவன்.
**கரிக்கால்** – நாசகாரன்.
**கரிக்காளவாய்** – சுண்ணாம்புக் காளவாய்வகை.
**கரிக்கிடங்கு** – கரிக்கடை; அடுப்புக்கரி உண்டாக்குமிடம்.
**கரிக்குடல்** – கற்குடல்.
**கரிக்குருவி** – குருவிவகை.
**கரிக்கை** – கரிசலாங்கண்ணிப் பூடு; கேடு விளைக்குங் கை.
**கரிக்கொடி** – கருங்கொடிவேலி.
**கரிக்கோடிடுதல்** – கருஞ்சாந்தால் நெற்றிக்குறியாகக் கோடு இடுதல்; மோவாயில் மயிர் அரும்புதல்.
**கரிக்கோடு** – மாத்துவர் நெற்றியில் இடும் கருஞ்சாந்துக் கோடு.
**கரிக்கோலம்** – கணவன் இறந்ததுமுதற் பத்து நாள்வரை மனைவிக்குச் செய்யும் அலங்காரம்; கறுத்துத் தோன்றும் நிலை; அழிஞ்சில்மரம்.
**கரிகரம்** – புணர்ச்சி வகையுள் ஒன்று.
**கரிகறுத்தல்** – கவலையால் முகங்கருகல்; மிகக் கறுத்தல்.
**கரிகன்னி** – வெருகு, ஒரு கிழங்கு.
**கரிகாடு** – கரிந்த பாலைநிலம்; சுடுகாடு.
**கரிச்சால்** – காண்க: **கரிசலாங்கண்ணி**.
**கரிச்சான்** – கரிக்குருவி; கரிசலாங்கண்ணிப் பூடு.
**கரிச்சோளம்** – கருஞ்சோளவகை.
**கரிசங்கு** – தென்னோலை மூடு, தென்னங்கீற்று.
**கரிசம்** – தேய்கை.
**கரிசல்** – கருமை; கரியநில விசேடம்; விலையேற்றம்.
**கரிசலாங்கண்ணி, கரிசலை** – கையாந்தகரைப் பூண்டு.
**கரிசற்காடு** – கருமண்ணிலம், கரிசலான பகுதி.
**கரிசனம்** – யானைக்கோடு; பொற்றலைக் கையாந்தகரை; அன்பு, அக்கறை, பரிவு.
**கரிசனை** – கரிசனம், அன்பு, அக்கறை.
**கரிசாலை** – காண்க: **கரிசலாங்கண்ணி**.
**கரிசு** – குற்றம்; பாவம்; கரிசை; உறுதிப்பிடி.
**கரிசை** – நானூறு மரக்கால் அளவு; 48 படி கொண்ட மூட்டை 64 கொண்டது; குதிர்.
**கரிஞ்சம்** – அன்றிற்பறவை.
**கரிணி** – மலைக்குகை; பெண்யானை; யானை; மலை.
**கரித்தண்ணீர்** – கரிச்சட்டியைக் கழுவிய நீர்.
**கரித்தல்** – உறுத்தல்; எரித்தல்; தாளித்தல்; உப்புக்கரித்தல்; வெறுத்தல்; குற்றம் கண்டு குறைகூறுதல்.
**கரித்துண்டு** – அழுக்குச்சீலை; கரியின் சிறுபாகம்.
**கரித்துணி** – அழுக்குச்சீலை; பிடிதுணி.
**கரிதல்** – கருகுதல்; தீய்தல்; கருமையாதல்.
**கரிதன்** – அச்சமுள்ளவன்.
**கரிதூபம்** – கரிப்புகை.
**கரிநாள்** – தீயநாள்.
**கரிப்பான்** – காண்க: **கரிசலாங்கண்ணி**.
**கரிப்பு** – அச்சம்; நிந்தித்தல்; காரம்.
**கரிப்புளிப்பு** – கரியமிலம்.
**கரிப்புறத்திணை** – புறத்திணையுள் ஒன்று, சான்றோர் கூறியவற்றைச் சான்றாகக் காட்டல்.
**கரிபிடித்தல்** – கரிபற்றுதல்.

**கரிபூசுதல்** – கண்ணேறு நீங்கக் கரிதீட்டுதல்; அவமதித்தல்.
**கரிபோக்குதல்** – கண்ணுக்கு மை எழுதுதல்; சான்று கூறுதல்.
**கரிமருந்து** – வெடிமருந்து.
**கரிமா** – எண்வகைச் சித்திகளுள் ஒன்று, மிகக் கனமாயிருக்கை; யானை.
**கரிமுகவம்பி** – யானைமுக ஓடம்.
**கரிமுகன்** – யானைமுகங் கொண்ட விநாயகர்; கயமுகாசுரன்.
**கரிமுட்டைச்சுறா** – கடல்மீன்வகை.
**கரிமுண்டம்** – மிகக் கறுத்த ஆள்.
**கரிமுரடு** – கரிக்கட்டை.
**கரிமுள்ளி** – நாய்முள்ளிச்செடி.
**கரியடுப்பு** – கரியிட்டெரிக்கும் அடுப்பு.
**கரியநிம்பம்** – கறிவேம்பு.
**கரியபோளம்** – ஒருவகைப் பூடு; இரத்தபோளம்.
**கரியமணி** – கருகுமணி; கண்மணி; கருஞ்சீரகம்.
**கரியமால்** – கருநிறமுள்ள திருமால்; துளசி; ஒரு நஞ்சு.
**கரியமான்** – கறுப்புமான்.
**கரியமிலவாயு** – வாயுவகை, கரிவளி.
**கரியர்** – நடுச்செல்வோர், சாட்சிக்காரர்; கீழ் மக்கள்.
**கரியல்** – வளராத மரம்; ஒருவகைத் துகில்; கருகல்; வெஞ்சனவகை.
**கரியல்வடலி** – பனங்கருக்கு.
**கரியவன்** – கருநிறத்தவன்; திருமால்; இந்திரன்; சனி; கள்வன்; நடுச்செல்வோன்.
**கரியன்** – கருநிறத்தவன்; திருடன்.
**கரியார்** – கருநிறம் உடையார்; கீழ்மக்கள்; சான்று கூறுவோர்.
**கரியாள்** – குதிரைவகை.
**கரில்** – குற்றம்; கொடுமை; கார்ப்பு.
**கரிவாகனன்** – யானையின்மீது செல்லும் இந்திரன்; ஐயனார்.
**கரிவாளை** – ஒருவகைப் பெரிய கடல்மீன்.
**கரிவு** – வெந்துபோனது; பயிர்தீய்கை.
**கரீத்துபட்டி** – கைச்சாத்து.
**கரீப்பு** – எளிய, தாழ்ந்த.
**கரீரம்** – மிடா; கும்பராசி; அகத்திமரம்; கருவேலமரம்; முளை; மூங்கில்முளை; யானை; யானைத் தந்தத்தின் அடிப்பகுதி.
**கரு** – கருப்பம்; முட்டைக்கரு; முட்டை; உடம்பு; குழந்தை; குட்டி; அச்சுக்கரு; நிமித்த காரணம்; நடு; உட்பொருள்; வித்தின் கரு; அடிப்படை; கருப்பொருள்; அணு; இயற்கை யறிவு; கறுப்பு; நிறம்; ஆயுதத்தின் பல்; குப்பைமேடு.
**கருக்கட்டுதல்** – உலோகத்தால் உருவம் வார்ப் பதற்கு அச்சுக்கரு அமைத்தல்; மழைக்குணங் கொள்ளுதல்; யோசனைபண்ணுதல்.
**கருக்கம்** – கார்மேகம்.
**கருக்கறுவாள்** – பற்கள் உள்ள அறுவாள்.
**கருக்கரைதல்** – கருவழிதல்.
**கருக்கல்** – இருள்; மங்கின இருட்டு; விடியற் காலை; அடர்ந்த மந்தாரம்; கருக்கல்நெல்; காய்ந்த பயிர்; சப்பட்டை; பயனற்ற பொருள்.
**கருக்கல்நெல்** – மணிபிடியாத நெல்.
**கருக்கலிடுதல்** – அடர்த்தியான மந்தாரமாதல், மேகமூட்டினால் இருளாதல்; நெல்லிக்காய் போன்றவற்றைக் கருநிறம் ஆகும்வரை ஊற வைத்துப் பக்குவப்படுத்தல்.
**கருக்கழிதல்** – கூர் மழுங்குதல்; புதுமை கெடுதல்.
**கருக்காம்பாறை** – இரத்தசூறை.
**கருக்காய்** – பிஞ்சு; பதர்நெல்; எள்ளு கொள்ளு முதலியவற்றின் மாறு.
**கருக்கானபணம்** – புது நாணயம்.
**கருக்கானவன்** – ஒழுங்குள்ளவன்; கண்டிப்பான வன்; வஞ்சகன்.
**கருக்கிக்கொடுத்தல்** – பத்தியத்துக்குக் கஞ்சி முதலியன காய்ச்சிக்கொடுத்தல்.
**கருக்கிடுதல்** – கூராக்குதல்; மீசை அரும்புதல்.
**கருக்கிடை** – ஆலோசனை.
**கருக்கு** – ஆயுதப் பற்கூர்மை; அறுவாளின் பல்; பனைமட்டை; இலைகளின் கருக்கு; கூர்மை; அறிவுக்கூர்மை; நேர்மை; பனங்காய்த்தோற் கருக்கு; போதைப் பொருள்; பொறித்த சித்திரம்; புதுமை; தூய்மை; அழகு; இளநீர்; கொத்துளி.
**கருக்குடி** – சவர்க்காரம்; அழுக்கு நீக்கும் வழலை முதலியன.
**கருக்குதல்** – கருகச்செய்தல்; எரித்தல்; காய்ச்சுதல்; திட்டுதல்.
**கருக்குப்பட்டு** – ஒருவகைப் பணிகாரம்.
**கருக்குமீசை** – முறுக்கிய மீசை.
**கருக்குவாய்ப்படுதல்** – ஆயுதவலகு கூர்மைப் படுதல்.
**கருக்குவாள்** – கூர்மையான வாள்.
**கருக்குவாளி** – கருக்குவாய்ச்சிமரம்.
**கருக்குவிடுதல்** – மீசை அரும்புதல்.
**கருக்குவேலை** – சிற்பவேலை.
**கருக்குழி** – கருப்பப் பை.
**கருக்கூட்டுதல்** – கருக்கட்டுதல், சினைத்தல்; உதவிசெய்தல்; நியாயம் தேடுதல்.
**கருக்கூடு** – கருப்பை, சினைப்பை.

**கருக்கொள்ளுதல்** – கருப்பமடைதல், உருப் பிடித்தல்.

**கருக்கோடுதல்** – காண்க: **கருக்குவிடுதல்.**

**கருகல்** – கருகிய பொருள்; கருகுதல்; தீய்ந்து போகை; சோறு கறிகளின் காந்தல்; மங்கலான ஒளி; தெளிவில்லாப் பேச்சு; மாலை நேரம்; மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்றாகிய இருள்.

**கருகற்புண்** – ஆறின புண்.

**கருகுதல்** – நிறங்கறுத்தல்; பயிர் முதலியன தீய்தல்; இருளுதல்; மனம் வருந்துதல்; வாடுதல்.

**கருகும்மெனல்** – மிக இருளுதற் குறிப்பு.

**கருகுமணி** – மகளிர் உட்கழுத்தில் அணியும் கறுப்பு மணிவகை.

**கருகுமாலை** – மாலையில் தோன்றும் மங்கலான வெளிச்சம்.

**கருகூலம்** – கருவூலம், பொருளறை; கருப்புக் கட்டி.

**கருங்கடல்வண்ணன்** – கடலின் நிறத்தை ஒத்த திருமால்; ஐயனார்.

**கருங்கண்** –கண்ணெச்சில், திருட்டிதோடம்.

**கருங்கண்ணி** – கரிய கண்களையுடையவள்; ஒரு மீன்வகை; பருத்திவகை.

**கருங்கந்து** – நெற்களத்தில் பொலிக்கந்துக்கு அடுத்துவிழும் பதர்.

**கருங்கரப்பன்** – கரப்பான்வகை.

**கருங்கல்** – பாறைக்கல்; மலைக்கல்; சிகிமுகிக் கல்.

**கருங்கலம்** – மண் ஏனம், மட்பாண்டம்.

**கருங்களா** – கடல்மீன்வகை.

**கருங்கற்றலை** – கடல்மீன்வகை, வெள்ளைக் கற்றலை மீன்.

**கருங்காஞ்சொறி** – சிறுகாஞ்சொறி.

**கருங்காடு** – சுடுகாடு.

**கருங்காடை** – கறுப்புக் காடைப்பறவை.

**கருங்காணம்** – காட்டுக்கொள்.

**கருங்காந்தள்** – கார்க்கோடல்.

**கருங்காய்** – கொஞ்சங்குறைய முற்றிய பயிர் அல்லது காய்; இளம்பாக்கு.

**கருங்கால்** – காலிற்காணும் மாட்டுநோய்வகை; கருமையான கால்.

**கருங்காலி** – மரவகை; எட்டிமரம்; கேடு] சூழ் வோன்.

**கருங்காலித்தைலம்** – மேகநோய்களுக்குப் பயன் படுத்தும் தைலவகை.

**கருங்காவி** – கருங்குவளை.

**கருங்கிரந்தி** – உடம்பின் தோலைக் கருநிற மாக்குவதாய்க் குழந்தைகட்கு வருவதான ஒரு வகை நோய்.

**கருங்குங்கிலியம்** – ஒருவகை மருந்துப்பொருள்.

**கருங்குட்டம்** – குட்டநோய்வகை.

**கருங்குணம்** – தீக்குணம்.

**கருங்குதிரையாளி** – கருங்குதிரைமீது செல்லும் வைரவன்.

**கருங்குந்தம்** – கண்ணோய்வகை.

**கருங்கும்மெனல்** – காண்க: **கருகும்மெனல்.**

**கருங்குரங்கு** – கருநிறக் குரங்கு.

**கருங்குருவி** – கரிக்கருவி.

**கருங்குவளை** – நீலோற்பலம், குவளைவகை; நெய்தல்.

**கருங்குறுவை** – குறுகிய காலத்தில் விளையும் ஒரு வகை நெல்.

**கருங்குன்றி** – துவரைவகை; ஒருவகைக் குன்றி.

**கருங்கூத்து** – இழிவான நாடகம்.

**கருங்கேசம்** – வெண்கலம்.

**கருங்கை** – வலிய கை; கொல்லுங் கை.

**கருங்கொடி** – கொடிவகை; வெற்றிலைவகை.

**கருங்கொண்டல்** – தென்கீழ்காற்று; வடகீழ் காற்று.

**கருங்கொல்** – இரும்பு.

**கருங்கொல்லன்** – இரும்புவேலை செய்வோன், கருமான்.

**கருங்கொன்றை** – மஞ்சட்கொன்றை.

**கருங்கோள்** – இராகு.

**கருச்சிதம்** – முழக்கம்; வீராவேசம்.

**கருஞ்சரக்கு** – நெல் முதலிய பதினெண்வகைப் பண்டம், கூலம்.

**கருஞ்சனம்** – முருங்கைமரம்.

**கருஞ்சாதி** – கீழ்மக்கள்.

**கருஞ்சாந்து** – குழைசேறு.

**கருஞ்சார்** – அரைப்பொருத்து.

**கருஞ்சாரை** – சாரைப்பாம்புவகை.

**கருஞ்சிலை** – கருநிறக்கல்.

**கருஞ்சிவதை** – ஒருவகைச் செடி.

**கருஞ்சிவப்பு** – கருமை கலந்த செந்நிறம்.

**கருஞ்சிறைப் பறவை** – மயில்.

**கருஞ்சீரகம்** – ஒரு சரக்கு, சீரகவகை.

**கருஞ்சுக்கான்** – ஒருவகைக் கல்.

**கருஞ்சுக்கிரன்** – கண்ணோய்வகை.

**கருஞ்சுரை** – சுரைவகை; காட்டுக்கத்தரி.

**கருஞ்செம்பை** – ஒருவகைச் செடி.

**கருஞ்செய்** – நன்செய் நிலம்.

**கருஞ்செவ்வாப்பு** – பிறந்த குழந்தையின் நோய்க் குறியான நிறவேறுபாடு.

**கருஞ்சேரா** – கடித்தலால் உடம்பில் கறுப்பு நிற மான தடிப்பை உண்டாக்கும் ஒரு நச்சுப்பூச்சி.

**கருஞ்சேவகம்** – பெருவீரச் செயல்.

**கருடக்கல்** – பாம்பின் நஞ்சைப் போக்கும் கல்.

**கருடக்கை** – நின்று வணங்குதலைக் காட்டும் இணைக்கைவகை.

**கருடக்கொடி** – கருடன் எழுதப்பெற்ற கொடி; குறிஞ்சாக்கொடி; பெருமருந்து.

**கருடக்கொடியோன்** – கருடக்கொடியையுடைய திருமால்.

**கருடகம்பம்** – திருமால் கோயில் கொடிமரம்; கருடன் சன்னதியை அடுத்து இருக்கும் விளக்குத் தூண்; கருடக்கொடித் தூண்; வைணவ அடியவர் வலம்வருங்கால் கையில் ஏந்திச் செல்லும் எரியும் விளக்குத்தண்டு.

**கருடகேதனன்** – திருமால், கருடக்கொடியோன்.

**கருடசாரம்** – கடலுப்பு.

**கருடசானம்** – கருடத்தியானம்.

**கருடத்துவசன்** – காண்க: **கருடகேதனன்.**

**கருடத்தொனி** – ஒரு பண்வகை.

**கருடதரிசனம்** – கருடனைக் கண்டு வணங்குகை.

**கருடதிசை** – கிழக்கு.

**கருடப்பச்சை** – ஒருவகை மரகதம், கருடக்கல்.

**கருடப்பார்வை** – கூரிய பார்வை; மாறுகண்; நஞ்சு தீர்க்கும் பார்வை.

**கருடபக்கம்** – ஒருவகை நிருத்தக்கை.

**கருடபஞ்சமி** – ஆவணி மாதத்துச் சுக்கிலபட்சப் பஞ்சமியில் சுமங்கலிகளால் கொண்டாடப் படும் நோன்பு.

**கருடபஞ்சாக்கரம்** – ஐந்தெழுத்தாலாகிய கருட மந்திரம்.

**கருடமுகம்** – முகம் மட்டும் வெள்ளை நிறமாயிருக்கும் மாட்டுக்குற்றம்.

**கருடர்** – பதினெண் கணத்தாருள் ஒரு வகுப்பார்.

**கருடவாகனன்** – கருடனை ஊர்தியாகவுடைய திருமால்.

**கருடன்** – வைனதேயன்; திருமால் வாகனம்; பருந்துவகை; கொல்லங்கோவைச் செடி.

**கருடன்கிழங்கு** – பெருமருந்து.

**கருடாசனம்** – யோகாசனவகை.

**கருடாரூடன்** – கருடன்மேல் வீற்றிருக்குந் திருமால்.

**கருடி** – சிலம்பம்; கரடிக்கூடம்.

**கருடிவித்தை** – காண்க: **கரடிவித்தை.**

**கருடுதல்** – விரும்புதல்.

**கருடோற்காரம்** – மரகதவகை.

**கருடோற்சவம்** – திருமால் கருடாரூடராய்க் காட்சி கொடுக்கும் திருநாள்.

**கருணம்** – எலுமிச்சைமரம்; காது.

**கருணமல்லி** – முல்லை.

**கருணன்** – அருளுடையவன்; கர்ணன்; கும்பகர்ணன்.

**கருணா** – ஒருவகை வாச்சியம்; கருணை; பாவனை ஐந்தனுள் ஒன்றான அருள்.

**கருணாகடாட்சம்** – அருள்நோக்கு, கருணையோடு கூடிய கடைக்கண் பார்வை.

**கருணாகரன்** – அருளுக்கு இருப்பிடமான கடவுள்.

**கருணாநிதி** – அருட்செல்வன், கடவுள்.

**கருணாபாவனை** – வறியவர்கள் வறுமை நீங்கிச் செல்வமுடையவர்களாகுக என்று பாவித்தல்.

**கருணாமூர்த்தி** – அருள் உருவான கடவுள்.

**கருணி** – மலை; குகை.

**கருணிகை** – தாமரைக்கொட்டை.

**கருணீகம்** – ஊர்க் கணக்குவேலை.

**கருணீகன்** – ஊர்க்கணக்கன்; கணக்குவேலை பார்க்கும் ஒரு சாதி.

**கருணை** – அருள், தயவு, இரக்கம்; ஒரு கிழங்கு; ஒன்பான் சுவையுள் ஒன்றாகிய அவலச்சுவை.

**கருணைமறம்** – அருளாற் செய்யும் தண்டனை.

**கருத்தபம்** – காண்க: **கர்த்தபம்.**

**கருத்தமம்** – சேறு.

**கருத்தரங்கு** – கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளும் மேடை.

**கருத்தரித்தல்** – கருத்தங்கல், சினையாதல், சூல் கொள்ளுதல்.

**கருத்தவ்வியம்** – செய்யத்தக்கது.

**கருத்தளவு(வை)** – அனுமானப் பிரமாணம்.

**கருத்தன், கருத்தா** – செய்வோன்; தலைவன்; கடவுள்.

**கருத்தாவாகுபெயர்** – கருத்தாவின் பெயரைக் காரியத்திற்கு வழங்குதல்.

**கருத்தாளி** – புத்திசாலி, கருத்துள்ளவன்.

**கருத்து** – நோக்கம்; தாற்பரியம்; கொள்கை; எண்ணம், விருப்பம்; சொற்பொருள்; கவனம்; இச்சை; விவேகம்; சம்மதம்; மனம்; பயன்; சங்கற்பம்; தன்மதிப்பு.

**கருத்துக்கொள்ளுதல்** – நோக்கமுறுதல், மனம் வைத்தல்.

**கருத்துடையடை** – அபிப்பிராயத்தோடு கூடிய விசேடணத்தை உடையதாகிய அணி.

**கருத்துடையடைகொளி** – அபிப்பிராயத்தோடு கூடிய விசேடியத்தை உடையதாகிய அணி.

**கருத்துப்பிசகு** – தவறான கருத்து, தப்புரை.

**கருத்துப்பிரிதல்** – மனத்து உதித்தல்; கருத்து விளங்குதல்.

**கருத்துப்பொருள்** – மனத்தாலே கருதப்பட்ட பொருள்.

**கருத்துரை** – தாற்பரியம், செய்யுட் கருத்துரைக்கு முரை, உட்பொருள்.

**கருத்தெடுத்தல்** – சூழ்ச்சி செய்தல்; உட்கருத்தறிதல், உள்ளவுண்மையை உணர்ந்தறிதல்.

**கருத்தொட்டுதல்** – பொருள் காணுதல்; தொக்கு நின்ற சொல்லை விரித்துப் பொருள்காணுதல்; பிறர் பாடத்தில் தன் கருத்தை ஒட்டுதல்; மனத்தை ஒருமுகப்படுத்துதல்.

**கருத்தோட்டம்** – சிந்தனை.

**கருதல்** – எண்ணல், அனுமானம், நினைத்தல்.

**கருதலர்** – பகைவர்.

**கருதலளவை** – காண்க: **கருத்தளவு(வை).**

**கருதலார், கருதாதார், கருதார்** – காண்க: **கருதலர்.**

**கருதுதல்** – எண்ணுதல்; மறந்ததை நினைத்தல்; நிதானித்தறிதல்; உத்தேசித்தல்; மதித்தல்; விரும்புதல்; அனுமானித்தல்; நன்கு ஆலோசித்தல்; ஒத்தல்.

**கருந்தமிழ்** – கொச்சைத்தமிழ்.

**கருந்தரை** – பாழ்நிலம்.

**கருந்தலை** – கால்பாகம்; முடிவு; தொடக்கம்; கரிய தலை.

**கருந்தனம்** – பொன்; பணம்.

**கருந்தாது** – இரும்பு; இரும்பின் பொடி.

**கருந்தாமக்கொடி** – சிறுசெங்குரலி என்னும் மலைக்கொடி.

**கருந்தாள்** – அறுபட்ட தாளடி.

**கருந்திடர்** – பெரிய மேடு.

**கருந்துகிலோன்** – நீல ஆடையை அணிந்த பலராமன்.

**கருந்தும்பை** – பேய்மருட்டி; கருங்காலிமரம்; செடிவகை; மரவிசேடம்.

**கருந்துவரை** – மலைத்துவரை; மரவகை.

**கருந்தூள் செந்தூள் பரத்தல்** – கடுமையாய் முயலுகை.

**கருந்தொழில்** – வலிய தொழில்; கொலைத் தொழில்; தச்சுவேலை.

**கருந்தோழி** – அவுரிச்செடி.

**கருநடம்** – கருநாடகம், கன்னடம்.

**கருநந்து** – நத்தைவகை.

**கருநாக்கு** – தீயநாக்கு, தீயநாக்குள்ளவர்.

**கருநாகப்படலம்** – ஒருவகைக் கண்நோய்.

**கருநாகம்** – கரும்பாம்பு, இராகு; காரீயம்,

**கருநாடகம்** – தென்னிந்திய மாநிலங்களுள் ஒன்று; கன்னடமொழி; தென்னாட்டு இசை; பழைமையானது; நாகரிகமற்றது.

**கருநாடர்** – கருநாடகத்தைச் சேர்ந்தவர்.

**கருநாபி** – கல்லுப்பு.

**கருநாய்** – ஓநாய்.

**கருநார்** – பனையின் கறுத்த நார்.

**கருநாழிகை** – இரவு.

**கருநாள்** – நற்செயல்களுக்கு ஆகாத நாள், தீய நாள்.

**கருநிலம்** – பயன்படாத நிலம்.

**கருநீலப்பிறப்பு** – நரகப் பிறப்புக்குச் சிறிது மேற்பட்ட பிறவி.

**கருநெய்தல்** – கருங்குவளை, நீலம்.

**கருநெல்லி** – ஒருவகை நெல்லிமரம்.

**கருநெறி** – நெருப்பு.

**கருநொச்சி** – ஒருவகை நொச்சிச்செடி.

**கருநோய்** – ஒருவகை மாட்டுநோய்.

**கருப்பக்கிருகம்** – கருவறை, மூலத்தானம், கோயிலில் தெய்வத்திருமேனியுள்ள அறை; அரண்மனையின் உள்வீடு.

**கருப்பகோளகை** – கருப் பை.

**கருப்பங்கொல்லை** – கரும்புத் தோட்டம்.

**கருப்பச்சிதைவு** – கருவழிவு.

**கருப்பட்டி** – பனைவெல்லம்; பனங்கற்கண்டு; வெல்லம்.

**கருப்படம்** – கந்தற் புடைவை.

**கருப்பணி** – பனையினின்று இறக்கும் பதநீர்.

**கருப்பத்துளை** – பவளங்கள் உண்டாகும்போதே காணும் உட்டுளையாகிய குற்றம்.

**கருப்பதீக்கை, கருப்பதீட்சை** – மனைவியின் கருப்பகாலத்து மயிர் வளர்க்கை.

**கருப்பதும்பம்** – கருப்பத்தை மூடியிருக்கும் நஞ்சுப்பை.

**கருப்பந்தெப்பம்** – பேய்க்கரும்புகொண்டு செய்யப்படும் மிதவை.

**கருப்பந்தோகை** – கரும்பின் இலை.

**கருப்பநாடி** – கொப்பூழ்க்கொடி.

**கருப்பநாள்** – குழந்தை பிறந்த ஒன்பதாம் நாள்.

**கருப்பநிச்சிதம்** – கருப்ப காலத்திலேயே செய்யப்பட்ட திருமண உறுதி.

**கருப்பநீர்** – கருப்பஞ்சாறு; பனையின் பதநீர்.

**கருப்பப்பரிசம்** – கருப்பந்தரிக்கை.

**கருப்பம்** – கருக்கொண்டிருத்தல், உட்பொருளாகக் கொண்டது; சினை; கருப்பை; அரண்மனை.

**கருப்பம்பாகு** – வெல்லப்பாகு.

**கருப்பரம்** – தலையோடு; இரும்புப் பாத்திரம்; எலும்பு.

**கருப்பாசயம்** – கருத்தங்கும் இடம், கருப்பை.

**கருப்பாதானம்** – கருப்பந்தரித்தற்காகச் செய்யும் ஒரு சடங்கு.

**கருப்பாலை** – கரும்பாட்டும் ஆலை.

**கருப்பிண்டம்** – கருப்பத்திலுள்ள பிண்டம்.

**கருப்பிணி** – கருக்கொண்டவள்.

**கருப்பு** – பஞ்சம், வறுமையான காலம்.

**கருப்புக்கட்டி** – வெல்லம்; பனைவெல்லம்; கற்கண்டு.

**கருப்புரம்** – காண்க: **கருப்பூரம்.**

**கருப்புவில்** – மன்மதனது கரும்புவில்.

**கருப்புவில்லி** – கரும்பை வில்லாகவுடைய மன்மதன்.

**கருப்பூர்வழக்கு** – தீராத வழக்கு.

**கருப்பூரம்** – பொன்; ஒரு மணச்சரக்கு; பொன்னரிதாரம்; ஒரு மரவகை.

**கருப்பேந்திரம்** – கரும்பாலை.

**கருப்பை** – கருப்பப் பை; காரெலி; ஒருவகைப் பனை.

**கருப்பொருள்** – காரணப் பொருள்; ஐந்திணைக்கும் உரிய தெய்வம் முதலிய பொருள்கள்.

**கருப்போட்டம்** – மார்கழி மாதத்தில் கருக்கொண்ட மேகத்தின் தென்சார்பான ஓட்டம்.

**கரும்படை** – மேகப்படை.

**கரும்பணி** – பெண்களின் தோள் மார்புகளில் சந்தனக் குழம்பு முதலியவற்றால் கரும்பு வடிவாக வரையப்படும் கோலம்.

**கரும்பன்** – கரும்பை வில்லாகவுடைய மன்மதன்.

**கரும்பனசை** – கருவழலைப் பாம்பு.

**கரும்பாடு** – ஏரியின் நீர்ப்பிடி வரையுள்ள நிலம்.

**கரும்பாம்பு** – இராகு; கருவழலைப் பாம்பு.

**கரும்பாலை** – கரும்பாட்டும் ஆலை; பாலை மரவகை.

**கரும்பித்தம்** – ஒருவகைப் பித்தநீர்; பைத்தியம்; ஒரு நோய்.

**கரும்பிள்ளை** – காக்கை.

**கரும்பிறப்பு** – நரகப்பிறவி.

**கரும்பிறை** – கரும்பளிங்குக் கல்; கருஞ்சுக்கான் கல்.

**கரும்பு** – ஒருவகைப் பயிர்; புனர்பூசம்.

**கரும்புசம்** – வண்டு, ஒருவகைக் கரிய வண்டு.

**கரும்புல்** – பனைமரம்.

**கரும்புள்** – கரிக்குருவி; காகம்; வண்டுவகை; பெண்வண்டு.

**கரும்புள்ளிக்கல்** – உலோக தாதுவுள்ள கல்வகை.

**கரும்புளித்தல்** – களிம்பூறுதல், செம்பிற் களிம்பினால் மோர் முதலியன திரிந்து கெடுதல்.

**கரும்புற்று** – கருநிறமுள்ள கிரந்திவகை.

**கரும்புறத்தோர்** – விலங்குகளை வேட்டையாடி உண்ணும் இனத்தார்.

**கரும்புறம்** – பனைமரம்; கருமை.

**கரும்பூ** – நீலோற்பலம், கருங்குவளை.

**கரும்பேன்** – ஈரத்தாற் சீலையில் தோன்றும் கரும்புள்ளி.

**கரும்பொன்** – இரும்பு.

**கருமக்கருத்தன்** – கருமஞ்செய்பவன்; செயப்படு பொருள் வினைமுதல்போல் வருவது.

**கருமக்கழிபலம்** – தீவினையைக் கழிக்கும் நல்வினை.

**கருமக்காமம்** – செயலின்பொருட்டு மேற்கொண்ட பொய்க்காமம்.

**கருமக்கோட்பாடு** – மேற்கொண்ட செயல்.

**கருமகர்த்தா** – காண்க: **கருமக்கருத்தன்.**

**கருமகள்** – சண்டாளி; காக்கை.

**கருமகன்** – கொல்லன்.

**கருமகாண்டம்** – வேள்வி முதலிய வைதிக தருமங்களைப்பற்றிக் கூறும் வேதத்தின் முற்பகுதி; முற்பிறப்புத் தீவினைகளால் ஏற்படும் நோய்களையும் அவற்றிற்குரிய சிகிச்சை முறையையும் விளக்கும் ஒரு மருத்துவ நூல்.

**கருமகாண்டி** – வைதிகக் கிரியைகளின்படி நடப்பவன்.

**கருமகீலகன்** – வண்ணான்.

**கருமச்சார்ச்சி, கருமச்சார்பு** – இரண்டாம் வேற்றுமைச் சார்பு பொருண்மையுள் ஒன்று. அஃது ஒன்றனையொன்று மெய்யுறுதல்; அதாவது செயப்படுபொருளைக் கருத்தா மெய்யுறும் சார்பு.

**கருமசண்டாளன்** – இராகு; துரோகி, பொறாமை முதலிய தீக்குணமுடையவன்.

**கருமசம்** – அரசமரம்; கருமத்தினாலே தோன்றிய ரோகம் முதலியன; களங்கம்; வினைப்பயன்; கலியுகம்.

**கருமசாட்சி** – சூரியன்.

**கருமசுத்தி** – பாவம் நீக்கல்; செயலைக் குற்றமறச் செய்கை.

**கருமசேடம்** – பல்வேறு அனுபவங்களைக் கொண்டு செலுத்தும் வினைக்குறை.

**கருமஞ்சரி** – நாயுருவிச்செடி.

**கருமஞ்செய்தல்** – இறுதிக்கடன் செய்தல்.

**கருமணல்** – கரிய நுண்மணல்.

**கருமணி** – கண்ணின்மணி; கருகுமணி, நீலமணி.

**கருமத்தம்** – கருவூமத்தை.

**கருமத்தலைவன்** – காரியத்தலைவன்.

**கருமத்துரோகம்** – துரோகச்செயல்.

**கருமநிவர்த்தி** – வினையொழிவு; முன் செய்த தீவினை நீங்கப் புரியும் கிரியை.

**கருமப்பழி** – துரோகம்.

**கருமப்பிறப்பு** – பாவசென்மம்.

**கருமபந்தம், கருமபந்தனம்** – வினைகளாலான கட்டு.

**கருமபலன்** – வினைப்பயன்.

**கருமபாகை** – வேதநூற்பொருளின் ஒன்று, **கருமகாண்டம்.**

**கருமபூமி** – உழவு, தொழில், வரைவு, வாணிகம், விச்சை, சிற்பம் என்னும் அறுவகைத் தொழிற்குரிய பூமி; சுடுகாடு; வேள்வி முதலிய நற்செயல்கள் புரிதற்குரிய பாரதநாடு.

**கருமம்** – செயல்; வினைப்பயன்; தொழில்; வேதசம்பந்தமான சடங்கு; இறுதிக்கடன்; செயப்படுபொருள்; வெம்மை; மும்மலங்களுள் ஒன்றாகிய கன்மவிதி.

**கருமமல்லாச்சார்பு** – செயப்படுபொருளை யேனும் ஆதாரத்தையேனும் கருத்தா மெய் யுறுதலினின்றி வரும் சார்பு.

**கருமமூலம்** – தருப்பை.

**கருமயாகம்** – நித்திய கருமானுட்டானம்.

**கருமயிர்** – கரடி.

**கருமயிலை** – இருண்ட சாம்பல் நிறம்.

**கருமயோகம்** – பயன் கருதாது செய்யும் கடமை; உடல் நிலைத்தற்காகச் செய்யும் யோகம்.

**கருமருந்து** – வெடிமருந்து.

**கருமவதிகாரர், கருமவிதிகள்** – அரசு காரியம் நடத்துந் தலைவர்.

**கருமவியாதி** – முன்செய்த தீவினையால் உறும் தீராநோய்.

**கருமவினைஞன்** – புரோகிதன்.

**கருமவேதனை** – மிக்க வருத்தம்.

**கருமன்** – கொல்லன்.

**கருமா** – பன்றி; யானை.

**கருமாத்துமா** – முன்வினைப்பயனை அனுபவிப்பவன்.

**கருமாதி** – அந்தியேட்டி முதலிய சடங்கு, கருமாந்தரம்.

**கருமாதிபதி** – சாதகன் பிறந்த இலக்கினத்திற்குப் பத்தாம் இடத்து அதிபதி.

**கருமாந்தம், கருமாந்தரம்** – இறந்தவர்பொருட்டுச் செய்யும் பதினாறாம்நாட் சடங்கு.

**கருமாயம்** – அருமையானது; அதிக விலை.

**கருமாறிப்பாய்ச்சல்** – காஞ்சிபுரத்துக் காமாட்சி கோயிற்குளத்துள் நாட்டப்பட்ட இரண்டு கழுக்கோல்களின் இடையே உயரமான இடத்தி னின்றுந் தவறாது குதிக்கை.

**கருமாறிப்பாய்தல்** – கருமாறிப் பாய்ச்சல்போன்ற அரிய செயலைச் செய்தல்.

**கருமான்** – கலைமான், ஆண்மான்; கொல்லன்; பன்றி.

**கருமானம்** – மந்திரவித்தை.

**கருமானுபவம்** – செய்வினை அனுபவிக்கை.

**கருமி** – தன் இனத்திற்குரிய செயல்களைச் செய்வோன்; தீவினையுடையோன், பாவி; ஈயாதவன்.

**கருமுகில்** – நீருண்ட மேகம்; கருமுகில் பாடாணம்.

**கருமுகை** – இருவாட்சி; சிறுசண்பகம்; சாதி மல்லிகை.

**கருமுடித்தல்** – மந்திரத்திற்காக அட்ட கருமக் கருவுண்டாக்கல்; இரசவாதக் கருவைச் சித்தப் படுத்துதல்.

**கருமுரடன்** – கீழ்ப்படியாதவன்.

**கருமேகம்** – மேகநோய்வகை; கருமையான மேகம்.

**கருமேந்திரியம்** – தொழில்களைச் செய்யும் கை கால் முதலிய உறுப்புகள்.

**கருமேனி** – கரியவுடல்; பருவுடல், தூல உடம்பு.

**கருமை** – கறுப்பு; பெருமை; வலிமை; பசுமை; கொடுமை; வெள்ளாடு; செயல்; வெப்பம்.

**கருவங்கம்** – காரீயம்.

**கருவடகம்** – கறிவடகம்.

**கருவடம்** – மலையும் ஆறுஞ் சூழ்ந்த ஊர்.

**கருவப்பை** – கருவூலம்; பொருள் வைக்கும் பை.

**கருவம்** – செருக்கு, அகங்காரம்; கரு.

**கருவரி** – கண்ணிலுள்ள கரிய கோடு.

**கருவல்** – குட்டையாள்.

**கருவலி** – மிகுந்த வலிமை.

**கருவழலை** – வழலைப்பாம்புவகை.

**கருவழிவு** – கருச்சிதைவு.

**கருவறிதல்** – உள்ளீடறிதல்; பகுத்தறியும் பருவம் அடைதல்; கருக்கொண்டதை அறிதல்.

**கருவறுத்தல்** – அடியோடு தொலைத்தல்.

**கருவறை** – கருக்குழி; கோயிலிலுள்ள மூலத் தானம்.

**கருவன்** – செருக்கன்; சங்காரமூர்த்தி.

**கருவா** – இலவங்கப்பட்டைமரம்; கிராம்புமரம்.

**கருவாட்டுவாலி** – வலியான், கரிக்குருவி.

**கருவாடு** – உப்பிட்டு உலர்த்திய மீன்; காய்ந்த மீன்.

**கருவாப்பட்டை** – இலவங்கப்பட்டை.

**கருவாய்** – இலவங்கம்.

**கருவாலி** – ஒரு குருவி; ஒரு மரவகை.

**கருவாளி** – கருத்துடையோன், அறிவாளி; இரசம்.

**கருவி** – ஆயுதம்; சாதனம்; கவசம்; கேடகம்; குதிரைக்கலணை; குதிரைச்சம்மட்டி; தொகுதி; மேகம்; தொடர்பு; ஆடை; ஓவியம்; அணிகலன்; துணைக்காரணம்; இசையுண் டாதற்குரிய யாழ் முதலிய கருவிகள்.

**கருவிக்குயிலுவர்** – தோற்கருவி வாசிப்போர்.

**கருவிகரணங்கள்** – உடல் உறுப்புகளும் மனமும்.

**கருவிகழலுதல்** – வலியழிதல்.

**கருவிநூல்** – கல்வியறிவை வளர்த்தற்குச் சாதன மான நூல்; ஆரம்ப நூல்.

**கருவிப்புட்டில்** – ஆயுதவுறை.

**கருவிப்பை** – அடைப்பம், ஆயுதம் வைக்கும் பை.

**கருவிபணம்** – வரிவகை.

**கருவிமாக்கள்** – யாழ்மீட்டும் பாணர்.

**கருவியாகுபெயர்** – காரணத்தின் பெயர் காரியத் திற்காவது.

**கருவியைந்து** – தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்னும் ஐந்து வகையான இசைக்கருவிகள்.

**கருவிரலூகம்** – கரிய விரல்களையுடைய குரங்கு போலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் மதிற் பொறி.

**கருவிரிதல்** – பயிரில் கதிர்பறிதல்.

**கருவிலி** – ஒருவகைப் பாம்பு.

**கருவிழி** – கண்மணி.

**கருவிளங்கனி** – மூன்று நிரையசைச் சீரைக் குறிக்கும் வாய்பாடு.

**கருவிளங்காய்** – நிரைநிரைநேர் கொண்ட மூவகைச் சீரைக் குறிக்கும் வாய்பாடு.

**கருவிளந்தண்ணிழல்** – நிரை நிரை நேர் நிரை கொண்ட நாலசைச் சீரைக் குறிக்கும் வாய்பாடு.

**கருவிளம்** – இரண்டு நிரையசைச்சீரைக் குறிக்கும் வாய்பாடு; காக்கட்டான்; வில்வம்.

**கருவிளா** – ஒருவகை விளாமரம்; வில்வம்.

**கருவிளை** – காக்கணங்கொடி; ஒரு மரவகை.

**கருவினை** – பாவம்.

**கருவீரல்** – கல்லீரல்.

**கருவுகலம்** – பொருளறை, கருவூல அறை.

**கருவுப்பு** – எள்ளுப்பு.

**கருவுயிர்த்தல்** – ஈனுதல்.

**கருவுளமைப்பு** – பிறப்பெடுத்தலால் வரும் விளைவு.

**கருவுறுதல்** – கருத்தரித்தல்; மலர்தல்.

**கருவூமத்தை** – ஊமத்தஞ்செடிவகை.

**கருவூர்** – சேரரது பழைய தலைநகர்; கரு உண்டாகும் இடம்.

**கருவூலம்** – செல்வச் சேர்ப்பறை, பொருளறை.

**கருவெடுத்தல்** – உடம்பெடுத்தல்; அட்ட கருமக் கருச் சேர்த்தல்.

**கருவேப்பிலை** – கறிவேம்பின் இலை; கறிவேம்பு; செடிவகை.

**கருவேம்பு** – கறிவேம்புமரம்; கறுப்பு வேப்பமர வகை.

**கருவேல்** – ஒரு மரம், வேலமரவகை.

**கருவை** – வரகு வைக்கோல்; ஒரு சிவதலம்.

**கருள்** – இருள்; கறுப்பு; குற்றம்; சீற்றம்; நல்லாடை.

**கருளன்** – கருடன்.

**கருனை** – பொரியல், பொரிக்கறி.

**கரேணு** – யானை; பெண்யானை.

**கரை** – கடற்கரை; நீர்க்கரை; எல்லை; செய் வரம்பு; சீலையின் விளிம்பு; பக்கம்; இடம்; சொல்; ஊர்ப் பெரும்பங்கு.

**கரைக்கல்லோலம்** – கடற்பாசி.

**கரைக்காரன்** – ஊர் மணியக்காரன்; நிலப்பங்குக் குரியவன்; சீட்டு நடத்துபவன்.

**கரைக்கூறுசெய்வார்** – நிலவளவை செய்யும் ஊர் அதிகாரிகள்.

**கரைகட்டுதல்** – நீர்க்கரைக்கு வரம்பு உண்டாக்குதல்; சீலை விளிம்பைக் கட்டுதல்.

**கரைகடத்தல்** – கரையைத் தாண்டுதல்; எல்லை மீறுதல்.

**கரைகண்டவன்** – மிகத் தேர்ந்தவன்.

**கரைகன்று** – பருவத்துக்குமுன் ஈன்ற கன்று.

**கரைகாணுதல்** – முடிவு காணுதல், எல்லை யறிதல்.

**கரைகாரன்** – காண்க: **கரைக்காரன்.**

**கரைச்சல்** – உருக்குகை; கவலை.

**கரைசல்** – கரையல்; உருக்குதல்.

**கரைசிலை** – இந்துப்பு.

**கரைசேர்தல்** – காண்க: **கரையேறுதல்.**

**கரைஞ்சான்** – அகில்மரம்.

**கரைத்தல்** – உருக்குதல்; கரையச்செய்தல்; எழுத்திலாவோசை; அழைத்தல்; அழித்தல்; நிமிண்டுதல்.

**கரைத்துக்குடித்தல்** – உணவு முதலியவற்றைக் கரைத்து உட்கொள்ளுதல்; முற்றக் கற்றறிதல்.

**கரைதட்டுதல்** – கப்பல் மணலிற் பாய்தல்.

**கரைதல்** – கரைந்துபோதல்; உருகுதல்; இளைத்தல்; அழைத்தல்; சொல்லுதல்; அழுதல்; உருவழிதல்; ஒலித்தல்; வருந்துதல்; காக்கையின் கூப்பீடு.

**கரைதலைப்பாடம்** – கடைதலைப் பாடம், தலைகீழாகப் பாடம் பண்ணுகை.

**கரைதுறை** – முடிவு; இறங்குமிடம்.

**கரைதுறைக்காவற்காரன்** – துறைமுகங் காப்பவருள் தலைவன்.

**கரைப்பங்கு** – ஊர் நிலப்பங்கு.

**கரைப்படுத்தல்** – கரையிற் சேர்த்தல்; நற்கதி அடைவித்தல்.

**கரைப்பாதை** – கரைவழி; கரைவழியே செல்லும் பயணம்.

**கரைப்பு** – வீட்டின் மேல்தளத்தை நீர்வாட்ட முறும்படி செய்கை.

**கரைப்புக்கல்** – தளத்திற்கு இழைப்போட்டுங் கல்.

**கரைப்போக்கு** – கடற்கரை; போலிக்கெம்பு; இழிவானது.

**கரைபடுதல்** – பங்குவீதம் நிலம் பிரிவுபடுதல்.

**கரைபிடித்தல்** – மரக்கலந் துறைசேர்தல்.

**கரைபிடித்தோடுதல்** – மரக்கலம் கரையோரமாய்ச் செல்லுதல்.

**கரைபுரளுதல்** – பெருக்கெடுத்தல், கரைமூடிப் பாய்தல், மிகுதல்.

**கரைபோடுதல்** – செய்கரை கட்டுதல்; நிலம் பிரித்தல்; சீட்டுப்போடுதல்.

**கரைமடி** – கரைவலை.

**கரைமரஞ்சேர்தல்** – உய்வடைதல்.

**கரைமானியம்** – ஏரிக்கரையைப் பழுதுபார்ப்பதற்கு வேண்டிய ஆள்களைக் கூட்டுவதற்கு விடப்பட்ட இறையிலி நிலம்.

**கரையப்பாடம்பண்ணுதல்** – காண்க: **கரையாக்குதல்.**

**கரையல்** – கரைந்தது; கரைதல்; உருகுதல்; கரைந்த பொருள்.

**கரையற்சாதம்** – குழைந்த சோறு.

**கரையாக்குதல்** – நன்றாகக் கற்றல்.

**கரையாளன்** – ஊர்க் கரைப்பங்குக்கு உரியவன்; மறவர், இடையர்களின் பட்டப்பெயர்.

**கரையான்** – கடற்கரைப் பக்கத்து வாழும் வலைஞன்.

**கரையிடுதல்** – நிலப்பங்கு பிரித்தல்; நிலங்களைப் பயிரிடுமாறு பிரித்துக் கொடுத்தல்.

**கரையீடு** – ஊர்நிலங்களை மாற்றியடைக்கை; அடைமானம்.

**கரையேற்றம்** – நற்கதியடைகை; வறுமை முதலியவற்றினின்றும் ஈடேறுகை.

**கரையேற்றுதல்** – நற்கதி சேர்த்தல்; வறுமை முதலியவற்றினின்று ஈடேற்றுதல்; திருமணம் பெறச் செய்தல்.

**கரையேறுதல்** – நீரினின்று கரையடைதல்; நற்கதி யடைதல்; வறுமை முதலியவற்றினின்றும் ஈடேறுதல்; வாழ்க்கைப்படுதல்; விரும்பியதை அடைதல்.

**கரையோலை** – பிரிவினைப் பத்திரம்.

**கரைவலை** – மீன்வலை.

**கரைவலைத்தோணி** – கரைவலையை இழுத்துச் செல்லுந் தோணி.

**கரைவழி** – நீர்க்கரைப் பாதை; ஆற்றோரமான நிலம்; கரையீடு.

**கரைவழித் தீர்வை** – வேற்றூர்களிலிருந்து உள்நாடு வழியாகவரும் பண்டங்களுக்கு விதிக்கப்படும் சுங்கம்.

**கரைவாடை** – வடமேல்காற்று.

**கரைவீதம்** – ஊர்க் குடிகட்குப் பிரிக்கப்படும் பங்கு.

**கரைவு** – கரைதல்; மன இளக்கம்; சரிவு.

**கரோடம்** – தலையோடு.

**கரோடி, கரோடிகை** – சூட்டுமாலை, முடிமாலை; கழுதை.

**கரோருகம்** – நகம்.

**கல்** – வெட்டியெடுத்த கல்; சிறுகல்; பாறை; மலை; இரத்தினம்; காவிக்கல்; முத்து; வீரக்கல்; சாவுச்சடங்கில் இறந்தார் பொருட்டுப் பத்து நாளைக்கு நாட்டப்படுங் கல், மரகதக்குற்றம் எட்டனுள் ஒன்று; செங்கல்; கருங்கல்; மைல் அளவுக்கு நாட்டப்பட்ட கல்; கிலோமீட்டர் அளவுக்கு நாட்டப்படுங் கல்; மைல்தூரம்; கல்வி.

**கல் (வி)** – தோண்டு; பயில்; கல்வி கல்; படைக்கலம் முதலியன பயில்.

**கல்கட்டை** – கல்லினாற் கட்டப்பட்ட கட்டை.

**கல்கம்** – உலர்ந்த சரக்கைப் பால் அல்லது நீர் விட்டு அரைத்துச்செய்யுங் குளிகை.

**கல்காரம்** – பாறைக்கற் கட்டடம்.

**கல்கி** – கோயில்; திருமாலின் பத்துப் பிறப்புகளுள் இனி நிகழவிருக்கும் கடைசிப் பிறப்பு.

**கல்சிலை** – பறவைவகை.

**கல்நடுதல்** – இறந்தார்பொருட்டுக் கல் நடுதல்.

**கல்நாதம்** – அன்னபேதி என்னும் மருந்துச் சரக்கு.

**கல்நார்** – ஒருவகை மருந்து.

**கல்நுங்கு** – முதிர்ந்த நுங்கு.

**கல்நெஞ்சு** – வன்னெஞ்சு, இரக்கமற்ற மனம்.

**கல்பு** – மனம்.

**கல்மடி** – பசுவின் கர்ய்மடி.

**கல்மந்தாரம்** – அடைபட்டுச் சஞ்சாரமின்றியுள்ள மேகம்.

**கல்மரவை** – கற்சட்டி.

**கல்மழை** – ஆலங்கட்டியாக விழும் மழை.

**கல்மாந்தம்** – குழந்தைகட்கு உண்டாகும் ஈரல் நோய்வகை.

**கல்மூங்கில்** – ஒருவகை மூங்கில், உள்தொளை சிறுத்துள்ள மூங்கில்வகை; முள்ளில்லாத சிறு மூங்கில்வகை.

**கல்யாணகுணம்** – நற்குணம், உயர்ந்த குணம்.

**கல்யாணச்சாவு** – அகவைமுதிர்ந்தோரது இறப்பு.

**கல்யாணத்திருமேனியாதல்** – நல்லுடம்பு வாய்த்தல்.

**கல்யாணதரம்** – சமவசரணத்திலுள்ள மூன்று மதில்களுள் ஒன்று.

**கல்யாணம்** – காண்க: **கலியாணம்.**

**கல்யாணன்** – நற்குணமுடையவன்.

**கல்(லி)யாணி** – நற்குணமுடையவள்; ஒரு பண்வகை.

**கல்லக்காரம்** – பனங்கற்கண்டு.

**கல்லகம்** – மலை.

**கல்லகாரம்** – செங்குவளை; நீர்க்குளிரி.

**கல்லங்காய்** – இறுகிய காய்.

**கல்லட்டிகை** – மணிவைத்து இழைத்த அட்டிகை அணி.

**கல்லடார்** – விலங்குகளைப் பிடிக்கும் கற்பொறி.

**கல்லடித்தல்** – கல் வெட்டுதல்; காலிற் கல்லடி படுதல்.

**கல்லடைப்பு** – நீரடைக்கும் ஒரு நோய்வகை.

**கல்லணை** – கல்லாற் கட்டிய நீரணை; கரிகாலன் கட்டிய அணை; ஓர் ஊர்; குதிரைமேல் தவிசு.

**கல்லத்தி** – ஓர் அத்திமரம்.
**கல்லதர்** – பருக்கைக் கற்கள் பொருந்திய சிறுவழி.
**கல்லம்** – செவிடு; மஞ்சள்.
**கல்லரவிந்தம்** – கற்றாமரை.
**கல்லல்** – குழப்பம்; பலர் பேசலால் எழும் ஒலி; ஓர் ஊர்.
**கல்லலகு** – ஒருவகை வாச்சியம்.
**கல்லவடம்** – ஒருவகைப் பறை; முரசு.
**கல்லழிஞ்சில்** – ஒருவகை அழிஞ்சில்மரம்.
**கல்லளை** – மலைக்குகை.
**கல்லறுத்தல்** – பச்சைவெட்டுக்கல் அறுத்தல், செங்கல் அறுத்தல்.
**கல்லறை** – குகை; பிணக்குழி; கல்லாலாகிய அறை.
**கல்லன்** – தீயோன், பொல்லாதவன்.
**கல்லாங்குத்துநிலம்** – கடினமான நிலம்.
**கல்லாசாரி** – கல்தச்சன்; கல்தச்சர் தலைவன்.
**கல்லாடை** – காவித்துணி.
**கல்லாணக்காணம்** – திருமணத்திற்காகச் செலுத்தப்பட்ட ஒரு பழைய வரி.
**கல்லாந்தலை** – ஒரு மீன்வகை.
**கல்லாப்பெட்டி** – பலசரக்கு வணிகனின் பணப் பெட்டி.
**கல்லாமை** – கல்வி கல்லாதிருத்தல், கற்றுக் கொள்ளாமை, படியாதிருத்தல்.
**கல்லார்** – கல்வியறிவற்றவர், கீழ்மக்கள்.
**கல்லாரம்** – செங்கழுநீர், செங்குவளை; நீர்க் குளிரி; மஞ்சள்.
**கல்லாரை** – கரந்தை, ஒருவகைப் பூமரம்.
**கல்லால்** – ஓர் ஆலமரம்; கல்லாலமரம்; குருக் கத்தி; பூவரசு.
**கல்லான்** – கல்வியில்லாதவன்.
**கல்லி** – பருவத்துக்கு மேற்பட்ட நுண்ணறிவு; கல்விமிக்க குழந்தை; ஆமை; ஊர்க்குருவி; கேலி; வேடிக்கை; மேலங்கி உறுப்பு; சுற்றுவரி என்னும் கட்டட உறுப்பு; சகடம்.
**கல்லிச்சி, கல்லித்தி** – இத்திமரவகை.
**கல்லித்திருத்துதல்** – மேடான நிலத்தை வெட்டித் திருத்துதல்.
**கல்லியம்** – கள்; ஆயத்தமானது; நோயின்மை.
**கல்லியாணக்கூடம்** – சேலைவகை; திருமணம் செய்யுமிடம்.
**கல்லியாணம்** – காண்க: **கலியாணம்.**
**கல்லில் நார் உரித்தல்** – இல்லாத பொருளைப் பெற முயலுதல்; ஒரு பொருளைப் பாடுபட்டு முயன்று பெறுதல்.
**கல்லிழைத்தல்** – மணிக்கற்களைப் பதித்தல்.
**கல்லின்காரம்** – கல்நார்.

**கல்லீயம்** – வெள்ளீயம் காரீயங்களின் கலப்பு; வன்மையான ஈயம்; நீலாஞ்சனம்.
**கல்லீரம்** – முருக்கு.
**கல்லீரல்** – பித்த சுரப்பி; பறவை மீன்களுக்குள்ள இரண்டாம் இரைப்பை.
**கல்லுக்கலைக்காத்தான், கல்லுக்கலைத்தான்** – பொன்னாங்காணிக் கீரை.
**கல்லுக்காரர்** – இரத்தினம் விற்போர்.
**கல்லுக்குத்துதல்** – மேல்தளம் முதலியவற்றிற்குப் பாவுகல் குத்துதல்; செயலைத் தடை செய்தல்.
**கல்லுகம்** – பெருவாகை.
**கல்லுகொம்பு** – தரைதோண்டும் முளை.
**கல்லுண்டை** – ஒருவகைச் சம்பாநெல்.
**கல்லுத்தீர்தல்** – இரத்தினஞ் செதுக்குதல்.
**கல்லுத்தூக்குதல்** – நங்கூரந் தூக்குதல்.
**கல்லுதல்** – தோண்டுதல்; துருவுதல்; நீர் அரித் தல்; தின்னுதல்; எழுத்தாணிக் கூர் கிழித்தல்; ஒலித்தல்.
**கல்லுப்பிடித்தல்** – அரிசி களையும்போது சிறு கற்கள் கீழே தங்குதல்; தொலைக்க வழி தேடுதல்.
**கல்லுப்பு** – ஒருவகை உப்பு.
**கல்லுப்பொறுக்கி** – கல்லை விழுங்கும் புறாவகை.
**கல்லுப்போடுதல்** – செயலைத் தடைசெய்தல்; எதிர்பாராத ஆபத்தை உண்டாக்குதல்; நங்கூரம் போடுதல்.
**கல்லுருணி** – புல்லுருவிப்பூடு.
**கல்லுருவி** – கல்லைக் கரைக்குங் குணமுள்ள ஒருவகைப் பூடு.
**கல்லுவைத்தல்** – நங்கூரமிடுதல்; கடிவாயில் மந்திரங்கூறி நஞ்சுக்கல் வைத்தல்; நெற்றியிற் கல்லை ஏற்றித் தண்டித்தல்; இறந்தோர்க்குக் கல் நடல்; செயல் பலிக்காமற் பண்ணுதல்; அணிகளில் மணிக்கற்களைப் பதித்தல்.
**கல்லுளி** – கல்வெட்டும் உளி, கல்வேலைக்குரிய உளி; பேய்க்களா.
**கல்லுளிச்சித்தன்** – ஒருவகைச் சித்தர்; கல்லுளி மங்கன்.
**கல்லுளிமங்கன்** – அருவருப்பான செய்கையால் பிடிவாதங் காட்டுபவன்.
**கல்லுளியுருக்கு** – கல்லைச் செதுக்கும் எஃகு.
**கல்லுளுவை** – ஒரு கடல்மீன்வகை.
**கல்லூரி** – கல்வி பயிலும் இடம்; சுற்றுத் தாழ்வாரம்.
**கல்லூற்று** – கல்லில் ஊறும் நீரூற்று.
**கல்லூன்றுதல்** – கல் புதைத்தல், சாச் சடங்காகக் கல்நடுதல்.
**கல்லெடுப்பு** – கல்லை யெடுத்தல், சாவுச் சடங்கில் நிறுத்திய கல்லை யெடுத்தல்.

**கல்லெரிப்பு, கல்லெரிப்புமேகம்** – நீர்ச்சுருக்கு நோய்.
**கல்லெறி** – கவண்; கல்லை வீசுகை; கல்லெறி தொலைவு.
**கல்லெறிதூரம்** – வலிமையோடு கல்லை வீசிஎறிய அது விழும் தொலைவின் அளவு.
**கல்லெனல்** – ஒலிக்குறிப்பு.
**கல்லேறு** – கல்லெறிதல்; முத்துக் குற்றங்களுள் ஒன்று.
**கல்லை** – இலையாற் செய்த உண்கலம்; பாதக் குறட்டின் குமிழ்; அவதூறு.
**கல்லொட்டர்** – கற்சுவர் எடுக்கும் ஒட்டச் சாதியார்.
**கல்லொட்டி** – நத்தை.
**கல்லோலம்** – நீர்த்திரை, அலை.
**கல்வம்** – காண்க: **கலுவம்.**
**கல்வழி** – கல்லை வைத்தெண்ணும் ஒருவகைக் கணக்கு; மலைப்பாதை.
**கல்வளை** – மலைப்பிளப்பு; மலைக்குகை.
**கல்வி** – அறிவு; வித்தை; கற்கை; கற்கும் நூல்; பயிற்சி.
**கல்விக்களஞ்சியம்** – கல்வியறிவு நிறைந்தவர்.
**கல்விச்சாலை** – கல்விபயிலும் இடம், கல்விக் கூடம், கல்லூரி, பாடசாலை.
**கல்விச்சேர்க்கை** – கலைக்களஞ்சியம், பல்கலை யகரமுதலி.
**கல்வித்துறை** – கல்வி அமைப்பு; கல்வி நிலையம்; கல்விவகை.
**கல்விநூல்** – கலை, சாத்திரம்.
**கல்விப்பொருள்** – கல்விச்செல்வம்.
**கல்விபயில்களம்** – கல்வி பயிலும் இடம், கல்லூரி.
**கல்விமதம்** – கல்விச்செருக்கு.
**கல்விமான்** – அறிஞன், புலவன்; கற்றவன், படிப்பாளி; கலைஞன்.
**கல்வியறிவு** – கற்றதனாற் பெறும் அறிவு.
**கல்வியூரி** – கல்வி பயிலிடம், கல்லூரி, கழகம், சங்கம்.
**கல்விவான்** – காண்க: **கல்விமான்.**
**கல்விளக்கு** – மாக்கல்லாலாகிய விளக்கு.
**கல்வினையர்** – சிற்பாசாரியர், கல்தச்சர், சிற்பி.
**கல்வீடு** – கல்லினாற் கட்டிய வீடு; உறுதியான கட்டடம்.
**கல்வீரியம்** – அன்னபேதி.
**கல்வெட்டி** – மாணிக்கக்கல் செதுக்குவோர்; செங்கல் அறுத்தற்குரிய கருவி, செங்கல் அச்சு.
**கல்வெட்டு** – கல்லில் எழுதப்பட்டது; சிலா சாசனம்; அழியாத சொல்; முன்னோர் இறந்த நாள் முதலியவற்றைக் குறிக்கும் புகழ்ச்சிச் செய்யுள், சரமகவி, இரங்கற் பா.
**கல்வெடி** – மலைகளை உடைக்க உதவும் வெடி மருந்து வகை; உரத்த ஓசையோடு வெடிக்கும் வெடி.
**கல்வெள்ளி** – இரும்பும் வெள்ளீயமும் கலந்தது, கலப்பு வெள்ளி.
**கல்வேலை** – கல்லிற் செய்யும் வேலை; மணி வேலை.
**கலக்கடி** – கலக்கம், அச்சம்; குழப்பம்.
**கலக்கம்** – கலங்குகை; மனக்குழப்பம்; துன்பம்; அச்சம்; புத்தித் தெளிவின்மை; அழுகை; ஆரவாரம்.
**கலக்கு** – கலக்கம்; பொருத்து.
**கலக்குதல்** – கலங்கச்செய்தல்; கலத்தல்.
**கலகக்காரன்** – சண்டை செய்வோன், சச்சரவு செய்வோன்.
**கலகக்குருவி** – மீன்கொத்தி; சச்சரவு செய் வோன்.
**கலகக்கை** – இரு கை விரல்களையும் நிமிர்த்து வளைக்கும் அபிநயக்கை.
**கலகப்பிரியன்** – கலகத்தில் விருப்பமுடையவன், கலகமூட்ட விரும்புவோன்; நாரதர்.
**கலகம்** – குழப்பம், சச்சரவு; ஒருவன்மேல் பிறர்க்குப் பகை உண்டாகும்படி தூண்டிவிடுகை; பேரொலி; நாட்டுக் குழப்பம்; போர்; ஒரு மீன்; காண்க: **கலகக்குருவி.**
**கலகல** – காண்க: **கலகலெனல்.**
**கலகலக்கக் காய்தல்** – நன்றாக உலர்தல்.
**கலகலத்தல்** – கலகலவென்று ஒலித்தல்; நன்றாகக் காய்தல்; மிகப் பேசுதல்; கட்டுக்குலைதல்.
**கலகலத்தவாய்** – அலப்பும் வாய்; மனத்தி லுள்ளதை மறையாது பேசுவோன்.
**கலகலப்பு** – ஒலிக்கை; கலந்து பழகுகை; உற்சாக முடைமை.
**கலகலம்** – பறவை ஒலி; பேரிரைச்சல்; அணிகலச் செப்பு.
**கலகலெனல்** – ஈரடுக்கொலிக் குறிப்பு.
**கலகவாயன்** – சண்டைக்காரன்; கலகம் செய் வோன்.
**கலகி** – கலகக்காரி.
**கலகித்தல்** – கலகஞ் செய்தல்.
**கலங்கடித்தல்** – திகைக்கப்பண்ணுதல், கலங்கச் செய்தல்.
**கலங்கரைவிளக்கம்** – கப்பலைக் கரைநோக்கி அழைக்கும் விளக்குத்தூண்.
**கலங்கல்** – கலங்குதல்; கலங்கல் நீர்; அழுதல்; அச்சம்; மயங்கல், குழம்புதல்; துன்புறுதல்; கலங்கிய கள்; கலிங்கு; ஏரிமதகு.
**கலங்குதல்** – நீர் முதலியன குழம்புதல்; மனங் குழம்புதல்; தெளிவின்றாதல், மயங்குதல்; அஞ்சுதல்; துன்புறுதல்; தவறுதல்.

**கலங்கொம்பு** – கலைமான் கொம்பு.
**கலசக்கொப்பு** – மாதர் காதணிவகை.
**கலசப்பானை** – சிறுபானை; தூபகலசம்; காளாஞ்சி.
**கலசம்** – குடம்; கிண்ணம்; பாண்டம்; பால்; தூபகலசம்.
**கலசமாட்டுதல்** – குடத்தால் மஞ்சனமாட்டுதல்.
**கலசமுனி** – குடத்தில் தோன்றிய அகத்தியர்.
**கலசயோனி** – அகத்தியர்; துரோணாசாரியார்.
**கலசுதல்** – கலத்தல்.
**கலடு** – கன்னிலம், வன்னிலம், கடுநிலப் பூமி.
**கலணை** – குதிரைச்சேணம்.
**கலணைக்கரடு** – சேணத்தின் முன்பக்கம்.
**கலத்தல்** – சேர்த்தல்; சேர்தல்; நெருங்கல்; புணர்தல்; பொருந்தல்; கூட்டுறவாதல்; தோன்றுதல்; பரத்தல்.
**கலத்திலிடுதல்** – உணவு பரிமாறுதல்.
**கலத்திற்பிரிவு** – கடல்கடந்து செல்லும் பிரிவு.
**கலதம்** – வழுக்கைத்தலை.
**கலதி** – தலை வழுக்கைவிழும் நோய்; கேடு; மூதேவி; தீக்குணமுடையோன்.
**கலதிமை** – தீவினை.
**கலதை** – கலக்கம், குழப்பம்; மூதேவி.
**கலந்தருநன்** – குயவன்; பணித்தட்டான்.
**கலந்துகட்டி** – நல்லதும் கெட்டதும் கலந்தது.
**கலந்துபரிமாறுதல்** – கூடிச் செயல்புரிதல்; கூடி யனுபவித்தல்.
**கலந்தை** – பெருமை.
**கலப்படம்** – கலப்புள்ளது.
**கலப்பற்று** – படகின் மூட்டுகளை நீர் புகாது அடைக்கை.
**கலப்பற்றுக்காரன்** – படகின் நீக்கலடைப்பவன்.
**கலப்பற்றுத்தோணி** – நீக்கலடைக்கப்பட்டுள்ள தோணி.
**கலப்பற்றுப்பார்த்தல்** – படகின் நீக்கலடைத்தல்.
**கலப்பு** – கலத்தல்; உறவாகுகை; புணர்ச்சி; கலந்து கட்டியாதல்.
**கலப்புக்கதிர்** – பயிரிடைக் கதிர் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணும் பருவம்.
**கலப்புச்சரக்கு** – கலந்து கட்டியான பண்டம்.
**கலப்புறம்** – குழியம்மி.
**கலப்புறுமொழி** – இருதிணையிலும் வருஞ்சொல்.
**கலப்பெண்** – பின்னத்துடன் சேர்ந்த முழு எண்.
**கலப்பை** – உழுபடை; ஒன்றற்கு அமைந்த உறுப்புகள்; துணைக்கருவி; யாழ்; வாத்தியக் கருவி; வாத்தியம் முதலிய கருவிகளை வைக்கும் பை.
**கலப்பைக்கிழங்கு** – கார்த்திகைக் கிழங்கு, வெண் தோன்றிக் கிழங்கு; கொப்பூழ்க்கொடி.
**கலப்பைக்கூர்** – கலப்பையின் கொழுமுனை.
**கலப்பைச் சக்கரம்** – ஏர்ப் பொருத்தம் பார்க்கும் சக்கரம்.
**கலப்பைசேர்த்தல்** – கலப்பை செய்தல்.
**கலப்பைநூல்** – உழவுநூல்.
**கலப்பைப்படை** – அலாயுதம், கலப்பை வடிவுள்ள ஆயுதம்.
**கலபம்** – மயில்தோகை.
**கலபி** – மயில்.
**கலபிங்கம்** – ஊர்க்குருவி.
**கலம்** – உண்கலம்; பாண்டம்; குப்பி; கப்பல்; இரேவதி; அணிகலன்; யாழ்; கலப்பை; ஆயுதம்; ஓலைப்பாத்திரம்; ஒரு முகத்த லளவை; பந்தி; வில்லங்கம்.
**கலம்பகக்கலி** – எழுத்தொவ்வாது வரும் கலிப்பா.
**கலம்பகம்** – கலவை; பல்வகைச் செய்யுள்களா லாகிய சிற்றிலக்கியம்; கலக்கம்; கணிதநூல்.
**கலம்பகமாலை** – பல பூக்கலந்த மாலை; ஒரு சிற்றிலக்கியம்.
**கலம்பகன்** – செவிட்டுமன்.
**கலம்பம்** – கடப்பமரம்; தாலம்ப பாடாணம்.
**கலம்பாடு** – ஒரு கல விதை விதைத்தற்குரிய நிலம்.
**கலம்பி** – கொத்துப்பசளை.
**கலம்பூச்சு** – பாண்டம் தேய்க்கும் ஓசை.
**கலமர்** – பாணர்.
**கலமலக்குதல்** – உழக்குதல்.
**கலயம்** – கலசம், மட்பாண்டம்; நீர்ப்பாண்டம்.
**கலர்** – தீயோர், கீழ்மக்கள்.
**கலரை** – ஓர் அளவுப்பெயர்.
**கலலம்** – கருவைச் சூழ்ந்து தோன்றும் தோல்.
**கலவகம்** – காக்கை.
**கலவஞ்சம்பா** – ஆறுமாதத்திற் பயிராகக்கூடிய சிறுமணிநெல்.
**கலவடை** – உரலின் வாய்க்கூடு, உரலணை; பாண்டம் வைக்கும் புரியணை.
**கலவம்** – மயில்தோகை; மயில்; கலாபம் என்னும் ஓர் இடையணி; குழியம்மி, கல்வம்.
**கலவர்** – மரக்கலமோட்டுவோர்; கப்பலிற் செல்வோர்; நெய்தல்நில மக்கள்; படைவீரர்.
**கலவரம்,** / **கலவரை** } – மனக்கலக்கம், குழப்பம்; சந்தடி.
**கலவல்** – கலத்தல்; எழுத்திலாவோசை.
**கலவறை** – அணிகலன்கள் வைக்கும் அறை.
**கலவன்** – கலப்பானது.
**கலவாங்கட்டி** – உடைந்தவோடு.
**கலவாசு** – ஒருவகை வெடி.
**கலவாயோடு** – கடல்நுரை.
**கலவார்** – பகைவர்.

**கலவி** – கலக்கை, புணர்ச்சி.
**கலவிகரணன்** – வயிரவன்.
**கலவித்துப்பாடு** – காண்க: **கலம்பாடு.**
**கலவிருக்கை** – விருப்பமான இடம்; பண்டசாலை.
**கலவினர்** – உறவினர்.
**கலவு** – உடலின் மூட்டுவாய்.
**கலவுதல்** – கலத்தல்.
**கலவை** – கலப்புண்ட பொருள்; சந்தனக் குழம்பு; கலப்பான உணவு; மண் கலந்த சுண்ணாம்பு, சுண்ணச்சாந்து.
**கலவைச்சந்தனம், கலவைச்சேறு** – மணப்பண்டங்கள் சேர்த்த சந்தனம்.
**கலவைத்தசை** – இறுகியமைந்த சதை.
**கலவைநீர்** – மணங்கலந்த நீர்.
**கலவையணி** – நீரும் பாலும்போலப் பிரிக்க முடியாத பல அணிகள் விரவிவருதல்.
**கலவோடு** – உடைந்தவோடு, மட்பாண்டச் சல்லி.
**கலன்** – அணிகலன்; கீழ்மகன்; மரக்கலம்; பூண்; யாழ்; கோட்சொல்லி; வில்லங்கம்.
**கலன்கழிமடந்தை** – அணிகள் அணிவதைக் கைவிடும் கைம்பெண்.
**கலனம்** – வாய் பிதற்றுகை; இந்திரிய நெகிழ்ச்சி; பெரும்பாடு; சந்தனக்குழம்பு.
**கலனரசு** – தாலி.
**கலனிருக்கை** – கலவிருக்கை; பண்டசாலை.
**கலனிலி** – கைம்பெண்.
**கலனை** – காண்க: **கலணை**; கலப்பை; ஒன்றற்கமைந்த பல்வகை உறுப்புகள்.
**கலாங்கிசம்** – இராசியைப் பதினாறு கூறிடுகை.
**கலாசு** – மரக்கலம், கப்பல்.
**கலாசுகாரன்** – மரக்கலம் ஓட்டுவோன்; பீரங்கி சுடும் படையாள்.
**கலாத்துவா** – ஐந்து கலைகளாகிய அத்துவா வகை.
**கலாதத்துவம்** – சுத்தாசுத்த தத்துவங்களுள் ஒன்று.
**கலாதரன்** – காண்க: **கலாபதி.**
**கலாதன்** – தட்டான், கருமான்.
**கலாதி** – கலகம், சண்டை.
**கலாநிதி** – சந்திரன்; கல்விக்களஞ்சியம்; அறிஞர்களுக்குக் கொடுக்கும் பட்டம்.
**கலாப்பித்தல்** – கலத்தல்.
**கலாபதி** – பதினாறு கலைகளையுடைய சந்திரன்.
**கலாபம்** – பதினாறு கோவையுள்ள மாதர் இடையணி, மேகலை, அரைப்பட்டிகை; மயில் தோகை; பீலிக்குடை; தொகுதி; அம்புக்கூடு; கலகம்.
**கலாபனை** – கலகம்.
**கலாபி** – மயில்.
**கலாபித்தல்** – கலகம் பண்ணுதல்.
**கலாபேதம்** – வேறுபட்ட சமயம்.
**கலாம்** – போர்; மாறுபாடு; சினம்; கொடுமை; ஊடல்.
**கலாம்பூரம்** – ஒருவகை மருந்து.
**கலாய்த்தல்** – கலகஞ்செய்தல்; சினத்தல்.
**கலாயி** – பாண்டங்கட்குப் பூசப்படும் ஈயம்.
**கலால்** – கள்.
**கலால்தீர்வை** – கள்வரி.
**கலாவதி** – சந்திரன்; கலைமகள்.
**கலாவம்** – காண்க : **கலாபம்.**
**கலாவல்லி** – கலைமகள்; பண்டிகை.
**கலாவுதல்** – கலத்தல்; கூடுதல்; கலக்கமடைதல்; வெகுளல்.
**கலி** – ஒலி; கடல்; வலிமை; செருக்கு; தழைக்கை; துளக்கம்; மனவெழுச்சி; கலிப்பா; இடைச்சங்கநூல், கலித்தொகை; கலிபுருடன்; கலியுகம்; துன்பம்; வறுமை; வஞ்சகம்; போர்.
**கலிக்கம்** – கண்ணிலிடும் மருந்து.
**கலிகம்** – காண்க: **கலிக்கம்**; வன்னிமரம்.
**கலிகன்றி** – திருமங்கையாழ்வார்.
**கலிகாலம்** – கலியுகம்.
**கலிகை** – பூவரும்பு; மல்லிகைச்செடி.
**கலிகொள்ளுதல்** – வெளிப்படுதல்.
**கலிங்கம்** – ஒரு நாடு; ஒரு மொழி; ஆடை; வானம்பாடி; ஊர்க்குருவி; வெட்பாலைமரம்; ஆற்றுத் தும்மட்டிக்காய்; கண்மருந்து; மிளகு.
**கலிங்கல், கலிங்கு** – ஏரிமதகு; நீர் வழியும் அணைக்கட்டு.
**கலிச்சி** – இரட்டைப் பிள்ளைகளுள் பெண்.
**கலிசம்** – வன்னிமரம்.
**கலிஞ்சு** – காண்க: **கலிங்கு.**
**கலித்தல்** – ஒலித்தல்; யாழொலித்தல்; செழித்தல்; உண்டாதல்; எழுதல்; பெருகுதல்; மகிழ்தல்; செருக்குதல்; விரைவாதல்; நெருங்கியிருத்தல்; நழுவுதல்; நீக்குதல்.
**கலித்தளை** – நேர் ஈற்று உரிச்சீர் முன்னர் நிரை வருவது.
**கலித்தாழிசை** – ஒத்துள்ள சில அடிகளையேனும் பல அடிகளையேனும் பெற்று ஈற்றடிமிக்கு வருவதாகிய கலிப்பாவின் இனம்.
**கலித்துருமம்** – தான்றிமரம்.
**கலித்துறை** – நெடிலடி நான்குகொண்டு வருவதாகிய கலிப்பாவின் இனம்; கட்டளைக் கலித்துறை.
**கலிதம்** – விந்து நழுவுகை.

**கலிதி** – திப்பிலி.

**கலிநடம்** – கழாய்க்கூத்து.

**கலிப்பா** – நான்குவகைப் பாக்களுள் ஒன்று.

**கலிப்பு** – ஒலிக்கை; பொலிவு; தரா என்னும் உலோகம்.

**கலிபணம்** – ஈமச்சடங்கிற் பண்டைக் காலத்து வழங்கிய ஒரு நாணயம்.

**கலிப(பி)லி** – ஆரவாரம்; கலகம், சச்சரவு.

**கலிபுருடன்** – கலிகாலத்துக்கு உரிய தேவதை, சனி.

**கலிமகிழ்** – ஒலக்கம்.

**கலிமா** – முகமது மதத்தாருடைய விண்ணப்பம்.

**கலிமாரகம்** – கிலுகிலுப்பை.

**கலிமாலகம்** – அகில்.

**கலிமோகனம்** – அத்திமரம்.

**கலியப்தம்** – கலியுகம் பிறந்த ஆண்டு முதல் எண்ணும் ஒரு முறை.

**கலியம்** – காண்க: **கலீயம்.**

**கலியன்** – படைவீரன்; திருமங்கையாழ்வார்; இரட்டைப் பிள்ளைகளுள் ஆண்; கலிபுருடன்; பசித்தவன்; வறிஞன்; சனி.

**கலியாணக்காரர்** – மணமக்கள்; கலியாண சம்பந்திகள்; கலியாண விருந்தினர்.

**கலியாணக்கால்** – பந்தற்கால்.

**கலியாணக்கூடம்** – வீட்டில் மணச்சாலையாகப் பயன்படுத்தும் கூடம்.

**கலியாணக்கோலம்** – மணக்கோலம், திருமண அலங்காரம்.

**கலியாணச்சடங்கு** – திருமணத்துக்குமுன் மாப்பிள்ளை காதணி அணியும் சடங்கு; திருமணச் சடங்கு.

**கலியாணஞ்சொல்லுதல்** – திருமணம் நிகழ்வதைக் கூறி அழைத்தல்.

**கலியாணப்பந்தல்** – மணப்பந்தல்.

**கலியாணப்பூ** – மூன்றாம் முறையாக நிறைந்து விழும் இலுப்பைப் பூவின் வீழ்ச்சி.

**கலியாணப்பூசணி** – பெரும்பூசணி; நீற்றுப் பூசணி.

**கலியாணப்பொருத்தம்** – திருமணப் பொருத்தம்; திருமண உறுதி, நிச்சயதார்த்தம்.

**கலியாணம்** – திருமணம்; நன்மை; மங்களம்; பொன்; நற்குணம்.

**கலியாணம்பண்ணுதல்** – திருமணம் செய்தல்; மொய்யிடவேண்டி விருந்து செய்தல்.

**கலியாணமண்டபம்** – திருமணம் நடக்கும் கோயில் மண்டபம்; திருமண மண்டபம்.

**கலியாணமால்** – அரண்மனையைச் சார்ந்த கலியாணக்கூடம்.

**கலியாணமுடித்தல்** – திருமணம் உறுதிசெய்தல்; திருமணம் புரிதல்.

**கலியாணமெழுதுதல்** – திருமணப் பதிவு செய்தல்.

**கலியாணவாழ்த்து** – மணமக்களை வாழ்த்துதல்.

**கலியாணவெழுத்து** – திருமணத்தைச் சட்டப்படி பதிவு செய்கை.

**கலியாணன்** – நற்குண நற்செய்கையுள்ளவன்.

**கலியுகம்** – நாலு யுகங்களுள் கடைசி யுகம்.

**கலிலம்** – கலப்பு; செந்நீர்.

**கலிவிருத்தம்** – அளவடி நான்குடையதாய் வரும் கலிப்பாவின் இனம்.

**கலிவெண்பா** – கலிப்பா வகையுள் ஒன்று, கலியோசை தழுவி ஈற்றடி வெண்பாப்போல் முச்சீரடியான் வருவது; வெண்கலிப்பா, கலிவெண்பாட்டு.

**கலிழ்** – கலங்கல்நீர்.

**கலிழ்தல்** – அழுதல்; ஒழுகுதல்; புடைபெயர்தல்.

**கலிழிநீர்** – காண்க: **கலிழ்.**

**கலின்கலினெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**கலினம்** – கடிவாளம்; வன்னிமரம்; கற்பரி பாடாணம்.

**கலினி** – திப்பிலி; கைம்பெண்.

**கலினை** – மிளகு; கொள்ளு; கடிவாளம்; கைம்மை.

**கலீயம்** – கடிவாளம்.

**கலீரம்** – முருக்கு.

**கலீரெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**கலுக்குப்பிலுக்கு** – அணிகளால் எழுமொலி; பகட்டு.

**கலுங்கு** – காண்க: **கலிங்கு.**

**கலுடம்** – கலங்கல்நீர்; பாவம்.

**கலுவடம்** – பூவரும்பு.

**கலுவம்** – மருந்தரைக்கும் குழியம்மி.

**கலுழ்** – அழுகை; நீர்க்கலக்கம்.

**கலுழ்ச்சி** – அழுகை.

**கலுழ்தல்** – கலங்குதல்; தடுமாறுதல்; அழுதல்; ஒழுகுதல்; உருகுதல்.

**கலுழக்கல்** – கருடக்கல், பாம்பின் கடிநஞ்சை நீக்கும் கல்.

**கலுழம்** – கலங்கல்நீர்.

**கலுழன்** – கருடன், ஒரு பறவை வகை.

**கலுழி** – கலங்கல்நீர்; காட்டாறு; நீர்ப்பெருக்கு, வெள்ளம்; கண்ணீர்; கலக்கம்.

**கலேகபோதநியாயம்** – பறவைகள் பல ஒரே களத்தில் தவசங்களைப் பொறுக்க மேல் விழுவது போலும் நெறி.

**கலேயகம்** – மஞ்சள்.

**கலேர்(ல்)** – ஓர் ஒலிக்குறிப்பு.

**கலை** – கூறு; சந்திரனது பதினாறு கூறுகளுள் ஒன்று; ஒளி; எட்டு விநாடி அல்லது முப்பது காட்டை கொண்ட ஒரு காலநுட்பம்; அறுபத்துநான்கு கலைகளுள் ஒன்று; கல்வி; சாத்திரம்; மொழி; சுத்தாசுத்த தத்துவம் ஏழனுள் ஒன்று; உடல்; புணர்ச்சிக்குரிய காரணங்கள்; ஆண்மான்; ஆண்குரங்கு; அரைப்பட்டிகை; மேகலை என்னும் அணி; ஆடை; நூல்; மரவைரம்; மகரமீன்; மகரராசி.

**கலைக்கணாளர்** – அமைச்சர்.

**கலைக்களஞ்சியம்** – அகரவரிசையில் கலைகளைப் பற்றிக் கூறும் தொகுப்பு நூல்.

**கலைகுறைதல்** – தெய்வ ஆற்றல் குறைதல்; அழகு கெடுதல்.

**கலைச்சாலை** – கல்லூரி, கல்விச்சாலை.

**கலைஞன்** – கலைகளில் வல்லவன், கல்விமான்.

**கலைஞானம்** – நூலறிவு; அறுபத்துநான்கு கலை.

**கலைஞானி** – நூலுணர்ந்தோன், சாத்திரமறிந்தவன்.

**கலைத்தல்** – குலைத்தல்; நீக்கல், பிரித்தல்; பிரித்து நீக்குதல்; மனத்தைக் கலைத்தல்; ஓட்டுதல்; கூட்டம் முதலியவற்றைக் கலைத்தல்.

**கலைத்தொழில்** – யாழ் மீட்டற்குரிய செய்கைகள்.

**கலைத்தொழில் எட்டு** – யாழில் இசை எழுப்புவதற்கு ஏதுவாகிய எண்வகைக் கலைத்தொழில்கள்; அவை: பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு.

**கலைதல்** – குலைதல்; அழிதல்; நிலைகெடுதல்; சுருதி குலைதல், பண் மயங்கல்.

**கலைநாதன்,**
**கலைநாயகன்** } – புத்தன்.

**கலைநியமம்** – கலைமகள் கோயில், மதுரையில் இருந்த சிந்தாதேவி கோயில்.

**கலைப்பாகி** – கலையூர்தியுடைய துர்க்கை; கல்வித் தலைவியாகிய கலைமகள்.

**கலைமகள்,**
**கலைமடந்தை** } – கலைமகள், நாமகள், சரசுவதி.

**கலைமலைவு** – கீதம், கணிதம் முதலிய கலை நூல்களிற் கூறப்பட்டவற்றோடு மாறுபட வருவது.

**கலைமான்** – ஆண்மான்; மான்வகை; கலைமகள்.

**கலையறிபுலவன்** – முருகக் கடவுள்.

**கலையானத்தி** – துர்க்கை, கலையூர்தி.

**கலையினன்** – சந்திரன்.

**கலையுருவினோன்** – கலைகளை உருவாகவுடைய சிவன்.

**கலையூர்தி** – காண்க: **கலைப்பாகி.**

**கலையேறுதல்** – தெய்வ ஆற்றல் மிகுதல்; செருக்கடைதல்.

**கலையோன்** – சந்திரன்.

**கலைவல்லார்** – புலவர்; கலைஞர்; பரத்தையர்.

**கலைவாகன்** – வாயு.

**கலைவாணர்** – புலவர், கலைவல்லோர்.

**கலைவாணி** – கலைமகள்.

**கவ்வம்** – மத்து; மாட்டுச் சுழிவகை.

**கவ்வரணம்** – குறிஞ்சியாழ்த் திறங்களுள் ஒன்று.

**கவ்வியம்** – பசுவினின்று கொள்ளப்படும் ஐந்து பொருள்கள்; பிதிரர்களை எண்ணிக் கொடுக்கும் பிண்டம்.

**கவ்வு** – வாயால் கவ்வுகை; தின்கை; கவட்டை.

**கவ்வுதல்** – வாயினாற் பற்றுதல்; கவர்தல்; சுமத்தல்; வௌவுதல்.

**கவ்வை** – ஒலி; பழிச்சொல்; துன்பம்; கவலை; பொறாமை; கள்; செயல்; எள்ளிளங்காய்; ஆயிலியம்.

**கவ்வை பார்த்தல்** – வேலைபார்த்தல்.

**கவசம்** – மெய்புகு கருவி, உடற்பாதுகாப்பு உறை, இரட்சை, இரும்பு முதலியவற்றாற் செய்த சட்டை; சீலைமண்; இரட்சை உண்டாக்குவதாய் உள்ள ஒரு மந்திரம்; காயத்திற்கிடும் கட்டு.

**கவசித்தல்** – சீலைமண் செய்தல்.

**கவட்டடி** – எட்டிவைக்கும் ஓர் அடி; ஆண்குறி; பெண்குறி.

**கவட்டன்** – வஞ்சகன்.

**கவட்டுதல்** – வளைத்தல்.

**கவட்டை** – கவர், மரக்கிளையின் கவர்.

**கவடம்** – வஞ்சனை, விரகு.

**கவடாவீடு** – களஞ்சியம்.

**கவடி** – வெள்வரகு, பலகறை; ஒருவகை விளையாட்டு; கபடமுள்ளவர்; தகரம்; படிக்காரம்.

**கவடு** – மரக்கிளை; கவருள்ள மரக்கிளை; இடைச்சந்து; ஓரளவை; யானைக் கழுத்தில் கட்டும் கயிறு; கபடம்; உட்பிரிவு.

**கவடுதாக்கி** – அடிவைப்பு.

**கவடுபடுதல்** – யாழ்ப்பத்தர்போல இருபுறமும் தாழ்ந்து நடுவுயர்தல்; பிரிவுபடுதல்.

**கவடுவட்டம்** – முத்துவகைகளுள் ஒன்று.

**கவடுவைத்தல்** – எட்டி நடத்தல்.

**கவண்** – கல்லெறியும் கருவி.

**கவண்கல்** – கவணில் வைத்து எறியுங்கல்.

**கவண்டன்** – காண்க: **கவுண்டன்.**

**கவண்டி(டு)** – கவண்.

**கவணம்** – அடிபட்ட காயக்கட்டு.

**கவணி** – ஒருவகைச் சீலை; சரிகைவேலை.

**கவணை** – கவண், கல்லெறியும் கருவி; மாட்டுக்குத் தீனிவைக்கும் இடம்.

**கவந்தம்** – தலையற்ற உடல்; தலைதறித்த மரம்; செக்கு; நீர்; பேய்; வயிறு.

**கவந்தி, கவந்திகை** – சந்தையாலாகிய மெத்தைப் போர்வை.

**கவம்** – கபம்; மத்து.

**கவயம்** – காட்டுப்பசு; கவசம்.

**கவயமா(ல்)** – காட்டுப்பசு.

**கவர்** – பிரியுங்கிளை; பலவாகப் பிரிகை; நீண்ட திருமண்கட்டி; சூலத்தின் கவர்; வஞ்சகம்; வாழைமரம்; உத்திரம் புகுத்தும் சுவர்ச்சந்து; அணையில் நீர் செல்லுதற்குவிடும் வழி.

**கவர்க்கால்** – கவராயுள்ள முட்டுக்கட்டை; கப்புள்ள மரம்; கிணற்று விட்டத்தைத் தாங்கும் கவையுள்ள கால்; கிளைவாய்க்கால்.

**கவர்கோடல்** – ஐயுறுதல், சந்தேகநிலை.

**கவர்ச்சி** – கவருதல், இழுக்கை; வெள்ளைக் காக்கணம்.

**கவர்த்தடி** – முள்ளைத் தூக்கும் கோல்.

**கவர்த்தல்** – பிரிவுபடுதல்; கவடுபடுதல், கப்பு விடுதல், கிளைவிடுதல்.

**கவர்தல்** – அகப்படுத்துதல்; கொள்ளையிடல்; திருடல்; வசப்படுத்துதல்; விரும்புதல்; பெற்றுக்கொள்ளுதல்; நுகர்தல்; முயங்கல்; கடைதல்; அழைத்தல்; பிரிதல்; மாறுபடுதல்.

**கவர்ந்தூண்** – கொள்ளையடித்து உண்ணும் உணவு.

**கவர்நெறி** – கிளைவழி.

**கவர்ப்பு** – பலவாகப் பிரிகை.

**கவர்படுதல்** – இரண்டுபடல், பிரிவுபடுதல்; பல பொருள்படுதல்.

**கவர்படுமொழி** – பலபொருள் தரும் சொல், மயக்கப்பொருள் தரும் சொல்.

**கவர்பு** – வேறுபடுகை.

**கவர்வழி** – கிளைவழி, பல கவராகப் போகும் வழி.

**கவர்விடுதல்** – கப்புவிடுதல், கிளைத்தல்; பிரிவு படுதல்; பலபொருள்படுதல்.

**கவர்வு** – கவர்ச்சி, இழுக்கை; விருப்பம்; துயரம்; அகிம்சை.

**கவரம்** – சினம்.

**கவராச(ய)ம், கவராயுதம்** – வட்டம் வரையுங் கருவி.

**கவரி** – கவரிமான்; சாமரை; எருமை; தேர்.

**கவரிமா, கவரிமான்** – ஒருவகை மான்.

**கவரிறுக்கி(கு)** – வேலி முதலியவற்றின் முகப்பில் விலங்குகள் உட்புகாதபடி இடப்படுந் தடை மரம்.

**கவருகோல்** – குயவர் கருவிகளுள் ஒன்று.

**கவரெழுசங்கம்** – சங்கஞ்செடி.

**கவல், கவல்பு** – வருத்தம், துயரம்; மனக்கலக்கம்; பல நினைவு.

**கவலம்** – துயரம்.

**கவலித்தல், கவலுதல்** – கவலைப்படல், மனம் வருந்துதல்.

**கவலை** – வருத்தம்; மனச்சஞ்சலம்; பல நினைவு; ஒருவகை நோய்; அக்கறை; அச்சம்; பல தெருக்கள் கூடுமிடம்; கவர்த்த வழி; மரக் கிளை; நீரிறைக்கும் தோற்கூடை; செந்தினை; கிழங்குள்ள ஒருவகைக் கொடி; மீன்வகையுள் ஒன்று; கபிலை, புகர்நிறம்.

**கவலை கவற்றுதல்** – வருத்தஞ் செய்தல்.

**கவலைச்சால்** – கவலை ஏற்றத்தில் நீரிறைக்குஞ் சால்.

**கவலைபாய்தல்** – கவலை மிகுதல்; மயங்குதல்; வேதம் ஓதும்போது வரிசை தவறி ஓதுதல்.

**கவலையேற்றம்** – எருதுகளைப் பூட்டி நீர் இறைக்கும் முறை.

**கவவு** – அகத்திடுகை; உள்ளீடு; முயக்கம்.

**கவவுக்கை** – அணைத்த கை.

**கவவுதல்** – அகத்திடுதல்; விரும்புதல்; கையால் தழுவுதல்; முயங்குதல்; நெருங்குதல்; பொருந்துதல்.

**கவழம்** – கவளம், வாயளவுகொண்ட உணவு; யானைக்கு அளிக்கும் உணவு.

**கவழிகை** – திரைச்சீலை.

**கவளம்** – வாயளவுகொண்ட உணவு; யானைக்கு அளிக்கும் உணவு; கபோலம்; யானைமதம்.

**கவளி** – கட்டு; புத்தகக்கட்டு; வெற்றிலைக் கட்டு.

**கவளிகை** – புத்தகக்கட்டு, நூற்கட்டு.

**கவளீகரித்தல்** – மொத்தமாக விழுங்குதல்; முழுதும் அபகரித்தல்.

**கவற்சி** – கவலை, மனவருத்தம்; விருப்பம்.

**கவற்றுதல்** – கவலையடையச் செய்தல், வருத்துதல்.

**கவற்றுமடி** – பட்டாடைவகை.

**கவறல்** – மனங்கலங்குதல், வருந்துதல்.

**கவறாடல்** – சூதாடல்.

**கவறு** – சூதாடுகருவி, தாயக்கட்டை; சூது; பனம் பட்டை.

**கவனஞ்செலுத்துதல்** – கருத்தாயிருத்தல்.

**கவனம்** – போர்; படை; கலக்கம்; வெப்பம்; கவிபாடுகை; கருத்து; வேகம்; காடு.

**கவனன்** – வேகமுள்ளோன்; நினைவுள்ளோன்.

**கவனி** – கந்தக பாடாணம்.
**கவனித்தல்** – கருத்தூன்றி யறிதல்; கருத்து வைத்தல்.
**கவனிப்பு** – கவனித்தல், கருத்தூன்றுகை.
**கவாஅன்** – தொடை; மலைப்பக்கம்.
**கவாட்சம், கவாட்சி** – சாளரம், வட்டச் சாளரம்.
**கவாட்டி** – சிப்பி.
**கவாடக்கட்டி** – வசம்பு.
**கவாடக்காரன்** – பொதிமாட்டுக்காரன்.
**கவாடம்** – கதவு; ஓர் எருது சுமக்கக்கூடிய விறகு, புல் அல்லது வைக்கோற் சுமை.
**கவாடிபந்தி** – யானைக் கூடத்தைத் துப்புரவு செய்வோன்.
**கவாத்து** – போர்வீரர் புரியும் உடற்பயிற்சி.
**கவாய்** – மெய்யுறை, நிலையங்கி; கந்தை; பாடகன்.
**கவாரம்** – தாமரை.
**கவாளம்** – குதிரைப் பேதிமருந்து; புண்ணாற்றும் மருந்துள் ஒன்று; காயக்கட்டு மருந்து.
**கவான்** – தொடை; மலைப்பக்கம்; திரள்.
**கவான்செறி** – தொடையில் அணியும் ஒருவகை அணிகலன்.
**கவி** – பாவலன்; பாட்டு; மங்கலப்பாடகன்; ஞானி; சுக்கிரன்; ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளைப் பாடுவோன்; குரங்கு; பூனைக்காலி.
**கவிகண்ணோக்கு** – புருவத்திற்கு அருகில் கையைக் கவித்துக்கொண்டு பார்க்கும் பார்வை.
**கவிகம்** – குக்கில்மரப்பிசின்; கடிவாள இரும்பு.
**கவிகை** – வளைவு; குடை; நன்மை தீமை; ஈகம், தியாகம்.
**கவிச்சக்கரவர்த்தி** – பாவலர்க்குத் தலைவர்.
**கவிச்சடித்தல்** – அழுகிய மீன்நாற்றம் வீசுதல்.
**கவிச்சி(சு)** – புலால் நாற்றம்.
**கவிச்சுக்கடை** – மீன்கடை; இறைச்சிக்கடை.
**கவிசனை** – உறை; சேணம்.
**கவிசினம்** – காண்க: **கோவணம்.**
**கவிசை** – ஒரு வயிற்றுநோய், வயிற்றுக்கட்டி.
**கவிஞன்** – புலவன், பாவலன்; சுக்கிரன்.
**கவித்தம்** – விளாமரம்; கைம்முட்டி; அபிநயத்தின் ஒருவகை; கடுகுரோகிணி.
**கவித்தல்** – கவியச்செய்தல்; வளைந்து மூடுதல்; முடி முதலியன அணிதல்; சூட்டுதல்; மூடுதல்.
**கவித்துவம்** – பாப் பாடும் திறம்.
**கவிதல்** – வளைதல்; மூடுதல்; கருத்தூன்றுதல், விருப்பமாயிருத்தல்; இடிதல்.
**கவிதை** – பாடல்.
**கவிநாதன், கவிநாயகன்** – பாட்டுடைத் தலைவன்.
**கவிப்பர்** – வணிகருள் ஒரு வகுப்பார்.
**கவிப்பு** – காண்க: **கவிகை.**
**கவிமாலை** – பாமாலை.
**கவியம்** – கடிவாளம்.
**கவியரங்கேறுதல்** – புலவனாகச் சங்கத்தாரால் கொள்ளப்படுதல்; கழகத்தாரால் நூல் ஏற்றுக் கொள்ளப்படுதல்.
**கவிர்** – முண்முருக்கமரம்.
**கவிரத்தினம்** – கவிகளுள் சிறந்தவன்.
**கவிரம்** – தேவவிருட்சம்; அலரிச்செடி.
**கவிராச(ய)ன்** – பாட்டுப் பாடுவோன், புலவர்களுள் சிறந்தோன்; புலவர் மரபினருக்கு வழங்கும் பட்டப்பெயர்.
**கவிரோமம்** – பூனைக்காலிச்செடி.
**கவிவல்லோர், கவிவாணர்** – புலவர்; பாடகர்.
**கவிவு** – உள்வளைவு, குவிவு.
**கவிழ்த்தல்** – கவிழச்செய்தல்; கெடுத்தல்; மூடுதல்; ஒழுகவிடுதல்; வெளிப்படுத்துதல்.
**கவிழ்தல்** – தலைகீழாதல்; நாணம் முதலியவற்றால் தலையிறங்குதல்; குனிதல்; நிலைகுலைதல்; அழிதல்; முழுகிப்போதல்.
**கவின்** – அழகு.
**கவினுதல்** – அழகுபெறுதல்.
**கவினம்** – கடிவாளம்; வெண்ணெய்; வளைவு.
**கவீச்சுரன்** – பெரிய கவிவாணன், கவிகட்குத் தலைவன்.
**கவீரம்** – அலரிச்செடி.
**கவீனம்** – பசு மேய்ந்த இடம்; வெண்ணெய்.
**கவுசனம்** – காண்க: **கோவணம்.**
**கவுசனை** – உறை; சேணம்.
**கவுசி** – குழைவு; வருத்தம்; ஒருவகை வரிக்கூத்து; பாட்டு; ஒருவகை நோய்; கொன்றை.
**கவுசிகம்** – வெண்பட்டு, ஒரு பண்வகை; சாமவேதம்; விளக்குத்தண்டு.
**கவுஞ்சயூகம்** – அன்றில்போல் வகுக்கும் அணிவகுப்பு.
**கவுட்டி** – தொடைச்சந்து.
**கவுடதம்** – வெட்பாலை.
**கவுடி** – ஒரு பண்வகை.
**கவுண்டன்** – தமிழர், கன்னடர் சிலர்க்குள் வழங்கும் சாதிப்பெயர்; சாதிப்பிரிவு.
**கவுணம்** – ஒருவகைத் திருநீறு; மாறுபொருள்.
**கவுணி** – காண்க: **கவுணியன்.**
**கவுணியர்கோன்** – கவுண்டினிய கோத்திரத்துப் பெரியாரான திருஞானசம்பந்தர்.
**கவுணியன்** – கவுண்டினிய கோத்திரத்தான்.

**கவுத்துகவாதம்** – அறுபத்துநான்கு கலைகளுள் வருந்துகின்ற மனத்தை மகிழ்விக்கும் வித்தை.
**கவுத்துவம்** – வஞ்சகம்; திருமால் மார்பிலணியும் மணி.
**கவுதகம்** – கைப்பிடிச் சுவர்.
**கவுதம்** – மீன்கொத்தி.
**கவுதாரி** – ஒரு பறவைவகை.
**கவுந்தி** – சமண தவப்பெண்; குந்திதேவி.
**கவுமாரம்** – இளமை; முருகக்கடவுளை வழிபடும் சமயம்.
**கவுமாரி** – பார்வதி, சத்தியின் ஓர் அவதாரம்.
**கவுமோதகி** – திருமாலின் தண்டாயுதம்.
**கவுரம்** – வெண்மை.
**கவுரவம்** – மேன்மை.
**கவுரிசங்கம், கவுரிசங்கரம்** – கவுரிசங்கரர்களது உருவின தாய் இரு பிளவுபட்ட ஒற்றை உருத்திராக்கம்.
**கவுல்** – தீநாற்றம்; நிலக்குத்தகை; உடன் படிக்கை; வஞ்சனை.
**கவுல்தார்** – நிலக்குத்தகை எடுத்தவன்.
**கவுள்** – கன்னம்; யானையின் கன்னம்; யானையின் உள்வாய்; பக்கம்.
**கவுளி** – பல்லி; வெற்றிலைக் கட்டு; ஒருவிதத் தெங்கு.
**கவுனி** – கோட்டைவாயில்; குதிரைப்பற் பாடாணம்.
**கவேது, கவேதுகை** – காட்டுக் கோதுமை.
**கவேரகன்னி** – கவேரன் மகளான காவிரியாறு.
**கவேலம்** – குவளை, கருநீலமலர்.
**கவை** – பிளவுபட்ட கிளை; அகில்; செயல்; எள்ளின் இளங்காய்; ஆயிலியநாள்; பிளவு பட்ட கிளை; காடு; கவர்வழி; மரக்கப்பு; தேவை; தொழில்.
**கவைக்காகாமை** – பயனின்மை.
**கவைக்கால்** – பிளவுபட்டுத் தோன்றுங் கால்.
**கவைக்குதவாதது** – பயனற்றது.
**கவைக்குளம்பு** – விலங்கின் பிளவுபட்ட பாதம்.
**கவைக்கொம்பு** – பிரிவுபட்ட மரக்கிளை.
**கவைக்கோல்** – கவரான கழி; குத்துக்கோல்; கொடிற்றுக்கோல்.
**கவைத்தல்** – கவடுபடுதல், பிளவுபடுதல்; உள தாதல்; அகத்திடுதல்; அணைத்தல்.
**கவைத்தாம்பு** – தாமணியை உடைய தும்பு.
**கவைத்தாள்** – நண்டு; பிளவுபட்ட கால்.
**கவைதல்** – மூடல்; மொய்த்தல்.
**கவைநா** – பிளவுண்ட நாவுடைய பாம்பு; உடும்பு.
**கவைமுட்கருவி** – யானையை அடக்கும் குத்துக் கோல்.
**கவைமுள்** – வேலமுள்.
**கவையடி** – பிளவுபட்ட பாதம்.
**கவையாயிருத்தல்** – வேலையாயிருத்தல்; அக்கறையாயிருத்தல்.
**கழகண்டு** – தீம்பு.
**கழகம், கழகு** – கல்வி பயிலும் இடம், கல்விச் சங்கம்; படை, மல் முதலியன பயிலும் இடம்; சூது; சூதாடுமிடம்; ஓலக்கம்; புலவர் கூடிய சபை.
**கழங்கம்** – சூதாடு கருவி.
**கழங்காடல்** – பெண்கள் ஆடும் கழற்சிக்காய் ஆட்டம்.
**கழங்கிட்டுரைத்தல்** – கழற்சிக்காயால் குறியறிந்து சொல்லுதல்.
**கழங்கு** – கழற்சிக்காய்; கழற்சி விளையாட்டு; வெறியாட்டு; சூது; வேலனாடல்; விந்து.
**கழங்குபடுத்தல்** – கழங்குகொண்டு குறியறிதல்.
**கழங்குமெய்ப்படுத்தல்** – பயிர்களை விலங்குகள் அழிக்காதபடி புலிபோல் செய்துவைக்கும் உருவத்திற்குக் கழற்சிக்காயைக் கண்ணாக அமைத்தல்; கழற்காய் மூலம் குறியறிதல்.
**கழஞ்சு** – ஓர் எடுத்தலளவை; சிறிது.
**கழப்பன், கழப்பாடி(ளி)** – வேலைக்கள்ளன், வேலையைச் செய்யாது வீணே பொழுதைக் கழிப்பவன்.
**கழப்பு** – சோம்பல்; கள்ளத்தனம்.
**கழப்புதல்** – சோம்பலாயிருத்தல்; வேலை செய் யாது காலம் போக்குதல்.
**கழல்** – வீரக்கழல்; சிலம்பு; கால்மோதிரம்; செருப்பு; பாதம்; கழற்சி; காற்றாடி; பொன் வண்டு.
**கழல்வளை** – வளையல்வகை.
**கழலக்குத்துதல்** – குற்றம் சொல்லிச் செயலைத் தடுத்தல்.
**கழலவிடுதல்** – பட்சபாதம் முதலியவற்றால் வேண்டுமென்றே நெகிழவிடுதல்.
**கழலி** – பிரண்டை.
**கழலுதல்** – நெகிழ்ந்துபோதல்; விலகல்; வெளி யேறுதல்; நீங்குதல்; பிதுங்குதல்; விழுதல்.
**கழலை, கழலைக்கட்டி** – இரணக்கட்டி; கழுத்தில் வரும் ஒருவகைக் கட்டி அல்லது நோய்.
**கழலைக்கரப்பான்** – ஒருவகைச் சொறிநோய்.
**கழற்காய்** – கழற்சிக்காய்.
**கழற்சி** – கழற்சிக்காய்; கெச்சக்காய்ச்செடி.
**கழற்பதி** – பெருங்குமிழ்மரம்.
**கழற்றி** – கழற்றப் பயன்படும் கருவி.
**கழற்று** – உறுதிமொழி.
**கழற்றுதல்** – நெகிழச்செய்தல்; நீக்குதல்; கழலப் பண்ணல்; போக்குதல்.

**கழற்றுரை** – உறுதிச்சொல்.

**கழற்றெதிர்மறுத்தல், கழற்றெதிர்மறை** – பாங்கனுடைய உறுதி மொழியைத் தலைவன் கேளாது மறுத்தல்.

**கழறியுரைத்தல்** – இடித்துரைத்தல்; பாங்கன் தலைவனுக்கு இடித்துரைத்து உறுதிமொழி கூறுதல்.

**கழறுதல்** – இடித்தல்; சூளுரைத்தல்; உறுதி சொல்லுதல்; சினத்தல்; அவமதித்தல்.

**கழனி** – வயல்; மருதநிலம்; சேறு; திரைச்சீலை; கழுநீர்.

**கழனிக்கடைத்தவர்** – மருதநில மாக்கள்.

**கழனிக்குளம்** – நன்செய் நடுவேயுள்ள ஏரி.

**கழனிப்பயிர்** – நெல்.

**கழனிலை** – பொதுவியல் திணைத் துறை பன்னிரண்டனுள் ஒன்று; இளைஞன் ஒருவன் போரிற் புறங்கொடாமை கண்டு வியந்த வீரர் அவனுக்கு வீரக்கழல் அணிவித்துப் புகழ்ந்தாடும் துறை; ஒருவகைக் கூத்து.

**கழாஅல்** – கழுவுதல்.

**கழாநிலம்** – கழாலை, உவர்நிலம்.

**கழாய்** – கமுகு; மூங்கில்; சிறுகீரை; கழைக் கூத்தன் நின்று ஆடுதற்கு நடும் மூங்கிற் கம்பம்.

**கழாய்க்கூத்து** – காண்க: **கழைக்கூத்து**.

**கழாயம்** – மருந்து ஊறல் நீர்; துவர்ப்பு.

**கழாயர்** – கழைக்கூத்தர்.

**கழால்** – கழுவுதல்; களைதல்; கழலுதல்.

**கழாலுதல்** – நெகிழ்தல்; விலகுதல்.

**கழாற்றூக்கு** – இசைத்தமிழில் கூறப்பட்டுள்ள எழுவகைத் தூக்கினுள் ஒன்று; ஆறு சீரளவுள்ள தாளவுறுப்பு.

**கழி** – கோல், மரக்கொம்பு; கடலடுத்த உவர்நீர்ப் பரப்பு; நுகத்துளையில் இடுங் கழி; ஆயுதக் காம்பு; யாழின் இசையெழுப்புங் கருவி; வரிச்சல்; நூற்சுருள்; மிகுதி; ஊன்; கயிறு.

**கழிக்கரைப்புலம்பல்** – பிரிந்த தலைவனை நினைந்து தலைவி கடற்கரையில் இருந்து கொண்டு தனியே இரங்குதல்.

**கழிகடை** – அறக்கெட்டது; இழிந்தவன்(ள்); இழிந்தது.

**கழிகண்ணோட்டம்** – அளவுகடந்த மகிழ்ச்சி.

**கழிகல மகடூஉ** – காண்க: **கலன்கழி மடந்தை**.

**கழிகாலம்** – காண்க: **கழிந்தகாலம்**.

**கழிகெட்டவன்** – மிகக் கெட்டவன்.

**கழிகோல்** – எளிதில் கறவாத பசுவை அசையாமல் நிறுத்திக் கறப்பதற்குப் பயன்படுத்தும் இணைப்புக் கழி; கன்று பாலுண்ணாமலிருக்க முகத்திற் கட்டும் வாய்ப்பூட்டு.

**கழிச்சல்** – பேதி, மலப்போக்கு, கழிதல்; **பேரச்சம்**.

**கழிச்சியர்** – நெய்தல்நிலத்து மகளிர்.

**கழிசடை** – கழிக்கப்பட்ட மயிர்ச்சடைபோல் இழிந்தவன்(ள்).

**கழித்தல்** – நீக்குதல்; ஒதுக்குதல்; பெரிய எண்ணினின்று சிறிய எண்ணைக் குறைத்தல்; வெட்டுதல்; போக்குதல்; உருவுதல்.

**கழித்துக்கட்டுதல்** – போக்குச் சொல்லி நெகிழ விடுதல்; இகழ்ந்து ஒதுக்குதல்; பயன்படாததைப் பிறனிடஞ் சேர்த்தல்.

**கழிதல்** – மிகுதல்; கடந்துபோதல்; நடத்தல்; குறைபடுதல்; அழிதல்; ஒழிதல்; சாதல்; முடிவடைதல்; வருந்துதல்; மலம் முதலியன வெளிப்படுதல்; அச்சங்கொள்ளுதல்.

**கழிந்தகாலம்** – இறந்தகாலம்.

**கழிந்தார்** – பொருளில்லாதவர்; இறந்தவர்; தாழ்ந்தவர்.

**கழிந்தோர்** – வலிமிக்கோர்.

**கழிநிலம்** – உவர்த்தரை, உப்பளம்.

**கழிநெடில், கழிநெடிலடி** – ஐந்தின்மிக்க சீரால் வரும் அடி.

**கழிப்பாம்பு** – ஆறு காலுடைய ஓர் உயிரி.

**கழிப்பு** – ஒழிக்கை; சாந்தி கழிக்கை; குற்றந் தீர்க்கும் ஒரு சடங்கு; குற்றம்; தள்ளுண்ட பொருள்; கழித்தல்.

**கழிப்புக்கழித்தல்** – நோயாளியின் தலையைச் சுற்றிச் சோறு முதலியவற்றை வெளியில் எறிதல்.

**கழிப்புல்** – ஒருவகைப் புல்.

**கழிப்பெடுத்தல்** – காண்க: **கழிப்புக்கழித்தல்**.

**கழிபடர்** – மிகுந்த துயரம்.

**கழிபிறப்பு** – முற்பிறப்பு.

**கழிமாந்தம்** – குழந்தைகட்குப் பேதியோடு வரும் மாந்தநோய்.

**கழிமுகம்** – ஆறு கடலோடு கலக்கும் இடம்; அருவி.

**கழிமுள்ளி** – முள்ளிச்செடி.

**கழிமை** – தள்ளுகை, விலக்குகை, நீக்குகை.

**கழிய** – மிகவும்.

**கழியர்** – காண்க: **கழியவர்**.

**கழியல்** – கழிக்கப்பட்டது; கழிகை; **கழிச்சல்**; கழி; கடைமுளை.

**கழியவர்** – நெய்தல்நில மாக்கள்.

**கழியிருக்கை** – ஆறு சூழ்ந்த இடம்.

**கழியுடல்** – பிணம்.

**கழியுப்பு** – கடலுப்பு.

**கழியூணன்** – பெருந்தீனி தின்பவன்.

**கழிவட்டம்** – கடைப்பட்டவன்(ள்); கடைப்பட்டது.

**கழிவிரக்கம்** – சென்றதை எண்ணி வருந்தல்; மிக வருத்தம்; மிக இரக்கம்.

**கழிவு** – கழிகை; இறந்தகாலம்; நிகழ்காலம்; கழிகடை; தள்ளுபடியான தொகை, கழிப்புக் கணக்கு; கழுவாய்; அழிவு; சாவு; மிகுதி; உள்ளது சிறத்தல்.

**கழிவுசரக்கு** – தள்ளுபடியான பொருள்.

**கழிவெண்பிறப்பு** – அறுவகைப் பிறப்பையும் கடந்து ஆன்மா அடையும் நிருவாணநிலை.

**கழினி** – இடுதிரை.

**கழு** – கழுமரம்; கழுகு; சூலம்; பசுவின் கழுத்தில் கட்டும் கழி.

**கழுக்கடை** – கழுவாயுதம்; சிறிய ஈட்டி; சூலம்.

**கழுக்களம்** – கழுவேற்றும் இடம்.

**கழுக்காணி** – உலக்கை; அறிவற்றவன்; வேங்கை மரம்; தாமரை.

**கழுக்கோல்** – கழுமரம்; கழு; கழிக்கோல், மூங்கில் தண்டு.

**கழுகண்டு** – வணங்காத் தலையன்.

**கழுகரிப்ப்ரி** – இறக்கையுள்ள குதிரை.

**கழுகு** – கழுகு என்னும் பறவை; பிணந்தின்னிக் கழுகு; பொன்னிறக் கழுகு.

**கழுகுபொறி** – கோட்டை மதிலில் வைக்கப்படும் கழுகின் உருவமுள்ள எந்திரம்.

**கழுச்சிறையன்** – கழுவேற்றப்படத்தக்கவன்.

**கழுத்தல்** – பொய்.

**கழுத்தறுத்தல்** – மிக்க துன்பத்திற்கு உள்ளாக்குதல்.

**கழுத்தறுப்பு** – பெருந்துன்பம்.

**கழுத்திருத்தல்** – சுமையால் கழுத்து அமுங்குதல்.

**கழுத்திற்கட்டுதல்** – ஒரு செயலைச் செய்ய வற்புறுத்தி ஒப்படைத்தல்.

**கழுத்து** – கண்டம்; பூமியில் பானை முதலியன வைத்தற்கேற்ற இடம்.

**கழுத்துக்கட்டி** – கழுத்தில் வரும் ஒருவகைக் கட்டி; இடையூறு; கழுத்துக்குட்டைவகை.

**கழுத்துக்குக்கத்தி** – அழிவை உண்டாக்கக் கூடியவன்.

**கழுத்துக்குட்டை** – கழுத்திற் கட்டுகின்ற துணி.

**கழுத்துக்கொடுத்தல்** – தன் வருத்தம் பாராமல் பிறர் செயலைத் தான் ஏற்று நிற்றல்; வாழ்க்கைப்படுதல்.

**கழுத்துச்சட்டை** – பெண்களின் அங்கிவகை.

**கழுத்துச்சந்து** – கழுத்தின் மூட்டு.

**கழுத்துத்திருகுதல்** – கழுத்தை முரித்தல்; கட்டாயப்படுத்துதல்.

**கழுத்துப்பட்டிகை, கழுத்துப்பட்டை** – சட்டையின் கழுத்தைச் சுற்றித் தைத்திருக்கும் பட்டைத்துணி; கழுத்துக்கட்டி.

**கழுத்துப்பிடிப்பு** – கழுத்துச் சுளுக்கு.

**கழுத்துப்பொருத்தம்** – மங்கலியப் பொருத்தம், மணப்பொருத்தம் பத்தனுள் ஒன்று.

**கழுத்துமணி** – கழுத்தணிவகை.

**கழுத்துமுடிச்சு** – குரல்வளை.

**கழுத்துமுறித்தல்** – ஒருவனை வருத்திப் பொருள் முதலியன பெறுதல்; தொந்தரவு செய்து கேட்டல்; உடன்படாமையைக் காட்ட கழுத்தைத் திருப்பிக்கொள்ளுதல்.

**கழுத்துரு** – தாலியோடு கோக்கும் பலவகையான தங்க உருக்கள்.

**கழுத்துவெட்டி** – கொலைகாரன்.

**கழுத்தேறுதண்டம்** – தூக்குத்தண்டனை.

**கழுத்தைக்கட்டுதல்** – விடாது கட்டாயப்படுத்துதல்.

**கழுதாழி, கழுதிரதம்** – பேய்த்தேர்.

**கழுது** – பேய்; காவற்பரண்; வண்டு.

**கழுதை** – ஒரு விலங்கு.

**கழுதைக்குடத்தி** – கழுதைப்புலி.

**கழுதைத்திசை** – வடமேற்குத் திசை.

**கழுதைப்புலி** – ஒருவகை விலங்கு, கழுதைக் குடத்தி.

**கழுதையூர்தி, கழுதைவாகினி** – கழுதையை ஊர்தியாகவுடைய மூதேவி.

**கழுதைவிட்டை** – கழுதையின் மலம்.

**கழுந்தன்** – உடல் பருத்து அறிவு மழுங்கியவன்.

**கழுந்து** – உலக்கை, வில் முதலியவற்றின் திரண்ட நுனி; முரட்டுத்தனம்; மரவைரம்; பொருத்துக் கூர்.

**கழுநர்** – அழுக்கு, பாவம் முதலியன கழுவுவோர்.

**கழுநீர்** – அரிசி கழுவிய நீர்; செங்குவளை; நீலோற்பலம்; தீர்த்தநீர்.

**கழுமணி** – கடைந்து தூய்மை செய்யப்பட்ட மணி.

**கழுமம்** – குற்றம்.

**கழுமரம்** – கழுவேற்றுதற்கு நடப்பட்ட மரம்.

**கழுமல்** – மயக்கம்; பற்றுதல்; நிறைவு; மிகுதி.

**கழுமு** – கலப்பு; திரட்சி.

**கழுமுதல்** – சேர்தல்; பொருந்தியதாதல்; திரளுதல்; கலத்தல்; நிறைதல்; மிகுதல்; மயங்குதல்.

**கழுமுள்** – ஆயுதம்; மாதுளை; சூலம்; ஈட்டி; கழுமரம்.

**கழுமோதுதல்** – தரையிற் புற்பற்றை அடித்தல்.

**கழுவன்** – பெருந்தீயன்.

**கழுவாணி** – கழுவிலுள்ள இருப்பாணி.

**கழுவாநெஞ்சன்** – கன்னெஞ்சன்.

**கழுவாய்** – பரிகாரம்.

**கழுவாய்நிலம்** – புல்தரை.

**கழுவிக்குளிப்பாட்டுதல்** – பிணத்தை நீராற் கழுவுதல்.

**கழுவிழுங்கி, கழுவுணி** – சோம்பேறி.

**கழுவுதல்** – நீரால் தூய்மை செய்தல்; வட்டாக உருக்குதல்; நீக்குதல்.

**கழுவுநீர்** – புண்கழுவும் மருந்துநீர்.

**கழுவெளி** – புல்தரை.

**கழுவேற்றுதல்** – கழுவினில் ஏற்றிக் கொல்லுதல்.

**கழுவேறி** – கழுவேறினவன்; கழுவன்.

**கழுவேறுதல்** – கழுவிலேறிச் சாதல்; பிறனது வருத்தந் தாங்குதல்.

**கழை** – கரும்பு; மூங்கில்; மூங்கிற்குழாய்; வேய்ங் குழல்; ஓடக்கோல்; குத்துக்கோல்; தண்டு; புனர்பூச நாள்.

**கழைக்கூத்தன்** – மூங்கில்மேல் நின்றாடும் கூத்தன்.

**கழைக்கூத்து** – கம்பங்கூத்து, மூங்கிற் கழியை நட்டு அதன்மேல் நின்றாடும் கூத்து.

**கழைநெல்** – மூங்கில் அரிசி.

**கழைவளர்தூம்பு** – மூங்கிலாற் செய்யப்பட்ட இசை வளரும் பெருவங்கியம்.

**கள்** – மது; தேன்; வண்டு; களவு; பன்மை விகுதி; அசைநிலை.

**கள்வம்** – திருட்டுச் செயல்; கவர்ச்சியுள்ளது.

**கள்வன்** – திருடன்; கரியவன்; நடுச்செல்வோன்; முசு; நண்டு; கற்கடகராசி; யானை.

**கள்வி** – கள்ளம் உடையவள்; திருடி; மனமடக்கம் உள்ளவள்.

**கள்விலைஞன்** – கள் விற்பவன்.

**கள்விலையாட்டி** – கள் விற்பவள்.

**கள்ள** – ஓர் உவமஉருபு.

**கள்ளக்கடவு** – திருட்டுவழி.

**கள்ளக்கடை** – திருட்டுப் பொருள்களை விற்கும் கடை.

**கள்ளக்கதவு** – கள்ளவாயில், பிறர் அறியாமற் செல்லுதற்குரிய கதவுள்ள வாயில்.

**கள்ளக்கப்பல்** – கடற்கொள்ளைக்காரர்க்குரிய கப்பல்.

**கள்ளக்கப்பற்காரன்** – கடற்கொள்ளை யடிப் போன்.

**கள்ளக்கயிறு** – உறியின் சுருக்குக் கருவி; பையின் சுருக்குக் கயிறு.

**கள்ளக்கவறு** – கள்ளச் சூதுகருவி.

**கள்ளக்கவி** – பிறர்பாடிய பாடலைத் தனதென்று கூறுபவன்; ஒருவனுக்குப் பாடிய பாட்டை வேறொருவனுக்குக் கொடுப்போன்.

**கள்ளக்காசு** – செல்லாக்காசு; திருட்டு நாணயம்.

**கள்ளக்காமம்** – காரியத்தின்பொருட்டு மேற் கொண்ட போலிக் காமம்.

**கள்ளக்கிடை** – தூங்குவதுபோல் பாசாங்கு செய் தல்; மறைந்து பதுங்கியிருத்தல்.

**கள்ளக்கும்பி(பீ)டு** – வஞ்சனையாகச் செய்யும் வணக்கம்.

**கள்ளக்கையெழுத்து** – மாறான கையொப்பம்.

**கள்ளக்கோல்** – அளவைத் தவறாக நிறுத்துக் காட்டுந் தராசு.

**கள்ளங்கவடு** – சூதுவாது.

**கள்ளச்சத்தியம்** – பொய் ஆணை.

**கள்ளச்சரக்கு** – திருட்டுப் பொருள்; ஏமாற்றி விற்கும் போலிப்பொருள்.

**கள்ளச்சாட்சி** – பொய்ச்சாட்சி; பொய்ச்சாட்சி சொல்வோன்.

**கள்ளச்சாவி** – கள்ளத் திறவுகோல்.

**கள்ளச்சி** – கள்ளச் சாதியாள்; திருடி; வாழைப் பூவின் உட்புறமுள்ள நரம்பு.

**கள்ளச்சிரிப்பு** – வஞ்சகமாக வெளிக்குக் காட்டுஞ் சிரிப்பு.

**கள்ளச்சுரம்** – உட்காய்ச்சல்.

**கள்ளச்சொல்** – பொய்; திருட்டுப்பேச்சு.

**கள்ளஞானம்** – போலியறிவு.

**கள்ளத்தனம்** – திருட்டுத்தனம்; கபடம்.

**கள்ளத்தாலி** – பிறர் மணம் புரியாதவாறு தனக்கு உரிமையுள்ள ஒரு பெண்ணுக்குத் திருட்டுத் தனமாகக் கட்டும் தாலி.

**கள்ளத்தூக்கம், கள்ளநித்திரை** – பொய்யுறக்கம்; யோக நித்திரை.

**கள்ளநேரம்** – களவு முதலியன நடத்துவதற்கு ஏற்ற வேளை; கன்னியிருட்டு வேளை.

**கள்ளநோக்கம், கள்ளநோக்கு** – கள்ளப்பார்வை; வஞ்சகக் கருத்து.

**கள்ளப்பசு** – பால் கொடுக்காமல் அடக்கிக் கொள்ளும் பசு.

**கள்ளப்பார்வை** – வஞ்சக நோக்கம்; காமக்குறிப் போடு நோக்கும் நோக்கம்.

**கள்ளப்புருடன்** – வைப்பு நாயகன், கள்ளக் காதலன்.

**கள்ளப்பூமி** – பகைவரைப் பிடிக்க உள்ளிடம் படுகுழியாய் மேலிடம் தரைபோல் அமைக்கப் படும் நிலம்.

**கள்ளப்பெண்சாதி** – வைப்பாட்டி.

**கள்ளம்** – வஞ்சகம்; பொய்; களவு; குற்றம்; அவிச்சை; புண்ணிலுள்ள அசறு.

**கள்ளமடை** – திருட்டு வழியால் நீரைச் செல்லச் செய்யும் மடை.

**கள்ளமாடு** – பட்டிமாடு; சண்டிமாடு; திருடப் பட்ட மாடு.

**கள்ளமார்க்கம்** – திருட்டு வழி, கள்ள வாயில்; போலிச் சமயம்.

**கள்ளமுத்திரை** – போலிமுத்திரை.

**கள்ளல்** – களவுசெய்தல்.

**கள்ளவழி** – திருட்டுப்பாதை, மறைவாய்ச் செல்லுதற்குரிய வழி.

**கள்ளவறை** – பிறர் அறியமுடியாதபடி அமைந்துள்ள அறை; பெட்டி முதலியவற்றுள் பிறர் அறியா வகையில் அமைக்கப்படும் அறை.

**கள்ளவாசல்** – இரகசிய வழி; திட்டிவாசல்.,

**கள்ளவிலை** – திருடர் விற்கும் குறைந்த விலை.

**கள்ளவிழி** – வஞ்சகப் பார்வை.

**கள்ளவேடம்** – வஞ்சிக்கும்படி மேற்கொண்ட மாறுகோலம்.

**கள்ளழகர்** – கள்ளர் நாட்டுள்ள அழகர்மலையில் கோயில்கொண்டுள்ள திருமால்.

**கள்ளன்** – திருடன்; வஞ்சகன்; கள்ளச்சாதியான்.

**கள்ளாட்டு** – களியாட்டம்.

**கள்ளாதாரம்** – பொய்யாக உண்டாக்கின பத்திரம்.

**கள்ளாமை** – களவுசெய்யாமை.

**கள்ளி** – செடிவகை; திருடி; கள்ளச்சாதிப் பெண்; வேலை செய்யாது கழப்புபவள்.

**கள்ளிக்காக்கை** – செம்போத்து; ஒருவகைக் காக்கை.

**கள்ளிப்பெட்டி** – சாதிக்காய்ப் பெட்டி.

**கள்ளிமடையான், கள்ளிமந்தாரை** – பெருங்கள்ளி; ஓர் அலரி, ஈழத்தலரி.

**கள்ளுக்காடி** – புளித்த கள்.

**கள்ளுதல்** – களவுசெய்தல்.

**கள்ளுவெறி** – குடிவெறி.

**கள்ளேடுவிடுதல்** – சில ஏடுகளை வேண்டுமென்று படியாமலோ எழுதாமலோ தள்ளிவிடுதல்; அரைகுறையாக வேலைசெய்தல்.

**கள** – களாச்செடி; களவொழுக்கம்.

**களக்கம்** – குற்றம்.

**களக்கர்** – புலையர்; வேடர்; ஈனர்.

**களக்குறிப்பு** – களத்துத் தவசக் குறிப்பு.

**களகண்டம்** – குயில்.

**களகம்** – பெருச்சாளி; நெற்கதிர்; சுண்ணாம்புச் சாந்து; அன்னம்.

**களகம்பலம்** – எருது, பசு முதலியவற்றின் அலைதாடி.

**களகள** – காண்க: **களகளெனல்.**

**களகளத்தல்** – ஒலியெழுதல்.

**களகளப்பு, களகளம்** – பேரொலி.

**களகளெனல்** – ஈரடுக்கொலிக் குறிப்பு.

**களங்கம்** – குற்றம்; மறு; துரு; களிம்பு; கறுப்பு; கறுப்புப் புள்ளியாகிய ஒருவகை வயிரக்குற்றம்; நீலம்; அடையாளம்; சீதாங்க பாடாணம்.

**களங்கன்** – சந்திரன்; மாசுள்ளோன்.

**களங்கொள்ளுதல்** – வெல்லுதல்; இருப்பிடமாக்குதல்.

**களஞ்சம்** – கஞ்சா முதலிய வெறிப்பண்டங்கள்.

**களஞ்சியம்** – பொருளை நிரப்பிவைக்கும் இடம்; கருவூலம்; பண்டசாலை; தவசமிருக்கும் இடம்.

**களஞ்செதுக்குதல்** – நெற்களத்துக்காக இடம் வெட்டித் தயார்ப்படுத்துதல்.

**களத்திரக்காரகன்** – சுக்கிரன்.

**களத்திரம்** – மனைவி; குடும்பம்; அரைப்புறம்; அரனிடம்; பிறந்த இலக்கினத்திற்கு ஏழாமிடம்.

**களத்துமேடு** – நெற்களமாக அமைந்த மேடு.

**களதவுதம், களதூ(தௌ)தம்** – வெள்ளி என்னும் உலோகம்.

**களந்தூன்றி** – தான்றி; தான்றிக்காய்.

**களப்படி** – வேளையாள்களுக்குக் களத்திற் கொடுக்கும் கூலி.

**களப்பலி** – போர்க்களத்தில்போர் தொடங்குமுன் கொற்றவைக்குக் கொடுக்கும் பலி.

**களப்பன்றி** – பெருங்குமிழ்.

**களப்பாட்டு** – களத்துப் போர் அடிப்போர் பாடும் பாட்டு.

**களப்பிச்சை** – களத்தில் தவசமாய்க் கொடுக்கும் அறச்செயல்.

**களப்பு** – கடலில் ஆழமில்லாத இடம்.

**களப்பூசை** – நெற்களத்தில் கொடுக்கும் பலி.

**களப்பேச்சு** – நெற்களத்தில் வழங்கும் குறிப்புப் பேச்சு.

**களப்பேறு** – நெற்களத்தில் குடிமக்கள் முதலியோர் பெறும் சுதந்தரம்.

**களபம்** – கலவை; சுண்ணச்சாந்து; கலவைச் சாந்து; யானைக்கன்று; யானை; கண்ணாடி.

**களம்** – நெற்களம்; போர்க்களம்; இடம்; சபை; வேள்விச்சாலை; களர்நிலம்; உள்ளம்; கொட்டகை; கருமை; மனைவி; மஞ்சு; கழுத்து; இன்னோசை.

**களம்பழம்** – களாவின்பழம்.

**களம்பாடுதல்** – போர்க்களத்தை வண்ணித்தல்.

**களம்விடுதல்** – நெற்கதிரடிக்க ஆணையிடுதல்; அம்பாரம் அளந்தபின் களத்தில் சிதறிய தவசத்தை உழவனுக்கு இடுதல்.

**களம்வெட்டல்** – போரிற் பகைப்படையைக் கொன்று பேய்கட்கு விருந்தூட்டுங் களவேள்வி.

**களமதிப்பு** – களத்துக் குவிந்த நெல்லின் மதிப்பளவு.

**களமம்** – நெல்.

**களமர்** – மருதநில மாக்கள்; உழவர்; வீரர்; அடிமைகள்.

**களமாலை** – கண்டமாலை நூல்.
**களமீடு** – களத்துமேடு.
**களர்** – உவர்நிலம், களர்நிலம்; சேற்றுநிலம்; கூட்டம்; கறுப்பு; கழுத்து.
**களர்நிலம், களர்பூமி, களர்மண்** – உப்புமண்; பயிரிட உதவாத நிலம்.
**களரவம்** – காட்டுப்புறா.
**களரி** – களர்நிலம்; பால்நிறம்; காடு; போர்க்களம்; வில், மல், நாடகம், கல்வி முதலியன பயிலும் அரங்கு; நீதிமன்றம்; தொழில் செய்யும் இடம்.
**களரிகட்டுதல்** – அவையடக்கஞ் செய்தல், கூத்தரை ஆடல் பாடல் செய்யவொட்டாமல் மந்திரத்தினால் கட்டுதல்; நாடகசாலை கட்டுதல்; நீதிமன்ற ஊழியரை வசப்படுத்துதல்.
**களரிபூட்டுதல்** – நாடகஅரங்கில்கூத்து நடிப்பதற்கான ஏற்பாடுகள் தொடங்குதல்.
**களரியமர்த்துதல்** – அவையோரை அரங்கில் உட்காரவைத்தல்; பறையறைந்து அவையைச் சத்தஞ் செய்யாமல் அமரச்செய்தல்.
**களரிவிடுதல்** – அரங்கில் முதன்முறையாக நாடகமாந்தரை ஆடவிடுதல்.
**களவடித்தல்** – திருட்டுத்தனஞ் செய்தல்.
**களவம்** – காண்க: **களபம்.**
**களவன்** – நண்டு.
**களவாடுதல்** – திருடல்.
**களவாணி(ளி)** – திருடன்.
**களவியல்** – அகப்பொருள் உறுப்புகளுள் ஒன்று; இறையனார் அகப்பொருள்.
**களவிற்கூட்டம்** – காண்க: **களவுப்புணர்ச்சி.**
**களவு** – திருட்டு; திருடிய பொருள்; வஞ்சனை; கள்ளவொழுக்கம்; களாச்செடி.
**களவுச்சொத்து** – திருட்டுப்பொருள்.
**களவுப்புணர்ச்சி** – தலைவனும் தலைவியும் பிறர் அறியாது தனியிடத்தில் கூடுகை; கற்பிற்கு முன்பு நிகழும் ஒழுக்கம்.
**களவுபண்ணுதல்** – திருடுதல்; கவர்தல்.
**களவுபிடித்தல்** – மந்திர தந்திரங்களால் திருடனைக் கண்டுபிடித்தல்.
**களவேர்வாழ்க்கை** – திருட்டுத்தொழில்.
**களவேள்வி** – பேய்கள் வயிறார உண்ணும்படி வீரன் போர்புரிந்து பகையழித்ததைக் கூறும் புறத்துறை.
**களவொழுக்கம்** – காண்க: **களவுப்புணர்ச்சி.**
**களன்** – மருதநிலம்; இடம்; பொய்கை; ஒலி; கழுத்து; தொடர்பு; மயக்கம்.
**களா** – சிறுகளா; பெருங்களா; மலைக்களா; களாவகை; முண்முருங்கை; தணக்கு.
**களாசம்** – பிரம்பு.
**களாஞ்சி** – காண்க: **காளாஞ்சி.**
**களாபாடனம்** – அருட்பெருக்குப் பதினான்கனுள் ஒன்று. அது கல்வி கற்பித்தல்.
**களாவகம்** – சிறுகீரை.
**களாவதி** – ஒருவகை வீணை.
**களாவம்** – இடையணி.
**களி** – மகிழ்ச்சி; கள் முதலியன அருந்திக் களிக்கை; தேன்; கள்; கட்குடியன்; உள்ளச் செருக்கு; யானைமதம்; குழைவு; குழம்பு; மாவாற் கிண்டிய களி; கஞ்சி; வண்டல்; உலோகநீர்; களிமண்.
**களிக்கண்** – கம்பியிழுக்குங் கருவி.
**களிகம்** – வாலுளுவை என்னும் மருந்து.
**களிகிண்டுதல்** – களிகிளறுதல்; குழப்புதல்.
**களிகூர்தல்** – அகங்களித்தல், களிப்பு மிகுதல்.
**களிகை** – மொட்டு; ஒருவகைக் கழுத்தணி.
**களித்தரை** – களிமண் நிலம்.
**களித்தல்** – மகிழ்தல்; கள்ளுண்டு வெறிகொள்ளுதல்; மதங்கொள்ளுதல்; செருக்கடைதல்; நுகர்தல்.
**களித்துயில்** – இன்பத்துயில்.
**களித்துழவை** – களியாகத் துழாவிச் சமைத்த கூழ்.
**களிதம்** – வழுக்கல்; பெருங்கல்.
**களிதின்னல்** – களி உண்ணுதல்; இலஞ்சம் வாங்குதல்.
**களிதூங்குதல்** – மகிழ்ச்சி மிகுதல்.
**களிந்தை** – யமுனையாறு.
**களிநெஞ்சன்** – கொடூரன்; செருக்கன்.
**களிப்பாக்கு** – அவித்துச் சாயமூட்டிய பாக்கு.
**களிப்பு** – மகிழ்ச்சி; செருக்கு; மயக்கம்; மதவெறி; மண்ணின் பசை; சிற்றின்பம்.
**களிம்பற்றவன்** – குற்றமற்றவன்.
**களிம்பு** – செம்பின் மலப்பற்று; துரு; மாசு; பூச்சு மருந்து.
**களிம்பூ(பே)றுதல்** – களிம்புபிடித்தல்; தயிர் முதலியன களிம்பாற் கெடுதல்.
**களிமகன்** – கட்குடியன்.
**களிமண்** – பசையுள்ள மண்வகை.
**களிமம்** – எலி.
**களிமுத்தை** – கிண்டிய களியுருண்டை.
**களியடைக்காய்** – களிப்பாக்கு.
**களியம்** – தேசிக்கூத்துக்குரிய கால்வகை.
**களியர்வண்ணம்** – குடியர் உண்டு குடித்து மகிழ்வதைச் சிறப்பித்துப் பாடும் வண்ணப்பாட்டு.
**களியலடி** – கும்மியாட்டம்.
**களியன்** – குடியன்.
**களியாட்டு** – கள்ளுண்டு ஆடும் ஆட்டம்.

**களிவாதல்** – மகிழ்வடைதல்.
**களிவாய்நிலம்** – காண்க: **களித்தரை.**
**களிற்றரசு** – ஐராவதம் என்னும் யானை.
**களிற்றியானை** – ஆண்யானை.
**களிற்றினம்பு** – யானைத்திப்பிலி.
**களிற்றுடனிலை** – வீரனொருவன் யானையை வேலால் எறிந்து அதன்கீழ் இறந்துபட்டதைக் குறிக்கும் புறத்துறை.
**களிற்றுத்தானை** – நால்வகைத் தானையுள் ஒன்றான யானைப்படை.
**களிற்றுப்பன்றி** – ஆண்பன்றி.
**களிற்றுப்பொறி** – பகைவரை அழித்தற்குக் கோட்டை மதிலில் வைக்கப்பெறும் யானை வடிவான எந்திரம்.
**களிறு** – ஆண்யானை; ஆண்பன்றி; ஆண்சுறா; அத்தநாள்.
**களிறுதருபுணர்ச்சி** – தலைவன் தலைவியை யானையினின்று காத்தமைபற்றி அவ்விருவருக்கும் உண்டான சேர்க்கை.
**களுக்குக்களுக்கெனல்** – ஒலிக்குறிப்பு.
**களுசி** – சீந்திற்கொடி.
**களேப(வ)ரம்** – உடம்பு; எலும்பு; பிணம்; குழப்பம்.
**களை** – பயிருடன் வளரும் புல்பூண்டுகள்; குற்றம்; அயர்வு; சந்திரகலை; அழகு.
**களைக்கட்டுதல்** – இசைக்கருவிகளின் ஓசை அடக்கமான இடத்தில் நன்கு ஒலித்தல்.
**களைக்கொட்டு, களைக்கொத்து** – களைஎடுத்தல்; களைபறிக்குங் கருவி.
**களைகட்டல்** – களைபிடுங்கல், களைபறித்தல்.
**களைகட்டி** – காண்க: **களைவாரி.**
**களைகண்** – பற்றுக்கோடு, ஆதரவு, ஆதாரம்; காப்பவன்.
**களைஞன்** – சண்டாளன்; களைபறிப்போன்.
**களைத்தல்** – இளைப்புறுதல், சோர்வடைதல்.
**களைதல்** – பிடுங்கியெறிதல்; நீக்குதல்; ஆடையணி கழற்றல்; அழித்தல்; குழைதல்; அரிசி கழுவுதல்; கூட்டி முடித்தல்.
**களைப்பு** – சோர்வு.
**களைப்புல்** – பயிருடன் களையாக முளைக்கும் புல்.
**களைபறித்தல், களையறுத்தல்** – களைபிடுங்குதல், களைபறித்தல்; இடையூற்றைப் போக்குதல்.
**களையாற்றுதல்** – இளைப்பாற்றுதல்.
**களையேறுதல்** – களைகொள்ளுதல், ஒளிமிகுதல்; விக்கிரகத்தில் தெய்வ ஆற்றல் மிகுதல்; சந்திரகலை மிகுதல்.
**களைவாங்குதல்** – அழகு குறைதல்; விக்கிரகத்தில் தெய்வ ஆற்றல் நீங்குதல்.
**களைவாரி** – களைபறிக்குங் கருவி, களைக்கொட்டு.
**களைவு** – களைதல், நீக்குதல்.
**கற்கசம்** – கடினம்; கடும்பற்றுள்ளம்; வேலிப்பருத்தி; கரும்பு.
**கற்கசன்** – வன்னெஞ்சன்.
**கற்கட்டு** – கல்லாலாகிய கட்டடம்.
**கற்கட்டுதல்** – கிணறு முதலியவற்றைக் கருங்கல் அல்லது செங்கல்லால் கட்டுதல்; அணிகலனில் மணிகளைப் பதித்தல்.
**கற்கட்டுமோதிரம்** – மணிபதித்த மோதிரம்.
**கற்கடகசிங்கி** – கடுக்காய்ப்பூ.
**கற்கடகம்** – ஓரிராசி; நண்டு பிணைந்துவரும் இணைக்கைவகை.
**கற்கடகவைரி** – குரங்கு.
**கற்கண்டம்** – அகில்.
**கற்கண்டு** – கருப்பஞ்சாற்றுக் கட்டி; அணிகல வகையுள் ஒன்று.
**கற்கந்து** – கற்றூண்.
**கற்கம்** – இலுப்பைப்பூ; தாமரை; ஒரு மருந்துச்சரக்கு; கழாயம் முதலியவற்றின் கசடு; எண்ணெய் முதலியவற்றின் கசடு; பாவம்; பெருமை; விட்டை; இரும்புக்கிட்டம்; நீர்க்குடம்; வெள்ளைக்குதிரை; தீ; கண்ணாடி; காடு.
**கற்கரம்** – மத்து.
**கற்கரி** – ஒருவகை நிலக்கரி.
**கற்கரிகை** – சதங்கை.
**கற்கலை** – காவிவேட்டி.
**கற்கவி** – கதவுநிலையின்மேலே இடப்பட்டிருக்கும் பாவுகல்.
**கற்கவுதாரி** – காட்டுக்கோழிவகை.
**கற்காண்டல்** – போரிட்ட வீரனது உருவம் அமைப்பதற்கேற்ற சிலையைத் தெரிந்துகொள்வதைக் கூறும் புறத்துறை.
**கற்காணம்** – கல்லால் அமைந்த செக்கு; கருஞ்சீரகம்.
**கற்காப்பு** – போர்க்காலத்தில் கோயில் கருவறையைக் காப்பதற்காக அதன் வாயிலை அடைத்தெழுப்பும் கற்சுவர்.
**கற்காரம்** – கல்வேலை; காரக்கல்.
**கற்காரு** – அகில்மரம்; சாம்பற்பூசணி.
**கற்கி** – கோயில்; திருமாலின் பத்துப் பிறப்புள் ஒன்று; குதிரை.
**கற்கிடை** – செங்கற்சூளை.
**கற்குடல்** – பேதிமருந்துக்கு எளிதில் மலம் கழியாத குடல்.
**கற்குரு** – கருப்பூரச் சிலாசத்து.
**கற்குளித்தல்** – முத்து, மணி முதலியவை எடுப்பதற்காகக் கடலில் மூழ்குதல்.

**கற்குளிமாக்கள்** – முத்துக்குளிப்போர்.

**கற்கேணி** – பாறையை வெட்டி உண்டாக்கப் படும் கிணறு.

**கற்கை** – படித்தல்.

**கற்கொத்தி** – கல்லைப் பிளந்து வேலை செய் பவன்; கல்லுப் பொறுக்கும் புறா.

**கற்கோணிலை** – போரிற்பட்ட வீரனது சிலை யைக் கைக்கொள்ளுதலைக் கூறும் புறத்துறை.

**கற்கோவை** – கருடன்கிழங்கு.

**கற்சட்டி** – மாக்கல்லால் அமைத்த சட்டி.

**கற்சத்து** – கல்நார்; கருப்பூரச் சிலாசத்து.

**கற்சரீரம்** – வலிய உடல்.

**கற்சவளை** – கல்நார்.

**கற்சாகம்** – மரகதம்.

**கற்சாலர்வேலை** – தேன்கூடுபோல் செய்யப்பட்ட செங்கற் கட்டட வேலை.

**கற்சிலை** – உருவம் அமைத்த கல்.

**கற்சிற்பர்** – கல்தச்சர், சிற்பி.

**கற்சிறை** – கல்லணை, கல்லால் கட்டின கரை.

**கற்சுண்ணாம்பு** – ஒருவகைக் கல்லை நீற்றி எடுக்கும் சுண்ணாம்பு.

**கற்சூரம்** – கழற்கொடி; பேரீந்து.

**கற்சூலை** - வலிப்புநோய்வகை.

**கற்பகக்கரம்** – கோழித்தலைக் கந்தகம்.

**கற்பகச்சோலை** -- இந்திரன் நந்தவனம்.

**கற்பகநாடு** – தேவருலகம்.

**கற்பகம்** – தேவருலகத்து ஐந்து தருக்களுள் ஒன்று, வேண்டியதை எல்லாம் தரும் மரம்; கற்பகதரு வடிவான கோயில் வாகனம்; தென்னை; பனை; புளியாரை.

**கற்பகவல்லி** – காமவல்லிக்கொடி.

**கற்பகன்** – நாவிதன்.

**கற்பசு** – பயனற்றது.

**கற்பஞ்சாப்பிடுதல்** – உடல் நீடித்திருப்பதற்காகக் கற்பமருந்து உண்ணுதல்.

**கற்படி** – கல்லாலான படிக்கட்டு.

**கற்படுத்தல்** – செங்கற்பதித்தல்.

**கற்படை** – கோட்டையிற் கள்ள வழி; கற்பதித்த இடம்; நீர் செல்லக் கல்லால் கட்டிய சாக்கடை.

**கற்பணம்** – கைவேல்.

**கற்பதித்தல்** – கல் பரப்புதல்; மணி பதித்தல்; கல்வெட்டு வரைதல்.

**கற்பம்** – இருத்தற்கு அமைந்த இடம்; 432 கோடி ஆண்டுகொண்ட பிரமனது ஒருநாள்; பிரமனது வாழ்நாள்; தேவர்க்குரிய வாழ்நாளளவு; ஆயுளை நீட்டிக்கும் மருந்து; திருநீறு; இலட்சங் கோடி; தேவருலகம்; கற்பகம்.

**கற்பரன்** -- வெள்ளைநஞ்சு.

**கற்பலகை** – எழுதும் பலகை; தட்டையான கல்.

**கற்பலங்காரி** – கற்புடையவள்.

**கற்பனாகௌரவம்** – கற்பனை மிகுவதால் ஆன குற்றம்.

**கற்பனாசக்தி** – புனைந்துரைக்கும் திறமை.

**கற்பனை** – புனைந்துரை; வருணனை; கட்டளை; சங்கற்பம்; காரிய ஏற்பாடு; இல்லாததைக் கட்டிச்சொல்லுதல்; கபடம்; பொய்த்தோற் றம்; கல்வி; போதனை.

**கற்பா** – கோட்டை உள்மதிலின் வாரியுள் உயர்ந்த நிலம்.

**கற்பாசி** – கல்லில் பற்றியுள்ள பாசிவகை.

**கற்பாஞ்சான்** – பெருங்காயம்.

**கற்பாட்டி** – கற்புடையவள்.

**கற்பாடு** – கல்லுள்ள நிலம்.

**கற்பாந்தம்** – மிக்க உறுதி; ஊழிமுடிவு.

**கற்பாலவணம்** – கடலுப்பு.

**கற்பாவுதல்** – கல்லால் தளம் போடுதல்; கற்கள் பரவியிருத்தல்.

**கற்பாழி** – மலைக்குகை.

**கற்பாள்** – மனைவி; கற்புடையவள்; படிப்பவள்.

**கற்பாறை** – கல்லாக அமைந்த பாறை.

**கற்பிடிப்புவேலை** – கற்களைப் பொருத்தும் வேலை.

**கற்பித்தல்** – கற்றுக்கொடுத்தல், அறிவுறுத்தல்; உண்டாக்குதல்; கட்டளையிடல்; விதித்தல்; ஏற்பாடு செய்தல்; கற்பனை செய்தல்.

**கற்பிதம்** – அலங்கரிப்பு; கற்பிக்கப்பட்டது; செய் யப்பட்டது; புனைந்துரை; பொய்; கட்டளை.

**கற்பியல்** – கற்பைப்பற்றிக் கூறும் அகப்பொருட் பகுதி.

**கற்பு** – மகளிர் கற்பு; களவுக்கூட்டத்துக்குப்பின் தலைவன் தலைவியை முறைப்படி மணந்து இல்லறம் புரியும் ஒழுக்கம்; கற்பின் அடையாள மான முல்லை; கல்வி; தியானம்; ஆணை; கதி; உறுதி; புரிசை; மதிலுண்மேடை; நீதிநெறி; கற்பனை.

**கற்புமுல்லை** – தலைவி தன் கணவன் நலத்தைப் பெருகச் சொல்லும் புறத்துறை; கணவன் அருளத் தலைவி விருந்தோம்பும் செல்வத்தை வாழ்த்தும் புறத்துறை; கணவனைப் பிரிந்த தலைவி தனியிருந்து தன் நிறைகாத்தலின் சிறப்பைக் கூறும் புறத்துறை.

**கற்புரம்** – பொன்.

**கற்புரை** – சாம்பிராணி.

**கற்புழை** – மலைக்குகை.

**கற்பூ** – பரவ மகளிரணியும் காதணி; கல்லாரை; கல்தாமரை.

**கற்பூரக்கொடி** – வெற்றிலைவகை.

**கற்பூரணி** – கற்றாழை.
**கற்பூரத்தட்டு** – கோயிலில் தீபம் காட்டப் பயன் படுத்தும் தட்டு.
**கற்பூரம்** – கருப்பூரம்; பொன்னாங்காணி.
**கற்பூரவிலை** – மிகக் குறைந்த விலை.
**கற்பூரவிளக்கு** – கருப்பூரதீபம்.
**கற்பை** – எடைகல், தராசு, உரைகல் வைப்பதற் கான பை.
**கற்பொடி** – கல்தூள்; உடைந்த துண்டு; சுண் ணாம்புக்கல் முதலியவற்றின் பொடி; அன்ன பேதி.
**கற்பொழுக்கம்** – கற்பியல்.
**கற்பொளிதல்** – உளியாற்கல்லைச் செப்பனிடுதல்.
**கற்பொறி** – பற்றிரும்பு; கோட்டைமதிலில் வைக் கப்பெறும் கல்வடிவுள்ள இடங்கணி முதலிய பொறிகள்.
**கற்பொறுக்கி** – புறாவகை.
**கற்போடுதல்** – செயலைக் கெடுத்தல்.
**கற்போன்** – மாணாக்கன், படிப்போன்.
**கற்றச்சன்** – கல்வேலை செய்யும் சிற்பி.
**கற்றடம்** – கல்லடர்ந்த காடு; மலைவழி.
**கற்றம்** – பாறை.
**கற்றவன்** – கற்றறிந்தவன்; ஞானி.
**கற்றளம்** – கற்கள் பதித்த தரை.
**கற்றளி** – கற்கோயில்.
**கற்றளிப்புறம்** – கோயிலுக்கு விடப்பட்ட இறை யிலி நிலம்.
**கற்றறிமூடன்,** **கற்றறிமோழை** – கற்றும் மூடனாயிருப்பவன்.
**கற்றறிவு** – கற்றதனாலாகிய அறிவு.
**கற்றா** – கன்றையுடைய பசு.
**கற்றாமரை** – மலைப்பூடுவகை.
**கற்றார்** – அறிஞர், புலவர், படித்தோர், கல்வி யறிவுடையோர்கள்.
**கற்றாழஞ்சோறு** – கற்றாழையின் உள்ளீடான பகுதி.
**கற்றாழை** – ஒரு பூடு; சிவப்புக் கற்றாழை; கற்றாழைவகை.
**கற்றானை** – காவித்துணி.
**கற்றிருத்துதல்** – காண்க: **கற்பொளிதல்.**
**கற்றிருப்பணி** – கற்களால் செய்யும் கோயில் வேலை.
**கற்றுக்குட்டி** – கற்குஞ் சிறுவன்; அறிவில் தேர்ச்சி பெறாதவன்.
**கற்றுக்கொடுத்தல்** – சொல்லிக் கொடுத்தல், போதித்தல்.
**கற்றுக்கொள்ளுதல்** – பயிலுதல்.
**கற்றுச்சொல்லி,** **கற்றுச்சொல்வோன்** – புலவனொருவனிடம் கற்று அவனுக்குத் துணையாயிருப்பவன்.

**கற்றுளசி** – மலைத்துளசி.
**கற்றேக்கு** – ஒருவகைத் தேக்குமரம்; கும்பிமரம்.
**கற்றை** – திரள்; கட்டு, தொகுதி; தென் னோலைக் கற்றை.
**கற்றைபிடித்தல்** – கூரை நிரைச்சல் வேய்தல்; தென்னோலை பின்னுதல்.
**கற்றைபோடுதல்** – கூரை வேய்தல்.
**கற்றைவைத்துக்கட்டுதல்** – புல்கற்றை வைத்துக் கூரை வேய்தல்; மண்திரள் வைத்துக் கட்டு தல்.
**கற்றொட்டி** – கருங்கல்லாலான தொட்டி.
**கற்றொழிலோர்** – சிற்பாசாரிகள், கல்தச்சர்.
**கற்றோர்நவிற்சியணி** – குணமிகுதிக்குக் காரண மல்லாததைக் காரணமாக்கிச் சொல்லும் அணி.
**கறக்குதல்** – நூல் முறுக்கேற்றுதல்; நிமிண்டுதல்.
**கறகறத்தல்** – ஒலித்தல்; தொண்டையறுத்தல்; கடித்தற்கு நறுமுறுவென்றிருத்தல்.
**கறகறப்பு** – ஓர் ஒலிக்குறிப்பு; நறுமுறுவென் றிருக்கை; தொண்டையறுப்பு; மனத்தாபம்; தொந்தரவு செய்கை.
**கறங்கல்** – ஒலித்தல்; சுழற்சி; வளைதடி; பேய்.
**கறங்குதல்** – ஒலித்தல்; சுழலுதல்; சூழ்தல்.
**கறங்கோலை** – ஓலைக் காற்றாடி.
**கறடு** – தாழ்ந்த முத்துவகை; குள்ளமானது; பொன்.
**கறண்டிகை** – முடி உறுப்புள் ஒன்று.
**கறண்டிகைச்செப்பு** – சுண்ணாம்புக் கரண்டகம்.
**கறத்தல்** – பால் கறத்தல்; பால் கொடுத்தல்; கவருதல்.
**கறந்தமேனியாய்** – வேறு கலப்பின்றித் தூய்மை யாய்.
**கறப்பற்று** – துருப்பிடிக்கை.
**கறப்பு** – கறக்கை.
**கறம்** – கொடுமை, தீவினை; வன்செய்கை.
**கறமண்** – காய்ந்து வறண்டது.
**கறல்** – விறகு.
**கறவாத்தேனு** – உதைகாற்பசு.
**கறவு** – கப்பம்; கறவைப்பசு.
**கறவை** – பால் கறக்கும் பசு; கறக்கை.
**கறவைக்கலம்** – பால் கறக்கும் ஏனம்.
**கறவையான்** – பாற்பசு.
**கறள்** – கறை, துரு.
**கறளுதல்** – வளர்ச்சியறுதல்; விளக்குத்திரி மங்கி எரிதல்.
**கறளை** – குள்ளன்; வளர்ச்சியின்மை; வளர்ச்சி யற்றது; பருக்காத காய்; ஒருவகைக் கட்டி.
**கறா** – காடைக்குரல்.
**கறார்** – வரையறை; உறுதி.

**கறாளி** – அடங்காமை.
**கறாளை** – கறளை, வளர்ச்சியற்றவன்; வளர்ச்சியற்றது.
**கறி** – மிளகு; மரக்கறி, இறைச்சி; கடித்துத் தின்னுகை; ஒரு நாழிகை.
**கறிக்கருணை** – காறாக்கருணை.
**கறிக்குடலை** – கறியைக் கொண்டுசெல்லுதற்குரிய இலைக்கலம்.
**கறித்தல்** – கடித்துத் தின்னுதல்; உப்புச்சுவை மிகுதல்.
**கறித்தூள்** – கறிக்குரிய கூட்டுப்பொடி, கறிமசாலை.
**கறிப்பலா** – ஈரப்பலா.
**கறிப்புடல்** – ஒருவகை வண்டு; கறிக்குரிய காய் காய்க்கும் ஒருவகைக் கொடி.
**கறிப்புடோல்** – புடல்.
**கறிமசாலை** – கறிக்கிடும் சரக்கு.
**கறியமுது** – சமைத்த கறியாகச் சாமிக்குப் படைக்கும் உணவு; கறியாகிய உணவு.
**கறியமுதுவடகம்** – காண்க: **கறிவடகம்.**
**கறியாமணக்கு** – பப்பாளி.
**கறிவடகம்** – கறியிற் சேர்க்கும் வடகவகை.
**கறிவேப்பிலை** – கறி தாளிக்கும்போது சேர்க்கும் இலை; கறிவேம்பு.
**கறிவேம்பு** – கறிவேப்பிலைமரம்.
**கறு** – மனவைரம்.
**கறுக்கட்டுதல்** – தீராப் பகை கொள்ளுதல்.
**கறுக்கல்** – கருமையாதல்; விடிவதற்கு முன்னுள்ள இருட்டு.
**கறுக்கன்வெள்ளி** – மட்ட வெள்ளி.
**கறுக்காய்** – இளநீரின் கண்பக்கத்துள்ள பகுதி; பதர்.
**கறுத்தகார்** – நெல்வகை.
**கறுத்தவன்** – கருநிறமுடையவன்; பகைவன்.
**கறுத்தோர்** – பகைவர்.
**கறுப்பன்** – கரியவன்; ஒரு தேவதை; ஒருவகை நெல்.
**கறுப்பி** – கருநிறமுடையவள்; கருவண்டு; பேய்த் தும்பை.
**கறுப்பு** – கருமை; வெகுளி; குற்றம்; கறை; கறுப்புப்புள்ளி; தழும்பு; இராகு; பேய் பிசாசுகள்; அபின்.
**கறுப்புக்கட்டுதல்** – பயிர் முதிர்ந்து கருநிறங் கொள்ளுதல்; மழைக்கோலங் கொள்ளல்.
**கறுப்புச்சருக்கரை** – தூய்மை செய்யப்படாத சருக்கரை.
**கறுப்புப்படர்தல்** – கருமேகநோய் உடலில் பரவுதல்.
**கறுப்புமரம்** – தும்பிலி.
**கறுப்புவீரம்** – விளக்குக்கரி.
**கறும்புதல்** – துன்புறுத்துதல்; சிறிதுசிறிதாகக் கடித்துண்ணுதல்.
**கறுமுதல்** – சினத்தல்.
**கறுமு(மொ)றெனல்** – சினக் குறிப்பு; ஒலிக் குறிப்பு.
**கறுவம்** – வெகுளி.
**கறுவல்** – கரியன்; கருநிறம்; சினக்குறிப்பு.
**கறுவியம்** – தீராப்பகை.
**கறுவு** – சினம்; மனவைரம்.
**கறுவுதல்** – சினக்குறிப்புக் காட்டுதல்; மனவைரங் கொள்ளுதல்; பல்லால் துருவுதல்.
**கறுவைத்தல்** – மனவைரங் கொள்ளுதல்.
**கறுழ்** – கடிவாளம்.
**கறேரெ(லெ)னல்** – கருமைநிறக் குறிப்பு.
**கறை** – மாசு; குற்றம்; கறுப்புநிறம்; நிறம்; இருள்; இரத்தம்; மாதவிடாய்; உரல்; கருங்காலி; குடிவரி; நஞ்சு.
**கறைக்கண்டன்** – கழுத்தில் கறையையுடைய சிவபெருமான்.
**கறைக்கணித்தல்** – குறை நீங்க வேண்டித் துதித்தல்.
**கறைப்பல்** – மாசு படிந்த பல்.
**கறைமிடற்றண்ணல்,** **கறைமிடற்றோன்** – காண்க: **கறைக் கண்டன்.**
**கறையடி** – உரல் போன்ற அடியையுடைய யானை.
**கறையான்** – செல்லு, சிதல்.
**கறையான்மேய்தல்** – செல்லுப்பிடித்தல்.
**கறையோர்** – வரிசெலுத்துவோர்.
**கன்** – கல்; சிறு தராசு; கன்னார்தொழில்; வேலைப்பாடு; செம்பு; உறுதிப்பாடு.
**கன்சருக்கரை** – கற்கண்டு.
**கன்மசாந்தி** – முற்பிறப்புகளின் தீவினையொழியச் செய்யும் சடங்கு.
**கன்மடம்** – பாவம்; அழுக்கு; கறை.
**கன்மதம்** – ஒரு மருந்துச் சரக்கு.
**கன்மநிவர்த்தி** – பாவக் கழுவாய்.
**கன்மபந்தம்** – புதுமை; கருமத்தால்வரும் பிறப்புகளில் பயனைக் கொடுக்கும்படி தோன்றுவது.
**கன்மபாதகன்** – மிகக் கொடியன்.
**கன்மபூமி** – காண்க: **கருமபூமி.**
**கன்மம்** – கருமம், செயல்; வினைப்பயன்; செய்தொழில்; பாவம்; தீவினை.
**கன்மம்புசித்தல்** – வினைப்பயனை நுகர்தல்.
**கன்மலி** – ஏலக்காய்ச்செடி.
**கன்மலை** – பெரும் பாறையாலான மலை; படிக்காரம்.
**கன்மழை** – ஆலங்கட்டி மழை.

**கன்மாடன்** – களங்கமுடையவன்.

**கன்மாதிகன்** – பிதிர் கருமஞ் செய்வோன்.

**கன்மி** – பாவி; கருமங்களைச் சரியாகச் செய்பவன்; தொழிலாளி; ஊழியன்.

**கன்மிட்டன்** – செயல் செய்வதில் வல்லவன்; எல்லாச் செயல்களையும் அக்கறையுடன் செய்பவன்.

**கன்முகை** – காண்க: **கன்முழை.**

**கன்முரசு** – பெருவாகை.

**கன்முலை** – இறுகிய பசுமடி.

**கன்முழை** – மலைக்குகை.

**கன்மேந்திரியம்** – காண்க: **கருமேந்திரியம்.**

**கன்மேய்வு** – மாடப்புறா.

**கன்மேலெழுத்து** – கல்லெழுத்து, அழிவில்லாச் சாசனம்.

**கன்மொந்தன்** – வாழைகளில் ஒருவகை.

**கன்றல்** – சினக்குறிப்பு; எழுச்சியின் மிகுதி; கன்றிப்போன புண்.

**கன்றினகாயம்** – கன்றிப்போன புண்; ஆறிப்போன புண்.

**கன்று** – விலங்கின் கன்று; மரக்கன்று, இளமரம்; சிறுமை; கை வளையல்.

**கன்றுக்குட்டி** – பசு எருமைகளின் இளங்கன்று.

**கன்றுகாலி** – கன்றுகளுடன் கூடிய மாட்டு மந்தை.

**கன்றுதல்** – முதிர்தல்; அடிபடுதல்; சினக் குறிப்புக் கொள்ளுதல்; வெயிலாற் கருகுதல்; மனமுருகுதல்; வருந்துதல், நோதல்; வாடுதல்; பதனழிதல்.

**கன்றுதாய்ச்சி** – சினைப்பசு.

**கன்றுப்பொங்கல்** – மாட்டுப்பொங்கலுக்கு அடுத்த நாள், காணும்பொங்கல்.

**கன்றுபோடுதல்** – பசு முதலியன கன்று ஈனுதல்.

**கன்றுவிடுதல்** – பால் சுரக்கும்படி கன்றை ஊட்ட விடுதல்; பால் கறத்தல்.

**கன்னக்களவு** – சுவரில் கன்னம் வைத்துச் செய்யும் திருட்டு.

**கன்னக்காரன்** – கன்னமிடுந் திருடன்.

**கன்னக்கிரந்தி** – கன்னத்தில் வரும் ஒரு நோய்.

**கன்னக்கோல்** – சுவரைத் துளைத்தற்குத் திருடர் கையாளும் கருவி.

**கன்னகடூரம்** – கர்ணகடோரம், காதால் கேட்கப்படாத கொடியது.

**கன்னகம்** – கன்னக்கோல்.

**கன்னங்கரிய** – மிகக் கறுப்பான.

**கன்னங்கறேலெனல்** – மிகக் கறுப்பாயிருத்தல்.

**கன்னசாமரை** – குதிரையின் காதில் அலங்காரமாய்த் தொங்கவிடும் சாமரை.

**கன்னசாலை** – மேல்மாளிகைப் பக்கங்களில் முன்புறம் நீண்டுள்ள பரண்கூடு.

**கன்னஞ்செய்தல்** – கேட்டல்.

**கன்னடகௌளம்** – ஒரு பண்வகை.

**கன்னடம்** – திராவிட மொழிகளுள் ஒன்று; கன்னடமொழி பேசும் கருநாடக மாநிலம்; ஒரு பண்வகை.

**கன்னத்தட்டு** – சிறு தராசு தட்டு.

**கன்னப்பரிசை** – கதுப்புமயிர்.

**கன்னப்பூ** – மகளிர் காதணியினுள் ஒன்று.

**கன்னப்பொறி** – கன்னத்தின் பொட்டு.

**கன்னபரம்பரை, கன்னபாரம்பரியம்** – கேள்வி வழியாக வந்த செய்தி.

**கன்னபூரம்** – அசோகு; மாதர் காதணியினுள் ஒன்று.

**கன்னம்** – கதுப்பு; காது; யானைச்செவி; கோள் வீதியளவு; கன்னக்கோல்; கன்னக் கருவியால் தோண்டிய துளை; களவு; பொற்கொல்லனின் சிறு தராசு தட்டு; வேண்டுதலாகச் செய்து கொடுக்கும் சிறு படிமம்; பெருமை; தாடை; சதுரத்தின் ஒரு மூலையினின்று அதற்கு நேர் மூலைவரையுள்ள குறுக்கு; நேர்கோண முக்கோணத்தில் நேர்கோணத்திற்கு எதிரிலுள்ள கை; பொற்கொல்லன்; பொன்.

**கன்னமதம்** – யானைக் காதில் தோன்றும் மதநீர்.

**கன்னமிடுதல்** – சுவரைத் துளை செய்தல்; கொள்ளையிடல்.

**கன்னமூலம்** – காதினடி.

**கன்னல்** – கரகம்; நாழிகைவட்டில்; நாழிகை; கரும்பு; சருக்கரை; கற்கண்டு; மணற்பாகு; ஒருவகைச் சிறு குருவி.

**கன்னலமுது** – பாயசம்.

**கன்னவகம்** – சிறுகீரை.

**கன்னவேதம், கன்னவேதை** – காதுகுத்துஞ் சடங்கு.

**கன்னற்கட்டி** – கருப்புக்கட்டி; கற்கண்டு.

**கன்னன்மணி** – கண்டசருக்கரைத் தேறு.

**கன்னா** – ஒரு வாச்சியம்.

**கன்னாடர்** – கருநாடர்.

**கன்னாபின்னாவெனல்** – பொருளின்றிக் குழறுதற் குறிப்பு, வாயில் வந்தவாறு உளறுதல்.

**கன்னார்** – கல்நார்; பாத்திரவேலை செய்பவர்.

**கன்னாருரித்தல்** – இல்லாத பொருளைப் பெற முயலுதல்; ஒரு பொருளைப் பாடுபட்டு முயன்று பெறுதல்.

**கன்னாவதஞ்சம்** – செவிமலர்ப்பூ என்னும் ஓர் அணி.

**கன்னான்** – பாத்திரவேலை செய்பவன்.

**கன்னி** – குமாரி, மணம் ஆகாத பெண்; இளமை; அழிவில்லாள்; புதுமை; முதனிகழ்ச்சி; அழிவின்மை; பெண்; தவப்பெண்; தெய்வப் பெண்; இளமைகுன்றாப் பெண்; துர்க்கை; பார்வதி; குமரியாறு; கன்னிராசி; புரட்டாசி; அத்தநாள்; காக்கணங்கொடி; கற்றாழைச் செடி; கரந்தை.

**கன்னிக்காய்** – முதன்முதலில் காய்க்கும் காய்.

**கன்னிக்காய்ச்சல்** – புரட்டாசி மாதத்தில் காயும் வெயில் மிகுதி.

**கன்னிக்கால்** – கலியாண முகூர்த்தக்கால்; புது வீட்டின் மதிலில் தென்முகமாக முதலில் நடும் சீலை சுற்றிய கம்பம்.

**கன்னிக்காவல்** – கன்னிப் பருவத்துக் காக்குங் கற்பு.

**கன்னிக்குட்டி** – முதலில் போடும் ஆட்டுக்குட்டி.

**கன்னிக்குடம்** – பன்னீர்க்குடம், கருப்பையின் ஒரு பகுதி.

**கன்னிக்குடமுடைதல்** – பேறுகாலத்தில் முதலில் வெளிப்பட்டு வரும் நீர்.

**கன்னிகம்** – மணித்தக்காளி.

**கன்னிகழிதல்** – மணம்புரியப் பெறுதல்.

**கன்னிகாதானம்** – கன்னியை ஆடவனுக்குக் கொடையாகத் திருமணம் செய்துகொடுக்கும் முறை.

**கன்னிகாமடம்** – கிறித்தவப் பெண்துறவியர் வசிக்கும் இடம்.

**கன்னிகாரம்** – கோங்குமரம்.

**கன்னிகை** – குமரி; தாமரைக்கொட்டை; பூமொட்டு.

**கன்னிச்சவ்வு** – கன்னித்தன்மை நீங்குவதற்குமுன் யோனியை மூடியுள்ள சவ்வு.

**கன்னித்தமிழ்** – அழிவில்லாத தமிழ்மொழி.

**கன்னித்திங்கள்** – காண்க: **கன்னிமாதம்.**

**கன்னித்திசை** – தென்மேற்கு மூலை.

**கன்னித்தீட்டு** – முதற்பூப்புக்கு உரிய தீட்டு.

**கன்னித்தேங்காய்** – தென்னையின் முதல் தேங்காய்.

**கன்னிநகர்** – கன்னிமாடம்.

**கன்னிநாகு** – கன்றுபோடாத இளம்பசு.

**கன்னிநாடு** – பாண்டிநாடு.

**கன்னிப்பழி** – கன்னியைக் கற்பழித்த பாவம்.

**கன்னிப்பிள்ளைத்தாய்ச்சி** – முதற் கருவுற்றவள்.

**கன்னிப்பூப்பு** – முதற்பூப்பு.

**கன்னிப்பூமலர்தல்** – பெண் பூப்பெய்தல்.

**கன்னிப்பொங்கல்** – தைமாதப் பிறப்புக்கு அடுத்த நாளில் கன்னிகைகளால் கொண்டாடப் பெறும் ஒரு விழா.

**கன்னிப்போர்** – வீரனது முதற்போர்.

**கன்னிமடம்** – காண்க: **கன்னியாமடம்.**

**கன்னிமதில்** – அழியாத கோட்டை.

**கன்னிமாடம்** – காண்க: **கன்னியாமாடம்.**

**கன்னிமாதம்** – புரட்டாசி மாதம்.

**கன்னிமார்** – மணமாகாப் பெண்டிர்; நற்கதியடைந்த கற்புடைக் கன்னியர்; ஏழு கன்னியர் என்னும் தேவதைகள்.

**கன்னிமுத்திரை** – காண்க: **கன்னிச்சவ்வு.**

**கன்னிமை** – கன்னிப்பருவம்.

**கன்னியழித்தல்** – ஆடவன் முதன்முதல் ஒரு பெண்ணுடன் கூடிக் கன்னித் தன்மையை நீக்குஞ் சடங்கு; கன்னிமை கெடுதல்.

**கன்னியழிதல்** – கன்னிமை கெடுத்தல்.

**கன்னியன்னம்** – கற்றாழஞ்சோறு.

**கன்னியாதானம்** – காண்க: **கன்னிகாதானம்.**

**கன்னியாமடம்** – கன்னியர் வசிக்கும் இடம்; கிறித்தவப் பெண்துறவியர் வசிக்கும் இடம்.

**கன்னியாமாடம்** – அரசமகளிர் வசிக்கும் இடம்.

**கன்னியிருட்டு** – வைகறைக்குமுன் தோன்றும் இருள்.

**கன்னியீற்று** – பசுவின் தலையீற்று.

**கன்னியூஞ்சல்** – திருமணச் சடங்கின் தொடக்கத்தில் மணமக்கள் ஆடும் ஊஞ்சல் ஆட்டம்.

**கன்னிவிடியல்** – வைகறை.

**கன்னிவேட்டை** – முதல்வேட்டை.

**கன்னிறம்** – சங்கஞ்செடி.

**கன்னீர்ப்படுத்தல்** – போரிலிறந்த வீரனது நடுகல்லை நீராட்டும் புறத்துறை; போர் செய்து இறந்த வீரனது வீரச் செயலை வரைந்த கற்களைப் போர்க்களத்திலே மறவர் நிரைத்தலைக் கூறும் புறத்துறை.

**கன்னுவர்** – கன்னார்.

**கன்னுறுகம்** – சிறுகீரை.

**கன்னெஞ்சன்** – கொடிய மனமுடையவன்.

**கன்னெஞ்சு** – வன்மனம்.

**கன்னை** – கட்சி, பக்கம்.

**கன்னைக்கொற்றி** – விளையாட்டில் இரு கட்சிக்கும் உதவி செய்வோன்.

**கன்னைக்கோல்** – நெய்வோர் கருவியுள் ஒன்று.

**கன** – கனா, கனவு.

**கனக்குறைவு** – இலேசான தன்மை; பெருமைக் கேடு.

**கனகச்சம்பா** – உயர்ந்த சம்பாநெல்வகை.

**கனகச்சுற்றம்** – அரசர்க்குரிய எண்பெருந் துணைவருள் ஒருவகையாராகிய பொருட்காப்பு அதிகாரி.

**கனகசபை** – பொன்னம்பலம், சிதம்பரத்தில் நடராசமூர்த்தி எழுந்தருளியிருக்கும் திருச்சபை.

**கனகத்தும்பி** – பொன்வண்டு.
**கனகதண்டி, கனகதண்டிகை** – பொற்சிவிகை.
**கனகதம்** – ஒட்டகம்.
**கனகதர்** – சண்டாளர், புலையர்.
**கனகம்** – பொன்; மீன்கொத்தி.
**கனகமலை** – மேருமலை, பொன்மலை.
**கனகமாரி** – பொன்மழை.
**கனகமாரிபொழிதல்** – பொன்னைச் சிறப்பாகக் கொடுத்தல்.
**கனகமாழை** – பொற்கட்டி.
**கனகமிளகு** – வால்மிளகு.
**கனகன்** – இரணியன்; நாணயக் குற்றவகை.
**கனகாங்கி** – முதல் மேளகர்த்தா.
**கனகாபிடேகம்** – பொன் திருமஞ்சனம்.
**கனகாமிர்தம்** – வெள்ளி.
**கனகாரியம்** – முக்கியமான அலுவல்; ஊமத்தை.
**கனகி** – ஊமத்தை.
**கனங்காய்** – மனோரஞ்சிதம்.
**கனங்கொள்ளுதல்** – பாரமாதல்; பெருமையுடையதாதல்.
**கனசங்கலிதம்** – அடுத்தடுத்துவரும் எண்களின் கனத்தைக் கூட்டுகை.
**கனசாரம்** – பச்சைக் கருப்பூரம்.
**கனசாரி** – மிகுதி.
**கனத்தநாள்** – கோள்நிலையால் நோயினைப் பெருகச் செய்யும் நாள்.
**கனத்தல்** – பாரமாதல்; மிகுதியாதல்; பருத்தல்; கம்மிய குரலாதல்; பெருமையுறுதல்.
**கனதண்டி** – கனமும் பெருமையுமுள்ளது.
**கனதி** – பாரம்; இறுமாப்பு.
**கனதை** – மதிப்பு, சிறப்பு, கௌரவம்.
**கனப்பாடு** – கனமாயுள்ள தன்மை; அகற்சி.
**கனப்பு** – கனமாயிருக்கை; பருமை; பாரம்; அழுத்தம்; கொழுப்பு; இறுமாப்பு.
**கனபாடி** – வேதத்துக்குக் கனம் சொல்ல வல்லோன்.
**கனம்** – மேகம்; பாரம்; பருமன்; பெருமை; செறிவு; திரட்சி; உறுதி; மிகுதி; ஓர் எண்ணை அதனாலேயே இருமுறை பெருக்கவரும் இலக்கம்; வட்டம்; அகலம்; பொன்; கனராகம்; கூட்டம்.
**கனம்பார்த்தல்** – எடைபார்த்தல்; நிலைதெரிதல்.
**கனம்பொருந்திய** – கண்ணியமுள்ள.
**கனமழை** – பெருமழை.
**கனமாப்பலகை** – சங்கப்பலகை.
**கனமூலம்** – கனத்தொகையினின்று அறியும் அதன் மூலம்.
**கனமோசம்** – பெருவஞ்சகம்.
**கனருசி** – மின்னல்; மிகுந்த சுவை.
**கனல்** – நெருப்பு; வெப்பம்.
**கனல்வு** – சினம்.
**கனலி** – சூரியன்; நெருப்பு; கொடிவேலி; பன்றி; கள்ளி.
**கனலிநாள்** – அத்தநாள்.
**கனலுதல்** – எரிதல்; கொதித்தல்; சினத்தல்; சிவத்தல்.
**கனலொழுங்கு** – சுடர், சுவாலை.
**கனலோன்** – சூரியன்.
**கனவட்டம்** – குதிரை; பாண்டியன் குதிரை.
**கனவல்** – கனாக் காணுதல்.
**கனவளவு(வை)** – அகலம், நீளம், உயரம் இவற்றைப் பெருக்குதலால் வரும் எண்.
**கனவான்** – மதிப்புடையோன்.
**கனவிரதம்** – நீர்.
**கனவீனம்** – மதிப்புக்குறைவு.
**கனவு** – கனா; உறக்கம்; மயக்கம்.
**கனவுதல்** – கனாக் காணுதல்.
**கனற்கூர்மை** – வளையலுப்பு.
**கனற்சி** – உள்ளக்கொதிப்பு; சினம்; வெப்பம்.
**கனற்சிலை** – ஒருவகைக் கருங்கல்.
**கனற்பு** – அடுப்பு.
**கனற்றுதல்** – எரியச்செய்தல்; சுடச்செய்தல்; வெதுப்புதல்; மிக்கு விளங்குதல்.
**கனறல்** – கனலுதல்; சினம்.
**கனனிறக்கல்** – மணி, மாணிக்கம்.
**கனா** – கனவு, உறக்கத்தில் தோன்றும் தோற்றங்கள், சொப்பனம்.
**கனாக்காணுதல்** – தூக்கத்தில் சில தோற்றங்களைக் காணுதல்; கிடைத்தற்கரியதைப் பெற அவாவுதல்.
**கனி** – பழம்; கனிவு; சாரம்; இனிமை; கனிச்சீர், மூவகைச் சீரில் இறுதியிலுள்ள நிரையசை; பொன் முதலியன எடுக்கும் சுரங்கம்.
**கனிக்காழ்** – பழத்தின் விதை.
**கனிகரம்** – அன்பு; அக்கறை.
**கனிகாலம்** – பழுக்குங் காலம்.
**கனிச்சீர்** – கனி என்னும் வாய்பாடுகொண்ட அசையை இறுதியிலுடைய வஞ்சியுரிச்சீர்.
**கனிட்டன்** – கடைசிப்பிள்ளை; பின்னவன், தம்பி; கீழ்மகன்.
**கனிட்டிகை** – கனிட்டை, சிறுவிரல்.
**கனிட்டை** – கடைசியாகப் பிறந்த மகள்; தங்கை; சிறுவிரல்.
**கனித்தல்** – கனிவாதல், இளகச் செய்தல்.
**கனிதல்** – பழுத்தல், முதிர்தல்; மனமிளகுதல்; நெகிழ்தல்; தழல் மிகுதல்; புதைத்தல்.
**கனிந்தபாடம்** – தெளிந்த பாடம்.
**கனிப்பு** – இனிமை.

**கனிய** – முற்ற; முழுவதும்.

**கனியாமணக்கு** – ஒருவகை ஆமணக்கு; பப்பாளி மரம்.

**கனிவு** – இரக்கம்; முதிர்வு.

**கனுக்குதல்** – பாடும்போது கண்டத்தொனி உருளுதல்; கசங்கப்பண்ணுதல்.

**கனுப்பொங்கல்** – காண்க: **கன்னிப்பொங்கல்.**

**கனை** – செறிவு; நிறைவு; மிகுதி; ஒலி.

**கனைத்தல்** – ஒலித்தல்; குதிரை முதலியன கத்தல்; கொக்கரித்தல்; திரளுதல்; இருளுதல்; விரைந்து செல்லுதல்.

**கனைதல்** – நெருங்கல்; மிகுதல்; ஒலித்தல்.

**கனைப்பு** – ஒலி; குதிரை முதலியவற்றின் குரலோசை; கொக்கரிப்பு.

**கனைவு** – நெருக்கம், செறிவு.

**கனோபலம்** – ஆலங்கட்டி.

## கா

**கா** – ஓர் உயிர்மெய்யெழுத்து(க்+ஆ); சோலை; கற்பகமரம்; பாதுகாப்பு; காவடித்தண்டு; துலாக்கோல்; ஒரு நிறையளவு; தோட்சுமை; பூ முதலியன இடும் பெட்டி; அசைச்சொல்; கலைமகள்.

**காக்கட்டான்** – ஒரு கொடிவகை, கொடிக் காக் கட்டான்.

**காக்கணம்** – காக்கட்டான்கொடி.

**காக்கத்துவான்** – கிளிவகை.

**காக்கம்** – காக்குறட்டைச்செடி; கோவைக்கொடி.

**காக்கன்போக்கன்** – தீநெறியில் நடப்போன்; ஊர் பேர் தெரியாதவன்.

**காக்காச்சி** – ஒரு கடல்மீன்வகை; ஒருவகைக் கிளிஞ்சில்.

**காக்காந்தோல்** – குதிகாலில் உண்டாகும் கொப்புளவகை.

**காக்காய்** – காகம்.

**காக்காய்க்கால்** – காய்ந்த வயலிற் காணும் வெடிப்பு; காகத்தின் கால்போற் காணும் வயிரக் குற்றவகை; எழுத்து வரிப்பிளப்பைக் குறிக்கும் புள்ளடி.

**காக்காய்கொல்லி** – ஒருவகைச் செடி.

**காக்காய்ச்சோளம்** – கருஞ்சோளம்.

**காக்காய்ப்பொன்** – போலிப் பொன்; ஒருவகை வண்ணத்தகடு.

**காக்காய்வலிப்பு** – கால் கை வலிப்பு நோய்வகை.

**காக்காரர்** – தோட்சுமைக்காரர்; பல்லக்குக் காத் தண்டுகளைச் சுமப்போர்.

**காக்காவெனல்** – காக்கையின் ஒலிக்குறிப்பு.

**காக்குறட்டை** – காக்கணங்கொடிவகை.

**காக்கை** – காகம்; அவிட்டநாள்.

**காக்கைக் கண்ணன்** – மாறுகண்ணன்.

**காக்கைக்குணம்** – மடியின்மை, கலங்காமை, நெடுகக் காண்டல், பொழுது இறவாது இடம் புகுதல், மறைந்த புணர்ச்சி ஆக ஐந்தும் காக்கையின் தன்மைகள்.

**காக்கைக்கொடியாள்** – மூதேவி.

**காக்கைப்பொன்** – காண்க: **காக்காய்ப்பொன்.**

**காக்கைமல்லி** – நுணாமரம்.

**காக்கைவலி** – காண்க: **காக்காய்வலிப்பு.**

**காக்கைவேலி** – உத்தாமணி, வேலிப்பருத்தி.

**காகச்சிலை** – காந்த சக்தியுள்ள ஒருவகை இரும்புக்கட்டி.

**காகத்துரத்தி** – ஆதொண்டைக்கொடி.

**காகதாலி(லீ)யம்** – காகம் பனையில் உட்காரப் பழம் விழுதல்போல் இயல்பாக நடைபெறும் செயலை ஒருவன் தன்மேலேற்றிக்கொள்ளும் நெறி.

**காகதாளி** – கருங்காலி.

**காகதாலீயம்** – காண்க: **காகதாலியம்.**

**காகதுண்டம்** – அகில்.

**காகதுண்டி** – ஒருவகைப் பித்தளை; கஞ்சாப் பூண்டு.

**காகதுவசம்** – வடவைத் தீ, ஊழித் தீ.

**காகதேரி** – மணித்தக்காளிச்செடி.

**காகந்தி** – காவிரிப்பூம்பட்டினம்.

**காகநதி** – அகத்திய முனிவர் கமண்டல நீரைக் காகம் கவிழ்த்ததால் வந்த ஆறு, காவேரி ஆறு.

**காகநாசம்** – நரிமுருங்கை.

**காகப்புள்** – காக்கை; அவிட்டநாள்.

**காகபதம்** – ஒரு காலவளவு, 65,536 கணங் கொண்ட காலவகை.

**காகபலம்** – வேம்பு; எலுமிச்சமரம்.

**காகபலி** – பகலில் உணவு கொள்ளுவதற்கு முன்பு காகத்துக்கு இடும் உணவு.

**காகபாதம்** – வயிரக் குற்றங்களுள் ஒன்று.

**காகபிந்து** – கரும்புள்ளி.

**காகபீலி** – குன்றிக்கொடி.

**காகம்** – காக்கை; அவிட்டநாள்; கீரி; கற்பகம்.

**காகமாசி** – மணித்தக்காளி.

**காகரி** – திப்பிலி.

**காகரூடி** – பன்றி.

**காகலீரவம்** – குயில்.

**காகலூகம்** – ஆந்தை.
**காகவாகனன்** – காக்கையை ஊர்தியாகவுடைய சனி.
**காகளம்** – எக்காளம், ஒருவகை வாத்தியம்.
**காகாபிசாசு** – இரத்தமுண்ணும் வௌவால்.
**காகாரி** – ஆந்தை.
**காகாலன்** – அண்டங்காக்கை.
**காகாவிரிச்சி** – காண்க: **காகாபிசாசு**.
**காகி** – விளாமரம்.
**காகித்தம், காகித்திரம்** – குறிஞ்சாக்கொடி.
**காகிதம்** – தாள், கடுதாசி; கடிதம்.
**காகு** – கூறப்படாத பொருளைத் தரக்கூடிய சொல்லின் ஓசை வேறுபாடு.
**காகுத்தன்** – ககுத்த வமிசத்தில் தோன்றிய இராமன்.
**காகுளி** – பேய்போலக் கத்திப் பாடுதல்; தொண்டையில் உண்டாகும் மந்தவோசை; இசை; தவிசு.
**காகூவெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**காகொடி** – எட்டிமரம்.
**காகோடகி** – வாலுளுவை என்னும் மருந்து.
**காகோடி** – காண்க: **காகொடி**.
**காகோடியன்** – கழைக்கூத்தன்.
**காகோதம், காகோதரம்** – பாம்பு.
**காகோலம்** – காண்க: **காகாலன்**.
**காகோளி** – அசோகமரம்; கொடியரசமரம்; தேட்கொடுக்கிமரம்.
**காங்கி** – பேராசைக்காரன்; வேலையாளர் தொகுதி.
**காங்கிசை** – விருப்பம்.
**காங்கு** – நீலப்புடைவை; பெரும்பானை; கோங்குவகை.
**காங்கூலம்** – சுட்டுவிரல், பெருவிரல், பேடுவிரல் (நடுவிரல்) என்னும் மூன்றும் ஒட்டிநிற்க, மோதிரவிரல் முடங்கிச் சிறுவிரல் நிமிர்ந்து நிற்கும் இணையா வினைக்கை.
**காங்கெயம்** – ஒருவகைப் பொன்.
**காங்கேயன்** – கங்கையில் தோன்றிய முருகக் கடவுள்; கங்கையின் மகனான வீடுமன்.
**காங்கை** – வெப்பம்.
**காச்சக்கீரை, காச்சரக்கு, காச்சரக்குநார்** – புளிச்சைக்கீரை.
**காச்சி** – துவரை.
**காச்சிரக்கு** – காண்க: **காச்சக்கீரை**.
**காச்சுப்பீச்செனல், காச்சுமூச்செனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**காச்சுரை** – காண்க: **காச்சக்கீரை**.
**காசசுவாசம்** – காச இழுப்பு.
**காசண்டி** – வாயகலமுள்ள ஒருவகை ஏனம்.
**காசநீர்** – காசநோய்க்குக் காரணமான கெட்ட நீர்.
**காசம்** – ஈளைநோய்; கோழை; நாணல்; வானம்; பளிங்கு; கண்ணோய்வகை; பொன்.
**காசமர்த்தகம்** – பெரும்புல்.
**காசரம்** – எருமை.
**காசறை** – கத்தூரிவிலங்கு; கத்தூரி; மயிர்ச் சாந்து; மணி.
**காசறைக்கரு** – கத்தூரிவிலங்கின் குட்டி.
**காசனம்** – கொலை.
**காசா** – காயாஞ்செடி; நாணல்; எருமை; சொந்தம்; அசல்விலை; மிகவும் சிறந்த; துணி வகை; தலைவன்.
**காசாக்காரன்** – சொந்தக்காரன்.
**காசாப்பற்று** – தனது பற்று.
**காசாம்பாரை** – ஒரு மீன்வகை.
**காசாம்பூவண்ணன்** – திருமால்; துரிசு; காய்ச்சற் பாடாணம்.
**காசாயம்** – ரொக்க வரும்படி.
**காசி** – ஒரு நகரம்; செப்புக்காசு; காசிக்குப்பி; சீரகம்; சிரமம்; காசு.
**காசிக்கமலம்** – பட்டை தீர்ந்த வயிரக் கல்வகை.
**காசிக்கல்** – காகச்சிலை; காந்த சத்தியுள்ள ஒரு வகை இரும்புக் கட்டு.
**காசித்தீர்த்தம்** – காசியில் எடுக்கப்படும் கங்கை நீர்.
**காசித்தும்பை** – தும்பைச் செடியில் ஒருவகை.
**காசிமணிமாலை** – ஒருவகைக் கழுத்தணி.
**காசிரம்** – வட்டம்.
**காசிரோர்த்தம்** – வறட்சுண்டி; தொட்டாற் சுருங்கி.
**காசினி** – பூமி.
**காசு** – பொன்; அச்சுத்தாலி; குற்றம்; நாணயம்; சிறு செப்புக்காசு; மணி; வெண்பாவின் இறுதிச் சீருள் ஒன்று; கோழை; சூதாடுகருவி.
**காசுக்கட்டி** – ஒருவகை மருந்துச் சரக்கு; மர வகை.
**காசுக்கடை** – பணம் மாற்றும் கடை; தங்கம், வெள்ளி விற்கும் இடம்.
**காசுக்காரன்** – காசுக்கடைக்காரன்; செல்வன்.
**காசுகட்டுதல்** – செப்புக்காசால் விளையாடுதல்; பணம் வைத்துச் சூதாடுதல்.
**காசுகல்** – நிறைகல்.
**காசுமண்** – காவிக்கல்.
**காசுமாலை** – பொற்காசு கோத்த மாலையணி.
**காசை** – காயாஞ்செடி; நாணல்; காசநோய்; புற்பற்றை.

**காசையாடை** – காவித்துணி.
**காஞ்சனம்** – பொன்; புன்கமரம்.
**காஞ்சனி** – மஞ்சள்; பொன்னிறம்; கோரோசனை; காட்டாத்தி.
**காஞ்சா** – கஞ்சாச்செடி.
**காஞ்சி** – காஞ்சிபுரம்; ஆற்றுப் பூவரசு; காஞ்சிப் பூமாலை; காஞ்சித்திணை; நிலையின்மை; செவ்வழிப்பண்வகை; நொய்யலாறு; நாதாங்கி; மகளிர் இடையணி; மயிர்; பெருமை; அறிவு.
**காஞ்சிகா(கை)** – காண்க: **காஞ்சிரம்.**
**காஞ்சித்திணை** – வீடுபேறு நிமித்தமாகப் பல் வேறு நிலையாமைகளைச் சாற்றும் புறத் திணை; வீரன் காஞ்சி மலர்மாலை அணிந்து பகைவர்முன் எதிரூன்றி நிற்றலைக் குறிக்கும் புறத்திணை.
**காஞ்சியம்** – வெண்கலம், உபதாதுக்களுள் ஒன்று.
**காஞ்சியெதிர்வு** – எதிரூன்றும் படையை மேலிடாது தடுக்கும் வீரனுடைய திறமையைக் கூறும் புறத்துறை.
**காஞ்சிரங்காய்** – எட்டிக்கொட்டை.
**காஞ்சிரம், காஞ்சிரை** – எட்டிமரம்.
**காஞ்சுகம்** – சட்டை.
**காஞ்சுகன்** – சட்டை போட்ட மெய்காப்பாளன்.
**காஞ்சுகி** – காஞ்சுகன்; சட்டை.
**காஞ்சொறி, காஞ்சோன்றி** – பூண்டுவகை.
**காட்சி** – பார்வை; காணல்; தோற்றம்; தரிசனம்; கண்காட்சி; வியத்தகு காட்சி; காட்சியளவை; அறிவு; தலைமகளைத் தலைமகன் முதலில் காணுதலைக் கூறும் கைக்கிளைத் துறை; வீரர் வீரபத்தினியர்க்கு ஏற்ற நடுகல்லை ஆராய்ந்து காணும் புறத்துறை; நடுகல்லை வீரர் தரிசித் தலைக் கூறும் புறத்துறை; அழகு; தன்மை; நூல்.
**காட்சிப்பிரமாணம்** – நேராகக் காண்டல்.
**காட்சிப்பொருள்** – காணப்படும் பொருள்; கையுறை.
**காட்சிமறைத்தல்** – எண் குற்றத்துள் உண்மைக் கொள்கையைக் காணவொட்டாமல் தடுக்கும் செயல்.
**காட்சியணி** – ஓரணி; உவமான உவமேயங்களின் தன்மையை ஒன்றற்கொன்று ஏற்றிக் கூறுதல்.
**காட்சியர், காட்சியவர்** – அறிஞர்.
**காட்சியளவை** – காண்டல் அளவை.
**காட்சியறிவு** – பொருளை நேரிற்கண்டு அறியும் அறிவு.
**காட்சியோகு** – ஞானயோகம்.
**காட்சிவரி** – தன் வருத்தத்தைப் பலரும் காணும் படி நடிக்கும் கூத்து; காட்சிகளின்பொருட்டு ஏற்பட்ட வரி.
**காட்டகத்தமிர்து** – காட்டில் உண்டாகும் பொருள்களாகிய அரக்கு, உலண்டு, தேன், மயிற்பீலி, நாவி என்பன.
**காட்டகத்தி** – வீழிச்செடி.
**காட்டணம்** – பெருங்குமிழ்.
**காட்டத்தி** – பேயத்திமரம், மரவகை.
**காட்டப்பெறுதல்** – உரிமைகொண்டாடுதல்.
**காட்டம்** – விறகு; சிறுகோல்; வெண்கலம்; சினம்; உறைப்பு; மிகுதி.
**காட்டரண்** – நால்வகை அரண்களுள் காடாகிய அரண்.
**காட்டலரி** – அலரிவகை; நச்சுப்பாலுள்ள மரம்; பாலைவகை.
**காட்டவீணை** – வீணை.
**காட்டவுரி** – அவுரிவகை; புனல்முருங்கை.
**காட்டழல்** – காட்டுத் தீ.
**காட்டா** – காட்டுப் பசு.
**காட்டாக்கி** – கட்டையைக் கடைந்துண்டாக்கும் நெருப்பு.
**காட்டாடு** – விலங்குவகை.
**காட்டாத்தி** – திருவாத்தி.
**காட்டாமணக்கு** – ஆமணக்குவகை, பேயா மணக்கு.
**காட்டாள்** – நாகரிகமில்லாதவன், முரடன்.
**காட்டாளத்தி** – இசையின் ஆலாபனவகை.
**காட்டாறு** – வெள்ளத்தால் திடீரெனப் பெருகும் சிற்றாறு; காட்டிலோடுஞ் சிற்றாறு.
**காட்டான்** – நாகரிகமில்லாதவன்; அயலான்; காட்டுப் பசு.
**காட்டி** – பன்றி.
**காட்டிக்கொடுத்தல்** – கற்றுக்கொடுத்தல் ; குற்றத்தை வெளிப்படுத்தல்; தன் பக்கத்தானை எதிரிக்குக் காட்டிக்கொடுத்தல்.
**காட்டிமறைத்தல்** – எளிதிற் கிடைப்பதுபோல் தோற்றுவித்து ஏமாறச் செய்தல்; தடுத்து ஆட்கொள்ளுதல்.
**காட்டில்** – காண்க: **காட்டிலும்.**
**காட்டிலம்** – வாழை.
**காட்டிலமிர்து** – காண்க: **காட்டகத்தமிர்து.**
**காட்டிலவு** – கோங்கிலவுமரம்; பேயிலவுமரம்.
**காட்டிலும்** – உடன்; உறழ்ச்சிப் பொருள் குறிக்கும் ஓர் இடைச்சொல்.
**காட்டிலுமிழி** – நாகரவண்டு.

**காட்டிலேபோதல்** – வீணாய்க் கழிதல்.

**காட்டீஞ்சு,**
**காட்டீந்து** } – ஈச்சமரம்.

**காட்டீருள்ளி** – நரிவெங்காயம்.

**காட்டு** – காண்பித்தல்; எடுத்துக்காட்டு; ஒளி; துணைக்கருவி; உறைப்பு; குப்பை.

**காட்டுக்கட்டை** – பலவித மரங்களின் விறகு.

**காட்டுக்கருணை** – ஒருவகைப் பூடு; சேனைக் கிழங்குவகை.

**காட்டுக்கல்** – ஒருவகை முருட்டுக்கல்.

**காட்டுக்காய்ச்சுரை** – சுரைவகை; புளிச்சை வகை, முட்புளிச்சை.

**காட்டுக்கிராம்பு** – நீர்க் கிராம்பு.

**காட்டுக்கிரியை** – ஈமச்சடங்கு.

**காட்டுக்கீரை** – காட்டில் கிடைக்கும் பலவகைக் கீரை.

**காட்டுக்கொடி** – கசப்புள்ள ஒருவகைக் கொடி; நன்னாரிவகை.

**காட்டுக்கொள்** – கருங்காணம்; காலியாந் துவரை.

**காட்டுக்கோழி** – சம்பங்கோழி; கற்கவுதாரி.

**காட்டுத்தம்பட்டன்** – வாளவரைக் கொடிவகை.

**காட்டுத்தனம்** – முருட்டுத்தனம்.

**காட்டுத் தீ** – காட்டில் பற்றிய பெருந்தீ.

**காட்டுதல்** – காண்பித்தல்; அறிவித்தல்; மெய்ப் பித்தல்; நினைப்பூட்டுதல்; படையல்; உண் டாக்குதல்; அறிமுகஞ் செய்தல்; வெளிப் படுத்துதல்.

**காட்டுப்பச்சிலை** – பலவகைச் செடிகொடிகளின் இலைகள்; மரவகை.

**காட்டுப்படை** – காடுவாழ் இனத்தினின்று திரட்டப்பட்ட சேனை.

**காட்டுப்பயிர்** – தானே விளையும் பயிர், புன்செய்ப் பயிர்.

**காட்டுப்பன்றி** – பன்றி இனம்.

**காட்டுப்பாதை** – காட்டிற் செல்லும் வழி; நாட்டுப்புறத்து வழி.

**காட்டுப்பிள்ளை** – திக்கற்ற குழந்தை.

**காட்டுப் பீ** – குழந்தை பிறந்தவுடன் கழிக்கும் மலம்.

**காட்டுப்புத்தி** – மூடவறிவு.

**காட்டுப்பூவரசு** – ஒருவகைப் பூவரசமரம்

**காட்டுப்பூனை** – பூனையில் ஓர் இனம்.

**காட்டுப்பெண்சாதி** – வைப்பாட்டி.

**காட்டுமயிலம்** – காட்டுநொச்சி.

**காட்டுமரம்** – தாழ்ந்தவினமரக்கட்டை; காட்டில் உள்ள மரம்.

**காட்டுமல்லி** – நீண்ட மரமல்லி.

**காட்டுமழை** – நாட்டில் வெள்ளம் பெருகும்படி மலைக்காட்டிற் பெய்யும் மழை.

**காட்டுமனிதன்** – நாகரிகமற்றவன்; வாலில்லாக் குரங்கு.

**காட்டுமா** – சாரம்; மரவகை; புளிமா; உதளை; காட்டுவிலங்கு.

**காட்டுமிராண்டி** – விலங்காண்டி, நாகரிக மற்றவன், முரடன்; காட்டில் வாழ்வோன்.

**காட்டுமிருகம்** – வனவிலங்கு; கானக்குதிரை.

**காட்டுமிருகாண்டி** – காண்க: **காட்டுமிராண்டி.**

**காட்டுமுருங்கை** – மாவிலங்கைமரம்; ஆடா தோடை; காட்டுமுருக்கு; மரவகை.

**காட்டுரோகம்** – மாட்டுநோய்வகை.

**காட்டுவாரி** – காட்டாறு.

**காட்டுவெள்வெங்காயம்** – காண்க: **காட்டுள்ளி.**

**காட்டுவெள்ளரி** – பேய்க்கொம்மட்டி.

**காட்டுள்ளி** – நரிவெங்காயம்.

**காட்டெருமை** – எருமையினம்; எருக்கு; திருகு கள்ளி; சதுரக்கள்ளி; கூவை.

**காட்டெலுமிச்சை** – காட்டுநாரத்தை; காட்டுக் கொழுஞ்சி; நாய்விளா; மலைநாரத்தை.

**காட்டேறி** – கேடு விளைக்கும் ஒரு தேவதை.

**காட்டை** – திசை; எல்லை; 64 கணங்கொண்ட காலநுட்பம்; நுனி.

**காட்பு** – வைரம்.

**காடகம்** – ஆடை.

**காடபந்தம்** – தீவட்டி.

**காடமர்செல்வி** – கொற்றவை, துர்க்கை.

**காடர்** – காடுவாழ் சாதியார், ஆனைமலையில் வாழும் ஒரு சாதியார்.

**காடவன்** – பல்லவர்களின் சிறப்புப் பெயர்.

**காடவிளக்கு** – பெருவிளக்கு.

**காடன்** – மீன்வகை.

**காடாக்கினி** – பெருநெருப்பு, பெருந் தீ.

**காடாந்தகாரம்** – பேரிருள்.

**காடாரம்பம்** – நீர்ப்பாசனமில்லாத பகுதி.

**காடாரம்பற்று** – காட்டுப்புறம்.

**காடாவிளக்கு** – காண்க : **காடவிளக்கு.**

**காடாற்று** – பால்தெளிப்பு, சஞ்சயனம்.

**காடாற்றுதல்** – பிணம் சுட்ட மறுநாள் எலும்பு திரட்டிப் பால் தெளித்தல்.

**காடி** – புளித்த கஞ்சி; புளித்த கள்; சோறு; கஞ்சி; புளித்த பழரசம்; ஊறுகாய்; ஒருவகை வண்டி; ஒரு மருந்து; கழுத்து; நெய்; அகழி; கோட்டையடுப்பு; மாட்டுக்கொட்டில்; மர வேலையின் பொளிவாய்.

**காடிக்காரம்** – நெருப்புக்கல்.

**காடிகம்** – சீலை.

**காடிச்சால்** – காடி வைக்குஞ் சால்; மர வேலையின் பொளிவாய்.

**காடிச்சால்முலை** – வேள்விச்சாலையில் காடி வைக்கப்படும் வடகிழக்குத் திசை.

**காடியடுப்பு** – கோட்டடுப்பு, கோட்டையடுப்பு.

**காடியுளி** – இழைப்புளிவகை.

**காடிவெட்டுதல்** – பள்ளந்தோண்டுதல்.

**காடினியம்** – வன்மை, கடினத்தன்மை.

**காடு** – வனம்; மிகுதி; நெருக்கம்; செத்தை; எல்லை; நான்கு அணைப்புள்ள ஒரு நிலவளவு; சுடுகாடு; இடம்; புன்செய்நிலம்; சிற்றூர்; ஒரு தொழிற்பெயர் விகுதி.

**காடுகட்டுதல்** – விலங்கு பறவைகளைக் குறித்த இடத்தில் வாராமல் தடைசெய்தல்.

**காடுகலைத்தல்** – வேட்டைக்காரர் விலங்குகளைக் கலைத்தல்; வேலைக்காரரை அச்சுறுத்தல்.

**காடுகாட்டுதல்** – ஏமாற்றுதல்.

**காடுகாள், காடுகிழவோள், காடுகிழாள்** – கொற்றவை, துர்க்கை.

**காடுகிழான்வெயில்** – சூரியன் மறையுங்கால் தோன்றும் மஞ்சள்வெயில்.

**காடுகெடுத்தல்** – காடழித்தல்.

**காடுகெழுசெல்வி** – கொற்றவை.

**காடுகொல்லுதல்** – காட்டை வெட்டியழித்தல்.

**காடுகோள்** – விளைநிலம் காடுபற்றிப்போகை.

**காடுதரிசு** – செடிகள் முளைத்த தரிசுநிலம்.

**காடுபடுதல்** – நிரம்புதல்; வீணாதல்.

**காடுபடுதிரவியம்** – காட்டிலே உண்டாகும் பொருள்கள்.

**காடுபலியூட்டுதல்** – காட்டில் வாழும் தேவர்களுக்குப் பலியிடுதல்.

**காடுபிறாண்டி** – காடுவாரி.

**காடுமறைதல்** – சாதல்.

**காடுமேடு** – மேடாகவுள்ள தரிசுநிலம்.

**காடுமேய்தல்** – வீணாய்த் திரிதல்.

**காடுவாரி** – செத்தைவாருங் கருவி; கண்ட பொருளை எல்லாம் சேர்ப்பவன்; உயிர் வாழ்வதற்கென்று எத்தொழிலையுஞ் செய்பவன்.

**காடுவாழ்த்து** – எல்லோரும் இறந்து போகவும் தான் இறப்பின்றி நிலைபெற்ற புறங்காட்டை வாழ்த்தி உலகவியல்பை விளக்கும் ஒரு புறத்துறை.

**காடுவெட்டி** – மரம் வெட்டுபவன்; நாகரிகம் அற்றவன்; சிறு மண்வெட்டி; பல்லவர்களின் பட்டப்பெயர்; கள்ளர்களின் பட்டப்பெயருள் ஒன்று.

**காடேறுதல்** – காட்டிற்கு ஓடுதல்; இறக்குந் தறுவாயில் நோய்த்தெளிவு உண்டாதல்.

**காடை** – ஒரு பறவை, குறும்பூழ்.

**காடைக்கண்ணி** – காடையின் கண்போன்ற தினைவகை.

**காடையிறகு** – நாடகம் நடிப்போர் தலையில் அணியும் பலநிறமுள்ள இறகு.

**காண்** – காட்சி; அழகு; காணுதல்; முன்னிலையில் வரும் ஓர் உரையசை.

**காண்கை** – அறிவு.

**காண்டகம்** – காடு; நோய்; கமண்டலம்; நில வேம்பு.

**காண்டம்** – நூலின் பெரும்பிரிவு; மலை; எல்லை; காடு; நீர்; அம்பு; கோல்; குதிரை; அடிமரம்; ஆயுதம்; முடிவு; சமயம்; திரள்; அணிகலச்செப்பு; கமண்டலம்; நிலவேம்பு; திரைச்சீலை; ஆடை; சீந்தில்; புத்தி.

**காண்டமந்திரம்** – குதிரைகளை வானில் பறக்கச் செய்யும் மந்திரம்.

**காண்டல், காண்டலளவை** – கண்ணுக்கு நேராகப் பார்த்து அறிகை.

**காண்டவதகனன்** – காண்டவ வனத்தை எரித்த அருச்சுனன்.

**காண்டவம்** – காண்க: **காண்டாவனம்.**

**காண்டவன்** – இந்திரன்.

**காண்டாதிகிருதம்** – நிலவேம்பு முதலியவற்றால் ஆன நெய் வடிவாயுள்ள ஒரு கூட்டுமருந்து.

**காண்டாமிருகம்** – ஒரு விலங்கு, கல்யானை.

**காண்டாமிருகரத்தம்** – வேங்கைமரம்; பெருமர வகை; பிரம்புவகை; பிசின்வகை.

**காண்டாவனம்** – இந்திரனுக்குப் பிரியமான வனம்.

**காண்டாவனன்** – இந்திரன்.

**காண்டிகை** – கருத்து, சொற்பொருள், எடுத்துக் காட்டு அடங்கிய உரை. இம் மூன்றோடு வினாவும் விடையுமாய் ஐந்து கூறாயும் அமையும் உரை, சூத்திரப் பொருளைச் சுருங்க உரைக்கும் உரைவகை.

**காண்டியம்** – சரகாண்ட பாடாணம்; வெக்கை.

**காண்டி(டீ)ப(வ)ம்** – அருச்சுனன் வில்; தனுராசி.

**காண்டீப(வ)ன்** – அருச்சுனன்.

**காண்டு** – கூப்பிடுதூரம்; சினம்; துன்பம்.

**காண்டை** – முனிவர் உறைவிடம், கற்பாழி.

**காண்டோபக்கிரமணம்** – வேதத்தின் ஒவ்வொரு காண்டத்தையும் ஓதத் தொடங்குங்கால் செய்யும் கிரியை.

**காண்பவன்** – அறிகிறவன், ஞாதிரு.

**காண்பு** – காட்சி, காணுதல்.

**காண்பொங்கல்** – காண்க: **காணும்பொங்கல்.**

**காண்வரி** – பிறர் காணும்படி பலகாலும் வந்து நடிக்குங் கூத்து.

**காண்வருதல்** – காட்சிக்கு இலக்காகுதல்.

**காணபத்தியம்** – கணபதியை முதற் கடவுளாக வழிபடும் சமயம்.

**காணம்** – கொள்ளு; நிறுத்தலளவையுள் ஒன்று; பொன்; பொற்காசு; பொருள்; பாகம்; செக்கு.

**காணம்போடுதல்** – செக்காட்டி எண்ணெயெடுத்தல்; அடிக்கடி தின்றுகொண்டே இருத்தல்.

**காணல்** – காணுதல்; குறித்தல்; மனத்தால் குறித்தல்; வணங்குதல்.

**காணலன்** – பகைவன்.

**காணலிங்கம்** – சிவகணங்களால் நாட்டப்பட்ட சிவலிங்கம்.

**காணன்** – ஒற்றைக்கண்ணன்.

**காணா** – சிறுபாம்பு.

**காணாக்கடி** – கடித்தது இன்னது என்று அறிய முடியாத நச்சுக்கடி; சிறுபாம்புக் கடி.

**காணாக்கண்ணிடுதல்** – பார்த்தும் பாராதது போலாதல்.

**காணாக்காட்சி** – வியத்தகு காட்சி, அற்புதக் காட்சி.

**காணாக்கிரகணம்** – பாதாளக் கிரகணம்.

**காணாக்கோல்** – தெரியாது வந்து தைக்கும் அம்பு.

**காணாக்கோள்** – மறைந்து சிறுபான்மையாகப் புலப்படும் கோள்கள்.

**காணாசி** – காணியாட்சி, உரிமைநிலம்.

**காணாத்தலம்** – ஆண்பெண்குறிப் பொது.

**காணார்** – குருடர்; பகைவர்.

**காணாவுயிர்** – நுண்ணிய உடம்புள்ள உயிரி.

**காணி** – உரிமையான இடம்; ஓர் எண்; நிலம்; நூறு குழி அளவுள்ள நிலம்; வழிவழியுரிமை; ஒரு சிற்றளவு; காணியாட்சி; ஒரு மஞ்சாடி நிறை; பொன்னாங்காணி.

**காணிக்கடன்** – நிலவரி.

**காணிக்காரன்** – நிலச்சொந்தக்காரன்; ஊர்ப் பங்காளி; ஒரு மலைச்சாதியான்.

**காணிக்கை** – கடவுளுக்கு அல்லது பெரியோருக்கு விரும்பி அளிக்கும் பொருள், கையுறை.

**காணித்தாயம், காணித்தாயவழக்கு** – பங்காளிகளின் நில வழக்கு.

**காணித்துண்டு** – நிலத்தின் சிறுபகுதி.

**காணிப்பற்று** – உரிமை ஊர்.

**காணிப்பூமி** – காண்க: காணியாட்சி.

**காணிமானியம்** – சர்வமானியம்; ஊர்ப் பங்காளிகளுக்குப் பொதுவான மானியம்.

**காணியாட்சி** – உரிமைநிலம்.

**காணியாளன்** – உழவின்மேல் ஊக்கமுள்ள குடிமகன்; காணியாட்சியுள்ளவன்; வேளாளருள் ஒரு பிரிவினர்; அத்துவைதக் கொள்கையைத் தழுவிய பார்ப்பனப் பிரிவு.

**காணுதல்** – அறிதல்; காண்டல்; சந்தித்தல்; செய்தல்; வணங்குதல்.

**காணும்** – முன்னிலைப் பன்மையில் வரும் ஓர் அசைச்சொல்.

**காணும்பொங்கல்** – தை மூன்றாம்நாள் மாட்டுப் பொங்கலையடுத்து ஒருவரையொருவர் கண்டு நலம் கேட்கும் கொண்டாட்ட நாள்.

**காணுமோர்** – காண்பவர்.

**காத்தட்டி** – ஆதொண்டைக்கொடி.

**காத்தண்டு** – காவடியின் தண்டு.

**காத்தல்** – பாதுகாத்தல்; அரசாளுதல்; எதிர் பார்த்தல்; விலக்குதல்.

**காத்தவராயன்** – ஓர் ஊர்த் தேவதை; காவல் புரிபவன்.

**காத்தான்** – காத்தவராயன்.

**காத்தியம்** – கடித்துண்ணும் உணவு.

**காத்தியாயனி** – பார்வதி; கொற்றவை.

**காத்திரம்** – கீரி; சினம்; உடல்; உறுப்பு; யானையின் முன்னங்கால்; கனம்; பருமன்; முக்கியம்; பாம்பு.

**காத்திரவேயம்** – பாம்பு.

**காத்திரவேயர்** – பாதாளத்தில் வசிக்கும் நாகர்.

**காத்திரன்** – வலியோன்.

**காத்திரி** – கீரி; சினம்; படைக்கலம்.

**காத்திருத்தல்** – வரவுபார்த்திருத்தல்; காவல் பூண்டிருத்தல்.

**காத்திரை** – ஆயுதம்.

**காத்தூட்டுதல்** – தனது கொள்கையை அடிக்கடி எடுத்தாண்டு மகிழ்வூட்டுதல்.

**காத்தூலம்** – பண்டைக்காலத்து வழங்கிய துகில் வகை.

**காத்தொ(தோ)ட்டி** – ஆதொண்டைக்கொடி.

**காதகம்** – கொலை; பீடித்தல்.

**காதகன்** – கொலையாளன்; கொடியவன்.

**காதடைத்தல், காதடைப்பு** – செவிடுபடல்; நோய் முதலிய வற்றால் காது கேளாது போதல்; பசிமிக்க நிலையில் ஏற்படும் சோர்வு.

**காதம்** – ஏழரை நாழிகை வழித்தொலைவு; கொலை; கள்; நாற்சதுரமான கிணறு.

**காதம்பம்** – அன்னப்பறவைவகை; கானாங்கோழி.

**காதம்பரி** – கள்; வடமொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்ட ஒரு தமிழ்க் காப்பியம்.

**காதர்** – வரம்பிலா ஆற்றலுள்ள கடவுள்.

**காதரம், காதரவு** – அச்சம்; தீவினைத் தொடர்பு.

**காதரன்** – அச்சமுள்ளோன்.

**காதல்** – அன்பு; காமவிச்சை; பத்தி; வேட்கை; ஆவல்; மகன்; சிற்றிலக்கியவகையுள் ஒன்று; கொல்லுதல்; தறித்தல்; ஆந்தைக்குரல்.

**காதலவர்** – அன்புக்குரியவர்; சுற்றத்தார்.
**காதல(லா)ன்** – அன்பிற்குரியவன்; தோழன்; கணவன்; மகன்.
**காதலி** – அன்புக்குரியவள்; தோழி; மனைவி; மகள்.
**காதலித்தல்** – அன்புகொள்ளுதல், விரும்புதல்.
**காதலித்தவன், காதலித்தோன்** – அன்பன்.
**காதலோன்** – தலைவன்; மகன்.
**காதவம்** – நிலவேம்பு; வான்கோழி.
**காதற்பரத்தை** – சேரிப்பரத்தையின் மகளாய்த் தலைவனது காதற்கு உரிமைபூண்டு அவனையே சார்ந்திருப்பவள்.
**காதற்பாங்கன்** – தலைவனுக்கு உற்ற நண்பன்.
**காதற்பிள்ளை** – உரிமைப்பிள்ளை, அன்புமகன்.
**காதற்ற முறி** – செலுத்தற்குரியதைத் தீர்த்துக் கிழித்துவிட்ட ஓலைப்பத்திரம்.
**காதற்றோழி** – தலைவியின் அன்புக்குரியவள்.
**காதறுத்தல்** – காதின் துளையை அறுத்தல்; பத்திரத்தை அறுதியாகத் தீர்த்துக் கிழித்து விடுதல்.
**காதறுதல்** – காதின் துளை அறுதல்; பத்திரம் தீர்க்கப்பெற்றுக் கிழிபடுதல்; செருப்பின் வாரறுதல்; ஊசித்துளை முறிதல்; கவணில் கல் வைக்கும் இடம் அற்றுப்போதல்; பகை கொள்ளுதல்.
**காதறுப்பான்** – காதைச் சுற்றிவரும் புண்.
**காதறை** – காதறுபட்ட ஆள்; காதுக்குழி.
**காதறைகூதறை** – ஒழுக்கங்கெட்டவள்.
**காதறைச்சி** – சண்டைபிடிப்பவள்.
**காதன்** – கொலைசெய்பவன்.
**காதன்மை** – அன்பு; ஆசை.
**காதி** – ஈரிழைத் துணி; முரட்டுத்துணி; கதர்த் துணி; விசுவாமித்திர முனிவரின் தந்தை; ஒரு வகைக் கன்மம்; மிருதபாடாணம்; கொலை.
**காதிகன்** – முத்திக்குப் பாதகமாயுள்ள கன்மங்கள்.
**காதிரைச்சல்** – காதடைப்பால் உண்டாகும் குமுறல்.
**காதில்விழுதல்** – காதுக்குச் செய்தியெட்டுதல்.
**காதிலடிபடுதல்** – அடிக்கடி செய்தி கேட்கப் படுதல்.
**காதிலி** – செவிடன்; செவிடி.
**காதிலோதுதல்** – மந்திர உபதேசம் செய்தல்; இரகசியம் சொல்லுதல்; கோட்சொல்லுதல்.
**காதிவென்றோன்** – அருகன்.
**காது** – செவி; ஊசித்தொளை; கொலை; கவணில் கல் வைக்கும் இடம்; புகையிலையின் காம்பு; ஏனங்களின் விளிம்புப்பிடி.
**காதுக்கரப்பான்** – காதின் வெளிப்புறத்திற் காணும் நோய்.
**காதுக்குடைச்சல்** – காதுநோய்வகை.
**காதுக்குறும்பி** – காதழுக்கு; குறும்பி வாங்கி.
**காதுகன்** – கொலைகாரன்; கொடியோன்.
**காதுகிழித்தல்** – பத்திரத்தை ரத்துச் செய்து கிழித்தல்.
**காதுகிள்ளுதல்** – காதுகிழித்தல்; காதுகுத்துதல்.
**காதுகுடைதல்** – காதில் குடைச்சல்நோய்வருதல்; காதுக் குறும்பி எடுத்தல்.
**காதுகுத்தல், காதுகுத்துதல்** – காதில் அணிகலன் அணியும் சடங்கு செய்தல்; வஞ்சித்தல்; காதுக்குள் நோவெடுத்தல்.
**காதுகுளிர்தல்** – செவிப்புலனுக்கு இன்பமாதல்.
**காதுகொடுத்தல்** – உற்றுக்கேட்டல்.
**காதுச்சோணை** – காதின் தண்டு.
**காதுசெய்தல்** – காதுவளர்த்தல்.
**காதுதல்** – கூறுசெய்தல்; கொல்லல்; தறித்தல்.
**காதுதூர்தல்** – காதுமடலின் துளை தூர்தல்.
**காதுப்பூச்சி** – செவிப்பாம்பு.
**காதுபெருக்குதல்** – காதுவளர்த்தல்.
**காதுமடல்** – புறக்காது.
**காதுமந்தம்** – காது நன்றாகக் கேளாமை.
**காதுவிடாய்** – பசி முதலியவற்றால் உண்டாகும் காதடைப்பு.
**காதெழுச்சி** – சதை வளர்ந்து காதைச் செவிடுபடுத்தும் நோய்வகை.
**காதை** – வரலாறு, சரித்திரம்; சொல்; பாட்டு; கதைகொண்ட பகுதி; கொலை; தாளத்தின் அடிப்பு.
**காதைகரப்பு** – மிறைக்கவியுள் ஒன்று, ஒரு செய்யுளை முடிய எழுதி அதன் ஈற்று மொழியுள் முதலெழுத்துத் தொடங்கி ஓரோர் எழுத்து இடையிட்டுப் படிக்கப் பிறிதொரு செய்யுள் வரப் பாடும் மிறைக்கவி.
**காதைநெறித்தல்** – கூர்ந்து கேட்குமாறு குதிரை முதலிய விலங்குகள் காதை நிமிர்த்தல்.
**காதோதி** – தீய எண்ணத்தோடு இரகசியம் ஓதுவோன்.
**காதோலை** – காதுக்கிடும் பனையோலை; மகளிர் காதணி.
**காந்தக்கம்பி** – இடிதாங்கி; மின்சாரக் கம்பி.
**காந்தக்கல்** – அயக்காந்தம்.
**காந்தசத்துரு** – காந்தத்துக்கு மாற்றுச்சரக்கு; நவச்சாரம்; வெடியுப்பு.
**காந்தப்பர்** – கந்தருவர்.
**காந்தப்பெட்டி** – திசையறிகருவி.
**காந்தபசாசம்** – காந்தக் கல்.
**காந்தபட்சி** – அழகு பறவையான மயில்.

**காந்தம்** – காந்தக்கல்; ஒருவகைப் பளிங்கு; அழகு; மின்சாரம்; கந்தபுராணம்.

**காந்தம்பிடித்தல், காந்தம்வலித்தல்** – காந்தம் இரும்பை இழுத்தல்.

**காந்தமண்** – காந்தச் சத்துள்ள செம்மண்.

**காந்தமணி** – காந்தக்கல்.

**காந்தமலை** – பூமியின் வடகோடியில் காந்த மயமாகவுள்ளதாகக் கருதப்படும் மலை.

**காந்தர்(ரு)ப்பம்** – காந்தருவம்; கந்தருவர் அம்பு.

**காந்தர்ப்பர்** – கந்தருவர்.

**காந்தருவம்** – காதலர் தம்முள் மனமொத்துக் கூடுங் கூட்டம்; இசைப்பாட்டு; காந்தருவ வேதம்.

**காந்தருவமணம்** – தலைவியும் தலைவனும் தாமாகவே கூடும் கூட்டம்.

**காந்தருவர்** – கந்தருவர்; பாடுவோர்.

**காந்தருவவாதம்** – அறுபத்து நான்கு கலையுள் ஒன்றான இசைக்கலை.

**காந்தருவவிவாகம்** – காண்க: **காந்தருவமணம்.**

**காந்தருவவேதம்** – இசைக்கலை.

**காந்தருவி** – பாடுபவள்.

**காந்தல்** – காந்துகை; உமி, ஓலை முதலியவற்றின் எரிந்த கருகல்; காய்ந்த பயிர்; தீய்ந்து போதல்; சினம்.

**காந்தவண்டி** – இருப்புப்பாதையில் செல்லும் மின்வண்டி.

**காந்தவர்** – காண்க: **காந்தருவர்.**

**காந்தள்** – கார்த்திகைப் பூ; காந்தள் மலரணிந்து வேலன் வெறியாடுவதைக் கூறும் புறத்துறை; முருகக் கடவுளுக்குரிய காந்தளைச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை; சவர்க்காரம்.

**காந்தளிகம்** – சின்னிமரம்.

**காந்தற்சோறு** – கரிந்த சோறு.

**காந்தன்** – அரசன்; எப்பொருட்கும் இறைவன்; கணவன்; தலைவன்; சந்திரன்; மன்மதன்.

**காந்தாரக்கிராமம்** – தேவலோகத்து வழங்குவதாகக் கொள்ளப்படும் இசைச் சுரவகை.

**காந்தாரபஞ்சமம்** – பாலையாழ்த் திறங்களுள் ஒன்று.

**காந்தாரம்** – வடமேற்கு இந்திய நாடுகளுள் ஒன்று, ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று; ஏழிசையுள் ஒன்று, பாலையாழ்த்திறம்; காடு.

**காந்தாரி** – துரியோதனனின் தாய்; கொடியவள்; தசநாடியுள் ஒன்று; சிவனார்வேம்பு; சத்தி சாரம்; ஒரு பண்வகை.

**காந்தாரி மைந்தன்** – துரியோதனன்.

**காந்தாளம்** – எரிச்சல்; சினம்.

**காந்தி** – அழகு; ஒளி; கதிர்; சிலாசத்து; வைடூரியம்; அணிவகை.

**காந்திகொள்ளுதல்** – உடம்பு சூடுகொள்ளுதல்.

**காந்திப்போதல்** – சோறு முதலியன கரிந்து போதல்.

**காந்திமதி** – ஒளியுள்ளவள்; குபேரன் பட்டணம்.

**காந்திமான்** – ஒளியுள்ளவன்.

**காந்திருவம்** – காந்தருவம்; கந்தருவலோகம்.

**காந்துகம்** – வெண்காந்தள்.

**காந்துகன்** – பந்தடிப்போன்; பலகாரம் விற்பவன்.

**காந்துதல்** – எரிதல்; வெப்பங்கொள்ளுதல்; கருகிப்போதல்; மனம் வேகுதல்; ஒளிவீசுதல்; பொறாமைப்படுதல்; வீணாய் எரிதல்; சினத்தல்; சுடுதல்; பல்லால் சுரண்டுதல்.

**காந்தை** – பெண்; மனைவி; தலைவி.

**காந்தைக்கண்** – இரண்டு இமைகளையும் விரித்து விழிக்கும் அபிநயக் கண்.

**காப்பரிசி** – பிறந்த குழந்தைகளுக்குக் காப்பிடும் நாளில் வழங்கும் பாகு கலந்த அரிசி; திருமணம் முதலிய காலங்களில் காப்புநாண் கட்டும்போது கையிலிடும் அரிசி; கிறித்து பிறந்த பதின்மூன்றாம் நாள் திருவிழாவில் கோயிலில் வழங்கும் பாகுகலந்த அரிசி.

**காப்பவிழ்த்தல்** – திருமணம் முதலிய சடங்குகளில் காப்புக் களைதல்.

**காப்பாடுதல்** – மறைத்துக் காத்தல்.

**காப்பாள்** – காவல் வீரன்.

**காப்பாற்றுதல்** – பாதுகாத்தல், ஆதரவளித்தல்.

**காப்பி** – ஒருவகைச் செடி; குடிநீர்; படி, நகல்.

**காப்பிடுதல்** – நெற்றியில் திருநீறு அல்லது மண்ணைக் குழைத்திட்டுக் காப்புச் செய்தல்; காப்புநாண் கட்டுதல்; பிறந்த குழந்தைக்குக் காப்புப்பூட்டுதல்; ஆவணங்களில் அரசு முத்திரை இடுதல்.

**காப்பியக் கலித்துறை** – நெடிலடி நான்காய் வரும் கலித்துறை.

**காப்பியக்குடி** – பழைய அந்தணர்குடி; சீகாழிக்கு அயலிலுள்ள ஓர் ஊர்.

**காப்பியன்** – சுக்கிரன்.

**காப்பிரிமிளகாய்** – குடைமிளகாய்.

**காப்பில்** – மீன்பிடிக்க உதவும் கூரிய ஓர் ஆயுதம்; தோணியின் உறுப்புகளுள் ஒன்று.

**காப்பீடு** – பாதுகாத்தல்; காக்கப்படுவது.

**காப்பு** – பாதுகாவல்; காவலாயுள்ளது; காப்பு நாண்; தெய்வ வணக்கம்; காப்புப் பருவம்; திருநீறு; கைகால்களில் அணியும் வளை; வேலி; மதில்; கதவு; அரசமுத்திரை; ஏட்டுக் கயிறு; காவலான இடம்; ஊர்; திக்குப்பாலகர்; சிறை; மிதியடி; அரசன் நுகர்பொருள்.

**காப்புக்கட்டுதல்** – கோயில் திருவிழாத் தொடங்குதல்; ஊக்கத்துடன் செயலில் இறங்குதல்; மூலிகைக்குக் காப்புநாண் கட்டுதல்; நேர்த்திக் கடனுக்கு மஞ்சள்நூல் அணிதல்.

**காப்புக்கடவுள்** – திருமால்.

**காப்புக்கரப்பறிதல்** – பொருள் அறிந்து ஏட்டெழுத்தைப் படித்தல்.

**காப்புக்காடு** – காவற்கட்டுள்ள காடு.

**காப்புச்செய்தல்** – ஓலைச் சுவடியைக் கட்டிவைத்தல்.

**காப்புத்தடை** – விழாக்காலத்தில் காப்புக் கட்டுதலால் நிகழும் பயணத்தடை.

**காப்புதாரி** – தற்காப்புரிமை.

**காப்புநாண்** – இரட்சையாகக் கட்டும் மஞ்சட்படுத்தின நூற்கயிறு.

**காப்புநீக்குதல்** – ஓலைச்சுவடியைக் கட்டவிழ்த்துத் திறத்தல்.

**காப்புப்பருவம்** – பிள்ளைத்தமிழ் கூறும் பருவங்களுள் முதற்பருவம்.

**காப்புமறம்** – காவல்வீரர்.

**காப்புமாலை** – தெய்வங்காப்பதாக மூன்று, ஐந்து அல்லது ஏழு பாடல்களாற் பாடப்படும் ஒரு சிற்றிலக்கியம்.

**காப்பொன்** – நூறு பலம் நிறையுள்ள பொன்.

**காபட்டியம்** – கபடத்தன்மை.

**காபணங்கட்டுதல்** – தெய்வத்துக்கு வேண்டிக் கொண்ட பணத்தை மஞ்சள் துணியிற் கட்டி வைத்தல்.

**காபணம்** – ஒற்றடம்.

**காபந்து** – பாதுகாவல்.

**காபரா** – குழப்பம்.

**காபாலம்** – பிரமன் தலையோட்டைக் கையிலேந்திச் சிவபிரான் ஆடுங் கூத்து; சைவத்தின் அகப்புறச் சமயம் ஆறனுள் ஆன்மா நித்திய மாய்ப் பலவாய்வியாபகமாய் இருப்பதென்றும் பச்சைக்கொடி பிடித்து மக்களின் தலையோட்டில் ஐயமேற்றுண்பவர் முத்தராய்ச் சிவசமம் ஆவரென்றும் கூறும் சமயம்.

**காபாலமதம்** – சைவசமயத்தின் ஒரு பிரிவு

**காபாலன்,**
**காபாலி** } – சிவன்; காபால மதத்தான்.

**காபி** – ஒரு பண்வகை; காப்பி.

**காபில்** – திறமையாளன்.

**காபிலம்** – கபிலர் மதமான சாங்கியம்; தலை தொடங்கிக் காலளவும் ஈரத்துணியால் உடம்பைத் துடைத்துக்கொள்ளுதலாகிய நீராட்டு வகை.

**காபினி** – நவச்சாரம்.

**காபோதி** – கண்ணிலி; அறிவிலி.

**காம்பி** – நீர் இறைக்குங் கருவி.

**காம்பிரம்** – முருக்கு.

**காம்பிலி,**
**காம்பிலியம்** } – வடநாடுகளுள் ஒன்று.

**காம்பீரம்,**
**காம்பீரியம்** } – பெருமிதம், கம்பீரம்; ஆழம்.

**காம்பு** – பூ, இலை முதலியவற்றின் தாள்; மலர்க் கொம்பு; கருவிகளின் கைப்பிடி; மூங்கில்; ஆடைக்கரை; ஒருவகைப் பட்டாடை; பூசணி; அம்புச்சிறகு.

**காம்புக்கிண்ணம்** – கைப்பிடியுள்ள ஏனம்.

**காம்புச்சத்தகம்** – ஓலை வாருஞ் சிறுகத்தி.

**காம்புச்சல்லடை** – சல்லடைவகை.

**காம்புப்புகையிலை** – காம்புடன்கூடிய புகையிலை.

**காம்போகி** – குன்றி.

**காமக்கடப்பு** – காமமிகுதி.

**காமக்கடவுள்** – வழிபடு தெய்வம்.

**காமக்கண்ணி** – காஞ்சியில் கோயில்கொண்டிருக்கும் காமாட்சியம்மன்.

**காமக்கலகம்** – புணர்ச்சி; ஊடல்.

**காமக்கவலை** – காமமிகுதியால் தோன்றும் துன்பம்.

**காமக்காய்ச்சல்** – காமதாபம்.

**காமக்கிழத்தி** – ஒருவருக்கே உரிமைபூணுங் குலப்பரத்தை மகளாய்க் காமங் காரணமாகத் தலைமகனால் வரைந்துகொள்ளப்பட்டவள்.

**காமக்குறிப்பு** – காதலிற்றோன்றும் மெய்ப்பாடு, காதலை வெளியிடுங் குறிப்பு.

**காமக்கூட்டம்** – தலைவனும் தலைவியும் தம்முள் அன்பொத்துக் கூடுங் கூட்டம்.

**காமக்கோட்டத்தி** – காமக்கோட்டத்தில் உறையும் பார்வதி.

**காமக்கோட்டம்** – காஞ்சியில் உள்ள காமாட்சி கோயில்.

**காமக்கோட்டி** – பார்வதி; காமக்கோட்டம்; காமப்பைத்தியம்.

**காமகாண்டம்** – காமன் அம்பாகப் பயன்படுத்தும் ஒருவகைப் பூ.

**காமகாரம்** – காய்மகாரம், பொறாமை.

**காமசரம்** – மாம்பூ; காண்க: **காமன்கணை.**

**காமசலம்** – காண்க: **காமநீர்.**

**காமசாலை** – சிற்றின்பத்துக்குரிய இடம்.

**காமத்தீ** – காமாக்கினி, காமமாகிய நெருப்பு.

**காமத்துப்பால்** – காமத்தைப்பற்றிக் கூறும் இலக்கணப் பகுதி; திருவள்ளுவர் திருக்குறளில் அகப்பொருட்பாலாகிய ஒரு பகுதி.

**காமத்துப்பாலோர்** – பரத்தமை கொண்டொழுகுவோர்.

**காமதகனன்** – காமனை எரித்த சிவன்.

**காமதம்** – பூமியில் விழுந்தபின் எடுத்துக் கொள்ளும் பசுவின் சாணம்.
**காமதேவன்** – மன்மதன்.
**காமதேனு** – தேவலோகப் பசு.
**காமநாசன்** – சிவன்.
**காமநீர்** – காமத்தால் தோன்றும் சுக்கிலம்.
**காமநோய்** – காமத்தால் உண்டாகும் துன்பம்.
**காமப்பற்று** – காமவிருப்பு.
**காமப்பால்** – முலைப்பால்.
**காமப்பித்து** – காமப் பைத்தியம்.
**காமப்புணர்ச்சி** – இயற்கைப் புணர்ச்சி.
**காமப்பூ** – மதனகாமப் பூ, கொடிச் சம்பங்கி.
**காமப்பேய், காமப்பைத்தியம்** – அறிவினையழிக்குந் தீராப் பெருங்காமம்; காமம் மிக்கவன்.
**காமப்போர்** – புணர்ச்சி.
**காமபாலன்** – தன்னை அடைந்தாரின் விருப்பங் களை நிறைவேற்றுபவனான பலராமன்.
**காமபீடம்** – மாந்தர் விரும்பும் முத்திபோகங் களைக் கொடுப்பதாகிய காஞ்சிபுரம்.
**காமபூமி** – இன்புவுலகு, போகபூமி.
**காமம்** – ஆசை, அன்பு, விருப்பம்; இன்பம்; புணர்ச்சியின்பம்; காமநீர்; ஊர்; குடி; இறை.
**காமமரம்** – ஒருவகை மரம்.
**காமமலடி** – கனவினால் கருப்பம் நசிக்கப் பெறுபவள்.
**காமர்** – விருப்பம்; அழகு; காமுகர்.
**காமரசி** – நெருஞ்சில்.
**காமரம்** – அடுப்பு; அத்தநாள்; இசை; சீகாமரம்; வண்டு; அகில்மரம்; ஆலமரம்; காவடித் தண்டு.
**காமரி** – புளிநறளைச் செடி.
**காமரீசம்** – புல்லுருவி.
**காமரூபம்** – விரும்பியபடி மேற்கொள்ளுகிற வடிவம்; ஒரு நாடு.
**காமரூபி** – பச்சோந்தி; நினைத்த உருவங்கொள் பவன்.
**காமல்லிகை** – வனமல்லிகை.
**காமலீலை** – புணர்ச்சி.
**காம(மா)லை** – கண்ணில் உண்டாகும் ஒருவகை நோய்.
**காமவல்லபை** – நிலவு.
**காமவல்லி** – கற்பகத்தில் படருங் கொடி.
**காமவாயில்** – இயற்கை அன்பு.
**காமவிகாரம்** – காமத்தால் உண்டாகும் வேறுபாடு.
**காமவிடாய்** – கலவி விருப்பம்.
**காமவெறி** – காமப்பைத்தியம்.
**காமவேதம்** – காமசாத்திரம்.
**காமவேழம்** – நாணல்.
**காமவேள்** – மன்மதன்.
**காமற்கடந்தோன்** – புத்தன்.
**காமற்காய்ந்தோன்** – சிவன்; அருகன்.
**காமன்** – மன்மதன்; பௌத்த மதத்திற் கூறப் படும் தீமை விளைக்குந் தெய்வம்; ஒருவகை வரிக்கூத்து; இந்திரன்; வண்டு; திப்பிலி.
**காமன்கணை** – அசோகம், குவளை, தாமரை, மாம்பூ, முல்லை என்னும் ஐந்து மலரம்புகள்.
**காமன்கொடி** – மீன்.
**காமன்பண்டிகை** – மன்மத தகனத் திருவிழா.
**காமன்வில்** – கரும்பு.
**காமனாள்** – இளவேனிற்காலம்.
**காமனூர்தி** – தென்றல்.
**காமனை** – சிறுகிழங்கு; விருப்பம்.
**காமனைங்கணை** – காண்க: **காமன்கணை.**
**காமாக்கினி** – காமத்தீ.
**காமாட்சி** – பார்வதி; காஞ்சிபுரத்து அம்பிகை.
**காமாட்சிப்புல்** – காவட்டம்புல்; சுன்னாறிப்புல்; கருப்பூரப்புல்.
**காமாட்சிவிளக்கு** – கலியாணம் முதலிய சிறப்பு நாள்களில் பயன்படுத்தும் பாவைவிளக்கு.
**காமாட்டி** – மண்வெட்டுவோன்; மூடன்.
**காமாதூரன்** – காம இச்சை மிக்கவன்.
**காமாந்தகன்** – சிவன்; காமத்தால் அறிவிழந்த வன்.
**காமாப்பலகை** – மரக்கலத்தின் சுற்றுப்பலகை.
**காமாரி** – சிவன்; காளி.
**காமி** – காம இச்சை மிகுந்தவன்; உவர்மண்; பொன்னிமிளை.
**காமிகம்** – இருபத்தெட்டுச் சிவாகமங்களுள் ஒன்று.
**காமித்தல்** – விரும்புதல்; காமங்கொள்ளுதல்.
**காமியக்கல்** – கோமேதகம்.
**காமியகுரு** – ஈசுரபத்தியும் அறமும் போதிக்கும் குரு.
**காமியசத்தி** – அப்பிரகம்.
**காமியம்** – இச்சிக்கும் பொருள்; பயன்கருதிச் செய்யும் வினை; கன்மமலம்; ஆகாமியம்.
**காமியமரணம்** – தற்கொலை.
**காமியர்** – காமவேட்கையுள்ளோர்.
**காமினி** – பெண்; ஆகாயகமன மந்திரம்; அழகு.
**காமீ** – சென்ம லக்கினத்திலிருந்து ஏழாமிடத் துள்ள கோள்.
**காமுகப்பிரியம்** – கத்தூரி மஞ்சள்.
**காமுகன்** – காம இச்சை மிகுந்தவன்; மன்மதன்; திருமால்; நாகரிகன்.

**காமுருகி** – ஓணான்.

**காமுறுதல்** – விரும்புதல்; வேண்டிக்கொள்ளுதல்.

**காமோத்தீபகம்** – காமத்தை மிகுவிக்கும் பொருள்.

**காய்** – முதிர்ந்து பழுக்காத மரஞ்செடிகளின் பலன்; மூவகைச்சீரின் இறுதியிலுள்ள நேரசை, காய்ச்சீர்; பழுக்காத புண்கட்டி; முதிராது விழுங் கரு; பயனின்மை; வஞ்சனை; விதை; சொக்கட்டான்காய்; பக்குவப்படாத விளை பொருள்கள்.

**காய்க்கடுக்கன்** – உருத்திராட்சம் வைத்துக் கட்டிய கடுக்கன்.

**காய்க்கறியமுது** – கடவுட்குப் படைக்குங் கறி.

**காய்க்கும்பருவம்** – காய்தோன்றுங் காலம்; பிள்ளைபெறும் பருவம்.

**காய்கறி** – உணவுக்குரிய மரக்கறிகள்.

**காய்ங்கனி** – காயும் கனியும்.

**காய்ச்சல்** – உலர்ச்சி; சுரநோய்; மனவெரிச்சல்; வெப்பம்.

**காய்ச்சல்காரன்** – சுரமுள்ளவன்; பணம் வறண்வன்; பொறாமையால் மனவெரிச்சல் உள்ளவன்.

**காய்ச்சற்பாடாணம்** – பிறவிப் பாடாணங்களுள் ஒன்று.

**காய்ச்சற்பாடு** – தவசத்தின் நன்றாகக் காய்ந்த நிலை, நெல் முதலியன உலர்த்துதலால் உண்டாகும் அளவுக்குறைவு; பொருளிழந்து ஏங்கிநிற்கும் நிலை.

**காய்ச்சி** – துவரை.

**காய்ச்சிரக்கு** – புளிச்சைக்கீரை.

**காய்ச்சீர்** – நேரீற்று மூவசைச் சீர்.

**காய்ச்சுக்கட்டி** – காசுக்கட்டி.

**காய்ச்சுக்கல்** – போலி இரத்தினம்.

**காய்ச்சுக்குப்பி** – திராவகம் காய்ச்சி இறக்கும் குப்பி.

**காய்ச்சுண்டை** – காசுக்கட்டி.

**காய்ச்சுப்பு** – சவட்டுப்பு; உவர்நீரைக் காய்ச்சி யெடுக்கும் உப்பு.

**காய்ச்சுமண்** – வளையல் செய்தற்குரிய மணல்.

**காய்ச்சுரை** – புடமிட்ட பொன்; புளிச்சைக்கீரை.

**காய்ச்சுறுக்கு** – புளிச்சைக்கீரை.

**காய்த்தல்** – மரஞ்செடி முதலியன காய்களை உண்டாக்குதல்.

**காய்த்தானியம்** – முதிரை; கதிர்த்தானியம்; முசுக்கட்டை.

**காய்த்துதல்** – எரியச்செய்தல்; சினத்தல்; காய்ச்சுதல்.

**காய்த்தும்பை** – கறித்தும்பை.

**காய்தல்** – உலர்தல்; சுடுதல்; மெலிதல்; வருந்தல்; விடாய்த்தல்; வெயில்நிலாக்கள் எறித்தல்; எரித்தல்; அழித்தல்; விலக்குதல்; வெறுத்தல்; வெகுளுதல்; கடிந்துகூறுதல்; வெட்டுதல்.

**காய்நீர்** – வெந்நீர்.

**காய்ப்பழம்** – முழுதும் பழுக்காத பழம்.

**காய்ப்பறங்கி** – கோழிக்கு வரும் நோய்களுள் ஒன்று.

**காய்ப்பனை** – சாறு எடுக்காத பெண்பனை.

**காய்ப்பு** – வெறுப்பு; மட்டமான இரும்பு; மரஞ்செடி முதலியன பலன் தருதல்; தோலின் தடிப்பு; தழும்பு.

**காய்ப்புமரம்** – காய்களுள்ள மரம்.

**காய்பசி** – மிக்க பசி.

**காய்ம்பனை** – காய்க்கும் பனை.

**காய்ம்பாளை** – பெண்பனையின் பாளை.

**காய்மகாரம்** – பொறாமை, எரிச்சல்.

**காய்மடி** – பசுவின் வன்முலை.

**காய்மரம்** – காண்க: **காய்ப்புமரம்.**

**காய்மை** – பொறாமை.

**காய்மைகரித்தல்** – பொறாமைப்படுதல்.

**காய்மைகாரி** – பொறாமைப்பட்டவன்(ள்).

**காய்வள்ளி** – ஒருவகை வள்ளிக்கொடி, காட்டு வள்ளி; சீரகவள்ளி; வெற்றிலைவள்ளி; கிழங்கு வகை.

**காய்வாழை** – நிறையக் காய்காய்க்கும் வாழை வகை.

**காய்விழுதல்** – கருச்சிதைந்து வெளிப்படுதல்.

**காயக்கம்** – மோகமயக்கம்.

**காயக்கரணம்** – உறுப்பினாற் செய்யும் அபிநயம்.

**காயக்கிலேசம்** – உடலை வருத்தி யொடுக்குகை.

**காயக்குத்தகை** – நிலையான குத்தகை ஏற்பாடு.

**காயகம்** – இசை; மோகமயக்கம்; வாணிகம்.

**காயகற்பம்** – உடல் நீடித்திருக்க உண்ணும் மருந்து.

**காயகன்** – இசைபாடுவோன்; மயக்குவோன்.

**காயங்கட்டுதல்** – புண்ணுக்கு மருந்திட்டுக் கட்டுதல்.

**காயசன்னி** – காயம்பட்டதனால் உண்டாகும் இரணசன்னி.

**காயசித்தி** – உடலை நெடுநாள் இருக்கச் செய்யும் வித்தை; அணிமா, மகிமா முதலிய சித்திகள்; பொன்னாங்காணி.

**காயசித்திக்கடியான்** – காந்தக்கல்.

**காயசித்திச் சுண்ணம்** – கருப்பூரச் சிலாசத்து.

**காயசித்தியானோன்** – உடல் நீடித்திருக்கப் பெற்றவன்; சூதபாடாணம்.

**காயசித்தியுப்பு** – அமரியுப்பு.

**காயடித்தல்** – விதையடித்தல்.

**காயத்திரி** – நான்முகன் மனைவியாகிய காயத்திரி தேவதை; அந்தணர் நாள்தோறும் ஓதும் ஒரு வேதமந்திரம்; நான்கடிகட்குமாக 24 உயிர் எழுத்துகளுள்ள சந்தம்; கருங்காலி; கலைமகள்.
**காயத்தையிருத்தி** – பூவழலை.
**காயப்பெண்** – கனவில் தோன்றி மயக்கி வருத்தும் மோகினி.
**காயம்** – ஆகாயம்; உடல்; பெருங்காயம்; ஐங்காயம்; மிளகு; உறைப்பு; குழம்பில் வெந்த கறித்துண்டு; கறிச்சம்பாரம்; காயமருந்து; காழ்ப்பு; அடிபட்டதனால் உண்டான புண்; வடு; நிலைபேறு.
**காயம்படுதல்** – புண்படுதல்.
**காயமருந்து** – மகப்பெற்றவளுக்குக் கொடுக்கும் காரமருந்து.
**காயமேரை** – அரசாங்கத் தீர்வைபோக எஞ்சிய விளைவில் ஊர்க்குடிகளிடமிருந்து தச்சர், கொல்லர் முதலிய தொழிலாளிகள் அடையும் ஊதியம்.
**காயல்** – கழி; கழிமுகம்; உப்பளம்; சுரநோய்.
**காயா** – காசாமரம்; காசாவகை; பீக்கொஞ்சி.
**காயாபுரி** – உடல்.
**காயாம்பூமேனியன், காயாம்பூவண்ணன்** – நீலநிறமுடைய திருமால்.
**காயாமரம்** – ஒருபொழுதும் காய்ப்பில்லாத மரம்.
**காயிகம்** – உடம்பினாற் செய்வது.
**கார்** – கருமை; கரியது; மேகம்; மழை; நீர்; கார்ப்பருவம்; கார்நெல்; கருங்குரங்கு; வெள்ளாடு; ஆண்மயிர்; கருங்குட்டம்; இருள்; அறிவுமயக்கம்; ஆறாச்சினம்; பசுமை; அழகு; செவ்வி; எலி; கொழு.
**கார்க்காய்** – சந்திரநாகம், இராகு; கார்காலத்தில் காய்க்கும் காய்.
**கார்க்கோடகன்** – எட்டு நாகங்களுள் ஒன்றான கடவுட்பாம்பு; இரக்கமற்றவன்; கருடக்கல்.
**கார்க்கோடல்** – கருங்காந்தள்.
**கார்க்கோடன்** – காண்க: **கார்க்கோடகன்.**
**கார்க்கோழி** – கருங்கோழி; கருங்காணம்; கருஞ்சீரகம்.
**கார்கரணை** – கருணை, கருணைச்செடி.
**கார்காலம்** – ஒரு பருவகாலம், ஆவணி புரட்டாசி மாதங்கள்; மேகங்கள் கூடி மழை பெய்யும் காலம்.
**கார்கோள்** – கடல்; சனி; ஓமை.
**கார்கோளி** – முத்தக்காசு; காண்க: **கார்க்கோழி.**
**கார்கோன்** – ஒரு தலைமை அதிகாரி.
**கார்த்தல்** – உறைத்தல்; உப்புக்கரித்தல்; கறுப்பாதல்; அரும்புதல்; வெறுத்தல்.
**கார்த்தன்** – துரிசு.
**கார்த்திகம்** – சாந்திர மாதத்துள் எட்டாவது, கார்த்திகை மாதம்.
**கார்த்திகேயன்** – முருகக்கடவுள்.
**கார்த்திகை** – ஒரு நட்சத்திரம்; ஒரு மாதம்; கார்த்திகைப்பூ; கார்த்திகை மாதத்தில் வீடுதோறும் விளக்கேற்றிக் கொண்டாடும் கார்த்திகையோடு கூடிய நிறைமதி நாள்; துர்க்கை.
**காத்திகைக்காசு, கார்த்திகைக்காணிக்கை** – ஒரு பழைய வரி.
**கார்த்திகைக்கிழங்கு** – கலப்பைக்கிழங்கு.
**கார்த்திகைக்கொள்ளி** – கார்த்திகைத் திருநாளில் அனற்பொறி தட்டி விளையாடுதற்குரிய அகத்திக்கொள்ளி.
**கார்த்திகைத்தேவிமார்** – காண்க: **கார்த்திகைப் பெண்கள்.**
**கார்த்திகைப்பச்சை** – பழைய வரிவகை.
**கார்த்திகைப்பூ** – காந்தள்.
**கார்த்திகைப்பெண்கள்** – அறுவராகிய கார்த்திகைப் பெண்டிர்.
**கார்த்திகைப்பொரி** – கார்த்திகைத் திருநாளிற் படைக்கும் நெற்பொரி.
**கார்த்திகைவிரதம்** – முருகக்கடவுளைக் குறித்துக் கார்த்திகை நாள்தோறும் கடைப்பிடிக்கப் படும் நோன்பு.
**கார்த்திகைவிளக்கீடு** – திருக்கார்த்திகைக் கொண்டாட்டமாக வீடு முதலியவற்றில் விளக் கேற்றுகை.
**கார்த்திகைவிளக்கு** – திருக்கார்த்திகையில் ஏற்றப் படும் விளக்கு.
**கார்நாற்றம்** – தலைப்பெயல் மழையால் மண்ணில் தோன்றும் மணம்.
**கார்நிறம்** – கறுப்புவண்ணம்; மாமிசச்சிலை என்னும் ஒருவகைக் கறுப்புக்கல்.
**கார்நெல்** – கார்காலத்தில் அறுவடையாகும் நெல்.
**கார்ப்பணியம்** – கடும்பற்றுள்ளம்; பொறாமை.
**கார்ப்பருவம்** – காண்க: **கார்காலம்.**
**கார்ப்பாசம்** – பருத்திச்செடி.
**கார்ப்பாளன்** – கொடியவன்.
**கார்ப்பான்** – கரிசலாங்கண்ணி.
**கார்ப்பு** – காரம்; உவர்ப்பு.
**கார்ப்பெயல்** – கார்காலத்து மழை.
**கார்பா(வா)ர்** – அதிகாரம்.
**கார்போகரிசி** – கார்போகி என்னும் பூண்டின் வித்து.
**கார்போகி** – பூடுவகை.

**கார்மணி** – கரிசலாங்கண்ணி.
**கார்மலி** – கடல்.
**கார்முகம்** – வில்; பஞ்சுகொட்டும் வில்; மூங்கில்.
**கார்முகில்** – கருக்கொண்ட மேகம்; கார்காலத்து மேகம்; கருமுகில் பாடாணம்.
**கார்முல்லை** – பிரிந்த தலைவன் வருமுன் அவன் வருவதற்குரிய கார்ப்பருவத்தின் குறியாக மேகம் முன்வந்ததைக் கூறும் புறத்துறை.
**கார்வண்ணர்** – அசுரர்.
**கார்வண்ணன்** – திருமால்.
**கார்வலயம்** – கடல்.
**கார்வழலை** – இராசமாநாகம்.
**கார்வா** – கடல்மீன்வகை.
**கார்வாரி** – செயலாளன்.
**கார்வினை** – பாவத்தொழில்.
**கார்வெள்ளி** – மட்டவெள்ளி.
**கார்வை** – இசையில் நாதநீட்சி.
**காரக்கருணை** – காறுகருணை, கருணைக்கிழங்கு.
**காரக்கழிச்சல்** – அசீரண பேதிவகை.
**காரகக்கருவி** – தொழிலை இயற்றுவிக்கும் கருவி.
**காரகபஞ்சகம்** – காண்க: **கருமேந்திரியம்** : நாக்கு, கை, கால், எருவாய், கருவாய் என்னும் உறுப்புகள்.
**காரகம்** – வேற்றுமையுருபேற்ற பெயர்வினை கொண்டு முடியும் நிலை; சிறைச்சாலை; மேகநோய்.
**காரகமுதற்கருவி** – செய்கையின் முதற்காரணம்.
**காரகவேது** – தொழில்நிகழ்ச்சிக்குக் கருவியாயுள்ள ஏது.
**காரகன்** – செய்வோன்; படைப்போன்; சூரியரேகாமிசம்.
**காரங்கட்டுதல்** – நீலச்சாயத்தை உறுதியாக்குதல்; உறைப்பு மருந்து கூட்டுதல்.
**காரச்சீலை** – புண்ணுக்கிடும் மருந்துச்சீலை.
**காரசாரம்** – அளவோடு அமைந்த காரச்சுவை.
**காரடம்,**
**காரடவித்தை** } – சாலவித்தை.
**காரடன்** – வித்தைக்காரன்.
**காரடை** – ஒருவகைப் பணியாரம்.
**காரண்டம்** – நீர்க்காக்கை.
**காரணக்குறி** – காரணப்பெயர்; முன்னறிகுறி.
**காரணக்குறிமரபு** – தொன்றுதொட்டு வருங் காரணப்பெயர்.
**காரணக்குறியாக்கம்** – காரணம்பற்றிப் படைத்துக்கொள்ளும் பெயர்ச்சொல்.
**காரணகர்த்தா** – முதற்கடவுள்.
**காரணகுரு** – ஞானதேசிகன், வீடுபேறு அடைதற்குக் காரணமான ஞானகுரு.
**காரணச்சிறப்புப்பெயர்** – காரணத்தால் ஓரினத்தில் ஒன்றற்குச் சிறப்பாக வரும் பெயர்ச்சொல்.
**காரணச்சொல்** – கதை.
**காரணசரீரம்** – ஐம்பூதச் சேர்க்கையால் பருவுடலுக்குக் காரணமாயுள்ள நுண்ணுடல்.
**காரணப்பெயர்** – யாதானும் ஒரு காரணம்பற்றி வழங்கும் பெயர்.
**காரணப் பொதுப்பெயர்** – காரணத்தாற் பல வற்றிற்கும் பொதுவாய் வரும் பெயர்.
**காரணம்** – மூலம்; ஏது; கருவி; நோக்கம்; வழிவகை; சிவாகமங்கள் இருபத்தெட்டனுள் ஒன்று.
**காரணமரபு** – காரணக்குறி மரபு; காரணம்பற்றித் தொன்றுதொட்டு வழங்கும் பெயர்ச்சொல்.
**காரணமாயை** – உடம்பு முதலியவற்றின் தோற்றத்திற்குக் காரணமாயுள்ள பொருள்.
**காரணமாலை** – ஓர் அணி, பின்பின்னாக வருவனவற்றிற்கு முன்முன்னாக வருவனவற்றைக் காரணங்களாகவேனும் காரியங்களாகவேனும் சொல்லும் அணி.
**காரணவணு** – உலகப் படைப்புக்கு ஒருங்கு பலதொக்குக் காரணமாகும் பரமாணுக்கள்.
**காரணவன்** – மூலகாரணனான கடவுள்; கணக்கன்; குடும்பத் தலைவன்.
**காரணவாகுபெயர்** – காரணம் காரியத்திற்கு ஆகிவரும் பெயர்ச்சொல்.
**காரணவாராய்ச்சி** – காரணம் குறைவின்றியிருந்தும் காரியம் பிறவாமையைச் சொல்லும் அணி.
**காரணவிடுகுறி** – ஒருகாற் காரணப்பெயராயும் ஒருகால் இடுகுறிப்பெயராயும் இருக்கும் பெயர்ச்சொல்.
**காரணவிலக்கணை** – காரணத்தைக் காரியமாகக் கூறும் அணி.
**காரணன்** – மூலமானவன், கடவுள்; தலைவன்; மிருதபாடாணம்.
**காரணாவத்தை** – காரியாவத்தைகட்குக் காரணமாக இருக்கும் அவத்தை.
**காரணி** – பார்வதிதேவி.
**காரணிக்கம்** – வரலாறு, சரித்திரம்; செபமாலை.
**காரணிகன்** – நடுநிலையாளன்; ஆய்வாளன்.
**காரணீகம்** – ஆய்ந்து அறிதற்குரிய பண்பு.
**காரத்திரி** – அறுத்த புண் முதலியவற்றில் உட்செலுத்தும் காரமருந்து தோய்த்த சீலைத்திரி.
**காரப்பசை** – குன்றிமணியையும் சீனிக்காரத்தையும் அரைத்துச் சேர்த்துத் தட்டார் பயன்படுத்தும் ஒருவகைப் பசை.
**காரப்பொடி** – எரிவுண்டாக்கும் மருந்து; பற்றாசு; சிறுமீன்வகை.

**காரம்** – உறைப்பு; கார்ப்புப்பு; சாம்பலுப்பு; சீலையின் அழுக்குவாங்குங் காரம்; சாயமிடுங் காரம்; வெண்காரம்; அக்கரகாரம்; அழிவு; திருநீறு; சினம்; மரவயிரம்; எழுத்தின்சாரியை; பொன்; தொழில்; உறுதி; வலிமை; முயற்சி.

**காரம்போடுதல்** – ஆடை முதலியவற்றிற்குக் காரம்வைத்தல்; உணவுப்பொருளுக்குக் காரஞ் சேர்த்தல்.

**காரமருந்து** – மகப்பெற்ற பெண்களுக்குக் கொடுக்குங் காயமருந்து; தோலை எரித்துத் தின்னும் மருந்து.

**காரர்** – அச்சமுள்ளோர்; செய்வோர்.

**காரல்** – ஒருமீன்; காறல்; தொண்டையில் உண்டாகும் கறகறப்பு.

**காரவல்லி** – பாகற்காய்.

**காரளத்தல்** – நெல்லளத்தல்.

**காரறிவு** – மயக்கம்பொருந்திய அறிவு.

**காரறுத்தல்** – கார்நெற்பயிரை அறுவடை செய்தல்.

**காரன்** – உரியவன்; செய்வோன்; ஆண்பாற் பெயர் விகுதி; சோரபாடாணம்.

**காரா** – எருமை; கருநிறப் பசு.

**காராகிரகம்** – சிறைச்சாலை.

**காராஞ்சி** – நீர் இறைக்கும் ஒருவகைக் கருவி.

**காராடு** – வெள்ளாடு.

**காராண்மை** – நிலத்தைப் பயிரிடுங் குடியுரிமை; ஒரு பழைய வரி.

**காராப்பூந்தி** – ஒருவகைத் தின்பண்டம்.

**காராம்பசு** – நாக்கும் முலைக்காம்பும் கருநிறமாக உள்ள பசு இனம்.

**காராம்பி** – எருது பூட்டி நீரிறைக்கும் கருவிவகை.

**காராமணி** – ஒருவகைப் பயறு, பெரும்பயறு.

**காராளர்** – வேளாளர்; வணிகர்; முற்காலத்திருந்த ஒரு முருட்டுச் சாதியார்; தென்னார்க்காட்டு மாவட்டத்திலுள்ள மலைவாழ்நரான ஒரு வேடச்சாதியார்.

**காரான்** – எருமை; கருநிறப் பசு.

**காரானை** – மேகம்.

**காரி** – கருமை; கருநிறம் உடையது; கரிக்குருவி; காகம்; சனி; நஞ்சு; கரிய எருது; காரீயம்; வாசுதேவன்; ஐயனார்; வயிரவன்; இந்திரன்; கடையெழு வள்ளல்களுள் ஒருவன்; காரி நாயனார்; ஓர் ஆறு; ஆவிரைச் செடி; கண்டங்கத்தரி; செய்பவன்; பதினாறு படியளவு; வெண்காரம்; காரி வள்ளலின் குதிரை; களர்; முதுநிலம்; கீழ்மகன்; தொழிற்சாலை.

**காரிக்கன்** – வெளுக்காத வெள்ளைத்துணி.

**காரிக்குதிரை** – கருநிறக் குதிரை; ஐயனாரது குதிரை.

**காரிக்கூன்** – ஒருவகைக் காளான்.

**காரிகம்** – காரகம், மேகநோய்; வாதனை; காவிக் கல்.

**காரிகை** – பெண்; அழகு; அலங்காரம்; கட்டளைக் கலித்துறை; ஓர் யாப்பிலக்கண நூல்; ஒரு நிறை; வாதனை.

**காரிப்பிள்ளை,**
**காரிப்புள்** } – கரிக்குருவி.

**காரிமை** – கொடிவேலி.

**காரியக்காரன்** – செயலாளன்; ஊரதிகாரியின் பதிலாள்; வேலையில் திறமையுள்ளவன்; தன்னலம் நாடுவோன்.

**காரியக்கெட்டி** – திறமையாளன், தொழிலில் வல்லவன்; வேலைத்திறம்.

**காரியகர்த்தா** – தொழில் நடத்துவோன்; மேலதிகாரி.

**காரியகரம்** – பயனுடைய செயல்.

**காரியகாரன்** – காரியத்தலைவன்; காரியம் பார்ப்போன்.

**காரியகுரு** – பொருளுக்காகக் கற்பிக்கும் ஆசிரியன்.

**காரியகேவலம்** – உடலத்தைப் பெற்ற ஆன்மா ஐம்புல நுகர்ச்சி நீங்கி இளைப்பாறும் பொருட்டு மூலாதாரத்தில் ஒடுங்கிக்கிடக்கும் நிலை.

**காரியசகலம்** – உடலத்தைப் பெற்ற ஆன்மா தொழிற்பட்டு ஐம்புலன்களை நுகரும் நிலை.

**காரியசாதகம்** – காரியத்தைச் சிந்திக்கச்செய்வது.

**காரியசாதனம்** – துணைக்கருவி.

**காரியசித்தி** – காரியானுகூலம், செயல் முடித்தல்.

**காரியசுத்தம்** – உடலைப் பெற்ற ஆன்மா ஒழுக்கமும் செயற்பாடுமின்றி இறைவன் திருவடியை நினைந்துசெல்லும் நிலை.

**காரியஞ்செலுத்துதல்** – தொழில் நடத்துதல்.

**காரியத்தடை** – தொடங்கிய செயலுக்கு நேரும் இடையூறு.

**காரியத்தலைவன்** – மேலதிகாரி.

**காரியத்தவறு** – விரும்பியது கைகூடாமை; செயற்கேடு.

**காரியத்தன்** – காண்க: **காரியகாரன்**.

**காரியத்தாழ்ச்சி** – செயல் கைகூடாமை.

**காரியத்துக்குவருதல்** – பயன்படுதல்.

**காரியத்தை மடித்தல்** – குதர்க்கம் பேசுதல்.

**காரியத்தோன்** – செயல் பார்க்கும் அதிகாரி.

**காரியதரிசி** – ஒரு சபையின் செயல்களை நடத்திவைப்பவன்.

**காரியதுரந்தரன்** – செயற்பொறுப்பு வகித்தலில் வல்லவன்.

**காரியப்பபடுதல்** – தொழிற்படுதல்; கைகூடுதல்.

**காரியப்பாடு** – பயன்.
**காரியப்பொறுப்பு** – தொழிலை நிறைவேற்றுங் கடமை.
**காரியபாகம்** – செயல் கைகூடுதல்.
**காரியம்** – செயல், செய்கை; காரணத்தால் ஆவது; செய்யத்தக்கது; நோக்கம்; இறுதிக் கடன்; சாணம்.
**காரியமாயை** – மூலப் பிரகிருதி.
**காரியமுற்றுதல்** – எடுத்த செயல் கைகடந்து போதல்.
**காரியமுன்னிடுதல்** – எடுத்த செயல் கைகூடுகை.
**காரியவாகுபெயர்** – காரியம் காரணத்திற்கு ஆகும் பெயர்ச்சொல்.
**காரியவாதி** – தன் செயலைச் சாதித்துக்கொள் பவன்.
**காரியவான்** – திறமையுடையவன்.
**காரியவிலக்கணை** – காரியத்தைக் காரணமாக உபசரித்தல்.
**காரிரத்தம்** – ஆடுதின்னாப்பாளைச்செடி.
**காரிருள்** – மிக்க இருள்.
**காரிழை நாதம்** – கந்தகம்.
**காரீயம்** – கருநிறமான ஈயவகை.
**காரு** – வண்ணான்; கம்மாளன்; கம்மத் தொழில்.
**காருகத்தம்,**
**காருகத்தியம்** } – இல்லறநிலை.
**காருகத்தொழில்** – நெய்யுந்தொழில்.
**காருகம்** – நெய்யுந்தொழில்; ஊழிய வேலை; இல்லறம்; நெருப்பை வணங்குஞ் சமயம்.
**காருகவடி** – கோள்நிலை.
**காருகன்** – நெய்வோன்; வண்ணான்; ஓவியன்; கொலையாளன்.
**காருச்சிவல்** – கடற்பாசி; கடற்காளான்.
**காரு(ரூ)டம்** – கருடன்; கருடசமூகம்; அறுபத்து நாலு கலையுள் நஞ்சு தீர்க்கும் வித்தை; ஓர் உபநிடதம்; கருடபுராணம்; பச்சைக்கல்; மருக்காரைச் செடி; காருடவித்தை.
**காருடயூகம்** – கருட வடிவாக அமைக்கும் ஒரு படைவகுப்பு.
**காருடவித்தை** – நஞ்சு வைத்தியம்; சாலவித்தை.
**காருடன்** – சாலவித்தைக்காரன்.
**காருண்ணியம்** – அருள், கருணை.
**காருண்யமேகம்** – மேகம்போற் கைம்மாறு எதிர் பாராது உதவி செய்பவன்.
**காருணி** – வானம்பாடி.
**காருணிகன்** – கருணையுள்ளவன், அருளுடை யோன்.
**காருணியம்** – காண்க: காருண்ணியம்.
**காருவாகன்** – வண்ணான்.
**காரூகம்** – கருங்குரங்கு.
**காரெலி** – கறுப்பெலி.
**காரெள்** – எள்ளின்வகை.
**காரெனல்** – ஒளி மழுங்குதற் குறிப்பு; கருநிற மாகை.
**காரேறு** – கரிய எருமைக்கடா.
**காரை** – காட்டுச்செடிவகை; மருக்காரை; காறல் மீன்; ஆடை; சுண்ணச்சாந்து; பல்லில் இறுகப் பற்றிய ஊத்தை.
**காரைக்கட்டுவீடு** – சுண்ணாம்பு செங்கற்களால் கட்டப்பட்ட வீடு.
**காரோடன்** – சாணைக்கல் செய்வோன்; ஆயுத வுறை செய்வோன்.
**கால்** – நாலில் ஒன்று; தமிழில் நாலிலொன்றைக் குறிக்கும் 'வ' என்னும் பின்ன எண்குறி; பாதம்; பூவின் தாள்; அடிப்பாகம்; எழுத்தின் கால்; தேருருள்; வண்டி; கோல்; குறுந்தறி; நெசவுத்தறியின் மிதி; கைப்பிடி; தூண்; பற்றுக்கோடு; முளை; மரக்கன்று; மகன்; இனமுறை; பிறப்பிடம்; வாய்க்கால்; பிரிவு; வழி; நடை; இடம்; வனம்; முனை; மரக்கால்; அளவு; கதிர்; மழைக்கால்; காற்று; வாத ரோகம்; ஐம்பூதம்; பொழுது; செவ்வி; தடவை; காலன்; கருநிறம்; ஏழனுருபுள் ஒன்று; ஒரு வினையெச்ச விகுதி; ஒரு முன்னொட்டு.
**கால்கடியன்** – வல்லவன், தீரன், திறனுடையவன்.
**கால்கடுத்தல்** – பாதம் நோதல்.
**கால்கழி கட்டில்** – பாடை.
**கால்கழுவுதல்** – கால்கழுவ நீர்கொடுத்து உபசரித்தல்; மலங்கழுவுதல்.
**கால்கிளர்தல்** – ஓடுதல்; படையெடுத்துச் செல்லுதல்.
**கால்கூசுதல்** – பிறவிடஞ் செல்ல மனங்கூசுதல்.
**கால்கெஞ்சுதல்** – அடி வருந்துதல்.
**கால்கைப்பிடிப்பு** – வாதநோய்.
**கால்கொள்ளுதல்** – திருவிழா முதலியவற்றுக்குத் தொடக்கஞ் செய்தல்; தொடங்குதல்; இடங் கொள்ளுதல்; ஏறச்செய்தல், ஆரோகணஞ் செய்தல்; பெருக்கெடுத்தல்.
**கால்கோள்** – தொடக்கம்; போரில் இறந்த வீரனுருவைக் கல்லில் வகுக்கத் தொடங்கு தலைக் கூறும் புறத்துறை.
**கால்சாய்தல்** – அடியோடழிதல்.
**கால்சீத்தல்** – காலினால் கீறுதல்; வேரோடு களைதல்.
**கால்செய்வட்டம்** – விசிறி, பேராலவட்டம்.
**கால்தடுக்குதல்** – அடியிடறுதல்.
**கால்தல்** – வெளிப்படுதல்; குதித்தல்; கக்குதல்; தோற்றுவித்தல்.

**கால்தாங்குதல்** – காலை இழுத்து நடத்தல்.
**கால்தாழ்தல்** – தாமதித்தல்; ஈடுபடுதல்; மூழ்கி விடுதல்.
**கால்நடை** – ஆடுமாடுகள்; காலால் நடத்தல்.
**கால்நோக்கு** – கோள்களின் காற்பார்வை.
**கால்நோய்** – பாதநோவு.
**கால்பரிதல்** – அறுபடுதல்.
**கால்பாவுதல்** – கால்வைத்தல்; நிலைகொள்ளுதல்.
**கால்பிடித்தல்** – பாதத்தை வருடுதல்; காலைப் பற்றிக் கெஞ்சுதல்; தொண்டுபுரிதல்; வாய்க் கால் வெட்டுதல்; விதையடித்தல்.
**கால்பின்னுதல்** – கால்கள் முறுக்கிக்கொள்ளுதல்; முட்டிக்கால் தட்டுதல்.
**கால்மட்டம்** – கண்பார்வையின்றிக் காலால் தடவி நடக்கை.
**கால்மடக்கு** – கடப்புக்கால்.
**கால்மரத்தல்** – பாதம் உணர்ச்சியற்றுக் கட்டை போலாதல்.
**கால்மாடு** – பசு; காற்புறம்.
**கால்மிதி** – அடிவைப்பு; அடிச்சுவடு; அடிவைக்கும் வரை; செருப்பு; காலிற்பட்ட தூசியைத் துடைத்துக்கொள்வதற்கு இடப்படும் தென்னைநார்த் தடுக்கு.
**கால்முளைத்தல்** – குழந்தை நடைகற்கத் தொடங்குதல்.
**கால்மெட்டிடுகை** – திருமணத்தில் மணமக்கள் கால்விரலில் மோதிரமிடுகை.
**கால்யாத்தல்** – நெருங்குதல்; மறைத்தல்; தேக்குதல்.
**கால்வடம்** – காலணிவகை.
**கால்வழி** – ஒற்றையடிப் பாதை; காற்சுவடு; கால்வாசி; மரபுவழி.
**கால்வளைவித்தல்** – வளைத்தல்.
**கால்வாங்குதல்** – காலை வெட்டுதல்; கால் வழுக்குதல்; பின்வாங்குதல்; சாதல்; எழுத்துகளின் காலிழுத்தல்.
**கால்வாசி** – நாலில் ஒரு பங்கு; அடிவைத்த பலன்.
**கால்வாய்** – வாய்க்கால்.
**கால்வாயன்** – தெரிந்து பேசும் வன்மையற்றவன்.
**கால்விடுதல்** – கால்கள் செயலறுதல்; முட்டுக் கொடுத்தல்; தூர உறவாதல்; அறவொழித்தல்.
**கால்விலங்கு** – காலுக்கிடும் தளை.
**கால்விழுதல்** – மழைக்கால் இறங்குதல்; ஒளி வீசுதல்.
**கால்விழுந்துபோதல்** – பாரிசவாயு முதலியவற்றால் கால் அசைவற்றுப் போதல்; செயலற்றுப் போதல்.
**கால்வீச்சு** – கால்வீசி நடக்கை.
**கால்வீசுதல்** – கதிர்வீசுதல்; காற்றடித்தல்.
**கால்வெடிப்பு** – காலிற்காணும் பித்தவெடிப்பு.
**கால்வைத்தல்** – நுழைதல்.
**காலக்கடவுள்** – யமன்; சிவன்.
**காலக்கணிதம்** – வானவியல், வானசாத்திரம்.
**காலக்கணிதர்** – சோதிடர்.
**காலக்கழிவு** – தாமதம்; வீண்பொழுது போக்குகை.
**காலக்கனல்** – ஊழித் தீ.
**காலக்கிரமம்** – நாளடைவு; வரலாற்றுக் கால வரிசை.
**காலக்கிரயம்** – தற்கால விலை.
**காலக்குறி** – பருவத்துக்குரிய அடையாளம்.
**காலக்கொடுமை** – காலப் பொல்லாங்கு, காலத்தின் தீமை.
**காலகட்கம்** – ஒரு நரகம்.
**காலகதி** – காலப்போக்கு; விதி; இறப்பு.
**காலகம்** – சேங்கொட்டை.
**காலகரணம்** – காலங்கழித்தல்.
**காலகாலன்** – சிவன்.
**காலகூடம்** – பாற்கடலில் தோன்றிய நஞ்சு.
**காலங்கண்டவன்** – ஆண்டிலும் அனுபவத்திலும் முதிர்ந்தவன்.
**காலங்கழித்தல்** – வாழ்நாள் போக்குதல், உயிர் வாழ்தல்.
**காலங்கிட்டுதல், காலங்கூடுதல்** – சாகுந்தறுவாய் நெருங்குதல்.
**காலசக்கரம்** – கோள்கள் சுழன்று வருதற்குரிய மண்டலம்; கோள்நிலையால் ஒருவனுக்கு உண்டாகும் பலன்; விடாது சுழன்றுவருங் காலம்.
**காலசங்கதி** – நடப்புச் செய்தி.
**காலசங்கை** – உத்தேச காலவளவு; காலக் கணக்கு; காலாவதி.
**காலசந்தி** – காலை வழிபாடு.
**காலசம்** – பேராலவட்டம்; காற்று.
**காலசூத்திரம்** – ஒரு நரகம்.
**காலசேயம்** – மோர்.
**காலஞ்செய்தல்** – இறத்தல்.
**காலஞ்செல்லுதல்** – இறந்துபோதல்; நாட்கடத்தல், தாமதப்படுதல்.
**காலஞ்சொல்லி** – முற்குறிகாட்டும் காக்கை; பல்லி.
**காலட்சேபம்** – பிழைப்பு; காலங்கழித்தல், நாட் கழித்தல்; நேரம்போக்கல்; திருவாய்மொழி யோதல்; சமயநூல் ஓதுதல்; புண்ணிய கதையை இசைப்பாட்டுகளுடன் எடுத்துக் கூறுகை.
**காலடி** – உள்ளங்கால்; காற்சுவடு; சேரநாட்டில் சங்கராசாரியார் பிறந்த ஊர்.

**காலடியில்** – மிக அண்மையில்; ஆதரவில்.
**காலத்தால்** – உரியபோதில்; காலம்பெற.
**காலத்திரயம்** – இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூவகைக் காலம்.
**காலத்தீ** – ஊழித் தீ.
**காலதண்டம்** – யமனது தண்டாயுதம்.
**காலதர்** – காற்று வரும் வழி, சாளரம்.
**காலதருமம்** – காலத்தன்மை.
**காலதாமதம்** – காலத்தாழ்வு, தாமதம்.
**காலதுரிதம்** – காலவிரைவு, வேகம்.
**காலந்தள்ளுதல்** – காலங்கழித்தல்.
**காலந்தாழ்த்துதல்** – காலதாமதஞ் செய்தல்.
**காலநிரூபணம்** – காலத்தை வரையறுக்கை; கால கணிதம்.
**காலநுட்பம்** – காலத்தின் நுண்ணிய பகுதி.
**காலநேமி** – காலச்சக்கரம்; ஓர் அசுரன்.
**காலநேரம்** – கோள்களின் பலன்.
**காலப்பண்** – அவ்வக் காலத்திற்கு உரிய பண்.
**காலப்பயிர்** – பருவத்தில் விளையும் பயிர்.
**காலப்பழக்கம்** – பழைமையான வழக்கம், நாட்பட்ட பழக்கம்.
**காலப்பிரமம்** – காலமாகிய பரம்பொருள்.
**காலப்பிரமாணம்** – காலவளவை.
**காலப்பெயர்** – காலத்தைக் குறிக்கும் பெயர்ச்சொல், காலத்தினடியாக வந்த பெயர்.
**காலபடர்** – யமதூதர்.
**காலபரிச்சேதம்** – காலத்தால் ஒரு பொருளை அளவிடுகை; காலவரையறை.
**காலபரிபாகம்** – காலத்தின் பக்குவநிலை.
**காலபாசம்** – யமன் ஆயுதமாகிய கயிறு.
**காலபேதம்** – காலவேறுபாடு.
**காலம்** – பொழுது; தக்க சமயம்; பருவம்; பருவப் பயிர்; விடியற்காலம்; முடிவு காலம்; தொழில் நிகழ்ச்சியைக் குறிக்கும் முக்காலம்; இசைக்குரிய மூன்று காலம்; தாளப் பிரமாணம்.
**காலம்பண்ணுதல்** – ஆயுள்முடிதல்.
**காலம்பார்த்தல்** – சமயம் நோக்குதல்; ஒருவனது இறுதிக் காலத்தைக் கணக்கிடுதல்.
**காலம்பெற** – தக்க காலத்தில்; விடியற் காலையில்.
**காலம்போக்குதல்** – காலத்தை வீணாய்க் கழித்தல்.
**காலமடைதல்** – இறத்தல்.
**காலமயக்கம்** – காலவழுவமைதி.
**காலமல்லாக் காலம்** – அகாலம்.
**காலமலைவு** – ஒரு காலத்துக்குரியதை மற்றொரு காலத்துக்குரியதாகக் கூறும் வழு.
**காலமழை** – பருவமழை.
**காலமறிதல்** – வினைசெயற் கேற்ற காலத்தை அறிதல்; முக்காலத்தும் நிகழ்வனவற்றைத் தமது சிறப்பாற்றலால் அறிதல்.
**காலமாதல்** – காண்க: **காலமடைதல்.**
**காலமாறு** – காலைதோறும்.
**காலமானம்** – கால அளவு.
**காலமிருத்து** – உரிய காலத்தில் அடையும் இறப்பு.
**காலமே** – விடியற்காலையில்.
**காலமேகம்** – காண்க: **காளமேகம்.**
**காலராத்திரி** – கற்ப முடிவிலுள்ள நீண்ட இரவு; துன்பம் விளைக்கும் இரவு; துர்க்கா சத்தியின் ஒரு பேதம்.
**காலலம்புதல்** – காலைக் கழுவுதல்; மலங் கழுவுதல்.
**காலவகை** – காலக் கூறுபாடு; கால வேறுபாடு.
**காலவம்** – நெருப்பு.
**காலவர்த்தமானம்** – நடப்புச் செய்தி.
**காலவரையறை** – காலநியமிப்பு; காலாவதி; வரலாற்றுக் காலத்தைக் குறித்தல்.
**காலவழக்கம்** – நடப்பு வழக்குமுறை.
**காலவழு** – ஒரு காலத்தைப் பிறிதொரு காலத்தில் பிறழக் கூறுதல்.
**காலவழுவமைதி** – கால வழுவை இலக்கண முடையதாக அமைப்பது.
**காலவாகுபெயர்** – ஒரு காலத்தின் பெயர் அக் காலத்தோடு இயைபுடைய பொருளுக்கு ஆகி வருவது.
**காலவிடைநிலை** – காலத்தைக் காட்டும் இடை நிலை.
**காலவித்தியாசம்** – காலவேற்றுமை; தீய காலம்.
**காலவிதி** – தீவினை.
**காலவிரயம்** – வீண்காலம் போக்குகை.
**காலளப்பான்** – மரக்காலால் தவசமளப்போன்.
**காலளவு** – மரக்காலால் அளக்கை.
**காலன்** – யமன்; யமதூதர்கள்; காலதானம்; சனி; கரந்துறை கோள்களுள் ஒன்று.
**காலன்கொம்பு** – மாட்டுக்கொம்பு.
**காலாக்கினி** – காலத் தீ; ஒரு காலாக்கினி புவனம்.
**காலாகாலத்தில்** – உரிய சமயத்தில்; சிற்சில சமயம்.
**காலாகோலம்** – அலங்கோலம்.
**கால்ங்கரை** – ஏரிக்கு நீர் கொண்டுவரும் கால்வாய்.
**காலாசு** – காற்கவசம்.
**காலாட்டம்** – முயற்சி.

**காலாடி** – முயற்சியுடையோன்; சில சாதிகளின் தலைவர்க்குரிய பட்டப்பெயர்; நீர்பாய்ச்சும் ஊர்ப் பணியாளன்; தொழிலற்றுத் திரிவோன்.

**காலாடுதல்** – முயலுதல்; முயற்சியால் செல்வம் செழித்திருத்தல்.

**காலாணி** – கல், முள் அழுத்தலால் உள்ளங் காலில் உண்டாகும் தடிப்புத்தோல்; மேற் கூரை தாங்கும் முளைக்கட்டை.

**காலாணியறுதல்** – வலி, செல்வம் முதலியன குன்றித் தளர்தல்.

**காலாதீதம்** – காலங்கடந்தது, காலாவதியானது.

**காலாதீதன்** – காலங்கடந்த கடவுள்.

**காலாந்தகன்** – சிவன்; யமன்; கொடியவன்.

**காலாந்தரம்** – வேறுபட்ட காலம்; இடைக்காலம்; காலப்போக்கு.

**காலாயுதம்** – கோழி.

**காலாவதி** – வேளாண்மைக் காலம்; காலவரையறை; தவணை முடிவு.

**காலாழ்** – சேறு.

**காலாழி** – கால்விரல் மோதிரம்.

**காலாள்** – ஒருவகைச் சேனை, காலாட்படை; பாசனக்காலில் நீர் பாய்ச்சுவோன்.

**காலாறு** – வண்டு; சிற்றாறு.

**காலாறுதல்** – நடை ஓய்ந்திருத்தல்; காலில் இரத்தவோட்டம் உண்டாக உலாவுதல்.

**காலி** – பசு; பசுக்கூட்டம்; தீயவழி; பயனற்றவன்; பூனைக்காலி; வெறுமை.

**காலிடுதல்** – கால்வைத்தல்.

**காலித்தல்** – கோள்கள் தோன்றுதல்.

**காலிமாடு** – வயலிலோ காட்டிலோ கூட்டமாக வளர்க்கப்படும் கால்நடை.

**காலியம்** – விடியல்.

**காலியாங்குட்டி** – ஒரு சிறு பாம்பு.

**காலியாதல்** – வீடு, உத்தியோகம் முதலியன ஒருவர் வசப்படாமல் ஒழிந்திருத்தல்.

**காலில்விழுதல்** – அடியில் விழுந்து வணங்குதல்; மன்னிப்பு வேண்டுதல்; அடைக்கலமாதல்.

**காலிலி** – முடவன்; முடத்தி; அருணன்; பாம்பு; காற்று; மீன்.

**காலிறங்குதல்** – யானைக்கால் உண்டாதல்; மழைக்காலிறங்குதல்; சீலையின் விளிம்புகள்; குறுக்கிழைக் கோடு கொள்ளுதல்.

**காலுழற்றி** – காலிற் காணும் வாதநோய்.

**காலுளைவு** – கால்நோவு.

**காலூரம்** – தவளை.

**காலூறுதல்** – பயணக் குறியாகக் காலில் தினவு உண்டாதல்; ஓடியாடப் பிள்ளைகள் விரும்புதல்.

**காலூன்றுதல்** – நிலைபெறுதல்; காலிறங்குதல்; பந்தற்கால் நாட்டுதல்.

**காலெடுத்தல்** – வாய்க்கால் வெட்டுதல்; பின்னும்படி மயிரை வகிர்ந்தெடுத்தல்; தொடங்குதல்; அனுமதி கொடுத்தல்.

**காலேகம்** – முத்து; கலவைச் சாந்து.

**காலேகவண்ணம்** – கலவைச் சாந்து.

**காலேணி** – குறுக்குப் படிகளை உடைய ஏணி.

**காலேந்திரம்** – காலத்தைப் புலப்படுத்தும் எந்திரம்.

**காலேயம்** – புல்லுண்ணும் நாற்காலுயிர்கள்; கத்தூரி மஞ்சள்; மோர்; கள்.

**காலை** – பொழுது; வாணாள்; தருணம்; முறை; விடியற்காலம்; சூரியன்; பகல்; பள்ளியெழுச்சி முரசம்; அடைப்பு; மீன்வகை.

**காலைக்கடன்** – காலையில் செய்யவேண்டிய செயல்கள்.

**காலைச்சுற்றுதல்** – தொடர்ந்து பற்றுதல்.

**காலைஞாயிறு** – உதயசூரியன்.

**காலைமுழவு** – காலையில் அடிக்கப்படும் முரசம்.

**காலைமுரசம்** – பள்ளியெழுச்சி முரசு.

**காலையடைத்தல்** – அடைப்பிடுதல்.

**காலையந்தி** – காலையை அடுத்த அந்திப் பொழுது.

**காலைவெள்ளி** – விடியற்காலத்து உதிக்கும் சுக்கிரன், விடிவெள்ளி.

**காலொட்டுதல்** – குறைவைக் காட்டாமற் சரிப்படுத்தல்.

**காலொற்றுதல்** – காற்று வீசுதல்.

**காலோடிகையோடி** – தொழிலற்றுத் திரிபவன்.

**காலோடுதல்** – வழுக்குதல்; செயன்முயற்சி உண்டாதல்.

**காலோர்** – காலாள்கள்.

**காலோலம்** – அண்டங்காக்கை.

**காவகா** – சேங்கொட்டை.

**காவட்டம்புல்,**
**காவட்டை** } – மாந்தப்புல்.

**காவடி** – காத்தண்டு; இறைவன் வேண்டுதலுக்கு எடுக்கும் காவடி; காவுதடியிற் கொண்டு போகும் பொருள்.

**காவணப்பத்தி**.– மண்டபம், பந்தல் முதலியவற்றின் அலங்காரமான மேற்றளம்

**காவணம்** – பந்தல்; மண்டபம்; சோலை.

**காவணவன்** – ஒருவகைப் புழு.

**காவதம்** – காதம், சுமார் பதினாறு கி.மீ. கொண்ட தொலைவு.

**காவதன்** – வரிக்கூத்துவகை.

**காவந்து** – காபந்து; தலைவன்.

**காவல்** – பாதுகாப்பு; வேலி; மதில்; சிறைச் சாலை; காவலாள்; பரண்; காக்கப்படும் நாடு; கவசம்.

**காவல்கட்டு** – தக்க காப்பு; நோயாளியின் பத்தியப் பாதுகாப்பு.

**காவல்மாற்றுதல்** – இளைப்பாறுதற்பொருட்டுக் காவலரை முறைமாற்றி அமர்த்தல்.

**காவல்மேரை** – காவலுக்காகக் கொடுக்கும் தானியம்.

**காவலறை** – காக்கப்படும் பொருளறை; காவல் காத்து நிற்கும் அறை.

**காவலன்** – பாதுகாப்போன்; அரசன்; மெய் காப்பாளன்; கணவன்; கடவுள்.

**காவலாள், காவலாளன்** – காவற்காரன்.

**காவலாளி** – காவற்காரன்; கணவன்.

**காவற்கட்டு** – காவல் செய்வதற்குரிய ஏற்பாடு.

**காவற்கடவுள்** – திருமால்.

**காவற்கணிகை** – களத்து ஆடும் கூத்தி.

**காவற்கலி** – வாழைமரம்.

**காவற்காடு** – கோட்டையைச் சுற்றிக் காவலாக வளர்க்கப்படும் காடு.

**காவற்காரன்** – காவல் செய்வோன்.

**காவற்கூடம்** – சிறைச்சாலை.

**காவற்கூடு** – காவலாளர் தங்குமிடம்.

**காவற்சாலை** – காண்க: **காவற்கூடம்.**

**காவற்சோலை** – அரசர் விளையாடுதற்குரிய நந்தவனம்.

**காவற்பிரிவு** – தலைவன் நாடுகாவற்பொருட்டுத் தலைவியைப் பிரியும் பிரிவு.

**காவற்புரி** – வயலில் காவலாக வைக்கோலால் செய்து வைக்கப்படும் பாவை; நெற் குவியல்மேல் பூத பிசாசங்கள் அணுகாமல் தடுக்க இடும் வைக்கோற் பழுதை.

**காவற்பெண்டு** – செவிலித்தாய்; பெண்பாற் புலவருள் ஒருவர்.

**காவற்றண்டனை** – சிறையிலிருக்கும் தண்டனை.

**காவற்றெய்வதம்** – காக்குந் தெய்வம்.

**காவன்** – சிலந்திப்பூச்சி.

**காவன்மகளிர்** – பகைவர் மனையில் சிறை பிடிக்கப்பட்ட பெண்கள்.

**காவன்மரம்** – அரசர்க்கு உரியதாய்ப் பகைவர் அணுகாமல் அவரால் பாதுகாக்கப்படும் மரம்.

**காவன்முரசம்** – காத்தல் தொழிலுக்கு அறி குறியான அரசாங்க முரசு.

**காவன்முல்லை** – அரசனாட்சியைச் சிறப்பிக்கும் புறத்துறை.

**காவா** – காட்டுமல்லிகை.

**காவாங்கரை** – வாய்க்காற்கரை.

**காவாய்** – ஒருவகைப் புல்.

**காவாலி** – சிவன்; மனம்போனபடி நடப்பவன்.

**காவாளர்** – காவடி சுமப்பவர்.

**காவாளி(ளை)** – காட்டுமல்லிகை; காய்வேளைப் பூடு.

**காவி** – காவிக்கல்; ஆடையிலேறும் பழுப்பு; பற்காவி; கருங்குவளை; கள்; அவுரி மருந்துருண்டை; கப்பலின் தலைப்பாய்.

**காவிக்கல்** – ஒருவகைச் சிவப்புத் தாது.

**காவிதி** – வேளாளருக்குப் பாண்டியர் கொடுத்து வந்த பட்டப்பெயர்; வணிகமாதர் பெறும் பட்டவகை; கணக்கர் சாதி; மந்திரி; வரிதண்டும் அரசாங்கத் தலைவர்.

**காவிதிப்புரவு** – அரசராற் காவிதியர்க்குக் கொடுக்கப்பட்ட ஊர்.

**காவிதிப்பூ** – காவிதி என்னும் பட்டத்துடன் அரசர் அளிக்கும் பொற்பூ.

**காவிதிமை** – கணக்குவேலை.

**காவிபிடித்தல்** – பழுப்புநிறம் ஏறுதல்.

**காவிமண்** – செம்மண்.

**காவியகுணம்** – செய்யுட்குணம்; அவை: செறிவு, தெளிவு, சமநிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தலில் பொருண்மை, காந்தம், வலி, சமாதி என்னும் பத்து.

**காவியம்** – பழையதொரு கதைபற்றிய தொடர் நிலைச் செய்யுள்; கலம்பகம், பரணி முதலிய சிற்றிலக்கியம்.

**காவியன்** – சுக்கிரன்.

**காவியாக்கட்டை** – நங்கூரக்கட்டை.

**காவியேறுதல்** – ஆடையில் நீர்ப்பழுப்பேறுதல்.

**காவிரிபுதல்வர்** – வேளாளர், உழவர்.

**காவிளை** – காய்வேளைப்பூடு; கொழிஞ்சி.

**காவு** – சோலை; சிறுதெய்வங்களுக்கு இடும் பலி; காவுப்பொருட்குரிய மை.

**காவுதடி** – காவடித் தண்டு.

**காவுதல்** – காவடி சுமத்தல்; சுமத்தல்; விரும்புதல்.

**காவுப்பொட்டு** – பூசாரி நெற்றியிலணியும் அஞ்சனப் பொட்டு.

**காவுவோர்** – பல்லக்குச் சுமப்போர்.

**காவேரிமணல்** – அயமணல்.

**காவேளை** – காய்வேளைப் பூண்டு.

**காவோலை** – முற்றின வோலை.

**காழ்** – மரவயிரம்; மனவுறுதி; கட்டுத்தறி; தூண்; ஒடத்தண்டு; இருப்புக்கம்பி; யானைப் பரிக்கோல்; கதவின் தாழ்; விறகு; காம்பு; கழி; இரத்தினம்; முத்து; பளிங்கு; பூமாலை; மணிவடம்; நூற்சரடு; விதை; கொட்டை; கருமை; குற்றம்.

**காழ்கொள்ளுதல்** – முதிர்தல்.
**காழ்கோளி** – நெட்டிலிங்கம்.
**காழ்த்தல்** – முற்றுதல்; மனவயிரங்கொள்ளுதல்; அளவுகடந்து மிகுதல்; உறைத்தல்.
**காழ்ப்பு** – உறைப்பு; வயிரம்; மனவயிரம்; தழும்பு; சாரம்.
**காழ்வை** – அகில்.
**காழகம்** – கடாரம்; ஆடை; கைக்கவசம்; கருமை.
**காழம்** – உடை விசேடம்.
**காழி** – உறுதி; சீகாழி.
**காழியர்கோன்** – திருஞானசம்பந்தர்.
**காழியன்** – பிட்டுவாணிகன்; உப்புவாணிகன்; வண்ணான்.
**காழூன்றுகடிகை** – குத்துக்கோல்; கூடாரம்.
**காழோர்** – குத்துக்கோலுடைய யானைப்பாகர்.
**காளகண்டம்** – குயில்; மயில்; கரிக்குருவி; ஊர்க் குருவி; வேங்கைமரம்.
**காளகண்டன்** – கறுத்த கழுத்துடைய சிவன்.
**காளகண்டி** – துர்க்கை; ஒரு கெட்ட நாள்.
**காளகம்** – சேங்கொட்டை; மருக்காரைச் செடி; எக்காளம்; கருமை.
**காளகூடம்** – ஆலகாலம், நஞ்சு; ஒரு நரகம்.
**காளச்சிலை** – வைடூரியம்.
**காளசுந்தரி** – கறுத்த கழுத்தையுடைய பார்வதி.
**காளபதம்** – மாடப்புறா.
**காளபந்தம்** – ஒரு விளக்கு.
**காளபம்** – போர்.
**காளம்** – கருமை; நஞ்சு; பாம்பு; எட்டிமரம்; மேகம்; நல்வினைக்குக் காரணமான பெரு மழை; கழு; ஊதுகொம்பு; அவுரிப்பூண்டு; சூலம்; சக்கரப்படை.
**காளமுகி** – கல்மழையைப் பொழியும் மேகம்.
**காளமேகம்** – கருமேகம்; ஒரு புலவன்.
**காளயுக்தி** – அறுபதாண்டுக் கணக்கில் ஐம்பத் திரண்டாம் ஆண்டு.
**காளவனம்** – சுடுகாடு.
**காளவாய்** – கழுதை; செங்கல் சுண்ணாம்பு சுடும் சூளை.
**காளவாய்க் கல்** – சுட்ட புதுச்செங்கல்.
**காளவாயன்** – உரக்கக் கத்துபவன்.
**காளவிளக்கு** – திருவிழா முதலிய சிறப்புக் காலங் களில் பயன்படுத்தும் பெருவிளக்கு.
**காளாஞ்சி** – தாம்பூலப்பெட்டி; தாம்பூலம் துப்பும் கலம்; வாதநோய்வகை.
**காளாத்திரி** – பாம்பின் நான்கு நச்சுப் பற்களுள் ஒன்று.
**காளாம்பி, காளான்** } – நாய்க்குடை.

**காளி** – துர்க்கை; பார்வதி; சிங்கம்; கரியவள்; வாயுமூர்த்தியான காளரின் சக்தி; பதினெட்டு உபபுராணத்துள் ஒன்று; பாம்பின் நச்சுப் பற்களுள் ஒன்று; மணித்தக்காளி; எட்டி; காட்டுமுருக்கு; கக்கரி.
**காளிக்கங் கட்டுதல்** – கருஞ்சாயங் கூட்டுதல்.
**காளிக்கம்** – ஒருவித நீலச்சாயம்; செப்புத்தாது உள்ள மலை.
**காளிக்கமெழுதுதல்** – சீலைத்துணியில் கருஞ்சாய ரேகை எழுதுதல்.
**காளிகம்** – மணித்தக்காளிச் செடி; உபபுராணம் பதினெட்டனுள் ஒன்று.
**காளிங்கமர்த்தனன்** – காளிங்கன் என்னும் நாகத்தின்மீது பாதங்களை வைத்து ஆடித் துவைத்த கண்ணபிரான்.
**காளிங்கராயன்** – தமிழ்மன்னர்களால் அரசாங்கத் தலைவர் சிலருக்கு வழங்கப்பட்ட பட்டப் பெயர்; கள்ளர்குலப் பட்டப்பெயருள் ஒன்று.
**காளித்தனம்** – மூர்க்கத்தனம்.
**காளிதம்** – களிம்பு; கறுப்பு.
**காளிந்தம்** – ஏலம்; பாம்பு.
**காளிந்தி** – யமுனையாறு; வாகை; தேக்கு.
**காளிப்பணம்** – 3 அணா 4 பைசா கொண்ட பழைய நாணயம்.
**காளிமம், காளிமை** } – காண்க: **காளிதம்.**
**காளியன்** – கண்ணபிரான்தன் பாதங்களால் தலையில் மிதித்தாடப்பெற்ற பாம்பு.
**காளினியம்** – கத்தரிச்செடி.
**காளை** – இளவெருது; எருது; கட்டிளமைப் பருவத்தினன்; ஆண்மகன்; பாலைநிலத் தலைவன்; வீரன்.
**காளைக்கன்று** – ஆவின் ஆண்கன்று.
**காளைமாடு** – எருது.
**காளையங்கம்** – போர்.
**காளையம்** – போர் ஆரவாரம்.
**காற்கட்டு** – தடை; கலியாணம்.
**காற்கடுப்பு** – கால் உளைச்சல்.
**காற்கடைகொள்ளுதல்** – புறக்கணித்தல், அலட்சியம்பண்ணுதல்.
**காற்கவசம்** – மிதியடி, பாதரட்சை.
**காற்காந்தல்** – காற்புண்.
**காற்காப்பு** – காலில் அணியும் காப்பு.
**காற்காறை** – தெய்வத் திருமேனியின் பாதங் களிற் சாத்தும் அணிகலன்.
**காற்குடைச்சல்** – காலுளைவு.
**காற்குப்பாயம்** – காற்சட்டை.
**காற்குளம்** – பூசநாள்.
**காற்கொட்டை** – காலுக்கிடும் திண்டு.

**காற்கோமாரி** – கால்நடைகளுக்கு வரும் கால்நோய்வகை.
**காற்சரி** – ஒரு காலணி; பாதரசம்.
**காற்சவடி** – பாதசாலம்.
**காற்சிராய்** – காற்சட்டை.
**காற்சிலம்பு** – காலணிவகை.
**காற்சீப்பு** – இடுப்புச் சந்தெலும்பு.
**காற்சுவடு** – அடிவைப்பின் குறி.
**காற்சுற்று** – மகளிர் கால்விரலில் அணியும் அணிவகை.
**காற்படம்** – விரலை அடுத்திருக்கும் பாதத்தின் அடிப்பக்கம்; புறவடி.
**காற்படுதல்** – அழிதல்.
**காற்படை** – காலாட்படை; கோழி; கட்டட அடிப்படையில் தரைக்கு மேலுள்ள பகுதி.
**காற்பரடு** – புறவடி.
**காற்பனிகம்** – கற்பிக்கப்பட்டது.
**காற்பாசம்** – பருத்தி.
**காற்பாதை** – ஒற்றையடிப் பாதை.
**காற்பிடித்தல்** – காண்க: **காயடித்தல்.**
**காற்பிடிப்பு** – வாதத்தினாற் காலிற் காணும் பிடிப்புநோய்.
**காற்புத்தி** – தாளகம்.
**காற்புரவு** – ஆற்றுப்பாசன நிலம்.
**காற்புள்ளி** – (,) ஒரு தொடரைப் படிக்கும் பொழுது சிறிதளவு நிறுத்தவேண்டும் இடத்தைக் குறித்தற்கு இடும் குறி.
**காற்பெட்டி** – வண்டியின் பின்பெட்டி.
**காற்பெய்தல்** – ஓடுதல்.
**காற்றடக்கி** – துருத்தி; நீர்க்குமிழி.
**காற்றண்டை** – ஒரு காலணிவகை.
**காற்றருந்துதல்** – காற்றை உண்ணல்; சோம்பியிருத்தல்.
**காற்றமும்பு** – வலியோடுகூடிய கால்வீக்கம்.
**காற்றன்** – துரிசு.
**காற்றாடவைத்தல்** – காற்றுப்படுமாறு பண்டங்களை வைத்தல்.
**காற்றாடி** – சுழல் கறங்கு; காற்றாடிப் பட்டம்; கறங்கின் சுழற்சியால் நீரிறைக்கும் எந்திரம்; நிலையில்லாதவன்; சவுக்கு; மரவகை; விசிறி.
**காற்றாடிப்பட்டம்** – காற்றில் பறக்கவிடும் பட்டம்.
**காற்றாய்ப்பறத்தல்** – விரைந்தோடுதல்; சுறுசுறுப்பாய்த் தொழில்செய்தல்.
**காற்றிளவல்** – இளங்காற்று.
**காற்றின்சகாயன்** – தீ.
**காற்றினாள்** – வாயுவைத் தேவதையாகக் கொண்ட சுவாதிநாள்.
**காற்று** – வாளி; உயிர்ப்பு; அபானவாயு; பிசாசு; காண்க: **காற்றினாள்.**
**காற்றுக்கடுவல்** – பெருங்காற்று.
**காற்றுக்கரப்பு** – பேய்க்கோளாறு.
**காற்றுக்காலம்** – ஆடி மாதத்தைப்போல் பெருங்காற்று வீசுங்காலம்.
**காற்றுக்கொள்ளுதல்** – வெளிப்பரவல்.
**காற்றுச்சங்கை** – காண்க: **காற்றுக்கரப்பு.**
**காற்றுதல்** – வெளிப்படுத்துதல்; அழித்தல்.
**காற்றுநாள்** – காண்க: **காற்றுமுந்துநாள்.**
**காற்றுநோவு** – கால்நடைகளுக்கு வரும் வெக்கைநோய்.
**காற்றுப்பு** – காறியுமிழ்தல்.
**காற்றுப்பெயர்தல்** – காற்றுக்காலந் தொடங்குதல்.
**காற்றுப்போதல்** – அடைப்பினின்றும் காற்று வெளியேறுதல்; அபான வாயுவை வெளியிடுதல்.
**காற்றுமழை** – காற்றோடு கூடிவரும் மழை.
**காற்றுமுந்துநாள்** – காற்றைத் தேவதையாகக் கொண்ட சுவாதியை முற்பட்ட நாளாக உடைய விசாகநாள்.
**காற்றுவாக்கு** – காற்றடிக்குந் திசை; காற்று வீசும் பக்கம்; தற்செயல்; சோம்பல்.
**காற்றுவாங்குதல்** – காற்றை நுகர்தல்.
**காற்றுவாரி** – கதவில்லாத சிறு சாளரம்.
**காற்றுவாரிப் பந்தல்** – காற்று மிகுதியாக வருமாறு அமைக்கப்படும் பந்தல்.
**காற்றுவாரிப் பலகை** – காற்றை வரவுந் தடுக்கவும் அமைக்கப்படும் முகட்டுச் சாளரப்பலகை.
**காற்றேறு** – காற்றினால் தோன்றும் ஒருவகை முத்துக் குற்றம்.
**காற்றொடுக்கம்** – காற்று வீசாது ஒடுங்குகை.
**காற்றொழில்** – சிறுவேலை.
**காற்றோட்டி** – கொடிவகை; செடிவகை.
**காறல்** – தொண்டைக் கறகறப்பு; காறும் பொருள்; ஒரு மருந்துச்செடி.
**காறற்கத்தரி** – ஒருவகைக் கத்தரிச்செடி.
**காறற்கொட்டி** – ஒரு மருந்துச்செடி.
**காறாக்கருணை** – சேனைக்கிழங்கு.
**காறாப்பித்தல், காறியுமிழ்தல்** – காறித் துப்புதல்.
**காறு** – காலவளவு; சலாகை; கொழு.
**காறுதல்** – காறற் சுவையாதல்; கோழையை மிடற்றிலிருந்து கொணர முயலுதல்; வயிரங் கொள்ளல்.
**காறுபாறு** – காண்க: **கார்பார்.**
**காறுவடித்தல்** – கொழுமுனை தீட்டுதல்.
**காறை** – மாதரும் குழந்தைகளும் அணியும் கழுத்தணி; வண்டிக்குடத்தைச் சுற்றியிடும் இரும்பு வளையம்; பூஞ்சணம்; வைக்கோல் முதலியவற்றின் தாள்; சுண்ணாம்பு.
**காறையெலும்பு** – கழுத்தெலும்பு.

**கான்** – மணம்; காடு; பூ; சலதாரை; வாய்க்கால்; மரக்கலத்தின் அறை; எழுத்தின் சாரியை; இசை; செவி; புகழ்.
**கான்படுதிரவியம்** – அரக்கு, இறால், தேன், மயிற் பீலி, நாவி முதலிய காட்டில் உண்டாகும் அரும் பொருள்கள்.
**கான்மரம்** – ஆலமரம்.
**கான்மா** – காட்டுப்பன்றி.
**கான்மாறுதல்** – கழிந்துபோதல்; காலை மாற்றுதல்.
**கான்மியம்** – மும்மலத்துள் ஒன்றாய் அநாதியா யுள்ள கன்மமலம்.
**கான்முறிதல்** – அடியோடு கெடுதல்.
**கான்முளை** – மகன்.
**கான்மோதிரம்** – கால்விரலணி.
**கான்யாறு** – முல்லை நிலத்திலுள்ள ஆறு, காட்டாறு.
**கான்றல்** – கக்குதல்; இருமிக் கோழை துப்புதல்.
**கான்றியம்** – வெப்பம்.
**கான்றை** – ஒரு மரவகை.
**கானக்கல்** – காண்க: **கானகக்கல்.**
**கானக்குதிரை** – காட்டுமான்வகை; காட்டுக் குதிரை; மாமரம்.
**கானக்குறத்தி முலைப்பால்** – தேன்.
**கானக்கூபரம்** – நாகப்பச்சை.
**கானக்(ங்)கோழி** – காட்டுக்கோழி.
**கானகக்கல்** – காட்டுக்கல்; கரும்புள்ளிக் கல்.
**கானகக்கூத்து** – கூத்துவகை.
**கானகச்சங்கம்** – நாகரவண்டு.
**கானகத்தும்பி** – கருவண்டுவகை.
**கானகநாடன்** – முல்லைநிலத் தலைவன்; குறிஞ்சி நிலத் தலைவன்.
**கானகம்** – காடு; கருஞ்சீரகம்; காலின் நகம்.
**கானங்கோழி** – காட்டுக்கோழி; வழுக்கைத் தலையையுடைய புள்வகை.
**கானசரம்** – நாணல்.
**கானத்தேறு** – மஞ்சள்.
**கானநாடன்** – காண்க: **கானகநாடன்.**
**கானப்படம்** – காடெழுதின கேடயம்; யானை, சிங்கம் முதலிய சித்திரமெழுதின பலகை; பெரு வாரல்வலை.
**கானப்பலா** – காட்டுப்பலா.
**கானப்பேர்** – காட்டை அரணாகவுடைய காளையார்கோயில்.
**கானம்** – காடு; தேர்; நந்தவனம்; மணம்; தொகுதி; பேதை; வானம்பாடி; இசைப் பாட்டு.
**கானயூகம்** – காட்டுக் குரங்கு.
**கானரசம்** – இசைச்சுவை.
**கானல்** – மணம்; கடற்கரை; கழி; உப்பளம்; உவர்நிலம்; மலைசார்ந்த சோலை; கடற் கரைச் சோலை; வெப்பம்; சூரியக்கதிர்; பேய்த்தேர்; பரல் நிரம்பிய நிலம்.
**கானல்வரி** – கழிக்கரைப் பாடல்.
**கானல்வீசுதல், கானலடித்தல்** – வெக்கையடித்தல்.
**கானலோடுதல்** – பேய்த்தேரோடுதல்.
**கானவன்** – குறிஞ்சி, முல்லை அல்லது பாலை நிலத்து மகன்; குரங்கு.
**கானவாழை** – நீர்வாழை.
**கானவிருக்கம்** – பாதிரிமரம்.
**கானனம்** – காடு.
**கானனீர்** – கானலில் தோன்றும் நீர்த்தோற்றம், பேய்த்தேர்.
**கானனுசாரி** – நன்னாரிக்கொடி.
**கானா** – சுக்கானின் கைப்பிடி.
**கானாங்கள்ளி** – இலைக்கள்ளி.
**கானாங்கெளிறு** – நன்னீரில் வாழும் ஒருவகை மீன்.
**கானாங்கோழி** – கானங்கோழி, காட்டுக்கோழி; வான்கோழி.
**கானாங்கோழை** – கானா வாழைவகை; ஒரு பூண்டுவகை.
**கானாங்கோனான்** – குழப்பம்.
**கானாத்தடி** – காண்க: **கானா.**
**கானான்** – ஒருவகைச் செடி.
**கானிலம்** – கொடிவேலி.
**கானீனன்** – கன்னிபெற்ற பிள்ளை; கன்னன்.
**கானெறி** – காண்க: **காலதர்.**
**கானை** – காலிற் காணும் மாட்டுநோய்வகை; காளையார்கோயில்.

## கி

**கி** – ஓர் உயிர்மெய்யெழுத்து (க் + இ).
**கிக்கிரி** – மீன்கொத்திப் பறவை.
**கிகிணி** – காக்கணங்கொடி; வலியான்குருவி.
**கிங்கரன்** – ஏவலாளன்; தூதன்.
**கிங்கரி(ரை)** – விலைமகள்; வேலைக்காரி.
**கிங்கிணி** – பாதசதங்கை; அரைச்சதங்கை; கிலு கிலுப்பை.
**கிங்கிரம்** – குதிரை; குயில்; வண்டு.

**கிங்கிலியன்** – காண்க: கிங்கரன்.
**கிச்சடி** – ஒருவகை உண்டி; கறிவகை; கூழ்வகை.
**கிச்சலாட்டம், கிச்சாட்டம், கிச்சிலாட்டம்** – தொல்லை.
**கிச்சிலி** – கொழிஞ்சி; நாரத்தை; கிச்சிலிக் கிழங்கு; பூலாங்கிழங்கு.
**கிச்சிலிக்கரணை** – காட்டுமிளகு.
**கிச்சிலிக்கிழங்கு** – ஒரு மணந்தரும் கிழங்கு.
**கிச்சு** – நெருப்பு.
**கிச்சுக்கிச்சுமூட்டுதல்** – கூச்சமுண்டாகும்படி பிறர் உறுப்புகளைத் தொடுதல்.
**கிச்சுக்கிச்செனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**கிசம், கிசலம், கிசலயம், கிசலை** – தளிர்.
**கிசில்** – ஒருவகைப் பிசின்; கீல்.
**கிசுகிசெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**கிஞ்சப்பண்ணி** – நாயுருவிச்செடி.
**கிஞ்சம்** – சிறிது; சிறுமை; புளிமாமரம்; புளி.
**கிஞ்சல்** – சுருக்கம்.
**கிஞ்சன், கிஞ்சனன்** – ஏழை, வறிஞன்.
**கிஞ்சி** – வேப்பமரம்.
**கிஞ்சிக்கினம்** – காண்க: கிஞ்சிஞ்ஞம்.
**கிஞ்சிக்கினன்** – காண்க: கிஞ்சிஞ்ஞன்.
**கிஞ்சிஞ்ஞத்துவம்** – சிற்றறிவுடைமை.
**கிஞ்சிஞ்ஞதை** – சிற்றறிவுடையவன் தன்மை.
**கிஞ்சிஞ்ஞம்** – சிற்றுணர்வு.
**கிஞ்சிஞ்ஞன்** – சிற்றறிவினன்; சீவான்மா.
**கிஞ்சித்தாகப் பேசுதல்** – இழித்துக் கூறுதல்.
**கிஞ்சித்து** – கொஞ்சம்; சிறுமை; புளிமாமரம்.
**கிஞ்சித்தேனும்** – சிறிதாயினும்.
**கிஞ்சிதம்** – சிறுமை; கொஞ்சம்.
**கிஞ்சில்** – கொஞ்சம், சிறிது.
**கிஞ்சு** – சிறிதான; முதலை.
**கிஞ்சுகம்** – முண்முருக்கமரம், கலியாணமுருக்கு வகை; பலாசுமரம்; சிவப்பு; கிளி; அசுணம்.
**கிஞ்சுகி** – பலாசமரம்; முண்முருக்கமரம்.
**கிஞ்சுமாரம்** – முதலை.
**கிட்ட** – அருகே; ஐந்தாம் வேற்றுமைக்கும் ஏழாம் வேற்றுமைக்கும் உரிய உருபு.
**கிட்டக்கல்** – இரும்புத்துரிசு; முருக வெந்துள்ள செங்கல்.
**கிட்டங்கி** – பண்டசாலை, கிடங்கு.
**கிட்டடி** – பக்கம், அண்மை.
**கிட்டத்தட்ட** – ஏறக்குறைய.
**கிட்டப்பார்வை** – அண்மையிலுள்ளது மட்டும் தெரியும் பார்வைக்குற்றம்.
**கிட்டம்** – அண்மை; உலோகக்கட்டி; இரும்பு முதலியவற்றின் துரு; வண்டல்; இறுக்கம்; சேறு முதலியவற்றின் ஏடு; கடையப்படாத மணியிலுள்ள கரடு.
**கிட்டம்பிடித்தல்** – உலர்தல்.
**கிட்டமுட்ட** – ஏறக்குறைய; அருகில்.
**கிட்டலர், கிட்டார்** – பகைவர்.
**கிட்டாலம்** – செப்புப்பாத்திரவகை.
**கிட்டி** – இறுக்குங்கோல்; கவரிறுக்கி; கொல்லர் கருவி; நுகமுளை; சிறுவர் விளையாட்டுக் கருவியுள் ஒன்று; கைத்தாளம்; நாழிகை வட்டில்; சின்னிச்செடி; பன்றி; தலையீற்றுப் பசு.
**கிட்டிக்கயிறு** – பூட்டுக்கயிறு.
**கிட்டிக்கலப்பை** – தேய்ந்த கலப்பை.
**கிட்டிக்கிழங்கு** – சின்னிக்கிழங்கு.
**கிட்டிக்கொள்ளுதல்** – நெருங்கிவிடுதல்; நெருங்கி எதிர்த்தல்.
**கிட்டிக்கோல்** – கிட்டி, கைக்கிட்டி, இறுக்குங் கோல்.
**கிட்டிகட்டுதல்** – இறுக்குங்கோலிட்டு வருத்துதல்; நெருக்கி வருத்துதல்.
**கிட்டிணம்** – கறுப்பு; மான்தோல்.
**கிட்டிபூட்டுதல்** – கிட்டிக்கோல் பூட்டி வருத்துதல்; எருதைப் பூட்ட நுகமுளை போடுதல்.
**கிட்டிமுட்டி** – மிக நெருக்கமாக.
**கிட்டியடித்தல்** – ஒருவகை விளையாட்டு; வீணாய்ப் பொழுதுபோக்குதல்; கிட்டி பூட்டுதல்.
**கிட்டிரம்** – நெருஞ்சிப் பூண்டு.
**கிட்டினர்** – சுற்றத்தார், உறவினர்.
**கிட்டினவுறவு** – நெருங்கின சுற்றம்.
**கிட்டினன்** – திப்பிலி.
**கிட்டுதல்** – சமீபமாதல்; உறவு நெருங்குதல்; கிடைத்தல்; பல்முதலியன ஒன்றோடொன்று இறுகுதல்; அணுகுதல்; எதிர்த்தல்; கட்டுதல்.
**கிட்டுமானம்** – அண்மை.
**கிட** – ஒரு நிகழ்கால இடைநிலை.
**கிடக்கட்டும், கிடக்கிடு, கிடக்கிடும்** – அதைத் தள்ளு என்னும் புறக்கணிப்புக் குறிப்பு.
**கிடக்கை** – படுக்கைநிலை; படுக்கை; படுக்குமிடம்; பூமி; பரப்பு; இடம்; உள்ளுறு பொருள்.
**கிடகு** – இருபத்துநான்கு விரல்கொண்ட முழ அளவு.
**கிடங்கர்** – அகழி; கடல்.
**கிடங்காடுதல்** – சுடுகாட்டில் பிணத்தைச் சுற்றி வருதல்.

**கிடங்கு** – அகழ்; குளம்; குழி; பண்டசாலை, பொருளற்ற; சிறைச்சாலை.
**கிடத்தல்** – படுத்திருக்கும் இருக்கைவகை.
**கிடத்துதல்** – கிடக்கச்செய்தல், படுக்கச் செய்தல்.
**கிடந்தகிடையாய்** – நோயால் படுத்த படுக்கை யாய்.
**கிடந்த திருக்கோலம்** – திருமால் பள்ளிகொண்ட நிலை.
**கிடந்துருளி** – நீர் இறைக்கும் இராட்டின உருளை.
**கிடப்பு** – கிடந்து துயில்கை; நிலை; மேற் போகாத நிலைமை.
**கிடப்புத்தொகை** – இருப்புத்தொகை.
**கிடப்புதல்** – கிடத்துதல்.
**கிடவாக்கிடை** – பெருந்துன்ப நிலை; நோய் முற்றிப் படுக்கையிலிருக்கை.
**கிடா** – கடா; எருமை.
**கிடாக்காலன்** – எருமைக்கொம்பு.
**கிடாசுதல்** – காண்க: **கடாசுதல்.**
**கிடாய்** – ஆட்டின் ஆண்; வியங்கோள் விகுதி; காண் என்னும் பொருளில் வரும் முன்னிலை ஒருமை உரையசை.
**கிடாரம்** – கொப்பரை.
**கிடாரவன்** – அகில்வகை.
**கிடாரி** – கடாரி.
**கிடி** – பன்றி.
**கிடிகோள்,** **கிடீர்** } – காண்மின் என்னும் பொருளில் வரும் முன்னிலைப் பன்மை உரையசை.
**கிடுக்கட்டி** – ஓர் ஒலி; ஒருவகை முழவு; இருப்பைப் பூவின் இடித்த கட்டி.
**கிடுக்கு** – கிடுக்கட்டி; ஓர் ஒலிக்குறிப்பு.
**கிடுக்குக்கிடுக்கெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**கிடுகிடாய்த்தல்** – நடுநடுங்குதல்; திகைத்தல்.
**கிடுகிடாயமானம்** – அதிர்ச்சி.
**கிடுகிடு** – ஒரு சிறுபறை; நடுக்கம்.
**கிடுகிடுத்தல்** – நடுங்குதல்; ஒலித்தல்; பல்லோடு பல் கொட்டுதல்.
**கிடுகிடுபாதாளம்** – அச்சத்தை உண்டுபண்ணும் பெரும்பள்ளம்.
**கிடுகிடெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; அச்சக் குறிப்பு; விரைவுக் குறிப்பு.
**கிடுகின்படம்** – தோற்கேடகம்.
**கிடுகு** – கேடகம்; சட்டப்பலகை; தேர் மரச் சுற்று; முடைந்த ஓலைக் கீற்று; வட்டவடிவப் பாறைவகை.
**கிடுகு பின்னுதல்** – ஓலை முடைதல்.
**கிடுகோலை** – கீற்றுக்குரிய தென்னையோலை.
**கிடுபிடி** – வட்டவடிவமான ஒருவகை வாத்தியம்.
**கிடுமுடி** – ஒருவகைச் சிறுபறை.
**கிடேச்சு(சை)** – நெட்டி.
**கிடை** – கிடக்கை; நோயில் விழுகை; இருப் பிடம்; வேத பாடசாலை; வேதமோதுங் குழாம்; ஆயுதம் பயிலிடம்; **ஆட்டுக்கிடை;** உட்கிடை; ஐயம்; உவமை; நெட்டி; சடை மரம்.
**கிடைக்காரன்** – ஆட்டுக்கிடைக்கு உரியவன்; ஆட்டுக்கிடை வைக்கும் நிலத்துக்குரியவன்.
**கிடைகொடுத்தல்** – பசு முதலியன பொலி எருதின் சேர்க்கைக்கு இடம்கொடுத்தல்.
**கிடைச்சரக்கு** – நாட்பட்ட சரக்கு.
**கிடைச்சி (சு, சை)** – காண்க: **கிடேச்சு.**
**கிடைத்தல்** – அடைதல், பெறுதல்; இயைதல்; அணுகல்; எதிர்த்தல்.
**கிடைப்படுதல்** – நோயுறுதல்; கட்டுப்படுதல்.
**கிடைப்பாடு** – நோய்.
**கிடைப்பிசகு** – படுத்திருக்கும்போது நிலை மாறியதால் ஏற்படும் சுளுக்கு.
**கிடைமறித்தல்,** **கிடைவைத்தல்** } – உரத்திற்காகக் கால்நடை களை வயலிற் கூட்டுதல்.
**கிண்கிணி** – காற்சதங்கை; அரைச் சதங்கை; கிலுகிலுப்பை.
**கிண்கிணித் தாமம்,** **கிண்கிணி மாலை** } – சதங்கைமாலை.
**கிண்கிணி வாய்க்கொள்ளுதல்,** **கிண்கிணி வாய்ச்செய்தல்** } – சிறு சதங்கையின் வாய் போலச் சிறிதே மலரத் தொடங்குதல்.
**கிண்கிணெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**கிண்டல்** – எள்ளல், பரிகாசம்; தூண்டிவிடுகை.
**கிண்டன்** – தடியன்; உரப்புத்துணி.
**கிண்டான்** – ஒருவகை உரப்புத்துணி.
**கிண்டி** – மூக்குத் துளையால் நீர் விழும் சிறு பாத்திரம்.
**கிண்டிக்கொடுத்தல்** – கிளறிக்கொடுத்தல்; தூண்டிவிடுதல்; நினைப்பூட்டுதல்.
**கிண்டிப்பார்த்தல்** – தோண்டிப் பார்த்தல்; ஆராய்தல்.
**கிண்டிவிடுதல்** – காண்க: **கிண்டிக்கொடுத்தல்.**
**கிண்டுதல்** – கிளறுதல்; தோண்டுதல்; ஆராய் தல்; நினைப்பூட்டுதல்; தூண்டுதல்; கடைதல்; கிளறிச் சமைத்தல்; வெளிப்படுத்துதல்; எள்ளல்; கிழித்தல்.
**கிண்ணகம்** – வெள்ளம்.
**கிண்ணம்** – சிறு வட்டில்; கிண்ணி; நாழிகை வட்டில்.
**கிண்ணாரம்** – ஒரு நரம்பிசைக் கருவி.

**கிண்ணி** – கிண்ணம், சிறு வட்டில்; நாழிகை வட்டில்; கத்தியின் கைப்பிடி யுறை; நண்டின் கால்; நாயின் கிண்ணிக்கால்; பசு முதலிய ஒருசார் விலங்குகளின் குளம்பின்மேல் உள்ள திரட்சி.

**கிண்ணிக் கருப்பூரம்** – இரசகருப்பூரம், உயர்ந்த கருப்பூரம்.

**கிண்ணெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**கிணகன்** – அடிமை.

**கிணம்** – கிணறு; தழும்பு.

**கிணற்றுக்கட்டு** – கிணற்றின் சுற்றுக் கட்டடம்.

**கிணற்றுவாரகம்** – கிணறு வெட்டுவதற்காக அரசாங்கத்தார் உழவர்களுக்குக் கொடுக்குங் கடன்.

**கிணற்றுறை** – மண் சரியாதிருத்தற்குக் கிணற்றுள் இறக்கும் உறை.

**கிணறு** – கேணிவகை, கூவல்.

**கிணறெடுத்தல்** – கிணறு வெட்டுதல்; கிணறு வெட்டுதற்கேற்ற இடந்தேர்தல்.

**கிணாங்கு** – புல்வகை.

**கிணாட்டு** – ஓலைநறுக்கு; மீன்செதில் முதலியன; கதிர் முதலியவற்றின் சிறு குலை.

**கிணி** – கைத்தாளம்.

**கிணிதம்** – வாயுதேவன் வில்.

**கிணிதி** – கிலுகிலுப்பைச் செடி.

**கிணீரெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**கிணுகிணுத்தல்** – கொசு முதலியன ஒலித்தல்; முணுமுணுத்தல்.

**கிணை** – ஒருவகை மருதப்பறை; உடுக்கை; தடாரிப்பறை.

**கிணைநிலை** – கிணைமகன் மருதநிலத்து வேளாளனைக் கிணைகொட்டிப் புகழும் புறத்துறை.

**கிணைநிலைப் பொருநர், கிணைப்பொருநர்** – கிணைப்பறை கொட்டிக்கொண்டு வேளாளரைப் புகழ்ந்துபாடும் பொருநர்.

**கிணைமகள்** – விறலி.

**கிணைமகன், கிணைய(வ)ன்** – கிணைப்பறை கொட்டுபவன்.

**கித்த** – விரைவாக.

**கித்தம்** – செய்யப்பட்டது; விரைவு.

**கித்தான்** – ஒருவகை முரட்டுத்துணி.

**கித்தான்கயிறு** – சணற்கயிறு.

**கித்தான்பாய்** – கப்பற்பாய்.

**கித்தில்** – கூந்தற் கமுகுவகை; கூந்தற் கமுகின் நார்.

**கித்துதல்** – ஒற்றைக் காலால் தாவி நடத்தல், நொண்டிநடத்தல்.

**கிதயுகம்** – காண்க: கிருதயுகம்.

**கிதவம்** – ஊமத்தஞ்செடி.

**கிதவன்** – வஞ்சகன்.

**கிந்திகம்** – திப்பிலிமூலம்.

**கிந்தி நடத்தல்** – முன்னங்காலால் நடத்தல்; நொண்டி நடத்தல்.

**கிந்துகாலன்** – கொந்தி நடப்பவன்.

**கிந்துதல்** – படங்குந்தி நடத்தல்; நொண்டி விளையாடுதல்; நொண்டி நடத்தல்.

**கிபாயத்து** – ஊதியம், இலாபம்.

**கிம்புரி** – தோளணி; யானையின் கொம்புப்பூண்; முடியுறுப்புள் ஒன்று; நீர் விழுதற்கு மகரவாய் வடிவில் அமைக்கப்பட்ட தூம்பு; மகரவாய் என்னும் அணிகலன்.

**கிம்புரிமுகம்** – ஆபரண முகப்பின் உறுப்புள் ஒன்று.

**கிம்புருடர்** – பதினெண்கணத்தொருவராய் மனிதமுகமும் குதிரையுடலும் படைத்த தேவ சாதியார்.

**கிம்புருட வருடம்** – ஏமகூடத்திற்கும் இமயமலைக்கும் இடைப்பட்ட வடவிந்தியப்பகுதி, நாவலந் தீவில் ஒன்பது கண்டங்களுள் ஒன்று.

**கிமாவெனல்** – முறுமுறுத்தல் குறிப்பு.

**கிமித்துக்கினம்** – புழு.

**கியாதம்** – புகழ்.

**கியாதி** – புகழ்; பிருகுவின் மனைவி.

**கியாழம்** – கழாயம்.

**கியானம்** – அறிவு, ஞானம்.

**கிரக்கம்** – களைப்பு.

**கிரககதி** – கோளின்நடை.

**கிரககழிப்பு, கிரகசாந்தி** – கோளால் வரும் தீமை கழியச் செய்யும் கழுவாய்.

**கிரகங்கழித்தல்** – கிரகசாந்தி செய்தல்.

**கிரகச்சித்திரம்** – குடும்பச் சச்சரவு.

**கிரகச்சுற்று** – கோளின் சுற்றுநடை.

**கிரகசம்** – ஒரு நரகம்.

**கிரகசாரம்** – கோளின் நடை; தீக்கோளின் பலன்; கோள்நிலைக் குறிப்பு.

**கிரகசெபம்** – கோளால் உண்டாகும் தீமை கழியச் செய்யும் செபம்.

**கிரகணம்** – பற்றுகை; மனத்திற் கொள்ளுதல்; சந்திரசூரியர்களின் கிரகணம்.

**கிரகணி** – அசீரண பேதிவகை.

**கிரகநடை** – கோளின் போக்கு.

**கிரகநிலை** – கோள்கள் நிற்கும் நிலைமை.

**கிரகநீதி** – இல்லொழுக்கம்.

**கிரகப் பெயர்ச்சி** – கோள் இடம் மாறுகை.

**கிரகபதனம்** – அகலாங்கு, அட்சரேகை.

**கிரகபதி** – சூரியன்.

**கிரகபலம்** – கோளின் அதிகாரம்.

**கிரகபீடை** – கோள்நிலையினால் வரும் இடர்.

**கிரகபுடம்** – சாதகங்களில் கோள்களின் நிலையை வரையறுக்கை.

**கிரகம்** – கோள்கள்; தாள அளவையுள் ஒன்று; வீடு.

**கிரகமண்டலம்** – காண்க: **கிரகவீதி**.

**கிரகமாலிகை, கிரகமாலை** – கோள்கள் மாலைபோல் தொடர்ந்து நிற்கும் நிலை.

**கிரகவக்கிரம்** – கோள் பின்னோக்கிச் செல்லும் நடை.

**கிரகவட்டம், கிரகவீதி** – கோள் செல்லும் வழி.

**கிரகாராதனை** – நவக்கிரக பூசை.

**கிரகித்தல்** – பற்றுதல்; நுண்ணிதின் உணர்தல்; ஏற்றுக்கொள்ளுதல்; துப்பறிதல்; சாரம் வாங்குதல்; குறிப்பால் அறிதல்.

**கிரங்குதல்** – சோர்வடைதல்.

**கிரசேமிரம்** – பச்சைக் கருப்பூரம்.

**கிரஞ்சனம்** – முருங்கைமரம்.

**கிரணம்** – ஒளி, கதிர்; சிவாகமங்கள் இருபத்தெட்டனுள் ஒன்று.

**கிரணம்வீசுதல்** – ஒளிவீசுதல்.

**கிரணமாலி, கிரணன்** – சூரியன்.

**கிரது** – வேள்வி; நரகவகை; ஒரு முனிவர்.

**கிரந்தகர்த்தா** – நூலாசிரியன்.

**கிரந்தம்** – நூல்; ஒற்று ஒழித்து உயிரும் உயிர்மெய்யுமாகக் கொள்ளப்படும் 32 எழுத்தின் கூட்டம்; வடமொழியை எழுதற்குத் தமிழ் மக்கள் வழங்கிய எழுத்து; வடமொழி.

**கிரந்தி** – முடிச்சு; இடை, பிங்கலை, சுழிமுனை நாடி மூன்றின் சந்தி; கிரந்திநோய்; ஏலத்தோல்; நெல்லிப்பருப்பு.

**கிரந்திகம்** – காண்க: **கிரந்திமூலம்**.

**கிரந்திதகரம்** – நந்தியாவட்டை.

**கிரந்திப்பண்டம்** – புண்களை உண்டாக்குந் தின்பண்டம்.

**கிரந்திப்புண்** – மேகக்கட்டி; சிலந்திப்புண்.

**கிரந்திமூலம்** – திப்பிலிமூலம்.

**கிரந்திவாயு** – குழந்தை நோய்வகை.

**கிரமக்காரன்** – ஒழுங்காக நடப்பவன்.

**கிரமதாவா** – ஒழுங்கு வழக்கு.

**கிரமப்பிரசவம்** – சுகமான பிரசவம்.

**கிரமம்** – ஒழுங்கு; நீதிமுறை; வேதமோதுதலில் ஒருவகை.

**கிரமி** – ஒழுங்காய் நடப்போன்; சாத்திர விதிப்படி நடப்பவன்.

**கிரமுகம்** – கமுகமரம்.

**கிரயக்காரன்** – விற்பவன்.

**கிரயச்சீட்டு, கிரயசாசனம், கிரயபத்திரம்** – விற்பனை ஆவணம்.

**கிரயம்** - விற்பனை; விலைத்தொகை.

**கிரவுஞ்சம்** – அன்றிற்புள்; கோழி பறக்கும் அளவுள்ள தொலைவு; கிரவுஞ்சத்தீவு; கிரவுஞ்சமலை.

**கிராக்கி** – காண்க: **கிறாக்கி**.

**கிராகதி** – நிலவேம்பு.

**கிராகியம்** – அறியத்தக்கது; கொள்ளத்தக்கது.

**கிராணம்** – மறைவு, கிரகணம்; சிறுவட்டில்; மூக்கு.

**கிராணி** – ஒருவகைக் கழிச்சல்நோய்; எழுத்தர்.

**கிராதகன்** – கொடியவன்.

**கிராதமூர்த்தி** – வேட்டுவக்கோலம் கொண்ட சிவபிரான்.

**கிராதன்** – வேடன்; மலைக்குறவன்; கொடியவன்.

**கிராதி** – மரத்தினாற் செய்த வேலி, அளியடைப்பு.

**கிராந்தி** – சூரியவீதி; கிரகச்சாய்வு.

**கிராந்திமண்டலம், கிராந்திவீதி** – சூரியவீதி.

**கிராந்துதல்** – மறைந்துகொள்ளுதல்; இணைத்தல்.

**கிராம்** – கடிவாளம்.

**கிராம்பு** – இலவங்கம்.

**கிராமக்கணக்கன்** – ஊர்க் கணக்குவேலை பார்ப்போன்.

**கிராமக்காவல்** – ஊர்காவல்; ஊர்காவற்காரன்.

**கிராமச்சாவடி** – ஊர்ப் பொதுவிடம்.

**கிராமச் செலவு** – ஊர்ப் பொதுச்செலவு.

**கிராமசமுதாயம்** – வருமானமுள்ள ஊர்ப் பொதுச் சொத்து.

**கிராமசிம்மம்** – நாய்.

**கிராமணி** – ஊர்த் தலைவன்; தலைமையானவன்; கிராமியன்; சான்றாரிலும் கைக்கோளரிலும் ஒரு சாரார்க்கு வழங்கும் பட்டப்பெயர்.

**கிராமத்தார்** – ஊர் மகாசனம்.

**கிராமத்தான்** – நாட்டுப்புறத்தான்.

**கிராமதேவதை** – ஊரைக் காக்கும் பெண் தெய்வம்.

**கிராமநத்தம்** – ஊரையடுத்து வீடுகள் கட்டக் கூடிய இடம்.

**கிராமம்** – நூறு குடியுள்ள ஊர்; மருதநிலத்தூர்; ஊர்; நீர்வாழ் பறவை; சுரங்களின் சேர்க்கை வகை.

**கிராமமானியம்** – இடைக்கால அரசர்களால் ஊர் தோறும் பணியாள்களுக்கு அளிக்கப்பட்ட இறையிலி நிலம்.

**கிராமமேரை** – ஊர் வேலைக்காரரின் சுதந்தரம்.

**கிராமாதிகாரி** – ஊர்த்தலைவன்.
**கிராமாந்தரம்** – நாட்டுப்புறம்.
**கிராமியம்** – நாட்டுப்புறமக்கள் பேசும் கொச்சைப் பேச்சு; இழிவானது.
**கிராமியன்** – நாட்டுப்புறத்தவன்.
**கிராய்** – புற்காடு; கருஞ்சேற்று நிலம்.
**கிராய்தல்** – சுவர் முதலியவற்றைத் தேய்த்துத் துலக்கல்.
**கிராவணம்,** **கிராவம்** – கல்மலை.
**கிரி** – பன்றி; மலை; பிணையாளி; இலக்கினம்.
**கிரிகரன்** – ஒரு வாயு.
**கிரிகன்னி** – துர்க்கை; வெள்ளைக் காக்கணங் கொடி.
**கிரிகிரி** – காட்டுப்பன்றி.
**கிரிகை** – செய்கை.
**கிரிகோலம்** – அலங்கோலம்.
**கிரிச்சம்** – வருத்தம்.
**கிரிசம்** – மென்மை.
**கிரிசரம்** – மலையிற் பிறந்த யானை.
**கிரிசன்** – சிவன்.
**கிரிசு,** **கிரிசுக் கத்தி** – குறுவாள்.
**கிரிசை** – பார்வதி; செய்கை.
**கிரித சாக்கரி** – ஒரு பண்வகை.
**கிரிதுர்க்கம்** – மலையரண்.
**கிரிமல்லிகை** – வெட்பாலை மரம்; மலை மல்லிகை.
**கிரிமிஞ்சி** – ஒருவகைச் சிவப்புச் சாயம்.
**கிரியாசத்தி** – ஐந்து சத்தியுள் ஒன்று; அது வினைத்துணையாக நின்று உலகங்களை யாக்குவது.
**கிரியாத்து** – மலைவேம்பு.
**கிரியாபதம்** – வினைமுற்றுச் சொல்.
**கிரியாபூசை** – கிரியாபாகத்தான் புரியும் பூசை.
**கிரியா மார்க்கம்** – முத்திக்குரிய கிரியையாகிய வழி.
**கிரியாவான்** – கிரியையினின்று ஒழுகுவோன்.
**கிரியை** – செய்கை; சிவனை வழிபடுகை; இறுதிக் கடன்; தாளப் பிரமாணத்துள் ஒன்று; வினை; கிரியாசத்தி.
**கிரியைக்கேடு** – முறைகேடு.
**கிரிராசன்** – இமயமலை.
**கிரிவாணம்** – நீலாஞ்சனக் கல்.
**கிரீச்செனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**கிரீசன்** – சிவன்.
**கிரீட்டி** – பிரண்டைக்கொடி.
**கிரீட்டுமம்** – முதுவேனிற்காலம்.
**கிரீடதாரி** – முடிதரித்தோன்.
**கிரீடம்** – மணிமுடி; வேலிப்பருத்தி.
**கிரீடாதிபதி** – முடிமன்னன்.
**கிரீடி** – அரசன்; அருச்சுனன்.
**கிரீடித்தல்** – விளையாடுதல்; புணர்தல்.
**கிரீடை** – விளையாட்டு; மகளிர் விளையாட்டு; புணர்ச்சி.
**கிரீதன்** – பெற்றோரிடமிருந்து விலைக்கு வாங்கப்பட்ட தத்துப்பிள்ளை.
**கிரீவம்** – கழுத்து.
**கிருகச்சித்திரம்** – குடும்பச் சச்சரவு.
**கிருகசாரி,** **கிருகத்தன்** – இல்லறத்தான், இல்லற நிலையி லுள்ளவன்.
**கிருகதேவதை** – இல்லுறை தெய்வம்.
**கிருகப் பிரவேசம்** – புதுமனையிற் புகும்போது செய்யும் சடங்கு; மணப்பெண்ணைக் கணவன் வீட்டிற்கு முதன்முறை அழைத்துக்கொள்ளும் போது செய்யும் சடங்கு.
**கிருகபதி** – வீட்டுத் தலைவன்; இல்லறத்தான்.
**கிருகம்** – வீடு.
**கிருகரன்** – பசி, கோபம் முதலியவற்றை உண்டாக்கும் பத்து வாயுக்களுள் ஒன்று.
**கிருகி** – இல்வாழ்வான்.
**கிருகிணி** – மனைவி.
**கிருசம்** – மெலிவு, இளைப்பு.
**கிருசாரான்னம்** – அன்னத்துடன் எள்ளுப்பொடி கலந்த உணவு.
**கிருட்டி** – தலையீற்றுப் பசு; பன்றி; பிரண்டைக் கொடி.
**கிருட்டிகன்** – பயிரிடுவோன், வேளாளன்.
**கிருட்டிணபக்கம்,** **கிருட்டிணபட்சம்** – தேய்பிறை, அபரபட்சம்.
**கிருட்டிணபாணம்** – எட்டிமரம்.
**கிருட்டிணம்** – கறுப்பு; இரும்பு; மிளகு; துரிசு; காகம்; குயில்; மான்வகை.
**கிருட்டிணமூலி** – துளசி.
**கிருட்டிணன்** – கண்ணன்; அருச்சுனன்.
**கிருட்டிணை** – திரௌபதி; ஓர் யாறு; கடுகு; முந்திரிகை; வால்மிளகு.
**கிருட்டினாசினம்** – மான்தோல்.
**கிருத்தம்** – செய்யப்பட்டது.
**கிருத்தி,** **கிருத்திகை** – கார்த்திகை.
**கிருத்திமம்** – தோல்; செயற்கையானது; பொய்; பூதம்.
**கிருத்தியம்** – தொழில்; பிதிர்கடன்; ஐந் தொழில்.
**கிருத்திரம்** – கழுகு.
**கிருத்திரிமம்** – போலியானது; வஞ்சனை; குறும்புச் செயல்.

**கிருத்திவாசன்** – சிவபெருமான்.
**கிருதக்கினதை** – செய்நன்றி கோறல்.
**கிருதக்கினன்** – நன்றி மறந்தவன்.
**கிருதக்கு** – வஞ்சகம்.
**கிருதகிருத்தியன்** – செய்தற்குரிய கடமையைச் செய்துமுடித்தவன்.
**கிருதஞ்ஞதை** – செய்நன்றியறிகை.
**கிருதஞ்ஞன்** – செய்நன்றியறிபவன்.
**கிருதம்** – செய்யப்பட்டது; கிருதயுகம்; நெய்; செம்முருங்கைமரம்.
**கிருதயுகம்** – நான்கு யுகங்களுள் முதல் யுகம்.
**கிருதன்** – செருக்குள்ளவன்.
**கிருதா** – கன்னமீசை.
**கிருதார்த்தன்** – பேறுபெற்றவன்.
**கிருதி** – இசைப்பாட்டு, கீர்த்தனம்.
**கிருது** – செருக்கு; ஒய்யாரம்.
**கிருதுக்காரன்** – காண்க: **கிருதன்.**
**கிருபணத்துவம், கிருபணம்** – இவறல் தன்மை, உலோபம்.
**கிருபணன்** – இவறல் தன்மையுடையவன், உலோபி.
**கிருபாகடாட்சம்** – காண்க: **கிருபைக்கண்.**
**கிருபாகரம்** – திருவருள்.
**கிருபாகரன்** – அருளுக்கு இருப்பிடமானவன்.
**கிருபாசமுத்திரம்** – அருட்கடல்.
**கிருபாமூர்த்தி, கிருபாளு** – அருளுடையவன்.
**கிருபை** – அருள்.
**கிருபைக்கண்** – அருட்பார்வை.
**கிருமி** – புழு.
**கிருமிசத்துரு** – பலாசு; பலாசம் விதை.
**கிருமிநாசம்** – குரோசானியோமம்; பலாசம் விதை; பேய்ப்பீர்க்கு; பங்கம்பாளைச்செடி.
**கிருமிமலடு** – கருப்பையில் புழுக்களால் உண்டாகும் மலட்டுத் தன்மை.
**கிருமிவைத்தல்** – புண்ணிற் புழுவுண்டாதல்.
**கிரேதம், கிரேதயுகம், கிரேதை** – காண்க: **கிருதயுகம்.**
**கிரேந்தி** – ஏலத்தோல்.
**கிரேனிடல்** – அஞ்சியொடுங்குதற் குறிப்பு.
**கிரௌஞ்சம்** – கோழி பறக்கும் அளவுள்ள தொலைவு; ஒரு மலை; கிரவுஞ்சத்தீவு; அன்றில் பறவை.
**கில்** – ஆற்றலுணர்த்தும் இடைநிலை.
**கில்கில்லெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**கில்தல் (கிற்றல்)** – ஆற்றல் கொள்ளுதல்.
**கில்லம்** – கழுத்து; தொண்டைக்குழி.
**கிலம்** – சிதைந்தது; சிறுமை, புன்மை.
**கிலமாதல்** – பழுதுபடுதல்.
**கிலாய்த்தல்** – சினங்கொள்ளல்; அங்கலாய்த்தல்.
**கிலி** – அச்சம், பயம்.
**கிலிகோலம், கிலிச(ய)ம்பறை** – சீர்கேடு, அலங்கோலம்.
**கிலிபிடித்தல்** – மனத்தில் அதிக அச்சங்கொள்ளுதல்.
**கிலீபம்** – அலி.
**கிலுக்கம்** – பறவைவகை.
**கிலுக்கு** – ஒலிக்கை; கிலுகிலுப்பை; ஒரு விளையாட்டுக் கருவி.
**கிலுக்குத்தடி** – அஞ்சலெடுத்துச் செல்லுவோர் கையில் கொண்டு ஒலிசெய்யும் தடி.
**கிலுக்குதல்** – ஒலிக்கச்செய்தல்.
**கிலுகிலி** – பிள்ளைகள் ஆட்டும் கிலுகிலுப்பை.
**கிலுகிலுத்தல்** – கிலுகிலுவென்று ஒலித்தல்; ஆரவாரித்தல்.
**கிலுகிலுப்பை** – ஒலிசெய்யும் ஒரு விளையாட்டுக் கருவி; செடிவகை; கொடிவகை.
**கிலுகிலெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**கிலுங்குதல்** – ஒலித்தல்.
**கிலுத்தம்** – மணிக்கட்டு; மக்கள் வடிவான பழமுடைய மரவகை.
**கிலுபதம்** – முறைமை, நியாயம்.
**கிலுமொலெனல்** – வண்டு முதலியவற்றின் ஒலிக் குறிப்பு; அடர்ச்சிக் குறிப்பு.
**கிலேசம்** – துன்பம்.
**கிலேசித்தல்** – துன்பப்படுதல்.
**கிழக்கத்தி, கிழக்கத்திய** – கீழ்த்திசைக்குரிய.
**கிழக்கதை** – தொன்மம், பழங்கதை.
**கிழக்கு** – கிழக்குத் திசை; கீழிடம்; இழிவு; பள்ளம்.
**கிழக்குக்கணவாய்** – கிழக்குத்தொடர்ச்சி மலை.
**கிழக்குவெளுத்தல்** – பொழுது விடியத் தொடங்குதல்.
**கிழங்கான்** – கடல்மீன்வகை.
**கிழங்கிருத்தல்** – அடிமூலம் பெயர்க்கப்படாது தங்குதல்.
**கிழங்கு** – செடிகொடிகளின் மூலம்; காரணம்.
**கிழங்கெடுத்தல்** – அடியோடு அழித்தல்.
**கிழடு** – முதுமை; முதியது.
**கிழடுகட்டை** – அகவை முதிர்ந்து பயனற்றவர்.
**கிழத்தனம்** – முதுமை.
**கிழத்தி** – உரியவள்; தலைவி.
**கிழம்** – முதுமை; முதுமையடைந்தவர்.
**கிழம்படுதல்** – முதுமையடைதல்.
**கிழமழை** – பெய்து ஓயும் நிலையிலுள்ள மழை.
**கிழமேல்** – கிழக்கு மேற்காக.

**கிழமை** – உரிமை; உறவு; நட்பு; ஆறாம் வேற்றுமைப் பொருள்; குணம்; வாரநாள்; முதுமை.

**கிழமைக்கழுதல்** – இறந்துபட்ட எட்டாம்நாள் துக்கம் கொண்டாடுதல்.

**கிழமைவட்டம்** – ஏழுநாள் கொண்ட அளவு.

**கிழலை** – திசை; மரக்கலத்தின் சாய்வுப்பக்கம்.

**கிழவது** – உரியது.

**கிழவன்** – உரியவன்; தலைவன்; மருதநிலத் தலைவன்; அகவை முதிர்ந்தவன்; எண்ணெய்க் கசடு; பரணி.

**கிழவி** – தலைவி; முதியவள்; முருங்கைமரம்.

**கிழவு** – காண்க: **கிழத்தனம்.**

**கிழவோன்** – உரியவன்; தலைவன்; முதியவன்.

**கிழாஅன்** – தயிர்த்தாழி.

**கிழாத்தி** – கடல்மீன்வகை; நன்னீரில் வாழும் மீன்வகை.

**கிழார்** – வேளாளர் பட்டப்பெயர்; நீர் இறைக்கும் பொறி; தோட்டம்.

**கிழாலை** – களர்நிலம்.

**கிழாள்** – உரியவள்.

**கிழான்** – உரியவன்; சூரியன்; வேளாளர் பட்டப் பெயர்; தயிர்த்தாழி.

**கிழான்பச்சை** – சந்தனவகை.

**கிழி** – கிழிபட்ட துகில்; சீலையில் எழுதிய ஓவியம்; பொற்கிழி; நிதிப்பொதி; கதிர்க்கிழி; கோவணம்.

**கிழிக்கட்டு** – துணியிற் கட்டிய நிதி முதலியன.

**கிழிகட்டுதல்** – துணியில் முடிந்த பந்தயப் பொருளைப் பலருங் காணும்படி தூக்கிக் கட்டுதல்.

**கிழிச்சீரை** – பணம் பொதிந்த சீலை.

**கிழிசல்** – கிழிந்தது.

**கிழித்தல்** – கிழியச்செய்தல்; பேர்த்தல்; கீறுதல்; கோடு வரைதல்; சாதித்தல்; தின்னுதல்; சொல்லாற் கண்டித்தல்; அங்காத்தல்.

**கிழிதம்** – நிதிக்கிழி.

**கிழிதல்** – பீறுதல், பிளந்துபோதல்; பேர்தல்; தோல்வியுறுதல்; அழிதல்.

**கிழிப்பு** – கிழிக்கை; பிளப்பு; குகை.

**கிழிமுறி** – கிழிக்கப்பட்ட ஆவணம்.

**கிழியல்** – கிழிவு; கிழிந்தது; பயனற்றவன்.

**கிழியறுத்தல்** – வாதத்தில் வென்று பொற்கிழி பெறுதல்.

**கிழியீடு** – நிதிப்பொதி, பொன்முடிப்பு.

**கிழிவு** – கிழிதல்; வாய்ப்புக் கிடைக்காமை.

**கிள்ளல்** – காண்க: **கிள்ளுதல்.**

**கிள்ளாக்கு** – அதிகாரச் சீட்டு.

**கிள்ளாப்பிறாண்டு** – விளையாட்டுவகை; அலட்சியமாகப் பரிமாறுகை.

**கிள்ளி** – சோழர்க்கு வழங்கிய சிறப்புப் பெயர்.

**கிள்ளிக்காட்டுதல்** – குறிப்புக் காட்டுதல்; சிறிதளவு பரிமாறுதல்.

**கிள்ளிக்கொடுத்தல்** – சிறுகக் கொடுத்தல்; தூண்டிவிடுதல்.

**கிள்ளித்தெளித்தல்** – சிறிது கொடுத்தல்.

**கிள்ளிவிடுதல்** – தூண்டிவிடுதல்.

**கிள்ளு** – கிள்ளப்பட்ட துண்டு; கிள்ளுகை.

**கிள்ளுக்கீரை** – கிள்ளியெடுக்கப்படும் கீரைவகை; எளிமை.

**கிள்ளுங்கிழியுமாய்** – பயனற்றதாய்.

**கிள்ளுதல்** – நகத்தாலெடுத்தல்; தோண்டுதல்; அழித்தல்; சிறிதளவு எடுத்தல்.

**கிள்ளை** – கிளி; கருங்கிளி; குதிரை; சாதிபத்திரி.

**கிள்ளைச்சாதம்** – கிளிக்குஞ்சு.

**கிளத்தல், கிளத்துதல்** – புலப்படக் கூறுதல்; விதந்து கூறுதல்.

**கிளப்பம்** – கிளர்ச்சி.

**கிளப்பிவிடுதல்** – தூண்டிவிடுதல்; நீக்குதல்.

**கிளப்பு** – எழும்புகை; சொல்லுகை; சோற்றுக் கடை.

**கிளப்புதல்** – எழுப்புதல்; சுவர் முதலியன எழச் செய்தல்; நீக்குதல்; உண்டாக்குதல்; தூண்டிவிடுதல்.

**கிளம்பல்** – எழும்பல்; பதிவுப் புத்தகத்தில் புதிதாகச் சேர்த்த நிலங்களின் அட்டவணை.

**கிளம்பிவிடுதல்** – மனமின்றிச் சம்மதித்தல்; குடிபோதல்.

**கிளம்புதல்** – மேலெழுதல்; விளக்கமாதல்; பூமிமட்டத்திற்குமேல் வருதல்; மூண்டெழுதல்; உண்டாதல்; புறப்படுதல்; அதிகப்படுதல்; எடுபடுதல்.

**கிளர்** – ஒளி; பூந்தாது.

**கிளர்ச்சி** – எழும்புகை; மேலோங்குதல்; உள்ளக் கிளர்ச்சி; வளர்ச்சி; செழிப்பு; சினம்; கலவரம்; இறுமாப்பு.

**கிளர்த்துதல்** – எழுப்புதல்; நிறைத்தல்.

**கிளர்தல்** – மேலெழுதல்; வளர்தல்; மிகுதல்; விளங்குதல்; சிறத்தல்; உள்ளக் கிளர்ச்சி கொள்ளுதல்; சினத்தல்; இறுமாப்புக் கொள்ளுதல்.

**கிளர்வரி** – நடுநின்றார், மாறுபட்ட இருவருக்குஞ் சந்து சொல்லக் கேட்டு நிற்பதாக நடிக்கும் நடிப்பு.

**கிளர்வி** – கதவு.

**கிளவரி** – தண்ணீர்விட்டான் கிழங்கு.

**கிளவி** – மொழி; பேச்சு; சொல்; அகப்பொருள் துறை.

**கிளவிக்கொத்து** – கோவைப் பிரபந்தத்தின் பல துறை கொண்ட அதிகாரம்.

**கிளவிக்கோவை** – அகப்பொருட்கோவை.

**கிளவித்தலைவன்** – அகப்பொருள் தலைவன்.

**கிளறிப்பார்த்தல்** – ஆராய்ந்து தெரிதல்; கிண்டிப் பார்த்தல்; தூண்டிவிடுதல்.

**கிளறிவிடுதல்** – கிண்டிவிடுதல்; தூண்டிவிடுதல்; மறைபொருளை வெளியாக்குதல்.

**கிளறுதல்** – கிண்டுதல்; கலக்குதல்; துழாவுதல்; துருவி ஆராய்தல்; வெளியாக்குதல்.

**கிளா** – களாச்செடி.

**கிளாய்** – எள்ளுக்காய்க் கோது.

**கிளி** – கிள்ளை, பறவைவகை; கிளிவகை; கிளி மீன்; வெட்டுக்கிளி.

**கிளிக்கூடு** – கிளியை அடைத்து வளர்க்கும் பஞ்சரம்; குற்றவாளிகளை அடைத்துத் துன்புறுத்தும் கூடு; வழக்குமன்றத்தில் சாட்சி களேனும் கைதிகளேனும் நிற்கும் அடைப் பிடம்.

**கிளிக்கொம்பன்** – வளைகொம்புள்ள மாடு.

**கிளிக்கொம்பு** – கிளிமூக்குப்போல வளைந்த விலங்குக் கொம்பு.

**கிளிகடிகருவி** – கிளியோட்டுங் கருவி.

**கிளிகடிகோல்** – கிளியோட்டுங் கருவியுள் ஒன்று.

**கிளிச்சிறை** – கிளிச்சிறகுபோன்ற நிறமுள்ள பொன்வகை.

**கிளிஞ்சில்** – கடல்வாழ் உயிர்வகை.

**கிளிஞ்சிற்சுண்ணாம்பு** – கிளிஞ்சிலை நீற்றியெடுக் கும் நீறு.

**கிளித்தட்டு** – ஒருவகை விளையாட்டு.

**கிளிப்பிள்ளை** – கிளி; கிளிக்குஞ்சு.

**கிளிமூக்கன்** – கற்றாழை; வளைந்த மூக்குடைய வன்.

**கிளிமூக்கு** – கிளிமூக்குப் போன்றது; சுவடிகளில் ஏடு விழாமல் தடுக்கவைக்கும் ஓலையீர்க்குத் துண்டு.

**கிளிமூக்குக்கிழங்கு** – ஆகாசகருடன் கிழங்கு.

**கிளியந்தட்டு** – காண்க: **கிளித்தட்டு.**

**கிளியீடு** – கிளியினாற் பொந்துகளிற் சேர்த்து வைக்கப்பட்ட கதிர்கள்.

**கிளுகிளுத்தல்** – மகிழ்தல்.

**கிளுகிளெனல்** – சிரித்தல் முதலிய ஒலிக்குறிப்பு; செழித்தற் குறிப்பு; ஒளிர்தற் குறிப்பு.

**கிளுவை** – செடிவகை; உயிர்வேலி; பறவை வகை; மீன்வகை; மரவகை.

**கிளை** – கப்பு; பூங்கொத்து; தளிர்; சுற்றம்; பகுப்பு; இனம்; உறவினர்; மூங்கில்; ஓர் இசைக்கருவி; ஓர் இசை.

**கிளைக்கதை** – ஒன்றிலிருந்து பலகதை தோன்றுங் கதை.

**கிளைக்கொம்பு** – பன்றியின் கோரப்பல்.

**கிளைகூட்டுதல்** – ஆந்தைகள் கூட்டமாய்ச் சத்த மிடுதல்.

**கிளைச்சங்கம்** – துணைச்சங்கம்.

**கிளைஞர்** – உறவினர்; நட்பினர்; மருதநில மாக்கள்.

**கிளைத்தல்** – மரம் கப்புவிடுதல்; பெருகுதல்; உண்டாதல்; நெருங்குதல்; விளைதல்; நிறை தல்; கிளறுதல்.

**கிளைதல்** – நீக்குதல்; களைதல்; ஆடை களை தல்; கிளறுதல்.

**கிளைநதி** – ஆற்றினின்று பிரிந்து செல்லும் சிற்றாறு.

**கிளைநரம்பு** – குரல், இளி, துத்தம், விளரி, கைக் கிளை என்னும் யாழ் நரம்புகள்.

**கிளைப்பு** – கப்புவிடுகை; கிண்டுகை.

**கிளைப்பெயர்** – சுற்றத்தை உணர்த்தும் பெயர்.

**கிளைமை** – உறவு.

**கிளையடுப்பு** – கொடியடுப்பு.

**கிளையார்** – உறவினர்; நண்பர்.

**கிளையிதழ்** – புறவிதழ்.

**கிளையோடுதல்** – கிளைவிடுதல்.

**கிளைவழி** – கொடிவழி, வமிசம்.

**கிளைவிழுதல்** – கப்பு உண்டாதல்.

**கிளைவிளக்கு** – பல கிளைகளையுடைய மண விளக்குவகை.

**கிற்பன்** – அடிமையானவன்.

**கிற்பு** – வலிமை; வேலைப்பாடு; செய்கை; அடிமைத்தனம்.

**கிற்றல்** – செய்யுந்திறங்கொள்ளுதல்.

**கிறாக்கி** – அருமை; விலையேற்றம்.

**கிறாம்புதல்** – மெல்லச் செதுக்குதல்.

**கிறாய்** – பச்சைநிறக் களிமண்.

**கிறாளித்தனம்** – கொடுமை.

**கிறி** – குழந்தைகளின் முன்கையில் அணியும் சிறு பவள வடம்; பொய்; தந்திரம்; மாயம்.

**கிறிச்சிடுதல்** – கிறிச்சென்று ஒலித்தல்.

**கிறிசு** – குறுவாள்.

**கிறித்தல்** – மாயஞ்செய்தல்.

**கிறித்தவன்** – கிறித்தவ சமயத்தைச் சார்ந்தவன்.

**கிறு** – நிகழ்கால இடைநிலை.

**கிறுக்கல்** – தாறுமாறாக எழுதுதல்; எழுத்தின் அடிப்பு.

**கிறுக்கன்** – பைத்தியக்காரன்; ஆணவம் பிடித்த வன்.

**கிறுக்கு** – உருத்தெரியாத எழுத்து; எழுதியதை அடித்தல்; தலைச்சுற்று; பைத்தியம்; மிக்க ஆசை; ஆணவம்.

**கிறுக்குதல்** – எழுதுதல்; கீறித்தள்ளல்; வரைந்த எழுத்தை அடித்தல்; தலைசுற்றுதல்.

**கிறுகிறுத்தல்** – மயக்கமாதல்; தடுமாறுதல்.
**கிறுகிறுப்பு** – தலைச்சுழற்சி; செருக்கு.
**கிறுகிறெனல்** – தலைசுற்றற் குறிப்பு; விரைவுக் குறிப்பு.
**கிறுங்குதல்** – அசைதல்.
**கிறுசன்** – குங்குமப்பூ; மஞ்சள்.
**கிறுத்துவம்** – அகில்.
**கிறுது** – குறும்பு; செருக்கு.
**கிறுதுவேதன்** – பீர்க்கங்கொடி.
**கின்று** – ஒரு நிகழ்கால இடைநிலை.
**கின்னகம்** – தூக்கணங்குருவி.
**கின்னம்** – துன்பம்; கீழ்மை.
**கின்னரகண்டி, கின்னரகீதம்** – கின்னரர்களால் பாடப்படும் இசை.
**கின்னரப்பெட்டி** – ஆர்மோனியம் முதலிய வாத்தியப்பெட்டி.
**கின்னரம்** – இசையெழுப்பும் ஒரு பறவைவகை; ஒருவகை யாழ்; நீர்வாழ் பறவை; ஆந்தை.
**கின்னரமிதுனம்** – கின்னரப் பறவைகளின் ஆண் பெண் இரட்டை; ஒருசார் தேவசாதியின் ஆண்பெண் இணை.
**கின்னரர்** – மனிதவுடலும் குதிரை முகமும் உடையராய் இசையில் வல்ல தேவசாதியார்.
**கின்னரர்பிரான்** – குபேரன்.
**கின்னராகம்** – ஒரு பெரும்பண் வகை.
**கின்னரி** – யாழ்வகை; கின்னரசாதிப் பெண்; ஆந்தை.
**கின்னி** – மழைக்கிளி.
**கின்னிக்கோழி** – கினியாநாட்டுக் கோழி.
**கினி** – கிரகபீடை.
**கினிதல்** – முற்றுங் கவிதல்.
**கினை** – புடமிடுதற்குரிய கவசம்; விளாமரம்.

## கீ

**கீ** – ஓர் உயிர்மெய் எழுத்து (க்+ஈ), கவ்வருக்கத்தில் நான்காம் எழுத்து.
**கீக்கீயெனல்** – பறவையொலிக் குறிப்பு.
**கீகசம்** – எலும்பை யொட்டிய தசை; மிகச் சிறிய புழுச்சாதி.
**கீகடம்** – நெருக்கம்.
**கீச்சாங்குருவி** – ஒருவகைப் பறவை.
**கீச்சான்** – குழந்தை; கீச்சாங்குருவி; கடல்மீன் வகை.
**கீச்சி** – பாசிமணியாலான கழுத்தணி.
**கீச்சிடுதல்** – கீச்சென்று சத்தமிடுதல்.
**கீச்சு** – அழுகையொலி; ஒருசார் புள்ளொலி; உருகியிறுகிய இரும்பு.
**கீச்சுக் கிட்டம்** – காண்க : **இரும்புக் கிட்டம்.**
**கீச்சுக்கீச்சுத் தம்பலம், கீச்சுக்கீச்சுத் தாம்பாளம்** – குழந்தைகளாடும் ஒருவகை விளையாட்டு.
**கீச்சுக்கீச்செனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**கீச்சுக்குரல்** – ஒருவகை மென்குரல்.
**கீச்சுப்புட்டை** – அண்டவாதம், வாதநோய்.
**கீச்சுமூச்செனல்** – கூக்குரலிடுங் குறிப்பு.
**கீசகம்** – மூங்கில்; குரங்கு; தலைக்கிடு காப்புறை.
**கீசம்பறை** – முறைகேடு, ஒழுங்கீனம்,
**கீசரன், கீசரி** – சரக்கொன்றைமரம்.
**கீசறை** – காண்க: **கீசம்பறை.**
**கீசன்** – சூரியன்; போர்வல்லோன்.
**கீசா** – பொய்.
**கீசுகீசெனல்** – காண்க: **கீச்சுக்கீச்செனல்.**
**கீடப்பகை** – வாய்விளங்கம்.
**கீடம்** – புழு; கோற்புழு; வண்டு.
**கீடமணி** – மின்மினி.
**கீடமாரி** – சிறுபுள்ளடிப் பூண்டு.
**கீண்டல்** – கிழித்தல்; கிண்டுதல்; கிளைத்தல்; பிளத்தல்.
**கீணம்** – சிதைவு, கேடு.
**கீணர்** – கீழோர், அற்பர்.
**கீதசாலை** – இன்னிசை பயிலும் இடம்.
**கீதநடை** – காண்க: **கீதவேதம்.**
**கீதம்** – இசைப்பாட்டு; இன்னிசை; வண்டு; மூங்கில்.
**கீதவம்** – ஊமத்தை.
**கீதவாத்தியம்** – இசைக்கருவி.
**கீதவீதி** – கீதநாதம் வருகின்ற வழி.
**கீதவுறுப்பு** – இசைப்பாட்டின் கூறு.
**கீதவேதம்** – சாமவேதம்.
**கீதாங்கம்** – இசைக்கு வாசிக்கும் வாச்சியக் கூறு.
**கீதாரி** – இடையர்.
**கீதானுகம்** – கீதாங்கம்.
**கீதி** – பாடுகை; கருங்காலி; பாட்டு.
**கீதை** – நீதிகளைக் கூறும் அருட்பாடல்; பகவத் கீதை.
**கீர்** – சொல்; பாட்டு; பாயசவகை.
**கீர்கீரெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**கீர்த்தனம், கீர்த்தனை** – ஓர் இசைப்பாட்டு; புகழ்ச்சி.
**கீர்த்தி** – புகழ்.
**கீர்த்தித்தல்** – புகழ்தல்.
**கீர்த்தித்தானம்** – சென்மலக்கினம்.

**கீர்த்திமான்** – புகழ்பெற்றவன்.
**கீர்த்திமை** – காண்க: **கீர்த்தி.**
**கீர்த்திலட்சுமி** – புகழாகிய திரு.
**கீர்வாணி** – ஒரு பண்வகை.
**கீரணம்** – விழுங்கல்.
**கீரம்** – கிளி; கருங்கிளி; பால்; நீர்.
**கீரவாணி** – ஒரு பண்வகை; இருபத்தேழாம் மேளகர்த்தா.
**கீரி** – கீரிப்பிள்ளை; கருவாலி; மரவகை; கள்ளி.
**கீரிநோய்** – வயிற்றுப் பூச்சியால் வருங் குழந்தை நோய்.
**கீரிப்பல்** – சிறு பல்.
**கீரிப்பாம்பு** – வயிற்றிலுள்ள ஒருவகைப் புழு.
**கீரிப்பிள்ளை** – நகுலம்.
**கீரிப்பூச்சி** – கீரைப்பூச்சி.
**கீரிப்பூண்டு** – பாம்பைக் கடித்த கீரி அதன் நஞ்சு தன்னை வருத்தாதிருக்கச் சார்ந்து புரளும் ஒரு பூடு.
**கீரிராசி** – சுறுசுறுப்பில்லாது மிகப் பருத்துள்ள குதிரைச் சாதி.
**கீரை** – உணவுக்குப் பயன்படும் இலைவகை.
**கீரைக்காரன்** – கீரையைப் பயிரிட்டு விற்போன்.
**கீரைமசித்தல்** – சமைக்கும்போது கீரைக்கறியை மத்தாற் கடைந்து பதப்படுத்தல்.
**கீரைநார்ப்பட்டு** – பட்டுச்சீலைவகை.
**கீரைப்பாம்பு, கீரைப்பூச்சி** – வயிற்றிலுண்டாகும் நாகப் பூச்சி.
**கீரைமணி** – கழுத்தில் அணியும் ஒருவகைச் சிறு பாசிமணி.
**கீரைமீன்** – ஒருவகைச் சிறிய மீன்.
**கீல்** – உடற்பொருத்து; கதவின் கீல்; பூசுந்தார்.
**கீல்கீலாய்** – சந்து சந்தாய்.
**கீல்பூசுதல்** – தாரடித்தல்.
**கீல்முளை** – கதவிற் கீல்தாங்கும் முளை.
**கீல்(லு)தல்** – கிழித்தல்.
**கீல்வாதம், கீல்வாயு** – கீல்மூட்டுகளில் உண்டாகும் வாதநோய்.
**கீல்வீக்கம்** –கீல்மூட்டு வீங்குதல்.
**கீலக** – அறுபதாண்டுக் கணக்கில் நாற்பத்திரண்டாம் ஆண்டு.
**கீலகம்** – ஆணி; பொருத்து; விரகு.
**கீலகவெட்டை** – மிகுவெப்பம்; கீலக ஆண்டுப் பஞ்சம்.
**கீலச்சு** – உருவம் உண்டாக்கும் கட்டளையச்சு.
**கீலம்** – ஆணி; சுடர்க்கொழுந்து; பிசின்; கிழிதுண்டம்; வெட்டு; பூசுந்தார்.
**கீலாணி** – கதவு முதலியவற்றின் கீலைப் பற்றியிருக்கும் ஆணி.
**கீலாரி** – காண்க: **கீதாரி.**
**கீலாலம்** – இரத்தம்; நீர்; காடி.
**கீலி** – விரகன், தந்திரமுள்ளவன்.
**கீழ்** – கீழிடம்; கிழக்கு; பள்ளம்; முற்காலம்; குற்றம்; கயமை; இழிந்தவன்; கீழே; ஏழனுருபு; மறதி; கடிவாளம்.
**கீழ்க்கடை** – கழிந்துபோன நாள்கள்; இழிந்தது.
**கீழ்க்கண்** – கீழ்ப்பார்வை; கண்ணின் கீழ்ப்பக்கம்.
**கீழ்க்கணக்கு** – அடிநிமிர்வில்லாச் செய்யுள் பலவற்றால் அறம் பொருள் இன்பங்களைப்பற்றிக் கூறும் நூல்வகை; கீழ்வாய் இலக்கம்; உதவிக் கணக்கன்.
**கீழ்க்கதுவாய்த்தொடை** – அளவடியுள் ஈற்றயற் சீர்க்கண் இன்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலியன வரத் தொடுப்பது.
**கீழ்க்காது** – காதடி.
**கீழ்க்குரல்** – அடிக்குரல்; மந்தவொலி.
**கீழ்காற்று** – கிழக்கிலிருந்து வீசும் காற்று.
**கீழ்ச்சாதி** – தாழ்ந்த சாதி, கீழ்பிறப்பு.
**கீழ்த்தரம்** – இழிந்த தரம், தாழ்ந்தபடி.
**கீழ்த்திசை** – கிழக்கு.
**கீழ்த்திசைப்பாலன்** – இந்திரன்.
**கீழ்(மு)தல்** – கிழித்தல், பிளத்தல்; சிதைத்தல்; தோண்டுதல்; மீறுதல்; கோடுகிழித்தல்; பறியுண்ணுதல்.
**கீழ்நிலை** – தாழ்ந்த நிலைமை; கீழ்மாடம்; நிலவறை.
**கீழ்நோக்கம்** – கீழ்ப்பார்வை; கீழானவற்றில் மனம் விரும்புகை.
**கீழ்நோக்குதல்** – கீழே பார்த்தல்; தரையின் கீழாதல்; தாழ்ந்த நிலைக்குப் போதல்; கீழானவற்றில் மனம் செல்லுதல்; கழிச்சலாதல்.
**கீழ்ப்பட்டவர்** – தாழ்ந்தவர்.
**கீழ்ப்படிதல்** – அடங்கிநடத்தல்.
**கீழ்ப்படிவு** – அமைவு, அடங்கிப்பணிகை.
**கீழ்ப்படுத்தல்** – அடங்குதல், தாழ்வுபடுத்தல்; இழிவுறச் செய்தல்.
**கீழ்ப்படுதல்** – அடங்குதல், இழிவுபடுதல்.
**கீழ்ப்பயிர்** – பயிருக்குக்கீழ் உண்டாகும் பயிர்; புன்செய்ப் பயிர்.
**கீழ்ப்பாடு** – கீழ்ப்பக்கம்.
**கீழ்ப்பாதி** – குடிவாரம்.
**கீழ்ப்பாய்ச்சி** – மூலைக்கச்சம்.
**கீழ்ப்பார்வை** – கீழ்நோக்குகை; வஞ்சகப் பார்வை.
**கீழ்ப்பால்** – கீழ்ச்சாதி.
**கீழ்ப்பாவல்** – மரக்கலத்தின் ஓர் உறுப்பு.
**கீழ்ப்புறம்** – கீழ்ப்பக்கம்; கப்பலின் சாய்வுப் பக்கம்.
**கீழ்பால்** – கிழக்கு.

**கீழ்போகம்** – கிழங்குகளின் விளைவு.
**கீழ்மக்கள்** – இழிந்தோர்.
**கீழ்மகன்** – இழிந்தோன்; சனி.
**கீழ்மடை** – கடைமடை; மடைநீர் பாய்தற்குத் தொலைவான நிலம்.
**கீழ்மரம்** – அச்சுமரம்.
**கீழ்மாடம்** – நிலவறை.
**கீழ்முந்திரி** – கீழ்வாய் இலக்கங்களுள் ஒன்று, $\frac{1}{102400}$.
**கீழ்மேலாதல்** – தலைகீழாதல்.
**கீழ்மை** – இழிவு, தாழ்மை.
**கீழ்வாய்** – மோவாய்; சிற்றெண்; பெண்குறி.
**கீழ்வாய்நெல்லி** – கீழாநெல்லி.
**கீழ்வாயிலக்கம்** – ஒன்றுக்குக் கீழ்ப்பட்ட எண் வாய்பாடு, பின்ன எண்ணின் கீழ்த்தொகை.
**கீழ்விழுதல்** – செயல் முடிவதற்காகத் தாழ்தல்.
**கீழ்வு** – கீழிடம்.
**கீழ்வெட்டு** – தடுத்துப் பேசுகை; கிண்டல் பேச்சு; சதிசெய்து கெடுக்கை.
**கீழ்வெட்டு வெட்டுதல்** – சதிசெய்தல்; தடுத்துப் பேசுதல்; வெட்டிய கிணற்றின் அடியில் மேலும் வெட்டுதல்.
**கீழண்டை** – கிழக்குப் பக்கம், கிழக்குப்புறம்.
**கீழது** – கீழுள்ளது.
**கீழறுத்தல்** – நிலத்தில் சுரங்கம் செய்தல்; சதி செய்தல்.
**கீழறுதல்** – படைகளின் மனப்போக்குப் பகைவரால் வேறுபடுத்தப்படுதல்.
**கீழறுப்பான்** – சூழ்ச்சியாற் பிறரைக் கெடுப்பவன்.
**கீழறை** – கீழறுக்கை; நிலவறை; பொந்து.
**கீழாதல்** – தாழ்வடைதல்; தளர்தல்.
**கீழாநெல்லி** – நெல்லிச் செடிவகை; சிறிய மரவகை.
**கீழாறு** – நிலத்தினுள்ளோடும் ஆறு.
**கீழிசை** – பாடுதற்குரிய குற்றங்களுள் ஒன்று.
**கீழிடுதல்** – தாழ்த்துதல்.
**கீழிதழ்** – கீழுதடு.
**கீழிருத்தல்** – உட்பட்டிருத்தல்.
**கீழுக்குப் போதல்** – தாழ்நிலைக்கு வருதல்.
**கீழுலகு, கீழேழுலகம்** – பூமியின் கீழுள்ள ஏழுலகங்கள்; அவை: அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதலம்.
**கீழைத்திசை** – கீழ்த்திசை.
**கீழைநாள்** – விடியற்காலம்.
**கீழோங்கி** – செம்படவரில் கீழ்வகுப்பார்.
**கீழோசை** – கீழிசை.
**கீழோர்** – தாழ்ந்தோர்; உழவர்; சண்டாளர்.
**கீள்** – கூறு; இடுப்பிற் கட்டும் துணியாலாகிய அரைஞாண்.
**கீள்(ளு)தல்** – கிழித்தல்; உடைதல்.
**கீளி** – கடல்மீன்வகை.
**கீளுடை** – கோவணம், இலங்கோடு.
**கீற்கதவு** – கீல் தைக்கப்பட்ட கதவு.
**கீற்கொண்டை** – மயிர் முடித்தலின்வகை.
**கீற்பாய்** – தார் பூசின துணி.
**கீற்பிடிப்பு** – வாதப்பிடிப்பு நோய்.
**கீற்றன்** – குறுக்குக் கோடுள்ள புடைவை.
**கீற்று** – வரி; துண்டு; கூரைவேயும் தென்னங்கீற்று; கிடுகு; வயிரக்குற்றம் பன்னிரண்டனுள் ஒன்று; மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்று.
**கீற்றுக்கால்** – வெடிப்புள்ள பாதம்.
**கீற்றுமதி** – மூன்றாம் பிறைச்சந்திரன்.
**கீறல்** – பிளவு; வரிவரைகை; எழுதுகை; கீற்றுக் கையெழுத்து; கையெழுத்திடத் தெரியாதவன்.
**கீறிக் காயவைத்தல்** – உப்புக்கண்டம் உலர்த்துதல்.
**கீறிப்பார்த்தல்** – ஆய்ந்தறிதல்.
**கீறியாற்றுதல்** – உட்கருத்தை வெளிப்படுத்தி மனத்தாங்கலை நீக்கிக்கொள்ளுதல்.
**கீறு** – வரி; பிளப்பு; துண்டம்; எழுத்து; தென்னமட்டை அல்லது பனங்கிழங்கின் பாதி.
**கீறுதல்** – வரி கீறுதல்; எழுதுதல்; கிறுக்குதல்; கிழித்தல்; பறண்டுதல்; அறுத்தல்; வகிர்தல்; குறிப்பித்தல்; கடத்தல்.
**கீன்றல்** – கீறுதல்.
**கீனம்** – இழிவு; குறைவு.

## கு

**கு** – ஓர் உயிர்மெய்யெழுத்து (க்+உ); நான்கனுருபு; ஒரு சாரியை; பண்புப்பெயர் விகுதி; தொழிற்பெயர் விகுதி; தன்மை யொருமை எதிர்கால வினைமுற்று விகுதி; வடமொழியில் இன்மைக்கும் எதிர்மறைக்கும் வரும் ஒரு முன்னொட்டு; பூமி.
**குக்கர்** – மிக இழிந்தோர்.
**குக்கல்** – கக்குவான் நோய்; நாய்.
**குக்கன்** – நாய்.
**குக்கி** – வயிறு.
**குக்கில்** – செம்போத்து; குங்கிலியம்; குங்கிலியப் பிசின்.
**குக்கிலம்** – அதிவிடயப்பூண்டு.
**குக்குடச்சூட்டு** – கோழித்தலைக் கந்தகம்.

**குக்குடசர்ப்பம்** – ஆயுள் நீடித்தலால் உடல் குறைந்து கோழி பறக்கும் அளவு பறந்து செல்லும் தன்மையதான பாம்பு.

**குக்குடதீபம்** – கோழி வடிவாக உள்ள கோயில் விளக்கு.

**குக்குடபுடம்** – கோழிப்புடம், கோழியின் அளவாகப் பத்து வறட்டிகொண்டு இடப்படும் புடம்.

**குக்குடம்** – கோழி; குக்குடசர்ப்பம்.

**குக்குடாசனம்** – இரு பாதங்களையும் கீழ் வைத்துக் கோழிபோல் குந்தியிருந்து யோகம் செய்யும் இருக்கைவகை.

**குக்குடி** – பெட்டைக்கோழி; இலவமரம்.

**குக்குதல்** – இருமுதல்; குந்துதல்.

**குக்குரம்** – கோடகச்சாலைப் பூடு.

**குக்குரன்** – காண்க: **குக்கன்.**

**குக்குரி** – பெண்நாய்.

**குக்குலி** – செம்போத்து.

**குக்குலு, குக்குலுவம்** – குங்கிலியம்.

**குக்குறுவான்** – ஒரு பறவை வகை.

**குக்கூடல்** – முட்டாக்கு.

**குக்கூவெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**குகம்** – மலைக்குகை; வேகமான நடையுள்ள குதிரை; நுட்பம்; மறைவு.

**குகரம்** – மலைக்குகை; சுரங்கம்.

**குகரர்** – சாவகத்தீவில் வாழும் ஒரு சாதியார்.

**குகலிதம்** – ஒலி; குயிலின் குரல்.

**குகன்** – முருகன்; இராமரிடம் நட்புக்கொண்ட ஒரு வேடன்; குரு.

**குகாரணி** – உமை.

**குகீலம்** – மலை.

**குகு** – அமாவாசை; பத்து நாடியுள் ஒன்று; கூகையொலி.

**குகுரன்** – காண்க: **குக்கன்.**

**குகுலா** – கடுகுரோகிணி; தேனீ.

**குகூகம்** – குயில்.

**குகை** – மலையில் விலங்குகள் தங்கும் இடம்; முனிவர் வாழிடம்; சிமிழ்; உலோகங்களை உருக்கும் பாத்திரம்; கல்லறை.

**குகைக்காமன்** – கல்நார்.

**குகைச்சி** – கறையான் புற்று.

**குகைப்புடம்** – மூசையில் வைத்து இடும் புடம்.

**குகைமேனாதத்தீ** – சுவர்ணபேதி.

**குங்கிலிகம்** – குங்கிலியம்; வாலுளுவையரிசி.

**குங்கி(கு)லியம்** – ஒருவகை மரம், சாலமரம்; வெள்ளைக் குங்கிலியம்; கருங்குங்குலியம்; மலைக்கிளுவை.

**குங்குதல்** – குன்றுதல், குறைதல்.

**குங்குமக்காவி** – செங்காவி.

**குங்குமச்சம்பா** – மஞ்சள் நிறமுள்ள சம்பா நெல் வகை.

**குங்குமச்செப்பு** – குங்குமம் வைக்கும் சிமிழ்.

**குங்குமச்சோரன்** – குதிரையில் ஒருவகை.

**குங்குமப்பரணி** – குங்குமம் வைக்கும் சிமிழ்.

**குங்குமப்பூ** – குங்குமமரத்தின் பூ.

**குங்குமப் பொட்டு** – குங்குமப் பொடியால் நெற்றியிலிடும் திலகம்.

**குங்குமம்** – செடிவகை; மஞ்சளிலிருந்து செய்யும் மகளிர் செம்பொடி; குரங்கு மஞ்சள்நாறி; செஞ்சாந்து; நெற்றியிலிடும் குங்குமப் பொடி; குங்குமப்பூ.

**குங்குமவர்ணி** – மஞ்சட் கல்; அரிதாரம்.

**குங்குமவலரி** – செவ்வலரிச்செடி.

**குங்குலு** – ஒருவகை நீண்டமரம், குங்கிலியமரம்.

**குச்சத்தின் பாதி** – சிறுபுள்ளடிப் பூண்டு.

**குச்சம்** – கொத்து; ஒருவகை அலங்காரக் குஞ்சம்; நெற்குஞ்சம்; பற்பாடகம்; குன்றிமணி; நாணல்; புறந்தூற்றுமொழி.

**குச்சரம்** – கூர்ச்சர நாடு.

**குச்சரி** – ஒரு பண்வகை; முற்காலத்திலே வழங்கிய துகில்வகை.

**குச்சரித்தல்** – அருவருப்புக் கொள்ளுதல்.

**குச்சி** – மரக்குச்சி; கொண்டையூசி; ஒருவகைச் செடி; முகடு.

**குச்சிகை** – வீணைவகை.

**குச்சித்தல்** – அருவருத்தல்.

**குச்சிதம்** – இழிவு.

**குச்சிப்புல்** – ஒருவகைப் புல்.

**குச்சில்** – சிறு வீடு; காண்க: **குச்சுப்புல்.**

**குச்சிலியர்** – கூர்ச்சரர்.

**குச்சு** – மரக்குச்சு; கடாவுமுளை; கொண்டையூசி; சிறுகுடில்; சிற்றறை; குஞ்சம்; குச்சுப்புல்; ஒரு காதணி; கழுத்தணிவகை; சீலையின் முன்மடி; பாவாற்றி என்னும் நெசவுக் கருவி.

**குச்சுக்கெம்பு** – புறவிடம் மேடான சிவப்பு மணி.

**குச்சுப்பிடித்தல்** – ஆடையைக் கொய்து வைத்தல்; குஞ்சம் வைத்தல்.

**குச்சுப்புல்** – ஒருவகைப் புல், கொத்தாயுள்ள புல்.

**குச்சுமட்டை** – ஓவியரின் கருவிவகை; வெள்ளையடித்தற்குதவும் மட்டை.

**குச்செறிதல்** – மயிர்சிலிர்த்தல்.

**குச்சை** – கொய்சகம்.

**குசக்கணக்கு** – தவறான கணக்கு; குயவரில் கணக்குப் பார்க்கும் ஒருவகையினர்.

**குசக்கலம்** – மட்பாண்டம்.

**குசத்தனம்** – அறிவுக்குறைவு, மூடத்தனம்.

**குசத்தி** – குயப்பெண்; ஓடு; பூவழலை.

**குசந்தனம்** – செஞ்சந்தனம்.
**குசப்புத்தி** – மடமை.
**குசபலம்** – மாதுளைமரம்.
**குசம்** – தருப்பை; நீர்; மரம்; முலை; குயவற்குரியது.
**குசமசக்கு** – குழப்பம்; காரியச் சிக்கல்.
**குசர்** – பிசிர்.
**குசலக்காரன்** – மந்திரக்காரன்; வஞ்சகன்.
**குசலப்பிரசினம்** – நலங்கேட்டல்.
**குசலபுத்தி** – கூர்மையான புத்தி; தந்திரபுத்தி.
**குசலம்** – நலம்; நற்குணம்; மாட்சிமை; திறமை; தந்திரம்; மாந்திரிகம்.
**குசலவித்தை** – மகளிர்க்குரிய விநோதக் கைத்தொழில்களாகிய எண்ணல், எழுதல், இலைகிள்ளல், பூத்தொடுத்தல், யாழ்மீட்டல், மந்திரவித்தை.
**குசலவேதனை** – இன்பவுணர்ச்சி.
**குசலன்** – மிக வல்லோன்; அறிஞன்; சூழ்ச்சி வல்லோன்.
**குசலாகுசலவேதனை** – இன்பதுன்ப வுணர்ச்சி.
**குசலை** – தடை; சுவர்த்தலையிற் கட்டும் ஆரல்.
**குசவம்** – கொய்சகம்; ஓரங்கொய்து சுருக்கப்பட்ட உடை.
**குசவன்** – காண்க: குயவன்.
**குசவோடு** – குயவன் செய்த ஓடு.
**குசன்** – செவ்வாய்; சீராமன் புதல்வருள் ஒருவன்.
**குசாக்கிரபுத்தி** – மிக நுண்ணிய புத்தி, தருப்பை நுனிபோல் கூரிய அறிவு.
**குசாண்டு** – சிறுமை, அற்பத்தன்மை.
**குசால்** – மனக்களிப்பு; நடையுடைபாவனைகளின் மினுக்கு.
**குசாற்காரன்** – மகிழ்ச்சியாயிருப்பவன்; பகட்டுக்காரன்.
**குசினி** – சமையலறை; சிறியது; சமையற்காரன்.
**குசினிப்பயிர்** – இளம்பயிர்.
**குசு** – அபானவாயு.
**குசுகுசுத்தல்** – இரகசியம் பேசுதல், காதுக்குள் ஓதுதல்.
**குசும்பம், குசும்பா(பை)** – செந்துருக்கம்பூ மரம்.
**குசும்பு** – குறும்புத்தனம்.
**குசுமம்** – பூ.
**குசுமாகரம்** – பூந்தோட்டம்; இளவேனில்.
**குசுமாசவம்** – தேன்.
**குசேசயம்** – தாமரை.
**குசை** – தருப்பைப்புல்; குதிரைக் கடிவாளம்; மகிழ்ச்சி; குதிரையின் பிடரிமயிர்.
**குசைக்கயிறு** – குதிரையின் வாய்வடம்.
**குசைக்கிரந்தி** – தருப்பைப் பவித்திர முடிச்சு.
**குசோத்தியம்** – நேர்மையற்ற கேள்வி; தந்திரம்; பரிகாசம்.
**குஞ்சங்கட்டுதல்** – அலங்காரத்துக்குத் தொங்கவிடுதல்.
**குஞ்சட்டி** – சிறுசட்டி.
**குஞ்சம்** – குறள்; கூன்; குறளை; பூங்கொத்து; புற்குச்சு; புடைவை அகலத்தின் அரைக்காற்பாகம்; கொய்சகம்; ஈயோட்டி; பாவாற்றி; குன்றிக்கொடி; நாழி; புளிநறளைச்செடி; சீதாங்கபாடாணம்.
**குஞ்சரத்தீ** – யானைத்தீ.
**குஞ்சரம்** – யானை; ஒரு சொல்லைச் சார்ந்து உயர்வு குறிக்கும் மொழி; கருங்குவளை.
**குஞ்சரமணி** – கழுத்தணிவகை.
**குஞ்சரவொழுகை** – யானை கட்டிய வண்டி.
**குஞ்சராசனம்** – அரசமரம்.
**குஞ்சரி** – பெண்யானை; முருகக் கடவுளின் மனைவியான தெய்வயானை.
**குஞ்சன்** – குறளன், குள்ளன்.
**குஞ்சாமணி** – ஆண்குழந்தைகளின் அரையிற் கட்டும் மணிவிசேடம்.
**குஞ்சான்** – குழந்தையின் ஆண்குறி.
**குஞ்சி** – சிறுமையானது; பறவைக்குஞ்சு; சிறிய தாய்; சிற்றப்பன்; குழந்தையின் ஆண்குறி; கொடிநாட்டுங் குழி; கொடிக்கழை; குடுமி; தலை; குன்றிக்கொடி; சிற்றணுக்கள்.
**குஞ்சித்தல்** – கால்தூக்கி வளைத்தல்; காலின் படங் குந்திநிற்றல்.
**குஞ்சிதநடம்** – ஒரு காலைத் தூக்கி வளைந்தாடும் நடராசர் கூத்து.
**குஞ்சிதம்** – வளைந்தது.
**குஞ்சியப்பன்** – தந்தையின் தம்பி; தாயின் தங்கை கணவன்; தாயின் இரண்டாம் கணவன்.
**குஞ்சியாய்ச்சி, குஞ்சியாயி** – சிறிய தாய்; தந்தையின் தம்பி மனைவி; தந்தையின் இரண்டாம் தாரம்; தாயின் தங்கை.
**குஞ்சிரிப்பு** – புன்னகை.
**குஞ்சு** – பறவைக்குஞ்சு; சிறுமை; எலி, அணில் முதலியவற்றின் குஞ்சு; குழந்தையின் ஆண்குறி.
**குஞ்சுக்கடகம்** – சிறிய ஓலைப்பெட்டி.
**குஞ்சுக்குவைத்தல்** – முட்டையைக் குஞ்சு பொரிக்கும்படி வைத்தல்.
**குஞ்சுகுழந்தைகள்** – சிறியவும் பெரியவுமான குழந்தைகள்.
**குஞ்சுங்குழுமானும்** – பூச்சித்திரள்; பல வயதிலுள்ள குழந்தைகளின் கூட்டம்.

**குஞ்சுச்சிப்பி** – முற்றாத முத்துச்சிப்பி.
**குஞ்சு நறுக்குதல்** – காண்க: சுன்னத்துச்செய்தல்.
**குஞ்சுப்பெட்டி** – காண்க: குஞ்சுக்கடகம்.
**குஞ்சுபொரித்தல்** – முட்டையினின்று குஞ்சினை வெளிவிடுதல்.
**குஞ்சுரம்** – குன்றிமணி.
**குஞ்சுறை** – பறவைக்கூடு.
**குஞ்சை** – நெய்வோர் பாவில் தேய்க்கும் குஞ்சம்.
**குட்சி** – வயிறு; ஒற்றைத் தாயம்.
**குட்டநாசனம்** – வெண்கடுகு.
**குட்டநாடு** – திருவாங்கூர்ப் பகுதியைச் சேர்ந்ததும் கோட்டயம், கொல்லம் என்னும் நகரங்களைக் கொண்டதும், மிகுதியான ஏரிகளை உடையதுமான ஒரு கொடுந்தமிழ் நாடு.
**குட்டம்** – ஆழம்; குளம்; மடு; குட்டநாடு; பரப்பிடம்; திரள்; சபை; குரங்குக்குட்டி; குறைந்த சீருள்ள அடி; தரவு; தொழுநோய்.
**குட்டமிடுதல்** – பள்ளந்தோண்டுதல்.
**குட்டரி** – மலை.
**குட்டன்** – சிறுபிள்ளை; ஆட்டுக்குட்டி; விலங்கின் குட்டி.
**குட்டான்** – சிறு ஓலைப்பெட்டி.
**குட்டி** – ஆடு, கீரி, குதிரை, நரி, நாய், பன்றி, புலி, பூனை முதலியவற்றின் குட்டி; விலங்கின் பிள்ளைப் பொது; சிறுமை; சிறு பெண்; கடைசி மகன்; பல்லாங்குழி முதலிய விளையாட்டில் அதிகமாகக் கூடுங் காய்; ஆதாயம்; காக்கைப்பலா; கடிச்சை; வாழைக் கன்று.
**குட்டிக்கரணம்** – தலைகீழாகப் புரளும் வித்தை; பெருமுயற்சி.
**குட்டிக்கலகம்** – சிறுகலகம்; கோட்சொல்லலால் விளையுங் கலகம்.
**குட்டிக்கும்பிடுதல்** – தலையிற் குட்டிக்கொண்டு விநாயகரை வணங்குகை.
**குட்டிக்கொக்கான்** – சிறு கற்களைக்கொண்டு ஆடும் விளையாட்டுவகை.
**குட்டிச்சாத்தான்** – குறளித்தேவதை.
**குட்டிச்சுவர்** – இடிந்த சிறுசுவர்; பாழ்மனை; பழுது.
**குட்டிச்சுவராய்ப்போதல்** – கெட்டுப்போதல்.
**குட்டிப்பிடவம்** – ஒரு மரவகை.
**குட்டிபோடுதல்** – விலங்கு குட்டி ஈனுதல்; விளையாட்டில் அதிகப் பந்தயம் இறுத்தல்.
**குட்டிமம்** – கல் பதித்த தரை.
**குட்டியம்** – சுவர்; மேடை.
**குட்டியிடுக்கி** – சிற்றரத்தைச் செடி; பயிருடன் முளைக்கும் ஒரு புல்; கோஷ்டம், ஒருவகைச் செடி.
**குட்டியிடுதல்** – விலங்கு முதலியன குட்டி போடுதல்.
**குட்டிவிரல்** – கால் கைகளில் ஐந்துக்கு அதிகமாயுள்ள விரல்.
**குட்டிவைத்தல்** – விளையாட்டில் தவறான காயை அடித்தல்; சூதில் பந்தயம் இழத்தல்.
**குட்டினம்** – கருஞ்சீரகம்.
**குட்டினி** – கற்பழிந்தவள்; கூட்டிக்கொடுப்பவள்.
**குட்டு** – கைமுட்டியால் தலையில் இடிக்கை; இரகசியம்; மானம்; குட்டநோய்; கோஷ்டம்.
**குட்டுணி** – பிறரால் குட்டுண்பவன்(ள்).
**குட்டுதல்** – கைமுட்டியால் தலையில் குட்டுதல்.
**குட்டுப்பட்டவன்** – ஒரு தொழிலில் இடர்ப்பட்டு அனுபவம் பெற்றவன்.
**குட்டுப்படுதல்** – அடிக்கடி இடறுதல்.
**குட்டுவன்** – குட்டநாட்டிலுள்ளவன்; சேரன்.
**குட்டேறு** – சிறு காளை; எருத்துத் திமில், மாட்டுக் கொண்டை.
**குட்டை** – குள்ளம்; குறுகிய உருவம்; சிறு குளம்; குறுணி; குட்டைமரம்; வெள்ளைக்குட்டம்.
**குட்டைமரம்** – தொழுமரம்.
**குட்டையாடு** – பள்ளையாடு.
**குட்டையிலடித்தல்** – தொழுமரத்தில் கட்டியடித்தல்.
**குட** – வளைந்த.
**குடக்கம்** – வளைவு.
**குடக்கனி** – பலாப்பழம்.
**குடக்கால்** – குடம் போன்ற விளக்குத் தண்டு.
**குடக்கி** – வளைவானது.
**குடக்கியன்** – கூனன்.
**குடக்கினி** – காசுக்கட்டி; கருங்காலிமரம்.
**குடக்கு** – மேற்கு.
**குடக்குழி** – நீர்க்குண்டு.
**குடக்கூத்து** – தன் பேரனாகிய அநிருத்தனை வாணன் சிறைப்படுத்த அவனது நகரவீதியில் சென்று கண்ணன் குடமெடுத்தாடிய கூத்து.
**குடக்கூலி** – காண்க: குடிக்கூலி.
**குடக்கோ, குடக்கோன்** – சேரன்.
**குடகச்செலவு** – யாழில் இசைபட வாசிக்கும் வகையுள் ஒன்று.
**குடகம்** – மேற்கு; தமிழ்நாட்டின் மேல்பாலுள்ள நாடு; குடகுமலை; கோளகபாடாணம்.
**குடகரம்** – உத்தாமணிக்கொடி, வேலிப்பருத்தி.
**குடகன்** – சேரன்; மேல்நாட்டான்.
**குடகாற்று** – மேல்காற்று.
**குடங்கர்** – குடம்; கும்பராசி; குடிசை.
**குடங்கவிழ்தல்** – காண்க: குடஞ்சாய்தல்.
**குடங்குல்** – மடி.
**குடங்குதல்** – வளைதல்.

**குடங்கை** – உள்ளங்கை; எல்லா விரலும் கூட்டி உட்குழிக்கும் இணையா வினைக்கை.

**குடச்சிப்பி** – வளைவுள்ள சிப்பி.

**குடச்சூல்** – பாதச் சிலம்புவகை.

**குடசப்பாலை** – கசப்பு வெட்பாலை; கறிப் பாலை; கொடிப்பாலைச் செடி.

**குடசம்** – குடசப்பாலை; மலைமல்லிகை.

**குடஞ்சாய்தல்** – வண்டி குடம்சாய்ந்து விழுதல்.

**குடஞ்சுட்டவர்** – பசுநிரை மேய்க்கும் இடையர்.

**குடஞ்சுட்டு** – பசு.

**குடத்தி** – இடைச்சி; கழுதைப்புலி; ஓநாய்.

**குடதாடி** – தூணின்மேல் வைக்கும் குடவடிவான உறுப்பு.

**குடதிசை** – மேற்குத் திக்கு.

**குடதேவர்** – அகத்தியர்.

**குடந்தம்** – கைகூப்பி மெய்வளைத்துச் செய்யும் வழிபாடு; நால்விரல் மடக்கிப் பெருவிரல் நிறுத்தி நெஞ்சிடை வைக்கை; குடம்; கும்ப கோணம்; திரட்சி.

**குடந்தம்படுதல்** – வழிபடுதல்.

**குடந்தை** – வளைவு; கும்பகோணம்.

**குடநாட(த)ன்** – சேரன்.

**குடநாடு** – மேல்நாடு; கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் ஒன்று.

**குடப்படை** – உட்கோயிலின் அடிமட்டத்திலுள்ள கட்டடப் பகுதி.

**குடப்பம்** – இருப்பைமரம்.

**குடப்பறை** – குடவடிவமான பன்றிப்பறை.

**குடப்பாம்பிற் கையிடுதல்** – பாம்பை அடைத்த குடத்திற் கையிட்டுச் சூளுரைத்தல்.

**குடப்பாம்பு** – குடத்தில் அடைபட்ட பாம்பு; மதிற் பொறிவகை.

**குடப்பாலை** – காண்க: **குடசப்பாலை.**

**குடப்பிழுக்கை** – வரிக்கூத்துவகை.

**குடப்பெட்டி** – நெல்வகை.

**குடபலை** மணித்தக்காளி.

**குடபுலம்** – மேல்நாடு.

**குடம்** – நீர்க்குடம்; கும்பராசி; குடக்கூத்து; குட தாடி; வண்டிக்குடம்; திரட்சி; பசு; நகரம்; பூசம்; குடநாடு; வெல்லக்கட்டி; சதுரக்கள்ளி.

**குடம்பை** – கூடு; முட்டை; ஏரி; உடல்.

**குடம்விட்டுக் கட்டுதல்** – கலியாணத்திற்கு நடும் கோலை அடுக்குக் குடம்போலச் சீலையால் அலங்கரித்தல்.

**குடமண்** – வெண்மணல்.

**குடமணம்** – கருஞ்சீரகம்.

**குடமல்லிகை** – ஒருவகை மல்லிகை.

**குடமலை** – குடகுமலை.

**குடமலைநாடு** – குடகுநாடு.

**குடமாடல்** – குடக்கூத்து, மாயோன் கூத்து.

**குடமாலை** – உருட்சியான மாலைவகை.

**குடமிளகாய்** – மிளகாய்வகை.

**குடமுடைத்தல்** – கொள்ளிவைப்பவன் பிணத் தைச் சுற்றிவந்து நீர்க்குடம் உடைக்கும் சாவுச் சடங்கு.

**குடமுழவம்,** / **குடமுழவு,** / **குடமுழா** – முழா வாத்தியவகை.

**குடமுழுக்கு** – திருமுழுக்கு, கும்பாபிடேகம்.

**குடமுனி** – காண்க: **குடதேவர்.**

**குடமூக்கில்,** / **குடமூக்கு** – கும்பகோணம்.

**குடர்** – குடல்.

**குடராசம்** – பூரான்வகை.

**குடரி**– யானைத்தோட்டி.

**குடல்** – வயிற்றுள் இரைப்பையைத் தொடர்ந் துள்ள குழாய்; பெருங்குடல்; சிறுகுடல்; காயின் குடல்; மரக்குடல்; பழக்குடல்.

**குடல்காய்கை** – பசியால் வயிறு ஒட்டிக் கொள்கை.

**குடல்தட்டுதல்** – குடலின் பிறழ்வைத் தட்டி ஒழுங்குபடுத்துதல்.

**குடல் பதறுதல்** – துக்கமிகுதி முதலியவற்றால் வயிறு கலங்குதல்.

**குடல்வலி** – உணவுமிகுதி முதலியவற்றாற் குட லிற் காணும் நோவு.

**குடல்வாதம்,** / **குடல்வாயு** – ஒருவகை நோய், அண்டவாதம்.

**குடல் விளக்கஞ் செய்தல்** – பிறந்த வயிற்றைப் பெருமைபெறச் செய்தல்.

**குடலளைச்சல்** – பெருங்குடலில் தோன்றும் நோய்வகை.

**குடலிரைச்சல்** – வயிற்றிரைவு.

**குடலெரிச்சல்** – வயிறு காந்துகை, வயிற் றெரிச்சல்.

**குடலேற்றம்** – குடல் இடம் மாறிமேலேறுதலால் உண்டாகும் நோய்.

**குடலேறுதல்** – குடல் இடம் மாறி மேலேறுதல்.

**குடலை** – பூக்கூடை; கதிர்க்கூடை; கிணற்றுக் கூடை; பழக்கூடு; கீற்றுக்கூடு; குடல்.

**குடலைக்கிணறு** – ஒருவகை உறைக்கிணறு.

**குடலைக் குழப்புதல்** – வாந்தி செய்யும்படி வயிற்றைப் புரட்டுதல்.

**குடலைப் பிடுங்குதல்** – பசியால் வயிறு கிண்டப் படுதல்; வாந்தியெடுக்கவருதல்.

**குடலையாகுதல்** – கதிர் ஈனுதல்.

**குடலையுங்கதிரும்** – கருக்கொண்டதும் கொள் ளும் நிலையில் உள்ளதுமான கதிர்.

**குடலைவயிறு** – குழைந்த வயிறு.

**குடவண்டி போடுதல்** – குடங்கவிழ்தல்; தலை கீழாய்க் கவிழ்தல்.

**குடவண்டி வைத்தல்** – தொந்தி தள்ளுதல்.

**குடவம்** – பித்தளை.

**குடவர்** – குடகுநாட்டி லுள்ளோர்.

**குடவரை** – அத்தகிரி, மேற்குமலை.

**குடவரைவாசல்** – கோபுரவாயில்.

**குடவளப்பம்** – இருப்பைமரம்.

**குடவறை** – நிலவறை; சிற்றறை.

**குடவன்** – இடையன்; பித்தளை; ஒரு கொட்டைக்காய்; கணிகை; குடவுண்ணி; கோஷ்டம்.

**குடவியிடுதல்** – வளைத்து அகப்படுத்துதல்.

**குடவிளக்கு** – மணவறையில் அக்கினி மூலையில் குடத்தின்மேல் வைக்கும் விளக்கு; தொங்க விடுவதும் உலோகத்தால் அமைந்ததுமான குடவடிவுள்ள விளக்கு.

**குடவு** – வளைவு; குகை.

**குடவுதல்** – வளைவாதல்.

**குடவோலை** – முன்னாளில் ஊர்ச்சபையோரைத் தேர்ந்தெடுக்க மக்கள் குடத்திலிடுஞ் சீட்டு.

**குடற்சவ்வு** – வயிற்றின் உறுப்பை மூடியிருக்குஞ் சவ்வு.

**குடற்படுவன்** – குழந்தையின் குடர்நோய்வகை.

**குடற்பிடுங்கி** – வாந்தியெடுக்கச் செய்வதாகிய துரிசு.

**குடற்புரை** – குடலின் துளை.

**குடற்பை, குடற்போர்வை** – கருப்பப் பை.

**குடற்றுடக்கு** – இரத்தக் கலப்பான உறவு.

**குடா** – வளைவு; குடைவு; குடாக்கடல்; மூலை.

**குடாக்கடல்** – மூன்று பக்கம் தரைசூழ்ந்த கடல்.

**குடாக்கு** – உக்கா; புகையிலை, பாகு, பழம், சந்தனம் இவற்றாலான உக்கா மருந்து.

**குடாக்கை** – வயலின் மூலை.

**குடாகாயம்** – குடத்தினால் அளவுபடுத்தப்பட்ட வானம்.

**குடாசகம்** – கபடம்; ஏமாற்று; தீயுரை.

**குடாசுதல்** – தந்திரம் பண்ணுதல்.

**குடாது** – மேற்கிலுள்ளது; மேற்கு.

**குடாப்பு** – கூடு.

**குடாரம்** – கோடரி; தயிர்கடைவதற்கு நட்ட தறி; தயிர்கடை தாழி.

**குடாரி** – கோடாலி; யானைத் தோட்டி; திப்பிலி.

**குடாரு** – தயிர்கடை தாழி.

**குடாவடி** – வளைந்த அடியையுடைய கரடி.

**குடாவு** – குடைவு.

**குடான்** – செம்முள்ளிச் செடி.

**குடி** – பருகுகை; மதுபானம்; மதுவுண்ட மயக்கம்; புருவம்; குடியானவன்; குடியிருப்போன்; ஆட்சிக்குட்பட்ட குடிகள்; குடும்பம்; குலம்; வீடு; ஊர்; வாழிடம்.

**குடிக்காசு** – காண்க: **குடிக்காணம்.**

**குடிக்காடு** – ஊர்.

**குடிக்காணம்** – குடிவரி.

**குடிக்காவல்** – ஊர்காவல்.

**குடிக்கூலி** – வீட்டுவாடகை; வாடகை.

**குடிகாரன்** – கள் முதலியன குடிப்பவன், குடியன்.

**குடிகெடுதல்** – குடும்பம் அடியோடு அழிதல்.

**குடிகேடன்** – தீயொழுக்கத்தால் குலத்தை யழிப்போன்.

**குடிகேடி** – குலத்தையழிப்பவன்(ள்); விபசாரி.

**குடிகேடு** – குடும்ப அழிவு.

**குடிகை** – இலைக்குடில்; கோயில்; ஏலவரிசி; கமண்டலம்.

**குடிகொள்ளுதல்** – நிலையாகத் தங்கியிருத்தல்.

**குடிகோள்** – சூழ்ச்சியால் குடியைக் கெடுக்கை.

**குடிங்கு** – பறவை.

**குடிச்செருக்கு** – குடிப்பிறப்பாலுண்டான இறுமாப்பு; குடிவளம்.

**குடிசரம்** – நீர்ப்பன்றி.

**குடிசல்** – குடிசை.

**குடிசனம்** – நாட்டுமக்கள்.

**குடிசெய்தல்** – பிறந்த குடியை உயர்த்துதல்; வாழ்தல்.

**குடிசை** – சிறுகுடில், சிறுவீடு.

**குடிசை தூக்குதல், குடிசையெடுத்தல்** – குடிசையை வேற்றிடத்திற்கு மாற்றுதல்.

**குடிஞை** – ஆறு; குடிசை; கோட்டான்; பறவை.

**குடிஞைக்கல்** – சோழர் காலத்து வழங்கிய ஒரு வகை எடைக்கல்.

**குடிஞைப்பள்ளி** – கண்ணுளாளர் தங்குதற்குரிய நாடக அரங்கின் பகுதி.

**குடித்தரம்** – தனித்தனியான குடித்தீர்வை.

**குடித்தல்** – பருகுதல், உட்கொள்ளுதல்.

**குடித்தனக்காரன்** – பயிரிடுவோன்; ஊரில் செல்வாக்கு உள்ளவன்; வீட்டுத்தலைவன்; வாடகைக்குக் குடியிருப்போன்.

**குடித்தனப்படுதல்** – இல்வாழ்க்கை நிலையை அடைதல்.

**குடித்தனப்பாங்கு** – இல்வாழ்க்கையொழுங்கு.

**குடித்தனம்** – இல்வாழ்க்கை; வாடகைக்குடி; குடிவாழ்க்கையின் ஒழுங்கு.

**குடித்தனவுறுப்பு** – குடும்பத்திற்கு உறுப்புகளான இடம், பொருள், ஏவல் முதலியன.

**குடித்தெய்வம்** – குலதெய்வம்.

**குடிதாங்கி** – குலத்தைத் தாங்குபவன்.

**குடிதிருத்துதல்** – ஆட்சிக்குட்பட்ட குடிகளை நன்னிலையில் நிறுத்துதல்; பிறந்த குலத்தை மேம்படுத்துதல்.

**குடிநற்கல்** – ஒருவகை எடைக்கல்.

**குடிநாட்டுதல்** – குடியேற்றுதல்.

**குடிநிலம்** – குடியிருக்கும் மனைநிலம்; பெண்ணுக்குச் சீர்வரிசையாகக் கொடுத்த மனை.

**குடிநிலை, குடிநிலையுரைத்தல்** – வீரக்குடியின் பழைமையையும் அஞ்சாமையையும் கூறும் புறத்துறை.

**குடிநீர்** – குடித்தற்குரிய நீர்; கஷாய மருந்து.

**குடிப்படை** – குடிகளாலான சேனை.

**குடிப்பழி, குடிப்பழுது** – குலத்துக்கு ஏற்பட்ட நிந்தை.

**குடிப்பாங்கு** – குடித்தனப்பாங்கு; குடியானவன் பின்பற்றுதற்குரிய ஒழுங்கு; குடிகளின் ஏற்பாடு.

**குடிப்பாழ்** – குடிகள் விட்டு நீங்குதலால் ஊருக்கு உண்டான அழிவு; குடிகளற்றுப் போன ஊர்.

**குடிப்பிறப்பாளர்** – உயர்குடியிற் பிறந்தோர்.

**குடிப்பிறப்பு** – உயர்ந்த குடியில் பிறத்தல்.

**குடிப்பெண்** – மனைவி; கற்புடையவள்.

**குடிப்பெயர்** – குலத்தால் வந்த பெயர்; பிறந்த குலம்பற்றி வழங்கும் பெயர்.

**குடிபடை** – குடிமக்கள்.

**குடிபுகுதல்** – வேறு வீட்டில் வாழச்செய்தல்; புது வீட்டிற் குடிபோதல்.

**குடிபோதல்** – இருக்கும் வீட்டைவிட்டு வெளியேறுதல்; வேறுவீட்டில் குடிபுகுதல்; புதுவீடு குடிபோதல்; பண்டங் கரைதல்.

**குடிமக்கள்** – பணி செய்தற்குரிய பதினெட்டு வகை ஊர்க் குடிகள் ; அடிமைகள்.

**குடிமக்கள் மானியம்** – பணிசெய்யும் வண்ணான், அம்பட்டன் முதலிய தொழிலாளிகளுக்கு விடப்பட்ட இறையிலி நிலம்.

**குடிமகன்** – நற்குடிப் பிறந்தவன்; வழிவழி அடிமை; படிவாங்கிப் பயிரிடும் குடித்தனக்காரன்; அம்பட்டன்.

**குடிமதிப்பு** – ஊர்வரித் திட்டம்.

**குடிமார்க்கம்** – இல்வாழ்க்கை, குடித்தனக் கடமை.

**குடிமிராசு** – வழிவழி நில உரிமை.

**குடிமுழுகிப்போதல்** – குடும்பநிலை முதலியன முற்றும் அழிதல்.

**குடிமை** – உயர்குலத்தாரது ஒழுக்கம்; பிறந்த குடியை உயரச் செய்தல்; குடிப்பிறப்பு; அரசரது குடியாயிருக்குந் தன்மை; குடித்தனப் பாங்கு; அடிமை; குடிகளிடம் பெறும் வரி.

**குடிமைப்பாடு** – ஊழியம்.

**குடியரசு** – மக்களால் நடத்தப்படும் அரசாங்கம்.

**குடியழிவு** – குடும்பக்கேடு; பெருங்கேடு.

**குடியன்** – குடிகாரன்.

**குடியாயக்கட்டு** – ஊர்க் குடும்பங்களின் மொத்தத் தொகை.

**குடியாள்** – பண்ணையாள்; தாளகம்.

**குடியான், குடியானவன்** – உழவன், பயிரிடுவோன்.

**குடியிருக்கை** – குடிகள் தங்கும் இடம்; குடியாகத் தங்கி இருக்கை.

**குடியிருத்தல்** – வாழ்தல்; குடிக்கூலிக்கிருத்தல்.

**குடியிருப்பு** – குடியிருக்கை; வாழ்வு; ஊர்; சில இனத்தவர்கள் தனியாக வாழ்ந்துவரும் இடம்.

**குடியிருப்புநத்தம்** – ஊர்மக்கள் வாழும் இடம்.

**குடியிறங்குதல்** – நிலைக்குடியாகத் தங்குதல்.

**குடியிறை** – குடிகள் செலுத்தும் வரி.

**குடியுடம்படிக்கை** – குத்தகைச் சீட்டு.

**குடியும்தடியும்** – வீடும் நிலமும்.

**குடியெழும்புதல்** – கலகம் முதலிய நிகழ்ச்சிகளால் வேறிடம் பெயர்தல்.

**குடியேற்றநாடு** – மக்கள் புதிதாகக் குடியேறிய நாடு.

**குடியேற்றம்** – புதிதாக ஒரு நாட்டிற் குடிபுகுதல்.

**குடியேற்றுதல்** – குடியேறச் செய்தல்.

**குடியேறுதல்** – தம் நாடுவிட்டு வேறு நாடு சென்று வாழ்தல்; நிலைத்துவிடுதல்.

**குடியோட்டி, குடியோட்டுப்பூண்டு** – ஒருவகைப் பூண்டு.

**குடிரம்** – காரைச்செடி.

**குடில்** – குடிசை; ஆட்டுக்குட்டி முதலியவற்றை மூடுவதற்கு உதவும் குடில்; வீடு; வானம்; சிற்றில்; தேர்ச் சக்கரங்களைத் திருப்பிச் செலுத்துதற்குக் கொடுக்கும் முட்டுக்கட்டை.

**குடிலச்சி** – ஒருவகைக் கருவண்டு; இந்திர பாடாணம்.

**குடிலம்** – வளைவு; வானம்; சடை; வஞ்சகம்; உள்வாங்கிப் பாடும் இசைத்தொழில்; குராமரம்; ஈயமணல்; வெள்ளீயம்; நாக பாடாணம்; குதிரை நடைவகை.

**குடிலை** – சுத்தமாயை; பிரணவம்.

**குடிவருதல்** – குடிபுகுதல்.

**குடிவாரநிலம்** – குடிகட்குப் பயிரிடும் உரிமையுள்ள நிலம்.

**குடிவாரம்** – பயிரிடுவோன் உரிமை; உழுபவனின் பங்குக்குரிய விளைச்சல்.

**குடிவாழ்க்கை** – இல்வாழ்க்கை; குடும்ப நிருவாகம்; வாழ்க்கை ஒழுங்கு.

**குடிவிளங்குதல்** – குலம் முதலியன செழித்தல்.

**குடிவெறி** – கட்குடி மயக்கம்.

**குடிவைத்தல்** – வீட்டை வாடகைக்கு விடுதல்; குடியிருக்கச் செய்தல்; குடியை நிலைபெறச் செய்தல்.

**குடீசகம்** – ஒருவகைச் சன்னியாசம்.

**குடீசகன்** – உறவின்முறையார் உதவியுடன் குடியில் வாழும் துறவி.

**குடீரகம், குடீரம்** – குடிசை; இலைக்குடில்.

**குடு** – கள்.

**குடுக்கம்** – உபதாளம் ஐந்தனுள் ஒன்று.

**குடுக்கை** – தேங்காய் முதலியவற்றின் குடுவை; கமண்டலம்; இடக்கையென்னும் தோற்கருவி; வீணையின் உறுப்பு.

**குடுகு, குடுகுடா, குடுகுடி** – குடுக்கை; தேங்காய் முதலியவற்றாலான குடுவை; கஞ்சா முதலியன குடிக்கும் கருவி, உக்கா.

**குடுகுடுக்கை** – கொப்பரைத் தேங்காய்.

**குடுகுடுகிழவன்** – தளர்ந்த வயதோன், மிகவும் முதிர்ந்தவன்.

**குடுகுடுத்தல்** – ஒலிக்குறிப்பு; ஒலித்தல்; விரைதல்.

**குடுகுடுத்தான்** – விரைவுக்காரன்.

**குடுகுடுப்பாண்டி** – குடுகுடுப்பை அடித்துக் குறிகூறும் பிச்சைக்காரன்.

**குடுகுடுப்பு** – பரபரப்பு.

**குடுகுடுப்பை** – 'குடுகுடு' என்று ஒலிக்கும் பொருள்; குடுகுடுப்பாண்டி ஆட்டி ஒலிக்கும் சிறிய உடுக்கை; எப்பொழுதும் அவசரப் படுபவன்; கஞ்சாக்குடுக்கை; வறட்சி.

**குடுகுடெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; விரைவுக் குறிப்பு.

**குடுப்பம்** – நான்கு பலமுள்ள அளவு.

**குடும்பத்தானம்** – இராசிச் சக்கரத்தில் குடும்பத்தின் நிலைமையை உணர்த்தும் இலக்கினத்திற்கு இரண்டாவது ஆகிய இடம்.

**குடும்பபாரம்** – குடும்பத்தைத் தாங்கும் பொறுப்பு.

**குடும்பம்** – சமுசாரம்; உறவினர்; குலம்; மனைவி.

**குடும்பன்** – குடும்பத்தலைவன்; சமுசாரி; பள்ளர் தலைவன்; ஊரில் சாகுபடியான நிலங்களை அளப்பவன்.

**குடும்பி** – சமுசாரி; குடும்பத் தலைவன்; குறும்பி, காதுள் அழுக்கு.

**குடும்பினி** – மனைவி.

**குடும்பு** – காய் முதலியவற்றின் குலை.

**குடுமி** – ஆண்மக்களது முடிந்த மயிர்; மலை உச்சி; மாடத்தின் உச்சி; தலை உச்சி; உச்சிக் கொண்டை; நுனி; முடி; கதவின் குடுமி; மேழிக்குடுமி, முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியன்; வெற்றி; பாம்பாட்டி.

**குடுமிக்கதவு** – கீழும் மேலும் உள்ள முனைகளால் ஆடி அடைக்கவும் திறக்கவும் பெறும் கதவு.

**குடுமிக்காரன்** – குடுமியுள்ளவன்.

**குடுமிக்குயவன்** – குயவர் தலைவன்.

**குடுமிக்கூந்தல்** – உச்சிக் கூந்தல்.

**குடுமி களைதல்** – தலைமயிர் நீக்குதல்; மலர்ச் சிகையைக் கூட்டி முடித்தல்.

**குடுமிகொள்ளுதல்** – வெல்லுதல்.

**குடுமிதட்டுதல்** – சண்டைக்குச் சித்தமாதல்; தானிய அளவில் தலைவழித்தல்.

**குடுமிப் பருந்து** – உச்சிச் சூட்டினையுடைய ஒரு வகைப் பருந்து.

**குடுமியைப் பிடித்தல்** – சண்டையிடுதல்.

**குடுமியை முடிந்துவிடுதல்** – சண்டை மூட்டுதல்.

**குடுமி வாங்குதல்** – வேண்டுதலின் பொருட்டு மயிர்களைதல்; இழிவுசெய்தல்.

**குடுமிவைத்தல்** – வேதத்திற்குரிய வருணத்தாரின் பிள்ளைகட்குச் செய்யும் ஒரு சடங்கு.

**குடுவை** – வாய்குறுகிய குண்டுப் பாத்திரம்; கமண்டலம்; கள்ளிறக்கும் சிறுகலம்; ஒரு வகைச் சீட்டாட்டம்.

**குடை** – கவிகை; அரசாட்சி; குடைக்கூத்து; பாதக்குறட்டின் குமிழ்; நீருண்ணும் ஓலைப் பட்டை; குடைவேல்; உட்டுளைப்பொருள்.

**குடைக்கல்** – கல்லறையின் மூடுகல்.

**குடைக்காம்பு** – குடையின் கைப்பிடி.

**குடைக்காளான்** – நாய்க்குடை.

**குடைக்கிழங்கு** – சிற்றரத்தைச் செடி.

**குடைக்கூத்து** – குடையையே திரையாகக் கொண்டு ஆடிய முருகனின் ஆடல்.

**குடைக்கொள்ளுதல்** – மேலெழுதல்; குடஞ் சாய்தல்.

**குடைகரி** – பொன்னுருக்கும் கரிக்குகை.

**குடைகவிழ்தல்** – காண்க: குடஞ்சாய்தல்.

**குடைச்சல்** – வாயுவால் உண்டாகும் குடைச்சல், நோவு.

**குடைச்சூல்** – சிலம்பு; உள்ளிடங் குடைவு படுகை.

**குடைச்செலவு** – ஒரு காஞ்சித்திணைத் துறை, பகையைத் தடுத்துக் காக்கப் புறப்படுமுன் கொற்றக்குடையை நல்லவேளையில் புறவீடு செய்தல்.

**குடைச்செவி** – சினம் முதலிய காரணங்களால் வளைவுபட்ட விலங்குகளின் செவி.

**குடைதல்** – கிண்டுதல்; துளைத்தல்; மிக வருத்துதல்; கடைதல்; வேண்டாதவற்றில் தலையிடுதல்; துருவுதல்; உட்புகுதல்; நீரில் மூழ்குதல்; உளைவு; அராவுதல்.

**குடைந்தாடுதல்** – அமிழ்ந்து நீராடுதல்.

**குடைநாட்கோள்** – பகையரணைக் கொள்ள நினைந்து மேற்சென்ற வேந்தன் தன் குடையை நல்ல வேளையில் புறவீடு விடும் உழிஞைத்திணைத் துறை.

**குடைநிலை** – பகைமேல் செல்லும் அரசன் தன் குடையை நல்லவேளையில் புறவீடு விடும் வஞ்சித்திணைத் துறை.

**குடைமங்கலம்** – நான்கு திக்கும் புகழ்மிக வீற்றிருந்த அரசனது குடையைப் புகழ்ந்து கூறும் பாடாண் துறை.

**குடைமிளகாய்** – காப்பிரி மிளகாய்.

**குடைமுல்லை** – போரில் வெற்றிகண்ட அரசனது குடையைப் புகழ்ந்து கூறும் வாகைத் துறை.

**குடையாணி** – தலையிடம் உருண்டையான ஆணி; கோயிற் குடையில் செருகும் ஆணி.

**குடைவண்டு** – துளைக்கும் வண்டு.

**குடைவிருத்தி** – விழாக் காலத்தில் சுவாமிக்குக் குடைபிடிப்பதற்காக ஏற்பட்ட மானியம்.

**குடைவு** – பொந்து; குகை.

**குடைவேல்** – உடை; நீருடை மரம்.

**குடோரி** – கீறுகை; பாம்புக்கடிக்கு மருந்து இடுகை; வங்கமணல்; வெங்காரம்; வெள்ளைப் பாடாணம்.

**குடோரிவைத்தல்** – மண்டையைக் கீறி மருந்து பதித்தல்.

**குண்டக்கணிகை** – கற்பழிந்து வேசையானவள்.

**குண்டக்கம்** – கோள்; வஞ்சனை.

**குண்டக்கிரியை** – ஒரு பண்வகை.

**குண்டகம்** – மண்பறிக்கும் கருவிவகை.

**குண்டகன்** – சோரநாயகனுக்குப் பிறந்தவன்.

**குண்டடித்தல்** – கோலி இரும்புக்குண்டு முதலியவற்றால் விளையாடுதல்; கஞ்சாக் குடித்தல்; தேர்வு முதலியவற்றில் தவறுதல்.

**குண்டடியன்** – ஆண்சிவிங்கி.

**குண்டடுப்பு** – ஒருவகைக் குழியடுப்பு.

**குண்டணி** – குறளைச்சொல்.

**குண்டப்பணிவிடை** – கீழ்த்தரமான ஊழியம்.

**குண்டம்** – வெள்ளிக்குண்டம்; குழி; வாவி; குடுவை; பானை; கற்பழிந்துபோனவள்; பன்றி.

**குண்டம்பாய்தல்** – வேண்டுதலுக்குத் தீக்குழியில் நடத்தல்.

**குண்டலப்புழு, குண்டலப்பூச்சி** – வளைந்து சுருண்டுகொள்ளும் புழுவகை.

**குண்டலம்** – ஆடவர் காதணிவகை; வானம்; வட்டம்; சுன்னம்.

**குண்டலமண்டலம்** – சுருண்டு வளைகை.

**குண்டலன்** – குண்டலந்தரித்தவன்.

**குண்டலி** – நாபித்தானம்; கருவாய்க்கும் எருவாய்க்கும் நடுவிலிருப்பதாகக் கருதப்படும் மூலாதாரம்; சீந்திற்கொடி; சங்கஞ்செடி; சுத்தமாயை; பாம்பு; மயில்; மான்; தாளகம்.

**குண்டலிசத்தி** – சுத்தமாயை.

**குண்டலினி** – மகாமாயை; மூலாதாரத்திலுள்ள பாம்பின் வடிவமைந்த ஒரு சத்தி.

**குண்டன்** – விபசாரத்திற் பிறந்த மகன்; பருத்து வலுத்தவன்; இழிந்தவன்; அடிமை; வளைந்தது; குண்டுணி சொல்வோன்.

**குண்டனி** – காண்க: குண்டணி.

**குண்டாக்கன்** – தலைவன்.

**குண்டாஞ்சட்டி** – வாயகன்ற பாண்டம்.

**குண்டாணிக்கொடி** – ஒரு கொடிவகை.

**குண்டாந்தடி** – பருத்துக் குறுகிய கைத்தடி.

**குண்டா, குண்டான்சட்டி** – வாயகன்ற பாண்டம்.

**குண்டி** – ஆசனப்பக்கம்; அடிப்பக்கம்; இதயம்; மீன்சினை; மூத்திரப்பை.

**குண்டிக்காய்** – மூத்திரப் பிருக்கம்; இதயம்.

**குண்டிக்காயெரிச்சல்** – மூத்திரப்பையிற் காணும் ஒரு நோய்.

**குண்டிக்கொழுப்பு** – ஆணவம், இறுமாப்பு.

**குண்டிகாய்தல்** – உணவின்மையால் வயிறு காய்தல்.

**குண்டிகை** – கமண்டலம்; குடம்; குடுக்கை; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.

**குண்டித்துணி** – அரைத்துணி.

**குண்டியம்** – குறளை; மறைவை வெளிப்படுத்துகை; பொய்.

**குண்டில்** – சிறுசெய்; முதுகு.

**குண்டீரம்** – தத்துவம்; வல்லமை.

**குண்டு** – பந்துபோல் உருண்டு கனப்பது; நிறைகல் வகை; துலாக்கோல்; உருண்டை வடிவான ஒருவகைப் பாண்டம்; பீரங்கிக் குண்டு; உருண்டையான பொன்மணி; கஞ்சா முதலியவற்றில் செய்த திரளை; விலங்குகளின் விதை; ஆண்குதிரை; ஆழம்; குழி; குளம்; தாழ்வு; சிறுசெய்; உரக்குழி.

**குண்டுக்கட்டு** – திரளச் சேர்த்துக்கட்டுங் கட்டு; ஒருவனுடைய கழுத்தையும் காலையும் ஒன்று சேர்த்துத் திரளாகக் கட்டுங் கட்டு.

**குண்டுக்கட்டை** – பிளக்காத உருண்டை விறகு.

**குண்டுக்கல்** – தராசின் நிறைகல்; வேலை செய்து செப்பனிடப்படாத கல்.

**குண்டுக்கலம்** – இருபத்துநான்கு மரக்கால் கொண்ட ஓரளவு.

**குண்டுக்கழுதை** – ஆண்கழுதை.

**குண்டுக்காயம்** – துப்பாக்கிக்குண்டு பட்டதால் உண்டான புண்.

**குண்டுக்காளை** – பொலியெருது.
**குண்டுக்குதிரை** – ஆண்குதிரை.
**குண்டுங்குழியுமாய்** – மேடும் பள்ளமுமாய்.
**குண்டுசட்டி** – உருண்டையான சட்டி.
**குண்டுணி** – கலகமூட்டுகை; கோட்சொல்; கோட்சொல்பவன்.
**குண்டுதைரியம்** – முரட்டுத் தைரியம்.
**குண்டுநீர்** – கடல்.
**குண்டுநூல்** – நுனியில் ஈயக்குண்டு கட்டப் பட்டிருக்கும் அளவுநூற் கயிறு.
**குண்டுபடுதல்** – வெடிகுண்டால் தாக்கப்படுதல்.
**குண்டுபாய்தல்** – ஆழம்படுதல்.
**குண்டுமணி** – குன்றிமணி.
**குண்டுமரக்கால்** – எட்டுப்படி கொண்ட ஓர் அளவு.
**குண்டுமல்லிகை** – குடமல்லிகை.
**குண்டுமாற்றுக் குழிமாற்று** – மோசடியான காரியம்; பெண்ணைக் கொடுத்துப் பெண் கொள்ளுகை.
**குண்டூசி** – தலைதிரண்ட ஊசி.
**குண்டெழுத்து** – திரண்டு தடித்த எழுத்து.
**குண்டை** – எருது; இடபராசி; குறுகித் தடித்தது; குறுமை; ஈகைக்கொடி.
**குண்டோதரன்** – சிவகணத்தவருள் ஒருவன், ஒரு பூதன்; பெருந்தீனிக்காரன்.
**குண்ணவாடை** – வடகீழ்காற்று.
**குண்ணியம்** – பெருக்கப்படும் எண்.
**குணக்காய்ப்பேசுதல்** – விதண்டாவாதஞ் செய்தல்.
**குணக்கிராகி** – நற்குணத்தையே கொள்பவன்.
**குணக்கு** – கிழக்கு; கோணல்; எதிரிடை; மாறுபாடு; நோய் முற்றுகை.
**குணக்குதல்** – பின்னிற்றல்; வளைத்தல்.
**குணக்குன்று** – நற்குணம் மிகுந்தவன்.
**குணக்கேடன்** – நற்குணமற்றவன்.
**குணக்கேடு** – குணமின்மை; நோய் கடுமையாக மாறும் நிலை.
**குணகண்டி** – சிவதைக்கொடி.
**குணகம்** – பெருக்கும் எண்.
**குணகர்** – கணக்கர்.
**குணகாரம்** – பெருக்கல்.
**குணகு** – பூதபிசாசம்.
**குணகுணிபாவம்** – பண்பும் பண்பியும் போலப் பிரியாமல் இருக்கும் நிலை.
**குணகுதல்** – வளைதல்; சோர்தல், தளருதல்; மனந் தடுமாறுதல்.
**குணகோளார்த்தம்** – பூமியின் கிழக்குப் பாதி உருண்டை.
**குணங்கர்** – காண்க: குணகு.
**குணங்காட்டுதல்** – இயற்கைக் குணத்தை வெளிப் படுத்துதல்; நோயினின்று குணமாதலைக் காட்டுதல்.
**குணங்கு** – காண்க: குணகு.
**குணங்குதல்** – காண்க: குணகுதல்.
**குணங்குறி** – தன்மையும் வடிவமும்.
**குணசாலி** – நற்குணமுள்ளவன்(ள்).
**குணசீலன்** – நற்குண நற்செயல் உடையவன்.
**குணசைவம்** – பதினாறுவகைச் சைவ சமயங் களுள் சிவபிரானை எண்குணங்களுடைய வராக நினைந்து வழிபடும் ஒரு பிரிவு.
**குணஞ்ஞன்** – பிறர் நற்குணங்களையறிந்து மகிழ் பவன்; இனிய குணமுள்ளவன்.
**குணட்டு** – கதிர் முதலியவற்றின் சிறு கொத்து.
**குணட்டுதல்** – மயக்கிப் பேசுதல்; செல்லங் கொஞ்சுதல்; துள்ளி விளையாடுதல்; பகட்டுப் பண்ணுதல்.
**குணத்திரயம்** – மூவகையாகிய மூலகுணங்கள்; அவை: சாத்துவிகம், இராசதம், தாமதம்.
**குணத்துக்குவருதல்** – சீர்ப்படுதல்; நோயினின்று நலமாதல்; இணங்குதல்.
**குணத்தொகை** – பண்புத்தொகை.
**குணத்தொனி** – வில்லின் நாணோசை.
**குணத்துவம்** – விளங்காமல் நின்ற மூலப்பகுதி முக்குணமாய்ப் பிரிந்து விளங்கிச் சமமாய் நிற்கும் நிலை; குணதத்துவத்திற்குரிய உலகம்.
**குணதரன்** – நற்குணமுள்ளவன்; முனிவன்.
**குணதிசை** – கிழக்குத் திசை.
**குணநிதி** – நற்குணம் நிறைந்தவன், குணமுள் ளோன்.
**குணப்படுத்துதல்** – சீர்ப்படுத்துதல்; நோயை நீக்குதல்.
**குணப்படுதல்** – சீர்ப்படுதல்; நோயினின்று நல மடைதல்; செழிப்படைதல்; கழிவிரக்கங் கொள்ளுதல்.
**குணப்பண்பு** – தன்மை குறிக்கும் பண்புச்சொல்.
**குணப்பிழை** – குணக்கேடு.
**குணப்பெயர்** – பண்பு குறிக்கும் பெயர்ச்சொல்; பண்பினடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; சிறப்பியல்புபற்றி மக்கட்குப் புலவரால் கொடுக்கப்பட்டு வழங்கும் பெயர்.
**குணபத்திரன்** – அருகன்; கடவுள்.
**குணபம்** – பிணம்; சுடுகாட்டுப் பிசாசு.
**குணபலம்** – அதிவிடையப் பூண்டு.
**குணபாகம்** – அனுகூல நிலை, ஏற்ற பக்குவம்.
**குணபாசி** – பிணந்தின்னும் பிசாசு.
**குணபேதம்** – குணம் மாறுதல்; நோய் கடுமை யாதற் குறி.

**குணம்** – பொருளின் தன்மை; ஒழுக்கத் தன்மை; சாத்துவிக இராசத தாமதமாகிய மூல குணங்கள்; காப்பியத்தைச் சிறப்பிக்கும் செறிவு, தெளிவு முதலிய தன்மை; அனுகூலம்; சுகம்; மேன்மை; புத்தித் தெளிவு; நிறம்; வில்லின் நாண்; குணவிரதம்; குடம்; கயிறு.
**குணமணி** – காண்க: குணவான்.
**குணமாக்குதல்** – நலமாக்குதல்; சீர்திருத்தல்.
**குணமாதல்** – நலமடைதல்.
**குணமுள்ளவன்** – நற்குணம் உடையவன்.
**குணலி** – சீந்திற்கொடி.
**குணலை** – ஆரவாரக் கூத்து; வீராவேசத்தாற் கொக்கரிக்கை; நாணத்தால் உடல் வளைகை.
**குணலையிடுதல்** – கொக்கரித்தல்; இரைந்து கூத்தாடுதல்.
**குணவதம்** – குணவிரதம், ஒருவித சைன நோன்பு; நற்குணம்.
**குணவதன்** – நற்குணம் உடையவன்; குண விரதத்தை அனுட்டிப்பவன்.
**குணவதி** – நற்குணமுள்ளவள்.
**குணவந்தன்** – குணவான்.
**குணவாக்கு** – சிறப்பாக அமைந்த குணம்; சொந்தப் பழக்கம்.
**குணவாகுபெயர்** – பண்புப் பெயரைப் பண்பிக்கு உரைத்தல்.
**குணவான்** – காண்க: குணமுள்ளவன்.
**குணவியது** – மேன்மையானது.
**குணவிரதம்** – மகாவிரதத்துக்கு அடுத்தபடியாகக் கொள்ளும் ஒரு சைன நோன்பு.
**குணன்** – குணமுள்ளவன், நற்குணம் உடையவன்.
**குணனம்** – எண்வகைக் கணிதத்துள் ஒன்றாகிய பெருக்கல்.
**குணனீயம்** – பெருக்கப்படும் எண்.
**குணாக்கர நியாயம்** – மரம், புத்தகம் முதலியவற்றில் புழுவின் அரிப்பு எழுத்தாதல் போலத் தற்செயலாக நேர்வதைக் குறிக்கும் நெறி.
**குணாகுணம்** – நன்மையுந் தீமையும்; குணமும் குணமின்மையும்.
**குணாட்டம்** – ஒருவகை வரிக்கூத்து.
**குணாதிசயம்** – குணவிசேடம்.
**குணாதீதம்** – குணங்கடந்தது.
**குணாது** – கிழக்கிலுள்ளது.
**குணாம்பி** – கோமாளி.
**குணாம்பு** – பகடி.
**குணாம்புதல்** – பகடி பேசுதல்.
**குணாலங்கிருதன்** – நற்குணத்தையே அணியாக உடையவன்.
**குணாலம்** – ஒருவகை மகிழ்ச்சிக்கூத்து; வீராவேசத்தாற் கொக்கரித்தல்; ஒரு பறவை.
**குணாலயன்** – நற்குணமுள்ளவன், குணங்களுக்கு இருப்பிடமானவன்.
**குணாலை** – ஆரவாரத்துடன் நடிக்குங் கூத்து.
**குணாளன்** – நற்குணமிக்கவன்.
**குணி** – பண்பி; முடமானது; நற்குணம் உடையவன்; சொத்தைக் கையன்.
**குணித்தல்** – கணித்தல்; ஆலோசித்தல்; வரையறுத்தல்; பெருக்குதல்.
**குணிதம்** – பெருக்கிவந்த தொகை, மடங்கு.
**குணிப்பு** – அளவு; ஆராய்ச்சி; மதிப்பு.
**குணில்** – குறுந்தடி; பறையடிக்குந் தடி; கவண்.
**குணு** – புழு.
**குணுக்கம்** – வருத்தம், துன்பம்.
**குணுக்கன்** – மூக்காற் பேசுவோன்.
**குணுக்கு** – மாதர் காதணியுள் ஒன்று; காது பெருக்க இடும் ஓலைச்சுருள்; மீன்வலையின் ஈயக்குண்டு; வெள்ளி; பணியாரவகை.
**குணுக்குத்தடி** – இரும்புப் பூணிட்ட கனத்த கழி.
**குணுக்குதல்** – வளைத்தல்; துணுக்குதல்.
**குணுகுணுத்தல்** – மூக்காற் பேசுதல்; முணுமுணுத்தல்.
**குணுகுணெனல்** – முணுமுணுத்தற் குறிப்பு.
**குணுகுதல்** – கொஞ்சுதல்.
**குணுங்கர்** – இழிந்தோர்; புலையர்; தோற்கருவியாளர்; குயிலுவர்.
**குணுங்கு** – பிசாசு; கொச்சை நாற்றம்.
**குணைவண்டு** – வண்டுவகை.
**குத்தகை** – குறிப்பிட்ட காலத்துக்கு அனுபவ உரிமையளிக்கும் ஒப்பந்தக் கட்டுபாட்டு முறை; குத்தகைத் தொகை.
**குத்தகைக்காரன்** – குத்தகை எடுப்பவன்.
**குத்தகைச்சரக்கு** – ஒப்பந்தஞ் செய்த சரக்கு.
**குத்தகைச்சீட்டு** – குத்தகைப் பத்திரம்.
**குத்தகைப்பொருள்** – குத்தகைக்கு ஒப்பந்தப்படி கட்டவேண்டிய பொருள்.
**குத்தகைமாறுதல்** – குத்தகைக் காலம் முடிவு பெறுகை.
**குத்தகையெடுத்தல்** – குத்தகைக்கு வாங்குதல்.
**குத்தம்** – எருது.
**குத்தரசம்** – பெருங்காயம்.
**குத்தல்** – உடம்பின் உள்நோவு; மனம் நோவச் செய்கை; தெருவிற்கு எதிராக வீடு அமைந்திருப்பது முதலிய குற்றம்; நீர்க் குத்தலான இடம்; குற்றலரிசி.
**குத்தலரிசி** – குற்றித் தீட்டிய அரிசி.
**குத்தன்** – காப்பவன்; வணிகர் பட்டம்; குப்த மரபில் வந்த அரசன்.

**குத்தாங்கல்** – செங்குத்தாக வைக்குங் கல் அல்லது செங்கல்; குத்துக்கல்.

**குத்தாணி** – மரக் கைப்பிடியமைந்த நீண்ட ஊசி வகை.

**குத்தாமற்குத்துதல்** – குறிப்பாகக் குற்றத்தைச் சொல்லிக் காட்டுதல்.

**குத்தார்க்கு** – குத்தூசியால் வாங்கித் தைக்கும் பனைநார்.

**குத்தாலம்** – திருவாத்தி, காட்டாத்தி.

**குத்தாலா** – கடுகுரோகிணி.

**குத்தாளை** – மானவாரியாக விளையும் நெல் வகை.

**குத்தி** – கோணிமூட்டையினின்றும் அரிசி முதலிய வற்றை எடுக்கும் கருவி, குத்தூசி; கலப்பைக் கூர்; திரிகரண அடக்கம்; மண்; மாறுபாடு.

**குத்திக்காட்டுதல்** – ஒருவன் குற்றத்தைச் சுட்டிக் காட்டி அவன் மனத்தைப் புண்படச் செய்தல்.

**குத்திக்கொல்லன்** – ஆயுதபாணியாய்ப் பொருள் கொண்டு செல்பவன்.

**குத்திச்செருப்பு** – குதியிற் கனமுள்ள செருப்பு.

**குத்திப்பிடுங்குதல்** – வாந்திசெய்ய வருதல்.

**குத்திப்பேசுதல்** – நோவும்படி ஒருவரைச் சுட்டிப் பேசுதல்.

**குத்தியளத்தல்** – அளக்குங் கருவியைத் தானியத் திற் பாய்ச்சியளத்தல்.

**குத்தியோட்டம்** – இரண்டு விலாப்பக்கங்களிலும் கூரான கம்புகளைக் குத்திக்கொண்டு கோயிலை வலம்வரும் ஒரு வேண்டுதல்.

**குத்திரக்காரன்** – வஞ்சகன்.

**குத்திரப்பேச்சு** – இகழ்ந்துரைக்குஞ் சுடுசொல்.

**குத்திரம்** – வஞ்சகம்; இழிவு; ஏளனச் சொல்; குரூரம்; மலை; சணல்; பொய்.

**குத்திரவித்தை** – தந்திரம்; சூனிய வித்தை.

**குத்திரன்** – வஞ்சகன்.

**குத்திருமல்** – கக்குவான் இருமல்.

**குத்தினி** – ஒருவகைப் பட்டுச்சீலை.

**குத்தீட்டி** – ஈட்டிவகை.

**குத்து** – கைமுட்டியால் தாக்குவது; ஈட்டி முதலியவற்றால் தாக்குகை; உரலிற் குற்று தல்; புள்ளி; செங்குத்து; நோவு; பிடி; தெரு முதலியவற்றின் பாய்ச்சல்.

**குத்துக்கட்டை** – ஒன்றைத் தாங்குவதற்கு நட்டு நிறுத்தப்படும் கட்டை.

**குத்துக்கம்பு** – நுனி கூர்மையான கழி.

**குத்துக்கல்** – செங்குத்துக் கல்; நிறுதிட்டமாய் வைக்கப்பட்ட கல்; ஏரி நீரின் ஆழத்தைக் காட்டும் அளவுகல்.

**குத்துக்கழி** – கட்டைவண்டியின் பாரில் இரு பக்கத்திலும் நடும் கழி, கதிகால்.

**குத்துக்காயம்** – ஆயுதங்கொண்டு குத்துவதனால் உண்டாகிய புண்.

**குத்துக்கால்** – தாங்குகால்; நெசவுத்தறியின் ஓர் உறுப்பு; தடை.

**குத்துக்காலிடுதல்** – காலைக் குத்திட்டு உட்காரு தல்.

**குத்துக் குடைச்சல்** – வாயுவால் உண்டாகும் நோவு.

**குத்துக்கு நிற்றல்** – எதிர்த்து நிற்றல்; வாதாடு தல்.

**குத்துக்குளம்பு** – குதிரை முதலிய விலங்கின் நெட்டான குளம்பு.

**குத்துக்கூலி** – நெல் முதலியவை குற்றுவதற்குக் கொடுக்குங் கூலி.

**குத்துக்கொம்பு** – விலங்கின் நேர்கொம்பு.

**குத்துக்கோல்** – தாற்றுக்கோல், முனையில் கூரிய இரும்புள்ள கோல்.

**குத்துச்சண்டை** – குத்துப்போர், மற்போர்.

**குத்துண்ணுதல்** – செங்குத்தாக நிற்றல்.

**குத்துணி** – ஒரு புடைவை; தமுக்குணி, குத்துப் பட்டவன்; இழிவுபட்டவன்.

**குத்துத்திராய்** – ஒரு கீரைவகை.

**குத்துதல்** – துளையிடுதல்; ஊசி முதலிய வற்றால் துளையிடுதல்; படைக்கலன்களால் குத்துதல்; தைத்தல்; கொம்பினால் முட்டுதல்; முட்டியால் குத்துதல்; புள்ளி குத்துதல்; முத்திரை குத்துதல்; உலக்கையால் குற்றுதல்; தின்னுதல்; கிண்டுதல்; சுடுசொல் சொல்லு தல்; வருத்துதல்; அகழ்தல்.

**குத்துப்பாடு** – பிறர் மனம் நோவச் செய்தல்; குற்றம்.

**குத்துப்பாறை** – செங்குத்தான பாறை; நெற் குற்றும் பாறை; மலைப் பக்கத்திலுள்ள செங்குத்தான கற்குவியல்.

**குத்துப்புரை** – நெற்குற்றும் இடம்.

**குத்துப்போர்** – செங்குத்தாக வைக்குஞ் சூடு; மற்போர், குத்துச் சண்டை; தீராப் பகை.

**குத்துமதிப்பாய்** – சுமாராய்.

**குத்துமானம்** – கட்டட வளைவுக்குமேல் குத்தாக வைக்கும் செங்கல் வேலை.

**குத்துவல்லயம்** – கையிற்கொண்டு குத்துதற்கு உதவும் ஈட்டி.

**குத்துவலி** – இசிவுநோவு.

**குத்துவாதை** – பசிவருத்தம்.

**குத்துவாள்** – உடைவாள்.

**குத்துவிளக்கு** – நிலையாக நிறுத்தப்படும் விளக்கு.

**குத்துவெட்டு** – சண்டையிற்படுங் காயங்கள்; தீராப் பகை; எழுத்துக் கிறுக்கு; நாணயம் முதலியவற்றில் படும் பழுது.

**குத்துனி** – ஒருவகைப் பட்டுச்சீலை; பட்டுக் கலந்த துணிவகை.

**குத்தூசி** – குத்தித் தைக்கும் ஊசி; கூரைவேயும் ஊசி; கோணிமூட்டைகளில் நெல் முதலிய வற்றைக் குத்தி எடுக்கும் கருவி.

**குத்தென விழுதல்** – தலைகீழாய் விழுதல்; செங் குத்தாய் விழுதல்.

**குதக்குதல்** – காண்க: குதப்புதல்.

**குதகீலம்** – மூலநோய்.

**குதட்டுதல்** – குதப்புதல், அதக்குதல்; குழறிப் பேசுதல்.

**குதப்புதல்** – மெல்லுதல், அதக்குதல்.

**குதபம்** – பதினைந்தாகப் பகுக்கப்பட்ட பகற் காலத்தின் எட்டாம் பாகம்; தருப்பைப் புல்.

**குதபன்** – சூரியன்; தீ.

**குதம்** – ஓமம்; தருப்பை; மலவாய்; தும்மல்; வெங்காயம்; மிகுதி.

**குதம்புதல்** – துணி அலசுதல்; கொதித்தல்; சினத் தல்.

**குதம்பை** – காது பெருக்குவதற்காக இடும் ஓலை; சீலை முதலியவற்றின் சுருள்; காதணிவகை.

**குதர்** – பிரிவு.

**குதர்க்கக்காரன்** – விதண்டாவாதி.

**குதர்க்கம்** – முறைகெட்ட தர்க்கம்; தடை.

**குதர்க்கி** – போலித் தர்க்கிகன், விதண்டை பேசுவோன்.

**குதர்செல்லுதல்** – நெறிதவறிச் செல்லுதல்.

**குதர்தல்** – கோதி யெடுத்தல்; அடியோடு பெயர்த்தல்; குதர்க்கவாதம் பண்ணுதல்.

**குதரம்** – மலை.

**குதலை** – மழலைச்சொல்; இனிய மொழி; அறி விலான்.

**குதலைமை** – பொருள் விளங்காமை; தளர்ச்சி.

**குதற்று** – நெறிதவறுகை.

**குதறுதல்** – சிதறுதல்; கிண்டுதல்; நெறி தவறுதல்; புண் மிகுதல்; குலைதல்.

**குதனம், குதனை, குதனைக்கேடு** – துப்புரவின்மை; திறமை யின்மை; அக்கறையின்மை.

**குதாவிடை** – அலங்கோலம்; காலத்தாழ்வு.

**குதானன்** – தாளிச்செடி.

**குதி** – குதிப்பு; குதிகால்; முயற்சி.

**குதிகள்ளன்** –குதியில் வரும் ஒரு புண் வகை.

**குதிகால்** – குதிங்கால், காற்குதி.

**குதிகொள்ளுதல்** – குதித்தல்; பெருகுதல்; பொலிதல்.

**குதிங்கால்** – உள்ளங்காலின் பின்பாகம்.

**குதித்தல்** – பாய்தல்; நீர் முதலியன எழும்பி விழுதல்; கூத்தாடுதல்; செருக்குக் கொள்ளு தல்; கடந்துவிடுதல்; துள்ளல்.

**குதிப்பு** – குதிக்கை; கருவங் கொள்ளல்; சுதும்பு மீன்.

**குதிமுள்** – குதிரைமுள்.

**குதிர்** – தானியம் வைக்குங் கூடு; ஒரு மர வகை.

**குதிர்தல்** – தீர்மானப்படுதல்; பூப்பெய்தல்.

**குதிரம்** – 35 கழஞ்சு அளவுள்ள கருப்பூரம்.

**குதிரி** – அடங்காதவள்.

**குதிரை** – பரி; கயிறு முறுக்குங் கருவி; யாழின் ஓர் உறுப்பு; துப்பாக்கியின் ஓர் உறுப்பு; தாங்குசட்டம்; குதிரைமரம்; ஊர்க்குருவி; அதியமானின் குதிரைமலை.

**குதிரைக்கயிறு** – குதிரையின் வாய்வடம்.

**குதிரைக்காரன்** – குதிரைப் பாகன்; குதிரை வீரன்.

**குதிரைக்குளம்படி** – நீர்ச்சேம்புச்செடி; அடப்பங் கொடி.

**குதிரைக்குளம்பு** – குதிரையின் குரம்; நீர்க் குளிரிச்செடி.

**குதிரைக்கொம்பு** – கிடைத்தற்கரியது.

**குதிரைச் சம்மட்டி** – குதிரைச் சவுக்கு.

**குதிரைச்சாணி** – குதிரைக்காரன்; குதிரை வைத்தியன்.

**குதிரைச் சாரி** – குதிரையின் சுற்றி ஓடுங் கதி.

**குதிரைச்சேவகன்** – குதிரைவீரன்.

**குதிரைத்தறி** – நீருடைப்பை அடைத்தற்கு வைக்கோல் முதலியவற்றோடு நிறுத்தும் மரச்சட்டம்.

**குதிரை நடை** – பெருமிதநடை, கம்பீரநடை.

**குதிரைநிலை** – குதிரைக் கொட்டில்.

**குதிரைப் பட்டை** – மேற்கூரை தாங்கும் கட்டை; கூரையில் ஓடு நழுவாமலிருக்கும்படி அடுக்கிய ஓட்டின் முகப்பில் பட்டையாகப் பூசப்படும் சாந்து.

**குதிரைப்படை** – குதிரைச்சேனை.

**குதிரைப் பந்தி** – காண்க: குதிரைநிலை.

**குதிரைப்பல்லன்** – வெள்ளைப்பூண்டு.

**குதிரைப்பிடுக்கன்** – பீநாறிமரம்.

**குதிரைமரம்** – கால்வாய் அடைக்குங் கதவு; உடற்பயிற்சிக்குரிய தாண்டுமரம்; குதிரைத் தறி; நெசவிற் பாவு தாங்குதற்குரிய மரச் சட்டம்.

**குதிரைமறம்** – போர்க் குதிரையின் திறப் பாட்டைக் கூறும் புறத்துறை.

**குதிரைமறி** – குதிரைக்குட்டி; பெட்டைக்குதிரை.

**குதிரைமுகம்** – முழந்தாள் எலும்பு; குளத்தின் கரைக்கட்டிற்கு வலியுதவும் முட்டுக் கட்டடம்.

**குதிரைமுகவோடம்** – பரிமுக அம்பி, குதிரையின் உருவை முகப்பிற்கொண்ட தோணி.

**குதிரைமுள்** – குதிரையை விரைவுபடுத்தற்கு ஏறுவோர் காலில் இட்டுக்கொள்ளும் முட் கருவி.

**குதிரையாளி** – குதிரை ஏறி நடத்துவோன்; வயிரவன்.
**குதிரையாளி வீதி** – குதிரை செலுத்தற்குரிய வெளியிடம்.
**குதிரையிராவுத்தன்** – குதிரைவீரன்.
**குதிரையேற்றம்** – குதிரையேறி நடத்தும் வித்தை.
**குதிரையேறுதல்** – குதிரைமேல் ஏறிச் செல்லுதல்; சிறுவர்களின் குதிரை விளையாட்டு; பிறரைக் கீழ்ப்படுத்துதல்.
**குதிரை வடிப்போர்** – குதிரை நடத்துவோர்.
**குதிரைவலி** – பெண்களுக்குப் பேறுகாலத்தி லுண்டாகும் பெருவலி.
**குதிரைவலிப்பு** – குதிரைவலி; குதிரையின் காற் சுண்டு வாதம்.
**குதிரைவாய்க் கருவி** – கடிவாளம்.
**குதிரைவாலிச் சம்பா** – ஒருவகைச் சம்பாநெல்.
**குதிரைவிடுதல்** – குதிரையைச் சரியாக விடுதல்; குதிரைப் பந்தயம் விடுதல்.
**குதிரைவீரர்** – குதிரைப் படையாளர்.
**குதுகம்** – விருப்பம்.
**குதுகலம்** – காண்க: குதூகலம்.
**குதுகலித்தல்** – காண்க: குதூகலித்தல்.
**குதுகுதுப்பு** – ஆவல்; குளிரால் நடுங்குகை.
**குதுகுலம்** – காண்க: குதூகலம்.
**குதும்பகர்** – தும்பைப்பூடு.
**குதுவை** – காண்க: கொதுவை.
**குதூகலம்** – விருப்பம்; மனக்களிப்பு; முன் காணாப் பொருளைக் காண்பதால் வரும் மகிழ்ச்சி.
**குதூகலித்தல்** – மனமகிழ்தல்.
**குதை** – விற்குதை; அம்பு; அம்பின் அடிப்பாகம்; ஆபரணத்தின் பூட்டு; முயற்சி; பசி.
**குதைச்சு** – சட்டையில் பொத்தானிடும் துளை; தாலியுருவகை.
**குதைத்தல்** – விற்குதையில் நாணைப் பூட்டுதல்.
**குதைதல்** – செலுத்துதல்; துளையிடுதல்; தடுமாறச் செய்தல்.
**குதைபோடுதல்** – முடிச்சுப் போடுதல்.
**குதையாணி** – அணிகலனைப் பூட்டும் சுரையாணி.
**குந்தகம்** – தடை; குறைந்த விலை.
**குந்தணை** – தைலம் காய்ச்சுவதற்கு ஆதாரமாக வைக்கப்படும் இரும்பண்டா.
**குந்தம்** – குதிரை; நான்கு பலம் கொண்ட ஒரு நிறை; வைக்கோற் படப்பு; கண்ணோய் வகை; துயரந்தருவது; எறிகோல்; குத்துக் கோல்; வெண்குருத்து; நவநிதியுள் ஒன்று; குருந்தமரம்; கற்பாடாணம்; கோளக பாடாணம்.
**குந்தமம்** – பூனை.
**குந்தலிங்கம்** – சாம்பிராணி.
**குந்தளம்** – மகளிர் தலைமயிர்; மயிர்க்குழற்சி; கூந்தற் கொத்து; சாளுக்கிய அரசரது நாடு.
**குந்தன்** – திருமால்; தூயதன்மையுடையவன்.
**குந்தனக்காரன்** – மணி மதிப்போன்.
**குந்தனம்**– மணி பதிக்கும் இடம்; தங்கம்.
**குந்தா** – துப்பாக்கியின் அடி; கப்பலின் பின்புறம்.
**குந்தாணி** – பெருவுரல்; உரலின் வாய்க்கூடு; கண்ணோய் வகை.
**குந்தாலம், குந்தாலி(ளி)** – குத்தித் தோண்டுங் கருவி; மண்வெட்டி; கணிச்சி.
**குந்தாளித்தல்** – களித்துக் கூத்தாடல்.
**குந்தி** – கள்; பாண்டவரின் தாய்.
**குந்திநடத்தல்** – முன்காலை மட்டும் ஊன்றி நடத்தல்.
**குந்திநிற்றல்** – ஒற்றைக்காலால் நிற்றல்; முன்னங்காலால் நிற்றல்.
**குந்திருக்கம்** – காண்க: குந்துருக்கம்.
**குந்து** – உட்காருகை; ஒட்டுத்திண்ணை; நொண்டுகை; பழத்தின் சிம்பு.
**குந்துகாலன்** – காலை இழுத்து நடப்பவன்; குந்தியிருக்கை.
**குந்துதல்** – காலை ஊன்றவைத்து உட்காருதல்; முன்னங்கால்களை ஊன்றி நிற்றல்; நொண்டி நடத்தல்; வளைதல்.
**குந்துதிண்ணை** – ஒட்டுத்திண்ணை.
**குந்துரு, குந்துருக்கம்** – பறங்கிச் சாம்பிராணி; வெள்ளைக் குங்கிலியம்.
**குநகி** – சொத்தை நகமுள்ளவன்(ள்).
**குப்பஅஞ்சனா** – நெற்குவியலின் மதிப்பு.
**குப்பக்காடு** – பட்டிக்காடு.
**குப்பத்தம்** – நிலச் சொந்தக்காரரின் பங்கு.
**குப்பம்** – ஊர்; காடு; செம்படவர் வாழும் சிற்றூர்; கூட்டம்; குவியல்.
**குப்பல்** – குவியல்; மேடு; கூட்டம்.
**குப்பன்** – முன்னிரண்டு குழந்தைகளும் தவறிய பின் பிறக்கும் மூன்றாம் மகனுக்கு இடும் பெயர்.
**குப்பாசம்** – மெய்ச்சட்டை; பாம்புச்சட்டை.
**குப்பாமணி** – குப்பைமேனி.
**குப்பாயம்** – சட்டை.
**குப்பான்** – மூடன்.
**குப்பி** – ஒருவிதக் குடுவை; சடைக்குச்சு; குப்பிக் கடுக்கண்; சிமிழ்; கண்ணாடிக் குடுவை; வயிர வகை; வீணையின் முறுக்காணி; மாட்டுக் கொம்பு முதலியவற்றிற் செருகும் பூண்; சங்கங்குப்பி; சாணி; முன்னிரண்டு குழந்தைகளும் தவறியபின் பிறக்கும் மூன்றாம் மகளுக்கு இடும்பெயர்.

**குப்பிச்சாரம்** – காசிச்சாரம்.
**குப்பிமா** – மாக்கல்.
**குப்பிலவணம்** – வளையலுப்பு.
**குப்பிவைப்பு** – ஓர் இரசாயன முறை; இரசாயனச் சரக்கு.
**குப்புகுப்பெனல்** – தீ முதலியன மூண்டெழும் போது உண்டாகும் ஓர் ஒலிக்குறிப்பு.
**குப்புறக் கிடத்தல்** – தலைகீழாகக் கிடத்தல், கவிழ்ந்து கிடத்தல்.
**குப்புறத் தள்ளுதல்** – தலைகீழாக விழும்படி தள்ளுதல்.
**குப்புறவிழுதல்** – முகந் தரைநோக்க விழுதல்.
**குப்புறுதல்** – கடத்தல்; பாய்ந்து கடத்தல்; தலை கவிழ விழுதல்; தலைகுனிதல்; குழந்தையின் முகந் தரைநோக்கக் கவிழ்தல்.
**குப்பெனல்** – திடீரெனல், விரைவுக் குறிப்பு.
**குப்பை** – குவியல்; கூட்டம்; தவசக் குவியல்; செத்தை; மேடு; மலம்; சதகுப்பை.
**குப்பைக்காரன்** – குப்பை வாருவோன்.
**குப்பைக் காலன்** – அதிர்ஷ்டக் காலுடையவன்.
**குப்பைக் கீரை** – சிறுதண்டுக் கீரை; அறைக்கீரை.
**குப்பை கிளர்(று)தல், குப்பை கிளைத்தல்** – குப்பையைக் கிண்டுதல்; குற்றம் வெளியாகத் துருவி விசாரித்தல்.
**குப்பைகூளம்** – செத்தை முதலியவற்றின் தொகுதி.
**குப்பைப்பருத்தி** – பருத்திவகை, உப்பம்பருத்தி.
**குப்பைமேடு** – கூளக் குவியல்.
**குப்பைமேனி** – ஒருவகைப் பூடு.
**குப்பையன்** –அழுக்கடைந்தவன்.
**குப்பைவாரி** – குப்பை வாருவோன்; செத்தை கூட்டுங் கருவி.
**குப்பைவைத்தல்** – உரம் போடுதல்.
**குபசுபா** – எட்டிமரம்.
**குபதம்** – தீயநடை; பாழ்வழி.
**குபதன்** – தீய வழியிற் செல்வோன்.
**குபலம்** – வலியின்மை; இழப்பு.
**குபார்** – கூச்சலிடுகை; கக்கல்கழிச்சல் நோய், வாந்திபேதி.
**குபிதன்** – கோபங்கொண்டவன்.
**குபிலன்** – மன்னன், காவலன்.
**குபினன்** – வலைஞன்.
**குபீரெ(லெ)னல்** – விரைவுக் குறிப்பு.
**குபேரகம்** – சின்னிப் பூடு.
**குபேர சம்பத்து** – குபேரனுக்கு உரியது போன்ற பெருஞ்செல்வம்.
**குபேரன்** – வடதிசைக்கு உரிய பெருஞ்செல்வன்; செல்வன்; சந்திரன்.
**குபையம்** – சிறுபுள்ளடிப் பூடு.
**கும்பகம்** – இழுத்த மூச்சுக்காற்றை உள்ளே நிறுத்தும் பிராணாயாமவகை.
**கும்பகாம்போதி** – ஒரு பண்வகை.
**கும்பகாரன்** – குயவன்.
**கும்பகாரிகை** – குயத்தி; கண்ணிடு மை.
**கும்பங்கொட்டுதல்** – துர்க்கைக்கு வேண்டு தலைச் செலுத்துதல்; பெருந்தீனி கொடுத்தல்.
**கும்பசம்பவன், கும்பசன்** – குடத்திலிருந்து பிறந்தவன்; அகத்தியன்; துரோணன்.
**கும்பஞ்சான்** – சிவதைக்கொடி.
**கும்பஞ்செய்தல்** – கல்லறையின்மேல் மண்ணைக் குவித்தல்; பிணத்தைப் புதைத்தல்.
**கும்பதீபம்** – குடவடிவான ஆராதனை விளக்கு.
**கும்பம்** – குடம்; கும்பகலசம்; யானை மத்தகம்; கலசம்; கும்பராசி; மாசிமாதம்; நெற்றி; இரு தோள்கட்கும் இடையிலுள்ள முதுகின் மேற்பக்கம்; நூறுகோடி; குவியல்; சிவதை.
**கும்பம்போடுதல்** – தேவதைகளுக்குப் பெருஞ் சோறளித்தல்.
**கும்பமுனி** – காண்க: குடதேவர்.
**கும்பயோனி** – காண்க: கும்பசம்பவன்.
**கும்பல்** – குவியல்; திரள்; கூட்டம்; கும்பல் நாற்றம்.
**கும்பளம்** – கலியாணப்பூசணி.
**கும்பளமோசு** – ஒருவகைக் கருவாடு.
**கும்பன்** – அகத்தியன்; சிவகணத் தலைவருள் ஒருவன்; ஓர் அரக்கன்; கயவன்.
**கும்பனாற்றம்** – காண்க: கும்பிநாற்றம்.
**கும்பா** – ஒருவகைப் பாண்டம்.
**கும்பாகம்** – பவளக்கொடி.
**கும்பாபிடேகம்** – கோயில்களில் சுவாமி பிரதிட்டை செய்வதற்கும் சுத்தி செய்வதற்கும் உரிய சடங்கு, குடமுழுக்கு.
**கும்பாரம்** – அம்பாரம்; கும்பம்.
**கும்பாலத்தி** – சுவாமிக்குமுன் எடுக்கும் கும்பதீபம்.
**கும்பி** – குவியல்; சேறு; சுடுசாம்பல்; வயிறு; யானை; கும்பிபாகம்; நரகம்; கும்பராசி; நெருப்பு; மட்பாண்டம்.
**கும்பிடரி** – பயிரிடுவோர் நிலக்கிழார்க்கேனும் ஆலயத்திற்கேனும் அளிக்கும் கதிர்க்கட்டு.
**கும்பிடல்** – காண்க: கும்பிடுதல்.
**கும்பி(பீ)டு** – வணங்குகை, வணக்கம்.
**கும்பிடுகள்ளன்** – வணக்கங் காட்டும் வஞ்சகன்.
**கும்பிடுசட்டி** – தீச்சட்டி; தட்டார் நெருப்பு வைக்கும் சட்டி.
**கும்பிடுதல்** – கெஞ்சுதல்; கைகூப்பி வணங்கல்.
**கும்பிடுபோடுதல்** – கைகுவித்து வணங்குதல்.
**கும்பித்தல்** – யோகமுறையில் மூச்சடக்குதல்.
**கும்பிநாற்றம்** – தீய்ந்துபோன உணவில் உண்டாகும் நாற்றம்.

**கும்பிபாகம்** – ஏழு நரகத்துள் ஒன்று, பாவம் செய்தவரைக் குயவர் சூளையில் சுடுவதுபோல் வாட்டுவதாகிய நரகம்.

**கும்பீர(ள)ம்** – முதலை.

**கும்பு** – கூட்டம், திரள்; அடிப்பற்று.

**கும்புதல்** – அடிப்பற்றுதல், சமைத்த உணவு தீய்ந்துபோதல்.

**கும்பை** – சிறுமரம்; திக்காமல்லிவகை; சேரி; கும்பகோணம்; குடம்; வேசி; ஒரு வாழை வகை; பெருங்கம்பளிமரம்; ஓமகுண்டத்தின் வேதிகை.

**கும்மட்டம்** – ஒருவகைச் சிறுபறை; காகிதத்தி னாலான கூட்டுவிளக்கு; விமானக் கூண்டு; கட்டட வளைவு.

**கும்மட்டி** – குதிக்கை; குதித்து விளையாடுதல்; ஒரு வாத்தியம்; தீச்சட்டி; ஆற்றுத் தும்மட்டிச் செடி.

**கும்மல்** – ஆடையை நனைத்துக் கசக்குதல்; கூட்டம்; அரிவாள்.

**கும்மலி** – தடித்தவள், பருத்தவள்.

**கும்மலித்தல்** – விளையாடுதல்.

**கும்மாயம்** – குழைத்துச் சமைத்த பருப்பு; சுண்ணாம்பு.

**கும்மாளங்கொட்டுதல், கும்மாளம்** } – குதித்து விளையாடுகை; குதித் தாடும் ஓர் அநாகரிகக் கூத்து.

**கும்மி** – மகளிர் கைகொட்டிப் பாடியாடும் கூத்து; கும்மிப்பாட்டு.

**கும்மிப் பாட்டு** – மகளிர் குதித்து விளையாடுகை யில் பாடும் ஒருவகைப் பாட்டு.

**கும்மியடித்தல்** – பாடிக்கொண்டு கைகொட்டி யாடுதல்.

**கும்மிருட்டு** – மிக்க இருள்.

**கும்முதல்** – ஆடை கசக்குதல்; உரலில் மெல்லக் குற்றுதல்; கையால் பிசைந்து மெல்லிதாக்கு தல்; கூடுதல்.

**கும்மெனல்** – இருளடர்ச்சி; காதடைப்பு முதலிய வற்றைக் கூறுமிடத்து வரும் குறிப்பு.

**குமஞ்சம், குமஞ்சான்** } – பறங்கிச் சாம்பிராணி; தூப வர்க்கம்.

**குமட்டு** – ஓக்காளம், அருவருப்பினால் உண் டாகும் வாந்தி.

**குமட்டுதல்** – வாந்திக்கு வருதல்; நிறைய உண்டு தெவிட்டுதல்; கக்குதல்; அருவருத்தல்.

**குமடு** – கன்னம்.

**குமண்டை** – ஒருவகை மகிழ்ச்சிக் கூத்து.

**குமண்டையிடுதல்** – மகிழ்ச்சியாற் குதித்தல்; நிறைய உண்டு தெவிட்டல்.

**குமதி** – புத்திகேடன், அறிவு கெட்டவன்.

**குமர்** – மணமாகாதவள், கன்னி; கன்னிமை, அழியாத்தன்மை.

**குமரகண்டம்(ன்)** – ஒரு வலிப்புவகை.

**குமரகம்** – மாவிலங்கமரம்.

**குமரகோட்டம்** – காஞ்சிபுரத்தில் உள்ள முருகன் கோயில்.

**குமரதண்டம்** – முருகக் கடவுளைப் படைத் தலைவனாகக் கொண்ட தேவர் படை.

**குமரம்** – கொம்பில்லாத விலங்கு; மறைந்த ஒரு தமிழ் இலக்கணநூல்.

**குமரவேள்** – முருகக்கடவுள்.

**குமரன்** – இளைஞன்; மகன்; முருகன்; வயிரவன்.

**குமரி** – கன்னி; பருவம் அடைந்த பெண்; மகள்; துர்க்கை; குமரியாறு; கன்னியாகுமரி; அழி வின்மை; கற்றாழை; மலைநிலத்துச் செய்யும் வேளாண்மை; சொன்னபேதி.

**குமரிக்கடல்** – குமரியருகிலுள்ள கடல்.

**குமரிக்கோடு** – குமரிக்கடற் பக்கத்திலிருந்த ஒரு மலை.

**குமரிச் சேர்ப்பன்** – குமரித் துறைக்குரிய பாண்டியன்.

**குமரிஞாழல்** – மல்லிகை; சங்கபுட்பி.

**குமரித்துறை** – கன்னியாகுமரி; தீர்த்தத்துறை.

**குமரித்தெய்வம், குமரிப்பகவதி** } – கன்னியாகுமரித் தெய்வம்.

**குமரிப்படை** – அழியாச் சேனை.

**குமரிப்போர்** – கன்னிப்போர், முதற்போர்.

**குமரிமதில்** – அழியாக் கோட்டை.

**குமரிமூத்தல்** – கன்னியாயிருந்து மூப்படைதல்; பயனின்றிக் கழிதல்.

**குமரியாடுதல்** – கன்னியாகுமரியில் நீராடுதல்; கன்னிப்பெண்ணோடு கூடல்.

**குமரியிருட்டு** – கன்னியிருட்டு, விடியற்கு முன் உள்ள இருள்.

**குமரியிருத்தல்** – வீணே கழிதல்.

**குமல்** – அரிவாள்.

**குமலி** – துளசி.

**குமார்க்கம்** – தீயவழி.

**குமாரசுவாமி** – முருகக்கடவுள்.

**குமாரத்தி** – மகள்.

**குமாரம்** – இளமை; உருக்கி ஓடவைத்த பொன்.

**குமாரன்** – மகன்; இளைஞன்; முருகக்கடவுள்.

**குமாரி** – புதல்வி; குமரி; காளி; அழியா இளமையினள்.

**குமிகை** – முதிராத எள்ளு; வெள்ளெள்ளு.

**குமிட்டித்தல்** – குமிழ்போலாதல்; திரளுதல்.

**குமிடக்கல்** – கிட்டக்கல்.

**குமிண்சிரிப்பு** – புன்சிரிப்பு.

**குமிண்டி** – கீரைவகை.

**குமித்தல்** – குவித்தல்; அரிசி முதலியவற்றை அதிகமாகக் குற்றுதல்.

**குமிதம்** – தேக்கமரம்.
**குமிதல்** – திரளுதல்; குளிர்தல்.
**குமிதிகம்** – காண்க: **குமிதம்.**
**குமிலம்** – பேரொலி.
**குமிலவோதை** – பேராரவாரம்.
**குமிலி** – துளசி.
**குமிழ்** – நீர்க்குமிழ்; உருண்டு திரண்ட வடிவம்; எருதின் திமில்; உள்ளங்காற் கட்டி; நாணற் புல்; குமிழமரம்.
**குமிழ்க்கட்டை** – பாதக்குறடு.
**குமிழ்குமிழ்த்தல்** – பிறர்க்குத் தோன்றாமல் மறைத்தல்.
**குமிழ்த்தல்** – குமிழிடுதல்; மயிர் சிலிர்த்தல்; ஒலிக்கச் செய்தல்; கொழித்தல்.
**குமிழ்ப்பு** – குமிழ் எழுகை; மயிர்ச்சிலிர்ப்பு; கொழிக்கை.
**குமிழாணி** – தலையில் குமிழ்கொண்ட ஆணி; குமிழ்ப்பிடி.
**குமிழி** – நீர்க்குமிழி; பாதக்குறட்டின் குமிழ்; ஊற்றுவாய்; சீழ்க்குமிழி.
**குமிழித்தல்** – குமிழி கொள்ளுதல்.
**குமிழிநீருண்ணுதல்** – ஒரு செயலில் கருத்தூன்றி யிருத்தல்.
**குமிறுதல்** – ஒலித்தல்.
**குமுக்கு** – மொத்தம்; பெருந்தொகை; கூட்டம்; உதவி; இரகசியம்.
**குமுக்குதல்** – ஊமைக் காயம்படக் கையாற் குத்தல்; ஆடை கும்முதல்.
**குமுகம்** – பன்றி.
**குமுகாயம்** – சமுதாயம்.
**குமுகுமுத்தல்** – அதிக மணம் வீசுதல்.
**குமுகுமெனல்** – பேரொலிக் குறிப்பு; மிகுமணக் குறிப்பு.
**குமுங்குதல்** – மசிதல்; உள்ளிறங்குதல்.
**குமுதகம்** – கட்டடத்தின் எழுதகவகை; ஒரு சித்திரக் கம்பி.
**குமுதச்சிலந்தி** – கொப்புளமாகாமல் சீழ்வடியும் புண்வகை.
**குமுதசகாயன், குமுதநாதன்** } – சந்திரன்.
**குமுதப்படை** – கருவறையின் வெளிப்புற மதிலில் வேலைப்பாடமைந்த அடிப்பகுதி; குமுதம்.
**குமுதம்** – வெள்ளாம்பல்; செவ்வாம்பல்; தென் மேற்குத் திசையானை; படையின் ஒரு தொகை; மிகுதி; கட்டடத்தின் எழுதக வகை; கருவிழியால் உண்டாகும் ஒருவகை நோய்; அடுப்பு; பேரொலி; தருப்பை; கருப்பூரம்.
**குமுதிகை** – பூசணிக்கொடி; பறங்கிக்கொடி.
**குமுதிப்பனை** – கிச்சிலிப்பனை.
**குமுலி** – துளசிச்செடி.
**குமுறக்காய்தல்** – நன்றாகக் காய்தல்.
**குமுறப்பிழிதல்** – இறுகப் பிழிதல்.
**குமுறல்** – பேரொலி.
**குமுறலண்டம்** – அண்டவாதவகை.
**குமுறுதல்** – அதிரொலி செய்தல்; கலப்போசை எழுதல்; மனத்தினுள்ளேயே வருந்துதல்; பீறிடுதல்; கொதித்தல்.
**குமேரு** – பேய்பிசாசுகளுக்கு இருப்பிடமான தென்முனை.
**குமை** – அழிவு; துன்பம்; அழுக்குத்துணி முதலியன இடும் பெட்டி; அடி; ஓர் எடை.
**குமைத்தல்** – துவைத்தல்; உரலில் வைத்து இடித்தல்; குழைய வேகச்செய்தல்; வருத்து தல்; அழித்தல்.
**குமைதல்** – குழைய வேகுதல்; குழம்புதல்; வெப்பத்தால் புழுங்குதல்; கண் முதலியன இறுகிக்கொள்ளுதல்; சோர்தல்; அழிதல்; வருந்துதல்.
**குமைதின்னுதல்** – அடியுண்ணுதல்.
**குய்** – தாளிப்பு; தாளித்த கறி; நறும்புகை; சாம்பிராணி.
**குய்மனத்தாளர்** – வஞ்சகர்.
**குய்யதீபகம்** – மின்மினி.
**குய்யபீசகம்** – எட்டி.
**குய்யம்** – மறைவானது; ஆண்குறி; பெண்குறி; எருவாயில்; வஞ்சகம்.
**குய்யரோகம்** – பெண்குறியில் வரும் ரோகம்.
**குய்யோமுறையோவெனல்** – கூச்சலோடு முறை யிடுதற் குறிப்பு.
**குயக்கலம்** – மட்பாண்டம்; ஒரு நூல்.
**குயக்காலம்** – நிலக்கடம்புப் பூடு.
**குயக்குண்டு** – குயவர் மண்ணெடுக்குங் குழி.
**குயத்தி** – குயவர்குடிப் பெண்.
**குயத்தினலகை** – நிலவாகைப் பூடு.
**குயம்** – அரிவாள்; நாவிதன் கத்தி; குயச்சாதி; இளமை; முலை; தருப்பைப் புல்.
**குயமயக்கு** – தாறுமாறு.
**குயலன்** – தேர்ந்தவன்.
**குயவரி** – புலி.
**குயவன்** – மட்பாண்டம் வனைவோன்; மறை பொருளாளன்.
**குயவன்மணை** – குயவனது சக்கரத்தின் அடிக் கட்டை.
**குயவு** – தேர்.
**குயா** – கோங்குமரம்.
**குயில்** – சொல்; ஒரு பறவை; கோகிலம், மேகம்; துளை.
**குயில் கூவுதல்** – கண்ணுக்கினிதாய்த் தோற்று தல்.

**குயில்(லு)தல்** – சொல்லுதல்; கூவுதல்; செய்தல்; மணி பதித்தல்; கட்டுதல்; பின்னுதல்; நெய்தல்; துளைத்தல்; செறிதல்; வாத்தியம் ஒலித்தல்; நடைபெறுதல்.
**குயிலாயம்** – மட்கலம் வனையுங்கூடம்; சுவருள் அறை; பறவைக் கூடு.
**குயிலுவக் கருவி** – இசைக்கருவிகள்.
**குயிலுவம்** – வாத்தியம் வாசித்தல்.
**குயிலுவர்** – இசைக்கருவி வாசிப்போர்.
**குயிற்றுதல்** – சொல்லுதல்; செய்தல்; மணி பதித்தல்.
**குயிறல்** – காண்க: **குயில்(லு)தல்.**
**குயின்** – மேகம்; செயல்.
**குயின்மூக்கெலும்பு** – முதுகின் அடியெலும்பு.
**குயின்மொழி** – இன்மொழி; அதிமதுரம்.
**குயினர்** – மணியில் துளையிடுவோர்; தையற்காரர்.
**குயுக்(த்)தி** – நேர்மையற்ற உத்தி; ஏளனம்.
**குரக்களித்தல்** – காண்க: **குரக்குவலி.**
**குரக்கன்** – கேழ்வரகு.
**குரக்கன்சாறுதல்** – கேழ்வரகு விதைத்தபின் வயலைக் கிளறிக் கொடுத்தல்; கேழ்வரகு விதைத்தல்.
**குரக்குக்கை** – குரக்குவாதம் பிடித்த கை.
**குரக்குவலி** – குரங்குக்கு வரும் வலிப்பு நோய்; கைகால்களில் வரும் ஒருவகை வலிப்பு.
**குரக்குவலித்தல்** – குரக்குவலி உண்டாதல்.
**குரக்குவாதம்** – காண்க: **குரக்குவலி.**
**குரகதம்** – குதிரை; குதிரைப்பல் நஞ்சு
**குரகம்** – விமானப் பறவை; நீர்வாழ் பறவைப் பொது.
**குரங்கம்** – எட்டிமரம்; மான்; விலங்கின் பொது; மலைக்கொன்றை.
**குரங்கன்** – குரங்குபோலக் குறும்புத்தனம் செய்பவன்; குரங்கம்; எட்டிமரம்; சந்திரன்.
**குரங்காட்டம்** – குரங்கின் கூத்து.
**குரங்காட்டி** – குரங்கை ஆடச்செய்துகாட்டி உயிர் வாழ்வோன்.
**குரங்கி** – சந்திரன்.
**குரங்கு** – வளைவு; வானரம்; முசுமுசுக்கைக் கொடி; கொக்கி; விலங்கு.
**குரங்குகடியன்** – குரங்காலேனும் அணிலாலேனும் முனையில் தீண்டப்பட்டுப் பழுதுற்ற தேங்காய்.
**குரங்குச்சேட்டை** – குறும்புச் செய்கை.
**குரங்குடாப்பு** – கதவு சாளரங்களின்மேல் மழை வெயில்களைத் தடுக்க அமைக்கும் மறைவு.
**குரங்குத் தாழ்ப்பாள்** – கொக்கித் தாழ்ப்பாள்.
**குரங்குதல்** – வளைதல்; தாழ்தல்; தொங்குதல்; தங்குதல்; குறைதல்; இரங்குதல்.
**குரங்குப்பட்டை** – கூரையோடுகள் கலைந்து போகாதபடி முகட்டிலிருந்து அடிவரை கட்டும் சுண்ணாம்புப் பட்டை.
**குரங்குப்பிடி** – விடாப்பிடி; பிடிவாதம்.
**குரங்குப் புத்தி** – நிலையற்ற புத்தி.
**குரங்குமச்சு** – கூரையின்கீழ் அமைக்கும் மச்சு.
**குரங்குமார்க்கம்** – குதிரைநடையுள் ஒன்றான வானரநடை.
**குரங்குமூஞ்சி** – வேறுபட்ட முகம், விகாரமான முகம்; ஒருவகைச் சிறுமரம்.
**குரங்குமூஞ்சிக்காய்** – முகப்பிற் சிவந்த மாங்காய்.
**குரங்குவலி** – காண்க: **குரக்குவலி.**
**குரச்சை,** **குரசு** } – குதிரைக் குளம்பு.
**குரண்டகம்** – மருதோன்றிமரம்; பெருங்குறிஞ்சி.
**குரண்டம்** – மருதோன்றிமரம்; கொக்குவகை.
**குரணம்** – முயற்சி.
**குரத்தம்** – ஆரவாரம்.
**குரத்தி** – குருபத்தினி; ஆசாரிய பதவி வகிப்பவள்; தலைவி; சைன தவப்பெண்.
**குரப்பம்** – குதிரை தேய்க்குங் கருவி.
**குரம்** – ஒலி; தருப்பை; பாகல்; குதிரை முதலியவற்றின் குளம்பு; பசு.
**குரம்பு** – அணைக்கட்டு; ஆற்றினின்று பாசனக் கால்களுக்கு நீரைத் திருப்பும் அணை.
**குரம்பை** – சிறுகுடில்; பறவைக் கூடு; உடல்; தானியக் கூடு, சேர், பத்தாயம்; இசைவகை.
**குரமடம்** – பெருங்காயம்.
**குரல்** – கதிர்; பூங்கொத்து; ஒன்றோடொன்றற்குள்ள சேர்க்கை; தினை, வாழை முதலியவற்றின் தோகை; தினை; பாதிரி; பெண்டிர் தலைமயிர்; மகளிர் குழல்முடிக்கும் ஐவகையுள் ஒன்று; இறகு; பேச்சொலி; மொழி; சந்தம்; மிடறு; ஏழிசையுள் முதலாவது; ஓசை; கிண்கிணிமாலை.
**குரல்காட்டுதல்** – அழைத்தற் பொருட்டுக் குறிப்பொலி காட்டுதல்; பறவை யொலித்தல்; பெருஞ் சத்தமிடுதல்.
**குரல்குளிறுதல்** – யாழ் முதலியவற்றில் சுருதி கலைதல்.
**குரல்வளை** – மிடற்றின் உறுப்பு.
**குரலடைப்பு** – குரல் கம்முகை; பேச முடியாமற் போகை.
**குரவகம்** – வாடாக் குறிஞ்சிமரம்; மருதோன்றி மரம்.
**குரவம்** – குராமரம்; பேரீந்துமரம்; கோட்டம்.
**குரவம்பாவை** – பாவையின் வடிவுடைய குரவம்பூ.

**குரவரம்** – குறிஞ்சாக்கொடி.

**குரவன்** – அரசன், ஆசிரியன் அல்லது குரு, தாய், தந்தை, தமையன் என்னும் ஐங்குரவருள் ஒருவர்; மந்திரி; பிரமன்.

**குரவு** – குராமரம்; குருத்தன்மை.

**குரவை** – மகளிர் கைகோத்தாடுங் கூத்து; மகிழ்ச்சி ஒலி; கடல்.

**குரவைக்கூத்து** – எழுவரேனும் ஒன்பதின்மரேனும் கைகோத்தாடும் ஒருவகைக் கூத்து.

**குரவைப்பறை** – ஒருவகைக் குறிஞ்சிப்பறை.

**குரவையிடுதல்** – நாவால் குழறி மகிழ்ச்சி ஒலி செய்தல், குலவையிடுதல்.

**குரா** – குராமரம்.

**குராசானி** – ஒருவகைப் பூண்டு.

**குரால்** – புகர்நிறம்; ஈனாப் பருவத்து ஆடு; பசு; கோட்டான்.

**குராற்பசு** – கபிலைநிறப் பசு.

**குரிகிற்றாளி** – ஒரு கிழங்குவகை.

**குரிசில்** – பெருமையிற் சிறந்தோன்; உபகாரி; தலைவன்.

**குரீஇ** – குருவி; பறவை.

**குரீஇப்பூளை** – சிறுபூளை.

**குரு** – அம்மை முதலிய கொப்புளங் காணும் நோய்; புண்; வேர்க்குரு; புளகம்; கொட்டை; ஒளி; முத்துக்குற்றங்களுள் ஒன்று; துரிசு; உலோகங்களைப் பேதிக்குஞ் சிந்தூரம் முதலியவை; இரசம்; ஞானாசாரியன்; ஆசிரியன்; புரோகிதன்; தகப்பன்; அரசன்; வியாழன்; பூசநாள்; பாரம்; பருமன்; பெருமை; நெடில்; நெடிலும் நெடிலொற்றும் குறிலொற்றுமாகிய அசைகள்; இரண்டு மாத்திரையின் அளவு; எட்டு அட்சர காலங் கொண்ட தாள அங்கவகை; குருவருடம்; ஒரு தேசம்; குருகுலத் தலைவன்.

**குருக்கண்** – முலை.

**குருக்கத்தி** – மாதவிக்கொடி.

**குருக்கள்** – ஆசாரியார்; சிவன்கோயில் பூசாரி; பார்ப்பனர் அல்லாத சைவர்க்குக் கிரியை செய்விக்கும் சைவ வேளாளர்; கௌரவர்.

**குருக்கன்** – மெலிவிக்கும் நோய்.

**குருக்கு** – பிரமதண்டுச்செடி; இளம்பனை முதலியவை நெருங்கிய தோப்பு.

**குருக்குத்தி** – பிரமதண்டுச்செடி; பயிரில் விழும் நோய்வகை.

**குருக்கொடுத்தல்** – கோயிற்பூசை புரிதல்; கொடுமைசெய்யத் தூண்டல்.

**குருக்கொள்ளுதல்** – குருவின் தன்மையை மேற்கொள்ளுதல்.

**குருகு** – விலங்கு முதலியவற்றின் இளமை; குட்டி; குருத்து; வெண்மை; பறவை; நாரை; அன்றில்; கோழி; மூலநாள்; கொல்லுலை மூக்கு; கைவளை; குருக்கத்திமரம்; கல்லால் வகை; ஒரு நாடு; இடைச்சங்க நூல்களுள் ஒன்று.

**குருகுபெயர்க்குன்றம்** – இமயமலை அடிவாரத்திலுள்ள குன்று.

**குருகுமண்** – வெண்மணல்.

**குருகுமணல்** – வெண்பொடி மணல்.

**குருகுருத்தல்** – நமைத்தல்; நெஞ்சை உறுத்துதல்.

**குருகுலம்** – குரு மரபு; குருவின் வாழ்விடம்.

**குருகுலவாசம்** – கல்வியின் பொருட்டு மாணாக்கர் ஆசிரியருடன் வாழ்தல்.

**குருகூர், குருகை** – நம்மாழ்வார் தோன்றிய ஆழ்வார் திருநகரி.

**குருச்சி** – சீனக்காரம்; நாற்காலி.

**குருசந்திரயோகம்** – வியாழனுஞ் சந்திரனும் ஓர் இராசியிற் கூடியிருக்கும் யோகம்.

**குருசம்** – வெண்தோன்றிக்கிழங்கு.

**குருசில்** – காண்க: குரிசில்.

**குருசு** – சிலுவை.

**குருசேவை** – ஆசாரியனை வழிபடுகை.

**குருட்டடியாய்** – முன்னதாக நினையாதிருத்தல்; தற்செயலாய்.

**குருட்டாட்டம்** – கண்மூடித்தனமான செய்கை.

**குருட்டுக்கண்ணாடி** – முகம் தெரியாத கண்ணாடி.

**குருட்டுக்கல்** – ஒளிமங்கின கல்.

**குருட்டுச்சாயம்** – மங்கலான சாயம்.

**குருட்டுத்தனம்** – அறியாமை, கண்மூடித்தனம்.

**குருட்டுநாள்** – செவ்வாயும் சனியும்.

**குருட்டுநியாயம்** – கண்மூடித்தனமான நியாயம்.

**குருட்டுப்பத்தி** – அறியாமையான பக்தி.

**குருட்டுப்போக்காய்** – கண்மூடித்தனமாய்; தற்செயலாய்.

**குருட்டுயோகம்** – முயற்சியின்றிச் செல்வம் கிட்டுகை.

**குருட்டுவழி** – கண்மூடித்தனமான முறை.

**குருட்டுவாக்கில்** – தற்செயலாய்.

**குருட்டெழுத்து** – மங்கலான எழுத்து.

**குருடன்** – பார்வையில்லாதவன்; சுக்கிரன்; திருதராட்டிரன்.

**குருடி** – பார்வையில்லாதவள்.

**குருடு** – பார்வையின்மை; ஒளியின்மை; ஆடை முதலியவற்றின் முருட்டுப்பக்கம்; மூடன்; காதின் வெளிப்புறத்திலுள்ள செவிள்.

**குருத்தடைத்தல்** – நெல் முதலிய பயிர்கள் குருத்து விடாதிருத்தல்; கதிர் பொதிநிரம்புதல்.

**குருத்தல்** – தோன்றுதல்; வேர்க்குரு உண்டாதல்; சினங்கொள்ளுதல்.

**குருத்து** – மரம் முதலியவற்றின் குருத்து, ஓலைக் கொழுந்து; தந்தம், மூளை இவற்றின் குருத்து; காதுக் குருத்து; இளமை; வெண்மை.

**குருத்துமணல்** – பொடிமணல்.

**குருத்துரோகம்** – ஆசிரியனுக்குச் செய்யும் துரோகம்.

**குருத்துவம்** – குருத்தன்மை; பெருமை; கனம்; நன்றி.

**குருத்துவாங்குதல்** – குருத்துவிடுதல்.

**குருத்தெலும்பு** – இளவெலும்பு.

**குருத்தோலை** – இளவோலை.

**குருத்தோலை ஞாயிறு, குருத்தோலைப் பெருநாள்** – கிறித்தவர்களின் ஒரு திருநாள், ஞாயிறன்று கிறித்துநாதர் எருசலேம் நகருக்குள் வெற்றிமுழக்கோடு நுழைந்ததைக் கொண்டாடும் திருநாள்.

**குருதட்சிணை** – படிப்பு முடிந்தபின் குருவுக்குச் சீடன் கொடுக்குங் காணிக்கை.

**குருதி** – இரத்தம்; சிவப்பு; செவ்வாய்; மூளை.

**குருதிப்பலி** – வீரன் தன் இரத்தத்தைக் கொற்றவைக்குக் கொடுக்கும் பலி.

**குருதிப்புனல்** – செந்நீர், உதிரநீர்.

**குருதியூட்டுதல்** – விலங்குப் பலிகொடுத்தல்.

**குருதிவாரம்** – செவ்வாய்க்கிழமை.

**குருது** – தானியக்குதிர்; நெய்.

**குருந்தக்கல்** – மணிவகையுள் ஒன்று, குருவிந்தக் கல்.

**குருந்தம்** – குருந்தக்கல்; குருந்தமரம்.

**குருந்து** – வெண்குருந்து; குழந்தை; காட்டெலுமிச்சை; ஒருவகைச் சிறுமரம்; குருக்கத்தி; குருந்தக்கல்.

**குருநாத்தகடு** – ஒளியுள்ள ஒருவகை மெல்லிய வண்ணத்தகடு.

**குருநாதன்** – பரமகுரு, முருகக்கடவுள்.

**குருநாள்** – வியாழக்கிழமை; பூசநாள்.

**குருநிந்தை** – ஐம்பெரும் குற்றங்களுள் ஒன்றாகிய குருவைப் பழித்தல்.

**குருநோய்** – அம்மைநோய்.

**குருப்பித்தல்** – பருவுண்டாதல்.

**குருப்பு** – பரு.

**குருப்பூச்சி** – காண்க: குருவண்டு.

**குருபத்தி** – குருவின்மேல் கொள்ளும் அன்பு.

**குருபத்திரம்** – துத்தநாகம்; புளியமரம்.

**குருபரம்பரை** – குருவமிசவழி; ஆழ்வார் ஆசாரியார்களின் வரலாறு கூறும் நூல்.

**குருபரன்** – பரமகுரு.

**குருபன்னி** – குருபத்தினி.

**குருபாரம்பரியம்** – குருவமிசவழி, ஆசாரிய பரம்பரை.

**குருபீடம்** – குருவினது இடம்.

**குருபூசை** – சமாதியடைந்த குருவின் (பெரியாரின்) வருட நட்சத்திரந்தோறும் மடங்களில் மகேசுவர பூசையுடன் அக் குருவிற்குச் செய்யும் ஆராதனை.

**குரும்பட்டி** – தென்னை பனைகளின் இளங்காய்.

**குரும்பி** – புற்றாஞ்சோறு.

**குரும்பை** – பனை தெங்குகளின் பிஞ்சு; இளநீர்; புற்றாஞ்சோறு; காதினுள் திரளும் குறும்பி.

**குருமகன்** – குரு; குருவின் புதல்வன்.

**குருமணி** – பரமகுரு.

**குரும(மா)ன்** – ஒருசார் விலங்குபறவைகளின் இளமைப் பெயர்.

**குருமித்தல்** – பேரொலி செய்தல், முழங்குதல்.

**குருமுடித்தல்** – உலோகங்களை நீற்றுதற்கு உதவும் மருந்து செய்தல்; இரசவாதத்தில் பொன்னாக்குதற்கு மருந்து செய்தல்.

**குருமுறை** – சவர்க்காரம்; கோடாசொரிப்பூடு.

**குருமுனி** – அகத்தியன்.

**குருமூர்த்தம்** – தெய்வம் குருவாக வருதல்; தேவன் குருவாக வருதல்; குருவாக உபதேசிக்க வந்த கடவுளின் திருமேனி.

**குருமூர்த்தி** – பரமகுரு; தட்சிணாமூர்த்தி.

**குருமை** – வண்ணம்; பெருமை.

**குருலிங்க சங்கமம்** – குருவும் சிவமும் திருக்கூட்டமும்.

**குருவகம்** – வெண்சிவப்பு.

**குருவண்டு** – புள்ளியுள்ள குளவிவகை.

**குருவரன்** – காண்க: குருபரன்.

**குருவருடம்** – நவகண்டங்களுள் ஒன்று.

**குருவன்** – குரு.

**குருவாரம்** – வியாழக்கிழமை.

**குருவால்** – இத்திமரம்.

**குருவி** – ஒரு சிறுபறவை; மூலநாள்; குன்றிமணி.

**குருவிக்கண்** – சிறு கண்; சிறு துளை.

**குருவிக்கல்** – ஒருவகைச் செம்மண்.

**குருவிக்கார்** – கார்நெல்வகை.

**குருவிக்காரன்** – குருவி பிடிப்போன்; குருவி பிடிக்கும் ஓர் இனத்தவன்.

**குருவிக்குடல்** – அடிக்கடி உண்டாகும் உணவு விருப்பம்.

**குருவிச்சி(சை)** – புல்லுருவிப்பூடு; ஒருவகை மரம்.

**குருவிஞ்சி** – ஒரு பூண்டு; காட்டுவெற்றிலை.

**குருவித்தலை** – வில்லாளிகள் மறைந்திருந்து அம்பெய்தற்குரிய மதிலுறுப்பு; சிறிய தலை.

**குருவிந்தக்கல்** – குருவிந்தம்; சாணைக்கல் செய்வதற்குதவும் ஒருவகைக் கல்; காவிக் கல்.

**குருவிந்தம்** – தாழ்ந்த தர மாணிக்கவகை; குன்றிமணி; வாற்கோதுமை; சாதிலிங்கம்; முத்தக்காசு.

**குருவிவாலான்** – பெருநெல்வகை.
**குருவுக்காதி** – பச்சைக் கருப்பூரம்.
**குருள்** – மகளிர் தலைமயிர்; நெற்றியில் மயிர்ச் சுருள்.
**குருள்(ளு)தல்** – சுருளுதல்.
**குருளை** – இளமை; ஒருசார் விலங்கின் குட்டி; அதாவது நரி, நாய், பன்றி, மான், புலி, முசு, முயல், யாளி இவற்றின் குட்டி; பாம்பின் குட்டி; குழந்தை; ஆமை.
**குருஉப்புகை** – மணமுள்ள புகை.
**குரூபம்** – வேறுபட்ட உருவம்.
**குரூபி** – விகாரமுள்ளவன்(ள்).
**குரூரம்** – கொடுமை.
**குரூரவதை** – சித்திரவதை.
**குரை** – ஒலி; பெருமை; பரப்பு; அசைநிலை; இசைநிறை; குதிரை.
**குரைத்தல்** – ஆரவாரித்தல்; குலைத்தல்.
**குரைப்பு** – ஓசை.
**குரைமுகன்** – நாய்.
**குரைய** – ஓர் அசைநிலை.
**குரோசம்** – இரண்டேகால் மைல்கொண்ட தொலைவு; கூப்பிடு தொலைவு.
**குரோட்டம், குரோட்டா** – நரி.
**குரோட்டு, குரோடம்** – பன்றி.
**குரோதம்** – பகைமை; கோபம்; செற்றம்.
**குரோதன்** – கோபமுள்ளவன்; வீரபத்திரன்.
**குரோதன** – அறுபதாண்டுக் கணக்கில் ஐம்பத்தொன்பதாம் ஆண்டு.
**குரோதி** – அறுபதாண்டுக் கணக்கில் முப்பத்தெட்டாம் ஆண்டு; கோபி; பகைவன்.
**குல்யன்** – மந்திரி.
**குல்லகம்** – வறுமை.
**குல்லம்** – முறம்.
**குல்லரி** – இலந்தைமரம்.
**குல்லா** – தலைக்குல்லா; படகில் பாய்மரத்தைக் கட்டுங் கயிறு; வெளிப்படையான.
**குல்லாய்** – தலைக்குல்லா.
**குல்லிரி** – வீராவேசவொலி.
**குல்லை** – காட்டுத்துளசி; துளசி; வெட்சி; கஞ்சாச்செடி.
**குல்வலி** – காண்க: குல்லரி.
**குலக்காய்** – சாதிக்காய்.
**குலக்கு** – குணுக்கு; குலை, இலை, பூ, பழம் முதலியவற்றின் சிறுகொத்து.
**குலக்கொடி** – காண்க: குலமகள்.
**குலக்கொழுந்து** – குலத்தை விளங்கச்செய்பவன்.
**குலகன்னி** – கற்புடையவள்.
**குலகாயம்** – பேய்ப்புடல்; குலவொழுக்கம்; நத்தை.
**குலகாலம்** – நிலக்கடம்புப் பூடு.
**குலகாலன்** – குலத்தைக் கெடுப்பவன்.
**குலகிரி** – எட்டுத் திக்குகளிலுமிருந்து உலகைத் தாங்குவதாகக் கூறப்படும் எட்டு மலைகள்.
**குலகுரு** – வமிசகுரு.
**குலங்கூறுதல்** – நற்குடிப்பிறப்பைப் பாராட்டுதல்; மற்றவர் குலத்தை இழித்துக் கூறுதல்.
**குலங்கெட்டவன்** – சாதி ஒழுக்கந் தவறியவன்.
**குலச்சுமால்** – களத்தில் விற்கும் தானியம்.
**குலசன்** – ஒழுக்கமுடையவன்; குலம் வழுவாத பெற்றோர்க்குப் பிறந்தவன், நற்குலத்தான்.
**குலசேகரன்** – குலத்தில் சிறந்தோன்; குலசேகரப் பெருமாள்.
**குலசேகரன்படி** – திருமால்கோயிலின் கருவறை வாயிற்படி.
**குலஞ்செப்புதல்** – தன் குலப்பெருமை கூறுதல்.
**குலஞ்செய்தல்** – குலத்தைத் தோற்றுவித்தல்.
**குலடை** – கற்பொழுக்கங் கெட்டவள்.
**குலத்தம்** – கொள்.
**குலதருமம்** – குல ஒழுக்கம்.
**குலதிலகன்** – குலத்திற் சிறந்து விளங்குபவன்.
**குலதெய்வம், குலதேவதை** – ஒரு குலத்தார் வழிவழியாக வழிபடும் தெய்வம்.
**குலந்தெரித்தல்** – குடிப்பழி தூற்றுதல்.
**குலநாசகம்** – ஒட்டகம்.
**குலப்பம்** – செம்புமணல்; கக்குவான்.
**குலப்பரத்தை** – ஒருவர்க்கே யுரிமை பூண்டொழுகும் பரத்தையர் குலத்தவள்; கணிகையர் குலப்பெண்.
**குலப்பெயர்** – குலம்பற்றி வழங்கும் பெயர்.
**குலபதி** – குலத்துக்குத் தலைவன்; பத்தாயிரம் மாணவர்க்கு உணவு முதலியன அளித்துக் கல்வி கற்பித்தவன்.
**குலம்** – நற்குடிப் பிறப்பு; குடி; உயர்குலம்; சாதி; மகன்; இனம்; குழு; கூட்டம்; வீடு; அரண்மனை; கோயில்; இரேவதி நட்சத்திரம்; நன்மை; அழகு; மலை; மூங்கில்.
**குலம்பா** – பேய்ச்சுரை.
**குலம்புகுந்தவன்** – சாதி மாறினவன்.
**குலம்பெயர்தல்** – மாறுபாடடைதல்.
**குலமகள்** – நற்குடியில் பிறந்தவள், கற்புள்ளவள்.
**குலமகன்** – நற்குடியில் பிறந்தவன்; குலத்தில் பிறந்த மகன்.
**குலமணி** – சாதி ரத்தினம்; ஒரு குலத்தில் புகழ் மிக்கவன்.
**குலமதம்** – குடிப்பிறப்பால் தோன்றுஞ் செருக்கு.
**குலமரியாதை** – குலத்தின் ஒழுங்கு
**குலமீன்** – அருந்ததி, வடமீன்.

**குலமுதல்** – மரபுமுன்னோன்; மகன்; குலதெய்வம்.

**குலமுதற்பாலை** – இசைவகை.

**குலமுள்ளோன்** – நற்குடிப் பிறந்தவன்.

**குலமுறை** – மரபு வரலாறு; குலவழக்கம்.

**குலவரி** – சந்தனம்; செஞ்சந்தனம்.

**குலவரை** – எண்குல மலை; சிறந்த மலை; நாகம்; மந்தாரச் சிலை.

**குலவன்** – உயர்குடிப் பிறந்தோன்.

**குலவிச்சை, குலவித்தை** – குலத்துக்குரிய கல்வி.

**குலவிருது** – குலத்துக்குரிய பட்டம்; கொடி முதலிய விருது; குலப்பிறப்பால் தோன்றும் சிறப்புக் குணம்.

**குலவிளக்கு** – குலத்தை விளங்கச்செய்பவர்.

**குலவு** – வளைவு.

**குலவுகாசம்** – நாணற்புல்.

**குலவுதல்** – விளங்குதல்; மகிழ்தல்; உலாவுதல்; நெருங்கி உறவாடுதல்; தங்குதல்; வளைதல்; குவிதல்.

**குலவுரி** – சந்தனமரம்; செஞ்சந்தன மரம்.

**குலவை** – குரவை, மாதர் வாயால் செய்யும் ஒருவித மங்கலவொலி.

**குலா** – மகிழ்ச்சி.

**குலாங்கனை** – உயர்குலத்தவள்.

**குலாங்குலி** – காவட்டம்புல்.

**குலாசாரம்** – குலவொழுக்கம்.

**குலாசாரியன்** – குலகுரு.

**குலாதனி** – கடுகுரோகிணி.

**குலாதிக்கன்** – குலத்தில் புகழ்மிக்கவன்.

**குலாபிமானம்** – குடிப்பற்று.

**குலாம்** – அடிமை.

**குலாமர்** – உலோபிகள், பிறருக்கு ஈயாதவர்.

**குலாயம்** – பறவைக் கூடு; மக்களால் செய்யப்படும் பறவைக் கூடு; வலை.

**குலாயனம்** – மக்களால் செய்யப்படும் பறவைக் கூடு.

**குலாரி** – ஒருவகை வண்டி.

**குலாலன்** – குயவன்.

**குலாலி** – குயத்தி.

**குலாவுதல்** – நட்பாடுதல்; அளவளாவுதல்; உலாவுதல்; விளங்குதல்; மகிழ்தல்; நிலைபெறுதல்; கொண்டாடுதல்; வளைதல்; வளைத்தல்; வயப்படுத்துதல்.

**குலி** – மனைவியின் மூத்த தமக்கை; யாக்கை.

**குலிகம்** – சாதிலிங்கம்; சிவப்பு; இலுப்பைமரம்.

**குலிங்கம்** – ஊர்க்குருவி; குதிரை; ஒரு நாடு.

**குலிசபாணி** – தேவேந்திரன்.

**குலிசம்** – வச்சிரப்படை; வயிரம்; இலுப்பை மரம்; வன்னிமரம்; கற்பரி பாடாணம்; நரக விசேடம்.

**குலிசவேறு** – வச்சிரப்படை.

**குலிசன்** – இந்திரன்; கற்பரி பாடாணம்.

**குலிசி** – இந்திரன்.

**குலிஞ்சன், குலிஞன்** – காண்க: **குலீனன்.**

**குலி(லீ)ரம்** – நண்டு.

**குலிலி** – வீராவேசவொலி.

**குலீனன்** – உயர்குலத்தோன்.

**குலுக்கி** – அழகுகாட்டுபவள், பிலுக்கி.

**குலுக்குதல்** – அசைத்தல்; குலுங்கச்செய்து கலத்தல்.

**குலுக்கெனல்** – சிரித்தற் குறிப்பு.

**குலுக்கை** – குதிர்.

**குலுகுலுத்தல்** – குறுகுறுவென்று செல்லுதல்; குடுகுடென்றொலித்தல்.

**குலுங்குடைத்தல்** – ஏலத்தொகையை ஏறவொட்டாமல் தடுத்தல்.

**குலுங்குதல்** – அசைதல்; நடுங்குதல்; நிறைதல்.

**குலுத்தம்** – கொள்ளு.

**குலுமம்** – சேனையில் ஒரு தொகை.

**குலுமமூலம்** – இஞ்சி.

**குலை** – கொத்து; காய்க்குலை, ஈரற்குலை முதலியன; செய்கரை; பாலம்; வில்லின் குதை; நாண்.

**குலைக்கல்** – கோரோசனை.

**குலைகுலைதல்** – அச்சத்தால் நடுங்குதல்.

**குலைச்சல்** – அழிதல்.

**குலைத்தல்** – அவிழ்த்தல்; பிரித்தல்; ஒழுங்கறச் செய்தல்; அழித்தல்; ஊக்கங்குன்றச் செய்தல்; அசைத்தல்; குலையாக ஈனுதல்; நாய் குரைத்தல்.

**குலைதல்** – அவிழ்தல்; கலைதல்; நிலைகெடுதல்; மனங்குழைதல்; நடுங்குதல்; அழிதல்; சினக் குறிப்புக் காட்டுதல்.

**குலைதள்ளுதல்** – குலைவிடுதல்.

**குலைநோய்** – மார்பெரிச்சல்.

**குலைப்பன்** – குளிர்காய்ச்சல்; கக்குவான்.

**குலைப்பு** – நடுக்குவாதம்; குலைத்தல்.

**குலையெரிவு** – காண்க : **குலைநோய்.**

**குலைவட்டம்** – அம்புக்குதை.

**குலோமி** – வெள்ளறுகம்புல்.

**குலோமிசை** – வசம்பு.

**குவட்டிலுதித்தோன்** – சொன்னபேதி.

**குவடு** – மலையுச்சி; திரட்சி; மலை; குன்று; மரக்கொம்பு; சங்கபாடாணம்.

**குவலயம்** – பூமி; நெய்தல்; கருங்குவளை; செங்குவளை; அவுபலபாடாணம்.

**குவலயாபீடம்** – கஞ்சன் கண்ணனைக் கொல்லும்படி ஏவின யானை.

**குவலிடம்** – ஊர்.

**குவலை** – பூங்கஞ்சாச் செடிவகை; துளசி.
**குவலையன்** – துரிசு.
**குவவு** – திரட்சி; குவியல்; கூட்டம்; பிணைதல்; பெருமை; பூமி; மேடு.
**குவவுதல்** – குவித்தல்; குவிதல்.
**குவளை** – கருங்குவளை; செங்கழுநீர்ப்பூ; ஒரு பேரெண்; அணிகளில் மணிபதிக்குங் குழி; கடுக்கன்குவளை; மகளிர் கழுத்தணிவகை; கண்குழி; ஒருவகைப் பாண்டம்; கண்ணின் மேலிமை; பாண்டத்தின் விளிம்பு.
**குவளைக்கடுக்கன்** – மணியழுத்தின கடுக்கன் வகை.
**குவளைத்தாரான்** – குவளைமாலை அணிந்த உதிட்டிரன், தருமன்.
**குவளையச்சு** – கடுக்கனில் குவளை அமைத்தற் குரிய கருவி.
**குவாகம்** – கமுகு; ஒருவகைப் பிசின்மரம்.
**குவாதம்** – கழாயம்; குதர்க்கம்.
**குவாது** – முறைகெட்ட தர்க்கம்.
**குவால்** – குவியல்; கூட்டம்; மேடு; அதிகம்; நெற்போர்.
**குவி** – சுவர்.
**குவிகை** – குவிதல்.
**குவித்தல்** – கும்பலாக்குதல்; தொகுத்தல்; கூட்டுவித்தல்; கைகூப்புதல்; கூம்பச்செய்தல்; சுருக்குதல்; உதடுகளைக் கூட்டுதல்.
**குவிதல்** – கூம்புதல்; நெருங்கக் கூடுதல்; வாயிதழ் கூடுதல்; குவியலாதல்; உருண்டு திரளுதல்; கூடுதல்; சுருங்குதல்; ஒருமுகப்படுதல்.
**குவிமுட்கருவி** – யானையை அடக்கும் ஆயுதம்.
**குவியல்** – குவிந்திருப்பது.
**குவிரம்** – காடு.
**குவில்** – அறுத்தல்; கைப்பிடியரி.
**குவிவு** – குவிதல்; கும்பவடிவு.
**குவேலம்** – ஆம்பல்.
**குவை** – குவியல்; குப்பைமேடு; தொகுதி; கூட்டம்; கண்ணின் வெண்படலத்தில் உண்டாகும் நோய்வகை; பொன்னுருக்கும் குகை.
**குழ** – இளமையான.
**குழகம்** – அழகு.
**குழகன்** – இளைஞன்; அழகன்; முருகன்; பிறர்க்கு இணங்குபவன்.
**குழகு** – இளமைச் செவ்வி; அழகு; குழந்தை.
**குழகுதல்** – கொஞ்சிவிளையாடுதல்; கவர்தல்.
**குழகுழத்தல்** – நெகிழ்ந்திருத்தல்; மன உறுதி அறுதல்.
**குழகுழவெனல்** – இளகியிருக்கும் குறிப்பு.
**குழங்கல்** – கழுத்தணி மாலைவகை.
**குழந்தை** – கைப்பிள்ளை; சிறுபிள்ளை; இளமைப் பருவம்.
**குழந்தைகுட்டி** – பல அகவையுள்ள குழந்தைகள்.
**குழந்தைகுட்டிக்காரன்** – பெரிய குடும்பமுடையவன்.
**குழந்தைப்புத்தி** – சிறுபிள்ளையறிவு.
**குழப்படி** – காண்க: **குழப்பம்.**
**குழப்படிகாரன்** – சண்டை செய்வோன்; கலகம் செய்வோன்; குறும்பன்.
**குழப்பம்** – தாறுமாறு; மனக்கலக்கம்; கலகம்; இராசகலகம்; கொந்தளிப்பு.
**குழப்பன்** – கலகக்காரன்.
**குழப்பு** – திராவகங்கள் முதலியவற்றைக் கலக்குகை; கலகமுண்டாக்குகை.
**குழப்புதல்** – பிறழ்வித்தல்; கலக்குதல்; திகைக்கச் செய்தல்; மனத்தைக் கலக்குதல்; காரியக் கேடாக்குதல்; குழப்பம் பண்ணுதல்; குழப்பிப் பேசுதல்.
**குழம்பல்** – கலங்குகை; குழம்பான பொருள்.
**குழம்பு** – குழம்பான பொருள்; காய்கறிக் குழம்பு; குழைசேறு.
**குழம்புதல்** – கலங்குதல்; நிலைகுலைதல்; தத்தளித்தல்.
**குழம்புப்பால்** – வற்றக் காய்ச்சிய பால்.
**குழம்புவைத்தல்** – காய்கறி சேர்த்துக் குழம்பு காய்ச்சுதல்; குழம்பு வடிவான மருந்து காய்ச்சுதல்.
**குழமகன்** – இளமைத் தலைவன்; ஒரு சிற்றிலக்கிய வகை; மரப்பாவை.
**குழமணம்** – பாவைக்குச் செய்யும் கலியாணம்.
**குழமணன்** – மரப்பாவை.
**குழமணிதூரம்** – தோற்றவர் ஆடும் ஒருவகைக் கூத்து.
**குழல்** – கூந்தல்; மயிர்க்குழற்சி; ஐம்பாலுள் சுருக்கி முடிக்கப்படுவது; மயிர்; துளையுடைய பொருள்; இசைக்குழல்; குழலிசை; துப்பாக்கி; உட்டுளை; ஒருவகைக் கழுத்தணி; ஒரு மீன்வகை.
**குழல்சுடுதல்** – துப்பாக்கி சுடுதல்.
**குழல்விடுதல்** – துளையுண்டாதல்.
**குழல்(லு)தல்** – சுருளுதல்; சுருட்டி முடித்தல்.
**குழலூதி, குழலோன்** } – வேய்ங்குழல் வாசிப்போன்.
**குழவி** – கைக்குழந்தை; ஒருசார் விலங்கின் இளமைப் பெயர்; புல், மரம் முதலிய ஓரறிவுயிரின் இளமைப் பெயர்; அம்மி கல்லுரல்களில் அரைக்கும் கல்; பெருமை.
**குழவிக்கல்** – அம்மி உரல்களில் அரைக்குங் கல்.
**குழவிகொள்பவர்** – குழந்தையை வளர்ப்பவர்.
**குழவிஞாயிறு** – உதயசூரியன்.

**குழவித்திங்கள்** – இளம்பிறை.
**குழவு** – இளமை.
**குழற்காடு** – கூந்தல் தொகுதி.
**குழற்கொத்து** – மயிர்க்குழற்சி; இடுமயிர், சவுரி.
**குழற்சி** – சுருண்டிருக்கை; சுருட்டி முடிக்கும் கொண்டை.
**குழற்சிகை** – தலைமயிர்.
**குழற்பிட்டு** – மூங்கிற் குழலில் வைத்து அவிக்கும் பிட்டு.
**குழற்றுதல்** – குழறியொலித்தல்.
**குழறுதல்** – பேச்சுத் தடுமாறுதல்; கூவுதல்; கலத்தல்; கேடுவிளைத்தல்.
**குழறுபடை** – சொல் தடுமாற்றம்; தாறுமாறு.
**குழாஅல்** – கூடுகை.
**குழாம்** – கூட்டம்; சபை.
**குழாய்** – துளையுடைய பொருள்; துளை.
**குழாய்க்கிணறு** – குழாய் இறக்கி உண்டாக்கிய கிணறு; ஆழ்கிணறு.
**குழி** – பள்ளம்; நீர்நிலை; கிணறு; வயிறு; பாத்தி; ஓர் எண்ணின் வருக்கம்; 33 அங்குலங் கொண்ட கோலின் சதுர நிலவளவை; கனவடி; பன்னீரடிச் சதுரம்.
**குழிக்கண்ணி** – குழிவான கண்ணுள்ளவள்.
**குழிக்கணக்கு** – ஒருவகை நிலவளவை.
**குழிக்குத்து** – செடி முதலியவற்றைப் பிடுங்கி நடுங் குழி.
**குழிச்சட்டி** – பணியாரஞ் சுடுங் குழியுள்ள மண் சட்டி.
**குழிங்கை** – அகங்கை, உள்ளங்கை.
**குழிசி** – பானை; மிடா; வண்டியின் குடம்.
**குழிசீலை** – காண்க: **குளிசீலை.**
**குழித்தல்** – குழியாக்குதல்; செதுக்குதல்.
**குழித்தாமரை** – கொட்டைப்பாசி.
**குழிதல்** – உட்குழிவாதல்.
**குழிநரி** – குள்ளநரி; காண்க : **குழியானை.**
**குழிநாவல்** – நாவல்மரவகை.
**குழிப்பிள்ளை** – ஆழத்தில் நடுந் தென்னம் பிள்ளை.
**குழிப்பு** – குழிசெய்கை; தாழ்வு; செய்யுட் சந்த வகை.
**குழிபறித்தல்** – குழிதோண்டுதல்; சூழ்ச்சிசெய்து பிறர்க்குத் தீங்கு செய்ய முயலுதல்.
**குழிமாற்று** – வருக்க வாய்பாடு; பெருக்கல் வாய் பாடு.
**குழிமி** – மதகு; பாண்டத்தின் மூக்கு.
**குழிமிட்டான்** – நத்தைச்சூரிப் பூண்டு.
**குழிமுயல்** – ஒருவகை முயல்.
**குழியச்சு** – பொன்மணி உருவாக்கும் அச்சு.
**குழியம்** – திரள்வடிவு; மண உண்டை; வளைதடி.
**குழியம்மி** – மருந்தரைக்கும் குழியுள்ள அம்மி, கலுவம்.
**குழியானை** – மணலில் குழிசெய்துகொண்டு அதனுள் விழும் எறும்பு முதலியவற்றை உண்ணும் சிறுபூச்சி.
**குழியில் விழுதல்** – தீநெறிப்படுதல்.
**குழிவு** – குழிந்திருக்கை; மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று.
**குழிவெட்டி** – குழி தோண்டுபவன்.
**குழு** – மக்கட்கூட்டம்; மகளிர் கூட்டம்; ஆடு மாடு முதலியவற்றின் கூட்டம்; தந்திரம்; சாதுரியச்சொல்; தொகுதி.
**குழுக்காலி** – கட்டுக்கு அகப்படாது கொழுத் திருக்கும் மந்தை மாடு.
**குழுதாழி** – மாட்டுத்தொட்டி.
**குழுப்படை** – அரசனால் அமர்த்தப்பட்ட தலை வனையுடைய படை.
**குழும்பு** – குழி; திரள்.
**குழுமல்** – கூடுதல்; கூட்டம்.
**குழுமுதல்** – கூடுதல்; கலத்தல்; கூடி முழங்குதல்.
**குழுவல்** – கூடுகை; கூட்டம்.
**குழுவன்** – காண்க: **குளுவன்.**
**குழுவுதல்** – கூடுதல்; கலத்தல்.
**குழூஉ** – கூட்டம்.
**குழூஉக்குறி** – சிற்சில கூட்டத்தினர்க்குள் வழங்கும் குறிப்புச்சொல்.
**குழூஉநிலை** – கோபுரம் முதலிய கட்டடத்தின் தளநிலைகள்.
**குழூஉப்பெயர்** – கூட்டம்பற்றி வரும் பெயர்ச் சொல்.
**குழை** – குண்டலம்; தளிர்; சேறு; துளை; காது; குழல்; காடு; வானம்; நெய்தல்; சங்கு.
**குழைக்காடு** – நாட்டுப்புறம்; காட்டுப்புறம்.
**குழைகுழைத்தல்** – குழம்பிக் கிடத்தல்.
**குழைச்சரக்கு** – சாரமற்ற பண்டம்; காக்கப்படும் பொருள்.
**குழைச்சி** – புற்றாஞ்சோறு.
**குழைச்சு** – கயிற்றுச் சுருக்கு; முடிச்சு; உடலி லுள்ள எலும்பின் சந்து; ஆயுதக் குளசு.
**குழைசாந்து** – கட்டடம் பூசுதற்கு உதவும் கலவைச் சாந்து.
**குழைசேறு** – கலங்கற்சேறு.
**குழைத்தல்** – குழையச் செய்தல்; ஒன்றாய்க் கலத்தல்; தழையச் செய்தல்; திரட்டுதல்; இளகுவித்தல்; வளைத்தல்; அசைத்தல்.
**குழைதல்** – இளகுதல்; மனமிளகுதல்; சோறு அளிதல்; நெருங்கி உறவாடல்; வளைதல்; துவளுதல்; தளர்தல்; வருந்துதல்.
**குழைநாற்றம்** – அழுகிய இலைநாற்றம்.
**குழைமறைவு** – தழையின் மறைப்பு; மறைந்து ஒதுங்குகை.

**குழைமுகப்புரிசை** – அந்தப்புரம்.
**குழையடித்தல்** – வேப்பிலையால் மந்திரித்து நோய் தீர்த்தல்; தழையை உரமாக இடுதல்; ஆளை வசப்படுத்துதல்.
**குழையல்** – இளகி ஒன்றுபட்டிருப்பது.
**குழையற்கறி** – குழைய வெந்த கறி, அதிகமாக வெந்த கறி.
**குழையற்பனாட்டு** – பனம்பழச் சாற்றின் இறுகல்.
**குழைவு** – நெகிழ்கை; இரக்கம்; வாடுகை; கலப்பு; அணைவு; வளைவு.
**குள்ளக்குடைதல்** – நீருள் மிகவும் குடைந்து மூழ்குதல்.
**குள்ளக்கெண்டை** – ஒரு மீன்வகை.
**குள்ளத்தாரா** – குள்ளவாத்து, ஒருவகைச் சிறு வாத்து.
**குள்ளநரி** – நரிவகை.
**குள்ளம்** – குறள்; குறுமை; கொடுமை; தந்திரம்.
**குள்ளம்பாய்தல்** – குறுகிக்கொண்டு வருதல்; பிறர் அறியமுடியாதபடி தந்திரமாயிருத்தல்.
**குள்ளன்** – குறளன்; விரகன்.
**குள்ளி** – குள்ளமானவள்.
**குள்ளிருமல்** – கக்கிருமல்.
**குளக்கட்டு** – குளத்தின் கரையைக் கட்டுகை; குளத்திற்குக் கட்டப்பட்ட கரை.
**குளக்கால்** – குளத்துக்கு நீர்வரும் வாய்க்கால்.
**குளக்கீழ்** – குளத்தின் மதகையடுத்துள்ள வயல்.
**குளக்குருவி** – நண்டு.
**குளக்கோடு** – குளக்கரை.
**குளகம்** – மரக்கால்; ஆழாக்கு; பல பாட்டுகள் ஒரு வினை கொள்ளுஞ் செய்யுள்; குற்றெழுத்துத் தொடர்ந்த செய்யுள்; சருக்கரை.
**குளகன்** – இளைஞன்.
**குளகு** – தழையுணவு; தழை; இலைக்கறி.
**குளகுளத்தல்** – நெகிழ்ந்திருத்தல்.
**குளகுளெனல்** – நெகிழ்ந்திருத்தல்; ஈரடுக் கொலிக் குறிப்பு.
**குளசு** – கயிற்றுச் சுருக்கு.
**குளஞ்சி** – கிச்சிலிமரம்.
**குளநெல்** – குளத்தின் நீர்ப்பிடிப்பில் தானாக விளையும் நெல்.
**குளப்படி** – குளம்புச் சுவடு; குளம்புச் சுவட்டில் தேங்கிய நீர்.
**குளப்படுகை, குளப்பாடு** – குளத்துக்கருகிலுள்ள நிலம்.
**குளப்பிரமாணம்** – ஏரிநீரால் சாகுபடியாகும் மொத்த நிலம்; ஒருவகைப் பொன்னிறை.
**குளப்புக்கூறுகொள்ளுதல்** – பெருந்துன்பமுறுதல்.
**குளம்** – தடாகம்; ஏரி; மார்கழி; நெற்றி; சருக்கரை; வெல்லம்.
**குளம்பாசி** – குளத்தில் மீன்பிடிக்கும் உரிமை, பாசிக்குத்தகை.
**குளம்பு** – ஒருசார் விலங்குகளின் பாதம்.
**குளவஞ்சி** – குளஞ்சி என்னும் மரவகை.
**குளவாழை** – ஆறு மாதத்தில் பயிராகும் ஒரு நெல்வகை.
**குளவி** – கொட்டும் இயல்புள்ள வண்டு; காட்டு மல்லிகை; மலைமல்லிகை; பச்சிலைமரம்.
**குளவிந்தம்** – மருந்தாக உதவும் மஞ்சள்வகை.
**குளவிமண்** – குளவிக்கூட்டு மண்.
**குளறுதல்** – பேச்சுத் தடுமாறுதல்; உளறுதல்; நரி முதலியன ஊளையிடுதல்; கெடுத்தல்.
**குளறுபடி(டை)** – குழப்பம்.
**குளாஞ்சி** – காண்க: **குளவஞ்சி.**
**குளாம்பல்** – குளத்தில் உண்டாகும் ஆம்பல்.
**குளி** – குளித்தல்; முத்துக்குளி.
**குளிகன்** – எண்வகை நாகத்துள் ஒன்று; காணப் படாத ஒரு கோள்.
**குளிகாரன்** – முத்துக்குளிப்போன்.
**குளிகுளித்தல்** – மகப்பெறுதல்.
**குளிகை** – மாத்திரை; மந்திர ஆற்றலுள்ள மாத்திரை.
**குளிசதோசம்** – கருப்பமாதலை வேண்டும் மகளிர் ரட்சை கட்டிக்கொள்ளும்போது எதிர்ப்படும் குழந்தைகளுக்கு வரும் ஒரு நோய்.
**குளிசம்** – இரட்டையாகக் கட்டிக்கொள்ளும் ஒரு வகைத் தகடு; நஞ்சு போக்குவோர் காப்பாகக் கட்டிக்கொள்ளும் வேர்; சக்கரம் வரைந்த தகடு; வளையம்; குளிகை.
**குளிசீலை** – கோவணம்.
**குளித்தல்** – நீராடுதல்; பெண்கள் தீட்டு மூழ்குதல்; தைத்தல்; அழுந்துதல்; வலிய உட்புகுதல்; மறைதல்; தோல்வியுறுதல்; முத்துகளை மூழ்கியெடுத்தல்.
**குளிப்பச்சை** – ஒரு மணிவகை.
**குளிப்பாட்டுதல், குளிப்பித்தல்** – நீராட்டுதல், குளிக்கச் செய்தல்.
**குளிப்பு** – குளித்தல்.
**குளியம்** – வேங்கைப்புலி; உருண்டை; மருந்து.
**குளியல்** – நீராடுதல்.
**குளியாமலிருத்தல்** – கருவுற்றிருத்தல்.
**குளிர்** – குளிர்ச்சி; சுரக்குளிர்; பனிக்காற்று; நடுக்கம்; வெண்குடை; மீனொழுங்கு; தங்குதல்; மத்தளம்; கிளிகடிகருவி; கவண்; மழுவாயுதம்; சூலம்; அரிவாள்; இலைமூக்கரி கத்தி; நண்டு; கற்கடக ராசி; ஆடிமாதம்.
**குளிர்காணல்** – குளிர்ச்சி தாக்குகை; உடம்பு நோயாற் சில்லிடுகை.
**குளிர்காய்ச்சல்** – குளிரோடுவரும் சுரம்.

**குளிர்காய்தல்** – குளிர் வருத்தாதபடி வெப்பம் பிடித்தல்.

**குளிர்காலம்** – பனிக்காலம்.

**குளிர்ச்சி** – சீதளம், குளிர்மை; இனிமையானது; சில்லிடுகை.

**குளிர்சுரம்** – காண்க: **குளிர்காய்ச்சல்.**

**குளிர்த்தி** – காண்க: **குளிர்ச்சி.**

**குளிர்தல்** – குளிர்ச்சியடைதல், சில்லிடுதல்; கண்ணுக்கு இனிமையாதல்; ஆறுதலடைதல்; அருளால் முகம் கனிதல்; பனிக்காற்று உறைத்தல்; அம்மை முதலியவற்றால் இறத்தல்; விதைத்தல்.

**குளிர்ந்த குரல்** – இனிய ஓசை.

**குளிர்ந்தகொள்ளி** – நயவஞ்சகன்.

**குளிர்ந்தபேச்சு** – இனியமொழி.

**குளிர்ந்தவேளை** – சாயங்காலம்.

**குளிர்ந்துகிடத்தல்** – சூடாறியிருத்தல்; கைகால் சில்லிடுதல்; இறந்துகிடத்தல்.

**குளிர்மை** – குளிர்ச்சி, சீதளம்; அன்பு.

**குளிர்விடுதல்** –அச்சம் நீங்குதல்.

**குளிரநோக்குதல்** – அருளோடு பார்த்தல்.

**குளிரம்** – நண்டு.

**குளிரி** – பீலிக்குஞ்சம்; நீர்ச்சேம்பு; குளிர்ச்சி.

**குளிறு** – ஒலி.

**குளிறுதல்** – ஒலித்தல், சத்தமிடுதல்.

**குளுகுளுத்தல்** – செழித்து வளருதல்; சோகை பற்றுதல்; அழுகிப்போதல்.

**குளுகுளுப்பை** – காமாலை நோய்.

**குளுத்தி** – குளிர்மை.

**குளுந்தை** – கத்தூரிவகை.

**குளுப்பை** – நோயால் முகம் ஊதுகை.

**குளுப்பைதட்டுதல்** – நோயால் முகம் ஊதித் தோன்றுதல்.

**குளுமை** – குளிர்ச்சி.

**குளுவன்** – குறவனுடைய பாங்கன்; பாம்பாட்டி.

**குளுவை** – ஊரற்பறவை.

**குளைச்சக்கரம்** – ஓடு.

**குளைச்சு** – நாலில் ஒன்று, கால்.

**குற்குலு** – குங்கிலியம்.

**குற்சித்தல்** – அருவருத்தல்.

**குற்சிதம்** – அருவருப்பு.

**குற்சை** – இளிவரல், அருவருப்பு; இகழ்ச்சி.

**குற்பகம்** – நாணற்புல்.

**குற்பம்** – பரடு; கணைக்கால்.

**குற்றங்காட்டுதல்** – குற்றத்தை எடுத்துச்சொல்லுதல்.

**குற்றங்காணுதல்** – தவறு கண்டுபிடித்தல்.

**குற்றச்சாட்டு** – குற்றப்பத்திரிகை.

**குற்றஞ்சாட்டுதல், குற்றஞ்சுமத்தல்** – ஒருவன்மீது குற்றத்தை ஏற்றுதல்.

**குற்றப்படுதல்** – குற்றத்திற்குள்ளாதல்.

**குற்றப்பத்திரம், குற்றப்பத்திரிகை** – நீதிமன்றத்தில் ஒருவன் மீது குற்றத்தின் விவரங் காட்டிப் படிக்கப்படும் பத்திரம்.

**குற்றப்பாடு** – குற்றம்; குற்றத்திற்கு உட்படுகை.

**குற்றம்** – பிழை; பழி; துன்பம்; உடற்குறை; தீங்கு; அபராதம்; தீட்டு.

**குற்றம்பாராட்டுதல்** – பிறர் குற்றத்தை மிகுதிப் படுத்துதல்.

**குற்றவாளி** – குற்றம் செய்தவன்; குற்றஞ் சாட்டப்பட்டவன்.

**குற்றவீடு** – காமம், வெகுளி முதலிய குற்றங்கள் நீங்குகை.

**குற்றி** – மரக்கட்டை; வாய் குறுகிய சிறு பாண்டம்.

**குற்றிகரம்** – காண்க: **குற்றியலிகரம்.**

**குற்றிசை** – குறுகிய சந்தம்; தலைவன் தலைவியைப் புறக்கணித்து அறநெறி பிறழ்ந் தொழுகுவதைக் கூறும் புறத்துறை.

**குற்றியலிகரம்** – சார்பெழுத்துள் ஒன்றாய் அரை மாத்திரையாகக் குறுகிய இகரம்.

**குற்றியலுகரம்** – மாத்திரை குறுகிய உகரம், சார்பெழுத்துள் ஒன்றாய்ப் பெரும்பாலும் மொழிகளின் ஈற்றில் வல்லின மெய்களைச் சார்ந்து அரைமாத்திரையாய்க் குறுகிவரும் உகரம்.

**குற்றுடைவாள்** – சுரிகை.

**குற்றுதல்** – இடித்தல்; தாக்குதல்; நெரித்தல்; ஊடுருவக் குத்துதல்.

**குற்றுயிர்** – இறக்கும் நிலையிலுள்ள உயிர், குறையுயிர்; குற்றெழுத்து.

**குற்றுழிஞை** – பகைவரது கோட்டை மதில்மேல் நின்று வீரனொருவன் தன் பெருமை காட்டுவது கூறும் புறத்துறை.

**குற்றெழுத்து** – ஒரு மாத்திரையளவு ஒலிக்கப் படும் எழுத்து; அவை: அ, இ, உ, எ, ஒ என்பன.

**குற்றேவல்** – சிறுதொழில்; பணிவிடை.

**குறக்கூத்து** – குறவராடுங் கூத்து.

**குறங்கறுத்தல்** – கால்வாயினின்று வேறு தனிக் கால் பிரித்தல்;தொடையைப் பிளத்தல்.

**குறங்கு** – தொடை; கிளைவாய்க்கால்; கொக்கி.

**குறங்குசெறி** – தொடையணி.

**குறஞ்சனம்** – வெண்காரம்.

**குறஞ்சி** – செம்முள்ளிச்செடி; ஈந்து; மருதோன்றி.

**குறட்டரியம்** – குறைகூறுதல்; குறையை மெல்ல வெளியிடுகை.

**குறட்டாழிசை** – குறள்வெண்பாவிற்குரிய பாவினம்.

**குறட்டுச்சுவர்** – மண்தாங்கிச் சுவர்.

**குறட்டுவாதம்** – ஒருவகை வலிப்புநோய்.

**குறட்டை** – உறக்கத்தில் மூச்சுவிடும் ஒலி; சவரிக் கொடி; எலிவகை.

**குறட்பா** – குறள்வெண்பா.

**குறடா** – குதிரைச்சவுக்கு.

**குறடு** – கம்மியர் குறடு; சுவடி தூக்குங் கயிற்றுக் குறடு; பாதக்குறடு; மரத்துண்டு; பலகை; இறைச்சி கொத்தும் பட்டடை மரம்; தேர் முதலியவற்றின் அச்சுக்கோக்குமிடம்; சந்தனக்கல்; ஒட்டுத்திண்ணை; திண்ணை; பறைவகை; நண்டு.

**குறண்டி** – செவ்வழிப் பண்வகை; முட்செடி; தூண்டில் முள்.

**குறண்டுதல்** – வளைதல்; வலிப்புக்கொள்ளுதல்; சுருளுதல்.

**குறத்தனம்** – பாசாங்கு, கள்ளத்தனம்.

**குறத்தி** – குறிஞ்சிநிலப் பெண்; குறச்சாதிப் பெண்; குறிகூறுபவள்; நிலப்பனை.

**குறத்திப்பாட்டு** – தலைவியின் காதல் முதலியவைபற்றிக் குறத்தி குறிசொல்வதாகப் பாடும் நூல்.

**குறம்** – குறச்சாதி; குறத்தி சொல்லுங் குறி; குறவர் கூற்றாக வரும் கலம்பகவுறுப்புள் ஒன்று; குறத்திப்பாட்டு.

**குறவஞ்சி** – குறிசொல்லுங் குறத்திமகள்; குறத்திப்பாட்டு.

**குறவணவன்** – ஒரு புழு, எருக்குவியலில் தோன்றும் வெண்புழு.

**குறவழக்கு** – தீராவழக்கு; பிடிவாதமாய் மேற்கொள்ளும் தீய வழக்கு.

**குறவன்** – குறிஞ்சிநில மகன்; பாலை நிலத்தவன்; ஒரு சாதியான்; பாசாங்கு பண்ணுகிறவன்; பாதரசம்.

**குறவாணர்** – மலைக்குறவர்.

**குறவி** – குறத்தி, குறச்சாதிப் பெண்.

**குறவை** – ஒரு மீன்வகை.

**குறழ்தல்** – குனிதல்.

**குறள்** – குறுமை; ஈரடி உயரமுள்ள குள்ளன்; பூதம்; சிறுமை; இருசீரடி; குறள்வெண்பா; திருக்குறள்.

**குறள்வெண்பா** – முதலடி நாற்சீரும் இரண்டாமடி முச்சீருமாகி வரும் ஈரடி வெண்பா.

**குறளடி** – இருசீரான் வரும் அடி.

**குறளன்** – குள்ளன்; வாமனனாக அவதாரம் செய்த திருமால்.

**குறளி** – குறியவள்; குறளிப்பிசாசு; குறளி வித்தை; கற்பழிந்தவள்.

**குறளிக்கூத்து** – குறும்புச் செயல்கள்.

**குறளிவித்தை** – குறளியின் உதவியால் செய்யும் மாயவித்தை.

**குறளை** – கோள் சொல்லுதல்; வறுமை; நிந்தனை; குள்ளம்.

**குறாவுதல்** – ஒடுங்குதல்; வாடுதல், மெலிதல்; புண் ஆறி வடுவாதல்.

**குறாள்** – கன்னி; பெண்ணாடு.

**குறி** – அடையாளம்; இலக்கு; குறியிடம்; நினைத்த இடம்; நோக்கம்; குறிப்பு; மதக் கொள்கை; முன்னறிந்து கூறும் நிமித்தம்; சபை; முறை; காலம்; ஒழுக்கம்; ஆண்பெண் குறி; அடி; இலக்கணம்.

**குறிக்கொள்வோன்** – செயல்முடிக்குந் துணிவுள்ளோன்.

**குறிக்கொள்ளுதல்** – கைக்கொள்ளுதல்; மனத்துட் கொள்ளுதல்; கவனமாகப் பாதுகாத்தல்; மேன்மைப்படுதல்; ஒன்றையே குறியாகக் கடைப்பிடித்தல்.

**குறிக்கோள்** – மனஒருமை; நினைவில் வைத்தல்; அறியுந்திறம்; உயர்ந்த நோக்கம்; நல்லுணர்வு; யாழ் மீட்டுகையில் கருத்தோடு செய்யவேண்டிய பண்ணல் முதலிய தொழில்கள்.

**குறிகாணுதல்** – அறிகுறி தோன்றுதல்; அடையாளந் தோன்றல்; குறிப்பிடுதல்; மகப் பேற்றுக் குறிதோன்றுதல்.

**குறிகூடுதல்** – நோக்கம் நிறைவேறுதல்.

**குறிகெட்டவன்** – நெறியற்றவன்.

**குறிகேட்டல்** – குறிசொல்லுமாறு நிமித்திகனை வினாவுதல்.

**குறிச்சி** – குறிஞ்சிநிலத்தூர்; ஊர்.

**குறிச்சூத்திரம்** – ஒரு நூலிற் பயின்றுவருங் குறியீடுகளைத் தெரிவிக்கின்ற நூற்பா.

**குறிசொல்லுதல்** – குறியிடம் பார்த்துச் சாத்திரஞ் சொல்லல், பின் நிகழப்போவனவற்றை முன்னறிந்து கூறுதல்.

**குறிஞ்சா** – ஒரு கொடிவகை.

**குறிஞ்சி** – மலையும் மலைசார்ந்த இடமும்; குறிஞ்சிப் பண், ஒரு பண்வகை; புணர்தலாகிய உரிப்பொருள்; குறிஞ்சிப்பாட்டு; மருதோன்றி; செம்முள்ளி; குறிஞ்சிமரம்; ஈந்துமரம்; குறிஞ்சிப்பூ.

**குறிஞ்சிக்கிழவன், குறிஞ்சிக்கிறைவன், குறிஞ்சித்தெய்வம்** – முருகக்கடவுள்.

**குறிஞ்சிப்பண்** – நால்வகைப் பெரும்பண்களுள் ஒன்று.

**குறிஞ்சிப்பறை** – தொண்டகப் பறை.

**குறிஞ்சிமன்** – காண்க: **குறிஞ்சிக்கிழவன்.**

**குறிஞ்சியாழ்** – குறிஞ்சிநிலத்து யாழ், குறிஞ்சிப் பண்.

**குறிஞ்சியாழ்த்திறம்** – எண்வகைத்தாய்க் குறைந்த சுரங்கள் கொண்ட குறிஞ்சிப்பண்.

**குறிஞ்சிலி** – காதில் அணிதற்குரிய பூவகை.

**குறிஞ்சிலைக்கல்** – ஈரக்கல்.

**குறிஞ்சிவேந்தன்** – காண்க: **குறிஞ்சிக்கிழவன்.**

**குறித்தல்** – கருதுதல்; தியானித்தல்; வரையறுத்தல்; கோடு வரைதல்; குறித்துக்கொள்ளுதல்; சுட்டுதல்; பற்றுதல்; இலக்குவைத்தல்; அடைதல்; பாவித்தல்; சொல்லுதல்; முன்னறிவித்தல்; ஊதியொலித்தல்.

**குறித்தழைத்தல்** – கூட்டத்திலுள்ள ஒருவனைக் குறிப்பிட்டழைத்தல்; பாதுகாக்கும்படி அழைத்தல்; தேவதையைத் தோன்றும்படி அழைத்தல்.

**குறித்து** – நோக்கி.

**குறிப்பறிதல்** – நோக்கமறிதல்; குறிப்பினாலறிதல்.

**குறிப்பாளி** – உய்த்துணர்பவன்.

**குறிப்பிடம்** – குறித்த இடம்; சுருக்கம்; கிறித்து பட்ட பாடுகளைக் காட்டும் படிமம்.

**குறிப்பித்தல்** – குறிப்பினால் நினைவூட்டுதல்.

**குறிப்பு** – அறிகுறி; உட்கருத்து; மனத்தால் உணரப்படுவது; ஒன்பதுவகைச் சுவைகளினால் உண்டாகும் மனநிலை; மன ஒருமை; குறிப்புக் குறி; சைகை; கூரிய அறிவு; சுருக்கம்; ஓசை, நிறம் முதலிய பொருளைக் குறிப்பது; வெளிப்படையாக அல்லாது பொருளுணர்த்துஞ் சொல்; அடையாளம்; கைக்குறிப்பு; ஏடு; சாதகம்; சிறப்பியல்பு; இலக்கு.

**குறிப்புச்சொல்** – குறிப்பினாற் பொருள் உணர்த்தும் சொல்.

**குறிப்புத்தொழில்** – குறிப்பால் உணர்த்தும் செயல்; இங்கிதச் செய்கை.

**குறிப்புநிலை** – காண்க: **குறிப்புச்சொல்.**

**குறிப்புப்பொருள்** – குறிப்பால் உணர்த்தப்படும் பொருள்.

**குறிப்புமொழி** – காண்க: **குறிப்புச்சொல்.**

**குறிப்புருவகம்** – குறிப்பினாற் பெறப்படும் உருவகவணி.

**குறிப்புவமை** – குறிப்பால் உணரப்படும் உவமையணி.

**குறிப்புவினை, குறிப்புவினைமுற்று** – பொருள் இடங் காலஞ் சினை குணந் தொழில் அடியாகத் தோன்றிக் காலத்தைக் குறிப்பாகக் காட்டும் வினை.

**குறிப்புவினையாலணையும்பெயர்** – முன்பு குறிப்பு வினையாய்ப் பின்பு பொருள்களைக் குறித்தற்கு வரும் பெயர்.

**குறிப்புவினையெச்சம்** – தொழில் காலங்களைக் குறிப்பாகக் காட்டும் வினையெச்சம்.

**குறிப்பெச்சம்** – கூறிய சொற்களைக்கொண்டு அவற்றின் கருத்தாகக் கொள்ளும் பொருள்.

**குறிப்பெழுத்து** – சுருக்கெழுத்து.

**குறிப்பெழுதுதல்** – பொருட்குறிப்பு எழுதுதல்; சாதகக் குறிப்பெழுதுதல்; பேரேட்டில் எழுதுவதற்குமுன் கணக்கைக் குறிப்புப் புத்தகத்தில் எழுதுதல்.

**குறிப்பேடு** – அன்றாட வரவுசெலவுக் கணக்குகளைப் பதியும் புத்தகம்; நினைவுக் குறிப்புப் புத்தகம், நாட்குறிப்பு.

**குறிப்போலை** – செயல் குறித்திருக்கு மோலை; பிறப்புக் குறிப்பு எழுதிய ஓலை.

**குறிபார்த்தல்** – நிமித்தம் பார்த்தல்; நன்மை தீமைகளைக் குறிபார்த்துச் சொல்லுதல்; இலக்குப் பார்த்தல்.

**குறிபிழைத்தல்** – குறிதவறுதல்; மழைக்குறி தோன்றியும் மழை பெய்யாது விடுதல்.

**குறிபோடுதல்** – அடையாளம் இடுதல்; எண்ணுதற்குக் கோடு இடுதல்.

**குறியிடம்** – தலைவனும் தலைவியும் கூடுதற்குக் குறித்த இடம்.

**குறியீடு** – குறியாக இட்டாளும் பெயர்.

**குறியெதிர்ப்பை** – அளவுகுறித்து வாங்கி அவ்வாறே திருப்பிக் கொடுக்கும் பொருள்.

**குறியோன்** – அகத்தியன்; குள்ளன்.

**குறில்** – குற்றெழுத்து; குறுமை.

**குறுக்கடி** – குறுக்குவழி; குறுக்கே புகுந்து செய்யும் செயல்; ஒழுங்கற்ற பேச்சு.

**குறுக்கம்** – குறுகிய நிலை; சுருக்கம்; ஒருவகைப் புன்செய் நில அளவுவகை.

**குறுக்கல்** – குறைத்தல்; நெடிலைக் குறிலாக்குஞ் செய்யுள் விகாரம்.

**குறுக்களவு** – குறுக்குத்தூரம்.

**குறுக்கிடுதல்** – இடையே செல்லுதல்; பிறர் செயலில் தலையிடுதல்; தடையாக எதிர்ப்படுதல்.

**குறுக்கீடு** – குறுக்கிடுகை, தலையீடு.

**குறுக்கு** – நெடுமைக்கு மாறான அகலம்; குறுக்களவு; குறுமை; மாறு; சுருக்கம்; இடுப்பு.

**குறுக்குக்கேள்வி** – வழக்கில் சாட்சியை மடக்கிக் கேட்கும் கேள்வி; ஒழுங்கற்ற கேள்வி; பேசுகையில் பிறன் ஒருவன் இடையில் கேட்கும் கேள்வி.

**குறுக்குச்சட்டம்** – குறுக்காகப் போடுஞ் சட்டம்; கூரையின் குறுக்குக்கட்டை.

**குறுக்குச்சுவர்** – பாகஞ்செய்துகொண்ட மனையில் எல்லை குறித்தற்குக் குறுக்கே இடும் சுவர்.

**குறுக்குதல்** – குறுகப்பண்ணுதல்; குறையச் செய்தல்; சுருக்குதல்; நெருங்கச் செய்தல்; அண்மையாதல்.

**குறுக்குப்பாதை** – குறுக்குவழி.

**குறுக்கும்நெடுக்கும், குறுக்கும்மறுக்கும்** – இங்குமங்கும்.

**குறுக்குமறுக்கு** – குறுக்கே மறுத்துப் பேசுகை.

**குறுக்குவழி** – குறுக்குப்பாதை; கோணல் வழி.

**குறுக்குவிசாரணை** – வழக்கில் சாட்சியை மடக்கிக் கேட்குங் கேள்வி.

**குறுக்கே** – இடையே; மத்தியில்; எதிராக.

**குறுக்கேநிற்றல்** – இடையூறாக இருத்தல்.

**குறுக்கேமடக்குதல்** – இடையிற் பேசி வாயடக்குதல்.

**குறுக்கை** – புலி; உடைவாள்; ஒரு சிவதலம்.

**குறுக்கையர்** – திருநாவுக்கரசர்; ஒரு வேளாளர், வேளாள மரபில் திருநாவுக்கரசு நாயனார் பிறந்த குடியைச் சார்ந்தவர்.

**குறுகல்** – அணுகல்; குறுகிய பொருள்.

**குறுகலர், குறுகார்** – பகைவர்.

**குறுகுத்தாளி** – சிறுதாளிச்செடி.

**குறுகுதல்** – குள்ளமாதல்; சிறுகுதல்; மாத்திரை குறைதல்; அணுகுதல்.

**குறுகுறுத்தல்** – வெறுப்புத்தோன்ற முணுமுணுத்தல்; மனம் உறுத்திக்கொண்டிருத்தல்; தினவுறுதல்.

**குறுகுறுநடத்தல்** – குறுகக்குறுக நடந்து செல்லுதல்.

**குறுகுறுப்பு** – விருப்பின்மை தோன்ற முணுமுணுத்தல்; குறட்டை; அச்சக்குறி காட்டுதல்; சுறுசுறுப்பு.

**குறுகுறுப்பை** – காண்க: குறட்டை.

**குறுகுறென்றுவிழித்தல்** – திருட்டுவிழி விழித்தல்.

**குறுகுறெனல்** – கோபக்குறிப்பு; விரைவுக் குறிப்பு; அச்சக்குறிப்பு; சுறுசுறுப்பாயிருத்தற் குறிப்பு.

**குறுங்கண்** – சாளரம், சன்னல்.

**குறுங்கண்ணி** – முடியிலணியும் மாலை.

**குறுங்கணக்கு** – உயிரும் மெய்யும் ஆகிய முப்பது முதலெழுத்து.

**குறுங்கலி** – பாலை யாழ்த்திறத்துள் ஒன்று; தன் மனைவியை விரும்பாது வேறுபட்ட ஒருவனுடைய காதல் கெடும்படி சொல்லும் புறத்துறை.

**குறுங்காடு** – சிறுகாடு.

**குறுங்கிண்ணி** – வெண்கலம்.

**குறுங்குடியாள்** – தாளகம்.

**குறுங்கூலி** – நெல் முதலியன குற்றுங் கூலி.

**குறுங்கோல்** – சிறிய கோல்.

**குறுஞ்சிரிப்பு** – புன்னகை.

**குறுஞ்சீர்வண்ணம்** – குற்றெழுத்துப் பயின்று வரும் சந்தம்.

**குறுணல்** – காண்க: குறுநொய்.

**குறுணி** – எட்டுப் படி கொண்ட ஒரு தானிய அளவு.

**குறுணை** – காண்க: குறுநொய்.

**குறுத்தல்** – குறுகுதல்.

**குறுதல்** – பறித்தல்; மேலிழுத்து வாங்குதல்; நெல் முதலியன குற்றுதல்; நீக்குதல்.

**குறுந்தடி** – சிறிய கோல்; பறையடிக்குங் கோல்; போதிகை; உத்திரத்தைத் தாங்கும்படி சுவரோடு ஒட்டித் தூண்போல் எழுப்பிய கட்டடம்.

**குறுந்தறி** – போதிகை; சிறுமுளை; உத்திரத்தைத் தாங்கும்படி சுவரோடு ஒட்டித் தூண்போல் எழுப்பிய கட்டடம்.

**குறுந்தாள்** – குறுகிய படிக்கட்டு.

**குறுந்தொட்டி** – சிறுகாஞ்சொறிச்செடி; சிற்றாமுட்டி.

**குறுநகை** – புன்சிரிப்பு.

**குறுநடை** – குறுகிய நடை, சிறுநடை.

**குறுநணி** – மிக அண்மை.

**குறுநர்** – களைபறிப்போர்.

**குறுநறுங்கண்ணி** – குன்றிப்பூ.

**குறுநாத்தகடு** – பொன்போல் ஒளியுள்ள மெல்லிய தகடு.

**குறுநிகழ்ச்சி** – மிக நுண்ணிய அளவுள்ள கணிகம் எனப்படும் காலம்.

**குறுநிலமன்னன்** – சிற்றரசன்.

**குறுநிலைவழக்கு** – குழூஉக்குறி வழக்கு.

**குறுநெறி** – குறுகிய மயிர்நெறிப்பு.

**குறுநொய்** – அரிசி முதலியவற்றின் சிறு நொய்.

**குறும்படி** – வாசற்படி.

**குறும்படை** – கோட்டை.

**குறும்பயிர்** – இளம்பயிர்.

**குறும்பர்** – குறுநில மன்னர்; ஒருவகைச் சாதியார்; வேடர்; கீழ்மக்கள்; குறும்பிடையர்.

**குறும்பலா** – கூழைப்பலா; ஒரு சிவாலயம்.

**குறும்பறை** – பறவைப்பேடு.

**குறும்பன்** – குறும்புக்காரன்; குறுநில மன்னன்.

**குறும்பாடு** – குறும்புத்தனம்; ஒருவகை ஆடு.

**குறும்பி** – காதுள்ளழுக்கு; மலம் மூத்திரம் முதலியவை.

**குறும்பிடி** – சிறு கைப்பிடி; உடைவாள்.

**குறும்பிவாங்கி** – காதழுக்கு எடுக்குங் கருவி.

**குறும்பின்மை** – துன்பம் விளைக்குங் குறும்பரசர் இல்லாமையாகிய நாட்டமைதிவகை.

**குறும்பு** – பாலைநிலத்தூர்; ஊர்; குறுநில மன்னர்; பகைவர்; சிறிய துணுக்கு; அரண்; வலிமை; குறும்பர் சாதி; குறும்புத்தனம்; போர்.

**குறும்புக்காரன்** – குறும்புத்தனம் செய்பவன்.

**குறும்புழை** – சிறிய வாயில்.
**குறும்பூழ்** – காடை.
**குறும்பொறி** – அரைப்பட்டிகை.
**குறும்பொறை** – சிறுமலை; குறிஞ்சிநிலம்; குறிஞ்சி நிலத்து ஊர்; காடு.
**குறும்பொறை நாடன்** – முல்லைநிலத் தலைவன்.
**குறும்போக்கு** – யாழ் வாசிக்கும் முறைகளுள் ஒன்று.
**குறும்போது** – மலரும் பருவமுள்ள அரும்பு.
**குறும(மா)க்கள்** – சிறுபிள்ளைகள்.
**குறுமகள்** – இளம்பெண்; மனைவி.
**குறுமடல்** – திருநீறு வைக்குஞ் சிறிய மடல்.
**குறுமணல்** – சிறுமணல்; அயமணல்.
**குறுமல்** – பொடி.
**குறுமுட்டு** – அளவுகடந்த செருக்கு; விரைவு; ஒடுக்கம்; பலாத்காரம்; திடீரென்று எதிர்ப் படுகை.
**குறுமுடிகுடி** – சிற்றரசுரிமையுடைய குலம்.
**குறுமுயல்** – ஒரு முயல்வகை.
**குறுமுனி, குறுமுனிவன்** – அகத்தியன்.
**குறுமை** – குறுகிய தன்மை; குள்ளம்; குறைவு; அண்மை.
**குறுமொழிக்கோட்டி** – பிறரை இகழ்ந்து நகை யாடுதலையே பொழுதுபோக்காகவுடைய கீழ்மக்கள் கூட்டம்.
**குறுவஞ்சி** – படையெடுத்து வந்த பேரரசருக்குச் சிற்றரசர் பணிந்து திறை கொடுத்துத் தம் குடிகளைப் புரக்கும் புறத்துறை.
**குறுவால்** – இத்திமரம்.
**குறுவாழ்க்கை** – வறுமை; சிறிதுகால இன்பம்.
**குறுவியர்** – சிறிதாகத் தோன்றும் வியர்வை.
**குறுவிலை** – பண்டங்கள் விலைக்கு அரிதாகக் கிடைத்தல்.
**குறுவிழிக்கொள்ளுதல்** – இதழ் குவிதல்.
**குறுவிழிவிழித்தல்** – சினம், அச்சம் முதலியவற் றால் வெறித்துப் பார்த்தல்.
**குறுவேர்வை** – அச்சம் முதலியவற்றால் சிறிதா கத் தோன்றும் வியர்வை.
**குறுவை** – ஒருகுறுகியகால நெல்வகை.
**குறுவை நோவு** – கால்நடைகளுக்குத் தொண்டை யில் உண்டாகும் நோய்வகை.
**குறுனாத்தகடு, குறுனாப்பட்டை** – முலாம் பூசின தகடு; அழகு செய்யப் பயன்படும் வண் ணத்தாள்.
**குறை** – குற்றம்; குறைபாடு; வறுமை; எஞ்சியது; மனக்குறை; தவறு; நேர்த்திக்கடன்; இன்றி யமையாப் பொருள்; செயல்; வேண்டுகோள்; வேண்டுவது; துண்டம்; ஆற்றிடைக்குறை; சொல்லின் எழுத்துக்குறை; ஆறாம் வேற் றுமை; உண்ணுந்தசை; அரசிறை.
**குறைக்கருமம், குறைக்காரியம்** – ஒரு செயலின் முடியாத பகுதி; அரைகுறையா யிருக் குஞ் செயல்.
**குறைகொள்ளுதல்** – மனக்குறையைப் பாராட்டு தல்; தன் குறையைக் கூறிக்கொள்ளுதல்.
**குறைகோள்** – இரத்தல்.
**குறைச்சல்** – குறைவு; தாழ்ச்சி; இழிவு.
**குறைச்சால்** – குறை உழவு.
**குறைசெய்தல்** – மரியாதைத் தாழ்வு பண்ணு தல்; வெட்டுதல்.
**குறைசொல்லுதல்** – மனத்திலுள்ள குறையைப் பிறரறியக் கூறுதல்; தனக்குத் தேவை யானதைச் சொல்லுதல்; குற்றஞ்சாட்டுதல்.
**குறைஞ்சால்** – காண்க: குறைச்சால்.
**குறைத்தல்** – சுருக்குதல்; தறித்தல், வெட்டுதல்; அறுத்தல்; அராவுதல்; முகத்தல்.
**குறைத்தலை** – தலையற்ற உடல்.
**குறைதல்** – சிறுகுதல்; இடம் பொருள் ஏவல் முதலியவற்றால் தாழ்தல்; பற்றாமற் போதல், அரைகுறையாதல்; விலையேறும்படி பண்டம் அருகுதல்; எழுத்துக்கெடுதல்; வருந்தி உயிரொடுங்குதல்; குறைவுற்று வருந்து தல்; ஊக்கங்குன்றுதல்; தோல்வியுறுதல்; அழிதல்.
**குறைதீர்த்தல்** – வேண்டியவற்றை உதவுதல்; கடமையைச் செய்து முடித்தல்.
**குறைதீர்தல்** – மனக்குறை தீர்தல்; முற்றுப்பெறு தல்.
**குறைந்தடைதல்** – குறையிரந்து வேண்டுதல்.
**குறைநயத்தல்** – குறையை நீக்க உடன்படுதல்.
**குறைநரம்பு** – குறைந்த சுரமுள்ள யாழ்த்திறம்.
**குறைநிறை** – ஏற்ற இறக்கம்; குடும்பத்திலுள்ள குறையும் நிறையும்.
**குறைநேர்தல்** – குறைநீக்க உடன்படுதல்.
**குறைப்பக்கம்** – தேய்பிறைநாள்.
**குறைப்பிள்ளை** – பருவம் நிரம்புமுன் பெற்ற கருப்பிண்டம்.
**குறைபடுத்தல்** – முகத்தல்; குறைவுண்டாக்குதல்; இழிவுபடுத்துதல்.
**குறைபடுதல்** – குறைவாதல்; துணிபடுதல்; வருத் தப்படுதல்.
**குறைபாடு** – குறைவு; மனக்குறை.
**குறைமகன்** – நிலைமை இழந்தவன்.
**குறைமதி** – தேய்பிறை.
**குறைமாதப்பிள்ளை** – மாத அளவு நிரம்புமுன் பிறந்த பிள்ளை.
**குறைமாதம்** – மாதத்தின் மிச்சம்; கருமுற்றி மகப்பெறுதற்குரிய காலவரையில் குறைவு பட்ட மாதம்.
**குறையரவு** – காண்க: குக்குடசர்ப்பம்.

**குறையலாளி** – குறையல் என்னும் பகுதிக்குத் தலைவரான திருமங்கை மன்னன்.
**குறையவை** – அறிவு குணங்களாற் குறைவு பட்டார் கூடிய சபை.
**குறையறுத்தல்** – குறைநீங்கக் கொடுத்தல்.
**குறையறுதல்** – மனக்குறை நீங்குதல்.
**குறையாக் கேள்வி** – நிரம்பிய அறிவு.
**குறையாற்றல்** – காண்க: குறைதீர்த்தல்.
**குறையிரத்தல்** – தன் குறைநீக்க வேண்டல்.
**குறையுடல்** – தலையற்ற உடல், முண்டம்.
**குறையுறவு** – மனக்குறை கொண்டிருக்கை.
**குறையுறுதல்** – குறைகூறி வேண்டுதல்.
**குறைவயிறு** – குறையாக உண்ட வயிறு.
**குறைவாளர்** – குறைவுடையவர்.
**குறைவில்** – வானவில்.
**குறைவிலறிவுடைமை** – குறைவில்லாத அறிவைக் கொண்டிருக்கின்ற இறைவன் எண்குணத்துள் ஒன்று.
**குறைவு** – குறைபாடு; குற்றம்; குறைந்த அளவுள்ளது; வறுமை; காரியபலன்.
**குறைவேண்டுநர்** – அனுகூல காரியங்களை விரும்புவோர்.
**குறோக்கை** – குறட்டை.
**குறோட்டை** – காக்கணங்கொடி; பீச்சுவிளாத்தி.
**குன்மப்புரட்டு** – குன்மத்தால் வாந்தியுண்டாக்கும் வயிற்றுநோய்வகை.
**குன்மம்** – செரிப்பின்மை; வலி முதலியன காணும் வயிற்றுநோய்; ஒரு படைத்தொகை; அடர்ந்த தூறு.
**குன்றக்கூறல்** – பத்துவகை நூற்குற்றங்களுள் கூறவேண்டியதைக் குறைவுபடச் சொல்லுகையாகிய குற்றம்.
**குன்றம்** – சிறுமலை.
**குன்றர்** – காண்க: குன்றவர்.
**குன்றல்** – குறைதல்; கெடுதல் விகாரம்.
**குன்றவர்** – குறிஞ்சிநில மக்கள்.
**குன்றவாணர்** – காண்க: குன்றவர்.
**குன்றவில்லி** – சிவன்.
**குன்றாவாடை** – வடகீழ்காற்று.
**குன்றி** – குன்றிக்கொடி; குன்றிமணி; மனோசிலை.
**குன்றிநிறக்கண்ணன்** – குன்றிமணிபோற் சிவந்த கண்ணுடையவன்; காட்டுப்பன்றி.
**குன்றிமணி** – குன்றிக் கொட்டை, குன்றிக் கொடியின் சிவப்பு விதை; 4 நெல் அல்லது $\frac{1}{2}$ மஞ்சாடி எடையுள்ள பொன் நிறுக்கும் நிறைவகை; அதிமதுரம்.
**குன்றியறுகரம்** – காண்க: குற்றியலுகரம்.
**குன்றிவேர்** – அதிமதுரம்.
**குன்று** – சிறுமலை; மலை; குறைவு; சிறுகுவடு; சதயநாள்.
**குன்றுகூப்பிடுதல்** – மலையில் எதிரொலியெழக் கூப்பிடுதல்.
**குன்றுதல்** – குறைதல்; அழிவுறுதல்; நிலை தாழ்தல்; எழுத்துக்கெடுதல்; வாடுதல்; வளர்ச்சியறுதல்.
**குன்றுபயன்** – களவொழுக்கம்.
**குன்றுவர்** – குறிஞ்சிநில மக்கள்; வேட்டுவர்.
**குன்றுவாடை** – வடமேல்காற்று.
**குன்றெடுத்தோன்** – கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்துத் தாங்கிய கண்ணன்.
**குன்றெறிந்தோன்** – கிரவுஞ்சமலையை வேலால் எறிந்தவனான முருகக்கடவுள்.
**குன்றேந்தி** – காண்க: குன்றெடுத்தோன்.
**குன்னம்** – அவமானம்; பழி.
**குன்னாத்தல்** – குளிரால் உடம்பு கூனிப்போதல்.
**குனகுதல்** – கொஞ்சிப்பேசுதல்.
**குனட்டம்** – அதிவிடயப்பூண்டு.
**குனாசகம்** – சிறுகாஞ்சொறிச்செடி.
**குனாசம்** – குன்றிக்கொடி.
**குனாபீ** – சுழிக்காற்று.
**குனி** – வளைகை; வில்.
**குனித்தல்** – வளைத்தல்; ஆடுதல்; குரல் நடுங்குதல்.
**குனிதல்** – வளைதல்; வணங்குதல்; தாழ்தல்; வீழ்தல்; இறங்குதல்.
**குனிப்பு** – வளைகை; ஆடல்; கூத்துவகை; குழிப்பு.
**குனிவு** – தாழ்வு; வளைவு.
**குனுகுதல்** – கொஞ்சிப் பேசுதல்.
**குனை** – கூர்மையான பக்கம்; நுனி.

## கூ

**கூ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (க்+ஊ); பூமி; கூவுதல்; கூக்குரல்; கூழ்; மலங்கழிக்கை.
**கூக்குரல்** – பேரொலி; முறையிடுதல்; குழந்தைகள் கத்துவதுபோன்ற 'கூ'வென்னுஞ் சத்தம்.
**கூக்கேட்டல்** – ஏவல் கேட்கை.
**கூகம்** – கோட்டான், ஆந்தை; மறைவு.
**கூகமானம்** – மறைபொருள்.
**கூகனம்** – மறைந்த பொருளுடைய சொல், அவைக்குப் பொருந்தாத மொழி; மாய்மாலம்.

**கூகாகம்** – கமுகு, பாக்குமரம்.

**கூகாரி** – காகம்.

**கூகாவெனல்** – பேரொலிக் குறிப்பு; முறையிடுதற் குறிப்பு.

**கூகு** – எட்டாண்டுப் பெண்.

**கூகூ** – அச்சக்குறிப்பு; ஓர் ஒலிக்குறிப்பு.

**கூகூவெனல்** – காண்க: **கூகாவெனல்.**

**கூகை** – கோட்டான், பேராந்தை; கூவைக் கிழங்கின் கொடி.

**கூகைக்கட்டு** – கூகைபோல முகத்தை வீங்கச் செய்வதான பொன்னுக்குவீங்கி என்னும் அம்மைக்கட்டு.

**கூகைநீறு** – கூவைமா; காட்டெருமைப் பால்; ஒரு மருந்து.

**கூச்சக்காரன்** – வெட்கப்படுபவன்; உடற்கூச்ச முள்ளவன்.

**கூச்சம்** – நாணுகை; உடல் கூசுகை; கண், பல் முதலியன கூசுகை; மனமெழாமை; நடுக்கம்.

**கூச்சல்** – இரைச்சல், பேரொலி; கக்கல் கழிச்சல், வாந்திபேதி.

**கூச்சலிடுதல்** – இரைதல்; கூக்குரலிடுதல்.

**கூச்சி** – விளாம்பழத்தின் சதை.

**கூச்சித(ர)ம்** – வெண்கடம்பு.

**கூச்சு** – கூரிய முனை; புளகம்.

**கூசம்** – கூச்சம்; முலை.

**கூசல்** – கூச்சம்; மனங்குலைகை; அச்சக்குறிப்பு; கூக்குரல்.

**கூசனம்** – காண்க: **கூகனம்.**

**கூசா** – மண், வெண்கலம் முதலியவற்றால் செய்த பாண்டம்.

**கூசிதம்** – பறவையினொலி.

**கூசிப்பார்த்தல், கூசிவிழித்தல்** – கண் கூச்சத்துடன் நோக்குதல்; அருளுடன் பார்த்தல்.

**கூசுதல்** – நாணுதல்; கூச்சங்கொள்ளுதல்; கண், பல் முதலியன கூசுதல்; அஞ்சிப் பின்வாங்குதல்; நிலைகுலைதல்.

**கூசுமாண்டம்** – பூசணி.

**கூட்டக்கட்டு** – ஒற்றுமையோடு உதவக்கூடிய சுற்றத்தாரின் கட்டுப்பாடு.

**கூட்டக்கலகம்** – மக்கள் ஒன்றுகூடி விளைக்கும் சண்டை.

**கூட்டக்கொள்ளை** – கூட்டமாகச் சேர்ந்தடிக்கும் கொள்ளை.

**கூட்டச்சாலை** – இருபக்கமும் மரங்கள் நிறைந்த பாதை.

**கூட்டடி** – உப்புக் குவியற்களம்.

**கூட்டத்தார்** – ஒரு வகுப்பினர்; ஒரு சமூகத்தின் உறுப்பினர்.

**கூட்டநாட்டம்** – பொதுமக்கள் கூடும் நிலைமை.

**கூட்டம்** – கூடுகை; திரள்; சபை; தொகுதி; இனத்தார்; நட்பினர்வகை; போர்; மெய்யுறு புணர்ச்சி; மிகுதி; பிண்ணாக்கு; மலையுச்சி.

**கூட்டமை** – கறிவகை.

**கூட்டமைதல்** – பலவகை உறுப்புகளும் சேர்ந்து அமைதல்.

**கூட்டமை தீ** – மணவேள்வித் தீ.

**கூட்டமைவு** – கூடியிருக்கை.

**கூட்டர்** – தோழர்; இனத்தார்.

**கூட்டரக்கு** – செவ்வரக்கு.

**கூட்டரவு** – கூடுகை; நட்பு; பொருட்கூட்டம்; சேர்க்கை.

**கூட்டல்** – ஒன்றுசேர்த்தல்; அதிகப்படுத்தல்; வலிய அரசரது துணையை நாடுதல்; எண்களை ஒன்றோடொன்று கூட்டுதலாகிய கணித வகை.

**கூட்டவணி** – ஒரு காலத்திலுண்டாகும் பல தொழில்களின் கூட்டத்தைக் கூறுவதாக வேனும் தனித் தனியே தொழிலை விளைத்தற் குரிய பல காரணங்கள் ஒன்றுகூடியதால் ஒரு தொழில் பிறப்பதாகக் கூறுவதாகவேனும் வரும் ஓர் அணி.

**கூட்டற்றவன்** – சேரத்தகாதவன்; ஒன்றுக்கும் உதவாதவன்; சாதிவிலக்குண்டவன்.

**கூட்டாஞ்சோறு** – கறிவகைகள் சேர்த்துப் பொங்கிய சோறு; கூடியுண்ணும் உணவு.

**கூட்டாளன்** – கூட்டாளி.

**கூட்டாளி** – தோழன்; பங்காளி; காரியம் பார்ப்பவன்; கூடிநடக்கிறவன்; உடனொத்தவன்; இரண்டில் ஒன்று.

**கூட்டிக்கொள்ளுதல்** – கூட்டம் முதலியவற்றில் சேர்த்துக்கொள்ளுதல்; மருந்து உணவு முதலியவற்றில் வேண்டும் பொருள்களைச் சேர்த்தல்.

**கூட்டிப்பிடித்தல்** – சேர்த்துப் பற்றுதல்; இழுத்துப் பிடித்தல்.

**கூட்டிப்போதல்** – கூட அழைத்துக்கொண்டு போதல்.

**கூட்டிமுடித்தல்** – கூந்தல் முதலியவற்றைச் சேர்த்துக் கட்டுதல்; முற்றுவித்தல்.

**கூட்டியுரைத்தல்** – ஒரு சொல்லை மற்றோரிடத்தும் சேர்த்துப் பொருள் கூறுதல்.

**கூட்டிவிடுதல்** – கூட்டியனுப்புதல்; கூட்டிக் கொடுத்தல்; சேர்த்துவைத்தல்.

**கூட்டிவைத்தல்** – வேண்டுவன புரிந்து நலஞ் செய்தல்; சேர்த்துவைத்தல்; மாறுபட்டாரை இணங்கச்செய்து சமாதானப்படுத்துதல்.

**கூட்டு** – ஓரினமான பொருள்; நட்பு; துணை; தொடர்பு; கூட்டு வாணிகம்; திரள்; ஒப்புமை; கலப்பு; கூட்டுக்கறி; நீரால் பதப்பட்ட மண் திரள்; வண்டிச் சக்கரம் முதலியவற்றிற்கு இடும் மை; கொள்ளைப் பொருள்; திறை; அரையிற் கட்டும் துகிலாகிய அரைஞாண்.

**கூட்டுக்கறி** – கூட்டமுது, காய்கறியும் பருப்புங் கலந்து செய்த கறியுணவு.

**கூட்டுக்காரன்** – கூட்டாளி.

**கூட்டுக்கால்** – பாய்ந்தோடுகை.

**கூட்டுக்குடும்பம்** – பிரிவினையாகாத குடும்பம்.

**கூட்டுண்ணுதல்** – கூடி உண்ணுதல்; முற்றும் துய்த்தல்; திறைகொள்ளுதல்; கலவி செய்தல்.

**கூட்டுதல்** – ஒன்றுசேர்த்தல்; இணைத்தல்; கலத்தல்; அதிகப்படுத்தல்; சபை கூட்டுதல்; துடைப்பத்தாற் பெருக்குதல்; உபதேசித்தல்.

**கூட்டுப்பயிர்** – பிறருடன் சேர்ந்து பயிர்செய்தல்.

**கூட்டுமா** – கறியிற் சேர்க்கும் மா.

**கூட்டுமூட்டு** – பலரும் கூடுகை; சதியாலோசனைக் கூட்டம்; பழிப்புரை.

**கூட்டுவர்த்தகம், கூட்டுவியாபாரம்** – பலர் கூடிச் செய்யும் வணிகம்.

**கூட்டுறவு** – சேர்ந்து வாழும் வாழ்க்கை; இணைந்த உறவு; நெருங்கிய தொடர்பு; நட்பு; ஒற்றுமையாய் வேலைசெய்கை.

**கூட்டுறவுச் சங்கம்** – ஐக்கிய நாணயச் சங்கம்.

**கூட்டெழுத்து** – விரைவாகக் கூட்டியெழுதும் எழுத்து; பல எழுத்துகளைச் சேர்த்தெழுதும் எழுத்து, தொடரெழுத்து.

**கூட்டை** – ஒரு கூத்துவகை.

**கூட்டோடு** – அடியோடு.

**கூட** – உடன்; ஒருங்கு; மேற்பட; உம்மைப் பொருள் தரும் இடைச்சொல்.

**கூடகம்** – வஞ்சகம்.

**கூடகாரகன்** – வஞ்சகன்.

**கூடகாரம்** – மேன்மாடம்; மாளிகையின் நெற்றிக் கூடு; கூடம்.

**கூடகாரன்** – காண்க: **கூடகாரகன்.**

**கூடசதுக்கம், கூடசதுர்த்தம்** – நான்காமடியிலுள்ள எழுத்துகள் யாவும் ஏனை மூன்றடிகளுள்ளும் மறைந்து நிற்குமாறு பாடப்பெறுஞ் சித்திரகவி.

**கூடசன்** – கணவனல்லாதார்க்குப் பிறந்த மகன், தந்தை இன்னானென்று அறியப்படாத புதல்வன்.

**கூடசன்மலி** – முன்னிலவு நிரம்பிய நரகவகை.

**கூடசாரன்** – அந்தரங்க தூதன்.

**கூடசாலம்** – ஏழு நரகத்துள் ஒன்று.

**கூடணை** – மயிற்றோகைக் கண்.

**கூடத்தன்** – பரப்பிரமம்; முதன்மையானவன்; ஆன்மா.

**கூடப(பா)தம்** – பாம்பு.

**கூடபாகலம்** – யானைக்கு வரும் ஒருவகைக் கடுஞ் சுரநோய்.

**கூடம்** – வீடு; வீட்டின் கூடம்; தாழ்வாரம்; யானைச்சாலை; மேலிடம்; கோபுரம்; தேவகோட்ட மன்றம்; சம்மட்டி; மலையினுச்சி; அண்டகோளகை; திரள்; மறைவு; பொய்; வஞ்சகம்; இசை வாராது ஓசை மழுங்கல்; யாழ் குற்றம் நான்கனுள் ஒன்று.

**கூடம்பில்** – சுரைக்கொடி.

**கூடயந்திரம்** – பொறி; வலை.

**கூடரணம்** – திரிபுரம்.

**கூடல்** – மதுரை; பொருந்துகை; புணர்தல்; ஆறுகள் கூடுமிடம்; தேடல்; தலைவனைப் பிரிந்த தலைவி அவன் வரும் நிமித்தமறியத் தரையில் சுழிக்கும் சுழிக்குறி; அடர்த்தியான தோப்பு.

**கூடல் வளைத்தல்** – மகளிர் விளையாட்டில் ஒன்று.

**கூடலர்** – கூடார், பகைவர்.

**கூடலித்தல்** – கிளர்ந்து வளைதல்.

**கூடலிழைத்தல்** – தலைவனைப் பிரிந்த தலைவி அவன் வரும் நிமித்தம் அறியத் தரையில் சுழி வரைதல்.

**கூடவற்சை** – தவளை.

**கூடற்கோமான்** – பாண்டியன்.

**கூடற்றெய்வம்** – கூடற்சுழிக்குரிய தேவதை.

**கூடன்** – காண்க: **கூடசன்.**

**கூடாக்கு** – புகையிலை.

**கூடாகாரம்** – மேல்வீடு; கூடம்; நிலவறை.

**கூடாங்கம்** – ஆமை.

**கூடாதார்** – பகைவர்.

**கூடாநட்பு** – அகத்தாற் கூடாது புறத்தாற் கூடியொழுகும் நட்பு, தீயோர் நட்பு.

**கூடார்** – காண்க: **கூடாதார்.**

**கூடாரம்** – சீலைவீடு, துணியால் அமைக்கும் வீடு; வண்டிக்கூடு; நெற்கூடு; பெருங்காயம்.

**கூடாரவண்டி** – மேற்கூடுள்ள வண்டி.

**கூடாவொழுக்கம்** – தகாத ஒழுக்கம்.

**கூடியவரை** – ஆனமட்டும்.

**கூடியற்பெயர்** – கூட்டத்தைக் குறிக்கும் பெயர்.

**கூடிலி** – புலால் உண்போன்.

**கூடிவருதல்** – சேர்ந்துவருதல்; கைகூடிவருதல்; மிகுதியாதல்.

**கூடினரைப்பிரித்தல்** – பகையரசர்களைத் தம்முட் பிளவுண்டாக்கிப் பிரிக்கை.

**கூடு** – உடல்; பறவைக்கூடு; விலங்கின் கூடு; நெற்கூடு; உருண்டு திரண்டு கூடுபோலுள்ளது; மைக்கூடு; வண்டிக்கூடு; சாட்சிக்கூடு; கூடாரம்; மீன்பறி.

**கூடுகொம்பன்** – கொம்பின் முனைப்பாகம் தம்முட் கூடிய மாடு.

**கூடுதல்** – ஒன்றுசேர்தல்; திரளுதல்; பொருந்துதல்; இயலுதல்; கிடைத்தல்; நேரிடுதல்; இணங்குதல்; தகுதியாதல்; அதிகமாதல்; தொடங்குதல்; அனுகூலமாதல்; உடன்படுதல்; நட்புக்கொள்ளுதல்; புணர்தல்; அடைதல்; மொத்தம்; மேலெல்லை.

**கூடுபூரித்தல்** – நிரப்புதல்.

**கூடுவாய்மூலை** – மேற்கூரை இணையும் மூலை.

**கூடுவிட்டுக் கூடுபாய்தல்** – உயிர் ஒருடம்பை விட்டு மற்றோர் உடம்பிற் புகுதல்.

**கூடுவிடுதல்** – இறத்தல்; எலும்பு தோன்ற இளைத்தல்.

**கூடுவிழுதல்** – சாதல்; கட்டியின் ஆணிவேர் கழலுதல்.

**கூடை** – பிரம்பு முதலியவற்றால் பின்னப்படும் கலம்; பூக்கூடை; ஈச்சங்கசங்கு, மூங்கில் முதலியவற்றால் செய்த கூடை; மழைநீர் படாதபடி உடல்மேல் போட்டுக்கொள்ளும் சம்பைக் கொங்காணி; அபிநயக் கைவகை.

**கூடைக்காரன்** – கூடை விற்போன்; கூடையில் காய்கறி விற்போன்.

**கூடைப்பாடல்** – சொற்செறிவும் இசைச்செறிவும் உடைய பாடல்.

**கூடையன்** – உடல் பருத்தவன்.

**கூண்டடுப்பு** – வளைவினுள் அமைந்த அனலடுப்பு.

**கூண்டாதல்** – மயிர் சிக்குப்படுதல்.

**கூண்டு** – கூடு; பறவைக்கூடு.

**கூண்டுதல்** – கூடுதல்.

**கூணிகை** – வீணையின் ஓர் உறுப்பு.

**கூத்தச் சாக்கையன்** – கூத்து நிகழ்த்தும் சாக்கையர் குலத்தான்.

**கூத்தப்பள்ளி** – அரண்மனையைச் சார்ந்த நாடக அரங்கு.

**கூத்தம்பலம்** – கூத்தாடுதற்குரிய கோயிலரங்கு.

**கூத்தர்** – நாடகம் நடிப்போர்.

**கூத்தராற்றுப்படை** – தலைவனைக் கண்டு மீண்ட இரவலன் கூத்தாடுபவரைத் தலைவனிடம் செலுத்தும் புறத்துறை; மலைபடுகடாம்.

**கூத்தரிசி** – குற்றிவிற்கும் அரிசி.

**கூத்தரிசிக்காரி** – அரிசி குற்றி விற்பவள்.

**கூத்தன்** – உயிர்; நாடகன்; சிவன்; ஒட்டக்கூத்தன்; துரிசு.

**கூத்தன்குதம்பை** – மூக்கொற்றிப்பூண்டு.

**கூத்தாட்டு** – நடிப்பு, நடனம்.

**கூத்தாடி** – நடன்; கழைக்கூத்தன்; கூத்தாடுவோன்.

**கூத்தாடிச்சி** – கூத்து நடிப்பவள்; அடங்காது சத்தமிட்டுத் திரிபவள்.

**கூத்தாடுதல்** – நடித்தல்; நடனம்; மகிழ்ச்சி மிகுதல்; செழித்திருத்தல்; பிடிவாதமாய் வேண்டுதல்.

**கூத்தி** – நாடகக் கணிகை; வேசி.

**கூத்து** – நடனம்; பதினொருவகைக் கூத்து; நாடகம்; தெருக்கூத்து; வியத்தகு செயல்; கேலிக்கூத்து; குழப்பம்; நாடகம்பற்றி அமைந்த ஒரு கடைச்சங்க நூல்.

**கூத்துக்களரி** – நடனசாலை.

**கூத்துக்காரன்** – கூத்தாடுவோன்; கூத்தாட்டுவோன்; விகடக்காரன்.

**கூத்துப்பண்ணுதல்** – வேடிக்கை பண்ணுதல்; குழப்பஞ்செய்தல்.

**கூத்துப்பாட்டு** – நாடகப் பாடல்.

**கூத்துள்படுவோன்** – ஆடல் ஆசிரியன்.

**கூதல்** – குளிர்; காய்ச்சற் குளிர்.

**கூதளம்** – கூதாளிச்செடி; வெள்ளரிக்கொடி; தூதுளைக்கொடி.

**கூதறை** – இழிந்தது; இழிந்த குணமுடையவள்; கிழியல்.

**கூதனம்** – இடக்கர்ச்சொல், மறைத்த சொல்.

**கூதாரி** – வெள்ளரிக்கொடி.

**கூதாளம், கூதாளி** – தூதுளைக்கொடி; செடிவகை.

**கூதிர்** – பனிக்காற்று; ஒரு பெரும்பொழுது, ஐப்பசி கார்த்திகை சேர்ந்த பருவம்; காற்று; குளிர்.

**கூதிர்ப்பாசறை** – போர்மேற் சென்ற அரசன் கூதிர்காலத்தில் தங்கும் படைவீடு.

**கூதுளம்** – காண்க: **கூதாளம்.**

**கூதை** – காற்று; பனிக்காற்று.

**கூதைசெய்தல்** – காதை மூளியாக்குதல்.

**கூந்தல்** – மயிற்றோகை; பெண்மயிர்; மயிற்பீலி; யானைக் கழுத்தின் அடிமயிர்; குதிரைப் பிடரிமயிர்; கமுகு, பனை இவற்றின் ஓலை; கூந்தற் பனைமரம்; பூ முதலியவற்றின் மெல்லியதோர் உறுப்பு.

**கூந்தல்கொள்ளுதல், கூந்தல்தொடுதல்** – மகளிரைத் தழுவுதல்.

**கூந்தலாற்றுதல்** – ஈரமயிரைக் கோதி உலர்த்துதல்.

**கூந்தளம்பாவை** – பூவகை.

**கூந்தற்கமுகு** – ஒருவகைக் கமுகு; தாளிப்பனை.

**கூந்தற்பனை** – தாளிப்பனைமரம்; திப்பிலிப் பனைமரம்.

**கூந்தன்மா** – குதிரை.

**கூந்தாலம், கூந்தாலி** – கடப்பாரை.

**கூந்து** – கூந்தல்; குதிரைப் பிடரிமயிர்; யானைக் கழுத்து மயிர்.

**கூப்பாடு** – கூப்பிடுதல்; முறையிடுதல்; பேரொலி.

**கூப்பிடு** – முறையீடு; கூப்பிடு தொலைவு.

**கூப்பிடுதல்** – அழைத்தல்; வரவழைத்தல்; அச்சம், துயரம் முதலியவற்றால் கத்துதல்; பேரொலி செய்தல்; தொழுதற்குக் கைகுவித்தல்.

**கூப்பிடுதூரம்** – கூப்பிட்ட சத்தம் கேட்கு மெல்லை, குரோசம்.

**கூப்பீடு** – கூப்பிடுதல்; முறையீடு; கூப்பிடு தொலைவு.

**கூப்பு** – குவியச்செய்கை.

**கூப்புதல்** – கைகுவித்தல்; குவித்தல்; சுருக்குதல்; குவியச்செய்தல்.

**கூபகம்** – இடுப்பிலுள்ள குழிவிடம்; ஒரு நாடு.

**கூபம்** – கிணறு.

**கூபரம்** – முழங்கை.

**கூபரி** – தேர்.

**கூபாரம்** – கடல்.

**கூம்பல்** – குமிழமரம்.

**கூம்பு** – பாய்மரம்; தேர்மொட்டு; பூவரும்பு; சேறு.

**கூம்புதல்** – குவிதல்; ஒடுங்குதல்; ஊக்கம் குறைதல்.

**கூம்புவிடல்** – தளையவிழ்தல்.

**கூர்** – மிகுதி; கூர்மை; கூர்நுனி; குயவன் சக்கரத்தைத் தாங்கும் ஓர் உறுப்பு; இலையின் நடுநரம்பு; கதிர்க்கூர்; காரம்; குத்துப் பாடான பேச்சு; மிக்க; சிறந்த.

**கூர்க்கறுப்பன்** – ஒருவகை உயர்ந்த நெல்.

**கூர்கெடுதல்** – நுனி மழுங்குதல்; அறிவு மழுங்குதல்.

**கூர்கேவு** – வெண்கடுகு.

**கூர்ங்கண்** – ஊடுருவிப் பார்க்குங் கண்.

**கூர்ச்சகன்** – நெய்வோன்.

**கூர்ச்சம்** – கட்டடத்திற்கு உதவுஞ் சிறுகால்; தருப்பை; தருப்பைக்கொத்து.

**கூர்ச்சரி** – ஒரு பண்வகை.

**கூர்ச்சி** – கூர்மை.

**கூர்ச்சிகை** – எழுதுகோல்.

**கூர்ச்சு** – கூர்மை; கூருள்ள தடி.

**கூர்ச்சேகரம்** – தென்னைமரம்.

**கூர்ச்சீட்டு** – கூறுசீட்டு, பாகபத்திரம்.

**கூர்சீவுதல்** – கூராக்குதல்; சீவுதல்; பகை மூட்டுதல்.

**கூர்த்தல்** – மிகுதல்; கூர்மையாதல்; அறிவு நுட்பமாதல்; உவர்த்தல்; சினத்தல்.

**கூர்த்திகை** – மட்டிப் படைக்கலம்; ஆயுதப் பொது.

**கூர்தல்** – மிகுதல்; விரும்புதல்; வளைதல்; குளிரால் உடம்பு கூனிப்போதல்.

**கூர்ந்தபஞ்சமம்** – மருத யாழ்த்திறவகை.

**கூர்ப்பது** – உள்ளது சிறத்தல்; உறைப்பு; கூர்மை; மிகுதி.

**கூர்ப்பம்** – புருவமத்தி.

**கூர்ப்பரம்** – முழங்கை.

**கூர்ப்பிடுதல்** – தீட்டிக் கூர்மையாக்குதல்.

**கூர்ப்பு** – உள்ளது சிறத்தல்; கூர்மை; அறிவு நுட்பம்; உவர்ப்பு.

**கூர்மக்கை** – பெருவிரலை நீட்டி மற்றை விரல்களை வளைத்துக் கீழ்நோக்கிப் பிடிக்கும் அபிநயக் கைவகை.

**கூர்மம்** – ஆமை; திருமால் பிறப்புள் ஒன்று; கூர்மபுராணம்.

**கூர்மயோகம்** – ஒருவன் பிறக்குங் காலத்து அவனுக்கு உயர்ந்த நிலையைக் கொடுக்குமாறு கோள்கள் சேர்ந்த ஒரு யோகம்.

**கூர்மன்** – தசவாயுக்களுள் இமைத்தல் விழித்தல்களைச் செய்யும் வாயு.

**கூர்மாதனம்** – கால் மடித்து உட்காருகை, ஒருவகை இருக்கை.

**கூர்மிகை** – வீணைவகை.

**கூர்முள்** – குதிரை செலுத்துங் கருவி.

**கூர்மை** – ஆயுதங்களின் கூர்; நுட்பம்; சிறப்பு; கல்லுப்பு; வெடியுப்பு.

**கூர்மைக்கரிவாள்** – சவர்க்காரம்.

**கூர்மைபார்த்தல்** – ஆயுதக் கூர்மை சோதித்தல்; ஒருவன் திறமையைச் சோதித்தல்.

**கூர்மையில்லோன்** – மந்தன்.

**கூர்வாங்குதல்** – கருவியைக் கூர்மையாக்குதல்.

**கூர்வாயிரும்பு** – அரிவாள்மனை.

**கூர்வை** – கப்பலின் குறுக்குக்கட்டை.

**கூரணம்** – கோடகசாலைப்பூண்டு; பாகல்.

**கூரம்** – பாகற்கொடி; கோடகசாலைப்பூண்டு; கொடுமை; பொறாமை; யாழ்.

**கூரல்** – கூந்தல்; இறகு; ஒரு பெருமீன்வகை.

**கூரறுக்கும்வாள்** – இரம்பவகை.

**கூரன்** – கூர்நெல்; நாய்; ஆண்பாற் பெயர்வகை.

**கூராம்பிளாச்சு** – மண்கொத்தும் மரக்கருவி.

**கூரியம்** – கூர்மை.

**கூரியன்** – புத்திக்கூர்மையுள்ளவன்; புதன்.

**கூரிலவணம்** – அமரியுப்பு.

**கூருமி** – உமிமூக்கு.

**கூரை** – வீட்டிறப்பு; வீட்டுக்கூரை; சிறுகுடில்.

**கூரைக்கட்டு** – கூரைவீடு.

**கூரைதட்டுதல்** – ஆண்பிள்ளைப் பிறப்புக்கு மகிழ்ச்சிக்குறியாகக் கூரையைத் தட்டுதல்.

**கூரைவீடு** – ஓலையாலேனும் புல்லாலேனும் வேய்ந்த வீடு.

**கூலக்கடை** – பலதானியக்கடை.

**கூலகம்** – கரை; கறையான் புற்று; குவியல்.

**கூலங்கசம்** – (இரண்டு கரையும் உராய்ந்து கொண்டு) முழுதும்.

**கூலங்கடம்** – கடல்.

**கூலபிந்து** – எட்டிமரம்.

**கூலம்** – பலதானியம்; காராமணி; பண்ணி காரம்; பாகல்; நீர்க்கரை; வரம்பு; முறை; விலங்கின் வால்; பசு; மரை; குரங்கு; குவியல்; நெல், துவரை முதலியவற்றிற்கு விதிக்கும் வரி.

**கூலவதி** – யாறு.

**கூலவாணிகன்** – தானியம் விற்பவன்.

**கூலி** – வேலைக்குப்பெறும் ஊதியம்; வாடகை; கூலிக்காரன்.

**கூலிக்காரன்** – கூலிக்கு வேலைசெய்பவன்.

**கூலிக்குமாரடித்தல்** – மனமின்றி வேலைசெய்தல்.

**கூலிப்படை** – கூலிக்கு அமர்த்தும் சேனை; கூலிக்காரனின் கூட்டம்.

**கூலிப்பாடு, கூலிப்பிழைப்பு** – நாட்கூலி பெற்றுச் செய்யும் வாழ்க்கை.

**கூலியாள்** – காண்க: **கூலிக்காரன்.**

**கூவநூல்** – கிணறு வெட்டுதற்குரிய இடம் முதலியவற்றை உணர்த்தும் நூல்.

**கூவநூலோர்** – கூவனூலில் வல்லோர்.

**கூவம்** – கிணறு.

**கூவல்** – கிணறு; பள்ளம்; அமைத்தல்.

**கூவிடை** – காண்க: **கூப்பிடுதூரம்.**

**கூவியர்** – உணவு சமைப்போர்; அப்பவாணிகர்.

**கூவிரம்** – வில்வமரம்; மலை மரவகை; தேரில் அமர்ந்து பிடித்துக்கொள்வதற்கு உதவுவதும் தாமரை மொட்டு வடிவில் அமைந்ததுமான ஓர் உறுப்பு; தேர்க்கொடி; தேரின் தலை யலங்காரம்.

**கூவிரி** – தேர்.

**கூவிளங்கனி** – நேர்நிரைநிரை குறிக்கும் வாய் பாடு; வில்வப்பழம்.

**கூவிளங்காய்** – நேர்நிரைநேர் குறிக்கும் வாய்பாடு.

**கூவிளந்தண்ணிழல்** – நேர்நிரைநேர்நிரை குறிக்கும் நாலசைச்சீர் வாய்பாடு.

**கூவிளந்தண்பூ** – நேர்நிரைநேர்நேர் குறிக்கும் நாலசைச்சீர் வாய்பாடு.

**கூவிளநறுநிழல்** – நேர்நிரைநிரைநிரை குறிக்கும் நாலசைச்சீர் வாய்பாடு.

**கூவிளநறும்பூ** – நேர்நிரைநிரைநேர் குறிக்கும் நாலசைச்சீர் வாய்பாடு.

**கூவிளம்** – வில்வமரம்; நேர்நிரையசை குறிக்கும் வாய்பாடு; மாவிலங்கம்; கோளகபாடாணம்.

**கூவிளி** – கூப்பிடும் ஓசை; கூப்பிடுதொலைவு.

**கூவிளை** – வில்வமரம்; கோளகபாடாணம்.

**கூவுதல்** – பறவை கூவுதல்; சத்தமிடுதல்; யானை முதலியன பிளிறுதல்; ஓலமிடுதல்; அழைத்தல்.

**கூவுவான்** – சேவல்.

**கூவை** – செடிவகை; கூட்டம்.

**கூவைநீறு** – கூகைநீறு, கூவைமா.

**கூழ்** – மாவினாற் சமைத்த உணவு; பலவகை உணவு; பொருள்; பொன்.

**கூழ்த்தல்** – ஐயப்படுதல்.

**கூழ்ப்பசை** – கஞ்சிப்பசை; மாப்பசை.

**கூழ்ப்பு** – ஐயம்.

**கூழ்படுதல்** – கலக்கமுண்டாதல்.

**கூழ்முட்டை** – கெட்டுப்போன முட்டை.

**கூழ்வடகம், கூழ்வடாம்** – அரிசிமாக் கூழாற் செய்யப்படும் வற்றல்.

**கூழ்வரகு** – கேழ்வரகு.

**கூழங்கை** – முடமான கை.

**கூழம்** – எள்ளு.

**கூழன்** – ஒருவகைப் பலா; கண்டகிக்கல்; தெளிந்த அறிவில்லாதவன்.

**கூழன்பலா** – ஒருவகைப் பலாமரம்.

**கூழா** – நறுவிலிமரம்.

**கூழாங்கல்** – வழுவழுப்பான ஒருவகைச் சிறுகல்.

**கூழாதல்** – சோறு குழைதல்; முட்டை பதனழி தல்.

**கூழாம்பாணி** – சருக்கரை கரைந்து கூழ் போலுள்ள நீர்.

**கூழாமட்டி** – அறிவிலான்.

**கூழான்** – கண்டகிக்கல்.

**கூழை** – பெண்டிர் தலைமயிர்; இறகு; மயிற் றோகை; நடு; வால்; குட்டையானது; புத்திக் குறைவு; கூழைத்தொடை; கூழைப்பாம்பு; சேறு; பொன்; கடைவரிசை; படையின் பின்னணி.

**கூழைக்க(கி)டா** – நீர்வாழ் பறவையுள் ஒன்று; வாலில்லா எருமைக்கடா.

**கூழைக்கும்பிடு** – போலிவணக்கம்.

**கூழைக்குறும்பு** – பிறர் அறியாமற் செய்யும் குறும்புச் செயல்.

**கூழைக்கை** – குறைபட்ட கை.

**கூழைத்தனம்** – போலியாகக் குழைந்து காட்டுகை.

**கூழைத்தொடை** – அளவடியில் இறுதிச்சீர் ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது.

**கூழைநரி** – வால் குட்டையான நரி.

**கூழைப்பாம்பு** – தலைக்கும் உடலுக்கும் இடையில் கழுத்தின்றி ஒன்றுபோல் தடித்துள்ள குள்ளவகைப் பாம்பு.

**கூழைப்பார்வை** – வஞ்சகப் பார்வை.

**கூழைமுட்டை** – காண்க: **கூழ்முட்டை.**

**கூழைமுரண்** – கடைச்சீரொழிந்த மற்றெல்லாச் சீர்க்கண்ணும் முரண்வரத் தொடுப்பது.

**கூழைமை** – கடமை; குழைந்து நடக்கை.

**கூழையன்** – குள்ளன்; முழுமடையன்.

**கூள்(ளு)தல்** – திரளுதல்.

**கூளப்படை** – பலவகையினர் கலந்த கூட்டுப் படை.

**கூளம்** – குப்பை, சண்டு; திப்பி.

**கூளன்** – பயனற்றவன்.

**கூளி** – கூட்டம்; குடும்பம்; உறவு, படைத் தலைவன்; சாத்தான்; பேய்; சிவகணங்களாகிய பூதம்; பெருங்கழுகு; குற்றம்; குள்ளம்; கற்பில்லாதவள்; எருது; பொலி காளை.

**கூளியர்** – படைவீரர்; வேட்டுவர்; ஆறலைப் போர்; குறவர்; ஏவல் செய்வோர்; நண்பர்.

**கூற்றம்** – பகுதி; கொடும்பகைவன், யமன்; அழிவுண்டாக்குவது; நாட்டின் பகுதி; சொல்.

**கூற்றரிசி** – குற்றலரிசி.

**கூற்றன்** – யமன்.

**கூற்றன் கொலையோன்** – மயில்துத்தம்.

**கூற்றன்வாய்** – தலைமதகு.

**கூற்று** – கூறுகை; மொழி; கூறத்தக்கது; யமன், காலன்.

**கூற்றுதைத்தான்** – யமனைக் காலால் உதைத்த சிவன்.

**கூற்றுவன்** – யமன்.

**கூறடைத்தல்** – பகுதியாகப் பிரித்தல்.

**கூறிட்டு மொழிதல்** – வினாக்களுக்கு ஏற்பப் பகுத்துக் கூறும் விடை.

**கூறிடுதல்** – பங்கிடுதல்; துண்டாக்குதல்.

**கூறியது கூறல்** – நூற் குற்றம் பத்தனுள் ஒன்று, முன்மொழிந்ததையே பயனின்றிப் பின்னும் மொழிவது.

**கூறு** – பகுதி, கூறுபாடு; பங்கு; பிளவுபட்ட துண்டு; பாதி; தன்மை.

**கூறுகொள்ளுதல்** – வாயில் திணித்துக்கொள்ளுதல்; உரிமையாக்கிக்கொள்ளுதல்.

**கூறுச்சீட்டு, கூறுசீட்டு** } – பாகப்பிரிவினை ஆவணம்.

**கூறுசெய்தல்** – துண்டாக்குதல்; பங்கிடுதல்; மணியம் பண்ணுதல்.

**கூறுசெய்வான்** – மணியக்காரன்; பங்கு பிரிப்பவன்.

**கூறுதல்** – சொல்லுதல்; விலைகூறுதல்; விளக்கிச் சொல்லுதல்; கூறு சொல்லுதல்.

**கூறுபடுத்துதல்** – பிரித்தல்.

**கூறுபடுதல்** – பிரிவுபடுதல்.

**கூறுபாடல்** – வாய்ப்பாட்டு.

**கூறுபாடு** – பாகுபாடு; பகுதி; தன்மை.

**கூறுவிக்குறுதல்** – பிறரைக்கொண்டு சொல்லுவித்தல்.

**கூறை** – ஆடை; கூறைப்புடைவை, கலியாண ஆடை.

**கூறைகோட்படுதல்** – ஆடையைப் பறிகொடுத்தல்.

**கூறைப்பாய்** – தோணிப்பாய்.

**கூறைப்புடைவை** – தாலிகட்டும் சமயத்திற்கு முன் மணமகளுக்கு மணமகன் வீட்டார் கொடுக்கும் சேலை.

**கூறையுடுத்தல்** – நாத்தனார் மணமகளுக்குக் கூறைப்புடைவை உடுத்துகை.

**கூன்** – வளைவு; உடற்கூனல்; கூனன்; நத்தை; ஆந்தை; பெரும்பாத்திரம்; செய்யுளடியில் அளவுக்குமேல் வரும் அசையும் சீரும்.

**கூன்கிடை** – ஐவகை மெய்க்குற்றங்களுள் ஒன்றாகிய உடல் கூனிக்கிடக்கை.

**கூன்முதுகு** – ஆமையோடு.

**கூனல்** – வளைவு, கோணல்; கூனல்முதுகு; கூனன்.

**கூனலங்காய்** – புளியங்காய்.

**கூனற்கிழவன்** – உடல் வளைந்த முதியோன்.

**கூனன்** – கூன் முதுகுடையவன்.

**கூனன் முதுகு** – காண்க: **கூன்முதுகு.**

**கூனாள்** – கூனி.

**கூனி** – கூனுடையவள்; இராமபிரான் முடிசூடு தலைச் சூழ்ச்சிசெய்து தடுத்த மந்தரை; வானவில்; இறால்மீன்வகை; பங்குனி.

**கூனிக்குயம்** – கூனிரும்பு, அறுவாள்.

**கூனிப்போதல்** – மூப்பு முதலியவற்றால் உடல் வளைதல்; அவமானம் முதலியவற்றால் உடல் குறுகுதல்.

**கூனிரும்பு** – அறுவாள்.

**கூனுதல்** – வளைதல்; முதுகு வளைதல்.

**கூனை** – மிடா; நீர்ச்சால்.

## கெ

**கெ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (க்+எ).

**கெக்கட்டம்** – பெருஞ்சிரிப்பு.

**கெக்கரித்தல்** – கொக்கரித்தல், ஆரவாரித்தல்; மிக இனித்தல்.

**கெக்கலி, கெக்கலிகொட்டுதல்** } – மகிழ்ச்சியாற் கைகொட்டிச் சிரித்தல்; குலுங்கச் சிரித்தல்.

**கெக்கலித்தல், கெக்கலிப்படுதல்** } – குலுங்கச் சிரித்தல்; மகிழ்தல்.

**கெக்களம்** – அதிகச் சிரிப்பு.

**கெக்களித்தல்** – நெளித்தல்; துருத்துதல்; தோல்விகாட்டல்.

**கெங்காதீரம்** – கங்கைக்கரை.

**கெச்ச** – போ.

**கெச்சக்காய்** – கழற்சிக்காய்.

**கெச்சங்கெட்டவன்** – நாணமில்லாதவன்.

**கெச்சம்** – முல்லைக்கொடி; அரசமரம்; காற்சதங்கை.

**கெச்சிதம்** – கெற்சிதம், முழக்கம்; பெருமிதம், கம்பீரம்; குணமடைந்துவருகை.

**கெச்சை** – காற்சதங்கை.

**கெச்சைநடை** – பெருமிதநடை.

**கெச்சைமிதி** – கூத்தின் விரைந்த நடை; குதிரை விரைந்து செல்லும் நடைவகை; பெருமித நடை.

**கெசக்கன்னி** – வெருகங்கிழங்கு.

**கெசகன்னம்** – காண்க: **கசகர்ணம்.**

**கெசம்** – யானை; இரண்டு முழ அளவு.

**கெசமாமுட்டி** – எட்டிமரம்.

**கெசாசைநா** – கையாந்தகரைப்பூடு.

**கெஞ்சிக்கேட்டல்** – தாழ்ந்த குரலுடன் வேண்டுதல்.

**கெஞ்சுதல்** – இரந்து வேண்டுதல், வருந்திக் கேட்டல், மன்றாடுதல்.

**கெட்ட** – அழிந்த; தீய.

**கெட்டகேடு** – தாழ்ந்த நிலையைக் குறிக்கும் ஓர் இழிசொல்.

**கெட்டணை** – இறுகும்படி கெட்டிக்கை.

**கெட்டதனம், கெட்டநடத்தை** – தீயொழுக்கம்.

**கெட்டம்** – தாடி.

**கெட்டலைதல்** – நிலைகெட்டுத் திரிதல்.

**கெட்டவன்** – தீயவன், தீயொழுக்கமுள்ளவன்.

**கெட்டவியாதி** – கொடிய நோய்; ஆண்பெண் குறிகளில் உண்டாகும் நோய்.

**கெட்டவேளை** – பொல்லாத காலம், தீயநேரம்; சமயமல்லாத சமயம்.

**கொட்டாகெட்டி, கெட்டாரகெட்டி** – மிகுந்த திறமை; மிக்க திறமையுள்ளவன்.

**கெட்டி** – உறுதி; இறுக்கம்; திறமை; திறமையுடையவன்; உரத்த குரல்; அழுத்தம்; மிக நன்று.

**கெட்டிக்காப்பு** – உட்குழலில்லாத இந்தியக் காப்பு என்னுங் கையணி.

**கெட்டிக்காரன்** – திறமையுடையவன்; அறிவு மிக்கவன்.

**கெட்டிக்கொலுசு** – உட்குழலில்லாத கொலுசு.

**கெட்டிச்சாயம்** – அழுத்தமான சாயம்.

**கெட்டித்தல்** – உறுதிப்படுத்துதல்.

**கெட்டித்தனம்** – திறமை; செட்டு.

**கெட்டிபண்ணுதல்** – பலப்படுத்தல்; உறுதியாக்குதல்.

**கெட்டிமூங்கில்** – கல்மூங்கில்.

**கெட்டிமேளம், கெட்டிவாத்தியம்** – தாலி கட்டுகை முதலிய காலங்களில் முழங்கும் அனைத்து வாத்தியம்.

**கெட்டு** – பக்கக்கிளை.

**கெட்டுப்போதல்** – அழிதல்; அழுகிப்போதல்; ஒழுக்கங்கெடுதல்; வறுமையுறுதல்; காணாமற் போதல்.

**கெட்டுப்போனவள்** – கற்பழிந்ததனாற் சாதியினின்று விலக்கப்பட்டவள்.

**கெட்டுவிடுதல்** – அழிதல்; அழுகிப்போதல்.

**கெட்டுவைத்தல்** – கிளைவிடுதல்.

**கெட்டேன்** – இரக்கக் குறிப்பு.

**கெடலணங்கு** – மூதேவி.

**கெடலூழ்** – தீவினை.

**கெடவரல்** – மகளிர் விளையாட்டு; மகளிர் கூட்டம்.

**கெடி** – நிறைவேறிவருஞ் செயல்; அதிகாரம்; மலைக்கோட்டை; ஊர்; வல்லமை; புகழ்; அச்சம்.

**கெடிமாடு** – நீண்ட பயணத்தின் இடையிடையே வண்டியில் மாற்றிப் பூட்டும் எருது.

**கெடிலம்** – ஆழமான ஓடை; கடலூர்க்கருகிலோடும் ஓர் ஆறு; ஒடுங்கிய வழி.

**கெடிறு** – காண்க: **கெளிறு.**

**கெடு** – கேடு; வறுமை; தவணை; எல்லை.

**கெடுகாலம்** – அழிவுகாலம்.

**கெடுகிடுதல்** – கெட்டொழிதல்.

**கெடுகுறி** – கேட்டிற்கு அறிகுறி, உற்பாதம்.

**கெடுத்தல்** – அழித்தல்; பழுதாக்குதல்; ஒழுக்கங்கெடுத்தல்; அவமாக்குதல்; செயலைத் தடைசெய்தல்; இழத்தல்; நீக்குதல், நஞ்சு முதலிய வற்றை முறியச் செய்தல்; முறியடித்தல்; காணாமற் போகுதல்.

**கெடுதல்** – அழிதல்; பழுதாதல்; வறுமையடைதல்; ஒழுக்கங்கெடுதல்; உருவழித்தல்; தோற்றோடுதல்; விபத்து; தீங்கு; விகாரத்தால் எழுத்துக் கெடுதல்; வழிதவறிப்போதல்.

**கெடுதலை** – அழிவு; பழுது.

**கெடுதி** – அழிவு; இழப்பு; இழந்த பொருள்; ஆபத்து; துன்பம்; தீமை.

**கெடுநினைவு** – தீயபுத்தி.

**கெடுப்பினை** – வங்கமணல்.

**கெடுபடுதல்** – விபத்தடைதல்.

**கெடுபிடி** – தடபுடல்; விரைவு.

**கெடுபுத்தி** – கெடுநினைவு.

**கெடும்பு** – கெடுநினைவு; கேடு.

**கெடுமதி** – கெடுபுத்தி, அழிதற்காம் அறிவு; கெட்ட ஆலோசனை.
**கெடுவாய்** – ஓர் இகழ்ச்சிமொழி.
**கெடுவான்** – ஒரு வசைமொழி.
**கெடுவு** – தவணை.
**கெடை** – மூங்கில்.
**கெண்டம்** – ஆபத்து.
**கெண்டன்** – தடியன், முரடன்.
**கெண்டி** – கெண்டிகை; துண்டு.
**கெண்டிகை** – கமண்டலம்.
**கெண்டிச்செம்பு** – மூக்குள்ள செம்புவகை.
**கெண்டுதல்** – தோண்டுதல்; அறுத்துத் தின்னுதல்; கிண்டுதல்.
**கெண்டை** – சேல்மீன்; சரிகை; கண்டை; புயத்தின் முன்பக்கத்துச் சதை; கணைக்கால்; ஏளனம்.
**கெண்டைக்கால்** – கணைக்கால்.
**கெண்டைபுரட்டுதல்** – பசிதாகம் முதலியவற்றால் கைகால்கள் வலித்திழுத்தல்.
**கெணனை** – எண்ணிக்கை.
**கெத்து** – தந்திரம்; தந்திரமான சொல்.
**கெத்துதல்** – கீறிப் பிளத்தல்; மீன் முதலியவை அறுத்தல்; கொக்கரித்தல்; ஏமாற்றுதல்.
**கெதாயு** – ஆயுள் முடிந்தவன்.
**கெதி** – கதி; புகலிடம்.
**கெந்தகம்** – கந்தகம், ஒருவகைத் தாதுப்பொருள்; அப்பிரகம்; நாய்வேளைப்பூடு.
**கெந்தசாலி** – கந்தசாலி, ஒருவகை உயர்ந்த செந்நெல்.
**கெந்தபொடி** – குளிக்கும்போது பயன்படுத்தும் ஒருவகை மணப்பொடி.
**கெந்தம்** – கந்தம், மணம்.
**கெந்தனம்** – கோடகசாலைப் பூண்டு.
**கெந்தி** – கந்தகம்; பொன்னிறமான கல்.
**கெந்தித்தல்** – தத்துதல்; நெளித்தல்.
**கெந்திபரம்** – ஆடுதின்னாப்பாளைச்செடி.
**கெந்திவாருணி** – பேய்த்தும்மட்டிக்கொடி.
**கெந்து** – ஒற்றைக்காலால் தத்தியாடும் பிள்ளை விளையாட்டு; கிட்டிப்புள் விளையாட்டு.
**கெந்துதல்** – தத்துதல்; நெளித்தல்; கிட்டிப்புள் அடித்தல்.
**கெபி(வி)** – பள்ளம்; குகை.
**கெம்பத்து** – பகட்டு.
**கெம்பரை** – கூடை.
**கெம்பளித்தல்** – மகிழ்தல்.
**கெம்பளிப்பு** – மகிழ்ச்சி.
**கெம்பு** – பதுமராகம், சிவப்பு இரத்தினக்கல்.
**கெம்புதல்** – கொந்தளித்தல்; இரத்தங்கொதித்தல்; உரத்துப் பேசுதல், ஆரவாரித்தல்.
**கெம்புநீலம்** – உயர்ந்தநீலம்.
**கெம்புமல்லிகை** – மயிர்மாணிக்கம்.
**கெமித்தல்** – போதல்; புணர்தல்.
**கெல்லுதல்** – கல்லுதல், தோண்டுதல்; வயிற்றை அரித்துவிடுதல்.
**கெலி** – அச்சம்; ஆசை; பெருவயிறு.
**கெலிசு** – முகம் வயிறுகளிற் காணும் வீக்கம்.
**கெலித்தல்** – வெல்லுதல்; ஆசைப்படுதல்; அஞ்சுதல்.
**கெலிப்பு** – வெற்றி; மகிழ்ச்சி.
**கெலுழன்** – கருடன்.
**கெவரி** – வெள்ளைக் காக்கணங்கொடி.
**கெவியூதி** – நாலரைக்கல் தொலைவு.
**கெவுரா** – துளசிச்செடி.
**கெவுரிசங்கம்** – காண்க: **கௌரிசங்கம்.**
**கெவுளி** – கவுளி, பல்லி; மஞ்சள்நிறத் தேங்காய்.
**கெவுனி** – கோட்டைவாயில்.
**கெழி** – நட்பு.
**கெழீஇயிலி** – பகைவன்.
**கெழு** – நிறம்; ஒளி; ஒரு சாரியை.
**கெழுதகைமை** – உரிமை; நட்பு.
**கெழுமுதல்** – நிறைதல்; முதிர்தல்; முளைத்தல்; காமவிகாரங் கொள்ளுதல்; கற்றல்; பொருந்துதல்; கூடுதல்.
**கெழுமை** – நிறம்; ஒளி; வளமை.
**கெழுவு** – நட்பு.
**கெழுவுதல்** – பொருந்துதல்; நிறைதல்; பற்றுக் கொள்ளுதல்.
**கெளிசு** – காண்க: **கெலிசு.**
**கெளித்தல்** – நெளிந்துபோதல்.
**கெளிதம்** – பெருங்கல்.
**கெளிர்ச்சல்லியம்** – மீன் எலும்பு.
**கெளிறு, கெளுத்தி** – கெளிற்றுமீன்.
**கெற்சி** – சிறுவழுதலை.
**கெற்பாதானம்** – கருத்தரித்த நாலாம் மாதஞ் செய்யும் ஒரு சடங்கு.
**கெற்பு** – கிற்பு, திராணி, வலிமை.
**கெற்போட்டம்** – காண்க: **கர்ப்போட்டம்.**

**கே** – ஓர் உயிர்மெய்யெழுத்து (க்+ஏ).
**கேகம்** – வீடு.
**கேகயப்புள்** – அசுணமா.
**கேகயம்** – மயில்; ஒரு நாடு; பண்வகை; அசுணப் பறவை; கவுரிபாடாணம்; வில்.
**கேகலன்** – கூத்தாடி.
**கேகி** – மயில்.
**கேகை** – மயிற்குரல்.
**கேசகன்** – நாவிதன்.
**கேசகீடம்** – பேன்.
**கேசதம்** – கரிசலாங்கண்ணிப் பூண்டு.
**கேசம்** – மக்கள் தலைமயிர்; விலங்கின் மயிர்.
**கேசமுட்டி** – வேம்பு.
**கேசரஞ்சனம்** – பொற்றலைக் கையாந்தகரை; தலைமயிர் வளர்க்குந் தைலவகை.
**கேசரம்** – பூந்தாது; மகிழமரம்; குங்குமப்பூ; வண்டு; பெருங்காயம்; பிடரிமயிர்.
**கேசரர்** – வித்தியாதரர்.
**கேசரி** – அரிமா, சிங்கம்; அரியணை; கொம்மட்டி மாதுளை; ஒருவகைச் சிற்றுண்டி.
**கேசரிகம்** – நாயுருவிச்செடி.
**கேசரியாசனம்** – கணைக்கால்கள் பிட்டத்தைத் தொடவும் விரித்த கைவிரல்கள் துடையிற் படவும் வாய் மலர்ந்தும் பார்வை மூக்கு நுனியை நோக்கியும் இருக்கும் யோகாசன வகை.
**கேசவம்** – பெண்வண்டு.
**கேசவன்** – கண்ணபிரான்; சோழன்.
**கேசாதிபாதம்** – முடிமுதல் அடிவரை; கலிவெண் பாவால் ஒருவரை வருணித்துக் கூறும் ஒரு பிரபந்தம்.
**கேசாரி** – குதிரைக் கழுத்தின் மயிர்.
**கேசி** – அழகிய மயிர்முடி உடையவள்.
**கேசினி** – சங்கங்குப்பிச்செடி.
**கேட்டல்** – செவிக்குப் புலனாகுதல்; பாடங்கேட்டல்; வினாவல்; விசாரித்தல்; வேண்டுதல்; கேள்விப்படுதல்; கொடுக்கச் சொல்லுதல்; தண்டித்தல்; இரத்தல்; நோய் முதலியன நீக்குதல்; விலை கேட்டல்; ஏற்றுக்கொள்ளுதல்; பொறுத்தல்; தணிதல்; கீழ்ப்படிதல்; ஒலி எட்டுதல்; செவியாற்கேட்குதல்; அனுமதி பெறுதல்.
**கேட்டித்தடி** – தாற்றுக்கோல்; சாட்டை.
**கேட்டுக்கொள்ளுதல்** – வேண்டிக்கொள்ளுதல்.
**கேட்டுமுட்டு** – புறச்சமயத்தாரைப்பற்றிக் கேட்டதனால் சைனர் மேற்கொள்ளும் தீட்டு.
**கேட்டை** – பதினெட்டாம் நாண்மீன்; மூதேவி; ஓர் அசைநிலை.
**கேட்டொறும்** – கேட்கும்பொழுதெல்லாம்.
**கேட்பு** – கேள்வி.
**கேட்போர்** – அவைக்களத்துத் தலைமையேற்று அரங்கேறும் நூலைக் கேட்டவர்; நூல் கேட்டற்குரிய மாணாக்கர்; இன்னார் கூற இன்னார் அதனைக் கேட்டாரென்னும் அகப்பாட்டுறுப்பு.
**கேடகம்** – பரிசை; மலைகள் அடுத்துள்ள ஊர்; பாசறை; கேடயம்; புறாமுட்டிச் செடி.
**கேடம்** – மலைகள் அடுத்துள்ள ஊர்; கிளி; ஆறு.
**கேடயம்** – கேடகம்; தெய்வத் திருமேனியை எழுந்தருளப்பண்ணும்போது உதவும் தோளுக்கினியான் என்னும் வாகனம்.
**கேடன்** – கெட்டவன், கேடுடையவன்; அழிப்பவன்.
**கேடிலி** – அழிவில்லாதவன்(ள்).
**கேடு** – அழிவு; இழப்பு; வறுமை; தீமை; கெடுதல்; வேறுபாடு; அழகின்மை.
**கேடுகாலம்** – அழிவுறுங்காலம்.
**கேடுகெட்டவன்** – நிலைமையழிந்தவன்.
**கேடுபாடு** – அழிவு; வறுமைநிலை.
**கேண்மை** – நட்பு; உறவு; கண்ணோட்டம்; வழக்கு.
**கேணம்** – செழிப்பு.
**கேணி** – கிணறு; சிறுகுளம்; அகழி; தொட்டில்.
**கேத்திரக்கியன்** – ஆன்மா.
**கேத்திரகணிதம்** – கோட்டுக்கணிதம், இரேகை கணிதம்.
**கேத்திரபாலன்** – வயிரவன், கோயிலைக் காக்கும் தேவதை.
**கேத்திரம்** – புண்ணியத்தலம்; விளைநிலம்.
**கேத்திரி** – திருமால்.
**கேதகாரியம்** – சாவுச்சடங்கு.
**கேதகி(கை)** – தாழை.
**கேதம்** – துக்கம்; இளைப்பு.
**கேதல்** – அழைத்தல்.
**கேதன்** – காமன்.
**கேதனம்** – கொடி.
**கேதாரகவுளம்** – ஒரு பண்வகை.
**கேதாரம்** – இமயமலையில் உள்ள ஒரு சிவதலம்; விளைநிலம்; ஒரு பண்வகை; மயில்.
**கேதாரயோகம்** – ஏழு கோள்கள் இடையீடின்றி நான்கு இராசிகளில் நிற்க வரும் யோகம்.
**கேதாரி** – குதிரைப் பிடரி; குதிரைச் சுழிவகை.
**கேதாளி** – குறிஞ்சி யாழ்த்திறத்துள் ஒன்று.
**கேது** – ஒன்பது கோள்களுள் ஒன்று; அடையாளம்; சுடர்; ஒளி; மயில்.
**கேதுக்கல்** – வயலின் எல்லைக்கல்.
**கேதுதல்** – கதறியழைத்தல்.
**கேதுமால், கேதுமால் வருடம், கேதுமாலம்** – ஒன்பது கண்டங்களுள் ஒன்று.

**கேதுரத்தினம்** – வைடூரியம்.
**கேந்திரம்** – வட்டத்தின் நடு; பிறந்த இலக்கினத்திற்கு ஒன்று, நான்கு, ஏழு அல்லது பத்தாம் இடம்.
**கேந்திரித்தல்** – கிரகம் கேந்திரம் பெற்று நிற்றல்.
**கேந்துமுறியம்** – நாய்வேளைப்பூடு.
**கேப்பை** – காண்க: கேழ்வரகு.
**கேமாச்சி** – வெள்ளைக் காக்கணங்கொடி.
**கேயம்** – இசைத்தற்குரியது; இசைப்பாட்டு.
**கேயிகம்** – காவிக்கல்.
**கேயூரம்** – தோளணிவகை.
**கேரண்டம்** – காக்கை.
**கேரளம்** – சேரநாடு; மலையாளமொழி; வாய் விளங்கம்; சோதிட சாத்திரத்துள் ஒன்று.
**கேரளன்** – சேரன்; கேரளநாட்டைச் சேர்ந்தவன்.
**கேருதல்** – கோழி கத்துதல்; குரல் கம்முதல்; தொண்டைக் கட்டால் வருந்தி மூச்சுவிடுதல்; திகைத்தல்.
**கேலகன்** – கழைக்கூத்தாடி.
**கேலம்** – விளையாட்டு; மகளிர் விளையாட்டு.
**கேலி** – ஏளனம்; விளையாட்டுப் பேச்சு; விகடம்.
**கேலிக்காரன்** – சிரிப்புக்காட்டுவோன், விகடன்; எள்ளி நகையாடுவோன்.
**கேலிகலை** – கலைமகள் கையிலுள்ள வீணை; பகடிப் பேச்சு.
**கேவணம்** – மணிபதிக்குங் குழி.
**கேவல்** – வள்ளிக்கொடி.
**கேவலக்கிடை** – ஆன்மா ஆணவத்தால் மறைப்புண்டு செயலற்றிருக்கும் நிலை.
**கேவலக்கிழவன்** – அருகக்கடவுள்.
**கேவலஞானம்** – முக்கால் அறிவு.
**கேவலதிரவியம்** – மிளகு.
**கேவலப்படுத்துதல்** – அவமதித்தல்.
**கேவலப்படுதல்** – மெலிதல்.
**கேவலப்பொருள்** – பரப்பிரமம்.
**கேவலம்** – தனிமை; இணையற்றது; வீடுபேறு; சிறுமை; முக்கால அறிவு; கீழாலவத்தை; தாழ்நிலை; அவமானம்; சாக்கிரம் முதல் துரியாதீதம் வரையுள்ள ஐந்து நிலைகளிலும் கீழ்நோக்கி மூலாதாரத்துக்குச் செல்லும் நிலை.
**கேவலவுணர்வு** – மெய்யறிவு, பரஞானம்.
**கேவலன்** – கைவல்ய பதவியடைய முயல்பவன்; சாமானியன்.
**கேவலாவத்தை** – கீழாலவத்தை; காரண கேவலம்; ஊழி இறுதிக்காலத்தில் ஆன்மாக்கள் ஒடுங்கி படைப்புக்காலமளவும் மறைப்புண்டு யாதொரு நினைவுமின்றி யிருப்பது.
**கேவலி** – கேவல ஞானமுள்ளவன்.
**கேவு** – வெண்கடுகு; தோணி முதலியவற்றில் ஏற்றுதற்குரிய கூலி.
**கேவுதல்** – மூச்சுத் திணறுதல்.
**கேவேடன்** – மீன்வலைஞன்.
**கேழ்** – ஒளி; நிறம்; ஒப்பு.
**கேழ்த்த** – நிறங்கொண்ட; மிகுந்த.
**கேழ்பவர்** – நன்மையுடையார்.
**கேழ்பு** – நன்மை.
**கேழ்வரகு** – ஒருவகைத் தவசம், கேப்பை.
**கேழல்** – நிறம்; பன்றி; குளநெல்.
**கேழற்பன்றி** – ஆண்பன்றி.
**கேள்** – உறவு; நட்பு; நண்பன்; கணவன்.
**கேள்வன்** – தலைவன்; கணவன்; அன்பன், தோழன்.
**கேள்வி** – கேட்டல்; கற்கை; வினா; நூற்பொருளைக் கற்றறிந்தவர் சொல்வதைக் கேட்டல்; கல்வி; சத்தம்; வேதம்; நூல்; சொல்; அறிக்கை; விசாரணை; இசைச்சுருதி; ஏலம் கேட்டல்; யாழ்.
**கேள்விக்காரர்** – ஏலங்கேட்போர்; வேலைக்கு விண்ணப்பஞ் செய்வோர்.
**கேள்விகேட்பாடு** – நியாய விசாரணை.
**கேள்விகொள்ளுதல்** – ஐயங்கொண்டு கேட்டல்.
**கேள்வித்தானம்** – சாதகன் பிறந்த இலக்கினத்திற்கு இரண்டு அல்லது மூன்றாம் இடம்.
**கேள்விப்படுதல்** – பிறர் வாய்மூலமாகச் செய்தி தெரிந்துகொள்ளுதல்.
**கேள்விப்பந்தர்** – பலர் கூடி நூல்கள் கேட்டற்குரிய இடமாக அமைந்த பந்தல்.
**கேள்விமுறை** – நியாய விசாரணை; கட்டுப்பாடு.
**கேள்வியாதல்** – கேள்வியால் தெரியவருதல்.
**கேள்விவரி** – அரசன் கட்டளைகளைப் பதியும் புத்தகம்.
**கேளல்கேளிர்** – பகையும் நட்புமில்லாத அயலார்.
**கேளலர்** – பகைவர்.
**கேளன்** – தோழன்.
**கேளா** – ஒருபயனுமின்றி.
**கேளார்** – பகைவர்; செவிடர்.
**கேளி** – மகளிர் விளையாட்டு; தென்னைவகை.
**கேளிக்கை** – மகளிர் நடனம்; விளையாட்டு.
**கேளிதம்** – பெரும் பாறைக்கல்.
**கேளிர்** – தோழர்; உறவினர்.
**கேளிவிலாசம்** – வேடிக்கை விநோதம்.
**கேனம்** – பைத்தியம்; பத்து உபநிடதத்துள் ஒன்று.
**கேனவாயன்** – பேதை.
**கேனன்** – பைத்தியக்காரன்.

**கை** – ஓர் உயிர்மெய்யெழுத்து (க்+ஐ); கரம்; யானைத்துதிக்கை; கதிர்; செங்கல் முதலிய வற்றை எண்ணும் ஓரளவு; அபிநயக்கை; பக்கம்; கட்சி; கைமரம்; இரயில் கைகாட்டி; சட்டையின் கை; கைப்பிடி; விசிறிக்காம்பு; சிறகு; படையுறுப்பு; சேனை; இடம்; கைப் பொருள்; செய்யத்தக்கது; ஒப்பனை; ஆற்றல்; கையளவு; ஆள்; சிறுமை; உலகவொழுக்கம்; ஒழுங்கு; தங்கை; தொழிற்பெயர் விகுதி; ஒரு தமிழ் முன்னொட்டு; குற்றம்.

**கைக்கட்டி** – கைக்கவசம்; அக்குள் புண்.

**கைக்கட்டு** – கைகளுக்குக் கட்டுப்போடுதல்; மகளிர் கையணிவகை.

**கைக்கடன்** – கைமாற்றுக்கடன்; கடப்பாடு.

**கைக்கடனாற்றல்** – உதவிபுரிதலாகிய வேளாண் மாந்தர் இயல்பு.

**கைக்கணிசம்** – கைமதிப்பு.

**கைக்கவசம்** – கையுறை.

**கைக்காணி** – காணிக்கை.

**கைக்காப்பு** – கையிலணியும் காப்பு.

**கைக்காறை** – ஒருவகைக் கையணி.

**கைக்கிளவன்** – காண்க: **கைக்கோளன்.**

**கைக்கிளை** – ஒருதலைக் காமம்; ஐந்து விருத்தச் செய்யுளால் ஒருதலைக் காமத்தைப்பற்றிக் கூறும் நூல்வகை; ஏழிசையில் மூன்றாவ தாகிய காந்தார சுரம்; மருட்பா.

**கைக்கிளைத் திணை** – கைக்கிளையைப்பற்றிக் கூறும் திணை.

**கைக்கீறல்** – தற்குறிக்கீற்று; கையெழுத்தின் குறிப்பு.

**கைக்குட்டை** – கையிற் பிடிக்கும் சிறு துணித் துண்டு.

**கைக்குடை** – சிறுகுடை.

**கைக்குத்து** – கைமுட்டியால் தாக்குகை.

**கைக்குதவுதல்** – சமயத்திற்கு உதவுதல்.

**கைக்குவருதல்** – கையிற் கிட்டுதல்.

**கைக்குழந்தை** – இடுக்குப்பிள்ளை, சிறு குழந்தை.

**கைக்குழவி** – சிறுகுழந்தை; சிறிய அம்மிக்குழவி.

**கைக்குற்றம்** – கைத்தவறு; சிறுபிழை.

**கைக்குறி** – வாழ்வின் போக்கினைக் குறிப்பாகக் கருதும் கைரேகை; கையளவு.

**கைக்குறிப்பு** – நினைவுக்குறிப்பு.

**கைக்கூட்டம்** – அணிவகுப்புக் கூட்டம்.

**கைக்கூட்டன்** – காவற்காரன்.

**கைக்கூலி** – நாட்கூலி; இலஞ்சம், பரிதானம்; கையிலே கொடுக்கும் விலைப்பொருள்; மணமகனுக்குப் பெண்வீட்டார் கொடுக்கும் தொகை.

**கைக்கொள்ளுதல்** – கையில் எடுத்துக்கொள்ளு தல்; பேணிக்கொள்ளுதல்; ஏற்றுக்கொள்ளு தல்; அங்கீகரித்தல்; பற்றுதல்; கவர்தல்; வளைந்துகொள்ளுதல்.

**கைக்கோளவன்** – காண்க: **கைக்கோளன்.**

**கைக்கோல்** – ஊன்றுகோல்; பற்றுக்கொடிறு.

**கைக்கோல் இளையர்** – கையில் தண்டம் பிடித்துக் காவல்தொழில் புரிவோர்.

**கைக்கோளப்படை** – சோழர் படையிலிருந்த காலாட்படையில் ஒரு பிரிவு, காண்க: **வேளைக்காரர்.**

**கைக்கோளன்** – செங்குந்தன், நெசவுத்தொழில் செய்யும் ஒரு சாதியான்.

**கைகட்டிநிற்றல்** – கைகளைக் கட்டிக்கொண்டு வணங்கி நிற்றல்.

**கைகட்டுதல்** – கையை மடக்கிக்கொண்டு வணக் கங் காட்டுதல்.

**கைகடத்தல்** – வசப்படாமல் மீறுதல்; கையை விட்டுப் போதல்; கைக்கு எட்டாமற்போதல், நீங்கல்.

**கைகண்ட** – அனுபவசித்தமான.

**கைகண்டயோகம்** – அனுபவசித்தமான மருந்து.

**கைகயன்** – கேகய நாட்டரசன்; கேகய நாட்டைச் சேர்ந்தவன்.

**கைகரத்தல்** – ஒளித்தல்.

**கைகலத்தல்** – நெருங்கிப் போரிடுதல்; கூடுதல்.

**கைகழிதல்** – எல்லை கடத்தல்.

**கைகழுவுதல்** – விட்டுவிடுதல்; பொறுப்பை நீக்கிக் கொள்ளுதல்; கையலம்புதல்.

**கைகாட்டு** – கைச்சைகை.

**கைகாட்டுதல்** – சைகை காட்டுதல், கையாற் குறிப்புக் காட்டல்; சிறிது அறம் செய்தல்; படையல் செய்தல்; கொடியசைத்து அடை யாளங் காட்டுதல்; இலஞ்சம் கொடுத்தல்.

**கைகாணுதல்** – அனுபவத்தில் அறிதல்; அத் தாட்சிப்படுதல்; நிறைவேறுதல்.

**கைகாய்த்துதல்** – எரியச்செய்தல்.

**கைகாரன்** – செல்வன்; திறமையுடையவன்; இராசியுள்ளவன்.

**கைகாவல்** – சமயத்தில் உதவுவது.

**கைகுவித்தல்** – கொம்மைகொட்டுதல்; கும்பிடல்; வணங்கல்.

**கைகூசுதல்** – அச்சத்தால் அல்லது வெட்கத்தால் பின்னடைதல்; கடும்பற்றுள்ளம் கொள்ளுதல்.

**கைகூடுதல்** – சித்தியாதல்; கிட்டுதல்.

**கைகூப்புதல்** – கைகூப்பி வணங்குதல்.

**கைகொட்டுதல்** – கொம்மைகொட்டுதல் கைகளைத் தட்டுதல்.

**கைகொடுத்தல்** – உதவிசெய்தல்; உடல்வலி யற்றவரைக் கைகொடுத்துத் தாங்குதல்; கைகுலுக்குதல்; கையடித்து உறுதிகூறுதல்.

**கைகோத்தல்** – தோளோடு தோள்பின்னுதல்; கைபிணைதல்; நட்புச்செய்தல்; சண்டை பிடித்தல்.

**கைகோத்தாடல்** – குரவையாடல்.

**கைகோலுதல்** – முயலுதல்; தொடங்குதல்; சங்கற்பித்தல்; கைகூப்புதல்.

**கைகோள்** – தலைவன் தலைவியரின் களவு கற்பு ஒழுக்கங்கள்.

**கைங்கரன்** – அடிமை.

**கைங்கரியம்** – பணிவிடை, தொண்டு.

**கைச்சட்டம்** – கூரையின் குறுக்குச்சட்டம்.

**கைச்சட்டை** – அரைச்சட்டை; கைக்கவசம்.

**கைச்சரக்கு** – கற்பனையாகக் கூறுஞ்சொல்.

**கைச்சரசம்** – இன்பவிளையாட்டு; கைச் சேட்டை.

**கைச்சரி** – மகளிர் கையணிவகை.

**கைச்சவளம்** – கையீட்டி.

**கைச்சாடு** – காண்க: **கைக்கவசம்**

**கைச்சாத்து** – கையெழுத்து; பொருட்பட்டி; ரசீது.

**கைச்சி** – கமுகு.

**கைச்சிமிட்டு** – இரகசியமாகக் கைகாட்டுங் குறிப்பு; கைலாவகம்.

**கைச்சிறை** – கைவசமானது.

**கைச்சீட்டு** – கையால் எழுதிய குறிப்புச்சீட்டு.

**கைச்சீப்பு** – தோட்பட்டை எலும்பு.

**கைச்சுத்தம்** – திருடாமை; இலஞ்சம் வாங்காமை; திருத்தமான கைத்தொழில்.

**கைச்சுரிகை** – உடைவாள்.

**கைச்சுருள்** – மணமக்களுக்குக் கொடுக்கும் வெற்றிலைச் சுருள்; மணமக்களுக்குத் தாம்பூலத்துடன் கொடுக்கும் பணம்.

**கைச்சுழிப்படுதல்** – சரியாக விதையாமையால் பயிர் ஓரிடத்துக் குவிந்து வளர்தல்.

**கைச்சூடு** – கையைத் தேய்த்தல் முதலியவற்றால் உண்டாகுஞ் சூடு; பொறுக்கக்கூடிய சூடு.

**கைச்செட்டு** – சிக்கனம்; சில்லறை வணிகம்.

**கைச்செலவு** – சொந்தச் செலவு; சில்லறைச் செலவு.

**கைச்சேட்டை** – கையால் செய்யும் குறும்புச் செயல்.

**கைசருவுதல்** – கைகலத்தல்; எதிர்த்தல்; திருடுதல்; பெண்களிடம் குறும்பு செய்தல்.

**கைசலி(ளை)த்தல்** – கைதளர்தல்; வறுமையுறுதல்.

**கைசிகம்** – ஒரு பண்வகை.

**கைசிகவிருத்தி** – காமம் பொருளாகக் காமுகராகிய மக்கள் தலைவராக வரும் நாடக நடை.

**கைசு** – காண்க: **க:சு.**

**கைசெய்தல்** – தொழிற்செய்தல்; அலங்கரித்தல்; உதவிசெய்தல்; நடத்துதல்; அறுவைச்சிகிச்சை செய்தல்.

**கைசோர்தல்** – காண்க: **கைசலி(ளை)த்தல்.**

**கைசோர்ந்துபோதல்** – கைவிட்டுப்போதல்; வறுமை நிலையை அடைதல்.

**கைஞ்ஞானம்** – சிற்றறிவு.

**கைடவை** – கொற்றவை, துர்க்கை.

**கைத்தடி** – ஊன்றுகோல்; சிறுதடி; பாகபத்திரம்; தற்குறிக் கீற்று.

**கைத்தண்டம்** – கையிழப்பு; ஊன்றுகோல்.

**கைத்தல்** – அலங்கரித்தல்; அலைத்தல்; கசத்தல்; நைந்து வருந்துதல்; சினத்தல்; செலுத்துதல்; ஊட்டுதல்.

**கைத்தலம்** – கை; உள்ளங்கை.

**கைத்தளம்** – ஒருவகைக் கேடயம்.

**கைத்தாங்கல்** – கையால் தாங்கிநிற்கை.

**கைத்தாய்** – வளர்ப்புத்தாய்.

**கைத்தாராளம்** – எதிர்நோக்காது உதவிசெய்தல்.

**கைத்தாள்** – திறவுகோல்; கையாலிடுந் தாழ்ப்பாள்; கோயில் விளக்குகளை ஏற்றப் பயன்படும் நீண்ட கைவிளக்கு.

**கைத்தாளம்** – தாளக்கருவி; சிறுதாளம்; கையால் போடுந் தாளம்.

**கைத்திட்டம்** – கைமதிப்பு; முடிவான கையிருப்புத் தொகை.

**கைத்திரி** – இடக்கையென்னுந் தோற்கருவி.

**கைத்தீட்டு** – ஆவணம், பத்திரம்.

**கைத்தீபம், கைத்தீவட்டி, கைத்தீவர்த்தி** – கைவிளக்கு, கையிற் பிடிக்குந் தீவட்டி, சிறு தீவட்டி.

**கைத்து** – கையிலுள்ள பொருள்; பொன்; செல்வம்; வெறுப்பு.

**கைத்துடுக்கு** – கையால் அடித்தல் முதலியன செய்யுந் தீய இயல்பு.

**கைத்துடுப்பு** – கூழ் முதலியன துழாவுங் கருவி; படகு தள்ளும் சிறிய தண்டு.

**கைத்துப்பாக்கி** – சிறு துப்பாக்கி.

**கைத்தூக்கு** – கையினால் எடுக்கக்கூடிய ஒரு தூக்களவு; கைகொடுத்து உதவல்.

**கைத்தூண்** – பிறர் கையால் உண்கை; சிறு தூண்.

**கைத்தொண்டு** – கோயிற் பணிவிடை; குற்றேவற் பணி.

**கைத்தொழில்** – கைவேலை; எழுதுதல் முதலியனவாகக் கைத்திறங்காட்டுந் தொழில்.

**கைதகம்** – தாழம்பூ.

**கைதட்டிப்பண்டாரம்** – வாய் திறவாது கைதட்டிப் பிச்சை வாங்கும் சைவ பண்டாரம்.

**கைதட்டுதல்** – நகைப்பு, வெறுப்பு, வியப்பு முதலியவற்றின் குறியாகக் கைகொட்டுதல்; கையடித்தல்; கைதப்புதல்; பூப்பெய்துதல்.

**கைதப்புதல்** – கைதவறிப்போதல்; இலக்குத் தவறுதல்.

**கைதரல், கைதருதல்** – உதவிசெய்தல்; உறுதிசெய்தல்; மணம்புரிதல்; மிகுதல்; கைகூடுதல்.

**கைதல்** – தாழை.

**கைதலைவைத்தல்** – பெருந்துன்பமடைதல்.

**கைதவம்** – கபடம்; துன்பம்; பொய்.

**கைதவறுதல்** – கைப்பிழையாதல்; தொலைந்து போதல்; கைதப்புதல்; இறத்தல்.

**கைதவன்** – பாண்டியன்; வஞ்சகன்.

**கைதழுவுதல்** – கைகோத்தல்.

**கைதளர்தல்** – சோர்தல்; வறுமையுறுதல்.

**கைதாங்குதல்** – உடல்வலியற்றவருக்குக் கைகொடுத்து உதவுதல்; அழிவெய்தாமற் காத்தல்.

**கைதி** – சிறைப்பட்ட குற்றவாளி.

**கைதிட்டம்** – திருந்திய அலங்காரம்; கைமதிப்பு; அறுதியிட்ட கையிருப்புத் தொகை.

**கைது** – சிறைக்காவல்.

**கைதுசெய்தல்** – சிறைப்படுத்துதல்.

**கைதுடைத்தல்** – விட்டொழிதல்.

**கைதூக்கிவிடுதல்** – வறுமையால் வருந்துவோர், நீரில் அழுந்துவோர் முதலியோரைக் காத்தல்; கூட்ட நடுவில் கையைப் பிடித்து வெளியே இழுத்துவிடுதல்.

**கைதூக்குதல்** – வறுமையால் வருந்துவோர், நீரில் அழுந்துவோர் முதலியோரைக் காத்தல்; உடன்பட்டதற்குக் குறியாகக் கையை உயர்த்துதல்.

**கைதூவல்** – கையொழிதல்.

**கைதூவாமை** – கையொழியாமை.

**கைதூவு** – செயலற்றிருக்கை.

**கைதூவுதல்** – கைவேலை நீங்குதல்; செயலற்றிருத்தல்.

**கைதேர்தல்** – திறமையடைதல்.

**கைதை** – தாழை.

**கைதைச்சுரிகையன்** – தாழையை வாளாக உடைய மன்மதன்.

**கைதொடல்** – உண்ணுதல்; உணவு; கலியாணம்.

**கைதொடன்** – உதவிசெய்வோன்; புத்தி பூர்வமாக ஒன்றைச் செய்வோன்.

**கைதொடுத்தல்** – திருமணஞ் செய்துவைத்தல்.

**கைதொடுதல்** – பரிசித்தல்; சூளுரைத்தல்; உண்ணுதல்; தொடங்குதல்: மணஞ்செய்தல்.

**கைதொடுமானம்** – உதவி.

**கைதொழுதல்** – கையினாற் கும்பிடல், வணங்குதல்; கும்பிடுவதற்காகக் கையைத் தலைமேல் உயர்த்துதல்.

**கைதோய்வு** – கையால் எட்டிப்பிடிக்கும் நிலை.

**கைந்தலை** – கைம்பெண்.

**கைந்நவிலாளர்** – கையால் தொழில் செய்யப் பழகியவர்.

**கைந்நாகம்** – யானை.

**கைந்நிதானம்** – கையால் எடை முதலியவற்றை மதிப்பிடுகை.

**கைந்நிறுத்துதல்** – நிலைநிறுத்துதல்; அடக்குதல்.

**கைந்நீட்டு** – கைப்பிடி; கையை நீட்டுகை.

**கைந்நீவுதல்** – அவமதித்துக் கடத்தல்.

**கைந்நூல்** – கையிற் கட்டும் காப்புநாண்.

**கைந்நொடி** – கையை நொடிக்கும் நேரவளவு.

**கைந்நொடித்தல்** – விரலை நொடித்தல், விரலைச் சொடுக்கி ஒலியுண்டாக்குதல்.

**கைநடுக்கம்** – மூப்பு, அச்சம் முதலியவற்றால் கைநடுங்குகை.

**கைநனைத்தல்** – பிறர் வீட்டில் உணவு கொள்ளுதல்.

**கைநாட்டு** – படியாதவர்கள் கையெழுத்துக்குப் பதிலாக இடும் கைக்கீறல், தற்குறிக் கீறல்; கையெழுத்து.

**கைநாட்டுதல்** – கையெழுத்திடுதல்.

**கைநிரை** – நிரைச்சல்.

**கைநிலை** – வீரர்கள் தங்குவதற்குப் பாசறையில் தனித்தனியே அமைக்கப்பட்ட குடிசை.

**கைநிறை** – கையால் தூக்கி மதிக்கும் எடை.

**கைநீட்டுதல்** – இரத்தல்; திருடுதல்; அடிக்கக் கையோங்குதல்; இழவு விசாரித்தல்.

**கைநீளம்** – தாராளம்; திருடுங்குணம்; அடிக்குங் குணம்.

**கைநுணுக்கம்** – அழகான வேலைப்பாடு; இவறல்.

**கைநெகிழ்தல்** – கைதவறவிடுதல்.

**கைநெரித்தல்** – துக்கம், அச்சம் முதலியவற்றால் கையை நெரித்தல்.

**கைநெல்லி** – உள்ளங்கை நெல்லிக்கனி.

**கைநொடித்தல்** – கைவிரலால் ஒலி உண்டாக்குதல்; செல்வநிலைமை கெடுதல்.

**கைநோட்டம்** – கையினாற் குறிப்பிக்குஞ் சாடை; கைவேலைத்திறம்; கையால் கணிக்கும் மதிப்பு.

**கைப்பக்கம்** – அருகில்.

**கைப்பகர்ப்பு** – அனுமதியின்றிப் பெற்றுக் கொண்டபடி.

**கைப்பட்டை** – தோட்பட்டை; கைப்பலகை; கைமரம் தாங்கும் சட்டம்; நீர் முகக்குஞ் சிறு பட்டை.

**கைப்பட** – சொந்தக் கையெழுத்தாக.
**கைப்படுத்தல்** – கைப்பற்றுதல்; தெளிதல்.
**கைப்படுதல்** – கைவசமாதல்; பார்த்தல்.
**கைப்படை** – ஆயுதம்; மணியாசுப் பலகை.
**கைப்பண்டம்** – கையிலுள்ள பொருள்.
**கைப்பணம்** – கையிலுள்ள தொகை; சொந்தப் பணம்; வாணிகத்தில் கடனின்றிக் கைமேல் கொடுக்கும் பணம்; ரொக்கப்பணம்; மூல தனம்.
**கைப்பணி** – மணியாசுப் பலகை; குற்றேவல்.
**கைப்பதற்றம்** – அவசரத்தில் கைபதறுகை; திருடுங்குணம்.
**கைப்பந்தம்** – கைத்தீவட்டி.
**கைப்பரிசு** – சிறு தெப்பம்; இலஞ்சம்.
**கைப்பழக்கம்** – கைப்பயிற்சி.
**கைப்பள்ளம்** – உள்ளங்கைக் குழி.
**கைப்பற்று** – கைத்தாங்கல்; கையில் பெற்றுக் கொண்ட தொகை; சாதனம்; உரிமை மானியம்.
**கைப்பற்றுதல்** – கையிற் கொள்ளுதல்; கவர்தல்; மணம்புரிதல்.
**கைப்பற்றுநிலம்** – நீண்டகாலம் அனுபவத்தி லிருக்கும் நிலம்.
**கைப்பாகம்** – செய்பாகம்; பதமறிந்து மருந்து முதலியன பக்குவஞ் செய்யும் திறம்.
**கைப்பாடு** – கைவேலை; கைவசம்; கையிழப்பு.
**கைப்பாடுபடுதல்** – அரும்பாடுபட்டு உழைத்தல்.
**கைப்பாணி** – மணியாசனப் பலகை; முடவன் தவழ்வதற்குக் கொள்ளும் கைப்பிடி.
**கைப்பிசகு** – கைக்குற்றம், கைத்தவறு; சிறுபிழை.
**கைப்பிடி** – கையாற் பிடிக்கை; பிடியளவு; ஆயுதப் பிடி; படிக்கட்டுகளில் பக்கத்தில் பிடித்துச் செல்ல உதவும் சுவர்ச்சட்டம் முதலியன; திருமணம்.
**கைப்பிடிச்சுவர்** – படிக்கட்டு முதலியவற்றின் பக்கங்களிற் கையாற் பிடித்துக்கொண்டு செல்லுமாறு அமைக்கப்பட்ட சுவர்.
**கைப்பிடித்தல்** – உறுதியாகக் கொள்ளுதல்; மணஞ்செய்தல்.
**கைப்பிடியாய்ப்பிடித்தல்** – கையும் களவுமாய்ப் பிடித்தல்.
**கைப்பிடிவாள்** – கைவாள், கைரம்பம்.
**கைப்பிள்ளை** – கைக்குழந்தை.
**கைப்பு** – கசப்பு, அறுசுவையுள் ஒன்று; ஆடு தின்னாப்பாளை; கைப்பான பொருள்; வெறுப்பு; குடிவெறி.
**கைப்புட்டில்** – கைவிரலுறை.
**கைப்புடை** – விரலுறை; வாயிற்காவலர் தங்கு மிடம்; அருகு.
**கைப்புண்ணியம்** – கைராசி; தயாளம்.
**கைப்புலி** – கையையுடைய புலி, யானை.
**கைப்பூட்டு** – மல்லரின் கைப்பிடிவகை; தோட் பொருத்து.
**கைப்பெட்டி** – சிறு பெட்டி.
**கைப்பொருள்** – கையிலுள்ள பொருள்.
**கைப்பொல்லம்** – சிறு துண்டு.
**கைப்பொறுப்பாய்** – அக்கறையாய்.
**கைப்பொறுப்பு** – வாணிகம் முதலியவற்றில் செலவு நட்டங்கள் தன் பொறுப்பு ஆகுகை; இழப்பு.
**கைபடிதல்** – தொழிலிற் கைதிருந்துதல்.
**கைபதறுதல்** – அவசரப்படுதல்; கைந்நடுங்குதல்.
**கைபரிதல்** – ஒழுங்குகுலைதல்.
**கைபரிமாறுதல்** – தூய்மை கெடும்படி தொடுதல்; கற்பையழித்தல்; கவர்தல்; அடிபிடி சண்டை யிடுதல்.
**கைபறிதல்** – கைதவறுதல்.
**கைபார்த்தல்** – கைத்தாதுவை அறிதல்; கைக்குறி பார்த்தல்; நாடி பார்த்தல்; உதவி நாடுதல்; பழுதுபார்த்தல்; வாணிகப் பொருள்களைச் சோதித்தல்.
**கைபிசைதல்** – செய்வதறியாது திகைத்தல்.
**கைபிடி** – உறுதி; கையிற் பெற்றுக்கொண்ட பொருள்.
**கைபிடித்தல்** – கைக்கொள்ளுதல்; மணம்புரிதல்.
**கைபுகுதல்** – வசப்படுதல்; ஒருவன் பேரிலிருந்த பத்திரம் பிறன் ஒருவனுக்கு மாறுதல்.
**கைபுடைத்தல்** – கைதட்டுதல்.
**கைபுனை** – அலங்கரிக்கை; பூத்தொடுக்கை.
**கைபுனைதல்** – அலங்கரித்தல்; அழகுசெய்தல்; பூத்தொடுத்தல்.
**கைபூசுதல்** – உண்ட கையைக் கழுவுதல்.
**கைபோடுதல்** – வாக்குக்கொடுத்தல்; தொழி லேற்கத் தொடங்குதல்; பிறர் அறியாமல் கைகளை ஆடைக்குள் மறைத்துக்கொண்டு கைக்குறிப்பால் விலை பேசுதல்; காமவிச்சை யோடு தொடுதல்.
**கைபோதல்** – முற்றும் வல்லவனாதல்; கடந்து செல்லுதல்.
**கைம்பெண்** – கணவனை இழந்தவள்.
**கைம்பெண்கூறு** – ஆண்வழி இல்லாத கைம் பெண்ணுக்குக் குடும்பச் சொத்திலிருந்து கொடுக்கும் வாழ்க்கைப் பொருள்.
**கைம்பெண்டாட்டி** – காண்க: **கைம்பெண்.**
**கைம்மகவு** – காண்க: **கைக்குழந்தை.**
**கைம்மடல்** – தோட்பட்டை.
**கைம்மணி** – பூசையில் கையாலசைக்குஞ் சிறு மணி; கைத்தாளம்.

**கைம்மதம்** – யானையின் துதிக்கையினின்று வெளியேறும் மதநீர்.

**கைம்மயக்கம், கைம்மயக்கு** – மோகமயக்கம்.

**கைம்மரம்** – வீட்டின் பாய்ச்சுமரம்.

**கைம்மருந்து** – கையிலுள்ள வசிய மருந்து; அனுபவ மருந்து; கணவனைத் தன்வசமாக்கப் பெண்டிர் பயன்படுத்தும் மருந்து.

**கைம்மலை** – யானை.

**கைம்மறதி** – நினைவுத் தவறு; கைப்பிழை.

**கைம்மறித்தல்** – கையால் தடுத்தல்; கைகவித்து விலக்குதல்.

**கைம்மா** – கையை உடைய விலங்கு, யானை.

**கைம்மாறு** – மறு, பிரதி; பதிலுதவி.

**கைம்மாறுதல்** – மேற்கொள்ளுதல்; விற்றல்.

**கைம்மான்** – காண்க: **கைம்மா.**

**கைம்மிகுதல்** – அளவுகடத்தல்; சாதி அறத்திற்கு மாறுபட்டு ஒழுகுதல்; அதிகப்படல்.

**கைம்மீறுதல்** – அளவுக்கு மிஞ்சுதல்.

**கைம்மீன்** – அத்தநாள்.

**கைம்முகிழ்த்தல்** – கடவுள் வழிபாடு, வணக்கம் முதலியவற்றில் கையைக் கூப்புதல்.

**கைம்முதல்** – வாணிகத்திற்கு வைத்த முதற் பொருள்; பொருள்; சாதனம்.

**கைம்முற்றுதல்** – முடிவுபெறுதல்.

**கைம்மேலே** – உடனே.

**கைம்மேற்பணம்** – உடனே கொடுக்கும் பணம்.

**கைம்மை** – காதலனைப் பிரிந்திருக்கும் தன்மை, கணவனை இழந்த நிலைமை; கைம்பெண்; சிறுமை; அறிவின்மை; பொய்.

**கைம்மைபெற்றோன்** – கைம்பெண்ணுக்குப் பிறந்தவன்.

**கைம்மைவினை** – கையால் வேலை செய்யுந்திறம்.

**கைமகவு** – காண்க: **கைம்மகவு.**

**கைமட்டம்** – கைமதிப்பு; கையனுபவம்; கொத்தன் மட்டம் பார்க்கும் கருவி; பூமி மட்டத்திலிருந்து தாழவிட்ட கைவரையிலுள்ள உயரம்.

**கைமட்டு, கைமதிப்பு** – கையால் தூக்கி மதிக்கும் மதிப்பு; உத்தேச மதிப்பு.

**கைமயக்கு** – வசிய மருந்து.

**கைமரம்** – வீட்டுக் கூரையின் கை.

**கைமலிவு** – விலைநயம்.

**கைமறித்தல்** – காண்க: **கைம்மறித்தல்.**

**கைமறிதல்** – கைமாறுதல்.

**கைமாட்டாதார்** – வேலை செய்ய இயலாதார்.

**கைமாட்டிக்கொள்ளுதல்** – அகப்பட்டுக்கொள்ளுதல்.

**கைமாற்று** – கைக்கடன்; கையை மாற்றி நீந்தும் நீச்சல்; பரிவர்த்தனை; விற்பனை.

**கைமாற்றுதல்** – ஆளை வேலையினின்று முறை மாற்றுதல்; பரிவர்த்தனை செய்தல்; விற்றல்.

**கைமாறாட்டம்** – கைத்தவறு; கைவன்மையாற் செய்யும் ஏமாற்றம்.

**கைமாறுதல்** – ஒருவர் கையில் இருந்து வேறு ஒருவர் கைக்குச் செல்லுதல்; விற்றல்; வேலையாள்கள் முறை மாறுதல்; ஒழுக்கத்தைக் கைவிடுதல்; கட்சிமாறுதல்; பண்டமாற்றுதல்.

**கைமிஞ்சுதல்** – வரம்பு மீறுதல்; பிறரோடு சண்டை செய்ய முற்படுதல்.

**கைமுட்டி** – விரல் மடக்கியுள்ள கை; முட்டியுத்தம்.

**கைமுடக்கம்** – பணமுட்டுப்பாடு; செய்கைக்குக் கை பயன்படாமை.

**கைமுடிப்பு** – கைப்பொருள்; கட்டுச்சோறு.

**கைமுடை** – கைமுடக்கம்; பணமுட்டுப்பாடு.

**கைமுதல்** – காண்க: **கைம்முதல்.**

**கைமுதிர்தல்** – இளமைப்பருவம் நிரம்புதல்.

**கைமுந்துதல்** – கைமிஞ்சுதல்; திருடுதல்.

**கைமுளி** – மணிக்கட்டிலுள்ள எலும்பு.

**கைமுறி** – ஓலைத்துண்டு, ஓலைச்சீட்டு.

**கைமுறை** – கைமாற்றுமுறை; அனுபவம்; நாட்டியம்.

**கைமூட்டு** – தோட்பொருத்து.

**கைமூலம்** – கமுக்கட்டு; கைராசி; கன்றிழந்த பசு.

**கைமெய்யாய்** – கையுங்களவுமாய்.

**கைமேலே** – காண்க: **கைம்மேலே.**

**கைமேற்பணம்** – காண்க: **கைம்மேற்பணம்.**

**கையகப்படுத்துதல்** – சிக்கப்பண்ணுதல்; தன் வசப்படுத்துதல்; காட்டிக்கொடுத்தல்.

**கையகலுதல்** – விட்டுநீங்குதல்.

**கையடக்கம்** – கைக்குள் அடங்குகை; கைக்குள் அடங்கிய பொருள்; சேமித்து வைக்கப்பட்ட பொருள்; ஒளித்துவைக்கப்பட்ட பொருள்.

**கையடித்தல்** – கையடித்து உறுதிதருதல்; விலைக்கு விற்றல்; கைவேலை செய்தல்.

**கையடிப்படுதல்** – ஒரு பொருள் பல கைகளில் கடந்துசெல்லுதல்.

**கையடுத்தல்** – கையடைத்தல்; அடைக்கலம் புகுதல்.

**கையடுப்பு** – கையால் எடுத்துச்செல்லத்தகும் சிற்றடுப்பு.

**கையடை** – பிறர் கையில் ஒப்புவிக்கை; பாதுகாக்குமாறு ஒப்படைத்த பொருள்; அடைக்கலப் பொருள்; இலஞ்சம்.

**கையடைத்தல்** – பிறர் கையில் ஒப்புவித்தல்; கடனைத் தீர்த்தல்.

**கையடைப்பு** – கைவசமான பொருள்.

**கையமர்த்துதல்** – கைகாட்டி அடங்கச் செய்தல்; கையால் சைகைகாட்டி உட்காரச் செய்தல்; அடக்கியாளுதல்.

**கையமர்தல்** – கையமைத்தருளல்.

**கையமைத்தல்** – காண்க: **கையமர்த்துதல்.**

**கையயர்தல்** – நிலைமை தாழ்தல்; சோர்வடைதல்.

**கையர்** – கீழ்மக்கள்; கள்ளர்; வஞ்சகர்; மூடர்.

**கையரி** – தேடுதல்.

**கையரிக்கொள்ளுதல், கையரித்தல்** – தேடுதல்; வாரி அரித்துக் கொள்ளுதல்; சேர்த்துக்கொள்ளுதல்.

**கையரியம்** – இரும்பு.

**கையல்லது** – தகாதது.

**கையலகு** – கைமரம்.

**கையலுத்தல்** – நிலைமை தாழ்தல்; சோர்வடைதல்.

**கையலைத்தல்** – துன்புறுத்துதல்.

**கையளித்தல்** – அடைக்கலம் புகுதல்; ஒப்படைத்தல்.

**கையறம்** – இரங்கற்பா; வசைக்கவி.

**கையறல்(வு)** – செயலறுதல், செயலற்ற நிலை; இறப்பு; துன்பம்; ஊடல்; வறுமை; ஒழுக்கமின்மை.

**கையறிதல்** – பழக்கமாதல்; செய்யுமுறைமை அறிதல்.

**கையறுத்துக்கொள்ளுதல்** – பொருள் இழத்தல்.

**கையறுதல்** – செயலொழிதல்; மனமழிதல்; அளவுகடத்தல்; மீட்சி அரிதாதல்; இறத்தல்; ஒழுக்கம் நீங்குதல்.

**கையறுதி** – அறுதியாக விற்றல்; கையுறுதி; கையடித்து விலை உறுதிசெய்கை; முற்றும் கைவிட்டு நீக்குகை.

**கையறுநிலை** – வாட்போரில் இறந்த வேந்தனைப் பார்த்து யாழ்ப்பாணருஞ் சுற்றத்தாரும் அவன் பட்ட பாட்டைச் சொல்லி இரங்குதல்; தலைவனேனும் தலைவியேனும் இறந்தமைக்கு அவர் சுற்றத்தார் முதலானோர் செயலற்று மிக வருந்தியமை கூறும் புறத்துறை; கையறுநிலைபற்றிய நூல்வகை.

**கையறை** – செயலின்மை; ஒழுக்கமின்மை; சிறிய சரக்கறை; கண்ணி வாய்க்கால்.

**கையன்** – கயவன்; கீழ்மகன்.

**கையாட்சி** – கைப்பழக்கம்; தொழில்; ஒருவன் வசமானது; அனுபவத்தால் நன்மையெனத் தெளிந்தது.

**கையாடல்** – நம்பிக்கைக்கு மாறாகப் பிறர் பொருளைக் கவர்தல்.

**கையாடுதல்** – கவர்தல்.

**கையாந்தகரை** – கரிசலாங்கண்ணிப் பூண்டு.

**கையாலாகாதவன்** – எவ்வேலையும் செய்யத் திறமையற்றவன்.

**கையாலாதல்** – செய்யும் ஆற்றல் பெறுதல்.

**கையாள்** – குற்றேவல் செய்வோன்; உதவி செய்வோன்.

**கையாளுதல்** – கையாலெடுத்து ஆளுதல்; வழக்கத்துக்குக் கொண்டுவருதல்; பறித்தல்; கற்பழித்தல்.

**கையாளி** – திறமையுடையவன்; கொடியவன், தீயன்; பாசாங்கு செய்வோன்.

**கையாற்றுதல்** – உதவி செய்து இளைப்பாறச் செய்தல்.

**கையாறு** – செயலொழிதல்; ஒழுக்கநெறி; துன்பம்.

**கையாறுதல்** – இளைப்பாறுதல்.

**கையான்** – கையாந்தகரைப்பூடு.

**கையிகத்தல்** – அளவுக்கு மேற்படுதல்; மீறுதல்; ஒழுங்கு தப்புதல்; கடத்தல்.

**கையிசைதல்** – மனம் இணங்குதல்.

**கையிடுதல்** – கையைத் தோய்த்தல்; தலையிட்டுக் கொள்ளுதல்; ஒரு தொழிலில் வேண்டாது தலையிடுதல்.

**கையிணக்கம்** – பொருத்தம்; கையடக்கம்; கைகலந்து சண்டையிடுகை; வைப்பாட்டி வைக்கை.

**கையிருப்பு** – கையிலுள்ள பணம்; இருப்புத் திட்டம்; செங்குவளை.

**கையில்** – தேங்காய்ப் பாதி.

**கையிலாகாதவன்** – காண்க: **கையாலாகாதவன்.**

**கையிலாதம்** – கைலாசம்.

**கையிழத்தல்** – காணாமற்போதல்.

**கையிளகுதல்** – கைப்பிடிப்பு நெகிழ்தல்; தாராளமாதல்.

**கையிளைத்தல்** – கைசலித்தல்; செல்வநிலை குன்றுதல்.

**கையிறக்கம்** – சீட்டு விளையாட்டில் முதலில் சீட்டை இறக்குதல்; செல்வம் முதலியவற்றின் நிலைகுன்றுகை.

**கையிறுக்கம்** – சிக்கனம்; ஈயாத்தன்மை.

**கையிறை** – கைரேகை; கைவிரலின் இடுக்கு.

**கையுங்களவுமாய்** – கையும் களவுப் பொருளுமாய்.

**கையுடன்** – காண்க: **கையோடு.**

**கையுடை** – கைக்கவசம்.

**கையுண்ணுதல்** – பிறர் கையை எதிர்பார்த்து உண்டு வாழ்தல்.

**கையுதவி** – சமயத்தில் செய்யும் உதவி; துணையான உணவுப்பொருள்; சிற்றுதவி; இலஞ்சம்.

**கையுதிர்க்கோடல்** – விட்டு விலகுமாறு கையசைத்துக் குறிப்பிடுதல்.

**கையுபகாரம்** – கையுதவி.

**கையுயர்த்துதல்** – கையோங்குதல்; கைதூக்குதல்; கையெடுத்தல்.

**கையுயர்தல்** – கையோங்குதல்; அடித்தல்; மேன்மைப்படுதல்.

**கையுறுதல்** – கையிற் கிடைத்தல், அகப்படல்; தொடுதல்.

**கையுறுதி** – கடனுக்கு வைக்கப்படும் ஈடு; கையடித்து விலையுறுதி செய்கை.

**கையுறை** – காணிக்கைப் பொருள்; மொய்ப் பணம்; தலைவிக்கு அன்பு பாராட்டித் தலைவன் கொடுக்கும் தழை முதலிய நன் கொடை; இலஞ்சம்; கைக்கவசம்.

**கையுறையெழுதுதல்** – திருமணம் முதலியவற்றில் மொய்க்கணக்கு எழுதுதல்.

**கையூட்டு** – இலஞ்சம்.

**கையூழ்** – இசைக்கரணம் எட்டனுள் ஒன்று, வண்ணத்திற் செய்த பாடலெல்லாம் இன்பமாக யாழிற் பாடுகை.

**கையெடுத்தல்** – கும்பிடல்; இரத்தல்; கையுயர்த்தித் தம் கருத்தை உணர்த்துதல்.

**கையெடுப்பு** – கையையுயர்த்தி நிற்கும் ஒருவனது உயரத்தினளவு.

**கையெழுத்து** – கையாலெழுதுதல்; கையொப்பம்; உடன்படிக்கை; கைரேகை.

**கையெழுத்துப் பிரதி** – கையால் எழுதிய நூற்படி.

**கையெழுத்துப் போடுதல்** – கையொப்பமிடுதல்.

**கையெறிதல்** – கைகொட்டுதல்; உறுதிகூறிக் கையடித்தல்; கோபத்தாற் கைவீசுதல்.

**கையேடு** – நாட்குறிப்புக் கணக்கு; சிறிய ஏட்டுப் புத்தகம்; பெருஞ் செலவுவிவரக் கணக்குப் புத்தகம்.

**கையேந்தி** – இரவலன், பிச்சைக்காரன்.

**கையேந்துதல்** – இரந்து வாங்குதல், யாசித்தல்.

**கையேற்பு** – பெறுகை; யாசிக்கை; களப்பிச்சை வாங்குகை; ஒரு தொழிலை ஏற்றுக்கொள்கை.

**கையேற்றம்** – செல்வப்பெருக்கான நிலை.

**கையேறல்** – நடுத்தரமான முத்து.

**கையேறுதல்** – கையிற் கிடைத்தல்; கைமாறுதல்.

**கையை** – தங்கை.

**கையைக்கடித்தல்** – எதிர்பார்த்ததற்குமேல் செலவாதல்; இழப்பாதல்.

**கையைக் குறுக்குதல்** – செலவைக் குறைத்தல்; உலோபஞ் செய்தல்.

**கையைப்பிடித்தல்** – திருமணஞ் செய்தல்; காண்க: **கையைக்கடித்தல்**; கையைப் பிடித்து இழுத்தல்.

**கையொட்டுக்கால்** – கருப்பூரவகை.

**கையொத்துதல்** – வணக்கம் செய்தல், அஞ்சலி செய்தல்.

**கையொப்பம்** – கையெழுத்து; கீறற் கையெழுத்து; கையெழுத்துச் செய்யப்பட்ட தொகை.

**கையொலி, கையொலியல்** – தெய்வத் திருமேனிகளுக்குச் சாத்தும் சிறிய ஆடை.

**கையொழிதல்** – கைதூவுதல்; கைவேலை நீங்குதல்.

**கையொழியாமை** – முயற்சி நீங்காமை; நேரமின்மை.

**கையொறுப்பு** – சிக்கனச் செலவு; இச்சையடக்குகை.

**கையோங்குதல்** – செழித்தோங்குதல்; மேன்மைப் படுதல்; அடித்தல்.

**கையோட்டம்** – செல்வநிலைமை; எழுதுதல் முதலிய வேலைகளிற் கைவிரைவு.

**கையோடு** – உடன்; பிடித்த பிடியோடு; சித்தமாய்; தாமதமின்றி.

**கையோடுகையாய்** – செயலோடு செயலாய்; தாமதமின்றி.

**கையோடுதல்** – வேகமாக எழுதுதல்; ஒரு தொழிலின் மனஞ் செல்லுதல்.

**கையோடே** – கைவிடாமல்; உடனே.

**கையோலை** – ஓலைத்துண்டு, ஓலைச்சீட்டு; கையுறுதி.

**கையோலைசெய்தல்** – தீர்மானித்தல்.

**கைரவம்** – குமுதம், வெள்ளாம்பல்.

**கைரவி** – நிலவு; காந்திப்பூ; வெந்தயம்.

**கைராசி** – கைபடுவதனால் உண்டாவதாகக் கருதும் நன்மை.

**கைராட்டு** – கையால் நூல் நூற்கும் பொறி, இராட்டை.

**கைரிகம்** – காவிக்கல்; பொன்; பொன்னூமத்தை.

**கைரேகை** – கையில் அமைந்திருக்கும் கோடு.

**கைலாகு** – கைத்தாங்கல்.

**கைலாகு கொடுத்தல்** – அரசர் முதலியோர் நடக்கும்பொழுது மரியாதையாக அவர் கைகளைத் தாங்குதல்; உடல் வலியற்றவரைக் கைகொடுத்துத் தாங்குதல்.

**கைலாகை** – கைகொடுத்தல்.

**கைலாசநாதன், கைலாசபதி** – கைலாயத்து இறைவனான சிவன்.

**கைலாச(ய)ம்** – எண்குல பர்வதங்களுள் ஒன்றும் சிவபிரான் வாழ்விடமுமான ஒரு மலை.

**கைலி** – கையொலி; ஓர் ஆடைவகை.

**கைலேசு** – கைக்குட்டை.

**கைலை** – கயிலைமலை.

**கைவசம்** – தன்னிடம் உள்ளவை; கைக்குட்படல்.

**கைவட்டணை** – கையாற் செய்யும் அபிநயம்.

**கைவட்டி** – சிறிய ஓலைப்பெட்டி.

**கைவண்டி** – கையால் இழுக்கும் வண்டி.

**கைவந்தவன்** – தொழிலிற் பழகித் தேர்ச்சியடைந்தவன்.

**கைவந்தி** – தோளின்கீழாகக் கையில் அணியும் ஓர் அணி.

**கைவரிசை** – திறமை; கொடை; சீட்டாட்டத்தில் முதலில் சீட்டை இறக்கும் உரிமை.

**கைவருதல்** – கைகூடுதல்; ஒருங்கே நிகழ்தல்; தேர்ச்சி பெறுதல்; பழக்கம்; ஒன்றைச் செய்யக் கையெழுதல்.

**கைவரை** – காண்க: **கைரேகை.**

**கைவல்யம்** – காண்க: **கைவல்லியம்.**

**கைவல்லபம்** – தோள்வலிமை; தொழில் செய்கைத்திறம்.

**கைவல்லியம்** – ஒருமைத் தன்மை; தனிமை; வீடுபேறு; கைகூடுகை; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.

**கைவலச்செல்வன்** – அருகன்.

**கைவலம்** – வீடுபேறு.

**கைவலிதல்** – கைகடந்துபோதல்.

**கைவலை** – சிறுவலை.

**கைவழக்கம்** – கொடைக்குணம்; கோயிலில் பூசகர் முதலியோர்க்கு உரிய உரிமை; தொழிலின் திறமை; ஈமக்கடன் ஆற்றிய பின்பு குடிமக்கள் ஐவர்க்கும் கொடுக்கும் பணம் முதலியன.

**கைவழங்குதல்** – கொடுத்தல்; கையடித்து உறுதி கூறுதல்.

**கைவழி** – யாழ்; கைவசமாக அனுப்பிய பொருள்; ஒற்றையடிப்பாதை; சிறு கிளையாறு.

**கைவளம்** – கைராசி; கைப்பொருள்; செழுமை; கைத்தொழிலின் திறம்.

**கைவளர்தல்** – போற்றப்பட்டு வளர்தல்; பழக்கமுறுதல்.

**கைவளை** – கைத்தொடி; கடகம்; சிறுவளை; மேற்கூரையைத் தாங்குமாறு சுவர் முதலியவற்றில் அமைக்குஞ் சட்டம்.

**கைவற்றுதல், கைவறளுதல்** – பொருளின்றி நிலைமை தாழ்தல்; கையிற் பொருளறுதல்.

**கைவன்மை** – கைத்திறம்.

**கைவாக்கு, கைவாகு** – கைராசி; கையால் ஆளுதற்குரிய நிலை.

**கைவாங்குதல்** – நீங்குதல்; கையை வெட்டுதல்.

**கைவாசி** – காண்க: **கைராசி.**

**கைவாய்க்கால்** – சிறு கால்வாய்.

**கைவாரம்** – கைதூக்கிக் கூறும் வாழ்த்து; செய்கைப்பங்கு, கூலி; வயிரம் முதலியவற்றின் முனை; சரிவாரம்.

**கைவாரிகள்** – நின்றேத்துவோர், அரசவையில் வாழ்த்துக் கூறுவோர்.

**கைவாள்** – சிறுவாள், கைரம்பம்.

**கைவாளம், கைவாளை** – அடைப்பை.

**கைவாறு** – கைத்தாங்கல்; தக்க சமயம்.

**கைவிசேடம்** – கைராசி; பரிசு.

**கைவிஞ்சுதல்** – அளவுகடத்தல்.

**கைவிட்டம்** – வீட்டின் குறுக்குவிட்டம்.

**கைவிடுதல்** – கைவிட்டுவிடுதல், விட்டொழிதல்.

**கைவிடுபடை** – அம்பு.

**கைவிதிர்த்தல்** – மறுப்பு, அச்சம், புகழ்ச்சி ஆகியவற்றின் குறியாகக் கையை அசைத்தல்.

**கைவிதை** – வெந்தயம்; நாற்றைப் பெயர்த்து நடாது விதைத்தபடியே பயிர்செய்கை.

**கைவிதைப்பு** – புழுதிவிதைப்பு.

**கைவிரித்தல்** – இரத்தற்காகக் கையை நீட்டுதல்; தன்னால் இயலாமை குறிப்பித்தல், மறுத்தல்.

**கைவிரைவு** – கையினால் விரைந்து தொழில் செய்யும் தன்மை.

**கைவிலங்கு** – கைக்கிடும் விலங்கு.

**கைவிலை** – ரொக்க விலை; நடப்பு விலை.

**கைவிளக்கு** – சிறு விளக்கு.

**கைவிளி** – கையால் உதட்டை மடித்து ஊதியெழுப்பும் சீழ்க்கை ஒலி.

**கைவினை** – கைத்தொழில்; கைவேலை.

**கைவினைஞன்** – தொழிலாளி.

**கைவீச்சு** – கைவீசுகை; கையிருப்புத் தொகை; கைத்திறம்.

**கைவேகம்** – கைவிரைவு.

**கைவேல்** – கைவிடா வேல்; கப்பணம்.

**கைவேலை** – கையால் செய்தது; கைத்தொழில் திறம்; கைத்தொழில்.

**கைவைத்தல்** – புகுதல்; திருடுதல்; கைவைத்துக் குரு புனிதமாக்குதல்; அடித்தல்; கற்பழித்தல்.

**கைனி** – அத்தநாள்; கைம்பெண்.

## கொ

**கொ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (க் + ஒ).

**கொக்கட்டி** – குறுகி வளைந்த பனங்கிழங்கு.

**கொக்கரி** – முழக்கம்; வாத்தியவகை.

**கொக்கரித்தல்** – ஆரவாரித்தல்; கோழி முதலியன கூவுதல்.

**கொக்கரை** – வளைவு; வைக்கோல் எடுக்கும் கருவி; வலம்புரிச்சங்கு; வாத்தியவகை; வில்; வலை; பரம்பு; தாளம்; பனை; தெங்கு முதலியவற்றின் இளமடல்.

**கொக்கறை** – பனை, தெங்கு முதலியவற்றின் வற்றியுலர்ந்த இளமடல்.

**கொக்காட்டல்** – சீராட்டுகை.

**கொக்காம்பாளை** – ஒரு செடிவகை.

**கொக்கான்** – ஏழாங்காய் விளையாட்டுவகை.

**கொக்கி** – கொளுவி; துறட்டிநுனியிற் செருகும் இருப்புக்கருவி.

**கொக்கிப்பூட்டு** – அணியிலுள்ள பூட்டு.

**கொக்கில்** – கொக்கி.

**கொக்கிறகு, கொக்கிறகுமந்தாரை** – காண்க: **கொக்கு மந்தாரை.**

**கொக்கு** – ஒரு பறவைவகை; மூலநாள்; மாமரம்; செந்நாய்; குதிரை.

**கொக்குக்கல்** – காண்க: **சிலமான்கல்,** மாந்தளிர்க் கல்.

**கொக்குமந்தாரை** – வெள்ளைமந்தாரை; ஒரு பூமரம்; காட்டத்தி மரம்; புடைவைவகை.

**கொக்குவாய்** – கொக்கி, அணிகலனிலுள்ள கொக்கி.

**கொக்கை** – கொக்கி.

**கொக்கைக்கல்** – ஆட்டுக்காற்கல்.

**கொக்கைச்சால்** – உழவுபடாத தரை.

**கொக்கோவெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**கொங்கணம்** – ஒரு நாடு; ஒரு மொழி.

**கொங்கணர்** – கொங்கண நாட்டார்; பண்டைத் தமிழ்ச்சித்தருள் ஒருவர்.

**கொங்கணி** – கொங்குநாட்டான்; மழையைத் தாங்க உடலில் கவிக்கும் சம்பங்கூடை.

**கொங்கரி** – ஏல அரிசி.

**கொங்கன்** – கொங்குநாட்டான்; சேரன்.

**கொங்காணி** – காண்க: **கொங்கணி.**

**கொங்காரம்** – குங்குமமரம்.

**கொங்காளன்** – ஒரு குதிரைவகை.

**கொங்கு** – கோயமுத்தூர், சேலம், நீலகிரி, தருமபுரி, பெரியார் மாவட்டத்தின் ஒரு பகுதியும் கருநாடக மாநிலத்தின் ஒரு பகுதியும் இணைந்த ஒரு பழந்தமிழ்நாட்டுப் பகுதி; பூந்தாது; மணம்; தேன்; கள்; கருஞ் சுரைக் கொடி; புறத்தோல்.

**கொங்கை** – முலை; மரக்கணு; கம்புத் தானியத்தின் உமி.

**கொச்சகக்கயிறு** – தெங்கின் கதம்பை நாராற் செய்யப்படுங் கயிறு.

**கொச்சகக்கலிப்பா** – தரவு, தரவிணை, சிஃறாழிசை, பஃறாழிசை, மயங்கிசை என்னும் ஐம்பிரிவுடைய கலிப்பாவகை.

**கொச்சகம்** – கொச்சகக்கலிப்பா; ஆடையுள் ஒரு வழிக் கொய்தடக்கிக் கட்டுவது; அம்போ தரங்க உறுப்புகளுள் ஒன்று; பரிபாடல் உறுப்பு களுள் ஒன்று; இழிவு.

**கொச்சம்** – காண்க: **கொச்சகக்கயிறு.**

**கொச்சன்** – சிறுபையன்.

**கொச்சி** – ஓர் ஊர்; சேரநாட்டிலுள்ள ஒரு நகரம்; விளாம்பழத்தின் உள்ளீடு; ஊசிமிள காய்; நெருப்பு; இளங்கொட்டாங்கச்சி.

**கொச்சிக்குழந்தை** – வைப்பரிதாரம்.

**கொச்சிமிளகாய்** – ஊசிமிளகாய்.

**கொச்சு** – குஞ்சம்; கத்தரிக்காய் முதலிய காய் கறிகள் சேர்ந்த குழம்புவகை; சிறிய.

**கொச்சை** – இழிவு; இழிந்தவன்; சீகாழி; திருந்தாத சொல்; ஆடு; வெள்ளாடு; பால் முதலியவற்றின் முடைநாற்றம்.

**கொச்சைச்சொல்** – திருந்தாப் பேச்சு; இழி சொல்.

**கொச்சைநாற்றம்** – ஆட்டுப்பால் நாற்றம்; பால் முதலியவற்றின் முடைநாற்றம்.

**கொச்சையர்** – இடையர்; இளைஞர்.

**கொச்சைவயம்** – சீகாழி என்னும் ஊர்.

**கொசமசக்கு** – குழப்பம்; செயற்சிக்கல்.

**கொச(சு)வம்** – கொய்சகம், ஓரங்கொய்து சுருக்கப்பட்ட உடை.

**கொசிகம்** – ஆடை.

**கொசு** – சிறுகொதுகு; பெருங்கொதுகு; கச்சம்.

**கொசுகு** – சிறுகொதுகு; பெருங்கொதுகு.

**கொசுத்தேன்** – சிறு கொசு இனங்கள் சேர்த்து வைக்குந் தேன்.

**கொசுமூட்டம்** – கொசுக்களைப் போக்குவதற்கு மூட்டும் புகை.

**கொசுவுதல்** – ஆடையைக் கொய்து அடுக்குதல்.

**கொசுறு** – பிசுக்கு, கொசுர்.

**கொஞ்சங்கொஞ்சமாய்** – சிறிதுசிறிதாய்.

**கொஞ்சத்தனம்** – எளிமை.

**கொஞ்சநஞ்சம்** – சிறிதளவு.

**கொஞ்சப்படுத்துதல்** – இழிவுபடுத்துதல்.

**கொஞ்சப்பேர்** – சிலர்; இகழ்.

**கொஞ்சம்** – சிறிது.

**கொஞ்சல்** – மழலைச்சொல்; சரசப்பேச்சு; செல்லமாகப் பேசுதல்.

**கொஞ்சன்** – அற்பன்.

**கொஞ்சி** – காட்டுக்கொஞ்சி; சீமைக்கொஞ்சி; பூவைமரம்.

**கொஞ்சுதல்** – மழலை பேசுதல்; இன்பமாய்ப் பேசுதல்; செல்லங்கொஞ்சுதல்; இனிதாய் ஒலித்தல்; முத்தமிடல்.

**கொஞ்சுநடை** – மெதுவான நடை.

**கொட்குதல்** – சுழலுதல்; சூழவருதல்; திரிதல்; வெளிப்படுதல்.

**கொட்டகம்** – காண்க: **கொட்டகை.**

**கொட்டகாரம்** – பண்டம் வைக்கும் அறை.

**கொட்டகை** – தொழுவம், மாட்டுக்கொட்டில்; பந்தல்வகை; சிற்றில்.

**கொட்டங்காய்** – தேங்காய்.

**கொட்டடி** – சமையல் அறை; மாட்டுக்கொட்டில்; சிறைச்சாலை அறை; சேலைவகை.

**கொட்டணக்காரி** – கூலிக்கு நெற்குற்றுபவள்.

**கொட்டணம்** – நெற்குற்றுகை; பஞ்சு கொட்டுகை.

**கொட்டணை** – ஒரு பூண்டுவகை.

**கொட்டம்** – இறுமாப்பு; சேட்டை; கடுகடுப்பு; முழக்கம்; நீர் முதலியன ஒழுகுகை; மாடு களுக்கு மருந்து கொடுக்கும் மூங்கிற் குழாய்; நூற்கும் கொட்டை; சிறிய ஓலைப்பெட்டி; மாட்டுத்தொழுவம்; ஒரு மணப்பண்டவகை; வீடு.

**கொட்டமடித்தல்** – மனம் போனபடி அரட்டை யடித்தல்.

**கொட்டறை** – காண்க: **கொட்டடி.**

**கொட்டன்** – கொட்டாப்புளி; பருத்தவன்; பருத்தது; தேங்காய்.

**கொட்டாப்பிடி, கொட்டாப்புளி** – உளிமேல் அடிக்கும் ஆயுதம், மரச்சுத்தியல்.

**கொட்டாய்** – காண்க: **கொட்டகை.**

**கொட்டாரம்** – தானியக்களஞ்சியம்; நெல் முதலிய தானியங் குற்றும் இடம்; யானைக்கூடம்; அரண்மனை; அரண்மனை முதலியவற்றின் தலைவாயில்.

**கொட்டாவி** – வாயைத் திறந்து வெளிவிடும் நெட்டுயிர்ப்பு.

**கொட்டாவிவிடுதல்** – வாயால் நெட்டுயிர்த்தல்; இறத்தல்; களைத்துப்போதல்.

**கொட்டாறு** – உப்பளம்.

**கொட்டி** – நீர்க்கொடிவகை; கொடுகொட்டி; தாளம்; வாயில்; கூட்டம்; கோயில்வாசல்.

**கொட்டிக்கொடுத்தல்** – அதிகமாகக் கொடுத்தல்; அதிகமாகக் கண்டித்தல்.

**கொட்டிக்கொள்ளுதல்** – நிரம்ப உண்ணுதல்; மேற்போட்டுக் கொள்ளுதல்.

**கொட்டிச்சேதம்** – பதினோர் ஆடல்களுள் திரிபுரம் எரித்த காலை சிவனாடிய கூத்து.

**கொட்டிப்பேசுதல்** – குத்திப்பேசுதல்

**கொட்டிமத்தளம்** – பெரிய மத்தளம்.

**கொட்டியம்** – எருது; பொதிமாட்டுத் திரள்.

**கொட்டியான்** – சுமைகாரன்; பயிரில் விழும் நோய்வகை; கெடுதியை உண்டுபண்ணுவது.

**கொட்டில்** – மாட்டுத்தொழுவம்; வில்வித்தை பயிற்றுமிடம்; கொட்டகை; சிறு குடில்.

**கொட்டு** – அடி; வாத்திய அடிப்பு; வாத்தியம்; தாளத்தில் அரைமாத்திரைக் காலம்; தேள் முதலியன கொட்டுகை; தோண்டு கருவிவகை; மண்வெட்டி; கொட்டுகை; உடல்; நெற்கூடு; பிரம்புக்கூடை; பனந்துண்டு; மலடி.

**கொட்டுக்காரன்** – மத்தளம் முதலியன வாசிப் பவன்; மேளகாரச் சாதி.

**கொட்டுக்கிடாரம்** – பெரிய கொப்பரை.

**கொட்டுக்கிணறு** – பனந்துண்டுகளை வைத்துக் கட்டிய கிணறு.

**கொட்டுக்குடவை** – உடுக்கைபோல் வடிவமைந்த பாத்திரம்.

**கொட்டுக்கூடை** – கிண்ண வடிவமான கூடை; கூடைபோன்ற வடிவுள்ள உலோக பாத்திரம்.

**கொட்டுதல்** – வாத்தியம் முழக்குதல்; சம்மட்டி யால் அடித்தல்; கையால் தட்டுதல்; பஞ்சரைத் தல்; நெற்குற்றுதல்; அடித்தல்; தேள், குளவி முதலியன கொட்டல்; சொரிதல்; கூடை முதலியவற்றில் இருந்து பண்டங்களைக் கொட்டுதல்; அப்புதல்; அறைந்துகொள்ளு தல்; பல்லி சொல்லுதல்; உதிர்தல்; கண் இமைத்தல்.

**கொட்டுப்பிடி** – கொட்டாப்புளி, உளியடிக்கும் ஆயுதம்.

**கொட்டுமுழக்கு** – விழாக்காலங்களில் முழக்கும் மேளதாளம் முதலிய வாத்திய ஓசை.

**கொட்டுமுறி** – உயர்ந்த பித்தளைவகை.

**கொட்டுமேளம்** – மேளவாத்தியம்.

**கொட்டுரசம்** – பருப்பிடாத இரசம்.

**கொட்டுவாய்** – தேள் முதலியன கொட்டின இடம்; நெருக்கடியான சமயம்.

**கொட்டுவான்** – தேள்; கொட்டாப்புளி; கொட்டு வேலை செய்யுங் கன்னான்.

**கொட்டுவேலை** – கொட்டுக் கன்னார் வேலை.

**கொட்டை** – விதை; தாமரைக்கொட்டை; பலாப் பிஞ்சு; உருண்டை வடிவம்; மகளிர் தலையணி வகை; கொட்டைக்கரந்தை; பாதக் குறட் டின் குமிழ்; ஆடைத்தும்பினைத் திரள முடிந்த முடிச்சு; கிடுகு தாங்கும் கால் முதலிய வற்றின் பகுதி; நூற்குங் கதிரின் கொட்டை; பஞ்சுச் சுருள்; யானையின் அணி விசேடம்; சும்மாடு; சிறு தலையணை; நெல்வகை.

**கொட்டைக்கரந்தை** – ஒரு கரந்தைச்செடிவகை.

**கொட்டைக்காய்ச்சி** – சதைப்பற்றுக் குறைந்து கொட்டை பருத்துள்ள காய்காய்க்கும் மா; பனைமரம்.

**கொட்டைநூற்றல்** – பஞ்சு நூற்றல்; பயனற்ற வேலை செய்தல்; வீண்காலம் போக்குதல்.

**கொட்டைப்பயறு** – ஒரு பயறுவகை.

**கொட்டைப்பாக்கு** – வேகவைக்காமல் உணக்கிய முழுப் பாக்கு.

**கொட்டைப்பாசி** – நீர்ப்பாசிவகை.

**கொட்டைப்புளி** – விதை எடுக்காத புளி.

**கொட்டைபரப்புதல்** – பகைவரது நாட்டை அழித்துத் தரைமட்டமாக்குதல்.

**கொட்டைபோடுதல்** – விதை விதைத்தல்; கடலைக் கொட்டை போடுதல்; பலாமரம் பிஞ்சு பிடித்தல்; தொழிலில் பழக்கப்படுதல்; சாதல்.

**கொட்டைமுத்து** – சிற்றாமணக்கு விதை.

**கொட்டைமுந்திரி, கொட்டைமுந்திரிகை** – ஒரு முந்திரிவகை.

**கொட்டையாடுதல்** – பஞ்சு பன்னுதல், பஞ்சைப் பிரித்தெடுத்தல்.

**கொட்டையிடுதல்** – பஞ்சுச் சுருள் செய்தல்.

**கொட்பு** – சுழற்சி; சுற்றித்திரிகை; மனச் சுழற்சி; சரராசி; வளைவு; கருத்து; நிலையின்மை.

**கொட்பேரன்** – கொள்ளுப்பேரன்.

**கொடாக்கண்டன்** – சிறிதும் ஈயாதவன்.

**கொடாரி** – காண்க: **கோடரி.**

**கொடி** – படர்கொடி; ஆடையுலர்த்துங் கொடி; கொப்பூழ்க்கொடி; மகளிர் கழுத்தணி; அரைஞாண்; ஒழுங்கு; நீளம்; சிறு கிளைவாய்க் கால்; கொடி; காற்றாடி; கலத்துவசம் என்னும் யோகம்; கேது; காக்கை; கிழக்குத் திசை.

**கொடிக்கம்பம்** – காண்க: **கொடிமரம்.**

**கொடிக்கயிறு** – முறுக்கேறின கயிறு; கொடியாகக் கட்டின கயிறு.

**கொடிக்கரும்பு** – நேராக வளர்ந்த கரும்பு.

**கொடிக்கவி** – கொடியைப்பற்றிய பாட்டு; கொடியேறும்படி பாடிய பாட்டு; சைவ சித்தாந்த நூல்களுள் ஒன்று.

**கொடிக்கழல்** – கழற்சிக்கொடி.

**கொடிக்கள்ளி** – கொடிவகை; கள்ளிச்செடிவகை.

**கொடிக்கால்** – வெற்றிலை; வெற்றிலைத் தோட்டம்; காய்கறித்தோட்டம்; வெற்றிலைக்கொடி; படருங்கொம்பு; கொடிக் கம்பம்.

**கொடிக்கால்மூலை** – ஊரின் வடமேற்கு மூலை.

**கொடிக்கூடை** – நாணற்கூடை.

**கொடிகட்டிநிற்றல்** – கொடிகட்டுதல்; உறுதிப் பாட்டுடன் முயற்சியை மேற்கொள்ளுதல்; நோயாளி முதலியோர் கயிற்றைப் பிடித்துக் கொண்டு நிற்றல்.

**கொடிகட்டிவாழ்தல்** – மிகுந்த செல்வ வாழ்க்கையில் இருத்தல்.

**கொடிகட்டுதல்** – கொடியெடுத்தல்; போருக்கு வருதல்; கொடியேற்றுதல்.

**கொடிச்சி** – குறிஞ்சிநிலப் பெண்; கொடிவேலி; காமாட்சிப்புல்; கன்னம்; புற்றாஞ்சோறு.

**கொடிச்சிவால்** – நுனி வெளுத்த பசுவின் வால்.

**கொடிசுற்றிப்பிறத்தல்** – பெற்றோர்க்கும் தாய் மாமனுக்கும் தீங்கு விளைதற்கு அறிகுறியாகக் கொப்பூழ்க்கொடி சுற்றிக்கொண்டு குழந்தை பிறத்தல்.

**கொடிஞ்சி** – கைக்குதவியாகத் தேர்த்தட்டின் முன்னே உள்ள அலங்கார உறுப்பு; தேர்.

**கொடிஞ்சில், கொடிஞ்சிற்பலகை** – எருதுகளைக்கொண்டு ஆற்றுக்கால் தோண்டும் பலகை.

**கொடித்தடம்** – ஒற்றையடிப் பாதை.

**கொடித்தண்டு, கொடித்தம்பம்** – காண்க: **கொடிக்கம்பம்.**

**கொடித்தரம்** – சூரியன் தோன்றும்போது உச்சியில் தோன்றும் எட்டாம் நாள் சந்திரன்.

**கொடித்தாலி** – சரட்டுத் தாலி.

**கொடித்தீ** – கொடிவேலி.

**கொடிது** – காண்க: **கொடியது.**

**கொடி நரம்பு** – வெளியே தெரியும்படி ஓடியுள்ள உடல் நரம்பு.

**கொடிநிலை** – மும்மூர்த்திகளின் கொடிகளுள் ஒன்றனோடு அரசன் கொடியை உவமித்துப் புகழும் புறத்துறை; கீழ்த்திசையில் நிலையாக உதிக்கும் சூரியன்.

**கொடிப்படை** – படையின் முன்னணி.

**கொடிப்பந்தர்** – கொடிகள் படர்ந்த பந்தல்.

**கொடிப்பயறு** – பயறுவகை.

**கொடிப்பவழம்** – பவழம்.

**கொடிப்பாதை** – காண்க: **கொடித்தடம்.**

**கொடிப்பாலை** – பாலைவகை; பாலை யாழ்த்திற வகை.

**கொடிப்பிணை** – வங்கமணல்.

**கொடிப்பிள்ளை** – காக்கைக் குஞ்சு; பள்ளையாடு.

**கொடிப்புல்** – அறுகம்புல்.

**கொடிப்பூ** – கொடிகளிற் பூக்கும் பூ.

**கொடிமரம்** – கோயில்களின் முன்னால் கொடியேற்றுவதற்காக நடும் மரம்; கொடி கட்டும் நீண்ட தடி.

**கொடிமல்லிகை** – மல்லிகை; சாதிமல்லிகை.

**கொடிமாசிகள்** – நிலையற்றோடும் மேகங்கள்.

**கொடிமாதுளை** – ஒருவகை மாதுளைமரம்.

**கொடிமின்னல்** – கொடிபோல வீசி ஒளிரும் மின்னல்.

**கொடிமுந்திரி, கொடிமுந்திரிகை** – திராட்சை.

**கொடிமூக்கு** – நீண்ட மூக்கு.
**கொடியடுப்பு** – அடுப்புவகை, பக்க அடுப்பு.
**கொடியது** – கொடுமையானது.
**கொடியரசு** – அவரைக்கொடி; அரசமரவகை.
**கொடியராகு** – கோமேதகம்.
**கொடியன்** – தீயன்; கேது.
**கொடியாடு** – ஆண்டுக்கொருமுறை ஒரு குட்டி போடும் நீண்ட காலுள்ள ஆடு.
**கொடியார்கூந்தல்** – அம்மையார் கூந்தல் என்னும் சவரிக்கொடி.
**கொடியாள்** – கொடிபோன்ற பெண்; கொடுமை யானவள்.
**கொடியாள்கூந்தல்** – காண்க: **கொடியார்கூந்தல்.**
**கொடியான்** – கொடுமையானவன்.
**கொடியிறக்குதல்** – ஏற்றின கொடியைத் தாழ்த்து தல்; திருவிழா முடிவில் கொடியைக் கீழிறக்கி விடுதல்; காற்றாடியை இறக்குதல்.
**கொடியீச்சு** – சவ்வரிசி.
**கொடியெடுத்தல்** – அறைகூவுகை; வெற்றியின் அறிகுறியாகக் கொடிபிடித்தல்.
**கொடியேற்றம், கொடியேற்று, கொடியேற்றுதல்** – கோயிலில் திருவிழாத் தொடக்கத்தில் கொடி மரத்தில் கொடியை உயர்த்துதல்.
**கொடியோடுதல்** – கொடியுண்டாகிப் படர்தல்; இரேகை நீளுதல்; இறக்குந்தறுவாயில் மூச்சு இழைதல்.
**கொடியோன்** – தீயவன்; கற்றாழை.
**கொடிவழி** – ஒற்றையடிப் பாதை; மரபுவழி.
**கொடிவழித்தீர்த்தம்** – திருப்பதி மலையிலுள்ள ஒரு புண்ணிய தீர்த்தம்.
**கொடிவாகனன்** – காக்கையை ஊர்தியாகவுடைய சனி.
**கொடிவிடுதல்** - மிகுதியாதல்; கொடியோடுதல்.
**கொடிவீடு** – படர்கொடிகளால் அமைந்த வீடு.
**கொடிவேலி** – சித்திரமூலம் என்னுங் கொடி.
**கொடிற்றுக்கோல்** – கள்வர் பயன்படுத்தும் கருவி, கன்னக்கோல்.
**கொடிறு** – கதுப்பு; யானை மதச்சுவடு; குறடு; பூசநாள்.
**கொடுக்கல்வாங்கல்** – கொடுப்பதுவும் வாங்குவதுவும், இலேவாதேவி.
**கொடுக்கறுத்தல்** – குறும்புத்தனத்தை அடக்குதல்.
**கொடுக்காய்ப்புளி** – வளைந்த காயையுடைய ஒரு மரவகை.
**கொடுக்கி** – ஆபரணப்பூட்டு; தேட்கொடுக்கிப் பூடு; கதவையடைத்து இடும் இருப்புப்பட்டை.
**கொடுக்கு** – தேள் முதலியவற்றின் கொட்டும் உறுப்பு; நண்டு முதலியவற்றின் இடுக்கிக்கால்; தீயவன்; ஆடைத்தொங்கல்; மகன்; மூலத்தாறு.
**கொடுகுதல்** – குளிரால் ஒடுங்குதல்; பற்கூசுதல்; கொடுமையாதல்.
**கொடுகொட்டி** – பதினோராடல்களுள் முப்புரம் எரித்த காலையில் சிவபெருமான் ஆடிய கூத்து; ஒரு பறைவகை.
**கொடுகொடுத்தல்** – குளிரால் நடுங்குதல்; விரைவுபடுதல்.
**கொடுங்கண்** – தீமை விளைவிக்கும் பார்வை.
**கொடுங்கரி** - பொய்ச்சாட்சி.
**கொடுங்காய்** – வெள்ளரிக்காய்.
**கொடுங்குழை** – வளைந்த காதணி.
**கொடுங்கை** – மடித்த கை; வளைந்த கை; நீண்டு வளைந்த வீட்டு உறுப்பு; கொடுமை.
**கொடுங்கோபிச்சிலை** – ஒருவகை மஞ்சள்நிறக் கல்.
**கொடுங்கோல், கொடுங்கோன்மை** – நீதிநெறி தவறிய அரசாட்சி.
**கொடுசூரி** – காண்க: **கொடுஞ்சூரி.**
**கொடுஞ்சி** – காண்க: **கொடிஞ்சி.**
**கொடுஞ்சூரி** – கொடியவள்.
**கொடுத்தல்** – ஈதல்; பெற்றெடுத்தல்; பங்காடுதல்; விற்றல்; உடன்படுதல்; சாகக்கொடுத்தல்; திட்டுதல்; அடித்தல்; ஒரு துணைவினை.
**கொடுத்துவைத்தல்** – ஒருவரிடம் பொருளை நம்பி வைத்தல்; நல்வினை பெற்றிருத்தல்.
**கொடுதி** – மரஆணி.
**கொடுந்தமிழ்** – செந்தமிழ்நாட்டைச் சூழ்ந்து வழங்கிவரும் தமிழ்மொழி.
**கொடுந்தமிழ்நாடு** – கொடுந்தமிழ் பேசப்படுவனவாகிய தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேணாடு, பூழி, பன்றி, அருவா, அருவா வடதலை, சீதம், மலாடு, புனனாடு என்னும் பன்னிரு நிலங்கள்.
**கொடுந்தறி** – வளைந்த முளைக்கோல்.
**கொடுந்துயர்** – மிக்க துயரம்; சாவு.
**கொடுந்தொழிலாளன்** – கொடுஞ் செய்கையுள்ளவன்; யமன்.
**கொடுநாக்கு** – தீய நாக்கு.
**கொடுநாக்கெறிதல்** – விருப்பக் குறிதோன்ற நாவால் வாய்ப்புறத்தைத் துழாவுதல்.
**கொடுநுகம்** – நுகத்தடி; கலப்பை; மகநாள்.
**கொடுப்ப(பி)னை** – கொடுப்புவினை என்பதன் மரூஉ; பெண்ணை மணஞ்செய்து தருதல்.
**கொடுப்பு** – கொடுக்கை; விளையாட்டாக அடிக்கை; கதுப்பு.

**கொடுப்புப்பல்** – கடைவாய்ப்பல்.
**கொடுப்பை** – பொன்னாங்காணிக்கீரை.
**கொடுபடுதல்** – கடன் முதலியன செலுத்தப் படுதல்.
**கொடுபோதல்** – கொண்டுசெல்லுதல்.
**கொடும்பகல்** – நண்பகல்.
**கொடும்பனிக்காலம்** – பனி மிகுந்துள்ள மாசி பங்குனி மாதங்கள்.
**கொடும்பாடன்** – கொடியன், மிகுந்த தீவினை யாளன்.
**கொடும்பாடு** – கொடுமைப்பாடு; மாறுபாடு.
**கொடும்பாவி(வை)** – பஞ்சம் முதலியன உண் டான காலங்களில் அவை தீரும்படி ஊர்க்குச் சாந்தியாகத் தெருக்களில் கட்டியிழுத்துக் கொளுத்தப்படும் வைக்கோல் உருவம்; தாம் வெறுப்பவர்களைப்போல் செய்யப்படும் பதுமை.
**கொடும்பு** – சிம்பு; தவிட்டுப்பொடி; கொடுமை.
**கொடும்புரி** – கொடுமுறுக்கு; கடுஞ்சூழ்ச்சி.
**கொடும்புலி** – சிங்கம்; சிங்கராசி.
**கொடும்பை** – நீர் அருவி; குன்றம்; குளம்; தூம்பு; தாம்பு; பச்சிலைப் பூண்டுவகை; கொடும்பாளூர்.
**கொடுமடி** – பண்டம் இடுதற்கு வளைத்துக் கட்டிய மடி.
**கொடுமரம்** – வில்; தனுராசி; ஏணிப்பழு.
**கொடுமலையாளம்** – அரிதிற் பொருள்படும் மலையாள மொழிவகை; கொடுமலையாளம் பேசும் மலைநாட்டுப் பகுதி.
**கொடுமுடி** – மலையினுச்சி; கோபுரத்தினுச்சி; உப்பரிகை; பாண்டிக் கொடுமுடி.
**கொடுமுடிச்சு** – அவிழ்க்க இயலாத முடிச்சு; கேடு சூழும் சூழ்ச்சி.
**கொடுமுறுக்கு** – நூலில் ஏறிய அதிக முறுக்கு.
**கொடுமூலை** – எளிதில் அறிந்து செல்ல முடியாத மூலையிடம்.
**கொடுமை** – கடுமை; முருட்டுத்தன்மை; தீமை; வளைவு; மனக்கோட்டம்; அநீதி; பாவம்; வேண்டாத சொல்.
**கொடுமைசொல்லுதல்** – கடுமையான சொல் லால் பேசுதல்.
**கொடுமைத்தானம்** – இலக்கினத்திற்கு எட்டா மிடம்.
**கொடுவரி** – புலி.
**கொடுவருதல்** – கொண்டுவருதல்.
**கொடுவாய்** – வாள் முதலியவற்றின் வளைந்த வாய்; குறளை; பழிச்சொல்; ஒரு மீன் வகை; புலிவகை; வாயினின்று வடியும் நீர்.
**கொடுவாயிரும்பு** – தூண்டில் முதலியவற்றி லுள்ள இரும்புக் கொக்கி.
**கொடுவாள்** – வளைந்த வாள்; அறுவாள்; மழு.
**கொடுவினை** – முற்பிறப்பிற் செய்த தீவினை.
**கொடுவேலி** – காண்க: கொடிவேலி.
**கொடுவை** – முருட்டுத்தனம், துட்டத்தனம்.
**கொடூரம்** – கொடுமை, குரூரம்.
**கொடை** – ஈகம், தியாகம்; ஈகை; உதவிப் பொருள்; கைக்கொண்ட ஆநிரையை இரவ லர்க்கு வரையாது கொடுக்கும் புறத்துறை; ஊர்த்தேவதைக்கு மூன்றுநாள் செய்யும் திருவிழா; வசவு; அடி.
**கொடைக்கடம்** – கொடையாகிய கடமை.
**கொடைக்கை** – கொடைகொடுக்கும் கை; வீட்டின் முகடு.
**கொடைநேர்தல்** – மகளை மணஞ் செய்து கொடுக்க உடன்படுதல்; தேவதைக்கு விழாச் செய்யத் தீர்மானித்தல்.
**கொடைமடம்** – அளவின்றிக் கொடுத்தல்.
**கொடைமுடி** – சரக்கொன்றை.
**கொடைமை** – கொடைத்தொழில்.
**கொடையாளன், கொடையாளி** } – ஈகையாளன்.
**கொடையெதிர்தல்** – கொடுத்தலை மேற்கொள்ளு தல்; கொடுத்ததைப் பெற்றுக்கொள்ளுதல்.
**கொடையோன்** – ஈகையுள்ளவன்.
**கொடைவஞ்சி** – போரில் வென்று கொண்ட பொருளைப் பாடிய பாணர்க்கு அரசன் பரிசாக அளிப்பதைக் கூறும் புறத்துறை.
**கொடைவள்ளல்** – அளவில்லாமற் பொருளைக் கொடுப்பவன்.
**கொடைவினா** – வினாவகையுள் ஒன்று, கொடுக் கும் நோக்கத்தோடு கேட்கும் வினா.
**கொடைவீரம்** – பிறருக்குத் தன்னை அளித்தல்.
**கொண்கன்** – கணவன்; நெய்தல்நிலத் தலைவன்.
**கொண்கானம்** – கொங்கண நாட்டிலுள்ள மலை.
**கொண்ட** – ஓர் உவமச்சொல்.
**கொண்டக்காரன்** – மீன்பிடிப்போருள் ஒரு வகுப்பினன்.
**கொண்டக்கிரி** – ஒரு பண்வகை.
**கொண்டகுளம்** – எட்டிமரம்.
**கொண்டங்கட்டிப் பாய்ச்சுதல்** – அணைகட்டி மேட்டுநிலத்தில் நீர் பாய்ச்சுதல்.
**கொண்டச்சாணி** – நஞ்சறுப்பான் பூண்டு.
**கொண்டம்** – குறிஞ்சாக்கொடி; நீர் பாய்ச்சு வதற்குத் தேக்கிய நீர்நிலை.
**கொண்டல்** – கொள்ளுதல்; மேகம்; காற்று; கீழ்காற்று; கிழக்கு; மேடராசி; கொண்டற் கல்; மகளிர் விளையாட்டுவகை.

**கொண்டல்வண்ணன்** – மேக நிறமுடைய திருமால்.

**கொண்டலாத்தி** – ஒரு குருவிவகை.

**கொண்டவன்** – கணவன்.

**கொண்டாட்டக்காரன்** – உற்சாகமுள்ளவன்; தோழன்.

**கொண்டாட்டம்** – பாராட்டுதல்; மகிழ்ச்சி; திருவிழா முதலிய சிறப்புகள்.

**கொண்டாட்டு** – சீராட்டு; பாராட்டல்.

**கொண்டாடுதல்** – கூடிக்குலாவுதல்; மெச்சுதல், பாராட்டுதல்; திருவிழா முதலியன கொண்டாடுதல்.

**கொண்டாரணியம்** – நுழைய முடியாத பெருங்காடு.

**கொண்டான்** – மகளிர் விளையாட்டுவகை; கணவன்.

**கொண்டான்கொடுத்தான்** – பெண் கொடுத்தும் எடுத்தும் சம்பந்தஞ் செய்தோர்.

**கொண்டானடித்தல்** – மகிழ்ச்சியால் கூத்தாடுதல்.

**கொண்டி** – பிறர் பொருள் முதலியவற்றைக் கொள்ளுதல்; உணவு; கப்பம்; சங்கிலி மாட்டும் இரும்பு; கொள்ளை; மிகுதி; அடங்காதவன்; பரத்தை; கதவுக்குடுமி; களவு; ஏர்க்கொழு முதலியவற்றைக் கொள்ளுதல்; மனவருத்தம்; பகைமை; புறங்கூறுகை.

**கொண்டிக்கதவு** – குடுமிக்கதவு.

**கொண்டிசொல்லுதல்** – பகைமையால் கொடுமை பேசுதல்.

**கொண்டித்தனம்** – அடங்காத்தனம்.

**கொண்டித்தொட்டி, கொண்டித்தொழு** – பட்டி மாட்டை அடைக்கும் தொழுவம்.

**கொண்டிபேசுதல்** – குறைகூறுதல்; பகைமையால் கொடுமை பேசுதல்; கோட்சொல்லுதல்; குற்றம் சுமத்திப் பேசுதல்.

**கொண்டிமகளிர்** – சிறைபிடிக்கப்பட்ட பெண்கள்; பரத்தையர்.

**கொண்டிமாடு** - பட்டிமாடு.

**கொண்டியம்** – புறங்கூறுதல்; குறளை.

**கொண்டியாரம்** – நிந்தை; செருக்கு; பிறர் செயலில் தலையிடுகை; சிறப்பு.

**கொண்டியோட்டி** – தொழுவத்திற்குப் பட்டி மாட்டை ஓட்டிச் செல்வோன்.

**கொண்டின்னி** – தும்பைச்செடி.

**கொண்டு** – முதல்; குறித்து; மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு; ஓர் அசைநிலை.

**கொண்டுகண்மாறுதல்** – நட்புக்கொண்டு புறக்கணித்தல்.

**கொண்டுகூட்டு** – பொருள்கோள் வகையுள் ஒன்று, செய்யுளடிகளில் உள்ள சொற்களை ஏற்ற இடங்களில் சேர்த்துப் பொருள் கொள்ளும் முறை.

**கொண்டுகூற்று** – அயலார் நேரிற் சொல்வதாகக் கூறும் மொழி.

**கொண்டுகொடுத்தல்** – பெண்ணைக் கொண்டுங் கொடுத்துஞ் சம்பந்தஞ்செய்தல்.

**கொண்டுசெல்லுதல்** – எடுத்துப்போதல்; நிருவகித்தல்.

**கொண்டுநடத்துதல்** – செயலை வருந்தியும் முடிவுவரை நடத்துதல்; கொடுக்கல் வாங்கல் செய்தல்.

**கொண்டுநிலை** – குரவைக்கூத்தில் தலைவனது வரைவுவேண்டிப் பாடும் பாட்டு.

**கொண்டுநிலைக்கூற்று** – இறந்துபடாமல் தலைமகனைத் தாங்கிக் கூறுந் தோழியின் சொல்.

**கொண்டுபோதல்** – எடுத்துக்கொண்டு செல்லுதல்; அழைத்துச் செல்லுதல்; கவர்ந்து செல்லுதல்.

**கொண்டுவிற்றல்** – அப்போதைக்கப்போது வாணிகத்துக்காகப் பண்டங்களை வாங்கி விற்றல்.

**கொண்டேசன்** – சுக்கு.

**கொண்டை** – மகளிர் கூந்தலைத் திரளாகச் சேர்த்துக் கட்டும் முடிவகை; சொருக்கு; குழந்தைகளுக்கு உச்சிக்கொண்டை கட்ட உதவும் நார்வளையம்; பறவைச் சூட்டு; ஆணி முதலியவற்றின் தலை; இலந்தைப் பழம்.

**கொண்டைக்கரிச்சான்** – உச்சிச்சூட்டுள்ள கரிக்குருவி.

**கொண்டைக்காரன்** – தலைமயிரைத் திரளாக முடித்துக் கட்டுபவன்; மேன்மையுடையவன்; செருக்கன்.

**கொண்டைக்கிரி** – முல்லைநிலப் பண்வகை.

**கொண்டைக்கிளாறு** – காண்க: **கொண்டலாத்தி.**

**கொண்டைக்குச்சு** – தலைமயிரோடு பின்னித் தொங்கவிடுவதாய் இரண்டு மூன்று குச்சுகளையுடைய அணி; கொண்டையிற் செருகும் ஊசிவகை.

**கொண்டைக்குலாத்தி** – காண்க: **கொண்டலாத்தி.**

**கொண்டைக்கோல்** – தலையிற் கொண்டையுள்ள கொம்பு; ஆழத்திற்கு அறிகுறியாக நீரிடையில் நடுங்கோல்; மகிழ்ச்சிக் குறியாக உயர்த்தி அசைக்கும் ஆடை கட்டிய கோல்.

**கொண்டை குலைந்துபோதல்** – அவமானப்படுதல்.

**கொண்டைத்திருகு, கொண்டைப்பூ** – மகளிர் தலையிலணியும் செவ்வந்திப்பூ வடிவினதான திருகாணிவகை.

**கொண்டைமாறு** – மரத்தின் உச்சியிலிருந்து எடுக்கும் சுள்ளி; கொண்டையுள்ள விளக்குமாறு.

**கொண்டைமுசு** – பெரிய கருங்குரங்குவகை.

**கொண்டைமேற் காற்றடிக்க** – உல்லாசமாய்.

**கொண்டையன்** – உச்சிக்கொண்டையுள்ள பருந்துவகை.

**கொண்டையூசி** – மகளிர் தலையில் செருகும் ஊசிவகை; குண்டூசி.

**கொண்டோன்** – கணவன்; பொருள் முதலியன கொண்டோன்.

**கொண்மூ** – வானம்; மேகம்.

**கொணசில்** – கோணல், வளைவு.

**கொணர்தல், கொணாதல்** – கொண்டுவருதல்.

**கொத்தடிமை** – குடும்பத்தோடு அடிமையாதல்.

**கொத்தம்** – எல்லை; கொத்துமல்லி.

**கொத்தமல்லி, கொத்தமுரி** – ஒரு செடிவகை.

**கொத்தல்** – பறவை முதலியன கொத்துகை.

**கொத்தலரி** – ஓர் அலரிவகை.

**கொத்தவரை** – செடிவகை, சீனியவரை.

**கொத்தவால்** – நகரத்தின் கடைத்தெரு முதலியவற்றின் காவல் தலைவன்.

**கொத்தழிதல்** – அடியோடழிதல்.

**கொத்தளத்தல்** – கூலியாகத் தவசங் கொடுத்தல்.

**கொத்தளம்** – கோட்டை மதிலுறுப்பு.

**கொத்தளி, கொத்தளிப்பாய்** – புற்பாய்.

**கொத்தன்** – கட்டட வேலைக்காரன், கொல்லத்துக்காரன்.

**கொத்தனார்** – தலைமைக் கொத்தன்.

**கொத்தானை** – கூட்டமாகச் செல்லும் சிறுமீன் வகை.

**கொத்தாள்** – வயலில் கூலிக்கு வேலைசெய்யும் ஆள்; அடிமை.

**கொத்தான்** – காண்க: **கொற்றான்.**

**கொத்தித்தழி** – சரக்கொன்றை.

**கொத்தித்தின்னுதல், கொத்திப்பிடுங்குதல்** – மிகுதியாகத் துன்பப்படுத்துதல்.

**கொத்து** – கொத்துகை; கொத்துவேலை; கொத்தனது ஒருநாள் வேலை; கொல்லத்துக்காரன்; களைபறிக்க உதவும் சிறு மண்வெட்டி; பூ முதலியவற்றின் கொத்து; திரள்; குடும்பம்; ஆடையின் மடி; தானியமாகக் கொடுக்குங் கூலி; சோறு; கைப்பிடியளவு; நாழி.

**கொத்துக்கணக்கு** – பரம்பரைக் கணக்குவேலை; கொத்தன் சம்பளக் கணக்கு.

**கொத்துக்கரண்டி** – கொத்துவேலைக்குரிய அரசிலைக் கரண்டி.

**கொத்துக்காடு** – உழவின்றிக் கொத்திப் பயிரிடும் நிலம்.

**கொத்துக்காரன்** – கொத்துவேலை செய்வோன்; வேலையாள்களின் தலைவன்.

**கொத்துக்காரி** – மரபுவழியுரிமையுடைய கோயில் தேவடியாள்.

**கொத்துக்குறகு** – நண்டு.

**கொத்துக்கூலி** – வேளாண்மை வேலையின் பொருட்டுக் கொடுக்குங் கூலி; கொத்தருக்குக் கொடுக்கும் கூலி.

**கொத்துங்குறையுமாய்** – அரைகுறையாய்.

**கொத்துச்சரப்பணி(ளி)** – மகளிர் கழுத்தணிவகை.

**கொத்துதல்** – இரை கொத்தியெடுத்தல்; மண் வெட்டுதல்; பூமியைத் தோண்டுதல்; குத்திக் கடித்தல்; வெட்டுதல்; தறித்தல்; எழுத்து முதலியன செதுக்குதல்.

**கொத்துப்பசளை** – கொடிப் பசளைக்கீரை.

**கொத்துமாலை** – பல சரங்கள் சேர்த்து ஒன்றாகக் கட்டிய பூமாலை.

**கொத்துமானம்** – நகாசுவேலை.

**கொத்துவேலை** – கொத்திச்செய்யும் சித்திர வேலை; கட்டட வேலை.

**கொத்தை** – சொத்தை; ஈனம்; நூற்சிம்பு; அரைகுறை; குருடன்; அறியாமை; பாவி.

**கொதி** – நீர் முதலியவற்றின் கொதிப்பு; வெப்பம்; உடம்பிற் காணும் சூடு; காய்ச்சல்; கொதிக் கழிச்சல்; கோபம்; கடுமை; வருத்தம்; செருக்கு; ஆசை.

**கொதிகஞ்சி** – உலைநீரில் கொதிக்கும் அரிசியினின்று வடிக்குங் கஞ்சி.

**கொதிகருப்பநீர்**–சுடவைத்த இனிப்புச் சாராயம்.

**கொதிகொதித்தல்** – உலைப்பெய்த அரிசி முதலியவற்றிலிருந்து கொதியெழும்புதல்.

**கொதித்தல்** – நீர் முதலியன கொதித்தல்; சூடுடையதாதல்; சினத்தல்; வருத்தமுறுதல்; வெப்பமாதல்; கடுக்கல்; ஆசைமிகக் கொள்ளுதல்; சூட்டு மிகுதியால் வயிறு கழிதல்.

**கொதிநீர்** – சூடுள்ள நீர், வெந்நீர்; கொதிக்கும் உலைநீர்.

**கொதிப்பு** – பொங்குகை; வெப்பம்; காய்ச்சல்; கோபம்; வயிற்றெரிச்சல்; பரபரப்பு.

**கொதிமந்தம்** – வெப்பமந்தம்.

**கொதியல்** – கொதிப்பு; நெகிழ்ந்த ஆபரண உறுப்பை இறுகச் செய்யும் வேலை.

**கொதியன்** – உணவில் ஆசைமிக்கவன்.

**கொதியெண்ணெய்** – கொதிக்க வைத்தெடுத்த மருந்தெண்ணெய்வகை.

**கொதுகு** – கொசு.

**கொதுகொதுத்தல், கொதுகொதுப்பு, கொதுகொதெனல்** – ஒலிக்குறிப்பு; குளிரால் நடுங்குகை; நோவெடுத்தற் குறிப்பு; இலேசாய் உடம்பு காய்தற் குறிப்பு; புண்கட்டி வீங்கிப் பழுத்தற் குறிப்பு.

**கொதுவை** – அடைமானம்.

**கொந்தகன்** – படைத்தலைவன்.

**கொந்தம்** – மாதர் மயிர்ச்சுருள்.

**கொந்தரிவாள்** – முட்செடிகளை அழித்து நீக்க உதவும் அறுவாள்வகை.

**கொந்தல்** – கொத்துகை; பறவை முதலியவற்றால் கொத்துப்பட்ட கனி; தணியாச் சினம்; கொடுங்குளிர்; போலி நடத்தை.

**கொந்தழல்** – தீத்திரள்; முறுகிய தீ.

**கொந்தளம்** – மாதர் தலைமயிர்; மாதர் தலைமயிர்ச்சுருள்; மாதர் குழற்கொத்து; குழப்பம்; கூத்துவகை; காண்டாமிருகம்; விலங்கின் இளமை; ஏந்துமிக்க இடம்; சாளுக்கியர் ஆண்ட நாடு.

**கொந்தளித்தல்** – பொங்கியெழுதல்.

**கொந்தளை** – கடற்பக்கத்து மரவகை.

**கொந்தாலி** – காண்க: **குந்தாலி(ளி).**

**கொந்தாழை** – ஒரு கடற்றாழைவகை.

**கொந்தாளம்** – நஞ்சு போக்கும் மருந்துவகை.

**கொந்தாளித்தல்** – பொங்கியெழுதல்.

**கொந்தி** – வரிக்கூத்துவகை.

**கொந்து** – ஒற்றைக்காலால் குதித்தாடும் விளையாட்டுவகை; கோபம்; கொத்து; பூக்கொத்து; திரள்; கொத்துமாலை; நாட்டுப்பகுதி.

**கொந்துதல்** – பறவைகள் அலகினாற் கொத்துதல்; மூர்க்கங்கொள்ளுதல்; குத்துதல்; அச்சுறுத்துதல்; ஒற்றைக்காலால் குதித்தல்; எரிதல்; கோபம் மூளுதல்.

**கொப்பம்** – யானை பிடிக்க வெட்டிய பெருங்குழி; ஓர் ஊர்; ஒரு நாடு.

**கொப்பரம்** – முழங்கை; மற்போரில் ஒருவகை.

**கொப்பரி(ரை)** – நீர்வற்றிய தேங்காய்.

**கொப்பரை** – கருப்பஞ்சாற்றைக் காய்ச்சும் பெரிய பாத்திரம்; பிடியோடு கூடிய பெரும் பாத்திரம்; உலர்ந்த தேங்காய்ப்பருப்பு.

**கொப்பளம்** – காண்க: **கொப்புளம்.**

**கொப்பளித்தல்** – காண்க : **கொப்புளித்தல்.**

**கொப்பாட்டன்** – பாட்டனுக்குப் பாட்டன்.

**கொப்பி** – கும்மியாட்டம்.

**கொப்பிகொட்டுதல்** – கும்மியடித்தல்.

**கொப்பு** – மரக்கிளை, கொம்பு; மாதர் காதணிவகை; மயிர்முடி.

**கொப்புள்** – காண்க: **கொப்பூழ்.**

**கொப்புளம்** – குமிழி; கொப்புளம்போன்ற பரு.

**கொப்புளித்தல்** – கொப்புளமாதல்; நீர் முதலியன குமிழிட்டு வெளிவருதல்; வாய் குமிழ்த்தல்; நீரை வாயிலிட்டு உமிழ்தல்; நீர் முதலிய வற்றை வெளிவிடுதல்.

**கொப்புளிப்பான்** – சின்னம்மை நோய்வகை.

**கொப்பூழ்** – உந்தி; கொப்புளம்போன்ற பரு.

**கொப்பூழ்க்கொடி** – பிறந்த குழந்தையின் கொப்பூழிலிருக்கும் கொடி.

**கொப்பூழறுத்தல்** – பிறந்த குழந்தையின் நஞ்சுக் கொடியை அறுத்தல்.

**கொப்பெனல்** – விரைவுக்குறிப்பு.

**கொம்படித்தல்** – கொம்பால் முட்டிப் பொருதல்; கடா முதலியன போர் செய்தல்; அதிகாரம் செலுத்துதல்.

**கொம்பர்** – மரக்கொம்பு.

**கொம்பரக்கு** – அரக்குவகை.

**கொம்பன்** – கொம்புள்ள விலங்கு; ஆற்றலுடையவன்; அம்மை அல்லது பேதிவகை; மீன்வகை.

**கொம்பனார்** – கொம்புபோல் வளையும் தன்மையுள்ள பெண்டிர்.

**கொம்பாலயம்** – தெய்வந் தங்குவதற்காகக் கொண்டு வழிபடப்பெறும் சில மரக்கிளைகள்.

**கொம்பி** – சனி.

**கொம்பிலேயேறுதல்** – கொம்பின்மேல் ஏறுதல்; வீண் செருக்குக் கொள்ளுதல்.

**கொம்பினர்** – காண்க: **கொம்பனார்.**

**கொம்பு** – மரக்கொம்பு; நாற்றுமுளை; கோல்; பல்லக்கு முதலியவற்றின் கொம்பு; விலங்கின் கொம்பு; யானை முதலியவற்றின் தந்தம்; ஊதுகொம்பு; 'கொ' முதலிய எழுத்துகளின் முற்பகுதியாய் அமைந்திருக்கும் அடையாளக்குறி.

**கொம்புக்காரன்** – கொம்பு வாத்தியம் ஊதுபவன்; வாந்திபேதிக்குரிய தேவதை.

**கொம்புகாவி** – பல்லக்குத் தூக்குவோன்.

**கொம்புச்சுழி** – சுழிவகை.

**கொம்புசீவிவிடுதல்** – கொம்பைக் கூராக்கி விடுதல்; சண்டைமூட்டி விடுதல்; உற்சாகப் படுத்துதல்.

**கொம்புத்தேன்** – மரக்கிளையிலுள்ள தேனடையிலிருந்து எடுத்த தேன்; தூய தேன்.

**கொம்புத்தேனீ** – தேனீவகை.

**கொம்புதல்** – முயலுதல்; சினத்தல்.

**கொம்புப்பாகல்** – நீண்ட பாகல்வகை.

**கொம்புப்பிடி** – கத்தி முதலியவற்றிற்குக் கொம்பால் செய்த பிடி.

**கொம்புபிடித்தல்** – கொம்பை ஊதுதல்.

**கொம்புமுளைத்தல்** – பிறர்க்கில்லாத சிறப்புண்டாயிருத்தல்; ஆடு மாடு முதலியவற்றிற்குக் கொம்பு முளைத்தல்.

**கொம்பூதி** – கொம்பூதுவோன்; நத்தை.

**கொம்பேறிமூக்கன், கொம்பேறிமூர்க்கன்** – பச்சைப்பாம்பு, மரப் பாம்புவகை.

**கொம்மட்டி** – கொடிவகை; தும்மட்டிக்காய்.

**கொம்மட்டிமாதுளை** – ஒரு மாதுளை மரவகை.

**கொம்மி** – மகளிர் கைகொட்டிப் பாடியாடும் விளையாட்டு.

**கொம்மெனல்** – ஒலிக்குறிப்பு; பெருக்கக்குறிப்பு; விரைவுக்குறிப்பு.

**கொம்மை** – வட்டம்; பெருமை; திரட்சி; இளமை; அழகு; மார்பு; இளமுலை; வலிமை; மேடு; வீடு; கொத்தளம்; அடுப்புக்குமிழ்; கதவுக்குடுமி; அழுக்குத் துணியிடும் பெட்டி; கைகுவித்துக் கொட்டுகை; கொம்மட்டிக் கொடி; கம்புவகை; பதர்.

**கொம்மைகொட்டுதல்** – கும்மியடித்தல்; தட்டியழைத்தல்; முதுகைத் தட்டிக்கொடுத்தல்.

**கொய்** – மீன்வகை.

**கொய்சகம்** – ஓரம் கொய்து அடுக்கப்பட்ட உடை.

**கொய்தல்** – பறித்தல்; அறுத்தல்; கத்தரித்தல்; தெரிந்தெடுத்தல்; சீலை கொய்தல்; சிலிர்த்தல்.

**கொய்யகம்** – கொய்சகம்; மண்டபத்தில் அலங்காரமாக ஓரம் சுருக்கி அமைத்துத் தொங்கவிடப்படும் ஆடை.

**கொய்யடி, கொய்யடிநாரை** – வண்டானம் என்னும் நாரை வகை.

**கொய்யல், கொய்யா** – ஒரு பழமரவகை.

**கொய்யாக்கட்டை** – இடுக்கிச்சட்டம்; அச்சின் மீது இரண்டு அருகுகளிலும் வண்டிச் சட்டத்தைத் தாங்கும்படி குறுக்காக வைக்கப்படும் கட்டைகள்; கொய்யாமரத்தின் கட்டை.

**கொய்யுளை** – குதிரைப் பிடரிமயிர்; குதிரை.

**கொரடா** – குதிரைச் சவுக்கு; இடுக்கி.

**கொரலி** – தினை; வெண்தினை.

**கொரி** – கன்றின் வாய்ப்பூட்டு.

**கொரிக்கம்** – எழுத்தாணிப் பூண்டு.

**கொருடன்** – கொவ்வைக்கொடி.

**கொல்** – இரும்பு; உலோகம்; கொலைத் தொழில்; வருத்தம்; கொல்லன்; கொல்லன் தொழில்; கதவில் தைக்கும் இரும்பு; குறுக்குத் தாழ்; ஐயப்பொருள் தரும் ஓர் இடைச்சொல்; ஓர் அசைநிலை.

**கொல்குறும்பு** – கொல்லும் வேடர் ஊர், பாலை நிலத்தூர்.

**கொல்லங்கோவை** – காக்கணங்கொடி; ஆகாச கருடன்.

**கொல்லத்துக்காரன்** – கொத்துவேலை செய்பவன்.

**கொல்லம்பாகல்** – ஒரு பாகல்வகை.

**கொல்லமா** – கொட்டை முந்திரிமரம்.

**கொல்லமிளகு** – மிளகாய்வகை.

**கொல்லர்** – கம்மாளர்; அரண்மனை வாயில் காப்போர்.

**கொல்லற்றுவேலை** – காண்க: **கொத்துவேலை.**

**கொல்லறு** – காண்க: **கொத்துக்கரண்டி.**

**கொல்லன்** – கம்மாளன்; இரும்புவேலை செய்பவன்; அரண்மனை வாயிற்காவலன்.

**கொல்லன்கம்மாலை** – காண்க: **கொல்லன் பட்டரை.**

**கொல்லன்கோவை** – காண்க: **கொல்லங்கோவை.**

**கொல்லன்பகை** – அஞ்சன நஞ்சு.

**கொல்லன்பட்டடை** – அடைகல்.

**கொல்லன்பட்டரை** – கொல்லன் உலைக்கூடம்.

**கொல்லா** – கருவூலவறையில் வேலைபார்க்கும் நம்பிக்கையான வேலையாள்.

**கொல்லாக்கொலை** – சித்திரவதை.

**கொல்லாமை** – உயிர்க்கொலை செய்யாமை.

**கொல்லாவண்டி** – உயர்ந்தோர் ஏறிச் செல்கின்ற மாட்டுவண்டி.

**கொல்லாவிரதம்** – உயிர்க்கொலை செய்யாமையாகிய நோன்பு.

**கொல்லாவிரதியர்** – கொல்லாமையை நோன்பாக உடையவர்; சமணர்.

**கொல்லாவேதம்** – சைனாகமம்.

**கொல்லாவேதன்** – கொல்லாவேதத்தை அருளிய அருகன்.

**கொல்லி** – கொல்லும் தன்மையது; சேலம் மாவட்டத்திலுள்ள ஒரு மலை; மருதயாழ்த்திறவகை, பண்வகையுள் ஒன்று; கொல்லிப்பாவை.

**கொல்லிக்கௌவாணம்** – முற்காலத்து வழங்கிய ஒரு சிறுபண்வகை.

**கொல்லிச்சி** – கொல்லச் சாதிப்பெண்.

**கொல்லிச்சிலம்பன்** – கொல்லிமலைத் தலைவனாகிய சேரன்.

**கொல்லித்திறம்** – முற்காலத்து வழங்கிய ஒரு பண்வகை.

**கொல்லிப்பாவை** – கொல்லிமலையில் தேவரால் அமைக்கப்பெற்று நோக்குவோரைத் தன் வயப்படுத்தும் மோகினிப் படிமை.

**கொல்லிமலை** – சேரன்மலை.

**கொல்லிவாடி** – பாலை யாழ்த்திறவகை.

**கொல்லிவெற்பன்** – காண்க: **கொல்லிச்சிலம்பன்.**

**கொல்லுதல்** – வதைத்தல்; அழித்தல்; வெட்டுதல்; கதிரறுத்தல்; துன்பப்படுத்துதல்; கெடுத்தல்.

**கொல்லுலை** – கொல்லனின் உலைக்கூடம்; கம்மாளர் உலைமுகம்.

**கொல்லெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; ஒலியடங்குதற் குறிப்பு.

**கொல்லை** – முல்லைநிலம்; புன்செய்நிலம்; தரிசு; தினைப்புனம்; தோட்டம்; புழைக்கடை; மலங்கழிக்குமிடம்; மலம்; வரம்புகடந்து ஒழுகுவோர்.

**கொல்லைக்காரன்** – தோட்டம், வயல் முதலிய வற்றில் வேலைசெய்பவன்; குப்பையெடுப்பவன்.

**கொல்லைக்குப்போதல்** – மலங்கழித்தல்.

**கொல்லைப்பயிர்** – மேட்டுநிலப் பயிர்.

**கொல்லைமை** – வரம்புகடந்து நடத்தல்.

**கொல்லைவிளைவித்தல்** – தோட்டம் பயிரிடுதல்.

**கொல்லைவெளி** – வயல்வெளி.

**கொலு** – அரசசபை; அரச முன்னிலை; திருவோலக்கம், உல்லாச வீற்றிருப்பு; நவராத்திரிப் பண்டிகையில் பொம்மை முதலிய வற்றை அலங்காரமாக அமைக்கை.

**கொலுக்கூடம்** – கொலுமண்டபம்; அரசவை.

**கொலுகொலுத்தல்** – கலகலத்தல்; மட்கிப் போதல்; வாதத்தில் தோற்றல்; ஓயாமல் பேசுதல்.

**கொலுகொலுப்பு** – பகட்டு, ஆடம்பரம்; கொலு கொலுத்தல்; ஓயாமல் பேசுதல்.

**கொலுசு** – காலணியுள் ஒன்று, சங்கிலி.

**கொலுமண்டபம்** – திருவோலக்க மண்டபம்.

**கொலுவிடுத்தல்** – வீற்றிருத்தல்.

**கொலை** – உயிர்வதை, உயிரை உடம்பினின்று நீக்கல்.

**கொலைக்கடம்பூட்டுதல்** – கொலைத்தண்டனை நிறைவேற்றுதல்.

**கொலைக்களம்** – கொல்லப்படும் இடம்.

**கொலைக்குற்றம்** – உயிர்வதை செய்தலாகிய குற்றம்.

**கொலைகாரன்** – கொலை செய்வோன்; பழி பாவங்களுக்கு அஞ்சாதவன்.

**கொலைச்சிறை** – சிறைச்சாலையில் கொலைத் தண்டனைக்குரிய குற்றவாளிகளை வைக்கும் அறை.

**கொலைசெய்தல்** – கொல்லுதல்.

**கொலைஞன்** – கொலைகாரன்; வேடன்; சண்டாளன்.

**கொலைநவிலுதல்** – கொலைசெய்தல்.

**கொலைநன்** – கொலைகாரன்.

**கொலைப்பழி, கொலைப்பாதகம்** – கொல்லுதலாகிய பெரும் பாவம்; பெருந் தீச்செயல்.

**கொலைப்பாதகன்** – கொலைசெய்பவன்.

**கொலைமகள்** – கொற்றவை, துர்க்கை.

**கொலைமலை** – கொலைசெய்யும் மலையாகிய யானை.

**கொலையாளன், கொலையாளி** – காண்க: **கொலைகாரன்.**

**கொலையுண்ணுதல்** – கொலைசெய்யப்படுதல்.

**கொலைவன்** – கொலைகாரன்; வேடன்; சிவன்.

**கொவ்வை** – கொவ்வைக்கொடி.

**கொவ்வைக்காய்ப்பதம்** – கொவ்வைக்காய் போன்ற பசுமையாய் நெற்பயிரில் தோன்றும் இளம்பதம்.

**கொவிந்தம்** – செம்முள்ளிச்செடி.

**கொவிள்** – ஒரு மரவகை.

**கொழி(ழு)ஞ்சி** – கிச்சிலி, ஒருவகை நாரத்தை மரம்; கொள்ளுக்காய்வேளை; பூவாது காய்க்கும் மரம்.

**கொழித்தல்** – தெள்ளுதல்; ஒதுக்குதல்; வாருதல்; பொழிதல்; கொப்புளித்தல், குற்றங்கூறுதல்; ஆராய்தல்; பாராட்டிச் சொல்லுதல்; தொனித்தல்; செழிப்புறுதல்; மேலே கிளம்புதல்.

**கொழிப்பு** – கொழிக்கை; செழிப்பு; குற்றம்.

**கொழிப்பூண்டு** – குப்பைமேனிப்பூடு.

**கொழியல்** – கொழிப்பு; தவிடெடுபடாத அரிசி.

**கொழியலரிசி** – நன்றாகக் குற்றித் தீட்டப்படாத அரிசி.

**கொழு** – கொழுப்பு; உலோகக்கோல்; ஏர்க்காறு, கலப்பையிற் பதிக்கும் இரும்பு; துளையிடும் பெரிய ஊசி.

**கொழுக்கட்டை** – வெல்லம் முதலியன சேர்த்து அரிசி மாவால் செய்யும் சிற்றுண்டிவகை.

**கொழுக்கொடுத்தல்** – இளக்காரங் கொடுத்தல்; பெருமையுண்டாக்குதல்.

**கொழுகொம்பு** – கொடிகள் ஏறிப் படர்தற்கு நடும் கொம்பு; பற்றுக்கோடு; மரத்தின் நடு கொம்பு.

**கொழுங்கிரி** – மல்லிகைச்செடி.

**கொழுச்சிராய்** – கலப்பையிற் கொழுவை இணைக்கும் மரத்துண்டு.

**கொழுத்தட்டுதல்** – கலப்பைக்காறைக் கூர்மை யாக்குதல்.

**கொழுத்தல்** – செழித்தல்; உடற்கொழுப்பு மிகுதல்; வளம் மிகுத்தல்; குழம்பாயிருத்தல்; திமிர்கொள்ளுதல்; பூமி மதர்த்தல்.

**கொழுத்(ந்)தாடை** – கரும்பின் நுனிப் பகுதி.

**கொழுதுதல்** – கோதுதல், குடைதல்; பறித்தல்; கிழித்தல்.

**கொழுந்தன்** – கணவனுடன் பிறந்தான்; அளியன், மைத்துனன்; கணவன்.

**கொழுந்தன்பு** – இளகிய அன்பு.

**கொழுந்தி** – மனைவியின் தங்கை; தம்பியின் மனைவி.

**கொழுந்து** – இளந்தளிர்; இளமையானது; மென்மை; மருக்கொழுந்து; வெற்றிலைக் கொடி; சுடர்; படையின் முன்னணி; சாமரை முதலியவற்றின் நுனி.

**கொழுந்துக்கால்** – வெற்றிலைக்கொடிக்கு நடும் கொழுகொம்பு.

**கொழுந்துதல்** – சுடர்விட்டு எரிதல்; காய்ச்சப் படுதல்; வெயிலிற் கருகுதல்.

**கொழுந்துவிடுதல்** – சுடர்விடுதல்; தளிர்விடுதல்.

**கொழுந்தோடுதல்** – தளிர்விடுதல்.

**கொழுநன்** – கணவன்; இறைவன்.

**கொழுநனை** – மலரும் பருவத்து அரும்பு.

**கொழுநீர்** – பெருகிய நீர்; மிகப் புளித்த கள்; வியர்வை.

**கொழுப்பிறக்குதல்** – செருக்கடக்குதல்.

**கொழுப்பு** – செழிப்பு; நிணம்; செழுமை; குழம்பா யிருக்கை; செருக்கு; நிலத்தின் மதர்ப்பு, நில வளம்.

**கொழுப்புக்கல்** – சிவப்புக்கல்வகை.

**கொழுப்புக்குடல்** – ஆட்டின் சிறுகுடல்.

**கொழும்புகை** – நறும்புகை.

**கொழுமிச்சை** – கிச்சிலி; நாரத்தை.

**கொழுமீதி** – அரசாங்கத் தீர்வைபோக நிலக் கிழார் அடையும் நிலவருமானம்.

**கொழுமுதல்** – மரத்தின் பருத்த அடிப்பகுதி.

**கொழுமுறி** – இளந்தளிர்.

**கொழுமை** – செழுமை; இளமை; அழகு; நிறம்; குளிர்ச்சி.

**கொழுலாபம்** – வேளாண்மையிற் கிடைக்கும் ஊதியம்.

**கொழுவுகதவு** – கீற்கதவு.

**கொழுவுகோல்** – காண்க: கொழுகொம்பு.

**கொள்** – காணம்; குடைவேல்; சிறு நிறையளவு.

**கொள்கலம்** – பண்டமிடுங் கலம்; அணி, ஆடை, சாந்து, சாந்துமாலை முதலியன பெய்கலம்; பனையோலை, மூங்கில் இவற்றால் ஆகிய கூடை.

**கொள்கிரயம்** – கொள்முதல்; விலைக்குக் கொண்ட பொருள்.

**கொள்கை** – கருத்து; கோட்பாடு; பெறுகை; நோன்பு; ஒழுக்கம்; நிகழ்ச்சி; இயல்பு; செருக்கு; நட்பு; பாண்டவகை.

**கொள்கையிடம்** – தவச்சாலை.

**கொள்கொம்பு** – காண்க: கொழுகொம்பு.

**கொள்முதல்** – வாங்கின விலை.

**கொள்வளவு, கொள்வனை** – கொள்ளுகை, பெண் கொள்ளுகை.

**கொள்வனைகொடுப்பனை** – கொடுக்கல் வாங்கல்; திருமணத் தொடர்பாகப் பெண் கொடுத்தலும் எடுத்தலும்.

**கொள்விலை** – காண்க: கொள்முதல்.

**கொள்விலைக்காணி** – விலைக்கு வாங்கின நிலம்.

**கொள்வினை** – பெண்கொள்ளுகை.

**கொள்வோன்** – வாங்குவோன்; கற்போன்; நான்காம் வேற்றுமை.

**கொள்ள** – இன்னும்; நிரம்ப; காரணப்பொருளி லேனும் காலப்பொருளிலேனும் செயவெ னெச்சத்துடன் கூடவருந் துணைவினை.

**கொள்ளப்படுதல்** – மனத்துக் கொள்ளுதல்; நன்கு மதிக்கப்படுதல்; ஏற்கப்படுதல்.

**கொள்ளம்** – குழைசேறு.

**கொள்ளாகொள்ளை** – மிகுதி.

**கொள்ளாமை** – மிகை; பகை.

**கொள்ளார்** – மனம் பொறாதவர்; பகைவர்.

**கொள்ளி** – கொள்ளிக்கட்டை; நெருப்பு; பொறாமையும் முன்கோபமும் உள்ளவன்; மகன்; எருமைநாக்குப்பூண்டு.

**கொள்ளிக்கட்டை** – எரியும் கட்டை.

**கொள்ளிக்கண்** – தீய கண்.

**கொள்ளிக்கண்ணன்** – கண்ணூறுகாரன்; கொடி யவன்.

**கொள்ளிக்கரப்பான்** – குழந்தைக்கு வரும் கரப் பான் நோய்வகை.

**கொள்ளிக்கால்** – ஒரு கால் வெள்ளையான குதிரை; குற்றம்; நற்பேறில்லாத கால்.

**கொள்ளிசெருகுதல்** – தீவைத்தல்; கேடுசெய்தல்.

**கொள்ளித்தேள்** – கடுமையாகக் கொட்டுந் தேள் வகை.

**கொள்ளிபெறுதல்** – இறந்த கோயில் அடியாரை எரித்தற்காகக் கோயிலினின்று நெருப்புப் பெறுதல்.

**கொள்ளிமண்டிலம்** – கொள்ளியைச் சுழற்று வதால் ஏற்படும் வட்டம்.

**கொள்ளிமாலை** – பிணத்திற்கு அணியும் மாலை.

**கொள்ளியம்** – உமரிச்செடி; புன்கமரம்.

**கொள்ளியெறும்பு** – கடியால் மிக்க நோவை உண்டாக்கும் சிற்றெறும்புவகை.

**கொள்ளிவட்டம்** – கொள்ளி சுழற்றுவதனால் தோன்றும் வட்டம்.

**கொள்ளிவாய்ப்பிசாசம், கொள்ளிவாய்ப்பேய்** – வாயில் நெருப்புடையதாகக் கருதப் படும் பேய்வகை.

**கொள்ளிவைத்தல்** – நெருப்புவைத்தல்; எரிவினை செய்தல்; தீங்குசெய்தல்; கலகம் மூட்டுதல்.

**கொள்ளு** – காணம், ஒரு தானியவகை.

**கொள்ளுதல்** – எடுத்துக்கொள்ளுதல்; பெறுதல்; விலைக்குவாங்கல்; உரிமையாகக்கொள்ளுதல்; மணம் செய்துகொள்ளுதல்; கவர்தல்; உள்ளே கொள்ளுதல்; முகத்தல்; கற்றுக்கொள்ளுதல்; கருதுதல்; நன்குமதித்தல்; கொண்டாடுதல்; அங்கீகரித்தல்: மேற்கொள்ளுதல்; மனம் பொறுத்தல்; ஒத்தல்; பொருந்துதல்; உடலிற் காயம்படுதல்; எதிர்மறை ஏவலொருமை வினையொடு சேர்க்கப்படும் ஓர் அசை.

**கொள்ளுநர்** – கொள்வோர்; கற்போர்.

**கொள்ளுப்பாட்டன்** – பாட்டனுக்குத் தந்தை, இரண்டாம் பாட்டன்.

**கொள்ளுப்பேரன்** – பேரனின் மகன்.

**கொள்ளெனல்** – பறை முதலியவற்றின் ஒலிக் குறிப்பு; மிகுதிக் குறிப்பு.

**கொள்ளை** – சூறையாடுதல்; மிகுதி; கூட்டம்; பெருவாரிநோய்; தடை; விலை; பயன்.

**கொள்ளைக்காய்ச்சல்** – நச்சுச்சுரம்.

**கொள்ளைக்காரன்** – கொள்ளையடிப்பவன்.

**கொள்ளைகொடுத்தல்** – பறிகொடுத்தல்.

**கொள்ளைகொள்ளுதல்** – கவர்தல்; கொள்ளை யடித்தல்.

**கொள்ளைநோய்** – பெருவாரிநோய்.

**கொள்ளைபோதல்** – பொருள் முதலியன பலவா றாக அழிபடுதல்; களவுபோதல்.

**கொள்ளையடித்தல்,** **கொள்ளையாடுதல்** } – சூறையாடுதல்.

**கொள்ளையூட்டுதல்** – **கொள்ளைகொள்ளும்படி** விடுதல்.

**கொளகொளத்தல்** – தளர்தல், இளகியிருத்தல்.

**கொளகொளெனல்** – ஈரடுக்கொலிக்குறிப்பு; குழறுதற்குறிப்பு; இளகியிருத்தற்குறிப்பு.

**கொளல்வினா** – ஒரு பண்டத்தைக் கொள்ளும் நோக்கத்தோடு கேட்கும் கேள்வி.

**கொளாஅல்** – கொள்ளச்செய்கை.

**கொளு** – செய்யுள் முதலியவற்றின் கருத்தை விளக்கும் சொற்றொடர்; பழுவெலும்பு; உருவுதிரையை மாட்டுங் கருவி.

**கொளுக்கி** – கொக்கி.

**கொளுகொம்பு** – காண்க: **கொழுகொம்பு.**

**கொளுகொளுத்தல்** – காண்க: **கொளகொளத்தல்.**

**கொளுச்சொல்** – கருத்து.

**கொளுத்து** – உடற்சந்து; ஆபரணங்களின் பூட்டு.

**கொளுத்துதல்** – கொள்ளச்செய்தல்; விளக்குதல்; அறிவுறுத்தல்; தீப்பற்றவைத்தல்; வீணை முதலியன வாசித்தல்; நாடகம் முதலியவற்றை நடத்தல்; தண்டித்தல்; சண்டை மூட்டுதல்; கடுமையாய் வெயில் காய்தல்; தூற்றுதல்; வியக்கும்படி செயல்புரிதல்.

**கொளுந்துதல்** – தீப்பற்றுதல்.

**கொளுவி** – கொக்கி.

**கொளுவிக்கொள்ளுதல்** – பின்னிக்கொள்ளுதல்; பற்றுதல்.

**கொளுவிப்பிடித்தல்** – மாட்டிவிடுதல்; வசப் படுத்துதல்; வழக்குத் தொடுத்தல்.

**கொளுவியிழுத்தல்** – சண்டைக்கு இழுத்தல்; துன்பத்துக்கு உள்ளாக்குதல்.

**கொளுவுகயிறு** – ஏடு கட்டும் கயிற்றின் முடிப்பு.

**கொளுவுதல்** – கொள்ளச்செய்தல்; தீ மூட்டுதல்; பூட்டுதல்; தூண்டிலிடுதல்; அகப்படுதல்; மிதியடி முதலியன அணிதல்; வேலையில் அமர்தல்; சிக்குதல்; தந்திரஞ்செய்தல்; குடல் தூக்கிக்கொள்ளுதல்.

**கொளை** – பிடிப்பு; கோட்பாடு; பயன்; இசை; தாளம்போடுதல்; பாட்டு.

**கொளையமைத்தல்** – வில்லை நாணேற்றுதல்.

**கொற்கைவேந்தன்** – கொற்கைநகர்த் தலைவனான பாண்டியன்.

**கொற்சேரி** – கொல்லன் இருப்பிடம்.

**கொற்றக்குடை** – அரசாங்கக் குடை.

**கொற்றத்தேவி** – பட்டத்தரசி.

**கொற்றப்பெருங்கணி** – அரசாங்கச் சோதிடன்.

**கொற்றம்** – வெற்றி; வீரம்; வலிமை; வன்மை; அரசியல்.

**கொற்றம்வைத்தல்** – அரசாட்சியை ஒருவரிடம் ஒப்புவித்தல்.

**கொற்றமுரசு** – அரசாங்கத்திற்குரிய வெற்றி முரசு.

**கொற்றவஞ்சி** – பகைவரை வாளோச்சி அழித்த அரசனது புகழைப் பெருக உரைக்கும் புறத் துறை.

**கொற்றவள்ளை** – பகைவர் நாடு அழிவதற்கு வருந்துவதைக் கூறும்முகத்தான் அரசன் புகழைச் சொல்லும் புறத்துறை; நாடழிகை; தோற்ற வேந்தன் கொடுக்கும் திறை.

**கொற்றவன்** – அரசன்; வெற்றியுடையோன்; முடக்கொற்றான்.

**கொற்றவாயில்** – அரசவாயில்; ஆசாரவாயில்.

**கொற்றவி** – அரசி.

**கொற்றவுழிஞை** – பகைவர் நகரைக் கைக்கொள் ளுதற் பொருட்டு அரசன் படையெடுத்துச் செல்லுதலைக் கூறும் புறத்துறை.

**கொற்றவை** – வெற்றிக்குரியவள், துர்க்கை.

**கொற்றவைநிலை** – துர்க்கைக்குப் பலியிட்டுப் பரவும் புறத்துறை.

**கொற்றன்** – காண்க: கொத்தன்.
**கொற்றாள்** – கல் மண்களில் வேலைசெய்பவர்.
**கொற்றான்** – இலையற்ற கொடிவகை.
**கொற்றி** – துர்க்கை; ஒரு வரிக்கூத்துவகை; பசுவின் இளங்கன்று.
**கொற்றியார்** – துளசிமாலை முதலிய சின்னங்களை அணிந்து திருமால் அடியராய்த் திரியும் பெண் துறவியர்; கலம்பக உறுப்புள் ஒன்று; பிள்ளைப்பேற்றிற்குரிய தேவதை.
**கொற்று** – கொற்றுத்தொழில்; கொற்றர்; ஒரு கொத்தன் செய்யும் வேலையளவு; உணவு; தானியமாகப் பெறும் கூலி.
**கொற்றுதல்** – கொற்றல்.
**கொற்றுறை** – கொல்லன்பட்டரை.
**கொற்றை** – இழிவானது, கேவலமானது.
**கொறகொறெனல்** – தொண்டையின் கரகரப்புக் குறிப்பு.
**கொறடா** – குதிரைச் சவுக்கு; ஏவுநர்.
**கொறி** – ஆடு; மேடராசி; பல், அலகு முதலியவற்றால் தானியத்தைப் பிரித்துத் தின்னுதல்; சிறிதுசிறிதாகப் பொறுக்கி உண்ணுதல்; விட்டுவிட்டு ஒலித்தல்; அலப்புதல்.
**கொறித்துப்பார்த்தல்** – நெல் குற்றுவதற்குப் பதமாக உள்ளதா என்று அறிய வாயிலிட்டுப் பதம் பார்த்தல்; செருக்கால் வெறித்துப் பார்த்தல்.
**கொறிதலை** – நிலவேம்பு.
**கொறு** – கன்றின் வாய்ப்பூட்டு.
**கொறுக்கச்சி** – நாணல்வகை.
**கொறுக்காய், கொறுக்காய்ப்புளி** – காண்க: கொடுக்காய்ப்புளி; ஈழப்புளி.
**கொறுக்கு** – ஆண்குறி நோய்வகை.
**கொறுக்கை** – நாணல்; கடல்; ஆண்குறி நோய்வகை.
**கொறுக்கோல்** – காண்க: கொறு.
**கொறுகொறுத்தல்** – சினங்கொள்ளல்; குறட்டைவிடுதல்.
**கொறுகொறுவெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; சினக் குறிப்பு.
**கொறுடு** – கன்னம்.
**கொன்** – பயனின்மை; அச்சம்; காலம்; விடியற்காலம்; பெருமை; வலிமை.
**கொன்றை** – மரவகை: சரக்கொன்றை; செங்கொன்றை; மஞ்சட்கொன்றை.
**கொன்றைசூடி** – கொன்றைமாலை சூடிய சிவன்.
**கொன்றைப்பழக்குழல்** – கொன்றைப்பழத்தைத் துளைத்துச் செய்யப்பட்ட ஊதுகுழல்.
**கொன்றைவேந்தன், கொன்றைவேய்ந்தன்** – சிவபெருமான்; ஔவையார் இயற்றிய ஒரு நீதிநூல்.
**கொன்னாளன்** – பயனற்றவன்; பாவி.
**கொன்னித்தல்** – பேச நாத் திரும்பாதிருத்தல்.
**கொன்னுதல்** – திக்கிப் பேசுதல், குழறுதல்.
**கொன்னேச்சன்** – மாட்டிற் பற்றும் ஈவகை.
**கொன்னை** – திருத்தமற்ற பேச்சு; திக்கிப் பேசுகை, குழறுகை; தொன்னை; இகழ்ச்சி.
**கொனை** – நுனி.

# கோ

**கோ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (க்+ஓ); இறைவன்; பேரரசன்; அரசன்; தந்தை; தலைமை; மலை; குயவன்; பசு; எருது; தேவலோகம்; வானம்; பூமி; திசை; கதிர்; சூரியன்; சந்திரன்; வச்சிரப்படை; அம்பு; கண்; சொல்; மேன்மை; நீர்; இரசம்; இலந்தைமரம்; இரங்கற்குறிப்பு.
**கோக்கதவு** – பெரிய கதவு.
**கோக்கலம்** – வெண்கலப் பாத்திரம்.
**கோக்காமரம்** – கடலிற் செலுத்தும் கட்டுமர வகைகளில் ஒன்று; தூக்குமரம்.
**கோக்காலி** – பாத்திரங்கள் வைப்பதற்குச் சுவரை ஒட்டி அமைக்கப்படும் சட்டம்; நெட்டையானவள்; போரிலிருந்து வைக்கோலைக் கோத்தெடுக்கும் கருவி.
**கோக்குஞ்சம்** – அம்பறாத்தூணி.
**கோகடம்** – முயல்வகை.
**கோகண்டம்** – நெருஞ்சிற்பூண்டு.
**கோகத்தி** – பசுக்கொலையாகிய பாவம்.
**கோகம்** – சக்கரவாகப்புள்; செந்நாய்; தவளை; உலர்ந்த பூ.
**கோகயம்** – தாமரை.
**கோகரணம்** – பசுப்போல் காதசைக்கும் வித்தை; மலைநாட்டில் உள்ள ஒரு சிவதலம்.
**கோகருணி** – பெருங்குரும்பை.
**கோகலி** – கடப்பமரம்.
**கோகழி** – திருவாவடுதுறை என்னும் சிவதலம்.
**கோகன்னம்** – மலைநாட்டில்உள்ள ஒரு சிவதலம்; யோகாசனவகை.
**கோகனகத்தி** – திருமகள்; கலைமகள்.
**கோகனகம்** – செந்தாமரை.
**கோகனகத்தோன், கோகனகன்** – தாமரையில் பிறந்தவனாகிய பிரமன்.

**கோகனதம்** – காண்க: **கோகனகம்.**

**கோகனதன்** – நான்முகன், பிரமன்.

**கோகனதை** – தாமரையில் இருப்பவளாகிய திருமகள்.

**கோகனம்** – கரிசலாங்கண்ணி; நிலக்கடம்புப்பூடு; நிலவேம்பு.

**கோகிலம்** – குயில்; பல்லி; குரங்கு; துளை; சிறு குறிஞ்சாக்கொடி; கலப்பை; உலக்கை.

**கோகிலவாசம்** – குயிலுக்கு இருப்பிடமாகிய மாமரம்.

**கோகிலாட்சம்** – நீர்முள்ளிச்செடி; கொம்மட்டி மாதுளைமரம்.

**கோகிலோற்சவம்** – குயிலுக்கு மகிழ்ச்சியை விளைவிக்கும் மாமரம்.

**கோகு** – புயம்; கபடம்; அடைவுகேடு; கழுதை.

**கோகுகட்டுதல்** – காண்க: **கோகுதட்டுதல்.**

**கோகுத்தம்** – மல்லிகை.

**கோகுதட்டுதல்** – தோள்தட்டி ஆரவாரஞ் செய்தல்.

**கோகுலம்** – கண்ணன் வளர்ந்த ஆயர்பாடி; குயில்; குரங்கு; துளை; கோயில்; கொட்டில்; பசுக்கூட்டம்.

**கோகோவெனல்** – பேரொலிசெய்தற் குறிப்பு.

**கோங்கந்தட்டம்** – கோங்கம்பூ.

**கோங்கம்** – நெல்லிமரம்; ஒரு மரவகை.

**கோங்கலர்** – முற்காலத்தில் வழங்கிய ஒரு துகில் வகை.

**கோங்கிலவு** – ஒரு மரவகை.

**கோங்கு** – கோங்குவகை; நீர்க்கோங்கு; முள்ளிலவு; மரவகை.

**கோசக்கம்** – குழப்பம்.

**கோசகாரம்** – பட்டுப்பூச்சி.

**கோசங்கம்** – வைகறை.

**கோசணை** – பேரொலி.

**கோசம்** – முட்டை; உறை, கவசம்; ஐந்து கோசம்; மதிலுறுப்பு; ஆண்குறி; கருப்பை; கருவூலம்; கருவூல அறை; அகரமுதலி முதலிய புத்தகம்; பட்டா; அபிநயத்துக்குரிய அலிக்கை வகை; தொகுதி; சாதிக்காய்; வீதி; அடங்கல் கணக்கு.

**கோசம்பி** – கௌசாம்பி என்னும் நகரம்.

**கோசமதம்** – ஆண்யானையின் குறியிலிருந்து வரும் மதநீர்.

**கோசமம்** – பீர்க்கங்கொடி.

**கோசமாற்றுதல்** – பட்டா முதலியவற்றிற் பேர் மாற்றுதல்.

**கோசர்** – பழைய மறக்குடியினருள் ஒருசாரார்.

**கோசரபலம்** – சன்மராசியிலிருந்து தற்காலத்தில் கோள்கள் இருக்கும் நிலையின் பலன்.

**கோசரம்** – ஐம்பொறி, மனம் இவற்றுக்கு ஆதாரமானது; பொறியுணர்வு; ஊர்; குறித்த காலத்தில் கோள்கள் இருக்கும் நிலை; கோசார பலன்; கோத்திரம்; பூந்தாது; மகிழமரம்.

**கோசரித்தல்** – அறிவுக்குப் புலனாதல்.

**கோசலம்** – பசுமூத்திரம்; கோசலநாடு; பதினெண் மொழியுள் ஒன்று.

**கோசலை** – கோசலநாடு; இராமனின் தாய்.

**கோசவதி** – காண்க: **கோசமம்.**

**கோசன்** – சீர்பந்த பாடாணம்.

**கோசனை** – கோரோசனை; பேரொலி.

**கோசா** – அலி; அன்னிய ஆடவர் காணாதபடி திரையிட்டு வாழும் பெண்கள்.

**கோசாங்கம்** – நாணற்புல்.

**கோசாரம்** – குறித்த காலத்தில் கோள்கள் இருக்கும் நிலை.

**கோசாரி** – காண்க: **கோசமம்.**

**கோசாலை** – ஓரங்கொய்து சுருக்கப்பட்ட ஆடை; பசுக்கொட்டில்.

**கோசாவித்திரி** – பசுவைத் துதிக்கும் மந்திரம்.

**கோசிகம்** – பட்டாடை; ஒரு பண்வகை; சாமவேதம்; கூகை.

**கோசிகன்** – குசிகர் மரபில் வந்தவனான விசுவாமித்திரன்.

**கோசிகை** – பட்டுச்சீலை.

**கோசிலேபிடித்துவருதல், கோசிலேவருதல்** – காற்றின் திசையிலே செல்லும்படி கப்பற் சுக்கானைத் திருப்புதல்.

**கோசு** – கூப்பிடு தொலைவு; வீதி; தோணிப் பாயின் முன்புறக் கயிறு; தடவை; தோல்வி; செயல்; முட்டைக்கோசு.

**கோசுப்பாய்** – கப்பலின் பின்புறப் பாய்.

**கோசுபோதல்** – தாழ்ச்சியாதல்; தோல்வியுறுதல்.

**கோசுமந்தில்** – படகின் பின்பக்கத்துப் பாய் தாங்கும் கட்டை.

**கோட்காரன்** – கோட்சொல்லுவோன்.

**கோட்கூறு** – இராசியை முப்பது கூறுகளாகப் பிரிக்கை; கிரகக்கோளாறு.

**கோட்சொல்லி** – குறளை சொல்லுவோன்.

**கோட்டகம்** – கரை; பள்ளம்; ஆழமான நீர்நிலை.

**கோட்டங்காவலர்** – சிறைக்கூடங் காப்போர்.

**கோட்டம்** – வளைவு; வணக்கம்; நடுநிலை திறம்புகை; மனக்கோணல்; பகைமை; பொறாமை; நாடு; நகரம்; தோட்டம்; கரை; யாழ்; மாக்கோலம்; உண்பன; பசுக்கொட்டில்; பசுக்கூட்டம்; குளம்; வயல்; நீர்நிலை; குரங்கு; வெண்குட்டம்; அறை; கோயில்; ஒருமணப் பண்டவகை; மாறுபாடு; சிறைச்சாலை; இடம்; வாசனைச் செடிவகை; குராமரம்; பாசறை; பச்சிலை.

**கோட்டரவு** – மனவருத்தம்; வாட்டம்; துன்பம்.

**கோட்டலை** – துன்பம்; விகடக்கூத்து; மூட நடத்தை; சரசம்.

**கோட்டான்** – கூகை; கொக்குவகை.

**கோட்டி** – துன்பம்; பைத்தியம்; பகடி; நிந்தை; சபை; குழு; கூட்டம்; பேச்சு; அழகு; ஒருவரோடு கூடியிருக்கை; கோபுரவாயில்; மனைவாயில்; கிட்டிப்புள்; விகடக்கூத்து.

**கோட்டிக்காரன்** – பைத்தியக்காரன்.

**கோட்டிகொள்ளுதல்** – அவையிற் பேசுதல்; துன்புறுத்தல்; இகழ்தல்.

**கோட்டித்தல்** – ஆரவாரித்தல்.

**கோட்டிலக்கம்** – வகுத்த மிச்சம்; ஒருவகைச் சதுரக்கணக்கு.

**கோட்டினம்** – எருமைக்கூட்டம்.

**கோட்டு** – நெற்கூடு; சீட்டாட்டத்தில் எல்லாப் பிடிகளையும் பிடித்து வெல்லுதல்.

**கோட்டுதல்** – வளைத்தல்; ஓவியம் வரைதல்; முறித்தல்; கட்டுதல்.

**கோட்டுநூறு** – கிளிஞ்சிற் சுண்ணாம்பு.

**கோட்டுப்பூ** – மரக்கொம்புகளில் தோன்றும் பூ.

**கோட்டுமண்கொள்ளுதல்** – மண்ணைக் கொம்பாற் குத்திக் கிளறுதல்.

**கோட்டுமலை** – கொம்புள்ள மலையாகிய யானை.

**கோட்டுமா** – யானை; காட்டுப்பன்றி; எருமைக் கடா.

**கோட்டுமீன்** – சுறாமீன்.

**கோட்டுவாத்தியம்** – வீணைவகை.

**கோட்டுவாய்** – கோடைவாய்; கொட்டாவி.

**கோட்டுவான்** – கோட்டான்; ஒரு நீர்ப்பறவை வகை.

**கோட்டூர்தி** – யானைத்தந்தத்தாற் செய்த பல்லக்கு.

**கோட்டெங்கு** – குலைகளையுடைய தெங்கு.

**கோட்டை** – மதிலரண்; இஞ்சி; காடு; பூட்டின் ஓர் உறுப்பு; வீட்டின் உள்ளிடம்; இருபத்தொரு மரக்கால் கொண்ட ஓர் அளவை; நெல்லை உள்ளே பெய்து கட்டிய நெற்கோட்டை; ஒரு நிலவளவு; வைக்கோற்போர்; இலை, புளி முதலியவற்றின் கட்டு; ஏராளம்; பரிவேடம்.

**கோட்டைகட்டுதல்** – மதிலரண் எழுப்புதல்; பெரும்பொருள் திரட்டுதல்; மனோராச்சியம் செய்தல்; பொய்க்கதை கட்டுதல்; பரிவேடம் கொள்ளுதல்; நெல்விதையைக் கோட்டையாகக் கட்டுதல்.

**கோட்டைப்போர்** – வைக்கோற்போர்.

**கோட்டைபிடித்தல்** – பகைவரது நாட்டைப் பிடித்தல்; அரிய செயலைச் செய்துமுடித்தல்.

**கோட்டைமேடு** – அகழிக்குப் புறம்பேயுள்ள மண்மேடு.

**கோட்டைவெளி** – கோட்டைக்கு வெளியிலுள்ள இடம்.

**கோட்படுதல்** – கொள்ளப்படுதல், பிடிக்கப்படுதல்; அறியப்படுதல்; வலிமைகொள்ளுதல்.

**கோட்படுபதம்** – மாட்டுக்குளம்பு.

**கோட்பறை** – செய்திகளை நகரத்தார்க்குத் தெரிவிக்கும் பறை.

**கோட்பாடு** – கொள்கை; நடத்தை.

**கோட்பு** – கொள்ளுகை; வலிமை.

**கோட்புகுதல்** – மரம் முதலியன பயன்கொள்ளும் பருவத்தனவாதல்.

**கோடகசாலை** – ஒரு பூண்டுவகை.

**கோடகம்** – முடியுறுப்புள் ஒன்று, சிகரமாகச் செய்த முடிவகை; பல தெருக்கள் கூடுமிடம்; குதிரை; அசுவதிநாள்; புதுமை; குண்டிகை.

**கோடங்கி** – உடுக்கை; உடுக்கை அடித்துக் குறி சொல்வோன்.

**கோடங்கிழங்கு** – சிற்றரத்தைச்செடி.

**கோடணை** – ஒலி; முழக்கம்; யாழ் வாசித்தல்; வாச்சியப் பொது; அலங்காரம்; கொடுமை.

**கோடணைபோக்குதல்** – பெருமுழக்கம் உண்டாகச் செய்தல்.

**கோடதகம்** – சுக்கு.

**கோடபதி** – கோடவதி; உதயணனுடைய யாழ்.

**கோடம்** – பேரொலி; வெண்கலம்; எல்லை; குதிரை; கோட்டை; குடில்; மாமரம்; வளைவு; செங்கருங்காலி; முடியுறுப்பு ஐந்தனுள் ஒன்று; ஒருகால் முடம்.

**கோடரம்** – மரக்கொம்பு; மரம்; சோலை; தேரின் மொட்டு; எட்டிமரம்; குரங்கு; மரப்பொந்து; குதிரை.

**கோடரவம்** – துன்பம், வருத்தம்.

**கோடரி** – கோடாலி, மரம்வெட்டுங் கருவி.

**கோடரிக்காம்பு** – கோடாலியின் பிடி; தன் குலத்தை அழிப்பவன்.

**கோடல்** – கொள்ளுகை; பாடம் கேட்கை; மனத்துக்கொள்ளுகை; வளைவு; முறித்தல்; வெண்காந்தள்.

**கோடவதி** – வீணை.

**கோடவி** – துர்க்கை.

**கோடா** – சாராய வண்டல்; கேலி.

**கோடாகோடி** – காண்க: **கோடானுகோடி.**

**கோடாங்கி** – வரிக்கூத்துவகை; மாதராடை; உடுக்கை.

**கோடாசலம்** – பேதியைக் கட்டும் மருந்துவகை.

**கோடாசுழி** – கோடகசாலைப்பூண்டு.

**கோடாஞ்சி** – பெரிய மரவகை.

**கோடாய்** – செவிலித்தாய்.
**கோடாரி** – காண்க: **கோடரி.**
**கோடாலம்** – பிறைபோல் வளைந்த மாலைவகை.
**கோடாலி** – காண்க: **கோடரி.**
**கோடாலிக்காம்பு** – காண்க: **கோடரிக்காம்பு.**
**கோடானுகோடி** – பலகோடி; அளவில்லாமை.
**கோடி** – நூறு நூறாயிரம், நூறு லட்சம்; சீலை; புதுச்சீலை; புதுமை; வளைவு; முடிமாலை; தொகுதி; அறுபத்துநான்கு அக்குரோணி கொண்ட படை; இருபது; வரிசை; நுனி; கடலுட் செல்லும் தரைமுனை; மூலை; வீட்டின் புறக்கோடி; விளிம்பு; படையின் பிற்கூழை; தேவைக்கு அதிகமான தண்ணீர்; குறிப்பு; வயிரக் குணங்களுள் ஒன்று; எல்லை.
**கோடிக்கரை** – தனுக்கோடி முதலிய தீர்த்த கட்டம்.
**கோடிக்கரையான்தோணி** – கள்ளத்தோணி.
**கோடிக்கல்** – கட்டடத்தின் மூலைக்கல்.
**கோடிக்காரன்** – மிக்க செல்வமுடையவன்; கொடுக்கல்வாங்கல் செய்யும் மார்வாரி; சீபாதம் தாங்கி.
**கோடிக்குத்தல்** – தெருப்பாய்ச்சல்.
**கோடிகம்** – பூந்தட்டு; குண்டிகை; அணிகலச் செப்பு; ஆடை.
**கோடிகர்** – ஆடை நெய்வோர்.
**கோடிகாண்பித்தல்** – குறிப்புக் காட்டுதல்.
**கோடித்தரை** – விளைநிலமாகப் புதிதாகத் திருத்தப்பட்ட நிலம்.
**கோடித்தல்** – அலங்கரித்தல்; ஒலித்தல்; அமைத்தல்; மனோரதஞ் செய்தல்; வேண்டுதல்.
**கோடிதீர்த்தம்** – தனுக்கோடி முதலிய **கோடிக் கரை.**
**கோடிப்பருவம்** – இளமைப் பருவம்.
**கோடிப்பாம்பு** – பழக்கப்படாத பாம்பு.
**கோடிப்பாலை** – பாலைவகை; ஒரு பண்வகை.
**கோடிபோடுதல்** – கணவன் இறந்தவுடன் கைம்பெண்ணுக்கு உற்றார் புதுப்புடைவை இடுதல்.
**கோடிமுரிதல்** – வயிரக் குற்றம் பன்னிரண்டனுள் ஒன்று.
**கோடியர்** – கூத்தர்; பல்லக்குத் தூக்குவோர்.
**கோடியலூர்தி** – யானைத் தந்தத்தாற் செய்யப்பட்ட வாகனம்.
**கோடியில்லாமை** – காண்க: **கோடிமுரிதல்.**
**கோடியோடுதல்** – ஏரி நீர்நிரம்பி வழிதல்.
**கோடிரம்** – கீரி; இந்திரகோபம்.
**கோடீசுவரன்** – பெருஞ்செல்வன்.
**கோடீரம்** – முடி; சடை; இந்திரன் வில்.
**கோடு** – வளைவு; நடுநிலை நீங்குகை; யானையின் தந்தம்; விலங்குகளின் கொம்பு; ஊதுகொம்பு; நீர்வீசுங் கொம்பு; மரக்கொம்பு; யாழ்த்தண்டு; 'கெ', 'கே' முதலியவற்றின் தலைப்பிலுள்ள கொம்புக் குறியீடு; பிறைமதி; சங்கு; குலை; மயிர்முடி; மலையுச்சி; மலை; மேட்டுநிலம்; வரி; ஆட்டம் முதலியவற்றிற்கு வகுத்த இடம்; நீர்க்கரை; குளம்; காலவட்டம்; வரம்பு; ஆடைக்கரை; முனை; பக்கம்; அரணிருக்கை; கொடுமை; நீதிமன்றம்.
**கோடுகீறுதல்** – குறிப்பிட்டுக் காண்பித்தல்.
**கோடுதல்** – வளைதல்; நெறிதவறுதல்; நடுவுநிலைமை தவறுதல்; வெறுப்புறுதல்.
**கோடை** – மேல்காற்று; வேனிற்காலம்; வெயில்; கோடைப்பயிர்; கோடைக்கானல்; குதிரை; வெண்காந்தள்; செங்காந்தள்.
**கோடைக்கிழங்கு** – சிற்றரத்தை.
**கோடைக்கொட்டை** – நிலக்கடலை.
**கோடைச்சவுக்கு** – ஆற்றுச்சவுக்கு.
**கோடைப்பூசணி** – கோடைக்காலத்தில் காய்க்கும் பூசணிவகை.
**கோடைப்போகம்** – கோடைக்காலத்துப் பயிர்.
**கோடையிடி** – கோடைப்பருவத்து மழையிடி.
**கோண்** – வளைவு; மாறுபாடு; கொடுங்கோன்மை; கோடம்; நுண்ணிய பகுதி; பாத்திரத்தின் மூக்கு.
**கோண்டம்** – குறிஞ்சாக்கொடி; நெருஞ்சில்.
**கோண்டன்** – கீழ்மகன்; பெருங்கொப்பூழன்.
**கோண்டை** – இலந்தைப்பழம்; கமுகு.
**கோண்மா** – புலி, சிங்கம் முதலிய கொடிய வன விலங்குகள்.
**கோண்மீன்** – கிரகம்.
**கோண்விழுதல்** – கோணலாதல்.
**கோணக்களிகிண்டுதல்** – குழப்பம் உண்டாக்குதல்.
**கோணக்கொம்பு** – வாங்கல் என்னும் ஊதுகருவி; வளைவான கொம்பு.
**கோணங்கி** – கோமாளி; உடுக்கையடித்துக் குறிசொல்வோன்.
**கோணங்கிக்கூத்து** – கோமாளிக்கூத்து; ஒழுங்கற்ற நடையுடைகள்.
**கோணங்கித்தாசரி** – உடலைக் கோணலாக வளைத்து நடிக்கும் ஓர் இனத்தவன்.
**கோணம்** – வளைவு; வளைந்த வாள்; யானைத் தோட்டி; சிறு தெரு; குதிரை; மூக்கு; மூலை; ஒதுக்குப்புறமான இடம்; வயற்காடு.
**கோணல்** – வளைவு; கூன்; மாறுபாடு; மனவுளைச்சல்.
**கோணல்மாணல்** – தாறுமாறு.
**கோணல்மூஞ்சி** – வெறுப்பு, சிரிப்பு முதலியவற்றைக் காட்டும் முகம்.
**கோணவட்டம்** – காண்க: **கோணாவட்டம்.**
**கோணவாய்** – கோணலாயுள்ள வாய்.

**கோணன்** – கூனன்; நீதிக்கேடன்.

**கோணாமுகம்** – சூழ அகழியிருக்கை.

**கோணாய்** – ஓநாய்; ஆண்நரி.

**கோணாவட்டம்** – கோணத்துள் வட்டம்; அரச விருதுகளுள் ஒன்று.

**கோணி** – சாக்குப்பை; எட்டு மரக்கால்கொண்ட ஓர் அளவு; பன்றி; அத்திமரம்.

**கோணிக்கயிறு** – சாக்குத் தைக்கும் சணல்நூல்.

**கோணிப்பை** – சாக்கு.

**கோணியல்** – காண்க: **கோணிப்பை.**

**கோணியலூசி, கோணியூசி** – சாக்குத் தைக்கும் ஊசி.

**கோணுதல்** – வளைதல்; கோணலாயிருத்தல்; நெறிபிறழ்தல்; மாறுபடுதல்; வெறுப்புக் கொள்ளுதல்.

**கோணை** – கோணல்; வளைவு; கொடுமை; தொல்லை; வலிமை; அழிவின்மை; பீடை.

**கோணைமாதம்** – பீடைமாதமாகிய மார்கழி.

**கோணையன்** – வக்கிரகுண முள்ளவன்.

**கோத்தணிகை** – காண்க: **கொடிமுந்திரிகை.**

**கோத்தல்** – மணி முதலியவற்றினோடு நூலைப் புகுத்தியிணைத்தல்; ஒழுங்குபடுத்துதல்; முறையாகக் கூறுதல்; தொகுத்துரைத்தல்; தொடுத்தல்; திறமையாகக் கதை முதலியன புனைந்து கூறுதல்; உடுத்துதல்: கைபிணைத் தல்; ஒன்றுசேர்த்தல்; கலந்துகொள்ளுதல்; எதிர்த்தல்.

**கோத்தனி** – காண்க: **கோத்தணிகை.**

**கோத்திரசம்** – ஒரு குலத்தில் தோன்றியது.

**கோத்திரசன்** – ஒரு குலத்தில் பிறந்தவன்.

**கோத்திரப்பெயர்** – குடிப்பெயர்.

**கோத்திரம்** – குலம்; பூமி; வரகு; நெட்டிப்புல்.

**கோத்திரமின்மை** – மறுபிறப்புக்குரிய கருமம் இல்லாமையாகிய அருகன் எண்குணத்துள் ஒன்று.

**கோத்திரவம்** – வரகு.

**கோத்திரி** – நற்குலத்தோன்; மலை; முந்திரிகை மரம்; சிறுபந்தம்.

**கோத்திரிகை** – முந்திரிகைமரம்.

**கோத்திரை** – பூமி.

**கோத்திழைத்தல்** – பாய், கூடை முதலியவற்றைப் பழுதுபார்த்தல்.

**கோத்து** – பட்டாளந் தங்குமிடம்.

**கோத்துக்கொடுத்தல்** – பிறருக்கு ஊசியில் நூலைக் கோத்துக்கொடுத்தல்; இருவருக்குள் பகையுண்டாகும்படி ஒருவர் பேச்சை மற்ற வர்க்கு மாற்றி உரைத்தல்.

**கோத்தும்பி** – அரசவண்டு; கோத்தும்பி என்னும் தொடரை ஈற்றில் கொண்டுவரும் பாடல் களையுடைய திருவாசகப் பதிகம்.

**கோத்துவாங்குதல்** – ஆடைக்கரையை வேறு நூலில் தனியாக நெய்தல்; கோணி முதலியன தைத்தல்.

**கோத்துவிடுதல்** – துன்பத்துக்கு உள்ளாக்குதல்; பகைமூட்டுதல்.

**கோத்தை** – பழுது.

**கோதடி** – கப்பற்கயிற்றை உரைசாமற் காக்குந் தடி.

**கோதண்டபாணி** – கோதண்டத்தைக் கையில் கொண்டவனான இராமன்.

**கோதண்டம்** – வில்; இராமனது வில்; புருவநடு; பண்டைக்காலத்தில் பள்ளிச் சிறாரைத் தண்டிக்கும் தொங்குகயிறு.

**கோதந்தி** – கன்னம்; தாடை.

**கோதம்** – பொல்லாங்கு; சினம்; கோத்திரம், குலம்.

**கோதமநதி** – கோதாவரி.

**கோதல்** – கேடடைந்த பொருள்.

**கோதனம்** – பசுவின் கன்று; பசுச்செல்வம்.

**கோதா** – உடும்பு; மற்கட்டுங் களம்.

**கோதாட்டம், கோதாட்டு** – வருந்துகை; வஞ்சிக்கை; குறும்பு விளையாட்டு.

**கோதாட்டுதல்** – சீராட்டுதல்; குற்றங்களைப் போக்குதல்.

**கோதாணி** – பெருங்குரும்பை.

**கோதாரி** – கக்கல்கழிச்சல்நோய், வாந்திபேதி; கொள்ளைநோய்.

**கோதாவ(வி)ரி** – கோதாவரி ஆறு.

**கோதாளை** – கப்பற்குழாயின் வாய்.

**கோதானம்** – ஒன்பது கொடைவகையுள் ஒன் றாகிய **பசுக்கொடை.**

**கோதி** – கோதுமை.

**கோதிகை** – உடும்பு; முதலை.

**கோது** – சக்கை; பழம் முதலியவற்றின் தோல்; பூ முதலியவற்றின் நரம்பு; குற்றம்; பயனின்மை; நெறிதவறுகை; உள்ளக்களிப்பு.

**கோதுகம், கோதுக(கு)லம்** – உள்ளக்களிப்பு.

**கோதுதல்** – மூக்கால் இறகைக் குடைதல்; மயிர்ச் சிக்கெடுத்தல்; சிதறச் செய்தல்; தோண்டுதல்; துளைத்தல்.

**கோதும்பை, கோதும, கோதுமை** – ஒரு கூலவகை.

**கோதூளி** – மாலைநேரம்.

**கோதை** – பெண்கள் தலைமயிர்; ஆண்டாள்; பூமாலை; முத்தாரம்; ஒழுங்கு; பெண்; சேரன்; காற்று; பூதம்; உடும்பு; வில்லாளர் கையில் பூணும் தோலுறை; மரக்காற் பறை; கௌதமி.

**கோதையன்** – பயனில்லாப் பொருளைக் கூறுவோன்.

**கோந்தச்சார்** – சிறுமையன், அற்பன்.

**கோந்தளங்காய்** – கடல்வழியாகக் கொண்டுவரப் படும் ஒருவகை மருந்துப் பழம்.

**கோந்தி** – குரங்கு.

**கோந்து** – பிசின்.

**கோந்துரு** – பாட்டனுக்குப் பாட்டன்; ஏளனம்.

**கோநகர்** – தலைநகர்; கோயில்.

**கோநாய்** – ஓநாய்.

**கோப்பழித்தல்** – சீரழித்தல்.

**கோப்பன்** – கெட்டிக்காரன்; தேர்ந்த போக்கிரி.

**கோப்பாளி** – வரிக்கூத்துவகை; தேர்ந்த போக்கிரி.

**கோப்பிடுதல்** – ஏற்பாடுசெய்தல்.

**கோப்பியம்** – இரகசியம்; அடக்கம்.

**கோப்பு** – கோக்கை; ஒழுங்கு; அமைப்பழகு; சீர்; அலங்காரம்; கவிவு; பகட்டு; பகடி; உபாயம்; தூக்கும் சுமை; காய்கறிகள்; அலுவலக ஆவணத்தொகுப்பு.

**கோப்புமுறை** – பொருந்தும்முறை.

**கோப்பெண்டு** – அரசமாதேவி.

**கோப்பெருங்கணக்கர்** – அரசாங்கத்துத் தலைமைக் கணக்கர்.

**கோப்பெருங்கிழவோள், கோப்பெருந்தேவி** – பட்டத்தரசி.

**கோப்பெருமுதியர்** – அரசாங்கத்தில் அனுபவம் முதிர்ந்த விருத்தர்.

**கோப்பெருவேந்தன்** – மன்னர்மன்னன், அரசர்க் கெல்லாம் அரசன், பேரரசன், சக்கரவர்த்தி.

**கோபக்காரன்** – சினம் மிகுதியுள்ளவன்.

**கோபகுண்டம்** – எட்டிமரம்.

**கோபங்காய்ந்தோர்** – கோபத்தை அடக்கியவ ரான முனிவர்.

**கோபங்கொள்ளுதல்** – சினம்கொள்ளுதல்; புண் முதலியவை கடுமையாதல்.

**கோபஞ்செலுத்துதல்** – சினத்தை வெளிப்படுத்து தல்.

**கோபத்திரம்** – தாமரைத் தண்டிலுள்ள நூல்.

**கோபத் தீ** – உயிர்த் தீக்களுள் ஒன்றான சினம்.

**கோபதாபம்** – பெருஞ்சினம்.

**கோபதி** – எருது; இந்திரன்; சிவன்; சூரியன்.

**கோபம்** – சினம்; வெறுப்பு; தம்பலப்பூச்சி; ஒரு துகில்வகை.

**கோபவல்லி** – பெருங்குரும்பைக்கொடி.

**கோபன்** – சிவன்; இடையன்; ஆநிரை காப்போன்.

**கோபனம்** – மறைவு, இரகசியம்.

**கோபனை** – கவண்.

**கோபாலகன், கோபாலன்** – கோக்களைக் காப்பவன், இடையன்; கண்ணபிரான்.

**கோபாலிகை** – காண்க: **கோபிகை.**

**கோபி** – சினமுள்ளோன்(ள்); இடைச்சி; நன்னாரி; கோபிசந்தனம்; கோபிசந்தனத்தால் அணியும் நெற்றிக்குறி; கருநொச்சி.

**கோபிகை** – இடைச்சி.

**கோபிசந்தனம்** – ஒருசார் திருமால் அடியார்கள் அணியும் ஒருவகை மஞ்சள் திருமண்.

**கோபித்தல்** – சினத்தல்; புண் முதலியன சினத் தல்; கடிதல்.

**கோபிதம்** – கோபம்.

**கோபிதாரம்** – குராமரம்.

**கோபிநாதன்** – இடைச்சியர் நாயகனான கண்ண பிரான், திருமால்.

**கோபிநாமம்** – திருமால் அடியார்கள் கோபி சந்தனத்தால் அணியும் நெற்றிக்குறி.

**கோபினை** – கோபம்.

**கோபீகன்** – அதிக கோபமுள்ளவன்.

**கோபுரத்தும்பை** – அடுக்குத்தும்பை.

**கோபுரந்தாங்கி** – கோபுரத்தைத் தாங்குவது போலச் செய்திருக்கும் பதுமை; காரிய நிருவாகியாக நடிப்போன்.

**கோபுரம்** – நகரம் அல்லது கோயிலின் பெரு வாயில் மேலமைப்பு; வாயில்.

**கோபுரவாச(யி)ல்** – கோபுரத்தோடுங் கூடிய வாயில்; கோபுரத்தின் கீழ்நிலை.

**கோம்பல்** – முன்கோபம்; தணியாக் கோபம்.

**கோம்பறை** – ஒன்றுமற்றது, பயனற்றது.

**கோம்பி** – பச்சோந்தி; ஓணான்; ஒந்திப்பொது.

**கோம்பு** – சினக்குறிப்பு.

**கோம்புதல்** – தேங்காய் முதலியவற்றின் மேல் ஓடு; அறிவிலி; ஓர் ஊர்.

**கோமகள்** – அரசி; தலைவி.

**கோமகன்** – இளவரசன், அரசகுமாரன்; அரசன்.

**கோமடந்தை** – இராசலக்குமி, திருமகள்; அரசி.

**கோமணம்** – காண்க: **கோவணம்.**

**கோமணாண்டி** – கோவணத்துடன் திரியும் பரதேசி.

**கோமணிக்குன்றம்** – வெண்கலமலை.

**கோமதி** – ஓர் ஆறு.

**கோமயம்** – பசுவின் சாணம்; கோமூத்திரம்.

**கோமரம்** – தெய்வ ஆவேசம்; சதுரக்கள்ளி.

**கோமளம்** – அழகு; இளமை; மென்மை; மகிழ்ச்சி; கறவைப் பசு; மாணிக்கவகை.

**கோமாட்டி** – தலைவி; அரசி.

**கோமாதாக்கள்** – நத்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என்னும் ஐவகைப் பசுக்கள்.

**கோமாயு** – நரி.

**கோமாரி** – மாடுகளுக்கு வாயிலும் கால்களிலும் வரும் நோய்.

**கோமாள்** – காண்க: **கோமகள்.**

**கோமாளம்** – குதித்து விளையாடுகை; குதித் தாடும் ஓர் அநாகரிகக் கூத்து.

**கோமாளி** – தன் சொல்லாலும் செயலாலும் மற்றவரைச் சிரிக்கச்செய்பவன், விகடன்; காண்க: **கோணங்கி.**

**கோமாளிக்கூத்து** – நகைப்பு விளைக்குஞ் செயல்.

**கோமான்** – அரசன்; பெருமையிற் சிறந்தோன்; மூத்தோன்; குரு; பன்றி.

**கோமி** – கோமதி ஆறு.

**கோமியம்** – காண்க: **கோமயம்; கோமேதகம்.**

**கோமுகம்** – பசுவின் முகம்போன்ற இருக்கை; பசு முதலியவற்றின் முகவடிவாகச் செய்யப் பட்ட நீர்விழும் வாய்.

**கோமுகாசனம்** – பசுவின் முகம்போன்ற இருக்கை; கணுக்கால்களை இடுப்புச் சந்தில் சேர்க்கும் ஆசனவகை.

**கோமுகி** – பசு முதலியவற்றின் முகவடிவாகச் செய்யப்பட்ட நீர்விழும் தூம்பு.

**கோமுகை** – காண்க: **கோமுகி.**

**கோமுற்றவர்** – அரசர்.

**கோமுறை** – அரசிறை; அரசனது நெறி தவறாத ஆட்சி.

**கோமுனி** – தலைமை முனிவன்; அரசமுனி.

**கோமூத்திரம்** – பசுவின் சிறுநீர்.

**கோமூத்திரிகை** – ஒருவகைச் சித்திரகவி; புல் வகை.

**கோமேதகம்** – ஒன்பதுவகை மணியுள் ஒன்று.

**கோமேதம்** – காண்க: **கோமேதகம்;** ஆவின் கொழுப்பை அவியாகக் கொடுத்துப் புரியும் ஒரு வேள்வி.

**கோய்** – கள் முகக்கும் ஏனம்; பரணிச் செப்பு; பரணிநாள்; குகை.

**கோயக்கண்** – மாறுகண்.

**கோயில்** – அரண்மனை; ஆலயம், கடவுளை வழி படும் இடம்; சிதம்பரம்; திருவரங்கம்; வீர சைவர் அணியும் இலிங்கச் செப்பு; கோயிற் பற்று; நாற்சீர்த் தூக்கு.

**கோயில்கொள்ளுதல்** – வாழுமிடமாகக் கொள்ளு தல்.

**கோயில்மாடு** – கோயிலுக்கு விடப்பட்ட மாடு; பெருமாள்மாடு; அடங்காத் தடியன்.

**கோயில்வாரியம்** – கோயில் விசாரணைச் சபை; கோயில்களைப் பராமரிக்கும் சபை.

**கோயிலார்** – கோயில் வேலைக்காரர்.

**கோயிலாழ்வார்** – கருவறை; ஆராதனைப் பெட்டி.

**கோயிலாள்** – பட்டத்தரசி.

**கோயிற்கட்டணம்** – அந்தப்புரம்; கோயிலுள் செல்லுவதற்குத் தரும் பணம்.

**கோயிற்கட்டி** – உண்டைக்கட்டி.

**கோயிற்காலம்** – கோயில்களில் அவ்வக்காலத்துச் செய்யப்படும் பூசை.

**கோயிற்காளை** – காண்க: **கோயில்மாடு.**

**கோயிற்கிராமம்** – கோயிலுக்குச் சொந்தமான ஊர்.

**கோயிற்கூழைத்தனம்** – அரசன் அவையிலுள் ளோர் காட்டும் போலி வணக்கம்.

**கோயிற்சாந்து** – அரசன் அணிதற்குரிய கலவைச் சந்தனம்.

**கோயிற்சுற்று** – கோயிலை அடுத்துள்ள இடம்.

**கோயிற்சேரி** – கோயிலுக்குச் சொந்தமான ஊர்ப்பகுதி.

**கோயிற்பற்று** – கோயிலுக்குரிய நிலம் முதலியவை; கிறித்தவக் கோயிலின் அதிகாரத் திற்குட்பட்ட ஊர்ப்பகுதி.

**கோயிற்புறம்** – கோயிலுக்கு அறக்கட்டளையாக விடப்பட்ட நிலம்.

**கோயிற்பெருச்சாளி** – கோயிலில் வாழும் பெருச் சாளி; கோயிற்சொத்தை அபகரிப்போன்.

**கோயின்மேரை** – விளைச்சலில் கோயிலுக்குக் கொடுக்கும் ஒரு பகுதி; கோயிற்குறுணி.

**கோயின்மை** – பெருமை; செருக்கு.

**கோர்க்கலம்** – மட்கலம்.

**கோரக்கர்மூலி** – கஞ்சா; கோரக்கநாதர் பயன் படுத்திய மூலிகை.

**கோரகம்** – இளம் பூவரும்பு; வட்டில்; தக்கோலம்.

**கோரகை** – பௌத்தத் துறவியரின் பிச்சைப் பாத்திரம்; அகப்பை; அரும்பு; கஞ்சா.

**கோரங்கம்** – நெல்லி.

**கோரங்கி** – சிற்றேலம்.

**கோரசம்** – சிவல் என்னும் பறவை.

**கோரண்டம்** – பெருங்குறிஞ்சி; மருதோன்றி மரம்; செம்புள்ளி.

**கோரணி** – கேலிக்கூத்து; காக்காய்வலிப்பு, ஒரு நோய்; முணுமுணுப்பு.

**கோரதந்தம்** – காண்க: **கோரப்பல்.**

**கோரதம்** – எருதினால் இழுக்கப்படும் தேர்.

**கோரதரம்** – ஒரு நரகம்.

**கோரப்பல்** – வக்கிரதந்தம், விகாரமான பல்; பாம்பின் நச்சுப்பல்.

**கோரம்** – கொடுமை; அச்சந்தருவது; வேறு பட்டது; வெம்மை; நரகவகை; விரைவு; சோழன் குதிரை; குதிரை; அகோரம் என்னும் மந்திரம்; கோளகநஞ்சு; பூவரும்பு; வட்டில்.

**கோரம்பர்** – கழைக்கூத்தர்.

**கோரம்பலம்** – கேளிக்கை; சூழ்ச்சி; வாய்ச் சண்டை.

**கோரம்பு** – தீம்பு.
**கோரரூபம்** – அச்சுறுத்தும் வடிவம்; நரக விசேடம்.
**கோரவாரம்** – சந்தனமரம்.
**கோரவாரி** – பெருங்காற்று, புயல்.
**கோரி** – பார்வதி; முகமதியர் பிணக்குழி மீதுள்ள ஒரு கட்டடம்.
**கோரிக்கை** – வேண்டுகோள்; விருப்பம்.
**கோரிகை** – அகப்பை; மரக்குதிரைமேல் வைக்கும் ஓலை நெற்கூடை.
**கோரித்தல்** – கடுமையாதல்.
**கோரிதம்** – துகள்.
**கோரியை** – அகப்பை.
**கோருதல்** – வேண்டிக்கொள்ளுதல்; விரும்புதல்.
**கோரை** – ஒரு புல்வகை.
**கோரைப்பல்** – விகாரமான பல்; நீண்ட பெரிய பல்; பல் வரிசையின் முன்னுள்ள கூர்மையான பல்.
**கோரைப்பாய்** – கோரைப்புல்லால் பின்னப்பட்ட பாய்.
**கோரையுள்ளான்** – உள்ளான் பறவைவகை.
**கோரோசனம், கோரோசனை** – பசுவின் வயிற்றினின்று எடுக்கப்பெறும் மஞ்சள் நிறமுள்ள மணப்பண்டம்.
**கோல்** – கம்பு; மரக்கொம்பு; ஊன்றுகோல்; செங்கோல்; அளவுகோல்; எழுதுகோல்; ஓவியந்தீட்டுங் கோல்; முத்திரைக்கோல்; தீக்கடைகோல்; பிரம்பு; குதிரைச்சம்மட்டி; கொழு; அம்பு; ஈட்டி; குடை முதலியவற்றின் காம்பு; யாழ்நரம்பு; துலாக்கோல்; துலாராசி; அரசாட்சி; ஐப்பசி மாதம்; அணியின் சித்திரவேலை; தூண்டில்; இலந்தைமரம்; தெப்பம்; திரட்சி.
**கோல்கொடுத்தல்** – குருடருக்குப் பற்றுக்கோடு கொடுத்தல்; கோலால் குருடனை நடத்தி வருதல்.
**கோல்கொள்ளுதல்** – தேர் முதலியன செலுத்துதல்.
**கோல்மட்டம்** – கோல் அளவு.
**கோல்மரம்** – வண்டியின் ஏர்க்கால்மரம்.
**கோல்வலித்தல்** – தண்டால் ஒடந்தள்ளுதல்.
**கோல்வள்ளம்** – விளிம்புள்ள கிண்ணம்; பிரம்பு கட்டின வட்டில்.
**கோல்வளை** – ஒரு வளையல்வகை.
**கோல்விழுக்காடு** – தற்செயல்.
**கோலக்கல்** – கோலப்பொடியாக இடித்தற்குரிய கல்.
**கோலக்காரன்** – கேலிக்காரன்.
**கோலகம்** – திப்பிலி.
**கோலங்காட்டுதல்** – மணமக்களை மணப்பந்தலுக்கு அழைத்துக்கொண்டு வருதல்; கோபித்துச் செல்லுதல்.
**கோலங்காணுதல்** – அலங்கரித்தல்; துன்பத்திற்கு உள்ளாதல்.
**கோலங்கொள்ளுதல்** – சமயத்திற்கேற்ற வேடம் பூணுதல்; பொய்த்தோற்றங் காட்டுதல்; மந்தாரமாயிருத்தல்.
**கோலச்சங்கம், கோலச்சங்கு** – முட்சங்குச்செடி.
**கோலச்சாரி** – வேடமகள் கொற்றவை உருக்கொண்டு ஆடும் கூத்து.
**கோலஞ்செய்வாள்** – தலைவிக்கு ஒப்பனை செய்பவள்.
**கோலப்பொடி** – கோலமிடுவதற்குதவும் அரிசிமா அல்லது ஒருவகை வெள்ளைக் கற்பொடி.
**கோலம்** – அழகு; நிறம்; உருவம்; தன்மை; வேடம்; ஆபரணம்; அலங்காரம்; மா, கற்பொடி முதலியவற்றாலிடுங் கோலம்; விளையாட்டு; பெருந்துன்பநிலை; முயற்சி; சிறு நீரோட்டம்; பன்றி; முள்ளம்பன்றி; இலந்தைமரம்; தெப்பம்; குரங்கு; பாக்கு; பீர்க்கங்கொடி; கருக்கொண்ட மகளிர்க்குச் செய்யும் வளைகாப்புச் சடங்கு; தக்கோலம்.
**கோலம்போடுதல்** – தரை முதலியவற்றில் மா முதலியவற்றால் அலங்கார வரியிடுதல்.
**கோலம்வருதல்** – ஊர்வலம் வருதல்.
**கோலமா** – காண்க: **கோலப்பொடி.**
**கோலமாறுதல்** – முன்கொண்ட தோற்றம் மாறுதல், மாற்றுருக் கொள்ளுதல்.
**கோலமிடுதல்** – காண்க: **கோலம்போடுதல்.**
**கோலரம்** – முளை.
**கோலலவணம்** – துருசு.
**கோலவேர்** – நிலப்பனை.
**கோலறை** – கூலியாள் வேலை செய்வதற்காக அளவுகோலால் அளந்து கொடுக்கப்படும் நிலம்.
**கோலறையிடுதல்** – வேலை செய்யும் இடங்களைக் கூலியாள்களுக்கு வகுத்துக் கொடுத்தல்.
**கோலா** – ஒரு மீன்வகை; திப்பிலி; ஒரு குடிநீர் வகை.
**கோலாகலம்** – பேரொலி, கூக்குரல்; பகட்டு.
**கோலாகலம்பண்ணுதல்** – ஒழுங்கீனமாய் நடத்தல்; பகட்டுச்செய்தல்.
**கோலாங்கூலம்** – முசு.
**கோலாச்சி** – ஒரு மீன்வகை.
**கோலாஞ்சி** – தற்பெருமை, பகட்டு.

**கோலாட்டம்** – சிறார் கோல்களைத் தட்டி விளையாடும் ஒரு விளையாட்டுவகை; ஐப்பசி, கார்த்திகை மாதங்கள் ஒன்றில் பெண்கள் கொண்டாடும் கோலாட்ட விழா.

**கோலாடி** – அரசாணை செல்லும் இடம்.

**கோலாடு** – ஆட்டுவகை.

**கோலாரிக்கம்** – போர்க்கு அறைகூவல்; இருவரிடும் சண்டை.

**கோலாலம்** – காண்க: **கோலாகலம்.**

**கோலாள்** – தேரோட்டி.

**கோலி** – மயிர்; இலந்தைமரம்; திப்பிலி; சிறு குண்டு போன்ற விளையாட்டுக்கருவி; சிற்றழிஞ்சில்; புன்குவகை.

**கோலிக்கற்றை** – சாமரம்.

**கோலிக்கொள்ளுதல்** – சேர்த்துக்கொள்ளுதல்.

**கோலிகக்கருவி** – நெசவுக்கருவி.

**கோலிகன்** – நெசவுத்தொழில் செய்வோன்; கோலிகரால் நெய்யப்பட்ட ஆடை.

**கோலியள்ளுதல்** – வாரியெடுத்தல்.

**கோலியன்** – காண்க: **கோலிகன்.**

**கோலிவருதல்** – சுற்றிவருதல்.

**கோலிளகுதல்** – அரசன் இறத்தல்.

**கோலுதல்** – பாத்தி முதலியன வகுத்தல்; வளைத்தல்; திரட்டிவைத்தல்; நீர் முதலியவற்றை முகந்து அள்ளுதல்; விரித்தல்; தொடங்குதல்; உண்டாக்குதல்; ஆலோசித்தல்; தியானித்தல்; அமைத்தல்.

**கோலுபட்டை** – இறைகூடைவகை.

**கோலெரி** – விளக்குத்தண்டின் மேலுள்ள விளக்கு.

**கோலை** – மிளகு.

**கோலொற்றுதல்** – அம்பெய்தல்.

**கோலோகம்** – பசுக்களுக்குரிய விண்ணுலகம்.

**கோலோர்** – மதயானையை அடக்கும் குத்துக்கோற்காரர்.

**கோவணம்** – கீழாடை.

**கோவணவன்** – கோவணந் தரித்த சிவன்.

**கோவணன்** – கோவணம் தரித்த சிவன்; வசிட்டன்.

**கோவணாண்டி** – கோவணம் மட்டும் உடைய பிச்சைக்காரன்; கதியற்றவன்.

**கோவணி** – ஆத்திமரம்.

**கோவதை** – பசுக்கொலை.

**கோவம்** – கோபம்; பொன்; தம்பலப்பூச்சி.

**கோவர்த்தனர்** – இடையர்; வணிகர்.

**கோவல்** – திருக்கோவலூர்.

**கோவலர்** – முல்லைநில மாக்கள், இடையர்.

**கோவலன்** – இடையன்; கண்ணன்; சிலப்பதிகாரத் தலைவன்.

**கோவலி** – பற்கிட்டுகை.

**கோவலூர்** – திருக்கோவலூர்.

**கோவளம்** – கடலுக்குள் நீண்ட தரை; தரை முனையில் உள்ள ஊர்.

**கோவளை** – வாழை.

**கோவன்** – இடையன்; அரசன்; சிவன்; வசிட்டன்.

**கோவாங்கு** – படிதம் என்னும் மாணிக்க விசேடம்.

**கோவிட்டு** – பசுச் சாணம்.

**கோவித்தியர்** – காண்க: **கோவியர்.**

**கோவிதன்** – அறிஞன்.

**கோவிதாரம்** – காட்டாத்தி; குரா.

**கோவிந்தம்போடுதல்** – கோவிந்தா என்று சொல்லிக் கையால் வணங்குதல்.

**கோவிந்தர்** – காண்க: **கோவலர்.**

**கோவிந்தன்** – திருமால்; நன்குணர்ந்தோன்.

**கோவியர்** – இடைச்சியர்.

**கோவில்** – கோயில், ஆலயம்; அரண்மனை; சிதம்பரம்; திருவரங்கம்.

**கோவில்வீடு** – வீட்டிலமைந்த குலதெய்வங்களின் கோயில்; கோயிலுக்குத் தருமமாக விடப்பெற்ற வீடு.

**கோவிலங்கு** – விலங்கு அரசனாகிய சிங்கம்.

**கோவிற்குடியான்** – சங்கூதும் பணிசெய்வோன்.

**கோவிற்புறா** – மாடப்புறா.

**கோவிற்றுறையார்** – கோயில் வேலைக்காரர்.

**கோவின்மை** – காண்க: **கோயின்மை.**

**கோவெனல்** – இரங்கற்குறிப்பு; பேரொலி செய்தற்குறிப்பு.

**கோவேள்** – குயவர்.

**கோவேறுகழுதை** – அரசர் ஏறும் ஊர்தியாகிய கழுதைவகை.

**கோவை** – கோக்கை; வரிசை, ஒழுங்கு; கோத்த மாலை, அணிவடம்; ஏற்பாடு; அகப்பொருட் கோவை; கொடிவகை.

**கோவைசியர்** – பசுக்களைக் காத்து வாழும் வணிகவகையார்.

**கோழ்** – வழுவழுப்பு; செழிப்பு; கொழுமை.

**கோழம்பம்** – குழப்பம்.

**கோழரை** – வழுவழுப்பான அடிமரம்.

**கோழி** – குக்குடம், ஒரு பறவை; உறையூர்; விட்டில்; கோழியவரை; பன்றிமோந்தான் கிழங்கு; இடலை.

**கோழிக்கல்** – குறுஞ்சிலைக்கல்.

**கோழிக்காரம்** – கோழிமலம் கூட்டிச் செய்யப்பெறும் ஒரு மருந்துவகை; கோழியெரு.

**கோழிக்கால்** – கொடியரசு; கோழிக்கால்போன்ற அடையாளக் குறிவகை.

**கோழிக்குடி** – அசோகமரம்.
**கோழிக்கூடு** – கோழியை அடைத்துவைக்கும் இடம்.
**கோழிக்கொடியோன்** – கோழியைக் கொடியில் கொண்ட முருகன்; ஐயனார்.
**கோழிகூவுநேரம்** – கோழி கூவும் சமயம், விடியற்காலம்.
**கோழிச்சேவல்** – ஆண்கோழி.
**கோழித்தலைக் கந்தகம்** – சிவந்த கந்தகம்.
**கோழிநெஞ்சு** – அஞ்சிநடுங்கும் மனம்.
**கோழிப்பசளை** – உமரிக்கீரை.
**கோழிப்போகம்** – விரைவில் விந்து வெளியேறும் புணர்ச்சி.
**கோழிமுட்டை** – சுன்னம், சுழியம்; கோழியினது முட்டை.
**கோழிமுள்** – கோழிக்காலிலுள்ள கூரிய நகம்.
**கோழிமுளையான்** – ஒரு பூண்டுவகை.
**கோழியவரை** – பெருங் கோழியவரைக் கொடி, அவரைவகை.
**கோழியாகக் கூவுதல்** – கோழிபோலக் கூவுதல்; மன்றாடுதல்.
**கோழியான்** – முருகக்கடவுள்.
**கோழியுள்ளான்** – ஒரு உள்ளான்குருவிவகை.
**கோழிவென்றி** – சேவலின் போர்வெற்றியைக் கூறும் புறத்துறை.
**கோழிவேந்தன்** – உறையூர் அரசனான சோழன்.
**கோழை** – கபம்; உமிழ்நீர்; மனத்திட்பமின்மை; இரக்கம்; சிறுபிள்ளை.
**கோழைத்தனம்** – மனத்திட்பமின்மை, அச்சத் தன்மை.
**கோழைதீர்தல்** – மனத்திடம் பெறுதல்.
**கோழைபடுதல்** – கீழ்மையடைதல், தாழ்வடை தல்.
**கோழைபோக்கி** – நறுந்தாளி.
**கோழையன்** – மனத்திடமற்றவன்.
**கோழையிருமல்** – கபக்கட்டால் வரும் இருமல்.
**கோழைவிந்து** – துளசி.
**கோள்** – கொள்ளுகை; துணிவு; மதிப்பு; வலிமை; அனுபவம்; புறங்கூறல்; பொய்; இடையூறு; தீமை; கொலை; பாம்பு; நஞ்சு; இராகு; கோள்; மேகம்; ஒளி; பரிவேடம்; குலை; இயற்கை, காவட்டம்புல்; கொழு; முன் னிலைப் பன்மை விகுதி.
**கோள்பிராது** – காண்க: **கோளுரை.**
**கோள்முடித்தல்** – புறந்தூற்றுதல்; கோட்சொல்லி இருவருக்குள் கலகம் விளைவித்தல்.
**கோள்வாய்** – புதுப்புண்.
**கோளக்கட்டி** – புண்வகை.
**கோளகம்** – மிளகு; திப்பிலி; தாளகம்; மண்டலிப் பாம்பு.
**கோளகை** – வட்டவடிவம்; யானையின் தந்தப் பூண்; மண்டலிப்பாம்பு; உறை.
**கோளம்** – உருண்டை; உயிரிகளின் உடலுக்குள் நீர் ஊறும் தசைப்பற்று.
**கோளயோகம்** – ஓர் இராசியிலே ஏழு கோள்கள் நிற்க வரும் யோகம்.
**கோளரி** – சிங்கம்.
**கோளரிக்கொடியோன்** – சிங்கக்கொடியை உடைய வீமன்.
**கோளவங்கம்** – ஈயமணல்.
**கோளன்** – கோள் சொல்லுவோன்; கைம்பெண் பெற்ற மகன்.
**கோளாங்கல்** – கூழாங்கல்.
**கோளாம்பி** – படிக்கம்.
**கோளார்த்தம்** – நிலவுருண்டையின் பாதி.
**கோளாளன்** – நூற்பொருள் முதலியவற்றை மறவாது பற்றுவோன்.
**கோளாறு** – தாறுமாறு; குற்றம்; சண்டை; வழி வகை.
**கோளி** – கொள்வோன்; ஆலமரம்; அத்திமரம்; பூவாது காய்க்கும் மரம்; கொழிஞ்சிமரம்; நான்காம் வேற்றுமை; கைம்பெண் பெற்ற மகன்; குதிரை கழுதைகளின் பெட்டை.
**கோளிகை** – குதிரை கழுதைகளின் பெட்டை.
**கோளிழைத்தல்** – கொல்லுதல்.
**கோளுரை** – கோட்சொல்லல்.
**கோளேசம்** – குங்குமப்பூ.
**கோளை** – எலி; குவளை; தோழி; கோதாவரி; மனோசிலை; நீர்ச்சால்.
**கோற்காரன்** – ஊர் ஊழியக்காரன்; ஓடந் தள்ளுவோன்.
**கோற்குத்து** – கோல்முனையால் குத்தப்படும் அளவுள்ள நிலம்.
**கோற்குறிப்பு** – நிலவளவுக் கணக்கு.
**கோற்கூத்து** – வரிக்கூத்துவகை.
**கோற்கொடி** – இலந்தைமரம்; சுரைக்கொடி.
**கோற்புழு** – உலண்டு.
**கோற்றேன்** – கொம்புத்தேன்.
**கோற்றொடி** – வேலைத் திறனமைந்த கைவளை யல்.
**கோற்றொழில்** – அரசாட்சி செய்கை; அரிய வேலைப்பாடு.
**கோற்றொழிலவன்** – அரண்மனை வாயிலில் கோல்கொண்டு காவல் செய்பவன்.
**கோற்றொழிலாளர்** – தண்டத்தைக் கையேந்தி அரசர்க்குமுன் வழிவிலக்குவோர்.
**கோறணி** – கேலிக்கூத்து; முகங்காட்டுகை; திமிர் வாதம்; முணுமுணுப்பு.
**கோறம்பு** – ஒரு நெற்றியணிவகை.
**கோறல்** – கொல்லுதல்.

**கோறின்னல்** – கோலை மெல்லுகை; பல் விளக்கல்.
**கோறை** – பழுது; சிராய்த்த காயம்; தொளை; மணிபதிக்குங் குழி.
**கோன்** – அரசன்; தலைவன்; இடையர் பட்டப் பெயர்.
**கோன்மை** – அரசாட்சி.
**கோனடிதொடுதல்** – அரசன் அடிமேல் ஆணையிடுதல்.
**கோனான்** – இடையர் பட்டப்பெயர்.
**கோனிச்சி** – இடைச்சி.
**கோனோலை** – அரசனாணை எழுதப்பட்ட திருமுகம்.

# கௌ

**கௌ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (க் + ஔ); கொள்ளு.
**கௌசல்யம்** – திறமை.
**கௌசலம்** – திறமை; சூழ்ச்சி; ஒரு நாடு.
**கௌசனம்** – காண்க: **கோவணம்.**
**கௌசனை** – உறை; குதிரை முதலியவற்றின் மேற் போடும் மெத்தை.
**கௌசிகபலம்** – தேங்காய்.
**கௌசிகம்** – கூகை; பட்டாடை; ஒரு பண் வகை; விளக்குத்தண்டு; பாம்பு; வியாழன்; சோகி.
**கௌசிகன்** – குசிக மரபினன், விசுவாமித்திரன்; இந்திரன்.
**கௌசிகை** – கிண்ணம்; விசுவாமித்திரனின் உடன்பிறந்தாள்.
**கௌசுகம்** – குங்கிலியம்.
**கௌஞ்சம்** – கிரவுஞ்சம்; அன்றிற்பறவை.
**கௌஞ்சிகன்** – பொன்வினைஞன்.
**கௌடநெறி** – செறிவு முதலிய வைதருப்ப நெறிக் குரிய குணங்கள் நிரம்பிவாராமல் சொற் பெருகத் தொடுக்கும் செய்யுள்வகை.
**கௌடம்** – வங்கத்தில் உள்ள ஓர் இடம்; கௌட நெறி; ஒரு மூலிகைவகை.
**கௌடி** – ஒரு பண்வகை.
**கௌடிலம்** – வளைவு.
**கௌணப்பொருள்** – இலக்கணை வகையாற் கொள்ளும் பொருள்.
**கௌணம்** – முக்கியமல்லாதது.
**கௌணியர்** – திருஞானசம்பந்தர்; பூமியி லுள்ளோர்.
**கௌத்துவக்காரன்** – வஞ்சகன்.
**கௌத்துவம்** – அத்தநாள்; திருமால் மார்பில் அணியும் மணி; பதுமராகம்; வஞ்சனை.
**கௌதகம்** – போதிகை.
**கௌதம்** – சிச்சிலிக்குருவி; கட்டுமானவகை.
**கௌதமன்** – ஒரு முனிவன்; புத்தன்; நியாயஞ் செய்த அக்கபாதர்; கிருபாசாரியார்.
**கௌதமி(மை)** – கோரோசனை; கோதாவரி ஆறு.
**கௌதாரி** – ஒரு பறவை.
**கௌதுகம்** – மகிழ்ச்சி; சால விளையாட்டு; காப்பாக மணிக்கட்டில் கட்டும் நூல்; தாலி.
**கௌதூகலம்** – மிதிபாகல்.
**கௌந்தி** – சமணப் பெண்துறவி; வால்மிளகு; கடுக்காய்வேர்.
**கௌபீனசுத்தம்** – பிற பெண்களைச் சேராதிருக் கும் தூயதன்மை.
**கௌபீனசுத்தன்** – பிற பெண்களைச் சேராதவன்.
**கௌபீனம்** – காண்க: **கோவணம்,** கச்சைச்சீலை.
**கௌமாரம்** – இளம்பருவம்; முருகக்கடவுளே பரம்பொருள் என்று வழிபடுவோரின் சமயம்.
**கௌமாரி** – ஏழு மாதர்களுள் ஒருத்தி; மாகாளி.
**கௌமுதி** – திருவிழா; நிலவு.
**கௌமோதகி** – திருமாலின் தண்டாயுதம்.
**கௌரம்** – வெண்மை; பொன்னிறம்.
**கௌரவம்** – மேன்மை; பெருமிதம்.
**கௌரவர்** – குருகுல வேந்தனான திருதராட்டிரன் மக்கள், துரியர்.
**கௌரி** – பார்வதி; காளி; எட்டு அல்லது பத்து ஆண்டுப் பெண்; பொன்னிறம்; கடுகு; புளி நறளைச் செடி; துளசி; பூமி; ஒரு பண்வகை.
**கௌரிகேணி** – வெள்ளைக் காக்கணங்கொடி.
**கௌரிசங்கம், கௌரிசங்காமணி** – இரட்டை உருத்திராட்சம்.
**கௌரிசிப்பி, கௌரிபாத்திரம்** – சங்கு வடிவுடைய பாண்டம்.
**கௌரிமைந்தன்** – பார்வதி புதல்வனாகிய முருகன்; விநாயகன்.
**கௌரியம்** – கருவேம்பு.
**கௌரியன்** – பாண்டியன் பட்டப்பெயர்.
**கௌரிவிரதம்** – ஐப்பசி மாதத்தில் கௌரியை நோக்கிப் புரியும் நோன்பு.
**கௌல்** – தீநாற்றம்; நிலக்குத்தகை உடன் படிக்கை.
**கௌவியம்** – பசுக் கொடுக்கும் பொருள்களான பால், தயிர், நெய், மூத்திரம், சாணம் ஆகிய வற்றின் சேர்க்கை.
**கௌவுகன்** – கீழ்ப்பார்வை.
**கௌவுதடி** – கவைத்தடி.
**கௌவுதல்** – வாயால் பற்றுதல்; கவர்தல்.

**கௌவை** – ஒலி; வெளிப்பாடு; பழிச்சொல்; துன்பம்; கள்; எள்ளிளங்காய்; ஆயிலியநாள்; செயல்.

**கௌளம்** – ஒரு பண்வகை.

**கௌளி** – பல்லி; நூறு வெற்றிலைகொண்ட கட்டு; ஒரு பண்வகை.

**கௌளிக்காதல், கௌளிச்சொல்** – நன்மை தீமைகளை அறிவிக்கும் பல்லிச் சத்தம்.

**கௌளிப்பத்திரம்** – வெள்ளை வெற்றிலைவகை.

**கௌளிபந்து** – ஒரு பண்வகை.

**கௌளிபாத்திரம்** – மஞ்சள்நிறக் காய்காக்கும் தென்னைவகை; தேங்காயோட்டினால் செய்யப்பட்டுத் துறவியர் உணவுகொள்ளப் பயன்படுத்தும் பாத்திரம்.

## ங

**ங** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ங்+அ); குறுணியைக் குறிக்கும் குறி.

**ஙகரம்** – குறுணியளவு.

**ஙனம்** – சுட்டுவினாவை யடுத்து இடம், தன்மை முதலிய பொருள்களைத் தரும் இடைச்சொல்.

## ச

**ச** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ச்+அ).

**சஃகுல்லி** – சிற்றுண்டிவகை.

**சக்கட்டம்** – பரிகாசம்; நிந்தை.

**சக்கட்டிசக்கட்டியெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**சக்கட்டை** – திறமையின்மை; இளப்பம்; மடையன்.

**சக்கட்டையாள்** – வலியற்றவன், ஆற்றலற்றவன்.

**சக்கடி(ணி)** – ஒரு கூத்துவகை.

**சக்கத்து** – முத்துவகை.

**சக்கதேவி** – காண்க: **சக்கம்மா.**

**சக்கந்தம்** – நிந்தை.

**சக்கப்பிரதமன்** – பலாப்பழங்கொண்டு செய்யப்படும் பாயசவகை.

**சக்கம்மா** – ஒரு பெண்தேவதை.

**சக்கரக்கல்** – திருமால்கோயில்களுக்கு இறையிலியாக விடப்பட்ட நிலங்களின் எல்லை குறிக்கும் திருவாழிக்கல்.

**சக்கரக்கவி** – வண்டிச் சக்கரம் போன்ற சித்திரத்திலே அமையுமாறு பாடும் மிறைக்கவி.

**சக்கரக்கள்ளன்** – உலோபி, ஒன்றுங்கொடாதவன்.

**சக்கரக்காரன்** – செல்வன்.

**சக்கரச்செல்வம்** – இந்திரனது செல்வம்; பெருஞ்செல்வம்.

**சக்கரஞ்சுற்றுதல்** – சுற்றி விளையாடுதல்; சுழலுதல்; பெரிதும் துன்புறுதல்.

**சக்கரத்தீவட்டி** – வட்டத் திவட்டி.

**சக்கரத்தேமல்** – நற்பேற்றைக் குறிப்பதாகக் கருதப்படும் வட்டமாக உள்ள தேமல்.

**சக்கரத்தேர்** – இழுப்புத்தேர்.

**சக்கரதரன்** – சக்கரத்தைத் தரித்த திருமால்; படத்தோடு கூடிய பாம்பு.

**சக்கரதாரி** – திருமால்.

**சக்கரப்பொறி** – வைணவத்தைப் பெறுதற்கு அடையாளமாக ஞானகுருவால் வலத்தோளில் பொறிக்கப்படும் சக்கரமுத்திரை; இயந்திரப் பொறி.

**சக்கரபதி** – தகரச்செடி.

**சக்கரபந்தம்** – காண்க: **சக்கரக்கவி.**

**சக்கரபரிபாலனம்** – அரசாட்சிசெய்கை.

**சக்கரபாணி** – சக்கரப்படையைக் கையிலுடைய திருமால்; துர்க்கை.

**சக்கரம்** – வட்டம்; உருளை; குயவன் சக்கரம்; சக்கரப்படை; கிரகச் சக்கரம்; சக்கரபந்தம்; சக்கரமாற்று; பழைய நாணயவகை; சக்கரவாகப் புள்; சக்கர எந்திரம்; செக்கு; பூமி; மதில்; கடல்; மலை; பிறப்பு; 60 ஆண்டுக் காலம்; வட்டவடிவு; பெருமை; மலை மல்லிகை; பீர்க்கு.

**சக்கரமாற்று** – சீகாழியின் பன்னிரு பெயர்களையும் செய்யுள்தோறும் அமைத்து ஒரு பாடலின் இறுதியிற் கூறிய பெயரை அடுத்த பாடலின் முதலிற்கொண்டு கூறும் சம்பந்தர் தேவாரப் பதிகம்.

**சக்கரயூகம்** – ஒரு படையணி, சக்கர வடிவாக அமைத்த படைவகுப்பு.

**சக்கரரேகை** – ஒருவனது நற்பேற்றைக் காட்ட வட்டவடிவாகக் கையில் அமைந்த கோடு.

**சக்கரவர்த்தி** – மன்னர்மன்னன், அரசர்க்கரசன், பேரரசன்; திகிரி மன்னவர்.

**சக்கரவர்த்தித்திருமகன்** – தசரதச் சக்கரவர்த்தியின் மகனான இராமபிரான்.

**சக்கரவர்த்தினி** – பேரரசி; சடாமாஞ்சில்; செம்பஞ்சு.

**சக்கரவாகம்** – சக்கரவாளம், இரவில் இணை பிரிந்து வருந்துவதாகக் கூறப்படும் ஒரு பறவைவகை; ஒரு பண்வகை.

**சக்கரவாணம்** – சக்கரம்போலச் சுழன்று தீப் பொறிகளைச் சிதறும் வாணம்.

**சக்கரவாளக்கோட்டம்** – காவிரிப்பூம்பட்டினத்தில் சுடுகாட்டுப் பகுதியில் உள்ள கோயில்.

**சக்கரவாளம்** – உட்புறம் ஒளியும் வெளிப்புறம் இருளுங்கொண்டு நிலவுலகத்தைச் சூழ்ந்துள்ளதாகக் கருதப்படும் மலை; மேருமலையின் மூன்றாந் தாழ்வரை; சக்கரவாளக்கோட்டம்; சக்கரவாகம்; வட்டவடிவு.

**சக்கரவிருத்தி** – வட்டிக்கு வட்டி.

**சக்கரன்** – திருமால்; இந்திரன்; பன்னிரு கதிரவருள் ஒருவன்.

**சக்கராகாரம்** – வட்டவடிவு.

**சக்கராயுதன்** – சக்கரப்படையை உடைய திருமால்.

**சக்கராயுதி** – கொற்றவை.

**சக்கரைக்குத்தி** – குத்தூசி, கோணியிலுள்ள பண்டத்தைச் சோதிக்கக் குத்தியெடுக்கும் ஊசி.

**சக்கல்** – மக்கல்; சக்கை; சாரமற்றது.

**சக்கவாலர்** – சக்கரவாள மலையிலிருப்பவரான வியந்திர தேவர்கள்.

**சக்களத்தி** – மாற்றாளான மனைவி; போலிப் பொருள்.

**சக்களத்திச்சண்டை, சக்களத்திப் போராட்டம்** – ஒருவனுடைய மனைவியருக்குள் நிகழும் சண்டை.

**சக்களமை** – சக்களத்திகளுக்குள் பகைமை; கடும்பகை.

**சக்களவன்** – ஒருத்தியைக் காதலிக்கும் பலருள் ஒருவன்.

**சக்களிதல்** – தட்டையாதல்.

**சக்களையன்** – சோம்பேறித் தடியன்.

**சக்காத்து** – இலவசம், விலையின்றிப் பெறுகை.

**சக்காந்தம்** – ஏளனம், பரிகாசம்.

**சக்காரம்** – தேமாமரம்.

**சக்கி** – துண்டுச்சட்டம்.

**சக்கிமுக்கி, சக்கிமுக்கிக்கல்** – நெருப்புண்டாக்கப் பயன்படும் கல், தீத்தட்டிக் கல்.

**சக்கியம்** – நட்பு, சிநேகம்; இயன்றது.

**சக்கியன்** – திறனுடையன்; தோழன்.

**சக்கியார்த்தம்** – சொல்லாற்றலால் உணரும் பொருள்.

**சக்கிரநாயகம்** – ஓமாலிகைகளுள் ஒன்றாகிய புலிநகம்.

**சக்கிரபாதம்** – உருளைகளைக் காலாக உடைய வண்டி; வட்டவடிவுள்ள கால்களை உடைய யானை.

**சக்கிரம்** – வட்டம்.

**சக்கிரமுகம்** – பன்றி.

**சக்கிரயானம்** – வண்டி.

**சக்கிரலேகை** – ஒருவனது நற்பேற்றைக் காட்ட வட்டவடிவாகக் கையில் அமைந்த கோடு.

**சக்கிரவாதம்** – சுழல்காற்று.

**சக்கிரன்** – இந்திரன்.

**சக்கிராதம்** – பன்றி.

**சக்கிரி** – சக்கரத்தை உடையவன்; அரசன்; திருமால்; இந்திரன்; குயவன்; செக்கான்; பாம்பு.

**சக்கிரிகை** – முழந்தாள்.

**சக்கிரிவதம்** – கழுதை.

**சக்கிலி** – தோல்வினைஞன்; சக்கிலியச்சாதி.

**சக்கிலிக்குருவி** – மீன்கொத்திப்பறவை.

**சக்கிலிச்சி** – சக்கிலிச்சாதிப் பெண்; சத்திசாரம் என்னும் மருந்து.

**சக்கிலியன்** – தோல்வேலை செய்பவன், செம்மான்.

**சக்கு** – கண்; பூஞ்சணம்.

**சக்குக்கட்டுதல்** – பூஞ்சணம் கட்டுதல்.

**சக்குச்சக்கெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**சக்குபு** – கரிசாலைப்பூடு.

**சக்குவரி** – ஒற்றொழித்து அடியொன்றுக்குப் பதினான்கு எழுத்துகள்கொண்ட நாலடிச் சந்தவிருத்தம்.

**சக்கை** – கோது; பட்டை; சிராய்; சிறு மரத் தக்கை; துப்பாக்கித் தக்கை; பலா; காட்டுப் பலா.

**சக்கைப்போடுபோடுதல்** – திறமையாகச் செய்தல்.

**சக்கையன்** – உடல்வலிமை இல்லாது படுத்திருப்பவன்.

**சக்கையாய்ப் பிழிதல்** – கடுமையாக வேலை வாங்குதல்.

**சக்கைவாங்குவாங்குதல்** – சக்கையாய்ப் பிழிதல்; மிகக் கடிந்து பேசுதல்.

**சக்கோலி** – ஒரு பூடுவகை.

**சக்தி** – சத்தி, சிவனது அருள்; வல்லமை; பார்வதி; ஆற்றல்.

**சக்திபூசை** – சத்தியை வழிபடுதல்.

**சக்திமான்** – ஆற்றலுள்ளவன்.

**சக்திமுகம்** – அரசனது ஆணைப்பத்திரம்.

**சக்தியானுசாரம்** – ஆற்றலுக்கு ஏற்ப.

**சக** – கூட என்னும் பொருள் தரும் ஒரு முன்னொட்டு.

**சககமனம்** – இறந்த கணவனுடன் மனைவி உடன்கட்டை யேறுதல்.

**சககாரம்** – காண்க: **சக்காரம்.**

**சககாரி** – துணைக்காரணம்.

**சகச்சிரம்** – ஆயிரம்; சிவாகமங்கள் இருபத் தெட்டனுள் ஒன்று.

**சகச்சை** – பொன்னாங்காணிக்கீரை.

**சகசட்சு** – உலகிற்குக் கண்ணான சூரியன்.

**சகசண்டி** – பெருமுருடன், நாணமற்றோன்.

**சகசநிட்டை** – ஒருவனுக்கு இயற்கையாய் அமைந்த தியான உணர்வு.

**சகசம்** – இயற்கையானது; உண்மை; கூடப் பிறந்தது; வட்டில்.

**சகசமலம்** – உயிர்கட்கு இயல்பாயுள்ளதாகிய ஆணவமலம்.

**சகசரம்** – சிறுகுறிஞ்சாக்கொடி.

**சகசரி** – பொன்னிறங் கலந்த கரும்பூவுள்ள மருதோன்றிமரம்; வாடாக் குறிஞ்சிமரம்; தோழி; மனைவி.

**சகசரிதம்** – உடன்நிகழ்வது.

**சகசன்** – உடன்பிறந்தான்.

**சகசா** – காண்க: **சகசரம்.**

**சகசாட்சி** – உலக முழுவதையும் காண்பவனான சூரியன்.

**சகசாலம்** – மாயவித்தை.

**சகசிரம்** – ஆயிரம்.

**சகசை** – உடன்பிறந்தாள்.

**சகசோதி** – பேரொளி; உலகிற்கு ஒளியாயிருப்பவனாகிய கடவுள்.

**சகட்டடி,**
**சகட்டுமேனி** } – மொத்தம்; சராசரி.

**சகடக்கால்** – வண்டிச்சக்கரம்.

**சகடப்பொறி** – சக்கரவடிவான ஓர் எந்திரம்.

**சகடபலம்** – நீர்க்கோழி.

**சகடம்** – வண்டி; தேர்; வட்டவியூகம்; உரோகிணி; சக்கரம்; ஊர்க்குருவி; துந்துபி; வட்டில்; தமரத்தைமரம்.

**சகடயூகம்** – சகடவடிவாக அமைக்கப்பெறும் படைவகுப்புவகை.

**சகடயோகம்** – குருவுக்கு ஆறு, எட்டு, பன்னிரண்டிற் சந்திரன் இருத்தலால் உண்டாகும் பலன்.

**சகடான்னம்** – கெட்ட உணவு.

**சகடி** – வண்டி.

**சகடிகை** – கைவண்டி.

**சகடு** – வண்டி; தேரைக் குறிக்கும் சதுரங்கக் காய்; உரோகிணிநாள்.

**சகடை** – வண்டி; துந்துபி என்னும் முரசு; சாவுச் சடங்கில் ஊதும் ஒரு வாத்தியம்.

**சகடைகொட்டி** – முரசடிப்போன்.

**சகடோல்** – அம்பாரி, யானைமேற்பீடம்.

**சகண்டை** – துந்துபி என்னும் முரசு; வாச்சியப் பொது.

**சகணம்** – சாணம்.

**சகணவர்த்தமரோகம்** – கண்ணோய்வகை.

**சகத்குரு** – உலககுரு; பரமகுரு.

**சகத்தன்** – நடுநிலையாளன்.

**சகத்திரதாரம்** – ஆயிரம் முனைகளை உடைய திருமாலின் சக்கரப்படை.

**சகத்திரதாரை** – பல கண்களுள்ள அபிடேகத் தட்டு.

**சகத்திரநாமன்** – ஆயிரம் பெயருடையவன்; கடவுள்; திருமால்.

**சகத்திரபே(வே)தி** – பெருங்காயம்; உலோக மண்வகை.

**சகத்திரம்** – ஆயிரம்; சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று.

**சகத்திரவீரியம்** – அறுகம்புல்.

**சகத்து** – உலகம்.

**சகதண்டம்** – உலகவுருண்டை.

**சகதலப்புரட்டன்** – உலகத்தையே புரட்டக் கூடியவன், பெருமோசக்காரன்.

**சகதாந்திரி** – உலகத்திற்குத் தாயான துர்க்கை.

**சகதாமத்தி** – தகரைச்செடி; கையாந்தகரை.

**சகதி** – சேறு; பொல்லாநிலம்; பூமி.

**சகதீசன்** – உலகிற்குத் தலைவனான கடவுள்.

**சகதேவம்** – உண்கலமாகப் பயன்படாத இலையையுடைய ஒரு மரவகை.

**சகதேவி** – நிலமகள்; நெய்ச்சிட்டிச்செடி.

**சகந்நாதன்,**
**சகநாதன்** } – உலகிற்கு இறைவனான பூரியில் கோயில் கொண்டுள்ள கடவுள்; திருமால்.

**சகநாயகன்** – காந்தம்.

**சகப்பிராந்தி** – உலக இன்பத்தால் உண்டாகும் மயக்கம்.

**சகபாடி** – ஒரே பள்ளியிற் பயின்ற மாணாக்கன்; கூடப் பாடுவோன்; மனைவியின் உடன்பிறந்தாள் கணவன்.

**சகம்** – உலகம்; சகாப்தம், ஆண்டுகளைக் கணிக்கும் கணக்கு; சக ஆண்டு; வெள்ளாடு; பாம்புச்சட்டை; சட்டை; மார்கழி மாதம்.

**சகமார்க்கம்** – இறைவடிவை ஒத்த நிலை பெறுதற்குரிய யோகநெறி; தோழமைநெறி.

**சகமீன்றவள்** – உலகங்களைப் பெற்றவளாகிய பார்வதி.

**சகர்ப்பபிராணாயாமம்** – மந்திரத்தோடு செய்யப்படும் மூச்சுப் பயிற்சி.

**சகரச்சாரி** – சத்திசாரம்.

**சகரநீர்** – சகரர் தோண்டிய கடல்.

**சகரர்** – கடலுண்டாகுமாறு பூமியைத் தோண்டியவர்களான சகரபுத்திரர்.

**சகரிகம்** – நாயுருவிச்செடி.

**சகரையாண்டு** – சகாப்த வருடம்.
**சகல்** – கொசு.
**சகலகம்** – வெள்ளாட்டுக்கடா.
**சகலகலாவல்லவன்** – கலையறிவு அனைத்தையும் அறிந்தவன்.
**சகலகலாவல்லி** – கலைகள் அனைத்திற்கும் உரியவளான கலைமகள்.
**சகலகுண சம்பன்னன்** – நற்குணங்கள் எல்லாம் நிறைந்தவன்.
**சகலத்திராள்** – எல்லாரும்.
**சகலபாசனம்** – அருகன் முக்குடையுள் ஒன்று.
**சகலபாடி** – காண்க: **சகலன்.**
**சகலம்** – எல்லாம்; சகலாவத்தை; துண்டு.
**சகலமங்கலை** – பார்வதி.
**சகலமோகினி** – உலகத் தோற்றத்திற்குக் காரண மான மாயா சக்தி.
**சகலர்** – ஆணவமலம், கன்மமலம், மாயாமலம் என்னும் மும்மலத்தையும் உடைய உயிர்கள்.
**சகலன்** – மனைவியின் உடன்பிறந்தாள் கணவன்.
**சகலாத்தன்** – அருகருள் நிகண்டவாதிகளால் கடவுளென்று கொள்ளப்படுபவர்.
**சகலாத்து** – ஒரு கம்பளித் துணிவகை.
**சகலாவத்தை** – ஓரவத்தை, மேலாமவத்தை; ஆன்மாக்கள் உடல் எடுத்துப் பிறப்பு இறப்பு களுக்கு உட்படும் காரணாவத்தை.
**சகலி** – ஒரு மீன்வகை.
**சகலிகரணம்** – துண்டுதுண்டாக்கல்.
**சகலை** – காண்க: **சகலன்.**
**சகவாசம்** – நட்பு.
**சகளத்திருமேனி** – சிவனது உருவவடிவம்.
**சகளநிட்களம்** – இலிங்கமாகிய சிவனது அருவுருவத் திருமேனி.
**சகளம்** – உருவத்திருமேனி.
**சகளன்** – உருவத் திருமேனிகொண்ட சிவன்; மனைவியின் உடன்பிறந்தாள் கணவன்.
**சகளீகரித்தல்** – உருவங்கொள்ளுதல்.
**சகன்** – சாலிவாகனன்; உலகநாயகன்; தோழன்.
**சகன்மகதாது** – செயப்படுபொருள் குன்றாத வினை.
**சகனம்** – தொடையினுட்பக்கமாகிய பிருட்டம்; பொறுமை; காண்க: **சகாப்தம்.**
**சகா** – தோழன்; பாம்புகொல்லிப்பூண்டு; உதவி, துணை.
**சகாடி** – பீர்க்கங்கொடி.
**சகாத்தம்** – காண்க: **சகாப்தம்.**
**சகாத்தன்** – தோழன்.
**சகாதி** – பாம்புகொல்லிப்பூண்டு.
**சகாதேவி** – நிலமகள்; நெய்ச்சிட்டிச்செடி.
**சகாப்தம்** – கி.பி. 78-ல் தொடங்குவதும் சாலி வாகனன் பெயரால் வழங்குவதும் ஆன ஆண்டுக்கணக்கு.
**சகாமியம்** – பயனை விரும்பிச் செய்யும் செயல்.
**சகாயதனம்** – உதவியாகக் கொடுக்கும் பணம்.
**சகாயம்** – துணை, உதவி; விலைநயம், மலிவு; நலம்.
**சகாயன், சகாயி** – உதவிசெய்வோன்; தோழன்.
**சகாயித்தல்** – உதவிசெய்தல்; மலிவாய்க் கொடுத்தல்.
**சகார்த்தம்** – உடனிகழ்ச்சிப் பொருள்.
**சகாரம்** – ஏச்சு, இகழ்ச்சி.
**சகாரி** – சகர்களின் பகைவனான விக்கிர மாதித்தன்.
**சகாரித்தல்** – ஏசுதல்.
**சகானா** – ஒரு பண்வகை.
**சகி** – தோழன்; தோழி.
**சகித்தல்** – பொறுத்தல், மன்னித்தல்.
**சகித்துவம்** – தோழமை.
**சகிதம்** – கூட.
**சகிதன்** – சேர்ந்திருப்போன்; அஞ்சி நடுங்குபவன்.
**சகிப்பாளி** – பொறுமையுள்ளவன்.
**சகிப்பு** – பொறுத்தல்.
**சகியம்** – நிலப்பனை; மஞ்சள்; மாமரம்; காவிரி யாறு தோன்றும் மலை.
**சகுட்டகம், சகுட்டம்** – ஆடுதின்னாப்பாளை.
**சகுடம்** – நாய்; சேம்பு.
**சகுணத்தியானம்** – கடவுளைக் குண உருவங்க ளுடையவராக மனத்தால் வழிபடுதல்.
**சகுணம்** – குணத்தோடு கூடியது.
**சகுந்தம்** – பறவை; கழுகு; கமுகு; பூதம்.
**சகுல்லியன்** – உறவன், பேரனுக்குப் பேரன் முதலிய தூர தாயாதி.
**சகுலி** – அப்பவருக்கம்; ஒரு மீன்வகை.
**சகுன்மம்** – கருணைக்கிழங்கு; காட்டுக்கருணை.
**சகுனத்தடை** – கெட்டகுறி, தீநிமித்தம்.
**சகுனம்** – பறவை; பறவைகள் வலமிடமாதல் முதலிய நன்மைதீமைக் குறி; நிலாமுகிப்புள்; ஒரு கால அளவு; கிழங்கு; பேரரத்தை.
**சகுனி** – பறவை; கூகை; துரியோதனன் மாமன்; சகுனி போன்றவன்; நிமித்தம் பார்ப்போன்.
**சகுனிமாமன்** – சகுனியைப்போல் கெட்ட புத்தி கற்பிப்போன்.
**சகேரா** – பண்டசாலை.
**சகோடம், சகோடயாழ்** – பதினாறு நரம்புகொண்ட யாழ்.
**சகோத்திரம்** – குலம்.
**சகோதரன்** – உடன்பிறந்தான்.
**சகோதரி** – உடன்பிறந்தாள்.

**சகோரம்** – நிலாமுகிப்புள், சக்கரவாகப் பறவை; செம்போத்துப் பறவை; பேராந்தை; செம்பரத்தை.

**சங்கஇலக்கியம்** – சங்ககாலத்தில் தோன்றிய பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும்.

**சங்கக்காப்பு** – மகளிர் கையிலணியும் சங்குவளை.

**சங்கக்குழையன்** – சங்கினால் இயன்ற காதணியை உடைய சிவன்.

**சங்கங்குப்பி** – பீநாறிச்சங்குச்செடி.

**சங்கச்செய்யுள்** – சங்ககாலத்துப் பாடல்.

**சங்கஞ்செடி** – செடிவகை.

**சங்கட்ட சதுர்த்தி** – விநாயகரைக் குறித்து இருக்கும் ஒரு நோன்பு.

**சங்கட்டம்** – வருத்தம்; நோய்; இறப்புத்துன்பம்.

**சங்கடப்படலை** – இருப்புக் கம்பியாலான தடை வாசல்.

**சங்கடப்படுதல்** – வேதனையுறுதல்.

**சங்கடப்பாடு** – வேதனையுறும் நிலை.

**சங்கடம்** – வருத்தம்; தடைவாசல்; இடுக்குவழி; இரட்டைத்தோணி.

**சங்கடி** - கேழ்வரகு களி.

**சங்கடை** – இறக்குந்தறுவாய்; வருத்தம்.

**சங்கத்தமிழ்** – சங்ககாலத்து வழங்கிய உயர்ந்த தமிழ்; சங்கத்தமிழ் நூல்கள்.

**சங்கத்தார்** – கூட்டத்தார், அவையோர்; பௌத்த சைன சங்கத்தார்; மதுரைச் சங்கப் புலவர்.

**சங்கதம்** – வடமொழி; பொருத்தம்; நட்பு; முறையீடு.

**சங்கதி** – செய்தி; இசைவிகற்பம்; தொடர்பு.

**சங்கநாதம்** – சங்கின் முழக்கம்; கோயிலில் சங்கு ஊதுதற்கு ஏற்பட்ட இனாம்.

**சங்கநிதி** – குபேரனது ஒன்பான் நிதிகளுள் ஒன்று; வட்டக் கிலுகிலுப்பைச் செடி.

**சங்கப்பலகை** – மதுரையில் சங்கப் புலவர் இருந்த இருக்கை, தகுதியுள்ள புலவர்க்கு மட்டும் இடங்கொடுக்கக் கூடிய தாய்ச் சிவபிரானால் சங்கத்தார்க்கு அருளப்பெற்ற ஒரு தெய்வப் பலகை.

**சங்கப்புலவர்** – முற்காலத்தே மதுரையிலிருந்த சங்ககாலப் புலவர்கள்.

**சங்கபரணி** – சங்கைக் கையிலுடைய திருமால்.

**சங்கபாலன்** – எட்டுப் பெரிய நாகத்துள் ஒன்று.

**சங்கபீடம்** – நாணல்வகை.

**சங்கபுங்கி** – கடுகுரோகிணிவேர்.

**சங்கபுட்பம்** – ஞாழல்.

**சங்கம்** – சேர்க்கை; அன்பு; புணர்ச்சி; ஈராறுகள் கூடுமிடம்; ஆறு கடலோடு கூடுமிடம்; அவை; புலவர்; கூட்டம்; பாண்டியர் ஆதரவுடன் விளங்கிய தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்ற முச் சங்கங்கள்; சைன பௌத்தர்களின் சங்கம்; சங்கு; கைவளையல்; நெற்றி; குரல்வளை; இலட்சங்கோடி; படையிலொரு தொகை; குபேரனது ஒன்பது நிதியுள் ஒன்று; கணைக்கால்; அழகு; கைக்குழி.

**சங்கம்வாங்குதல்** – கூட்டிக்கொடுத்தல்.

**சங்கமம்** – கூடுகை; கலத்தல்; ஆறு ஆற்றோடேனும் கடலோடேனும் கூடுமிடம்; சிவனடியார் திருக்கூட்டம்; கோள்கள் சேருகை; புணர்ச்சி; இயங்குதிணைப் பொருள்.

**சங்கமர்** – சிவனடியார்; வீரசைவருள் ஒரு சாரார்.

**சங்கமருவுதல்** – பண்டைத் தமிழ்ச் சங்கத்தாரது ஒப்புதல் பெறுதல்.

**சங்கமரூபம்** – சிவவடிவம்.

**சங்கமன்னர்** – நட்பு வேந்தர்.

**சங்கமிருத்தல்** – தமிழ்ச்சங்கத்தில் உறுப்பினராயிருத்தல்.

**சங்கமுகம்** – ஆறு கடலுடன் கூடுமிடம்.

**சங்கமுத்திரை** – வலக்கைப் பெருவிரல் நுனி சுட்டுவிரல் அடியைத் தொடும் முத்திரை.

**சங்கமேந்தி** – சங்கினைத் தரித்தோனாகிய திருமால்.

**சங்கயம்** – ஐயம், சந்தேகம்.

**சங்கரசாதி** – கலப்புச்சாதி.

**சங்கரநாராயணன்** – சிவனும் திருமாலும் இணைந்த வடிவமான சிவமூர்த்தம்.

**சங்கரம்** – கலவை; சாதிக்கலப்பு; நஞ்சு; போர்.

**சங்கரன்** – இன்பத்தை அளிப்பவன்; சிவன்; பதினோர் உருத்திரருள் ஒருவர்; கலப்புச் சாதியில் பிறந்தோன்.

**சங்கராதனம்** – இரு கால்களையும் மடக்கி இரு படத்தையுங் கூட்டி நேரே ஊன்றி இருகால் முகப்பின்மேல் நிற்பது.

**சங்கராபரணம்** – ஒரு பண்வகை.

**சங்கராலங்காரம்** – கலவையணி.

**சங்கரி** – பார்வதி.

**சங்கரித்தல்** – அழித்தல்.

**சங்கரீகரணம்** – சாதிக்கலப்பு.

**சங்கருடணம்** – இழுத்தல்; உழுதல்.

**சங்கருடணன்** – பலராமன்; பலபத்திரன்; திருமாலின் வியூகமூர்த்தங்களுள் ஒன்றான அழிக்கும் சக்தி.

**சங்கரேகை** – கையில் இருக்கும் சங்குவடிவான கோடு.

**சங்கலம்** – கலப்பு; ஊன்; எண்கூட்டுதல்.

**சங்கலனம்** – கலப்பு; எண்கூட்டுகை.

**சங்கலார்** – பகைவர்.

**சங்கலிகரணம்** – முறையிலாப் புணர்ச்சி; உயிர்க் கொலையாகிய பாவம்.

**சங்கலிதம்** – கலப்பு; எண் கூட்டுகை; தொடர்ந்து செல்லும் எண்களின் தொடர் அல்லது கூட்டம்.

**சங்கலேகை** – காண்க: **சங்கரேகை.**

**சங்கவளை** – சங்கினால் செய்த வெள்வளையல்.

**சங்களை** – மணற்கேணியில் கட்டுக்கட்டாக அமைக்கப்படும் பலகை.

**சங்களைக்கிணறு** – பலகைக் கட்டுக்கிணறு.

**சங்கற்பஞானம்** – மூவகை அறிவு; அவை: அறிபவன், அறிவு, அன்பு.

**சங்கற்பம்** – மனத்திட்பம்; மனக் கற்பனை; ஒரு பொருளை இன்னதென்று உணரும் துணிவு; கருத்து; சித்தவிருத்தி; விருப்பம்; நியமம்; எண்ணம், கொள்கை.

**சங்கற்பமாசம்** – சாந்திரமான மாதம்; இரண்டு அமாவாசைகளைக் கொண்ட மாதம்.

**சங்கற்பனை** - காண்க: **சங்கற்பம்.**

**சங்கற்பனைஞானம்** – காண்க: **சங்கற்பஞானம்.**

**சங்கற்பித்தல்** – உறுதிசெய்துகொள்ளுதல்.

**சங்கற்பிதம்** – முன்னமே உறுதிசெய்யப்பட்டது.

**சங்கறுப்போர்** – வளைபோழ்நர், சங்குகளை அறுத்து வளை முதலியன செய்வோர்.

**சங்கனனம்** – நரம்பு.

**சங்காசம்** – உவமை, ஒப்புமை.

**சங்காட்டம்** – சேர்க்கை.

**சங்காத்தம்** – இணக்கம், நட்பு; வாழிடம்.

**சங்காத்தி** – தோழன்.

**சங்காதம்** – கூட்டம்; அழித்தல்; ஒரு நரகம்; பாதங்களைக் கூட்டி ஐந்தடி எடுத்து வைக்கும் நடிப்புவகை.

**சங்காதமரணம்** – எதிர்பாராத நிகழ்ச்சியால் மக்கள் பலர் ஒருசேர மடிகை.

**சங்காயம்** – கரும்புத்தோகைச் சருகு; வயலில் களையோடு முளைக்கும் ஆனைப்புல்; உழுந்து, துவரை முதலியவற்றின் முற்றாத மணி.

**சங்காரகர்த்தா** – காண்க: **சங்காரமூர்த்தி.**

**சங்காரகாலம்** – ஊழிக்காலம்.

**சங்காரதூதன்** – அழித்தல் தொழிலுக்குரிய தேவதூதன்.

**சங்காரம்** – அழித்தல்; ஒடுக்குகை; மூலகாரணத்தில் அனைத்தும் ஒடுங்கும் உலகவழிவு; ஏழுவகை மேகங்களுள் பூவைப் பொழியும் மேகம்; அடக்குகை.

**சங்காரமுத்திரை** – கட்டைவிரல் நிற்க மற்ற நான்கு விரல்களையும் வளைத்துச் செய்யும் சிவபூசைக்குரிய முத்திரைவகை.

**சங்காரமூர்த்தி** – அழித்தல்தொழிலைச் செய்யும் சிவன்.

**சங்காரன்** – அழிப்பவன்.

**சங்காரி** – குதிரைவாலிப் பயிர்.

**சங்காரித்தம்** – ஏழுவகை மேகத்துள் பூப்பொழியும் மேகம்.

**சங்காவியம்** – அச்சத்தால் நிகழும் அவசரநிலை.

**சங்காளர்** – காமுகர், புணர்ச்சியை நாடுபவர்.

**சங்கி** – தொடர்புடையது.

**சங்கித்தல்** – ஐயுறுதல்; கனப்படுத்துதல்; மனந்தடுமாறுதல்.

**சங்கிதம்** – ஐயுறப்பட்டது.

**சங்கிதை** – செய்தித் தொகுப்பு; வேதத்தின் ஒரு பகுதி; வரலாறு.

**சங்கியை** – எண்; எண்ணிக்கை; புத்தி; ஆராய்வு.

**சங்கிரக்கூர்மை** – கடலுப்பு.

**சங்கிரகணம்** – ஏற்றுக்கொள்ளல்.

**சங்கிரகம்** – சுருக்கம்; திரட்டல்.

**சங்கிரகித்தல்** – சுருக்கித் திரட்டல்.

**சங்கிரந்தனன்** – இந்திரன்.

**சங்கிரம்** – காடு.

**சங்கிரமணம், சங்கிரமம்** – கோள்களின் நடை, கோள் ஓர் இராசியிலிருந்து அடுத்த இராசிக்குச் செல்லுகை; சூரியன் ஓர் இராசியிலிருந்து அடுத்த இராசிக்குச் செல்லுகை; சூரியன் வேறு இராசிக்குச் செல்லுங் காலம்.

**சங்கிரமித்தல்** – இராசி மாறுதல்; நோய் தொற்றுதல்; சேர்தல்.

**சங்கிராந்தசமவாதம்** – பாசுபதமதம்.

**சங்கிராந்தம்** – ஒன்றிலிருந்து வேறொன்றிற்குப் போதல்; தொடர்பு; மாதப்பிறப்பு.

**சங்கிராந்தவாதசைவன்** – காண்க: **சங்கிராந்தவாதி.**

**சங்கிராந்தவாதம்** – மலம் நீங்கிய ஆன்மாவின்கண் திருவருள் பிரதிபலித்து அதனை அருள்வடிவமாக்கும் என்று கூறும் சமயம்.

**சங்கிராந்தவாதி** – பாசுபத மதத்தைச் சார்ந்தவன்.

**சங்கிராந்தி** – தைமாதப் பிறப்பு; சூரியன் மகரராசியில் புகும் நாள்; பொங்கல்விழாக் கொண்டாடும் தைமாதம் முதல் தேதி.

**சங்கிராந்தித்தல்** – சம்பந்தப்படுதல்.

**சங்கிராமசூரன்** – போர்வீரன்.

**சங்கிராமம்** – போர்; மலைமேல் வழி.

**சங்கிராமவிலக்கணம்** – அறுபத்து நான்கு கலையுள் ஒன்றாகிய போர்த்தொழில்.

**சங்கிருதம்** – வடமொழி; கலப்பு.

**சங்கிலி** – தொடர்; இரும்பு முதலியவற்றால் வளையமாகச் செய்து ஒன்றோடொன்று சேர்க்கப்பட்டிருக்கும் கோவை; ஒரு நிலவளவு; வயிரச்சங்கிலி என்னும் அணி; விலங்கு; சுந்தரமூர்த்தி நாயனார் மனைவியருள் ஒருத்தி.

**சங்கிலிக்கோவை** – தொடர்ச்சியானது.

**சங்கிலிப்பூட்டு** – சங்கிலியின் பின்னல்; சங்கிலி மாட்டும் அணி; ஒருவகை மல்லுப்பிடி; பெருஞ் சிக்கல்.

**சங்கிலிவடம்** – சங்கிலிவடிவா யமைந்த கழுத் தணி; தேரிழுக்குஞ் சங்கிலி.

**சங்கின்குடியோன்** – நாகரவண்டு.

**சங்கினி** – காமசாத்திரம் கூறும் நால்வகைப் பெண்களுள் மூன்றாம் இனத்தவள்; பத்து நாடியுள் ஒன்று; சங்கங்குப்பி.

**சங்கீதக்கச்சேரி** – பக்கவாத்தியங்களுடன் நிகழும் பாட்டுக் கச்சேரி.

**சங்கீதக்காரன்** – இசைவல்லான்.

**சங்கீதம்** – இசை; இசைப்பாட்டு; வாத்தியத் துடன் பாடுதல்; இராக சாத்திரம்; கிச்சிலிக் கிழங்கு.

**சங்கீதலோலன்** – இசையில் பெரிதும் ஈடு பட்டவன்.

**சங்கீதவாத்தியம்** – இசைக்கருவி.

**சங்கீர்த்தனம்** – சொல்லுகை; புகழ்கை, துதிக்கை; பாவ அறிக்கை.

**சங்கீர்தம்** – ஒன்றுசேர்கை; புணர்ச்சி.

**சங்கீரணசாதி** – ஒன்பது அட்சரகாலங்கொண்ட தாளவளவை.

**சங்கீரணம்** – புணர்ச்சி; கலப்பு; கலவையணி; சங்கீரணசாதி; மத்தளவகை.

**சங்கு** – வலம்புரி, இடம்புரி, சலஞ்சலம், பாஞ்ச சன்னியம் என்னும் நான்கு வகைப்படும் நீர்வாழ் சங்கு; ஐம்படை என்னும் அணியின் ஓர் உரு; சங்குரேகை; சங்கினாற் செய்த கைவளை; குரல் என்னும் இசை; மிடறு; ஒரு பேரெண்; படையிலொருதொகை; பெருவிரல் நிமிர மற்ற நான்கு விரல்களும் வளைந்து நிற்கும் இணையாவினைக்கைவகை; கோழி; கடுகுரோகிணி; சங்கஞ்செடி; முளை; மட்டிப் படைக்கலம்.

**சங்குகர்ணம்** – சங்குபோன்ற செவிகளையுடைய ஒட்டகம்; கழுதை.

**சங்குச்சுரி** – சங்கின் உட்பக்கத்துச் சுழி; புரியாணி.

**சங்குசிதம்** – சுருக்கமானது.

**சங்குட்டம்** – எதிரொலி.

**சங்குத்தாலி** – சங்குருவமுள்ள தாலி; சங்கினாற் செய்யப்பட்டு மகளிர் அணியும் தாலி.

**சங்குத்திரி** – சங்கின் உட்சுழி.

**சங்குதல்** – பல்லாங்குழியில் ஆட்டமுறை இலாப மின்றி நின்றுவிடுதல்; ஊக்கங்கெடுதல்.

**சங்குதிருகி** – சங்கறுக்குங் கருவி; அடைத்த நெட்டித் தக்கையை இழுத்து வாங்கும் கருவி.

**சங்குநிதி** – வட்டக் கிலுகிலுப்பைச்செடி.

**சங்குப்புரி** – காண்க: சங்குச்சுரி.

**சங்குபுட்பம்** – ஞாழற்செடி.

**சங்குமணி** – சங்குகளாற் செய்த மணி.

**சங்குமதம்** – புனுகு.

**சங்குமரு** – வேப்பமரம்.

**சங்குமூர்த்தினி** – உச்சி.

**சங்குருளை** – ஆமை.

**சங்குலம்** – கூட்டம்; போர்.

**சங்குவடம்** – பரிசல் என்னும் ஒரு தோணிவகை.

**சங்குவளை** – சங்கினாற் செய்த வளையல்.

**சங்கூதுதல்** – கோயில் முதலியவற்றில் சங்கை ஊதுதல்; வேலைக்களத்துக்கு ஆள்களை அழைக்க இயந்திரத்தால் ஒலி எழுப்புதல்.

**சங்கேதம்** – குறி; உடன்பாடு; குழூஉக்குறி; உறுதிமொழி; கோயிலுக்கு இறையிலியாக விடப்பட்ட நிலம்; சாதிசமயங்களால் உண்டாகும் ஒற்றுமையுணர்ச்சி.

**சங்கேபம்** – சுருக்கம்.

**சங்கை** – எண்ணம்; வழக்கம்; வறட்சுண்டி; சுக்கு; எண்; அளவு; கனம்; கணைக்கால்; ஐயம்; அச்சம்; பகை; பூத பிசாசு முதலியன.

**சங்கைக்கேடு** – இகழ்ச்சி, அவமரியாதை.

**சங்கைமா(வா)ன்** – மதிக்கத்தக்கவன்.

**சங்கோசபரிவாரம்** – தக்கோரைப் போற்றுவதற் கென்று அரசனால் அமர்த்தப்பட்ட சிறு கூட்டத்தார்.

**சங்கோசபிசுனம்** – குங்குமம்.

**சங்கோசம்** – குங்குமம்; மஞ்சள்; சுருங்குதல்; கூச்சம்.

**சங்கோபனம்** – கமுக்கம், இரகசியம், மறைவு.

**சச்சடம்** – தாமரை.

**சச்சடி** – சந்தடி; மக்கள் திரண்டு கூடுதல்.

**சச்சம்** – உண்மை.

**சச்சம்பிரதாயம்** – நல்ல வரன்முறை.

**சச்சரவு** – கலகம்.

**சச்சரி** – வாத்தியவகை.

**சச்சரை** – கலகம்; பிளந்த துண்டு; ஒரு வாத்திய வகை.

**சச்சற்புடம்** – எட்டு மாத்திரைகொண்ட தாள வகை.

**சச்சனம்** – காவல்.

**சச்சாரம்** – யானைக்கூடம்.

**சச்சிதம்** – அலங்கரித்துவைக்கை.

**சச்சிதானந்தம்** – உண்மை, அறிவு, இன்பம் என்னும் பரம்பொருட்குரிய முக்குணங்கள்.

**சச்சிதானந்தன்** – சச்சிதானந்தம் உடையவன், கடவுள்.

**சச்சிதானந்தை** – உண்மை, அறிவு, இன்பம் என்னும் முக்குணங்களையுடைய சக்தி வடிவம்.

**சச்சு** – மட்டமான புகையிலை; சிறுமை; பதர்; சந்தடி; தொந்தரவு; பறவைமூக்கு; கொஞ்சம்; நீர்ச்சுண்டிச்செடி.

**சச்சை** – ஆராய்ச்சி; பலமுறை ஓதுதல்.

**சச்சையன்** – உண்மைப் பொருளானவன்.

**சசகதி** – குதிரைநடை ஐந்தனுள் முயலின் ஓட்டம் போன்ற நடை.

**சசகம்** – காண்க: **சசம்.**

**சசசசவெனல்** – காற்றின் ஒலிக்குறிப்பு.

**சசம்** – முயல்.

**சசம்பரி** – ஆமணக்கஞ்செடி.

**சசமதம்** – கத்தூரி.

**சசன்** – முயற்சாதி ஆடவன்.

**சசாபம்** – சிறு நன்னாரிப்பூடு.

**சசி** – கற்பூரம்; முயற்கறை உடைய சந்திரன்; இந்திராணி; இந்துப்பு; கடல்; மழை.

**சசிகன்னம்** – பூமிக்கும் சந்திரனுக்கும் உள்ள தொலைவு.

**சசிகேந்திரம்** – சந்திரன் இலக்கினத்துக்கு ஒன்று, நான்கு, ஏழு, பத்தாமிடங்களில் இருக்கை; சந்திர மந்தோச்சத்துக்கும் அப்போதப்போ தமைந்த அதன் மத்திய நிலைக்குமுள்ள வேறுபாடு.

**சசிசேகரன், சசிதரன்** – சந்திரனைத் தலையில் தரித்த சிவன்.

**சசிதேகம்** – சந்திரவட்டம்.

**சசிமணாளன்** – சசியின் கணவனான இந்திரன்.

**சசியம்** – பயிர்; தானியம்; காய்கனி முதலிய விளைபொருள்; மராமரம்; இந்துப்பு; கஞ்சாச் செடி; நிலப் பனங்கிழங்கு.

**சசிவல்லவன்** – காண்க: **சசிமணாளன்.**

**சசிவன்** – மந்திரி; நண்பன்.

**சசுபம்** – அசோகமரம், நெட்டிலிங்கம்.

**சஞ்சடி** – காண்க: **சச்சடி.**

**சஞ்சத்தகர்** – சூளுரை தவறாது நடக்கும் அரச வீரக் கூட்டத்தார்.

**சஞ்சம்** – பூணூல்; கச்சு.

**சஞ்சயம்** – கூட்டம்; ஐயம்.

**சஞ்சயனம்** – பால் தெளித்தலாகிய ஈமச்சடங்கு.

**சஞ்சரம்** – சஞ்சலம்; விரைந்து அசைகை; உடல்; வழி.

**சஞ்சரிகம்** – ஒரு வண்டுவகை.

**சஞ்சரித்தல்** – நடமாடுதல்; வாழ்தல்; திரிதல்; நெறிதப்பி ஒழுகுதல்.

**சஞ்சலம்** – நிலையில்லாமை; அசைவு; விரைந்து அசைகை; நடுக்கம்; மனக்கவலை, துன்பம்; நோய்.

**சஞ்சலரகிதன்** – மனக்கலக்கமற்றவன்.

**சஞ்சலை** – மின்னல்; திருமகள்; திப்பிலி.

**சஞ்சாயம்** – குடிவாரம்; நாட்கூலி; குத்தகைக்கு விடாமல் நிலச்சொந்தக்காரரே நிலத்தைப் பயிரிடுதல்; இலவசம்; அதிக இலாபம்.

**சஞ்சாரபிரேதம்** – நடைப்பிணம்; பயனற்றவன்.

**சஞ்சாரம்** – யாத்திரை; நடமாட்டம்; சஞ்சரித்தல்; நெறிதப்பிய ஒழுக்கம்; நடனத்துக்குரிய பாத வைப்புவகை ஐந்தனுள் ஒன்று; ஏற்ற இறக்கக் கலப்பு.

**சஞ்சாரன்** – உயிர்.

**சஞ்சாரி** – திரிபவன்; சங்கீத வர்ணபேதம்; குடியானவன்; பெரிய குடும்பமுடையவன்.

**சஞ்சாரிகன்** – தூதன்.

**சஞ்சாரிகை** – தூதி.

**சஞ்சாலி** – பெரிய துப்பாக்கி.

**சஞ்சாலி(ளி)கம்** – காண்க: **சஞ்சரிகம்.**

**சஞ்சிகை** – புத்தகப் பகுதி; பத்திரிகைப் பகுதி.

**சஞ்சிதம்** – ஈட்டியது, திரட்டியது; நுகர்ந்தது போக எஞ்சியுள்ள வினை.

**சஞ்சீவகரணி** – புளியமரம்; மூர்ச்சை தெளிவித்து உயிர்தரும் மருந்து.

**சஞ்சீவன்** – மாமரம்.

**சஞ்சீவனம்** – உயிர்ப்பித்தல்.

**சஞ்சீவனி** – காண்க: **சஞ்சீவி.**

**சஞ்சீவனை** – காண்க: **சஞ்சீவி**; நாங்கூழ்.

**சஞ்சீவி** – மூர்ச்சை தீர்த்து உயிர்தரும் மருந்து அல்லது மூலிகை; சீந்திற்கொடி.

**சஞ்சீவிமூலிகை** – உயிர்தரும் ஒரு மருந்துப் பச்சிலைவகை.

**சஞ்சீவினி** – காண்க: **சஞ்சீவி.**

**சஞ்சு** – பறவைமூக்கு; ஆமணக்கஞ்செடி; குல தருமம்; சாயல்.

**சஞ்சுப(வ)ம்** – அரசர்க்குரிய விருதுகள்; ஆயத்தம்.

**சஞ்சேபம்** – சுருக்கம்.

**சஞ்சை** – பெருங்காற்று; பேரொலி; பெருமழை; சூரியன் மனைவி.

**சட்சட்டெனல்** – விரைவுக்குறிப்பு.

**சட்சம்** – முத்திரைத் துளைக்கு அடுத்த துளை.

**சட்சமயம்** – அறுசமயம், ஆறு வகையான மதம்.

**சட்சு** – கண்.

**சட்ட** – செவ்விதாக; நன்றாக; முழுதும்; விரைவாக.

**சட்டக்கதவு** – சட்டங்களைக் கோத்து உள்ளே மெல்லிய துண்டுப் பலகைகளால் அமைக்கப் பட்ட கதவு.

**சட்டக்கல்லி** – வீண்பேச்சு.

**சட்டக்கால்** – கடைத்தட்டியைத் தூக்கி நிறுத்துங் கால்.

**சட்டகப்பை** – தட்டகப்பை, தோசைதிருப்பி என்னும் கருவி.

**சட்டகம்** – சட்டம்; மக்கட்படுக்கை; வடிவு; உடல்; பிணம்.

**சட்டகல்லி** – காண்க: **சட்டக்கல்லி.**

**சட்டங்கட்டுதல்** – ஒழுங்குபடுத்தல்; ஏற்பாடு செய்தல்; படங்களுக்குச் சட்டம்போடுதல்.

**சட்டசபை** – சட்டதிட்டங்களை உருவாக்கும் அவை, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் கொண்ட அவை.

**சட்டதிட்டம்** – சட்ட ஒழுங்கு; நிருணயம்.

**சட்டந்தட்டுதல்** – புனுகு வழித்தல்.

**சட்டந்தைத்தல்** – படம் முதலியவற்றிற்குச் சட்டஞ் சேர்த்தல்; வரிச்சலடித்தல்.

**சட்டநிர்மாணசபை** – காண்க: **சட்டசபை.**

**சட்டப்பரம்பு** – வயல் திருத்தும் பலகைவகை.

**சட்டப்பலகை** – மரச்சட்டம்; எழுதுங் கற்பலகை; வரியிழுக்குஞ் சட்டம்.

**சட்டம்** – மரச்சட்டம்; கம்பியிழுக்குங் கருவி; நகையின் உம்மச்சு; மேல்வரிச் சட்டம்; நியாய ஏற்பாடு; செப்பம்; நேர்மை; ஆயத்தம்; புனுகுபூனையிடமிருந்து எடுக்கப்படும் நீர்மப் பொருள்; மாணிக்கவகை.

**சட்டம்பி** – ஆசிரியர்; தலைவன்.

**சட்டம்பிப்பிள்ளை** – காண்க: **சட்டாம்பிள்ளை.**

**சட்டம்பியார்** – காண்க: **சட்டம்பி.**

**சட்டமழித்தல்** – ஆணை மீறுதல்.

**சட்டமன்றம்** – சட்டங்களை உருவாக்கி நிறைவேற்றும் சட்டசபை.

**சட்டமிடுதல்** – செய்யவேண்டிய கட்டளையைப் பணித்தல்.

**சட்டவட்டம்** – திட்டம்.

**சட்டவளை** – குறுக்குச் சட்டம்.

**சட்டவாள்** – பிடிவைத்த பெரிய இரம்பம்.

**சட்டவிளக்கு** – கோயிலில் சட்டத்தில் அமைத்து இடும் விளக்குவரிசை.

**சட்டன்** – மாணாக்கன்.

**சட்டாட்டம்** – இராசிப் பொருத்தத்தில் சாதகனுடைய இராசி பெண்ணின் இராசிக்கு ஆறாவதாகவும் பெண்ணின் இராசி சாதகன் இராசிக்கு எட்டாவதாகவும் இருக்கை; இராசிச் சக்கரத்தில் ஒரு கிரகம் மற்றொரு கிரகத்திற்கு எட்டாமிடத்தில் இருக்கை; வாதாட்டம்.

**சட்டாம்பிள்ளை** – பள்ளிக்கூட வகுப்பில் தலைமை ஏற்கும் மாணவன்.

**சட்டால்** – வில்வம்.

**சட்டி** – மட்பாண்டம்; ஆறாந் திதி; அறுபது; தாமரை.

**சட்டிசுரண்டி** – சட்டிசுரண்டுங் கருவி; சட்டிசுரண்டுபவன்(ள்).

**சட்டிசுரண்டுதல்** – சட்டியைச் சுரண்டிக் கழுவுதல்; இழிதொழில் செய்தல்.

**சட்டித்தலை** – பெருந்தலை.

**சட்டிபானை** – சமையல் முதலியவற்றிற்கு உதவும் மட்பாண்டங்கள்.

**சட்டிபூர்த்தி**, **சட்டிபூர்த்திசாந்தி** – அறுபதாம் ஆண்டு நிறைவு; அறுபதாம் ஆண்டில் செய்யுமொரு சடங்கு.

**சட்டியுருட்டுதல்** – சூதாடுதல்; வாயால் உருட்டுதல்; மட்பாண்டங்களில் வைத்திருக்கும் பொருள்களைத் திருடி உண்ணுதல்; காண்க: **சட்டிசுரண்டுதல்.**

**சட்டியெடுத்தல்** – இரத்தல், பிச்சையெடுத்தல்.

**சட்டிரசவர்க்கம்** – அறுசுவைத் தொகுதி.

**சட்டினி** – ஒரு துவையல்வகை.

**சட்டு** – ஆறு; அழிவு; சிக்கனம்.

**சட்டுப்பண்ணுதல்** – அழித்தல்; செட்டாயிருத்தல்.

**சட்டுப்பார்த்தல்** – அழித்தல்; விழுங்குதல்.

**சட்டுபுட்டெனல்** – விரைவுக்குறிப்பு.

**சட்டுவஞ்செலுத்துதல்** – உணவு பரிமாறுதல்; விருந்தோம்புதல்.

**சட்டுவம்** – அகப்பை; தோசைதிருப்பி.

**சட்டுவர்க்கம்** – இலக்கினத்திலிருந்து பிரியும் ஆறு வருக்கம்; அறுசுவை.

**சட்டெனல்** – விரைவுக்குறிப்பு; திடீரெனல்; குறிப்பு.

**சட்டை** – மேலாடை; தைத்த உடை; பாம்புச் சட்டை; பாம்பின்தோல்; உடம்பு; மதிப்பு; ஒருவகை நிறை; பொதி; தைவேளைப் பூண்டு.

**சட்டைக்காரன்** – ஐரோப்பியருக்கும் இந்தியருக்கும் பிறந்த சாதியான்.

**சட்டைகழற்றுதல்** – பாம்பு தோல் உரித்தல்.

**சட்டைநாதன்** – சட்டை அணிந்தவன்; சிவன்; வயிரவன்.

**சட்டைப்புரை**, **சட்டைப்பை** – மேலாடையில் அமைக்கப்படும் பை.

**சட்டைபண்ணுதல்** – இலட்சியம் செய்தல்.

**சட்பதம்** – அறுகால் வண்டு.

**சட்பம்** – அறுகம்புல்; இளம்புல்; ஆண்பெண் குறிகளை அடுத்துள்ள மயிர்.

**சட்பாவம்** – உடலுக்குண்டாகும் இருத்தல், தோன்றுதல், உருத்திரிதல், வளர்தல், சுருங்குதல், அழிதல் என்னும் ஆறு நிலைகள்.

**சட்பிதாபுத்திரிகம்** – ஐந்து தாளத்துள் ஒன்று.

**சடக்கடை** – ஒன்பது.

**சடக்கரம்** – காண்க: **ஆறெழுத்து.**

**சடக்கு** – வேகம்; செருக்கு; உடல்.

**சடக்குச்சடக்கெனல்** – ஈரடுக்கு ஒலிக்குறிப்பு.

**சடக்கெனல்** – விரைவுக்குறிப்பு.

**சடக்கோதன்** – வசம்பு.

**சடகம்** – ஊர்க்குருவி; கரிக்குருவி; வட்டில்.

**சடகோபம்** – திருமால் கோயில்களில் தரிசிப்போர் முடிமீது வைக்கப்படும் திருமாலின் திருவடி நிலை.

**சடகோபன்** – சடம் என்னும் வாயுவை வென்ற நம்மாழ்வார்.

**சடங்கப்படுதல்** – மூட்டையாகக் கட்டப்படுதல்; வேலை செய்துகொண்டிருத்தல்.

**சடங்கப்பூட்டு** – குண்டுக்கட்டாய்க் கட்டும் மற்பிடிவகை.

**சடங்கம்** – வேதத்திற்கு அங்கமான அறுவகைச் சாத்திரம்; அவை: சிட்சை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோபிசிதம், சோதிடம்; பயணமூட்டை; வருத்தம்; வேலை; பதினாறு தூக்களவு.

**சடங்கம்போடுதல்** – மூட்டையாகக் கட்டுதல்.

**சடங்கர்(வி)** – மறைக்குரிய ஆறங்கங்களையும் அறிந்தவன்.

**சடங்காதல்** – பெண்மகள் பூப்படைதல்.

**சடங்கு** – சாத்திரமும் வழக்கமும் பற்றிய முறையை நடத்தும் கிரியை; முதற்பூப்புச் சடங்கு; சாந்திக் கலியாணம்; குண்டுக் கட்டாய்க் கட்டும் மற்பிடிவகை.

**சடங்குகழித்தல்** – பெண்ணின் முதல் பூப்பில் உரிய சடங்கு செய்தல்; சில செயல்களுக்குரிய முறைகளைச் செய்தல்.

**சடசடவெனல், சடசடெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**சடசீதிமுகம்** – ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி மாதங்கள் பிறக்கும் நாள்; சூரியன் தனுசு 26ஆம் பாகையிலும், மீனம் 22ஆம் பாகையிலும், மிதுனம் 18ஆம் பாகையிலும், கன்னி 14ஆம் பாகையிலும் செல்லும் காலம்.

**சடப்பால்** – முலைப்பால்.

**சடபதார்த்தம்** – அறிவில்பொருள்.

**சடபுடெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; விரைவுக் குறிப்பு.

**சடம்** – அறிவில்பொருள்; அறியாமை; உடல்; பொய்; வஞ்சகம்; கொடுமை; சோம்பல்; பிறக்கும்போது ஆன்மாவில் மோதி அதன் அறிவைக் கெடுக்கும் ஒரு வாயுவகை; ஆறு என்னும் எண்.

**சடம்பு** – சணல்.

**சடரம்** – வயிறு.

**சடராக்கினி** – வயிற்றுத் தீ, மூலாக்கினி.

**சடலபுடலம்** – பருத்திருப்பது.

**சடலம்** – உடம்பு; பருத்த உடல்; அறிவில் பொருள்.

**சடலை** – பருத்திருப்பது; வீண்செயல்.

**சடவுப்பு** – அமரியுப்பு; சமாதியுப்பு.

**சடன்** – மூடன், அறிவற்றவன்.

**சடாக்கரம்** – காண்க : ஆறெழுத்து.

**சடாக்கரி** – காண்க: சடாட்சரி.

**சடாகம்** – அருநெல்லிமரம்.

**சடாட்சரம்** – காண்க: ஆறெழுத்து.

**சடாட்சரி** - உமை.

**சடாடவி** – சடைத்திரள், அடர்ந்த சடை.

**சடாதரம்** – காண்க: சடாகம்.

**சடாதரன்** – சடைதரித்த சிவன்; வீரபத்திரன்.

**சடாதரி** – பார்வதி.

**சடாதாரம்** – ஆறு ஆதாரம்; அவை: மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை.

**சடாதாரி** – சடைதரித்தவன், சிவன்; பார்வதி; கொடியாள்கூந்தல்; வரிக்கூத்துவகை.

**சடாபாரம்** – சடைக்கற்றை.

**சடாமகுடம்** – சடைமுடி.

**சடாமகுடன்** – சிவன்.

**சடாமாஞ்சி, சடாமாஞ்சில்** – செடிவகை; ஒரு மருந்துவகை.

**சடாமுடி** – சடைமுடி, மயிர்த்திரள்.

**சடாமுனி** – பேய்வகை.

**சடாய்** – சடாயு என்னும் கழுகுவேந்தன்; காற்சோடுவகை.

**சடாய்த்தல்** – துப்பாக்கி கெட்டித்தல்; பெருமிதமாகப் பேசுதல்; அதட்டுதல்.

**சடாரி** – கவசம்; சடகோபன், நம்மாழ்வார்.

**சடாரிடல், சடாரெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**சடாலம்** – ஆலமரம்; தேன்கூடு.

**சடாவல்லவன்** – சடைமுறையில் வேதப் பகுதிகளைச் சொல்வதில் வல்லவன்.

**சடானனன்** – ஆறு முகத்தையுடைய முருகன்.

**சடிதி** – விரைவு, சீக்கிரம்; ஏலத்தோல்.

**சடிதிவு** – ஏலத்தோல்.

**சடிலம்** – செறிவு, நெருக்கம்; வேர்; குதிரை; சடையாக அமைந்த மயிர்முடி.

**சடினம்** – வசம்பு; நெட்டிவேர்.

**சடுகுடு** – ஒருவகை விளையாட்டு.

**சடுத்தம்** – போட்டி; போராட்டம்; வீரவாதம்; வற்புறுத்தல்.

**சடுத்தாசனம்** – பூசையில் சிவனது இலிங்கம் அமைவதற்குரிய அனந்தர், தன்மம், ஞானம், வைராக்கியம். ஐசுவரியம், பதுமம் என்ற அறுவகை இருக்கை.

**சடுத்தி** – சோதனை.

**சடுதி** – விரைவு; சோதனை.

**சடுரசம்** – அறுசுவை.

**சடுலம்** – நடுக்கம்; மின்னல்.

**சடுலவாரவம்,** **சடுலவோசை** – தீக்கொழுந்து முதலியவற்றால் எழும் ஒலி.

**சடுலை** – மின்னல்.

**சடுவர்க்கம்** – சாதகக் கணிப்பின் ஆறுவர்க்கம்.

**சடை** – பின்னலாய் அமைந்த மயிர்முடி; பின்னிய கூந்தல்; அடர்ந்த மயிர்; வேர்; விழுது; இலாமிச்சை; வெட்டிவேர்; சடாமாஞ்சில்; திருவாதிரைநாள்; மிதுனராசி; வேதமோதும் முறைகளுள் ஒன்று; கற்றை; ஆணியின் கொண்டை; நெட்டி; அடைப்பு.

**சடைக்குச்சு** – தலைமயிரோடு பின்னித்தொங்க விடுவதாய் இரண்டு மூன்று குச்சுகளையுடைய அணி.

**சடைக்குழல்** – இரட்டை எருதுகளால் இழுக்கப் படும் ஏர்வகை.

**சடைகந்தம்** – வசம்பு.

**சடைச்சி** – நெட்டிப்புல்; கீரிப்பூண்டு; புளியாரை; பாசி; பொன்னிமிளை; மரவகை.

**சடைத்தல்** – கிளைத்து நெருங்குதல்; சோர் வடைதல்.

**சடைதல்** – சோர்வடைதல்; உள்ளடங்குதல்; பயிர் முதலியன குன்றிப்போதல்; ஆணி முதலியன அறைதல்; தடுத்தல்.

**சடைநாகம்** – நாகம்போலச் செய்த மகளிர் தலை யணி.

**சடைநாய்** – உடலில் மயிர் அடர்ந்துள்ள நாய் வகை.

**சடைப்பயறு** – ஒரு பயறுவகை.

**சடைப்பாசி** – சடைபோல் தடித்திருக்கும் ஒரு பாசிவகை.

**சடைப்பில்லை** – பெண்கள் தலைப் பின்னலில் செருகியணியும் தலையணிவகை.

**சடைபற்றுதல்** – சடைவிழுதல்; அடர்த்தியாதல்.

**சடைபி** – காண்க: **சடைப்பில்லை.**

**சடைபோட்டுக்கொள்ளுதல்** – முடியைச் சடை யாக்கிக் கொள்ளுதல்; தலைபின்னிக்கொள்ளு தல்.

**சடைமாரியாயி** – அம்மைநோய்க்குரிய தேவதை.

**சடைமுடி** – அடர்ந்ததும் பின்னிமுடிக்கப்பட்டது மான மயிர்; சரக்கொன்றை.

**சடைமுடியோர்** – சடைமுடியை உடைய முனிவர்.

**சடையப்பன்** – சடைமுடியையுடைய சிவன்; கம்பனை ஆதரித்த வள்ளல்.

**சடையன்** – சிவன்; சடையையுடையவன்; அறுபத்து மூவருள் ஒருவரான சடைய நாயனார்; சடையப்பவள்ளல்.

**சடையோன்** – சடையையுடையவன்; சிவன்; வீரபத்திரன்.

**சடைவாறுதல்** – இளைப்பாறுதல்.

**சடைவில்லை** – காண்க: **சடைப்பில்லை.**

**சடைவிழுதல்** – மயிர் சடையாகப் பற்றுதல்; பயன்படாதுபோதல்.

**சடைவு** – மனத்தளர்வு; ஆணி முதலியன அறைகை.

**சண்டகோபி** – கடுஞ்சினமுடையவன்.

**சண்டகோலாகலம்,** **சண்டகோலாலம்,** **சண்டதரம்** – ஒரு நரகவகை.

**சண்டதாண்டவம்** – காளியோடு சிவன் ஆடிய கூத்து.

**சண்டப்பிரசண்டம்** – மிகு கடுமை; ஆர்ப்பாட்டம்.

**சண்டப்பை** – கருப்பை.

**சண்டம்** – கொடுமை; கோபம்; வேகம்; வலிமை; ஒரு நரகவகை; அலி; பெருமை.

**சண்டமாருதம்** – பெருங்காற்று.

**சண்டவேகம்** – மிகு விரைவு.

**சண்டன்** – கடுஞ்சினமுடையவன்; யமன், காலன்; சூரியன்; சண்டேசுர நாயனார்; உருத்திரருள் ஒருவர்; சிவன்; அலி.

**சண்டாளத்துரோகி,** **சண்டாளப்பாவி** – கொடுமை செய்தவன்; கயமைத் தன்மையுள்ள வன்.

**சண்டாளம்** – கயமைத்தன்மை; பேய்.

**சண்டாளர்** – தீயவர்; கொலைஞர்.

**சண்டாளன்** – இழிஞன்; கொடியவன்; புலையன்.

**சண்டாளி** – கொடியவள்; புலைச்சி.

**சண்டி** – கொடியவன்(ள்); இடக்குச் செய்ப வன்; சண்டேசுர நாயனார், துர்க்கை; காளி; மானமற்றவன்; இலச்சைகெட்டமரம்.

**சண்டிக்கடா** – முரட்டு எருமைக்கடா; பிடிவாதச் சோம்பேறி.

**சண்டிகை** – துர்க்கை.

**சண்டித்தனம்** – பிடிவாதம்.

**சண்டிலன்** – சிவன்; நாவிதன்.

**சண்டிவாளம்** – ஒப்பந்தத்தை நீக்கவோ ஒன்றை மீட்கவோ கொடுக்கும் பணம்; கால்விலங்கு.

**சண்டீனம்** – பறவை; பறக்கும் வகையினுள் ஒன்று.

**சண்டு** – கூளம்; பயிரில் விழும் வண்டுவகை; புகைபிடிக்கும் அபினியுருண்டை; எல்லைக் கோல்.

**சண்டுதல்** – நிறைய உண்ணல்.

**சண்டை** – சச்சரவு; போர்; பிணக்கு; வாத்திய வகை.

**சண்டைக்காரன்** – சண்டையிடுங் குணமுடைய வன்; பகைவன்.

**சண்டைக்குநிற்றல்** – போராடுதல்.

**சண்டைபிடித்தல்** – போரிடுதல்; கடிந்து கூறுதல்.

**சண்ணக்கடா** – தின்று கொழுத்த கடா.

**சண்ணம்** – ஆண்குறி.
**சண்ணித்தல்** – பூசுதல்; சார்ந்திருத்தல்.
**சண்ணுதல்** – தாக்குதல்; நீக்குதல்; நிறைய உண்ணுதல்; புணர்தல்; செய்துமுடித்தல்.
**சண்பகம்** – ஒரு பூமரவகை.
**சண்பங்காறை** – தாலியின் உருவகை.
**சண்பங்கோரை** – ஒரு கோரைவகை.
**சண்பனி** – யோகினி.
**சண்பு** – கோரைவகை; நெட்டி.
**சண்பை** – சீகாழிநகர்.
**சண்மதம்** – அறுவகைச் சமயம்.
**சண்முகன்** – ஆறுமுகன், முருகன்.
**சணகம்** – புளியாரைக்கீரை; கடலை; சணல்.
**சணப்பு** – சணற்பயிர்; கஞ்சா.
**சணப்பை** – சணல்.
**சணப்பொழுது** – நொடிநேரம்.
**சணம்** – சணல்; நொடிநேரம்.
**சணம்பு, சணல்** – நார் தரும் ஒரு செடிவகை.
**சணற்பனார்** – சணல்நார்.
**சணாய்** – கடலை.
**சணாய்த்தல்** – காமங்கொள்ளல்; கொழுத்தல்.
**சணைத்தல்** – கொழுத்தல்; விரிந்துண்டாதல்.
**சத்தக்கருவி** – தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்னும் ஐவகை இசைக்கருவிகள்.
**சத்தக்கூலி** – வண்டிக்கூலி, வண்டிவாடகை.
**சத்தகம்** – ஏழு கூடியது; சிறுகத்திவகை; இறுதிக் கடன்.
**சத்தகன்னிகை** – அபிராமி, இந்திராணி, கௌமாரி, காளி, நாராயணி, மயேசுவரி, வராகி என்னும் ஏழு மாதர்கள்.
**சத்தகுலாசலம்** – பூமியைத் தாங்குவனவாகக் கூறப்படும் கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி என்னும் ஏழு மலைகள்.
**சத்தங்காட்டுதல்** – ஒலியிடுதல்; தீங்கிழைக்கும் உயிரினங்கள் விலகும்படி கைதட்டுதல்; ஆபத்துக்காலம் முதலியவற்றில் முறையிட்டுக் கூவுதல்.
**சத்தங்கேட்டல்** – வண்டிவாடகை பேசுதல்; ஒலி கேட்டல்.
**சத்தசமுத்திரம்** – உப்பு, நீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் இவற்றையுடைய ஏழு கடல்கள்.
**சத்தசிப்பி** – கிளிஞ்சில்.
**சத்தசுரம்** – ஏழு சுரம்.
**சத்ததாது** – உடம்பின் அமைப்பிலுள்ள இரதம், குருதி, எலும்பு, தோல், இறைச்சி, மூளை, சுக்கிலம் என்னும் ஏழுவகைப் பொருள்கள்.
**சத்ததாளம்** – துருவதாளம், அடதாளம், ஏக தாளம், திரிபுடைதாளம், ரூபகதாளம், சம்பை தாளம், மட்டியதாளம் என்னும் ஏழுவகைத் தாளங்கள்.
**சத்ததீர்த்தம்** – காண்க: **சத்தநதி.**
**சத்ததீவு** – நாவல், இரவி, குசை, கிரவுஞ்சம், இலவம், தெங்கு, புட்கரம் என்னும் ஏழு தீவுகள்.
**சத்தநதி** – கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, காவிரி, குமரி, கோதாவரி என்னும் ஏழு புண்ணிய ஆறுகள்.
**சத்தப்பிரதி** – கேள்விமூலம் தெரிவது.
**சத்தப்பிரபஞ்சம்** – சொல்உலகம்.
**சத்தப்பிரமம்** – ஒலியே தெய்வம் என்னும் நூல்; அறுபத்துநான்கு கலையுள் சுரபேதம் அறியும் வித்தை.
**சத்தப்பிரமவாதம்** – நாதமே பிரமம் என்னும் கொள்கை.
**சத்தப்பிரமாணம்** – ஆகமப் பிரமாணம், ஆப்த வசனமான வேதம் முதலியவற்றைக்கொண்டு அறியும் அளவை.
**சத்தபருணி** – ஏழிலைப்பாலைமரம்.
**சத்தபுரி** – மதுரை, அயோத்தி, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்னும் ஏழு புண்ணிய நகரங்கள்.
**சத்தம்** – ஒலி; சொல்; எழுத்து சொற்களைப் பற்றிய நூல்; சத்தப்பிரமாணம்; ஏழு; வாடகை; வண்டிக்கூலி.
**சத்தமண்டலம்** – வாயு, வருணன், சந்திரன், சூரியன், நட்சத்திரம், அக்கினி, மேகம் என்னும் ஏழு உலகங்கள்.
**சத்தமருத்து** – கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, மேல், கீழ், பலயோனியுயிர்கள் இவற்றினின்று வரும் ஏழுவகைக் காற்றுகள்.
**சத்தமன்** – யாவரினுஞ் சிறந்தவன்.
**சத்தமாங்கிசம்** – இராசியை ஏழாகப் பிரித்துக் கோள்களின் நிலையைக் குறிக்குஞ் சக்கரம்; ஏழில் ஒரு கூறு.
**சத்தமாதர், சத்தமாதாக்கள்** – காண்க: **சத்தகன்னிகை.**
**சத்தமி** – ஏழாந் திதி; ஏழாம் வேற்றுமை.
**சத்தமுகில், சத்தமேகம்** – சம்வர்த்தம், ஆவர்த்தம், துரோணம், புட்கலாவருத்தம், காளமுகி, சங்காரித்தம், நீலவருணம் என்னும் ஏழு மேகங்கள்.
**சத்தரிஷிகள்** – இருடிகள் எழுவர்: அகத்தியன், புலத்தியன், அங்கிரசு, கௌதமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டன்.
**சத்தலோகம்** – பொன், வெள்ளி, இரும்பு, செம்பு, ஈயம், தரா, கஞ்சம் என்னும் ஏழு வகை உலோகங்கள்.

**சத்தவருக்கம்** – நெல்லி, வெட்டிவேர், இலாமிச்சைவேர், சடாமாஞ்சில், இலவங்கம், ஏலம், திராட்சை என்னும் ஏழுவகை மருந்துப் பொருள்கள்.

**சத்தவிடங்கத்தலம்** – தியாகராசர் கோயில் கொண்டுள்ள ஆரூர், நாகை, நள்ளாறு, மறைக்காடு, காறாயில், வாய்மூர், கோளிலி என்னும் ஏழு தலங்கள்.

**சத்தன்** – ஆற்றலுடையவன்; அருவத் திருமேனி கொண்ட சிவன்.

**சத்தாமாத்திரம்** – கேவலம் உள்ளதாயிருக்கை.

**சத்தாய்த்தல்** – தொந்தரவுசெய்தல்; எள்ளுதல்.

**சத்தார்த்தம்** – சொற்பொருள்.

**சத்தாவத்தை** – சீவான்மாவுக்கு நிகழக்கூடிய அறியாமை, ஆவரணம், விட்சேபம், பரோட்ச ஞானம், அபரோட்ச ஞானம், சோகநிவர்த்தி, தடையற்ற ஆனந்தம் என்னும் ஏழுவகை நிலைகள்.

**சத்தாவரணம்** – திருவிழா முடிவில் சுவாமி பிராகாரத்துக்குள்ளேயே ஏழுதரஞ் சுற்றுகை.

**சத்தி** – ஆற்றல்; பிரபுசத்தி, மந்திரசத்தி, உற்சாக சத்தி ஆகிய மூவகை அரசர் ஆற்றல்கள்; மூன்று; பெருங்கொடி; கொடி நாட்டுங் குழி; சிவனது அருள்; உமை; சத்தி தத்துவம்; ஞானவதி; வேல்; சூலம்; சொல் லாற்றல்; கந்தகம்; நெல்லிக்காய்க் கந்தகம்; நீர்முள்ளி; வாந்திசெய்கை; வேம்பு; கொம்மட்டி; பேய்ப்புடல்; விருந்து; குடை; இசைச்செய்யுள்.

**சத்திக்குடம்** – மாளிகைமேல் வைக்கப்படும் சூலம் நாட்டிய குடம்.

**சத்திக்கூற்றோன்** – நவச்சாரம்.

**சத்திக்கொடி** – தாடிமஞ்சம் என்னுங் கொடி வகை.

**சத்திகம்** – குதிரை.

**சத்திகர்** – கடவுளருளால் அற்புதஞ் செய்வோர்; தேவதூத வகையினர்.

**சத்திகுருநாதன்** – கஞ்சா.

**சத்திகோணம்** – பார்வதிதேவியைக் குறிப்பதாக வரையும் கோணம்.

**சத்திசாரணை** – மூக்கிரட்டைக்கொடி.

**சத்திசெய்தல்** – வாந்தியெடுத்தல்.

**சத்தித்தல்** – ஒலித்தல்; கக்குதல்.

**சத்திதத்துவம்** – சுத்த தத்துவங்களுள் ஒன்றாய்ச் சிவனது வினையாற்றலுக்கு இடமாய்ச் சுத்த மாயை செயற்படுவதாயுள்ள விருத்தி.

**சத்திதரன்** – முருகன்; வேற்படையை உடைய வன்.

**சத்திதீட்சை** – வேண்டும் சாதனங்களையும் கிரியைகளையும் குரு தமது பாவனையால் செய்துகொள்ளும் ஔத்திரி தீட்சைவகை.

**சத்திநாதம்** – பொன்னிறம்; பொன்னிமிளை; ஏமாப்பிரகம்.

**சத்திநிபாதம்** – பக்குவமுடைய ஆன்மாக்களிடம் திருவருள் பொருந்துதல்.

**சத்திநிபாதன்** – திருவருள் பதியப்பெற்றவன்.

**சத்திப்பு** – கக்கல், வாந்தி.

**சத்திபீடம்** – சத்தியின் நிலைபேறுடைய ஆலயம்.

**சத்திபூசை** – காண்க: **சக்திபூசை.**

**சத்திமத்து** – ஞானவதி, காண்க: **சத்திதீட்சை.**

**சத்திமான்** – சத்தியையுடையோன், ஆற்றல் படைத்தவன்; காரியத்திற்குத் தகுதியாகும் படி சுத்தமாயை நோக்கி நிற்கும் சிவன்; சிவன் நோக்கி நின்றவழிக் காரியப்படுதற்குத் தகுதியாகும் சுத்த மாயையின் பகுதி.

**சத்திமுகம்** – அரசனது ஆணைப்பத்திரம்.

**சத்தியசந்தன்** – உண்மை பேசுபவன்.

**சத்தியஞ்செய்தல்** – பிரமாணம் பண்ணுதல்.

**சத்தியஞானம்** – மெய்யுணர்வு.

**சத்தியநிருவாணம்** – பிறவியறுத்தல்; மாணாக் கனை உடனே வீடுபேறு எய்துவிக்கும் நிருவாண தீட்சைவகை.

**சத்தியப்பிரமாணம்** – சத்தியப்பிரமாணிக்கம், சத்தியஞ்செய்கை.

**சத்தியப்பொருள்** – உள்பொருள்.

**சத்தியம்** – உண்மை; பிரமாணம்; துக்கம், துக் கோற்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் ஆகிய நான்கு வகைப்பட்ட பௌத்த தத்துவங்கள்; குறிஞ்சாக்கொடி.

**சத்தியம்பண்ணுதல்** – காண்க: **சத்தியஞ்செய்தல்.**

**சத்தியயுகம்** – கிரேதாயுகம், உண்மையே நிகழ்ந்த யுகம்.

**சத்தியலோகம்** – மேலேழு உலகத்துள் பிரமன் வசிக்கும் உலகம்.

**சத்தியவசனம்** – உண்மைமொழி; உண்மை பேசுகை.

**சத்தியவந்தன்** – காண்க: **சத்தியசந்தன்.**

**சத்தியவாசகம்** – காண்க: **சத்தியவசனம்.**

**சத்தியவாதி** – காண்க: **சத்தியசந்தன்.**

**சத்தியவான்** – உண்மையே பேசுபவன்; சாவித்திரி யின் கணவன்.

**சத்தியவிரதன்** – உண்மை பேசுதலையே விரத மாக உடையவன்; தருமபுத்திரன்.

**சத்தியவேதம்** – மெய்வேதம், விவிலிய நூல்.

**சத்தியானிருதம்** – மெய்யும் பொய்யும் கலந்தது; வாணிகத் தொழில்.

**சத்தியோசாதம்** – சிவபிரானுடைய ஐம்முகங் களுள் மேற்கு நோக்கிய முகம்; ஒரு சைவ மந்திரம்.

**சத்தியோ நிர்வாண தீட்சை, சத்தியோ நிர்வாணம்** – காண்க: **சத்திய நிருவாணம்.**

**சத்திரகன்மம்** – ஆயுதத்தால் அறுத்துச் செய்யும் சிகிச்சை.

**சத்திரசாலை** – அன்னசாலை, அறக்கூழ்ச்சாலை.

**சத்திரபதி** – அரசன்; குடையை உடைய தலைவன்.

**சத்திரம்** – அன்னசாலை; பல நாள்கள் செய்யும் வேள்விவகை; கைவிடாப் படை; இரும்பு; வேல்; இரண வைத்தியக் கத்தி; யசுர் வேதத்தின் ஓர் உட்பிரிவு; குடை; வியப்பு; கவிழ்தும்பைச்செடி; தும்பைச்செடி.

**சத்திரம்வைத்தல்** – ஆயுதத்தாற் புண்ணை அறுத்தல்.

**சத்திரவித்தை** – அறுவை மருத்துவம்; படைக்கலன் பயிலுங் கல்வி.

**சத்திராட்சி** – அரத்தைச்செடி.

**சத்திரி** – யானை; சத்திரியன்.

**சத்திரித்தல்** – ஆயுதத்தால் அறுத்துச் சிகிச்சை செய்தல்.

**சத்திரியன்** – அரச வகுப்பினன்.

**சத்திரூபம்** – சிவனது அருள்வடிவம்.

**சத்திலி** – கருப்பூரம்.

**சத்தின்வட்டம்** – விருந்தின் உணவுவகைகள்.

**சத்து** – உண்மை; என்றும் உள்ளது; நன்மை; சாரம்; வலிமை; சித்து, அறிவு; ஒழுக்கத்திற் சிறந்தவன்; ஞானி; மாவு; கருப்பூரச் சிலாசத்து; துத்தம்; அமைதிகுறிக்குஞ் சொல்.

**சத்துக்கொடுத்தல்** – வலிமை உண்டாக்குதல்.

**சத்துமா** – வறுத்த அரிசியின் மாவு, பொரிமாவு.

**சத்துமொத்தெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**சத்துராதி(ளி), சத்துரு** – பகைவன்.

**சத்துருசங்காரம்** – பகைவரை அழிக்கை.

**சத்துருத்தானம்** – இலக்கினத்துக்கு ஆறாம் வீடு, சாதகனுக்குப் பகையிடம்.

**சத்துருதுரந்தரன்** – பகைவர்களை வெல்பவன்.

**சத்துருபட்சத்தார்** – பகையினத்தவர்.

**சத்துருவாதி** – பகைவன்.

**சத்துவகர்** – வியத்தகு செயல்களை நிகழ்த்த வல்ல தேவதூதர்.

**சத்துவகுணம்** – மூவகைக் குணத்துள் ஒன்று, நற்செயல்களில் மனத்தைச் செலுத்தும் குணம்.

**சத்துவம்** – உளதாந்தன்மை; சாரம்; இயல்பு; வலிமை; சத்துவகுணம்; உயிரி; ஒரு மெய்ப்பாட்டுவகை.

**சத்துவரம்** – விரைவு; வேதிகை.

**சத்துவாரி** – பார்வை மங்கலாய்த் தெரிவது; வெள்ளெழுத்து.

**சத்துவாலம்** – ஓமகுண்டம்; தருப்பைப்புல்; கருப்பம்.

**சத்துவேது** – நேர்மையான காரணம்.

**சத்தை** – உளதாந்தன்மை; பலன்; உண்மை; சாரம்; வலிமை.

**சதக்கல்** – சதுப்புநிலம், சேற்றுநிலம்.

**சதக்கிர(ரு)து, சதக்கிருதன்** – காண்க: **சதமகன்.**

**சதக்கினி** – நூற்றுவரைக்கொல்லி என்னும் மதிற்பொறி.

**சதகம்** – நூறு பாட்டுகள் கொண்ட ஒரு நூல் வகை; நூற்றாண்டு; தான்றிமரம்.

**சதகுப்பி(பை)** – ஒரு மருந்துப்பூண்டுவகை; ஓமம்.

**சதகோடி** – நூறுகோடி; நூறு முனைகளையுடைய வச்சிரப்படை; இடி.

**சதகோடிசங்கம்** – பெருங்கூட்டம்.

**சதங்கை** – காலணி, கிண்கிணி; பெண்களும் குழந்தைகளும் அணியும் ஓர் அணிவகை.

**சதங்கைக்கொதி** – உலைநீரின் ஒருவகைக் கொதிப்பு.

**சதங்கைத்தாமம்** – ஒரு பூமாலைவகை.

**சதங்கைப்பூரமி, சதங்கைப்பூரான்** – ஒரு பூரான்வகை.

**சதங்கைமாலை** – ஒருவகைக் கழுத்தணி; மாலை வகை; குதிரைகளின் கழுத்தணி.

**சதசத்து** – உள்ளதும் இல்லதும்; ஆன்மா.

**சதசதத்தல்** – நொதுநொதுத்தல், ஈரம் பற்றியிருத்தல்.

**சதசதப்பு** – நொதுநொதுப்பு, ஈரப்பற்று.

**சதசல்லியம்** – பெருந்தொந்தரவு.

**சதசு** – கற்றோர் கூடிய அவை.

**சதஞ்சீவி** – சிரஞ்சீவி; நூறாண்டு வாழ்பவன்.

**சததம்** – எப்பொழுதும்.

**சததளம்** – நூறு இதழ்களையுடைய தாமரை.

**சததாரை** – நூறு முனைகளையுடைய வச்சிரப் படை; இடி.

**சதநியுதம்** – கோடி.

**சதபத்திரம்** – நூறு இதழ்களையுடைய தாமரை; கிளி; மயில்; வெண்ணாரை; தச்சன் கருவி.

**சதபத்திரி** – ஆடுதின்னாப்பாளை; நூறு இதழ்களையுடைய தாமரை.

**சதபதுமம்** – நூறு இதழ்களையுடைய தாமரை.

**சதபுட்பம், சதபுட்பி** – மருந்துப் பூண்டுவகை; ஓமம்.

**சதம்** – நூறு, ஒரு ரூபாவின் 1/100 பங்கு உள்ளதாய் இலங்கையில் வழங்கும் செப்பு நாணயம்; இலை; இறகு; அறுபட்ட பயிர்; அழியாதது; இறுதி; தமாலமரம்.

**சதமகன்** – நூறு வேள்விகள் செய்தவன், இந்திரன்.

**சதமுனைஇடி** – காண்க: **சததாரை.**
**சதமூலை** – கொடிவகை.
**சதயம்** – ஒரு நட்சத்திரம்.
**சதவல்** – சதுப்புநிலம்; குப்பை.
**சதவீரியம்** – வெள்ளறுகம்புல்.
**சதவீரு** – காண்க: **மல்லிகை.**
**சதவுருத்திரம்** – உருத்திரமூர்த்திக்கு உரிய வேத மந்திரம்.
**சதளக்காரன்** – பெருங்குடும்பக்காரன்.
**சதளம்** – கூட்டம்.
**சதனம்** – இலங்கையில் வழங்கும் செப்பு நாணயம்; வீடு.
**சதா** – எப்பொழுதும்; மரக்கலம்; பழுது; தாமதம்.
**சதாக்கினி** – தேள்.
**சதாகதி** – இடைவிடாமல் இயங்கும் காற்று; சூரியன்.
**சதாகாலம்** – எப்பொழுதும்.
**சதாங்கம்** – தேர்.
**சதாசர்வகாலம்** – எப்பொழுதும்.
**சதாசாரம்** – நல்லொழுக்கம்.
**சதாசிவதத்துவம்** – சுத்த தத்துவங்கள் ஐந்தனுள் ஒன்றாகவும் சாதாக்கியத்துக்கு இடமாகவும் ஞானமுங் கிரியையும் ஒத்து நிற்கும் நிலை.
**சதாசிவம்** – ஐந்து கர்த்தாக்களுள் முதல்வராய் உயிர்களுக்கு அருள் செய்யும்பொருட்டுச் சிவன் மேற்கொள்ளும் மூர்த்தம்; உருவாய் விளங்குதற்குமுன் உயிர்களின்பொருட்டுச் சிவன் மேற்கொள்ளும் அருவுருவாகிய மூர்த்தம்.
**சதாசிவன்** – அநுக்கிரக சிவமூர்த்தி.
**சதாசேர்வை** – எப்பொழுதும் ஊழியம் செய்கை.
**சதாட்டகம்** – நூற்றெட்டு.
**சதாபடம்** – எருக்கஞ்செடி.
**சதாபதி** – என்றுமுள்ள கடவுள்; மரவட்டை.
**சதாபலம்** – எலுமிச்சைமரம்.
**சதாபிடேகம்** – எண்பது ஆண்டுக்கு மேற்பட்டு வாழ்ந்து ஆயிரம்பிறை கண்டவர்க்குச் செய்யும் சடங்கு.
**சதாபுசம்** – வண்டுவகை.
**சதாபுட்பம்** – வெள்ளெருக்கு; முல்லை.
**சதாபுட்பி, சதாபூடம்** } – காண்க: **சதாபடம்.**
**சதாமூர்க்கம்** – பாம்புகொல்லிப்பூண்டு, காண்க: அருவதா.
**சதாமூலம்** – கொடிவகை.
**சதாய்த்தல்** – கேலிபண்ணுதல், எள்ளுதல்.
**சதாயுசு** – முதிர்ந்தவன்; நூறுவயதுள்ளோன்.
**சதாரம்** – நூறு முனைகளையுடைய வச்சிரப் படை.
**சதாவிருத்தி** – சத்திரம் முதலியவற்றில் வழிப்போக்கர் முதலானவர்க்குத் தினந்தோறும் அளிக்கும் உணவுப்பொருள்.
**சதாவுதல்** – பழுதாதல்.
**சதாவேரி** – காண்க: **சதாமூலம்.**
**சதானந்தம்** – நிலையான மகிழ்ச்சி.
**சதி** – வஞ்சனை; சோறு; தீயுண்டாக்கும் கருவி; சீக்கிரம்; தாளவொத்து; கற்புடையாள்; உரோகிணி; பார்வதி; இறந்த கணவனோடு மனைவி உடன்கட்டையேறுதல்; வட்டம்; கூட்டமாய்ச் செல்லுதல்.
**சதிகாரன்** – மோசக்காரன்.
**சதிகொலை** – படுகொலை.
**சதிங்கி** – கப்பற்பாயின் மூலைகளைப் பாய் மரத்தின் மேலாக இழுத்துக் கட்டுவதற்கு உதவுங் கருவி.
**சதித்தல்** – அழித்தல்; வஞ்சித்தல்.
**சதிபதி** – சிவன்; கணவன்மனைவியர்.
**சதிபாய்தல்** – நாட்டியமாடுதல்.
**சதிபுருடநியாயம்** – கணவன்மனைவியரிடையே உள்ள உரிமை.
**சதிமானம்** – வஞ்சனை.
**சதிமோசம்** – படுமோசம்.
**சதியன்** – மோசக்காரன், தீயோன்.
**சதியாலோசனை, சதியோசனை** } – வஞ்சக ஆலோசனை, தீய அறிவுரை.
**சதிர்** – திறமை; பெருமை; பேறு; அழகு; நிலைமை; குறைந்த விலை; செட்டு, சிக்கனம்; எல்லை; நாட்டியம்; பெரும்பயன் அளிக்கும் சிறு முயற்சி.
**சதிர்க்கச்சேரி** – நாட்டியக் கச்சேரி.
**சதிர்க்கிராமம்** – எல்லைப்புறத்திலுள்ள ஊர்.
**சதிரம்** – கக்கரிக்கொடிவகை; நேர்கோணம் உள்ளதும் அளவொத்த நான்கு எல்லை வரம்புடையதுமான உருவம்; உடல்.
**சதிராட்டம்** – நாட்டியம்.
**சதிரி** – திறமையுடையவள்.
**சதிருக்குவருதல்** – வெளிப்படையாதல்.
**சதிருசம்** – ஒப்பு.
**சது** – நான்கு; சத்தமிடாது இருக்கவேண்டும் என்று குறிக்கும் சொல்.
**சதுக்கபூதர்** – நாற்சந்திக்கண் குடிகொண்டுள்ள பூதங்கள்.
**சதுக்கம்** – நான்கு தெருக்கள் கூடுமிடம், நாற்சந்தி; சந்து; தலையிற் கட்டும் உருமால்.
**சதுக்கல்** – வழுக்கல்.
**சதுட்டயம்** – நான்கு மடங்குகொண்டது; கேந்திரம்.
**சதுட்பாதம்** – நாற்கால் விலங்கு; நாய்; கரணம் பதினொன்றனுள் அமாவாசையின் முற்பகுதியில் நிகழும் காலக்கூறு.

**சதுப்பு,**
**சதுப்புநிலம்** } – சேற்றுநிலம்.

**சதுப்புயன்** – நான்கு தோள்களையுடைய திருமால்.

**சதுப்பேதி** – நான்கு வேதங்களிலும் வல்ல பார்ப்பனன்.

**சதும்பை** – செடிவகை.

**சதுமணி** – கழலை.

**சதுமுகன்** – நான்கு முகங்களையுடைய பிரமன்; அருகன்.

**சதுர்** – நான்கு; திறமை; விரகு, உபாயம்; மலிவு; நாட்டியம்.

**சதுர்க்கதி** – ஆமை.

**சதுர்க்கோணம்** – நாற்கோணமுள்ள வடிவம்.

**சதுர்காணுதல்** – விலை மலிவாதல்.

**சதுர்கூலி** – ஆவிரைச்செடி.

**சதுர்த்தசம்** – பதினான்கு.

**சதுர்த்தசி** – பதினான்காம் திதி.

**சதுர்த்தம்** – நான்காவது; நான்கு சுரமுள்ள பண்.

**சதுர்த்தி** – நான்காம் திதி; நான்காம் வேற்றுமை; திருமணத்தில் நான்காம் நாள் இருக்கும் நோன்பு.

**சதுர்த்திகை** – காற்பலம்; நான்காம் திதி.

**சதுர்த்தியறை** – திருமணத்தில் நான்காம் நாள் இரவு மணமக்கள் கூடி உறையும் அறை.

**சதுர்ப்பதம்** – காண்க: **சதுர்ப்பாதம்.**

**சதுர்ப்பாகம்** – செலுத்தற்குரிய அரசிறையில் காற்பகுதி செலுத்தி அனுபவிக்கும் மானிய நிலம்; நிலவரியில் நாலில் ஒரு பாகத்தை அரசிடமிருந்து இனாம் பெறுதல்.

**சதுர்ப்பாடு** – காண்க: **சதுரப்பாடு.**

**சதுர்ப்பாதம்** – கரணம் பதினொன்றனுள் அமாவாசையின் முற்பகுதியில் நிகழும் காலக் கூறு; சிவாகமங்களிற் கூறப்படும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பகுதிகள்.

**சதுர்ப்புயன்** – நான்கு தோள்களை உடைய திருமால்; சிவன்.

**சதுர்ப்பேதி** – காண்க: **சதுர்வேதி.**

**சதுர்முகன்** – நான்முகன்; அருகன்.

**சதுர்யுகம்** – கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்னும் நான்கு யுகங்கள்; நான்கு யுகங்கூடிய பெருங்காலம்.

**சதுர்விதோபாயம்** –காண்க: **சதுருபாயம்.**

**சதுர்வேதம்** – இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்கள்.

**சதுர்வேதி** – நான்கு மறைகளிலும் வல்லவன்.

**சதுரக்கம்பம்** – நாற்கோணமாய் அமைந்த தூண் வகை.

**சதுரக்கல்** – சதுரவடிவான கல்.

**சதுரக்கள்ளி** – கள்ளிவகை.

**சதுரகராதி** – பெயரகராதி, பொருளகராதி, தொகையகராதி, தொடையகராதி என்று நாற்பிரிவுகள் உடையதாகப் பதினெட்டாம் நூற்றாண்டில் வீரமாமுனிவர் இயற்றிய அகராதி.

**சதுரங்கசேனை** – யானை, குதிரை, தேர், காலாள் சேர்ந்த நால்வகைப் படை.

**சதுரங்கபந்தம்** – சதுரங்கக் கட்டத்தில் எழுத்துகள் முறைப்படி அடையப் பாடப்பெறும் மிறைக்கவிவகை.

**சதுரங்கபலம்** – காண்க: **சதுரங்கசேனை.**

**சதுரங்கம்** – யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை எனும் நால்வகைப் படை; நால்வகைச் சேனைகளாகக் காய்களை நிறுத்தி விளையாடும் ஒரு விளையாட்டுவகை; நாற்கோணம்.

**சதுரச்சந்தி** – நாற்சந்தி.

**சதுரச்சிரம்** – நிருத்தக்கைவகை; தாளத்தின் சாதி ஐந்தனுள் ஒன்று.

**சதுரசிரசாதி** – தாளத்தின் சாதி ஐந்தனுள் ஒன்று.

**சதுரசிரம்** – காண்க: **சதுரச்சிரம்.**

**சதுரந்தயானம்** – சிவிகை, பல்லக்கு.

**சதுரப்பலகை** – சதுரங்கமாடும் பலகை; தச்சன் கருவிவகை.

**சதுரப்பாடு** – திறமை; அறிவுக்கூர்மை; நேர் கோணமுள்ளதும் அளவொத்த நான்கு எல்லை வரம்புடையதுமான உருவம்; உடலுழைப்பு.

**சதுரப்பாலை** – பாலை யாழ்த்திறவகை நான்கனுள் ஒன்று.

**சதுரம்** – நேர்கோணமுள்ளதும் அளவொத்த நான்கு எல்லை வரம்புடையதுமான உருவம், அகலம் நீளம் ஒத்த நாற்கோணம்; சதுரக் கள்ளி; சிறுவிரல் பின்பாக நிமிரப் பெருவிரல் உள்ளே வர மற்றை மூவிரல்களும் தம்முட் சேர்ந்து இறைஞ்சி நிற்கும் இணையாவினைக்கை; திறமை; அறிவுக்கூர்மை; நாகரிகம்; விரைவு.

**சதுரமாடம்** – நான்குபுறமும் அளவொத்த மாடப் புரை.

**சதுரவளவு** – அகலநீளங்களைப் பெருக்கிவந்த அளவு.

**சதுரன்** – திறமையுடையவன்; நகரவாசி; பேராசைக்காரன்.

**சதுரானன்** – நான்கு முகங்களை உடைய பிரமன்.

**சதுரித்தல்** – சரிசதுரமாக்கல்; மரம் முதலிய வற்றை நான்கு பட்டையாகச் செதுக்குதல்; கட்டடத்தின் அமைப்பெல்லையைப் பூமியில் வரையறுத்துக் குறித்தல்; எண்களை வர்க்க மாக்குதல்.

**சதுரித்திருத்தல்** – கவனமாயிருத்தல்.

**சதுருபாயம்** – அரசர்க்கென நீதிநூல்களில் கூறப் பட்டுள்ள சாமம், பேதம், தானம், தண்டம் என்னும் நான்குவகை உபாயங்கள்.

**சதுரூடியங்கள்** – யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நால்வகைப் படைகள்.

**சதுவகை** – நால்வகை.

**சதுவல்** – காண்க: **சதக்கல்.**

**சதுனி** – வெளவால்.

**சதேகமுத்தி** – சீவன்முத்தி.

**சதேகரு** – இலவங்கப்பட்டை.

**சதேகை** – சீவன்முத்தித் தன்மையில் நிட்டை பொருந்தியிருக்கை.

**சதேந்திரர்** – 42 பவணந்திரரும், 32 வியந்தரேந் திரரும், 22 கற்பேந்திரரும், சந்திரன், சூரியன், நரேந்திரன், மிருகேந்திரன் என்னும் நால்வரும் ஆகிய இந்திரர் நூற்றுவர்.

**சதேரன்** – பகைவன்.

**சதை** – ஊன்; பழத்தின் தசை; முன்னைமரம்; பாலைமரம்; இணை.

**சதைக்குந்தம்** – கருவிழியிற் படரும் நோய்வகை.

**சதைக்குவை** – கடைக்கண்ணில் வரும் நோய் வகை.

**சதைக்கொழுப்பு** – உடம்பு கொழுத்திருக்கை; தடித்தனம்.

**சதைத்தல்** – சதைபற்றுதல்; நசுக்குதல்; நெரித் தல்.

**சதைதல்** – நசுங்குதல், நெரிதல்.

**சதைப்படர்த்தி** – கண்ணோய்வகை.

**சதைப்பற்று** – பழத்தின் தசை; உடைமை; ஊன்.

**சதைப்புற்று** – வெள்விழியிற் காணும் நோய் வகை.

**சதையம்** – காண்க: **சதயம்.**

**சதையல்** – மூங்கில் பிளப்பு.

**சதைவலி** – சதையில் வலி உண்டாக்கும் நோய் வகை.

**சதைவளர்ச்சி** – சதைவளரும் நோய்வகை.

**சதைவுகாயம்** – நசுங்கலால் உண்டாகும் காயம்.

**சதைவைத்தவள்** – மலடானவள்.

**சதோக(கு)ரு** – இலவங்கப்பட்டை.

**சதோடம்** – குற்றத்துடன் கூடியது.

**சந்தக்கவி** – காண்க: **சந்தப்பா.**

**சந்தக்குழம்பு** – மணமூட்டிக் குழைத்த சந்தனம்.

**சந்தக்கேடு** – மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று.

**சந்தகபுட்பம்** – கிராம்பு.

**சந்தகம்** – இடியப்பம்; மகிழ்ச்சி.

**சந்தகன்** – சந்திரன்.

**சந்தகை, சந்தகைப்பலகை** – இடியப்பக்குழல்.

**சந்தசு** – யாப்புவகை; வேதாங்கங்களுள் ஒன்றாய் யாப்பிலக்கணம் கூறும் நூல்; வேதம்.

**சந்தஞ்சம்** – நாட்டியத்தில் காட்டும் ஆண்மக்கட் குரிய கைவகைகளுள் ஒன்று.

**சந்தடி** – இரைச்சல், ஆரவாரம்; கூட்டம்.

**சந்தடைப்பன்** – மாட்டுநோய்வகை.

**சந்தணி** – சந்தனம்.

**சந்தணுகி** – இடுகிய சந்துகளில் வாழும் பாம்பு.

**சந்தத்தாண்டகம்** – சந்தவடியும் தாண்டகவடியும் விரவி ஓசைகொண்டு வருஞ் செய்யுள்.

**சந்ததம்** – எப்பொழுதும்.

**சந்ததி** – வழித்தோன்றல்; மகன்; மரபு.

**சந்தப்பா, சந்தப்பாட்டு** – நான்கெழுத்து முதல் இருபத்தா றெழுத்து வரையுள்ள அடிகள் நான்கு கொண்ட பாவகை.

**சந்தப்பாணம்** – புண்கட்டிக்கு இடும் ஒரு கலவை மருந்து.

**சந்தம்** – அழகு; நிறம்; செய்யுள்வண்ணம்; வடிவு; சுகம்; பழக்கம்; வேதத்தில் வரும் யாப்பைப்பற்றிக் கூறும் நூல்; வேதம்; செய்யுள்; சந்தப்பாட்டு; சந்தனம்; துளை; கருத்து.

**சந்தமாமா** – சந்திரன்; கூத்தில் கோமாளி தன் னோடு பேசுபவரைக் குறித்தற்குக் கூறும் சொல்.

**சந்தயம்** – ஐயம்; ஐயவணி.

**சந்தர்ப்பணம்** – நிறைவுசெய்தல்; மகிழ்வித்தல்.

**சந்தர்ப்பம்** – வாய்ப்பு, சமயம்; முன்பின்னமைவு.

**சந்தரி** – துளசி.

**சந்தவடி** – நான்கு முதல் இருபத்தாறு வரையும் உள்ள எழுத்துகளால் இயன்ற விருத்தத்தின் அடி.

**சந்தவாக்கு** – இயற்கைக் குணம்; இழிந்த பழக்கம்.

**சந்தவிருத்தம்** – இனிய ஓசையுடைய பாடல்.

**சந்தனக்கட்டை** – உரைத்தற்குரிய சந்தனமரக் கட்டை.

**சந்தனக்கல்** – சந்தனம் உரைக்குங் கல்.

**சந்தனக்காப்பு** – சந்தனத்தைக் கடவுளின் திரு மேனியில் அப்புகை.

**சந்தனக்குடம்** – முகமதியரின் ஒரு திருவிழா.

**சந்தனக்குழம்பு** – இழைத்த சந்தனம், கலவைச் சாந்து.

**சந்தனக்குறை** – கலவைச் சாந்தில் பயன்படுத்தும் சந்தனக்கட்டைத் துண்டு.

**சந்தனக்கூட்டு, சந்தனச்சாந்து** – கலவைச் சந்தனம்.

**சந்தனச்சாரல்** – சந்தனமரங்கள் நிறைந்த மலைச்சரிவு.
**சந்தனச்சேறு** – காண்க: **சந்தனக்குழம்பு.**
**சந்தனஞ்சாத்துதல்** – சந்தனக்காப்பிடுதல்.
**சந்தனத்திரணை** – சந்தனக்கட்டி.
**சந்தனத்திரி** – ஊதுவத்தி.
**சந்தனத்தேய்வை** – காண்க: **சந்தனக்குழம்பு.**
**சந்தனநறுநீர்** – சந்தனங் கலந்த பனிநீர்.
**சந்தனப்பில்லை** – மாடுகளில் காணப்படும் ஒரு வகை மஞ்சள்நிறம்.
**சந்தனப்பீடிகை** – சந்தனமரத்தாலான மணைப் பலகை.
**சந்தனப்பூச்சு** – உடலிற் சந்தனம் பூசுகை.
**சந்தனம்** – சந்தனமரம்; அரைத்த சந்தனம்; தேர்.
**சந்தனமிழைத்தல்** – சந்தனம் உரைத்தல்.
**சந்தனவெற்பு** – சந்தனமரம் உண்டாகும் மலை; பொதியமலை.
**சந்தனவேங்கை** – சந்தனமரவகை.
**சந்தனாசலம்,** **சந்தனாத்திரி** – காண்க: **சந்தனவெற்பு.**
**சந்தனாதி** – வேங்கைமரம்; சந்தனாதித் தைலம்.
**சந்தனாதித்தைலம்** – சந்தனம் முதலிய பொருள்களினின்று வடிக்கும் தைலம்.
**சந்தா** – கட்டணம்.
**சந்தாபம்** – சுடுதல்; மனத்துன்பம்; செய்த பாவத்திற்கு இரங்குகை.
**சந்தாயம்** – நிலச் சொந்தக்காரர் குத்தகைக்கு நிலம் விடாமல் தாமே பார்த்தல்; ஊர்ப் பொதுச்சொத்தைப் பங்கிட்டு அனுபவித்தல்.
**சந்தானகரணி** – முரிந்த வுறுப்புகளை இணைக்கும் மருந்து; இலுப்பைமரம்; அறுகம்புல்; பெருமருந்து.
**சந்தானகுரவர்** – சைவசித்தாந்தத்தைப் பரவச் செய்த பின்வந்த மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியார் எனும் நால்வர்.
**சந்தானகுரு** – மரபுவழிக் குரு.
**சந்தானபரம்பரை** – சந்தான குரவரான சைவாசாரிய பரம்பரை.
**சந்தானம்** – மரபு, சந்ததி; குருபரம்பரை; தொடர்பு; சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று; அம்பு எய்கை.
**சந்தானலட்சுமி** – எண்வகை இலட்சுமி வடிவங்களுள் ஒன்று; மக்கட்பேறு.
**சந்தானவிரதம்** – மகப்பேறடைய நோற்கும் நோன்பு.
**சந்தானி** – வெண்காரம்.
**சந்தி** – இசைப்பு; கூடுகை; பல தெருக்கள் கூடுமிடம்; எழுத்து சொற்களின் புணர்ச்சி; நட்பாக்குகை; தறுவாய்; மூங்கில்மரம்; ஒரு பெரும்பண்வகை; நாடகச்சந்தி; வரிக்கூத்து வகை; காலைமாலை நியமம்; மாலைநேரம்; சந்தியாவந்தனம்; வணக்கம்; திருவிழா; கோயிற்கட்டளை; பாடை; தக்க சமயம்; கோயில் கால பூசை.
**சந்திக்கரை** – சாலை, ஆறு முதலியன கூடுமிடம்.
**சந்திக்காப்பு** – மாலையில் குழந்தைகளுக்குச் செய்யப்படும் ஒரு சடங்குவகை.
**சந்திக்கூத்து** – திருவிழாவில் பெண்கள் கோயிலின் முன்பு ஆடும் கூத்துவகை.
**சந்திக்கோணம்** – தேர் உறுப்புகளுள் ஒன்று.
**சந்திகம்** – சன்னிநோய்வகை.
**சந்திகை** – சிற்றுண்டிவகை.
**சந்தித்தம்** – ஐயுறப்பட்டது.
**சந்தித்தல்** – சேர்த்தல்; எதிர்தல்; தெரிந்து கொள்ளுதல்.
**சந்திப்பு** – எதிர்கை; இசைவு; ஆறு; தெரு முதலியன கூடுமிடம்; காணிக்கை.
**சந்திபண்ணுதல்** – சந்தியாவந்தனஞ் செய்தல்.
**சந்திமிதித்தல்** – நான்காம் மாதத்தில் நல்ல வேளையில் குழந்தையைத் தெருச்சந்திக்குத் தூக்கிச் செல்லுதல்.
**சந்திமுடித்தல்** – நியமநிட்டைகளை நிறைவேற்றுதல்.
**சந்தியாகாலம்** – சாயங்காலம், மாலைநேரம்.
**சந்தியாமடம்** – அன்றாடம் வழிபாடு செய்தற்குரிய நீர்க்கரை மண்டபம்.
**சந்தியாராகம்** – செவ்வானம்.
**சந்தியாவந்தனம்,** **சந்தியாவந்தனை** – காலை, உச்சி, மாலைகளில் வேத மந்திரங்களால் செய்யும் வழிபாடு.
**சந்தியில் இழுத்தல்** – பழிப்பிற்கிடமாக்குதல், ஒருவன் குற்றங்குறைகளை வெளிப்படுத்தி நிந்தைக்கிடமாக்குதல்.
**சந்தியில்நிற்றல்** – ஆதரவின்றி இருத்தல்; தெருச் சந்தியில் நிற்றல்.
**சந்தியை** – காலை, மாலை எனப்படும் நாட்பிரிவுள் ஒன்று; மல்லிகை.
**சந்திரகணம்** – நூலின் முதற் செய்யுளின் முதலில் அமையும்படி புளிமாங்காய் என்னும் வாய்பாடு பற்றி வரும் நற்கணச் சீர்வகை.
**சந்திரகம்** – மயிற்றோகைக் கண்; மயிற்றோகை; ஓலையின் உறைச்சுருள்; வெள்ளைமிளகு; நகம்.
**சந்திரகலை** – சந்திரன்கூறு; சந்திரிகை; பெண்களின் கொண்டையிலணியும் அணிவகை; இடைகலை.
**சந்திரகாசம்** – சிவன் இராவணனுக்குக் கொடுத்த வாள்; காண்க: **சந்திரகாசரசம்.**

**சந்திரகாசரசம்** – நீர்வடிவான ஒரு மருந்துவகை.

**சந்திரகாந்தக்கல், சந்திரகாந்தச்சிலை, சந்திரகாந்தம், சந்திரகாந்தமணி** – காண்க: **சந்திரமணி**; வெள்ளாம்பல்.

**சந்திரகாந்தி** – ஒரு பூச்செடிவகை.

**சந்திரகாம்புயம்** – வெண்டாமரை.

**சந்திரகாவி** – செங்காவிமண்; சிவப்புச் சாய வகை; ஒரு புடைவைவகை.

**சந்திரகாவிச்சேலை** – ஒரு புடைவைவகை.

**சந்திரகி** – மயில்.

**சந்திரகிரகணம்** – சூரியன், பூமி, சந்திரன் மூன்றும் நேர்கோட்டில் வரும் நிறைநிலாக் காலத்து இரவில் பூமியின் நிழல்பட்டுச் சந்திரன் இருளுதல்; இராகுவால் சந்திரன் பிடிக்கப்படுதல்.

**சந்திரகுரு** – வெண்முத்து; வெண்ணிறமுடைய அசுரகுரு, சுக்கிரன்.

**சந்திரகுலம்** – சந்திரனைக் குலமுதல்வனாகக் கொண்ட அரசகுலம்.

**சந்திரசம்பவன்** – சந்திரனிடம் தோன்றியவனான புதன்.

**சந்திரசாலிகை, சந்திரசாலை** – நிலாமுற்றம்.

**சந்திரசூடன், சந்திரசேகரன்** – சந்திரனை முடியில்கொண்ட சிவன்.

**சந்திரஞானம்** – ஒரு சைவாகமம்.

**சந்திரதரிசனம்** – குழந்தைக்கு நல்ல வேளையில் சந்திரனை முதன்முதலாக் காட்டுஞ் சடங்கு; வளர்பிறையில் சந்திரன் முதன்முதலில் தெரிதல்.

**சந்திரதிசை** – குபேரனது திசையாகிய வடக்கு.

**சந்திரதிலகம்** – சந்தனம்; சந்தனப்பொட்டு.

**சந்திரநாடி** – பெண்குறிவாயினிற் படிந்திருக்கும் சவ்வு.

**சந்திரநாதம்** – இராகு; ஒரு மருந்துச்சரக்கு.

**சந்திரப்பிரபை** – நிலவு; மகளிர் தலையணிகளுள் ஒன்று; சந்திரன் வடிவாய் அமைந்த ஊர்தி வகை.

**சந்திரப்பிறை** – மகளிர் அணியும் பிறைபோன்ற கழுத்தணி; மகளிர் தலையணிகளுள் ஒன்று.

**சந்திரபாணி** – வயிரக்கல்.

**சந்திரபூரம்** – பச்சைக் கருப்பூரம்.

**சந்திரம்** – கருப்பூரம்; பொன்; இரவின் 15 முகூர்த்தங்களுள் ஒன்பதாவது; மிருகசீரிடம்; நீர்.

**சந்திரமண்டலம்** – சந்திரனது வட்டம்; சூரிய மண்டலத்திற்கு மேலுள்ளதும் புவர் உலகத்தைச் சார்ந்ததுமாகிய உலகம்.

**சந்திரமணி** – சந்திரன் ஒளியில் நீர் சுரப்பதாகிய கல்.

**சந்திரமானம்** – சந்திரன் சஞ்சரிக்கும் அளவு.

**சந்திரமுருகு** – மகளிர் காதணிகளுள் ஒன்று.

**சந்திரமௌலி** – சந்திரனை முடியில் கொண்ட சிவன்.

**சந்திரரோகம்** – பெருநோய்வகை; பைத்தியம்.

**சந்திரலக்கினம்** – சாதகன் பிறந்த காலத்தில் சந்திரனிருக்கும் இராசி.

**சந்திரலோகம்** – காண்க: **சந்திரமண்டலம்.**

**சந்திரவட்டக்குடை, சந்திரவட்டம்** – அரசச் சின்னங்களுள் ஒன்றாகிய வெண்கொற்றக் குடை.

**சந்திரவலயம்** – சிலம்பு வடிவாயமைந்த வாச்சிய வகை.

**சந்திரவளையம்** – ஒரு விளையாட்டுக் கருவி, தோற்கருவிவகை; சந்திரவலயம்; தொட்டில் முதலியவற்றைத் தொங்கவிடுவதற்கு மேலிடத்து மாட்டுவதற்குரிய வளையவகை; கிணற்றுள் வட்டமாக அமைத்து இறக்கப்படும் நெல்லிக்கட்டை.

**சந்திரவாதி** – சந்திரலோகம் அடைவதே முத்தியென்று வாதிப்போன்.

**சந்திரவாள்** – காண்க: **சந்திரகாசம்.**

**சந்திரன்** – திங்கள்; குபேரன்; இடைகலை நாடி.

**சந்திரன்சிப்பி** – முத்துச்சிப்பி.

**சந்திரனாள்** – திங்கட்கிழமை.

**சந்திராதபம்** – நிலவு.

**சந்திராதித்தம்** – அருகன் முக்குடைகளுள் ஒன்று.

**சந்திராதித்தவரை, சந்திராதித்தவல்** – சந்திரர் சூரியர் உள்ள வரையில்.

**சந்திராபீடன்** – சந்திரனை முடியில் கொண்ட சிவன்.

**சந்திராயுதம்** – பிறைவடிவான அம்பு.

**சந்திரிகம்** – ஓலையின் உறைச்சுருள்.

**சந்திரிகை** – நிலவு; பேரேலம்; ஓலைச்சுருள்.

**சந்திரேகம்** – கார்போக அரிசிவிதை.

**சந்திரோதயம்** – நிலவினுதயம்; குளிர்ச்சியைத் தரும் ஒருவகை மாத்திரை.

**சந்திரோபாலம்பனம்** – காதலருள் பிரிந்தோர் விரக வேதனையால் சந்திரனைப் பழித்துக் கூறுதல்.

**சந்தில்** – சனி; மூங்கில்.

**சந்திவந்தனம், சந்திவந்தனை** – காண்க: **சந்தியாவந்தனம்.**

**சந்திவழு** – எழுத்திலக்கணத்திற்குரிய புணர்ச்சிக்கு வழுவாய்த் தொடுப்பது.

**சந்திவிக்கிரகம்** – அடுத்துக்கெடுத்தல், நட்புக் கொண்டு கெடுத்தல்.

**சந்திவிளக்கு** – கோயிலில் மாலைக்காலத்து ஏற்றும் விளக்கு.

**சந்திவேளை** – சாயங்காலம்.

**சந்து** – பொருத்து; உடற்பொருத்து; இடுப்பு; பலவழிகள் கூடுமிடம்; முடுக்கு; தூதன்; சமாதானம்; சந்தனமரம்; இசை; உயிர்.
**சந்துக்கட்டு** – செயல் செய்யும் காலம்; நெருக்கடியான சமயம்.
**சந்துக்காறை** – ஒருவகைக் கைவளை.
**சந்துசெய்தல்** – பொருத்தல்; துளைசெய்தல்; சமாதானஞ்செய்தல்.
**சந்துசொல்லுதல்** – தூதராகிச் செய்தி அறிவித்தல்.
**சந்துட்டி** – மகிழ்ச்சி; மனநிறைவு.
**சந்துநயத்தான்** – தூதுளைக்கொடி.
**சந்துபார்த்தல்** – சமயம்பார்த்தல்.
**சந்துபூசுதல்** – சுவரில் கல்லுக்கிடையே சுண்ணாம்பு முதலியன பூசுதல்; சிறு துளைகளை அடைத்தல்.
**சந்துபொந்து** – மூலைமுடுக்கு; பொந்துபுடைகள்.
**சந்துமந்து** – குழப்பம், தாறுமாறு; முடுக்கு.
**சந்துமுட்டு** – காலம் தவறிவரும் மாதவிடாய்.
**சந்துமுந்து** – காண்க: **சந்துமந்து**.
**சந்துயிர்** – எலும்பு.
**சந்துவாசல்** – திட்டிவாசல்.
**சந்துவாதம்** – இடுப்பு தொடைகளில் வரும் கீல் வாயு நோய்வகை.
**சந்துவாய்** – மூட்டுவாய்; இடைப்பிளவு.
**சந்துவிடுதல்** – இடைவெளிவிடுதல்; நெக்குவிடுதல்.
**சந்தேகம்** – ஐயம்; கைகூடாமை; குற்றமுள்ளதென்ற ஐயம்; இல்லாமை; கேடு.
**சந்தேகாலங்காரம்** – ஐயவணி.
**சந்தேகி** – எதனிடத்தும் ஐயம் கொண்டவன்(ள்).
**சந்தேகித்தல்** – ஐயப்படல்; துணிவுகொள்ளாதிருத்தல்.
**சந்தேசம்** – தூது.
**சந்தை** – பலவிடத்திருந்து ஓரிடத்தில் கொள்ளல் விற்றற்குக் கூடுமிடம்; குறித்த காலத்தில் கூடும் கடைகள்; கடைவீதி; கூட்டம்; புருவங்களின் நடுவிடம்; வேதம்; வேதம் முதலியவற்றை ஆசான் சொல்ல மாணவன் இருமுறை மும்முறை திரும்பச் சொல்லுதல்; செய்யுளில் திரும்பத்திரும்ப வருஞ்சொல்; செய்யுள்; பெரியோர் கூற்று.
**சந்தைக்காரன்** – சந்தையில் சரக்கு விற்பவன்.
**சந்தைக்கூட்டம்** – பெருங்கூட்டம்.
**சந்தைச்சரக்கு** – சந்தையிலுள்ள விற்பனைப் பொருள்கள்.
**சந்தையிரைச்சல்** – அதிக இரைச்சல், பேரொலி.
**சந்தைவெளி** – சந்தை கூடும் வெளியிடம்.
**சந்தோடம்** – பூரிப்பு, மகிழ்ச்சி; இனாம்.
**சப்பட்டை** – தட்டை; தட்டையானது; உள்ளீடின்மை; பதர்; மடையன்; கெட்டவன்; சப்பை; சிறகு.
**சப்பட்டைவாக்கு** – அவையில் கூறத்தகாத சொல்.
**சப்படி** – தட்டையானது; வயிரக் குற்றங்களுள் ஒன்று.
**சப்பணங்க(கூ)ட்டுதல், சப்பணம்** – அட்டணங்கால் இடுதல்.
**சப்பரம்** – தெய்வத்திருமேனி தாங்கி; ஒருவகைச் சிறுதேர்; ஒருவகைச் சித்திர இருக்கை; யானைமேற் றவிசு, அம்பாரி.
**சப்பரமஞ்சம்** – மேற்கட்டமைந்த அலங்காரக் கட்டில்.
**சப்பரை** – மூடன்.
**சப்பல்** – தட்டை; தட்டையானது; சப்புதல்; உணவின் எச்சில்.
**சப்பளாக்கட்டை** – தாளக்கட்டை.
**சப்பளாத்தி** – பருத்தவுடலர்; திறமையற்றவர்.
**சப்பளிதல்** – தட்டையாதல்.
**சப்பன்** – பயனற்றவன்; ஒரு மரவகை.
**சப்பன்னம்** – ஐம்பத்தாறு.
**சப்பாணி** – கைசேர்த்துக் கொட்டுதல்; அட்டணங்கா லிடுகை; நொண்டி.
**சப்பாணிகொட்டுதல்** – கைசேர்த்துக் கொட்டுதல்.
**சப்பாணிப்பருவம்** – பிள்ளைத்தமிழ்ப் பருவங்களுள் குழந்தையைக் கைகொட்டி விளையாடுமாறு வேண்டும் பருவம்.
**சப்பாத்தி** – ஒரு கள்ளிவகை; ரொட்டிவகை.
**சப்பாத்து** – செம்பரத்தைச்செடி; சப்பாத்திக் கள்ளி; மிதியடி.
**சப்பாத்துக்கள்ளி** – கள்ளிவகை.
**சப்பி** – பதர்; சப்புகிறவன்.
**சப்பிக்கொடுத்தல்** – வாயிலிட்டுப் பதப்படுத்திக் குழந்தைக்குக் கொடுத்தல்.
**சப்பிட்டுப்போதல்** – சுவையற்றுப் போதல்; ஊக்கமற்றுப் போதல்.
**சப்பியம்** – சபைக்கேற்ற சொல்; நெறிப்பட்ட பேச்சு.
**சப்பிரம்** – சப்பரத்தேர்; யானைமேற் றவிசு; ஒருவகைச் சித்திரவிருக்கை.
**சப்பிரமஞ்சம்** – காண்க: **சப்பரமஞ்சம்**.
**சப்பு** – சவர்க்காரம்; காரணம்.
**சப்புச்சவறு** – கழிக்கப்பட்ட பொருள்.
**சப்புதல்** – மெல்லுதல்; குதப்புதல்; உறிஞ்சிக் குடித்தல்; அதுங்குதல்; சுருங்குதல்.
**சப்பெனல்** – சாரமின்மைக் குறிப்பு.

**சப்பை** – தட்டையானது; சுவையற்றது; வலியின்மை; பயனற்றது; தாழ்ந்தது; இடுப்பு, தோள் இவற்றின் சந்து; தேரின் சக்கரத்துக்கு அடியில் கொடுக்கப்படும் கட்டை; வீட்டின் கூரைக் கைம்மரம்; மரத்திற் பிளந்த துண்டு; முத்திரை.

**சப்பையெலும்பு** – இடுப்புப்புறமுள்ள எலும்பு.

**சபக்கரம், சபட்சம்** – துணியப்பட்ட பொருள் இருக்கும் இடம்.

**சபதக்காரன்** – சூளுறவு செய்வோன்.

**சபதம்** – சூளுறவு; பந்தயம்.

**சபதமாயிருத்தல்** – இறுமாந்திருத்தல்.

**சபதரித்தல்** – சம்பாதித்தல்; ஆதரித்தல்.

**சபம்** – கடவுளைத் துதித்தல்; குதிரைக்குளம்பு; ஆலமரம் முதலியவற்றின் விழுது; மூங்கில் மரம்; பிணம்.

**சபர்** – கடற்பயணம்; பொறுத்தற்குறிப்பு; அரபி ஆண்டில் இரண்டாம் மாதம்.

**சபரணை** – முழுமை; ஆதரவு; ஆயத்தம்; ஒழுங்கு,

**சபரம்** – கெண்டைமீன்.

**சபரன்** – வேடன்.

**சபரியை** – பூசை.

**சபலங்கெட்டவன்** – பயனற்றவன்.

**சபலம்** – நிலையற்ற உள்ளம்; ஆசை; சாறு; மின்னல்; மெலிவு; பயனுள்ளது; சித்தி.

**சபலா** – திப்பிலி.

**சபலை** – மின்னல்; மனத்திட்பமற்றவள்; நிலையற்றவளாகிய திருமகள்; திப்பிலி; விலைமகள்.

**சபாகம்பம்** – அவைக்கு அஞ்சுகை.

**சபாகுசுமம்** – செம்பரத்தம்பூ.

**சபாநாதன், சபாநாயகன், சபாபதி** – அவைத்தலைவன்; சிதம்பர சபையின் தலைவனாகிய நடராசமூர்த்தி.

**சபாமண்டபம்** – அவை கூடுமிடம்.

**சபாரஞ்சகம், சபாரஞ்சிதம்** – அவையிலுள்ளோர் மனத்தைக் கவர்வது.

**சபிண்டர்** – பிதிர்ப்பிண்டம் இடுதற்குரியோர்.

**சபிண்டி, சபிண்டீகரணம்** – பிதிர்பூசை, இறந்த பன்னிரண்டாம் நாள் செய்யப்படும் சிராத்தம்.

**சபித்தல்** – சாபமிடல்; மந்திரத்தை உச்சரித்தல்.

**சபி(பீ)னம்** – காண்க: **வசம்பு.**

**சபை** – சபைகூடும் மண்டபம்; அவை; கூட்டம்; சிதம்பரத்தில் சிவபெருமான் நடனமாடும் சபை; அம்பலம்; திருச்சபை.

**சபைகூட்டுதல்** – கூட்டங் கூட்டுதல்.

**சபையார்** – சங்கத்தினர்; திருச்சபையார்; வடமப் பிராமணருள் ஒரு சாரார்.

**சபையேறுதல்** – சபைக்குமுன் வருதல்; அரங்கேறுதல்; திருட்டு முதலிய தீய வழியிற் பேரெடுத்தல்.

**சம்சாரம்** – உலக வாழ்க்கை; குடும்பம்; மனைவி.

**சம்சாரி** – மணமானவன்; பெரிய குடும்பம் நடத்துபவன்; குடியானவன்; வினைத் தொடர்புடையவன்.

**சம்பகம்** – காண்க: **சண்பகம்;** தற்பெருமை.

**சம்பங்கி** – சண்பகமரம்; கொடிச்சம்பங்கி.

**சம்பங்கூடு** – சம்பங்கோரையாலோ தென்னையோலையாலோ செய்த கூடு.

**சம்பங்கூடை** – சம்பம்புல்லாற் செய்த கூடை; சம்பங்கோரையாற் செய்த கொங்கணி.

**சம்பங்கோரை** – ஒரு கோரைவகை.

**சம்பங்கோழி** – காண்க: **காட்டுக்கோழி.**

**சம்படம்** – கூறை; ஒரு பழைய வரி; சோம்பல்; சிறு செப்பு.

**சம்பத்தி(து)** – செல்வம்; பொன்; பேறு.

**சம்பத்துவேட்டம்** – தாளம் ஐந்தனுள் ஒன்று.

**சம்பந்தக்காரர், சம்பந்தக்குடியார்** – சம்பந்திகள்.

**சம்பந்தங்கலத்தல்** – பிள்ளைகள் திருமணத்தால் பெற்றோர் உறவுகொள்ளுதல்.

**சம்பந்தம்** – தொடர்பு; கலப்பு; இணக்கம்; திருமண உறவு.

**சம்பந்தம்பேசுதல்** – மணம்பேசுதல்.

**சம்பந்தி** – மணமக்களின் பெற்றோர்கள்; சம்பந்தமுடையோன்; ஒற்றுமையானவன்; துவையல்வகை.

**சம்பந்தித்தல்** – சேர்த்தல்; உறவாதல்.

**சம்பம்** – வச்சிரப்படை; இடி; மரவயிரம்; எலுமிச்சை; வீண்பெருமை; அங்கநாடு.

**சம்பர்க்கம்** – சேர்க்கை.

**சம்பரசூதனன்** – சம்பரனைக் கொன்ற காமன்; தசரதன்.

**சம்பரம்** – நீர்; சரபம் என்னும் எண்காற்பறவை; ஆடை; பரபரப்பு; களிப்பு; சிறப்பு.

**சம்பரன்** – காமனாற் கொலையுண்ட அசுரன்; தசரதனாற் கொல்லப்பட்ட அசுரன்.

**சம்பராரி** – சம்பரனது பகைவனாகிய மன்மதன்; தசரதன்.

**சம்பரி** – நேர்வாளமரம்.

**சம்பவம்** – பிறப்பு; நிகழ்ச்சி; ஓரளவை.

**சம்பவித்தல்** – நிகழ்தல்.

**சம்பவை** – பார்வதிதேவி.

**சம்பளக்காரன்** – சம்பளம் பெறுபவன்.

**சம்பளத்துக்கிருத்தல்** – மாதச் சம்பளத்திற்கு வேலைசெய்தல்.

**சம்பளப்பிடித்தம்** – உரிய சம்பளத்தைக் கொடாது நிறுத்திக்கொள்ளுகை; சம்பளக் குறைவு.

**சம்பளம்** – வழியுணவு; வழிப்பொருள்; மாத உழைப்பிற்குக் கிடைக்கும் ஊதியம்; கறை; எலுமிச்சைமரம்; பள்ளிக்கூடச் சம்பளம்.

**சம்பளி** – வெற்றிலைப் பை; பொருள் வைக்கும் பை.

**சம்பன்னம்** – நிறைவு.

**சம்பன்னன்** – செல்வமுள்ளவன்; நிறைந்தவன்.

**சம்பா** – ஓர் உயர்ந்த நெல்வகை; மிளகு சீரகங் கலந்து சுவாமிக்குப் படைக்கும் அன்னம்; ஒரு விளையாட்டு; தாயவகை; நால் விரலளவு.

**சம்பாகம்** – நாடு; நன்றாய்ச் சமைத்தது.

**சம்பாடணை** – உரையாடல்.

**சம்பாத்தியம், சம்பாதனம், சம்பாதனை** – பொருள் ஈட்டுகை.

**சம்பாதித்தல்** – தேடிப்பெறுதல்.

**சம்பாபதி** – சம்பாபதியின் இருப்பிடமான காவிரிப்பூம்பட்டினம்; சம்புத்தீவைக் காவல் செய்யும் தேவதை.

**சம்பாரங்கூட்டுதல்** – கறிக்குக் கூட்டுவர்க்கஞ் சேர்த்தல்.

**சம்பாரப்பொடி** – கறிக்கூட்டுவர்க்கம்.

**சம்பாரம்** – கூட்டுவர்க்கம்; நீர்மோர்; கைமரந் தாங்கி.

**சம்பாரி** – சம்பன் என்ற அசுரனைக் கொன்ற இந்திரன்; அக்கினிதேவன்.

**சம்பால்** – ஒரு பச்சடிவகை.

**சம்பாலம்** – ஆட்டுக்கடா.

**சம்பாவனை** – வெகுமானம்; மரியாதை.

**சம்பாவிதம்** – நிகழக்கூடியது.

**சம்பான்** – தோணி, படகு.

**சம்பானோட்டி** – தோணி வலிப்போன்.

**சம்பிரதம்** – விளைவு; கலம்பக உறுப்புள் ஒன்று, இந்திரசாலம்.

**சம்பிரதாயம்** – குருபரம்பரையில் வந்த உபதேசம்; தொன்றுதொட்ட வழக்கம்; திறமை.

**சம்பிரதாரணை** – ஆராய்ந்து செய்யும் தீர்மானம்.

**சம்பிரதானம்** – கொடை; நான்காம் வேற்றுமைப் பொருள்.

**சம்பிரதி** – தலைமைக் கணக்கன்; ஊர்க்கணக் கனுக்கு உதவிசெய்யும் எழுத்தர்; வட்டத் தலைமைக் கணக்கர்.

**சம்பிரமம்** – மகிழ்ச்சி; பரபரப்பு; மனக்களிப்பு; சிறப்பு; நிறைவு.

**சம்பிராத்தி** – பேறு.

**சம்பிரேட்சியம்** – ஆராய்ந்தறிகை.

**சம்பிளி** – காண்க: **சம்பளி.**

**சம்பீரம்** – எலுமிச்சைமரம்; கிச்சிலிமரம்.

**சம்பு** – இன்பத்தைத் தருபவனான சிவன்; திருமால்; பிரமன்; அருகன்; சூரியன்; நாவல் மரம்; நாவலந்தீவு; நாவலந்தீவைக் காக்கும் தேவதை; சம்புநதி; செய்யுளும் உரை நடையும் விரவிவரும் நூல்வகை; எலுமிச்சை மரம்; வச்சிரப்படை; நரி; சம்பங்கோரை; நெட்டி.

**சம்புகம்(ன்)** – நரி.

**சம்புகேச்சுரம்** – திருவானைக்கா என்னுந் தலம்.

**சம்புச்சயனம்** – திருமாலின் படுக்கையாகிய ஆலிலை.

**சம்புடம்** – சிறு செப்பு; புத்தகப் பகுதி; இருக்கை ஒன்பதனுள் ஒன்று.

**சம்புத்தி** – ஒருமை விளி; நற்புத்தி.

**சம்புத்தீவு** – ஏழு தீவுகளுள் ஒன்றாகிய நாவலந் தீவு.

**சம்புபட்சம்** – சுத்தமாயைப் பிரபஞ்சத்தில் தொழில்புரியும் சிவபேதங்கள்.

**சம்புரோட்சணம், சம்புரோட்சணை** – தூய்மைக்காகக் கோயில் களில் செய்யும் சடங்கு.

**சம்புளி** – காண்க: **சம்பளி.**

**சம்பூகம்** – கிளிஞ்சில்வகை.

**சம்பூரணம்** – நிறைவு; முடிவு; மிகுதி; சம்பூரண ராகம்; பல பெண்குழந்தைகளைப் பெற்றுச் சலித்தோர் மேலும் பெறுதலில் வெறுப்புற்று இதுவே கடைப்பெண்ணாகுக என்று பிறந்த பெண்குழந்தைக்கு இடும் பெயர்.

**சம்பூரணராகம்** – எல்லாச் சுரங்களும் அமைந்த பண்.

**சம்பை** – சம்பங்கோரைப்புல்; மட்டச் சரக்கு; எளிதில் அழியக்கூடிய பண்டங்கள்; மீன்; மின்னல்; எழுவகைத் தாளத்துள் ஒன்று; செழிப்பு.

**சம்பைச்சரக்கு** – மட்டச் சரக்கு; எளிதில் அழியக் கூடிய பண்டங்கள்.

**சம்பைதாளம்** – எழுவகைத் தாளத்துள் ஒன்று.

**சம்போக்கு** – கப்பற் கூட்டம்.

**சம்போகம்** – புணர்ச்சி.

**சம்போதனம்** – பன்மைவிளி.

**சம்போதனை** – விளிவேற்றுமை.

**சம்போர்** – பூதம்.

**சம்மட்டி** – குதிரையோட்டுங் கருவி; சுத்தியல் வகை; ஒரு பூண்டுவகை.

**சம்மணம்** – காண்க: **சப்பணம்.**

**சம்மதம்** – உடன்பாடு; நட்பு; கொள்கை.

**சம்மதன்** – நண்பன்; மைத்துனன்.

**சம்மதி** – உடன்பாடு.

**சம்மதித்தல்** – உடன்படுதல்; நன்குமதித்தல்.

**சம்மாரம்** – அழிவு.

**சம்மான்** – தோணி.

**சம்மானம்** – உபசாரச்சொல்; வெகுமதி; இறையிலியாக விடப்பட்ட நிலம்.

**சம்மியஞானம்** – பேரறிவு.
**சம்மியம்** – கூத்தின் விகற்பம்.
**சம்மியாகம்** – கொன்றைமரம்.
**சம்மெனல்** – கம்பீரக் குறிப்பு.
**சம்மேளனம்** – கலப்பு; கூட்டம்.
**சம்மோகம், சம்மோகனம்** – கவர்ச்சி.
**சம்யோகம்** – புணர்ச்சி, சேர்க்கை; இரண்டு பொருள்கள் கூடியிருத்தலாகிய சம்பந்தம்.
**சம்ரட்சணம், சம்ரட்சணை** – காப்பாற்றுகை.
**சம்வரை** – நவபதார்த்தங்களுள் உயிரைக் கன்மம் அணுகாமல் தடுப்பது.
**சம்வாகம்** – நெல்லும் புல்லும் நிறைந்த மலையூர்.
**சம்வாதம்** – சொற்போர், தருக்கம்; உரையாடல்.
**சம்வித்து** – அறிவு.
**சம்வேகம்** – அறத்திலும் அதன் பயனிலும் விருப்பமுடைமை.
**சமக்காளம்** – விரிப்புவகை.
**சமகம்** – சிவபிரானைத் துதிக்கும் ஒரு வேத மந்திரம்.
**சமகலி** – அங்கக் கிரியைகளுள் ஒன்று.
**சமகன்னி** – பூப்படைந்த பெண்.
**சமகாலம்** – ஒரே காலம்.
**சமகோணம்** – ஒத்த கோணங்களையுடைய வடிவம்.
**சமங்கை** – தொட்டாற்சுருங்கி; ஆடுதின்னாப் பாளை.
**சமசத்தமம்** – வியாழன் நின்ற இராசிக்கு ஏழாம் இராசியிலே சுக்கிரன் நிற்கும் நிலை.
**சமசதுரம்** – ஒத்த அளவுள்ள நாற்கோணம்.
**சமசம்** – வேள்வியில் சோமரசம் வைக்கும் பாத்திரம்.
**சமசி** – நிறைவு; பாடிமுடிக்கும்படி ஒருவனுக்குக் கொடுக்கும் கவியுறுப்பு.
**சமசித்தத்துவம்** – எல்லாவற்றையும் சமமாகக் கருதும் மனநிலை.
**சமசியை** – காண்க: **சமசி.**
**சமசு** – கலகக்கூட்டம்.
**சமசை** – காண்க: **சமசி.**
**சமசோடி** – சரியான இணை.
**சமஞ்சிதன்** – ஊர்க்கணக்கன்.
**சமட்டி** – தொகுதி.
**சமட்டுதல்** – காலாலே துவைத்தல்.
**சமட்டுப்படி** – வண்டியில் ஏறியிறங்க அமைக்கும் படி.
**சமட்டுவண்டி** – மிதிவண்டி.
**சமண், சமணம்** – அருகமதம்; அம்மணம்.
**சமணர்** – சைனர்.
**சமணி** – இலவமரம்.
**சமத்காரம்** – பேச்சுத்திறன்; செய்யுள் நயம்; தோற்றம்; வனப்பு.
**சமத்தம்** – எல்லாம்.
**சமத்தன்** – வல்லவன்.
**சமத்தானம்** – இராச்சியம்; தலைநகரம்.
**சமத்து** – வல்லமை; திறமை உள்ளவன்; நாட்டின் உட்பிரிவு.
**சமத்துக்காரம்** – காண்க: **சமத்காரம்.**
**சமத்துக்காரன்** – திறமையுள்ளவன்.
**சமதரிசி** – பொதுநோக்குடையவன்.
**சமதலை** – புடைவையின் உள்தலைப்பு.
**சமதளம்** – சமமான பூமி; மக்கள்கூட்டம்.
**சமதாளம்** – ஒன்பதுவகைத் தாளத்துள் ஒன்று.
**சமதீதம்** – ஐக்கியம்; கழிந்தது.
**சமதை** – ஒப்பு; ஒருசார்பின்மை; வன்மை, மென்மை, இடைமை இம் மூன்றும் சமமாகக் கலந்துவரத் தொடுக்கும் செய்யுட்குணம்.
**சமநிலை** – நடுவுநிலைமை; வன்மை, மென்மை, இடைமை இம் மூன்றுஞ் சமமாகக் கலந்துவரத் தொடுக்கும் செய்யுட்குணம்; நிறையொத்த நிலை; சாந்தம் என்னும் சுவை; ஐவகைப் பாதங்களுள் ஒன்று.
**சமநிலைவஞ்சி** – இருசீரடியால் வரும் வஞ்சிப் பாட்டு.
**சமப்பால்** – வன்பாலும் மென்பாலுமின்றி இடைத்தரமாயுள்ள பூமி; முல்லை நெய்தல் நிலங்கள்.
**சமபந்தி** – ஒரே பந்தியில் உண்ணுமுரிமை; விருந்தில் ஒரே வரிசை.
**சமபூச்சியம்** – ஒத்த மேம்பாடு.
**சமபூமி** – மேடுபள்ளமில்லாத நிலம்; போர்க்களம்.
**சமம்** – மனஅமைதி; ஒப்பு; ஒத்த பொருள்; நடுவுநிலைமை; இரட்டையான எண்; போர்; முதுவேனில்; ஏற்றத்தாழ்வின்மை; ஒத்த அடிகளுடைய பாடல்; சமவெடுப்பு.
**சமம்பாவித்தல்** – சமமாதற்கு முயலுதல்.
**சமமுகம்** – முக அபிநயம் பதினான்கனுள் தியானிப்பதுபோல அசையாது இருத்தல்.
**சமயக்கட்டு** – மதக் கட்டுப்பாடு.
**சமயக்கணக்கர்** – மதவாதிகள்.
**சமயக்காட்சியர்** – மதத்தை உணர்ந்தவர்.
**சமயக்காரர்** – மதத்தைப் பின்பற்றுபவர்.
**சமயங்கடத்துதல்** – வீண்காலம் போக்குதல், செயலைச் செய்யாது நாள் கடத்துதல்.
**சமயச்சந்துக்கட்டு** – நெருக்கடியான சமயம்.
**சமயசத்திரம்** – மதவாதத்தில் வெற்றிக்கு அறிகுறியாகக்கொண்ட குடை.

**சமயத்தறுவாய்** – தக்க காலம்.
**சமயத்தார்** – ஒரு மதத்தைச் சார்ந்தவர்.
**சமயதத்துவம், சமயதருமம்** – மதத்தின் அடிப்படையான உண்மைகள்.
**சமயதீட்சை** – தீட்சை மூன்றனுள் சைவ சமயா சாரத்தை அனுட்டிக்கும்படி முதலாவதாகச் செய்யப்படுவது.
**சமயநிந்தை** – மதப்பூசல்.
**சமயநிலை** – மதக்கொள்கை; மத அனுட்டானம்.
**சமயப்பற்று** – மத அபிமானம்.
**சமயப்போர்** – மதச் சண்டை.
**சமயபேதம்** – மதவேறுபாடு; பொருத்தமற்ற காலம்; துன்பக் காலம்.
**சமயபோதனை** – மதக்கொள்கைகளை உணர்த்துகை; மதக்கொள்கை.
**சமயம்** – மதம்; காலம், தருணம், அவகாசம்; நூல்; உடன்படிக்கை; மரபு; சமயதீட்சை.
**சமயம்பார்த்தல்** – தக்க காலத்தை எதிர்பார்த்திருத்தல்.
**சமயமிருத்தல்** – ஓலக்கமிருத்தல்.
**சமயமுதல்வி** – சக்திமதத்தின் இறைவியாகிய உமை.
**சமயலகனம்** – மதக்கோட்பாட்டை மீறுகை.
**சமயவாதம்** – மதம்பற்றிய தருக்கம்.
**சமயவாதி** – தன் சமயமே உயர்ந்ததென வாதிப்பவன்.
**சமயவாற்றல்** – சொல்லாற்றல்.
**சமயவிகற்பம்** – மதவேறுபாடு.
**சமயாசமயம்** – தக்கதும் தகாததுமான காலங்கள்; உரிய காலம்.
**சமயாசாரம்** – மத ஒழுக்கம்.
**சமயி** – மதத்தைச் சார்ந்தோன்; சமயவாதி; சமயதீட்சை பெற்றவன்.
**சமயோசிதம்** – தருணத்திற்குரிய பொருத்தம்.
**சமர்** – போர்; முள்ளம்பன்றி.
**சமர்ச்சனம்** – வழிபடுதல்.
**சமர்த்தல்** – பொருதல்.
**சமர்த்தன், சமர்த்தாளி** – வல்லவன்.
**சமர்த்தி** – நிறைவு; வல்லவள்; பக்குவமடைந்த பெண்.
**சமர்த்து** – திறமை; திறமையுள்ளவர்.
**சமர்ப்பணம், சமர்ப்பணை, சமர்ப்பித்தல்** – கடவுள், பெரியோர்களுக்குக் காணிக்கை முதலியன அளிக்கை.
**சமரகேசரி** – போரில் அரியேறுபோன்ற பெரு வீரன்.
**சமரகோலாகலன்** – போரில் விருப்பமுடையவன்.
**சமரங்கம்** – போர்க்களம்.
**சமரசம்** – ஒற்றுமை; நடுநிலைமை.
**சமரதன்** – வேறு தேர்வீரனோடு சமமாய்ப் போரிட வல்ல தேர்வீரன்.
**சமரம்** – போர்; முள்ளம்பன்றி; கவரிமா; சாமரை.
**சமரி** – போருக்குரிய தெய்வமான கொற்றவை; பாம்பு.
**சமரேகை** – நிலநடுக்கோடு.
**சமலம்** – மலம்; அழுக்கு.
**சமலன்** – மலத்தோடுகூடிய ஆன்மா.
**சமவாசம்** – நட்பு.
**சமவாதசைவம்** – முத்திநிலையில் சிவமும் ஆன்மாவும் ஒக்கும் எனக் கொள்ளும் சைவ மதவகை.
**சமவாயம்** – தற்கிழமை.
**சமவிலை** – ஏற்றமில்லாத நடுத்தர விலை.
**சமவேதம்** – மற்றவற்றோடு நீக்கமின்றி இருக்கும் பொருள்.
**சமழ்த்தல்** – வருந்துதல்; நாணுதல்; தாழ்தல்.
**சமழ்ப்பு** – வருத்தம்; இழிவு; வெட்கம்.
**சமழ்மை** – இழிவு.
**சமற்காரம்** – பேச்சுத்திறம்; செய்யுள் நயம்; தோற்றம்.
**சமன்** – ஏற்றத்தாழ்வின்மை; இசைநூலில் வரும் தானநிலை மூன்றனுள் ஒன்று; ஆண்மை; யமன்; நீதிமன்ற அதிகாரியின் அழைப்புக் கட்டளை.
**சமனம்** – தணியச்செய்கை; ஆடுதின்னாப்பாளை; வசம்பு; ஐந்து செயல்களுள் ஒன்றாய் ஆன்மா தன் கன்மம் முடியும் வரையில் உலகானுபவங்களில் உழன்று மயங்கும்படி உண்மையை மறைத்தலைச் செய்யும் சிவபெருமானது அருட்செயல்.
**சமனாகத்தாக்குதல்** – யாழில் பண்களை வலியவும் மெலியவும் தாக்காது அளவொத்த ஓசையெழும்படி செய்தல்.
**சமனாதம்** – உவர்மண்.
**சமனிகை** – இடுதிரை.
**சமனிசை** – ஒத்த இசை; அமைதி என்னும் சுவை.
**சமனியகரணி** – புண்ணையும் தழும்புகளையும் போக்கும் மருந்து.
**சமனியம்** – பொதுவானது; முழுமை; சாதி என்னும் பொருள்; பெறுதற்கு எளியது.
**சமாசம்** – சபை; தொகைமொழி; இலிங்கபாடாணம்.
**சமாசாரம்** – செய்தி.
**சமாதானம்** – அமைதி; இன்பதுன்பங்களைப் பொருட்படுத்தாத மனநிலை; சம்மதம்; இணக்கம்; மனவொருமைப்பாடு.

**சமாதி** – மனத்தைப் பரம்பொருளோடு ஒன்று படுத்தி நிறுத்துகை; சங்கற்பம்; ஓர் அணி வகை; கல்லறை.

**சமாதிக்கல்** – கல்றையை மூடுங் கல்.

**சமாதிக்குழி** – நிமிர்ந்து உட்கார்ந்த நிலையிலேயே இறந்தவர்களைப் புதைக்குங் குழி; கல்லறை.

**சமாதியடைதல்** – யோகநிலையில் அமர்தல்; சித்திபெறுதல்.

**சமாதியில்வைத்தல்** – இறந்தவர்களை இருக்க வைத்துப் புதைத்தல்; நாசஞ்செய்தல்.

**சமாது** – ஊமத்தைச்செடி; காண்க: **சமாதிக்குழி.**

**சமாப்தி** – முடிவு.

**சமாபந்தி** – ஆண்டின் நிலவரித் தணிக்கை.

**சமாராதனை** – அந்தணருக்கு உணவளித்தல்.

**சமாலம்** – மயிற்றோகை விசிறி.

**சமாலி** – பூச்செண்டு.

**சமாலுகம்** – குறிஞ்சாக்கொடி.

**சமாலேபனம்** – சாணத்தால் மெழுகுகை.

**சமாவர்(ரு)த்தனம்** – பிரமசரியவிரதம் நீங்குதற்குச் செய்யும் சடங்கு.

**சமாளம்** – களிப்பு.

**சமாளித்தல்** – சரிக்கட்டி நடத்துதல்; பெரும் முயற்சியோடு ஒன்றை நிறைவேற்றுதல்.

**சமானகரணி** – காண்க: **சமனியகரணி.**

**சமானதை** – ஒப்பு.

**சமானம்** – ஒப்பு; ஒத்துள்ளது.

**சமானரகிதம்** – ஒப்பில்லாதது.

**சமானன்** – பத்து வாயுக்களுள் ஒன்றும் உண்ட உணவைச் செரிக்கச் செய்வதுமான ஒரு வாயு வகை; ஒத்தவன்.

**சமானார்த்தபதம்** – ஒருபொருட் பன்மொழி.

**சமானி** – ஒப்பானவன்.

**சமானித்தல்** – ஒப்பிடுதல்.

**சமானோதகன்** – பிதிர்களுக்கு நீர் விடுதற்குரியோன்.

**சமி** – அருகன்; வன்னிமரம்; தணக்குமரம்; வாழைமரம்.

**சமிக்கை** – குறி; செரிக்கை; சைகை; சங்கேதப் பெயர்.

**சமிஞ்ஞை** – சைகை; பெயர்.

**சமித்தம்** – வேள்விமண்டபம்.

**சமித்தல்** – அழிதல்; செரித்தல்; சுவறுதல்; நடத்தல்; பொறுத்தல்; அடக்குதல்; மனங் கலங்கிப்போதல்.

**சமித்து** – காண்க: **சமிதை**; கஞ்சாச்செடி.

**சமிதம்** – அமைதி.

**சமிதி** – சபைக்கூட்டம்; போர்.

**சமிதை** – அத்தி, அரசு, ஆல், இத்தி, கருங்காலி, நாயுருவி, பலாசு, மா, வன்னி என ஒன்பது விதம் கூடிய வேள்விக்குரிய சுள்ளிவிறகு, ஓம விறகு.

**சமிப்பாகம், சமிபாகம்** – கொன்றைமரம்.

**சமிபாடு** – செரிக்குங்காலம்; செரித்தல்.

**சமிர்த்தி** – நிறைவு.

**சமிரணன்** – வாயு.

**சமிலாகி** – திப்பிலி.

**சமீகம்** – போர்.

**சமீபம்** – அண்மை.

**சமீபித்தல்** – கிட்டுதல், அணுகுதல்.

**சமீரணம்** – கிடாரைமரம்; எலுமிச்சை.

**சமீரணன்** – காற்று.

**சமீரணி** – வீமன்.

**சமீரன்** – காற்று, வாயுதேவன்.

**சமு** – 729 தேரும், 729 யானையும், 2187 குதிரையும், 3685 காலாளுங்கொண்ட படை.

**சமுக்கா** – தொலைநோக்காடி; திசையறிகருவி.

**சமுக்காளம்** – காண்க: **சமக்காளம்.**

**சமுகம்** – சன்னிதானம்; நேர்காணல்; முன்னிலை; திரள்; மரியாதைச்சொல்.

**சமுச்சயம்** – தொகுதி; ஐயம்.

**சமுசயம்** – ஐயம்.

**சமுசாரக்காரன்** – பெரிய குடும்பத்தை உடையவன்.

**சமுசாரம்** – காண்க: **சம்சாரம்**; செய்தி.

**சமுசாரி** – திருமணமானவன்; குடியானவன்; குடும்பி; வினைத்தொடர்பு உடையவன்.

**சமுசாரித்தொழில்** – வேளாண்மைத் தொழில்.

**சமுசாரிமகன்** – நல்ல குடும்பத்திற் பிறந்தவன்.

**சமுசு** – கலகக் கூட்டம்; தீய ஆலோசனை.

**சமுத்திரசுண்டி** – கிளிஞ்சில்.

**சமுத்திரசோகி, சமுத்திரப்பச்சை** – ஒரு மருந்துக்கொடிவகை.

**சமுத்திரபகவான்** – கடலுக்குரிய கடவுளான வருணன்.

**சமுத்திரம்** – கடல்; ஒருபேரெண்; படையிலொரு தொகை; மிகுதி; முடக்கொற்றான்பூண்டு.

**சமுத்திரராசன்** – காண்க: **சமுத்திரபகவான்.**

**சமுத்திரவிலாசம்** – பிரிந்திருக்கும் தலைவனைக் குறித்துத் தலைவி கடற்கரையிலிருந்து புலம்புவதாகப் பாடும் நூல்வகை.

**சமுத்திராந்தம்** – சிறுகாஞ்சொறிக்கொடி; பருத்திச்செடி; சாதிக்காய்.

**சமுத்திராப்பழம்** – குந்தளப்பழம்.

**சமுதாயகாரியம்** – பொதுச்செயல்.

**சமுதாயச்சீர்திருத்தம்** – மக்களின் தொன்று தொட்டுவரும் பழக்கவழக்கங்களை முன்னேற்றத்தின்பொருட்டுத் திருத்துகை.

**சமுதாயசோபை** – உறுப்புகள் தனித்தனியாக வன்றி ஒருங்குகூடுதலால் தோன்றும் அழகு.
**சமுதாயநிலம்** – ஊர்ப் பொதுவாக இருந்து அனுபவிக்கப்படும் நிலம்.
**சமுதாயம்** – மன்பதை, மக்களின் திரள்; பொருளின் திரள்; கோயில் நிருவாக அதிகாரிகளின் கூட்டம்; பொதுவானது; உடன்படிக்கை; ஊர்ப் பொதுச்சொத்து.
**சமுதாயவாதி** – மக்கள் நலனுக்காக உழைப்பவன்; மனம் புத்தி முதலிய அகச் சமுதாயத்தாலும், நிலம் நீர் முதலிய புறச் சமுதாயத்தாலும் உலகம் தோன்றுமென வாதிக்கும் பௌத்த மதப் பிரிவினனாகிய சௌத்திராந்திகனும் வைபாடிகனும்.
**சமுதாய விண்ணப்பம்** – பலர் ஒன்றுகூடிச் செய்துகொள்ளும் மனு.
**சமுதாயிகம்** – ஒன்றுகூடுவது.
**சமுப்பவம்** – தைவேளைப்பூண்டு.
**சமுன்னதி** – அகந்தை.
**சமூகம்** – காண்க: **சமுகம்.**
**சமூலம்** – வேர்முதல் இலையீறாகவுள்ள எல்லாம்; முழுவதும்.
**சமேதம்** – உடனிருத்தல், கூடியிருத்தல்.
**சமேதன்** – கூடியிருப்பவன்.
**சமை** – ஆண்டு; மனஅமைதி; பொறுமை.
**சமைகடை** – முடிவு.
**சமைத்தல்** – படைத்தல்; செய்தல்; சித்தம் செய்தல்; அழித்தல்; உணவு ஆக்குதல்.
**சமைதல்** – ஆயத்தமாதல்; அமைதல்; பொருத்தமாதல்; தொடங்குதல்; நிரம்புதல்; புழுங்குதல்; அழிதல்; முடித்தல்; பூப்படைதல்.
**சமைப்பு** – முயற்சி.
**சமையல்** – உணவு ஆக்குதல்; ஆக்கிய உணவு.
**சமையற்கட்டு, சமையற்கூடம்** – சமையலறை.
**சமைவு** – நிலைமை; அழிவு; மனஅமைதி.
**சய** – அறுபதாண்டுக் கணக்கில் இருபத்தெட்டாம் ஆண்டு.
**சயகண்டி(டை)** – கோல்கொண்டு அடிக்கும் ஒரு வட்ட மணிவகை.
**சயகம்** – பூவரும்பு.
**சயசய** – போற்றிபோற்றி, வெற்றி குறித்த வாழ்த்துமொழி.
**சயசீலன்** – வெற்றியாளன்.
**சயத்தம்பம்** – வெற்றித்தூண்.
**சயதாளம்** – தாளம் ஒன்பதனுள் ஒன்று.
**சயந்தன்** – இந்திரன் மகன்.
**சயந்தனம்** – தேர்.
**சயந்தி** – பிறந்தநாள் விழா; காண்க: **வாதமடக்கி;** சிற்றகத்தி; இந்திரன் மகள்.
**சயபாளம்** – நேர்வாளமரம்.
**சயபேரிகை** – வெற்றிமுரசு.
**சயம்** – வெற்றி; சூரியன்; காண்க: **காசநோய்;** சிதைவு; சருக்கரை; ஆம்பல்.
**சயம்பு** – தானே உண்டானது; சிவன்; பிரமன்; அருகன்.
**சயமகள், சயமடந்தை** – வெற்றிக்குரிய கொற்றவை; மிதுனராசி.
**சயமரம்** – காண்க: **சுயம்வரம்;** வெற்றிக்குறியான தோரணம்.
**சயனக்கிருகம்** – படுக்கையறை, பள்ளியறை.
**சயனம்** – படுக்கை; படுத்திருக்கை; உறங்குதல்; புணர்ச்சி.
**சயனித்தல்** – உறங்குதல்; படுத்தல்; புணர்தல்.
**சயா** – வாதமடக்கிமரம்; கடுக்காய்.
**சயிக்கம்** – மென்மை.
**சயிக்கர்** – அரசமரம்.
**சயிக்கினை, சயிகை** – காண்க: **சைகை.**
**சயித்தம்** – புத்தர்கோயில்.
**சயித்தல்** – வெல்லுதல்.
**சயித்தான்** – பிசாசு.
**சயித்தி** – அரசமரம்.
**சயித்தியம்** – குளிர்ச்சி; குளிர்காலம்; ஒரு நோய்.
**சயிந்தர்** – சிந்து நாட்டினர்.
**சயிந்தவம்** – குதிரை; இந்துப்பு; தலை.
**சயிந்தவ லவணம்** – இந்துப்பு.
**சயிந்தவி** – ஒரு பண்வகை.
**சயிப்பு** – பொறுமை; வெற்றி.
**சயிரோகம்** – மேகவண்ணப் பூவுள்ள மருதோன்றி மரம்.
**சயிலகோபன்** – மலைகளின்மீது கோபமுடைய இந்திரன்.
**சயிலங்கமாலை** – வெட்டிவேர்.
**சயிலம்** – மலை.
**சயிலாதி** – மலைகளுள் முதன்மையான கைலாசமலை; சிலாதனுக்கு மகனான நந்தி.
**சயிலேகம்** – ஒரு மணப்பண்டம்.
**சயினி** – திப்பிலி.
**சயை** – துர்க்கை; திருதியை, அட்டமி, திரயோதசி என்னும் திதிகள்; முன்னைமரம்.
**சர்க்கம்** – சருக்கம், நூற்பிரிவு; படைப்பு.
**சர்க்கரை** – காண்க: **சருக்கரை.**
**சர்க்கரைக்கிழங்கு** – சர்க்கரைவள்ளிக்கிழங்கு.
**சர்க்கரைப்பூசணி** – பறங்கிக்காய்.
**சர்க்கரைப்பொங்கல்** – சர்க்கரை அல்லது வெல்லம் கலந்து சமைக்கப்படும் உணவுவகை.
**சர்ச்சரை** – சுரசுரப்பு; சச்சரவு.
**சர்ச்சை** – ஆராய்ச்சி; சொற்போர்.
**சர்த்தி** – கக்கல், வாந்தி.

**சர்ப்பசயனம்** – திருமாலின் பாம்பணை.

**சர்ப்பம்** – பாம்பு; பகற்பொழுது பதினைந்தனுள் இரண்டாவது.

**சர்ப்பராசி** – நாணல்புல்.

**சர்ப்பனை** – வஞ்சனை.

**சர்மம்** – காண்க: **சருமம்.**

**சர்வசக்தி** – அனைத்து வல்லமையுமுடையவன்.

**சர்வசங்கநிவர்த்தி** – எல்லாப் பொருளிலும் பற்றுவிடுகை.

**சர்வசித்து** – அறுபதாண்டுக் கணக்கில் இருபத்தொன்றாம் ஆண்டு.

**சர்வசுதந்தரம்** – முழு உரிமை.

**சர்வஞ்ஞத்துவம்** – முற்றும் உணர்ந்தவனாய் இருக்கும் தன்மை.

**சர்(ரு)வஞ்ஞன்** – எல்லாமறிந்தவன்; கடவுள்.

**சர்வத்தியாகம்** – முற்றுந் துறக்கை.

**சர்வதா** – எப்போதும்.

**சர்(ரு)வதாரி** – அறுபதாண்டுக் கணக்கில் இருபத்திரண்டாம் ஆண்டு.

**சர்(ரு)வம்** – முழுவதும்.

**சர்(ரு)வமானியம்** – வரியின்றி விடப்படும் நிலம்.

**சர்வமுகூர்த்தம்** – எல்லா நற்செயல்களுக்கும் உரிய நல்ல வேளை.

**சர்வவல்லமை** – எல்லாம் வல்லனாய் இருக்குந் தன்மை.

**சர்வவியாபி** – எங்கும் நிறைந்தவன், கடவுள்.

**சர்வன்** – சிவன்.

**சர்வாதிகாரி** – எல்லாச் செயல்களையும் கவனிக்கும் அதிகாரி.

**சர்வேசன்** – எல்லா உயிர்க்கும் தலைவனாகிய கடவுள்.

**சரக்கறை** – பண்டங்கள் வைக்கும் அறை; பொன் அறை; அணிகலன்கள் வைக்கும் அறை.

**சரக்கு** – வாணிகப்பொருள்; பொன்; கல்வியறிவு முதலியவற்றால் ஏற்படும் தகுதி அல்லது திறமை; கறிச்சரக்கு; மருந்துப்பண்டம்; சாராயம்; முண்டைரோகம்.

**சரக்குப்பறித்தல்** – பண்டங்களைக் கப்பலினின்று இறக்குதல்.

**சரக்குப்பிடித்தல்** – வாணிகத்துக்குப் பண்டங்களை மொத்தமாக வாங்குதல்.

**சரக்கொன்றை** – சரஞ்சரமாகப் பூக்கும் கொன்றைமரம்.

**சரகதி** – அம்புபோல் செல்லும் குதிரையின் நடை.

**சரகம்** – தேனீ; வண்டு; எல்லை; நாட்டின் பகுதி.

**சரகாண்டம்** – அம்புக்கூடு.

**சரகு** – உலர்ந்து வற்றிய இலை.

**சரகூடம்** – எதிரிகளின் ஆயுதம் தாக்காதவாறு அம்பினாற் கட்டும் பந்தல்.

**சரங்கட்டல்** – பூவால் மாலை கட்டுதல்.

**சரச்சிறு** – குறிஞ்சாக்கொடி.

**சரச்சுவதி** – காண்க: **சரசுவதி;** ஓர் ஆறு.

**சரசக்காரன்** – இனிய குணமுடையவன்; விகடன்.

**சரசங்காட்டுதல்** – உறுப்புகளைத் தொட்டுப் பரிகசித்தல்.

**சரசசல்லாபம், சரசப்பேச்சு** – காதற்பேச்சு; வேடிக்கைச் சொல்.

**சரசம்** – இனிய குணம்; பரிகாசம்; காம விளையாட்டு; மலிவு; தேக்கமரம்; வெண்ணெய்; உண்மை; இனிமை.

**சரசரத்தல்** – சருகு முதலியவை ஒலித்தல்; தொடுதற்குச் சரசரவென்றிருத்தல்.

**சரசரப்பு** – ஒலிக்கை; சுரசுரப்பு; மொருமொரு வென்றிருக்கை.

**சரசரெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; விரைந்து எளிதிற் செல்கைக் குறிப்பு; சுரசுரப்புக் குறிப்பு.

**சரசலீலை** – சுரத விளையாட்டு, புணர்ச்சி.

**சரசாங்கி** – இருபத்தேழாவது மேளகர்த்தா.

**சரசி** – பரிகாசக்காரன்; இனிய குண முள்ளவன்(ள்).

**சரசிசம்** – குளத்தில் தோன்றுவதாகிய தாமரை.

**சரசு** – குளம், நீர்நிலை.

**சரசுவதி** – பிரமன் தேவியாகிய கலைமகள்; ஓர் ஆறு; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.

**சரசுவதிபண்டாரம்** – கலைமகளின் செல்வமாகிய நூல்நிலையம்.

**சரசுவதிபீடம்** – கல்வி விளங்கும் இடம்; கல்வி நிரம்பியவன்; காண்க: **சிக்குப்பலகை;** கலைமகள் தங்குமிடம்.

**சரசுவதியூர்தி** – பூரான்.

**சரசுவதிவாக்கு** – கலைமகள் அருளால் இயற்கையாகவே அமைந்த நினைவாற்றல்.

**சரசோதி** – பிரமன் தேவியாகிய கலைமகள்.

**சரட்டட்டிகை** – பொற்கயிற்றில் பதக்கங் கட்டிய கழுத்தணிவகை.

**சரட்டடைப்பன்** – கால்நடை நோய்களுள் ஒன்று.

**சரட்டுத்தாலி** – பொன்கயிற்றில் கோத்தணியும் தாலிவகை.

**சரட்டெனல்** – விரைவுக்குறிப்பு.

**சரடம்** – ஓந்தி; பச்சோந்தி; குசும்பாமரம்.

**சரடு** – முறுக்குநூல்; பொன், வெள்ளிக் கம்பியினாற் செய்த கழுத்தணிவகை; தந்திரம்; மூக்கணாங் கயிறு.

**சரடுதிரித்தல்** – கயிறுதிரித்தல்; காண்க: **சரடு முறுக்குதல்.**

**சரடுமுறுக்குதல்** – தீயன செய்யத் தூண்டுதல்; ஒரு செய்தியைப் பொய்யாகக் கற்பித்து வெளியிடுதல்.

**சரடுவிடுதல்** – மற்றவர் மூலமாகத் தன் கருத்தை வெளியிடுதல்; தந்திரமாகப் பேசிப் பிறர் கருத்தை அறிய முயலுதல்; காண்க: **சரடு முறுக்குதல்.**

**சரண்** – அடைக்கலம்; பாதம்; காண்க: **அம்மை யார்கூந்தல்.**

**சரண்டம்** – பல்லி; பறவைப்பொது.

**சரண்புகுதல்** – அடைக்கலமடைதல்.

**சரணம்** – அடைக்கலம்; பாதம்; மருதநிலத்தூர்; வீடு; அரசமரம்; மயிற்றோகை; மயில்; பெருங்காயம்; யானைத்தோட்டி; வேதப் பகுதி; கீர்த்தனத்தின் மூன்றாம் உறுப்பு.

**சரணம்புகுதல்** – காண்க: **சரண்புகுதல்.**

**சரணர்** – வீரசைவப் பெரியோர்.

**சரணாகதம்** – அடைக்கலம், தஞ்சமடைதல்.

**சரணாகதன்** – அடைக்கலம் புகுந்தோன்.

**சரணாகதி** – அடைக்கலம் புகுகை.

**சரணாயுதம்** – காலை ஆயுதமாக உடைய கோழி.

**சரணார்த்தி** – அடைக்கலம் தேடுபவன்.

**சரணி** – வழி.

**சரணியன்** – காப்பவன்.

**சரதம்** – உண்மை.

**சரதலம்** – கோள்நிலை முதலியவற்றை உணரும் கணக்கு.

**சரந்தொடுத்தல்** – அம்பெய்தல்; மிகுதியாக வைதல்.

**சரநட்சத்திரம்** – புனர்பூசம், சுவாதி, திருவோணம், அவிட்டம், சதயம் என்னும் நல்ல நட்சத்திரங்கள்.

**சரப்பணி** – வயிரம் பதித்த கழுத்தணி.

**சரப்பலகை** – கடைகளின் அடைப்புப் பலகை; தூண்களுக்கு நடுவில் செல்லும் பலகை.

**சரப்பளி** – காண்க: **சரப்பணி.**

**சரபடி** – மரபுவழி.

**சரபம்** – சிங்கத்தைக் கொல்லவல்ல எண்காற் பறவை; ஒட்டகம்; மலையாடு; குறும்பாடு; விட்டில்பூச்சி; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.

**சரம்** – அசைவு; அசையும் பொருள்; உயிர்; நடை; இயங்குதிணை; மூச்சு; காண்க: **சரராசி**; சஞ்சலம்; அம்பு; ஐந்து; திப்பிலி; காண்க: **நாணல்**; மணிவடம்; மாலை; கொத்து; நீர்; கூரைச்சரம்; நீர்நிலை; இசைச்சுரம்; போர்; தனிமை; காண்க: **கொறுக்கச்சி**; கூதிர்காலம்; அம்புக்கூடு.

**சரம்பார்த்தல்** – மூச்சுப்போக்குப் பார்த்தல்.

**சரமகவி** – இறந்தவரைப்பற்றி இரங்கிப் பாடும் பாட்டு, கையறுநிலை.

**சரமண்** – சுண்ணச்சாந்துமண்.

**சரமணி** – சிறுமணிகள் கட்டிய அரைப்பட்டிகை.

**சரமதசை** – இறக்குந்தறுவாய்.

**சரமம்** – முடிவு; மேற்கு.

**சரமழை, சரமாரி** – அம்புமழை.

**சரராசி** – மங்கலமாகக் கருதப்படும் மேழம், கடகம், துலை, சுறவம் என்னும் இராசிகளுள் ஒன்று.

**சரலாந்தல்** – கிளைவிளக்குவகை.

**சரவட்டை** – கீழ்த் தரமானது.

**சரவடி** – காண்க: **சரபடி.**

**சரவணப்பொய்கை** – இமயமலைச்சாரலில் உள்ளதும் முருகக்கடவுள் பிறந்ததுமான ஒரு நீர்நிலை.

**சரவணபவன்** – சரவணப்பொய்கையில் பிறந்த முருகக்கடவுள்.

**சரவணம்** – கொறுக்கைப்புல்; நாணற்புல்; காண்க: **சரவணப்பொய்கை.**

**சரவணோற்பவன்** – காண்க: **சரவணபவன்.**

**சரவருடம்** – அம்புமாரி.

**சரவன்** – அம்பெய்வோன்.

**சரவாச்சம்** – கறியுப்பு.

**சரவாணி** – காண்க: **சரவன்.**

**சரவியம்** – அம்பினால் எய்யும் இலக்கு.

**சரவிளக்கு** – ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கித் தொங்கவிடும் கோயில்விளக்கு.

**சரவீணை** – வீணைவகை; வீணைபோல் ஒலி செய்யும் கருவண்டு.

**சரவை** – மேல்வரிச் சட்டம்; தெளிவற்ற எழுத்து; எழுத்துப்பிழை; மூலத்தோடு ஒத்திடாத படி; தொந்தரவு.

**சரவையிடுதல்** – எழுத்துப்பிழை திருத்துதல்.

**சரவையெழுத்து** – திருத்தப்படாத முதற் படி; படியெழுதுகை.

**சரளம்** – எளிது; தடையின்மை; ஒழுங்கு; சீமைத் தேவதாரு; சிவதைக்கொடி.

**சரளி** – சுரவரிசை; கோழை.

**சரளிக்கட்டு** – சளிக்கட்டு.

**சரளியாடுதல்** – ஏழு சுரங்களையும் பாடிப் பழகுதல்.

**சரளை** – சிறுமணல் சேர்ந்து கெட்டித்த கல்வகை.

**சரளைகட்டித்தல்** – சரற்கல் இடுவித்துப் பாதையைச் செம்மையாக்குதல்.

**சரற்காலம்** – ஐப்பசியும் கார்த்திகையுமாகிய கூதிர்காலம்; கார்காலம்.

**சரன்** – தூதன்; ஒற்றன்.

**சராகம்** – நேர்வழி; நாட்டின் பகுதி.

**சராகை** – வட்டில்.

**சராங்கம்** – தடையின்மை; நிறைவு; நேர்மை.

**சராசரம்** – இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்கள், அசையும் பொருள் அசையாப் பொருள்கள்; உலகம்.
**சராசரி** – சரிவீதம்.
**சராசரிமேரை** – ஊர்ச் சிப்பந்திக்குப் பிரித்துக் கொடுக்கும் பாகம்.
**சராசனம்** – வில்; அரசமரம்.
**சராத்திரயம்** – அம்புக்கூடு.
**சராப்பு** – நாணய நோட்டக்காரன்; காசுக் கடைக்காரன்; கருவூல வேலைக்காரன்.
**சராயு** – கருப்பப் பை.
**சராயுசம்** – கருப்பையிற் பிறப்பது.
**சராவம்** – அகல்; இரும்புக்கம்பி.
**சராளம்** – எளிமை; தடையின்மை; ஒழுங்கு.
**சராளித்தல்** – பேதியாதல், கழிதல்.
**சரி** – ஒப்பு; சம்மதக்குறிப்பு; மலைச்சாரல்; வழி; கூட்டம்; கைவளை; பொருத்தம்; நடத்தை; ஒழுங்கு; சரியளவு.
**சரிக்கட்டுதல்** – ஒப்பிடுதல்; ஒப்பச்செய்தல்; நேர்படுத்துதல்; இணங்குதல்; கடனைத் தீர்த்தல்; ஈடுசெய்தல்; முடிவுபடுத்துதல்; கொல்லுதல்; பழிவாங்குதல்; இணக்கமாகச் செய்தல்; உண்மையாதல்.
**சரிக்குச்சரி** – பதிலுக்குப்பதில்; பழிக்குப்பழி.
**சரிகமபதநி** – ஏழு சுரங்கள்.
**சரிகாணுதல்** – நேரொத்தல்; சரிபார்த்தல், ஒத்திடுதல்; பூர்த்திசெய்தல்; கொலைசெய்தல்.
**சரிகை** – கூத்தின் அங்கக்கிரியைகளுள் ஒன்று; சரியை; ஆடைக்கரையிலுள்ள பொன் வெள்ளி இழைகள்.
**சரிசமம், சரிசமானம்** – நேரான ஒப்பு.
**சரிசு** – கைவளை.
**சரிசொல்லுதல்** – ஒப்புக்கொள்ளுதல்; பொறுப்பேற்றல்.
**சரித்தல்** – சரியச்செய்தல்; வெட்டித்தள்ளுதல்; ஒரு பக்கஞ் சாயச்செய்தல்; சஞ்சரித்தல்; மேற்கொண்டொழுகுதல்; வசித்தல்; செரித்தல்; அசைதல்.
**சரித்திரகாரன்** – வரலாற்று ஆசிரியன்.
**சரித்திரம்** – வரலாறு; ஒழுக்கம்.
**சரித்திரை** – புளியமரம்.
**சரித்து** – ஆறு.
**சரிதம்** – காண்க: **சரித்திரம்.**
**சரிதல்** – நழுவுதல்; கீழே விழுதல்; குலைதல்; பின்னிடுதல்; சாதல்; சாய்தல்; சரிவாயிருத்தல்; கூட்டமாய்ச் செல்லுதல்.
**சரிதன், சரிதி** – செயலிற் சிறந்தவன்.
**சரிதை** – காண்க: **சரித்திரம்**; சரியை; பிச்சை.
**சரிப்படுத்துதல்** – நேர்படுத்துதல்; ஈடுசெய்தல்; ஒப்பிடுதல்; ஒப்பச்செய்தல்; இணக்குதல்; கடனைத்தீர்த்தல்; முடிவுபடுத்துதல்; கொல்லுதல்; பழிவாங்குதல்.
**சரிப்பிடித்தல்** – பிறருடன் ஒத்துச்செல்லுதல்; கேடு சூழ்தல்.
**சரிப்பித்தல்** – நடப்பித்தல்.
**சரிபங்கு** – சமமான பங்கு; பாதிப்பங்கு.
**சரிபம்** – அசோகமரம்.
**சரிபாதி** – பேர்பாதி.
**சரிபார்த்தல்** – ஒத்துப்பார்த்தல்; கேடு சூழ்தல்.
**சரிபோதல்** – நேர்நடத்தல்; சமாதானமாதல்; விருப்பப்படி நடத்தல்; ஒத்தல்.
**சரிமணி, சரிமணிக்கோவை** – மகளிர் இடையிலணியும் ஓர் அணிவகை.
**சரிமேரை** – குடிகளின் உரிமை.
**சரியம்** – சிறுநன்னாரிப் பூண்டு.
**சரியாக்குதல்** – சமனாக்குதல்; செய்துமுடித்தல்; ஒத்திருக்கச் செய்தல்; ஒழுங்காக்குதல்.
**சரியாதல்** – சமமாதல்; ஒத்துவருதல்; முடிவுறுதல்; நேர்வருதல்.
**சரியாபாதம்** – சிவாகமப்பகுதி நான்கனுள் ஒன்று.
**சரியாவான்** – சரியை நிலையில் ஒழுகுபவன்.
**சரியிடுதல்** – படி முதலியவற்றை மூலத்தோடு ஒப்பிடுதல்.
**சரியை** – ஒழுக்கம்; பயிற்சி; சிவனைச் சகளத் திருமேனியராகக் கோயிலில் வைத்து வழிபடுகை; பிச்சை; சரிகை.
**சரியையில்ஞானம்** – சிவபெருமானைக் குறித்த தியானபாவனையில் உறைப்பான ஓரனுபவ உணர்ச்சி.
**சரிவர** – முறையாய்; முழுதும்; திட்டமாய்.
**சரிவருதல்** – நேர்வருதல்; சமமாதல்; ஒத்துவருதல்; தீர்தல்.
**சரிவாரம்** – நில உரிமையாளனும் பயிர்செய்பவனும் விளைவைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளுதல்.
**சரிவு** – சரிந்துவிழுகை; சாய்வு; நகரம், ஆறு முதலியவற்றின் ஓரம்; மகளிர் முன்கை வளையல்.
**சரிளப்பா** – வெண்கடுகு.
**சரீரக்கட்டு** – உடலுறுதி.
**சரீரக்கூறு** – உடலின் பகுதி; உடல்நிலை
**சரீரசம்பந்தம்** – உறவு; புணர்ச்சி.
**சரீரசரீரிபாவம்** – உடலுக்கும் உடலுடையவனுக்குமுள்ள தொடர்பு.
**சரீரத்திரயம்** – தூல சூக்கும காரண சரீரங்கள், பருவுடல் நுண்ணுடல் காரண உடல்கள் என்னும் மூவகை உடலங்கள்.
**சரீரப்போக்கு** – உடம்பின் தன்மை.

**சரீரபதனம்** – உடம்பு விழுகையாகிய இறப்பு.
**சரீரம்** – உடல்; ஆள்.
**சரீரி** – உடலையுடைய உயிர்.
**சரு** – சோறு; தேவர் பிதிரர் உணவு.
**சருக்கம்** – நூற்பிரிவு; அத்தியாயம்; இலக்கியச் செய்யுட் கூறுபாடு; படலம்; படைப்பு.
**சருக்கரை** – கருப்பஞ்சாற்றிலிருந்து உருவாக்கப் படும் ஓர் இனிப்புப்பொருள்வகை.
**சருக்கரைமாமணி** – கற்கண்டு.
**சருக்கரைவள்ளி** – வள்ளிக்கிழங்குவகை.
**சருகட்டை** – மரவட்டைப்பூச்சி.
**சருகாதல்** – உடல் முதலியன வற்றி மெலிதல்; சருகுபோல் ஆதல்.
**சருகு** – உலர்ந்து வற்றிய இலை; வெற்றிலை; கைவளை; கூட்டம்.
**சருகுதிர்தல்** – உலர்ந்த இலை கீழே விழுதல்; தோல் உதிர்தல்.
**சருகொட்டி** – ஒரு பறவைவகை.
**சருச்சரை** – சுரசுரப்பு.
**சருத்தி** – தேர்க்கொடி; விருதுக்கொடி.
**சருப்பகுண்டலன்** – பாம்பைக் குண்டலமாகக் கொண்ட சிவன்.
**சருப்பதோபத்திரம்** – மிறைக்கவியில் ஒன்று; பல நிறப் பொடிகொண்டு இடும் கோலம்; எல்லாப் பக்கங்களிலும் போர்புரியுமாறு அமைக்கப் பட்ட படைவகுப்பு முறை.
**சருப்பம்** – பாம்பு.
**சருப்பராச்சியம்** – சங்கங்குப்பிச்செடி.
**சருப்பராசி** – நாணல்.
**சருமகன், சருமகாரன்** – காண்க: **சக்கிலியன்.**
**சருமபந்தம்** – மிளகு.
**சருமம்** – தோல்; தோலாலாகிய பாய்; கேடகம்; மரப்பட்டை.
**சருமன்** – காண்க: **சருமகன்**; பார்ப்பனர் பட்டப் பெயர்.
**சருவக்கியத்துவம்** – காண்க: **சர்வஞ்ஞத்துவம்.**
**சருவக்கியன்** – காண்க: **சர்(ரு)வஞ்ஞன்.**
**சருவசித்து** – அறுபதாண்டுக் கணக்கில் இருபத்தோராம் ஆண்டு; எல்லாவற்றையும் வென்றவன்.
**சருவந்து** – தலைக்கவசம்.
**சருவரி** – இரவு; இருள்.
**சருவல்** – நேயப்பான்மை; கொஞ்சுதல்; தொந்தரவு; சரிவான நிலம்.
**சருவு** – சரிவு; கிட்டுகை; சருகு.
**சருவுதல்** – பழகுதல்; கொஞ்சிக் குலாவுதல்; தொந்தரவுசெய்தல்; போராடுதல்; கிட்டு தல்; நழுவுதல்.
**சரேந்திரன்** – வில் வல்லவன்.
**சரேரெ(லெ)னல்** – விரைவுக்குறிப்பு.
**சரை** – நரைமயிர்; கிழத்தன்மை; வைக்கோல் முதலியவற்றாற் செய்யும் மூடிவகை.
**சரைத்தல்** – கிழத்தனமடைதல்; நரைத்தல்.
**சரைமலம்** – வயிரக்குற்றங்களுள் ஒன்று.
**சரையாப்பித்தல்** – உள்ளே செலுத்துதல்.
**சரோசம்** – தாமரை.
**சரோசனம்** – கோபத்தோடு கூடியிருக்கை.
**சரோருகம்** – தாமரை; நரகவகை.
**சரோருகன்** – தாமரையினின்று தோன்றிய பிரமன்.
**சரோவரம்** – சிறந்த பொய்கை.
**சல்லகண்டம்** – புறா.
**சல்லகம்** – முள்ளம்பன்றி; நார்; கைத்தாளம்.
**சல்லகி** – ஆத்திமரம்; வெள்ளைக்குங்கிலியம்; தேட்கொடுக்கிச்செடி; இலவுவகை; தளிர்; முள்ளம்பன்றி.
**சல்லடம்** – குறுகிய காற்சட்டை.
**சல்லடை** – தானியம் முதலியவற்றைச் சலிக்கும் கருவி.
**சல்லடைக்கண்** – சல்லடையிலுள்ள துளை.
**சல்லபம்** – முள்ளம்பன்றி.
**சல்லம்** – பன்றியினது முள்; நார்.
**சல்லரி** – பறைப்பொது; திமிலைப்பறை; கைத் தாளம்; பூடுவகை.
**சல்லரிதல்** – துண்டுதுண்டாக நறுக்குதல்.
**சல்லவட்டம்** – கேடயம்.
**சல்லா** – மெல்லிய துணி; இழைநெருக்கம் இல் லாத துணி.
**சல்லாபம்** – சரசப்பேச்சு; உரையாடல்; வினா விடை.
**சல்லாபன்** – சரசன்.
**சல்லாரி** – இழைநெருக்கமில்லாத துணி, அலசற் சீலை; பயனற்றவன்; வேடக்காரன்; கைத் தாளம்; ஒரு மரவகை.
**சல்லி** – கல் முதலியவற்றின் உடைந்த துண்டு; சிறு கல்; கிளிஞ்சில்; சிற்றோடு; சிறுகாசு; சல்லிக்காசு; மெலிந்தவன்; துளை; போக்கிரி; பொய்; ஆபரணத் தொங்கல்; பறைவகை; கெண்டைமீன்வகை; அதிமதுரம்.
**சல்லிக்கட்டு** – ஏறு தழுவும் விழா, முரட்டு எருது களைக் கொட்டுமுழக்குடன் வெளியில் விடுத்து அவற்றினைத் தழுவிப் பிடிக்கச்செய்யும் ஒரு விழா.
**சல்லிக்கரண்டி** – துளையுள்ள ஒரு கரண்டிவகை.
**சல்லிக்காசு** – சிறுகாசு.
**சல்லிகை** – ஒருவகைப் பெரும்பறை.
**சல்லிசு** – எளிதானது.
**சல்லித்தரை** – கரடுமுரடான தரை; கப்பியடித்த தரை.

**சல்லிப்பலகை** – கப்பலின் முகப்புப் பலகை.
**சல்லிப்பொடி** – உடைந்த துண்டு; சிறு மீன்.
**சல்லிமாடு** – சல்லிக்கட்டுக்குரிய காளை; பட்டி மாடு.
**சல்லிமாலை** – பொங்கல் முதலிய நாளில் மாடுகளுக்குக் கட்டும் மாலை.
**சல்லியகரணி** – ஆயுதத்தாற் பட்ட காயம் ஆற்றும் மருந்து; எருக்கு.
**சல்லியம்** – அம்பு; முள்ளம்பன்றி; எலும்பு; மாயவித்தை; ஆணி; இருப்புக்கோல்; ஆயுத நுனி; ஈட்டி; தொல்லை; பூமிக்குள் இருப்பதை அறியும் ஆருடம்; செஞ்சந்தனம்; கருநூலுள் ஒன்று.
**சல்லியன்** – நகுல சகாதேவருக்கு அம்மானாகிய ஒரு மன்னன்; சுக்கிரன்.
**சல்லிவேர்** – ஆணிவேரின் பக்கத்திற் செல்லும் சிறுவேர்.
**சல்லுதல்** – நீர்தெளித்தல்; சல்லடையாற் சலித்தல்.
**சலக்கப்புரை** – கழிப்பறை; குளிக்கும் அறை.
**சலக்கம்** – காண்க: **சலகம்.**
**சலக்கரணை** – ஏந்து, சௌகரியம்; தணிவு; உரிமை;
**சலக்கிரீடை** – ஆண்கள் பெண்களோடு கூடிப் புரியும் நீர் விளையாட்டு.
**சலக்கு** – நவச்சாரம்.
**சலக்கெனல்** – முத்து, மணி போன்றவை கீழே உதிரும்போது உண்டாகும் ஓசைக்குறிப்பு.
**சலகம்** – நீராடல்; மலங்கழிக்கை; பொட்டுப் பூச்சி.
**சலகரங்கம்** – சங்கு; தாமரை; திரை; தேங்காய்.
**சலகன், சலகன்பன்றி** – விதையடித்த பன்றி.
**சலகு** – முத்துச்சிப்பி; விதையடித்தல்; பயிற்சி.
**சலகுபிடித்தல்** – விதையடித்தல்; உடற்பயிற்சி செய்தல்.
**சலகை** – அறுபது முதல் எண்பது படி வரை அளவுள்ள ஒரு தானிய அளவு; சலகை விதைப்பாடுள்ள நிலம்; தோணி; தெப்பம்; வெளிப்பாடு; காணிக்கைப் பொருள்.
**சலங்கு** – கட்டுப்படகு; முத்துச் சலாபம்.
**சலங்கை** – சதங்கை என்னும் காலணி.
**சலசந்தி** – இரண்டு கடல்களைச் சேர்க்கும் குறுகிய நீர்ப்பகுதி.
**சலசம்** – நீரில் உண்டாவன: தாமரை, முத்து, பாசி.
**சலசயனம்** – நீரிடமாகிய படுக்கை.
**சலசர்ப்பிணி** – நீரில் செல்வதாகிய அட்டை.
**சலசரம்** – மீன்; மீனராசி; தோணி முதலியவை.
**சலசல** – நீர் பாயும் ஒலி; ஓர் ஒலிக்குறிப்பு.
**சலசலத்தல்** – ஓர் ஒலிக்குறிப்பு;ஓயாமற்பேசுதல்.
**சலசலெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**சலசலோசனன்** – தாமரைக் கண்ணனாகிய திருமால்.
**சலசாதி** – நீர்வாழ்வன.
**சலசூகரம்** – கடற்பன்றி.
**சலசூசி** – நீரட்டை.
**சலசை** – திருமகள்.
**சலஞ்சலம்** – வலம்புரி ஆயிரம் சூழ்ந்த சங்கு.
**சலணி** – வால்மிளகு.
**சலத்தம்பனம்** – நீரின் ஆற்றலை மாற்றும் வித்தை.
**சலதம்** – நீரைத் தரும் மேகம்.
**சலதரங்கம்** – நீரலை; பல கிண்ணங்களில் வெவ்வேறு அளவில் நீர் ஊற்றிச் சிறு குச்சியால் தட்டிவாசிக்கும் ஒரு வாத்தியவகை.
**சலதரம்** – நீரைத் தாங்கும் மேகம்; நீர்நிலை; குளம்; கடல்.
**சலதளம்** – அரசமரம்.
**சலதாரி** – கங்கைநீரைத் தரித்த சிவன்.
**சலதாரை** – நீரோட்டம்; சாக்கடை; நீர்க்கால்; மதகு.
**சலதி** – கடல்; பொய்பேசுபவன்.
**சலநிதி** – கடல்.
**சலப்பிரவாகம்** – வெள்ளப்பெருக்கு.
**சலப்பிரளயம்** – பெருவெள்ளம்.
**சலபத்திரம்** – அரசமரம்.
**சலபதி** – கடல் அரசனான வருணன்.
**சலபம்** – விட்டிற்பூச்சி.
**சலம்** – அசைவு; நீர்; சீழ்நீர்; மூத்திரம்; நடுக்கம்; அசையும் அம்புக்குறி; இயங்குதிணை; சுழற்சி; தணியாக் கோபம்; கோபம்; பொய்ம்மை; வஞ்சனை; பட்சபாதம்; தீச்செயல்; மாறுபாடு; போட்டி; முள்ளம்பன்றியின் முள்; இலாமிச்சை; பிடிவாதம்.
**சலம்பிடித்தல்** – சீழ்கொள்ளல்; பிடிவாதஞ் செய்தல்.
**சலம்புரி** – சங்கு.
**சலமலம்** – நீரும் மலமும்; கடற்பஞ்சு.
**சலரசம்** – உப்பு.
**சலராசி** – கடல்நீரோடு தொடர்புடைய நண்டு, மீன் முதலியவற்றின் கூட்டம்.
**சலருகம்** – தாமரை.
**சலரோகம்** – நீரிழிவுநோய்.
**சலலம்** – முள்ளம்பன்றியின் முள்.
**சலலிங்கம்** – மார்பிலணியும் அங்க இலிங்கம்.
**சலவர்** – நெய்தல்நில மாக்கள்.
**சலவன்** – வஞ்சகன்; பகைவன்; கோபமுள்ளவன்; விதையடித்த பன்றி.

**சலவாதி** – தணியாக் கோபமுள்ளவன்; பிடிவாதக்காரன்; சாவுச்செய்தி சொல்வோன்; மலசலவுபாதி.

**சலவியன்** – கோபமுள்ளவன்.

**சலவை** – ஆடை வெளுத்தல்; வெளுத்த துணி; சால்வை; விதையடிக்கை; சீதளம்; வியாபாரப் பிசுக்கு.

**சலவைக்கல்** – ஒருவகை நிறமுடைய கல்; தாதுப்பொருள்வகை; சூரியகாந்தக்கல்.

**சலன்** – கால்.

**சலனம்** – அசைவு; கலக்கம்; துன்பம்; சிவலிங்கம்; கால்; சஞ்சலம்; காற்று.

**சலனன்** – காற்று.

**சலாகு** – சிறு நாராசம், இருப்புக் கம்பி.

**சலாகை** – அம்பு; ஈட்டி; காந்தம்; துப்பாக்கிச் சலாகை; இருப்புக் கம்பி; அறுவைக் கருவி; சிறு நாராசம்; வரிச்சல்; நன்மணி; வாகு வளையம்; நாணயவகை; தட்டார் கருவி வகை.

**சலாங்கு** – பொய்யாப்புள்; கொசு.

**சலாசயம்** – நீர்நிலை; மூத்திரப் பை.

**சலாஞ்செய்தல்** – வணங்குதல்; கையை நெற்றியில் வைத்து வந்தித்தல்.

**சலாத்தி** – திரைச்சீலை.

**சலாத்துதல்** – குலுக்குதல்.

**சலாந்தரு** – நாட்டிய உறுப்புவகை.

**சலாபக்குளி** – முத்துக்குளித்தல்; வருமானமுள்ள தொழில்.

**சலாபம்** – முத்துக்குளிக்கை; முத்துக்குளிக்கும் துறைமுகம்.

**சலாம்** – வணக்கம்.

**சலாவணி** – நாணயம் முதலியன எங்கும் வழங்குகை; செல்வாக்கு.

**சலிகை** – காண்க: **சலுகை.**

**சலித்தல்** – ஒலித்தல்; அசைத்தல்; மனஞ்சலித்தல்; சோர்தல்; வெறுத்தல்; சல்லடையினால் சலித்தல்; கோபங்கொள்ளுதல்; அருவருப்புக் காட்டுதல்.

**சலிப்பு** – அசைவு; வெறுப்பு; சோர்வு; மனச் சலனம்; கோபம்.

**சலிலம்** – நீர்.

**சலினி** – திப்பிலி.

**சலீகம்** – போர்.

**சலீசு** – எளிது; மலிவு.

**சலுக்குமொலுக்கெனல்** – தவசங்களை உலக்கையால் குற்றும்பொழுது எழும் ஓசைக்குறிப்பு.

**சலுகை** – செல்வாக்கு; உரிமை; பழக்கமிகுதி; ஆதரவு.

**சலுகைக்காரன்** – பெருமைபடைத்தவன்; பரிபாலிப்போன்; செல்வம் முதலியவற்றால் செருக்குடையவன்.

**சலுகைகாட்டுதல்** – பெருமையாய் இருத்தல்; அதிகாரதோரணை கொள்ளுதல்; பரிவு காட்டுதல்.

**சலுப்பு** – துண்டு; நுனிக்கொம்பு; நீர்க்கோவை.

**சலூகை** – அட்டை.

**சலேந்திரன்** – வருணன்.

**சலோர்க்கம்,** **சலோர்ச்சம்** } – குங்கிலியம்.

**சவ்வரிசி** – சவ்வுமரத்தின் சோற்றைக் காய்ச்சிச் செய்யப்படும் பண்டம்; மரவள்ளிக்கிழங்கிலிருந்து செய்யப்படும் பொருள்.

**சவ்வாது** – ஒருவகைப் பூனையின் மணப் பொருள்; மரவள்ளி.

**சவ்வியபலம்** – யானைத்திப்பிலி.

**சவ்வியம்** – இடப்பக்கம்; மிளகு.

**சவ்வீரம்** – ஒரு நாடு; ஒரு மருந்துப் பொருள்; காடி; பறங்கிப்பாடாணம்.

**சவ்வு** – கண் முதலியவற்றின் மெல்லிய மூடு தோல்; புண்ணின் மூடுதோல்; புண்சவ்வு; பழம் முதலியவற்றை மூடியுள்ள தோல்.

**சவக்கம்** – சோர்வு; சதுரவடிவான வைரம்.

**சவக்களித்தல்** – சுவையற்றிருத்தல்.

**சவக்காடு** – சுடுகாடு.

**சவக்காமியம்** – நாய்.

**சவக்காரம்** – காண்க: **சவர்க்காரம்.**

**சவக்காலை** – கல்லறை.

**சவக்குச்சவக்கெனல்** – வளைந்து கொடுத்தற் குறிப்பு; ஈரப்பசையால் பதங்கெடுதற் குறிப்பு.

**சவங்கட்டுதல்** – சவத்தை ஆடையால் மூடி மூன்று சிறு துணிகளால் கட்டுதல்.

**சவங்கல்** – மழுங்கல்; வலியற்றவன்; மானம் மழுங்கினவன்(ள்).

**சவங்குதல்** – மனந்தளர்தல்; மானம் மழுங்கிப் போதல்; உடல்மெலிதல்; வீக்கம் வற்றுதல்; மூர்ச்சை போதல்.

**சவசவவெனல்** – மிகுதிக்குறிப்பு; பளபளப்புக் குறிப்பு.

**சவட்டுதல்** – வளைவாக்குதல்; மெல்லுதல்; விழுங்குதல்; அழித்தல்; கொல்லுதல்; மிதித்தல்; வெல்லுதல்; மொத்துதல்.

**சவட்டுநிலம்** – உவர்த்தரை, உப்புநிலம்.

**சவடன்** – பயனற்றவன்.

**சவடால்** – இடம்பம், பகட்டு.

**சவடால்அடித்தல்** – இடம்பங்காட்டுதல், வீண் செருக்குப் பாராட்டுதல்.

**சவடி** – பொற்சரடுகளில் கொத்தாக அமைந்த கழுத்தணிவகை; காறையெலும்பு; பெண்கள் காதணிவகை; ஒரு பாம்புவகை; கடலாத்தி.

**சவடிஎலும்பு** – காறையெலும்பு.

**சவடிப்பொட்டு** – தாலிப்பொட்டு.

**சவடு** – உவர்மண்; வண்டல்; நெரிவு.

**சவணம்** – கேள்வி.

**சவத்தி** – சக்களத்தி.

**சவதம்** – காண்க: **சபதம்**; விலைமலிவு.

**சவதரித்தல்** – சம்பாதித்தல்; ஒத்துப்போதல்.

**சவதலை** – காண்க: **சமதலை.**

**சவம்** – பிணம்; விரைவு; மூங்கில்; பிசாசம்.

**சவர்** – விளையாநிலம்; உவர்.

**சவர்க்கம்** – கல்லுப்பு.

**சவர்க்காரம்** – அழுக்கைப் போக்கும் ஒரு பொருள், சலவைக்கட்டி, காண்க: வழலை.

**சவர்க்குந்தா** – கப்பலின் மேலிடத்துள்ள மூன்றாம் பாய்மரம்.

**சவரக்கத்தி** – மழித்தற்குதவுங் கத்தி.

**சவரகன்** – அம்பட்டன்.

**சவரட்சணை** – காப்பாற்றுதல்.

**சவரணை** – காப்பாற்றுகை; நேர்த்தி; ஆயத்தம்; செல்வநிலை.

**சவரம்** – வெண்சாமரம்; மயிர்கழிக்கை; பவுன் நாணயம்.

**சவரன்** – வேடன்; பாலைநில மாக்கள்; பாலை நிலத் தலைவன்; ஒரு பொற்காசு.

**சவரி** – கவரிமான்; சாமரம்; மயிர்க்கற்றை; தென்னைநார்; வேடகுலப்பெண்; குறட்டைப் பூடு.

**சவரிமான்** – காண்க: **கவரிமான்.**

**சவரிலோத்திரம்** – குறட்டைப்பழம்.

**சவலம்** – பயனுடையது; அரைக்கால் வராகன்.

**சவலை** – மனக்குழப்பம்; வருத்தம்; காண்க: **சவலைக்குழந்தை**; இளமை; மின்னல்; அடி குறைந்தும் மிக்கும் வரும் பாட்டு; இசைப்பா வகை.

**சவலைக்கன்று** – இளங்கன்று.

**சவலைக்குழந்தை** – தாய்ப்பாலின்றி மெலிந்த குழந்தை.

**சவலைநெஞ்சம்** – உறுதியற்ற மனம்.

**சவலைப்பிள்ளை** – காண்க: **சவலைக்குழந்தை.**

**சவலைப்புத்தி** – காண்க: **சவலைநெஞ்சம்.**

**சவலைபாய்தல்** – தாய்ப்பாலின்றிக் குழந்தை மெலிதல்.

**சவலைமதி** – இளம்பிறை.

**சவலைவெண்பா** – முதலடியும் மூன்றாமடியும் நாற்சீராய்க் கடையடியும் இரண்டாம் அடியும் முச்சீராய்த் தனிச்சொல் அற்று வரும் வெண்பாவகை.

**சவள், சவள்தடி** – துவளுந் தடி; தோணியோட்டுங் கோல்.

**சவளக்காரர்** – செம்படவர், மீனவருள் ஓரினம்; ஓடம் விடுபவன்; ஈட்டிபிடிக்கும் வீரர்கள்.

**சவளச்சி** – காந்தாரியுப்பு.

**சவளசோழியம்** – நாகரிகம் நிரம்பிய கல்வியறிவு.

**சவளம்** – குந்தாயுதம்; ஒரு மீன்வகை; புளியின் முற்றிய பழச்சுளை.

**சவளமரம்** – படகு தள்ளுதற்குரிய தண்டுக்கோல்.

**சவளி** – சீலை, வேட்டி முதலிய துணிச்சரக்கு; மகளிர் அணியும் கழுத்தணி.

**சவளுதல்** – வளைதல்; துவளுதல்.

**சவளை** – வங்கமணல், ஈயமணல்.

**சவற்சவம்** – கல்லுப்பு.

**சவறு** – குப்பை; பயனற்றவன்.

**சவறுவிழுதல்** – கருப்பம் நிரம்பாது வெளிப் படுகை.

**சவனம்** – வேகம்; வேள்வி; பிருட்டபாகம்.

**சவனன்** – வேகமுடையவன்.

**சவனிக்கை** – திரை; இளைப்பாறு மண்டபம்.

**சவனிக்கைமண்டபம்** – உற்சவமூர்த்தி வீதிப்புறப் பாட்டிற்குப்பின் இளைப்பாறு மண்டபம்.

**சவாசு** – சபாஷ் என்னும் வியப்பிடைச் சொல்.

**சவாது** – ஒருவகை மணப்பொருள்.

**சவாய்** – கப்பலிற் பாய்மரந் தாங்கும் கயிறு.

**சவாரி** – ஊர்தியேறிச் செல்லுதல்; சுற்றுப் பயணம்; ஊர்தி.

**சவாரிசெய்தல்** – ஊர்திகளில் ஏறிச் செல்லுதல்.

**சவாரிபோதல்** – சுற்றுப்பயணம் போதல்; சவாரி செய்தல்.

**சவால்** – வினா; ஒருவகைப் பாட்டு; அறை கூவுகை.

**சவி** – ஒளி; அழகு; நேர்மை; வலிமை; சுவை; செல்வி; சரமணிக்கோவை; திருவிழா; பலன்; மிளகு.

**சவிக்கை** – சுங்கச்சாவடி.

**சவிகற்பக்காட்சி** – ஒரு பொருளின் பெயர், சாதி, குணம் முதலிய எல்லாக் கூறுகளும் புலப்படும் அறிவு.

**சவிகற்பசமாதி** – ஞேயம், ஞாதுரு, ஞானம் என்ற வேறுபாட்டுணர்ச்சியோடு விளங்கும் ஐக்கிய பாவனையாகிய யோகநிலை.

**சவிகற்பம்** – காண்க: **சவிகற்பக்காட்சி.**

**சவிகி(கை)** – சதுரத்திண்ணைக் கொட்டகை.

**சவிசங்கம்** – ஒரு வாதநோய்.

**சவித்தல்** – சபித்தல், சாபமிடுதல்; திட்டுதல்; மந்திரத்தை உச்சாரணம் செய்தல்; வேண்டுதல்.

**சவித்தாரம்** – விரிவுடையது; முக்கிய காரியம்.

**சவிதா** – சூரியன்.
**சவியம்** – ஆனைத்திப்பிலி.
**சவிர்சங்கி** – சிறு பீரங்கி.
**சவுக்கடி** – சாட்டையடி; கடுக்கனில் உள்ள தொங்கல்.
**சவுக்கடிக்கூடு** – அணிகலனில் மணி பதிக்கும் நகைக் கட்டடம்.
**சவுக்கம்** – சதுரம்; துணித்துண்டு; இலிங்கப் பெட்டகம்; தாளத்தின் விளம்பம்; கல்தச்சன் உளி.
**சவுக்கவர்ணம்** – நடனத்திற்குரிய இசைப்பாட்டு வகை.
**சவுக்களி** – காதணிவகை; கடுக்கனோடு சேர்க்கும் தங்கத்தகடு; ஒருவகைப் புடைவை.
**சவுக்களித்தல்** – காண்க: **சவக்களித்தல்.**
**சவுக்காரம்** – காண்க: **சவர்க்காரம்.**
**சவுக்கியம்** – நலம்; வசதி; மலிவு; மலங்கழிக்கை.
**சவுக்கு** – குதிரைச்சாட்டை; ஒரு மரவகை; சதுரத்திண்ணைக் கொட்டகை.
**சவுக்கை** – சதுரத்திண்ணைக் கொட்டகை; இளைப்பாறுமிடம்; காவற்கூடம்; விலை மலிவு; சுங்கச்சாவடி; ஒரு மரவகை.
**சவுகதன்** – புத்தன்.
**சவுகந்தி** – வசம்பு.
**சவுகரியம்** – ஏந்து, வசதி; மலிவு.
**சவுங்கல்** – வலியற்றவன்(ள்); மானமிழந்தவன்(ள்).
**சவுங்குதல்** – மனம் தளர்தல்; மானம் மழுங்கிப் போதல்; உடல் மெலிதல்; வீக்கம் வற்றுதல்; மூர்ச்சைபோதல்.
**சவுசம்** – தூய்மையாக்குதல்; மலங் கழுவுதல்.
**சவுசயம்** – முருக்கமரம்.
**சவுசன்னியம்** – அன்னியோன்னியம்; இனிய குணம்.
**சவுடால்** – காண்க: **சவடால்.**
**சவுடு** – வண்டல்; உவர்மண்; நெரிவு.
**சவுண்டம், சவுண்டி** – திப்பிலி.
**சவுண்டிகன்** – கள் விற்போன்.
**சவுத்தல்** – விலைநயத்தல்; விலைபடாமலிருத்தல்; அலுத்துப்போதல்; மெலிதல்; விளைவு குன்றிப்போதல்; சுவையற்றுப்போதல்; முறுமுறுப்பு அற்றுப்போதல்.
**சவுத்து** – மாதிரி; முன்மாதிரி.
**சவுதம்** – விலைமலிவு; விற்பனையாகாமல் இருக்கும் பொருள்; சோர்வு; இளைப்பு; நாட்டியவகை; வைதிகச் சடங்கு; தாளத்தின் விளம்பம்.
**சவுதரித்தல்** – ஒத்துநடத்தல்; பொருளீட்டுதல்.
**சவுந்தரம்** – அழகு.
**சவுந்தரி** – அழகுடையவள்; பார்வதி.
**சவுந்தரியம்** – காண்க: **சவுந்தரம்.**
**சவுபாக்கியம்** – செல்வம்; யோகம் இருபத்தேழனுள் ஒன்று.
**சவுபானம்** – படிக்கட்டு; தாழ்வாரம்.
**சவுரர்** – சூரியனை வழிபடும் மதத்தார்.
**சவுரி** – திருமால்; திருடன்; சனி; யமன்; குறட்டைப் பூண்டு.
**சவுரிகயிறு** – தென்னைநார்க் கயிறு.
**சவுரியம்** – களவு; சூரத்தனம்.
**சவுளம்** – முடிவாங்குகை.
**சவுளி** – சீலை, வேட்டி முதலிய துணிச்சரக்கு.
**சவை** – சபை; ஆடவர் கூட்டம்; கற்றறிந்தோர் கூட்டம்; புலவர்; மிதுனராசி.
**சவைக்கக்கொடுத்தல்** – முலையூட்டுதல்.
**சவைத்தல்** – மெல்லுதல்; முலையுண்ணுதல்.
**சவைமகள்** – மிதுனராசி.
**சவையல்** – பொழுதுபோக்கு.
**சவையார்** – சபையோர்; பார்ப்பனருள் ஒரு பிரிவினர்.
**சழக்கன்** – தீயவன்.
**சழக்கு** – குற்றம்; தீமை; பயனின்மை; தளர்ச்சி; பொய்.
**சழங்கு** – முதுமைத்தளர்ச்சி.
**சழங்குதல்** – சோர்தல்; நெகிழ்தல்; தொங்கியசைத்தல்.
**சழிதல்** – சப்பளித்தல்; தளர்தல்; நெருங்கிக் கிடத்தல்; ஊழற்சதை வைத்தல்.
**சழிவுநெளிவு** – கோணல்மாணல்.
**சழுக்கம்** – நெகிழ்ச்சி; மனமழிதல்.
**சழுங்குதல்** – நெகிழ்தல்; தளர்தல்; பிதுங்குதல்; தொங்கியசைதல்.
**சள்ளட்டியெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**சள்ளல்** – சேறு; அபானவாயு பறிதல்; இளகல்; பிஞ்சு; சிக்கல்; சாரமற்றது.
**சள்ளிடுதல்** – குரைத்தல்.
**சள்ளு** – முற்றாத இளங்காய்; தொந்தரவு.
**சள்ளுக்காய்** – முற்றாத இளங்காய்.
**சள்ளுச்சள்ளெனல்** – நாய் குரைக்கும் ஒலிக் குறிப்பு; கோபங்காட்டிப் பேசுங்குறிப்பு.
**சள்ளுதல்** – இளகுதல்; சிக்குதல்; அபானவாயு விடுதல்.
**சள்ளுப்படுதல்** – தொல்லைக்குள்ளாதல்.
**சள்ளுப்புள்ளு** – சண்டை; தொல்லை.
**சள்ளுவாயன்** – ஓயாது பேசுபவன்.
**சள்ளை** – துன்பம்; தொந்தரவு; ஒரு மீன்வகை; இருப்பு.
**சளக்குப்புளக்கெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**சளகந்தம்** – வசம்பு.
**சளகன்** – நிலையற்ற மனமுடையவன்.
**சளசண்டி** – பெருமூடன்.
**சளசளத்தல்** – சேறாயிருத்தல்; அலப்புதல்; மழை முதலியவற்றின் வீழ்ச்சியால் அருவியில் உண்டாகும் ஒலி; ஓர் ஒலிக்குறிப்பு; தர்க்கம் முதலியவற்றில் தளர்ச்சியடைதல்.
**சளசளவெனல், சளசளெனல்** – நீர்பாயும் ஒலி; அலப்புதற் குறிப்பு.
**சளப்புதல்** – அலப்புதல், குழப்புதல்.
**சளபுளத்தல்** – ஒலித்தல்; மனங்கலங்குதல்; குழப்பமாயிருத்தல்; ஆற்றல் முதலியன குறைதல்.
**சளம்** – மூர்க்கம்; துன்பம்; வஞ்சனை.
**சளவட்டை** – கீழ்த்தரமானது.
**சளன்** – வஞ்சகன்.
**சளாரெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**சளி** – குளிர்ச்சி; மூக்குச்சளி; கபம்; பிசின்.
**சளித்தல்** – சளிநோய் கொள்ளுதல்; புளித்தல்; தளர்தல்; பதனழிதல்.
**சளிப்பு** – பதனழிதல்; ஊழற்சதைபிடித்தல்; சளிகொள்ளுதல்.
**சளுக்கன்** – சாளுக்கிய வேந்தன்.
**சளுக்கி** – அகந்தைக்காரி; சாளுக்கிய வேந்தன்.
**சளுக்கு** – செருக்கு; திரிகையின் ஓர் உறுப்பு; பகட்டு.
**சளுகம்(ன்)** – அட்டை.
**சளைத்தல்** – சோர்தல்.
**சற்கரித்தல்** – போற்றுதல்.
**சற்கருமம்** – நற்செய்கை.
**சற்காரம்** – உபசாரம்.
**சற்காரியவாதம்** – தோற்றத்திற்கு முன்னும் காரியப்பொருள், காரணப் பொருள்களில் உள்ளது என்னும் கொள்கை.
**சற்குணம்** – நற்குணம்.
**சற்குரு** – ஞானாசிரியன்.
**சற்சங்கம்** – நல்லோர் கூட்டுறவு.
**சற்சனர்** – நல்லோர்.
**சற்சுகாதி** – பெருமருந்துக்கொடி.
**சற்பாத்திரம்** – கொடை பெறுதற்குத் தகுந்தவன்; ஒழுக்கமுடையோன்.
**சற்பாவம்** – உளதாந் தன்மை; சற்குருவைப் பிரமசொரூபமாகப் பாவிக்கை.
**சற்பிரசாதம்** – நல்லருள்.
**சற்புத்தி** – நல்லறிவு.
**சற்புத்திரன்** – நற்குண நற்செய்கை உள்ள புதல்வன்.
**சற்புருடன்** – நல்லவன், உத்தமன்.
**சற்று** – கொஞ்சம்; அற்பம்; எளிது.
**சறாம்புதல்** – பேணாதிருத்தல்.
**சறுக்கல்** – வழுக்கல்; வழுக்கலிடம்; கலிங்கு.
**சறுக்கு** – வழுக்குகை; காண்க: **சறுக்குக்கட்டை**; நழுவுகை; நெம்புதடி; சாக்குப்போக்கு; தடை.
**சறுக்குக்கட்டை** – தேர்ச்செலவை வழிப்படுத்தும் முட்டுக்கட்டை; ஆப்பு.
**சறுக்குதல்** – வழுக்குதல்; வழுவுதல்; செயல் நழுவுதல்; உராய்ந்து செல்லுதல்.
**சறுக்கை** – மதகு.
**சறுகுதல்** – நழுவுதல்.
**சறுதாசம்** – வேங்கைமரம்.
**சறை** – தாழ்வு; சறைமணி.
**சறைமணி** – இடையர் அரையில் கட்டி ஒலிப்பிக்கும் மணி.
**சறையினான்** – உடம்பைப் பேணாதவன்.
**சன்மப்பகை** – பிறவிப்பகை; தீராப்பகை.
**சன்மபூமி** – பிறந்த ஊர்.
**சன்மம்** – பிறப்பு; தோல்.
**சன்மராசி** – சாதகன் பிறந்த காலத்திற் சந்திரனிருந்த இராசி.
**சன்மலி** – காண்க: இலவு; ஒருவகை நரகவிசேடம்.
**சன்மாந்தரம்** – வேறு பிறவி.
**சன்மார்க்கம்** – நன்னெறி; ஞானநெறி.
**சன்மானம்** – உபசாரச்சொல்; வெகுமதி; இறையிலியாக விடப்பட்ட நிலம்.
**சன்மினி** – துர்க்கைக்குத் தொண்டுசெய்யும் பெண்பேய்.
**சன்னக்காரை** – நன்கு அரைக்கப்பட்ட சுண்ணாம்பு.
**சன்னசாலம், சன்னசாலை** – வெண்கடுகு.
**சன்னஞ்சன்னமாக** – சிறிதுசிறிதாக.
**சன்னத்தம்** – அணியம், ஆயத்தம்.
**சன்னத்தன்** – கவசம் பூண்டவன்; போர் முதலியவற்றிற்குத் தயாராக இருப்பவன்.
**சன்னதம்** – ஆவேசம்; தெய்வங்கூறல்; மிகு கோபம்; வீறாப்பு.
**சன்னதி** – காண்க: **சன்னிதி.**
**சன்னபின்னம்** – கண்டதுண்டம்.
**சன்னம்** – நுண்மை; நுண்ணிய பொடி; பொடிரத்தினம்; நேர்மை; ரவைக்குண்டு; மறைபொருள்; குரல் இழைவு.
**சன்னம்வைத்தல்** – வெள்ளைவைத்தல்; சிறிய மணிகளைப் பதித்தல்; அழகாய்ப் பேசுதல்; பேச்சில் தந்திரம் காட்டுதல்.
**சன்னல்** – சாளரம்.
**சன்னல்பின்னல்** – கொடி முதலியவை ஒன்றோடொன்று பின்னியிருத்தல்; சிக்கல்.

**சன்னலவங்கப்பட்டை** – இலவங்கப்பட்டைவகை.

**சன்னவீரம்** – ஒருவகை வெற்றிமாலை.

**சன்னாகம்** – போர்க்கவசம்; போருக்கு ஆயுதம்; விருதுகளுடன் செல்லும் அரசன்; வெளிப்புறப்பாடு.

**சன்னாசம்** – காண்க: **சன்னியாசம்.**

**சன்னாசி** – காண்க: **சன்னியாசி.**

**சன்னி** – ஒரு நோய்வகை; பேருள்ளது.

**சன்னிதானம்** – மடாதிபதி முதலிய பெரியோரைக் குறிக்கும் மரியாதைச் சொல்; திருமுன்பு; தெய்வமேறல்.

**சன்னிதி** – கடவுளின் திருமுன்பு; கோயிலுள் சுவாமி இருக்குமிடம்; அண்மை; சன்னிதானம்.

**சன்னிநரம்பு** – காலின் கட்டைவிரல் நரம்பு.

**சன்னிநாயகம், சன்னிநாயன்** – கருஞ்சீரகம்; தும்பைப் பூண்டு.

**சன்னிபாதம்** – சன்னிநோய்.

**சன்னியம்** – காண்க: **மரமஞ்சல்;** போர்.

**சன்னியாசம்** – துறவு; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.

**சன்னியாசமுத்திரை** – தண்டு, கமண்டலம் முதலிய துறவிகளுக்குரிய அடையாளங்கள்.

**சன்னியாசி** – துறவி.

**சன்னிவேசம்** – அமைப்பு.

**சன்னை** – சமிக்கை; எள்ளுதற் சொல்; குறிப்பு; பெரிய முரசு; தேரின் உலுக்குமரம்.

**சனக்கட்டு** – உறவினர்களின் கூட்டம்; உறவினரது பற்று; சனங்களின் ஒற்றுமை.

**சனகந்தம்** – வசம்பு.

**சனகம்** – புளியாரைக்கீரை; சாதிக்குக் காரணசூக்கும வினைவகை.

**சனஞ்சேர்த்தல்** – ஆள் கூட்டுதல்; படை திரட்டுதல்.

**சனபதி** – அரசன்.

**சனம்** – மக்கள்; இனத்தார்; கூட்டம்.

**சனமாலி** – இலவமரம்.

**சனலோகம்** – பிதிரர் முதலிய தேவர்கள் வாழும் உலகம்.

**சனனம்** – பிறப்பு.

**சனனமரணம்** – பிறப்பு இறப்பு.

**சனனி** – தாய்.

**சனனித்தல்** – பிறத்தல்.

**சனாசாரம்** – உலகநடை, உலகியல்.

**சனாதனதர்மம்** – பழைமையான அறவொழுக்கம்.

**சனார்த்தனம்** – சுக்கு; திருமால்தலம்.

**சனார்த்தனன்** – திருமால்.

**சனி** – ஒரு கோள்; சனிக்கிழமை; துன்பம்.

**சனிக்கிழமை** – வாரத்தின் ஏழாம் நாள்.

**சனித்தல்** – பிறத்தல், உண்டாதல்.

**சனிதிசை** – காண்க: **சனிமூலை.**

**சனிபாகம்** – காண்க: **கொன்றை.**

**சனிபிடித்தல்** – கேடு பிடித்தல்; சனிக்கோளால் துன்பம் விளைதல்.

**சனிமூலை** – வடகிழக்கு மூலை.

**சனியன்** – ஒரு கோள்; பீடைதருபவன்(ள்); பீடைதருவது.

**சனீச்சுரன்** – சனிக்கோள்.

**சனு** – வேண்டியவன்(ள்).

**சனுகம்** – மிளகு.

## சா

**சா** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ச்+ஆ); சாதல்; தேயிலைச்செடி.

**சாக்கடை** – கழிவுநீர் செல்லும் இடம், சலதாரை; சேறு.

**சாக்காட்டுப்பறை** – பிணப்பறை.

**சாக்காடு** – இறப்பு; கெடுதி.

**சாக்காத்தல்** – இறப்போர்க்கு அருகிலிருந்து உதவுதல்.

**சாக்காளி** – தன் உருவை மறைத்து வாழும் புழுவகை.

**சாக்கி** – சாட்சி; சக்கிமுக்கிக்கல்.

**சாக்கிடுதல்** – போக்குச் சொல்லுதல்.

**சாக்கியம்** – புத்தமதம்; சாட்சி.

**சாக்கியர்** – பௌத்தர்; சமணர்.

**சாக்கியன்** – சாக்கிய வமிசத்தில் தோன்றிய கௌதம புத்தர்; சாக்கியநாயனார்.

**சாக்கிரத்தானம்** – விழிப்புநிலையில் ஆன்மாவின் இடமாகக் கருதும் புருவநடு.

**சாக்கிரதை** – விழிப்பு, எச்சரிக்கை.

**சாக்கிரம்** – ஆன்மாவின் விழிப்புநிலை.

**சாக்கு** – வீண்காரணம்; பொன்; சட்டைப்பை; கோணிப்பை.

**சாக்குப்போக்கு** – வீண்காரணம்.

**சாக்குருவி** – தீநிமித்தமாகச் சத்தமிடும் என்று கருதப்படும் ஆந்தைவகை.

**சாக்குறி** – இறப்பு அடையாளம்.

**சாக்கை** – புரோகிதன்; அரசரின் கருமத் தலைவன்; நிமித்திகன்.

**சாக்கையன்** – கூத்தாடுபவன்; நிமித்திகன்.

**சாக்கோட்டி** – கருப்பிணிக்கு வரும் மசக்கை.

**சாத்தம்** – சக்தியையே தெய்வமாக வழிபடும் சமயம்.

**சாக்தன், சாக்தேயன்** – சாக்த சமயத்தைத் தழுவியவன்.
**சாகசக்கியம்** – திறமை; பாசாங்கு.
**சாகசபட்சி** – குலிங்கம் என்னும் பறவை.
**சாகசம்** – துணிவு; பாசாங்கு; மெய்மை; யானை; காண்க: **சாகசபட்சி.**
**சாகசன்** – துணிவுள்ளவன்.
**சாகசிகன்** – துணிவுள்ளவன்; பாசாங்கு செய்வோன்.
**சாகதன்** – துணிவுள்ளவன், வீரன்.
**சாகபட்சிணி** – புல்லுண்ணி.
**சாகம்** – வெள்ளாடு; தேனீ; இலைக்கறி; இலை; சிறுகீரை; தேக்கமரம்; இலைச்சாறு; வில்; சாகத்தீவு.
**சாகரணம்** – விழித்திருக்கை.
**சாகரப்பிரபை** – எப்பொழுதும் விழித்தே இருக்க வேண்டிய ஒரு நரகம்.
**சாகரம்** – விழித்திருக்கை; கடல்; பதினாயிரங் கோடி.
**சாகரி** – ஒரு பண்வகை.
**சாகவாசம்** – காண்க: **சகவாசம்.**
**சாகவில்வம்** – காண்க: **சேம்பு.**
**சாகளம்** – வெள்ளாடு.
**சாகாங்கம்** – மிளகு.
**சாகாடு** – வண்டி; வண்டியுருளை; உரோகிணி நாள்.
**சாகாதுண்டம்** – அகில்மரம்; சீந்திற்கொடி.
**சாகாமருந்து** – தேவாமிழ்தம்; ஒரு மூலிகைவகை.
**சாகாமிருகம்** – மரக்கிளையில் வாழும் விலங்கு; குரங்கு; அணில்.
**சாகாமூலி** – சீந்திற்கொடி.
**சாகாரம்** – வடிவுடையது; துயிலொழிகை.
**சாகி** – மரம்; ஈச்சமரம்; காண்க: **திராய்.**
**சாகித்தியசக்தி** – கவிபாடுந் திறமை.
**சாகித்தியம்** – செய்யுள்; இசைப்பாட்டு; இலக்கியம்.
**சாகியம்** – நட்பு.
**சாகினி** – கீரைவகை; பூங்கீரை; துர்த்தேவதை.
**சாகீர்** – மானியம்.
**சாகுபடி** – பயிர்செய்தல்.
**சாகுபடிக்கணக்கு** – பயிர்செய்யப்பட்ட நிலங்களின் கணக்கு.
**சாகுபடித்திட்டம்** – பயிர்செய்யத் தீர்மானித்த நிலங்களின் விவரம்; பயிரிடுவதற்கு ஏற்படும் எதிர்பார்ப்புச் செலவு.
**சாகை** – மரக்கிளை; கிளைக்குடும்பம்; கை; வேத நூற் பதிவு; வேதம்; இலை; வட்டில்; சாதல்; வாழுமிடம்.
**சாங்கம்** – உறுப்புகள் அனைத்தும்; சாயல்; முழுதும்; பத்திரமாய்.
**சாங்கமிலார்** – சாதியிலிருந்து விலக்கப்பட்டவர்.
**சாங்கரம்** – கலப்புச்சாதி.
**சாங்கரர்** – கலப்புச் சாதியார்.
**சாங்கரிச(ய)ம்** – கலப்பு.
**சாங்கிமம்** – மருத யாழ்த்திறவகை.
**சாங்கியம்** – கபிலர் மதம்; எண்ணிக்கைக்கு உட்படுவது; சடங்கு.
**சாங்கியயோகம்** – பிரமமே சீவன், சீவனே பிரமம் என்னும் மதம்.
**சாங்கு** – ஓர் அம்புவகை.
**சாங்குகௌரி** – காண்க: **புளிநறளை.**
**சாங்கேதிகம்** – அடையாளம்; கட்டுப்பாடு முதலியவற்றால் நிகழ்வது.
**சாங்கோபாங்கம்** – முழுமை.
**சாசற்புடம்** – ஐவகைத் தாளத்துள் ஒன்று.
**சாசனம்** – கட்டளை; அரசாணை முதலியவற்றைக் குறிக்கும் கல்வெட்டு; உறுதிப் பத்திரம்; இறையிலிநிலம்; அதிகாரச் சின்னம்; தண்டனை; வேட்டுவச்சேரி; வெண்கடுகு.
**சாசனம்பண்ணுதல்** – நிலம் முதலியவற்றை விற்பனைசெய்தல்.
**சாசி** – திராய்ப்பூண்டு; முலைப்பால்.
**சாசிபம்** – தவளை.
**சாசுவதம்** – அசையாநிலை; வீடுபேறு; நிலையுள்ளது.
**சாஞ்சலியம்** – நிலையின்மை.
**சாட்குலி** – ஊன் உண்போன்.
**சாட்கோல்** – சாண் அளவுள்ள கோல்.
**சாட்சாத்கரித்தல்** – நேரே காணுதல்.
**சாட்சாத்காரம்** – நேரில் உணர்கை.
**சாட்சாத்து** – கண்கூடாக, வெளிப்படையாக.
**சாட்சி** – நேரிற் கண்டவர்; வழக்கில் சாட்சி கூறுவோர்; எடுத்துக்காட்டு; உடன் உண்ணும் விருந்து; சைதன்னியம்; சான்று.
**சாட்சிக்காரன்** – வழக்கில் சான்று சொல்வோன்.
**சாட்சிப்படி** – சாட்சிக்காரர்களுக்குச் செலவாகும் பணம்.
**சாட்சிபூதம்** – சாட்சியாயிருத்தல்.
**சாட்சியம்** – வழக்கில் கூறும் சான்று.
**சாட்சிவாங்குதல்** – சாட்சிக் கையெழுத்து வாங்குதல்; சாட்சி விசாரித்தல்.
**சாட்டம்** – அடிக்கை; செருக்கு.
**சாட்டாங்கநமஸ்காரம், சாட்டாங்கம்** – இருகை, இருமுழங்கால், இருதோள், மார்பு, நெற்றி என்னும் எட்டு உறுப்புகளும் நிலத்தில் தோய வணங்குதல்.
**சாட்டி** – சாட்டை; அறுவடையானபின் உழாது கிடக்கும் நிலம்; பயிரிடுதற்காக உரமிடப்பட்டிருக்கும் நிலம்; சவுக்கு.

**சாட்டியம்** – வஞ்சகம்; பொய்; சடத்தன்மை; மந்தம்; சுரக்குறி; உடல்வலி; பிடிவாதம்; அறுபது நாளில் விளையும் நெல்.

**சாட்டு** – ஒப்பிக்கை; குற்றப்படுத்துகை.

**சாட்டுக்கூடை** – பெரிய கூடை.

**சாட்டுதல்** – பிறனிடம் சார்த்துதல்; குற்றஞ் சுமத்துதல்; அடித்தல்.

**சாட்டுவளம்** – பசும்புற்றரை; காண்க: அறுகு; நாவல்மரம்.

**சாட்டுவாய்** – தூற்றின தானியத்தோடு பதர் கலந்துள்ள தானியக் குவியல்.

**சாட்டை** – கசை; பம்பரஞ்சுற்றுங் கயிறு; மரத்தால் செய்யப்பட்ட ஒரு குயக்கருவி வகை.

**சாட்டைக்கூடை** – காண்க: **சாட்டுக்கூடை.**

**சாட்டைவார்** – சவுக்கு.

**சாடவம்** –ஆறு சுரமுள்ள பண்.

**சாடா,**
**சாடாவாக** } – முழுவதும்.

**சாடி** – கோள்மொழி; தூள், பொடி; பாண்ட வகை; கும்பராசி; சீலை; ஆண்கள் மயிர்; திப்பிலி; உழுசால்; ஓர் அளவை.

**சாடித்தல்** – கோட்சொல்லுதல்; கண்டித்தல்; நொறுக்கல்; இருபக்கமும் அசைதல்.

**சாடிலி** – காண்க: **சாட்குலி.**

**சாடு** – மணி முற்றாத சோளம்; கையில் இடும் உறை; வாக்குவன்மை; புலவன்; பெரிய கூடை; வண்டி.

**சாடுகம்** – வண்டி.

**சாடுதல்** – அடித்தல்; மோதுதல்; துகைத்தல்; குத்திக் கிழித்தல்; வடுச்செய்தல்; ஒடித்தல்; கொல்லுதல்; அசைதல்: ஒரு கட்சிக்குச் சார்பாய் இருத்தல்.

**சாடுமாலி** – வீட்டைப் பெருக்கித் துப்புரவு செய்பவள்; கேவலமானவள்.

**சாடுவர்** – நாவலர்.

**சாடை** – சாயல்; ஒப்பு; போக்கு; சைகை; சிறுமை; கோள்மொழி; பொடி.

**சாடைபண்ணுதல்** – சைகைகாட்டுதல்; அருள் காட்டுதல்.

**சாடைமாடை** – குறிப்பு; சிறுக; பார்த்தும் பாராமல்.

**சாண்** – ஒன்பது அங்குல அளவு.

**சாண்டு (டை)** – பூப்புநீர்.

**சாண்மாதுரன்** – முருகக் கடவுள்.

**சாணக்கியம்** – சாணக்கியன் செய்வதுபோன்ற சூழ்ச்சி.

**சாணகம்** – சாணி.

**சாணங்கி** – துளசி.

**சாணத்தனம்** – கேலி.

**சாணம்** – சாணி; சாணைக்கல்; சந்தனக்கல்; தழும்பு; நாராலாகிய பொருள்; சாதிலிங்கம்.

**சாணன்** – அறிவாற்றல் மிக்கவன்; வீரன்.

**சாணாக்கி** – மயிர்மாணிக்கப் பூண்டு; முயற்செவி; சனகிப்பூண்டு.

**சாணாகம்,**
**சாணாங்கி** } – சாணி.

**சாணாத்தி** – சாணாரப்பெண்.

**சாணாரக் கத்தி** – பாளை சீவும் அரிவாள்.

**சாணான்** – கள் இறக்கும் தொழிலினன், மரம் ஏறுபவன்.

**சாணி** – பசு முதலியவற்றின் சாணி; புத்திநுட்ப முள்ளவன்.

**சாணிச்சுருணை** – சாணமிட்டு மெழுகுதற்கு உரிய துணிக்கற்றை.

**சாணிதட்டுதல்** – சாணியை வறட்டியாக்குமாறு தட்டுதல்.

**சாணிபோடுதல்** – எருது, பசு முதலியன மலங் கழித்தல்.

**சாணியுடம்பு** – சதைமிக்கு வலியற்ற உடம்பு.

**சாணை** – சாணைக்கல்; வட்டமாகச் சுட்ட பணியாரவகை; கைக்குழந்தைகளை மூடிப் பொதியும் சீலை.

**சாணைக்கல்** – ஆயுதம் தீட்டுங் கல்.

**சாணைக்கூறை** – திருமணத்திற்கு முன் உறுதிச் சடங்கின்போது பெண்ணுக்குக் கொடுக்கும் புடைவை.

**சாணைதீர்தல்** – சாணைபிடிக்கப்படுதல்; இரத்தினப்பட்டை தீட்டுதல்.

**சாணைபிடித்தல்** – ஆயுதத்தைக் கூர்மைப் படுத்துதல்.

**சாத்தந்தை** – சாத்தனுக்குத் தந்தை.

**சாத்தம்** – ஒலி அளவை; வேதவாக்கு முதலிய வற்றைக்கொண்டு அறியும் அளவை; சத்தியைத் தெய்வமாகக் கொண்ட மதம்.

**சாத்தம்பி** – கலவைச்சந்தனங் குழைத்தற்குரிய அம்மி; மெருகு சுண்ணாம்பு அரைக்கும் பெரிய அம்மிவகை.

**சாத்தர்** – சத்திபூசை செய்வோர்; வெளிநாடு களில் சென்று வாணிகம்செய்யும் வாணிகக் கூட்டத்தார்.

**சாத்தல்** – வேதம்.

**சாத்தவர்** – வெளிநாடு சென்று வாணிகம் செய்யும் வாணிகக் கூட்டத்தார்.

**சாத்தவி** – சத்தி.

**சாத்தன்** – காண்க: ஐயனார்; அருகன்; புத்தன்; சீத்தலைச்சாத்தன்; ஒருவனைக் குறிப் பதற்குச் சொல்லும் சொல்; வாணிகக் கூட்டத் தலைவன்.

**சாத்தா** – காண்க: **ஐயனார்.**

**சாத்தாதவன்** – காண்க: **சாத்தானி.**

**சாத்தாவாரி** – தண்ணீர்விட்டான் கொடிவகை.

**சாத்தான்** – பிசாசநாதன்.

**சாத்தானி** – கோயிலில் பூமாலைத் தொண்டு புரிந்துவரும் பார்ப்பனனல்லாத வைணவன்.

**சாத்திக்கொள்ளுதல்** – பகட்டாக மாலை முதலியன அணிதல்.

**சாத்திகம்** – முக்குணத்துள் ஒன்றான சாத்துவிகம்; சிற்பநூலுள் ஒன்று.

**சாத்தியந்தன்** – பிறவிக்குருடன்.

**சாத்தியம்** – முடிக்கத்தக்கது, சாதிக்கத்தக்கது; அனுமான உறுப்புள் துணியப்பட வேண்டும் பொருள்; இருபத்தேழு யோகத்துள் ஒன்று; தீர்க்கக்கூடியது.

**சாத்தியர்** – தேவருள் ஒரு பகுதியார்.

**சாத்தியரோகம்** – தீர்க்கக்கூடிய நோய்.

**சாத்திரக்காரன்** – குறிசொல்பவன்; சோதிடன்.

**சாத்திரம்** – நூல்; வேதாந்தம், தருக்கம் முதலிய நூல்.

**சாத்திரம்பார்த்தல்** – குறிபார்த்தல்; சோதிட நூலால் நன்மை தீமை பார்த்தல்.

**சாத்திரவேரி** – காண்க: **சாத்தாவாரி.**

**சாத்திரி** – சாத்திரங் கற்றவன்.

**சாத்து** – சாத்துகை; காண்க: **சாத்துமுறை**; அடி; பெயர்த்து நடப்பெற்ற நாற்று; வாணிகர் கூட்டம்; கூட்டம்; கைம்மரம்.

**சாத்துக்கவி** – நூல்செய்தோன் பெருமை முதலியவற்றை விளக்கும் சிறப்புப் பாயிரம்.

**சாத்துக்குடி** – கிச்சிலிவகை; தித்திப்பெலுமிச்சை.

**சாத்துதல்** – அணிதல்; தரித்தல்; பூசுதல்; அடைத்தல்; நூலைப் படித்து முடித்தல்; அடித்தல்; பெயர்த்து நடுதல்.

**சாத்துப்படி** – கோயில் சிலைகளுக்கு மாலை முதலியன சாத்தி அலங்கரித்தல்; சந்தனம்.

**சாத்துப்பயிர்** – பிடுங்கி நடப்பெற்று வளர்ந்த பயிர்.

**சாத்துமாலை** – அணிதற்குரிய பூமாலை.

**சாத்துமுறை** – கோயில் முதலிய இடங்களில் வைணவர் திவ்வியப் பிரபந்தத்தை ஓதியபின் இறுதியில் சில பாசுரங்களைச் சிறப்புத் தோன்றத் தனியே ஓதுகை; ஆழ்வாராதியர் திருவிழாவின் முடிவு; தெய்விக நூல்கள் பற்றிய உரைக்கோவையின் முடிவு.

**சாத்துலம்** – புலி.

**சாத்துவதி** – அறம் பொருளாகவும், தெய்வ மானிடர் தலைவராகவும் வரும் நாடக விருத்தி.

**சாத்துவம்** – சாத்துவிகம்.

**சாத்துவி** – சாத்துவ வடிவமாயுள்ள சிவபெருமான்.

**சாத்துவிகம்** – முக்குணத்துள் ஒன்றாகிய உயர்ந்த நற்குணம். அஃது அருள், ஐம்பொறியடக்கல், ஞானம், தவம், பொறை, மேன்மை, மோனம், வாய்மை என எண்வகைப்படும்.

**சாத்துவிகன்** – சாந்தகுணமுடையவன்.

**சாத்துறி** – உறிவகை.

**சாத்தெறிதல்** – வாணிகக் கூட்டத்தைக் கொள்ளையிடுதல்.

**சாதகக்குணசலம்** – கந்தகம்.

**சாதகக்குறிப்பு** – பிறந்த ஆண்டு, மாதம், நாள், இராசி முதலிவற்றின் குறிப்பு.

**சாதகங்கணித்தல், சாதகஞ்செய்தல்** – ஒருவனது பிறந்தநாட் குறிப்பைக் கோள் நிலையைக் கணக்கிட்டு அறிந்து எழுதுதல்.

**சாதகப்பட்டிகை** – சாதகம் எழுதிய பத்திரம்.

**சாதகப்புள்** – காண்க: **சாதகபட்சி.**

**சாதகப்பொருத்தம்** – மணமக்களுடைய சாதகங்கள் தம்முள் பொருந்துகை.

**சாதகபட்சி** – வானத்திலிருந்து விழும் மழைத் துளியைப் பருகி வாழும் ஒரு பறவைவகை.

**சாதகபலன்** – சாதகத்தின்படியுள்ள நிகழ்ச்சிகள்.

**சாதகபுட்பம்** – காண்க: **கடனுரை.**

**சாதகபுடம்** – சாதகம் கணித்தல்.

**சாதகம்** – பிறப்பு; பிறவிக்குணம்; சாதகப் பத்திரிகை; ஒரு நூல்வகை; பயிற்சி; துணைக் காரணம்; உதவி; ஏந்து; முடிக்கவேண்டியது; அனுகூலம்; பிரமாணம்; பூதம்; சாதகப்புள்; மறைப்பு; எருக்கு.

**சாதகராகத்தி** – கோழித்தலைக் கந்தகம்.

**சாதகருமம்** – காண்க : **சாதகன்மம்.**

**சாதகன்** – பயிற்சியுள்ளவன்; யோகவழி நிற்போன்; நிருவாணதீட்சை பெற்றவன்; மாணாக்கன்; இறப்புவரை இல்லற ஒழுக்கத்தில் நிற்பவன்; உதவியாளன்; பூதம்; சாதகத்துக்குரியவன்.

**சாதகன்மம்** – பிள்ளை பிறந்த காலத்தில் செய்யும் சடங்கு.

**சாதகும்பம்** – பொன்.

**சாதங்காண்(ணு)தல்** – உலையிலிட்ட அரிசி அளவுக்குமேல் சோறாகத் தோன்றுதல்.

**சாதம்** – பிறப்பு; தோன்றுவது; இளமையுடையது; உண்மை; கூட்டம்; சோறு; பூதம்.

**சாதர்** – பிறந்தவர்; உயர்ந்த சால்வை.

**சாதரா** – உயர்ந்த சால்வை.

**சாதரூபம்** – நால்வகைப் பொன்களுள் ஒன்று.
**சாதரூபி** – பொன்னிறமுடைய அருகன்.
**சாதல்** – இறத்தல்.
**சாதலம்** – திராய் என்னும் துலாக்கட்டை.
**சாதவண்டு** – ஒரு வண்டுவகை.
**சாதவாகனன்** – ஐயனார்; சாதவாகன மரபி லுள்ள ஓர் அரசன்.
**சாதவேதா** – நெருப்பு; கொடிவேலி.
**சாதன்மியம்** – ஒப்புமை.
**சாதனக்காணி** – அரசனால் விடப்பட்ட உரிமை நிலம்.
**சாதனசாத்தியம்** – காரணகாரியம்.
**சாதனப்படிசெலுத்துதல்** – உயில் எழுதுதல்.
**சாதனப்பத்திரிகை** – விருப்ப ஆவணம், உயில்; பத்திரம்.
**சாதனபத்திரம்** – உரிமைப்பத்திரம்; விலை ஆவணம்.
**சாதனம்** – கருவி; துணைக்காரணம்; பயிற்சி; அனுமான உறுப்புகளுள் ஒன்றாகிய ஏது; உருத்திராக்கம் முதலிய சின்னம்; இலாஞ் சனை; இடம்; நகரம்; ஆதாரபத்திரம்.
**சாதனம்பண்ணல்** – பழகல்; உறுதிசெய்தல்.
**சாதனன்** – பிறந்தவன்.
**சாதனை** – செயல்முடிக்கை; விடாத முயற்சி; பிடிவாதம்; சலஞ்சாதிக்கை; நடித்துக் காட்டுகை; பொய்.
**சாதா** – சாதாரணமான; பகட்டில்லாத.
**சாதாக்கொப்பு** – மாதர் காதணிவகை.
**சாதாரண** – அறுபதாண்டுக் கணக்கில் நாற்பத்து நான்காம் ஆண்டு.
**சாதாரணதருமம்** – எல்லாச் சாதியாருக்கும் பொதுவான ஒழுக்கம்; உவமான உவமேயங் களின் பொதுத்தன்மை.
**சாதாரணப்படுதல்** – எல்லோராலும் அறியப் படுதல்.
**சாதாரணம்** – பொதுவானது; எளிது; தாழ் வானது; ஏதுப்போலி.
**சாதாரம்** – ஆதாரத்தோடு கூடியது.
**சாதாரி** – செவ்வழி யாழ்த்திறவகை என்னும் முல்லைநிலத்துப் பண்.
**சாதாவேலி** – காண்க: **சாத்திரவேரி.**
**சாதாழை** – கடற்பூண்டுவகை; வலியற்றவன்.
**சாதாளநிம்பம்** – எருக்கிலை.
**சாதாளி** – மருத யாழ்த்திறவகை.
**சாதி** – குலம்; பிறப்பு; ஓரினப் பொருள்களின் பொதுவாகிய தன்மை; இனம்; தன்மையிற் சிறந்தது; திரள்; சாதிமல்லிகை; சிறு சண்பகம்; சாதிக்காய்; தாளப்பிரமாணம் பத்தனுள் ஒன்று; போலிப் பதில்; திப்பிலி; பிரம்பு; பிரப் பம் பாய்; ஆடாதோடை; கள்; சீந்தில்; புழுகுசட்டம்.
**சாதிக்கட்டு** – சாதி ஒற்றுமை; சாதி ஒழுக்கம்.
**சாதிக்கலப்பு** – பல சாதியினர் திருமண சம்பந்தத் தால் ஒன்றுபடுகை.
**சாதிக்காய்** – ஐந்து மணச்சரக்குள் ஒன்று; சீமைக் கள்ளிமரம்.
**சாதிக்காய்ப்பெட்டி** – சீமைக் கள்ளிப்பெட்டி.
**சாதிக்காரன்** – கலப்பற்ற சாதியான், ஒரே இனத்தைச் சேர்ந்தவன்.
**சாதிக்காரை** – தகுதி.
**சாதிகம்** – காண்க: **சாதிமுறை.**
**சாதிகுலம்** – உயர்குலம்.
**சாதிகெட்டவன்** – தாழ்குலத்தோன்; சாதி மாறினவன்.
**சாதிங்குலிகம்** – சாதிலிங்கம்.
**சாதிசம்** – நறும்பிசின்; ஐந்து மணச்சரக்குள் ஒன்று.
**சாதிசனம்** – இனத்தாரும் உறவினரும்.
**சாதித்தல்** – நிறைவேற்றுதல்; நிலைநாட்டுதல்; விடாது பற்றுதல்; மந்திரசித்தி பெறுதல்; தேய்த்தல்; கண்டித்தல்; அழித்தல்; அளித்தல்; பரிமாறுதல்; சொல்லுதல்; மறைத்தல்; அருள் புரிதல்; வெல்லுதல்.
**சாதித்துவாங்குதல்** – முயன்று வாங்குதல்; கோட்டை முதலியவற்றைப் பிடித்தல்.
**சாதிப்பகை** – சாதி வேற்றுமையால் மாந்தர் பாராட்டும் பகை.
**சாதிப்பதங்கம்** – காண்க: **சாதிலிங்கம்.**
**சாதிப்பன்மை** – இனத்தைக் குறிக்கும் பன்மை.
**சாதிப்பெயர்** – சாதியைக் குறிக்கும் பெயர்.
**சாதிப்பெரும்பண்** – அகநிலை, புறநிலை, அரு கியல், பெருகியல் என்னும் நால்வகைத் தலைமைப் பண்கள்.
**சாதிமல்லிகை** – ஒரு மல்லிகைவகை.
**சாதிமான்** – நற்குலத்தோன்.
**சாதிமுறை** – சாதிக்குரிய ஒழுகலாறு.
**சாதிமை** – பெருமை; ஓர் இனத்துக்குரிய சிறப்புக் குணம்.
**சாதிருகியம்** – ஒப்புமை.
**சாதிரேக(ச)ம்** – குங்குமப் பூ.
**சாதிரை** – ஊர்வலம்.
**சாதிலிங்கம்** – வைப்புப் பாடாணவகை.
**சாதிவிருத்தி** – இனத்தொழில்.
**சாதினி** – காண்க: **முசுக்கட்டை**; பீர்க்கங்கொடி.
**சாதீக(ய)ம்** – சாதியின் பழக்கவழக்கம்; உயர்ந்தது.
**சாது** – துறவி; நற்குணத்தோன்; அருகன்; பைராகி; அப்பாவி; தயிர்.
**சாதுகம்** – பெருங்காயம்.

**சாதுகை** – காண்க: **சாத்துவிகம்.**

**சாதுசங்கம்** – பெரியோருடன் கூட்டுறவு.

**சாதுசரணம்** – சாதுக்களைச் சரண்புகுதல்.

**சாதுயர்** – இறப்புத் துன்பம்.

**சாதுர்ப்பாகம்** – நாலிலொரு பங்கு.

**சாதுரங்கம்** – நால்வகைப் படை; மாணிக்கவகை.

**சாதுரம்** - தேர்.

**சாதுரன், சாதுரிகன்** – தேர்ப்பாகன்; அறிவுள்ளவன்.

**சாதுரியம்** – திறமை; நாகரிகம்.

**சாதுரியன்** – திறமையுள்ளவன்.

**சாதுவன்** – நல்லவன்; ஐம்புலன்களடக்கியவன்; அருகன்; ஆதிரை கணவன்.

**சாதேவம்** – குழிநாவல்மரம்; சிறுநாவற்செடி.

**சாந்தம்** – அமைதி; பொறுமை; சந்தனம்; குளிர்ச்சி; சாணி; ஒன்பான் சுவைகளுள் ஒன்று.

**சாந்தம்பி** – காண்க: **சாத்தம்பி.**

**சாந்தவாரி** – காண்க: **சாத்திரவேரி.**

**சாந்தன்** – அமைதியுடையோன்; அருகன்; புத்தன்.

**சாந்தாற்றி** – சிற்றாலவட்டம்; பீலிவிசிறி.

**சாந்தி** – அமைதி; தணிவு; கோளினால் ஏற்படும் கோளாறுகளைச் சாந்தப்படுத்தும் சடங்கு; விழா; பூசை; சாந்திகலியாணம்; சாந்தி கலை; தீர்த்தங்கரர் இருபத்துநால்வருள் ஒருவர்.

**சாந்திக்கூத்து** – தலைவன் முதலியோர் மன வமைதி அடைதற்கு ஆடுங் கூத்து.

**சாந்திகலியாணம்** – திருமணமான பெண் முறைப்படி கணவனுடன் சேர்தற்குச் செய்யும் சடங்கு.

**சாந்திகழித்தல்** – சாந்திக் கிரியைகளால் கோள் முதலியவற்றின் பீடையைப் போக்குதல்.

**சாந்திமுகூர்த்தம்** – காண்க: **சாந்திகலியாணம்.**

**சாந்திரம்** – சந்திரன் சம்பந்தமானது; சந்திர **காந்தக் கல்.**

**சாந்திரமானம்** – சந்திரன் போக்கைக்கொண்டு மாத ஆண்டுகள் கணக்கிடும் முறை.

**சாந்திராயனம்** – ஒரு நோன்பு; இஃது ஒரு மாதத்தில் வெள்ளுவா முதல் காருவாவரை ஒவ்வொரு பிடி சோறு குறைத்தும் காருவா (அமாவாசை) முதல் வெள்ளுவா (பௌர்ணமி) வரை ஒவ்வொரு பிடி கூட்டியும் சாப்பிட்டு இருப்பது.

**சாந்து** – சந்தனம்; சந்தனமரம்; கலவைச் சந்தனம்; கருஞ்சாந்து; திருநீறு; விமுது; சுண்ணாம்பு; மலம்.

**சாந்துக்காறை** – மகளிர் கழுத்தணிவகை.

**சாந்துக்கோய்** – சாந்துச் செப்பு.

**சாந்துகூட்டுதல்** – நெற்றிக்கு இடுஞ் சாந்து உண்டாக்குதல்.

**சாந்துப்பொட்டு** – சாந்தினால் நெற்றியிலிடும் பொட்டு.

**சாந்துப்பொடி** – மணப்பொடி.

**சாந்துபூசுதல்** – சந்தனம் முதலியவை பூசுதல்; சுண்ணாம்பு பூசுதல்.

**சாந்தை** – மனவமைதியுடையவள்; பூமி.

**சாப்பறை** – சாவில் அடிக்கப்படும் பறை.

**சாப்பாக்கொடுத்தல்** – சுருதியோடு இசைய வேண்டி மத்தளத்தைத் தட்டிப் பார்த்தல்.

**சாப்பாடு** – உணவு; நல்ல அடி.

**சாப்பிடுதல்** – உண்ணுதல்; கைப்பற்றுதல்.

**சாப்பிள்ளை** – செத்துப் பிறக்கும் பிள்ளை.

**சாப்பை** – புற்பாய்; வலிமையில்லாதவன்.

**சாபங்கொடுத்தல்** – சபித்தல்.

**சாபசரத்தி** – தவப்பெண்.

**சாபத்திரி** – சாதிபத்திரி.

**சாபம்** – வில்; தனுராசி; விலங்கின் குட்டி; தவத்தோர் சபித்துக் கூறும் மொழி.

**சாபமோசனம்** – சாபத்திலிருந்து விடுபடுதல்.

**சாபல்லியம்** – பயனுளதாதல்; சபலபுத்தி.

**சாபலம்** – விடாப்பற்று; வான கணித வாக்கிய எண்; எளிமை.

**சாபனை** – சாபம்.

**சாபாலன்** – ஆட்டுவாணிகன்.

**சாபித்தல்** – சாபமிடுதல்.

**சாபிதா** – பண்டம் முதலியவற்றின் குறிப்பு.

**சாம்பசிவன்** – அம்பிகையுடன் கூடிய சிவன்.

**சாம்பம்** – காண்க: **ஆனைநெருஞ்சி.**

**சாம்பர்** – சாம்பல், எரிந்த நீறு.

**சாம்பல்** – எரிபட்ட நீறு; வாடற்பூ; முதுமை; நாவல்மரம்; புகையிலை பருத்திப் பயிர்களைக் கெடுக்கும் பூச்சி.

**சாம்பல்மொந்தன்** – வாழைவகை.

**சாம்பலச்சி** – வெடியுப்பு.

**சாம்பலாண்டி** – உடல் முழுதும் சாம்பல் பூசிய பரதேசி; கோமாளி.

**சாம்பலொட்டி** – எருக்கு.

**சாம்பவம்** – சிவசம்பந்தமானது; சைவமதபேதம்; ஒரு புராணம்.

**சாம்பவ(வா)ன்** – சிவனை வழிபடுவோன்; இராமாயணத்தில் கூறப்படும் கரடிவேந்தன்.

**சாம்பவி** – பார்வதி; ஒரு தீட்சைவகை; நாவல் வகை.

**சாம்பற்பூசணி** – பூசணிவகை.

**சாம்பற்பூத்தல்** – நெருப்பில் நீறுபூத்தல்; காய், இலை முதலியவற்றில் சாம்பல்நிறம் படிதல்; சாம்பல்போல் உடல்வெளுத்தல்.

**சாம்பன்** – சிவன்.

**சாம்பார்** – பருப்புக்குழம்பு.

**சாம்பான்** – பறையர் பட்டப்பெயர்.

**சாம்பி** – உயரத் தூக்கும் கருவிவகை.

**சாம்பிராச்சியம்** – காண்க: **சாம்ராச்சியம்.**

**சாம்பிராணி** – காண்க: **பறங்கிச் சாம்பிராணி**; ஒரு மரவகை; மூடன்; தூபவர்க்கத்துள் ஒன்று.

**சாம்பிராணிபோடுதல்** – ஆவேசம் வரச்செய்தல்; தூண்டுதலைச் செய்தல்; நறும்புகை காட்டுதல்; புகழ்தல்.

**சாம்பு** – பறை; படுக்கை; புடைவை; பொன்; நாவல்மரம்.

**சாம்புதல்** – இழுத்தல்; அறைதல்; உணர்வழிதல்; வாடுதல்; கூம்புதல்; ஒடுங்குதல்; கெடுதல்; குவிதல்; ஒளிமழுங்குதல்.

**சாம்பு(பூ)நதம்** – நால்வகைப் பொன்னுள் ஒன்று; மேருமலைக்கு வடக்கிலுள்ள நாவற்சாறுள்ள ஆறு.

**சாம்ராச்சியம்** – தனியரசாட்சி; பெரும்பதவி.

**சாமக்காவல்** – இராக்காவல்.

**சாமக்கிரி, சாமக்கிரியை** – உணவுப்பண்டம்; துணைக்கருவி.

**சாமக்கோழி** – நள்ளிரவில் கூவுங் கோழி.

**சாமகண்டர்** – நீலகண்டமுடைய சிவன்.

**சாமகம்** – சாணைக்கல்.

**சாமகானம்** – சாமவேதம் பாடுதல்.

**சாமணம்** – தட்டார் கருவிவகை.

**சாமந்தம்** – ஒரு பண்வகை; பக்கம்.

**சாமந்தன்** – சிற்றரசன்; படைத்தலைவன்; அமைச்சன்.

**சாமந்தி** – செவ்வந்தி; பூச்செடிவகை; சீமைச் சாமந்தி.

**சாமம்** – ஏழரை நாழிகைகொண்ட காலம்; இடைச்சாமம்; சாமவேதம்; கானம் பண்ணப்படும் வேதச்செய்யுள்; ஓர் உபாயம்; கருமை; பச்சை; பஞ்சம்; அறுகு.

**சாமர்த்தியம்** – திறமை; பூப்படைதல்.

**சாமரபுட்பம்** – கமுகு; மாமரம்.

**சாமரம்** – கழு; கவரிமான் மயிரால் அமைந்த அரச சின்னம்; சிவதைக்கொடி.

**சாமரை** – கவரிமான் மயிரால் அமைந்த அரச சின்னம்.

**சாமளம்** – கருமை; பசுமை.

**சாமளாதேவி, சாமளை** – பசிய நிறமுடைய பார்வதி.

**சாமன்** – புதன்; மன்மதன் தம்பி.

**சாமாசி** – நடுநிலையாளன்; தூதன்; ஆலோசனை.

**சாமான்** – பண்டம், பொருள்.

**சாமானியம்** – சாதாரணம்; பொது; பெறுதற்கெளியது; முழுமை.

**சாமானியன்** – சாதாரண சக்தியுள்ள மனிதன்; தன் சாதியில் மட்டமானவன்.

**சாமி** – கடவுள்; முருகக்கடவுள்; அருகன்; குரு; தலைவன்; மூத்தோன்; தாய்; தலைவி; பொன்; செல்வம்; சாமை; மரியாதைச் சொல்.

**சாமிபோகம்** – மேல்வாரதாரருக்குக் கொடுக்கும் துண்டுவாரம்.

**சாமியம்** – ஒப்புமை; சொத்துரிமை.

**சாமியாடுதல்** – தெய்வமேறியதால் குறி சொல்லுதல்.

**சாமீகரம்** – பொன்.

**சாமீப்பியம், சாமீபம்** – அண்மை; ஒரு பதவி; கடவுளை அணுகியிருக்கும் நிலை.

**சாமுசித்தன்** – முற்பிறப்பிலே சரியை கிரியை யோக முடித்து ஞானத்தோடு பிறந்தவன்.

**சாமுண்டி** – துர்க்கை; அவுரிப்பூண்டு; நாணல்; பொன்னாவிரை.

**சாமுதம்** – கடுக்காய்; கோரைப்புல்.

**சாமேளம்** – சாப்பறை.

**சாமை** – ஒரு தானியம்; வரகு; கற்சேம்பு; பெருநெருஞ்சில்.

**சாமோபாயம்** – நான்கு சூழ்ச்சிகளுள் ஒன்று, இன்சொற் கூறிப் பகைவனைத் தன்வசமாக்கும் சூழ்ச்சி.

**சாமோற்பலம்** – யானைநெற்றியிலணியும் சிந்தூரம்.

**சாமோற்பவை** – பெண்யானை.

**சாய்** – ஒளி; அழகு; நிறம்; புகழ்; தண்டாங்கோரைப்புல்; செறும்பு.

**சாய்கால்** – செல்வாக்கு.

**சாய்த்தல்** – சாயச்செய்தல்; ஒரு பக்கமாக ஓட்டுதல்; கரைக்குச் செலுத்துதல்; கெடுத்தல்; மெய்ப்படுத்துதல்; முறித்தல்; மிகுதியாகக் கொடுத்தல்; மனம் சாயப்பண்ணுதல்.

**சாய்த்துக்கொடுத்தல்** – ஒருசேரக் கொடுத்தல்.

**சாய்த்துவிடுதல்** – தள்ளிக் கொல்லுதல்; ஒருசேரக் கொடுத்தல்; கவிழ்த்துவிடுதல்.

**சாய்தல்** – மெலிதல்; கவிழ்தல்; வளைதல்; திரண்டுசெல்லுதல்; நடுநிலைமை மாறுதல்; சார்தல்; நடந்தேறுதல்; ஒதுங்குதல்; கோள் முதலியவை சாய்தல்; படுத்தல்; தோற்றோடுதல்.

**சாய்ப்பிடம்** – படை பின்வாங்குமிடம்; சிறுகொட்டகை.

**சாய்ப்பு** – தாழ்வு; மலைச்சரிவு; சாய்வான கூரை; சாய்வு; இறப்பு; இரிதல்; மட்டவெற்றிலை; முகச்சாய்ப்பு.

**சாய்மணை** – சார்மணை; திண்டு.

**சாய்மரம்** – சிவதைக்கொடி.

**சாய்மானப்பலகை** – சாய்ந்து கொள்ளுதற்குரிய பலகை; துணிவெளுக்கும் பலகை.

**சாய்மானம்** – சார்மணை; சாய்கை; ஒரு சார்பு.

**சாய்வு** – சரிவு; ஒருசார்பு நிற்றல்; குறைவு; நிலைமைத் தாழ்வு; வளைவு; நோக்கம்; அழிவு.

**சாயக்காரன்** – வண்ணமிடுபவன்.

**சாயகம்** – அம்பு.

**சாயங்காலம், சாயந்திரம்** – மாலைநேரம்.

**சாயந்தீர்தல், சாயந்தோய்த்தல்** – சாயம்போடுதல்.

**சாயப்பணி** – செஞ்சாயமிடும் தொழில்.

**சாயப்பாக்கு** – சாயமேற்றிய பாக்கு.

**சாயப்பிடித்தல்** – காற்றுவாக்கில் கப்பலைச் செலுத்துதல்.

**சாயம்** – நிறம், வண்ணம்; உண்மைத் தன்மை; காண்க: சாயவேர்; மாலைப்பொழுது.

**சாயம்பிடித்தல்** – சாயம்போடுதல்.

**சாயரட்சை** – சாயங்காலம்; கோயிலில் நடக்கும் மாலைப்பூசை.

**சாயரி** – பாலைப் பண்வகை.

**சாயல்** – மென்மைத் தோற்றம்; அழகு; ஒப்பு; நிறம்; மேனி; மென்மை; சாய்வு; இளைப்பு; நிழல்; மாதிரி; நுணுக்கம்; துயிலிடம்; சார்பு; மஞ்சள்; மேம்பாடு; மேம்பாடாகிய சொல்; அருள்.

**சாயல்காட்டுதல்** – நடித்தல்; முன்குறியாகக் காட்டுதல்.

**சாயல்மாயலாய்** – சாடைமாடையாய்.

**சாயவிடுதல்** – மரக்கலத்தைக் கரைசேரவிடுதல்; சாய்த்தல்; ஏறவிடுதல்.

**சாயவேர்** – சாயமிடுதற்குதவும் பூண்டுவகை.

**சாயவேளாகொல்லி** – ஒரு பண்வகை.

**சாயனம்** – கள்; கிரகபுடம்; இரசாயனம்.

**சாயாக்கிரகம்** – காணாக் கோள்களாகிய இராகு கேதுக்கள்.

**சாயாகௌளம்** – ஒரு பண்வகை.

**சாயாதனயன்** – சாயையின் மகனாகிய சனி.

**சாயாநீர்** – கானல்நீர்.

**சாயாபடம்** – நிழற்படம்.

**சாயாபதி** – சாயையின் கணவனாகிய சூரியன்.

**சாயாபுத்திரன்** – காண்க: சாயாதனயன்.

**சாயாபுருடன்** – நிழல், வடிவாகத் தோன்றும் புருடன்.

**சாயான்னம்** – மாலைப்பொழுது; மாலையிற் செய்யும் வழிபாடு.

**சாயானகம்** – ஓந்தி, ஓணான்.

**சாயினம்** – மென்மையுள்ள மகளிர் கூட்டம்.

**சாயுச்சியம்** – ஆன்மா கடவுளிடம் ஒன்றும் நிலை.

**சாயை** – நிழல்; சூரியனின் தேவி; எதிரொலி; இராகுகேதுக்கள்; புகழ்; பாவம்; பிரதேசம்; தேயிலை; ஒப்பு.

**சார்** – கூடுகை; இடம்; ஏழனுருபு; பக்கம்; அணைக்கரை; தாழ்வாரம்; ஒரு மரம்; அழகு; ஒற்றன்; வகை.

**சார்க்கரம்** – கற்கண்டு; பாலின் ஆடை.

**சார்க்கேசபுஞ்சம்** – இலவம்பிசின்.

**சார்கொடுத்தல்** – அணுகவிடுதல்.

**சார்ங்கம்** – திருமாலின் ஆயுதங்களுள் ஒன்றான வில்.

**சார்ச்சார்** – இடந்தொறு மிடந்தொறும்.

**சார்ச்சி** – சாய்வு; தொடர்பு; சேருகை; வருகை; சார்விடம்.

**சார்த்து** – பத்திரம்; குறிப்பு.

**சார்த்துகவி** – ஒருவன் கவியிசையில் வேறொரு செய்யுள் இயற்றுவோன்.

**சார்த்துதல்** – இணைத்தல்; சாரச்செய்தல்.

**சார்த்துவகை** – தலைமை வகையானன்றி உவமையாகிய சார்புவகையாற் கூறும் முறை.

**சார்த்துவரி** – பாட்டுடைத் தலைவன் பதியொடும் பேரொடுஞ் சார்த்திப் பாடும் வரிப் பாட்டு வகை.

**சார்த்தூலம்** – புலி.

**சார்தல்** – சென்றடைதல்; புகலடைதல்; அடுத்தல்; பொருந்தியிருத்தல்; கலத்தல்; உறவு கொள்ளுதல்; ஒத்தல்; சாய்தல்.

**சார்ந்தவர், சார்ந்தா(தோ)ர்** – சுற்றத்தார்; நண்பர்.

**சார்ப்பு** – சார்ப்புக்கூரை; ஆதாரம்.

**சார்பறுத்தல்** – துறத்தல்; பிறப்பறுத்தல்.

**சார்பிலா(லோ)ர்** – முனிவர்; பகைவர்.

**சார்பிற்றோற்றம்** – இயற்கைத் தோற்றமுறை; சார்பெழுத்து; பௌத்தர் கூறும் பன்னிரண்டு நிதானங்கள்.

**சார்பின்சார்பு** – குறுகிய சார்பெழுத்து.

**சார்பு** – இடம்; பக்கம்; அடைக்கலம்; பற்று; பிறப்பு; பௌத்தர் கூறும் பன்னிரண்டு நிதானங்கள்; ஒருதலை நிற்றல்; அண்மை; கூட்டுறவு; பொருத்தம்; சார்ப்புக்கூரை; புகலிடம்; கிட்டுகை.

**சார்புநூல்** – முதல் நூல் வழிநூல்களது பொருட் கூட்டத் திரிபு வேறுடைய நூல்.

**சார்பெழுத்து** – குற்றியலிகரம், குற்றியலுகரம் முதலிய சார்பில் தோன்றும் எழுத்து.

**சார்மணை** – சாய்ந்துகொள்ளுதற்காகத் திண்ணைகளில் அமைக்கப்படும் சாய்மானத் திண்டு.

**சார்மானம்** – காண்க: **சாய்மானம்.**
**சார்வணை** – சாய்ந்திருத்தற்குரிய அணை.
**சார்வபௌமம்** – வடதிசை யானை.
**சார்வபௌமன்** – ஒருவனைப் பணியாது உலகாள்வோனாகிய பேரரசன்.
**சார்வரி** – அறுபதாண்டுக் கணக்கில் முப்பத்து நான்காம் ஆண்டு.
**சார்வாரம்** – கச்சின் தலைப்பு.
**சார்வு** – இடம்; ஒட்டுத்திண்ணை; புகலிடம்; ஆதாரம்; துணை; வழிவகை; பற்று; இழவோலை; அயலிடம்; ஒருதலைப்பட்சம்.
**சார்வோலை** – முதிர்ந்த குருத்தோலை.
**சாரகம்** – தேன்; இந்துப்பு.
**சாரங்கபாணி** – சாரங்கத்தைக் கையிலுடைய திருமால்.
**சாரங்கம்** – மான்; வானம்பாடி; யானை; மேகம்; குயில்; வில்; வண்டு; ஒரு பண்; திருமால் வில்; குறிஞ்சாக்கொடி; சிறுகுறிஞ்சாக்கொடி.
**சாரங்கன்** – திருமால்; குதிரைவகை.
**சாரங்கி** – நரம்பு வாத்தியவகை.
**சாரசம்** – தாமரை; கொக்கு; வெண்ணாரை; இனியவோசை; சீமைநன்னாரி.
**சாரசன்** – சோரபுத்திரன்.
**சாரசனம்** – மாதர் இடையணிவகை.
**சாரசியம்** – இனிமை.
**சாரணர்** – ஒற்றர்; தூதுவர்; சமண பௌத்தருள் சித்திகளடைந்தோர்; தேவகணத்தாருள் ஒரு சாரார்; நாட்டுத்தொண்டர்.
**சாரணை** – ஒரு பூடுவகை.
**சாரத்தியம்** – தேரோட்டுந் தொழில்.
**சாரத்தின்சத்துரு** – முட்டை.
**சாரத்துவம்** – விபசாரம்.
**சாரத்துளை** – சாரக்கட்டை வைக்கும் சுவர்த் துளை.
**சாரதம்** – பூதம்; இனியவோசை; ஓர் இசைப் பாட்டுவகை.
**சாரதர்** – பூதகணத்தார்.
**சாரதா** – கலைமகள்.
**சாரதி** – தேரோட்டி; புலவன்.
**சாரதை** – காண்க: **சாரதா.**
**சாரப்பருப்பு** – காட்டுமாவிரை.
**சாரம்** – மேலேறக் கட்டும் மரம்; மேடு; கோளின் இயக்கம்; சாறு; இனிமை; மருந்து; சிறந்தது; பயன்; ஆற்றல்; மரவயிரம்; இலுப்பை; கொட்டைமுந்திரிகைமரம்; சித்திரப் பாலாடைப் பூடு; நவச்சாரம்; வண்ணான்காரம்; காரச் சாம்பல்; விபசாரம்; வடித்தெடுத்த பகுதி; மரவகை.
**சாரமாக்குதல்** – பொருட்படுத்துதல்.
**சாரமிறக்குதல்** – சாறுபிழிதல்; சாற்றை உட்செலுத்துதல்; கட்டடச் சாரத்தைப் பிரித்தல்.
**சாரமேயன்** – நாய்.
**சாரல்** – கிட்டுகை; பக்கம்; பக்கமலை; மலை; தூவானம்; மருதயாழிசை; தூற்றல்.
**சாரலம்** – எள்.
**சாரற்கட்டு** – மலையில் கோடைக்காலத்தில் மேகம் நிறைந்திருத்தல்.
**சாரன்** – ஒற்றன்; குதிரைவகை; சோரநாயகன்.
**சாராம்சம்** – வடித்தெடுத்த பகுதி; பயன்.
**சாராயம்** – காய்ச்சி வடித்த மது.
**சாரி** – வட்டமாயோடுகை; நடை; ஊர்திமீது செல்லுகை; உலாவல்; கூட்டம்; இசைக்கருவி வகை; பக்கம்; சூதாடுகாய்; தடவை; மாதர் சீலைவகை; அஞ்சனபாடாணம்.
**சாரிகை** – வட்டமாயோடல்; வையாளி; கதி; சுழற்காற்று; நாகணவாய்ப்பறவை; கவசம்; சுங்கம்; பக்கம்.
**சாரிகொள்ளுதல்** – நாட்டியத்தில் இடவலமாக ஆடுதல்.
**சாரிசம்** – கறியுப்பு.
**சாரிசெய்தல்** – வரியினின்று நீக்குதல்; நிலம் முதலியவற்றைச் சாசனம்மூலம் உதவுதல்; இழந்த அலுவலைத் திரும்பக் கொடுத்தல்; ஆணையை உரியோர்க்குச் சேர்த்தல்.
**சாரித்தல்** – கீழே விழச்செய்தல்.
**சாரித்திரம்** – ஒழுக்கம்; வரலாறு.
**சாரிதம்** – இனிய குரல்.
**சாரிநாதன்** – கத்தூரி விலங்கு.
**சாரிபம், சாரிபை** – காண்க: **நன்னாரி.**
**சாரியம்** – எட்டிமரம்; நன்னாரி.
**சாரியல்** – இந்துப்பு.
**சாரியன்** – ஒழுக்கமுடையவன்.
**சாரியை** – சார்ந்துவரும் இடைச்சொல்; குதிரையின் சுற்றுவரவு; வீரனுடைய நடைவகை; ஆடல்வகை.
**சாரீரகம்** – உடலோடு சம்பந்தப்பட்டது, சாரீர சம்பந்தமானது; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; காண்க: **பிரம்மசூத்திரம்.**
**சாரீரம்** – உடலோடு தொடர்புடையது; இனிய குரல்.
**சாரு** – அழகு; கிளி.
**சாருகம்** – கொலை.
**சாருகன்** – கொலையாளன்.
**சாருசம்** – கல்லுப்பு.
**சாரூப்பியம்** – கடவுளைப்போல் உருப்பெற்றிருத்தல்.

**சாரூபம்** – கடவுளைப்போன்ற வடிவம் பெறுதல்; இணக்கம்; பொன்வகை.

**சாரூரக(ச)ம்** – காண்க: **சாருசம்.**

**சாரை** – ஒரு பாம்புவகை; நீளமான கோடு.

**சாரையோட்டம்** – சாரைப்பாம்பின் போக்கு; நேரே ஓடும்வகை.

**சாரைவாலன்** – நீண்ட வாலுள்ள எருது; புகையிலைவகை.

**சாரோசி** – நவச்சாரம்.

**சாரோலை** – காண்க: **சார்வோலை.**

**சால்** – நிறைவு; நீர்நிரப்பும் பானை; நீர் இறைக்கும் கலம்; உழவுசால்; கும்பராசி; ஆண்டு.

**சால்கட்டுதல்** – தலைச்சால் உழுதல்; சாலில் விதைத்துச் செல்லுதல்.

**சால்பு** – மேன்மை; நற்குணம்; சான்றாண்மை; தன்மை; மனவமைதி; கல்வி.

**சால்புமுல்லை** – சான்றோருடைய அமைதிகூறும் புறத்துறை.

**சால்புளி** – முறைப்படி.

**சால்வயிறு** – பெருவயிறு.

**சால்வளைத்தல்** – ஏர்ச்சால் உழுதல்.

**சால்வை** – மயிர்க்கம்பளம்; பொன்னாடை.

**சால** – மிகவும்.

**சாலக்காரன்** – மாயவித்தைக்காரன்; வஞ்சகன்.

**சாலக்கிராமம்** – காண்க: **சாளக்கிராமம்.**

**சாலக்கு** – சூழ்ச்சி; போலி நடிப்பு; திறமை.

**சாலகபங்கடர்** – இராக்கதர்.

**சாலகம்** – வலை; சிலந்திவலை; யாகபத்தினியின் நெற்றியிலணியும் அணி; பறவைக்கூடு; பலகணி; அரும்பு; சாக்கடை; சிறுகுறிஞ்சா; மாயவித்தை.

**சாலகராகம்** – ஒரு பண்வகை.

**சாலகன்** – விரிவாகப் பேசுகிறவன்; சகலன்.

**சாலகிரி** – அழுக்ககற்றுமிடம்; அரண்மனையின் ஒதுக்குப் புரை.

**சாலடித்தல்** – சால்பட உழுதல்.

**சாலபஞ்சிகை** – மரப்பாவை.

**சாலம்** – கூட்டம்; மதில்; ஆச்சா; பலகணி; வலை; பூவரும்பு; கல்வி; தாழ்வாரம்; பெருமை; வஞ்சகம்; மாயவித்தை; நடிப்பு; சபை; அகலம்; குறளை; மருத்துவநூல்; கொடிமரம்; வகை.

**சாலம்பம்** – பற்றுக்கோடுள்ளது.

**சாலஜாலம்** – வஞ்சகம்.

**சாலர்** – அலங்காரத் தொங்கல்கள்; நெய்தல் நில மக்கள்; கைத்தாளவகை.

**சாலரி** – ஒரு வாத்தியவகை.

**சாலாதார்** – பெருமையற்றவர்.

**சாலாபோகம்** – அறச்சாலைகளுக்கு விடப்படும் இறையிலி நிலம்.

**சாலாரம்** – ஏணி; பறவைக்கூடு; படி.

**சாலி** – செந்நெல்; நெற்பயிர்ப் பொது; கள்; புழுகுசட்டம்; அருந்ததி; கவசம்; மராமரம்; வேலமரம்.

**சாலிகன்** – நெசவுத்தொழில் செய்பவன்; சாலியன் நெய்த ஆடை.

**சாலிகை** – கவசம்; சுங்கவரி.

**சாலியன்** – துணி நெய்வோன்; இலவங்கப் பட்டையை உரிக்கும் யாழ்ப்பாணத்துச் சாதியான்; ஆடை.

**சாலிவாகனசகாப்தம்** – கி.பி. 78ஆம் ஆண்டு சித்திரை மாதத்தில் தொடங்கிச் சாலிவாகனன் பேரால் வழங்கும் ஆண்டு.

**சாலினி** – அருந்ததி; தேவராட்டி; பேய்ப்பீர்க்கங்கொடி; கள்வாணிச்சி.

**சாலுகம்** – சாதிக்காய்; தாமரை முதலியவற்றின் கிழங்கு.

**சாலுதல்** – நிறைதல்; பொருந்துதல்; முற்றுதல்; மாட்சிபெறுதல்.

**சாலூகம்** – காண்க: **சாலுகம்.**

**சாலூரம்** – தவளை; மேன்மை.

**சாலேகம்** – சாளரம்; பூவரும்பு; சந்தனம்; சிந்தூரம்; சலதாரை.

**சாலேசரம்** – வெள்ளெழுத்து.

**சாலேயம்** – செந்நெல் விளையும் நிலம்; சிறுதேக்கு.

**சாலை** – உணவளிக்கும் அறச்சாலை; பள்ளிக்கூடம்; குதிரை, யானை முதலியவற்றின் கூடம்; பசுக்கொட்டில்; பொதுமண்டபம்; வீடு; வேள்விக்கூடம்; இருபக்கமும் மரம் செறிந்த பாதை.

**சாலோக்கியம், சாலோகம்** – கடவுளுடன் ஓரிடத்தில் உறைகை.

**சாவகக்குறிஞ்சி** – குறிஞ்சி யாழ்த்திறவகை.

**சாவகநோன்பி** – இல்லறத்திலிருந்து நோன்பு காப்போன்.

**சாவகம்** – ஒரு தீவு; ஒரு மொழி.

**சாவகன்** – சாவகத் தீவினன்; மாணாக்கன்; சனி; காண்க: **சாவகநோன்பி.**

**சாவகாசம்** – விரைவின்மை; வசதி, சௌகரிய சமயம்.

**சாவட்டை** – ஈர்; பயிர்ச்சாவி; மெலிந்தவன்(ள்); உலர்ந்த வெற்றிலை; தட்டாரப்பூச்சி; சிறு வட்டத் தலையணை.

**சாவட்டைப்பயிர்** – சாவியான பயிர்.

**சாவடி** – வழிப்போக்கர் தங்குமிடம்; ஊர்ச் சாவடி; கச்சேரி; ஊர்ப் பொதுவிடம்; இறப்பு விளைக்கத்தக்க அடி.

**சாவணம்** – கம்மியர் கருவியுள் ஒன்று; மூக்குமயிர் பிடுங்குங் கருவி; நாணல்; நாளம்.

**சாவதானம்** – எச்சரிக்கை; விரைவின்மை.

**சாவம்** – சாத்தீட்டு; சாபம்.

**சாவயம்** – உறுப்புகளோடு கூடியது.

**சாவரம்** – பாவம்; குற்றம்.

**சாவல்** – சேவல்.

**சாவற்கட்டு** – கோழிப்போர்.

**சாவற்பண்ணை** – படர்செடிவகை.

**சாவறுதி** – இறக்குந்தறுவாய்; வலிவின்மை.

**சாவாக்கிழங்கு** – கருடன்கிழங்கு.

**சாவாஞ்செத்தவன்** – வலுவற்றவன்.

**சாவாமூலி** – மயிற்சிகைப்பூண்டு; வேப்பமரம்.

**சாவாவரம்** – இறவாதபடி கடவுளிடம் பெறும் வரம்.

**சாவாவுடம்பு** – புகழ்.

**சாவி** – மணிபிடிக்காமல் பதராய்ப்போன கதிர்; திறவுகோல்; அச்சாணி.

**சாவிகொடுத்தல்** – கடிகாரம் முதலியவை ஓடு வதற்காக அவற்றின் சாவியை முறுக்குதல்; தூண்டுதல்.

**சாவித்தல்** – திட்டுதல்.

**சாவித்திரம்** – பூணூல்.

**சாவித்திரி** – கலைமகள், பிரமன் மனைவியருள் ஒருத்தி; சத்தியவானின் மனைவி; இரவு 15 முகூர்த்தத்துள் 13ஆவது; காயத்திரி மந்திரம்; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.

**சாவிபோதல்** – பயிர் பட்டுப்போதல்.

**சாவிவைக்கோல்** – சாவியாய்ப்போன பயிரின் வைக்கோல்.

**சாவீடு** – இழவுநேர்ந்த வீடு.

**சாவு** – இறப்பு; பிசாசம்.

**சாவெடி** – பிணநாற்றம்.

**சாவெழுத்து** – நச்செழுத்து.

**சாவேரி** – ஒரு பண்வகை.

**சாவோலை** – இழவோலை.

**சாழல்** – மகளிர் விளையாட்டுவகை; ஒரு நூல் வகை; வரிக்கூத்துவகை; கரடி.

**சாழை** – குடிசை; மகளிர் கைகொட்டி ஆடும் விளையாட்டு.

**சாழைகொட்டுதல்** – கைகொட்டுதல்.

**சாழையகத்தி** – ஓர் அகத்திமரவகை.

**சாளக்கிராமம்** – திருமால் உருவமாகக்கொண்டு பூசித்தற்குரிய ஒருவகைச் சிலை; ஒரு திருமால் தலம்.

**சாளகம்** – இசைப்பாவுக்குரிய சாதியோசை மூன்றனுள் ஒன்று.

**சாளம்** – குங்கிலியம்; மணல்.

**சாளர்** – செவ்வழி யாழ்த்திறவகை.

**சாளரம்** – பலகணி; காண்க: **சாலகராகம்.**

**சாளா** – ஒரு மீன்வகை.

**சாளி** – வண்டு; குடைவேல்; பணப்பை.

**சாளிகம்** – வண்டு.

**சாளிகை** – வண்டு; பணப்பை; சாடி.

**சாளியல்** – பணப்பை.

**சாளியா** – ஒரு மருந்துவிதை.

**சாளேச(சு)ரம்** – வெள்ளெழுத்து.

**சாளை** – ஒரு மீன்வகை; குடிசை; வழிந்துவிழும் வாய்நீர்.

**சாளையிறக்குதல்** – குடிசை கட்டுதல்.

**சாளைவாய்** – நீர்வடியும் வாய்.

**சாற்சமந்தம்** – மலையாத்திமரம்.

**சாற்றமுது** – இரசம்.

**சாற்று** – விளம்பரப்படுத்துகை; ஓசை.

**சாற்றுதல்** – விளம்பரப்படுத்தல்; விரித்துரைத் தல்; சொல்லுதல்; நிறைத்தல்; அடித்தல்; புகழ்தல்; அமைத்தல்.

**சாற்றுவாய்(ரி)** – காண்க: **சாளைவாய்.**

**சாற்றோலை** – ஆட்டுக்கிடையில் இடையர்கள் ஒதுங்கியிருக்கும் மறைவோலை.

**சாறடை(ணை), சாறணத்தி** – காண்க: **சாரணை.**

**சாறயர்தல்** – விழாக் கொண்டாடுதல்.

**சாறிப்போதல்** – பயனின்றிப் போதல்.

**சாறு** – இலை, பழம் முதலியவற்றின் சாறு; மணப்பண்டங்கள் ஊறின நீர்; இரசம்; திரு விழா; பூசை; திருமணம்; குலை.

**சாறுதல்** – நழுவுதல்; வழுக்குதல்; சரிதல்; பெருக்குதல்; கொத்துதல்.

**சாறுதாரி** – கரிசலாங்கண்ணி.

**சாறுபிழிதல்** – இரசமெடுத்தல்; வருத்துதல்; நன்றாய் அடித்தல்.

**சாறுவேளை** – பூண்டுவகை.

**சான்மலி** – இலவமரம்; இலவந்தீவு; ஒரு நரகம்.

**சான்மலிசாரம்** – இலவம்பிசின்.

**சான்றவர்** – அறிஞர்; சாணார்.

**சான்றவன்** – சாட்சி கூறுவோன்.

**சான்றாண்மை** – கல்வி கேள்விகளில் நிறைந்து ஒழுகுந் தன்மை; பெருந்தன்மை; பொறுமை; கள்ளிறக்குந் தொழில்.

**சான்றார்** – காண்க: **சான்றோர்.**

**சான்று** – சாட்சி.

**சான்றோர்** – அறிவொழுக்கங்களால் நிறைந் தோர்; சங்கப் புலவர்; வீரர்.

**சான்றோன்** – சூரியன்; அறிவொழுக்கங்களாற் சிறந்தவன்; மிருகசீரிட நாள்.

**சான்னித்தியம்** – தெய்வம் முதலியவற்றின் வெளிப்பாடு.

**சானகம்** – வில்.

**சானகி** – சீராமன் மனைவியாகிய சீதை; பொன்னாங்காணிக்கீரை; கொற்றான் கொடி; மூங்கில்.

**சானம்** – பெருங்காயம்; சாதிலிங்கம்; தியானம்; அம்மி; உரைகல்.

**சானவி** – கங்கையாறு.

**சானி** – மனைவி; பொதுமகள்.

**சானிகை** – மண்ணாற் செய்த தட்டு.

**சானித்தல்** – தியானித்தல்.

**சானித்தியம்** – காண்க: **சான்னித்தியம்.**

**சானினி** – சிறுகீரை; சேம்புச்செடி.

**சானு** – தாழ்வரை; மலை; முழந்தாள்.

## சி

**சி** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ச்+இ); சிவம்; சிரஞ்சீவி; ஒரு பெண்பால் விகுதி.

**சி∴றாழிசைக் கொச்சகக் கலிப்பா** – சில தாழிசை களோடு பிறவுறுப்புகளையும் கொண்டு முடியும் கலிப்பாட்டு.

**சிக்க** – நன்றாய்; சுருக்கமாக.

**சிக்கடி** – அவரைக்கொடி; சிக்கல்.

**சிக்கடிமுக்கடி** – தாறுமாறு; முட்டுப்பாடு.

**சிக்கணம்** – மழமழவென்றுள்ளது, வழுவழுப் பானது.

**சிக்கத்துப்புழுதி** – உழுதும் விதைக்கப்படா துள்ள நன்செய்.

**சிக்கம்** – மெலிவு; சிறைச்சாலை; ஈயம்; வெள்ளி; செம்பு; உறி; வலை; குடுமி; உச்சி; சீப்பு; வலைப்பை.

**சிக்கர்** – கள்; தலைநோவுடையார்.

**சிக்கரத்தெளியல்** – உசிலம்பட்டையிலிருந்து இறக்கும் கள்.

**சிக்கல்** – தாறுமாறு; முட்டுப்பாடு; காக்கைக் கல்; இளைத்தல்; அகப்பட்டுக்கொள்ளுதல்; ஓர் ஊர்.

**சிக்கறுக்கி** – சிணுக்குவாரி என்னும் சீப்புவகை.

**சிக்கறுத்தல்** – நூல் முதலியவற்றைச் சிக்கு விடுத்தல்; சிக்கலான வழக்கைத் தீர்த்தல்; துறவறம் புகுதல்.

**சிக்கனம்** – செட்டு; இறுக்கம்.

**சிக்கனவு** – திண்மை; மனவுறுதி; சிக்கனம்.

**சிக்கி** – நாணம்.

**சிக்கிமுக்கி, சிக்கிமுக்கிக்கல்** – நெருப்புண்டாக்கும் கல்.

**சிக்கு** – நூல் முதலியவற்றின் சிக்கு; சிக்கலான செயல்; கண்ணி; தடை; மாட்டிக்கொள் ளுகை; ஐயம்; உறுதி; எண்ணெய்ச் சிக்கு; சிக்கு நாற்றம்; மாசு.

**சிக்குக்கழித்தல்** – கலியாணகாலத்தில் மணமக னுக்குச் செய்யும் மயிர்கழி சடங்கு.

**சிக்குண்ணுதல்** – அதிக முடிச்சுப்படுதல்; அகப் படல்.

**சிக்குதல்** – சிக்குப்படுதல்; இறுகுதல்; அகப் பட்டுக்கொள்ளுதல்; கிடைத்தல்; இளைத்தல்.

**சிக்குப்பலகை** – கலைமகள் பீடம், புத்தகங் களை விரித்துவைத்துப் படிப்பதற்கு உதவும் கருவிவகை.

**சிக்குப்பாடு, சிக்குப்பிக்கு** – தொந்தரவு; சிக்கலாயிருப்பது; இடையூறு.

**சிக்குரு** – முருங்கைமரம்.

**சிக்குவாங்கி** – சீப்புவகை.

**சிக்குவாங்குதல்** – மயிர் முதலியவற்றின் சிக்கல் எடுத்தல்.

**சிக்குவாரி** – காண்க: **சிக்குவாங்கி.**

**சிக்குவை** – நாக்கு; தண்ணீர்விட்டான்கிழங்கு.

**சிக்கென** – உறுதியாக; இறுக; உலோபத்தன மாக; விரைவாக.

**சிக்கெனவு** – உறுதி; கையிறுக்கம்.

**சிக்கை** – பயிற்சி; இசைப்பயிற்சி; தண்டனை.

**சிகண்டம்** – மயிற்றோகை; தலைமுடி.

**சிகண்டி** – மயில்; திருமால்; அலி; அம்பு; கோழிச் சேவல்; பாலையாழினோசை; இசைநுணுக்க நூலாசிரியர்; தொல்லைகொடுப்பவன்; சிற்றாமணக்கு; தலைமுடி.

**சிகண்டிகம்** – கோழி.

**சிகண்டிகை** – கருங்குன்றி.

**சிகண்டிசன்** – வியாழன்.

**சிகதம், சிகதை** – வெண்மணல்.

**சிகநாதம்** – அப்பிரகம்.

**சிகரம்** – மலையுச்சி; மலை; உயர்ச்சி; கோபுரம்; விற்பிடி; நீர்த்துளி; அலை; புளகம்; வட்டில்; காக்கை; கிராம்பு; சுக்கு; இலவங்கம்; கவரிமா.

**சிகரம்வைத்தல்** – கோபுரம் முதலியவற்றின் உச்சியில் கலசம் வைத்தல்; அணிகலனில் கொண்டைவைத்தல்; மனத்திற் பதியும்படி திறமையாகப் பேசுதல்.

**சிகரி** – மலை; கோபுரம்; கருநாரை; புல்லுருவி; எலிவகை.

**சிகரிகை** – நேர்வாளச்செடி.
**சிகரிநிம்பம்** – மலைவேம்பு.
**சிகரியந்தம்** – புல்லுருவி.
**சிகல்** – குறைவு; கேடு.
**சிகல்(லு)தல்** – குறைதல்; கெடுதல்.
**சிகலோகம்** – காண்க: **அகில்.**
**சிகழி** – தலைமயிரின் முடிப்பு.
**சிகழிகை** – மயிர்முடிப்பு; தலையைச் சூழ அணியும் மாலைவகை; மாலை.
**சிகா** – எலி; முத்திரை; முடி.
**சிகாமணி** – தலையில் அணியும் மணி; சிறந்தோன்.
**சிகாரி** – வேட்டை; வேட்டைக்காரன்.
**சிகாரியான்** – வேட்டைக்காரன்; வேட்டையில் உதவி ஆள்.
**சிகாவர்க்கம்** – சுவாலைக் கூட்டம்.
**சிகாவரம்** – பலாமரம்.
**சிகாவலம்** – மயில்; பாசி.
**சிகாவளம்** – மயில்.
**சிகாவிம்பம்** – வட்டவடிவாகிய தலை.
**சிகி** – மயில்; நெருப்பு; கேது; ஆமணக்கு; புத்தர்களுள் ஒருவர்; அம்பு; எருது; குதிரை; சிலம்பு; சேவல்; விளக்கு.
**சிகிக்கிரீவம், சிகிகண்டம்** – மயில்துத்தம்.
**சிகிச்சை** – நோய்க்குச் செய்யும் பரிகாரம், மருத்துவம்.
**சிகிடிமா** – கொட்டைமுந்திரிகைமரம்.
**சிகிமுனி** – காண்க: **சிக்கிமுக்கிக்கல்.**
**சிகில்** – ஆயுதங்களைத் துலக்குகை.
**சிகிலம்** – சேறு.
**சிகிவாகனன்** – மயில்வாகனன், முருகக்கடவுள்.
**சிகுரம்** – மயிர்ப்பொது.
**சிகுவை** – நாக்கு; பத்து நாடிகளுள் ஒன்று; வாக்கு.
**சிகை** – குடுமி; தலைமயிர்முடி; தலையின் உச்சி; மயிற்கொண்டை; பந்தம்; சுடர்; உண்டிக் கவளம்; வட்டி; நிலுவை.
**சிகைக்காய்** – சீயக்காய்.
**சிகைதாடு, சிகைதாடுகுச்சு** – சீயக்காய்; தலையணிவகை.
**சிகைமாலை** – தலைமாலை; வாசிகை.
**சிங்கங்கீறுதல்** – அக்கிநோய்க்குச் செம்மண்ணால் சிங்கவடிவம் எழுதுதல்; கிட்டிப்புள்ளு விளையாட்டில் எண் குறித்தல்.
**சிங்கச்சுவணம்** – உயர்தரப் பொன்.
**சிங்கடியப்பன்** – சிங்கடி என்னும் பெண்ணுக்குத் தந்தையொத்த சுந்தரமூர்த்திநாயனார்.
**சிங்கத்திசை** – தெற்கு.
**சிங்கநகக்கை, சிங்கநகம்** – ஒரு கையின் விரல்களைச் சிங்க நகங்கள்போல் அகற்றி வளைத்தலாகிய அபிநயக்கைவகை.
**சிங்கநாதம்** – அரிமா முழக்கம்; வீராவேசத்தால் ஆரவாரித்தல்; ஊதுகொம்பு; போரில் வீரர் செய்யும் முழக்கம்; தொந்தரவு.
**சிங்கநோக்கு** – சிங்கத்தைப்போல் கழுத்தைத் திருப்பிப் பின்னும் முன்னும் பார்த்தல், அரிமா நோக்கம்.
**சிங்கப்பல்** – முன்புறம் நீண்டுள்ள துணைப்பல்.
**சிங்கப்பிரான், சிங்கப்பெருமாள்** – நரசிங்கமூர்த்தி.
**சிங்கம்** – மிக்க வன்மையுள்ள ஒரு விலங்கு; சிம்மராசி; ஆடாதோடை; கொம்பு; வாழையின் இளங்கன்று; ஒரு விளையாட்டு அளவு; வேளாளரின் பட்டப்பெயர்; சரகாண்டபாடாணம்; மணப்பண்டவகை.
**சிங்கம்புள்** – கிட்டிப்புள் என்னும் ஒரு விளையாட்டுக் கருவி.
**சிங்கமடங்கல்** – சிங்கக்குட்டி.
**சிங்கமடித்தல்** – கிட்டியடித்தல்.
**சிங்கமதாணி** – வெற்றிவேந்தன் மார்பில் அணியும் சிங்கமுகப் பதக்கம்.
**சிங்கமுகம்வைத்தல்** – கோபங்கொண்டிருத்தல்.
**சிங்கமுகவோடம்** – சிங்கத்தின் உருவை முகப்பிற் கொண்ட தோணி.
**சிங்கல்** – குறைதல்; இளைத்தல்.
**சிங்கவல்லி** – தூதுளைக்கொடி.
**சிங்கவாகினி** – துர்க்கை.
**சிங்கவாதனம்** – காண்க: **சிங்காசனம்.**
**சிங்கவிளக்கெரிக்கை** – பகைவர் தலையிலே சாணத்தையிட்டு விளக்கேற்றி அவமதிக்கை.
**சிங்கவேரம்** – சுக்கு; இஞ்சி; ஒரு மருந்துவகை.
**சிங்கவேறு** – ஆண்சிங்கம்; வீரன்.
**சிங்களம்** – இலங்கை; சிங்களமொழி; ஒரு கூத்து.
**சிங்களர்** – ஈழநாட்டிலுள்ள சிங்களமொழி பேசுவோர்.
**சிங்கன்** – குறவன்.
**சிங்கன்வாழை** – ஒரு வாழைவகை.
**சிங்காசனம்** – அரியணை, சிங்கம் தாங்குவது போல் அமைக்கப்பட்ட இருக்கை; தவிசு.
**சிங்காடி** – காண்க: **சிங்காணி.**
**சிங்காணம்** – மூக்குச்சளி.
**சிங்காணி** – உண்டை வைத்து அடிக்கும் ஒரு வில்வகை.
**சிங்காதனம்** – காண்க: **சிங்காசனம்.**
**சிங்காரக்காரன்** – அலங்கார உடையுள்ளவன்.
**சிங்காரத்தோட்டம், சிங்காரத்தோப்பு** – பூந்தோட்டம்; அடிசில் தோட்டம்.
**சிங்காரநடை** – ஒய்யாரநடை, பெருமிதநடை.

**சிங்காரப்பாய்ச்சல்** – குழந்தைகள் முதலியோரின் துள்ளுநடை.
**சிங்காரப்பேச்சு** – வேடிக்கைப்பேச்சு; சரசப் பேச்சு; அலங்காரப்பேச்சு.
**சிங்காரம்** – அலங்காரம்; ஒன்பான் சுவையுள் ஒன்றாகிய இன்பச்சுவை.
**சிங்காரி** – அலங்காரமுடையவன்(ள்).
**சிங்காரித்தல்** – அலங்கரித்தல்; அலங்கரித் துரைத்தல்.
**சிங்கி** – நஞ்சு; ஓர் உலோக நஞ்சுவகை; பின்னல்; குறத்தி; இராகுவின் தாய்; நாணமற்றவள்; துணங்கைக்கூத்து; பெண்சிங்கம், மிருதார சிங்கி; கற்கடகசிங்கி; கடுக்காய்; மீன்வகை; சிங்கிறால்; வல்லாரை; மான்கொம்பு.
**சிங்கிகம்** – சிறுவழுதலை என்னும் செடிவகை.
**சிங்கிகை புதல்வன்** – கேது.
**சிங்கிகொள்ளுதல்** – வயப்படுத்துதல்.
**சிங்கிட்டம்** – குடசப்பாலைக்கொடி.
**சிங்கிநாதம்** – இடம்பம்செய்கை; வீண் காலங் கழிக்கை; வீண்பேச்சு.
**சிங்கியடித்தல்** – ஒரு விளையாட்டுவகை; கூத் தாடுதல்; வறுமையால் முட்டுப்படுதல்; பெண்மைக்குணமின்றி ஒழுகுதல்.
**சிங்கிரம்** – காண்க: சிங்கிட்டம்.
**சிங்கிலி** – குன்றிக்கொடி; காண்க: புலிதொடக்கி; இண்டஞ்செடி.
**சிங்கிவேரம்** – சுக்கு.
**சிங்கினி** – வில்; வில்நாண்.
**சிங்குதல்** – குன்றுதல்; இளைத்தல்; கழிந்து போதல்; அழிதல்; சிக்கிக்கொள்ளுதல்.
**சிங்குவம்** – சுக்கு.
**சிங்குவை** – நாக்கு.
**சிங்ஙுவை** – நாக்கு; பத்து நாடியுள் ஒன்று.
**சிச்சிரம், சிச்சிலி** } – மீன்கொத்திப்பறவை.
**சிச்சிலிப்பொறி** – மதிற்பொறிவகை.
**சிச்சிலுப்பான், சிச்சிலுப்பை** } – அம்மைநோய்வகை.
**சிச்சீ** – இகழ்ச்சிக்குறிப்பு.
**சிசம்** – தமரத்தைமரம்.
**சிசிரம்** – சந்தனம்; காண்க: சிசிரருது.
**சிசிரருது** – மாசி பங்குனி மாதங்களாகிய பின் பனிக்காலம்.
**சிசினம்** – ஆண்குறி.
**சிசு** – குழந்தை; நூக்கமரம்; கருப்ப சிசு.
**சிசுகம்** – ஒரு மரவகை; கடற்பன்றி; குழந்தை.
**சிசுத்துவம்** – குழந்தைத்தன்மை.
**சிசுநாயகம்** – சிறுவர் ஆளும் கட்சி.
**சிசுமாரம்** – கடற்பன்றி; முதலை.
**சிசுரம்** – கிலுகிலுப்பைச்செடி.
**சிசுரூசை(டை)** – குற்றேவல்; பணிவிடை.
**சிசுவத்தி, சிசுவதை** } – குழந்தையைக் கொல்லல்.
**சிஞ்சிதம்** – அணிகலவொலி.
**சிஞ்சினீ** – வில்நாண்.
**சிஞ்சுபம்** – அசோகமரம்; நூக்கமரம்.
**சிஞ்சுமாரம்** – முதலை.
**சிஞ்சுரம்** – புளி.
**சிஞ்ஞாசு** – மெய்யறிவை அடைய விரும்புவோன்.
**சிட்சகன்** – ஆசிரியன்; தண்டிப்பவன்; மாணாக் கன்.
**சிட்சித்தல்** – தண்டித்தல்; கற்பித்தல்.
**சிட்சிப்பு** – தண்டனை; படிப்பிக்கை.
**சிட்சை** – தண்டனை; பயிற்சி; இசைப்பயிற்சி முதலியன; வேதாங்கத்துள் ஒன்று.
**சிட்சைப்படுதல்** – அறிவு பயிற்றப்படுதல்; ஏவல் செய்தல்.
**சிட்டங்கட்டுதல்** – செங்கல் உருகி உருக்குக் கல் ஆகுதல்; திரிந்து கருகிப்போதல்.
**சிட்டப்பட்டார்** – அடியார்.
**சிட்டபரிபாலனம்** – நல்லோரைக் காத்தல்.
**சிட்டம்** – இரும்புக்கிட்டம்; பெருமை; நீதி; உயர்ந்தது; நூற்சிட்டம்.
**சிட்டர்** – பெரியோர்; கல்வி நிரம்பிய சான்றோர்.
**சிட்டன்** – மாணாக்கன்.
**சிட்டா** – குறிப்பேடு.
**சிட்டாய்ப்பறத்தல்** – சிட்டுக்குருவியைப் போல விரைந்தோடிப் போதல்.
**சிட்டி** – உண்டாக்கப்பட்டன; படைப்பு; சிறு மட் கலம்; ஓர் அளவுக்குறிப்பு; சூது; கருவியை உருட்டும் செப்பு; சீழ்க்கை; ஒழுங்கு.
**சிட்டிக்கை** – கைந்நொடி: கைந்நொடிப் பொழுது; விரற்பிடியளவு.
**சிட்டித்தல்** – படைத்தல்.
**சிட்டிலிங்கி** – காட்டுமரவகை.
**சிட்டு** – சிட்டுக்குருவி; இழிந்தது; சிட்டுக்குடுமி; பெருமை.
**சிட்டுக்குருவி** – குருவிவகை.
**சிட்டை** – ஆடைக்கரைவகை; பெருஞ் செலவு களுக்கு விவரங்காட்டும் தனிக் கணக்குப் புத்தகம்.
**சிடம்** – சாதிக்காய்.
**சிடுக்கு** – சிக்கு; மகளிர் அணிவகை.
**சிடுசிடுத்தல்** – சினக்குறிப்புக் காட்டுதல்.
**சிடுசிடுப்பு** – சினக்குறிப்பு; காய்ச்சும் தைலத் தில் நீரிருப்பதை உணர்த்தும் ஒலிக்குறிப்பு.
**சிடுமூஞ்சி** – கடுகடுத்த முகம்; கடுகடுத்த முக முடையவன்.

**சிண்** – சூதாட்டத்திற் கூட்டாளி; கூட்டாளி; விளையாட்டில் பின்னும் ஒரு முறை ஆடுகை.
**சிண்டு** – குடுமி; ஒரு சிற்றளவு; சிறு பாத்திர வகை.
**சிண்டுதல்** – சருவுதல்; தொடுதல்; நெருங்குதல்.
**சிண்டுமுடிதல்** – சண்டைமூட்டுதல்.
**சிணாட்டால்** – பிடித்தல்.
**சிணாட்டிப்பார்த்தல்** – சண்டைக்கிழுத்தல்.
**சிணாட்டு** – அடர்ந்த சிறு கிளைகள்.
**சிணாட்டுதல்** – நோய் திரும்பப் பற்றுதல்.
**சிணாற்றைக்கழித்தல்** – சிறு கிளைகளை வெட்டியெறிதல்; வழக்குத் தீர்த்தல்.
**சிணாறு** – அடர்ந்த மரக்கிளைகள்.
**சிணி** – கெட்ட நாற்றம்.
**சிணுக்கம்** – மூக்கால் அழுதல்; சுருக்கம் விழுகை; உடன்பாடன்மையைக் குறிக்கும் முகக்குறி.
**சிணுக்கன்** – பயனற்றவன்.
**சிணுக்கு** – சீண்டுகை; சிக்கு; அழுகை; உழலை மரம்; விரல் முதலியவற்றின் நொடிப்பு.
**சிணுக்குச்சிணுக்கெனல்** – சிறிது சிறிதாக வெளிவருதல்; சிடுசிடுப்புக் குறிப்பு; அடிக்கடி அழுது தொந்தரவுசெய்தற் குறிப்பு.
**சிணுக்குதல்** – சிக்குப்படுத்துதல்; சிறிதுசிறிதாகத் தருதல்; விட்டு விட்டு வருதல்; துளித்தல்; உடன்படாமையை உணர்த்த முகத்தைக் கோட்டுதல்; சீண்டுதல்; பிள்ளையைத் திருடுதல்.
**சிணுக்குவாரி** – சிக்கல் எடுக்குங் கருவி.
**சிணுங்குதல்** – மூக்கால் அழுதல்; மழை தூறுதல்; கொஞ்சுதல்.
**சிணுசிணுத்தல்** – காண்க: சிணுங்குதல்.
**சித்தக்கல்** – குறுஞ்சிலைக்கல்.
**சித்தகங்கை** – ஆகாயகங்கை.
**சித்தகம்** – தலைச்சீரா; மெழுகு.
**சித்தசமாதானம்** – மன அமைதி.
**சித்தசமுன்னதி** – செருக்கு.
**சித்தசலனம்** – மனக்குழப்பம்.
**சித்தசன்** – மனத்தில் தோன்றுபவனாகிய மன்மதன்.
**சித்தசாதனம்** – வெண்கடுகு; முன்பே சாதித்த தொன்றைப் பின்னும் சாதிக்கை.
**சித்தசாந்தி** – மனஅமைதி.
**சித்தசுத்தி** – மனத்தூய்மை.
**சித்தசுவாதீனம்** – மனம் வயப்பட்டிருக்கை.
**சித்தஞ்செய்தல்** – காண்க: சித்தப்படுத்துதல்.
**சித்தநெறி** – முடிவான வழி.
**சித்தப்படுத்துதல்** – ஆயத்தம் செய்தல்.
**சித்தப்பிரமை** – மனமயக்கம்; பைத்தியம்; சன்னி வகை.
**சித்தம்** – மனம்; முடிவான மனக்கொள்கை; திண்ணம்; ஆயத்தமானது; சிவாகமத்துள் ஒன்று; யோகத்துள் ஒன்று; மூலப்பகுதி; முருங்கைமரம்.
**சித்தமன்** – ஆமணக்குஞ்செடி.
**சித்தமுகம்** – கிலுகிலுப்பைச்செடி.
**சித்தயோகம்** – நட்சத்திர யோகம் ஆறனுள் ஒன்று; நல்வேளை.
**சித்தர்** – ஞானசித்தி யடைந்தோர்; சித்திபெற்றவர்; தேவகணத்துள் ஒரு சாரார்.
**சித்தரி** – சிறுகுளம்.
**சித்தல்** – சீலை.
**சித்தலயம்** – பரம்பொருளுடன் மனம் ஒன்றுகை.
**சித்தவிகாரம்** – மனவேறுபாடு.
**சித்தவிலாசம்** – உலகப்பற்றில் ஈடுபடுதல்.
**சித்தவைத்தியம்** – சித்தர்கள் கையாண்டதாகக் கருதும் தமிழ் மருத்துவமுறை.
**சித்தன்** – சித்திபெற்றோன்; முருகக்கடவுள்; அருகன்; சிவன்; வைரவன்; வியாழன்; உண்மையுள்ளவன்; மாயவித்தை செய்பவன்; இலவமரம்; காந்தக்கல்.
**சித்தன்வாழ்வு** – முருகக்கடவுளின் வாழ்விடமான திருவாவினன்குடி.
**சித்தாகாரம்** – உருவமின்மை, அருவம்.
**சித்தாதிகள்** – சித்தர்; இரசவாதம் முதலான அரிய வித்தைகள் கைவந்தவர் எனக் கருதப்படும் யோகிகள்.
**சித்தாந்தசாத்திரம்** – சைவ சித்தாந்தத்தைக் கூறுவனவாகிய மெய்கண்ட சாத்திரம் முதலியன.
**சித்தாந்தசைவம்** – சுத்தாத்துவித சைவ சமயம்.
**சித்தாந்தம்** – முடிந்த முடிவு; சைவ சித்தாந்தம்; வானசாத்திரம் கூறும் நூல்; சிவாகமங்கள்; பிடிவாதம்.
**சித்தாந்தன்** – சிவன்; நிச்சயிக்கப்பட்டவன்.
**சித்தாந்தி** – சித்தாந்த சமயி; கணிதன்; தன் கொள்கையை நாட்டுபவன்; சைவ சித்தாந்தத்தைச் சார்ந்தவன்.
**சித்தாமோகம்** – பேரோசனை என்னும் உலோக வகை.
**சித்தார்த்தம்** – வெண்கடுகு; மெய்யறிவு.
**சித்தார்த்தன்** – புத்தன்.
**சித்தார்த்தி** – அறுபதாண்டுக் கணக்கில் ஐம்பத்து மூன்றாம் ஆண்டு.
**சித்தி** – கைகூடுகை; வீடுபேறு; எண்வகைச் சித்தி; அறிவு; சிவஞானசித்தியார்; ஊறுசெய்தல்; சித்தித்தல்; அற்புதவன்மை; சவர்க்காரம்; நிலப்பனை; எட்டிமரம்; பொன்னாங்காணி.

**சித்திக்கல்** – செடில் ஆட்டத்திற்காக நாட்டப் பட்ட தூண்; குறுஞ்சிலைக்கல்.

**சித்திகணபதி** – விநாயகன்.

**சித்தித்தல்** – கைகூடுதல்.

**சித்திநெறி** – முத்திவழி.

**சித்திபத்தனம்** – வீடுபேறு.

**சித்தியடைதல்** – வீடுபேறடைதல்.

**சித்தியர்** – தெய்வமங்கையர்வகை.

**சித்திரக்கம்மம்** – வியத்தகு வேலைப்பாடு; சித்திர வேலைப்பாடு.

**சித்திரக்கம்மி** – ஆடைவகை.

**சித்திரக்கரணம்** – நன்றாகக் கையினாற் செய்யுந் தொழில்; புணர்ச்சிவகை.

**சித்திரக்கிரீவன்** – அழகிய கழுத்தை உடைய புறவு.

**சித்திரக்குள்ளன்** – மிகக் குள்ளமானவன்.

**சித்திரகடம்** – பெருங்காடு.

**சித்திரகம்** – கொடிவேலி; ஆமணக்கு.

**சித்திரகவி** – நாற்கவிகளுள் சித்திரத்தில் அமைத் தற்கேற்பப் பாடும் மிறைக்கவி; சித்திரகவி பாடுவோன்.

**சித்திரகாயம்** – புலி.

**சித்திரகாரன், சித்திரகாரி** – ஓவியன், படம் வரைபவன்; சிற்பி.

**சித்திரகூடம்** – சித்திரச்சாலை; சீராமன் தங்கிய ஒரு மலை; சிதம்பரத்தில் உள்ள திருமால் கோயில்; தெற்றியம்பலம்.

**சித்திரச்சூடகம்** – அழகிய வேலைப்பாடமைந்த மோதிரம்.

**சித்திரச்சோறு** – காண்க: **சித்திரான்னம்.**

**சித்திரசபை** – திருக்குற்றாலத்தில் உள்ள கூத்தப் பெருமான் ஆடும் சபை.

**சித்திரசாலை** – காண்க: **சித்திரமண்டபம்.**

**சித்திரதாளம்** – ஒன்பான் தாளத்துள் ஒன்று.

**சித்திரப்படம்** – ஓவியம்; பூந்துகில்; யாழ் முதலிய வற்றின் பல நிறமுள்ள உறை; எழுதுசித்திரம்.

**சித்திரப்படாம்** – பூந்துகில்.

**சித்திரப்பணி** – வியத்தகு வேலை; ஓவியம்.

**சித்திரப்பா** – சித்திரகவிவகை.

**சித்திரப்பாலாடை(வி)** – அம்மான் பச்சரிசிப் பூண்டு.

**சித்திரப்பூமி** – விசித்திரமான சோலை, செய் குன்று முதலிய இடங்கள்.

**சித்திரப்பேச்சு** – அலங்காரப் பேச்சு; தந்திரப் பேச்சு.

**சித்திரபானு** – அறுபதாண்டுக் கணக்கில் பதினாறாம் ஆண்டு; நெருப்பு; சூரியன்.

**சித்திரபுண்டரம்** – வைணவர்கள் நெற்றியில் தரித்துக்கொள்ளும் திருமண்காப்பு.

**சித்திரம்** – ஓவியம்; சிறப்பு; அழகு; அலங் காரம்; வியப்புடையது; சித்திரகவி; சிற்ப நூல் முப்பத்திரண்டனுள் ஒன்று; ஓட்டை; குறைவு; வெளி; பொய்; இரகசியம்; உட் கலகம்; சித்திரப்பேச்சு; தந்திரப்பேச்சு; சிறு குறிஞ்சா; கொடிவேலி; ஆமணக்கஞ்செடி.

**சித்திரம்வெட்டுதல்** – கல்லில் சித்திரவேலை செய்தல்.

**சித்திரமண்டபம்** – ஓவியச்சாலை; ஓலக்க மண்டபம்.

**சித்திரமாடம்** – சிங்காரமாளிகை.

**சித்திரமிருகம்** – மான்.

**சித்திரமூலம்** – கொடிவேலி; செங்கொடிவேலி.

**சித்திரமேகலை** – மயில்.

**சித்திரரதன்** – சூரியன்.

**சித்திரரேகை** – உள்ளங்கைக் கோடுகளுள் ஒன்று.

**சித்திரவண்ணம்** – நெடிலும் குறிலும் ஒப்ப விரவிய சந்தம்.

**சித்திரவதம், சித்திரவதை** – வேதனைப்படுத்திக் கொல்லுகை.

**சித்திரவல்லாரி** – சேங்கொட்டை.

**சித்திரவேளாகொல்லி** – யாழ்த்திறவகை.

**சித்திரவோடாவி** – ஓவியன்.

**சித்திரன்** – ஓவியன்; தச்சன்.

**சித்திராக்கினை** – காண்க: **சித்திரவதை.**

**சித்திராங்கி** – தந்திரக்காரி; கொடுநீலி.

**சித்திரான்னம்** – புளி, எள், சர்க்கரை முதலிய வற்றைத் தனித்தனியே கலந்தட்ட சோறு.

**சித்திரிகை** – வீணைவகை; நல்லாடைவகை.

**சித்திரிணி** – காண்க: **சித்தினி.**

**சித்திரித்தல்** – அலங்காரமாய்ப் பேசுதல்; ஓவியந் தீட்டல்; அலங்கரித்தல்; கற்பனைசெய்தல்.

**சித்திரை** – ஒரு நட்சத்திரம்; தமிழாண்டின் முதல் மாதம்; அம்மான்பச்சரிசிப்பூண்டு; நாகணவாய்ப்புள்.

**சித்திரைக்கருந்தலை** – சாகுபடி முற்றுப் பெற்றதும் பின்ஏற்பாடுகளை நடத்தற்குரிய சித்திரைமாத முடிவு.

**சித்திரோடாவி** – கல்லில் உருவம் சமைக்கும் சிற்பி.

**சித்திலி** – சிற்றெறும்பு.

**சித்திலிகை** – வேலைப்பாடுள்ள ஆடைவகை.

**சித்தின்பம்** – ஞானத்தால் உண்டாகும் பேரின் பம்.

**சித்தினி** – நால்வகைப் பெண்டிருள் ஒருத்தி, பதுமினி வகைக்கு அடுத்த தரத்தவள்.

**சித்து** – அறிவு; அறிவுப்பொருள்; ஆன்மா; அட்டமாசித்தி; கலம்பக உறுப்பு; வேள்வி; வெற்றி; ஒரு வரிக்கூத்து வகை; எழுத்தடிப்பு; கொத்தனுக்கு உதவிசெய்யும் சிற்றாள்.

**சித்துக்காரன்** – சாலவித்தை கற்றவன்.
**சித்துடு** – நேர்வாளம்; கிலுகிலுப்பைச்செடி.
**சித்துநீர்** – இரசம்.
**சித்துப்பறத்தல்** – ஆகாசகமனஞ்செய்தல்; விரைவில் மறைதல்; செருக்குக் காட்டுதல்.
**சித்துப்பொருள்** – அறிவுமயமான பொருள்.
**சித்துரு** – கடவுள்.
**சித்துரூபம்** – நேர்வாளக்கொட்டை.
**சித்துவித்தை** – மாயவித்தை.
**சித்துவிளையாடுதல்** – சித்திகள் செய்தல்; மாயவித்தை செய்தல்.
**சித்தேசன்** – பிறைச்சந்திர உருவமுள்ள தலைக் குட்டை அணிந்த ஒருவகைப் பிச்சைக்காரன்.
**சித்தேரி** – சிறிய நீர்நிலை.
**சித்தை** – எண்ணெய்த் துருத்தி; பார்வதி; தகரக் கலம்.
**சிதகம்** – தூக்கணாங்குருவி.
**சிதகன்** – சுக்கிரன்.
**சிதகு** – குற்றம்.
**சிதகுஞ்சரம்** – ஐராவதம்.
**சிதகுதல்** – உருவுதல்; எழுதினதை அழித்தல்.
**சிதசத்திரம்** – வெண்குடை.
**சிதசிந்து** – கங்கை.
**சிதடன்** – குருடன்; அறிவில்லான்; பித்தன்.
**சிதடி** – சிள்வண்டு; அறிவில்லாதவள்; பேதைமை.
**சிதடு** – குருடு; பேதைமை, அறியாமை; உள்ளீடின்மை.
**சிதப்பூரம்** – பொன்னாங்காணிக்கீரை.
**சிதம்** – வெண்மை; வெள்ளி; வெற்றிகொள்ளப் பட்டது; மனைவாயில்; அறிவு; விண்மீன்; புளியாரை; வெண்சிவதை; சாதிக்காய்; மீன்; விண்; விஷ்ணுக் கரந்தை.
**சிதம்பர்** – இழிந்தோர்.
**சிதம்பல்** – பதனழிதல், கெட்டுப்போதல்.
**சிதம்பு** – பதனழிவு; இழிவு; தன்மையின் அழிவு.
**சிதம்புதல்** – பதனழிதல்; நீரில் அதிக நேரம் கிடத்தலால் கைகால்கள் வெளுத்தல்; நீர்ச் சாவியாதல்.
**சிதமருசம்** – வெண்மிளகு.
**சிதமை** – வெள்ளாடு.
**சிதர்** – மழைத்துளி; பூந்தாது; பொடி; துணி; சீலை; கந்தைத்துணி; உறி; வண்டு; மெத்தெனவு; சிந்துகை; சிச்சிலிப்பறவைவகை.
**சிதர்த்தல்** – பிரித்தல்; வெட்டுதல்; சிந்துதல்.
**சிதர்தல்** – சிதறுதல்; பரக்கச் சொல்லுதல்; படுத்தல்; சிதறி வீழ்தல்; நைதல்; காலால் கிளைத்தல்.
**சிதர்வை** – நைந்து கிழிந்துபோன துணி.
**சிதரம்** – மழைத்துளி; உறி.
**சிதல்** – கறையான்; ஈசல்.
**சிதலை** – கறையான்; துணி; நோய்.
**சிதவல்** – சீலைத்துணி; கந்தைத்துணி; கிழிந்த துண்டு; வெட்டுகை; குறைவுபட்டது; சிதறுதல்; படுக்கை; தேரின் கொடி; புரையோடிய புண்.
**சிதவலிப்பு** – மனவுறுதி.
**சிதள்** – மீன்செதில்; புண்ணின் அசடு; எலும்பு முதலியவற்றின் துண்டு.
**சிதறடித்தல், சிதறவடித்தல்** – முறியடித்தல்; கலங்கச் செய்தல்.
**சிதறி** – மழை; பாதிரிமரம்.
**சிதறுதல்** – இறைத்தல்; சிந்துதல்; மிகுதியாகக் கொடுத்தல்; கலைதல்; அழிதல்; பயனற்றதாதல்.
**சிதன்** – சுக்கிரன்; அச்சமுடையவன்.
**சிதனம்** – கோடகசாலைப்பூண்டு.
**சிதாகாச(ய)ம்** – அறிவுவெளி, ஞானவெளி.
**சிதாத்துமா** – கடவுள்.
**சிதாப்பிரம்** – வெள்ளைமுகில்.
**சிதாபாசம்** – மயக்கு.
**சிதாம்பு(போ)சம்** – வெண்டாமரை.
**சிதார்** – சீலை; மரவுரி; ஒரு வாத்தியவகை.
**சிதாரம்** – தேர்க்கொடி.
**சிதாரி** – தூபப்பண்டம்.
**சிதானந்தம்** – அறிவின்பம், ஞானானந்தம்.
**சிதானனன்** – கருடன்.
**சிதி** – ஈமவிறகு; கறுப்பு; வெண்மை; கோடரி.
**சிதிரம்** – கோடரி; தீ; வாள்.
**சிதிலம்** – சிதைவு.
**சிதுமலர்** – தண்ணீர்விட்டான்கிழங்கு.
**சிதுரம்** – நேர்வாளக்கொட்டை.
**சிதுரன்** – பகைவன்; தீயவன்.
**சிதேகி** – கடுக்காய்மரம்.
**சிதேதரம்** – கருமை.
**சிதேந்திரம்** – கோயில்.
**சிதேந்திரியம்** – அறிவுப்பொறி.
**சிதேந்திரியன்** – புலன்களை வென்றோன்.
**சிதை** – சிதைவு; பிணஞ்சுடு விறகு; இழிவுச் சொற்கள்; கப்பற்பாய்; கீழ்மக்கள்.
**சிதைசுற்று** – ஆலை; சக்கரம்; செக்கு.
**சிதைத்தல்** – அழித்தல்; கெடுத்தல்; குலைத்தல்; சிரைத்தல்; களைதல்; ஒலித்தல்; தேய்த்தல்.
**சிதைதல்** – தன்மை கெடுதல்; சிதறுதல்; அறுபடுதல்; கோபித்தல்; சொல்சிதைந்து வழங்குதல்; பொய்யாதல்; குலைதல்; வரம்பழிதல்; இசை முதலியன கெடுதல்.
**சிதையர்** – கீழ்மக்கள்.
**சிதைவு** – குற்றம்; கேடு.
**சிந்தகம்** – புளியமரம்; தூக்கணாங்குருவி.

**சிந்தடி** – செய்யுள் முச்சீரடி.

**சிந்தம்** – புளியமரம்; பாவகை; தூக்கணாங் குருவி.

**சிந்தன்** – குள்ளன்; குறளனிலும் சிறிது நெடியவன்; தூக்கணாங்குருவி.

**சிந்தனை** – எண்ணம்; மீண்டும்மீண்டும் நினைத்தல்; தியானம்; கவலை; கவனம்; குறிகேட்கும் செய்தி.

**சிந்தாக்கட்டிகை** – கழுத்தணிவகை; அட்டிகை வகை.

**சிந்தாக்கு** – ஒரு விளையாட்டுவகை; கழுத்தணி வகை.

**சிந்தாகுலம்** – மனக்கவலை.

**சிந்தாத்திரி(ரை)** – நல்ல பயணம்; இன்ப வாழ்வு.

**சிந்தாதேவி** – கலைமகள்.

**சிந்தாமணி** – வேண்டுவனவெல்லாம் அளிக்குந் தெய்வமணி; சீவகசிந்தாமணி என்னும் தமிழ்க் காப்பியம்; பண்வகை.

**சிந்தாமணிக்குளிகை, சிந்தாமணிமாத்திரை** – களைப்பு முதலிய வற்றை நீக்குங் குளிகை.

**சிந்தாவிளக்கு** – காண்க: **சிந்தாதேவி.**

**சிந்தித்தல்** – நினைத்தல்; மனனஞ்செய்தல்; தியானித்தல்; எண்ணுதல்; விரும்புதல்; கவலைப்படல்.

**சிந்திதம்** – நினைக்கப்பட்டது.

**சிந்திதன்** – நினைக்கப்பட்டவன்.

**சிந்தியம்** – நினைக்கத்தக்கது; சிவாகமத்துள் ஒன்று.

**சிந்தியல்வெண்பா** – மூன்றடியால் வரும் வெண்பாவகை.

**சிந்தினர்** – குள்ளர்.

**சிந்து** – கடல்; நீர்; ஆறு; சிந்துநதி; சிந்துதேசம்; ஒரு மொழி; ஒரு பண்; கொடி; இருவாட்சி; குள்ளன்; முச்சீரடி; இசைப்பாவகை; ஒரு வரிக்கூத்து வகை.

**சிந்துசங்கமம்** – ஆறும் கடலும் ஒன்றாகச் சேருமிடம்.

**சிந்துசம்** – உப்பு.

**சிந்துதல்** – சிதறுதல்; ஒழுகுதல்; நீக்குதல்; தெளித்தல்; செலவழித்தல்; பரப்புதல்; மூக்கைச் சிந்துதல்; அழித்தல்; களைதல்; பயனறச் செய்தல்; வெட்டுதல்.

**சிந்துநாடார்** – நெய்தனில மக்கள்.

**சிந்துநாதன்** – வருணன்.

**சிந்துபுட்பம்** – சங்கு.

**சிந்துரக்கட்டி** – செங்காவிக்கல்.

**சிந்துரம்** – சிவப்பு; நெற்றியில் அணிதற்குரிய ஒருவகைச் செம்பொடி; பொட்டு; யானை; செங்காவிப் பொட்டு; புளியமரம்.

**சிந்துரித்தல்** – உலோகங்களைப் பொடியாக்குதல்.

**சிந்துரை** – இந்திரன் யானையால் வளர்க்கப் பட்டவளாகிய தெய்வயானை.

**சிந்துவாரம்** – நொச்சிமரம்; கருநொச்சி; வில்.

**சிந்தூரத்திலகம், சிந்தூரப்பொட்டு** – குங்குமப்பொட்டு.

**சிந்தூரம்** – சிவப்பு; செங்குடை; நெற்றியில் அணியும் ஒருவகைச் சிவப்புப்பொடி; செஞ்சுண்ணம்; யானைப் புகர்முகம்; வெட்சிச் செடி; யானை; புளியமரம்; சேங்கொட்டை.

**சிந்தூரித்தல்** – உலோகங்களைச் சிந்தூரமாக்குதல்.

**சிந்தை** – மனம்; அறிவு; எண்ணம்; தியானம்; கவலை.

**சிந்தைகலத்தல்** – மனமொத்தல்.

**சிந்தைகூரியன்** – புதன்; கூர்மையான புத்தியுடையவன்.

**சிந்தைசெய்தல்** – நினைவில்வைத்தல்; தியானம் செய்தல்; கவலைகொள்ளுதல்.

**சிந்தைவிளக்கு** – முக்காலமும் அறிகை.

**சிப்பந்தி** – வேலைக்காரன்; ஆயுதம் தரித்த காவற்படை.

**சிப்பம்** – சிறு மூட்டை; புகையிலைச் சுமை.

**சிப்பி** – முத்தின் ஓடு; சிப்பியோடுகூடிய நீர்வாழ் உயிர்வகை; கிளிஞ்சில், இப்பி, சங்கு; தயிர் அளந்துவிடும் கொட்டாங்கச்சி; சிற்பி; தையற்காரன்.

**சிப்பியன்** – கம்மியன்; தையற்காரன்.

**சிபாரிசு** – பரிந்துரை; ஒருவனைக் குறித்துப் பிறனிடம் ஆதரித்துப் பேசும் பேச்சு முதலியன.

**சிம்பத்தை** – சிறுபுள்ளடிப்பூடு.

**சிம்பல்** – ஒலித்தல்; துள்ளுதல்; சிம்பு.

**சிம்பல்சிலும்பல்** – கந்தை.

**சிம்பிலி** – வெல்லமும் தேங்காயும் கேழ்வரகு மாவுஞ் சேர்த்துப் பண்ணின பிட்டு.

**சிம்பிளித்தல்** – காண்க: **சிம்புளித்தல்.**

**சிம்பு** – சிராய்; இரும்புத்துகள்; செதும்பு; மூங்கிற் சிம்பு; இளம்வளார்; குற்றம்; சுண்டி இழுக்கை.

**சிம்புகட்டுதல்** – ஒடிந்த உறுப்புக்குப் பத்தை வைத்துக் கட்டல்.

**சிம்புதல்** – ஒலித்தல்; துள்ளுதல்; கோபக்குறி காட்டுதல்; சுண்டியிழுத்தல்; ஒன்றுகூட்டுதல்; நன்றாய்த் தேய்த்தல்.

**சிம்புரி** – சும்மாடு; புரிமணை.

**சிம்புவிடுதல், சிம்புவெடித்தல்** – மரக்கன்று தளிர்த்தல்.

**சிம்புள்** – எண்காற்பறவை, சரபம்.

**சிம்புளி** – கம்பளி; செவ்வாடை.

**சிம்புளித்தல்** – கண்ணை மூடிக்கொள்ளுதல்.
**சிம்பை** – அவரைக்கொடி.
**சிம்மதம்** – பாம்பு.
**சிம்மநகம்** – அபிநயக்கைவகை.
**சிம்மம்** – சிங்கம்; சிம்மராசி; ஆவணிமாதம்.
**சிம்மாசனம்** – காண்க: **சிங்காசனம்.**
**சிம்மாத்தல்** – செம்மாத்தல், இறுமாத்தல்; மிகக் களித்தல்; வீறுபெறுதல்.
**சிம்மாளம்** – மகிழ்ச்சி.
**சிம்மு** – எல்லை.
**சிம்முதல்** – கொப்புளங் குத்திவிடுதல்; ஒலித்தல்.
**சிமட்டி** – பேய்க்கொம்மட்டிக்கொடி.
**சிமந்தூரி** – காண்க: **சிறுபுள்ளடி.**
**சிமயம்** – இமயமலை; பொதியமலை; மலையுச்சி.
**சிமாளம்** – காண்க: **சிம்மாளம்.**
**சிமாளித்தல்** – மிக மகிழ்தல்; சமாளித்தல்.
**சிமி** – ஆண்களின் குடுமி.
**சிமிக்கி** – கம்மலில் தொடுத்து அணியப்படும் முத்துக் கட்டிய காதணிவகை; கொடிவகை.
**சிமிக்கிப்பூ** – காண்க: **சிமிக்கி**; கொடிவகை.
**சிமிட்டா** – மயிர்பிடுங்குங் கருவி; சாமணம்.
**சிமிட்டி** – ஒருவகைச் சுண்ணாம்புக் கலவை; பேய்க்கொம்மட்டி.
**சிமிட்டு** – கண் சைகை; இமைப்பு; கள்ளவேலை; கைந்நொடி.
**சிமிட்டுக்கண்** – கண் அசைத்தல்; கொட்டுங்கண்.
**சிமிட்டுக்கள்ளி** – தந்திரக்காரி; கற்புக் குன்றியவள்.
**சிமிட்டுதல்** – கண்ணிமைத்தல்; சாடைதோன்றக் கண் சிமிட்டுதல்; தந்திரம் செய்து ஏமாற்றுதல்.
**சிமிட்டுவேலை** – கள்ளவேலை; வியத்தகு வேலைப்பாடு.
**சிமிண்டு** – தடி.
**சிமிண்டுதல்** – நிமிண்டுதல்; தூண்டிவிடுதல்; கிள்ளுதல்; சிமிட்டுதல்.
**சிமிலம்** – மலை.
**சிமிலி** – குடுமி; உறி; தோணி; சிள்வீடு; பூளைச் செடி; வெல்லங்கலந்த எள்ளின் பொடி.
**சிமிழ்** – செப்பு; திமில்.
**சிமிழ்தல்** – கட்டுதல்; அகப்படுத்துதல்; கண் கொட்டுதல்.
**சிமிழ்ப்பு** – பந்தம்; கட்டுகை.
**சிமிளி** – வெல்லங் கலந்த எள்ளின் பொடி.
**சிமிளித்தல், சிமிளிப்பு** – கண்கொட்டுகை.
**சிமுக்கிடுதல்** – எச்சரிக்கைசெய்தல்; அசைதல்.
**சிமுட்டி** – கீழாநெல்லிப் பூடு.
**சிமை** – மலையுச்சி; குடுமி.
**சிமையம்** – மலையுச்சி; கொடுமுடி.
**சியச்சினி** – வேலிப்பருத்திக்கொடி.
**சியத்தினி** – தக்காளி.
**சியிருதம்** – கடுக்காய்.
**சியேனம்** – பருந்து; அணிவகுப்பு.
**சிரக்கம்பம், சிரக்கம்பனம்** – தலையசைத்தல்; ஏற்புமுதலியவற்றின் அறிகுறியாகச் செய்யும் தலையசைப்பு.
**சிரக்கோழி** – குழலாதொண்டைக்கொடி; வசம்பு.
**சிரகபாலம்** – தலையோடு.
**சிரகம்** – திவலை; கரகம்; தலைச்சீரா.
**சிரகம்பிதம்** – காண்க: **சிரக்கம்பம்.**
**சிரங்காடு** – அடர்ந்த காடு.
**சிரங்காய்** – காண்க: **சிரங்கை.**
**சிரங்கு** – புண்.
**சிரங்கை** – கைகொண்ட அளவு.
**சிரச்சேதம்** – தலையை வெட்டுதல்.
**சிரசாவகித்தல்** – மரியாதையுடன் ஏற்றுக் கொள்ளுதல்.
**சிரசு** – தலை; தலைமயிர்.
**சிரஞ்சீவி** – நீண்ட ஆயுள் உடையவன்(ள்); பெரியோர் வாழ்த்த வழங்குஞ் சொல்; காகம்; இலவமரம்; மார்க்கண்டேய முனிவர்.
**சிரஞ்சீவியர்** – நீடூழிகாலம் வாழ்ந்திருக்க வரம் பெற்றவரான அசுவத்தாமன், மாவலி, மார்க்கண்டன், வியாசன், அனுமான், விபீடணன், பரசுராமன் என்னும் எழுவர்.
**சிரட்டை** – கொட்டாங்கச்சி; பிச்சைக்கலம்.
**சிரணி** – ஓமம்.
**சிரத்த(தை)காழகம்** – மருக்காரைச்செடி.
**சிரத்தல்** – தேய்த்தல்; அழித்தல்; எழுத்திலா வோசை.
**சிரத்தவன்** – தலைவன்.
**சிரத்தியார்** – சிறிய தாயார்.
**சிரத்துதல்** – உரக்க ஒலித்தல்; கோபித்தல்.
**சிரத்தை** – அன்பு; பத்தி; நம்பிக்கை; விருப்பம்; ஊற்றம்.
**சிரந்தை** – உடுக்கை.
**சிரநதி** – கங்கை.
**சிரபங்கம்** – காண்க: **சிரச்சேதம்.**
**சிரபாத்திரி** – கபாலத்தைப் பிச்சைப் பாத்திரமாகக்கொண்ட சிவன்.
**சிரபுரம்** – சீகாழி.
**சிரம்** – தலை; உச்சி; மேன்மை; நெடுங்காலம்; ஆமணக்கு; கமுகமரம்; கூவைநீறு; வாதமடக்கி.
**சிரமச்சாலை** – படைக்கலம் பயிலிடம்.
**சிரமஞ்செய்தல்** – சிலம்பம் முதலியன பழகுதல்.
**சிரமநிலை** – படைக்கலப் பயிற்சி.

**சிரமபரிகாரம்** – இளைப்பாறுதல்.
**சிரமம்** – களைப்பு; உழைப்பு; படைக்கலப் பயிற்சி.
**சிரமன்** – அடிமை; ஈனன்.
**சிரமிலி** – நண்டு.
**சிரமேற்கொள்ளுதல்** – மரியாதையுடன் ஏற்றுக் கொள்ளுதல்.
**சிரல்** – சிச்சிலிப்பறவை, மீன்கொத்திப்பறவை; முடிவிடம்.
**சிரவணம்** – காது; கேள்வி; திருவோண நாள்.
**சிரவம்** – காது; கௌதாரிப் பறவை.
**சிரற்றுதல்** – உரக்க ஒலித்தல்; கோபித்தல்.
**சிரறுதல்** – மாறுபடுதல்; சிதறுதல்.
**சிரஸ்தார்** – நீதிமன்றம், வட்டாட்சி அலுவலகம் முதலியவற்றிலுள்ள ஊழியர்களுக்குத் தலைமை அதிகாரி.
**சிராங்கம்** – தலை; உடல்நலம்; தடையின்மை.
**சிராத்தம்** – இறந்தோர்க்குச் செய்யுமோர் சடங்கு.
**சிராந்தி** – இளைப்பு.
**சிராபத்திரம்** – விளாமரம்.
**சிராபரன்** – இறைவன்.
**சிராய்** – மரச்சக்கை; பனஞ்செறும்பு; செதுக்கிய மரத்துண்டு; பருவின் முளை; காற்சட்டை.
**சிராய்த்தல்** – உராய்ந்து காயமேற்படுதல்.
**சிராய்பாக்கு** – முற்றாத பாக்கு.
**சிராய்விழுதல்** – நார்ப்பழமாதல்.
**சிரார்த்தம்** – காண்க: **சிராத்தம்.**
**சிராவணம்** – ஆவணிமாதம்; புதுப் பூணூல் தரிக்கும் சடங்கு; கல்; சாமணம்.
**சிராவியம்** – கேட்டற்கு இனியது.
**சிரானந்தம்** – அழியா இன்பம்.
**சிரி** – நகைப்பு; அம்பு; வாள்; வெட்டுக்கிளி; கொலைஞன்; 'தீர்வைக்கு உட்பட்டநிலம்'.
**சிரிட்டம்** – விளாம்பட்டை.
**சிரித்தபிழைப்பு** – எள்ளத்தக்க வாழ்க்கை.
**சிரித்தல்** – நகைத்தல்; கனைத்தல்; மலர்தல்; எள்ளுதல்.
**சிரிப்பாணி** – அடங்காச் சிரிப்பு; பகடி; ஏளனம்.
**சிரிப்பாணிப்படுதல்** – சிரிப்புக் கிடமாதல்; சிறுமைப்படுதல்.
**சிரிப்பாய்ச்சிரித்தல்** – இகழ்தல்; மலிந்துகிடத்தல்; நிலைகெட்டுத் திரிதல்.
**சிரிப்பு** – நகைப்பு; குதிரையின் கனைப்பு; பகடி; ஏளனம்.
**சிரீ** – திருமகள்.
**சிரீடம்** – குன்றிமணி; வாகைமரம்.
**சிரீதரன்** – திருமால்.
**சிரீமுக** – அறுபதாண்டுக் கணக்கில் ஏழாம் ஆண்டு.
**சிரீமுகம்** – திருமுகம்.
**சிரீவற்சம்** – திருமால் மார்பின் மறு; மார்பில் ஐந்து சுழியுள்ள குதிரை.
**சிரு** – தோளின் பொருத்து.
**சிருக்கு** – வேள்வியில் பயன்படும் நெய்த்துடுப்பு, இலைக்கரண்டி.
**சிருகம்** – அம்பு; காற்று; தாமரை.
**சிருகாலன்** – நரி.
**சிருங்கம்** – விலங்கின் கொம்பு; கொடுமுடி; சிருங்கவான்.
**சிருங்கலம், சிருங்கலை** – விலங்கு; இரும்புச் சங்கிலி; வில்லங்கம்.
**சிருங்கவான்** – பூமியின் எல்லையில் அமைந்த மலைகளுள் ஒன்று.
**சிருங்காடகம்** – நாற்சந்தி.
**சிருங்காரநிலை** – போர்க்களத்து இறந்துபட்ட வீரனது மார்பை அவன் மனைவி தழுவுதலைக் கூறும் புறத்துறை.
**சிருங்காரம்** – காண்க: **சிங்காரம்.**
**சிருங்காரித்தல்** – ஒப்பனைசெய்தல், சிங்காரித்தல்.
**சிருங்கி** – நஞ்சு போக்கும் ஒரு மருந்துவகை; சுக்கு; பொன்; குதிரையின் காதடியிலுள்ள தீச்சுழிவகை.
**சிருட்டி** – படைப்பு; படைப்புப்பொருள்; சிறந்தது.
**சிருட்டிகர்த்தா** – படைப்போனாகிய பிரமன்.
**சிருட்டித்தல்** – படைத்தல்; கற்பனைசெய்தல்.
**சிருட்டியாளன்** – சவர்க்காரம்.
**சிருணி** – யானைத்தோட்டி; பகைமை.
**சிருதம்** – நன்மை; இனிமை.
**சிரும்பணம்** – கொட்டாவி விடுகை.
**சிரேட்டம்** – தலைசிறந்தது.
**சிரேட்டன்** – தலைசிறந்தவன்.
**சிரேட்டாதேவி** – மூதேவி.
**சிரேட்டி** – வணிகன்.
**சிரேணி** – தெரு; இடையர்வீதி; வரிசை.
**சிரேணியம்** – காண்க: **சிரோணி.**
**சிரேயசு** – நன்மை; புகழ்.
**சிரேவனம்** – காட்டாமணக்கஞ்செடி.
**சிரை** – நரம்பு; குரங்கு; கெட்ட இரத்தம் செல்லும் குழாய்.
**சிரைத்தல்** – மயிர்கழித்தல்; செதுக்குதல்.
**சிரைதொழில்** – சிரைக்கும் வேலை; வீண்வேலை.
**சிரையன்** – நாவிதன்.
**சிரோசம்** – தலைமயிர்.
**சிரோட்டம்** – கடுக்காய்; நெல்லிமரம்; தான்றி மரம்.
**சிரோணி** – காட்டாமணக்கு.

**சிரோத்திரம்** – காது.
**சிரோதரம்** – கழுத்து.
**சிரோந்தம்** – மயிர்ச்செறிவு; செறிமயிர்ப் பரப்பு.
**சிரோபத்திய(ர)ம்** – கடுக்காய்.
**சிரோமணி** – தலைமணி; உயர்ந்தமணி; தலை சிறந்தவன்(ள்); பண்டிதர் பட்டப்பெயர்.
**சிரோமுட்டி** – கீழ்நோக்கி அம்பெய்கை.
**சிரோரத்தினம்** – தலைமணி.
**சிரோருகம்** – தலைமயிர்.
**சிரோவல்லி** – மயிலின் உச்சிக்கொண்டை.
**சிரோவேட்டம்** – தலைப்பாகை.
**சிரௌதம்** – சுருதி சம்பந்தமானது; வேதத்தில் விதிக்கப்பட்டது.
**சிரௌதி** – வேதத்தில் கூறப்பட்ட கருமங்களில் வல்லவன்.
**சில்** – சில; சிறுமை; நுண்மை; சிறு துண்டு; ஒட்டுச்சீலை; வட்டமானது; உருளை; தலையணி; கடற்சில்; ஆரவாரம்; மூடி; மூக்குக் கண்ணாடி.
**சில்காற்று** – தென்றல்.
**சில்குதல்** – சிலவாதல்.
**சில்சொல்** – மென்மொழி.
**சில்பதவுணவு** – உணவில் சிறிதளவே சேர்க்கப் படும் பொருளாகிய உப்பு.
**சில்பலி** – சிறு பலி.
**சில்லங்கெடுதல்** – சிதறுண்ணுதல்.
**சில்லத்து** – சிறு சட்டை.
**சில்லம்** – தேற்றாமரம்; எட்டி; சிறு துண்டு.
**சில்லம்பாய்** – கிழிந்த பாய்.
**சில்லர்** – வேடர்; சுவர்க்கோழி, கிறீச்சென்று ஒலிக்கின்ற பூச்சிவகை.
**சில்லரி** – சிலம்பின் பருக்கைக்கல்.
**சில்லறை** – சில்லறைச் சரக்கு, சிதறியவை; மீதி; சில்வானம்; தொல்லை; ஒரு காதணிவகை; சிதறின தொகை; சிறு தொகையாக மாற்றும் பணம்; இழிந்தது.
**சில்லறைக்கடை** – சிறிதளவாக வாணிகஞ் செய்யுங் கடை; பணமாற்றுங் கடை.
**சில்லறைக்கணக்கு** – விவரம் விளங்காத சிறு தொகைகள்; சில்லறைக் குறிப்புகள்.
**சில்லறைக்காசு** – சில்லறையாயுள்ள தொகை; கையூட்டு.
**சில்லறைக்குடி** – குறைவாகப் பயிரிட்டு வாழும் குடிகள்.
**சில்லறைப்புத்தி** – சுயமைத்தனம்; விபசாரம்.
**சில்லறையாள்கள்** – முதன்மையல்லாதவர்; தொந்தரவு செய்யும் கீழோர்.
**சில்லாட்டு** – சில்லறை; சிறு செயல்.
**சில்லாடை** – காண்க: **பன்னாடை.**
**சில்லான்** – சிறு ஓணான்; குருவிவகை; ஒரு விளையாட்டு; கறையான்.
**சில்லி** – சுவர்க்கோழி; ஓட்டை; வட்டம்; தேருருளை; சிறுகீரை; துண்டு.
**சில்லிக்காது** – சிறு தொளையுள்ள காது.
**சில்லிக்கோல்** – சிறு கம்பு.
**சில்லிகை** – சுவர்க்கோழி; நல்லாடைவகை; சூரியகிரகணம்.
**சில்லிடுதல்** – குளிர்ந்துபோதல்; ஒலித்தல்; நடுங்குதல்; சினத்தால் முகம் சிவத்தல்.
**சில்லிமூக்கு** – இரத்தம் வடியும் மூக்கு; மூக்கு நுனி.
**சில்லியகப்பை** – சல்லடைக் கண்போன்ற சில்லி களையுடைய அகப்பை.
**சில்லியடை** – சல்லடைவகை.
**சில்லிரத்தம்** – பொசியும் இரத்தம்.
**சில்லிவாயன்** – பயனின்றி ஓயாது பேசுபவன்.
**சில்லு** – துண்டு; வட்டமாயுள்ள விளையாட்டுக் கருவி; ஓடு; நொண்டி விளையாட்டு; சக்கரம்.
**சில்லுக்கருப்பட்டி** – ஒருவகைப் பனைவெல்லம்.
**சில்லுண்டி** – இழிந்தது; இழிந்தவன்; சிறு குழந்தைகள்.
**சில்லுணா** – சிற்றுண்டி.
**சில்லூறு** – காண்க: **சிள்வண்டு.**
**சில்லெனல்** – குளிர்ந்து இருத்தல்; புலன்களுக்கு இன்பமூட்டுங் குறிப்பு; முகமலர்ச்சிக் குறிப்பு; ஒலிக்குறிப்பு.
**சில்லை** – இழிவு; பழிச்சொல்: முரட்டுத்தனம்; பிரண்டை; நீர்ப்பறவை; சுவர்க்கோழி; கிலுகிலுப்பை; சிவல்வகை.
**சில்வண்டு** – காண்க: **சிள்வண்டு.**
**சில்வாய்** – கடைவாய்.
**சில்வானஞ்சேர்த்தல்** – வீட்டுப் பொருள்களை மறைவாக விற்றுப் பணம் சேர்த்தல்.
**சில்வானம்** – செலவுக்குக் கொடுத்ததை மிகுத்து வைக்கும் பணம்; சிறுதூறல்.
**சில** – கொஞ்சம்.
**சிலக்குணம்** – திமிங்கிலம்.
**சிலகம்** – அகப்பை.
**சிலங்கம்** – விளாம்பட்டை.
**சிலத்திற்கடுகு** – காண்க: **சிலக்குணம்.**
**சிலத்தின்பிருதிவி** – கருப்பூரச் சிலாசத்து.
**சிலதன்** – மருதநிலத்தான்; ஏவலாளன்; பணி யாளன்; தோழன்; தூதன்.
**சிலதி** – தோழி; வேலைக்காரி.
**சிலதை** – நீண்டு மெலிந்து கருநிறத்தவளாய்க் காம மிகுந்தவள்.
**சிலந்தி** – கொப்புளம்; நச்சுக்கட்டி; அபிநயத்துக் குரிய ஆண்கையுள் ஒன்று; கருஞ்சிலந்திமரம்; சிலந்திப்பூச்சி; கோரைவகை; கோமேதக வகை.

**சிலந்தியரிசி** – கோரைவகை.
**சிலம்** – இந்துப்பு.
**சிலம்பக்காரன்** – சிலம்பவித்தையில் வல்லவன்.
**சிலம்பக்கூடம்** – சிலம்பம் பயிலுமிடம்.
**சிலம்பங்காட்டுதல்** – அச்சுறுத்துதல்; செயற்கரிய செயலைச் செய்துமுடிக்க முயல்வதாக நடித்தல்; சிலம்பவித்தை காட்டுதல்.
**சிலம்பம்** – கழிவீசுதல் முதலிய படைக்கலப் பயிற்சி; சூழ்ச்சித்திறன்.
**சிலம்பம்பண்ணுதல், சிலம்பமாடுதல்** – சிலம்பம் விளையாடுதல், சிலம்பவித்தை காட்டுதல்.
**சிலம்பல்** – யாழினோசை; ஓயாது வீண்பேச்சுப் பேசுபவன்(ள்).
**சிலம்பன்** – குறிஞ்சிநிலத் தலைவன்; முருகன்; காவிரிப் புதுவெள்ளம்; பழைய நாணயவகை.
**சிலம்பாறு** – அழகர்மலையில் தோன்றும் சிற்றாறு.
**சிலம்பி** – சிலந்திப்பூச்சி.
**சிலம்பு** – ஒலி; மகளிர் காலணிவகை; பூசாரிகள் கைச்சிலம்பு; மலை; பக்கமலை; குகை.
**சிலம்புகழிநோன்பு** – மணம் நடத்துமுன் பெண்ணிற்குச் சிலம்பு கழற்றுதலாகிய சடங்குவகை.
**சிலம்புதல்** – ஒலித்தல்; எதிரொலித்தல்.
**சிலம்புரி** – ஒரு சீலைவகை.
**சிலமம்** – காண்க: **சிலம்பம்.**
**சிலமன்** – சாடை.
**சிலமான்கல்** – ஒரு உயர்ந்த கல்வகை.
**சிலமி** – சிலம்பவித்தையில் வல்லவன்; பிடிவாதக்காரன்.
**சிலர்** – சிலபேர்.
**சிலவங்கம்** – மீன் எலும்பு.
**சிலவர்** – சிலபேர்; பாலைநில மக்கள்; வேடர்; பாலைநிலத் தலைவர்.
**சிலாக்கியம்** – புகழத்தக்கது, மெச்சத்தக்கது; சிறந்தது; புகழ்; உரிமை.
**சிலாக்கியன்** – புகழ்தற்குரியவன்.
**சிலாகித்தல்** – புகழ்தல்.
**சிலாகை** – புகழ்ச்சி; துப்பாக்கிச் சலாகை; நீலக்கல்.
**சிலாசத்து** – உலோகவகை; மண்தைலம்; ஒருவகை மருந்துக் கல்; கற்பூரச்சிலை.
**சிலாசம்** – இரும்பு, தாமிரம் முதலிய உலோகங்கள்; மலையிற் பிறப்பன; கருப்பூரச்சிலை.
**சிலாசாச(த)னம்** – கல்வெட்டு, கல்லிற் செதுக்கப்பட்ட சாசனம்.
**சிலாசாரம்** – கல்லைப்போன்ற வன்மையுடைய இரும்பு.
**சிலாஞ்சனம்** – நீல மணிவகை.
**சிலாத்துமசம்** – கல்லில் பிறந்த இரும்பு.
**சிலாதலம்** – பாறை; கல் பரப்பிய இடம்; கற்பாவிய ஆசன மேடை.
**சிலாதைலம்** – பாறையில் உண்டாகும் மண்நெய்.
**சிலாந்தி** – சீந்திற்கொடி.
**சிலாநாகம்** – காண்க: **சிலைநாகம்.**
**சிலாப்பி** – சோம்பேறி.
**சிலாப்புட்டி** – நீர் இறைக்க உதவும் தோற்பை அல்லது நீர்ச்சால்.
**சிலாப்புதல்** – வீண்பொழுதுபோக்கல்; நடித்தல்.
**சிலாபம்** – முத்துக்குளிப்பு.
**சிலாபேசி** – சிவப்பு நெருஞ்சிப்பூண்டு.
**சிலாம்பு** – மீன்செதிள்; மரப்பொருக்கு; சிறாம்பு.
**சிலாமணி** – கருப்பூரச்சிலாசத்து; எங்கும் செல்லக்கூடியது.
**சிலாமதம்** – கன்மதம்; பிறவிப் பாடாணவகை.
**சிலாமனா** – மனோசிலை.
**சிலாயுதன்** – ஆமை.
**சிலார்(ரு)** – குழப்பம்; இனாம்.
**சிலாலேகை** – கல்வெட்டு.
**சிலாவங்கம்** – ஈயக்கல்.
**சிலாவட்டம்** – சந்தனக்கல்; சாணைக்கல்; கற்பீடம்.
**சிலாவருடம்** – கல்மழை; கல்மாரி மேகம்.
**சிலாவி** – கூரையைத் தாங்கும் வளைவு; கல்நார்; சிற்பி.
**சிலாவிந்து** – கல்நார்.
**சிலாவுதல்** – சுழலுதல்; வட்டமாய் வார்த்தல்.
**சிலிங்காரம்** – அலங்காரம்.
**சிலிட்டம்** – செறிவு; சிலேடைப் பொருளுள்ளது.
**சிலியானை** – முடக்கொற்றான்பூண்டு.
**சிலிர்** – மரவகை.
**சிலிர்சிலிர்த்தல்** – உடல் புளகித்தல்.
**சிலிர்த்தல்** – மயிர் நெறிக்கச் செய்தல்; தளிர்த்தல்; உடல் புளகித்தல்; சில்லிடுதல்.
**சிலீபதம்** – யானைக்கால்நோய்.
**சிலீமுகம்** – அம்பு; வண்டு; முலைக்கண்; போர்.
**சிலீர்சிலீரெனல்** – காண்க: **சிலீரெனல்.**
**சிலீரிடுதல்** – குளிருதல்.
**சிலீரெனல்** – குளிரால் உண்டாகும் உணர்ச்சிக் குறிப்பு; புளகித்தற் குறிப்பு.
**சிலுக்கன்** – கலகக்காரன்; தொந்தரவு செய்பவன்.
**சிலுக்கு** – இரும்புவளையம்; வாள் முதலியவற்றின் பல்; சிலும்பு; சிறுதுண்டு; தொந்தரவு; சிறுகாயம்.
**சிலுக்குவெட்டு** – சிறுகாயம்.

**சிலுகன்** – காண்க: **சிலுக்கன்.**
**சிலுகி** – கலகக்காரி.
**சிலுகிடுதல்** – நிலைகுலைதல்; சண்டையிடுதல்; கூச்சலிடுதல்.
**சிலுகு** – சண்டை; துன்பம்; குழப்பம்; கூச்சல்; குறும்பு; தடை; கிட்டாமை.
**சிலுகுசிலுகெனல்** – விரைவுக்குறிப்பு.
**சிலுகுபாக்கி** – கையிருப்பு.
**சிலுகை** – கஞ்சாக்குடுக்கை.
**சிலுசிலுத்தல்** – ஒலித்தல்; படபடவென்று பேசுதல்; கோபித்தல்; குளிர்வருதல்; குளிர்ந்திருத்தல்; தூறுதல்.
**சிலுசிலுப்பு** – குளிர்ச்சி; சிறுகோபம்; குறும்பு.
**சிலுசிலெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; குளிரால் நடுங்குதல் குறிப்பு.
**சிலுத்தல்** – பதமாதல்; சோறு பதனழிதல், சோறளிதல்; கோபித்தல்; குலுங்கக் காய்த்தல்; கொஞ்சமாய்ச் சொரிதல்.
**சிலுநீர்** – இலையில் தங்கி விழும் மழைத்துளி.
**சிலுப்பட்டை** – அலப்புகிறவன்; குறும்பு செய்யுஞ் சிறுவன்.
**சிலுப்பல்** – காண்க: **சிலும்பல்.**
**சிலுப்பு** – நடுக்கம்; கோபங்காட்டுகை; அடங்கா நடை.
**சிலுப்புதல்** – தயிர்கடைதல்; கலக்குதல்; அசைத்தல்; சுழற்றுதல்; மயிர்நெறிக்கச் செய்தல்.
**சிலும்பல்** – சிலிர்த்திருக்கை; சீலை முதலியவற்றின் கரடு; துணி முதலியவற்றின் பீறல்.
**சிலும்பு** – மரச்சிறாம்பு; களிம்பு.
**சிலும்புதல்** – மயிர் முதலியன சிலிர்த்தல்; கட்டை முதலியவற்றில் தும்பு முதலியன வெளிப்பட்டு நிற்றல்; பெருகிவருதல்; ஒலித்தல்; கலங்குதல்; அசைதல்.
**சிலுவட்டை** – கீழோர், கயவர்.
**சிலுவல்** – கந்தை; எளிமை; அழகின்மை; ஒழுங்கின்மை; மரியாதையின்மை.
**சிலுவலி** – சீர்கெட்டவள்.
**சிலுவாணம்** – செலவுக்குக் கொடுத்ததில் மிகுத்து வைக்கும் பணம்.
**சிலுவை** – கழுமரம்; கிறித்து அறையப்பட்ட மரம்; கிறித்தவ சமய சின்னத்துள் ஒன்று.
**சிலேட்டர்** – செட்டிகள், வணிகர்.
**சிலேட்டி** – செட்டி.
**சிலேட்டுமம்** – உடலிலுள்ள கபக்கூறு.
**சிலேடித்தல்** – இருபொருள்படப் பேசுதல்.
**சிலேடை** – பல பொருள் தரும் பாட்டு; ஒரு வடிவாய் நின்ற சொற்றொடர் பல பொருளுடையதாக வரும் அணி; இனிய சொற்றொடர்.
**சிலேதம்** – செம்முருங்கைமரம்.
**சிலேபணம்** – உடலிலுள்ள கபக்கூறு; இறக்குந் தறுவாயில் தோன்றும் மூச்சு.
**சிலேபி** – ஓர் இனிப்புப் பண்டம்.
**சிலேற்பனை** – காண்க: **சிலேபணம்.**
**சிலை** – கல்லிற் செதுக்கிய உருவம்; முழக்கம்; வில்; தனுராசி; மார்கழி மாதம்; மூல நாள்; வானவில்; ஒளி; வால்; மருந்து அரைக்கும் குழி அம்மி; மலை; அம்மி; ஒரு மரம்; சூதகபாடாணம்.
**சிலைக்கல்** – ஈரக்கல்.
**சிலைத்தல்** – ஒலித்தல்; முழங்குதல்; யாழொலித்தல்; கொட்டுதல்; சினங்கொள்ளுதல்; பின்னிடுதல்.
**சிலைநாகம்** – சூடாலைக்கல்.
**சிலைநார்** – கல்நார்.
**சிலைநிறக்கல்** – மாமிசச்சிலை.
**சிலைபாரித்தல்** – வில் வளைத்தல்.
**சிலைமா** – மாக்கல்.
**சிலையடித்தல்** – கல்லில் உருவம் செதுக்குதல்.
**சிலையாவி** – காண்க: **சிலைநார்.**
**சிலையிராசன்** – இரத்தினங்களுள் அரசாகிய வயிரம்.
**சிலையுடம்பு** – புண்கட்டிகள் அடிக்கடி புறப்படுதற்குரிய உடற்கூறு.
**சிலையோடுதல்** – புரையோடுதல்; எதிரொலித்தல்.
**சிலைவயிரம்** – வயிரக்கல்.
**சிலைவிந்து** – காண்க: **சிலைநார்.**
**சிலோச்சயம்** – மலை.
**சிவ்வல்** – கடற்பாசி.
**சிவ்வெனல்** – சிவத்தற்குறிப்பு; விரைவுக்குறிப்பு; இறுகற்குறிப்பு.
**சிவக்குறி** – சிவலிங்கம்.
**சிவகணம்** – சிவசேவைப் பரிவாரம்.
**சிவகணமுதல்** – சிவகணத்தின் தலைவராகிய நந்திதேவர்.
**சிவகதி** – வீடு, முத்தி.
**சிவகதிக்கிறை** – சிவகதிக்குத் தலைவனான அருகன்.
**சிவகம்** – சாதிக்காய்; நாய்ச்சீரகம்.
**சிவகரந்தை** – ஒரு பூண்டுவகை.
**சிவகாமி** – சிதம்பரத்து அம்பிகை.
**சிவங்கரன்** – மங்கலத்தைச் செய்பவனாகிய சிவபெருமான்.
**சிவங்கரி** – மங்கலத்தைச் செய்பவளாகிய பார்வதி.
**சிவச்சி** – சாதிக்காய்.
**சிவசக்தி** – சிவனிற் பிரியாத சக்தி.

**சிவசத்தி** – ஐந்துவகைச் சத்தி; துரிசு.
**சிவசமயம்** – சைவமதம்.
**சிவசன்** – சிவனிடம் பிறந்தவனாகிய சுக்கிரன்.
**சிவசாதனம்** – உருத்திராக்கம், திருநீறு முதலிய சைவசமயத்திற்குரிய சின்னங்கள்; உருத்தி ராக்கம்.
**சிவசாதாக்கியம்** – அருட்சக்தியால் தியான மூர்த்தியாய் நின்ற சிவம்.
**சிவசித்தர்** – சைவ சமயத்திற் கூறிய பரமுத்தியை அடைந்தவர்.
**சிவசிவ** – ஓர் இரக்கக்குறிப்பு.
**சிவசின்னம்** – காண்க: **சிவசாதனம்.**
**சிவஞானம்** – இறையுணர்வு, தெய்வ அறிவு.
**சிவஞானி** – சிவஞானம் பெற்றோன்.
**சிவண** – உவமைச்சொல்.
**சிவணுதல்** – நட்புக்கொள்ளுதல்; பொருந்துதல்; அளவளாவுதல்; அணுகுதல்; ஒத்தல்; பெறு தல்.
**சிவத்ததாசி** – செடிவகை; செம்பருத்தி; செம்பரத்தை.
**சிவத்தம்** – செம்முருங்கைமரம்.
**சிவத்தல்** – சிவக்குதல்; கோபித்தல்; சினக் குறிப்பு.
**சிவத்துருமம்** – வில்வமரம்.
**சிவதடி** – வெள்ளரி.
**சிவதரம்** – அதிக மங்களமானது.
**சிவதலம்** – சிவபிரான் கோயில்கொண்ட இடம்.
**சிவதாரம்** – தேவதாரு என்னும் மரவகை.
**சிவதுளசி** திருநீற்றுப்பச்சை.
**சிவதூதி** – துர்க்கை.
**சிவதை** – கொடிவகை.
**சிவந்தசோறு** – தீய்ந்துபோன சோறு.
**சிவந்தவேசை** – செம்பரத்தைச்செடி.
**சிவந்தி** – பாலைவகை; பூச்செடிவகை; கடுக்காய் வகை.
**சிவந்திரம்** – கைம்மாறு; வேலையில் இருப் பவர்க்கு அம் முறையில் கொடுக்கும் சுதந்தரம்.
**சிவநாபம்** – ஒருவகை இலிங்கம்.
**சிவநிசி** – சிவராத்திரி.
**சிவப்பன்** – செந்நிறமுள்ளவன்.
**சிவப்பி** – செந்நிறமுள்ளவள்; செந்தெங்கு.
**சிவப்பிராமணர்** – காண்க: **ஆதிசைவர்.**
**சிவப்பிரியம்** – உருத்திராக்கம்.
**சிவப்பிரியை** – சிவபிரானிடம் அன்புடையா ளாகிய பார்வதிதேவி.
**சிவப்பு** – செந்நிறம்; சிவப்புக்கல்; சீட்டு முதலிய விளையாட்டுகளில் வென்ற கட்சிக்கு இடும் குறியீடு; கோபம்; கறுப்பு.
**சிவப்புக்கந்தி** – கோழித்தலைக் கந்தகம்.
**சிவப்புக்கல்** – ஈரற்கல்; ஒரு மணிவகை.
**சிவப்புச்சிலை** – கெம்பு.
**சிவப்பூர்தல்** – சிவந்தநிறமடைதல்.
**சிவப்பேறு** – சிவமாம் தன்மையை அடைகை.
**சிவபண்டாரி** – சிவாலயக் கருவூலக்காரன்.
**சிவபதம்** – சிவனடியார்கள் தத்தம் பரிபாகத் திற்கு ஏற்ப அடையும் தான் ஆள் உலகிருத் தல், தன்பால் இருத்தல், தான் ஆம் பதம் பெறல், தான் ஆகுதல் என்னும் நால்வகைச் சிவபதவி.
**சிவபாத்தியன்** – சிவனடியான்.
**சிவபீசம்** – காண்க: **சிவவிந்து.**
**சிவபுரம்** – சிவலோகம்.
**சிவபூசை** – சிவவழிபாடு.
**சிவபோகம்** – சிவானந்தம்.
**சிவம்** – மங்களம்; உயர்வு; களிப்பு; நன்மை; குறுணி; முத்தி; கடவுளின் அருவுரு நிலை; சிவத்துவம்.
**சிவமது** – சிறுபுள்ளடிப்பூடு.
**சிவமயம்** – சிவமாந்தன்மை; மங்கலமொழி.
**சிவமரம்** – வெண்கடப்பமரம்; சவுக்குமரம்.
**சிவமல்லி** – காண்க: **கொக்குமந்தாரை.**
**சிவயோகி** – சிவயோகத்தால் முத்தியடைந் தோர்; காண்க: **வசம்பு.**
**சிவரசம்** – மூன்றுநாள் ஊறிய கஞ்சி; பாதரசம்.
**சிவராத்திரி** – சிவனடியார்கள் நாள் முழுதும் பட்டினியிருந்து இரவெல்லாம் கண்விழித்துச் சிவனைப் பலகாலம் அருச்சித்து மாசி மாதத் துக் கிருட்டின சதுர்த்தசியில் கொண்டாடும் மகாசிவராத்திரி விரதம்.
**சிவல்** – கவுதாரி; காடைவகை; செந்நிலம்; பகன்றைக்கொடி.
**சிவலை** – சிவப்பு நிறமுள்ள ஆள்; சிவப்புநிற முள்ளது; செந்நிற விலங்கு.
**சிவலோகச்சேவகன்** – காந்தம்.
**சிவலோகம்** – கைலாசம்.
**சிவவல்லபம்** – எருக்கு; ஒருவகை நாவல்; செவந் திச் செடி.
**சிவவிந்து** – இதள், பாதரசம்.
**சிவவெற்பு** – பழநி.
**சிவவேடம்** – உருத்திராக்கம் முதலிய சிவசின்னம் தரித்த கோலம்.
**சிவளிகை** – தலையணி.
**சிவளிகைக்கச்சு** – உடைமேல் கட்டும் கச்சு.
**சிவன்** – மும்மூர்த்திகளுள் ஒருவரான அழிக்கும் கடவுள்; சிவனடியார்க்கு வழங்கிய சிறப்புப் பெயர்.
**சிவனார்கிழங்கு** – காண்க: **கார்த்திகைக்கிழங்கு.**
**சிவனார்பாகல்** – கோவைக்கொடி; ஐவிரலிக் கொடி.

**சிவனார்வேம்பு** – ஒரு செடிவகை.
**சிவனி** – கழுதை.
**சிவா** – கடுக்காய்; கீழாநெல்லி; ஆடுதின்னாப் பாளை; வன்னிமரம்.
**சிவாசாரியர்** – ஆதிசைவர்களுடைய பட்டப் பெயர்.
**சிவாட்சம்** – உருத்திராக்கமணி.
**சிவாதரம்** – மரக்கொம்பு.
**சிவாயநம** – சைவர்களால் போற்றப்படும் ஐந்தெழுத்து மந்திரம்.
**சிவார்ச்சனம், சிவார்ச்சனை** – சிவபூசை.
**சிவாருகம்** – ஆலமரம்.
**சிவாலயம்** – சிவன்கோயில்.
**சிவானுபூதி** – சிவனோடு இரண்டறக் கலக்கும் அனுபவம்.
**சிவிகரம்** – சாதிக்காய்.
**சிவிகை** – பல்லக்கு; எருதுபூட்டிய வண்டிவகை.
**சிவிகையார்** – பல்லக்குச் சுமக்கும் சாதியார்.
**சிவிங்கி** – ஒரு விலங்குவகை; ஒரு பறவைவகை; சிறுத்தை.
**சிவிட்கு** – கோபம்.
**சிவிட்கெனல்** – பொறுமையின்மைக் குறிப்பு; விரைவுக்குறிப்பு.
**சிவிடு** – சிறிது; முந்நூற்றறுபது நெல் பிடிக்கும் அளவு.
**சிவிரம்** – படையெடுத்த அரசன் தங்குமிடம், பாசறை.
**சிவிறி** – விசிறி; நீர்வீசும் கருவி.
**சிவிறுதல்** – பரத்தல்; காண்க: **விசிறுதல்.**
**சிவுகம்** – மோவாய்.
**சிவேதை** – செடிவகை; நாணல்.
**சிவேரெனல்** – செந்நிறக்குறிப்பு.
**சிவை** – பார்வதி; காளி; நரி; வேர்; உலைமூக்கு; நெல்லிக்காய்.
**சிவைக்கியம்** – சிவனும் உயிரும் ஒன்றாய் இருத்தல்.
**சிவோகம்பாவனை** – சிவனே நான் என்று பாவித்தல்.
**சிழகுதல்** – விம்முதல்.
**சிள்வண்டு, சிள்வீ(வீ)டு** – சுவர்க்கோழி.
**சிள்ளுப்புள்ளெனல்** – சினக்குறிப்பு.
**சிள்ளெனல்** – விரைவுக்குறிப்பு; ஆரவாரக் குறிப்பு.
**சிளுசிளுத்தல்** – இரைச்சற்குறிப்பு; பதனழிவு.
**சிளுசி(பு)ளெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**சிளைத்தல்** – சோர்தல்.
**சிற்குணம்** – மெய்யறிவு, ஞானமாகிய குணம்.
**சிற்குணன்** – கடவுள்.
**சிற்சத்தி** – ஐவகை ஆற்றல்களுள் ஒன்று.
**சிற்சபை** – சிதம்பர நடனசபை.
**சிற்சிலிர்ப்பான்** – அம்மைநோய்வகை.
**சிற்சுகம்** – அறிவின்பம், ஞானானந்தம்.
**சிற்பசாத்திரம்** – சிற்பவித்தை.
**சிற்பசாலை** – சிற்பவேலை செய்யுமிடம்.
**சிற்பம்** – கல்லில் செதுக்கிய உருவம்; நுண்தொழில்; சிற்பக்கலை; சிந்திக்கை; அற்பம்; தொழில்திறமை.
**சிற்பர்** – சிற்பிகள்.
**சிற்பரக்கூர்மை** – கந்தகவுப்பு.
**சிற்பரம்** – கடவுள்.
**சிற்பரவுப்பு** – இந்துப்பு.
**சிற்பரன்** – அறிவுக்கு எட்டாத கடவுள்.
**சிற்பரை** – பார்வதி; சலவைக்கட்டி; பொன்னிமிளை.
**சிற்பன்** – படைப்புத்தொழிலில் வல்லவனான பிரமன்; சிற்பத் தொழிலோன்.
**சிற்பாசாரி, சிற்பி** – சிற்பக்கலைஞன்; நுட்பத் தொழில் செய்வோன்; கம்மியன்.
**சிற்றகத்தி** – ஒரு மரவகை.
**சிற்றஞ்சிறுகால்** – அதிகாலை, வைகறை.
**சிற்றடி** – சிறிய கால்.
**சிற்றடிப்பாடு** – மனித நடமாட்டம் அதிகம் இல்லாத ஒற்றையடிப்பாதை.
**சிற்றடியார்** – குற்றேவல் செய்வோர்.
**சிற்றண்டம்** – முட்டை.
**சிற்றப்பன்** – சிறிய தகப்பன்; மாற்றாந் தகப்பன்.
**சிற்றம்பலம்** – சிதம்பரத்து நடனசபை.
**சிற்றம்பலவன்** – சிதம்பரத்தில் நடனமாடுஞ் சிவபெருமான்.
**சிற்றரத்தை** – ஒரு செடிவகை.
**சிற்றவை** – சிறிய தாய்.
**சிற்றறிவன்** – ஆன்மா.
**சிற்றறிவு** – சுருங்கிய அறிவு, புல்லறிவு.
**சிற்றாடை** – சிறுமியர் அணியும் உடை; சிறிய ஆடை.
**சிற்றாத்தாள்** – சிறிய தாய்.
**சிற்றாமணக்கு** – ஓர் ஆமணக்குவகை.
**சிற்றாமல்லி** – காட்டுமல்லிகை.
**சிற்றாமுட்டி** – ஒரு செடிவகை.
**சிற்றால்** – கல்லத்திமரம்.
**சிற்றாலவட்டம்** – பீலிவட்ட விசிறி.
**சிற்றாள்** – ஏவலாள்; பையன்; கொத்தனுக்கு உதவிபுரியுங் கூலியாள்.
**சிற்றாறு** – சிறு ஆறு.
**சிற்றி** – சிறிய தாய்; பசளைக்கீரை.
**சிற்றிதழ்** – அகவிதழ்; அழகான பின்னல்.
**சிற்றிரு** – கிலுகிலுப்பைச்செடி.
**சிற்றிரை** – சிற்றுயிர்களின் உணவு; எளிய உணவு.

**சிற்றில்** – சிறு குடில்; சிறு வீடு; சிறுமியர் கட்டி விளையாடும் மணல்வீடு; காண்க: **சிற்றிற் பருவம்**; கந்தை.

**சிற்றிலக்கம்** – கீழ்வாயிலக்கம்.

**சிற்றிலிழைத்தல்** – சிறுமியர் மணல்வீடு கட்டி விளையாடுதல்.

**சிற்றிலை** – கடுக்காய்; குன்றிமணி; நெய்ச்சிட்டி.

**சிற்றிற்பருவம்** – சிறுமியர் கட்டிய மணற் சிற்றிலைத் தலைவன் சிதைக்கும் பருவத்தைப் புனைந்து கூறும் ஆண்பாற் பிள்ளைத்தமிழ்.

**சிற்றின்பம்** – இம்மைக்குரிய இன்பம், காம வின்பம்.

**சிற்றினம்** – அறிவும் ஒழுக்கமும் அற்றோர் கூட்டம்; நல்லறிவு இல்லாத தாழ்ந்தோர்.

**சிற்றுண்டி** – சிறு அளவான உணவு, எளிய உணவு; இனிப்பு உணவுவகை; பலகாரவகை, பண்ணி காரம்.

**சிற்றுணவு** – சிற்றுண்டி; கறி முதலியன.

**சிற்றுதல்** – சஞ்சலப்படுதல்.

**சிற்றுயிர்** – குறுகிய காலமே வாழும் உயிர்; இழிந்த உயிர்.

**சிற்றுரு** – சின்னவுரு; தாலியுடன் கோக்கும் உரு.

**சிற்றுள்** – சரக்கறை.

**சிற்றுளி** – தச்சுக்கருவி.

**சிற்றூண்** – காண்க: **சிற்றுண்டி**.

**சிற்றூர்** – சிறிய ஊர், குக்கிராமம்; குறிஞ்சி நிலத்தூர்.

**சிற்றூறல்** – சின்ன நீரூற்று.

**சிற்றெண்** – கீழெண்; இருசீர் ஓரடியாய் வரும் அம்போதரங்கவகை; பரிபாடல் உறுப்பு களுள் ஒன்று.

**சிற்றெலி** – சுண்டெலி.

**சிற்றெறும்பு** – எறும்புவகை.

**சிறக்கணித்தல்** – கண்ணைச் சுருக்கிப் பார்த்தல்; கடைக்கண்ணாற் பார்த்தல்; அவமதித்தல்.

**சிறகடித்தல்** – பறத்தற்பொருட்டு இறக்கை யடித்தல்.

**சிறகர்** – இறகு.

**சிறகறுதல்** – வலியழிதல்.

**சிறகாற்றுதல்** – சிறகை விரித்தடித்து இளைப் பாற்றிக்கொள்ளுதல்.

**சிறகி** – பறவைவகை; ஒரு மீன்வகை.

**சிறகிமீன்** – பறவைமீன்.

**சிறகு** – இறகு; மீன்சிறகு; படை முதலியவற் றின் உறுப்பு; தெருவின் பக்கம்; தெரு; கிளை வாய்க்கால்; பனையோலையிற் பாதி; கதவு முதலியவற்றின் இலை.

**சிறகுகட்டிப்பறத்தல்** – விரைந்துசெல்லுதல்.

**சிறகுகதவு** – இரட்டைக்கதவு.

**சிறகுகுடில்** – தூக்குங்குடிசை.

**சிறகுகோதுதல்** – சிறகை அலகால் வகிர்தல்; சிறகை உலர்த்துதல்.

**சிறகுகோழி** – காட்டுக்கோழிவகை.

**சிறகுதெரித்தல்** – காண்க: **சிறகுகோதுதல்**.

**சிறகுமுளைத்தல்** – தற்காத்துக்கொள்ளும் வலி பெறுகை; வெளியேறிவிடுகை.

**சிறங்கணித்தல்** – காண்க: **சிறக்கணித்தல்**.

**சிறங்கித்தல்** – அவமதித்தல்; சிறங்கையால் அளத்தல்.

**சிறங்கை** – கைந்நிறையளவு.

**சிறத்தல்** – மேன்மையாதல்; மேற்படுதல்; கனத் தல்; இன்றியமையாதிருத்தல்; மங்கலமாதல்; அன்பாதல்; மகிழ்தல்; அழகாதல்.

**சிறந்தோர்** – உயர்ந்தோர்; தேவர்; உறவினர்; துறந்தோர்.

**சிறப்பணி** – சாதி, குணம், செயல் என்பவற்றால் ஒரு பொருளைச் சிறப்பித்துக் கூறும் அணி; ஒப்புமையால் பொதுமையுற்றிருந்த இரண்டு பொருள்களுக்கு ஒரு காரணத்தால் வேறுபாடு தோன்றுவதைக் கூறும் அணி.

**சிறப்பாங்கல்** – மாணிக்கவகை.

**சிறப்பாடு** – மேம்பாடு.

**சிறப்பித்தல்** – அலங்கரித்தல்; பெருமைப்படுத் தல்; புகழ்தல்.

**சிறப்பிலாதாள், சிறப்பிலாள்** – மேம்பாடு இல்லாதவளாகிய மூதேவி.

**சிறப்பு** – பெருமை; திருவிழா; செல்வம்; அன்பளிப்பு; மதிப்பு; தலைமை; பகட்டு; காண்க: **சிறப்பணி**; இன்பம்; ஒன்றற்கேயுரியது; வரிசை; போற்றுகை; மிகுதி; வீடுபேறு.

**சிறப்புச்செய்தல்** – ஒப்பனைசெய்தல்; போற்று தல்; விழாக்கொண்டாடுதல்.

**சிறப்புடைக்கிளவி** – அன்பான சொல்.

**சிறப்புப்பாயிரம்** – ஒரு நூலுக்குச் சிறப்பாக அமைக்கப்பட்ட முன்னுரை, நூற்பெயரும் காரணமும் ஆக்கியோன் பெயரும் அளவும் பயனுமுரைப்பது.

**சிறப்புப்பெயர்** – ஒன்றற்கே உரிமைபூண்டு வரும் பெயர்; திணை, நிலம், சாதி, குடி, உடைமை, குணம், தொழில், கல்வி என்னும் எண்வகை யாலும் பொருள்களுக்குச் சிறப்பாகக் கூறும் பெயர்; அரசன் கொடுக்கும் பட்டப்பெயர்.

**சிறப்புரை** – சிறப்புச் சொற்பொழிவு.

**சிறப்புவிதி** – ஒன்றற்குரிய சிறப்பான முறை.

**சிறப்பெடுத்தல்** – திருவிழாக் கொண்டாடுதல்.

**சிறப்பெழுத்து** – ஒரு மொழிக்குச் சிறப்பாக அமைந்துள்ள எழுத்து.

**சிறவு** – சிறந்த செயல்.

**சிறாங்கணித்தல்** – காண்க: **சிறக்கணித்தல்**.

**சிறாங்கித்தல்** – உள்ளங்கையளவாக்குதல்; உரிமையாக்குதல்; இரத்தல்.

**சிறாங்கை** – காண்க: சிறங்கை.
**சிறாம்பி** – காவற்பரண்.
**சிறாம்பித்தல்** – ஒருசேரத் திரட்டுதல்.
**சிறாம்பு** – மரச்சிலும்பு.
**சிறாம்புதல்** – குறுகுதல்; இளைத்தல்; உராய்தல்; பிறாண்டுதல்.
**சிறாய்** – மரத்துண்டு.
**சிறாய்த்தல்** – உராய்ந்து ஊறுபடுதல்.
**சிறாய்த்துக்குச்சி** – செடிவகை.
**சிறார்** – சிறுவர்.
**சிறிட்டம்** – விளாம்பட்டை.
**சிறிது** – இழிந்தது.
**சிறிதுரைத்தல்** – இகழ்ந்து பேசுதல்.
**சிறிபலம்** – வில்வமரம்.
**சிறியசிந்தையர்** – கீழோர்.
**சிறியத்தினி** –வேலிப்பருத்தி.
**சிறிய தகப்பன்** – தந்தைக்குப் பின்னோன்; சிறிய தாயின் கணவன்.
**சிறிய தாய்** – தாயின் தங்கை; சிற்றப்பன் மனைவி; இளைய மாற்றாந் தாய்.
**சிறியநோக்குதல்** – கடைக்கண்ணால் பார்த்தல்.
**சிறிய மனம்** – கயமைக்குணம்.
**சிறியன்** – சிறுவன்; இழிந்தவன்.
**சிறியிலை** – சிறிய இலை.
**சிறிவில்** – அகிலமரம்.
**சிறுக்கன்** – சிறுவன்.
**சிறுக்கி** – இளம்பெண்; வேலைக்காரி.
**சிறுக்குதல்** – சிறுகச் செய்தல்; சினத்தல்.
**சிறுகல்** – சிறுகுதல், குறைதல்.
**சிறுகாஞ்சொறி** – ஒரு செடிவகை.
**சிறுகாடு** – தூறு அடர்ந்த காடு.
**சிறுகாப்பியம்** – பெருங்காப்பியத்திற்குள்ள உறுப்புகளில் சில குறைந்து நடைபெறும் நூல் வகை.
**சிறுகாய், சிறுகாரிடம்** – சாதிக்காய்.
**சிறுகால்** – தென்றல்; காண்க: காவட்டம்புல்.
**சிறுகாலை** – உதயம்; விடியற்காலை; இளமைப் பருவம்.
**சிறுகிராமம்** – நூறு குடியுள்ள ஊர்.
**சிறுகீரை** – ஒரு கீரைவகை.
**சிறுகு** – குழப்பம்; துன்பம்; தடை.
**சிறுகுடல்** – இரைப்பை முதல் பெருங்குடல்வரையுள்ள உணவுக்குழாயின் பகுதி.
**சிறுகுடி** – குறிஞ்சிநிலத்தூர்; சிற்றூர்; ஏழைக் குடும்பம்; சுருங்குதல்; நிலைதாழ்தல்.
**சிறுகுழி** – 36 சதுரஅடிகொண்ட ஓர் அளவை; கீழ்வாயிலக்கப் பெருக்கம்.
**சிறுகுறிஞ்சா** – ஒரு மருந்துக் கொடிவகை.
**சிறுகுறிஞ்சி** – நேர்வாளமரம்; புளியாரைப் பூண்டு.
**சிறுச்சிறிது** – கொஞ்சம்கொஞ்சமாக.
**சிறுசடாமாஞ்சில்** – ஒரு மருந்துவகை.
**சிறுசவளம்** – குந்தப்படை.
**சிறுசெங்குரலி** – கருந்தாமக்கொடி.
**சிறுசெய்** – பாத்தி.
**சிறுசொல்** – பழிச்சொல்; இழிசொல்.
**சிறுசோற்றுவிழவு** – சோற்றைத் தயிர் முதலிய வற்றோடு கலந்து உருண்டைகளாக்கி அவற்றை வருவோர்க்குக் கொடுத்து மகிழும் கொண்டாட்டம்.
**சிறுசோறு** – குழந்தைகள் விளையாட்டாகச் சமைக்கும் மணற்சோறு; சித்திரான்னம்.
**சிறுத்தல்** – சிறிதாதல்; சுருங்குதல்; கோபித்தல்; தடுத்தல்.
**சிறுத்தை** – சிறு புலிவகை.
**சிறுதகை, சிறுதகைமை** – தலைவணக்கம்.
**சிறுதடி** – சிறுவயல்; பாத்தி.
**சிறுதரம்** – சிறிய அளவு; இளம்பருவம்; சிறு தரத்துப் பிள்ளைகள்.
**சிறுதனம்** – சிறுபிள்ளைத் தன்மை; சிறுசேமிப்பு; சொந்த நிதிகள்.
**சிறுதாயார்** – காண்க: சிறிய தாய்.
**சிறுதாரை** – நீர்வீசுந் துருத்தி.
**சிறுதாலி** – சிறிய தாலிவகை; கணவனது வாழ் நாள்வரை மகளிர் கழுத்தில் சரட்டுடன் எப்பொழுதுமுள்ள தாலி; வைப்பாட்டிக்குக் கொடுக்குந் தாலி.
**சிறுதானியம்** – புன்செய்த் தானியம்.
**சிறுதிகை(சை)** – வடகிழக்கு, வடமேற்கு, தென் கிழக்கு, தென்மேற்கு எனப்படும் கோணத் திசைகள்.
**சிறுதிட்டை** – சிறுமேடு.
**சிறுதுகில்** – கந்தை.
**சிறுதுடி** – சிறிய உடுக்கைவகை.
**சிறுதுத்தி** – ஒரு பூண்டுவகை.
**சிறுதேட்டு** – காண்க: சில்வானம்.
**சிறுதேர்** – விளையாட்டு வண்டி; காண்க: சிறு தேர்ப்பருவம்.
**சிறுதேர்ப்பருவம்** – தலைவன் சிறிய தேரைச் செலுத்தும் பருவத்தைச் சிறப்பிக்கும் ஆண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பகுதி.
**சிறுதேவபாணி** – இசைப்பாவகை.
**சிறுதொழில்** – இழிசெயல்.
**சிறுநகை** – புன்சிரிப்பு.
**சிறுநணி** – விரைவாக.
**சிறுநனி** – சிறிதுபொழுது; விரைவாக.
**சிறுநாக்கு** – உண்ணாக்கு.
**சிறுநீர்** – மூத்திரம்.
**சிறுநுண்மை** – அம்பெய்தற்குரிய நால்வகை இலக்குகளுள் மிகவும் சிறியதான இலக்கு.

**சிறுநெறி** – அரிய வழி; தீய வழி.
**சிறுநோக்கு** – மதிப்பற்ற பார்வை.
**சிறுப்பம்** – இளமை.
**சிறுப்பனை** – இழிவு; வறுமை; அவமரியாதை; தொந்தரவு.
**சிறுப்பித்தல்** – சிறுகப்பண்ணுதல்; மரியாதைக் குறைவு காட்டுதல்.
**சிறுப்பிள்ளை** – வேலையாள்.
**சிறுப்பெரியார்** – சிறுமைக் குணங்கொண்டு பெரியார்போலத் தோன்றுபவர்.
**சிறுபசி** – இளம்பசி.
**சிறுபஞ்சமூலம்** – கண்டங்கத்தரி, சிறுமல்லிகை, பெருமல்லிகை, சிறுவழுதுணை, சிறுநெருஞ்சி இவற்றின் வேர்கள் சேர்ந்த மருந்து; ஒரு நூல்.
**சிறுபட்டி** – கட்டுக்கடங்காத இளைஞன்.
**சிறுபதம்** – வழி; தண்ணீராகிய உணவு.
**சிறுபயறு** – பச்சைப்பயறு; பனிப்பயறு.
**சிறுபயிர்** – குறுகிய காலத்தில் விளையும் பயிர்; புன்செய்ப் பயிர்.
**சிறுபருப்பு** – பச்சைப் பயற்றம்பருப்பு.
**சிறுபறை** – கைம்மேளம், தோற்கருவிவகை; காண்க: **சிறுபறைப்பருவம்.**
**சிறுபறைப்பருவம்** – தலைவன் சிறுபறை வைத்துக் கொண்டு அடித்து விளையாடும் பருவத்தைச் சிறப்பிக்கும் ஆண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பகுதி.
**சிறுபான்மை** – சிலவிடங்களில்; கொஞ்சம்; அருகிவழங்கும் வழக்கு.
**சிறுபிராயம்** – இளம்பருவம்.
**சிறுபிள்ளை** – இளம்பிள்ளை.
**சிறுபுறம்** – பிடரி; சிறுகொடை; முதுகு.
**சிறுபுள்ளடி** – ஒரு செடிவகை.
**சிறுபூளை** – நடைவழியில் முளைக்கும் ஒரு பூண்டுவகை.
**சிறுபெண்** – இளம்பெண்.
**சிறுபொழுது** – நாளின் பிரிவாகிய பொழுதுகள்; அவை: மாலை, இடையாமம், விடியல், காலை, நண்பகல், எற்பாடு.
**சிறுமகன்** – அறிவற்றவன்; சிறுவன்; இழிந்தவன்.
**சிறுமட்டம்** – சிறு குதிரை; சிற்றளவு; சிறுவாழை மரம்; யானைக்கன்று; குள்ளமானவன்(ள்).
**சிறுமணி** – காராமணிவகை; சதங்கை; ஒரு நெல்வகை.
**சிறுமல்** – தண்ணீர்விட்டான்கிழங்கு.
**சிறுமலை** – குன்று, பொற்றை.
**சிறுமாரோடம்** – செங்கருங்காலிமரம்.
**சிறுமி** – இளம்பெண்; மகள்.
**சிறுமியம்** – சேறு.
**சிறுமீன்** – அருந்ததி; அயிரைமீன்.
**சிறுமுத்தன்** – ஆண்பொம்மை.
**சிறுமுதுக்குறைமை** – இளமையிற் பேரறிவுடைமை.
**சிறுமுதுக்குறைவி** – இளம்பருவத்தே பேரறிவினையுடையவள்.
**சிறுமுறி** – கைச்சீட்டு.
**சிறுமூசை** – உலோகங்களை உருக்க உதவும் சிறிய மண்குகை.
**சிறுமூலகம்** – பூண்டுவகை; திப்பிலி.
**சிறுமூலம்** – சிறுகிழங்குச்செடி; திப்பிலி.
**சிறுமை** – இழிவு; கயமைத்தனம், கீழ்மை; இளமை; நுண்மை; எளிமை; குறைபாடு; வறுமை; பஞ்சம்; பிறர் மனத்தை வருத்துகை; இளப்பம்; குற்றம்; நோய்; துன்பம்; மிக்க காமம்; கயமை.
**சிறுமைத்தனம்** – இளமை; கயமைத்தனம்; நுண்மை; குறைபாடு; வறுமை.
**சிறுமைப்படுதல்** – வறுமைப்படுதல்; எளிமைப் படுதல்; இடைஞ்சற்படுதல்; கீழ்நிலை அடைதல்.
**சிறுமையர்** – கீழ்மக்கள்.
**சிறுவதும்** – சிறிதும்.
**சிறுவம்** – இளமை.
**சிறுவயது** – காண்க: **சிறுபிராயம்.**
**சிறுவயல்** – காண்க: **சிறுசெய்.**
**சிறுவரை** – சிறிது நேரம்; சிறுமூங்கில்; அற்பம்.
**சிறுவல்** – குழந்தை; இளம்பருவம்; தடை.
**சிறுவழுதுணை** – கத்தரிச்செடிவகை; கண்டங்கத்தரி.
**சிறுவன்** – இளைஞன்; சிறியன்; மகன்; சிறுபுள்ளடிவகை.
**சிறுவாடு** – ஜமீனுக்குரிய பண்ணைநிலங்கள்; சில்வானம், சிறுதேட்டு; பற்றடைப்பு நிலம்.
**சிறுவாள்** – கைவாள்.
**சிறுவி** – மகள்.
**சிறுவிடு** – கொள்ளுத் தானியம்.
**சிறுவித்தம்** – சூதாட்டத்தில் பந்தயமாக வைத்த சிறுபொருள்.
**சிறுவிரல்**– சுண்டுவிரல்.
**சிறுவிலை** – பஞ்சகாலம்; இளைத்துள்ளது; விலைமிகுதி.
**சிறுவிலைக்காலம், சிறுவிலைநாள்** – வறுமைக்காலம், பஞ்சகாலம்.
**சிறுவீடு** – சிறிய இல்லம்; அதிகாலையில் பால் கறக்குமுன் மாடுகளை மேயவிடுதல்; சிறுமியர் கட்டியாடும் மணல்வீடு.
**சிறுவெண்காக்கை** – கழுத்தில் சிறு வெண்மை நிறமுடைய காகம்.
**சிறுவோர்** – சிறுபிள்ளைகள்.

**சிறை** – காவல்; காவலில் அடைக்கை; சிறைச்சாலை; அடிமைத்தனம்; அடிமையாள்; பெண்டாகச் சிறைபிடிக்கப்பட்ட இளம் பெண்; அழகுள்ளவள்; அணை; நீர்நிலை; இடம்; பக்கம்; கரை; மதில்; வரம்பு; இறகு; யாழ்நரம்புக் குற்றவகையுள் ஒன்று.

**சிறைக்கணித்தல்** – புறக்கணித்தல்.

**சிறைக்களம், சிறைக்கூடம், சிறைக்கோட்டம்** – காவற்கூடம், சிறைச்சாலை.

**சிறைகாவல்** – சிறையிலிட்டுக் காக்குங் காப்பு.

**சிறைகொள்ளுதல்** – காவலில் வைக்கப் பிடித்துச் செல்லுதல்.

**சிறைச்சாலை** – காண்க: **சிறைக்கூடம்.**

**சிறைச்சோறு** – முப்பத்திரண்டு அறங்களுள் சிறைப்பட்டார்க்கு உணவளிக்குஞ் செயல்.

**சிறைசெய்தல், சிறைத்தல்** – சிறையில் வைத்தல்; நீரைத் தடுத்தல்; நீரைக் கட்டுதல்.

**சிறைதல்** – நிறங்கெடுதல்.

**சிறைநோய்** – சிறைத்துன்பம்.

**சிறைப்படுதல்** – சிறையில் அடைபடுதல்; தடைபடுதல்; அகப்படுதல்; மறக்கப்படுதல்.

**சிறைப்பள்ளி** – காண்க: **சிறைக்கூடம்.**

**சிறைப்பாடு** – சிறை; தடை; தவறி விழுந்த இடத்தில் பண்டங்கிடக்கை; பக்கம்.

**சிறைப்புறம்** – ஒதுக்கிடம்; தோழி தலைவியர்க்குள் நிகழும் செய்திகளைத் தலைவன் மறைந்தறிதற்கு அனுகூலமாய்க் காவல் மனைப்புறமாயுள்ள இடம்; வேலிப்புறம்; சிறைச்சாலை.

**சிறைபிடித்தல்** – அடிமையாக்குதல்; மனைவியாகவேனும் காமக்கிழத்தியாகவேனும் கொள்ளுமாறு பெண்ணைச் சிறைப்படுத்திக் கொண்டுபோதல்.

**சிறைமீட்டல்** – சிறையிலிருந்து விடுவித்தல்.

**சிறைமீள்(ளு)தல்** – சிறையினின்றும் நீங்குதல்.

**சிறையெடுத்தல்** – காண்க: **சிறைபிடித்தல்;** பெண்ணைத் தன்வசத்தே சேர்த்தல்.

**சிறைவன்** – காவற்பட்டவன்.

**சிறைவீடு** – சிறையினின்றும் வெளிவிடுகை.

**சிறைவைத்தல்** – காவலில் வைத்தல்.

**சின்** – ஓர் அசைச்சொல்.

**சின்மதி** – ஏழைப்புத்தி.

**சின்மயம்** – அறிவுமயம்.

**சின்மயன்** – அறிவுமயமாக உள்ள உயிர்.

**சின்முத்திரை** – சுட்டுவிரல் நுனியைப் பெருவிரல் நுனியுடன் சேர்த்துக் காட்டும் ஞானமுத்திரை.

**சின்மை** – சிறுமை, இழிவு; குரலின் மென்மை.

**சின்மொழி** – சில சொல்; இழிவான சொல்.

**சின்ன** – சிறிய; இழிந்த; இளைய.

**சின்னகை** – புன்னகை.

**சின்னச்சாதி** – கீழ்ச்சாதி.

**சின்னஞ்சிறிய** – மிகச் சிறிய.

**சின்னத்தட்டு** – பொற்கொல்லர் தராசின் தட்டு.

**சின்னத்தனம்** – கயமைத்தனம்; சிறுபிள்ளைத் தனம்.

**சின்னத்துரை** – இளவரசர்.

**சின்னது** – சிறியது.

**சின்னப்பட்டம்** – பெரிய மடாதிபதிக்கு அடுத்த நிலையில் உள்ளவர்; குருவின் வாரிசு.

**சின்னப்படுத்தல்** – பங்கப்படுத்தல், குறைப்படுத்தல்.

**சின்னப்படுதல்** – பங்கப்படுதல்; பழுதடைதல், சிதைவடைதல், பின்னமுறுதல்; இகழ்ச்சியடைதல்.

**சின்னப்புத்தி** – அற்பபுத்தி; பிள்ளைப்புத்தி.

**சின்னப்பூ** – நூறு, தொண்ணூறு, எழுபது, ஐம்பது, முப்பது இவற்றுள் ஒரெண்கொண்ட நேரிசை வெண்பாக்களால் அரசனது தசாங்கத்தைப் புகழ்ந்து கூறும் நூல்வகை; விடுபூ; கிள்ளுப்பூ.

**சின்னபின்னம்** – கண்டதுண்டம்.

**சின்னம்** – அடையாளம்; பெண்குறி; காளம்; அற்பம்; சிறியது; முறம்; மழைத்தூறல்; இகழ்ச்சி; முறிவுற்றது; விடுபூ; கிள்ளுப்பூ; பொடி; காசு; வீரர்கள் போர்க்காலத்தில் தம் வாயில் இட்டுக்கொள்ளும் பொன்தகடு; சீந்திற்கொடி; துண்டு.

**சின்னம்படுதல்** – இகழ்ச்சியடைதல்.

**சின்னம்மா** – தாயின் தங்கை; தந்தையின் தம்பி மனைவி; திருமகள்.

**சின்னம்மை** – தாயின் தங்கை; தந்தையின் தம்பி மனைவி; அம்மைநோய்வகை.

**சின்னமலர்** – விடுபூ.

**சின்னமனிதன்** – கயமைத்தனமுள்ளவன்.

**சின்னமுத்து** – அம்மைநோய்வகை.

**சின்னமூதி** – அரசன் ஆணையைச் சின்னமூதிக் கொண்டு படைக்குச் சாற்றுவோன்.

**சின்னமேளம்** – துருத்தி முதலிய வாத்தியங்களுடன் தாசிகள் பாடிக்கொண்டு ஆடுதற்குரிய சதிர்மேளம்.

**சின்னல்** – பகட்டு.

**சின்னன்** – சிற்றுயிர்; சிறுபொருள்.

**சின்னாபின்னம்** – காண்க: **சின்னபின்னம்.**

**சின்னாயி** – தாயின் தங்கை; தந்தையின் தம்பி மனைவி.

**சின்னாருகம்** – சீந்திற்கொடி.

**சின்னி** – சிறியது; முகத்தலளவை; காண்க: **சின்னிபொம்மை;** செடிவகை; புரட்டுக்காரி; இலவங்கம்; குன்றிமணி.

**சின்னிபொம்மை** – பின்னல்மயிருள்ள தலையும் மரத்தால் செய்யப்பட்ட கைகளும் நீண்டு தொங்கும் சட்டையும் கொண்டதாய் ஒருசில பிச்சைக்காரிகள் தம் பாட்டுக்கு ஏற்பத் தாளம் இடும்படி செய்து கையில் வைத்தாட்டும் ஒரு வகைப் பொம்மை.

**சின்னீர்** – கலங்கலான நீர்; மூத்திரம்.

**சின்னூல்** – சிறு நூல்; நேமிநாதம் என்னும் இலக்கண நூல்.

**சின்னெறி** – கள்ளச் சிறுவழி.

**சின்னை** – பெரிய கடல்மீன்வகை.

**சினகர்** – சைனர், சமணர்.

**சினகரம்** – கோயில்; சமணக்கோயில்; சிறு கோயில்; அரண்மனை.

**சினத்தல்** – கோபித்தல்; புண் முதலியன சிவத்தல்.

**சினந்தவிர்ந்தோன்** – கோபம் தவிர்ந்தவனாகிய புத்தன்; அருகன்.

**சினப்பு** – கோபம்; புண் முதலியவற்றின் வீக்கம்; வேனற்கட்டி; வெப்பத்தால் உடலில் உண்டாகும் வியர்க்குரு.

**சினம்** – கோபம்; நெருப்பு; போர்; வெம்மை.

**சினவர்** – பகைவர்.

**சினவரன்** – சினத்தை அடக்கியவன்; புத்தன்; அருகன்.

**சினவல்** – போர்.

**சினவுதல்** – கோபித்தல்; கொதித்தெழுதல்; பொருதல்.

**சினவுநர்** – பகைவர்.

**சினன்** – புத்தன்; அருகன்.

**சினா** – வட்டத்திருப்பிச்செடி; பங்கம்பாளைச் செடி.

**சினாடி, சினாடிகா** – மூக்கிரட்டைக்கொடி.

**சினாது** – மெலிந்தது; மெலிவு.

**சினாவில்** – தும்பைப்பூண்டு.

**சினீவாலி** – சந்திரகலை தோன்றும் அமாவாசை நாள்.

**சினேகபலம்** – தைலத்தைக் கொண்ட எள்.

**சினேகம்** – நட்பு; எண்ணெய்.

**சினேசம்** – சாதிக்காய்.

**சினேந்திரன்** – புத்தன்; அருகன்.

**சினை** – விலங்கு முதலியவை கருக்கொண்டிருத்தல்; கருப்பம்; முட்டை; பூவரும்பு; உறுப்பு; மூங்கில்; மொட்டு; மரக்கிளை.

**சினைகொள்ளுதல்** – கருக்கொள்ளுதல்.

**சினைத்தல்** – தோன்றுதல்; பூ அரும்புதல்; தழைத்தல்; சிரங்கு புடைத்தல்; கருக்கொள்ளுதல்; பருத்தல்.

**சினைப்படுத்துதல்** – காண்க: **சினையாக்குதல்.**

**சினைப்படுதல்** – காண்க: **சினைகொள்ளுதல்.**

**சினைப்பருவம்** – கருக்கொள்ளும் பருவம்; நெற்கதிரில் மணிபிடிக்கும் பருவம்.

**சினைப்பு** – வெப்பத்தால் உடலில் உண்டாகும் வியர்க்குரு; கருக்கொள்ளுகை; அரும்புகை; கொழுப்பு.

**சினைப்பூ** – மரக்கொம்புகளில் தோன்றும் பூ.

**சினைப்பெயர்** – உறுப்பைக் குறிக்கும் பெயர்; உறுப்புக் காரணமாய் வரும் பெயர்.

**சினையாக்குதல்** – கருவுண்டாக்குதல்; தொல்லை தருதல்.

**சினையாகுபெயர்** – சினைப்பெயர் அதன் முதலுக்கு ஆகும் பெயர்.

**சினையாறுபடுகை** – வெள்ளம்வருதற் குறியாக ஆற்றுநீர் கசிதல்.

**சினைவினை** – சினையின் தொழிலைக் காட்டி நிற்கும் வினைச்சொல்.

## சீ

**சீ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ச்+ஈ); திருமகள்; சிறப்புக் குறிக்கும் ஓர் அடைமொழி; சீழ்; சளி; இகழ்ச்சி வெறுப்புகளின் குறிப்பு.

**சீக்கட்டுதல்** – சீழ்பிடித்தல்.

**சீக்கல்** – நாவின் நுனியை மடித்துச் செய்யும் ஒலியாகிய சீழ்க்கை; கல்வகை.

**சீக்காச்சா** – நாய்ப்புடல்கொடி.

**சீக்காய்** – பழுக்காத பனங்காய்; காண்க: சீழ்க்கை; சீயக்காய்.

**சீக்கிரப்படுதல்** – விரைவுபடுதல்; எளிதிற் சினங் கொள்ளுதல்.

**சீக்கிரபுத்தி** – அவசரபுத்தி.

**சீக்கிரம்** – விரைவு; நோய் முதலியவற்றின் வீறு; உறைப்பு; கோபம்; குதிரை பூட்டிய பெட்டி வண்டி; அம்பு.

**சீக்கிரான், சீக்கிரி, சீக்கிரிய(யா)ன்** – உசிலமரம்.

**சீக்குரு** – முருங்கைமரம்.

**சீக்கூட்டுதல்** – காண்க: **சீக்கட்டுதல்.**

**சீக்கை** – கோழை.

**சீகத்தம்** – அழகிய கை.

**சீகம்** – தமரத்தைமரம்.

**சீகம்புல்** – ஊகம்புல்.
**சீகரம்** – நீர்த்துளி; ஆலங்கட்டி; மழை; அலை; செல்வச் செழுமை; கவரி; ஒருவகைக் கோயில்.
**சீகரி** – நீர்த்திவலை.
**சீகா** – ஐந்து உலோகம்.
**சீகாமரம்** – மருத யாழ்த்திறங்களுள் ஒன்று.
**சீகாரம்** – ஒரு பண்வகை.
**சீகாரியம்** – கோயில், மடம் முதலியவற்றின் மேல்விசாரணை; மங்கலச் செயல்.
**சீகு** – காண்க: **சீகம்புல்.**
**சீங்கண்ணி** – முதலைவகை.
**சீங்குழல்** – குழல்வகை.
**சீச்சீ** – இகழ்ச்சிக்குறிப்பு.
**சீசகம், சீசம்** – ஈயம்; பைத்தியம்.
**சீசா** – கண்ணாடிக்குப்பி.
**சீட்டாடுதல்** – சீட்டு விளையாடுதல்.
**சீட்டாள்** – கடிதம் கொண்டுசெல்பவனான வேலைக்காரன்.
**சீட்டி** – அச்சடித்த துணி; சீழ்க்கை; ஊதுகுழல்.
**சீட்டியடித்தல்** – சீழ்க்கையடித்தல்.
**சீட்டு** – எழுத்துக் குறிப்பு; பத்திரம்; கூட்டுச் சீட்டு நிதி; விளையாட்டுச் சீட்டு; பட்டியல்.
**சீட்டுக்கச்சேரி** – சீட்டாட்டம்.
**சீட்டுக்கட்டு** – விளையாடுஞ் சீட்டுத்தொகுதி.
**சீட்டுக்கரைசுவான்** – ஏலச்சீட்டு நடத்துபவன்.
**சீட்டுக்கவி** – ஓலைப்பாசுரம், ஓலையில் கவி வடிவில் எழுதிய கடிதம்.
**சீட்டுக்கிழிதல்** – இழத்தல்; வேலையிலிருந்து நீக்கப்படுதல்.
**சீட்டுக்குலுக்குதல்** – திருவுளச்சீட்டு உதறுதல்.
**சீட்டுக்கொடுத்தல்** – ஆதாரபத்திரம் முதலியன கொடுத்தல்; வேலையினின்று விலகக் கட்டளையிடுதல்.
**சீட்டுப்பிடித்தல்** – கூட்டுச்சீட்டு ஏற்படுத்துதல்; சீட்டில் ஏலமெடுத்தல்; சீட்டு விளையாட்டில் பிறர் சீட்டை வென்றெடுத்தல்.
**சீட்டுப்போடுதல்** – திருவுளச்சீட்டு உதறுதல்; கூட்டுச்சீட்டு நிதியில் பங்கெடுத்தல்; சீட்டு விளையாட்டில் சீட்டுப் போடுதல்.
**சீட்டுவாங்குதல்** – தள்ளப்படுதல்; எமனுடைய சீட்டுப்பெறுதலான இறத்தல்.
**சீட்டுவிழுதல்** – திருவுளச்சீட்டு முதலியன ஒருவன் சார்பாக உரிமையாதல்.
**சீட்டை** – இரண்டாம் போகத்தில் விளையும் கதிர்; சிழ்க்கை.
**சீட்டைக்கதிர்** – இரண்டாம் போகத்தில் விளையும் கதிர்; பணியாளர் அனுபோகத்தின் பொருட்டு விடப்பட்ட கதிர்.
**சீடன்** – மாணாக்கன்.
**சீடு** – நெசவில் பயன்படும் நூற்கண்டு.
**சீடை** – உருண்டை வடிவான பலகாரவகை; நருங்கல்; ஒருமீன்வகை.
**சீண்டரம்** – தொல்லை, தொந்தரவு.
**சீண்டல், சீண்டு** – தயிர் முதலியவற்றின் தீநாற்றம்.
**சீண்டுதல்** – தொந்தரவுசெய்தல்; தீண்டி யுணர்த்துதல்.
**சீணசந்திரன்** – தேய்பிறை.
**சீணம்** – கேடு; சோர்வு; அழிவுறுகை.
**சீணித்தல்** – வலிகுறைதல்; அழிவடைதல்.
**சீத்தடித்தல்** – காற்று வாரிவீசுதல்.
**சீத்தல்** – கீறிக் கிளறுதல்; துடைத்தல்; போக்குதல்; பெருக்கித் தள்ளுதல்; கூர்மையாகச் சீவுதல்; தூயதாக்கல்.
**சீத்தா** – ஒரு பழமரவகை.
**சீத்தி** – இளப்பம்; தாழ்வு.
**சீத்துப்பூத்தெனல்** – மூச்சுத் திணறுதல் குறிப்பு; பாம்பு சீறற்குறிப்பு; முறுமுறுத்தற்குறிப்பு.
**சீத்துவம்** – திறன்; வளம்; தூய்மை; சத்து.
**சீத்தை** – குணமின்மை; கைவிடப்பட்டவன்; கீழ் மகன்; பதனழிவு; சீட்டுச்சீலை.
**சீத்தைக்கண்** – புளிச்சைக்கண்.
**சீத்தைக்காடு** – அடர்ந்த காடு.
**சீதக்கட்டு** – சீதவழும்புநோய்.
**சீதக்கடுப்பு** – சீதக்கட்டால் மலவாயிலில் தோன்றும் வலி.
**சீதக்கழிச்சல்** – சீதபேதிவகை.
**சீதகண்டுவாதம்** – பாத நரம்பில் சீதள மிகுதியால் உண்டாகும் நமைச்சல்நோய்.
**சீதகம்** – ஈயம்; தரா.
**சீதகன்** – சுக்கிரன்; சோம்பன்; சந்திரன்.
**சீதகிரணன்** – சந்திரன்.
**சீதகும்பம்** – அலரி.
**சீதசம்பகம்** – கண்ணாடி.
**சீதசுரம்** – காண்க: **குளிர்காய்ச்சல்.**
**சீதநீர்** – பனிநீர்.
**சீதப்பற்று** – காண்க: **சீதக்கட்டு.**
**சீதப்பிரபம்** – கருப்பூரம்.
**சீதபானு** – குளிர்ந்த கதிரையுடைய சந்திரன்.
**சீதபித்தசுரம்** – மலைக்காய்ச்சல்.
**சீதபேதி** – பேதிவகை; வயிற்றுளைச்சல் நோய்.
**சீதம்** – குளிர்ச்சி, நீர்; மேகம்; சோம்பு; சந்தனம்; கள்; கொடுந்தமிழ் நாட்டில் ஒன்றாகிய சீதநாடு; சீதமலம்; அகில்மரம்; ஒரு நரகம்; காண்க: **பெருநறுவிலி; பற்பாடகம்;** பிறவிப்பாடாணவகை.
**சீதமண்டலம்** – சந்திரன்.
**சீதமண்டலி** – பாம்புவகை.
**சீதமயூகம்** – கருப்பூரம்.

**சீதமேகரோகம்** – நீரிழிவுநோய்வகை.
**சீதரன்** – திருமால்.
**சீதவலயம்** – நிலவுலகின் குளிர்மண்டலப் பகுதி.
**சீதவழும்பு** – காண்க: **சீதக்கட்டு.**
**சீதவாதம்** – குளிர்முடக்கு.
**சீதவாரம்** – மல்லிகைச்செடி; உத்தாமணிக் கொடி.
**சீதளகம்** – காண்க: **வெள்ளாம்பல்.**
**சீதளங்காய்** – காண்க: **கொடிமாதுளை.**
**சீதளங்கொள்ளுதல்** – நீர்க்கொள்ளுதல்.
**சீதளம்** – குளிர்ச்சி; ஈரம்; சந்தனம்; தாமரை; துருசு; எலுமிச்சைவகை; காண்க: **கொடி மாதுளை;** சிற்றகத்திச்செடி; பச்சைக் கருப்பூரம்; கோடகசாலைப்பூண்டு.
**சீதளாதேவி** – மாரியம்மன்.
**சீதளி** – காண்க: **பொன்னாங்காணி.**
**சீதளை** – கொடிமாதுளை; கொம்மட்டி மாதுளை; மாரியம்மன்.
**சீதன்** – சந்திரன்.
**சீதனக்காணி** – சீதனமாகப் பெற்ற பூமி.
**சீதனக்காரி** – சீதனத்துடன் வந்த பெண்.
**சீதனச்சீட்டு** – சீதனம் எழுதப்பட்ட ஓலை.
**சீதனம்** – மணமகள் கொண்டுவரும் சீர்வரிசை.
**சீதனவாட்சி** – சீதனவுரிமை.
**சீதனவுறுதி** – சீதனம் எழுதப்பட்ட ஓலை.
**சீதாங்கம்** – ஒருவகைச் சன்னி; பிறவிப்பாடாண வகை.
**சீதாங்கனை** – சீதை.
**சீதாபதி** – சீதையின் கணவனான இராமன்.
**சீதாரி** – செம்புளிச்சை; சாம்பிராணி; நகரம்.
**சீதாளம், சீதாளி** – காண்க: **தாளிப்பனை; கூந்தற்பனை.**
**சீதி** – குளிர்; பாவம்; முற்றத் துறத்தல்.
**சீது** – மது; ஈயம்.
**சீதுகந்தம்** – மகிழமரம்.
**சீதேவி** – திருமகள்; மகளிர் தலைக்கோல வுறுப்பு; செங்கழுநீர்.
**சீதேவியார் செங்கழுநீர்** – ஒரு பூண்டுவகை.
**சீதை** – உழுசாலில் தோன்றியவளான இராமனின் மனைவி; உழுபடைச்சால்; காண்க: **பொன்னாங்காணி;** நூற்றெட்டு **உபநிடதங்களுள் ஒன்று.**
**சீதோதகம்** – குளிர்ந்த நீர்.
**சீந்தல்** – மழைத்தூறல்; மூக்குச்சளி; சீந்துதல்.
**சீந்தில்** – ஒரு படர்கொடி.
**சீந்துதல்** – கோபித்தல்; சீறுதல்; சிந்துதல்; மதித்தல்; மூக்குச் சிந்துதல்; தீண்டுதல்.
**சீப்பங்கோரை** – ஒரு கோரைப்புல்வகை.
**சீப்பால்** – காண்க: **சீம்பால்.**
**சீப்பிடுதல்** – மயிர்சீவுதல்.
**சீப்பு** – மயிர்வாருஞ் சீப்பு; வாழைக்குலைச் சீப்பு; கதவின் தாள்; கோரைவகை; மதகிலுள்ள அடைபலகை; கதவுக்கு வலியாக உள்வாயிற் படியில் நிலத்தே வீழவிடும் மரம்; விலா எலும்பு; தோட்சீப்பு; நெய்யுங் கருவியின் ஓர் உறுப்பு; பாளம்; காற்று முதலியவற்றால் அடித்துவரப்படுவது.
**சீப்புக்கோரை** – பயிரோடு முளைக்குங் களை வகை; கோரைவகை.
**சீப்புநூல்** – பட்டைநூல்.
**சீப்புப்பணிகாரம்** – அப்பவருக்கவகை.
**சீப்புப்போடுதல்** – அடைபலகையால் மதகை யடைத்தல்.
**சீப்போம்பு** – கப்பல் முகப்புக்கட்டை.
**சீபண்டாரம்** – கோயிற்கருவூலம்; கோயிற்சொத்து.
**சீபதி** – திருமகள் கணவனான திருமால்; அருகன்.
**சீபலம்** – வில்வம்.
**சீபலி** – கோயிலில் இடும் அன்னபலி; கோயில்பலி பூசைக்காக எழுந்தருளப்பண்ணும் தெய்வத் திருமேனி; நாள்விழா.
**சீபாதம்** – திருவடி; கோயிலில் கடவுளுக்குரிய ஊர்தியைத் தாங்கிச் செல்வோர்.
**சீம்பால்** – பசுவின் ஈன்றணிமைப் பால்.
**சீமங்கலி** – நாவிதன்.
**சீமணல்** – நாகமணல்.
**சீமத்து** – செல்வம்.
**சீமதி** – அழகுள்ளவள்.
**சீமந்தகலியாணம்** – காண்க: **சீமந்தம்.**
**சீமந்தபுத்திரன்** – சீமந்தச் சடங்கு செய்துகொண் டதும் பிறந்த பிள்ளை.
**சீமந்தபுத்திரி** – சீமந்தச் சடங்கு செய்துகொண்ட தும் பிறந்த பெண்.
**சீமந்தம்** – முதற் கருப்பத்தில் ஏழு அல்லது ஒன்ப தாம் மாதத்தில் கருக்கொண்ட பெண்ணுக்குச் செய்யப்படும் சடங்கு.
**சீமந்தரேகை** – பெண்களின் தலைமயிரை வகிர் வதால் உச்சியில் உண்டாகும் கோடு.
**சீமந்தினி** – பெண்.
**சீமம்** – எல்லை.
**சீமாட்டி** – செல்வமுடையவள்; தலைவி.
**சீமாவிவாதம்** – எல்லைகுறித்த வழக்கு.
**சீமாள்** – காண்க: **சீமாட்டி.**
**சீமான்** – செல்வன்; குபேரன்; சிவபிரான்; தலை வன்; திருமால்; அருகன்.
**சீமுக** – அறுபதாண்டுக் கணக்கில் ஏழாம் ஆண்டு.
**சீமுகம்** – குரு, அரசன்போன்ற பெரியாரின் திருமுகம்.

**சீமுதகூடம்** – மலை.
**சீமூதம்** – நீருண்ட மேகம்; ஊக்கம்; பெண் யானை.
**சீமூதவாகனன்** – மேகத்தை ஊர்தியாகக் கொண்ட இந்திரன்.
**சீமூதவாகி** – புகை; ஆவி; அரி; தூபம்.
**சீமூதன்** – இந்திரன்; உழவன்; சிவன்.
**சீமூதை** – திராட்சை.
**சீமை** – எல்லை; நாடு; மேலைநாடு; அதிகப் பிரசங்கி.
**சீமைக்கள்ளி** – காண்க: **சாதிக்காய்.**
**சீமைச்சரக்கு** – வெளிநாட்டுச் சரக்கு; அரிதிற் கிடைக்கும் சரக்கு.
**சீமைச்சுண்ணாம்பு** – எழுதப் பயன்படும் சுண்ணாம்புக்கட்டி.
**சீமைநிலாவிரை** – சூரத்து நிலாவிரைச்செடி.
**சீமைப்பிரதானி** – நாட்டை ஆளும் அதிகாரி.
**சீய்த்தல்** – பெருக்குதல்; கிளறுதல்; வெட்டுதல்; போக்குதல்; உரைசுதல்.
**சீயக்காய்** – சீயக்காய்மரம்.
**சீயம்** – சிங்கம்; சிம்மராசி; எருக்கம்பால்; ஒரு நாடு.
**சீயர்** – வைணவத் துறவி; பெரியோர்.
**சீயன்** – திருமால்; செல்வன்; மூன்றாம் பாட்டன்; ஒரு நாடு; மட்டக்கெம்பு.
**சீயாள்** – மூன்றாம் பாட்டி.
**சீயான்** – மூன்றாம் பாட்டன்; ஒரு பூரான்வகை.
**சீயெனல்** – வெறுப்புக்குறிப்பு.
**சீர்** – செல்வம்; அழகு; நன்மை; பெருமை; தலைமை; மதிப்பு; புகழ்; இயல்பு; நேர்மை; செம்பொருள்; சமம்; துலாம்; அளவு; கனம்; துலாராசி; கதவுதண்டு; தண்டாயுதம்; தாளம்; பாட்டு; செய்யுளின் ஒருறுப்பு; வாத்தியவோசை; ஓசை; சீர்சிறப்பு; காலிலணியும் தண்டை; தளர்வு.
**சீர்க்கம்** – அலங்கார மண்டபத்தில் அமைக்கப் படும் சிற்பவகை.
**சீர்க்காரம்** – எதிரொலி.
**சீர்குலைதல், சீர்கெடுதல்** – ஒழுங்கு கெடுதல்; நிலைகெடுதல்; ஒழுக்கம் கெடுதல்.
**சீர்கேடி** – மூதேவி.
**சீர்கேடு** – ஒழுங்கீனம்; நிலைகுலைவு; அழகின்மை.
**சீர்கோடிகம்** – பாலைப்பண்ணின் திறங்களுள் ஒன்று.
**சீர்சிறப்பு** – மிகு செழிப்பு; சீதன வரிசை.
**சீர்செய்தல்** – ஒழுங்குபடுத்தல், வரிசைப்படுத்தல்; திருமணம் முதலியவற்றில் பெண்ணுக்குச் சீர் கொடுத்தல்.
**சீர்ணபத்திரம்** – வேம்பு.
**சீர்த்தல்** – கோபித்தல்; சிறத்தல்; சமயம் வாய்த்தல்; ஓசை இலயம்பட நிற்றல்.
**சீர்த்தி** – மிகுபுகழ்.
**சீர்த்துழாய்** – துளசிச்செடி.
**சீர்தட்டுதல்** – அழுக்குடையோர் நெருங்குதலாலேனும் தொடுதலாலேனும் குழந்தைக்கு நோய் மிகுகை.
**சீர்திருத்தம்** – செம்மைப்பாடு.
**சீர்திருத்துதல்** – செவ்வைப்படுத்துதல்.
**சீர்திருந்துதல்** – செப்பமாதல்.
**சீர்தூக்குதல்** – ஆராய்தல்; ஒப்புநோக்குதல்; வரையறுத்தல்.
**சீர்தைத்தல்** – காண்க: **சீர்தட்டுதல்.**
**சீர்ப்படுத்துதல்** – குணப்படுத்துதல்.
**சீர்ப்படுதல்** – ஒழுங்குபடுதல்; குணப்படுதல்; செம்மைப்படுதல்; அளவிற்படுதல்.
**சீர்ப்பாடு** – மேம்பாடு.
**சீர்ப்பிழை** – குற்றம்; தடை.
**சீர்ப்பு** – சிறப்பு.
**சீர்பண்ணுதல்** – ஆயத்தப்படுத்தல்; ஒழுங்குபடுத்தல்.
**சீர்பதி** – கடவுள்.
**சீர்பாதம்** – திருவடி; கோயிலில் கடவுளுக்குரிய ஊர்தியைத் தாங்கிச்செல்வோர்.
**சீர்மடக்கு** – செய்யுளில் சீர் இடைமடக்கிவருதல்.
**சீர்மரம்** – படமரம் என்னும் நெசவுக்கருவி.
**சீர்மை** – சிறப்பு; புகழ்; கனம்; அளவிற் படுகை; வழவழப்பு; காண்க: சீமை; நன்னடை.
**சீர்வண்டு** – நெய்வார் கருவியுள் ஒன்று.
**சீர்வரிசை** – சீதனம்.
**சீரகச்சம்பா** – ஒரு செந்நெல்வகை, சம்பா நெல் வகை.
**சீரகத்தாம(ரோ)ன்** – வணிகன்; சீரகமாலை அணிந்த குபேரன்.
**சீரகம்** – செடிவகை; ஒரு நிறையளவு; பன்றி.
**சீரகர்** – மரப்பட்டை தரித்த பௌத்தர்.
**சீரணம்** – உண்டது செரிக்கை; பழுது.
**சீரணி** – காடு; ஓமச்செடி; கூடத்தின் வேறுபாடு; பந்தத்தில் எரிதற்குச் சுற்றும் துணி; ஒரு பணிகாரம்.
**சீரணித்தல்** – காண்க: **சீரணம்.**
**சீரணை** – பழக்கம்.
**சீரந்தாதி** – பாட்டில் ஓரடியின் இறுதிச்சீர் அடுத்த அடியின் முதற்சீரோடு தொடுத்து வருவது.
**சீரம்** – பால்; மரவுரி; கலப்பை; இலாமிச்சை; சீரகம்.
**சீரமோடா** – விழுதிச்செடி; நார்ச்சீலை; காட்டெருமைப்பால்.
**சீரழிதல்** – காண்க: சீர்குலைதல்.

**சீரா** – தலைச்சீரா; பலாசு; கவசம்; சிற்றுண்டி வகை.
**சீராகம்** – ஒரு பண்வகை.
**சீராட்டு** – செல்லம் பாராட்டுகை; சிறு சண்டை.
**சீராட்டுதல்** – செல்லம் பாராட்டுதல்; கொண்டாடுதல்.
**சீராளன்** – சிறப்புப்பெற்றவன்; சிறுத்தொண்ட நாயனார் மகன்.
**சீரி** – புளியமரம்; முக்காடு.
**சீரிகை** – சுவர்க்கோழி.
**சீரிடம்** – வாய்த்த இடம்; தலை; வாகைமரம்.
**சீரிணன்** – கற்றோன்.
**சீரித்தல்** – சிறப்புறுதல்.
**சீரிப்பு** – பழக்கம்.
**சீரியது** – சிறந்தது.
**சீரியார்** – குணஞ் செயல்களால் சிறந்தவர்; அறிஞர்; புலவர்; செல்வர்; நல்லோர்; உயர்ந்தோர்.
**சீரிவிருட்சம்** – புளியமரம்.
**சீருகை** – காண்க: சீரிகை.
**சீருணம், சீருணி** – செம்பு.
**சீருள்** – ஈயம்; செம்பு; வெள்ளீயம்; செல்வம்.
**சீருளியம்** – செம்பு.
**சீரெடுத்தல்** – திருமணம் முதலியவற்றில் வரிசை கொடுத்தல்.
**சீரை** – மரவுரி; சீலை; கந்தை; துலாத்தட்டு.
**சீலக்கேடு** – கெட்ட நடத்தை.
**சீலசம்பன்னன்** – நற்குணன்.
**சீலத்துவம்** – குணம்.
**சீலம்** – தன்மை; ஒழுக்கம்; நல்லுணர்வு; நல்லொழுக்கம்; யானையைப் பயிற்றும் நிலை; தண்டனை; சிந்தில்.
**சீலவான்** – நற்குணமுடையவன், ஒழுக்கமுள்ளவன்.
**சீலவிருத்தன்** – நற்குணம் முதலியவற்றால் உயர்ந்தவன்.
**சீலன்** – காண்க: சீலவான்.
**சீலனம்** – சாத்திரங்களைப் பலகால் பயிலுகை.
**சீலா** – ஒரு கடல்மீன்வகை; படகின் இறைகூடை; நீர்வாழ் பறவை.
**சீலாசாரம்** – ஒழுக்கவகை.
**சீலாந்தி** – பூவரசுமரம்.
**சீலி** – ஒழுக்கமுடையவன்(ள்).
**சீலித்தல்** – நல்லொழுக்கத்தில் நிறுத்தல்; பழகுதல்.
**சீலை** – துணி; புடைவை; $2\frac{1}{4}$ முழத் துணி; கோவணம்.
**சீலைகொடுத்தல்** – கைம்பெண்ணுக்குப் புடைவைகொடுத்து அவளை மணம்புரிதல்.
**சீலைத்துணி** – சிறு துண்டு; அலங்காரத் துணி; ஆடை.
**சீலைநாட்டுதல்** – குட்டி பால்குடிக்காதிருக்கும் பொருட்டு ஆட்டின் மடியில் துணிகட்டுதல்.
**சீலைப்பாய்** – கந்தைத் துணி; கிழிந்த பாய்.
**சீலைப்பிள்ளை** – துணியாற் செய்யப்பட்ட ஒருவிதப் பொம்மை.
**சீலைப்பேன்** – சீலையிற் பற்றும் பேன்.
**சீலைமண்** – மருந்துச் சட்டியின் வாயை அடைக்கும் சீலையில் பூசும் மண்.
**சீவ** – 'நீடு வாழ்க' என வாழ்த்துதற் குறிப்பு.
**சீவகம்** – இலந்தைப்பிசின்; ஏலம்; காண்க: திருநாமப்பாலை; வேங்கைமரம்.
**சீவகர்** – புத்த சமயத்தார்; பௌத்தத் துறவியர்; பிச்சைக்காரர்.
**சீவகளை** – உயிரின் தளிர்ப்பு.
**சீவகன்** – சீவகசிந்தாமணிக் கதைத் தலைவன்; ஆசீவகன்.
**சீவகாருண்ணியம்** – பிற உயிர்களின் மீது வைக்கும் இரக்கம்.
**சீவகாலம்** – வாழ்நாள்.
**சீவகோடி** – உயிர்த்தொகுதி.
**சீவசஞ்சீவி** – சீந்திற்கொடி.
**சீவசாட்சி** – பரப்பிரமம்; உயிர்கள் அனைத்திற்கும் சாட்சி.
**சீவசுத்தி** – சச்சிதானந்த மயமாகிய பிரமத்தைச் சீவன் அவ்வொளியே கண்ணாகக் கண்டறிந்து அதில் சிவதற்போதம் அடங்கித் தனக்கு அதிட்டானமாகிய பிரமம் தானாய் நிற்கை.
**சீவசெந்து** – உயிருள்ளவை.
**சீவடம்** – இமைப்பு.
**சீவத்துவம்** – ஆன்மசத்தி.
**சீவதசை** – காண்க : சீவகாலம்.
**சீவதம்** – முகில்; ஆமை; மயில்.
**சீவதயாபரன்** – உயிர்வகைமீது அன்புடைய இறைவன்.
**சீவதயை** – உயிர்களிடத்து அருள்காட்டுகை.
**சீவதருமம்** – பசு புண்ணியம்.
**சீவதன்** – நீண்ட ஆயுளுடையவன்; மருத்துவன்.
**சீவதாது** – உயிர்நாடி.
**சீவதேகம்** – உயிர் வாழும் உடல்.
**சீவந்தன்** – உயிரோடிருப்பவன்.
**சீவந்தி** – சீந்திற்கொடி; பாலைமரம்; கடுக்காய்; கொடிப்பாலை; வெட்பாலை; புல்லுருவி.
**சீவம்** – உயிர், சீவன்.
**சீவர்** – உயிருள்ளோர்.
**சீவரஆடை** – காவியாடை.
**சீவரத்தார்** – துவராடை தரித்த பௌத்தத் துறவியர்.
**சீவரத்தினம்** – பாம்புக்கு உயிராதாரமாயுள்ளதும் வேண்டியதைக் கொடுக்கவல்லதுமான மணி.

**சீவரம்** – பௌத்தத் துறவியர் அணியும் துவர் பிடித்த ஆடை.
**சீவரர்** – துவராடை தரித்த பௌத்தத் துறவியர்.
**சீவராசி** – உயிர்த்தொகுதி.
**சீவரேக்கு** – சிற்பத் தீர்மான வேலை; குந்தனத் தகடு.
**சீவரேகை** – உள்ளங்கையிலுள்ள ஆயுட்கோடு.
**சீவல்** – செதுக்கினவை; பாக்குச்சீவல்; மெலிவு; நெகிழ்ச்சியானது; மெலிந்தவர்.
**சீவல்வெற்றிலை** – வெற்றிலைபாக்கு.
**சீவற்சம்** – திருமாலின் மார்பிலுள்ள மறு அல்லது மயிர்ச்சுழி; சிறப்புக் காலங்களில் மங்கலக் குறியாக எடுத்துச் செல்லும் திருமகள் உருவம்.
**சீவன்** – சீவாத்துமா; உயிரி; உயிர்; ஆற்றல்; வியாழன்; காந்தம்; வைடூரியம்.
**சீவன்முத்தர்** – இம்மையில் முத்திநிலை அடைந்தவர்.
**சீவன்முத்தி** – ஆன்மா இம்மையிலேயே முத்தியடைதல்.
**சீவனகம்** – சோறு.
**சீவனந்தேடுதல்** – பிழைக்கும்வழி நாடுதல்; இரைதேடுதல்.
**சீவனம்** – உயிர்வாழ்தல்; நீர்; கஞ்சி.
**சீவனாம்சம்** – மணவிலக்குப் பெற்ற பெண், கைம்பெண் முதலியோருடைய வாழ்க்கைக்கென்று கொடுக்கும் பொருள்.
**சீவனி** – உயிர்தரும் மருந்து; செவ்வழியாழ்த்திறவகை; காண்க: **மந்தாரச்சிலை**; வெட்பாலை; பாலைமரம்; ஆடுதின்னாப்பாளை; செவ்வள்ளிக்கொடி.
**சீவனீயம்** – நீர்.
**சீவனோபாயம்** – பிழைப்பிற்குரிய தொழில்.
**சீவாத்துமா** – உயிர்; சிற்றுயிர்.
**சீவாதாரம்** – வாழ்வுக்கு ஆதாரமானது; உடல்; உலகம்.
**சீவாந்தம்** – வாழ்க்கை முடிவு.
**சீவாளம்** – வீணையின் சீர்.
**சீவான்மா** – காண்க: **சீவாத்துமா.**
**சீவி** – உயிருடைய பொருள்; அழிஞ்சில்.
**சீவிக்கட்டுதல்** – தலைவாரி முடித்தல்; பாளையைச் சீவிக் கள்ளுக்கட்டுதல்.
**சீவிகா** – சாதிக்காய்.
**சீவித்தல்** – உயிர்வாழ்தல்; தொழிற்படுதல்.
**சீவிதம்** – உயிர்வாழ்க்கை; பிழைப்பதற்குரிய வழி; உயிர்வாழ்தற்குக் கொடுக்கப்பட்ட இறையிலி நிலம்.
**சீவிமுடித்தல்** – தலைமயிரைக் கோதிக்கட்டுதல்.
**சீவியம்** – காண்க: **சீவிதம்.**
**சீவினி** – சஞ்சீவி; யாழின் ஓர் ஓசைவகை.
**சீவுதல்** – செதுக்குதல்; தலைவாருதல்; மரமிழைத்தல்; பெருக்குதல்; பல் முதலியவை துலக்குதல்.
**சீவுளி** – இழைப்புளிவகை; பலகைசுரண்டி என்னும் கருவி; மெருகிடுங் கருவிவகை.
**சீவை** – கூத்து.
**சீவையர்** – கூத்தியர்.
**சீவோற்பத்தி** – உயிர்த்தோற்றம்.
**சீழ்** – புண்ணில் வடியும் நீர்; சீழ்க்கை.
**சீழ்க்காது** – காதிலிருந்து சீழ்வடியும் நோய்வகை.
**சீழ்க்கை** – நாவின் நுனியை மடித்து ஊதும் ஓர் ஒலிவகை.
**சீழ்க்கைக்கூத்து** – சீழ்க்கையெழுப்பி ஆடுங் கூத்து.
**சீழ்கு** – ஊகம்புல்.
**சீழ்குதல்** – விம்முதல்.
**சீழ்மரம்** – மாமரம்.
**சீற்காரம்** – மூச்சை உள்வாங்குதலால் எழும் ஒலி; சீழ்க்கையடித்தல்.
**சீற்றம்** – கோபம்; கடுங்கோபம்.
**சீறடி** – சிறிய கால்.
**சீறல்** – பெருங்கோபம்; பெருங்காயம்.
**சீறளவு** – தலைகட்டாமல் அளக்கும் அளவு.
**சீறிய கற்பு** – மறக்கற்பு.
**சீறியாழ்** – சிறிய யாழ்.
**சீறில்** – சிறுவீடு.
**சீறு** – சீற்றம்.
**சீறுதல்** – பாம்பு முதலியன சத்தத்துடன் வெகுளுதல்; குதிரை முதலியன மூச்செறிதல்; மூர்க்கமடைதல்; தீ முதலியன முழங்கி எரிதல்; கோபித்தல்; அழித்தல்.
**சீறுபாறெனல்** – முரண்படுதற்குறிப்பு.
**சீறுமாறு** – சரியாய் நடத்தாமை; தாறுமாறு; குழப்பம்.
**சீறூர்** – சிறிய ஊர்; குறிஞ்சிநிலத்தூர்.
**சீறெலி** – சுண்டெலி.
**சீனக்காரம்** – படிக்காரம்.
**சீனக்குடை** – கடுதாசிக் குடை.
**சீனச்சூடன்** – கருப்பூரவகை.
**சீனப்பட்டை** – காண்க: **பறங்கிப்பட்டை.**
**சீனப்பா** – பறங்கிக்கிழங்கு; காண்க: **பெருங்கிழங்கு.**
**சீனம்** – ஒரு நாடு; ஒரு மொழி; சீனத்துச் சரக்கு; படிக்காரம்.
**சீனாப்பெட்டி** – பெட்டிவாணம்.
**சீனி** – சருக்கரை, சீனிச்சருக்கரை; சீனத்துப் பொருள்; மரவகை; சாத்துக்குடி; சேணம்; மரநங்கூரம்.
**சீனிக்கிழங்கு** – சருக்கரைவள்ளிக் கிழங்கு.
**சீனை** – வன்னிமரம்.

சு – ஓர் உயிர்மெய்யெழுத்து(ச்+உ); நன்மை, சுகம், மங்கலம், சொந்தம் முதலியவற்றைக் காட்டும் வடமொழி இடைச்சொல்; அதட்டும் ஓசை; நாய் முதலியவற்றைத் துரத்தும் ஒலி.

சுஃறு, சுஃறெனல் } – ஓர் ஒலிக்குறிப்பு.

**சுக்கங்காய்** – மிதக்கங்காய்.

**சுக்கங்கீரை** – புளிக்கீரைவகை.

**சுக்கஞ்செட்டி** – கடுஞ்செட்டுள்ளவன், கஞ்சன்.

**சுக்கடித்தம்** – அழுத்தமான புடைவை.

**சுக்கம்** – காண்க: **தும்மட்டி**; வெள்ளரி; களவு; ஆயம்.

**சுக்கம்வைத்தல்** – களவாய்க் கைப்பற்றுதல்.

**சுக்கல்** – சிறு துண்டு; கண்ணில் பூ விழும் நோய் வகை.

**சுக்காஞ்செட்டி** – காண்க: **சுக்கஞ்செட்டி**.

**சுக்கான்** – கப்பலைத் திருப்புங் கருவி; சுண்ணாம்புக்கல்; தும்மட்டிக்கொடி.

**சுக்கான்கல்** – சுண்ணாம்புக்கல்; ஒருவகைக் கட்டிமண்; சுட்ட செங்கல்.

**சுக்கான்கீரை** – காண்க: **சுக்கங்கீரை**.

**சுக்கான்சுண்ணாம்பு** – சுக்கான்கல்லை நீற்றி யெடுத்த சுண்ணாம்பு.

**சுக்கான்திருப்புதல்** – கப்பலை நடத்துதல்; பிறனைத் தன்வயப்படுத்துதல்.

**சுக்கியானம்** – பரஞானம், மெய்யறிவு.

**சுக்கிரதசை** – சுக்கிரனுக்குரிய இருபது ஆண்டு ஆட்சிக்காலம்; யோககாலம்.

**சுக்கிரம்** – ஆனிமாதம்; கண்ணோய்வகை; கழுநீர்; கள்; நீர்.

**சுக்கிரவாரம்** – வெள்ளிக்கிழமை.

**சுக்கிரன்** – வெள்ளிக்கோள்; அசுரகுரு; தீ; கண்ணோயுள் ஒன்று.

**சுக்கிராக்கினை** – மிகக் கடுமையான கட்டளை; சுக்கிரீவனது ஆணை.

**சுக்கிரிகை** – புளியாரை.

**சுக்கில** – அறுபதாண்டுக் கணக்கில் மூன்றாம் ஆண்டு.

**சுக்கிலத்தம்பம்** – அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்றான விந்தைக் கட்டும் வித்தை.

**சுக்கிலத்தியானம்** – தன்னைப் பரமான்மாவாகப் பாவித்தல்.

**சுக்கிலபக்கம்**, **சுக்கிலபட்சம்** } – வளர்பிறைக் காலம், அமாவாசைக்கு அடுத்த நாள் தொடங்கி பௌர்ணமி முடிய உள்ள காலம்.

**சுக்கிலபுட்டா** – காண்க: **குங்குமம்**.

**சுக்கிலம்** – வெண்மை; விந்து; காண்க: **சுக்கில பட்சம்**; பாலைமரம்; பழமுண்ணிப்பாலை.

**சுக்கிலமண்டலம்** – வெள்ளைவிழி; விழியின் மேல்தோல்.

**சுக்கிலை** – பராசத்தி பேதம்.

**சுக்கு** – உலர்ந்த இஞ்சி; சிறுதுண்டு; பயனற்றது.

**சுக்குச்சுக்காய்** – துண்டுதுண்டாய்.

**சுக்குதல்** – செய்தல்; புணர்தல்; உலர்தல்.

**சுக்குநாறிப்புல்** – சுன்னாறிப் புல்.

**சுக்குமம்** – சிற்றேலம்.

**சுக்குமாத்(ந்)தடி** – வைராகிகள் கொள்ளுங் கைக் கழி; சிறு தெய்வங்களின் கையில் அமைக்கப் படும் சிறு தண்டம்; மந்திரக்கோல்.

**சுக்கை** – நட்சத்திரம்; பூமாலை; கப்பற் சுங்கம்; காண்க: **முசுமுசுக்கை**.

**சுகக்காரன்** – இன்பம் நுகர்பவன்; செல்லமாக வளர்ந்தவன்; வேசிக்கள்ளன்.

**சுகக்கேடு** – உடல்நலக் குறைவு.

**சுகங்காட்டுதல்** – இணங்கி மகிழ்வித்தல்; உடல் நலக்குறி தோற்றுவித்தல்.

**சுகசரீரம்** – நோயற்ற உடல்; மென்மையான உடல்.

**சுகசன்னி** – பொருந்தாப் புணர்ச்சி, அகாலப் புணர்ச்சி இவற்றால் உண்டாகும் சன்னிநோய்.

**சுகசிம்பி** – பூனைக்காலிச்செடி.

**சுகசீவி** – இன்பமாக வாழ்பவன்.

**சுகட்டான்** – முடக்கொற்றான்; நாணற்புல்.

**சுகத்திரம்** – வாகைமரம்.

**சுகதம்** – உறுப்பிக்கும் உறுப்புக்குமுள்ள வேறுபாடு.

**சுகதன்** – அருகன்; புத்தன்.

**சுகதாரு** – கடப்பமரம்.

**சுகதுக்கம்** – இன்பதுன்பம்.

**சுகந்தபரிமளம்** – நறுமணப்பண்டம்; நறுமணம்.

**சுகந்தம்** – நறுமணம்; நறுமணப்பொருள்; வாழை மரம்; கிழங்கு; சந்தனம்; கந்தகம்; கொடிச் சம்பங்கி; ஈரவெண்காயம்; அரத்தைச்செடி.

**சுகந்தமா** – கத்தூரி விலங்கு; கருப்பூரமரம்.

**சுகந்தமூலி** – வெட்டிவேர்.

**சுகந்தவர்க்கம்** – நறுமணப்பண்டம்.

**சுகந்தவர்க்கமிடல்** – நறுமணப்பொருள்களால் பிணத்தைக் கெடாது வைத்தல்.

**சுகந்தவாழை** – பூவாழை.

**சுகந்தி**, **சுகந்திக்கல்** } – செவ்வந்திக்கல், ஒரு மணி வகை.

**சுகந்திகம்** – ஒரு நெல்வகை; வெண்டாமரை.

**சுகந்திரம்** – உரிமைப்பேறு.

**சுகப்படுதல்** – நலமடைதல், நோயின்றியிருத்தல்; நலமாயிருத்தல்; மனமிணங்குதல்.

**சுகப்பிரசவம்** – வருத்தமின்றிக் குழந்தை பிறத் தல்.

**சுகபலம்** – எருக்கஞ்செடி.

**சுகபேதி** – மருந்தால் வயிற்றுவலி முதலியன இன்றி மலம் பேதியாகக் கழிகை.

**சுகபோகம்** – இன்ப அனுபவம்.

**சுகபோசனம்** – உடல்நலத்துக்குரிய உணவு.

**சுகம்** – இன்பம்; நன்மை தருவது; நல்வாழ்வு; இணக்கம்; காண்க: **சுகாசனம்**; கிளி; முலைக் கண்.

**சுகம்பல்** – புளிநறளைச்செடி.

**சுகர்மம்** – நற்செயல்; யோகம் இருபத்தேழனுள் ஒன்று.

**சுகரம்** – எளிதில் செய்யக்கூடியது.

**சுகவாகன்** – கிளியை ஊர்தியாகவுடைய மன் மதன்.

**சுகவாசி** – தொழிலின்றி இன்பமாக வாழ்வோன்; நிலைத்த குடியானவன்.

**சுகவாரி** – இன்பக்கடல்.

**சுகவாழ்வு** – நல்வாழ்க்கை.

**சுகவிருத்தி** – நலம்; இன்பச்செய்தி; சுகாதாரம்.

**சுகவீனம்** – நலமின்மை.

**சுகாசனம்** – ஆசனம் ஒன்பதனுள் யோகி தன் விருப்பம்போல அமைத்துக்கொள்ளும் ஆசனம்.

**சுகாசுகம்** – இன்பதுன்பம்.

**சுகாட்டம்** – நாணல்; முடக்கொற்றான்.

**சுகாதிசயம்** – நலம்; பேரின்பம்.

**சுகாதீதம்** – மேற்பட்ட சுகம்; வீடுபேறு.

**சுகாந்தம்** – வெண்காயம்.

**சுகாந்திக்கல்** – செவ்வந்திக்கல்.

**சுகானுபவம்** – இன்பநுகர்ச்சி.

**சுகி** – இன்பம் நுகர்பவன்; செல்வன்; நோயி லான்; இனிப்புப் பணிகாரவகை.

**சுகித்தல்** – நலமாயிருத்தல்; சிற்றின்பந் துய்த்தல்.

**சுகிதம்** – பால்.

**சுகிப்பு** – இன்ப அனுபவம்; சம்பிரமம்.

**சுகியன்** – இன்பந்துய்ப்பவன்; ஓர் இனிப்புப் பண்டவகை.

**சுகிர்** – உட்டுளை.

**சுகிர்த்து** – நண்பன்.

**சுகிர்தகுணம்** – நல்ல பண்பு, நற்குணம்.

**சுகிர்தசாலி** – பாக்கியமுள்ளவன்.

**சுகிர்தபலன்,**
**சுகிர்தபுண்ணியம்** } – நல்வினைப் பயன்.

**சுகிர்தம்** – நற்செயல்; நன்மை; இன்பம்; நெய்.

**சுகிர்தல்** – பஞ்சுகொட்டுதல்; மயிர்வகிர்தல்; கிழித்தல்; வடித்தல்.

**சுகிர்தவசனம்** – நல்வாக்கு.

**சுகிர்தன்** – நண்பன்; புண்ணியசாலி.

**சுகிர்புரிதல்** – யாழ் நரம்பினை வடித்து முறுக்கு தல்.

**சுகுச்சை** – அறுவகை வெறுப்புகளுள் ஒன்றாகிய அருவருப்பு.

**சுகுடம்** – சேம்பு.

**சுகுணம்** – நற்குணம்.

**சுகுமாரதை** – மென்மை; காண்க: **சுகுமாரநெய்**; வல்லொற்று நீங்கிய சொற்களால் ஆக்கப் பெற்ற மென்மை நிரம்பிய செய்யுட்குண மாகிய ஓர் அணி.

**சுகுமாரநெய்** – பெண்களுக்கு மலடுநீங்கக் கொடுக்கும் மருந்து நெய்.

**சுகுமாரம்** – மென்மை; காண்க: **சுகுமாரநெய்**; தானியவகை; கரும்புவகை.

**சுகுமாரன்** – மெல்லிய உடலுள்ளவன்; நன்மகன்.

**சுகோததி** – இன்பக்கடல்.

**சுகோதயள்** – சுகத்திற்கு இருப்பிடமானவள்.

**சுகோதரம்** – காண்க: **தாளிசபத்திரி.**

**சுங்கக்காரன்** – சுங்கம் வசூல் செய்பவன்.

**சுங்கச்சாவடி** – ஆயத்துறை.

**சுங்கம்** – ஆயம்; கீழறுக்கை; திருட்டு; காண்க: **ஆடுதின்னாப்பாளை.**

**சுங்கம்பிடித்தல்** – கடும்பற்றுள்ளத்தால் பொருள் சேர்த்தல்; இடைலாப மெடுத்தல்.

**சுங்கவிறை** – ஆயம்.

**சுங்கன்** – சுக்கிரன்; ஒரு மீன்வகை.

**சுங்கான்** – கப்பல் திருப்பும் கருவி; புகை குடிக்கும் குழாய்.

**சுங்கி** – ஆலமரம்; வன்னிமரம்.

**சுங்கு** – ஆடையில் தொங்கவிட்டுக் கட்டும் மூலை; ஆடையின் கொய்சகம்; சடைக்குச்சு.

**சுங்குத்தான்குழல்** – பறவை முதலியவற்றை வீழ்த்தும் உண்டை யெறிகுழல்.

**சுச்சு** – இஞ்சி; சுக்கு; சுண்டிச்செடி; பறவை மூக்கு.

**சுசனம்** – காற்று; உறவினர்.

**சுசனன்** – நல்லவன்.

**சுசாதிபேதம்** – சுயசாதியில் பல இனங்களுக்குள் மாறுபாடு.

**சுசி** – சுத்தம்; வெண்மை; நெருப்பு; சந்திரன்; முதுவேனில்; கோடைக்காலம்; சுக்கிரன்; ஆடி மாதம்; சுசிகரம்; காமக்கவலை; பாதரசம்; இணக்கம்; கொடிவேலி.

**சுசிகம்** – புளியாரைக்கீரை.

**சுசிகரம்** – தூய்மை; மேன்மை.

**சுசிதம்** – மிக வெண்மையான பால்.

**சுசிரம்** – நெருப்பு; உட்டுளை; ஊதுகுழல்.

**சுசீலம்** – இனிய பண்பு.

**சுசீலன்** – நல்லொழுக்கமுள்ளவன்.

**சுசீலை** – நல்லொழுக்கமுடையவள்; புகைநிறப் பசு.
**சுசுகம்** – முலைக்கண்.
**சுசுந்தரி** – மூஞ்சூறு.
**சுசுமை** – கற்புடையவள்; சுக்கிரன் மனைவி.
**சுசுருசை** – பணிவிடை.
**சுசுலம்** – சிறுபண்டம்; விழல்.
**சுசூகம்** – காண்க: **சுசுகம்.**
**சுஞ்சுமாரம்** – காலணி; முதலை; கழுத்தெலும்பு.
**சுஞ்ஞானம்** – காண்க : **சுக்கியானம்.**
**சுட்கம்** – வறட்சி; உலர்ந்தது; ஒருநோய்; பணம் முதலியவற்றின் குறைவு; கடும்பற்று.
**சுட்குதல்** – வறளுதல்.
**சுட்டகல், சுட்டசெங்கல்** – சூளையிற் சுடப்பட்ட செங்கல்.
**சுட்டணி** – காண்க : **நிதரிசனம்.**
**சுட்டல்** – காட்டுதல்; குறித்தல்; பொருண்மை மாத்திரம் காணும் அறிவு.
**சுட்டறிவு** – புலன்களால் அறியும் அறிவு.
**சுட்டாமுட்டி** – சுட்டுவிரல்.
**சுட்டி** – குழந்தைகளும் மகளிரும் நெற்றியிலணியும் அணி; மாட்டின் நெற்றிச்சுழி; மயிர்முடி; பாம்பு முதலிய உயிர்களின் உச்சிவெள்ளை; நெற்றிப்பட்டம்; தீயோன்; நற்பேறு இல்லாதவன்; புத்திக்கூர்மையுள்ளவன்; அதன் பொருட்டு; நாக்கு; ஆடைக்கரைவகை.
**சுட்டிக்காட்டுதல்** – குறித்துக் காண்பித்தல்.
**சுட்டிகை** – மாதர் நுதலணி.
**சுட்டிச்சுண்ணம்** – உடம்பைத் தூய்மை செய்தற்குரிய நறுமணப்பொடி.
**சுட்டிசுட்டியாக** – வட்டம் வட்டமாக.
**சுட்டித்தலை** – குறும்புத்தனம்; முரடன்.
**சுட்டித்தலையன்** – முரடன்; உச்சிவெள்ளையுடைய விலங்கு.
**சுட்டித்தனம்** – குறும்புத்தனம்.
**சுட்டிப்பேசுதல்** – குறிப்பாய்ச் சொல்லுதல்.
**சுட்டிமுகடு** – மகளிர் தலையில் அணியும் ஓர் அணிவகை.
**சுட்டு** – குறிப்பிடுகை; கருதப்படும் பொருள்; நன்மதிப்பு; காண்க: **சுட்டெழுத்து; சுட்டணி.**
**சுட்டுக்கோல்** – காண்க : **உலையாணிக்கோல்;** தீயோன்.
**சுட்டுச்சொல்** – ஒன்றைக் குறித்துக்காட்டும் மொழி.
**சுட்டுணர்வு** – புலன்களால் அறியும் அறிவு; பொருண்மை மாத்திரை காணும் அறிவு.
**சுட்டுதல்** – குறிப்பிடுதல்; நினைத்தல்; நோக்கமாகக் கொள்ளல்; நன்கு மதித்தல்.
**சுட்டுப்பெயர்** – சுட்டெழுத்தை முன்பெற்ற பெயர்; சுட்டுமாத்திரையாய் நிற்கும் பெயர்.
**சுட்டுப்பொருள்** – கருதிய பொருள்; வழிபாட்டிற்காக மனத்தில் அமைக்கப்படும் மூர்த்தம்.
**சுட்டுவிரல்** – ஆட்காட்டி விரல்.
**சுட்டுவைத்தல்** – ஒருவரை நினைத்தவண்ணமாயிருத்தல்; வழிபாட்டில் மனத்தை நிறுத்துதல்; இலக்குவைத்தல்.
**சுட்டெழுத்து** – சுட்டி உணர்த்தும் அ, இ, உ என்னும் எழுத்துகள்.
**சுடர்** – ஒளி; சூரியன்; வெயில்; சந்திரன்; கோள்; ஆண்டு; தளிர்; விளக்கு; சுடர்; தீப்பொறி; சுடரிலிருந்து விழும் எண்ணெய்த்துளி.
**சுடர்க்கடை** – மின்மினி; மயில்.
**சுடர்க்கொடி** – ஆரத்திக் கருப்பூரம்.
**சுடர்ச்சக்கரம்** – துருவச்சக்கரம்.
**சுடர்தல்** – ஒளிவிடுதல்.
**சுடர்நிலை** – விளக்குத்தண்டு; விளக்கணி.
**சுடர்நிலைத்தண்டு** – விளக்குத்தண்டு.
**சுடர்நேமி** – காண்க: **சுடர்ச்சக்கரம்.**
**சுடர்மணிக்கோவை** – யானையின் அணிவகை.
**சுடர்மௌலியர்** – ஒளிவிடும் சென்னியராகிய தேவர்கள்.
**சுடர்விட்டெரிதல், சுடர்விடுதல்** – சுவாலைவிட்டு எரிதல்.
**சுடர்விழியோன்** – வீரபத்திரன்; சிவபெருமான்.
**சுடர்விழுதல்** – விளக்கு முதலியவற்றிலிருந்து தீச்சிகை விழுதல்.
**சுடரவன், சுடரோன்** – ஒளியுடைய சூரியன்.
**சுடல்** – சுடரிலிருந்து விழும் எண்ணெய்த் துளி; திரியின் எரிந்த முனைமுடிச்சு.
**சுடலை** – காண்க: சுடுகாடு; சவர்க்காரம்.
**சுடலைக்கரை, சுடலைக்கான்** – சுடுகாடு.
**சுடலைநோன்பிகள்** – காபாலமதக் கொள்கையுடைய துறவியர்.
**சுடலைமாடன்** – சுடுகாட்டிலுள்ள ஒரு பேய்வகை.
**சுடலையாடி** – சுடுகாட்டில் ஆடுவோனாகிய சிவபெருமான்; சவர்க்காரம்.
**சுடாரி** – கவசம்; கையுறை.
**சுடிகை** – தலையுச்சி; முடி; நெற்றிச்சுட்டி; மயிர்முடி; சூட்டு; பொட்டு; பனங்கள்.
**சுடீரம்** – துளை.
**சுடு** – சுடுகை; சும்மாடு.
**சுடுக்குதல்** – நெட்டிவாங்குதல்; பேன் முதலியவற்றை நெரித்தல்.
**சுடுகண்** – கொள்ளிக்கண்.
**சுடுகலம்** – சுடப்பட்ட மட்பாண்டம்.

**சுடுகாட்டுக்கோட்டம்** – காண்க: **சக்கரவாளக் கோட்டம்.**

**சுடுகாட்டுப்பாட்டம்** – மயான வரிவகை.

**சுடுகாடு** – பிணம் எரிக்கும் மயானம்.

**சுடுகோல்** – சூட்டுக்கோல்.

**சுடுசுடுத்தல்** – சினக்குறிப்புக் காட்டுதல்.

**சுடுசுடெனல்** – விரைவுக்குறிப்பு; சினக்குறிப்பு.

**சுடுசுண்ணச்சாந்து, சுடுசுண்ணம்** – நீற்றின சுண்ணாம்பு.

**சுடுசொல்** – துன்புறுத்தும் மொழி.

**சுடுசோறு** – புதிதாகச் சமைத்த அன்னம்.

**சுடுதண்ணீர்** – வெந்நீர்.

**சுடுதல்** – காய்தல்; காயச்செய்தல்; எரித்தல்; பலகாரம் செய்தல்; காளவாயில் வேகவைத்தல்; மருந்து நீற்றுதல்; வெடி சுடுதல்; சூடிடுதல்; கெடுத்தல்; தீயிலிடுதல்; வருத்துதல்.

**சுடுதுரத்தம்** – சித்திரப்பாலாவிப் பூண்டு.

**சுடுநாற்றம்** – மயிர், பிணம் முதலியன சுடுதலால் உண்டாகும் நாற்றம்.

**சுடுநிலம்** – காண்க: **சுடுகாடு.**

**சுடுநீர்** – வெந்நீர்.

**சுடுநோக்கு** – கொள்ளிக்கண்; கொடிய பார்வை உடைய கண்.

**சுடுபடை** – காண்க: **சுடுகோல்.**

**சுடுபுண்** – சுட்டதனால் உண்டான புண்.

**சுடுபொன்** – புடமிட்ட பொன்.

**சுடுமட்பலகை** – செங்கல்.

**சுடுமண்** – சுட்ட ஓடு; மட்பாண்டம்; செங்கல்.

**சுடுமூஞ்சி** – கடுகடுத்த முகம்; கடுகடுத்த முகமுடையவன்(ள்).

**சுடுவல்(ன்)** – குருதி, இரத்தம்.

**சுடுவான்** – மரக்கலத்திலுள்ள சமையலறை.

**சுடுவு** – சும்மாடு.

**சுண்ட** – முற்றும்.

**சுண்டக்கட்டுதல்** – இழுத்துக் கட்டுதல்.

**சுண்டக்காய்ச்சுதல், சுண்டக்காய்தல்** – இறுகக் காய்தல்; நீர் வற்றக் காய்ச்சுதல்.

**சுண்டகம்** – மூங்கில் வில்.

**சுண்டகன்** – கள்ளிறக்குவோன்.

**சுண்டங்காய்** – சுண்டைக்காய்.

**சுண்டப்பிடித்தல்** – ஆடையை அளக்க இழுத்துப் பிடித்தல்; வயிற்றில் பிடித்துக்கொள்ளுதல்; பொருளை இறுக்குதல்.

**சுண்டம்** – கள்; யானைத்துதிக்கை.

**சுண்டல்** – எரித்த பழங்கறி; சுண்டின பயற்றுப் பணிகாரம்; சுண்டற்கடலை.

**சுண்டற்கறி** – எரித்த பழங்கறி.

**சுண்டன்** – அறிவிலி; காண்க: **மூஞ்சூறு;** சதய நாள்; சிறிய மரவகை.

**சுண்டாங்கி** – கறியோடு சேர்க்க அரைத்த கூட்டுப்பொருள்; துவையல்; அற்பம்; அளவிற் குறைவு.

**சுண்டாங்கியார்** – சிக்கனக்காரி.

**சுண்டாயம்** – விளையாட்டு.

**சுண்டாலம், சுண்டாலி** – யானை.

**சுண்டான்** – கள்விற்போர் வழங்கும் ஒரு மட்பாண்டச் சிற்றளவு; குழந்தைகள் தீக் கொளுத்தி விளையாடும் குச்சி.

**சுண்டி** – தொட்டாற்சுருங்கி; நீர்ப்பூடுவகை; சுக்கு; காண்க: **வறட்சுண்டி;** குறும்புக்காரன்; இஞ்சிச்செடி; கள்.

**சுண்டிக்கீரை** – நீர்ப்பூடுவகை.

**சுண்டிகை** – உள்நாக்கு.

**சுண்டில்** – சுண்டிற்செடி; தொட்டாற்சுருங்கி.

**சுண்டு** – தெறிக்கை; ஒரு சிற்றளவு; சிறுபாத்திர வகை; தலைப்பொடுகு; காய்ச்சுகையில் பாத்திரத்தடியில் பற்றியது; மூக்கு; கீழுதடு; சிறிது.

**சுண்டுக்கட்டை** – நெய்வார் கருவியுள் ஒன்று.

**சுண்டுதல்** – நீர் முதலியன வற்றுதல்; குன்றிப் போதல்; நாணயம் முதலியவற்றைத் தெறித்தல்; நோவுண்டாகும்படி நரம்பு முதலியன இழுத்தல்; வேகவைத்தல்; வயிறு இழுத்துப் பிடித்தல்; நாண் முதலியவற்றை இழுத்துத் தெறித்தல்; இரப்பர் முதலியவற்றை இழுத்து விடுதல்.

**சுண்டுவிரல்** – சிறுவிரல்.

**சுண்டுவில்** – விளையாட்டுக்கு உதவும் ஒரு வில்வகை.

**சுண்டெலி** – சிறிய எலி.

**சுண்டை** – சுண்டைச்செடி; கள்; யானைத் துதிக்கை; நீர்நிலை.

**சுண்டைக்காயன்** – மதிப்பற்றவன்.

**சுண்ணக்கல்** – சுண்ணாம்புக்கல்.

**சுண்ணகக்குற்றி** – நறுமணப்பொடி வைக்கும் சிமிழ்.

**சுண்ணகம்** – நறுமணப்பொடி.

**சுண்ணச்சாந்து** – சுண்ணாம்புக்காரை.

**சுண்ணப்பொடி** – நறுமணப்பொடி.

**சுண்ணம்** – பொடி; நறுமணப்பொடி; பூந்தாது; மலர்; புழுதி, சதயநாள்; சுண்ணாம்பு; ஈரடி எண்சீரைப் பொருள்முறையின்றித் துணித்துச் செய்யுளியற்றும் முறை; சொல் வகை நான்கனுள் நான்கடியான் வரும் இசைப் பாட்டு; பட்டுவகை.

**சுண்ணமாடுதல்** – விழா முதலிய காலங்களில் நறுமணப்பொடி தூவுதல்.

**சுண்ணமிடித்தல்** – நற்செயலுக்குச் செய்யும் ஒரு சடங்கு; நறுமணப்பொடி இடித்தல்.

**சுண்ணமொழிமாற்று** – மொழிமாற்றுப் பொருள் கோள்களுள் ஒன்று, ஈரடி எண்சீர்களில் பொருள்முறைக்கு ஏற்பச் சொற்களை மாற்றிக் கூட்டுதல்.

**சுண்ணவட்டு** – சுண்ணங் கலந்த நீரைவீசுங் கருவி.

**சுண்ணவாசி** – காட்டுமல்லிகை.

**சுண்ணாம்படித்தல்** – வெள்ளையடித்தல்.

**சுண்ணாம்பு** – சுட்ட சுண்ணாம்புக் கல்; நீற்றின சுண்ணாம்பு; சன்னச் சாந்தாக அரைத்த சுண்ணாம்பு.

**சுண்ணாம்புக்கல்** – சுண்ணாம்புச் சத்துள்ள கல்.

**சுண்ணாம்புக்காரை** – கட்டடத்திற்குரிய சுண்ணாம்புச் சாந்து; காய்ந்த சாந்து.

**சுண்ணாம்புக்காளவாய்** – சுண்ணாம்பு நீற்றுஞ் சூளை.

**சுண்ணாம்புத்துடுப்பு** – கரண்டகத்தினின்று சுண்ணாம்பு எடுக்குங் கருவி.

**சுண்ணாம்புதடவுதல்** – வெற்றிலை முதலியவற்றிற்குச் சுண்ணந் தடவுதல்; ஏமாற்றுதல்.

**சுண்ணாம்புப்பட்டை** – நல்ல செம்மண் பட்டையை இடையிட்டு அடிக்கும் சுண்ணாம்புக்கோலம்; ஓடு விலகாதிருக்கும் பொருட்டுப் போடும் சாந்துப்பட்டை.

**சுண்ணித்தல்** – நீற்றுதல்.

**சுணக்கம்** – பிணக்கம்; தாமதம்; வாட்டம்; முடை; சோர்வு; சரசவிளையாட்டு.

**சுணக்கன்** – நாய்; நாய்போலத் திரிகிறவன்; இழிந்தோன்.

**சுணக்குதல்** – தாமதப்படுத்தல்.

**சுணங்கத்திசை** – தென்மேற்றிசை.

**சுணங்கம்** – நாய்.

**சுணங்கல்** – வாட்டம்; தாமதம்; சோம்பேறி; சரச விளையாட்டு.

**சுணங்கழிதல்** – செருக்குக் குறைதல்.

**சுணங்கறை** – புணர்ச்சி.

**சுணங்கன்** – காண்க: சுணங்கம்.

**சுணங்கு** – மெலிவு; அழகுதேமல்; பசலை; படர் புண்; நாய்; பூந்தாது.

**சுணங்குதல்** – சோர்தல்; தாமதித்தல்; தடைப்படுதல்; விடாமல் கெஞ்சுதல்; மனநிறைவின்மையாதல்; சரச விளையாட்டுப் புரிதல்.

**சுணங்கை** – ஒருவிதப் பேய்க்கூத்து; துணங்கைக் கூத்து.

**சுணம்** – அழகுதேமல்; நறுமணப்பொடி.

**சுணை** – சுரணை; அறிவு; கூர்மை; தினவு; வைசூரியால் உடலில் தங்கும் அம்மைப்பால்; இலை காய்களின்மேலுள்ள சிறுமுட்கள்.

**சுணைக்கேடன்** – சுறுசுறுப்பு அற்றவன்; மானமில்லாதவன்; சுரணை இல்லாதவன்.

**சுணைக்கோரை** – ஒரு புல்வகை.

**சுணைகெட்டவன்** – காண்க: சுணைக்கேடன்.

**சுணைத்தல்** – தினவெடுத்தல்.

**சுணைப்பு** – சுரணை; அறிவு.

**சுத்தக்கட்டி** – கலப்பற்ற வெள்ளி தங்கங்களின் கட்டி.

**சுத்தக்கிரயம்** – எல்லா உரிமையையும் விலைக்குக் கொடுத்துவிடுகை.

**சுத்தகாந்தாரம்** – பதினாறு சுரங்களுள் ஒன்று; ஆசான் என்ற வகையைச் சார்ந்த ஒரு பண் வகை.

**சுத்தசாந்தம்** – இன்பவடிவ சத்தி.

**சுத்தசாரி** – நாட்டியவகை.

**சுத்தசிவபதம்** – பரமுத்தி.

**சுத்தசூனியம்** – முழுப் பாழ்.

**சுத்தசைதன்னியம்** – அறிவு மாத்திரையாய் உள்ளது.

**சுத்தஞானம்** – வினைக் கலப்பில்லாத வாலறிவு.

**சுத்ததினம்** – ஆண்டுப் பிறப்பு.

**சுத்தநிருத்தம்** – சொக்கம் என்னும் கூத்து.

**சுத்தநீர்க்கடல்** – ஏழு கடல்களுள் நன்னீர் கொண்ட கடல்.

**சுத்தப்பிரதி** – ஒன்றைப் பார்த்துப் பிழையற எழுதப்பட்ட படி; பரிசோதிக்கப்பட்ட புத்தகம்.

**சுத்தப்பொய்** – முழுதும் பொய்.

**சுத்தபரிசம்** – கிரகணம் பிடிக்குங் காலம்.

**சுத்தம்** – தூய்மை; உண்மை; முழுமை; பிழையின்மை; சூனியம்; நலம்; கலப்பின்மை; கபடமின்மை; குற்றமற்றது; சுக்கிலபட்சம்.

**சுத்தம்பண்ணுதல்** – தூயதாக்கல், துப்புரவாக்கல்.

**சுத்தமாய்** – அடியோடு.

**சுத்தமாயை** – துன்பமின்றி இன்பமே அளிப்பதும் சுத்தப்பிரபஞ்சத்துக்கு முதல் காரணமானதுமான மாயை.

**சுத்தமார்க்கம்** – உண்மையான பத்தி; மெய்ந்நெறி.

**சுத்தமூடன்** – முழுமுட்டாள்.

**சுத்தராகம்** – திரம்பிய இலக்கணமுடைய மூலப் பண்.

**சுத்தவாசனை** – நறுமணம்.

**சுத்தவாளி** – நியாய சபையில் குற்றமற்றவனாகத் தீர்ப்பளிக்கப்பட்டவன்; தூய்மையானவன்.

**சுத்தவீரன்** – போரிற் பின்னிடாத வீரன்.

**சுத்தன்** – தூயன்; சிவன்; முத்திபெறும் நிலையிலுள்ள உயிர்; கபடற்றவன்; மூடன்.

**சுத்தா** – ஒருமிக்க.

**சுத்தாசுத்ததத்துவம்** – காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மூலப்பகுதி என்ற ஏழு பிரிவினதாய்ச் சுத்தமும் அசுத்தமும் கலந்த தத்துவ வேறுபாடு.

**சுத்தாத்துவைதம்** – உயிர் இறைவனுடன் இரண்டறக் கலந்து துய்க்கும் நிலை.

**சுத்தான்னம்** – வெறுஞ்சோறு.

**சுத்தி** – மனமொழி மெய்களில் மாசின்மை; மருந்து முதலியவற்றின் குற்றம் நீக்குகை; சிப்பி; கும்பிடுகிளிஞ்சில்; சங்கு; தலையோடு; கரந்தை; அகல்; பாத்திரவகை; சுத்தியல்; அரைப்பலம்; புறமதத்தாரை இந்துமதத்தில் சேர்க்குங்கால் செய்யும் சடங்கு; வயிரக் குணங்களுள் ஒன்று.

**சுத்திகரம்**, **சுத்திகரிப்பு** – தூய்மைசெய்கை.

**சுத்திகை** – கிளிஞ்சில்; அகல்.

**சுத்திசெய்தல்** – துப்புரவாக்கல்; பொன் முதலிய உலோகங்களைத் தூய்மைசெய்தல்; மருந்துக் காகப் பாடாணம் முதலியவற்றைத் தூய்மை செய்தல்; மந்திரம் முதலியவற்றால் தூய்மை செய்தல்.

**சுத்திபத்திரம்** – பிழைதிருத்தக் குறிப்பு.

**சுத்தியம்** – உயர்ந்தரக ஆடை.

**சுத்தியல்** – கம்மாளர் கருவிகளுள் ஒன்றான சிறு சம்மட்டி.

**சுத்தீகரணம்** – தூய்மையாக்குகை.

**சுத்துரம்**, **சுத்துரு** – கண்டங்கத்தரிச்செடி.

**சுத்தோதகம்** – நல்ல தண்ணீர்.

**சுதகம்** – குறைவு.

**சுதசனம்** – ஆயுதம்.

**சுதசித்தம்** – தானாகவே ஏற்பட்டது.

**சுதந்தரக்காணி** – உரிமை நிலம்.

**சுதந்தரக்காரன்** – சொத்து முதலியவற்றுக்கு உரிமையுடையவன்.

**சுதந்தரம்** – மரபுரிமை; உரிமைப்பேறு; தன் விருப்பம்; விடுதலை.

**சுதந்தரவறிவு** – இயற்கைப் பேரறிவு.

**சுதந்தரவாளி** – சொத்தின் உரிமையாளன்.

**சுதந்தரன்** – சொத்தின் உரிமையாளன்; தன் விருப்பம்போல் நடப்பவன்.

**சுதந்தரித்தல்** – சொத்து முதலியவற்றின் உரிமை பெறுதல்; தன்வயத்தனாயிருத்தல்.

**சுதந்தி** – வடமேற்றிசைப் பெண்யானை; பெண் யானை.

**சுதம்** – இறங்குகை; அழிவு; பரமாகமம்; காண்க : **சுருதஞானம்**; முறைமை; நெருஞ்சில்.

**சுதர்ச்சி** – சதுரக்கள்ளிமரம்.

**சுதரிசனம்** – நற்காட்சி; திருமாலின் சக்கரம்; அழகு; கண்ணாடி.

**சுதருமம்** – நல்லறம்; இயல்பு; அறநூல் விதித்த படி நடத்தற்குரிய அவரவர் செயல்.

**சுதலம்** – கீழேழுலகங்களுள் ஒன்று.

**சுதன்** – மகன்.

**சுதன்மம்** – நல்லறம்; ஆயுதம்; இந்திரனின் அத்தாணி மண்டபம்.

**சுதன்மை** – இந்திரனின் அத்தாணி மண்டபம்.

**சுதனம்** – நற்பேறு; ஆயுதம்.

**சுதா** – தன்னடைவான; அமிர்தம்.

**சுதாகரன்** – அமிர்த கதிரையுடைய சந்திரன்.

**சுதாச்சி** – காண்க : **சுதர்ச்சி**.

**சுதாதாரன்**, **சுதாநிதி** – சந்திரன்.

**சுதாமனு** – மலை; முகில்.

**சுதாரித்தல்** – துணிவுகொள்ளல்; திறமையாக நடத்துதல்.

**சுதாவாய்**, **சுதாவில்** – தானாகவே; நேரில்.

**சுதி** – இசைச் சுருதி; யாழின் நரம்பு; அறிஞன்; மலவாய்த் துளை; வளர்பிறை; பெண்.

**சுதிமதிகெட்டவன்** – கேள்வியும் அறிவும் இல்லாதவன்.

**சுதியேற்றுதல்** – இசைச் சுருதியை மிகுதிப்படுத்துதல்; தூண்டிவிடுதல்.

**சுதிலயை** – சுருதியோடு இசையொன்றுகை.

**சுதினம்** – நல்ல நாள்.

**சுதும்பு** – ஒரு மீன்வகை.

**சுதேசம்** – சொந்த நாடு.

**சுதேசி** – உள்நாட்டான்; தனது நாட்டில் செய்த பண்டம்.

**சுதேசியம்** – தனது நாட்டில் செய்த பொருள்.

**சுதை** – தேவாமிர்தம்; பால்; சுவை; சுண்ணாம்பு; வெண்மை; நட்சத்திரம்; மின்னல்; உதைகால்பசு; கேடு; மகள்.

**சுதைக்குன்று** – சுண்ணாம்பு பூசிய செய்குன்று.

**சுந்** – சனி.

**சுந்தரத்தோளுடையான்** – அழகர்கோயில் திருமால்.

**சுந்தரப்பொடி** – சிவப்பு நறுமணத்தூள்.

**சுந்தரம்** – அழகு; நிறம்; நன்மை; சிவப்பு.

**சுந்தரன்** – அழகன்; சுந்தரமூர்த்தி; மதுரையில் கோயில்கொண்டுள்ள சிவபிரான்.

**சுந்தரி** – அழகி; துர்க்கை; இந்திராணி; பார்வதி; மூஞ்சூறு; ஒரு மரவகை.

**சுந்தரேசன்** – மதுரையில் கோயில்கொண்டுள்ள சிவபிரான்.

**சுந்து** – நீர்.

**சுந்தோபசுந்தநியாயம்** – சுந்தன், உபசுந்தன் என்ற இருவரும் திலோத்தமையை விரும்பி அவள் பொருட்டு மாய்ந்தாற்போல் ஒன்றனை ஒன்று கெடுக்கும் நெறி.

**சுப்பல், சுப்பி** – சுள்ளிவிறகு.

**சுப்பியம்** – காண்க: **மாவிலிங்கம்**; விளாமரம்; பாம்புகொல்லி; மாவிலிங்கமரப்பட்டை.

**சுப்பிரசன்னம்** – தெளிவு; அருள்.

**சுப்பிரசுதை** – காட்டெருமைப் பால்.

**சுப்பிரதந்தி** – வடமேற்றிசைப் பெண்யானை.

**சுப்பிரதீபம்** – மிக்க வொளி; கூர்மையான அறிவு; வடகீழ்த்திசை யானை.

**சுப்பிரதீபன்** – சீர்த்தி பெற்றோன்.

**சுப்பிரபாதம்** – திருப்பள்ளியெழுச்சி.

**சுப்பிரம்** – வெண்மை; தூய்மை; மிக்கவொளி; யோகம் இருபத்தேழனுள் ஒன்று; முத்துக் குற்றத்துள் ஒன்று; சந்தனம்; வெண்மை; வெள்ளி.

**சுப்பிரமணியன்** – முருகக்கடவுள்.

**சுப்பிரமதுவா** – கூவைநீறு.

**சுப்பிரயோகம்** – மன்மதனின் ஐந்து மலரம்புத் துன்பத்துள் காதலரைக் குறித்தே நினைவும் பேச்சுமாயிருக்கும் நிலை.

**சுப்பிராங்கி** – இந்திரன் குதிரை.

**சுப்பிரி** – நான்முகன்.

**சுப்பிவிறகு** – சுள்ளிவிறகு.

**சுப்பு** – வேற்றுமையுருபு.

**சுப்பெனல்** – நீர்வற்றல்.

**சுபக்கம்** – வாதத்தில் தன் கொள்கை; சிவஞான சித்தியாரில் சைவ சமயத்திற்குரிய கொள்கையை உணர்த்தும் பகுதி.

**சுபக்கிரகம்** – நற்கோள்; வளர்பிறைச் சந்திரன்; புதன், குரு, சுக்கிரன் ஆகிய நற்கோள்.

**சுபகரம்** – நன்மைசெய்வது.

**சுபகருமம், சுபகன்மம்** – மங்கலச்செயல்.

**சுபகிருது** – அறுபதாண்டுக் கணக்கில் முப்பத்தாறாம் ஆண்டு.

**சுபங்கரி** – மங்கலத்தைச் செய்பவளான பார்வதி.

**சுபசரிதம்** – நன்னடக்கை.

**சுபசரிதை** – மங்கலவரவு.

**சுபசூசக(ன)ம்** – மங்கலத்தைக் காட்டுங் குறி.

**சுபசோபனம்** – மங்கலச் செய்தி.

**சுபட்சம்** – தன் கொள்கை; சிவஞான சித்தியில் சைவசமயப் பகுதி.

**சுபத்திரை** – அருச்சுனன் மனைவி; கறுப்புப் பசு.

**சுபதம்** – நன்மை தருவது; அரசமரம்.

**சுபந்தம்** – உருபு ஏற்ற பெயர்ச்சொல்.

**சுபம்** – மங்கலம்; நன்மை; பேறு; முத்தி; மங்கலச் செயல்; அழகு; வெண்மை; இருபத்தேழு யோகத்துள் ஒன்று.

**சுபமங்களம்** – வாழ்த்துப்பாட்டு; முதிர்ந்த பருவத்தில் நேரும் நல்ல சாவு.

**சுபமுகூர்த்தம்** – நல்வேளை.

**சுபர்ணன், சுபன்னன்** – அழகிய சிறகுகளையுடைய கருடன்.

**சுபா** – நாட்டின் பகுதி.

**சுபாங்கி(கை)** – அழகிய உறுப்புள்ளவள்.

**சுபாசுபம்** – நன்மை தீமைகள்.

**சுபாலிகை** – அடுப்பு.

**சுபாவக்காரன்** – நல்லவன்; மூடன்.

**சுபாவங்காட்டுதல்** – இயல்பைக் காட்டுதல்; இழிகுணம் காட்டுதல்; நடித்தல்.

**சுபாவசித்தம்** – இயற்கையாகவே அமைந்திருப்பது.

**சுபாவப்பேச்சு** – கபடமற்ற பேச்சு.

**சுபாவம்** – இயல்பு; இயற்கையுணர்வு; உண்மை; இயற்கை; கலப்பற்றது; கபடின்மை; மூடத்தன்மை.

**சுபாவி** – காண்க: **சுபாவக்காரன்**.

**சுபாவிகம்** – இயற்கைத் தன்மை.

**சுபானு** – அறுபதாண்டுக் கணக்கில் பதினேழாம் ஆண்டு.

**சுபிட்சம்** – காலமழை முதலியவற்றால் உண்டாகுஞ் செழிப்பு.

**சுபுகம்** – மோவாய்.

**சுபுட்பம்** – காண்க: இலவங்கம்; பவளமல்லிகை.

**சுபேதார்** – ஓர் இராணுவ அதிகாரி.

**சுபை** – நாட்டுப்பகுதி.

**சுபையதார்** – காண்க: **சுபேதார்**.

**சுபோதம்** – மெய்யறிவு.

**சும்பகம்** – ஊசிக்காந்தம்.

**சும்பகன்** – காமவேட்டைக்காரன்.

**சும்பன்** – மூடன்.

**சும்பனம்** – இதழ் முதலியன சுவைக்கை; முத்தமிடல்; சப்புதல்.

**சும்பித்தல்** – முத்தமிடுதல்; சப்புதல்.

**சும்பிதகரணம்** – புணர்ச்சிவகை.

**சும்பிதம்** – காண்க: **சும்பனம்**.

**சும்புதல்** – வாடிச் சுருங்குதல்.

**சும்புள்** – கடப்பமரம்.

**சும்புளித்தல்** – பேரொளி முதலியவற்றால் கண் கூசுதல்.

**சும்மா** – தொழிலின்றி; இயல்பாய்; அமைதியாய்; வறிதாக; காரணமின்றி; பயனின்றி; கருத்தின்றி; விளையாட்டாய்; இலவசமாய்; தடையின்றி; அடிக்கடி.

**சும்மாடு** – பாரத்தைத் தாங்குவதற்காகத் தலையில் வைக்கும் சுமையடை; தானியமாகக் கொடுக்கும் உரிமை.

**சும்மாடுகோலுதல்** – துணியைத் தலைக்குச் சும்மாடாகச் சுற்றிக்கட்டுதல்.

**சும்மாது** – காண்க: சும்மா.

**சும்மெனல்** – மூச்சுவிடுதற் குறிப்பு.

**சும்மை** – சுமை; தொகுதி; நெற்போர்; ஊர்; நாடு; ஆவிரைச்செடி; ஒலி; யாழ்நரம்பின் ஓசை.

**சுமக்க** – மிகவும்.

**சுமங்கலம்** – பெரிதும் மங்கலமாயுள்ளது.

**சுமங்கலி(லை)** – மங்கலியப் பெண், கணவனுடன் வாழ்பவள்.

**சுமங்கை** – வறட்சுண்டிச்செடி; ஆடுதின்னாப் பாளை.

**சுமடன்** – சுமப்பவன்; அறிவில்லாதவன்; கீழ்மகன்.

**சுமடி** – அறிவிலாள்.

**சுமடு(டை)** – காண்க: சும்மாடு; சுமை.

**சுமத்தல்** – பாரமாதல்; சார்தல்; மிகுதல்; தாங்குதல்; மேற்கொள்ளுதல்; பணிதல்.

**சுமத்தி** – மிகுதி; விலையேற்றம்; கெட்டி.

**சுமத்துதல்** – பாரமேற்றுதல்; உடன்படச் செய்தல்; கடன் முதலியன பொறுக்கவைத்தல்; குற்றம் முதலியன ஏற்றுதல்.

**சுமதலை** – பொறுப்பு; விலை முதலியவற்றின் ஏற்றம்.

**சுமதி** – பாரம்; மிகுதி; பொறுப்பு; நல்லறிவு; அறிஞன்; தீர்த்தங்கரருள் ஒருவர்.

**சுமந்த** – அதிகமான.

**சுமப்பு** – பாரம், சுமை.

**சுமம்** – பூ.

**சுமரணம், சுமரணை** – சுரணை, உணர்ச்சி; அறிவு; நினைவு.

**சுமருதல்** – சுமக்குதல்.

**சுமனசம்** – காண்க: சுமம்.

**சுமனை** – சிவப்புப் பசு.

**சுமார்** – ஏறக்குறைய; மட்டம்.

**சுமாரகம்** – நினைப்பு.

**சுமாலி** – கள்; ஓர் அரக்கன்.

**சுமுகம்** – இன்முகம்.

**சுமுகன்** – இன்முகமுள்ளவன்.

**சுமுத்திரை** – சரியளவு; சரியானது; நேர்மை.

**சுமேரு** – தேவர்க்கு இருப்பிடமான மேருமுடி.

**சுமை** – சுமக்கை; பாரம்; தொகுதி; ஓரங்குல மழை; 60 படிகொண்ட ஓர் அளவை; பொறுப்பு; 180 தேங்காய்கொண்ட அளவு; 270 கவளிகொண்ட வெற்றிலைக்கட்டு.

**சுமைகாரன்** – மூட்டை தூக்குவோன்; குடும்ப பார மிக்கவன்.

**சுமைகூலி** - மூட்டை தூக்குவதற்குக் கொடுக்குங் கூலி.

**சுமைத்தயிர்** – ஆடைத்தயிர், கட்டித்தயிர்.

**சுமைதலை** – பொறுப்பு.

**சுமைதாங்கி** – பொறுப்பாளி; சுமையை இறக்கித் தலைப்பாரம் ஆற்றுதற்கு உதவியாக உயர்த்தி நிறுத்தப்பட்ட கற்கட்டு; இதணம்.

**சுமைதாங்கிபோடுதல்** – மகப்பெறாமல் கருப்பத்துடன் இறந்தவள்பொருட்டு அவள் வயிற்றுப் பாரத்தால் உண்டான வருத்தம் நீங்குமாறு சுமைதாங்கிக்கல் நாட்டுதல்.

**சுமைதி** – பாரம்; மிகுதி; பொறுப்பு.

**சுமையடை** – காண்க: சும்மாடு.

**சுமையாள்** – மூட்டை தூக்குவோன்.

**சுமையிறக்கி** – காண்க: சுமைதாங்கி.

**சுயகாரியதுரந்தரன்** – தன்னலம் மிக்கவன்.

**சுயகாரியம்** – சொந்த வேலை; தன்னலம்.

**சுயங்கிருதானர்த்தம்** – தானாகவே விளைத்துக் கொள்ளுந் தீங்கு.

**சுயசாதிமானம்** – தன் சாதியில் பற்றுவைத்தல்.

**சுயஞ்சோதி** – இயற்கையொளி; கடவுள்.

**சுயநலம்** – தன்னலம்.

**சுயபுத்தி** – இயற்கையறிவு, சொந்த அறிவு; மயக்கமற்ற அறிவு.

**சுயபோக்கு** – தன்மனப்போக்கு.

**சுயம்** – சொந்தமானது; சொந்தமான; தானாகப் பாடிய பாட்டு; கலப்பற்ற.

**சுயம்பாகம்** – தானாகச் சமைத்துக்கொள்கை; சத்திரம் முதலியவற்றில் கொடுக்கும் சமையற் பொருள்கள்.

**சுயம்பாகி** – சமையற்காரன்; சவர்க்காரம்.

**சுயம்பாவித்தல்** – அகங்கரித்தல்.

**சுயம்பிரகாசம்** – காண்க : சுயஞ்சோதி.

**சுயம்பு** – தானே தோன்றியது; கடவுள்; பிரமன்; அருகன்; இயற்கை; தூயதான; மடையன்.

**சுயம்புமூர்த்தி** – தானாகத் தோன்றிய தெய்வத் திருமேனி.

**சுயம்வரம், சுயமரம்** – தன்னை விரும்பி வந்த அரசர் கூட்டத்தில் தலைவி தலைவனைத் தானே தேர்ந்து வரித்துக்கொள்ளுகை.

**சுயமாய்** – தானாக; அடிக்கடி.

**சுயவலது** – சொந்தத் திறமை.

**சுயாதிபத்தியம்** – தன் இச்சைப்படி நடத்தும் ஆட்சி; கோளின் தசையில் தனது ஆட்சி.

**சுயாதிபதி** – தனியாட்சி செலுத்துபவன்.

**சுயாதீனம்** – தன்வயமானது; தன்விருப்பம்.

**சுயாதீனன்** – தன் விருப்பம்போல் நடப்பவன்.
**சுயார்ச்சிதம்** – சொந்த சம்பாத்தியம்.
**சுயிரகம்** – தருப்பைப்புல்.
**சுயேச்சை** – தன்னிச்சை, தன்விருப்பம், சுதந்தரம்.
**சுயோகி** – கள்.
**சுர்க்கி** – செங்கற்பொடி.
**சுரக்கட்டி** – வயிற்றுக்கட்டி.
**சுரகுரு** – தேவர்க்குத் தலைவனாகிய இந்திரன்; தேவர்க்குக் குருவாகிய வியாழன்; சோழர் குலத் தலைவன்.
**சுரங்கப்பாதை** – தரைமட்டத்திற்கு அடியில் உள்ள பாதை.
**சுரங்கம்** – நிலவறை: கீழறுக்கும் அறை; வீட்டில் நுழைவதற்குக் கள்வர் இடும் கன்னம்.
**சுரங்கம்வைத்தல், சுரங்கமறுத்தல்** – பாறைகளை மருந்து வைத்து உடைத்தல்; கீழறுத்தல்; கன்னமிடுதல்; வஞ்சகத்தால் தீங்கு விளைவித்தல்.
**சுரச்சதி** – ஓர் இசைவகை.
**சுரசம்** – சூடு தோய்த்த மருந்துச் சாறு; மதுரச் சாறு; சிறு கிழங்குச் செடி; துளசிச்செடி; நொச்சி; பாதரசம்; அரத்தை.
**சுரசனி** – இரவு.
**சுரசி** – வெண்ணொச்சிமரம்.
**சுரசுரத்தல்** – சருச்சரையாதல்.
**சுரசுரப்பு** – சருச்சரையாக இருக்கை.
**சுரசை** – சிற்றரத்தை.
**சுரஞ்சனம்** – கமுகு.
**சுரடி** – ஒரு பண்வகை.
**சுரண்டி** – சுரண்டுங் கருவி; தட்டிப் பறிப்பவன்; சிறிது சிறிதாகப் பொருள் சேர்ப்பவன்; சுரண்டின பொருள்.
**சுரண்டுதல்** – நகம் முதலியவற்றால் பிறாண்டுதல்; நகம் அல்லது விரல் நுனியால் உடம்பைத் தீண்டிக் குறிப்பித்தல்; சண்டைக்கு இழுத்தல்; கவர்தல்; செலவால் கரைத்தல்; தூண்டிவிடுதல்; விபசாரஞ் செய்தல்; இரத்தல்.
**சுரணை** – உணர்ச்சி; அறிவு.
**சுரத்தல்** – ஊறுதல்; உடலில் நீர் முதலியன பெருகி வீங்குதல்; நிறைதல்; பால்முதலியன சுரத்தல்; இடைவிடாது சொரிதல்; மிகக் கொடுத்தல்.
**சுரத்துய்த்தல்** – வீரர் தாம் கவர்ந்த ஆநிரையை அரிய வழியில் நோவு படாதபடி நடத்திக் கொண்டு செல்லுதலைக் கூறும் புறத்துறை.
**சுரதநீர்** – காமநீர்.
**சுரதநூல்** – காமநூல்.
**சுரதம்** – புணர்ச்சி; இனிமை; சாறு; பாதரசம்.
**சுரதமங்கை** – பொதுமகள்.
**சுரதரு** – தேவதரு, கற்பகத்தரு.
**சுரதலீலை** – புணர்ச்சி.
**சுரதாக்கு** – அரத்தைச்செடி.
**சுரநடை** – பாலைநிலத்தில் தலைவியை இழந்து நின்ற தலைவன் நிலையைக் கூறும் புறத்துறை.
**சுரநதி** – தேவநதியாகிய கங்கை.
**சுரப்பட்டைச்சத்து** – கொய்னா.
**சுரப்பு** – சுரத்தல்; ஊற்று; வீக்கம்.
**சுரப்புவிடுதல்** – கறத்தற்கு ஏற்ப மடியினின்று பால் சுரக்கத் தொடங்குதல்; கன்றைவிட்டுப் பால் சுரக்கச் செய்தல்.
**சுரபதம்** – தேவருலகம்.
**சுரபதி** – தேவர் தலைவனான இந்திரன்.
**சுரபி** – காமதேனு; வெள்ளைப்பசு; மணம்; காண்க: **தேட்கொடுக்கி**; துளசி; மல்லிகை; சாதிக்காய்; பிரமிப்பூடு.
**சுரபிபத்திரை** – பெருநாவல்.
**சுரபு** – இலவம்பிசின்; ஒரு பஞ்சுமரவகை.
**சுரபுன்னாகம், சுரபுன்னை** – புன்னைமரவகை.
**சுரம்** – பாலைநிலம்; காய்ச்சல்; காடு; அருநெறி; வழி; இசைவகை; ஏழிசை; உயிரெழுத்து; குரல்; கள்; உப்பு; நகத்தின் அடி; உட்டுளை.
**சுரம்பாடுதல்** – எடுத்துக்கொண்ட பண்ணுக்கேற்ற சுரவரிசைகளாலே கீர்த்தனம் முதலியன பாடுதல்.
**சுரம்போக்கு** – தலைவனுடன் தலைவி பாலை வழியிற் செல்லும் உடன்போக்குத் துறை.
**சுரம்போடுதல்** – இசைப்பாடலுக்கு ஏற்ப இசை அமைத்தல்.
**சுரம்விழுதல்** – குரல் தாழ்தல்; செருக்குக் குறைதல்.
**சுரமகளிர்** – தெய்வப் பெண்டிர்.
**சுரமண்டலம்** – ஒரு வாத்தியவகை.
**சுரமதி** – சிலந்தி; நச்சுச் சிலந்திவகை; மேகப் புண்வகை.
**சுரமலி, சுரமலிகம்** – காண்க: **செந்தீக்கரப்பான்**; கொப்புளம்.
**சுரமாந்தம்** – குழந்தைகட்கு வரும் மாந்தநோய் வகை.
**சுரமேற்றுதல்** – அடியோடு ஒழித்தல்; தூண்டுதல்; காட்டில் துரத்துதல்.
**சுரர்** – தேவர்.
**சுரர்குருநாள்** – பூசநாள்.
**சுரர்பகைவர்** – தேவருக்குப் பகைவராகிய அசுரர்.
**சுரர்பதி** – இந்திரன்; தேவருலகம்.
**சுரரிடம், சுரலோகம்** – தேவருலகம், துறக்கம்.

**சுரவன்பாக்கு** – உயர்ந்த பாக்குவகை.
**சுரழ்** – இலவம்பிசின்.
**சுரளிகை** – பாலைமரம்.
**சுரன்** – அறிஞன்; சூரியன்; காடு; சிறுமீன்வகை.
**சுரா** – கள்.
**சுராகரம்** – கள்ளுக்கு இருப்பிடமான தென்னை.
**சுராட்டு** – ஏகாதிபத்தியமுடைய இந்திரன்; நான்கு அடியுற்ற செய்யுளில் இரண்டெழுத்து ஓரடியுள் மிக்குச் சீரொத்து வருவது; 50 இலட்சத்துக்குமேல் ஒரு கோடிக்குக்கீழ் இறைவருவாயுடைய அரசன்.
**சுராதிராசன்** – காண்க: **சுரகுரு.**
**சுராரி** – அசுரர்.
**சுராலயம்** – தேவர் வாழிடமாகிய மேரு.
**சுராலை** – சாம்பிராணி.
**சுராளம்** – பெருமித நடை.
**சுரி** – சுழற்சி; சுழி; எருதின் நெற்றிவெள்ளைச் சுழி; அணி உறுப்புவகை; நரி; சேறு; துளை; ஏட்டுத் துளை; ஏட்டில் துளையிடும் கருவி.
**சுரிகை** – கத்தி; உடைவாள்; கவசம்.
**சுரித்தல்** – சுழிதல்; சுருளுதல், திரைதல்; வளைவாய்க் கிடத்தல்; சேற்றிற் புதைத்தல்; வற்றுதல்; சுருங்குதல்; மனஞ்சுழலுதல்; சேறாதல்; உள்ளொடுக்குதல்; சுளித்தல்; துளைவிடுதல்.
**சுரிதகம்** – கலிப்பா உறுப்பு ஆறனுள் இறுதி உறுப்பு; கூத்தில் சொல்நிகழும் வகையில் வரும் எட்டடிப் பாட்டு; ஒரு தலையணிவகை.
**சுரிதம்** – கலக்கப்பட்டது; வெட்டப்பட்டது.
**சுரிதல்** – சுழிதல்; சுருளுதல்; மடிப்புவிழுதல்; கடைகுழலுதல்.
**சுரிப்புறம்** – சங்கு; நத்தை; ஓலை ஏட்டின் துளையுள்ள பக்கம்.
**சுரிபோடுதல்** – தமரிடுதல்.
**சுரிமண்** – புதைமணல்; சேறு.
**சுரிமுகம்** – சுரிந்த முகமுடைய சங்கு; நத்தை.
**சுரியல்** – வளைவு; சுருண்ட மயிர்; மயிர்; பெண் மயிர்.
**சுரியாணி** – முறுக்காணி.
**சுரியூசி** – பனையேட்டில் துளையிடுங் கருவி.
**சுரீரெனல்** – காய்ந்த இரும்பில் நீர் சுண்டும்போது உண்டாகும் ஒலிக்குறிப்பு; தேள் கொட்டுதல் முதலியவற்றால் உண்டாகும் வலிக்குறிப்பு.
**சுருக்க** – சுருக்கமாக; விரைவாக.
**சுருக்கம்** – ஆடை முதலியவற்றின் சுருக்கு; சிறுமை; வறுமை; இவறல்.
**சுருக்களஞ்சி, சுருக்காங்கி** – குழைச்சு; கண்ணி; கட்டு.
**சுருக்கி** – தொட்டாற்சுருங்கி; சிறுகீரை; ஆமை.
**சுருக்கிடுதல்** – சுருக்குப்போடுதல்; சுருக்கில் மாட்டுதல்; காண்க: **சுருக்குக்கொடுத்தல்.**
**சுருக்கிப்பிடித்தல்** – செலவு முதலியன குறைத்தல்; வேலை முதலியவற்றைக் குறைத்து முடித்தல்.
**சுருக்கு** – சுருங்குகை; ஆடை முதலியவற்றின் மடிப்பு; குழைச்சு; கண்ணி; கட்டு; குறைவு; சுருக்கம்; கடும்பற்றுள்ளம்; விரைவு; அக்கறை; சுரணை; காண்க: **ஒட்டணி;** அடி; வேள்வியில் உதவும் நெய்த்துடுப்பு; பூமாலைவகை; வில்வம்.
**சுருக்குக்கஞ்சிகை** – வேண்டியபோது சுருக்கிக் கொள்ளுதற்குரிய திரை.
**சுருக்குக்கொடுத்தல்** – காண்க: **சுருக்கேற்றுதல்;** அடிகொடுத்தல்; கண்டிப்புக் காட்டுதல்.
**சுருக்குதல்** – குறைத்தல்; உள்ளிழுத்தல்; ஆடை முதலியன சுருக்குதல்; குடை முதலியன ஒடுக்குதல்; வலை, பை முதலியன சுருக்குதல்; மூலாம் பூசுதல்; ஓலை முதலியன அணிதல்.
**சுருக்குப்பை** – வாயைச் சுருக்கக்கூடிய தையற்பை.
**சுருக்குப்போட்டுக்கொள்ளுதல்** – கழுத்தில் உருவுகயிறிட்டுத் தற்கொலை புரிந்துகொள்ளுதல்.
**சுருக்குவலை** – ஒரு வலைவகை.
**சுருக்குவழி** – குறுக்குப்பாதை; கணக்குத் தீர்வதற்கான எளிய முறை.
**சுருக்குவார்** – விலங்குகளைப் பிடித்தற்குரிய கருவிவகை.
**சுருக்குவிழுதல்** – கயிறு முதலியவற்றில் முடிச்சு விழுகை; உடலில் மடிப்பு விழுகை; மோசத்துக்குள்ளாதல்.
**சுருக்குவைத்தல்** – கண்ணிவைத்தல்; செருக்கை ஒடுக்க வழிதேடுதல்.
**சுருக்கேற்றுதல்** – உலோகங்களைத் தூய்மை செய்யும்போது மருந்துநீர் தெளித்தல்.
**சுருக்கை** – பூமாலைவகை; வில்வம்.
**சுருங்கச்சொல்லணி** – ஓர் அணிவகை.
**சுருங்கச்சொல்லல்** – நூல் அழகினுள் ஒன்றான சுருக்கமாகக் கூறுதல்.
**சுருங்கப்பிடித்தல்** – குறைத்தல்.
**சுருங்கல்** – சுருங்கினது; கோட்டையின் கள்ள வழி; பூமாலைவகை; நுழைவாயில்; மடிப்பு.
**சுருங்கில்** – சிறுவீடு.
**சுருங்கு** – சலதாரை.
**சுருங்குதல்** – சிறுகுதல்; ஒடுங்குதல்; சுருக்கமாதல்; உள்ளடங்குதல்; ஒழுக்கம் தவறுதல்; ஆடை முதலியன சுருக்கம் கொள்ளுதல்.

**சுருங்கை** – நீர் செல்லுதற்கு நிலத்துள் கற்களால் அமைக்கப்படும் கரந்துபடுத்த வழி; கோட்டையின் கள்ளவழி; நுழைவாயில்; மாளிகையின் சாளரம்.

**சுருசுருத்தல்** – ஒலித்தல்; ஊக்கமாதல்.

**சுருசுரெனல்** – ஒலித்தற்குறிப்பு; வேகத்தோடு தீப்பற்றுதற்குறிப்பு; உடம்பு சுடுதற்குறிப்பு.

**சுருட்கொண்டை** – மயிர்முடிவகை.

**சுருட்கொள்ளுதல்** – சுருண்டுவிழுதல்.

**சுருட்டி** – ஆலவட்டம்; ஒரு பண்வகை; எடுபிடி வகை; பட்டுச்சீலைச் சுருட்டு; காண்க: **மயிர்சிகைப்பூண்டு.**

**சுருட்டிக்கொள்ளுதல்** – சூழ்ச்சியாய்க் கைப்பற்றுதல்; ஆடை, பாய் முதலியவற்றைச் சுருட்டி வைத்துக்கொள்ளல்.

**சுருட்டிப்பிடித்தல்** – நோய் முதலியன உடலை மெலிவித்தல்; நோவுண்டாம்படி பசியால் குடல் சுருட்டப்படுதல்; ஆடை முதலியவற்றைச் சுருட்டிப் பிடித்தல்.

**சுருட்டிமடக்குதல்** – வாதம் முதலியவற்றில் பிறரைக் கீழ்ப்படுத்துதல்; சூழ்ச்சியாய்ப் பறித்தல்.

**சுருட்டியடித்தல்** – சுழற்றித் தள்ளுதல்; வாதம் முதலியவற்றில் பிறரைக் கீழ்ப்படுத்துதல்.

**சுருட்டு** – சுருட்டுகை; சுருள்; புகையிலைச்சுருள்; தந்திரம்; உயர்ந்த பட்டுவகை.

**சுருட்டுக்குடித்தல்** – சுருட்டுப் புகையை உட்கொள்ளுதல்.

**சுருட்டுதல்** – சுருளச்செய்தல்; கவர்தல்.

**சுருட்டுப்பட்டு** – உயர்ந்த பட்டுவகை.

**சுருட்டை** – சுருண்ட மயிர்; சுருட்டை மயிருள்ள பிள்ளை; ஒரு பாம்புவகை; மிளகாய்ச் செடியில் காணும் இலைநோய்வகை.

**சுருண்டுபோதல்** – வாடியொடுங்குதல்; இறத்தல்.

**சுருணி** – யானைத்தோட்டி.

**சுருணை** – சுருட்டி வைத்த துணிமுதலிய பொருள்; கணக்கெழுதப்பட்ட ஓலைச்சுருள்; சாணிச் சுருணை; தீப்பற்றுதற்குரிய பந்தம்; பூண்; பந்து; வைக்கோற் சுருள்; கட்டட வளைவுவகை.

**சுருதஞானம்** – கேள்வியால் உண்டாகும் அறிவு.

**சுருதம்** – காதாற் கேட்டது; எழுதாக்கிளவியாகிய வேதம்; வரலாறு.

**சுருதி** – காது; சுதி; ஒலி; எழுதா மறை; இசைச் சுரத்திற்கு ஆதாரமான ஒலி; இருபத்திரண்டு வகைப்பட்ட இசைச்சுரம்; புகழ்; அசரீரி வாக்கு; பொய்ச் செய்தி; வேதசுரம்.

**சுருதிகூட்டுதல்** – வாத்திய நரம்புகளின் ஒலிகள் ஒத்திருக்குமாறு அமைத்தல்.

**சுருதிகொடுத்தல்** – இசைக்கு ஒத்த துணை ஒலி எழுப்புதல்.

**சுருதிசேர்த்தல்** – காண்க: **சுருதிகூட்டுதல்.**

**சுருதியான்** – வேதத்திற்குரிய பிரமன்; வேதத்தால் அறியப்படும் கடவுள்.

**சுரும்பர்** – வண்டு.

**சுரும்பாய(வ)ன்** – வண்டாகிய வில்நாணை உடைய மன்மதன்.

**சுரும்பித்தல்** – ஒலித்தல்.

**சுரும்பு** – வண்டு; ஆண்வண்டு; மலை.

**சுருவம்** – வடிவம்; தன்மை; வேள்விக்குரிய நெய்த்துடுப்பு; அகப்பைவகை.

**சுருவை** – வேள்விக்குரிய நெய்த்துடுப்பு.

**சுருள்** – வெற்றிலைச் சுருள்; சுருளுகை; சுருண்ட பொருள்; கட்டு; ஐவகைக் கூந்தல் முடிகளுள் ஒன்று; மகளிர் காதணிவகை; ஓலைச்சுருளின் மடிப்பு; திருமணத்தில் மணமக்களுக்குத் தாம்பூலத்துடன் கொடுக்கும் பரிசு; நாளம்.

**சுருள்வைத்தல்** – மணமக்களுக்குத் தாம்பூலத்துடன் பரிசிற்பொருள் அளித்தல்.

**சுருளமுது** – தாம்பூலம்.

**சுருளல்** – சுருளுதல்; மயிர் முதலியவற்றின் சுருள்.

**சுருளவாட்டுதல்** – மருந்து முதலியவற்றுக்காகப் பச்சிலை முதலியவற்றை வாட்டுதல்; வருந்த வேலை வாங்குதல்.

**சுருளி** – தொழுகண்ணிச்செடி; இலங்கை மரவகை.

**சுருளுதல்** – சுருளாதல்; சுருங்குதல்; சோர்தல்; துன்பத்திற்குள்ளாதல்.

**சுருளை** – சுருள்; குருத்து; காதணிவகை.

**சுரூபம்** – நல்லுருவம்; வடிவம்; தன்மை.

**சுரூபவதி** – அழகி.

**சுரூபி** – அழகுள்ளவன்(ள்).

**சுரேசன்** – இந்திரன்; முருகன்.

**சுரேசுவரி** – உமை; தேவகங்கை; முசுமுசுக்கை.

**சுரேந்திரன்** – இந்திரன்.

**சுரை** – சுரைக்கொடி; பசு முதலியவற்றின் மடி; கறவைப் பசு; கள்; தேன்; குழிந்த இடம்; உட்டுளை; மூங்கிற்குழாய்; திரிக்குழாய்; திருகாணியைச் செலுத்துஞ் சிறுகுழாய்; மூட்டுவாய்; அம்புத்தலை; பூண்; கூரான தோண்டு பாரைவகை.

**சுரைக்கந்தகம்** – ஒரு கந்தகவகை.

**சுரைக்குடம்** – சுரைக்காயால் அமைந்த குடம்.

**சுரைக்குடுக்கை** – சுரைக்காய்க் குப்பி, உலர்ந்த சுரைக்காய்.

**சுரைப்பழம்** – சுரையின் பழம்; பயனற்றவன்.

**சுரோணி** – நிதம்பம்.

**சுரோணிதம்** – குருதி; மகளிர் தீட்டு; சுக்கிலத்தோடு சேர்ந்து குழந்தை உண்டாகக் காரணமாகும் மகளிர் இரத்தம்; சிவப்பு.
**சுரோத்தமன்** – சூரியன்.
**சுரோத்திரம்** – காது; கேள்வி.
**சுரோத்திரியம்** – வேதமோதுவோர்க்கு விடப்பட்ட இறையிலி நிலம்; அரசாங்கவூழியஞ் செய்தவர்க்கு விடப்பட்ட வரியில்லா நிலம்.
**சுரோதா** – கேட்கிறவன்.
**சுல்கம்** – மகள்கொள்ள அளிக்கும் பரிசம்; பந்தயப் பொருள்; விலைப்பொருள்.
**சுல்லம்** – கயிறு; தாமிரம்.
**சுல்லி** – அடுப்பு; மடைப்பள்ளி.
**சுல்லு** – வெள்ளி.
**சுல்வம்** – தாமிரம்; சிறங்கை; சிறுமை.
**சுலபம்** – எளிமை; சிறுமை; மலிவு.
**சுலவுதல்** – சுழலுதல்; சுழற்றுதல்; சூழ்தல்; சுற்றுதல்.
**சுலனன்** – நெருப்பு.
**சுலாவு** – காற்று.
**சுலாவுதண்ணீர்** – வயலில் தேங்கிய நீர்.
**சுலாவுதல்** – காண்க: **சுலவுதல்.**
**சுலாவுரொட்டி** – நன்கு அரைக்கப்பட்ட கோதுமைமாவைக் கொண்டு சுடும் ரொட்டி.
**சுலு** – எளிது; தாமிரம்.
**சுலுகம்** – சிறங்கை; சேறு.
**சுலுப்பு** – மரக்கலம்.
**சுலோகம்** – புகழ்; பழமொழி; சொல்மாலை; வடமொழிச் செய்யுள்.
**சுலோகி** – கள்.
**சுலோசனம்** – அழகிய கண்; மூக்குக் கண்ணாடி.
**சுலோபம்** – எளிது; இழிந்தது; எறும்பு; பழமொழி.
**சுவ** – தன்னுடைய.
**சுவகதபேதம்** – உறுப்புக்கும் உறுப்பிக்கும் உள்ள வேற்றுமை.
**சுவகதம்** – தனக்குள் பேசுகை; உறுப்புக்கும் உறுப்பிக்கும் உள்ள வேற்றுமை.
**சுவச்சம்** – தெளிவு; தூய்மை; நலம்; நல்லெண்ணெய்; கவலையின்மை.
**சுவசம்** – தன்வயத்தில் உள்ளது.
**சுவட்டவர்** – காடையைப் பழக்கிப் போர் மூட்டுவோர்.
**சுவட்டிலக்கம்** – நெல் இலக்கம்.
**சுவடன்** – சுவைஞன்.
**சுவடி** – ஏட்டுப்புத்தகம்; புத்தகம்; பத்திரத் தொகுதி.
**சுவடிஎழுதுதல்** – எழுத்துகளை எழுதிப் பழகுதல்.
**சுவடிசேர்த்தல்** – பிள்ளைகள் படிக்க ஓலைச் சுவடி சேர்த்தல்.
**சுவடித்தல்** – தின்னுதல்; ஒப்பனைசெய்தல்.
**சுவடியைக்கட்டுதல்** – ஓலைச்சுவடியைக் கட்டி வைத்தல்; படிப்பை நிறுத்துதல்; பேச்சு முதலியவற்றை நிறுத்துதல்.
**சுவடு** – தழும்பு; அடையாளம்; அடித்தடம்; அடிச்சுவட்டின் ஒலி; அங்கவடி; தூய்மையின்மை; ஒன்றைப் பதித்தலால் ஏற்படும் குறி; ஆற்றல்; பழக்கம்; வழி; வச்சிராங்கி; நெல் இலக்கம்; 360 நெற்கொண்ட அளவு; கயிறு; சுவை.
**சுவண்டு** – பொருத்தம்.
**சுவணகாரகன்** – காண்க: **சுவன்னகாரன்.**
**சுவணம்** – பொன்; உலோகக் கட்டி; கருடன்; கழுகு.
**சுவத்தன்** – உடல்நலமுள்ளவன்; மனக்கவலையின்றி இருப்போன்.
**சுவத்திகம்** – மங்கலவடையாளம்; சுவத்திவாசனம்; நான்கு விரலும் தம்முள் ஒட்டி நிமிரப் பெருவிரல் குஞ்சித்து நிற்கும் பதாகைக் கை இரண்டனையும் மணிக்கட்டில் ஏற்றிவைக்கும் இணைக்கைவகை.
**சுவத்திகாசனம்** – ஒன்பதுவகை இருக்கைகளுள் கால்களைக் குறுக்கிட்டு வைத்துக்கொண்டு உடல் நிமிர அமரும் இருக்கைவகை.
**சுவதந்திரம்** – காண்க: **சுதந்தரம்.**
**சுவப்பிரம்** – வளை; நரகம்.
**சுவம்** – பறவையலகு; மூஞ்சூறு; தேவலோகம்; சொந்தமானது; உண்மை; நன்மை.
**சுவர்** – மதில்; தேரின் உறுப்பு; தேவலோகம்.
**சுவர்க்கணம்** – காண்க: **இந்திரகணம்.**
**சுவர்க்கம்** – துறக்கம், தேவலோகம்; இன்பம்; முலை.
**சுவர்க்கர்** – தேவர்.
**சுவர்க்கவாசல் ஏகாதசி** – மார்கழி மாதத்து வளர்பிறையில் பதினோராம் திதி.
**சுவர்க்கன்** – தேவலோகத் தலைவனான இந்திரன்.
**சுவர்க்கால்** – சுவரடி; சுவர்மேற் கட்டும் நீர்க்கால்.
**சுவர்க்கோழி** – காண்க : **சிள்வண்டு.**
**சுவர்ணபூமி** – அண்டத்தின் வரம்பையொட்டியுள்ள கடைசிப் பூகண்டம்; துறக்கம்; பர்மா நாடு.
**சுவர்ணம்** – பொன்; நாணயம்.
**சுவர்ணாங்கி** – நாற்பத்தேழாவது மேளகர்த்தா.
**சுவர்தாங்கி** – அணைசுவர்.
**சுவர்மேல்பூனை** – சுவரின்மீதுள்ள பூனை; ஈரடியாய் இருப்பவன்; இதுவோ அதுவோ என இரண்டுக்குற்ற நிலை.

**சுவர்யோனி** – தேவர் பிறப்பு.
**சுவரகழ்கருவி** – கன்னக்கோல்.
**சுவரணை** – காண்க: **சுரணை.**
**சுவரம்** – இசைச்சுரம்; காய்ச்சல்.
**சுவரறை** – நிலைப்பேழை, அலமாரி.
**சுவரிதம்** – நலிதலோசை.
**சுவரூபம்** – தன் இயல்பு; அரசமரபு.
**சுவரொட்டி** – விளம்பரத் தட்டி; பிறரை ஒட்டியிருக்கும் குணம் உடையவர்; சுவரில் ஒட்டப்படும் விளம்பரக் காகிதம்; ஒற்றுக்கேட்பவன்; சுவரில் மாட்டும் விளக்கு; சுவர்முள்ளங்கிப் பூடு; சுவரில் அடிக்கும் ஆட்டின் ஈரல்; அணை சுவர்.
**சுவல்** – பிடரி; தோட்கட்டு; முதுகு; குதிரையின் கழுத்துமயிர்; மேடு; தொல்லை.
**சுவல்வரி** – முதுகில் கோடுள்ள அணில்.
**சுவலை** – அரசமரம்.
**சுவவு** – பறவையின் அலகு; மூஞ்சூறு; துறக்கம்.
**சுவற்றுதல்** – வற்றச் செய்தல்; முற்றும் அழித்தல்.
**சுவறுதல்** – வற்றுதல்; உறிஞ்சப்படுதல்; காய்தல்; ஊறுதல்.
**சுவன்னகாரன்** – பொற்கொல்லன், தட்டான்.
**சுவனம்** – கனவு.
**சுவா** – நாய்.
**சுவாகதம்** – வரவேற்பு மொழி; நல்வரவு; கிளி.
**சுவாகா** – ஆகுதி செய்யும்போது தேவதையின் பெயர்க்குப்பின் கூறும் மொழி; அக்கினி தேவன் மனைவி.
**சுவாசக்குத்து** – மூச்சுநோய்வகை; மூச்சுப்பையின் மூடுதோலில் உண்டாகும் நோய்வகை.
**சுவாசக்குழல்** – மூச்சுக்குழாய்.
**சுவாசகம்** – பேராமுட்டிக்கொடி; எட்டி; உவர் மண்; இன்மொழி பேசும் கிளி.
**சுவாசகாசம்** – ஈளைநோய்.
**சுவாசகோசம், சுவாசப்பை** – மூச்சுப்பை, நுரையீரல்.
**சுவாசம்** – உயிர்ப்பு; நல்லிருப்பிடம்; நறுமணம்; சவட்டுமண்.
**சுவாசம்வாங்குதல்** – மரணமூச்சு வாங்குகை; மூச்சை இழுத்துப் பின் வெளிவிடுதல்; மேல் மூச்சு விடுதல்.
**சுவாசித்தல்** – மூச்சுவிடுதல்.
**சுவாத்தியம்** – மனநிறைவு; இன்பம்.
**சுவாத்தியாயம்** – தானாகக் கற்ற கல்வி.
**சுவாதம்** – உயிர்ப்பு.
**சுவாதி** – சோதிநாள்.
**சுவாதிட்டானம்** – ஆறாதாரத்துள் ஒன்று, மூலாதாரத்துக்கும் கொப்பூழ்க்கும் இடையேயுள்ள இடம்.
**சுவாதீனம்** – உரிமை; தன்வயமானது; தன் விருப்பம்.
**சுவாது** – சுவை; இனிமை; காண்க: **ஆடாதோடை.**
**சுவாந்தம்** – மணம்.
**சுவாபம்** – இயல்பு.
**சுவாபாவிகம்** – இயல்பாயுள்ளது.
**சுவாமி** – கடவுள்; முருகன்; தலைவன்; குரு; மூத்தோன்; ஒரு மரியாதைச் சொல்; பொன்.
**சுவாமிநாதன்** – சிவபெருமானுக்குக் குருவான முருகக்கடவுள்.
**சுவாமியார்** – துறவி.
**சுவாய்** – கப்பலின் ஒரு கயிறு.
**சுவாய்ப்பற்றி** – பாய்மரக் கயிறுகட்டுங் கட்டை.
**சுவாயம்புவம்** – தானாகத் தோன்றியது; சிவாகமத்துள் ஒன்று.
**சுவார்ச்சிதம்** – காண்க: **சுயார்ச்சிதம்.**
**சுவாரசம், சுவாரசியம்** – சுவையானது; விளாம்பட்டை.
**சுவாரி** – காண்க: **சவாரி;** கப்பலின் பின்னணியம்.
**சுவாலித்தல்** – சுடர்விட்டெரிதல்.
**சுவாலை** – சுடர், கனலொழுங்கு.
**சுவாவி** – உண்மையானவன்.
**சுவானசக்கரம்** – நாய் கடியாது விலக்குவதாகக் கருதப்படும் சக்கரம்.
**சுவானம்** – நாய்; நாயுருவி..
**சுவானுபவம், சுவானுபூதி** – தன்அனுபவம்.
**சுவானுபூதிகம்** – தன்அனுபவத்தால் உண்டாகும் அறிவு.
**சுவி** – கல்லாலமரம்; இத்திமரம்; துளசிச்செடி.
**சுவிகை** – கள்; கச்சோலம்.
**சுவிசாலம்** – மிகு அகலம்.
**சுவிசேடகன்** – நற்செய்தி சொல்லுவோன்.
**சுவீகரித்தல்** – ஏற்றுக்கொள்ளுதல்; தத்தெடுத்தல்; உட்கொள்ளுதல்.
**சுவீகாரபுத்திரன்** – தத்துப்பிள்ளை.
**சுவீகாரம்** – ஏற்பு; தத்தெடுத்தல்.
**சுவீரியம்** – இலந்தைக்கனி.
**சுவுகம்** – மோவாய்க்கட்டை.
**சுவேகம்** – உறை.
**சுவேச்சை** – தன்னிச்சை, தன்விருப்பம்.
**சுவேதகம்** – விளாம்பழம்.
**சுவேதகாண்டம்** – வஞ்சிக்கொடி; சீந்திற்கொடி.
**சுவேதகாரி** – வியர்வை பிறப்பிக்கும் மருந்து.
**சுவேதகுசுமம்** – காண்க: **வெள்ளெருக்கு.**
**சுவேதசம்** – வியர்வையில் தோன்றும் உயிர்.
**சுவேதசாரம்** – நாணற்புல்.
**சுவேதநாதம்** – விந்து.

**சுவேதம்** – வெண்மை; பாதரசம்; வெள்ளி; வியர்வை; நீர்வஞ்சி; வஞ்சிக்கொடி; மாவிலிங்கம்.

**சுவேதமூலம்** – சாரணைப்பூடு.

**சுவேதமூலி** – தொட்டாற்சுருங்கி.

**சுவேதவராககற்பம்** – திருமால் பன்றியாகத் தோன்றிய காலம்.

**சுவேதனை** – தன்னறிவு.

**சுவேதாம்பரர்** – வெள்ளாடை தரித்த சமண முனிவர்.

**சுவை** – ஐம்புலன்களுள் நாவின் உணர்வு, உருசி; இன்பம்; இரசம்; இனிமை; கவிதையின் இரசம்; சித்திரைநாள்.

**சுவைகாட்டுதல்** – சுவைதருதல்; ஆசை காட்டுதல்.

**சுவைத்தல்** – உருசிபார்த்தல்; உண்ணுதல்; முத்தமிடுதல்; இன்பம் நுகர்தல்; உருசியாதல்; முலையுண்ணல்.

**சுவைமை** – உருசி.

**சுவையணி** – உள்நிகழுந் தன்மை வெளிப்பட்டு விளங்க எண்வகை மெய்ப்பாட்டினாலும் நடக்கும் அணிவகை.

**சுழங்குறுதல்** – சுழலுதல்.

**சுழல்** – சுழற்சி; வளைவு; சுழிநீர்; சுழல்காற்று; காற்றாடி; பீலிக்குடை; ஏமாற்று; சஞ்சலம்.

**சுழல்கால்,**
**சுழல்காற்று** } – சூறைக்காற்று.

**சுழல்தண்ணீர்** – சுழலோடுகூடிய நீர்ப்பெருக்கு.

**சுழல்படை** – வளைதடி.

**சுழல்மாறித்தனம்** – ஏமாற்று.

**சுழல்மாறுதல்** – திருடுதல்.

**சுழல்வன** – இயங்குதிணைப் பொருள்கள்.

**சுழல்வு** – சுழல்கை; அலைகை; மனக்கலக்கம்.

**சுழலமாடுதல்** – ஒன்றைப் பெறுதற்கு இடை விடாது முயலுதல்; வஞ்சகமாகக் கொள்ளுதல்; அடிக்கடி போய் வணங்குதல்.

**சுழலன்** – ஏமாற்றுக்காரன்.

**சுழலுதல்** – உருளுதல்; வட்டமாகச் சுற்றுதல்; சுற்றித்திரிதல்; அலைவுபடுதல்; சஞ்சலப்படுதல்; சோர்தல்; பொறி மயங்குதல்.

**சுழலை** – கொள்கலம்; வஞ்சகம்.

**சுழலையாடுதல்** – அலக்கழித்தல்; வீணாகச் செலவழித்தல்; களைத்துப்போதல்.

**சுழற்சி** – சுழலுகை; அலைகை; மனக்கலக்கம்.

**சுழற்றல்** – கிறுகிறுப்பு.

**சுழற்றி** – சுழற்றுக்கருவியின் பிடி; துளையிடுங் கருவி; விசிறி; கருவண்டு.

**சுழற்றியடித்தல்** – சுழன்றுவீசுதல்; கொள்ளை நோய் வாருதல்.

**சுழற்று** – சுழற்றுகை.

**சுழற்றுதடி** – சிலம்பத்தடி.

**சுழற்றுதல்** – சுழலச்செய்தல்; சுழற்றியாட்டுதல்; கிறுகிறுக்கச் செய்தல்.

**சுழாரை** – பொன்னாவிரைச்செடி.

**சுழி** – உடற்சுழி; நீர்ச்சுழி; மயிர்ச்சுழி; எழுத்துச் சுழி; சுழலுகை; தலைவிதி; உச்சி; உச்சிப்பூ; சுழிப்புத்தி; மழையின் ஓரங்குல அளவு; கடல்.

**சுழிக்காற்று** – காண்க: **சூறைக்காற்று.**

**சுழிக்குணம்** – தீயகுணம்.

**சுழிகுளம்** – எவ்வெட்டு எழுத்துக்கொண்ட நான்கடியாய் மேனின்று கீழிழிந்தும், கீழ் நின்று மேல் ஏறியும், புறம் சென்று உள்முடியப் பாடப்படும் மிறைக்கவி.

**சுழித்தல்** – சுழலுதல்; நீர்ச்சுழி யுண்டாதல்; உடற்சுழி யுண்டாதல்; வேறிடத்தின்றி ஒருங்கே திரண்டு நிற்றல்; கண்குழிதல்; அடிபடாமல் ஒதுங்குதல்; தவறிப்போதல்; அலையச் செய்தல்; செலவு முதலியவற்றைச் சுருக்குதல்; முகத்தைச் சுருக்குதல்; கோபித்தல்; சுழியுண்டாக்குதல்; மறைத்தல்; தேர்வில் தேறாதபடி செய்தல்.

**சுழித்தனம்** – காண்க: **சுழிக்குணம்.**

**சுழித்துவாங்குதல்** – சுழற்றி உள் இழுத்தல்; மடக்கிவிடுதல்; மூச்சைச் சிரமப்பட்டு வெளிவிடுதல்.

**சுழிதல்** – சுழிபோல வளைதல்; முகஞ்சுருங்குதல்; கபடமாதல்; மனங்கலங்குதல்; இறத்தல்.

**சுழிப்பு** – சஞ்சலம்.

**சுழிப்புத்தி** – காண்க: **சுழிக்குணம்.**

**சுழிபேதம்** – ஏமாற்றுதல்.

**சுழிமாந்தம்** – கண்களின் சுழற்சியோடு கூடிய மாந்தவகை.

**சுழிமுனை** – காண்க: சுழுமுனை.

**சுழியச்சு** – பொன்னை உருக்கி வார்க்கும் அச்சு.

**சுழியப்பேசுதல்** – வருந்தச் சொல்லுதல்.

**சுழியம்** – மகளிர் தலையணிவகை; சுன்னம்.

**சுழியல்** – சுழிந்திருக்கை; சுருளாக மயிரை முடிக்கை.

**சுழியன்** – வஞ்சகன்; புத்திசாலி; கோபி; கொடிய குறும்பன்; சுழல்காற்று.

**சுழியாணி** – குடுமிக்கதவின் முள்ளாணி.

**சுழியாணிக்கட்டை** – குடுமிக்கதவின் முள்ளாணியைத் தாங்குங் கட்டை.

**சுழியாணிக்கதவு** – குடுமிக்கதவு.

**சுழியிலெழுத்து** – தலைவிதி.

**சுழியோடுதல்** – தண்ணீரில் மூழ்கிக் குளித்தல்; மனத்தை ஆராய்தல்.

**சுழிவு** – மறைவு; மனக்கவலை.

**சுழுத்தி** – புலன்கள் செயலற்றுநிற்கும் நிலை.
**சுழுந்து** – காண்க: **சுளுந்து.**
**சுழுமுனை, சுழுனா(னை)** – இடைகலை பிங்கலைகளுக்கு இடையிலுள்ள நாடி; மூலாதாரத்திலிருந்து உச்சித்துளை வரைக்கும் நிற்கும் நாடி.
**சுள்** – உறைப்பு; கருவாடு; சிறுமை.
**சுள்ளக்கம்** – கோபம்; மேட்டிமை; வேர்க்குரு.
**சுள்ளக்கன்** – கோபக்காரன்; அடங்காத குதிரை அல்லது மாடு.
**சுள்ளக்காய்** – மிளகாய்.
**சுள்ளம்** – சினம்.
**சுள்ளல்** – மெல்லியது.
**சுள்ளற்கோல்** – வளையுந் தடி; சவுக்கு.
**சுள்ளாணி** – சிறிய ஆணி; மெல்லிய ஆணி.
**சுள்ளாப்பித்தல்** – அடித்தல்; கதிரடித்தல்.
**சுள்ளாப்பு** – உறைப்பு; அடி; பழிச்சொல்; கடுமை; மழையின்பின் அடிக்கும் கடுவெயில்.
**சுள்ளான்** – காண்க: **சுள்ளெறும்பு;** கொசுவகை.
**சுள்ளி** – சிறு விறகு; அனிச்சமரம்; உலர்ந்த சிறுகொம்பு; சிறுகோல்; மரக்கிளை; சிறுமை; மாமரம்; ஆச்சாமரம்; ஞாழல்; மயிற்கொன்றைமரம்; நாகமல்லி; மல்லிகை; குங்குமம்; எலும்பு.
**சுள்ளிக்கோல்** – சவுக்கு.
**சுள்ளிடுதல்** – உறைத்தல்; மனம் வருந்துதல்.
**சுள்ளிடுவான்** – மிளகு; மிளகாய்; ஒரு பூச்சிவகை.
**சுள்ளு** – கருவாடு.
**சுள்ளுச்சுள்ளெனல்** – கடுத்தற்குறிப்பு; கோபக்குறிப்பு.
**சுள்ளுப்பூச்சி** – தெள்ளுப்பூச்சி.
**சுள்ளெறும்பு** – செந்நிறமுள்ள சிற்றெறும்புவகை.
**சுள்ளை** – மட்கலஞ் சுடுஞ் சூளை; காளவாய்.
**சுளகம்** – உள்ளங்கை; நன்மொழி.
**சுளகு** – முறம்; சுளகைப்போன்ற விசாகநாள்.
**சுளகுகட்டுதல்** – முறம்முடைதல்.
**சுளகுபின்னல்** – ஓலை முதலியவற்றில் பின்னும் ஒரு முடைசல்வகை; ஒரு தலைப்பின்னல் வகை.
**சுளி** – புளியாரைக்கீரை.
**சுளிக்கு** – ஊன்றுகோல்; முனை கூர்மையான ஒரு கைக்கோல்வகை.
**சுளிகை** – முருங்கைமரம்; அணிகலவகை.
**சுளித்தல்** – கோபித்தல்; சினக்குறிப்பு; காலால் துகைத்தல்; முறித்தல்; வெறுத்தல்; வருந்துதல்.
**சுளிதல்** – சினத்தல்.
**சுளிவு** – சினக்குறிப்பு; சினம்; எளிது; தணிவு.
**சுளுக்கி** – காண்க: **சுளிக்கு.**
**சுளுக்கு** – நரம்புப் பிறழ்ச்சி.
**சுளுக்குநாயகம்** – நரம்புச்சுளுக்கைக் குணப்படுத்தும் மருந்துச்செடி.
**சுளுக்குப்பார்த்தல்** – சுளுக்கு நீங்க மந்திரித்தல்.
**சுளுக்குருவுதல், சுளுக்குவழித்தல்** – எண்ணெய் முதலியவற்றால் சுளுக்கு நீங்கும்படி மந்திரித்து உருவுதல்.
**சுளுக்கேறுதல்** – சுளுக்கிக்கொள்ளுதல்.
**சுளுகு** – நுட்ப அறிவு; திறமைப் பேச்சு; எளிது.
**சுளுகுபின்னல்** – ஒரு மயிர்ப்பின்னல்வகை.
**சுளுகோடி** – மேற்கூரை இணையும் மூலை.
**சுளுந்து** – மரவகை; சுள்ளி முதலியவற்றாலான தீப்பந்தம்; சுளுந்துமரக்கழியில் எரிக்குந் தீப்பந்தம்; ஒருவகை ஆரத்திக்கலம்.
**சுளுந்துக்காரன்** – தீவட்டிக்காரன், தீவட்டி பிடிப்பவன்.
**சுளுவு** – எளிமை.
**சுளை** – பலாப்பழம் முதலியவற்றின் சதைப்பற்று.
**சுளைப்பிடாம்** – கம்பளி.
**சுளையம்** – திருட்டு.
**சுற்கம்** – காண்க: **சுல்கம்.**
**சுற்பம்** – செம்பு.
**சுற்றத்தார்** – உறவினர்; இனத்தார்; துணைவர்; பரிவாரம்.
**சுற்றந்தழால்** – உறவினரைத் தழுவிக்கொள்தல்.
**சுற்றம்** – உறவினர்; பரிவாரம்; அரசர்க்குரிய துணையில் ஒன்று; கூட்டம்; ஆயத்தார்.
**சுற்றளவு** – வட்ட அளவு.
**சுற்றாலை** – சுற்றுச்சுவர், பிராகாரம்.
**சுற்றிக்கட்டுதல்** – எழுத்துச்சுழி வரைதல்; சூழ்ச்சிசெய்தல்; நீரை வேறுவழி திருப்புதல்; பொய்யாகக் கற்பித்தல்; இலஞ்சம் கொடுத்தல்.
**சுற்றிக்கொள்ளுதல்** – சூழ்ந்துகொள்ளுதல்; கவர்தல்; வளைந்துகொள்ளுதல்.
**சுற்றிச்சுழல்(லு)தல்** – சுற்றிவருதல்; விடாது பற்றித்தொடர்தல்; விடாது கெஞ்சுதல்.
**சுற்றிச்சுழற்றுதல்** – விளக்கமின்றி வளர்த்துப் பேசுதல்.
**சுற்றிப்பிடித்தல்** – வளைந்து பற்றுதல்; வயிறு மிகவும் நோதல்; பற்றிக்கொள்ளுதல்.
**சுற்றிப்போடுதல், சுற்றியெறிதல்** – கண்ணேறு கழித்தல்; மணமக்கள் முதலியோரின் முடியைச் சுற்றிப் பண்ணிகாரம் முதலியவற்றை எறிந்து கண்ணேறு கழித்தல்.
**சுற்றிவாங்குதல்** – தேசிக்கூத்துக்குரிய கால்வகை; சுற்றிவந்து பெற்றுக்கொள்ளுதல்.

**சுற்று** – வட்டமாயோடல்; அச்சின்மேல் சுழற்சி; சுருளுதல்; சுற்றளவு; சுற்றுவழி; சுற்றிடம்; கால்விரலணி; மதில்; கோயிலின் சுற்றுமதில்; சொற்பொருள்களின் சிக்கல்.

**சுற்றுக்கட்டு** – வீட்டின் புறக்கட்டு; அயலிடம்; உறவினர்களின் கூட்டம்; கட்டுக்கதை; இலஞ்சம்.

**சுற்றுக்கட்டை** – கொத்தன் பூசுவதற்குப் பயன் படுத்தும் மணியாசிக்கட்டை.

**சுற்றுக்கல்** – கொப்பு முதலிய நகையைச் சுற்றி வட்டமாக அமைக்கும் மணிகள்.

**சுற்றுக்காரியம்** – காண்க: சுற்றுவேலை.

**சுற்றுக்கால்** – சுற்றுப்புறம்; அயலிடம்; சுற்றி யுள்ள கால்வாய்.

**சுற்றுக்காலிடுதல்** – விடாது பற்றித்தொடர்தல்; விடாது கெஞ்சுதல்.

**சுற்றுக்கோயில்** – ஆலயத்தின் சுற்றுப் பிராகாரத் தில் உள்ள சிறு சன்னதிகள்.

**சுற்றுக்கோள்** – சுற்றிக்கொள்ளுகை.

**சுற்றுச்சுவர்** – சுற்றுப்புற மதில்.

**சுற்றுச்சுழற்சி** – சுற்றுவழி; செயற்சிக்கல்; குறித்த செய்தியை நேரின்றி வளர்த்துக் கூறுகை.

**சுற்றுடைமை** – வட்டவடிவு.

**சுற்றுத்தேவதை** – கோயிலிலுள்ள பரிவாரத் தெய்வம்; பெரியோரை அடுத்திருப்பவர்.

**சுற்றுதல்** – சுற்றிவரல்; சுழன்றுசெல்லுதல்; வளைந்தமைதல்; கிறுகிறுத்தல்; மனங்கலங்கு தல்; தழுவுதல்; விடாது பற்றுதல்; சூழ்ந்திருத் தல்; வளையச் சூடுதல்; வளையக் கட்டுதல்; சுருட்டுதல்; சிந்தித்தல்; அலைதல்; உடுத்து தல்; சுழற்றுதல்; கம்பிகட்டுதல்; வஞ்சித்தல்; கைப்பற்றல்.

**சுற்றுப்பட்டு** – அயலிடம்.

**சுற்றுப்படாகை** – சுற்றுப்புறத்து ஊர்கள்.

**சுற்றுப்பயணம்** – இன்பப்பயணம்; சுற்றுவழி; அதிகார முறையில் அதிகாரிகள் பல ஊர்களுக் கும் சென்றுவருகை.

**சுற்றுப்பிராகாரம்** – காண்க: சுற்றுமதில்.

**சுற்றுப்புடைகொள்ளுதல்** – பக்கம் புடைத்திருத் தல்.

**சுற்றுப்புறம்** – அயலிடம்.

**சுற்றும்** – சூழ.

**சுற்றுமண்** – வார்ப்புக்கருவியின் புறம்பூசிய மண்; ஓலைக் கடிதத்தில் இடும் முத்திரைமண்.

**சுற்றுமதில்** – கோயில் முதலியவற்றைச் சூழ்ந்துள்ள மதில்.

**சுற்றுமுற்றும்** – நாலு பக்கமும்.

**சுற்றுலா** – இன்பச்செலவு.

**சுற்றுவட்டாரம்** – சுற்றுப்புறத்து ஊர்கள்.

**சுற்றுவரவு** – சூழ்ந்துவருகை; குதிரையின் வட்ட சாரி; மேல் வரும்படி.

**சுற்றுவழி** – நேரற்ற பாதை; தந்திரச் செயல்.

**சுற்றுவளையம்** – உருட்டி விளையாடும் சக்கரம்; வட்டம்; தெருவில் சுற்றிக்கொண்டிருக்கை; கைகட்டிச் சேவகம்.

**சுற்றுவாரி** – சுவர்ப்புறத்து நீண்ட கூரை.

**சுற்றுவீதி** – கோயிலைச் சுற்றியுள்ள தெரு; வளைந்துசெல்லும் சாலை.

**சுற்றுவேலை** – உதவித்தொழில்.

**சுற** – காண்க: சுறவம், சுறவு.

**சுறட்டன்** – தொந்தரவுக்காரன்.

**சுறட்டு** – கொடுமை, தொந்தரவு; பிடிவாதம்; சிக்கு; தலையிடுகை.

**சுறட்டுக்கோல்** – காண்க: துறட்டுக்கோல்.

**சுறட்டுத்தனம், சுறட்டுப்பிடி** } – முருட்டுத்தனம்.

**சுறட்டுவலி** – வாதநோய்வகை; பிடிவாதம்.

**சுறட்டை** – பசையின்றி வறண்டது.

**சுறண்டி** – காண்க: சுரண்டி.

**சுறண்டுதல்** – நகம் முதலியவற்றாற் பிறாண்டு தல்; சண்டைக்கிழுத்தல்; இரத்தல்; தூண்டி விடுதல்; கவர்தல்; விபசாரம் செய்தல்.

**சுறணம்** – காண்க: காறாக்கருணை.

**சுறவம், சுறவு** } – சுறாமீன், மகரமீன்.

**சுறவுக்குழை** – மகரமீன் வடிவாகச் செய்த காதணி.

**சுறவுக்கோடு** – நெய்தல்நில மக்கள் தெய்வமாக வைத்து வணங்கும் சுறாமீன் கொம்பு.

**சுறவுவாய்** – மகரவாய் என்னும் தலைக்கோலம்.

**சுறவை** – கடுமை, உக்கிரம்.

**சுறா** – மகரமீன்; மகரராசி; உடம்பில் பூக்கும் உப்பு; தேக அழுக்கு.

**சுறாமுள்** – சுறாமீன் எலும்பு.

**சுறாளம்** – வேகம்; கோபம்.

**சுறீரெனல்** – கடுத்தற்குறிப்பு; அச்சக்குறிப்பு; ஓர் ஒலிக்குறிப்பு.

**சுறு** – மயிர் முதலியன தீயிற் பொசுங்குதலால் உண்டாகும் நாற்றம்.

**சுறுக்கன்** – சுறுசுறுப்புள்ளவன்; கோபக்காரன்.

**சுறுக்கு** – விரைவு; வேகம்; ஆத்திரம்; சுறு சுறுப்பு; கூர்மை; கடுமை; காரம்; விலை யேற்றம்.

**சுறுக்குக்காட்டுதல்** – அடிகொடுத்து அச்சுறுத் தல்.

**சுறுக்கெனல்** – கடுத்தற்குறிப்பு; விரைவுக் குறிப்பு; திடீரெனக் குத்துதற்குறிப்பு.

**சுறுக்கொள்ளுதல்** – மயிர்க்குச்செறிதல்; தீய்ந்து போதல்.
**சுறுசுறுத்தல்** – தீவிரப்படுதல், கடுமையாதல்.
**சுறுசுறுப்பு** – ஊக்கம்; தீவிரம்.
**சுறுசுறெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; விரைவுக் குறிப்பு; உட்செல்லுதற்குறிப்பு; கடுத்தற் குறிப்பு.
**சுறுதி** – சுறுசுறுப்பு.
**சுறை** – இலையற்ற கொடிவகை.
**சுறோணிதம்** – காண்க: **சுரோணிதம்.**
**சுன்** – சனி.
**சுன்னச்சி** – சத்திசாரம்.
**சுன்னத்துச்செய்தல்** – ஆண்குறியின் முன்தோலை நீக்கும் சடங்கு செய்தல்.
**சுன்னம்** – சுழி; சுண்ணாம்பு.
**சுன்னிதம்** – நுட்பம்.
**சுன்னுக்கட்டி** – பாற்கட்டி.
**சுன்னை** – காண்க: **சுன்னம்.**
**சுனக்குடம்** – சதுரக்கள்ளிமரம்.
**சுனகன்** – நாய்; தென்மேற்றிசை.
**சுனம்** – வெள்ளுள்ளி.
**சுனாசமாய்** – காண்க: **சுனாயாசமாய்.**
**சுனாசி, சுனாசீரன், சுனாசு** – இந்திரன்.
**சுனாயாசமாய்** – வருத்தமின்றி.
**சுனாவணி** – விண்ணப்பம் வாசிக்கை.
**சுனி** – பெண்நாய்.
**சுனிசனம்** – புளியாரை.
**சுனுக்கு, சுனுகி** – காண்க: **சுனக்குடம்.**
**சுனை** – மலையூற்று; குகையிலுள்ள நீர்நிலை; நீர்நிலையும் நிழல்மரமும் உள்ள பசும்புற் றரை; தினவு; சுரணை; சுரசுரப்பு.
**சுனைக்கரந்தை** – திருநீற்றுப்பச்சை.
**சுனைத்தண்ணீர்** – சுனையிலுள்ள நீர்; புண்ணீர்.
**சுனைத்தல்** – தினவெடுத்தல்.
**சுனைதல்** – குழைதல்; வாடுதல்.
**சுனைவு** – சுனைநீர்; பேய்க்கடலை.

## சூ

**சூ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ச்+ஊ); நாயை ஏவும் ஒலிக்குறிப்பு; வியப்புச்சொல்; வாண வகை; சுளுந்து.
**சூக்கம்** – நுண்மை; தூலப்பொருளின் நுண்ணிய உருவம்; நுண்ணிய பொருள்; கூர்மை.
**சூக்காட்டுதல்** – நாயை ஏவுதல்; சூவென்று சத்த மிட்டு வெருட்டுதல்.
**சூக்காய்** – நண்டுவகை.
**சூக்கீடம்** – கம்பளிப்பூச்சி.
**சூக்குமசரீரம்** – காண்க: **சூட்சுமசரீரம்.**
**சூக்குமதண்டுலம்** – திப்பிலி.
**சூக்குமதாரி** – வஞ்சகன்.
**சூக்குமதேகம்** – காண்க: **சூட்சுமசரீரம்.**
**சூக்குமபத்திரம்** – கடுகு; கொத்துமல்லி; சீரகம்; செங்கரும்பு.
**சூக்குமபுத்தி** – கூர்மையான அறிவு.
**சூக்குமம்** – நுண்மை; பருப்பொருளின் நுண்ணிய வடிவம்; காண்க: **சீந்தில்; ஏலம்; சிவாகமம்.**
**சூக்குமாலங்காரம்** – ஒரு கருத்தைக் குறிப்பினால் உணர்த்தும் அணி.
**சூக்குமித்தல்** – நுட்பமாதல்.
**சூக்குமில்** – சிலந்திக்கூடு.
**சூக்குளி** – வெற்றிலை.
**சூக்கொட்டுதல்** – சூவொலியிட்டுச் சம்மதங் காட்டுதல்; வெறுப்புக்குறி காட்டுதல்.
**சூகம்** – தாமரைக்கொடி; ஊர்வன; நெல்வால்; அம்பு; இரக்கம்; காற்று; சுனை.
**சூகரம்** – பன்றி; மான்வகை.
**சூகரை** – குளத்தில் உடைப்புநீர் வெளிப் போகாதபடி இடும் அணை, அடைகரை.
**சூகை** – தலைசுற்றல்; வீட்டின் பின்புறம்; கரிய சிற்றெறும்புவகை; யானை.
**சூகைக்கண்** – அண்மைப்பார்வை.
**சூகையாடுதல்** – தலைசுற்றுதல்.
**சூங்குமம்** – வேலிப்பருத்தி.
**சூச்சான்** – கிட்டிப்புள் விளையாட்டு.
**சூச்சூவெனல்** – சத்தத்தை அடக்குங் குறிப்பு; நாயை ஏவுதற்குறிப்பு.
**சூசகம்** – அறிகுறி; தருப்பை.
**சூசகவாயு** – காண்க: **சூதகவாயு.**
**சூசகன்** – ஒற்றன்; ஆசிரியன்; பின்பற்றத்தக்க வன், முன்மாதிரியான நடத்தையுடையவன்.
**சூசம்** – செம்மறியாட்டுக்கடா.
**சூசனம், சூசனை** – குறிப்பிக்கை; குறிப்பு; திட்டம்; கூர்மை.
**சூசி** – ஊசி; ஊசிமுனைபோல் அமைக்கும் படை வகுப்புவகை; மெல்லிய கரையுள்ள துணி வகை; காண்க: **சூசிக்கை; அட்டவணை.**
**சூசிக்கல்** – ஊசிக்காந்தம்.
**சூசிக்கை** – நடுவிரலும் பெருவிரலுஞ் சேரச் சுட்டுவிரல் நிமிர மற்றை இருவிரல்களும் முடங்கிநிற்கும் இணையாவினைக்கைவகை.

**சூசிகம்** – ஒரு வாத்தியவகை.
**சூசிகன்** – தையற்காரன்.
**சூசிகாதரம்** – துதிக்கையைக் கொண்டிருப்பதாகிய யானை.
**சூசிகாபாணம்** – ஒரு கூரிய அம்புவகை.
**சூசிகாமுகம்** – ஊசிபோன்ற கூர்வாயுடைய சங்கு.
**சூசிகாவாயு** – காண்க: **சூதகவாயு.**
**சூசிகாவியூகம்** – ஊசி முனைபோல் முனை சிறுத்து வர அமைக்கும் படைவகுப்புவகை.
**சூசிகை** – ஊசி; குறிப்பு; யானைத்துதிக்கை.
**சூசித்தல்** – சுருக்குதல்; குறிப்பித்தல்.
**சூசிப்பித்தல்** – குறிப்பித்தல்; சுருங்கச்சொல்லல்.
**சூசி(சீ)பத்திரம்** – பொருளட்டவணை.
**சூசியம்** – சூட்டிறைச்சி.
**சூசுகம்** – முலைக்கண்.
**சூட்சக்காரன்** – கூர்மையுள்ளவன்; தந்திரமுள்ளவன்.
**சூட்சி** – வஞ்சகம்; ஆலோசனை; சூழ்ச்சி.
**சூட்சித்தல்** – ஆராய்ந்தறிதல்.
**சூட்சியன்** – மந்திரி; ஆலோசனை வல்லவன்.
**சூட்சுமசரீரம்** – நுண்ணிய உடல்.
**சூட்சுமபுத்தி** – நுண்ணறிவு; அறிவுக்காட்சி.
**சூட்சுமம்** – நுண்மை; பொருளின் நுண்ணிய வடிவம்; திறமை; இழிந்தது; அறிவுநுட்பம்; சூழ்ச்சி; சுருக்கம்; செட்டு; சுருக்கவழி; எச்சரிக்கை; நுட்பமான கூறு.
**சூட்டடுப்பு** – அடுப்புவகை.
**சூட்டாணி** – காண்க: **சூட்டுக்கோல்.**
**சூட்டிக்கை** – கூரியவறிவு; சுறுசுறுப்பு.
**சூட்டிஞ்சி** – ஏவறைகளைக்கொண்ட மதில்.
**சூட்டிவிடுதல்** – பெண்ணை மணஞ்செய்து கொடுத்தல்; நியமித்தல்; ஒப்படைத்தல்.
**சூட்டிறைச்சி** – சுட்ட இறைச்சி.
**சூட்டு** – தரித்தல்; மாலை; நுதலணி மாலை; நெற்றிப்பட்டம்; கோழி, மயில் முதலியவற்றின் உச்சிக்கொண்டை; பாம்பின் படம்; வண்டிச் சக்கரத்தின் விளிம்பில் வைத்த வளைந்த மரம், வட்டகை; ஏவறை; சுடப்பட்டது; தீவட்டிவகை.
**சூட்டுக்கோல்** – சூடு இடுதற்குரிய கம்பி.
**சூட்டுதல்** – அணிவித்தல்; ஒருவரைப் பாட்டால் புனைதல்; பட்டம் முதலியன கொடுத்தல்; முடிபுனைதல்; ஆணை முதலியன செலுத்துதல்; பரப்புதல்; சுமத்துதல்; சூட்டிவிடுதல்.
**சூட்டுமாலை** – தோளணிமாலை.
**சூட்டுமிதி** – நெல் முதலியவற்றின் சூட்டைக் கடாவிட்டு உழக்குகை.
**சூட்டுவலி** – சூட்டினால் உடம்பில் ஏற்படும் நோவு; மகப்பேற்று வலி.
**சூட்டெண்ணெய்** – உடற்சூட்டைத் தணித்துக் குளிர்ச்சி தரும் எண்ணெய்; வேப்பெண்ணெய்.
**சூட்டோடுசூடாய்** – உடன்தொடர்ச்சியாக.
**சூடகம்** – கைவளை; கிணறு; சடை.
**சூடங்கெட்டுப்போதல்** – நிலைகெட்டு முடிவாதல்.
**சூடடித்தல்** – காண்க: **சூட்டுமிதி.**
**சூடம்** – கருப்பூரம்; தலையுச்சி; சீழ்க்கை.
**சூடன்** – கருப்பூரவகை; மீன்வகை.
**சூடாகரணம்** – குழந்தைகட்குக் குடுமி வைக்கும் சடங்கு.
**சூடாமணி** – முடிமணி; ஒரு தெய்வமணி.
**சூடாலம்** – சணல்விதை; தலை.
**சூடாலைக்கல்** – ஒரு கல்வகை.
**சூடி** – சீலை.
**சூடிக்கொடுத்தாள்** – ஆண்டாள் நாச்சியார்.
**சூடிகை** – மணிமுடி; தூண்.
**சூடிச்சி** – எவட்சாரம்.
**சூடு** – வெப்பம்; அரிக்குவியல்; சுடப்பட்டது; சுடுபுண்; சூட்டுக்குறி; ஒற்றடம்; கோபமுண்டாக்குதல்; கோபம்; உணர்ச்சி; விலையேற்றம்; கண்ணோய்வகை; வடு.
**சூடுகாட்டுதல்** – சிறுசூடுபடுத்தல்; ஒற்றடங் கொடுத்தல்; சூடாக்குதல்; சுரக்குறி தோற்றுதல்; கடுமைக்குறி காட்டுதல்.
**சூடுகாணல்** – சுட்டுக்கொள்ளுதல்; சுரக்குறி தெரிதல்; வெப்பமாக இருத்தல்.
**சூடுதல்** – அணிதல்; பெயர்முதலியன தரித்தல்; கவிதல்; வளைந்துபோதல்.
**சூடுபிடித்தல்** – நீர்க்கடுப்பு உண்டாதல்; வேகமாகச் செய்தல்.
**சூடுபோடுதல்** – விலங்குகளுக்குக் குறியிடுதல்.
**சூடுமிதித்தல்** – காண்க: **சூட்டுமிதி.**
**சூடை** – தலை; குடுமி; ஒரு மீன்வகை.
**சூத்தாட்டி** – வேலை கழப்புகிறவன்; தகுதி கடந்து உடம்பட்டுத் தயை சம்பாதிப்பவன்.
**சூத்தி** – மிதியடி.
**சூத்திரக்கயிறு** – பாவையை ஆட்டும் கயிறு; பையின் சுருக்குக் கயிறு; காற்றாடிப் பட்டத்தில் குறுக்கே கட்டும் கயிறு; மந்திரம் செபிக்கும்போது அதன் தொகையை விரலில் சுற்றி அறிதற்கு உதவும் செபக்கயிறு.
**சூத்திரதாரன்** – நாடகம் நடத்துவோன்.
**சூத்திரதாரி** – பதுமையைக் கயிறுகட்டி ஆட்டுபவன்; நாடகத்தை நடத்துபவன்; கடவுள்.
**சூத்திரப்பதுமை** – காண்க: **சூத்திரப்பாவை.**
**சூத்திரப்பா** – இலக்கணம் முதலியவற்றை அமைத்தற்குரிய நூற்பா அகவல்.
**சூத்திரப்பாவை, சூத்திரப்பிரதிமை, சூத்திரப்பொம்மை** – கயிறு முதலியவற்றால் ஆட்டப்படும் பொம்மை.

**சூத்திரம்** – பஞ்சுநூல்; இயந்திரம்; நுண்ணிய வேலை; தந்திரம்; இரகசியம்; சில்லெழுத்திற் பலபொருள் தெரிவிக்கும் யாப்புச் செய்யுளாகிய நுற்பா; சூத்திர வடிவில் அமைந்த நூல்; இயக்குவிக்குங் கயிறு; பெயர், விதி, விலக்குதல், நியமம், அதிகாரம், ஞாபகம் என்னும் அறுவகைச் சூத்திரங்கள்.

**சூத்திரன்** – புட்பராகம்; வைடூரியம்; தச்சன்.

**சூத்திரி, சூத்திரிகன்** – பொம்மை முதலியவை ஆட்டுபவன்.

**சூத்து** – மலவாயில்; பிட்டம்; ஆண்குறி; பெண்குறி.

**சூத்தை** – கேடுற்றது; சொத்தை.

**சூதகக்கட்டு** – சூதகம் உரிய காலத்து வெளிப்படாமையாகிய நோய்.

**சூதகசன்னி** – மாதவிடாய்க் காலங்களில் ஏற்படும் சன்னிவகை.

**சூதகசூலை** – காண்க : **சூதகவாயு.**

**சூதகப்பாண்டு** – சூதகப்பெருக்கு முதலியவற்றால் இரத்தங் குறைந்த பெண்களுக்கு உண்டாகும் நோய்வகை.

**சூதகப்பெருக்கு** – பெரும்பாடுநோய்.

**சூதகம்** – அழுக்கு; மாதவிடாய் விலக்கம்; உறவினர்களின் பிறப்பு இறப்புகளில் இருக்கும் தீட்டு; பிறப்பு; மாமரம்; சிறுகிணறு; முலைக்கண்; பழைமை.

**சூதகவாயு** – மாதவிடாய்க் காலத்து வாயு மிகுதியால் ஏற்படும் நோய்வகை; காண்க: **சூதகசன்னி.**

**சூதசாலை** – மடைப்பள்ளி.

**சூதடி** – வஞ்சகம்.

**சூதநதி** – ஆன்பொருநை ஆறு.

**சூதநோக்கல்** – நீலாஞ்சனக்கல்.

**சூதம்** – மாமரம்; பிறப்பு; பாதரசம்; புளிமா மரம்; காண்க: **பவளமல்லிகை**; சூது; சூதாடு கருவி; வண்டு.

**சூதர்** – அரசர் முன்னின்று அவர்களைப் புகழ்வோர்; பாணர்.

**சூதரம்** – மாங்கனி.

**சூதவஞ்சனம்** – காண்க: **சூதநோக்கல்.**

**சூதவம்** – வண்டு.

**சூதன்** – தேரோட்டி; சூரியன்; தச்சன்; சூத முனிவன்; சூதாடுவோன்; தந்திரக்காரன்; சமையற்காரன்; புகழ்வோன்; பாணன்.

**சூதனம்** – அழித்தல்.

**சூதாட்டம்** – சூதாடல்; தந்திரம்.

**சூதாடி** – சூதாடுவோன்.

**சூதாடுகருவி** – தாயக்கட்டை.

**சூதாளி** – தந்திரக்காரன்.

**சூதானக்காரன்** – முன்னெச்சரிக்கை உள்ளவன்.

**சூதானம்** – எச்சரிக்கை; சேமம்; பாதுகாப்பு.

**சூதி** – பிள்ளைபெற்றவள்; அசைவு; தைத்தல்; நடை.

**சூதிகை** – மகப்பெற்றவள்; ஈனில்.

**சூது** – சூதாட்டம்; சூதாடுகருவி; உபாயம்; வெற்றி; இரகசியம்; தாமரை; காண்க: **சூரிய காந்தி**; சூழ்ச்சி.

**சூதுகருவி** – காண்க: **சூதாடுகருவி.**

**சூதுகளி** – சூதாடுகை; சூழ்ச்சி.

**சூதுகாரன்** – சூழ்ச்சியாளன்.

**சூதுபொருதல்** – சூதாடுதல்.

**சூதுவாது** – கள்ளங்கபடு.

**சூதுவென்றி** – சூதாட்டத்தில் நேர்ந்த வெற்றியைக் கூறும் புறத்துறை.

**சூந்துமம்** – சிலந்திநாயகப்பூடு.

**சூப்பி** – குழந்தைகள் வாயில் சுவைத்தற்கேற்ப முலைக்காம்புபோல் அமைந்த குமிழ்க்கருவி; ஒரு சிற்றுண்டிவகை; திரிந்து வாங்கித் தின்பவன்; ஆண்குறியின் நுனித்தோல்.

**சூப்பிக்கலியாணம்** – காண்க: **சுன்னத்துச்செய்தல்.**

**சூப்பு** – கறிரசம்; கோழிக்குஞ்சு முதலியவற்றின் சத்தைக்கொண்டு சமைத்த ரசம்.

**சூப்புதல்** – சப்புதல்; உமிழ்ந்தெடுத்தல்; சுருக்குதல்.

**சூபகன், சூபகாரன்** – சமையற்காரன்.

**சூம்படைதல்** – நிலைகெடுதல்; சோம்பல் கொள்ளுதல்.

**சூம்படைந்தவன்** – சுறுசுறுப்பற்றவன்; நிலை கெட்டவன்.

**சூம்புதல்** – மெலிந்துவாடுதல்; இரத்தம் முதலியன சுண்டிச் சிறுத்தல்; சுவைத்தல்.

**சூமம்** – வானம்; நீர்; பால்.

**சூர்** – அச்சம்; துன்பம்; நோய்; கடுப்பு; வஞ்சகம்; கொடுமை; கொடுந்தெய்வம்; தெய்வப்பெண்; மிளகு; வால்மிளகு; சூரபதுமன்; வீரம்; அஞ்சாமை; சூரியன்.

**சூர்ணம்** – பொடி.

**சூர்ணி, சூர்ணிகை** – செய்யுட்கருத்தை விளக்கி நிற்கும் இனிய சொற்றொடர்.

**சூர்த்தநோக்கு** – கொடுமை.

**சூர்த்தம்** – நடுக்கம்.

**சூர்த்தல்** – அச்சுறுத்தல்; கொடுமைசெய்தல்; சுழலுதல்.

**சூர்தல்** – பிரித்தல்; மயிர் முதலியன வகிர்தல்; பறித்தல்.

**சூர்துங்கராகம்** – குறிஞ்சி யாழ்த்திறவகைகளுள் ஒன்று.

**சூர்ப்பகை** – சூரபதுமன் பகைவனான முருகக் கடவுள்.

**சூர்ப்பம்** – முறம்; துணி.

**சூர்ப்பு** – கொடுந்தொழில்; சுழற்சி; கைக்கடகம்; வளைவு; அச்சம்.

**சூர்மகள்** – துர்க்கைக்கு ஏவல்செய்யும் யோகினி என்ற பெண்பேய்; வஞ்சகப்பெண்.

**சூரசூதன்** – அருணன்; புதன்.

**சூரடித்தல்** – மயிர் முதலியன தீப்படுதலால் கருகி நாற்றம் வீசுதல்.

**சூரணம்** – தூள்; பொடி; கருணைக்கிழங்கு.

**சூரணிகை** – காண்க: **சூர்ணிகை.**

**சூரணித்தல்** – பொடிசெய்தல்.

**சூரணை** – காண்க: **சூர்ணிகை.**

**சூரத்தனம்** – வீரத்தனம்.

**சூரத்துவம்,** **சூரதை** } – வீரம்.

**சூரப்புலி** – சுத்தவீரன்.

**சூரபுத்தி** – அறிவாற்றல்.

**சூரம்** – வீரம்; அச்சம்; கடலை; ஒரு மரவகை.

**சூரரமகளிர்** – தெய்வப் பெண்டிர்.

**சூரல்** – சுழித்தடிக்கை; பிரம்பு; சூரைப்பூ; காண்க: **நரியிலந்தை.**

**சூரன்** – வீரன்; சூரபதுமன்; நாய்; சூரியன்; நெருப்பு; கரடி; சேவல்; சிங்கம்.

**சூராட்டி** – தேவராட்டி.

**சூரி** – வீரமுடையவள்; மாகாளி; காடுகாள்; புலவன்; நித்தியசூரி; சூரியன்; எருக்கு; காண்க: **சூரிக்கத்தி;** ஓலைச் சுவடியில் துளையிடுங் கருவி; காண்க: **வைசூரி.**

**சூரிக்கத்தி** – கூர்மையான ஒரு கத்திவகை.

**சூரியகரந்தை** – ஒரு பூண்டுவகை.

**சூரியகலை** – பிங்கலை, மூக்கின் வலப்பக்கத்துத் துளை.

**சூரியகாந்தக்கல்** – வெயில் படும்போது நெருப்பு வெளிப்படுந் தன்மையுள்ள ஒருவகைப் பளிங்குக்கல்.

**சூரியகாந்தம்** – காண்க: **சூரியகாந்தக்கல்; சூரியகாந்தி.**

**சூரியகாந்தி** – செடிவகை; ஓரிலைத் தாமரை; ஒருவகைக் கெட்டியான பட்டு.

**சூரியகிரகணம்** – சூரியன், சந்திரன், பூமி மூன்றும் நேர்கோட்டில் வரும் மறைநிலாக் காலத்துப் பகலில் சந்திரன் சூரியனை மறைப்பது; கேது என்னும் கோளால் சூரியன் பற்றப்படுகை.

**சூரியகிரணம்** – கதிரவனிலிருந்து வரும் கதிர்.

**சூரியகுலம்** – சூரியனைக் குலமுதல்வனாகக் கொண்ட அரசகுலம்.

**சூரியகௌளி** – இளநீர்வகை.

**சூரியசரம்** – காண்க: **சூரியகலை.**

**சூரியதிசை** – கிழக்கு, சூரியனுக்குரிய திக்கு.

**சூரியநாராயணன்** – சூரியமண்டல மத்தியில் வசிப்பவராகக் கருதப்படும் திருமால்.

**சூரியப்படாம்** – விருதுவகை.

**சூரியப்பிரபை(வை)** – வெயில்; மகளிர் தலையணி வகை; சூரியன் வடிவாக அமைந்த ஊர்தி.

**சூரியபிம்பம்** – சூரியவட்டம்.

**சூரியபுடம்** – வெயிலில் உலர்த்தும் மருந்துப் புடம்; வானத்தில் சூரியனது உண்மைநிலை.

**சூரியமண்டலம்** – சூரியலோகம்; சூரியவட்டம்.

**சூரியவாதி** – கதிரவனையே கடவுளாகக் கொள்ளும் சமயத்தான்.

**சூரியன்** – ஞாயிறு; உபநிடதங்களுள் ஒன்று; சோழன்; செவ்வெருக்கஞ்செடி; செம்புமலை.

**சூரியை** – சூரியன்தேவி; புதுமணப்பெண்.

**சூரியோதயம்** – சூரியன் உதித்தல்; உதயகாலம், அதிகாலை.

**சூரினர்** – தெய்வப் பெண்கள்.

**சூருமம்** – தருப்பைப்புல்; ஒரு மணப்புல்வகை.

**சூரை** – ஒரு செடிவகை; மணிபிடியாப் பயிர்; பயிரில் விழும் நோய்வகை; ஒரு மீன்வகை; தூதுளைக்கொடி; கருஞ்சூரை.

**சூல்** – கருப்பம்; முட்டை; மூன்று முனையுடைய ஆயுதவகை; மேகம் நீர் நிரம்பியிருக்கை; பயிர்க்கரு; யானை, குதிரை முதலியவற்றிற்கு இடும் அலங்காரப் போர்வை.

**சூல்காணுதல்** – முதல்கருப்பந் தரித்திருக்கும் பெண்ணைத் தின்பண்டங்களோடு சென்று பார்த்தல்.

**சூலக்கல்** – சிவன்கோயிலுக்கு விடப்பட்ட நிலங்களின் எல்லையில் நடப்படும் சூலக்குறியுள்ள கல்.

**சூலக்காளை** – சிவன்கோயிலுக்காகச் சூலம் பொறித்து விடப்பட்ட காளை; கண்டபடி திரிபவன்.

**சூலக்குறடு** – காண்க: **சூட்டுக்கோல்.**

**சூலத்திசை** – வாரசூலையுள்ள திக்கு.

**சூலபாணி** – சிவபெருமான்.

**சூலம்** – மூன்று முனைகளையுடைய ஆயுதவகை; இடிதாங்கி; கழு; இரேவதிநாள்; காண்க: வாரசூலை; இருபத்தேழு யோகத்துள் ஒன்று; மாட்டுக்கு இடும் சூட்டுக்குறி; சூலைநோய் வகை.

**சூலல்** – தோண்டுதல்.

**சூலவேல்** – சூலாயுதம்; கழுமுள்.

**சூலானோன்** – சவர்க்காரம்.

**சூலி** – கருவுற்றவள்; சூலப்படையை உடைய சிவபிரான்; சூலப்படை தரித்த துர்க்கை; காண்க: **சதுரக்கள்ளி.**

**சூலிகம்** – கோழி.
**சூலிகை** – இடிதாங்கி.
**சூலினி** – சூலத்தை ஏந்திய பார்வதி; வெற்றிலை; சவர்க்காரம்.
**சூலுதல்** – தோண்டுதல்; கருவுறுதல்; அறுத்தல்.
**சூலை** – காலந்தவறி நிகழும் மாதவிடாயால் ஏற்படும் நோய்; வயிற்றுவலி நோய்; காண்க: **வாரசூலை**.
**சூலைக்கட்டி** – புணர்ச்சியால் உண்டாகும் புண் கட்டி.
**சூலைக்குடைச்சல்** – சூலைநோயால் உண்டாகும் திருகுவலி.
**சூலைசத்துரு** – காண்க: **ஆமணக்கு**.
**சூலைநீர்** – கெட்ட நோயால் சிறுநீர்க்குழாய் வழியாக வெளிவரும் சீழ்; காண்க: **மேகநீர்**.
**சூவானக்காரன்** – சமையற்காரன்.
**சூவானம்** – அட்டில்.
**சூவெனல்** – நாயை ஏவுதற்குறிப்பு.
**சூழ்** – ஆலோசனை; ஆராய்ச்சி; சுற்று; தலைமாலை; கடலைப்பருப்பு.
**சூழ்கோடை** – சூறாவளி.
**சூழ்ச்சம்** – சூழ்ச்சி, ஆலோசனை; வழிவகை.
**சூழ்ச்சி** – ஆலோசனை; நுண்ணறிவு; ஆராய்தல்; வழிவகை; மனத்தடுமாற்றம்.
**சூழ்ச்சித்துணைவர்** – அமைச்சர்கள்.
**சூழ்த்தல்** – சுற்றுதல்; சுற்றி மொய்த்தல்.
**சூழ்த்துதல்** – சூழச்செய்தல்.
**சூழ்தல்** – சுற்றியிருத்தல்; சுற்றிவருதல்; ஆராய்தல்; கருதுதல்; சதியாலோசனை செய்தல்; தேர்ந்தெடுத்தல்; அறிதல்; பண்ணுதல்; எழுதுதல்; தாக்குதல்.
**சூழ்தாழை** – தாமரை.
**சூழ்ந்திடல்** – வளைந்துகொள்ளல்.
**சூழ்போதல்** – சுற்றிப்போதல்; வலம்வருதல்; வளைத்தல்; ஆராய்தல்; சுற்றிக்கிடத்தல்.
**சூழ்வல்லோர்** – காண்க: **சூழ்ச்சித்துணைவர்**.
**சூழ்வளி** – சுழல்காற்று.
**சூழ்வார்** – காண்க: **சூழ்வோர்**.
**சூழ்வினை** – சூழ்ச்சி, உபாயம்.
**சூழ்வு** – ஆராய்கை; வழிவகை.
**சூழ்வோர்** – அமைச்சர்; உறவினர்; சூழ்ந்து நிற்பவர்.
**சூழல்** – சூழ்கை; சுற்றுப்புறம்; மணற்குன்று; கூட்டம்; சூழ்ச்சி; வழிவகை; அவதாரம்.
**சூழி** – உச்சி; உச்சிக்கொண்டை; சேணம்; யானையின் முகபடாம்; நீர்நிலை; கடல்; மேலிடம்.
**சூழிகை** – கள்.
**சூழியம்** – உச்சிக்கொண்டை; உச்சிக்கொண்டையில் அணியும் நகை.
**சூழியல், சூழியற்கம்பு** – வீட்டிறப்புத் தாங்கும் கம்பு.
**சூள்** – ஆணை, சபதம்; சத்தியம்; சாபம்; தீவட்டி.
**சூள்தல்** – காண்க: **சூளுறுதல்**.
**சூளறவு** – காண்க: **சூளுறவு**.
**சூளாமணி** – முடிமணி; ஒரு செய்யுள் நூல்; இந்திரன் அணியும் மணி.
**சூளி** – உச்சிக்கொண்டை.
**சூளிகம்** – அப்பவருக்கம்.
**சூளிகை** – நீர்க்கரை; செய்குன்று; யானைச் செவியடி; நிலாமுற்றம்; தலையணிவகை.
**சூளுறவு** – ஆணையிடுகை.
**சூளுறுதல்** – ஆணையிடுதல்; வஞ்சினங்கூறுதல்.
**சூளை** – செங்கல் முதலியன சுடும் காளவாய்; ஈமவிறகு; விலைமகள்.
**சூற்பெண்டு** – கருவுற்றவள்.
**சூறல்** – தோண்டுதல்.
**சூறன்** – காண்க: **மூஞ்சூறு**.
**சூறாவளி, சூறாவாரி** – சுழல்காற்று.
**சூறு** – மலவாய்.
**சூறுதல்** – சூழ்தல்.
**சூறை** – கொள்ளை; சுழல்காற்று; பனிச்சை என்னும் மயிர்முடிவகை; சல்லடம்; கடல் மீன்வகை; காண்க: **சூறைக்குருவி**; கழுத்தின் பின்குழி; பயிரில் விழும் நோய்வகை.
**சூறைக்காரன்** – கொள்ளையடிப்பவன்.
**சூறைக்காற்று** – சுழல்காற்று; புயற்காற்று.
**சூறைக்குருவி** – சோளக்கொல்லையிற் கூட்டங் கூட்டமாகக் காணப்படும் குருவிவகை.
**சூறைகொள்ளுதல்** – காண்க: **சூறையாடுதல்**.
**சூறைகோட்பறை** – வழிப்பறி செய்வோர்க்குரிய பாலைப் பறைவகை.
**சூறைச்சின்னம்** – கொள்ளையிடுவோர்க்குரிய ஊதுகொம்பு.
**சூறைத்தேங்காய்** – நேர்த்திக்கடனாகத் தெய்வத்தின் முன்னிலையில் உடைக்கப்படும் சிதறு தேங்காய்.
**சூறையர்** – பரத்தையர்.
**சூறையாடுதல்** – கொள்ளையடித்தல்; தலை சுற்றுதல்.
**சூறைவிடுதல்** – கொள்ளையிடச் செய்தல்; சொத்தைப் பிறர்க்கு வாரிவிடுதல்.
**சூன்** – பிதுக்கம்; வளைவு; குற்றம்; கபடம்; கை முதலியன சூம்பியிருக்கை; கமுக்கம்; இரண்டு வீட்டுச் சுவர்களின் இடைச்சந்து; புறம்போக்கு நிலம்; ஆங்கில ஆண்டில் ஆறாம் மாதம்.
**சூன்றல்** – தோண்டுதல்.

**சூனம்** – மான்; பூமலர்; வயிற்றுவீக்கம்.
**சூனர்** – ஊன் விற்போர்.
**சூனியக்காரன்** – பில்லிசூனியம் வைப்பவன்.
**சூனியதிசை** – அமங்கல திசையாகக் கருதப்படும் தென்கீழ்த்திசை; மூச்சுப்போகாத மூக்கின் துளைப்பக்கம்.
**சூனியப்பார்வை** – மந்திரவாதியின் தீக்கண்.
**சூனியம்** – இன்மை; பூச்சியம்; வறிதாயிருக்கை; பயனற்றது; மாயை; இறப்பை விளைக்கச் செய்யும் கலை; சூனியப்பொருள்; தூய்மை யின்மை.
**சூனியம்வைத்தல்** – ஒருவருக்குக் கேடு உண்டாதற் பொருட்டுப் பில்லிசூனியம் செய்தல்.
**சூனியமாதல்** – அழிவுறுதல்; பயனின்றாதல்; தவறிப்போதல்.
**சூனியமெடுத்தல்** – பிறரால் வைக்கப்பட்ட பில்லிசூனியத்தை அகற்றல்.
**சூனியவாதம்** – நாத்திக மதம், கடவுள் இல்லை எனும் ஒரு சமயவாதம்.
**சூனியவாதன்** – நாத்திகன்.
**சூனியவாதி** – நாத்திகன்; சூனியக்காரன்.
**சூனியவித்தை** – பில்லிசூனியம்.
**சூனியன்** –முடவன்.
**சூனு** – மகன்.
**சூனை** – வயிற்றுவீக்கம்; சொத்தை; குற்றம்; மகள்.

# செ

**செ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ச்+எ).
**செக்கச்சிவத்தல்** – மிகச் சிவத்தல்.
**செக்கச்செவேரெனல்** – மிகவுஞ் சிவந்திருத்தற் குறிப்பு.
**செக்கடி** – எண்ணெயாட்டும் இடம்.
**செக்கடித்தல்** – செக்கில் எள், வேர்க்கடலைக் கொட்டை, தேங்காய்க் கொப்பரை முதலிய வற்றை ஆட்டுதல்.
**செக்கணி** – ஒரு கூத்துவகை.
**செக்கம்** – சிவப்பு; கோபம்; இறப்பு.
**செக்கர்** – சிவப்பு; செவ்வானம்.
**செக்கர்ச்சிவப்பு** – மிகு சிவப்பு.
**செக்கர்வானிறத்தன்** – செவ்வானம்போல் செந் நிறமுள்ள சிவன்; வீரபத்திரன்.
**செக்கல்** – செவ்வானம்; மாலைநேரம்.
**செக்கவுரி** – ஒரு செடிவகை.
**செக்காட்டி** – எண்ணெயின்பொருட்டுச் செக்கு ஆட்டுபவன்; வாணியன்.
**செக்காடுதல்** – செக்கில் அரைபடுதல்; எண்ணெ யூற்றுதல்; காற்றிலும் மழையிலும் செடிகள் வேர்பறிந்து நிற்றல்.
**செக்கான்** – செக்காட்டும் வாணியன்.
**செக்கில்வைத்தாட்டுதல், செக்கிலிட்டுத்திரித்தல்** – மிகத் துன்புறுத்துதல்; செக்கிலே வைத்துத் திரித்தல்.
**செக்கு** – எண்ணெய் ஆட்டும் எந்திரம்; சதய நாள்; உண்டியல்.
**செக்குமேடு** – எண்ணெய் ஆடும் செக்குள்ள மேட்டிடம்.
**செக்குரல்** – செக்கின் அடிப்பகுதி.
**செக்குலக்கை** – செக்குரலில் எள் முதலியவற்றை ஆட்டும் பருத்த மரத்துண்டு; மிக்க வலிமை யுள்ளவன்.
**செகச்சாலம்** – மாயவித்தை; பேரொளி, செகசோதி.
**செகதம்** – அழித்தல்; கெடுத்தல்.
**செகநாதன்** – உலகிற்கு இறைவனாகிய கடவுள்.
**செகம்(ன்)** – உலகம்.
**செகரிகம்** – நாயுருவிச்செடி.
**செகன்மோகினி** – உலகனைத்தையும் மயக்கும் பேரழகி.
**செகில்** – தோளின் மேற்புறம்; சிவப்பு.
**செகிள்** – கனித்தோல்; கேழ்வரகின் கப்பி; மீன் செதிள்.
**செகுத்தல்** – வெல்லுதல்; கொல்லுதல்.
**செங்கட்டி** – காவிக்கல்; சாதிலிங்கம்; செங்கல்லின் துண்டு.
**செங்கடம்பு** – ஒரு கடப்பமரவகை.
**செங்கண்** – சிவந்த கண்; ஒரு கடல்மீன்வகை.
**செங்கண்ணன்** – சிவந்த கண்களையுடைய ஓர் எலிவகை.
**செங்கண்ணி** – சிவந்த கண்களையுடைய ஒரு மீன்வகை; ஒரு செந்நெல்வகை.
**செங்கண்மா** – சிவந்த கண்ணுடைய கரடி; ஒரு நகரம்.
**செங்கண்மாரி** – காமாலை.
**செங்கண்மால்** – சிவந்த கண்ணுடைய திருமால்.
**செங்கணான்** – திருமால்; ஒரு சோழ அரசன்.
**செங்கதிர்** – சிவந்த கதிர்களையுடைய சூரியன்.
**செங்கதிர்நாள்** – சூரியனை அதிதேவதையாகக் கொண்ட உத்தரநாள்.
**செங்கதிரோன்** – சிவந்த கதிர்களையுடைய சூரியன்.
**செங்கமலம்** – செந்தாமரை.
**செங்கமலவல்லி, செங்கமலை** – செந்தாமரை மலரில் வாழும் கொடியாகிய திருமகள்.

**செங்கயல்** – ஒரு மீன்வகை.
**செங்கரடு** – செம்மண்குன்று.
**செங்கரப்பான்** – எயிற்றுப்புண்.
**செங்கருங்காலி** – ஒரு மரவகை.
**செங்கரும்பு** – செந்நிறமுள்ள கரும்புவகை.
**செங்கல்** – சுட்ட மண்கல்; காவிக்கல்; மாணிக்கம்.
**செங்கல்வராயன்** – செங்கல்வகிரி என்னும் திருத்தணிகைமலைத் தலைவனான முருகக் கடவுள்.
**செங்கல்வரை** – திருத்தணிகைமலை.
**செங்கலங்கல்** – செந்நிறமான கலங்கல்; புது வெள்ளநீர்.
**செங்கலம்** – செந்தாமரை.
**செங்கழுநீர்** – கொடிவகை; செங்குவளை; செவ்வாம்பல்.
**செங்களம்** – இரத்தத்தால் சிவந்த இடம்; போர்க்களம்.
**செங்களி** – செம்பஞ்சுக்குழம்பு; பாக்கு ஊற வைக்குஞ் சாயக்குழம்பு.
**செங்கற்கட்டளை** – செங்கல் அறுத்தற்குரிய அச்சு.
**செங்கற்றலை** – ஒரு மீன்வகை.
**செங்கனல்** – கொழுந்துவிட்டெரியும் தீ; கனிந்துகொண்டிருக்கும் அழல்.
**செங்காகம்** – செம்போத்துப் பறவை.
**செங்காடு** – திருச்செங்காட்டங்குடி என்னும் ஒரு சிவதலம்; சிவந்த காட்டுநிலம்.
**செங்காந்தள்** – செந்நிறமுள்ள படர்கொடிவகை.
**செங்காய்** – பழுக்கும் பருவத்துள்ள காய்.
**செங்காய்ப்புண்** – பழுக்காத புண்.
**செங்கார்** – ஒரு கார்நெல்வகை.
**செங்காரணி, செங்காரி** – கருஞ்சிவலையான பசு முதலிய விலங்கு.
**செங்காரித்தல்** – கோபம், வெயில், கடுமை இவற்றால் முகஞ் சிவந்துகாட்டுதல்; மழை யின்றிப் பயிர்கள் கதிர்வாங்காது செந்நிற மாதல்.
**செங்காலி** – செங்கருங்காலிமரம்.
**செங்காவி** – செங்கழுநீர்; குங்குமக்காவி.
**செங்கானாரை** சிவந்த காலையுடைய நாரை வகை.
**செங்கிடை** – ஒரு முட்செடிவகை.
**செங்கிரந்தி** – ஒரு மேகக்கட்டிவகை; செந்நிறப் புண்கட்டி.
**செங்கிளுவை** – கீச்சுத்தாராப் பறவை; ஒரு மரவகை.
**செங்கீரை** – ஒரு கீரைவகை; செங்கீரைப் பருவம்.
**செங்கீரைப்பருவம்** – இருகை ஊன்றி ஒரு கால் மடக்கி ஒரு கால் நீட்டி ஐந்தாம் திங்களிற் பிள்ளைகள் தலைநிமிர்ந்தாடும் பருவம்.
**செங்குங்குமம்** – சந்தனமரவகை.
**செங்குணக்கு** – நேர்கிழக்கு.
**செங்குத்தாய்விழுதல்** – தலைகுப்புற விழுதல்.
**செங்குத்து** – நேரே நிமிர்ந்து நிற்கும் நிலை.
**செங்குந்தம்** – கண்ணோய்வகை; இரத்தத்தால் சிவந்த ஈட்டி.
**செங்குமிழ்** – ஒரு மரவகை.
**செங்குமுதம்** – காண்க: செவ்வாம்பல்; கண்ணோய் வகை.
**செங்குலிகம்** – சாதிலிங்கம்.
**செங்குவளை** – செங்கழுநீர்ப்பூ.
**செங்குளவி** – மஞ்சள் நிறமுள்ள ஒரு குளவிவகை.
**செங்குறிஞ்சி** – ஒரு மரவகை.
**செங்குன்றி** – ஒரு குன்றிக்கொடிவகை.
**செங்கை** – கொடுக்குந் தன்மையுள்ள கை; அழகிய கை; சிவந்த கை; திருவாதிரைநாள்.
**செங்கொடிவேலி** – ரோசாநிறப் பூவுள்ள ஒரு கொடிவகை.
**செங்கொல்** – செம்பொன்.
**செங்கொல்லர்** – தட்டார்.
**செங்கொள்** – ஒரு கொள்ளுவகை.
**செங்கோட்டியாழ்** – நால்வகை யாழ்களுள் ஒன்று.
**செங்கோடு** – செங்குத்தான மலை; செருந்தி மரம்; ஒரு சிவதலம்.
**செங்கோல்** – அரசச் சின்னமாகிய நேர்கோல்; நல்லரசாட்சி; நெருப்புச் சலாகை.
**செங்கோல்கோடுதல்** – அரசநீதி தவறுதல்.
**செங்கோலம்** – செம்புமணல்.
**செங்கோலறுகு** – அறுகம்புல்வகை.
**செங்கோலோச்சுதல்** – நீதி தவறாது அரசு புரிதல்.
**செங்கோற்கடவுள்** – யமன்.
**செங்கோன்மை** – அரசநீதி.
**செச்சை** – சந்தனக்குழம்பு; நீறு; சட்டை; வெள்ளாட்டுக்கடா; ஆடு; மேடராசி; தழை கள்; குடில்; செங்காடு; உதயசந்திரன்; இலிங்கப்பெட்டகம்; இரட்டை; சிவப்பு; வெட்சி; செந்துளசிச்செடி.
**செஞ்ச** – நிறைய; சேர; நேராக; முழுதும்.
**செஞ்சடையோன்** – காஷ்மீரப் படிகம்; சிவன்; வயிரவன்; வீரபத்திரன்.
**செஞ்சந்தனம்** – ஒரு சந்தனமரவகை.
**செஞ்சம்** – நேர்மை; முழுமை.
**செஞ்சாந்து** – குங்குமம்; சந்தனக்கலவை.
**செஞ்சாலி** – உயர்தரச் செந்நெல்வகை.
**செஞ்சிலை** – சிவந்த கல்; செங்காவி; அழகிய வில்.

**செஞ்சீரகம்** – செந்நிறமுள்ள சீரகவகை.
**செஞ்சு** – நேர்மை; முழுதும்.
**செஞ்சுடர்** – சூரியன்; தீ.
**செஞ்சுடர்ப் பகவன்** – தீக்கடவுள்; கதிரவன்.
**செஞ்சுருட்டி** – ஒரு பண்வகை.
**செஞ்செயல்** – நேர்மையான தொழில்.
**செஞ்செவியர்** – செல்வர்.
**செஞ்செவே** – நேராக; எளிதாக; முழுவதும்.
**செஞ்செழிப்பு** – முகமலர்ச்சி; பயிர்ச்செழிப்பு; ஏராளம்.
**செஞ்சொல்** – திருந்திய சொல்; வெளிப்படையான சொல்.
**செஞ்சொன்மாலை** – புகழ்மாலை.
**செஞ்சோற்றுக்கடன்** – உணவுபெற்று உண்டதற்காக வீரன் தன் உயிரையும் போரிடைக் கொடுத்தலாகிய கடமை.
**செஞ்சோறு** – சிவப்பன்னம்; காண்க: **செஞ்சோற்றுக்கடன்**; உரிமைச்சோறு.
**செஞ்ஞானி** – சிறந்த ஞானி.
**செட்டி** – முருகன்; வாணிகன்; வணிகர்களின் பட்டப்பெயர்; காண்க: **வெட்சி**; மல்லகசெட்டி.
**செட்டிச்சி** – வணிகக்குலப் பெண்.
**செட்டிமை** – செட்டித் தன்மை; வாணிகம்.
**செட்டியப்பன்** – சிவன்.
**செட்டு** - சிக்கனம்; கடும்பற்றுள்ளம்; வாணிகம்.
**செட்டுக்காரன்** – அளவாய்ச் செலவிடுவோன்; பிறருக்குக் கொடுக்காதவன்.
**செட்டுப்பொட்டாதல்** – வாணிகஞ் சிதைதல்.
**செட்டை** – இறகு; தோட்பட்டை; மீன்சிறை; ஆடைக்கரைவகை.
**செடகன்** – வேலைக்காரன்; அடிமை.
**செடி** – பூண்டு; புதர்; நெருக்கம்; பாவம்; தீமை; துன்பம்; தீநாற்றம்; பதனழிந்தது; அற்பம்; ஒளி; குற்றம்.
**செடிக்காடு** – புதர்.
**செடிச்சி** – இழிந்தவள்.
**செடிசீத்தல்** – காடுவெட்டுதல்.
**செண்டாடுதல்** – பந்தாடுதல்; நிலைகுலைத்தல்.
**செண்டாயுதன்** – ஐயனார்.
**செண்டு** – பூச்செண்டு; பந்து; குதிரைச் சம்மட்டி; வையாளிவீதி; பந்தடிமேடை; நூற்செண்டு; தீவட்டிச்செண்டு; கூர்மை.
**செண்டுகோல்** – பந்தடிக்குங் கோல்.
**செண்டுமல்லிகை** – காண்க: **குடமல்லிகை**.
**செண்டுவெளி** – அரண்மனையைச் சார்ந்துள்ள வையாளிவீதி.
**செண்டேறுதல்** – சாரிகை புறப்படுதல்.
**செண்டை** – ஒரு கொட்டுவாத்தியவகை.
**செண்ணம்** – நுண்டொழில்; அழகிய வடிவு.
**செண்ணிகைக்கோதை** – பூமாலைவகை.
**செண்ணுதல்**– அலங்கரித்தல்.
**செண்பகம்** – வண்டுண்ணாத மலர்; செம்போத்துப் பறவை; சண்பகமரம்.
**செண்பகவருக்கை** – ஒரு பலாமரவகை.
**செத்தல்** – சாதல்; தேங்காய் நெற்று; உலர்ந்து சுருங்கிய பனம்பழம், மிளகாய், வாழை முதலியன; மெலிந்தது; அறக்காய்ந்தது, பசுமையற்றது.
**செத்து** – செதுக்குகை; கருதி; ஐயம்; ஒத்து.
**செத்துதல்** – செதுக்குதல்.
**செத்தை** – வைக்கோல்; துரும்பு; குப்பை; உலர்ந்த சருகு முதலியன; ஓலைவேலி; அழுகின தசை; கடல்மீன்வகை.
**செத்தைகுத்துதல்** – மதிலில் முளைக்குஞ் செடிகளைக் களைதல்.
**செத்தோர்ப்புணர்த்தல்** – இறந்தோரை உயிர்பெற்றெழச் செய்தல்.
**செதில்(ள்)** – மீனின்மேலுள்ள பிராலுறுப்பு; தோல்; தூளி; மரப்பட்டை.
**செதிளெடுத்தல்** – தோலையுரித்தல்; முற்றும் போக்குதல்.
**செதுக்கடவேலை** – காண்க: **செதுக்குவேலை**.
**செதுக்கணார்தல்** – கைம்மிஞ்சுதல்.
**செதுக்கி** – காண்க: **செதுக்குப்பாரை**.
**செதுக்கு** – செதுக்குகை; பூ முதலியன வாடல்; சேறு; பூதம்; மந்தி.
**செதுக்குதல்** – புல் முதலியன செதுக்குதல்; மரம் முதலியன செதுக்குதல்; வற்றியொடுங்குதல்.
**செதுக்குப்பாரை** – புல், மண் முதலியன செதுக்குங் கருவி.
**செதுக்குவேலை** – அணிகலன்களில் மணி பதிக்கும் தொழில்.
**செதுக்குளி** – தச்சனின் உளிவகையுள் ஒன்று; மணி பதித்தற்குரிய தட்டான் கருவி.
**செதுக்கை** – தழும்பு.
**செதுகு** – கூளம்; சருகு; தீங்கு.
**செதுகுதல்** – தவறுதல்.
**செதுகை** – தீமை.
**செதுத்தல்** – ஒளிமழுங்குதல்; சோர்தல்; வற்றியொடுங்குதல்.
**செதும்பல்** – காண்க: **செதும்புதல்**.
**செதும்பு** – சேறு; சிறிதளவு ஓடும் நீர்.
**செதும்புதல்** – ஈரம் உறைத்தல்.
**செதுமகவு** – இறந்து பிறக்கும் பிள்ளை.
**செதுமொழி** – பொல்லாச் சொல்.
**செதுவல்** – பட்டுப்போதல்.

**செந்தட்டு** – தன்மீது படும் அடியைத் தடுத்தல்; செயல் சித்திக்குமாறு செய்யும் மறைந்து கொள்ளல் முதலிய வழிவகை.

**செந்தண்டு** – செந்தண்டுக்கீரை; நோயாற் சிவந்த கதிர்; பவளம்.

**செந்தண்மை** – அருள்.

**செந்தணக்கு** – காண்க: **தணக்கு**; தணக்குவகை; வெண்டாளி.

**செந்தணல்** – காண்க: **செந்தீ.**

**செந்தணற்கொடி** – பவளக்கொடி.

**செந்தமிழ்** – கலப்பற்ற தூய தமிழ்.

**செந்தமிழ்நாடு, செந்தமிழ்நிலம்** – வையையாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், மருவூரின் மேற்கும், கருவூரின் கிழக்கும் ஆகிய செந்தமிழ் வழங்கும் நிலம்.

**செந்தயிர்** – செந்நிறமுள்ள தயிர்க்கட்டி.

**செந்தரா** – கசப்புள்ள மருந்துக்கொடிவகை.

**செந்தருப்பை** – நச்சுப்புல்வகை.

**செந்தலித்தல்** – செழிப்பாதல்.

**செந்தலிப்பு** – செழிப்பு.

**செந்தலை** – அரைக்கால்.

**செந்தழல்** – பொங்கி எரியும் தீ; செந்தணல்; கேட்டைநாள்.

**செந்தழற்கொடி** – பவளக்கொடி.

**செந்தளித்தல்** – செழிப்பாதல்; செவ்வியுறுதல்.

**செந்தளிர்** – செந்நிறமுள்ள இளந்தளிர்.

**செந்தளிர்ப்பு** – மகிழ்ச்சி; செழிப்பு; இளமை வளம்.

**செந்தாது** – பொன்.

**செந்தாமரை** – சிவந்த தாமரை.

**செந்தார்** – ஆண்கிளியின் கழுத்திலுள்ள செங்கோடு.

**செந்தாழை** – செந்நிறமுள்ள தாழைவகை; தணக்குவகை; பார்வையை மறைக்கும் கண்ணோய்; உதட்டில் புண் உண்டாக்கி வாயில் தீநாற்றம் அடைவிக்கும் நோய்வகை; பயிரைச் செந்நிறமாக்கும் நோய்வகை; நெல் வகை.

**செந்தாள்** – நோயால் செந்நிறமான கதிர்.

**செந்தாளி** – ஒரு தாளிச்செடிவகை.

**செந்தி** – காண்க: **திருச்செந்தூர்.**

**செந்திரி(ரு)க்கம்** – ஓலைக் கடிதத்தின் மூடுசுருள்; கயிற்றில் ஏறிச் செல்லுமாறு தொடுக்கும் ஓலைச்சுருள்.

**செந்திரு** – திருமகள்; தாளகம்.

**செந்திருக்கை** – ஒரு மஞ்சள்வகை.

**செந்தில்** – முருகக்கடவுள் தலமாகிய திருச்செந்தூர்.

**செந்திறம்** – சிவப்பு; குறிஞ்சி யாழ்த்திறத்துள் ஒன்று; தெளிவு.

**செந்தினை** – கம்புப்பயிர்; சிவந்த தினை.

**செந்தீ** – கொழுந்துவிட்டெரியும் தீ.

**செந்தீக்கரப்பான்** – கரப்பான் சட்டிவகை.

**செந்தீவண்ணன்** – நெருப்பின் நிறமுடையவனாகிய சிவன்; செவ்வாய்.

**செந்தீவளர்ப்போர்** – வேள்வித்தீயை வளர்ப்பவராகிய அந்தணர்.

**செந்தீவேட்டல்** – வேள்விசெய்தல்.

**செந்து** – அணு; நரி; உயிரினம்; ஊர்வன முதலிய உயிரி; ஏழு நரகத்துள் ஒன்று; பெரும் பண்ணுள் ஒன்று; காண்க: **சடாமாஞ்சில்;** பெருங்காயம்.

**செந்துத்தி** – சிறுதுத்திச்செடி.

**செந்துத்தீ** – பெருங்காயம்; காண்க: **சடாமாஞ்சில்.**

**செந்தும்பை** – ஒரு தும்பைப்பூண்டுவகை.

**செந்துரசம்** – ஒரு பிசின்வகை.

**செந்துருக்கம்** – ஒரு செடிவகை.

**செந்துருத்தி** – செம்பாலைப் பண்களுள் ஒன்று.

**செந்துருதி** – குறிஞ்சி யாழ்த்திறத்துள் ஒன்று.

**செந்துளிர்** – செந்நிறத் தளிர்.

**செந்துறை** – பாடற்கேற்ற பாட்டு.

**செந்தூக்கு** – நேராகத் தூக்குகை; செங்குத்து; தாளவகை; ஒரு பாட்டுவகை.

**செந்தூரத்தாசி** – கந்தகம்.

**செந்தூரம்** – சிவந்த பொடி.

**செந்தூள்** – போர்க்களத்து இரத்தமயமான துகள்.

**செந்தூள்கருந்தூள் பறத்தல்** – சண்டை முதலியவற்றின் கடுமையை உணர்த்தும் குறிப்பு.

**செந்தேன்** – உயர்ந்த தேன்; அறுவகைப் புகைக்கும் நறுமணப் பொருள்களுள் ஒன்று.

**செந்தொட்டி** – காஞ்சொறிக்கொடி.

**செந்தொடை** – சிவந்த மாலை; மோனை எதுகை முதலியன அமைக்கப்படாத பாட்டு; அம்பு முதலியவற்றை எய்யும் குறி.

**செந்தொடையன்** – செந்நிறப் பூமாலையை அணிந்தவனான வயிரவன்.

**செந்தோன்றி** – காண்க: **செங்கழுநீர்; காந்தள்.**

**செந்நகரை** – ஒரு மரவகை; ஒரு கடல்மீன்வகை.

**செந்நாகம்** – செந்நிறமுள்ள நாகப்பாம்புவகை; கேது.

**செந்நாடிக்கா** – மூக்கிரட்டைக்கொடி.

**செந்நாப்போதர்** – திருவள்ளுவர்.

**செந்நாயுருவி** – ஒரு நாயுருவிச்செடிவகை.

**செந்நிலம்** – செந்தரை; போர்க்களம்.

**செந்நிலை** – கூத்துநிலைவகை.

**செந்நிறக்கல்** – மாமிசச்சிலை.

**செந்நிறுவுதல்** – நேர்வழியில் நிறுத்துதல்.

**செங்நீர்** – இரத்தம்; புதுவெள்ளம்; தெளிந்த நீர்; சுரோணிதம்; சாயச்சரக்கு.
**செங்நீர்ப்பவளம்** – சிவந்த பவளம்.
**செங்நீர்முத்து** – செந்நீரோட்டமுள்ள முத்து.
**செங்நெல்** – செஞ்சாலிநெல்; நன்னீர் மீன்வகை.
**செங்நெறி** – நல்வழி, சன்மார்க்கம்.
**செப்பஞ்செய்தல்** – ஒழுங்குபடுத்துதல்; புதைத்தல்.
**செப்பட்டை** – பறவைச் சிறகு; தோட்பட்டை; தூண்டியில் வைக்குஞ் சதுரக்கல்; கன்னம்.
**செப்பட** – செவ்விதாக.
**செப்படி** – காண்க: **செப்படிவித்தை.**
**செப்படித்தல்** – செப்படிவித்தைசெய்தல்.
**செப்படிவித்தை** – செப்பைக்கொண்டு செய்யும் ஒருவகைத் தந்திரவித்தை; தந்திரம்; சூழ்ச்சியான செயல்; சிக்கனம்.
**செப்பம்** – செவ்வை; நடுநிலை; சீர்திருத்தம்; பாதுகாப்பு; செவ்விய வழி; தெரு; நெஞ்சு; மனநிறைவு; ஆயத்தம்.
**செப்பமிடுதல்** – காண்க: **செப்பஞ்செய்தல்.**
**செப்பல்** – சொல்லுகை; காண்க: **செப்பலோசை;** செந்நிறம்.
**செப்பல்பிரிதல்** – பொழுதுவிடிதல்.
**செப்பலி** – கடல்மீன்வகை.
**செப்பலோசை** – வெண்பாவுக்குரிய ஓசை.
**செப்பலோடுதல்** – செந்நிறங்கொள்ளுதல்.
**செப்பனிடுதல்** – சீர்திருத்துதல்; சமப்படுத்துதல்; மெருகிடுதல்.
**செப்பாடு** – நேர்மை.
**செப்பிக்கூறுதல்** – விடைசொல்லுதல்.
**செப்பிடில்** – காண்க: **சடாமாஞ்சில்.**
**செப்பிடுவித்தை** – காண்க: **செப்படிவித்தை.**
**செப்பியம்** – திரும்பத்திரும்ப உச்சரித்தல்.
**செப்பிலை** – காண்க: **தும்பை.**
**செப்பு** – சொல்; விடை; செம்பு; சிமிழ்; நீர் வைக்கும் குடுவை; சிறுமியர் விளையாட்டுப் பாத்திரம்; இடுப்பு.
**செப்புக்கட்டை** – பொன் வளையல் முதலிய வற்றிற்கு உள்ளே இடும் தாமிரக் கட்டை.
**செப்புக்குடம்** – செப்பு முதலிய உலோகங்களாற் செய்த நீர்க்குடம்.
**செப்புக்கோட்டை** – செம்பினாலியன்ற இராவணன் கோட்டை.
**செப்புச்சிலை** – செம்பாலான உருவம்; மாந்தளிர்க்கல்.
**செப்புத்திருமேனி** – செம்பினாலாகிய சிலை.
**செப்புத்துறை** – இடுகாடு.
**செப்புதல்** – சொல்லுதல்; விடைசொல்லுதல்.
**செப்புநெருஞ்சி** – சிவப்பு நெருஞ்சிப்பூடு.
**செப்புப்பட்டயம், செப்புப்பத்திரம்** – செப்புத்தகட்டிலெழுதிய சாசனம்.
**செப்புவழு** – விடைக் குற்றம்.
**செப்பேடு** – காண்க: **செப்புப்பட்டயம்.**
**செப்போடு** – செம்பாலாகிய ஓடு.
**செபத்தியானம்** – மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே கடவுளை நினைந்திருத்தல்.
**செபம்** – மந்திரமோதல்; வேண்டுதல்; சூழ்ச்சி.
**செபமாலை, செபவடம்** – செபஞ்செய்வதற்குரிய மாலை; மாதரின் அணிகலவகை.
**செபித்தல்** – மந்திரம் சொல்லுதல்; வேண்டுதல்.
**செம்** – சிவப்பு; செம்மை.
**செம்பக்கால்** – வெற்றிலைக்கொடி நடாத இளமையான அகத்திச் செடிகளையுடைய வெற்றிலைத் தோட்டம்.
**செம்பகம்** – காண்க: **செண்பகம்.**
**செம்பகை** – யாழ்க்குற்றம் நான்கனுள் ஒன்று; இன்பமின்றி இசைத்தலாகிய தாழ்ந்த இசை.
**செம்பசலை(ளை)** – சிவப்புப் பசளைக்கீரை.
**செம்பஞ்சி(சு)** – ஒரு பருத்திவகை; சிவந்த பஞ்சு; செவ்வரக்குச் சாயமிட்ட பஞ்சு.
**செம்பஞ்சுக்குழம்பு** – மகளிர் பண்டைக் காலத்தில் அழகிற்காகப் பூசிய சிவப்புக் கலவை.
**செம்பஞ்சூட்டுதல்** – மகளிர் அடிகட்குச் செம்பஞ்சுக் குழம்பு பூசுதல்.
**செம்பட்டை** – சிவந்த மயிர்; வாத்தியவகை.
**செம்படத்தி** – செம்படவப்பெண்.
**செம்படவன்** – மீன்வலைஞன்.
**செம்படாம்** – சிவப்புச் சீலை.
**செம்படை** – சிவந்த மயிர்.
**செம்படைச்சி** – காண்க: **செம்படத்தி.**
**செம்பத்தி** – உண்மையான அன்பு.
**செம்பரத்தை** – ஒரு செடிவகை.
**செம்பருத்தி** – உயர்ரகப் பூணூல் நூற்க உதவும் பருத்திவகை; செம்பஞ்சு; பருத்திவகை.
**செம்பருந்து** – கருடன்.
**செம்பலகை** – செங்கல்.
**செம்பலா** – இலவங்கவகை.
**செம்பவளம்** – வெளுப்புக் கலவாது நன்றாகச் சிவந்துள்ள பவளவகை; உருண்டை வடிவுள்ள பவளவகை.
**செம்ப(பி)ளித்தல்** – அச்சம் முதலிய காரணம் பற்றிக் கண்ணை இடுக்கிக்கொள்ளுதல்.
**செம்பாகம்** – சரிபாதி; இனிமை; நல்ல பக்குவம்.
**செம்பாட்டுத்தரை, செம்பாட்டுநிலம், செம்பாட்டுமண்** – செம்மண் பூமி.
**செம்பாடு** – செம்மண் பூமி; செம்மண் படிந்தது.
**செம்பாதி** – சரிபாதி.
**செம்பாம்பு** – கேது.
**செம்பால்** – காண்க: **சுரோணிதம்;** சரிபாதி.

**செம்பால்பாய்தல்** – கட்டிளமையால் உடலில் இரத்த ஓட்டம் தெரியும்படியா யிருத்தல்.

**செம்பாலை** – பாலைப் பண்வகை.

**செம்பாளை** – சம்பா நெல்வகை; சிவப்பு நெல் வகை.

**செம்பி** – கருவண்டு; மருதோன்றி; சிவப்பி.

**செம்பித்த்ரோகம்** – பித்தநோய்வகை.

**செம்பியன்** – முதலேழு வள்ளல்களுள் ஒருவன்; சிபியின் வழிவந்த சோழன்.

**செம்பியன் தமிழ்ப்பேரரையன், செம்பியன் தமிழவேள்** – பிற்காலத்துச் சோழர்களால் வீரர்களுக்குக் கொடுக்கப்பட்டுவந்த பட்டங் களுள் ஒன்று.

**செம்பிற்பொருப்பு** – செம்புத்தாதுள்ள பொதிய மலை.

**செம்பிறப்பு** – அறுவகைப் பிறப்பினுள் நான்காவ தாகிய செம்புயிர்க்குரிய பிறப்பு.

**செம்பின்பச்சை** – நாகப்பச்சை.

**செம்பு** – தாமிரம்; பொன்; செம்பினாலான பாத்திரவகை; மூன்றேகால் சேர்கொண்ட ஒரு முகத்தலளவு; தூர்தல்.

**செம்புகம்** – செம்போத்துப்பறவை; நரி.

**செம்புகொட்டி** – செம்புவேலை செய்யும் சாதி யான், கன்னான்.

**செம்புண்** – ஆறும் நிலையில் உள்ள புண்; இரத் தத்தாற் செந்நிறமாயிருக்கும் புண்.

**செம்புண்ணீர்** – இரத்தம்.

**செம்புத்தீக்கல்** – இரும்புஞ் செம்புங் கலந்த உலோகக்கட்டி.

**செம்புப்பற்று** – பொன்னிற் கலந்த செம்பு.

**செம்புமணல்** – செம்பு கலந்த மணல்.

**செம்புமலை** – செம்புத் தாதுகளைத் தன்னிடத்தேகொண்ட மலை.

**செம்புயிர்** – கீழ்மக்கள், விலங்கு இவற்றின் உயிர்.

**செம்புலம்** – செழிப்பான நிலம்; போர்க்களம்; பாலைநிலம்; சுடுகாடு; காண்க: **செம்புமலை.**

**செம்புலியாடு** – செம்மறியாடு.

**செம்புவரை** – காண்க: **செம்பிற்பொருப்பு.**

**செம்புள்** – கருடன்.

**செம்புளிச்சை** – காண்க: **தேவதாரு;** மரவகை.

**செம்புனல்** – இரத்தம்; புதுவெள்ள நீர்; சிவந்த நீர்.

**செம்பூ** – செந்நிறப் பூவுள்ள செடிவகை.

**செம்பூறல்** – செம்பில் உண்டாகும் களிம்பு.

**செம்பை** – காண்க: **சிற்றகத்தி;** ஒரு மரவகை; நெற்பயிரின் நோய்வகை.

**செம்பொடி** – பூந்துகள், மகரந்தப்பொடி; செம் மணல்; நீலக்கல்; சிந்தூரம்.

**செம்பொத்தி** – ஆடைவகை.

**செம்பொருள்** – உண்மைப்பொருள்; நேர் பொருள்; சிறந்த பொருள்; முதற்பொருளான கடவுள்; அறம்.

**செம்பொருளங்கதம்** – வாய் கரவாது சொல்லிய வசைப்பாட்டு.

**செம்பொறி** – அரச முத்திரை.

**செம்பொன்** – சிறந்த பொன்.

**செம்பொன்வரை** – செம்பொன்மயமான மேரு மலை.

**செம்போக்கு** – உயர்பதவிகளில் உயிர் செல்லல்.

**செம்போத்து** – ஒரு பறவைவகை; கள்ளிக் காக்கை.

**செம்போதகர்** – சமணருள் ஒரு பகுதியார்.

**செம்மகள்** – திருமகள்; அனுபவமற்ற பெண்.

**செம்மட்டி** – மரமஞ்சள்; ஒரு சிப்பிவகை.

**செம்மண்** – சிவந்த மண்.

**செம்மண்பட்டை** – நல்ல நாள்களில் திண்ணை முதலியவற்றில் சுண்ணாம்புப் பட்டையை இடையிட்டு அடிக்கும் செம்மண்கோலம்.

**செம்மணத்தி** – செம்புளிச்சை.

**செம்மணி** – மாணிக்கம்; சிவப்புமணி; கெம்புக் கல்; கண்ணின் கருமணியைச் சூழ்ந்திருக்கும் சிவந்த மணி.

**செம்மரம்** – அழிஞ்சில்மரம்; ஒரு மரவகை; காண்க: **மஞ்சாடி; தேவதாரு;** செஞ்சந்தனம்.

**செம்மருதர்** – நல்ல உழவர்கள்.

**செம்மல்** – தலைமை; வலிமை; தருக்கு; பெருமையிற் சிறந்தோன்; இறைவன்; சிவன்; அருகன்; புதல்வன்; சாதிபத்திரி; முல்லைப்பூ வகை; பழம்பூ; வாடாப்பூ; நீர்.

**செம்மலை** – ஆவிரைச்செடி.

**செம்மலைப்பாலை** – பாலைப் பண்வகை.

**செம்மறி** – ஓர் ஆடுவகை.

**செம்மறிப்புருவை** – பெண்ணாடு; செம்மறி யாட்டுக்குட்டி.

**செம்மாத்தல்** – இறுமாந்திருத்தல்; மிகக் களித் தல்; வீறுபெறுதல்.

**செம்மாத்தி** – சக்கிலியச் சாதிப்பெண்.

**செம்மாப்பு** – அகமலர்ச்சி; இறுமாப்பு; வீற்றிருக்கை.

**செம்மாளி** – செம்படவர் தரிக்கும் செருப்புவகை.

**செம்மான்** – சக்கிலியன்.

**செம்மானம்** – செவ்வானம்; மழை பெய்தலைக் குறிக்கும் வானம்.

**செம்மீன்** – காண்க: **அருந்ததி;** செவ்வாய்; திருவாதிரைநாள்; பெருந்தலைத் திமிங்கிலம்.

**செம்மீன்வயிரம்** – செம்மீன் வயிற்றில் காணப் படும் மீனம்பர் என்னும் மருந்துப்பண்டம்.

**செம்முதல்** – மூடுதல்; தூர்த்தல்; பையை நிறைத்து வாயைத் தைத்தல்; புண்ணைக் கீறி விடுதல்; புடைத்தல்; கலங்குதல்; கண் கலங்கி வீங்குதல்; நிறம் முதலியன பரவுதல்.

**செம்முல்லை** – ஒரு முல்லைவகை, தளவம்.

**செம்மேவல்** – இணங்குகை.

**செம்மை** – செவ்வை; சிவப்பு; நேர்மை; மனக் கோட்டமின்மை; ஒற்றுமை; பெருமை; தூய்மை; அழகு; கேது; கந்தகம்.

**செம்மைப்படுத்துதல், செம்மைபண்ணுதல்** – ஒழுங்குபடுத்துதல்; தூய்மைசெய்தல்; முடித்தல்; அலங்கரித்தல்.

**செம்மையாதல்** – நேராதல்; சீராதல்; நிறைதல்.

**செம்மொழி** – நற்சொல்; தொகைமொழி அல்லாத ஒரு மொழி.

**செம்மொழிச்சிலேடை** – பிரிவின்றியே பல பொருள் தரும் சொற்றொடர்.

**செமித்தல்** – செரித்தல்; பிறத்தல்; பொறுத்தல்.

**செய்** – வயல்; ஒன்றே முக்கால் ஏக்கர்கொண்ட நன்செய் நிலவளவு; 100 சிறுகுழிகொண்ட நிலவளவு.

**செய்க்கடன்** – நிலவரி.

**செய்கடன்** – கடமைச் செயல்; பிதிரர் கடன்; நேர்த்திக்கடன்.

**செய்கரை** – செயற்கைக் கரை; வரப்பு; பாலம்.

**செய்காரியம்** – செய்யப்பட்ட வேலை; சமாளிப்பு.

**செய்கால்** – பயிரிடப்படும் நிலம்; சோலை; நற்காலம்; பயிர்செய்தற்கு வேண்டும் உழைப்பு.

**செய்கால்சாகுபடி** – நன்செய் நிலத்தில் புன்செய்ப் பயிர்செய்கை.

**செய்காற்கரம்பு** – தரிசாக விடப்பட்ட நிலம்.

**செய்குறை** – பிழை; அரைகுறை வேலையாயிருப்பது.

**செய்குன்றம், செய்குன்று** – செல்வமக்கள் விளையாடற் பொருட்டு அமைக்கப்படும் மலை.

**செய்கூலி** – செய்த வேலைக்குப் பெறும் கூலி.

**செய்கை** – தொழில்; செயல்; மன உடல் செய்கைகள்; வேலைப்பாடு; ஒழுக்கம்; உடன்படிக்கை; செயற்கைப் பொருள்; காண்க: **செய்கைச்சூத்திரம்**; பில்லிசூனியம்; வேளாண்மை; அரசாங்க அனுமதிபெற்றுப் புதிதாகப் பண்படுத்திய நிலம்.

**செய்கைக்காணி** – பற்றடைப்புநிலம்; சாசனக் காணி.

**செய்கைக்காரன்** – குடித்தனக்காரன்; நல்ல உழவன்; மாந்திரிகன்.

**செய்கைச்சரக்கு** – வைப்புச்சரக்கு; செயற்கைப் பொருள்.

**செய்கைச் சூத்திரம்** – புணர்ச்சிவிதி முடிபுவிதி முதலியவற்றை முடித்துக்காட்டும் விதிச் சூத்திரம்.

**செய்கைச்சூழ்ச்சி** – தந்திரச்செயல்.

**செய்கைத்தளை** – பண்படுத்தப்பட்ட நிலம்; பட்டயக்காணி.

**செய்கைத்தாழ்ச்சி** – மேற்பார்வைக் குறைவு; தொழிற்குறைவு; வயலின் செம்மைக் குறை.

**செய்கையொப்பம்** – பட்டா.

**செய்சுனை** – அகழ்ந்து உண்டாக்கப்பட்ட நீர்நிலை.

**செய்தல்** – இயற்றுதல்; உண்டாக்கல்; சம்பாதித்தல்; ஒத்தல்.

**செய்தி** – சமாசாரம்; செயல்; தொழில்; ஒழுக்கம்; செய்நன்றி; தன்மை.

**செய்திகொல்லுதல்** – காண்க: **செய்நன்றி கொல்லுதல்.**

**செய்திறம்** – மருத யாழ்த்திறத்துள் ஒன்று.

**செய்தொழில்** – செய்கை.

**செய்நன்றி** – நன்றியறிவு; உதவி.

**செய்நன்றிக்கேடு, செய்நன்றிகொல்லுதல்** – பிறன் செய்த உதவியை மறத்தல்.

**செய்பவன்** – கருத்தா.

**செய்பாகம்** – மருந்துசெய்யும் முறை; ஒழுங்கு முறை; கருத்து முற்றுதற்கு ஏற்ற முறை.

**செய்பாவை** – திருமகள்.

**செய்பொருள்** – செயப்படுபொருள்; அறம், பொருள், இன்பம், வீடு என நால்வகைப்பட்ட உறுதிப்பொருள்.

**செய்ய** – சிவந்த; செப்பமான.

**செய்யல்** – ஒழுக்கம்; காவல்; சேறு; செய்தொழில்; செய்தல்.

**செய்யவள்** – காண்க: **செய்யாள்.**

**செய்யவன்** – சூரியன்; செவ்வாய்; சிவந்த மேனியன்.

**செய்யன்** – சிவந்தவன்; நேர்மையானவன்; பாம்பு வகை.

**செய்யாக்கோலம்** – இயற்கையழகு.

**செய்யாமொழி** – செய்யப்படாத மொழியாகிய வேதம்.

**செய்யார்** – பகைவர்.

**செய்யாள்** – செந்நிறமுடைய திருமகள்; தாயின் தங்கையான சிறிய தாயார்.

**செய்யான்** – சிவந்தவன்; ஒரு பூரான்வகை.

**செய்யுட்கலம்பகம்** – பலவகைப் பாடற்றிரட்டு.

**செய்யுட்கிழமை** – ஆறாம் வேற்றுமைப் பொருள்களுள் இன்னாரது பாட்டு என ஆக்கியோனுக்கும் அவன் பாட்டுக்கும் உள்ள உரிமையாகிய பொருள்.

**செய்யுட்கோவை** – காண்க: **செய்யுட்கலம்பகம்.**

**செய்யுட்சொல்** – செய்யுளில்மட்டும் வழங்கும் சொல்.

**செய்யுட்பொருத்தம்** – மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உண்டி, வருணம், நாள், கதி, கணம் என்று பத்து வகையாய்க் காப்பியத்தின் முதல் செய்யுள் முதன்மொழியில் பார்த்தற் குரிய பொருத்தம்.

**செய்யுட்போலி** – உரைநடைவகையுள் ஒன்று.

**செய்யுண்முடிபு** – செய்யுளில் மட்டும் வழங்குஞ் சொல்வழக்கு.

**செய்யுணடை** – செய்யுளில் வழங்கும் நடை.

**செய்யுள்** – பாட்டு; காவியம்; உரை; விளைநிலம்; செய்கை.

**செய்யுள்வழக்கு** – செய்யுளில் வழங்குஞ் சொல்.

**செய்யுள்வழு** – யாப்பிலக்கணத்தோடு பொருந் தாத இயல்பினையுடைய குற்றம்.

**செய்யுள்விகாரம்** – வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல், விரித்தல், தொகுத்தல், முதற்குறை, இடைக்குறை, கடைக்குறை, எனச் செய்யுளில் சொற்கள் பெறும் ஒன்பது வகை மாறுபாடு.

**செய்யுளுறுப்பு** – எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்னும் செய்யுளின் உறுப்புகள்.

**செய்யோள்** – திருமகள்; சிவந்த நிறத்தினள்.

**செய்யோன்** – செந்நிறமுடையோன்; செவ்வாய்; அருகன்; சூரியன்.

**செய்வது** – செய்யத்தக்கது; கருத்தா.

**செய்வினை** – வினைமுதல் வினை; முற்பிறப்பில் செய்த கருமம்; பில்லிசூனியம்; செய்யுந் தொழில்.

**செய்வினைமடிதல்** – உரிய தொழிலிற் சோம்பு தல்.

**செய்சேதி** – உப்பு.

**செய** – அறுபதாண்டுக்கணக்கில் இருபத் தெட்டாம் ஆண்டு; வெற்றிக் குறிப்பான சொல்.

**செயத்தம்பம்** – வெற்றித்தூண்.

**செயநீர்** – சுண்ணாம்பும் நவச்சாரமும் கலந்த நீர்.

**செயநீர்க்கருத்தன்** – நவச்சாரம்.

**செயப்படுபொருள்** – வினைமுதலது தொழிலின் பயனை அடைவது; நூலாசிரியன் கூறப்புகும் நூற்பொருள்.

**செயப்படுபொருள் குன்றாதவினை** – செயப்படு பொருளைப் பெறவல்ல வினைச்சொல்.

**செயப்படுபொருள் குன்றியவினை** – செயப்படு பொருளைப் பெறமாட்டாத வினைச்சொல்.

**செயப்பாட்டுவினை** – படுவிகுதி புணர்ந்த முதனிலைகளையுடையதாய்ச் செயப்படு பொருளை எழுவாயாகக்கொண்ட வினை; பழவினை.

**செயபரம்** – காண்க: மரமஞ்சள்.

**செயம்** – வெற்றி; பிறந்த நாளிலிருந்து 360ஆம் நாளாகிய நன்னாள்.

**செயர்** – வீட்டுவரி, சந்தைவரி முதலிய பலவகை வருவாய்.

**செயல்** – தொழில்; பொருள் தேடுகை; இழைப்பு வேலை; வேலைப்பாடு; காவல்; ஒழுக்கம்; வலிமை; செல்வாக்கு; செய்யல்; நிலைமை; சேறு.

**செயலழிதல்** – வலியழிதல்.

**செயலறவு** – வலியின்மை.

**செயலறுதல்** – வலியழிதல்; அழகு அழிதல்; ஒழுக்கம் கெடுதல்.

**செயலை** – அசோகமரம்.

**செயற்கை** – இயற்கைக்கு மாறானது; காண்க: **செயற்கைப்பொருள்**; தொழில்; தன்மை.

**செயற்கைச்சாக்காடு** – பொய்ச் சாவு.

**செயற்கைப்பொருள்** – காரணத்தால் தன்மை திரிந்த பொருள்; உண்டாக்கப்பட்ட பொருள்.

**செயற்கையழகு** – புனைந்துண்டாகிய எழில்.

**செயற்கையளபெடை** – செய்யுளின் ஓசை நிரம்பப் புலவர் செய்துகொள்ளும் அளபெடை.

**செயற்கைவாசனை** – உண்டாக்கப்பட்ட மணம்; சேர்க்கைக் குணம்.

**செயித்தல்** – வெற்றியடைதல்; செயல் கைகூடு தல்.

**செயிர்** – குற்றம்; கோபம்; போர்; வருத்துகை; நோய்.

**செயிர்த்தல்** – வெகுளுதல்; வருத்துதல்; குற்றஞ் செய்தல்.

**செயிர்ப்பு** – குற்றம்; சினம்.

**செயிரியர்** – பாணர்.

**செரித்தல்** – சீரணமாதல்; நிலையாகப் பெறுதல்.

**செரிப்பித்தல்** – சீரணிக்கச்செய்தல்; தொல்லையை நீக்குதல்; நிலைநிறுத்துதல்; நிலையாகப் பெறுதல்.

**செரு** – போர்; ஊடல்.

**செருக்கடுத்தல்** – அகந்தைகொள்ளுதல்.

**செருக்கம்(ல்)** – கள்முதலியன உண்டலால் வரும் மயக்கம்.

**செருக்களம்** – போர்க்களம்.

**செருக்களவஞ்சி** – போர்க்களத்தைச் சிறப்பித்து அகவற்பாவாற் பாடப்படும் நூல்வகை.

**செருக்கு** – அகந்தை; மகிழ்ச்சி; ஆண்மை; மயக்கம்; செல்வம்; செல்லம்.

**செருக்குதல்** – ஆணவங்கொள்ளுதல்; பெருமித முறுதல்; களித்தல்; மிகுத்தல்; நன்கு நுகர்தல்; மதர்த்தல்; பாக்கு முதலியன தொண்டையில் அடைத்துக்கொள்ளுதல்; மயங்குதல்.

**செருக்கொடுத்தல்** – எதிர்த்துப் போர்செய்தல்.

**செருகுகொண்டை** – முடிக்குங் கொண்டைவகை.

**செருகுதல்** – இடைநுழைத்தல்; அடைசுதல்; சிக்குதல்; கண் முதலியன செருகுதல்; செரிக்காமல் உணவு வயிற்றில் சிக்கிக்கொள்ளுதல்.

**செருகுபூ** – இடையிடையே வைத்துத் தொடுக்கப் பட்ட பூ.

**செருத்தணி** – திருத்தணிகை.

**செருத்தல்** – மாட்டுமடி.

**செருத்தி** – வெற்றிக்கொடி.

**செருத்தொழிலோர்** – படைவீரர்.

**செருந்தி** – வாட்கோரைப்புல்; சிலந்திமரம்; மணித்தக்காளிச்செடி; குறிஞ்சி யாழ்த்திற வகை.

**செருந்து** – பூவிதழ்; சிலந்திமரம்.

**செருநர்** – படைவீரர்; பகைவர்.

**செருப்படி** – ஒரு படர்கொடிவகை.

**செருப்படை** – ஒரு படர்கொடிவகை; சிறந்த போர்வீரர்களைக்கொண்ட சேனை.

**செருப்பு** – மிதியடி; பூழிநாட்டில் உள்ளவொரு மலை.

**செருப்புக்கடி** – செருப்பு அழுத்துதலால் உண்டாகும் புண்.

**செருப்புத்தின்னி** – தோற்செருப்பைத் தின்னும் நாய்.

**செருமகள்** – போர்க்குரிய பெண்தெய்வமாகிய கொற்றவை.

**செருமல்** – தொண்டையைத் தூய்மை செய்யக் கனைத்தல்.

**செருமுதல்** – நிரம்புதல்; நெருக்கமாயிருத்தல்; பதிதல்; விக்குதல்; அடைத்தல்; கனைத்தல்.

**செருமுனை** – போர்க்களம்; போர்புரியும் படை.

**செருவஞ்செய்தல்** – மாறுபடுதல்.

**செருவிடைவீழ்தல்** – அகழினையும் காவற் காட்டையும் காத்துப் பட்ட வீரரது வெற்றியைப் புகழும் புறத்துறை.

**செருவிளை** – வெள்ளைக்காக்கணம்.

**செருவுறுதல்** – ஊடுதல்.

**செல்** – போகை; வாங்கிய கடனுக்குச் செலுத்திய தொகை; கடன்; கடன் செலுத்தியதற்குப் பத்திரமெழுதுங் குறிப்பு; கையொப்பம்; சென்ற காலவளவு; மேகம்; வானம்; குடி; வேல்; கறையான்.

**செல்கதி** – புகல்; உய்வு.

**செல்காலம்** – செல்வாக்குள்ள காலம்; இறந்த காலம்.

**செல்கை** – காண்க: செல்வாக்கு.

**செல்சார், செல்சார்வு** – பற்றுக்கோடு.

**செல்சுடர்** – மறையும் சூரியன்.

**செல்ல** – அகல; சிறிது காலங்கழித்து; முடிய.

**செல்லக்கட்டுதல்** – திட்டமாய் முடித்தல்; வசப்படுத்துதல்; கடன் தீர்த்தல்.

**செல்லங்கொஞ்சுதல்** – குழந்தை, பெண்டிர் முதலியவருடன் கொஞ்சிப்பேசுதல்.

**செல்லங்கொடுத்தல்** – அன்புமேலீட்டால் குழந்தைகட்கு அதிக இடங்கொடுத்தல்.

**செல்லச்சிரிப்பு** – புன்சிரிப்பு.

**செல்லடித்தல்** – கறையானால் தின்னப்படுதல்; கடன் முதலியவற்றிற்குத் தொகை செலுத்திப் பத்திரத்தில் பதிதல்.

**செல்லத்தனம்** – காண்க: செல்லம்.

**செல்லநடை** – குழந்தை முதலியோரின் தளர் நடை; மந்தநடை.

**செல்லப்பிள்ளை** – அருமைக்குழந்தை; சுகவாசி.

**செல்லப்பெண்** – அருமைப்பெண்.

**செல்லப்பேச்சு** – மழலைச்சொல்; மகளிரின் கொஞ்சற்பேச்சு.

**செல்லம்** – செல்வம்; சொந்தக் கருவூலம்; வெற்றிலைபாக்கு வைக்கும் பெட்டி; விநோதம்; இளக்காரம்; கொஞ்சற்பேச்சு.

**செல்லரித்தல்** – கறையானால் தின்னப்படுதல்.

**செல்லல்** – துன்பம்; வெறுப்பு; ஒரு மீன்வகை.

**செல்லவைத்தல்** – செல்லாத நாணயத்தைச் செலாவணியாக்குதல்.

**செல்லன்** – அருமைக் குழந்தை; சுகவாசி; செல்வமுள்ளவன்.

**செல்லாக்காசு** – செலாவணியாகாத பணம்; நாணயம் செல்வாக்குகளை இழந்தவன்; ஒரு மீன்வகை; மருந்துப்பச்சிலைவகை.

**செல்லாக்காலம்** – செல்வாக்கு நீங்கின காலம்; தள்ளாத கிழப்பருவம்.

**செல்லாநெறி** – செல்லுதற்கு அரிய வழியாகிய வான்.

**செல்லாமை** – பிரிந்துபோகாமை; வறுமை; வலியின்மை; செய்யவேண்டியவை; ஆற்றாமை.

**செல்லாவாழ்க்கை** – வறுமைவாழ்வு.

**செல்லாவிடம்** – வறுமைக்காலம்; பலிக்காத இடம்.

**செல்லாறு** – கைக்கொள்ளும் முறை.

**செல்லி** – அருமைப்பெண்; ஓர் ஊர்த்தேவதை.

**செல்லிடம்** – பொருளுள்ள காலம்; பலிக்குமிடம்; போகுமிடம்.

**செல்லியம்** – கோழி.

**செல்லு** – காண்க: செல்.

**செல்லுச்சீட்டு** – ரசீது.

**செல்லுஞ்சீட்டு** – உண்மையான கையெழுத்து; செலாவணியான பத்திரம் முதலியன; ரசீது.

**செல்லுஞ்சொல்** – நாடெங்கும் செல்லும் மதிப்பு; பிறர்க்கு ஏற்கக்கூறும் சொல்.

**செல்லுதல்** – நிகழ்தல்; வீழ்தல்; ஆதல்; பரவுதல்; பயனுறுதல்; நிலைத்திருத்தல்; செலாவணியாதல்; வேண்டியதாதல்; பொருந்துதல்; விரும்பி ஏற்றுக்கொள்ளப்படுதல்; அடைதற்குரியதாதல்; கழிதல்; தணிதல்; கெடுதல்; இறத்தல்; கிட்டுதல்; அடைதல்; போதல்.

**செல்லுபடி** – செல்லான தொகை.

**செல்லுலகு** – மக்கள் செல்லுதற்குரிய உலகமாகிய மறுமை.

**செல்வக்களிப்பு** – செல்வத்தால் உண்டாகும் மதர்ப்பு.

**செல்வக்கிடப்பு** – செல்வ மிகுதி.

**செல்வச்சிரஞ்சீவி** – வயதில் குறைந்த ஆண்பாலரைக் குறித்துப் பெரியோர் வாழ்த்துத் தோன்ற வழங்கும் சொல்.

**செல்வப்பொருள்** – கல்விப்பொருளின் வேறான செல்வமாகிய பொருள்.

**செல்வம்** – கல்வி; அழகு; செழிப்பு; நுகர்ச்சி; துறக்கம்; ஐசுவரியம்; மகளிரின் கொஞ்சற்பேச்சு.

**செல்வழி** – நேர்வழி.

**செல்வன்** – செல்வமுள்ளவன்; இறைவன்; புத்தன்; மகன்.

**செல்வாக்கு** – நாடெங்கும் செல்லும் மதிப்பு; புகழ்.

**செல்வி** – திருமகள்; தலைவி; மகள்; செல்வமுடையவள்.

**செல்விக்கை** – செல்வம்; செட்டு.

**செல்விநாதன்** – திருமகள் கணவனாகிய திருமால்.

**செல்வு** – காண்க: **செல்வம்.**

**செல்வுழி** – செல்லுதற்குரிய கதி.

**செல்வைத்தல்** – கடன் முதலியவற்றிற்குத் தொகை செலுத்திப் பத்திரத்தில் பதிதல்.

**செலக்குரு** – நவச்சாரம்.

**செலக்கூபம்** – நண்டு.

**செலக்கூர்மை** – காண்க: **செலக்குரு.**

**செலகம்** – காண்க: **மல்லிகை.**

**செலசரம்** – நீர்வாழ்வன.

**செலதம்** – கோரைக்கிழங்கு.

**செலம்** – நீர்; இலாமிச்சைப்புல்.

**செலவடை** – செலவு.

**செலவயர்தல்** – செல்ல விரும்புதல்.

**செலவழித்தல்** – செலவிடுதல்; கொடுத்துவிடுதல்; பொருளையழித்தல்.

**செலவழிதல்** – பொருள் முதலியன செலவாய்ப் போதல்; சாதல்.

**செலவழிவு** – செலவழிகை; இலாபநட்டம்.

**செலவழுங்குதல்** – தலைவன் தலைவியைவிட்டுப் பிரிதலைத் தவிர்தல்.

**செலவாதல்** – காண்க: **செலவழித்தல்.**

**செலவாளி** – தாராளமாய்ச் செலவிடுபவன்; அளவுக்குமிஞ்சிச் செலவழிப்போன்; குடும்பச் செலவு மிக்கவன்.

**செலவிடுதல்** – காண்க: **செலவழித்தல்**; அனுப்புதல்.

**செலவு** – பணவழிவு; போக்கு; ஓட்டம்; நடை; குதிரைநடை; பயணம்; படையெடுப்பு; ஐந்தொழில்களுள் கொள்ளும் நிலம் அறிந்து கொள்ளுகை; நீட்சியளவு; ஆலாபனம்; வழி; ஒழுக்கம்; தேவை; மொய்; ஆணை; சிறந்த காலம்; பிரிவு; சாவு; காலக்கழிவு; எலிவளை முதலியன; வீட்டுக்கு வேண்டிய உணவுப் பண்டம்.

**செலவுகாரன்** – காண்க: **செலவாளி.**

**செலவுகொடுத்தல்** – நட்டமிறுத்தல்; ஆணையளித்தல்.

**செலவுகொல்லுதல்** – வாங்கிய தொகையிற் செலவிட்டதற்குக் கணக்கு ஒப்புவித்தல்; செலவிடுதற்கு விவரம் சொல்லுதல்.

**செலவுபெயர்தல்** – போதலைத் தவிர்தல்.

**செலவுவாங்குதல்** – கறிப்பண்டம் வாங்குதல்; விடைபெறுதல்.

**செலாம(வ)ணி** – புழக்கம்; செல்லக்கூடியது; செல்வாக்கு.

**செலியம்** – இலாமிச்சைப்புல்.

**செலு** – மீன்செதிள்; நறுவிலிமரம்; மெலிந்த.

**செலுத்துதல்** – செல்லச்செய்தல்; ஓட்டுதல்; இறுத்தல்; நடத்துதல்; எய்தல்; ஆணை நடத்துதல்.

**செலுந்தி, செலுந்தில்** – மெலிந்தது.

**செலுப்பு** – சிறுதுண்டு; பாக்குச்சீவல்; நீர்க் கோப்பு.

**செலுவன்** – மெலிந்தவன்.

**செவ்வகத்தி** – ஓர் அகத்திமரவகை.

**செவ்வட்டை** – ஒருவகை அட்டைப்பூச்சி; சருக்கரைவள்ளிநோய்.

**செவ்வண்** – செங்குத்து.

**செவ்வணம்** – செவ்வையாக.

**செவ்வணி** – தலைமகனுக்குத் தலைவியின் பூப்பு உணர்த்தற் குறியாகத் தோழி அணிந்து கொள்ளும் செங்கோலம்.

**செவ்வந்தி** – ஒரு பூச்செடிவகை.

**செவ்வரக்கு** – சாதிலிங்கம்.

**செவ்வரத்தம், செவ்வரத்தை** – செம்பரத்தைச்செடி.

**செவ்வரி** – கண்ணிலுள்ள சிவந்த கோடு; நாரை வகை.

**செவ்வல்** – செம்மண்நிலம்; செந்நிறம்.

**செவ்வல்நார்** – காண்க: **செவ்வாம்பல்.**

**செவ்வல்லி** – செவ்வள்ளிக்கொடி; செந்நிறமான அல்லிவகை; காண்க: **மஞ்சிட்டி.**

**செவ்வலரி** – ஓர் அலரிவகை.

**செவ்வழி** – நன்னெறி; முல்லைப்பண்.

**செவ்வழிப்பாலை** – பாலை யாழ்த்திறத்துள் ஒன்று.

**செவ்வழிபாடு** – முற்றும் அடங்கி ஒழுகுகை.

**செவ்வழியாழ்** – முல்லைப்பண்.

**செவ்வள்ளி** – ஒரு வள்ளிக்கொடிவகை.

**செவ்வன், செவ்வனம்** – செவ்வகையாக.

**செவ்வனிறை** – நேர்விடை.

**செவ்வாப்பு, செவ்வாப்புக்கட்டி** – காமாலைவகை; குழந்தைகளுக்குத் தலையிலுண்டாகும் சிவப்புக் கட்டி.

**செவ்வாம்பல்** – செந்நிறமான அல்லிவகை.

**செவ்வாய்** – ஒன்பது கோள்களுள் ஒன்று; செவ்வாய்க்கிழமை; பிடாரிகோயில் திருவிழா.

**செவ்வாய்நோன்பு** – செவ்வாய்ப் பிள்ளையார், ஆண்டுக்கு இருமுறை செவ்வாய்க்கிழமை நள்ளிரவில் ஆடவரும் ஆண்குழந்தைகளும் அறியாவகை வேளாள மகளிரால் மிக மறைவாகக் கடைப்பிடிக்கப்படும் விரதம்.

**செவ்வாரம்** – நிலக்கிழானும் பயிரிடுவோனும் பிரித்துக்கொள்ளும் சரிவாரம்.

**செவ்வாழை** – ஒரு வாழைவகை.

**செவ்வானம்** – செக்கர்வானம்.

**செவ்வி** – காலம்; ஏற்ற சமயம்; காட்சி; அரும்பு; பக்குவம்; புதுமை; அழகு; சுவை; மணம்; தன்மை; தகுதி; சித்திரைநாள்.

**செவ்விதின்** – செம்மையாக.

**செவ்விது** – நேரானது; நன்று.

**செவ்விநிறம்** – மாந்தளிர்க்கல்.

**செவ்விபார்த்தல்** – ஒருவன் தக்க சமயத்தை எதிர்பார்த்து நிற்றல்.

**செவ்விய** – நேர்மையான.

**செவ்வியம்** – மிளகுகொடி.

**செவ்விய(யா,யோ)ன்** – நேர்மையுடையவன்.

**செவ்விளகி** – கழுதைவண்டு.

**செவ்விளநீர்** – செந்தெங்கின் இளங்காய்.

**செவ்விளிம்பன்** – சிவக்கத் தோய்ந்த விளிம்பினை உடைய ஆடை.

**செவ்விளை** – காண்க: **செவ்விளநீர்.**

**செவ்விறகி** – காண்க: **செவ்விளகி.**

**செவ்வினையாளர்** – நற்செய்கை உடையோர்.

**செவ்வு** – செம்மை; நேர்மை; திக்கு; முத்துகளின் அளவுவகை.

**செவ்வெண்** – பெயர்வினைகளுள் எண்ணிடைச் சொல் தொக்குவருந் தொடர்.

**செவ்வெண்ணெய்** – பிறந்த குழந்தையின் வாயில் தடவும் தேன்கூட்டிய ஆமணக்கெண்ணெய்.

**செவ்வே** – நன்றாக; நேரே; மேல்முகமாக.

**செவ்வேள்** – முருகக்கடவுள்.

**செவ்வை** – நேர்மை; மிகுதி; வழி முதலியவற்றின் செப்பம்; சரியான நிலை.

**செவ்வைக்கேடு** – ஒழுங்கின்மை.

**செவ்வைப்பூசல்** – அறப்போர்.

**செவத்தல்** – காண்க: **சிவத்தல்.**

**செவந்தரை** – காண்க: **கோலாட்டம்.**

**செவல்** – செந்நிறமான விலங்கு; செம்மண் நிலம்.

**செவலை** – செந்நிறமுள்ள விலங்கு.

**செவி** – காது; கேட்கை; பாத்திரத்தின் காது வளையம்; வீணையின் முறுக்காணி; ஓரங்குல மழை.

**செவிக்குத்து** – காதுநோவு.

**செவிக்கெட்டுதல், செவிக்கேறுதல்** – கேள்விப்படுதல்; கேட்டற்கு இனிதாயிருத்தல்.

**செவிகொடுத்தல்** – காதுகொடுத்துக் கேட்டல்.

**செவிகொள்(ளு)தல்** – கேட்டல்.

**செவிச்செல்வம்** – கேள்வியாகிய செல்வம்.

**செவிச்சொல்** – காதில் இரகசியமாகக் கூறுதல்.

**செவிசாய்த்தல்** – சொல்வதைக் கேட்கச் செவி தாழ்த்தல்.

**செவிட்டுதல்** – கொல்லுதல்; ஒருபுறங் கண் சாய்த்துப் பார்த்தல்.

**செவிடன்** – காது கேளாதவன்.

**செவிடி** – காது கேளாதவள்.

**செவிடு** – காது கேளாமை; கன்னம்; காது கேளாதவர்; ஆழாக்கில் ஐந்திலொன்றாகிய அளவு; காதணிவகை.

**செவிடுசெல்லுதல், செவிடுபடுதல்** – ஓசை மிகுதியால் காது கேளாது போதல்; காண்க: **செவிடெறிதல்.**

**செவிடெறிதல்** – சத்தத்தால் அலைவுறுதல்.

**செவித்துறண்டி** – குறும்பிவாங்கி.

**செவிதாழ்த்தல்** – காண்க: **செவிகொடுத்தல்.**

**செவிதின்னுதல்** – இரகசியம் பேசுதல்.

**செவிநிறக்கல்** – காண்க: **மாந்தளிர்க்கல்.**

**செவிப்படுத்துதல்** – காதில் மெல்ல அறிவித்தல்.

**செவிப்படுதல்** – கேட்கப்படுதல்.

**செவிப்பண்** – நீர்க்கரகத்தை அடக்கிவைக்க உதவும் பிரம்புக்கூடை.

**செவிப்பறையறைதல்** – மந்திரம் முதலியவற்றைப் பிறர் செவியிற் படாதவாறு இரகசியமாகக் கூறுதல்.

**செவிப்பாடு** – கேள்வியால் வரும் இன்பம்; காதில் புகுகை.

**செவிப்பாம்பு** – காண்க: **செவிப்பூரான்**; மாட்டுக் குற்றவகை.
**செவிப்புலன்** – காதால் உணரும் ஓசையுணர்வு.
**செவிப்புற்று** – காதுநோய்வகை.
**செவிப்பூரான்** – காதுக்குள் சென்று துன்புறுத்தும் பூரான்வகை.
**செவிபடுவாதம்** – காது கேளாமற் செய்யும் நோய்வகை.
**செவிமடல்** – காதின் வெளியுறுப்பு; காண்க: **செவிமலர்.**
**செவிமடுத்தல்** – கேட்டல்.
**செவிமந்தம்** – செவிடு.
**செவிமலர்** – ஒரு காதணிவகை; மகளிர் காதணிவகை; தெய்வத் திருமேனிகளிற் சாத்தும் காதோலை; காதுநோய் நீங்கியமைக்காகச் செலுத்தும் செவியுருவம்; உட்செவி.
**செவிமறை** – செவியில் மறுவுள்ள எருது.
**செவிமாட்டுதல்** – பிறர் காதில் வலிய நுழைத்தல்.
**செவியடி** – காதின் அடிப்பகுதி; களத்தில் கதிரடித்தவுடன் நெற்பட்டறை வைத்திருந்த இடம்.
**செவியடித்தல்** – காதாட்டுதல்.
**செவியம்** – காண்க: **செவ்வியம்.**
**செவியறிவு** – காண்க: **செவியறிவுறூஉ.**
**செவியறிவுறுத்தல்** – நல்லறிவு புகட்டுதல்.
**செவியறிவுறூஉ** – அரசர் முதலியோர்க்குச் செவிக்கண் நிற்கக் கூறும் நீதி; அரசர்க்கு நல்லறிவு புகட்டுதலைக் கூறும் புறத்துறை; ஒரு நூல்வகை.
**செவியறை** – காண்க: **காதறை.**
**செவியன்** – முயல்.
**செவியான்** – காண்க: **செவிப்பூரான்.**
**செவியிலி** – காண்க: **செவியறை.**
**செவியுறை** – காதுக்கிடும் மருந்து; செவிக்கண் நிற்கக் கூறும் நீதி.
**செவியுறையங்கதம்** – அரசர்க்கு உறுதி கூறும் நோக்குடன் அறிஞர் கூறும் வசைச்செய்யுள்.
**செவியேறு** – கேள்வி.
**செவிரம்** – ஒரு பாசிவகை.
**செவிலி** – வளர்ப்புத்தாய்; முன்பிறந்தவள்.
**செவிலித்தாய்** – வளர்ப்புத்தாய்.
**செவிள்** – காதின் மேற்புறத்து உறுப்பு.
**செவுள்** – மீனின் மூச்சு உறுப்பு.
**செவேரெனல்** – சிவந்திருத்தற் குறிப்பு.
**செவை** – காண்க: **செவ்வை.**
**செழிச்சி** – செழிப்பு; வளம்.
**செழித்த கல்** – சுக்கான் கல்.
**செழித்தல்** – தழைத்தல்; வளம் பெருகுதல்; சிறப்பு நிலையில் இருத்தல்; அளவுக்கு மிஞ்சியிருத்தல்; முகமலர்ச்சியுறுதல்.
**செழிதல்** – வளர்தல்.
**செழிப்பம், செழிப்பு** – வளம்; நிறைவு; பொலிவு.
**செழியன்** – பாண்டியன்.
**செழுகம்** – அட்டை.
**செழுகை** – சாணளப்பான் புழு.
**செழுசெழுத்தல்** – மிகு வளப்பமாதல்; தழைத்தல்.
**செழுஞ்சோறு** – கொழுத்த உணவு.
**செழுத்து** – வளம்.
**செழுந்து** – நிறைவு.
**செழுப்பம், செழும்பல்** – வளம்; நிறைவு.
**செழுமறை** – நெருப்பு.
**செழுமை** – செழிப்பு; மாட்சிமை; தழைவு; அழகு.
**செழுவிதின்** – செம்மையாக.
**செள்ளு** – தெள்ளுப்பூச்சி; உண்ணிவகை.
**செளிம்பன்** – குணக்கேடன்.
**செளிம்பு** – களிம்பு; பிடிவாதம்.
**செளிம்பூறல்** – களிம்புப் பற்று.
**செளுகம், செளுகை** – அட்டை.
**செளைப்பு** – சோர்வு.
**செற்றம்** – மனவயிரம்; நெடுங்காலம் நிகழ்வதாகிய பகைமை; வெறுப்பு; தணியாக் கோபம்; ஊடற்சினம்.
**செற்றல்** – கொல்லுதல்; அழித்தல்; கேடு; செறிவு; ஈமுட்டை.
**செற்றலர், செற்றார்** – பகைவர்.
**செற்று** – நெருக்கம்.
**செற்றுதல்** – கொல்லுதல்; செதுக்குதல்; பதித்தல்; அமுந்துதல்; செறிதல்; அழித்தல்.
**செற்றை** – சிறு தூறு; கூட்டம்; நன்னீர்மீன்.
**செற்றோர்** – பகைவர்.
**செறல்** – கோபம்; கொல்லுகை.
**செறி** – நெருக்கம்.
**செறிஞர்** – உறவினர்.
**செறித்தல்** – சேர்த்தல்; இறுக்குதல்; அடைதல்; அடக்குதல்; வைத்தல்; திணித்தல்; பதித்தல்; அணியாக இடுதல்; அடைவித்தல்; ஏற்காத பொருளைச் செய்யுளிற் புகவிட்டு உரை கூறுதல்; கொல்லுதல்; அழித்தல்; மூழ்குதல்; திரட்டுதல்; நெரித்தல்; மூடுதல்.
**செறிதல்** – நெருங்குதல்; திண்ணிதாதல்; இறுகுதல்; அடங்குதல்; பொருந்துதல்; எல்லை கடவாதிருத்தல்; மறைதல்; மிகுதல்; திரளுதல்; கலத்தல்; குளித்தல்; புணர்தல்.

**செறிப்பு** – நெருக்கம்; அடக்கம்; சேர்த்தல்; செறிவு; பாத்தி; நீர்நிலை; உப்பங்கழி; உழு நிலம்; பகை; தலைவனைச் சந்திப்பதற்கு வாய்ப்பின்றிப் பெற்றோர் தலைவியை வீட்டினுள் இருத்துகை.

**செறிமை** – நெருக்கம்.

**செறிவன்** – அருகன்; சலியாதவன்.

**செறிவு** – நெருக்கம்; மிகுதி; கூட்டம்; உறவு; பொந்து; கலப்பு; உள்ளீடு; தன்னடக்கம்; எல்லைகடவா நிலைமை; நெகிழிசையின்மையாகிய செய்யுட்குணம்.

**செறு** – வயல்; குளம்; பாத்தி; கோபம்.

**செறுத்தல்** – அடக்குதல்; தடுத்தல்; நெருக்குதல்; உள்ளடங்கச் செய்தல், நீர் முதலியன அடைத்தல்; தூர்த்தல்; சினத்தல்; வெறுத்தல், வெல்லுதல்; கொல்லுதல்.

**செறுதல்** – அடக்குதல், தடுத்தல், சினத்தல், வெறுத்தல், வருத்துதல், வெல்லுதல், அழித்தல்; வேறுபடுதல்.

**செறுதொழில்** – தீச்செயல்.

**செறுநர்** – பகைவர்.

**செறுப்பு** – கட்டுப்பாடு; நெருக்கம்; கொலை.

**செறும்பு** – சிறாய்; பனஞ்சிறாம்பு; மனவயிரம்.

**செறும்புக்காரன்** – மனத்திற் கறுவுகொண்டவன்.

**செறுமுதல்** – கனைத்தல்; தேம்பியழுதல்.

**செறுவர்** – காண்க: **செறுநர்.**

**செறுவு** – வயல்.

**சென்மசாபல்லியம்** – பிறவிப்பயனை அடைகை.

**சென்மப்பகை** – பிறவிப்பகை; கடும்பகை.

**சென்மப்பத்திரிகை** – பிறப்பியம், சாதகம்.

**சென்மபூமி** – பிறந்த நாடு.

**சென்மம்** – பிறப்பு; முழு உரிமை.

**சென்மாந்தரம்** – வேறுபிறவி.

**சென்மித்தல்** – பிறத்தல்.

**சென்றஞான்றை** – நேற்றைத்தினம்.

**சென்றது** – வினாவோடு சேர்ந்து அடுக்கியும் அடுக்காதும் வரும் அசைநிலை.

**சென்றுதேய்ந்திறுதல்** – நூற்குற்றம் பத்தனுள் வரவரச் சொல்நயம் பொருள்நயம் குறைந்து வருதலாகிய குற்றம்.

**சென்றுபோதல்** – இறத்தல்.

**சென்னக்கூனி** – சிறிய இறால்மீன்.

**சென்னடை** – அன்றாடப் படித்தரம்.

**சென்னம்** – நீர்ப்பறவைவகை; வடிவு.

**சென்னல்** – தேன்; கெண்டைமீன்; சாளரம்.

**சென்னாக்கூனி** – காண்க: **சென்னக்கூனி.**

**சென்னி** – தலை; உச்சி; சிறப்பு; சோழன்; பாணன்; அசுவினி; கன்னம்.

**சென்னியம்** – உண்டுபண்ணப்பட்டது.

**சென்னியர்** – கூத்தர்.

**சென்னை** – கோயில்மூர்த்தியின் புறப்பாடு அறிவிக்கும் மேளம்; மீன்வகை; கன்னம்; சென்னைப்பட்டினம்.

**செனகன்** – தந்தை.

**செனனம்** – பிறப்பு.

**செனனி** – தாய்; உயிர்களின் பிறப்புக்குக் காரணமான சிவசத்தி.

**செனித்தல்** – பிறத்தல்.

**செனு** – பிறப்பிடம்.

## சே

**சே** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ச்+ஏ); காளை; இடபராசி; சிவப்பு; சேமரக்கொட்டை; அழிஞ்சில்மரம்; வெருட்டுங்குறி; வெறுப்புக்குறி.

**சேக்கரித்தல்** – கொக்கரித்தல்.

**சேக்காளி** – தோழமையுள்ளவன்(ள்).

**சேக்கிழார்** – தொண்டைநாட்டு வேளாளரின் குடிப்பெயருள் ஒன்று; பெரியபுராணம் இயற்றிய ஆசிரியர்.

**சேக்கு** – முலைப்பால்; கன்னக்குடுமி; துருப்புச்சீட்டு.

**சேக்குப்புள்ளி** – உறவினர் அற்றுத் தனித்தவன்.

**சேக்கை** – கட்டில் முதலிய மக்கட்படுக்கை; விலங்கின் படுக்கை; தங்குமிடம்; பறவைக்கூடு; வலை; முலை; உடற்றழும்பு; கடகராசி; நண்டு; சிவப்பு; செம்பசளைக்கீரை.

**சேக்கைப்பள்ளி** – படுக்கை.

**சேக்கோள்** – பகைவரது ஆநிரை கவர்தல்.

**சேகண்டி** – காவலாளர் உறைவிடம்; கோல்கொண்டு அடிக்கும் வட்டமணிவகை.

**சேகம்** – மரவயிரம்.

**சேகரக்காரன்** – பண்டங்களைச் சேகரிப்பவன்.

**சேகரஞ்செய்தல்** – சித்தஞ்செய்தல்.

**சேகரத்தார்** – கூட்டத்தார்.

**சேகரம்** – சம்பாத்தியம்; தயாரிப்பு; கூட்டம்; பிரதேசம்; இனவழி; மணிமுடி; தலை; தலையில் அணிவது; அழகு; மாமரம்.

**சேகரன்** – சிறந்தோன்.

**சேகரி** – நாயுருவிச்செடி.

**சேகரித்தல்** – தயார்செய்தல்; சம்பாதித்தல்; ஒன்றுசேர்த்தல்; சிறந்திருத்தல்.

**சேகன்** – சேவகன்; வேலையில் ஆற்றலுடையவன்.

**சேகில்** – சிவந்த எருது.
**சேகிலி** – வாழைமரம்.
**சேகு** – காண்க: **சேகம்**; சிவப்பு; திண்மை; குற்றம்; ஐயம்; தழும்பு.
**சேகை** – சிவப்பு.
**சேங்கன்று** – ஆண்கன்று.
**சேங்கொட்டை** – சேமரக்கொட்டை; சேமரம்.
**சேங்கொட்டைமரம்** – ஒரு மரவகை.
**சேச்சே** – அருவருப்புக் குறிப்பு; அமர்த்துங் குறிப்பு.
**சேசே** – வெறுப்புக் குறிப்பு; மாடு முதலியன ஓட்டுதற்குறிப்பு; கூட்டத்தின் ஒலிக்குறிப்பு.
**சேட்சி** – தொலைவு.
**சேட்டம்** – அழகு; ஆனிமாதம்; செழிப்பு; மேன்மை; வலிமை.
**சேட்டன்** – தமையன்; மூத்தவன்; உருத்திரர் களுள் ஒருவன்; பெரியோன்.
**சேட்டனம்** – முயற்சி.
**சேட்டாதேவி** – மூதேவி.
**சேட்டி** – அக்காள்; தொழிற்படுத்துவோள்.
**சேட்டித்தல்** – தொழிற்படுதல்; தொழிற்படுத்து தல்.
**சேட்டிதன்** – தொழிற்படுத்துவோன்.
**சேட்டுக்குழி** – சேற்றுக்குழி.
**சேட்டுமம்** – கபம்.
**சேட்டை** – குறும்புச்செய்கை; குதிப்பு முதலிய செயல்கள்; மூத்தவள்; மூதேவி; பெருவிரல்; கேட்டைநாள்; விசாகநாள்; முறம்; உறுப் புப் புடைபெயர்க்கை; செய்கை.
**சேட்டைக்காரன்** – குறும்புசெய்பவன்; தந்திர வேலை செய்பவன்; காமக்குறிப்புக் காட்டு வோன்.
**சேட்படுதல்** – எதிர்ப்படுதல்; தொலைவாதல்; நெடுங்காலத்ததாதல்.
**சேட்படை** – தொலைவிலிருத்தல்; தலைவன் தலைவியோடு சேராது தோழி தடுத்தல்.
**சேட்புலம்** – தொலைவிடம்.
**சேடக்கிரியை** – ஈமக்கடன், இறுதிக்கடன்.
**சேடக்குடும்பி** – கோயில் அருச்சகன்.
**சேடக்கோல்** – தூக்குக்கோல்.
**சேடகப்பிண்டி** – கேடகம் பிடிக்கை.
**சேடகம்**, **சேடகவட்டம்** – கேடகம்.
**சேடசேடிபாவம்** – ஆண்டான் அடிமைத்திறம்.
**சேடம்** – மிச்சப் பொருள்; கழிந்த மீதி; எச்சில்; இறைவனுக்குப் படைக்கும் பொருள்; அடிமை; சிலேட்டுமம்.
**சேடல்** – காண்க: பவழமல்லிகை; உச்சிச்செலுந் தில் மரம்.
**சேடவட்டில்** – உண்கலம்.
**சேடன்** – ஆதிசேடன்; நாகலோகவாசி; நெசவுச் சாதியார்; அடிமைக்காரன்; கட்டிளமை யோன்; பெரியோன்; தோழன்; காதலுக்குத் துணைபுரிபவன்; கடவுள்.
**சேடி** – தோழி; ஏவல் செய்வோள்; இறையவள்; தெருச் சிறகு; வித்தியாதர உலகம்.
**சேடிகை** – பணிப்பெண்; கன்னியாராசி.
**சேடித்தல்** – எஞ்சுதல்; குறைத்தல்.
**சேடியம்** – ஊழியம்.
**சேடு** – அழகு; பெருமை; திரட்சி; நன்மை; இளமை.
**சேடை** – மணமக்கள்மீது அரிசியிடும் மணச் சடங்கு; சேடையரிசி; தொளி உழவுக்காக நீர் கட்டப்பட்ட வயல்; சேறு.
**சேடைபாய்ச்சுதல்** – வயலில் நீர் பாய்ச்சுதல்.
**சேடைபாய்தல்** – வயலில் தானே நீர் பாய்கை.
**சேடையரிசி** – மணமக்களை வாழ்த்தி இடும் அரிசி.
**சேடைவைத்தல்** – நிலத்தைச் சேறாக்குதல்.
**சேண்** – அகலம்; நீளம்; சேய்மை; உயரம்; மலையினுச்சி; வானம்; தேவருலகம்; நெடுங் காலம்.
**சேண்டிரவர்** – சேணியர்.
**சேண** – உயர.
**சேணம்** – மெத்தை; கலணை.
**சேணவி** – அறிவு.
**சேணாடர்** – வானோர்.
**சேணாடு** – துறக்கம்.
**சேணி** – ஏணி; முறை; குழு; செடி.
**சேணியர்** – வித்தியாதரர்; ஆடை நெய்வோர்.
**சேணியன்** – இந்திரன்; ஆடை நெய்வோன்;
**சேணை** – காண்க: **சேணவி.**
**சேணோன்** – மலையில் வாழ்பவன்; பரணிலிருந்து பயிர்களை யழிக்கவரும் விலங்குகளை விரட்டு பவன்.
**சேத்திரக்கிஞன்** – உடலையறிபவனான ஆன்மா.
**சேத்திரபாலன்** – காக்கும் கடவுள்; பைரவர்.
**சேத்திரம்** – பன்னிரண்டு சாளக்கிராமம் கொண்ட தொகுதி; புண்ணிய தலம்; கருப்பை; மனைவி.
**சேத்து** – சிவப்பு; ஒப்பு; கருத்து; உறுப்பு; நிலம்; ஐயம்; அசைச்சொல்; நெருக்கம்.
**சேதகம்** – சிவப்பு; சேறு.
**சேதம்** – கேடு; இழப்பு; பிரிப்பு; வெட்டு; துண்டு; கீழ்வாயிலக்கம்; கூத்தின் ஓர் உறுப்பு.
**சேதனம்** – அறிவுப்பொருள்; அறிவு; காண்க: **விருத்தசேதனம்**; பிளவுசெய்கை.
**சேதனன்** – அறிவுடையோன்; உயிர்.
**சேதனை** – அறிவு; பிளவுசெய்கை.

**சேதா** – சிவப்புப் பசு.
**சேதாம்பல்** – காண்க: **செவ்வாம்பல்.**
**சேதாரம்** – தேமாமரம்; தேய்மானம்; நகை செய்யும்போது ஏற்படும் இழப்பு; வெட்சி மரம்.
**சேதி** – செய்தி; தன்மை; சேதிநாடு; ஓர் அரச மரபு.
**சேதித்தல்** – வெட்டுதல்; அழித்தல்.
**சேதிம(ய)ம்** – சமண பௌத்தப்பள்ளி; தேவாலயம்.
**சேது** – செய்கரை; சேதுவணை; இராமேசுவரம்; தனுக்கோடி முதலிய தீர்த்தக்கட்டம்; சிவப்பு.
**சேதுபந்தனம்** – அணைக்கட்டு.
**சேந்தன்** – முருகன்; திவாகரஞ் செய்வித்தோன்; சேந்தனார் என்னும் சிவனடியார்.
**சேந்தி** – களஞ்சியம்; பரண்; கள்; துலாக் கட்டையின்மீது பலகைகளைச் சேர்க்கும்படி இடைவெளியில்லாம விடும் பலகை.
**சேந்து** – சிவப்பு; தீ; அசோகமரம்.
**சேந்துதல்** – இறைத்தல்.
**சேந்துபந்தம்** – அரக்கு.
**சேந்தை** – கட்டிலின் மேற்கட்டி.
**சேப்பு** – சிவப்பு; தாமரைக்கிழங்கு; சிவப்புக்கல்; சட்டைப்பை.
**சேப்புதல்** – தங்குதல்.
**சேபம்** – ஆண்குறி.
**சேபாலம்** – காண்க: **சேங்கொட்டை.**
**சேம்பு** – ஒரு செடிவகை; வறட்சேம்பு.
**சேமக்(ங்)கலம்** – கோல்கொண்டு அடிக்கும் வட்ட மணி.
**சேமக்காரன்** – நம்பிக்கையுள்ளவன்; சிக்கன முள்ளவன்; காவற்காரன்; முன்னெச்சரிக்கை யுள்ளோன்.
**சேமகாலம்** – செழிப்புக்காலம்.
**சேமஞ்செய்தல்** – மூடிவைத்தல்.
**சேமணன்** – தந்தையற்றவன்.
**சேமணி** – மாட்டுக் கழுத்திற் கட்டும் மணி; காண்க: **சேமக்(ங்)கலம்.**
**சேமத்தேர்** – வைப்புத்தேர்.
**சேமநிதி** – வைப்புப்பொருள்; தன் நன்மைக் காகப் பிறரிடம் வைக்கப்பட்ட நிதி.
**சேமப்படை** – வைப்புப்படை.
**சேமப்பொருள்** – காண்க: **சேமநிதி.**
**சேமம்** – நல்வாழ்வு; இன்பம்; காவல்; அரணானவிடம்; சிறைச்சாலை; புதை பொருள்; ஓலைச்சுவடியின் கட்டு; பகைவரது அம்பு தன்மேற் படாமல் காக்குஞ் செயல்; சவச்சேமம்.
**சேமரம்** – அழிஞ்சில்மரம்; சேங்கொட்டைமரம்.
**சேமவில்** – உற்ற காலத்து உதவும்படி துணை யாகக் கொள்ளும் வில்.
**சேமவைப்பு** – காண்க: **சேமநிதி.**
**சேமறி** – மாட்டின் புணர்ச்சி.
**சேமன்** – போக்கிரி.
**சேமா** – எருது.
**சேமாறி** – விதையடிப்போன்.
**சேமாறுதல்** – எருதுக்கு விதையடித்தல்.
**சேமித்தல்** – போற்றிவைத்தல்; புதைத்துவைத் தல்; பாதுகாத்தல்.
**சேமை** – காண்க: **சேம்பு(பை).**
**சேய்** – மகவு; சிவப்பு; இளமை; செவ்வாய்; முருகன்; மகன்; தலைவன்; தொலைவு; நீளம்; பெருமை; மனையிடம்; மூங்கில்.
**சேய்குன்றம்** – முருகக்கடவுள் வாழ்விடமாகிய திருப்பரங்குன்றம்.
**சேய்த்து** – தொலைவானது; நீளமானது; செந்நிறமுடையது.
**சேய்நீர்** – சுண்ணாம்பும் நவச்சாரமும் கலந்த நீர்.
**சேய்மரபு** – இளமைப்பருவம்.
**சேய்மை** – தொலைவு; நீளம்.
**சேய்மைவிளி** – தொலைவிலுள்ளோரை அழைக் கும் விளி.
**சேயம்** – கரை; ஓட்டம்; கூட்டப்பட்டது; வெற்றி.
**சேயவன்** – முருகன்; செவ்வாய்.
**சேயன்** – செந்நிறமுள்ளவன்; தொலைவிலுள்ள வன்; மகன்.
**சேயா** – காண்க: **கடுக்காய்.**
**சேயார்** – தொலைவிலுள்ளோர்; பகைவர்.
**சேயான்** – செந்நிறமுடையவன்.
**சேயிலம்** – இலுப்பைமரம்.
**சேயேபசம்** – காண்க: **மரமஞ்சள்.**
**சேயோன்** – முருகக்கடவுள்; சிவன்; தொலைவி லிருப்பவன்.
**சேர்** – திரட்சி; வைக்கோற்புரியா லமைந்த நெற்குதிர்; களஞ்சியம்; மாட்டின் இரண்டு முன்னங்கால்களையும் சேர்த்துக் கட்டுந் தளை; ஓர்ஏர் மாடு; நிறுத்தலளவை; ஒரு முகத்தலளவை; சேங்கொட்டைமரம்.
**சேர்க்கை** – திரளுகை; கூடுகை; கலப்புப் பொருள்; கூட்டுறவு; ஒன்றுதல்; புணர்ச்சி; வில்லையாகச் செய்த மணக்கூட்டுச் சரக்கு.
**சேர்க்கைப்பல்லி** – நிலைப்பல்லி.
**சேர்க்கைமுலை** – சந்துமுலை.
**சேர்க்கைவாசனை** – செயற்கைக் குணம்.
**சேர்கட்டுதல்** – தானியத்தை அளந்து நெற்கூட்டி விடுதல்.
**சேர்கால்** – தளைகால்.
**சேர்காலிடுதல்** – கால் தளைதல்.

**சேர்கொடுத்தல்** – காட்டிக்கொடுத்தல்.

**சேர்ச்சி** – காண்க: **சேர்க்கை.**

**சேர்த்தல்** – இயைத்தல்; தொடுத்தல்; கலத்தல்; புணரச்செய்தல்; கூட்டிக்கொள்ளுதல்; கட்டுதல்; இடைச்செருகுதல்; இலை பரிமாறுதல்; திரட்டுதல்; ஈட்டுதல்; தனதாக்குதல்; அடைவித்தல்.

**சேர்த்தி** – கூடுகை; கலப்புப்பொருள்; கூட்டுறவு; புணர்ச்சி; ஐக்கியம்; இசைவு; பொருத்தம்; ஒப்பு; சொற்புணர்ப்பு; கடவுள் தேவியுடன் ஒருங்கு வீற்றிருக்கும் சமயம்.

**சேர்த்திக்கை** – கூடுகை; கலப்புப்பொருள்; இசைவு; ஒப்பு; கூட்டுறவு; ஐக்கியம்; புணர்ச்சி.

**சேர்த்துக்கொள்ளுதல்** – ஏற்றுக்கொள்ளுதல்; கணக்கிற்பதிதல்; கைப்பற்றுதல்.

**சேர்த்துதல்** – காண்க: **சேர்த்தல்.**

**சேர்த்துப்பிடித்தல்** – வசப்படுத்துதல்; சிக்கனம் பண்ணுதல்; சேர்த்துக்கொள்ளுதல்; வைப்பு வைத்தல்; கைப்பற்றுதல்.

**சேர்த்துவைத்தல்** – சொத்துச் சேர்த்தல்; சமாதானப்படுத்துதல்.

**சேர்தல்** – ஒன்றுகூடுதல்; இடைவிடாது நினைத்தல்; கலத்தல்; சம்பந்தப்படுதல்; நட்பாதல்; இயைதல்; உரித்தாதல்; சேகரிக்கப்படுதல்; திரளுதல்; செறிதல்; கிடத்தல்; உளதாதல்; செல்லுதல்; கூடுதல்; பொருந்துதல்; புணர்தல்; பெறுதல்; சென்றடைதல்; ஒப்பாதல்; சேதித்தல்.

**சேர்ந்தகை** – கூட்டாளி.

**சேர்ந்தகைமை** – கூட்டுறவு.

**சேர்ந்தலை** – புணர்ச்சி; கூட்டுறவு.

**சேர்ந்தார்** – அடைக்கலமடைந்தவர்; நண்பர்; உறவினர்.

**சேர்ந்தார்கொல்லி, சேர்ந்தாரைக்கொல்லி** – தன்னை அடைந்த பொருளை அழிக்கும் நெருப்பு.

**சேர்ப்பன்** – நெய்தல்நிலத் தலைவன்; வருணன்.

**சேர்ப்பு** – இடம்; வாழ்விடம்; கடற்கரை; கலப்புப் பொருள்; பிற்சேர்க்கை; கப்பலிலிருந்து சரக்கிறக்கும் பாலம்.

**சேர்ப்பூட்டு** – இணையொத்தது.

**சேர்பந்து** – கசை.

**சேர்பு** – வாழ்விடம்; வீடு; காண்க: **சேர்மானம்.**

**சேர்மானம்** – இணைப்பு; கூடுகை; கலப்புப் பொருள்; ஐக்கியம்; கூட்டுறவு; புணர்ச்சி; கலக்கும் பொருள்.

**சேர்விடம்** – வாழுமிடம்; துயிலிடம்; திரளுகை.

**சேர்வு** – அடைதல்; வாழிடம்; திரட்சி; ஒன்றுசேர்கை; ஊர்; கூட்டம்.

**சேர்வை** – கூட்டுறவு; கலவை; மருந்து முதலியவற்றிற் கூட்டுங் கலப்புச் சரக்கு; சீலையிற் பூசியிடும் மருந்து; உலோகக் கலப்பு; மகளிர் காதணிவகை; கள்ளிறங்கும்படி சீவின பாளையைக் கள்ளுக்கலயத்துடன் இணைக்கை; சேனை; கூட்டம்; இருபது வெற்றிலைக்கட்டு; கூத்துவகை; வணக்கம்; பற்று; சில வகுப்பாரின் பட்டப் பெயர்வகை.

**சேர்வைக்காரன்** – படைத்தலைவன்; பட்டப் பெயர்வகை.

**சேர்வைக்கால்** – ஏணியைத் தாங்குங் கால்; தட்டைத் தாங்கி நிற்கும் பீடக்கால்.

**சேர்வைகட்டுதல்** – மரக்கிளைகளைச் சேர்த்துத் தாழ்வாரம் இறக்குதல்; வெற்றிலைக்கொடி படரும்படி அகத்திக் கால்களை இரட்டையிரட்டையாகச் சேர்த்துக் கட்டுதல்.

**சேர்வைகாரன்** – கள்ளர், மறவர், அகம்படியர், வன்னியர்க்கு வழங்கும் பட்டப்பெயர்வகை.

**சேர்வைச்சந்தனம்** – கலவைச் சந்தனம்.

**சேர்வையணி** – வேறுபட்ட பல அணிகள் சேர்ந்து வரும் கலவையணி.

**சேர** – அணித்தாக; முழுதும்; கூட.

**சேரக்கட்டுதல்** – சேர்த்தல்; செலுத்துதல்.

**சேரங்கை** – காண்க: **சிறங்கை.**

**சேரடி** – நெற்கூடு நிற்குமிடம்.

**சேரமண்டலம்** – சேரநாடு.

**சேரமான், சேரல்** – சேரநாட்டரசன்.

**சேரலன்** – தமிழ்வேந்தர் மூவருள் சேரநாட்டரசன்; பகைவன்.

**சேரலி** – ஒரு நெல்வகை.

**சேரன்** – காண்க: **சேரமான்.**

**சேரா** – கள்.

**சேராங்கொட்டை** – காண்க: **சேங்கொட்டை.**

**சேராச்சேர்த்தி** – இசைவற்ற சேர்க்கை; தகாத கூட்டுறவு; தாறுமாறு; எதிர்பாராத சந்திப்பு.

**சேரார்** – பகைவர்.

**சேரான்** – சேங்கொட்டைமரம்.

**சேரி** – ஊர்; முல்லைநிலத்தூர்; தெரு; பறைச்சேரி.

**சேரிகை** – ஊர்.

**சேரிடுதல்** – பிணைத்தல்.

**சேரிடையாக** – இடையீடின்றித் தொடர்ச்சியாக.

**சேரிப்பரத்தை** – ஊர்ப்புறச் சேரியில் வாழும் பரத்தை.

**சேரிமடை** – கழிவுவாய்க்கால்.

**சேருகம்** – நாகணவாய்ப்புள்.

**சேரை** – சிறங்கை; காண்க: **சாரை.**

**சேல்** – கெண்டைமீன்வகை.

**சேலகம்** – கோரைக்கிழங்கு.
**சேலம்** – ஆடை; ஓரூர்.
**சேலவன்** – மீனாகப் பிறப்பெடுத்த திருமால்.
**சேலியால்** – இலாமிச்சைப்புல்.
**சேலேகம்** – சந்தனமரம்; சிந்தூரம்.
**சேலை** – புடைவை, மகளிர் சீலை; ஆடை; அசோகமரம்; முழுத் துணியின் பாதி.
**சேலைபோடுதல்** – கைம்பெண்ணானவட்குக் கோடிபோடுதல்.
**சேலோதம்** – சந்தனமரம்.
**சேவகம்** – ஊழியம்; வீரம்; யானைக்கூடம்; உறக்கம்; காண்க: **பேயுள்ளி.**
**சேவகமெழுதுதல்** – படையில் அமர்த்துதல்.
**சேவகமோடி** – போர்வீரனுக்குரிய கருவிகள்; வீரம்; வீரனுக்குரிய மாதிரிகை.
**சேவகன்** – வீரன்; ஊழியன்; காண்க: **சேவகன் பூடு.**
**சேவகன்பூடு** – காண்க: **சிற்றாமுட்டி**; காந்தள்; சிறுபுள்ளடி.
**சேவகனார்** – வீரத் தெய்வமாகிய ஐயனார்.
**சேவடி** – சிவந்த பாதம்.
**சேவதக்குதல்** – எருதுக்கு விதையடித்தல்.
**சேவம்** – பாம்பு; ஆண்குறி; உயரம்.
**சேவல்** – மயில் ஒழிந்த பறவைகளின் ஆண்; கோழியின் ஆண்; ஆண் அன்னம்; முருகக் கடவுள் ஊர்தியாகிய மயில்; காவல்; ஆண் குதிரை; சேறு.
**சேவலங்கொடியோன், சேவலோன், சேவற்கொடியோன்** – சேவலைக் கொடியிற் கொண்ட முருகக் கடவுள்.
**சேவனை** – ஊழியத்தொழில்; கோயில் தொண்டு; விழாக்காலங்களில் மேளம் முதலியன சேவிக்கை.
**சேவனைக்காரர்** – கோயில் மேளக்காரர்.
**சேவா** – வாடகை.
**சேவாகாலம்** – திருமால் கோயில் முதலியவற்றில் திவ்வியப் பிரபந்தம் ஓதுகை.
**சேவாலங்கொட்டை** – காண்க: **நேர்வாளம்.**
**சேவாலிகம்** – காண்க: **கருநொச்சி.**
**சேவித்தல்** – பணிசெய்தல்; வணங்குதல்; காணுதல்; திவ்வியப் பிரபந்தம் முதலியன ஓதுதல்; மருந்து முதலியன உட்கொள்ளுதல்.
**சேவிதம்** – தொண்டு.
**சேவியம்** – வெள்ளை வெட்டிவேர்.
**சேவுகம்** – ஊழியம்; வீரம்.
**சேவை** – தொண்டு; வணக்கம்; வழிபடுதல்; காட்சி; ஒரு மரவகை; காட்டு மங்குஸ்தான்; திவ்வியப் பிரபந்தம் முதலியன ஓதுகை; ஒருவகைப் பணிகாரம்.
**சேவையூர்** – சிதம்பரம்.
**சேழ்** – மேலிடம்.
**சேழ(ள)ம்** – மீதி.
**சேற்கண்ணி** – அரிதாரம்.
**சேற்பனம்** – கபம்.
**சேற்றுக்கடி** – காண்க: **சேற்றுப்புண்.**
**சேற்றுக்கால்** – வயலில் தொளியடித்து நாற்று நட்டுப் பயிர்செய்யும் வேளாண்மை; சேடையாக்கி விதைக்கும் வயல்; களிமண் வயல்.
**சேற்றுப்புண்** – சேற்றால் கால்விரலிடையில் உண்டாகும் அரிபுண்.
**சேற்றுப்புழி** – உழப்பட்ட நிலம்.
**சேற்றுமம்** – கபம்.
**சேறடி(டை)** – வண்டிச் சக்கரத்திற்படும் சேற்றைத்தடுக்க அமைக்குங் கருவி.
**சேறல்** – செல்லுகை.
**சேறாடி** – ஒரு விருதுவகை; காண்க: **சேறடி(டை).**
**சேறாடுதல்** – வயலில் விதைத்தற்குச் சேறு கலக்குதல்; துகைத்துக் குழைத்தல்.
**சேறு** – சகதி; குழம்பு; சாரம்; இனிமை; கள்; தேன்; திருவிழா; பாகு; சீழ்; பனம்பழம், தேங்காய் இவற்றின் செறிந்த உள்ளீடு; விளாம்பழம்; மணி; நீரோட்டம்.
**சேறுகுத்தி** – சேற்றைத் தள்ளற்கு உதவும் கருவி.
**சேறுஞ்சுரியுமாய்** – குழைவாய்.
**சேனம்** – பருந்து.
**சேனம்பாம்பு** – ஒரு மீன்வகை.
**சேனன்** – ஒரு பழைய பட்டப்பெயர்.
**சேனா** – விலாங்குமீன்; நிலாவிரைப்பூண்டு.
**சேனாங்கம்** – படையுறுப்பு.
**சேனாசமுத்திரம்** – கடல்போன்ற பெரும்படை; பெருங்கூட்டம்.
**சேனாதிபதி(ன்)** – படைத்தலைவன்.
**சேனாதிராயன்** – முருகக்கடவுள்; படைத்தலைவன்.
**சேனாபத்தியம்** – படைத்தலைமை.
**சேனாபதி** – படைத்தலைவன்; ஒரு பண்வகை.
**சேனாமுகம்** – முதற்படை; படையின் ஒரு தொகை.
**சேனாவரையன்** – படைத்தலைவன்; தொல்காப்பிய உரையாசிரியருள் ஒருவர்.
**சேனாவு** – தகரைச்செடி.
**சேனை** – யானை, தேர், குதிரை, காலாள் என்னும் நாற்படை; ஆயுதம்; கூட்டம்; நண்பரும் உறவினரும்; தெரு; கடைத்தெரு; சந்தை; பல; சேணம்; கருணைக்கிழங்கு; சேனைப்பால்.
**சேனைக்கணிமகன்** – சேனையிலுள்ள நிமித்திகன்.

**சேனைக்கால்** – கோயிற்குட தீபக்கால்.

**சேனைக்குடையார்** – இலை விற்கும் ஒரு சாதியார்.

**சேனைத்தலைவர்** – திருமாலின் கணத்தலைவர்; இலை விற்கும் ஒரு சாதியார்; படைத் தலைவர்.

**சேனைப்படைகள்** – பெருங்கூட்டம்.

**சேனைப்பால்** – குழந்தை பிறந்ததும் புகட்டும் இனிப்புக் கலந்த நீர்ம வடிவான உணவு.

**சேனைப்பெருங்கணி** – சேனையில் அமர்ந்துள்ள சோதிடத் தலைவன்.

**சேனைப்பெருவாணிகன்** – படைக்கு வேண்டிய உணவு முதலிய பண்டங்களைக் கொடுத்து உதவுபவன்.

**சேனைமுதலியார், சேனையர்கோன்** – திருமால்கணத் தலைவர்; கைக்கோளச் சாதியார்.

**சேனையுள்படுநன்** – அரசன் ஆணையைக் காளமூதிச் சேனைக்கு அறிவிப்போன்.

## சை

**சை** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ச்+ஐ); இகழ்ச்சிக் குறிப்பு.

**சைக்கினை** – காண்க: **சைகை.**

**சைகதம்** – மணல்; மணற்கரை.

**சைகதவுண்டை** – மணல்மலை.

**சைகை** – சமிக்கை; சாடை.

**சைங்கிகேயன்** – இராகு.

**சைசவம்** – இளமை; பதினாறு வயதிற்கு உட்பட்ட பருவம்.

**சைத்தான்** – பிசாசு.

**சைத்தியம்** – பௌத்தராலயம்; குளிர்ச்சி; இறப்புக் கல்வெட்டு; பலிபீடம்.

**சைத்தியன்** – சுக்கிரன்.

**சைத்திரகம், சைத்திரம்** – சித்திரை மாதம்; ஓவிய வேலை; வெற்றி.

**சைத்திரரதம்** – குபேரனின் நந்தவனம்.

**சைத்திராவலி** – சித்திரை மாதத்து முழுநிலவு.

**சைத்திரி** – சித்திரை மாதத்தில் நடைபெறும் வேள்வி.

**சைத்திரியஞானம்** – கடவுள் உயிர்களைப்பற்றிய அறிவு.

**சைத்திரியம்** – தெளிவு; மனத்திட்பம்.

**சைத்திரோற்சவம்** – சித்திரையில் நிகழும் கோயில் திருவிழா.

**சைதன்னியதரிசனம்** – தானுந் தலைவனும் ஒன்றெனக் காண்டல்.

**சைதனம்** – சீவான்மா.

**சைதனியம்** – அறிவு; சீவான்மா; பரமான்மா.

**சைதனியவான்** – அறிவுள்ளவன்.

**சைந்தவம்** – இந்துப்பு; குதிரை; தலை; சிந்து நதி; சிந்துதேசம்.

**சைந்தவி** – ஒரு பண்வகை.

**சைமானம்** – அன்பளிப்பு.

**சையகம்** – படுக்கை.

**சையத்திருத்தல்** – நல்ல நிலையில் இருத்தல்.

**சையம்** – கல்; குடகுமலை; மலை; நியமம்.

**சையமினி** – யமனது நகரம்.

**சையானம்** – காண்க: **சையகம்.**

**சையெனல்** – இகழ்ச்சிக்குறிப்பு.

**சையை** – காண்க: **சைகை.**

**சையொத்திருத்தல்** – இணக்கமாக இருத்தல்.

**சையோகசம்பந்தம்** – இரண்டு பொருள்கள் கூடியிருத்தலாகிய தொடர்பு.

**சையோகம்** – கலக்கை; காண்க: **யோகசம்பந்தம்;** புணர்ச்சி.

**சையோகித்தல்** – புணர்தல்; கலத்தல்.

**சையோத்தி, சையோத்தியம்** – இணக்கம்.

**சைரிகம்** – கலப்பை.

**சைரிகன்** – உழவன்; ஏர்மாடு.

**சைரிபம்** – எருமை.

**சைலகம்** – மலையிருவேலிப்புல்; சாம்பிராணி.

**சைலதரன்** – மலையைத் தாங்கியவனான கண்ணபிரான்.

**சைலபதி** – மலைகளுக்குத் தலைவன் எனப்படும் இமயமலை.

**சைலபித்தி** – கல்லுளி.

**சைலம்** – மலை; சேலை.

**சைலாந்திரம்** – மலைக்குகை.

**சைவசித்தாந்தம்** – சைவசமயத் தெளிவுண்மை.

**சைவம்** – சிவசமயம்; ஆகமம்; சிவபுராணம்; இளமை; புலால் தின்னாமலிருக்கை.

**சைவர்** – சிவசமயத்தார்; ஊன் உண்ணாதார்.

**சைவரல்** – இகழுதல்.

**சைவலம்** – ஒரு பாசிவகை.

**சைவவாதி** – சைவசமயக் கொள்கையை எடுத்து வாதிப்போன்.

**சைவன்** – சிவனை வழிபடுவோன்; சிவன்; புலால் உண்ணாதவன்.

**சைனம்** – சமணமதம்.

**சைனன்** – அருகன்; புத்தன்; அருக சமயத்தவன்.

**சைனியம்** – சேனை.

**சொ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ச்+ஒ).
**சொக்கட்டாய்** – எளிதாக.
**சொக்கட்டான்** – ஒரு புடைவைவகை; கவறு உருட்டியாடுந் தாய விளையாட்டுவகை.
**சொக்கட்டான்கவறு** – சொக்கட்டான் ஆட்டத்தில் தாயங் குறிக்க உருட்டும் வட்டு.
**சொக்கட்டான்பந்தல்** – சொக்கட்டான் மனை போற் செய்த பந்தல்.
**சொக்கத்தாண்டவம்** – சுத்த நிருத்தம்.
**சொக்கதேவன்** – கூகைக்கட்டு நோய்; காண்க: கூகை.
**சொக்கநாதன், சொக்கநாயகன்** – அழகராய் விளங்கும் மதுரைச் சோமசுந்தரக் கடவுள்.
**சொக்கப்பனை** – கார்த்திகைத் திருவிழாவில் கோயில்களுக்கு முன்பு எரிக்கும் பனையோலைக் கூடு.
**சொக்கம்** – தூய்மை; சுத்த நிருத்தம்; கெம்புக் கல்; துறக்கம்; களவு.
**சொக்கலி** – சிறுபசளைக்கொடி.
**சொக்கலிங்கம்** – காண்க: **சொக்கநாதன்.**
**சொக்கவெள்ளி** – தூயவெள்ளி; விடிவெள்ளி.
**சொக்கறை** – கன்னம் முதலியவற்றில் விழுங் குழி; சிறிய அடைப்பு; மதில் முதலியவற்றின் துளை.
**சொக்கன்** – அழகன்; சிவன்; வணிகரின் கையாள்; குரங்கு; மூடன்; வேலைக்காரச் சிறுவன்.
**சொக்கா** – காண்க: **சொக்காய்.**
**சொக்காக்கீரை** – ஒரு கீரைவகை.
**சொக்காய்** – சட்டை.
**சொக்காரன்** – சொத்தின் உரிமையாளனான தாயாதி; சகலன்.
**சொக்காலி(ளி)** – சிறுதுளைப்பூண்டு.
**சொக்கிடுதல்** – மயக்கப்பொடி தூவுதல்.
**சொக்கிடுவித்தை** – காண்க: **சொக்குவித்தை.**
**சொக்கு** – அழகு; மயக்கம்; வயப்படுகை; சொக்கநாதன்; கன்னம்; தூய்மை; பொன்.
**சொக்குதல்** – மயங்குதல்; மனம் பிறர்வயமாதல்; பிறர் மயங்குமாறு ஒழுகுதல்; கண்ணுறக்கமாதல்; குழிவு அல்லது வளைவு விழுதல்.
**சொக்குப்பொடி** – பிறரை மயக்கித் தன்வயப் படுத்துதற்கு உதவும் மாயப்பொடி.
**சொக்குவித்தை** – மயக்குவித்தை.
**சொகினம்** – நிமித்தம்.
**சொகுசா** – துத்தமும் செம்பும் கலந்த உலோகம்.
**சொகுசு** – நேர்த்தி; இன்பம்; சிறப்பு.
**சொகுசுக்காரன்** – இன்பமாயிருப்பவன்.
**சொங்காரன்** – காண்க: **சொக்காரன்.**
**சொங்கு** – குற்றம்.
**சொச்சம்** – மிச்சம்; மாசின்மை; காண்க: **சில்வானம்**; கழித்தல் வகுத்தல்களில் வரும் மீதி.
**சொட்டம்** – குற்றமுள்ளவன்.
**சொட்டா** – ஒரு வாள்வகை.
**சொட்டு** – குட்டு; குற்றம்; குற்றங்குறை வெளிப் படக் கூறாது குறிப்பாற் கூறும் பேச்சு; சுன்னம்.
**சொட்டுச்சொட்டெனல்** – துளித்தற்குறிப்பு.
**சொட்டுச்சொல்** – பழிச்சொல்.
**சொட்டுதல்** – துளித்தல்; கொத்துதல்; வஞ்சித் தல்; பறித்தல்; குட்டுதல்; பால் கறத்தற்கு ஆட்டுமடியைத் தட்டுதல்; அடித்தல்.
**சொட்டுப்பால்** – இறுகின பால்.
**சொட்டுப்போடுதல்** – அடிகொடுத்தல்; குறை கூறுதல்; தவறுதல்.
**சொட்டுவைத்தல்** – குட்டுதல்; நிந்தைக்குப் பாத்திரமாக்குதல்.
**சொட்டை** – பள்ளம்; சுருக்கு முதலியவற்றை மாட்டும் இடம்; வளைதடி; வளைந்த வாள்; வளைவு; பழிச்சொல்; ஏளனம்; வழுக்கைத் தலை; தலைப்பொடுகு; சொற்சித்திரம்; பார்ப்பனரது பழங்குடிகளுள் ஒன்று.
**சொட்டைச்சொல்** – பழிச்சொல்; ஏளனம்.
**சொட்டைசொள்ளை** – குற்றங்குறை.
**சொட்டைத்தலை** – வழுக்கைவிழுந்த தலை.
**சொட்டையாளன்** – படைவீரன்.
**சொட்டைவாள்** – வளைந்த வாள்வகை.
**சொட்டைவிழுதல்** – தலையில் வழுக்கை விழுதல்; அதுங்கிப்போதல்.
**சொடக்கு** – நெட்டி; சோம்பற்றன்மை; கைந் நொடிப்பு; கைந்நொடிப்பொழுது; துளைக் கருவி; கிலுகிலுப்பைச்செடி; கடுகு.
**சொடக்குதல்** – நெட்டிவாங்குதல்; கைந்நொடித் தல்; பேன் குத்துதல்.
**சொடக்கெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**சொடி** – சுறுசுறுப்பு.
**சொடித்தல்** – குறைவாய் விற்றல்.
**சொடிதல்** – பயிர்கள் வெயிலில் வாடுதல்; குழைதல்.
**சொடுகு** – காண்க: **சொட்டை.**
**சொடுதலை** – வாயகன்ற பாத்திரவகை.
**சொண்டடித்தல்** – பேசுதற்கு உதடு குவித்தசைத் தல்.
**சொண்டறை** – இழிஞன், புல்லன்.
**சொண்டன்** – செருக்கன்.
**சொண்டி** – சுக்கு.
**சொண்டிலி** – இழிகுணத்தன்.
**சொண்டு** – குழிவு; பறவைமூக்கு; உதடு; தடித்த உதடு; கனத்த பாத்திரவிளிம்பு; அற்பன்; தலையழுக்கு; பொடுகு; ஆயுத நுனி; உத்தியோகம்.

**சொண்டுக்கதை** – உணவுக்காகச் சொல்லுங் கதை; பிறரை மகிழ்விக்கப் புறங்கூறுகை.

**சொண்டுக்காரன்** – தடித்த உதடன்.

**சொண்டுசொல்** – துன்புறுத்தும் மொழி.

**சொண்டுத்தீன்** – அடிக்கடி கொள்ளும் சுவையுணவு.

**சொண்டுப்பானை** – கனத்த விளிம்புடைய பானை.

**சொண்டுபண்ணுதல்** – இகழ்ச்சி பண்ணுதல்.

**சொண்டுபேசுதல்** – நிந்தித்தல்.

**சொண்டுவிற்றல்** – புறங்கூறுதல்.

**சொணை, சொணைப்பு** – காண்க: **சுணை.**

**சொத்தலி** – கொட்டையில்லாப் பனங்காய்.

**சொத்தி** – உடற்குறை; நொண்டி.

**சொத்தியன்** – நொண்டி.

**சொத்து** – உடைமை; பொன்; உடற்குறை; உடலிற் பூசும் செம்பசை.

**சொத்துக்காரன்** – செல்வன்; பொருளுக்கு உரியவன்.

**சொத்துவம்** – பொருள் உரிமை; காண்க: **சுயம்பு.**

**சொத்துவைத்தல்** – தொகுத்துவைத்தல்; புதல்வன் முதலியவர்க்குச் சொத்துச்சேர்த்து வைத்தல்.

**சொத்தை** – புழு, வண்டு முதலியன அரித்தது; ஊனம்; சீர்கேடு; மெலிந்த உயிரி; கன்னம்; இலங்கைமரம்.

**சொத்தைப்பல்** – கெட்டுப்போன பல்.

**சொத்தையிற்போடுதல்** – கன்னத்தில் அடித்தல்.

**சொதசொதெனல்** – கசிதற்குறிப்பு.

**சொதி** – தேங்காய்ப்பால் அவியல்.

**சொதை** – உடைமை; பொன்; இரட்டை.

**சொந்தக்கம்பத்தம்** – தானே பண்ணைவைத்துச் செய்யும் வேளாண்மை.

**சொந்தக்காரன்** – உரியவன்; உறவினன்.

**சொந்தம்** – தனக்குரியது; நெருங்கிய உறவு.

**சொப்பட** – நன்றாக.

**சொப்பம்** – ஒளியின்மை.

**சொப்பனம்** – கனவு; கனவுநிலை; மாயத்தோற்றம்.

**சொம்** – உடைமை; சொத்து.

**சொம்பு** – அழகு; செம்பு.

**சொம்மாளி** – உரிமைக்காரன்.

**சொம்மெடுத்தல்** – வாரிசாகச் சொத்தையடைதல்.

**சொயம்** – காண்க: **சுயம்.**

**சொர்க்கம்** – தேவலோகம், துறக்கம்; முலை.

**சொர்க்கவாசல்** – திருமால் கோயில்களில் மார்கழி மாதத்து வளர்பிறை ஏகாதசி முதல் பத்து நாள் வரை தெய்வத்திருமேனி எழுந்தருளுதற்கு உரியதும், வைகுண்ட வாயில் போலக் கருதிப் பலரும் செல்வதற்கு உரியதும் மற்றக் காலங்களில் திறக்கப்படாது அடைத்துக்கிடப்பதுமான தனிவாயில்.

**சொர்ணக்கல்** – வைடூரியம்.

**சொர்ணசீரகம்** – கரும்பு.

**சொர்ணம்** – பொன்; கோடகசாலைப்பூண்டு; மிகுதி.

**சொர்னம்** – பொன்; நாணயம்.

**சொரங்கம்** – ஏலத்தோல்.

**சொரசத்தோரசி** – இலவங்கப்பட்டை.

**சொரடு** – துறட்டி.

**சொரணை** – காண்க: **சுரணை.**

**சொரி** – தினவு.

**சொரிதம்** – நலிதல் ஓசை.

**சொரிதல்** – உதிர்தல்; மழைபெய்தல்; மிகுதல்; பொழிதல்; கொட்டுதல்; மிகக் கொடுத்தல்; காண்க: **சொறிதல்;** சுழலுதல்.

**சொரிந்தளத்தல்** – பண்டங்களை மேலே தூவியளத்தல்.

**சொரிமணல்** – கால்வைத்தவரை இறக்கியமிழ்த்தும் மணல்.

**சொரிமித்தல்** – இணங்குதல்.

**சொரிமிப்பு** – இணக்கம்.

**சொரிவாய்** – குதிரிலிருந்து நெல் சொரிந்து விழுந்துளை.

**சொரிவு** – ஈவு; உதிர்வு; பொழிவு.

**சொருகுதலைப்பு** – சீலையின் உள்ளிடமான தலைப்பு.

**சொருணை** – காண்க: **சுரணை.**

**சொருவு** – உறை.

**சொரூபம்** – இயற்கைத் தன்மை; சாயல்; வடிவம்; குணம் குறியின்றி ஒன்றாய் யாவுங் கடந்த பதி; அழகு, பரப்பிரம்மத்தின் சச்சிதானந்த ரூபமான உண்மை இயல்பு; சிறப்பியல்பு.

**சொரூபானுபூதி** – இறைவனுடன் உயிர் ஒன்றி நிற்கும் நிலை.

**சொரூபி** – உருவுடையவன்; கடவுள்.

**சொரூபிகரித்தல்** – உருவமுடைத்தாதல்.

**சொல்** – மொழி; பேச்சு; பழமொழி; உறுதிமொழி; புகழ்; மந்திரம்; சாபம்; கட்டளை; புத்திமதி; பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்னும் நால் வகை மொழிகள்; தமிழ்மொழியில் உள்ள இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என நால்வகைப்பட்ட மொழிகள்; நாடகவரங்கில் பேசப்படும் உட்சொல், புறச்சொல், ஆகாசச் சொல் என்பன; சத்தம்; நாமகள்; பேசச்செய்வதான கள்; நெல்.

**சொல்லணி** – சொல்லின் ஓசை முதலிய இன்பம் தோன்ற அமைக்கும் அணிவகை.

**சொல்லதிகாரம்** – சொல்லின் பாகுபாடு, செய்கை முதலியவற்றைப்பற்றிக் கூறும் இலக்கணப் பகுதி.

**சொல்லழுத்தம்** – ஊன்றியுச்சரிக்கை; வாக்குறுதி.

**சொல்லற்பாடு** – சொல்லப்படுகை.

**சொல்லறிகணை** – ஒலியைக் கேட்டே மறைந் துள்ள இலக்கை அறிந்து எய்யுங் கணை.

**சொல்லறிபுள்** – கிளி; பூவை.

**சொல்லறுதி** – விலை முதலியவற்றை வரையறை யாகக் கூறும் உறுதி.

**சொல்லாக்கம்** – சொற்செய்து கொள்ளுகை.

**சொல்லாகுபெயர்** – நூலுக்கு உரை செய்தான் என்பதில் உரையென்பது அம் மொழியால் உணரப்படும் பொருளுக்கு ஆவது போன்ற ஆகுபெயர்.

**சொல்லாட்டி** – திறமையாகப் பேசுபவள்.

**சொல்லாட்டு** – பேச்சு.

**சொல்லாடுதல்** – பேச்சில் வழங்குதல்; பேசுதல்.

**சொல்லாதசொல்** – தகாத சொல், இடக்கர்ச் சொல்; வசை.

**சொல்லாமற்சொல்லுதல்** – தன் கருத்தைக் குறிப் பாகச் சொல்லுதல்.

**சொல்லாழம்** – சொல்லின் பொருள் ஆழம்.

**சொல்லாளி** – வாக்குறுதி யுள்ளவன்; செல்வாக் குள்ளவன்; சொற்றிறமையுள்ளவன்.

**சொல்லானந்தம்** – பிரபந்தத் தலைவனது இயற் பெயரையடுத்துக் கேடுபயக்கும் அமங்கலச் சொல்லையமைத்துச் செய்யுள் செய்தல்.

**சொல்லிக்காட்டுதல்** – பாடம் ஒப்பித்தல்; விளக்கி யறிவித்தல்; குத்திக்காட்டுதல்.

**சொல்லிக்கொடுத்தல்** – படிப்பித்தல்; புத்தி சொல்லுதல்; அறிவித்தல்; தூண்டிவிடுதல்.

**சொல்லிக்கொள்ளுதல்** – விடைபெறுதல்; ஒரு வனுக்காகப் பிறனிடந் தாங்கிப் பேசுதல்; முறையிடுதல்; தனக்குள் பேசுதல்; பாடங் கேட்டல்.

**சொல்லிப்போடுதல், சொல்லிவிடுதல்** – வெளியிடுதல்; காட்டிக் கொடுத்தல்; ஆள்மூலம் செய்தியனுப்புதல்; அழைத்துவரச் செய்தி அனுப்புதல்.

**சொல்லிவைத்தல்** – முன்னறிவித்தல்; கற்பித்தல்.

**சொல்லிழுக்கு** – சொற்குற்றம்.

**சொல்லிறத்தல்** – வாக்கை மீறுதல்.

**சொல்லின்பம்** – சொற்சுவை.

**சொல்லின்முடிவின் அப்பொருள் முடித்தல்** – சொல் முடிந்தவிடத்து மற்றப் பொருள்களையும் முடியவைக்கும் உத்திவகை.

**சொல்லுதல்** – பேசுதல்; அறிவித்தல்; திருப்பிக் கூறுதல்; கட்டளையிடுதல்; புத்திகூறல்; புகழ் தல்; களைதல்.

**சொல்லுரிமை** – அழுத்தமாய்த் திருந்திய பேச்சு.

**சொல்லுருபு** – வேற்றுமையுருபுகட்குப் பதிலியாக வழங்குஞ் சொல்.

**சொல்லுரை** – சொற்பயன்.

**சொல்லுறுதி** – வாக்கு நிறைவேற்றுகை.

**சொல்லெச்சம்** – சொல் எஞ்சி நிற்பது.

**சொல்லேருழவர்** – அமைச்சர்; புலவர்.

**சொல்வகை** – சொல்லியற் பகுப்பு; பேசுந்திறம்; கூத்துக்குரியதாய் வரும் பாட்டு.

**சொல்வழு** – சொல்லிலக்கணத்தோடு பொருந் தாமையாகிய குற்றம்.

**சொல்வளம்** – சொற்பொலிவு.

**சொல்வளர்த்தல்** – செய்தியைப் பலருமறியச் செய்தல்; வீணாகச் சொல்லைப் பெருக்குதல்.

**சொல்வன்மை** – பேச்சுவன்மை; சொல்திறம்.

**சொல்விழுக்காடு** – பொருளின்றி வரும் துணைச் சொல்.

**சொல்விளம்பி** – பேசச் செய்யும் கள்.

**சொல்வென்றி** – வாதத்தில் வெல்லுதல்.

**சொலவு** – சொல்லுகை; பழமொழி.

**சொலி** – மரப்பட்டை.

**சொலித்தல்** – உரித்தல்; பேர்த்தல்; ஒலித்தல்; எரிதல்.

**சொலிப்பு** – சுடர், ஒளி.

**சொலியன்** – காண்க: முடக்கொற்றான்.

**சொள்ளல், சொள்ளை** – சொத்தை; ஒல்லி; ஒன்றுக்கும் பயனற்றவன்; அம்மைவடு; இழுக்கு; செயற்கேடு.

**சொற்காத்தல்** – புகழைப் போற்றுதல்; வாக்கை நிறைவேற்றுதல்; அடக்கிப் பேசுதல்.

**சொற்காரி** – ஏழுவகை மேகங்களுள் ஒன்று.

**சொற்குற்றம்** – சொல்லிலக்கணத்திற்கு மாறான குற்றம்; சொல்லின் தீமை.

**சொற்கேட்டல்** – ஏவற்படி நடத்தல்; வசை யைப் பொறுத்தல்; வசைபெறுதல்.

**சொற்கோ** – திருநாவுக்கரசர்.

**சொற்சாதுரியம், சொற்சித்திரம்** – நாவன்மை; பேச்சுநயம்.

**சொற்சிதைவு** – சொல்லின் மாறுபட்ட உருவம்.

**சொற்சிமிட்டு** – பொடிவைத்துப் பேசுகை; சொல்வன்மை.

**சொற்சீரடி** – அம்போதரங்க வுறுப்பு.

**சொற்சுவை** – சொல்லின்பம்.

**சொற்செலவு** – செல்வாக்கு; பரிந்து பேசுகை.

**சொற்செறிவு** – சொல்வளம்.

**சொற்சோதனை** – சொல்லாராய்ச்சி.

**சொற்சோர்வு** – சொற்பிழை; தடுமாறிப் பேசுதல்.

**சொற்பசீவனம்** – வறுமைப்பட்ட வாழ்வு.

**சொற்படுத்துதல்** – இசைக்கு இணங்கப் பதமமைத்தல்.

**சொற்படுதல்** – பலன்மிகுதல்.

**சொற்பத்திலேபார்த்தல்** – காரியங்களை எளிதின் முடிக்க முயலுதல்; நயமாக வாங்குதல்.

**சொற்பதம்** – சொல்லளவு; சொல்லாற் குறிக்கப் படும் நிலை.

**சொற்பபுத்தி** – குறைந்த அறிவு; இழிதன்மை.

**சொற்பம்** – சிறியது.

**சொற்பவிலை** – மலிவான விலை.

**சொற்பழி** – பிறர் கூறும் நிந்தைமொழி.

**சொற்பழுத்தவர்** – நாவன்மையுடையவர்.

**சொற்பனம்** – காண்க: **சொப்பனம்**.

**சொற்பாடு** – உடன்படிக்கை; பழிச்சொல்.

**சொற்பானு** – இராகு.

**சொற்பிரயோகம்** – சொற்களை ஆளுகை.

**சொற்பிழை** – சொற்குற்றம்; எழுத்துக் குற்றம்.

**சொற்பின்வருநிலையணி** – செய்யுளில் முன்வந்த சொல்லே வெவ்வேறு பொருளில் பின்னும் வரும் அணிவகை.

**சொற்பு** – சொல்லுகை

**சொற்புத்தி** – புத்திமதி.

**சொற்புரட்டு** – பொய்.

**சொற்புள்** – பின் வருவதைச் சொல்லும் காக்கை.

**சொற்பெருக்கு** – சொற்பொழிவு.

**சொற்பொருட்பின்வருநிலை** – சொல்லும் பொருளும் ஒன்றே மறித்து வருவது.

**சொற்பொருள்விரித்தல்** – சொற்பொருள் விளங்க உருபு முதலானவற்றை விரித்துச் சொல்லும் உத்தி.

**சொற்பொழிவு** – அவையில் உரையாற்றுகை.

**சொற்போர்** – ஒரு பொருள் குறித்துப் பேசி வாதிடுவது.

**சொற்றல்** – சொல்லுதல்.

**சொற்றாமம்** – புகழ்ச்சி; புகழ்மாலை.

**சொற்றிரிபு** – சொல்லின்கண் நிகழும் மாறுபாடு.

**சொற்றிருத்தல்** – உச்சரிப்பு நேர்மை; எழுத்துப் பிழையின் திருத்தம்.

**சொற்றொடர்** – பல மொழிகள் கொண்ட வாக்கியம் முதலியன.

**சொற்றொடர்நிலைச்செய்யுள்** – காண்க: **அந்தாதி**.

**சொறி** – தினவு; காண்க: **சொறிசிரங்கு**; சுரசுரப்பு; காஞ்சொறிச்செடி; மீன்வகை.

**சொறிக்கல்** – செம்பாறாங்கல்; மஞ்சள் அரைக்குங் கல்; சுக்கான் கல்.

**சொறிக்கிட்டம்** – இரும்புத்துரு.

**சொறிகட்டை** – காண்க: **ஆதீண்டுகுற்றி**.

**சொறிகொள்ளிநாய்** – பைத்தியம் பிடித்த நாய்.

**சொறிசிரங்கு** – கடுந்தினவை உண்டாக்கக்கூடிய சொறிவகை.

**சொறிதல்** – தினவு நீங்க நகத்தால் தேய்த்தல்; கெஞ்சிக்கேட்டல்; தினவுண்டாதல்.

**சொறிதேய்த்தல்** – தினவுக்காக உரைசுதல்; இழிவாய்க் கருதுதல்; கோபமூட்டுதல்.

**சொறிந்துகொடுத்தல்** – தூண்டுதல்; வாழ்வு கருதி ஒருவனை அணுகி இச்சகமாகத் தொழில் செய்தல்.

**சொறிபுண்** – சிறு பிள்ளைகட்கு உண்டாகும் கட்டுக்கரப்பான்.

**சொறியன்** – சொறியுள்ளவன்; ஒருவகைத் தவளை; காண்க: **சிறுகாஞ்சொறி**.

**சொறிவு** – தினவு.

**சொறுண்டுதல்** – சொறிதல்.

**சொன்ஞானம்** – அறிவுடைமொழி.

**சொன்மகள், சொன்மடந்தை** – சொல்மடந்தையாகிய கலைமகள்.

**சொன்மாரி** – சொல்லாலாகிய மழை; இடையறாத பெரும்பேச்சு.

**சொன்மாலை** – புகழ்ச்சி; புகழ்மாலை.

**சொன்மிக்கணி** – காண்க: **சொற்பின்வருநிலையணி**.

**சொன்முதல்** – நாதத்துக்குக் காரணமான மாயை.

**சொன்றி** – சோறு; சுக்கு.

**சொன்னகாரன்** – தட்டான்.

**சொன்னசீரம்** – கரும்பு.

**சொன்னம்** – பொன்; சோளம்; கால்வாய்.

**சொன்னல்** – சோளம்; இரும்பு.

**சொன்னி** – மணம்.

**சொனகு** – பெரும்புல்வகை.

**சொனாகம்** – வேலிப்பருத்தி, உத்தாமணிக் கொடி.

# சோ

**சோ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ச்+ஓ); உமை; அரண்; வாணாசுரன் நகர்; வியப்புப் பொருளைத் தரும் ஓர் இடைச்சொல்.

**சோகநீக்கி** – மாதவிக்கொடி.

**சோகம்** – துன்பம்; சோர்வு; காமனது ஐந்தம்புகளால் ஏற்படும் துன்பநிலையுள் ஒன்றான உணவில் வெறுப்புண்டாகச் செய்யும் மிகு துன்பம்; சோம்பல்; திரள்; ஒட்டகம்; துடை; கடவுளும் ஆன்மாவும் ஒன்றெனப் பாவிக்கை; அசோகமரம்; கூம்புகை; கடுகுரோகிணிப் பூண்டு; உருண்டை.

**சோகம்பாவனை** – ஆன்மாவும் கடவுளும் ஒன்றெனப் பாவித்தல்.

**சோகரிகன்** – வேட்டைக்காரன்.
**சோகாத்தல்** – துன்பமடைதல், வருந்துதல்.
**சோகாப்பு** – துன்பம்.
**சோகாரி** – காண்க: **கடம்பு.**
**சோகி** – பலகறை; பாம்புப்பிடாரன்.
**சோகித்தல்** – துன்பமடைதல்; மயங்குதல்.
**சோகு** – பேய்.
**சோகை** – இரத்தக் குறைவால் முகம் வெளுத்து ஊதுமாறு செய்யும் நோய்வகை.
**சோங்கம்** – அகில்மரம்; காண்க: **கிச்சிலிக் கிழங்கு.**
**சோங்கு** – மறதி; துப்பாக்கிக்கட்டை; மரக்கலம்; கானாறு சூழ்ந்து விளங்கும் மலைச்சோலை; நாரை; கோங்கிலவுமரம்.
**சோங்குதல்** – சரிவாதல்.
**சோச்சி** – சோறு.
**சோச்சிபாச்சி** – சோறும் பாலும்.
**சோச்சியகன்** – கீழ்மகன்.
**சோசம்** – தென்னை.
**சோசனம்** – வெள்ளை வெங்காயம்.
**சோசித்தல்** – வற்றுதல்; துன்பப்படுதல்; சோர்வடைதல்.
**சோசியம்** – காண்க: **சோதிடம்.**
**சோசியன்** – காண்க: **சோதிடன்.**
**சோட்டா** – சிறுகழி; இலேசான; சிறிய; தடிக்கம்பு.
**சோட்டை** – பேராவல்; அன்பு.
**சோட்டைப்பண்டம்** – விருப்பவுணவு.
**சோடசம்** – பதினாறு.
**சோடசோபசாரம்** – பதினாறுவகைப் போற்றுகை; அவை: தாம்பூலமளித்தல், அமுதம் ஏந்தல், வாய் கொப்புளிக்க நீர் தருதல், ஆடை சாத்தல், கருப்பூர தீபம் ஏந்துதல், கால் கழுவ நீர்தரல், இருக்கை யளித்தல், சந்தனம் பூசல், நறும்புகை காட்டல், நீராட்டுதல், மஞ்சளரிசி தூவுதல், மந்திரமலரால் வழிபடல், பூச்சாத்துதல், முப்புரிநூல் தரல், விளக்கேற்றல்.
**சோடணம்** – உலர்த்துதல்; உலர்தல்.
**சோடல்** – புடைவை.
**சோடன்** – சோம்பன்; மூடன்; கீழ்மகன்.
**சோடனை** – அலங்கரிக்கை; அழகு; ஏறிட்டுக் கற்பிக்கை.
**சோடி** – இரட்டை; ஒப்பு; பட்டாவுரிமையை நீக்குகை; வரிவகை; உசிலம்பொடி.
**சோடிசேர்த்தல்** – பொலிகாளையோடு பசுவைப் புணரவிடுதல்; மாட்டிற்கு இணைசேர்த்தல்.
**சோடித்தல்** – அலங்கரித்தல்; கற்பித்தல்; புனைந்து பேசுதல்.
**சோடிப்பு** – அலங்கரிக்கை; கற்பனை.
**சோடு** – காலுறை; கவசம்; இரட்டை; பறவை முதலியவற்றின் ஆண்பெண் இரட்டைகளுள் ஒன்று; மிதியடிவகை; ஒரிணை வரிசை; ஒப்பு; ஓர் எடை; ஓரளவு; சுவடு.
**சோடுகட்டுதல்** – இணைசேர்த்தல்; இரட்டையாக்குதல்.
**சோடை** – வறட்சி; காய்ந்துபோன மரம்; காரியக்கேடு; ஒரு நோய்வகை; சோர்வு; அறிவிலி; விருப்பம்; மகிழ்ச்சி; தொழில்; கோடைகாலத்தில் வயல்வழிப் பாதையில் வண்டி சென்ற தடம்; சுவடு.
**சோடையன்** – வலுவற்றவன்.
**சோணகிரி** – திருவண்ணாமலை.
**சோணங்கி** – மெலிந்தவர்; ஒரு நாய்வகை.
**சோணசைலம்** – காண்க: **சோணகிரி.**
**சோணம்** – சிவப்பு; ஓர் ஆறு; பொன்; இரத்தம்; கடல்; செங்கரும்பு; செந்தூரம்; தீ.
**சோணாகம்** – பெருவாகைமரம்.
**சோணாடு** – சோழநாடு.
**சோணி** – பலகறை; இரத்தம்.
**சோணிதக்கட்டு** – சூதகக்கட்டு.
**சோணிதம்** – இரத்தம்; சிவப்பு; காண்க: **சுரோணிதம்; மஞ்சள்;** வாதநோய்வகை.
**சோணேசன்** – திருவண்ணாமலையிற் கோயில் கொண்ட சிவபெருமான்.
**சோணை** – காதின் அடித்தண்டு; புகையிலை முதலியவற்றின் காம்பினடி; சோணையாறு; திருவண்ணாமலை; திருவோணநாள்; மண்வெட்டியில் காம்பு செருகும் அடிப்பகுதி; கைப்பிடிச் சுவர்.
**சோணைக்காது** – அடிபெருத்த காது.
**சோத்தம்** – இழிந்தார் செய்யும் வணக்கம்.
**சோத்தாள்** – வேலை செய்யாத சோம்பேறி.
**சோத்தி** – புலன்கள் செயலற்று உறங்கும் நிலை; நடுஇரவு.
**சோத்தியம்** – வியப்பு; வியக்கத்தக்கது; ஆராயத்தக்கது; குற்றச்சாட்டு; தவறு; கழிக்கப்படுந் தொகை; வினா; நடுஇரவு.
**சோத்திரம்** – காது; கேள்வி.
**சோத்திரியம்** – வேதம்வல்ல பார்ப்பனர் முதலியோர்க்கு ஆதியில் விடப்பட்ட இறையிலி நிலம்; அரசாங்க ஊழியம் செய்தவர்க்கு விடப்பட்ட இறையிலி நிலம்.
**சோத்திரியர்** – வேதாத்தியயனம் செய்த பார்ப்பனர்.
**சோத்தும்** – காண்க: **சோத்தம்.**
**சோதகம்** – தூய்மைசெய்தல்; ஆய்வு; கழிக்கும் தொகை; தலைப்பெயல் மழை; மழைமுடிவில் விழுந் தூறல்.
**சோதகன்** – கல்விமான்.

**சோதம்** – தூய நீர்.
**சோதரன்** – உடன்பிறந்தான்.
**சோதரி(ரை)** – உடன்பிறந்தாள்.
**சோதனம்** – சோதித்தல்; உலோகங்களின் தரத்தை ஆய்தல்; உலோகங்களைப் புடமிடுகை; நிமித்தம்.
**சோதனி** – துடைப்பம்; செத்தை.
**சோதனை** – ஆராய்ச்சி; ஆராய்வு, பரீட்சை; தெய்வசோதனை; உலோகங்களின் தரத்தைச் சோதிக்கை; குறிப்பு; முகத்தலளவு; தீமை செய்யத் தூண்டுகை; பேதிமருந்து.
**சோதி** – கடவுள்; சூரியன்; ஒளி; அருகன்; சிவன்; திருமால்; கதிர்; தீ; நட்சத்திரம்; விளக்கு; கருப்பூர தீபம்; சாதிலிங்கம்; ஞானம்; பூநாகம்; சுவாதிநாள்; சுவர் முதலியவற்றில் காணும் வெடிப்பு.
**சோதிக்குண்மணி** – முத்து; வெள்ளொளியால் சூழ்ந்த மணி.
**சோதிடநூல், சோதிடம்** – வானவியல்; கோள்களின் பலன்களை அறிவிக்கும் நூல்; நிமித்தம்.
**சோதிடர்** – சோதிடம் கூறுவோர்; சந்திரன், சூரியன், கோள், மீன் முதலிய வான மண்டலங்கள்.
**சோதிடவர்** – சோதிடம் வல்லவர்.
**சோதிடன்** – சோதிடம் கூறுவோன்.
**சோதித்தல்** – ஆராய்தல்; விசாரணைசெய்தல்; தூய்மைசெய்தல்; சோதனைபண்ணுதல்; விளக்கமுறுதல்; தீமைசெய்யத் தூண்டுதல்.
**சோதிநாயகன்** – ஒளிவடிவான கடவுள்.
**சோதிநாள்** – சுவாதிநாள்.
**சோதிப்பிழம்பு** – கதிர்த்திரட்சி.
**சோதிமயம்** – ஒளிவடிவு; காண்க: வாலுளுவை.
**சோதியம்** – காண்க: வாலுளுவை.
**சோதியன்** – ஒளிவடிவான கடவுள்.
**சோதியான்** – ஒளிப்பிழம்பான சூரியன்.
**சோதிராத்திரி** – நள்ளிரவு.
**சோதிவிருட்சம்** – இரவில் ஒளியுடன் விளங்குவதாகக் கருதப்படும் மரவகை.
**சோதினி** – செத்தை; துடைப்பம்.
**சோந்தை** – பற்று; இடையூறு.
**சோப்பம்** – இரக்கம்.
**சோப்பளாங்கி** – பயனற்றவன்; வலுவற்றவன்.
**சோப்பி** – ஈயோட்டி.
**சோப்பு** – அடி; சவர்க்காரம்.
**சோப்புதல்** – சோர்வுறச் செய்தல்; அடித்தல்.
**சோபகிருது** – அறுபதாண்டுக் கணக்கில் முப்பத்தேழாம் ஆண்டு.
**சோபநித்திரை** – புணர்ச்சி முடிந்தபின் நிகழும் அயர்ந்த உறக்கம்.
**சோபம்** – அழகு; ஒளி; இரத்தத்தைக் குறைக்கும் நோய்வகை; சோர்வு; கள்; துன்பம்; சோம்பல்; இரக்கம்; பத்துக்கோடி; கோடாகோடி; மூர்ச்சை.
**சோபலம்** – சோம்பல்; பெருஞ்சீரகம்.
**சோபலாங்கி** – காண்க: **சோப்பளாங்கி.**
**சோபனஞ்சொல்லுதல்** – முதற்பூப்பு முதலிய நற்செய்தி கூறுதல்; வாழ்த்துக் கூறுதல்; மங்களப்பாட்டுப் பாடல்.
**சோபனப்பாட்டு** – மங்களப்பாட்டு.
**சோபனம்** – அழகு; நன்மை; வாழ்த்து; வாழ்த்துப் பாட்டு; நற்செய்தி; நன்னிமித்தம்; நன்முகூர்த்தம்; நித்திய யோகத்துள் ஒன்று; நற்செயல்.
**சோபாதானம்** – முதற்காரணமுள்ளது.
**சோபாலிகை** – அடம்பு; விரிதூறு.
**சோபானம்** – படிக்கட்டு; தாழ்வாரம்.
**சோபானமுறை** – படிமுறை.
**சோபானவகை** – பாரம்பரியம்.
**சோபித்தல்** – ஒளிசெய்தல்; அழகாதல்; மேம்படுதல்; சோர்வுறுதல்.
**சோபிதம்** – அழகு; ஒளி.
**சோபை** – அழகு; ஒளி; ஒரு நோய்வகை.
**சோம்பல்** – மடிமை; மயக்கத்தைத் தரும் அம்மை நோய்; மயக்கம்.
**சோம்பலம்** – சேங்கொட்டை.
**சோம்பன்** – சோம்பேறி.
**சோம்பாகி(யி)** – சமையற்காரன்.
**சோம்பி** – காண்க: **சோம்பன்.**
**சோம்பு** – சோம்பல்; மந்தம்; பெருஞ்சீரகம்.
**சோம்புதல்** – சோம்பலடைதல்; அறிவு மந்தமாதல்; ஊக்கமிழத்தல்; வாடுதல்; கெடுதல்; பின்வாங்குதல்.
**சோம்பேறி** – சோம்பலாயிருப்பவன்; தங்கத்தை இளக்கும் திராவகம்.
**சோமக்கிரணம்** – காண்க: **சந்திரகிரகணம்.**
**சோமகுண்டம்** – காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ள ஒரு புண்ணிய தீர்த்தம்.
**சோமசுந்தரன்** – மதுரையில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான்.
**சோமசூத்திரம்** – சிவன்கோயிலில் திருமுழுக்காட்டிய நீர் விழும் கோமுகம்.
**சோமசேகரன்** – நிலவை முடியில் உடைய சிவன்.
**சோமதாரி** – இந்துப்பு.
**சோமதிசை** – குபேரனது திசையான வடதிசை.
**சோமநாதி** – ஒருவகைப் பெருங்காயம்.
**சோமபந்து** – ஆம்பல்; சூரியன்; புதன்.
**சோமபானம்** – வேள்வியில் குடிக்கும் சோமச்சாறு.
**சோமம்** – யாகரசக்கொடி; காண்க: **கொடிக்கள்ளி**; ஒரு வேள்வி; கள்.

**சோமராகம்** – பாலைப் பண்களுள் ஒன்று.

**சோமவட்டம்** – அமிர்தம் பெருகும் இடம் என்று கருதப்படும் புருவமத்தி.

**சோமவல்லரி** – காண்க: **பொன்னாங்காணி.**

**சோமவல்லி** – சீந்திற்கொடி.

**சோமவாரம்** – திங்கட்கிழமை.

**சோமன்** – சந்திரன்; சோமசுந்தரன்; குபேரன்; ஒரு வள்ளல்; எட்டு வசுக்களுள் ஒருவன்; கருப்பூரம்; சவர்க்காரம்; வேட்டி; ஆடை; நீல பாடாணம்; வெள்ளிமணல்.

**சோமாறி** – சோம்பேறி; ஏனாதியர்வகை; சமையற்காரன்.

**சோமாறுதல்** – இரவல் வாங்குதல்; ஒருத்தியைப் பலர் புணர்தல்; திருடுதல்; பண்டமாற்றுதல்; ஒரு பாத்திரத்திலிருந்து மற்றொன்றிற்குப் பகிர்தல்; சோம்புதல்; பின்வாங்குதல்.

**சோமி** – துர்க்கை.

**சோமேசன்** – காண்க: **சோமசேகரன்.**

**சோர்** – சோர்வு; வஞ்சகம்; பகட்டு.

**சோர்ச்சி** – தளர்வு; வஞ்சகம்.

**சோர்த்தல்** – திருடுதல்.

**சோர்தல்** – தளர்தல்; மனம்தளர்தல்; மூர்ச்சித்தல்; நழுவுதல்; கண்ணீர் முதலியன வடிதல்; கசிதல்; கழலுதல்; வாடுதல்; தள்ளாடுதல்; தடுமாறுதல்; இறத்தல்; விட்டொழிதல்; துயரப்படுதல்; உடலில் தைலம் முதலியன இறங்குதல்.

**சோர்பதன்** – தளர்ந்த காலம்.

**சோர்பு** – தளர்ச்சி.

**சோர்பொழுது** – மாலைக்காலம்.

**சோர்வு** – தளர்ச்சி; மறதி; மெலிவு; இழுக்கு; சொரிகை; திருட்டு; விபசாரம்.

**சோர்வுபார்த்தல்** – ஏமாறின சமயம் பார்த்தல்.

**சோரகவி** – பிறர் பாடியதைத் தான் பாடியதாகக் கூறுபவன்; திருட்டுப் பாடல்.

**சோரகன்** – திருடன்.

**சோரங்கொடுத்தல்** – பறிகொடுத்தல்; மனைவியின் கற்பழியப் பெறுதல்; துன்புறுதல்.

**சோரத்தனம்** – திருட்டுக்குணம்; ஏமாற்றுங் குணம்; விபசாரம்.

**சோரத்துவம்** – திருட்டுக்குணம்.

**சோரப்பார்வை** – திருட்டுப்பார்வை; விபசாரிகளின் நோக்கு.

**சோரப்பெய்தல்** – மழை மிகுதியாகப் பெய்தல்.

**சோரப்போடுதல்** – ஒரு செயலை ஆறப்போடுதல்; பின்தள்ளிப் போடுதல்.

**சோரபயம்** – கள்வர் பயம்.

**சோரபுத்திரன்** – கணவனல்லாத பிறனுக்குப் பிறந்த புதல்வன்.

**சோரம்** – களவு; வஞ்சனை; விபசாரம்.

**சோரம்போதல்** – வைப்புப்பாடாணவகை; களவு போதல்; விபசாரஞ்செய்தல்.

**சோரமார்க்கம்** – விபசாரம்.

**சோரல்** – தளர்தல்; கெடுதல்.

**சோரவித்தை** – திருட்டுத்தொழில்.

**சோரன்** – திருடன்; விபசாரம் செய்பவன்; ஆட்டுக்குட்டி.

**சோராவ(வா)ரி** – கொள்ளை; வலாற்காரம்.

**சோரி** – இரத்தம்; மழை; சிறுசெருப்படிச்செடி.

**சோரியிளநீர்** – செவ்விளநீர்.

**சோல்(லு)தல்** – கைப்பற்றுதல்; மீட்டுக்கொள்ளுதல்.

**சோலி** – செயல்; தொந்தரவு; முலைக்கச்சு; தோணியிலொதுக்கிடம்; இரவிக்கைவகை.

**சோலிக்காரன்** – காரியக்காரன்; தொல்லை கொடுப்பவன்.

**சோலிசெய்தல்** – வேலைசெய்தல்; நேரம் போக்குதல்.

**சோலிமாலி** – தொல்லை.

**சோலை** – மரங்கள் செறிந்து நிழல்செய்யும் இடம்; சீனிமரம்.

**சோலைநுகர்வு** – வேனிற்காலத்துச் சோலையின் குளிர்ச்சி இன்பம் துய்த்தல்.

**சோலைமலை** – காண்க: **அழகர்மலை.**

**சோவானை** – மங்களகரமான ஆரத்திப் பாட்டு.

**சோவி** – காண்க: **சோகி.**

**சோவெனல்** – ஒலிக்குறிப்பு.

**சோவை** – காண்க: **சோகை.**

**சோழகக்கச்சான்** – தென்மேற்குக் காற்று.

**சோழகக்கொண்டல்** – தென்கீழ்த்திசைக் காற்று.

**சோழகம்** – தென்காற்று.

**சோழகன்** – ஒரு காட்டுச் சாதியான்; கள்ளர் பட்டப்பெயருள் ஒன்று.

**சோழங்கன்** – சோழன்.

**சோழநாடு** – சோழர் அரசாண்ட தமிழ்நாட்டுப் பகுதி.

**சோழம்** – காண்க: **சோழநாடு**; பார்ப்பனனைக் கொன்ற ஒரு சோழனைப் பற்றியிருந்த பேய்; விடாதுபற்றித் துன்புறுத்துவோன்; சோம்பேறி; மூடன்.

**சோழமண்டலம்** – காண்க: **சோழநாடு.**

**சோழன்** – சோழவரசன்.

**சோழி** – காண்க: **சோகி.**

**சோழிப்பல்** – பலகறைபோன்ற பல்.

**சோழியக்கடகம், சோழியக்கூடை** – மண் அள்ளும் கூடை, சாட்டுக்கூடை.

**சோழியப்பாரை** – மண்வெட்டிவகை.

**சோழியப்பை** – இரப்போர் பை.

**சோழியமணம்** – இருபதினாயிரம் பாக்குக் கொண்ட அளவு.

**சோழியன்** – சோழநாட்டான்; பார்ப்பனர், வேளாளர் முதலியோருள் சில வகுப்பினர்க்கு வழங்கும் பெயர்; ஒரு மண்வெட்டிவகை.

**சோழியாவணம்** – காண்க: **சோழியமணம்.**

**சோளகம்** – குடுமி வைக்கும் சடங்கு.

**சோளம்** – ஒரு தானியவகை; சங்கஞ்செடி; காண்க: **சோழம்.**

**சோளன்** – காண்க: **சோழன்**; மக்காச்சோளம்; ஒரு தானியவகை.

**சோளி, சோளிகை** – காண்க: **சோழியப்பை.**

**சோற்றமலை** – காண்க: **சோற்றுக்கட்டி.**

**சோற்றலகு** – சிப்பல்; மரத்தில் வயிரமில்லாத பாகம்.

**சோற்றி** – மரத்தினுட்சோறு; வயிரமின்மை; பழத்தின் சதைப்பாகம்; பச்சிலைவகை; சோறு.

**சோற்றிலை** – காண்க: **சோற்றுக்கற்றாழை.**

**சோற்றுக்கட்டி** – அன்னவுருண்டை.

**சோற்றுக்கடன்** – உண்ட சோற்றுக்குக் கைம்மாறாகச் செய்யும் செயல்; கடமையாக மாத்திரம் இடும் சோறு.

**சோற்றுக்கற்றாழை** – வெள்ளிய உள்ளீடுடைய கற்றாழைவகை.

**சோற்றுக்குவால்** – அன்னக்குவியல்.

**சோற்றுக்கை** – சோற்றை எடுத்துதவும் வலக்கை.

**சோற்றுத்தடி** – காண்க: **சோற்றுக்கட்டி.**

**சோற்றுத்துருத்தி** – சோற்றால் நிரப்பிய துருத்தி; உடம்பு.

**சோற்றுப்பற்று** – சோற்றுப்பருக்கை.

**சோற்றுப்பனை** – வயிரம் அற்ற பனை.

**சோற்றுப்பானை** – சோறாக்கும் மட்பாண்டம்; பெருந்தீனிக்காரன்.

**சோற்றுப்பை** – இரைப்பை.

**சோற்றுமயக்கம்** – பேருணவு உண்டமையால் வரும் உறக்கம்.

**சோற்றுமாடு** – பயனற்றவன்; சோறு தின்பதற்கு மாத்திரமுள்ள மாடு போன்றவன்.

**சோறாக்குதல்** – உணவு சமைத்தல்.

**சோறு** – அன்னம்; மிருதங்கத்தின் நடுவில் பூசும் கலவைச்சாந்து; கற்றாழை முதலியவற்றின் சோறு; பனை முதலியவற்றின் உள்ளீடு; முத்தி; பரணிநாள்.

**சோறுகொல்லி** – பெருந்தீனிக்காரன்; அன்னபேதி.

**சோறுவடித்தல்** – காண்க: **சோறாக்குதல்**; சமைத்த சோற்றினின்று கஞ்சியை வடித்தல்.

**சோறுவாய்த்தல்** – செஞ்சோற்றுக் கடன் கழித்தல்.

**சோறூட்டல்** – குழந்தைகளுக்கு முதன்முதலில் சோறூட்டும் சடங்கு.

**சோன்மதன்** – பித்தன்.

**சோனகம்** – ஒரு நாடு; ஒரு மொழி.

**சோனகன்** – யவன நாட்டான்.

**சோனம்** – மேகம்; காண்க: **சோனகம்.**

**சோனாமா(வா)ரி** – விடாமழை.

**சோனாமேகம்** – பெருமழை பொழியும் முகில்.

**சோனி** – வளர்ச்சியற்றது; மெலிந்தவன்(ள்).

**சோனை** – கார்மேகம்; விடாமழை; விடாமழைப் பாட்டம்; மழைச்சாரல்; திருவோணநாள்; கைப்பிடிச் சுவர்.

**சோனைகட்டுதல்** – மழைபெய்யுங் குறிப்பாக ஓரிடத்தில் மேகம் கூடியிருக்கை.

**சோனைப்புல்** – ஒரு புல்வகை.

**சோனைமாரி** – காண்க: **சோனாமா(வா)ரி.**

**சோனைமேகம்** – காண்க: **சோனாமேகம்.**

# சௌ

**சௌ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ச்+ஔ); சிறுமி; சுமங்கலிகளைக் குறிக்க வழங்கும் சௌபாக்கியவதி என்னும் சொல்லின் முதலெழுத்துக் குறிப்பு.

**சௌக்கம்** – பண்டங்களின் மலிவு.

**சௌக்கியம்** – ஆரோக்கியம்; காண்க: **சௌகரியம்**; மலங்கழிக்கை.

**சௌகதன்** – சூனியவாதி; புத்தன்.

**சௌகந்தம்** – நறுமணம்.

**சௌகந்தி** – ஒரு மாணிக்கவகை; கந்தக பாடாணம்.

**சௌகந்திகம்** – வெள்ளாம்பல்; காண்க: **சௌகந்தி; நீலோற்பலம்**; செங்குவளை.

**சௌகந்திகை** – நறுமணமுடையது; ஒருவகைத் தாமரை.

**சௌகம்** – நான்கு.

**சௌகரியம்** – ஏந்து, வசதி; மலிவு.

**சௌசம்** – தூய்மை; கால்கழுவுதல்.

**சௌசன்னியம்** – அன்பு, இனிய குணம்; ஒற்றுமை.

**சௌசிகன்** – தையற்காரன்.

**சௌசேயன்** – வண்ணான்.

**சௌடால்** – காண்க: சவடால்.
**சௌடு** – வண்டல்.
**சௌண்டி** – காண்க: திப்பிலி.
**சௌண்டிகன்** – கள் விற்போன்.
**சௌத்தி** – சக்களத்தி.
**சௌத்திராந்திகம்** – புத்தசமய வகையுள் ஒன்று.
**சௌத்திராமணி** – ஒரு வேள்விவகை.
**சௌதம்** – அரண்மனை; சாலை; வெள்ளி; மலிவு.
**சௌதாயம்** – மகளுக்குக் கொடுக்கும் சீர்வரிசை; நன்கொடை.
**சௌந்தரம்** – அழகு.
**சௌந்தரன்** – அழகன்; சிவன்.
**சௌந்தரி** – அழகி; பார்வதி.
**சௌந்தரியம்** – அழகு; சாந்தம்.
**சௌந்திரியவதி** – அழகுள்ளவள்.
**சௌந்தரீகம்** – பேரழகு.
**சௌந்தரேசன்** – மதுரைச் சொக்கநாதர்.
**சௌப்திகம்** – துயில்வோரை எதிர்த்துக் கொல்லுகை.
**சௌபஞ்சனம்** – புனல்முருங்கைமரம்.
**சௌபன்னம்** – சுக்கு; மரகதம்.
**சௌபாக்கியம்** – மிகுபேறு; யோகத்துள் ஒன்று; உபநிடதத்துள் ஒன்று.
**சௌபாக்கியவதி** – சிறு பெண்கள்; சுமங்கலிகளின் பெயர்க்கு முன் வழங்கப்படும் ஒரு மங்கலச்சொல்.
**சௌபானம்** – படிக்கட்டு.
**சௌமன்** – சந்திரன் மகனான புதன்.
**சௌமாரம்** – இளமை.
**சௌமிய** – அறுபதாண்டுக் கணக்கில் நாற்பத்து மூன்றாம் ஆண்டு.
**சௌமியத்துவம்** – அழகு; சாந்தம்; மனவொடுக்கம்.
**சௌமியதாது** – கோழை.
**சௌமியம்** – அழகு; சாந்தம்.
**சௌமியவாரம்** – புதன்கிழமை.
**சௌமியன்** – சாந்தமுள்ளவன்; புதன்; சிவன்; அருகன்; சமணத்துறவி.
**சௌமேச(ரு)கம்** – பொன்.
**சௌரகன்** – நாவிதன்.
**சௌரசனம்**– சூரசேனி என்னும் பாகதமொழி.
**சௌரப்பியன்** – குபேரன்.
**சௌரம்**– சூரிய சம்பந்தம்; சூரியனை வழிபடுஞ் சமயம்; ஓர் உபபுராணம்; மயிர்மழிக்கை.
**சௌரமாதம்** – சூரிய கதியினால் ஏற்படும் மாதம்.
**சௌரமானம்** – சூரியகதியைக்கொண்டு காலம் கணிக்கும் முறை.
**சௌரன்** – கள்ளன்; சனி; சூரியன்; சோமன்.
**சௌராட்டிரம்** – ஒரு நாடு; ஒரு பண்வகை.
**சௌரி** – திருமால்; சனி; யமன்; கன்னன்; யமுனையாறு; கவரிமான் மயிரால் அமைந்த அரச சின்னம்.
**சௌரியம்** – களவு; வீரம்; ஏந்து, வசதி.
**சௌரியலட்சுமி** – வெற்றித் திருமகள்.
**சௌரியன், சௌரியவான்** – வீரன்.
**சௌரு** – கொச்சை நாற்றத்தோடுகூடிய சுவை; உவர்ப்பு.
**சௌலப்பியம்** – எளிவந்த தன்மை.
**சௌவீரகம்** – இலந்தைமரம்.
**சௌவீரம்** – ஒரு மருந்துவகை; இலந்தைமரம்.
**சௌளம்** – மயிர்களைதல்; குடுமிவைத்தல்.
**சௌளாம்பரம்** – பட்டாடை.
**சௌனிகன்** – ஊன் விற்போன்.

## ஞ

**ஞஃகான்** – 'ஞ' என்னும் எழுத்து.
**ஞஞ்சை** – மயக்கம்.
**ஞஞ்ஞையெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**ஞண்டு** – நண்டு; கற்கடகராசி.
**ஞத்துவம்** – அறியுந்தன்மை.
**ஞமகண்டன்** – யமகண்டன்.
**ஞமர்தல்** – பரத்தல்; தங்குதல்; முற்றுதல்; ஒடிதல்; நெரிதல்.
**ஞமலி** – நாய்; மயில்; கள்.
**ஞமன்** – யமன்; துலாக்கோலின் சமன்வாய்.
**ஞயம்** – நயம்; இனிமை.
**ஞரல்(லு)தல்** – ஒலித்தல்; முழங்குதல்.
**ஞரிவாளை** – ஒரு பூடுவகை; ஒரு மரவகை.
**ஞலவல், ஞவல்** – கொசுவகை; மின்மினிப்பூச்சி.
**ஞறா** – மயிலின் குரல்.

## ஞா

**ஞா** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ஞ்+ஆ); கட்டு; பொருந்து.
**ஞாங்கர்** – இடம்; பக்கம்; மேல்; அங்கே; முன்; இனி; வேற்படை.
**ஞாஞ்சில்** – கலப்பை; மதிலுறுப்பு.
**ஞாட்பு** – போர்; போர்க்களம்; படை; கூட்டம்; கனம்; வலிமை.
**ஞாடு** – நாட்டுப்பகுதி.

**ஞாண்** – கயிறு; வில்லின் நாண்.

**ஞாத்தல்** – கட்டுதல்; பொருந்துதல்.

**ஞாதம்** – அறியப்பட்டது; அறிபவன்.

**ஞாதவ்வியம்** – அறியவேண்டியது.

**ஞாதா** – ஞானவான்; அறிகிறவன்.

**ஞாதி** – பங்காளி, தாயாதி; சுற்றம்; தொலையுறவினர்; பதினோர் உருத்திரருள் ஒருவர்.

**ஞாதி(து)ரு** – அறிபவன்; ஆன்மா.

**ஞாதுருத்துவம்** – அறிகிறவனான தன்மை.

**ஞாதேயம்** – உறவு; உறவுத்தன்மை.

**ஞாபகக்கருவி** – அறிதற்கு உதவுங் கருவி.

**ஞாபகக்குறி** – நினைவூட்டுவதற்கு அடையாளமாக வைத்த பொருள்.

**ஞாபகக்குறிப்பு** – நினைவூட்டுவதற்குரிய சீட்டு.

**ஞாபகக்குறை** – நினைவின்மை.

**ஞாபகங்கூறல்** – குறித்த பொருளை நேரே கூறாது வேறு வகையில் நினைவுபடுத்தும் ஒருவகைத் தந்திரவுத்தி.

**ஞாபகசத்தி** – நினைவாற்றல்.

**ஞாபகப்படுத்துதல்** – நினைப்பூட்டுதல்; நினைவிற் கொள்ளுதல்.

**ஞாபகம்** – நினைவு; அறிவு; குறிப்பிப்பது; நற்பொருள்; மேற்கோள் இலக்கியம்; குறிப்பு.

**ஞாபகம்பண்ணுதல்** – காண்க: **ஞாபகப்படுத்துதல்**; மனப்பாடம் பண்ணுதல்.

**ஞாபகமறதி** – நினைவின்மை.

**ஞாபகவேது** – அறிவிற்குக் காரணமாயது.

**ஞாபித்தல்** – நினைப்பூட்டுதல்.

**ஞாய்** – தாய்; உன் தாய்.

**ஞாயம்** – காண்க: **நியாயம்.**

**ஞாயில்** – கோட்டையின் ஏவறை.

**ஞாயிறு** – சூரியன்; ஞாயிற்றுக்கிழமை; சௌரமாதம்.

**ஞாயிறுதிரும்பி** – காண்க: **சூரியகாந்தி.**

**ஞாயிறுபோது** – உச்சிப்போது.

**ஞாயிறுவணங்கி** – ஒரு செடிவகை.

**ஞாலம்** – உலகம், பூமி, நிலம்; உயர்ந்தோர்; மாயவித்தை.

**ஞாலமாது** – ஊமத்தை; நிலமகள்.

**ஞாலி(லு)த்தட்டு, ஞாலுதட்டு** – சிற்றுருக்களோடு சேர்த்து மகளிர் கழுத்தில் அணியும் அணிகலவகை.

**ஞாலுதல்** – தொங்குதல்; பொழுதுசாய்தல்.

**ஞாழ்** – யாழ்.

**ஞாழல்** – காண்க: புலிநகக்கொன்றை; மயிற்கொன்றைமரம்; பொன்னாவிரை; குங்குமமரம்; கோங்குமரம்; மரவயிரம்; ஆண்மரம்; மல்லிகைவகை.

**ஞாழல்மாது** – காண்க: **ஊமத்தை.**

**ஞாழி** – வள்ளைக்கொடி.

**ஞாளம்** – தண்டு.

**ஞாளி** – நாய்; கள்.

**ஞாளிதம்** – காண்க: **ஞாழி.**

**ஞாளியூர்தி** – நாயை ஊர்தியாக உடைய வைரவன்.

**ஞாற்சி(று)** – தொங்குகை.

**ஞாற்றுதல்** – தொங்கவிடுதல்.

**ஞாறுதல்** – மணம்வீசுதல்; தோன்றுதல்.

**ஞான்றஞாயிறு** – சூரியன் மறையும் நேரம்.

**ஞான்று** – நாள்; காலத்தில்; ஓர் இடைச்சொல்.

**ஞான்றுகொள்ளுதல்** – கழுத்திற் சுருக்கிட்டுச் சாதல்.

**ஞான்றை** – காலம்.

**ஞானக்கண்** – அறிவாகிய பார்வை.

**ஞானக்கந்தம்** – காண்க: **விஞ்ஞானம்.**

**ஞானக்காட்சி** – இறையறிவு; காண்க: **ஞானதிருட்டி.**

**ஞானக்கூத்தன்** – ஞானத்தில் கூத்தாடும் சிவன்.

**ஞானக்கை** – பரஞானமாகிய முத்திசாதனம்.

**ஞானகிருதம்** – தெரிந்து செய்த பாவம்.

**ஞானசத்தி** – முத்தி எய்துமாறு செய்யும் சிவபிரானது சத்தி.

**ஞானசபை** – ஞானம் விளங்கும் சிதம்பரத்தில் உள்ள சிற்சபை.

**ஞானசமாதி** – துறவிகள் நிட்டையின்பொருட்டு நேராக நிமிர்ந்திருக்கும் நிலை.

**ஞானசரிதன்** – ஞானநெறியில் ஒழுகுபவன்.

**ஞானசரீரம்** – அறிவுமயமான உடம்பு.

**ஞானசாதகன்** – மோட்சசாதன முறையில் ஞானநெறி அடையவேண்டி முயல்பவன்.

**ஞானசாதனம், ஞானசாதனை** – மோட்சசாதன முறையில் ஞானநெறி அடைதற்கு வேண்டும் பயிற்சி.

**ஞானசித்தன்** – அறிவு கைவரப்பெற்றவன்.

**ஞானசுகம்** – இறைவனோடு இரண்டறக் கலந்து நிற்கும் பேரின்ப மகிழ்ச்சி.

**ஞானசூனியன்** – அறிவற்றவன்.

**ஞானத்தாளன்** – காண்க: **ஞானி.**

**ஞானத்தில் ஞானம்** – ஞானநிட்டை கூடுகை.

**ஞானத்தில்யோகம்** – ஞானத்தைச் சிந்தித்துத் தெளிகை.

**ஞானத்திறைவி** – அறிவிற்குரிய பெண்தெய்வமான கலைமகள்.

**ஞானதிட்டி, ஞானதிருட்டி** – ஞானத்தால் அறிதல்; முக்கால உணர்ச்சி; ஆசாரிய அருள்.

**ஞானதீட்சை** – ஞானவுபதேசவகை; ஞானஸ்நானக்கிரியை.

**ஞானநாயகன்** – கடவுள்; மெய்யறிவால் சிறந்தவன்.

**ஞானநிட்டை** – இறைவனோடு ஆன்மா ஒன்றி நிற்கும் அனுபவநிலை.

**ஞானநிலை** – காண்க: **ஞானமார்க்கம்; ஆத்தும ஞான நிச்சயம்.**

**ஞானப்பல்** – கடைசிக் கடைவாய்ப்பல்.

**ஞானப்புதல்வன்** – மாணாக்கன்.

**ஞானப்பூங்கோதை** – திருக்காளத்தியில் உள்ள உமாதேவி.

**ஞானப்பைத்தியம்** – ஞானத்தால் உண்டாகும் அறிவுமயக்கம்.

**ஞானபரன்** – ஞானத்தால் சிறந்த கடவுள்.

**ஞானபாதம்** – சிவாகமம் நாற்பாதங்களுள் பதி, பசு, பாசங்களாகிய முப்பொருளைப்பற்றிக் கூறும் முதற்பகுதி; காண்க: **ஞானமார்க்கம்;** அருகக் கடவுளது திருமொழி.

**ஞானபாரகன்** – ஞானவறிவிலே தெளிவடைந்தவன்.

**ஞானபுத்திரன்** – காண்க: **ஞானப்புதல்வன்.**

**ஞானபூசை** – அறிவுநிலையில் நின்று அறிவு நூல்களை ஓதல், ஓதுவித்தல் முதலிய பூசனை.

**ஞானபூரணன்** – அறிவு நிறைந்தவன்.

**ஞானம்** – அறிவு; கல்வி; பரஞானம்; பூமி; தத்துவநூல். தசபாரமிதைகளுள் ஞானம் நிரம்புகை; மதிஞானம், சுருதஞானம், அவதி ஞானம், மனப்பரியய ஞானம், கேவலஞானம் என்னும் ஐவகை ஞானங்கள்; சிவனைச் சகளமும் நிட்களமும் கடந்த திருமேனி உடையவராகக் கேட்டல் முதலிய ஞான முறைப்படி அறிவால் வழிபடுகை; பூசையில் சிவலிங்கம் அமைவதற்குரிய சலாசனங்களுள் ஒன்று.

**ஞானமார்க்கம்** – ஞானநெறி, முத்தி எய்தற்குரிய தலைசிறந்த ஞானபாதம்.

**ஞானமூர்த்தி** – அறிவு உருவமான கடவுள்; சிவன்; அறிவுக்கு இறைவியாம் கலைமகள்.

**ஞானவல்லியம்** – பார்வதி; கிணறு முதலிய வெட்டுதற்குரிய நிலத்தின் இயல்பைக் கூறும் கூவநூல்.

**ஞானவான்** – காண்க: **ஞானி.**

**ஞானவிரல்** – மோதிரவிரல்.

**ஞானவிருத்தன்** – அறிவால் முதிர்ந்தவன்.

**ஞானவீரன்** – பரஞானத்தில் வீரனாயுள்ளவன்.

**ஞானன்** – அறிவு முதிர்ந்தவனான பிரமன்.

**ஞானாகரன்** – அறிவிற்கு இருப்பிடமானவன்.

**ஞானாகாசம்** – ஞானியனைத்தையும் ஒருங்கு உணர்தற்குரிய பரவெளி.

**ஞானாசாரம்** – முத்திமார்க்கத்தில் சிறந்ததாகிய ஞானபாதத்திற்குரிய ஒழுக்கம்.

**ஞானாசாரியன்** – மெய்யறிவு கொளுத்தும் ஆசிரியன்.

**ஞானார்த்தம்** – மெய்ப்பொருள்.

**ஞானாரணியம்** – அறிவை மறைப்பதான கருமம்.

**ஞானானந்தம்** – பேரின்பம்.

**ஞானானந்தன்** – கடவுள்.

**ஞானி** – ஞானமுள்ளவன்; நாலாம் பாதத்தோன்; பேரறிவுடையவன்; அருகன்; நான்முகன்; கேது; சேவல்.

**ஞானேந்திரியம்** – உணர்தற்குரிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன.

**ஞானோதயம்** – மெய்யறிவு தோன்றுகை.

**ஞானோபதேச(ய)ம்** – ஞானபோதனை; ஞானாசிரியரிடத்தே உபதேசம் பெறுகை.

## ஞி

**ஞிமிர்** – ஒலி.

**ஞிமிர்தல்** – வண்டு முதலியன ஒலித்தல்; நிமிர்தல்.

**ஞிமிறு** – தேனீ; வண்டு.

## ஞெ

**ஞெகிழ்தல்** – கழலுதல்; தளர்தல்; மனமிளகுதல்; மலர்தல்; உருகுதல்; மெலிதல்; சோம்புதல்.

**ஞெகிழம்** – சிலம்பு.

**ஞெகிழி** – கொள்ளிக்கட்டை; தீக்கடைகோல்; தீ; காண்க: **கொடிவேலி;** சிலம்பு.

**ஞெண்டு** – காண்க: **ஞண்டு.**

**ஞெண்டுகம்** – காண்க: **பெருவாகை.**

**ஞெண்டுதல்** – கிண்டுதல்.

**ஞெப்தி** – நினைவு; அறிவு.

**ஞெமர்தல்** – பரத்தல்; நிறைதல்.

**ஞெமல்** – சருகு.

**ஞெமல்(லு)தல்** – திரிதல்.

**ஞெமலி** – மகநாள்.

**ஞெமன்கோல்** – துலாக்கோல்.

**ஞெமிடுதல்** – கசக்குதல்.

**ஞெமிதல்** – நெரிதல்.

**ஞெமிர்த்தல்** – ஒடித்தல்; நெரித்தல்; அழுத்தல்; பரப்புதல்.

**ஞெமிர்தல்** – பரத்தல்; முற்றுதல்; தங்குதல்; ஒடிதல்; நெரிதல்.

**ஞெமுக்கம்** – அழுந்துகை; அமுக்கம்.
**ஞெமுக்குதல்** – நெருக்கி வருத்துதல்.
**ஞெமுங்குதல்** – அழுந்துதல்; செறிதல்.
**ஞெமை** – ஒரு மரவகை.
**ஞெரல்** – ஒலி; விரைவு.
**ஞெரி** – முரிந்த துண்டு.
**ஞெரிதல்** – முரிதல்.
**ஞெரேரெ(லெ)னல்** – அச்சக்குறிப்பு; விரைவுக் குறிப்பு; ஒலிக்குறிப்பு; தன்மைக்குறிப்பு.
**ஞெலி, ஞெலிகோல்** – தீக்கடைகோல்.
**ஞெலிதல்** – குடைதல்; தீக்கடைதல்.
**ஞெலுவல்** – காண்க: **செத்தல்.**
**ஞெலுவன்** – தோழன்.
**ஞெள்ளல்** – உடன்படுதல்; ஒலித்தல்; பள்ளமாதல்; பூசல்; விரைவு; சோர்வு; பள்ளம்; மிகுதி; மேன்மை; குற்றம்; வீதி.
**ஞெள்தல், ஞெள்ளுதல்** – உடன்படுதல்; ஒலித்தல்; பள்ளமாதல்.
**ஞெள்ளெனல்** – ஒலிக்குறிப்பு.
**ஞெள்ளை** – நாய்.
**ஞெளிதல்** – காண்க: **நெளிதல்.**
**ஞெளிர்** – யாழ்முதலியவற்றின் உள்ளோசை; ஒலி.
**ஞெளிர்தல்** – எடுத்தலோசையுடன் ஒலித்தல்.
**ஞெறித்தல்** – புறவிதழ் ஒடித்தல்; நெரித்தல்.

## ஞே

**ஞேயம்** – அன்பு; காண்க: **சினேகம்;** அறியப்படும் பொருள்; அறிதற்குரிய கடவுள்.
**ஞேயர்** – நண்பர்; அறிவுடையோர்.
**ஞேயா** – பெருமருந்துக்கொடி.

## ஞை

**ஞைஞையெனல்** – இகழ்ச்சிக்குறிப்பு; கெஞ்சுதற்குறிப்பு; அழுதற்குறிப்பு.

## ஞொ

**ஞொள்குதல்** – மெலிதல்; குறைவுபடுதல்; சோம்புதல்; அஞ்சுதல்; அலைதல்; குலைதல்.
**ஞொள்ளெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

## த

**த** – ஓர் உயிர்மெய்யெழுத்து (த் + அ); குபேரன்; நான்முகன்; தைவதமாகிய விளரியிசையின் எழுத்து.
**தக்கடி** – வஞ்சனை; துரோகம்; கடுமை; குதர்க்கம்; பொய்; துலாக்கோல்; பத்துச் சேர் கொண்ட நிறையளவு.
**தக்கடிவித்தை** – செப்படிவித்தை; ஏமாற்று.
**தக்கடை** – இரட்டைத் தட்டுள்ள நிறைகோல்.
**தக்கடைக்கல்** – நிறைகல்.
**தக்கணம்** – தெற்கு; வலப்பக்கம்; தக்கணநாடு; தாளப்பிரமாணத்தின் உட்பிரிவு; உடனே.
**தக்கணன்** – காண்க: **தக்கணாமூர்த்தித்தேவர்.**
**தக்கணாக்கினி** – வேள்வித்தீ மூன்றனுள் ஒன்று, தென்முக அங்கி.
**தக்கணாதி** – குறிஞ்சி யாழ்த்திறங்களுள் ஒன்று.
**தக்கணாமூர்த்தித்தேவர்** – தென்முகமாயிருக்கும் சிவமூர்த்தி.
**தக்கணாயனம்** – ஆடி முதல் சூரியன் தெற்கு நோக்கிச் செல்லும் ஆறுமாத காலம்.
**தக்கணை** – காண்க: **தக்கிணை.**
**தக்கத்தடித்தல்** – மிகப் பருத்தல்.
**தக்கது** – தகுதி; தகுதியானது.
**தக்கப்பண்ணுதல்** – நிலைக்கச்செய்தல்; வயப்படுத்துதல்; ஒருவனது தகுதியைக் காட்டுதல்.
**தக்கம்** – நிலைபேறு; பற்று; பல்லாங்குழி விளையாட்டில் காய்கள் இல்லாதிருக்கும் குழி; பாண்டத்தின் அடியில் தங்கிய உணவு; அறநூல் பதினெட்டனுள் ஒன்று; வாதம்; முதல்.
**தக்கர்** – சாடி.
**தக்கரம்** – களவு; வஞ்சகம்.
**தக்கராகம்** – பாலைப்பண்ணின் திறம் ஐந்தனுள் ஒன்று.
**தக்கல்** – அடைப்பு.
**தக்கவர்** – தகுதியுடையோர்.
**தக்கன்** – பிரசாபதிகளுள் ஒருவன்; எண்வகை நாகத்துள் ஒன்று; கள்வன்.
**தக்காங்கு** – தக்கபடி; நடுவுநிலையாக.
**தக்காணம்** – தெற்கு; வலப்பக்கம்; இந்தியாவின் தென்பகுதி.
**தக்கார்** – மேன்மக்கள்; நடுவுநிலைமையுடையோர்; பெருமையிற் சிறந்தோர்; உறவினர்.

**தக்காரி** – வாதமடக்கி.

**தக்காளி** – காண்க: **மணித்தக்காளி**; சீமைத் தக்காளி.

**தக்காளிப்பிள்ளை** – பிள்ளைப்பூச்சி.

**தக்காற்போல** – தக்கபடி.

**தக்கிணம்** – தெற்கு.

**தக்கிணாக்கினி** – காண்க: **தக்கணாக்கினி.**

**தக்கிணாமூர்த்தி** – காண்க: **தக்கணாமூர்த்தித் தேவர்.**

**தக்கிணாயனம்** – காண்க: **தக்கணாயனம்.**

**தக்கிணை** – குரு முதலியோர்க்குக் கொடுக்கும் பொருள்.

**தக்கிப்போதல்** – நிலைபெறுதல்.

**தக்கியா** – பக்கிரிகளின் இருப்பிடம்.

**தக்கிரம்** – மோர்.

**தக்கிருத்தல்** – தனக்குத் தக வொழுகுதல்.

**தக்கு** – இசையின் தாழ்ந்த ஓசை; தந்திரம்.

**தக்குத்தக்கெனல்** – ஓர் அடுக்கொலிக்குறிப்பு.

**தக்குத்தடவல்** – தடவி நடக்கை; தடுமாறிப் படிக்கை.

**தக்குதல்** – நிலைபெறுதல்; பயன்படுதல்; ஏற்ற தாதல்; அரக்குதல்; எல்லைகட்டுதல்; நயப் படல்.

**தக்குவித்தல்** – ஆட்சிக்குட்படுத்தல்.

**தக்கெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**தக்கேசி** – மருதநிலப் பண்வகை.

**தக்கை** – காதிலிடும் குதம்பை; அகப்புற முழவு மூன்றனுள் ஒன்றாகிய ஒரு பறைவகை; பறை; தெப்பம்; நெட்டிவகை; அடைப்பான்; அடைப்பு; தூண்டிலோடு சேர்த்து மிதக்க விடும் சக்கைத்துண்டு; பாலமாக இடும் பனையின் அடிமரம்; சோளம், ஆமணக்கு முதலியவற்றின் உலர்ந்த தட்டை; கட்டி; கிழிந்த சீலையில் தைக்கும் ஒட்டுத்துண்டு.

**தக்கோர்** – தகுதிவாய்ந்தவர்; அறிஞர்.

**தக்கோர்மை** – தக்கவர் தன்மையான நியாயம்.

**தக்கோலம்** – காண்க: **வால்மிளகு**; தாம்பூலம்; சிறுநாவற்பூ; திப்பிலி; திருவூறல் என்னும் தேவாரம் பெற்ற ஓர் ஊர்.

**தக்கோலி** – அகில்வகை.

**தத்தம்** – சுடப்பட்டது.

**தகசு** – தவழ்கரடி என்னும் விலங்கு; தகடு.

**தகட்டுமுளை** – கொக்கிவகை.

**தகட்டுவைரம்** – பட்டை தீட்டப்பெறாத வைரம்.

**தகடி** – பீதாம்பரம்; ஏமாற்றுகை; நீர்.

**தகடு** – மென்மையுந் தட்டையுமான வடிவு; உலோகத் தட்டு; வண்ணத் தகடு; கம்மார் வெற்றிலை, கறுப்பு வெற்றிலை; பூவின் புற விதழ்; மண்படை; அடர்ச்சி; வாழை இலை யின் நடுப்பகுதியை நறுக்கிய ஏடு.

**தகடுதைத்தல்** – மரப்பெட்டி முதலியவற்றிற்குப் பட்டமடித்தல்.

**தகண்** – தடை; தழும்பு; பழக்கம்; கிழங்கு விழுந்த பனங்கொட்டையின் உள்ளீடு.

**தகணிதம்** – துந்துபி; உலோகமணல்.

**தகணேறுதல்** – தழும்புபடுதல்; பழக்கமாதல்; முற்றுதல்.

**தகணை** – உலோகக்கட்டி.

**தகத்து** – அரியணை; சிறந்த இடம்; பெருமை; மணத்துக்குரிய அலங்காரத் தேர்.

**தகதகவெனல், தகதகெனல்** – ஒளிவீசுதற்குறிப்பு; ஒலிக் குறிப்பு.

**தகப்படுதல்** – மேன்மைதங்குதல்.

**தகப்பன்** – தந்தை.

**தகப்பன்சாமி** – தன் தந்தைக்குக் குருவான முருகக்கடவுள்; அடங்காப் பையன்.

**தகம்** – எரிவு; சூடு.

**தகமை** – காண்க: **தகைமை.**

**தகர்** – பொடி; தகர்ந்த துண்டு; ஆட்டுப்பொது; செம்மறியாட்டுக்கடா; வெள்ளாடு; யாளி யின் ஆண்; ஆண்யானை; ஆண்சுறா; மேட்டு நிலம்; பூமி; பலாசுமரம்.

**தகர்**(வி) – தகர்என் ஏவல்; அழி; குட்டுஎன் ஏவல்.

**தகர்த்தல்** – நொறுக்குதல்; புடைத்தல்; உடைத் தல்; சிதறடித்தல்; குட்டுதல்; அழித்தல்; நெரித்தல்; பரு முதலிய கட்டிகளைத் திறத் தல்; மெச்சும்படி ஆற்றல் காட்டுதல்.

**தகர்தல்** – நொறுங்குதல்; உடைதல்; நெரிதல்; சிதறுதல்; அழிதல்; காய்ந்துபோதல்.

**தகர்ப்பு** – உடைப்பு; குட்டு.

**தகர்ப்பொறி** – கோட்டைமதிலிற் காப்பாக வைக்கும் ஆட்டின் வடிவான எந்திரவகை.

**தகர்வு** – உடைவு; அழிவு.

**தகரஞாழல்** – மயிர்ச்சாந்துவகை.

**தகரடி** – சிதறவடிக்கை; பெருமிதப் பேச்சு.

**தகரம்** – மயிற்சாந்து; மணம்வீசும் மரவகை; மணம்; வெள்ளீயம்; உலோகத்தகடு; இதயத் தின் உள்ளிடம்.

**தகரவித்தை** – இறைவனை இதயவெளியில் வைத்துத் தியானம்செய்யும் முறையை உணர்த்தும் வித்தை.

**தகரார்(று)** – தடை, மறுப்பு; விவாதம்.

**தகல்** – தகுதி; காண்க: **பவளப்பூண்டு**; ஒரு கீரை வகை.

**தகல்பாச்சி, தகல்பாசி** – மோசக்காரன்; பெரும் புரட்டான்.

**தகலக்கட்டுதல்** – ஏமாற்றுதல்.

**தகலுபாசி** – காண்க: **தகல்பாச்சி.**

**தகலோன்** – தகுதியை உடையவன்.

**தகவல்** – எடுத்துக்காட்டு; நேர்விடை; செய்தி.

**தகவின்மை** – தகுதியின்மை; நடுநிலையின்மை; வருத்தம்.

**தகவு** – தகுதி; உவமை; உரிமை; குணம்; பெருமை; அருள்; நடுவுநிலைமை; நீதி; வலிமை; அறிவு; தெளிவு; கற்பு; நன்மை; நல்லொழுக்கம்.

**தகவுரை** – பரிந்துரை, சிபாரிசு.

**தகழி** – அகல்; உண்கலம்.

**தகழிச்சி** – கருப்பூரம்.

**தகளி** – காண்க: **தகழி.**

**தகன்** – வேர்விட்ட பனங்கொட்டை; நெருப்பு; கீரைவகை; பூரான்; கிழங்குவிழுந்த பனங் கொட்டையின் உள்ளீடு.

**தகனக்கிரியை** – பிணத்தை எரிக்கும் சடங்கு.

**தகனபலி** – நெருப்பிலிட்டுச் செய்யும் பலி.

**தகனம்** – எரித்தல்; பிணஞ்சுடுகை; செரித்தல்; உணவு.

**தகனன்** – நெருப்பு.

**தகனித்தல்** – எரித்தல்.

**தகனை** – உலோகக்கட்டி.

**தகா** – பசிதாகம்; மிக்க ஆசை; மோகம்; பொருளாசை; மோசம்.

**தகாதா(தி)** – வழக்கு; குற்றம்; நெருக்குகை.

**தகித்தல்** – எரித்தல்; பிணஞ்சுடுதல்; சூடுசெய் தல்; செரித்தல்.

**தகிலன்** – வஞ்சகன்.

**தகிலாயம்** – நட்பு; நன்றி.

**தகிலித்தல்** – உட்செலுத்துதல்; வஞ்சித்தல்; திருடிக் கொடுத்தல்; பண்டமாற்றிக் கொள்ளு தல்; உழக்குதல்; குற்றஞ்சாட்டுதல்.

**தகிலிமா** – சேங்கொட்டைமரம்.

**தகுணிச்சம்** – பறைப்பொது; அகப்புற முழவு மூன்றனுள் ஒன்று; ஒரு வரிக்கூத்துவகை.

**தகுணிதம்** – வாச்சியப்பொது; அகப்புற முழவு மூன்றனுள் ஒன்று.

**தகுதல்** – ஏற்றதாதல்; மேம்படுதல்; தொடங்கு தல்; கிட்டுதல்; ஒத்தல்; ஏற்குதல்; இயலுதல்; தகுதியாதல்.

**தகுதி** – பொறுமை; பொருத்தம்; தகுதிவழக்கு; மேன்மை; நல்லொழுக்கம்; நடுவுநிலைமை; ஆற்றல்; அறிவு; கூட்டம்; தடவை; குணம்; நிலைமை.

**தகுதியணி** – தக்க இரண்டு பொருள்களின் சேர்க்கையை உணர்த்தும் அணி.

**தகுதியின்மையணி** – தகாத இரண்டு பொருள் களின் சேர்க்கையை உணர்த்தும் அணி.

**தகுதியோர்** – அறிஞர்; சுற்றத்தார்; பெருமை யிற் சிறந்தோர்; நடுவுநிலைமையோர்.

**தகுதிவழக்கு** – பொருள்களுக்கு இயல்பாய் அமைந்த சொற்களை ஒழித்துத் தகுதியான வேறுசொற்களால் கூறும் இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி என்னும் மூவகை வழக்கு.

**தகுந்தகுமெனல்** – ஒலியோடு எரிதற்குறிப்பு; ஒளி வீசுதற் குறிப்பு; முழவு முதலியன ஒலித்தற் குறிப்பு.

**தகுந்தபுள்ளி** – செல்வம் முதலியவற்றால் தகுதி யானவர்.

**தகுந்தவர்** – ஒழுக்கமுடையவர்.

**தகுந** – தக்கவை.

**தகுவ** – இயன்றவை.

**தகுவன்** – அசுரன்.

**தகுவியர்** – அசுரமகளிர்.

**தகுளம்** – மகளிர் விளையாட்டு.

**தகை** – அழகு; அன்பு; அருள்; கவசம்; குணம்; தடை; தகுதி; பொருத்தம்; ஒப்பு; மேம்பாடு; பெருமை; நன்மை; இயல்பு; நிகழ்ச்சி; கட்டுகை; மாலை; தளர்ச்சி; தாகம்; மூச்சிழைப்பு.

**தகை(வி)** – தடுத்துவிடு; ஆணையிடு.

**தகைத்தல்** – தடுத்தல்; கட்டுதல்; சுற்றுதல்; வாட்டுதல்; அரிதல்; நெருங்கப்பெறுதல்; களைத்தல்.

**தகைதல்** – தடுத்தல்; ஆணையிட்டுத் தடுத்தல்; பிடித்தல்; அடக்குதல்; உள்ளடக்குதல்; பிணைத்தல்; தளர்தல்; ஒத்தல்; அழகு பெற் றிருத்தல்.

**தகைப்பு** – தடை; மதிற்சுற்று; மாளிகைக் கட்டணம்; வீட்டின் பகுதி; படைவகுப்பு; தளர்ச்சி; மூச்சிழைப்பு.

**தகைபாடுதல்** – தலைவன் தலைவியின் நலம் பாராட்டுதல்.

**தகைமை** – தன்மை, தகுதி; பெருமை; பொறுமை; குணம்; மதிப்பு; அழகு; ஒழுங்கு; நிகழ்ச்சி.

**தகையணங்குறுத்தல்** – தலைவியின் அழகு தலை வனை வருத்தமுறுத்தலைக் கூறும் அகத்துறை.

**தகைவிலாங்(ன்)குருவி** – தரையில் தங்காது பெரும்பாலும் பறந்துகொண்டே இருக்கும் குருவிவகை.

**தகைவு** – தடை; இளைப்பு.

**தங்கக்கட்டி** – பொற்கட்டி, மிக நல்லவன்(ள்).

**தங்கக்கம்பி** – பொன்னாலான கம்பி; வணக்க மொடுக்கமுள்ளவன்(ள்).

**தங்கக்கலசம்** – கோபுரம் முதலியவற்றின் உச்சி யில் அமைக்கும் தங்கப்பூச்சுப் பூசிய குடவுரு.

**தங்கக்குடம்** – பொற்குடம்; மிக நல்லவன்(ள்).

**தங்கக்குணம்** – சிறந்த குணம்.
**தங்கச்சி** – காண்க: **தங்கை.**
**தங்கசாலை** – நாணயம் அடிக்கும் சாலை.
**தங்கஞ்சலமாக்கி** – சுவர்ணபேதி.
**தங்கப்பூச்சு** – பொன்முலாம்.
**தங்கம்** – பசும்பொன்; சிறந்தது; கலப்பற்ற பொற்கட்டி; மிக நல்லவர்.
**தங்கமுலாம்** – பொன்மெருகு.
**தங்கரேக்கு** – பொன்னிற் செய்த தகடு.
**தங்கல்** – தங்குதல்; தாமதித்தல்; தங்குமிடம்; நிலைபெறுதல்; அடியில் படிந்திருப்பது; கெடி.
**தங்கலர்** – பகைவர்.
**தங்கள்** – உங்களுடைய; படர்க்கைப் பன்மையுடன் சேர்ந்துவரும் சாரியை; கடிதத்தில் கையெழுத்திடுவதன்முன் எழுதப்பெறும் ஒரு வழக்குமொழி.
**தங்காள்** – தங்கை; அம்மா.
**தங்கான்** – அரை என்னும் எண்ணின் குழூஉக் குறி; கொள்முதல்.
**தங்கு** – தங்குதல்.
**தங்குடிச்சுற்றம், தங்குடித்தமர்** – தாயத்தார்; ஞாதியர்.
**தங்குதடை** – தடங்கல்; தடுமாற்றம்.
**தங்குதரிப்பு** – காண்க: **தங்குதடை**; அடக்கம்.
**தங்குதல்** – வைகுதல்; உளதாதல்; அடங்குதல்; நிலைபெறுதல்; தணிதல்; தாமதப்படுதல்; தடைப்படுதல்; இருப்பாயிருத்தல்; அடியிற் படுதல்; சார்ந்திருத்தல்.
**தங்குதுறை** – கப்பல் தங்கிச்செல்லுமிடம்.
**தங்குதேர்ப்படுதல்** – இடையே தாமதித்தல்; தேரிழுப்பில் நிலையை அடையாது ஓரிடத்தில் தங்குதல்.
**தங்குநடை** – தங்கித்தங்கி செல்லும் பயணம்.
**தங்குபடி** – மீதி.
**தங்குபிண்டம்** – மாதவிடாய் வெளிப்படத் தேய்ந்து தங்கியிருக்கும் கருப்பிண்டம்.
**தங்குமூச்சு** – இறக்குங் காலத்தில் நின்றுநின்று வரும் மூச்சு.
**தங்கூசு** – தூண்டிலில் கட்டுங் கயிறு.
**தங்கை** – இளையசகோதரி; தங்கை முறையாள்; இளையாள்.
**தங்கைச்சி** – காண்க: **தங்கை; கருங்குவளை.**
**தங்கையைக்கொல்லி** – ஒரு பூடுவகை.
**தச்சக்கோல்** – 33 அங்குலமுள்ள தச்சுமுழம்.
**தச்சகன்** – குடும்பத் தலைவன்.
**தச்சவாடி** – தச்சுவேலை செய்யுமிடம்.
**தச்சவேலை** – தச்சருக்குரிய தொழில்; மரவேலை.
**தச்சன்** – மரவேலை செய்பவன்; தச்சுவேலை செய்யும் சாதியான்; விசுவகர்மாவுக்குரிய சித்திரைநாள்.
**தச்சன்குருவி** – காண்க: **மரங்கொத்தி.**
**தச்சாசாரி** – மரவேலை செய்பவன்.
**தச்சி** – தயிர்; தச்சிபாரா ஆட்டத்தில் எல்லாக் காய்களும் நிமிர்ந்து விழும் விருத்தம்.
**தச்சிச்சி** – தச்சச் சாதிப்பெண்.
**தச்சு** – தச்சன் தொழில்; தச்சனது ஒரு நாள் வேலை அளவு.
**தச்சுக்கழித்தல்** – புதுவீட்டில் குடியிருப்பதற்கு முன் பேயோட்டுதற்காகத் தச்சர்கள் செய்யும் சடங்கு.
**தச்சுக்கோல்** – காண்க: **தச்சக்கோல்.**
**தச்சுவாடி** – தச்சுவேலை செய்யுமிடம்; வாடகை வண்டிகள் நிற்கும் இடம்; விறகுகடை.
**தச்சுவினைமாக்கள்** – தச்சர்.
**தச்சுவேலை** – தச்சருக்குரிய தொழில்.
**தச** – பத்து.
**தசக்கிரீவன், தசகண்டன்** – பத்துக் கழுத்துடைய இராவணன்.
**தசகம்** – பத்துச் செய்யுள்கொண்ட பிரபந்தம்.
**தசகூலி** – பயிர் செய்வதற்கு ஏற்ற உழவு முதலிய பத்துவகைக் கூலி.
**தசசீலம்** – பௌத்தத்துறவியருக்குரிய பத்துவகையான ஒழுக்கவிதிகள்.
**தசதானம்** – விழாக்காலங்களில் பார்ப்பனர்க்கு உப்பு, எள், நெய், நெல், பசு, பூமி, பொன், ஆடை, வெல்லம், வெள்ளி ஆகியவற்றைக் கொடுக்கும் பத்துவகைக் கொடைப்பொருள்கள்.
**தசநாடி** – பத்து நாடிகள்; அவை: அத்தி, அலம்புடை, இடை, காந்தாரி, குகு, சங்கினி, சிங்குவை, சுழுமுனை, பிங்கலை, புருடன் என்னும் பத்துவகைப்பட்டு உயிர்வளி இயங்குதற்குரிய வழியாகிய நாடிகள்.
**தசப்பொருத்தம்** – பத்துவகையான கலியாணப் பொருத்தங்கள்; அவை: தினம், கணம், மாகேந்திரம், ஸ்திரிதீர்க்கம், யோனி, ராசி, ராசியதிபதி, வசியம், ரச்சு, வேதை என்பனவாம். செய்யுட்பொருத்தம் பத்து; அவை: மங்கலம், சொல், பால், வருணம், உண்டி, தானம், எழுத்து, நாள், கதி, கணம் என்பனவாம்.
**தசபலன்** – தசபாரமிதையால் வன்மையுடைய புத்தன்.
**தசம்** – சிவிகை; பத்து.
**தசமம்** – பத்தாவது; பத்தில் ஒன்று.
**தசமி** – பத்தாம் திதி; தசமியில் உண்ணுவதான ஒரு பணிகாரம்.
**தசமுகன்** – பத்துமுகமுடைய இராவணன்.

**தசமூலம்** – கண்டங்கத்தரி, சிறுமல்லிகை, சிறுவழுதுணை, தழுதாழை, நெருஞ்சி, பாதிரி, பெருங்குமிழ், பெருமல்லிகை, வாகை, வில்வம் என்னும் பத்து மருந்துவேர்கள்.

**தசரா** – மாளய அமாவாசையை அடுத்துத் துர்க்கையை வணங்கி நிகழ்த்தப்படும் பத்து நாள் விழா.

**தசவவதாரன்** – பத்து அவதாரங்கள் எடுத்த திருமால்.

**தசவாயு** – உடலில் நிற்கும் பத்து வாயு; அவை: அபானன், உதானன், கிருகரன், கூர்மன், சமானன், தனஞ்சயன், தேவதத்தன், நாகன், பிராணன், வியாழன் என்பன.

**தசனப்பொடி** – கருநிறமுள்ள பற்பொடிவகை.

**தசனம்** – பல், கவசம்; மலைமுடி.

**தசாக்கரி** – ஒரு பண்வகை.

**தசாங்கத்தயல்** – ஆசிரியவிருத்தத்தால் அரசியல் உறுப்புகள் பத்தனையும் பாடும் நூல்வகை.

**தசாங்கம்** – ஊர், யானை, கொடி, செங்கோல், நாடு, குதிரை, மலை, மாலை, முரசு, யாறு என்னும் பத்து அரசியல் உறுப்புகள்.

**தசாட்சரி** – ஒரு பண்வகை.

**தசாமிசம்** – பத்தில் ஒரு கூறு; பத்தில் ஒன்று.

**தசாவதாரம்** – மீன், ஆமை, பன்றி, நரசிங்கம், வாமனன், பரசுராமன், இராமன், பலராமன், கண்ணன், கற்கி என்னும் திருமாலின் பத்துத் திருப்பிறப்புகள்.

**தசியு** – ஆரியர் அல்லாத சாதிவகை; திருடன்.

**தசிரம்** – உட்டுளை; மழைத்தூறல்.

**தசுகரம்** – களவு.

**தசும்பர், தசும்பு** – குடம்; மிடா; கோபுரவிமானங்களின் உச்சிக்குடம்; பொன்.

**தசுமன்** – கள்வன்; வேள்வி செய்விப்போன்.

**தசை** – இறைச்சி, ஊன், புலால், மாமிசம்; சதை, முடைநாற்றம்; பழத்தின் சதை; நிலைமை; கோளின் ஆட்சிக்காலம்; திரி.

**தசைக்கனி** – சதைப்பற்றுள்ள பழவகை.

**தசைத்தல்** – சதைபிடித்தல்; கொழுத்தல்.

**தசைதல்** – சதைப்பற்றாதல்; பூரித்தல்.

**தசைநரம்பு, தசைநார்** – அசைவுகொடுக்கும் நரம்பு.

**தசைப்பற்று** – தசைபிடித்திருத்தல்; சதை.

**தசைப்பு** – கொழுப்பு; சதைபிடித்திருத்தல்.

**தசைபிடி** – சதைபிடிக்கை.

**தசையடைப்பு** – காண்க: **தசைவளர்ச்சி**; கொழுப்புப் பிடித்தல்.

**தசையூறுதல்** – சதைபிடித்தல்.

**தசைவலி** – சதையில் உண்டாகும் நோவு.

**தசைவளர்ச்சி** – சதைப்பற்றுண்டாகை; புண்ணைச் சுற்றிச் சதை மிகுகை; மூத்திரத் துளையை அடைத்துக்கொண்டு சதை வளர்கை.

**தசைவைப்பு** – கோளின் ஆட்சிமுடிவு.

**தஞ்சக்கேடு** – வலுவின்மை; வறுமை.

**தஞ்சம்** – எளிது; தாழ்வு; எளிமை; பற்றுக்கோடு; அடைக்கலப்பொருள்; உறுதி; பெருமை.

**தஞ்சன்** – அறிஞன்.

**தஞ்சனன்** – தன்னையுணர்ந்தவன்.

**தஞ்சு** – காண்க: **தஞ்சம்.**

**தட்குதல்** – தங்குதல்; கட்டுதல்; தடுத்தல்.

**தட்சகன்** – எண்வகை நாகத்துள் ஒன்று; குடும்பத் தலைவன்.

**தட்சசங்காரன்** – தக்கனை அழித்தவனான சிவன்.

**தட்சணம்** – தெற்கு; வலப்பக்கம்; அப்போதே.

**தட்சணாக்கினி** – காண்க: **தக்கணாக்கினி.**

**தட்சணாமூர்த்தம்** – காண்க: **தட்சிணாமூர்த்தம்.**

**தட்சணாமூர்த்தி** – காண்க: **தட்சிணாமூர்த்தி.**

**தட்சணாயனம்** – காண்க: **தக்கணாயனம்.**

**தட்சணை** – காண்க: **தட்சிணை.**

**தட்சிணபூமி** – பூகோளத்தின் தென் சீதளபாகம்.

**தட்சிணம்** – தக்கிணம், தெற்கு; வலப்பக்கம்; அறிவுக்கூர்மை; தாராளம்.

**தட்சிணாசலம்** – பொதியமலை.

**தட்சிணாமூர்த்தம்** – சிவபிரான் தென்முகமாயிருந்து பிரமபுத்திரர்களாகிய சனகாதியர் நால்வருக்கும் உபதேசித்த திருவுருவம்.

**தட்சிணாமூர்த்தி** – தென்முகமாயிருக்கும் சிவமூர்த்தம்; தெற்கிலிருக்கும் அகத்தியர்; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.

**தட்சிணாயனம்** – காண்க: **தக்கணாயனம்.**

**தட்சிணாவர்த்தம்** – காண்க: **வலம்புரிச்சங்கு.**

**தட்சிணை** – குரு முதலிய பெரியோருக்குக் கொடுக்கும் பொருள்; பரிதானம்; சிட்சை.

**தட்டகப்பை** – தட்டையாக இருக்கும் தோசை திருப்பி என்னும் கருவி.

**தட்டத்தானி** – தன்னந்தனி; முற்றும் தனித்திருக்கை.

**தட்டம்** – உண்கலம்; தாம்பாளம்; துயிலிடம்; படுக்கை; கச்சு; கைகொட்டுகை; பரந்த இதழையுடைய பூ; நீர்நிலை; பல்; பாம்பின் நச்சுப்பல்; நிலத்தில் வீழ்ந்து வணங்குகை; யானை செல்லும் வழி; மோவாய்; அல்குல்; வயல்.

**தட்டம்மை** – அம்மைநோய்வகை.

**தட்டல்** – கை முதலியவற்றால் தட்டுதல்; தாளம் போடல்; தடுத்தல்; முட்டுப்பாடு; ஐந்து என்பதன் குழூஉக்குறி; தாலம்; ஒன்றில் உள்ளதை வெளியில் கொட்டுகை.

**தட்டல்தடவல்** – முட்டுப்பாடு; நடை தடுமாறுகை.

**தட்டழி** – ஒரு வாத்தியவகை.

**தட்டழிதல்** – நிலைகுலைதல்; திகைத்தல்; தோல்வியுறுதல்; சீர்கெடுதல்.

**தட்டழிவு** – கலக்கம்; தோல்வி.

**தட்டறை** – அடைப்பை முதலியவற்றிலுள்ள சிறிய உட்பை.

**தட்டாக்குடி** – தட்டார்கள் இருப்பிடம்.

**தட்டாத்தி** – தட்டாரப்பெண்.

**தட்டாரப்பூச்சி** – ஒரு பூச்சிவகை; பறக்கும் பூச்சி வகை.

**தட்டான்** – பொற்கொல்லன்; காண்க: **தட்டாரப் பூச்சி; வெண்கோட்டம்;** புடல்கொடி; பேய்ப் புடல்.

**தட்டானுப்பி** – ஒரு கொடிவகை.

**தட்டி** – காவல்; சிறை; கதவு; படல்; பலகை; பிரம்பு முதலியவற்றால் பின்னிய மறைப்புத் தடுக்கு; ஆயுதவகை; வாத்தியவகை; அரைச் சல்லடம்; தாம்பாளம்; காண்க: **வெண்கோட்டம்;** வெற்றிலைக் கட்டு.

**தட்டிக்கவி** – கருப்பூர ஆரத்திப்பாட்டு.

**தட்டிக்கழித்தல்** – விலக்குதல்; சாக்குப்போக்குச் சொல்லுதல்; ஒருவனுக்கு வரவேண்டிய தொகையிலிருந்து அவனால் செலுத்த வேண்டிய தொகையைக் கழித்துக் கணக்கு முடித்தல்.

**தட்டிக்கேட்டல்** – அடக்கியாளுதல்; காண்க: **தட்டிச்சொல்லுதல்;** கண்டித்தல்.

**தட்டிக்கொடுத்தல்** – அமைதிபண்ணுதல்; ஊக்கப் படுத்தல்; தூண்டுதல்; ஒருவர்மீது தட்டிக் குறிப்புக் காட்டுதல்.

**தட்டிக்கொள்ளுதல்** – பறித்தல்; திருடுதல்; தளர்தல்; மோதிக்கொள்ளுதல்; தடைப்படுதல்; பற்றாமற்போதல்.

**தட்டிச்சுற்றுதல்** – கொள்ளையடித்தல்.

**தட்டிச்சொல்லுதல்** – மறுத்துரைத்தல்; காண்க: **தட்டிக்கேட்டல்;** திக்கிப்பேசுதல்.

**தட்டித்தடவுதல், தட்டித்தடுமாறுதல்** – தடுமாறுதல்.

**தட்டித்திரிதல்** – சிரமப்பட்டு அலைதல்.

**தட்டிப்பறித்தல்** – அடித்துப் பிடுங்குதல்; தந்திர மாய்ப் பறித்தல்.

**தட்டிப்பார்த்தல்** – தேங்காய், நாணயம் முதலியவற்றைச் சுண்டிப்பார்த்து அவற்றின் இயல்பை அறிதல்; இரகசியமறிய முயலுதல்.

**தட்டிப்புடைத்தல்** – முறத்தாற் கொழித்து நெல் முதலியவற்றைப் பிரித்தெடுத்தல்.

**தட்டிப்பேசுதல்** – மறுத்துரைத்தல்; காண்க: **தட்டிக்கேட்டல்;** திக்கிப்பேசுதல்.

**தட்டிப்போடுதல்** – கவிழச் செய்தல்; வெல்லுதல்; மறுத்தல்.

**தட்டியம்** – நெடுங்கேடயம்.

**தட்டியழைத்தல்** – கைகொட்டிக் கூப்பிடுதல்; போருக்கழைத்தல்.

**தட்டியளத்தல்** – தானியம் முதலியவற்றைத் தலையை வழித்து அளத்தல்.

**தட்டியோட்டுதல்** – மாட்டையடித்துச் செலுத்துதல்.

**தட்டிவிடுதல்** – உற்சாகப்படுத்துதல்; மாட்டையடித்துச் செலுத்துதல்; விரைந்து செய்தல்; கவிழச் செய்தல்; உழவில் ஏர்களை முன் பின்னாக மாற்றுதல்; பின்வாங்கச் செய்தல்; மறுத்தல்; திரும்ப உழுதல்; வெட்டிவிடுதல்; தப்புதல்; உழுத சாலில் திரும்ப உழுதல்.

**தட்டிவைத்தல்** – குறிப்பாகச் சொல்லுதல்.

**தட்டு** – தட்டுகை; அடி; மோதுகை; தாளம் போடுகை; விலக்குகை; முட்டுப்பாடு; தடை; குற்றம்; தீனம்; மறைவு; காவல்; பயிர்த் தட்டை; தராசுதட்டு; வட்டம்; வளைவு; கேடகம்; குயவன்சக்கரம்; முறம்; தேர் முதலியவற்றின் நடுவிடம்; ஆசனத்தடுக்கு; கப்பல் தட்டு; நெடுங்கை; பூவிதழ்; விபசாரி.

**தட்டுக்காரன்** – ஏமாற்றுக்காரன்; தந்திரக் காரன்.

**தட்டுக்கிளி** – கிளித்தட்டில் ஒரு பக்கத்துத் தலைவன் நிலத்தில் சதுரக்கோடு கீறி ஆடும் ஒரு விளையாட்டுவகை.

**தட்டுக்கிளிபாய்தல்** – நிலத்தில் சதுரக்கோடு கீறி ஆடும் ஒரு விளையாட்டுவகை.

**தட்டுக்கூடை** – அகன்ற கூடைவகை.

**தட்டுக்கெடுதல்** – மனங்கலங்குதல்; வறுமையால் நிலைகெடுதல்; இழப்படைதல்; காண்க: **தட்டுண்டுபோதல்;** தடுமாறிப்போதல்; தாறுமாறாதல்.

**தட்டுக்கேடு** – இழப்பு; அழிவு; குழப்பம்; வறுமை.

**தட்டுக்கொட்டு** – கொட்டுமுழக்கு; போலி நடிப்பு; மினுக்குப்பொருள்; தந்திரம்.

**தட்டுச்சரி** – மகளிர் முன்கையில் அணியும் அணி வகை.

**தட்டுச்சுளகு** – அகன்ற முறவகை.

**தட்டுண்டுபோதல்** – சிதறுண்ணுதல்; கதிரடி படுதல்; தடைப்படுதல்; கலங்குதல்; சரக்கு மோசடியாய் மாற்றப்படுதல்.

**தட்டுத்தடங்கல், தட்டுத்தடை** – தடை; தடுமாற்றம்.

**தட்டுத்தாவரம்** – புகலிடம்.

**தட்டுதல்** – கதவு முதலியவற்றை அடித்தல்; மோதுதல்; கிட்டுதல்; கொட்டுதல்; உட்செல் லுமாறு அடித்தல்; தட்டித் தூசி போக்குதல்; உடைத்தல்; கவர்தல்; தள்ளுதல்; அகற்றுதல்; தடுத்தல்; மறுத்தல்; குலையச் செய்தல்; தப்புதல்.

**தட்டுப்படுதல்** – தடைப்படுதல்; குறைவுபடுதல்; புலன்களுக்குத் தெரிதல்.

**தட்டுப்பறத்தல்** – திடீரென்று மறைதல்.

**தட்டுப்பாய்தல்** – கிளித்தட்டு விளையாட்டு.

**தட்டுப்பிழா** – வட்டமாய் முடைந்த பெட்டி வகை.

**தட்டுப்புடை** – தானியத்தை முறம் முதலிய வற்றாற் புடைக்கை.

**தட்டுமாறுதல்** – நிலைகெடுதல்.

**தட்டுமானம்** – ஏமாற்று; தந்திரவழி.

**தட்டுமுட்டு** – வீட்டுப் பொருள்கள்; கருவிகள்; மூட்டைகள்.

**தட்டுருவுதல்** – ஊடுசெல்லுதல்.

**தட்டுவாணி** – ஒரு குதிரைவகை; விலைமகள்.

**தட்டுளுப்பு** – தடுமாற்றம்.

**தட்டை** – மொட்டை; பரந்த வடிவம்; முறம்; திருகாணி; பயிர்களின் அடித்தாள்; தினைத் தாள்; காண்க: **மூங்கில்**; கிளிகடிகருவி; கவண்; கரடிகைப்பறை; அறிவிலி; தீ; ஒரு காலணிவகை.

**தட்டைத்தலை** – தட்டையான பெரிய தலை.

**தட்டைப்பயறு** – பயறுவகை; பெரும்பயறு.

**தட்டையம்மை** – காண்க: **தட்டம்மை.**

**தட்டொளி** – உலோகக் கண்ணாடி.

**தட்டோடு** – தட்டையோடு; கூரையை மூடுமாறு இடும் வளைவுள்ள ஒருவகை ஓடு.

**தட்பம்** – குளிர்ச்சி; விசிறுதல் முதலிய போற் றுகை; அருள்.

**தட்பவெப்பம்** – குளிர்ச்சியும் சூடும்.

**தட** – பெரிய; வளைந்த; மெல்லிய.

**தடக்கம்** – தடை.

**தடக்கிப்பேசுதல்** – திக்கிப்பேசுதல்.

**தடக்கு** – தடை.

**தடக்குதல்** – தடைபண்ணுதல்; இடறுதல்; தடைப்படுதல்.

**தடங்கல்** – தடை; மறுப்பு; சுணக்கம்; அடைப்பு; வேலையின்றியிருக்கை.

**தடங்கல்பண்ணுதல்** – நிறுத்திவைத்தல்; தடை செய்தல்.

**தடங்குதல்** – காண்க: **தடக்குதல்.**

**தடங்கோலுதல்** – வழிசெய்தல்; ஒருவனைக் கெடுக்க வழி முதலியன தேடுதல்.

**தடத்தம்** – நடுநிலை; இயற்கையானன்றிப் பிறி தொன்றன் சார்பு முதலியனபற்றிப் பொருளுக்குள்ள இலக்கணம்; ஐந்தொழில் களைப் பண்ணும் இறைநிலை.

**தடத்தன்** – நடுநிலையாளன்; மேலோன்.

**தடதடத்தல்** – நாக்குத் தட்டல்; தள்ளாடுதல்; குழறுதல்; தளர்வாதல்.

**தடதடப்பு** – தள்ளாட்டம்.

**தடதடெனல்** – விரைவுக்குறிப்பு; ஒலிக்குறிப்பு.

**தடந்தேடுதல்** – காண்க: **தடங்கோலுதல்.**

**தடபடெனல்** – ஒலிக்குறிப்பு; தள்ளாடற்குறிப்பு.

**தடபுடல்** – விரைவு; சந்தடி; அபாயநிலை; பகட்டு.

**தடம்** – நீர்நிலை; கரை; வரம்பு; வேள்விக்குழி; தாழ்வரை; வெளியிடம்; மலை; மூங்கில்; இடம்; உயர்ந்த இடம்; வழி; மனைவாயில்; சுவடு; கண்ணி; சுருக்கு; பெருமை; அகலம்; செல்வப்பகுதி; வளைவு; கடம்புவகை.

**தடம்படுதல்** – தழும்புபடுதல்; பயிற்சியால் ஆற்றல் மிகுதல்.

**தடம்பார்த்தல்** – அடிச்சுவடு பார்த்தல்; கேட்டில் உதவி தேடுதல்.

**தடம்புரளுதல்** – நிலைதடுமாறுதல்; நிலைகெடு தல்; பாதம் நரம்பு பிசகுதல்; பாதையை விட்டு விலகுதல்.

**தடமண்** – சுதைமண்.

**தடயம்** – பலபண்டம்; அணிகலன்கள்; களவு போய்த் திரும்பக் கிடைத்த பொருள்; விலங்கு.

**தடல்** – மேட்டுநிலம்; பலாப்பழச்செதிள்; வாழை மடல்; விலங்கு, மரம் முதலியவற்றின் தோல்.

**தடவக்கொடுத்தல்** – முதுகைத் தடவ இடங் கொடுத்தல்; மிக இணங்குதல்.

**தடவரல்** – வளைவு.

**தடவருதல்** – காண்க: **தடவாதல்.**

**தடவல்** – ஆறு என்னும் எண்ணின் குழூஉக்குறி; முறை; முட்டுப்பாடு; பொங்கல் முதலிய உணவுவகை.

**தடவாதல்** – தடவுதல்; பூசுதல்; தேடுதல்; யாழ் முதலியன வாசித்தல்.

**தடவிக்கட்டுதல்** – பதித்தல்.

**தடவிக்கொடுத்தல்** – தடவுதல்; ஊக்கப்படுத்து தல்; சமாதானப்படுத்துதல்; குறையக் கொடுத்தல்.

**தடவு** – பருமை; பகுதி; தூபக்கால்; வேள்விக் குழி; கணப்புச்சட்டி; ஒரு மரவகை; சிறைச்சாலை.

**தடவுத்தாழி** – பெருஞ்சாடி.

**தடவுதல்** – பூசுதல்; வருடுதல்; இருட்டில் கைகால் முதலியவற்றால் துழாவுதல்; தேடுதல்; குறைத்தளத்தல்; யாழ் முதலியன மீட்டுதல்; திருடுதல்; உரிமையில்லாதவரைப் புணர்தல்; அசைதல்; தடுமாறுதல்; முட்டுப்பாடாயிருத் தல்; தகட்டுப் பணிகாரம் செய்தல்.

**தடவுநிலை** – துறக்கம்.

**தடவுவாய்** – மலைச்சுனை.

**தடவை** – முறை; தவணை.

**தடறு** – ஆயுத உறை.

**தடா** – பானை; மிடா; கணப்புச்சட்டி; பருமை; மிடாவினும் பெரிய கலம்.

**தடாககருமம்** – மலங்கழிக்கை.

**தடாகம்** – குளம்.

**தடாகவாதாரம்** – ஏரிப் பாய்ச்சலுள்ள நிலம்.

**தடாதகை** – தடுத்தற்கரிய தகையுடைய மீனாட்சிதேவி.

**தடாதடி** – குழப்பம்.

**தடாதடிக்காரன்** – நியாயமின்றிப் பலவந்தஞ் செய்வோன், அடாவடிக்காரன்.

**தடாபுடாவெனல்** – கோபித்துப் பேசுங்குறிப்பு; கீழ்விழும் ஒலிக்குறிப்பு; பகட்டுக்குறிப்பு.

**தடாம்** – வளைவு.

**தடாரம்** – ஈரொத்துத் தாளம்; சின்னம்மை.

**தடாரி** – உடுக்கை; கிணைப்பறை; பம்பை; வாத்தியப்பொது.

**தடாரித்தல்** – ஊடுருவுதல்; மிகக் கண்டித்தல்.

**தடாவுதல்** – வளைதல்.

**தடி** – கழி; தண்டாயுதம்; தடிக்கொம்பு; மரம் முதலியவற்றின் பிளந்த துண்டம்; அளவு கோல்; ஆற்றங்கரை; உலக்கை; பருமைவில்; வயல்; பாத்தி; தசை; கருவாடு; உடும்பு; மிதுனராசி; கீறற் கையெழுத்து; மின்னல்.

**தடிக்கம்பு** – கைக்கழி.

**தடிக்கொம்பு** – தடிக்கம்பு; மாட்டுக் குற்றவகை.

**தடிகாரன்** – தடியையுடையவன்; அழிப்பவன்.

**தடித்தல்** – பெருத்தல்; மிகுதல்; உறைதல்; திரளுதல்; தாமதித்தல்; மரத்தல்; உரப்பாதல்; வீங்குதல், பருத்தல், சித்தம் கடினமாதல்; நச்சுக்கடியினால் தடிப்புண்டாதல்.

**தடித்தனம்** – முருட்டுத்தனம்; மட்டித்தனம்; சோம்பேறித்தனம்.

**தடித்து** – மின்னல்.

**தடிதல்** – வெட்டுதல்; அழித்தல்; குறைத்தல்.

**தடிப்பம்** – பருமை; வீக்கம்.

**தடிப்பயல்** – கொழுத்தவன்; முரடன்; மட்டி.

**தடிப்பு** – கடினம்; வீக்கம்; உடல் தழும்பு; பூரிப்பு; கனம்; செருக்கு.

**தடிபிணக்கு** – அடிதடி.

**தடிபோடுதல்** – நிலம் அளத்தல்; தேரை மரக் கட்டையால் நெம்பிக் கிளப்புதல்; இடையூறுசெய்தல்; வருந்தி முயன்று ஒருவனை வேலையில் ஈடுபடும்படி செய்தல்.

**தடிமன்** – நீர்க்கோவை; பருமை.

**தடிமாடு, தடிமிண்டன், தடியன்** – கொழுத்தவன், பருத்தவன், முரடன்.

**தடிவு** – வெட்டு; அழிக்கை; கொலை.

**தடினி** – ஆறு.

**தடு** – தடுக்கை.

**தடுக்கல்** – தடை.

**தடுக்கிநிற்றல்** – தடையால் நின்றுபோதல்.

**தடுக்கு** – இடறுகை; தட்டி; பாய்; தவிசு.

**தடுக்குத்தள்ளுதல்** – இச்சகம் பேசுதல்.

**தடுக்குதல்** – இடறுதல்; தடைசெய்தல்.

**தடுக்குப்பாய்** – சிறுபாய்.

**தடுக்குப்போடுதல்** – உட்காரச் சிறுபாய் இடுதல்; உபசரித்தல்.

**தடுத்தல்** – தடைசெய்தல்; அடைத்தல்; வேறு பிரித்தல்; நிறுத்திவைத்தல்; அடக்குதல்; விலக்குதல்; மறுத்தல்; எதிர்த்தல்; பயனறச் செய்தல்; எண்ணம் மாறச்செய்தல்.

**தடுத்தாள்(ளு)தல்** – திருத்தி வயமாக்குதல்.

**தடுப்பு** – தடுக்கை; தடை.

**தடுமன்** – காண்க: **தடிமன்.**

**தடுமாற்றம்** – ஒழுங்கின்மை; தள்ளாடுகை; மனக் கலக்கம்; ஐயம்; தவறு.

**தடுமாற்று** – மனக்கலக்கம்.

**தடுமாறுத்தி** – காரியத்தைக் காரணமெனத் தடுமாறக் கூறும் அணிவகை.

**தடுமாறுதல்** – ஒழுங்கீனமாதல்; நெறியின்றிக் கலநதுகிடத்தல்; மனங்கலங்குதல்; துன்பத் துக்குள்ளாதல்; ஐயுறுதல்; தவறுதல்; தள்ளாடுதல்.

**தடுமாறுவமம், தடுமாறுவமை** – காண்க : **எதிர்நிலையணி.**

**தடை** – தடுக்கை; இடையூறு; மறுப்பு; கவசம்; காப்பு; காவல்; வாசல்; அணை; அடைப்பு; மந்திரத் தடை; காண்க: **தடல்;** எண்பதுபலங் கொண்ட அளவு; நிறுக்கப்போகும் பொருளை வைத்திருக்கும் பாத்திரம் முதலியவற்றிற்குரிய எடை.

**தடைஇய** – திரண்ட; பெருத்த.

**தடைக்கட்டு** – நிறை அளவுகளைப் பரிசோதிக்கும் உத்தியோகம்.

**தடைகட்டுதல்** – பாம்பு முதலியவற்றை மந்திரத்தால் தடுத்தல்; தராசில் எடைத் தடையமிடுதல்.

**தடைத்தல், தடைதல்** – தடுத்தல்.

**தடைபடுத்துதல், தடைபண்ணுதல்** – இடையூறுசெய்தல்; காவற்படுத்துதல்; தடுத்துதல்.

**தடையம்** – அணிகலன்கள்; தடை; களவு முதலிய குற்றங்களில் சம்பந்தப்பட்ட பொருள்; கத்திப்பிடி; பெற்றுக்கொண்ட பொன்னுக்குத் தட்டார் கொடுக்கும் பொன்னிறை கல்; தராசுதடை; தட்டுமுட்டு; நிறுக்கப்போகும் பொருளை வைத்திருக்கும் பாத்திரம் முதலிய வற்றிற்குரிய எடை.

**தடையறுத்தல்** – மந்திரத் தடைநீக்குதல்; இடையூறு விலக்குதல்.

**தடைவிடை** – மறுப்பும் மாற்றமும்.

**தண்** – குளிர்ச்சி; அருள்.

**தண்கடற்சேர்ப்பன்** – நெய்தல்நிலத் தலைவன்.

**தண்கதிர், தண்சுடர், தண்சுடர்க்கலையோன்** – குளிர்ந்த ஒளியுள்ள கதிர்களையுடைய சந்திரன்.

**தண்டக்காரன்** – வேலைக்காரன்.

**தண்டக்கூற்றம்** – வரிவகை.

**தண்டகநாடு** – காண்க: **தொண்டைநாடு.**

**தண்டகம்** – காண்க: **தொண்டைநாடு; தண்டகாரணியம்;** தண்டனை; வடமொழியில் ஒருவகைச் செய்யுள்; வீணாதண்டம் என்னும் முதுகெலும்பு; அணிகலன்; கரிக்குருவி; குறுந்தறி; நுரை.

**தண்டகமாலை** – முந்நூறு வெண்பாக்களால் பாடும் ஒரு நூல்வகை.

**தண்டகன்** – ஒரு மன்னன்; யமன்.

**தண்டகாகம்** – காண்க: **செம்போத்து.**

**தண்டகாரணியம்** – தக்கணதேசத்தில் துறவியர் வசித்துவந்த ஒரு காடு.

**தண்டங்கொடுத்தல்** – அபராதங்கட்டுதல்; இழத்தல்; இழப்புக்கு ஈடு கொடுத்தல்.

**தண்டச்சோறு** – பயனற்றவனுக்கு இடும் உணவு; இலவசமாகக் கொடுக்குஞ் சோறு; காண்க: **புல்லுருவி.**

**தண்டசக்கரம்** – குயவனது சுழற்றுகருவி.

**தண்டசம்** – கருவிவகை.

**தண்டஞ்செய்தல்** – நிலத்தில் வீழ்ந்து வணங்குதல்; தண்டித்தல்; கோலால் அளத்தல்.

**தண்டடித்தல்** – பாளையம் அடித்துப் படை இறங்குதல்.

**தண்டத்தலைவன்** – படைத்தலைவன்.

**தண்டத்தான்** – யமன்.

**தண்டத்துக்கழுதல்** – பொருள் முதலியவற்றைப் பயனின்றிக் கொடுத்தல்; நட்டமாக இறுத்தல்.

**தண்டதரன்** – யமன்; கதாயுதத்தையுடைய வீமன்; அரசன்; குயவன்.

**தண்டதாசன்** – அடிமை.

**தண்டநாயகம்** – படைத்தலைமையாகிய வேலை.

**தண்டநாயகன்** – படைத்தலைவன்; தண்டனை செய்யும் அதிபதியாகிய அரசன்; சிவகணத் தலைவனாகிய நந்தி.

**தண்டநீதி** – அரசியல் நூல்.

**தண்டப்படுதல்** – அபராதம் விதிக்கப்படுதல்.

**தண்டப்பொருள்** – அபராதமாகக் கொள்ளும் பொருள்.

**தண்டபாசிகன்** – கொலைகாரன்.

**தண்டபாணி** – தண்டைக் கையிலுடைய முருகன்; திருமால்; யமன்; வீமன்.

**தண்டம்** – கோல்; தண்டாயுதம்; அபராதம்; தண்டனை; குடைக்காம்பு; உலக்கை; படகு துடுப்பு; ஓர்அளவை; உடம்பு; படை; படைவகுப்புவகை; திரள்; வரி; கருவூலம்; இழப்பு; யானைகட்டும் இடம்; யானை செல்லும் வழி; ஒறுத்து அடக்குகை; வணக்கம்; ஒரு நாழிகை நேரம்; செங்கோல்.

**தண்டம்பண்ணுதல்** – அடியில் வீழ்ந்து வணங்குதல்.

**தண்டம்பிடித்தல்** – அபராதம் வாங்குதல்.

**தண்டம்போடுதல்** – அபராதமிடுதல்; வணங்குதல்.

**தண்டமானம்** – வால் முறுக்குதல்.

**தண்டமிழ்** – தண்ணிய தமிழ்.

**தண்ட(டி)யமரம்** – கோக்காலி.

**தண்டயாத்திரை** – படையெடுத்துச் செல்லுகை.

**தண்டர்** – தண்டனை செய்வோர்.

**தண்டல்** – வசூலித்தல்; வசூலிக்கும் பொருள்; தீர்வை வசூலிப்பவன்; எதிர்த்தல்; தண்டனை; படகு தலைவன்.

**தண்டலர்** – பகைவர்.

**தண்டலாளன்** – தீர்வை வசூலிப்போன்.

**தண்டலை** – சோலை; பூந்தோட்டம்; ஓர் ஊர்.

**தண்டவாளம்** – புடைவை வகை; இரும்புச் சட்டம்.

**தண்டற்காரன்** – வரி முதலியன வசூலிப்போன்; தீர்வை வசூல் செய்யும் ஊர்ப் பணியாளன்; படகு தலைவன்.

**தண்டன்** – கோல்; வணக்கம்.

**தண்டன்சமர்ப்பித்தல்** – மார்பு நிலத்துற விழுந்து வணங்குதல்.

**தண்டனம்** – சிட்சை.

**தண்டனிடுதல்** – கீழே விழுந்து வணங்குதல்.

**தண்டனை** – ஒறுப்பு.

**தண்டா** – தொந்தரவு; சண்டை; சிக்கல்; கதவை அடைத்து இடும் இரும்புத்தடி; உடற்பயிற்சி வகை.

**தண்டாமை** – நீங்காமை.

**தண்டாயம்** – பாரந்தாங்குந் தண்டு; தவணைப் பகுதி.

**தண்டாயுதபாணி** – தண்டாயுதத்தைக் கையிலுடைய முருகக்கடவுள்.

**தண்டாயுதம்** – கதைப்படை; பாரந்தாங்கும் தண்டு.

**தண்டாயுதன்** – தண்டாயுதம் உடையவன், முருகக்கடவுள்; வைரவக்கடவுள்; ஐயனார்; வீமன்.

**தண்டாரணியம்** – காண்க: **தண்டகாரணியம்,** ஓர் ஆரிய நாடு.

**தண்டாரம்** – குயவன் சக்கரம்; மதயானை; வில்; தோணி; வண்டி.

**தண்டான்** – கோரைவகை; புடல்வகை.

**தண்டி** – தண்டற்காரன்; பருமன்; மிகுதி; தரம்; ஓர் அணி இலக்கண நூலாசிரியர்; யமன்; சண்டேசுவர நாயனார்; செருக்குள்ளவர்; எட்டு அடியுள்ள இசைப்பாட்டுவகை.

**தண்டிகை** – ஒரு பல்லக்குவகை; பெரிய வீடு.

**தண்டித்தல்** – பருத்தல்; ஒறுத்தல்; வெட்டுதல்; கட்டளையிடுதல்; வருந்தி முயலுதல்.

**தண்டிதரம்** – ஆற்றல்.

**தண்டிப்பு** – தண்டனை; வெட்டுகை.

**தண்டியக்கொம்பு** – நடிக்கப் பழகுவோர் ஆதரவாகக் கொள்ளுங் கழி; கூரை தாங்குங் குறுக்குக் கட்டை; மக்கள் நெருக்கி உட்புகாதபடி இடும் குறுக்குமரம்; பல்லக்குக் கொம்பு.

**தண்டியம்** – கச்சூர்க்கட்டை; புறக்கூரையைத் தாங்குங் கட்டை; நடிக்கப் பழகுவோர் ஆதரவாகக் கொள்ளும் கழி; வாயிற்படியின் மேற் கட்டை.

**தண்டியல்** – பல்லக்குவகை.

**தண்டியிற்புண்** – ஆண்குறியில் வரும் புண்வகை.

**தண்டிலம்** – ஓமம் பண்ணுதற்கு அமைத்துக் கொண்ட இடம்; சிவபூசைக்கு அமைத்துக் கொண்ட இடம்.

**தண்டு** – கோல்; மரக்கொம்பு; திருமால் முதலியோர்க்குரிய கதாயுதம்; தண்டாயுதம்; வளைதடி; உலக்கை; விளக்குத்தண்டு; வீணை; செவித்தண்டு; மூக்குத்தண்டு; முதுகந்தண்டு; ஆண்குறி; வரம்பு; பச்சோந்தி; தொளையுடைய பொருள்; மூங்கிற் குழாய்; மூங்கில்; பூவிதழ்; சிவிகை; செருக்கு; மிதுனராசி; சேனை; சேகரித்த பணம் முதலியன.

**தண்டுக்கீரை** – பருத்த தண்டுடன் வளரும் கீரை.

**தண்டுக்கோல்** – படகு துடுப்பு; படகு தள்ளுதற்குரிய சவளமரம்; பிரமசாரிக்குரிய பலாசக் கோல்.

**தண்டுதல்** – வசூலித்தல்; வருத்துதல்; இணைத்தல்; நீங்குதல்; விலகுதல்; தணிதல்; கெடுதல்; தடைபடுதல்; தொடுதல்; மனம் அமைதல்; விருப்பங்கொள்ளுதல்; சினமூண்டெழுதல்; விலகுதல்.

**தண்டுபோடுதல்** – படகுதுடுப்புத் தள்ளுதல்; வாகனஞ்சுமத்தல்.

**தண்டுமாரி** – சிறு தெய்வங்களுள் ஒன்று; அடக்கமற்ற பெண்.

**தண்டுமிண்டு** – மூர்க்கத்தனம்.

**தண்டுலபலை** – திப்பிலிச்செடி.

**தண்டுலம்** – அரிசி; காண்க: **தண்டிலம்.**

**தண்டுலம்பு** – அரிசி கழுவும் நீர்.

**தண்டுவலித்தல்** – காண்க: **தண்டுபோடுதல்.**

**தண்டெடுத்தல்** – படையெடுத்தல்.

**தண்டெலும்பு** – முதுகெலும்பு.

**தண்டேறு** – எலும்பு.

**தண்டேறுதல்** – பல்லக்கேறுதல்.

**தண்டை** – மாதர் காலணியில் ஒன்று; கேடகம்; வால்; காண்க: **தண்டைமாலை.**

**தண்டைக்காரன்** – வஞ்சகன்; தொந்தரவு செய்வோன்.

**தண்டைநோய்** – நோய்வகை.

**தண்டைமாலை** – பூமாலைவகை.

**தண்டைமானம்** – வால் முறுக்குதல்.

**தண்டொட்டி** – மாதரின் ஒரு காதணிவகை.

**தண்டோரா** – பறைசாற்றல்.

**தண்ண** – எளிமையுடைய.

**தண்ணடை** – மருதநிலத்தூர்; நாடு; பச்சிலை; காடு; சிற்றூர்; உடுக்கைவகை.

**தண்ணம்** – ஒருகட்பறை; மழுவாயுதம்; குளிர்ச்சி; காடு.

**தண்ணவன்** – குளிர்ந்த சந்திரன்.

**தண்ணளி** – குளிர்ந்த அருள்.

**தண்ணாத்தல்** – தாழ்த்தல்.

**தண்ணியசொல்** – இதப்படுத்துஞ்சொல்.

**தண்ணீர்** – குளிர்ந்த நீர்; நீர்.

**தண்ணீர்க்காரன்** – நீர் சுமந்து கொடுப்போன்.

**தண்ணீர்க்காரி** – நீர் சுமந்து கொடுப்பவள்.

**தண்ணீர்க்கால்** – நீரோடும் வழி.

**தண்ணீர்க்குடம்** – நீர் முகக்கும் குடம்; காண்க: **நீர்வாழை.**

**தண்ணீர்கட்டுதல்** – வயல் முதலியவற்றில் நீர் தேக்குதல்; நீர்க்கொப்புளங் கொள்ளுதல்.

**தண்ணீர்காட்டுதல்** – கால்நடைகளுக்குக் குடிநீர் காட்டுதல்; ஏமாற்றுதல்; அலைக்கழித்தல்.

**தண்ணீர்த்துரும்பு** – இடையூறு.

**தண்ணீர்த்துறை** – நீர்நிலையில் இறங்குமிடம்.

**தண்ணீர்த்துறையேறுதல்** – மாதவிடாயாதல்.

**தண்ணீர்தெளித்தல்** – தூய்மையின்பொருட்டு நீர் தெளித்தல்; தொடர்பை நீக்கிவிடுதல்.

**தண்ணீர்ப்பத்தாயம்** – நீர்த்தொட்டி.

**தண்ணீர்ப்பந்தர்(ல்)** – வெயிற்காலத்தில் வழிச் செல்வோர்க்குக் குடிநீர் முதலியன உதவும் அறச்சாலை.

**தண்ணீர்ப்பிடிப்பு** – குளம் முதலியவற்றில் நீர் பிடித்துள்ள அளவு; உணவு முதலியவற்றின் நீர்மத் தன்மை.

**தண்ணீர்பட்டபாடு** – தாராளமாய்ச் செலவு செய்கை; எளிதாகச் செய்யவல்லது.

**தண்ணீர்மட்டம்** – நீர்மட்டம் என்னும் கருவி; குளம் முதலியவற்றில் தண்ணீர் பிடித்துள்ள அளவு.

**தண்ணீர்மாறுதல்** – ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நீரை மாற்றிப் பாய்ச்சுதல்.

**தண்ணீர்வார்த்தல்** – வழிச்செல்வோர் முதலியோர்க்கு நீர் கொடுத்தல்; நோய் நீங்கினோர் முதலியோரை நீராட்டுவித்தல்; தொடர்பற நீக்கிவிடுதல்.

**தண்ணீர்விட்டான்** – ஒரு கொடிவகை.

**தண்ணீராக்குதல்** – ஒருவனை இரக்கங் கொள் ளும்படி செய்தல்; உலோக முதலியவற்றை நீர்மமாக்குதல்; பால் முதலியவற்றில் நீர் கலத்தல்; மனப்பாடம் பண்ணல்.

**தண்ணீராதல்** – நீர்மயமாய்ப்போதல்; மனப் பாடமாதல்.

**தண்ணுமை** – மத்தளம்; முழவு; உடுக்கை; ஒரு கட்பறை.

**தண்ணுமையோன்** – மத்தள ஆசிரியன்.

**தண்ணெனல்** – குளிர்ச்சிக்குறிப்பு; இரங்கற் குறிப்பு; தட்டுகைக்குறிப்பு.

**தண்ணெனவு** – குளிர்ந்திருக்கை; இரங்குகை.

**தண்பணை** – மருதநிலம்.

**தண்பதம்** – புதுப்புனல்; புதுப்புனல் விழா; தாழ் நிலை.

**தண்பு** – குளிர்ச்சி.

**தண்மை** – குளிர்ச்சி; சாந்தம்; இன்பம்; மென்மை; தாழ்வு; விளைவுக் குறைவு; அறிவின்மை.

**தணக்கம்** – நுணா என்னும் கொடி.

**தணக்கு** – நுணாமரம்; நுணாக்கொடி; தணக்க மரம்; முட்டைக் கோங்கிலவுமரம்; வால்; முட்டைக் கோங்கு என்னும் மரம்.

**தணத்தல்** – நீங்குதல்; போதல்; நீக்குதல்; பிரிதல்.

**தணப்பு** – நீங்குதல்; தடை; செல்லல்.

**தணல்** – கனிந்த நெருப்பு; நெருப்பு; நிழலிடம்.

**தணல்விழுங்கி** – தணலை விழுங்கும் தீக்கோழி.

**தணலம்** – காண்க: **எருக்கு.**

**தணவம்** – அரசமரம்.

**தணி** – மலை; குளிர்ச்சி; தேர்நெம்புங் கட்டை.

**தணிக்கை** – மேற்பார்வையிடுகை.

**தணிகை** – திருத்தணிகை.

**தணிசு** – விலைமலிவு; சதைபிடிக்கை; வளைவு.

**தணித்தல்** – ஆற்றுதல்; குறைத்தல்; புதைத்தல்; தாழ்த்தல்; தீர்த்தல்; தண்டித்தல்; அவித்தல்; பொறுத்தல்.

**தணிதல்** – ஆறுதல்; குறைதல்; வற்றுதல்; விளக்கு முதலியன அவிதல்; வேலை முதலிய வற்றினின்றும் நீங்குதல்; தாழ்தல்; ஒன்றோடு ஒன்று இசைதல்; நிறைதல்; மனநிறைவாதல்; பருத்தல்.

**தணிப்பு** – தணித்தல்; காண்க: **தணிவு;** அதிமதுரம் முதலியவற்றைக் கியாழமிட்டுச் செய்த ஒரு மருந்துவகை.

**தணியல்** – காண்க: **தணிவு;** திருத்தணிகை; கள்.

**தணிவு** – குறைகை; வணக்கம்; சாந்தம்; நீர் வற்றுகை; இழிவு; தாழ்வு.

**தணுப்பு** – குளிர்ச்சி; நீர்க்கோவை.

**தத்** – அது; அந்த; அதட்டற்குறிப்பு.

**தத்தக்கபித்தக்கவெனல்** – நடைதளர்தற்குறிப்பு; பேச்சுத் தடுமாறற்குறிப்பு.

**தத்தகன்** – காண்க: **தத்துப்பிள்ளை.**

**தத்தங்கொடுத்தல்** – சுவீகாரங் கொடுத்தல்; காண்க: **தத்தம்பண்ணுதல்.**

**தத்தடி** – குழந்தையின் தளர்நடை.

**தத்தபுத்திரன்** – காண்க: **தத்தகன்.**

**தத்தம்** – நீர்வார்த்துக் கொடுக்கும் கொடை.

**தத்தம்பண்ணுதல்** – பொருளை நீர்வார்த்துக் கொடுத்தல்; பொருளைத் திரும்பப் பெறாத படி கொடுத்துவிடுதல்; பிதிரர்க்கு நீரோடு பிண்டம் முதலியன கொடுத்தல்.

**தத்தயோகம்** – தீயோகங்களுள் ஒன்று.

**தத்தரசமயம்** – நெருக்கடியான நேரம்.

**தத்தரம்** – நடுக்கம்; மிகுவிரைவு; தந்திரம்.

**தத்தளம்** – கட்டடத் தளங்களின் நெகிழ்ந்த நிலை.

**தத்தளித்தல்** – ஆபத்தில் அகப்பட்டுத் திகைத்தல்; பஞ்சம் முதலியவற்றால் வருந்துதல்.

**தத்தளிப்பு** – உயிர் தப்பவேண்டித் திகைக்கை; மனங்கலங்குகை.

**தத்தன்** – காண்க: **வளர்ப்புப்பிள்ளை.**

**தத்தாங்கி** – சிறுமியர் கைகொட்டிப் பாடும் விளையாட்டுவகை.

**தத்தாங்கிகொட்டுதல்** – சிறு குழந்தைகள் கை கொட்டுதல்.

**தத்தாபகாரம்** – தானங் கொடுத்ததைத் திரும்ப வாங்குகையாகிய பாவம்.

**தத்தாரி** – கண்டபடி திரிவோர்.

**தத்தி** – கொடை; சத்துவம்.

**தத்திகாரம்** – பொய்.

**தத்திதம்(ன்)** – பெரும்பான்மைப் பெயர்ச்சொல்லின்மேல் வரும் விகுதி; பகுபதம்.

**தத்திதாந்தம்** – தத்தித விகுதியைக்கொண்ட பெயர்; சிறிது மாறித் தன்னோடு இயைபுடைய பொருளையாகிலும் தன் பொருளையாகிலும் உணர்த்துவது.

**தத்தியம்** – மெய்; துகில்வகை.

**தத்தியோதனம்** – காண்க: **ததியோதனம்.**

**தத்தினம்** – காண்க: **சிராத்தம்.**

**தத்து** – தாவிநடத்தல்; பாய்தல்; மனக்கவலை; சாதகத்தின்படி நேரும் ஆபத்து; தவறு; சுவீகாரம்; சுவீகாரபுத்திரன்; சிறுதுளை; பூச்சிக்கடியாலாகிய தடிப்பு.

**தத்துக்கிளி** – வெட்டுக்கிளி; கிளிப்பிள்ளை; பிள்ளைகளின் விளையாட்டுவகை.

**தத்துதல்** – குதித்தல்; தாவிச்செல்லுதல்; தாவி ஏறுதல்; அடியால் அளத்தல்; ததும்புதல்; பரவுதல்; ஒளி முதலியன வீசுதல்.

**தத்துப்பிள்ளை, தத்துப்புத்திரன்** – சுவீகாரப்பிள்ளை.

**தத்துமீட்டல்** – நோயாளியை ஆபத்திலிருந்து காத்தல்; கண்டம் என்று கருதப்பட்ட காலத்தைக் கடத்தல்.

**தத்துவசதுக்கம்** – மணமேடை.

**தத்துவசாலி** – அதிகாரபத்திரம் பெற்றோன்.

**தத்துவஞானம்** – முடிவான உண்மையுணர்வு.

**தத்துவஞானி** – முடிவான உண்மையை உணர்ந்தோன்.

**தத்துவப்பொருள்** – பேருண்மையாய் உள்ளவனான கடவுள்.

**தத்துவம்** – உண்மை; பொருள்களின் குணம்; இயல்பான அமைப்பு; உடற்பலம்; இந்திரிய பலம்; அதிகாரம்; பரமான்மா; ஆன்மா; அதிகாரபத்திரம்.

**தத்துவமசி** – 'அது நீயாக இருக்கிறாய்' என்னும் பொருள்கொண்ட வேதவாக்கியம்.

**தத்துவரூபம்** – தத்துவங்களின் குணங்களை ஆன்மா காணும் நிலையாகிய தசகாரியவகை.

**தத்துவவாதம்** – இயற்கையே கடவுளென்னும் மதம்.

**தத்துவவாதி** – இயற்கையே கடவுள் என்று வாதிப்போன்.

**தத்துவவுணர்வு** – கடவுளைப்பற்றிய உண்மையுணர்வு.

**தத்துவன்** – பேருண்மையாய் உள்ளவனான கடவுள்; அருகன்.

**தத்துவாத்துவா** – ஆறு அத்துவாக்களுள் முப்பத்தாறு தத்துவங்களாகிய அத்துவாக்கள்.

**தத்துவாதீதன்** – தத்துவம் கடந்த பரம்பொருள்.

**தத்துறுதல்** – தத்தி வருதல்; வருத்தப்படுதல்; நேர்தல்; கிட்டுதல்.

**தத்தெடுத்தல்** – பிறர் குழந்தையைத் தனக்கு உரிமையாக ஏற்றல்.

**தத்தை** – கிளி; தமக்கை.

**தத்ரூபம்** – முழுவதும் ஒற்றுமையான வடிவம்.

**ததபத்திரி** – வாழை.

**ததம்** – அகலம்; பின்பு.

**ததர்** – செறிவு; கொத்து; சிதறுகை.

**ததர்த்தல்** – வருத்துதல்.

**ததர்தல்** – நெரிதல்.

**ததள்** – தளரா நிலை.

**ததா** – அப்படி.

**ததாகதன்** – புத்தன்.

**ததி** – தக்க சமயம்; தயிர்; சத்துவம்.

**ததிகேடு** – வலியின்மை; செல்வக்குறைவு.

**ததிசம், ததிசாரம்** – வெண்ணெய்.

**ததிமண்டம்** – மோர்.

**ததியர்** – அடியார்.

**ததியாராதனை** – காண்க: **ததீயாராதனம்.**

**ததியோதனம்** – தயிர்ச்சோறு.

**ததீயாராதனம், ததீயாராதனை** – திருமால் அடியார்க்கு இடும் விருந்துணவு.

**ததும்புதல்** – மிகுதல்; நிறைதல்; நிரம்பிவழிதல்; மனநிரம்புதல்; அசைதல்; முழங்குதல்.

**ததைத்தல்** – கூட்டுதல்; நெருக்கல்; நிறைதல்.

**ததைதல்** – நெருங்குதல்; சிதைதல்; சிதறல்; வெளிப்படாதிருத்தல்.

**தந்தக்கட்டில்** – தந்தத்தினால் ஆன கட்டில்; உயர்ந்த கட்டில்.

**தந்தக்காரி** – காண்க: **வாதமடக்கி.**

**தந்தக்குறி** – புணர்ச்சிகாலத்தில் பல்லால் உண்டான அடையாளம்.

**தந்தசடம்** – காண்க: **எலுமிச்சை; விளாமரம்.**

**தந்தசடை** – புளியாரைச்செடி.

**தந்தசம்** – காண்க: **தந்தமாமிசம்.**

**தந்தசுத்தி** – பல் விளக்கல்.

**தந்தசூகம்** – பாம்பு; பாம்புகள் நிரம்பிய நரக வகை.

**தந்தசூலை** – பல்வலி.

**தந்ததாவனம்** – காண்க: **தந்தசுத்தி;** பற்குச்சி; கருங்காலிவகை.

**தந்ததி** – காண்க: **சந்ததி.**

**தந்தப்பூண்** – யானையின் கொம்பில் அணியும் கிம்புரி.

**தந்தபத்திரம்** – மல்லிகைவகை.

**தந்தபலம்** – விளாமரம்.

**தந்தபலை** – திப்பிலி.
**தந்தபாகம்** – யானையின் மத்தகம்.
**தந்தம்** – பல்; யானை முதலியவற்றின் கொம்பு; மலைமுகடு; நறுக்கி வைத்திருக்கும் பழத் துண்டம்.
**தந்தமா** – தந்தத்தை உடைய விலங்கான யானை.
**தந்தமாமிசம்** – பல்லின் ஈறு.
**தந்தரோகம்** – பல்நோய்.
**தந்தவேட்டம்** – காண்க: **தந்தமாமிசம்.**
**தந்தனத்தோம்** – ஓர் ஒலிக்குறிப்பு; வில்லிசை.
**தந்தனப்பாட்டு** – தெம்மாங்குவகை; பெரும் பாலும் பிச்சைக்காரர் பாடும் பாட்டு.
**தந்தனப்பாட்டுப்பாடுதல்** – ஏழைபோல் நடித்தல்.
**தந்தனம்** – தந்திரம்; ஆதாரமின்மை; பொருட் படுத்தாமை; தற்பெருமை.
**தந்தனவெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**தந்தாம்** – தங்கள், தங்களுடைய.
**தந்தாயுதம்** – தந்தத்தை ஆயுதமாக உடைய யானை; ஆண்பன்றி.
**தந்தார்** – பெற்றோர்.
**தந்தாலிகை** – கடிவாளம்.
**தந்தாவளம்** – யானை.
**தந்தி** – ஆண்யானை; நச்சுப் பற்களையுடைய பாம்பு; யாழ்நரம்பு; நரம்பு; யாழ்; காண்க: **நேர்வாளம்;** கம்பி; மின்சாரக்கம்பிமூலம் அனுப்பும் செய்தி.
**தந்திக்கடவுள்** – யானை முகத்தையுடைய கடவுளான விநாயகர்.
**தந்திக்கம்பி** – வீணை முதலியவற்றின் நரம்பு; செய்திகளை அறிவிக்கும் மின்சாரக்கம்பி; புடைவைவகை.
**தந்தித்தீ** – யானைத் தீ என்னும் பசிநோய்.
**தந்திதந்தியாய்** – வரிசைவரிசையாய்.
**தந்திபீசம்** – காண்க: **நேர்வாளம்.**
**தந்திமருப்பு** – காண்க: **முள்ளங்கி.**
**தந்திமுகன்** – காண்க: **தந்திக்கடவுள்.**
**தந்தியடித்தல்** – தந்திமூலம் செய்தி அனுப்புதல்.
**தந்தியுரியோன்** – யானைத்தோலைப் போர்த்த சிவன்.
**தந்திரக்காரன்** – சூழ்ச்சியுள்ளவன், யுக்திக்காரன்.
**தந்திரகம்** – காண்க: **சீந்தில்.**
**தந்திரகரணம்** – களவுநூல்; களவுநூலிற் சொல்லப்படுந் தொழில்கள்.
**தந்திரசாத்திரம்** – தெய்வபூசனைக்குரிய மந்திர தந்திரங்களைக் கூறும் நூல்.
**தந்திரசாலி** – காண்க: **தந்திரக்காரன்.**
**தந்திரபாலன்** – படைத்தலைவன்.
**தந்திரம்** – வழிவகை; தொழில்திறமை; உத்தி; பித்தலாட்டம்; சூழ்ச்சி; கல்விநூல்; காண்க: **தந்திரசாத்திரம்;** படை; காலாள்; யாழ்நரம்பு; கடவுள் வழிபாட்டில் காட்டும் கைச்செய்கை.
**தந்திரமா** – தந்திரமுள்ள விலங்கான நரி.
**தந்திரர்** – யாழ் வாசிப்பவரான கந்தருவர்.
**தந்திரவாயன்** – சிலம்பி; நெய்வோன்.
**தந்திரன்** – காண்க: **தந்திரக்காரன்.**
**தந்திரி** – தந்திரக்காரன்; காண்க: **தந்திரபலன்;** மந்திரி; கோயிலின் அருச்சகத் தலைவர்; யாழ்; குழலின் துளை; யாழ்நரம்பு.
**தந்திரிகரம்** – செங்கோட்டியாழ் உறுப்பினுள் ஒன்று.
**தந்திரிகை** – கம்பி.
**தந்திரை** – சோம்பல்; உறக்கம்.
**தந்து** – நூல்; கயிறு; கல்விநூல்; சந்ததி; உபாயம்; தொழில்திறமை; உத்தி.
**தந்துகடம்** – சிலந்திப்பூச்சி.
**தந்துகம்** – கடுகு.
**தந்துகி** – நாடி நுட்பக்குழல்கள்.
**தந்துகீடம்** – நூலிழைக்கும் சிலந்திப்பூச்சி.
**தந்துசாரம்** – காண்க: **கமுகு.**
**தந்துபம்** – கடுகு.
**தந்துமந்து** – குழப்பம்.
**தந்துரம்** – ஒழுங்கின்மை.
**தந்துரை** – நூற்குள் நுதலிய பொருள் அல்லாத வற்றைத் தந்து கூறும் பாயிரம்.
**தந்துரைக்கிளவி** – பிறவுயிர்களைப் போன்று செய்யும் ஒலி.
**தந்துரைத்தல்** – செய்யுள் மூலத்தில் இல்லாத சொற்பொருளை வருவித்துக் கூறுதல்.
**தந்துவர், தந்துவாயர்** – நெசவுகாரர்; நூலால் நெய்யும் தொழிலையுடைய கைக்கோளர்.
**தந்துவை** – மாமியார்; மாமன் மனைவி.
**தந்தை** – தகப்பன்.
**தந்தைபெயரன்** – தன் தந்தையின் பெயரினை யுடையவனான மகன்.
**தந்தையன்** – காண்க: **தந்தை.**
**தப்பட்டை** – பறைவகை.
**தப்பட்டைக்காரன்** – பறையடிப்போன்.
**தப்படி** – தவறான செய்கை; ஐந்தடி அல்லது மூன்றடிகொண்ட கால் வைப்பு.
**தப்பணம்** – கோணியூசி.
**தப்பல்** – குற்றம்; அடி; துவைத்தல்.
**தப்பளம்** – எண்ணெய் முதலியன நிரம்பத் தேய்க்கை; பல காய்கறிகளைப் புளியிலிட்டுப் பக்குவப்படுத்திய குழம்பு.
**தப்பளை** – பெருவயிறு; தவளை; மீன்வகை.
**தப்பறை** – பொய்; சூது; கெட்ட சொல்.
**தப்பறைக்காரன்** – பொய்யன்.

**தப்பித்தல்** – குற்றம் முதலியவற்றினின்று விலகுதல்.
**தப்பித்தவறி** – தவறுதலாய்; தற்செயலாய்.
**தப்பித்தான்** – தப்புச்செய்தவன்; தப்பிச்சென்றவன்.
**தப்பிதம்** – தவறு; நெறிதவறுங் குற்றம்.
**தப்பியார்** – குற்றம் செய்தோர்.
**தப்பிலி** – குற்றமற்றவன்; போக்கிரி.
**தப்பு** – குற்றம்; பொய்; வஞ்சனை; தப்பித்துக் கொள்ளுகை; துணி துவைத்தல்; ஒரு பறை வகை.
**தப்புக்கடலை, தப்புக்கொட்டை** – விளைச்சற்காலத்தில் சிதறிப்போன நிலக்கடலை.
**தப்புச்செடி** – தானே தோன்றிய செடி.
**தப்புத்தண்டா** – குற்றம்; தொந்தரை.
**தப்புதல்** – தவறுதல்; பயன்படாது போதல்; பிறழுதல்; விட்டுப்போதல்; அபாயத்திலிருந்து நீங்குதல்; இறத்தல்; பிழைசெய்தல்; அழிதல்; அடித்தல்; சீலை தப்புதல்; விட்டு விலகுதல்; காணாமற்போதல்; தடவுதல்; அப்பம் முதலியன தட்டுதல்; கையால் தட்டுதல்; தடவிப்பார்த்தல்; அப்புதல்; செய்யத் தவறுதல்; தண்டுதல்.
**தப்புநடத்தை** – தீயவொழுக்கம்.
**தப்புமேளம்** – ஒரு பறைவகை.
**தப்பெண்ணம்** – தவறான கருத்து.
**தப்பை** – மூங்கிற்பட்டை; முரிந்த எலும்பு பொருந்த வைத்துக் கட்டும் சிம்பு; அடி; ஒரு சிறு பறைவகை.
**தபச்சரணம்** – தவஞ்செய்கை.
**தபசி** – காண்க: **தவசி.**
**தபசியம்** – பங்குனிமாதம்; முல்லை.
**தபசு** – காண்க: **தவம்.**
**தபதபவெனல்** – விரைவாகத் தொடர்தற் குறிப்பு.
**தபதி** – கல்தச்சன், சிற்பி.
**தபம்** – காண்க: **தவம்;** மாசிமாதம்; வெப்பம்.
**தபலை** – தவலை; பாத்திரவகை; மத்தளவகை.
**தபளா** – மத்தளவகை.
**தபன்** – சூரியன்.
**தபனம்** – வெப்பம்; வெயிற்காலம்; தாகம்; ஒரு நரகவகை.
**தபனற்கஞ்சி** – வெயிலில் நிறமிழக்கும் மஞ்சள்.
**தபனன்** – சூரியன்; தீக்கடவுள்; கொடிவேலி.
**தபனியம், தபனீயகம்** – காண்க: **தமனியம்.**
**தபா** – தடவை.
**தபாது** – தப்பு; ஏமாற்றுகை.
**தபாய்த்தல்** – தப்பிவிடுதல்; கேலிபண்ணுதல்; ஏமாற்றிவிடுதல்.
**தபால்** – அஞ்சல்; நிற்குமிடம்.
**தபாற்காரன்** – தபாற்கடிதங் கொடுப்போன்; கடிதங்களை அஞ்சலில் கொண்டுசெல்வோன்.
**தபித்தல்** – காய்தல்; வருந்துதல்.
**தபுக்கெனல்** – விழுதல் முதலியவற்றின் விரைவுக் குறிப்பு; ஓர் ஒலிக்குறிப்பு.
**தபுத்தல்** – கெடுத்தல்; அழித்தல்.
**தபுத்துதல்** – ஈரம் புலர்த்துதல்.
**தபுதல்** – கெடுதல்; இறத்தல்.
**தபுதாரநிலை, தபுதாரம்** – கணவன் தன் தாரம் இழந்து துயருறும் நிலையைக் கூறும் புறத்துறை.
**தபுதி** – அழிவு.
**தபோதன், தபோதனன், தபோநிதி** – முனிவன்.
**தபோபலம்** – தவப்பயன்; தவத்தால் உண்டாகும் வல்லமை.
**தபோலோகம்** – மேலேழு உலகினுள் ஒன்று.
**தபோவனம்** – தவம் செய்யும் காடு; தவசிகள் தங்கும் சோலை.
**தம்** – ஒரு சாரியை இடைச்சொல்; மூச்சடக்குகை; மூச்சு;
**தம்பகம்** – ஒன்றுக்கும் பயன்படாது அங்கங்கே முளைத்துத் தீய்ந்துபோகும் தாவரவகை.
**தம்பட்டம்** – ஒரு பறைவகை; வாளவரைக் கொடி.
**தம்பட்டை** – வாளவரைக்கொடி.
**தம்பதி** – கணவனும் மனைவியும்; மருதமரம்.
**தம்பம்** – தூண்; யானை முதலியன கட்டுந் தறி; விளக்குத்தண்டு; பற்றுக்கோடு; கொடிக் கம்பம்; கவசம்; ஊருணி; தம்புகைமரம்; காண்க: **தம்பனம்.**
**தம்பர்** – தாம்பூல எச்சில்.
**தம்பல்** – காண்க: **தம்பர்;** மழையால் வயல் இறுகுகை.
**தம்பலடித்தல்** – கனத்த மழையால் இறுகின வயலை உழுதல்; வயலிறுகிச் சமமாதல்.
**தம்பலப்பூச்சி** – இந்திரகோபம் என்னும் பூச்சி வகை.
**தம்பலம்** – வெற்றிலைபாக்கு; காண்க: **தம்பர்; தம்பலப்பூச்சி.**
**தம்பலாடுதல்** – வயலில் நீர்பாய்ச்சி மிதித்துச் சேறாக்குதல்.
**தம்பலி** – மருதமரம்.
**தம்பலை** – நிலவிலந்தைமரம்.
**தம்பனகாரன்** – பொருள்களின் இயற்கையைக் கட்டுப்படுத்தும் மந்திரவாதி.
**தம்பனம்** – அசைவற நிறுத்துகை; எட்டுக் கருமத்துள் ஒருவன் இயக்கத்தை மந்திரத்தால் தடுத்து நிறுத்துகை.

**தம்பனை** – ஒருவன் இயக்கத்தை மந்திரத்தால் தடுத்துக் கட்டுகை.
**தம்பா** – கள் அளக்குங் கருவி.
**தம்பி** – பின் பிறந்தோன்; வயதிற் சிறியவனைக் குறிக்கும் சொல்; தம்பிமுறையான்.
**தம்பி(வி)** – வாயுவையடக்கு.
**தம்பிக்கை, தம்பிகை** – ஒருவகைச் சிறுசெம்பு.
**தம்பிடித்தல்** – மூச்சடக்குதல்.
**தம்பித்தல்** – அசையாதிருத்தல்; மந்திரசக்தி முதலியவற்றால் தடுத்தல்.
**தம்பிராட்டி** – தனக்குத்தானே தலைவி; உடன் கட்டையேறுபவள்.
**தம்பிரான்** – கடவுள்; தனக்குத்தானே தலைவன்; திருவாங்கூர் அரசர் பட்டப்பெயர்; சைவத் துறவி; துறவித் தலைவர்.
**தம்பிரான்தோழன்** – சிவபிரானுக்குத் தோழனாகிய சுந்தரமூர்த்தி நாயனார்.
**தம்புதல்** – குட்டுதல்.
**தம்புரா, தம்பூரு** – பக்கச் சுருதிக்குரிய ஒரு நரம்புக் கருவி.
**தம்போலி** – வச்சிரப்படை.
**தம்மடக்குதல்** – காண்க: **தம்பிடித்தல்.**
**தம்மதம்** – உடன்பாடு; காண்க: **நஞ்சுண்டை.**
**தம்மவன்** – சுற்றத்தான்.
**தம்மனை** – தாய்.
**தம்மாகும்மா செய்தல்** – வீண்செலவு செய்தல்.
**தம்மான்** – தலைவன்.
**தம்மி** – தாமரை.
**தம்மிடுதல்** – நிறுத்தப்படுதல்; தணிதல்.
**தம்மிலம்** – மகளிர் மயிர்முடி.
**தம்முன்** – முன்னோன், அண்ணன்.
**தம்மோய்** – காண்க: **தம்மனை.**
**தம்மோன்** – காண்க: **தம்மான்.**
**தமக்கை** – அக்காள்; தமக்கை முறையாள்.
**தமகன்** – கொல்லன்.
**தமசம், தமசு** – இருள்; தாமதகுணம்.
**தமத்தமப்பிரபை** – காண்க: **தமப்பிரபை.**
**தமத்தல்** – தணிதல்; விலை மலிதல்; நிரம்புதல்.
**தமதமவெனல்** – நெருப்பு முழங்கியெரியும் ஒலிக் குறிப்பு.
**தமப்பன்** – தகப்பன்.
**தமப்பிரபை** – ஏழ் நரகவட்டங்களுள் இருள் நிறைந்த நரகம்.
**தமம்** – இருள்; தாமதகுணம்; இராகு; சேறு; கள்வரை வாட்டும் ஒருவகை நரகம்; ஞானேந்திரியம் கன்மேந்திரியங்களிற் செல்லாமல் மனத்தை மறித்தல்.
**தமயன்** – மூத்த சகோதரன்; அண்ணன் முறையான்.
**தமர்** – உற்றார்; தமக்கு வேண்டியவர்; சிறந்தோர்; வேலையாள்கள்; கருவியால் அமைத்த துளை; துளையிடும் கருவி.
**தமர்ப்படுதல்** – இணங்கல்; விரும்பல்.
**தமர்மை** – நட்பு.
**தமரகம்** – மூச்சுக்குழல்; உடுக்கை.
**தமரகவாயு** – நெஞ்சடைப்பு நோய்; இரைப்பு நோய்.
**தமரத்தை** – ஒரு மரவகை.
**தமரம்** – ஒலி; அரக்கு; தமரத்தைமரம்.
**தமராணி** – துளையாணி; தமரில் மாட்டும் ஊசி.
**தமரித்தல்** – ஒலித்தல்; விரும்பல்.
**தமரிப்பு** – விருப்பம்; ஒலி.
**தமருகம்** – உடுக்கை.
**தமரூசி** – துளையிடும் ஊசி; தமரில் மாட்டும் ஆணி.
**தமரோசை** – கிலுகிலுப்பைச்செடி.
**தமலி** – சட்டுவம்.
**தமள்** – உற்றாள்.
**தமன்** – உற்றான்.
**தமனகம், தமனம்** – காண்க: **மருக்கொழுந்து.**
**தமனி** – வன்னிமரம்; நல்ல இரத்தம் ஓடும் குழாய்.
**தமனியக்கூடம், தமனியப்பொதியில்** – பலர் கூடுதற்குரிய பொன் வேய்ந்த அம்பலம்.
**தமனியம்** – பொன்.
**தமனியன்** – இரணியன்; பிரமன்; சனி.
**தமாசு** – வேடிக்கை.
**தமாலகி** – காண்க: **கீழாநெல்லி.**
**தமாலம்** – பச்சிலைமரம்; இலை; நுதற்குறி; மூங்கில் தோல்.
**தமி** – தனிமை; ஒப்பின்மை; கதியின்மை; இரவு.
**தமிசிரம்** – குறைவு; இருள்.
**தமிசு** – வேங்கைமரம்.
**தமிட்டம்** – காண்க: **தம்பட்டம்.**
**தமித்தல்** – தனியாதல்; தண்டித்தல்.
**தமியம்** – கள்.
**தமியள்** – திக்கற்றவள்; தனியாயிருப்பவள்.
**தமியன்** – திக்கற்றவன்; தனித்தவன்.
**தமியாட்டி** – காண்க: **தமியள்.**
**தமிழ்** – இனிமை; நீர்மை; தமிழ்மொழி; தமிழ் நூல்; தமிழ்நாடு; தமிழர்.
**தமிழ்க்குச்சரி** – குறிஞ்சி யாழ்த்திறவகை.
**தமிழ்க்கூத்தர்** – தமிழக்கூத்து ஆடுபவர்.
**தமிழ்நடவை** – தமிழ் வழங்கும் இடமாகிய தமிழகம்.

**தமிழ்நதி** – செந்தமிழ் நாட்டிற்குரிய ஆறான வையை ஆறு.
**தமிழ்நர்** – தமிழர்.
**தமிழ்நாடன்** – தமிழ்நாட்டு வேந்தன்; பாண்டிய அரசன்.
**தமிழ்ப்படுத்துதல்** – பிறமொழியிலுள்ளதைத் தமிழில் மொழிபெயர்த்தல்.
**தமிழ்மருந்து** – தமிழ் மருத்துவ நூல்களிற் கூறிய வாறு செய்யப்பட்ட மருந்து.
**தமிழ்மலை** – பொதியமலை.
**தமிழ்மறை** – திருக்குறள்; தேவாரம்; திருவாசகம்; திவ்வியப் பிரபந்தம்.
**தமிழ்முனிவன்** – அகத்தியன்.
**தமிழ்வாணன்** – தமிழ்ப்புலவன்.
**தமிழ்வேதம்** – காண்க: **தமிழ்மறை.**
**தமிழ்வேளர்கொல்லி** – மருத யாழ்த்திறவகை.
**தமிழக்கூத்து** – தமிழ்நாட்டுக்குரிய கூத்து.
**தமிழகம்** – தமிழ்நாடு.
**தமிழ(ழி)ச்சி, தமிழத்தி** – தமிழப்பெண்.
**தமிழப்பல்லவதரையர்** – தமிழ்நாட்டுப் பல்லவ அரசர்.
**தமிழன்** – தமிழைத் தாய்மொழியாக உடைய வன்; ஆரியனல்லாத தென்னாட்டான்.
**தமிழாகரன்** – தமிழுக்கு நிலைக்களமான திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.
**தமிழியல்வழக்கு** – பண்டைக் காலத்துத் தமிழ் நூல்களிற் கூறப்படும் காமக்கூட்டம்.
**தமிழோர்** – தமிழ்மக்கள்; தமிழ்ப்புலவர்.
**தமுக்கடித்தல்** – பறைசாற்றிச் செய்தியறிவித் தல்; தேவையின்றிப் பிறருக்கு அறிவித்தல்.
**தமுக்கம்** – போருக்குச் செல்லும் யானைகள் திரளுமிடம்; வசந்தமாளிகை.
**தமுக்கு** – செய்தி தெரிவிக்க முழக்கும் ஒரு பறை வகை.
**தமுக்குப்போடுதல்** – காண்க: **தமுக்கடித்தல்.**
**தமை** – ஆசை; புலன்களையடக்குதல்.
**தமையம்** – காண்க: **அரிதாரம்.**
**தமையன்** – காண்க: **தமயன்.**
**தமோகுணம்** – காம வெகுளி மயக்கங்களுக்குக் காரணமான குணம்.
**தமோமணி** – மின்மினி.
**தய்யான்** – தையற்காரன்.
**தயக்கம்** – ஒளிவிடுகை; தோற்றம்; கலக்கம்; அசைவு.
**தயங்குதல்** – விளங்குதல்; ஒளிவிடுதல்; தெளிவா யிருத்தல்; திகைத்தல்; வாடுதல்; அசைதல்.
**தயல்** – பெண்.
**தயவு** – அன்பு; அருள்; பக்தி.
**தயனியம்** – அருளத்தக்கது.
**தயா** – காண்க: **தயவு.**
**தயாசீலன்** – அருளுடையவன்.
**தயாதர்மம்** – அருளாகிய அறம்.
**தயாபரன்** – அருள்மிக்க கடவுள்.
**தயாபாரமிதை** – அருள் மிகுகையாகிய பாரமிதை.
**தயார்** – அணியம், ஆயத்தம்.
**தயாவம்** – காண்க: **தயவு.**
**தயாவீரன்** – அருளில் மேம்பட்ட புத்தன்.
**தயாவு** – காண்க: **தயவு.**
**தயாளத்துவம், தயாளம்** – அருள்.
**தயாளன், தயாளு** – காண்க: **தயாசீலன்.**
**தயித்தியர்** – அசுரர்.
**தயிர்** – பிரையூற்றின பால்; மூளைக் கொழுப்பு.
**தயிர்க்கோல்** – மத்து.
**தயிர்கடைதறி** – தயிர் கடைவதற்குப் பயன்படுத் தும் தூண்.
**தயிர்கடைதாழி** – மத்திட்டுக் கடையும் தயிர்ப் பானை.
**தயிர்வேளை** – தைவேளைப்பூடு.
**தயிரமுது** – கடவுட்கு அல்லது அடியார்க்குப் படைக்குந் தயிர்.
**தயிரியம்** – மனத்திட்பம், துணிவு.
**தயிரேடு** – பால் ஆடை.
**தயிலக்காப்பு** – கடவுள் திருமேனிக்கு எண்ணெய் இடுதல்.
**தயிலம்** – வடித்த மருந்தெண்ணெய்; எண்ணெய்.
**தயிலமாட்டுதல்** – பிணத்தை எண்ணெயிலிட்டுக் கெடாமற் காத்தல்.
**தயிலமிறக்குதல்** – பொருள்களினின்று தைலம் வடித்தல்.
**தயினியம்** – எளிமை.
**தயை** – அருள்; அன்பு; பக்தி.
**தர்க்கம்** – காண்க: **தருக்கம்.**
**தர்ச்சனி** – சுட்டுவிரல்.
**தர்ப்பகன்** – மன்மதன்.
**தர்ப்பணம்** – தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பிதிரருக்கும் இறுக்கும் நீர்க்கடன்; கண்ணாடி.
**தர்ப்பணானனன்** – எதிர் தோன்றினாரைக் காண மாட்டாத கண்ணாடிபோன்ற முகமுடைய குருடன்.
**தர்ப்பீத்து** – பயிற்சி; ஒழுக்கம்.
**தர்பார்** – அரசன் முதலாயினரது ஓலக்கம்.
**தர்மம்** – காண்க: **தருமம்.**
**தர்மாசனம்** – காண்க: **தருமசபை;** பார்ப்பனருக்கு விட்ட இறையிலி நிலம்.
**தர்மோபதேசம்** – அறவுரை.

**தரக்கு** – புலி; கழுதைப்புலி.

**தரகரி(ன்)** – வாங்குவோர் விற்போர்களிடையே நின்று பண்டங்களின் விற்பனைக்கு ஏற்பாடு செய்பவன்.

**தரகு** – தரகர் பெறும் கூலி; வாசனைப் புல்வகை; விலை இலாபம்; காண்க: **தரகுபாட்டம்**; ஏறக் குறைய இரண்டு படியுள்ள ஓர் அளவுகருவி.

**தரகுகாரன்** – காண்க: **தரகன்.**

**தரகுகூலி** – தானியம் வாங்குவோன் அளப் பவனுக்குக் கொடுக்கும் கூலி.

**தரகுபாட்டம்** – தரகரிடமிருந்து கொள்ளும் வரி.

**தரங்கம்** – அலை; கடல்; மனக்கலக்கம்; இசை யலைவு; ஈட்டி.

**தரங்கம்மி** – நிலத்தின் தாழ்ந்த தரம்; நிலவரிக் குறைவு.

**தரங்கிணி** – ஆறு.

**தரங்கித்தல்** – அலையுண்டாதல்; மனம் அலை தல்.

**தரங்கு** – வழி; மண்வெட்டிப் பிடியின் அடியில் பொருத்தப்பட்டுள்ள இரும்பு வளையம்; ஈட்டிமுனை; அலை.

**தரணம்** – தாண்டல்; பாலம்; தரிக்கை; அரிசி; இமயமலை; கதிரவன்; பாவம்; பூமி.

**தரணி** – பூமி; மலை; நியாயவாதி; சூரியன்; மருத்துவன்; படகு.

**தரணிதரன்** – அரசன்; திருமால்.

**தரணிபன்** – அரசன்; சூரியன்.

**தரணிவாரிக்கல்** – கானகக்கல்.

**தரணீதரம்** – ஆமை.

**தரத்தர** – மேன்மேலே கொடுக்க.

**தரதூது** – முயற்சி; வேளாண்மை.

**தரந்தம்** – தவளை; கடல்; விடாமழை.

**தரப்பு** – பக்கம்; உத்தியோக நிலை; அயன்பூமி.

**தரபடி** – நடுத்தரம்; உட்சட்டை; ஊர் நிலங் களின் தரவாரி முறை; காண்க: **தரவழி.**

**தரம்** – தகுதி; மேன்மை; தலை; தெப்பம்; வலிமை; வீதம்; வகுப்பு; மட்டம்; தக்க சமயம்; நிலப்பிரிவு; தீர்வை; மலை; பருத்திப் பொதி; கூட்டம்; சங்கு; தடவை; அச்சம்; அரக்கு; வரிசை; பூமி.

**தரவழி** – வகை; நடுத்தரம்.

**தரவிணைக்கொச்சகம்**– இரண்டு தரவுகொண்ட கொச்சகக் கலிப்பாவகை.

**தரவு** – தருகை; கலிப்பாவின் முதலுறுப்பு; கட்டளை; தரகர்பெறுங் கூலி; விலை இலாபம்; காண்க: **தரகன்**; தரகரிடமிருந்து கொள்ளும் வரி; வரி; வரிதண்டுகை; பிடர்.

**தரவுக்காரன்** – தண்டக் கட்டளையை நிறை வேற்றுவோன்.

**தரவுகொச்சகம்** – கொச்சகக் கலிப்பாவகை.

**தரவை** – கரம்புநிலம்; களை மூடிய உவர்நிலம்.

**தரள நீராஞ்சனம்** – முத்தாரத்தி.

**தரளம்** – நடுக்கம்; முத்து; உருட்சி.

**தரளை** – கஞ்சி; கள்.

**தரன்** – தரித்தவன்; எட்டு வசுக்களுள் ஒருவன்.

**தரா** – ஒருவகைக் கலப்பு உலோகம்; பூமி; சங்கு.

**தராங்கம்** – மலை.

**தராசம்** – வயிரக் குணங்களுள் ஒன்று; மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்று.

**தராசு** – நிறைகோல்; ஓரளவு; துலாராசி; பரணி நாள்; வெள்ளெருக்கு.

**தராசுக்குண்டு** – நிறைகல்.

**தராசுக்கொடி** – காண்க: **பெருமருந்து**; முல்லை.

**தராசுக்கோல்** – துலாக்கோல்.

**தராசுத்தட்டு** – துலாத்தட்டு.

**தராசுநா** – காண்க: **தராசுமுள்.**

**தராசுப்படி** – நிறைகல்; காண்க: **தராசுக்குண்டு.**

**தராசுமுள்** – தராசில் இரண்டு தட்டும் சமமாய் உள்ளதா என்பதைக் காட்டும் முள்.

**தராதரம்** – ஏற்றத்தாழ்வு; உயர்வுதாழ்வு; உயர் நிலை; மலை.

**தராதலம்** – பூமி; கீழேழு உலகத்துள் ஒன்று.

**தராதிபன்,**<br>**தராபதி** } – அரசன்.

**தராய்** – மேட்டுநிலம்; கீரைவகை; பிரமிப்பூண்டு.

**தரி** – இருப்பு; நன்செய் நிலம்.

**தரிகொடுத்தல்** – இடங்கொடுத்தல்.

**தரிகொள்(ளு)தல்** – இருப்புக்கொள்ளுதல்.

**தரிசனபேதி** – காண்க: **தரிசனவேதி.**

**தரிசனம்** – காட்சி; பார்வை; கண்; தோற்றம்; தரிசிக்கை; சொப்பனம் முதலிய தோற்றம்; கண்ணாடி; மதக்கொள்கை; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.

**தரிசனவிசுத்தி** – வீட்டுநெறியை ஐயமின்றித் தெளிகை.

**தரிசனவேதி** – தாழ்ந்த உலோகங்களை உயர்ந்த உலோகங்களாக மாற்றவல்ல பச்சிலைவகை.

**தரிசனாவரணியம்** – எண்வகைக் குற்றத்துள் உண்மைக் கொள்கையைக் காணவொட்டா மல் தடுக்கும் கருமம்.

**தரிசனீயம்** – காட்சிக்கினியது.

**தரிசனை** – காட்சி; அறிகை; கண்ணாடி.

**தரிசித்தல்** – பெரியோர்; கடவுள்; புண்ணியத் தலங்களைக் காணுதல்; வழிபடல்.

**தரிசியம்** – காணத்தக்கது.

**தரிசு** – பயிர் செய்யாத நிலம்; உள்ளிடு பரல்.

**தரிஞ்சகம்** – அன்றிற்பறவை.

**தரித்தல்** – நிலைபெற்று நிற்றல்; இருப்புக் கொள்ளுதல்; ஊன்றி நிற்றல்; அணிதல்; தாங்குதல்; பொறுத்தல்; அடக்கிக்கொள்ளுதல்; மறவாது உள்ளத்தில் வைத்தல்; தாம்பூலம் தின்னுதல்.

**தரித்திரப்படுதல்** – வறுமையடைதல்; உலோப குணத்தையடைதல்.

**தரித்திரம்** – வறுமை.

**தரித்திரம்பிடித்தல்** – வறுமையடைதல்; உலோபியாயிருத்தல்.

**தரித்திரன்** – வறியவன்.

**தரித்திரி** – வறியவள்; பூமி.

**தரிப்பு** – தங்குகை; நினைவு; பொறுத்திருக்கை; உறுதி; இருப்பிடம்; கையிருப்பு; நிறுத்தும் இடம்; காண்க: **தருப்பு.**

**தரிப்புத்தட்டான்** – செல்வன்.

**தரிபடுதல், தரிபெறுதல்** – நிலைபெறுதல்.

**தரியல(லா)ர்** – பகைவர்.

**தரியாபத்து** – விசாரணை; கண்டுபிடிக்கை; வழக்கு.

**தரியார்** – பகைவர்.

**தரு** – மரம்; கற்பகமரம்; இசைப்பாட்டுவகை; ஒருவகைச் சந்தம்; காண்க: **தேவதாரு.**

**தருக்கம்** – நியாயவாதம்; மேம்பாடு; வாக்கு வாதம்; நியாயவாத நூல்.

**தருக்கி** – அகங்காரமுள்ளவர்; நியாயவாத நூல் வல்லோன்.

**தருக்கித்தல்** – வாக்குவாதம் பண்ணல்.

**தருக்கு** – செருக்கு; வலிமை; களிப்பு; தருக்கம்.

**தருக்குதல்** – அகங்கரித்தல்; களித்தல்; ஊக்க மிகுதல்; பெருக்குதல்; இடித்தல்; வருத்துதல்; உடைத்தல்; மேற்கொள்ளுதல்.

**தருக்கோட்டம்** – காவிரிப்பூம்பட்டினத்தில் கற்பகத்தரு நின்று விளங்கிய கோயில்.

**தருசாரம்** – மரத்தின் சாரமாயுள்ள கருப்பூரம்.

**தருசு** – நெருங்கிய இழை.

**தருணம்** – இளமை; தக்க சமயம்; நல்ல எண்ணம்; காண்க: **பெருஞ்சீரகம்; ஆமணக்கு.**

**தருணன்** – இளைஞன்.

**தருணி** – காண்க: **தருணை; கற்றாழை.**

**தருணை** – இளம்பெண், பதினாறு முதல் முப்பது அகவைவரை யுள்ள பெண்.

**தருதல்** – கொடை.

**தருநன்** – கொடுப்பவன்.

**தருநிலைக்கோட்டம்** – காண்க: **தருக்கோட்டம்.**

**தருநிறப்பஞ்சரம்** – காந்தம்.

**தருப்பகம்** – தாழ்வு.

**தருப்பகன்** – மன்மதன்.

**தருப்படன்** – ஊர் காவற்காரன்.

**தருப்பணம்** – தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பிதிரருக்கும் செய்யும் நீர்க்கடன்; உணவு; அவல்; கண்ணாடி.

**தருப்பம்** – அகங்காரம்; புனுகுசட்டம்; தருப்பைப்புல்.

**தருப்பாக்கிரம்** – தருப்பை நுனி.

**தருப்பி** – காண்க: **தருவி.**

**தருப்பித்தல்** – வழிபாடுகளால் கடவுளுக்குத் தன்னை ஒப்படைத்தல்.

**தருப்பு** – குறைந்த விலையுள்ள ஒரு வெள்ளைக் கல்வகை.

**தருப்பை** – குசைப்புல்.

**தருமக்கட்டை** – பிறர் தருமத்தால் வாழும் உடலான அநாதப்பிள்ளை; ஆவுரிஞ்சு தறி.

**தருமக்கல்** – ஒருவன் செய்த அறங்கள் வரையப் பட்ட கல்வெட்டு.

**தருமக்கிழவர்** – தருமத்தைக் காப்பவர்; அறச் செயல் புரிதற்குரிய வணிகர்.

**தருமகர்த்தா** – கோயில் அதிகாரி; நீதி உரைக்கும் அதிகாரி.

**தருமகாரியம்** – அறச்செயல்.

**தருமச்செல்வி** – காண்க: **தருமதேவதை;** பார்வதி.

**தருமச்செலவு** – அறத்திற்காகச் செய்யும் செலவு.

**தருமசக்கரம்** – அறவாழி.

**தருமசங்கடம்** – மாறுபட்ட இரு கடமைகளுள் எதைச் செய்வது என்று அறியாது துன்புறும் நிலை.

**தருமசத்திரம்** – அறக்கூழ்ச்சாலை, அன்ன சத்திரம்.

**தருமசபை** – நீதிமன்றம்.

**தருமசாச(த)னம்** – அறச்செயலைக் குறிக்கும் செப்புப் பட்டயம்.

**தருமசாலி** – அறஞ்செய்வோன்.

**தருமசாலை** – தருமசத்திரம்; முப்பத்திரண்டு அறங்களையும் புரிதற்குரிய இடம்.

**தருமசிந்தை** – அறம்புரியுங் கருத்து.

**தருமசீலன்** – அறஞ்செய்பவன்.

**தருமசீலி** – அறம்புரிபவள்.

**தருமணல்** – புதிதாகக் கொணர்ந்து பரப்பும் மணல்.

**தருமத்தியானம்** – ஆன்மா ஈடேறுவதைப்பற்றிய நினைவு.

**தருமதலைவன்** – தருமத்திற்குரிய தலைவனான புத்தன்.

**தருமதாயம்** – அறத்திற்காக விடும் இறையிலி நிலம்.

**தருமதானம்** – சமய தருமப்படி செய்யும் தானம்.

**தருமதி** – நிலுவை.

**தருமதேவதை** – அறக்கடவுள்; இயக்கிதேவி; யமன்.

**தருமநாள்** – பரணிநாள்.

**தருமநியாயம், தருமநீதி** – அறநூல்களில் கூறும் நீதி.

**தருமப்பள்ளி** – அறப்புறமான கல்விச்சாலை.

**தருமப்பிணம்** – ஊராராற் சுடப்படும் அநாதப் பிணம்.

**தருமப்பெட்டி** – தருமக் காணிக்கையிடும் பெட்டி.

**தருமபத்தினி** – கணவனோடு உடனிருந்து வைதிகக் கருமங்களை நடத்தும் மனைவி.

**தருமபீடிகை** – புத்தர் பாதங்கள் அமைந்த பீடம்.

**தருமபுத்திரன்** – பாண்டவருள் மூத்தோன்; தரும பத்தினியிடம் பிறந்த மகன்.

**தருமபுரம்** – யமலோகம்; சைவமடமுள்ள ஒரு சோணாட்டுத்தலம்.

**தருமம்** – நற்செயல்; விதி; நீதி; தானம் முதலிய அறம்; நல்லொழுக்கம்; கடமை; இயற்கை; பதினெண்வகைப்பட்ட அறநூல்.

**தருமமன்று** – தருமசபை.

**தருமமுதல்வன்** – அருகக்கடவுள்.

**தருமமூர்த்தி** – தருமமே உருவானவன்.

**தருமராசன்** – பாண்டவருள் மூத்தவன்; புத்தன்; அருகன்; யமன்; பாலைமரம்.

**தருமரேகை** – அறஞ்செய் குணத்தைக் குறிக்கும் கைரேகை.

**தருமலோபம்** – அறக்கடமை தவறுகை.

**தருமவட்டி** – நியாயவட்டி.

**தருமவதி** – அறச்செயலுள்ள பெண்.

**தருமவந்தன்** – காண்க: தருமவான்.

**தருமவாகனன்** – அறமே வடிவான காளையை ஊர்தியாகக்கொண்ட சிவன்.

**தருமவாசனம்** – காண்க: தருமசபை.

**தருமவாட்டி** – அறச்செயலுள்ள பெண்.

**தருமவாடி** – பிச்சை வழங்குமிடம்.

**தருமவாளன், தருமவான்** – அறச்சிந்தையுள்ளோன்.

**தருமவினைஞர்** – அறப்புறங் காவலர்.

**தருமவைத்தியசாலை** – நோயாளிகளுக்குப் பொருள் வாங்காது மருத்துவம் செய்யுமிடம்.

**தருமன்** – அறக்கடவுள்; யமன்; தருமபுத்திரன்; புத்தன்; அருகன்; பாண்டவருள் மூத்தோன்; திருக்குறள் உரைகாரருள் ஒருவர்.

**தருமாசனத்தார், தருமாசனத்துக் கருத்தாக்கள்** – நீதிபதிகள்.

**தருமாசனம்** – காண்க: தருமசபை; பார்ப்பனருக்கு விட்ட இறையிலி நிலம்.

**தருமாத்திகாயம்** – சமணரது பஞ்சாஸ்திகாயத்துள் மீனுக்கு நீர்போலச் சீவனது செலவுக்கு உதவும் பொருள்.

**தருமாத்துமா** – காண்க: தருமவான்.

**தருமாதருமம்** – நியாய அநியாயம்.

**தருமி** – காண்க: தருமவான்; ஒரு வேதியத் தொண்டன்; தருமத்தையுடைய பொருள்.

**தருமிருகம்** – குரங்கு.

**தருராசன்** – மரங்களின் அரசனாகிய பனை.

**தருவாரி** – கல்லுப்பு.

**தருவி** – துடுப்பு; ஓமத்திற்கொள்ளும் இலைக் கரண்டி; பேர் மாத்திரத்துக்கு உள்ளது.

**தருவித்தல்** – வருவித்தல்.

**தருவை** – பெரிய ஏரி.

**தருடம்** – தாமரைப்பூ.

**தரை** – பூமி; நிலம்; ஆணித்தலை; நரம்பு; சூற்பை.

**தரைக்காற்று** – பூமியில் எழுந்து வீசுங்காற்று.

**தரைகாணுதல்** – அளவிடுதல்; கீழ்விழுதல்.

**தரைதட்டுதல்** – கப்பல் தரையில் மோதுதல்.

**தரைப்படுத்துதல்** – தோற்கச்செய்தல்.

**தரைமகன்** – பூமியின் மகனான செவ்வாய்.

**தரைமட்டம்** – நிலமட்டம்.

**தரையர்** – பூமியிலுள்ளோர்.

**தரையிடுதல்** – அடித்த ஆணியின் இருபுறத்தையும் மடக்குதல்.

**தரையோடு** – தரையிற் பாவுதற்குரிய ஓடு.

**தல்லம்** – குழி; நீரிருக்கும் பள்ளம்.

**தல்லி** – தாய்.

**தல்லிகை** – திறப்பு.

**தல்லு** – புணர்ச்சி.

**தல்லுதல்** – இடித்து நசுக்குதல்.

**தல்லுமெல்லு** – இழுபறி.

**தல்லை** – தெப்பம்; இளம்பெண்.

**தலக்கம்** – இழிசெயல்.

**தலக்கு** – நாணம்.

**தலகம்** – தடாகம்.

**தலசம்** – பூமியில் தோன்றிய முத்து.

**தலசயனம்** – மாமல்லபுரம் முதலியவற்றிற் போலத் திருமால் நிலத்திற் பள்ளிகொண்ட திருக்கோலமுள்ள இடம்.

**தலசுத்தி** – உண்கலம் இடுவதற்குமுன் அது வைக்குமிடத்தை நீரிட்டுத் தூய்மை செய்கை; பிறப்பு இறப்பு நிகழ்ந்த வீட்டை மந்திர நீரால் தூய்மைசெய்தல்.

**தலத்தாது** – காண்க: நிலப்பனை.

**தலத்தார்** – கோயில் அதிகாரிகள்.

**தலபுட்பம்** – காண்க: தாழை.

**தலம்** – இடம்; பூமி; உலகம்; தெய்வத்தலம்; ஆழம்; காடு; கீழ்; வீடு; செய்; தலை; நகரம்; இலை; உடலுறுப்பு; இதழ்.

**தலமுகம்** – நிருத்தக் கைவகை.

**தலவகாரம்** – சாமவேத சாகைகளுள் ஒன்று.
**தலவாசம்** – தெய்வத்தலத்தில் வாழ்தல்.
**தலவாரி** – வயல்வாரி.
**தலன்** – கீழானவன்.
**தலாடகம்** – அகழ்; காட்டெள்; சுழல்காற்று; யானைச்செவி.
**தலாடகன்** – யானைப்பாகன்.
**தலாடம்** – அணில்.
**தலாதலம்** – கீழேழுலகத்துள் ஒன்று.
**தலாதிபதி(ன்)** – மன்னன், அதிகாரி.
**தலாமலம்** – மருக்கொழுந்து.
**தலை** – சிரம்; முதல்; சிறந்தது; வானம்; இடம்; உயர்ந்தோன்; தலைவன்; உச்சி; நுனி; முடிவு; ஒப்பு; ஆள்; தலைமயிர்; ஏழாம் வேற்றுமை உருபு; ஓர் இடைச்சொல்; மேலே; தபால் கடிதத்தில் ஒட்டும் முத்திரைத்தலை; தலையோடு.
**தலைக்கட்டு** – முடிவு; குடும்பம்; தலைப்பாகை; கருமாதியின் இறுதியில் தலைப்பாகை கட்டும் நன்மைச் சடங்கு; வீட்டின் முதற்கட்டு.
**தலைக்கடை** – முதல்வாசல்.
**தலைக்கணை** – காண்க: **தலையணை.**
**தலைக்கருவி** – தலைக்கவசம்.
**தலைக்கரை** – வயலை அடுத்துள்ள நிலம்.
**தலைக்கழிதல்** – பிரிதல்.
**தலைக்கனம்** – தலைநோவு; செருக்கு.
**தலைக்காஞ்சி** – பகைவரையழித்துப் பட்ட வீரனது தலையைப் புகழ்ந்து கூறும் புறத்துறை.
**தலைக்காவல்** – முதன்மைக் காவல்.
**தலைக்கிறுகிறுப்பு** – பித்த மயக்கம்; அகம்பாவம்.
**தலைக்கீடு** – போலிக் காரணம்; காரணம்; தலைப்பாகை.
**தலைக்குட்டை** – தலைப்பாகை.
**தலைக்குடி** – முதற்குடி; பழங்குடி.
**தலைக்குத்தலைநாயகம்** – ஆளுக்காள் தலைமை.
**தலைக்குத்து** – தலைவலி.
**தலைக்குமேலே** – அளவுக்கு மிஞ்சி.
**தலைக்குலை** – முதற்குலை; குலையின் நுனிப் பாகம்.
**தலைக்குறை** – சொல்லின் முதற் குறை; முண்டம்.
**தலைக்கூட்டு** – வாணிகத்தின் தலைமைக் கூட்டாளி.
**தலைக்கூட்டுதல்** – கூட்டுவித்தல்; நிறை வேற்றுதல்; வைக்கோற்போரைச் செப்பமாக அமைத்தல்.
**தலைக்கூடுதல்** – ஒன்றுசேர்தல்; நிறைவேறுதல்.
**தலைக்கை** – தலைமையானவர்.
**தலைக்கைதருதல்** – கையால் தழுவி அன்புடைமை காட்டுதல்.
**தலைக்கொம்பு** – பல்லக்குத் தண்டின் வளைந்த முன்பாகம்; பல்லக்குச் சுமப்போரின் முதற்றானம்; சிறந்தவன்(ள்).
**தலைக்கொள்ளுதல்** – தலைக்கேறுதல்; மிகுதல்; இறத்தல்; வெல்லுதல்; மேற்கொள்ளுதல்; கிட்டுதல்; கைப்பற்றுதல்; தொடங்குதல்; கெடுத்தல்.
**தலைக்கோதை** – நெற்றிக் கட்டுமாலை.
**தலைக்கோல்** – அரசனிடமிருந்து ஆடற்கணிகையர் பெறும் பட்டம்.
**தலைக்கோலம்** – மகளிர் தலையிலணியும் அணி வகை.
**தலைக்கோலாசான்** – நட்டுவன்.
**தலைக்கோலி** – ஆடிமுதிர்ந்த கணிகை.
**தலைக்கோற்றானம்** – நாடக அரங்கு.
**தலைகட்டுதல்** – மயிர் முடித்தல்; கணக்குப் புத்தகம் முதலியவற்றில் தலைப்பு எழுதுதல்; விளிம்பு கட்டுதல்.
**தலைகவிழ்தல்** – நாணம் முதலியவற்றால் தலை சாய்தல்; மேல்கீழாதல்; அகங்கரித்தல்.
**தலைகழித்தல்** – கடமை முதலியவற்றைச் செய்துதீர்த்தல்; தலைமுடி கழித்தல்.
**தலைகாட்டுதல்** – சிறிது நேரம் வந்து தங்கியிருத்தல்; பலருமறிய வெளிவருதல்; நன்னிலைமைக்கு வரத் தொடங்குதல்.
**தலைகாண்(ணு)தல்,**
**தலைகாத்தல்** } – பாதுகாத்தல்.
**தலைகிழக்காதல்** – அழிவடைதல்.
**தலைகீழாய்** – நேர்நிலை தவறி; முற்றவும் நன்றாய்.
**தலைகீழாய்நிற்றல்** – மிகச்செருக்குக்கொள்ளுதல்; பெருமுயற்சியெடுத்தல்.
**தலைகுலைதல்** – நிலைகெடுதல்.
**தலைகுனிதல்** – தலையால் வணங்குதல்; தலை கவிழ்தல்.
**தலைகொடுத்தல்** – செயலிலே முன்னிற்றல்; செயலை ஆளுதல்; பிறர் செயலில் வேண்டாது இடைப்புகுதல்; ஆபத்தில் உதவிபுரிதல்.
**தலைகொழுத்தல்** – அகங்கரித்தல்.
**தலைச்சன்** – முதற்பிள்ளை.
**தலைச்சாத்து** – தலைப்பாகை.
**தலைச்சாவகன்** – முதல் மாணாக்கன்.
**தலைச்சாவிவெட்டுதல்** – பயிர் மதர்த்துப் போகாதபடி நுனியை வெட்டுதல்.
**தலைச்சிரங்கு** – தலையில்வரும் புண்.
**தலைச்சிறத்தல்** – மிகப் பெருகுதல்; மேன்மை யுறுதல்.
**தலைச்சீரா** – தலைக்கவசம்.

**தலைச்சுமடு, தலைச்சுமை** – கனம்; தலைப்பாரம்; பொறுப்பு.
**தலைச்சுருளி** – ஈசுரமூலிப்பூடு.
**தலைச்சுழற்சி, தலைச்சுற்றல்** – தலைக் கிறுகிறுப்பு; ஆட்டு நோய்வகை.
**தலைச்சுற்று** – காண்க: **தலைச்சுற்றல்**; மரத்தின் அடிச்சுற்று.
**தலைச்சூல்** – முதன்முதலிற் கொள்ளும் கருப்பம்.
**தலைச்சோடு** – காண்க: **தலைச்சீரா.**
**தலைச்சோழகம்** – தென்மேல்காற்று வீசத் தொடங்குதல்.
**தலைசாய்த்தல்** – நாணுதல்; இறத்தல்; வணங்குதல்; கீழே படுத்தல்; கேட்டற்கு விரும்புதல்.
**தலைசாய்தல்** – இறத்தல்; நாணுதல்.
**தலைசிறத்தல்** – காண்க: **தலைச்சிறத்தல்.**
**தலைசீய்த்தல்** – முற்றுந்துடைத்தல்; துன்பமுறுதல்.
**தலைசீவுதல்** – தலைமயிர் வாருதல்; கழுத்தையறுத்தல்; ஒன்றன் மேற்பகுதியை நீக்குதல்.
**தலைசுற்றியாடுதல்** – இறுமாப்புக்கொள்ளுதல்.
**தலைசெய்தல்** – தலைமை தாங்குதல்; தலைவைத்துப் படுத்தல்; தலையெடுத்தல்.
**தலைத்தரம்** – முதல்தரம்.
**தலைத்தருதல்** – தலைமையான அன்பினைக் கையால் தழுவிக் காட்டுதல்.
**தலைத்தலை** – ஒவ்வொருவரும்; இடந்தோறும்; மேலும்மேலும்.
**தலைத்தாழ்வு** – தலை கவிழ்க்கச் செய்யும் மானக்கேடு.
**தலைத்தாள்** – பெரியவன்(ள்); முன்னிலையில்.
**தலைத்திமிர்** – தலைக்கனம்; கொழுப்பு.
**தலைத்திராணம்** – காண்க: **தலைச்சீரா.**
**தலைத்திவசம்** – இறந்தவர்பொருட்டு முதலாமாண்டு முடிவில் நடத்துஞ் சிராத்தம்.
**தலைத்தீபாவளி** – கலியாணத்தின்பின் மணமகள் வீட்டில் முதன்முதற் கொண்டாடுந் தீபாவளிப் பண்டிகை.
**தலைத்தோற்றம்** – வீரன் ஒருவன் பகைவரின் ஆநிரையைக் கைப்பற்றி வருதல் அறிந்து அவன் உறவினர் மகிழ்தலைக் கூறும் புறத்துறை.
**தலைதகர்தல்** – முனைமுரிதல்.
**தலைதட்டுதல்** – அளவுப்படியின் தலைமீதாகவுள்ள தானியத்தை வழித்தல்; அடக்குதல்.
**தலைதடவுதல்** – வஞ்சித்துக் கெடுத்தல்.
**தலைதடுமாற்றம்** – பெருங்குழப்பம்.
**தலைதடுமாறு** – மயங்குகை.
**தலைதடுமாறுதல்** – கலங்குதல்; ஒழுங்கு தவறுதல்; சீர்கேடு அடைதல்.
**தலைதருதல்** – முதன்மை அளித்தல்; காண்க: **தலைகொடுத்தல்.**
**தலைதல்** – மேன்மையாதல்; கூடுதல்; மழைபெய்தல்; மிகக் கொடுத்தல்; பரத்தல்.
**தலைதாழ்தல்** – வணங்குதல்; நாணுதல்; நிலைகெடுதல்.
**தலைதுவட்டுதல்** – தலைமயிரின் ஈரந் துடைத்தல்.
**தலைதெறிக்க** – பொறிகலங்கும்படி.
**தலைதொட்டபிள்ளை** – தத்துப்பிள்ளை.
**தலைதொடுதல்** – தலையைத் தொட்டு ஆணையிடுதல்; ஞானஸ்நானத்தில் தலையில் தொட்டு அருள்புரிந்து ஞானத் தந்தையாதல்.
**தலைதோய்தல்** – நீரில் தலைமுழுகுதல்.
**தலைநகரம்** – முதன்மையான நகரம்.
**தலைநடுக்கம், தலைநடுக்குவாதம்** – தலையாட்டம்; தலைச்சுற்று; அச்சம்.
**தலைநடுங்குதல்** – மயக்கமுறுதல்; தலையாட்டமடைதல்; அச்சமுறுதல்.
**தலைநறுக்கு** – ஓலையின் முன்பாகம்.
**தலைநாள்** – அசுவதி நட்சத்திரம்; முதல்நாள்; முந்திய நாள்; முற்காலம்; முற்பிறவி.
**தலைநிம்பம்** – சிவனார்வேம்பு.
**தலைநிமிர்ச்சி** – நன்னிமித்தமாக ஆடுமாடு முதலியன தலையை உயர்த்துகை; பருவமடைகை; விருத்தியடைகை; செருக்கு.
**தலைநிமிர்த்துதல்** – தலையை உயர்த்துதல்; நிலையைப் பெருக்குதல்; பருவம் வரும்வரை வளர்த்தல்; நிலைபெறச்செய்தல்.
**தலைநிமிர்தல்** – தலையை உயர்த்துதல்; நிலைமேம்படுதல்.
**தலைநிலம்** – முதலிடம்.
**தலைநீங்குதல்** – விட்டொழிதல்.
**தலைநீட்டுதல்** – காண்க: **தலைகாட்டுதல்.**
**தலைநீர்ப்பாடு** – கிளைக் கால்வாய்கள் பிரியும் முதல் மடை.
**தலைநீர்ப்பெருந்தளி** – காண்க: **தண்ணீர்ப்பந்தர்(ல்).**
**தலைநோய்(வு)** – தலைவலி; தலைநோய்வகை.
**தலைப்படுத்துதல்** – கூட்டுதல்.
**தலைப்படுதல்** – ஒன்றுகூடுதல்; எதிர்ப்படுதல்; மேற்கொள்ளுதல்; பெறுதல்; முன்னேறுதல்; தலைமையாதல்; புகுதல்; வழிப்படுதல்; தொடங்குதல்.
**தலைப்படுதானம்** – அறத்தால் ஈட்டிய பொருளை முக்குற்றமற்ற நற்றவத்தோர்க்கு மனமுவந்து ஈதல்.
**தலைப்பணி** – இடப்பக்கம் மதிப்பிறை போலவும், வலப்பக்கம் சூரியன்போலவும் நடுக்கோடு வகிர்மேல் செல்வதுமான மகளிர் தலையணி வகை.
**தலைப்பணிலம்** – வலம்புரிச்சங்கு.

**தலைப்பந்தி** – பந்தியின் முதலிடம்.
**தலைப்பறை** – யானை முதலியவற்றின் முன்னே கொட்டும் பறை.
**தலைப்பா, தலைப்பாகை** – தலையிற் கட்டும் துணி.
**தலைப்பாட்டு** – கூத்தின் முதலில் தொடங்கும் பாட்டு.
**தலைப்பாடு** – கலந்திருக்கை; தற்செயல் நிகழ்ச்சி.
**தலைப்பாமாறி** – தலைப்பாவை மாற்றுவோன்; பெருமோசக்காரன்; பக்காத்திருடன்.
**தலைப்பாரம்** – தலைக்கனம்; தலைச்சுமை; தோணியின் முற்பாகத்தில் மிக்க சுமையை ஏற்றுகை.
**தலைப்பாளை** – தென்னை முதலியவற்றில் வரும் முதல் பாளை; மகளிர் தலையணிவகை.
**தலைப்பித்தம்** – தலைச்சுற்றல்.
**தலைப்பிரட்டை** – தவளைமீன்.
**தலைப்பிரிதல்** – நீங்குதல்.
**தலைப்பிள்ளை** – முதற்பிள்ளை.
**தலைப்பு** – நூல் முதலியவற்றின் தலைப்பெயர்; ஆதி; முன்றானை; சீலை விளிம்பு; தோன்றும் இடம்.
**தலைப்புணர்த்தல்** – பை முதலியவற்றின் வாயைக் கட்டுவதற்காகச் சுருக்குதல்.
**தலைப்புணை** – முக்கிய ஆதாரம்.
**தலைப்புரட்டு** – தொல்லை; பெரும்பொய்; குழப்பம்; செருக்கு.
**தலைப்புரள்(ளு)தல்** – நீர் சுருண்டுபாய்தல்; மேன்மேல் மிகுதல்.
**தலைப்புற்று** – தலைப்புண்வகை.
**தலைப்புறம்** – முன்புறம்.
**தலைப்பெய்தல்** – ஒன்றுகூடுதல்; கிட்டுதல்; பெய்துரைத்தல்; கூடுதல்.
**தலைப்பெயர்த்தல்** – மீளச்செய்தல்.
**தலைப்பெயல்** – முதல் மழை.
**தலைப்பெயனிலை** – மகப்பேறாகிய கடனை யிறுத்துத் தாய் இறந்த நிலையைக் கூறும் புறத்துறை; போர்க்களத்தினின்று புறங் காட்டிச் சென்ற மகனது செயற்காற்றாது தாய் இறந்துபட்ட நிலை கூறும் புறத்துறை.
**தலைப்பேறு** – முதற்பிள்ளை; முதற்பேறு;
**தலைப்போடுதல்** – மேற்கொள்ளுதல்.
**தலைபணிதல்** – வணங்குதல்.
**தலைபிணங்குதல்** – ஒன்றோடொன்று மாறுபடுதல்.
**தலைபோகுமண்டிலம்** – இசைப்பாவகையுள் ஒன்று.
**தலைபோதல்** – பெருங்கேடுறுகை.
**தலைமக்கள்** – மேன்மக்கள்; படைத்தலைவர்.
**தலைமகள்** – தலைவி; மூத்த பெண்; அகப் பொருள் தலைவி; மனைவி.
**தலைமகன்** – தலைவன்; மூத்த மகன்; அகப் பொருள் தலைவன்; கணவன்.
**தலைமடங்குதல்** – கீழ்ப்படிதல்; தலைகுனிதல்; காண்க: **தலைமடிதல்.**
**தலைமடிதல்** – இறத்தல்; கதிர் முதலியன சாய்தல்.
**தலைமடுத்தல்** – தலையணையாகக் கொள்ளுதல்.
**தலைமடை** – கிளைக்கால் பிரியும் முதல்மடை; நீர்ப்பாசனம் தொடங்கும் முதல்மடை.
**தலைமண்டை** – தலையோடு.
**தலைமண்டையிடுதல்** – மிதமிஞ்சுதல்.
**தலைமணத்தல்** – நெருங்கிக் கலத்தல்; ஒன்றோ டொன்று பின்னுதல்.
**தலைமயக்கம்** – தலைச்சுழற்சி.
**தலைமயங்குதல்** – பெருகுதல்; கைகலத்தல்; கலந்திருத்தல்; கெடுதல்; பிரிதல்.
**தலைமயிர்வாங்குதல்** – முடியிறக்குதல்; கைம் பெண்ணாயினாள் தலைமயிரை முதலில் எடுப்பித்தல்.
**தலைமறைதல்** – ஒளிந்துகொள்ளுதல்; மறைந்து போதல்.
**தலைமாடு** – தலைப்புறம்; பக்கம்; தூரவளவு.
**தலைமாணாக்கன்** – முதல் மாணாக்கன்.
**தலைமாராயம்** – பகைவனுடைய தலையைக் கொண்டுவந்தவன் மனமுவக்கும்படி மன்னன் செல்வமளித்தலைக் கூறும் ஒரு புறத்துறை.
**தலைமாலை** – தலைக்கு அணியும் கண்ணி; சிவபிரான் அணியும் தலையாலாகிய மாலை.
**தலைமாறு** – படி; மாற்று.
**தலைமிதழ்** – மூளை.
**தலைமுழுக்கு** – மெய்முழுதும் குளிக்கை; எண்ணெய்முழுக்கு; மகளிர் சூதகம்; நோய் நீங்கியபிறகு செய்யும் முதல்முழுக்கு.
**தலைமுழுகாமலிருத்தல்** – கருவுற்றிருத்தல்.
**தலைமுழுகுதல்** – உடல் முழுதுங் குளித்தல்; எண்ணெய் தேய்த்துக் குளித்தல்; மாதவிடாய் முடிவில் குளித்தல்; நிலைகெடுதல்; தொடர்பு அழித்தல்; கைவிடுதல்.
**தலைமுறை** – பரம்பரை; ஒருவர் இருந்து வாழும் காலம்.
**தலைமுறைதத்துவமாய்** – வழிவழியாய்.
**தலைமூர்ச்சனை** – வருத்தம்.
**தலைமேற்கொள்ளுதல்** – பயபத்தியாய் ஏற்றுக் கொள்ளுதல்; பொறுப்பை ஏற்றல்.
**தலைமை** – முதன்மை; மேன்மை; எசமானத் தன்மை; உரிமை.
**தலைமைப்பாடு** – பெருமை.

**தலைமைவகை** – ஒன்றன் சார்பானன்றித் தலைமைபற்றிக் கூறும் முறை.

**தலையடி** – காண்க: **தலையடிப்பு.**

**தலையடித்தல்** – தொந்தரவுபடுத்துதல்.

**தலையடித்துக்கொள்(ளு)தல்** – தொந்தரவு படுதல்.

**தலையடிப்பு** – தொந்தரவு; நெற்கதிரின் முதலடி.

**தலையடுத்தல்** – சேர்த்துக் கூறுதல்.

**தலையணி** – தலையில் அணியும் அணிவகை.

**தலையணை** – தலைவைத்துப் படுப்பதற்காகப் பஞ்சு முதலியன அடைத்துத் தைத்த பை; ஆற்றின் உற்பத்திக்கு அருகில் கட்டும் முதலணை.

**தலையணைமந்திரம்** – கணவனுடன் தனித்திருக்கும்போது மனைவி கமுக்கமாகச் சொல்லும் செய்திகள்; கோள்மொழி.

**தலையரங்கேறுதல்** – தான் கற்ற வித்தையை முதன்முறை அவையோர்க்குக் காட்டுதல்.

**தலையரட்டை** – வீண்பேச்சு; செருக்குடன் வீண் பேச்சுப் பேசுபவன்.

**தலையல்** – சொரிகை; தலைப்பெய்மழை; மழை பெய்துவிடுதல்; புதுநீர் வரவு.

**தலையலங்காரம்** – தலையை அலங்கரித்தல்; தேர் மொட்டு.

**தலையழித்தல்** – அடியோடு கெடுத்தல்; தலைமை தீர்த்தல்.

**தலையழிதல்** – அடியோடு கெடுதல்.

**தலையளி** – இனியவற்றை முகமலர்ந்து கூறுதல்; உயர் அன்பு; அருள்.

**தலையளித்தல்** – அருளோடு நோக்குதல்; வரிசை செய்தல்.

**தலையற்றாள்** – தலைவனை இழந்த கைம்பெண்.

**தலையறை** – உடற்குறை.

**தலையன்பு** – உயர் அன்பு.

**தலையாகுமோனை** – செய்யுளின் ஓரடியில் எல்லாச் சீரிலும் மோனையெழுத்து ஒன்றி வரத் தொடுப்பது.

**தலையாகெதுகை** – செய்யுள் அடிதோறும் முதற்சீர் முழுதும் ஒன்றிவரும் எதுகை.

**தலையாட்டம்** – தலைநடுக்கம்; பேரச்சம்; குதிரைத் தலையணிவகை.

**தலையாட்டி,**
**தலையாட்டிப் பொம்மை** } – இங்குமங்கும் தலையசைத்து ஆடும் பொம்மை; எதற்கும் இணங்கி நடப்பவன்.

**தலையாடி** – பனைமரத்தின் நுனிப்பாகம்; ஒரு செய்யுளின் பிற்பகுதி.

**தலையாப்பு** – வடிசோற்றின்மேற் பரந்துள்ள கஞ்சியாடை.

**தலையாயர்** – பெரியோர்.

**தலையாரி** – ஊர்க்காவற்காரன்.

**தலையானடத்தல்** – அகங்கரித்தல்; பெருமுயற்சி செய்தல்.

**தலையிடி** – தலைவலி.

**தலையிடுதல்** – காரணமின்றிப் பிறர் செயலில் புகுதல்; நுழைதல்; கூட்டுதல்.

**தலையில்லாச்சேவகன்** – நண்டு.

**தலையிலடித்தல்** – அநியாயஞ்செய்தல்; ஒருவனது தலையைத் தொட்டுச் சத்தியஞ் செய்தல்.

**தலையிலெழுத்து** – விதி.

**தலையிற்கட்டுதல்** – ஒருவனை ஒன்றற்குப் பொறுப்பாக்குதல்; ஏமாற்றிக் கொடுத்தல்.

**தலையிற்போடுதல்** – பொறுப்பாக்குதல்; பழி சுமத்தல்.

**தலையிறக்கம்** – தலை சாய்கையான துயரம்; அவமானம்.

**தலையீடு** – முதலீற்று; முதல்தரம்; தலைப்பிலிருப்பது; சுவரின் தலைப்பாகத்தில் கட்டப்படும் செங்கல் வரிசை.

**தலையீண்டுதல்** – ஒன்றுகூடுதல்.

**தலையீற்று** – முதலீனுகை; முதற் கன்று.

**தலையுடைத்துக்கொள்(ளு)தல்** – பெருமுயற்சி எடுத்தல்.

**தலையுதிர்நெல்** – கதிரின் முதலடிப்பில் எடுக்கப் படும் நெல்.

**தலையுவா** – அமாவாசை.

**தலையெடுத்தல்** – தலை நிமிர்தல்; வெளித்தெரிதல்; வளர்ச்சியடைதல்; உற்பத்தியாதல்; இழந்த நிலையைத் திரும்ப அடைதல்; நீக்குதல்.

**தலையெடுப்பு** – மேம்படுதல்; செருக்கு; தலை நிமிர்ச்சி; ஒரு துறையில் உயர்தல்; மேன்மை.

**தலையெழுத்து** – பிரமலிபியாகிய விதி; நூலின் முகப்பு; உயிரெழுத்து.

**தலையேழுவள்ளல்கள்** – சகரன், காரி, நளன், துந்துமாரி, நிருதி, செம்பியன், விராடன்.

**தலையேறுதண்டம்** – பொறுக்கமுடியாத தண்டனை; துன்பப்படுத்தி வாங்கும் வேலை; மிக்க துன்பம்.

**தலையோடு** – மண்டையோடு, கபாலம்.

**தலைவணங்குதல்** – தலைசாய்த்து வணங்குதல்; பயிரின் தலை வளைதல்.

**தலைவரிசை** – உயர்ந்த பரிசு.

**தலைவலி** – தலைநோவு; முகத்திலுள்ள நரம்பு நோவு; தொந்தரவு.

**தலைவழித்தல்** – தலைச்சவரம் பண்ணுதல்; தலைதட்டுதல்.

**தலைவழிதல்** – நிரம்பிவழிதல்.

**தலைவழுக்கை** – தலையை வழுக்கையாகச் செய்யும் நோய்வகை.

**தலைவன்** – முதல்வன்; அரசன்; குரு; மூத்தோன்; சிறந்தவன்; கடவுள்; அகப் பொருட் கிழவன்; கதைத்தலைவன்; கணவன்.

**தலைவாங்கி** – தூக்குப்போடுவோன்; தீயன்.

**தலைவாங்குதல்** – சிரச்சேதஞ் செய்தல்; காண்க: **தலைமயிர்வாங்குதல்.**

**தலைவாசகம்** – பாயிரம்.

**தலைவாசல்** – காண்க: **தலைவாயில்.**

**தலைவாய்** – முதன்மடை.

**தலைவாய்ச்சேரி** – முகப்பிலுள்ள ஊர்ப்பகுதி.

**தலைவாயில்** – முதல்வாசல்; கதவின் மேல்நிலை.

**தலைவாரி** – சீப்பு.

**தலைவாருதல்** – தலைமயிர் சீவுதல்.

**தலைவாழையிலை** – நுனியோடு கூடிய வாழை இலை.

**தலைவி** – தலைமைப் பெண்; இறைவி; அகப் பொருட் கிழத்தி; கதைத்தலைவி; மனைவி.

**தலைவிதி** – ஊழ்.

**தலைவிரிகோலம்** – அலங்கோலம்.

**தலைவிரிச்சான்** – தலைமயிர் முடியாதவன்; சாரணைப்பூடு; செருப்படைப்பூடு.

**தலைவிளை** – வயலின் முதல்விளைவு.

**தலைவெட்டி** – தலைமயிரைக் கத்தரித்துக் கொள்வோன்; காவாலி; மோசக்காரன்; ஆட்டுநோய்வகை.

**தலைவெட்டுதல்** – சிரத்சேதம் செய்தல்; காண்க: **தலைதட்டுதல்;** மோசஞ்செய்தல்; பத்திரக் காதுகுத்துதல்; தலைமயிர் கத்தரித்தல்.

**தலைவைத்தல்** – காண்க: **தலையிடுதல்;** நீர் முதலியன பாயத் தொடங்குதல்.

**தவ்வல்** – சிறு குழந்தை; மரம் விலங்கு முதலிய வற்றின் இளமை.

**தவ்வி** – அகப்பை.

**தவ்வு** – கெடுகை; பலகையிலிடும் துளை; பாய்ச்சல்.

**தவ்வுதல்** – தாவுதல்; குறைதல்; குவிதல்; கெடுதல்; தவறுதல்; மெல்ல மிதித்தல்; அகங் கரித்தல்.

**தவ்வெனல்** – சுருங்குதற்குறிப்பு; மழையின் ஒலிக்குறிப்பு.

**தவ்வை** – தாய்; தமக்கை; மூதேவி.

**தவ** – மிக.

**தவக்கம்** – தடை; இல்லாமை; தாமதம்; கவலை.

**தவக்கு** – நாணம்.

**தவக்கை** – காண்க: **தவளை.**

**தவக்கொடி** – தவப்பெண்.

**தவங்கம்** – துன்பம்.

**தவங்குதல்** – தடைப்படுதல்; பொருட்குறை யால் வருந்துதல்; வாடுதல்.

**தவச்சாலை** – தவம் செய்யும் இடம்.

**தவசம்** – தானியம்; தொகுத்த பண்டம்.

**தவசி** – தவஞ்செய்பவன்.

**தவசிப்பிள்ளை** – பூசைப் பணியாள்; சைவருக்குச் சமையற்காரன்.

**தவசு** – காண்க: **தவம்.**

**தவடை** – தாடை.

**தவண்டை** – பேருடுக்கை; ஒரு நீச்சுவகை; தவிப்பு; காண்க: **தவடை.**

**தவண்டையடித்தல்** – நீரில் விளையாடுதல்; வறுமைப்படுதல்.

**தவணை** – கெடு; சட்டம் பதிக்கும் காடி; கட்டுப் பானைத் தெப்பம்.

**தவணைச்சீட்டு** – காலங் குறித்தெழுதும் பத்திரம்.

**தவணைப்பணம்** – கெடுவின்படி செலுத்த வேண்டிய பணம்.

**தவணைபார்த்தல்** – சாகுபடிக் கணக்குப் பார்த் தல்.

**தவத்தர்** – முனிவர்.

**தவத்தல்** – நீங்குதல்.

**தவதாயம்** – இடுக்கண்.

**தவதாயித்தல்** – துன்பநிலைக்குள்ளாதல்.

**தவந்து** – தானியம்.

**தவநிலை** – தவச்செயல்.

**தவப்பள்ளி** – முனிவர் வாழிடம்.

**தவம்** – பற்று நீங்கிய வழிபாடு; புண்ணியம்; இல்லறம்; கற்பு; தோத்திரம்; தவத்தைப் பற்றிக் கூறும் கலம்பக உறுப்பு; வெப்பம்; காட்டுத்தீ.

**தவமுதல்வி, தவமுதுமகள்** } – தவத்தில் முதிர்ந்தவள்.

**தவமுதுமகன்** – தவத்தில் முதிர்ந்த முனிவன்.

**தவர்** – வில்; துளை; சிறு கப்பலில் சங்கிலி சுற்றும் கருவி.

**தவர்தல்** – துளைத்தல்.

**தவராசம்** – வெள்ளைச் சருக்கரை.

**தவல்** – குறைவு; கேடு; குற்றம்; இறப்பு; வறுமையால் வருந்துகை.

**தவல்(லு)தல்** – நீங்குதல்.

**தவலத்து** – ஆட்சி.

**தவலை** – அகன்ற வாயுடைய பாத்திரவகை.

**தவலோகம்** – மேலேழுலகினுள் ஒன்று.

**தவவிளக்கு** – முக்காலத்தை விளக்கும் தவமாகிய தீபம்.

**தவவீரர்** – தவம் இயற்றுவதில் வீரரான முனிவர்.

**தவவேடம்** – முனிவர்கோலம்.

**தவவேள்வி** – நோன்பு இருத்தல்.

**தவழ்சாதி** – ஊர்ந்து செல்லும் உயிரினம்.

**தவழ்தல்** – ஊர்தல்; தத்துதல்; பரத்தல்.
**தவழ்புனல்** – மெல்லச் செல்லும் ஆற்றுநீர்.
**தவழவாங்குதல்** – ஒருவனைக் குனியவைத்துத் துன்புறுத்தி அவன் சொத்து முழுவதையும் கவர்தல்; மிகுதியான வேலைவாங்குதல்.
**தவளசத்திரம்** – அரசர்க்குரிய வெண்கொற்றக் குடை.
**தவளத்தொடை** – தும்பைமாலை.
**தவளம்** – வெண்மை; வெண்மிளகு; சங்கபாடாணம்.
**தவளிதம்** – வெண்மை.
**தவளை** – ஒரு நீர்வாழ் சாதிவகை.
**தவளைக்கிண்கிணி** – தவளைபோல் ஒலிக்கும் கிண்கிணிகொண்ட ஒரு காலணிவகை.
**தவளைக்குஞ்சு, தவளைக்குட்டி** – தவளையின் இளமை.
**தவளைக்குரங்கு** – பணிப்பூட்டுவகை; கொக்கித் தாழ்ப்பாள்; இரட்டைக்கொக்கி.
**தவளைப்பாய்த்து** – சூத்திரநிலை நான்கனுள் தவளைப் பாய்ச்சல்போல இடைவிட்டுச் செல்லும் ஒரு நிலை.
**தவளோற்பலம்** – காண்க: **வெள்ளாம்பல்**
**தவற்றுதல்** – விலக்கல்.
**தவறு** – பிழை; செயல் கைகூடாமை; நெறி தவறுகை; அழுக்கு; பஞ்சம்; குறைவு.
**தவறுதல்** – வழுவுதல்; பிசகுதல்; சாதல்; தப்புதல்; குற்றம் செய்தல்; தாண்டுதல்; வாய்க்காமற் போதல்; காணாமற்போதல்; தோல்வியுறல்.
**தவறைவாரி** – கப்பலின் இருப்புக்கருவிவகை.
**தவன்** – தவசி; காண்க: **தவம்**; தலைவன்.
**தவனகம்** – மருக்கொழுந்து.
**தவனப்புளி** – மிளகாயும் உப்பும் உளுத்தம் பருப்பும் சேர்த்திடித்த புளி; தாகத்தை நீக்கவல்ல புளி.
**தவனம்** – வெப்பம்; தாகம்; ஆசை; வருத்தம்; மருக்கொழுந்து.
**தவனன்** – சூரியன்; அக்கினி.
**தவனியம்** – பொன்.
**தவாக்கினி** – வேள்வித்தீ; காட்டுத்தீ.
**தவாநிலை** – உறுதிநிலை.
**தவாவினை** – மலை; முத்தி.
**தவாளித்தல்** – கால்வாய் முதலியன தோண்டுதல்.
**தவாளிப்பு** – எழுதகக்குழி; பார்வைக்கு மதிப்பாயிருக்கை.
**தவிசணை** – கட்டில்.
**தவிசம்** – கடல்; வீடுபேறு.
**தவிசு** – தடுக்கு; பாய்; பீடம்; மெத்தை; யானை முதலியவற்றின்மேலிடும் மெத்தை; திராவகம்.
**தவிட்டம்மை** – சின்னம்மை.
**தவிட்டான்** – ஒரு மரவகை.
**தவிட்டுக்கிளி** – ஒரு தத்துக்கிளிவகை.
**தவிட்டுக்கொய்யா** – காண்க: **தவிட்டான்.**
**தவிட்டுண்ணி** – சிறிய உண்ணிவகை.
**தவிட்டுப்பழம்** – தவிட்டுக்கொய்யா.
**தவிடு** – அரிசியினின்றும் கழியும் துகள்; தானியத் தவிடு; பொடி.
**தவிடுபொடியாதல்** – பொடிப்பொடியாதல்; நிலைகுலைதல்.
**தவித்தல்** – இளைத்தல்; வேட்கையெடுத்தல்; இல்லாமைபற்றி வருந்துதல்.
**தவிப்பு** – வேட்கை; வருந்துகை.
**தவிர்ச்சி** – இடையீடு; தங்குகை.
**தவிர்த்தல்** – நீக்குதல்; நிறுத்திவிடுதல்; தடுத்தல்; அடக்குதல்.
**தவிர்த்துவினைசெயல்** – பகைவர் எய்யும் அம்பினைத் தடுத்து அவர்மேல் அம்பு எய்யுஞ் செயல்.
**தவிர்தல்** – விலகுதல்; தங்குதல்; தணிதல்; பிரிதல்; நீக்குதல்; ஒழிதல்; இல்லாமற் போதல்.
**தவிர** – நீங்க.
**தவில்** – மேளவகை.
**தவிவு** – இடையீடு.
**தவிழ்தல்** – காண்க: **தவிர்தல்.**
**தவுக்கார்** – சுண்ணச்சாந்து; எழுதக வளைவு; மதிற் செங்கல்லின் இடைவெளி.
**தவுசெலம்** – முருங்கைமரம்.
**தவுடு** – குதிரைப்பாய்ச்சல்; படையெடுப்பு; அரிசி தீட்டியபின் வரும் துகள்; தாடை.
**தவுடை** – தாடை.
**தவுதல்** – குன்றுதல்.
**தவுரிதகம்** – குதிரைநடையுள் ஒன்று.
**தழங்கல்** – ஆரவாரம்; யாழ் நரம்போசை.
**தழங்குதல்** – முழங்குதல்; ஒலித்தல்.
**தழங்குரல்** – ஒலிக்குமோசை.
**தழம்** – தயிலம்.
**தழல்** – தீ, நெருப்பு; கார்த்திகைநாள்; நஞ்சு; காண்க: **கொடிவேலி; கிளியோட்டுங்கோல்;** கவண்.
**தழல்(லு)தல்** – அழலுதல்; ஒளிவிடுதல்.
**தழலாடி** – தீயோடு ஆடும் சிவன்.
**தழலாடிவீதி** – நெற்றி.
**தழலி** – நெருப்பு.
**தழற்சி** – அழலுதல்.
**தழற்சொல்** – நெருப்பைப்போன்ற சுடுசொல்; தண்டனையைத் தோற்றுவிக்கும் சொல்.
**தழற்பூமி** – உவர்மண்.

**தழனாள்** – அக்கினியை அதிதேவதையாக உடைய கார்த்திகைநாள்.

**தழாத்தொடர்** – ஒரு சொல் அடுத்துவருஞ் சொல்லை நேரே தழுவாது அமையுந்தொடர்.

**தழால்** – தழுவுதல்; சேர்த்துக்கொள்ளுதல்.

**தழிச்சுதல்** – தழுவுதல்; புகுதல்.

**தழிஞ்சி** – தாக்குண்ட படைவீரரை முகமன் கூறியும் பொருள் கொடுத்தும் அரசன் தழுவிக் கோடலைக் கூறும் புறத்துறை; தோற்றவர் மேல் ஆயுதஞ் செலுத்தாத மறப்பண்பினைக் கூறும் புறத்துறை.

**தழீஇந்தழீஇமெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**தழு** – தழுவுகை.

**தழுக்குதல்** – செழிப்படைதல்.

**தழுத்தல்** – காண்க: **தழுதழுத்தல்.**

**தழுதணை** – கற்பாசி; படர்தாமரை.

**தழுதழுத்தல்** – நாக்குழறுதல்; நாத்தடுமாறிப் பேசல்.

**தழுதாழை** – வாதமடக்கிமரம்.

**தழும்பிடுதல்** – புண்ஆறி வடுவாதல்.

**தழும்பு** – வடு; குறி; குற்றம்; சிதைவு.

**தழும்புதல்** – தழும்புண்டாதல்; பழகியிருத்தல்.

**தழுவணி** – குரவைக்கூத்து.

**தழுவணை** – பக்கத்தில் அணைத்துக்கொள்ளும் பஞ்சணை; திண்டு; கடலட்டை.

**தழுவல்** – தழுவுதல்; கையில் எடுக்கக்கூடிய நெல்லரித் தொகுதி.

**தழுவாவட்டை** – காண்க: **கடலட்டை.**

**தழுவு** – அணைப்பு; இருகையிலும் அணைக்கும் அளவு.

**தழுவுதல்** – அணைத்தல்; மேற்கொள்ளுதல்; அன்பாய் நடத்துதல்; நட்பாக்கிக்கொள்ளு தல்; உள்ளடக்குதல்; பூசுதல்; பொருந்துதல்; சூழ்தல்; புணர்தல்.

**தழுவுதொடர்** – ஒரு சொல் மற்றொரு சொல்லை நேரே தழுவிநிற்கும் தொடர்.

**தழூஉ** – அணைப்பு; மகளிராடும் குரவைக்கூத்து.

**தழை** – இலை; தளிர்; மயிற்றோகை: பீலிக் குடை; தழையாலான மகளிர் உடை; ஒரு மாலைவகை; காண்க: **பச்சிலை**; தழைகை; சீட்டாட்டத்தில் எண்ணிக்கையில் சேர்க்கப் படாத சீட்டு.

**தழைக்கண்ணி** – இலைமாலை.

**தழைத்தல்** – செழித்தல்; பூரித்தல்; மிகுதல்; வளர்ச்சியடைதல்; சீட்டாட்டத்தில் எண்ணிக் கையில் சேராத சீட்டுகளை இறக்குதல்.

**தழைத்தானை** – இலையாற் செய்யப்பட்ட மேலாடை.

**தழைதல்** – தளிர்த்தல்; செழித்தல்; தாழ்தல்.

**தழைதாம்பு** – தழையும் சிறுகொம்பும்.

**தழைப்பு** – செழிப்பு; தளிர்த்தல்.

**தழையணி** – காண்க: **தழையுடை.**

**தழையிடுவார்** – பூவும் இலையும் கோயிலுக்குத் தந்து பணிசெய்வோர்.

**தழையுடை** – தழையாலான உடை.

**தழைவு** – தளிர்ப்பு; குழை; செழிப்பு; வளமை; மிகுதி.

**தழைவுகொடுத்தல்** – பலமுடைமையாதல்.

**தள்** – காண்க: **தள்ளு.**

**தள்ளம்பாறுதல், தள்ளமாறுதல்** – தள்ளாடுதல்; அலைதல்; அசைதல்; தத்தளித்தல்; தருக்கத்தில் தோல்வி அடைதல்; பெருங்கலக் கத்தில் இருத்தல்.

**தள்ளல்** – பொய்.

**தள்ளாட்டம்** – அசைவு; தடுமாற்றம்; சோர்வு.

**தள்ளாடுதல்** – தடுமாறுதல்; ஆடுதல்; தத்தளித் தல்; மனம் அலைதல்.

**தள்ளாதகாலம்** – கிழப்பருவம்.

**தள்ளாதவன்** – வலுவற்றவன்.

**தள்ளாமை** – தளர்ச்சி; இயலாமை; இல்லாமை.

**தள்ளாவாரம்** – சோம்பல்.

**தள்ளிச்சி** – உவர்மண் என்னும் பூநீறு.

**தள்ளிப்போடுதல், தள்ளிவிடுதல்** – நாள் ஒத்திவைத்தல்; விலக்கிவிடுதல்.

**தள்ளிவெட்டி** – மதிற்பொறிவகை.

**தள்ளிவைத்தல்** – இடம்விட்டு வைத்தல்; நாள் ஒத்திவைத்தல்; விலக்கிவிடுதல்; விலக்கி வைத்தல்.

**தள்ளு** – அகற்றுகை; கழிவு; நீக்குகை; கைவிடல்.

**தள்ளுண்டவன்** – விலக்கப்பட்டவன்.

**தள்ளுண்ணல்** – தள்ளப்படுதல்.

**தள்ளுதல்** – விலகுதல்; குன்றுதல்; மறதியால் சோர்தல்; தடுமாறுதல்; கழித்தல்; புறம்பாக்கு தல்; ஏற்றுக்கொள்ள மறுத்தல்; அமுக்குதல்; வெட்டுதல்; கொல்லுதல்; மறத்தல்; தூண்டு தல்; தவறுதல்; வலியுடைத்தாதல்; வெளி யேறுதல்; முன்செல்லுமாறு தாக்குதல்.

**தள்ளுபடி** – தள்ளப்பட்டது; கழிக்கப்பட்டது; நீக்கப்பட்டது.

**தள்ளுமட்டம்** – யானையின் இளங்கன்று.

**தள்ளுவண்டி** – கையால் தள்ளிச்செலுத்தும் சிறுவண்டி.

**தள்ளுறுதல்** – தள்ளப்படுதல்; வருந்துதல்.

**தள்ளை** – தாய்.

**தளகர்த்தம்** – படைத்தலைமை.

**தளகர்த்தன்** – படைத்தலைவன்.

**தளசிங்கம்** – பெருவீரன்.

**தளதளத்தல்** – பலமாதல்; ஒளிர்தல்; நெகிழ்தல்.

**தளதளப்பு** – பலம்; வீக்கம்; காந்தி.

**தளதளெனல்** – ஒளிவீசுதற் குறிப்பு; பலமாதற் குறிப்பு; இளகுதற்குறிப்பு; ஒலிக்குறிப்பு.

**தளப்படி** – மனவுலைவு.

**தளப்பம்** – மனவுலைவு; ஒரு காதணிவகை; காண்க: **தாளிப்பனை.**

**தளப்பற்றுக்காரன்** – ஓலைபிடித்தெழுதுவோன்.

**தளப்பு** – சோர்வு; கேடு.

**தளபதி** – படைத்தலைவன்.

**தளம்** – கனம்; வெண்சாந்து; செஞ்சாந்து; தள வரிசை; உப்பரிகை; தட்டு; மேடை; பூவிதழ்; படை; கூட்டம்; சாணைபிடியாத கெம்பு; சாடி; அடிப்படை; சுண்ணாம்பு.

**தளம்பு** – மதகு; சேறுகுத்தி.

**தளம்புதல்** – ததும்புதல்; சாய்ந்தாடுதல்; மனமலைதல்; பழக்கமுறுதல்; முட்டுப்படுதல்.

**தளமெடுத்தல்** – படையெடுத்தல்; போர் தொடங்குதல்.

**தளர், தளர்ச்சி** – சோர்வு; நெகிழ்ச்சி; சோம்பல்; வறுமை.

**தளர்த்துதல்** – வலுக்குறைத்தல்; நெகிழ்த்தல்.

**தளர்தல்** – நெகிழ்தல்; சோர்தல்; வலுக்குறைதல்; மனங்கலங்குதல்; இறத்தல்; உயிரொடுங்குதல்; நுடங்குதல்; சோம்புதல்; தவறுதல்.

**தளர்ந்துகொடுத்தல்** – இணங்குதல்.

**தளர்நடை** – குழந்தைகள் தொடக்கத்தில் தடுமாறி நடக்கும் நடை.

**தளர்வு** – சோர்வு; நெகிழ்கை; தடுமாறுகை; துன்பம்.

**தளரவிடுதல்** – நெகிழவிடுதல்.

**தளருடை** – நெகிழ்ந்த உடை.

**தளவட்டம்** – பூவிதழ்ச்சுற்று.

**தளவம்** – முல்லைக்கொடி; காண்க: **செம்முல்லை.**

**தளவரிசை** – கற்பரப்பு; எழுதகம்.

**தளவாடம்** – வேலை செய்வதற்கு வேண்டிய கருவிகள்; தட்டுமுட்டு.

**தளவாய்(ன்)** – படைத்தலைவன்.

**தளவு** – யானையின் வாய்; செம்முல்லை; முல்லை; ஊசிமல்லிகை.

**தளா** – செம்முல்லை; முல்லை; ஊசிமல்லிகை.

**தளி** – கோயில்; இடம்; நீர்த்துளி; தலைப் பெயல் மழை; மேகம்; குளிர்; விளக்குத் தண்டு; விளக்குத்தாழி.

**தளிகை** – உண்கலம்; சமையல்; இறைவனுக்குப் படைத்த பொருள்; கூழ்க்கட்டி.

**தளிச்சேரி** – தேவதாசிகள் வசிக்குந் தெரு.

**தளிச்சேரிப்பெண்டுகள்** – தேவதாசிகள்.

**தளித்தல்** – துளித்தல்; பூசுதல்; தெளித்தல்.

**தளிதல்** – தெளிதல்.

**தளிப்பெண்டுகள்** – காண்க: **தளிச்சேரிப் பெண்டுகள்.**

**தளிமம்** – அழகு; மெத்தை; படுக்கை; திண்ணை; வாள்; வீடுகட்டும் இடம்.

**தளியிலார்** – தேவரடியார்.

**தளிர்** – முளைக்கும் பருவத்து இலை; கொழுந்து.

**தளிர்தல்** – துளிர்த்தல்; தழைத்தல்; செழித்தல்; மகிழ்தல்.

**தளிர்ப்பு** – துளிர்க்கை; மனவெழுச்சி.

**தளிவடகம்** – இலைவடகம்.

**தளிவம்** – தகடு.

**தளுக்கு** – மினுக்கு; பகட்டு; மூக்கணி; தந்திரம்; அப்பிரகம்; அப்பிரகத் திலகப்பொட்டு.

**தளுக்குணி** – சுரணையற்றவன்; ஏமாற்றுபவன்.

**தளுக்குதல்** – பூசுதல்; துலக்குதல்; ஒளிர்தல்.

**தளுகன்** – பொய்யன்.

**தளுகு** – புளுகு.

**தளும்புதல்** – ததும்புதல், மேலெழுந்து வழிதல்; மனமலைதல்.

**தளுவம்** – கைத்துண்டு.

**தளை** – கட்டு; கயிறு; விலங்கு; பாசம்; மலர் முறுக்கு; சிறை; தொடர்பு; காற்சிலம்பு; ஆண்கள் மயிர்; வயல்; வரம்பு; யாப்புறுப்பு எட்டனுள் ஒன்று.

**தளை(வி)** – தகை; தடைசெய்; பிணி.

**தளைத்தல்** – கட்டுதல்; கொதித்தல்; அடக்குதல்.

**தளைதட்டல்** – வேற்றுத் தளை விரவியதனால் எடுத்துக்கொண்ட செய்யுளின் தளை மாறுபடுதல்.

**தளைதல்** – பிணித்தல்.

**தளைந்துவிடுதல்** – விலங்கின் முன்கால்களைக் கட்டி மேய்ச்சலுக்கு விடுதல்.

**தளைநார்** – பனையேறிகள் காலில் மாட்டிக் கொள்ளுங் கயிறு.

**தளைப்படுதல், தளைபடுதல்** – சிறையாதல்; கட்டுப்படுதல்.

**தளைபோடுதல்** – குறுக்காக வரப்பிடுதல்.

**தளையம்** – விலங்கு.

**தளையல்** – கட்டுகை; மறியற்படுத்துகை.

**தளையவிழ்தல்** – பந்தம் நீங்குதல்; மலர் முறுக் கவிழ்தல்.

**தளையாளர்** – காலில் தளையிடப்பட்டவர்.

**தளையிடுதல்** – பிணித்தல்.

**தளைவார்** – விலங்கின் கால்களைக் கட்டும் வார்; காண்க: **தளைநார்; தளையிடுபவர்.**

**தற்கரன்** – கள்வன்.

**தற்கரிசனம்** – தன்னலம்.

**தற்காத்தல்** – தன்னைத்தான் காத்தல்; பாது காத்தல்.

**தற்காப்பு** – தன்னைப் பாதுகாத்துக்கொள்கை.

**தற்காலம்** – நிகழ்காலம்; குறித்த காலம்.
**தற்காவல்** – காண்க: **தற்காப்பு**; கற்புநிலை.
**தற்கிழமை** – பிரியாதிருக்கும் தொடர்பு.
**தற்கு** – செருக்கு.
**தற்குணம்** – சிறப்புப்பண்பு; ஒரு பொருளின் குணத்தை மற்றொரு பொருள் பற்றுதலைக் கூறும் அணி.
**தற்குறி** – கல்வியறிவில்லாதவர் கையெழுத்தாக இடும் கீறல்; எழுதப்படிக்கத் தெரியாதவன்.
**தற்குறிப்பு** – தானாய் நியமிப்பது; எழுதத் தெரியாதவன் கையெழுத்தாக இடும் கீறல்; காண்க: **தற்குறிப்பேற்றம்**.
**தற்குறிப்பேற்றம்** – பொருளின் இயல்பை யொழித்து வேறு ஒரு பொருளை ஏற்றிச் சொல்லும் அணி.
**தற்குறைச்சல்** – குறைவு; தேய்வு.
**தற்கெலம்** – வறுமை.
**தற்கேடர்** – அறியாது தமக்கே கேடு விளைவிப்ப வர்.
**தற்கொண்டான்** – கணவன்.
**தற்கொலை** – தானே தன்னுயிரை மாய்த்தல்.
**தற்கோலம்** – தாம்பூலத்துடன் உட்கொள்ளும் வால்மிளகு.
**தற்சங்கை** – தன்னிடத்துள்ள பற்று.
**தற்சணம்** – உடனே.
**தற்சமம்** – ஒலிமாறுபாடு இன்றித் தமிழில் வழங் கும் வடசொல், ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொது.
**தற்சமயம்** – குறித்த வேளை; உற்ற வேளை; இப்பொழுது.
**தற்சனி** – சுட்டுவிரல்.
**தற்சாட்சி** – பரமாத்துமா; மனச்சாட்சி.
**தற்சிவம்** – முதற்கடவுள்.
**தற்சுட்டு** – தன்னைச் சுட்டுகை.
**தற்செய்கை** – தன்னைச் செப்பமுடையவ னாக்குகை; தனது செயல்.
**தற்செயல்** – தானே இயலுதல்; பலித்தல்; தன்னைப் பெருக்குதல்.
**தற்செயலாய்** – எதிர்பாராமல்.
**தற்செருக்கு** – அகங்காரம்.
**தற்செல்வம்** – வலிமை; சொந்தப் பொருள்.
**தற்பகன்** – மன்மதன்.
**தற்பகீடம்** – படுக்கையில் பற்றுவதான மூட்டுப் பூச்சி.
**தற்பணம்** – காண்க: **தர்ப்பணம்**; முதுகெலும்பு; கண்ணாடி; யானைமுதுகு.
**தற்பதம்** – தத் என்னும் சொல்; இறையியல்.
**தற்பம்** – அகந்தை; பாவம்; வஞ்சனை; துயிலிடம்; மெத்தை; மனைவி; மேனிலை; கத்தூரி.
**தற்பரம்** – மேம்பட்டது; பரம்பொருள்.
**தற்பரன்** – பரம்பொருள்.
**தற்பரை** – உமாதேவி; ஒரு விநாடியில் அறுபதில் ஒரு பகுதி; ஒரு மாத்திரையில் முப்பதில் ஒன்று; ஆன்மா தன்னைப் பதியாகக் கருதும் அறிவு.
**தற்பலம்** – வெள்ளாம்பல்.
**தற்பவம்** – தமிழுக்கேற்பத் திரிந்து வழங்கும் வட மொழி; அணிவகை.
**தற்பாடி** – காண்க: வானம்பாடி.
**தற்பின்** – தம்பி.
**தற்பு** – உள்ள நிலைமை; செருக்கு.
**தற்புகழ்ச்சி** – தன்னைத்தான் புகழ்ந்து கொள்கை.
**தற்புருடம்** – சிவன் ஐம்முகத்துள் கிழக்கு நோக்கி யிருப்பது.
**தற்போதம்** – தன்னையும் கடவுளையும் அறியும் அறிவு; இயற்கையாகவுள்ள முற்றுணர்வு; ஆணவம்; தன்னினைவு.
**தற்றெரிசனிகள்** – ஆன்ம தரிசனம் செய்த பெரியார்.
**தறடிகம்** – மாதுளை.
**தறதறத்தல்** – தறதற என்று ஒலித்தல்.
**தறதறெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**தறி** – வெட்டுகை; நடுதறி; தூண்; முளைக் கோல்; நெசவுப் பொறி; பறைக் குறுந்தடி; கோடரி; பொத்தான் கொக்கி.
**தறிக்கால்** – கொடிக்காற் கால்வாய்; சோதிடத் தில் பலன் சொல்ல உதவும் உறுப்பு.
**தறிக்கிடங்கு** – நெசவுத் தறியின் கீழுள்ள பள்ளம்.
**தறிகிடங்கு** – கரும்பின் ஆலைக்கிடங்கு.
**தறிகுற்றி** – வயலுக்கு உரமாகவிடும் தழை களைத் தறிக்க நடும் கருவி.
**தறிகை** – வெட்டப்படுகை; கட்டுத்தறி; கோடரி; உளி.
**தறிச்சன்** – எருக்கு.
**தறித்தல்** – வெட்டுதல்; கட்டவிழ்த்தல்; கெடுத் தல்; பிரித்தல்; தானியம் புடைத்தல்.
**தறிதல்** – அறுபடுதல்.
**தறிதலை** – காண்க: **தறுதலை**.
**தறிபோடுதல்** – நெசவுத்தறியில் நெய்தல்.
**தறிமரம்** – நெசவுத்தறியில் நெய்த ஆடையைச் சுருட்டும் மரம்.
**தறிவலை** – நடுதறியுடையதாய் மான் பிடிக்க உதவும் வலை.
**தறுக்கணித்தல்** – பழம் கன்றிப்போதல்; புண் காய்த்துப்போதல்; உணவுப்பொருள் இறுகு தல்; நிறைத்தல்.
**தறுகட்பம்** – அஞ்சாமையாகிய வீரம்.

**தறுகண்** – கொடுமை; அஞ்சாமையாகிய வீரம்; கொல்லுகை.

**தறுகண்ணன்** – வன்கண்மையுள்ளவன்; வீரன்.

**தறுகண்மை** – காண்க: **தறுகண்.**

**தறுகணாளன்** – காண்க: **தறுகண்ணன்.**

**தறுகணி** – வன்கண்மையுள்ளவள்.

**தறுகுதல்** – தடைப்படுதல்; தவறுதல்; திக்கிப் பேசுதல்; தாமதித்தல்.

**தறுகுறும்பன்** – தீயோன்; முரடன்.

**தறுகுறும்பு** – முருட்டுத்தன்மை; தீம்பு.

**தறுசு** – இழைக்குளிர்த்தி.

**தறுதல்** – இறுக உடுத்துதல்; கட்டுதல்.

**தறுதலை, தறுதலையன், தறுதும்பன்** – அடங்காதவன்.

**தறும்பு** – நீரணை; முளை.

**தறுவாய்** – உற்ற சமயம்; பருவம்.

**தறுவுதல்** – குறைதல்.

**தறைதல்** – ஆணி முதலியவற்றை இறுக்கல்; தைத்தல்; குற்றப்படுத்துதல்; தட்டையாதல்.

**தறைமலர்** – ஆணியின் மரை.

**தறையடித்தல்** – நிலத்தில் அசையாமல் இருத்துதல்.

**தன்** – தான் என்னும் சொல் வேற்றுமையுருபை ஏற்குமிடத்துப் பெறும் திரிபு.

**தன்கடையே** – தன்னடைவே.

**தன்காரியக்குட்டி** – தன்னலக்காரன்.

**தன்காரியம்** – சொந்தச் செயல்.

**தன்காலம்** – உரிய பருவம்; கள் மிகுதியாகக் கிடைக்கும் காலம்.

**தன்கு** – மகிழ்ச்சி.

**தன்குலம்வெட்டி** – தன்குலத்தை அழிப்பதான கோடரிக்காம்பு.

**தன்கோட்கூறல்** – முன்னூல் ஆசிரியர் கூறியவாறு கூறாது தன் கோட்பாட்டாற் கூறுகை.

**தன்தரை** – வெறுந்தரை; போடு மண்ணின்றி இயற்கையான தரை.

**தன்படியே** – தானாகவே; தன்னிச்சைப்படி.

**தன்படுவன்** – தானாக உண்டாகும் விளையுப்பு.

**தன்பாட்டில்** – தானாகவே; பிறர் செயலில் தலையிடாமல்.

**தன்பாடு** – தன் செயல்; தன் உழைப்பு.

**தன்பிடி** – தன் கொள்கை.

**தன்பேறு** – சொந்தப் பயன்.

**தன்பொறுப்பு** – தனதாக ஏற்றுக்கொள்ளும் கடமை.

**தன்மசரணம்** – தருமத்தைச் சரண்புகுகை.

**தன்மணி** – அறச்சிந்தனை உள்ளவன்.

**தன்மதிப்பு** – தற்பெருமை.

**தன்மப்பயிர்** – அறத்தை விளைவிக்கும் பயிரான பேருபகாரி.

**தன்மபுத்திரன்** – காண்க: **தருமபுத்திரன்.**

**தன்மம்** – தருமம்; சலாசனவகை.

**தன்மயம்** – தன் இயற்கை; திறமை; வேறொன்றனொடு ஒன்றுபடுகை.

**தன்மயமாதல்** – வேறுபாடின்றி ஒன்றாதல்.

**தன்மராசா** – தருமபுத்திரன்; பாலைமரம்; அறச்சிந்தனையுள்ளவன்.

**தன்மன்** – யமன்; தருமபுத்திரன்; திப்பிலி.

**தன்மாத்திகாயம்** – பஞ்சாஸ்திகாயத்துள் மீனுக்கு நீர்போலச் சீவனது செலவுக்குச் சாதனமான பொருள்.

**தன்மாத்திரை** – ஐம்பொறிகளுக்குக் காரணமான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் மூலப்பொருள்கள்.

**தன்மானி** – வறுமை.

**தன்மி** – காண்க: **தருமி.**

**தன்மிட்டன்** – அறச்சிந்தை உள்ளவன்; நன்னெறியில் ஒழுகுபவன்.

**தன்மூப்பு** – இறுமாப்பு; எதேச்சை.

**தன்மேம்பாட்டுரை** – தற்புகழ்ச்சி அணி.

**தன்மை** – குணம்; இயல்பு; நிலைமை; முறை; பெருமை; ஆற்றல்; நன்மை; மெய்ம்மை; தன்னைக் குறிக்குமிடம்; ஓரணி.

**தன்மைநவிற்சி** – பொருள் முதலியவற்றை இயற்கையிலுள்ளவாறே கூறும் அணி.

**தன்மைமிகுத்துரை** – ஒரு பொருளின் இயல்பை மிகுத்துக் கூறுகை.

**தன்வசப்படுத்துதல்** – தன்னுடையதாக்குதல்.

**தன்வயத்தனாதல்** – கடவுள் எண்குணத்துள் சுதந்தரனாந் தன்மை.

**தன்வழி** – தன் மரபு; தன் விருப்பம்.

**தன்வினை** – ஊழ்வினை; இயற்றுதற் கருத்தாவின் வினையை உணர்த்துஞ் சொல்; தனது செயல்.

**தன்வேதனை** – தன் அனுபவம்.

**தன்னடக்கம்** – தன்னைக் கட்டுப்பாடு பண்ணல்; அமைதி.

**தன்னடிச்சோதி** – பரந்தாமனது திருவடியின் ஒளியாகிய பரமபதம்.

**தன்னந்தனி** – முற்றுந்தனிமை.

**தன்னந்தனித்தல்** – முழுதும் தனிமையாதல்.

**தன்னம்** – பசுவின்கன்று; மான்கன்று; மரக்கன்று; சிறுமை.

**தன்னமை** – நட்பு; இணக்கம்.

**தன்னயம்** – தன்னலம்.

**தன்னரசு** – சுதந்தர அரசு; அரசியலற்றிருக்கை.

**தன்னரசுநாடு** – ஒருவன் தன் இச்சைப்படி ஆளும் நாடு; அராசக நாடு.

**தன்னலம்** – சுயநலம்.
**தன்னவன்** – தன்னைச் சேர்ந்தவன்.
**தன்னறிவு** – சுயவறிவு; மயக்கமற்ற அறிவு.
**தன்னாட்சி** – சுய ஆட்சி.
**தன்னாரவண்ணம்** – மனப்பாங்கின்படி.
**தன்னிச்சை** – தன்விருப்பம்; சுதந்தரம்.
**தன்னியம்** – முலைப்பால்.
**தன்னியல்பு** – சிறப்புக்குணம்.
**தன்னியன்** – செல்வமுடையோன்; பாக்கியவான்.
**தன்னியாசி** – ஒரு பண்வகை.
**தன்னிலை** – இயல்புநிலை; சமனாய் நிற்கை.
**தன்னினமுடித்தல்** – ஒன்றைச் சொல்லுமிடத்து விரிவுறாமைவேண்டி அதற்கினமாகிய மற்றொன்றையும் அதனோடு கூட்டி முடித்தலாகிய உத்தி.
**தன்னினி** – வேங்கைமரம்.
**தன்னீங்கள்** – எதேச்சை; தன்னுரிமையாக்கல்; தொடர்பின்மை.
**தன்னுண்மை** – பரப்பிரமத்தின் உண்மை அறிவு இன்பமாய இயல்பு; சிறப்பியல்பு.
**தன்னுணர்ச்சி** – தன்னறிவு; ஞாபகம்.
**தன்னுதல்** – சிறிதுசிறிதாக எடுத்தல்; தோணியை மெல்லத் தள்ளுதல்; பொருந்துதல்.
**தன்னுதோணி** – சிறிய படகு.
**தன்னூட்டி** – தாய்ப்பாலைத் தடையின்றி உண்டு வளர்ந்த சேங்கன்று.
**தன்னேத்திரம்** – காண்க: **கோமேதகம்.**
**தன்னேற்றம்** – தன்னைச் சார்ந்த இனத்தார்; சிறப்பாய் அமைந்த பெருமை.
**தன்னை** – தலைவன்; தமையன்; தமக்கை; தாய்.
**தன்னைக்கட்டுதல்** – போதியதாதல்; மந்திரத்தால் தன்னைக் காத்தல்; வசப்படுத்துதல்; சம்மதித்தல்; குறை நீக்குதல்; செட்டாக நடத்துதல்; நிருவகித்தல்.
**தன்னையறிதல்** – தனது உண்மைத் தன்மையை உணர்தல்; பூப்படைதல்.
**தன்னைவேட்டல்** – தலைவனுடன் வீரன் தன்னுயிர் மாய்த்தலைக் கூறும் புறத்துறை; இறந்த கணவனுடலைப் போர்க்களத்தில் அவன் மனைவி தேடுதலைக் கூறும் புறத்துறை.
**தன்னொழுக்கம்** – தன்னிலைக்குத் தக்க நடை.
**தன்னோர்** – தன்னைச் சார்ந்தவர்.
**தனக்கட்டு** – பெருஞ்செல்வம்.
**தனகரன்** – கள்வன்; குபேரன்; சுதந்தரன்.
**தனகு** – மனக்களிப்பு.
**தனகுதல்** – சரசஞ்செய்தல்; உள்ளங்களித்தல்; சண்டைசெய்தல்.
**தனசாரம்** – காண்க: **தன்னியம்.**
**தனஞ்சயன்** – அருச்சுனன்; உடலைவிட்டு உயிர் நீங்கினும் தான் நீங்காது சிறிது நேரம் நின்று வெளியேறும் வளி; நெருப்பு.
**தனஞ்செயகாரம்** – படிக்காரம்.
**தனத்தோர்** – பொருள் ஈட்டுதற்குரிய வணிகர்.
**தனதன்** – குபேரன்.
**தனதாள்** – சொந்த வேலைக்காரன்; உடந்தையாயிருக்கும் ஆள்.
**தனதானியம்** – பொன்னும் விளைபொருள்களும்.
**தனது** – சொந்தம்; உரிமை.
**தனதுபண்ணுதல்** – தன்வயப்படுத்துதல்.
**தனந்தயன்** – பாலுண்ணும் குழந்தை.
**தனபதி** – குபேரன்.
**தனபதித்துவம்** – செல்வநிலை; கொடைக்குணம்.
**தனபாரம்** – கொங்கைச்சுமை.
**தனம்** – செல்வம்; பொன்; பொருள்; முலை; தன்மை; உத்திரம்; பசுவின்கன்று; வருத்தம்; கூட்டற்கணக்கு; பண்புணர்த்தற்குப் பெயரின் பின்வரும் இடைச்சொல்; சாதகத்தில் சென்மலக்கினத்திலிருந்து செல்வத்தைக் குறிக்கும் இடமான இரண்டாம் வீடு.
**தனமதம்** – பொருட்செருக்கு.
**தனயன்** – மகன்.
**தனயை** – மகள்.
**தனரேகை** – பொருள் நிலையைக் காட்டும் கைக்கோடு.
**தனலக்குமி** – செல்வமாகிய திரு.
**தனவந்தன்** – செல்வன்.
**தனவனா** – ஆச்சாமரம்.
**தனவான்** – செல்வன்.
**தனவை** – சிறுகாஞ்சொறி.
**தனவைசியர்** – மூவைசியருள் பொன்வணிகர்; நாட்டுக்கோட்டைச் செட்டிமார்.
**தனவையாதம்** – காண்க: **தனவை.**
**தனன்** – வணிகர் பட்டப்பெயர்.
**தனாசி** – ஒரு பண்வகை.
**தனாட்டி** – செல்வமுடையவள்.
**தனாட்டியன்** – செல்வன்.
**தனாதிபதி(ன்)** – குபேரன்.
**தனாது** – தன்னுடையது.
**தனி** – ஒற்றை; தனிமை; ஒப்பின்மை; உரிமை; கலப்பின்மை; உதவியின்மை; சீட்டாட்டத்தில் ஒருவனே எல்லாச் சீட்டையும் பிடிக்கை; தேர் நெம்புந் தடி.
**தனிக்காட்டுராசா** – காட்டுத்தலைவன்; கட்டுக்கு அடங்காதவன்.
**தனிக்குடி** – தனியாகப் பிரிந்துவாழுங் குடும்பம்.
**தனிக்குடித்தனம்** – குடும்பத்திலிருந்து பிரிந்து தனித்து வாழ்ந்துவருகை; மனைவியுடன் தனி வீட்டில் வாழ்க்கை நடத்துகை.

**தனிக்குடை,**
**தனிக்கோல்** } – தனியரசாட்சி.

**தனிகம்** – கொத்துமல்லி.

**தனிகன்** – செல்வன்.

**தனிகை** – இளம்பெண்; கற்புடையவள்.

**தனிச்சி** – கணவனைப் பிரிந்து தனித்திருப்பவள்.

**தனிச்சித்தம்** – அமைதியான மனம்.

**தனிச்செய்கை** – பிறருடன் சேராது தானே செய்யும் வேளாண்மை.

**தனிச்சொல்** – கலிப்பா முதலியவற்றில் ஆங்கு என்பதுபோலத் தனித்து வருஞ்சொல்; தனிச் சீர்.

**தனிசர்** – கடன் வாங்கினோர், கடன்காரராகிய குறும்பரசர்.

**தனிசு** – கடன்.

**தனிட்டை** – அவிட்டநாள்; அவிட்டம் முதலிய ஐந்து நட்சத்திரங்கள்.

**தனித்தகுடி** – அநாதக் குடும்பம்.

**தனித்தல்** – ஒன்றியாதல்; நிகரற்றிருத்தல்; உதவியற்றிருத்தல்.

**தனித்தன்மைப்பன்மை** – தன்னொருவனையே குறிக்கும் தன்மைப்பன்மை.

**தனித்தனி** – ஒவ்வொன்றாய் அல்லது ஒவ்வொரு வராய்.

**தனித்தாள்** – ஒன்றியாள்; உதவியற்ற ஆள்; ஒற்றைக் காகிதம்.

**தனித்தி** – தனியாகவிடப்பட்டவள்.

**தனித்திருத்தல்** – தனிமையாயிருத்தல்; ஒன்றியா யிருத்தல்.

**தனிதம்** – ஒலி; முழக்கம்.

**தனிதர்** – ஒன்றியாயிருப்பவர்.

**தனிநிலை** – ஆய்த எழுத்து; தனியே நின்று பொருள் முடியும் செய்யுள்; ஒப்பற்ற நிலை; தனித்து நிற்கை.

**தனிநிலையொரியல்** – தாளவிகற்பங்களுள் ஒன்று.

**தனிப்படுதல்** – பிரிந்து ஒன்றியாதல்.

**தனிப்பாட்டு,**
**தனிப்பாடல்** } – விடுகவி.

**தனிப்பாடு** – தனிமை; முழுப் பொறுப்பு.

**தனிப்புடம்** – உட்காரும்வகை ஒன்பதனுள் ஒன்று.

**தனிப்புறம்** – ஒதுங்கின இடம்.

**தனிப்பொருள்** – ஒப்பு உயர்வற்ற பொருள்.

**தனிமம்** – தனிப்பொருள், மூலகம்.

**தனிமுடி** – தனியரசு.

**தனிமுதல்** – கடவுள்; தனிவாணிகம்; கூட்டு வாணிகத்தில் ஒவ்வொரு பங்காளியும் இட்ட விடுமுதல்.

**தனிமை** – தனித்திருக்கும் நிலைமை; உதவி யின்மை; ஒதுக்கம்; ஒப்பின்மை.

**தனிமைப்பாடு** – ஒன்றியான நிலை; உதவியற்ற நிலை.

**தனிமையாற்றல்** – வணிகர் எண்குணத்துள் வாணிகத்தின்பொருட்டுக் குடும்பத்தைப் பிரிந்திருக்கை.

**தனிமொழி** – தொகைப்படாது தனியே நிற்குஞ் சொல்; பிறமொழியினின்று பிறக்காத மொழி.

**தனியரசாட்சி** – ஏகாதிபத்தியம்.

**தனியன்** – தனித்த ஆள்; குரு வணக்கமான ஒற்றைச் செய்யுள்; தனியானவன்; இனத்தி னின்றும் பிரிந்தமையால் மூர்க்கம்கொண்ட விலங்கு; ஒரு நூலை அல்லது ஆக்கியோனைப் புகழ்ந்து கூறும் தனிச் செய்யுள்.

**தனியா** – கொத்துமல்லி; அரைக்கச்சை.

**தனியூர்** – பெருநகர்.

**தனிவலிப்பெருமாள்** – குப்பைமேனிப்பூடு.

**தனிவழி** – துணையற்ற வழி.

**தனிவீடு** – தனிமையான வீடு; ஒற்றைக் குடியுள்ள வீடு; ஒரே சதுரமான வீடு; வீடுபேறு.

**தனு** – உடல்; வில்; தனுராசி; சிறுமை; நான்கு கரங்கொண்ட நீட்டலளவை; எருத்தின் முக்காரம்; மார்கழி மாதம்; ஊன்றிப் பேசுகை; தக்கன் மகளும் அசுரர்க்குத் தாயுமான காசிபர் மனைவி.

**தனுக்காஞ்சி** – செவ்வழி யாழ்த்திறத்துள் ஒன்று.

**தனுகாண்டன்** – அம்பு; வில்; விற்போர் வல்ல வன்.

**தனுகூபம்** – மயிர்த்துளை.

**தனுசன்** – மகன்; தனுவினிடம் தோன்றிய அசுரன்.

**தனுசாத்திரம்** – வில்வித்தை.

**தனுசாரி** – இந்திரன்; திருமால்.

**தனுசு** – வில்; தனுராசி.

**தனுசை** – மகள்.

**தனுத்திரம்** – கவசம்.

**தனுத்துருவம்** – வில்லுக்குதவும் மரமான மூங்கில்.

**தனுமணி** – ஒரு போரில் ஆயிரம்பேரைக் கொன்ற வீரர் வில்லில் கட்டும் மணி.

**தனுமானசி** – பொருள்மேல் பற்றறுதலையுடைய மனநிலை.

**தனுமேகசாய்கை** – நீலக்கல்.

**தனுர்** – காண்க: **தனுசு.**

**தனுர்மாதம்** – மார்கழிமாதம்.

**தனுர்வித்தை,**
**தனுர்வேதம்** } – வில்வித்தை.

**தனுரசம்** – உடலின் ரசமாகிய வியர்வை.

**தனுருகம்** – மயிர்.

**தனுரேகை** – வில்வடிவான கைக்கோடு.

**தனுவாரம்** – போர்க்கவசம்.

**தனுவேதம்** – காண்க: **தனுர்வேதம்.**

**தனுவேதி** – வில்லாளி.

**தனேசன்** – குபேரன்.

**தனை** – அளவு குறிக்கப் பிற சொல்லின்பின் வரும் ஒரு சொல்.

**தனையள்** – மகள்.

**தனையன்** – மகன்.

**தனையை** – காண்க: **தனையள்.**

## தா

**தா** – ஓர் உயிர்மெய்யெழுத்து (த்+ஆ); வலிமை; வருத்தம்; கேடு; குற்றம்; பகை; பாய்கை; குறை.

**தா(வி)** – தா என்னும் ஏவல்; ஒத்தவர் தமக்குள் ஒன்றை வேண்டிச் சொல்லும் சொல்.

**தாஅம்** – பரக்கும்.

**தாஅயது** – தாவியது; கடந்தது.

**தாஅவண்ணம்** – இடையிட்டு வரும் எதுகையுடைய சந்தம்.

**தாஅனாட்டித் தனாஅது நிறுப்பு** – எழுவகை மதங்களுள் தானே ஒரு பொருளைப் புதிதாய் எடுத்துக்கூறி அதனை நிலைநிறுத்துகை.

**தாக்கடைப்பன்** – மாட்டுநோய்வகை.

**தாக்கணங்கு** – தீண்டி வருத்துந் தெய்வம்; காமநோயை உண்டாக்கி வருத்துந் தெய்வம்; திருமகள்; உமாதேவியாரின் பரிவாரப் பெண் பூதங்களுள் ஒருவகை.

**தாக்கணித்தல்** – மெய்ப்பித்துக் காட்டல்.

**தாக்கம்** – தாக்கு; எதிர்தாக்குகை; வேகம்; கனத்திருக்கை; மிக்கிருக்கை; வீக்கம்; முதற்கொண்டு.

**தாக்கல்** – எதிர்த்தல்; பாய்ந்து மோதுகை; பதிகை; தகவல்; சுவாதீனப்படுத்துகை; செய்தி; சம்பந்தம்.

**தாக்காட்டுதல்** – நாட்கடத்தி ஏமாற்றுதல்; பராக்குக்காட்டல்; உதவிசெய்தல்; தந்திரமாய் வயப்படுத்தல்.

**தாக்காயணி** – தக்கன் மகளாகிய உமாதேவி.

**தாக்கீது** – ஆணை.

**தாக்கு** – அடி; போர்; படை; வேகம்; பாதிக்கை; சாதனை; குறுந்தடி; இடம்; பெருக்கல்; நெல்வயல்; பற்று; வளமை; ஆணை; நிலவறை; மிகு சுமை; எதிர்க்கை; எதிரெழுகை.

**தாக்குதல்** – எதிர்த்தல்; மோதுதல்; முட்டுதல்; பாய்தல்; தீண்டுதல்; அடித்தல்; வெட்டுதல்; பற்றியிருத்தல்; எண்கூட்டிப் பெருக்கல்; குடித்தல்; சரிக்கட்டுதல்; உறைத்தல்; கடுமையாதல்; பழிவாங்குதல்; தலையிட்டுக்கொள்ளுதல்; பலித்தல்; பெருகுதல்; பாரமாதல்; நெளித்துப்போதல்.

**தாக்கோல்** – காண்க: **தாட்கோல்.**

**தாகசாந்தி** – நீர்வேட்கையைப் போக்குதல்.

**தாகசுரம்** – நீர்வேட்கையை உண்டுபண்ணும் ஒரு சுரநோய்வகை.

**தாகம்** – நீர்வேட்கை; ஆசை; காமம்.

**தாகமடக்கி** – புளியாரை என்னும் பூண்டுவகை.

**தாகமெடுத்தல்** – நீரில் விருப்பங்கொள்ளுகை.

**தாகீது** – காண்க: **தாக்கீது.**

**தாகித்தல்** – நீர்வேட்கை உண்டாதல்.

**தாங்கல்** – தாங்குகை; உட்கிடைக் கிராமம்; மனக்குறை; துன்பம்; சகிப்பு; பூமி; நீர்நிலை; பாசனத்துக்குப் பயன்படும் இயற்கை ஏரி; தயக்கம்; தூக்குகை.

**தாங்கள்** – மரியாதையுடன் கூடிய முன்னிலைப் பன்மைச் சொல்.

**தாங்கி** – ஆதாரம்; தாங்குபவன்; ஒரு பொருளைத் தாங்கிநிற்கும் கருவி; பூண்; பணிகளின் கடைப்பூட்டு; யானைக் கொம்பில் அணியும் கிம்புரி; கப்பல் முதலியவற்றிலுள்ள நீர்நிலை; காண்க: **மலைதாங்கி.**

**தாங்கித்தடுக்கிடுதல்** – மிகுந்த உபசாரம் செய்தல்.

**தாங்கிப்பேசுதல்** – பரிந்துபேசுதல்; ஒருவர் சொன்னதை ஆதரித்துப் பேசுதல்.

**தாங்கு** – தாங்கல்; ஆதாரம்; ஈட்டிக்காம்பு.

**தாங்குகோல்** – தோணியை ஊன்றித் தள்ளும் கோல்; உதவி.

**தாங்குசுவர்** – முட்டுச்சுவர்.

**தாங்குதல்** – சுமத்தல்; புரத்தல்; ஆதரித்தல்; தடுத்தல்; பொறுத்தல்; தோணி தள்ளுதல்; வருந்துதல்; மனத்திற் கொள்ளுதல்; அன்பால் நடத்தல்; தாமதித்தல்; நிறுத்துதல்; குதிரை முதலியவற்றின் வேகத்தை அடக்கிச் செலுத்துதல்; நொண்டுதல்; இளைப்பாற்றுதல்; ஏற்றுக்கொள்ளுதல்; அணிதல்; சிறப்பித்தல்; அழுத்துதல்; பிடித்துக்கொள்ளுதல்.

**தாங்குநன்** – காப்பாற்றுவோன்.

**தாச்சா** – முந்திரிகை.

**தாச்சி** – கருவுற்றிருப்பவள்; தாய்ப்பால் கொடுப்பவள்; விளையாட்டில் ஒரு கட்சியிலுள்ள தலைவன்; விளையாட்டில் தொடவேண்டுமிடம்; சோனைப்புல்வகை.

**தாசத்துவம்** – அடிமைத்தன்மை.

**தாசநம்பி** – பூணூல் அணியாத வைணவரின் பட்டப்பெயர்; பூணூல் தரியாத வைணவன்.

**தாசநெறி, தாசமார்க்கம்** – அடிமைநெறி; சிவனை உருவத் திருமேனியாகக் கோயிலில் வைத்து வழிபடுகை.

**தாசரதி** – தசரதன் மகனான இராமன்.

**தாசரி** – தாதன்; மலைப்பாம்பு; பாம்புப் பிடாரன்.

**தாசன்** – ஊழியக்காரன்; அடிமை; பக்தன்; வைணவர் கூறும் வணக்கச்சொல்.

**தாசனாப்பொடி** – பற்பொடி.

**தாசி** – தோழி; தொண்டுபுரிபவள்; அடிமைப் பெண்; விலைமகள்; பரணிநாள்; மருதோன்றிமரம்.

**தாசியநாமம்** – சமய உண்மை தெரிவிக்கும் சடங்கில் ஞானாசாரியன் கொடுக்கும் அடிமைப்பெயர்.

**தாசியம்** – அடிமைத்தன்மை.

**தாசினாப்பொடி** – காண்க: **தாசனாப்பொடி.**

**தாசு** – நாழிகைவட்டில்; இரண்டரை நாழிகை கொண்ட ஒருமணி நேரம்; சூதாடுகருவி.

**தாசுவம்** – கொடை.

**தாசேரகம், தாசேரம்** – ஒட்டகம்.

**தாசோகம்** – 'நான் அடியேன்' என்று பொருள்படும் வணக்கச்சொல்; வீரசைவர்களின் மாகேசுர பூசை.

**தாட்கம்** – கொடிமுந்திரிகை.

**தாட்கவசம்** – செருப்பு.

**தாட்கூட்டு** – மகளிர் கையணிவகை.

**தாட்கோரை** – கோரைப்புல்வகை.

**தாட்கோல்** – தாழ்ப்பாள்; திறவுகோல்.

**தாட்சண்ணியம், தாட்சணம், தாட்சணியம், தாட்சணை** – காண்க: **தாட்சிண்ணியம்.**

**தாட்சம்** – கொடிமுந்திரிகை; பல்லாங்குழி விளையாட்டில் காய்கள் இல்லாதிருக்கும் குழி.

**தாட்சன்** – கருடன்.

**தாட்சாயணி** – தக்கன் மகளாகத் தோன்றிய உமாதேவி; இருபத்தேழு நட்சத்திரப் பொது; உரோகிணிநாள்.

**தாட்சி** – தாமதம்; இழிவு; தாழ்ந்து பணிகை.

**தாட்சிண்ணியம், தாட்சிணியம், தாட்சிணை** – இரக்கம்; கண்ணோட்டம்; ஒருதலைச் சார்பு; மரியாதை.

**தாட்டன்** – பெருமைக்காரன்; தலைமை ஆண் குரங்கு; போக்கிரி; ஒருவனை இகழ்ச்சி தோன்றக் குறிக்கும் சொல்.

**தாட்டாந்தம், தாட்டாந்திகம்** – எடுத்துக்காட்டு; உபமேயம்.

**தாட்டான்** – தலைவன்; கணவன்.

**தாட்டானை** – கிழக்குரங்கு.

**தாட்டி** – திறமை; தடவை; துணிவு; தடையின்மை; பெருமிதம்; கெட்டிக்காரி; அகலம்; ஆண்தன்மை வாய்ந்தவள்; வைப்பாட்டி.

**தாட்டிகம்** – வலிமை; இறுமாப்பு.

**தாட்டிகன்** – பலவான்; தீங்குபுரிவோன்.

**தாட்டுதல்** – காலங்கடத்தல்; நீக்குதல்; மறுத்தல்.

**தாட்டுப்பூட்டெனல்** – வெகுளிக்குறிப்பு; பகட்டுக் குறிப்பு.

**தாட்டுப்போட்டு** – குழப்பம்.

**தாட்டோட்டம், தாட்டோட்டு** – புரட்டு; குழப்பம்; தாமதம்.

**தாட்படை** – கோழி.

**தாட்பாள்** – கதவடைக்குந் தாழ்; எலிப் பொறியின் தாள்.

**தாடகம்** – காண்க: **நீர்முள்ளி; வீழி.**

**தாடங்கம்** – பெண்கள் காதில் அணியும் தோடு.

**தாடபத்திரம்** – ஓலையாலான காதணி.

**தாடம்** – அடிக்கை.

**தாடனம்** – தட்டுதல்; அடித்தல்; வலக்கை இளம் பிறையாகவும் இடக்கை பதாகையாகவும் மார்பிற்கு நேரே எட்டுவிரல் உயர்த்திப் பிடிக்கும் அபிநயக்கைவகை.

**தாடாளன்** – மேன்மையுள்ளவன்; பெருமுயற்சியுடையவன்.

**தாடாற்றி** – கடுமையைத் தணித்துச் சமநிலைக்குக் கொண்டுவருகை.

**தாடி** – மோவாய்; மோவாய் மயிர்; சேவற் கழுத்தில் தொங்கும் சதை; பசு முதலிய வற்றின் அலைதாடி; வாளின் பிடி; தட்டுகை.

**தாடித்தல்** – அடித்தல்; கொட்டுதல்.

**தாடிதபதம்** – வலக்கால் படத்தின் நுனியை இடக்கால் பக்கத்தில் ஊன்றி நிற்கும் நிலை.

**தாடிமஞ்சம்** – சத்திக்கொடி.

**தாடிமப்பிரியம்** – மாதுளம்பழத்தை விரும்பும் கிளி.

**தாடிமம்** – சிற்றேலம்; பூமாதுளை.

**தாடிரி** – காண்க: **கண்டங்கத்தரி.**

**தாடு** – வலிமை; தலைமை.

**தாடை** – கன்னம்; தாடையெலும்பு; பெரும்பல்; விருப்பம்; மோவாய்.

**தாடைஎலும்பு** – கன்னத்தின் கீழெலும்பு.

**தாண்டகச்சந்தம்** – தாண்டக அடி மிக்குச் சந்த அடி குறைந்துவரும் செய்யுள்; சந்த அடியும் தாண்டக அடியும் கலந்து ஓசையுடன் அமையும் பாட்டு.

**தாண்டகம்** – செய்யுள்வகை; இருபத்தாறெழுத்தின் மிக்க எழுத்தான் அடிகொண்டு வரும் பா; ஒரு நூல்வகை.

**தாண்டகவடி** – இருபத்தாறுக்கு மேற்பட்ட எழுத்துகளால் இயன்ற அடி.

**தாண்டவம்** – தாண்டுதல்; செலுத்தல்; கூத்து வகை.

**தாண்டவமூர்த்தி, தாண்டவராயன், தாண்டவன்** – நடனமாடும் மூர்த்தியாகிய நடராசர்.

**தாண்டி** – நடனசாத்திரம்.

**தாண்டிமண்டலம்போடுதல்** – கோபாவேசத்தோடு மேற்பாய்தல்.

**தாண்டு** – குதி; வெற்றி; அகங்கரிப்பு.

**தாண்டுகாலி** – கண்டபடி திரிபவன்(ள்).

**தாண்டுகாற்போடுதல்** – ஒரு வேலையும் செய்யாமல் திரிதல்; ஆற்றலுக்கு மீறிய வேலையை மேற்கொள்ளுதல்; நூலில் இங்கொரு பக்கம் அங்கொரு பக்கமாகப் படித்தல்.

**தாண்டுதல்** – மிதமிஞ்சிப் பேசுதல்; குதித்தல்; கடத்தல்; செலுத்தல்; மேற்படுதல்; செருக்கடைதல்.

**தாண்முளை** – மகன்.

**தாணா** – குதிரைக்குக் கொடுக்கும் அவித்து எடுத்த கொள்ளு; காவல்நிலையம்; சிற்றுணவு.

**தாணாக்காரன்** – காவலன்.

**தாணி** – தான்றிமரம்; பூண்டுவகை.

**தாணித்தல்** – பதித்தல்; கெட்டிப்படுத்துதல்; துப்பாக்கியில் மருந்திடுதல்; உறுதிப்படுத்துதல்; குற்றமேற்றல்; விரைவில் கடைதல்; இழையோட்டுதல்.

**தாணு** – சிவன்; குற்றி; தூண்; நிலைபேறு; மலை; பற்றுக்கோடு; செவ்வழி யாழ்த்திறவகை; தாவரம்.

**தாணையம்** – கோட்டைக்குள்ளிருக்கும் படை; பாளையம்; மந்தை.

**தாணையம்போடுதல்** – பாளையம் இறங்குதல்; உறவினர் பலர் ஒரு வீட்டில் பலநாள் கூடியிருத்தல்.

**தாத்தா** – பாட்டன்; கிழவன்.

**தாத்தாரி** – காண்க: **நெல்லி.**

**தாத்தி** – ஆத்திமரம்.

**தாத்திரம்** – கோடரி; கூன்வாள்.

**தாத்திரி** – தாய்; பூமி; நெல்லிமரம்; ஆடுதின்னாப்பாளை.

**தாத்திரியம்** – வறுமை.

**தாத்திருவாதம்** – கபடம்; பொய்.

**தாத்துதல்** – தாற்றுதல், கொழித்தல்; இழிந்ததை மேலாக மாற்றுதல்; ஒளித்துவைத்தல்; செலவழித்தல்.

**தாத்துரு** – பன்னிரண்டு ஆதித்தருள் ஒருவர்.

**தாத்துவிகம்** – தத்துவத் தொடர்புடையது.

**தாதக்கூத்து** – தாசரிகள் ஆடும் நடனம்.

**தாதகி** – ஆத்திமரம்; ஒரு தீவம்; பேய்க்கொம்மட்டி.

**தாதச்சி** – தவப்பெண்.

**தாதமார்க்கம்** – காண்க: **தாசநெறி.**

**தாதரி** – ஆடுதின்னாப்பாளை.

**தாதலம்** – நோய்; பாகம்; மனத்திட்பம்.

**தாதன்** – தாசன், அடியவன்; தொண்டன்; வைணவப் பரதேசி; தந்தை; ஈகையாளன்.

**தாதா** – தந்தை; தாத்தா; பெரியோன்; கொடையாளி; பிரமன்; காண்க: **தாத்துரு.**

**தாதாத்மியம்** – காண்க: **தாதான்மியம்.**

**தாதான்மியசக்தி** – சிவபெருமானை விடுத்து ஒரு போதும் நீங்காத ஐவகை வினையுள் ஒரு வினைவகை.

**தாதான்மியம்** – ஒன்றுபட்டிருக்கை.

**தாதானம்** – கரிக்குருவி.

**தாதி** – வேலைக்காரி; செவிலித்தாய்; தோழி; விலைமகள்; பரணிநாள்; வாதி.

**தாதிற்(ன்)றூள்** – பூந்தாது, மகரந்தப்பொடி.

**தாது** – கனிப்பொருள்; உலோகம்; காவிக்கல்; பஞ்சபூதம்; நாடி; பூந்தாது; தேன்; தாதுமாதுளமரம்; கேள்வி; உடலின் எழுவகைத் தாதுக்கள்; சுக்கிலம்; வாதபித்த சிலேட்டுமங்கள்; நீறு; பூவின் இதழ்; மலர்; அறுபதாண்டுக் கணக்கில் பத்தாம் ஆண்டு; அடிமை; வினைப்பகுதி.

**தாதுகட்டுதல்** – இந்திரியம் அடக்குதல்.

**தாதுகந்தம்** – கந்தகம்.

**தாதுகலிதம்** – காண்க: **தாதுநட்டம்.**

**தாதுகி** – செங்கல்.

**தாதுசேகரம்** – துரிசு.

**தாதுண்பறவை** – வண்டு.

**தாதுநட்டம்** – வீரியச்சிதைவு.

**தாதுபரீட்சை** – நோயறியுமாறு நாடிபிடித்து ஆய்தல்.

**தாதுபார்த்தல்** – கைந்நாடி யறிதல்.

**தாதுபுஷ்டி** – இந்திரியம் மிகுகை.

**தாதுமாதுளை** – பூமாதுளை.

**தாதுராசகம்** – இந்திரியம், சுக்கிலம்.

**தாதுவாதம்** – அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்றாகிய நாடியியல்பு அறிகை; கபடம்; பொய்; உலோகப் பரிசோதனை.

**தாதுவாதி** – உலோகங்கள் பரிசோதிப்போன்.

**தாதுவிருத்தி** – சுக்கிலப்பெருக்கு.

**தாதுவிழுதல்** – நாடி ஒடுங்குதல்.

**தாதுவைரி** – கந்தகம்; காண்க: **கடுக்காய்.**

**தாதெருமன்றம்** – எருக்கள் நிறைந்த மரத்தடிப் பொதுவிடம்; இடையர் குரவை முதலியன நிகழ்த்துவதற்குரிய இடம்.

**தாதை** – தந்தை; பாட்டன்; பிரமன்; காண்க: **பேய்க்கொம்மட்டி.**

**தாதைதன்றாதை, தாதைதாதை** – பாட்டன்.

**தாந்தன்** – ஐம்பொறிகளையும் வென்றவன்.

**தாந்தாமெனல்** – மத்தளம் அடிக்கும் ஒலிக்குறிப்பு.

**தாந்தி** – மன அடக்கம்.

**தாந்திரம், தாந்திரிகம்** – ஆகம சம்பந்தமானது; தந்திரம்.

**தாந்திரிகன்** – ஆகமநூல் வல்லோன்.

**தாந்தீமெனல்** – இசையொலிக் குறிப்பு; கண்டபடி செலவிடற் குறிப்பு.

**தாந்துவீகன்** – தையற்காரன்.

**தாந்தோமெனல்** – காண்க: **தாந்தீமெனல்.**

**தாநகம்** – கொத்துமல்லி.

**தாப்பணிவார்** – கலணைக்கச்சை; கசை.

**தாப்பிசை, தாப்பிசைப் பொருள்கோள்** – செய்யுளில் நடுவிலுள்ள மொழியை ஏனை ஈரிடத்துங்கூட்டிப் பொருள் கொள்வது.

**தாப்பு** – குறித்த சமயம்; ஏந்து, வசதி.

**தாப்புக்கொள்ளுதல்** – சமயம் பார்த்திருத்தல்.

**தாப்புலி** – வலிமிக்க புலி; ஒரு பழைய பாவகை.

**தாபகம்** – நிலைநிறுத்துகை.

**தாபகன்** – நிலைநிறுத்துபவன்.

**தாபச்சுரம்** – கடுஞ்சுரம்.

**தாபசப்பிரியை** – காண்க: **கொடிமுந்திரி.**

**தாபசன்** – துறவி.

**தாபசி** – துறவி; காண்க: **ஆயா.**

**தாபசுரம்** – காண்க: **தாபச்சுரம்.**

**தாபசோபம்** – மிகு துன்பம்.

**தாபத்திரயம்** – ஆதியான்மிகம், ஆதிதெய்விகம், ஆதி பௌதிகம் என்னும் மூவகைத் துன்பங்கள்.

**தாபதநிலை** – தவ ஒழுக்கம்; கைம்மை நோன்பு.

**தாபதப்பக்கம்** – நீராடல், நிலக்கிடைகோடல், தோலுடுத்தல், எரியோம்பல், உரையாடாமை, சடைபுனைதல், காட்டிலுணவு, கடவுள் பூசை என்னும் தாபதற்குரிய எட்டு வகை ஒழுக்கத்தைக் கூறும் புறத்துறை.

**தாபதப்பள்ளி, தாபதம்** – முனிவர் வாழிடம்.

**தாபதன்** – முனிவன்; சமணமுனிவன்.

**தாபந்தம், தாபந்திரியம்** – சங்கடம்; இரக்கம்; ஆத்திரம்.

**தாபம்** – வெப்பம்; துன்பம்; தாகம்; காடு; முத்திராதாரணம்.

**தாபமாறி** – காண்க: **தான்றி.**

**தாபமானி** – தட்பவெப்பங்களின் அளவுகாட்டும் கருவி.

**தாபரம்** – மலை; உடம்பு; நிலைத்திணைப் பொருள்; மரப்பொது; இடம்; ஆதாரம்; பற்றுக்கோடு; பூமி; கோயில்; இலிங்கம்; உறுதி.

**தாபரன்** – எல்லாவற்றுக்கும் ஆதாரமான கடவுள்.

**தாபரித்தல்** – நிலைபெற்றிருத்தல்; ஆதரித்தல்.

**தாபவாகினி** – வெப்பத்தைப் பரப்புங் கருவி.

**தாபனம்** – நிலைநிறுத்துகை; நிலையிடப் பெற்றது; பிரதிட்டைசெய்கை; நிறுவனம்.

**தாபனன்** – சூரியன்.

**தாபி** – புத்தன்; யமுனையாறு; வறிஞன்.

**தாபிஞ்சம்** – ஆமணக்கஞ்செடி; பச்சிலைமரம்.

**தாபித்தல்** – நிலைபெறச்செய்தல்; பிரதிட்டை செய்தல்; மெய்ப்பித்தல்.

**தாபிதம்** – நிலைநிறுத்தப்பட்டது; சூடு; நிலை நிறுத்துகை; பிரதிட்டைசெய்கை.

**தாபே** – சார்ந்தவன்; வசம்.

**தாம்** – அவர்கள்; மரியாதை குறிக்கும் முன்னிலைச் சொல்; ஓரசைச்சொல்; ஒரு சாரியை; தாகம்; விலை.

**தாம்பணி** – மாடுகளை வரிசையாகப் பிணைக்கும் நீண்ட கயிறு.

**தாம்பத்தியம்** – குடும்பவாழ்க்கை.

**தாம்பாளம்** – ஒரு தட்டுவகை.

**தாம்பிகம்** – பகட்டு.

**தாம்பிகன்** – பகட்டன்.

**தாம்பிரகம்** – செம்பு.

**தாம்பிரகருப்பம்** – துரிசு.

**தாம்பிரகாரன்** – செம்பு கொட்டியாகிய கன்னான்.

**தாம்பிரசூடம்** – சேவல்; நடுவிரலும் சுட்டு விரலும் பெருவிரலும் தம்மில் நுனியொத்துக் கூடி வளைந்து சிறுவிரலும் அணிவிரலும் முடங்கி நிமிரும் இணையாவினைக்கைவகை.

**தாம்பிரபத்திரம்** – செப்புப் பட்டயம்.

**தாம்பிரபன்னி** – தாமிரபருணி ஆறு.

**தாம்பிரம்** – செம்பு; சிவப்பு.

**தாம்பிரவன்னி** – காண்க: **தாம்பிரபன்னி.**

**தாம்பு** – கயிறு; தாமணிக் கயிறு; ஊஞ்சல்; அணையில் நீர் செல்லுதற்கென விட்ட வழி.

**தாம்புக்கயிறு** – கயிறு.

**தாம்புந்தோண்டியுமாதல்** – மிக ஒற்றுமையாயிருத்தல்; இறைக்கும் கயிறும் குடமும் போன்றிருத்தல்.

**தாம்புலோவல்லி** – மஞ்சாடிமரம்.

**தாம்பூரவல்லம்** – வாழை.

**தாம்பூலங்கொடுத்தல்** – வெற்றிலைபாக்கு அளித்து முகமன்செய்தல்; வெற்றிலைபாக்கு அளித்துக் கூட்டம் கலைத்தல்; வேலையிலிருந்து நீக்க ஆணைதருதல்.

**தாம்பூலதாரணம்** – வெற்றிலைபாக்குப் போடுகை.

**தாம்பூலம்** – வெற்றிலைபாக்கு.

**தாம்பூலம்வைத்தல்** – திருமணத்திற்கு வருமாறு வெற்றிலைபாக்கு வைத்து ஒவ்வொருவரையும் அழைத்தல்; இரகசியத்தை வெளியாக்குதல்.

**தாம்பூலமாற்றுதல்** – திருமணம் உறுதிசெய்தல்.

**தாம்பூலவல்லி** – வெற்றிலைக்கொடி.

**தாம்பூலவாககன்** – அடைப்பைக்காரன்.

**தாம்பூலி** – காண்க: **தாம்பூலவல்லி.**

**தாம்பூலிகன்** – வெற்றிலை வாணிகன்.

**தாம்போகி** – ஆற்றின் குறுக்கணையில் தடுப்பின்றி நீர் ஓடுவதற்குள்ள பகுதி; ஏரியில் மிகுதியான நீர் தானே வெளிச்செல்வதற்குக் கட்டிய மதகு.

**தாமசபதார்த்தம்** – தமோகுணத்தை அதிகரிக்கச் செய்யும் கள், இறைச்சி முதலியன.

**தாமசம்** – காண்க: **தமோகுணம்; தாமதம்.**

**தாமசாத்திரம்** – பகைவருடைய கண்ணும் மனமும் இருளடையச் செய்யும் அம்புவகை.

**தாமசித்தல்** – காண்க: **தாமதித்தல்.**

**தாமணி** – கயிறு; மாட்டைப் பிணிக்குந் தாம்பு; மாடு கன்றுகளின் கழுத்தில் கட்டியிருக்கும் தும்பு; கப்பற்பாயின் பின்பக்கக் கயிறு.

**தாமதம்** – காண்க: **தமோகுணம்; தாமசாத்திரம்;** மந்தகுணம்; காலநீட்டம்.

**தாமதவேளை** – தீயநாளின் கடைப்பகுதி.

**தாமதித்தல்** – காலந்தாழ்த்தல்; தடைப்படுதல்; மனமின்றி இருத்தல்.

**தாமநிதி** – ஒளியின் இருப்பிடமான சூரியன்.

**தாமநூல்** – ஆயுள்வேதம்.

**தாமம்** – பூமாலை; கயிறு; வடம்; பரமபதம்; நகரம்; ஊர்; மலை; இடம்; உடல்; ஒழுங்கு; பூ; கொன்றைமரம்; சந்தனம்; ஒளி; போர்க்களம்; யானை; புகழ்; பிறப்பு; பதினெட்டுக் கோவையுள்ள மாதர் இடையணி; முடியுறுப்பு ஐந்தனுள் ஒன்று.

**தாமரசம்** – காண்க: **செந்தாமரை;** செம்பு.

**தாமரை** – தாமரைக்கொடி; ஒரு பேரெண்; பதும வியூகம்; எச்சில் தழும்பு.

**தாமரைக்கண்ண(ணா)ன்** – தாமரை போன்ற கண்ணுடையவனான திருமால்.

**தாமரைக்கொட்டை** – பொகுட்டு; மகளிர் தலையணிவகை.

**தாமரைச்சிறகி** – நீர்வாழ் பறவைவகை.

**தாமரைநண்பன், தாமரைநாதன், தாமரைநாயகன்** – தாமரைக்குக் காதலனான சூரியன்.

**தாமரைநூல்** – தாமரைத்தண்டின் நூல்.

**தாமரைப்பாசினி** – அரிதாரம்.

**தாமரைப்பீடிகை** – புத்தரது திருவடிப்பீடம்.

**தாமரைமணி** – தாமரை விதை; தாமரை மணியாலாகிய மாலை.

**தாமரைமுகை** – தாமரைமுகை வடிவான தேர் மொட்டு.

**தாமரையாசனன்** – தாமரையில் வீற்றிருக்கும் பிரமன்.

**தாமரையாசனி, தாமரையாள்(ள்)** – திருமகள்; அரிதாரம்.

**தாமரைவளையம்** – தாமரைத்தண்டு.

**தாமரைவற்றல்** – வற்றலாகச் செய்த தாமரைக் கிழங்கு.

**தாமரைவாசி** – காண்க: **தாமரையால்(ள்).**

**தாமலகி** – காண்க: **கீழாநெல்லி.**

**தாமளை** – புன்னைமரம்.

**தாமன்** – சூரியன்.

**தாமான்** – கப்பலின் பின்பக்கத்துக் கயிறு.

**தாமிச்சிரம்** – பேரிருள்; மாயை; ஒரு நரகவகை.

**தாமிரக்கருணி** – மேற்றிசைப் பெண்யானை.

**தாமிரசாசனம்** – நிலம் முதலியவற்றைக் கொடுத்ததைக் குறிக்கும் செப்பேடு.

**தாமிரசிகி** – செந்நிறக் கொண்டையுடைய சேவல்.

**தாமிரப்பட்டயம்** – செப்பேட்டுச் சாசனம்.

**தாமிரப்பல்லவம்** – அசோகமரம்.

**தாமிரபீசம்** – காண்க: **கொள்.**

**தாமிரம்** – செம்பு.

**தாமிரிகை** – குன்றிக்கொடி.

**தாமிரை** – காண்க: **தாமிரம்.**

**தாமீகன்** – பகட்டன்.

**தாமை** – தாம்புக்கயிறு.

**தாமோதரன்** – ஆய்ச்சியர் பிணித்த கயிற்றை இடுப்பிலுடையவன், கண்ணன்.

**தாய்** – அன்னை; ஐவகைத் தாயருள் ஒருத்தி; தாயாகக் கருதப்படும் அரசன் தேவி, குருவின் தேவி, அண்ணன் தேவி, மகள் கொடுத்தவள் இவர்களுள் ஒருத்தி.

**தாய்க்கட்டுமனை** – வீட்டின் நடுப்பகுதி.

**தாய்க்கண்** – தேங்காயின் மூன்று கண்களில் மேலே உள்ள கண்.

**தாய்க்கரும்பு** – விதையாக நட்ட முதற்கரும்பு.

**தாய்க்காணி** – முதல்தர நிலம்.

**தாய்க்கால்வழி** – காண்க: **தாய்வழி.**

**தாய்க்கிழங்கு** – மூலமாயுள்ள முதற்கிழங்கு.

**தாய்க்கீழ்ப்பிள்ளை** – எட்டிக்கன்று.

**தாய்ச்சங்கம்** – முதலில் தோன்றிய அவை.

**தாய்ச்சி** – கருவுற்றவள்; முலைப்பால் கொடுக்குந் தாய்; விளையாட்டில் தலைமையாள்; விளையாட்டில் தொடவேண்டும் இடம்; மூலம்.

**தாய்ச்சீட்டு** – மூலஓலை.

**தாய்ச்சீலை** – கோவணம்.

**தாய்தந்தை** – பெற்றோர்.

**தாய்தலைத்தென்றல்** – நேராக அடிக்கும் முதல் தென்றல்.

**தாய்ப்பாட்டன்** – தாயைப் பெற்ற தகப்பன்.

**தாய்மாமன்** – தாயுடன் பிறந்தவனான அம்மான்.

**தாய்வழி** – உறவுமுறையில் தாயின் தொடர்பு.

**தாய்வாய்க்கால்** – கிளைக் கால்கள் பிரியும் தலை வாய்க்கால்.

**தாய்வேர்** – ஆணிவேர்.

**தாயக்கட்டை** – சூதாட்டத்தில் உருட்டும் கவறு.

**தாயகம்** – அடைக்கலம்; பிறந்த இடம்.

**தாயத்தவர்** – உறவுமுறைப் பங்காளிகள்.

**தாயப்பதி** – பிறந்த ஊர்; தனக்கு உரிமையாகக் கிடைத்துள்ள வாழிடம் அல்லது ஊர்.

**தாயபந்து** – உடன்பிறந்தான்.

**தாயபனுவல்** – இடையிடையே இலக்கணங்கள் கலந்துவரும் இலக்கியவகை.

**தாயபாகம்** – உரிமைப்பங்கு.

**தாயம்** – பங்கு; தந்தைவழிச் சுற்றம்; கவறு; சூதாடுகருவி; துன்பம்; சமயவாய்ப்பு; கொடை; குழந்தை விளையாட்டுவகை; கவறு உருட்ட விழும் ஒன்று என்னும் எண்; பாகத்திற் குரிய முன்னோர் பொருள்; தாமதித்தல்; மேன்மை.

**தாயம்போடுதல்** – கவறு உருட்டி ஒன்று எனும் எண் போடுதல்.

**தாயமாடுதல்** – கவறாடுதல்; கட்டமாடுதல்; காலம் தாழ்த்தல்.

**தாயவிபாகம்** – உரிமைப் பொருளைப் பிரித்தல்.

**தாயாதி** – ஒரு குடியில் பிறந்த உரிமைப் பங்காளி.

**தாயான்** – ஒன்பது என்னும் குழூஉக்குறி.

**தாயான்புலு** – தொண்ணூறு என்னும் குழூஉக்குறி.

**தாயித்து** – மந்திரத்தகடு அடங்கிய அணி; அணிவகை.

**தாயுமானவர், தாயுமானார்** – திருச்சிராப்பள்ளிச் சிவபெருமான்; ஒரு சைவப் பெரியார்.

**தாயேடு** – காண்க: **தாயோலை.**

**தாயைக்கொல்லி** – தன் தாயைக் கொலைசெய்த மாபாவி; குலை ஈன்றதால் நசித்துப்போகிற வாழை முதலியன; புல்லுருவி.

**தாயோலை** – மூலஓலை, முதலோலை.

**தார்** – பூ; பூவரும்பு; பூமாலை; பூங்கொத்து; கிண்கிணிமாலை; சங்கிலி; ஒழுங்கு; படை; கொடிப்படை; கிளிக்கழுத்தின் கோடு; பிடரி மயிர்; கயிறு; காண்க: தார்க்குச்சு; தோற்கருவி வகை; உபாயம்; ஏரி உள்வாயிலுள்ள புன் செய்; உடைமையைக் குறிக்கும் ஒரு சொல்; வீடு; கீல் எண்ணெய்.

**தார்க்கணித்தல்** – சான்று காட்டி நிறுவுதல்; தடுத்துச் சொல்லுதல்; தாமதப்படுத்துதல்.

**தார்க்காட்டுதல்** – போக்குக்காட்டுதல்; தாமதப் படுத்துதல்.

**தார்க்கிகன்** – தருக்கநூல் வல்லவன்.

**தார்க்கியன்** – கருடன்.

**தார்க்குச்சு** – நுனியில் இருப்புமுள் பதிக்கப்பட்ட மாடு ஓட்டும் கோல்.

**தார்சுக்கட்டடம்** – மெத்தைவீடு.

**தார்ட்டியம்** – வலிமை.

**தார்த்தராட்டிரர்** – திருதராட்டிரன் பிள்ளைகளான துரியோதனன் முதலியோர்.

**தார்தாராய்** – துண்டுதுண்டாக.

**தார்நிலை** – அரசனைப் பகைவர் சூழ்ந்தவழி வேறிடத்திருந்த அவன் படைத்தலைவர் முதலியோர் விரைந்துவந்து உதவுதலைக் கூறும் புறத்துறை; பகைவரின் முன்னணிப் படையைத் தடுப்பேன் என்று ஒரு வீரன் தனது அஞ்சாமையை வெளிப்படுத்தும் புறத் துறை.

**தார்ப்பாய்ச்சுதல்** – மூலைக்கச்சம் கட்டுதல்.

**தார்ப்பிடம்** – காண்க: **மரமஞ்சள்.**

**தார்ப்பூ** – அரசருக்குரிய அடையாளப்பூ.

**தார்மபத்தனம்** – மிளகு.

**தார்மிகன்** – அறச்சிந்தனையாளன்.

**தார்யம்** – தாங்கப்படுவது.

**தாரக்கம்** – பத்திய உணவு.

**தாரகத்தான்** – பன்றிக்கொம்பு.

**தாரகப்பிரமம்** – பிரணவ வடிவமான பரப்பிரமம்.

**தாரகம்** – கடப்பதற்குரிய கருவி; ஆதாரம்; பிரணவமந்திரம்; விண்மீன்; உச்சவிசை; பத்திய உணவு.

**தாரகற்காய்ந்தாள்** – தாரகாசுரனைக் கொன்ற காளி.

**தாரகற்செற்றோன்** – தாரகனைக் கொன்ற முருகக்கடவுள்.

**தாரகன்** – ஆதாரமானவன்; கடப்பிப்பவன்; முருகக்கடவுளால் கொல்லப்பட்ட சூரபதுமன் தம்பி; காளியால் கொல்லப்பட்ட அசுரன்.

**தாரகாகணம்** – விண்மீன் கூட்டம்.

**தாரகாபதி** – விண்மீன்களுக்கு தலைமையான நிலா; வியாழன்.

**தாரகாரி** – தாரகனைக் கொன்ற முருகக்கடவுள்; காளி.

**தாரகை** – விண்மீன்; கண்மணி; பூமி.

**தாரகைக்கோவை** – ஏகாவலி என்னும் அணிகலன்.

**தாரகைமாலை** – அருந்ததிபோன்ற கற்புடை மகளிர்க்குள்ள இயற்கைக் குணங்களைப் பாடும் இலக்கியவகை.

**தாரண** – அறுபதாண்டுக் கணக்கில் பதினெட்டாம் ஆண்டு.

**தாரணநட்சத்திரம்** – மூலம், ஆயிலியம், கேட்டை, திருவாதிரை என்னும் நாண்மீன்கள்.

**தாரணம்** – தரிக்கை; உறுதிப்பாடு; நிலைத்திருக்கை; காண்க: **தாரணநட்சத்திரம்**; ஓர் யோகம்.

**தாரணி** – பூமி; மலை; யமன்.

**தாரணித்தல்** – தரித்தல்; தாங்குதல்.

**தாரணை** – தரித்தல்; உறுதி; நினைவில் வைத்தல்; மனத்தை ஒன்றன்மீது சிந்தை வைத்திருத்தலாகிய அட்டாங்க யோகத்துள் ஒன்று; ஒழுங்கு; வீதம்; நெல் முதலிய பண்டங்களின் விலை.

**தாரதண்டுலம்** – வெண்சோளம்.

**தாரதம்மியம்** – ஏற்றத்தாழ்வு.

**தாரபரிக்கிரகம்** – திருமணம்.

**தாரம்** – மனைவி; திருமணநிலை; அரிதாரம்; அரும்பண்டம்; வெள்ளி; வெண்கலம்; நா; ஏழிசையுள் ஒன்று; வீணைநரம்பில் ஒன்று; விண்மீன்; நீர்; பார்வை; முத்து; பாதரசம்; சாதிலிங்கம்; எல்லை; பச்சைப்பாம்பின் நஞ்சு; எடுத்தலோசை; நிடாதசுரம்; பிரணவம்; தரா என்னும் உலோகம்; தெய்வலோக மரங்களுள் ஒன்றாகிய மந்தாரம்; தேவதாரமரம்; கயிறு; மிதுனராசி; சிற்றரத்தை; நாரத்தை.

**தாரவெழுத்து** – ஏழாவது சுரமாகிய தாரத்தைக் குறிக்கும் 'ஔ' என்னும் எழுத்து.

**தாரா** – விண்மீன்; நாரைவகை; ஒரு வாத்துவகை; வாத்துநடை; நீர்த்தாரை; ஒரு சமண தேவதை.

**தாராகணம்** – விண்மீன்கூட்டம்.

**தாராகிருகம்** – நீர்த்தாரையால் குளிர்ச்சி தருமாறு அமைத்த மாளிகை.

**தாராங்கம்** – வாள்.

**தாராங்குரம்** – ஆலங்கட்டி.

**தாராசந்தானம்** – நீர்த்தாரைபோல் நீங்காது வரும் தொடர்ச்சி.

**தாராட்டு** – தாலாட்டு.

**தாராட்டுதல்** – தாலாட்டுதல்.

**தாராடம்** – குதிரை; மதயானை; மேகம்; சாதகப் புள்.

**தாராதத்தம்** – நீர்வார்த்துப் பெண்ணைக் கொடுத்தல்.

**தாராத(தா)ரம்** – மேகம்.

**தாராதீனன்** – மனைவிக்கு அடங்கி நடப்போன்.

**தாராபதம்** – வானம்.

**தாராபதி** – உடுக்கள் தலைவனான சந்திரன்; தாரையின் கணவனான வியாழன்.

**தாராபந்தி** – நாண்மீன் வரிசை.

**தாராபலம்** – நாண்மீன் பலன்.

**தாராமுக்கன்** – பாம்புவகை.

**தாராவணி** – காற்று.

**தாராளம்** – உதாரகுணம், கொடைப்பண்பு; மிகுதி; விசாலம்; ஊக்கம்; சாதுரியம்; வெளிப்படை.

**தாரி** – வழி; முறைமை; விலைவாசி; அரிதாரம்; வண்டு முதலியவற்றின் ஒலி; தரிப்பவன் என்னும் பொருள்படும் விகுதிவகை.

**தாரிகம்** – தீர்வை.

**தாரிசம்** – ஒப்பந்தம்; நியாயமானது.

**தாரிணி** – பூமி; இலவமரம்.

**தாரித்தல்** – உடைத்தாதல்; பொறுத்தல்.

**தாரித்திரம்,** **தாரித்திரியம்** – காண்க: **தரித்திரம்.**

**தாரிப்பு** – உதவி; மதிப்பு; தாங்கிப்பேசுதல்; மேம்படச்செய்தல்.

**தாரிராட்டினம்** – தார்நூல் சுற்றும் இயந்திரம்.

**தாரின்வாழ்நன்** – தார்நூலால் வாழ்பவனான நெசவுத் தொழிலாளன்.

**தாரு** – மரம்; மரக்கிளை; மரத்துண்டு; காண்க: **தேவதாரு.**

**தாருகம்,** **தாருகவனம்** – காண்க: **தாருகாவனம்.**

**தாருகவிநாசினி,** **தாருகற்செற்றாள்,** **தாருகாரி** – தாருகனைக் கொன்ற காளி.

**தாருகாவனம்** – ஒரு தபோவனம், முனிவர் பலர் தவம்செய்து வாழ்ந்த சிறப்புடைய காடு.

**தாருண்ணியம்** – இளம்பருவம்.

**தாருணம்** – அச்சம்.

**தாருணி** – காண்க: **நத்தைச்சூரி.**

**தாருவனம்** – காண்க: **தாருகாவனம்.**

**தாரை** – ஒழுங்கு; வரிசை; கோடு; அடிச்சுவடு; பெருமழை; நேராக ஓடல்; கண்மணி; கண்; கூர்மை; சிறு சின்னம்; சீலை; நீர்வீசுங்கருவி; மாட்டின் மலவாய்ப்பக்கம்; நீர் ஒழுக்கு; ஆயுதமடல்; வயிரக்குணங்களுள் ஒன்று; வழி; ஆடையின் விலக்கிழை; நீண்ட ஊதுங்குழல்; எக்காளம்; சக்கரப்படை; விண்மீன்; வாலியின் மனைவி; வியாழன் மனைவி குதிரை நடை.

**தாரைகவணி** – கோடு உள்ள ஆடைவகை.

**தாரைப்பட்டு** – கோடுகள் அமைந்த பட்டுவகை.

**தாரைமழுங்கல்** – வயிரக்குற்றங்களுள் ஒன்று.

**தாரைவார்த்தல்** – நீர்வார்த்துக் கொடுத்தல்; தொலைத்துவிடுதல்.

**தால்** – நாக்கு; காண்க: **தாலாட்டு**; பிள்ளைத் தமிழ் உறுப்புகளுள் ஒன்று.

**தாலகி** – கள்.

**தாலகேதனன், தாலகேது** – பனை எழுதிய கொடியை உடையோன்; பலராமன்; வீடுமன்.

**தாலப்பருவம்** – பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் பாட்டுடைத் தலைவன் தலைவியரைத் தாலாட்டுதலைக் கூறும் பகுதி.

**தாலப்புல்** – பனை.

**தாலபத்திரம்** – பனையோலை; காதில் அணியும் சுருளோலை.

**தாலபத்திரி** – காண்க: **மரமஞ்சள்.**

**தாலபீசநியாயம்** – பனை முந்தியதோ கொட்டை முந்தியதோ என்பதுபோல வழக்குரைக்கும் பீசாங்குர நியாயம்.

**தாலபோதம்** – காண்க: **ஆவிரை.**

**தாலம்** – பனைமரம்; கூந்தற்பனைமரம்; காண்க: **மடல்மா; கூந்தற்கமுகு; அனுடநாள்;** பூமி; நா; தட்டம்; உண்கலம்; தால வடிவிலுள்ள யானைக்காது; தேன்; உலகம்; மூன்று பிடிகொண்ட நீட்டலளவு.

**தாலமூலி** – காண்க: **நிலப்பனை.**

**தாலவ்வியம்** – இடையண்ணத்தில் இடைநாவின் முயற்சியால் பிறக்கும் எழுத்து.

**தாலவட்டம்** – விசிறி; யானைச்செவி; யானை வால்; பூமி.

**தாலவிருந்தம்** – பேராலவட்டம்; விசிறி.

**தாலாட்டு** – குழந்தைகளை உறங்கச் செய்வதற்காக நாவசைத்துப் பாட்டுப்பாடுகை; 'தாலேலோ' என்று முடியும் ஒருவகைப் பாட்டு; தாலாட்டுவதற்கு ஏற்றதாய்ப் பாட்டுடைத் தலைவரின் சிறந்த செய்கைகளைத் தெரிவிக்கும் பல கண்ணிகளையுடைய ஒரு நூல்வகை.

**தாலாட்டுதல்** – குழந்தைகளைத் தொட்டிலில் இட்டு உறங்கச்செய்யப் பாட்டுப்பாடுதல்.

**தாலாப்பு** – குளம்.

**தாலாலம்** – பழிமொழி.

**தாலி** – திருமணத்தில் கணவன் மனைவிக்குக் கழுத்தில் கட்டும் அடையாள உரு; காண்க: **ஐம்படைத்தாலி; ஆமைத்தாலி;** சிறுவர் கழுத்தி லணியும் ஐம்படைத்தாலி; கீழ்காய்நெல்லி; மட்பாத்திரம்; பனை; பலகறை.

**தாலிக்கட்டு** – திருமணம்.

**தாலிக்கயிறு** – மாங்கலியம் கோப்பதற்குரிய மஞ்சள் பூசிய சரடு.

**தாலிக்கொடி** – தாலி கோப்பதற்கான பொற் சரடு.

**தாலிக்கொழுந்து** – ஆமைத்தாலி; பனையின் வெண்குருத்தாலான அணிகலன்.

**தாலிக்கோவை** – தாலியுருவோடு கோப்பதற்கான பலவகை உருக்கள்.

**தாலிகட்டுதல்** – திருமணம்புரிதல்.

**தாலிச்சரடு** – காண்க: **தாலிக்கொடி.**

**தாலிப்பிச்சை** – சுமங்கலியாய் ஒருத்தி வாழுமாறு அவள் கணவன் உயிரைக் காப்பாற்றுகை.

**தாலிப்பொட்டு** – வட்டமாகச் செய்த தாலியுரு.

**தாலிபெருக்கிக்கட்டுகை** – கலியாண காலத்தில் கட்டப்பட்ட தாலியுடன் மணிகளைக் கோக்கும் சடங்கு; தாலியைப் பழைய நூலிலிருந்து வேறொரு சரட்டில் கோத்தல்.

**தாலிபெருகுதல்** – தாலிச்சரடு அறுதல்.

**தாலிமணிவடம்** – தாலியோடு மணிகள் சேர்ந்த மாங்கலியக்கொடி.

**தாலியம்** – காண்க: **பாதிரி.**

**தாலியறுத்தல்** – கணவனை இழந்து கைம்பெண்ணாதல்; துன்பத்துக்குள்ளாதல்.

**தாலீபுலாகநியாயம்** – ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்னும் வழக்குப்போல ஒன்றன் ஒருபுடைத் தன்மையிலிருந்து அதன் முழு நிலையையும் அறியும் முறை.

**தாலு** – நா; அண்ணம்.

**தாலுக்கா** – மாவட்டத்தின் உட்பிரிவு.

**தாலுகண்ணி** – காண்க: **வெள்ளைக்காக்கணம்.**

**தாலுகா** – காண்க: **தாலுக்கா.**

**தாலுகை** – மேனாப்பல்லக்கு.

**தாலுவுறுத்துதல்** – தாலாட்டுதல்.

**தாலூரம்** – சுழல்காற்று; நீர்ச்சுழல்; குங்குலிய வகை.

**தாவகம்** – வனம்; காட்டுத்தீ.

**தாவசி** – தவமுடையவன்.

**தாவட்டம்** – சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று; ஒரு கல்வகை.

**தாவடம்** – கழுத்தணிமாலை; உருத்திராக்க மாலை; பூணூலை மாலையாகத் தரிக்கு முறை; இருப்பிடம்.

**தாவடி** – பயணம்; போர்; தாண்டுகால்.

**தாவடித்தோணி** – கரைவரையில் சென்று பகைக் கப்பலை அழிக்கும் தோணி.

**தாவடிபோதல்** – படையெடுத்தல்.

**தாவடியிடுதல்** – தாவி அடியிட்டு அளத்தல்.

**தாவணி** – மாட்டைப் பிணிக்குந் தாம்பு; மாடுகளைக் கூட்டமாகக் கட்டுமிடம்; சிறு பெண்களின் மேலாடை; குதிரையின் மேலாடை; காண்க: **கண்டங்கத்தரி.**

**தாவணியடித்தல்** – காரியமின்றி ஒருவன் வீட்டில் தங்குகை.

**தாவந்தம்** – சங்கடம்; இரக்கம்; வறுமை; ஆத்திரம்; நரகம்.

**தாவம்** – காடு; தீ; காட்டுத்தீ; வெப்பம்; மரப்புழு; துன்பம்.

**தாவரசங்கமம்** – இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்கள்; வீட்டுப்பண்டங்களான அசையும் பொருளும் நிலம், வீடு முதலிய அசையாப் பொருள்களும்; சிவபெருமானது திருமேனிகளாகக் கருதப்படும் இலிங்கமும் அடியார்களும்.

**தாவரம்** – நிலைத்திணைப் பொருள்; ஆதாரம்; உறுதி; மரப்பொது; இடம்; உடல்; இலிங்கம்.

**தாவரலிங்கம்** – திருக்கோயிலிலுள்ள சிவலிங்கம்.

**தாவரன்** – கடவுள்.

**தாவரித்தல்** – தாங்குதல்; காப்பாற்றுதல்.

**தாவல்** – தாண்டல்; பரப்பு; வருத்தம்.

**தாவழக்கட்டு** – கால்நடைகளின் முன்னங்காலிற்கும் கழுத்திற்கும் கட்டும் கயிறு.

**தாவளக்காரர்** – தேசாந்தர வணிகர்; பொதிமாட்டுக்கார வணிகர்.

**தாவளம்** – தங்குமிடம்; மருதநிலத்தூர்; பற்றுக்கோடு.

**தாவளம்போடுதல்** – காண்க: **தாவணியடித்தல்.**

**தாவளி** – கம்பளம்; வெண்மை; காண்க: **கண்டங்கத்தரி.**

**தாவளியம்** – வெண்மை.

**தாவளை** – நோய் தணிந்திருக்கை; ஒன்றைவிட மேலாயிருக்கை.

**தாவனம்** – தூய்மைசெய்கை; தோற்றுவித்தல்.

**தாவா** – வழக்கு; தடை.

**தாவாரம்** – காண்க: **தாழ்வாரம்.**

**தாவானலம்** – காட்டுத்தீ.

**தாவு** – பாய்கை; செலவு; குதிரைநடை; எதிர்ப்பு; கேடு; வலிமை; பற்றுக்கோடு; துறைமுகம்; உறைவிடம்; பள்ளம்.

**தாவுதல்** – தாண்டுதல்; தழைத்தல்; பறத்தல்; சாய்தல்; குதித்தல்; கடத்தல்; பரத்தல்; ஊடுசெல்லுதல்; பாய்ந்து எதிர்த்தல்; அகங்கரித்தல்; கெடுதல்; ஒழிதல்.

**தாவுவண்ணம்** – தாஅவண்ணம், இடையிட்டு வரும் எதுகையுடைய சந்தம்.

**தாழ்** – தாழ்ப்பாள்; சீப்பு; சுவர்ப்புறத்து நீண்ட உத்திரம்; தாழக்கோல், திறவுகோல்; முலைக்கச்சு; நீளம்; வணக்கம்.

**தாழ்க்கோல்** – தாழக்கோல், தாழைத் திறக்குங் கோல், திறவுகோல்.

**தாழ்ச்சி** – கீழ்மை; தாழ்வு; தாழ்மை; குறைவு; பணிவை வெளிப்படுத்தும் சொல்; வணக்கம்; ஆழம்; இகழ்ச்சி; ஏலாமை; காலநீட்டிப்பு; தவறு; நிலைகெடுதல்; விழுதல்.

**தாழ்ச்சிஉயர்ச்சி** – சிறுமை பெருமை.

**தாழ்த்துதல்** – அமிழ்த்துதல்; கீழ்ப்படுத்துதல்; குறைத்தல்; சாய்த்தல்; தாமதித்தல்; தங்கச் செய்தல்.

**தாழ்தல்** – அமிழ்ந்துதல்; சாய்தல்; குறைதல்; சரிதல்; நிலைகெடுதல்; தாமதித்தல்; தங்குதல்; தொங்குதல்; ஈடுபடுதல்; விரும்புதல்; ஆசைப்பெருக்கம்; வணங்குதல்.

**தாழ்ந்தார்** – பணியுள்ளவர்; இழிந்தோர்.

**தாழ்ந்துகொடுத்தல்** – இணங்கிப்போதல்.

**தாழ்ந்துபடுதல்** – ஓரிடத்தே சேர்ந்து தங்குதல்.

**தாழ்ந்துபோதல்** – ஒப்புமையில் குறைந்து போதல்; இழிந்த நிலையடைதல்; தாழ்ந்து கொடுத்தல்.

**தாழ்ப்பம்** – ஆழம்.

**தாழ்ப்பாள்** – கதவடைக்குந் தாழ்.

**தாழ்ப்பாளர்** – உரிய காலத்தை எதிர்பார்த்திருப்பவர்.

**தாழ்ப்பு** – இறக்குகை; நீரில் அமிழ்த்துகை; புதைக்கை; தாமதம்.

**தாழ்புயல்** – காலிறங்கின மேகம்.

**தாழ்மை** – பணிவு; இழிவு; தாமதம்; வறுமை; கீழ்மை.

**தாழ்வடம்** – கழுத்தணி; உருத்திராக்கமாலை.

**தாழ்வர்(ரை)** – மலையடிவாரம்.

**தாழ்வறை** – நிலவறை.

**தாழ்வாய், தாழ்வாய்க்கட்டை** – மோவாய்.

**தாழ்வாரம்** – வீட்டிறப்பு, தாழ்ந்த இறப்பு; வீட்டைச் சாரப் புறத்தே சாய்வாக இறக்கப்பட்ட இடம்.

**தாழ்வு** – பள்ளம்; குறுமை; அவமானம்; குற்றம்; தொங்கல்; மலையடிவாரம்; தங்குமிடம்; அடக்கம்; வணக்கம்; துன்பம்.

**தாழக்கோல்** – தாழ்ப்பாள்; திறவுகோல்.

**தாழங்காய்** – தாழைக்காய்; பயனற்றவன்.

**தாழஞ்சங்கு** – வாயகன்ற சங்கு; இளங்குழந்தைகளுக்குப் பால் புகட்டும் சங்கு.

**தாழம்** – ஓசை முதலியவற்றின் தாழ்வு; அமைதி; தாமதம்.

**தாழம்படுதல்** – ஓசை தாழ்ந்துவருதல்.

**தாழறை** – சிறிய அறை.

**தாழி** – வாயகன்ற சால்; இறந்தோரைப் புதைக்க உதவும் பாண்டம்; வைகுண்டம்; சாடி; பரணிநாள்; அரிதாரம்; சிவதை; கடல்.

**தாழிசை** – தரவினின்றும் சுருங்கியதாய் வருவது; பாவினங்களுள் ஒன்று.

**தாழை** – செடிவகை; தென்னைமரம்; தென்னம் பாளை.

**தாள்** – கால்; மரம் முதலியவற்றின் அடிப்பகுதி; பூ முதலியவற்றின் காம்பு; வைக்கோல்; முயற்சி; தாழ்ப்பாள்; படி; திறவுகோல்; ஒற்றைக் காகிதம்; சட்டையின் கயிறு; விளக்குத்தண்டு; விற்குதை; ஆதி; கடையாணி; வால்மீன்; சிறப்பு; கொய்யாக் கட்டை; தாடை; கண்டம்.

**தாளக்கட்டு** – இசை ஒத்துஅமைகை.

**தாளக்கம், தாளகம்** – அரிதாரம்.

**தாளஞ்சொல்லுதல்** – பாட்டுக்கு ஏற்பச் சுரம் பாடுதல்; கூத்தில் சுரக்கட்டுப் பாடுதல்.

**தாளடி** – கதிர்த்தாள்; கதிரை இரண்டாம் முறை அடிக்கை; முதல் விளைவு எடுத்ததும் நடக்கும் வேளாண்மை; இருபூநிலம்; சாகுபடிக்காலம்.

**தாளடிநடவு** – முதற்போகம் அறுவடையானபின் வயலை உழுது நடுகை.

**தாளப்பிரமாணம்** – இசைத் தாளவறுதி; காண்க: **தாளப்பிராணம்.**

**தாளப்பிராணம்** – காலம், மார்க்கம், கிரியை, அங்கம், கிரகம், சாதி, களை, இலயை, யதி, பிரத்தாரம் என்னும் தாளத்துக்குரிய உறுப்புகள்.

**தாளம்** – பாட்டின் காலத்தை அறுதியிட்டு அளக்கும் அளவு; கைத்தாளக் கருவி; பனைமரம்; கூந்தற்பனைவகை; அரிதாரம்; தாளத்திற்கு இசையக் கூறும் அசைகள்; காண்க: **தாளிசபத்திரி.**

**தாளம்போடுதல்** – தாளங் கொட்டுதல்; வறுமையால் துன்புறுதல்; விடாது கெஞ்சுதல்.

**தாளம்மை** – பொன்னுக்குவீங்கி.

**தாளமானம்** – தாள அளவு.

**தாளவொற்று** – சதி; தாளவுறுப்புகளைத் தவறாது கணக்கிட்டுப் போடும் தாளகதி.

**தாளன்** – பயனற்றவன்.

**தாளாண்மை** – ஊக்கம்; விடாமுயற்சி.

**தாளாளன்** – ஊக்கமுள்ளவன், முயற்சியுடையவன்.

**தாளி** – பனைமரம்; கூந்தற்பனைவகை; மருந்துச் செடிவகை; ஒரு கொடிவகை; அனுடநாள்; மரவகை; மண்ணால் செய்த விளக்கின் அகல்.

**தாளிக்கம்** – தழைப்பு; திடன்.

**தாளிக்கை** – கறிக்குக் கடுகு முதலியவற்றை மணமுண்டாகும்படி யிடுதல்; உயர்ந்த விலை.

**தாளிகை** – இதழ்; செய்தித்தாள், பத்திரிகை.

**தாளிசபத்திரி** – ஒரு மருந்துச்சரக்கு, பெரிய இலவங்கப்பட்டை மரம்; சிறுமரவகை.

**தாளிசம்** – ஒரு செடிவகை.

**தாளித்தல்** – கடுகு முதலியன இட்டு நெய்யில் வறுத்துக் குழம்பு முதலியவற்றில் சேர்த்தல்; மருந்தைச் சுவைப்படுத்துதல்; புனைந்துரைத்தல்; சுண்ணாம்பைக் குழைத்தல்; கண்டித்தல்; செருக்குக்கொள்ளுதல்; தன் நிலைமைக்கு மீறிப் பகட்டாக வாழ்தல்.

**தாளித்துக்கொட்டுதல்** – கடுகு முதலியவற்றை நெய்யில் வறுத்துக் குழம்பு முதலியவற்றிற்கு இடுதல்.

**தாளிதம்** – கறி, குழம்பு முதலியவற்றிற்கு நறுமணமுண்டாக்கக் கடுகு முதலியவற்றைப் பொரித்துக் கொட்டுதல்.

**தாளிப்பனை** – கூந்தற்பனைவகை.

**தாளிப்பு** – காண்க: தாளிதம்; மதர்ப்பு; தற்புகழ்ச்சி.

**தாளிம்பம்** – நுதலணிவகை.

**தாளியடித்தல்** – நெருக்கமாய் முளைத்த பயிர்களை விலக்குவதற்காகவும், எளிதில் களையெடுப்பதற்காகவும் பல முனைகளையுடைய பலகையால் உழுது பண்படுத்துதல்.

**தாளுதல்** – இயலுதல்; பொறுத்தல்; விலை பெறுதல்.

**தாளுருவி** – ஒரு காதணிவகை.

**தாற்பரியம்** – பொருள்; விவரம்; நோக்கம்; ஆவல்; பாராட்டு.

**தாற்றுக்கோல்** – இரும்பு முள்ளையுடைய கோல்; **அங்குசம்.**

**தாற்றுதல்** – கொழித்தல்; தரித்தல்.

**தாற்றுப்பூ** – கொத்துப்பூ.

**தாறு** – வாழை முதலியவற்றின் குலை; பின்புறக் கச்சக்கட்டு; இரேகை; வரையில்; உண்டை நூல் சுற்றும் கருவி; முட்கோல்; மாடோட்டும் கோலிலுள்ள முள்; அங்குசம்; விற்குதை; கீல் **எண்ணெய்.**

**தாறுக்கண்டு** – உண்டை நூல் கண்டு; தறிநாடா.

**தாறுகன்னி** – வெள்ளைக் காக்கணங்கொடி.

**தாறுதாறாய்க்கிழித்தல்** – சிறு துண்டுகளாகக் கிழித்தல்.

**தாறுபாய்ச்சிக்கட்டுதல்** – மூலக்கச்சம் கட்டுதல்.

**தாறுமாறாய்ப் பேசுதல்** – முன்பின் மாறுபடப் பேசுதல்; பிதற்றுதல்; வைதல்.

**தாறுமாறு** – ஒழுங்கின்மை; குழப்பம்; எதிரிடை; முறையின்மை; மரியாதைக் குறைவு.

**தான்** – படர்க்கை ஒருமைப் பெயர்; தேற்றச் சொல்; அசைச்சொல்; முழுப் புடைவை; குழம்பில் போடப்படும் காய்கறித்துண்டம்; 'அதுவன்றி இஃது ஒன்று' என்று பொருள் படுவதோர் இடைச்சொல்.

**தான்குறியிடுதல்** – உலகத்து வழக்கமின்றித் தானே ஒரு பெயரிட்டு ஆளுகையாகிய உத்தி.

**தான்மிகன்** – அறச்சிந்தையாளன்.

**தான்றி** – தான்றிமரம்; மருதோன்றி; திரிபலையுள் ஒன்று; எல்லை.

**தான்றோன்றி** – தானாகத் தோன்றியது; சுதந்தரன்; கடவுள்.

**தானக்கணக்கு** – கோயில் உத்தியோகங்களுள் ஒன்று.

**தானக்காரர்** – கோயிற் சொத்துகளை மேற்பார்வையிடுபவர்.

**தானக்கை** – தகுந்த இடம்; உடம்பின் உயிர் நிலைப் பகுதி.

**தானகம்** – ஒரு கூத்துவகை; பண்ணினை விவரித்தல்.

**தானசாசனம்** – தானம் கொடுத்ததற்குரிய பத்திரம்.

**தானசீலம்** – கொடைக்குணம்.

**தானசீலன்** – ஈகையாளன்.

**தானசூரன்** – காண்க: **தானவீரன்.**

**தானத்தார்** – கோயில் அதிகாரிகள்.

**தானத்தான்** – சிவாலயத்தில் பூசை செய்யும் குருக்கள்; பரம்பரையாக வந்த தலைவன்.

**தானதருமம்** – ஈகை.

**தானநிலை** – இசைக் கூறுபாடு.

**தானப்பிரமாணம்** – காண்க: **தானசாசனம்.**

**தானப்பெருக்கம்** – பத்து, நூறு, ஆயிரம் முதலிய எண்களால் பெருக்குகை; மனக்கோட்டை கட்டுகை.

**தானப்பொருத்தம்** – நூலைத் தொடங்கும் செய்யுளிலுள்ள முதன்மொழிப் பொருத்தம்.

**தானபத்திரம்,**
**தானபத்திரிகை** } – காண்க: **தானசாசனம்.**

**தானம்** – இடம்; இருப்பிடம்; பதவி; கோயில்; இருக்கை; சக்தி; துறக்கம்; செய்யுட் பொருத்தத்தில் வரும் நிலைகள்; எழுத்துப் பிறக்குமிடம்; எண்ணின் தானம்; நன்கொடை; யானை மதம்; நால்வகை உபாயத்துள் ஒன்றாகிய கொடை; குளித்தல்; இசைச்சுரம்; சாதக சக்கரத்திலுள்ள வீடு; ஆற்றலில் சமமாயிருக்கை; இல்லறம்; மகரவாழை.

**தானம்பாடுதல்** – ஒரு பண்ணினைச் சுரமுறையால் விவரித்துப் பாடுதல்.

**தானமானம்** – இருக்கும் பதவியால் ஏற்படும் பெருமை.

**தானவண்ணம்** – ஓர் இசைப்பாட்டுவகை.

**தானவர்** – தனு என்பவளின் வழிவந்த அசுரர்; வித்தியாதரர்.

**தானவள்** – அசுரப்பெண்.

**தானவன்** – சந்திரன்; அசுரன்.

**தானவாரி** – அசுரர்களுக்குப் பகைவனான திருமால்; இந்திரன்.

**தானவிச்சை** – வித்தையின் துறைகள்.

**தானவீரன்** – பெருங்கொடையாளி.

**தானாக** – தனியாக; தன் விருப்பம்போல்.

**தானாகரன்** – தானத்திற்கு இருப்பிடமான பெருங்கொடையாளி.

**தானுனாட்டித் தனாதுநிறுப்பு** – தானாக ஒன்றனைக் கூறி அதனை நிலைநிறுத்துதல்.

**தானாதல்** – சுதந்தரனாதல்; ஒன்றுபடுதல்.

**தானாதிகாரி** – கொடைக்குரிய அதிகாரி.

**தானாதிபதி** – படைத்தலைவன்; தூதன்; நடுநிலையாளன்.

**தானாபத்தியம்** – தூது; நடுவுநிலைமை; ஆசாரிய பதவி.

**தானாபதி** – படைத்தலைவன்; தூதன்; அந்தப்புரத் தூதி.

**தானி** – தானத்திலுள்ளது; இடத்திலிருப்பது; இருப்பிடம்; பண்டசாலை; கொடுப்போன்.

**தானிகம்** – கோயிலுக்குப் பரம்பரையாயுள்ள உரிமை; கோயில் செயல்களைக் கண்காணிக்கும் உத்தியோகம்; கொத்துமல்லி.

**தானிகன்** – கோயில் செயல்களைக் கண்காணிப்பவன்.

**தானிகை** – கொத்துமல்லி.

**தானியகோட்டகம்** – தானியக் களஞ்சியம்.

**தானியசாரம்** – தூற்றின நெற்பொலி.

**தானியதவசம்** – தானியமாகிய செல்வம்.

**தானியப்பொட்டு** – பதர்; அந்துப்பூச்சி; பயிர் நோய்வகை.

**தானியம்** – நெல் முதலியன; கொத்துமல்லி.

**தானியராசன்** – கோதுமை; கொத்துமல்லி.

**தானியலட்சுமி** – தானியமாகிய செல்வத்துக்குரிய திருமகள்.

**தானியாகுபெயர்** – இடத்தில் உள்ள பொருளின் பெயர் இடத்திற்கு ஆவது.

**தானீகம்** – கோயில் செயல்களைக் கண்காணிக்கும் உத்தியோகம்.

**தானு** – காற்று; கொடையாளன்; வெற்றியாளன்.

**தானூரம்** – சுழல்காற்று.

**தானெடுத்துமொழிதல்** – முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்றாகிய முன்னோர் மொழியை எடுத்தாளுதல்.

**தானை** – படை; ஆயுதப்பொது; ஆடை; மேடைத் திரைச்சீலை; முசுண்டி என்னும் ஆயுதம்.

**தானைநிலை** – பகைவர் அஞ்சுதற்குரிய காலாட் படையின் நிலைமை கூறும் புறத்துறை; இருபக்கத்துப் படையும் புகழும்படி போர் செய்த வீரனது திறந்தைக் கூறும் புறத்துறை.

**தானைமறம்** – போர் செய்யவந்த இருவகைப் படையும் போர் செய்து அழியாதபடி காத்த வீரன் ஒருவனது உயர்ச்சி கூறும் புறத்துறை; சேனையின் அஞ்சாமையைப் புகழ்ந்து பகைவர் அழிந்ததற்கு இரங்குதலைக் கூறும் புறத்துறை; உயிர்க்கேடுகட்கு அஞ்சாது பூசலுக்கு முற்படும் வேந்தனது சிறப்புக்கூறும் புறத்துறை.

**தானைமாலை** – அரசனுடைய முன்னணிப் படையை ஆசிரியப்பாவால் புகழ்ந்து பாடும் இலக்கியவகை.

**தானையம்** – காண்க: **தாணையம்**; கால்நடைகளின் மந்தை.

## தி

**தி** – ஓர் உயிர்மெய்யெழுத்து (த்+இ).

**திக்கங்கம்** – எட்டுத்திக்குப் பாலகர் குறி.

**திக்கசம்** – எட்டுத் திக்கிலுமுள்ள யானைகள்.

**திக்கம்** – இளயானை.

**திக்கயம்** – காண்க: **திக்கசம்**.

**திக்கரன்** – இளைஞன்.

**திக்கரி** – இளம்பெண், குமரி.

**திக்கரித்தல்** – மறுத்தல்; வெறுத்தல்.

**திக்கரை** – முருக்கு.

**திக்கற்றவன்** – கதியற்றவன்.

**திக்காதிக்கு** – பல திசையிலும்.

**திக்காரம்** – நிந்தை; இகழ்ச்சி; பிடிவாதம்.

**திக்கிடுதல்** – அச்சமுறுதல்; நடுக்குறல்.

**திக்கியானை** – காண்க: **திக்கசம்**.

**திக்கிராந்தம்** – கூத்துவகை.

**திக்கு** – திசை; புகலிடம்; வாய்த்தெற்று; சமயம்; காண்க: **கொடிவேலி**.

**திக்குக்கட்டு** – பாதுகாப்புக்காகத் திக்குத் தேவதைகளை மந்திரத்தால் கட்டுப்படுத்தி நிறுத்துகை.

**திக்குக்கெடுதல்** – திசை தெரியாது மயங்குதல்; உதவியற்றுத் திரிதல்.

**திக்குத்திக்கெனல்** – அச்சத்தால் நெஞ்சு பதைத்தற்குறிப்பு; தாளக்குறிப்பு.

**திக்குதல்** – சொற்கள் தடைப்படத் தெற்றியுச்சரித்தல்; சொற்குழறிப் பேசுதல்.

**திக்குப்பந்தனம்** – காண்க: **திக்குக்கட்டு**.

**திக்குப்பலி** – திக்குத் தேவதைகளுக்கு இடும் பலி.

**திக்குப்பாலகர்** – எண்திக்குப் பாலகர்; இந்திரன்.

**திக்குப்பேச்சு** – தெற்றிப் பேசும் சொல்.

**திக்குமாறாட்டம்** – திசை தடுமாறுதல்.

**திக்குமுக்காடுதல்** – மூச்சுவிட முடியாமல் திணறுதல்.

**திக்குமுக்கு** – மூச்சு முட்டுகை.

**திக்குவாய்** – குளறுவாய்; தெற்றிப் பேசுபவன்.

**திக்குவாயன்** – வாய் தெற்றிப் பேசுபவன்.

**திக்குவிசயம்** – அரசர்கள் தம் பெருமை விளங்க எல்லாத் திசைகளிலும் வெற்றிபெறுகை.

**திக்குறு** – காட்டு முருங்கைமரம்.

**திகசம்** – காண்க: **ஓமம்**.

**திகதி** – தேதி.

**திகந்தம்** – திக்கின் முடிவு.

**திகந்தராளம்** – வானம்.

**திகம்** – மிகுதி; புலித்தோல்; அவாவறுத்தல்.

**திகம்பரம்** – அம்மணம்.

**திகம்பரன்** – ஆடையணியாதவன்; கதியற்றவன்; நிருவாண சந்நியாசி; சமணமுனிவன்; அருகன்; சிவன்.

**திகம்பரி** – திகம்பரனின் மனைவியான பார்வதி.

**திகரடி** – சோர்வு; மூச்சடைப்பு.

**திகரம்** – சோர்வு; ஈளை; அவா.

**திகழ்,**
**திகழ்ச்சி** } – ஒளி; தோற்றம்.

**திகழ்த்துதல்** – விளக்குதல்; விளங்கக் காட்டுதல்; அழகுறுத்தல்.

**திகழ்தல்** – விளங்குதல்; சிறப்புறுதல்; உள்ளடக்கிக் கொள்ளுதல்.

**திகழ்வு** – விளக்கம்; ஒளி.

**திகளர்** – கன்னட நாட்டார் தமிழருக்கு வழங்கும் பெயர்.

**திகாந்தம்** – காண்க: **திகந்தம்**

**திகிர்** – நடுக்கம்; பலிச்சடங்கில் பயன்படுத்தும் கயிறு.

**திகிரி** – வட்டவடிவு; உருளை; சக்கரப்படை; தண்டசக்கரம்; அரசாணை; வண்டி; தேர்; சூரியன்; மலை; மூங்கில்; வேறு.

**திகிரிக்கல்** – சக்கரவாளகிரி; ஆட்டுக்கல்; கோரோசனை.

**திகிரிகை** – சக்கரம்; குயவன் சக்கரம்.

**திகிரிப்புள்** – சக்கரவாகப் பறவை.

**திகிரியான்** – சக்கரப்படை தாங்கிய திருமால்.

**திகில்** – அச்சம், பீதி.

**திகில்படுதல்,**
**திகில்பிடித்தல்,**
**திகிலெனல்** } – பேரச்சங்கொள்ளுகை; திடுக்கிடுதற்குறிப்பு.

**திகுதிகெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; புண்ணெரிச்சற்குறிப்பு; நெருப்புப் பற்றியெரியுங்குறிப்பு; சினக்குறிப்பு; விரைவுக்குறிப்பு; நீரொலிக் குறிப்பு; அச்சக்குறிப்பு.

**திகை** – திகைப்பு; ஈளை; மயக்கம்; தேமல்; திசை.
**திகைத்தல்** – மயங்குதல்; அடங்குதல்; சோர்தல்.
**திகைதல்** – முடிவுறுதல்; தீர்மானமாதல்.
**திகைதி** – தேதி.
**திகைப்பு** – பிரமிப்பு; ஈளை.
**திகைப்பூடு, திகைப்பூண்டு** – மிதித்தவர்களை மயங்கச் செய்யும் ஒரு பூண்டுவகை.
**திங்கட்கண்ணியன்** – சந்திரனை முடியிற் கொண்டவனான சிவன்.
**திங்கட்கிழமை** – சந்திரனுக்கு உரியதான நாள், வாரத்தின் இரண்டாம் நாள்.
**திங்கட்குடையோன்** – சந்திரனைக் குடையாகக் கொண்ட மன்மதன்.
**திங்கட்குலன்** – சந்திரகுலப் பாண்டியன்.
**திங்கட்குழவி** – பிறைச்சந்திரன்.
**திங்கண்முக்குடையோன்** – அருகன்.
**திங்கணாள்** – சந்திரனை அதிதேவதையாகக் கொண்ட மிருகசீரிடம்.
**திங்கள்** – சந்திரன்; மாதம்; திங்கட்கிழமை; பன்னிரண்டு.
**திங்கள்மணி** – காண்க: **சந்திரகாந்தக்கல்.**
**திங்ஙு** – வினைமுற்று விகுதிகள்.
**திசாதிசை** – வேறுபட்ட திசைகள்.
**திசாமுகம்** – திக்கு
**திசாயம்** – குங்கிலியம்.
**திசாலம்** – பொழுது.
**திசி** – திசை.
**திசிலன்** – இராக்கதன்; சந்திரன்.
**திசை** – திக்கு; கோள் ஆட்சிக் காலம்; நற்பேற்றுக் காலம்; திரி; நிலைமை; அதிகாரத்துக்குட்பட்ட இடம்; ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு.
**திசைக்கல்** – எல்லைக்கல்.
**திசைகட்டுதல்** – காண்க: **திக்குக்கட்டுதல்.**
**திசைகாவல்** – நாட்டின் அமைதியைக் காப்போன்; திசைகாவல் வரி.
**திசைச்சொல்** – செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரு நிலப் பகுதிகளிலிருந்து தமிழில் வந்து வழங்கும் சொல்.
**திசைத்தல்** – மயங்குதல்.
**திசைதப்புதல்** – வழிதவறுதல்.
**திசைநா** – கொடிவேலிமரம்.
**திசைநாற்கோணம்** – நான்கு கோணத்திக்குகள்.
**திசைப்பாலகர்** – காண்க: **திக்குப்பாலகர்.**
**திசைப்பு** – திகைப்பு; ஈளை.
**திசைப்புரட்டன்** – திசைகளை மாற்றுவோன்; பெரும் பொய்யன்.
**திசைபோதல்** – எங்கும் பரவுதல்.
**திசைமுகன்** – நான்முகனான பிரமன்.
**திசைமொழி** – காண்க: **திசைச்சொல்.**
**திசையடித்தல்** – நல்லூழ் வாய்த்தல்.
**திசையானை** – காண்க: **திக்கசம்.**
**திசையோனி** – கொடி, புகை, சிங்கம், நாய், இடபம், கழுதை, யானை, காகம் என்னும் எண்திசைக் குறிகள்.
**திட்குதல்** – மனங்குலைதல்.
**திட்டஞ்செய்தல்** – கட்டளையிடுதல்; ஏற்பாடு செய்தல்.
**திட்டம்** – காணப்படுவது; நிலவரம்; கட்டளை; செவ்வை; ஏற்பாடு; மதிப்பு; உறுதி; நிறைவு; கட்டளை அளவு; அரசிறை மதிப்பு, செலவு மதிப்பு, சாகுபடி மதிப்பு முதலியன.
**திட்டவட்டம்**– செவ்வை; ஏற்பாடு; உறுதி.
**திட்டனம்** – இலுப்பைமரம்.
**திட்டாணி** – மரத்தைச் சுற்றிய மேடை.
**திட்டாந்தப்பேச்சு** – உறுதிவார்த்தை; கற்பனையாகப் பேசும் பேச்சு.
**திட்டாந்தப்போலி** – இயைபில்லாத எடுத்துக் காட்டு.
**திட்டாந்தம்** – எடுத்துக்காட்டு; உறுதி.
**திட்டி** – திட்டிவாயில்; மேடு; துவட்டா என்னும் தேவதச்சன்; பலகணி; பார்வை; காண்க: **மஞ்சிட்டி; திருட்டிப்பொட்டு;** கண்ணேறு; தினை; மூலைகளில் தேர் திரும்பும்போது அதன் வடத்தை இழுப்பதற்கு வசதியாக விடப்பட்ட சந்து.
**திட்டித்தம்பம்** – கண்கட்டுவித்தை.
**திட்டித்தல்** – புதிதாக உண்டாக்குதல்.
**திட்டிப்பொட்டு** – கண்ணேறு படாமலிருக்கக் கன்னத்தில் வைக்கும் மைப்பொட்டு.
**திட்டிவாச(யி)ல்** – பெரிய கதவுகள் சாத்தப்படும்போது உட்செல்வதற்கு உதவும் சிறிய வாயில்; சிறிய வாயில்.
**திட்டிவிடம்** – பார்வையால் கொல்லுந்தன்மையுடைய பாம்பு.
**திட்டு** – மேட்டுநிலம்; சிறு குன்று; ஆற்றிடைக்குறை; வயலிலுள்ள களை முதலியவற்றின் கொத்து; இடைச்சுவர்; வசை; நூறு எண் கொண்ட காலாள் முதலியவற்றின் தொகை.
**திட்டுதல்** – வைதல்.
**திட்டுமுட்டு** – நெஞ்சடைப்பு; குழந்தைகளுக்கு வயிற்று வீக்கத்தோடு வரும் ஒரு நோய்வகை; எதிர்நிந்தனை.
**திட்டுமுட்டுப்படுதல்** – மூச்சுவிட இயலாது துன்புறல்.
**திட்டெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**திட்டை** – மேட்டுநிலம்; திண்ணை; உரல்; காண்க: **வெள்ளெருக்கு;** ஓர் ஊர்.

**திட்டையிடுதல்** – ஈறுகட்டடல்; புண்ணில் தசை வளர்தல்.
**திட்டையுரல்** – அடி ஆழமற்ற உரல்.
**திட்பம்** – உறுதி; வலிமை; மனவுறுதி; சொற் பொருள்களின் உறுதி; காலநுட்பம்.
**திடகாத்திரம்** – கட்டுள்ள உடல்.
**திடசித்தம்** – உறுதியான மனம்.
**திடத்துவம்** – உறுதிப்பாடு, பலம்.
**திடப்படுத்துதல்** – உறுதிப்படுத்துதல்; வலுப் படுத்துதல்.
**திடப்படுதல்** – உறுதிப்படுதல்; ஊக்கமடைதல்.
**திடபத்தி** – உறுதியான பக்தி.
**திடபரம்** – மனவலி; உறுதி.
**திடம்(ன்)** – உறுதி; வலிமை; கலங்காநிலை; மன உறுதி; மெய்ம்மை; நிலைதவறாமை.
**திடமனம்** – உறுதியான மனம்.
**திடமை** – காண்க: வெள்ளெருக்கு.
**திடர்** – மேட்டுநிலம்; மலை; குப்பைமேடு; புடைப்பு; தீவு; திடமான பிரமாணத்தாலே ஏற்பட்டுத் தாபிதமானவர்.
**திடரிடுதல்** – மேடாதல்.
**திடல்** – வெளியிடம்; மேட்டுப்பகுதி.
**திடவரம்** – உறுதி; மனஉறுதி.
**திடவிரதம்** – உறுதியான முடிவு.
**திடற்புன்செய்** – நன்செய் மத்தியில் பயிராகும் புன்செய் மேட்டுநிலம்.
**திடறு** – மேட்டுநிலம்.
**திடாரி** – ஊக்கமுடையவன்.
**திடாரிக்கம்** – மனத்திடம்.
**திடீரெனல்** – பொருள் விழும்போது உண்டாம் ஓர் ஒலிக்குறிப்பு; விரைவு, எதிர்பாராத நிலை இவற்றை உணர்த்தும் குறிப்பு.
**திடுக்கம்,**
**திடுக்காட்டம்** } – அச்சம்.
**திடுக்கிடுதல்** – அச்சமுறுதல்; நடுக்கமுறுதல்.
**திடுக்கு** – அச்சம்.
**திடுக்குத்திடுக்கெனல்** – அச்சம் சோர்வுகளால் அடிக்கடி நடுங்கற்குறிப்பு; அச்சத்தால் நெஞ் சடித்தற் குறிப்பு.
**திடுக்கெனல்** – காண்க: **திடீரெனல்.**
**திடுகூறு** – விரைவு.
**திடுதிடெனல்** – விரைவுக்குறிப்பு; காண்க: **திடுக்குத்திடுக்கெனல்.**
**திடுதிப்பெனல்** – விரைவு, எதிர்பாரா நிலை இவற்றை உணர்த்தற்குறிப்பு.
**திடும்** – ஒரு பறைவகை.
**திடுமல்** – பெண்ணின் அடங்காத்தன்மை.
**திடுமலி** – அடங்காதவள்.
**திடுமன்** – திண்மை; அடங்காத தன்மை.
**திடுமெனல்** – காண்க: **திடீரெனல்.**
**திண்கல்** – சுக்கான்கல்.
**திண்டகம்** – கிலுகிலுப்பைச்செடி.
**திண்டாட்டம்,**
**திண்டாட்டு** } – அலைக்கழிவு; மனக்கலக்கம்.
**திண்டாடுதல்** – அலைக்கழிதல்; கலக்கப்படுதல்; நெருக்கப்படுதல்; மனம் கலங்கித் தடுமாறு தல்.
**திண்டி** – பருமன்; யானை; காண்க: **அரசு;** பசளைக்கொடி; தடித்தவள்; தம்பட்டம்; உணவு.
**திண்டிப்போத்து** – உண்டு கொழுத்துத் திரிபவன்; உண்டு கொழுத்த கடா.
**திண்டிமகவி** – திண்டிமம் முழக்கிக்கொண்டு வாதம் செய்யும் புலவன்.
**திண்டிமம்** – காண்க: **திடும்.**
**திண்டிறல்** – மிகுந்த வலிமை.
**திண்டு** – அரைவட்ட வடிவான பஞ்சணை; முட்டாகக் கட்டப்படும் சிறு சுவர்.
**திண்டுமுண்டு** – எதிரிடைப் பேச்சு.
**திண்ணக்கம்** – நெஞ்சுரம்.
**திண்ணகம்** – செம்மறியாட்டுக்கடா; துரு வாட்டுக்கடா; தட்டார் மெருகிடும் கருவி யுள் ஒன்று.
**திண்ணம்** – உறுதி; வலிமை; இறுக்கம்; பொய்ம்மை.
**திண்ணன்** – வலியுடையோன்; கண்ணப்ப நாயனாருக்குப் பெற்றோர் இட்ட பெயர்.
**திண்ணனவு** – நெஞ்சுரம்; உறுதி.
**திண்ணிமை** – மனவுறுதி.
**திண்ணியன்** – வலியவன்; மன உறுதியுள்ளவன்.
**திண்ணெனல்** – உறுதியாயிருத்தற் குறிப்பு; வாத்திய நரம்பின் ஒலி.
**திண்ணெனவு** – நெஞ்சுரம்; உறுதி.
**திண்ணை** – வேதிகை; மேடு.
**திண்ணைக்குறடு** – பெரிய திண்ணையை ஒட்டிக் கீழே கட்டப்பட்ட சிறு திண்ணை; திண்ணையை ஒட்டியுள்ள படி.
**திண்ணைப்பள்ளிக்கூடம்** – தெருப்பள்ளிக்கூடம்; ஆசிரியர் வீட்டுத் திண்ணைகளில் நடத்தப் படும் கல்விக்கூடம்.
**திண்பொறுத்தல்** – பாரந்தாங்குதல்.
**திண்மை** – வலிமை; உறுதி; கலங்காநிலைமை; பருமன்; உண்மை.
**திணர்** – செறிவு.
**திணர்த்தல்** – நெருக்கமாதல்; கனமாகப் படிந் திருத்தல்.
**திணர்தல்** – சோர்தல்.
**திணறுதல்** – மூச்சுத் தடுமாறுதல்.
**திணி** – திட்பம்; செறிவு; பூமி.

**திணிகம்** – போர்.
**திணித்தல்** – செறிய உட்புகுத்துதல்; நெருக்கி வருத்துதல்; இடைச்சேர்த்தல்; பதித்தல்.
**திணிதல்** – செறிதல்; இறுகுதல்.
**திணிநிலை** – படைகள் நெருங்கிநிற்கும் நிலை.
**திணிப்பு** – வலிமை; சுமத்துகை.
**திணிம்பு** – செறிவு; நெருக்கம்.
**திணியன்** – பயனற்றுப் பருத்தவன்; பயனற்றுப் பருத்தது.
**திணிவு** – நெருக்கம்; வன்மை.
**திணுக்கம்** – செறிவு; கட்டி.
**திணுங்குதல்** – செறிதல்; உறைதல்.
**திணை** – நிலம்; குலம்; இடம்; வீடு; ஒழுக்கம்; உயர்திணை அஃறிணை என்னும் பகுப்பு; தமிழ்நூல்களில் வரும் அகத்திணை புறத்திணை ஒழுக்கம்.
**திணைக்களம்** – பல்வேறு அலுவலகப் பிரிவுகள்.
**திணைகள்** – சனங்கள்.
**திணைநிலைவரி** – ஐந்திணைச் செய்திகளைக் காமக்குறிப்புத் தோன்றப் பாடும் ஒரு பா வகை.
**திணைநிலைப்பெயர்** – சாதி குறிக்கும் பெயர்; திணையில் வாழும் மக்கட்கு வழங்கும் பெயர்; ஐந்திணைத் தலைமக்கட்கு வழங்கும் பெயர்.
**திணைப்பாட்டு** – எடுத்த திணைக்கு உரிய தொழிலைப் பொதுப்படக் கூறும் பாடல்.
**திணைப்பெயர்** – குறிஞ்சி முதலிய நிலங்களில் வாழும் மக்கட்கு வழங்கும் பெயர்.
**திணைமயக்கம்** – ஒரு நிலத்துக்குரிய காலம் கருப்பொருள்கள் வேற்றுநிலத்துப் பொருள்களுடன் கலந்து காணப்படல்; அகம் புறம் என்னும் திணைகள் ஒன்றுடனொன்று மயங்கி வருதல்.
**திணைவழு** – உயர்திணை அஃறிணை இரண்டும் தம்முள் மயங்கி வருவது.
**தித்தகம்** – காண்க: **மலைவேம்பு.**
**தித்தம்** – கசப்பு; காண்க: **நிலவேம்பு; மலைவேம்பு;** தீ; கட்டுக்கதை; ஒளி.
**தித்தா** – காண்க: **வட்டத்திருப்பி; பீதரோகிணி.**
**தித்தாவெனல்** – பரதத்தில் வழங்கும் தாளக் குறிப்பு.
**தித்தி** – இனிப்பு; சிறுதீனி; இன்பம்; தேமல்; தாளச்சதி; குரங்கு; துருத்தி; ஒரு வாத்திய வகை; வேள்விக்குழி; குரவமரம்; பேரீந்து; தோற்பை.
**தித்திக்காரன்** – துருத்திவாத்தியம் ஊதுபவன்.
**தித்திகம்** – காண்க: **பேய்ப்புடல்;** அரத்தை.
**தித்திசாகம்** – மாவிலிங்கமரம்.
**தித்தித்தல்** – இனித்தல்.
**தித்திப்பு** – இனிப்பு; இனிப்புப் பண்டம்.
**தித்திமுளை** – இரட்டைத் தித்திப்புப் பனங்கட்டி.
**தித்தியம்** – வேள்விக்குழி.
**தித்திரம்** – அரத்தைச்செடி.
**தித்திரி** – கவுதாரி; மீன்கொத்திவகை.
**தித்திரு, தித்திருச்சி** – நாணற்புல்.
**தித்துதல்** – திருத்துதல்; எழுத்துக் கற்க வரிவடிவின்மேல் பலமுறை எழுதிப் பழகுதல்.
**தித்துப்பாடு** – திருத்தம்.
**திதம்** – நிலை; அக்கினி; கட்டுக்கதை.
**திதலை** – தேமல்; மகவீன்ற பெண்களுக்குள்ள வெளுப்புநிறம்.
**திதளம்** – காண்க: **மாமரம்.**
**திதனி** – தேமல்.
**திதி** – நிலைமை; நிலைபேறு; சந்திரன் நாள்; பிரதமை முதலிய திதிகள்; சிராத்தம்; செல்வம்; சிறப்பு; வாழ்வு; வளர்ச்சி; காப்பு; கனம், இருப்பு; அசுரர் மருத்துகளின் தாயான காசிபன் மனைவி.
**திதிகர்த்தா** – காப்புக் கடவுளாகிய திருமால்.
**திதிகொடுத்தல்** – ஆண்டுதோறும் ஒருவர் இறந்த நாளில் சிராத்தம் செய்தல்.
**திதிகொள்ளுதல்** – ஒரே மாதத்தில் ஒரே திதி இருமுறை வரும்போது அவற்றுள் ஒன்றைச் சிராத்தம் முதலியவற்றிற்குக் கொள்ளுதல்.
**திதிசர், திதிசுதர்** – திதியின் புதல்வர்களான அசுரர்.
**திதிட்சயம்** – காருவா, அமாவாசை.
**திதிட்சை** – பொறுமை.
**திதித்தல்** – காத்தல்; கட்டுதல்.
**திதித்திரயம்** – ஒரு நாளில் மூன்று திதிகள் நேர்வது.
**திதிநாடி** – கிரகண நாழிகைக் காலம்.
**திதிபரன்** – திருமால்.
**திதிமைந்தர்** – திதியின் மக்களான அசுரர்.
**திதியம்** – அழிவின்மை.
**திதீக்கதை** – பொறுக்குந்தன்மை.
**திதீக்கை, திதீட்சை** – பொறுமை.
**திதைதல்** – பரவுதல்.
**திந்திடம், திந்திடீகம்** – புளியமரம்.
**திந்திரிச்சி** – நாணல்.
**திந்திருணி** – புளியமரம்.
**திந்நாகம்** – திக்கு நாகம், எட்டுத் திக்கிலுமுள்ள யானைகள்.
**திப்பம்(லி)** – காண்க: **திப்பிலி.**

**திப்பி** – கோது; வாய் அகன்ற சிறு மண்சட்டி; கொட்டாங்கச்சி யகப்பை.

**திப்பியம்** – திவ்வியம்; தெய்வத்தன்மையுடையது; துறக்கம்; வியக்கத்தக்கது; சிறந்தது; காண்க: **ஓமம்**; நெல்விசேடம்.

**திப்பியன்** – தெய்வத்தன்மையுடையோன்.

**திப்பிரமை** – திசைத் தடுமாற்றம்; மனக்குழப்பம்.

**திப்பிலாட்டம்** – பிறனைக் கிள்ளியும் அலைத்தும் ஆடும் விளையாட்டு; விடுகதை; பித்த லாட்டம்.

**திப்பிலி** – ஒரு மருந்துச் சரக்கு. அது கண்ட திப்பிலி, யானைத் திப்பிலி முதலாகப் பல வகைப்படும்.

**திப்பிலியாட்டம்** – காண்க: **திப்பிலாட்டம்.**

**திப்பை** – மேடு; பருத்தது.

**திபதை** – இரண்டடிக் கண்ணிப் பாட்டு.

**திம்மலி** – உடல் பருத்தவள்.

**திம்மன்** – ஆண்குரங்குவகை.

**திம்மை** – பருமன்; சரிகை முதலியவற்றின் பந்து; காண்க: **திப்பிரமை.**

**திமி** – பெருமீன்.

**திமிகோடம்** – கடல்.

**திமிங்கிலகிலம்** – திமிங்கிலத்தை விழுங்கும் பெருமீன்.

**திமிங்கிலம்** – திமியை விழுங்கக்கூடிய பெருமீன்; பெருமீன்வகை.

**திமிசடித்தல்** – இளகிய தரையைத் திமிசுக் கட்டையால் கெட்டிப்படுத்துதல்.

**திமிசம்** – வேங்கைமரம்.

**திமிசு** – காண்க: **திமிசம்**; நிலத்தை இறுகப் பண்ணி மட்டஞ்செய்யுங் கட்டை.

**திமிசுபோடுதல்** – காண்க: **திமிசடித்தல்.**

**திமிதம்** – பேரொலி; குதித்தாடுகை; உறுதி; ஈரம்.

**திமிதமிடுதல்** – களிப்புக்கொள்ளுதல்.

**திமிதிமி** – தாளக்குறிப்புச்சொல்; காண்க: **திமிங்கிலம்**; ஒலிக்குறிப்பு.

**திமிதிமியெனல்** – தாளக்குறிப்பு; கூட்ட ஒலிக் குறிப்பு; விரைவுக்குறிப்பு.

**திமிர்** – குளிரால் உண்டாகும் விறைப்பு; மரத்துப் போதல்; சோம்பல்; தேகக் கொழுப்பு; அறிவுடல்களின் சோர்வு.

**திமிர்ச்சி** – காண்க: **திமிர்வாதம்.**

**திமிர்த்தல்** – கால் முதலியன மரத்துப்போதல்; கொழுத்துத் தடித்தல்; தடவுதல்; அடித்தல்; குலுக்குதல்; அருவருத்தல்; உறுதிப்படுத்தல்; பிரமைபிடித்தல்.

**திமிர்தம்** – பேரொலி.

**திமிர்தல்** – பூசுதல்; தடவுதல்; அப்புதல்; வாரி இறைத்தல்; ஒலித்தல்; வளர்தல்; கம்பித்தல்.

**திமிர்ப்பூச்சி** – வயிற்றுப்புழு.

**திமிர்பிடித்தல்** – கொழுத்தல்; செருக்குக் கொள்ளு தல்; மரத்தல்.

**திமிர்வாதம்** – உடல் மரத்துப் போவதால் உண் டாகும் ஒரு நோய்; உடற்கொழுப்பால் ஏற்படும் மந்தபுத்தி; காண்க: **திமிர்வாயு.**

**திமிர்வாயு** – பக்கவாதம்; வாதநோய்.

**திமிர்விடுதல்** – சோம்பல் முரித்தல்.

**திமிரகாசம்** – கண்ணோய் வகையுள் ஒன்று.

**திமிரம்** – இருள்; கருநிறம்; இரவு; நரகம்; கண்ணோய்வகை; மாயை.

**திமிரன்** – மந்தன்.

**திமிராரி** – இருளின் பகைவனான சூரியன்.

**திமிராளி** – திமிர்வாதக்காரன்; சோம்பேறி.

**திமில்** – மீன்படகு; மரக்கலம்; எருத்தின் கொண்டை; வேங்கைமரம்; பேரொலி.

**திமில்வாழ்நர்** – படகினால் வாழ்க்கை நடத்துபவ ராகிய செம்படவர்.

**திமிலம்** – பெருமீன்வகை; பேரொலி.

**திமிலர்** – நெய்தல்நில மக்கள்.

**திமிலி** – காண்க: **திம்மலி.**

**திமிலிடுதல்** – மிகவொலித்தல்.

**திமிலை** – ஒரு பறைவகை; மின்கதிர்; கடல் மீன்வகை.

**திமிறியடித்தல்** – ஒருவன் பிடிப்பினின்றும் விடு வித்துக்கொள்ளுதல்.

**திமிறுதல்** – மீறுதல், வலிந்து தன்னைப் பிறரிட மிருந்து விடுவித்தல்; நீண்டுவளர்தல்; மாவு முதலியன சிந்துதல்.

**திமுதிமுவெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**திமைத்தல்** – கிளப்புதல்.

**தியக்கடி** – சோர்வு.

**தியக்கம், தியக்கு** – காண்க: **தியக்கடி**; அறிவுக்கலக்கம்; மனச்சஞ்சலம்; மயக்கம்.

**தியக்குதல்** – மயங்கச்செய்தல்.

**தியங்குதல்** – சோர்வெய்தல்; கலங்குதல்; புத்தி மயங்குதல்.

**தியசம்** – காண்க: **மரமஞ்சள்.**

**தியதி** – தேதி.

**தியந்தி** – கீரைவகை; துலாக்கட்டை.

**தியரடி** – காண்க: **தியக்கடி.**

**தியாகம்** – பிறருக்காக ஒன்றனை விட்டுக்கொடுத் தல்; கைவிடல்; கொடை.

**தியாகமாவிநோதன்** – கொடுத்தலையே பொழுது போக்காக உடையவன்.

**தியாகமுரசு** – அரசருக்கு உரிய மூன்று முரசு களுள் கொடையளித்தலைக் குறிப்பதற்கு முழங்கும் முரச வாத்தியம்.

**தியாகர், தியாகராசர்** – திருவாரூரில் கோயில்கொண் டுள்ள சிவபெருமான்.

**தியாகவான், தியாகி** – பிறர்பொருட்டுத் தன்னலம் துறப்போன்; கொடையாளி.
**தியாச்சியம்** – தள்ளற்பாலது; ஒவ்வொரு நட்சத்திரத்திலும் நற்செயல்களுக்கு விலக்கப்பட்ட நேரம்.
**தியாசம்** – காண்க: **மரமஞ்சள்.**
**தியாதன்** – நினைக்கப்பட்டவன்.
**தியாதிரு** – தியானிக்கிறவன்.
**தியாமம்** – காண்க: **அறுகு;** இருவேலி.
**தியாலம்** – காலம்.
**தியானம்** – சிந்தனை; இடையறாச் சிந்தனை; தியானம் நிறைகை.
**தியானவான், தியானி** – விடாது சிந்திப்பவன்.
**தியானித்தல்** – ஒன்றை இடைவிடாது நினைத்தல்.
**தியூதம்** – சூதாட்டம்.
**தியோதம்** – ஒளி; வெயில்.
**திரக்கத்தாரு** – நிலப்பனை.
**திரக்கம்** – கொன்றைமரம்.
**திரக்கரித்தல்** – விலக்குதல்; மறுத்தல்; இகழ்தல்.
**திரக்காரம்** – விலக்குகை; அவமதிப்பு; மறைக்கை.
**திரக்குதல்** – சுருங்குதல்; தேடுதல்.
**திரகம்** – காண்க: **திரக்கம்.**
**திரங்கம்** – மிளகு; நகரம்.
**திரங்கல்** – முத்துக் குற்றவகை; சுருங்கல்; மிளகு.
**திரங்குல்** – வற்றிச் சுருங்குதல்; உலர்தல்; சுருளுதல்; தளர்தல்.
**திரச்சீனமுகம்** – நாணத்தால் தலையாட்டும் அபிநய முகவகை.
**திரட்சி** – உருண்டை; திரண்ட தன்மை; கூட்டம்; முத்து; காண்க: **இருதுசாந்தி.**
**திரட்சிக்கலியாணம்** – இருதுசாந்திச் சடங்கு.
**திரட்டு** – திரட்டுகை; தொகைநூல்; பூப்படைதல்.
**திரட்டுக்கலியாணம்** – காண்க: **இருதுசாந்தி.**
**திரட்டுதல்** – உருண்டையாக்குதல்; ஒன்று கூட்டுதல்; தொகுத்தல்; கலத்தல்; சுருக்குதல்; கட்டுதல்.
**திரட்டுப்பால்** – சர்க்கரையிட்டு இறுகக் காய்ச்சின பால்; ஒருவகை இனிப்புப் பணிகாரம்.
**திரடு** – மேடு.
**திரண்டகல்** – உருளைக்கல்; குண்டுக்கல்.
**திரண்டகொடிச்சி** – உலோக மண்வகை.
**திரணச்சி** – நவச்சாரம்.
**திரணபதி** – புற்சாதிக்கு அரசாகிய வாழை.
**திரணம்** – அற்பம்; துரும்பு; புல்; செத்தை.
**திரணி** – கொடிப்புன்கு.
**திரணை** – உருண்டை; மாலைவகை; வைக்கோற் புரிக் கற்றை; திண்ணை; கட்டட எழுதக வேலை; கொத்துக்கரண்டி.
**திரந்திகம்** – திப்பிலிவேர்.
**திரப்படுதல்** – உறுதிப்படுதல்.
**திரப்பியம்** – காண்க: **திரவியம்.**
**திரபு** – தகரம்; நரகவகை.
**திரம்** – உறுதி; வலி; உரம்; நிலவரம்; வீடுபேறு; மலை; பூமி; தகரைச்செடி; காண்க: **திரராசி.**
**திரமம்** – பழைய கிரேக்க நாணயவகை.
**திரமாதம்** – திரராசிகளில் சூரியன் இருக்கும் மாதம்; அதாவது வைகாசி, ஆவணி, கார்த்திகை, மாசி மாதங்கள்.
**திரமிட(ள)ம்** – திராவிடம்; தமிழ்மொழி.
**திரயம்** – மூன்று.
**திரயம்பகன்** – முக்கண்ணுடைய சிவபெருமான்.
**திரயாங்கம்** – திதி வார நட்சத்திரங்களைக் காட்டும் குறிப்பு.
**திரயோதசி** – தேய்பிறை வளர்பிறைகளில் வரும் பதின்மூன்றாம் திதி.
**திரராசி** – நிலைநிற்கவேண்டும் செயல்களைத் தொடங்குவதற்கு ஏற்றனவாகக் கருதப்படும் இடபம், சிங்கம், விருச்சிகம், கும்பம் என்னும் இராசிகள்.
**திரல்** – காண்க: **காட்டாமணக்கு.**
**திரலடி** – காண்க: **ஏலம்.**
**திரவம்** – நீர்மம்; நீர் முதலியவற்றின் நெகிழ்ச்சி; கசிவு; திராவகம்.
**திரவாதி** – காட்டாமணக்குஞ்செடி.
**திரவிடம்** – காண்க: **திராவிடம்.**
**திரவிடமொழிகள்** – தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு, குடகு, கோடா முதலிய தென்னாட்டு மொழிகள்.
**திரவிணம்** – பொன்; பாக்கியம்; வலி.
**திரவித்தல்** – நீர் முதலியவற்றைப் பொசியப் பண்ணல்.
**திரவியசம்பத்து** – பேறு, பாக்கியம்.
**திரவியம்** – பொருள்; சரக்கு; பொன்; சொத்து; ஒருவகைக் கலப்புமருந்து; அரும்பண்டம்; தருக்க நூல்களில் கூறப்படும் மண், நீர், தீ, காற்று, வானம், காலம், திக்கு, ஆன்மா, மனம் என்னும் மூலப்பொருள்கள்.
**திரவியம்ஐந்து** – ஐந்துவகைப் பொருள்கள்: பசுவிலிருந்து பெறப்படும் பால், தயிர், நெய், மூத்திரம், சாணம் என்னும் ஐந்துவகைப் பொருள்கள்; மலை, கடல், காடு, நாடு, நகர் இவற்றில் உண்டாகும் பொருள்கள்.
**திரவியவான்** – செல்வன்.
**திரள்** – உருண்டை; கூட்டம்; படை; மிகுதி; குலை; மிக முடுகிய நடையையுடைய பாடல்.
**திரள்கோரை** – கஞ்சாங்கோரைவகை.

**திரள** – சுருக்கமாக; முழுதும்.
**திரளாரம்** – நிலப்பனை.
**திரளி** – ஒரு மீன்வகை; திரளிமரம்.
**திரளுதல்** – உருண்டையாதல்; மிகக் கூடுதல்; பருத்தல்; வீங்குதல்; இறுகுதல்; பூப்படைதல்; மிகுதல்.
**திரளை** – கட்டி; நூலுருண்டை; கூட்டம்.
**திரா** – பவழமல்லிகைமரம்.
**திராங்கு** – தாழ்ப்பாள்.
**திராசு** – தராசு; குதிரையை வண்டியில் பூட்டும் கயிறு.
**திராட்சம்** – திராட்சைக்கொடி.
**திராட்சாபாகம்** – திராட்சைச்சாறுபோலச் சுவைப்பதற்கு இனிதான எளிய செய்யுள் நடை.
**திராட்சை** – திராட்சைக்கொடி.
**திராணம்** – காத்தல்; உறை.
**திராணி, திராணிக்கம், திராணிக்கை** – ஆற்றல், சத்தி.
**திராணிசெலுத்தல்** – அதிகாரம் செலுத்துதல்; பொறுப்பான வேலையை நன்கு பார்த்தல்; நாணயம் காத்தல்.
**திராணிவந்தன்** – செயலாற்றுதற்குத் தக்கவன்.
**திராபை** – பயனற்றவன்; பயனற்றது.
**திராமரம்** – காண்க: **திரா.**
**திராய்** – ஒரு கீரைவகை; துலாக்கட்டை.
**திராய்க்கம்பம்** – உத்திரம்.
**திராயந்தி** – காண்க: **கம்பந்திராய்.**
**திராலம்** – ஒரு வெள்ளிவகை.
**திராவகநீறு** – வெடியுப்புச் சுண்ணம்.
**திராவகம்** – செய்நீர்; மருந்துச் சரக்குகளிலிருந்து இறக்கப்படும் சத்துநீர்.
**திராவகன்** – அறிஞன்; கள்வன்.
**திராவடி** – காண்க: **ஏலம்.**
**திராவணஞ்செய்தல்** – ஓட்டுதல்.
**திராவணம்** – ஓடுதல்.
**திராவிடப்பிரபந்தம்** – ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்.
**திராவிடம்** – தமிழ்நாடு; தமிழ்மொழி; தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு முதலிய திராவிட மொழிகள்; தமிழ்நாடு, ஆந்திரம், கன்னடம், மகாராட்டிரம், கூர்ச்சரம் என்னும் ஐந்து திராவிட நாடுகள்.
**திராவிடவேதம்** – காண்க: **தமிழ்வேதம்.**
**திரி** – முறுக்குகை; விளக்குத்திரி; தீப்பந்தம்; தீக்குச்சி; காதுக்கு இடும் திரி; எந்திரம்; மெழுகுவத்தி; புண்ணுக்கு இடும் திரி; காண்க: **வெள்ளைப்பூண்டு;** பெண்; மூன்று.
**திரிக்கால்** – முக்கால்.
**திரிக்குழாய்** – தீவட்டிக்கு எண்ணெய் வார்க்கும் கருவி.
**திரிகடுகம்** – சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மருந்துச் சரக்குகள்; பதினெண்கீழ்க்கணக்கில் ஒன்றாகிய ஓர் அறநூல்.
**திரிகடுகு** – சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்று மருந்துச் சரக்குகள்.
**திரிகண்** – காண்க: **மூங்கில்.**
**திரிகண்டகம், திரிகண்டகி(கை, ம்)** – நெருஞ்சிப்பூண்டு.
**திரிகந்தம்** – மூவகை மணப்பொருள்கள்: கிராம்பு, நாவற்பூ, செண்பகப்பூ அல்லது சந்தனம், செஞ்சந்தனம், அகில்.
**திரிகரணம்** – உள்ளம், உரை, உடல் என்னும் மூன்று கருவிகள்.
**திரிகல்** – திரிகை; எந்திரம்.
**திரிகாலசந்தி** – காலை, உச்சி, மாலை என்னும் மூன்று சந்தியாகாலங்களில் செய்யும் அனுட்டானம்.
**திரிகாலஞானம்** – முக்கால உணர்ச்சி.
**திரிகாலம்** – காலை, உச்சி, மாலை என்னும் நாளின் மூன்று பகுதிகள்; இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலங்கள்.
**திரிகாலவர்த்தமானம்** – மூன்று காலத்தும் நிகழும் செய்தி.
**திரிகாலோசிதம்** – காண்க: **தருப்பை.**
**திரிகுணம்** – சத்துவம், இராசதம், தாமதம் என்னும் மூவகைக் குணங்கள்.
**திரிகூடம்** – மூன்று உச்சிகளையுடைய திருக்குற்றாலமலை; ஒரு மலை.
**திரிகை** – அலைகை; சுற்றுகை, எந்திரம்; குயவன் சக்கரம்; இடக்கைமேளம்; கூத்தின் அங்கக் கிரியைவகை; முந்திரிகைமரம்.
**திரிகோணப்பாலை** – பாலைப் பண்வகை.
**திரிகோணம்** – முக்கோணம்.
**திரிச்சீலை** – புண்ணிலும் விளக்கிலும் இடும் திரி.
**திரிசங்குசுவர்க்கம்** – திரிசங்குவுக்காக விசுவாமித்திரர் படைத்த விண்ணுலகு; இடையில் நின்று வருந்தும் திண்டாட்ட நிலைமை.
**திரிசங்குமண்டலம்** – திரிசங்குவின் உலகம்; தென் திசையிலுள்ள வானமண்டலம்.
**திரிசந்தி** – காண்க: **திரிகாலசந்தி.**
**திரிசமஞ்சரி** – துளசி.
**திரிசமம்** – தீம்பு; தொல்லைதரும் செயல்.
**திரிசாகபத்திரம்** – காண்க: **வில்வம்.**
**திரிசி** – இல்லறத்தான்.
**திரிசிகம்** – வில்வமரம்.

**திரிசிகை** – சூலப்படை.

**திரிசியம்** – கண்ணுக்குப் புலனாவதாகிய மாயா காரியமான சடப்பொருள்.

**திரிசிரசு** – இராமாயணத்தில் கூறப்படும் மூன்று தலையுள்ள ஓர் அரக்கன்.

**திரிசிரபுரம்** – திரிசிரசு என்பவனால் அமைக்கப் பட்டதாகக் கருதப்படும் ஊரான திரிசிராப் பள்ளி.

**திரிசிரா** – காண்க: **திரிசிரசு.**

**திரிசுகந்தம்** – சாதிக்காய், சாதிபத்திரி, இலவங் கம் என்னும் மூன்றுவகை மணப்பண்டங்கள்.

**திரிசுடர்** – சூரியன், சந்திரன், அக்கினி என்னும் முச்சுடர்.

**திரிசூலக்கல்** – சிவன்கோயில் நிலங்களின் எல்லை குறிக்க நாட்டப்படும் திரிசூலக்குறி பொறித்த கல்.

**திரிசூலம்** – முத்தலைச் சூலம்.

**திரிசூலன்** – முத்தலை வேலையுடைய யமன்.

**திரிசூலி** – திரிசூலமுடைய சிவன்; திரிசூலமுடைய காளி; காண்க: **கற்றாழை.**

**திரிசொல்** – செய்யுளில் மட்டும் வழங்கப்படுவதற் குரிய தமிழ்ச்சொல்; கற்றவர்க்கு மாத்திரம் பொருள் விளங்கும் சொல்.

**திரிஞ்சில்** – துரிஞ்சில், வௌவால்.

**திரித்தல்** – சுழற்றுதல்; முறுக்குதல்; வேறுபடுத்து தல்; மாவு அரைத்தல்; அலைத்தல்; வெட்டு தல்; மொழிபெயர்த்தல்; திரும்பச்செய்தல்.

**திரித்துவம்** – கடவுளின் முத்தன்மை.

**திரிதசர்** – தேவர்.

**திரிதண்டசன்னியாசி** – முக்கோல் தாங்கும் வைணவசமயத் துறவி.

**திரிதண்டம்** – வைணவ சன்னியாசியின் கையிலுள்ள முக்கோல்.

**திரிதண்டி** – காண்க: **திரிதண்டசன்னியாசி.**

**திரிதரல்** – திரிதல்; சுழலல்; மீளல்.

**திரிதல்** – அலைதல்; எழுத்து மாறுதல்; பால் தன்மை கெடுதல்; கெடுதல்; சுழலல்; வேறு படல்; சலித்தல்; மயங்குதல்; கைவிடுதல்; திருகுறுதல்; போதல்; திரும்புதல்.

**திரிதியம்** – செவ்வள்ளிக்கொடி.

**திரிதியை** – தேய்பிறை வளர்பிறைகளில் வரும் மூன்றாந் திதி.

**திரிதூளி** – சின்னபின்னம்.

**திரிதேகி** – பற்பாடகப்புல்.

**திரிநயனன், திரிநேத்திரன்** – முக்கண்ணனாகிய சிவன்.

**திரிபங்கம்** – முத்திறமாக உடம்பை வளைத்து நிற்கும் உருவங்களின் நிலை.

**திரிபங்கி** – ஒரு செய்யுளாய் நின்று ஒரு பொருள் பயப்பதன்றி அதுவே மூன்று செய்யுளாய்ப் பிரிந்து வெவ்வேறு பொருள் பயக்கத்தக்க தாகவும் பாடும் சித்திரகவிவகை.

**திரிபதகை** – கங்கை.

**திரிபதாகை** – அணிவிரலும் பெருவிரலும் வளைந்து நிற்க ஏனைய விரல்களை நிமிர நிறுத்தும் இணையா வினைக்கை.

**திரிபதார்த்தம்** – சைவசித்தாந்த நூல்களுள் சொல்லப்படும் பதி பசு பாசங்களாகிய முப் பொருள்கள்.

**திரிபதை** – காண்க: **திரிபதகை**; இசைப்பாவகை.

**திரிபலம், திரிபலை** – கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக் காய் என்னும் மூன்று காய்களின் கூட்டம்.

**திரிபழுகம்** – பால் நெய் தேன்களால் ஆன கூட்டுப்பண்டம்.

**திரிபன்றி** – சுழலும் பன்றி வடிவாய் அமைக்கப் பட்ட இலக்குவகை.

**திரிபாகி** – ஒரு சித்திரகவிவகை; மூன்று எழுத்து களைச் சேர்க்க ஒரு மொழியாகவும், அதன் முதல் இறுதி எழுத்துகளைச் சேர்க்க மற்றொரு மொழியாகவும், இடை கடை எழுத்துகளைச் சேர்க்க வேறொரு மொழியாகவும் வந்து வெவ்வேறு பொருள் தரும் சித்திரகவி.

**திரிபிடகம்** – சூத்திர பிடகம், வினய பிடகம், அபிதர்ம பிடகம் என்னும் மூவகை பௌத்த ஆகமத் தொகுதி.

**திரிபு** – வேறுபாடு; செய்யுள்வகை; தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் எழுத்துப் புணர்ச்சி விகாரம்; விபரீத உணர்ச்சி.

**திரிபுகாட்சி** – ஒன்றை வேறொன்றாய்க் காணு தல்.

**திரிபுச்சம்** – இசைக்குரிய கமகம் பத்தனுள் மும் மூன்றாக விரைந்து அடுக்கிப் பாடுவது.

**திரிபுசம், திரிபுடகம்** – மூன்று எல்லைக் கோடுகளை யுடைய முக்கோணம்.

**திரிபுடி** – அறிவுக்குரிய காண்பான், காட்சி, காட்சிப்பொருள் என்பன.

**திரிபுடிபலம்** – காண்க: **ஆமணக்கு.**

**திரிபுடை** – ஏழு தாளத்துள் ஒன்று.

**திரிபுண்டரம்** – சைவர் நெற்றியில் அணியும் மூவரிகொண்ட திருநீற்றுப் பூச்சு.

**திரிபுரசுந்தரி** – பார்வதி.

**திரிபுரதகனன்** – முப்புரம் எரித்த சிவன்.

**திரிபுரம்** – வானில் உலாவிய பொன், வெள்ளி, இரும்பு இவற்றாலான மூன்று அசுரர் நகரங்கள்.

**திரிபுரமல்லிகை** – மல்லிகைவகை.

**திரிபுரமெரித்தான்** – மூன்று நகரங்களை எரித்த சிவன்; மாவிலங்கை; காண்க: **நொச்சி.**

**திரிபுராந்தகன்** – காண்க: **திரிபுரதகனன்.**

**திரிபுரி** – சாறடை; சாறணைப்பூண்டு.

**திரிபுரை** – காண்க: **திரிபுரசுந்தரி**; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.

**திரிபுவனசக்கரவர்த்தி** – சோழர் பட்டப்பெயர்.

**திரிபுவனம்** – காண்க: **திரிலோகம்**; சோழ நாட்டில் உள்ள ஒரு சிவதலம்.

**திரிபோது** – காண்க: **திரிகாலம்.**

**திரிமஞ்சள்** – மஞ்சள், கத்தூரிமஞ்சள், மரமஞ்சள் என்னும் மூவகை மஞ்சள்.

**திரிமணி** – பௌத்தர் வணங்கும் புத்தன், புத்த தருமம், புத்தசங்கம் என்னும் மூன்று பொருள்கள்.

**திரிமணை** – புரிமணை; வட்டவளையமாய் வைக்கோல், நார் முதலியவற்றால் பாத்திரங்கள் வைப்பதற்குப் பயன்படுத்தும் பீடம்.

**திரிமரம்** – திரிகை; தானியம் முதலியவற்றை மாவாக்கப் பயன்படும் கருவி.

**திரிமலம்** – மும்மலமாகிய ஆணவம், மாயை, கன்மம்.

**திரிமார்க்கம்** – முச்சந்தி.

**திரிமுண்டம்** – காண்க: **திரிபுண்டரம்.**

**திரிமூர்த்தி** – மும்மூர்த்திகளாகிய பிரமன், திருமால், உருத்திரன்.

**திரிமூலம்** – மூவகை வேர்களாகிய கண்டுமூலம், சித்திரமூலம், திப்பிலிமூலம்.

**திரிய** – திரும்ப.

**திரியக்கி** – மூன்று கண்ணுடைய தேங்காய்.

**திரியக்கு** – குறுக்கானது; விலங்கு.

**திரியக்கோடல்** – ஒன்றை மற்றொன்றாக மாறுபடக் கருதுதல்.

**திரியட்சி** – காண்க: **திரியக்கி.**

**திரியம்பகம்** – சிவனுடைய வில்.

**திரியம்பகன்** – மூன்று கண்களையுடைய சிவன், அருகன், திருமால், விநாயகன், வீரபத்திரன் என்போர்.

**திரியம்பகி** – திரியம்பகன் மனைவியாகிய சத்தி.

**திரியல்** – திரிதல்.

**திரியவும்** – திரும்பவும்.

**திரியாமை** – இரவு; யமுனையாறு; நீலக்கல்.

**திரியிடுதல்** – காது வளர்க்கத் துணித்திரி இட்டு வைத்தல்.

**திரியேகக்கடவுள்** – பிதா சுதன் ஆவிகளாகிய முத்திறக் கடவுள்.

**திரியேகத்துவம், திரியேகம்** – கடவுளின் முத்திறத் தன்மை.

**திரியேற்றுதல்** – புண் முதலியவற்றில் காரச்சீலையிடுதல்.

**திரிராத்திரி** – காண்க: **திரிமஞ்சள்.**

**திரிரேகம்** – சங்கு.

**திரில்** – குயவன் சக்கரம்.

**திரிலவங்கம்** – சிறுநாகப்பூ, செண்பகப்பூ, கிராம்பு என்னும் மூவகை மணச்சரக்கு.

**திரிலிங்கம்** – ஸ்திரீலிங்கம் என்னும் பெண்பால்; அபிநயக்கை வகைகளுள் ஒன்று; காண்க: **தான்றி.**

**திரிலோகம்** – திரிபுவனம்; பூமி, பாதலம், துறக்கம் என்னும் உலகங்கள்; பொன், வெள்ளி, செம்பு என்னும் மூன்று உலோகங்கள்.

**திரிலோகாதிபதி** – திரிலோகத்தின் அதிபதியாகிய இந்திரன்.

**திரிலோகேசன்** – சூரியன்.

**திரிலோசனன்** – முக்கண்ணனாகிய சிவன்.

**திரிலோசனி** – முக்கண்ணுடைய துர்க்கை.

**திரிவட்டம்** – நூல் சுற்றுங் கருவிவகை.

**திரிவிக்கிரமன்** – மூன்றடியால் உலகம் அளந்த திருமால்; சூரியன்.

**திரிவிதசேதனர்** – பத்தர், முத்தர், நித்தியர் என்ற மூவகை ஆன்மாக்கள்.

**திரிவு** – காண்க: **திரிபுகாட்சி**; வேறுபாடு; தவறுகை; கேடு; இயக்கம்; சரியில்லாததால் திருப்பித்தரப்பட்டது.

**திரிவுக்காட்சி** – ஒரு பொருளைப் பிறிதொன்றாகக் காணும் காட்சி.

**திரிவேணி, திரிவேணிசங்கமம்** – மூவாறு கூடுமிடம்; அலகாபாத் என வழங்கும் பிரயாகையில் கங்கை, யமுனை, அந்தர்வாகினியான சரசுவதி என்னும் மூன்று ஆறுகள் கூடுமிடம்.

**திரீ** – பெண், ஸ்திரீ.

**திரீலிங்கம்** – காண்க: **திரிலிங்கம்.**

**திரு** – திருமகள்; செல்வம்; சிறப்பு; அழகு; பொலிவு; நல்வினை; தெய்வத்தன்மை; பாக்கியம்; மாங்கலியம்; பழங்காலத் தலையணிவகை; சோதிடங் கூறுவோன்; மகளிர் கொங்கைமேல் தோன்றும் வீற்றுத்தெய்வம்.

**திருக்கடைக்காப்பு** – தேவாரம் முதலிய பதிகங்களின் பலன் கூறும் இறுதிச் செய்யுள்.

**திருக்கண்** – அருட்பார்வை; திருவிழாவில் சுவாமி புறப்பாட்டில் சுவாமி எழுந்தருளும் மண்டகப்படி.

**திருக்கண்சாத்துதல்** – அருளுடன் பார்த்தல்; மண்டகப்படிக்கு எழுந்தருளப்பண்ணுதல்; பார்வையிடுதல்.

**திருக்கண்ணமுது** – திருக்கன்னலமுது, பாயசம்.

**திருக்கண்ணாமடை** – அரிசி சருக்கரை வாழைப்பழங்களால் ஆக்கப்பட்ட ஓர் இனிய உணவு வகை.

**திருக்கண்மலர்** – தெய்வத் திருமேனியின் கண்களில் சாத்தும் மலர்போன்ற கண் உரு.

**திருக்கம்** – வஞ்சகம்.
**திருக்கலசமுடித்தல்** – குடமுழுக்காட்டல்.
**திருக்கலியாணம்** – கோயிலில் தெய்வங்களுக்குச் செய்விக்கப்படும் திருமணவிழா.
**திருக்கற்றளி** – கருங்கல்லால் கட்டப்பெற்ற கோயில்.
**திருக்காட்சி** – தெய்வத்தியானம்.
**திருக்காப்பிடுதல்** – கோயிற்கதவு மூடுதல்.
**திருக்காப்பு** – தெய்வக்காவல்; திருமுறைகளைக் கயிற்றால் கட்டிவைத்தல்; அந்தியில் குழந்தைகளுக்குச் செய்யும் இரட்சைச் சடங்கு.
**திருக்காப்புச்சாத்துதல்** – காண்க: **திருக்காப்பிடுதல்.**
**திருக்கார்த்திகை** – விளக்கீட்டுத் திருவிழா; கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் விளக்கேற்றிவைத்துக் கொண்டாடும் திருவிழா.
**திருக்கிடுதல்** – நீள முறுக்கிடுதல்.
**திருக்கு** – முறுக்கு; மாறுபாடு; அணித்திருகு; துகில்வகை; சங்கடம்; வஞ்சகம்; கண்; காண்பவன்.
**திருக்குதல்** – முறுக்குதல்; முறுக்கிப் பறித்தல்; வளைத்தல்.
**திருக்குறிப்பு** – திருவுள்ளக் கருத்து.
**திருக்கூட்டம்** – தொண்டர்குழாம்.
**திருக்கூத்து** – கடவுளின் திருவிளையாட்டு; சிவபெருமான் திருநடனம்.
**திருக்கை** – கடல்மீன்வகை.
**திருக்கைக்கோட்டி** – திருமுறைகள் ஓதுதற்குரிய கோயில் மண்டபம்; கோயிலில் திருமுறைப் பாசுரம் ஓதுவோர்.
**திருக்கைச்சிறப்பு** – ஏனாதிப்பட்டத்திற்கு அறிகுறியாய் அளிக்கும் மோதிரம்.
**திருக்கோலம்** – கடவுளுக்குச் செய்யும் அலங்காரம்; நின்ற திருக்கோலம், இருந்த திருக்கோலம், கிடந்த திருக்கோலம் என மூவகையாய்த் திருமால் கோயில் கொண்டிருக்கும் திருமேனி நிலை.
**திருக்கோவை** – சுவாமிக்கு முன்நின்று வேதம், பிரபந்தம் முதலியன ஓதும் கூட்டம்.
**திருகணி** – காண்க: **திருகாணி**; சங்கின் சுழி.
**திருகணை** – புரிமணை.
**திருகம்** – காட்டுச்சாதிக்காய்மரம்; துளை.
**திருகல்** – முறுக்கு; மாறுபடுதல்; மாணிக்கக் குற்றவகை; இடர்ப்பாடுள்ள சொற்றொடர்.
**திருகல்முறுகல்** – கோணல்; மனவேறுபாடு; இடர்ப்பாடுள்ள சொற்றொடர்.
**திருகாணி** – அணியின் திருகுமரை; பெண்கள் காதிலும் மூக்கிலும் அணியும் திருகோடுகூடிய அணிவகை.
**திருகு** – முறுக்கு; கோணல்; மாறுபாடு; ஏமாற்றும் பேச்சு; குற்றம்; அணியின் திருகுமரை; சுரி.
**திருகுகம்மல்** – மகளிர் அணியும் திருகோடுகூடிய காதணிவகை.
**திருகுகள்ளி** – கள்ளிவகை; கொம்புக்கள்ளி.
**திருகுகொம்பன்** – வளைந்த கொம்புடைய விலங்குவகை.
**திருகுதல்** – முறுக்குதல்; மாறுபடுதல்; பின்னுதல்; பறித்தல்.
**திருகுதாழை** – காண்க: **வாதமடக்கி.**
**திருகுதாளம்** – புரட்டு.
**திருகுப்பூ** – செவந்தி வடிவான மகளிர் தலையணிவகை.
**திருகுபலை** – வலம்புரிக்காய்.
**திருகுமணை** – தேங்காய் துருவும் மணை.
**திருகுமரை** – திருகு முதலியவற்றின் சுரிந்த வரை; திருகாணி; திருகாணியின் தலை.
**திருகுமூலம்** – முடக்கொற்றான்.
**திருகுவட்டம்** – நூல் சுற்றும் கருவி.
**திருகுவில்லை** – காண்க: **திருகுப்பூ.**
**திருகுளி** – உளிவகை; திருப்புளி; காண்க: **திருகூசி.**
**திருகூசி** – துளையிடும் கருவிவகை; கிணற்றுத் துலாவின் குறுக்கே இடும் அச்சுக்கட்டை.
**திருச்சபை** – சிதம்பரத்தில் நடராசர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்; கிறித்தவர் கூடித் தொழும் இடம்.
**திருச்சியம்** – காணப்படுகிற பொருள்.
**திருச்சிற்றம்பலம்** – சிதம்பரத்திலுள்ள சிற்சபை; சைவர்கள் வழங்கும் வணக்கச்சொல்; ஓர் ஊர்.
**திருச்சின்னம்** – தெய்வம், அரசன் முதலாயினோர் முன் ஒலிக்கும் ஊதுகுழலுள்ள விருதுவகை.
**திருச்சீரலைவாய்** – காண்க: **திருச்செந்தூர்.**
**திருச்சுற்றாலயம்** – கோயிலின் பிராகாரத்திலுள்ள பரிவார தேவதைகளின் கோயில்.
**திருச்சுற்றாலை** – காண்க: **திருச்சுற்றாலயம்; திருச்சுற்றுமாளிகை.**
**திருச்சுற்று** – கோயிற்பிராகாரம்.
**திருச்சுற்றுமாளிகை** – கோயிலின் உட்பிராகாரத்தை ஒட்டியிருக்கும் மண்டபம்.
**திருச்செந்தூர்** – திருநெல்வேலி மாவட்டத்திலுள்ளதும் முருகக்கடவுள் ஆறுபடை வீடுகளில் ஒன்றுமான தலம்.
**திருச்செவிசாத்துதல்** – கேட்டருளுதல்.
**திருசி** – கண்.
**திருசியம்** – காணப்படும் பொருள்.
**திருசை** – காண்க: **திருசி.**
**திருசோபம்** – வெண்டாமரை.
**திருட்டாந்தம்** – எடுத்துக்காட்டு.

**திருட்டாந்தவாபாசம்** – உதாரணப்போலி.
**திருட்டாபோகம்** – இம்மையில் நுகரும் இன்பம்.
**திருட்டி** – கண்; பார்வை; நோக்கம்; தீக்கண்; கண்ணெச்சில்.
**திருட்டித்தல்** – கண்ணுக்குப் புலனாதல்; தோற்றுவித்தல்.
**திருட்டிபந்து** – மின்மினிப்பூச்சி.
**திருட்டிபோகம்** – கண்ணுக்கினிய காட்சி.
**திருட்டியம்** – ஞானம், அறிவு.
**திருட்டு** – களவு; வஞ்சகம்.
**திருட்டுத்தனம்** – கள்ளக்குணம்; தந்திரம்; அயோக்கியத்தனம்.
**திருட்டுவழி** – கள்ளப்பாதை; திட்டிவாசல்.
**திருட்டுவாசல்** – இரகசிய வழி.
**திருடக்காண்டம், திருடக்கிரந்தி** – மூங்கில்.
**திருடதை** – உறுதி; பலம்; மிகுதி.
**திருடபலம்** – கொட்டைப்பாக்குவகை.
**திருடம்** – வலிமை; இரும்பு.
**திருடமூலம்** – தேங்காய்.
**திருடன்** – கள்வன்; தந்திரக்காரன்; காண்க: **விட்டுணுக்கரந்தை.**
**திருடி** – திருடுபவள்; கள்ளிச்செடி.
**திருடு** – களவு.
**திருடுதல்** – களவாடுதல்.
**திருணகம்** – வாளுறை.
**திருணசிங்கம்** – கோடரி.
**திருணதை** – வில்.
**திருணபதி** – புல்லின் அரசனான பனை.
**திருணபூலி** – புல்லாலாகிய பாய், கோரைப்பாய்.
**திருணம்** – உலர்ந்த புல்; உடைவாள்; வில்; தேள்; தேனீ.
**திருணராசன்** – காண்க: **திருணபதி.**
**திருணோற்பவம்** – காட்டுப்பயிர்.
**திருத்தம்** – ஒழுங்கு; திட்டம்; பிழைதிருத்துகை; செப்பனிடுதல்; முன்னுள்ளதைச் சிறிது மாற்றுகை; உச்சரிப்புத் தெளிவு; புண்ணியநீர்.
**திருத்தல்** – திருத்தம்; வயல்.
**திருத்தன்** – தூய்மையானவன்; கடவுள்.
**திருத்தி** – மனநிறைவு.
**திருத்து** – பண்படுத்தப்பட்ட நிலம்; நன்செய் நிலம்; ஒப்பனை.
**திருத்துதல்** – செவ்விதாக்குதல்; சீர்ப்படுத்துதல்; மேன்மைப்படுத்துதல்; செம்மையாகச் செய்தல்; நிலம் முதலியவற்றைப் பண்படுத்தல்; இலை, காய் முதலியன நறுக்குதல்; செம்மைபெற அணிதல்; உறவாக்குதல்; மெருகிடுதல்; மேற்பார்த்தல்; அழைத்தல்.
**திருத்துழாய்** – காண்க: **துளசி.**
**திருத்தொண்டர்** – இறைவனடியார்.
**திருத்தொண்டு** – கடவுளடியார்க்குச் செய்யும் பணிவிடை.
**திருத்தோப்பு** – கோயிலுக்குரிய நந்தவனம்.
**திருதம்** – தரிக்கை; தாளவகை.
**திருதி** – உறுதி; துணை; யோகம் இருபத்தேழனுள் ஒன்று; திராவகம்; சத்து; விரைவு.
**திருதிமை** – மனத்திட்பம்.
**திருதியை** – தேய்பிறை வளர்பிறைகளில் வரும் மூன்றாம் திதி.
**திருந்தகைமை** – மேன்மை.
**திருந்தலர், திருந்தார்** – பகைவர்.
**திருந்தினர்** – ஒழுக்கமுள்ளவர்.
**திருந்துதல்** – சீர்ப்படுதல்; செவ்விதாதல்; பண்படுத்தப்படுதல்; தொழில் முற்றுதல்; அழகுபடுதல்; மேன்மையாதல்; பயிற்சி மிகுதல்.
**திருநகர்** – செல்வநகரம்.
**திருநட்சத்திரம்** – பெரியோர் பிறந்த நட்சத்திரம்; பெரியோர் மறைந்த நட்சத்திரம்; வயது.
**திருநடனம்** – இறைவன் திருக்கூத்து.
**திருநடைமாளிகை** – கோயிற்பிராகாரம்.
**திருநந்தவனம்** – கோயில் நந்தவனம்.
**திருநந்தாவிளக்கு** – சுவாமி திருமுன் எப்பொழுதும் எரிந்துகொண்டிருக்கிற விளக்கு.
**திருநல்லியாண்டு** – நல்ல வளமையான ஆட்சி ஆண்டு.
**திருநாடலங்கரித்தல்** – வைகுண்டத்தை அலங்கரிக்கும் நற்கதியடைதல்.
**திருநாடு** – வைகுண்டம்.
**திருநாமக்கத்திரி** – ஒரு பாம்புவகை.
**திருநாமச்செடி** – ஒரு செடிவகை.
**திருநாமத்துக்காணி** – தேவதான நிலம்.
**திருநாமத்துத்தி** – ஒரு பூடுவகை.
**திருநாமப்பாட்டு** – இயற்றியவரின் பெயர், பயன் முதலியவை கூறும் பதிகவிறுதிப் பாட்டு.
**திருநாமப்பாலை** – ஒரு பூடுவகை.
**திருநாமம்** – தெய்வம் அல்லது பெரியோரின் பெயர்; வைணவர் தரிக்கும் ஊர்த்துவ புண்டரம்; மதிப்புவாய்ந்த மக்கள்.
**திருநாள்** – விழாநாள்; பிறந்தநாள்.
**திருநாளைப்போவார்நாயனார்** – தில்லையைக் காண நாளைப் போவேன் என்றவராகிய நந்தனார்.
**திருநிலைமகளிர்** – சுமங்கலிகள்.
**திருநீலகண்டன்** – கரிய கழுத்தையுடையவனான சிவன்; ஒரு பூரான்வகை; தீயன்.
**திருநீற்றுக்காப்பு** – பெரியோரால் ஒருவருக்குக் காப்பாக இடப்படும் திருநீறு; திருநீறு.
**திருநீற்றுக்கோயில்** – திருநீற்றுப் பை.

**திருநீற்றுப்பச்சை, திருநீற்றுப்பத்திரி** – ஒரு செடிவகை.
**திருநீற்றுப்பழம்** – திருநீற்றுருண்டை.
**திருநீற்றுமடல்** – திருநீறு வைக்கும் கலம்.
**திருநீறு** – விபூதி.
**திருநுந்தாவிளக்கு** – காண்க: **திருநந்தாவிளக்கு.**
**திருநோக்கம், திருநோக்கு** – கடவுள், குரு முதலியோரின் அருட்பார்வை.
**திருப்தி** – காண்க: **திருத்தி.**
**திருப்படிமாற்று** – திருக்கோயிலில் மூர்த்திகளுக்குப் படைக்கும் அரிசி முதலிய பண்டம்.
**திருப்படிமாறுதல்** – சுவாமிக்குப் படையற் பொருள் அமைத்தல்.
**திருப்படைவீடு** – கடவுள் கோயில்கொண்டுள்ள தலம்.
**திருப்பணி** – கோயில்தொண்டு; கோயில் கட்டுதல் புதுப்பித்தல் முதலிய வேலை; பெரியோர்களுக்குச் செய்யும் தொண்டு; நற்காரியம்.
**திருப்பணிமாலை** – கோயில் திருப்பணி விவரம் கூறும் நூல்வகை.
**திருப்பதி** – புண்ணியத்தலம்; திருவேங்கடம் என்னும் திருமால் தலம்.
**திருப்பதிக(ய)ம்** – தெய்வத்தைப் புகழ்ந்துரைக்கும் பத்து அல்லது பதினொரு பாடல் கொண்டது.
**திருப்பம்** – திரும்புகை; திரும்பும் தெருக்கோடி; சவரி என்னும் மயிர்முடி; பண வாணிகம்.
**திருப்பரிவட்டம்** – தெய்வத் திருமேனிக்குச் சாத்தும் ஆடை; கோயில் மரியாதையாகப் பெரியோர் தலையில் சுற்றிக் கட்டப்படும் கடவுளின் ஆடை.
**திருப்பல்லாண்டு** – பல்லாண்டு பல்லாண்டு என்று கடவுளரைப் புகழ்ந்து பாடும் பாடல்வகை; சிவபெருமான்மீது சேந்தனார் பாடிய நூல்; நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்துள் பெரியாழ்வார் பாடிய நூல்.
**திருப்பள்ளி** – திருக்கோயில்; தெய்வசயனம்.
**திருப்பள்ளித்தாமம்** – கோயில்மூர்த்திகளுக்குச் சாத்தப்படும் மாலை.
**திருப்பள்ளிபடுத்துதல்** – சன்னியாசிகளை அடக்கம் செய்தல்.
**திருப்பள்ளியெழுச்சி** – தேவர்கள் உறக்கம் விட்டெழுதல்; கடவுளைத் துயிலெழுப்புவதாக அமைந்த பாடல்கள் அடங்கிய பதிகம்.
**திருப்பாட்டு** – கடவுளைப்பற்றிப் பெரியோர் பாடிய பாட்டு; தேவாரம்; வசைச்சொல்.
**திருப்பாவாடை** – கோயில் மூர்த்திக்குப் படைக்கும் பெரிய நிவேதனம்; நிவேதனம் படைக்கும் ஆடை.
**திருப்பாவை** – நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்துள் பாவைநோன்பு குறித்து ஆண்டாள் பாடியதொரு நூல்.
**திருப்பாற்கடல்** – திருமால் பள்ளிகொண்டருளும் இடம்.
**திருப்பி** – ஆணியைத் திருகி உட்செலுத்தும் ஆயுதவகை; காண்க: **வட்டத்திருப்பி.**
**திருப்பு** – தடவை; ஒரு மீன்வகை.
**திருப்புகழ்** – தெய்வப் புகழ்ச்சியான பாடல்; அருணகிரிநாதர் முருகக்கடவுள்மீது பாடிய நூல்.
**திருப்புதல்** – திரும்பச் செய்தல்; மாற்றுதல்; பாடத்தை மறுமுறை ஓதல்; மொழிபெயர்த்தல்; ஏட்டின் பக்கத்தைத் தள்ளுதல்; முறுக்குதல்; கவிழ்த்தல்; சாவி கொடுத்தல்; திருப்பிக் கொடுத்தல்; விதிர்த்தல்; நோய் முதலியன தணித்தல்; சூனியத்தைத் திரும்பச் செய்தல்.
**திருப்புளி** – திருகாணி இறுக்கும் கருவி.
**திருப்பூட்டு** – தாலி; மணமகளுக்குத் தாலி கட்டுகை.
**திருப்பூட்டுதல்** – மணமகள் கழுத்தில் தாலி கட்டுதல்.
**திருப்பூவல்லி** – மகளிர் பூக்கொய்தலைப்பற்றிக் கூறும் திருவாசகப் பகுதி.
**திருப்பொறி** – அரசர் முதலியோர்க்குரிய உடல் இலக்கணம்.
**திருப்போனகம்** – கடவுளுக்குப் படைத்த அமுது.
**திரும்புகால்** – மீளும் சமயம்.
**திரும்புதல்** – மாறுதல்; மீளுதல்; விலகுதல்; வளைதல்; சூரியன் சாய்தல்.
**திருமகள்** – செல்வத்துக்குத் தலைவியான திருமால் மனைவி.
**திருமகள்கொழுநன்** – திருமகளின் கணவனான திருமால்.
**திருமகள்மைந்தன்** – திருமகளின் புதல்வனான மன்மதன்.
**திருமகளாடல்** – பாவை என்னும் கூத்து.
**திருமகன்** – திருமகள் கொழுநனான திருமால்; திருமகள் மைந்தனான காமன்; செல்வமகன்.
**திருமங்க(கி)லியம்** – தாலி.
**திருமஞ்சனம்** – திருமுழுக்கு; திருமுழுக்குக்குரிய நீர்.
**திருமஞ்சனமாட்டுதல்** – திருமுழுக்காட்டுதல்.
**திருமடந்தை** – திருமகள்.
**திருமடம்** – குருவின் மாளிகை.
**திருமடவளாகம்** – கோயிலைச் சுற்றியுள்ள இடம்.
**திருமடைப்பள்ளி** – சமையலறை.
**திருமண்** – வைணவர் நெற்றியிலணியும் நாமம்; நாமக்கட்டி.

**திருமண்காப்பு** – வைணவர் நெற்றியில் இடும் திருநாமம்.

**திருமணம்** – கலியாணம்.

**திருமணம்பரிமாறுதல்** – தாளித்தல்; பொய் கலந்து பேசுதல்.

**திருமணிகுயிற்றுநர்** – முத்துக்கோப்போர்.

**திருமதில்** – கோயிலின் சுற்றுமதில்.

**திருமதுரம்** – பழம், நெய், சருக்கரை சேர்த்துச் செய்யப்படும் படையற்பொருள்.

**திருமந்திரம்** – சிவஐந்தெழுத்து; திருமால் எட்டெழுத்து; திருமூலர் இயற்றிய நூல்; கோயில்.

**திருமந்திரவோலைநாயகம்** – அரசவை எழுத்தாளர் தலைவன்.

**திருமரம்** – அரசமரம்.

**திருமலர்** – திருமகள் வீற்றிருக்கும் தாமரைமலர்.

**திருமலை** – தூய்மையான மலை; கயிலாயமலை; திருவேங்கடமலை.

**திருமறுமார்பன்** – அருகன்; மார்பில் அழகிய மறுவையுடைய திருமால்.

**திருமாது, திருமாமகள்** – திருமகள்.

**திருமாமணிமண்டபம்** – பரமபதத்துள்ள திருவோலக்க மண்டபம்.

**திருமால்** – விட்டுணு; அரசன்.

**திருமால்குன்றம்** – அழகர்மலை.

**திருமால்கொப்பூழ்** – திருமாலின் கொப்பூழிலிருந்து உண்டான தாமரை.

**திருமால்நிலை** – திருமாலின் பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை என்னும் ஐவகை வடிவங்கள்.

**திருமால்புதல்வன்** – திருமாலின் மகனான மன்மதன்; பிரமன்.

**திருமாலவதாரம்** – மீன், ஆமை, பன்றி, நரசிங்கம், வாமனம், பரசுராமன், இராமன், பலராமன், கண்ணன், கற்கி என்னும் திருமாலின் பத்துப் பிறப்புகள்; சனகன், சனந்தனன், சனாதனன், சனற்குமாரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்கிரீவன், தத்தாத்திரேயன், மோகினி, வேள்வியின்பதி, வியாதன், தன்வந்தரி, புத்தன் எனப் பதினைந்து கூறுகளையுடைய பிறப்புகள்.

**திருமாலாயுதம்** – திருமாலின் ஐம்படைகளான பாஞ்சசன்னியம் என்னும் சங்கு, சுதரிசனம் என்னும் சக்கரம், சார்ங்கம் என்னும் வில், நாந்தகம் என்னும் வாள், கௌமோதகி என்னும் தண்டு.

**திருமாலிருஞ்சோலை** – காண்க: **அழகர்மலை.**

**திருமாளிகை** – கோயில்மதிலை ஒட்டி உட்புறத்து அமைத்துள்ள கட்டட வரிசை; பெரியோர் வாழும் இல்லம்.

**திருமானகரம்** – காண்க: **திருநாடு.**

**திருமுகம்** – கடவுள் சன்னிதானம்; பெரியோர் வரைந்து அனுப்பும் ஓலை; அரசனது சாசனம்.

**திருமுட்டு** – பூசைத்தட்டு முதலியன.

**திருமுடி** – கோயில்மூர்த்தியின் தலைப்பகுதி; மதிப்புவாய்ந்த மக்கள்; கொத்துவேலை செய்வோர்.

**திருமுடிச்சாத்து** – தலைப்பாகை.

**திருமுடிச்சேவகர்** – ஐயனார்.

**திருமுடித்திலகம்** – திருமுடியில் சூட்டும் மணி.

**திருமுடியோன்** – முடிசூடிய அரசன்.

**திருமுண்டம்** – சைவர்கள் மூன்று வரியாக நெற்றியில் இடும் திருநீற்றுக்குறி.

**திருமுதல்** – திரும்புதல்; நன்றாகத் தேய்த்தல்.

**திருமுழுக்கு** – காண்க: **திருமஞ்சனம்;** மார்கழி மாதத்தில் பாவைநோன்புகொண்டு மகளிர் முழுகும் நீராட்டு.

**திருமுளைப்பாலிகை** – திருமணம் முதலிய சிறப்பு நிகழ்ச்சிகளில் தானிய முளை வளர்க்கப்பெறும் மண்குடுவை.

**திருமுற்றத்தார்** – கோயிற்பணி செய்வோர்.

**திருமுற்றம்** – கோயிற் சன்னிதானம்; குதிரை வையாளிவீதி.

**திருமுறை** – இறைவனிடம் முறையிட்டுப் பாடும் தெய்வப்பாடல்கள்; தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம், பதினோராந் திருமுறை, பெரியபுராணம் என்னும் சைவத் திருநூல்கள்; இராமலிங்க அடிகள் பாடிய நூல்கள்.

**திருமுன், திருமுன்பு, திருமுன்னர்** – சன்னிதி; சன்னிதியில்.

**திருமெய்க்காப்பு** – கோயில் காப்போன்.

**திருமெய்ப்பூச்சு** – கோயில்மூர்த்தங்களின்மேல் பூசப்படும் மணப்பூச்சு; புனுகு, களபம் முதலியன.

**திருமெழுக்கு** – சாணம்; கோயிலிடத்தை மெழுகுகை.

**திருமேற்பூச்சு** – காண்க: **திருமெய்ப்பூச்சு.**

**திருமேனி** – கடவுள், முனிவர் முதலியோரது தெய்வ உடல்; சிலை; பெண்கள் காதணி; காண்க: **குப்பைமேனி.**

**திருமேனிகாவல்** – கோயிற்காவல்.

**திருமேனியழகி** – காண்க: **குப்பைமேனி.**

**திருமை** – அழகு.

**திருமொழி** – பெரியோர் சொல்; ஆகமம்; தருமம்; நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்துள் ஒன்றான பெரிய திருமொழி.

**திருவகுப்பு** – சந்தக் குழிப்பில் அமைந்த செய்யுள் வகை.

**திருவட்டி** – காண்க: **திருகுகள்ளி.**

**திருவடி** – சீபாதம்; சுவாமி; முனிவர்; திருமாலின் பாதத்தில் இருக்கும் அனுமான்; கருடன்; திருவாங்கூர் அரசர்; நோவில்லாத புண்; கோமாளி விகடம்.

**திருவடிக்கம்** – திருமால்கோயிற் படிக்கத்தி னின்று எடுத்து வழங்கும் சுவாமி தீர்த்தம்.

**திருவடிசம்பந்தி** – சீடன்.

**திருவடித்தலம்** – கடவுள் முதலியோர் பாதுகை.

**திருவடிதீட்சை** – சீடன் தலையில் குரு தன் பாதத்தை வைத்தருளும் தீட்சைவகை.

**திருவடிதொழுதல்** – கடவுள் முதலியோரை வணங்குதல்.

**திருவடிநிலை** – சிலை வைக்கும் மேடை; கடவுளர் முதலியோர் மிதியடி.

**திருவடிபிடிப்பான்** – கோயில் அருச்சகன்.

**திருவடையாளம்** – சைவசமயத்திற்குரிய திருநீறு முதலிய சாதனங்கள்.

**திருவணுக்கன்** – திருவாயில் கருவறையை அடுத்துள்ள இடம்.

**திருவணை** – சேது.

**திருவணைக்கரை** – தனுக்கோடி.

**திருவத்தவர்** – செல்வம் படைத்த நல்வினை யாளர்.

**திருவத்தியயனம்** – திவ்வியப் பிரபந்தம் ஓதுகை; சிராத்தம்.

**திருவந்திக்காப்பு** – திருவிழாக் காலத்தில் சுவாமி புறப்பாட்டின் முடிவில் கண்ணேறு போகச் செய்யும் சடங்கு.

**திருவம்பலம்** – தென்னார்க்காட்டு மாவட்டத்தி லுள்ள புகழ்வாய்ந்த சிவதலம், சிதம்பரம்.

**திருவமால்** – திருமால்.

**திருவமுது** – நிவேதனவுணவு.

**திருவரங்கு** – கோயிலுள்ள முதன்மை மண்டபம்.

**திருவலகிடுதல்** – கோயிலைப் பெருக்கித் துப்புர வாக்கல்.

**திருவலகு** – கோயிலைப் பெருக்கும் துடைப்பம்.

**திருவள்ளுவப்பயன்** – திருவள்ளுவர் தந்த திருக்குறள்.

**திருவளத்தான்** – நகைச்சுவை நடிகன், கோமாளி, **விகடன்.**

**திருவறம்** – மததருமம்; சமண ஒழுக்கம்.

**திருவன்** – செல்வன்; திருமால்; விகடக்காரன்; புரட்டன்; ஒரு மீன்வகை.

**திருவாக்கு** – தெய்வப் பெரியோர்களின் வாய் மொழி.

**திருவாங்குதல்** – தாலி களைதல்.

**திருவாசகம்** – திவ்விய வாக்கு; மாணிக்கவாசகர் அருளிய துதிநூல்.

**திருவாசி, திருவாசிகை, திருவாட்சி** – வாகனப் பிரபை; ஒரு மாலை வகை.

**திருவாட்டி** – செல்வி, செல்வமுடையவள்.

**திருவாடுதண்டு** – கோயில் ஊர்தியைச் சுமக்க உதவும் தண்டு; ஒரு பல்லக்குவகை.

**திருவாணை** – அரசாணை.

**திருவாத்தான்** – காண்க: **திருவளத்தான்.**

**திருவாத்தி** – ஒரு பூமரவகை.

**திருவாதிரை** – இருபத்தேழு நட்சத்திரங்களுள் ஆறாவது நட்சத்திரம்; காண்க: **ஆருத்திரா தரிசனம்;** சடங்குவகை.

**திருவாபரணம்** – கடவுளர்க்கு அணியும் அணி கலன்.

**திருவாய்க்கேள்வி** – அரசனது ஆணை; இராச விசாரணை.

**திருவாய்மலர்தல்** – கூறியருளுதல்; பெரியார் சொல்லுதல்.

**திருவாய்மொழி** – தெய்வவாக்கு; நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்துள் நம்மாழ்வார் அருளிய தமிழ்நூல்.

**திருவாராதனம்** – கடவுட்பூசை; இறைவனது ஐயாற்றலுள் ஒன்று.

**திருவாலி** – புரட்டன்.

**திருவாழ்த்தான்** – காண்க: **திருவளத்தான்.**

**திருவாழி** – திருமாலின் சக்கரம்; மோதிரம்.

**திருவாழிக்கல்** – முத்திரையிடப்பெற்ற எல்லைக் கல்.

**திருவாளர்** – ஒருவர் பெயருக்குமுன் வழங்கும் மரியாதைச் சொல்.

**திருவாளன்** – விகடன்; தெய்வத் திருவருள் பெற் றவன்.

**திருவாறாட்டு, திருவாறாடல்** – தெய்வத் திருமேனியை நீராட்டுகை.

**திருவி** – செல்வம் உள்ளவள்.

**திருவிடையாட்டம்** – கோயில்தொண்டு; தேவ தான மானியம்.

**திருவிருந்து** – திவ்விய விருந்து; நல்லருள்.

**திருவிருப்பு** – கோயில் அமைந்த இடம்.

**திருவில்** – அழகிய வில்லான வானவில்.

**திருவிலி** – தாலியற்ற கைம்பெண்.

**திருவிழா** – கோயிலில் நிகழும் திருநாள்.

**திருவிழாப்புறம்** – திருவிழா நடத்துவதற்காக விடப்பட்ட இறையிலி நிலம்.

**திருவிளக்கு** – கோயில் விளக்கு; மங்கலமாக வைக்கும் விளக்கு.

**திருவிளக்குநாச்சியார்** – விளக்குத் தெய்வம்; கையில் விளக்கு ஏந்திய பதுமை.

**திருவிளம்** – காண்க: **திராய்; சிவதை.**

**திருவிளையாட்டு** – தெய்வ விளையாட்டு.

**திருவிளையாடல்** – தெய்வலீலை; திருவிளையாடற் புராணம்; சிற்றின்பக் களியாட்டம்.

**திருவினாள்** – திருமகள்.

**திருவினை** – நல்வினை.

**திருவீதியலங்கரித்தல்** – கோயில்மூர்த்தி தெருவில் உலாவரல்.

**திருவுடம்பு** – தெய்வக்களை பொருந்திய உடம்பு; தெய்வத்திருமேனி.

**திருவுண்ணாழி, திருவுண்ணாழிகை** – கருவறை.

**திருவுரு** – தெய்வ வடிவம்; தெய்வத்திருமேனி.

**திருவுள்ளம், திருவுளக்குறிப்பு** – தெய்வசித்தம்; பெரியோர் உள்ளக்கருத்து.

**திருவுளச்சீட்டு** – தெய்வசித்தமறியுஞ் சீட்டு.

**திருவுளச்செயல்** – தெய்வச்செயல்.

**திருவுளத்தடைத்தல்** – மனத்திற்கொள்ளுதல்.

**திருவுளம்பற்றுதல்** – ஏற்றுக்கொள்ளுதல்; கேட்க மனங் கொள்ளுதல்; அருள்புரிதல்; கருதுதல்.

**திருவுளம்வைத்தல்** – அருள்புரிதல்; விருப்பங் கொள்ளுதல்.

**திருவுளமடுத்தல்** – எண்ணுதல்.

**திருவுளமறிய** – தெய்வசாட்சியாய்.

**திருவுறுப்பு** – மகளிர் நெற்றியில் அணியும் சீதேவி என்னும் அணி.

**திருவூசல்** – கோயில்மூர்த்திகள் எழுந்தருளியிருந்து ஆடும் ஊஞ்சல்.

**திருவூறல்** – ஊற்றுநீர்; வெயிற்காலத்திலே ஆற்றிடைக்குறையில் நடத்துந் திருவிழா.

**திருவெம்பாவை** – மார்கழி மாதத்தில் ஓதப்படும் திருவாசகப் பகுதி.

**திருவெழுச்சி** – திருவிழா.

**திருவெழுத்து** – அரசன் கையெழுத்து; கொச்சி, திருவிதாங்கூர் அரசர்களின் கட்டளை; ஐந்தெழுத்து மந்திரம்.

**திருவேகம்பம்** – காஞ்சிபுரத்தில் விளங்கும் சிவன் திருக்கோயில்.

**திருவேங்கடம்** – திருப்பதி என்று வழங்கும் திருத்தலம்.

**திருவேடம்** – திருநீறு, கண்டிகை முதலிய சைவக் கோலம்; சைவ மடங்களில் உள்ள துறவியர் அணியும் காதணிவகை.

**திருவொற்றாடை** – திருமுழுக்குச் செய்ததும் சுவாமி திருமேனியில் ஒற்றி உபசரிக்கும் ஆடை.

**திருவோடு** – பரதேசிகளின் பிச்சைப்பாத்திரம்.

**திருவோணம்** – இருபத்தேழு நாள்களுள் இருபத்திரண்டாவது நாள்; திருவோணத் திருவிழா.

**திருவோலக்கம்** – அத்தாணி மண்டபத்தில் வீற்றிருக்கை; தெய்வ சன்னிதானம்.

**திருவோலை** – காண்க: **திருமுகம்.**

**திரேக்காணம்** – இராசியின் மூன்றில் ஒரு பாகம்.

**திரேதம்** – காண்க: **திரேதாயுகம்.**

**திரேதாக்கினி** – காண்க: **முத்தீ.**

**திரேதாயுகம், திரேதை** – நான்கு யுகங்களுள் இரண்டாவது.

**திரை** – அலை; ஆறு; பூமி; கடல்; ஏழு என்னும் குழூஉக்குறி; திரைச்சீலை; தோற்சுருக்கம்; வெற்றிலை; வெற்றிலைச் சுருள்; வைக்கோற் புரி; பஞ்சுச்சுருள்.

**திரைச்சீலை** – இடுதிரை.

**திரைத்தல்** – சுருக்குதல்; சுருட்டுதல், தன்னுள் அடக்குதல்; ஒதுக்குதல்; ஆடைகொய்தல்; அலையெழுதல்; அணைத்தல்; தோல் சுருங்குதல்.

**திரைத்தவிர்தல்** – விட்டுவிட்டு ஒளிவிடல்.

**திரைத்துப்பாடுதல்** – திரும்பத்திரும்ப நீட்டிப் பாடுதல்.

**திரைதல்** – சுருங்குதல்; வயது முதிர்ச்சியால் தோல் சுருங்குதல்; அலையெழுதல்; மிதந்து ஆடுதல்; திரிதல்; திரளுதல்; இழை விலகுதல்.

**திரைப்பு** – சுருங்குகை; அலையெழுகை; திரையால் மறைத்த இடம்.

**திரையல்** – சுருங்கல்; வெற்றிலை; வெற்றிலைச் சுருள்.

**திரையன்** – நெய்தல்நிலத் தலைவன்; தொண்டைநாட்டு அரசன்.

**திரைராசிகம்** – முத்தொகை வினா.

**திரைலோக்கியம்** – மூவுலகம்; பேரழகுள்ளது.

**திரைவிழுதல்** – தோல் சுருக்குவிழுதல்.

**திரைவு** – தோல் சுருங்குகை; அலையெழுகை.

**திரோகிதம்** – மறைவு; மறைக்கப்பட்டது.

**திரோதகம்** – மறைத்தலைச் செய்வது.

**திரோதசத்தி, திரோதம், திரோதயம், திரோதாயி, திரோதானகரி, திரோதானசத்தி** – மறைத்தல், ஆன்மாக்களுக்கு உலக அனுபவங்களைக் கொடுத்து உண்மையை மறைத்தல் செய்யும் சிவபெருமானின் ஐவகை ஆற்றலுள் ஒன்று.

**திரோதானம்** – மறைப்பு; ஒரு நரகம்; காண்க: **திரோதானசத்தி; திரோப(பா)வம்.**

**திரோதித்தல்** – மறைத்தல்; ஆன்மாவை மயக்கமுறச் செய்தல்.

**திரோதை** – காண்க: **திரோதசத்தி.**

**திரோப(பா)வம்** – ஆன்மா தன் கன்மம் முடியும் வரையில் உலக அனுபவங்களில் உழன்று மயங்கும்படி உண்மையை மறைத்தலைச் செய்யும் சிவபெருமானது அருட்செயல்.

**திரோபவித்தல்** – மறைத்தல்; ஆன்மாவை மயக்க முறச் செய்தல்.

**திரௌபதர், திரௌபதீயர்** – திரௌபதியின் புதல்வர்.

**தில், தில்ல** – விழைவு, காலம், ஒழியிசை என்னும் பொருளில் வரும் ஓர் இடைச்சொல்.

**தில்லம்** – காடு.

**தில்லானா** – தாளக்குறிப்பு; ஒரு சந்தக்குழிப்பு; தில்லா அல்லது தில்லானா என்று முடியும் இசைப்பாட்டுவகை.

**தில்லி** – டில்லிப்பட்டணம்; மிகச் சிறிய நிலப் பகுதி.

**தில்லியம்** – நல்லெண்ணெய்; புதிதாகத் திருத்தப் பட்ட விளைபுலம்.

**தில்லுப்பில்லு, தில்லுமுல்லு** – பொய்புரட்டு.

**தில்லை** – ஒரு மரவகை; சிதம்பரம்; தில் என்னும் இடைச்சொல்; சம்பாநெல்வகை.

**தில்லைநாயகம்** – ஒரு சம்பாநெல்வகை.

**தில்லைமூவாயிரவர்** – சிதம்பரம் திருக்கோயிலின் உரிமைக்குருக்கள், தில்லைவாழ் அந்தணர்.

**தில்லையம்பலம்** – கனகசபை, சிதம்பரத்தில் நடராசர் கோயில்கொண்டுள்ள பொன்னம் பலம்.

**தில்லைவனம்** – தில்லைமரக் காடாகிய சிதம்பரம்.

**திலகடம்** – எள்ளுப்பிண்ணாக்கு.

**திலகம்** – நெற்றிப்பொட்டு; சிறந்தது; கட்டளைக் கலித்துறைவகை; மஞ்சாடிமரம்.

**திலகலம்** – செக்கு.

**திலகன்** – சிறந்தவன்.

**திலகாதுகன்** – எண்ணெய் வாணியன்.

**திலகை** – எள்ளுப்போலக் கருநிறமுள்ள கத்தூரி வகை.

**திலதண்டகன்** – காண்க: **திலகாதுகன்.**

**திலதண்டுலம்** – எள்ளுடன் கலந்த அரிசி; புணர்ச் சிக் காலத்துச் செய்யும் எண்வகை ஆலிங்கனத் துள் ஒன்று.

**திலதம்** – காண்க: **திலகம்.**

**தில்தர்ப்பணம்** – பிதிரர்பொருட்டு எள்ளுந் தண்ணீரும் இறைத்தல்.

**திலதைலம்** – நல்லெண்ணெய்.

**திலப்பொறி** – எள் இட்டு ஆட்டும் செக்கு.

**திலம்** – எள்ளு; மஞ்சாடிமரம்.

**திலவகம்** – விளாம்பட்டை.

**திலு** – மூன்றனைக் குறிக்க வழங்கும் குழூஉக் குறி.

**திலுப்புலு** – முப்பது என்பதனைக் குறிக்கும் குழூஉக்குறி.

**திலோத்தமை** – தெய்வலோக ஆடல் மகளிருள் ஒருத்தி.

**திலோதகம்** – காண்க: **திலதர்ப்பணம்.**

**திவ்வியகவி** – தெய்வப்புலவன்.

**திவ்வியசட்சு** – காண்க: **திவ்வியதிருட்டி.**

**திவ்வியத்தொனி** – தேவர்கள் அருகக்கடவுள் முன்பு செய்யும் ஆரவார ஒலி.

**திவ்வியதிருட்டி** – முக்கால உணர்வு, தீர்க்க தரிசனம்; தீர்க்கதரிசி.

**திவ்வியதீர்த்தம்** – வெயில் காயும்போது பெய்யும் மழையில் நீராடல்.

**திவ்வியதேசம்** – ஆழ்வார்களால் பாடப்பெற்ற திருப்பதிகள்.

**திவ்வியப்பிரபந்தம்** – பன்னிரு ஆழ்வார்களின் அருளிச் செயல்களாகிய நாலாயிரம் பாடல் கொண்ட தொகுதி.

**திவ்வியபோதனை** – ஞானோபதேசம்.

**திவ்வியம்** – தெய்வத்தன்மையுள்ளது; மேன்மை யானது; ஒரு சந்தனவகை.

**திவ்வியமங்களவிக்கிரகம்** – அருச்சனை செய்து வழிபடற்குரிய தெய்வத்திருமேனி.

**திவ்வியமாக** – நன்றாக.

**திவ்வியமுத்திரை** – கட்டைவிரலும் மோதிரவிர லும் சேர்ந்த முத்திரை.

**திவ்வியரத்தினம்** – சிந்தாமணி முதலிய தெய்வமணி.

**திவ்வியவராடி** – குறிஞ்சிப்பண்வகை.

**திவ்வியவருடம்** – தேவஆண்டு; அது மானுட ஆண்டு முந்நூற்றறுபத்தைந்து கொண்டது என்பர்.

**திவ்வியாத்திரம்** – தெய்வப்படைகள்.

**திவ்வியாதிவ்வியம்** – தெய்வத்தன்மையும் மானுடத்தன்மையும் சேர்ந்துள்ளது.

**திவ்வியாபரணம்** – அரசர் முதலியோர் அணியும் சிறந்த அணிகலன்.

**திவசம்** – பகல்; நாள்; சிராத்தம்; ஒருவர் இறந்த திதி.

**திவம்** – பகல்; பரமபதம்; வானம்.

**திவரம்** – நாடு.

**திவலை** – சிதறுந் துளி; மழைத்துளி; மழை.

**திவவு** – யாழின் தண்டில் நரம்புகளை வலிபெறக் கட்டும் வார்க்கட்டு; மலைமேல் ஏறும் படிக்கட்டு.

**திவள்(ளு)தல்** – துவளுதல்; வாடுதல்; திளைத் தல்; அசைதல்; விளங்குதல்; தொடுதல்; தீண்டி யின்புறுத்துதல்.

**திவறுதல்** – சாதல்.

**திவா** – பகல்; நாள்; நற்செயலுக்கு ஆகாதென நீக்கப்படும் காலம்.

**திவாகரன்** – சூரியன்; திவாகரம் என்னும் நூலின் ஆசிரியன்.

**திவாந்தகாலம்** – மாலை.

**திவாந்தம்** – பகற்குருடாகிய ஆந்தை.

**திவாபீதம்** – வெண்டாமரை.

**திவாராத்திரம், திவாராத்திரி** – பகலும் இரவும்.

**திவால்** – கடனைத் தீர்க்க வலுவற்ற நிலை.

**திவான்** – முதலமைச்சன்; அரசிறையதிகாரி.

**திவானி** – நீதிமன்றம்.

**திவி** – துறக்கம்; பகற்பொழுதில் நற்செயலுக்கு ஆகாதென விலக்கப்பட்ட காலம்.

**திவிதிராட்சம்** – காண்க: **கொடிமுந்திரிகை.**

**திவிபிநாமம்** – காண்க: **கொடிவேலி.**

**திளைத்தல்** – நெருங்குதல்; நிறைதல்; அசைதல்; விளையாடுதல்; முழுகுதல்; நுகர்தல்; தொழிலில் இடைவிடாது பயிலல்; மகிழ்தல்; பொருதல்; துளைத்தல்; கொதிக்கக் காய்ச்சுதல்; இடைவிடாது ஒழுகுதல்.

**திற்றி** – கடித்துத் தின்னுதற்குரிய உணவு; இறைச்சி.

**திறக்கு** – செயல்.

**திறக்குதல்** – அதிகப்படுதல்.

**திறத்தகை** – வலியவன்.

**திறத்தல்** – கதவு முதலியவற்றின் காப்பு நீக்குதல்; பூட்டு முதலியவற்றைத் திறத்தல்; வழி முதலியவற்றின் அடைப்பு நீக்குதல்; வெளிப்படுத்துதல்; புத்தகம் முதலியவற்றை விரித்தல்; துளைத்தல்; பிளத்தல்.

**திறத்தவன்** – செல்வம்படைத்தவன்; வலியவன்; திறமையுடையவன்.

**திறத்தி** – மருத்துவச்சி.

**திறத்திறம்** – நான்கு சுரமுள்ள பண்.

**திறந்தவெளி** – வெளியான இடம்.

**திறந்தறை** – காவலற்ற இடம்; விளைவு இல்லாப் பூமி; மறைவை வெளிப்படுத்துவோன்.

**திறந்துகாட்டுதல்** – வெளிப்படையாக்குதல்; தெளிவாக விளக்குதல்.

**திறந்துபேசுதல்** – மனத்தைவிட்டுப் பேசுதல்.

**திறப்படுதல்** – கூறுபடுதல்; சீர்ப்படுதல்.

**திறப்பண்** – குறைந்த நரம்புள்ள பண்கள்.

**திறப்பணம்** – காண்க: **துறப்பணம்.**

**திறப்பாடு** – கூறுபாடு; சீர்ப்படுகை; திறமை.

**திறப்பு** – வெளியிடம்; திறவுகோல்; வாயில்; பிளப்பு; அரசு தீர்வைநிலம்.

**திறபடுதல்** – திறக்கப்படுதல்; வெளியாதல்.

**திறம்** – கூறுபாடு; வகை; சார்பு; மிகுதி; கூட்டம்; நிலைபெறுதல்; வலிமை; திறமை; மேன்மை; கற்பு; நேர்மை; மருத்துவத் தொழில்; வழி; வரலாறு; குலம்; ஒழுக்கம்; சுற்றம்; ஆடு 80, பசு 80, எருமை 80 கூடின கூட்டம்; கோட்பாடு; விரகு, உபாயம்; ஐந்து சுரமுள்ள இசை; பாதி; உடம்பு; வேடம்; இயல்பு; செய்தி; காரணம்; பேறு.

**திறம்புதல்** – மாறுபடுதல்; தவறுதல்; நரம்பு முதலியன பிறழ்தல்.

**திறமை** – சாமர்த்தியம்; வலிமை; துணிவு; மேன்மை; மிகுதி; பேறு.

**திறமைக்காரன்** – வல்லவன்; செல்வன்.

**திறல்** – வலிமை; ஊக்கம்; பகை; போர்; ஒளி; வெற்றி.

**திறலோன்** – வல்லமையுள்ளவன்; பதினைந்தாண்டுப் பருவத்தான்.

**திறவது** – உறுதியானது; செவ்வையானது.

**திறவறிதல்** – உபாயமறிதல்; இரகசியத்தை வெளியிடும் தகுதியறிதல்; பட்டறிதல்.

**திறவான்** – வல்லவன்.

**திறவிது** – செவ்விது; உறுதியானது.

**திறவு** – திறத்தல்; வாயில்; வழி; வெளியிடம்; உளவு; காரணம்.

**திறவுகோல்** – காண்க: **தாழக்கோல், சாவி.**

**திறவோன்** – பகுத்தறிவுள்ளவன்; வலிமையுடையவன்.

**திறன்** – கூறுபாடு.

**திறனில்யாழ்** – நெய்தல் யாழ்த்திறம்.

**திறாங்கு** – கதவடைதாழ்.

**திறாணி** – காண்க: **திராணி.**

**திறுத(தி)ட்டம்** – நேர்நிற்கை.

**திறுதிறுக்கல்** – அஞ்சி விழித்தல்.

**திறுதிறெனல்** – அச்சத்தோடு நோக்கும் குறிப்பு.

**திறை** – அரசிறை, கப்பம்.

**திறையளத்தல்** – கப்பங்கட்டுதல்.

**தின்பண்டநல்கல்** – முப்பத்திரண்டு அறங்களுள் வழிச்செல்வோருக்கு உணவிடும் அறச்செயல்.

**தின்பண்டம்** – உணவுப்பொருள்; பண்ணிகாரம்.

**தின்பன** – திற்றி.

**தின்ம(மா)ர்** – தின்பவர்.

**தின்மை** – தீமை; சாவு; தீய செயல்.

**தின்றல்** – உண்ணல்; மெல்லுதல்.

**தின்றி** – காண்க: **தின்பண்டம்.**

**தின்னி, தின்னிமாடன்** – கண்ட இடங்களிலெல்லாம் தின்பவன்.

**தின்னுதல்** – உண்ணுதல்; கடித்தல்; மெல்லுதல்; அரித்தல்; அழித்தல்; வருத்துதல்; வெட்டுதல்; அராவுதல்; பெறுதல்.

**தினகரன்** – பகலைச் செய்வோனான சூரியன்.
**தினகவி** – நாள்தோறும் கவிபாடுவோன்; அரசன் திருவோலக்க மண்டபத்தில் உட்காரும் போதும் எழுந்திருக்கும்போதும் பாடும் பாட்டு.
**தினகாரி** – காண்க: **தினகரன்.**
**தினகாலம்** – எப்போதும்.
**தினசரி** – நாள்தோறும்; நாட்குறிப்பு; நாட் செயல்.
**தினசரிக்குறிப்பு** – நாட்குறிப்பு.
**தினத்திரயம்** – மூன்று நட்சத்திரங்கள் வரும் நாள்.
**தினந்தினம், தினந்தோறும்** – ஒவ்வொரு நாளும்.
**தினநாதன்** – நாளுக்குத் தலைவனான சூரியன்.
**தினப்படி** – நாள்தோறும்; நாட்படித்தரம்.
**தினப்பாடு** – தின்னுகை; நாள்தோறும்.
**தினப்பொருத்தம்** – காண்க: **நட்சத்திரப் பொருத்தம்.**
**தினம்** – நாள்; பகல்; நட்சத்திரம்; நாள்தோறும்.
**தினம்பார்த்தல்** – நல்ல நாள் பார்த்தல்.
**தினமணி** – சூரியன்.
**தினமானம்** – காண்க: **நாள்தோறும்; கலியுகம்** தொடக்கமாகக் கணிக்கப்பட்ட நாட்கணக்கு.
**தினமுகம்** – நாளின் முகமான விடியற்காலை.
**தினவர்த்தமானம்** – நாட்செய்தி.
**தினவர்த்தமானி** – செய்தித்தாள்.
**தினவாரி** – நாள்தோறும்.
**தினவிருத்தி** – காண்க: **தினவாரி**; நாள்வேலை.
**தினவு** – சொறி.
**தினவுதென்றல், தினவெடுத்தல்** – அரிப்புண்டாதல்.
**தினாமிகம்** – நாளின் பகுதி.
**தினாரம்பம்** – விடியற்காலம்.
**தினிகை** – நாட்கூலி.
**தினிசு** – பொருளின் தரம்.
**தினிசுவாரி** – தரந்தரமாய், வகைவகையாய்.
**தினை** – சிறுதானியவகை; தினைவகை; ஒரு புல்வகை; காண்க: **சாமை; தினையளவு.**
**தினைக்குருவி** – ஒரு சிறுகுருவிவகை.
**தினைச்சாமை** – காண்க: **சாமை.**
**தினைப்புனம்** – தினை விளையும் புலம்.
**தினையளவு** – மிகச் சிறிய அளவு.

## தீ

**தீ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (த்+ஈ); பஞ்ச பூதத்துள் ஒன்றாகிய நெருப்பு; வேள்வித் தீ; கோபம்; அறிவு; தீமை; நஞ்சு; நரகம்; விளக்கு; உணவைச் செரிக்கச்செய்யும் வயிற்றுத் தீ; வழிவகை.
**தீக்கஞ்சி** – நெருப்புக்கு அஞ்சுவதான ஆரத்திக் கருப்பூரம்.
**தீக்கடவுள்** – அக்கினிதேவன்.
**தீக்கடன்** – இறுதிச்சடங்கு; அக்கினிகாரியம்.
**தீக்கடைகோல்** – கடைந்து நெருப்புண்டாக்க உதவும் அரசு அல்லது வன்னிமரத்துச் சிறு கட்டை.
**தீக்கடைதல்** – கடைந்து நெருப்புண்டாக்குதல்.
**தீக்கணம்** – செய்யுள் முதற்சீராக அமைக்கத் தகாததும் நிரைநேர்நிரை என வருவதுமாகிய செய்யுட்கணம்.
**தீக்கதி** – கொடிய உலகமாகிய நரகம்; கொடிய விதி.
**தீக்கதிர்** – உலையாணிக்கோல்.
**தீக்கரண்டி** – நெருப்பு எடுக்கும் கருவி.
**தீக்கரும்பு** – விறகு.
**தீக்கருமம்** – தீய செயல்; தீக்கடன், ஈமக்கிரியை.
**தீக்கரை** – காண்க: **முள்ளுமுருங்கை.**
**தீக்கல்** – தீத்தட்டிக் கல்; இரும்புச் சத்துள்ள கல்.
**தீக்கலம்** – காண்க: **தீச்சட்டி; ஈமப்பள்ளி.**
**தீக்கனா** – தீமை விளைவிக்கும் கனவு.
**தீக்காய்தல்** – குளிர்காய்தல்.
**தீக்காரியம்** – காண்க: **தீக்கருமம்.**
**தீக்காலி** – தன் வரவால் குடிகேடு விளைப்பவள்; ஓர் அசுரன்.
**தீக்காற்று** – நெருப்புக்காற்று, அனற்காற்று.
**தீக்கித்தல்** – நோன்புகொள்ளல்.
**தீக்கிதர்** – காண்க: **தீட்சிதர்.**
**தீக்குச்சி** – தீ உண்டாக்கும் குச்சி; தீங்கு விளைவிப்போன்.
**தீக்குண்டம்** – ஓமகுண்டம்.
**தீக்குணம்** – கெட்ட குணம்; வெப்பம்.
**தீக்குணர்** – கீழ்மக்கள்; தீயர்.
**தீக்குதித்தல்** – ஆவேசம் முதலியவற்றால் வேண்டுதலுக்காகத் தீக்குழியில் இறங்கி நடத்தல்; தீப்பாய்தல்.
**தீக்குருவி** – காண்க: **தீக்கோழி.**
**தீக்குளித்தல்** – நெருப்பில் பாய்ந்து இறத்தல்.
**தீக்குறி** – கெடுவது காட்டுங் குறி; தீநிமித்தம்.
**தீக்கூர்மை** – இந்துப்பு; திலசாரம் என்னும் உப்பு.
**தீக்கை** – காண்க: **தீட்சை.**

**தீக்கொள்ளி,** } – நெருப்பிடுவோன்; கலக
**தீக்கொளுத்தி** } மூட்டுபவன்.

**தீக்கோழி** – நெருப்புக்கோழி.

**தீக்கோள்** – கேடுதரும் கிரகம்.

**தீகுறுதல்** – தீயினால் அழிதல்.

**தீங்கனி** – இனிய பழம்.

**தீங்கு** – தீமை; குற்றம்; துன்பம்.

**தீச்சகுனம்** – தீநிமித்தம்.

**தீச்சட்டி** – வேண்டுதலுக்கு எடுக்கும் நெருப்புச் சட்டி; கணப்புச்சட்டி.

**தீச்சடம்** – சிறுநீர்.

**தீச்சலம்** – ஒரு பணிகாரவகை; ஒருவகைக் கடல் மீன் ஓடு.

**தீச்சனகம்** – காண்க: இலுப்பை.

**தீச்சனம்** – காண்க: மிளகு.

**தீச்சார்பு** – தீயோர் தொடர்பு, கெட்டவர் சேர்க்கை.

**தீச்சுடர்** – தீக்கொழுந்து; வெடியுப்பு.

**தீச்சொல்** – பழிச்சொல்.

**தீசகன்** – ஆலோசனையுள்ளவன்; ஆசிரியன்.

**தீசல்** – சமையலில் கருகியது; தீக்குணமுள்ளவர்; தீக்குணமுள்ளது.

**தீஞ்சுபோதல்** – எரிந்துபோதல்; பயிர்முதலியன கருகுதல்; சோறு முதலியன காந்துதல்; சீற்றம் கொள்ளுதல்; அழிதல்.

**தீஞ்சுவை** – இன்சுவை.

**தீஞ்சேறு** – இனிய பாகு.

**தீஞ்சொல்** – இனிய மொழி.

**தீட்சணகண்டகம்** – முள்நாவல்.

**தீட்சணகந்தகம்** – வெங்காயம்.

**தீட்சணகம்** – காண்க: வெண்கடுகு.

**தீட்சணசாரம்** – காண்க: இலுப்பை.

**தீட்சணதண்டுலம்** – திப்பிலி.

**தீட்சணபத்திரம்** – அலரி.

**தீட்சணபுட்பம்** – இலவங்கம்.

**தீட்சணம்** – உறைப்பு; கடுமை; கூர்மை; ஆயுதம்; மிளகு; கஞ்சாங்கோரை; இரும்பு; கொள்ளை நோய்; இறப்பு.

**தீட்சணரோகம்** – கொடிய நோய்.

**தீட்சணியம்** – உறைப்பு; கடுமை; கூர்மை.

**தீட்சாகுரு** – ஒருவனுக்குத் தீட்சைச் சடங்கு செய்யும் ஆசாரியன்.

**தீட்சித்தல்** – நோக்கம், தொடுகை, உபதேசம் முதலியவற்றால் அருளுடன் குரு தீட்சை செய்வித்தல்; பேருக்கம் காட்டுதல்; விரத நியமம் கொள்ளுதல்.

**தீட்சிதர்** – யாகம் செய்தோர்; தில்லை மூவாயிரவர்; வேள்வி செய்த பார்ப்பனர் தரிக்கும் பட்டப்பெயர்; சங்கற்பம் கொண்டவர்; சமயதீட்சை பெற்றோர்.

**தீட்சை** – அறிவுரை; நோன்பு; சங்கற்பம்; குருவின் அருளுரை; ஞானபோதனை; அறிவுரை கேட்டல்; பக்குவ ஆன்மாவைக் கரையேற்றல்; சமயதீட்சை, விசேடதீட்சை, நிர்வாணதீட்சை என்னும் மூவகைச் சைவ சமயச் சடங்கு; நயனதீட்சை, பரிசதீட்சை முதலிய எழுவகையான சைவசமயச் சடங்குகள்; குறித்த காலத்தின் முடிவுவரை மயிர் வளர்க்கை.

**தீட்சைகேட்டல்** – குருவினிடமிருந்து உபதேசம் பெறுகை.

**தீட்சைபண்ணுதல்** – உபதேசந்தரல்.

**தீட்டணசாரம்** – காண்க: இலுப்பை.

**தீட்டணம்** – காண்க: கஞ்சாங்கோரை.

**தீட்டம்** – மலம்; தீண்டுகை; மகப்பேறு, இறப்பு முதலியவற்றால் உண்டாவதாகக் கருதப்படும் தீட்டு; மாதவிடாய்.

**தீட்டரிசி,** } – தவிடு நீக்கிய அரிசி.
**தீட்டலரிசி** }

**தீட்டிப்பார்த்தல்** – கல்வி முதலியவற்றைச் சோதித்தல்.

**தீட்டு** – கூராக்குகை; மாதவிடாய்; பிறப்பு இறப்பு முதலியவற்றால் உண்டாவதாகக் கருதப்படும் தீட்டு; தீண்டுகை; சீட்டு; பூச்சு; அடி; துப்புரவாக்குதல்.

**தீட்டுக்கல்** – சாணைக்கல்.

**தீட்டுக்கவி** – காண்க: சீட்டுக்கவி.

**தீட்டுக்காரி** – மாதவிடாய் கொண்டவள்.

**தீட்டுக்குற்றி** – ஆயுதம் தீட்டும் தடி.

**தீட்டுகோல்** – எழுதுகோல்.

**தீட்டுதல்** – கூராக்குதல்; துலக்குதல்; மினுக்குதல்; அரிசி குற்றித் தூய்மைசெய்தல்; கோதுதல்; தூய்மைசெய்தல்; பூசுதல்; எழுதுதல்; சித்திரித்தல்; சொல்லுதல்; அடித்தல்; சாத்துதல்.

**தீட்டுப்படுதல்** – தீண்டத்தகாதவரைத் தீண்டுதலால் தூய்மை கெடுதல்.

**தீட்டுப்பலகை** – கத்தி முதலியன தீட்டும் பலகை.

**தீட்டுவீடு** – பிறப்பாலும் இறப்பாலும் தீட்டுள்ள வீடு.

**தீட்பு** – இழிவு; ஒழுக்கத் தவறுதலால் நேரும் குற்றம்.

**தீண்டல்** – தீண்டுதல்; பிறப்பு இறப்பு முதலியவற்றால் உண்டாவதாகக் கருதப்படும் தீட்டு; மாதவிடாய்; வயல்.

**தீண்டியம்** – காண்க: பவளக்குறிஞ்சி.

**தீண்டுதல்** – தொடுதல்; பற்றுதல்; பாம்பு முதலியன கடித்தல்; அடித்தல்; தீட்டுப்படுத்துதல்.

**தீத்தகம்** – பொன்.

**தீத்தட்டி, தீத்தட்டிக்கல், தீத்தட்டிக்குடுக்கை** – காண்க: **சிக்கிமுக்கிக்கல்.**
**தீத்தபிங்கலம்** – சிங்கம்.
**தீத்தம்** – தீர்த்தம்; பெருங்காயம்; சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று.
**தீத்தரசம்** – நாங்கூழ்ப் புழுவகை.
**தீத்தருகோல்** – காண்க: **தீக்கடைகோல்.**
**தீத்தல்** – சுடுதல்; பயிர் முதலியன கருகச் செய்தல்; காந்தவைத்தல்; காயச்செய்தல்.
**தீத்தலோகம்** – வெண்கலம்; நிறம்; மாந்தளிர்க் கல்.
**தீத்தலோசனம்** – பூனை.
**தீத்தாங்கம்** – மயில்.
**தீத்தாங்கி** – தீயை மறைக்கும் பலகை; அடுப்பின் மேலே அமைக்கப்பட்ட பரண்.
**தீத்தாட்சம்** – பூனை; மயில்.
**தீத்தி** – ஒளி; அழகு; வெண்கலம்.
**தீத்தியம்** – காண்க: **அரத்தை.**
**தீத்திரள்** – தீக்கொழுந்தின் கூட்டம்; ஊழித்தீ.
**தீத்திறம்** – கொலை முதலிய கொடுஞ்செயல்கள்; தீயில் செய்யும் வேள்வி வழிபாடு.
**தீத்தீண்டல்** – திருமணச் சடங்குமுறை.
**தீத்தீண்டுகையார்** – வேங்கைமரம்.
**தீத்தெய்வம்** – அக்கினிதேவன், தீக்கடவுள்.
**தீத்தொழில்** – பாவச்செய்கை; அக்கினிகாரியம்; வேள்வி.
**தீதல்** – எரிந்துபோதல்; பயிர் முதலியன கருகுதல்; சோறு முதலியன காந்துதல்; அழிதல்; சினத்தல்.
**தீது** – தீமை; குற்றம்; பாவச்செயல்; துன்பம்; இறப்பு; கேடு; உடம்பு; இடையூறு.
**தீதை** – கன்னிப்பெண்; அறிவு.
**தீந்தமிழ்** – இனிய தமிழ்.
**தீந்தொடை** – யாழ்நரம்பு; யாழ்; தேனடை.
**தீநா** – தீச்சுடர்; கப்பல்களுக்குத் திசை தெரிவிக்கப் பனைகளைக் காலாக நாட்டி அதன்மீது மண் இட்டு எரிக்கும் விளக்கு; கப்பற்காரர் துறையறியக் கொளுத்தும் தீப் பந்தம்; கலங்கரைவிளக்கம்.
**தீநாக்கு** – தீயின் நாக்காகிய சுடர்; கருநாக்கு.
**தீநாய்** – சுடுகாட்டில் திரியும் ஒரு நாய்வகை.
**தீநிமித்தம்** – கெட்ட குறி.
**தீநீர்** – நன்னீர்; மருந்துக்கு உதவும் வடிநீர்; இனிய இளநீர்; இனிய குடிநீர்; திராவகம்.
**தீநுரை** – கடல்நுரை.
**தீப்தம்** – ஒளி; சிங்கம்; பெருங்காயம்; சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று; பண்வகையுள் ஒன்று.
**தீப்பசி** – கொடும்பசி.
**தீப்படுதல்** – நெருப்புப்பற்றுதல்; இறத்தல்.
**தீப்படை** – தீக்கடவுளின் ஆயுதம்.
**தீப்பறவை** – காண்க: **தீக்கோழி.**
**தீப்பாய்தல்** – உடன்கட்டையேறுதல்.
**தீப்பி** – நெருப்பு.
**தீப்பிடித்தல்** – நெருப்புப்பற்றுதல்.
**தீப்பிணி** – கொடிய நோய்; காய்ச்சல்.
**தீப்பியம்** – காண்க: **ஓமம்;** தீச்சுடர்.
**தீப்பிரகாசி** – காண்க: **குங்கி(கு)லியம்.**
**தீப்பிரயகம்** – காண்க: **தீப்பியம்.**
**தீப்புட்பம்** – சண்பகப்பூ.
**தீப்புண்** – தீயாற் சுட்ட புண்.
**தீப்பொறி** – நெருப்புப்பொறி.
**தீபக்கால்** – விளக்குத்தண்டு; தீபாராதனைக் கருவி.
**தீபக்கிட்டம்** – விளக்குப்புகை திரண்ட மை.
**தீபக்கொடிச்சி** – கருப்பூரவகை.
**தீபகம்** – விளக்கு; ஓரிடத்து நின்ற மொழி பல விடத்தும் சென்று பொருள் விளக்கும் அணி வகை; பார்வை விலங்கு.
**தீபகாந்தி, தீபகாந்தியோன்** – தீபவொளியுடைய வயிரக் கல்.
**தீபகூபி** – விளக்குத்திரி.
**தீபங்காட்டல்** – தீபார்ச்சனை செய்தல்.
**தீபசாந்தி** – இந்திரவிழா.
**தீபசாலம்** – காண்க: **தீபமரம்.**
**தீபத்தம்பம்** – விளக்குத்தண்டு, கலங்கரை விளக்கம்.
**தீபதூபம்** – விளக்கும் நறும்புகையும்.
**தீபபுட்பம்** – காண்க: **தீப்புட்பம்.**
**தீபம்** – விளக்கு; விளக்குத்தண்டு; சோதிநாள்; சோதிமரம்; தீவு.
**தீபம்பார்த்தல்** – கோயில் முதலிய இடங்களில் விளக்கிடுதல்; கோயில் முதலியவற்றில் இட்ட விளக்கை அவியாமல் பார்த்துக்கொள்ளுதல்.
**தீபமரம்** – சோதிமரம்.
**தீபவதி** – ஆறு.
**தீபவராடி** – வராடிப் பண்வகை.
**தீபவிருட்சம்** – தீபமரம்; விளக்குத்தண்டு.
**தீபனம்** – அதிகப்படுத்துவது; பசி; உணவு; மஞ்சள்; அதிக ஒளி; படையல்; செய்கை.
**தீபாந்தம்** – பெருச்சாளி.
**தீபாந்தரம்** – காண்க: **தீவாந்தரம்.**
**தீபாரத்தி, தீபாராதனை** – விளக்குக் காட்டிப் பூசித்தல்.
**தீபாவலி(ளி)** – தீபவரிசை; விளக்குகளை வரிசையாய் ஏற்றிவைக்கும் பண்டிகை; ஐப்பசி மாதத்தில் சதுர்த்தசி நாளில் கொண்டாடும் ஓர் இந்துப் பண்டிகை; பொருளை இழந்து வறுமையடைதல்.

**தீபி** – புலி.
**தீபிகை** – விளக்கு.
**தீபு** – கடலால் சூழப்பட்ட நிலப்பகுதி.
**தீம்** – இனிமை; இனிய; அமுது.
**தீம்பண்டம்** – இனிய தின்பண்டம்.
**தீம்பன்** – கீழ்மகன்.
**தீம்பி** – தீயவள்.
**தீம்பு** – தீது; தாழ்வு; கேடு; குறும்பு.
**தீம்புகை** – நறும்புகை.
**தீம்புழல்** – இனிய பணியாரம்; இலுப்பைப் பூ.
**தீம்புளி** – கருப்புக்கட்டி கூட்டிப் பொரித்த புளி.
**தீம்பூ** – ஒரு மரவகை; மணப்பொருள்களுள் ஒன்று.
**தீமகம்** – பகைவரைக் கொல்வதற்காகச் செய்யும் வேள்வியாகிய ஆபிசாரயாகம்.
**தீமடுத்தல்** – நெருப்பு மூட்டுதல்; நெருப்பி லிடுதல்.
**தீமிதி** – வேண்டுதல் நிமித்தம் நெருப்புக்குழியில் இறங்கி நடத்தல்.
**தீமிதித்திருவிழா** – திரௌபதையம்மன் கோயி லில் அடியார்கள் வேண்டுதல்பொருட்டு நெருப்புக்குழியில் நடக்கும் திருவிழா.
**தீமுகம்** – நெருப்பெரியுமிடம்; உலைவாய்.
**தீமுறை** – நெருப்பில் செய்யும் ஓமச்சடங்கு.
**தீமூட்டு** – தீ மூட்டுவதற்குரிய பொருள்.
**தீமூட்டுதல்** – நெருப்புப் பற்றவைத்தல்; கலக மூட்டுதல்.
**தீமேனியான்** – தீப்போலும் உடல் நிறமுடைய சிவபெருமான்.
**தீமை** – கொடுமை; குற்றம்; பாவச்செயல்; குறும்பு; இறப்பு; முதலியன.
**தீமொழி** – பொல்லாச்சொல்; சாபம்.
**தீய்த்தல்** – பயிர் முதலியன கருகச்செய்தல்; காந்தவைத்தல்; காயச்செய்தல்; சுடுதல்.
**தீய்தல்** – எரிந்துபோதல்; பயிர் முதலியன கருகு தல்; சோறு முதலியன காந்துதல்; சீற்றம் கொள்ளுதல்; அழிதல்.
**தீய்வு, தீய்வுகரிவு** – பயிர் முதலியன பட்டுப்போகை; பயிர் கரிந்துபோகை.
**தீய** – தீமையான; போலியான.
**தீயகம்** – நெருப்புள்ள இடமான நரகம்.
**தீயது** – இனியது; தீங்குள்ளது; சைவ உணவு.
**தீயபுட்பம்** – காண்க: **தீப்புட்பம்.**
**தீயம்** – இனிப்பு.
**தீயர்** – கீழ்மக்கள்; கொடியோர்; வேடர்; மலை யாளச் சாதியாருள் ஒரு வகையர்.
**தீயல்** – சமையலில் கருகினது; பொரிக்கறி; குழம்புவகை.
**தீயவை** – தீய செயல்; துன்பம்; கீழ்மக்கள் கூட்டம்.
**தீயழல்** – தீக்கொழுந்து.
**தீயளி** – பசுங்காய்.
**தீயறம்** – பொல்லாங்கு.
**தீயாக்கீரை** – பொன்னாங்காணிக் கீரை.
**தீயாடி** – ஈமத்தீயில் ஆடுபவனான சிவபெருமான்.
**தீயார்** – கொடியோர்; கீழ்மக்கள்; வேடர்.
**தீயினம்** – தீயோர் கூட்டம்.
**தீயுண்புள்** – காண்க: **தீக்கோழி.**
**தீயெச்சம்** – அவிக்கப்படாத நெருப்பின் மிச்சம்.
**தீயொழுக்கம்** – கெட்ட நடத்தை.
**தீயோம்புதல்** – ஓமத்தீ வளர்த்தல்.
**தீயோர்** – காண்க: **தீயார்.**
**தீர்க்கக்கிரீப(வ)ம்** – நீள்கழுத்துடைய ஒட்டகம்.
**தீர்க்ககணம்** – வெண்சீரகம்.
**தீர்க்ககதி** – ஒட்டகம்.
**தீர்க்ககந்தை** – வெருகங்கிழங்கு.
**தீர்க்ககாண்டம்** – கோரைப்புல்.
**தீர்க்கசங்கம்** – ஒட்டகம்; நாரை.
**தீர்க்கசத்திரம்** – பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேல் நடைபெறும் வேள்வி.
**தீர்க்கசதுரம்** – கோணங்கள் ஒத்ததும் பக்கங்கள் ஒவ்வாததுமான நாற்கோட்டு உருவம்.
**தீர்க்கசந்தி** – எழுத்து விகாரமுற்றுப் புணரும் வடமொழிப் புணர்ச்சியுள் ஒன்று.
**தீர்க்கசாலம்** – ஆச்சாமரம்.
**தீர்க்கசிகுவம்** – பாம்பு.
**தீர்க்கசீவம்** – நீண்ட ஆயுள்.
**தீர்க்கசுமங்கலி** – சுமங்கலியாய் நெடுங்காலம் வாழ்பவள்; தேவரடியாள்.
**தீர்க்கசுரம்** – நெடில்; நீண்டகாலம் இருக்கும் காய்ச்சல்.
**தீர்க்கசுவாதம்** – பெருமூச்சு.
**தீர்க்கதண்டம்** – தரையில் படிந்து வணங்குகை; ஆமணக்கு.
**தீர்க்கதண்டன்** – தரையில் கவிழ்ந்து வணங்கும் வணக்கமுறை.
**தீர்க்கதரிசனம்** – மேல் வருவதை அறியும் அறிவு.
**தீர்க்கதரிசி** – முக்கால நிகழ்ச்சியை உணர்பவன்.
**தீர்க்கதரு** – பனைமரம்.
**தீர்க்கதாரு** – நிலப்பனை.
**தீர்க்கநாதம்** – சங்கு.
**தீர்க்கநித்திரை** – நெடுந்தூக்கம்; இறப்பு.
**தீர்க்கபர்ணி** – நீண்ட இலையுள்ள வாழை.
**தீர்க்கபாதப(வ)ம்** – தென்னை.
**தீர்க்கம்** – நீட்சி; நெட்டுயிரெழுத்து; முழுமை; உறுதி; அறிவுத் தெளிவும் கவர்ச்சியுமுள்ள தோற்றம்; பெருமிதத் தோற்றம்; துணிகரச் செயல்; தெளிவு; சன்மலக்கினத்துக்கு 6, 7 ஆம் இராசிகள்.

**தீர்க்கம்போடுதல்** – நெட்டெழுத்தின் நீட்சிக்குறியிடுதல்.
**தீர்க்கமாருதம்** – யானை.
**தீர்க்கமூலம்** – முடக்கொற்றான்; வில்வவகை; தொட்டாற்சுருங்கி.
**தீர்க்கயோசனை** – ஆழ்ந்த சிந்தனை.
**தீர்க்கரசனம்** – பாம்பு.
**தீர்க்கரதம்** – பன்றி.
**தீர்க்கலோகிதம்** – காண்க: சிலந்தி; தருப்பை.
**தீர்க்கவசனம்** – உறுதிச்சொல்.
**தீர்க்கவர்ச்சிகை** – முதலை.
**தீர்க்கவிருக்கம்** – பெருமரம்.
**தீர்க்கவைரம்** – நெடுநாளைய பகைமை.
**தீர்க்காயு, தீர்க்காயுசு** – நீண்ட ஆயுள்; காக்கை; மார்க்கண்டன்.
**தீர்க்காயுதம்** – ஈட்டி; பன்றி.
**தீர்க்காயுள்** – நீண்ட வாழ்நாள்.
**தீர்க்காலோசனை** – ஆழ்ந்த யோசனை.
**தீர்த்தகர், தீர்த்தகரர்** – காண்க: தீர்த்தங்கரர்; தூயோர்.
**தீர்த்தங்கரர்** – சமணருள் அருக பதவியடைந்த இருபத்து நான்கு சமண குருமார்.
**தீர்த்தங்கொடுத்தல்** – திருக்கோயிலில் சுவாமி தீர்த்தம் அளித்தல்; திருநாள் முடிவில் அடியார்கள் நீராடும்படி சுவாமி தீர்த்தத் துறையில் திருமஞ்சனமாடுதல்.
**தீர்த்தத்துறை** – புண்ணிய நீரில் இறங்கும் துறை.
**தீர்த்தம்** – நீர்; தூய்மை; ஆராதனை நீர்; புண்ணிய நீர்த்துறை; திருமஞ்சன நீர்; திருவிழா; தீ; வேள்வி; பிறப்பு; சிராத்தம்; பெண்குறி.
**தீர்த்தமாடுதல்** – நல்வேளையில் புண்ணிய நீரில் முழுகுதல்.
**தீர்த்தயாத்திரை** – புண்ணியப் புனல்களில் நீராடும் பொருட்டுச் செய்யும் பயணம்.
**தீர்த்தல்** – விடுதல்; முடித்தல்; போக்குதல்; அழித்தல்; கொல்லுதல்; தீர்ப்புச்செய்தல்; நன்றாகப் புடைத்தல்; கடன் முதலியன ஒழித்தல்; மனைவியை விலக்குதல்.
**தீர்த்தவாசி** – புண்ணியத்துறைப் பக்கத்து வாழ்பவன்; தீர்த்தயாத்திரை செல்வோன்.
**தீர்த்தன்** – தூயோன்; கடவுள்; அருகன்; குரு.
**தீர்த்திகை** – தீர்த்தம்; ஆறு.
**தீர்தல்** – உள்ளது ஒழிதல்; முற்றுப்பெறுதல்; உரிமையாதல்; இல்லையாதல்; அழிதல்; கழிதல்; செலவாய்ப்போதல்.
**தீர்ந்தவன்** – தேறினவன்; துறந்தவன்; ஊக்கமுடையவன்.
**தீர்ப்பான்** – மருத்துவன்.
**தீர்ப்பு** – முடிவு; நியாயத்தீர்ப்பு; தீர்மானம்; தண்டனை; ஒழிப்பு; கழுவாய்.
**தீர்ப்புக்கட்டுதல்** – முடிவை உறுதிப்படுத்துதல்; மதிப்பிடுதல்; இலாபநட்டக் கணக்கு முடிவு கட்டுதல்.
**தீர்பு** – தீர்தல்.
**தீர்மானம்** – தண்டனை; தாளத்தீர்ப்பு; முடிவு; முழுமை; சுண்ணாம்பு மட்டிப்பூச்சின்மேல் வெள்ளையால் மெருகிடுகை.
**தீர்மானித்தல்** – கணித்தல்; முடித்தல்; தாளந் தீர்த்தல்.
**தீர்மை** – நீக்கம்.
**தீர்வு** – நீங்குகை; கழுவாய்; தாளத்தீர்ப்பு.
**தீர்வை** – உறுதி; கணக்கு; முடிவு; விதி; வரிப் பணம்; கழுவாய்; கீரிப்பிள்ளை.
**தீர்வைக்காரன்** – ஆயக்காரன்; வரிதண்டுவோன்.
**தீர்வைச்சரக்கு** – சுங்கவரி இடுதற்குரிய பொருள்.
**தீர்வைத்துறை** – சுங்கத்துறை.
**தீர்வையிடுதல்** தீர்மானித்தல்; முடிவுசெய்தல்.
**தீர** – முற்ற; மிக.
**தீரக்கழிய** – மிக அதிகமாய்.
**தீரத்துவம், தீரதை** – மனத்திட்பம்.
**தீரம்** – துணிவு; அறிவு; கரை; செய்வரம்பு; அம்பு; மஞ்சள்.
**தீரவாசம்** – ஆற்றுப்பாய்ச்சலுள்ள இடம்.
**தீரவாசி** – ஆற்றங்கரையில் வாழ்வோர்.
**தீரன்** – மன உறுதியுள்ளவன்.
**தீராந்தி** – விட்டம்.
**தீராமாற்று** – கழுவாயில்லாத செயல்.
**தீராமை** – கொடுமை; கடுந்துரோகம்; பொய்க் குற்றச்சாட்டு; பேரநீதி; வன்மத்தாற் சொல்லுங் கோள்; ஆற்றாமை.
**தீராமைக்காரி** – வன்கண்மை உள்ளவள்.
**தீரிக்கை** – ஒழிந்த வேளை.
**தீரை** – துணிவுள்ளவள்.
**தீவகச்சாந்தி** – முற்காலத்தில் காவிரிப்பூம் பட்டினத்தில் நடந்த இந்திரவிழா.
**தீவகம்** – காண்க: தீபகம்; தீவு; பார்வை விலங்கு.
**தீவகமிருகம்** – பார்வை விலங்கு.
**தீவட்டி** – தீப்பந்தம்; பயனற்ற அறிவிலி.
**தீவட்டித்தடியன்** – பயனற்ற அறிவிலி.
**தீவண்ணன்** – நெருப்பு நிறத்தவனான சிவன்.
**தீவத்தி** – காண்க: தீவட்டி.
**தீவம்** – விளக்கு; தீவு.
**தீவர்த்தி** – காண்க: தீவட்டி.
**தீவலஞ்செய்தல்** – திருமணம்; திருமணச் சடங்கு முதலியவற்றில் ஓமத்தீயை வலமாகச் சுற்றி வருகை.

**தீவளர்த்தல்** – உடன்கட்டையேறல் முதலியவற்றிற்கு நெருப்பு வளர்த்தல்; வேள்வித்தீயைப் பெருக்குதல்.
**தீவளர்ப்போர்** – முத்தீயைப் பேணுவோராகிய அந்தணர்; முனிவர்.
**தீவளி** – கடுங்காற்று.
**தீவறை** – பெருநெருப்பெரிக்கும் குழியடுப்பு.
**தீவனம்** – பசி; கால்நடைகளின் உணவு.
**தீவாணம்** – அரசாட்சி; அறங்கூறவையம்.
**தீவாந்தரம்** – தூரத்தீவு.
**தீவாளி** – காண்க: **தீபாவலி(ளி).**
**தீவாளிகுளித்தல்** – வீண்செலவு செய்து வறியவனாதல்.
**தீவாளியாதல்** – கடனால் நிலைகுலைதல்.
**தீவான்** – காண்க: **திவான்**; தீவில் வாழ்பவன்; எரிக்கப்படத்தக்க புல்லன்.
**தீவானம்** – பைத்தியம்.
**தீவி** – புலி; பறவைவகை.
**தீவிகை** – விளக்கு.
**தீவிதிராட்சம்** – வெளிநாட்டுக் கொடிமுந்திரிகை.
**தீவிய** – இனிமையான.
**தீவிரகந்தம்** – துளசி.
**தீவிரம்** – விரைவு; கடுமை; கொடுமை; சூரியக்கதிர்; உறைப்பு; ஒரு நரகம்; பெருங்கோபம்.
**தீவிரித்தல்** – விரைவுபடுத்துதல்; கொடுமையாதல்.
**தீவிழித்தல்** – சினத்துடன் பார்த்தல்.
**தீவிளி** – காயாமரம்; பசுங்காய்; கொடுஞ்சொல். கடுங்காற்று; தீபாவளி.
**தீவினை** – பாவம்; கொடுஞ்செயல்; அக்கினி காரியம்; தீ வழிபாடு.
**தீவினையச்சம்** – தீய செயல்களைச் செய்வதற்கு அஞ்சுதல்.
**தீவு** – நாற்புறமும் நீர் சூழ்ந்த நிலம்; தொலைநாடு; பயிர் கரிந்துபோதல்; இனிமை.
**தீவுக்குருவி** – அயல்நாட்டுப் பறவை.
**தீவுச்சரக்கு** – வெளிநாட்டுச் சரக்கு.
**தீவேட்டல்** – திருமணஞ்செய்தல்; வேள்வி செய்தல்.
**தீவேள்வி** – தீச்சான்றாகச் செய்யும் மணவினை.
**தீழ்ப்பு** – கீழ்மை; தீட்டு.
**தீற்றுதல்** – சுண்ணம் முதலியவற்றால் துளை அடைத்தல்; ஊட்டுதல்; பூசுதல்; மெழுகுதல்; ஆடையைச் சுருக்கெடுத்து மெதுவாக்குதல்; கயிற்றின் முறுக்காற்றுதல்; பல்விளக்குதல்.
**தீன்** – மதம்; உணவு.
**தீன்பண்டம்** – காண்க: **தின்பண்டம்.**
**தீனக்காரன்** – நோயாளி.
**தீனபந்து** – எளியார்க்கு அன்பன்; கடவுள்.
**தீனம்** – வறுமை; நோய்; கொடுமை; நட்பு.
**தீனரட்சகன்** – எளியவரைக் காப்பவன்; கடவுள்.
**தீனன்** – வறியவன்; இரப்போன்; தீம்பன்; பெருந்தீனி தின்பவன்.
**தீனி** – கொழுத்த உணவு; சிற்றுண்டி; விலங்குணவு.
**தீனிப்பை** – இரைப்பை.

# து

**து** – ஓர் உயிர் மெய்யெழுத்து (த்+உ); உணவு; அனுபவம்; பிரிவு; ஒருமைத் தன்மை விகுதி; சுட்டுப்பெயர் வினாப்பெயர்களில் ஒன்றன்பால் குறிக்கும் விகுதி; ஒன்றன்பால் விகுதி; பகுதிப்பொருள் விகுதி.
**துக்கக்காரன்** – இழவு கொண்டாடுவோன்.
**துக்ககன்** – துயரமுள்ளோன்.
**துக்கங்கேட்டல்** – இழவு விசாரித்தல்.
**துக்கங்கொண்டாடுதல்** – இழவு கொண்டாடுதல்.
**துக்கசகிதர்** – மானிடர்.
**துக்கசாகரம்** – துயர்க்கடலாகிய பெருந்துயர்.
**துக்கடா** – சிறு துண்டு; உணவிற்குரிய பச்சடி முதலிய துணை உணவுப்பொருள்; மிகச் சிறிதான.
**துக்கடி** – சிறு துண்டு; நிலப்பகுதி.
**துக்கத்திரயம்** – ஆதிதெய்விகம், ஆதியான்மிகம், ஆதிபௌதிகம் என்னும் மூவகைத் துன்பங்கள்.
**துக்கநிவாரணம்** – துயரிலிருந்து விடுபடுகை; அவா என்னும் பற்றுவிட்டு நிற்கும் நிலையே வீடு என்னும் பௌத்தமதக் கொள்கை.
**துக்கநிவாரணமார்க்கம்** – வாய்மை நான்கனுள் பற்று இல்லாமையே துக்க நீக்கத்திற்கு வழி என்னும் பௌத்தமதக் கொள்கை.
**துக்கம்** – துன்பம்; வாய்மை நான்கனுள் உலகப் பிறப்பே துன்பம் என்று கூறும் பௌத்த மதக் கொள்கை; நோய்; சயரோகம்; நரகம்; வானம்.
**துக்கர்** – காசநோயாளிகள்.
**துக்கரம்** – செய்தற்கரியது.
**துக்கராகம்** – இழவுக்குரிய பண்வகை; பாலை யாழ்த்திறவகை.
**துக்கவீடு** – இழவு கொண்டாடும் வீடு.
**துக்காணி** – இரண்டு அல்லது நான்கு தம்படி மதிப்புக்கொண்ட சிறு செப்புநாணயம்.
**துக்காதீதம்** – இன்பம்.

**துக்கி** – துயரமுடையோன்(ள்).
**துக்கித்தல்** – மனம் வருந்துதல்.
**துக்கிதம்** – துன்பம்.
**துக்கிதன்** – துயரமுடையோன்.
**துக்கு** – கீழ்மை; பயனின்மை; உதவாதவன்; உதவாதது; துரு; துவக்கு என்னும் தோல்;
**துக்குடி** – காண்க: **துக்கடி.**
**துக்குணி** – மிகச் சிறியது.
**துக்குப்பிடித்தவன்** – பயனற்றவன்.
**துக்கை** – துர்க்கை; மகளிர் மாதத்தீட்டு.
**துக்கோற்பத்தி** – வாய்மை நான்கனுள் அவாவே எல்லாவகைத் துயரத்திற்கும் காரணம் என்னும் பௌத்தமதக் கொள்கை.
**துகத்தல்** – கசத்தல்.
**துகம்** – நிலத்தாக்கு; பங்கு.
**துகள்** – தூளி; குற்றம்; பூந்தாது.
**துகளிதம்** – தூளி.
**துகளிலி** – குற்றமற்றவனான கடவுள்.
**துகிதை** – மகள்.
**துகிர்** – பவளம்; பவளக்கொடி.
**துகிர்த்தாளி** – காண்க: **பவழமல்லிகை.**
**துகிரிகை** – எழுதுகோல்; சாந்து; சித்திரம்.
**துகில்** – நல்லாடை; துணிக்கொடி; விருதுக் கொடி.
**துகிலிகை** – எழுதுகோல்; சித்திரம்; துணிக் கொடி.
**துகிற்கிழி** – உறை.
**துகிற்பீசம்** – பருத்திவிதை.
**துகின்மனை** – கூடாரம்.
**துகின்முடி** – தலைப்பாகை.
**துகின்முடித்தல்** – தலைப்பாகை கட்டுதல்.
**துகினசயிலம்** – பனிமலையான இமயமலை.
**துகினம்** – பனி; நிலாவின் கதிர்.
**துகினூல்** – வெண்ணூல்.
**துகு** – வருத்தம்.
**துகுத்தல்** – தொகுதியாக்குதல்.
**துகுதல்** – தொகுதியாதல்.
**துகுதுகுவெனல்** – பெருங்கூட்டம் வருகையில் எழும் ஒலிக்குறிப்பு.
**துகூலம்** – நுண்ணிய சீலை; வெண்பட்டு.
**துகைத்தல்** – மிதித்துழக்குதல்; இடித்தல்; வருத்துதல்; திரிதல்.
**துகையல்** – தேங்காய் காய்கறிகளை அரைத்துச் செய்யும் உணவின் துணைப்பொருள்வகை.
**துங்கசேகரம்** – மலை.
**துங்கதை** – உயர்ச்சி; பெருமை.
**துங்கபத்திரி** – துங்கபத்திரையாறு.
**துங்கம்** – உயர்வு; அகலம்; பெருமை; நுனி; தூய்மை; மலை; வெற்றி; கதிவலயத்திலிருந்து சந்திரன் செல்லும் அதிக தூரம்.
**துங்கரிகம்** – காவிக்கல்.
**துங்கன்** – தூயவன்; உயர்ந்தோன்; மேன்மை யுடையோன்; கதிவலயத்திலிருந்து சந்திரன் செல்லும் அதிக தூரம்.
**துங்கி** – இரவு.
**துங்கீசன்** – சூரியன்; சிவன்; திருமால்; சந்திரன்.
**துங்கீபதி** – சந்திரன்.
**துச்சத்தரு** – ஆமணக்கு.
**துச்சதானியம்** – பதர்.
**துச்சம்** – இழிவு; கீழ்மை; வெறுமை; பதர்; நிலையின்மை; பொய்; பேய்க்கொம்மட்டிக் கொடி; இன்மை; கொம்மட்டி மாதுளைக் கொடி.
**துச்சரிதம்** – தீயொழுக்கம்.
**துச்சவனன்** – இந்திரன்.
**துச்சன்** – இழிந்தவன்.
**துச்சாரி** – தீய நடத்தையுள்ளவன்.
**துச்சி** – உண்ணுகை; அனுபவம்; தேர்வு; பூநீறு.
**துச்சிமை** – கீழ்மை.
**துச்சில்** – ஒதுக்கிடம்; தங்குமிடம்; மயில் முதலியவற்றின் கொண்டை.
**துச்சு** – இழிவு.
**துசகம்** – மாதுளைமரம்; கொம்மட்டிமாதுளை.
**துசம்** – கொடி; பல்; உமி; குங்கிலியம்; முட்டை யில் பிறப்பது.
**துசன்** – பார்ப்பான்.
**துஞ்சர்** – அசுரர்.
**துஞ்சரித்தல்** – கண்விழித்தல்.
**துஞ்சற** – முழுமையும்.
**துஞ்சு, துஞ்சுகுழல்** – ஐம்பால்களுள் பின்னித் தொங்க விட்ட கூந்தல்வகை.
**துஞ்சுதல்** – தூங்குதல், துயிலுதல்; சோம்புதல்; தொழிலின்றி இருத்தல்; சோர்தல்; இறத்தல்; வலியழிதல்; குறைதல்; தொங்குதல்; தங்கு தல்; நிலைபெறுதல்.
**துஞ்சுநிலை** – கட்டில்.
**துஞ்சுமரம்** – மதில் வாயிலில் இடும் கணைய மரம்; கழுக்கோல்.
**துஞ்சுமன்** – சோம்பலுள்ளவன்.
**துஞ்சை** – காண்க: **துஞ்சுகுழல்.**
**துட்கரம்** – வருந்தி முடித்தற்குரியது.
**துட்கிரமம்** – ஒழுங்கற்றது; எட்டாதது.
**துட்கு** – அச்சம்.
**துட்குதல்** – அச்சங்கொள்ளுதல்.
**துட்கெனல்** – அச்சக்குறிப்பு.
**துட்சணத்துவம்** – குறும்புத்தனம்.
**துட்சணம்** – குறும்புத்தனம்; அவையில் கூறத் தகாத சொல்.
**துட்டக்கிளவி** – தீய சொல்.

**துட்டகண்டகன்** – மிகக் கொடியவன்; பிறரை வருத்தி வேலைவாங்குவோன்.

**துட்டகம்** – பொல்லாங்கு.

**துட்டகன்** – தீமைபுரிவோன்.

**துட்டத்தனம்** – தீக்குணம்.

**துட்டதேவதை** – மாடன், காட்டேறி முதலிய கொடுந்தெய்வங்கள்.

**துட்டநிக்கிரகம்** – தீயோரையழித்தல்.

**துட்டம்** – தீமை; கொடுமை; மரகதக் குற்றங்களுள் ஒன்றாகிய நீலோற்பலநிறம்.

**துட்டரி(வி)** – தொடரிச்செடி.

**துட்டன்** – தீயோன்; தேள்.

**துட்டாட்டம்** – முருட்டுதனம்; தீய வாழ்வு.

**துட்டாப்பு** – சிட்டைமரத்திடையே கட்டிய பாரம் சுமத்தல்; செரியாமை.

**துட்டி** – மனநிறைவு; கெட்டவள்; சாவுத்தீட்டு; சாதுயர்; சம்பளம் பிடிக்கை.

**துட்டு** – பணம்; இரண்டு அல்லது நான்கு தம்படி மதிப்புக்கொண்ட செப்புநாணயம்; தீமை.

**துட்டுக்கட்டை, துட்டுத்தடி** } – குறுந்தடி.

**துட்டுத்துக்காணி** – பணம்; சில்லறைப்பணம்; செல்வம்.

**துட்டுவம்** – சிறுமை; புன்மை.

**துட்டை** – கட்டுக்கடங்காதவள்; கற்பில்லாதவள்.

**துட்பதம்** – பாசாங்கு.

**துடக்கம்** – காண்க: **தொடக்கம்.**

**துடக்கறுப்பான்** – காண்க: முடக்கொற்றான்; கொற்றான்கொடி.

**துடக்கு** – சம்பந்தம்; தன்னகப்படுத்துவது; மாதவிலக்கு; உறவினர்களின் பிறப்பிறப்புகளில் காக்கும் தீட்டு.

**துடக்குதல்** – கட்டுதல்; அகப்படுத்துதல்; தொடங்குதல்; சம்பந்தப்படுத்துதல்.

**துடங்குதல்** – காண்க: **தொடங்குதல்.**

**துடப்பம்** – துடைப்பம்.

**துடர்** – சங்கிலி.

**துடர்தல்** – காண்க: **தொடர்தல்.**

**துடராமுறி** – விடுதலை ஆவணம்.

**துடரி** – தொடரிச்செடி; புலிதொடக்கி; திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஒரு மலை.

**துடவர்** – நீலகிரி மலைச்சாதியார்.

**துடவை** – தோட்டம்; சோலை; விளைநிலம்.

**துடி** – சலிப்பு; காலநுட்பம்; வேகம்; சுறுசுறுப்பு; அறிவுநுட்பம்; மேன்மை; வலி; அகில்மரம்; காண்க: **தூதுளை;** கூதாளிச்செடி; சங்கஞ்செடி; ஏலச்செடி; மயிர்ச்சாந்து; உடுக்கை; காண்க: **துடிக்கூத்து;** துடிகொட்டுபவன்; சிறுமை; திரியணுகம்.

**துடிக்கூத்து** – பகைவரை அழித்தபின் முருகக் கடவுளும் எழுமாதர்களும் துடிகொட்டி ஆடிய கூத்து.

**துடிகம்** – தும்பைச்செடி.

**துடித்தல்** – படபடவெனச் சலித்தல்; மனம் பதைத்தல்; பரபரத்தல்; மின்னுதல்; பசி முதலியவற்றால் வருந்துதல்; துடுக்காதல்.

**துடிதலோகம்** – பௌத்தமத நூல்களில் கண்ட தேவலோகம்.

**துடிதுடித்தல்** – மனம் பதைபதைத்தல்; கடுகடுத்தல்.

**துடிநிலை** – போர்க்களத்திலே மறவருடைய வீரம் மிகத் துடிகொட்டுதலைக் கூறும் புறத்துறை; வழிவழியாய்த் துடிகொட்டி வருபவனது குணங்களைப் புகழும் புறத்துறை.

**துடிநூல்** – உடலில் நாடித்துடிப்புகளைக் கொண்டு விளைவுகூறும் அறிவியல்நூல்.

**துடிப்பு** – நாடியடிக்கை; நடுக்கம்; பரபரப்பு; சினம்; பிரம்பு முதலியவற்றின் வீச்சு; செருக்கு; விலை முதலியவற்றின் ஏற்றம்; ஊற்றம்.

**துடியடி** – துடிபோன்ற காலையுடைய யானைக் கன்று.

**துடியன்** – துடிகொட்டுபவன்; சுறுசுறுப்புள்ளவன்; சினமுள்ளவன்; தீயன்.

**துடியாஞ்சி** – காண்க: **சங்கஞ்செடி.**

**துடியாடல்** – காண்க: **துடிக்கூத்து.**

**துடுக்கன்** – செருக்குள்ளவன்.

**துடுக்கு** – குறும்புத்தனம்; சுறுசுறுப்பு; தீச்செயல்.

**துடுக்குக்காரன்** – செருக்குள்ளவன்; தீயவன்.

**துடுப்பாற்றி** – ஒரு கடல்மீன்வகை.

**துடுப்பு** – சட்டுவம்; அகப்பை; வலிதண்டு; பூங்கொத்து; அகப்பைபோன்ற காந்தள்மடல்.

**துடும்புதல்** – ததும்புதல்; கூடுதல்.

**துடுமெனல்** – ஒலிக்குறிப்பு; நீரில் விழுதற் குறிப்பு.

**துடுமை** – ஒரு தோற்கருவிவகை.

**துடுவை** – நெய்த்துடுப்பு.

**துடை** – தொடை என்னும் உறுப்பு; சுவர்க் கட்டை; சுவர்ப்புறத்து நீண்ட உத்திரம்; அரசமரம்; காண்க: **விடமூங்கில்.**

**துடைகாலன்** – தன் குடும்பத்துக்குக் கேடு விளைவிக்கும் இயல்புடையோன்.

**துடைகாலி** – தன் குடும்பத்துக்குக் கேடு விளைவிக்கும் இயல்புடையவள்.

**துடைத்தல்** – தடவிப்போக்குதல்; பெருக்கித் தள்ளுதல்; அழித்தல்; துவட்டுதல்; கொல்லுதல்; தீற்றுதல்; காலியாக்குதல்; நீக்குதல்; கைவிடுதல்; ஒப்பமிடுதல்.

**துடைப்பக்கட்டை** – காண்க: **துடைப்பம்**; தேய்ந்த துடைப்பம்.

**துடைப்பம்** – விளக்குமாறு.

**துடையரசு** – காண்க: **விடமூங்கில்**.

**துடைவாழை** – தொடையில் உண்டாகும் கட்டி வகை; அரையாப்புக்கட்டி.

**துடைவை** – காண்க: **துடவை**.

**துண்டம்** – துண்டு; சிறுதுணி; பிரிவு; சிறிய வயற் பகுதி; சிறிய வாய்க்கால்; மூக்கு; பறவை யலகு; யானைத் துதிக்கை; முகம்; ஆயுத வலகு; சாரைப்பாம்பு; மீன்துண்டம்.

**துண்டமதி** – பிறைச்சந்திரன்.

**துண்டமிழுத்தல்** – தோட்டங்களில் சிறு வாய்க்கால் அமைத்தல்.

**துண்டரிக்கம்** – கொடுமை; தொல்லை: கண்டிப்பு; முகக்களை.

**துண்டரிகம்** – கொடுமை; தொல்லை.

**துண்டன்** – கொலைஞன்.

**துண்டாடுதல்** – துண்டுதுண்டாக வெட்டுதல்.

**துண்டாயம்** – பொற்பணம்; பொன்மணல்.

**துண்டி** – துண்டுநிலம்; கொப்பூழ்; பறவையலகு.

**துண்டி(வி)** – பிள; வெட்டு; கூறுபடுத்து.

**துண்டிகை** – கொப்பூழ்.

**துண்டித்தல்** – சுருக்கிப்பேசுதல்; வெட்டல்; மரித்தல்; கிழித்தல்; கண்டித்தல்; மறுத்தல்.

**துண்டில்** – மூங்கில்.

**துண்டீரபுரம்** – துண்டீரனது நகரமான காஞ்சிபுரம்.

**துண்டு** – சிறுதுணி; சீட்டு; கையொப்பச் சீட்டு; பாக்கி; இழப்பு; கூறு; புகையிலைக்கட்டு; வெற்றிலைக்கட்டு; மொத்த விளைவில் நிலக் கிழாருக்குரிய பகுதி; தனியானது.

**துண்டுகத்தரி** – ஒரு நச்சுப்புழுவகை.

**துண்டுதுடுக்கு** – சிறு துணுக்கு; தீண்டக்கூடாத பொருள்.

**துண்டுந்துணியுமாக** – துண்டுதுண்டாக.

**துண்டுப்பத்திரிகை** – தனிக் கடிதமாக வெளி யிடும் செய்திச்சீட்டு.

**துண்டுபடுதல்,** / **துண்டுவிழுதல்** – வேண்டிய அளவுக்குமேல் மிச்சப்பகுதி அமைதல்; வேண்டிய அளவுக்குக் குறைவுபடுதல்; இழப் புண்டாதல்.

**துண்ணிடுதல்** – அச்சம் முதலியவற்றால்; திடுக் கிடுதல்.

**துண்ணெனல்** – திடுக்கிடுதற்குறிப்பு; அச்சக் குறிப்பு; விரைவுக்குறிப்பு.

**துணங்கல்** – கூத்து.

**துணங்கறல்** – இருள் திருவிழா.

**துணங்கு** – இருள்.

**துணங்கை** – பேய்; முடக்கிய இரு கைகளையும் விலாப்புடைகளில் ஒற்றியாடும் கூத்துவகை; திருவிழா; திருவாதிரைநாள்.

**துணதுணத்தல்** – விடாதுபேசுதல்.

**துணர்** – பூ; பூங்கொத்து; பூந்தாது; குலை.

**துணர்த்தல்,** / **துணர்தல்** – கொத்துடையதாதல்.

**துணரி** – பூங்கொத்து.

**துணவு** – விரைவு; நுணாமரம்.

**துணி** – ஒளி; தெளிவு; துண்டம்; மரவுரி; சோதி நாள்; உறுதி; ஆடை; தொங்கல்; தேரில் கட்டிய கொடி.

**துணிக்கை** – சிறுதுண்டு.

**துணிகரம்** – துடுக்கு.

**துணிகரித்தல்** – துணிவுகொள்ளுதல், ஊக்கங் கொள்ளுதல்.

**துணிச்சல்** – காண்க: **துணிகரம்**.

**துணித்தல்** – வெட்டுதல்.

**துணிதல்** – வெட்டுண்ணுதல்; நீங்குதல்; கிழிதல்; தெளிவாதல்; உறுதிசெய்தல்; ஊக்கமடை தல்; தொடங்குதல்.

**துணிதாண்டுதல்** – ஆடையைத் தாண்டிச் சத்தியம் பண்ணுதல்; உறுதிமொழி கூறுதல்.

**துணிந்தவன்** – எதற்கும் அஞ்சாதவன்.

**துணிந்துமணியங்கட்டுதல்** – பிடிவாதமாயிருத் தல்; ஊக்கத்தோடு முயலுதல்.

**துணிநிலா** – பிறைச்சந்திரன்.

**துணிபு** – காண்க: **துணிவு**; கொள்கை.

**துணிபொருள்** – துணிந்த மெய்ப்பொருள்; உறுதி செய்யப்பட்ட பொருள்; சித்தாந்தம்; தத்து வம்; பரம்பொருள்.

**துணியல்** – துண்டு.

**துணிவு** – தெளிவு; மனத்திட்பம்; நம்பிக்கை; நோக்கம்; துண்டு; ஆண்மை; துணிச்சல்; உறுதி; முடிவு; கொள்கை; தாளம்; கைக்கிளை வகையுள் ஒன்று.

**துணிவுவமை** – உவமேயத்தை உவமானமாக முதலில் ஐயுற்றுப் பின் உவமேயமாகவே துணியும் அணிவகை.

**துணுக்கம்** – நடுக்கம்; அச்சம்; உள்ளோசை.

**துணுக்கிடுதல்** – திடுக்கிடுதல்; அஞ்சுதல்.

**துணுக்கு** – துண்டு; காண்க: **துணுக்கம்**.

**துணுக்குறுதல்** – அச்சங்கொள்ளுதல்.

**துணுக்கெறிதல்** – அச்சத்தால் துள்ளுதல்.

**துணுக்கெனல்** – அச்சக்குறிப்பு.

**துணுக்கை** – காண்க: **துணியல்**.

**துணுங்குதல்** – வெருவுதல்.

**துணை** – அளவு; இணை, ஒப்பு; ஆதரவு, உதவி; உதவுவோன்; காப்பு; கூட்டு; இரண்டு; இரட்டை; கணவன்; மனைவி; உடன்பிறப்பு; புணர்ச்சி; வரை; ஆயுதமுனை; அம்பு; நட்பினன்(ள்).
**துணைக்கருவி** – உதவிக்கருவி; வழிவகை.
**துணைக்காரணம்** – காரியம் முடியும் வரையில் இருந்து பின் நீங்கும் கருவி.
**துணைச்சொல்** – வழிமொழிகை.
**துணைத்தல்** – மாலை கட்டல்; ஒத்தல்.
**துணைதல்** – ஒத்தல்.
**துணைப்படை** – தனக்கு உதவும் நட்பரசனின் படை.
**துணைப்பேறு** – உதவிபெறுகை.
**துணைப்பொருள்** – ஒப்புமை கூறப்படுவது.
**துணைப்போதல்** – ஒப்பாதல்.
**துணைமுத்தம்** – பல வடம் சேர்ந்த முத்து.
**துணைமை** – உதவி; பிரிவின்மை; ஆற்றல்.
**துணையல்** – பூமாலை.
**துணையறை** – அணிகலன் முதலியவற்றின் தொங்கல்.
**துணையாளன்** – உதவிபுரிவோன்.
**துணையிருத்தல்** – காவலாய் உடனிருத்தல்.
**துணைவஞ்சி** – பிறரை வெல்லவோ, கொல்லவோ நிற்கும் வீரனைச் சில கூறிச் சந்துசெய்வித்தலைக் கூறும் புறத்துறை.
**துணைவன்** – உதவிசெய்வோன்; தோழன்; கணவன்; மந்திரி; உடன்பிறந்தான்.
**துணைவி** – மனைவி; தோழி; உடன்பிறந்தாள்.
**துத்தநாகம்** – ஓர் உலோகம்.
**துத்தபேனம்** – பால்நுரை.
**துத்தம்** – ஏழிசையுள் ஒன்று; சமனிசை; ஓமாலிகைவகை; கண்மருந்தாக உதவும் துரிசு; நாணற்புல்; காண்க: நீர்முள்ளி; நாய்ப்பாகல்; நாய்; வயிறு; பால்; வைப்புப்பாடாணவகை.
**துத்தரி** – ஊதுகொம்புவகை.
**துத்தல்** – உண்ணுதல்; நுகர்தல்.
**துத்தன்** – வஞ்சகன்.
**துத்தாத்தி** – பாற்கடல்.
**துத்தாரி** – ஒருவிதச் சீலை; ஊதுகுழல்வகை.
**துத்தி** – பாம்பின் படப்பொறி; உடலில் தோன்றும் தேமல்; யானை மத்தகப்புள்ளி; செடிவகை; ஒத்துக்கருவி; திருவடிநிலை; திருமண்; காண்க: பெருந்துத்தி; வட்டத்துத்தி; முசுக்கட்டைமரம்; முள்வெள்ளரிவகை.
**துத்தியம்** – புகழ்ச்சி.
**துத்து** – பொய்; வஞ்சனை; தப்பிதம்; சேணம் முதலியவற்றின் உள்ளிடும் கம்பளி ஆட்டுமயிர் முதலியன; கம்பளிப்போர்வை.
**துத்துக்கோல்** – நெசவுப்பாவினுள் நெய்வோர் செலுத்துங் கழி.
**துத்துமாற்று** – சூழ்ச்சி; வஞ்சனை; பொல்லாங்கு.
**துத்தூரம்** – காண்க: ஊமத்தை.
**துதம்** – தோத்திரம்; அசைவு.
**துதமுகம்** – வேண்டாமை குறித்தற்கு இடம் வலமாகத் தலையாட்டல்.
**துதி** – தோத்திரம்; புகழ்; நுனி; துருத்தி; உறை; காண்க: தூதுளை.
**துதிக்கை** – தும்பிக்கை.
**துதிகை(யை)** – வளர்பிறை தேய்பிறைகளில் இரண்டாம் திதி; இரண்டாம் வேற்றுமை.
**துதித்தல்** – புகழ்தல்; தொழுதல்; நினைத்தல்.
**துதியம்** – குறட்டைப்பழம்.
**துதியரிசி** – மங்கலவரிசி.
**துதிவாதம்** – புகழுரை.
**துது** – இருது, மாதப்பருவம்.
**துதை** – நெருக்கம்.
**துதைத்தல்** – நெருக்குதல்.
**துதைதல்** – செறிதல்; மிகுதல்; படிதல்.
**துந்தகூபதி** – கொப்பூழ்.
**துந்தம்** – வயிறு.
**துந்தமம்** – ஒரு பறைவகை.
**துந்தி** – வயிறு; கொப்பூழ்; வாய்ப்புண்வகை.
**துந்திகன்** – பெருவயிறு.
**துந்திரோகம்** – பெருவயிறு, மகோதரம்.
**துந்துபம்** – கடுகு.
**துந்துபி** – பேரிகை; வாத்தியப்பொது; அறுபதாண்டுக் கணக்கில் ஐம்பத்தாறாம் ஆண்டு; ஓர் அசுரன்.
**துந்துமி** – பேரிகை; பேரொலி; மழைத்துளி.
**துந்துருபாவை, துந்துருமாலை** – துடிப்புள்ளவள்.
**துந்துளம்** – காரெலி.
**துந்நிமித்தம்** – தீக்குறி.
**துந்நெறி** – கெட்ட வழி.
**துப்பகம்** – காண்க: துப்பம்.
**துப்பட்டா** – மேல்விரிப்பு; மேலுக்கு அணியும் விலையுயர்ந்த ஆடை.
**துப்பட்டி** – குளிருக்காகப் போர்த்துக்கொள்ளும் துணிப்போர்வை; மேல்விரிப்பு; விழாக்காலங்களில் பரவமகளிர் போர்த்துக்கொள்ளும் போர்வை.
**துப்பம்** – நெய்; குருதி.
**துப்பல்** – உமிழ்நீர்; பயனற்றது; ஆணை.
**துப்பற்காளாஞ்சி** – எச்சில் உமிழும் கலம்.
**துப்பற்றவன்** – திறமையில்லாதவன்; கதியற்றவன்.
**துப்பறிதல்** – உளவறிதல்.

**துப்பன்** – வலிமையுள்ளவன்; ஒற்றன்.

**துப்பாக்கி** – துமுக்கி, சுடுங்கருவி; கதிர்த் தலையைத் தாக்கும் நெற்பயிர்நோய்.

**துப்பாக்கிக்குதிரை** – துப்பாக்கி சுடுதற்குக் கையினால் இழுத்துவிடும் உறுப்பு.

**துப்பாசி** – இடைநின்று மொழிபெயர்ப்போன்; ஐரோப்பியரின் வாணிகத்தில் இடைநின்று உதவும் இந்தியத் தரகன்.

**துப்பார்** – உண்பவர்.

**துப்பிரசம்** – கருஞ்சுண்டிமரம்.

**துப்பு** – வலிமை; அறிவு; திறமை; ஆராய்ச்சி; முயற்சி; பெருமை; துணை; ஊக்கம்; பொலிவு; நன்மை; பற்றுக்கோடு; தன்மை; தூய்மை; உளவு; பகை; பவளம்; அரக்கு; சிவப்பு; நுகர்ச்சி; நுகர்பொருள்; உணவு; துரு; உமிழ்நீர்; நெய்; ஆயுதப்பொது.

**துப்பு(வி)** – துப்புஎன் ஏவல்; காறியுமிழ்.

**துப்புக்கூலி** – உளவு கண்டுபிடித்தற்கு உதவும் பொருள்.

**துப்புக்கெட்டவன்** – திறமையில்லாதவன்; அறிவற்றவன்; அழுக்குப் பிடித்தவன்.

**துப்புக்கேடு** – சீர்கேடு.

**துப்புண்ணி** – சீர்கெட்டவர்.

**துப்புத்துருப்பிடித்தல், துப்புத்துருவிவிசாரித்தல்** – உளவு கண்டுபிடித்தல்; விவரமாக விசாரித்தல்.

**துப்புதல்** – உமிழ்தல்.

**துப்புரவாய்** – தூய்மையாய்; முழுதும்.

**துப்புரவு** – தூய்மை; நுகர்ச்சிப்பொருள்; ஐம்பொறி நுகர்ச்சி; அனுபவம்; திறமை; முறைமை; மேன்மை; வேண்டற்பாடு; அழகு.

**துபாக்கி** – காண்க: **துப்பாக்கி.**

**துபாசி** – காண்க: **துப்பாசி.**

**தும்** – தூசி; இறப்பு எதிர்காலங்களைக் காட்டும் தன்மைப் பன்மை வினைமுற்று விகுதி.

**தும்சம்** – அழிவு.

**தும்பகா** – காண்க: **தும்பை.**

**தும்படைசி** – நாடாவில் ஓர் உறுப்பு.

**தும்பரம்** – அத்திமரம்.

**தும்பராட்டகம்** – காண்க: **பேரரத்தை.**

**தும்பன்** – தீயவன்.

**தும்பால்** – இறையிலிநிலம்.

**தும்பாலை** – சுரைக்கொடி.

**தும்பி** – யானை; வண்டு; ஆண்வண்டு; கருவண்டு; கறுப்புமரவகை; காண்க: **காட்டத்தி;** சுரைக்கொடி; முடக்கொற்றான்கொடி; கரும்பு; ஒரு மீன்வகை; கற்பில்லாதவள்; கருந்தாளிவகை; பானத்துக்குரிய பாத்திர வகை.

**தும்பிக்கை** – யானைத் துதிக்கை.

**தும்பிச்சி** – கற்பில்லாதவள்; பழைய நாணய வகை.

**தும்பிப்பதக்கம்** – வண்டின் வடிவாகச் செய்யப் பட்ட அணிவகை.

**தும்பியூதுதல்** – வண்டுபோல ஒலித்தல்; ஓசையோடு வலிந்து மூச்சு வாங்குதல்; எச்சில், சவர்க்காரநீர் முதலியவற்றை ஊதிக் குமிழி உண்டாக்குதல்.

**தும்பிலி** – ஒரு மரவகை; கடல்மீன்வகை.

**தும்பினி** – மின்மினிப்பூச்சி.

**தும்பு** – கயிறு; நார்; சிம்பு; தாலியுரு; நெருஞ்சி; கரும்பு; வரம்பு; தூசி; குற்றம்; அநாகரிகச் சொல்.

**தும்புக்கட்டு** – தேங்காய் நாரால் செய்த துடைப்பம்.

**தும்புக்கயிறு** – தென்னை, பனை முதலியவற்றின் நாரால் திரிக்கப்பட்ட கயிறு; மாட்டுத்தும்பு.

**தும்புதட்டுதல்** – நையப் புடைத்தல்.

**தும்புபோடுதல்** – கயிறு திரித்தல்; துருவியறிதல்.

**தும்புரு** – யாழ்வகை; ஒரு கந்தருவன்.

**தும்புவெட்டு** – ஆடையின் ஓரத்தைக் கத்தரித் தல்.

**தும்பை** – ஒரு செடிவகை; போர் செய்வோர் அணியும் அடையாளமலை; போர்; தும்பைத் திணை; கூட்டம்; வெற்றிலை; ஒரு மீன்வகை; தானியவகை.

**தும்பைத்திணை** – பெருவீரச் செயல் காட்டிப் பகைவரோடு போர் செய்தலைக் கூறும் பகுதி.

**தும்பைமாலை** – தும்பைமாலை அணிந்து பெரும்போர் புரிந்த வீரனைப் புகழ்ந்து கூறும் நூல்வகை.

**தும்மட்டி** – சிறுகொம்மட்டி.

**தும்மல்** – தும்முதல்; மூச்சு.

**தும்மற்காதல்** – தும்மலைக்கொண்டு குறி சொல்லுகை.

**தும்மு** – தும்முதல்; கொசு.

**தும்முட்டி** – சிறுகொம்மட்டி.

**தும்முதல்** – தும்மல், மூச்சுத் தடைப்பட்டு ஒலியுடன் மூக்கு வாய்வழியாய் வெளிவருதல்; விடுதல்; மூச்சுவிடுதல்.

**துமாலா** – இறையிலிநிலம்; வெள்ளி அல்லது பொன்சரிகை யிழுக்கும் தொழிலின் கடைசிச் செயல்.

**துமானம்** – அணிகலப்பெட்டி.

**துமி** – வெட்டு; தூறல்; மழைத்துளி; நீர்த்துளி.

**துமித்தல்** – வெட்டுதல்; அறுத்தல்; விலக்குதல்; துளித்தல்.

**துமிதம்** – மழைத்துளி.
**துமிதல்** – வெட்டுண்ணல்; உமிதல்; அழிதல்; விலக்குதல்.
**துமுக்கி** – துப்பாக்கி.
**துமிலம்** – பேராரவாரம்.
**துமுலம்** – குழப்பம்.
**துய்** – உணவு; பஞ்சு; பஞ்சின் நுனி; புளியம் பழத்தின் ஆர்க்கு; மென்மை; கதிர், பூவிதழ் முதலியவற்றின் மெல்லிய பகுதி; சிம்பு; கூர்மை.
**துய்த்தல்** – புலன்களால் நுகர்தல்; உண்ணுதல்; நூல்நூற்றல்; நாடகச் சந்தி ஐந்தனுள் இறுதி யானது.
**துய்ப்பு** – நுகர்ச்சி.
**துய்ய** – தூய்மையுள்ள; கலப்பற்ற; உறுதியான.
**துய்யம்** – தூய்மை.
**துய்யமல்லி** – நான்கு முதல் ஆறுமாதங்களில் விளையக்கூடிய சம்பாநெல்வகை.
**துய்யன்** – தூயன்; வெள்ளிமணல்.
**துய்யா** – திரைகளின் ஓரத்தில் அமைக்கப்படும் அலங்காரப் பின்னல்; நெசவுப் பின்னல் கயிறு.
**துய்யாள்** – தூய்மையுடையாள்; நாமகள்.
**துயக்கம்** – சோர்வு; தடை.
**துயக்கன்** – மனத்திரிவை உண்டாக்குபவன்.
**துயக்கு** – சோர்வு; துயரம்; மனமயக்கம்; ஆசை; பந்தம்; தடை; மனத்திரிவு.
**துயக்குதல்** – தளரச்செய்தல்.
**துயங்குதல்** – சோர்தல்.
**துயம்** – இரண்டு; திருமாலைத் தேவதையாகக் கொண்டதும் இரண்டு வாக்கியங்கள் உடை யதுமான மந்திரம்; கொடி.
**துயர்** – துன்பம்; அரசர்க்கு உரிய சூது முதலா கிய விதனம்.
**துயர்தல்** – வருந்துதல்; தொடர்தல்;
**துயரடி** – துன்பம்; சோர்வு.
**துயரம்** – துன்பம்; மனத்துக்கம்; இரக்கம்; மழை.
**துயரி** – யாழ்நரம்பு.
**துயல்வருதல்** – அசைதல்.
**துயல்(லு)தல்** – அசைதல்; தொங்குதல்; பறத் தல்.
**துயவு** – அறிவின் திரிபு.
**துயில்** – உறக்கம்; கனா; தங்குகை; இறப்பு; புணர்ச்சி; ஆடை.
**துயில்கூர்தல், துயில்மடிதல்** – உறங்குதல்.
**துயில்வு** – உறக்கம்.
**துயிலார்** – உறக்கமில்லாத தேவர்.
**துயிலார்தல்** – உறங்குதல்.
**துயிலி** – ஒரு கீரைவகை; ஓர் ஆடைவகை.
**துயிலிடம்** – உறங்கும் இடம்; மக்கட்படுக்கை.
**துயிலுணர்தல்** – விழித்தல்.
**துயிலுதல்** – உறங்குதல்; தங்குதல்; இறத்தல்; மறைதல்.
**துயிலெடுத்தல், துயிலெடுப்பு** – தூக்கத்திலிருந்து எழுப்பு தல்.
**துயிலெடை** – துயிலெழுப்பல்.
**துயிலெடைநிலை** – பாசறையில் வேந்தர் புகழ் கூறி அவரைத் துயிலெழுப்புவதாகக் கூறும் புறத்துறை; அரசர் முதலியோர் துயில் நீங்குதல்பற்றிப் பாடப்படும் நூல்வகை.
**துயிலெடைமாக்கள்** – அரசரைத் துயிலெழுப்பும் சூதர்.
**துயிலெழுதல்** – உறக்கம்விட்டு எழுதல்.
**துயிலெழுமங்கலம்** – பாணர் முதலியோர் அரச ரைத் துயிலெழப் பாடும் மங்கலப்பாடல்.
**துயிலேற்றல்** – உறக்கம்விட்டு எழுதல்.
**துயிற்சி** – தூக்கம்.
**துயிற்றுதல்** – உறங்கச்செய்தல்; தங்கப்பண்ணு தல்.
**துயினடை** – தூக்கத்திடையே எழுந்து செல்லச் செய்யும் நோய்.
**துயுலி** – கீரைவகை.
**துர்** – தீதுப்பொருள் தரும் ஒரு வடமொழி முன் னொட்டு.
**துர்க்கடம்** – இடர்ப்பாடு.
**துர்க்கதன்** – வறுமையுற்றவன்.
**துர்க்கதி** – கெட்ட நடத்தை; வறுமை; நரகம்.
**துர்க்கந்தம்** – தீநாற்றம்.
**துர்க்கம்** – அரண்; மலைக்கோட்டை.
**துர்க்கருமம்** – தீச்செயல்.
**துர்க்காதேவி** – கொற்றவை; பார்வதி.
**துர்க்காபூசை** – நவராத்திரியில் துர்க்காதேவி யைக் குறித்துச் செய்யும் மூன்றுநாள் பூசை.
**துர்க்குணம்** – தீக்குணம்.
**துர்க்குணன்** – தீயவன்.
**துர்க்குறி** – தீச்சகுனம், தீநிமித்தம், கேட்டைக் குறிக்கும் அடையாளம்; சென்றவிடங்களில் தீமை விளைவிக்கக்கூடிய தீயூழினர்.
**துர்க்கை** – சிவபிரான் தேவியும் பாலைநிலத் தேவியுமாகிய பெண்தெய்வம்; பூரநாள்.
**துர்ச்சரிதம்** – கெட்ட நடத்தை.
**துர்ச்சனன்** – தீயவன்.
**துர்த்தினம்** – தீய நாள்; சூரிய கிரணமின்றி மேக மூட்டமுள்ள நாள்.
**துர்த்தூரம்** – ஊமத்தஞ்செடி.
**துர்த்தேவதை** – சிறுதெய்வம்.
**துர்நடத்தை** – தீயொழுக்கம்.
**துர்ப்பரிசம்** – காண்க: சிறுகாஞ்சொறி.

**துர்ப்பலம்** – வலுவின்மை; தாழ்நிலை.
**துர்ப்பலன்** – வலியற்றவன்; கோள் முதலிய வற்றின் தீப்பயன்.
**துர்ப்பிட்சம்** – பஞ்சம்.
**துர்ப்புத்தி** – கெடுமதி; தீய கொள்கை; கெடுமதி யுடையோர்; தீயுரை.
**துர்மரணம்** – தற்கொலை முதலியவற்றால் உண் டாகும் சாவு.
**துர்லபம்** – பெறுதற்கரியது.
**துர்வாதம்** – நேர்மையற்ற வாதம்.
**துர்விநியோகம்** – தீயவழியில் செலவிடுகை.
**துரக்கு** – ஐயப்பாடு.
**துரகதம்** – குதிரை.
**துரகதாமன்** – அசுவத்தாமன்.
**துரகம்** – குதிரை; காண்க: **குதிரைத்தறி**; குதிரைப்பல் பாடாணம்.
**துரங்கம்** – குதிரை; மனம்.
**துரங்கமம்** – குதிரை.
**துரங்கவதனன்** – குதிரை முகத்தையுடையவ னான கின்னரன்.
**துரங்காரி** – எருமை.
**துரங்கி** – குதிரைக்காரன்.
**துரட்டன்** – தீநெறி ஒழுகுபவன்.
**துரட்டு** – முள்மரவகை; சிறுமரவகை; சிக்கல்; அபாயம்.
**துரத்தல்** – ஓட்டிச் செலுத்துதல்; எய்தல்; போக்குதல்; அடித்தல்; தூண்டுதல்; முடுக்கி உட்செலுத்துதல்; முயலுதல்; வீசுதல்; எரிதல்; போதல்.
**துரத்துதல்** – வெருட்டி ஓட்டுதல்; அப்புறப்படுத் தல்; திருடன் முதலியோரைப் பிடிக்கப் பின் தொடர்தல்; வண்டிமாடு முதலியவற்றைத் தூண்டி விரைந்தோடச் செய்தல்.
**துரதிட்டம்** – நல்வினையின்மை, நற்பேறின்மை.
**துரந்தரம்** – பொதியெருது; பொறுப்பு.
**துரந்தரன்** – பொறுப்பு ஏற்பவன்; முயன்று நிற் போன்; வெற்றிபெற்றவன்.
**துரந்தரி** – பொறுப்பு ஏற்போள்.
**துரப்பணம்** – காண்க: **துறப்பணம்.**
**துரப்பு** – முடுக்குதல்; அகற்றுதல்; மலையிற் குடையப்பட்ட பாதை.
**துரப்புதல்** – தேடுதல்.
**துரபிமானம்** – தகாத இடத்தில் வைக்கப்பட்ட பற்று; வீண்பெருமை; வெறுப்பு.
**துரம்** – பொறுப்பு; சுமை; ஓர் இசைக்கருவி; கோயிற்குரிய வரிவசூலிக்கும் அலுவலகம்.
**துரமி** – தொடரிச்செடி; தூதுளைக்கொடி.
**துரவு** – பாசனத்துக்கு உதவும் பெருங்கிணறு; மணற்கேணி; தூது.
**துரவுவாரகம்** – கிணறுவெட்டக் கொடுக்கும் கடன்.
**துராகதம், துராகிருதம்** – உரிமை இல்லாவிடத்து வலிய நிகழ்த்தும் செயல்; கெட்ட நடத்தை; பலவந்தக் கற்பழிப்பு; நிந்தை.
**துராசர்** – கெட்ட ஆசையை உடையவர்.
**துராசாரம்** – தீயொழுக்கம்; அவமரியாதை; ஒழுக்கக்கேடு.
**துராசாரி** – தீயொழுக்கமுடையான்(ள்).
**துராசை** – தகாத இச்சை.
**துராத்தியம்** – ஏழைமை.
**துராத்துமா** – தீயோன்.
**துராய்** – அறுகம்புல்லால் திரித்த பழுதை; தலை யணிவகை; செடிவகை.
**துராய்க்கட்டை** – தரா என்னும் உலோகத்தாற் செய்த பாத்திரம்.
**துராரம்பலம்** – தீச்செயல்.
**துரால்** – செத்தை; துன்பம்.
**துராலபம்** – சிறுகாஞ்சொறிச்செடி; அடைதற்கு அரியது.
**துராலோசனை** – தீய யோசனை.
**துராலோபம்** – சிறுகாஞ்சொறிச்செடி.
**துரி** – எழுதுகோல்; பாரம்; பாவாற்றி.
**துரிசு** – துன்பம்; குற்றம்; குறும்பு; மயில் துத்தம்.
**துரிஞ்சில்** – வௌவால்வகை; சீக்கிரிமரம்.
**துரிதம்** – விரைவு, வேகம்; ஆடல்பாடல்களில் தாள விரைவு; பாவம்; கலக்கம்; கேடு.
**துரியசிவன்** – மும்மூர்த்திகட்கும் மேலான சிவன்.
**துரியத்தானம்** – ஆன்மா துரியநிலையில் அடங்கு வதற்குரிய உந்திப்பகுதி.
**துரியம்** – நான்காவது; நான்காம் அவத்தை; யோகியர் தன்மயமாய் நிற்கும் உயர்நிலை; பொதியெருது; சுமத்தல்.
**துரியன்** – சுத்தான்மா; கடவுள்.
**துரியாதீதம்** – துரியம் என்னும் நான்காம் நிலைக்கும் மேம்பட்ட ஐந்தாம் நிலை; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.
**துரீ** – நெசவுப் பாவாற்றி.
**துரீயம்** – பொதியெருது; சுமக்கை.
**துரீலெனல்** – எதிர்பாராது விரைந்துவருதற் குறிப்பு.
**துரு** – இருப்புக்கறை; களிம்பு; குற்றம்; செம்மறியாடு; வேதம் முதலியன ஓதும் சந்த வகை; மரவகை.
**துருக்கம்** – செல்லுதற்கு அரிய இடம்; ஒடுக்க வழி; மலையரண்; மதில்; குறிஞ்சிநிலம்; காடு; கலக்கம்; கத்தூரி; காண்க: **குங்குமம்;** குங்குமமரம்; காண்க: **குந்துருக்கம்;** கத்தூரி **மான்.**

**துருக்கல்** – செம்புறைக்கல்; இரும்புக்கிட்டம்.
**துருக்கன்** – துருக்கி நாட்டான்; முகமதியன்.
**துருக்கு** – துருக்கருக்கு உரியது; துருக்கர் மொழி; துருக்கி நாட்டான்.
**துருகம்** – மதில்.
**துருசி** – காண்க: **துருசு.**
**துருசிகுரு** – நவச்சாரம்.
**துருசு** – மயில்துத்தம்; களிம்பு; மாசு; விரைவு; ஆத்திரம்.
**துருஞ்சில்** – காண்க: **துரிஞ்சில்.**
**துருணன்** – சிவபிரான்.
**துருத்தி** – ஆற்றிடைக்குறை; தோல்; ஊதுந் துருத்தி; உலைத்துருத்தி, உலையூதுகருவி; தோற்பை; நீர்வீசுங் கருவி; தோலால் அமைந்த ஓர் இசைக்கருவி; காண்க: **ஒத்து;** வயிறு; கவறாட்டத்து வழங்கும் ஒரு குழூஉக் குறி; துட்டப்பெண்.
**துருத்துதல்** – வெளித்தோன்றுதல்; வெளித் தள்ளுதல்.
**துருத்தூரம்** – ஊமத்தை.
**துருதம்** – விரைவு.
**துருதுருத்தல்** – ஆத்திரப்படல்; அமைதியின்றி யிருத்தல்; துடிதுடித்தல்.
**துருதுருப்பு** – அமைவின்மை; சுறுசுறுப்பு; விரைவு.
**துருதுரும்பை** – குழந்தை விளையாட்டுவகை.
**துருதுருவெனல், துருதுரெனல்** – குழந்தை நிலையில் அமைதி யின்மைக் குறிப்பு.
**துருதை** – தினவு; ஆசைப்பாடு.
**துருந்துதல்** – துளை பெரிதாக்குதல்; ஆராய்தல்.
**துருநாமம்** – மூலநோய்.
**துருப்பணம்** – காண்க: **துறப்பணம்.**
**துருப்பிடித்தல்** – இரும்பில் கறைபற்றுதல்; குற்ற அடையாளம் கண்டுபிடித்தல்.
**துருப்பு** – படை; சீட்டுத்துருப்பு.
**துருப்புக்கூடு** – தூற்றாப் பொலி.
**துருபவருணி** – காட்டாமணக்கஞ்செடி.
**துரும்பன்** – கீழ்ச்சாதிகளுக்கு வெளுக்கும் வண்ணான்; ஒன்றுக்கும் உதவாதவன்; கீழ்த் தரச் சாதியான்.
**துரும்பு** – கூளம்; சிராய்; சக்கை; கண்ணுக்கு மை இடும் கருவி; ஒரு சாதி; சீட்டுத்துருப்பு.
**துரும்புமுறித்துப்போடுதல்** – தடையுண்டாக்கு தல்; பகையுண்டாக்குதல்.
**துருமசிரேட்டம்** – பனைமரம்.
**துருமதி** – கெடுமதி; கெட்ட எண்ணமுடையவர்.
**துருமநகம்** – முள்.
**துருமம்** – கற்பகத்தரு; மரம்; மனக்கலக்கம்; சாப்பிராமரம்.
**துருமவருணி** – காட்டாமணக்கஞ்செடி.
**துருமவியாதி** – கொம்பரக்கு.
**துருமாரி** – யானை.
**துருமோற்பலம்** – கோங்குமரம்.
**துருவகம்** – குற்றி.
**துருவங்கட்டுதல்** – சோதிடத்தில் கிரகணம் முதலியன அறிதற்கு முறையமைத்தல்; வழி வகை தேடுதல்; கணக்கு முதலியவற்றிற்குச் சூத்திரவிதி உண்டாக்குதல்.
**துருவசக்கரம்** – இரவு பகல்களை உண்டாக்கு வதாகக் கருதப்படும் வானவட்டம்; சப்தவிருடி மண்டலம்.
**துருவண்ணம்** – வெள்ளி.
**துருவதாளம்** – தாளவகையுள் ஒன்று; எழுவகைத் தாளத்துள் ஒன்று.
**துருவம்** – அசையாநிலை; துருவமீன்; ஒப்பு; கோல்நடையின் தூரநிலை; என்றுமிருப்பது; நவதாளத்துள் ஒன்று; யோகத்துள் ஒன்று; உபாயம்; ஒடுக்கவழி; வீடுபேறு; ஊழ்; மலைக் கோட்டை; உறுதி; பூமியின் முனை; கூத்து விகற்பம்.
**துருவமண்டலம்** – வானிடத்திலுள்ள துருவப் பகுதி.
**துருவர்ணம்** – காண்க: **துருவவண்ணம்.**
**துருவல்** – தேடல்; துளைத்தல்; துருவிய பொருள்; தேங்காய் முதலியன துருவும் கருவி.
**துருவல்மணை, துருவலகு, துருவலகுகுற்றி** – தேங்காய் துருவும் கருவி.
**துருவாக்கியம்** – சோதிடத்தில் பயன்படுத்தும் கணக்கு வாய்பாட்டுவகை.
**துருவாட்டி** – ஏலம்.
**துருவாடு** – செம்மறியாடு.
**துருவாதி** – காட்டாமணக்கஞ்செடி.
**துருவு** – துருவல்; தேடுகை; தொளை.
**துருவுதல்** – தேடுதல்; ஆராய்தல்; தொளைத்தல்; கடைதல்; தேங்காய் முதலியன கடைந்து சீவுதல்; துன்புறுத்துதல்.
**துருவுமணை** – காண்க: **துருவல்மணை.**
**துருவை** – செம்மறியாடு; ஆடு; இசையுறுப்புள் ஒன்று; பார்வதி.
**துருளக்கம்** – குந்துருக்கம்; சாம்பிராணி.
**துரை** – தலைவன்; ஐரோப்பியன்; **வேகம்;** மிகுதிப்பாடு.
**துரைச்சி** – தலைவி; ஐரோப்பியப் பெண்; உலோகநிமிளை.
**துரைசானி** – தலைவி; ஐரோப்பிய மாது.
**துரைத்தனக்காரர்** – அதிகாரமுள்ளோர்.
**துரைத்தனம்** – அரசாங்கம்.

**துரைப்பெண்,**
**துரைமகள்** – சீமாட்டி; தலைவி.
**துரைமகன்** – தலைவன்.
**துரோகம்** – ஐவகை நன்றியில் செய்கை; தீங்கு; ஏமாற்றுகை.
**துரோகி** – இரண்டகம் எண்ணுபவன்; ஏமாற்றுவோன்; கொடும்பாவி; இரக்கமற்றவன்.
**துரோட்டி** – அங்குசம்; துறட்டுக்கோல்.
**துரோணம்** – பதக்கு என்னும் ஓர் அளவை; ஏழு மேகங்களுள் மண்பொழிவது; சரபம்; எண்காற் பறவை; காக்கை; தும்பைச்செடி; வில்; தனுராசி; கிணற்று அருகிலுள்ள நீர்நிலை; தொன்னை; தேக்குமரம்.
**துரோணி** – தோணி.
**துரோணிகை** – காண்க: **ஆவிரை.**
**துரோணிதலம்** – காண்க: **தாழை.**
**துரோதரம்** – சூதாட்டம்.
**துரோபவம்** – மயக்கு, மாமாயம்.
**துல்லபம்** – அருமை.
**துல்லம்** – பேரொலி.
**துல்லிபம்** – ஒப்பு.
**துல்லியம்** – ஒப்பு; உவமை; ஒப்பக் கையெழுத்து; தூய்மை; அப்பிரகம்.
**துல்லியோகிதாலங்காரம்,**
**துல்லியோகிதை** – ஒப்புமைக் கூட்ட அணி.
**துலக்கம்** – விளக்கம்; ஒளி, பளபளப்பு, மெருகு; தெளிவு.
**துலக்குதல்** – தேய்த்துக்கழுவுதல்; வெளிப்படுத்தல்; மெருகிடுதல்; ஒளிரப்பண்ணுதல்; தூய்மைசெய்தல்; தீட்டுதல்.
**துலங்கு** – தொழுமரம்.
**துலங்குதல்** – ஒளிர்தல்; விளங்குதல், தெளிவாதல்; சிறத்தல்; கலங்குதல்; தொங்கியசைதல்; ஒப்பமிடப்படுதல்.
**துலங்கூர்தி** – காண்க: **தூங்குகட்டில்.**
**துலம்** – கனம்; துலாநிறை; நீர்முள்ளிச்செடி; கோரைப்புல்; பருத்தி; நிறைகோல்.
**துலவம்** – பருத்தி.
**துலா** – நிறைகோல்; ஏற்றமரம்; திராவி; தூண் மேலுள்ள போதிகையின்கீழ் வாழைப்பூ வடிவில் அமைந்த அலங்கார உறுப்பு; துலாராசி; வண்டி ஏர்க்கால்.
**துலாக்கட்டை** – திராவி; வண்டியச்சுக்கட்டை.
**துலாக்கொடி** – ஏற்றமிழுக்குங் கயிறு; ஏற்றமிழுக்கும் சிறுமூங்கில்.
**துலாக்கோல்** – நிறைகோல்.
**துலாகோடி** – நிறைவகை; பத்துக்கோடி; மகளிர் காலணிவகை.
**துலாதரன்** – சூரியன்.
**துலாதாரம்** – நிறைகோல்; தராசுக்கயிறு.
**துலாதாரன்** – வணிகன்.
**துலாதானம்** – ஒருவன் தன் நிறையுள்ள பொன்னைப் பார்ப்பனர்க்குக் கொடுக்குங் கொடை.
**துலாந்து** – துலாக்கட்டை; வீட்டில் பொருள் வைக்க உதவும் ஒரு பரண்வகை.
**துலாபாரதானம்,**
**துலாபாரம்,**
**துலாபாரமேறுதல்** – காண்க: **துலாதானம்.**
**துலாம்** – நிறைகோல்; ஒரு நிறையளவு; துலாராசி; ஐந்துவீசை, நூறுபலம், இருநூறுபலம் கொண்ட நிறைகள்; ஐப்பசிமாதம்; துலாக் கட்டை; உத்திரக்கட்டை; தூண்மேலுள்ள போதிகையின்கீழ் வாழைப்பூ வடிவில் அமைந்த அலங்கார உறுப்பு; ஏற்றமரம்.
**துலாம்பரம்** – வெளிப்படை; ஐப்பசி வானம் போன்றதான துலக்கம்.
**துலி** – பெண்ணாமை.
**துலிதம்** – நிறுக்கப்பட்டது; அசைவு.
**துலுக்கப்பூ** – செடிவகை.
**துலுக்கன்** – துருக்கி நாட்டான்; முகமதியன்.
**துலுக்காணம்** – துருக்கித்தானம் என்னும் நாடு; ஒருவகைச் சதுரங்க விளையாட்டு; துருக்க சம்பந்தமானது; துருக்க இராச்சியம்.
**துலுக்காணியம்,**
**துலுக்காவணம்** – துருக்க அரசாட்சி.
**துலுக்கி** – சிங்காரி.
**துலுக்கு** – அசைக்கை; முகமதியர் பேசும் மொழி.
**துலுக்குதல்** – குலுக்குதல்; செருக்கி நடத்தல்; அசைத்தல்.
**துலுங்குதல்** – அசைதல்.
**துலை** – நிறைகோல்; காண்க: **துலாதானம்;** துலாராசி; கிணற்றிலிருந்து இறைக்கும் நீர் தங்குமிடம்; ஏற்றமரம்; மடைமுகம்; நூறு பலம் கொண்ட நிறை; ஒப்பு; வெகுதூரம்; தூரப்பிரதேசம்; தோட்டம்.
**துலைக்குழி** – ஏற்றச் சாலிலிருந்து நீர் கொட்டும் பள்ளம்.
**துலைநா** – தராசுமுள்.
**துலைமுகம்,**
**துலைவாய்** – துலைக்கிடங்கு; கிணற்றிலிருந்து இறைக்கும் நீர் தங்குமிடம்.
**துலோபம்** – கருஞ்சுண்டி.
**துவ்வாதவன்** – வறிஞன்.
**துவ்வாமை** – நுகராமை; வறுமை; வேண்டாமை; வெறுப்பு.
**துவ்வான்** – காண்க: **துவ்வாதவன்.**
**துவ்வு** – உணவு; அனுபவம்; ஐம்பொறி நுகர்ச்சி; இழிவு.

**துவ்வுதல்** – நுகர்தல்; வலிமைபெறுதல்; பற்றுக் கோடாதல்; நீங்கியொழிதல்.
**துவ்வை** – பருகுதற்குரியது; இறைச்சி; பிண்ணாக்கு.
**துவக்கம்** – தொடக்கம்.
**துவக்கு** – கட்டு; தொடர்பு; பற்று; செடிகொடிகளின் பிணக்கு; சங்கிலி; தோல்; உடல்; ஊறு உணர்கருவி; துப்பாக்கி.
**துவக்குதல்** – கட்டுதல்; கட்டுண்ணுதல்; தொடங்குதல்; வயப்படுத்தல்.
**துவங்கிசம்** – தேசம்; இழப்பு; துன்பம்.
**துவங்குதல்** – தொடங்குதல்.
**துவசங்கட்டுதல்** – வெற்றி முதலியன குறிப்பதற்குக் கொடியேற்றுதல்; முயன்று நிற்றல்; எதிராளியாய் நிற்றல்.
**துவசத்தம்பம்** – கோயிற் கொடிமரம்.
**துவசம்** – கொடி; அடையாளம்; ஆண்குறி; வணிகம் குறிக்க அமைக்கும் குறி.
**துவசமங்கையர்** – கள் விற்கும் பெண்கள்.
**துவசர்** – கள் விற்போர்.
**துவஞ்சம்** – அழிவு.
**துவட்சி** – அசைவு; ஒசிவு; சோர்வு; வாடுகை; வறட்சி.
**துவட்சிகை** – கடுக்காய்ப்பிஞ்சு.
**துவட்டர்** – சிற்பியர்.
**துவட்டல்** – காண்க: **துவட்டுதல்**; கறிவகை.
**துவட்டா** – தேவதச்சனாகிய விசுவகருமன்.
**துவட்டாநாள்** – சித்திரைநாள்.
**துவட்டு** – கறிவகை; துவட்டுதல்.
**துவட்டுதல்** – நீரைத் துடைத்தல்; கறி முதலியன துவட்டுதல்; கறிப்பண்டங்களைத் தொட்டுக் கொள்ளுதல்; கசக்குதல்.
**துவடா** – பகைவர்.
**துவணுகம்** – இரண்டு பரமாணுக்களின் கூட்டம்.
**துவந்தன்** – தம்முன் மாறுபட்ட இருவகை நிலைத் துன்பத்துக்கு இடமாயிருப்பவன்.
**துவந்தனை** – கட்டு; தடை; துன்பம்.
**துவந்தித்தல்** – தொடர்புறுதல்.
**துவந்துவம்** – இரட்டை; தொடர்பு; பழவினைத் தொடர்பு; தம்முள் மாறுபட்ட இருவகை நிலை; நோய்களின் பிணைப்பு; சண்டை; ஐயம்.
**துவம்** – இரண்டு; அசையாநிலை; பண்புணர்த்தும் ஒரு வடமொழி விகுதி.
**துவயம்** – இரண்டு; இரண்டு வாக்கியமாய்த் திருமாலைப்பற்றியமைந்த மந்திர விசேடம்.
**துவர்** – துவர்ப்பு; துவர்ப்புடைய பொருள்கள்; பகை; செருக்கு; உலர்ந்த விறகு; சருகிலை; சிவப்பு; பவளம்; காவி; துவரை; பாக்கு; துண்டு; கோது.
**துவர்க்கட்டி** – காசுக்கட்டி.
**துவர்க்கண்டல்** – செந்தாழை.
**துவர்க்காய்** – பாக்கு.
**துவர்ச்சிகை** – கடுக்காய்ப்பிஞ்சு; கூவை மா.
**துவர்த்தல்** – துவர்ப்புக்கொள்ளுதல்; சிவத்தல்; பூசுதல்; ஈரம்போக்கல்.
**துவர்த்து, துவர்த்துமுண்டு** – ஈரம் துவட்டும் துணி.
**துவர்தல்** – பிரிதல்; வகிர்தல்; தெளிதல்; உலருதல்; புலர்த்துதல்; பூசுதல்; முதிர்தல்; முழுதுமாதல்; ஆடுதல்.
**துவர்ப்பகை** – குரோதம், மானம், மாயை, உலோபம் என்னும் நான்கு பாவங்கள்.
**துவர்ப்பிடித்தல்** – தடுத்திடுமாறு ஆடையைப் பிடித்தல்.
**துவர்ப்பு** – அறுசுவையுள் ஒன்று; நகைச்சுவை; இரதி, அரதி, சோகம், பயம், சுகுச்சை என்னும் குண வேறுபாடுகள்; உயிர்த்துன்பம்; பத்து.
**துவர** – மிக; முழுதும்.
**துவரம்** – துவர்ப்பு; கறிவகை.
**துவராடை** – காவியூட்டிய ஆடை.
**துவரி** – காவிநிறம்; இலவம்பூ.
**துவரிதம்** – யானை.
**துவரை** – துவரஞ்செடி; காண்க: **காட்டத்தி**; துவாரகை; கோவணம்.
**துவல்** – அருச்சிக்கும் பூ; விரைவு.
**துவலுதல்** – துளித்தல்; நிறைதல்; விரைதல்; சாதல்.
**துவலை** – நீர்த்துளி, மழைத்தூவல்; கூட்டம்.
**துவள்** – காண்க: **துவட்சி**; குற்றம்.
**துவள்வு** – காண்க: **துவட்சி**.
**துவள்(ளு)தல், துவளல்** – ஒசிதல்; நெளிதல்; வாடுதல்; கசங்குதல்; துடித்தல்; வருந்துதல்; ஒழிதல்; அடர்தல்; இறுகுதல்; ஒட்டுதல்; புணர்தல்; மெல்லியதாய் இருத்தல்; தொடுதல்.
**துவளை** – மேற்பூச்சு; ஒற்றடம்; வாட்டம்.
**துவற்றுதல்** – தூவுதல்; கெடுத்தல்.
**துவறல்** – மழைதூவுகை; விரைவு.
**துவன்** – காண்க: **வட்டத்திருப்பி**.
**துவன்று** – நிறைவு.
**துவன்றுதல்** – சாதல்; நிறைதல்; நெருங்குதல்; கூடிநிற்றல்; குவிதல்.
**துவனம், துவனி** – ஒலி.
**துவனித்தல்** – முழங்குதல்.

**துவா** – இரண்டு; தொழுகை.
**துவாதசம்** – பன்னிரண்டு.
**துவாதசாதித்தர்** – பன்னிரு சூரியர்.
**துவாதசாந்தம்** – உச்சிக்குமேல் பன்னிரண்டு அங்குலத்தில் உள்ள யோகத்தானம்.
**துவாதசி** – பன்னிரண்டாம் திதி.
**துவாந்தம்** – இருள்; நரகம்.
**துவாபரம், துவாபரயுகம்** – 8,64,000 ஆண்டுகள்கொண்ட மூன்றாம் யுகம்.
**துவாரடை** – மரக்கலவுறுப்புகளுள் ஒன்று.
**துவாரபாலகர், துவாரபாலர்** – வாயில் காப்போர்; கோயிலின் வாயில் காவல் தெய்வங்கள்.
**துவாரம்** – தொளை; மனைவாயில்; வழி; மூலம்.
**துவாரிகன்** – வாயிற்காவலன்.
**துவாலை** – உதிரப்பெருக்கு; உடலில் பூசும் பூச்சு; துணித்துண்டு; மேற்பூச்சு மருந்து.
**துவாலையிறைப்பு** – ஒரு நோய்; சூதகப்பெருக்கு.
**துவாளித்தல்** – கால்வாய் முதலியன தோண்டுதல்.
**துவி** – இரண்டு.
**துவிச்சக்கரவண்டி** – ஈருருளி, மிதிவண்டி.
**துவிசம்** – இருமுறை தோன்றுவது; பல்; முட்டையிற் பிறப்பது.
**துவிசன்** – இருபிறப்புடைய முதல் மூன்று வகுப்பான்; பார்ப்பனன்.
**துவிதம்** – இரண்டு; இருமை.
**துவிதவாதம்** – பகைவர் இருவரைத் தம்முள் பொருமாறு செய்து இருவருக்கும் உதவுபவனாக நடித்துத் தான் பொதுப்பட இருக்கை; கடவுளும் சிவனும் வேறெனக் கொள்ளுஞ் சமயமாகிய துவைதமதம்.
**துவிதவாதி** – கடவுளுஞ் சீவனும் வேறெனக் கொள்ளுஞ் சமயத்தான்.
**துவிதாகதி** – நண்டு.
**துவிதாத்துமகம்** – சாதிக்காய்.
**துவிதாதகி** – முதலை.
**துவிதியை** – இரண்டாம் திதி; இரண்டாம் வேற்றுமை; கோரோசனை.
**துவிதீயம்** – இரண்டாவது; இரண்டாம் மனைவி.
**துவிபடி** – காண்க: துப்பட்டி.
**துவிபாசி** – இருமொழி தெரிந்தவன்.
**துவியம்** – இரண்டாவது.
**துவிரதம்** – இருகொம்புடையதான யானை.
**துவிரம்** – தேனீ.
**துவிருத்தி** – கூறியது கூறல்; இரண்டுபடச் சொல்லல்.
**துவிரேபாரி** – வண்டுணா மலரான சண்பகம்.
**துவீபம்** – தீவு; புலித்தோல்.
**துவேச(ட)ம்** – பகை; வெறுப்பு.
**துவை** – மிதிக்கை; துவையல்; இறைச்சி; பருகும் உணவுவகை; ஆணம்; புளிங்கறி; பிண்ணாக்கு; துளசி; ஆடைவெளுக்கை.
**துவைத்தல்** – ஒலித்தல்; யாழ் ஒலித்தல்; ஆரவாரித்தல்; புகழப்படுதல்; மிதித்துழக்குதல்; துணிதுவைத்தல்; தோய்த்தல்; குற்றுதல்; இடித்தல்; கடைதல்; சேர்த்துவைத்தல்; உறையச்செய்தல்; ஆயுதத் துவைச்சலிடுதல்.
**துவைதம்** – கடவுளும் உயிரும் வேறென்பதும் மத்துவாசாரியரால் பரப்பப்பெற்றதுமான சமயம்.
**துவைதல்** – தோய்தல்; உறைதல்; கஞ்சியிடுதல்; ஆயுதத் துவைச்சலிடுதல்; மிதித்து உழக்கப் படுதல்.
**துவைபாயனன்** – தீவில் பிறந்தவனான வேதவியாசன்.
**துவையல்** – தொகையல் எனப்படும் உணவு; ஆடை வெளுக்கை; உருக்கைத் துவைச்சல் இடுகை.
**துழத்தல்** – துழாவுதல்.
**துழதி** – துன்பம்.
**துழவை** – துழாவிச் சமைத்த கூழ்; மூங்கிற் பற்றை.
**துழனி** – ஒலி; குறைகுற்றம்.
**துழாதல்** – காண்க: துழாவுதல்.
**துழாய்** – துளசிச்செடி.
**துழாய்மௌலி** – துளசிமாலை முடியினனாகிய திருமால்.
**துழாவாரம்** – வம்புப்பேச்சு.
**துழாவுதல்** – கையாலலைதல்; கிளறுதல்; தடவுதல்; நாடுதல்; ஆராய்தல்; தண்டுவலித்தல்; தடுமாறுதல்; அளவளாவுதல்.
**துழைதல்** – துடுப்பால் துழாவிச் செலுத்துதல்.
**துள்** – குதிப்பு; செருக்கு.
**துள்ளம்** – சிறுதுளி.
**துள்ளல்** – துள்ளுதல்; கூத்து; கலிப்பாவுக்குரிய துள்ளலோசை; முடுகிசை; கூத்தன்; ஆடு; கொசு; ஆட்டுநோய்வகை.
**துள்ளலோசை** – கலிப்பாவுக்குரிய ஓசை.
**துள்ளாட்டம்** – களிப்பு; செருக்கு.
**துள்ளி** – திவலை.
**துள்ளு** – காண்க: துள்.
**துள்ளுச்சீட்டு** – அடைக்கலச்சீட்டு.
**துள்ளுதல்** – குதித்தல்; தாவிச் செல்லுதல்; செருக்கடைதல்; மிகுதல்; பதைத்தல்; கவலையின்றித் திரிதல்.
**துள்ளுப்பூச்சி** – தானியத்தைக் கெடுக்கும் பயிர்ப் பூச்சிவகை.
**துள்ளுமறி** – ஆட்டுக்குட்டி.

**துள்ளுமா** – தேவதைகளுக்கு வெல்லத்துடன் கலந்து படைக்கும் மாவகை.
**துள்ளொலி** – அலை எழும் ஓசை.
**துளக்கம்** – அசைவு; நடுக்கம், மனக்கலக்கம்; குறைதல்; சோதிநாள்; ஒளி.
**துளக்கு** – அசைவு; வருத்தம்.
**துளக்குதல்** – அசைத்தல்; விளக்குதல்; வணங்குதல்.
**துளங்குதல்** – அசைதல்; நிலைகலங்குதல்; தளர்தல்; வருந்துதல்; ஒலித்தல்; ஒளிசெய்தல்.
**துளங்கொளி** – மிக்க ஒளி; கேட்டைநாள்.
**துளசி** – காண்க: குழிமிட்டான்; திருத்துழாய்.
**துளசிமணி** – திருமாலடியார் அணியும் துளசிக் கட்டையைக் கடைந்து செய்த மணி.
**துளசிமாடம்** – வழிபடப்படும் துளசியைக் கொண்ட மேடை.
**துளசிமாலை** – துளசியிலைக் கொத்தால் கட்டிய மாலை; துளசிமணிமாலை.
**துளபம்** – காண்க: **துளசி.**
**துளம்** – காண்க: **மாதுளை**; மயிலிறகின் அடி.
**துளம்பிக்கிரி** – ஆதொண்டைக்கொடி.
**துளர்** – பயிரின் களை; களைக்கொட்டு.
**துளர்தல்** – நிலம் முதலியவற்றைக் கொத்துதல்; மணம் முதலியன வீசுதல்.
**துளவம்** – காண்க: **துளசி.**
**துளவன்** – துளசி அணிந்த திருமால்.
**துளவு** – காண்க: **துளவம்.**
**துளவை** – துளை; மூங்கிற்பற்றை.
**துளாரி** – நெய்வார் கருவியுள் ஒன்று.
**துளி** – திவலை; மழை; ஒரு சொட்டு அளவு; சிறிதளவு; நஞ்சு; பெண்ணாமை; துளித்தல்.
**துளித்தல்** – துளியாய் விழுதல்; சொட்டுதல்; மழைபெய்தல்.
**துளிநசைப்புள்** – மழைத்துளி விரும்பும் வானம்பாடி.
**துளிர்** – தளிர்.
**துளிர்த்தல்** – தளிர்த்தல்; செழித்தல்.
**துளு** – துளுநாடு; துளுநாட்டு மொழி.
**துளுப்பிடுதல்** – கலக்குதல்.
**துளும்புதல்** – அசைதல்; தளும்புதல்; துள்ளுதல்; மேலெழுதல்; திமிறுதல்; வருந்துதல்; விளங்குதல்; மிகுதல்; இளகுதல்; சோதிவிடுதல்.
**துளுவம்** – காண்க: **துளு.**
**துளுவவேளாளர்** – துளுவ நாட்டிலிருந்து தொண்டைநாட்டிற்கு வந்து குடியேறிய வேளாளவகையினர்.
**துளுவன்** – ஒரு வாழைவகை; துளுநாட்டான்.
**துளை** – தொளை; உட்டுளை; மூங்கில்; வாயில்; சுருட்சி; வயிரக் குற்றங்களுள் ஒன்று.
**துளைக்கருவி** – உள்ளே துளையுடைய வாத்தியம்.
**துளைக்கை** – தும்பிக்கை.
**துளைச்செவி** – உட்செவி; உட்செவியுள்ள உயிர்கள்.
**துளைத்தல்** – தொளைசெய்தல்; ஊடுருவுதல்; வருத்துதல்; நுட்பமாய்க் கேட்டல்.
**துளைதல்** – நீரில் விளையாடுதல்; அழுந்திக் கிடத்தல்.
**துளைநிறை** – காண்க: **துளைப்பொன்.**
**துளைப்பு** – துளைத்தல்; இடைவிடாத் தொல்லை.
**துளைப்பொன்** – புடமிட்ட தூய பொன்.
**துளையடித்தல்** – துளைத்தல்; தொளையுண்டாக்குதல்.
**துளையம்** – நீரில் துளைகை.
**துற்கதம்** – தொல்லை; வறுமை.
**துற்கதி** – ஒடுங்கிய பாதை; வறுமை; கெட்டவிதி; துன்பக்காலம்; கெட்ட நடத்தை; தீய வாழ்க்கை; நரகம்.
**துற்கை** – காண்க: **துர்க்காதேவி.**
**துற்பரிசம்** – சிறுகாஞ்சொறி.
**துற்றர்** – உண்பவர்.
**துற்றவை** – நுகர்பொருள்.
**துற்றி** – உண்பவை.
**துற்று** – உணவு; கவளம்; கூட்டம்.
**துற்றுதல்** – உண்ணுதல்; கவ்வுதல்; குற்றுதல்; நெருங்குதல்; மேற்கொண்டு நடத்தல்.
**துறக்கநாடு, துறக்கம்** } – சுவர்க்கம், தேவருலகம்.
**துறட்டி** – அங்குசம்; காய் முதலியன பறிக்குந் துறட்டுக்கோல்; சிக்கு; காண்க: **துறட்டிச்செடி.**
**துறட்டிச்செடி** – ஒரு முட்செடிவகை.
**துறட்டிபோடுதல்** – இரகசியத்தை உசாவி உளவறிதல்; தன்வயப்படுத்த முயலுதல்.
**துறட்டிரும்பு** – இரும்புக்கொக்கி.
**துறட்டு** – முள்மரவகை; சிறுமரவகை; சிக்கல்; கேடு.
**துறட்டுக்கோல்** – காய் முதலியன பறிக்க உதவும் கோல்வகை.
**துறட்டுப்பிடி** – காண்க: **துறட்டுவாதம்.**
**துறட்டுமுள்** – இரும்புக்கொக்கி; துறட்டிச்செடி.
**துறட்டுவாதம்** – பிடிவாதம்.
**துறடு** – அங்குசம்; காய் முதலியன பறிக்கும் துறட்டுக்கோல்; சிக்கு.
**துறத்தல்** – கைவிடுதல்; பற்றற்றுத் துறவுபூணுதல்; நீங்குதல்.
**துறந்தா(தோ)ர்** – பற்றுவிட்ட முனிவர்.
**துறப்பணம்** – துளையிடும் தச்சுக்கருவி.

**துறப்பணவலகு** – துறப்பணக்கோலிலுள்ள ஊசி.
**துறப்பு** – பிரிவு; துறவு; பூட்டு; திறவுகோல்; விடுதல்; துறவிகளுக்கு விதித்துள்ள அறம்.
**துறம்** – காண்க: **துறவு.**
**துறவர்** – முனிவர்; துறந்தவர்.
**துறவறம்** – இல்லறந்துறத்தல்; பற்றற்ற நிலை; துறவியருக்கு விதித்துள்ள அறம்.
**துறவி** – சன்னியாசி; சன்னியாசம்; துறவியருக்கு விதித்துள்ள அறம்.
**துறவு** – விடுதல்; இரகசியம்; வாய்ப்பான நிலை; வெளியிடம்; சன்னியாசம்; துறவியருக்கு விதித்துள்ள அறம்.
**துறவோர்** – முனிவர்.
**துறு** – நெருக்கம்; உண்ணுகை; செம்பூரான்கல்.
**துறுகல்** – பாறை; குன்று; நீர்க்கால் அடைக்குங் கல்.
**துறுட்டி** – ஏலவகை.
**துறுத்தல்** – அமைத்தல்; அமுக்கல்; திணித்தல்; வெளியே நீளல்.
**துறுதல்** – நெருங்குதல்; குவிதல்; அடைதல்; சூட்டுதல்.
**துறுதுறுவெனல்** – காண்க: **துருதுருவெனல்.**
**துறுபடை** – போர்ப்படை.
**துறுபவம்** – நெருக்கம்.
**துறும்புதல்** – காண்க: **துறுமுதல்.**
**துறுமல்** – நெருக்கம்; திரட்சி.
**துறுமுதல்** – நெருங்குதல்; திரட்டல்.
**துறுவல், துறுவுதல்** – நெருங்குகை; நுகர்ச்சி; உண்ணல்.
**துறை** – இடம்; நீர்த்துறை; நியாயவழி; பகுதி; உபாயம்; சபை கூடுமிடம்; ஆறு; வண்ணார் துறை; கடல்; கடற்றுறை; நூல்; வரலாறு; அகமும் புறமும்பற்றிய பொருட்கூறு; பாவினங்களில் ஒன்று; அலுவலகத் துறை, இலாகா.
**துறைக்குறை** – ஆற்றிடைக்குறை, துருத்தி.
**துறைகாட்டுதல்** – வழிகாட்டுதல்.
**துறைகூட்டுதல்** – துறைமுழுக்கைப் பூர்த்திசெய்தல்.
**துறைத்தோணி** – கரைகடத்துந் தோணி.
**துறைப்பேச்சு** – கொச்சைப்பேச்சு; நாட்டு மொழி.
**துறைபடிதல்** – நீர்நிலைகளில் நீராடுதல்.
**துறைபிடித்தல்** – துறைமுகம் சேர்தல்; வழிவகை தேடுதல்; மனத்துக்கு ஏற்றதாதல்.
**துறைபோதல்** – நிரம்புதல்; செயல் முடிவாதல்; முழுமையுங் கற்றுத்தெளிதல்.
**துறைமாறுதல்** – முன் பயின்றதனைவிட்டு வேறு தொழிலில் புகுதல்; வழிதவறுதல்.
**துறைமுகம்** – கப்பல்கள் வந்து தங்கும் கடற்றுறை; கடற்கரைப்பட்டினம்.
**துறைமுழுக்கு** – ஐப்பசித் திங்களில் பெண்கள் ஆற்றில் முறைப்படி நீராடுகை; துறை மூழ்கல்.
**துறைமுன்றில்** – வீட்டின் முற்றம்.
**துறைவன்** – நெய்தல்நிலத் தலைவன்.
**துன்** – வளை.
**துன்பம்** – மனவருத்தம்; மெய்வருத்தம்; நோய்; கெடுதி; வறுமை.
**துன்பன்** – துன்பமுள்ளவன்.
**துன்பு** – காண்க: **துன்பம்.**
**துன்புறுத்துதல்** – வருத்துதல்.
**துன்புறுதல்** – வருந்துதல்.
**துன்மதி** – கெடுமதி; தீயோன்; மூடத்தன்மை, அறுபதாண்டுக் கணக்கில் ஐம்பத்தைந்தாம் ஆண்டு.
**துன்மந்திரி** – தீயவுரை சொல்லும் அமைச்சன்.
**துன்மரணம்** – தற்கொலை முதலியவற்றால் நேரும் சாவு.
**துன்மார்க்கம்** – தீநெறி.
**துன்மார்க்கன்** – தீநெறியாளன்.
**துன்முகி** – அறுபதாண்டுக் கணக்கில் முப்பதாம் ஆண்டு; தீய முகத்தோற்றமுள்ளவன்.
**துன்மை** – தீமை.
**துன்றுதல்** – நெருங்குதல்; கிட்டுதல்; பொருந்துதல்.
**துன்றுநர்** – நண்பர்.
**துன்னகாரர், துன்னநாயகர்** – தையற்காரர்.
**துன்னபோத்து** – உழவெருமை.
**துன்னம்** – தையல்; ஊசித்துளை; ஒரு மரவகை.
**துன்னம்பெய்தல்** – தைத்தலைக்கொள்ளுதல்.
**துன்னர்** – தையற்காரர்; தோல்வினைஞர்.
**துன்னல்** – நெருங்கல்; தைத்தல்; சிறு திவலை.
**துன்னலர், துன்னாதார், துன்னார்** – பகைவர்.
**துன்னிமித்தம்** – தீய சகுனம்.
**துன்னியார்** – அடுத்தோர்; நண்பர்.
**துன்னீதி** – தீயவழி.
**துன்னீர்** – எச்சில்; கழிவுநீர்.
**துன்னு** – இறைச்சி; முதுகு; தசை.
**துன்னு (வி)** – நெருங்கு; பொருந்து.
**துன்னுதல்** – பொருந்துதல்; மேவுதல்; அணுகுதல்; செறிதல்; செய்தல்; அடைதல்; ஆராய்தல்; தைத்தல்; உழுதல்.
**துன்னுநர்** – நண்பர்.
**துன்னூசி** – தையலூசி; கலப்பையின் கொழு.
**துன்னெறி** – தீயவழி.
**துனாவி** – திப்பிலி.

**துனி** – வெறுப்பு; சினம்; புலவிநீட்டம்; பிரிவு; துன்பம்; அச்சம்; நோய்; குற்றம்; இடையூறு; ஆறு; வறுமை.

**துனித்தல்** – வெறுத்தல்; சினத்தல்; கலாய்த்தல்; நெடிது புலத்தல்.

**துனிநாதம்** – கடல்.

**துனிப்பு** – வெறுப்பு.

**துனைதல்** – விரைதல்.

**துனைவு** – விரைவு.

## தூ

**தூ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (த்+ஊ); தூயது; தூய்மை; வெண்மை; பற்றுக்கோடு; வலிமை; பகை; இறைச்சி; பறவையின் இறகு; இகழ்ச்சிக் குறிப்பு.

**தூக்கணக்கயிறு** – ஆழமான நீருள் முக்குளிப் பவனை முக்குளிக்கும் காலத்துக் கட்டியிருக்கும் கயிறு.

**தூக்கணங்குரீஇ, தூக்கணங்குருவி** – தொங்குங் கூடு கட்டும் குருவிவகை.

**தூக்கணம்** – தொங்கல்; உறி; காண்க: தூக்கணங்குருவி; தூக்கணக்கயிறு.

**தூக்கணாங்கயிறு** – எருதுக்கு இடும் மூக்குக் கயிறு.

**தூக்கணாங்குருவி** – காண்க: தூக்கணங்குருவி.

**தூக்கம்** – உறக்கம்; அயர்வு; சோம்பல்; வாட்டம்; முகச்சோர்வு; காற்று முதலியவற்றின் தணிவு; விலையிறக்கம்; ஆபரணத் தொங்கல்; காதணி; அலங்காரத் தொங்கல்; காண்க: தூக்கணங்குருவி; கால நீட்டிக்கை; நிறுப்பு; விலையேற்றம்; உயரம்.

**தூக்கம்விடுதல்** – உறக்கம் நீங்குதல்; அலங்காரத் தொங்கல் கட்டுதல்.

**தூக்கல்** – விலை முதலியவற்றின் ஏற்றம்; ஆராய்தல்; உயரம்.

**தூக்கிப்பிடித்தல்** – எடுத்து நிறுத்துதல்; நுணுகிக் குற்றம் காணுதல்; உலோபங் காட்டுதல்.

**தூக்கிப்போடுதல்** – வெளியேயெறிதல்; திடுக்கிடுமாறு செய்தல்; சண்டைமூட்டுதல்; மரண தண்டனையாகத் தூக்கிலிடுதல்.

**தூக்கியடித்தல்** – உயர்த்தி மோதுதல்; மற்போரில் எளிதாகத் தோற்கச்செய்தல்; தான் மேம்பட்டுப் பிறனைப் பின்வாங்கச் செய்தல்; மறுத்தல்.

**தூக்கியெறிதல்** – ஏற்றுக்கொள்ள மறுத்தல்; அக்கறைகாட்டாதிருத்தல்; தான் மேம்பட்டுப் பிறனைப் பின்வாங்கச்செய்தல்.

**தூக்கிரி** – ஊர்காவற்காரன்.

**தூக்கிரிமேரை** – களத்தில் அளிக்கப்படும் ஊர் காவற் சுதந்தரம்.

**தூக்கிரும்பு** – இரும்புத்துறட்டி.

**தூக்கிலி** – ஆராயுந் திறனற்றவன்.

**தூக்கிலிடுதல்** – மரண தண்டனையாகத் தூக்கிலே போடுதல்.

**தூக்கிவிடுதல்** – மேலுயர்த்தல்; தூண்டிவிடுதல்; உதவிபுரிந்து காத்தல்; காண்க: தூக்கிலிடுதல்.

**தூக்கு** – தொங்கவிடும் பொருள்; உறி; உயர்ச்சி; நிலைகோல்; துலாராசி; ஐம்பது பலமுள்ள நிறை; பாட்டு; கூத்து; இசை; பாக்களைத் துணித்து நிறுக்கும் செய்யுளுறுப்பு; ஆராய்ச்சி; காண்க: தூக்கணங்குருவி; வாரடை; கனம்.

**தூக்கு** (வி) – ஆராய்; உயர்த்து; நிறுத்து.

**தூக்குக்கோல்** – நிறுக்கும் தராசுவகை.

**தூக்குணி** – தூக்குண்டவன்; மானமற்றவன்; தூக்குக்கு அஞ்சாதவன்; சாப்பாட்டுக்குத் தொங்குகிறவன்.

**தூக்குத்தூக்கி** – சுவடித் தூக்கைத் தூக்குபவன்.

**தூக்குதல்** – உயர்த்துதல்; நிறுத்தல்; ஆராய்தல்; ஒப்புநோக்குதல்; மனத்திற்கொள்ளுதல்; தொங்கவிடுதல்; காண்க: தூக்கிலிடுதல்; உதவிசெய்தல்; நங்கூரம் வலித்தல்; அசைத்தல்; ஒற்றறுத்தல்.

**தூக்குநூல்** – சுவரின் ஒழுங்கை அறியத் தொங்க விடும் கயிறு.

**தூக்குமரம்** – தூக்குத்தண்டனைக்கமைந்த மரம்.

**தூக்குமாலை** – ஊர்தியில் தொங்கவிடும் மாலை.

**தூக்குவிளக்கு** – தொங்குவிளக்கு.

**தூகம்** – காண்க: புளிநரளை.

**தூகுதல்** – குப்பை முதலியவற்றைக் கூட்டித் தள்ளுதல், திருவலகிடுதல்.

**தூகை** – பாளை.

**தூங்கணம்** – தொங்கல்; காண்க: தூக்கணங் குருவி.

**தூங்கமளி** – ஊஞ்சற்கட்டில்.

**தூங்கமுட்டு** – கோரைக்கிழங்குவகை.

**தூங்கல்** – தொங்கல்; தராசு; தாழ்கை; நெருங்குகை; உறக்கக்கலக்கம்; சோம்பல்; சோர்தல்; ஓரிசை; வஞ்சிப்பா ஓசை; கூத்து.

**தூங்கல்வண்ணம்** – வஞ்சி ஓசை பயின்றுவரும் சந்தவகை.

**தூங்கலன்** – சோம்பன்.

**தூங்கலாளி** – மந்தன், சுறுசுறுப்பில்லாதவன்; சீமைவாகை; காண்க: கரிசலாங்கண்ணி.

**தூங்கலோசை** – வஞ்சிப்பாவுக்கு உரிய ஓசை.

**தூங்காமை** – செயலில் சோர்வில்லாமை.

**தூங்காவிளக்கு** – எப்போதும் அணையாது எரியும் விளக்கு.

**தூங்கானைமாடம்** – யானையின் முதுகுபோன்று அமைக்கப்பட்ட கோயில்; தென்னார்க்காட்டு மாவட்டத்துள்ள பெண்ணாகடச் சிவன் கோயில்.

**தூங்கிசை** – செய்யுளுக்குரிய நால்வகை ஓசையுள் ஒன்று

**தூங்கிசைச்செப்பல்** – இயற்சீர் வெண்டளையால் மாமுன் நிரையும் விளமுன் நேருமாக வரும் வெண்பாவுக்குரிய ஓசை.

**தூங்கிசைத்துள்ளல்** – கலிப்பாவுக்குரிய ஓசை.

**தூங்கிசையகவல்** – நிரையொன்றாசிரியத் தளையான் வரும் அகவற்பாவுக்குரிய ஓசை.

**தூங்கிருள்** – செறிந்த இருள், மிகுந்த இருள்.

**தூங்குகட்டில்** – தொங்கியாடும் கட்டில்.

**தூங்குதல்** – அசைதல்; தொங்குதல்; ஊசல் முதலியவற்றில் ஆடுதல்; சோம்பலாயிருத்தல்; வாடுதல்; சாதல்; இடையறாது விழுதல்; ஒலித்தல்; நிலையாகக் தங்குதல்; மெத்தென நடத்தல்; செறிதல்; கூத்தாடுதல்; துயிலுதல்; தாமதித்தல்; அழுந்துதல்; மிகுதல்.

**தூங்குதோல்** – பாம்பின் சட்டை.

**தூங்குமஞ்சம்** – தொங்கி ஆடும் கட்டில்.

**தூங்குமூஞ்சி** – மந்தன்; சீமைவாகைமரம்; காண்க: **கரிசலாங்கண்ணி.**

**தூங்கெயில்** – சோழன் ஒருவனால் அழிக்கப் பட்டதாகக் கூறப்படும் ஆகாயக்கோட்டை.

**தூசக்குடிஞை** – கூடாரம்.

**தூசம்** – யானையின் கழுத்திலிடுங் கயிறு.

**தூசர்** – வண்ணார்; படைவீரர்.

**தூசரம்** – சாம்பல் நிறம்.

**தூசரன்** – எண்ணெய் வாணிகன்.

**தூசறுத்தல்** – அடியோடு அழித்தல்.

**தூசனம்** – நிந்தைச்சொல்.

**தூசி** – குதிரை; கொடிப்படை; போர்; உச்சி; கூத்துத் தொழில்வகை; மிகச் சிறிது; புழுதி.

**தூசிகம்** – காண்க: **புளியாரை.**

**தூசிதாங்கி** – அழுக்குத் தாங்க உடையின் மேலே கட்டுந் துண்டுப் புடைவை; மேல்மறைப்பு.

**தூசிப்படை** – கொடிப்படை.

**தூசியம்** – கூடாரம்.

**தூசு** – ஆடை; பஞ்சு; முன்னணிப்படை; சித்திரைநாள்; யானைக் கழுத்திடுகயிறு; புழுதி; மிகச் சிறிது; தூய்மை.

**தூசுப்பு** – தண்ணீர்விட்டான்கொடி.

**தூட்டி** – ஆடை.

**தூட்டிகம்** – காண்க: **தும்பை.**

**தூடணம், தூடணை** – நிந்தை; நிந்தைச்சொல்; கண்டனம்.

**தூடிதம்** – கெடுக்கப்பட்டது.

**தூடியம்** – கூடாரம்.

**தூண்** – தம்பம்; கட்டடத் தூண்; பற்றுக்கோடு; தறி.

**தூண்டாவிளக்கு** – எப்பொழுதும் எரியும் நந்தா விளக்கு; நாகரத்தினமாகிய மணிவிளக்கு.

**தூண்டிக்காட்டுதல்** – விவரித்தல்; பிறன் செய்த குற்றத்தை அவனிடம் குத்திக்காட்டுதல்; தூண்டிக் கொடுத்தல்.

**தூண்டிக்கொடுத்தல்** – நினைப்பூட்டுதல்; குற்றத்தை வெளியிடுதல்; குறிப்பாக அறிவித் தல்; கோட்சொல்லுதல்.

**தூண்டில்** – மீன்பிடிக்கும் ஒரு கருவி; கொக்கி; வரிக்கூத்துவகை.

**தூண்டில்போடுதல்** – உளவறிதல்; தன்வயப் படுத்துதல்; தூண்டிலிடுதல்.

**தூண்டில்முள்** – தூண்டிலின் கொக்கிமுனை.

**தூண்டில்வேட்டுவன்** – தூண்டிலைக் கொண்டு வேட்டையாடுபவனான மீன் பிடிப்போன்.

**தூண்டிவிடுதல்** – காண்க: **தூண்டிக்கொடுத்தல்;** விளக்கைத் தூண்டுதல்.

**தூண்டுகோல்** – விளக்குத்திரியைத் தூண்டும் ஈர்க்கு; ஏவிவிடுவோன்.

**தூண்டுதல்** – செலுத்துதல்; ஏவுதல்; தள்ளுதல்; விளக்கைத் தூண்டுதல்; நினைப்பூட்டுதல்; செலுத்துதல்; அனுப்புதல்; கிளப்பிவிடுதல்.

**தூண்மாலை** – தூண்போல அலங்கரிக்கப்படும் மாலை.

**தூணம்** – தூண்; பற்றுக்கோடு; பகை; அம்புக் கூடு; தீய நாள்வகை; பாத்திரம் தூக்க இடும் கயிற்றுச் சுருக்கு.

**தூணி** – அம்புக்கூடு; நான்குமரக்கால் கொண்ட ஓர் அளவு.

**தூணிகர்** – வாணிகர், தனவணிகர்.

**தூணித்தல்** – பருத்தல்.

**தூணியங்கம்** – அத்திப்பிசின்.

**தூணீரம்** – அம்புக்கூடு.

**தூத்தியம்** – தூதன் செயல் அல்லது மொழி.

**தூதம்** – அசைவு; நிந்தை.

**தூதளை** – காண்க: **தூதுளை.**

**தூதன்** – செய்தியறிவிப்போன்; அரசனின் தூதன்; ஒற்றன்; ஏவலாளன்; புதன்; காமக் கூட்டத்துக் காதலரை இணக்குவோன்; தேவதூதன்.

**தூதாடுதல்** – தூதாகப் போதல்.

**தூதாள்** – காண்க: **தூதன்.**

**தூதி** – தூது செல்பவள்; பாம்பின் நச்சுப் பற்களுள் ஒன்று.

**தூதிகை** – தூது செல்பவள்.

**தூது** – இருவரிடையே பேச்சு நிகழ்தற்கு உதவியாக நிற்கும் ஆள்; இராசதூதர் தன்மை; ஒரு நூல்வகை; கூழாங்கல்; தூதுமொழி; தூதுவளைக் கொடி; காமக் கூட்டத்துக் காதலரை இணக்கும் செயல்; செய்தி.

**தூதுணம்புறவு, தூதுணி** – கூழாங்கல்லை உண்ணும் புறாவகை; தூக்கணங் குருவி.

**தூதுவளை** – ஒரு கொடிவகை.

**தூதுவன்** – காம வாயிலோன்; தூதன்; புதன்.

**தூதுளை** – காண்க: **தூதுவளை.**

**தூதூவெனல்** – உமிழ்தற்குறிப்பு.

**தூதை** – சிறு மட்கலம்; சிறு மரப்பானை; சிறு சம்மட்டி; ஒரு சிறிய அளவு.

**தூதைகூலம்** – பஞ்சுபன்னும் வில்.

**தூந்துதுருப்பிடித்தல்** – நுணுகி ஆராய்ச்சி செய்தல்.

**தூப்பு** – தூத்தல்; பெருக்குகை; தூய்மை; துளை.

**தூப்புக்காரன்** – தெருப்பெருக்குவோன்.

**தூபக்கால்** – புகைகாட்டும் கருவி.

**தூபகலசம்** – காண்க: **தூபமுட்டி,** நறும்புகைப் பண்டம் எரிக்கும் கலசம்.

**தூபங்காட்டுதல், தூபங்கொடுத்தல்** – கடவுள் முதலியோர்க்கு நறும்புகை காட்டுதல்; நிவேதனம் செய்தல்.

**தூபதீபங்காட்டுதல்** – பூசையின்போது நறும்புகையும் விளக்கும் எடுத்து வழிபடல்.

**தூபம்** – புகை; நறும்புகை; நெருப்பு; காண்க: **வெள்ளைக்குந்துருக்கம்;** நீண்ட மரவகை; கடப்பமரம்; அபிநயவகை; காண்க: **கருங் குங்கிலியம்.**

**தூபம்போடுதல்** – ஆவேசம் வருவதற்காகச் சாம்பிராணி புகைத்தல்; சாம்பிராணி புகைத்தல்; தூண்டிவிடுதல்; வீணாய்ப் புகழ்தல்.

**தூபமணி** – கடவுட்கு நறும்புகை காட்டும்போது கையால் ஆட்டி ஒலிக்கும் கைம்மணி.

**தூபமுட்டி** – நறும்புகைப்பண்டம் எரிக்கும் கலசம்.

**தூபரதண்டி** – கண்டபடி செலவழிப்பவர்; சொன்னபடி கேளாதவர்.

**தூபரம்** – கொம்பில்லா விலங்கு.

**தூபவருக்கம்** – நறும்புகைப்பண்டம்.

**தூபாயிதம்** – நெருப்பினால் நேரும் சாவு.

**தூபி, தூபிகை** – உச்சி; மலைமுகடு; கோபுரம்; விமான சிகரம்.

**தூபிதம்** – சூடு; சுடுகை; தீயில் இறந்துபடுகை.

**தூம்** – முகத்தலளவை; ஒரு நிறை.

**தூம்பல்** – சுரைக்கொடி.

**தூம்பா** – காண்க: **தும்பை; தூம்பை.**

**தூம்பாமடை** – காண்க: **தூம்புவாய்.**

**தூம்பிரம்** – தூமலம்; கருஞ்சிவப்பு.

**தூம்பு** – உள்துளை; உள்துளைப் பொருள்; மதகு; வாய்க்கால்; சலதாரை; மூங்கில்; பெருவங்கியம்; இசைக்குழல்; நீர்ப்பத்தர்; காண்க: **மரக்கால்;** மனைவாயில்; இடுக்குவழி; ஈயம்; பாதை.

**தூம்புவாய்** – சலதாரை.

**தூம்பை** – பாடை.

**தூமக்குடம்** – தூமகலசம்.

**தூமக்கொடி** – புகையொழுங்கு.

**தூமக்கொடியோன்** – அக்கினிதேவன்.

**தூமக்கோள்** – வால்வெள்ளி; விண்வீழ்கொள்ளி.

**தூமகேது** – நெருப்பு; தீமைக்குறி; விண்வீழ் கொள்ளி; கொடுமை; வால்வெள்ளி.

**தூமணி** – முத்து.

**தூமதேவன்** – காண்க: **தூமக்கொடியோன்.**

**தூமப்பிரபை** – எழுவகை நரகங்களுள் ஒன்று.

**தூமம்** – புகை; நறும்புகை, தூபகலசம்; மண்கலச் சூளை; காண்க: **தூமகேது; புளிநறளை.**

**தூமம்போக்கி** – புகைபோக்கி.

**தூமமணி** – காண்க: **தூபமணி.**

**தூமமுட்டி** – தூபகலசம்.

**தூமயோனி** – மேகம்.

**தூமரதம்** – புகைவண்டி.

**தூமலம்** – காண்க: **தூமிரம்;** பாவம்.

**தூமான்** அணிகலச்செப்பு; அரியணை.

**தூமியம்** – புகை.

**தூமிரகம்** – ஒட்டகம்.

**தூமிரம்** – கருஞ்சிவப்பு.

**தூமை** – மகளிர் சூதகம்; காண்க: **தூய்மை;** வெண்மை.

**தூய்தன்மை** – தூய்மையின்மை; தீட்டு.

**தூய்து** – தூய்மையானது.

**தூய்மை** – துப்புரவு; மெய்மை; வீடுபேறு; நன்மை; வெண்மை.

**தூய** – தூய்மையான, பரிசுத்தமான.

**தூயவன்** – மாசிலான்; திருமால்.

**தூயவுடம்பினனாதல்** – இறைவன் எண்குணத்துள் பரிசுத்தத் திருமேனியனாம் தன்மை.

**தூயவெள்ளை** – நல்ல வெள்ளை, கலப்பற்ற வெள்ளை.

**தூயன்** – காண்க: **தூயவன்.**

**தூயாள்** – பரிசுத்தமானவள்; கலைமகள்.

**தூர்** – வேர்; அடிப்பக்கம்; பனையின் வேர்ப் பற்றுள்ள அடிப்பகுதி; அடிமரம்; பாத்திரத்தி னடிப்புறம்; சேறு; கிணற்றில் தேங்கிய வண்டல் முதலிய கசடுகள்; பனைவடலி முதலியன; பழிச்சொல்.

**தூர்க்கை** – பூரநாள்.

**தூர்கட்டுதல்** – மரம் செடி முதலியன அடிபருத்து எழுதல்; கொத்தாய்க் கிளைத்தெழுதல்.

**தூர்ச்சடி** – பாரமான சடையையுடைய சிவபெருமான்.

**தூர்த்தம்** – தீநெறி; ஊமத்தஞ்செடி; அரப்பொடி.

**தூர்த்தல்** – அடைத்தல்; மறைத்தல்; உட்செலுத்துதல்; மிகப்பொழிதல்; பெருக்கித் துப்புரவுசெய்தல்.

**தூர்த்தன்** – காமுகன்; பரத்தமைகொண்டு ஒழுகு வோன்; கொடியோன்.

**தூர்த்தை** – காமவெறி பிடித்தவள், கற்பில்லாத வள்.

**தூர்தல்** – நிரம்புதல்; நெருங்குதல்; அடைபடு தல்; மறைதல்; அழிதல்.

**தூர்மம்** – தேட்கொடுக்கிச்செடி.

**தூர்வகம்** – பொதிமாடு; சுமக்கை.

**தூர்வாரி** – கிணறுகளில் தூர்வாரியெடுப்பவன்.

**தூர்வாருதல்** – கிணற்றில் படிந்த சேற்று வண்டலை வாரி எடுத்தல்.

**தூர்வு** – கிணறு முதலியன சேற்றால் அடைபடு தல்.

**தூர்வை** – கிணற்றடை தூர்; கிணற்றைச் சார்ந்த நிலம்; கொத்தப்பட்ட மண்; அறுகம் புல்; செத்தை.

**தூர்வைசெய்தல்** – நிலத்தை வெட்டித் திருத்து தல்.

**தூர்வைத்தைலம்** – அறுகம்புல்லுத் தைலம்.

**தூர்வைப்படுத்துதல்** – காண்க: **தூர்வைசெய்தல்.**

**தூர்னா** – அறுகு.

**தூர** – விலக.

**தூரக்காரி** – வீட்டுக்கு விலக்கானவள்.

**தூரகமணம்** – தொலைதூர நாட்டுப் பயணம்.

**தூரகாரி** – வருகாரியம் அறிவோன்(ள்).

**தூரதரிசி** – முக்காலமுணர்வோன், தீர்க்கதரிசி; பண்டிதன்; பருந்து.

**தூரதிட்டி** – சேய்மைப் பார்வை; முன்னுணர்ச்சி; தீர்க்கதரிசி.

**தூரம்** – சேய்மை; புறம்பு; மகளிர் தீட்டு; தூரத்து உறவு; ஓர் இசைக்கருவி; ஊமத்தஞ் செடி; சிறுமரவகை; வேறுபாடு.

**தூரல்** – நிறைகை; துன்பம்.

**தூரவுறவு** – தொடர்பில்லாத உறவுமுறை.

**தூராதிதூரம்** – மிக்க தொலைவு.

**தூராதூரம்** – வெவ்வேறு தொலைவு; நெடுந் தொலைவு.

**தூரி** – பலகறை; சிறுதூம்பு; காண்க: **தூரிகை;** தூரிவலை; எருது; ஊசல்; தூரியம் என்னும் ஒரு வாத்தியவகை.

**தூரிகை** – எழுதுகோல்.

**தூரிது** – சேய்மையானது.

**தூரிய** – தொலைவான.

**தூரியம்** – பறைப்பொது; மங்கலப்பறை; முரசு; பொதியெருது; எழுதுகோல்; கைவேல்; நல்லாடை; ஈயம்; நஞ்சு.

**தூரியன்** – தூரத்திலுள்ளவன்.

**தூரு** – காண்க: **தூர்.**

**தூருதல்** – அடைபடுதல்; நிரம்புதல், மலங் கழித்தல்.

**தூரேத்தி** – கம்பந்திராய்ப் பூண்டு.

**தூரோணம்** – கவிழ்தும்பைச்செடி.

**தூலகம்** – பருத்தி.

**தூலகன்மம்** – உள்ளம் உரை உடல்களால் (மனம் வாக்கு காயங்களால்) செய்யப்படும் செயல்.

**தூலகாலம்** – வாழ்நாள்.

**தூலசர்(ரு)க்கரை** – உப்பு; பருத்திவிதை.

**தூலசரீரம்** – உண்டானவுடல்; நுண்ணுடலைப் போர்த்தியிருக்கும் ஐம்பூத பரிணாமத்தால் உண்டான பருவுடல்.

**தூலசித்து** – சீவான்மா, உயிர்.

**தூலதேகம்** – காண்க: **தூலசரீரம்.**

**தூலம்** – பருத்தி; இலவமரம்; பஞ்சு; கோரைப் புல்; நீர்முள்ளிச்செடி; பருமை; வானம்; கண்ணுக்குப் புலனாவது; வீட்டினுத்திரம்; நெற்போரடிக்கும் கோல்; நஞ்சு; பொதுமை.

**தூலலிங்கம்** – கோபுரம்; சிவாலயம்.

**தூலி, தூலிகை** – காண்க: **தூரிகை.** அன்னத்தின் இறகு; மெத்தை; விளக்குத்திரி.

**தூலித்தல்** – பருத்தல்; பெருகுதல்.

**தூலினி** – காண்க: **இலவு.**

**தூலை** – பருத்தி.

**தூவத்தி** – வாள்.

**தூவரம்** – துவர்ப்பு; காளை; கொம்பில்லா விலங்கு.

**தூவல்** – தூவுகை; மழை; இறகு; எழுதும் இறகு; பேனா; அம்பின் இறகு; ஓவியந்தீட்டுங்கோல்; துவலை.

**தூவழி** – பண்வகை.

**தூவானம்** – சிதறுமழை; அருவிவீழ் இடம்.

**தூவி** – பறவை இறகு; மயிற்றோகை; அன்னத்தி னிறகு; அன்னப்பறவை; சூட்டு; எழுதுகோல்; தூள்; மீன்சிறகு.

**தூவிப்பொன்** – கிளிச்சிறை என்னும் பொன்.
**தூவியளத்தல்** – எளிதாகப் பெய்து அளத்தல்.
**தூவு** – ஊன்.
**தூவு** (வி) – தூவுஎன் ஏவல்; சிதறு; தெளி.
**தூவுதல்** – தெளிதல்; இறைத்தல்; அளக்கும் போது எளிதாக மேலே பெய்தல்; அருச்சித்தல்; மிகச் சொரிதல்; ஒழிதல்; மழைபெய்தல்.
**தூவுரை** – நல்லுரை.
**தூவெள்ளறுவை** – அழுக்கற்ற வெண்ணிறமுள்ள ஆடை.
**தூவெளி** – அறிவுவெளி, சிதாகாசம்.
**தூவையர்** – புலாலுண்போர்.
**தூள்** – துகள்; புழுதி; பூந்தாது; மருந்துப்பொடி; திருநீறு; கறிப்பொடி; மூக்குத்தூள்; சிறியவை; சிறுமுத்து.
**தூள்படுத்துதல்** – முற்றும் அழித்தல்; அட்டகாசம் செய்தல்.
**தூள்படுதல்** – கடுமையாகச் செயல்புரிதல்.
**தூளம், தூளனம்** – தூள்; திருநீற்றை நீரில் குழையாது பூசுதல்.
**தூளி** – புழுதி; பூந்தாது; குதிரை; குதிரையின் ஆர்ப்பு; ஏணை, குழந்தைத் தொட்டில்.
**தூளிசாலம்** – அருகன் கோயிலின் முதல் மதில்.
**தூளித்தல்** – பருத்தல்; திருநீற்றால் உத்தூளனஞ் செய்தல்.
**தூளித்துவசன்** – காற்று.
**தூளிதம்** – பொடிக்கப்பட்டது; திருநீறு.
**தூளிமட்டம்** – தரைமட்டம்.
**தூற்றல்** – பழிச்சொல்; சிறுமழை.
**தூற்றாப்பொலி** – தூற்றாத நெற்குவியல்.
**தூற்றி** – புறங்கூறுவோன்; பெருக்குவோன்.
**தூற்றிக்கொள்ளுதல்** – தெரிந்துகொள்ளுதல்.
**தூற்று** – பொலிதூற்றுகை; பழிப்பு.
**தூற்றுக்காடு** – சிறுதூறு.
**தூற்றுக்கூடை, தூற்றுகூடை** – பொலி தூற்றுவதற்கு உதவும் தட்டுக்கூடை; பொலி தூற்றுவதற்கு உதவும் முறம்.
**தூற்றுத்தலையன்** – பிராய்மரம்.
**தூற்றுதல்** – சிதறுதல்; தூசுபோகத் தானியங்களைத் தூவுதல்; புழுதி முதலியவற்றை இறைத்தல்; பரப்புதல்; அறிவித்தல்; பழிகூறுதல்; வீண்செலவு செய்தல்.
**தூற்றுமுறம்** – நெற்பொலி தூற்றுவதற்கு உதவும் முறம்.
**தூறல்** – காண்க: **தூற்றல்.**
**தூறன்** – அவதூறு சொல்பவன்; காமுகன்; குடிக்குப் பழியாயுள்ளவன்.
**தூறாக்குதல்** – பழித்தல்.
**தூறு** – புதர்; குவியல்; குறுங்காடு; சுடுகாடு; காண்க: **திராய்; மஞ்சள்;** பழிச்சொல்; தீங்கு.
**தூறுகுணம்** – காண்க: **கடம்பு.**
**தூறுதல்** – மழை தூவுதல்; கிளைத்தல்; செய்தி பரவுதல்; சடைபற்றுதல்; நிந்தித்தல்.
**தூறுதலை** – சிலும்பலான மயிர்த்தலை.
**தூறுதலையன்** – பற்றைத் தலையன்; காண்க: **பிராய்.**
**தூறுபடுதல்** – சிதறிப்போதல்; சடைபற்றுதல்; பழிமொழி கூறப்படல்.
**தூறுபுட்பம்** – சீந்திற்கொடி; சிலந்தி.
**தூறுமாறு** – தீநெறி.
**தூறுவாதி** – தீம்பாலைமரம்.
**தூனம்** – வருத்தம்; அசைவு.
**தூனனம்** – அகற்றல்; அசைதல்.

# தெ

**தெ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (த்+எ).
**தெக்கணம்** – தெற்கு; வலப்பக்கம்.
**தெக்கணை** – தட்சிணை, குரு முதலியோருக்குக் கொடுக்கும் நன்கொடை.
**தெக்கு** – தெற்கு.
**தெக்குதல்** – கொள்ளுதல்.
**தெகிட்டு** – தெவிட்டுகை; வாந்திவருகை.
**தெகிடி** – சூது விளையாட்டுவகை; புரட்டு.
**தெகிழ்தல்** – விளங்குதல்; வாய்விடுதல்; நிறைதல்.
**தெகிள்** – கொடிப்புன்கு.
**தெகுட்டி, தெகுட்டிகை** – தேட்கொடுக்கிச்செடி.
**தெகுட்டுதல்** – தெவிட்டுதல்.
**தெகுடாடுதல்** – திண்டாடுதல்.
**தெகுள்தல்** – நிறைதல்; பெருகுதல்.
**தெகுளம்** – நிறைவு; பெருக்கம்.
**தெங்கங்காய்** – தேங்காய்.
**தெங்கம்** – தென்னைமரம்.
**தெங்கம்பழம்** – தேங்காய்நெற்று.
**தெங்கு** – தென்னைமரம்; தித்திப்பு; போர்ச்சேவலின் தன்மை குறிக்கும் குழூஉக்குறியுள் ஒன்று; ஏழு தீவுகளுள் ஒன்று.
**தெசலம்** – மாமரம்.
**தெட்சகன்** – இரட்சகன்; எட்டு நாகத்துள் ஒன்று.
**தெட்சணதேசம்** – விந்திய மலைக்குத் தெற்கே உள்ள நாடு.
**தெட்சணம்** – தெற்கு; வலப்பக்கம்; காளாமுகம்.

**தெட்சணாவிருத்தம்** – வலம்புரிச்சங்கு.
**தெட்சணை** – காண்க: **தட்சிணை.**
**தெட்சிணம்** – காண்க: **தட்சணம்.**
**தெட்ட** – முற்றிய; தெளிவான.
**தெட்டத்தெளிய** – மிகத் தெளிவாய்.
**தெட்டத்தெறித்தல்** – இரண்டாய் முரிதல்.
**தெட்டரசர்** – வென்று கீழ்ப்படுத்தப்பட்ட அரசர்.
**தெட்டல்** – ஏமாற்றுதல்; பறித்தல்.
**தெட்டவர்** – தெளிந்தவர்.
**தெட்டி** – வஞ்சிப்பவன்(ள்); யானை; வாணிகன்.
**தெட்டு** – வஞ்சனை; பறிக்கை; யானைக் கணையம்.
**தெட்டுண்ணுதல்** – கவர்ந்து உண்ணுதல்.
**தெட்டுதல்** – காண்க: **தெட்டல்.**
**தெட்பம்** – தெளிவு; மனத்தேற்றம்; முதிர்ச்சி; மூதறிவு.
**தெடாரி** – தடாரிப் பறை.
**தெண்** – தெளிவு.
**தெண்டகை** – நெருக்கடி; தேவை.
**தெண்டன்** – கோல்; வணக்கம்.
**தெண்டிரை** – கடல்.
**தெண்டு** – கோல்; கற்றை; ஓணான்.
**தெண்டுதடி** – கனமுள்ள பொருள்களை மேலே கிளப்பும் கருவி, நெம்புகோல்.
**தெண்டுதல்** – கிளப்புதல்; மிண்டுதல்; நரம்பு வலித்தல்; இரத்தல்.
**தெண்டை** – காண்க: **தெண்டகை.**
**தெண்ணர்** – அறிவில்லாதவர்.
**தெண்ணீர்** – தெளிந்த நீர்.
**தெண்மை** – தெளிவு; அறிவின் தெளிவு.
**தெத்து** – மூலை; வேலியடைப்பு; ஏமாற்று.
**தெத்துமாற்று** – வஞ்சகம்.
**தெந்தனம்** – கவலையற்ற தன்மை; சோம்பல்; தாமதம்.
**தெந்தனமடித்தல்** – வீணே திரிதல்; வேலையை உழப்புதல்.
**தெந்தனா** – தாளச் சொற்கட்டு.
**தெந்தி** – நேர்வாளமரம்.
**தெப்பக்கட்டை** – மிதவை; வண்டியச்சுக் கோத்த மரம்; கிணற்றடியில் வைத்துக் கட்டப்படும் மரச்சட்டம்; ஏற்றமரத்தில் நீர்ச்சாலைக் கட்ட உதவும் மரக்கட்டை.
**தெப்பத்திருநாள்,** **தெப்பத்திருவிழா** – கோயில் திருக்குளத்தில் தெப்பத்தில் சுவாமியை வைத்துக் கொண்டாடும் திருவிழா.
**தெப்பம்** – மிதவை, புணை.
**தெப்பமண்டபம்** – தெப்பத்திருவிழா நடைபெறும் குளத்தில் நடுவில் உள்ள மண்டபம்.
**தெப்பலங்கெட்டவன்** – உடல்வலியற்றவன்.
**தெப்பை** – காண்க: **தெப்பம்.**
**தெம்பல்** – சேறு; மழையால் வயல் இறுகுகை.
**தெம்பாங்கு** – ஒரு சந்தனவகை; காண்க: **தெம்மாங்கு.**
**தெம்பு** – உடல் வலிமை; ஊக்கம்; துணிவு; செருக்கு.
**தெம்மாங்கு** – நாட்டுப்புற இசைப்பாடல்வகை.
**தெம்மாடி** – ஒன்றுக்கும் உதவாத அறிவீனன்.
**தெம்முனை** – போர்க்களம்.
**தெய்** – கொலை; தெய்வம்.
**தெய்தெய்** – தாளக்குறிப்பு.
**தெய்தெய்யெனல்** – கோபத்தால் குதித்தாடும் குறிப்பு; மாடுகளை ஓட்டும் ஒலிக்குறிப்பு.
**தெய்ய** – ஓர் அசைநிலை.
**தெய்வக்கண்ணோர்** – கேவலஞானமுடையவர்.
**தெய்வக்கல்** – தெய்வ உரு அமைத்தற்குரிய கல்.
**தெய்வக்காப்பு** – பாட்டுடைத் தலைவனைத் தெய்வம் காக்க எனக் கூறும் பிள்ளைத்தமிழ்ப் பகுதி.
**தெய்வக்கிளவி** – தெய்வத்தின் திருவாக்கு.
**தெய்வக்குற்றம்,** **தெய்வக்குறை** – பூசை முதலியன செய்யாமையால் வரும் தெய்வக் கோபம்.
**தெய்வகடாட்சம்** – தெய்வத்தின் திருவருள்.
**தெய்வகணம்** – தேவக்கூட்டம்.
**தெய்வகளை** – தெய்வவிளக்கம்.
**தெய்வகற்பனை** – தெய்வக் கட்டளை; விதி.
**தெய்வகாரியம்** – தெய்வத்துக்குச் செய்யும் திருப்பணி.
**தெய்வகுஞ்சரி** – காண்க: **தெய்வயானை.**
**தெய்வங்கொண்டாடி** – தெய்வம், பேய் முதலியவற்றால் ஆவேசிக்கப்பட்டு ஆடுபவன், வெறியாடுபவன்.
**தெய்வங்கொள்கை** – கடவுள் உண்டு என்னும் கொள்கை.
**தெய்வச்சாயல்** – காண்க: **தெய்வகளை.**
**தெய்வச்சிலையான்** – திருப்புல்லாணியில் கோயில் கொண்டுள்ள திருமால்.
**தெய்வச்செயல்** – தெய்வத்தின் செய்கை; எதிர்பாராது நிகழ்கை.
**தெய்வசகாயம்** – கடவுள் துணை.
**தெய்வசங்கற்பம்** – தெய்வத்தின் தீர்மானம்.
**தெய்வசாட்சி** – கடவுள் சாட்சி.
**தெய்வசிந்தனை** – கடவுள் நினைப்பு.
**தெய்வசுரபி** – காமதேனு.
**தெய்வசோதனை** – கடவுளின் சோதிப்பு.
**தெய்வஞ்செப்புதல்** – கடவுளைத் துணைவேண்டி வழிபடுதல்.
**தெய்வஞானம்** – தெய்வத்தைப்பற்றிய அறிவு.

**தெய்வத்தச்சன்** – தேவலோகத்துச் சிற்பியான விசுவகன்மா.
**தெய்வத்தரு** – காண்க: தேவதாரு.
**தெய்வத்தன்மை** – கடவுளின் இயல்பு.
**தெய்வத்தானம்** – கடவுட்கோயில், தேவாலயம்.
**தெய்வத்துவம்** – கடவுள் தன்மை.
**தெய்வத்துவனி** – தேவர் அருகதேவருக்குச் செய்யும் சிறப்புகளுள் ஒன்று.
**தெய்வதம்** – தெய்வம்; ஆண்டு.
**தெய்வதயானை** – காண்க: தெய்வயானை.
**தெய்வதலம்** – கோயில்; திருப்பதி.
**தெய்வதுந்துமி** – தேவலோகத்து முரசு.
**தெய்வதூடணம்** – கடவுள் நிந்தனை.
**தெய்வதை** – கடவுள்; பேய்.
**தெய்வநதி** – கங்கையாறு.
**தெய்வப்பசு** – காமதேனு.
**தெய்வப்பாவை** – காண்க: கொல்லிப்பாவை.
**தெய்வப்பிரமம்** – தெய்வத் தன்மையுடைய பிரம வீணை.
**தெய்வப்பிறப்பு, தெய்வப்பிறவி** – தெய்வத்தினிடமிருந்து பிறக்கும் பிறப்பு; தெய்வக் கூறான பிறப்பு.
**தெய்வப்புணர்ச்சி** – முன்பின் அறியாத ஆணும் பெண்ணும் எதிர்பாராத நிலையில் கண்டு காதலித்துக் கூடும் கூட்டம்.
**தெய்வப்புலமை** – தெய்வ அருளினால் வந்த புலமை; தெய்வத்தன்மை வாய்ந்த புலமை.
**தெய்வப்புள்** – தெய்வத்தன்மையுள்ள பறவையான கருடன்.
**தெய்வப்பெண்** – தேவலோகத்துப் பெண்.
**தெய்வபத்தி** – கடவுளிடத்தில் செய்யும் அன்பு.
**தெய்வபயம்** – கடவுளாணைக்கு அஞ்சுதல்.
**தெய்வம்** – கடவுள்; ஊழ்வினை; தெய்வத் தன்மை; எண்வகை மணத்துள் ஒன்றாகிய தெய்வமணம்; தெய்வச்செயல்; ஆண்டு; புதுமை; தெய்வத்தன்மை உள்ளது; மணம்.
**தெய்வமணம்** – மிக மேலான மணம்; காண்க: தெய்வப்புணர்ச்சி; வேள்வி செய்விக்கும் ஆசிரியன் ஒருவனுக்குத் தன் பெண்ணை அலங்கரித்து அந்த வேள்வித்தீயின் முன்னர்க் கொடுப்பது.
**தெய்வமணி** – சிந்தாமணி; இழிந்த தாதுப் பொருள்களைப் பொன்னாக்கும் மருந்து; குதிரைக் கழுத்திலுள்ள நற்சுழி; நற்சுழியுள்ள குதிரைவகை.
**தெய்வமந்திரி** – தேவர்களுக்குரிய அமைச்சனான வியாழன்.
**தெய்வமயக்கம், தெய்வமயக்கு** – தெய்வ ஆவேசம்; தெய்வத்தால் ஏற்பட்ட சித்த மயக்கம்.
**தெய்வமரம்** – கற்பகதரு; தேவதாருமரம்.
**தெய்வமாடம்** – தெய்வத் திருக்கோயில்.
**தெய்வமாடுதல்** – தெய்வம் ஏறப்பெறுதல்.
**தெய்வமானுடம்** – தெய்வத்தன்மையோடு கூடிய மானுடத்தன்மை.
**தெய்வமுறுதல்** – ஆவேசமடைகை; தெய்வத் தன்மை பெறுகை.
**தெய்வமேயென்று** – எவ்வகை உதவியுமின்றிக் கடவுளே கதியாக; பிறர் செயல்களில் தலையிடாமல்; வாளா.
**தெய்வமேறுதல்** – காண்க: தெய்வமுறுதல்.
**தெய்வயாகம்** – கடவுளரின்பொருட்டுச் செய்யப்படும் வேள்வி.
**தெய்வயானை** – இந்திரனின் யானையாகிய ஐராவதம்; முருகப்பெருமானின் தேவியருள் ஒருத்தி.
**தெய்வயானைகாந்தன்** – தெய்வயானையின் கணவனான முருகக்கடவுள்.
**தெய்வலோகம்** – மேலுலகம், துறக்கம்.
**தெய்வவணக்கம்** – கடவுளை வணங்குகை; நூலின் முதலில் கூறப்படும் கடவுள் வாழ்த்து.
**தெய்வவாக்கு** – கடவுளின் திருவாக்கு; உருவிலி வாக்கு.
**தெய்வவிசுவாசம்** – கடவுள் உண்டு என்னும் கொள்கை; கடவுளிடம் நம்பிக்கை; கடவுளிடத்துக் காட்டுவதுபோன்று காட்டும் நம்பிக்கை.
**தெய்வவிரதன்** – சிறப்புமிக்க நோன்பைக் கொண்ட வீடுமன்.
**தெய்வவீடு** – விமானம்.
**தெய்வவுத்தி** – சீதேவி என்னும் தலைக்கோலம்.
**தெய்வாதனம்** – ஒருகால் மடித்து ஒருகால் ஊன்றி யிருக்கும் இருப்புநிலை.
**தெய்வாதீனம்** – தெய்வச்செயல்; தற்செயல், எதிர்பாரா நிகழ்ச்சி.
**தெய்வாவி** – பரிசுத்த ஆவி.
**தெய்வி(வீ)கம்** – தெய்வத்தன்மையுள்ளது; தெய்வச்செயல்; தற்செயல்; மகிமை; ஒன்பது பனை உயரமுள்ள ஓரளவு.
**தெய்வீகமாதல்** – இறத்தல்.
**தெய்வோபாசனை** – கடவுள் வழிபாடு.
**தெரிக்கல்** – விரித்துக் கூறுதல்.
**தெரிகடை** – நல்லவை தெரிந்தெடுத்தபின் எஞ்சியது.
**தெரிகவி** – தேர்ந்தெடுக்கப்பட்ட செய்யுள் திரட்டு.
**தெரிகோல்** – பொருள்களை ஆராயும் துலாக் கோல்.
**தெரிசம்** – அமாவாசை.

**தெரிசி** – குதிரை.

**தெரிசித்தல்** – காண்க: **தரிசித்தல்.**

**தெரிசியம்** – காட்சி.

**தெரிசொல்** – சத்தியம்; தெரிந்த காரணம்; அருஞ் சொல் விளக்கம்.

**தெரித்தல்** – வெளிப்படுத்துதல்; காலங்கழித்தல்; சொல்லுதல்; குறிப்பிட்டு விளக்குதல்; எழுது தல்; தெரிந்தெடுத்தல்; கொழித்தல்; பங்கிடு தல்; மாறுபடுதல்.

**தெரிதரல்** – அறிதல்; தோற்றுதல்.

**தெரிதருதேற்றவுவமை** – ஐயுற்றதனைத் தெரிந்து துணிவதை விளக்கும் உவமையணி.

**தெரிதல்** – தோன்றுதல்; விளக்கமாதல்; அறிதல்; ஆராய்தல்; தெரிந்தெடுத்தல்; அரித்தெடுத் தல்; காணும் ஆற்றலைப் பெற்றிருத்தல்; மனமறிதல்; கேட்டல்.

**தெரிந்தவன்** – அறிவுடையோன்.

**தெரிந்துசெயல்வகை** – ஒருவன் தான் செய்யும் வினைகளை ஆராய்ந்து செய்யும் திறம்.

**தெரிந்துணர்ச்சி, தெரிந்துணர்வு** – அறிந்துணரும் உணர்வு.

**தெரிந்துதெளிதல்** – அமைச்சர் முதலாயினாரைப் பலவகையானும் ஆராய்ந்து தெளிகை.

**தெரிந்துவினையாடல்** – அமைச்சர் முதலாயினார் செய்யவல்ல செயல்களை ஆராய்ந்து அவற் றின்கண்ணே அவரை ஆளும் திறம்.

**தெரிநிலை** – தெளிவுபட அறிவிக்கும் நிலை; விளங்கிநிற்பது; ஆராய்ந்து அறியும் நிலை; எல்லா விரலும் விரிந்து குவிந்து நிற்கும் இணையாவினைக்கைவகை; தெரிநிலை வினை.

**தெரிநிலைவினை** – காலத்தை வெளிப்படை யாகக் காட்டும் வினைச்சொல்.

**தெரிப்பு** – அறிவிப்பு; சொல்லுகை; ஆராய்வு; எழுதுகை; கொழிப்பு; சீட்டு; கொழிக்கப்பட் டவை.

**தெரிபடுதல்** – தெரிந்தெடுக்கப்படுதல்; தோன்று தல்.

**தெரிபொருள்** – அறிபவனான ஆன்மா.

**தெரிமா** – அரிமா, சிங்கம்.

**தெரியக்காட்டுதல்** – வெளிப்படுத்துதல்.

**தெரியத்தெரிதல்** – தெளிவாயறிதல்.

**தெரியப்படுத்துதல்** – அறிவித்தல்.

**தெரியல்** – தெரிந்துகொள்ளுதல்; பூமாலை.

**தெரியலர்** – அறிவில்லார்; பகைவர்.

**தெரியவுணர்தல்** – தெளியவறிதல்.

**தெரியாத்தனம்** – அறியாமை.

**தெரியுமோர்** – தெரிவோர்.

**தெரிவித்தல்** – அறிவித்தல்; வெளிப்படுத்தல்.

**தெரிவு** – அறிவு; தெரிந்தெடுக்கை; தெரிந் தெடுக்கப்பட்டது; தோற்றம்; அறியப் பட்டது.

**தெரிவை** – பெண்; இருபத்தைந்து முதல் முப்பத் தொரு வயதிற்குட்பட்ட பெண்; கன்னியா ராசி.

**தெரு** – வீதி; வழி.

**தெருக்கூத்து** – தெருவெளியில் நடக்கும் நாடகம்; எல்லோரும் நகைக்கத்தக்கது.

**தெருட்சி** – அறிவு; தெளிவு; முதற்பூப்பு.

**தெருட்டல்** – தெளியச்செய்தல்; யாழ்நரம்பை உருட்டும் இசைக்கரணவகை.

**தெருட்டு** – அறிவிப்பு; தேற்றுகை; பூப்படைதல்.

**தெருட்டுக்கலியாணம்** – இருதுசாந்தி; கலியாண மாதற்குரிய பருவத்தில் செய்யும் சடங்கு.

**தெருட்டுதல்** – அறிவுறுத்துதல்; மனத்தைத் தெளிவித்தல்; ஊடல் தீர்த்தல்; யாழ்நரம்பு திருத்துதல்.

**தெருண்டபெண்** – பூப்படைந்த பெண்.

**தெருணை** – ஒரு மரவகை.

**தெருமரல்** – மனச்சுழற்சி; அச்சம்.

**தெருமருதல்** – மனம் சுழலுதல்.

**தெருவம்** – காண்க: **தெரு.**

**தெருவாசல்** – வெளிவாசல்; வெளிவாசலின் பக்கத்திலுள்ள திண்ணை.

**தெருவிலழகி** – காண்க: **குப்பைமேனி.**

**தெருவு** – காண்க: **தெரு.**

**தெருவுபாடு** – வீட்டின் முன்புறம்.

**தெருள், தெருள்வு** – அறிவின் தெளிவு.

**தெருளான்** – அறிவிலி.

**தெருளுதல்** – உணர்வுறுதல்; தெளிதல்; விளங்கு தல்; பூப்படைதல்.

**தெல்** – தெல்லுக்காய்.

**தெல்லாட்டம்** – ஒரு விளையாட்டுவகை; வஞ்சனை.

**தெல்லு** – தெல்லுக்காய்; ஒரு விளையாட்டுவகை; பல்லக்குப்போகிகள் தோள்மாற்றும் அஞ்ச விடம்; நீண்ட பாத்தி; நெடுங்கிடங்கு.

**தெல்லுக்கட்டுதல்** – இழுபறிப்படுதல்; பாத்தி கட்டுதல்.

**தெல்லுக்காரர்** – தோள்மாற்றும் பல்லக்குப் போகிகள்; அஞ்சற்காரர்.

**தெல்லுப்பு** – வளையலுப்பு.

**தெல்லோட்டு** – ஒய்வில்லாத அலைக்கழிப்பு.

**தெலிங்கம்** – காண்க: **தெலுங்கம்.**

**தெலுகு, தெலுங்கம், தெலுங்கு** – ஒரு நாடு; தெலுங்குமொழி.

**தெவ்** – பகை; பகைவன்; போர்; கொள்ளுகை.

தெவ்வம் – பகைவன்.
தெவ்வர்முனைப்பதி – பாசறை.
தெவ்வன் – காண்க: தெவ்வம்.
தெவ்வினை – போர்.
தெவ்வு – பகை; சந்திரன்; கொள்ளுகை.
தெவ்வுதல் – கொள்ளுதல்; கவர்தல்; நிறைத்தல்; மன்றாடிக் கேட்டல்.
தெவம் – மாமரம்.
தெவிட்டல் – உமிழப்பட்டது.
தெவிட்டு – உணவில் வெறுப்பு.
தெவிட்டுதல் – தேக்கிடுதல்; அசையிடுதல்; திரளுதல்; நிறைதல்; தங்குதல்; ஒலித்தல்; உமிழ்தல்; அருவருத்தல்; அடைதல்; அடைத்தல்; வெல்லுதல்; மறைத்தல்; நினைத்தல்.
தெவிளுதல் – திரளுதல்; நிறைதல்.
தெவு – கொள்ளுகை.
தெவுளுதல் – காண்க: தெவிளுதல்.
தெழ்கு – இடையில் அணியும் அணிவகை.
தெழி – ஒலி.
தெழித்தல் – அதட்டுதல்; மிதித்துழக்குதல்; முழக்குதல்; ஆரவாரித்தல்; ஒலித்தல்; அடக்குதல்; வருத்துதல்; நீக்குதல், பிரித்தல்.
தெழிப்பு – ஆரவாரம்.
தெள், தெள்கு } – தெள்ளுப்பூச்சி.
தெள்குதல் – தெளிவாதல்; தேங்குதல்.
தெள்விளி – தெளிந்த ஓசை; தெளிந்த சொல்; இசைப்பாட்டு; கூவி வெருட்டும் ஓசை.
தெள்ளத்தெளிதல் – மிகத் தெளிவாதல்.
தெள்ளி – யானை.
தெள்ளிச்சி – பூநீறு, உவர்மண்.
தெள்ளிதின் – தெளிவாக.
தெள்ளிமை – தெளிவு; அறிவுநுட்பம்.
தெள்ளியர் – தெளிந்த அறிவுடையவர்.
தெள்ளு – பூச்சிவகை; காண்க: இரிக்கி.
தெள்ளுதல் – தெளிவாதல்; ஆராய்தல்; படைத்தல்; கொழித்தல்; அலைகொழித்தல்; தெளிவித்தல்; அனுபவமுதிர்தல்.
தெள்ளேணம் – கைகொட்டிப் பாடியாடும் மகளிர் விளையாட்டு.
தெளி – தெளிவு; சாறு; ஒளி; விதைப்பு.
தெளிஞன் – அறிஞன்.
தெளித்தல் – தெளிவித்தல்; வெளிப்படுத்துதல்; துப்புரவாக்கல்; ஊடலுணர்த்துதல்; விதைத்தல்; கொழித்தல்; புடைத்தல்; சாறு வடித்தல்; நிச்சயித்தல்; சூளுறுதல்; தூவுதல்; நீக்குதல்; உருக்கி ஓடவைத்தல்.
தெளிதல் – தெளிவாதல்; அமைதியுறுதல்; ஒளிர்தல்; வெண்மையாதல்; குணப்படுதல்; செழித்தல்; ஒழிதல்; துளைத்தல்; அறிதல்; முடிவுக்கு வருதல்; ஆராய்தல்; தேறுதல்; நம்புதல்; இலாபம் காணுதல்.
தெளிநீர் – தூய நீர், நன்னீர்.
தெளிப்பு – தூய்மைசெய்கை; தூவுகை; கொழிக்கை; வடிக்கை.
தெளிர் – யாழின் உள்ளோசை.
தெளிர்த்தல் – ஒலித்தல்; செழித்தல்; மகிழ்ச்சியுறுதல்.
தெளிர்தல் – ஒளிபெறுதல்.
தெளிவு – விளக்கம், துலக்கம்; உடற்செழிப்பு; பதநீர்; நினைவு; மன அமைவு; அறிவு; நற்காட்சி; உளக்குறிப்பு; நீக்கம்; சான்று; ஆராய்வு; நம்பிக்கை; சாறு; கஞ்சித்தெளிவு; இலாபம்; பொருள் புலப்பட அமையும் செய்யுளின் குணம்; பாடற்பயன்வகை.
தெளிவெண்ணெய் – பச்சையாக வடித்த வேப்பெண்ணெய்.
தெற்கு – தென்றிசை.
தெற்குமுகமாய்ப்போதல் – இறத்தல்.
தெற்றல் – மாறுபாடுடையவன்; அறிவில் தெளிந்தவன்.
தெற்றி – சித்திரகூடம்; திண்ணை; மேட்டிடம்; மரவகை; பழிபாவம் விளைவிப்பவன்; மாடம்.
தெற்றியம்பலம் – கோயில் முதலியவற்றில் அமைந்த சித்திரகூடம்.
தெற்று – பின்னல்; வேலி அடைப்பு; செறிவு; இடறுகை; மாறுபாடு; தவறு; தேற்றம்.
தெற்றுதல் – இடறுதல்; தடைப்படுதல்; மாறுபடல்; பிழைசெய்தல்; பின்னல்; பிணங்குதல்; தொடுத்தல்; இறுக்குதல்; பல்லைக் கடித்தல்; வாய்கொன்னுதல்; அலைத்தல்; தடுத்தல்; இகலுதல்; செறிதல்; மோதுதல்; மாற்றுதல்.
தெற்றுப்பல் – ஒன்றோடொன்று பின்னியிருக்கும் பல்.
தெற்றுமாற்று – ஏமாற்று.
தெற்றுவாசல் – திட்டிவாயில்.
தெற்றுவாய் – காண்க: திக்குவாய்.
தெற்றென – விரைவாக; உடனே; தெளிவாக.
தெற்றெனவு – தெளிவு; வெட்கமின்மை.
தெறல் – அழித்தல்; கோபித்தல்; வருத்துதல்; வெம்மை.
தெறி – சிதறுகை; அணி, அங்கி முதலிவற்றின் கடைப்பூட்டு; குறும்புப்பேச்சு.
தெறிக்கடித்தல் – சிதறவடித்தல்; எதிரி அடங்கும்படி பேசுதல்.
தெறிக்கப்பேசுதல் – நிதானமின்றிக் கடுத்துப் பேசுதல்.

**தெறிகெடுதல்** – நிலைகுலைதல்.

**தெறித்தல்** – சிதறுதல்; குலைதல்; துள்ளிவிழுதல்; முரிதல்; பிளத்தல்; உடைத்தல்; அறுதல்; வேறுபடுதல்; நீங்குதல்; தவறுதல்; செருக்காயிருத்தல்; பிதுங்குதல்; குறும்புபண்ணுதல்; நரம்புதுடித்து நோவுண்டாக்குதல்; விரலால் சுண்டுதல்; விரலால் உந்துதல்; முற்றுதல்; தாக்கப்பட்டு வெளிப்படுதல்.

**தெறித்தளத்தல்** – ஒன்றைத் தட்டுதலால் உண்டாகும் ஒலியின் தன்மையை நிதானித்துச் செவியால் அளப்பது.

**தெறித்துநடை,** **தெறிநடை** – துள்ளுநடை.

**தெறிப்பு** – செருக்கு மேலிட்ட நடக்கை; கடைப்பூட்டு; அதிர்கை; சிணுக்கி.

**தெறிபடுதல்** – சிதறுண்ணுதல்; அலைந்துலைதல்; தோற்றோடுதல்; திக்கறுதல்; கலங்குதல்; தவறுதல்.

**தெறிமுற்றுதல்** – முழுதும் பழுத்தல்.

**தெறிவில்** – சுண்டுவில்.

**தெறு** – சுடுகை; கோபம்; அச்சம்; துன்பம்.

**தெறுக்கால்** – தேள்; விருச்சிகராசி.

**தெறுத்தல்** – நெரித்தல்; குவித்தல்.

**தெறுதல்** – சுடுதல்; காய்ச்சுதல்; கோபித்தல்; வருத்துதல்; தண்டஞ்செய்தல்; அழித்தல்; கொட்டுதல்; பகைத்தல்; கொல்லுதல்; தங்கல்; நெரித்தல்.

**தெறுநர்** – பகைவர்; கொலையாளர்.

**தெறுவி** – அகப்பை.

**தெறுழ்** – ஒரு காட்டுக் கொடிவகை; காண்க: **புளிமா.**

**தென்** – அழகு; இனிமை; இசை; இசைப்பாட்டு; கற்பு; தெற்கு; தென்னைமரம்; வலப்பக்கம்.

**தென்கயிலை** – கயிலாயத்தை ஒத்ததும் தென்னாட்டில் உள்ளதுமான சிதம்பரம், திருக்காளத்தி, திருவையாறுபோன்ற சிவதலங்கள்.

**தென்கலை** – தென்னாட்டுக்குரிய கலையான தமிழ்.

**தென்கலைநாமம்** – தென்கலை வைணவர் தரிக்கும் திருமண்குறி.

**தென்கலையார்** – தென்கலை நாமம் தரிக்கும் வைணவப் பிரிவினர்.

**தென்கால்,** **தென்காற்று** – தென்றல்.

**தென்கிழக்கு** **தென்கீழ்த்திசை,** – தெற்கும் கிழக்கும் கூடும் கோணத்திசை.

**தென்கீழ்த்திசைப்பாலன்,** **தென்கீழ்த்திசையிறை,** **தென்கீழ்த்திசையோன்** – தென்கீழ்த்திசையின் தலைவனான அக்கினிதேவன்.

**தென்கோடு** – தென்முனை; பிறைச்சந்திரனின் தென்முனை.

**தென்படுதல்** – புலப்படுதல்; பயிற்சி அடைதல்.

**தென்பல்லி** – புல்லகம் என்னும் தலையணியின் உறுப்பு இரண்டனுள் ஒன்று.

**தென்பாண்டி,** **தென்பாண்டிநாடு** – நாஞ்சில் நாடாகக் கருதப்படும் பாண்டிநாட்டின் தென்பகுதி.

**தென்பார்** – தென்னாடு; பூமியின் தென்பாகமாகிய பாண்டிநாடு.

**தென்பு** – காண்க: **தெம்பு.**

**தென்புலக்கோன்** – தென்திசைக்குத் தலைவனாகிய யமன்.

**தென்புலத்தார்** – தென்திசையிலுள்ள பிதிரர்; யமபடர்.

**தென்புலத்தார்வேள்வி** – இறந்தோர்பொருட்டுச் செய்யும் நீர்க்கடன்.

**தென்புலம்** – தென்னாடு; பாண்டிநாடு; யமனுலகம்; பிதிரர்கள் வாழிடம்.

**தென்புலர்** – யமபடர்.

**தென்மலை** – பொதியமலை; சோலைமலை.

**தென்முனி** – தெற்கில் வாழும் முனிவராகிய அகத்தியன்.

**தென்மொழி,** **தென்றமிழ்** – தென்திசையில் வழங்கும் மொழியாகிய தமிழ்.

**தென்றல்** – தென்காற்று.

**தென்றல்வருமலை** – பொதியமலை.

**தென்றற்கோன்** – தென்றலையுடைய அரசனாகிய பாண்டிய மன்னன்.

**தென்றற்றேரான்** – தென்றலைத் தேராகவுடைய மன்மதன்.

**தென்றி** – தெற்கு; காண்க: **தென்றல்.**

**தென்றிசைக்கிழவன்,** **தென்றிசைக்கோன்,** **தென்றிசைப்பாலன்,** **தென்றிசைமுதல்வன்** – தென்திசையின் தலைவனாகிய யமன்.

**தென்றிசையங்கி** – காண்க: **தக்கணாக்கினி.**

**தென்றுதல்** – சிதறுதல்; இனம்பிரிதல்.

**தென்னகர்** – தெற்கிலுள்ள நகரமாகிய யமபுரம்.

**தென்னங்கிடுகு** – தென்னங்கீற்றால் முடைந்த தட்டி; விரியிலைத்தட்டி.

**தென்னங்குரும்பை** – இளநீர் பிடியாத இளங்காய்.

**தென்னம்பாளை** – தென்னம்பூ உள்ளடங்கிய உறை; தென்னம்பூவின் உறை.

**தென்னம்பிள்ளை** – தென்னங்கன்று; தென்னைமரம்.

**தென்னம்பொருப்பு** – தெற்கின்கண் உள்ள பொதியமலை.

**தென்னமட்டை** – தென்னையோலையின் நடுவிலுள்ள மட்டை; தேங்காயின் கூந்தல்.

**தென்னமரம்** – தெங்கு.
**தென்னர்** – தெற்கு; தென்னாட்டவர்; பாண்டிய அரசர்; பகைவர்.
**தென்னல்** – காண்க: **தென்றல்.**
**தென்னவன்** – தென்னாட்டு அரசனாகிய பாண்டியன்; யமன்; இராவணன்.
**தென்னவெல்லம்** – தென்னஞ்சாற்றிலிருந்து செய்யும் இனிய கட்டி.
**தென்னவெனல்** – இசைக்குறிப்பு.
**தென்னன்** – காண்க: **தென்னவன்.**
**தென்னாசாரியர்** – தென்கலை வைணவ ஆசாரியர்.
**தென்னாதெனாவெனல்** – தாளச் சொற்கட்டு.
**தென்னி** – வாழை.
**தென்னிலை** – காண்க: **தென்னோலை.**
**தென்னுதல்** – கிளம்புதல்; நெம்புதல்.
**தென்னுரை** – காண்க: **தென்மொழி.**
**தென்னுலகு** – பிதிரர் உலகம்.
**தென்னை** – தெங்கு.
**தென்னோலை** – தென்னையோலை.
**தெனாது** – தெற்கில் உள்ளது; தெற்கு.

# தே

**தே** – ஓர் உயிர்மெய்யெழுத்து (த்+ஏ); தெய்வம்; கொள்ளுகை; தலைவன்; மாடு துரத்தும் ஒலிக்குறிப்பு.
**தேஎம்** – தேயம், நாடு; இடம்.
**தேக்கம்** – தேங்குகை; நீரோட்டத்தின் தடை; நிறைவு; மனக்கலக்கம்; ஏப்பம்; தடை; அச்சம்.
**தேக்கர்** – மிகுதி.
**தேக்கிடுதல்** – ஏப்பமிடுதல்; நிரம்பி வழிதல்; உணவின் மிகுதியால் அதனில் வெறுப்புநிலை அடைதல்.
**தேக்கு** – தேக்குமரம்; கமுகமரம்; தெவிட்டு; ஏப்பம்; காண்க: **சம்பகம்.**
**தேக்குதல்** – நீர் முதலியவற்றை ஓரிடத்தில் தேங்குமாறு கட்டுதல்; தடைபண்ணுதல்; நிரம்பப் பருகுதல்; நிறைதல்; தெவிட்டுதல்; ஏப்பம்விடுதல்.
**தேக்கெறிதல்** – தெவிட்டுதல்; ஏப்பமிடுதல்; நிறைதல்; நிரம்பவுண்ணுதல்.
**தேக்கொக்கு** – தேமா.
**தேகக்கூறு** – உடலின் இயல்பாயுள்ள நிலை.
**தேககாங்கை** – உடற்சூடு.
**தேககாந்தி** – உடல் ஒளி, மேனியின் பளபளப்பு.
**தேககோசம்** – தோல்.
**தேகசம்பந்தம்** – புணர்ச்சி; உறவு.
**தேகசாரம்** – மூளை.
**தேகசுத்தி** – உடலின் தூய்மை; உடல் தூய்மை செய்யும் சடங்கு.
**தேகத்தடிப்பு** – கரப்பான்வகை.
**தேகதாரகம்** – எலும்பு.
**தேகதிடம்** – உடல்வலிமை.
**தேகபந்தம்** – உடல்மேல் வைக்கும் பற்று.
**தேகம்** – உடம்பு; கமுகு.
**தேகயாத்திரை** – உடலோம்புதல்; இறப்பு.
**தேகரசம்** – வியர்வை.
**தேகராசம்** – காண்க: **கையாந்தகரை.**
**தேகவியோகம்** – உடலிலிருந்து நீங்குதலாகிய சாவு.
**தேகளி** – இடைகழி.
**தேகளீதீபநியாயம்** – இடைகழியில் வைத்த விளக்கு இருபுறமும் ஒளிவீசுதல்போல ஒரு பொருள் இடையிலிருந்து இரண்டிடத்தும் பயின்றுவரும் நெறி.
**தேகனி** – மஞ்சள்.
**தேகாத்துமவாதம்** – உடம்பே ஆன்மா என்று கூறும் சாருவாகமதம்.
**தேகாந்தம்** – உடலின் இறுதியாகிய இறப்பு.
**தேகாபிமானம்** – உடம்பினிடத்து வைக்கும் பற்று.
**தேகி** – ஆன்மா; புல்லுருவி.
**தேகியெனல்** – ஈ என இரத்தற்குறிப்பு.
**தேங்காய்** – தெங்கங்காய்; இனிய காய்.
**தேங்காய்க்கண்** – தேங்காயின் மேலிடத்துள்ள முக்கண்.
**தேங்காய்த்தண்ணீர்** – முற்றின தேங்காயின் நீர்.
**தேங்காய்த்துருவல்** – தேங்காய்ப்பருப்பின் துருவிய பூ.
**தேங்காய்துருவி** – தேங்காய்ப்பருப்புத் துருவும் கருவி.
**தேங்காய்நெய்** – தேங்காய்ப்பாலினின்றும் காய்ச்சி எடுக்கப்படும் எண்ணெய்; கொப்பரையைச் செக்கிலிட்டு ஆட்டி எடுக்கும் எண்ணெய்.
**தேங்காய்ப்பால்** – தேங்காய்த் துருவலினின்று பிழிந்த பால்; தேங்காய்ப்பாலுடன் சருக்கரை யிட்டு ஆக்கும் குடிநீர்வகை.
**தேங்காய்ப்பூ** – காண்க: **தேங்காய்த்துருவல்.**
**தேங்காய்மரம்** – தென்னைமரம்; கத்தூரிமண மரவகை.

**தேங்காய்முறி,** } – இரண்டாக உடைத்த தேங்கா
**தேங்காய்மூடி** } யில் பாதி.
**தேங்காய்மூரி** – தேங்காயின் நரம்பு.
**தேங்காய்வழுக்கை** – தேங்காயின் முற்றாத உள்வீடு.
**தேங்காயெண்ணெய்** – காண்க: **தேங்காய்நெய்.**
**தேங்காயெறிதல்** – சிதறுதேங்கா யுடைத்தல்.
**தேங்குதல்** – நிறைதல்; தங்குதல்; மிகுதல்; மனங்கலங்குதல்; அஞ்சுதல்; தாமதித்தல்; கெடுதல்.
**தேங்குழல்** – முறுக்குவகை.
**தேசகன்** – நாடாள்வோன்.
**தேசகாலம்** – இடமும்பொழுதும்; கால நிகழ்ச்சி.
**தேசத்தொண்டு** – நாட்டிற்குழைத்தல்.
**தேசப்படம்** – நாட்டு அமைப்பைக் காட்டும் படம்.
**தேசப்பழமை** – காண்க: **தேசவழக்கம்.**
**தேசபரிச்சேதம்** – இடத்தால் அளவிடுகை.
**தேசம்** – நாடு; இடம்; ஒளி.
**தேசமுகி** – அரசிறை அதிகாரி.
**தேசலம்** – மாமரம்.
**தேசவழக்கம்,** } – நாட்டுவழக்கம்.
**தேசவளமை** }
**தேசவாசி** – நாட்டில் வாழ்வோன்; கண்டபடி அலைவோன்; நாட்டுநடப்பு அறிபவன்.
**தேசவியவகாரம்** – நாட்டுவழக்கம்.
**தேசன்** – ஒளிமயமாயுள்ளவன்; பெரியோன்.
**தேசனம்** – திருத்தம்; மூங்கில்.
**தேசனி** – மருள்; மஞ்சள்.
**தேசா** – ஒரு பண்வகை.
**தேசாக்கிரி** – பாலை யாழ்த்திறவகை.
**தேசாசாரம்** – காண்க: **தேசவழக்கம்.**
**தேசாட்சரி** – உச்சிவேளையில் பாடப்படுவதாகிய ஒரு பண்வகை.
**தேசாதிபத்தியம்** – நாடாளும் தலைமை.
**தேசாதிபதி** – நாடோள்வோன்.
**தேசாதேசம்** – பற்பல நாடு.
**தேசாந்தரம்** – அயல்நாடு.
**தேசாந்தரி** – அயல்நாட்டான்; பயணிகளை உண்பிக்கும்பொருட்டு ஏற்பட்ட கோயிற் கட்டளை.
**தேசாந்திரி** – பல இடங்களுக்குச் சென்று வாழ்பவன்; பயணி; பரதேசி.
**தேசாவரம்** – பூடுவகை; கண்டதிப்பிலி; திப்பிலி மூலம்.
**தேசி** – பெரிய குதிரை; ஒரு பண்வகை; ஒரு கூத்துவகை; அழகு; ஒளிரும் அழகுள்ளவள்; எலுமிச்சைமரம்.
**தேசிகம்** – அவ்வந்நாட்டுச்சொல்; அயல்நாட்டுச் சொல்; இசைப் பாடல்களில் வரும் சொல் வழக்கு; ஒரு கூத்துவகை; ஒளி; அழகு; பொன்.
**தேசிகன்** – குரு; ஆசான்; மடாதிபதிக்கு வழங்கும் பட்டப்பெயர்; தந்தை; சைவகுருக்கள் மரபினன்; வணிகன்; அழகன்; வேதாந்த தேசிகன்; அயல்நாட்டான்.
**தேசியம்** – அந்தந்த நாட்டுச்சொல்; கூத்துவகை.
**தேசு** – ஒளி; பொன்; அழகு; விந்து; அறிவு; புகழ்; பெருமை.
**தேசோமந்தரம்** – காண்க: **நெல்லி.**
**தேசோமயம்** – பேரொளி.
**தேட்கடை** – மூலநாள்; பூடுவகை.
**தேட்குடிச்சி** – கருவண்டு.
**தேட்கெண்டை** – ஒரு மீன்வகை.
**தேட்கொடுக்கி** – சிறுசெடிவகை.
**தேட்கொடுக்கு** – சிறு செடிவகை; தேளின் வாலிலுள்ள கொடுக்கு.
**தேட்டக்காரன்** – பொருள் தேடுவோன்; திருடன்.
**தேட்டம்** – தேடிய பொருள், சம்பாத்தியப் பொருள்; சேகரிப்பு; கவலை; விருப்பம்.
**தேட்டாக்கூறு** – காண்க: **தேடாக்கூறு.**
**தேட்டாண்மை** – நாட்டம்; விசாரிப்பு; சம்பாத்தியம்.
**தேட்டாளன்** – சம்பாத்தியம் மிக்கவன்; புதல்வன்.
**தேட்டு** – விருப்பம்; துருவிக்கொள்கை; சம்பாத்தியப் பொருள்; சாப்பாடு முதலியவற்றின் சிறப்பு; பாதுகாப்பு.
**தேட்டை** – காண்க: **தேட்டம்;** தெளிவு; தெளிந்த நீர்; உயர்ந்தது.
**தேடாக்கூறு** – பாதுகாப்பின்மை.
**தேடாத்தேட்டம்** – பெருமுயற்சி அல்லது தீயவழியால் சேர்த்த பொருள்.
**தேடி** – அதிவிடயப்பூண்டு.
**தேடிப்பிடித்தல்** – ஆராய்ந்து கண்டெடுத்தல்; சோரபுருடனைப் பெறுதல்.
**தேடியோடித்திரிதல்** – பெருமுயற்சிசெய்தல்.
**தேடிவைத்தல்** – பொருள் சேர்த்துவைத்தல்.
**தேடுதல்** – ஆராய்தல்; துருவிநாடுதல்; சம்பாதித்தல்; விசாரித்தல், ஓம்புதல்; முயலுதல்.
**தேண்டுதல்** – துருவி நாடுதல்.
**தேணிறம்** – மாந்தளிர்க்கல்.
**தேத்தடை** – தேனிறால்.
**தேத்தண்ணீர்** – தேயிலைப் பானகம்.
**தேத்தாலடித்தல்** – பலவிடத்தும் மலிவாக விற்றல்.
**தேத்திறால்** – தேன் இறால்.
**தேதாவெனல்** – இசைக்குறிப்பு.
**தேதி** – நாள்.
**தேது** – காண்க: **தேசு.**

**தேதேயெனல், தேந்தேமெனல்** – இசைக்குறிப்பு.
**தேநீர்** – காண்க: **தேத்தண்ணீர்.**
**தேப்பை** – தெப்பம்.
**தேபூசை** – தெய்வவழிபாடு.
**தேம்** – இனிமை; நறுமணம்; தேன்; தேனீ; வண்டு; கள்; ஈரம்; மதம்; நெய்; இடம்; நாடு; திக்கு; ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு.
**தேம்பல்** – தேம்புதல்; வாட்டம்; இளைத்தல்; குறைந்த நிலை; வருத்தம்; விம்மியழுதல்; பழம்பூ; காண்க: **தேமல்.**
**தேம்புதல்** – வாடுதல்; மெலிதல்; வருந்துதல்; விம்மியழுதல்; அழிதல்; நுகர உரியதாதல்; வலி குறைதல்.
**தேமம்** – ஈரம்.
**தேமல்** – சுணங்கு; ஓர் உடற்புள்ளிவகை; மேகப் படை; தோலைப்பற்றி வரும் நோய்வகை.
**தேமா** – மாமரவகை; நேர்நேர் என வரும் சீரைக் குறிக்கும் வாய்பாடு.
**தேமாங்கனி** – நேர்நேர்நிரை என வரும் சீரைக் குறிக்கும் வாய்பாடு.
**தேமாங்காய்** – நேர்நேர்நேர் எனவரும் சீரைக் குறிக்கும் வாய்பாடு.
**தேய்கடை** – தேய்ந்தது; வளர்ச்சியற்றது.
**தேய்கடைப்பிள்ளை** – வளராப்பிள்ளை.
**தேய்த்தல்** – உரைசச்செய்தல்; துலக்குதல்; குரைத்தல்; செதுக்குதல்; அழித்தல்; துடைத்தல்; எண்ணெய் முதலியன அழுந்தப் பூசுதல்.
**தேய்த்துக்குளி** – எண்ணெய் முழுக்கு.
**தேய்தல்** – உரைசுதல்; குறைதல்; மெலிதல்; வலி குன்றல்; கழிதல்; அழிதல்; சாதல்.
**தேய்தவளை** – தேரை.
**தேய்ந்துமாய்ந்துபோதல்** – கவலையால் உடல் மெலிதல்.
**தேய்நீர்** – காண்க: **தேநீர்.**
**தேய்ப்புணி** – செட்டுள்ளவன்.
**தேய்ப்புத்தாள்** – உப்புத்தாள்.
**தேய்பிறை** – குறைமதி; இருட்பக்கமாகிய கிருட்டினபக்கம்.
**தேய்மானம்** – தேய்வு; பொன்னை உரைத்ததால் உண்டாகும் குறைவு; சிக்கனம்; சோம்பல்.
**தேய்வு** – குறைபாடு; பொன்னை உரைத்தலால் உண்டாகும் குறைவு; இழிவு; மெலிவு; அழிவு.
**தேய்வை** – சந்தனக்குழம்பு.
**தேயசு** – காண்க: **தேசு.**
**தேயபரிச்சேதம்** – இடத்தால் அளவிடுகை; ஒரு நாட்டில் உண்டென்பது வேறு ஒரு நாட்டில் இல்லையென்பது.
**தேயம்** – நாடு; இடம்; உடல்; பொன்; பொருள்; களவு; அழகு; புகழ்; அறிவு; பெருமை; வீரியம்.
**தேயவியற்கை** – நாட்டுவழக்கம்.
**தேயன்** – நினைக்கப்படுவோன்; திருடன்.
**தேயாமண்டிலம்** – தேய்ந்து குறையாத சூரிய மண்டலமான ஆதித்தமண்டிலம்.
**தேயாமணி** – வைரமணி.
**தேயாமதி** – முழுநிலா.
**தேயிலை** – தேயிலைச்செடி; தேயிலைத்தூள்.
**தேயு** – நெருப்பு; மயக்கம்.
**தேயுசகா** – தீயின் நண்பனான காற்று.
**தேயுடலி** – காண்க: **தேவாங்கு.**
**தேயுலிங்கம்** – அக்கினி வடிவமாகத் திருவண்ணா மலையில் உள்ள சிவலிங்கம்.
**தேர்** – இரதம்; சிறுதேர்; காண்க: **கொல்லா வண்டி**; உரோகிணிநாள்; கானல்; பௌத்த முனிவர்.
**தேர்க்கவி** – காண்க: **இரதபந்தம்.**
**தேர்க்கால்** – தேர்ச்சக்கரம்; குயவனின் சக்கரம்.
**தேர்க்குடம்** – காண்க: **தேர்க்குழிசி; தேர்முடி;** தேரின் அலங்காரக்குடம்.
**தேர்க்குழிசி** – தேரின் சக்கரக்குடம்.
**தேர்க்கூம்பு** – கொடிஞ்சிமரம்; தேரின் முடி.
**தேர்க்கொடி** – தேரில் கட்டிய கொடி.
**தேர்க்கொடிஞ்சி** – கைக்கு உதவியாகத் தேர்த் தட்டின் முன்னே நடப்பட்ட உறுப்பு; தேரின் நுகக்காலை இணைக்கும் அடிமரம்; கொடிஞ்சி மரம்; இரதத்தின் சிகரம்.
**தேர்க்கொடுங்கை** – தேரின் வெளிப்பக்கத்து வளைவு.
**தேர்க்கொற்றன்** – தேரோட்டுவோன்.
**தேர்ச்சி** – ஆராய்ச்சி; கல்வி; தெளிவு; பயிற்சி; தேர்வில் வெற்றிபெறுகை; ஆலோசனை.
**தேர்ச்சித்துணைவர்** – மந்திரத்தலைவர்; அமைச்சர்; நட்பினர்.
**தேர்ச்சில்** – தேர்ச்சக்கரம்.
**தேர்ச்சிவரி** – உறவினர்க்குத் தன் துன்பங்களைத் தெரிவிக்கும் கூத்துவகை.
**தேர்ச்சினை** – தேர்மொட்டு.
**தேர்த்தட்டு** – தேரின் உட்பரப்பு.
**தேர்த்தல்** – கலத்தல்.
**தேர்த்தானை** – தேர்ப்படை.
**தேர்த்திருநாள்** – கோயில் தேர்த்திருவிழா.
**தேர்தல்** – ஆராய்தல்; சிந்தித்தல்; அறிதல்; தெளிதல்; தெரிந்தெடுத்தல்; தேடுதல்; உறுதி செய்தல்; கொள்ளல்; பயிற்சியடைதல்; ஐயுறுதல்.
**தேர்ந்தவன்** – அறிஞன்; கற்றவன்; புலவன்.

**தேர்ந்துசெயல்** – செயல் கைகூடும் வகையறிந்து செயல்புரிகை.
**தேர்நிலை** – தேர் நிலையாக நிற்குமிடம்.
**தேர்ப்பாகன்** – தேரோட்டி, வலவன், சாரதி; புதன்.
**தேர்ப்பார்** – தேரின் உட்பரப்பு.
**தேர்மரச்சுற்று** – தேர்த்தட்டைச் சுற்றிவர அமைக்கும் பலகை.
**தேர்மறம்** – அரசனது போர்த்தேரின் சிறப்பினைக் கூறும் புறத்துறை.
**தேர்முட்டி** – கோயில்தேர் நிற்கும் இடம்.
**தேர்மொட்டு** – கொடிஞ்சிமரம்; தேர்க்கூம்பு; பூவரசின் முதிர்ந்த மொட்டு.
**தேர்வடம்** – தேரிழுக்கும் பெரிய கயிறு.
**தேர்வலவன், தேர்வலான்** – தேர்ப்பாகன்.
**தேர்வீரர்** – தேர்நடத்திப் போர்புரியும் வீரர்.
**தேர்வு** – ஆராய்ச்சி; தேர்ந்தெடுத்தல்; பயிற்சி; சுவை.
**தேரகன்** – தேரோட்டி.
**தேரடி** – தேர்ச்சக்கரம்; திருமாலின் சக்கரப் படை; காண்க: **தேர்முட்டி**.
**தேரர்** – பௌத்தமுனிவர்; சித்தருள் ஒருவர்.
**தேரலர்** – பகைவர்.
**தேரறேர்** – உண்மைத் தேர் அல்லாத தேரான கானல்நீர்.
**தேரன்** – பௌத்தன்; தமிழ் மருத்துவநூல்கள் பல இயற்றிய சித்தரான தேரையர்.
**தேராணி** – தேரின் அச்சாணி.
**தேராதுதெளிதல்** – ஆராயாது ஒன்றை மற்றொன்றாக உறுதிசெய்தல்.
**தேரார்** – கல்லாதார்; கீழோர்; பகைவர்.
**தேரி** – மணல்தரை; மணற்குன்று.
**தேரிடக்கியம்** – காண்க: **தேர்க்கொடி**.
**தேரை** – தவளைவகை; தூண்டிலில் உணவு; தேங்காய்நோய்; கல்லின் குற்றம்.
**தேரைபாய்தல்** – பிறக்கும் குழந்தை இளைக்கும்படி கருப்பிணிமீது தேரை விழுகை; நோய்ப்பட்டு உடல் தேய்தல்.
**தேரோர்** – தேர்வீரர்; ஏர்க்களம் போர்க்களம் இவற்றை இசைக்கருவிகளுடன் பாடியாடும் புலவர்.
**தேரோன்** – தேருடையவனான சூரியன்; தேர்ப்படைவீரன்.
**தேலிக்கை** – எளியது.
**தேலுதல்** – தப்புதல்; காண்க: **தேறுதல்**.
**தேவக்கிரியை** – ஒரு பண்வகை; தெய்வச்செயல்.
**தேவகங்கை** – ஆகாயகங்கை.
**தேவகடாட்சம்** – இறைவனருள்.
**தேவகண்ணி** – மலைவேப்பமரம்.
**தேவகணம்** – தேவர்களின் கூட்டம்; அசுவினி, மிருகசீரிடம், புனர்பூசம், பூசம், அத்தம், சுவாதி, அனுடம், திருவோணம், இரேவதி என்னும் ஒன்பது நட்சத்திரங்கள்.
**தேவகணிகை** – காண்க: **தேவதாசி**.
**தேவகதி** – நால்வகைப் பிறப்புகளுள் ஒன்று, தெய்வப்பிறப்பு.
**தேவகந்தம்** – குங்கிலியம்; நெய்ச்சிட்டிப்பூண்டு.
**தேவகன்மி** – கோயிலில் கடவுள் காரியம் பார்ப்பவன்.
**தேவகாந்தாரி** – ஒரு பண்வகை.
**தேவகானம்** – தேவர்கள் பாடும் இசை.
**தேவகுசுமம்** – கிராம்பு.
**தேவகுஞ்சரி** – தெய்வயானை.
**தேவகுண்டம்** – தானாக உண்டான ஊற்று.
**தேவகுமாரன்** – கடவுளின் புதல்வனான இயேசு கிறிஸ்து.
**தேவகுரு** – தேவர்க்கு ஆசானான வியாழன்; காண்க: **தேவகுருவம்**.
**தேவகுருவம்** – அறுவகைப் போகபூமிகளுள் ஒன்று.
**தேவகுலம், தேவகோட்டம்** – கோயில்.
**தேவகோடி** – ஒரு பேரெண்.
**தேவசடங்கு** – சங்கநிதி.
**தேவசபை** – இந்திரசபை.
**தேவசாட்சியாய்** – தெய்வமே சான்றாக; உண்மையாய்.
**தேவசிந்தனை** – கடவுள் தியானம்.
**தேவசேவை** – தெய்வ ஊழியம்.
**தேவசேனாபதி** – தேவர்களின் படைத்தலைவனான முருகக்கடவுள்.
**தேவடியாள்** – காண்க: **தேவதாசி**.
**தேவதச்சன்** – தெய்வலோகத்துத் தச்சனாகிய விச்சுவகருமா.
**தேவதத்தம்** – கோயிலுக்கு அளிக்கும் கொடை; அருச்சுனன் கைச்சங்கு.
**தேவதத்தன்** – யாரேனும் ஒருவனைக் குறிக்கும் சொல்; கொட்டாவியை உண்டுபண்ணும் வாயு.
**தேவதரு** – ஐந்தருக்களுள் ஒன்றான கற்பகம்; மதகரி வேப்பமரம்.
**தேவதா** – தெய்வம்; பிசாசம்.
**தேவதாகாரம்** – கோயில்.
**தேவதாசன்** – தெய்வத் தொண்டன்; அரிச்சந்திரன் மகன்.
**தேவதாசி** – கோயிற் பணிவிடைபுரியும் கணிகை; தேவலோகத்து நாடகமகளிர்.

**தேவதாடம்** – இராகு; தீ.

**தேவதாமரை** – பதுமநிதி.

**தேவதாயம்** – கோயிலுக்கு விடப்பட்ட பூமி முதலிய தருமம்.

**தேவதாரம், தேவதாரு** – ஐந்தருக்களுள் ஒன்று; வண்டு கொல்லிமரம்; நெட்டிலிங்க மரம்; மதகரி வேப்பமரம்.

**தேவதானம்** – கோயிலுக்கு விடப்பட்ட வரி இல்லா நிலம்.

**தேவதீபம்** – கண்.

**தேவதுந்துபி** – தேவவாத்தியம்.

**தேவதூடணம்** – தெய்வநிந்தை.

**தேவதூதன்** – தெய்வச்செய்தி கொண்டு வருவோன்.

**தேவதூபம்** – வெள்ளைக் குங்கிலியம்.

**தேவதேவன், தேவதேவு** – பரம்பொருள்.

**தேவதை** – தெய்வம்; பேய்.

**தேவநகர்** – கோயில்; துறக்கம்.

**தேவநாகரம், தேவநாகரி** – வடநாட்டில் உண்டாகி வழங்கும் ஆரிய மொழியின் வடிவெழுத்து.

**தேவநாயகன்** – தேவர்கள் தலைவன்.

**தேவப்பசு** – காமதேனு.

**தேவப்பிரமா** – நாரதன்.

**தேவப்புள்** – தெய்வத்தன்மையுள்ள பறவையான அன்னம்.

**தேவபதம்** – வானம்; அரசர் முன்னிலை.

**தேவபதி** – இந்திரன்.

**தேவபாடை** – தேவர்களின் மொழியான வட மொழி.

**தேவபாணி** – தேவரை வாழ்த்தும் பாட்டுவகை.

**தேவபூமி** – தேவலோகம்.

**தேவபோகம்** – காண்க: **தேவதானம்.**

**தேவம்** – கடவுள்; அனிச்சை; காண்க: குழிநாவல்; மாமரம்.

**தேவமாதா** – தேவர்களின் தாயான அதிதி; கன்னிமரியாள்.

**தேவமானம்** – தேவர்க்குரிய காலவளவு.

**தேவயாத்திரை** – தலயாத்திரை; கோயில் மூர்த்தியின் புறப்பாடு.

**தேவயானம்** – கடவுளர் ஊர்தி; அர்ச்சிசு முதலாகிய தேவதைகளைக் கடந்து மோட்சத்துக்குச் செல்லும் வழி.

**தேவயானை** – இந்திரன் பட்டத்து யானையான ஐராவதம்; முருகன்தேவி.

**தேவர்** – கடவுளர்; நால்வகைத் தேவவகையார்; ஐவகைத் தெய்வசாதியினர்; திருவள்ளுவர்; திருத்தக்கதேவர்; உயர்ந்தோரைக் குறிக்கும் சொல்; அரசர் துறவியர் முதலியோருடைய சிறப்புப்பெயர்; முக்குலத்தோரின் பட்டப் பெயர்.

**தேவர்கோன்** – தேவர்க்கு அரசனான இந்திரன்.

**தேவரகசியம்** – தேவர்க்கு மட்டும் தெரிந்த செய்தி.

**தேவரகண்டன்** – திருவாரூர்ச் சிவபெருமான்.

**தேவரங்கம்** – பணிப்புடைவை.

**தேவரடியார்** – தேவதாசிகள்.

**தேவரம்பை** – தெய்வப்பெண்; தெய்வலோகத்து நாடக மகளிருள் ஒருத்தி.

**தேவரன்** – கணவனுடன் பிறந்தான்.

**தேவராசன்** – தேவர்களுக்கு அரசனான இந்திரன்.

**தேவராட்டி** – தெய்வமேறி ஆடுகிறவள்.

**தேவராலயம்** – தேவர்க்கு இருப்பிடமான மகாமேரு.

**தேவராளன்** – தெய்வமேறி ஆடுகிறவன்.

**தேவரான்** – காமதேனு.

**தேவருணவு** – தேவரின் உணவான அமுதம்.

**தேவலகன்** – கோயில் அருச்சகன்.

**தேவலன்** – நன்னெறி நடப்போன்; பார்ப்பான்; காண்க: தேவரன்.

**தேவலோகம்** – துறக்கம்.

**தேவவசனம்** – கடவுள் திருவாக்கு.

**தேவவருடம்** – தேவர்க்குரியதும் முந்நூற்றறுபத்தைந்து மானுட ஆண்டு கொண்டதுமான ஆண்டு.

**தேவவிரதன்** – தேவனை வழிபடுவோன்; வீடுமன்.

**தேவளம்** – கோயில்.

**தேவன்** – கடவுள்; அருகன்; அரசன்; கொழுந்தன்; பரிசைக்காரன்; ஈட்டிக்காரன்; மடையன்; முக்குலத்தோருக்கு வழங்கும் பட்டப்பெயர்.

**தேவனம்** – தாமரை; சூதாட்டம்.

**தேவாங்கம்** – பட்டுச்சீலை.

**தேவாங்கு** – உடல் இளைத்துத் தோன்றும் ஒரு விலங்குவகை; வேலைப்பாடு அமைந்த ஆடை வகை.

**தேவாசிரியன்** – திருவாரூரில் உள்ள ஆயிரக்கால் மண்டபம்.

**தேவாசுரம்** – தேவர்க்கும் அசுரர்க்கும் நடந்த பெரும்போர்.

**தேவாத்துமா** – அரசமரம்.

**தேவாதிதேவன்** – முதற்கடவுள்.

**தேவாதீனம்** – தெய்வத்தின் முடிவு.

**தேவாபீட்டை** – தேவர்களுக்கு உகந்ததாகிய வெற்றிலை.

**தேவாமுதம்** – காண்க: **தேவருணவு.**

**தேவாயதனம்** – கடவுளர்க்குரிய கோயில்.

**தேவாயுதம்** – வானவில்.

**தேவார்ப்பணம்** – தெய்வத்துக்குப் படைத்த பொருள்.

**தேவாரம்** – பூசனை; வீட்டில் வைத்து வழிபடும் கடவுள்; மாளிகையில் ஒரு பகுதி; சைவ சமயகுரவர் மூவர் அருளிய சைவத் திருப்பாடல்கள்.

**தேவாராதனை** – கடவுள் வழிபாடு.

**தேவாலயம்** – கடவுளருக்குரிய கோயில்; மேருமலை.

**தேவான்னம்** – கடவுளுக்கு படைக்கப்பட்ட அமுது.

**தேவி** – தெய்வமகள்; பார்வதி; சீதேவி; மூதேவி; காளி; மனைவி; தலைவி; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; மாரியம்மன்.

**தேவிகை** – ஊமத்தை.

**தேவிகோட்டம்** – காளிகோயில்.

**தேவிமை** – தலைவியாம் தன்மை.

**தேவில்** – கடவுளுக்குரிய கோயில்.

**தேவு** – தெய்வம்; தெய்வத்தன்மை.

**தேவேக்கியம்** – காண்க: ஓமம்.

**தேவேசியம்** – வியாழன்.

**தேவேத்தனம்** – தெய்வச்செயல்.

**தேவேந்திரன்** – தேவர்களின் அரசன்.

**தேவை** – செயல்; விருப்பம்; அவசரம்; கட்டாயம்; அடிமைத்தனம்; இராமேசுவரம்; மகள் கொடுத்தவர் திருமணத்தின்பின் மண மகனை அழைத்துச் செய்யும் முதல் விருந்து.

**தேவோத்தியானம்** – கோயிலைச் சார்ந்த நந்தவனம்.

**தேள்** – கொடுக்காற் கொட்டித் துன்புறுத்தும் ஓர் உயிரி; விருச்சிகராசி; அனுடநாள்.

**தேளி** – ஒரு மீன்வகை; கேளித் தேங்காய் என்னும் ஒரு தேங்காய்வகை.

**தேளை** – இதயத்துடிப்பு.

**தேற்றம்** – தெளிவு; மனங்கலங்காமை; உறுதி; ஆறுதல்; செழிப்பு; சூளுறவு.

**தேற்றரவாளன், தேற்றரவாளி** – கிறித்தவசமய பரிசுத்த ஆவி; ஆறுதல் சொல்லுவோன்; திடனுடையோன்.

**தேற்றரவு** – காண்க: தேற்றம்.

**தேற்றன்** – உண்மை அறிவுள்ளவன்.

**தேற்றன்மை** – தெளிவு.

**தேற்றா** – தேற்றாமரம்.

**தேற்றாங்கொட்டை** – கலங்கல் நீரைத் தெளியச் செய்யும் தேற்றாமர விதை.

**தேற்றார்** – அறிவிலார்; பகைவர்.

**தேற்றாவொழுக்கம்** – ஐயுறத்தக்க தீயநடை.

**தேற்று** – தெளிவு; தெளிவிக்கை; தேற்றாமரம்.

**தேற்றுதல்** – தெளிவித்தல்; தெளிந்தறிதல்; சூளுறுதல்; ஆற்றுதல்; தேறுதல் கூறுதல்; தூய்மைசெய்தல்; குணமாக்குதல்; பல முண்டாக்குதல்; ஊக்கப்படுத்துதல்.

**தேற்றேகாரம்** – உறுதிப்பொருளை உணர்த்தும் ஏகாரம்.

**தேறகம்** – கடல்மீன்வகை.

**தேறத்தெளிதல்** – தடைபோக விசாரித்தறிதல்; முற்றுமாய் அறிகை.

**தேறல்** – தெளிவு; தெளிந்த கள்; தேன்; சாறு.

**தேறல(லா)ர், தேறார்** – அறியாதார்; பகைவர்.

**தேறினர்** – ஆராய்ந்துகொண்ட நண்பர்.

**தேறினவன்** – கலை முதலியவற்றில் தேர்ச்சி பெற்றவன்; பட்டறிவுமிக்கவன்.

**தேறு** – தெளிவு; உறுதி; தேற்றாங்கொட்டை; துண்டு; கொட்டுகை.

**தேறுகடை** – தீர்மானம்.

**தேறுதல்** – தெளிதல்; நீர்தெளிதல்; துணிதல்; ஆறுதல்; பலித்தல்; மனத்திண்மையுறுதல்; முதிர்தல்; செழித்தல்; தேர்ச்சியடைதல்; தங்கல்; கூடுதல்; சோறு முதலியன விறைத் தல்; நம்புதல்; மயக்கம் தெளிதல்.

**தேறுதலை** – ஊக்கம், துணிவு; ஆறுதல்.

**தேறுநர்** – கற்றோர்; நம்பத்தக்கவர்; சேர்ந் தோர்.

**தேறுமுகம்** – பற்றுக்கோடு.

**தேன்** – மது; தேனிறால்; கள்; இரசம்; இனிமை; வண்டுவகை; பெண்வண்டு; மணம்.

**தேன்கதலி** – ஒரு வாழைவகை.

**தேன்குழல், தேன்குழாய்** – காண்க: தேங்குழல்.

**தேன்கூடு** – தேனிறால்; தேன்கூட்டின் உள்ளறை; தேனீக்கள் தங்கும் கூடு.

**தேன்மரம்** – மகாகனிமரம்.

**தேன்மெழுகு** – தேனடையிலுள்ள மெழுகு.

**தேன்வதை** – தேன்கூடு.

**தேன்றாடு, தேனடை** – தேனைச் சேர்த்துவைக்க மெழு கால் தேனீக்கள் கட்டும் கூடு.

**தேனம்** – பெருங்கடல்.

**தேனருவி** – குற்றாலமலையின் மேலுள்ள ஓர் அருவி.

**தேனழித்தல்** – தேன்கூட்டைக் கலைத்துத் தேன் கொள்ளுதல்.

**தேனன்** – திருடன்.

**தேனி** – காண்க: கடுகுரோகிணி; கொத்துமல்லி.

**தேனித்தல்** – இனித்தல்; மகிழ்தல்; தியானித்தல்.

**தேனிரும்பு** – இரும்புவகை.

**தேனிழைத்தல்** – தேன்கூடுகட்டுதல்.

**தேனிறாட்டு, தேனிறால்** – காண்க: தேனடை.

**தேனீ** – தேன் சேர்க்கும் வண்டு.

**தேனு** – பசு; காமதேனு; எருமை; குதிரை; களவு.

**தேனுகம்** – பெண்யானை.

**தேனுகாரி** – தேனுகனுக்குப் பகைவனான கண்ணபிரான்.

**தேனூறுதல்** – இனிமையாதல்.

**தேனெய்** – தேன்.

**தேனெறும்பு** – இனிய பொருளில் விருப்பமுடைய பெரிய எறும்பு; நஞ்சுள்ள எறும்புவகை.

## தை

**தை** – ஓர் உயிர்மெய்யெழுத்து (த்+ஐ); ஒரு மாதம்; பூசநாள்; மகரராசி; நாய்க்கடுகு செடி; தையல்; தாளக் குறிப்பினுள் ஒன்று; அலங்காரம்; மரக்கன்று.

**தைஇ** (வி) – கோத்து; தொடுத்து.

**தைஇய** (வி) – இழைத்த; கோலஞ்செய்த; தொடுத்த.

**தைச்சங்கிராந்தி** – சூரியன் மகரராசியில் புகும் தைமாத முதல்நாள்.

**தைசதம்** – இராசதகுணம் மேலிட்ட அகங்காரம்; அகங்காரத் திரயத்துள் சத்துவகுணம் மேலிட்டது; பலம்; நெய்; ஒளி சம்பந்தமானது; மகரராசி.

**தைசதன்** – நுண்ணுடலை யான் என்று கருதும் சீவன்.

**தைசம்** – பூசநாள்.

**தைத்தல்** – தையலிடுதல்; ஆணி முதலியன அடித்தல்; பொருத்துதல்; இணைத்தல்; படைத்தல்; இடுதல்; வலைபின்னுதல்; தொடுத்தல்; கோத்தல்; அலங்கரித்தல்; சித்திரித்தல்; பதித்தல்; அடைத்தல்; உடுத்தல்; உட்புகுதல்; ஊடுருவுதல்.

**தைத்தியகுரு, தைத்தியபுரோகிதன், தைத்தியமந்திரி** – அசுரர் குருவான சுக்கிரன்.

**தைத்தியர்** – திதி என்பவளின் மைந்தரும் பதினெண்கணத்துள் ஒருவகையினருமான அசுரர்.

**தைத்தியாரி** – தைத்தியர்களுக்குப் பகைவனான திருமால்.

**தைத்திரம்** – காண்க: **மீன்கொத்தி.**

**தைத்திரீயம்** – எசுர்வேத சாகைகளுள் ஒன்று; உபநிடதம் பத்தனுள் ஒன்று.

**தைதம்** – விரல்நுனி.

**தைதிலம்** – காண்டாமிருகம்; கரணம் பதினொன்றனுள் ஒன்று.

**தைதேயர்** – அரக்கர்.

**தைந்நீராடல்** – தை மாதத்தில் கன்னிப்பெண்கள் காலையில் நீராடும் சடங்கு.

**தைப்பான்** – ஊசி; தையற்காரன்.

**தைப்பூசம்** – தை மாதத்துப் பூசத்திருநாள்.

**தைப்பை** – சட்டை.

**தைப்பொங்கல்** – தைமாதம் முதல்நாள் பொங்கலிட்டு வழிபடும் பெருநாள்.

**தையல்** – தைப்பு; தையல்வேலை; அலங்காரத் துணி; புனையப்படுவது; கட்டழகு; பெண்; மேகம்.

**தையற்காரன்** – தைப்போன்; பின்னல்வேலை செய்வோன்.

**தையெனல்** – இசைக்குறிப்பு.

**தைரியசாலி** – மனத்துணிவுள்ளவன்.

**தைரியஞ்சொல்லுதல்** – ஊக்கங்கொடுத்தல்.

**தைரியம்** – மனத்துணிவு; குதிரையின் பெருமித நடை.

**தைரியலட்சுமி** – துணிவு தரும் தேவதை.

**தைலக்காப்பு** – கோயில் தெய்வத் திருமேனிகளுக்கு எண்ணெய் சாத்துகை; எண்ணெய் தேய்த்துக்கொள்ளுகை.

**தைலசௌரிகை** – வௌவால்; கரப்பான்பூச்சி.

**தைலபிபீலிகை** – செவ்வெறும்புவகை.

**தைலபீதம்** – அத்திப்பிசின்.

**தைலம்** – எண்ணெய்; நல்லெண்ணெய்; மரச் சத்து; மணப்பண்டங்களுள் ஒன்று; கூட்டெண்ணெய்; ஆமணக்கெண்ணெய்.

**தைலமாட்டுதல்** – எண்ணெய்க் காப்பிடுதல்; பிணத்தைத் தைலத்தால் கெடாமல் பாதுகாத்தல்.

**தைலமிறக்குதல், தைலமெடுத்தல்** – எண்ணெய் வடித்தல்; சத்தியை வாங்கிவிடுதல்.

**தைலா** – மரப்பெட்டி.

**தைலாங்குருவி** – காண்க: **தகைவிலாங்(ன்)குருவி.**

**தைலி** – பணப்பை; காண்க: **தைலிகன்.**

**தைலிகன்** – எண்ணெய் வாணிகன்; மருத்துவன்.

**தைவகருமம்** – தீயிலிடும் பலி.

**தைவதம்** – தெய்வம்; தெய்வாராதனை; ஏழு சுரத்துள் ஒன்று.

**தைவதீபம்** – தெய்வம் அருளிய விளக்கான கண்கள்.

**தைவம்** – கடவுள்; தெய்வத்தின் வடிவு; பரார்த்த லிங்க வகைகளுள் தேவர்களால் நிறுவப் பெற்றது.

**தைவரல்** – வருடல்; தடவல்; அலங்கரித்தல்; கலைத்தொழில் எட்டனுள் அனுசுருதி ஏற்றுகை.

**தைவருதல், தைவாதல்** – வருடுதல்; தடவிவருதல்; தொட்டுச்சீர்ப்படுத்துதல்; மாசு நீக்குதல்; அனுசுருதியேற்றல்.

**தைவிகம்** – பரார்த்தலிங்க வகைகளுள் தேவர்களால் நிறுவப்பெற்றது; தெய்வத்தன்மை உடையது.

**தைவி(வே)ளை** – நாய்க்கடுகுசெடி.

**தைனியம்** – எளிமை; கீழ்மை; பொருளாசை.

# தொ

**தொ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (த்+ஒ).

**தொக்கட்டி** – மரத்தில் பழங்களைப் பொதிந்து வைக்கும் ஓலைமறைவு; பழம் வைக்கும் சிறு கூடை; காவற்குடிசை.

**தொக்கடம்** – மிதித்து உழக்குகை; பழம் வைக்கும் சிறுகூடை.

**தொக்கடம்போடுதல்** – உடம்பு பிடித்தல்; கசக்கிச் சாறுபிழிதல்.

**தொக்கடவு** – குறுக்குவழி.

**தொக்கடி** – காண்க: **தொக்கட்டி.**

**தொக்கடை** – வறுமை.

**தொக்கணம்** – காண்க: **தொக்கடம்.**

**தொக்கம்** – செரியாமல் வயிற்றில் சிக்கிக்கொள்ளும் பொருள்; வழக்கு.

**தொக்கார்** – கூட்டத்தார்; தோழர்.

**தொக்கி** – சமுத்திராபச்சைச் செடி.

**தொக்கு** – தொடுவுணர்ச்சியை அறிகருவி; உடம்பின்தோல்; கனியின்தோல்; மரப்பட்டை; ஆடை; பற்று; துவையல்; சிறுமை; எளிது; இளப்பமானவன்; நேர்மை.

**தொக்குத்தொக்கெனல்** – ஈரடுக்கொலிக்குறிப்பு; தள்ளாடற்குறிப்பு.

**தொக்குநிற்றல்** – வெளிப்படாது நிற்றல்.

**தொகக்காரன்** – மதிப்பிடுவோன்.

**தொகம்** – மதிப்பு.

**தொகம்பார்த்தல்** – மதிப்பிடுதல்.

**தொகாநிலை, தொகாநிலைத்தொடர்** – முற்றுத்தொடர், எச்சத்தொடர் முதலிய தொடர்சொற்கள்.

**தொகுத்தல்** – எண் கூட்டல்; திரட்டிக் கூட்டுதல்; அடுக்குதல்; மதிப்பிடுதல்; தொக்குநிற்கச் செய்தல்; சொல்லின் முதல் இடை இறுதியில் எழுத்துகளை நீக்குதல்; சுருக்குதல்; சம்பாதித்தல்.

**தொகுத்துக்கூறல், தொகுத்துச்சுட்டல்** – முப்பத்திரண்டு உத்திகளுள் நூற்பொருளை ஓரிடத்தே சுருக்கிக் கூறுவது.

**தொகுத்துரை** – பொழிப்புரை.

**தொகுதல்** – கூடுதல்; நெருங்குதல்; ஒன்றாதல்; அடுக்கிவருதல்; ஒடுங்குதல்; மறைதல்; மொத்தமாதல்; ஒத்தல்; உள்ளடங்குதல்; சுருங்குதல்; குட்டையாதல்; வீணாதல்.

**தொகுதி** – கூட்டம்; சேர்க்கை; மந்தை; பகுதி; வரிசை; சாதி; உருபு முதலியவற்றின் மறைவு; மொத்த எண்; சபை; சிறு செப்பு.

**தொகுதிப்பெயர்** – குழுவைக் குறிக்கும் பெயர்; குழூஉக்குறிப்பெயர்; மொத்த எண்.

**தொகுப்பு** – தொகை; கூட்டம்; எல்லை.

**தொகை** – கூட்டம்; சேர்க்கை; கொத்து; மொத்தம்; பணம்; எண்; கணக்கு; தொக்கு நிற்றல்; திரட்டுநூல்; விலங்கு முதலியவற்றின் திரள்; கூட்டல்; தொகுத்துக் கூறுகை; வேற்றுமைத்தொகை முதலிய தொடர் சொற்கள்.

**தொகைக்காரன்** – செல்வன்.

**தொகைச்சூத்திரம்** – ஒரு பொருளின் பகுப்பை எண்ணிக்காட்டும் சூத்திரம்.

**தொகைநிலை** – வென்ற வேந்தன் தன் படைக்குச் சிறப்புச் செய்யுமாறு அதனை ஒருங்குதொகுக்கும் உழிஞைத்துறை; பகைவேந்தர் எல்லாம் ஒருங்குபணிதலைக் கூறும் புறத்துறை; சுமுகமாய் நிற்கை; சுருங்கிநிற்கை; காண்க: **தொகைநிலைத்தொடர்;** போரில் இருதிறத்தாரும் மாய்ந்ததைக் கூறும் புறத்துறைவகை; காண்க: **தொகைநிலைச்செய்யுள்.**

**தொகைநிலைச்செய்யுள்** – பொருள், பாட்டு, அளவு முதலியனபற்றி ஒருங்குதிரட்டப்பட்ட செய்யுள் நூல்.

**தொகைநிலைத்தொடர்** – வேற்றுமையுருபு முதலியன இடையே மறைந்து நிற்கவரும் சொற்றொடர்.

**தொகைநூல்** – பலரால் பாடப்பட்ட பாடல்கள் ஒன்றாகத் திரட்டப்பட்ட நூல்.

**தொகைப்படுத்துதல்** – மொத்தத் தொகையாக வளரச்செய்தல்; பெரும்பொருள் திரட்டுதல்; பிரித்துக்காட்டுதல்.

**தொகைப்பொருள்** – பிண்டப்பொருள்; தொகைநிலைத் தொடரின் பொருள்.

**தொகைபூட்டுதல்** – கணக்குச் சரிக்கட்டுதல்; கணக்கு மொத்தம் கட்டுதல்.

**தொகைமோசம்** – கணக்குத் தவறுகை; பண இழப்பு.

**தொகையகராதி** – சதுரகராதியில் தொகையுடைய பொருளைக் காட்டும் அகராதி; எண் தொகையால் சுட்டும் பொருள் விளக்க அகராதி.

**தொகையடியார்** – ஒத்த தன்மையால் ஒரு நெறிப்பட்ட தொண்டர் குழு; ஒன்பது பிரிவினராயுள்ள கூட்டு அடியார்.

**தொகையாக்குதல்** – காண்க: தொகைப்படுத்துதல்.

**தொகையுவமம்** – பொதுத்தன்மை வெளிப்பட்டு வாராமல் ஆராய்ந்துணரும்படி மறைந்து நிற்கும் உவமை.

**தொகையேற்றுதல்** – சிறுகச்சிறுக கொடுத்துக் கடன் ஏற்றுதல்; எண் கூட்டுதல்; கணக்குப் பதிதல்.

**தொகைவிரி** – விரித்துக் கூறியதனைத் தொகுத்தும் தொகுத்துக் கூறியதனை விரித்தும் கூறும் முறை.

**தொங்கட்டான்** – உடையைத் தளர்வாகக் கட்டுகை; தொங்கலாயுள்ள காதணிவகை.

**தொங்கணி** – தொங்கலாயுள்ள அணிவகை.

**தொங்கல்** – தொங்குதல்; தொங்கற்பொருள்; ஒட்டுப்பற்றியிருத்தல்; அலங்காரத் தூக்கம்; அணிகலத் தொங்கல்; அணிகலக் கடைப்பூட்டு; காதணிவகை; முன்றானை; பெண்கள் மேலாக்கு; பருத்த பூமாலை; ஆண்மயிர்; பீலிக்குஞ்சம்; மயில்தோகை; வெண்குடை; மகளிர் ஐம்பாலுள் ஒருவகை; குடை, சாமரம் முதலிய விருது.

**தொங்கல்போடுதல்** – மேலாக்கிடுதல்.

**தொங்கல்விழுதல்** – குறைவாதல்.

**தொங்கன்** – கள்வன்.

**தொங்காரப்பாய்ச்சல்** – குதிரை முதலியவற்றின் ஓட்டம்.

**தொங்காரம்** – ஏளனம்.

**தொங்கி** – கள்ளி.

**தொங்கிசம்** – கேடு; துன்பம்.

**தொங்கிப்பாய்தல்** – குதித்தோடுதல்; அகங்கரித்தல்.

**தொங்கிப்போதல்** – வைத்தது காணாமற் போதல்; பொருள் மோசம் போதல்; வழியிற் களைத்துத் தங்குதல்; சாதல்; ஓடிப்போதல்.

**தொங்குகாது** – வடிந்த காது; மாட்டுக் குற்றவகை.

**தொங்குகிழவன்** – தொண்டுகிழவன்.

**தொங்குங்கல்** – ஆட்டுஉரல்.

**தொங்குதல்** – நாலுதல்; அண்டிக்கிடத்தல்; நிலைத்துநிற்றல்; இருத்தல்; திடமாதல்; குதித்தல்; சாதல்; முடிவுபெறாது தாமதித்திருத்தல்; உதவியற்றிருத்தல்; கிடைத்தல்.

**தொங்குபறிவு** – ஒட்டியும் ஒட்டாமலும் இருத்தல்; விலக வழிபார்த்தல்.

**தொங்குபாலம்** – நீர்ப்பரப்பில் தாங்கு தூண்களின்றிப் பிணைக்கப்பட்டிருக்கும் பாலம்.

**தொங்குபுழுதி** – வயலில் இறுகாது நிற்கும் புழுதி.

**தொசம்** – கொடி.

**தொட்ட** – பெரிய.

**தொட்டகுறை** – முற்பிறவியில் தொடங்கிவிட்ட வினைக்குறை; தொடங்கிவிட்ட முற்றாப் பணி; பயன்துய்க்காமை.

**தொட்டடி** – செய்யுளின் முதலடி.

**தொட்டப்பன்** – தலைதொட்ட ஞானத்தந்தை.

**தொட்டம்** – சிறுநிலம்.

**தொட்டல்** – தீண்டல்; உண்டல்; கட்டுதல்; தோண்டல்.

**தொட்டவிரல்தறித்தான்** – பெருங்குறிஞ்சாக் கொடி.

**தொட்டாட்டுமணியம், தொட்டாட்டுவேலை** – குற்றேவல்.

**தொட்டாய்ச்சி** – ஞானத்தாய்.

**தொட்டால்வாடி, தொட்டாற்சிணுங்கி, தொட்டாற்சுருங்கி** – தொட்டால் சுருங்கும் செடிவகை; சுண்டிவகை.

**தொட்டி** – நீர்த்தொட்டி; மரம், விறகு முதலியன விற்குமிடம்; வேலியடைப்பு; அம்பாரி; கள்; சிற்றூர்; அழி; குப்பைத்தொட்டி; காண்க: **தொட்டிக்கட்டு; சிறுகாஞ்சொறி; சிற்றாமுட்டி;** அபராதம்.

**தொட்டிக்கட்டு** – வீட்டின் நடுவில் திறந்தவெளியுடன்கூடிய சதுரக்கட்டு.

**தொட்டிக்கால்** – கவட்டுக்கால்.

**தொட்டிச்சி** – தொட்டியச் சாதிப் பெண்.

**தொட்டிமை** – ஒற்றுமை; அழகு.

**தொட்டியம்** – ஒரு நாடு; ஒரு மொழி; சூனிய வித்தை.

**தொட்டில்** – குழந்தைகளை வைத்து ஆட்டுஞ் சிறு கட்டில்; தூளி; நீர்த்தொட்டி.

**தொட்டிலிடுதல்** – பிறந்த குழந்தையை முதன் முறையாய்த் தொட்டிலில் இடும் சடங்கு.

**தொட்டிவயிறு** – பெருவயிறு.

**தொட்டிவீடு** – தொட்டிக்கட்டுள்ள வீடு.

**தொட்டு** – தொடங்கி; குறித்து.

**தொட்டுக்காட்டுதல்** – ஒன்றைச் செய்துகாட்டுதல்.

**தொட்டுக்கொண்டுபோதல்** – ஒன்றைச் சுமப்பது போல் தொட்டுச்செல்லுகை; பாடையைப் பிடித்துக்கொண்டு செல்லுதல்; பிணச் சடங்கில் துணிமூலை பிடித்தல்.

**தொட்டுக்கொள்ளுதல்** – எட்டிப்பிடித்தல்; உணவுத்துணையாக ஊறுகாய் முதலியவற்றைச் சிறிய அளவு உட்கொள்ளுதல்.

**தொட்டுத்தெறித்தல்** – ஆலாத்தி நீரை மண மக்கள்மேல் தெளித்தல்; மிகச் சிறிய அளவு கொடுத்தல்.

**தொட்டுத்தொட்டு** – சிறுகச்சிறுக.

**தொட்டுப்பிடித்தல்** – மகப்பேறு காலத்தில் பக்கத்திலிருந்து உதவிசெய்தல்.

**தொட்பம்** – திறமை.

**தொடக்கம்** – தொடங்குகை; ஆரம்பம்; ஆதி; செல்வம்; வருக்கம்.

**தொடக்கு** – கட்டு; பற்று; மகளிர் சூதகம்.

**தொடக்குதல்** – சிக்கிக்கொள்ளுதல்; ஆரம்பித் தல்; கட்டுதல்; அகப்படுத்துதல்; தரித்தல்; பொருத்தல்.

**தொடங்கல்** – தொடங்குதல், ஆரம்பிக்கை; முதற்படைப்பு; செய்ய முயலுகை.

**தொடங்கு** – கால்விலங்கு, தளை.

**தொடங்குதல்** – ஆரம்பித்தல்; முயலுதல்; ஒத்தல்.

**தொடர்** – தொடர்கை; சங்கிலி; விலங்கு; பஞ்சு; வரிசை; பிசின்; பூமாலை; மரபுவழி; சொற்றொடர்; பழைமை; நட்பு; உறவு; உலோகங்களை உருக்க உதவும் மட்பாண்டம்.

**தொடர்ச்சி** – தொடர்கை; உறவுமுறை; பரம் பரைத்தொடர்பு; நட்பு; வழக்குத் தொடர்ச்சி; . பூங்கொத்து; முயற்சி; வரிசை; காரணகாரியத் தொடர்பு; தொடுசு; செறிவு.

**தொடர்ச்சொல்** – சொற்களின் தொடர்; தொடர் மொழி.

**தொடர்ச்சொற்புணர்த்தல்** – முப்பத்திரண்டு தந்திர உத்தியில் ஒன்றற்கொன்று தொடர் புடைய சொற்களைச் சேர்த்துவைத்தல்.

**தொடர்தல்** – இடையறாது வருதல்; பிணைந்து நிற்றல்; அமைதல்; தாக்குதல்; பின்பற்றுதல்; மிகுதல்; நெருங்குதல்; கட்டல்; தேடல்; வழக்கிற்கு இழுத்தல்.

**தொடர்ந்தார்** – நண்பர்.

**தொடர்நிலைச்செய்யுள்** – பழையதொரு கதை மேல் நாற்பொருளும் வனப்பும் அமைய இயற்றப்படும் செய்யுள் நூல்.

**தொடர்ப்பாடு** – தொடர்ச்சி; பற்று; காம நுகர்ச்சி.

**தொடர்ப்பூ** – விரிபூ.

**தொடர்பற** – முழுதும்.

**தொடர்பு** – தொடர்கை; நட்பு; உறவு; நியதி; ஒட்டுகை; பாட்டு; பரம்பரைத் தொடர்பு; வரிசை; காரண காரிய சம்பந்தம்.

**தொடர்முழுதுவமை** – உவமானம் உவமேயம் இரண்டிலும் பொதுத்தன்மையைத் தெரி விக்கும் சொல் தனித்தனி வரும் அணி.

**தொடர்மொழி** – இரண்டெழுத்துக்கு மேற்பட்ட எழுத்துகளைக்கொண்ட சொல்; இரண்டு சொற்களால் ஆகும் தொடர்.

**தொடர்வட்டி** – வட்டிக்கு வட்டி.

**தொடர்வண்டி** – இரயில்வண்டி, புகைவண்டி.

**தொடர்வு** – காண்க: தொடர்ச்சி.

**தொடரர்** – மேவினர்.

**தொடராமுறி** – விடுதலைப்பத்திரம்; ஒருவர்மீது இனி வழக்குத் தொடர்வதில்லை என்று உறுதி செய்து எழுதிக்கொடுக்கும் ஆதரவுச்சீட்டு.

**தொடரி** – செடிவகை; முட்செடிவகை; காண்க: புலிதொடக்கி.

**தொடரெழுத்து** – நிலைமொழி ஈற்றையும் வருமொழி முதலையும் தழுவிநிற்கும் எழுத்து.

**தொடல்** – சங்கிலி.

**தொடலை** – தொங்கவிடுகை; மாலை; மகளிர் விளையாட்டுவகை; மணிக்கோவைகளால் தொடுக்கப்பட்ட மேகலை.

**தொடி** – வளைவு; கைவளை; தோள்வளை; வீரவளை; சுற்றுவட்டம்; பூண்.

**தொடிசு** – காண்க: தொடுசு.

**தொடித்தடி** – வளைதடி; பூண்கட்டிய ஊன்று கோல்.

**தொடிமகள்** – காண்க: விறலி.

**தொடு** – தோட்டம்; மருதநிலம்; வஞ்சகம்.

**தொடுக்கம்** – பொன்.

**தொடுக்கை** – ஆடு அடைக்கும் இடம்; தொடுத் தல்.

**தொடுகழல்** – செருப்பு.

**தொடுசு** – தொடர்ச்சி; கூத்திவைப்பு.

**தொடுத்தல்** – இயைத்தல்; தொடங்குதல்; கட்டு தல்; பூட்டுதல்; வளைத்தல்; எய்தல்; அணிதல்; சேர்த்துவைத்தல்; பாத் தொடுத் தல்; உண்டாக்குதல்; வழக்குத்தொடர்தல்; பூ முதலியன இணைத்தல்.

**தொடுதல்** – தீண்டுதல்; தோண்டுதல்; பிடித்தல்; பிழிதல்; தொடங்குதல்; உண்ணல்; ஆணை யிடுதல்; செலுத்துதல்; வாச்சியம் வாசித்தல்; அடித்தல்; செருப்பணிதல்.

**தொடுதுணை** – உதவி.

**தொடுதோல்** – காண்க: தொடுகழல்.

**தொடுப்பி** – புறங்கூறுவோன்.

**தொடுப்பு** – தொடுத்தல்; தொடர்ந்திருக்கை; கட்டு; சேர்க்கை; சங்கிலி; கலப்பை; சால் வளைத்து உழுதல்; விதைப்பு; புறங்கூறல்; செய்கைத் தொடர்ச்சி; கட்டுக்கதை; செருப்பு; பழக்கம்; கள்ளக்கணவன்; ஆசைநாயகி; களவு.

**தொடுப்புக்கத்தி** – பட்டாக்கத்தி.

**தொடுப்புக்காரன்** – நெருங்கிய நண்பன்; கள்ளக் கணவன்.

**தொடுபதம்** – சோறு.

**தொடுவழக்கு** – தொடர்ந்து வரும் வழக்கு; கள்ள வழக்கு; விடாது பற்றிவரும் வழக்கம்.

**தொடுவாய்** – ஆறுங் கடலுஞ் சேருமிடம்; புறங் கூறுதல்.

**தொடுவான்** – அடிவானம்; பிணையடி மாடு களைத் தொடுக்குங் கயிறு.

**தொடுவானம்** – அடிவானம்.

**தொடுவிலங்கு** – இருவரைப் பிணைக்கும் விலங்கு.

**தொடுவு** – கொல்லை; களவு.

**தொடுவை** – தொடுத்திருப்பது; புதிய யானையைப் பயிற்றும் யானை; பாங்கன்; வைப்புக் காதலர்.

**தொடுவைவள்ளம்** – துணைச் சிறுபடகு.

**தொடை** – இடையறாமை; தொடர்ச்சி; அம்பெய்கை; கட்டு; தேனடை; அம்பு; நாண்; பூமாலை; பூங்கொத்து; மதிற்சுற்று; செய்யுள் உறுப்புள் ஒன்று; சந்து; பாட்டு; சுவர்ப்புறத்து நீண்ட உத்திரம்; சட்டம்; துடை என்னும் உறுப்பு.

**தொடைக்கயிறு** – எருதைக் கலப்பை நுகத்தோடு பிணிக்கும் சிறுகயிறு, பூட்டாந்தளை.

**தொடைதட்டிவேளாளர்** – தொடையில் சவரக் கத்தியைத் தட்டித் தீட்டும் நாவிதர்.

**தொடைதட்டுதல்** – தொடையில் அடித்துக் கொண்டு வீரவாதம் செய்தல்; சண்டைக் கழைத்தல்.

**தொடைமுரண்** – சொல்லாலும் பொருளாலும் மாறுபட அமைக்கும் முரண்தொடை என்னும் செய்யுளின் தொடை அமைப்பு.

**தொடையகராதி** – சதுரகராதிப் பகுதியுள் எதுகையாக வருதற்குரிய சொற்களைக் கூறும் அகராதி.

**தொடையல்** – தொடர்ச்சி; கட்டுகை; பூமாலை; தோளணிமாலை; தேன்கூடு; அழிவு.

**தொடைவாழை** – மருந்துச் செடிவகை; அடித் தொடையில் புறப்படும் மேகக்கட்டி; வீக்கக் கால்.

**தொடைவில்லை** – சிறிய வட்டத் தலையணை.

**தொண்டகம்** – குறிஞ்சிநிலப் பறை; ஆகோட் பறை.

**தொண்டச்சி** – பணிப்பெண்; தேவடியாள்.

**தொண்டர்** – அடியார்; அடிமைகள்; உலகப் பற்றில் ஈடுபட்டவர்.

**தொண்டர்சீர்பரவுவார்** – அடியார் பெருமைகளை வெளிப்படுத்தியவரான பெரியபுராணம் பாடிய சேக்கிழாரது பட்டப்பெயர்.

**தொண்டரடிப்பொடி** – தெய்வஅடியார்களின் காலில் ஒட்டிய தூசி; தொண்டரடிப் பொடியாழ்வார்.

**தொண்டலம்** – யானைத்துதிக்கை; கள்.

**தொண்டன்** – அடியான்.

**தொண்டாடுதல்** – பணிசெய்தல்.

**தொண்டி** – சோழர்க்குரிய ஒரு துறைமுகப் பட்டினம்; சேரர்க்குரிய ஒரு துறைமுகப் பட்டினம்; வேலியைத் தாண்டாவண்ணம் மாட்டின் கழுத்தில் கட்டித் தொங்கவிடப் படும் கட்டை; தொண்டுசெய்பவள்; சிறு தோட்டம்; துளை; நெல்லாலாக்கின கள்; மரவகை; காண்க: **கலப்பைக்கிழங்கு.**

**தொண்டிக்கள்** – நெல்லாற் சமைத்த கள்.

**தொண்டிச்சி** – அடிமைச்சி; தேவடியாள்.

**தொண்டியோர்** – சோழகுலத்தோர்; சேரர்.

**தொண்டீரன்** – தொண்டைமண்டல அரசன்.

**தொண்டு** – அடிமைத்தனம்; அடிமையாள்; கடவுள் வழிபாடு; ஒடுக்கவழி; அணிவகை; பழைமை; ஒன்பது; ஒரு பூண்டு; கோழியுள்ளான்; வேலியைத் தாண்டாவண்ணம் மாட்டின் கழுத்தில் தொங்கவிடும் கட்டை; தேங்காய்; பலா முதலியவற்றின் மேற்றோல்.

**தொண்டுகிழவன்** – முதிர்ந்த கிழவன்.

**தொண்டுதுரவு** – பணிவிடை; உளவு.

**தொண்டை** – குரல்வளை; கழுத்து; குரல்; யானைத் துதிக்கை; ஆதொண்டைக்கொடி; சிறு கடல்மீன்வகை; தொண்டைமண்டலம்.

**தொண்டைக்கட்டு** – கபத்தால் தொண்டை அடைத்துக்கொள்ளுகை; உண்ணவும் பேசவும் முடியாதவாறு தொண்டை புண்படுகை; தொண்டைநோய்வகை.

**தொண்டைக்கதிர்** – கதிர் வெளிப்படுதற்குரிய பருவம்.

**தொண்டைக்குழி** – குரல்வளைக் குழி.

**தொண்டைகத்துதல்** – பெருங்குரலிடுதல்.

**தொண்டைகம்முதல்** – கபத்தால் தொண்டை அடைத்துக்கொள்ளுதல்.

**தொண்டைகாட்டல்** – உரத்துப் பேசல்.

**தொண்டைத்தூரு** – உள்நாக்கு வளரும் நோய்.

**தொண்டைதிறத்தல்** – இசைக்குரல் சுத்தப் படுகை; உரக்கக் கத்துகை.

**தொண்டைநாடு** – தமிழ்நாட்டுப் பகுதிகளுள் ஒன்று.

**தொண்டைப்புகைச்சல்** – தொண்டை புகைந்து இருமுதல்.

**தொண்டைமணி** – குரல்வளை.

**தொண்டையடைத்தல்** – பேசமுடியாதபடி தொண்டையில் அடைப்புண்டாகை.

**தொண்டையடைப்பு** – தொண்டைநோய்வகை.

**தொண்டையுடைதல்** – பருவத்தாற் குரல் மாறுதல்.

**தொண்டையோர்** – தொண்டைமண்டல அரசர்.

**தொண்டைவிடுதல்** – தெளிவாய்க் குரலிடுதல்; பெருங்குரலிடுதல்.

**தொண்டைவைத்தல்** – கூவுதல்.

**தொண்டொண்டொடெனல்** – பறையின் ஒலிக் குறிப்பு.

**தொண்ணாத்தல்** – கெஞ்சிநிற்றல்.

**தொண்ணூறு** – ஓர் எண், ஒன்பது பத்து, நூறுக்குப் பத்துக் குறைந்த எண்.

**தொணதொணப்பு** – வெறுப்புண்டாகும்படி ஓயாமல் பேசுகை.

**தொத்தல்** – வலியற்றவர்; வலுவில்லாதது.

**தொத்தன்** – அடிமையாள்.

**தொத்தா** – சிறிய தாய்.

**தொத்தாள்** – அடிமை; காண்க: **தொத்தா.**

**தொத்திப்பிடித்தல்** – ஒட்டிக்கொள்ளுதல்; ஆதாரமாகப் பற்றுதல்; அடைக்கலம் புகுதல்.

**தொத்தியேறுதல்** – கைகால்களால் பற்றியேறுதல்; அதிகாரங்காட்டுதல்.

**தொத்து** – பூங்கொத்து; திரள்; பற்று; சார்பு; அடிமை; பழமையாய் வரும் நட்பு; வைப்பாட்டி; தொற்றுநோய்க்குணம்; ஆதாரப்பொருள்.

**தொத்துதல்** – ஒட்டுதல்; பற்றுதல்; படர்தல்; தொங்குதல்; தொடர்தல்; நோயொட்டுதல்.

**தொத்துநோய், தொத்துவியாதி** } – காண்க: **தொற்றுநோய்.**

**தொத்துவேலை** – இணைக்கும் வேலைப்பாடு; சரியாய் முடிக்காத வேலை.

**தொத்துளிப்பாய்** – பாய்வகை.

**தொத்தூன்** – தொங்குசதை.

**தொந்தக்காரர்** – உறவினர்; பழம்பகைவர்.

**தொந்தப்படுதல்** – சம்பந்தப்படுதல்; ஒட்டுநோய் பற்றுதல்.

**தொந்தப்பழி** – தலைமுறை தலைமுறையாக வரும் பழிப்பு; பரம்பரையாக வரும் பகை.

**தொந்தப்பாடு** – தொடர்பு, சம்பந்தம்.

**தொந்தம்** – இரட்டை; புணர்ச்சி; தொடர்பு; பகை; மரபுவழிநோய்; ஆயுதவகை; பழமை; நெருங்கிய பழக்கம்.

**தொந்தயுத்தம்** – இருவர் ஒருவருக்கொருவர் செய்யும் போர்.

**தொந்தரவு** – துன்பம்; தொல்லை.

**தொந்தரித்தல்** – வருத்துதல்.

**தொந்தரை** – காண்க: **தொந்தரவு.**

**தொந்தவினை** – முற்பிறப்பில் செய்த இருவினைப் பயன்.

**தொந்தனை** – இணைவிழைச்சு; பிணைப்பு.

**தொந்தார்த்தம்** – இருபொருள்படுதல்; முற்பிறப்பில் செய்த இருவினைப்பயன்.

**தொந்தி** – வயிறு; தொப்பை, பெருவயிறு; தசை மடிப்பு; நோய்வகை; பரவமகளிர் அணியும் கைக்காப்பு.

**தொந்தித்தல்** – பற்றுதல்; கலத்தல்; தாறுமாறாதல்; தொடர்தல்.

**தொந்திதள்ளுதல்** – வயிறு பருத்தல்; வளைந்து போகை.

**தொந்திப்பு** – நோய்க்கலப்பு; நட்பு; தீராப்பகை.

**தொந்திவிழுதல்** – காண்க: **தொந்திதள்ளுதல்.**

**தொந்திவைத்தல்** – காண்க: **தொந்திதள்ளுதல்;** செல்வவானாகை.

**தொந்தோமெனல்** – தாள வொலிக்குறிப்பு.

**தொப்பணம்** – விநாயகர் வணக்கம் முதலியவற்றில் வலக்கையால் இடக்காதையும், இடக்கையால் வலக்காதையும் பிடித்து உட்கார்ந்து எழுந்திருக்கை.

**தொப்பாரம்** – தோட்சுமை; துணிப்பெருமூட்டை; புற்கட்டு; கொப்புளம்; ஒரு முடியலங்காரவகை; முகமூடிவகை; பெரிய கட்டடம்.

**தொப்பி** – தலையணி; கள்; கமுகின் பாளை மடல்; மிருதங்கத்தின் இடப்பக்கம்.

**தொப்பிக்காரர்** – தொப்பி அணிபவராகிய ஐரோப்பியர்.

**தொப்பிமடல்** – கமுகம்பாளைமடல்.

**தொப்புத்தொப்பெனல்** – கீழ்விழுதற்குறிப்பு; அடிவிழுதற்குறிப்பு.

**தொப்புள்** – கொப்பூழ்.

**தொப்பெனல்** – காண்க: **தொப்புத்தொப்பெனல்.**

**தொப்பை** – தொந்தி; கொப்புளம்; மத்தளத்தில் அடிக்கும் நடுவிடம்.

**தொப்பைக்காரன்** – பெருந்தொந்தியுடைய செல்வன்.

**தொம்பதம்** – 'தத்துவமசி' என்னும் வேதவாக்கியத்தில் 'துவம்' என்னும் சொல்.

**தொம்பம்** – கழைக்கூத்து.

**தொம்பரம்** – பலருக்குச் சமைத்த ஊண்; பெரிய கட்டடம்; சமையற் பானை.

**தொம்பரவன்** – காண்க: **தொம்பன்.**

**தொம்பரை** – ஊர்சுற்றி; நெற்குதிர்.

**தொம்பறை** – களஞ்சியம்; பெருவயிறன்; மூங்கிலாலான நெற்குதிர்.

**தொம்பன்** – கழைக்கூத்தன்.

**தொம்பாரம்** – பெரிய கட்டடம்.

**தொம்பை, தொம்பைக்கூடு** } – கடவுளுக்குமுன் கொண்டு செல்லும் எடுபிடிகளில் ஒன்று; மூங்கிலாலான நெற்குதிர்; தேர் முதலியவற்றின் ஆடைத்தொங்கல்வகை.

**தொம்மனை** – மிகப் பருமன்; காண்க: **தொம்பை.**

**தொம்மெனல்** – ஒலிக்குறிப்பு.

**தொம்மை** – பருமன்; காண்க: **தொம்பை.**

**தொய்** – குற்றம்.

**தொய்தம்** – காண்க: **துவைதம்.**

**தொய்தல்** – இளைத்தல்; சோர்தல்; துவளுதல்; வளைதல்; கெடுதல்; பயன்குறைதல்; வினை செய்தல்; உழுதல்; வயிறு முதலியன வாடுதல்; மூச்சுத்திணறுதல்.

**தொய்படுதல்** – நனைதல், வளைவுறல்.

**தொய்யகம்** – தலைக்கோலத்தின் ஓர் உறுப்பு.

**தொய்யப்போடுதல்** – ஒரு பயன் கருதிச் செயலைச் சிறிது தாழ்த்துதல்.

**தொய்யல்** – சோர்வு; துன்பம்; சேறு; உழவு; களிப்பு.

**தொய்யவாங்குதல்** – மெல்ல மூச்சுவருதல்; நிலை தாழ்த்துதல்.

**தொய்யவிடுதல்** – கயிறு முதலியவற்றைத் தளர விடுதல்; செயலை நிறுத்திவைத்தல்; விலை யேறுதற்பொருட்டு விலைப்பொருள்களை முடக்கிவைத்தல்; இணங்குதல்.

**தொய்யா, தொய்யாக்கீரை** – கீரைவகை.

**தொய்யில்** – மகளிர் தோள் முலைகளில் வரிக் கோலம் எழுதும் சந்தனக்குழம்பு; மகளிர் தனங்களில் சந்தனக் குழம்பால் எழுதும் கோலம்; உழுநிலம்; கீரைவகை; அழகு; கிளர்ச்சி; நீர்க்கொடிவகை.

**தொய்வு** – கட்டின் நெகிழ்ச்சி; இளைப்பு; ஈளை; மூச்சுமுட்டு.

**தொல்** – பழைய; இயற்கையான.

**தொல்கதை** – தொன்மம், புராணம்.

**தொல்காப்பியம்** – தமிழிலுள்ள மிகப்பழமையான இலக்கணநூல்.

**தொல்படை** – அரசனுடைய முன்னோர் காலத்தி லிருந்து தொடர்ந்துவரும் படை.

**தொல்பதி** – பழமையான ஊர்.

**தொல்லியல்** – பழைய உழுவலன்பு.

**தொல்லெழில்** – இயற்கையழகு.

**தொல்லை** – பழமை; துன்பம்; செயல்.

**தொல்லையார்** – பழமையோராகிய தேவர்.

**தொல்வரவு** – பழைய குடிப்பிறப்பு.

**தொல்வரைவு** – அடிப்பட்ட குடியொழுக்கம்.

**தொல்வினை** – பழவினை.

**தொலி** – தோல்; உமி.

**தொலித்தல்** – உமி அல்லது தோடுபோக இடித் தல்; உரித்தல்; புடைத்தல்.

**தொலியல்** – உமி போக்கிய அரிசி.

**தொலை** – ஒப்பு; அழிவு; தூரம்; அக்கரைச்சீமை.

**தொலைச்சுதல்** – கொல்லுதல்; முடித்தல்; செலுத்துதல்.

**தொலைத்தல்** – அழித்தல்; கழித்தல்; நீக்குதல்; கெட்டுப்போக்குதல்; சிதைத்தல்; தோல்வி யடையச்செய்தல்; முற்றுப்பெறச்செய்தல்; முடித்தல்.

**தொலைதல்** – அழிதல்; முடிதல்; முற்றுதல்; வழி முதலியன கழிதல்; சோர்தல்; நீங்குதல்; தோற்றுப்போதல்; வருந்துதல்; காணாமற் போதல்.

**தொலைதூரம்** – மிகத் தொலைவு.

**தொலைநோக்காடி** – சேய்மையிலுள்ள பொரு ளைக் காண உதவும் கருவி.

**தொலைநோக்கு** – நெடுந்தொலைவு பார்க்கும் பார்வை.

**தொலைபு** – அழிகை.

**தொலைவு** – அழிவு; சோர்வு; குறைகை; தோல்வி; முடிவு; தூரம்.

**தொலைவெட்டு** – காண்க: **தொலைதூரம்.**

**தொழித்தல்** – கோபித்தல்; ஒலித்தல்.

**தொழிதல்** – சிதறுதல்.

**தொழில்** – செயல்; அலுவல்; தந்திரம்; பெருமை; வினைச்சொல்; ஏவல்; திறமை; களவு.

**தொழில்மாறுதல்** – ஒரு வேலையைவிட்டு வேறு வேலைக்குச் செல்லுகை.

**தொழில்முடக்கம்** – தொழில் செய்ய மறுத்திருத் தல்.

**தொழில்வரி** – தொழில்பற்றி விதிக்கும் வரி.

**தொழிலாகுபெயர்** – வற்றல் என்பதுபோலத் தொழிலின் பெயர் அதனையுடைய பொரு ளுக்கு ஆகிவருவது.

**தொழிலாளன்** – வேலைக்காரன்; வேலைத் திறமையுள்ளவன்.

**தொழிலாளி** – வேலைக்காரன்; வேலைத்திறம் படைத்தவன்.

**தொழிலோர்** – தொழிலாளர்.

**தொழிற்குறிப்பு** – வினைக்குறிப்புச் சொல்.

**தொழிற்சாலை** – வேலைக்களம், பணிக்களரி.

**தொழிற்சொல்** – வினைச்சொல்; தொழிற்பெயர்.

**தொழிற்படுத்துஞ்சொல்** – ஏவல்வினை.

**தொழிற்படுதல்** – செயல்நடத்தல்; வேலையிற் புகுதல்.

**தொழிற்பண்பு** – செய்கை குறிக்கும் பண்புச்சொல்.

**தொழிற்பயில்வு** – தொழில் மேன்மேலும் நிகழ்கை.

**தொழிற்பாடு** – வேலை; வேலைத்திறம்.

**தொழிற்பெயர்** – வினைப்பெயர்; வினையாலணை யும் பெயர்.

**தொழிற்றுறை** – வாணிகம்; தொழிற்சாலை; பணிக்களம்.

**தொழின்முதல்** – ஏவுதல்கருத்தா.
**தொழின்மொழி** – வினைச்சொல்.
**தொழீஇ** – தொழில் செய்பவள்; பணிப்பெண்.
**தொழு** – மாட்டுக்கொட்டில்; பட்டிமாடுகளை அடைக்கும் இடம்; சிறைக்கூடம்; குட்ட நோய்; இரேவதி; இல்வாழ்க்கை; கள்ளுச்சாடியிருக்கும் ஏணி; உழலைமரம்; காட்டுவிலங்குகளை அடைக்கும் கூண்டு; நீர்நிலை.
**தொழுக்கன்** – அடிமை.
**தொழுகண்ணி** – செடிவகை.
**தொழுகள்வர்** – பாசாங்குசெய்வோர்.
**தொழுகு** – மாட்டுத்தொழு.
**தொழுகுலத்தோர்** – தொழத்தக்க குலத்தார்; பார்ப்பனர்.
**தொழுகுலம்** – அந்தணர்குலம்; குலதெய்வம்; குலமாகத் தொழத்தக்கவர்.
**தொழுகை** – வணங்குகை; தெய்வ வழிபாடு.
**தொழுத்தை** – காண்க: தொழும்பி; பணிப்பெண்; கற்பில்லாதவள்.
**தொழுதகுதல்** – நன்கு மதித்தல்; விரும்புதல்.
**தொழுதகுதெய்வம்** – வணங்குதற்குரியவளான அருந்ததி.
**தொழுதல்** – வணங்கல்.
**தொழுதி** – கூட்டம்; திரட்சி; பறவைக்கூட்டம்; பறவையொலி.
**தொழுந்தகை** – தொழத்தக்கவன்(ள்).
**தொழுநோய்** – குட்டநோய்வகை.
**தொழுப்பிறப்பு** – தன் தொழுவிலேயே பிறந்து வளர்ந்த மாடு.
**தொழுப்பு** – உழுதொழில் வளைப்பு.
**தொழும்பன், தொழும்பாளன்** – அடியவன்; இழிந்தோன்.
**தொழும்பி** – அடிமைப்பெண்.
**தொழும்பு** – அடிமை; அடிமைத்தொழில்; அடிமையாள்; கடவுள் திருப்பணி.
**தொழுமகளிர்** – குற்றேவல் மகளிர்.
**தொழுமரம்** – தொழுக்கட்டை.
**தொழுவம்** – மாட்டுக்கொட்டில்.
**தொழுவர்** – தொழில்செய்வோர்; உழவர்.
**தொழுவறை** – காண்க: தொழுவம்.
**தொழுவன்** – காண்க: தொள்ளாளி; பயிரிடுவோன்.
**தொழுவை** – மடு.
**தொழுனை** – யமுனையாறு; காண்க: தொழுநோய்.
**தொள்கல்** – துளைக்கை.
**தொள்கு** – வலை; சேறு; பள்ளம்.
**தொள்ளம்** – தெப்பம்; சேறு.
**தொள்ளல்** – துளை.
**தொள்ளாடி** – வலுவற்றவன்(ள்); வலுக்குறைதல்.
**தொள்ளாடுதல்** – வலிதளர்தல்.
**தொள்ளாயிரம்** – ஒன்பது நூறு.
**தொள்ளாளி** – தொழிலாளி.
**தொள்ளி** – சேறு.
**தொள்ளுதல்** – துளைத்தல்; நெகிழ்தல்.
**தொள்ளை** – துளை; துளையுடைய பொருள்; குழி; மரக்கலம்; குற்றம்; அறியாமை; மரக்கால் என்னும் அளவுகருவி; பழைமை.
**தொள்ளைக்காது** – பெருந்துளையுள்ள காது; அணிநீங்கிய தொளைக்காது.
**தொளதொளத்தல்** – தளர்வுறுதல்; இளகிப் போதல்; ஊறுதல்; மனவுறுதியற்றிருத்தல்.
**தொளதொளெனல்** – நெகிழ்தற்குறிப்பு; ஊறுதற் குறிப்பு.
**தொளி** – சேறு; வீதி.
**தொளியடித்தல்** – வயலில் சேறுகலக்குதல்.
**தொளிவிதை(ரை)ப்பு** – வயலைச் சேறாகக் கலக்கி விதைத்தல்.
**தொளுக்குக்கொண்டை** – அவிழ்ந்த மயிர்முடி.
**தொளுக்குதல்** – தொடுத்தல்; தளரக்கட்டுதல்.
**தொளை** – துளை; மூங்கில்.
**தொளைத்தல்** – துளையிடுதல்; தொந்தரவு செய்தல்; செய்தி அறியும்பொருட்டு ஆழம் பார்த்தல்.
**தொற்பதம்** – காண்க: தொம்பதம்.
**தொற்று** – சம்பந்தம்; மூலைக்கையோடணைத்த மரம்; நோயின் ஒட்டுத்தொடர்பு.
**தொற்றுதல்** – பற்றியிருத்தல்; ஒட்டித்தொடர்தல்; கைகளால் பற்றி ஏறுதல்; படர்தல்.
**தொற்றுநோய், தொற்றுவியாதி** – ஒட்டித்தொடரும் நோய்.
**தொறு** – பசுக்கூட்டம்; தொழுவம்; இடைச்சாதி; கூட்டம்; மிகுதி; அடிமை; ஓரிடைச்சொல்; அடிமையாள்.
**தொறுத்தி** – காண்க: தொறுவி.
**தொறுவன்** – இடையன்.
**தொறுவி** – இடைச்சி.
**தொறுவிடம்** – மாட்டுத்தொழு.
**தொறுவு** – அடிமைத்தனம்; கூட்டம்; பசுக்கூட்டம்; செய்தொழில்; தொழு; இடைச்சாதி; மிகுதி; அடிமையாள்.
**தொன்மம்** – பழங்கதை, புராணம்.
**தொன்மரம்** – பழைமையான மரமான ஆலமரம்.
**தொன்மை** – பழைமை; செய்யுள் வனப்பில் ஒன்று; உரை விரவிப் பழமையாகிய கதை பொருளாகச் செய்யப்படுவது; தன்மை.
**தொன்று** – பழைமை; பழையது; ஊழ்.
**தொன்றுதொட்டு** – அனாதிகாலமாய், பழங்காலம் தொடங்கி.
**தொன்னீர்** – கடல்.

**தொன்னூல்** – தொன்மம், புராணம்; ஓர் இலக்கணநூல்.
**தொன்னை** – இலைக்கலம்; ஈனன்.
**தொனி** – ஒலி; காண்க: **தொனியர்த்தம்.**
**தொனித்தல்** – ஒலித்தல்; சொல்லுதல்; குறிப்புப் பொருள் தோன்றுதல்.
**தொனியர்த்தம்** – ஆற்றலாலன்றிக் குறிப்பால் அறியப்படும் பொருள்.
**தொனிவைத்தல்** – குறிப்புப்பொருள் அமைத்தல்; பேரொலிசெய்தல்.
**தொனு** – உக்காரம்.
**தொனுப்புதல்** – அலப்புதல்.

# தோ

**தோ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (த்+ஓ); நாயைக் கூப்பிடும் ஒலி.
**தோக்கியம்** – காண்க: **தோக்குமம்.**
**தோக்கு** – கைத்துப்பாக்கி.
**தோக்குமம்** – காதின் குறும்பி; முகில்.
**தோக்குளம்** – காண்க: **பருத்தி.**
**தோக்கை** – முன்றானை; கொய்சகம்; சீலை; மேற்போர்வை.
**தோகசம்** – பால்.
**தோகதம்** – வயாநோய்; விருப்பம்.
**தோகம்** – சிறுமை; இளங்குழந்தை; பால்; துயரம்.
**தோகல்** – காண்க: **சோனைப்புல்.**
**தோகலி** – அசோகமரம்.
**தோகை** – மயில்; மயிற்பீலி; பெண்; இறகு; விலங்கின்வால்; முன்றானை; பெருங்கொடி; நெல், கரும்பு, வாழை முதலியவற்றின் இலை; பனங்கிழங்கின் வாற்றோல்; ஆண்குறியின் நுனித்தோல்; பெண்மயிர்; ஆடை; கொய்சகம்; தொங்கல்; மீன்வகை.
**தோகைப்பகை** – மயிலுக்குப் பகையான ஒந்தி.
**தோகைமஞ்ஞை, தோகைமயில்** – ஆண்மயில்.
**தோகைமுகபூடணம்** – பெண்களின் முகத்தை அலங்கரிப்பதான மஞ்சள்.
**தோசம்** – குற்றம்; பாவம்; குறை; நாடிக் கொதிப்பு; சன்னி; விடக்காய்ச்சல்; குழந்தை நோய்வகை.
**தோசி** – நற்பேறு அற்றவன்.
**தோசை** – மாவாலாகிய ஒரு பணிகாரவகை.
**தோசைதிருப்பி** – கல்லில் வார்க்கும்தோசையைத் திருப்பவும் எடுக்கவும் உதவும் கருவி.
**தோட்கட்டு** – தோட்சந்து; தோள்.
**தோட்காப்பு** – தோள்வளை.
**தோட்கோப்பு** – கட்டுச்சோறு.
**தோட்சுமை** – தோளில் தாங்கும் சுமை; மூட்டை; காண்க: **காவடி.**
**தோட்டக்காரன்** – தோட்டத்தைப் பார்க்கும் வேலையாள்; தோட்டத்தின் சொந்தக்காரன்.
**தோட்டக்கால்** – கேணிப் பாய்ச்சலுள்ள கொல்லைநிலம்.
**தோட்டப்பயிர்** – காய்கறிகள்.
**தோட்டம்** – வீட்டுக்கொல்லை; படப்பை; சோலை.
**தோட்டவாரியம்** – தோட்டக் கண்காணிப்பு.
**தோட்டா** – துப்பாக்கியிலிடும் வெடிமருந்துச் சுருள்.
**தோட்டி** – ஆணை; காவல்; கதவு; மனைவாயில்; காண்க: **தோணாமுகம்**; கட்டழகு; செங்காந்தள்மலர்; நெல்லிமரம்; அங்குசம்; கொக்கி; வெட்டியான்; குப்பை முதலியன வாருவோன், துப்புரவாளன்.
**தோட்டிச்சி** – தோட்டிப்பெண்.
**தோட்டிமை** – ஒற்றுமை; வெட்டியான்வேலை.
**தோட்டுக்காது** – ஓலைச்சுருள் முதலியன இட்ட காது; காதின் அடித்தண்டு.
**தோட்டுச்சக்கரம்** – சக்கரவாணம்.
**தோட்டுச்சிரங்கு** – கொப்புளச்சிரங்கு.
**தோட்டுணை** – கணவன்.
**தோட்பட்டை** – தோட்புறத்து எலும்பு.
**தோடகச்சிரங்கு** – காண்க: **தோட்டுச்சிரங்கு.**
**தோடகம்** – தாமரை; கொப்புளம்.
**தோடத்திரயம்** – வாதம் பித்தம் சிலேட்டுமம் என்னும் முப்பிணிகள்.
**தோடம்** – குறை; பாவம்; பிணி, சன்னி; கிச்சிலி வகை; மகிழ்ச்சி; இரவு; நாடிக்கொதிப்பு; விடக்காய்ச்சல்; பித்தவாதசுரம்; குழந்தை நோய்வகை; மூவகை இலக்கணக்குற்றம்.
**தோடயம்** – நாடகத்தின் முன்மொழிப் பாட்டு.
**தோடா** – கையணிவகை; கல்வித்திறமைக்குப் பரிசிலாகப் பெறும் பொற்காப்பு.
**தோடி** – ஒரு பண்வகை.
**தோடு** – பூ; பூவிதழ்; ஓலை; காதோலைச்சுருள்; காதணி; பழத்தின் ஓடு; வட்டமாக அரிந்தது; வட்டத்திரணை; தொகுதி; தோல்; இலை; கதிர்த்தாள்.
**தோடை** – மாட்டுநோய்வகை; ஆடாதோடை; கிச்சிலிவகை; முத்துக் குளியலில் ஒரு முழுக்கில் கிடைக்கும் சிப்பிகள்.
**தோடையம்** – காண்க: **தோடயம்.**
**தோண்டான்** – ஓநாய்.

**தோண்டி** – தண்ணீரிறைக்குஞ் சிறு பாத்திரம்; காண்க: **கரந்தை**; வறட்சுண்டிச்செடி.
**தோண்டுச்சால்** – நாற்றங்காலில் தேங்கின நீரை வடிக்கத் தோண்டும் சிறுகால்.
**தோண்டுதல்** – அகழ்தல்; குடைதல்; முகத்தல்; விவரம் விசாரித்தல்; பண்டம் இறக்குதல்.
**தோண்மாற்றுதல்** – மணமகனும் மணமகளும் மாலைமாற்றுதல்; சுமையை ஒரு தோளிலிருந்து மற்றொரு தோளுக்கு மாற்றிக்கொள்ளுதல்; ஒருவர் தோட்சுமையை மற்றவர் தோளுக்கு மாற்றுதல்.
**தோண்முதல்** – புயவலி.
**தோண்மேல்** – பிடரி.
**தோண்மை** – காண்க: **தோண்முதல்.**
**தோணாமுகம்** – அகழ்சூழ்ந்த பெரிய நகரம்.
**தோணி** – ஓடம்; மிதவை; மரக்கலம்; நீர்; நீர்த் தொட்டி; சேறு; மதிலுறுப்பு; அம்பு; இரேவதி நட்சத்திரம்; சிறுவழுதுணங்காய்.
**தோணிக்காரன்** – படகோட்டி.
**தோணித்துறை** – துறைமுகம்.
**தோணிதள்ளுதல்** – ஓடத்தை நீரில்விடுதல்.
**தோணிதாங்குதல்** – படகைக் கழையால் தள்ளுதல்.
**தோணிப்பாலம்** – தோணிபோல் அமைக்கப்படும் கற்பாலம்.
**தோணிபுரம்** – சீகாழி.
**தோணியம்** – அம்பு.
**தோணுதல்** – தோன்றுதல்.
**தோணோக்கம்** – மகளிர் விளையாட்டுவகை.
**தோத்திரப்பா, தோத்திரப்பாட்டு** – துதிப்பாட்டு.
**தோத்திரம்** – புகழ்ச்சி; வணக்கமொழி; காண்க: **தோத்திரப்பாட்டு.**
**தோத்திரித்தல்** – புகழ்தல்.
**தோதகத்தி** – நீண்ட மரவகை; வஞ்சகி; கற்பொழுக்கமற்றவள்.
**தோதகம்** – வருத்தம்; வஞ்சகம்; சாலவித்தை; கற்பு ஒழுக்கமின்மை.
**தோதகமாடுதல்** – தொந்தரவுபண்ணுதல்; ஒழுக்கமற்றிருத்தல்.
**தோதகன்** – வஞ்சகன்; ஒழுக்கமற்றவன்; கடுகடுப்புள்ளவன்.
**தோதம்** – பசுவின் கன்று; வருத்தம்.
**தோதனம்** – அங்குசம்; ஈட்டி.
**தோது** – ஏந்து, வசதி; பொருத்தம்; ஒப்பு; வீதம்; உபாயம்; தொடர்பு; போட்டி.
**தோப்பாடி** – துட்டன், தீயன்.
**தோப்பாண்டி** – திருநந்தவனப் பணி செய்யும் பரதேசி.
**தோப்பி** – நெல்லாற் சமைத்த கள்; கள்.
**தோப்பு** – சோலை.
**தோப்புக்கண்டம், தோப்புக்கரணம்போடுதல்** – இருகை மாறிச் செவியைப் பிடித்து இருகால் முடக்கியிருந்து எழுதல்; பிறர் சொன்னபடியெல்லாம் நடத்தல்.
**தோப்பை** – திண்மையின்றிப் பருத்தது; தொங்கு சதை.
**தோம்** – குற்றம்; தீமை; துன்பம்.
**தோம்பு** – சிவப்பு; நிலவிவரக் கணக்கு.
**தோமம்** – கூட்டம்; சாமவேதத்தின் தொகுதி வகை.
**தோமரம்** – எறியாயுதம்; கைவேல்; தண்டாயுதம்; ஒரு வாச்சியவகை.
**தோய்ச்சல்** – உறைகை; இரும்பைத் துவைச்ச விடுகை.
**தோய்த்தல்** – நனைத்தல்; துவைச்சலிடுதல்; சாயமேற்றுதல்; ஆடைதுவைத்தல்; உறையச் செய்தல்.
**தோய்தல்** – முழுகுதல்; நனைதல்; நிலத்துப் படிதல்; செறிதல்; அணைதல்; உறைதல்; கலத்தல்; பொருத்துதல்; முகத்தல்; கிட்டுதல்; ஒத்தல்; அகப்படுதல்; நட்டல்; துவைச்சலிடுதல்.
**தோய்ந்தார்** – நண்பர்.
**தோய்ப்பன்** – சுகியன் என்னும் பணிகாரம்.
**தோய்ப்பாடி** – தீயன்.
**தோய்ப்பு** – காண்க: **தோய்ச்சல்.**
**தோய்பனி** – மிகுபனி.
**தோயசம்** – தாமரை.
**தோயசூசகம்** – தவளை.
**தோயதம்** – மேகம்; வெண்ணெய்; நெய்.
**தோயதரம்** – நீரைக்கொண்டதான மேகம்.
**தோயதி** – கடல்.
**தோயதிப்பிரியம்** – காண்க: **இலவங்கம்.**
**தோயப்பம்** – சுகியன்; தோசை.
**தோயபாணம்** – காண்க: **பொடுதலை.**
**தோயம்** – நீர்; கடல்.
**தோயல்** – தோய்தல்; கலத்தல்; குளித்தல்; தயிர்.
**தோயல்வாய்த்தல்** – சமயம்வாய்க்கை.
**தோர்த்தல்** – தோல்வியுறல்; ஒப்பில் தாழ்தல்; இணங்குதல்; இழத்தல்.
**தோர்வை** – தோல்வி.
**தோரணக்கந்து** – கோயில் முதலியவற்றின் முன் வாயிலில் அலங்கார வளைவைத் தாங்கி நிற்கும் தூண்; அலங்காரத் தொங்கல் கட்டும் கால்.
**தோரணக்கல்** – நீர் ஆழம் அறியுங் கல்.
**தோரணக்கால்** – காண்க: **தோரணகம்பம்;** அலங்காரத் தொங்கல் கட்டும் கால்; திருவாசிக்கால்.

**தோரணகம்பம்** – காண்க: **தோரணக்கந்து.**

**தோரணம்** – அலங்காரவாயில்; தெருவில் குறுக்காகக் கட்டும் அலங்காரத் தொங்கல்; ஊர்தி; குரங்கு; நீராடுமிடத்திற் கட்டும் வரம்பு; தராசுதாங்கி; யானைநடை.

**தோரணவாயில்** – அலங்கார வளைவுள்ள வாயில்.

**தோரணவீதி** – தோரணங்களால் அலங்கரிக்கப் பட்ட தெரு.

**தோரணன்** – யானைப்பாகன்.

**தோரணி(ணை), தோரணிக்கம்** – நல்லொழுங்கு; முறை.

**தோரத்தம்** – தொந்தரவு; கட்டாயம்; சண்டை யிடும் குணம்.

**தோராயம்** – எதிர்பார்ப்பு, உத்தேசம்.

**தோராவழக்கு** – ஓயாத வழக்கு.

**தோரி** – சோறு.

**தோரியம்** – கூத்து; வாச்சியம்.

**தோரியமகள், தோரியமடந்தை** – நாட்டியம் ஆடி முதிர்ந்தவள்.

**தோரை** – ஒரு மலைநெல்வகை; மூங்கிலரிசி; கைவரை; இரத்தம்; மங்கல்நிறம்; ஒருபனை வகை; மயில்விசிறி; நான்கு விரற்கிடையுள்ள நீட்டலளவை; அணிவிடம்.

**தோல்** – சருமம்; உடம்பின் மேலுள்ள தோல்' புறணி; விதையின் மேற்றோல்; கேடகம்; துருத்தி; மெல்லென்ற சொல்லால் விழுமிய பொருள் பயப்பச் செய்யும் நூல்; புகழ்; அழகு; சொல்; யானை; தோல்வி; நற்பேறின்மை; உடம்பு; பக்கரை; மூங்கில்.

**தோல்முட்டை** – கருவில்லாத முட்டை; தோடு கடினமாவதற்குமுன் இடப்பட்ட முட்டை.

**தோல்வி** – வெற்றியின்மை.

**தோல்வினைஞர், தோல்வினைமாக்கள்** – சங்கிலியர், செம்மார்.

**தோல்வு** – காண்க: **தோல்வி.**

**தோலடிப்பறவை** – தோலால் இணைக்கப்பட்ட காலுள்ள பறவை.

**தோல(லா)ன்** – புல்லன், அற்பன்.

**தோலனம்** – நிறுத்தல்.

**தோலா** – ஒரு ரூபாஎடை.

**தோலாட்டம்** – கயமைத்தனம்.

**தோலாண்டி** – இழிஞன்.

**தோலாநாவினர்** – நாவன்மையுடையவர்.

**தோலாமை** – ஈடழியாமை, தோல்வியின்மை.

**தோலாவழக்கு** – முடிவுபெறாத வழக்கு.

**தோலாள்** – பயனற்றவள்.

**தோலி** – ஒரு மீன்வகை; அரக்கு; பழத்தோல்.

**தோலிகை** – ஊஞ்சல்; காது.

**தோலின்துன்னர்** – தோல்வேலை செய்வோர்.

**தோலுழிஞை** – கிடுகுபடையைச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை.

**தோலோதோல்** – உடம்படாமைக் குறிப்பு; எவ்விதமும்.

**தோவத்தி** – ஆண்மக்களின் அரையாடை.

**தோவம்** – ஒரு காலஅளவு.

**தோவாளம்** – கிணற்றைச் சுற்றி எழுப்பிய சுவர்.

**தோழ்** – மாட்டுத்தொழுவம்.

**தோழம்** – மாட்டுக்கொட்டில்; கடல்; பேரெண்.

**தோழமை** – நட்பு.

**தோழன்** – நண்பன்.

**தோழி** – பாங்கி; பணிசெய்பவள்; செவிலித் தாயின் மகள்; தேவி; அரக்கு.

**தோழிச்சி** – பாங்கி; செவிலித்தாயின் மகள்; தேவி.

**தோள்** – புயம்; கை; தொளை.

**தோள்கொட்டுதல்** – வீரக்குறியாகப் புயங்களைத் தட்டுதல்.

**தோள்கொடுத்தல்** – உதவுதல்; சுமையைத் தாங்குதல்.

**தோள்சேர்தல்** – தழுவுதல்.

**தோள்தட்டுதல்** – காண்க: **தோள்கொட்டுதல்.**

**தோள்படிகொள்ளுதல்** – ஒன்றைப் பற்றாகக் கொள்ளுதல்.

**தோள்மாற்றுதல்** – காண்க: **தோண்மாற்றுதல்.**

**தோள்மாறுதல்** – தோளை மாறிக்கொடுத்தல்; மனம் வேறுபடுதல்.

**தோள்வந்தி** – தோளில் அணியும் வளைவகை.

**தோள்வலி** – புசபலம்; தோள்நோவு.

**தோள்வளை** – தோளில் அணியும் அணிவகை.

**தோளணி** – தோளில் அணியப்படும் அணிகல வகை.

**தோளாமணி** – தொளையிடப்படாத இரத்தினம்.

**தோளி** – அவுரிப்பூண்டு; அரக்கு; நன்னீர் மீன் வகை.

**தோளிற்கொள்ளுதல்** – திருமணஞ் செய்துகொள்ளுதல்.

**தோளுதல்** – துளைத்தல்; தோண்டுதல்; நீக்குதல்.

**தோளோச்சல்** – தோளையெடுத்தல்; கையை உயர்த்துதல்.

**தோற்கட்டு** – முன்கைத் தோற்கவசம்.

**தோற்கடித்தல்** – தோற்றோடப்பண்ணல்.

**தோற்கருவி** – தோலாற் செய்யப்பட்ட இசைக் கருவிவகை.

**தோற்கருவியாளர்** – வாச்சியம் இசைப்போர்.

**தோற்கவசம்** – தோலால் அமைந்த சட்டை.

**தோற்காது** – காண்க: **தோற்செவி.**

**தோற்காற்பறவை** – காண்க: **தோலடிப்பறவை.**

**தோற்கிடங்கு** – தோல் பதனிடும் இடம்.

**தோற்கைத்தாளம்** – முன்கையில் அணியும் தோற் கவசம்.

**தோற்சித்தை** – எண்ணெய் வைக்க உதவும் தோலாலான பாத்திரவகை.

**தோற்செருப்பு** – செருப்புவகை.

**தோற்செவி** – புறச்செவி; புறச்செவியுடைய உயிரினங்கள்.

**தோற்பரம்** – கேடகம்; நெடுஞ்செருப்பு.

**தோற்பாடி** – வேசி; இழிஞன்.

**தோற்பாய்** – தோலால் அமைந்த தவிசு.

**தோற்பாவை** – தோலால் செய்யப்பட்ட பொம்மை; காண்க: **தோற்பாவைக்கூத்து.**

**தோற்பாவைக்கூத்து** – தோற்பாவையைக் கொண்டு ஆட்டும் கூத்து.

**தோற்பு** – தோல்வி.

**தோற்புரை** – தோலின்துளை; மேற்றோல்; சவ்வுள்ள உடலிடம்.

**தோற்பை** – தோலால் செய்யப்பட்ட பை; உடம்பு; துளையுள்ள தோல்குல்லா.

**தோற்றம்** – காட்சி; விளக்கம்; சாதி; படைப்பு; சாயை; புகழ்; பார்வை; உயர்ச்சி; உற்பத்தி; பிறப்பு; உருவம்; தன்மை; வலிமை; சொல் மாலை; உறுப்பு; உத்தேசம்; நாடகப் பிரதேசம்; எண்ணம்; மாயை; இருவகைத் திணை; காண்க: **உயிர்த்தோற்றம்.**

**தோற்றரவு** – காட்சி; உற்பத்தி; வெளிப்படல்; உயர்பிறப்பு; ஆவேசம்.

**தோற்றல்** – தோன்றுகை; வலிமை; புகழ்; தோல்வி; வீண் எண்ணம்.

**தோற்றவொடுக்கம்** – பிறப்பிறப்பு.

**தோற்றனம்** – சுணைக்கேடு.

**தோற்றாங்கொள்ளி** – அஞ்சிப் புறங்கொடுத் தோடுபவன்.

**தோற்று** – தோன்றுகை.

**தோற்றுதல்** – காண்க: **தோன்றுதல்**; தோன்றச் செய்தல்; பிறப்பித்தல்.

**தோற்றுருத்தி** – உலைத்துருத்தி; உடம்பு.

**தோற்றுவாய்** – தொடக்கம்; தொடங்குமிடம்; பாயிரம்; பின்வருவதை முன்னர்க் கூறும் குறிப்பு.

**தோற்றுவித்தல்** – தோன்றச்செய்தல்; உண்டாக் கல்; பிறப்பித்தல்.

**தோற்றுன்னர்** – சக்கிலியர்; செம்மார்.

**தோறு, தோறும்** – ஒவ்வொன்றும், ஒவ்வொரு பொழுதும் என்னும் பொருளில் வரும் ஓர் இடைச்சொல்.

**தோன்றக்கொடுத்தல்** – போதுமானபடி கொடுத் தல்.

**தோன்றல்** – தோற்றம்; தலைமை; உயர்ச்சி; விளக்கம்; தலைவன்; முல்லைநிலத் தலைவன்; தமையன்; அரசன்; மகன்; மொழிப்புணர்ச்சியில் வரும் தோன்றல் விகாரம்.

**தோன்றல்விகாரம்** – மொழிப்புணர்ச்சியில் எழுத்து, சாரியை முதலியன தோன்றுகை.

**தோன்றாத்துணை** – பிறரறியாமல் உதவுவோ னாகிய கடவுள்.

**தோன்றாவெழுவாய்** – ஒரு தொடரில் வெளிப் படச் சொல்லப்படாத எழுவாய்.

**தோன்றி** – இரத்தம்; காந்தள்; ஒரு மலை.

**தோன்றிகர்** – வணிகர்; செல்வர்.

**தோன்றுதல்** – கண்காண வெளிப்படல்; அறியப் படுதல்; பிறத்தல்; முளைத்தல்; விளங்குதல்; நிலைகொள்ளுதல்; வருதல்; சாரியை முதலியன சொற்களிடையே வருதல்; உண்டாதல்.

# தௌ

**தௌ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (த்+ஔ).

**தௌகித்திரன்** – மகளுக்கு மகன்.

**தௌகித்திரி** – மகளுக்கு மகள்.

**தௌசாரம்** – குளிர்; பனி.

**தௌத்தியம்** – தூது; துதி; ஒருத்தியைக் கூட்டி விடுகை.

**தௌதசிலம்** – பளிங்கு.

**தௌதம்** – வெள்ளி; துவைத்த ஆடை; குளியல்.

**தௌதிகம்** – முத்து.

**தௌர்ப்பல்லியம்** – வலுவின்மை.

**தௌர்ப்பாக்கியம்** – நற்பேறின்மை.

**தௌரிதகம், தௌரிதம், தௌரீதகம்** – விரைவு; குதிரைநடை.

**தௌலம்** – துலாக்கோல்.

**தௌலிகன்** – வன்னக்காரன், ஓவியன்.

**தௌலேயம்** – ஆமை.

**தௌவல்** – கேடு.

**தௌவாரிகன்** – வாயில் காப்போன்.

**தௌவுத்தல்** – கெடுதல்; தத்துதல்.

**தௌவை** – காண்க: **தவ்வை.**

**ந** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ந்+அ); சிறப்பு, மிகுதி, எதிர்மறைப் பொருள்களை உணர்த்தும் ஓர் இடைச்சொல்.

**நக்கசாரணர்** – ஆடையின்றி வாழும் நாகர்சாதியினர்.

**நக்கத்தனம்** – இவறல், கடும்பற்றுள்ளம்.

**நக்கபாரம்** – காண்க: **நக்கவாரம்.**

**நக்கம்** – காண்க: **நக்கனத்துவம்.**

**நக்கரம்** – முதலை.

**நக்கரித்தல்** – நகர்ந்துசெல்லுதல்; தவழ்தல்; படுகிடையாதல்; படுக்கையிற் புரண்டு கிடத்தல்.

**நக்கல்** – நக்கியுண்ணும் பொருள்; நக்கியுண்ணும் இளகம்; சோறு; எச்சில்; உண்ணல்; தீண்டுகை; இவறலன், உலோபி; சிரிப்பு; ஏளனம்; ஒளி; படி.

**நக்கவாலப்படுதல்** – மிக்க வறுமையடைதல்.

**நக்கவாரப்பேச்சு** – நம்பிக்கையற்ற பேச்சு.

**நக்கவாரம்** – வங்காளக்குடாக் கடலில் உள்ள ஒரு தீவு; வறுமை.

**நக்கவாரம்பிடித்தல்** – வறுமையாதல்.

**நக்கவாரி** – நக்கவாரத் தீவினர்; ரொக்க வணிகன்; நம்பிக்கையற்ற வணிகன்; குள்ளமானது; மூன்று ஆண்டுகளில் காய்க்கும் தென்னைவகை.

**நக்கன்** – அம்மணன்; அருகன்; சிவன்; தேவதாசிகளின் சிறப்புப்பெயர்; நரி.

**நக்கனத்துவம், நக்கனம்** – அம்மணம்.

**நக்கி** – நக்கி உண்பவனான ஏழை; இவறலன், உலோபி; ஆடை, திரை முதலியவற்றின் ஓரங்களில் அலங்காரமாக அமைக்கும் பின்னல்.

**நக்கிதம்** – இரண்டு.

**நக்கிரப்பலகை** – முதலை வடிவுள்ள காலால் தாங்கப்பட்ட பலகை.

**நக்கிரம்** – காண்க: **நக்கரம்**; மேல்வாயிற்படி.

**நக்கிரா** – தேட்கொடுக்கிச்செடி.

**நக்கினம்** – காண்க: **நக்கணத்துவம்**; இறந்தவர் பொருட்டுச் செய்யும் முதல் சிராத்தம்; பெண்குறி.

**நக்கினிகை** – அம்மணமாயுள்ள பெண்; பத்தாண்டுப் பருவத்தாள்.

**நக்கு** – அம்மணம்.

**நக்குணி** – ஒரு பாம்புவகை; உணவுக்குத் திண்டாடுபவன்; சிறுபிள்ளை.

**நக்குதல்** – நாவாலெடுத்துண்ணுதல்; தீண்டுதல்; அழித்தல்; சுடுதல்; வறுமைப்படுதல்.

**நக்குப்பொறுக்கி** – எச்சிற் பொறுக்கி உண்போன்.

**நகக்கண், நகக்கால்** – நகமும் விரலும் கூடும் இடம்.

**நகக்காளான்** – தரையில் எறிந்த நகத்திலிருந்து முளைப்பதாகக் கருதப்படும் காளான்வகை.

**நகக்குத்தன்** – அம்பட்டன்.

**நகக்குறி** – கலவிக்காலத்தில் மகளிர் உறுப்பில் ஆடவர் நகத்தால் பதிக்கும் அறுவகை அடையாளங்கள்.

**நகங்கிருதி** – புண்ணியம் ஏழனுள் அகங்காரம் இன்மை என்னும் குணம்.

**நகச்சுற்று** – நகக்கண்ணில் வரும் ஒரு புண்வகை.

**நகச்சூடு** – இளஞ்சூடு.

**நகடு** – உடல் வெளுக்கை.

**நகதி** – ரொக்கக்காரன்; பொன்கட்டி; நிலத்தீர்வை; கருவூலம்.

**நகநந்தினி** – இமயமலையின் மகளான பார்வதி.

**நகநோக்கி** – வேலிப்பருத்திக்கொடி.

**நகப்புண்** – நகங்கீறுவதால் உண்டாகும் புண்.

**நகம்** – மலை; பூமி; மரம்; நாகணம் என்னும் மணப்பொருள்; உகிர்; பறவைநகம்; விரல் உறை; அடிக்குளம்பு; பங்கு.

**நகம்வெட்டி** – நகம் வெட்டும் கருவி.

**நகமுகம்** – வில்.

**நகர்** – நகரம்; மாளிகை; அரண்மனை; கோயில்; சடங்குசெய்யும் இடம்; விழாக்கள் நிகழும் மண்டபம்; மனைவி.

**நகர்** (வி) – அசை; பெயர்.

**நகர்த்துதல்** – இடம்விட்டுப் பெயர்த்தல்; சிறிது தள்ளுதல்; காலம்கடத்தல்; சிறுகச்சிறுக கவர்தல்; நன்றாகப் புடைத்தல்; செவ்வையாய்ச் செய்தல்.

**நகர்தல்** – ஊர்தல்; தவழ்தல்; மறைவாய்ப் போதல்.

**நகரப்பதி** – தலைநகர்.

**நகரப்பதிவாழ்நர்** – தலைநகரில் வாழ்வோர்; நாகரிகமுள்ளோர்.

**நகர்ப்புறம்** – புறநகர்.

**நகர்படுதிரவியம்** – நகரத்தில் உண்டாகும் பொருள்களான கண்ணாடி, பித்தன், கருங்குரங்கு, யானை, அரசன் என்பவை.

**நகரசம்** – யானை.

**நகரத்தார்** – நகரவாழ்நர்; நாட்டுக்கோட்டைச் செட்டிமார்.

**நகரம்** – பேரூர்; அரண்மனை; கோயில்; வாழுமிடம்; பறவை உகிர்; உகிர்.

**நகரமாந்தர்** – அரசர்க்குரிய எண்பெருந் துணைவருள் தலைமைபெற்ற நகர்வாழ்நர்.

**நகரவிரம்** – மயில்.

**நகரா** – பெருமுரசுவகை.

**நகராமுசி** – ஈரல்.

**நகரி** – நகரம்; அரசுக்குரிய புறம்போக்கு; வறட்சுண்டிச்செடி.

**நகரிபகம்** – காகம்.
**நகருடம்** – மூக்கு.
**நகரை** – பேய்நவரைமரம்; ஓர் அரிசிவகை; ஒரு மரவகை.
**நகல்** – சிரிக்கை; மகிழ்ச்சி; நட்பு; ஏளனம்; படி.
**நகவிலோகம்** – நகக்கோடு.
**நகழ்தல்** – நகர்ந்துசெல்லுதல்.
**நகழ்வு** – துன்பம்; ஆசனவகை.
**நகளுதல்** – காண்க: **நகழ்தல்**; நசுக்குண்ணுதல்.
**நகாஅர்** – சிரிப்பில் தோன்றுவதான பல்.
**நகாஅல்** – சிரிப்பு.
**நகாசு** – நெற்றி; காண்க: **நகாசுவேலை.**
**நகாசுவேலை** – நகைகளில் செய்யப்படும் அலங்காரவேலை.
**நகாயுதம்** – நகத்தை ஆயுதமாகக் கொள்ளுவதான சிங்கம்; புலி; பூனை.
**நகாரி** – இந்திரன்.
**நகில், நகிலம்** – முலை.
**நகுடம்** – மூக்கு.
**நகுத்தம்** – புன்கமரம்; காட்டுப்பச்சிலைவகை.
**நகுதல்** – சிரித்தல்; மகிழ்தல்; மலர்தல்; கட்டவிழ்தல்; ஒளிவிடுதல்; புள்ளிசைத்தல்; அவமதித்தல்; தாழ்த்துதல்.
**நகுதா** – மாலுமி; காக்காய்ச்சரிகைநூல்.
**நகுநயமறைத்தல்** – களவுக் கூட்டத்தின்முன் தலைவி நாணத்தால் உள்ளடங்கிய தன் மகிழ்ச்சியைத் தலைவற்குப் புலனாகாதவாறு மறைக்கை.
**நகுநலம்** – கீரிப்பிள்ளை.
**நகுலன்** – பரிமாவுகைப்போன்; சிவன்; அறிஞன்; புதல்வன்; பஞ்சபாண்டவருள் ஒருவன்.
**நகேசன்** – மலைகட்குத் தலைவனான இமயமலை.
**நகேசனங்கை** – இமயமலையின் பெண்ணான பார்வதி.
**நகை** – சிரிப்பு; மகிழ்ச்சி; இன்பம்; மதிப்பு; இனிப்பு; இகழ்ச்சி; நட்பு; நயச்சொல்; விளையாட்டு; மலர்; பூவின்மலர்ச்சி; பல்; பல்லீறு; முத்து; முத்துமாலை; அணிகலன்; ஒப்பு.
**நகை** (வி) – சிரி; பழி.
**நகைகொட்டுதல்** – மிகச் சிரித்தல்.
**நகைச்சொல்** – வேடிக்கைப்பேச்சு; இகழ்மொழி.
**நகைத்தல்** – சிரித்தல்; நிந்தித்தல்.
**நகைத்திறச்சுவை** – விதூடகக் கூத்து.
**நகைநட்டு, நகைநாணயம்** – நகை முதலிய பொருள்கள்.
**நகைப்பு** – சிரிப்பு; ஏளனம்.
**நகைப்புலவாணர்** – நட்புக்குரியரானவர்.
**நகைமுகம்** – சிரித்த முகம்; உடன்பட்டமை தோற்றும் முகப்பொலிவு.
**நகையாடுதல்** – சிரித்தல்; எள்ளுதல்.
**நகையால்** – பகன்றைச்செடி.
**நகைவர்** – நட்பினர்.
**நகைவேழம்பர்** – விகடஞ்செய்வோர்.
**நங்கணவாய்ச்சி** – ஒரு பறவைவகை.
**நங்கள்** – நாங்கள் என்பது வேற்றுமையுருபை ஏற்கும்போது அடையும் உருவம்.
**நங்கனை** – அரைப்பட்டிகையின் உறுப்பு.
**நங்கு** – ஏளனம், பரிகாசம்.
**நங்குகாட்டுதல், நங்குதல்** – எள்ளிநகையாடுதல்.
**நங்குரம்** – காண்க: **நங்கூரம்.**
**நங்கூரந்தூக்குதல்** – நங்கூரத்தைக் கடலிலிருந்து மேலேயெடுத்தல்; கப்பல் புறப்படுதல்.
**நங்கூரம்** – கப்பலை நிறுத்திவைக்கும் கருவி.
**நங்கை** – பெண்ணிற் சிறந்தவள்; மருமகள்.
**நங்கைநாச்சி** – தலைவி.
**நச்சறுப்பாய்ஞ்சான், நச்சறுப்பான்** – காண்க: **நஞ்சறப்பாய்ஞ்சான்.**
**நச்சறை** – நஞ்சுக்கிருப்பிடம்.
**நச்சி** – வீண்வார்த்தை பேசித் துன்புறுத்துபவள்.
**நச்சினி** – கேழ்வரகு; நாலாமாதம் என்று பொருள்கொண்ட மருத்துவக் குழூஉக்குறி.
**நச்சு** – ஆசை; விரும்பப்படும் பொருள்; தொந்தரவு; அலப்பல்; தாமதம்; சிறிய.
**நச்சுக்கண்** – கொடும்பார்வை.
**நச்சுக்கத்தி** – நஞ்சூட்டிய கத்தி; மிகக் கெட்டவர்.
**நச்சுக்குழல்** – தொலைநோக்கி; காண்க: **சுங்குத்தான்குழல்.**
**நச்சுக்கொடி** – காண்க: **நஞ்சுக்கொடி.**
**நச்சுச்சொல்** – செய்யுளில் வழங்கக்கூடாத தீச்சொல்; கொடுஞ்சொல்.
**நச்சுதல்** – விரும்புதல்; அலப்புதல்; தொந்தரவு செய்தல்.
**நச்சுநச்செனல்** – தொந்தரவுசெய்தற் குறிப்பு; அடுத்தடுத்துப் பல்லி சொல்லுதற் குறிப்பு; ஓசையிடுதற் குறிப்பு.
**நச்சுப்படைக்கலம்** – நஞ்சு தோய்க்கப்பட்ட ஆயுதம்.
**நச்சுப்பல்** – பாம்பின் நச்சுப்பல்; தீப்பயன் விளைக்கும் பல்.
**நச்சுப்பார்வை** – மோகப்பார்வை; கோபப் பார்வை; கண்ணூறு.
**நச்சுப்பால்** – கள்ளிப்பால்; சீம்பால்; குழந்தைகளின் உடம்பிற்கு ஏலாத பால்.
**நச்சுப்பிச்சு** – ஓயாத் தொந்தரவு; அலப்புகை.
**நச்சுப்புல்** – உண்டார்க்கு நோய் விளைக்கும் புல்.

**நச்சுப்பொய்கை** – நச்சுநீர் நிறைந்த நீர்நிலை.
**நச்சுமரம்** – எட்டி முதலிய நஞ்சுள்ள மரம்.
**நச்சுமழை** – விடாத சிறு தூறல்; காலம் தப்பிப் பெய்து கேடு விளைக்கும் மழை.
**நச்சுவாக்கு** – தீச்சொல்.
**நச்சுவாய்** – கேடு விளைக்கும் வாய்.
**நச்சுவாயன்** – ஓயாமற் பிதற்றுபவன்.
**நச்சுவிறகு** – கள்ளி, எருக்கு முதலிய நஞ்சுச் சாரமுள்ள விறகுகள்.
**நச்சுவேலை** – தொந்தரவை உண்டாக்கும் வேலை; எளிதில் செய்யலாகாத சிக்கலான பணி.
**நச்செலி** – சுண்டெலி; மூஞ்சூறு; நஞ்சுள்ள எலி வகை.
**நச்செழுத்து** – நூலின் முதற் செய்யுளில் முதலெழுத்தாக அமைக்கத்தகாத எழுத்துகள்.
**நசல்** – நோய்.
**நசலாளி, நசற்காரன்** – நோயாளி.
**நசனை** – மாணிக்கக் குற்றத்துள் ஒன்று.
**நசாரி** – எட்டிமரம்.
**நசித்தல்** – அழிதல்; குறைதல்; சாதல்; அழித்தல்; அரைத்தல்; கசக்குதல்; அடக்கிப் பேசுதல்; எளிதாக்குதல்.
**நசிதல்** – அழிதல்; நசுங்குதல்; குறைதல்; அடக்கிப் பேசப்படுதல்; நிலைமை சுருங்குதல்; திரைதல்.
**நசிந்துகொடுத்தல்** – பழுத்து மெதுவாயிருத்தல்; இணங்குதல்.
**நசிப்பு** – அழிவு.
**நசியம்** – மூக்கிலிடும் மருந்து; மூக்குப்பொடி.
**நசியல்** – நெரிந்தது; தட்டையானது; வளைந்து கொடுப்பது.
**நசியலன்** – கழப்புணி.
**நசிவு** – நெரிவு; நிந்தை; கேடு.
**நசிவுகாணுதல்** – நைந்து சேதப்படுதல்; மனம் வேறுபடுதல்; நிலையற்றிருத்தல்.
**நசிவுகாயம்** – ஊமைக்காயம்.
**நசிறாண்டி, நசிறாணி** – தொந்தரவு செய்வோன்; ஒன்றுங்கொடாதவன், இவறலன்.
**நசினை** – காண்க: நசனை.
**நசுக்கான்** – சிறியது.
**நசுக்கு** – நெரிவு; சிறியது.
**நசுக்குணி** – சிறியது; கூழையன்; பின்னிடுவோன்; தொந்தரவுசெய்வோன்.
**நசுக்குதல்** – நசுங்கச்செய்தல்; கழப்பிப் பேசுதல்; தடுத்தல்; கீழ்ப்படுத்துதல்; அடித்தல்.
**நசுக்குநசுக்கெனல்** – ஒட்டுதற்குறிப்பு; தொந்தரவு செய்தற் குறிப்பு.
**நசுகுணி** – சிறியது; கூழையன்.
**நசுங்கச்சப்பி** – உலோபி, கருமி, இவறலன்.
**நசுங்கடித்தல்** – பலங்கெடுத்தல், நொறுக்கல்.
**நசுங்கல்** – மெலிந்தது; நைந்த காயம்; இவறலன், உலோபி; உறுதியற்றவன்.
**நசுங்கல(லா)ன்** – உறுதியற்றவன், காண்க: நசுக்குணி.
**நசுங்குதல்** – நசுக்கப்படுதல்; பிதுங்குதல்; கசங்குதல்; செயல் கெடுதல்; நழுவிவிடுதல்; நிலைகுலைதல்.
**நசுநசுத்தல்** – தடுமாறுதல்; விடாது தூறிக் கொண்டிருத்தல்; ஈரமாயிருத்தல்; தொடக்குழைதல்; தாராளமின்றியிருத்தல்; தொந்தரவு செய்தல்.
**நசுநசெனல், நசுபிசெனல்** – மழை தூறற்குறிப்பு; ஈரக் குறிப்பு; தொந்தரவு செய்தற் குறிப்பு; வளைந்து கொடுத்தற் குறிப்பு; மனம் சஞ்சலப்படுதற் குறிப்பு.
**நசுவல்** – இவறலன், உலோபி; முயற்சியற்றவர்; மெலிந்தது; குழப்பமானது; மலம்; மெலிந்தவர்; தொந்தரவு செய்வோன்.
**நசை** – ஆசை; அன்பு; நம்பிக்கை; எள்ளல்; குற்றம்; ஈரம்.
**நசைகுநர்** – காண்க: நசையுநர்.
**நசைதல்** – விரும்புதல்; அன்புசெய்தல்.
**நசைநர், நசையுநர்** – நண்பர்.
**நசையுரை** – காதற்பேச்சு.
**நசைவினை** – நற்செயல்.
**நசைவு** – தரையில் உண்டாகும் ஈரம்.
**நஞ்சபாதம்** – குதிரைக் குற்றங்களுள் ஒன்று.
**நஞ்சம்** – நஞ்சு.
**நஞ்சறப்பாய்ஞ்சான், நஞ்சறுப்பான்** – காண்க: கொடிப்பாலை; படுவங்கீரை.
**நஞ்சன்** – தீயவன்.
**நஞ்சி** – குன்றிமணி.
**நஞ்சீடு** – நஞ்சு இடப்படுகை.
**நஞ்சு** – விடம்; தீயது; குழந்தை பிறந்தபின் வெளிப்படும் தசை முதலியன.
**நஞ்சுக்கொடி** – கொப்பூழ்க்கொடி; குழந்தை பிறந்தபின் வெளிப்படும் தசை முதலியன.
**நஞ்சுச்சுரம்** – மகப்பேற்றுக் காய்ச்சல்.
**நஞ்சுண்டம்** – மரவகை.
**நஞ்சுண்டான்** – நஞ்சுண்ட சிவபிரான்.
**நஞ்சுண்டை** – மரவகை.
**நஞ்சுண்டோன்** – சிவபிரான்; கள்ளர் பட்டப் பெயர்.

**நஞ்சுபாய்ச்சுதல்** – வஞ்சகஞ் செய்தல்; ஆயுதம் முதலியவற்றுக்கு நஞ்சு ஏற்றுதல்.
**நஞ்சுபிடித்தம்** – நஞ்சுக்கொடி தங்குதலால் உண்டாகும் நோய்.
**நஞ்சுமுறிச்சான்** – காண்க: நஞ்சறப்பாய்ஞ்சான்.
**நஞ்சுவிழியரவு** – திட்டிவிடம்.
**நஞ்சுறுதல்** – மனம் உருகுதல்.
**நஞ்சூட்டுதல்** – ஆயுதம் முதலியவற்றிற்கு விடமேற்றுதல்; நஞ்சைக் கலந்து கொடுத்தல்.
**நஞ்செடுத்தல்** – நஞ்சு முறித்தல்.
**நஞ்சை** – நன்செய்.
**நட்சத்திரகண்டகி** – காண்க: **அன்னாசி**.
**நட்சத்திரச்சக்கரம்** – விண்மீன் வட்டம்; சந்திர மண்டலத்திற்குரிய நட்சத்திரங்கள்; கலப்பைச் சக்கரம் முதலியனபோலச் சோதிடங் கணித்தகுரிய சக்கரவகை.
**நட்சத்திரச்சீரகம்** – பெருஞ்சீரகம்.
**நட்சத்திரதீபம்** – ஒரு விளக்குவகை.
**நட்சத்திரநேமி** – சந்திரன்; திருமால்; துருவ மீன்.
**நட்சத்திரப்பொருத்தம்** – பத்துவகைக் கலியாணப் பொருத்தங்களுள் மணமக்களின் நட்சத்திரப் பொருத்தம்.
**நட்சத்திரம்** – அசுவினி முதலாக இரேவதி இறுதியாகவுள்ள இருபத்தேழு நாள்மீன்; வானமண்டலத்தில் தோன்றும் மீன்; சந்திரன் நாண்மீனில் தங்கிச்செல்லும் காலம்.
**நட்சத்திரமண்டலம்** – விண்மீன் வட்டம்.
**நட்சத்திரமாதம்** – அசுவினி முதல் இருபத்தேழு விண்மீன்களைக்கொண்டு கணக்கிடும் மாதம்.
**நட்சத்திரமாலை** – விண்மீன் கூட்டம்; விண்மீன்கள் செறிந்து தோன்றும் பால்வீதி மண்டலம்; சந்திரனுக்குரித்தான இருபத்தேழு விண்மீன்கள்; இருபத்தேழு பாடல்கொண்ட பிரபந்தவகை; ஒரு சோதிட நூல்.
**நட்சத்திரவீதி** – சந்திரன் திரியும் வானவழி; விண்மீன்கள் செறிந்து தோன்றும் பால்வீதி மண்டலம்.
**நட்சத்திரேசன்** – சந்திரன்.
**நட்டசந்திரன்** – ஆவணி மாதத்து வளர்பிறைச் சதுர்த்திப் பிறை.
**நட்டணை** – கூத்து; கோமாளிக்கூத்து; கொடுமை; நடிப்பு; கணவன் மனைவி போன்றவருள் ஒற்றுமையின்மை; யோசனையின்மை; பொறுமையின்மை.
**நட்டணைக்காரன்** – செருக்குக் கொண்டவன்.
**நட்டதுட்டி** – வருவாய்க் குறைவு.
**நட்டநடு** – நடுமையம்.
**நட்டநடுநாள்** – உச்சிக்காலம்; உரியகாலம்.
**நட்டநடுப்பெற** – நடுமத்தியில்; மரியாதையின்றி; உலகப்பழியைக் கவனியாது.
**நட்டபாடை** – குறிஞ்சிப் பண்வகை.
**நட்டம்** – நடனம்; பிரத்தியயம் ஆறனுள் ஒன்று; இழப்பு; நேர்நிலை; கோவணம் மட்டும் கட்டிக்கொண்டு ஆடையின்றி இருக்கை; இழந்த பொருளைப்பற்றி நிமித்தத்தால் அறியும் கலை.
**நட்டமாய்நிற்றல்** – அடங்காதிருத்தல்.
**நட்டராகம்** – காண்க: **நட்டபாடை**.
**நட்டவம்** – காண்க: **நட்டுவம்**.
**நட்டவர்** – நண்பர்.
**நட்டழிவு** – நடவுச்சேதம்.
**நட்டாத்திசூத்திரம்** – கொள்ளைப்பொருள்.
**நட்டாமுட்டி** – நடுத்தரமானது; வஞ்சகம்; கீழ்மை; ஒரு நூல்.
**நட்டாமுட்டிவேலை** – சில்லறை வேலை.
**நட்டார்** – நண்பர்; உறவினர்.
**நட்டாற்றில்விடுதல்** – கேட்டில் கைவிட்டுப் போதல்; ஆற்றின் நடுவில் விடுதல்.
**நட்டி** – இழப்பு.
**நட்டியுங்குட்டியும்** – சிறியதும் குறியதும், சின்னஞ் சிறிது.
**நட்டு** – உப்புக் கொட்டிவைக்கும் மேடை; நாட்டியம்; காண்க: **நட்டுவன்**; நாட்டியக் காரன்; கீழ்மை; சரிநடு; நட்டம்.
**நட்டுக்கதை** – கட்டுக்கதை; நிந்தைமொழி.
**நட்டுச்சினை** – நண்டுமுட்டை.
**நட்டுமுட்டு** – ஆடல்பாடல்; மத்தளக்காரனும் தாளக்காரனும்; நடனத்துக்குரிய கருவிகள்.
**நட்டுமுட்டுக்காரர்** – நட்டுவ மேளக்காரர்.
**நட்டுவம்** – நாட்டியம் பழக்கி ஆட்டுவிக்குந் தொழில்.
**நட்டுவன்** – நாட்டியம் பயிற்றும் ஆசிரியன்.
**நட்டுவாக்காலி, நட்டுவாய்க்காலி** – கவ்விக்கொட்டும் தன்மையுள்ள ஒரு சிற்றுயிரிவகை.
**நட்டுவிழல், நட்டுவிழுதல்** – தலைகீழாய் விழுதல்; மெய்க்குற்றம் ஐந்தனுள் தலைசாய்கை; செருக்குறுதல்.
**நட்டுவைத்தல்** – மரக்கன்று முதலியவற்றை நடுதல்; குடும்பம் முதலியவற்றை நிலைநிறுத்தல்.
**நட்டுவைத்தவன்** – ஆதரித்தவன்.
**நட்டோடு** – நண்டின் மேலோடு.
**நட்டோர்** – காண்க: **நட்டார்**.
**நட்பாடல்** – நட்புச்செய்தல்.
**நட்பாராய்தல்** – நட்புக்குரியாரை ஆராயுந்திறம்.
**நட்பாளர்** – உற்ற நண்பினர்; அரசர் உறுதிச் சுற்றத்துள் நம்பிக்கைக்குரிய நண்பர்.

**நட்பு** – சிநேகம்; உறவு; சுற்றம்; நண்பன்; யாழின் நாலாம் நரம்பு; காதல்; அரசாங்கம் ஆறனுள் ஒன்றாகிய நட்பரசர்; கையூட்டு; மாற்றரசரோடு நட்புச்செய்கை.

**நட்புக்காட்டுதல்** – சிநேகபாவங் காட்டுதல்; குழந்தைகட்குத் தின்பண்டம் உதவுதல்; இலஞ்சம் கொடுத்தல்.

**நட்புவைத்தல்** – சிநேகஞ்செய்தல்.

**நடக்குமிடம்** – செல்வாக்குள்ள இடம்.

**நடக்கை** – ஒழுக்கம்; செல்கை; வழக்கு.

**நடத்தல்** – நடந்துசெல்லுதல்; ஒழுகுதல்; பரவுதல்; நிகழ்தல்; நிகராதல்; நிறைவேறுதல்.

**நடத்துதல்** – நடக்கச்செய்தல்; அழைத்துப் போதல்; செயல்புரிதல்; கற்பித்தல்; செலுத்துதல்; அரைத்தல்.

**நடத்தை** – காண்க: நடக்கை; செல்வாக்கு; இயல்பு.

**நடத்தைக்காரன்** – செல்வாக்குள்ளவன்.

**நடத்தைக்காரி, நடத்தைகெட்டவள்** – விலைமகள்.

**நடத்தைப்பிழை** – ஒழுக்கத்தவறு.

**நடந்தசெய்தி** – உண்மைநிகழ்ச்சி.

**நடந்துகொள்ளுதல்** – மேலோரிடத்து ஒழுகுதல்.

**நடந்துவருதல்** – நிகழ்தல்.

**நடந்தேறுதல்** – நிறைவேறுதல்.

**நடப்பன** – காலால் நடந்துசெல்லும் உயிர் வகை.

**நடப்பிப்பு** – சிக்கனம்; மேற்பார்வை.

**நடப்பு** – நடத்தை; போக்குவரவு; தீய காமத் தொடர்பு; கருமாந்தரத்துக்கு முதல் நாளில் கல்நடுஞ் சடங்கு; செல்லுதற்குரிய இடம்; தற்காலம்; தாலிவாங்குகை.

**நடப்புக்காரன்** – காண்க: நடத்தைக்காரன்; வாடிக்கைக்காரன்; கள்ளக்கணவன்.

**நடப்புவட்டி** – நடைமுறை வட்டி.

**நடப்புவிலை** – தற்கால விலை.

**நடபடி** – நடத்தை; செயல்; நிகழ்ச்சி; வழக்கம்; ஒழுக்கம்.

**நடபாவி** – படியுள்ள கிணறு.

**நடம்** – கூத்து.

**நடம்பயிலுதல்** – காண்க: நடமாடுதல்.

**நடமண்டனம்** – அரிதாரம்.

**நடமாட்டம்** – நடக்கை; வலிமை; செல்வாக்கு; பழக்கம்; கூடுமிடம்; நடனம்.

**நடமாடுதல்** – நடத்தல், உலாவுதல்; திரிதல்; ஊடாடுதல்; வழங்குதல்; கூத்தாடுதல்; பரவியிருத்தல்; துன்பம் முதலியவற்றால் அடைபட்டிருந்து வெளிவருதல்.

**நடமாளிகை, நடமாளிகைமண்டபம்** – கோயிற் பிராகாரம்.

**நடராசன்** – சிவபெருமானின் பல மூர்த்தங்களுள் ஒன்றான நடனமாடும் உருவம்.

**நடல்** – ஊன்றுகை.

**நடலம்** – செருக்கு; அதிநாகரிகங் காட்டுகை; பாசாங்கு; வீண்செலவிடுகை; இகழ்ச்சி.

**நடலம்பண்ணுதல்** – அதிநாகரிகம் காட்டுதல்.

**நடலமடித்தல்** – பாசாங்கு செய்தல்.

**நடலை** – வஞ்சனை; துன்பம்; பொய்ம்மை; பாசாங்கு; அசைவு.

**நடவடி, நடவடிக்கை** – நடத்தை; செயல்.

**நடவு** – நாற்று நடுகை; நட்ட பயிர்; நடவுக் கணக்கு.

**நடவுகம்பு** – தளிர்த்துவரும் பொருட்டு நடப்படும் கம்பு.

**நடவுகாரிகள்** – நாற்று நடும் வேலைக்காரிகள்.

**நடவுகொத்து** – வயல் நடுகைக்காகக் கொடுக்கப்படும் கூலி.

**நடவுசெய்தல்** – அரசாளுதல்; நாற்று நடுதல்.

**நடவுதல்** – செலுத்துதல்; செயல் நடத்துதல்.

**நடவுப்பயிர்** – முதலில் நட்ட பயிர்.

**நடவுபோடுதல்** – நாற்று நடுதல்.

**நடவை** – வழி; கடவைமரம்; வழங்குமிடம்; உபாயம்; காண்க: நடவு; தணக்கமரம்.

**நடன்** – கூத்தன்.

**நடனசாலை** – கூத்துப் பயிலிடம்.

**நடனம்** – கூத்து; பாசாங்கு; குதிரை நடை; இந்திரசாலம்.

**நடனர்** – கூத்தர்.

**நடனியர்** – கூத்தியர்.

**நடாத்துதல்** – காண்க: நடத்துதல்.

**நடாவுதல்** – காண்க: நடவுதல்.

**நடி** – நாட்டியப்பெண்; ஆட்டம்.

**நடித்தல்** – கூத்தாடுதல்; பாசாங்குசெய்தல்; கோலங்கொள்ளுதல்.

**நடிப்பு** – கூத்து; பாவனைகாட்டல்.

**நடு** – இடை; மையம்; வானத்தின் உச்சி; நடுவு நிலை; இடுப்பு; நீதி; மிதம்; வழக்கு; பூமி; இடைப்பட்டது; அந்தரியாமியான கடவுள்.

**நடுக்கட்டு** – அரைக்கச்சை; பெரிய வீட்டின் நடுவிலுள்ள பகுதி.

**நடுக்கண்டம்** – மத்தியத்துண்டு; மத்தியப்பகுதி.

**நடுக்கம்** – நடுங்குகை; மிக்க அச்சம்; துன்பம்; கிறுகிறுப்பு.

**நடுக்கல்** – நடுங்கல்; காண்க: நடுக்கல்வாதம்.

**நடுக்கல்வாதம்** – உதறுவாதம்.

**நடுக்கற்சுரம்** – குளிர்காய்ச்சல்.

**நடுக்கு** – காண்க: நடுக்கம்; மனச்சோர்வு.

**நடுக்குடி** – நடுநிலைமையிலுள்ள குடும்பம்; ஓர் இனத்தின் தலைமைக் குடி; நடுவூர்க் குடி.

**நடுக்குதல்** – காண்க: **நடுக்குறுத்தல்**; மயங்கச் செய்தல்; நடுங்குதல்.
**நடுக்குவாதம்** – காண்க: **நடுக்கல்வாதம்.**
**நடுக்குறுத்தல்** – நடுங்கச்செய்தல்.
**நடுக்கேட்டல்** – வழக்கு விசாரித்தல்; நியாயமாகத் தீர்ப்புச் சொல்ல வேண்டுதல்.
**நடுகல்** – போரில் இறந்துபட்ட வீரனைத் தெய்வமாக நிறுத்தும் கல்.
**நடுகூலி** – நாற்று நட்ட கூலி.
**நடுகை** – நாற்று நடவு.
**நடுங்க** – ஓர் உவம உருபு.
**நடுங்கநாட்டம்** – தோழி தலைவி நடுங்குமாறு பேசும் ஒரு துறை.
**நடுங்கல்** – அச்சம்.
**நடுங்கலன்** – நடுக்கல்வாதக்காரன்.
**நடுங்குதல்** – அசைதல்; அஞ்சுதல்; மனங்குறைதல்; பதறுதல்; நாத் தடுமாறுதல்; தலையசைத்தல்; ஒப்பாதல்; அதிர்தல்.
**நடுச்சாமம்** – நள்ளிரவு; மூன்றாம் சாமம்.
**நடுச்செய்தல்** – நியாயம் சொல்லுதல்.
**நடுச்சொல்லுதல்** – தீர்மானஞ்செய்தல்; காண்க: **நடுச்செய்தல்**; சான்று கூறுதல்.
**நடுச்சொல்வார்** – சான்று கூறுவோர்.
**நடுத்தரம்** – மத்தியநிலை.
**நடுத்தலை** – உச்சந்தலை; மத்தியமான இடம்.
**நடுத்திட்டம்** – நடுவுநிலைமை.
**நடுத்தீர்ப்பு** – நியாயத் தீர்மானம்; தெய்வத் தீர்ப்பு; கர்த்தருடைய கடைசித் தீர்ப்பு.
**நடுத்துஞ்சல்** – காண்க: **அவமிருத்து.**
**நடுத்தெரு** – ஊரின் மத்தியிலுள்ள வீதி; தெருவின் மத்தி.
**நடுத்தெருவில்விடுதல்** – ஆதரவின்றிக் கைவிட்டுப் போதல்.
**நடுதல்** – ஊன்றுதல்; வைத்தல்; நிலைநிறுத்துதல்.
**நடுதறி** – நட்ட கம்பம்; கன்றாப்பூரில் உள்ள சிவபிரான்.
**நடுநடுங்குதல்** – பயத்தால் மிகக் கலங்குதல்; குரல் இசைக்கேடாகக் கம்பித்தல்.
**நடுநாடி** – காண்க: **சுழுமுனை.**
**நடுநாயகம்** – அணிகலன் மத்தியில் பதிக்கும் மணி; சிறந்தவன்.
**நடுநாள்** – நண்பகல்; இடையாமம்; சித்திரை நாள்.
**நடுநிலை** – நீதி; மத்தியநிலைமை, நியாயம்; சைவத்திற்கு யோக பூசைவகை.
**நடுநிலைஞாயம்** – மத்தியத்தம்.
**நடுநிலைமை** – மத்தியநிலைமை; நியாயம்; காண்க: **நடுநிலைஞாயம்.**
**நடுநிற்றல்** – பிணைபடுகை.
**நடுநெஞ்சு** – நடுமத்தியம்.
**நடுப்பகல்** – மத்தியானம், உச்சிவேளை, உருமம்.
**நடுப்பாதை** – நடைவழியின் நடுவிலுள்ள பகுதி.
**நடுப்பார்** – மத்தி.
**நடுப்பார்த்தல்** – மத்தியத்தம் பார்த்தல்.
**நடுப்புற, நடுப்பெற** – மத்தியில்.
**நடுப்பேசுதல்** – ஒருவருடைய வழக்கை எடுத்துப் பேசுதல்.
**நடுமத்தி** – காண்க: **நடுமையம்.**
**நடுமத்தியானம்** – உச்சிக்காலம், உருமம்.
**நடுமையம்** – நடுமத்தி; உச்சி.
**நடுராசி** – நடுத்தரம்.
**நடுவண்** – இடையில்.
**நடுவத்தசாமம்** – நள்ளிரவு.
**நடுவயது** – இளமைக்கும் மூப்புக்கும் இடைப்பட்ட பருவம்.
**நடுவர்** – நீதிபதி.
**நடுவழி** – பயணத்தின் மத்தி; நடைவழியின் நடுவிலுள்ள பகுதி.
**நடுவறுத்தல்** – சீர்தூக்கிப் பார்த்தல்; வழக்குந் தீர்த்தல்.
**நடுவறுத்தான்** – மூக்கிரட்டைக்கொடி.
**நடுவன்** – காண்க: **நடுவர்**; நமன்; நடுநிலைமையோன்.
**நடுவனாள்** – பரணி.
**நடுவாந்தரம்** – உதவியற்ற நிலை; செயலினிடையில்; எதிர்பாராதபடி; மத்தியப்பகுதி.
**நடுவிரல்** – ஐவிரல்களுள் இடையிலுள்ள விரல்.
**நடுவிலவன், நடுவிலான்** – புதல்வர்களுள் நடுவுள்ளவன்.
**நடுவின்மை** – நீதிக்கேடு.
**நடுவீடு** – பூசைக்குரிய உள்வீடு; சாப்பாட்டு அறை.
**நடுவு** – இடை; நடுவுநிலைமை; மாதரிடுப்பு; நீதி.
**நடுவுநிலை** – ஒருபக்கம் சாராமை; சாந்தம் என்னும் சுவை.
**நடுவுநிலைத்திணை** – பாலைத்திணை.
**நடுவுநிலைமை** – காண்க: **நடுநிலை**; செம்மை; நிதானம்.
**நடுவுபாடு** – மத்தியப்பகுதி.
**நடுவுள்ளவன்** – இடையிலுள்ளவன்; புதல்வர்களுள் மத்தியில் உள்ளவன்.
**நடுவூர்** – ஊரின் நடுவிடம்.
**நடுவெலும்பு** – முதுகெலும்பு.
**நடுவெழுத்து** – பத்திரம் எழுதுபவன்; பத்திரப் பதிவு அலுவலன்.
**நடுவெளி** – இடைவெளி; பரந்தவெளி.
**நடுவே** – இடையில்.

**நடேசன்** – காண்க: **நடராசன்.**

**நடை** – காலாற் செல்லுகை; பயணம்; அடி வைக்குங் கதி; வாசல்; இடைகழி; ஒழுக்கம்; வழக்கம்; நீண்டநாள்; நடைகூடம்; இயல்பு; அடி; கூத்து; தொழில்; செல்வம்; ஒழுக்க நூல்; நித்தியபூசை; கோயில்; கோள் முதலிய வற்றின் கதி; கப்பல் ஏறும் வழி; மொழியின் போக்கு; வாசிப்பின் நோட்டம்; தடவை.

**நடைக்காவணம்** – காண்க: **நடைப்பந்தல்.**

**நடைக்குநடை** – ஒவ்வொரு தடவையும்.

**நடைக்கூடம்** – வாயிலிடம்; மாளிகையின் முகப்புக்கூடம்; நடந்துசெல்லும் கூடமான உடம்பு.

**நடைகாவற்காரன்** – கோயில் முதலியவற்றின் வாயில்களின் காவலாய் நிற்பவன்.

**நடைகிணறு** – இறங்க ஏற உதவும் படிகள் கொண்ட கிணறு.

**நடைகூடம்** – காண்க: **நடைக்கூடம்.**

**நடைகூலி** – நடந்து செல்வதற்குரிய கூலி.

**நடைச்சலங்கு** – சிறுபடகு.

**நடைசாரி** – குதிரையின் மந்தநடை; உலாவுகை; இடையறாத நடை.

**நடைத்திண்ணை** – இடைகழித் திண்ணை.

**நடைத்தேர்** – சிறுதேர்.

**நடைநீர்** – ஓட்டமுள்ள தண்ணீர்.

**நடைப்பட(டா)ம்** – நடத்தற்பொருட்டு வழியில் விரிக்கும் ஆடை.

**நடைப்பந்தல்** – விழாக்காலத்தில் நடந்து செல்வ தற்கு அமைக்கும் பந்தல்; புறப்பாட்டில் சுவாமியுடன் செல்லுமாறு அமையும் பூப் பந்தல்.

**நடைப்பரிகாரம்** – வாழ்க்கைக்கு வேண்டிய பண்டங்கள்; பயணத்திற்கு வேண்டிய பொருள்கள்; பத்தியமில்லாத மருந்து.

**நடைப்பிணம்** – பயனற்றவன்; நடக்கும் பிணம்.

**நடைப்பெருவாயில்** – கோயிலின் தலைவாசல்.

**நடைப்பொன்** – நடப்புச் செலவுக்குத் தேவை யான பணம்.

**நடைபடம்** – காண்க: **நடைபாவாடை.**

**நடைபடி** – நடத்தை; வழக்கம்; நீதிமன்ற நட வடிக்கை.

**நடைபரிதல்** – விரைந்து நடத்தல்.

**நடைபழகுதல்** – நடக்கக் கற்றல்; தாமதமாய் நடத்தல்.

**நடைபாதை** – நடக்கும் பாதை.

**நடைபாவாடை** – நடத்தற்பொருட்டு வழியில் விரிக்கும் ஆடை.

**நடைபாவி** – படிக்கிணறு; படிக்கட்டு.

**நடைமலை** – நடக்கும் மலையாகிய யானை.

**நடைமனை** – நடக்கும் வீடாகிய உடல்.

**நடைமாடு** – ஆடுமாடுகள்.

**நடைமாற்று** – காண்க: **நடைபாவாடை.**

**நடைமுதல்** – நடப்பிலுள்ள ஆண்டு.

**நடைமுறை** – வழக்கமாக நடைபெறும் செயல் கள்; பரம்பரை வழக்கம்.

**நடையறிதல்** – ஊர்வழக்கங்களையறிதல்; எழுத்து நடையை அறிதல்.

**நடையன்** – நடக்கிறவன்; உழவுமாடு, குதிரை முதலியன; செருப்பு.

**நடையாட்டம்** – வழக்கிற் பயின்றுவருகை.

**நடையாடுதல்** – சஞ்சரித்தல்; பரவுதல்.

**நடையில்விடுதல்** – மாடு முதலியவற்றைப் பெரு நடையிற் செலுத்துதல்.

**நடையுடைபாவனை** – மக்களின் வழக்கவொழுக் கம் முதலியன.

**நடையுடையோன்** – காற்று.

**நடையொத்து** – ஒரு தாளவகை.

**நடைவண்டி** – சிறுபிள்ளைகள் நடைபழகுதற்கு உதவும் சிறுவண்டி.

**நடைவரம்பு** – நடந்து செல்லுவதற்குத் தக்கபடி அமைந்த வயல் வரப்பு.

**நடைவழி** – மூன்று முழ அகலமுள்ள பாதை: நடக்கும் வழி.

**நடைவாவி** – படிகளமைந்த கிணறு.

**நடைவானம்** – காண்க: **நடைப்பந்தல்.**

**நடைவிளக்கெரித்தல்** – தண்டனையாகத் தலையில் விளக்கை வைத்துக் குற்றஞ் செய்தோரை ஊரில் வலம்வரச் செய்தல்.

**நடைவெள்ளம்** – தோட்டம் முதலியவற்றிற்குத் தானாகவே பாயும் நீர்.

**நண்டு** – நீர் ஓரம் வாழும் ஒருவகைச் சிறு உயிரி; கற்கடகராசி.

**நண்டுக்கரம்** – தெரிநிலைக்கையிரண்டும் அங்குலி பிணைந்துவரும் இணைக்கைவகை.

**நண்டுக்காற்கீரை** – ஒரு கீரைவகை.

**நண்டுக்காற்புல்** – ஒரு புல்வகை.

**நண்டுக்கொடுக்கு** – நண்டின் முன்புறத்துள்ள உறுப்பு.

**நண்டுச்செலவு** – நண்டு இருக்கும் வளை.

**நண்டுஞ்சுண்டும், நண்டுநசுக்கு** } – சிறியவும் பெரியவுமான இளங்குழந்தைகள்.

**நண்டுவாய்க்காலி** – காண்க: **நட்டுவாய்க்காலி.**

**நண்ணம்** – சிறிது.

**நண்ணலர், நண்ணார்** } – பகைவர்.

**நண்ணுதல்** – கிட்டுதல்; பொருந்துதல்; செய்தல்; இருத்தல்.

**நண்ணுநர்** – நட்பினர்.

**நண்ணுவழி** – அருகிலுள்ள இடம்.

**நண்பகல்** – *நடுப்பகல்.*
**நண்பல்** – *இருபற்களினிடை.*
**நண்பன்** – *தோழன்; காதலன்; குறிஞ்சிநிலத் தலைவன்; காண்க:* **சணல்.**
**நண்பு** – *அன்பு; உறவு; நட்பு.*
**நண்மை** – *அண்மை.*
**நணந்தம்** – *சணற்பயிர்; காண்க:* **காட்டுப் பச்சிலை;** *புன்கமரம்.*
**நணி** – *அணிமையான இடம்.*
**நணியான்** – *அருகிலிருப்பவன்.*
**நணுகலர், நணுகார்** – *பகைவர்.*
**நணுகுதல், நணுங்குதல்** – *கிட்டுதல், சார்தல், ஒன்றிக் கலத்தல்; அணுகுதல்.*
**நத்தப்பாழ்** – *அழிந்துபோன சிற்றூர்.*
**நத்தம்** – *இருள்; இரவு; ஆக்கம்; ஊர்; ஊரின் குடியிருப்பிடம்; மனைநிலம்; இடம்; நத்தை; சங்கு; வாழை; காண்க:* **எருக்கு; நத்தமாலம்;** *கடிகார ஊசி.*
**நத்தமாலம்** – *புன்கமரம்.*
**நத்தாசை** – *விருப்பம்; பற்று; பேராசை.*
**நத்தாமணி** – *காண்க:* **வேலிப்பருத்தி.**
**நத்தி** – *இன்மை; மீனினுடைய மிதவைப் பை.*
**நத்திதம்** – *நாணயமிடப்பெற்றது.*
**நத்து** – *சங்கு; நத்தை; மூக்கணிவகை; ஒரு பறவைவகை; விருப்பம்.*
**நத்துதல்** – *விரும்புதல்.*
**நத்தை** – *மேலே ஓடு உள்ளதும் ஊர்ந்து செல்வது மான ஓர் உயிரி; கருநந்து; கொற்றான்; கடுகு.*
**நத்தைச்சுண்டி, நத்தைச்சூரி** – *ஒரு செடிவகை.*
**நத்தைப்படுவன்** – *கண்ணில் உண்டாகும் கட்டி.*
**நதம்** – *மேற்குநோக்கியோடும் ஆறு; உச்சத் திருந்து கிழக்கிற்கு அல்லது மேற்கிற்குள்ள தூரம்; நந்தியாவட்டச்செடி.*
**நதி** – *கிழக்கேயோடும் ஆறு; ஆறு; வணக்கம்.*
**நதிகரந்தை** – *திப்பிலிமூலம்.*
**நதிகேள்வன்** – *ஆறுகளின் தலைவனான வருணன்.*
**நதிசரம்** – *ஆற்றுச்சார்பிற் பிறந்த யானை.*
**நதிதீரம்** – *ஆற்றங்கரை.*
**நதிபதி** – *கடல்; வருணன்.*
**நதீசம்** – *ஆற்றில் பிறப்பதாகிய தாமரை.*
**நதீரம்** – *காண்க:* **நதிதீரம்.**
**நதீரயம்** – *நீர்ப்பாய்ச்சல்.*
**நதுத்தல்** – *அவித்தல்; கெடுத்தல்; மறைத்தல்.*
**நந்த** – *ஓர் உவமவுருபு; பெருக, விளங்க.*
**நந்தகம்** – *காண்க:* **நாந்தகம்.**
**நந்தகி** – *திப்பிலி.*
**நந்தகோபன், நந்தகோபாலன்** – *கண்ணபிரானை வளர்த்த தந்தை; கண்ணபிரான்.*
**நந்தநந்தனன்** – *கண்ணன்.*
**நந்தம்** – *சங்கு; கத்தூரி; காக்கை; குபேரனது ஒன்பதுவகை நிதிகளுள் ஒன்று; நாரத்தை; பெருமுயற்சி.*
**நந்தமாலம்** – *காண்க:* **நத்தமாலம்.**
**நந்தல்** – *ஆக்கம்; கேடு; நிந்தை.*
**நந்த(தா)வனம்** – *பூந்தோட்டம்.*
**நந்தன்** – *காண்க:* **நந்தகோபாலன்; திருநாளைப் போவார்நாயனார்;** *இடையன்; திருமால்; புதல்வன்; வாழைவகை.*
**நந்தன** – *அறுபதாண்டுக்கணக்கில் இருபத் தாறாம் ஆண்டு.*
**நந்தனம்** – *பூந்தோட்டம்; இந்திரனது பூங்கா வனம்; சோலை; நந்தன ஆண்டு; நத்தை; தவளை; நாரத்தை; மகிழ்ச்சி.*
**நந்தனவனம்** – *இந்திரனது பூங்காவனம்; பூந் தோட்டம்; சோலை.*
**நந்தனன்** – *மகன்.*
**நந்தனி(னை)** – *மகள்.*
**நந்தாமணி** – *காண்க:* **நத்தாமணி.**
**நந்தாவிளக்கு** – *கோயில் கருவறை முதலியவற்றி லுள்ள அணையாவிளக்கு.*
**நந்தி** – *காளை; சிவகண நாதராகிய நந்தி; இடப ராசி; சிவன்; நந்திதுர்க்கம் என்னும் மலை; சமணர் பட்டப்பெயர்; உபபுராணத்துள் ஒன்று; ஓர் ஊர்; நந்தியாவட்டச்செடி; பல்லவ அரசர் பெயர்.*
**நந்திகேச்சுரன், நந்திகேசன்** – *சிவன்; காண்க:* **நந்தி தேவன்.**
**நந்திதேவன்** – *சிவகண நாதராகிய நந்திதேவர்.*
**நந்திப்பூசணி** – *சாம்பற் பூசணிக்கொடி.*
**நந்தியாவட்டம்** – *ஒரு பூச்செடிவகை.*
**நந்தியாவர்த்தம்** – *நந்தியாவட்டம் என்னும் ஒரு செடிவகை; ஒரு கட்டடவகை.*
**நந்தியாவருத்தனன்** – *நண்பன்; மகன்; சிவன்.*
**நந்திவிருட்சம்** – *சின்னிமரம்.*
**நந்தினி** – *காமதேனுவின் கன்று; மகள்.*
**நந்து** – *ஆக்கம்; சங்கு; பறவை; நத்தை.*
**நந்துதல்** – *கெடுதல்; சாதல்; அவிதல்; மறைதல்; தழைத்தல்; விளங்குதல்; செருக்குதல்; தூண்டுதல்; வளர்தல்; நிந்திக்கப்படுதல்.*
**நந்துருணி** – *புறங்கூறுவோன்; மதியீனன்; இழிஞன்.*
**நந்துருணிப்பேச்சு** – *கோட்சொல்; நம்பிக்கை யற்ற பேச்சு.*
**நந்தை** – *கொற்றான்கொடி; தேற்றாமரம்; பிரதமை சட்டி ஏகாதசி என்னும் திதிகள்; கபிலைப்பசு.*
**நந்நான்கு** – *நான்கு நான்காக.*

**நப்பாசை** – நாவின் தீராத ஆசை; வீணான ஆசை.
**நப்பிரிதல்** – நம்மைப் பிரிதல்.
**நப்பின்னை** – கண்ணனுக்குகந்த தேவியருள் ஒருத்தி.
**நப்புணர்தல்** – நம்மைச் சேர்தல்.
**நபம்** – வானம்; ஆவணிமாதம்; கார்காலம்.
**நபர்** – ஆள்.
**நபனம்** – நீராட்டம்; திருமஞ்சனம்.
**நபாகம்** – இருள்.
**நபி** – தீர்க்கதரிசி; முகம்மது.
**நபுஞ்சகம்** – காண்க: **நபுஞ்சகன்**; ஆண் தன்மை யின்மை; நபுஞ்சலிங்கம்.
**நபுஞ்சகலிங்கம்** – அலிப்பால்.
**நபுஞ்சகன்** – அலி; ஆண்தன்மை இழந்தவன்.
**நபோமணி** – விண்மணியான சூரியன்.
**நம்** – எல்லாம் என்னும் சொல் உயர்திணை யாயின் அஃது உருபேற்கும்போது கொள்ளுஞ் சாரியை; வணக்கம்.
**நம்பகம்** – காண்க: **நம்பிக்கை.**
**நம்ப(பா)ன்** – ஆணிற்சிறந்தோன்; கடவுள்; சிவன்.
**நம்பி** – ஆணிற்சிறந்தவன்; முழுமையன்; கடவுள்; காண்க: **நம்பியான்**; ஒரு செல்லப் பெயர்; நம்பியாண்டார்நம்பி; நாற்கவிராச நம்பி.
**நம்பிக்கை** – விசுவாசம்; உறுதிப்பாடு; ஆணை; நம்பி யொப்புவிக்கப்பட்டது; உண்மை.
**நம்பிக்கைசெலுத்துதல்** – நம்பிக்கைக்குக் குறைவு வாராது நடந்துகொள்ளுதல்.
**நம்பிக்கைத்துரோகம்** – இரண்டகம்.
**நம்பிக்கைபண்ணுதல்** – உறுதிசெய்தல்; ஆணை யிடுதல்; காண்க: **நம்பிக்கைசெலுத்துதல்.**
**நம்பிக்கையுள்ளவன்** – நம்பத்தக்கவன்; பிறரிடம் உண்மையாய் நடப்பவன்; தெய்வ நம்பிக்கை யுள்ளவன்.
**நம்பியாரூரர்** – சைவசமய குரவருள் ஒருவரான சுந்தரர்.
**நம்பியான்** – கோயில் அருச்சகரின் பட்டப்பெயர்.
**நம்பிராட்டி, நம்பிராட்டியார்** – அரசன்தேவி; கடவுள்தேவி.
**நம்பிரான்** – கடவுள்; தலைவன்; ஊர்திக்குதிரை.
**நம்பு** – அருச்சகம்; நாவல்; விருப்பம்; கோயிலில் பூசை செய்யும் உரிமை.
**நம்புசெய்வார்** – அருச்சகர்.
**நம்புண்டல்** – நம்பும்படிசெய்கை.
**நம்புதல்** – விரும்புதல்; நம்பிக்கைவைத்தல்; எதிர் பார்த்தல்; ஏற்பளித்தல்.
**நம்பூதிரி** – மலையாள அந்தணர் வகையினன்.
**நம்பெருமாள்** – திருவரங்கத்துத் திருமால்.
**நம்மனோர்** – காண்க: **எம்மனோர்.**
**நம** – வணக்கம்.
**நமக்கரித்தல்** – வணங்குதல்.
**நமக்காரம்** – காண்க: **நம.**
**நமக்காரி** – தொட்டாற்சுருங்கிச்செடி; வறட்சுண்டிச்செடி.
**நமகம்** – உருத்திரனைக் குறிக்கும் ஒரு வேத மந்திரம்.
**நமச்சிவாய** – ஐந்தெழுத்து, பஞ்சாட்சர மந்திரம்.
**நமசம்** – இணக்கம்.
**நமசன்** – உதவுபவன், அனுகூலன்.
**நமசிதன்** – வழிபடத்தக்கவன்.
**நமட்டுச்சிரங்கு** – காண்க: **நமட்டுச்சொறி.**
**நமட்டுச்சிரிப்பு** – எள்ளற்சிரிப்பு.
**நமட்டுச்சொறி** – சிரங்கு; சொறிபுண்; சிரங்கு வகை.
**நமடுகடித்தல்** – குழந்தைகள் உதட்டைக் கடித்தல்.
**நமத்தம்** – சடாமாஞ்சில்பூண்டு.
**நமதன்** – ஆண்டவன்.
**நமர்** – நம் இனத்தவர்; நம்முடைய உறவினர்.
**நமர்த்தல்** – ஈரம் ஏறுதல்.
**நமரி** – நீண்ட எக்காளவகை.
**நமருதல்** – ஊறுதல், பெருகுதல்.
**நமலுதல்** – வணங்குதல்.
**நகவாரிதி** – தொடை.
**நமன்** – யமன்; நம்மவன், சுற்றத்தான்.
**நமிடு** – பேன்முட்டை; நாரைவகை.
**நமித்திரர்** – பகைவர்.
**நமுகுதல்** – குழைதல்.
**நமுடு** – ஈர்; கீழுதடு; கொக்கு; பட்டுநூல்களில் விழும் முடிச்சு.
**நமுத்தல்** – காண்க: **நமர்த்தல்.**
**நமூது** – சாட்சி; பொறுப்பாளி; விவரக்குறிப்பு.
**நமூனா** – மாதிரிப் படிவம்.
**நமேரு** – புன்னைமரம்; சுரபுன்னைமரம்.
**நமை** – தினவு; வைக்காலிமரம்.
**நமைக்காய்** – கத்தரிக்காய்.
**நமைச்சல்** – காண்க: **நமைப்பு.**
**நமைத்தல்** – காண்க: **நமைதல்**; வருத்துதல்; சூட்டுதல்; கட்டளை இடுதல்.
**நமைதல்** – தினவெடுத்தல்.
**நமைப்பு** – தினவு; சிரங்கு; வருத்தம்.
**நமோ** – காண்க: **நம.**
**நயக்கன்** – நாய்.
**நயக்கிளவி** – அசதியாடல்.
**நயகுணம்** – நற்குணம்.

**நயங்காட்டுதல்** – இன்சொல் முதலியவற்றால் வயப்படுத்துதல்.
**நயச்சொல்** – இனிய சொல்; முகமன்வார்த்தை; இச்சகம்; அசதியாடல்.
**நயத்தகுதல்** – விரும்பல்; நன்மையாதல்.
**நயத்தல்** – விரும்புதல்; பாராட்டுதல்; சிறப்பித்தல்; பிரியப்படுத்தல்; தட்டிக்கொடுத்தல்; கெஞ்சுதல்; அன்புசெய்தல்; பின்செல்லுதல்; மகிழ்தல்; இன்பமுறல்; இனிமையுறுதல்; இணங்கிப்போதல்; பயன்படுதல்; மலிதல்; மேம்படுதல்; ஈரம் ஏறுதல்; நட்பாடல்; தலைவனைக் கண்ட தலைவி தனது ஆசைப்பாடு கூறும் புறத்துறை.
**நயத்தவிலை** – மலிந்த விலை.
**நயந்துசொல்லுதல்** – பயன்படச் சொல்லுதல்; வேண்டிக்கொள்ளுதல்.
**நயந்தோர்** – நண்பர்; கணவர்.
**நயநயவார்த்தை** – உறுதியில்லாச் சொல்.
**நயநிலைப்படலம்** – நாடகம்.
**நயப்பாடு** – பயன்; மேம்பாடு.
**நயப்பித்தல்** – விரும்பும்படி செய்தல்; மகிழ்வித்தல்; உடன்படுத்தல்; பயன்படுத்தல்; மலிவாக்குதல்.
**நயப்பு** – அன்பு; விருப்பம்; இன்பம்; தலைவி எழிலைப் புகழ்கை; மலிவு; இலாபம்; மேம்பாடு; நன்மை.
**நயப்புணர்வு** – கண்ணோட்டம்.
**நயபயம்** – அன்பும் கண்டிப்பும்.
**நயம்** – இன்பம்; அருள்; மகிழ்ச்சி; விருப்பம்; நன்மை; மேன்மை; போற்றுகை; அன்பு; பக்தி; நற்பயன்; மலிவு; மிகுதி; பயன்; நுண்மை; இனிமை; நீதி; கொடையாளி; கனமும் தேசிகமும் கலந்து பாடும்வகை.
**நயம்பண்ணுதல்** – உதவிசெய்தல்.
**நயம்பாடு** – காண்க: நயப்பாடு; அழகுபடுகை.
**நயம்பாடுதல்** – இனிமையாய்ப் பாடுதல்; முகமன் கூறுதல்.
**நயம்பேசுதல்** – மகிழப் பேசுதல்; இனிமையாய் ஒலித்தல்.
**நயமாலி** – மனோசிலை என்னும் மருந்து.
**நயமொழி** – இன்மொழி; நலம்பயக்கும் சொல்.
**நயர்** – அறிவுடையார்.
**நயவசனம்** – இனிய சொல்; பணிவான சொல்.
**நயவஞ்சகம்** – இனிமைகாட்டி ஏமாற்றுகை.
**நயவர்** – காதலர்; நண்பர்; நீதியுடையோர்.
**நயவருதல்** – விரும்புதல்; நன்மையுண்டாதல்.
**நயவன்** – சுவைஞன்.
**நயவார்** – பகைவர்.
**நயவார்த்தை** – காண்க: நயவசனம்.
**நயவான்** – நயப்புள்ளோன்; ஆதாயக்காரன்; உபகாரி; விரும்பாதவன்.
**நயவுரை** – இனிய சொல்.
**நயன்** – காண்க: நயம்; நயவான்; பசை; உறவு; கொடையாளி; விரகு, உபாயம்; நீதி.
**நயன்மை** – நீதி.
**நயனகாசம்** – கண்மேற் படர்சதை.
**நயனத்தானம்** – துயிலணை.
**நயனதீட்சை** – அருட்பார்வையால் சீடனுக்கு ஞானம் உண்டாக்குதல்.
**நயனப்பார்வை** – கண்ணோக்கு; காதல் நோக்கம்.
**நயனம்** – கண்.
**நயனமாலை** – உருத்திராக்கமாலை.
**நயனமோக்கம், நயனமோட்சம்** – சிற்பிகள் சிலை முதலியவற்றிற்குக் கண்ணைத் திறந்துவிடுகை.
**நயனரோகம்** – கண்ணோய்.
**நயனவாரி** – கண்ணீர்.
**நயனை** – கண்மணி.
**நயனோற்சவம்** – கண்காட்சி; காட்சிக்கு விருந்தான அழகுமிக்க பொருள்; விளக்கு.
**நயாசலன்** – நீதிநெறி வழுவாதவன்.
**நயிச்சியஞ்செய்தல்** – தன்வயப்படுத்துதல்.
**நயிட்டிகப்பிரமசாரி** – வாழ்நாள் முழுதும் பிரமசாரியாய்க் கழிப்போன்; மாணவன்.
**நயிட்டிகர்** – நிட்டை தவறாதோர்.
**நயிந்தை** – தலைவன்; ஒரு பட்டப்பெயர்.
**நயினார்** – ஆண்டவன்; தலைவன்; காண்க: ஐயனார்; சித்திரகுப்தன்; சமணர்க்குரிய பட்டப்பெயர்.
**நர்த்தகன்** – கூத்தாடுவோன்.
**நர்த்தகி** – – கூத்தாடுபவள்.
**நர்த்தனம்** – கூத்து.
**நரகபாதாளம்** – ஆழ்நரகம்.
**நரகம்** – உயிர்கள் தீவினையின் பயனை நுகரும் இடம், பாதாள உலகம்.
**நரகர்** – நரகத்தில் வாழ்பவர்.
**நரகரி** – நரசிம்மமூர்த்தியாகிய திருமால்.
**நரகல்** – மலம்; தூய்மையின்மை.
**நரகலித்தல்** – அருவருத்தல்; அழுக்குடைத்தாதல்.
**நரகவாய்** – நிரயவாய்; நரகம்.
**நரகவேதனை** – நரகத்தில் நுகரும் துன்பம்.
**நரகன்** – நரகத்திலுள்ளோன்; மாபாவி; கண்ணபிரானால் கொல்லப்பட்ட ஓர் அசுரன்.
**நரகாரி, நரகாந்தகன்** – நரகாசுரனைக் கொன்றவனான திருமால்.
**நரகாலி** – கால்நடைகளுக்கு வரும் ஒரு நோய் வகை.
**நரகி** – நரகலோகத்துள்ளவள்.

**நரகீலகன்** – குருவைக் கொலைசெய்தவன்.
**நரகு** – நரகம்.
**நரகேசரி** – காண்க: **நரவரி**; மக்களுள் சிறந்தவன்.
**நரங்கடித்தல்** – அழித்தல்.
**நரங்குதல்** – கடையாதல்; மெலிதல்; நொறுங்குதல்.
**நரசிங்கம், நரசிங்கமூர்த்தி, நரசிம்மன்** – நரனும் சிங்கமும்கூடிய உருவுடன் பிறப்பெடுத்த திருமால்.
**நரசீவன்** – மனிதன்.
**நரத்துவம்** – மானிடத்தன்மை.
**நரதுங்கன்** – மாந்தரிற் சிறந்தவன்.
**நரதுதி** – மாந்தரைப் புகழ்தல்.
**நரதேவன்** – மக்கள் தலைவனான அரசன்.
**நரந்தம்** – கத்தூரிவிலங்கு; கத்தூரி; மணம்; மணப்புல்வகை; காகம்; நாரத்தை.
**நரப்பிரதிட்டை** – மக்களால் நிறுவப்பட்டது.
**நரப்புக்கருவி** – நரம்புடைய யாழ் முதலிய இசைக்கருவிகள்.
**நரப்புக்கருவியாளர்** – யாழ் முதலியன வாசிப்போர்.
**நரபதி** – மக்கட்குத் தலைவனான அரசன்; சோழ, விசயநகர வேந்தரின் பட்டப்பெயர்.
**நரபாலன்** – மக்கள் தலைவனான அரசன்.
**நரம்** – மாந்தப்பிறவி.
**நரம்பன்** – ஒல்லியானவன்; ஒரு புகையிலை வகை.
**நரம்பின்மறை** – யாழ்நூல்.
**நரம்பு** – தசைநார்; நாடி; இரத்தக்குழாய்; யாழ் நரம்பு; இலை முதலியவற்றின் நரம்பு; வில் நாண்.
**நரம்புக்கடுப்பு** – நரம்புநோய்வகை.
**நரம்புக்கருவி** – நரம்புகள்கொண்ட இசைக்கருவி.
**நரம்புக்கழலை** – நிணநீர் நரம்பின் வீக்கம்.
**நரம்புக்காய்** – நீண்டுமெலிந்த காய்; முருங்கைக் காய்.
**நரம்புச்சிலந்தி** – தோலில் புழுக்களை உண்டாக்கும் ஒரு புண்வகை; நரம்பின்மேல் உண்டான புண்கட்டி.
**நரம்புச்சுற்று** – நரம்பின் விக்கம்.
**நரம்புசன்னி** – இழுப்புநோய்.
**நரம்புப்பல்** – காண்க: **நரம்புச்சுற்று**.
**நரம்புப்பிசகு** – காண்க: **சுளுக்கு**.
**நரம்புமண்டலம்** – உடம்பிலுள்ள நரம்புகளின் கூறுபாடு.
**நரம்புவலி** – காண்க: **நரம்பெரிச்சல்**.
**நரம்புவாங்குதல்** – இலை முதலியவற்றின் நரம்பை நீக்குதல்; குதிகாலின் நரம்பை வெட்டுதலான துன்புறுத்தல்.
**நரம்புவீக்கம்** – விதைவிக்கம்; காண்க: **நரம்புவலி**.
**நரம்பெடுத்தல்** – கடுமையாக வேலைபுரியச் செய்தல்; துணிவைக் கெடுத்தல்; உடம்பு மிக மெலிந்துபோதல்.
**நரம்பெரிச்சல்** – நரம்புநோய்வகை.
**நரமடங்கல்** – காண்க: **நரசிங்கமூர்த்தி**.
**நரமாமிசம்** – மனித ஊன்.
**நரமேதம்** – மாந்தரைக் கொன்று செய்யும் வேள்வி.
**நரல்** – செத்தை; மக்கட்கூட்டம்.
**நரல்வு** – யாழின் உள்ளோசை; ஒலிக்கை; எடுத்தலோசை.
**நரலுதல்** – ஒலித்தல்; கத்துதல்.
**நரலை** – கடல்; மதிலுறுப்புகளுள் ஒன்று; ஒலி.
**நரலோகம்** – மக்கள் உலகமான மண்ணுலகம்.
**நரவரி** – நரசிங்கமூர்த்தி.
**நரவல்** – காண்க: **நரகல்**.
**நரவாகனம்** – மக்களால் சுமக்கப்படும் சிவிகை; ஊர்தி; குபேரனது ஊர்தி.
**நரவாகனன்** – நரனை ஊர்தியாகக்கொண்ட குபேரன்.
**நரளி** – கடலை.
**நரற்றுதல்** – ஒலித்தல்; ஒலிக்கச்செய்தல்.
**நரன்** – மாந்தன்; அருச்சுனன்; ஒரு முனிவன்; ஓர் இயக்கன்.
**நரா** – கன்றுகை.
**நராங்குதல்** – வளர்ச்சி குன்றிப்போதல்.
**நராதிபன்** – அரசன்.
**நராந்தகம்** – இறப்பு.
**நராந்தகன்** – மக்களை அழிக்கும் யமன்; கொடியோன்.
**நராந்தகம்** – காக்கை.
**நராப்பற்றுதல்** – பழம் முதலியன கன்றிப்போதல்.
**நராபோகம்** – நினைத்திராத வாழ்வு பெறல்; ஒருவன் போகம் நுகரும் வாழ்நாள் எல்லை.
**நராயணன்** – திருமால்.
**நராலை** – நரகம்.
**நரி** – ஒரு விலங்குவகை; புலி; வைக்கோற்புரிக் கருவி.
**நரிக்குழி** – நரிவளை.
**நரிக்கொன்றை** – செங்கொன்றைமரம்.
**நரிகுளிப்பாட்டுதல்** – நல்ல சொற்களால் ஏமாற்றுதல்.
**நரிச்சல்** – வெளவால்வகை.
**நரித்தல்** – காண்க: **நரிதல்**; நொறுக்குதல்; கெடுத்தல்; நிந்தித்தல், இகழ்தல்; திகைத்தல்; நரித்தன்மை அடைதல்.
**நரித்தலை** – முழங்கால் முட்டு.
**நரிதல்** – வருத்துதல்.

**நரிநிறம்** – பலநிறக்கலப்பு; பல எண்ணம்; வெறுப்பு.
**நரிப்பு** – நரித்தன்மை; இகழ்வு; வியப்பு; நொறுங்குகை.
**நரிப்புத்தி** – தந்திரபுத்தி.
**நரிப்புறம்** – மிருகசீரிடநாள்.
**நரிமருட்டி** – கிலுகிலுப்பைச்செடி.
**நரிமிரட்டல்** – இளங்குழந்தைகட்குத் தூக்கத்தில் உண்டாகும் அழுகையும் சிரிப்பும்.
**நரியன்** – குள்ளன்; சூதுள்ளவன்; பெருநெல்வகை.
**நரியிலந்தை** – இலந்தைவகை.
**நரியுடை** – முசுமுசுக்கை.
**நரியுணி** – நரியால் உண்ணப்படுவதான நண்டு.
**நரியுப்பு** – கறியுப்பு.
**நரிவாற்புல்** – ஒரு புல்வகை.
**நருக்கல்** – நசுக்குண்டது; குத்தல்வலி; வேகாத சோறு; வயிற்றுவலிவகை.
**நருக்கு** – குட்டுகை.
**நருக்குதல்** – நொறுக்குதல்; கொல்லுதல்; துண்டாக்குதல்; குட்டுதல்.
**நருக்கெனல்** – குத்தல் ஒலிக்குறிப்பு; விரைவுக் குறிப்பு.
**நருங்குதல்** – நொறுங்குதல்; தேய்தல்.
**நருநருத்தல்** – நெறுநெறுத்தல்; புன்மையாதல்.
**நருநரெனல்** – நெறுநெறெனற் குறிப்பு.
**நருமுதல்** – பல்லால் கடித்தல்; பல்லைக் கடித்தல்.
**நருவல்** – நருங்கினது; மலம்.
**நருவிசு** – நாகரிகம்; சிக்கனம்; துப்புரவு; நேர்மையானது.
**நரேசன், நரேந்திரன்** – மக்கள் தலைவனான அரசன்.
**நரை** – வெண்மை; வெண்மயிர்; எருது; இடபராசி; சாமரம்; கவரிமா; மூப்பு; பெருமை; வெள்ளைக்குதிரை; பறவைவகை; நாரை.
**நரைக்கொம்பு** – வெள்ளைக் கழியான எலும்பு.
**நரைச்சல்** – பயிர் முதலியவற்றின் வெளிறின தன்மை.
**நரைஞர்** – முதியவர்; முடி வெளுத்தவர்.
**நரைத்தல்** – மயிர்வெளுத்தல்; பயிர்வெளிறுதல்; நிறம்வெளுத்தல்.
**நரைதிரையில்லான்** – மூப்படையாத காகம்.
**நரைப்பு** – மயிர் வெண்மையாகை.
**நரைமை** – மூப்பு.
**நரையல்லி** – காண்க: **வெள்ளாம்பல்.**
**நரையன்** – நரைத்தவன்; பருவமின்றி நரைத்தவன்; வல்லூறுவகை; சாம்பல் நிறமுள்ள விலங்கு.
**நரையான்** – சின்னது; நாரை; மீன்கொத்திப் பறவை; காகம்; நெல்வகை; நாரைப்பசு; நருங்கின குழந்தை.
**நல்** – நல்ல; வறுமை.
**நல்கல்** – பெருங்கொடை; அன்பு; கொடுக்கை; அருள்.
**நல்குதல்** – கொடுத்தல்; விரும்புதல்; தலையளிசெய்தல்; படைத்தல்; வளர்த்தல்; தாமதித்தல்; பயன்படுதல்; உவத்தல்; அருள்செய்தல்.
**நல்குரவு** – வறுமை.
**நல்கூர்** – எளிமை.
**நல்கூர்தல்** – வறுமையடைதல்; களைப்படைதல்; துன்புறுதல்.
**நல்கூர்ந்தா(தோ)ன்** – வறியோன்.
**நல்ல** – நன்மையான; மிக்க; கடுமையான.
**நல்லசேவகன்** – சிறந்த வீரன்; ஐயனார்.
**நல்லணி** – மங்கலநாண்.
**நல்லதண்ணீர்** – குடிதண்ணீர்; சுவையுள்ள நீர்.
**நல்லதனம்** – நட்பு; ஒத்துப்போகும் இயல்பு.
**நல்லதனம்பண்ணுதல்** – சாந்தப்படுத்துதல்.
**நல்லது** – அறம்; நன்மையானது; காண்க: **நல்லபாம்பு.**
**நல்லதுசொல்லுதல்** – புத்திமதி சொல்லுதல்; அன்பாய்ப் பேசுதல்; வழியனுப்புதல்.
**நல்லதுபண்ணுதல்** – இணக்குதல்.
**நல்லதுபொல்லாது** – நன்மை தீமை.
**நல்லநடத்தை** – நல்லொழுக்கம்.
**நல்லநினைப்பு** – நல்லெண்ணம்; சிறந்த ஞாபகம்.
**நல்லப்பன்** – தந்தையுடன் பிறந்தவன்.
**நல்லபழக்கம்** – நற்பயிற்சி; நெருங்கின நட்பு; நல்லோர் இணக்கம்.
**நல்லபாம்பு** – நாகப்பாம்பு.
**நல்லபுத்தி** – மயக்கமற்ற அறிவு; கூரிய அறிவு; நற்போதனை.
**நல்லம்** – கறுப்பு; கரி; இஞ்சி.
**நல்லமழை** – அதிக மழை.
**நல்லமனம்** – விரிந்தவுள்ளம்; தூய சிந்தை.
**நல்லமாதிரி** – நல்லவகை; நல்லொழுக்கம்.
**நல்லவர்** – அறிஞர்; நல்லோர்; நண்பர்; பெண்கள்; காண்க: **நல்லபாம்பு.**
**நல்லவழி** – நல்ல பாதை; நன்னடக்கை; நற்குலம்; மோட்சவழி.
**நல்லவளம்** – மிகுந்த செழிப்பு; தக்க சமயம்.
**நல்லவார்த்தை** – இன்சொல்; உவப்புச்சொல்; வாழ்த்துரை; கெஞ்சுமொழி; சமாதானப் பேச்சு.
**நல்லவெல்லம்** – கரும்புவெல்லம்; கருப்புக்கட்டி.
**நல்லவேளை** – நற்சமயம்; நல்ல நெருக்கடியான நேரம்; நாய்க்கடுகுசெடி.
**நல்லவை** – நற்செயல்கள்; அறிவு, ஒழுக்கம் முதலியவற்றால் உயர்ந்தோர் சபை; நியாயம் பேசுவோர் சபை.

**நல்லறம்** – நல்வாழ்க்கை, இல்வாழ்க்கை, மேன்மையான தருமம்; சமயதருமம்; நல்லொழுக்கம்.
**நல்லறிவு** – நற்புத்தி; நற்போதனை; ஒரு நீதி நூல்.
**நல்லாக** – நன்றாக.
**நல்லாங்கு** – நன்மை.
**நல்லாச்சி** – நல்லம்மாள்; சிற்றன்னை.
**நல்லாடை** – சிறந்த துகில்.
**நல்லாப்பு** – நன்மை.
**நல்லாய்ச்சி** – சிறிய தாய் முறையாள்.
**நல்லார்** – நற்குணமுடையோர்; பெரியோர்; கற்றார்; மகளிர்.
**நல்லாள்** – நற்குணமுடையவள்; தக்கவர்.
**நல்லாறு** – நல்வழி.
**நல்லாறுடையான்** – நல்வழிச் செல்வோன்.
**நல்லி** – பெண்; முதுகெலும்பு; விலங்குக் காலின் எலும்பு.
**நல்லிசை** – மறையாத புகழ்.
**நல்லிருப்பு** – வாளாவிருத்தல்; நல்வாழ்வு.
**நல்லிளம்படியர்** – அழகிய இளம்பெண்டிர்.
**நல்லினம்** – நல்லவர் கூட்டம்; பசுக்கூட்டம்.
**நல்லுயிர்** – மனைவிக்கு உயிர்போன்ற கணவன்.
**நல்லுறவு** – நெருங்கின உறவு.
**நல்லூழ்** – புண்ணியம், தவப்பயன்.
**நல்லெண்ணம்** – நல் நினைவு.
**நல்லெண்ணெய்** – எள்ளிலிருந்து எடுக்கும் எண்ணெய்.
**நல்லேர்கட்டுதல்** – நல்லவேளையில் பருவத்திற் குரிய உழவைத் தொடங்குதல்.
**நல்லேறு** – இடபம்; ஆண்எருமை.
**நல்லொழுக்கம்** – நன்னடக்கை; ஒழுக்கம்.
**நல்லோர்** – அறிஞர்; மகளிர்.
**நல்வசி** – சூலம்.
**நல்வழி** – நல்லொழுக்கம்; ஔவையார் இயற்றிய நீதிநூல்.
**நல்வாக்கு** – நன்னிமித்தமான சொல்; வேண்டு கோட் சொல்; வாழ்த்துரை.
**நல்வார்த்தை** – காண்க: நல்வாக்கு; சிறந்த செய்தி.
**நல்வாழ்வு** – இன்பமான இல்லற வாழ்க்கை; சீருஞ்சிறப்புமாய் வாழ்கை.
**நல்விதி** – தவப்பயன்.
**நல்வினை** – அறச்செயல்; முற்பிறப்பிற் செய்த புண்ணியச் செயல்.
**நலக்குதல்** – கசங்கச்செய்தல்; அழுக்காக்குதல்; நன்மைபயத்தல்.
**நலங்கனிதல்** – அன்பு முற்றுதல்; அழகு முற்று தல்.
**நலங்கிடுதல்** – மணமக்களுக்கு எண்ணெய் சீயக் காய் மஞ்சட்பொடி முதலியவற்றைப் பூசுஞ் சடங்குசெய்தல்; மணமக்களுக்கு நலங்கு நடத்துதல்.
**நலங்கு** – நறுங்கூட்டு; ஒரு கலியாணச் சடங்கு; ஒரு மருந்து.
**நலங்குதல்** – நொந்துபோதல்; வருந்துதல்; நுடங்குதல்; கசங்குதல்.
**நலஞ்சாற்றுதல்** – அரசன் ஆணையை வெளியிடு தல்.
**நலத்தல்** – நலமாதல்; விரும்புதல்.
**நலந்தட்டுதல்** – விதையடித்தல்.
**நலப்பாடு** – நன்மை; ஆதாயம்; நற்பேறு.
**நலப்பு** – நன்மை; வெற்றி.
**நலம்** – நன்மை; இன்பம்; உதவி; கண்ணோட்டம்; அழகு; அன்பு; ஆசை; குணம்; பயன்; புகழ்; உயர்வு; நல்வாழ்வு; நிறம்; செம்மைநிறம்; விருச்சிகராசி; எருதின் விதை; சுக்கு; அறம்.
**நலம்பாடு** – தகுதி.
**நலம்பாராட்டல், நலம்பாராட்டு** – தலைவியின் அழகைத் தலைவன் வியந்துரைக்கும் அகத்துறை.
**நலம்பாராட்டுதல்** – அலங்கரித்தல், ஒப்பனை செய்தல்.
**நலம்பொலம்** – நன்றுதீது.
**நலவர்** – நல்லோர்.
**நலவல்** – நாவல்மரம்.
**நலவு** – நன்மை; மன்னிப்புக் கேட்கும் மொழி.
**நலி** – நோய்.
**நலித்தல்** – துன்புறுத்தல்.
**நலிதல்** – சரிதல்; மெலிதல்; வருந்தல்; அழிதல்; நெருக்கல்.
**நலிபு** – ஆய்தவெழுத்திற்குச் செய்யுளில் வழங்கும் ஒரு பெயர்.
**நலிபுவண்ணம்** – ஆய்தவெழுத்துப் பயின்றுவருஞ் சந்தப்பாட்டு.
**நலிவு** – துன்பம்; கேடு.
**நவ்வல்** – காண்க: நலவல்.
**நவ்வார்** – பகைவர்.
**நவ்வி** – பெண்மான்; மான்குட்டி; இளமை; அழகு; அத்தநாள்; காண்க: நவ்வு.
**நவ்வு** – மரக்கலம்.
**நவ்வுதல்** – முழுதும் நம்புதல்; ஆசையோடு எதிர் பார்த்திருத்தல்.
**நவக்கிரகம்** – சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி, இராகு, கேது ஆகிய ஒன்பது கோள்கள்.

**நவகண்டம்** – கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்விரேபதம், வடபரதம், தென்பரதம், மத்திய கண்டம் என்னும் பூமியின் ஒன்பது கண்டங்கள்; காண்க: **நவவருடம்.**

**நவகருமம்** – புதுப்பிக்கும் வேலை.

**நவகோடிசித்தபுரம்** – திருவாவடுதுறை என்னும் ஊர்.

**நவகோணத்தாள்** – பார்வதிதேவி.

**நவச்சாரப்பற்று** – நவச்சாரத்தினால் உலோகங்கள் ஒன்றுடன் ஒன்று பொருந்துமாறு செய்யும் பற்று.

**நவச்சாரம்** – ஓர் உப்புவகை.

**நவசத்தி** – வாமை, சேட்டை, ரௌத்திரி, காளி, பலவிகரணி, பலபிரமதனி, சர்வபூததமனி, சக்தி, மனோன்மணி ஆகிய ஒன்பது சிவசத்திகள்.

**நவசாரத்தான்** – பொன்மணல்.

**நவசி** – ஒரு தென்னைமரவகை; ஒரு கமுகமர வகை.

**நவத்தம்** – சடாமாஞ்சில் மருந்து.

**நவத்துவாரம்** – கண்கள், காதுகள், மூக்குத் துளைகள், வாய், மலத்துளை, நீர்த்துளை என்னும் ஒன்பது உடல் வாயில்கள்.

**நவதளம்** – தாமரைத்தளிர்.

**நவதாரணை** – சதுரங்கதாரணை, சத்தாரணை, சித்திரதாரணை, நாமதாரணை, பேததாரணை, மந்திரதாரணை, மாயாதாரணை, வச்சிரதாரணை; வத்துத்தாரணை என்னும் ஒன்பது அவதான வகைகள்; யோகத்தில் ஒன்பது வகைப்பட்ட மனோதாரணை.

**நவதாளம்** – அரிதாளம், அருமதாளம், சமதாளம், சயதாளம், சித்திரதாளம், துருவதாளம், நிவிர்த்ததாளம், படிமதாளம், விடதாளம் என்னும் ஒன்பது தாளவகை.

**நவதானியம்** – உழுந்து, நெல், எள்ளு, கடலை, கொள்ளு, கோதுமை, அவரை, பயறு, துவரை ஆகிய ஒன்பது தவசங்கள்.

**நவதி** – தொண்ணூறு.

**நவதிகை** – தூரியக்கோல்.

**நவதீர்த்தம்** – கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, சிந்து, காவேரி, கோதாவிரி, துங்கபத்திரை, சோணையாறு என்னும் ஒன்பது புண்ணிய தீர்த்தங்கள்.

**நவதை** – புதுமை.

**நவநாதசித்தர்** – ஒன்பது சித்தராகிய அனாதிநாதர், ஆதிநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர், சதோகநாதர், சத்தியநாதர், மச்சேந்திரநாதர், மதங்கநாதர், வகுளிநாதர்.

**நவநிதி** – கச்சபநிதி, கற்பநிதி, சங்கநிதி, நந்தநிதி, நீலநிதி, பதுமநிதி, மகாநிதி, மகாபதுமநிதி, முகுந்தநிதி ஆகிய ஒன்பது வகைப்பட்ட குபேரநிதி.

**நவநீதகம்** – நெய்.

**நவநீதம்** – வெண்ணெய்; புதுமை.

**நவப்பிரீதி** – வெடியுப்பு.

**நவபண்டம்** – காண்க: **நவதானியம்.**

**நவபுண்ணியம்** – எதிர்கொள்ளல், பணிதல், உட்காருவித்தல், கால்கழுவல், அருச்சித்தல், நறும்புகை காட்டல், விளக்குக் காட்டல், அறுசுவையுணவு படைத்தல், புகழ்தல் என ஒன்பது வகைப்பட்ட போற்றுகைகள்.

**நவம்** – புதுமை; நட்பு; பூமி; ஒன்பது; கார்காலம்; காண்க: **சாரணை.**

**நவமணி** – கோமேதகம், நீலம், பவளம், புருடராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வயிரம், வைடூரியம் என்னும் ஒன்பது மணிவகைகள்.

**நவமி** – ஒன்பதாந் திதி.

**நவமுகில், நவமேகம்** – ஆவர்த்தம், சம்வர்த்தம், புட்கலம், துரோணம், காளம், நீலம், வாருணம், வாயுவம், தமம் ஆகிய ஒன்பதுவகை மேகங்கள்.

**நவரசம்** – நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை, அமைதி என்னும் ஒன்பான் சுவைகள்.

**நவரத்தினம்** – காண்க: **நவமணி.**

**நவரதம்** – காண்க: **நவரசம்.**

**நவராத்திரி** – புரட்டாசி மாதம் வளர்பிறை பிரதமை முதல் கொற்றவை, திருமகள், கலைமகள் ஆகிய சத்திகளைப் பூசிக்கும் ஒன்பது நாள்.

**நவரோசு** – ஒரு பண்வகை.

**நவலோகம்** – பொன், இரும்பு, செம்பு, ஈயம், வெள்ளி, பித்தளை, தரா, துத்தநாகம், வெண்கலம் ஆகிய ஒன்பது உலோகங்கள்.

**நவவருடம்** – குரு, இரணிய, இரமிய, இளாவிருத, கேதுமால, பத்திர, அரி, கிம்புருட, பாரத என்னும் பூமியின் ஒன்பது பெரும் பிரிவுகள்.

**நவாக்கரி** – ஒன்பது எழுத்துகளுள்ள மந்திர வகை.

**நவாங்கிசம்** – இராசியை ஒன்பதாகப் பகிர்தல்.

**நவாடா** – தோணி.

**நவாது** – வெண்மையான சருக்கரைவகை.

**நவாமிசம்** – காண்க: **நவாங்கிசம்.**

**நவி** – கோடரி.

**நவித்தல்** – அவித்தல்.

**நவியம்** – காண்க: **நவி,** மழுப்படை; புதுமை; புதியது.

**நவிர்** – ஆண்மயிர்; முள்முருக்கமரம்; துரும்பு; மருதயாழ்த்திறம்; வாள்; புன்மை.

**நவிரம்** – ஆண்மயிர்; உச்சி; தலை; மயில்; மலை; நன்னன்மலை; மருதயாழ்த்திறவகை; புன்மை; வாள்.

**நவிரல்** – ஒரு மரவகை.

**நவிலுதல்** – சொல்லுதல்; கற்றல்; பெரிதொலித்தல்; பாடுதல்; செய்தல்; பழகுதல்; தாங்குதல்; விரும்புதல்; குறித்தல்; மிகுதல்.

**நவிழ்த்தல்** – அவித்தல்.

**நவிற்றுதல்** – சொல்லுதல்; ஆராய்தல்; அதிகாரத்தோடு உரைத்தல்.

**நவின்றோர்க்கினிமை** – நூலின் பத்தழகினுள் ஒன்று.

**நவீனம்** – புதிய முறையில் எழுதப்பட்ட கதை.

**நவுதல்** – நெகிழ்தல்; மட்கிப்போதல்.

**நவுரி** – எக்காளவகை.

**நவை** – குற்றம்; இழிவு; தண்டனை.

**நவைத்தல்** – கொல்லுதல்.

**நழுக்கம்** – ஆழமின்மை; மழுங்குதல்.

**நழுக்குதல்** – வருத்துதல்; அரிசியை ஒன்றிரண்டாகக் குற்றுதல்; மழுங்கச்செய்தல்; தந்திரமாய் விட்டுவிலகுதல்; கீறுதல்; சிறிதுசிறிதாக மலம்போதல்.

**நழுங்குதல்** – மழுங்குதல்; கீறப்பெறுதல்; வழுவுதல்.

**நழுநழுத்தல்** – பிடிகொடாது பேசுதல்.

**நழுப்புதல்** – மயங்கச்செய்தல்; வேலை செய்ய மறுகுதல்.

**நழுவமுது** – கூழ்.

**நழுவல்** – பிடிகொடாது பேசுகை; மறைந்து சொல்லுகை; ஓர் அபசுரம்.

**நழுவுதல்** – வழுவுதல்; தந்திரமாய் நீங்குதல்; பிடிகொடாது பேசுதல்.

**நள்** – நடு; இரவு; உச்சிப்பொழுது; திருவோணநாள்; செறிவு.

**நள்ளலர், நள்ளார்** – பகைவர்.

**நள்ளி** – நண்டு; கற்கடகராசி; உறவு; கடையெழு வள்ளலுள் ஒருவன்.

**நள்ளிடை** – நடுஇடம்.

**நள்ளிருணாறி** – இரவில் மணக்கும் இருவாட்சிப்பூ.

**நள்ளிருள்** – செறிந்த இருள்.

**நள்ளு** – மருங்கு; காண்க: நள்ளுதல்.

**நள்ளுதல்** – நட்புக்கொள்ளுதல்; விரும்புதல்; அடைதல்.

**நள்ளுநர்** – நண்பர்.

**நள்ளெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**நள** – அறுபதாண்டுக் கணக்கில் ஐம்பதாம் ஆண்டு.

**நளத்தம்** – சடாமாஞ்சில்பூண்டு.

**நளபாகம்** – நளன் செய்த சமையல் போன்றதான உயர்ந்த சமையல், நன்றாய்ச் சமைத்த உணவு.

**நளம்** – அகலம்; காண்க: தாமரை; சிற்ப நூல்களுள் ஒன்று; நளவசாதி.

**நளி** – அகலம்; பெருமை; செறிவு; குளிர்ச்சி; கூட்டம்; செருக்கு; நிந்தை; எள்ளல்; தேள்; காண்க: வெண்சாரணை.

**நளிதல்** – செறிதல்; பரத்தல்; ஒத்தல்.

**நளிப்பு** – காண்க: நளிவு.

**நளிய** – ஓர் உவம உருபு.

**நளிர்** – குளிர்ச்சி; குளிர்காய்ச்சல்; பகை; செறிவு; பெருமை; நண்டு.

**நளிர்வித்தல்** – நடுங்கச்செய்தல்.

**நளிவிடம்** – தேள்.

**நளிவு** – செறிவு.

**நளினக்காரன்** – நயப்பேச்சுள்ளவன்; விகடன்; எள்ளிநகையாடுவோன்.

**நளினம்** – தாமரை; தண்ணீர்; நயச்சொல்; இங்கிதம்; நிந்தை; ஏளனம்.

**நளினாட்சமாலை** – தாமரைமணிமாலை.

**நளினி** – திருமகள்; தாமரைப் பொய்கை; ஒரு பண்வகை.

**நளினை** – திருமகள்.

**நளுக்கல்** – நெல்லின் இரண்டாம் குற்று.

**நளுக்குதல்** – நடுக்குதல்.

**நளுங்கு** – ஒரு கிளிஞ்சில்வகை; காண்க: அழுங்கு.

**நளுத்தை** – ஒரு பண்வகை.

**நளை** – ஏலத்தோல்.

**நற்கதி** – துறக்கம் முதலிய நற்பதவி.

**நற்கந்தம்** – நறுமணம்.

**நற்காட்சி** – நல்லறிவு; கண்ணுக்கினிமையான காட்சி; இரத்தினத்திரயத்துள் ஒன்று; பழுதில்லாத கருத்து.

**நற்காமம்** – ஒத்த காமம்.

**நற்காலம்** – நல்லகாலம்; ஆங்காலம்; காலவகை ஆறனுள் ஒன்று.

**நற்கீர்த்தி** – பெரும்புகழ்.

**நற்கு** – நன்மை; நன்றாக.

**நற்குடி** – காண்க: நற்குலம்.

**நற்குணம்** – நல்ல தன்மை.

**நற்குலம்** – உயர்குடி.

**நற்குறி** – நன்னிமித்தம்.

**நற்கோள்** – புதன், வியாழன், வெள்ளி முதலிய நன்மைசெய்யும் கோள்கள்.

**நற்சாட்சி** – பரிந்துரை; அனுகூல சாட்சி.

**நற்சாந்து** – சுண்ணச்சாந்து; சன்னச்சாந்து.

**நற்சார்வு** – நல்லோர் கூட்டம்; நல்லடைக்கலம்; அறச்சிந்தை.

**நற்சாரி** – நவச்சாரம்.
**நற்சிலை** – கருங்கல்.
**நற்சீரகம்** – நச்சீரகம்; கருஞ்சீரகம்; சன்னச்சீரகம்.
**நற்செங்கல்** – காவிக்கல்.
**நற்செய்தி** – நல்ல செய்தி.
**நற்சொல்** – நன்னிமித்தமொழி.
**நற்பலம்** – வெட்பாலைமரம்.
**நற்பிரியம்** – மிக்க அன்பு; பற்பாடகச்செடி.
**நற்பு** – நன்மை.
**நற்புத்தி** – நல்லறிவு.
**நற்பேறு** – சிறந்த செல்வம்; நல்லூழ்.
**நற்போர்** – அறநெறி தவறாத சண்டை, அறப்போர்.
**நற்றம்** – நற்குணம்.
**நற்றரித்தல்** – நன்றாக நிலைத்தல்.
**நற்றவம்** – வீடு பெறுதற்குச் செய்யுந் தவம்.
**நற்றாய்** – பெற்ற தாய்.
**நற்றிறம்** – நன்மை; நீதிநெறி; நோன்பு.
**நற்று** – நன்மை.
**நற்றுடி** – புன்னாகமரம்; வேர்.
**நற்றுணை** – நல்வாழ்வுக்குத் துணைநிற்கும் பொருள்.
**நற்றுளி** – அத்திப்பிசின்; அத்திமரம்.
**நற்றோழி** – அருமைத்தோழி.
**நற** – தேன்; கள்.
**நறநறப்பு** – மனவேற்றுமை.
**நறவம்** – தேன்; கள்; பால்; மணம்; காண்க: **மயிற்கொன்றை**; **ஞாழல்**; **குங்குமமரம்**; அனிச்சமரம்.
**நறவு** – தேன்; கள்; மணம்; மணக்கொடிவகை; சேரநாட்டிலுள்ள ஓர் ஊர்.
**நறளை** – மரவகை; பிரண்டைவகை.
**நறா** – கள்; தேன்; மணம்.
**நறுக்கரிசி** – பாதி வெந்த சோறு.
**நறுக்கு** – துண்டு; ஓலைச்சீட்டு; நாகசுரத்தின் நாக்கு.
**நறுக்குத்திப்பிலி** – தேசாவரம் என்னும் சரக்கு.
**நறுக்குதல்** – வெட்டுதல்; துண்டித்தல்; நொறுக்குதல்.
**நறுக்குமூலம்** – கண்டதிப்பிலி; வெட்டிவேர்.
**நறுகுமுறுகெனல்** – பொறாமைக்குறிப்பு.
**நறுசுவொறுசாக** – செட்டாக; நேர்த்தியாக.
**நறுஞ்சுதை** – தூய ஆவின் பால்.
**நறுதடி** – அடைகல்.
**நறுந்தாது** – முப்பத்திரண்டு ஓமாலிகைகளுள் ஒன்றான மணச்சரக்கு.
**நறுந்தொடை** – மணமுள்ள மாலை.
**நறுநறெனல்** – பல்லைக்கடித்தற் குறிப்பு; சுரசுரப்புக் குறிப்பு.
**நறுநாற்றம்** – நல்ல மணம்.
**நறுநெய்** – பசுவின் நெய்.
**நறும்பிசின்** – காண்க: **கரியபோளம்**; பிசின்வகை.
**நறும்புகை** – மணப்புகை.
**நறும்புன்னை** – காண்க: **நறுந்தாது**.
**நறுமடி** – அழகிய துகில்.
**நறுமண்** – மகளிர் கூந்தலில் தேய்த்துக் கொள்ளும் வாசனை மண்வகை.
**நறுமருப்பு** – இஞ்சி.
**நறுமா** – எளியது; எளியவன்; புறக்கணிப்பு, அலட்சியம்; வெறுமை; புல்லன்.
**நறுமாதுளம்** – தித்திப்பு மாதுளை.
**நறுமுதல்** – பல்லைக்கடித்தல்; பல்லாற்கடித்தல்.
**நறுமுறுத்தல்** – முறுமுறுத்தல்; உறுமுதல்; பொறாமைகொள்ளுதல்.
**நறுமுறெனல்** – முறுமுறுத்தற்குறிப்பு.
**நறுமை** – நன்மை; நன்மணம்.
**நறுமொறுத்தல்** – காண்க: **நறுமுறுத்தல்**.
**நறுவட்டாணி** – மிகு திறமை; பொருளின்றி நயமாய்ப் பேசுந் திறம்.
**நறுவியது** – நல்லது; மணப்பண்டம்.
**நறுவிலி** – ஒரு மரவகை; பெருநறுவிலி.
**நறை** – கள்; தேன்; நறும்புகை; மணம்; மணப்பண்டம்; மணக்கொடிவகை; குற்றம்.
**நறைக்காய்** – சாதிக்காய்.
**நன்கலந்தருநன்** – இரத்தினப் பணித்தட்டான்.
**நன்கனம்** – நன்றாக.
**நன்காடு** – சுடுகாடு; இடுகாடு.
**நன்கு** – அழகு; மிகுதி; நல்லது; நலம்; நிலைபேறு; நன்னிமித்தம்; மகிழ்ச்சி; மிகவும்; இதம்.
**நன்குமதித்தல்** – சிறப்பித்தல்.
**நன்கொடை** – பரிசில்; உதவிப்பொருள்; தருமம்.
**நன்செய்** – நெல்லும் கரும்பும் விளையும் வயல்.
**நன்சொல்** – இன்சொல்; நற்போதனை.
**நன்பகல்**, **நன்பகலந்தி** – உச்சிக்காலம்.
**நன்பால்** – நல்லொழுக்கம்.
**நன்பு** – நன்மை; செவ்வையாய்.
**நன்பொருள்** – மெய்ப்பொருள்; மகன்.
**நன்மக்கள்** – நல்ல பிள்ளைகள்; சான்றோர்.
**நன்மார்க்கம்** – நன்னெறி, நல்வழி.
**நன்முகம்** – அழகிய முகம்; இன்முகம்; தாராளம்.
**நன்முத்து** – சிப்பியிலிருந்து எடுக்கும் முத்து.
**நன்மை** – நலம்; பயன்; உதவி; சிறப்பு; நன்னெறி; நற்குணம்; ஆக்கம்; நற்செயல்; நல்வினை; வாழ்த்துமொழி; மிகுதி; மேம்பாடு; புதுமை; அழகு; நல்லருள்; காண்க: **நன்மையாதல்**.

**நன்மைப்பகுதி, நன்மைப்பேறு** – நல்வினைப்பயன்.

**நன்மையாதல்** – பூப்படைதல்.

**நன்மொழி** – இன்மொழி; உறுதிமொழி; தேவ பாணி.

**நன்மொழிபுணர்த்தல்** – நூலழகு பத்தனுள் இனிய மொழிகளைச் சேர்த்து வழங்குகை.

**நன்றாக** – செம்மையாக; ஒரு வாழ்த்துத் தொடர்.

**நன்றாய்** – தாராளமாய்; காண்க: **நன்றாக.**

**நன்றாயிருத்தல்** – நல்ல நிலைமையிலிருத்தல்; நல்வாழ்வோடிருத்தல்.

**நன்றி** – நன்மை; உதவி; செய்ந்நன்றி; அறம்.

**நன்றிகெட்டவன்** – செய்ந்நன்றியை மறந்தவன்.

**நன்றிகேடு, நன்றிகொல்லுதல், நன்றிகோறல்** – செய்ந்நன்றி மறக்கை.

**நன்றிசொல்லுதல்** – செய்ந்நன்றியறிவித்தல்.

**நன்றிமறத்தல்** – செய்ந்நன்றி மறந்துவிடுதல்.

**நன்றியற்றவன்** – செய்ந்நன்றி மறந்தவன்.

**நன்றியறிதல்** – செய்ந்நன்றியுணர்தல்.

**நன்றியில்செல்வம்** – பயன்படாச் செல்வம்.

**நன்றியீனம்** – காண்க: **நன்றிகேடு.**

**நன்று** – நல்லது; சிறப்பு; பெரிது; அறம்; இன்பம்; நல்வினை; உதவி; வாழ்வின் நோக்கம்; துறக்கம்; ஏற்கைக்குறிப்பு.

**நன்னடத்தை, நன்னடை** – நல்லொழுக்கம்.

**நன்னயம்** – இன்சொற் செயல்கள்; நல்ல உதவிகள்; உபசாரம்; நன்மை; நினைவு.

**நன்னர்** – நன்மை.

**நன்னாட்கொள்ளுதல்** – மங்கலமான நாளைக் குறிப்பிடுதல்.

**நன்னாரி** – கொடிவகை.

**நன்னாள்** – நல்ல நாள்; விழாநாள்.

**நன்னி** – சிறியது.

**நன்னிக்கல்** – மருந்தரைக்கும் அம்மி.

**நன்னிலம்** – நன்செய்.

**நன்னிலமிதித்தல்** – மணமகனான அரசன் தன் மனைவியைவிட்டு முதன்முதல் அத்தாணி மண்டபத்திற்கு அடிவைக்கும் சடங்கு.

**நன்னிலை** – நல்ல நிலைமை; நல்லொழுக்கம்; தவம்; உலகம்.

**நன்னிறம்** – வெண்ணிறம்.

**நன்னீர்** – தூயநீர்; பனிநீர்; நல்ல இயற்கை.

**நன்னுதல்** – பல்லாற் கடித்தல்; நறுக்குதல்.

**நன்னெறி** – நல்ல வழி; ஒரு நீதிநூல்.

**நனந்தலை** – அகன்ற இடம்; மண்டலம்; நடு; உச்சந்தலை; உச்சி; திசை.

**நனம்** – அகற்சி, அகலம்.

**நனவு** – மெய்ம்மை; விழிப்பு; நினைவு; களன்; போர்க்களம்; தேற்றம்; அகலம்.

**நனா** – நனவுநிலையான விழிப்பு.

**நனி** – மிகுதியாய்.

**நனை** – பூவரும்பு; தேன்; கள்; யானைமதம்.

**நனைத்தல்** – ஈரமாக்குதல்.

**நனைதல்** – ஈரமாதல்; அரும்புதல்; தோன்றுதல்.

**நனைவு** – ஈரம்.

## நா

**நா** – ஓர் உயிர்மெய்யெழுத்து(ந்+ஆ); சொல்; நடு; மணி முதலியவற்றின் நாக்கு; தீயின் சுடர்; திறவுகோலின் நாக்கு; நாகசுரத்தின் ஊதுவாய்; துலைநாக்கு; அயல்; பொலிவு.

**நாக்கரளை** – நாவில் வரும் ஒரு நோய்வகை.

**நாக்களாம்பூச்சி** – காண்க: **நாக்குப்பூச்சி.**

**நாக்கறுத்தான்புல்** – தருப்பை.

**நாக்கு** – நாக்கு என்னும் உறுப்பு; சொல்; நடு; துலைநா; மணியின் நாக்கு; தீயின் சுடர்; பூட்டின் தாள்; திறவுகோலின் நாக்கு; நாகசுரத்தின் ஊதுவாய்; அயல்; தானியக்கதிர்; படகு வலிக்கும் தண்டு.

**நாக்குத்தவறுதல்** – சொல்தவறுதல்; பொய் சொல்லுதல்.

**நாக்குநரம்பற்றவன்** – தீயவை பேசுபவன்; அளவு கடந்து பேசுபவன்.

**நாக்குநீட்டுதல்** – அளவுகடந்து பேசுதல்.

**நாக்குநீளுதல்** – விருப்பமிகுதல்; கடுமையாய்ப் பேசுதல்.

**நாக்குப்புண்** – நாவில் தோன்றும் நோய்வகை.

**நாக்குப்புரட்டு** – பொய்.

**நாக்குப்புரளுதல்** – சொல் தவறுதல்.

**நாக்குப்புற்று** – நாவில் உண்டாகும் புண்வகை.

**நாக்குப்பூச்சி** – மலப்பையில் வாழும் சிறு புழு; வயிற்றில் உள்ள நீண்ட புழுவகை; நாங்கூழ்.

**நாக்குவழித்தல்** – நாவின் அழுக்கினை வழித்து நீக்குதல்.

**நாக்குவளைத்தல்** – பழித்தல்.

**நாக்குவாங்குதல்** – நாக்கை உள்ளிழுத்தல்; களைத்துப்போதல்; வில்லங்கப்படுத்துதல்; களைக்கப்பண்ணுதல்.

**நாக்குவிழுதல்** – பேச நாவெழாதிருத்தல்.

**நாக்குழறுதல்** – நாத்தழுதழுத்தல்.
**நாக்குறுதி** – சொல் தவறாமை.
**நாக்கைப்பிடுங்கிக்கொள்ளுதல்** – தவறு நடந்ததற்கு மிக்க வருத்தங்காட்டுதல்; நாவைப் பிடுங்கிக்கொண்டு தற்கொலை செய்து கொள்ளுதல்; முயற்சியெடுத்துக்கொள்ளுதல்; அதிகமாகப் பேசுதல்.
**நாக்கொட்டுதல்** – நாவறளுகை.
**நாகக்குவடு** – செம்புமலை.
**நாககர்ணம்** – செவ்வாமணக்குச்செடி.
**நாககற்பம்** – செவ்வீயம்.
**நாககன்னிகை** – நாகலோகத்துப் பெண்.
**நாககெந்தி** – நேர்வாளம்; காண்க: **வஞ்சிக்கொடி**.
**நாகசம்** – சிந்தூரம்; ஈயம்.
**நாகசரம்** – காண்க: **நாகசுரம்**.
**நாகசாபம்** – நல்லபாம்பைக் கொல்வதனால் ஏற்படும் பழிவினை.
**நாகசுரம்** – துளைக்கருவிவகை.
**நாகசேதகன்** – மலைகளின் சிறகை அரிந்தோனாகிய இந்திரன்.
**நாகணம்** – நறும்பண்டவகை; நேர்வாளம்.
**நாகணவாய், நாகணவாய்ச்சி, நாகணவாய்ப்புள்** – பூவைப் பறவை.
**நாகணை** – திருமாலின் பாம்புப் படுக்கை.
**நாகணையினான்** – பாம்பைப் படுக்கையாகக் கொண்ட திருமால்.
**நாகத்திசை** – வடமேற்கு.
**நாகதந்தம்** – யானைக்கொம்பு; பாம்பின் பல்; முளையாணி.
**நாகதாளி** – காண்க: **சப்பாத்துக்கள்ளி**.
**நாகதிசை** – மேற்கு.
**நாகதீபம்** – ஐந்தலை நாகத்தின் வடிவம்போன்ற விளக்கு.
**நாகதேவன்** – காண்க: **ஆதிசேடன்**.
**நாகதேனி** – காண்க: **பெருமருந்து**.
**நாகதொனி** – மருதப் பண்களுள் ஒன்று.
**நாகந்தி** – காண்க: **நேர்வாளம்**.
**நாகநாடு** – துறக்கம்; நாகர் என்னும் மனித சாதியார் வாழும் நாடு; பவணலோகம்.
**நாகநாதன்** – துறக்கத்துக்கு இறைவனான தேவேந்திரன்; காண்க: **ஆதிசேடன்**; சிவன்.
**நாகப்பகை** – பாம்பிற்குப் பகையான கருடன்.
**நாகப்பச்சை** – பச்சைக்கல்வகை.
**நாகப்பாம்பு** – நல்லபாம்பு; வயிற்றுப்பூச்சி.
**நாகப்பூ** – ஒரு மரவகை.
**நாகப்பூச்சி** – காண்க: **நாக்குப்பூச்சி**.
**நாகபடம்** – நல்லபாம்பின் படம்; பாம்புப் படத்தின் உருவம்கொண்ட ஒரு காதணி வகை; படமெடுத்த நாகத்தின் உருக்கொண்ட தோளணிவகை.
**நாகபந்தம்** – ஒரு சித்திரகவிவகை.
**நாகபந்து** – அரசமரம்.
**நாகபாசம்** – பாம்புருவான ஒரு படைக்கலம்.
**நாகம்** – வானம்; துறக்கம்; மேகம்; ஒலி; காண்க: **நல்லபாம்பு**; **நாகப்பச்சை**; **நாவல்**; பாம்பு நஞ்சு; நாகலோகம்; யானை; குரங்கு; கருங்குரங்கு; காரீயம்; துத்தநாகம்; நற்சீலை; மலை; புன்னைமரம்; ஞாழல்; சுகம்.
**நாகம்மா** – பாம்புத் தேவதை.
**நாகமணி** – நாகத்தின் தலையில் இருப்பதாகக் கருதப்படும் இரத்தினம்.
**நாகமல்லி** – கொடிவகை.
**நாகமாதா** – துளசி.
**நாகமாபுரம்** – மதுரை.
**நாகமுகன்** – யானைமுகத்தவனான கணபதி.
**நாகர்** – தேவர்; மகளிர் தலையணிவகை; பாதி மக்கள் வடிவும் பாதி நாகவடிவுமாய் அமைந்த நாகலோகவாசிகள்; ஒரு பழைய சாதியார்.
**நாகரகன்** – சித்திரகாரன்; கள்வன்.
**நாகரத்தினம்** – காண்க: **நாகமணி**.
**நாகரம்** – காண்க: **தேவநாகரி**; வடமொழி எழுத்து; சுக்கு; தேன்றொடை.
**நாகரவண்டு** – பொன்வண்டு; நத்தைவகை; சிறு குழந்தை.
**நாகரன்** – நகரத்தான்; சிறந்தோன்; கணவன்; உடன்பிறந்தான்.
**நாகராகம்** – பெரும் பண்களுள் ஒன்று.
**நாகராசன்** – காண்க: **ஆதிசேடன்**.
**நாகரி** – குருக்கத்திக்கொடி.
**நாகரிகம்** – நகரவொழுக்கம்; காண்க: **தேவநாகரி**; செப்பம்; கண்ணோட்டம்; மரியாதை; பிலுக்கு.
**நாகரிகர்** – கண்ணோட்டமுடையவர்; நகரத்தார்; பல்கலை வல்லோர்; காமுகர்; சதுரர்; சுவைஞர்.
**நாகரிகி** – செப்பமான நடையுடையவள்.
**நாகரையன்** – காண்க: **ஆதிசேடன்**.
**நாகல்** – நாவல்.
**நாகலதை** – ஆண்குறி.
**நாகலிங்கம்** – நாகத்தால் கவிக்கப்பெற்ற இலிங்கம்போன்ற உருவத்தைக்கொண்ட பூவுள்ள மரவகை.
**நாகலோகம்** – தேவலோகம்; கீழேழுலகுள் ஒன்று, பாதலம்.
**நாகவடம்** – காண்க: **நாகபடம்**.
**நாகவராளி** – ஒரு பண்வகை.
**நாகவல்லி** – வெற்றிலைக்கொடி; திருமண நிறைவுச் சடங்கில் ஒன்று.

**நாகவள்ளி** – வள்ளிக்கிழங்கு; வெற்றிலைக் கொடி.

**நாகவாய்** – கடைசற் கருவிவகை.

**நாகவாயு** – தசவாயுக்களில் ஒன்றான விக்கல் முதலியவற்றை உண்டாக்கும் காற்று.

**நாகவாரிகம்** – மயில்; கருடன்; அரசர் ஏறுதற் குரிய யானை.

**நாகவாரிகன்** – யானைப்பாகன்.

**நாகவீதி** – பால்வீதி மண்டலம்.

**நாகவீதியர்** – துறக்கலோகத்திற்குச் செல்லும் வழியில் வாழும் தேவசாதியார்.

**நாகன்** – காண்க: **நாகவாயு.**

**நாகாசனன்** – பாம்பை உணவாகவுடையவனான கருடன்.

**நாகாத்திரம்** – காண்க: **நாகபாசம்.**

**நாகாதிபன்** – இந்திரன்; ஐராவதம்; ஆதிசேடன்; இமயமலை; மேருமலை; குறிஞ்சித் தலைவன்.

**நாகாந்தகன்** – நாகங்களைக் கொல்பவனான கருடன்.

**நாகாபரணன்** – நாகங்களை அணிகலனாக உடைய சிவபிரான்.

**நாகாயுதம்** – ஒரு படைக்கலவகை.

**நாகாரி** – கருடன்; தேவேந்திரன்.

**நாகாலயம்** – பாதலம்; தேவர்களிருப்பிடம்.

**நாகியர்** – தேவமாதர்.

**நாகினி** – காண்க: வஞ்சிக்கொடி; வெற்றிலை.

**நாகு** – இளமை; பெண்மை; எருமை, மரை, பெற்றம், நந்து என்பவற்றின் பெண்; நத்தை; பசு; கிடாரிக்கன்று; சங்கு; இளமரம்; பெண் மீன்; புற்று; மலை.

**நாகுகன்று** – கிடாரிக்கன்று.

**நாகேசுரம்** – சிறுநாகப்பூ.

**நாகேசுவரன்** – பாம்புகளை அணிந்த சிவபிரான்.

**நாகேந்திரன்** – காண்க: **ஆதிசேடன்.**

**நாகை** – சோழநாட்டிலுள்ள ஒரு துறைமுகப் பட்டினம்; காண்க: நாவல்; பாம்பு.

**நாங்கு** – மரவகை; தானியமாகச் செலுத்தும் வட்டி.

**நாங்குதல்** – ஆற்றல் குறைதல்.

**நாங்குழு, நாங்கூழ்** – காண்க: **நாக்குப்பூச்சி.**

**நாச்சி** – தலைவி.

**நாச்சிமார்** – திருமாலின் தேவிமார்; ஏழு தேவியர்.

**நாச்சியார்** – அரசி அல்லது தலைவி; பெண் தெய்வம்; ஆண்டாள்.

**நாச்செறு** – வசை.

**நாசகாரி** – கேடுசெய்பவன்(ள்).

**நாசகாலம்** – அழிவுகாலம்.

**நாசகாலன்** – பொருளை அழிப்பவன்; கொடியோன்.

**நாசநட்சத்திரம்** – சுக்கிரன் நின்ற நாளுக்குப் பத்தாம் நாள்.

**நாசம்** – அழிவு; சாவு; காண்க: **நாசநட்சத்திரம்.**

**நாசமிலி** – கேடற்ற சிவபிரான்.

**நாசமோசம்** – கேடு, அபாயம்.

**நாசயோகம்** – கேடு விளைக்கும் வார நட்சத் திரங்களின் சேர்க்கை.

**நாசன்** – அழிப்போன்; யமன்.

**நாசனம்** – காண்க: **நாசம்.**

**நாசனன்** – அழிப்பவன்.

**நாசனி** – அழிப்பவள்.

**நாசாக்கிரம்** – காண்க: **நாசிகாக்கிரம்.**

**நாசி** – மூக்கு; மூக்குத்துளை; சலதாரையின் வாய்; கதவுநிலையின் மேற்சட்டம்; மாளிகை மேனிலையுறுப்பு; இசைக்குற்றவகை.

**நாசிகாக்கிரம்** – நுனிமூக்கு.

**நாசிகாபரணம்** – மூக்குத்தி.

**நாசிகாபீடம்** – மூக்குள் வளரும் சதைவகை.

**நாசிகாமலம்** – மூக்குச்சளி, மூக்குப்பீ.

**நாசிகேது** – அக்கினி.

**நாசிகை** – மூக்கு; மாளிகையின் மேனிலையில் உள்ள உறுப்பு; காண்க: **நாசிதாரு.**

**நாசித்துவாரம்** – மூக்குத்துளை.

**நாசிதாரு** – கதவுநிலையின் மேற்சட்டம்.

**நாசியம்** – மூக்கணாங்கயிறு.

**நாசுக்கு** – அழகு.

**நாசுவன்** – அம்பட்டன்.

**நாசோற்பத்தி** – உலகம் மாறிமாறி அழிந்து பிறப்பது.

**நாஞ்சில்** – கலப்பை; மதிலுறுப்பு; வள்ளுவன் என்ற ஒரு தலைவனின் மலை; நாஞ்சில்நாடு.

**நாஞ்சிலான், நாஞ்சிற்படையோன்** – கலப்பைப் படையுடையோனாகிய பலராமன்.

**நாட்கடத்துதல்** – நாட்கழித்தல்; நாள் தள்ளி வைத்தல்.

**நாட்கடன்** – காலைக் கடமை.

**நாட்கணக்கன்** – வாழ்நாளுக்குக் கணக்கு வைத் திருப்பவனான யமன்.

**நாட்கணக்கு** – அன்றாடக் கணக்கு; அன்றாட வேலை; வாழ்நாளின் எல்லை.

**நாட்கவி** – அன்றன்று அரசனைப் புகழ்ந்து கூறும் பாடல்.

**நாட்கழிவு** – காலக்கழிவு; சம்பளம் போடுகை யில் நாளைக் குறைத்துவிடுகை.

**நாட்கால்** – முகூர்த்தக்கால்; காண்க: **நாட்காலம்.**

**நாட்காலம், நாட்காலை** – விடியற்காலம்; ஏற்ற பருவம்.

**நாட்குறித்தல்** – ஏற்ற நாளைக் கணித்தறிதல்.

**நாட்கூலி** – அற்றைக்கூலி.

**நாட்கூறு** – முற்பகல்.

**நாட்கொடி** – சிறப்புநாளை அறிவித்தற்குக் கட்டுங் கொடி; அரசன் நாடோறுஞ் செய்த வெற்றிக்கு அறிகுறியாகக் கட்டிய கொடி.

**நாட்கொல்லி** – ஆயுளைப் போக்குபவனான யமன்; வீண்காலம் போக்குபவன்.

**நாட்கொள்ளுதல்** – நன்னாளில் தொழில் தொடங்குதல்; அரச சின்னங்களாகிய குடை, வாள் முதலியவற்றைப் புறவீடு விடுதல்.

**நாட்கோள்** – அரச சின்னங்களைப் புறவீடு விடுதல்.

**நாட்செய்தல்** – நல்ல வேளையில் செயலில் இறங்குதல்.

**நாட்செல்லுதல்** – நெடுங்காலம் நிற்றல்; வயதாதல்.

**நாட்செலவு** – நாள் கழிகை; அன்றாடம் ஆகும் பணச்செலவு.

**நாட்சோறு** – காலையுணவு; மணம் செய்யப் புகுவோர்க்கு அவர் உறவினர் கொடுக்கும் விருந்து.

**நாட்டம்** – நோக்கம்; கண்; பார்வை; அழகு; ஆராய்ச்சி; சோதிடநூல்; செவ்வழி யாழ்த்திற வகையுள் ஒன்று; விருப்பம்; ஐயம்; திரிதல்; நிலைநிறுத்துகை; நாட்டுத் தலைமை; ஐயம்; வாள்.

**நாட்டம்கார்** – ஒரு நிலத்தைப் பயிரிடுவதற்குச் சிறந்த உரிமையுடையோன்.

**நாட்டமிலி** – குருடன்.

**நாட்டமைதி** – நாடு குழப்பமின்றி இருக்கும் நிலை; நாட்டின் சிறப்பிற்குரியவான செல்வம், விளைவு, செழுவளம், செங்கோல், நோயின்மை, குறும்பின்மை.

**நாட்டவன்** – நாட்டுப்புறத்தவன்; நாட்டான்.

**நாட்டாசாரம்** – நாட்டுவழக்கம்.

**நாட்டாண்மை** – ஊரதிகாரம்; செயலாற்றும் திறம்.

**நாட்டார்** – தேசத்தார்; ஊர்ச்சபையார்; தென்னார்க்காட்டு மாவட்டத்திலுள்ள ஒரு வேளாள வகுப்பார்; செம்படவர், கள்ளர் குலப் பட்டப்பெயருள் ஒன்று.

**நாட்டாள்** – கூலிவேலை செய்வோன்.

**நாட்டியக்காரன்** – கூத்தன்.

**நாட்டியக்காரி** – நாட்டியம் ஆடுபவள்; பகட்டுக்காரி.

**நாட்டியப்பிரியன்** – சிவபிரான்; நடனப்பிரியன்; கருத்து; பகட்டன்.

**நாட்டியம்** – கை முதலியவற்றால் காட்டும் குறிப்பு; கூத்து.

**நாட்டிருவமுது** – காலைப் படையற்பொருள்.

**நாட்டிலமிர்து** – நாட்டில் விளையும் செந்நெல், சிறுபயறு, பசுநெய், கரும்பு, வாழை ஆகிய பொருள்கள்.

**நாட்டு** – நிலை; சுவர் எழுப்புகையில் குறுக்கே வைக்கும் கல்.

**நாட்டுக்கவுண்டன்** – கொங்கு வேளாளரிற் பெருஞ்செல்வன்.

**நாட்டுக்காவல்** – நாடுகாக்குந் தொழில்.

**நாட்டுக்குற்றம்** – ஊருக்குத் தீது விளைப்பனவாகிய விட்டில், கிள்ளை, யானை, தன்னரசு இழப்பு, மிகுகாற்று, மிகுமழை, வேற்றரசு.

**நாட்டுச்சந்தம்** – பட்டிக்காட்டுத்தனம்.

**நாட்டுச்சரக்கு** – உள்நாட்டுப் பண்டம்.

**நாட்டுச்சார்பு** – மருதநிலம்.

**நாட்டுச்சிறப்பு** – நாட்டுவளம்.

**நாட்டுத்தேவர்** – நாட்டில் வணங்கப்படும் தேவர்கள்; அந்தணர்.

**நாட்டுதல்** – நடுதல்; படைத்தல்; நிலைநிறுத்துதல்; எழுதுதல்; வாழவைத்தல்.

**நாட்டுப்படை** – அறுவகைப் படையுள் நாட்டு மக்களாலியன்ற படை.

**நாட்டுப்பழம்** – நாட்டு வாழைப்பழம்; ஒட்டுக்கனி அல்லாத பழம்.

**நாட்டுப்புறத்தான்** – பட்டிக்காட்டான்.

**நாட்டுப்புறம்** – பட்டிக்காடு.

**நாட்டுப்போக்கு** – நாட்டுவழக்கம்; பொதுவாக வழங்கும் முறை.

**நாட்டுவழக்கம்** – நாட்டுப்பழக்கம்.

**நாட்டுவளப்பம்** – நாட்டின் செழிப்பு; நாட்டு வழக்கம்; நாட்டு அமைதி.

**நாட்டுவளம்** – நாட்டுச் சிறப்பு; நாட்டமைதி.

**நாட்டை** – ஒரு பண்வகை.

**நாட்பட்டிருத்தல்** – நெடுங்கால மிருத்தல்.

**நாட்படுதல்** – நாட்செல்லுதல்; நெடுங்காலந் தங்குதல்; தற்காலத்துக்குத் தகுதியற்றதாதல்.

**நாட்பணம்** – முன்பணம், அச்சாரம்.

**நாட்பணிவிடை** – அன்றாட வேலை; நன்முகூர்த்தத்திற் செய்யும் வேலை.

**நாட்பறை** – நாழிகைப் பறை.

**நாட்பார்த்தல்** – மங்கலச் செயல்களுக்கு நல்ல நாள் பார்த்தல்.

**நாட்பு** – காண்க: ஞாட்பு.

**நாட்பூ** – அன்றலர்ந்த பூ.

**நாட்பொருத்தம்** – காண்க: நட்சத்திரப்பொருத்தம்; செய்யுள் முதன்மொழிப் பொருத்தத்துள் ஒன்று.

**நாட்போது** – அன்றலர்ந்த போது.

**நாடகக்கணிகை** – நாட்டியப் பெண்.

**நாடகக்காரன்** – நாடகமாடுவோன்; காமுகன்; பாசாங்குக்காரன்.

**நாடகக்காரி** – நாடகமாடுவோள்; பாசாங்குக் காரி.

**நாடகச்சந்தி** – முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் என்னும் ஐவகைப்பட்ட நாடகக் கதைப்பொருத்து.

**நாடகசாலை** – கூத்து நிகழும் இடம்; நாடகக் கணிகை.

**நாடகசாலையர்** – கூத்தர், நடிகர்.

**நாடகத்தமிழ்** – முத்தமிழில் கூத்துப்பற்றி வழங்கும் தமிழ் இலக்கியப் பகுதி.

**நாடகத்தரம்பையர்** – மேனகை, அரம்பை, ஊர்வசி, திலோத்தமை என்னும் தேவ கணிகையர்.

**நாடகத்தரு** – நாடகப் பாடல்வகை.

**நாடகத்தி** – கூத்து நிகழ்த்தும் பெண்; விபசாரி.

**நாடகத்துறை** – நடனவித்தை.

**நாடகப்பண்** – நாடகத்தில் வழங்கும் பண்வகை.

**நாடகப்பரத்தை, நாடகப்பெண்** – காண்க: **நாடகக்கணிகை.**

**நாடகபாத்திரம்** – நாடக மேடையில் நடிப்போன்(ள்).

**நாடகம்** – கலை அறுபத்து நான்கனுள் ஒன்று; காண்க: **நாடகத்தமிழ்**; கதை மாந்தர்களின் வடிவம் பூண்டு ஒரு கதையை நடந்ததுபோல் நடித்துக்காட்டுவது.

**நாடகமகள்** – நாடகமாடுங் கணிகை.

**நாடகமாடுதல்** – கூத்து நடித்தல்.

**நாடகமேடை** – நாடகமாடும் அரங்கு.

**நாடகர்** – கூத்தர்.

**நாடகவழக்கு** – நாடகத்திற்குரிய நெறி; புனைந்துரை வழக்கு.

**நாடகவிருத்தி** – சாத்துவதி, ஆரபடி, கைசிகி, பாரதி என்னும் நால்வகை நாடகநடை.

**நாடகன்** – நடனமாடுவோன்.

**நாடகாங்கம்** – அபிநயம்.

**நாடகியர்** – கூத்தர்.

**நாடல்** – ஆராய்தல்.

**நாடவர்** – தேசத்தார்.

**நாடறிவான்** – நாடுகளை அறிபவனான சந்திரன்.

**நாடன்** – தேசத்தான்; ஆளுந்தலைவன்; குறிஞ்சி நிலத் தலைவன்; கார்த்திகைநாள்.

**நாடன்பருத்தி** – ஒரு செடிவகை.

**நாடா** – நெசவுக்கருவிவகை; நூற்பட்டை; அணி வகை.

**நாடி** – நாட்டிலுள்ளவள்; நாட்டையுடையவள்; இரத்தக்குழாய் முதலியன; மூச்சுக்குழாய்; யாழின் நரம்பு; உட்டொளை; பூவின் தாள்; நாழிகை; மூக்கு; மோவாய்; மாளிகையின் மேற்பாகத்தோர் உறுப்பு; சோதிடநூல்; தாதுநரம்பு; இலைநரம்பு.

**நாடிகேளம்** – காண்க: **நாளிகேர(ள)ம்.**

**நாடிதாரணை** – நாடிகளின் நடைமுறை.

**நாடிநரம்பு** – நாடியோட்ட நரம்பு.

**நாடிப்பரீட்சை** – நாடியைச் சோதித்து அறிகை.

**நாடிபார்த்தல்** – தாது பார்த்தல்.

**நாடிமண்டலம்** – சூரியவீதி.

**நாடியொடுங்குதல், நாடிவிழுதல்** – தாதுவின் ஒடுக்கம்; ஊக்கமிழத்தல்.

**நாடு** – நாட்டுப்பகுதி; இடம்; பூமி; உலகம்; நாட்டுப்புறம்; மருதநிலம்; பக்கம்; இடப்பரப்பு; பூவுலகப்பொது; ஒரு பேரெண்.

**நாடுசார்நிலம்** – நாட்டின் பக்கத்திலுள்ள கழனி முதலியவை.

**நாடுதல்** – தேடுதல்; ஆராய்தல்; விரும்புதல்; தெரிதல்; ஒத்தல்; அளத்தல்; கிட்டுதல்; நினைத்தல்; மோப்பம்பிடித்தல்; அளவுபடுதல்.

**நாடுபடுதிரவியம்** – நாட்டிலுண்டாகும் பொருள்களான செந்நெல், செவ்விளநீர், சிறுபயறு, ஆனெய், வாழை, கரும்பு.

**நாடுபிடித்தல்** – நாட்டை வென்று கைக்கொள்ளுதல்; குத்தகையெடுத்தல்.

**நாடுரி** – ஒன்றரை நாழிகொண்ட முகத்தல் அளவை.

**நாடேயன்** – நாடகக் கணிகையின் மகன்.

**நாடோடி** – ஊர்சுற்றித் திரிபவன்; நாட்டுக்குரியது; சாதாரண வழக்கில் உள்ளது.

**நாடோடிப்பேச்சு** – வழக்குச்சொல்; சாதாரணப் பேச்சில் வழங்கும் மொழி.

**நாடோறும்** – தினமும்.

**நாண்** – வெட்கம்; மகளிர்க்குரிய கூச்சம்; வில் நாண்; கயிறு; மாங்கலியங் கோத்த சரடு; காண்க: **அரைஞா(நா)ண்.**

**நாண்ஞாயிறு** – காலை.

**நாண்புடை** – வில்லின் நாணொலி.

**நாண்பூட்டுதல்** – காண்க: **நாணேற்றுதல்.**

**நாண்மகிழ், நாண்மகிழிருக்கை** – நாளோலக்கம்.

**நாண்மங்கலம்** – அறம் விளைக்கும் செங்கோலினையும் அருளினையும் விரும்பியோன் பிறந்த நாளின் சிறப்பைச் சொல்லும் புறத்துறை; அரசற்கு யாண்டு இத்துணை சென்றது என்று எழுதும் மங்கலம்.

**நாண்மதி, நாண்மதியம்** – முழுநிலா.

**நாண்மலர்** – அன்றலர்ந்த பூ.

**நாண்மீன்** – அசுவினி முதலிய விண்மீன்.
**நாண்முதல்** – அதிகாலை.
**நாண்முல்லை** – போரின்பொருட்டுக் கணவன் பிரிந்த இல்லிலே தலைவி தற்காத்துத் தங்கிய நிலைமை கூறும் புறத்துறை.
**நாண்முழவு** – காலை முரசு; நாழிகைப் பறை.
**நாண்மேயல்** – காலை மேய்ச்சல்.
**நாண்மை** – வெட்கம்; மகளிர் கூச்சம்.
**நாணக்கேடு** – வெட்கமின்மை.
**நாணகம்** – நாணயம்.
**நாணநாட்டம்** – தலைவி நாணும் வகையால் அவளுக்குத் தலைவனுடன் கூட்டமுண்மையை ஆராய்ந்தறிகை.
**நாணம்** – வெட்கம்; அறிவு; பயபக்தி; மானம்; தணிகை; கூச்சம்; மகடூஉக் குணம் நான்கனுள் ஒன்று.
**நாணயக்காரன்** – காசுக்கடைக்காரன்; செயலில் நேர்மையாக நடப்பவன்.
**நாணயஞ்செலுத்துதல்** – செயலில் தகுதிகாட்டுதல்.
**நாணயத்தப்பு** – நேர்மை தவறுகை.
**நாணயம்** – நேர்மை; மனச்சாட்சி; செயல் முதலியன குறித்த பயன் தவறாமை; நேர்த்தியானது; முத்திரையிடப்பட்ட காசு; கட்டுப்பாடு; விலங்கின் மூக்கிலிடுங் கயிறு; இயற்கை நிகழ்ச்சி.
**நாணயவான்** – நேர்மை தவறாதவன்.
**நாணயவேலை** – நேர்த்தியான வேலை.
**நாணல்** – ஒரு புல்வகை; வெட்கப்படுதல்; வளைதல்; தருப்பைவகை.
**நாணற்கரும்பு** – கரும்புவகை.
**நாணாளும்** – தினந்தோறும்.
**நாணி** – நாணமுடையாள்; வில்நாண்.
**நாணிக்கொள்ளுதல்** – காண்க: நான்றுகொள்ளுதல்.
**நாணித்தல்** – நாணுதல்.
**நாணிலி** – நாணம் அற்றோர்.
**நாணிழல்** – காலைநிழல்.
**நாணீர்** – புதுப்புனல்.
**நாணு** – நாணம்.
**நாணுகம்** – குதிரை.
**நாணுதல்** – வெட்கப்படுதல்; மனங்குன்றுதல்; பயபக்தி காட்டுதல்; அஞ்சுதல்; பிணங்குதல்; அடங்குதல்; குவிதல்.
**நாணுவம்** – நாகணவாய்ப்புள்.
**நாணுவரையிறத்தல்** – பத்து அவத்தையுள் நாண் நீங்குதலாகிய அவத்தைவகை.
**நாணெறிதல்** – நாணைத் தெறித்து ஒலியெழுப்புதல்.

**நாணேற்றுதல்,** **நாணேறிடுதல்** – வில்லை வளைத்து நாணைக் கொளுவுதல்.
**நாணையம்** – காண்க: நாணயம்.
**நாத்தலைமடிவிளி** – சீழ்க்கை.
**நாத்தழும்பிருத்தல்,** **நாத்தழும்புதல்,** **நாத்தழும்பேறுதல்** – பலமுறை சொல்லுதலால் நாவுக்குப் பழக்கமுண்டாதல்.
**நாத்தனார்(ள்)** – கணவனுடன் பிறந்தாள்.
**நாத்தாங்கி** – காண்க: நாதாங்கி; இலைக்கள்ளி வகை.
**நாத்தாங்கிப்பேசுதல்** – எண்ணிப் பேசுதல்; நாக் குழறிப் பேசுதல்.
**நாத்தி** – கணவனுடன் பிறந்தவள்; ஒன்றுக்கு உள்ளதான ஒரு பொருள் மற்றொன்றுக்கு இல்லாதாகை; இன்மை; அழிவு; தாழ்வாரம்.
**நாத்திகம்** – கடவுள் இல்லை என்னும் கொள்கை; தெய்வ நிந்தனை.
**நாத்திகன்** – கடவுளும் இருவினைப் பயனும் இல்லை என்னும் கொள்கை உள்ளவன்; சமய ஒழுக்கம் அற்றவன்.
**நாத்தூண்** – காண்க: நாத்தனார்(ள்).
**நாதக்குடம்** – சங்கு.
**நாதக்குமிழ்** – விந்து தங்கும் உடலுறுப்பு.
**நாதக்குழல்** – ஊதுகருவி; விந்துக்குழல்.
**நாதகிருத்தியர்** – நற்செயல்கட்கு அனுப்பப்படும் தேவதூதர்.
**நாதகீதன்** – சிவபிரான்.
**நாததத்துவம்** – ஞானசத்தியின் இருப்பிடமும் சுத்த தத்துவங்களுள் ஒன்றுமாகிய தத்துவம்.
**நாதம்** – சத்தம்; ஒலி; வாச்சிய ஓசை; இசைப் பாட்டு; சிவபிரானது ஒன்பதுவகை மூர்த்தங்களுள் ஒன்று; பாதி வட்டமான மந்திரலிபி; தலைவனையுடைமை; செம்பால், சோணிதம்.
**நாதரவி** – உடற்கொழுப்பு.
**நாதரூபதரை** – பார்வதி.
**நாதரூபம்** – சிவனது ஒலிவடிவு.
**நாதவத்தம்** – காண்க: யானைநெருஞ்சி.
**நாதவுப்பு** – பூமியில் உண்டாகும் உப்பு.
**நாதன்** – தலைவன்; அரசன்; கணவன்; முனிவன்; குரு; இறைவன்; சிவன்; அருகன்; தமையன்.
**நாதாக்கள்** – ஞானியர்.
**நாதாக்கியை** – காண்க: நாதரூபதரை.
**நாதாங்கி** – பூட்டு, தாழ்ப்பாள், சங்கிலி இவற்றை மாட்ட உதவும் கதவுநிலை உறுப்பு.
**நாதாந்தம்** – ஞானநெறிகளுள் ஒன்று.
**நாதாந்தன்** – சிவன்.
**நாதாந்தி** – பொன்னிமிளை.
**நாதார்** – ஏழைக்குடிகள்.
**நாதான்** – தலைவன்.

**நாதி** – ஞாதி; உறவினன்; காப்பாற்றுவோன்; பெருங்காயவகை.
**நாதிக்காரன்** – ஞாதி; உறவினன்.
**நாதித்தல்** – ஒலியெழுதல்; ஒலியெழுப்புதல்.
**நாதியன்** – காண்க: **நாதான்.**
**நாதேயம்** – காண்க: வஞ்சிக்கொடி; சீந்திற் கொடி; துரிசு; இந்துப்பு.
**நாந்தகம்** – திருமாலின் வாள்; வாள்.
**நாந்தல்** – மந்தாரம்; ஈரம்; மந்தாரமாய் இருக்குங் காலம்.
**நாந்தி** – நாடக முன்னுரை; பாயிரம்; சிராத்த வகை; முதுகு.
**நாந்திகந்துரு** – மரமஞ்சள்.
**நாந்துதல்** – நனைதல்.
**நாநல்கூர்தல்** – பேசாதிருத்தல்.
**நாநீட்டுதல்** – நாவைநீட்டிப் பேசுதல்.
**நாப்பண்** – நடு; தேர்நடு; யாழினுறுப்பு.
**நாப்பாடம்** – மனப்பாடம் பண்ணிய வாய்ப் பாடம்.
**நாப்பு** – பரிகாசம், ஏளனம்.
**நாப்புக்காட்டுதல், நாப்புதல்** – அழகுகாட்டுதல்; வஞ்சித்தல்.
**நாப்புற்று** – நாநோவுவகை.
**நாபதி** – பேச்சாற்றல் படைத்தவன்; பேச்சு அருளுவோன்.
**நாபி** – கொப்பூழ்; கத்தூரி; காண்க: **வச்சநாபி;** வச்சநாபி முறிவு என்னும் ஒரு மருந்துவகை.
**நாபிக்கொடி** – கொப்பூழ்க்கொடி.
**நாபிசன்** – திருமாலின் உந்தியில் பிறந்தோனான நான்முகன்.
**நாபிதன்** – காண்க: **நாவிதன்.**
**நாபிநாடி, நாபிநாளம்** – காண்க: நாபிக்கொடி.
**நாபிரம்** – விந்து.
**நாபீலம்** – கடிதடம்; கொப்பூழ்க்குழி.
**நாம்** – அச்சம்; தன்மைப் பன்மைப் பெயர்; தாங்கள்.
**நாம்பல்** – இளைப்பு; இளைத்த விலங்கு.
**நாம்பன்** – இளவெருது.
**நாம்பு** – மெலிந்தது; மெல்லிய கொடி.
**நாம்புதல்** – இளைத்தல்.
**நாமக்கட்டி** – வைணவர் அணியுந் திருமண் கட்டி.
**நாமக்காரர்** – வைணவர்.
**நாமகரணம்** – பெயரிடுஞ் சடங்கு.
**நாமகள்** – பிரமன் நாவில் வசிக்கும் கலைமகள்.
**நாமகீர்த்தனம், நாமசங்கீர்த்தனம்** – கடவுள் திருப்பெயர் ஓதுகை.
**நாமசேடம்** – பெயர்மட்டும் மிஞ்சும் சாவு.
**நாமஞ்சாத்துதல்** – பெயரிடுதல்; நெற்றியில் நாமம் இடுதல்; ஏமாற்றுதல்.
**நாமஞ்செய்தல்** – பெயரிடுதல்.
**நாமடந்தை** – காண்க: **நாமகள்.**
**நாமடிக்கொள்ளுதல்** – நாவை மடித்தல்.
**நாமத்தாலி** – கார்காத்த வேளாளரது விளக்கிடு கலியாணத்தில் பெண் கழுத்தில் அணியும் தாலிவகை.
**நாமதாது** – பெயரடியாகப் பிறந்த வினை.
**நாமதாரணம்** – பெயர் தரிக்கை; திருமண் தரிக்கை.
**நாமதாரி** – நாமந்தரிப்பவனான வைணவன்; மூங்கில்வகை; சீலைவகை.
**நாமதேயம்** – பெயர்; யாகாதிகளுக்குப் பெயரிடும் வேதவாக்கியவகை.
**நாமநீர்** – அச்சத்தைத் தரும் கடல்.
**நாமம்** – திருமண் கட்டி; அச்சம்; நிறைவு; புகழ்; திருமாலின் பன்னிரண்டு பெயர்களைக் கூறி உடலில் இடும் திருமண் காப்பு; பேர்; தும்பைச் செடி; முள்தராசின் நடு; காண்க: **நாரத்தை;** பாசி.
**நாமமிடுதல்** – காண்க: **நாமஞ்சாத்துதல்.**
**நாமமோதிரம்** – பெயர் எழுதிய மோதிரம்.
**நாமயம்** – தற்போதம்.
**நாமராசி** – பெயர்ப் பொருத்தம்; இராசிப் பொருத்தம்.
**நாமவந்தம்** – காண்க: **யானைநெருஞ்சி.**
**நாமவெகுண்டம், நாமவைகுண்டம்** – தும்பைப்பூடு.
**நாமறுதல்** – பேருமில்லாதபடி முற்றும் அழிந்து போதல்.
**நாமனூரலைவாய்** – திருச்செந்தூர்.
**நாமாது** – காண்க: **நாமகள்.**
**நாமாவளி** – திருப்பெயர் வரிசை.
**நாமிதம்** – வளைவு.
**நாமுடி** – நாநுனி.
**நாமோச்சாரணம்** – திருப்பெயரைச் சொல்லுதல்.
**நாய்** – ஒரு விலங்கு; சூதாடுகருவி.
**நாய்க்கடி** – நாயின் கடிப்பு; நாய்க்கடியால் உண்டாகும் சன்னி நோய்.
**நாய்க்கடுகு** – நாய்வேளைப்பூடு.
**நாய்க்கரந்தை** – குன்றிக்கொடி.
**நாய்க்குட்டி** – குட்டிநாய்; ஒரு பணிவுமொழி.
**நாய்க்குணம்** – இழிகுணம்; முருட்டுத்தனம்.
**நாய்க்கொரித்தல்** – நாய்க்குச் சோறு சமைத்த லான இழிதொழில் செய்தல்.
**நாய்க்கொரிப்போன்** – நாய்க்குச் சோறு சமைப்ப வனான சண்டாளன்.
**நாய்கன்** – வணிகன்; தலைவன்; கணவன்; தந்தை.
**நாய்ச்சீரகம்** – ஒரு பூண்டுவகை.

**நாய்த்திசை** – தென்மேற்குத் திசை.

**நாய்த்தீற்றி** – நாய்க்குரிய இழிவான உணவு.

**நாய்த்துளசி** – கஞ்சாங்கோரைப் பூண்டு.

**நாய்நாக்கி(கு)** – இலைக்கள்ளிமரம்.

**நாய்ப்புட(டோ)ல்** – ஒரு கொடிவகை.

**நாய்வேட்டம்** – நாயின் உதவிகொண்டு ஆடும் வேட்டை; நாய்கள் வேட்டையில் உயிர்களை வருத்துவதுபோன்ற தொல்லை.

**நாய்வேளை** – ஒரு பூடுவகை.

**நாயக்கன்** – படைத்தலைவன்; வடுகருள் ஒரு சாராரின் சாதிப் பெயர்; வன்னியர், வேடர், இருளர் முதலிய தமிழ்ச்சாதியாரின் பட்டப் பெயர்.

**நாயகத்தி** – காண்க: **நாயகி.**

**நாயகப்பத்தி** – நாடகமாடும் தலைமையிடம்.

**நாயகப்பானை** – கோயிலில் பொங்கலிடும் பெரிய பானை.

**நாயகம்** – தலைமை; மேம்பாடு; சிறப்பின் மிக்கது; வேலைக்காரரின் தலைவன்; காண்க: **நாயகமணி**; கிரந்திநாயகச்செடி.

**நாயகம்பண்ணுதல்** – முதன்மை செலுத்தல்.

**நாயகமணி** – மணிமாலை நடுவிலே கோத்திருக்கும் பெருமணி; அணிகலன்களின் நடுவில் அமைக்கும் இரத்தினம்.

**நாயகமுத்து** – மாலையின் நடுவிலே அமைந்த பெருமுத்து.

**நாயகமேனி** – மரகதப்பச்சை.

**நாயகன்** – தலைவன்; கணவன்; அரசன்; கடவுள்; நடத்துவோன்; கதைத் தலைவன்.

**நாயகாதிபன்** – அரசன்.

**நாயகி** – மனைவி; தலைவி; பார்வதி; கதைத் தலைவி; ஒரு பண்வகை.

**நாயரஞ்சி** – நாயுருவிச்செடி.

**நாயன்** – கடவுள்; அரசன்; தலைவன்.

**நாயன்தே** – சுவாமி என்ற பொருள்படும் தொடர்.

**நாயன்மார்** – தலைவர்; பெரியபுராணத்தில் கூறப் பெறும் சிவனடியார்கள்; கடவுளர்.

**நாயனகாரன்** – நாகசுரம் வாசிப்போன்.

**நாயனம்** – நாகசுரம்.

**நாயனாய்ச்சியார்** – உமையும் சிவனும்; தலைவனும் தலைவியும்.

**நாயனார்** – தலைவர்; கடவுள்; சிவன்; சிவனடியார்; தந்தை; திருவள்ளுவர்; சில சாதியாரின் பட்டப்பெயர்.

**நாயாட்டம்** – உளைச்சல்; பேயாட்டம்.

**நாயாடி** – வேட்டையாடுவோன்; திருவிதாங்கூரில் உள்ள காட்டுச் சாதியார்.

**நாயிகை** – தலைவி.

**நாயில்** – காண்க: **ஞாயில்.**

**நாயிறு** – காண்க: **ஞாயிறு.**

**நாயிறுதிரும்பி,**
**நாயிறுவணங்கி** } – காண்க: **ஞாயிறுவணங்கி.**

**நாயுருவி** – ஒரு பூண்டுவகை.

**நாயுள்ளி** – நரிவெண்காயம்.

**நாயுறக்கம்** – பொய்யுறக்கம்.

**நாயோட்டம்** – குதிரைநடையில் ஒன்று.

**நாயோட்டுமந்திரம்** – திருவைந்தெழுத்தில் 'சி' என்னும் எழுத்து.

**நார்** – மட்டை முதலியவற்றின் நார்; கயிறு; வில்லின் நாண்; பன்னாடை; கல்நார்; அன்பு.

**நார்க்கயிறு** – கொச்சைக்கயிறு.

**நார்ச்சீலை** – மரவுரி; காண்க: **நார்மடி.**

**நார்ப்பட்டு** – காண்க: **நார்மடி.**

**நார்மட்டை** – நார் உரிக்கத் தகுதியான பனை மட்டை.

**நார்மடி** – பட்டாடை போல்வதும் நாரால் செய்ததுமான ஆடைவகை.

**நாரகர்** – நரகத்துக்குரிய பாவிகள்.

**நாரங்கம்** – காண்க: **நாரத்தை.**

**நாரசிங்கம்** – உபபுராணத்துள் ஒன்று; மருந்து வகை.

**நாரசிங்கன்** – காண்க: **நரசிங்கம்.**

**நாரணவன்** – கிருமிவகை; மாட்டுநோயுள் ஒன்று.

**நாரணன்** – திருமால்.

**நாரணி** – துர்க்கை.

**நாரணியவன்** – துர்க்கையை உடையவனான சிவபிரான்.

**நாரத்தம்** – சடாமாஞ்சில் என்னும் மருந்து; காண்க: **வசம்பு.**

**நாரத்தம்புல்** – ஒரு புல்வகை.

**நாரத்தை** – ஒரு சிறுமரவகை; கடாரநாரத்தை; காட்டுநாரத்தை; கொழுஞ்சிவகை.

**நாரதம்** – மேகம்; பெரிய யாழ்வகை; பதினெண் புராணத்துள் ஒன்று.

**நாரதன்** – பிரமபுத்திரராகிய பெருமுனிவர்; புத்தருள் ஒருவர்; கலகஞ் செய்பவன்.

**நாரதீயம்** – பதினெண் புராணத்துள் ஒன்று; ஓர் உபபுராணம்.

**நாரநிதி** – நீர்நிலையாகிய கடல்.

**நாரப்புண்** – காண்க: **நரம்புச்சிலந்தி.**

**நாரம்** – நீர்; பாசி; மக்கட்கூட்டம்; நீர்வாழ் புள்; பசுவின்கன்று; ஆன்மாக்கள்; மரவகை.

**நாரன்** – காமமூட்டுவோனான மன்மதன்.

**நாராங்கி** – கதவின் தாழ்ப்பாள்; காண்க: **நாதாங்கி.**

**நாராசம்** – இருப்புச் சலாகை; இரும்பாணி; எழுத்தாணி; குறுக்குச் சந்து; விட்டம்.

**நாராயணகோபாலர்** – திருமாலுருவுடையோர்.

**நாராயணகௌளம்** – ஒரு பண்வகை.

**நாராயணப்பிரியன்** – திருமாலின் நண்பனான சிவபிரான்.

**நாராயணம்** – அரசமரம்; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; கடல்மீன்வகை.

**நாராயணன்** – நீரை இடமாக உடைய திருமால்; சிவன்; நான்முகன்; வருணன்; சந்திரன்; திருமாலின் அவதாரமான ஒரு முனிவன்; நாரைவகை.

**நாராயணாத்திரம்** – திருமாலை அதிதேவதையாக உடைய ஓர் அம்பு.

**நாராயணி** – துர்க்கை; திருமகள்; பார்வதி; கங்காதேவி; தண்ணீர்விட்டான்கிழங்கு; குறிஞ்சி யாழ்த்திறத்துள் ஒன்று.

**நாராயம்** – அம்பு; எழுத்தாணி; அளவுப் படி வகை.

**நாரி** – வில்லின் நாண்; பன்னாடை; யாழ்நரம்பு; தேன்; பெண்; பார்வதி; சேனை; மணம்; காண்க: **நன்னாரி**; இடுப்பு; கள்.

**நாரிக்குத்து** – இடுப்புவலி.

**நாரிகேர(ள)ம்** – காண்க: **நாளிகேர(ள)ம்**.

**நாரிகேளபாகம்** – மிக்க வருத்தத்துடன் பொருள்களைக் காணும் இயல்புடைய செய்யுள் நடைவகை.

**நாரிகை** – பெண்.

**நாரிப்பிடிப்பு** – இடுப்புப் பிடிப்பு.

**நாரிபாகன்** – பெண்ணைப் பாகத்தில் கொண்ட சிவபிரான்.

**நாரியங்கம்** – கிச்சிலிவகை.

**நாரை** – ஒரு நீர்ப்பறவைவகை; வெண்கொக்கு; பறவைவகை; மாட்டின் அலைதாடி.

**நால்** – நான்கு; நாலடியார் என்னும் தமிழ்நூல்.

**நால்கு** – நான்கு.

**நால்வகைச்சாந்து** – கலவை, பீதம், புலி, வட்டிகை என்னும் நால்வகையாலான சாந்து.

**நால்வகைச்சேனை** – காண்க: **நாற்படை**.

**நால்வகைச்சொல்** – பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல்.

**நால்வகைத்தோற்றம்** – காண்க: **உயிர்த்தோற்றம்**.

**நால்வகைப்பா** – வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா.

**நால்வகைப்பூ** – கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ.

**நால்வகைப்பொருள்** – அறம், பொருள், இன்பம், வீடு.

**நால்வகைப்பொன்** – சாதருபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம்.

**நால்வகையரண்** – காட்டரண், மலையரண், நீர் அரண், மதிலரண்.

**நால்வகையாச்சிரமம்** – நான்குவகை வாழ்க்கை நிலை: மாணவநிலை, இல்லறநிலை, வனநிலை, துறவுநிலை.

**நால்வகையாழ்** – பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ்.

**நால்வகையிழிச்சொல்** – குறளை, பொய், கடுஞ்சொல், பயனில்சொல்.

**நால்வகையுகம்** – கிரேதா, திரேதா, துவாபரம், கலி.

**நால்வகையுணவு** – உண்ணல், தின்னல், நக்கல், பருகல்.

**நால்வகையுபாயம்** – இனியவை கூறல், வேறுபடுத்தல், ஈதல், ஒறுத்தல் (சாம, பேத, தான, தண்டம்).

**நால்வகையூறுபாடு** – குத்தல், வெட்டல், எய்தல், எறிதல்.

**நால்வர்** – சைவசமய குரவர் நால்வர்: திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர்.

**நால்வாய்** – தொங்கும் வாய்; யானை.

**நால்வாயன்** – யானைமுகத்தவனான விநாயகன்; ஐராவத யானையையுடைய இந்திரன்.

**நால்விதப்பண்** – காண்க: **நாற்பண்**.

**நால்விதப்புண்ணியம்** – கொடை, கல்வி, தவம், ஒழுக்கம்.

**நால்வேதம்** – தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமவேதம்; இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்.

**நாலம்பலம்** – கோயிலுள் ஒரு பகுதி.

**நாலல்** – காண்க: **தணக்கு**.

**நாலா** – பல; வாய்க்கால்; பள்ளத்தாக்கு.

**நாலாகாரியம்** – பல தொழில்.

**நாலாம்பொய்யுகம்** – கலியுகம்.

**நாலார(ரை)ச்சக்கரம்** – சித்திரகவிவகை.

**நாலாவான்** – நான்காமவன்.

**நாலாவிதம்** – பலவிதம்.

**நாலி** – முத்து; காண்க: **கார்த்திகைப்பூ**; கந்தைத் துணி.

**நாலிகம்** – எருமை; காகம்; தாமரை.

**நாலிகை** – மூங்கில்.

**நாலு** – நான்கு; சில; பல; நாலடியார்.

**நாலுகட்டு** – நாற்புறமும் சுற்றுக்கட்டுத் திண்ணைகொண்ட வீட்டின் பகுதி.

**நாலுசதுரக்கமலம்** – காண்க: **மூலாதாரம்**.

**நாலுதல்** – தொங்குதல்; கழுத்திற் சுருக்கிட்டுக் கொள்ளுதல்.

**நாலைங்கள்ளி** – இலைக்கள்ளிமரம்.

**நாவசைத்தல்** – பேசுதல்.
**நாவடக்கம்** – மந்திரத்தால் வாயைப் பேச வொட்டாமற் செய்கை; மோனம்.
**நாவடம்** – காதணிவகை; தாலியுருவகை.
**நாவடை** – கிணற்றில் இறைப்பவன் நீர்ச்சாலைச் சாய்க்கும் இடம்.
**நாவடைத்துப்போதல்** – பேசமுடியாமற்போதல்.
**நாவணம்** – உள்நாக்கு.
**நாவமிர்தம்** – பேச்சு; அறிவுரை.
**நாவரசர், நாவரசு** – திருநாவுக்கரசு நாயனார்.
**நாவரணை** – நாப்புற்றாகிய ஒரு நோய்வகை.
**நாவரையர்** – காண்க: **நாவரசர்.**
**நாவல்** – நாவல்மரம்; காண்க: **நாவலந்தீவு;** வெற்றியொலி; போருக்கு அழைக்கை; நெற் போரிடுவோர் மகிழ்ச்சியினாலிடும் ஒலி; நெற் போர் தெழிக்கும் பகட்டினங்களைத் துரப்ப தோர் சொல்; துன்பக் குறிப்பு.
**நாவலகலிடம், நாவலந்தீவு, நாவலம்புவி** – ஏழு தீவுகளுள் உப்புக்கடல் சூழ்ந்த தீவு.
**நாவலம்பொலம்** – சாம்பூநதம் என்னும் பொன்.
**நாவலர்** – பேசுதலில் வல்லவர்; புலவர்; அமைச்சர்; பார்ப்பார்.
**நாவலர்கோன், நாவலூராளி** – நாவலூரினரான சுந்தரர்.
**நாவலோநாவல்** – வெற்றிக் குறியாக இடும் ஒலி; நெற்போரிடுவோர் மகிழ்ச்சியினாலிடும் ஒலி.
**நாவழி** – நாக்கு வழிக்குங் கருவி.
**நாவற்பொழில்** – காண்க: **நாவலந்தீவு.**
**நாவறட்சி** – நீர்வேட்கை.
**நாவன்மை** – பேச்சாற்றல்; சொல்லாற்றல்.
**நாவாய்** – உள்ளீடற்ற கதிர்; மரக்கலம்; இரேவதி நாள்; காண்க: **நாவாய்ப்பறை.**
**நாவாய்ப்பறை** – நெய்தனிலப் பறை.
**நாவாள்** – கலைமகள்.
**நாவி** – கொப்பூழ்; கத்தூரிமான்; கத்தூரி; புழுகுபூனை; புழுகு; காண்க: **ஊமத்தை;** மரக்கலம்.
**நாவிக்குழம்பு** – புழுகு.
**நாவிகன்** – கப்பற்காரன்.
**நாவிச்சட்டம்** – கத்தூரிச்சட்டம்; புழுகுசட்டம்.
**நாவிசம்** – நாவிதத்தொழில்.
**நாவித்தண்டை** – எருமுட்டை; பீநாறிப் பூண்டு.
**நாவிதச்சி** – அம்பட்டச்சி.
**நாவிதன்** – அம்பட்டன்; கார்த்திகைநாள்; பூரநாள்.
**நாவிநெய்** – காண்க: **நாவிக்குழம்பு.**
**நாவிப்பிள்ளை** – கத்தூரி விலங்குக் குட்டி.
**நாவிப்புழுகு** – மான்மதம், புழுகு.
**நாவியம்** – காந்தள்மலர்.
**நாவிலை** – வெற்றிலை.
**நாவிழுதல்** – பேச நாவெழாது போதல்.
**நாவின்கிழத்தி** – கலைமகள்.
**நாவினார்** – நாவலர்.
**நாவு** – நாக்கு.
**நாவுதல்** – கொழித்தல்; நாக்கு வளைத்தல்; நாவினால் குறிகாட்டி நகையாடல்.
**நாவுரி** – காண்க: **நாடுரி.**
**நாவுழலை** – நாக்குழறுகை; நாவால் வரும் குற்றம்.
**நாவுழற்றுதல்** – பொறாமைப்பட்டுப் பேசுதல்.
**நாவேறுசெல்வி** – கலைமகள்.
**நாவை** – கலப்பை நா; கொழுநுனி.
**நாழ்** – குற்றம்; செருக்கு; இல்லாதது சொல்லுகை; திறமை; நாள்.
**நாழ்மை** – செருக்கு; குற்றம்.
**நாழம்** – வசை.
**நாழல்** – காண்க: **ஞாழல்.**
**நாழி** – உட்டுளைப் பொருள்; அளக்கும் ஒரு படி; காற்படி; நாழிகை; நூல்நாழி; அம்பறாத் தூணி; பூரட்டாதிநாள்.
**நாழிக்கிணறு** – மகளிர் விளையாட்டுக்கு அமைக் கப்பட்ட கிணறு; சிறுகிணறு.
**நாழிகை** – கால அளவு; அறுபது விநாடிகொண்ட கால அளவு; நாடா; உத்தரட்டாதிநாள்; கோயிற்பகுதி.
**நாழிகைக்கணக்கன்** – நாழிகைவட்டிலில் நேரம் அறிந்து கூறுவோன்.
**நாழிகைக்கவி** – அரசரும் கடவுளரும் நாழிகை தோறும் செய்யும் செயல்களைக் கூறும் நூல்வகை.
**நாழிகைத்தூம்பு** – நீர்வீசுங் கருவிவகை.
**நாழிகைப்பறை** – நாழிகை அறிவிக்க அடிக்கும் பறை.
**நாழிகைவட்டம்** – சூரியக்கடிகாரம்; நாழிகை வட்டில்; கடிகாரம்; கால்வாயிலிருந்து நீரைப் பகிர்ந்துகொள்ளும் முறை.
**நாழிகைவட்டில்** – நாழிகையை அறிவிக்கும் கருவி.
**நாழிகைவெண்பா** – காண்க: **நாழிகைக்கவி.**
**நாள்** – தினம்; காலம்; வாழ்நாள்; நல்ல நாள்; காலை; முற்பகல்; நட்சத்திரம்; திதி; புதுமை; அன்றலர்ந்த பூ; வெண்பாவின் ஈற்றடி யிறுதியில் வரும் ஓரசைச்சீர் வாய்பாடு.
**நாள்கேட்டல்** – நல்லநாள் குறிக்கும்படி கேட்டல்.
**நாள்தள்ளுதல்** – காலங்கழித்தல்; காலங்கடத்தல்.
**நாள்வழிக்கணக்கு** – அன்றாடக் கணக்கு.
**நாள்வேலை** – அன்றைய பணி; கலியாணத்தன்று மணமகன் செய்துகொள்ளும் சவரச் சடங்கு.
**நாள்வைத்தல்** – திருமணநாள் குறித்தல்.

**நாளகம்** – இலாமிச்சம்புல்.
**நாளங்காடி** – பகற்கடை.
**நாளடைவில்** – நாள் செல்லச்செல்ல.
**நாளதினாலே** – நடப்புத் தினத்தில்.
**நாளது** – நடப்பு.
**நாளந்தி** – விடியற்காலம்.
**நாளம்** – உள்துளை; தண்டு; நரம்பு; பொன்னரி தாரம்.
**நாளரம்** – காண்க: **நாளகம்.**
**நாளரும்பு** – புதிய அரும்பு.
**நாளவை** – நாளோலக்கம்.
**நாளறுதி** – காலவெல்லை; நாளடைவில்.
**நாளன்று** – நாளைநின்று, நாளை மறுநாள்.
**நாளாதல்** – காலங்கழிகை; காலத்திற்கு உரியதன் றாகை.
**நாளாய்ந்தோர்** – வாழ்நாளைக் கணிப்பவரான மருத்துவர்.
**நாளார்** – யமன்.
**நாளாவட்டத்தில்** – காண்க: **நாளடைவில்.**
**நாளி** – கள்; நாய்; அறுபது விநாடிகொண்ட நேரம்; ஒரு கால அளவு; காண்க: **நாடா.**
**நாளிகம்** – காண்க: **நாளகம்;** வெள்ளைக்கொடி; தாமரை; கோட்டை மதிற்சுவரில் அமைக்கப் படும் எறிபடைவகை.
**நாளிகேர(ள)ம்** – தென்னை.
**நாளிடுதல்** – நல்ல நாள் குறித்தல்.
**நாளிதழ்** – செய்தித்தாள், தினசரிப் பத்திரிகை.
**நாளிது** – காண்க: **நாளது.**
**நாளிருக்கை** – காண்க: **நாளவை.**
**நாளில்** – காண்க: **நாளடைவில்.**
**நாளினி** – புளிமாமரம்.
**நாளினுநாளும்** – காண்க: **நாளுக்குநாள்.**
**நாளுக்கு** – ஒரு நாளில்; நல்ல நாளில்.
**நாளுக்குநாள், நாளுநாளினும்** } – ஒவ்வொரு நாளும்.
**நாளும்** – தினந்தோறும்.
**நாளுலத்தல்** – இறத்தல்; நாட்கழிதல்.
**நாளெடுத்தல்** – நன்முகூர்த்தஞ் செய்தல்.
**நாளெல்லை** – மறையும் நேரம், அத்தமனம்; இறுதிக்காலம்.
**நாளேரடித்தல்** – நல்ல நாளில் உழத்தொடங்கு தல்.
**நாளை** – அடுத்த தினத்தில்; நாளுக்குரிய.
**நாளைக்கழித்து** – அடுத்த தினத்தின் பின்நாள்.
**நாளைக்கு** – அடுத்த தினத்தில்.
**நாளைநின்று, நாளைநீக்கி** } – பிற்றை நாளை அடுத்து.
**நாளைமற்றைநாள்** – நாளை அல்லது நாளை நின்று; இனிமேல்.
**நாளைய** – தற்காலத்துக்குரிய; நாளுக்குரிய; மறு நாட்குரிய.
**நாளோட்டுதல்** – காலங்கழித்தல்; காலங்கடத்து தல், தாமதஞ் செய்தல்.
**நாளோதி** – பஞ்சாங்கமோதுவோன்.
**நாளோலக்கம்** – கடவுளர் அல்லது அரசர் காலை யில் அத்தாணியில் வீற்றிருத்தல்.
**நாளோலை** – சாதகம்; முகூர்த்த ஓலை; நல்ல முகூர்த்தத்தில் வீட்டுக்கு ஓலை வேய்கை.
**நாற்கணம்** – நால்வகை எழுத்தான உயிர்க்கணம், வன்கணம், மென்கணம், இடைக்கணம்.
**நாற்கதி** – நால்வகைப் பிறப்பான தேவகதி, மக்கள்கதி, விலங்குகதி, நரககதி.
**நாற்கவி** – நான்குவகைப் பாட்டான ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம்; ஆசுகவி முதலிய நால்வகைப் புலவர்கள்.
**நாற்காலி** – நான்கு கால்களையுடைய விலங்கு; நான்கு காலுள்ள இருக்கை.
**நாற்காற்சீவன்** – நான்கு காலுள்ள விலங்கு.
**நாற்குணம்** – அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி ஆகிய ஆடவர்குணம்; நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு ஆகிய பெண்டிர் குணம்.
**நாற்கோணம்** – நான்கு கோணமுள்ள உருவம்.
**நாற்சதுரம்** – சமநீளமும் சமகோணமுமுடைய உருவம்; காண்க: **பிரண்டை.**
**நாற்சந்தி** – நாலு தெருக்கள் கூடுமிடம்.
**நாற்சி** – தொங்குதல்.
**நாற்படை** – தேர்ப்படை, குதிரைப்படை, யானைப்படை, காலாட்படை.
**நாற்பண்** – நான்கு நிலத்துக்குரிய குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் (செவ்வழி) என்னும் பண்கள்.
**நாற்பது** – நான்கு பத்துக்கொண்ட எண்.
**நாற்பயன்** – காண்க: **நாற்பொருள்.**
**நாற்பாட்டன்** – பாட்டனுக்குப் பாட்டன்.
**நாற்பால்** – நால்வகைச் சாதிப் பகுப்பான அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்.
**நாற்பால்மரம்** – பால்மிகுதியாயுள்ள ஆல், அரசு, அத்தி, இத்தி என்னும் நால்வகை மரங்கள்.
**நாற்பான்** – காண்க: **நாற்பது.**
**நாற்பொருள்** – நான்கு உறுதிப்பொருள்களாகிய அறம், பொருள், இன்பம், வீடு.
**நாற்பொன்** – காண்க: **நால்வகைப்பொன்.**
**நாற்றங்கால்** – நாற்றுக்காக விதையிடும் வயல்; மூலம்.
**நாற்றங்கேட்டல்** – மணமறிதல்.
**நாற்றடி** – காண்க: **நாற்றங்கால்.**
**நாற்றம்** – மணம்; மூக்கால் அறியும் புலனறிவு; தீநாற்றம்; கள்; தொடர்பு; தோற்றம்.

**நாற்றம்வீசுதல், நாற்றமெடுத்தல்** – தீயநாற்றமடித்தல்.
**நாற்றவுணவு** – அவியாகிய உணவு.
**நாற்றி** – நான்கு மடங்கு.
**நாற்றிசை** – நான்கு திக்குகளான கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு.
**நாற்று** – பிடுங்கிநடும் பயிர்.
**நாற்றுதல்** – தொங்கவிடுதல்; தூக்குப்போடுதல்.
**நாற்றுநடவு** – நாற்று நடுகை.
**நாற்றுப்பாக்கு** – விதைக்குரிய பாக்கு.
**நாற்றுப்பாத்தி** – நாற்று உண்டாக்கும் இடம்.
**நாற்றுப்பாவுதல்** – விதை தெளித்தல்; தானியம் முதலியன பதிபோடுதல்; இளஞ்செடிப் பதியம் வைத்தல்.
**நாற்றுமரம்** – நாற்றுவிட்டுப் பிறகு எடுத்து நட்டு வளர்க்கும் மரம்.
**நாற்றுமுடி** – ஒருசேரக்கட்டிய நாற்றின் முடிப்பு.
**நாற்றுவிடுதல்** – நாற்று உண்டாக்க விதை விதைத்தல்.
**நாறல்** – நாறுதல்; தீநாற்றம்; நாற்றமுடையது.
**நாறனா** – கிடேச்சு, நெட்டி.
**நாறி** – நன்னாரிக்கொடி; கற்றாழைச்செடி.
**நாறு** – காண்க: நாற்று; பயிர்முளை.
**நாறுகட்டி** – பெருங்காயம்.
**நாறுகரந்தை** – ஒரு பூண்டுவகை.
**நாறுதல்** – மணத்தல்; தோன்றுதல்; பிறத்தல்; முளைத்தல்; மோத்தல்; தீநாற்றம் வீசுதல்.
**நான்காம்வேதம்** – வேதத்துள் நான்காவதான அதர்வணம்.
**நான்கு** – மூன்றுக்குமேல் ஒன்றுகொண்ட எண்; நாலில் ஒரு பங்கு; வட்டிக்காகச் சேர்த்து அறுவடையானதும் கொடுப்பதாகச் சம்மதித்துப் பெறும் தானியக் கடன்.
**நான்மருப்பியானை** – நான்கு கொம்புடைய யானையாகிய ஐராவதம்.
**நான்மருப்பியானையூர்தி** – ஐராவதத்தை ஊர்தியாக உடையவனான இந்திரன்.
**நான்மலத்தர்** – ஆணவம், கன்மம், சுத்தமாயை, திரோதாயி என்னும் நான்கு மலமுடைய பிரளயாகலர்.
**நான்மறை** – காண்க: நால்வேதம்.
**நான்மறைமுதல்வன்** – அந்தணன்.
**நான்மறையாளன்** – நான்கு வேதங்களில் வல்லவனான பார்ப்பனன்.
**நான்மறையோன்** – பிரமன்; நான்கு வேதங்களில் வல்லவனான பார்ப்பனன்.
**நான்மாடக்கூடல்** – மதுரைநகர்.
**நான்முகத்தோன்** – நான்கு முகமுடைய பிரமன்.
**நான்முகப்புல்** – காண்க: நாணல்.
**நான்முகன்** – பிரமன்; அருகன்.
**நான்முகன்கிழத்தி** – பிரமன் மனைவியாகிய கலைமகள்.
**நான்முகன்தேவி** – கலைமகள்; காண்க: மனோசிலை.
**நான்முலையாயம்** – பசுக்கூட்டம்.
**நான்று** – காலம்.
**நான்றுகொண்டுநிற்றல், நான்றுகொள்ளுதல்** – கழுத்தில் சுருக்கிட்டுக்கொண்டு சாதல்.
**நானச்செப்பு** – புழுகுசெப்பு.
**நானம்** – மணப்பண்டம்; கத்தூரி; கத்தூரி விலங்கு; புழுகு; பூசுவன; மணப்பொடி; கவரிமான்; ஞானம்; சுத்தி செய்தற்கு நீரில் மூழ்குகை.
**நானமா** – கத்தூரிவிலங்கு.
**நானவெண்ணெய்** – நீராடும்போது தேய்த்துக் கொள்ளும் மணஎண்ணெய்.
**நானா** – பல.
**நானார்த்தபதம்** – பலபொருள் ஒருசொல்.
**நானாவிகாரி** – பலவிதமாகப் பரிணமிக்கும் ஒரு பொருள்.
**நானாவிதம்** – அநேகவகை, பலவிதம்.
**நானாளைமாறன்** – நான்கு நாளைக்கு ஒரு முறை வரும் காய்ச்சல்.
**நானாற்றிசை** – பல திசை.
**நானிலம்** – குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நால்வகை நிலம்.
**நானூல்** – மார்பில் தொங்கும் நூலாகிய பூணூல்.
**நானூறு** – நான்கு நூறுகொண்ட எண்.

## நி

**நி** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ந்+இ); இன்மை, மறுதலை, மிகுதி, அண்மை, உறுதி, வன்மை, விருப்பம் இவற்றைக் காட்டும் வடமொழி முன்னொட்டு; நிடாதம் எனப்படும் தார இசையின் எழுத்து.
**நிக்கந்தத்தேவர், நிக்கந்தன்** – பற்றற்றவனாகிய அருகன்.
**நிக்கா** – முகமதியர் கலியாணம்; கைம்பெண் மணம்.
**நிக்கிரகத்தானம்** – வாதிகள் தோல்வியுறுதற்கு ஏதுவாகியது.
**நிக்கிரகம்** – அழிக்கை; அடக்குதல்; தண்டனை; வெறுப்பு; வாதத் தோல்வி; எல்லை.
**நிக்கிரகித்தல்** – கொல்லுதல்; அடக்குதல்; கைவிடுதல்; ஒறுத்தல்.

**நிக்கிரானுக்கிரகம்** – ஒறுத்தலும் அருளுதலும்.
**நிக்குரோதம்** – ஆலமரம்; காட்டாமணக்கு.
**நிகசலாகம்** – தனியிடம்.
**நிகடம்** – அண்மை.
**நிகண்டவாதம்** – நிகண்டவாதியின் கொள்கை.
**நிகண்டவாதி** – சமணருள் ஒரு பகுதியார்.
**நிகண்டவாய்ச்சொல்லுதல்** – உண்மை கூறுதல்.
**நிகண்டாயிருத்தல்** – உண்மையாதல்.
**நிகண்டு** – சொற்பயன் விளக்கும் நூல்; அகரமுதலி, அகராதி; படலம்; உறுதி; வேதச் சொற்றொகுதி.
**நிகண்டுபேசுதல்** – எல்லாந் தெரிந்ததுபோற் பேசுதல்.
**நிகணம்** – வேள்விப் புகை.
**நிகதம்** – பேச்சு.
**நிகதி** – காண்க: **நியதி**.
**நிகப்பிரபை** – இருள்.
**நிகம்** – ஒளி.
**நிகமம்** – முடிவு; வேதம்; நகரம்; நெடுந்தெரு; கடைவீதி; வாணிகம்; வாணிகக் கூட்டம்.
**நிகமனம்** – அனுமான உறுப்பு ஐந்தனுள் இறுதியானது.
**நிகர்** – ஒப்புமை; சமானம்; ஒளி; போர்.
**நிகர்த்தல்** – ஒத்தல்; மாறுபடுதல்; விளங்குதல்; போர்.
**நிகர்தி** – இருப்புலக்கை.
**நிகர்ப்பு** – ஒப்பு; போர்.
**நிகர்ப்புதம்** – நூறுகோடி.
**நிகர்பக்கம்** – காண்க: **சுபக்கம்**.
**நிகர்வம்** – செருக்கின்மை.
**நிகர்வி** – செருக்கில்லாதவன்(ள்).
**நிகர்வு** – ஒப்பு.
**நிகர** – ஓர் உவம உருபு.
**நிகரம்** – கூட்டம்; குவியல்; மொத்தம்; பொருள்; கொடை; விழுங்குதல்; 'நி' என்னும் எழுத்து.
**நிகரார்** – பகைவர்.
**நிகரிடுதல்** – ஒப்பிடுதல்.
**நிகருவம்** – அடக்கம்.
**நிகலம்** – பிடரி.
**நிகழ்காலம்** – தொழில் நடைபெறும் காலம்.
**நிகழ்ச்சி** – சம்பவம்; நிலைமை; செயல்; தற்காலம்.
**நிகழ்த்துதல்** – நடப்பித்தல்; சொல்லுதல்.
**நிகழ்தல்** – நடத்தல்; நடந்துவருதல்; செல்லுதல்; தங்குதல்; நிறைவேறுதல்; விளங்குதல்.
**நிகழ்வு** – நடக்கை; காண்க: **நிகழ்காலம்**; நிலைமை.
**நிகளம்** – நீளம்; யானைக் காற்சங்கிலி; விலங்கு; தளை; கடப்பமரவகை.
**நிகற்பம்** – பத்துஇலட்சங் கோடி.
**நிகாசம்** – உவமை.
**நிகாதம்** – நரகம்.
**நிகாதன்** – வஞ்சகன்.
**நிகாயம்** – கூட்டம்; இடம்; வீடு; நகரம்.
**நிகாயன்** – வடிவமற்ற கடவுள்.
**நிகாரணம்** – கொலை; காரணமற்றது.
**நிகாரணன்** – காண்க: **நிசாரணன்**.
**நிகாரம்** – அவமரியாதை; தவறு; பணி; தூற்றுதல்; விழுங்குதல்.
**நிகிதம்** – படை; இதமின்மை.
**நிகிர்தம்** – காண்க: **பிசி**
**நிகிருட்டம்** – இழிவு.
**நிகிருதி** – வறுமை; பொல்லாங்கு; நிந்தை.
**நிகிலம்** – எல்லாம்.
**நிகீயெனல்** – குதிரையின் கனைப்புக் குறிப்பு.
**நிகீனன்** – கீழ்மகன்.
**நிகு** – மஞ்சள்; அறியுங் கருவி.
**நிகுஞ்சம்** – புதர்வீடு; குகை; சிறு குடிசை.
**நிகுஞ்சனம்** – கொலை; கூத்தின் உடற்செய்கைகளுள் ஒன்று.
**நிகுட்டம்** – தொனி.
**நிகுத்தை** – கதவு.
**நிகுதி** – காண்க: **நியதி**; வரி.
**நிகுநிகுவெனல்** – மினுமினுத்தற் குறிப்பு.
**நிகும்பம்** – நேர்வாளக்கொட்டை.
**நிகூடம்** – ஆழம்; மறைவு.
**நிகேதம், நிகேதனம்** – வீடு; கோயில்; நகரம்.
**நிகோதம்** – விலங்கினம்; கொடிய நரகவகை.
**நிச்சம்** – காண்க: **நிச்சயம்**; எப்பொழுதும்.
**நிச்சயதாம்பூலம்** – பெண்ணை மணஞ்செய்து தருவதற்கு உறுதிப்படுத்த மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டாருக்குத் தரும் வெற்றிலைபாக்கு.
**நிச்சயம்** – உறுதி; மெய்.
**நிச்சயார்த்தம்** – மெய்ப்பொருள்; காண்க: **நிச்சயதாம்பூலம்**.
**நிச்சயித்தல்** – உறுதிப்படுத்தல்; தீர்மானித்தல்.
**நிச்சல்** – எப்பொழுதும்.
**நிச்சலபுத்தி** – திரியாத மனம்.
**நிச்சலம்** – அசைவின்மை; நித்தியத்துவம்; இலக்கு நால்வகையுள் அசைவற்றிருப்பது.
**நிச்சலன்** – அசைவற்றவன்; கடவுள்.
**நிச்சலும்** – காண்க: **நிச்சல்**.
**நிச்சலை** – சத்தி விசேடம்; பூமி.
**நிச்சாயகம்** – உறுதிப்படுத்துவது.
**நிச்சாரகம்** – காற்று.
**நிச்சாலங்கம்** – மலை.
**நிச்சித்தம்** – மனோலயம்; கவலையின்மை.

**நிச்சிதம்** – காண்க: **நிச்சயம்.**
**நிச்சிதார்த்தம்** – காண்க: **நிச்சயதாம்பூலம்.**
**நிச்சிந்தன்** – கவலையற்றவன்; அருகன்; ஈசன்.
**நிச்சிந்தை** – கவலையின்மை.
**நிச்சியம்** – வெள்ளுள்ளிப்பூண்டு.
**நிச்சிரேணி** – ஏணி.
**நிச்சிரேயசம்** – வீடுபேறு.
**நிச்சுவசனம்** – பெருமூச்சு; சினம்.
**நிச்சுவாசம்** – மூச்சு வெளிவிடுகை; மூச்சினை அடக்குகை; மூச்சு; சிவாகமத்துள் ஒன்று.
**நிச்சேட்டை** – செயலற்றிருக்கை.
**நிச்சேடம்** – மிச்சமின்மை.
**நிசகரம்** – உறுதிபண்ணுகை.
**நிசங்கம்** – அம்புக்கூடு; இணக்கம்.
**நிசதம், நிசதி** – தவறாது ஒவ்வொரு நாளும்.
**நிசப்தம்** – ஒலியின்மை.
**நிசம்** – உண்மை, சத்தியம்; இயல்பாகவுரியது.
**நிசவான்** – உண்மையுள்ளவன்.
**நிசா** – இரவு.
**நிசாகசம்** – இரவில் மலரும் ஆம்பல்.
**நிசாகம்** – மஞ்சள்.
**நிசாகரன்** – இரவைச் செய்வோனாகிய சந்திரன்; சேவல்.
**நிசாசரம்** – ஆந்தை; பாம்பு.
**நிசாசரன்** – இரவில் திரிவோன்; அசுரன்; சந்திரன்; இராக்கதன்.
**நிசாசரி** – கூகை; அரக்கி; விலைமகள்.
**நிசாசலம்** – பனி.
**நிசாடம்** – ஆந்தை.
**நிசாடு** – மஞ்சள்.
**நிசாதன்** – கீழ்மகன்; வஞ்சகன்.
**நிசாதனம்** – இடம்; வீடு; நகரம்; உடல்.
**நிசாதி** – மாலை வெளிச்சம்.
**நிசாந்தம்** – விடியற்காலம்.
**நிசாபதி** – சந்திரன்; கருப்பூரம்.
**நிசாமணி** – மின்மினி; சந்திரன்.
**நிசாமனம்** – கேள்வி; பார்வை; நிழல்.
**நிசாமானம்** – இராக்கால அளவு.
**நிசார்** – நீண்ட காற்சட்டை.
**நிசார்த்தம்** – உண்மை.
**நிசாரணம்** – கொலை.
**நிசாரணன்** – கொலைஞன்.
**நிசாரம்** – சத்தற்றது; வருத்தம்.
**நிசாரி** – இரவின் பகைவனான சூரியன்.
**நிசாளம்** – ஒருகட்பறை.
**நிசான்** – கொடி.
**நிசி** – இரவு; நள்ளிரவு; இருள்; மஞ்சள்; பொன்.
**நிசிசரன்** – அசுரன்; அரக்கன்; சந்திரன்; கள்வன்; காவற்காரன்.
**நிசித்தண்ணீர்** – காலையில் நீராகாரத்திற்குதவ இரவில் சோற்றுப் பானையில் ஊற்றிய நீர், நீராகாரம்.
**நிசித்தம்** – இகழ்ச்சி; விதிக்கு முரணானது.
**நிசிதம்** – இகழ்ச்சி; பொய்; கூர்மை; இரும்பு.
**நிசிதன்** – அசுரன்; இழிஞன்.
**நிசிந்தன்** – ஈசன்.
**நிசிமணி** – காண்க: **நிசாமணி.**
**நிசீத்தியை** – இரவு.
**நிசீதம்** – இரவு; நள்ளிரவு; கூர்மை; புன்மை.
**நிசீதிகை** – உண்ணாநோன்பால் உயிர்விடுதல்.
**நிசும்பம்** – காண்க: **நிசாரணம்.**
**நிசும்பன்** – காண்க: **நிசாரணன்.**
**நிசும்பனம்** – காண்க: **நிசாரணம்.**
**நிசுலகம்** – மார்புறை.
**நிசுவாசம்** – காண்க: **நிச்சுவாசம்.**
**நிசுளம்** – நீர்க்கடப்பமரம்.
**நிசூதனம்** – அழிக்கை.
**நிசை** – இரவு.
**நிட்கண்டகம்** – தீமையின்மை; கண்ணோட்டமின்மை.
**நிட்கண்டகன்** – பகையற்றவனாகிய சிவபெருமான்.
**நிட்கம்** – வராகனெடை; நாணயவகை; பொன்; பறைவகை.
**நிட்களங்கம்** – மாசின்மை.
**நிட்களசிவம்** – அருவமான சிவம்.
**நிட்களம்** – உருவமின்மை; தூய்மை.
**நிட்களர்** – அருவமூர்த்தியான சிவபெருமான்.
**நிட்காமியம்** – விருப்பமின்மை; பயனை விரும்பாது செய்யும் செயல்.
**நிட்காரணம்** – காரணம் இன்மை.
**நிட்காரம்** – நிந்தை.
**நிட்குடி** – ஏலம்.
**நிட்சணம்** – முத்தங்கொடுக்கை.
**நிட்சேபம்** – எட்டுப் போகத்துள் ஒன்றாகிய புதைபொருள்; ஈட்டுப்பொருள்.
**நிட்டுரதரன், நிட்டுரவன்** – வன்னெஞ்சன்.
**நிட்டூரம்** – கொடுமை.
**நிட்டூரி** – கொடியவள்.
**நிட்டை** – தியானம்; நோன்புநோற்றல்.
**நிட்பலம்** – பயனின்மை.
**நிட்பிரபஞ்சம்** – பிரபஞ்சத்தைக் கடந்தது.
**நிட்பிரபஞ்சன்** – அமைதியானவன், சாந்தமுள்ளவன்.
**நிடதம்** – எண்குல மலைகளுள் ஒன்று; ஒரு நாடு; முட்டியாக இரண்டு கையுஞ் சமன்செய்யும் இணைக்கைவகை.
**நிடலம்** – நெற்றி.
**நிடலாட்சன்** – நெற்றிக்கண்ணனான சிவபிரான்.

**நிடாதம்** – ஏழிசைகளுள் ஏழாவது.
**நிடூதனம்** – கொலை.
**நிடூதனன்** – கொலைஞன்.
**நிடேகம்** – மணமக்கள் முதன்முறை கூடும் சடங்கு.
**நிடேதம்** – விலக்கு; விலக்கப்பட்ட பொருள்.
**நிண்டுதல்** – நிமிண்டுதல்.
**நிண்ணயம்** – ஏற்பாடு; உறுதி; ஆராய்வு.
**நிண்ணயம்பண்ணுதல்** – உறுதிசெய்தல்.
**நிணச்செருக்கு** – உடற்கொழுப்பாலாகிய ஆணவம்.
**நிணத்தல்** – கொழுத்தல்; கட்டுதல்; முடைதல்.
**நிணத்திசு** – இரத்தச் சவ்வு.
**நிணநரம்புகள்** – ஊன்நரம்புகள்.
**நிணநெய்** – மணிக்கட்டுகளில் உண்டாகும் பசை.
**நிணம்** – கொழுப்பு; ஊன்; ஊனீர்.
**நிணர்தல்** – கட்டுதல்; செறிதல்.
**நிணவை** – பிணிப்பு; பின்னிச்செய்யப்பட்டது.
**நிணறு** – உருக்கம்; இதம்.
**நித்தக்கட்டளை** – காண்க: **நித்தியக்கட்டளை.**
**நித்தகருமம்** – காண்க: **நித்தியகருமம்.**
**நித்தக்காய்ச்சல்** – தினமும் அடிக்கும் சுரநோய்.
**நித்தத்துவம்** – என்றுமுளதாந்தன்மை.
**நித்தநிமிந்தம்** – கோயில் நித்தியக்கட்டளை.
**நித்தம்** – என்றும் அழியாதுள்ள நிலை; காண்க: **நித்தியகருமம்;** ஓமகுண்டம்; நீர்முள்ளிப் பூண்டு.
**நித்தரங்கசமுத்திரம்** – அலையற்ற கடல்.
**நித்தல், நித்தலும்** – எந்நாளும்.
**நித்தவிநோதம்** – அருகனது முக்குடைகளுள் ஒன்று.
**நித்தன்** – அருகன்; கடவுள்; சிவன்.
**நித்தாநித்தம்** – நிலைபேறும் நிலையாமையும்.
**நித்தாரம்** – தீர்மானம்; நிருணயம்.
**நித்திகம்** – கண்டங்கத்தரி; தூதுவளை.
**நித்தியக்கட்டளை** – அன்றாட ஏற்பாடு.
**நித்தியகருமம்** – அன்றாடஞ் செய்யவேண்டிய செயல்கள்.
**நித்தியகலியாணம்** – நிலைத்த இன்பம்; என்றும் உள்ள மகிழ்ச்சி.
**நித்தியகலியாணி** – பார்வதி; பிள்ளையார்பூ என்னும் செடி.
**நித்தியசூரி** – மாலுலகத்து வாழ்கின்ற முத்தர்கள்.
**நித்தியத்துவம்** – அழிவின்மை.
**நித்தியநைமித்திகம்** – நாள் வழிபாடும் விழாவும்.
**நித்தியப்படி** – நாடோறும்; தினமும் நடக்குங் கட்டளைப்படி.
**நித்தியப்பிரளயம்** – உயிர்களின் சுழுத்திநிலை; இறப்பு; நாள்தோறும் நிகழும் பிரளயம்.
**நித்தியபூசை** – நாள்தோறும் நடைபெறும் வழிபாடு.
**நித்தியம்** – அழியாமை; எப்பொழுதும்; வீடுபேறு; கடல்; நாடோறும்; காண்க: **நித்தியபூசை;** நாட்கடமை உணர்த்தும் நூல்; காண்க: **நித்திகம்.**
**நித்தியமுத்தன்** – கடவுள்; பிரமஞானி.
**நித்தியமுத்தி, நித்தியமோட்சம்** – மீளாத நற்கதி.
**நித்தியயோகம்** – குறையாச் செல்வம்; என்றும் விடாச் சேர்க்கை.
**நித்தியயௌவனம்** – மாறா இளமை.
**நித்தியல்** – காண்க: **நித்தியபூசை; நித்தியக் கட்டளை.**
**நித்தியவாழ்வு** – மோட்சப்பதவி; நிலைத்த வாழ்க்கை.
**நித்தியவிதி** – அன்றைய செயல்; நாட்கடமை உணர்த்தும் நூல்; இறந்தவர்பொருட்டுப் பத்துநாளும் செய்யும் சடங்கு; ஓமக் கிடங்கு; பலி கொடுக்குமிடம்.
**நித்தியவிநோதம்** – காண்க: **நித்தவிநோதம்.**
**நித்தியவிபூதி** – திருமாலின் பரமபதம்.
**நித்தியன்** – கடவுள்.
**நித்தியாநித்தியம்** – காண்க: **நித்தாநித்தம்.**
**நித்தியானந்தம்** – நிலைத்த மகிழ்ச்சி; வீடுபேறு.
**நித்தியானந்தன்** – காண்க: **நித்தியன்.**
**நித்திராதேவி** – தூக்கத்துக்குரிய மூதேவி.
**நித்திராபங்கம்** – தூக்கத்தடை; தூக்கம்பிடியா நோய்.
**நித்திராவிருட்சம்** – மரவகை; இருள்.
**நித்திரித்தல்** – உறங்குதல்.
**நித்திரை** – உறக்கம்.
**நித்திரைதெளிதல்** – உறக்கத்தினின்று நீங்குதல்.
**நித்திரைரோகம்** – தூக்கநோய்.
**நித்தில்** – காண்க: **நொச்சி; மின்மினி.**
**நித்திலக்கோவை** – முத்துமாலை; அகநானூற்றின் மூன்றாம் பகுதி.
**நித்திலம்** – முத்து.
**நித்திலவட்டம், நித்திலவடம்** – முத்துமாலை.
**நித்திலவூர்தி** – முத்துப்பல்லக்கு.
**நித்தை** – உமை; தூக்கம்.
**நிதகம்** – நீர்முள்ளிப்பூண்டு.
**நிதம்** – தினமும்.
**நிதம்பம்** – மலைப்பக்கம்; அல்குல்; பிருட்டம்; நிருத்தக்கைவகை; தோள்; கரை; கற்பரி பாடாணம்.
**நிதரிசனம்** – எடுத்துக்காட்டு; திருட்டாந்தம்; உவமை அணி.
**நிதலம்** – கீழேழுலகத்துள் ஒன்று.

**நிதனம்** – அழிவு; சாவு; வறுமை; பிறந்த நாளுக்கு ஏழா நாள்.

**நிதாககரன்** – சூரியன்.

**நிதாகம்** – முதுவேனிற்காலம்; வெப்பம்; வியர்வை.

**நிதாந்தன்** – மேன்மையுள்ளவன்.

**நிதார்த்தம்** – உறுதி; நேர்மை; உண்மை; சமன் செய்கை.

**நிதானக்காரன்** – யோசனையுள்ளவன்.

**நிதானம்** – ஆதிகாரணம்; நோய்க்காரணம்; இரத்தினம்; பொன்; படை; தீர்மானம்; உத்தேசம்; நோக்கம்; நேர்மை; சமம்; பிரமாணம்; சாவதானம்; முடிவு; பௌத்தர் கூறும் பேதைமை, செய்கை, உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு, வேட்கை, பற்று, பவம், தோற்றம், வினைப்பயன் என்னும் பன்னிரண்டு நிதானங்கள்.

**நிதானவான்** – நேராளி, அறிவாளி.

**நிதானன்** – ஆதிகாரணனான கடவுள்.

**நிதானி** – முன்யோசனையுள்ளவன்.

**நிதானித்தல்** – உறுதிசெய்தல்; அளவு திட்டப்படுத்துதல்; அனுமானித்தல்.

**நிதி** – பொன்; பொருட்குவை; ஐக்கிய நாணயச் சங்கம்.

**நிதிக்கிழவன், நிதிக்கோன்** – குபேரன்.

**நித்தியாசனம்** – இடைவிடாத் தியானம்.

**நிதிநிட்சேபம்** – பூமியின் கீழுள்ள புதையல்.

**நிதிப்பலகை** – பொற்பலகை.

**நிதிப்பொதி** – பொற்கிழி.

**நிதிபதி** – காண்க: **நிதியின்கிழவன்.**

**நிதியம்** – பொருள்திரள்; பொன்; கடவுண்மணி வகை.

**நிதியின்கிழவன்** – குபேரன்; தலைச்சங்கப் புலவருள் ஒருவர்.

**நிதியோன், நிதீசன்** – குபேரன்.

**நிதுவனம்** – கலப்பு; புணர்ச்சி; மகிழ்ச்சி; விளையாட்டு.

**நிதேசம்** – கட்டளை; சொல்; அண்மை.

**நிந்தகன்** – இழிவாகப் பேசுவோன்.

**நிந்தம்** – தனியுரிமை.

**நிந்தனை** – இகழ்ச்சி.

**நிந்தாத்துதி** – இகழ்தல்போலப் புகழ்தல்.

**நிந்தித்தல்** – இகழ்தல்; பொருட்படுத்தாதிருத்தல்.

**நிந்திதம்** – பரிகாசம், ஏளனம்; தடை; இகழப்பட்டது.

**நிந்திப்பு** – காண்க: **நிந்தனை.**

**நிந்து** – வயிற்றில் இறந்த பிள்ளையைப் பெற்றவள்.

**நிந்தை** – காண்க: **நிந்தனை.**

**நிந்தையுவமை** – உவமேயத்தை உயர்த்தி உவமானத்தை இகழ்ந்து சொல்லும் உவமை அணி.

**நிப்பரம்** – பாரமின்மை; அசைவின்மை.

**நிப்பாட்டுதல்** – நிறுத்துதல்; தாமதித்தல்; நேராக நடுதல்.

**நிபத்தி** – உண்மை; தோன்றுமிடம்; உதவி.

**நிபத்தியை** – போர்க்களம்.

**நிபதனம்** – விழுகை; கீழ்இறக்குகை.

**நிபந்தம்** – கோயிற்கட்டளைக்கு விடப்பட்ட சொத்து; தாவரப்பொருள்; தவணையாகச் செலுத்துவது; அணை; கடமை; யாப்பு.

**நிபந்தனம்** – தொகுப்பு.

**நிபந்தனை** – கட்டுப்பாடு; ஏற்பாடு; தண்டனை; பொதுவிதி.

**நிபம்** – காரணம்; உவமை; வஞ்சனை; கோள்.

**நிபாதம்** – இறங்குகை; செயலொழிகை; இறப்பு; காண்க: **உடம்பொடுபுணர்த்தல்.**

**நிபாதனம்** – கொல்லுகை.

**நிபானம்** – கிணறு; நீர்த்தொட்டி; பாற்குடம்.

**நிபிடம்** – காண்க: **நிபுடம்.**

**நிபீடனம்** – மல்வித்தை.

**நிபுடம்** – நெருக்கம்.

**நிபுணத்துவம்** – திறமை.

**நிபுணம்** – திறமை; சிறப்பு.

**நிபுணன்** – மிகவல்லோன்; கலைவல்லோன்; புதன்.

**நிம்பம்** – வேப்பமரம்.

**நிம்பன்** – வேப்பமாலையுடைய பாண்டியன்.

**நிம்பிரி** – பொறாமை.

**நிம்பிரித்தல்** – கோபித்தல்.

**நிம்பை** – திருமகள்.

**நிம்மதி** – மனவமைதி.

**நிம்மந்தம்** – ஒற்றுமையின்மை; அகங்காரம்.

**நிம்மளம்** – மனவமைதி; களங்கமற்றது.

**நிமந்தக்காரர்** – கோயில் வேலைக்காரர்; திருவடி தாங்குவோர்.

**நிமந்தப்புறம்** – அறத்துக்கு விடப்பட்ட நிலம்.

**நிமந்தம்** – கோயில் ஊழியம்; கோயிலின் ஏற்பாடு.

**நிமம்** – பிடர்த்தலை.

**நிமலம்** – மாசின்மை.

**நிமலன்** – மலமற்ற கடவுள்; தூயன்.

**நிமலை** – களங்கமற்ற பார்வதி.

**நிமிட்டுதல்** – கிள்ளுதல்; நெருடித் தூண்டுதல்; கசக்குதல்.

**நிமிடம்** – நிமையம், காலநுட்பம்; தாளத்தின் காலவகை பத்தனுள் ஒன்று.
**நிமிடன்** – மிகத் திறமையாளன்.
**நிமிடி** – சுறுசுறுப்புள்ளவன்.
**நிமிடிபாதம்** – கண்டிப்பு; பிடிவாதம்.
**நிமிடு** – திறமையான வேலை.
**நிமிடுதல்** – நெருடுதல்.
**நிமிண்டி** – ஓர் எறும்புவகை; சிறு திருடன்.
**நிமிண்டுதல்** – கசக்குதல்; கிள்ளுதல்; பிறர் அறியாமற் சிறிதாக எடுத்தல்.
**நிமித்தக்காரன்** – வருஞ்செயல் சொல்வோன்.
**நிமித்தகாரணம்** – காரணம் மூன்றனுள் குடத்துக்குக் குயவன்போலக் காரியத்தோடு சேராத காரணம்.
**நிமித்தத்துவம்** – ஏதுத்தன்மை.
**நிமித்ததானம்** – தென்புலத்தார்க்குச் செய்யுஞ் சடங்கினுள் ஒன்று.
**நிமித்தம்** – காரணம்; காண்க: **நிமித்தகாரணம்**; சகுனம்; அடையாளம்; இலக்கு; பொருட்டு; சபிண்டீகரணத்தில் இறந்தோர்க்குப் பிரதிநிதியாய் வரிக்கப்பெற்றவர்க்குரிய இடம்.
**நிமித்திகப்புலவர், நிமித்திகர்** – அரசரின் உறுதிச் சுற்றத்தார் ஐவருள் வருவது கூறவல்ல கணியர்; குறிசொல்லுபவர்.
**நிமித்தியம்** – சகுனம்; காரணம்.
**நிமிதல்** – வாய்நெளிதல்.
**நிமிர்த்துதல்** – நேர் நிற்கச் செய்தல்; வளைவு நீக்குதல்; சீர்ப்படுத்துதல்; நன்றாகப் புடைத்தல்.
**நிமிர்தல்** – உயர்தல்; நீளுதல்; வளர்தல்; ஏறுதல்; பரத்தல்; நுடங்குதல்; நடத்தல்; ஓடுதல்; மிகைத்தல்; தூரமாதல்; உயர்ந்ததாதல்; நெருங்குதல்; உறுதியாதல்; இடையிடுதல்; முயலுதல்; இறுமாத்தல்; கோள் மீளத் திரும்புதல்.
**நிமிரல்** – நிமிர்கை; சோறு.
**நிமிளன்** – காண்க: **நிமிடி**; கெட்டிக்காரன்.
**நிமிளை** – செவ்வெண்மையான கல்வகை.
**நிமை** – இமை.
**நிமைத்தல்** – இமைத்தல்.
**நியக்கரணம்** – இகழ்வு, அவமதிப்பு.
**நியக்கி** – மான்.
**நியக்குரோதம்** – ஆலமரம்.
**நியசித்தல்** – வைத்தல்; பதித்தல்.
**நியதம்** – அடக்கம்; எப்பொழுதும்.
**நியதி** – கட்டுப்பாடு; செய்கடன்; ஒழுக்கவிதி; ஊழ்; முறைமை; வரையறை; எப்பொழுதும்.
**நியதிச்சொல்** – காண்க: **நியதிப்பெயர்**.
**நியதித்தல்** – உறுப்புகளை மந்திரத்தால் தெய்வங்கட்கு உரியனவாக்குதல்.
**நியதிப்பெயர்** – ஏற்புடைய மொழி.
**நியதிபண்ணுதல்** – நீக்குதல்.
**நியதுதல்** – விடுதல்.
**நியதேந்திரியன்** – ஐம்பொறிகளை அடக்கினவன்.
**நியந்தா** – கட்டளையிடுவோன்; கடவுள்.
**நியமக்காரன்** – நோன்புபூண்டவன்; ஒழுக்கமுள்ளவன்.
**நியமங்கெட்டவன்** – ஒழுக்கந் தவறியவன்.
**நியமச்சூத்திரம்** – ஓரிடத்தில் பல விதிகள் நிகழும் நிலையில் ஒன்றை வரையறுக்கும் சூத்திரம்.
**நியமஞ்செய்தல்** – ஏற்படுத்துதல்; வேலையில் அமர்த்துதல்; நோன்புகொள்ளல்.
**நியமம்** – செய்கடன்; விதி; அட்டயோக விதிமுறைகளில் வழுவாது ஒழுகுதல்; வரையறுக்கை; வழக்கு; உறுதி; முடிவு; நகரம்; கோயில்; கடைத்தெரு; வீதி; இடம்; மண்டபம்.
**நியமவிஞ்சனம்** – இன்றியமையாச் சாதனம்.
**நியமனம்** – கட்டளை; அமர்த்தம்; உத்தியோக அமைவு; ஆணை; வகைப்படுத்துகை.
**நியமித்தல்** – உத்தியோகம் முதலியவற்றில் அமர்த்துதல்; தீர்மானித்தல்; சங்கற்பஞ் செய்தல்; ஓரிடத்திற் பல விதிகள் நிகழும் நிலையில் ஒன்று அல்லது சிலவே வரும் என்று வரையறுத்தல்; பிறப்பித்தல்; கட்டளையிடல்; வகைப்படுத்துதல்.
**நியமிதம்** – நியமனம்பெற்றது; உறுதி.
**நியர்** – ஒளி.
**நியர்ப்புதம்** – பதினாயிரங்கோடி.
**நியாக்கியம்** – பொரியரிசி.
**நியாச(த)ம்** – வைத்தல்; கிரியை; தன்னைக் கடவுளிடம் ஒப்படைத்தல்; வேம்பு; ஈடு வைத்த பொருள்.
**நியாமகன்** – அமர்த்துபவன்; ஓட்டுநன்; மாலுமி.
**நியாயக்கேடு** – நீதிக்கேடு.
**நியாயங்காட்டுதல்** – காரணங்கூறுதல்.
**நியாயங்கேட்டல்** – வழக்கு விசாரித்தல்.
**நியாயசபை** – நீதிமன்றம்.
**நியாயத்தப்பு** – காண்க: நியாயக்கேடு.
**நியாயத்தலம்** – காண்க: நியாயசபை.
**நியாயத்தார்** – நீதிபதிகள்.
**நியாயத்தீர்ப்பு** – வழக்கில் நீதிபதி கொடுக்கும் தீர்மானம்.
**நியாயப்பிரமாணம்** – நீதிச்சட்டம்.
**நியாயப்பிரமாணி** – ஒழுக்கமுள்ளவன்; நியாய முறை தவறாது நடப்பவன்.
**நியாயபரிபாலனம்** – நீதியாட்சி.
**நியாயபோதனை** – நன்னெறியுணர்த்துகை; நீதிமொழி.

**நியாயம்** – நீதி; வாய்மை; நன்னெறி; சட்டம்; முகாந்தரம்; வாக்குவாதம்; கௌதமர் மதம் பற்றிய தருக்கநூல்; போக்கு; கட்டுப்பாடு; இடம்; வழக்கு; உலகியலாகவும் சாத்திரமாகவும் வழங்கும் திட்டாந்த நெறி; ஒரு நோக்கத்துடன் அமைந்த சட்டம்.

**நியாயம்பேசுதல்** – வழக்கை விசாரித்தல்; தீர்ப்புக்கொடுத்தல்.

**நியாயமலைவு** – தருக்கநூலுக்கு மாறான கூற்று.

**நியாயமுத்தரித்தல்** – நியாயங் காட்டுதல்; பிரதிவாதஞ் செய்தல்.

**நியாயமுரசு** – மும்முரசுகளுள் அரசன் நீதி வழங்குதற்கு அறிகுறியாக முழங்கும் முரசு.

**நியாயர்** – தருக்கநூலில் வல்லவர்.

**நியாயவாதி** – வழக்கறிஞன்; நியாயம் பேசுவோன்.

**நியாயவான்** – நீதிமான்; நியாயம் பேசுவோன்; நீதிபதி.

**நியாளம்** – ஒரு பறைவகை.

**நியுத்தம்** – முட்டியுத்தம்.

**நியுத்தன்** – மனங்கவிந்தவன்; ஒரு செயல் செய்தற்கு அமர்த்தப்பெற்றவன்.

**நியுதம்** – நூறாயிரம்; பத்து நூறாயிரம்.

**நியூனம்** – குறைவு; தோல்வித்தானவகை.

**நியோககுற்றம்** – வாதத்தில் எதிரியின் தோல்வித்தானம் அறியாமை.

**நியோகம்** – கட்டளை; நியமித்த தொழில்; தத்துவம்; உறுதி; முயற்சி.

**நியோகித்தல்** – கட்டளையிடுதல்.

**நியோசனம்** – கட்டளை; இசைவு.

**நிர்க்கதி** – கதியின்மை.

**நிர்க்கந்தவாதி** – சமணருள் ஒரு பிரிவினராகிய நிகண்டவாதி.

**நிர்க்குண்டி** – வெண்ணொச்சிச்செடி.

**நிர்க்குணம்** – குணமின்மை; இழிகுணமில்லாமை.

**நிர்க்குணன்** – குணமற்ற கடவுள்; குணாதீதன்.

**நிர்க்கோத்திரம்** – காண்க: கோத்திரமின்மை.

**நிர்ச்சரம்** – தலைமயிர் பறித்தல் முதலிய சமண நோன்பு.

**நிர்ச்சலம்** – நீரின்மை; நீரும் உண்ணாப் பட்டினி; அசைவின்மை.

**நிர்ச்சலை** – சலனமற்ற சிவசத்தி.

**நிர்ச்சீவனாதல்** – முற்றும் ஆற்றலற்றுப் போதல்.

**நிர்ணயம்** – உறுதி; ஆராய்வு.

**நிர்ணயித்தல்** – தீர்மானித்தல்; முடிவுசெய்தல்.

**நிர்த்தத்துவன்** – தத்துவாதீதனாகிய கடவுள்.

**நிர்த்தம்** – நடனம்; வரிக்கூத்துவகை.

**நிர்த்தமாராயன்** – நட்டுவர்தலைவன்.

**நிர்த்தனன்** – சொத்துரிமையற்றவன்; எளியவன்.

**நிர்த்தாட்சிணியம்** – இரக்கமின்மை.

**நிர்த்தாரணம்** – நிலையிடுகை.

**நிர்த்தூளி** – முற்றும் அழிதல்.

**நிர்த்தேசம்** – கட்டளை; குறித்துக்காட்டுகை; சூத்திரபிடகத்தின் ஒரு பகுதி.

**நிர்த்தேசித்தல்** – குறித்துக்காட்டுதல்.

**நிர்த்தொந்தம்** – பற்றின்மை; தொந்ததுக்கமின்மை.

**நிர்நாசம்** – அழியாமை; முற்றுமழிதல்.

**நிர்நாமம்** – அருகன் எண்குணத்துள் ஒன்றாகிய பெயரில்லாமை.

**நிர்நாமன்** – பெயரற்ற கடவுள்.

**நிர்நிமித்தம், நிர்நிமித்தியம்** – காரணமின்மை.

**நிர்ப்பத்தியம்** – பத்தியமின்மை.

**நிர்ப்பந்தம்** – தொந்தரவு; கட்டாயம்.

**நிர்ப்பந்தித்தல்** – கட்டாயப்படுத்துதல்; துன்புறுத்துதல்.

**நிர்ப்பாக்கியம்** – பேறின்மை.

**நிர்மதி** – மனக்கவலையின்மை.

**நிர்மலதை** – மலமற்றிருக்குந் தன்மை.

**நிர்மலம்** – மாசின்மை; மனக்கவலையின்மை.

**நிர்மலன்** – மாசற்ற கடவுள்.

**நிர்மாணம்** – இயற்றுகை; ஏற்பாடு; அம்மணம்.

**நிர்மாலியம்** – பூசித்துக் கழித்த பொருள்.

**நிர்மித்தல்** – இயற்றுதல்; விதித்தல்.

**நிர்மிதம்** – படைக்கப்பட்டது; படைத்தல்; கற்பிதம்; விதித்தல்.

**நிர்மூடன்** – முழுமூடன்.

**நிர்மூடி** – மூடப்பெண்.

**நிர்மூலம்** – காரணமற்றது; பாழாதல்.

**நிர்வகித்தல்** – ஆளுதல்; செயல் நடப்பித்தல்; பொறுத்தல்; உறுதிப்படுத்துதல்.

**நிர்வசனம்** – சொற்கு வேர்ச்சொற் பொருள் கூறுகை; பேசாதிருக்கை.

**நிர்வமிசம்** – சந்ததியின்மை.

**நிர்வர்த்தியம்** – மூவகைச் செயப்படுபொருள்களுள் இயற்றப்படுவது.

**நிர்வாகசபை** – செயல்களைச் செய்துமுடிக்குஞ் சங்கம்.

**நிர்வாகப்படுதல்** – நிலைப்படுதல்.

**நிர்வாகம்பண்ணுதல்** – பொறுத்தல்; ஆளுதல்; பராமரித்தல்; முடிவுசெய்தல்; செயல் நடப்பித்தல்; மெச்சும்படி ஒன்றைச் சாதித்தல்; உறுதிப்படுத்துதல்.

**நிர்வாகமாதல்** – நேர்மையாய் நடத்தப்படுதல்; கன்னி முறைப்படி மணம் செய்விக்கப்படுதல்.

**நிர்வாகன், நிர்வாகி** – ஆள்திறனுடையோன்; வாய்மையாளன்; மேலாளர்; பொறுப்பாளர்.

**நிர்வாசம்** – குடியற்றது.
**நிர்வாணம்** – சமண பௌத்தர்களின் முத்தி நிலை; வீட்டின்பம்; அம்மணம்.
**நிர்வாணி** – ஆடையில்லாதவன்(ள்); சிவன்; அருகன்.
**நிர்விக்கினம்** – இடையூறின்மை.
**நிர்விகற்பக்காட்சி** – பொருளின் உண்மை மாத்திரம் உணரும் உணர்வு.
**நிர்விகற்பம்** – வேறுபாடின்மை; ஐயமின்மை.
**நிர்விகாரம்** – வேறுபாடின்மை; கடவுள்.
**நிர்விகாரி** – கடவுள்.
**நிர்விசாரம்** – கவலையின்மை; துயரமின்மை.
**நிர்விவாதம்** – விவாதமற்றது.
**நிரக்கம்** – சுட்டறிவின்மை.
**நிரக்கரகுக்கி** – காண்க: **நிரட்சரகுட்சி.**
**நிரக்கு** – அகவிலை; நேர்மை.
**நிரகங்கிருதி, நிரங்கிருதி** :– புறவிவகாரம்; செருக்கின்மை.
**நிரங்குசம்** – கட்டுப்படாமை.
**நிரங்குசன்** – கட்டுப்படாதவன்.
**நிரசம்** – சத்தின்மை; சுவையின்மை.
**நிரசனம்** – அழித்தல்; தள்ளுதல்; பட்டினி; வாயாலெடுத்தல், கக்குதல்.
**நிரஞ்சனம்** – குற்றமில்லாதது; வெளி; நிறைவு; வீடுபேறு; இரசகற்பூரம்.
**நிரஞ்சனன்** – அழுக்கற்ற கடவுள்; அருகன்; சிவன்.
**நிரஞ்சனி** – பார்வதி.
**நிரட்சம்** – நிலநடுக்கோடு, பூமத்தியரேகை.
**நிரட்சரகுட்சி** – எழுத்தறிவற்றவன்.
**நிரட்சரேகை** – காண்க: **நிரட்சம்.**
**நிரத்தல்** – பரத்தல்; நிரம்புதல்; கலத்தல்; சமாதானப்படுதல்; ஒழுங்குசெய்தல்; நெருங்குதல்; போதியதாதல்; சமபங்கிட்டு அளித்தல்.
**நிரத்திமாலி** – சிவபிரான்.
**நிரத்தியயம்** – குற்றமின்மை.
**நிரத்துதல்** – சமதளமாக்குதல்; குண்டு குழிகளைத் தூர்த்துச் சமனாக்குதல்.
**நிரதம்** – எப்பொழுதும்.
**நிரதி** – பற்று.
**நிரதிகாரன்** – ஒன்றற்குரிய அதிகாரமற்றவன்.
**நிரதிசயம்** – உயர்வற உயர்ந்த நிலைமை.
**நிரதிசயவின்பம்** – தன்னின் மேம்பட்ட இன்பமில்லாத வீட்டின்பம்.
**நிரந்தம்** – முடிவற்றது; நெருக்கிடை; குரங்கு.
**நிரந்தரம்** – இடைவிடாமை; முடிவற்று எப்பொழுதும் இருக்கை; நெருக்கம்; அழிவு; குரங்கு; சராசரி.
**நிரந்தரன்** – எப்போதுமுள்ள கடவுள்; சிவன்.
**நிரந்தரி** – காண்க: **நிரஞ்சனி.**
**நிரந்தரித்தல்** – எப்போதுமிருத்தல்; பரவுதல்.
**நிரப்பம்** – முழுமை; இறப்பு; ஒப்புமை; சமம்; கற்பு.
**நிரப்பிவிடுதல்** – பூர்த்தியாக்குதல்; சூலடையச் செய்தல்.
**நிரப்பு** – நிறைவு; சமதளம்; சமாதானம்; வறுமை; குறைவு; சோர்வு; நிறைகுடத்தைச் சூழப்போடும் நெல்; மங்கலக்குறியாக நெல் வைத்து நிரப்பிய நாழி.
**நிரப்புதல்** – நிறைத்தல்; பரப்புதல்; பூர்த்தி செய்தல்; மனநிறைவாக்குதல்; விடையளித்தல்.
**நிரப்போர்** – இரப்போர்; வறியர்.
**நிரபராதி** – குற்றமற்றவன்.
**நிரம்ப** – நிறைய, மிகுதியாக.
**நிரம்பரன்** – ஆடையில்லாதவன்; அருகன்; சிவன்.
**நிரம்பவழகியர்** – பேரழகுள்ளவர்; சிவன்; ஒரு புலவர்.
**நிரம்பாச்சொல்** – மழலைச்சொல்.
**நிரம்பாத்துயில், நிரம்பாத்தூக்கம்** – அரைத்தூக்கம்.
**நிரம்பாநோக்கு** – இடுக்கிப் பார்க்கும் பார்வை.
**நிரம்பாமென்சொல், நிரம்பாமொழி** – மழலைச்சொல்.
**நிரம்பிப்பாய்தல்** – ததும்பி வழிதல்.
**நிரம்பியபுட்பம், நிரம்பியம்** – வாழை.
**நிரம்பினபெண்** – பருவமடைந்த பெண்.
**நிரம்புதல்** – நிறைதல்; மிகுதல்; முடிவுறுதல்; பருவமடைதல்; முதிர்தல்.
**நிரயப்பாலர், நிரயபாலர்** – நரகத்திலுள்ள தலைவர்.
**நிரயம்** – காண்க: **நிரையம்.**
**நிரர்த்தகம், நிரர்த்தம்** – பயனற்றது.
**நிரல்** – வரிசை; ஒப்பு.
**நிரலுதல்** – ஒழுங்குபடுதல்.
**நிரவகாசவிதி** – குறித்த இடந்தவிர வேறு இடத்திற்குச் செல்லக்கூடாத விதி.
**நிரவகாலிகை** – வெளி.
**நிரவதி, நிரவதிகம்** – எல்லையற்றது.
**நிரவம்** – ஒலியின்மை.
**நிரவயவம்** – உறுப்பற்றது.
**நிரவயன்** – அழிவில்லாத கடவுள்.
**நிரவலடித்தல்** – உழுதநிலத்தைச் சமனாக்குதல்.
**நிரவற்பயிர்** – பெருமழையில் மண்ணால் மூடப்பட்ட பயிர்.
**நிரவுதல்** – சமனாதல்; தீர்தல்; பரவுதல்; வரிசையாயிருத்தல்; சமனாக்குதல்; குறைதீர்த்தல்; சராசரி பார்த்தல்; சரிப்படுத்துதல்; அழித்தல்.

**நிரளியசாரை** – கானகக்கல்.
**நிரன்னுவயன்** – சுற்றமற்ற துறவி.
**நிரனிறுத்தல்** – நிறுத்தமுறையால் வரிசையாக அமைத்தல்.
**நிரனிறை** – ஒழுங்காக நிறுத்தல்; பொருள்கோள் நான்கனுள் நிறுத்தமுறையே சொற்களை நிறுத்தல்.
**நிரா** – பழம் முதலியவற்றின் கன்றின நிலை.
**நிராகம்** – உடலின்மை.
**நிராகரணம்** – மறுப்பு.
**நிராகரன்** – அருவமான கடவுள்.
**நிராகரித்தல்** – மறுத்தல்; புறக்கணித்தல்.
**நிராகாரம்** – மறுப்பு; புறக்கணிப்பு; உருவமின்மை; வானம்; வீடுபேறு; உணவின்மை.
**நிராகாரன்** – உருவிலாக் கடவுள்.
**நிராகிருதம்** – தள்ளுண்டது; உருவமற்றது.
**நிராகிருதி** – வடிவின்மை; மறுப்பு; புறக்கணிப்பு.
**நிராகுலம்** – கலக்கமின்மை.
**நிராங்குதல்** – நருங்குதல்.
**நிராசனர்** – கடவுளர்.
**நிராசாரம்** – ஒழுக்கமின்மை.
**நிராசை** – விருப்பமின்மை; நம்பிக்கையறுகை.
**நிராடங்கம்** – மறுப்பற்றது.
**நிராதபகை** – இரவு.
**நிராதாரம்** – ஆதாரமின்மை; சார்பு வேண்டாமை; காண்க: **நிராதாரயோகம்.**
**நிராதாரயோகம்** – ஆன்மா தன்னறிவு இழந்து அறிவு வடிவாய சிவனை அடைந்து பற்றற நிற்கும் நிலை.
**நிராதாரன்** – பற்றுக்கோடற்றவனான கடவுள்.
**நிராமயம்** – நோயின்மை; நோயற்றது.
**நிராமயன்** – கடவுள்.
**நிராயுதபாணி** – ஆயுதமற்றவன்.
**நிராயுதன்** – ஆயுதமற்றவன்; அருகன்.
**நிரால்ம்பம்** – பற்றுக்கோடின்மை; வெளி; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.
**நிராலம்பன்** – பற்றுக்கோடற்ற கடவுள்.
**நிரியாசம்** – புகைச்சரக்கு ஆறனுள் ஒரு பிசின்வகை; காண்க: **வேம்பு.**
**நிரியாணம்** – யானைக் கடைக்கண்; இறப்பு; வீடுபேறு.
**நிரீச்சுரம்** – கடவுளில்லை என்னும் மதம்.
**நிரீச்சுரவாதி** – காண்க: **நிரீச்சுவரவாதி.**
**நிரீச்சுவரசாங்கியம்** – இறைவனின்மையைக் கூறும் சாங்கிய மதம்.
**நிரீச்சுவரவாதி** – கடவுள் இல்லை என்போன்.
**நிரீட்சணசுத்தி** – கண்ணேறு கழிக்கை.
**நிரீட்சணம்** – பார்வை; எதிர்பார்த்திருக்கை; மதிப்பு; பார்வையின்மை.
**நிரீட்சமாணம்** – நம்பிக்கை; பார்க்கை.
**நிரீட்சித்தல்** – பார்த்தல்; பார்வை பார்த்தல்; எதிர்பார்த்தல்.
**நிரீட்சிதம்** – பார்க்கப்பட்டது.
**நிருச்சுவாசம்** – மூச்சுவிடாதிருக்கை.
**நிருசத்தன்** – இராக்கதன்.
**நிருசிங்கம்** – நரசிங்கம்.
**நிருணயம்** – ஆராய்வு; உறுதி.
**நிருணயித்தல்** – தீர்மானித்தல்.
**நிருணாமன்** – பெயரில்லாத கடவுள்; அருகன்.
**நிருணித்தல்** – காண்க: **நிருணயித்தல்.**
**நிருத்தம்** – நடனம்; பற்றின்மை; வேதங்களிலுள்ள சொற்களை ஆராயும் நூல்; காண்க: **திரோப(பா)வம்.**
**நிருத்தமாது** – நாடகக் கணிகை.
**நிருத்தன்** – நடிப்போன்.
**நிருத்தாங்கம்** – நடனத்துக்கு வாசிக்கும் மத்தளம், தாளம் முதலியன.
**நிருத்தாசனம்** – தெளிவு.
**நிருத்தாட்சிணியம்** – கண்ணோட்டமின்மை.
**நிருத்தாதனம்** – ஒரு காலைத் தூக்கி நிற்கும் நிலைவகை.
**நிருத்தானுகம்** – காண்க: **நிருத்தாங்கம்.**
**நிருத்தி** – சொற்கு வேர்ச்சொற் பொருள் கூறுகை.
**நிருதர்** – அரக்கர்.
**நிருதாட்ச(சி)ணியம்** – காண்க: **நிருத்தாட்சிணியம்.**
**நிருதி** – தென்மேற்றிசைப் பாலகனான குபேரன்; முதலெழு வள்ளலுள் ஒருவன்; அரக்கி.
**நிருதிதிசை** – குபேரன் திசையான தென் மேற்கு.
**நிருதிபாசம்** – கடற்பாசி.
**நிருதூளி** – தூளி, அழுக்கு.
**நிருநாசம்** – காண்க: **நிர்நாசம்.**
**நிருநாசன்** – அழிவற்ற கடவுள்.
**நிருநாமன்** – கடவுள்.
**நிருபசரிதம்** – உபசாரமாக ஏற்றிக் கூறப்படாதது.
**நிருபதி** – காண்க: **நிருபன்**; குபேரன்.
**நிருபதுங்கராகம்** – பெரும்பண்வகை.
**நிருபம்** – எழுதியனுப்புங் கட்டளை; கடிதம்; தீர்மானம்.
**நிருபமம்** – ஒப்பின்மை.
**நிருபமன்** – ஒப்பில்லாதவன்.
**நிருபவல்லவை** – அரசி.
**நிருபர்** – தாளிகைக்குச் செய்தி திரட்டுபவர்.
**நிருபன்** – அரசன்.
**நிருபாதானம்** – முதற்காரணமின்மை.

**நிருபாதி** – துன்பமின்மை; காரணமின்மை; தடையின்மை.

**நிருபாதிகம்** – தடையற்றது; காரணமற்றது.

**நிருமதம்** – யானை; மதமொழிந்த யானை.

**நிருமலதானம்** – ஞானிகட்கு உதவுங் கொடை.

**நிருமலம்** – மாசின்மை.

**நிருமலன்** – குற்றமற்றவன்; கடவுள்.

**நிருமலி** – பார்வதி.

**நிருமாலியம்** – பூசித்துக் கழித்த பொருள்; வில்வம்; பெரிய மாவிலங்கமரம்.

**நிருமித்தல்** – படைத்தல்; தீர்மானித்தல்; ஆராய்தல்; ஏற்படுத்துதல்; பொய்யாகக் கற்பித்தல்.

**நிருமிதம்** – உண்டாக்கப்பட்டது; பொய்யாகக் கற்பித்தது.

**நிருமிதி** – படைப்பு.

**நிருமூடம்** – முழுதும் அறிவின்மை.

**நிருவகித்தல்** – காண்க: **நிர்வகித்தல்.**

**நிருவாகசபை** – செயல்களைச் செய்துமுடிக்கும் சங்கம்.

**நிருவாகம்** – ஆளுகை; பொறுப்பு; மேற்பார்வை; ஓம்புகை; நடப்பித்தல்; பொறுக்கை; பொருள் கொள்ளும் முறை; முடிவு; உறுதி; நிலைமை.

**நிருவாணதீட்சை** – சிவதீட்சையில் மூன்றாவது.

**நிருவிகற்பசமாதி** – தான் வேறு கடவுள் வேறென்ற விகற்ப உணர்வற்ற யோகநிலை.

**நிருவிடயானந்தம்** – உணர்ச்சிக்கு எட்டாத இன்பம்.

**நிரூபணம்** – ஆராய்ச்சி; மெய்ப்பித்தல்.

**நிரூபம்** – உருவமின்மை.

**நிரூபன்** – உருவமற்ற கடவுள்.

**நிரூபித்தல்** – மெய்ப்பித்தல்; ஆராய்தல்.

**நிரூபிதம்** – நிச்சயிக்கப்பட்டது; தீர்மானிக்கப் பட்டது.

**நிரேதுகம்** – ஏதுவற்றது.

**நிரை** – வரிசை; ஒழுங்கு; கொடிப்படை; படை வகுப்பு; காண்க: **கிரமம்;** கோபுரம்; கூட்டம்; பசுக்கூட்டம்; பசு; நிரையசை; ஒரு விளை யாட்டுவகை.

**நிரைக்கழு** – மதிற் கதவுகட்குக் காவலாக அமைக்கப்படும் முட்கழு.

**நிரைகவர்தல்** – பகைவர்களின் பசுக்கூட்டங் களைப் பிடித்தல்.

**நிரைகிளம்பி** – சினையாடு.

**நிரைகோட்பறை** – நிரை கவரும்போது அடிக்கும் பாலைப்பறைவகை.

**நிரைகோடல், நிரைகோள்** – போர்த் தொடக்கமாகப் பகைவரின் ஆநிரையைக் கவர்கை.

**நிரைச்சம்** – காண்க: **நிரைசல்;** இரவல்.

**நிரைச்சல்** – காண்க: **நிரைசல்;** இரவல்; சூது விளையாட்டுவகை; படைவகுப்பு.

**நிரைசல்** – ஓலை முதலியவற்றால் இடும் அடைப்பு.

**நிரைத்தல்** – ஒழுங்காய் நிறுத்தல்; நிரப்புதல்; பரப்புதல்; கோத்தல்; நிறைவேற்றுதல்; தனித் தனியாய்ச் சொல்லுதல்; திரளுதல்; சபை கூட்டுதல்; தொடர்ந்துவருதல்.

**நிரைத்தாலி** – ஒரு தாலிவகை.

**நிரைதல்** – நிரப்புதல்; ஒழுங்காக்குதல்; முடைதல்; ஓலை முதலியவற்றை வரிசையாக வைத்து மறைத்தல்; வரிசையாதல்; முறைப் படுதல்; திரளாதல்.

**நிரைந்துகாட்டுதல்** – விரித்தல், விளக்குதல்.

**நிரைபு** – முற்றியலுகரத்தாலேனும் குற்றிய லுகரத்தாலேனும் தொடரப்படும் நிரை யசை.

**நிரைபெயர்த்தல்** – எதிரிகள் கைக்கொண்ட பசுக் கூட்டங்களைத் திரும்பக் கைப்பற்றல்.

**நிரைமீட்சி, நிரைமீட்டல்** – பகைவர் கவர்ந்த ஆநிரையை மீட்கை.

**நிரையம்** – நரகம்.

**நிரையொன்றாசிரியத்தளை** – ஆசிரியப்பாவில் நிரையீற்று இயற்சீர்முன் நிரைமுதல் இயற்சீர் வந்து ஒன்றுந் தளை.

**நிரோசாதம்** – காண்க: **நிரோதி.**

**நிரோட்டகம், நிரோட்டம், நிரோட்டியம்** – இதழியைந்து பிறவாத எழுத்துகளால் ஆகிய செய்யுள்.

**நிரோட்டியவோட்டியம்** – செய்யுளின் முற்பாதி நிரோட்டியமும் பிற்பாதி ஒட்டியமுமாகப் பாடும் கவி.

**நிரோதம்** – தடை; அடக்கம்.

**நிரோதனை** – புலனடக்கம்.

**நிரோதி, நிரோதினி** – பதினாறு கலையுள் ஒன்று.

**நில்லாமை** – நிலைத்திராமை; அழிவது; உறுதிப் படாமை.

**நிலக்கடம்பு** – ஒரு பூண்டுவகை.

**நிலக்கடலை** – வேர்க்கடலை, மணிலாக் கொட்டை.

**நிலக்கணம்** – மூன்று நிரையசையடுத்து வருவதும் செய்யுளின் தொடக்கத்திருப்பின் நன்மை எனப்படுவதுமான சொல்.

**நிலக்கரி** – பூமியிலிருந்து எடுக்கப்படும் ஒரு கரிவகை.

**நிலக்கன்று** – சிறுபயிர்.

**நிலக்காரை** – ஒரு முட்செடிவகை.

**நிலக்கிழார்** – நிலத்துக்கு உரியவர்.

**நிலக்குமிழ்** – ஒரு செடிவகை.

**நிலக்குழி** – உரக்குழி; எழுத்துக்குழி.
**நிலக்கூந்தல்** – எலிச்செவிப்பூடு.
**நிலக்கொடி** – காண்க: **நிலமகள்.**
**நிலக்கொதி, நிலக்கொதிப்பு** – சூரிய வெப்பத்தால் பூமியினின்று எழும் வெப்பம்.
**நிலச்சாந்து** – சுண்ணக்காரை; மண்ணைக் கொண்டு குழந்தை நெற்றியில் இடும் பொட்டு.
**நிலச்சார்பு** – பூமியின் தன்மை; நிலவளம்.
**நிலத்தழல்** – காண்க: **நிலக்கொதிப்பு.**
**நிலத்தாமரை** – ரோசாமலர்.
**நிலத்தி** – நுளம்பு.
**நிலத்துளக்கு** – நிலநடுக்கம், பூகம்பம்.
**நிலத்துளசி** – துளசிவகை.
**நிலத்தெய்வம்** – நிலமகள்; ஐந்திணைக்குரிய தெய்வங்கள்.
**நிலந்தட்டி** – நிலத்தைச் சமனாக்கும் பலகை; கடல்மீன்வகை.
**நிலந்தரஞ்செய்தல்** – முற்றும் அழித்தல்.
**நிலந்தெளிதல்** – பொழுதுவிடிகை.
**நிலநடுக்கம்** – பூமி அதிர்வு, பூகம்பம்.
**நிலப்பரப்பு** – ஒரு நிலஅளவைவகை; நிலத்தின் அளவு; பூமியின் மொத்த நீள அகலம்.
**நிலப்பலா** – வேர்ப்பலா.
**நிலப்பனை** – மருந்துச்செடிவகை.
**நிலப்பாகல்** – பாகல்வகை.
**நிலப்பாலை** – சிறுமரவகை.
**நிலப்பாவாடை** – காண்க: **நடைபாவாடை.**
**நிலப்பிரயோசனம்** – நிலவிளைவு.
**நிலப்பிளப்பு** – கமர், வெடிப்பு.
**நிலப்பூ** – புற்புதர்களிலுண்டாகும் பூ.
**நிலப்பூச்சி** – பூச்சிவகை.
**நிலப்பெயர்** – நிலம்பற்றி ஒருவனுக்கிடும் பெயர்.
**நிலப்பெயர்ச்சி** – இடம் மாறுகை.
**நிலப்பொட்டு** – மண்ணைத் தேய்த்து இடுந் திலகம்; ஒரு காளான்வகை.
**நிலப்போங்கு** – நிலத்தன்மை.
**நிலபுலம்** – நன்செய் புன்செய்; விளைநிலமும் தோப்புகளும்; பல்வகை நிலம்.
**நிலம்** – தரை; மண்; பூமி; இடம்; வயல்; பதவி; நிலத்திலுள்ளார்; எழுத்து அசை சீர்களாகிய இசைப்பாட்டின் தானம்; விடயம்; மேன் மாடம்; கள்ளிவகை.
**நிலம்பி** – கொசு.
**நிலம்புலம்** – காண்க: **நிலபுலம்.**
**நிலமகள்** – பூமிதேவி.
**நிலமகன்** – பூமிதேவியின் மகனான செவ்வாய்.
**நிலமங்கை, நிலமங்கைநாச்சியார்** – காண்க: **நிலமகள்.**
**நிலமட்டம்** – தரைமட்டம்; நீர்மட்டம்.
**நிலமடந்தை** – காண்க: **நிலமகள்.**
**நிலமண்** – மனைத்தளத்தை நிரப்பும் மண்.
**நிலமயக்கம்** – காண்க: **திணைமயக்கம்.**
**நிலமளந்தோன்** – உலகை அளந்த திருமால்.
**நிலமாளிகை** – நிலவறை.
**நிலமிதி** – ஒரு பகுதியில் சேருகை; இடத்தின் தன்மை; நடைவசதி.
**நிலயம்** – தங்குமிடம்; கோயில்; மருதநிலத்தூர்; இலக்கு; படி; கூத்து.
**நிலயம்பிடித்தல்** – இடங்காணுதல்; நிலைப் படுதல்; மருந்து முதலியவற்றின் அளவை நிதானித்தல்.
**நிலவடலி** – சிறுபனைமரம்.
**நிலவடி** – கையினால் எடுத்தடிக்கும் கதிரடிப்பு. களத்தில் கையால் அடித்த தானியம்.
**நிலவடுப்பு** – நிலத்தில் அமைக்கும் அடுப்புவகை.
**நிலவர்** – நீரின் நிலையை மூழ்கியறிபவர்; நிலத்துள்ளவர்.
**நிலவரண்** – நீரும் நிழலுமற்ற மருதநில அரண்.
**நிலவரம்** – நிலைபேறு; நிலைமை; அன்றாட வேலை.
**நிலவரி** – அரசாங்கத்திற்குச் செலுத்தும் பூமி வரி.
**நிலவருந்தி** – சகோரப்புள்.
**நிலவலயம்** – பூமண்டலம்.
**நிலவறை** – பூமிக்குள் அமைக்கப்படும் அறை.
**நிலவாகை** – ஒரு மருந்துச்சரக்கு; பாகல்வகை.
**நிலவாசி** – நிலத்தன்மை.
**நிலவாரம்** – விளைவிலிருந்து பயிரிடுவோன் நிலக்கிழாருக்குக் கொடுக்கும் தானியத்தின் ஒரு பகுதி.
**நிலவிழுது** – காண்க: **நிலப்பனை.**
**நிலவீரியம்** – பூநீறு.
**நிலவு** – ஒளி; சந்திரன்; நிலவொளி.
**நிலவுகாய்தல்** – நிலவெறித்தல்.
**நிலவுதல்** – நிலைத்திருத்தல்; தாங்குதல்; வழங்குதல்; பரவுதல்; ஒளிவிடுதல்.
**நிலவுலகம்** – பூமி.
**நிலவூறல்** – பூமிக்கசிவு.
**நிலவெக்கை** – வெயில் காய்ந்ததால் நிலத்தில் உண்டாகும் வெப்பம்.
**நிலவெடுப்பு** – முதலுழவு.
**நிலவெறித்தல்** – நிலவொளி வீசுதல்.
**நிலவேம்பு** – செடிவகை.
**நிலவேர்** – பூநாகம், மண்புழு.
**நிலன்** – நிலம்.
**நிலா** – காண்க: **நிலவு.**
**நிலாக்கல்** – காண்க: **சந்திரகாந்தக்கல்.**
**நிலாக்காலுதல்** – நிலவு வீசுதல்.
**நிலாக்கொழுந்து** – இளம்பிறை.
**நிலாத்திரி** – மத்தாப்பு.

**நிலாமண்டபம்** – காண்க: **நிலாமுற்றம்.**
**நிலாமண்டலம்** – சந்திரமண்டலம்.
**நிலாமணக்கு** – பூண்டுவகை.
**நிலாமணி** – காண்க: **சந்திரகாந்தக்கல்.**
**நிலாமாடம்** – காண்க: **நிலாமுற்றம்.**
**நிலாமுக்கி, நிலாமுகி** – நிலவின் கதிர்களை உண்டு வாழும் பறவைவகை, சகோரப் புள்.
**நிலாமுற்றம்** – நிலாக்காலத்து உலவுவதற்காக வீட்டின்மேல் அமைத்த திறந்தவெளி முற்றம்.
**நிலாவுதல்** – நிலவுதல்; நிலைத்திருத்தல்; தியானித்தல்; ஒப்பாதல்.
**நிலுவை** – தங்குகை; வரவுபாக்கி.
**நிலுவைக்காரன்** – கடன்காரன்; நிலுவை வசூலிப்பவன்.
**நிலை** – நிற்கை; உறுதி; தன்மை; நிலைமை; தொழில்; இடம்; தங்குமிடம்; பூமி; காண்க: **நிலைத்திணை;** தேர்த்தட்டு; கதவுநிலை; தூண்; விளக்குத்தண்டு; நெறி; வழக்கு; ஆசிரமம்; குலம்; மரபுரிமை; இசைப்பாட்டு வகை; பொழுது; முகூர்த்தம்; ஒரு நிலவளவு வகை; ஒருவன் நிற்கக்கூடிய நீராழம்; பசு ஒரு தடவை கழிக்குஞ் சாணி; அணிகலத் தொங்கல்.
**நிலைக்கட்டுதல்** – நிலைக்கச்செய்தல்.
**நிலைக்கடகம்** – பெருங்கூடை.
**நிலைக்கண்ணாடி** – ஓரிடத்தில் நாட்டப்பட்ட முகம்பார்க்கும் பெரிய கண்ணாடி.
**நிலைக்கதவம்** – நிலையிலமைந்த கதவு.
**நிலைக்கல்** – ஆட்டுக்கோரோசனை; நிலைப்படியின் கீழுள்ள கல்.
**நிலைக்களப்போலி** – ஓர் எழுத்து நின்றவிடத்தில் அதற்கு ஈடாய் வந்துநிற்கும் எழுத்து.
**நிலைக்களம்** – தங்குமிடம்.
**நிலைக்கால்** – கட்டில் முதலியவற்றின் கால்.
**நிலைக்கிடை** – நாட்டியத்தில் உட்காரும் நிலை.
**நிலைக்குடி** – பழங்குடி; நிலக்கிழாரின் நிலைத்த குடிகள்.
**நிலைக்குத்துதல்** – இறக்கும்போது விழி முதலியன அசைவின்றியிருத்தல்.
**நிலைகலங்குதல்** – காண்க: **நிலைகுலைதல்.**
**நிலைகுலைத்தல்** – நிலைமையழித்தல்; கற்பழித்தல்; ஒழுக்கங்கெடுத்தல்; சிதறவடித்தல்; தயங்கச்செய்தல்.
**நிலைகுலைதல்** – நிலைமை தவறுதல்; நெறி பிறழ்தல்: தயங்குதல்; சிதறுண்ணுதல்.
**நிலைகெடுதல்** – தடுமாறல்.
**நிலைகேடு** – கெட்டுப்போன நிலைமை.
**நிலைகொள்ளுதல்** – உறுதியாதல்; தன்னிலையடைதல்; நிற்குமளவு ஆழமாதல்.
**நிலைகோலுதல்** – அணிவகுத்தல்; இடந்தேடுதல்.
**நிலைச்செண்டு** – நிலத்தில் நின்று எறிந்து விளையாடும் பந்து.
**நிலைச்செரு** – இடையறாப் போர்.
**நிலைசெல்லுதல்** – காண்க: **நிலைகொள்ளுதல்.**
**நிலைத்தல்** – நிலைபெறுதல்; தாமதித்தல்; நீர் ஆள் அளவுக்கு இருத்தல்.
**நிலைத்தானம்** – கோயில்.
**நிலைத்திணை** – அசையாப்பொருள்.
**நிலைத்துறை** – வழக்கமாய் இறங்கும் நிலையாழமுள்ள நீர்த்துறை.
**நிலைத்தேர்** – அலங்காரம் செய்து ஓரிடத்தில் நிலையாக நிறுத்தப்பட்டிருக்குந் தேர்.
**நிலைதடுமாறுதல்** – காண்க: **நிலைகுலைதல்.**
**நிலைதல்** – நிலைத்துநிற்றல்.
**நிலைதளம்புதல்** – நிலையற்றிருத்தல்; கலக்கமுற்றிருத்தல்; நிலைமை தவறுதல்; நெறி வழுவுதல்; காவாது கிடத்தல்.
**நிலைதிரிதல்** – முறைமை கெடுதல்.
**நிலைநாட்டுதல்** – நிலைத்திருக்கச்செய்தல்; தொடங்குதல்.
**நிலைநிற்றல்** – கொள்கையை உறுதியாய்க் கடைப்பிடித்தல்; நிலையாய்த் தங்குதல்.
**நிலைநிறுத்துதல்** – தொடங்குதல்; முடிவாய் மெய்ப்பித்தல்.
**நிலைநீர்** – ஓட்டமற்ற நீர்; கடல்.
**நிலைநீர்ப்பாட்டம்** – ஏரிப் பாய்ச்சல் வரி.
**நிலைப்படி** – கதவுநிலையின் அடிப்படி.
**நிலைப்படுத்துதல்** – காண்க: **நிலைநிறுத்துதல்;** உறுதியாக்குதல்.
**நிலைப்படுதல்** – நிலைநிற்றல்; உறுதியாதல்.
**நிலைப்படை** – காவலுக்குத் தலைநகரிலேயே நிறுத்திவைக்கப்பட்ட சேனை.
**நிலைப்பதம்** – காண்க: **நிலைமொழி.**
**நிலைப்பாடு** – நிலைமை; உறுதிப்பாடு.
**நிலைப்பு** – நிலை; உறுதி; விடாமுயற்சி.
**நிலைப்பூட்டு** – கதவில் தைக்கப்பட்ட பூட்டு வகை.
**நிலைபிடித்தல்** – தொழில் முதலியன பெற்று நிலையாயிருத்தல்; குறிக்கோளை அடைதல்.
**நிலைபெறுத்தல்** – காண்க: **நிலைநிறுத்துதல்;** காத்தல்.
**நிலைபெறுதல்** – நிலையாய்த் தங்குதல்; துன்பமற்ற நிலைமையை அடைதல்; நீடித்தல்; ஒன்று நிற்கக்கூடியவளவு ஆழமுடைத்தாதல்.
**நிலைபேறு** – நிலைப்பிடம்; உறுதி; தூண்; மானம்; வீடுபேறு.
**நிலைபோடுதல்** – தொடங்குதல்.
**நிலைமடக்கு** – அணிவகை.

**நிலைமண்டிலம், நிலைமண்டிலவாசிரியப்பா** – சீர்கள் தம்முள் அளவொத்த அடிகளை உடைய அகவற்பாவகை.

**நிலைமண்டுதல்** – அயலூரில் நீடித்துத் தங்குதல்; ஓரிடத்தைப் பற்றிக்கொள்ளுதல்.

**நிலைமாறுதல்** – இடமாறுதல்; சொல்லில் எழுத்துகள் இடம்பிறழ்தல்.

**நிலைமை** – இயல்பு; வாழ்க்கைநிலை; நிலை; நிலவரம்; திண்மை; உறுதி; உண்மை; புகழ்; வீடுபேறு; நிலவுடைமை.

**நிலைமைக்காரன்** – நிலக்கிழான்; நேர்மையுள்ளவன்.

**நிலைமொழி** – பதப்புணர்சிக்கண் முதலில் நிற்கும் சொல்.

**நிலையகம்** – மனை.

**நிலையங்கி** – முகம்மதியர் அணியும் நீண்ட சட்டை; தெய்வத்திருமேனிக்குச் சாத்தும் கவசம்; தெய்வத்திருமேனிக்குச் செய்யும் முழு அலங்காரம்.

**நிலையம்** – இலக்கு; தங்குமிடம்; கோயில்; மருத நிலத்தூர்; படி; கூத்து.

**நிலையல்** – நிற்கை.

**நிலையழிதல்** – காண்க: **நிலைகுலைதல்.**

**நிலையற்றவன்** – உறுதியில்லாதவன்; தகுதி இல்லாதவன்.

**நிலையறிதல்** – எண்ணமறிதல்.

**நிலையாடி** – நெய்வார் கருவியுள் ஒன்று; காண்க: **நிலைக்கண்ணாடி.**

**நிலையாமை** – நிலைத்துநில்லாமை; உறுதியின்மை, உறுதியற்ற தன்மை; அழிந்துபடும் தன்மை.

**நிலையாறுதல்** – அமைதியுறுதல்.

**நிலையிடுதல்** – காண்க: **நிலைநிறுத்துதல்;** அளந்தறிதல்.

**நிலையியற்பொருள்** – காண்க: **நிலைத்திணை.**

**நிலையுடைக்கட்டை** – முளையாணி.

**நிலையுதல்** – நிலைபெறுகை.

**நிலையுமல்** – தொம்பை, மூங்கிலாலான நெற்குதிர்; கூடை.

**நிலையுரல்** – நிலத்திற் புதைத்துவைக்கும் பெரிய உரல்.

**நிலையூன்றுதல்** – மரம் முதலியன வேரூன்றல்; உறுதிப்படுதல்.

**நிலையெடுத்தல்** – பெருமைபெற்று விளங்குதல்.

**நிலைவரம்** – நிலைபேறு; உறுதி; நிலைமை.

**நிலைவரி** – இசைப்பாட்டுவகை.

**நிலைவிடுதல்** – மனைக்கு வாயில்நிலை அமைத்தல்.

**நிலைவிளக்கு** – குத்துவிளக்கு; மணவிழாவில் ஏற்றும் விளக்கு; நிலைச்சட்டத்தில் உள்ள விளக்கு.

**நிவகம்** – கூட்டம்.

**நிவசதி** – வீடு.

**நிவசனம்** – ஆடை.

**நிவத்தல்** – உயர்தல்; படர்தல்; வளர்தல்; மேலாதல்; மேல்வழிதல்; தோன்றுதல்.

**நிவந்தக்காரர்** – கோயிற்றொண்டு செய்வோர்.

**நிவந்தம்** – கோயிற்றொண்டு; கோயிற்செலவு; நிபந்தனை; வேலைத்திட்டம்; கடவுளை வழிபடும் இடம்; சங்கிரகநூல்.

**நிவப்பு** – உயரம்.

**நிவப்புத்தூக்கு** – ஐஞ்சீருள்ள இசைப்பாட்டு.

**நிவம்** – தோளின் மேலிடம்.

**நிவர்த்தனம்** – திரும்புதல்; போக்குதல்.

**நிவர்த்தி** – காண்க: **நிவிர்த்தி.**

**நிவர்தல்** – ஓங்குதல்.

**நிவறுதல்** – பொடியாதல்; மொய்த்தல்.

**நிவாசம்** – தெய்வம் அல்லது பெரியார் வாழிடம்.

**நிவாதகவசர்** – காற்றுப்புகாத கவசத்தை உடையவர்.

**நிவாதம்** – காற்றின்மை.

**நிவாரணம்** – தடுக்கை; தடை; ஒழிப்பு; அறுவகைப்பட்ட துன்பநீக்கம்.

**நிவாரம்** – தடை.

**நிவி** – மாமரம்.

**நிவிர்த்தன்** – துறவி.

**நிவிர்த்தி** – விடுதலை; காண்க: **நிவிர்த்திகலை;** துறவு; ஒழிப்பு; போக்கு.

**நிவிர்த்திகலை** – ஐந்துவகைக் கலையுள் ஆன்மாக்களைத் தளையினின்று விடுவிப்பதாகிய கலை.

**நிவேசம்** – வீடு.

**நிவேசனம்** – இடம்; வீடு; ஊர்; 2400 சதுர அடி கொண்ட மனையளவு.

**நிவேத்தியம்** – தெய்வப் படையல்.

**நிவேதனம்** – கடவுளுக்குப் படைக்கும் அமுது; ஒப்புவிக்கை.

**நிவேதித்தல்** – நைவேத்தியஞ் செய்தல்.

**நிழத்துதல்** – முன்னுள்ள நிலையினின்றும் நுணுகுதல்; தின்றழித்தல்; இல்லையாக்குதல்.

**நிழல்** – சாயை; எதிரொளி; அச்சு; குளிர்ச்சி; அருள்; ஒளி; நீதி; புகலிடம்; கொடை; செல்வம்; மரக்கொம்பு; நோய்; பேய்.

**நிழல்காண்மண்டிலம்** – நிழலை உமிழும் கண்ணாடி.

**நிழல்விழுதல்** – நிழல்வீசுதல்; நிழல்படிதல்.

**நிழலல்** – காண்க: **நிழலுதல்.**

**நிழலாட்டம்** – ஓவியத்தில் மங்கின பக்கம்; மாதிரி; மெய்ம்மையற்றது; தோற்பாவையாட்டம்.

**நிழலாடுதல்** – எதிரொளித்தல்; எதிருருத் தோன்றுமாறு இருத்தல்; ஆள் நடமாடுவதால் ஏற்படும் நிழலின் அசைவு; நிழல்மாத்திரம் தெரியும்படி பார்வை குன்றுதல்.
**நிழலி** – ஒளி; நீதி; காற்று; நோய்.
**நிழலிடுதல்** – நிழலைக் கொடுத்தல்; எதிரொளி; ஒளிவிடுதல்.
**நிழலுதல்** – நிழல்செய்தல்; காப்பமைதல்; ஒளி செய்தல்; எதிரொளித்தல்.
**நிழலுலர்த்தல்** – நிழலில் மருந்து முதலியவற்றைக் காயவைத்தல்.
**நிழலொதுக்கு** – இளைப்பாறுதற்குரிய நிழலிடம்.
**நிழற்சரிவு** – நிழலின் சாய்வு; சாயங்காலம்.
**நிழற்சாய்வு** – காண்க: **நிழலொதுக்கு.**
**நிழற்செய்தல்** – நிழல் தருதல்.
**நிழற்பாடு** – நிழல்படுகை.
**நிழற்பாவை** – திரைச்சீலைக்குள் வைத்து ஆட்டும் பாவை.
**நிழற்றல்** – நிரம்பா மென்சொல்.
**நிழற்றாங்கல்** – பந்தல்.
**நிழற்றுதல்** – ஒளிவிடுதல்; நிழல்செய்தல்; மணி முதலியன அடித்தல்; அடங்குதல்; காத்து அளித்தல்.
**நிழறுதல்** – ஒளிவிடுதல்.
**நிளுதனம்** – அழிக்கை.
**நிற்காரம்** – இகழ்ச்சி.
**நிற்பத்தி** – இடம்.
**நிற்பது** – நிலைத்திணைப்பொருள், தாவரம்.
**நிற்பாக்கியம்** – ஏதுமின்மை; நற்பேறின்மை.
**நிற்பாட்டுதல்** – நிறுத்துதல்; நடுதல்.
**நிற்புதம்** – பதினாயிரங்கோடி.
**நிற்றல்** – நிற்கை.
**நிற்றலும்** – எந்நாளும்.
**நிறக்கேடு** – புகழ்க்குறைவு.
**நிறங்குணம்** – இயல்பு.
**நிறங்கொடுத்தல்** – நிறமூட்டுதல்; மேனியாதல்; நிறமுடைத்தாதல்; ஒளிரச்செய்தல்.
**நிறத்தல்** – நிறம்பிடித்தல்; நிறம்முற்றுதல்; ஒளிர்தல்; பயனளித்தல்.
**நிறம்** – வண்ணம்; சாயம்; இயல்பு; ஒளி; புகழ்; இசை; மார்பு; நடுவிடம்; உயர்நிலை; உடல்; தோல்.
**நிறம்பெயர்தல்** – நன்னிறமாதல்; நிறம் வேறுபடுதல்.
**நிறவாளத்தி** – இசையின் ஆலாபனவகை.
**நிறுத்தசொல்** – காண்க: **நிலைமொழி.**
**நிறுத்தம்** – நிறுத்துகை; செங்குத்தாக நிறுத்தல்.
**நிறுத்தல்** – நிலைநிறுத்துதல்; எடைபார்த்தல்; தீர்மானித்தல்; படைத்தல்; வைத்தல்; தடைசெய்தல்.

**நிறுத்தலளவை, நிறுத்தளத்தல்** – நிறையளவு; நிறுத்தல் வாய்பாடு.
**நிறுத்திக்கொள்ளுதல்** – காண்க: **நிறுத்துதல்;** நிறைவேற்றுதல்; எதிர்பார்த்தல்.
**நிறுத்திச்சொல்லுதல்** – விரைவின்றித் தெளிவாய்ச் சொல்லுதல்.
**நிறுத்திப்பிடித்தல்** – கண்டிப்பாதல்; சிறு குற்றங்களைக் கவனித்தல்; தூக்கிப்பிடித்தல்.
**நிறுத்தியெழுதுதல்** – எழுத்துச் செவ்வையாயிருக்கும்படி மெல்ல எழுதல்; இடம்விட்டெழுதல்; எழுத்துகள் சாய்வின்றி நிமிர்ந்துநிற்கும்படி எழுதுதல்.
**நிறுத்து** – இசைப்பாட்டின் சிறுபகுதி.
**நிறுத்துக்கட்டுதல்** – அளவிடுதல்.
**நிறுத்துதல்** – நேராக நிற்கச்செய்தல்; நிலைநாட்டுதல்; தீர்மானித்தல்; மனத்தை ஒரு நிலையில் இருத்துதல்; அமர்த்துதல்; ஆதரித்தல்; சீர்திருத்துதல்; தழுவிக்கொள்ளுதல்; ஒப்புவித்தல்; மேற்செல்லாதிருக்கச்செய்தல்; தள்ளிவைத்தல்; படிக்கும்போதும் பாடும்போதும் உரியவிடங்களில் நிறுத்துதல்; செய்யாதொழித்தல்; அவித்தல்.
**நிறுத்துப்பார்த்தல்** – எடைபோட்டுப் பார்த்தல்; ஆராய்தல்; ஒப்பிடுதல்.
**நிறுதிட்டம்** – நேரே நிற்கை; விறைப்பு.
**நிறுப்பான்** – துலா; துலாராசி.
**நிறுபூசல்** – பேரொலி; மும்முரம்.
**நிறுவுதல்** – காண்க: **நிறுத்துதல்.**
**நிறை** – பூர்த்தி; எண்வகைப் பாடற் பயன்களுள் ஒன்று; அடுத்தடுத்து வரும் சுரம்; இரண்டு தாக்குடைய தாளவகை; நிறுக்கை; தராசு; துலாராசி; எடை; நூறு பலம்கொண்ட அளவு; வரையறை; நிறுத்துகை; வைத்து அமைக்கை; கற்புவழி நிற்றல்; ஆடூஉக் குணம் நான்கனுள் காப்பன காத்துக் கடிவன கடியும் திண்மை; மனவடக்கம்; கற்பு; சூளுரை; வலி; அறிவு; மறைபிறரறியாமை; அழிவின்மை; மாட்சிமை; நீதி; மிகுதி; கவனம்; நீர்ச்சால்.
**நிறைகட்டுதல்** – தடைகட்டுதல்; மதிப்புக்குத் தக்கவாறு பண்டமாற்றுச்செய்தல்.
**நிறைகர்ப்பம்** – நிறைசூல், பூரணகருப்பம்.
**நிறைகர்ப்பிணி** – நிறைசூலி, பூரண கருப்பமுடையவள்.
**நிறைகல்** – படிக்கல்.
**நிறைகலை** – முழுக்கூறு; தெய்வத்திருமேனியின் முகத்திற் காணும் முழு அழகு; முழுநிலா; தெய்வ ஆவேசம்; முழுவெறி; முழுப்பிறப்பு.
**நிறைகுடம்** – பூரணகும்பம்; கல்வி, செல்வம் முதலியன நிறையப் பெற்றும் பெருமிதங் காட்டாதவன்.

**நிறைகுணம்** – பொறுமைக்குணம்.
**நிறைகோல்** – துலாக்கோல்.
**நிறைசூல்** – காண்க: **நிறைகர்ப்பம்**; கருக்கொண்டுள்ள மேகம்; மிகுதியாகப் பூக்கும் நிலை.
**நிறைசெல்வம்** – நிரம்பிய சம்பத்து.
**நிறைசெல்வன்** – நிறைந்த செல்வமுடைய குபேரன்.
**நிறைத்தல்** – நிரம்பச்செய்தல்; பரவச்செய்தல்; திணித்தல்.
**நிறைதருதூறு** – சீந்திற்கொடி.
**நிறைதல்** – நிரம்புதல்; மிகுதல்; பரவியிருத்தல்; மனநிறைவாதல்; அமைதியாதல்.
**நிறைந்தகுணம், நிறைந்தமனம்** – திருப்தியுள்ள மனத்தன்மை; மகிழ்ச்சியுள்ள சித்தம்.
**நிறைந்தமனிதன்** – உயர்குணமுடையோன்.
**நிறைநரம்பு** – ஏழு சுரமுள்ள பண்.
**நிறைநாழி** – மங்கல அறிகுறியாக நெல் நிரப்பி வைக்கப்பட்ட படி.
**நிறைநாழிவைத்தல்** – திருமணம் முதலியவற்றில் மங்கலக் குறியாகப் படியில் நெல்லை நிரம்பவைத்தல்.
**நிறைநிலவு** – முழுத்திங்கள்.
**நிறைநீர்வேலி** – பேய்த்தேர்; உடைகுளம்.
**நிறைபாரம்** – கனத்த சுமை; நிரம்ப உண்ணுகை; அணி, அம்மை முதலியன உடல் முழுதும் நிரம்பியிருக்கை.
**நிறைபூசல்** – பேரொலி.
**நிறைமணி** – விநாயகருக்குச் செய்யப்படும் திருமஞ்சனம்.
**நிறைமதி** – முழுநிலா; முழு அறிவு.
**நிறைமை** – மனத்தைக் கற்புவழியில் நிறுத்துகை.
**நிறைமொழி** – பலிக்கும் வாக்கு; மந்திரம்.
**நிறைமொழியாளர்** – முனிவர்; புலவர்.
**நிறைய** – நிரம்ப.
**நிறையவை** – எல்லாப் பொருளையும் அறிந்து எதிர்வரும் மொழிகளை எடுத்துரைக்க வல்லவர் குழுமிய சபை.
**நிறையழிதல்** – கற்பழிதல்; ஒழுக்கங்கெடுதல்; யானை மதம்பிடித்தல்.
**நிறையறிகருவி** – கட்டளைக்கல்; தராசு.
**நிறையுரை** – எடையும் மாற்றும்.
**நிறையெடுத்தல்** – நிறுத்தல்.
**நிறைவு** – முழுமை; மிகுதி; நிரப்புகை; மனநிறைவு; மகிழ்ச்சி; மாட்சிமை; வீடுபேறு.
**நிறைவேற்றம்** – முற்றுகை; நடத்துகை.
**நிறைவேற்றுதல்** – முற்றச்செய்தல்; நடத்துதல்.
**நிறைவேறுதல்** – முற்றுதல்; நற்கதியடைதல்.
**நின்** – உனது.
**நின்மலம்** – மாசின்மை.
**நின்மலன்** – அழுக்கற்றவனான கடவுள்; அருகன்.
**நின்மலி** – காண்க: **வில்வம்.**
**நின்மாலியம்** – பூசித்துக் கழித்த மலர் முதலிய பொருள்.
**நின்மிதி** – உண்டாக்குகை; தொடக்கம்.
**நின்மூடன்** – காண்க: **நிர்மூடன்.**
**நின்றதிருக்கோலம்** – திருமால் திருக்கோலம் மூன்றனுள் நின்றருளும் நிலை.
**நின்றது** – நிலைத்த பொருள்; தாவரம்; எஞ்சியது.
**நின்றநிலை** – பிடிவாதம்; ஒரே நிலை; நிற்கும் நிலை.
**நின்றவடி** – நின்ற இடம்; காலடி.
**நின்றாடல்** – நின்றாடும் தெய்வக் கூத்துவகை.
**நின்றாற்சிணுங்கி** – காண்க: **நின்றுசிணுங்கி.**
**நின்று** – எப்பொழுதும்; ஐந்தாம் வேற்றுமைப் பொருள்பட வரும் ஓர் இடைச்சொல்.
**நின்றுசிணுங்கி** – சிறியாநங்கைச்செடி.
**நின்றுபயனின்மை** – நூற்குற்றம் பத்தனுள் ஒன்று.
**நின்றுபோதல்** – வேலை முதலியன நடவாது போதல்.
**நின்றுவற்றுதல்** – சொல்லும் சொற்றொடரும் இருந்தும் பயனிலவாதல்.
**நின்றேத்துவார்** – நின்றுகொண்டு அரசனின் புகழ் பாடுவார்.
**நின்றை** – அசைநிலை; திருநின்றவூர்.
**நின்னாமன்** – பெயரில்லாத அருகன்; சிவன்.
**நினதம்** – காண்க: **நினாதம்.**
**நினவ** – உன்னுடையன.
**நினாதம்** – ஒலி.
**நினைத்தல், நினைதல்** – கருதுதல்; ஞாபகத்திற்கொணர்தல்; ஆராய்தல்; தியானித்தல்; அறிதல்; நோக்கமாகக்கொள்ளுதல்; பாவித்தல்; மனனம்.
**நினைப்பணி** – ஒரு பொருள் ஒப்புமையாற் பிறிதொன்றனை ஞாபகப்படுத்துவதாகக் கூறும் அணிவகை.
**நினைப்பாயிருத்தல்** – கவனமாயிருத்தல்; மனத்தை ஒருமுகப்படுத்துதல்.
**நினைப்பாளி** – நினைவாற்றலுள்ளோன்.
**நினைப்பிடுதல்** – ஆணையிடுதல்.
**நினைப்பு** – எண்ணம்; அறிவுரை; நினைவு; பாவனை; நோக்கம்; கவனம்; தியானம்; மனவுறுதி.
**நினைப்பூட்டுதல்** – ஞாபகப்படுத்துதல்; அறிவுறுத்துதல்.

**நினைவு** – எண்ணம்; ஆலோசனை; ஞாபகம்; பாவனை; நோக்கம்; கவனம்; தியானம்; வருத்தம்; ஞாபகக் குறிப்பு; அரசர் கட்டளை.
**நினைவுகூர்தல்** – ஞாபகங்கொள்ளுதல்.
**நினைவுகேடு** – காண்க: **நினைவுத்தப்பு.**
**நினைவுத்தடுமாற்றம்** – காண்க: **நினைவுத்தப்பு;** மயக்கம்; பைத்தியம்.
**நினைவுத்தப்பு** – ஞாபகத்தவறு; அறிவு அழிந்து போகை.
**நினைவுவைத்தல்** – மனம்வைத்தல்; நினைத்தல்; நன்றியின்பொருட்டேனும் அன்பினாலேனும் ஞாபகம்வைத்தல்; விரும்புதல்.
**நினைவோடுதல்** – ஞாபகம் வருதல்.

# நீ

**நீ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ந் + ஈ); முன்னிலை ஒருமைப் பெயர்.
**நீக்கம்** – நீங்குகை; பிளப்பு; நீளம்; முடிவு; தறுவாய்; இடைப்பட்ட இடம்.
**நீக்கல்** – நீக்குதல்; அழிக்கை; மாறுபாடு; தையல் இணைப்பு; துளை.
**நீக்கு** – விலக்கு; கழிவு; பிளப்பு; மீதி; காண்க: **நீக்கம்.**
**நீக்குதல்** – ஒழித்தல்; விடுவித்தல்; கழித்தல்; ஒதுக்குதல்; அழித்தல்; அகற்றுதல்; பிரித்தல்; திறத்தல்; மாற்றுதல்; கைவிடுதல்.
**நீக்குப்போக்கு** – இணக்கம்; மரியாதை; உதவி; சாக்குப்போக்கு; வழிவகை; இடைவெளி; இளைப்பாறுகை; செயல்முறைமை.
**நீகம்** – தவளை; மேகம்.
**நீகாசம்** – ஒப்பு; உண்மை; உறுதி.
**நீகாமன்** – காண்க: **நீகான்.**
**நீகாரம்** – பனி; காண்க: **ஆணவமலம்;** அவமதிப்பு.
**நீகான்** – மாலுமி.
**நீங்கல்** – விலகுகை; பிளப்பு; புறம்பு.
**நீங்கள்** – முன்னிலைப் பன்மைப்பெயர்.
**நீங்குதல்** – பிரிதல்; ஒழித்தல்; கடத்தல்; மாறுதல்; விடுதலையாதல்; தள்ளுண்ணுதல்; நடத்தல்; ஒழிதல்; நீந்துதல்; பிளவுபடுதல்; விரிந்து அகலுதல்; சிதறுதல்.
**நீச்சல்** – நீந்துகை; வெள்ளம்; கோவணம்.
**நீச்சு** – நீந்துதல்; நீந்தக்கூடிய ஆழம்; வெள்ளம்; மீன்நாற்றம்.
**நீச்சுத்தண்ணீர்** – நீந்தக்கூடிய ஆழமுள்ள நீர்.
**நீசக்கிரகம்** – இராகுகேதுக்கள்; நீசத்தானத்தில் இருக்கும் கோள்.
**நீசகம்** – நீர்.
**நீசசாதி** – இழிந்த குலம்.
**நீசத்தானம்** – ஒரு கோளின் உச்சத்திற்கு ஏழாமிடம்.
**நீசப்படுதல்** – ஈனப்படுதல்; நீசத்தானமுறுதல்.
**நீசம்** – இழிவு; பள்ளம்; தாழ்ச்சி; கோளின் உச்சத்திற்கு ஏழாமிடம்; கொடுமை; பொருத்தமில்லாத ஆண்பெண்களின் புணர்ச்சி; மஞ்சள்.
**நீசவாகனம்** – கழுதை.
**நீசன்** – இழிந்தோன்; நீசத்தானத்தில் இருக்கும் கோள்; அறிவில்லாதவன்.
**நீசாரம்** – கம்பளிப்புடைவை; திரைச்சீலை.
**நீஞ்சுதல்** – காண்க: **நீந்துதல்;** பெருஞ்செயல்களை முடிக்கப் பெருமுயற்சிசெய்தல்; மிகுதியாகக் குடித்தல்.
**நீட்சி, நீட்சிமை, நீட்டம்** – நீளம்; ஓசையின் நீட்சி; நீட்டுகை; தாமதம்.
**நீட்டல்** – நீட்டுதல்; குற்றுயிரை நெட்டுயிராக இசைக்கும் செய்யுள் விகாரவகை; காண்க: **நீட்டலளவு(வை);** சடையை நீட்டி வளர்த்தல்; பெருங்கொடை.
**நீட்டலளவு(வை)** – அளவை நான்கனுள் நீட்டியளக்கும் முழம் காதம் போன்ற அளவு.
**நீட்டாணம்** – குழம்பு.
**நீட்டாள்** – நெடியவன்; வேலையாள்.
**நீட்டித்தல்** – நீளச்செய்தல்; காண்க: **நீட்டிப்பேசுதல்;** காலந்தாழ்த்துதல்; முடித்தல்; நெடுங்காலம் நிலைத்தல்.
**நீட்டிநடத்தல்** – எட்டி நடத்தல்; மெல்ல நடத்தல்.
**நீட்டிப்பேசுதல்** – விரித்துச் சொல்லுதல்; சொற்களை நீட்டி உச்சரித்துப் பேசுதல்.
**நீட்டிப்போடுதல்** – காலை எட்டிவைத்தல்; காலந் தாழ்த்துதல்.
**நீட்டியளத்தல்** – ஓரிடத்தையேனும் பொருளையேனும் கோல் முதலிய கருவிகொண்டு அளக்கை.
**நீட்டு** – நீளம்; தூரம்; திருமுக ஓலை.
**நீட்டுதல்** – நீளச்செய்தல்; முடக்காது நேர் நிறுத்தல்; நைவேத்தியம் முதலியவை அளித்தல்; கொடுத்தல்; செருகுதல்; நீளப்பேசுதல்; இசை முதலியவற்றில் காலம் நீட்டித்தல்; தாமதித்தல்.
**நீட்டுப்போக்கு** – நீளவாட்டு; திறமை; உயரம்.

**நீட்டுமுடக்கு** – கொடுக்கல்வாங்கல்; உதவுங் குணம்; தெம்பு, ஆற்றல்.
**நீட்டோலை** – திருமுகவோலை.
**நீட்பம்** – நீளம்.
**நீடசம்** – குருவி.
**நீடம்** – பறவைக்கூடு; இருப்பிடம்.
**நீடாணம்** – காண்க: **நீட்டாணம்.**
**நீடி** – எங்கும் பரவியிருக்கும் தன்மை.
**நீடித்தல்** – நீளுதல்; நிலைநிற்றல்.
**நீடு** – நெடுங்காலம்; நிலைத்திருக்கை.
**நீடுதல்** – நீளுதல்; பரத்தல்; செழித்தல்; மேம்படுதல்; நிலைத்தல்; இருத்தல்; தாமதித்தல்; கெடுதல்; தாண்டுதல்; பொழுதுகடத்துதல்; தேடுதல்; பெருகுதல்.
**நீடுநினைந்திரங்கல்** – கூட்டம் பெறாமல் காலம் நீட்டிக்கவே தலைவியை மிக நினைந்து தலைவன் இரங்கல்.
**நீடுநீர்** – தீர்த்தநீர்.
**நீடூழி, நீடூழிகாலம்** – நெடுநாள், நெடுங்காலம்.
**நீடோடநடத்தல்** – நெடுங்காலம் நிகழ்தல்.
**நீண்டவன்** – வாமனாவதாரம் எடுத்து வளர்ந்த திருமால்.
**நீண்டாயம்** – நீளம்.
**நீண்முடி** – நீண்டமுடிதரித்தவனான அரசன்.
**நீண்மை** – பழைமை.
**நீண்மொழி** – சூளுரை; வீரனொருவன் செய்த வஞ்சினம் கூறும் புறத்துறை.
**நீணாளம்** – நீண்ட புகைக்குழாய்.
**நீணிதி** – பெருஞ்செல்வம்.
**நீணிலை** – ஆழம்; நீர்மடு.
**நீணுதல்** – நெடுந்தொலைவு செல்லுதல்.
**நீணெறி** – நீண்ட வழி; இடைவிடா இன்பத்துக்குரிய நெறி.
**நீத்தம்** – வெள்ளம்; ஆழம்; கடல்; மிகுதி; தண்ணீர்விட்டான்செடி.
**நீத்தல்** – பிரிதல்; துறத்தல்; தள்ளுதல்; இழித்தல்; வெறுத்தல்; விடுதல்; நீங்குதல்.
**நீத்தவன்** – அருகன்; துறவி.
**நீத்தார்** – முனிவர்; துறவியர்.
**நீத்திடுதல்** – பெருக்கிடுதல்; மிகுத்திடுதல்; விட்டு விடுதல்; துறந்துவிடுதல்.
**நீத்து** – நீந்துதல்; நீந்தக்கூடிய ஆழமுடைய நீர்; வெள்ளம்.
**நீதக்கேடு** – காண்க: **நீதிக்கேடு.**
**நீதம்** – தகுதியானது; நீதி; தானியம்; நற்பேறு.
**நீதம்பாதம்** – நீதி.
**நீதவான்** – நியாயநெறி நிற்போன்; நீதிபதி.
**நீதன்** – காண்க: **நீதிமான்**; இழந்தோன்.
**நீதி** – நியாயம்; முறைமை; மெய்; உலகத்தோடு பொருந்துகை; அறநூல்; இயல்பு; ஒழுக்கநெறி; நடத்துவது; வழிவகை; பார்வதி.
**நீதிக்கேடு** – நியாயத்தவறு; ஒழுக்கத்தவறு.
**நீதிகெட்டவன்** – நியாயந் தவறியவன்.
**நீதிகேட்டல்** – வழக்கு விசாரித்தல்.
**நீதிச்செல்வம்** – குழந்தைகளுக்கு முடிவாங்கும் சடங்கு செய்தல்.
**நீதித்தலம்** – நீதிமன்றம், வழக்கு விசாரிக்கும் சபை.
**நீதிநியாயம்** – நீதிமுறை; சட்டதிட்டங்கள்; நீதிமன்ற ஒழுங்கு.
**நீதிநூல்** – அறம் பொருள்களைப்பற்றிக் கூறும் நூல்; சட்டக்கலை.
**நீதிநெறி** – நல்லொழுக்கம்.
**நீதிபரன்** – நீதியினின்றுந் தவறாதவன்; கடவுள்.
**நீதிமான்** – நியாயநெறி நிற்போன்.
**நீதியதிபதி** – நீதிபதி.
**நீதியறிந்தோன்** – நியாயம் தெரிந்தவன்; அமைச்சன்.
**நீதியொழுங்கு** – காண்க: **நீதிநெறி.**
**நீதிவான்** – காண்க: **நீதிமான்**; நீதிபதி.
**நீதினி** – நியாயந் தவறாதவள்.
**நீந்து** – கடல்.
**நீந்துதல்** – நீரில் மிதந்து செல்லுதல்; கடத்தல்; பெருகுதல்; வெல்லுதல்; கழித்தல்.
**நீந்துபுனல்** – ஆழமுள்ள நீர்.
**நீப்பு** – துறவு; பிரிவு.
**நீப்புரவு** – நீங்குகை.
**நீபம்** – வெண்கடம்பு; செங்கடம்பு; உத்தரட்டாதிநாள்; காண்க: **நீர்க்கடம்பு**; காரணம்; மரவகை.
**நீம்** – முன்னிலைப் பன்மைப் பெயர்.
**நீம்பல்** – பிளப்பு; வெடியுப்பு.
**நீமம்** – ஒளி.
**நீயல்** – நீங்கல்; விடுதல்.
**நீயான்** – காண்க: **நீகான்.**
**நீயிர்** – நீவிர், முன்னிலைப் பன்மைப் பெயர்.
**நீர்** – தண்ணீர்; கடல்; இரசம்; பனிநீர்; உடல் இரத்தம்; பித்தநீர் முதலிய நீர்மப் பொருள்; பூராடநாள்; பூரட்டாதிநாள்; ஈரம்; மணியின் ஒளி; குணம்; நிலை.
**நீர்க்கட்டி** – பாசனவேலையைக் கவனிக்கும் ஊர்ப்பணியாளன்; ஆலங்கட்டி; சீழ்பிடித்த புண்கட்டி.
**நீர்க்கட்டு** – சிறுநீர் தடைப்பட்டிருக்கும் நோய்; நீரினால் உண்டாகும் வீக்கம்; நீர்க்கோவை; நீர்நோய்வகை; ஏரி முதலியவற்றில் நீர் தேங்கும் அளவு.

**நீர்க்கட்டுதல்** – புண் சீழ்பிடித்தல்.
**நீர்க்கடம்பு** – கடப்பமரவகை.
**நீர்க்கடவுள்** – வருணன்.
**நீர்க்கடன்** – தென்புலத்தார் பொருட்டுச் செய்யும் தர்ப்பணம், எள்ளும் தண்ணீரும் இறைத்தல்; காண்க: **சந்தியாவந்தனம்.**
**நீர்க்கடுப்பு** – எரிச்சலோடு துளித்துளியாய்ச் சிறுநீர் இறங்கும் நோய்வகை.
**நீர்க்கண்டி** – பாசன வேலையைக் கவனிக்கும் ஊர்ப்பணியாளன்.
**நீர்க்கணம்** – செய்யுளின் முதலில் மங்கலமாக அமைக்கத்தக்கதும் நேர்நிரைநிரை என வருவதுமாகிய செய்யுட்கணம்; குழந்தைகளுக்கு வரும் கணைநோய்வகை.
**நீர்க்கமல்லி** – அல்லிக்கொடி.
**நீர்க்கரை** – ஆறு, குளம் முதலியவற்றின் கரை.
**நீர்க்கழலை** – ஓர் இமைக்கட்டிவகை.
**நீர்க்கழிவு** – காண்க: **நீரிழிவு.**
**நீர்க்காக்கை** – காக்கைவகை.
**நீர்க்கால்** – வாய்க்கால்.
**நீர்க்காவி** – ஆடையில் பற்றும் இளஞ்செந்நிறம்; கருங்குவளைமலர்.
**நீர்க்கிழவன்** – வருணன்.
**நீர்க்கீரி** – நீரில் வாழும் விலங்குவகை.
**நீர்க்குடம்** – நீர் நிரம்பிய இடம்; எண்வகை மங்கலத்துள் ஒன்றாகிய நிறைகுடம், பூரண கும்பம்.
**நீர்க்குண்டி** – வெண்ணொச்சிச்செடி.
**நீர்க்குமிழி** – நீரில் எழும் கொப்புளம்.
**நீர்க்குவை** – கடைக்கண்ணில் வளரும் வேண்டாத தசை.
**நீர்க்குளரி** – செடிவகை; சிறு செடிவகை.
**நீர்க்குறிஞ்சா** – கழுதைப்பாலைச்செடி.
**நீர்க்கைக்கதவு** – மதகு.
**நீர்க்கொழுந்து** – நீரோட்டம்.
**நீர்க்கொள்ளுதல்** – நீர்க்கோவை, சளிபிடித்தல்; சீழ்பிடித்தல்.
**நீர்க்கோத்தை** – ஒரு தண்ணீர்ப்பாம்புவகை.
**நீர்க்கோப்பு** – நீர்க்கோவை.
**நீர்க்கோலம்** – தண்ணீரால் இடப்படும் தீக்குறியான கோலம்; நீர் விளையாட்டுக் காலத்தில் அணியும் சிறப்புடை; நீரில் எழுதப்படும் எழுத்து.
**நீர்க்கோலி** – தண்ணீர்ப்பாம்பு.
**நீர்க்கோவை** – நீர் தங்கி நிற்கக்கூடிய நிலப்பகுதி; நீர்ப்பிடிப்பு; நீர்க்கொள்ளுதல்; நீரால் உண்டாகும் உடம்புவீக்கம்; கபவாதநோய்.
**நீர்க்கோழி** – நீர்வாழ் பறவை.
**நீர்க்கோன்** – காண்க: **நீர்க்கிழவன்.**
**நீர்கட்டல்** – மூத்திரம் அடைபட்டிருக்கும் நோய்.
**நீர்ச்சாய்வு** – நீர்க்கசிவுள்ள பகுதி.
**நீர்ச்சால்** – தண்ணீர்மிடா; நீர் இறைக்கும் சால்.
**நீர்ச்சாவி** – மிகுநீரால் வரும் பதர்; வெள்ளக் கெடுதியால் உண்டாகும் நெற்பதர்.
**நீர்ச்சிக்கு** – காண்க: **நீர்க்கடுப்பு.**
**நீர்ச்சிரங்கு** – சேற்றுப்புண்.
**நீர்ச்சீலை** – கோவணம்.
**நீர்ச்சுண்டி** – நீர்ப்பூண்டுவகை.
**நீர்ச்சுரப்பு** – நீரால் உண்டாகும் உடல்வீக்கம்; காண்க: **நீரிழிவு.**
**நீர்ச்சுழல், நீர்ச்சுழி** – நீரிலுண்டாகுஞ் சுழி; மாட்டுச் சுழிவகை.
**நீர்ச்சுனை** – மலைமீதுள்ள நீர்நிலை.
**நீர்ச்சூலை** – அண்டவாயு; அண்டவீக்கம்.
**நீர்ச்செறுப்பு** – காண்க: **நீர்கட்டல்.**
**நீர்ச்சோபை** – உடல்வீக்கம்.
**நீர்ச்சோறு** – நீர் கலந்த பழஞ்சோறு.
**நீர்செய்காந்தமணி** – காண்க: **சந்திரகாந்தக்கல்.**
**நீர்த்தல்** – நீராதல்; ஈரமாதல்.
**நீர்த்தலை** – மூளையில் இரத்தம் குறைவாகும் நோய்.
**நீர்த்தாக்கு** – நீர் அதிகமாகத் தேங்கி நிற்குமிடம்.
**நீர்த்தாரை** – நீரோட்டம்; ஆண்குறி; மூத்திரப் பையிலிருந்து சிறுநீரைக் கொணரும் குழாய்; மழைத்தாரை.
**நீர்த்தாரையடைப்பு** – நீர்க்கடுப்பு.
**நீர்த்தாழ்வு** – காண்க: **நீர்நிலை.**
**நீர்த்தானம்** – பிறந்த இலக்கினத்திலிருந்து நாலாமிடம்.
**நீர்த்தித்திப்பு** – மூத்திரம் சருக்கரைத் தன்மை கலந்து மிதமிஞ்சி இறங்கும் நோய்வகை.
**நீர்த்துப்போதல்** – நீரின் தன்மையடைதல்.
**நீர்த்துறை** – நீர்நிலையில் இறங்குமிடம்.
**நீர்த்தூம்பு** – மதகு.
**நீர்த்தெளியான்** – தரைக்கு நீர் தெளித்துத் துப்புரவு செய்யும் வேலைக்காரன்.
**நீர்தலைப்படுதல்** – சந்திசெய்தல்.
**நீர்நாடு** – நீர்வளமுள்ள சோழநாடு.
**நீர்நாய்** – நீரில் வாழும் விலங்குவகை.
**நீர்நாள்** – பூராடநாள்.
**நீர்நாற்று** – நீர்பாய்ச்சிய நிலத்தில் உண்டாகும் நாற்று.
**நீர்நிலம்** – நன்செய்.
**நீர்நிலை** – ஏரி குளம் முதலிய நீருள்ளவிடம்; சதுப்புநிலம்; ஆழம்; முத்துக்குற்றம்.
**நீர்நிறக்காக்கை** – காண்க: **நீர்க்காக்கை.**
**நீர்ப்பஞ்சு** – கடற்காளான்.
**நீர்ப்படலம்** – கண்நோய்வகை.
**நீர்ப்படை** – நடுகல்லிற்கு நீராட்டித் தூய்மை செய்தலைக் கூறும் புறத்துறை.
**நீர்ப்பண்டமாதல்** – உருகுதல்.

**நீர்ப்பயிர்** – நன்செய்ப்பயிர்.
**நீர்ப்பரிசை** – ஆமை.
**நீர்ப்பறவை** – நீரில் வாழும் பறவை.
**நீர்ப்பனை** – புல்லாமணக்கஞ்செடி.
**நீர்ப்பாக்கு** – ஊறற்பாக்கு.
**நீர்ப்பாசி** – தண்ணீரில் மிதக்கும் பாசிவகை.
**நீர்ப்பாடு** – நீரிழிவு; நீர்க்குறைவு; விடக்கிராணி; குழந்தைநோய்வகை.
**நீர்ப்பாம்பு** – தண்ணீரில் வாழும் பாம்புவகை.
**நீர்ப்பாய்ச்சல்** – ஆறு, கால்வாய் முதலியவற்றின் மூலம் ஏற்படும் பாசனம்; சீழ்வடிகை; நீர் நிலைக்கு எதிராக வீட்டுவாயில் அமைந் திருக்கும் நிலை.
**நீர்ப்பிடிப்பு** – ஏரியில் நீர் பற்றுமிடம்; நிலத்தில் நீர் வடியாது நிற்கும் நிலை; நீரளவு; காய் கனிகளில் உள்ள சாறு; நீர்த்தட்டு.
**நீர்ப்பீனசம்** – சளிநோய்வகை.
**நீர்ப்புள்** – காண்க: **நீர்ப்பறவை.**
**நீர்ப்புற்று** – வெள்விழியிற் சதைவளரும் நோய் வகை.
**நீர்ப்பூ** – நால்வகைப் பூவில் நீரில் உண்டாவது.
**நீர்ப்பெருக்கு** – வெள்ளம்; கடல்நீரேற்றம்; நோய்வகை.
**நீர்ப்போர்** – நீரின்கண்ணே போலிப் போர்புரியும் விளையாட்டு.
**நீர்பிரிதல்** – சினத்தல்; சிறுநீர் இறங்குகை.
**நீர்பெய்கலன்** – கமண்டலம்.
**நீர்பெய்தல்** – சிறுநீர்விடுதல்.
**நீர்போகி** – மதகு.
**நீர்மட்டம்** – சரிமட்டம் பார்க்கும் கருவி; கடல் மட்டம்.
**நீர்மறிப்பு** – நீரைத் தடுத்துத் திருப்புகை; காண்க: **நீரடைப்பு.**
**நீர்மனிதன்** – மக்கள் முகம்போல் முகமுடைய ஒரு கடல்வாழ் உயிரிவகை; உலகானுபவம் இல்லாதவன்.
**நீர்மாங்காய்** – நீரில் ஊறவைத்த வடுமாங்காய்.
**நீர்மாடம்** – பள்ளியோடம்.
**நீர்மாலை** – பிணத்தைக் குளிப்பாட்ட நீர் கொண்டுவரும் சடங்கு.
**நீர்மீட்டான்** – காண்க: **தண்ணீர்விட்டான்.**
**நீர்முகம்** – நீர்த்துறை; ஆறு கடலொடு கூடு மிடம்.
**நீர்முட்டுதல்** – நீர்நிரம்புதல்; மூத்திரம் பெய்தல்.
**நீர்முழுகி** – நீரில் முழுகுவோன்; நீரடைப்பை நீக்குவோன்.
**நீர்முள்ளி** – நீரில் வளரும் முள்ளுள்ள பூண்டு.
**நீர்மேல்நெருப்பு** – கல்லுருவிச்செடி.
**நீர்மை** – நீரின் தன்மை; தன்மை; சிறந்த குணம்; எளிமை; அழகு; ஒளி; நிலைமை; ஒப்புரவு.
**நீர்மோர்** – மோருடன் அதிக நீர் சேர்த்துத் தரும் ஒரு குடிநீர்வகை.
**நீர்யானை** – நீரில் வாழும் விலங்குவகை.
**நீர்வரத்து** – நீர்ப்பெருக்கு.
**நீர்வரைப்பு** – கடலால் சூழப்பட்ட நிலவுலகம்.
**நீர்வல்லி** – வெற்றிலை; தண்ணீர்விட்டான் கிழங்கு.
**நீர்வலயம்** – காண்க: **நீர்வரைப்பு.**
**நீர்வலி** – மகப்பேறு காலத்தில் சிறுநீர் பெய்ய முடியாமல் ஏற்படும் வலி.
**நீர்வளம்** – நீர்ச்சிறப்பு; நீர் நிறைவு; நேர்வாள மரம்.
**நீர்வற்றம்** – நீர் இறக்கம்.
**நீர்வற்றல்** – ஈரம் சுண்டுதல்; வற்றல்.
**நீர்வற்றற்றேங்காய்** – கொப்பரைத்தேங்காய்.
**நீர்வார்த்தல்** – தாரைவார்த்துக் கொடுத்தல்.
**நீர்வாரம்** – ஆற்றில் வளரும் கொடிவகை.
**நீர்வாரி** – யானைக்காலிற் கட்டும் சங்கிலி.
**நீர்வாழ்சாதி** – நீரில் வாழும் உயிரிகள்; நெய்தல் நில மக்கள்.
**நீர்வாழை** – தண்ணீர் உதவும் வாழைவகை.
**நீர்வாழைக்காய்** – மீன்.
**நீர்விட்டுப்போதல்** – காண்க: **நீர்த்துப்போதல்;** பதனழிந்து சுவை கெடுதல்; மிகுதியாய் வியர்த்தல்.
**நீர்விதை** – நன்செய்ச் சாகுபடி.
**நீர்வியாதி** – காண்க: **நீரிழிவு; நீர்ச்சுரப்பு.**
**நீர்விலை** – நீர்வரி.
**நீர்விழவு, நீர்விளையாட்டு** – ஆடவரும் மகளிரும் தண்ணீரில் இறங்கி நின்று புரியும் விளையாட்டு.
**நீர்வீழ்ச்சி** – மலையருவி.
**நீரகம்** – கடல் சூழ்ந்த பூமி; காஞ்சியில் உள்ள திருமால் கோயில்களுள் ஒன்று.
**நீரசம்** – சுவையற்றது; மாதுளை; தாமரை; சலவாயு.
**நீரட்டுதல்** – காண்க: **நீர்வார்த்தல்.**
**நீரடைப்பு** – மூத்திரத்தடைநோய்வகை.
**நீரணி** – மகளிர் நீர் விளையாட்டில் கொள்ளும் கோலவகை.
**நீரணிமாடம்** – காண்க: **நீர்மாடம்.**
**நீரத்தி** – ஒரு மரவகை.
**நீரதம்** – நீரைக் கொடுக்கும் மேகம்; நீரற்றது.
**நீரதி** – கடல்; சாறு.
**நீரநிதி** – கடல்.
**நீரம்** – தண்ணீர்.
**நீரரண்** – நான்கரணுள் நீர் நிறைந்துள்ள அகழி.
**நீரரமகள்** – நீரில் வாழும் தெய்வப்பெண்.
**நீரவன்** – அறிவுடையவன்.
**நீரழிவு** – காண்க: **நீரிழிவு.**

**நீராகாரம்** – பழஞ்சோற்றில் கலந்துள்ள நீர்.

**நீராசனம், நீராஞ்சனம்** – காண்க: **நீராரத்தி.**

**நீராட்டணி** – காண்க: **நீரணி.**

**நீராட்டம், நீராட்டு** – நீரில் முழுகுகை.

**நீராட்டுதல்** – முழுக்காட்டுதல், மஞ்சனஞ் செய்வித்தல்.

**நீராடல்** – காண்க: **நீராடுதல்.**

**நீராடற்காய்** – முற்றின தேங்காய்.

**நீராடுதல்** – குளித்தல்; நீர் விளையாட்டு.

**நீராணிக்கம்** – நீர் நிறைவு; நேர்வாளமரம்; ஈரம்; நீர் பாய்ச்சுவோனுக்குக் குடிகள் தரும் உரிமை.

**நீராணிக்கன்** – கொங்குநாட்டு ஏரிமதகின் காவற்காரன்; நீர்க்கண்டி.

**நீராத்திரை** – நீர் விழாவுக்குச் செல்லும் பயணம்.

**நீராரத்தி** – மஞ்சள்நீர் ஆரத்தி.

**நீராரம்பம்** – நீர்ப்பாசன வசதியுள்ள நிலம்.

**நீராவி** – தண்ணீர் வெப்பத்தினால் மாறிய ஆவி; தடாகம்.

**நீராவிக்கப்பல்** – நீராவியாற் செல்லுங் கப்பல்.

**நீராவிமண்டபம்** – ஆறு, தடாகங்களின் நடுவே அமைந்த மண்டபம்.

**நீராவியந்திரம்** – நீராவியினால் செலுத்தப்படும் பொறி.

**நீராழி** – கடல்; மாட்டுநோய்வகை.

**நீராழிமண்டபம்** – காண்க: **நீராவிமண்டபம்.**

**நீராளம்** – நீர்த்தன்மை; நீர்மிகுதி; நீருடன் கலந்த உணவு; மயக்கம் இல்லாத இனிப்புக்கள்.

**நீராளமாய்விடுதல்** – உணவில் குழம்பு முதலியவற்றை அதிகமாகப் பரிமாறுதல்.

**நீரிலாநிலம்** – பாலைநிலம்.

**நீரிழிச்சல், நீரிழிவு** – சிறுநீர் சருக்கரைத் தன்மை கலந்து மிதமிஞ்சி இறங்கும் நோய்வகை.

**நீரிறங்குதல்** – சிறுநீர் இறங்குகை; உடம்பில் கெட்டநீர் தங்குகை.

**நீரிறைவன்** – வருணன்.

**நீருருள்** – சகடமாகப் பண்ணித் தண்ணீர் ஏற்றி உருட்டுங் கருவி.

**நீருள்ளி** – வெங்காயம்.

**நீரூபம்** – வானம்; காற்று.

**நீரூர்பாதை** – நிறைபுனல்.

**நீரூற்று** – ஊற்று; கசிவு.

**நீரூறி** – காண்க: **கீழாநெல்லி.**

**நீரெட்டி, நீரெட்டிமுத்து** – காண்க: பேயாமணக்கு; மரவட்டைமரம்.

**நீரேற்றம்** – நீர்ப்பெருக்கு; நீர்க்கோவை; கெட்ட நீரால் உடம்புவீங்கும் நோய்.

**நீரோசை** – மகிழ்ச்சி; கொண்டாட்டம்.

**நீரோட்டம்** – ஓடும் நீர்; மணியின் உள்ளொளி; நீர் செல்லுங் கால்.

**நீரோடி** – மதகு; கூரைக் கூடல்வாய்; நீரோடும் உள்வாய்.

**நீரோடுகால்** – கால்வாய்; ஊரில் நீர் வடிந்து செல்லுந் தாழ்ந்த நிலம்.

**நீரோடை** – கால்வாய்; நீர்நிலை.

**நீரோருகம்** – தாமரை.

**நீல்** – நீலம்; கறுப்பு; அவுரி; காண்க: கருங்குவளை; காற்று; வாதநோய்.

**நீலக்கட்டி** – அவுரிச்சாயக்கட்டி.

**நீலக்கல்** – நீலமணி.

**நீலக்காரம்** – துரிசு.

**நீலக்காலி** – காண்க: அவுரி; நண்டுவகை.

**நீலக்கோலன்** – மன்மதன்.

**நீலகண்டம்** – சிவனது நஞ்சு தங்கிய கழுத்து; மயில்.

**நீலகண்டன்** – நீலநிறம் கொண்ட கழுத்தையுடைய சிவன்; திருநீலகண்ட நாயனார்; துரிசு; பூரபாடாணம்; முருங்கைமரம்.

**நீலகண்டி** – துர்க்கை; பொல்லாதவள்; பாம்பின் நச்சுப்பல்லில் ஒன்று.

**நீலகந்தி** – மாணிக்கவகை.

**நீலகமலம்** – காண்க: **கருங்குவளை.**

**நீலகாசம்** – கண்ணோயுள் ஒன்று.

**நீலகிரி** – நீலமலை, ஒரு மலைத்தொடர்.

**நீலங்கட்டுதல்** – நீலச்சாயந் தோய்த்தல்; பொய் கற்பித்தல்.

**நீலச்சுறா** – சுறாமீன்வகை.

**நீலந்தன்** – பாணன்.

**நீலந்தீர்தல்** – நீலநிறம் போடுதல்.

**நீலநாகம்** – கருநாகம்.

**நீலநெல்** – கார்நெல்.

**நீலப்பறவை** – நீலநிறமுள்ள மயில்.

**நீலப்பைங்குடம்** – பச்சைக்குப்பி.

**நீலம்** – நீலநிறம்; நீலச்சாயம்; மாணிக்கவகை, ஒன்பான் மணியினுள் ஒன்று; நீலக்கட்டி; குபேரனது நிதியில் ஒன்று; கறுப்பு; இருள்; காண்க: **கருங்குவளை**; நீல ஆடை; நஞ்சு; துரிசு; கண்ணிலிடும் மை; ஒரு மலைத்தொடர்; பனைமரம்.

**நீலம்பற்றவைத்தல்** – ஆடைக்கு நீலமேற்றுதல்; கதைகட்டுதல்.

**நீலம்பாரித்தல்** – நச்சுக் கடியால் உடம்பு நீலநிறமாதல்; இருளடைதல்.

**நீலமணி** – நீலரத்தினம்; கண்ணில் உள்ள கருமணி; தென்னை.

**நீலமணிவோன்** – முருகக்கடவுள்.

**நீலமருந்து** – அவுரி.
**நீலமார்க்கம்** – கரிசாலைப்பூண்டு.
**நீலமேகம்** – கார்மேகம்.
**நீலமேகன்** – நீலமேனியனான திருமால்.
**நீலமேனியள்** – கருநிறமுடைய பார்வதி.
**நீலமேனியன்** – திருமால்; துருசு.
**நீலர்** – கருநிறமுடைய அரக்கர்.
**நீலவண்ணன்** – திருமால்; சனி; நீலநிறத்தோன்.
**நீலவருணம்** – நீலநிறம்; நீலச்சாயம்; தீயைப் பொழியும் முகில்.
**நீலவழுதலை** – நீலவழுதுணைவகை.
**நீலன்** – சனி; கொடியன்; ஒரு குரக்குப் படைத் தலைவன்; குதிரைவகை; மாங்கனிவகை.
**நீலாங்கம்** – புழு; மலைத்தேள்.
**நீலாஞ்சனம்** – துருசு; பாடாணவகை; கறுப்புக் கல்; கல்லீயம்.
**நீலாஞ்சனை** – மின்னல்.
**நீலாட்சம்** – அன்னப்புள்.
**நீலாம்பரன்** – பலபத்திரன்.
**நீலாம்பரி** – காண்க: **நீலாம்புரி**; ஒரு செடிவகை.
**நீலாம்புசன்** – காண்க: **நீலோற்பலம்.**
**நீலாம்புரி** – ஒரு பண்வகை.
**நீலி** – கருநிறம்; துர்க்கை; பார்வதி; ஒரு பெண் பேய்; கொடியவள்; காண்க: **நீலினி**; மேக வண்ணப் பூவுள்ள மருதோன்றிமரம்; பாம்புப் பல்லில் ஒன்று; துருசு; கருநொச்சிச்செடி.
**நீலிக்கண்ணீர்** – பொய்க்கண்ணீர்.
**நீலிகை** – காண்க: **நீலினி.**
**நீலித்தனம்** – கொடுமை; பாசாங்கு; செருக்கு.
**நீலிதம்** – நீலநிறமானது.
**நீலினி** – அவுரிச்செடி.
**நீலோற்பலம்** – காண்க: **கருங்குவளை; கருநெய்தல்.**
**நீவரகம்** – பஞ்சம்.
**நீவரம்** – நீர்; சேறு; நாடு; வாணிகம்.
**நீவாரம்** – காண்க: **குளநெல்; செந்தினை.**
**நீவான்** – காண்க: **நீகான்.**
**நீவி** – கொய்சகம்; மகளிர் ஆடையுடுத்தும்போது இடையில் முடிக்கும் முடிச்சு; ஆடை; பணப்பை; கிழி; துடைக்கை; இறகு.
**நீவியம்** – ஆடை.
**நீவிர்** – நீங்கள், முன்னிலைப் பன்மைப் பெயர்.
**நீவுதல்** – கைவிடுதல்; கடத்தல்; அறுத்தல்; அழித்தல்; தடவிக்கொடுத்தல்; கோதுதல்; துடைத்தல்; பரப்புதல்; பூசுதல்; தூண்டுதல்.
**நீழல்** – காண்க: **நிழல்**; காற்று.
**நீழை** – ஒளி; காற்று.
**நீள்** – நீளம்; நெடுங்காலம்; உயரம்; ஆழம்; ஒளி; ஒழுங்கு.
**நீள்சடையோன்** – நீண்ட சடையைக்கொண்ட சிவபெருமான்; காண்க: **சரக்கொன்றை.**
**நீள்விசும்பு** – விண்ணுலகம்; வைகுந்தப்பதவி.
**நீள** – நெடுந்தொலைவாக; நெடுங்காலமாக; வெகுதொலைவில்.
**நீளத்தில்விடுதல்** – காலந்தாழ்த்தல்; வெறுஞ் சொல் சொல்லிக் கடத்தல்; வேண்டுமென்று புறக்கணித்தல்.
**நீளம்** – நெடுமை; தொலைவு; தாமதம்; பறவைக் கூடு.
**நீளவாட்டு** – நெடும்போக்கு.
**நீளி** – நெடியன்; நெடியது.
**நீளிடை** – நெடுந்தொலைவு; நெடியவழி; காடு.
**நீளித்தல்** – நீளுதல்; நெடுநாள் இருத்தல்; தாமதித்தல்.
**நீளிப்பு** – நீளுகை.
**நீளியது** – நீண்டது.
**நீளுதல்** – காண்க: **நீடுதல்**; பெருமையாதல்; ஓடுதல்.
**நீளெரி** – பெருநெருப்பு; மிகுவெப்பம்.
**நீளை** – காற்று; திருமால் தேவியருள் ஒருத்தி.
**நீற்றமுது** – வெற்றிலையில் தடவுஞ் சுண்ணாம்பு.
**நீற்றறை** – சுண்ணாம்புக் காளவாய்.
**நீற்றுக்கோயில்** – திருநீற்றுப் பை.
**நீற்றுண்டை** – திருநீற்றுக்காக உருட்டி வைக்குஞ் சாணவுருண்டை.
**நீற்றுதல்** – நீறாக்குதல், பொடியாக்குதல்; உலோகங்களைப் பொடியாக்குதல்.
**நீற்றுப்பெட்டி** – எண்ணெயூற்றுங் கூடை; பிட்டுச் சுடும் பெட்டி.
**நீற்றுமுண்டி** – நெற்றியில் திருநீறு அணிந்தவர்.
**நீறடித்தல்** – சுண்ணாம்பு நீற்றில் தோய்த்த கயிற்றினால் கோலம் போடுதல்.
**நீறணிகடவுள், நீறணிந்தோன்** – காண்க: **நீறாடி.**
**நீறாகுதல்** – சாம்பராய்ப் போதல்.
**நீறாடி** – திருநீறு அணிந்த சிவபெருமான்.
**நீறாடுதல்** – திருநீறு பூசுதல்; புழுதிபடிதல்; பொடியாக்குதல்.
**நீறு** – திருநீறு; சாம்பல்; புழுதி; நீற்றின சுண்ணாம்பு.
**நீறுதல்** – நீறாதல்; சுண்ணமாதல்; பொடியாதல்; அழிதல்.
**நீறுபூசி** – சிவபெருமான்; சமணத்திலிருந்து சைவரான வேளாளர்.
**நீறுபூத்தநெருப்பு** – சாம்பல் படிந்த கட்டைத் தணல்; கோபத்தை வெளிக்காட்டாதவன்.
**நீறுபூத்தல்** – நன்றாய் நீறுதல்; சாம்பல்நிறம் பிடித்தல்; உடலில் அழுக்குப் பிடித்தல்.
**நீன்மை, நீனிறம்** – நீலநிறம்.
**நீனிறவியலகம்** – நீலப்பரப்பான கடல்.
**நீனிறவினை** – பாவச்செயல்.

# நு



**நு** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ந் + உ); ஆயுதப் பொது; தியானம்; தோணி; நிந்தை; நேரம்; புகழ்.

**நுக்காங்குலை** – காய்கள் விழுந்த பனங்குலைத் தண்டு.

**நுக்கு** – பொடித்துண்டு; எட்டிமரம்.

**நுக்குடம்** – எட்டிமரம்.

**நுக்குதல்** – பொடியாக்கல்; புடைத்தல்; அழித்தல்; மிகுதியாய்ப் பெய்தல்.

**நுகக்கால்** –நுகத்தடி; காண்க: **ஏர்க்கால்.**

**நுகக்காற்குச்சி** – நுகத்து முளைக்குச்சி.

**நுகத்தடி** – காளையின் கழுத்தில் பூட்டப்படும் மரத்தடி.

**நுகத்தாணி** – காண்க: **பகலாணி.**

**நுகத்துளை** – நுகத்தடியின் இருமுனைகளிலும் உள்ள துளை.

**நுகம்** – எருதுகளின் கழுத்தில் பூட்டும் மரம், நுகத்தடி; காண்க: **நுகத்தாணி**; பாரம்; வலிமை; சோதிநாள்; மகநாள்; கதவின் கணையமரம்.

**நுகம்புரட்டி** – கட்டுக்கமையாத எருது; ஒழுங்கு தவறுகிறவன்.

**நுகம்வைத்தல்** – நல்ல நாளில் முதன்முறையாக எருதின் கழுத்தில் நுகத்தைப் பூட்டுதல்.

**நுகர்ச்சி** – அனுபவம்; உண்ணுதல்; காண்க: **வேதனை.**

**நுகர்தல்** – அருந்துதல்; செய்தல்; துய்த்தல்.

**நுகர்வு** – காண்க: **நுகர்ச்சி.**

**நுகும்பு** – பனை, வாழை முதலியவற்றின் மடல் விரியாத குருத்து; பனையோலை.

**நுகைத்தல்** – இளகச்செய்தல்; தளரச்செய்தல்.

**நுகைதல்** – தளர்தல்; இளகுதல்.

**நுகைவு** – தளர்வு; தளர்ந்தது; மென்மை; தணிவு; பொருளுதவி; மனக்கனிவு.

**நுங்கள்** – உங்கள்; நீங்கள்.

**நுங்கு** – பனையிளங்காய்க்குள்ளிருக்கும் இளம் பருப்பு, பனஞ்சுளை; நுங்குக்காய்.

**நுங்குக்குவளை** – நுங்கு எடுத்துப் போட்ட பனங்காய்.

**நுங்குதல்** – விழுங்குதல்; ஆரப்பருகுதல்; கைக்கொள்ளுதல்; கெடுதல்.

**நுங்குப்பாக்கு** – இளம்பாக்கு.

**நுங்கை** – உம் தங்கை; உம் தாய்.

**நுசுப்பு** – இடை, மருங்குல்.

**நுசை** – சிவதைவேர்.

**நுட்பக்காரன்** – புத்திக்கூர்மையுள்ளவன்.

**நுட்பம்** – நுண்மை; நுண்ணிய ஆராய்ச்சி தோன்ற எழுதப்பெற்ற உரை; நுட்பம்; பொருளின் நுட்பம்; காலநுட்பம்; கரந்துறை கோள்களுள் ஒன்று; ஓரணி.

**நுடக்கம்** – அசைவு; துவளுதல்; தள்ளாட்டம்; கூத்து; வளைவு.

**நுடக்கு** – அசைவு.

**நுடக்குதல்** – கழுவுதல்; துவட்டுதல்; மாய்த்தல்; கரைத்தல்; மடக்குதல்.

**நுடங்கு** – அசைவு; நுட்பம்.

**நுடங்குதல்** – அசைதல்; துவளுதல்; தள்ளாடுதல்; ஆடுதல்; வளைதல்; நுட்பமாதல்; அடங்குதல்; ஈடுபடுதல்; மெலிதல்.

**நுண்டுகில்** – பட்டாடைவகை.

**நுண்டொடர்** – காண்க: **நேர்ஞ்சங்கிலி.**

**நுண்ணறிவு** – நுண்ணிய புத்தி.

**நுண்ணாக்கை** – நுண்ணுடல், சூக்கும உடல்.

**நுண்ணிச்சிறை** – ஒரு சிறுகுருவிவகை.

**நுண்ணிமை** – காண்க: **நுண்மை.**

**நுண்ணியான்** – கூரிய அறிவுடையோன்; அமைச்சன்.

**நுண்ணுணர்வு** – கூரிய அறிவு.

**நுண்ணுருக்குதல்** – கரையவுருக்குதல்.

**நுண்ணேலம்** – ஒரு மணப்பண்டவகை.

**நுண்பொருள்** – நுட்பமான கருத்து; நுண்ணிய பொருள்.

**நுண்மணல்** – சிறுமணல்.

**நுண்மை** – கூர்மை; நுட்பம்; மிகுதி; வேலைத்திறம்; அறிவுநுட்பம்; பொருள்நுட்பம்; சிற்றுண்டி; கமுக்கம்.

**நுணக்கம்** – கூர்மை; வாட்டம்; அசைதல்; மெல்லியதாதல்.

**நுணங்கியோர்** – நுணுகிய அறிவுடையோர்.

**நுணங்கு** – நுண்மை; நுடக்கம்; தேமல்.

**நுணங்குதல்** – அசைதல்; மெல்லிதாதல்; நுட்பமாதல்; வளைதல்; துவளுதல்; செறிதல்; வாடுதல்.

**நுணல்(லை)** – தவளை; கடல்மீன்வகை.

**நுணவம்** – நுணாமரம்.

**நுணவு** – நுணாமரம்; தணக்கமரம்; கட்டில்.

**நுணவை** – எள்ளுருண்டை; அரிசி முதலியவற்றின் மா; நுணாமரம்.

**நுணா** – நுணாமரம்; மஞ்சள்நாறிமரம்; தணக்கமரம்.

**நுணாவுதல்** – தடவித்தெரிதல்; நாவால் தடவியுணர்தல்.

**நுணி** – நுனி.

**நுணித்தல்** – கூர்மையாக்குதல்; பொடியாக்குதல்; நுணுகி ஆராய்தல்.

**நுணிதல்** – தேய்தல்.

**நுணுக்கம்** – நுண்மை; கூர்மை; கூரறிவு; வேலைத்திறம்; பொருளடக்கம்; யாழின் உள்ளோசை; காலநுட்பம்; இவறல்; பொன்.

**நுணுக்கம்பார்த்தல்** – சிறுசிறு செயல்களிலும் மிகுந்த ஈடுபாடு கொள்ளல்; ஒவ்வொன்றையும் நுணுகி ஆராய்தல்.

**நுணுக்கு** – நுண்மை: நுட்பமானது; பொடியெழுத்து.

**நுணுக்குதல்** – நுண்மையாக்குதல்; பொடியாக்குதல்; அரைத்தல்; சிதைத்தல்; சிறிதாய் எழுதுதல்; ஒன்றும் கொடாமை; யாழில் இன்னிசையெழுப்புதல்; கூர்மையாக்குதல்; புத்தியைக் கூர்மையாக்குதல்; நுண்ணிதாக வேலை செய்தல்.

**நுணுக்கெழுத்து** – பொடியாக எழுதும் எழுத்து.

**நுணுகு** – காண்க: **நுண்மை.**

**நுணுகுதல்** – நுட்பமாதல்; மெலிதல்; கூர்மையாதல்.

**நுணுங்கு** – நுண்மை; பொடி.

**நுணுங்குதல்** – நுட்பமாதல்; பொடியாதல்; மெல்லப் பாடுதல்.

**நுணை** – கோட்சொல்.

**நுணைத்தல்** – தடவித்தெரிதல்; நாவால் தடவியுணர்தல்.

**நுதம்** – நீராடுந்துறை.

**நுதம்பு** – கள்; சோறு

**நுதம்புதல்** – நனைந்திளகுதல்; ஈரமாதல்.

**நுதல்** – சொல்; நெற்றி; புருவம்; தலை; மேலிடம்.

**நுதல் (வி)** – கருது; குறி.

**நுதலணி** – நெற்றிச்சுட்டி.

**நுதலிப்புகுதல்** – முப்பத்திரண்டு உத்தியுள் ஒன்று, சொல்லப் போகும் பொருளை முன்னர்ச் சுட்டிப் பின் விளக்குதல்.

**நுதலுதல்** – கருதுதல்; கூறுதல்; தோற்றுவித்தல்.

**நுதற்கண்** – நெற்றிக்கண்.

**நுதற்கண்ணன்** – சிவன்.

**நுதற்சுடிகை,**
**நுதற்சூட்டு** } – காண்க: **நுதலணி.**

**நுதனாட்டன்** – காண்க: **நுதற்கண்ணன்.**

**நுதனாட்டி** – நெற்றிக்கண்ணுடைய துர்க்கை.

**நுதி** – நுனி; அறிவுக்கூர்மை; தலை; முன்பு; வாக்கியமுறைப்படி செய்த சந்திர கணனத்தில் ஏற்படும் வாக்கியப் பிழை.

**நுதித்தல்** – அடைசுதல்.

**நுதித்தோல்** – ஆண்குறியின் நுனித்தோல்.

**நுதுத்தல்** – அவித்தல்; அழித்தல்; நீக்குதல்.

**நுதுப்பு** – தணிப்பு.

**நுந்தாவிளக்கு** – காண்க: **நந்தாவிளக்கு.**

**நுந்துதல்** – தள்ளுதல்; தூண்டுதல்.

**நுந்தை** – உம் தந்தை.

**நுபம்** – எருக்கஞ்செடி.

**நும்** – நீயிர் என்பது வேற்றுமை உருபேற்கும் போது மாறும் வடிவம்; எல்லீரும் என்பது வேற்றுமையுருபு ஏற்கும்போது கொள்ளும் சாரியை.

**நும்பி** – உம் தம்பி.

**நும்முன்** – உம் முன்னோன்; உம் தமையன்.

**நும்மோர்** – உம்மவர்.

**நுமள்** – உம்மவள்.

**நுமன்** – உம்மைச் சார்ந்தவன்.

**நுமையன்** – உம் தமையன்.

**நுரம்பு** – சேறு.

**நுரு** – அறுத்த தாளில் முளைக்குந் தளிர்.

**நுரை** – நீர்க்குமிழித் தொகுதி; குமிழி; வெண்ணெய்; வெள்ளை; வயிரக்குற்றவகை.

**நுரைகக்குதல்** – நுரையை வாயிலிருந்து வெளிவிடுதல்.

**நுரைத்தல்** – நீர் முதலியன கொப்புளங்களாதல்.

**நுரைதப்புதல்** – நுரை வாயிலிருந்து வெளிவருதல்.

**நுரையீரல்** – மார்பின் இருபுறத்துள்ளதும் கெட்ட காற்றை வெளிவிட்டு நல்ல காற்றை உட்கொண்டு குருதியைத் தூய்மை செய்வதுமான உறுப்பு, மூச்சுப்பை.

**நுலையிலி** – ஊமை.

**நுவ்வை** – உன் தங்கை.

**நுவணம்,**
**நுவணை** } – கல்விநூல்; நுட்பம்; இடித்த மா; பஞ்சிநூல்; பைந்தினை.

**நுவல்** – சொல்.

**நுவல்வோன்** – ஆசிரியன்.

**நுவலாச்சொல்** – ஒரு பொருளைப் பழித்தாற் போலப் புகழும் அணி.

**நுவலாநுவற்சி** – காண்க: ஒட்டணி; குறிப்பெச்சம்.

**நுவலுதல்** – சொல்லுதல்; விரும்புதல்.

**நுவற்கரி** – கரகம்.

**நுவற்சி** – சொல்லுகை.

**நுவறுதல்** – அராவுதல்.

**நுழாய்ப்பாக்கு** – முதிராப் பாக்கு.

**நுழுதுதல்** – முடித்தல்.

**நுழுந்தி** – பொறுப்பேலாகாது நழுவுவோன்.

**நுழுந்துதல்** – நுழைத்தல்; முடித்தல்; கவர்தல்; பதுங்குதல்; நகர்தல்; எளிதில் அறியக்கூடாத இடத்தில் வைத்தல்; மறைதல்.

**நுழுவல்** – முதிராப் பாக்கு; நழுவும் பொருள்.

**நுழுவுதல்** – நகர்தல்.

**நுழை** – சிறுவழி; பலகணி; குகை; துளை; நுண்மை; புத்திநுட்பம்.

**நுழைகடவை** – வேலி முதலியவற்றின் சிறு திறப்பு.

**நுழைச்சல்** – காண்க: நுழைகடவை; ஏழு என்னும் எண்ணிற்கு வழங்கும் குழூஉக்குறி.

**நுழைத்தல்** – புகுத்தல்.

**நுழைதல்** – புகுதல்; பதிதல்; சேர்ந்துகொள்ளுதல்; நுண்மையாதல்; இடைச்செருகப்படுதல்; கூரிதாதல்; சாடை சொல்லுதல்; கடத்தல்; மட்டுக்கட்டுதல்.

**நுழைநரி** – நரி; நயவஞ்சகன்.

**நுழைபுலம்** – நுண்ணறிவு.

**நுழைவழி, நுழைவாச(யி)ல்** – திட்டிவாசல்.

**நுழைவு** – நுண்மை; கூரிய புத்தி.

**நுள்ளல்** – காண்க: **நுளம்பு.**

**நுள்ளான்** – சிற்றெறும்பு.

**நுள்ளு** – கிள்ளு; சிறுதுண்டு.

**நுள்ளுதல்** – கிள்ளுதல்.

**நுளம்பு** – சிறுகொசு; பெருங்கொசு.

**நுளுப்புதல்** – கழப்புதல்.

**நுளை** – வலையர்சாதி; ஈனம்; குருடு.

**நுளைச்சி** – நுளைச்சாதிப் பெண், நெய்தல்நிலப் பெண்.

**நுளையன்** – இழிந்தோன்; நெய்தல்நிலத்தான்.

**நுறுக்குதல்** – பொடியாக்குதல்.

**நுறுங்கு** – குறுநொய்.

**நுறுங்குதல்** – பொடிபடுதல்; சிதைதல்.

**நுன்** – உனது; நீ என்பது வேற்றுமையுருபு ஏற்கும்போது பெறும் வடிவம்.

**நுனி** – முனை; நுண்மை.

**நுனித்தல்** – கூராக்குதல்; கூர்ந்து நோக்குதல்; ஆராய்ந்து கூறுதல்; கருதுதல்.

**நுனிநா** – நாக்கின் நுனி.

**நுனிப்பு** – கூர்ந்தறிகை.

**நுனிப்புல்மேய்தல்** – மேல்வாரியாய்ப் புல் மேய்தல்; மேலெழுந்தவாரியாகப் படித்தல்.

**நுனை** – முனை.

## நூ

**நூ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ந்+ஊ); எள்; யானை; அணிகலன்.

**நூக்கம்** – உயரம்; நூக்கமரம்; தோதகத்திமரம்.

**நூக்கல்** – நெய்வார் கருவியுள் ஒன்று.

**நூக்கு** – காண்க: **நூக்கம்.**

**நூக்குதல்** – தள்ளுதல்; ஊசலாட்டுதல்; அசைத்தல்; தூண்டுதல்; எறிதல்; முறித்தல்; நீக்குதல்; பரிகாரம் செய்தல்; சாத்துதல்.

**நூங்கர்** – தேவர்.

**நூங்கு** – பெருமை; மிகுதி.

**நூங்குதல்** – மிகுதியாயிருத்தல்.

**நூடி** – சிற்றேலம்.

**நூத்தல்** – நொதுத்தல்; தளர்தல்; அழித்தல்.

**நூதல்** – அவிதல்.

**நூதனம்** – புதுமை; புதியது.

**நூதனன்** – புதியவன்; புதியதில் விருப்பமுடையவன்; புதியதை உண்டாக்குபவன்.

**நூப்பு** – தணிப்பு.

**நூபம்** – எருது; எருக்கஞ்செடி.

**நூபுரம்** – பாதகிண்கிணி; சிலம்பு.

**நூர்த்தல்** – அவித்தல்; ஆற்றுதல்.

**நூர்தல், நூரல்** – அவிதல்; ஆறுதல்; பதனழிதல்.

**நூல்** – பஞ்சிநூல்; பூணூல்; மங்கலநாண்; எற்றுநூல்; ஆண்குறியிலுள்ள நரம்பு; ஆண்குறி; ஆயுதவகை; சாத்திரம்; ஆகமம்; ஒரு நாடகநூல்; ஆலோசனை.

**நூல்கேட்டல்** – பாடங்கேட்டல்.

**நூல்சோர்த்தல்** – நூலைப் பதனிடுதல்.

**நூல்பிடித்தல்** – சுவரொழுங்கு பார்க்க நூலைப் பிடித்தல்.

**நூல்புடைத்தல்** – மரத்தின் நேர்மையறிய நூலால் தெறித்துக் குறியிடுதல்.

**நூல்போடுதல்** – காண்க: **நூல்புடைத்தல்;** நியாயஞ்செய்தல்; பூணூற் கலியாணஞ் செய்தல்.

**நூல்போதல்** – கல்வியில் தேர்ந்தவன் ஆதல்; கைம்பெண்ணாதல்.

**நூல்யாப்பு** – தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்ப்பு என நான்கு வகையாக இயற்றப்படும் நூலின் அமைப்பு; ஒரு புடைவைவகை.

**நூல்வல்லோர்** – கல்விமான்கள்; அமைச்சர்.

**நூல்வழக்கு** – செய்யுள் வழக்கு; சாத்திரமுறை.

**நூல்விடுதல்** – சிலந்தி முதலியன நூற்கூடு கட்டுதல்; மனநிலையின் ஆழம் பார்த்தல்.

**நூல்வெண்மாடம்** – காண்க: **நூன்மாடம்.**

**நூலச்சு** – நெசவுக்கருவியின் உறுப்புவகை; கம்பிச்சட்டம்.

**நூலட்டவணை** – நூலின் பொருளடக்கம்; நூலின் வகைகளைத் தொகுத்துரைக்கும் தொகைநூல்.

**நூலவையார்** – அறநூலோதினோர்.

**நூலறிபுலவர்** – அறநூல்கள் முதலியன உணர்ந்த அமைச்சர்.

**நூலறிவு** – கல்வியறிவு.

**நூலாக்கலிங்கம்** – நூற்கப்படாத நூலால் இயன்ற ஆடை, பட்டாடை.

**நூலாசிரியன்** – நூலாக்கியோன்.
**நூலாம்படை** – ஒட்டடை.
**நூலாம்பூச்சி** – சிலந்திப்பூச்சி.
**நூலார்** – கற்றோர்.
**நூலிழத்தல்** – கைம்மையடைதல்.
**நூலிழந்தாள்** – கைம்பெண்.
**நூலிழை** – ஓரிழை நூல்.
**நூலிழைத்தல்** – கதிரிலுள்ள நூலை எடுத்துச் சுற்றுதல்; நூல்நூற்றல்.
**நூலுண்டை** – நூல் சுற்றிய உண்டை; நெய்தற்குரிய நூல் சுற்றின குற்றி.
**நூலுரைப்போர்** – ஆசிரியர்.
**நூலுறிஞ்சி** – நெய்வார் கருவியுள் ஒன்று; நெய்வோன்.
**நூலெச்சம்** – நூலுரைவகை.
**நூலெடுத்தல்** – நூல் விலைக்கு வாங்குதல்; நூலைச் சிக்கெடுத்தல்.
**நூலேணி** – கயிற்றினால் அமைந்த ஏணி; பாய்மரத்து ஏணி; கடல்மீன்வகை.
**நூலோட்டுதல்** – பெருந்தையலிடுதல்.
**நூலோடுதல்** – நெசவுப் பாவோடுகை.
**நூலோர்** – நூலாசிரியர்; கற்றோர்; அமைச்சர்; பார்ப்பனர்.
**நூவு** – எள்.
**நூவுதல்** – நீர்பாய்ச்சுதல்.
**நூவுநெய்** – நல்லெண்ணெய்.
**நூழல்** – நூறல், அழித்தல்.
**நூழில்** – கொன்றுகுவிக்கை; மிடைந்த போர்; வீரனொருவன் பகைமன்னர் சேனையைக் கொன்று தன் வேலைத் திரித்து ஆடுதலைக் கூறும் புறத்துறை; கொள்ளையடித்தோர் மக்களைக் கொன்றுகுவிக்கும் இடம்; குவிதல்; கொடிப்பிணக்கு; ஒரு கொடிவகை; கொடிக்கொற்றான்; திரை; யானை; தொளை; செக்கு.
**நூழிலர்** – வணிகர்.
**நூழிலாட்டு** – கொன்றுகுவித்தல்; வீரனொருவன் தன் மெய்யில் தைத்த படை பறித்து மாற்றார் மேல் எறிதல்.
**நூழிலாட்டுதல்** – கொன்றுகுவித்தல்.
**நூழை** – சிறுவாயில்; துளை; சன்னல்; குகை; நுண்மை.
**நூழைவாயில்** – சுருங்கைவழி.
**நூற்கருத்து** – நூற்பொருள்.
**நூற்கழி** – நூற்பந்து; நூல் சுற்றிய கழி.
**நூற்கிரந்தம்** – சாத்திரம்.
**நூற்குற்றம்** – குன்றக் கூறல், மிகைபடக் கூறல், கூறியது கூறல், மாறுக்கொளக் கூறல், வழூஉச்சொற் புணர்த்தல், மயங்கவைத்தல், வெற்றெனத் தொடுத்தல், மற்றொன்று விரித்தல், சென்றுதேய்ந்திறுதல், நின்று பயனின்மை என்னும் பத்து வகைப்பட்ட நூலின்கண் அமையலாகாக் குற்றங்கள்.
**நூற்படுகு** – நூற்பாவு.
**நூற்பயன்** – நூலால் எய்தும் பயன்.
**நூற்பழக்கம்** – கல்விப்பயிற்சி.
**நூற்பா** – காண்க: **நூற்பாவகவல்**; தறியிற் பிணைக்கும் பாவு.
**நூற்பாவகவல்** – இலக்கணம் முதலியன அமைதற்குரிய அகவல்வகை; சூத்திர யாப்பு.
**நூற்புலமை** – புத்தக அறிவு.
**நூற்புறத்திணை** – ஆகமத்தால் அமைந்த துணிபுரை.
**நூற்பொருள்** – நூலிற் கூறப்படும் பொருள்.
**நூற்றந்தாதி** – அந்தாதித் தொடையாகப் பாடப்படும் நூறு வெண்பா அல்லது கலித்துறைகொண்ட சிற்றிலக்கியவகை.
**நூற்றல்** – நூற்குதல், நூலாக்குதல்.
**நூற்றாண்டு** – நூறு ஆண்டுகொண்ட கால அளவு.
**நூற்றாறு** – நூனாழி; நெசவிற்குதவும் நூல் சுற்றிய சிறுகுச்சி.
**நூற்றுநிறை** – நூறுபலம்.
**நூற்றுலாமண்டபம்** – நூறடி உலாவுதற்குரிய அமுது செய்யும் மண்டபம்.
**நூற்றுவர்** – நூறு என்னும் தொகையினர்; துரியோதனாதியர்.
**நூற்றுவரைக்கொல்லி** – நூறுபேரை ஒருங்கே கொல்லும் பொறிவகை.
**நூற்றுறை** – நூற்பொருள்.
**நூறாயிரம்** – இலக்கம், இலட்சம்.
**நூறு** – நூறு என்னும் எண்; மா, பொடி முதலியன; சுண்ணாம்பு.
**நூறு (வி)** – அழி.
**நூறுகோடி** – பதினாயிரம் இலட்சங்கொண்ட எண்; நூறு முனைகளையுடைய வச்சிரப் படை.
**நூறுதல்** – அழித்தல்; அறைந்துகொள்ளுதல்; வெட்டுதல்; நெரித்தல்; பொடியாக்குதல்; இடித்தல்; வளைந்துகொள்ளுதல்; துரத்தல்.
**நூறும்புகுதல்** – நூறாண்டு வாழ்தல்.
**நூறை** – மலங்குமீன்; வள்ளிவகை.
**நூன்மடந்தை** – கலைமகள்.
**நூன்மாடம்** – கூடாரம்.
**நூன்முகம்** – பாயிரம்; நூலின் தொடக்கம்; நூற்றுறை.
**நூன்முடிபு** – நூலின் உட்பகுதியாய் முடியும் உறுப்பு; நூற்பொருளினது நோக்கம்; நூலின் இறுதி.

**நூனம்** – உறுதி; குறைபாடு; தோல்வித்தான வகை.

**நூனயம்** – நூலின் அழகு; கல்விநயம்.

**நூனாதிக்கம், நூனாதிகம்** } – குறைசொல்லும் குணம்.

**நூனாயம்** – சூது.

**நூனாழி, நூனாழிகை** } – நெசவுநாடா.

**நூனுட்பம்** – நூலினது நுண்மை; நூற்கருத்து.

# நெ

**நெ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ந்+எ).

**நெக்கல்** – தளர்ந்தது; அறக்கனிந்தது; அழுகல்.

**நெக்கு** – தள்ளு; நெகிழ்ச்சி; உடைபடல்.

**நெக்குடைதல்** – காண்க: **நெக்குருகுதல்.**

**நெக்குதல்** – கிளப்புதல்; துரத்தியடித்தல்; கூட்டம் நெருக்குதல்; கோலிக்கொட்டுதல்.

**நெக்குருகுதல்** – இளகுதல்.

**நெக்குரோதம்** – ஆலமரம்.

**நெக்குவிடுதல்** – பிளவுபடுதல்; பொருத்துவாய் விடுதல்.

**நெகல்** – நெகிழ்தல், தளர்தல்; கனிதல்.

**நெகிடி** – நெருப்புக்குவை.

**நெகிழ்ச்சி** – காதில்வரும் புண்கட்டி, எழுச்சி; தளர்ச்சி; மனமிரங்குகை.

**நெகிழ்த்தல்** – தளர்த்துதல்; மலர்த்துதல்; பிரித்தல்; நசுக்குதல்; எய்தல்.

**நெகிழ்தல்** – குழைதல்; மெலிதல்; பொசிதல்; பொடியாதல்; மலர்தல்; இளகல்; கட்டுத் தளர்தல்; மனமிரங்குதல்; நிலைகுலைதல்; நழுவல்; விட்டுநீங்குதல்.

**நெகிழ்ப்பு** – குழைவு.

**நெகிழ்வு** – பிரிவு; தளர்வு; மலர்தல்.

**நெகிழம்** – பாதச்சிலம்பு.

**நெகிழி** – பாதச்சிலம்பு; கொள்ளிக்கட்டை.

**நெகுதல்** – கரைதல்; உருகுதல்; மனமிரங்குதல்; வருந்துதல்; கழலுதல்; கெடுதல்; பொடியாதல்.

**நெச்சி** – காண்க: **கடுக்காய்.**

**நெசவு** – நெசவுத்தொழில்; நெசவின் இழையமைப்பு.

**நெஞ்சகம்** – மனம்.

**நெஞ்சடித்தல்** – அச்சம் முதலியவற்றால் இதயம் படபடக்கை.

**நெஞ்சடைத்தல்** – மார்படைப்பு.

**நெஞ்சடைப்பான்** – மாட்டுநோய்வகை.

**நெஞ்சடைப்பு** – மார்படைப்பு; பொதிபறியாமற் செய்யும் பயிர்நோய்.

**நெஞ்சம்** – காண்க: **நெஞ்சு**; அன்பு.

**நெஞ்சழிதல்** – மதிமயங்கல்; மனம்குலைதல்; தன்னடக்கங் கெடுதல்.

**நெஞ்சறிசுட்டு** – சொல்லாற் குறியாது மனத்திலுள்ள பொருளைக் குறிக்கவருஞ் சுட்டு.

**நெஞ்சறிவுறுத்தல்** – மனத்துக்கறிவித்தல்.

**நெஞ்சன்** – துணிவுடையோன்; செருக்குள்ளவன்.

**நெஞ்சாங்கட்டை** – மார்பெலும்பு, நெஞ்செலும்பு; பிணஞ்சுடுவதற்கு நெஞ்சுப் பக்கமாக வைக்குங் கட்டை.

**நெஞ்சாங்குலை** – ஈரற்குலை; மார்பு; இதயம்; மார்புக்குழி.

**நெஞ்சாங்குழி** – தொண்டைக்குழி.

**நெஞ்சார** – மனமார.

**நெஞ்சாறல்** – துன்பம்.

**நெஞ்சிற்கல்** – கவலை; துன்பம்.

**நெஞ்சிற்பாரம்** – தாங்கமுடியாத பொறுப்பு; துன்பம்.

**நெஞ்சு** – மனம்; இதயம்; மார்பு; நடு; திண்ணக்கம்; தொண்டை; துணிவு.

**நெஞ்சுக்குத்து** – மார்புவலி.

**நெஞ்சுகரித்தல்** – தொண்டை கரகரக்கை; பொறாமைகொள்ளுகை.

**நெஞ்சுகலத்தல்** – ஒருவனோடு கலந்தாய்தல்; மனமொன்றுபடுதல்.

**நெஞ்சுகாய்தல்** – நெஞ்சு வறளுகை; மனஞ்சோர்கை.

**நெஞ்சுச்சளி, நெஞ்சுத்தடுமன்** } – நெஞ்சிற் கபமுண்டாக்கும் நோய்வகை.

**நெஞ்சுத்துடிப்பு** – இதயமடிக்கை.

**நெஞ்சுத்துணிகரம், நெஞ்சுத்துணிவு** } – மனவுறுதி.

**நெஞ்சுதுடித்தல்** – இதயந்துடிக்கை; மனமிரங்குதல்.

**நெஞ்சுப்புண்** – தொண்டைப்புண்.

**நெஞ்சுபதறுதல்** – மனநடுங்குதல்.

**நெஞ்சுபுண்ணாதல்** – மனநோதல்; தொண்டை புண்ணாதல்.

**நெஞ்சுரப்பு** – மனக்கடுமை.

**நெஞ்சுரம்** – மனக்கடுமை; மனவூக்கம்; தடித்தனம்.

**நெஞ்சுருகுதல்** – மனமிளகுதல்.

**நெஞ்சுவலி** – மார்புவலி.

**நெஞ்சுவிடுதூது** – ஒரு நூல்; மனத்தைக் காதலர் பால் தூதுவிடுவதாக அதனை முன்னிலைப் படுத்திக் கூறும் சிற்றிலக்கியவகை.

**நெஞ்சுள்** – மனம்.

**நெஞ்சுளுத்தல்** – மனமுரிதல்.

**நெஞ்சுறைப்பு** – மனக்கடுமை; துணிவு.

**நெஞ்செரிச்சல்** – பொறாமை.

**நெஞ்செரிதல்** – கோபத்தால் மனங்கொதித்தல்; பொறாமைப்படல்.

**நெஞ்சைப்பிளத்தல்** – துன்பம் முதலியன மனத்தை வருத்துதல்.

**நெஞ்சோர்மம்** – நெஞ்சுத்துணிவு.

**நெட்டங்கம்** – செருக்கு; செருக்கினாற் பழித்துரைக்கும் மொழி.

**நெட்டநெடுமை** – மிகுநீளம்.

**நெட்டம்** – நெடுமை; செங்குத்து; மிளகு.

**நெட்டாங்கு** – செங்குத்து; நீளவாட்டு; காண்க: **நெட்டங்கம்;** அழகுகாட்டுகை; வடமுனை தென்முனைகளைத் தொடும் நெடுக்குக்கோடு, தீர்க்கரேகை.

**நெட்டாயம்** – நெட்டைக்குத்தாகச் செங்கல் அடுக்கும் முறை.

**நெட்டி** – உடற்பொருத்து; எலும்பு; சுடக்கு; சோம்பல்; ஒரு புல்வகை.

**நெட்டிசை** – விருத்தப்பாவில் நீண்டொலிக்கும் இசை.

**நெட்டிடை** – நெடுந்தொலைவு.

**நெட்டிமுறித்தல், நெட்டியெடுத்தல்** – சோம்பல் முறித்தல்; சுடக்கெடுத்தல்; வருத்துதல்.

**நெட்டில்** – மூங்கில்.

**நெட்டிலிங்கம், நெட்டிலிங்கு** – அசோகமரம்.

**நெட்டு** – தள்ளுகை; தாக்குகை; நெடுமை; நெடுந்தொலைவு; அகலம்; உப்புமேடை; காம்பு; செருக்கு; குலை.

**நெட்டுக்கட்டுதல்** – குலைதள்ளுதல்.

**நெட்டுக்குத்து** – செங்குத்து.

**நெட்டுடைத்தல்** – செருக்கையடக்குதல்.

**நெட்டுதல்** – தள்ளுதல்; மிகவுண்ணுதல்; தாக்குதல்.

**நெட்டுயிர்** – உயிர்நெடில்.

**நெட்டுயிர்த்தல்** – பெருமூச்சுவிடுதல்.

**நெட்டுயிர்ப்பு** – பெருமூச்சு.

**நெட்டுரு** – மனப்பாடம்.

**நெட்டுருச்செய்தல், நெட்டுருப்பண்ணுதல்** – மனப்பாடம்செய்தல்.

**நெட்டூத்தி, நெட்டூதி** – ஒரு சங்குவகை.

**நெட்டூரம்** – வஞ்சகம்.

**நெட்டெழுத்து** – இரண்டு மாத்திரைகொண்ட உயிரெழுத்து; பெயர் முழுமையும் அடங்கிய கையெழுத்து; எட்டப்பார்வை; பத்திரம் முதலியன எழுதுகை; பத்திரத்தின் உடல்.

**நெட்டெழுத்துக்காரன்** – பத்திரம் எழுதுவோன்.

**நெட்டை** – நெடுமை; படைவகை; முழுவெலும்பு; பிணம்; சோம்பல்முறிக்கை; சுடக்குவிடுகை.

**நெட்டைச்சி** – நெடியள்.

**நெட்டையன்** – நெடியன்.

**நெட்டோடை** – நீண்டவோடை.

**நெட்டோலை** – திருமுகம்; பறியோலை.

**நெடநெடெனல்** – முறிதல் ஒலிக்குறிப்பு.

**நெடலை** – நாரைவகை.

**நெடி** – சிள்வண்டு; மிளகாய் முதலியன கமறல்; காரம்; தீநாற்றம்.

**நெடித்தல்** – பொழுது நீட்டித்தல்.

**நெடித்தற்பொழுது** – தாமதம்.

**நெடிது** – நீண்டது; தாமதம்.

**நெடிதுய்த்தல்** – நெடுநாள் வாழவைத்தல்.

**நெடிதுயிர்த்தல்** – பெருமூச்சுவிடுதல்.

**நெடிப்பு** – நெடுநேரம்.

**நெடியவட்டம்** – பெருங்கேடகம்.

**நெடியோன்** – நெட்டையானவன்; திரிவிக்கிரமனாகிய திருமால்; பெரியோன்; துளசிச்செடி; காண்க: **மூக்கிரட்டை.**

**நெடியோன்குன்றம்** – திருவேங்கடமலை.

**நெடில்** – நீளம்; நெட்டெழுத்து; மூங்கில்; மிக்கது.

**நெடிலடி** – ஐந்து சீரால் அமைந்த செய்யுளடி.

**நெடிலி** – ஒரு கடற்பறவைவகை; புல்வகை.

**நெடுக்கு** – நீட்சி.

**நெடுக்குச்சுவர்** – நீளவாட்டுச் சுவர்.

**நெடுக** – நீளமாய்; நேராக; தொடர்பாக.

**நெடுகப்பிடித்தல்** – மழை முதலியன விடாது தொடர்தல்; தங்காமற் செல்லுதல்; வெகு காலம் இல்லாதிருத்தல்; காலம்பிடித்தல்; நீளமாகப் பிடித்தல்; பேச்சு முதலியவற்றை விரித்தல்; பொருளை அழித்தல்.

**நெடுகலும்** – எப்பொழுதும்.

**நெடுகவிடுதல்** – நீளமாகவிடுதல்; தள்ளிவைத்தல்.

**நெடுகிலும்** – எப்பொழுதும்.

**நெடுகுதல்** – நீளுதல்; தாமதித்தல்; சாதல்; காணாமற்போதல்.

**நெடுங்கடல்** – கரையடுத்த கடல்.

**நெடுங்கடை** – பெரிய வாயில்.

**நெடுங்கண்** – தூரப்பார்வையுள்ள கண்; பின்னிய ஓலையின் நீண்ட கண்; நீண்ட மட்டையின் இறுதியில் விரியும் பனையோலைப் பிரிவு; தேங்காயின் தாய்க்கண்.

**நெடுங்கண்பார்வை** – காண்க: **நெடும்பார்வை.**

**நெடுங்கண்விழுதல்** – ஓலை முடைதலில் பெருங்கண் உடையதாதல்.

**நெடுங்கணக்கு** – அகரச்சுவடி, அரிச்சுவடி, அகரம் முதலிய எழுத்துகளைக் கற்பிக்கும் சுவடி; நெடுநாட்கணக்கு; வாராக் கடன்.
**நெடுங்கதை** – பழங்கதை; நீண்ட கதை.
**நெடுங்கயிறு** – நீளமான கயிறு; நீண்ட வலை; பெருந்தாமதம்.
**நெடுங்கழுத்தல்(ன்)** – நீண்ட கழுத்துள்ள ஒட்டகம்; கோவேறுகழுதை.
**நெடுங்காலம்** – வெகுகாலம், நீண்டகாலம்; பல நாள்.
**நெடுங்காலி** – கால்நீண்ட பசு.
**நெடுங்கிடை** – காண்க: **நெடுஞ்சாண்கிடை**; நீண்டகாலமாகப் படுத்துக்கிடத்தல்.
**நெடுங்குரல்** – விடாத பெருங்குரல்.
**நெடுங்குரலன்** – பெருங்குரலுடைய கழுதை.
**நெடுங்கூவிளி** – பெருமுழக்கம்.
**நெடுங்கேடு** – தீராத கேடு.
**நெடுங்கை** – நெடிய கையுடைய யானை.
**நெடுங்கைநீட்டு** – மிகத் தொலைவு.
**நெடுங்கோடிச்சுவர்** – நீளவாட்டுச் சுவர்.
**நெடுங்கோணி** – ஒட்டகம்.
**நெடுஞ்சட்டை** – நீண்ட அங்கி.
**நெடுஞ்சாண்,**
**நெடுஞ்சாண்கிடை** } – தரையில் விழுந்து வணங்குதல்.
**நெடுஞ்சீர்வண்ணம்** – நெட்டெழுத்துப் பயின்று வருஞ் சந்தம்.
**நெடுஞ்சொல்** – புகழ்.
**நெடுத்தல்** – காலம் முதலியன நீளுதல்; மழை முதலியன விடாது தொடர்தல்; நெட்டையாதல்.
**நெடுந்தகை** – மேம்பாடுள்ளவன்.
**நெடுந்தகைமை** – மேம்பாடு.
**நெடுந்துயில்** – நீண்ட உறக்கம்; இறப்பு.
**நெடுந்துருத்தி** – நீர்வீசும் கருவிவகை.
**நெடுந்தூக்கு** – தூக்கு ஏழனுள் எழுசீர் கொண்டது.
**நெடுந்தூரம்** – மிகத் தொலைவு.
**நெடுந்தெய்வம்** – பெருமைபெற்ற தெய்வம்.
**நெடுந்தெரு** – கடைவீதி; பெருவீதி.
**நெடுந்தொகை** – நீண்ட பாடல்களின் தொகுப்பாகிய அகநானூறு.
**நெடுந்தோட்டி** – பெரிய அங்குசம்.
**நெடுநாவை** – கலப்பையின் நீண்ட கொழு.
**நெடுநாள்,**
**நெடுநிகழ்ச்சி** } – நெடுங்காலம்.
**நெடுநீட்டு** – மிக்க தொலைவு; வெகுநீளம்.
**நெடுநீர்** – கடல்; நீட்டித்துச் செய்யும் இயல்பு.
**நெடுநெடெனல்** – முறிதல் ஒலிக்குறிப்பு; வளர்ச்சிக் குறிப்பு.
**நெடுநேரம்** – பெரும்பொழுது.
**நெடுப்பம்** – நீட்சி.
**நெடுப்பிணை** – வங்கமணல்.
**நெடும்பகை** – நீண்டகாலமா யுள்ள பகை; பெரிய பகை; தீராப் பகை.
**நெடும்பயணம்** – நீண்ட பயணம்; இறப்பு.
**நெடும்பழக்கம்** – நீண்ட அனுபவம்; நீடித்த நட்பு.
**நெடும்பழி** – பெரும்பழி; அழியாப் பழி.
**நெடும்பா** – ஆடாதோடை என்னும் மருந்துச் செடி.
**நெடும்பாடு** – பெருங்குறைவு.
**நெடும்பார்வை** – நீண்ட தொலைவு பார்க்கும் ஆற்றல்.
**நெடும்புகழ்** – மிகுபுகழ்.
**நெடும்புரிவிடுதல்** – நாட்கடத்துதல்; பொய் சொல்லுதல்.
**நெடும்புனல்** – ஆழமுள்ள நீர்நிலை.
**நெடும்போக்கு** – மீளும் நோக்கமில்லாத செலவு.
**நெடுமன்** – நீண்டது; பாம்பு.
**நெடுமாந்தடி** – நீண்ட கழி; பயனற்றவன்.
**நெடுமால்** – திருமால்.
**நெடுமி** – நெடியவள்; நீண்ட மரம்; மழை.
**நெடுமிசை** – உச்சி.
**நெடுமிடல்** – மிகுவலியோன்.
**நெடுமுரல்** – ஒரு மீன்வகை.
**நெடுமூக்கு** – துதிக்கை.
**நெடுமூச்சு** – பெருமூச்சு.
**நெடுமூச்செறிதல்** – மேல்மூச்சு வாங்குதல்.
**நெடுமை** – நீளம், உயரம், காலம் முதலியவற்றின் நீட்சி; பெருமை; அளவின்மை; ஆழம்; கொடுமை; பெண்டிர் தலைமயிர்; நெட்டெழுத்து.
**நெடுமொழி** – புகழ்ச்சொல்; தன்மேம்பாட்டுரை; வஞ்சினம்; காண்க: **நெடுமொழியலங்காரம்**; புராணக்கதை; யாவருமறிந்த செய்தி.
**நெடுமொழிகூறுதல்** – புகழ்தல்.
**நெடுமொழியலங்காரம்** – போரில் வீரன் ஒருவன் தனக்கு நிகரில்லையென்று மேம்படுத்துரைக்கும் அணி.
**நெடுவசி** – போர்வீரனது புண்ணைத் தைத்தலால் உண்டாம் ஊசித்தழும்பு.
**நெடுவரி** – ஒழுங்கு.
**நெடுவல்** – நெடிய ஆள்.
**நெடுவாசி** – பெருத்த மாறுபாடு.
**நெடுவிரல்** – காண்க: **ஆடாதோடை**; நாய்ப்பாகற் கொடி.
**நெடுவீடு** – வீடுபேறு.
**நெடுவெண்பாட்டு** – ஏழடிச் சிறுமையும் பன்னீரடிப் பெருமையுமுடைய வெண்பா வகை.

**நெடுவெள்ளூசி** – புண் தைக்கும் ஊசி; நெட்டை என்னுங் கருவி.

**நெண்டுதல்** – எதிர்க்களித்தல்; தோண்டுதல்; நொண்டுதல்.

**நெத்தப்பலகை** – சூதாடுபலகை.

**நெத்தம்** – இரத்தம்.

**நெத்த(தி)லி** – காண்க: **நெய்த்தோலி.**

**நெதி** – செல்வம்; முத்து; தியானம்.

**நெதியம்** – செல்வம்.

**நெதியாளன்** – குபேரன்.

**நெப்பம்** – மென்மை, மிருது, இலேசு.

**நெம்பு** – மேல்எழுப்புகை; இருகூர் இணைப்பு அணி; காண்க: **ஓடாணி;** ஏணிப்பழு; ஏற்ற மடலாணி; விலாவெலும்பு; காண்க: **நெம்புதடி.**

**நெம்புதடி** – பொருளைக் கிளப்ப அதனடியில் செலுத்துங் கோல்.

**நெம்புதல்** – மேலே கிளப்புதல்; உடைத்துத் திறத்தல்.

**நெமிரல்** – காண்க: **நிமிரல்.**

**நெய்** – வெண்ணெயை உருக்கி உண்டாக்கும் பொருள்; வெண்ணெய்; எண்ணெய்; புழுகுநெய்; தேன்; இரத்தம்; நிணம்; நட்பு; சித்திரைநாள்.

**நெய்க்கடல்** – எழுகடலுள் நெய்மயமாகியது.

**நெய்க்கிழி** – எண்ணெய் தோய்த்த சீலைத் துண்டு.

**நெய்க்கொட்டான், நெய்க்கொட்டை** } – பூவந்திமரம்.

**நெய்ச்சட்டி** – செங்கழுநீர்ப்பூ; பவளக் குன்றி மணி; கீரைவகை.

**நெய்ச்சிட்டி** – காட்டுச்சீரகம்; பவளக் குன்றிமணி.

**நெய்த்தல்** – பளபளத்தல்; கொழுத்தல்; பசப்புடையதாயிருத்தல்.

**நெய்த்தோர்** – இரத்தம்; ஒதிமரம்.

**நெய்த்தோலி** – ஒரு பொடிமீன்வகை.

**நெய்தல்** – ஆடை முதலியவை நெய்தல்; வெள்ளாம்பல்; காண்க: **கருங்குவளை;** செங்கழுநீர்க்கிழங்கு; கடலும் கடல் சார்ந்த இடமும்; இரங்கலாகிய உரிப்பொருள்; சாப்பறை; ஒரு பேரெண்.

**நெய்தல்பூண்டோன்** – நெய்தல் மாலை அணிந்த ஐயனார்.

**நெய்தல்யாழ்** – நெய்தற் பெரும்பண்களுள் ஒன்று.

**நெய்தல்யாழ்த்திறம்** – நெய்தற்பண்வகை.

**நெய்தற்கடவுள்** – வருணன்.

**நெய்தற்பறை** – நெய்தல்நிலப் பறை, சாப்பறை.

**நெய்தற்றிணை** – நெய்தல்நிலம்.

**நெய்தை** – பெருமை.

**நெய்நெட்டி** – சம்பங்கோரைப்புல்.

**நெய்ப்பந்தம்** – நெய் ஊற்றி எரிக்கும் பந்தம்.

**நெய்ப்பிலி** – ஒரு மாணிக்கக் குற்றவகை.

**நெய்ப்பீர்க்கு** – பீர்க்குவகை.

**நெய்ப்பு** – நெய்ப்பதமுடைத்தாயிருக்கை; பளபளப்பு; கொழுப்பு; சீழ்.

**நெய்ம்மிதி, நெய்ம்மிதிகவளம்** } – நெய்கலந்து மிதித்துத் திரட்டப்பட்ட உணவு.

**நெய்முட்டை** – நெய்யெடுக்குங் கரண்டி.

**நெய்யணி** – பிள்ளைப்பேற்றின்பின் தீட்டு நீங்குதற்குரிய முழுக்கு.

**நெய்யரி** – பன்னாடை.

**நெய்யாடல்** – திருநாள்களில் மங்கலமாக எண்ணெய் தேய்த்து முழுகுதல்.

**நெய்யாடுதல்** – எண்ணெய் பூசி மங்கலநீராடல்; நெய்பூசுதல்.

**நெய்யுண்டை** – நெய்கலந்த சோற்றுத்திரள்.

**நெய்யுலை** – உணவு சமைத்தற்காக நெய் காய்கின்ற உலை.

**நெய்யேற்றுதல்** – அறுகம்புல்லை நெய்யில் தோய்த்து மணமக்கள் தலையில் மகளிர் வாழ்த்தித் தடவுதல்.

**நெய்வார்** – நெசவுகாரர்.

**நெய்வான்மீன்** – சித்திரைநாள்.

**நெய்விழா** – காண்க: **நெய்யாடல்.**

**நெய்விளக்கு** – நெய்வார்த்து எரிக்கும் விளக்கு; தெய்வ சன்னிதிக்குமுன் ஏற்றும் மாவிளக்கு.

**நெய்வு** – நெசவு.

**நெய்வைத்தல்** – மருந்துநெய் செய்தல்; கொழுப்பேறுதல்.

**நெரடு** – படிக்கக் கடினமானது; கரடு.

**நெரடுதல்** – காண்க: **நெருடுதல்;** கடினமாதல்; தட்டுப்படுதல்.

**நெரி** – நெரிவு; சேலையின் கொய்சகம்; புண் புறப்பாடு முதலியவற்றால் கைகால் சந்துகளில் உண்டாகும் புடைப்பு; சுரசுரப்பு; நோய் வகை.

**நெரிசல்** – நெரிந்தது; நெருக்கமாயிருக்கும் நிலை; மனவருத்தம்; கண்ணோய்வகை; பசலை.

**நெரிஞ்சி, நெரிஞ்சில்** } – காண்க: **நெருஞ்சி.**

**நெரித்தல்** – நொறுக்குதல்; நசுக்குதல்; நிமிட்டல்; துன்பம் முதலியவற்றால் மகளிர் கைவிரல்களை அழுத்திச் சேர்த்தல்; கைவிரல்களைச் சுடக்குதல்; நிலைகெடச்செய்தல்; திறமையாய் நடத்துதல்; நெருங்குதல்; குவித்தல்.

**நெரிதரல், நெரிதல்** } – நொறுங்குதல்; நிலைகெடுதல்; நெருங்குதல்; வளைதல்.

**நெரியல்** – மிளகு.

**நெரியாசம்,** **நெரியாசி** – ஒரு புகைக்கும் பொருள்வகை; வேம்பு.

**நெரிவு** – நசுக்குதல்; சுடக்கு; பகை.

**நெருக்கடி** – நெருக்கம்; இக்கட்டு, துன்பம்.

**நெருக்கம்** – செறிவு; வேலைச் சங்கடம்; ஒடுக்கம்; இடைவிடாமை; அவசரம்; பலவந்தம்; துன்பம்; கொடுமை; நோய்க்கடுமை; கையிறுக்கம்; அண்மை; இறக்குந்தறுவாய்.

**நெருக்கிடை** – காண்க: **நெருக்கடி**; வறுமை.

**நெருக்கிப்பார்த்தல்** – வற்புறுத்துதல்; முயற்சியெடுத்தல்.

**நெருக்கிப்பிடித்தல்** – தொடர்ந்து பற்றுதல்; மிகுதியாய் உண்ணுதல்; செட்டால் மிச்சம் பிடித்தல்.

**நெருக்கு** – காண்க: **நெருக்கம்.**

**நெருக்குண்ணுதல்** – நெருக்குப்படுதல்.

**நெருக்குதல்** – ஆலை, செக்கு முதலியவற்றில் இட்டு ஆட்டுதல்; சுருக்குதல்; நசுக்குதல்; வருத்துதல்; அடர்ந்து தள்ளுதல்; அமுக்குதல்; பலவந்தம்பண்ணுதல்; தாக்குதல்; விடாப்பிடியாய் இருத்தல்; உரந்தல்; செறியச்செய்தல்; வருத்திக்கேட்டல்.

**நெருக்கெனல்** – காண்க: **நெரேலெனல்.**

**நெருங்கல்** – கண்டிப்புச்சொல்; செறிவு; நெருங்குதல்.

**நெருங்குதல்** – கிட்டுதல்; ஒடுக்கமாதல்; செறிதல்; கிட்டின உறவாதல்; நசுங்குதல்; இடித்துக்கூறுதல்; மும்முரமாதல்; கோபித்தல்; தொடர்தல்; அவசரமாதல்; மீதூர்தல்.

**நெருஞ்சி,** **நெருஞ்சில்** – ஒரு முட்பூண்டுவகை.

**நெருட்டுக்கருத்து** – கருகலான கருத்து; கருகலான பொருள்.

**நெருட்டுப்புத்தி** – வஞ்சகமனம்; கோணல் அறிவு.

**நெருடன்** – வஞ்சகன்; கெட்டிக்காரன்.

**நெருடி** – வஞ்சகி; கெட்டிக்காரி.

**நெருடு** – நிமிண்டுகை; இழைபொருத்துகை; தடவுகை; கருகல்; சொற்சங்கடம்; கரடுமுரடானது; ஆடையில் பிரிந்தெழும் நூல் முடிச்சு; வஞ்சனை.

**நெருடுதல்** – நிமிண்டுதல்; நிமிண்டி இழைபொருத்துதல்; திரித்தல்; தடவல்; வஞ்சித்தல்.

**நெருநல்,** **நெருநலைநாள்,** **நெருநற்று** – நேற்று.

**நெருநெருத்தல்** – திடீரென ஒடிதல்; திடீரென வயிறு முதலியன வலித்தல்.

**நெருநெரெனல்** – திடீரென வயிறு வலித்தற்குறிப்பு; திடீரெனற்குறிப்பு; நெரிதற்குறிப்பு.

**நெருநை** – காண்க: **நெருநல்.**

**நெருப்பன்** – கடுஞ்சினம் உடையவன்; கலகக்காரன்; பொல்லாதவன்.

**நெருப்பு** – அக்கினி; இடி; உடற்சூடு; கோபம் முதலியவற்றின் கடுமை; ஒழுக்கத்தில் ஒரு போதும் தவறாதவர்.

**நெருப்புக்கண்** – சிவனது நெற்றிக்கண்; கண்ணேறு உள்ள கண்; அனல்பொறி பறக்குங் கண்; பொறாமைக் கண்.

**நெருப்புக்கல்** – தீத்தட்டிக் கல்; காடிக்காரம்.

**நெருப்புக்காடு** – பெருநெருப்பு; கடுவெயில்; கடுஞ்சினம்.

**நெருப்புக்கொள்ளி** – தீக்கொள்ளி; கலகக்காரன்; தீயன்.

**நெருப்புக்கொளுத்துதல்** – தீமூட்டுதல்; கடுவெயிலெறித்தல்; கடுமையாதல்; தீமைசெய்தல்; கலகமூட்டுதல்; தீக்கொளுத்துதல்.

**நெருப்புக்கோழி** – தணலை விழுங்கும் கோழிவகை; நெருப்புப்போன்ற சிவந்த தொண்டையை உடைய வான்கோழி.

**நெருப்புச்சட்டி** – தீச்சட்டி.

**நெருப்புச்சூடு** – தீப்பட்ட புண்.

**நெருப்புத்தண(ழ)ல்** – கட்டைநெருப்பு.

**நெருப்புத்தள்ளி** – நெருப்புத் தள்ளுகிற இரும்பாயுதம்.

**நெருப்புத்திராவகம்** – வெடியுப்புத் திராவகம்.

**நெருப்புப்படுதல்** – நெருப்பால் அழிதல்; தெய்வ தண்டனை முதலியவற்றால் அழிதல்; கடுங்கோடையால் வருந்துதல்; அநீதியால் துன்புறுதல்; விலை முதலியன மிகுதியாதல்.

**நெருப்புப்பிடித்தல்** – தீப்பற்றி எரிதல்.

**நெருப்புப்பொறி** – தீப்பொறி.

**நெருப்புமழை** – ஊழிக்காலத்தில் பெய்யும் அக்கினி மழை.

**நெருப்புமூட்டுதல்** – தீப்பற்றவைத்தல்; கலகம் மூட்டுதல்.

**நெருப்புவிழுதல்** – தீப்பொறி பறக்கை; தணல் உண்டாகை; கூரைமேல் தீத்திரள் விழுகை; அநீதி முதலியவற்றால் அழிகை; தன்னிலை அழிகை; நெருப்பால் அழிகை.

**நெருள்** – மக்கட்கூட்டம்.

**நெரேலெனல்** – விரைவுக்குறிப்பு.

**நெல்** – பயிர்வகை; நென்மணி; உணவு; எட்டு எள்ளளவுகொண்ட நீட்டலளவை; காண்க: **வாகை.**

**நெல்லரி** – அரியப்பட்ட கைப்பிடியளவான நெற்கதிர்.

**நெல்லி** – ஒரு மரவகை; திரிபலையில் ஒன்றான நெல்லிக்காய்.

**நெல்லிக்காய்மூட்டை** – ஒற்றுமையற்றவர்.

**நெல்லிச்சாந்து** – காய்ந்த நெல்லியின் அரைத்த விழுது.

**நெல்லிச்சி** – வரிக்கூத்துவகை.

**நெல்லிமுள்ளி** – காய்ந்த நெல்லித்தோல்.

**நெல்லிவட்டு** – நெல்லிக்காயாகிய விளையாட்டுக் கருவிவகை.

**நெல்லு** – காண்க: நெல்.

**நெளி** – வளைந்த விரலணிவகை.

**நெளிச்சல்** – வளைவு; வளைந்தது.

**நெளித்தல்** – வளைத்தல்; கோணுதல்; அசைத்தல்; வேலைகழப்புதல்; இறுமாப்புறுதல்.

**நெளிதம்** – புன்மை, அற்பம்; இலேசு.

**நெளிதல்** – உடல் வளைதல்; வளைந்து நகர்தல்; சுருளுதல்; குழிதல்; வருந்துதல்; குலைதல்; மிகுதியாதல்; அதுங்குதல்.

**நெளிப்பு** – இறுமாப்பு; பரிகாசம்; துன்பம்; செருக்கு முதலியவற்றால் குறும்புசெய்தல்.

**நெளிப்புக்காரன்** – பகட்டுக்காரன்.

**நெளிப்புப்பேசுதல்** – ஏளனமாகப் பேசுதல்.

**நெளியல்** – வளைவு; வளைந்தது.

**நெளியலன்** – கூனன்.

**நெளியலி** – கூனி.

**நெளியலெடுத்தல்** – கோணலை நீக்குதல்.

**நெளியன்** – கடல்மீன்வகை; பயிரை அழிக்கும் புழுவகை.

**நெளிர்** – எடுத்தலோசை.

**நெளிர்தல்** – சத்தமிடுதல்.

**நெளிவு** – வளைவு; வருத்தம்; இணங்குகை; கைவிரல்மோதிரம்; செருக்கு; காண்க: நெளிவுசுளிவு.

**நெளிவுசுளிவு** – ஏற்றத்தாழ்வு; கமுக்கம், இரகசியம்.

**நெற்கடை** – மூலநாள்.

**நெற்களஞ்சியம்** – நெல்லிட்டு வைக்கும் புரை.

**நெற்காணி** – நெல்விளையும் நிலம்.

**நெற்குவை** – நெற்போர்.

**நெற்குறி** – நெல்லைக்கொண்டு சொல்லும் சோதிடம்.

**நெற்கூடு** – காண்க: நெற்களஞ்சியம்.

**நெற்சிறுதாலி** – தாலிவகை.

**நெற்சூடு** – கடாவடிபடாத நெற்கதிர்த் தொகுதி.

**நெற்செய்தல்** – நெற்பயிரிடுதல்.

**நெற்பயிர்** – நெல்விளையும் பயிர்.

**நெற்பரப்பு** – பன்னிரண்டு குழிகொண்ட நில அளவு.

**நெற்பழம்** – மதர்ப்பினால் வெடித்த நெல், நல்விளைவின் குறியாக முற்றி வெடிக்கும் நென்மணி; மழை மிகுதியாலாகும் நெல்லின் நோய்.

**நெற்பொரி** – நெல்லை வறுப்பதால் விரிந்து மலரும் அரிசி.

**நெற்போர்** – கடாவடி அடிக்காத வைக்கோற் போர்.

**நெற்றம்** – முதிர்ந்து காய்ந்த காய்; நெரிப்பு.

**நெற்றலன்** – மெலிந்து உணங்கியவன்.

**நெற்றி** – கண்புருவங்களுக்கு மேலுள்ள பகுதி; முன்படை; முன்பகுதி; உச்சி; கட்டடத்தின் மேனிலை முகப்பு; வானம்; தண்டிகையின் தலைப்பு; மரத்திலிருந்து கிளைகள் பிரிகின்ற இடம்; நடு; முயற்சி.

**நெற்றிக்கட்டு** – மாதர் அணிகின்ற தலைமாலை.

**நெற்றிக்கண்ணன்** – நெற்றியில் கண்ணுடைய சிவபிரான்.

**நெற்றிக்கிடுதல்** – நெற்றியில் திருநீறு முதலிய குறியிடுதல்.

**நெற்றிக்குறி** – நெற்றியிலிடும் பொட்டு முதலியன.

**நெற்றிக்கை** – முன்படை; மேற்கூரை தாங்கும் எதிர்க்கைமரம்.

**நெற்றிச்சுட்டி** – மகளிரும் குழந்தைகளும் அணியும் நுதலணிவகை; விலங்கின் நெற்றி வெள்ளை.

**நெற்றிச்சுழி** – விலங்கின் நெற்றியில் உள்ள மயிர்ச்சுழி.

**நெற்றிச்சூட்டு** – மகளிர் அணியும் நுதலணிவகை.

**நெற்றித்திலகம்** – நெற்றிப்பொட்டு.

**நெற்றிப்பட்டம்** – நுதலணிவகை.

**நெற்றிப்பொட்டு** – திலகம்.

**நெற்று** – முதிர்ந்து காய்ந்த காய்; நெறிப்பு.

**நெற்றுதல்** – மோதுதல்; இலக்கில் தட்டுதல்; பெறுதல்; முதிர்தல்.

**நெற்றெடுத்தல்** – உலர்ந்த காயைச் செடியிலிருந்து பறித்தெடுத்தல்; நெற்றை உரித்து விதையெடுத்தல்; விதை சேர்த்துவைத்தல்.

**நெறநெறெனல்** – காண்க: நெறுநெறெனல்; மென்மையற்றிருத்தற் குறிப்பு.

**நெறி** – வழி; சமயம்; வளைவு; சுருள்; விதி; ஒழுக்கம்; செய்யுள்நடை; குலம்; வழிவகை; ஆளுகை; குதிரை முதலியவற்றின் நடை; வீடுபேறு; கோயில்; தாழ்ப்பாள்; கண் மண்டைக்குழி; புறவிதழ் ஒடிக்கை; காண்க: **நெறிக்கட்டி**; மனநிலை.

**நெறிக்கட்டி** – புண்கட்டிக்காக உடற்சந்துகளில் உண்டாகும் வீக்கம்.

**நெறிகேடன்** – நல்லொழுக்கமில்லாதவன்.

**நெறிகேடு** – கொடுங்கோன்மை, அநீதி; தீயொழுக்கம்.

**நெறிசெய்தல்** – ஆளுதல்; நல்வழிப்படுத்துதல்.
**நெறித்தல்** – புறவிதழ் ஒடித்தல்; சினத்தால் புருவத்தை வளைத்தல்; நிமிர்த்தல்; கையாற் பிடித்துவிடுதல்; முறுக்காயிருத்தல்; மயிர் குழலுதல்; நோக்குதல்.
**நெறிதல்** – மயிர் குழற்சியாதல்.
**நெறிநீர்** – கடல்.
**நெறிப்படுதல்** – ஒழுங்குபடுதல்; நல்லொழுக்கத்தில் நிலைபெறுதல்; ஒன்றன் வழிப்படுதல்; உள்ளடங்குதல்.
**நெறிப்பு** – புருவத்தை வளைத்தல்; நிமிர்ந்திருத்தல்; அகங்கரித்தல்.
**நெறிபொறி** – மும்முரம்.
**நெறிமருப்பு** – எருமை, மான் முதலியவற்றின் முடங்கின கொம்பு.
**நெறிமாறுதல்** – வழிதப்புதல்.
**நெறிமான்** – நீதிமான்.
**நெறிமுறைமை** – நியாயவழி.
**நெறிமை** – விதி; நன்னெறி; வழக்கு.
**நெறியிலார்** – கீழ்மக்கள்.
**நெறியிலி** – தீயோன்.
**நெறியோன்** – பெரியோன்.
**நெறு** – ஓசை.
**நெறுக்கெனல்** – ஒடிதல், முரிதல் முதலியவற்றால் உண்டாம் ஒலிக்குறிப்பு.
**நெறுநெறுத்தல்** – பல்லைக் கடித்தல்; ஒலிபடப் பிளவுறுதல்; உறுமுதல்; நெரிந்தொலித்தல்.
**நெறுநெறெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; முரிதற் குறிப்பு; பல்லைக் கடிக்கும் ஒலிக்குறிப்பு.
**நென்பு** – மர ஆப்பு; ஏணிப்பழு.
**நென்மா** – அரிசிமா.
**நென்னல்,**
**நென்னேற்று** } – முன்னாள்.

# நே

**நே** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ந்+ஏ); அன்பு; ஈரம்.
**நேக** – மிகப் பொடியாக.
**நேசகன்** – வண்ணான்.
**நேசம்** – அன்பு; ஆர்வம்; தகுதி.
**நேசன்** – நண்பன்; அடியான், பக்தன்.
**நேசானுசாரி** – உண்மையாய் நடப்பவன்.
**நேசி** – அன்புடையவள்.
**நேசித்தல்** – அன்புவைத்தல்.
**நேட்டம்** – தேட்டம்; சம்பாதித்த பொருள்.
**நேடுதல்** – தேடுதல்; எண்ணுதல்; விரும்புதல்; சம்பாதித்தல்; இலக்காகக் கொள்ளுதல்.
**நேத்திரநரம்பு** – கண்நரம்பு.
**நேத்திரப்படலம்** – ஒரு கண்ணோய்வகை.
**நேத்திரபரியந்தம்** – கடைக்கண்.
**நேத்திரபிண்டம்** – கண்விழி; பூனை.
**நேத்திரம்** – கண்; மயிற்பீலிக்கண்; பட்டாடை.
**நேத்திரயோனி** – இந்திரன்; சந்திரன்.
**நேத்திரரோகம்** – கண்ணோய்.
**நேத்திரவீட்சணம்** – அருளுடன் பார்த்தல்.
**நேத்திராம்பு** – கண்ணீர்.
**நேத்திரோற்சவம்** – கண்ணுக்கு விருப்பமானது.
**நேதா** – தலைவன்.
**நேதி** – முறை.
**நேதித்தல்,**
**நேதியதுசெய்தல்** } – இதுவன்றெனக் கூறுதல்.
**நேபத்தியம்** – அலங்காரம்; வேடம்; நாடக அரங்கில் வேடம்பூணும் மறைவிடம்; நாடக மேடை.
**நேபம்** – நீர்.
**நேம்புதல்** – கொழித்தல்.
**நேமகம்** – நியமிக்கை; ஏற்பாடு; தீர்மானம்; மணவாக்குறுதி; தெய்வத்துக்குப் படைத்தல்; ஒழுங்கு; இருப்பிடம்.
**நேமநிட்டை** – நோன்புகளை உறுதியோடு செய்கை; நித்தியானுட்டானம்.
**நேமம்** – நியமனம்; விதிமுறை; ஊழ்; நேரம்; சாயங்காலம்; பங்கு; பிளப்பு; வேர்; மேலிடம்; வேலி; ஏமாற்றுகை.
**நேமன்** – சீரிய ஒழுக்கமுள்ளவன்.
**நேமனம்** – காண்க: **நியமனம்**, அமர்த்தம்.
**நேமி** – வட்டம்; தேருருளை; சக்கரப்படை; ஆணைச்சக்கரம்; கடல்; பூமி; மோதிரம்; சக்கரவாகப்புள்; சக்கரப்படையுடையவனான திருமால்; தீர்த்தங்கரர் இருபத்து நால்வருள் ஒருவர்.
**நேமித்தல்** – காண்க: **நியமித்தல்**, அமர்த்துதல்; சிந்தித்தல்.
**நேமிநாதன்** – அருகக்கடவுள்; கடவுள்.
**நேமிப்புள்** – சக்கரவாகப்புள்.
**நேமியஞ்செல்வன்** – பேரரசன்.
**நேமியா(யோ)ன்** – சக்கரப்படை உடையவனான திருமால்.
**நேமிவலயம்** – பூமண்டலம்.
**நேமிவலவன்** – திருமால்; கடவுள்.
**நேயம்** – அன்பு; பக்தி; நன்மை; நெய்; நிலப்பனைக்கிழங்கு.
**நேயவை** – இடுதிரை.
**நேயன்** – நண்பன்.

**நேர்** – உடன்பாடு; உவமை; செவ்வை; நீதி; நல்லொழுக்கம்; திருந்திய தன்மை; மாறுபாடு; நீளம்; வரிசை; பாதி; நுணுக்கம்; கொடை; கதி; காண்க: **நேர்விடை**; தனிமை; மிகுதி; ஊர்த்துவநிலை; நிலைப்பாடு; காண்க: **நேரசை**; வலிமை; முன்; பிராகாரம்.

**நேர்கட்டி** – ஒரு மணச்சரக்குவகை.

**நேர்கட்டுதல்** – சரிக்கட்டுதல்.

**நேர்கடன்** – காண்க: **நேர்த்திக்கடன்.**

**நேர்காட்டுதல்** – எதிர்த்தல்; ஒரு திசைநோக்கிச் செலுத்துதல்; கொல்லுதல்; விழுங்குதல்; வரிசையாக வைத்தல்; முன் காட்டுதல்; முன் ஏர் நடத்துதல்; சரியாகப் பிளத்தற்கு வெட்டிக்காட்டுதல்; நீர்க்கால் மாட்டுதல்; சாவுகிடையாகக் கிடத்துதல்.

**நேர்காணல்** – ஒருவரை நேரில் சந்தித்துப் பேசுகை, பேட்டி.

**நேர்காற்று** – உதவுங்காற்று.

**நேர்கூறு** – சரிபாகம்.

**நேர்கொடுநேரே** – வெளிப்படையாக.

**நேர்ச்சி** – போக்கு; தகுதி; இணக்கம்; சூள்; நட்பு; சிறப்பு.

**நேர்சீர்** – ஒழுங்கு; மனவொற்றுமை; தகுதிக்கேற்ப நடக்கை.

**நேர்சொல்லுதல்** – உண்மை கூறுதல்.

**நேர்சோழகம்** – நேர்தென்றல்.

**நேர்ஞ்சங்கிலி** – கழுத்திலணியப்படும் வேலைப்பாடு வாய்ந்த ஒரு சங்கிலிவகை.

**நேர்த்தரவு** – குற்றம் பொறுத்தோமென்று நேரிற் கூறும் ஆணை.

**நேர்த்தல்** – ஒத்தல்; எதிர்த்தல்.

**நேர்த்தி** – சிறப்பு; திருத்தமுள்ளது; காண்க: **நேர்த்திக்கடன்**; முயற்சி; நேர்ந்த பொருள், வேண்டுதல்.

**நேர்த்திக்கடன்** – வேண்டுதல்; வேண்டுதலுக்காக வைத்த பண்டம்.

**நேர்த்திக்குறிப்பு** – தவறாமை.

**நேர்தப்புதல்** – நேர்மைதவறுதல்.

**நேர்தல்** – பொருந்துதல்; நிரம்புதல்; நிகழ்தல்; எதிர்ப்படுதல்; இளைத்துப்போதல்; மென்மையாதல்; எதிர்தல்; நெருங்குதல்; தீண்டுதல்; பெறுதல்; கொடுத்தல்; உடன்படுதல்; ஒத்தல்; உறுதிசெய்தல்; அமர்த்தல், நியமித்தல்; தண்டனைக்கு உட்படுத்தல்; வேண்டுதல்; செல்லுதல்; வேண்டிக்கொள்ளல்; எதிர்த்தல்; அறுத்தல்.

**நேர்ந்தபடி** – முறையின்றி; விருப்பப்படி; முன் யோசனையின்றி.

**நேர்ந்தபோக்கு** – முருட்டுப்பிடிவாதம்.

**நேர்ந்தார்** – நண்பர்.

**நேர்ந்துகொள்ளுதல்** – வேண்டிக்கொள்ளுதல்.

**நேர்ந்துபோதல்** – நிகழ்தல்; மெலிதல்.

**நேர்ந்துவிடுதல்** – வேண்டுதலுக்காக விலங்கு முதலியவற்றைக் கோயிலுக்கு விடுதல்; மெலிதல்.

**நேர்நிரத்தல்** – சமமாய் நிற்றல்.

**நேர்நிலைவஞ்சி** – காண்க: **சமநிலைவஞ்சி.**

**நேர்நிற்றல்** – எதிர்நிற்றல்; ஒழுங்காய் நிற்றல்.

**நேர்நிறை** – கற்பு; சரிபாரம்; நீதி.

**நேர்ப்பம்** – இயல்பு; திறமை.

**நேர்பசை** – குற்றுகரமுற்றுகரங்களோடு இயைந்து வரும் நேரசை.

**நேர்படுத்துதல்** – காண்க: **நேர்பிடித்தல்; நேர்பண்ணுதல்**; நலப்படுத்துதல்.

**நேர்படுதல்** – சந்தித்தல்; நன்கு பயிலுதல்; நிகழ்தல்; ஏற்புடையதாதல்; வாய்த்தல்; காணப்படுதல்; எதிர்ப்படுதல்; உடன்படுதல்; நட்புக்கொள்ளுதல்; ஒழுங்குபடுதல்.

**நேர்பண்ணுதல்** – சமனாக்குதல்; ஒழுங்குப்படுத்துதல்; ஒன்றுபடுத்துதல்; ஆணையிடுதல்.

**நேர்பாடு** – தற்செயலான நிகழ்ச்சி; உபாயம்; நீதி; நீளம்; உடன்பாடு; காண்க: **நேர்த்திக்கடன்.**

**நேர்பிடித்தல்** – நேர்வழி செலுத்துதல்; முடிவுக்குக் கொண்டுவருதல்; சரிப்படுத்துதல்; சமாதானப்படுத்துதல்; நலமாதல்.

**நேர்பு** – நேரசை; நீளம்; எழுச்சி; சந்திப்பு; நிகழ்ச்சி; போக்கு.

**நேர்போதல்** – இணங்குதல்; குணமாதல்; சரியாய்ப்போதல்.

**நேர்ம்புணை** – இலேசான தெப்பம்.

**நேர்முகம்** – எதிர்முகம்.

**நேர்மை** – செம்மை; உண்மை; நீதி; நுண்மை; அறம்; திருத்தம்; சமம்; இசைவு; நன்னிலை; நிகழ்ச்சி.

**நேர்மையம்** – சரிநடு.

**நேர்வருதல்** – ஒத்திருத்தல்.

**நேர்வழி** – நேர்பாதை; நல்லொழுக்கம்.

**நேர்வளம்** – செவ்வழியாழ்த்திறம்; பாலையாழ்த்திறம்.

**நேர்வாய்க்கட்டளை** – மாடத்தின்கண் சாளரம்.

**நேர்வாளம்** – மருந்துமரவகை.

**நேர்வான்** – சித்திரைநாள்.

**நேர்விடை** – உடன்பாட்டை நேரே குறிக்கும் விடை; நேராகச் சொல்லும் விடை.

**நேர்வு** – நிகழ்ச்சி; உடன்பாடு; கொடுத்தல்; வேண்டுகை; எதிர்தல்; பொருதல்; சரிந்து விழுகை.

**நேர** – ஓர் உவமஉருபு.

**நேரகாலம்** – ஏற்ற காலம்; கெடுதியான காலம்; விதித்த காலம்; தற்காலம்.

**நேரங்கடத்துதல்** – பொழுதுபோக்குதல்; வேலையில் மந்தமாயிருத்தல்.

**நேரங்கெட்டநேரம்** – ஒவ்வாத சமயம்; தகுதியற்ற காலம்.

**நேரசை** – குறிலோ நெடிலோ தனித்தேனும் ஒற்றடுத்தேனும் வரும் அசைவகை.

**நேரஞ்சாய்தல்** – பொழுதுபோதல்.

**நேரஞ்செல்லுதல்** – அதிககாலம் பிடித்தல்; தாமதமாதல்.

**நேரடி** – நாற்சீரான் வரும் அளவடி; நேரில்.

**நேரந்தப்புதல்** – காலந்தவறுதல்.

**நேரபாரமறிதல்** – அடக்கவொழுக்கமறிதல்; காலமறிதல்.

**நேரம்** – காலம்; தருணம்; பகலிற் பாதியாகிய இரு யாமகால அளவு; குற்றம்; அபராதம், ஒறுப்புப்பணம்.

**நேரல்** – காண்க: **நேர்வு.**

**நேரல்லார்** – கீழோர்; பகைவர்.

**நேரலன்** – பகைவன்; நேர்மையானவன்; நிறுதிட்டமானது.

**நேராக்குதல்** – இணக்குதல்; முடிவுபடுத்துதல்; அழித்தல்.

**நேராக** – தானாக; காட்சியாக; உண்மையாய்; முழுமையும்.

**நேராதல்** – இணங்குதல்; சரியாதல்.

**நேராதார்,**
**நேரார்** } – பகைவர்.

**நேராளி** – நேர்மையுள்ளவன்.

**நேரிசம்** – எறிபடை; அம்புவகை.

**நேரிசை** – காண்க: **நேரிசைவெண்பா**; பண்வகை.

**நேரிசைவெண்பா** – இரண்டாமடியின் ஈற்றில் தனிச்சொற் பெற்றுவரும் வெண்பாவகை.

**நேரிடுதல்** – நிகழ்தல்; எதிர்ப்படுதல்; கைகூடுதல்.

**நேரியது** – நேரானது; ஒரு நல்லாடைவகை.

**நேரியன்** – நேரிமலைக்கு உரியவனான சோழன்; நுண்ணுணர்வுடையவன்; அணுவுக்கு அணுவாய் இருப்பவன்.

**நேரிறை** – சோழன்; உடன்பாட்டை நேரே குறிக்கும் விடை.

**நேருக்குநேராய்நிற்றல்** – சரிநேராதல்; நேர் எதிராயிருத்தல்; பிறர்போலத் தானும் நடத்தல்.

**நேருக்குவருதல்** – இணங்கிவருதல்.

**நேரேடம்,**
**நேரேடு** } – நாவல்மரம்.

**நேரொத்தல்** – இணையாயிருத்தல்; மாறுபாடின்றி இருத்தல்; மிகப் பொருந்தி இருத்தல்.

**நேரோடல்** – குதிரையின் நேரோட்டம்.

**நேளி** – காண்க: **தாமரை.**

**நேற்று** – முன்நாள்; சற்று முன்காலத்தில்.

**நேற்றையதினம்** – நேற்று.

**நேனம்** – பைத்தியம்.

## நை

**நை** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ந்+ஐ); ஓர் இகழ்ச்சிக்குறிப்பு.

**நைக்காட்டுதல்** – கேலிகாட்டுதல்.

**நைகரம்** – துன்பம்; குறைவு.

**நைச்சி** – காக்கை; பாம்பு.

**நைச்சிக(ய)ம்** – தாழ்வு; இழிதன்மை; தன்வயப்படுத்துகை.

**நைசர்க்கிகம்** – இயற்கையாகத் தோன்றியது.

**நைசிக(ய)ம்** – காண்க: **நையம்.**

**நைட்டிகப்பிரமசாரி** – திருமணஞ் செய்யாமல் சாகும்வரை மாணவம் பூண்டிருப்பவன்.

**நைட்டிகம்** – ஆயுள் முழுதும் மாணவம் பூண்டொழுகும் நிலை.

**நைட்டிகன்** – காண்க: **நைட்டிகப்பிரமசாரி.**

**நைத்தல்** – நசுக்குதல்; எரித்தல்; அழித்தல்.

**நைத்திக(ய)ம்** – நித்தியத்துவம், என்றும் உளவாயிருக்கை.

**நைதல்** – இரங்குதல்; நிலைகெடுதல்; கெடுதல்; தளர்தல்; நசுங்குதல்; சுருங்குதல்; மாத்திரையிற் குறைதல்; வாடுதல்; மனம்வருந்தல்; தன்வயப்படாமை.

**நைதிகை** – காண்க: **ஊசிமல்லிகை.**

**நைதெனல்** – இரக்கக்குறிப்பு; மெலிதற் குறிப்பு; மனநோதற்குறிப்பு.

**நைநையெனல்** – இகழ்ச்சிக்குறிப்பு; குழந்தை விடாது அழுதற்குறிப்பு.

**நைபடுதல்** – நசுக்கப்படுதல்.

**நைபத்தியம்** – நடிப்பவன் கொள்ளும் வேடம்.

**நைபாலி** – அடுக்குமல்லிகை.

**நைபாலிகம்** – செம்பு; பித்தளை.

**நைமிசம்** – நைமிசம் என்னும் காடு; திருமால் திருப்பதி.

**நைமித்திக(ய)ம்** – சிறப்பு வழிபாடு.

**நையநருக்குதல்** – பொடியாக்குதல்; நையப்புடைத்தல்.

**நையப்புடைத்தல்** – நன்றாக அடித்தல்.

**நையம்** – மூக்கிலிடும் மருந்து; காக்கை.

**நையல்** – மெலியச்செய்யும் நோய்; அம்மைநோய்.

**நையாண்டி** – கேலிப்பேச்சு; சிரிப்புப்பேச்சு; நாடோடிப் பாட்டுவகை.

**நையாயிகன்** – அறநூல் கற்றோன்.

**நைராக்கியம்** – எள்ளிநகையாடல், பரிகாசம்.

**நைராசியம்** – நம்பிக்கையின்மை.

**நைருதி** – தென்மேற்றிசை.

**நைலம்** – கடற்பாசி மருந்து.

**நைவருதல்** – வருந்துதல்; இரங்குதல்.

**நைவளம்** – பாலைப் பண்வகை; குறிஞ்சியாழ்த் திறம்.

**நைவனம்** – நடனம்; வீரன்.

**நைவு** – வாடினது; மிகப் பழுக்கை; வருந்துகை; நோய்.

**நைவேத்தியம்** – கடவுளுக்குப் படைக்கும் உணவு.

**நைவேதனம்**–படைத்தல்; காண்க: **நைவேத்தியம்.**

**நைவேதித்தல்** – கடவுளுக்கு உணவு முதலியன படைத்தல்.

# நொ

**நொ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ந் + ஒ); துன்பம்; நோய்; மென்மை.

**நொக்கு** – வெடிப்பு.

**நொக்குதல்** – உண்டு குறைத்தல்; அடித்தல்; மிகுதியாகத் திட்டுதல்.

**நொக்கென** – உடனே.

**நொங்கு** – நுங்கு.

**நொங்குதல்** – விழுங்குதல்; மெலிதல்.

**நொச்சி** – கருநொச்சி; வெண்ணொச்சி; காண்க: **நொச்சித்திணை;** ஒரு புறத்துறை; எயில் காத்தல்; மதில்; சிற்றூர்.

**நொச்சித்திணை** – நொச்சிமாலை சூடி வீரர் எயில் காத்தலைக் கூறும் புறத்திணை.

**நொசி** – வருத்தம்; நுண்மை.

**நொசித்தல்** – வருத்துதல்.

**நொசிதல்** – நுண்மையாதல்; அருமையாதல்; வருந்தல்; வளைதல்; நைதல்; குறைவுறுதல்.

**நொசிப்பு** – மனத்தை ஒருவழிச் செலுத்துதலாகிய சமாதி.

**நொசிவு** – நுண்மை; வருத்தம்; வளைந்த நிலை.

**நொட்டாங்கை** – இடக்கை.

**நொட்டு** – புணர்ச்சி.

**நொட்டுதல்** – புணர்தல்; ஏமாற்றுதல்.

**நொட்டை** – சுவைமிகுதியால் அண்ணத்தில் நாவைச் சேர்த்துக் கொட்டுதல்.

**நொட்டைச்சொல்** – குறைச்சொல்.

**நொடி** – கைந்நொடிப்பொழுது; சொல்; முதுமொழி; செய்யுள்; ஓசை; வண்டிப்பாதைகளில் ஏற்படும் பள்ளம்; புதிர்; நோய்த்துன்பம்.

**நொடிக்கதை** – விடுகதை; மிகச் சுருக்கமாக அமையும் கதை.

**நொடிசொல்லுதல்** – புதுச்செய்தி கூறுதல்; விடுகதை சொல்லுதல்; எள்ளிநகையாடல்.

**நொடித்தல்** – சொல்லுதல்; சொடக்குதல்; இங்கிதத்தாலழைத்தல்; கோள்சொல்லுதல்; பழித்தல்; அழித்தல்; காண்க: **நொடிசொல்லுதல்;** கட்டுக்குலைதல்; நடக்கும்போது கால் சிறிது வளைதல்; ஒடித்தல்; உறுப்பாட்டுதல்; பால் முதலியன சுரத்தல்; இழப்படைதல்.

**நொடித்தான்மலை** – அழிப்புத் தலைவனான சிவனின் கைலாயமலை.

**நொடித்துப்போதல்** – நிலைகுன்றுதல்; வறுமையடைதல்.

**நொடிதல்** – சொல்லுதல்; ஒடிதல்.

**நொடிப்பு** – கையால் நொடித்தல் நேரம், கணப்பொழுது.

**நொடிபயிற்றுதல்** – பேச்சுக் கற்பித்தல்.

**நொடிபோக்குதல்** – தாளத்திற்கியையக் கையை நொடித்தல்.

**நொடிவரை** – விரைவில்.

**நொடிவிழுதல்** – பாதையில் குழிப்பள்ளம் விழுதல்; கோணலாதல்.

**நொடுக்குநொடுக்கெனல்** – ஒலிக்குறிப்பு; பாதக் குறட்டினொலி; படபடத்தற்குறிப்பு.

**நொடுத்தல்** – விற்றல்.

**நொடுநொடுத்தல்** – துடித்தல்; துடுக்காயிருத்தல்.

**நொடுநொடெனல்** – படபடத்தற்குறிப்பு; துடுக்காயிருத்தற்குறிப்பு.

**நொடை** – விலை; விற்கை; பலபண்டம்.

**நொடைமை** – விலை.

**நொண்டல்** – நொண்டுதல்; நுகர்தல்; முகத்தல்.

**நொண்டி** – முடமான ஆள் அல்லது விலங்கு; முடம்; காண்க: **நொண்டிநாடகம்;** பொய்க்காலால் நடப்போன்.

**நொண்டிக்கால்** – முடக்கால்; பொய்க்கால்.

**நொண்டிநாடகம்** – கள்வனொருவன் படையிலுள்ள குதிரையொன்றைத் திருட முயன்றபோது கால்தறியுண்டு பின் நல்வழிபெற்ற செய்தியைச் சிந்துச்செய்யுளால் புனைந்து கூறும் நாடகநூல்.

**நொண்டுதல்** – காலை ஊன்றாமல் கிந்தி நடத்தல்.

**நொதல்** – துன்புறுத்தல்.

**நொதி** – அருவருக்கத்தக்க சேறு.

**நொதித்தல்** – கொப்புளித்தல்; புளித்த மா முதலியன பொங்குதல்; ஈரமாதல்; நீர் முதலியவற்றில் ஊறிப்போதல்; நுரைத்தல்.

**நொதுக்கல்** – இளக்கமுள்ளது.
**நொதுத்தல்** – அழித்தல்; தளர்தல்.
**நொதுநொதுத்தல்** – குழைதல்; சீழ்கட்டுதல்; ஈரமாதல்; நுரைத்தல்.
**நொதுநொதெனல்** – புளித்த மா முதலியன பொங்குதற்குறிப்பு; நெகிழ்தற்குறிப்பு.
**நொதுமல்** – அயல்; புறக்கணிப்பு; மென்மை; அன்பிலார் கூற்று.
**நொதுமலர்** – அயலார்.
**நொதுமலாளர்** – அயலார்; புறங்கூறுவோர்.
**நொதுமெனல்** – விரைவுக்குறிப்பு.
**நொந்தகைமை** – வறுமை.
**நொந்தலை, நொந்தலைமை** – வலுவின்மை; வறுமை.
**நொந்தன்னம்** – நீர்விடாமையாற் பதனழிந்த சோறு.
**நொந்தார்** – பகைவர்.
**நொந்துதல்** – அழிதல்; தூண்டுதல்.
**நொப்பம்** – திறமை.
**நொப்பு** – தடைசெய்கை; குட்டி பால் குடியாமலிருக்க ஆட்டின் முலையிற் சுற்றும் ஓலை; வெள்ளப்பெருக்கில் மிதந்துவரும் செத்தை முதலியன.
**நொம்பலம்** – துன்பம்; நோவு.
**நொய்** – குறுநொய்; இலேசு; மென்மை; நுண்மை.
**நொய்தல்** – நுண்மை.
**நொய்து** – மெல்லியது; இழிவானது; விரைவு.
**நொய்தெனல்** – விரைவுக்குறிப்பு.
**நொய்ப்பம்** – திறமை; இலேசு.
**நொய்ம்மை** – கனமின்மை; மென்மை; நேர்த்தி; உறுதியின்மை; குற்றம்; நுண்மை; தளர்ச்சி; மனத்திடமின்மை; மன உருக்கம்; இழிவு.
**நொய்ய** – அற்பமான; வலியற்ற; நுட்பமான; மென்மையான; கடுமையாக.
**நொய்யசொல்** – வசைச்சொல்.
**நொய்யரிசி** – குறுநொய்.
**நொய்யவன்** – வறியவன்; இழிஞன்; எளியவன்; வலுவில்லான்.
**நொய்யெனல்** – நுண்மைக்குறிப்பு.
**நொய்வு** – காண்க: நொய்ம்மை; மனவருத்தம்.
**நொரு** – பயிரினடியில் முளைப்பது; காய்ப்பு மாறினபின் அரும்பும் பிஞ்சு.
**நொருக்குதல்** – காண்க: நொறுக்குதல்.
**நொருகை** – சிற்றுண்டி.
**நொருங்குதல்** – காண்க: நொறுங்குதல்.
**நொலை, நொலையல்** – பூரிகை என்னும் அப்பவருக்கம்.
**நொவ்வல்** – வருத்தம்.
**நொவ்விதாக** – விரைவாக.
**நொவ்வு** – மெலிவு; உடையுந்தன்மை; வாட்டம்; வருத்தம்; விரைவு.
**நொவ்வுதல்** – வருந்துதல்; மெலிதல்.
**நொழுந்துதல்** – நுழைத்தல்.
**நொள்குதல்** – சுருங்குதல்; முகத்தல்; இளைத்தல்.
**நொள்கெனல்** – அச்சக்குறிப்பு.
**நொள்ளல்** – பார்வையற்றுக் கண்குழிந்த நிலை; காண்க: நுளம்பு.
**நொள்ளாப்பு** – காண்க: நொவ்வல்.
**நொள்ளுதல்** – முகத்தல்; விழுங்குதல்.
**நொள்ளை** – குருடு; காண்க: நாகரவண்டு; விலங்குவகை; கைக்குழந்தை.
**நொள்ளைக்கண்** – பார்வை மாறிய கண்.
**நொள்ளைப்பயல்** – இழிஞன், புல்லன்.
**நொளநொளத்தல்** – குழைதல்; வழுவழுப்பாதல்.
**நொளில்** – காண்க: நொதி.
**நொளுக்கல்** – முற்றாத நிலை; இளம்பாக்கு.
**நொளுநொளெனல்** – குழைதற்குறிப்பு.
**நொளுவல்** – காண்க: நொளுக்கல்.
**நொற்பம்** – காண்க: நுட்பம்; எளிமை.
**நொறில்** – விரைவு; நுடக்கம்; ஒடுக்கம்; அருவருக்கத்தக்க சேறு.
**நொறு** – தின்பண்டம்.
**நொறுக்கரிசி** – நொறுங்கிய அரிசி; பாதி வெந்த சோறு.
**நொறுக்கித்தள்ளுதல்** – நன்றாயடித்தல்; மிகத் திட்டுதல்; திறமைகாட்டுதல்.
**நொறுக்கு** – பொடியாக்குகை; மெல்லுகை; நன்றாயடிக்கை.
**நொறுக்குதல்** – பொடியாக்கல்; நையப் புடைத்தல்; இரத்தக்காயம் பண்ணுதல்; மிகுதியாய் உண்ணுதல்.
**நொறுங்கு** – நொய்; தூள்; நுண்மை.
**நொறுங்குதல்** – பொடியாதல்; பின்னிரங்குதல்.
**நொறுநாட்டியம்** – சிறுகுற்றங்கள் காணுந் தன்மை.
**நொறுவை** – காண்க: நொறுவைப்பண்டம்.
**நொறுவைக்கள்ளன்** – வீண்செலவு செய்வோன்.
**நொறுவைக்கள்ளி** – வீண்செலவு செய்பவள்.
**நொறுவைப்பண்டம்** – சிற்றுண்டி.
**நொன்றி** – காண்க: நௌவி.
**நொன்னை** – நையாண்டி; பரிகாசம்.

## நோ

**நோ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ந்+ஓ); வலி; துன்பம்; நோய்; சிதைவு; வலுவின்மை.
**நோக்க** – ஓர் உவமவுருபு.

**நோக்கம்** – கண்; பார்வை; கிரகநோக்கு; தோற்றம்; உயர்ச்சி; அழகு; காவல்; கருத்து; அறிவு; கவனம்; விருப்பம்; குறிப்பு.

**நோக்கர்** – கழைக்கூத்தர்; பார்வையாளர்.

**நோக்கல்** – பார்த்தல்; காத்தல்; தேடுதல்.

**நோக்கனோக்கம்** – மனத்தால் நோக்கும் நோக்கம்.

**நோக்காடு** – நோவு; இராசநோக்காடு; மன நோவு; நோய்; வறுமை.

**நோக்காலுரைத்தல்** – பார்வையால் உணர்த்துதல்.

**நோக்கியநோக்கம்** – கண்களால் நோக்குகை.

**நோக்கு** – கண்; பார்வை; அழகு; கருத்து; அறிவு; பெருமை; விருப்பம்; கதி; விநோதக் கூத்துகளுள் ஒன்று; ஒருவகைச் செய்யுளுறுப்பு; ஓர் உவமவுருபு.

**நோக்குடைப்பொருள்** – குறிப்புப் பொருள்; குறிப்பு; மொழிகளால் அமைந்த சுவையுடைய பொருள்.

**நோக்குதல்** – பார்த்தல்; கருதுதல்; கவனித்தல்; திருத்துதல்; பாதுகாத்தல்; அருளுதல்; ஒத்தல்; ஒப்பிட்டுப் பார்த்தல்; படித்தல்; விரும்புதல்; கண்காணித்தல்.

**நோக்குவித்தை** – கண்கட்டுவித்தை.

**நோக்கெதிர்நோக்குதல்** – தலைவன் நோக்கிய விடத்துத் தலைவி எதிர்நோக்குதல்.

**நோஞ்சல்** – மெலிவு.

**நோஞ்சான், நோஞ்சி(சை)** – நோய் முதலியவற்றால் மெலிந்தவன்.

**நோட்டக்காரன்** – நாணயம் பரிசோதிப்போன்; நாணயம், பொன், மணி முதலியவற்றின் தன்மைகளை அறிந்தவன்.

**நோட்டம்** – நாணயசோதனை; கணக்கு; விலை; மதிப்பு; பொன், மணி முதலியவற்றின் சோதனை; பார்வை; போட்டி; வெல்ல முயலுகை.

**நோட்டம்பார்த்தல்** – தகுதியறிதல்; மதித்தல்; மிகக் கண்டிப்பாயிருத்தல்.

**நோடாலம்** – உள்ளக்களிப்பு, உல்லாசம்; அதி நாகரிகம்; பரிகாசம்; புதுமை.

**நோண்டுதல்** – கிளறுதல்; முகத்தல்; குடைந் தெடுத்தல்; துருவி விசாரித்தல்; சிறுகத் திருடுதல்; பயிரைக் கிள்ளுதல்; ஒரு தொழிலைச் சிறிது சிறிதாகச் செய்தல்.

**நோணாவட்டம்** – சிறுகுற்றங்கள் காணுந்தன்மை.

**நோதல்** – பூடு முதலியவற்றிற்கு வரும் கேடு; துன்புறுதல்; நோயுறல்; வருந்துதல்; வறுமைப் படுதல்; பதனழிதல்; எழுத்து முதலியவற்றின் மழுங்கல்; சாயம் சிதறுகை; வறுமை; வெறுத்தல்.

**நோதலை** – வறுமை; பூடு முதலியவற்றிற்கு வரும் கேடு.

**நோதிறம்** – முல்லை பாலைகட்குரிய அவலப் பண்வகை.

**நோப்படுதல்** – நோய்ப்படுதல்; மெலிதல்.

**நோப்பாளம்** – சினம்.

**நோம்பு** – காண்க: **நோன்பு.**

**நோம்புக்கயிறு** – காண்க: **காப்புநாண்.**

**நோம்புதல்** – காண்க: **நேம்புதல்.**

**நோய்** – துன்பம்; வருத்தம்; பிணி; குற்றம்; அச்சம்; நோவு.

**நோய்ச்சல்** – நோய்கொள்ளல்; மெலிந்தவர்; நோய்.

**நோய்ஞ்சல்** – மெலிந்தவர்; நோய்.

**நோய்ஞ்சி** – காண்க: **நோயாளி.**

**நோய்த்தல்** – பிணியால் வருந்துதல்; மெலிதல்; வாடுதல்; சாரமற்றுப்போதல்.

**நோய்முகன்** – சனி.

**நோய்விழுதல்** – செடிகளில் பூச்சிபிடிக்கை.

**நோயாளி** – பிணியாளன்.

**நோயுள்ளதீட்டு** – நோவோடு கூடிய மாதவிடாய்.

**நோல்** – நோன்புக்கிரியை.

**நோல்தல்** – நோற்றல்; பொறுத்தல்.

**நோலாமை** – செய்த பாவத்திற்கு வருந்தாமை.

**நோலுதல்** – காண்க: **நோல்தல்.**

**நோலை** – எள்ளுருண்டை; எட்கசிவு.

**நோவல்** – அப்பம்.

**நோவாளி** – நோவுள்ளான்; வறிஞன்.

**நோவு** – நோய்; துன்பம்; மகப்பேற்றுவலி; வலி; இரக்கம்.

**நோவுசாத்துதல்** – பெரியோர் நோய்வாய்ப் படுதல்.

**நோவெடுத்தல்** – மகப்பேற்றுவலி உண்டாதல்.

**நோழிகை** – நெசவுநூலின் தாறு.

**நோளை** – பிணியுண்ட நிலை.

**நோற்பார்** – தவம்செய்பவர்.

**நோற்பாள்** – சமணப் பெண்துறவி.

**நோற்பு** – பொறுமை; தவஞ்செய்கை.

**நோற்றல்** – பொறுத்தல்; விரதமிருத்தல்; தவஞ் செய்தல்.

**நோறு** – வாய்.

**நோன்பி** – விரதி.

**நோன்பிருத்தல்** – விரதங்கொள்ளுதல்.

**நோன்பு** – தவம்; விரதம்.

**நோன்புதுறத்தல்** – பட்டினிகிடந்து மறுநாள் உண்ணுதல்.

**நோன்புநோற்றல், நோன்புபிடித்தல்** – விரதம் மேற்கொள்ளுதல்.

**நோன்புயர்தல்** – காண்க: **நோன்புதுறத்தல்.**

**நோன்மை** – பொறுமை; வலிமை; பெருந்தன்மை; தவம்.

**நோன்றல்** – பொறுத்தல்; தள்ளல்; நிலைநிறுத்தல்; துறத்தல்; தவஞ்செய்தல்.

**நோனாமை** – தவஞ்செய்யாமை; ஆற்றாமை; அழுக்காறு.

**நோனாவட்டம்** – காண்க: **நோணாவட்டம்.**

**நோனார்** – ஆற்றாதார்; பகைவர்; தவமில்லார்.

# நௌ

**நௌ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ந்+ஔ); மரக்கலம்.

**நௌகரிமானியம்** – ஊழியத்திற்காக விடப்படும் மானியம்.

**நௌவி** – மான்.

# ப

**ப** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+அ); இருபதில் ஒரு பாகத்தைக் காட்டுமொரு கீழ்வாயிலக்கக் குறி; பஞ்சமம் எனப்படும் இளியிசையின் எழுத்து.

**பஃதி** – பகுப்பு; வேறுபாடு; திறை; வருவாய்; தாளிகையின் வரிசை எண்.

**பஃது** – பத்து.

**பஃபத்து** – நூறு.

**பஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா** – பல தாழிசைகளோடு மற்றையுறுப்புகளையும் பெற்றுவரும் கொச்சகக் கலிப்பாவகை.

**பஃறி** – ஓடம்; மரக்கலம்; இரேவதிநாள்.

**பஃறியர்** – நெய்தல்நில மக்கள்.

**பஃறொடை, பஃறொடைவெண்பா** – நான்கடியின் மிக்குவரும் வெண்பா.

**பக்கக்கால்** – உத்திரத்தின்மேல் வைக்கப்படும் பக்கக் குத்துக்கால்; பக்கத்துணை.

**பக்ககன்** – கூட்டாளி.

**பக்கச்சுவர்** – கட்டடத்தின் இரண்டு பக்கங்களிலும் எழுப்பப்படுஞ் சுவர்.

**பக்கச்சொல்** – பக்கத்திலிருப்பவர்கள் சொல்லும் சொல்; துணைச்சொல்; தகுதிபற்றியும் வழக்குப்பற்றியும் வழங்கும் சொற்கள்.

**பக்கச்சொல்லாளி** – துணைநின்று பேசுவோன்.

**பக்கசூலை** – சூலைநோய்; துன்பம்.

**பக்கஞ்செய்தல்** – ஒளிவிடுதல்.

**பக்கடுத்தல்** – நொறுங்குதல்.

**பக்கணம்** – ஊர்; வேடர்வீதி; அயல்நாட்டுப் பண்டம் விற்கும் இடம்; சிற்றுண்டி; தின்பண்டம்.

**பக்கத்தார்** – அயலார்; நாட்டவர்; அடுத்தவர்; கட்சிக்காரரர்.

**பக்கத்துணை** – பக்க உதவி.

**பக்கத்துமீட்சி** – யாண்டுத் தீயில்லை ஆண்டுப் புகையுமில்லை என்பதுபோல் துணிபொருள் ஏதுவின் மறுதலையுரை.

**பக்கதன்மம்** – துணிபொருட்கு இடனாயுள்ள பக்கத்தின் தன்மை.

**பக்கப்பருத்தல்** – மிகப் பருத்தல்.

**பக்கப்பாட்டு** – துணைப்பாட்டு.

**பக்கப்பிளவை** – முதுகந்தண்டருகில் விலாப் பக்கத்தில் வரும் பிளவைக்கட்டி.

**பக்கப்போலி** – தருக்கத்தில் பக்கத்தின் ஆபாசம்.

**பக்கம்** – அருகு; இடம்; பாரிசம்; நாடு; வீடு; விலாப்புறம்; வால்; அரசுவா; சிறகு; அம்பிறகு; நட்பு; அன்பு; சுற்றம்; கொடிவழி, வமிசம்; சேனை; பதினைந்து திதிகொண்ட காலம்; திதி; கூறு; நூலின் பக்கம்; கோட்பாடு; அனுமானத்தின் உறுப்பினுள் மலை நெருப்புடைத்து என்றதுபோன்ற உறுதிசெய் வசனம்; துணிபொருள் உள்ளவிடம்; தன்மை; கையணி; ஒளி; நரை; உணவு.

**பக்கம்படுதல்** – ஒருசார்பு பற்றியிருத்தல்.

**பக்கர்** – இனத்தார்.

**பக்கரசம்** – தேன்.

**பக்கரை** – அங்கவடி; சேணம்; துணிப்பை.

**பக்கல்** – பக்கம்; இனம்; நாள்.

**பக்கவழி** – சுற்றுவழி; குறுக்குவழி.

**பக்கவாட்டு** – பக்கங்களிற் சார்ந்துள்ளது; நேர் சம்பந்தமற்றது.

**பக்கவாத்தியம்** – வாய்ப்பாட்டுக்குத் துணையான இசைக்கருவிகள்.

**பக்கவாதம்** – ஒருதலைப்பக்கமாகப் பேசுதல்; கைகால்களை அசைவற்றதாகச் செய்யும் நோய்.

**பக்கவாயு** – கல்லீரலின் நோய்வகை; அண்டவாயு; பக்கவாதம்.

**பக்கவெட்டுப்போடுதல்** – கூச்சங்காட்டுதல்.

**பக்கவேர்** – பக்கத்திற் செல்லும் வேர்.

**பக்கறை** – துணியுறை; குழப்பம்; பல்லில் கறுப்புக்கறை ஏற்றுகை; பை.

**பக்காத்திருடன்** – பேர்போன திருடன்.

**பக்கி** – பறவை; ஒன்றும் ஈயாதவன்; குதிரை வண்டி.

**பக்கிசைத்தல்** – ஒலி விட்டிசைத்தல்; வேறு படுத்திக் கூறுதல்.

**பக்கிடுதல்** – வெடித்தல்; வடுப்படுதல்; திடுக்கிடுதல்.

**பக்கிணி** – ஓர் இரவும் அதற்கு முன்பின்னுள்ள இருபகல்களும்.

**பக்கிராசன்** – பறவைகளுக்கு அரசனான கருடன்.

**பக்கிரி** – முகமதியப் பரதேசி; பிச்சைக்காரன்.

**பக்கு** – பிளவு; கவர்படுகை; பை; மரப்பட்டை; புண்ணின் அசறு; பற்பற்று; பொருக்கு.

**பக்குப்பக்கெனல்** – அச்சக்குறிப்பு; மிகுதிக் குறிப்பு; திடீரென்று எழும் ஒலிக்குறிப்பு; வெடிக்கச் சிரித்தற்குறிப்பு; அடுத்தடுத்து உண்டாகும் ஒலிக்குறிப்பு.

**பக்குவகாலம்** – தகுதியான காலம்; பெண் பூப் படையுங் காலம்.

**பக்குவசாலி** – தகுதியுள்ளவன்; ஆன்மபக்குவம் உள்ளவன்.

**பக்குவஞ்சொல்லுதல்** – மன்னிப்புக் கேட்டல்; செய்வகை கேட்டல்.

**பக்குவப்படுதல்** – பூப்படைதல்; தகுதியாதல்; ஆன்மபரிபாகம் அடைதல்.

**பக்குவம்** – தகுதி; முதிர்ச்சி; ஆத்துமபரிபாகம்; ஆற்றல்; மன்னிப்பு; பூப்படைகை.

**பக்குவமாதல்** – காண்க: **பக்குவப்படுதல்.**

**பக்குவர்** – கருமகாண்டிகர், ஞானகாண்டிகர், பக்திகாண்டிகர் எனப்படும் வைதிக ஒழுக்கத் தவர்; மருத்துவர்.

**பக்குவன்** – தகுதியுள்ளோன்.

**பக்குவாசயம்** – இரைப்பை.

**பக்குவி** – தகுதியுடையவன்(ள்); பூப்படைந்த வள்.

**பக்குவிடுதல்** – பிளத்தல்; தோலறுதல்.

**பக்கெனல்** – சிரிப்பின் ஒலிக்குறிப்பு; அச்சம், வியப்பு முதலியவற்றின் குறிப்பு; வெடித்தற் குறிப்பு; விரைவுக்குறிப்பு.

**பக்தன்** – தெய்வபக்தியுள்ளவன்.

**பக்தாதாயம்** – நெல்வருவாய்.

**பக்தி** – கடவுள், குரு முதலியோரிடத்து வைக்கும் அன்பு; வழிபாடு.

**பகட்டன்** – ஆடம்பரக்காரன்.

**பகட்டு** – ஆடம்பரம்; தற்பெருமை; ஒளி; கவர்ச்சி; ஏமாற்று; அதட்டு.

**பகட்டுதல்** – வெளிமினுக்குதல்; வேடங்காட்டு தல்; ஆடம்பரங்காட்டுதல்; வெருட்டுதல்; தற்புகழ்ச்சி செய்தல்; அருவருத்தல்; பொலிவு பெறுதல்; மயக்குதல்; வஞ்சித்தல்; கண்மயங் கப் பண்ணுதல்; அதட்டுதல்.

**பகட்டுமுல்லை** – முயற்சியான் வந்த இளைப் பாலும் பாரம் பொறுத்தலாலும் மனைக் கிழவனை உழுகின்ற எருதுடன் உவமிக்கும் புறத்துறை.

**பகடக்காரன்** – எத்தன்; வீண் ஆரவாரக்காரன்; சூழ்ச்சிக்காரன்.

**பகடம்** – தற்பெருமை; அதட்டு; நிறங் கொடுக்கை; சிலம்பம்; வெளிவேடம்.

**பகடி** – பரிகாசம்; விகடம்; சிரிப்பு உண்டாக்கு பவன்; வெளிவேடக்காரன்; கூத்தாடி; கூத்துவகை; வினை.

**பகடு** – பெருமை; பரப்பு; வலிமை; எருது; எருமைக்கடா; ஏர்; ஆண்யானை; தெப்பம்; ஓடம்; சந்து.

**பகடை** – சூதின் தாயத்தில் ஒன்று; எதிர்பாராத நற்பேறு; சக்கிலியச் சாதிப்பெயர்.

**பகடையடித்தல்** – இடம்பச் சொல் சொல்லு தல்.

**பகண்டை** – கவுதாரிவகை; சிவப்பறவை; விகடப் பாடல்; நறையால் என்னும் பூடுவகை.

**பகந்தரம்** – மலவாயில் புரைவைத்த புண்.

**பகபகெனல்** – தீ எரியும்போது உண்டாகும் ஒலிக் குறிப்பு; பசியால் வயிறு எரிதற்குறிப்பு.

**பகம்** – ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியமென்னும் அறுகுணம்; பெண்குறி; கொக்கு; குயில்; காண்க: **கொக்குமந்தாரை;** காக்கட்டான்கொடி.

**பகர்** – ஒளி; காண்க: **பங்கம்பாளை.**

**பகர்ச்சி** – சொல்.

**பகர்த்துதல்** – பெயர்த்து எழுதுதல்.

**பகர்தல்** – சொல்லுதல்; விற்றல்; கொடுத்தல்; உணர்த்துதல்; ஒளிர்தல்; பெயர்தல்.

**பகர்நர்** – விற்குநர்.

**பகரம்** – ஒளி; அழகு; பதிலாக.

**பகரி** – காண்க: **ஆவிரை.**

**பகரிப்பு** – பகட்டு; ஒளி.

**பகல்** – பகுக்கை; நடு; நடுவுநிலை; நுகத்தாணி; முகூர்த்தம்; அரையாமம்; மத்தியானம்; பகற்போது; பிறரோடு கூடாமை; கட்சி; இளவெயில்; அறுபது நாழிகைகொண்ட நாள்; ஊழிக்காலம்; சூரியன்; ஒளி; வெளி; கமுக் கட்டு.

**பகல்செய்வான்** – பகற்பொழுது செய்யும் சூரியன்.

**பகல்மாறு** – பகற்பொழுதில்.
**பகல்மானம்** – பகற்பொழுது.
**பகல்வத்தி** – வாணவகை.
**பகல்வாயில்** – பகலின் வாயிலான கிழக்குத்திசை.
**பகல்விளக்கு** – பகலில் மரியாதைக்காக இடும் விளக்கு.
**பகல்வினையாளன்** – நாவிதன்.
**பகல்வெய்யோன்** – நடுவுநிலை விரும்புவோன்.
**பகல்வெள்ளிகாட்டுதல்** – காணமுடியாத தொன்றனைக் காட்ட முயலுதல்.
**பகல்வெளிச்சம்** – பகலொளி; போலிநடிப்பு.
**பகல்வேடக்காரன்** – பகற்காலத்தில் பல வேடம் பூண்டு பிழைப்போன்; வெளிவேடக்காரன்.
**பகல்வேடம்** – பகற்காலத்து உருவமாற்றிக் கொள்கை; பகட்டு நடிப்பு.
**பகலங்காடி** – காண்க: **நாளங்காடி.**
**பகலடி** – சிங்கியடித்தல்.
**பகலவன்** – சூரியன்; பரணிநாள்.
**பகலாணி** – நுகத்தாணி.
**பகலிருக்கை** – நாளோலக்க மண்டபம்; தனிமை இடம்.
**பகலோன்** – சூரியன்.
**பகவதி** – அறக்கடவுள்; துர்க்கை; பார்வதி; தாம்பிரவருணி ஆறு.
**பகவதிநாள்** – பூரநாள்.
**பகவன்** – பகம் என்பதனால் குறிக்கப்படும் ஆறு குணங்களை உடைய பெரியார்; சிவன்; திருமால்; தேவன்; பிரமன்; புத்தன்; அருகன்; சூரியன்; குரு; திருமால் அடியாரான முனிவர்.
**பகவான்** – பகம் என்பதனால் குறிக்கப்படும் ஆறு குணங்களை உடைய பெரியார்; பன்னிரு சூரியருள் ஒருவன்; சிவன்.
**பகவிருக்கம்** – காண்க: **நிலக்கடம்பு.**
**பகவு** – துண்டு; பங்கு; வெடிப்பு.
**பகழி** – அம்பு; அம்புக்குதை.
**பகழித்திரள்** – அம்புத்திரள்.
**பகற்கள்ளன்** – பகலிற் கொள்ளையிடுவோன்; பிறர்பொருளை வஞ்சித்துக் கவர்பவன்.
**பகற்குருடு** – பகலில் குருடான கூகை.
**பகற்குறி** – களவொழுக்கத்தில் பகற்காலத்தே தலைவனுந் தலைவியும் சந்திக்கக் குறிப்பிட்ட இடம்.
**பகற்கொள்ளை** – பட்டப்பகலிற் கொள்ளை யடிக்கை.
**பகற்பண்** – பகற்காலத்திற் பாடப்படும் பண்கள்.
**பகற்பாடு** – பகற்காலம்; பிழைப்பிற்காகப் பகலில் செய்யும் வேலை.
**பகற்போது** – பகற்காலம்; பகற்காலத்தில் மலரும் மலர்.
**பகற்றீவேட்டல்** – பகலில் பகைவரூர்களை எரித்தல்.
**பகன்றை** – கிலுகிலுப்பைச்செடி; சிவதைக் கொடி; சீந்திற்கொடி; நறையால் என்னும் பூடுவகை.
**பகா** – தூதுவளை.
**பகாநிலை** – பிரிவுபடாத தன்மை.
**பகாப்பதம்** – பகுக்கவியலாத சொல்.
**பகாப்பொருள்** – பிரிக்கப்படாத கடவுள்.
**பகாரம்** – அழகு.
**பகாலம்** – மண்டையோடு.
**பகாலி** – கபாலமுடைய சிவன்.
**பகாவின்பம்** – வீட்டின்பம்.
**பகிடி** – காண்க: **பகடி.**
**பகிர்** – பங்கு; துண்டம்; வெடிப்பு; வெளிப்புறம்.
**பகிர் (வி)** – பங்கிடு.
**பகிர்த்தேசம்** – ஊர்ப்புறம்; மலங்கழித்தற்குரிய இடம்.
**பகிர்தல்** – பங்கிடுதல்; பிளத்தல்; பிரிதல்.
**பகிர்விடுதல்** – பிளத்தல்.
**பகிரங்கம்** – வெளிப்படை.
**பகிரண்டம்** – வெளி அண்டம்.
**பகினி** – உடன்பிறந்தாள்.
**பகீரதப்பிரயத்தனம்** – பெருமுயற்சி; கங்கையைக் கொண்டுவருவதற்குப் பகீரதன் செய்த முயற்சி.
**பகீரதி** – பகீரதனால் கொண்டுவரப்பட்ட கங்கை.
**பகீரெ(லெ)னல்** – அச்சக்குறிப்பு; திடீரென மனக் கலக்கமுறுதற் குறிப்பு.
**பகு** – அதிகமான.
**பகுத்தல்** – பங்கிடுதல்; வகைப்படுத்தல்; தெளி வாய்க் கூறுதல்; கொடுத்தல்; வெட்டுதல்; பிடுங்குதல்; கோது நீக்குதல்.
**பகுத்தறிதல்** – பிரித்தறிதல்; நன்மைதீமை அறிதல்; பொருள்களை வகைப்படுத்தி உணர்தல்.
**பகுத்தறிவு** – நன்மைதீமை அறியும் அறிவு.
**பகுத்துண்ணுதல்** – ஏழைகள் முதலியோருக்குப் பங்கிட்டுக் கொடுத்து உண்ணுதல்.
**பகுத்துப்பார்த்தல்** – ஒரு பொருளைச் செவ்வையாக ஆராய்ந்து பார்த்தல்.
**பகுத்துவம்** – மிகுதி; இசையில் மிக்குவரும் சுரம்.
**பகுதம்** – நிகழ்ந்துகொண்டிருப்பது.
**பகுதல்** – பிளவுபடுதல்; பாகமாய்ப் பிரித்தல்.
**பகுதானிய** – காண்க: **வெகுதான்ய.**
**பகுதி** – சொல்; முதனிலை; பகுப்பு; வேறுபாடு; திறை; வருவாய்; மூலப்பிரகிருதி; தன்மை; படை; மந்திரி; கூட்டம்; ஒரு சந்தவகை; புத்தகத்தின் வரிசை எண்; உரிமைப்பட்டது.

**பகுதிக்கிளவி** – காண்க: **பக்கச்சொல்.**

**பகுதிகட்டுதல்** – இறைகொடுத்தல்; பங்கிடுதல்.

**பகுதிப்பொருள்விகுதி** – தனக்கு ஒரு பொருளின்றிப் பகுதியின் பொருளிலேயே வரும் விகுதி.

**பகுப்பு** – பிரிவு.

**பகுபதம்** – பகுதி, விகுதி முதலிய உறுப்புகளாகப் பிரிக்கக்கூடிய சொல்.

**பகுபதவுறுப்பு** – பகுதி, விகுதி, இடைநிலை, சந்தி, சாரியை, விகாரம் என்னும் சொல்லுறுப்புகள்.

**பகுமூத்திரம்** – நீரிழிவு.

**பகுவசனம்** – பன்மை.

**பகுவாய்** – பிளந்த வாய்; அகன்ற வாய்; பிழா, தாழி.

**பகுவொளி** – பேரொளி.

**பகுளம்** – மிகுதி; தேய்பிறை.

**பகேசிகை** – காயாத மரம்.

**பகை** – எதிர்ப்பு; பகைவன்; மாறுபாடு; வெறுப்பு; தீங்கு; காண்க: **பகைநரம்பு;** வேற்றரசருடன் பகைகொள்ளுகை; கோளின் பகைவீடு; காமகுரோதம் முதலிய உட்பகை.

**பகை (வி)** – எதிர்.

**பகைசாதித்தல்** – வன்மங்கொள்ளுதல்.

**பகைஞன்** – காண்க: **பகைவன்.**

**பகைத்தல்** – பகைகொள்ளல்; முரணல்; அடித்தல்; சார்தல்.

**பகைத்தி** – பகைப்பெண்.

**பகைத்தொடை** – காண்க: **முரண்தொடை;** மாறுபட்டவற்றின் சேர்க்கை.

**பகைதணிவினை** – தூது செல்லுதல்.

**பகைநரம்பு** – யாழில் நின்ற நரம்புக்கு மூன்று ஆறாவதாயுள்ள எதிர்நரம்பு.

**பகைப்புலம்** – எதிரியின் இடம்; போர்க்களம்.

**பகைமுனை** – போர்க்களம்.

**பகைமேற்செல்லல்** – போருக்குச் செல்லுதல்.

**பகைமை** – எதிர்ப்பு.

**பகையகம்** – போர்க்களம்; எதிரியின் இடம்.

**பகையாக்கல்** – வேற்றரசருடன் பகைகொள்ளுகை.

**பகையாளி** – காண்க: **பகைவன்.**

**பகைவர்க்கம்** – காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என ஆன்மாவின் உட்பகைகளாயுள்ள ஆறு குற்றங்கள்.

**பகைவன்** – எதிரி.

**பகோளம்** – வானமண்டலம்.

**பங்கக்கேடு** – இகழ்ச்சி, அவமானம்.

**பங்கசம், பங்கசாதம்** – தாமரை.

**பங்கதாளம்** – தாளவகை.

**பங்கப்படுதல்** – சிறுமையடைதல்.

**பங்கம்** – தோல்வி; குற்றம்; அவமானம்; வெட்கம்; விகாரம்; கேடு; நல்லாடை; சிறுதுகில்; இடர்; துண்டு; பங்கு; பிரிவு; காண்க: **பங்கதாளம்;** குளம்; அலை; சேறு; புழுதி; பாவம்; முடம்; பந்தயம்.

**பங்கம்பாலை(ளை)** – காண்க: **ஆடுதின்னாப்பாளை;** அரிவாள்முனைப்பூண்டு.

**பங்கமழிதல்** – மானமிழத்தல்.

**பங்கயச்செல்வி** – தாமரையிலுள்ள திருமகள்.

**பங்கயத்தவன்** – பிரமன்.

**பங்கயப்படு** – தாமரைமடு.

**பங்கயப்பீடிகை** – புத்தரின் பாதங்கள் அமைந்த பதுமபீடம்.

**பங்கயம்** – சேற்றில் தோன்றும் தாமரை; தாமரை வடிவான ஆயுதவகை; நாரை.

**பங்கயன்** – கதிரவன்; தாமரையில் தோன்றிய நான்முகன்.

**பங்கயனாள்** – பிரமனுக்குரிய உரோகிணிநாள்.

**பங்கயாசனன்** – காண்க: **பங்கயன்.**

**பங்கவாசம்** – சேற்றில் வாழும் நண்டு.

**பங்களப்படை** – பதர்போன்ற கூட்டுப்படை.

**பங்களம்** – பதர்க்குவியல்; பயனற்றது; காண்க: **பங்களப்படை.**

**பங்களன்** – வங்காள நாட்டான்.

**பங்கறை** – அழகின்மை; அழகில்லாதவர்.

**பங்கன்** – பாகமுடையவன்; இவறலன், ஒன்றுங் கொடாதவன்.

**பங்காரம்** – பொன்; வரம்பு.

**பங்காரு** – பொன்.

**பங்காலி** – வௌவால்.

**பங்காளம்** – ஒரு நாடு; ஒரு பண்வகை.

**பங்காளி** – கூட்டாளி; தாயாதி; வங்காள நாட்டான்.

**பங்கி** – ஆடவரின் மயிர்; விலங்குகளின் மயிர் வகை; பாகம் பெற்றுக்கொள்வோன்; சாதிலிங்கம்.

**பங்கிடுதல்** – பகுத்துக்கொடுத்தல்; ஏற்படுத்துதல்.

**பங்கித்தல்** – வெட்டுதல்; பகுத்தல்.

**பங்கியடித்தல்** – கஞ்சாப்புகை குடித்தல்; கஞ்சா இளகம் உண்ணுதல்.

**பங்கிலம்** – தெப்பம்.

**பங்கீடு** – பங்கிடுதல்; கணக்கு; திட்டம்; உபாயம்.

**பங்கு** – பாகம்; பாதி; பக்கம்; நிலம்; முடம்; முடவன்; சனி; தலைப்பாகை.

**பங்குக்காணி** – கூட்டுப்பங்கான நிலம்.

**பங்குக்காரன்** – பங்குக்குடையவன்; ஊர்களில் மிகுதியான நிலமுடையவன்.

**பங்குசம்** – தலைக்கோலம்.
**பங்குதாரன்** – காண்க: **பங்குக்காரன்.**
**பங்குபாகம்** – பங்கு; பாகப்பிரிவினை.
**பங்குரம்** – ஆற்றுமுடக்கு; வளைவு.
**பங்குரை** – அதிவிடயம்.
**பங்குவழிநிலம்** – பங்குவழிப்படி நுகரும் பூமி.
**பங்குவாளி** – நிலக்கிழார்.
**பங்குவீதம்** – வீதாசாரப்படி; சமமாயுள்ள பங்கு.
**பங்குனி** – ஒரு மாதம்; உத்தரநாள்.
**பங்கேசம், பங்கேருகம்** – சேற்றில் தோன்றும் தாமரை.
**பச்சடம்** – காண்க: **பச்சவடம்.**
**பச்சடி** – ஒரு கறிவகை; பேறு, பாக்கியம்.
**பச்சரிசி** – நெல்லைப் புழுக்காமற் காயவைத்துக் குற்றின அரிசி; மாமரவகை; காண்க: **அம்மான் பச்சரிசி.**
**பச்சவடம்** – மேற்போர்வை, விரிப்பு, திரை முதலியவற்றுக்குப் பயன்படும் நீண்ட சீலை.
**பச்சாத்தாபம்** – செய்த குற்றத்தைக் குறித்து வருந்துதல்; இரக்கம்.
**பச்சிமகாண்டம்** – புது ஏற்பாடு.
**பச்சிமத்தோன்** – சனி.
**பச்சிமப்பிறை** – இளம்பிறை.
**பச்சிமம்** – மேற்கு; பின்புறம்; பின்பட்டது.
**பச்சியம்** – வியப்புக்குறிப்பு.
**பச்சிரும்பு** – உருகின இரும்பு.
**பச்சிலை** – பச்சையிலை; ஒரு மரவகை; பச்சிலைகளால் ஆகிய மருந்து; நறைக்கொடி; புகைச்சரக்கு; துகில்வகை.
**பச்சிலைப்பட்டு** – பசிய இலையுடைய பட்டு.
**பச்சிலைமருந்து** – மருந்தாகப் பயன்படும் இலை.
**பச்சிலையோணான்** – காண்க: **பச்சோந்தி.**
**பச்சிறைச்சி** – புதிய ஊன்; ஆறாப் புண்.
**பச்சுடம்பு** – தாய்க்குக் குழந்தை பிறந்த பிறகு இருக்கும் புண்ணுடல்; குழந்தையின் இளவுடல்; அம்மைப்புண் காயாத உடம்பு.
**பச்சுதி** – நழுவுகை.
**பச்சூன்** – காண்க: **பச்சிறைச்சி.**
**பச்செனல்** – பசுமையாதற்குறிப்பு; சிறப்பாயிருத்தற்குறிப்பு.
**பச்செனவு** – பச்சை; ஈரம்; பொலிவு.
**பச்சை** – பசுமை நிறம்; மரகதம்; பயறு; திருமணத்தில் நான்காம் நாளில் மணமக்களை வாழ்த்திப் பரிசு வழங்கும் சடங்கு; வெற்றிலை; மணப்புல்வகை; சாயத்துக்கு உதவும் பூடுவகை; பச்சைகுத்திய அடையாளம்; பசப்புநிறம்; திருமால்; புதன்; நன்கொடை; கப்பம்; கைம்மாறு; உணவுப் பொருள்; வேகாதது; உலராதது; முற்றாதது; ஆறாதது; தூய்மை பண்ணப்படாதது; தோல்; போர்வை; குளிர்ச்சி; கெட்ட சொல்; வெளிப்படையானது; மிகுதி; இலாபம்; அநாகரிகம்; பயிர்கட்கு வரும் நோய்வகை.
**பச்சைக்கருப்பூரம்** – ஒரு கருப்பூரவகை.
**பச்சைக்கல்** – மரகதம்; சுடாத செங்கல்; கல்வகை; காதணிவகை.
**பச்சைக்கிளி** – கிளிவகை; வெட்டுக்கிளி; சிறுவர் விளையாட்டுவகை.
**பச்சைக்குப்பி** – மதுவடைக்குங் குப்பிவகை.
**பச்சைக்குழந்தை** – இளங்குழவி.
**பச்சைக்கூடு** – பருவுடல்.
**பச்சைக்கொம்பு** – இஞ்சி.
**பச்சைக்கோடு** – ஒன்பான் மணிகளுள் ஒன்றான மரகதம்.
**பச்சைகட்டு** – சிறு நன்கொடை; சாந்தி செய்யும் மருந்து; தற்கால சாந்தி.
**பச்சைகுத்துதல்** – உடலிற் பச்சைக்கோலம் பதித்தல்.
**பச்சைச்சடையன்** – பச்சைநிறச் சடையுடைய வயிரவன்.
**பச்சைத்தண்ணீர்** – காய்ச்சாத குளிர்ந்த நீர்.
**பச்சைத்தேரை** – தேரைவகை.
**பச்சைத்தோல்** – பதனிடாத் தோல்; புண் ஆறின பின்பு தோன்றும் புதுத்தோல்.
**பச்சைநாடான்** – காண்க: **பச்சைவாழை.**
**பச்சைப்பசும்பொய்** – காண்க: **பச்சைப்பொய்.**
**பச்சைப்பசேரெனல்** – பசுமையாயிருத்தற்குறிப்பு.
**பச்சைப்படாம்** – ஒரு நீண்ட சீலைவகை.
**பச்சைப்பதம்** – தானியத்தின் முற்றாப் பருவம்; நன்றாய் வேகாத நிலைமை.
**பச்சைப்பயறு** – பாசிப்பயறு; உழுந்துவகை.
**பச்சைப்பல்லக்கு** – பாடை.
**பச்சைப்பாம்பு** – ஒரு பாம்புவகை.
**பச்சைப்பால்** – காய்ச்சாத பால்.
**பச்சைப்பானை** – சுடாத பானை.
**பச்சைப்பிள்ளை** – பிறந்த குழந்தை; அறியாப் பிள்ளை.
**பச்சைப்பிள்ளைத்தாய்ச்சி** – கைக்குழந்தையை உடைய தாய்.
**பச்சைப்புண்** – ஆறாத புண்.
**பச்சைப்புளுகன்** – வீணாக இடம்பம் பேசுவோன்; பெரும்பொய்யன்.
**பச்சைப்பெருமாள்** – பச்சைநிறமுள்ள திருமால்; ஒரு நெல்வகை.
**பச்சைப்பொய்** – முழுப்பொய்.
**பச்சைபச்சையாய்ப்பேசுதல்** – இழிசொற்களை வெளிப்படையாகச் சொல்லுதல்.
**பச்சைபிடித்தல்** – செழிக்கத் தொடங்குதல்.

**பச்சைமண்** – ஈரமுள்ள மண்; மட்பாண்டங்களுக்குப் பிசைந்த மண்; இளங்குழந்தை.

**பச்சைமரம்** – உயிருள்ள மரம்; வேலைக்குத் தகுதியாக்கப்படாத மரம்.

**பச்சையன்** – பசிய நிறமுள்ள திருமால்.

**பச்சையாய்ப்பேசுதல்** – வெளிப்படையாய்ப் பேசுதல்; காண்க: **பச்சைபச்சையாய்ப்பேசுதல்.**

**பச்சையிரும்பு** – உருக்கி வார்க்காத இரும்பு; தேனிரும்பு.

**பச்சையெழுதுதல்** – திருமணம் முதலிய சிறப்பு நாள்களில் கொடுத்த நன்கொடைகளுக்குக் கணக்கெழுதல்.

**பச்சைவடம்** – ஒரு சேலைவகை.

**பச்சைவாழை** – ஒரு வாழைவகை.

**பச்சைவில்** – வானவில்; மன்மதன்வில்.

**பச்சைவெட்டு** – தூய்மை செய்யப்படாத மருந்து; வெளிப்படை; பழுக்காத காய்.

**பச்சைவெண்ணெய்** – காய்ச்சாத பாலிலிருந்து எடுக்கும் வெண்ணெய்.

**பச்சைவெயில்** – மாலைக்காலத்து வெயில்.

**பச்சோந்தி** – ஓணான்வகை.

**பச்சோலை** – காயாத ஓலை.

**பசகன்** – சமையற்காரன்.

**பசண்டை** – பசுமை; ஈரம்; நன்னிலை.

**பசத்தல்** – பசுமையாதல்; காமத்தால் மேனி பசலைநிறமாதல்; ஒளிமங்குதல்; மங்கிப் போதல்; பொன்னிறங்கொள்ளுதல்.

**பசதன்** – சூரியன்; இந்திரன்; அக்கினி.

**பசந்தம்** – நேரம்.

**பசப்பு** – பசுமைநிறம்; பாசாங்கு; நிறவேறுபாடு; ஈரப்பற்று; சுகநிலை; வளம்.

**பசப்புதல்** – இன்முகங்காட்டி ஏய்த்தல்; அலப்புதல்.

**பசபசத்தல்** – தினவெடுத்தல்; முறுமுறுத்தல்.

**பசபசப்பு** – தினவு; அலப்புகை; கோள்.

**பசபசெனல்** – தினவெடுத்தற்குறிப்பு; அலப்புதற் குறிப்பு; மழைதூறற்குறிப்பு; மருண்டு பார்த்தற்குறிப்பு.

**பசமனத்திரம்** – காண்க: **மரமஞ்சள்.**

**பசல்** – சிறுவன்; காண்க: **பசலி.**

**பசலி** – கி.பி. 591 முதல் தொடங்கப்பட்டதும் அக்பர் பேரரசரால் நடைமுறைப்படுத்தப் பட்டதுமான ஓர் ஆண்டு.

**பசலை** – அழகுதேமல்; பொன்னிறம்; காமநிற வேறுபாடு; தலைவன் பிரிவால் வேறுபட்ட நிறம்; வருத்தம்; மனவருத்தம்; இளமை; கவலையின்மை; கீரைவகை.

**பசளி(ளை)** – ஒரு கீரைவகை; கோழிக்கீரை; பப்பாளி; உரம்; குழந்தை.

**பசளைக்கதை** – வீண்கதை.

**பசளைக்கலம்** – பச்சைப்பானை.

**பசளைமண்** – உரமுள்ள மண்.

**பசற்றனம்** – இளமைக்குணம்.

**பசறு** – பச்சிலைச் சாறு.

**பசனம்** – சமையல்; வழிபாடு.

**பசனை** – கடவுளைத் துதித்துப் பாடுதல்.

**பசாசம்** – பேய்; இரும்பு; ஓர் இணையா வினைக்கைவகை.

**பசாசரதம்** – பேய்த்தேர்.

**பசாசு** – பேய்.

**பசாடு** – மாசு.

**பசாரி** – விபசாரி.

**பசானம்** – ஒரு நெல்வகை; பசானநெல்லின் அறுவடைக்காலம்.

**பசி** – உணவுவேட்கை; வறுமை; தீ.

**பசித்தல்** – பசியெடுத்தல்.

**பசித்தீபனம்** – உணவுவேட்கை.

**பசிதகனி** – சோறு.

**பசிதம்** – சாம்பல்; திருநீறு.

**பசிப்பிணி** – பசியாகிய நோய்.

**பசிபட்டினி** – உண்ணாது வருந்துகை.

**பசியம்** – கயிறு.

**பசியாட்டி** – பசித்திருப்பவள்.

**பசியாற்றுதல், பசியாறுதல்** – உண்டு பசியைத் தணித்தல்; உண்பித்தல்.

**பசியான்** – பசுமைநிறத்தவன்.

**பசியெடுத்தல்** – பசியுண்டாதல்.

**பசியேப்பம்** – பசிமிகுதியால் உண்டாகும் தேக்கெறிவு.

**பசிரி** – பசளைக்கொடி.

**பசு** – ஆ; காளை; இடபராசி; விலங்கு; சிற்றுயிர், சீவான்மா; சாது; வேள்விக்குரிய ஆடு; பல்லாங்குழி ஆட்டத்தில் குழியில் விழுந்து ஒருங்குசேரும் ஆறு விதை.

**பசுக்கல்** – பலகைகளை இணைக்கை.

**பசுக்கற்கதவு** – பலகைகளால் இணைக்கப்பட்ட கதவு.

**பசுக்கற்சன்னல்** – மரத்தால் இழைத்துச் செய்த கதவுகளையுடைய சன்னல்.

**பசுக்காவலர்** – இடையர்; காண்க: **கோவைசியர்.**

**பசுக்கோட்டம்** – காண்க: **பசுமந்தை.**

**பசுகரணம்** – உயிர்களின் செயல்.

**பசுகாதம்** – மிருகபலி.

**பசுங்கதிர், பசுங்கதிர்க்கடவுள்** – பசுங்கதிரையுடைய சந்திரன்.

**பசுங்கர்(ரு)ப்பூரம்** – காண்க: **பச்சைக்கருப்பூரம்.**

**பசுங்கல்** – சந்தனம் அரைக்குங் கல்.

**பசுங்காய்** – முற்றாத தானியம்; இளங்காய்; பாக்குவகை.

**பசுங்கிளி** – பச்சைக்கிளி.

**பசுங்குடி** – மேன்மையான குடி; உழவன்.

**பசுங்குழவி** – இளங்குழந்தை.

**பசுங்கூட்டு** – மணக்கலவை.

**பசுங்கொடி** – அறுகம்புல்.

**பசுஞானம்** – ஆன்மசொரூப ஞானம்; சிற்றறிவு; ஆன்மநிலை.

**பசுத்துவம்** – சீவத்தன்மை.

**பசுத்தொழு** – மாட்டுக்கொட்டில்.

**பசுதருமம்** – காண்க: **பசுபுண்ணியம்**; புணர்ச்சி; இம்மை இன்பத்துக்காகச் செய்யும் செயல்.

**பசுதை** – விலங்குத்தனம்.

**பசுந்தமிழ்** – செந்தமிழ்.

**பசுந்தரை** – புல்தரை.

**பசுநரம்பு** – பெரும்பாலும் கெட்ட இரத்தத்தைக் கொண்டு செல்லும் இரத்தக்குழாய், சிரை.

**பசுநாகு** – கடாரிக்கன்று.

**பசுநிலை** – பசுக்கொட்டில்.

**பசுப்பட்டி** – பசுமந்தை.

**பசுப்புரை** – காண்க: **பசுநிலை**.

**பசுபதி** – ஆன்மாக்களுக்குத் தலைவனாகிய சிவபெருமான்.

**பசுபுண்ணியம்** – உயிர்களின்பொருட்டுச் செய்யும் அறச்செயல்.

**பசுபோதம்** – ஆன்மவறிவு.

**பசும்பட்டு** – நேர்த்தியான பட்டு.

**பசும்பதம்** – சமைத்தற்குரிய அரிசி முதலியன.

**பசும்பயறு** – பாசிப்பயறு.

**பசும்பிடி** – பச்சிலைமரம்.

**பசும்பிறப்பு** – சமணசமயங் கூறும் அறுவகைப் பிறப்புகளுள் மூன்றாவது.

**பசும்புண்** – புதுப்புண்.

**பசும்புல்** – பச்சைப்புல்; விளைபயிர்.

**பசும்பை** – வணிகர்கள் தோளில் மாட்டிக் கொள்ளும் நீண்ட பை.

**பசும்பொன்** – மாற்றுயர்ந்த பொன்; காண்க: **கிளிச்சிறை**.

**பசுமஞ்சள்** – மஞ்சள்வகை.

**பசுமந்தை** – ஆநிரை, பசுக்கூட்டம்.

**பசுமம்** – திருநீறு.

**பசுமை** – பச்சைநிறம்; குளிர்ச்சி; இளமை; அழகு; புதுமை; சாரம்; நன்மை; செவ்வி; உண்மை; பொன்னிறம்; செல்வம்; சால்வை வகை.

**பசுவதி** – சாது.

**பசுவன்** – பசுக்கன்றின் வயிற்றில் உள்ள பாலை உறையச்செய்யும் பை; கோரோசனை; கோலாட்ட விழாவில் காளைபோல் மண்ணால் செய்துவைத்துப் பெண்கள் வணங்கும் உருவம்.

**பசுவாசாரம்** – சத்திபூசை.

**பசுவெயில்** – மாலைவெயில்.

**பசேரெனல்** – பச்சைநிறமாயிருத்தல்.

**பசை** – ஒட்டும் பசை; பிசின்; சாரம்; ஈரம்; பக்தி; அன்பு; பற்று; இரக்கம்; பயன்; செல்வம்; கொழுப்பு; முழவின் மார்ச்சனைப் பண்டம்; உசவு.

**பசைத்தல்** – மை முதலியன நன்றாய்ப் பதிதல்.

**பசைதல்** – அன்புகொள்ளல்; நட்புக்கொள்ளுதல்; செறிதல்; இளகுதல்; மை முதலியன நன்றாய்ப் பதிதல்; பிசைதல்; தாராளமாதல்; ஒட்டவைத்தல்; ஒன்றுசேர்த்தல்; பதமாக்குதல்.

**பசைந்தார்** – நண்பர்.

**பசையாப்பு** – உலகப் பற்றாகிய பந்தம்.

**பசைவு** – அன்பு.

**பஞ்ச** – ஐந்து.

**பஞ்சக்கிலேசம்** – ஐவகைத் துன்பமான அவிச்சை, தன்முனைப்பு, அவா, ஆசை, வெகுளி.

**பஞ்சகஞ்சுகம்** – காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஐந்து ஆன்மதத்துவச் சட்டைகள்.

**பஞ்சகதி** – குதிரையின் ஐவகை நடையான மயில்நடை, மல்லநடை, குரக்குநடை, ஏறுநடை, புலிநடை என்பன.

**பஞ்சகந்தம்** – ஐவகை முகவாசனைப் பண்டம்; உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என ஐவகைக் கந்தங்கள்; இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம் என்னும் ஐவகை மணச்சரக்கு.

**பஞ்சகம்** – ஐந்தன் கூட்டம்.

**பஞ்சகருவி** – தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்னும் ஐவகை இசை உண்டாக்கும் கருவிகள்.

**பஞ்சகலியாணி** – நான்கு கால்களிலும் முகத்திலும் வெண்மை நிறமுள்ள சிவப்புக் குதிரை.

**பஞ்சகவ்வியம்** – பசுவினின்றுண்டாகும் பால், தயிர், நெய், மூத்திரம், சாணம் என்பவற்றின் கலப்பு.

**பஞ்சகன்னியர்** – ஒழுக்கத்தில் சிறந்த அகலிகை, சீதை, தாரை, திரௌபதி, மண்டோதரி என்னும் ஐந்து மகளிர்.

**பஞ்சகாலம்** – காலை, சங்கவ காலம், நண்பகல், அபரான்ன காலம், மாலை என முறையே காலை முதல் அவ்வாறு நாழிகைகொண்ட ஐந்து பகற்பகுதிகள்; அகவிலை குறைந்த காலம்.

**பஞ்சகாவியம்** – சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐந்து தமிழ்ப்பெருங்காப்பியங்கள்.

**பஞ்சகிருத்தியம்** – படைத்தல், நிலைபெறுத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் கடவுளின் ஐந்தொழில்கள்; படைக்கலத்தால் பொரும்பொழுது வீரன் செய்தற்குரிய தொடை, விலக்கு, செலவு, சேமம், தவிர்த்து வினைசெயல் என்னும் ஐந்தொழில்கள்; உழுது பயிர்செய்தல், பண்டங்களை நிறுத்து விற்றல், நூல்நூற்றல், எழுதுதல், படைகொண்டு தொழில் பயிலுதல் ஆகிய ஐந்தொழில்கள்.

**பஞ்சகோசம்** – அன்னமயகோசம், ஆனந்தமய கோசம், பிராணமயகோசம், மனோமய கோசம், விஞ்ஞானமயகோசம் என ஆன்மாவை மூடிக்கொண்டுள்ள ஐவகை உறைகள்.

**பஞ்சகோலம்** – சுக்கு, திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், சித்திரமூலம் இவற்றின் சேர்க்கை.

**பஞ்சகௌவியம்** – காண்க: **பஞ்சகவ்வியம்.**

**பஞ்சங்கூறுதல்** – ஏழைபோல நடித்தல்.

**பஞ்சசத்தி** – பரையாற்றல், முந்தையாற்றல், விருப்பாற்றல், அறிவாற்றல், வினையாற்றல் என்னும் ஐவகை சிவ ஆற்றல்கள்.

**பஞ்சசயனம்** – இலவம்பஞ்சு, பூ, கோரை, மயிர், அன்னத்தூவி இவற்றால் செய்த படுக்கை; அழகு, குளிர்ச்சி, மார்த்தவம், பரிமளம், வெண்மை என்னும் ஐவகைத் தன்மை கொண்ட படுக்கை.

**பஞ்சசாயகன்** – ஐங்கணைகளை உடைய மன்மதன்.

**பஞ்சசீலம்** – காமம், கொலை, கள், பொய், களவு என்னும் ஐந்தனையும் முற்றத் துறத்த லாகிய பௌத்தரொழுக்கம்.

**பஞ்சசுத்தி** – பூசைக்கு இன்றியமையாத ஐவகைச் சுத்திகளாகிய ஆத்துமசுத்தி, இலிங்கசுத்தி, திரவியசுத்தி, பூதசுத்தி, மந்திர சுத்தி என்பன.

**பஞ்சஞானன்** – புத்தர்.

**பஞ்சடைதல்** – பசி முதலியவற்றால் பார்வை மயங்குதல்.

**பஞ்சணை** – பஞ்சால் செய்த மெத்தை.

**பஞ்சத்துவம், பஞ்சதசம்** – பதினைந்து; பன்னிரண்டாம் நாள் இறந்தவர்பொருட்டுச் செய்யும் சடங்கு; பஞ்ச பூதங்களும் பிரித லாகிய இறப்பு.

**பஞ்சதரு** – சந்தானம், தேவதாரம், கற்பகம், மந்தாரம், பாரிசாதம் என்னும் ஐவகைத் தெய்வமரங்கள்.

**பஞ்சதன்மாத்திரை** – ஐம்பெரும் பூதங்களின் நுண் நிலைகளாகிய ஐந்து தத்துவங்கள்.

**பஞ்சதாரை** – காண்க: **பஞ்சகதி**; சருக்கரை.

**பஞ்சதாளம்** – சிவபிரானது ஐந்து முகத்தினின் றும் உதித்ததாகச் சொல்லப்படும் சச்சற் புடம், சாசற்புடம், சட்பிதா புத்திரகம், சம்பத்து வேட்டம், உற்கடிதம் என்னும் ஐந்துவகைத் தாளங்கள்.

**பஞ்சதிரவியம்** – காண்க: **பஞ்சகவ்வியம்**; மலைபடு பொருள், காடுபடுபொருள், நாடுபடுபொருள், நகர்படுபொருள், கடல்படுபொருள் என்னும் ஐவகைப் பொருள்கள்.

**பஞ்சதிராவிடம்** – விந்தியத்திற்குத் தெற்கேயுள்ள திராவிடம், ஆந்திரம், கன்னடம், மகாராட் டிரம், கூர்ச்சரம் என்னும் ஐந்து திராவிட நாடுகள்.

**பஞ்சது** – குயில்; நேரம்.

**பஞ்சதுட்டன்** – கொலை, களவு, பொய், கள்ளுண்ணல், குருநிந்தை என்னும் ஐவகைக் கொடுஞ்செயல்களைச் செய்வோன்.

**பஞ்சதுந்துபி** – காண்க: **பஞ்சமாசத்தக்கருவி.**

**பஞ்சதூபம்** – அகில், சாம்பிராணி, குந்துருக்கம், குக்குலு, சூடன் என்னும் ஐவகையான புகைத் தற்குரிய மணப்பொருள்கள்.

**பஞ்சதை** – ஐம்பூதம்; இறப்பு.

**பஞ்சநகம்** – ஆமை; யானை; புலி.

**பஞ்சநகி** – உடும்பு.

**பஞ்சநதம், பஞ்சநதி** – ஐயாறு; திருவையாறு என்னும் தலம்.

**பஞ்சப்பாட்டு** – ஓயாது தனது ஏழைமையைக் கூறுங் கூற்று.

**பஞ்சப்பிரமம்** – ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்ற சிவனின் ஐம்முகங்கள்; சிவபிரானின் ஐந்து திருமுகம் பற்றிய மந்திரங்கள்; நூற்றெட்டு உபநிடதங் களுள் ஒன்று.

**பஞ்சப்பொழுது** – பஞ்சகாலம், சிறுபொருளும் பெருவிலை விற்கும் காலம்.

**பஞ்சபட்சி** – குறியறிதற்கு உரியனவும் அ, இ, உ, எ, ஒ என்னும் எழுத்தால் முறையே குறிக்கப்படுவனவுமான வல்லூறு, மயில், ஆந்தை, காகம், கோழி ஆகிய ஐந்து புட்கள்; பஞ்சபட்சிகளின் ஒலியைக்கொண்டு குறி சொல்லும் நூல்.

**பஞ்சபல்லவம்** – பூசனைக்குரிய ஆத்தி, மா, முட் கிளுவை, முல்லை, வில்வம் என்னும் ஐந்தன் தளிர்கள்.

**பஞ்சபாணம்** – முல்லைமலர், அசோகமலர், தாமரைமலர், மாம்பூ, குவளைமலர் என்னு மன்மதனுக்குரிய ஐந்து அம்புகள்.

**பஞ்சபாணன்** – ஐங்கணையோனான மன்மதன்.
**பஞ்சபாணி** – பார்வதி.
**பஞ்சபாதகம்** – கொலை, களவு, பொய், கட்குடித்தல், குருநிந்தை என்னும் ஐந்துவகைக் கொடுஞ்செயல்கள்.
**பஞ்சபூதம்** – ஐம்பூதங்களான நிலம், நீர், தீ, வளி, வான் என்பன.
**பஞ்சம்** – சிறுவிலைக் காலம்; ஐந்து.
**பஞ்சமகதி** – வீடுபேறு.
**பஞ்சமம்** – ஏழுவகைச் சுரங்களுள் ஐந்தாவது; அழகு; குறிஞ்சி அல்லது பாலைப்பண்வகை; திறமை.
**பஞ்சமலம்** – ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதனம் என்னும் ஐவகை மலங்கள்.
**பஞ்சமாசத்தக்கருவி** – தோற்கருவி, துளைக் கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக் கருவி என்னும் ஐவகை இசைக்கருவிகள்.
**பஞ்சமாபாதகம்** – காண்க: **பஞ்சபாதகம்.**
**பஞ்சமாபாதகன்** – காண்க: **பஞ்சதுட்டன்.**
**பஞ்சமி** – ஐந்தாந் திதி; ஐந்தாம் வேற்றுமை; பார்வதி; இருபத்தேழு நட்சத்திரங்களுள் இறுதி ஐந்து நட்சத்திரங்கள்.
**பஞ்சமுகன்** – சிவன்; சிங்கம்.
**பஞ்சமூர்த்தி** – சிவபிரானுக்குரிய சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், திருமால், பிரமன் என்னும் ஐந்து மூர்த்தங்கள்; விநாயகன், முருகன், சிவன், உமை, சண்டேசுவரன் என்னும் ஐவகைக் கடவுளர்.
**பஞ்சமூலம்** – சிறுபஞ்சமூலம், பெரும்பஞ்சமூலம் என்னும் ஐவகை வேர்கள்.
**பஞ்சரம்** – பறவைக்கூடு; மட்பாண்டஞ் செய்யுமிடம்; இடம்; கோயிற்கருவறையின் ஒரு பகுதி; செருந்திமரம்; கழுகு; உடம்பு.
**பஞ்சரித்தல்** – தொந்தரவுபடுத்துதல்; கொஞ்சிப் பேசுதல்; விரிவாய்ப் பேசல்.
**பஞ்சலக்கணம், பஞ்சலட்சணம்** – எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐவகைத் தமிழ் இலக்கணம்.
**பஞ்சலிங்கம்** – பிருதிவிலிங்கம் (காஞ்சி, ஆரூர்), அப்புலிங்கம் (திருவானைக்கா), தேயுலிங்கம் (திருவண்ணாமலை), வாயுலிங்கம் (சீகாளத்தி), ஆகாயலிங்கம் (சிதம்பரம்) என்னும் சிவனின் ஐவகை இலிங்கங்கள்.
**பஞ்சலித்தல்** – மனந்தடுமாறுதல்.
**பஞ்சலிப்பு** – பஞ்சத்தின் வருத்தம்; எளிமை கூறல்.
**பஞ்சலோகம்** – பொன், ஈயம், வெள்ளி, செம்பு, இரும்பு என்னும் ஐந்து உலோகம்; ஐவகை உலோகக்கலப்பு.
**பஞ்சலோபி** – மிக உலுத்தன்.
**பஞ்சவடம்** – பூணூல்.
**பஞ்சவடி** – மயிர்க்கயிற்றால் ஆகிய பூணூல்; கோதாவரிக் கரையிலுள்ள ஒரு புண்ணியத் தலம்.
**பஞ்சவத்திரம்** – அகன்ற முகமுடைய சிங்கம்.
**பஞ்சவத்திரன்** – ஐம்முகனான சிவன்.
**பஞ்சவமுது** – காண்க: **பஞ்சாமிர்தம்.**
**பஞ்சவர்** – பாண்டியர்; பாண்டுமன்னன் புதல்வர்களான தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன்; ஐவகைச் சோதிகள்.
**பஞ்சவர்ணக்கிளி** – ஐவண்ணமுடைய கிளிவகை.
**பஞ்சவர்ணம்** – காண்க: **பஞ்சவன்னம்.**
**பஞ்சவன்** – பாண்டியன்.
**பஞ்சவன்னக்கிளி** – ஐந்து வண்ணமுடைய கிளி.
**பஞ்சவன்னம்** – கருமை, செம்மை, பசுமை, மஞ்சள், வெண்மை என்னும் ஐந்து நிறம்.
**பஞ்சவாசம்** – ஐந்து மணப்பொருள்களான ஏலம், தக்கோலம், இலவங்கம், சாதிக்காய், கருப்பூரம்.
**பஞ்சவாதனம்** – அனந்தாசனம், கூர்மாசனம், சிங்காசனம், பதுமாசனம், யோகாசனம் என்னும் ஐவகையான இருக்கைநிலைகள்.
**பஞ்சறை** – தளிர்நிலை,
**பஞ்சறைக்கிழவன்** – தளர்ந்த கிழவன்.
**பஞ்சனம்** – அழிவு.
**பஞ்சனி** – சொக்கட்டான்மனை.
**பஞ்சாக்கரம்** – ஐந்தெழுத்து மறை.
**பஞ்சாக்கினி** – இராகம், காமம், வெகுளி, சடம், தீபனம் என்னும் ஐவகை உடற்றீ; தவசி நிற்பதற்கு நாற்றிசைக்கு நான்கு தீக் குண்டமும் மேலே சூரியனுமாகிய ஐவகை அக்கினி; ஐவகை மருந்துச்சரக்கு.
**பஞ்சாங்கம்** – திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் எனும் ஐந்து உறுப்புகளைக் கொண்ட நூல்; காலக்குறிப்பு நூல்; ஆமை; குதிரை; சாதகம்; புரோகிதத்துக்கு விடப்படும் மானியம்; புரோகிதத்தொழில்; கொலைப்பாவத்துக்குரிய ஐந்து உறுப்புகள்.
**பஞ்சாங்குலம்** – ஆமணக்கஞ்செடி.
**பஞ்சாட்சரக்காவடி** – திருநீற்றுக்காவடி.
**பஞ்சாட்சரம்** – நமசிவாய என்னும் ஐந்தெழுத்துகளாலான சிவபிரானை அதிதெய்வமாகக் கொண்ட மந்திரம்; திருநீறு.
**பஞ்சாடுதல்** – கண் பஞ்சடைதல்.
**பஞ்சாமிர்தம்** – ஐந்தமுதமான சருக்கரை, நெய், தேன், வாழைப்பழம், திராட்சை என்னும் இனிய பண்டங்களின் கூட்டுக்கலவை.

**பஞ்சாமிலம்** – இலந்தை, புளியாரை, நெல்லி, எலுமிச்சை, மாதுளை என்னும் ஐவகைப் புளிப்புள்ள மரங்கள்.

**பஞ்சாய்** – கோரைவகை; தூபக்கால்.

**பஞ்சாய்க்கோதை** – காண்க: **பஞ்சாய்ப்பாவை.**

**பஞ்சாய்ப்பறத்தல்** – விரைவாய் நடத்தல்; நிலை குலைந்திருத்தல்.

**பஞ்சாய்ப்பாவை** – பஞ்சாய்க்கோரையாற் செய்த பாவை.

**பஞ்சாயத்தார்** – நியாய சங்கத்தார்.

**பஞ்சாயத்து** – ஐவர் கூடிய நியாய சபை; வழக்கு விசாரணை.

**பஞ்சாயம்** – ஐந்து பேர் கூடிய நியாய சங்கம்; கோரைவகை.

**பஞ்சாயுதபாணி** – ஐம்படைக் கையனான திருமால்.

**பஞ்சாயுதம்** – திருமால் தரிக்கும் ஐம்படைகளான சக்கரம், வில், வாள், தண்டு, சங்கம். இவை முறையே சுதரிசனம், சார்ங்கம், நாந்தகம், கௌமோதகி, பாஞ்சசான்னியம் எனப் பெயர் பெறும்; காண்க: **ஐம்படைத்தாலி.**

**பஞ்சாயுதன்** – காண்க: **பஞ்சாயுதபாணி.**

**பஞ்சார்த்தல்** – பஞ்சடைதல்.

**பஞ்சாரம்** – ஐந்து சரம்கொண்ட கழுத்தணி; குதிரை, எருது இவற்றின் வயது; ஆடையில் பஞ்சு எழும்பியுள்ள நிலை; பறவை அடைக்கும் கூடு.

**பஞ்சாலை** – பஞ்சு அரைக்கும் ஆலை.

**பஞ்சாவமுதம்** – காண்க: **பஞ்சாமிர்தம்.**

**பஞ்சான்** – பச்சைக்குழந்தை; செடிவகை; மீன் வகை.

**பஞ்சான்மா** – அந்தர ஆன்மா, சீவான்மா, தத்துவ ஆன்மா, பூத ஆன்மா, மந்திர ஆன்மா என்பன.

**பஞ்சானனம்** – ஐம்முகமுடைய சிங்கம்.

**பஞ்சானனன்** – ஐம்முகத்தோனான சிவன்.

**பஞ்சானுங்குஞ்சும்** – குழந்தைகுட்டிகள்.

**பஞ்சி** – பஞ்சு; பஞ்சணை; வெண்துகில்; காண்க: **இலவு; செவ்வரக்கு;** சடைந்தது; பெருந்தூறு; வருத்தம்; **சோம்பல்;** பஞ்சாங்கம்.

**பஞ்சிகம்** – தாளிக்கொடி.

**பஞ்சிகை** – கணக்கு; பஞ்சாங்கம்; உரை நூல்.

**பஞ்சிதம்** – விண்மீன்.

**பஞ்சிநாண்** – பூணூல்.

**பஞ்சியடர்** – கொட்டிய பஞ்சு.

**பஞ்சியூட்டுதல்** – மகளிர் பாதங்களில் செம் பஞ்சுக் குழம்பு பூசுதல்.

**பஞ்சீகரணம்** – ஐம்பூதக் கூறுகளின் சேர்க்கை.

**பஞ்சு** – பருத்தி; சீலை; பருத்திச்செடி; செவ் வரக்குச் சாயமிட்ட பஞ்சு; விளக்குத் திரி; கவறாட்டத்தில் வழங்கும் குழூஉக்குறி.

**பஞ்சுகொட்டி** – பஞ்சு அடிப்பவன்.

**பஞ்சுத்துய்** – பன்னிய பஞ்சுநுனி.

**பஞ்சுப்பொதி** – பஞ்சடைத்த மூட்டை.

**பஞ்சுரம்** – குறிஞ்சி அல்லது பாலை யாழ்த்திறத் துள் ஒன்று.

**பஞ்சூகம்** – பெருமை.

**பஞ்சேந்திரியம்** – மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள்.

**பஞ்சை** – பஞ்சம்; வறுமை; ஏழை; வலுவில்லான்; சிறுமைத்தனம் உள்ளவர்.

**பஞ்சைக்கோலம்** – வறுமைவேடம்.

**பஞ்சைத்தனம்** – இவறல்; வறுமை.

**பஞ்சைமயிர்** – மெல்லிய அல்லது புன்மயிர்.

**பஞ்சையன்** – வறிஞன்.

**பஞ்ஞிலம்** – மக்கள்தொகுதி.

**பட்கை** – பாம்பின் மேல்வாய் நச்சுப்பல்.

**பட்சணம்** – சிற்றுண்டி; உண்கை; விலங்கின் உணவு.

**பட்சணி** – உண்போன்; பெருந்தீனிக்காரன்.

**பட்சணை** – காண்க: **பட்சணம்.**

**பட்சதாபம்** – இரக்கம்.

**பட்சபாதம்** – ஒருதலைச்சார்பு; கைகால்களை வலியற்றதாகச் செய்யும் நோய்.

**பட்சம்** – அன்பு; கட்சி; சிறகு; பதினைந்து நாள் கொண்டது; கோட்பாடு.

**பட்சாந்தரம்** – கொள்ளப்பட்ட கொள்கையி னின்று வேறுபட்ட கொள்கை.

**பட்சி** – பறவை; குதிரை.

**பட்சித்தல்** – உண்ணுதல்; கவர்தல்; அழித்தல்.

**பட்சியம்** – பணியாரம்.

**பட்சிராசன்** – காண்க: **பக்கிராசன்;** கருடப் பச்சைக்கல்.

**பட்டகசாலை** – கூடம்; மனையில் உண்ணுமிடம்.

**பட்டகம்** – காண்க: **ஆடுதின்னாப்பாளை;** புழுக் கொல்லிக்கொடி.

**பட்டங்கட்டுதல்** – பட்டப்பெயர் சூட்டுதல்; அரசு முதலிய பதவி அளித்தல்; திருமணத்தில் மணமக்கள் நெற்றியில் பொற்பட்டங் கட்டு தல்.

**பட்டடை** – அடைகல்; கொல்லன்களரி; குவியல்; தானியவுறை; தோணிதாங்கி; தலையணை யாக உதவும் மணை; உட்காரும் பலகை; அதிர்வேட்டுக் குழாய்கள் பதித்த கட்டை; நரம்புகளின் இளியிசை; இறைப்புப் பாசனத் தால் விளையும் கழனி; கழுத்தணி.

**பட்டடைக்கழனி** – தண்ணீர் இறைத்துப் பயிரிடுங் கழனி.

**பட்டடைமரம்** – இறைச்சிவைத்துக் கொத்தும் மரம்.

**பட்டடையார்** – கடையின் முதலாளி; மேற்பார்ப்போர்.

**பட்டணப்பிரவேசம்** – ஊர்வலம்.

**பட்டணம்** – பெருநகரம்; பேரூர்.

**பட்டணவன்** – நெசவுச்சாதிவகை; பட்டணவனால் நெய்யப்பட்ட ஆடை; வலைஞர் சாதி.

**பட்டணை** – பட்டுப்படுக்கை.

**பட்டத்தரசி** – தலைமையரசி.

**பட்டத்தியானை** – அரச சின்னங்களுடையதும் அரசன் ஏறுவதற்கு உதவுவதுமான யானை.

**பட்டத்துத்தேவி** – தலைமையரசி.

**பட்டதாரி** – சிறப்புப்பட்டம் பெற்றவன்; பகட்டுக்காரன்.

**பட்டந்தரித்தல்** – முடிசூடுதல்; சிறப்புப்பெயர் சூடுதல்.

**பட்டப்பகல்** – நடுப்பகல்.

**பட்டப்பெயர்** – சிறப்புப்பெயர்; புனைந்து வழங்கும் பெயர்.

**பட்டபாடு** – அனுபவித்த துன்பம்.

**பட்டம்** – பருவம்; வாள்; ஆயுதவகை; நீர்நிலை; வழி; நாற்றங்காற்பகுதி; விலங்கு துயிலிடம்; படகுவகை; கவரிமா; சிறப்புக்கு அறிகுறியாக நெற்றியிலணியும் பொற்றகடு; மாதர் நுதலணி; பட்டப்பெயர்; ஆட்சி; சட்டங்களை இணைக்க உதவும் தகடு; காற்றாடி; சீலை; பெருங்கொடி; உயர்பதவி; பொன்; பறைவகை; பலபண்டம்.

**பட்டமரம்** – உலர்ந்துபோன மரம்.

**பட்டயம்** – வாள்; தாமிரசாசனம்; பட்டா.

**பட்டர்பிரான்** – பெரியாழ்வார்.

**பட்டவர்(ரு)த்தனம்** – அரசயானை; குதிரைச் சாதி; பார்ப்பனருள் ஒரு சாரார் இடும் நெற்றிக்குறி; மறைவின்றிப் பேசுபவர்.

**பட்டவர்(ரு)த்தனர்** – பட்டந்தரித்த சிற்றரசர்.

**பட்டறிவு** – நுகர்ச்சி, அனுபவம்.

**பட்டறை** – தொழிற்சாலை; அடைகல்; தோணி தாங்கி; தலையணையாக உதவும் மணை; அதிர்வேட்டுக் குழாய்கள் பதிக்கப்பட்ட கட்டை; வீட்டின் உத்திரம்; வீட்டின் தளத்திலிருந்து எழுப்பவேண்டும் அளவில் எழுப்பிய சுவர்; மக்கள் கூட்டம்; தொழிலாளர் சமுதாயம்.

**பட்டறைக்கேணி** – பாசனத்துக்குப் பயன்படும் கிணறு.

**பட்டறைநிலம்** – கிணற்றுப் பாசனமுள்ள நன்செய் நிலம்.

**பட்டன்** – புலவன்; கோயில் அருச்சகன்; பெரியாழ்வார்; சுவாமி; உண்மை பேசுபவன்.

**பட்டா** – வாள்; உரிமையாவணம்; இரும்புப் பட்டம்.

**பட்டாக்கத்தி** – வாள்.

**பட்டாங்கு** – உண்மை; உள்ள நிலைமை; சாத்திரம்; மெய்போல் பேசும் கேலிப்பேச்சு முதலியன; சித்திரவேலை யமைந்த சேலை.

**பட்டாசாரியன்** – புலவன்; கோயில் அருச்சகன்; ஒரு சமய ஆசிரியன்.

**பட்டாசு** – சீனவெடி.

**பட்டாடை** – பட்டுச்சீலை.

**பட்டாணி** – உருதுமொழி பேசும் முகம்மதிய சாதி; கடலைக்கொடிவகை; கொண்டியாணி வகை.

**பட்டாதாரன்** – பட்டாவுடம்படிக்கை பெற்றவன்.

**பட்டாரகன்** – கடவுள்; அருகபதவி பெற்றோன்; குருதேவன்.

**பட்டாளம்** – 500முதல் 1000வரை காலாள்கள் கொண்ட படை.

**பட்டி** – பசுக்கொட்டில்; ஆட்டுக்கிடை; நிலவளவுவகை; கொண்டித்தொழு; சிற்றூர்; இடம்; காவலில்லாதவர்; களவு; பட்டிமாடு; விபசாரி; நாய்; பலகறை; மகன்; தெப்பம்; சீலை; புண்கட்டுஞ் சீலை; மடிப்புத் தையல்; விக்கிரமாதித்தன் மந்திரி; அட்டவணை; பாக்குவெற்றிலைச்சுருள்; பூச்செடிவகை.

**பட்டிக்கடா** – பொலிஎருது, பொலிகாளை.

**பட்டிக்காடு** – சிற்றூர்.

**பட்டிகன்** – திருடன்.

**பட்டிகை** – அரைக்கச்சை; மேகலை; முலைக்கச்சு; தெப்பம்; தோணி; ஏடு; அரசபத்திரம்; சீலை; தோளிலிடும் யோகபட்டி; சுவர்த்தலத்தின் சித்திரக்கம்பி; சீந்திற்கொடி; காண்க: செவ்வந்தி; தாழை.

**பட்டிகைச்சூட்டு** – மேகலை.

**பட்டிடை** – காண்க: **நந்தியாவட்டம்.**

**பட்டிணி** – உணவுகொள்ளாமை.

**பட்டிநியமம்** – காண்க: **பட்டிமண்டபம்.**

**பட்டிப்பொங்கல்** – மாட்டு மந்தையிலிடும் பொங்கல்.

**பட்டிபுத்திரன்** – பண்டைக்காலத்தில் இளைஞர் விளையாட்டில் இட்டு வழங்கிய பெயர்.

**பட்டிபெயர்த்தல்** – கால்நடையைப் புறம்பே செலுத்துதல்.

**பட்டிபோதல்** – கால்நடை முதலியன பயிரை அழித்தல்; கண்டபடி திரிதல்; விபசாரம் செய்தல்.

**பட்டிமண்டபம்** – கல்விமண்டபம்; ஓலக்க மண்டபம்; சொற்பொழிவு நிகழ்த்தும் அரங்கம்; சொற்போர் நடக்கும் இடம்.
**பட்டிமம்** – கல்விபயிலும் இடம்.
**பட்டிமரம்** – கள்ளமாட்டின் கழுத்திற் கட்டும் மரம்.
**பட்டிமாடு** – கொண்டிமாடு, ஊர்சுற்றும் மாடு.
**பட்டிமுறித்தல்** – கட்டுக்கடந்து போதல்; கூட்டத்தை நீக்குதல்.
**பட்டிமேய்தல்** – கால்நடை முதலியன பயிரை அழித்தல்; பட்டிபோதல்; கண்டபடி திரிதல்.
**பட்டிமை** – வஞ்சனை; களவிற்போகுந் தன்மை.
**பட்டியடித்தல்** – விபசாரஞ்செய்தல்.
**பட்டியல்** – வரிச்சல்; தூணின்கீழ் வைக்குங் கல்; வணிகச்சரக்கின் விலையட்டவணை; பொருள்களின் அட்டவணை.
**பட்டியுரை** – வாய்காவாது சொல்லுஞ் சொல்; கொச்சைச்சொல்.
**பட்டிவாய்** – வாய்க்கு வந்தவாறு பேசுபவர்.
**பட்டினம்** – ஊர்; நெய்தல்நிலத்தூர்; காவிரிப்பூம்பட்டினம்; உடல்.
**பட்டினவன்** – பரவச்சாதியான்.
**பட்டினி** – உண்ணாதிருத்தல்; அரசி; பார்ப்பனத்தி.
**பட்டினிகிடத்தல்** – உணவின்றி இருத்தல்; சாவீட்டில் உண்ணாதிருத்தல்.
**பட்டினிநோன்பிகள்** – சமணத்துறவியர்.
**பட்டினிப்பண்டம்** – சாவீட்டுக் கனுப்பும் உணவுப் பண்டம்; சாவீட்டில் உண்ணும் உணவு.
**பட்டினிபொறுத்தல்** – பசியால் வருந்துதல்.
**பட்டினிபோடுதல்** – பிறரைப் பட்டினியாயிருக்கச் செய்தல்.
**பட்டினிவிடுதல்** – உண்ணாதிருத்தல்.
**பட்டு** – பட்டாடை; பட்டுப்பூச்சியால் உண்டாகும் நூல்; கோணிப்பட்டை; சிற்றூர்; இருந்தேத்தும் மாகதர்; கட்டியம்; கள்ளி வகை.
**பட்டுக்கரை** – ஆடையில் பட்டாலியன்ற கரை.
**பட்டுக்கஞ்சம்** – பட்டின் கற்றைத் தொங்கல்.
**பட்டுத்தெளிதல்** – அனுபவத்தினால் அறிதல்; காண்க: **பட்டுத்தேறுதல்.**
**பட்டுத்தேறுதல்** – நோய் நீங்கி உடம்பு வலிமை பெறுதல்; அனுபவத்தால் மனவலி பெறுதல்.
**பட்டுப்பூச்சி** – பட்டுநூல் உண்டாக்கும் பூச்சி வகை.
**பட்டுப்போதல்** – உலர்ந்துபோதல்; சாதல்.
**பட்டுருவுதல்** – ஊடுருவுதல்.
**பட்டுவாடா** – சம்பளம் முதலியன கொடுத்தல்.
**பட்டை** – மரத்தோல்; வாழைப்பட்டை; பொற்சரிகைப்பட்டி; கழுத்துப்பட்டை; பனம் பட்டை; போதிகை; மணியைத் துலக்கும் பட்டை; காண்க: **பட்டைத்தையல்;** பொடி மட்டை; அணிகலனின் ஓர் உறுப்பு; நீர் இறைக்குங் கூடை; காண்க: **மரவுரி;** தகடு; பனங்கை; பட்டைச்சோறு.
**பட்டைக்கம்பு** – சிலம்பம்; பழகுவோர் கைத்தடி.
**பட்டைக்காறை** – ஒரு கழுத்தணிவகை.
**பட்டைகேசரி** – சூடன் உண்டாகும் மரம்.
**பட்டைச்சாதம்** – கடவுளுக்குப் படைக்கப்பட்ட சோற்றுக்கட்டி.
**பட்டைச்சாராயம்** – வெள்வேலம் பட்டையைக் காய்ச்சி இறக்கும் ஒரு பானவகை; காண்க: **வெள்வேல்.**
**பட்டைத்தையல்** – ஆடை முதலியனவற்றை மடித்துத் தைக்கும் தையல்.
**பட்டைதட்டுதல்** – சோற்றைக் கிண்ணத்தில் அடக்கிக் கவிழ்த்து வில்லைச் சோறாகச் செய்தல்.
**பட்டைதீர்தல்** – சுண்ணம் முதலியவற்றால் பட்டை அடிக்கப்படுதல்; கெம்பு முதலியவற்றை வெட்டிப் பட்டையாக்குதல்.
**பட்டைநாமம்** – அகன்ற நாமம்.
**பட்டைப்பறி** – மீன்பிடிக்க இடும் கருவி.
**பட்டையடித்தல்** – சுண்ணாம்பு செம்மண்களால் பட்டையான நீண்ட கோடுகள் வரைதல்; அகலமாக்குதல்; காண்க: **பட்டைதட்டுதல்.**
**பட்டையம்** – வாள்; ஆவணம்.
**பட்டையுரித்தல்** – மரம் முதலியவற்றிலிருந்து மேற்பட்டையை நீக்குதல்.
**பட்டைவிட்டுப்போதல்** – வெயில் கடுமையாயிருத்தல்; விறகிலிருந்து பட்டை நெகிழ்தல்.
**பட்டோலை** – எழுதுதற்குச் செய்யப்பட்ட ஓலை; அரசர்விடுந் திருமுகம்; ஒருவர் சொல்ல எழுதிய ஓலை; பேரேட்டின் மொத்த வரவு செலவுக் குறிப்பு; அட்டவணை; மருத்துவரின் மருத்துவக்குறிப்பு.
**பட்டோலைகொள்ளுதல்** – பெரியோர் கூறியதை எழுதுதல்.
**பட்பு** – குணம்.
**பட** – ஓர் உவமவுருபு.
**படக்குப்படக்கெனல்** – அச்சக்குறிப்பு; நாடி முதலியன அடித்தற்குறிப்பு.
**படகம்** – கவரிமா; திரைச்சீலை; பரண்; அகமுழவுகளுள் ஒன்று; சிறுபறை; போர்ப்பறை; கலகம்; கோல்; காண்க: **விட்டுணுக்கரந்தை;** கூடாரம்; நிலவளவு; சிறுபூடுவகை.
**படகாரன்** – ஓவியன்; நெய்வோன்.
**படகு** – சிற்றோடம்; தோணி.
**படகுடி** – கூடாரம்.
**படகுவலித்தல்** – படகைச் செலுத்துதல்.
**படகோட்டி** – படகைச் செலுத்துபவன்.

**படங்கம்** – கூடாரம்; சண்பகமரம்.
**படங்க(கா)ன்** – கடல்மீன்வகை.
**படங்கு** – கூடாரம்; மேற்கட்டி; ஆடை; இடுதிரை; பெருங்கொடி; மெய்போற் பேசுகை; சாம்பிராணிப்பதங்கம்; அடிப் பாகம்; பெருவரிச்சல்; பாதத்தின் உட்பகுதி.
**படங்குந்திநிற்றல்** – முன்காலை ஊன்றி நிற்றல்.
**படங்குந்திவீடு** – கூடாரம்.
**படதீபம்** – ஒரு விளக்குவகை.
**படப்பம்** – மருங்கில் ஊர்சூழ்ந்த நகரம்.
**படப்பு** – பனங்கொட்டை சேகரித்து உலர்த்தும் கொல்லை; வைக்கோற்போர்.
**படப்பை** – தோட்டப்பகுதி; புழைக்கடை; பக்கத் திலுள்ள இடம்; ஊர்ப்புறம்; நாடு; மருத நிலத்தூர்; பசுக்கொட்டில்; பனங்கொட்டை சேகரித்து உலர்த்தும் கொல்லை.
**படப்பொறி** – பாம்பின் படத்திலுள்ள புள்ளிகள்; துத்திச்செடி.
**படபடத்தல்** – பேச்சு முதலியவற்றில் விரைதல்; குளிர் முதலியவற்றால் நடுங்குதல்; கோபக் குறிப்பு; ஒலி உண்டாதல்.
**படபடப்பு** – பேச்சு முதலியவற்றில் விரைவு; நடுக்கம்.
**படபடெனல்** – துடித்துப்பேசல், அசைதல், வெடித்தல், கடுமை, விரைவு, களைப்பு முதலிய குறிப்புகள்.
**படம்** – சீலை; சித்திரச்சீலை; திரைச்சீலை; சட்டை; போர்வை; ஓவியம் எழுதின படம்; பெருங்கொடி; விருதுக்கொடி; யானைமுகப் படாம்; பாம்பின் படம்; காற்றாடி; பாதத் தின் முற்பகுதி; உடல்.
**படம்பிடித்தல்** – ஒளியின் உதவியால் கருவி கொண்டு உருவத்தைப் பிடித்தல்.
**படம்புகுதல்** – சட்டையிடுதல்.
**படமஞ்சரி** – ஒரு பண்வகை.
**படமரம்** – நெய்வார் கருவியுள் ஒன்று.
**படமாடம், படமாளிகை** – கூடாரம்.
**படமெடுத்தல்** – பாம்பு படத்தை விரித்து நிற்றல்; ஒளிப்படம் பிடித்தல்.
**படர்** – செல்லுகை; ஒழுக்கம்; வருத்தம்; நோய்; நினைவு; பகை; மேடு; துகிற்கொடி; படை வீரர்; எமதூதர்; ஏவல் செய்வோர்; இழி மக்கள்; தேமல்; தூறு; வழி; தறுகண்மை.
**படர் (வி)** – தொடர், படர்என் ஏவல்.
**படர்க்கை** – சொற்களுக்குரிய மூவிடங்களுள் தன்மை முன்னிலைகள் இல்லாத இடம்.
**படர்கொடி** – நின்று வளராத படருங்கொடி; கொடிவகை.
**படர்ச்சி** – செலவு; நல்லொழுக்கம்; கொடி ஓடுகை; விதி; பரந்த வடிவம்; பரவுதல்.
**படர்தல்** – ஓடுதல்; கிளைத்தோடுதல்; பரவுதல்; பெருகுதல்; அகலுதல்; விட்டுநீங்குதல்; வருந்துதல்; அடைதல்; நினைத்தல்; பாடுதல்.
**படர்தாமரை** – தோல்மேற் படரும் நோய்வகை; தேமல்வகை; அமைதியில்லாதவர்.
**படர்நோய்** – நினைவினால் உண்டாம் வருத்தம்.
**படர்பயிர்** – படர்கின்ற கொடி.
**படரடி** – சிதறவடிக்கை.
**படரை** – ஆவிரை.
**படல்** – ஓர் அடைப்புவகை; மறைப்புத்தட்டி; பூந்தடுக்கு; பாய்மரத்தில் இணைக்கப்பட்ட குறுக்குக்கட்டையிலுள்ள குழி; உறக்கம்.
**படலம்** – கூட்டம்; நூற்பகுதி; கூடு; மேற்கட்டி; நேத்திரப்படலம்; அடுக்கு; உலகம்; சுற்றம்; திலகம்; மறைப்புத்தட்டி; அடைப்பு; இரத்தினக்குற்றம்.
**படலி** – கூட்டம்; வீட்டின் மேற்கூரை.
**படலிகை** – பெரும்பீர்க்கு; கைம்மணி; பூப் பெட்டி; இளைப்பு; கண்ணோய்வகை; வட்ட வடிவு; ஓர் அளவு.
**படலிடம்** – குடிசை.
**படலியம்** – குதிரைச்சேண உறுப்பு.
**படலை** – படர்கை; பரந்த இடம்; வாயகன்ற பறை; தாழை; பூவும் தழையும் விரவித் தொடுத்த மாலை; கூட்டம்; குதிரைக் கிண்கிண்மாலை; குலையிலுள்ள சீப்பு; அடைப்பு.
**படலைக்கண்ணி, படலைமாலை** – பச்சிலையும் பூவும் கலந்து தொடுத்த மாலை.
**படவம்** – போர்ப்பறை.
**படவன்** – படகோட்டி.
**படவாள்** – படைவாள்.
**படவு** – சிற்றோடம்.
**படன்** – படைவீரன்; இழிகுலத்தான்; யமகிங் கரன்; பேய்.
**படனம்** – படித்தல்; மனப்பாடம்.
**படா** – காண்க: **குட்டிப்பிடவம்**; பெரிய.
**படாக்கொட்டில்** – காண்க: **படமாடம்.**
**படாகி** – செருக்கு; புளுகுகிறவன்.
**படாகை** – கொடி; நாட்டின் உட்பிரிவு; குடிசை; கூட்டம்.
**படாடோபம்** – நடையுடைபாவனையிற் செய்யும் பகட்டு.
**படாதுபடுதல்** – மிகத் துன்புறுதல்.
**படாந்தரம்** – முழுப் பொய்; கற்பனையால் மிகுத்துக் கூறுகை; அகாரணம்.
**படாப்பழி** – பெரும்பழி.

**படாபஞ்சனம்** – முற்றும் அழிதல்.

**படாம்** – சீலை; திரைச்சீலை; பெருங்கொடி; கூடாரம்; முகபடாம்.

**படாம்வீடு** – கூடாரம்.

**படாமுரசு** – ஓயாது ஒலிக்கும் பேரிகை.

**படார்** – சிறுதூறு.

**படார்படாரெனல்** – வெடித்தல் ஒலிக்குறிப்பு.

**படாரர்** – கடவுள்; பூச்சியர்.

**படாரன்** – பாம்பாட்டி.

**படாரிடுதல், படாரெனல்** – படாரென வெடித்தல்.

**படாவஞ்சனம், படாவஞ்சனை** – முழுக் கற்பனை; கொடுஞ் சூழ்ச்சி; முற்றும் அழிக்கை.

**படி** – கற்படி; ஏணிப்படி; நிலை; தன்மை; அங்கவடி; தராசின் படிக்கல்; நூறு பலங் கொண்ட நிறையளவு; நாட்கட்டளை; நாழி; அன்றாடச் செலவுக்குக் கொடுக்கும் பொருள்; உபாயம்; உதவி; நிலைமை; விதம்; வாயில் நிலையின் கீழ்க் குறுக்குக்கட்டை; உடம்பு; மரபுவழி; தகுதி; முறைமை; வேதிகை; தாழ்வாரம்; நீர்நிலை; ஒத்த பிரதி; பகை; பூமி; உவமை; ஓர் உவமவுருபு.

**படி**(வி) – வாசி, படியென் ஏவல்.

**படிக்கட்டளை** – நாட்கட்டளை.

**படிக்கட்டு** – சோபனக்கட்டு; நிறைகல்.

**படிக்கம்** – எச்சில் உமிழும் கலம்; முழுக்குநீர் முதலியவற்றைச் சேர்க்கும் பாண்டம்.

**படிக்கல்** – நிறைகல்.

**படிக்காசு** – நாட்செலவுக்குக் கொடுக்கும் பணம்; இரகுநாத சேதுபதியின் அவைக்களப் புலவர்.

**படிக்காரம்** – சீனக்காரம்.

**படிக்காரன்** – நாளுணவுக்காக வேலை செய்வோன்; படிகொடுப்போன்.

**படிக்கால்** – ஏணி.

**படிக்குப்பாதி** – சரிபாதி.

**படிகட்டுதல்** – உணவுக்கு வேண்டிய பணத்தைச் செலுத்துதல்; நிறைத் தடைகட்டுதல்; படிக்கல் அமைத்தல்.

**படிகம்** – பளிங்கு; கூத்து; விளாம்பட்டை; பிச்சை.

**படிகமிடுதல்** – காண்க: **பழுக்கச்சுடுதல்.**

**படிகாரன்** – வாயிற் காவலன்.

**படிகால்** – தலைமுறை.

**படிகை** – யானை மேலிடும் தவிசு; காண்க: **நந்தியாவட்டம்.**

**படிச்சந்தம்** – ஒன்றைப்போன்ற வடிவு.

**படிச்செலவு** – அன்றாடச் செலவு.

**படிசம்** – தூண்டில்.

**படிசியேற்றம்** – சிற்றேற்றம்.

**படிசு** – நிலைமை; ஒத்த அமைப்பு.

**படித்தரம்** – கோயில் முதலியவற்றுக்கு உதவும் நாட்கட்டளை; ஒழுங்கு; நடுத்தரம்.

**படித்தல்** – வாசித்தல்; கற்றல்; சொல்லுதல்; துதித்தல்; பழகுதல்.

**படித்தனம்** – கோயில் முதலியவற்றுக்கு உதவும் நாட்கட்டளை.

**படித்திரம்** – சூட்டிறைச்சி.

**படித்துறை** – படிக்கட்டுகள் அமைந்த நீர்த்துறை.

**படிதம்** – கூத்து; துதி; மாணிக்கவகை.

**படிதல்** – அடியிற்றங்குதல்; பரவுதல்; வசமாதல்; கையெழுத்துத் திருந்தி அமைதல்; கீழ்ப்படிதல்; குளித்தல்; கண்மூடுதல்; அமுங்குதல்; கலத்தல்; வணக்கமுடன் கீழே விழுதல்; நுகர்தல்; பொருந்துதல்.

**படிப்படி, படிப்படியாய்** – சிறுகச்சிறுக.

**படிப்படை** – காண்க: **கூலிப்படை.**

**படிப்பணம்** – அன்றாடச் செலவுக்குக் கொடுக்கும் பணம்.

**படிப்பனவு** – படிப்பு.

**படிப்பனை** – படிப்பு; கல்வி; படித்தல்; திறன்.

**படிப்பாளி** – கற்றோன்.

**படிப்பித்தல்** – கற்பித்தல்.

**படிப்பினை** – காண்க: **படிப்பனை;** புத்திமதி; வங்கமணல்; நீதி.

**படிப்பு** – கல்வி; வாசிப்பு; விரகு; பாடுதல்; போதனை.

**படிப்புரை** – ஒட்டுத்திண்ணை.

**படிப்புறம்** – கோயிற் பூசாரிகட்கு விடப்படும் மானியம்.

**படிமக்கலம்** – முகம்பார்க்கும் கண்ணாடி.

**படிமகன்** – பூமியின் மகனான செவ்வாய்.

**படிமத்தாள்** – தேவராட்டி.

**படிமத்தா(தோ)ன்** – தேவராளன், தெய்வமாடுவோன்.

**படிமதாளம்** – ஒன்பதுவகைத் தாளத்துள் ஒன்று.

**படிமம்** – பிரதிமை; உருவம்; மாதிரி; வடிவம்; தவவேடம்; நோன்பு; சன்னதம்; காண்க: **படிமக்கலம்;** தூய்மை.

**படிமவுண்டி** – நோற்றுப் பட்டினி விட்டுண்ணும் உணவு.

**படிமா** – ஒப்பு; மாதிரி.

**படிமானம்** – கீழ்ப்படிதல்; சட்டப்பலகைகளின் இணைப்புப் பொருத்தம்; அமைவு; தணிவு.

**படிமுழுதிடந்தோன்** – நிலம் முழுதும் பெயர்த்துத் தூக்கிய திருமால்.

**படிமேடை** – படிப்படியாக உயர்ந்தமைந்த ஆசன வரிசை.

**படிமை** – வடிவம்; பிரதிமை; நோன்பு; தவவேடம்; வழிபடுதெய்வம்.
**படியகம்** – துப்பற்பாத்திரம்.
**படியச்சு** – நேர் ஒப்புடையது.
**படியப்பார்த்தல்** – விலைகுறைத்தல்; பலகைகளை இணைத்தல்; அமிழும் நிலையில் இருத்தல்.
**படியவைத்தல்** – படியும்படி வைத்தல்; ஊன்றுதல்; அடங்கச்செய்தல்.
**படியளத்தல்** – வாழ்க்கைக்கு வேண்டும் தானியம் முதலியவற்றைக் கொடுத்தல்.
**படியளந்தோன்** – உலகை அளவிட்ட திருமால்.
**படியாள்** – படிவாங்கிப் பயிரிடும் உழவன்.
**படியெடுத்தல்** – ஒன்றைப்போல வேறொன்றை உண்டாக்குதல்.
**படியோர்** – உலகோர்; வணங்காத பகைவர்.
**படியோலை** – மூல ஓலையைப் பார்த்து எழுதிய ஓலை.
**படிலன்** – வீரன்; பணியாளன்.
**படிவம்** – வழிபடுதெய்வம்; உடம்பு; உருவம்; வடிவழகு; தவவேடம்; தோற்றம்; நோன்பு.
**படிவர்** – முனிவர்.
**படிவவுண்டி** – காண்க: **படிமவுண்டி.**
**படிற்றுரை** – பொய்ச்சொல்.
**படிற்றொழுக்கர்** – காமுகர்.
**படிறன்** – திருடன்; பொய்யன்; வஞ்சகன்; கொடியவன்; காமுகன்.
**படிறி** – வஞ்சகமுள்ளவள்.
**படிறு** – வஞ்சனை; பொய்; அடங்காத்தனம்; குறும்பு; களவுப்புணர்ச்சி; கொடுமை.
**படினம்** – மேன்மை; பக்குவம்; வெற்றி; கல்வி.
**படீரம்** – சந்தனம்; சிவப்பு; வயிறு; உயரம்; வாதக்கூறான நோய்.
**படீரெனல்** – ஒலிக்குறிப்பு.
**படீனம்** – பறவைக் கதி விசேடங்களில் ஒன்று.
**படு** – கள்; மரத்தின் குலை; குளம்; மடு; மருதயாழ்த்திறத்துள் ஒன்று; உப்பு; பெரிய; கொடிய; இழிவான; கெட்டிக்காரன்; பேரறிவு; நன்மை.
**படு (வி)** – படுத்துக்கொள்; விழு.
**படுக்கவைத்தல்** – கிடக்கும்படி செய்தல்; தோல்வியுறச் செய்தல்; அழித்தல்.
**படுக்களம்** – படுக்கும் இடம்.
**படுக்காளி, படுக்காளிப்பயல்** – போக்கிரி; பொய்யன்.
**படுக்கை** – படுத்தல்; தானியம் முதலியன வைத்தற்கு உதவுமாறு அடியில் பரப்பிய பொருள்; திருவிழா; தேவதைகளுக்கு முன் இடும் படையல்; பட்டடை; படுக்கை; சரக்கு மூட்டைமேல் நீர்படாதிருக்கத் தோணியினடியில் பரப்பும் புல் அல்லது ஓலை.
**படுக்கைப்பற்று** – பெண்ணுக்குக் கொடுக்கும் சீர் வரிசை; அந்தப்புரம்.
**படுக்கையறை** – பள்ளியறை.
**படுகண்ணி** – அணிகலனில் கொக்குவாய் மாட்டப்படும் உறுப்பு.
**படுகர்** – பள்ளம்; மேல்நிலை; இறங்கியேறும் வழி; வயல்; மருதநிலம்; ஒரு சாதி.
**படுகல்** – நீர்நிலை.
**படுகள்ளம்** – பெருமோசம்.
**படுகள்ளன்** – போக்கிரி.
**படுகளம்**– போர்க்களம்; தொந்தரவு.
**படுகளி** – மிகு மகிழ்ச்சி; பெருஞ்சேறு.
**படுகாடு** – மரங்கள் ஒருசேர விழுந்த காடு; சுடுகாடு.
**படுகாடுகிடத்தல், படுகாடுநிற்றல்** – செயலற்றுக்கிடத்தல்.
**படுகாயம்** – உயிராபத்தான காயம்.
**படுகாரம்** – வெண்காரம்.
**படுகால்** – ஏணி; படி; மேகலை.
**படுகிடங்கு** – பெருங்குழி.
**படுகிடை** – தன் எண்ணம் நிறைவேறப் பிடிவாதமாகப் படுத்திருக்கை; நோய் மிகுதியால் எழுந்திருக்கமுடியாத நிலை.
**படுகிழவன்** – மிக முதிர்ந்தவன்.
**படுகுலைப்படுதல்** – நெஞ்சில் அடியுண்டு விழுதல்.
**படுகுலையடித்தல்** – செயலறப்பண்ணுதல்.
**படுகுழி** – பெரும்குழி.
**படுகை** – ஆற்றோர நிலம்; நீர்நிலை.
**படுகொலை** – கொடுங்கொலை.
**படுசுட்டி** – மிகுந்த புத்திக் கூர்மையுள்ளவர்; மிகுந்த குறும்புத்தனமுள்ளவர்.
**படுசூரணம்** – மருந்துத்தூள்; பேரழிவு.
**படுசூல்** – முதிர்ந்த கருப்பம்.
**படுசூளை** – வட்டமாய் அமைக்கப்படும் காளவாய்.
**படுஞாயிறு** – மறையும் சூரியன்; மாலையில் உண்டாகி நடுநிசியில் நீங்கும் தலைநோய்.
**படுத்தடி** – முருட்டுத்தன்மை.
**படுத்தநிலம்** – தளப்படுத்திய பூமி.
**படுத்தல்** – செய்தல்; நிலைபெறச்செய்தல்; சேர்ப்பித்தல்; வளர்த்தல்; உடம்பிற் பூசுதல்; அழித்தல்; பரப்புதல்; தளவரிசையிடுதல்; ஒழித்தல்; வீழச்செய்தல்; எழுத்துகளின் ஒலியைத் தாழ்த்திக் கூறுதல்; கிடத்தல்; பறையறைதல்.
**படுத்தலோசை** – தாழ உச்சரிக்கப்படும் ஒலி.
**படுத்துதல்** – துன்பஞ்செய்தல்; அடையச் செய்தல்; உண்டாக்குதல்.
**படுத்துவம்** – வலிமை; திறமை.
**படுதம்** – கூத்துவகை.

**படுதல்** – உண்டாதல்; தோன்றுதல்; உதித்தல்; நிகழ்தல்; மனத்தில் தோற்றுதல்; பூத்தல்; ஒன்றன்மீது ஒன்று உறுதல்; மொய்த்தல்; அகப்படுதல்; புகுதல்; பெய்தல்; பெரிதாதல்; மேன்மையடைதல்; அழிதல்; சாதல்; மறைதல்; புண் காய்தல்; சாய்தல்; வாடுதல்; துன்பமடைதல்; தொங்குதல்; ஒலித்தல்; பாய்தல்; புதைக்கப்படுதல்; உடன்படுதல்; ஒத்தல்; பொறுத்தல்; முட்டுதல்.

**படுதா** – திரைச்சீலை; மூடுசீலை; ஒதுக்கிடம்.

**படுநிலம்** – நீரில்லா நிலம்; விளையா நிலம்; சுடுகாடு; போர்க்களம்.

**படுநீலி** – பெருஞ்சாதனைக்காரி.

**படுநுகம்** – அரசபாரம்.

**படுபழம்** – முதிர்ந்த பழம்; வஞ்சகன்.

**படுபழி** – கொடிய தீச்செயல்.

**படுபனை** – காய்க்கும் பனை.

**படுபாடர்** – விடாப்பிடியுடையவர்.

**படுபாதகன், படுபாவி** – மிகக் கொடியவன்.

**படுபுரளி, படுபொய்** – பெரும்பொய்.

**படுபொருள்** – புதையல்; மிகுதியாய்த் தேடிய பொருள்; நிகழ்வது.

**படுமரம்** – பட்டமரம்.

**படுமலை, படுமலைப்பாலை** – பாலை யாழ்த்திறவகை; குறிஞ்சியாழ்த்திறவகை.

**படுமுதலாக** – தன்னடைவே.

**படுமுறை** – அபராதம், ஒறுப்புப் பணம்.

**படுமோசம்** – முழுமோசம்; பெருங்கேடு; பெருந்தவறு.

**படுவசை** – பெருநிந்தனை.

**படுவஞ்சனை** – பெருமோசம்; முழுதும் அழிகை.

**படுவம்** – சேற்றுநிலம்.

**படுவன்** – கள் விற்போன்; ஒரு புண்கட்டிவகை; கீரைவகை.

**படுவான்** – மேற்றிசை; அழிவான்.

**படுவி** – கள்விற்பவள்; கற்பில்லாதவள்; குட்டையானவள்.

**படுவை** – தெப்பம்.

**படை** – சேனை; அறுவகைப் படைகள்; திரள்; சுற்றம்; ஆயுதம்; கருவி; சாதனம்; காண்க: **இரத்தினத்திரயம்**; முசுண்டி; கலப்பை; குதிரைக்கலணை; யானைச்சூல்; போர்; கல் முதலியவற்றின் அடுக்கு; செதிள்; சமமாய்ப் பரப்புகை; படுக்கை; உறக்கம்; மேகப்படை.

**படை** (வி) – உண்டாக்கு; படைஎன் ஏவல்.

**படைஊற்றம்** – படைத்தேர்ச்சி.

**படைக்கப்பல்** – போர்க்கப்பல்.

**படைக்கர்த்தா** – படைத்தலைவர்.

**படைக்கலக்கொட்டில்** – போர்க்கருவிக்கூடம்.

**படைக்கலத்தொழில்** – ஆயுதங்களைக்கொண்டு போரிடுந் தொழில்.

**படைக்கலம்** – ஆயுதம்; எறிபடை; எஃகு.

**படைக்கிழவன்சிறுக்கன்** – காண்க: **படையுள் படுவோன்**.

**படைக்குழப்பம்** – படைவீரரின் குழப்பம்; போர் வீரர் தலைவர்க்கடங்காது புரியும் கலகம்.

**படைக்கோலம்** – போர்க்கோலம்.

**படைகூட்டுதல்** – படைக்கு ஆள்திரட்டுதல்.

**படைச்சனம்** – போர்வீரர்.

**படைச்சாத்து** – சேனைக்கூட்டம்.

**படைச்சால்** – உழவுசால்.

**படைச்சிறுக்கன், படைச்சிறுப்பிள்ளை** – காண்க: **படையுள் படுவோன்**.

**படைச்செருக்கு** – படைவீரம்.

**படைசாற்றுதல்** – போருக்கழைத்தல்.

**படைசெய்தல்** – போர்புரிதல்.

**படைஞர்** – படைவீரர்.

**படைத்தல்** – உண்டாக்கல்; பரிமாறுதல்; நிவேதித்தல்; சம்பாதித்தல்; பெற்றிருத்தல்; கலத்தல்; அடித்தல்.

**படைத்தலைவன்** – சேனாபதி.

**படைத்தவன்** – காண்க: **படைப்போன்**; கருத்தா; தந்தை; ஒன்றை அடைந்தவன்.

**படைத்துக்கோட்பெயர்** – கூத்திலும் விளையாட்டிலும் உறுப்பினர்க்கு இட்டு வழங்கும் பெயர்.

**படைத்துணை** – போர்த்துணை; போரில் உதவுவோன்.

**படைத்துமொழிதல்** – கற்பித்துச் சொல்லுதல்.

**படைத்தோன்** – காண்க: **படைத்தவன்**.

**படைநர்** – போர்வீரர்.

**படைநாள்** – படையெழுச்சி நாள்.

**படைநிலை** – படையாளர் மகளிருடன் தங்குமிடம்.

**படைப்பற்று** – பாளையம்; மேகப்படை.

**படைப்பு** – உண்டாக்கப்பட்டது; பெறுகை; செல்வம்; நிவேதனம்; உணவு பரிமாறுதல்; காடு.

**படைப்போன்** – பிரமன்.

**படைபண்ணுதல்** – போர் செய்தல்.

**படைபயிற்றல்** – ஆயுதவித்தை கற்பித்தல்; சிலம்பம் பழக்கல்.

**படைபோதல்** – போருக்குப் போதல்.

**படைமடம்** – அறப்போர் நெறியினின்றும் தவறுதல்.

**படைமயிர்** – பாவாற்றி.
**படைமரம்** – நெய்வார் கருவியுள் ஒன்று.
**படைமறுத்தல்** – கீழறுத்தல்.
**படைமுகம்** – போர்த்தொடக்கம்.
**படையணி** – தீப்பந்தம் வைத்துக்கொண்டு ஆடும் ஆட்டவகை.
**படையர்** – சேனைகளையுடையவர்.
**படையல்** – தெய்வத்திற்குப் படைக்கும் பொருள்; அடிக்குமடி.
**படையறுத்தல்** – கீழறுத்தல்; வசீகரித்தல்.
**படையறுதல்** – வலிமையிழத்தல்; கீழ்ப்பட்டு அடங்குதல்.
**படையாட்சி** – படைவீரன்; வீரச்செயல்; ஒரு சாதியாரின் பட்டப்பெயர்.
**படையாள், படையாளன்** – போர்வீரன்.
**படையிறங்குதல்** – பாளையம் போடுதல்.
**படையுடன்படாமை** – ஆயுதமெடேன் என்று வரைந்துகொள்ளுகை.
**படையுள்படுவோன்** – அரசன் ஆணையைப் போர் வீரர்களுக்கு அறிவிப்போன்.
**படையுறுப்பு** – சேனையின் அணி.
**படையுறை** – ஆயுத உறை.
**படையெடுத்தல்** – படையுடன் பகைப்புலத்தின் மேற்செல்லுதல்.
**படையெழுச்சி** – படையெழுதல்.
**படைவகுப்பு** – தண்டம், மண்டலம், அசங்கதம், போகம் எனும் நால்வகைப்பட்ட அணிவகுப்பு.
**படைவட்டம்** – வளைதடி.
**படைவரம்** – குதிரைச்சேணம்.
**படைவழக்கு** – தம்மில் இனமொத்த படை வீரர்க்கு அரசன் படைவழங்குதலைக் கூறும் புறத்துறை.
**படைவாள்** – கலப்பைக்கொழு; கலப்பை.
**படைவீடு** – படைக்கலக்கொட்டில், ஆயுதசாலை; பாசறை; முருகனின் அறுவகைப்பட்ட இருப்பிடம்; தலைநகர்.
**படைவீரன்** – சேனைவீரன்.
**படோல்** – காண்க: பேய்ப்புடல்.
**படோலம்** – யானைகட்டுந் தறி; முள்வெள்ளரி.
**பண்** – இசை; இசைப்பாட்டு; ஏழு சுரமுள்ள இசை; யாழ் முதலிய நரம்புக் கருவிகள்; பருவம்; குதிரைக்கலணை; அலங்காரம்; கூத்துவகை; ஓசை; யானை குதிரைகளுக்குச் செய்யும் அலங்காரம்; தேருக்குச் செய்யும் அலங்காரம்; தகுதி; அமைவு; மரக்கலத்தின் இடப்புறம்; வயல்; தொண்டு; நீர்நிலை; தோணியின் இடப்பக்கப் பாய்மரக் கயிறு.
**பண் (வி)** – செய், பண்ஏன் ஏவல்.
**பண்கயிறு** – தோணியின் இடப்பக்கத்துப் பாய் மரக் கயிறு.
**பண்செய்தல்** – பண்படுத்தல்; ஒப்பனைசெய்தல்.
**பண்டக்கலம்** – பொன்னணிகலன்.
**பண்டக்காரன்** – செல்வன்; பண்டத்துக்குரியவன்.
**பண்டகன்** – அலி.
**பண்டகாரி** – பொருளாளன்; செல்வமிக்கவன்.
**பண்டங்கன்** – காண்க: **பண்டரங்கன்.**
**பண்டசாலை** – பொருள்களைச் சேர்த்துவைக்கும் இடம்; அணிகலன் முதலியன வைக்கும் இடம்; களஞ்சியம்; கருவூல அறை.
**பண்டடை** – களஞ்சியம்.
**பண்டப்பழிப்பு** – ஒரு பொருளைக் குறித்துக் குறை கூறுகை; காய்கறிகளின் மதிப்பைக் குறைத்துக் கூறுகை.
**பண்டபதார்த்தம்** – பொருள்கள்; உணவுப் பொருள்கள்; சொத்து.
**பண்டம்** – பொருள்; பாண்டம் முதலியன; தின் பண்டம்; பயன்; பொன்; நிதி; ஆடுமாடுகள்; வயிறு; உடல்; உண்மை; பழம்.
**பண்டமாற்று, பண்டமாற்றுமுறை** – ஒரு பொருளைக் கொடுத்து மற்றொரு பொருளை வாங்குதல்.
**பண்டமாறுதல்** – ஒன்று கொடுத்து மற்றொன்று வாங்குதல்; விற்றல்.
**பண்டர்** – கீழ்மக்களுள் பாடும் வகுப்பினர்; அசுரர்.
**பண்டரங்கன்** – பாண்டரங்கக் கூத்தாடுவோனான சிவபெருமான்.
**பண்டவறை** – காண்க: **பண்டசாலை.**
**பண்டவீடு** – நிதியறை.
**பண்டறிசுட்டு** – முன்னமே அறிந்ததைக் குறிக்குஞ் சுட்டு.
**பண்டன்** – ஆண்தன்மை இல்லாதவன்.
**பண்டனம்** – போர்; கவசம்.
**பண்டாக்கள்** – தலங்களில் பயணிகளுக்கு உதவி செய்யும் பார்ப்பனப் புரோகிதர்.
**பண்டாகி** – சேம்புச்செடி; கத்தரிச்செடி.
**பண்டாரத்தி** – பண்டாரப்பெண்.
**பண்டாரத்தோப்பு** – அரசாங்கத் தோட்டம்.
**பண்டாரம்** – பல்பண்டம்; செல்வம்; களஞ்சியம்; இனிய தின்பண்டம்; மஞ்சட்பொடி; பொது; பரதேசி; சைவத்துறவி; பூக்கட்டி விற்கும் ஒரு சாதியார்.
**பண்டாரவாடை** – வேளாண்மையையே ஆதாரமாகக் கொண்டிருக்கும் ஊர்; ஓர் ஊர்.
**பண்டாரவாரியம்** – கோயில் விசாரணைச் சபையார்.
**பண்டாரவிடுதி** – அதிகாரிகள் தங்கும் விடுதி.
**பண்டாரவேலை** – பொது ஊழியம்; கட்டாயத் தின்மேற் செய்யும் வேலை.

**பண்டாரி** – கருவூலக் காப்பாளன், நிதி காப்பாளன்; உடையார்சாதிப் பட்டப்பெயர்; மரக்கலப் பண்டங் காப்போன்; காவல் அதிகாரியின் ஏவலாள்; சைவத்துறவி.

**பண்டி** – வண்டி; வயிறு; உடல்; யானை; உரோகிணிநாள்.

**பண்டிகை** – திருநாள்; பெருநாள்; ஒருவகைச் சிற்பவேலை.

**பண்டிதம்** – கல்வித்திறம்; மருத்துவம்.

**பண்டிதவாய்** – கடுக்காய்.

**பண்டிதன்** – புலவன்; மருத்துவன்; சுக்கிரன்; புதன்; நாவிதன்; வரிக்கூத்துவகை; ஓர் அலுவலன்.

**பண்டிதை** – மிகக் கற்றவள்.

**பண்டியுளிரும்பு** – வண்டியின் இரும்பச்சு.

**பண்டிலன்** – தூதன்.

**பண்டு** – பழைமை; முற்காலம்; நிதி.

**பண்டுகம்** – காண்க: ஓமம்; செவ்வகத்திமரம்.

**பண்டை** – பழைமை; முற்காலம்; கல்வி; அறிவு.

**பண்டைக்காலம்,** **பண்டைநாள்** } – முன்னாள்.

**பண்டைப்பயில்வு** – முற்பிறப்பின் பழக்கம்.

**பண்டையர்** – முன்னோர்.

**பண்டையூழி** – கிருதயுகம்.

**பண்டைவினை** – முன்வினை.

**பண்ணத்தி** – உரையும் பாட்டுமாகச் செய்யப்படும் ஒரு நூல்வகை.

**பண்ணப்பணைத்தல்** – கப்புங்கிளையும்விட்டுச் செழித்தல்.

**பண்ணமைத்தல்** – சித்தஞ்செய்தல்.

**பண்ணமைமுழவு** – வீரமுழவுவகை.

**பண்ணல்** – யாழ்நரம்புகளைப் பண்ணுக்கேற்ற வாறு அமைத்தல்.

**பண்ணவன்** – கடவுள்; தேவன்; அருகன்; முனிவன்; குரு; திண்ணியன்; பாணன்.

**பண்ணவி** – தேவி.

**பண்ணறை** – இசையறிவற்றவன்; அடைவுகேடு.

**பண்ணாளத்தி** – இராக ஆலாபனம்.

**பண்ணானவன்** – நன்னெறியாளன்.

**பண்ணிகாரம்** – பலபண்டம்; பணியாரம்.

**பண்ணியம்** – இசைக்கருவி; விற்கப்படும் பொருள்; பண்டம்; பலகாரம்.

**பண்ணியவிலைஞர்** – பண்டவாணிகர்.

**பண்ணியவீதி** – கடைத்தெரு.

**பண்ணியற்றிறம்** – ஆறு சுரமுள்ள இசை.

**பண்ணியாங்கனை** – பரத்தை.

**பண்ணியாரம்** – காண்க: பணிகாரம்.

**பண்ணுதல்** – செய்தல்; அணியமாதல், ஆயத்தஞ் செய்தல்; இசைக்கருவியில் வாசித்தல்; சுருதியமைத்தல்; அலங்கரித்தல்; சமைத்தல்.

**பண்ணுமை** – இசைத்தன்மை.

**பண்ணுரை** – புனைந்துரை.

**பண்ணுவன்** – குதிரைப்பாகன்; யானைப்பாகன்.

**பண்ணுறுத்தல்** – நுகத்தில் பூட்டுதல்; வாகனாதிகளைச் சித்தஞ்செய்தல்; அலங்கரித்தல்.

**பண்ணுறுதல்** – ஆயத்தமாதல், அணியமாதல்.

**பண்ணை** – மருதநிலம்; வயல்; தோட்டம்; நீர்நிலை; ஓடை; சொந்த வேளாண்மை; வாரக்குடி; பனந்தோப்புக் குடிசை; மக்கட்கூட்டம்; மகளிர்கூட்டம்; தொகுதி; பெருங்குடும்பம்; மிகுதி; மகளிர் விளையாட்டு; விலங்கு துயிலிடம்; ஒரு கீரைவகை; தடவை; இசை.

**பண்ணைக்காரன்** – உழவன்; பண்ணையாள்; பெருநிலக்கிழான்; ஊர் உதவிமணியக்காரன்.

**பண்ணைக்கீரை** – ஒரு கீரைவகை.

**பண்ணைநிலம்** – சொந்தமாகப் பயிரிடும் நிலம்.

**பண்ணைபாய்தல்** – புனலிற் பாய்ந்து விளையாடுதல்.

**பண்ணைபார்த்தல்** – பயிரிடும் நிலங்களைக் கண்காணித்தல்; பெருங்குடும்பத்தை நிருவகித்தல்; பண்ணையில் ஊழியம் செய்தல்.

**பண்ணையரிவாள்** – கதிரறுக்கும் அரிவாள்.

**பண்ணையாடுதல்** – விளையாடுதல்.

**பண்ணையார்** – பெருநிலக்கிழார்.

**பண்ணையாள்** – வயலில் வேலைசெய்பவன்.

**பண்ணைவீடு** – பெருநிலக்கிழாரின் வீடு; மடைப்பள்ளி; பண்டசாலை.

**பண்ணைவைத்தல்** – தானே பயிர்செய்ய ஆள் முதலியன அமர்த்தல்; உணவு சமைத்தல்; தோணியைச் சித்தஞ்செய்தல்; கோழிப் பண்ணை முதலியன வைத்தல்.

**பண்பட்டவன்** – கல்வியறிவும் அனுபவமும் உள்ளவன்.

**பண்படுத்துதல்** – சீர்திருத்துதல்; நிலம் முதலியவற்றைச் செம்மைப்படுத்துதல்.

**பண்படுதல்** – சீர்திருந்துதல்; உதவுதல்; அமைதல்; நிலம் முதலியன செப்பமாதல்.

**பண்பாகுபெயர்** – பண்புப்பெயர் பண்பிக்கு ஆகி வருவது.

**பண்பாளன்** – நற்குணமுடையவன்.

**பண்பி** – பண்பையுடைய பொருள்.

**பண்பு** – வண்ணம், வடிவு, அளவு, சுவை என்னும் நாற்குணம்; இயல்பு; மனத்தன்மை; பிறர் இயல்பை அறிந்து நடக்கும் நற்குணம்; விதம்; பண்புப்பெயர்; அழகு; முறை; செய்கை.

**பண்புகாட்டுதல்** – இயற்கைக் குணத்தை வெளிப்படுத்துதல்.

**பண்புகொள்பெயர்** – பண்புச்சொல் தழுவிய பெயர்; பண்படியாகப் பிறந்த பெயர்ச்சொல்; பண்பியைக் குறிக்கும் பெயர்.

**பண்புச்சொல்** – பண்புணர்த்துஞ் சொல்.

**பண்புடைமை** – எல்லார் இயல்புகளையும் அறிந்து ஒத்து ஒழுகும் தன்மை.

**பண்புத்தொகை, பண்புதொகுமொழி** – பண்புருபு இடையில் மறைந்து வருவது.

**பண்புருபு** – பண்பைக் குறிக்கும் 'ஆகிய' என்னும் சொல்லுருபு.

**பண்புரைப்பார்** – தூதர்.

**பண்புலம்** – உரமிட்ட வயல்.

**பண்புவமை** – ஒன்றன் பண்பை மற்றொன்றற்கு ஒப்பிடுவது.

**பண்பொட்டு** – காண்க: **பண்புத்தொகை.**

**பண்மகள்** – விறலி.

**பண்மாறு** – தேசிக்கூத்தை ஒருமுறை ஆடி முடிக்கை.

**பண்விடுதல்** – நிலைகுலைதல்.

**பணக்காரன்** – செல்வன்.

**பணக்காரி** – செல்வமிக்கவள்.

**பணக்கொழுப்பு, பணச்சலுகை** – செல்வச்செருக்கு.

**பணத்தட்டு** – பணமுடை.

**பணதரம்** – படத்தையுடைய பாம்பு.

**பணதி** – வேலைப்பாடு; செயல்; படைப்பு; அணிகலன்; கற்பனை.

**பணப்பித்து** – பணவாசை.

**பணப்பேய்** – பொருளாசை மிகுந்தவன்.

**பணம்** – பருமை; ஒரு நாணயம்; பொற்காசு; வாணிகச் சரக்கு; பொருள்; விலை; யானை நடத்தும் ஆயுதம்; பந்தயம்; பாம்பின் படம்; பாம்பு; இடங்கை வலங்கைப் பிரிவினர்; வேலை; வீடு; பணையப்பொருள்.

**பணமணி** – நாகரத்தினம்.

**பணமிடுக்கு** – செல்வத்தாலான வலிமை.

**பணமிதப்பு** – செல்வமிகுதி.

**பணமுடக்கம்** – பணமில்லாக் குறைவு; பணம் வட்டியின்றி வீணாகத் தங்குகை.

**பணமுடிச்சு** – பணக்கிழி.

**பணமுடை** – பணத்தட்டு.

**பணயம்** – ஈடாக வைத்த பொருள்; விலைமகளுக்குக் கொடுக்குங் கூலி; பந்தயப் பொருள்.

**பணர்** – மரக்கிளை; அடர்ந்த கொம்பு.

**பணவம்** – தம்பட்டம்.

**பணவன்** – வேலைக்காரன்.

**பணவிடை** – அஞ்சல்வழி விடுக்கும் பணம்.

**பணவெடை** – நான்கு குன்றிமணி அல்லது அரைக்கால் வராகன் எடையுள்ள பொன்னிறை.

**பணவை** – பரண்; கழுகு; பேய்; அளவு.

**பணாங்கனை** – விலைமகள்.

**பணாடவி** – பாம்புப் படத்தின் கூட்டம்.

**பணாதரம்** – காண்க: **பணதரம்.**

**பணாமகுடம்** – பாம்பின் படமுடி.

**பணாமணி** – நாகரத்தினம்; மாணிக்கவகை.

**பணி** – செயல்; தொழில்; தொண்டு; பணிகை; பரக்கை; பயன்தரும் வேலை; நுகர்பொருள்; அணிகலன்; மலர்களால் அலங்கரிக்கை; பட்டாடை; தோற்கருவி; வேலைப்பாடு; வகுப்பு; சொல்; கட்டளை; விதி; வில்வித்தை முதலியவற்றைக் கற்பிக்குந் தொழில்; ஈகை; நாகம்; தாழ்ச்சி.

**பணி (வி)** – தொழு, பணி, பணிஎன் ஏவல்.

**பணிக்கம்** – திருத்தம்; தொழிலில் நேர்மை; எச்சில் உமிழும் கலம்.

**பணிக்களரி** – தொழில் செய்யும் இடம்; தொழிற்சாலை.

**பணிக்கன்** – ஆசாரியன்; படைக்கலம், கூத்து முதலியன பயிற்றுவோன்; தலைமைக் கொற்றன்; தச்சன்; யானைப்பாகன்; நாவிதர் தலைவன்; நச்சுத்தீர்க்கும் மருத்துவன்; பள்ளர்சாதி வகையான்; சாராயங் காய்ச்சு கிறவன்.

**பணிக்காயன்** – ஊழியன்.

**பணிக்காரன்** – வேலையாள்.

**பணிக்கு** – தொழிலில் நேர்மை; நல்ல உடற் கூறு; விவரமான குறிப்பு; சூழ்வினை.

**பணிக்குதல்** – பணித்தல்.

**பணிக்கை** – நேர்த்தியாய் முகமயிர் வெட்டுகை.

**பணிக்கொட்டில்** – தொழிற்சாலை.

**பணிகாரம்** – தின்பண்டவகை.

**பணிகொள்ளுதல்** – தொண்டனாக ஏற்றுக் கொள்ளுதல்.

**பணிகோள்** – வணக்கம்.

**பணிசாரகன்** – காண்க: **பணிக்காரன்.**

**பணிசெய்வோன்** – வேலை செய்பவன்; திருமணம், சாவு முதலிய காலங்களில் சங்கு அல்லது தாரை ஊதும் சாதியான்.

**பணித்தட்டார்** – பொற்கொல்லர்.

**பணித்தல்** – தாழ்த்துதல்; குறைத்தல்; மிதித்தல்; அருளிச்செய்தல்; ஆணையிடுதல்; ஏவுதல்; கொடுத்தல்.

**பணித்தலைவன்** – பாம்பரசனாகிய ஆதிசேடன்.

**பணிதம்** – பந்தயப்பொருள்.

**பணிதல்** – தாழ்தல்; பெருமிதமின்றி அடங்குதல்; இறங்குதல்; பரத்தல்; தாழ்ச்சியாதல்; வணங்குதல்; குறைதல்; எளிமையாதல்; உண்ணுதல்.

**பணிதி** – வேலை; அணிகலன்; அலங்கரிப்பு; துதிக்கத்தக்கது; செல்வச்செருக்கு; சொல்.

**பணிநர்** – ஏவல் செய்வோர்.

**பணிப்பகை** – பாம்பின் பகையான கருடன்.
**பணிப்படுத்துதல்** – ஒப்பனைசெய்தல்; செப்ப னிடுதல்; உண்டாக்குதல்; வேலைசெய்தல்.
**பணிப்பு** – தணிவு; ஏவல்.
**பணிப்பெண்** – குற்றேவல்மகள்.
**பணிப்பொத்தி** – துகில்வகை.
**பணிப்பொன்** – அணிகல வடிவான பொன்.
**பணிபதம்** – தாழ்ந்த சொல்.
**பணிபோதல்** – ஒரே செயலாயிருத்தல்; தொழில் புரிதல்.
**பணிமக்கள்** – தொண்டுபுரிவோர்.
**பணிமடங்குதல்** – வேலைமுடிகை.
**பணிமாறுதல்** – இரட்டல்; ஊதுதல்; தொண்டு செய்தல்; தொழில்மாறுதல்.
**பணிமுடக்கம்** – வேலைநிறுத்தம்.
**பணிமுட்டு** – தளவாடம்.
**பணிமூப்பிமார்** – தேவரடியார்.
**பணிமொழி** – தாழ்ந்த சொல்; மென்மொழி; பெண்; கட்டளை.
**பணியல்** – வழிபாடு.
**பணியார்** – பகைவர்.
**பணியாரம்** – காண்க: **பணிகாரம்.**
**பணியாளர்** – வேலைக்காரர்.
**பணியிறை** – ஆதிசேடன்.
**பணியினாக்கு** – தண்ணீர்விட்டான்செடி.
**பணியோள்** – பணிப்பெண்.
**பணிலம்** – சங்கு; வலம்புரிச்சங்கு; சங்கினால் இயன்ற கைவளைவகை.
**பணிவிடை** – குற்றேவல்; திருப்பணி; வேலை; கட்டளை.
**பணிவிடைக்காரன்** – வேலையாள்; தொழிலாளி; கோயிற்பிள்ளை.
**பணிவிளக்கு** – கோயில்விளக்குவகை.
**பணிவு** – கீழ்ப்படிகை; வணக்கம்; குறை; தாழ் விடம்.
**பணினம்** – காண்க: **பணாதரம்.**
**பணீசன்** – காண்க: **பணியிறை.**
**பணை** – பருமை; பெருமை; மரக்கொம்பு; மூங்கில்; அரசமரம்; மருதநிலம்; வயல்; நீர் நிலை; குதிரை யானைகள் தங்குமிடம்; விலங் கின் படுக்கை; முரசு; வாத்தியம்; மருதநிலப் பறை; உயரம்; பரண்; தவறுகை; ஐந்து ஆண்டுகொண்ட காலவளவு; சாணைக்கல்; உலைக்களத்துப் பட்டடை; யானைத் தந்தம்.
**பணைத்தல்** – பருத்தல்; செழித்தல்; பிழைத்தல்.
**பணையம்** – பந்தயப்பொருள்; ஈடு; காலணி வகை.
**பணையவன்** – முரசறைவோன்.
**பணையான்** – சாணைக்கல் செய்வோன்.
**பத்தகேசரி** – கருப்பூரம்.
**பத்தங்கெட்டவன்** – ஒழுக்கங்கெட்டவன்.
**பத்தசாரம்** – காடி.
**பத்ததி** – ஒழுங்கு; ஆகமக் கிரியைக்கு வழி காட்டும் நூல்; சொற்பொருள்; வழி.
**பத்தம்** – கட்டு; உண்மை; உணவு; செய்நன்றி யறிகை; குவியல்; உண்கலம்.
**பத்தர்** – கடவுளன்புடையவர், அடியார்; அன்புடையார்; வீரசைவரில் புலால் உண்ணாத வகுப்பினர்; இருவினைப் பிணைப் புள்ள ஆன்மாக்கள்; வணிகர்கள்; தட்டார் பட்டப்பெயர்களுள் ஒன்று; குடுக்கை; தொட்டி; மரத்தாலான நீர் இறைக்கும் கருவி; குழி; நார் உரித்தற்கு ஏற்ற பனை மட்டையின் ஓர் உறுப்பு.
**பத்தராய்ப்பணிவார்** – தொகையடியாருள் சிவபிரானுக்கும் சிவனடியாருக்கும் தொண்டு புரியும் ஒரு சாரார்.
**பத்தராவி** – பத்தர்களுக்கு உயிர்போன்ற திருமால்.
**பத்தல்** – நீரிறைக்குங் கருவி; தொட்டி; குடுக்கை; குழி; நார் உரித்தற்கு ஏற்ற பனைமட்டையின் ஓர் உறுப்பு.
**பத்தவற்சலன்** – அடியார்களிடம் பேரன்புள்ள கடவுள்.
**பத்தனம்** – பட்டணம்.
**பத்தா** – கணவன்; துப்பு; படிப்பணம்.
**பத்தாசு** – படகு.
**பத்தாசை** – நன்றியும் அன்பும்.
**பத்தாம்பசலி** – காலத்திற்குப் பொருந்தாத பழங் கருத்து.
**பத்தாயம்** – தானியம் முதலியன இட்டுவைக்கும் களஞ்சியம்; பெரும்பெட்டகம்; விலங்கு முதலியன அடைக்குங் கூண்டு; எலி முதலியன பிடிக்கும் பொறி.
**பத்தி** – வழிபாடு; ஒழுக்கம்; முறைமை; வரிசை; வகுப்பு; பத்திரிகை முதலியவற்றின் நீளவாட் டுப் பகுதி; அலங்கார வேலைப்பாடு; யானை யின் நடைவகை; வீட்டிறப்பு; தூணின் இடை வெளி; பாத்தி; நம்பிக்கை; பக்தி; படைத் தொகுதி.
**பத்திக்கீற்று** – காண்க: **தொய்யில்.**
**பத்திக்குறடு** – கோயிலுள் எழுப்பப்பட்டிருக்கும் திண்ணை.
**பத்திசாரன்** – திருமழிசையாழ்வார்.
**பத்திடை** – ஆயிரம் பலங்கொண்ட நிறுத்த லளவை.
**பத்திநெறி** – பத்தியால் நற்கதியடையும் முறை.

**பத்திபாய்தல்** – ஒளிவீசுதல்; எதிரொளித்தல்.
**பத்திமார்க்கம்** – காண்க: **பத்திநெறி.**
**பத்திமாலை** – இடுப்புவரை தொங்குவதும் மணமக்கள் அணிவதுமான மாலை; தாழ்வடம்.
**பத்திமான்** – பத்திமிக்கோன்.
**பத்திமுகம்** – பந்தல் அல்லது சுவரின் முன்பக்க நெற்றி.
**பத்திமை** – தெய்வபத்தியுடைமை; காதல்.
**பத்தியம்** – மருந்துக்குத் தக்கவாறு உண்ணப்படும் உணவு; இதம்; கவனம்; படிப்பணம்; இலஞ்சம்; காண்க: **கடுக்காய்; அவுரி;** பூவாது காய்க்கும் மரம்; செய்யுள்.
**பத்தியமுறித்தல்** – மருந்துப் பத்தியத்தைக் கெடுத்தல்; குறித்த காலத்திற்கப்பால் பத்தியவுணவை நீக்குதல்.
**பத்தியிறக்குதல்** – தாழ்வாரம் இறக்குதல்.
**பத்தியுலாவுதல்** – கடவுள் ஊர்தியில் எழுந்தருளி உலாவருதல்; வரிசையாயுலாவுதல்.
**பத்திரகம்** – இலை; இறகு; சந்தனம்.
**பத்திரகாளி** – கொற்றவை.
**பத்திரப்படுத்துதல்** – காத்தல்; காவலில் வைத்துப் பாதுகாத்தல்.
**பத்திரப்பதிவு** – ஆவணத்தை அரசாங்கப் பதிவு செய்கை.
**பத்திரம்** – இலை; புத்தகத்தின் ஏடு; இலை போன்ற தகடு; ஓர் அணிகலன்; சாசனம்; திருமுகம்; பூவிதழ்; இறகு; அம்பு; சிறுவாள்; அழகு; அழகிய உருவம்; கவனம்; நன்மை; பாதுகாப்பு; நலம்; யானைவகை; மலை; பீடத்திலுள்ள எழுதகவகை; காண்க: **பத்திரலிங்கம்;** குதிரைப்பந்தி; நவ வருடத்துளொன்று; காண்க: **பத்திராச(த)னம்.**
**பத்திரலிங்கம்** – சைவாலயத்துப் பலிபீடம்.
**பத்திரன்** – சிவன்; வீரபத்திரன்; காண்க: **பாணபத்திரன்.**
**பத்திராகாரன்** – அழகிய வடிவினன்.
**பத்திராங்கம்** – செஞ்சந்தனம்; ஊமத்தை.
**பத்திராச(த)னம்** – அரியணை; அவைத்தலைமை; ஆசனவகை.
**பத்திராதியர்** – இதழ்நடத்துந் தலைவர்.
**பத்திராலாபனம்** – நலங்கூறுகை.
**பத்திரி** – அம்பு; பறவை; குதிரை; சாதிபத்திரி; இலை; காளி; கொத்தளம்; காட்டுச்சாதி.
**பத்திரிகை** – செய்தித்தாள்; கடிதம்; அச்சடித்த தாள்; சாதனம்; விளம்பரத்துண்டு; இலை.
**பத்திரை** – இரண்டு, ஏழு, பன்னிரண்டாந் திதிகள்; காலவகை; நற்பசு; காளி; கண்ணன் தேவியருள் ஒருத்தி.
**பத்திரைகேள்வன்** – வீரபத்திரன்.
**பத்திவிசுவாசம்** – திடமான நம்பிக்கை.
**பத்திவைராக்கியம்** – தெய்வபத்தியில் திடமாயிருத்தல்.
**பத்தினி** – கற்புடையாள்; மனைவி.
**பத்தினிக்கடவுள்** – கடவுளாகக் கருதப்பட்ட கண்ணகி.
**பத்தினிக்கல்** – இறந்த கற்புடையாட்டியின் பொருட்டு நாட்டப்படுங் கல்.
**பத்தினிப்பிள்ளை** – உரிமைப் பிள்ளை.
**பத்து** – ஓர் எண்; தசமிதிதி; காண்க: **பற்று;** வயல்; கடவுள், பெரியோர் முதலியோரிடத்து உள்ள பத்தி; நாலாயிரப் பிரபந்தத்தில் பத்துப் பதிகம் கூடிய பகுதி; சீட்டுக்கட்டில் பத்துக் குறியுள்ள சீட்டினம்.
**பத்துக்காடு** – வயல்நிலம்; திட்டமான புன்செய்த் தீர்வை.
**பத்துக்காலோன்** – பத்துக்கால்களுடைய நண்டு.
**பத்தும்பத்தாத** – முழுமையாக.
**பத்துமாற்றுத்தங்கம்** – பத்தரைமாற்றுத்தங்கம், உயர்ந்த தங்கம்.
**பத்தூரம்** – பொன்னாங்காணிப்பூடு.
**பத்தை** – சிறு துண்டு; மண்ணோடுகூடிய பசும்புல் துண்டு; குயவன் அறுக்குங் கருவி.
**பத்தைகட்டுதல்** – ஒடிந்த எலும்பு கூடுவதற்கு மட்டை வைத்துக் கட்டுதல்; பொய்மொழிகளால் பாசாங்கு செய்து குற்றத்தை மறைக்க முயலுதல்.
**பதக்கணம்** – வலம்வருகை.
**பதக்கம்** – சரடு முதலியவற்றில் கோக்கப்பட்டுத் தொங்கும் கழுத்தணிவகை.
**பதக்கிரமம்** – நடன நடைமுறை.
**பதக்கு** – இரண்டு மரக்கால் கொண்டது, இரண்டு குறுணி.
**பதக்குப்பதக்கெனல்** – அச்சக்குறிப்பு.
**பதகம்** – பறவை; பாதகம்; ஊர்த்தொகுதி.
**பதகளித்தல்** – பதறுதல்.
**பதகன்** – கொடும்பாவி; கீழ்மகன்.
**பதகி** – கொடும்பாவி; கீழ்மகள்.
**பதங்கம்** – பறவை; விட்டில்பூச்சி; பாதரசம்; மருந்துச் சரக்குவகை; சப்பங்கிமரம்.
**பதங்கமம்** – பறவை; விட்டிற்பூச்சி.
**பதங்கன்** – சூரியன்.
**பதங்கு** – குழி; ஒட்டுவரிசை; பிளந்த பனையின் பாதி.
**பதச்சாயை** – மக்களின் நிழல்.
**பதச்சேதம்** – சீர்; சொற்றொடரைத் தனித்தனி சொல்லாகப் பிரித்தல்.
**பதசம்** – பறவை; சந்திரன்.

**பதசாரம்** – சொல்லின் பொருள்நயம்.
**பதசாரி** – நாட்டியத்திற் காலடியிடும்வகை.
**பதசாலம்** – மகளிர் அணியும் காலணிவகை.
**பதஞ்செய்தல்** – பதப்படுத்துதல்; மென்மையாக்குதல்.
**பதட்டம்** – காண்க: **பதற்றம்.**
**பதடி** – பதர்; உமி; பயனின்மை; வில்.
**பதணம்** – மதிலுள்மேடை; மதில்.
**பதத்திரம்** – சிறகு.
**பதத்திரி** – பறவை.
**பதநியாசம்** – நடனத்தில் ஒழுங்குபெற அடிவைக்கும் முறை; ஒரு பூண்டுவகை.
**பதநீர்** – புளிப்பு ஏறாதபடி சுண்ணாம்பு இடப்பட்ட கலயத்துள் இறக்கிய இனிப்புக் கள்; பனஞ்சாறு.
**பதநெகிழ்த்தல்** – சொற்பிரித்தல்.
**பதப்படுத்துதல்** – பயன்படும்படி செய்தல்; இணக்குதல்; பக்குவப்படுத்துதல்.
**பதப்படுதல்** – பக்குவமாதல்; பழுத்தல்.
**பதப்பர்** – வெள்ளத்தைத் தடுக்க இடும் மணற்கோட்டை.
**பதப்பாடு** – பக்குவமாகை; பழுக்கை; மதிலுறுப்பு.
**பதப்பிரயோசனம்** – சொல்லின் பொருள்நயம்.
**பதப்புணர்ச்சி** – நிலைமொழியும் வருமொழியும் ஒன்றுபடுகை.
**பதப்பேறு** – காண்க: **பதமுத்தி.**
**பதப்பொருள்** – காண்க: **பதவுரை.**
**பதபதெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; நெஞ்சு அடித்தற் குறிப்பு.
**பதபாடம்** – வேதவாக்கியங்களைப் பதம்பதமாக எடுத்தோதும் முறை.
**பதபாதம்** – காலடி.
**பதபூர்த்தி** – சாரியை.
**பதம்** – பக்குவம்; உணவு, சோறு; அவிழ்; தண்ணீர்; ஈரம்; கள்; அறுகம்புல்; இளம்புல்; இனிமை; இன்பம்; அழகு; ஏற்ற சமயம்; தகுதி; பொழுது; நாழிகை; கூர்மை; அடையாளம்; அளவை; பொருள்; காவல்; கொக்கு; முயற்சி; மாற்றுரு; செய்யுளடி நாலிலொன்று; பூரட்டாதிநாள்; மொழி; காண்க: **பதபாடம்**; இடம்; பதவி; தெய்வபதவி; வழி; தரம்; கால்; வரிசை; ஒளி; இசைப்பாட்டுவகை.
**பதம்பார்த்தல்** – ஆய்வுசெய்தல்; சுவையறிதல்; செயலைத் தொடங்குமுன் ஆராய்ந்து பார்த்தல்; விதையிட நிலஞ் சோதித்தல்.
**பதமம்** – சந்திரன்; பறவை; விட்டிற்பூச்சி.
**பதமுடித்தல்** – பகுபத உறுப்புக் கூறுதல்.
**பதமுத்தி** – பரமுத்திக்கும் கீழ்ப்பட்ட இந்திரன் முதலிய இறையவர் பதங்கள்.
**பதமை** – மென்மை; மந்தகுணம்; அமைதி; மெல்லோசை; இணக்கம்; தாழ்மை.
**பதயுகம்** – இணையடிகள்.
**பதர்** – உள்ளீடு இல்லாத நெல்; பயனின்மை; பயனற்றவர்; குற்றம்.
**பதர்ச்சொல்** – பொருளில்லாத சொல்.
**பதர்த்தல்** – பதராய்ப் போதல்.
**பதரி** – இலந்தைமரம்; காண்க: **பதரிகாசிரமம்.**
**பதரிகாசிரமம்** – இமயச்சாரலில் உள்ளதும் நாராயணர் தவம் புரிந்ததும் திருமாலுக்குச் சிறந்ததுமான தலம்.
**பதலம்** – பத்திரம்; பாதுகாப்பு.
**பதலை** – சிறுமலை; மலை; மத்தளம்; ஒருகட்பகுவாய்ப் பறை; தாழி; அலங்காரக் குடம்.
**பதலைவங்கு** – மலைக்குகை.
**பதவம்** – அறுகம்புல்.
**பதவல்** – குப்பை.
**பதவாயுதம்** – காண்க: **காலாயுதம்.**
**பதவி** – நிலை; வழி; புண்ணியவுலகம்; நால்வகை வீட்டுநிலை; நீர்மையுள்ளவன்.
**பதவிசு** – அமைதி.
**பதவியடைதல்** – கதியடைதல்; உயர்நிலை அடைதல்.
**பதவியது** – சாந்தமானது; மெல்லியது.
**பதவு** – காண்க: **பதவல்**; புல்; புற்கட்டு; புன்மை; அமைதி.
**பதவுரை** – செய்யுளில் சொல்லைப் பிரித்துப் பொருளுரைத்தல்.
**பதவை** – வழி; குப்பை.
**பதற்றம்** – முன்பின் ஆராயாமல் விரைவுபடுதல்.
**பதறுதல்** – காண்க: **பதற்றம்.**
**பதன்** – பக்குவம்.
**பதன்படுதல்** – பக்குவமாதல்.
**பதன்பதனெனல்** – மனம் பரிதவித்தற்குறிப்பு.
**பதனம்** – பத்திரம்; பாதுகாப்பு; மதிலுள் மேடை; மதில்; இறக்கம்; தாழ்மை; அமைதி; கோள்களின் அட்சாம்சம்.
**பதனழிதல்** – பக்குவநிலை தவறுதல்.
**பதனழிவு** – பக்குவம் கெடுகை.
**பதனி** – காண்க: **பதநீர்.**
**பதனிட்டதோல்** – செப்பனிடப்பட்ட தோல்.
**பதனிடுதல்** – தோல் முதலியவற்றை மெதுவாக்குதல்.
**பதாகம்** – விருதுக்கொடி; அபிநயத்துக்குரிய ஆண் கைகளுள் ஒன்று.
**பதாகன்** – அரசன்; கொடியுடையோன்.
**பதாகினி** – படை.
**பதாகை** – விருதுக்கொடி; பெருங்கொடி; இணையாவினைக்கைவகை; அபிநயக் கைவகை.

**பதாதி** – காலாட்படை; ஒரு யானை, ஒரு தேர், ஒரு குதிரை, ஐந்து காலாள்கள்கொண்ட படைத் தொகுதி; அமைதியின்மை.

**பதாயுதம்** – காண்க: **காலாயுதம்.**

**பதார்த்தம்** – சொற்பொருள்; பொருள்; சோறு ஒழிந்த கறி முதலிய உணவுப்பொருள்; சொத்து; திரவியம் முதலிய எழுவகைப் பொருள்கள்; சைவசமய முப்பொருள்; சமண சமய இருவகை மூலப்பொருள்கள்.

**பதி** – நகரம்; பதிகை; நாற்று; உறைவிடம்; வீடு; கோயில்; குறிசொல்லும் இடம்; ஊர்; பூமி; குதிரை; தலைவன்; கணவன்; அரசன்; மூத்தோன்; குரு; கடவுள்.

**பதிக்கினி** – கணவனைக் கொன்றவள்.

**பதிகம்** – பத்துச் செய்யுளால் முடியும் நூல்; பாயிரம்; நாற்று.

**பதிகன்** – வழிப்போக்கன்; காலாள்.

**பதிசித்திரம்** – கோபுரப்பதுமை.

**பதிசேவை** – கணவனுக்குச் செய்யும் தொண்டு.

**பதிஞானம்** – கடவுளைப்பற்றிய அறிவு, இறையறிவு.

**பதிஞானவாழ்வு** – பரம்பொருளோடு இரண்டறக் கலத்தலாகிய அனுபவம்.

**பதிட்டித்தல்** – தொடங்குதல்.

**பதிட்டை** – நிறுவுதல், பிரதிட்டை; தொடக்கம்.

**பதித்தல்** – அழுத்துதல்; மணி முதலியன இழைத்தல்; பதியவைத்தல்; குழியாக்குதல்; தாழ்த்தல்; எழுதல்; அதிகாரம் கொடுத்தல்.

**பதித்திரி** – உலைத்துருத்தி.

**பதித்தெழுதுதல்** – அழுந்த எழுதுதல்; மேலே இடம்விட்டுக் கீழே எழுதுதல்.

**பதிதபாவனன்** – ஒழுக்கம் தவறியவரைத் தூயராக்கும் கடவுள்.

**பதிதல்** – முத்திரை முதலியன அழுந்துதல்; தாழ்ந்திருத்தல்; ஆழ்தல்; ஊன்றுதல்; நிலையாதல்; தங்குதல்; கோள் முதலியன இறங்குதல்; விலை தணிதல்; அதிகாரம் பெறுதல்; பின்னிடுதல்.

**பதிதன்** – சமய ஒழுக்கந் தவறினவன்.

**பதிநிச்சயம்** – கடவுளின் இருப்பு அறிதல்.

**பதிப்பு** – பதித்தல்; நூல் அச்சிடுகை; அச்சிடப்பட்ட நூல்.

**பதிபக்தி** – கணவனிடம் கொண்டுள்ள அன்பு.

**பதிபடை** – மறைந்துநிற்கும் சேனை.

**பதிபோடுதல்** – பதுங்குதல்; நாற்றுநடுதல்; பதியம்போடுதல்.

**பதிமினுக்கு** – இடத்தைத் துலக்குவதாகிய துடைப்பம்.

**பதிமை** – பிரதிமை.

**பதியம்** – நாற்று; ஊன்றிநடுஞ் செடிகொடிகிளை முதலியன; காண்க: **இலைப்பாசி; பதிகம்;** பாடல்; பதிப்பது; தெய்வத்தைப்பற்றிப் பெரும்பாலும் பத்துச் செய்யுளால் பாடப் படும் நூல்வகை.

**பதியரி** – நாற்று.

**பதியிலார்** – கணிகையர்.

**பதியெழுதல்** – வலசைபோதல்; பயத்தால் ஊரை விட்டு ஓடிப்போதல்.

**பதிரன்** – செவிடன்.

**பதில்** – மாற்றம்; விடை; பதிலாக.

**பதிலாள்** – பிரதியாக அமர்த்தும் ஆள்.

**பதிலிப்பத்திரம்** – அதிகாரப்பத்திரம்.

**பதிவிரதம்** – காண்க: **பதிவிரதாதர்(ரு)மம்.**

**பதிவிரதமுல்லை** – கற்புக்கு அறிகுறியாக அணியும் முல்லை.

**பதிவிரதாதர்(ரு)மம்** – கற்புநெறி.

**பதிவிரதி(தை)** – கற்புடைய மனைவி.

**பதிவிருத்தல்** – ஒளித்திருத்தல்.

**பதிவு** – அழுந்துகை; பள்ளம்; விண்மீன்களின் சாய்வு; பதுக்கம்; தீர்மானிக்கப்பட்ட செலவு; வழக்கம்; கணக்குப் பதிகை; மனம் ஊன்றுகை; அமைதி; விலைத்தணிவு; பதியம்.

**பதிவுவைத்தல்** – கணக்கிற் பதிதல்; வாடிக்கை வைத்தல்.

**பதிவைத்தல்** – நாற்றுப் பதித்தல்; பதியம் போடுதல்.

**பதிற்சீட்டு** – பதிலியாக வாங்கும் ஆவணத்தின் படி.

**பதினாயிரம்** – பத்தாயிரம்.

**பதினாலுலகம்** – மேலேழுலகமான பூலோகம், புவலோகம், சுவர்க்கலோகம், சனலோகம், தபோலோகம், சத்தியலோகம், மகாலோகம்; கீழேழுலகமான அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதலம்.

**பதினாறுபேறு** – புகழ், கல்வி, வலிமை, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் என்பன.

**பதினெட்டாம்பெருக்கு** – ஆடிமாதம் பதினெட்டாம் நாள் காவிரிப்பெருக்கு; ஆடிப் பதினெட்டில் கொண்டாடும் விழா.

**பதினெண்கண்ணன்** – பதினெட்டுக் கண்களையுடைய முருகன்.

**பதினெண்கணம்** – அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், இயக்கர், பூதர், விஞ்சையர், கந்தருவர், அந்தரர், பசாசர், முனிவர், உரகர் (நாகர்), விண்ணோர், மண்ணோர் ஆகியோர்.

**பதினெண்கீழ்க்கணக்கு** – நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், முதுமொழிக்காஞ்சி, ஏலாதி, கைந்நிலை என்னும் பதினெட்டு நூல்கள்.

**பதினெண்குடிமக்கள்** – ஓடாவி (ஓடஞ்செய்பவர்), கன்னார், குயவர், கொல்லர், கோவியர்( இடையர்), ஓச்சர், தச்சர், தட்டார், நாவிதர், பள்ளர், பாணர், பூமாலைக்காரர், எண்ணெய் வாணியர், உப்புவாணியர், இலைவாணியர், வண்ணார், வலையர், வெட்டியான் ஆகிய குடிமக்கள்.

**பதினெண்புராணம்** – மச்சம், கூர்மம், வராகம், வாமனம், பதுமம், வைணவம், பாகவதம், பிரமம், சைவம், இலிங்கம், பௌடியம், நாரதீயம், காருடம், பிரமகைவர்த்தம், காந்தம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமாண்டம் என்பன.

**பதினெண்மொழி** – பதினெண் நாட்டார்க்குரிய மொழியான அங்கம், அருணம், கலிங்கம், காம்போசம், கொங்கணம், கோசலம், கௌசிகம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனகம், திரவிடம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம் என்பன.

**பதினோராடல்** – அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல், துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை என்னும் பதினொரு வகையான கூத்துகள்.

**பதுக்கம்** – ஒளிப்பு; கபடம்; பதுங்குந்தன்மை; மன்னிக்கை; கண்ணி.

**பதுக்காய்** – உள்ளான்குருவி; பருத்துக் குள்ளமாய் உள்ளவன்.

**பதுக்குதல்** – ஒளித்துவைத்தல்.

**பதுக்கை** – கற்குவியல்; இலைக்குவியல்; மணற்குன்று; சிறுதூறு; பாறை.

**பதுக்கைக்கடவுள்** – மணற்குன்றின் மேலுள்ள நடுகல் தெய்வம்.

**பதுங்கலன்** – பின்னிற்பவன்; கூச்சமுள்ளவன்.

**பதுங்குதல்** – ஒளித்தல்; பதிவிருத்தல்; மறைதல்; பின்னிற்றல்; காண்க: **பதுங்குபிடித்தல்.**

**பதுங்குபிடித்தல்** – மேல்தளத்துக்குச் சிறுகல் பாவுதல்.

**பதுமகேசரம்** – புன்னைமரம்.

**பதுமகோசிகம்** – தாமரைக்காய் உருவமாகக் கைகுவித்து ஐந்து விரலையும் அகல விரித்துக் காட்டும் இணையாவினைக்கைவகை.

**பதுமநாபன்** – உந்தித் தாமரையோனாகிய திருமால்.

**பதுமநிதி** – குபேரனது ஒன்பான் நிதியுள் ஒன்று.

**பதுமபந்து** – சூரியன்; தேனீ.

**பதுமபீடத்தன்** – பிரமன்.

**பதுமபீடம்** – தாமரை வடிவாகச் செய்யப்பட்ட இடம்.

**பதுமம்** – தாமரை; காண்க: **பதுமரேகை;** பதினெண் புராணத்துள் ஒன்று; காண்க: **பதுமபீடம்; பதுமநிதி;** ஆசனவகை; முடியுறுப்பு ஐந்தனுள் ஒன்று; அபிநயத்துக்குரிய ஆண் கைகளுள் ஒன்று; சோதிநாள்; மாணிக்கவகை.

**பதுமமணி** – தாமரைக்கொட்டை.

**பதுமயோனி** – தாமரையில் பிறந்த பிரமன்.

**பதுமராகம்** – மாணிக்கவகை.

**பதுமரேகை** – ஒருவனது நற்பேற்றைக் குறிப்பதாகக் கருதப்படும் தாமரை வடிவான கைக்கோடு.

**பதுமவியூகம்** – தாமரை வடிவமாக வகுக்கப்பட்ட படையணி.

**பதுமவீசம்** – தாமரைமணி.

**பதுமன்** – பிரமன்; எண்வகை நாகத்துள் ஒன்று.

**பதுமாக்கன்** – தாமரை போன்ற கண்களையுடைய திருமால்.

**பதுமாசனம்** – இரு கால்களையும் மடக்கி அமரும் தாமரை மலர்போன்ற இருக்கைநிலை.

**பதுமாசனன்** – தாமரையில் வீற்றிருக்கும் பிரமன்.

**பதுமாசனி(னை)** – தாமரையில் வீற்றிருக்கும் திருமகள்.

**பதுமாஞ்சலி** – இரு கையையும் தாமரைக்காய் உருவமாகக் கூட்டும் இணைக்கைவகை.

**பதுமாவதி** – காண்க: **பதுமாசனி(னை).**

**பதுமினி** – நால்வகைப் பெண்டிருள் உயர் இலக்கணம் உடையவள்.

**பதுமுகம்** – காண்க: **பதுமாசனம்;** நறும்பண்ட வகை.

**பதுமை** – திருமகள்; காளி; கற்பிற் சிறந்த சூரபன்மன் மனைவி; திருமகள் தோன்றிய பொய்கை; ஓரிதழ்த்தாமரை; பாவை; சிலை; பதுமநிதி.

**பதைத்தல்** – துடித்தல்; வருந்துதல்; நடுங்குதல்; ஆத்திரமடைதல்; செருக்கடைதல்.

**பதைபதைத்தல்** – மிகத் துடித்தல்.

**பந்தகம்** – கட்டு; முடிச்சு; பற்று; அடைமானம்; சார்ந்திருத்தல்.

**பந்தடித்தல்** – பந்து விளையாடுதல்.

**பந்தணம்** – பற்று.

**பந்தம்** – உறவு; கட்டு; தொடர்பு; முடிச்சு; பற்று; செய்யுளின் தளை; முறைமை; கட்டுப் பாடு; மயிர்முடி; சொத்தைப் பிறர்வயப் படுத்துகை; மதில்; கைவிளக்கு; தீவட்டி; அழகு; தீத்திரள்; உருண்டை; பொன்; நூலிழை; பெருந்துருத்தி.

**பந்தம்பிடித்தல்** – தீவட்டி தாங்குதல்; இறந்தவர் உடலத்தைச் சுடுகாட்டுக்குக் கொண்டுபோகும் போது அவர் பேரக்குழந்தைகள் நெய்யில் நனைத்த பந்தத்தைப் பிடித்தல்.

**பந்தயக்குதிரை** – போட்டியோட்டத்தில் விடப் படுங் குதிரை.

**பந்தயம்** – போட்டி; போட்டியில் வைக்கும் பொருள்; பந்தகம்.

**பந்தர்** – பந்தல்; நிழல்; பண்டசாலை; ஓலக்க மண்டபம்; படர்கொடி விதானம்; ஒரு கடற் கரைப் பட்டினம்.

**பந்தல்** – கால் நட்டுக் கீற்றுகள் பரப்பிய இடம்; நிழல்; பண்டசாலை; ஓலக்கமண்டபம்; படர் கொடி விதானம்; நீர் விழுதற்குக் குழாய் வடிவாகச் செய்யப்பட்ட கருவி.

**பந்தற்கால்** – திருமணத்தை முன்னிட்டு நல்ல வேளையில் பந்தல் போடுவதற்காக நடப்படும் கால்.

**பந்தனம்** – கட்டுகை ; கட்டு ; கயிறு ; சிறைப் படுத்துகை.

**பந்தனாலயம்** – சிறைச்சாலை.

**பந்தனை** – கட்டுகை; கட்டு; பற்று; ஆணவம் முதலிய குற்றங்கள்; மகள்; குழந்தைநோய்.

**பந்தானம்** – உறவினர் கூட்டம்.

**பந்தி** – உண்டற்கு அமர்ந்தவர் வரிசை; குதிரைச் சாலை; ஒழுங்கு; கட்டு.

**பந்தித்தல்** – கட்டுதல்; கூடுதல்; ஆன்மாவைப் பாசத்துக்குள்ளாக்குதல்.

**பந்திப்பாய்** – விருந்தினர் உணவருந்த உட்காரப் போடும் நீண்ட பாய்.

**பந்திபோசனம்** – பலரும் சேர்ந்து உண்ணுதல்.

**பந்திவஞ்சனை** – பந்தி பரிமாறுதலில் ஓர வஞ்சனை காட்டுதல்.

**பந்திவிசாரணை** – உணவளிக்கும்போது பந்தியில் உள்ளோரைப் போற்றுகை.

**பந்து** – சுற்றம்; உருண்டை வடிவான விளையாட் டுக்கருவி; சுருள்; நீர்வீசுங் கருவி; மட்டத் துருத்தி; திரிகை; கட்டு; சூழ்ச்சி; பொருளின்றி வழங்கும் ஒருசொல் விழுக்காடு; ஆட்டச் சீட்டு; அடிக்கும் சவுக்கு.

**பந்துக்கட்டு** – சம்பந்தக்கட்டு, சுற்றமிகுதி; சூழ்ச்சி; கூட்டச்சேர்க்கை; இல்லாததைக் கூட்டிச் சொல்லுகை.

**பந்துசனம்** – சுற்றத்தார்.

**பந்துத்துவம்** – உறவு.

**பந்துமாலை** – பூப்பந்து.

**பந்துரம்** – அழகு.

**பந்துவராளி** – ஒரு பண்வகை.

**பந்தெறிகளம்** – பந்து விளையாடும் இடம்.

**பப்ப** – இகழ்ச்சிக் குறிப்பு.

**பப்படம்** – அப்பளம்.

**பப்பத்து** – பத்துக்கொண்ட கூறுகள்.

**பப்பளி** – பப்பாளிமரம்; கிச்சிலிவகை.

**பப்பளிச்சேலை** – ஒரு நிறமுடைய சேலைவகை.

**பப்பாதி** – இரண்டு சமபாகம்.

**பப்பாளி** – ஒரு சிறுமரவகை.

**பப்பு** – பரப்பு; ஒப்பு; துவரம்பருப்பு.

**பப்புவர்** – அரசனது கீர்த்தியைப் புகழ்வோர்.

**பம்** – விண்மீன்.

**பம்பரத்தி** – அடக்கமற்றவள்.

**பம்பரம்** – வேகமாகச் சுழற்றி விளையாடும் கருவி; மந்தரமலை; அடக்கமற்றவள்.

**பம்பரமாட்டுதல்** – பம்பரஞ் சுழற்றுதல்; அலைக் கழித்தல்.

**பம்பரைக்காரியம்** – முறைபிறழ்ந்த செய்கை.

**பம்பல்** – பரந்த வடிவு; ஒலி; களிப்பு; பொலிவு; அறுவடை; துளி.

**பம்பு** – வேடிக்கை; கல்; மூங்கில்மரம்.

**பம்புதல்** – செறிதல்; நிறைதல்; பரவுதல்; எழுதல்; ஒலித்தல்.

**பம்பை** – ஒரு வாத்தியவகை; முல்லை நெய்தல் நிலங்கட்குரிய பறை; பறட்டைமயிர்; ஒரு பொய்கை; பாம்பன் வாய்க்கால்.

**பம்பைக்காரன்** – பம்பையடிக்கும் தொழிலுடை யோன்.

**பம்மல்** – மூட்டம்; தையல் நூலோட்டம்.

**பம்மாத்து** – வெளிவேடம்.

**பம்முதல்** – மேகம் மூட்டம்போடுதல்; செறிதல்; மறைதல்; மூடுதல்; ஒலித்தல்; நூலோட்டுதல்; பதுங்குதல்.

**பம்மை** – திருமகள்; ஆரியாங்கனையருள் ஒருத்தி; பதுமை.

**பமரம்** – வண்டு.

**பயகம்பனம்** – அச்சத்தால் நடுங்குகை.

**பயங்கரம்** – அச்சம்; மிகு அச்சம் உண்டாக்குதல்.

**பயங்காட்டுதல்** – அச்சமடையத்தக்க தோற்றங் காட்டுதல்; அச்சுறுத்தல் செய்தல்.

**பயங்காளி** – அச்சமுள்ளோன்.

**பயசம்** – நீர்; பால்.

**பயசு** – நீர்; பால்; திருநாமப்பாலைப்பூண்டு.

**பயசுகம்** – பூனை.

**பயணங்கட்டுதல், பயணப்படுதல்** – பயணத்துக்கு ஆயத்தம் பண்ணுதல்.
**பயணம்** – யாத்திரை; இறப்பு.
**பயத்தல்** – விளைதல்; உண்டாதல்; பலித்தல்; கிடைத்தல்; படைத்தல்; பெறுதல்; கொடுத்தல்; பூத்தல்; இயற்றுதல்; நிறம்வேறுபடுதல்; அச்சமுறுதல்.
**பயதம்** – காண்க: **பமரம்.**
**பயந்தாள்** – தாய்.
**பயந்தோர்** – பெற்றோர்.
**பயந்தோர்ப்பழிச்சல்** – தலைவியின் பெற்றோரைத் தலைவன் வாழ்த்திப் புகழும் துறை.
**பயந்தோன்** – தந்தை.
**பயப்படுத்துதல்** – அச்சுறுத்துதல்.
**பயப்படுதல்** – அஞ்சுதல்.
**பயப்பய** – மெல்ல மெல்ல.
**பயப்பாடு** – பயன்படுகை; அச்சம்.
**பயப்பு** – பயன்; அருள்; நிறம் வேறுபடுகை; பொன்னிறம்.
**பயபக்தி** – ஒடுக்கவணக்கம்.
**பயம்** – அச்சம்; அச்சச்சுவை; வாவி; அமுதம்; பால்; நீர்; பலன்; வினைப்பயன்; பழம்; இன்பம்; அரசிறை; தன்மை.
**பயம்பகர்தல்** – பயன்படுதல்.
**பயம்பு** – பள்ளம்; குழி; யானையை அகப்படுத்தும் குழி; நீர்நிலை; காண்க: **வசம்பு.**
**பயமுறுத்துதல்** – அச்சமுண்டாக்குதல்; கண்டித்தல்.
**பயரை** – ஒரு மரவகை.
**பயல்** – சிறுபிள்ளை; இழிஞன்; பாதி; பங்கு; பள்ளம்; குறிப்புச்சொல்.
**பயலாள்** – வாலிபப் பருவத்தவர்.
**பயற்றங்காய்** – பயறு உள்ளடங்கிய காய்; பயறுவகை; பூணூலின் நீளத்தைக் குறைக்க இடும் முடிச்சுவகை.
**பயற்றம்மை** – காண்க: **சிச்சிலுப்பை;** சின்னம்மை நோய்.
**பயறு** – பாசிப்பயறு; தானியவகை; சித்திரை நாள்.
**பயன்** – பலன்; வினைப்பயன்; சொற்பொருள்; செல்வம்; பழம்; அகலம்; சாறு; பால்; வாவி; அமுதம்; நீர்.
**பயன்சொல்லுதல்** – பலன் இன்னதென்று சொல்லுதல்; பொருளுரைத்தல்.
**பயன்படுதல்** – உதவியாயிருத்தல்.
**பயன்மரம்** – பயன்படுபொருள் தரும் மரம்.
**பயனில்சொல்** – இழிசொல் நான்கனுள் ஒன்றாகிய வீண்சொல்.
**பயனிலாள்** – விலைமகள்.
**பயனிலி** – ஒன்றுக்கும் உதவாதவன்(ள்).
**பயனிலை** – சொற்றொடரில் எழுவாய் கொண்டு முடியும் சொல்.
**பயனுவமம், பயனுவமை** – பயனைப்பற்றி வரும் உவமை.
**பயானகம்** – வினைப்பயன்; அச்சம்; நரகவகை.
**பயிக்கம்** – பிச்சை.
**பயிட்டம்** – முத்துவகை.
**பயித்தியக்காரன்** – பித்துப்பிடித்தவன்; மூடன்.
**பயித்தியம்** – காண்க: **பைத்தியக்காரன்;** பித்து; மதிகேடு; தீராமோகம்.
**பயிர்** – விலங்கொலி; ஒலிக்குறிப்பு; அழைப்பு; பறவைக்குரல்; ஒலி; வாச்சியம்; சைகை; விதந்து கட்டிய வழக்கு; அருவருப்பு; பயன் படுத்தத்தகும் செடிகள்; பைங்கூழ்; குருத்து; காண்க: **இடலை.**
**பயிர்க்குடி** – பயிரிடுங் குடி.
**பயிர்த்தல்** – அருவருத்தல்; மனங்கொள்ளா திருத்தல்.
**பயிர்த்தொழில்** – உழுதொழில்.
**பயிர்தல்** – விலங்கு முதலியன ஒன்று ஒன்றனைக் குறியிட்டு அழைத்தல்; அழைத்தல்; இசைத்தல்.
**பயிர்ப்பு** – அருவருப்பு; பெண்டிர் குணம் நான்கனுள் ஒன்று, பயிலாத பொருளில் வரும் அருவருப்பு; மனங்கொள்ளாமை; தூய்மையின்மை; பிசின்.
**பயிர்பிடித்தல்** – பயிரில் தானியமணி பற்றுதல்.
**பயிர்வைத்தல்** – பயன் தரும் மரஞ்செடிகள் நடுதல்; நிலச் சாகுபடி செய்தல்.
**பயிரங்கம்** – காண்க: **பகிரங்கம்.**
**பயிரவி** – காண்க: **முடக்கொற்றான்; பைரவி.**
**பயிரழிவு** – விலங்கு, வெள்ளம் முதலியவற்றால் உண்டாகும் பயிர்க்கேடு.
**பயிராதல்** – பயிர் உண்டாதல்; சினையாதல்.
**பயிரிடுதல்** – நிலத்தில் பயிர்களை உண்டாக்குதல்; விலங்குகளை அவ்வவற்றின் ஒலிக்குறி காட்டி அழைத்தல்.
**பயிரிலி** – தரிசுநிலம்.
**பயிருகம்** – பழம்பாசி.
**பயிரேறுதல்** – பயிர்செழித்தல்.
**பயில்** – பழக்கம்; சொல்; சைகை; குழூஉக்குறி.
**பயில்வான்** – மற்போர்புரிவோன்.
**பயில்வு** – பயிற்சி; செய்கை; இருப்பு.
**பயிலல்** – எடுத்தலோசை; கற்றல்.
**பயிலியம்** – குப்பைமேனிப்பூண்டு.
**பயிலுதல்** – தேர்ச்சியடைதல்; சொல்லுதல்; பழகுதல்; சேவித்தல்; நடமாடுதல்; தங்குதல்; கற்றல்; நிகழ்தல்; நெருங்குதல்; பொருந்துதல்; ஒழுகுதல்; ஒலித்தல்; அழைத்தல்.

பயிற்சி – பழக்கம்; செய்துபழகுதல்.
பயிற்றி – பழக்கம்.
பயிற்றுதல் – பழக்குதல்; கற்பித்தல்; சொல்லுதல்; பலகாற் கூறுதல்; செய்தல்; கொளுவுதல்.
பயின் – பிசின்; பாலேடு; கப்பலின் சுக்கான்.
பயினன் – ஆதிசேடன்.
பயினி – குறிஞ்சிநிலத்து மரவகை; கூடுகை.
பயோததி – கடல்; பாற்கடல்.
பயோதம் – மேகம்.
பயோதரம் – மேகம்; கடல்; பாலைக்கொண்ட முலை; பால்; கரும்பு.
பயோதிகம் – கடல்நுரை.
பர்க்கம் – ஒளி; வீரியம்.
பர்க்கன் – சிவன்; சூரியன்; திருமால்; பிரமன்.
பர்ணசாலை – இலைவேய்ந்த குடில்.
பர்ணம் – இலை.
பர்த்தா – கணவன்.
பர்வதம் – மலை.
பர்வதராசகுமாரி – பார்வதி.
பர்வதராசன் – மலைகளுக்கு அரசனான இமய மலை.
பரக்க – விரிவாய்; மிக.
பரக்கழி – பெரும்பழி; சீர்கெட்டவர்.
பரக்கழித்தல் – பெரும்பழி விளைத்தல்.
பரக்கழிதல் – பெரும்பழியுறுதல்.
பரக்கழிவு – பெரும்பழி; சீர்கெட்டவர்.
பரக்குதல் – அலைந்துதிரிதல்.
பரகதி – வீடுபேறு.
பரகாயப்பிரவேசம் – கூடுவிட்டுக் கூடுபாய்தல்.
பரகாரியம் – பிறர்காரியம்.
பரகாலன் – பகைவர்க்கு யமன்போன்றவன்; திருமங்கையாழ்வார்.
பரகிதம் – பிறர்க்கு நன்மையானது; ஒருவகைச் சோதிடநூல்.
பரகீயம் – பிறன்மனை விரும்புவதாகிய தீய ஒழுக்கம்; பிறர்க்கு உரியது.
பரகீயை – பிறனுக்கு உரியவள்.
பரகுடிலம் – பிரணவம்.
பரகுபரகெனல் – தடுமாறுதற்குறிப்பு; ஒலிக் குறிப்பு.
பரங்கருணை – தெய்வ அருள்.
பரசமயம் – புறமதம்.
பரசியம் – எல்லாரும் அறிந்தது.
பரசிவம்(ன்) – துரிய சிவன்.
பரசு – மழுவாயுதம்; கோடரி; மூங்கில்; ஒரு பண்வகை.
பரசுகம் – வீடுபேற்றின்பம்.
பரசுதல் – துதித்தல்; மெல்லென ஒதுக்கி எடுத்தல்; மெல்லெனத் தேய்த்தல்.
பரசுபாணி – மழுவைக் கையிலுடைய சிவபிரான்; பரசுராமன்; விநாயகன்.
பரசுவம் – பிறர்பொருள்.
பரசை – சிறிய ஓடம்.
பரஞ்சாட்டுதல் – பொறுப்புக் காட்டுதல்.
பரஞ்சுடர், பரஞ்சோதி – மேலான ஒளியுருவக் கடவுள்.
பரஞானதீபவிளக்கம் – திருவருள்.
பரஞானம் – கடவுளைப்பற்றிய அறிவு; இறைவனை உணரும் பத்திநிலைவகை; இறையறிவு.
பரட்டை – செடிமுதலியன தலை பரந்துநிற்கை; காண்க: பறட்டை.
பரட்டையம் – ஒட்டுச் சல்லடம்.
பரடு – கால்கரண்டை.
பரண் – காவல்மேடை; பொருள்களை வைக்கும் மேல்தட்டு; மச்சு.
பரண்டை – கணைக்கால்; பறவைவகை.
பரணம் – தாங்குகை; உடுத்துகை; கவசம்; சம்பளம்; பட்டுச்சீலை; பரணிநாள்.
பரணி – பரணிநாள்; அரசனுடைய போர் வெற்றியைச் சிறப்பித்துப் பாடும் சிற்றிலக்கிய வகை; இராக்கதம்; அடுப்பு; செப்பு; சிலந்திக் கூடு; மதகு; கூத்து; காவல்மேடை; மேல் தட்டு.
பரணிகுடிசை – ஓலையால் வேய்ந்த குடில்.
பரத்தல் – பரவுதல்; தட்டையாதல்; அலமருதல்.
பரத்தன் – பரத்தையரிடம் கூடி ஒழுகுபவன்.
பரத்தி – நெய்தல்நிலப் பெண்.
பரத்திரயம் – காண்க: இரத்தினத்திரயம்.
பரத்திரவியம் – பிறர்பொருள்.
பரத்திரி – மனைவியல்லாதவள்.
பரத்துதல் – விரித்தல்.
பரத்துவம் – கடவுள்தன்மை; திருமால் நிலை ஐந்தனுள் ஒன்று.
பரத்தை – பொதுமகள்; தீயநடத்தை; ஒரு செடி வகை; அயன்மை.
பரத்தைமை – விலைமகளுடன் கூடும் வழக்கம்; அயன்மை; தீயநடத்தை.
பரதகண்டம் – இந்திய நாடு.
பரதத்துவம் – பரம்பொருள்.
பரதந்திரம், பரதந்திரியம் – பிறரைச் சார்ந்திருப்பது.
பரதம் – கூத்து; ஒரு கண்டம்; ஒரு நாடகத் தமிழ் நூல்; ஒரு பேரெண்.
பரதமோகினி – நாட்டியத்தால் பிறரை மயக்குபவள்.
பரதர் – குருகுலத்தரசர்; கூத்தர்; நெய்தல்நில மக்கள்; வணிகர்; காமுகர்.
பரதவசந்தன் – வசந்தன் ஆட்டத்தில் ஒருவகை.

**பரதவர்** – நெய்தல்நில மக்கள்; தமிழ்நாட்டுக் குறுநில மன்னருள் ஒருசாரார்; வணிகர்.
**பரதவருடம்** – காண்க: **பரதகண்டம்.**
**பரதவித்தல்** – வருந்துதல்; இரங்குதல்.
**பரதன்** – இராமன் தம்பி; பரதநூல் செய்தோன்; ஓரரசன்.
**பரதாரம்** – பிறன்மனைவி.
**பரதாரி** – பிறன்மனை விழைவோன்.
**பரதி** – நாடகி, கூத்தாடுபவள்.
**பரதெய்வம்** – முழுமுதற் கடவுள்.
**பரதேகம்** – நுண்ணுடம்பு.
**பரதேசம்** – அயல்நாடு; காண்க: **பரதேசயாத்திரை.**
**பரதேசயாத்திரை** – திருமணச்சடங்கில் காசி யாத்திரை போதல்.
**பரதேசி** – கதியற்றவன்; அயல்நாட்டான்; இரவலன்; தேசயாத்திரை செய்வோன்.
**பரதேவதை** – காண்க: **பரதெய்வம்.**
**பரந்தவட்டம்** – கைம்மணி.
**பரந்தவர்** – இரந்து திரிவோர்.
**பரந்தாமம்** – வைகுண்டம்.
**பரந்தாமன்** – திருமால்.
**பரநாரிசகோதரன்** – பிறர்பெண்டிரை உடன் பிறந்தாளாகக் கருதுபவன்.
**பரநியாசம்** – தெய்வத்தினிடம் அல்லது குருவிடம் ஆன்மபாரத்தை வைத்தல்.
**பரப்ப** – மிக.
**பரப்பாழ்** – வானவெளி.
**பரப்பிரமம்** – முழுமுதற் கடவுள்; உலகியலறிவு அற்றவன்; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.
**பரப்பு** – இடவிரிவு; உலகம்; மிகுதி; தொகுதி; அளவு; ஒரு நிலவளவு; கடல்; முகடு; நிவேதனப் பொருள்; கதவுநிலையின் மேலுள்ள மண்தாங்கிப் பலகை; படுக்கை; வரிக்கணக்கு.
**பரப்புதல்** – பரவச்செய்தல்; செய்தி முதலியன பரப்பல்; விரித்தல்; ஒழுங்கின்றி வைத்தல்; நிலைபெறுதல்; பெருகக் கொடுத்தல்.
**பரபக்கம், பரபட்சம்** – பிறர்மதக் கொள்கை.
**பரபத்தி** – சிவபத்தி; கடவுளின் திருவுருவைக் காணும் பத்தியின் முதலாம் நிலை.
**பரபத்தியம்** – முதல்; வணிகக் கடன்களைப் பொறுக்கும் மதிப்பு; கொடுக்கல் வாங்கல்; சமன்செய்தல்.
**பரபதம்** – காண்க: **பரகதி.**
**பரபரத்தல்** – தீவிரப்படல்; மிக விரைதல்; தன்வயமழிதல்; சுறுசுறுப்பாதல்; தினவெடுத்தல்.
**பரபரப்பு** – சுறுசுறுப்பு; தினவு; விரைவு.
**பரபரெனல்** – விரைவுக்குறிப்பு.
**பரபாகம்** – பிறர் சமைத்த உணவு; மேன்மை; பல வண்ணங்கள் கலத்தலால் உண்டாகும் அழகு; நற்பேறு; மிச்சம்.
**பரபிருதம்** – குயில்; காகம்.
**பரபுட்டம்** – குயில்.
**பரபுட்டை** – விலைமகள்.
**பரபூர்வை** – மறுமணம் செய்தவள்.
**பரபோகம்** – பேரின்பம்.
**பரம்** – உடல்; கவசம்; பாரம்; கேடகவகை; மேலானது; திருமால்நிலை ஐந்தனுள் ஒன்று; கடவுள்; மேலுலகம்; திவ்வியம்; வீடுபேறு; பிறவிநீக்கம்; முன்; மேலிடம்; அன்னியம்; சார்பு; தகுதி; நிறைவு; நரகம்; குதிரைக் கலணை; அத்திமரம்; பரதேசி.
**பரம்படித்தல்** – பரம்புச் சட்டத்தால் நிலத்தைச் சமப்படுத்தல்.
**பரம்பரம்** – வழிவழியாக வரும் உரிமை; வமிசம்; காண்க: **பரம்பரை; பரம்பரன்**; முத்தி; ஒன்றுக்கு ஒன்று மேலானது.
**பரம்பரன்** – முழுமுதற் கடவுள்.
**பரம்பரை** – இடையறாத் தொடர்பு; தலைமுறைத் தொடர்பு.
**பரம்பு** – உழுத கழனியைச் சமப்படுத்தும் பலகை; பரவிய நிலம்; மூங்கிற்பாய்; வரப்பு; இடவிரிவு; வரிக்கணக்கு.
**பரம்புதல்** – பரவுதல்; தட்டையாக விரிதல்; நிறைதல்.
**பரம்புப்பலகை** – நிலத்தைச் சமப்படுத்தும் பலகை.
**பரம்பொருள்** – மேலான பொருள்; கடவுள்.
**பரமகதி** – வீடுபேறு; இறுதிக்காலத்தில் புகும் அடைக்கலம்; பூரணகதி.
**பரமகாரணன்** – ஆதிகாரணனான கடவுள்.
**பரமகாருணிகன்** – பேரருளாளன்.
**பரமகுரு** – சிறந்த குரு; ஆசாரியனுக்கு ஆசாரியன்.
**பரமசண்டாளன்** – கொடும்பாவி.
**பரமசத்துரு** – பெரும்பகைவன்.
**பரமசந்தேகம்** – தீரா ஐயம்.
**பரமசித்தி** – காண்க: **பரமபதம்.**
**பரமசிவன்** – சிவபிரான்.
**பரமசுதன்** – தேவகுமாரர், இயேசுநாதர்.
**பரமசுந்தரி** – தருமதேவதை.
**பரமசுவாமி** – கடவுள்; அழகர்மலைத் திருமால்.
**பரமஞானம்** – இறையறிவு.
**பரமண்டலம்** – அயல்நாடு; வீடுபேறு.
**பரமதம்** – பிறசமயம்.
**பரமநாழிகை** – திதி வார யோக கரண நட்சத்திரங்களின் முழு நாழிகை.
**பரமபதம்** – வீடுபேறு.

**பரமபாகவதன்** – திருமாலடிமையில் சிறந்தவன்.
**பரமம்** – சிறப்பு; தலைமை; முதன்மை; முதற் கடவுள்; தெய்வநிலை.
**பரமமூர்த்தி** – காண்க: **பரமன்.**
**பரமயோக்கியன்** – உண்மையிற் சிறந்தோன்.
**பரமரகசியம், பரமராசியம்** – அதிரகசியம்; மறைவான தத்துவக்கொள்கை.
**பரமலோபி** – மிகு உலுத்தன்.
**பரமன்** – முதற்கடவுள்.
**பரமன்னம்** – காண்க: **பரமான்னம்.**
**பரமனையேபாடுவார்** – தொகையடியாருள் சிவனையே பாடும் ஒரு தொகுதியினர்.
**பரமாகாசம்** – பரமன் உறையும் ஞானாகாசம்; கடவுள்.
**பரமாணு** – சூரியனின் கதிரில் படரும் துகளில் முப்பதில் ஒரு பாகமாகிய மிகச் சிறிய அளவு.
**பரமாத்துமன்** – கடவுள்.
**பரமாத்துமா** – பரம்பொருள்; சுத்தாத்துமா.
**பரமார்த்தம்** – மேலான பொருள்; உண்மைப் பொருள்; உண்மை; வீடுபேறு; உலக இயல்பு; அறியாமை; ஒரு கற்பநூல்.
**பரமார்த்தன்** – உண்மையிற் சிறந்தோன்; உலக அனுபவமற்றவன்.
**பரமாற்புதம்** – பெருவியப்பு.
**பரமான்மா** – பரம்பொருள்.
**பரமான்னம்** – பாயசவகை.
**பரமானந்தம்** – பேரின்பம்.
**பரமீசன்** – காண்க: **பரமாத்துமன்.**
**பரமுத்தி** – வீடுபேறு; பாசங்களிலிருந்து நீங்கித் துய்க்கும் பேரின்பம்.
**பரமேச்சுரன், பரமேச்சுவரன், பரமேசுவரன்** – கடவுள்; சிவபிரான்.
**பரமேசுவரி** – பார்வதி.
**பரமேட்டி** – பரம்பொருள்; பிரமன்; திருமால்; சிவன்; அருகன்; பரமபதத்திலுள்ள ஐம்பூதங் களுள் ஒன்று.
**பரமைகாந்தி** – கடவுளிடமே மனத்தை நிறுத்தும் பெரியோன்.
**பரமோபகாரம்** – பேருதவி.
**பரர்** – பிறர்; பகைவர்.
**பரல்** – பருக்கைக்கல்; விதை.
**பரலோககமனம்** – இறப்பு.
**பரலோகம்** – மேலுலகு; வீட்டுலகு.
**பரவக்காலி** – அவசரப்படுபவன்.
**பரவக்காலித்தனம்** – அவசரப்படுகை.
**பரவசம்** – பிறர்வயமாதல்; தன்வயமற்றிருத்தல்; பிரமாணம்; பராக்கு; மிகுகளிப்பு.
**பரவணி** – தலைமுறை, பரம்பரை.
**பரவர்** – ஒரு சாதியார்.
**பரவல்** – பரவின இடம்; வாழ்த்து.
**பரவாசீசுவரி** – சிவசத்தி.
**பரவாசுதேவன்** – பரமபதத்துள்ள திருமால்.
**பரவாதி** – வேற்றுச்சமயத்தவன்; இழிஞன்.
**பரவிருதயம்** – குயில்.
**பரவிவேகம்** – மெய்யறிவு.
**பரவுக்கடன்** – நேர்த்திக்கடன்.
**பரவுதல்** – பரந்திருத்தல்; பரப்புதல்; சொல்லு தல்; புகழ்தல்; துதித்தல்; பாடுதல்.
**பரவெளி** – பரமன் உறையும் ஞானாகாசம்; கடவுள்.
**பரவை** – பரப்பு; கடல்; உப்பு; ஆடல்; பரவல்; மதில்; பரவிநிற்கும் நீர்; திடல்; சுந்தரர் மனைவி.
**பரவையமுது** – உப்பு.
**பரவைவழக்கு** – கடலால் சூழப்பெற்ற உலக வழக்கு.
**பரற்பரம்** – ஒன்றுக்கொன்று.
**பரன்** – கடவுள்; அயலான்; சீவான்மா.
**பரனந்தி** – காண்க: **பரதெய்வம்.**
**பராக்கடித்தல்** – பராமுகஞ்செய்தல்; அவமதித் தல்.
**பராக்கதம்** – கடியப்பட்டது.
**பராக்கிரமசாலி** – வலுவுள்ளவன்; வீரன்.
**பராக்கிரமம்** – வீரம்; வல்லமை.
**பராக்கிரமன்** – வீரன்.
**பராக்கிரமித்தல்** – வீரச்செயல் காட்டுதல்.
**பராக்கு** – கவனமின்மை; மறதி; எச்சரிக்கையைக் குறிக்கும் சொல்; கவனமாறுகை.
**பராகண்டம், பராகண்டிதம்** – கவனமின்மை.
**பராகம்** – மகரந்தம்; துகள்; ஒரு நறுமணத்தூள்; காண்க: **சந்தனம்;** நோன்புவகை.
**பராகரணம்** – இகழ்தல்.
**பராகாச(ய)ம்** – காண்க: **பரவெளி.**
**பராங்கதி** – காண்க: **பரகதி.**
**பராங்குசன்** – எதிரிகளாகிய யானைகளை அடக் கும் அங்குசம் போன்றவன்; நம்மாழ்வார்.
**பராசத்தி** – ஞானமயமான சிவசத்தி; நாற் பிரிவுள்ள சிவசத்தி.
**பராசயம்** – தோல்வி.
**பராசலம்** – திருப்பரங்குன்றம்.
**பராசனன்** – கொலைஞன்.
**பராசிதம்** – சிவன் கைவாள்; விட்டுணுக்கிரந்தி.
**பராசியம்** – காண்க: **பரசியம்.**
**பராடம்** – பாலைநிலம்.
**பராதீனம்** – சுதந்தரமின்மை; உரிமையற்றது.
**பராதீனம்பண்ணுதல்** – தன் சொத்தைப் பிறர்க்கு உரிமையாக்குதல்.

**பராபத்தியம்** – காண்க: பாரபத்தியம்; மேல் விசாரணை.

**பராபரம்,**
**பராபரவத்து,**
**பராபரன்** – பரம்பொருள்.

**பராபரி** – ஒழுங்கு; சக்தி.

**பராபரிக்கை** – சோதனை.

**பராபரித்தல்** – ஒழுங்குபடுத்தல்.

**பராபரியாய்** – கேள்விமூலமாய்.

**பராபரை** – சிவசத்தி.

**பராபவ** – அறுபதாண்டுக் கணக்கில் நாற்பதாம் ஆண்டு.

**பராபவம்** – மதியாமை; தோல்வி.

**பராமரிசம்** – பகுத்தறிகை.

**பராமரிசித்தல்** – ஆராய்தல்; பகுத்தறிதல்.

**பராமரித்தல்** – ஆதரித்தல்; காத்தல்; ஆலோசித்தல்; விசாரித்தல்; பத்திரப்படுத்துதல்; செயல்புரிதல்.

**பராமரிப்பு** – ஆதரிப்பு; விசாரிப்பு; மேலாண்மை செய்தல்.

**பராமுகம்** – அசட்டை; கவனிப்பின்மை; புறக்கணிப்பு.

**பராய்** – பிராய்மரம்.

**பராயணம்** – குறிக்கோள்; அறுசமயத்துள் ஒன்று; இராசிமண்டலம்.

**பராயணன்** – குறிக்கொள்வோன்; சமயத்தைப் பின்பற்றுவோன்.

**பரார்த்தம்** – பிறர்க்கு உதவியானது; ஒரு பேரெண்; பிரமன் ஆயுளில் பாதி.

**பராரி** – ஓடிப்போனவன்; நிலம் வீடு இவற்றை விட்டு ஓடிய குடி.

**பராரை** – பருத்த அடிமரம்; விலங்கின் பருத்த மேல்தொடை; உள்ளோசை.

**பராவணம்** – துதிக்கப்படும் பொருள்.

**பராவமுது** – தெய்வங்கட்குரிய அமுதம்.

**பராவர்த்திதம்** – கூத்துறுப்பினுள் ஒன்று.

**பராவர்த்து** – சம்பளப்பட்டி; மதிப்பு.

**பராவரம்** – ஒழுங்கின்மை.

**பராவுதல்** – வணங்குதல்; புகழ்தல்.

**பரான்னம்** – பிறர் கொடுத்த உணவு; தனக்குச் சொந்தமில்லாத உணவு.

**பரானுகூலம்** – பிறர்க்குதவியானது.

**பரானுகூலி** – உபகாரி; விபசாரி.

**பரானுபவம்** – பேரின்பம்.

**பரானுபூதி** – பிறரனுபவம்.

**பரி** – செலவு; வேகம்; குதிரைநடை; குதிரை; அசுவினிநாள்; குதிரைமரம்; உயர்ச்சி; பெருமை; கறுப்பு; மாயம்; பருத்திச்செடி; பாதுகாக்கை; சுமை; துலை; ஊற்றுணர்வு; அன்பு; வருத்தம்; மிகுதிப்பொருள் குறிக்கும் ஓர் இடைச்சொல்.

**பரிக்காரம்** – ஒப்பனை, அலங்காரம்.

**பரிக்காரர்** – குத்துக்கோற்காரர்; குதிரை நடத்துவோர்.

**பரிக்கிரகத்தார்** – ஊர்ச்சபையார்.

**பரிக்கிரகத்துப்பெண்டுகள்** – கோயிற் பணிப் பெண்கள்.

**பரிக்கிரகம்** – பற்றுகை; ஏற்றுக்கொள்கை; மனைவி; வைப்பாட்டி; சூளுரை; ஊர்ச்சபை.

**பரிக்கிரகித்தல்** – ஏற்றுக்கொள்ளுதல்; வைப்பாகக் கொள்ளுதல்.

**பரிக்கிரமம்** – சுற்றுதல், அலைந்துதிரிதல்.

**பரிக்கிரயம்** – விற்பனை.

**பரிக்கை** – காண்க: பரீட்சை; தாங்குகை.

**பரிக்கோல்** – குத்துக்கோல்.

**பரிகணித்தல்** – அளவிடுதல்.

**பரிகம்** – அகழி; மதிலுள்மேடை; மதில்; அழித்தல்; எழுமரம்; நித்திய யோகத்துள் ஒன்று; ஓர் இரும்பாயுதம்.

**பரிகரம்** – துணைக்கருவி; சேனை; பரிவாரம்; செய்யுளணிவகை.

**பரிகரித்தல்** – நீக்குதல்; நோயைக் குணப்படுத்துதல்; முன் கூறியதை மறுத்தல்; போக்குதல்; அடக்குதல்; ஒன்றுங்கொடாமை; போற்றுதல்; கடத்தல்; கழுவாய் செய்தல்; பத்தியம் முதலியன உதவி நோயாளியைக் கவனித்தல்.

**பரிகலசேடம்** – ஞானாசிரியர் உண்ட மிச்சில்.

**பரிகலபரிச்சின்னங்கள்** – எடுபிடி முதலியவற்றைக் கொண்டுசெல்லும் பணியாளர்.

**பரிகலம்** – குருமார் உண்கலம்; பெரியோர் உண்டு மிகுந்தது; சேனை; பேய்க்கூட்டம்.

**பரிகாசம்** – பகடி; நிந்தனை; எள்ளல்; விளையாட்டு.

**பரிகாரச்செலவு** – மருத்துவச்செலவு.

**பரிகாரம்** – நீக்குகை; கழுவாய்; மாற்று உதவி; மருத்துவம்; காத்தல்; கேடுநீங்கக் கூறும் வாழ்த்து; வழுவமைதி; விலக்கு; பொருள்; கப்பம்; பெண்மயிர்.

**பரிகாரி** – மருத்துவன்; நாவிதன்.

**பரிகை** – அகழி; மதிலுள்மேடை; முத்திரை வகை.

**பரிச்சதம்** – போர்வை.

**பரிச்சயம்** – பழக்கம்; குதிரைநோய்வகை.

**பரிச்சாத்து** – குதிரைத்திரள்.

**பரிச்சிதம்** – பழக்கம்.

**பரிச்சின்னம்** – அரசர் முதலியவர்க்குரிய சின்னம்; அளவுபட்டது.

**பரிச்செண்டு** – விளையாடுஞ் செண்டுவகை; பரிச்செண்டு வீசி ஆடும் விளையாட்டு.

**பரிச்சேதம்** – துண்டிப்பு; அளவுக்கு உட்படுகை; அத்தியாயம்; பகுத்தறிகை; முழுமை; சிறு பகுதி.
**பரிச்சை** – பழக்கம்; காண்க: **பரீட்சை**.
**பரிசகம்** – சித்திரசாலை.
**பரிசணித்தல்** – மெதுவாய்ப் பேசுதல்.
**பரிசம்** – முலைவிலை, மாப்பிள்ளை வீட்டார் பெண்ணுக்காகத் தரும் கொடைப்பொருள்; சீதனம்; தொடுதல்; ஊற்றறிவு; கிரகணம் பற்றல்; பரத்தைக்குக் கொடுக்கும் முன்பணம்; ஆழம்; ஆசிரியன் மாணவற்குச் செய்யும் தீட்சைகளுள் ஒன்று; வல்லெழுத்து மெல் லெழுத்துகள்.
**பரிசம்போடுதல்** – திருமணம் உறுதிசெய்தல்.
**பரிசயம்** – பழக்கம்.
**பரிசயித்தல்** – பழகுதல்.
**பரிசரண்** – காவற்காரன்; தோழன்; படைத் தலைவன்.
**பரிசன்னியம்** – மேகம்; மேரு.
**பரிசனபேதி** – காண்க: **பரிசனவேதி**.
**பரிசனம்** – உறவு; ஏவல் செய்வோர்; பரிவாரம்; தொடுதல்; கிரகணம் பற்றுகை.
**பரிசனவேதி** – தாழ்ந்த உலோகங்களைப் பொன் னாக்கும் மருந்து.
**பரிசனன்** – காற்று.
**பரிசனை** – காண்க: **பரிசயம்**.
**பரிசாரகம்** – ஏவற்றொழில்; சமையல்தொழில்.
**பரிசாரகன்** – பணியாள்; சமையற்காரன்.
**பரிசாரம்** – காண்க: **பரிசாரகம்**; வணக்கம்; பெண் மயிர்.
**பரிசாரிகை** – வேலைக்காரி.
**பரிசித்தல்** – தொடுதல்; தீண்டல்; கிரகணம் பற்றுதல்; நுகர்தல்; பழகுதல்.
**பரிசிரமம்** – பெருமுயற்சி; மிகுவருத்தம்.
**பரிசிரயம்** – கூட்டம்.
**பரிசில்** – கொடை; சிற்றோடம்.
**பரிசிலர்,**
**பரிசிலாளர்** } – பரிசில்வேண்டி இரப்போர்.
**பரிசீலனை** – ஆராய்ச்சி; சோதனை.
**பரிசு** – பரிசில்; குணம்; விதம்; விதி; பெருமை; சிற்றோடம்; கொடை; மணமகளுக்கு மண மகன் வீட்டார் அளிக்கும் பணம் முதலியன.
**பரிசுகெடுதல்** – சீரழிதல்.
**பரிசுத்தம்** – தூய்மை; துப்புரவு.
**பரிசுத்தர்** – தூயோர்; தேவதூதர்.
**பரிசுத்தவான்,**
**பரிசுத்தன்** } – தூயோன்.
**பரிசுத்தை** – தூய்மையானவள்.
**பரிசை** – கேடகம்; விருது; சிற்றோடம்; கருமத் தைத் தடுத்தற்பொருட்டுப் பொறுக்க வேண்டும் துன்பங்கள்.
**பரிசைக்காரன்** – கேடகம் பிடிப்போன்.
**பரிசோதனை,**
**பரிசோதித்தல்** } – நன்கு ஆராய்தல்.
**பரிஞ்சு** – வாட்பிடி.
**பரிஞ்ஞானம்** – பேரறிவு.
**பரிட்சித்தல்** – ஆராய்தல்; சோதனைசெய்தல்.
**பரிட்டவணை** – மாறுகை.
**பரிட்டினகம்** – பறவை வட்டமிடுதல்.
**பரிணதன்** – கற்றோன்.
**பரிணமித்தல்** – ஒன்றிலிருந்து ஒன்று பெருகுதல்; நிலைமாறுதல்.
**பரிணயம்** – திருமணம்.
**பரிணாமம்** – ஒன்று மற்றொன்றாக மாறுதல்.
**பரித்தல்** – அறுத்தல்; சூழ்தல்; ஓடுதல்; சுமத்தல்; ஆளுதல்; பொறுக்கியெடுத்தல்; பாதுகாத்தல்; தரித்தல்.
**பரித்தியாகம்** – முற்றுந்துறத்தல்.
**பரித்தியாகி** – துறவி.
**பரித்திராசம்** – பெரும்பயம்.
**பரித்திராணம்** – பாதுகாப்பு.
**பரிதபித்தல்** – காண்க: **பரிதவித்தல்**.
**பரிதல்** – பற்றுவைத்தல்; காதல்கொள்ளுதல்; இரங்குதல்; சார்பாகப் பேசுதல்; வருந்துதல்; பிரிதல்; அறுதல்; முறிதல்; அழிதல்; ஓடுதல்; வெளிப்படுதல்; அஞ்சுதல்; வருந்திக் காத்தல்; பகுத்தறிதல்; அறிதல்; அறுத்தல்; அழித்தல்; நீங்குதல்; கடத்தல்; உதிர்த்தல்; வாங்கிக் கொள்ளுதல்.
**பரிதவித்தல்** – துயருறல்; வருந்துதல்; இரங்குதல்.
**பரிதாகம்** – வெம்மை.
**பரிதாபப்படுதல்** – வருந்துதல்; இரங்குதல்.
**பரிதாபம்** – துன்பம்; இரக்கம்; தான் செய்த குற்றத்துக்கு வருந்துகை; பெருந்தாகம்.
**பரிதாபி** – அறுபதாண்டுக் கணக்கில் நாற்பத் தாறாம் ஆண்டு; இரக்கமுள்ளவன்; துன்புறுபவர்.
**பரிதானம்** – பண்டமாற்று; கைக்கூலி.
**பரிதி** – பரிவேடம்; வட்டவடிவு; சூரியன்; சக்கரப்படை; தேருருளை; சக்கரவாகப்புள்; ஒளி; வேள்விமேடை; தருப்பை; திருக்குறள் உரையாசிரியருள் ஒருவர்.
**பரிதிமண்டலம்,**
**பரிதிவட்டம்** } – சூரியமண்டலம்.
**பரிது** – பெரியது; விதம்.
**பரிந்துபேசுதல்** – மற்றொருவருக்காகப் பேசுதல்; அன்போடு பேசுதல்.
**பரிந்துரை** – சிபாரிசு; ஆதரவுப் பண்பு.
**பரிநாமம்** – புகழ்; செல்வம்.

**பரிநியாசம்** – முடிவுசெய்கை; வசனப்பொருள்.
**பரிநிர்வாணம்** – வீடுபேறு.
**பரிப்பாகன்** – குதிரை நடத்துவோன்.
**பரிப்பு** – இயக்கம்; துன்பம்; தாங்குகை.
**பரிபக்குவம்** – ஞானமுதிர்ச்சி; தகுதி.
**பரிபணம்** – கைப்பணம்; மூலதனம்.
**பரிபரி** – யானையை அடக்கும் பரியாய மொழிச் சொல்.
**பரிபவம்** – அவமானம்; எளிமை; இகழ்ச்சி.
**பரிபவித்தல்** – அவமதித்தல், இகழ்தல்.
**பரிபாகம்** – சமைக்கை; பக்குவம்; முதிர்வு.
**பரிபாகி** – தகுந்தவன்; அறிவுமுதிர்ச்சியுள்ளவன்.
**பரிபாடி** – ஒழுங்கு.
**பரிபாடை** – குறியீடு; குழூஉக்குறி.
**பரிபாலகன்** – காப்போன்; உதவியளிப்போன்.
**பரிபாலனம்** – ஆளுகை; பாதுகாப்பு.
**பரிபாலித்தல்** – பாதுகாத்தல்; அருளுதல்.
**பரிபுரம்** – காற்சிலம்பு.
**பரிபுலம்புதல்** – மிக வருந்துதல்.
**பரிபூதம்** – தெரிவு; அவமானம்; தூய்மையுள்ளது; பழையது.
**பரிபூர்த்தி** – நிறைவு; மிகுதி.
**பரிபூரணத்துவம்** – முழுமைத்தன்மை.
**பரிபூரணதசை** – வீடுபேறு; இறப்பு.
**பரிபூரணம்** – நிறைவு; மிகுதி; முடிவு; இறப்பு.
**பரிபூரணன்** – முழுமையன்; கடவுள்.
**பரிபூரணி** – பார்வதி; திருமகள்.
**பரிமகம்** – அசுவமேதம்.
**பரிமளதிரவியம்** – மணப்பண்டம்.
**பரிமளதைலம்** – நறுமணமுடைய எண்ணெய்.
**பரிமளம்** – மிகுமணம்; நறுமணம்.
**பரிமளித்தல்** – மிகுமணம் வீசுதல்; சிறப்படைதல்; கூடிக்களித்தல்; சிறக்கப் போற்றுதல்; புகழ்தல்.
**பரிமளிப்பு** – மணம்வீசுதல்; சிறப்பு; போற்றுகை; புகழ்ச்சி; மகிழ்ச்சி; கூடிக்களிக்கை.
**பரிமா** – குதிரை.
**பரிமாணம்** – அளவு.
**பரிமாவடிப்போர்** – குதிரைப்பாகர்.
**பரிமாற்றக்காரி** – விபசாரி.
**பரிமாற்றப்பிழை** – தீயொழுக்கம்.
**பரிமாற்றம்** – மாற்றிக்கொள்ளுகை; நடக்கை; நோய் பரவியிருக்கை; கலந்திருக்கை; விபசாரம்.
**பரிமாறுதல்** – மாற்றிக்கொள்ளுதல்; உணவு படைத்தல்; நுகர்தல்; பணிமாறுதல்; கையாளுதல்; உட்கொள்ளுதல்; புணர்தல்; நடமாடுதல்; பரவுதல்; ஒழுகுதல்; உலாவுதல்.
**பரிமித்தல்** – அலங்கரித்தல்.
**பரிமிதம்** – அளவுபட்டது.
**பரிமிதி** – காண்க: **பரிமாணம்.**
**பரிமுகம்** – காலின் குதிரைமுகம்; அசுவினிநாள்.
**பரிமுகமாக்கள்** – கின்னரர்.
**பரிமுகவம்பி** – குதிரைமுகவோடம்.
**பரிமேதம்** – காண்க: **பரிமகம்.**
**பரிமேயம்** – காண்க: **பரிமிதம்.**
**பரிய** – பருத்த.
**பரியகம்** – பாதகிண்கிணி; காற்சரி; கைச்சரி.
**பரியங்கம்** – கட்டில்; துயிலிடம்.
**பரியட்டக்காசு** – துகில்வகை.
**பரியது** – பெரிய உடம்புபெற்றது.
**பரியந்தம்** – எல்லை.
**பரியம்** – மணப்பரிசு; பரத்தையர்பெறுங் கூலி.
**பரியயம்** – அசட்டை; எதிரிடை; ஒழுங்கின்மை.
**பரியரை** – மரத்தின் பருத்த அடிப்பகுதி.
**பரியல்** – இரங்குதல்; விரைந்து செல்லுதல்.
**பரியவசானம்** – கடைமுடிவு.
**பரியவம்** – பலர் செல்லும் வழி.
**பரியழல்** – காண்க: **வடவைத்தீ.**
**பரியன்** – பெரியோன்; உருவத்தால் பெரியவன்.
**பரியாசகர்** – வேடிக்கைக்காரர்.
**பரியாசம், பரியாசை** – காண்க: **பரிகாசம்.**
**பரியாத்தி** – மனநிறைவு; பகுத்தறிகை; சம்பாதிக்கை.
**பரியாயச்சொல்** – ஒருபொருள் குறித்த மாற்றுச் சொல்.
**பரியாயப்பெயர், பரியாயநாமம்** – ஒருபொருட் பல்பெயர்.
**பரியாயம்** – மாற்றுச்சொல்; நானாவிதம்; பொருளை வெளிப்படையாய்க் கூறாது குறிப்பாய்க் கூறும் அணி; பரிணாமம்; தடவை.
**பரியாரம்** – மாற்றுவழி.
**பரியாரி** – காண்க: **பரிகாரி.**
**பரியாலோசனை** – ஆராய்தல்; கூர்ந்தயோசனை.
**பரியாளம்** – சூழ்வோர்.
**பரிவட்டச்சீலை** – நேர்த்தியான ஆடை.
**பரிவட்டணை** – மாறுகை; யாழ்நரம்பு தடவுகை; விருது.
**பரிவட்டம்** – ஆடை; கோயில் மரியாதையாக வணங்குவோரின் தலையைச்சுற்றிக் கட்டும் கடவுளாடை; சீலை; துண்டுச்சீலை; தெய்வத் திருமேனியின் உடை; துக்ககாலத்தில் தலையிற் கட்டுஞ் சீலை; நெய்வார்கருவி வகை; காண்க: **பரிவேடம்.**
**பரிவத்தித்தல்** – சுற்றுதல்.
**பரிவதனம்** – அழுதல்; நிந்தனை.
**பரிவயம்** – அரிசி; இளமை.

**பரிவர்** – அன்புடையவர்.
**பரிவர்த்திதம்** – அபிநயக்கைவகை.
**பரிவருத்தம்** – உலகமுடிவு; சுற்றுதல்; பொருள் தந்து பொருள்பெறல்; ஆமை.
**பரிவருத்தனம்** – பண்டமாற்றுகை; குதிரைநடை வகை.
**பரிவருத்தனை** – பண்டமாற்றுவகை; ஒன்றற் கொன்று கொடுத்து வேறொன்று கொண்டன வாகக் கூறும் அணி.
**பரிவற்சரம்** – ஆண்டு.
**பரிவற்சனம்** – கொலை; விடுகை.
**பரிவாதம்** – பழிச்சொல்.
**பரிவாரம்** – ஏவலர்; சூழ்ந்திருப்போர்; படை; மறவர் அகம்படியருள் ஒரு பிரிவினர்; உறை.
**பரிவாரன்** – வேலைக்காரன்.
**பரிவாராலயம்** – சுற்றுக்கோயில்.
**பரிவிரட்டம்** – தவறு.
**பரிவிராசகன்** – காண்க: **பரித்தியாகி.**
**பரிவிருத்தி** – கோள்களின் சுற்று; கிரகசார வாக்கியம்.
**பரிவு** – அன்பு; பக்தி; இன்பம்; இரக்கம்; பக்குவம்; வருத்தம்; குற்றம்.
**பரிவேசம்** – காண்க: **பரிவேடம்.**
**பரிவேட்டி** – வலம்வருகை.
**பரிவேட்பு** – பறவை வட்டமிடுகை.
**பரிவேடணம்** – சூழுதல்; விருந்தினர்க்குப் பரிமாறுகை.
**பரிவேடம், பரிவேடிப்பு** – சந்திரசூரியரைச் சூழ்ந்து தோன்றும் வட்டம்.
**பரிவேதனம்** – சம்பாத்தியம்; திருமணம்; பரந்த அறிவு; அழுகை; பெருந்துயரம்.
**பரீக்கை, பரீட்சணம்** – காண்க: **பரிசீலனை.**
**பரீட்சித்தல்** – ஆராய்தல்; சோதித்தல்.
**பரீட்சை** – தேர்வு; ஆராய்ச்சி; பழக்கம்.
**பரீதாபி** – காண்க: **பரிதாபி;** நாற்பத்தாறாம் ஆண்டு.
**பரு** – சிறுகட்டி; சிலந்திநோய்; கணு; கடல்; மலை; துறக்கம்; நெல்லின் முளை.
**பரு (வி)** – அருந்து, உண்; குடி.
**பருக்கன்** – பரும்படியானது.
**பருக்குதல்** – பருகச்செய்தல்; பெருக்குதல்.
**பருக்கென்னுதல்** – பருத்துக்காட்டுதல்; கொப்புளித்தல்.
**பருக்கை** – பருமனாதல்; சோற்று அவிழ்; காண்க: **பருக்கைக்கல்;** பளிங்கு; புல்லன்; கோது.
**பருக்கைக்கல்** – சிறு கூழாங்கல்; பளிங்கு; சுக்கான்கல்.
**பருகல்** – குடிக்கை; குடித்தற்குரியது.
**பருகு** – குடிக்கை.
**பருகுதல்** – குடித்தல்; உண்ணுதல்; நுகர்தல்.
**பருங்கி** – வண்டு.
**பருங்குதல்** – பறித்தல்; கொல்லுதல்.
**பருங்கை** – கொடைக்குணமுள்ளவர்; பெருஞ் செல்வர்.
**பருணன்** – ஆள்பவன், நிருவகிப்பவன்.
**பருணிதன்** – புலவன்; அறிவுப் பக்குவமுடையவன்.
**பருத்தல்** – பெருத்தல்.
**பருத்தவன்** – தடித்தவன்.
**பருத்தி** – பஞ்சு உண்டாகுஞ் செடிவகை; பஞ்சு.
**பருத்திக்காடு** – பருத்தி விளைநிலம்.
**பருத்திக்குண்டிகை** – பருத்திப் பஞ்சடைத்த குடுவை.
**பருத்திக்கொட்டை** – பருத்திவிதை.
**பருத்தித்தூறு** – வாய்க்கிரந்தி.
**பருத்திப்பெண்டு** – பஞ்சு நூற்கும் பெண்.
**பருத்திப்பொதி** – பருத்திமூட்டை.
**பருத்திவீடு** – பருத்தியின் பன்னப்பட்ட பஞ்சு.
**பருதி** – காண்க: **பரிதி;** விளையாட்டுக்குரிய வளையம்.
**பருந்தலை** – பெரிய தலை; செருக்குள்ளவன்; பெருஞ்செல்வன்; மாட்டுக் குற்றவகை.
**பருந்தாட்டம்** – பருந்து தன் இரையைக் கொத்தியாட்டும் செயல்; பெருந்துன்பம்.
**பருந்து** – பறவைவகை; வளையல்.
**பருப்பதம்** – மலை.
**பருப்பதி** – பார்வதி.
**பருப்பம்** – பருக்கை; பருமை; மலை.
**பருப்பு** – துவரை முதலியவற்றின் உள்ளீடு; பருமை; தோல் நீக்கிய தானியங்களின் பகுதி.
**பருப்புப்பொங்கல்** – பருப்புக் கலந்து சமைத்த சோறு.
**பருப்புமத்து** – வெந்த பருப்பை மசிக்க உதவும் மத்துவகை.
**பருப்பொருள்** – நூலின் பிண்டப்பொருள்; சுவையற்ற பொருள்; பாட்டின் மேலெழுந்தவாரியான பொருள்.
**பருப்போரை** – காண்க: **பருப்புப்பொங்கல்.**
**பருபருக்கை** – வேகாச் சோறு; சிறு கூழாங்கல் போன்ற பொருள்; ஓரினப் பொருள்களில் பெரியது; சிறிதும் பெரிதுமான பொருள் தொகுதி; ஒன்றிரண்டாக உடைக்கப்பட்ட தானியம்.
**பருபாரித்தல்** – மிகப் பருத்தல்.
**பரும்படி** – உரப்பானது; செவ்வையின்மை; பருமட்டு; பெருவாரி; கறி முதலியவற்றோடு சேர்ந்த சோறு.

**பருமட்டம்** – தோராய மதிப்பு; தூலமாய்க் குறிக்கப்பட்ட நிலை.

**பருமட்டு** – காண்க: **பருமட்டம்**; பருத்த பொருள்.

**பருமணல்** – பெருமணல்; வரிக்கூத்துவகை.

**பருமம்** – பருமை; பதினெட்டு வடம்கொண்ட அரைப்பட்டிகை; நிதம்பம்; கவசம்; குதிரைக் கலணை; யானைக் கழுத்திலிடும் மெத்தை; எருதின் முதுகிலிடும் அலங்கார விரிப்பு.

**பருமல்** – கப்பற் குறுக்குமரம்.

**பருமன்** – பருமை; பருத்தது; பருத்தவர்.

**பருமித்தல்** – அலங்கரித்தல்; படைக்கலம் பயிலுதல்; இறுமாப்பாயிருத்தல்; வருந்துதல்.

**பருமிதம்** – எக்களிப்பு; இறுமாப்பு; படைக்கலம் பயிலுகை.

**பருமுத்து** – பெரிய முத்து; பெரியம்மையின் கொப்புளம்.

**பருமை** – பருத்திருக்கை; பரும்படியான தன்மை; பெருமை; முக்கியம்.

**பருவக்காற்று** – குறித்த காலத்தில் ஒரு பக்கமாக அடிக்குங் கடற்காற்று.

**பருவகாலம்** – பக்குவ காலம்; ஏற்ற காலம்; மழை, காற்று, வெயில், பனி முதலியவை மிக்குத் தோன்றும் காலப்பகுதி; காருவா, மறைநிலா; வெள்ளுவா, நிறைநிலா.

**பருவஞ்செய்தல்** – செழிப்பாதல்.

**பருவஞ்சொல்லுதல்** – ஆலோசனை கூறுதல்.

**பருவத்தொழுக்கம்** – காலத்துக்கேற்ப நடிக்குஞ் செயல்.

**பருவதம்** – மலை; மீன்வகை.

**பருவதவர்த்தனி** – இமவானால் வளர்க்கப்பட்ட பார்வதி.

**பருவதவாசினி** – காண்க: **காயத்திரி**; **துர்க்கை**.

**பருவதி** – பார்வதி; சந்திரன்.

**பருவநிலை, பருவபேதம்** – காலவேறுபாடு; காலநிலை.

**பருவம்** – காலம்; காலப்பிரிவு; இளமை; பக்குவம்; வயது; மறைநிலா அல்லது நிறைநிலா; கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் ஆறு பருவங்கள்; மாதம்; மழைக்காலம்; தக்க காலம்; பயிரிடுதற்குரிய காலம்; ஆண்டு; பயனளிக்குங் காலம்; கணு; நூற் கூறுபாடு; நிலைமை; உயர்ச்சி; அளவு; சூரியன் ஒவ்வோர் இராசியிலும் புகும் காலம்; ஆடவர் பெண்டிர்க்குரிய வெவ்வேறு ஆயுட்கால நிலைகள்; முகம்மதியர் திருவிழாவகை.

**பருவம்பார்த்தல்** – ஆழம் பார்த்தல்; தக்க சமயம் பார்த்தல்; ஆலோசித்தல்.

**பருவமழை** – உரிய காலத்தில் பெய்யும் மழை.

**பருவமாதல்** – தகுதியாதல்; பெண்கள் பூப்படைதல்.

**பருவயோனி** – கரும்பு.

**பருவரல்** – துன்பம்; பொழுது.

**பருவருதல்** – வருந்துதல்; துன்புறுத்தல்; அருவருத்தல்.

**பருவல்** – பருத்தது.

**பருவு** – முகத்தில் உண்டாகும் சிறு கட்டிவகை.

**பருவுதல்** – அரித்தல்.

**பரூஉ** – பருமை; பரித்தல்; மிகுதிப்படுகை.

**பரூஉக்கை** – பருத்த கை; வண்டியினோர் உறுப்பு.

**பரேண்** – மிக்க வன்மை.

**பரேபம்** – நீர்நிலை.

**பரேர்** – மிக்க அழகு.

**பரை** – பார்வதி; சிவசத்தி; சீவான்மா இறையருளைப் பெற்று நிற்கும் நிலை; ஐந்து மரக்கால்கொண்ட அளவு.

**பரைச்சி** – பார்வதி.

**பரோட்சஞானம்** – கட்புலனுக்குத் தென்படாத பிரமமொன்று உண்டென்று கேட்டறிதல்; இறையறிவு.

**பரோட்சம்** – கண்ணுக்கெட்டாதது; இறையறிவு; சென்ற காலம்; அரங்கிலுள்ளோர் காதில் விழாதபடி கூறும் மொழி.

**பரோபகாரம்** – பிறர்க்குச் செய்யும் உதவி.

**பரோபகாரி** – பிறர்க்கு உதவி புரிபவன்.

**பல்** – எயிறு; ஒன்றுக்கு மேற்பட்டவை; யானை, பன்றி முதலியவற்றின் கொம்பு; நங்கூர நாக்கு; சக்கரம்; வாள் முதலியவற்றின் பல் போன்ற கூர்; சீப்புப் பல்; வெள்ளைப்பூண்டு முதலியவற்றின் தனித்தனி உள்ளீடு; தேங்காய் உள்ளீட்டின் சிறு துண்டு.

**பல்கணி** – சாளரம்.

**பல்கல்** – பெருகுதல்.

**பல்கலைக்கழகம்** – பல கலைகளையும் கற்பிக்கும் உயர் கல்விக்கழகம்.

**பல்கால், பல்காலும்** – அடிக்கடி.

**பல்காற்பறவை** – பல கால்களையுடைய வண்டு.

**பல்குதல்** – பலவாதல்; மிகுதல்.

**பல்நோவு** – பல்லில் உண்டாகும் வலி.

**பல்பல** – பலபல.

**பல்பொருட்பெயர்** – பலபொருள் கொண்ட ஒரு சொல்.

**பல்முளைத்தல்** – எயிறு எழுகை; கடைவாய்ப் பல் முளைத்தல்.

**பல்லக்கு** – ஆள்கள் சுமந்து செல்லும் ஊர்தி வகை.
**பல்லகம்** – கரடி.
**பல்லகி** – சேங்கொட்டைமரம்.
**பல்லணம்** – குதிரைக்கலணை.
**பல்லதி** – ஒரு பண்வகை.
**பல்லம்** – அம்பு; குதிரைக்கலணை; கரடி; ஒரு பேரெண்; சேங்கொட்டைமரம்; ஆயுதவகை.
**பல்லயம்** – ஒரு கைவாள்வகை.
**பல்லரணை(ளை)** – பல் ஈற்று நோய்வகை.
**பல்லவத்திரு** – அசோகமரம்.
**பல்லவதரையர்** – பல்லவ அரச மரபினர்.
**பல்லவம்** – தளிர்; அம்பு; ஒரு நாடு; கீர்த்தனத்தில் ஓர் உறுப்பு.
**பல்லவர்** – பலர்; பல்லவ அரசர்.
**பல்லவராயன்** – சோழப் படைத்தலைவர்களின் பட்டங்களுள் ஒன்று; மூடன்; இளிச்சவாயன்; கள்ளர் ஓச்சர்களின் பட்டப்பெயர்.
**பல்லவன்** – காமுகன்; கீழ்மகன்.
**பல்லவி** – இசைப்பாட்டில் பாடப்படும் முதலுறுப்பு.
**பல்லவை** – பல பொருள்; இழிவான பொருள்; இழிவு.
**பல்லாக்கு** – காண்க: பல்லக்கு.
**பல்லாங்குழி** – பதினான்கு குழியுள்ள ஒரு விளையாட்டுக்கு உதவும் பலகை; சோகி முதலியவற்றால் பல்லாங்குழிப் பலகையில் ஆடும் விளையாட்டு.
**பல்லாண்டு** – ‘நீடு வாழ்க’ என்னும் வாழ்த்து; பலவருடம்; காண்க: **திருப்பல்லாண்டு**.
**பல்லாதகி** – சேங்கொட்டைமரம்.
**பல்லார்** – பலர்.
**பல்லி** – ஒரு சிற்றுயிரிவகை; பூடுவகை; வெற்றிலைக் கணுவில் அரும்பும் குருத்து; பெரிய பல்லுடையவள்; பலுகுக் கட்டை; கற்சிலைப் புள்; ஊரின் அரைக்கூறு.
**பல்லிதழ்** – பல இதழ்கொண்ட மலர்.
**பல்லிப்பூண்டு** – கொல்லைப்பல்லி யென்னும் பூண்டு.
**பல்லிபடுதல்** – பல்லி சத்தமிடுதல்.
**பல்லிபற்றுதல்** – ஒன்றை விடாது பற்றுதல்.
**பல்லியம்** – பலவகை இசைக்கருவிகள்; குதிரைப் பந்தி; தொங்கல்; மருதநிலம்.
**பல்லியாடுதல்** – விதைத்தபின் மட்டம் செய்தல்.
**பல்லிளித்தல்** – பல்லை வெளிக்காட்டுதல்; புடைவை சாயம்போதல்.
**பல்லிற்சொத்தை** – கெட்டுப்போன பல்.
**பல்லீறு** – பற்களைப் பற்றியுள்ள தசை.
**பல்லு** – காண்க: பல்.
**பல்லுக்கட்டுதல்** – பல்லுக்குத் தங்கம் கட்டுதல்; செயற்கைப் பல் வைத்தல்.
**பல்லுக்காட்டுதல்** – வெளிப்படச் சிரித்தல்; கெஞ்சுதல்; புடைவை சாயம்போதல்.
**பல்லுக்கிட்டுதல்** – குளிர் முதலியவற்றால் வாய் திறக்க முடியாமல் பற்கள் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கை.
**பல்லுக்குச்சி** – பல் விளக்க உதவுங் குச்சி.
**பல்லுக்குத்துதல்** – பல்லிடுக்கிற் செருகிய பொருளைக் குத்தி எடுத்தல்.
**பல்லுகம்** – கரடி; பெருவாகைமரம்.
**பல்லுத்தேய்த்தல்** – காண்க: **பல்விளக்குதல்**.
**பல்லுறைப்பை** – பல அறைகளையுடைய பை.
**பல்லூகம்** – கரடி.
**பல்லூழ்** – பல தடவை.
**பல்லூறுதல்** – பல் முளைக்கையில் உண்டாகுந் தினவு.
**பல்லைக்கடித்தல்** – சினம் முதலியவற்றால் பல்லை நெறுநெறுத்தல்.
**பல்லைத்திறத்தல்** – காண்க: **பல்லுக்காட்டுதல்**.
**பல்லைப்பிடித்துப்பார்த்தல்** – மாட்டின் வயதைக் கணித்தல்; ஒருவன் திறனை ஆராய்தல்.
**பல்லைப்பிடுங்குதல்** – பல்லைப் பிடுங்கிவிடுதல்; ஆற்றலை வாங்குதல்.
**பல்வலம்** – சிறுகுளம்.
**பல்வலிப்பறவை** – சரபப்பறவை.
**பல்வளம்** – நில நீர் முதலிய அனைத்தும் வளம் பெற்றிருத்தல்.
**பல்விளக்குதல்** – பல்லைத் தூய்மைசெய்தல்.
**பல** – ஒன்றுக்கு மேற்பட்டவை.
**பலக்கேடு** – வலியின்மை.
**பலகணி** – சாளரம்; திட்டிவாயில்.
**பலகம்** – அடுக்கு; கேடகம்; நாற்காலி.
**பலகறை** – சோகி.
**பலகாரம்** – யானைமேற்றவிசு; சோறு அல்லாத சிற்றுண்டிவகை.
**பலகால்** – பலமுறை.
**பலகீனம்** – வலுக்குறைவு.
**பலகை** – மரப்பலகை; உழவில் சமன்படுத்தும் மரம்; சூதாட உதவுவதும் கோடுகள் வரையப் பட்டதுமான பலகை; நெடும்பரிசை; எழுதும் பலகை; வரிக்கூத்து; யானைமேற்றவிசு; பறை வகை; வயிரக் குணங்களுள் ஒன்று.
**பலகைமரம்** – நெய்வார் கருவியுள் ஒன்று; பலகை அறுக்க உதவும் மரம்.
**பலகையடித்தல்** – பரம்படித்தல்.
**பலங்கனி** – பலாப்பழம்.
**பலசம்** – நகரவாயில்; பழம்; பனசம்; போர்; வயல்.

**பலசரக்கு** – பலவகைப் பண்டம்.
**பலசாலி** – உடல் வலியுள்ளோன்.
**பலசித்தி** – பயனடைகை.
**பலசூதனன்** – பலன் என்னும் அசுரனைக் கொன்ற இந்திரன்.
**பலட்சயம்** – வலுக்குறைவு; விளைவிழப்பு.
**பலண்டு** – வெங்காயம்.
**பலத்தல்** – கடுமையாதல்; வலிமையடைதல்; செழித்தல்.
**பலத்தியாகம்** – செய்யும் செயலின் பயனை விடுகை.
**பலதானம்** – சிறப்பு நாள்களில் பழத்துடன் அளிக்கும் கொடை; சாந்திக் கலியாணம்.
**பலதேவன்** – காண்க: **பலராமன்.**
**பலப்படுதல்** – வலுவடைதல்; கருவுறுதல்; பலனுக்கு வருதல்; நயப்படுதல்.
**பலப்பம்** – ஒரு மாக்கல்வகை; கற்பலகையில் எழுத உதவும் குச்சி.
**பலபட்டடை** – பலசாதி; கலப்புச் சாதி; பல பண்டமுள்ள சாலை; பல கலப்பானது.
**பலபடுதல்** – பலவாதல்; கட்சிப்படுதல்.
**பலபத்திரன்** – காண்க: **பலராமன்.**
**பலபத்திரன்படை** – பலபத்திரனது படையாகிய கலப்பை.
**பலபலவெனல், பலபலெனல்** – ஒலிக்குறிப்பு; பொழுது விடியற்குறிப்பு; கண்ணீர் விரைந்து வடிதற்குறிப்பு.
**பலபாடு** – பலவகைத் துன்பம்; பல செயல்; அநேக வகையான நிந்தை.
**பலபை** – சூரியன் மையவரியில் நிற்கையில் சூரியக் கடிகார மத்தியில் விழும் நிழல்.
**பலபொருளொருசொல்** – பலபொருள் கொண்ட ஒரு சொல்.
**பலபோகம்** – பூமியில் பலருக்குரிய தனித்தனி நுகர்ச்சி; பலனை நுகர்கை.
**பலம்** – வலி; வேகம்; படை; உறுதி; பருமன்; நெற்றி; இலை; நிறைவகை; இறைச்சி; நிமிடம்; கனி; காய்; கிழங்கு; பயன்; பொன்; காண்க: **வெட்பாலை;** சாதிக்காய்; கேடகம்; மகளிர் சூதகம்; வட்டத்தின் பரப்பு; ஆயுத நுனி; செல்வாக்கு; கலப்பையின் கொழு; கணித உறுப்புகளுள் ஒன்று.
**பலமிலி** – காய்ப்பில்லா மரம்.
**பலமுகம்** – பலவழி.
**பலமூலசாகாதி** – கனி, கிழங்கு, இலை முதலியன.
**பலர்** – அநேகர்; சபை.
**பலர்க்கம்** – கன்னம்.
**பலர்பால்** – உயர்திணைப் பன்மைப்பால்.
**பலரறிசுட்டு** – யாவராலும் அறியப்பட்ட சுட்டு.
**பலரறிசொல்** – பலருமறிந்த செய்தி; காண்க: **பலர்பால்.**
**பலராமன்** – திருமாலின் பத்துப் 'பிறப்புகளுள் கண்ணபிரானுக்குத் தமையனாய் வந்தவர்.
**பலலம்** – சேறு; பிண்ணாக்கு; ஊன்.
**பலவத்து** – பயனுள்ளது; வலிமையுள்ளது.
**பலவந்தம்** – வலாற்காரம், கட்டாயம்.
**பலவந்தன்** – முரடன்; வலிமையுள்ளவன்.
**பலவம்** – குழி; காய்; பழம்.
**பலவரி** – மெய்வருக்கம்.
**பலவழித்தோன்றல்** – மருமகன்.
**பலவறிசொல்** –காண்க: **பலவின்பால்.**
**பலவான்** – வலிமையுடையவன்.
**பலவின்பால்** – ஐம்பாலுள் அஃறிணையிற் பன்மை குறிக்கும் பால்.
**பலவினீட்டம்** – பல பொருள்களின் தொகுதி.
**பலவினைச்சிலேடை** – பல வினைபற்றி வருஞ் சிலேடையணிவகை.
**பலவீனம்** – வலியின்மை; அசதிநோய்.
**பலவு** – பலாமரம்.
**பலவுறுதல்** – பெருவிலை பெறுதல்.
**பலவேலைக்காரன்** – பலதொழில் செய்பவன்; கோயிலில் சில்லறை வேலை செய்பவன்.
**பலற்காரம்** – காண்க: **பலாத்காரம்.**
**பலன்** – விளைச்சல்; பழம்; பயன்; சோதிடபலன்; இந்திரனால் கொல்லப்பட்ட ஓர் அரக்கன்; வெங்காயம்.
**பலன்காணுதல்** – போதிய அளவு விளைதல்.
**பலா** – பலாமரம்; காண்க: **சிற்றாமுட்டி.**
**பலாக்கன்** – குறும்பார்வையினன்.
**பலாக்கினி** – பித்தம்.
**பலாகம்** – கொக்கு.
**பலாகாரம்** – காண்க: **பலகாரம்.**
**பலாசம்** – பசுமை; இலை; முருக்கமரம்; பலா மரம்; காண்க: **ஈரப்பலா;** புரசமரம்.
**பலாசனம்** – பழம் உண்ணும் கிளி.
**பலாசு** – முருக்கமரம்.
**பலாட்டியம்** – பலம்; வலாற்காரம்.
**பலாண்டு** – வெங்காயம்.
**பலாத்காரம்** – கட்டாயப்படுத்துதல்.
**பலாந்தம்** – ஒரு முறை காய்த்துப் பட்டுபோகும் பூண்டு; காண்க: **மூங்கில்.**
**பலாபலம்** – வலிமை மெலிமை.
**பலாபலன்** – ஊதியமும் இழப்பும், இலாப நட்டம்.
**பலாயனம்** – புறங்காட்டியோடுதல்; நிலைகுலைவு.
**பலாரெனல்** – பொழுதுவிடிதற்குறிப்பு.
**பலாலம்** – வைக்கோல்.
**பலாற்காரம்** – காண்க: **பலாத்காரம்.**
**பலான** – இன்னதென்று அறியப்பட்ட.

**பலி** – வேள்வி முதலியவற்றில் தேவர், தென் புலத்தார் முதலியோரை முன்னிட்டு இடும் உணவுப்பொருள்; பலியிடுதற்குரிய உயிரினம் முதலியன; காக்கை முதலிய உயிரினங்கள் உண்ண இடுஞ் சோறு; பிச்சை; சோறு; பூசையில் அருச்சிக்கும் பூ முதலியன; சாம்பல்; திருநீறு; கப்பம்; மாவலிச் சக்கரவர்த்தி; பலிப்பது; காய்கனிகளுள்ள மரம்; காக்கை; மரவகை; கந்தகம்; 'பலீன் சடுகுடு' என்னும் விளையாட்டுவகை.

**பலிக்கந்தம்** – பலியிடும் இடம்.

**பலிகை** – பிண்ணாக்கு.

**பலிகொடுத்தல்** – தெய்வத்திற்குப் பலியிடுதல்; கொல்லுதல்.

**பலிகொள்ளி** – பிச்சை ஏற்கும் சிவபெருமான்.

**பலிசை** – ஊதியம்; இலாபம்; வட்டி.

**பலித்தம்** – பயன்; ஊதியம்; பலிக்கை; கனிமரம்.

**பலித்தல்** – நேர்தல்; பயன்விளைத்தல்; செழித்தல்; மிகுதல்; கொடுத்தல்.

**பலிதம்** – பலிக்கை; இலாபமாகை; பயன்; கனிமரம்; நரைமயிர்.

**பலிதேர்தல்** – பிச்சையெடுத்தல்.

**பலிதை** – கிழவி.

**பலிப்பு** – வெற்றி; பயன்; நன்றாக விளையும் தன்மை; வினைப்பயன்.

**பலிபீடம், பலிபீடிகை** – பலியிடும் மேடை.

**பலிபுட்டம்** – பலியால் வளர்க்கப்படும் காக்கை.

**பலியம்** – தளிர்; பூ.

**பலியூட்டுதல்** – காண்க: **பலிகொடுத்தல்.**

**பலினம்** – நிறையக் காய்த்திருக்கும் மரம்; ஞாழல் மரம்; மிளகு.

**பலினி** – ஞாழல்மரம்; நிறையக் காய்த்திருக்கும் மரம்; மல்லிகை; எலிவகை.

**பலீ** – எருது; ஒட்டகம்; கடா; கோழை; பன்றி.

**பலு** – காண்க: **பலகறை.**

**பலுக்குதல்** – தெளிவாக உச்சரித்தல்; தற்புகழ்ச்சியாகப் பேசுதல்; பேசுதல்; தெளித்தல்.

**பலுகம்** – குரங்கு.

**பலுகுக்கட்டை** – வயலில் மண்கட்டிகளை உடைத்துப் பரப்புவதற்கான பலகொழுத் தட்டு.

**பலுகுதல்** – பலவாதல்; மிகுதல்.

**பலே** – 'மிக நன்று' எனும் பொருள்படும் குறிப்புச் சொல்.

**பலேந்திரன்** – வலுவுள்ளவன்.

**பலை** – காண்க: **திரிபலை**; பசி, தாகம் முதலியவற்றை யழிக்கும் மந்திரம்; சிற்றாமுட்டிச் செடி.

**பலோத்தமை** – திராட்சைப்பழவகை.

**பலோதகம்** – பழச்சாறு.

**பலோதயம்** – ஆதாயம்; பயன்விளைகை; மகிழ்ச்சி; வீடுபேறு; வலிமை.

**பலோற்காரம்** – காண்க: **பலாத்காரம்.**

**பலோற்பதி** – மாமரம்.

**பவ்வம்** – மரக்கணு; நிறைநிலா; பருவகாலம்; ஆழ்கடல்; நீர்க்குமிழி; நுரை.

**பவ்வி** – மலம்; அழுக்கு.

**பவ்வியம்** – தாழ்மை, அடக்கம், பணிவு.

**பவ** – அறுபதாண்டுக் கணக்கில் எட்டாம் ஆண்டு.

**பவசாகரம்** – பிறவிக்கடல்.

**பவஞ்சம்** – காண்க: **பிரபஞ்சம்.**

**பவண்** – கொடி.

**பவணம்** – நாகலோகம்.

**பவணர்** – நாகலோகத்தில் வாழ்நர்.

**பவணேந்திரன்** – இந்திரருள் ஒருவன்.

**பவணை** – கழுகு.

**பவத்தல்** – தோன்றுதல்.

**பவதி** – பார்வதி.

**பவந்தம்** – சூது; பாசாங்கு.

**பவந்தருதல்** – தோன்றுதல்.

**பவநாசன்** – பிறப்பை அறுக்கும் கடவுள்.

**பவம்** – பிறப்பு; உலகவாழ்க்கை; உலகம்; கரணம் பதினொன்றனுள் ஒன்று; உண்மை; பாவம்; மனவைரம்; அழிவு; பதினொன்றை உணர்த்தும் குறிப்புச்சொல்.

**பவமானன்** – வாயுதேவன்.

**பவமின்மை** – இறைவன் எண்குணத்துள் ஒன்றாகிய பிறப்பின்மை.

**பவர்** – நெருக்கம்; பரவுதல்; அடர்ந்த கொடி; பாவிகள்.

**பவர்க்கம்** – நரகம்; பகரவரிசை.

**பவர்தல்** – நெருங்கியிருத்தல்.

**பவரணை** – நிறைநிலா; பலகறை.

**பவழம்** – மணிவகை ஒன்பதனுள் ஒன்று.

**பவழமல்லிகை** – ஒரு மரவகை; காம்பு சிவந்து இதழ் வெண்மையாய் இருக்கும் ஒரு பூவகை, பாரிசாதம்.

**பவழவாய்** – கருத்தங்கும் பை; பவழம் போன்ற வாய்.

**பவளக்காலி** – பவளநிறக் காலுடைய பறவை வகை; ஒரு பூண்டுவகை.

**பவளக்குறிஞ்சி** – மருதோன்றி.

**பவளக்கொடி** – கடலில் வளரும் கொடிவகை; வெற்றிலைவகை; ஓர் அரசி.

**பவளநீர்** – குருதி, செந்நீர், இரத்தம்.

**பவளநெடுங்குஞ்சியோன்** – பைரவன்.

**பவளப்பழம்** – முற்றின பவளம்.

**பவளப்பூண்டு** – ஒரு செடிவகை.
**பவளம்** – காண்க: **பவழம்.**
**பவளமணி** – பவளத்தாலாகிய கையணி.
**பவளமல்லிகை** – காண்க: **பவழமல்லிகை.**
**பவளமாலை** – பவழத்தாலான கழுத்தணிவகை.
**பவளவடம்** – பவழத்தாற் கட்டிய மாலை; பவழத்தாலான முன்கை வளை.
**பவளவடிவன்** – சிவந்த வடிவம் உள்ள முருகன்.
**பவன்** – சிவபிரான்; கடவுள்; புதிதாய் உண்டாவது; பதினோர் உருத்திரருள் ஒருவர்.
**பவனகுமாரன்** – அக்கினி.
**பவனசம்** – காற்றை உண்ணும் பாம்பு.
**பவனம்** – அரண்மனை; வீடு; பூமி; உலகப் பொது; இராசி; நாகலோகம்; பாம்பு; துறக்கம்; விமானம்; பூனை; வாயுதேவன்; நெல் முதலியன தூற்றுகை.
**பவனவாய்** – காற்றுச் செல்லும் வாசலான மலவாய்.
**பவனன்** – வாயுதேவன்.
**பவனாசனம்** – காண்க: **பவனசம்.**
**பவனாத்துமசன்** – வாயுவின் மகன்; அனுமன்; வீமன்.
**பவனி** – உலாவருகை.
**பவனிக்குடை** – அரசன் உலாவருகையிற் பிடிக்குங் குடை.
**பவனிவருதல்** – உலாவருதல்.
**பவாயனை** – கங்கையாறு.
**பவானி** – பார்வதி; காவிரியாற்றின் துணையாறு.
**பவி** – இடியேறு; நீர்.
**பவிகம்** – சிறப்பு.
**பவிசு** – மதிப்பு; செல்வம்; ஒளி; செருக்கு; ஒழுங்கு.
**பவிடியம்** – எதிர்காலம்; பதினெண் புராணத்துள் ஒன்று.
**பவித்தல்** – உண்டாதல்.
**பவித்திரம்** – தூய்மை; காண்க: **தருப்பை; பூணூல்;** தருப்பைப் பவித்திர வடிவான பொன் மோதிரம்; பகந்தரநோய்; தருப்பைப் புல்லாற் செய்த ஒரு முடிச்சு; திருவிழா; மாலைவகை; நெய்; **தேன்.**
**பவித்திரவான், பவித்திரன்** – தூயவன்.
**பவித்திரி** – தருப்பைப் புல்; தூயவன்.
**பவித்திரை** – தூய்மையுள்ளவள்.
**பவுஞ்சு** – படை; ஒழுங்கு.
**பவுத்தர்** – புத்த சமயத்தோர்.
**பவுத்திரநோய், பவுத்திரம்** – மலவாயருகில் உண்டாகும் கட்டிவகை, பகந்தரநோய்.
**பவுத்திரன்** – மக்கள்வயிற்றுப் பேரன்.
**பவுதிகம்** – இயற்பியல்; பூத சம்பந்தமானது.
**பவுந்திரம்** – காண்க: **பவுத்திரம்.**
**பவுமன்** – செவ்வாய்.
**பவுரணை, பவுரம்** – முழுமதி.
**பவுரி** – மண்டலமிடுதல்; மண்டலமாய் ஆடும் கூத்துவகை; பெரும்பண்வகை.
**பவுரிசம்** – போலியான நடை.
**பவுருசம்** – ஆண்மை.
**பவுழியன்** – பூழிநாட்டை ஆண்டவனான சேரன்.
**பழக்கம்** – வழக்கம்; பயிற்சி; அறிமுகம்; ஒழுக்கம்; திறன்; அமைதிக்குணம்.
**பழக்கம்காட்டுதல்** – தீயொழுக்கத்தை வெளிப் படுத்துதல்.
**பழக்காய்** – செங்காய்.
**பழக்குதல்** – பழகச்செய்தல்.
**பழகுதல்** – பயிலுதல்; உறவுகொள்ளுதல்; பதப் படுதல்; சாதுவாதல்; இணக்கமாதல்; ஊடாடு தல்; நாட்படுதல்.
**பழங்கஞ்சி** – முதல்நாளிலுள்ள கஞ்சி; புளித்த கஞ்சி.
**பழங்கண்** – துன்பம்; ஒலி; மெலிவு.
**பழங்கணாளர்** – துன்புற்றோர்..
**பழங்கதை** – முன்வரலாறு; மறந்த செய்தி; தொன்மம், புராணம்.
**பழங்கந்தை** – கிழிந்த துணி.
**பழங்கள்** – புளித்த கள்.
**பழங்காதை** – காண்க: **பழங்கதை.**
**பழங்கிடையன்** – பழைய பொருள்கள்.
**பழங்குடி** – பழமையான குடி; வழிவழியாக நிலைபெற்றுவரும் குடி.
**பழகு** – நாட்பட்டது.
**பழஞ்சரக்கு** – நாட்பட்ட பண்டம்; பிராரத்த கருமம்.
**பழஞ்சாதம்** – காண்க: **பழஞ்சோறு.**
**பழஞ்செருக்கு** – மிகுந்த குடிவெறி.
**பழஞ்சொல்** – பழமொழி.
**பழஞ்சோற்றுத்தண்ணீர்** – காண்க: **நீராகாரம்.**
**பழஞ்சோறு** – பழைய அன்னம்.
**பழந்தக்கராகம்** – ஒரு பழைய பண்வகை.
**பழநடை** – வழக்கம்.
**பழப்பாக்கு** – முதிர்ந்த பாக்கு.
**பழம்** – கனி; வயது முதிர்ந்தோன்; **கைகூடுகை;** ஆட்டக்கெலிப்பு; முக்கால்.
**பழம்பகை** – நெடுநாட் பகை; மனவைரம்; இயற்கைப் பகை.
**பழம்பஞ்சுரம்** – குறிஞ்சிப்பண்வகை.
**பழம்படி** – முன்போல.
**பழம்பாக்குவாங்குதல்** – கலியாணம் உறுதி செய்தல்
**பழம்பாசி** – காண்க: **கொட்டைப்பாசி; வெதுப் படக்கி.**

**பழம்பாடம்** – படித்த பாடம்; நினைவாற்றலுடன் நன்றாய் மீண்டும் சொல்லக்கூடிய பாடம்.
**பழம்பெருச்சாளி** – அனுபவமிக்க தந்திரசாலி.
**பழம்பொருள்** – கடவுள்; பழைய பொருள்; புதையல்.
**பழம்போக்கு** – பழைய முறை.
**பழமலை** – திருமுதுகுன்றம், விருத்தாசலம்.
**பழமனை** – இடிந்து பாழான வீடு.
**பழமா** – தேமா.
**பழமெடுத்தல்** – பழத்தைப் பறித்தல்; ஆட்டங் கெலித்தல்.
**பழமை** – தொன்மை; தொன்மையானது; வழங்காதொழிந்தது; சாரமின்மை; முதுமொழி; வெகுநாட் பழக்கம்; நாட்பட்டதால் ஏற்படும் சிதைவு; பழங்கதை; மரபு.
**பழமைபாராட்டுதல்** – நெடுநாளாக உள்ள பழக்கத்தைத் தெரிவித்தல்.
**பழமொழி** – முதுசொல்; பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று.
**பழரசம்** – பழச்சாறு.
**பழவடியார்** – வழித்தொண்டர்.
**பழவரிசி** – குற்றிப் பழகிய அரிசி.
**பழவினை** – முன்வினை.
**பழனம்** – வயல்; மருதநிலம்; பொய்கை.
**பழனல்வெதிர்,** **பழனவெதிர்** – கரும்பு.
**பழனியாண்டவன்,** **பழனியாண்டி,** **பழனிவேலன்** – பழனியில் கோயில் கொண்டுள்ள முருகக் கடவுள்.
**பழி** – குற்றம்; நிந்தை; அலர்; குறை; பாவம்; பழிக்குப் பழி; பொய்; பகைமை; ஒன்றுக்கும் உதவாதவன்.
**பழிக்குடி** – பழம்பகைகொண்ட குடும்பம்; ஏழைக்குடி.
**பழிக்குவிடுதல்** – அழியவிடுதல்.
**பழிகரப்பங்கதம்,** **பழிகரப்பு** – வசையைக் குறிப்புப் பொருளாகக்கொண்ட செய்யுள் வகை.
**பழிகாரன்** – பிறர்மேல் பழிகூறுபவன்; படுபாவி.
**பழிகிடத்தல்** – தன்செயல் நிறைவேற ஒருவன் வீட்டுவாயிலில் உண்ணாமல் இருத்தல்.
**பழிச்சு** – துதி.
**பழிச்சுதல்** – புகழ்தல்; வணங்குதல்; வாழ்த்துதல்; கூறுதல்.
**பழிச்சொல்** – நிந்தை; அலர்.
**பழிசுமத்தல்** – நிந்தனையேற்றல்; பழி ஒருவன் மேல் வருதல்.
**பழிசுமத்துதல்** – அநியாயமாகக் குற்றஞ்சாட்டுதல்.
**பழிசை** – இகழ்ச்சி.
**பழித்தல்** – நிந்தித்தல்; புறங்கூறுதல்.
**பழித்துரை** – காண்க: **பழிச்சொல்.**
**பழிதீர்த்தல்** – பழிவாங்குதல்; பாவம் போக்குதல்.
**பழிதூற்றுதல்** – புறங்கூறுதல்; அலர்பரப்புதல்.
**பழிநாணல்** – பழிபாவத்திற்கு அஞ்சுதல்.
**பழிப்பனவு** – பழிப்பான செயல்.
**பழிப்பு** – நிந்தை; குற்றம்; குறளை; குறை.
**பழிப்புக்காரன்** – நிந்திப்போன்; நகைப்புக்கு இடமானவன்.
**பழிப்புவமை** – உவமேயத்தை உயர்த்தி உவமானத்தைப் பழிக்கும் அணி.
**பழிபாதகம்** – பெரும்பாதகம்.
**பழிபோடுதல்** – காண்க: **பழிசுமத்துதல்.**
**பழிமுடித்தல்** – காண்க: **பழிவாங்குதல்.**
**பழிமுடிதல்** – பகைமூட்டுதல்.
**பழிமூட்டுதல்** – கோட்சொல்லுதல்.
**பழிமூளுதல்** – பகையுண்டாகை.
**பழிமொழி** – நிந்தனை; புறங்கூறுகை.
**பழியேற்றல்** – குற்றப் பொறுப்பைத் தாங்குதல்.
**பழிவாங்குதல்** – தீமைக்குத் தீமை செய்தல்.
**பழிவேலை** – வருத்தி வாங்கப்படும் வேலை.
**பழு** – பொன்னிறம்; விலாவெலும்பு; விலா; ஏணியின் படிச்சட்டம்; சட்டம்; பேய்.
**பழுக்க** – முற்றவும்.
**பழுக்கக்காய்ச்சுதல்** – சிவக்கக் காய்ச்சுதல்.
**பழுக்கச்சுடுதல்** – நிறம் ஏறப் பொன்னைத் தீயில் காய்ச்சுதல்.
**பழுக்கப்போடுதல்** – ஒரு செயல் முடிவதற்குக் காத்திருத்தல்.
**பழுக்காய்** – பழுத்த பாக்கு; மஞ்சள் கலந்த செந்நிறம்; தேங்காய்; சாயநூல்.
**பழுக்காய்நூல்** – சாயமிட்ட நூல்.
**பழுக்குறை** – எண் குறைந்த விலாவெலும்புகளையுடைய எருதுவகை.
**பழுத்தபழம்** – முதிர்ந்த கனி; முதிர்கிழவன்; பக்குவமடைந்தவன்; தீமையிற் கைதேர்ந்தவன்.
**பழுத்தல்** – பழமாதல்; முதிர்தல்; மூப்படைதல்; பக்குவமாதல்; கைவருதல்; பரு முதலியன முற்றுதல்; மனங்கனிதல்; நிறம் மாறுதல்; நன்மையாதல்; செழித்தல்; மிகுதல்; பழுப்பு நிறமாதல்; குழைதல்; காரம் முதலியன கொடாமையால் பிள்ளை பெற்ற வயிறு பெருத்தல்.
**பழுது** – பயனின்மை; குற்றம்; சிதைவு; பதன் அழிந்தது; பிணமாயிருக்குந் தன்மை; பொய்; வறுமை; தீங்கு; உடம்பு; ஒழுக்கக்கேடு; இடம்; நிறைவு.

**பழுதுபடல்** – சீர்கெடல்.
**பழுதுபார்த்தல்** – கெட்டதைச் செப்பனிடுதல்.
**பழுதை** – வைக்கோற்புரி; கயிறு; பாம்பு.
**பழுப்படைதல்** – பூங்காவி நிறமாதல்.
**பழுப்பு** – பொன்னிறம்; அரிதாரம்; முதிர்ந்து மஞ்சள் நிறப்பட்ட இலை; சிவப்பு; சீழ்; ஏணியின் படிச்சட்டம்.
**பழுப்புப்பொன்** – செம்பொன்.
**பழுப்பேறுதல்** – காண்க: **பழுப்படைதல்.**
**பழுபாகல்** – ஒரு பாகற்கொடிவகை; காண்க: **தும்பை.**
**பழுமணி** – மாணிக்கம்.
**பழுமரம்** – ஆலமரம்; பழுத்த மரம்.
**பழுவம்** – காடு; தொகுதி.
**பழுவெலும்பு** – விலாவெலும்பு.
**பழுனுதல்** – முதிர்தல்; கனிதல்; முற்றுப்பெறுதல்.
**பழூஉ** – பேய்.
**பழை** – கள்.
**பழைஞ்சோறு** – காண்க: **பழஞ்சோறு.**
**பழைமை** – தொன்மை; தொன்மையானது; வழங்காதொழிந்தது; சாரமின்மை; முதுமொழி; நெடுநாட் பழக்கம்; பழங்கதை; மரபு; நாட்பட்டதால் ஏற்படும் சிதைவு.
**பழைய** – நாட்பட்ட.
**பழையது** – நாட்பட்டது; பழஞ்சோறு.
**பழையநாள்** – பண்டைக்காலம்.
**பழையபடி** – முன்போல; மறுபடியும்.
**பழையமனிதன்** – வயதுமுதிர்ந்தவன்; பாவ நிலையிலுள்ள மனிதன்.
**பழையர்** – முன்னோர்; கள் விற்போர்.
**பழையவமுது** – காண்க: **பழஞ்சோறு.**
**பழையவேற்பாடு** – பண்டை வழக்கம்; விவிலிய நூலின் பூர்வாகமம்.
**பழையோன்** – தொன்மையானவன்; நீண்டகால நட்புடையவன்.
**பழையோள்** – துர்க்கை.
**பள்** – பள்ளச்சாதி; நாடகநூல்வகை; காளி முதலிய தெய்வங்கட்குப் பலிகொடுக்கும் காலத்துப் பாடப்படும் பண்வகை.
**பள்குதல்** – பதுங்குதல்.
**பள்ளக்காடு** – தாழ்ந்த நிலப்பகுதி.
**பள்ளக்கால்** – காண்க: **பள்ளக்காடு**; தாழ்ந்த நன்செய் நிலம்; தாழ்விடத்துப் பாயும் வாய்க்கால்.
**பள்ளக்குடி** – பள்ளச்சாதி; பள்ளர் குடியிருக்கும் இடம்.
**பள்ளச்சி** – பள்ளச்சாதிப் பெண்.
**பள்ளத்தாக்கு** – மலைகளின் நடுவே உள்ள இடம்; தாழ்ந்த நிலம்.
**பள்ளநாலி** – தாழ்விடத்துப் பாயும் நீர்க்கால்.
**பள்ளம்** – தாழ்வு; தாழ்ந்த நிலம்; ஆழம்; குழி; முகம், கால் இவற்றில் உள்ள குழிவு.
**பள்ளம்பறித்தல்** – குழிதோண்டுதல்; ஒருவனைக் கெடுக்க முயலுதல்.
**பள்ளமடை** – தாழ்ந்தவிடத்துப் பாயும் நீர்க்கால்; பள்ளமான வயலுக்குப் பாயும்படி வைக்கப் பட்ட மடை; தாழ்ந்தவிடத்தில் வேகமாய்ப் பாயும் நீரோட்டம்; எளிதாகப் பாய்தற்கு இயலும் பூமி; எளிதில் நிகழ்வது.
**பள்ளயம்** – காண்க: **பள்ளையம்.**
**பள்ளர்** – உழவர்; ஒரு சாதியார்வகை.
**பள்ளவோடம்** – படகுவகை.
**பள்ளாடு** – குள்ளமான ஆட்டுவகை.
**பள்ளி** – கல்வி கற்குமிடம்; அறை; அறச்சாலை; இடம்; சிற்றூர்; இடைச்சேரி; நகரம்; முனிவர் இருப்பிடம்; சமண பௌத்தக் கோயில்; அரசருக்குரிய அரண்மனை முதலியன; பணிக்களம்; மக்கட் படுக்கை; கிறித்தவக் கோயில்; பள்ளிவாசல்; தூக்கம்; விலங்கு துயிலிடம்; சாலை; வன்னியச்சாதி; குள்ளமானவள்; குறும்பர்.
**பள்ளிக்கட்டில்** – அரியணை.
**பள்ளிக்கட்டு** – இளவரசியின் திருமணம்; ஊர் உண்டாக்குகை.
**பள்ளிக்கணக்கன்** – பள்ளிக்கூடச் சிறுவன்.
**பள்ளிக்கணக்கு** – பள்ளிக்கூடத்துப் படிப்பு.
**பள்ளிக்கிராமம்** – கோயிற்குரிய ஊர்.
**பள்ளிக்குவைத்தல்** – பிள்ளைகளைப் பள்ளிக் கூடத்திற்கு அனுப்பிவைத்தல்.
**பள்ளிக்குறிப்பு** – தூக்கக் குறி.
**பள்ளிக்கூடத்துத்தம்பி** – ஊரில் எழுதப்படிக்கத் தெரிந்தவன்.
**பள்ளிக்கூடம்** – கல்வி கற்குமிடம்.
**பள்ளிகொண்ட பெருமாள், பள்ளிகொண்டான்** – கிடந்த திருக்கோலங்கொண்ட திருமால்.
**பள்ளிகொள்ளுதல்** – துயில்கொள்ளுதல்.
**பள்ளிச்சந்தம்** – சமண பௌத்தக் கோயில்களுக்கு வழங்கப்பட்ட ஊர்.
**பள்ளித்தாமம்** – இறைவனுக்குச் சாத்தும் மாலை.
**பள்ளித்தேவாரம்** – அரண்மனையில் வணங்கும் தெய்வம்; அரண்மனைத் தெய்வத்திற்குரிய பூசை.
**பள்ளித்தோழமை** – பள்ளிக்கூடத்து நட்பு.
**பள்ளிப்பிள்ளை** – மாணாக்கன்.
**பள்ளிப்பீடம்** – காண்க: **பள்ளிக்கட்டில்.**
**பள்ளிபடை** – அரசர் முதலியோர்க்குப் புரியும் ஈமக்கடன்; இறந்த அரசரின் நினைவாகக் கட்டப்பட்ட கோயில்.

**பள்ளிபருத்தல்** – அரசர் முதலியோர்க்கு ஈமக் கடன் செய்தல்.

**பள்ளிமண்டபம், பள்ளிமாடம்** – காண்க: **பள்ளியறை.**

**பள்ளியந்துலா** – படுக்கைப் பல்லக்கு.

**பள்ளியம்பலம்** – காண்க: **பள்ளிமாடம்.**

**பள்ளியயர்தல்** – உறங்குதல்.

**பள்ளியறை** – துயிலிடம்.

**பள்ளியெழுச்சி** – துயிலெழுப்புதல்; காண்க: **திருப்பள்ளியெழுச்சி;** அரசர் முதலியோரைத் துயிலெழுப்பும் சிற்றிலக்கியவகை.

**பள்ளியோடம்** – காண்க: **பள்ளவோடம்.**

**பள்ளியோடவையம்** – பள்ளியோடம்போன்ற வண்டி.

**பள்ளிவாசல்** – முகமதியர் மசூதி.

**பள்ளு** – உழத்திப் பாட்டு, ஒரு சிற்றிலக்கிய வகை; காண்க: **பள்.**

**பள்ளை** – குள்ளம்; ஆடு; குள்ளமான ஆட்டு வகை; வயிறு; பருத்த உயிரினம்.

**பள்ளைச்சி** – குள்ளமானவள்.

**பள்ளையம்** – உண்கலம்; சிறுதெய்வங்களுக்குப் படைக்கும் பொருள்.

**பள்ளையம்போடுதல்** – தெய்வத்துக்குமுன் அன்னம், கறி முதலியவற்றைப் படைத்தல்.

**பள்ளையன்** – குறுகிப் பருத்தவன்.

**பள்ளையாடு** –காண்க: **பள்ளாடு.**

**பளக்கு** – கொப்புளம்.

**பளகம்** – பவளம்; மலை.

**பளகர்** – மூடர்; குற்றமுடையவர்.

**பளகு** – குற்றம்.

**பளபளத்தல்** – ஒளிர்தல்.

**பளபளப்பு** – ஒளி; பாடல்நயம்.

**பளபளவெனல்** – ஒளிக்குறிப்பு; ஒலிக்குறிப்பு.

**பளாபளா** – வியப்புக்குறிப்பு; இன்மைக் குறிப்பு.

**பளிக்கறை, பளிக்கறைமண்டபம்** – பளிங்குக் கற்களால் கட்டப்பட்ட மாளிகை.

**பளிக்காய்** – பச்சைக்கருப்பூரங் கலந்த பாக்கு.

**பளிக்குமாடம்** – காண்க: **பளிக்கறைமண்டபம்.**

**பளிங்கு** – படிகம்; கண்ணாடி; கருப்பூரம்; சுக்கிரன்; தோணிக்கயிறு; புட்பராகம்; காண்க: **அழுங்கு.**

**பளிச்சிடுதல்** – ஒளிவீசுதல்.

**பளிச்சுப்பளிச்செனல், பளிச்செனல்** – ஒளிவீசுதற்குறிப்பு; விரைவுக்குறிப்பு; தெளிவுக்குறிப்பு; வேதனைக்குறிப்பு.

**பளிஞ்சி** – தோணிக்கயிறு.

**பளிதச்சுண்ணம்** – பச்சைக்கருப்பூரம் கலந்த பொடி.

**பளிதம்** – கருப்பூரம்; பச்சைக்கருப்பூரம்; பச்சடி; **ஒரு பேரெண்.**

**பளீரெனல்** – ஒலிக்குறிப்பு; ஒளிவீசுதற்குறிப்பு; வேதனைக்குறிப்பு.

**பளு, பளுவு** – பாரம்; கனம்; கடுமை.

**பளை** – வளை; விலங்கு முதலியவற்றின் வளை.

**பற்கடித்தல்** – கோபம் முதலியவற்றால் பல்லைக் கடித்தல்.

**பற்காட்டுதல்** – சிரித்தல்; பல்லைக் காட்டிக் கெஞ்சுதல்.

**பற்காவி** – தாம்பூலம் முதலியவற்றால் பல்லில் ஏறிய காவி.

**பற்காறை** – பற்களில் கட்டியாய்த் திரண்டிருக்கும் ஊத்தை; காண்க: **பற்காவி;** பற்களில் ஏற்றிய கறுப்புக்கறை.

**பற்குச்சி** – பல் விளக்குங் குச்சி.

**பற்குடைச்சல்** – பல்நோவு; சொத்தைப் பல்.

**பற்குத்து** – பல்நோவு.

**பற்குறி** – பற்பட்ட குறி; புணர்ச்சிக் காலத்து மகளிர் உறுப்பில் ஆடவர் பற்பட்டு உண்டாகும் தழும்பு.

**பற்குனி** – காண்க: **பங்குனி.**

**பற்சர்** – பகைவர்.

**பற்சன்னியன்** – வருணன்.

**பற்சனம்** – நிந்தை.

**பற்சீவுங்கோல்** – பற்குச்சி.

**பற்சீவுதல்** – பல் விளக்குதல்.

**பற்சொத்தை** – பல்லிற் பூச்சிவிழும் நோய்.

**பற்படகம்** – காண்க: **பற்பாடகம்.**

**பற்பணம்** – ஒரு பலம் உள்ள நிறையளவு.

**பற்பதம்** – மலை.

**பற்பநாபன்** – காண்க: **பதுமநாபன்.**

**பற்பம்** – தூள்; திருநீறு; நீற்றுமானப் பொருள்; தாமரை; ஒரு பேரெண்; பதினெண் புராணத்துள் ஒன்று.

**பற்பராகம்** – மாணிக்கவகை.

**பற்பரோகம்** – கண்ணிமையில் செஞ்சதை வளர்ந்திருக்கும் நோய்வகை.

**பற்பல** – மிகுதியானவை.

**பற்பறைகொட்டுதல்** – குளிரால் பல் ஒன்றோடொன்று தாக்கி ஓசையுண்டாக்குதல்.

**பற்பாடகம்** – ஒரு மருந்துப்பூடுவகை.

**பற்பொடி** – பல்விளக்க உதவும் தூள்.

**பற்ற** – முன்னிட்டு; ஒட்ட; காட்டிலும்.

**பற்றடித்தல்** – சுவர் முதலியவற்றிற்கு ஒட்டிடுதல்.

**பற்றடைப்பு** – பயிரிடுதற்காக நிலத்தைக் குடிகளிடம் விடுங் குத்தகை.

**பற்றம்** – கற்றை; கூட்டம்; துணையாகப் பிடிக்கை; வீக்கம்; நன்றியறிவு; கனம்.

**பற்றலம்புதல்** – சமைத்த பாண்டங்களைக் கழுவுதல்.

**பற்றலர்** – காண்க: பற்றார்.

**பற்றவைத்தல்** – உலோகங்களைப் பொருத்துதல்; தீமூட்டல்; பகைவிளைத்தல்.

**பற்றற்றான்** – பற்றற்றவனான கடவுள்.

**பற்றற** – முழுதும்.

**பற்றறுதி** – முழுதுந் தொடர்பறுகை.

**பற்றாக்கை** – அம்புத்திரள்; அம்புத்திரள் கட்டும் கயிறு.

**பற்றாசு** – உலோகங்களைப் பொருத்த இடையிலிடும் பொடி; பற்றுக்கோடு; தஞ்சம்; காரணம்; ஓர் அசைவகை.

**பற்றாதது** – சிறுமையானது; போதாதது; கொஞ்சம்.

**பற்றாப்படி** – போதியதும் போதாததுமானது; குறைவு.

**பற்றாப்போரி** – தகுதியற்ற எதிரி.

**பற்றாமாக்கள்** – காண்க: பற்றார்.

**பற்றாயம்** – பெரும்பெட்டி; உயிரினங்களைப் பிடிக்கவும் அடைக்கவும் உதவும் கூண்டு, பொறி முதலியன.

**பற்றாயார்** – முனிவர்.

**பற்றார்** – பகைவர்.

**பற்றி** – உலோகங்களைப் பொருத்த உதவும் பொடி; குறித்து.

**பற்றிப்படர்தல்** – கொடிபடர்தல்; குடும்பஞ் செழித்தல்.

**பற்றிப்பிடித்தல்** – தொடர்ந்துநிற்றல்; நன்றாய்ப் பிடித்தல்; சோறு வெந்து கரிந்துபோதல்.

**பற்றியெரிதல்** – தீமூண்டெரிதல்; சினம் மூளுதல்.

**பற்றிரும்பு** – இணைக்கும் தகட்டிரும்பு.

**பற்றிலார்** – பகைவர்; உலகப் பற்றற்றவரான முனிவர்.

**பற்றிலான்** – காண்க: பற்றற்றான்.

**பற்றிலி** – தரிசுநிலம்.

**பற்றின்மை** – இறைவன் எண்குணத்துள் ஒன்றாகிய விருப்பின்மை.

**பற்றினர்** – உறவினர்; நண்பர்.

**பற்று** – பிடிக்கை; ஏற்றுக்கொள்கை; அகப்பற்றுப் புறப்பற்றுகளாகிய விருப்புகள்; சம்பந்தம்; ஒட்டு; பற்றாசு; பசை; சமைத்த பாண்டத்தில் பற்றிப் பிடித்திருக்கும் சோற்றுப்பருக்கை; சோற்றுப்பருக்கை ஒட்டியுள்ள பாத்திரம்; உரிமையிடம்; தங்குமிடம்; பல ஊர்களுடைய நாட்டுப்பகுதி; பெற்றுக்கொண்ட பொருள்; பற்றுக்கோடு; தூண்; அன்பு; நட்பு; வீட்டுநெறி; செல்வம்; இல்வாழ்க்கை; வயல்; கட்டு; கொள்கை; மருந்துப்பூச்சி; வாரப்பாடல்; சிற்றூர்; கலவைச் சுண்ணாம்புவகை.

**பற்று** (வி) – ஊன்று; பிடி; கைக்கொள்.

**பற்றுக்கால்** – தாங்குகட்டை; பொய்க்கால்.

**பற்றுக்குறடு, பற்றுக்கொடிறு** – ஒரு கம்மக்கருவிவகை.

**பற்றுக்கோடு** – ஆதாரம்; பற்றுக்கோல்; கட்டுத்தறி; அடைக்கலம்.

**பற்றுக்கோல்** – ஊன்றுகோல்; மாடுகளுக்குச் சூடுபோட உதவும் இருப்புக்கோல்; ஈயம் பற்றவைக்குங் கருவி; கம்மக்கருவியினொன்று.

**பற்றுச்சீட்டு** – ரசீது; சாகுபடிக் குத்தகைப் பத்திரம்.

**பற்றுதல்** – பிடித்தல்; பயனறுதல்; ஊன்றிப் பிடித்தல்; ஏற்றுக்கொள்ளுதல்; மனத்துக் கொள்ளுதல்; தொடுதல்; உணர்தல்; தொடர்தல்; நிறம்பிடித்தல்; தீ முதலியன மூளுதல்; தகுதியாதல்; ஒட்டுதல்; பொருந்துதல்; போதியதாதல்; உறைத்தல்; உண்டாதல்; பொறுத்தல்.

**பற்றுப்போடுதல்** – பூச்சுமருந்து தடவுதல்.

**பற்றுமஞ்சள்** – நிறம்பிடிக்கும் பூச்சுமஞ்சள்.

**பற்றுவரவு** – கொடுக்கல்வாங்கல்; கணக்கின் வரவுசெலவுக் குறிப்பு.

**பற்றுவாய்** – பற்றுவைக்கும் இடம்; துப்பாக்கியில் மருந்திடும் துளை.

**பற்றுவைத்தல்** – ஆசைகொள்ளுதல்; அன்பு வைத்தல்.

**பற்றுள்ளம்** – இவறல், பொருளின்மேல் விருப்பு.

**பற்றை** – காண்க: செங்காந்தள்; தூறு; தொகுதி; கீழோன்.

**பற்றைச்சி** – விலைமகள்.

**பறக்கடித்தல்** – துரத்துதல்; சிதறடித்தல்.

**பறக்கவிடுதல்** – வானத்திற் செல்லும்படி செய்தல்; தொந்தரவுசெய்தல்; கெடுத்தல்; உதவி செய்யாது கைவிடுதல்.

**பறகுபறகெனல்** – சொறிதற்குறிப்பு.

**பறங்கி** – பூசணிக்காய்வகை; ஒரு மேகநோய்; ஐரோப்பியன்; சட்டைக்காரன்.

**பறங்கிக்காய்** – பூசணிக்காய்வகை.

**பறங்கிக்காரன்** – ஐரோப்பியன்; சட்டைக்காரன்.

**பறங்கிச்சாம்பிராணி** – பெரிய மரவகை; சாம்பிராணிவகை.

**பறங்கிப்பட்டை** – ஒரு கொடிவகை.

**பறங்கிவியாதி** – ஒரு நோய்வகை.

**பறட்டை** – செழிப்பற்றது; இன்மையைக் குறிக்கும் ஒரு விளையாட்டுக் குறியீடு; தூற்று மயிர்; பறட்டைக்கீரை; ஒரு நிந்தைமொழி.

**பறட்டைச்சி** – தூறுபோன்ற தலைமயிர் உடையவள்.

**பறட்டைத்தலை** – தூறடர்ந்த மயிர்த்தலை.

**பறட்டையன்** – தூறடர்ந்த மயிர்த்தலையன்.

**பறண்டுதல்** – நகத்தால் சுரண்டுதல்.

**பறண்டை** – ஒரு வாத்தியவகை; கைம்முட்டியின் மொழி.

**பறத்தல்** – பறவை, பஞ்சு முதலியன வானத்தில் பறத்தல்; வேகமாக ஓடுதல்; விரைவுபடுத்தல்; அமைதியற்று வருந்துதல்; சிதறியொழிதல்.

**பறதி** – பறத்தல்; பதற்றம்.

**பறந்தடித்தல்** – கவலையால் விரைவுபடுதல்.

**பறந்தலை** – பாழிடம்; பாலைநிலத்தூர்; சுடுகாடு; போர்க்களம்; படைவீடு.

**பறப்பன்** – தேள்; விருச்சிகராசி; அவசரக்காரன்.

**பறப்பன** – சிறகுடைய உயிரிகள்.

**பறப்பு** – பறக்கை; விரைவு; கவலை.

**பறப்புப்பார்த்தல்** – அன்றாட வேலையைக் கவனித்தல்.

**பறப்பை** – பறவை; பறவை வடிவமாகச் செய்த வேள்விமேடை; வேள்வியில் நெய்வைக்கும் பாத்திரம்.

**பறப்பைப்படுத்தல்** – கருடன், பருந்து முதலிய பறவைவடிவாக வேள்விமேடை அமைத்தல்.

**பறபறத்தல்** – மிக விரைதல்; பறபறவென்று ஒலித்தல்.

**பறபறெனல்** – விரைவுக்குறிப்பு; துணி கிழித்தல் முதலியன நிகழும்போது உண்டாகும் ஒலிக் குறிப்பு.

**பறம்பர்** – தோல்வேலை செய்பவர்.

**பறம்பி** – மோசக்காரி.

**பறம்பு** – மலை; பாரியின் மலை; பாரியின் நாடு; முலை.

**பறம்புதல்** – அடித்தல்.

**பறல்** – பறவை.

**பறவாதி** – பேராசைக்காரன்; விரைவுடையோன்; விரைவு.

**பறவை** – புள்; இறகு; பறக்கை; வண்டு; அவிட்டநாள்; அம்மைவகை.

**பறவைமாநாகம்** – காண்க: குக்குடசர்ப்பம்.

**பறவையணில்** – மலையில் வாழும் பறக்கும் அணில்வகை.

**பறவைவேந்தன்** – பறவைக்கு அரசனான கருடன்.

**பறழ்** – பருப்பு; மரங்களில் வாழ்வன, தவழ்வன, மூங்கா, வெருகு, எலி, அணில், நாய், பன்றி, புலி, முயல், நரி இவற்றின் இளமைப்பெயர்.

**பறளிகை, பறளை** – காண்க: பற்றிரும்பு; தளவரிசைப் படை; உலோகத்தகடு; குறடு.

**பறாண்டுதல்** – காண்க: பிறாண்டுதல்.

**பறி** – பிடுங்குகை; கொள்ளை; இறக்கின பாரம்; மீன்பிடிக்குங் கருவி; பனையோலைப் பாய்; உடம்பு; பொன்.

**பறிக்கல்** – கிட்டம்.

**பறிகாரன்** – அநியாயக்காரன்; வழிப்பறி செய்வோன்.

**பறிகொடுத்தல்** – களவு கொடுத்தல்; சாகக் கொடுத்தல்.

**பறித்தல்** – செடியிலிருந்து இலை முதலியவற்றை வலிய நீக்குதல்; பிடுங்குதல்; வலிதிற் கவர்தல்; தோண்டுதல்; பாரம் இறக்குதல்; அழித்தல்; நீக்குதல்.

**பறிதல்** – ஓடிப்போதல்; நிலைபெயர்தல்; வெளிப்படுதல்; எய்யப்படுதல்; ஒலியுடன் வெளிப்படுதல்; கட்டவிழ்த்தல்; இல்லாமற் போதல்; செய்மைநிலையாதல்; ஒட்டிப்போதல்; திரட்டப்படுதல்; அறுதல்; உண்டாதல்; தணிதல்; தீர்மானப்படாதிருத்தல்; தப்பிப் போதல்; முன்செல்லுதல்; ஊடுருவுதல்.

**பறிதலைக்கையர், பறிதலையர்** – தலைமயிரைப் பறித்துக் கொள்ளும் அமணர்.

**பறிபோதல்** – கொள்ளையிடப்படுதல்.

**பறிபோடுதல்** – மீன்பிடிக்கப் பறிவைத்தல்.

**பறிமணல்** – பொன்மணல்.

**பறிமுதல்** – அரசால் கவர்ந்துகொள்ளப்பட்ட பொருள்; கொள்ளையிடப்பட்ட பொருள்.

**பறிமுறை** – பல் வீழ்ந்து முளைத்தல்.

**பறியோலை** – பனையோலைப் பாய்.

**பறிவு** – கழிவு; அதிர்கை; நிலைபெயர்கை; ஒட்டிப்போகை.

**பறிவை** – செடிவகை; சீந்திற்கொடி; காண்க: நந்தியாவட்டம்; தாழை.

**பறுகு** – சிறுதூறு; குள்ளம்.

**பறுணி** – கொள்ளு; சீந்திற்கொடி; காண்க: பெருங்குமிழ்; வல்லாரை; பெருங்குரும்பை.

**பறை** – தோற்கருவி; தப்பு; பறையடிக்குஞ் சாதி; வட்டம்; சொல்; விரும்பிய பொருள்; ஒரு முகத்தலளவை; மரக்கால்; நூல்வகை; வரிக்கூத்துவகை; குகை; பறத்தல்; பறவை இறகு; பறவை.

**பறைக்கோலம்** – இழிவான கோலம்.

**பறைகொட்டுதல்** – தப்படித்தல்; மேளமடித்தல்; பல் முதலியன ஒன்றுடன் ஒன்று அடித்துக் கொள்ளுதல்.

**பறைச்சல்** – பேச்சு.

**பறைச்சி** – பறைக்குடிப் பெண்.

**பறைச்சேரி** – பறையர் வாழும் இடம்.

**பறைசாற்றுதல்** – காண்க: பறையறைதல்; இரகசியத்தை வெளிப்படுத்துதல்.

**பறைத்தல்** – சொல்லுதல்; நீக்குதல்.

**பறைத்துடைவை** – பறை அடிப்பவர்களுக்கு விடப்படுகிற தோட்டம் முதலிய மானிய வருவாய்.

**பறைதட்டுதல்** – காண்க: பறையறைதல்.

**பறைதல்** – சொல்லல்; தேய்தல்; அழிதல்.

**பறைப்பருந்து** – கரும்பருந்து.
**பறைப்பேச்சு** – கொச்சைச்சொல்; செயல் நிறைவேறாத பேச்சு.
**பறைபடுத்துதல்** – காண்க: **பறையறைதல்.**
**பறைமுறைசாற்றுதல்** – பறையடித்தறிவித்தல்.
**பறைமேளம்** – பறையர் தப்பட்டை; அலப்புவோன்.
**பறைமை** – வரிக்கூத்துவகை; ஊர்ச் சுதந்தர வகை.
**பறையடித்தல்** – காண்க: **பறையறைதல்.**
**பறையலகு** – காண்க: **பலகறை.**
**பறையறைதல்** – செய்தி தெரிவித்தற்குப் பறையடித்தல்; நெஞ்சடித்தல்.
**பறையாமை** – கரிய ஆமை.
**பறைவிடுதல்** – காண்க: **பறையறைதல்.**
**பறைவு** – சொல்லுகை; தெரிவிக்கை.
**பன்** – நாணல்வகை; பருத்தி; அரிவாட்பல்.
**பன்மம்** – தாமரை; திருநீறு; பொடி.
**பன்மா, பன்மாண்** – பலவிதமாக.
**பன்மினி** – காண்க: **பதுமினி;** தாமரை.
**பன்முறை** – பல தடவை; பலவகை.
**பன்மை** – ஒன்றுக்கு மேற்பட்டது; தொகுதி; ஒரு தன்மையாய் இராமை; நேர்குறிப்பின்மை; பொதுமை; பார்த்தும் பாராமை.
**பன்மைப்பால்** – பலர்பால் பலவின்பால்கள்.
**பன்மையியற்பெயர்** – ஓரினப் பல பொருளைக் குறிக்கும் இயற்பெயர்; பல பாலையுங் குறித்து நிற்கும் பெயர்.
**பன்மொழித்தொகை** – இரண்டு பெயருக்கு மேற்பட்ட பெயர்களாலாகிய தொகை.
**பன்றி** – ஒரு விலங்குவகை; பன்றி வடிவான பொறிவகை; கொடுந்தமிழ் நாட்டினொன்று.
**பன்றிக்கிடை** – பன்றிகள் அடைக்கும் இடம்.
**பன்றிக்குறும்பு** – நிலப்பனைச்செடி.
**பன்றிக்கூழ்ப்பத்தர்** – பன்றிக்குக் கூழிடுந்தொட்டி.
**பன்றிக்கொம்பு** – பன்றியின் கோரப்பல்; ஒரு மீன்கொம்புவகை.
**பன்றிக்கொழுப்பு** – காண்க: **பன்றிநெய்.**
**பன்றிநாடு** – கொடுந்தமிழ் நாடு பன்னிரண்டனுள் ஒன்றாகிய பழனிமலையைச் சுற்றியுள்ள நாடு.
**பன்றிநெய்** – பதப்படுத்தப்பட்ட பன்றிக் கொழுப்பு.
**பன்றிப்பத்தர்** – பன்றிக்குக் கூழிடுந் தொட்டி; நீர் இறைக்குங் கருவிவகை.
**பன்றிப்பறை** – காட்டுப்பன்றிகளை வெருட்ட அடிக்கும் பறைவகை.
**பன்றிமலை** – பழனிமலை.
**பன்றிமுகம்** – நரக விசேடம்.
**பன்றிவார்** – பன்றி இறைச்சி.
**பன்றிவெட்டுதல்** – ஒரு விளையாட்டுவகை.
**பன்னக்காரன்** – கீற்று முடைவோன்; வெற்றிலை வாணிகன்.
**பன்னகசயனன்** – பாம்பிற் பள்ளிகொண்ட திருமால்.
**பன்னகசாலை** – காண்க: **பர்ணசாலை.**
**பன்னகப்பூணினான்** – பாம்பை அணிகலனாக உடைய சிவபிரான்.
**பன்னகம்** – பாம்பு; இலை; பல்லக்கு முதலியவற்றின் மேற்கட்டி.
**பன்னகர்** – நாகலோகவாசிகள்.
**பன்னகவைரி** – பாம்பின் பகையான கருடன்.
**பன்னகாசனன்** – பாம்பை இருக்கையாகக் கொண்ட திருமால்; பாம்பை உண்கிற கருடன்.
**பன்னகாபரணன்** – காண்க: **பன்னகப்பூணினான்.**
**பன்னகுடி** – காண்க: **பர்ணசாலை.**
**பன்னச்சத்தகம்** – ஓலைபின்னுவோரின் கையரிவாள்.
**பன்னசாலை** – காண்க: **பர்ணசாலை.**
**பன்னத்தண்டு** – நெய்வார் கருவியுள் ஒன்று.
**பன்னத்தை** – மழைக்காலத்துத் தோன்றும் நத்தைவகை.
**பன்னம்** – ஓலைமுடைகை; இலை; இலைக்கறி; சாதிபத்திரி; வெற்றிலை.
**பன்னமிருகம்** – தழையுண்ணும் விலங்கு.
**பன்னரிவாள்** – கருக்கறுவாள்.
**பன்னல்** – பஞ்சுகொட்டுகை; சொல்; பருத்தி; சொல்லுகை; நெருக்கம்; ஆராய்கை.
**பன்னவல்லி** – வெற்றிலைக்கொடி.
**பன்னவேலை** – ஓலைமுடைதல் தொழில்.
**பன்னாகம், பன்னாங்கு** – தென்னங்கீற்று; தென்னந்தட்டி; பல்லக்கு முதலியவற்றின் மேற்கட்டி.
**பன்னாங்குழி** – காண்க: **பல்லாங்குழி.**
**பன்னாசம்** – துளசிச்செடி.
**பன்னாசனம்** – இலையுணவு; புற்பாய்.
**பன்னாசி** – காண்க: **பன்னாசம்.**
**பன்னாடு** – ஒரு பழைய நாடு.
**பன்னாடை** – தென்னை, பனை இவற்றின் மட்டைகளை மரத்தோடு பிணைத்துநிற்கும் வலைத்தகடுபோன்ற பகுதி; மூடன்; இழை நெருக்கமில்லாத் துணிவகை.
**பன்னாபன்னாவெனல்** – ஒன்றைப் பலமுறை பேசுதற்குறிப்பு.
**பன்னாலம்** – தெப்பம்.
**பன்னி** – காண்க: **பத்தினி;** சணற்பயிர்.
**பன்னிருகரத்தோன்** – முருகக்கடவுள்.
**பன்னீர்** – ரோசா முதலிய பூக்களினின்று இறக்கப்படும் நறுமணநீர்; சீழ்நீர்; கருப்பைநீர்; மரவகை.

**பன்னீர்க்குடம்** – கருவைச் சூழ்ந்த நீர்ப்பை.
**பன்னீர்க்குப்பி** – பன்னீர்தூவுங் கருவி; பன்னீர் அடைத்துள்ள புட்டி.
**பன்னீர்ச்செம்பு** – பன்னீர்தூவுங் கருவி; பன்னீர்ச் செம்புபோல் செய்யப்பட்ட தாலியுருவகை; பன்னீர்ச்செம்பு உருவமைந்த மதிலுறுப்பு.
**பன்னீர்வடித்தல்** – மண எண்ணெய் இறக்குதல்.
**பன்னு** – வரிப்பணம்.
**பன்னுதல்** – பஞ்சுநூற்றல்; ஆராய்ந்து செய்தல்; புகழ்தல்; பேசுதல்; படித்தல்; நின்றுநின்று பேசுதல் அல்லது படித்தல்; பாடுதல்; நரப்புக் கருவி வாசித்தல்; பின்னுதல்; அரிவாளைக் கூராக்குதல்; நெருங்குதல்.
**பன்னை** – தறி; சூடன்; ஒரு செடிவகை.
**பன்னொன்று** – பதினொன்று.
**பனங்கட்டி** – பனைவெல்லம்.
**பனங்கதிர்** – காண்க: **பனம்பிடுக்கு.**
**பனங்கருக்கு** – பனைமட்டையின் கூர்மையுள்ள விளிம்பு; இளம்பனை.
**பனங்கள்** – பனைமரத்திலிருந்து இறக்கும் மது.
**பனங்கற்கண்டு** – பனஞ்சாற்றைக் காய்ச்சிச் செய்யப்படும் கற்கண்டுவகை.
**பனங்காடு** – பனைமரம் அடர்ந்த தோப்பு.
**பனங்கிழங்கு** – பனங்கொட்டையிலிருந்து உண்டாவதும் உண்ணுதற்குரியதுமான நீண்ட முளை.
**பனங்கிளி** – பனைமரத்தில் வாழும் அன்றிற் பறவை; ஒரு கிளிவகை.
**பனங்குடை** – பதநீர், சோறு முதலியவற்றை வைப்பதற்குப் பனையோலையால் செய்த பட்டை.
**பனங்குருத்து** – பனையின் இளவோலை.
**பனங்கை** – பனைமரத்துக் கழி.
**பனங்கொட்டை** – பனம்பழத்தின் உள்ளீடு.
**பனசம்** – பலாமரம்; பாற்சோற்றிச்செடி; முள்.
**பனசை** – ஒருவிதக் கொப்புள அம்மை; ஒரு நச்சுப்பாம்புவகை; திருப்பனந்தாள் என்னும் ஊர்.
**பனஞ்சக்கை** – பனம்பழத்தின் சாறெடுக்கப்பட்ட பண்டம்; பனைவரிச்சல்.
**பனஞ்சட்டம்** – பனைவரிச்சல்.
**பனஞ்சாறு** – காண்க: **பதநீர்.**
**பனஞ்சுளை** – நுங்கு.
**பனஞ்செறும்பு** – பனைமரத்திற் செறிந்துள்ள நரம்பு.
**பனத்தி** – பார்ப்பனத்தி.
**பனந்தாமன்** – பனம்பூ மாலையனாகிய பலபத்திரன்.
**பனந்தாரான்** – சேரன்; பலராமன்; பனம்பூ மாலை தரித்தோன்.
**பனந்தோடு** – பனையின் குருத்தோலை.
**பனம்** – பருமை.
**பனம்பட்டை** – பனஞ்சட்டம்; நீரிறைக்கும் பனையோலைப் பட்டை; பனையுத்திரம்.
**பனம்பிடுக்கு** – பனம்பூ.
**பனம்புடையல்** – பனம்பூ மாலை.
**பனம்பெட்டி** – சில்லுக் கருப்பட்டி வைக்கும் பெட்டி; கள்ளிறக்கும் நார்ப்பெட்டி.
**பனம்போந்தை** – காண்க: **பனங்குருத்து.**
**பனர்** – கிளை.
**பனவன்** – பார்ப்பான்.
**பனாட்டு** – பனைவெல்லக்கட்டி; பனம்பழத்தின் பாகு.
**பனாத்து** – துணிவகை.
**பனி** – குளிர்ந்துவிழுந் துளி; காண்க: **பனிக்கட்டி**; குளிர்; குளிர்ச்சி; நீர்; கண்ணீர்; மழை; மஞ்சு; இனிமையானது; அச்சம்; நடுக்கம்; நோய்வகை; சுரம்; துன்பம்.
**பனிக்கஞ்சி** – தாமரை.
**பனிக்கட்டி** – உறைந்த நீர்; ஆலங்கட்டி.
**பனிக்கதிர்** – குளிர்ந்த கதிரையுடைய சந்திரன்.
**பனிக்காடு** – மேகமூட்டம்.
**பனிக்காலம்** – காண்க: **பனிப்பருவம்.**
**பனிக்காற்று** – வாடைக்காற்று.
**பனிக்குடமுடைதல்** – மகப்பேற்றின் முன்நிகழ்ச்சியாகப் பனிக்குடநீர் வெளிப்படுகை.
**பனிச்சை** – ஐம்பால் மயிர்முடிகளுள் ஒன்று; கழுத்தின் பின்குழி; ஒரு பிளவைவகை; காட்டத்திமரம்.
**பனித்தல்** – பனிகொள்ளுதல்; துளித்தல்; இடைவிடாது மழைபெய்தல்; குளிரால் நடுங்குதல்; நடுங்கல்; அஞ்சுதல்; வருந்துதல்; ததும்புதல்; நடுங்கச்செய்தல்; வருத்துதல்; அடித்தல்.
**பனித்து** – கருப்பூரம்.
**பனிதாங்கி** – ஒரு பூண்டுவகை.
**பனிநத்தை** – மழைக்காலத்துத் தோன்றும் நத்தைவகை.
**பனிநீர்** – பனித்துளி; காண்க: **பன்னீர்.**
**பனிப்பகை, பனிப்பகைவானவன்** – பனியின் பகையான சூரியன்.
**பனிப்படலம்** – திரண்ட மேகம்.
**பனிப்பருவம்** – பனி பெய்யக்கூடிய மார்கழி, தை, மாசி, பங்குனி மாதங்கள்.
**பனிப்பாறை** – பெரும் பனிக்கட்டி.
**பனிப்பு** – நடுக்கம்; அச்சம்.
**பனிப்புக்கட்டுதல்** – வருத்தமுண்டாக்குதல்.
**பனிப்புழு** – கம்பளிப்பூச்சி; சேற்றுப்புழு.
**பனிப்பூங்காரம்** – வெயிலுடன்கூடிய மந்தாரம்.
**பனிப்பெயர்தல்** – பனி சொரிதல்.

**பனிமலை** – இமயமலை.

**பனிமாசு,**
**பனிமுகில்,** } – வெண்மேகம்.
**பனிமேகம்**

**பனிமேய்ச்சல்** – காலை மேய்ச்சல்; அளவுக்கு மிஞ்சி இன்பம் நுகர்கை.

**பனியெதிர்பருவம்** – மார்கழி, தை மாதங்களாகிய முன்பனிப் பருவம்.

**பனிவெடிப்பு** – பித்தவெடிப்பு; பனியால் கைகால்களில் உண்டாகும் புண்.

**பனிற்றுதல்** – தூவுதல்.

**பனுக்குதல்** – துளித்தல்.

**பனுவல்** – பன்னப்பட்ட பஞ்சு; பஞ்சிநூல்; சொல்; பாட்டு; நூல்; கேள்வி; கல்வி; ஆராய்ச்சி.

**பனுவல்வாழ்த்து** – ஒரு நூலைப் புலவர் புகழ்தலைக் கூறுந் துறை.

**பனுவல்வென்றி** – பிற நூல்களினும் ஒரு நூல் சிறப்புடைத்தெனக் கூறுந் துறை.

**பனுவலாட்டி** – கலைமகள்.

**பனுவுதல்** – சொல்லுதல்.

**பனை** – ஒரு மரவகை; ஒரு பேரளவு; அனுடநாள்; ஒரு மீன்வகை.

**பனைக்கொடியோன்** – பனையெழுதப்பெற்ற கொடியை உடைய பலராமன்; வீடுமன்.

**பனைத்துணை** – பனையளவு; பேரளவு.

**பனைநார்** – பனைமட்டையிலிருந்து எடுக்கப்படும் நார்.

**பனைப்போழ்** – பனையின் குருத்தோலை.

**பனைமடல்** – பனங்குருத்து; பனையோலை.

**பனைமுகிழ்** – பனங்காயின் மேல்தோல்.

**பனையன்** – ஒரு நோய்வகை; ஒரு பாம்புவகை; ஒரு மீன்வகை.

**பனையிடுக்குதல்** – சாறு வழியும்படி பனம் பாளையை நசுக்குதல்; கள்ளிறக்குதல்.

**பனையிதக்கை** – காண்க: **பனைமுகிழ்.**

**பனையூசல்** – பனைமரங்களிற் கட்டி ஆடப்பெறும் ஊசல்.

**பனையேறி** – பனையேறுஞ் சாணாரச்சாதி; ஒரு பாம்புவகை; பெரியம்மைவகை; ஒரு மீன்வகை.

**பனைவட்டு** – காண்க: **பனைவெல்லம்.**

**பனைவாரை** – பனஞ்சட்டம்.

**பனைவெட்டு,**
**பனைவெல்லம்** } – பனஞ்சாற்றைக் காய்ச்சி எடுக்கும் வெல்லம்.

## பா

**பா** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+ஆ); பாட்டு; பரப்பு; தேர்த்தட்டு; கைம்மரம்; நெசவுப்பா; பஞ்சிநூல்; நிழல்; கடிகாரவூசி; காப்பு; பருகுதல்; தூய்மை; அழகு; பாம்பு; பூனைக்காலிக் கொடி.

**பாக்கட்டுதல்** – நெசவுப்பாவில் அறுந்த இழையை இணைத்தல்.

**பாக்கம்** – நெய்தல்நிலத்தூர்; ஊர்; அரசன் இருப்பிடம்; சிறு மூட்டை.

**பாக்கல்** – பாவுகல்.

**பாக்கழி** – மருத யாழ்த்திறத்துள் ஒன்று.

**பாக்கன்** – பூனை; காட்டுப்பூனை.

**பாக்கானூல்** – நெசவுப்பாவில் நெய்தபின் அச்சில் மிஞ்சிய நூல்.

**பாக்கி** – நிலுவை; மிச்சம்.

**பாக்கியசாலி** – நல்வினையாளர்.

**பாக்கியதானம்** – பிறந்த இலக்கினத்துக்கு ஒன்பதாமிடம்.

**பாக்கியம்** – செல்வம்; நல்வினை; விதி; பகல் பதினைந்து முகூர்த்தத்துள் பதினைந்தாவது; காண்க: **பாக்கியதானம்**; கழாயம்.

**பாக்கியலட்சுமி** – தனலட்சுமி.

**பாக்கியவதி** – செல்வமுள்ளவள்.

**பாக்கியவந்தன்**
**பாக்கியவாளன்,** } – செல்வமுள்ளவன்.
**பாக்கியவான்,**

**பாக்கியாதிபதி** – பாக்கியத்தானமாகிய ஒன்பதாம் வீட்டுக்குடையவன்.

**பாக்கிலை** – பாக்குவெற்றிலை.

**பாக்கு** – அடைக்காய்; கமுகு; எதிர்காலங் காட்டும் வினையெச்ச விகுதி; தொழிற்பெயர் விகுதி; பாக்குக்குப் பதிலாகப் பயன்படும் பட்டையையுடைய ஒரு செடிவகை.

**பாக்குச்சீவல்,**
**பாக்குச்செதில்** } – பாக்குவெட்டியாற் சீவப்பட்ட பாக்குத் துண்டு.

**பாக்குப்பாளை** – பாக்குமரத்தில் பூவை உள்ளடக்கி இருக்கும் மடல்.

**பாக்குப்பிடித்தல்** – பிறனுக்குத் தீங்குண்டாகும்படி சூழ்ச்சிசெய்தல்; குறைத்துவிடுதல்.

**பாக்குப்பிளவு** – பாக்குத்துண்டு; பாதியாக வெட்டப்பட்ட பாக்கு.

**பாக்குப்பை** – தாம்பூலமிடும் பை.

**பாக்குமட்டை** – பாக்குமரத்தில் உண்டாகும் மட்டை; கமுகமட்டையின் விரிந்த அடிப்பாகம்.

**பாக்குரல்** – வெற்றிலைபாக்கை இட்டு இடிக்கும் கையுரல்.

**பாக்குவெட்டி** – பாக்குச் சீவுங் கருவி.
**பாக்குவெற்றிலை** – தாம்பூலம்.
**பாக்குவைத்தல்** – தாம்பூலம் வைத்தல்; பாக்கு வைத்து மணத்திற்கு அழைத்தல்; பிறருக்குத் தீங்கு உண்டாகும்படி சூழ்ச்சிசெய்தல்.
**பாக்கை** – நெய்தல்நிலத்தூர்; ஊர்.
**பாகசாதனன்** – இந்திரன்.
**பாகசாதனி** – இந்திரன் மகனான சயந்தன்; அருச்சுனன்.
**பாகசாலை** – மடைப்பள்ளி.
**பாகடை** – காண்க: பாக்குவெற்றிலை.
**பாகண்டன்** – வெளிவேடக்காரன்.
**பாகதம்** – பிராகிருதமொழி.
**பாகதாரி** – காண்க: பாகுவன்.
**பாகப்படுத்துதல்** – சமைத்தல்; பக்குவப்படுத்தல்.
**பாகப்படுதல்** – பக்குவப்படுதல்; பதப்படுதல்.
**பாகபத்திரம்** – சொத்துப் பிரிவினை குறிக்கும் சீட்டு.
**பாகபுடி** – குயவன் சூளை.
**பாகம்** – பகுக்கை; கூறு; பாதி; பாகை; பக்கம்; பங்கம்; பிச்சை; பறைவகை; சமையல்; சூடுபடுத்தல்; பக்குவம்; மூவகைச் செய்யுள் நடை; மனநிலை; புயம்; நான்கு முழம் கொண்ட நீட்டலளவை; இடம்.
**பாகமாதல்** – உணவு முதலியன தயாராதல்; மருந்து முதலியன பதமாதல்; பங்கு பிரிக்கப்படுதல்.
**பாகர்** – யானை, குதிரை முதலியவற்றை நடத்துவோர்; தேரின் மேல்தட்டைச் சுற்றியுள்ள மரக் கைப்பிடிச் சுவர்; தேர்.
**பாகரபிரபை** – சூரிய ஒளி.
**பாகல்** – பாகற்கொடி; பலாமரம்.
**பாகலம்** – யானைக்கு வரும் சுரநோய்வகை.
**பாகலன்** – உன்மத்தன்; மயக்கமுடையவன்.
**பாகவதநடனம்** – வைணவ அடியார்கள் செய்யும் நடனம்.
**பாகவதர்** – திருமாலடியவர்; இசையுடன் சமயக் கதைகள் சொல்வோர்; பாடகர்.
**பாகன்** – யானைப்பாகன்; தேர் முதலியன நடத்துவோன்; புதன்; பக்குவம் பெற்றவன்; பக்கத்தில் கொண்டவன்; செயலில் துணை செய்வோன்; சுங்கம் வாங்கி.
**பாகாரம்** – வகுத்தல்.
**பாகாரி** – இந்திரன்.
**பாகி** – தகுதியானவன்; சாரதிவேலை செய்யும் பெண்; நாய்.
**பாகிடுதல்** – பிச்சையிடுதல்; பங்கிடுதல்.
**பாகித்தல்** – பங்கிடுதல்.
**பாகியம்** – புறம்பானது; மலங்கழிக்கை.
**பாகினேயன்** – உடன்பிறந்தாள் மகன்.
**பாகீடு** – பங்கிடுதல்.
**பாகீரதி** – கங்கை.
**பாகு** – குழம்பான உணவு; இளகிய வெல்லம்; சருக்கரை; கற்கண்டு; பால்; பாக்கு; பரணி நாள்; பகுதி; பிச்சை; கரை; உமை; அழகு; யானைப்பாகன்; தேர் முதலியன நடத்துவோன்; ஆளுந்திறன்; கை; தலைப்பாகை; அழகு.
**பாகுடம்** – அரசிறை; கையுறை.
**பாகுடி** – மிகத் தொலைவு.
**பாகுபடுதல்** – பிரிவுபடுதல்.
**பாகுபாடு** – பிரிவுபடுகை; பகுப்பு.
**பாகுலம்** – கார்த்திகைமாதம்.
**பாகுவலயம்** – தோள்வளை.
**பாகுவன்** – சமையற்காரன்.
**பாகுளி** – புரட்டாசி மாதத்து முழுமதிநாள்.
**பாகை** – ஊர்; பகுதி; வட்டத்தில் 1/360 பங்கு; ஒரு காலஅளவு; தலைப்பாகை; யானையின் உடலில் மதநீர் ஊறும் இடம்.
**பாங்கர்** – இடம்; பக்கம்; தோழர்; கணவர்; பாங்கர்க்கொடி; உகாமரம்.
**பாங்கற்கூட்டம்** – தோழனது உதவியால் தலைவியைத் தலைவன் குறியிடத்துக்கூடுகை.
**பாங்கன்** – தோழன்; கணவன்.
**பாங்கானவன்** – மரியாதை உள்ளவன்.
**பாங்கி** – தலைவியின் தோழி; பணம் கொடுக்கல் வாங்கல் செய்யும் நிதிச்சாலை.
**பாங்கினம்** – ஆயம்.
**பாங்கு** – அழகு; பக்கம்; இடம்; ஒப்பு; நன்மை; தகுதி; நலம்; இயல்பு; ஒழுக்கம்; தோழமை; துணையானவர்; இணக்கம்; ஒருசார்பு; நாணயம்; வழி; தொழுமிடம்; ஆட்டுக்கிடை மறிப்பதற்குரிய விரியோலை முதலியன.
**பாங்குபண்ணுதல்** – நல்லுடை தரித்தல்.
**பாங்கோர்** – நட்பினர்; பக்கத்திலுள்ளவர்; சார்பாயுள்ளவர்.
**பாச்சல்** – காண்க: பாய்ச்சல்.
**பாச்சி** – தாய்ப்பால்.
**பாச்சிகை** – சூதாடுகருவி.
**பாச்சியம்** – பகுதி; வகுக்கப்படும் எண்.
**பாச்சுருட்டி, பாச்சுற்றி** – நெய்த ஆடையைச் சுருட்டும் நெசவுத் தறிமரம்.
**பாச்சை** – புத்தகப்பூச்சி; தத்துப்பூச்சிவகை; சுவர்க்கோழி; கரப்பு.
**பாசக்கட்டு** – பிறப்பிற்குக் காரணமான உயிர்த் தளை.
**பாசக்கயிறு** – சுருக்குக்கயிறு.
**பாசகம்** – உண்ட உணவைச் செரிப்பதற்காக இரைப்பையில் உண்டாகும் நீர்; வகுக்குமெண்.

**பாசகரன்** – பாசத்தைக் கையிலுடைய யமன்.
**பாசகன்** – காண்க: **பாகுவன்.**
**பாசகுசுமம்** – இலவங்கமரம்.
**பாசஞானம்** – வாக்குகளாலும் கலாதி ஞானத்தாலும் அறியும் அறிவு; அறியாமை.
**பாசடம்** – வெற்றிலை.
**பாசடை** – பசுமையான இலை.
**பாசண்டச்சாத்தன்** – சமய நூல்களில் வல்லவனான ஐயனார்.
**பாசண்டம்** – தொண்ணூற்றாறுவகைச் சமய சாத்திரக் கோவை; புறச்சமயக் கொள்கை; வேத ஒழுக்கத்திற்கு வேறான சமயம்.
**பாசண்டிமூடம்** – புறமதத்தவரைப் போற்றும் மடமை.
**பாசத்தளை** – காண்க: **பாசக்கட்டு.**
**பாசத்தன், பாசதரன்** – யமன்; வருணன்; விநாயகன்.
**பாசநாசம்** – குருவின் அருளால் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களை நீக்குகை.
**பாசநாசன்** – கடவுள்.
**பாசபந்தம்** – காண்க: **பாசக்கட்டு**; பாசக்கயிறு.
**பாசபாணி** – சிவன்; வருணன்; யமன்; விநாயகன்.
**பாசம்** – ஆசை; அன்பு; கயிறு; கயிற்று வடிவமான ஆயுதவகை; படை அணிவகுப்புவகை; தளை; மும்மலம்; ஆணவமலம்; பற்று; கட்டு; பத்தி; கவசம்; தையல்; ஊசித்துளை; நூல்; சுற்றம்; பேய்; சீரகம்.
**பாசமாலை** – கழுத்தணிவகை.
**பாசமோசனம்** – காண்க: **பாசவிமோசனம்.**
**பாசருகம்** – காண்க: **அகில்.**
**பாசவர்** – வெற்றிலை விற்போர்; ஆட்டிறைச்சி விற்போர்; இறைச்சி விற்போர்.
**பாசவல்** – செவ்வி அவல்; பசுமையான விளை நிலம்.
**பாசவிமோசனம்** – உயிர் உலகப்பற்றிலிருந்து நீங்குகை.
**பாசவினை** – பந்தத்திற்கு ஏதுவாகிய வினை.
**பாசவீடு** – மும்மலங்களிலிருந்து விடுபடுகை.
**பாசவைராக்கியம்** – உலகப் பொருள்களில் வெறுப்பு.
**பாசறவு** – பற்றறுகை; நிறத்தின் அழிவு; துயரம்.
**பாசறை** – போர்க்களத்தில் படைகள் தங்கும் இடம்; ஒரு மரவகை; மணியாசிப்பலகை; துன்பம்; பசிய இலையால் செறிந்த முழை.
**பாசறைமுல்லை** – ஒருவகைத் துறை, பாசறையில் தலைமகன் தலைவியை நினைக்கும் புறத்துறை.
**பாசன்** – சிற்றுயிர், சீவான்மா; யமன்; வருணன்; சிவபெருமான்.
**பாசனக்கால்** – நிலங்களுக்குப் பாயும் வாய்க்கால்.
**பாசனம்** – வெள்ளம்; நீர்பாய்ச்சுதல்; வயிற்றுப் போக்கு; பாண்டம்; உண்கலம்; மட்கலம்; மரக்கலம்; தங்குமிடம்; ஆதாரம்; சுற்றம்; பங்கு; பிரிவுக்கணக்கு; நீக்கம்; நெருப்பு; ஒரு மருந்துவகை; புளிப்பு.
**பாசாங்கடித்தல்** – போலியாக நடித்தல்.
**பாசாங்கு** – போலி நடிப்பு; வஞ்சகம்.
**பாசாங்குக்காரன்** – பாசாங்கு செய்வோன்.
**பாசாங்குக்காரி** – பாசாங்கு செய்பவள்.
**பாசாங்குசதரன், பாசாங்குசன்** – பாசத்தையும் அங்குசத்தையும் தாங்கியிருப்பவனாகிய கணபதி.
**பாசாண்டி** – புறச்சமயநூல் வல்லோன்.
**பாசாணபேதி** – நெருஞ்சிமுள்; சிறுநெருஞ்சி.
**பாசி** – பசுமையுடையது; நீர்ப்பாசி; கடற்பாசி; நெட்டிப்புல்; பூஞ்சணம்; காண்க: **சிறுபயறு**; குழந்தைகளின் கழுத்தணிக்கு உதவும் மணிவகை; மேகம்; காண்க: **பாசிநிலை**; வருணன்; யமன்; நாய்; ஆன்மா; கிழக்கு; மீன்பிடிப்பு; மீன் சமைத்தல்.
**பாசித்தீர்வை** – மீன் பிடித்துக்கொள்வதற்குக் கொடுக்கும் வரி.
**பாசிதம்** – பிரிக்கப்பட்ட பங்கு; வகுத்த ஈவு.
**பாசிதூர்த்துக்கிடத்தல்** – அழுக்குப் பிடித்துக் கிடத்தல்.
**பாசிநிலை** – பகைவருடைய வலிகெட அவருடைய அகழிடத்துப் பொருதலைக் கூறும் புறத்துறை.
**பாசிநீக்கம், பாசிநீக்கு** – சொல்தோறும் அடிதோறும் பொருள் ஏற்றுவரும் பொருள்கோள்.
**பாசிப்படை** – திடீரென்று தாக்கும் படை; பலமுள்ள படை; கைவிட்ட நம்பிக்கை.
**பாசிப்பயறு** – ஒரு பயறுவகை.
**பாசிப்பருவம்** – மீசையின் இளம்பருவம்.
**பாசிப்பாட்டம்** – மீன்பிடிப்பதற்கு இடும் வரி.
**பாசிபடர்தல்** – பாசிபிடித்தல்.
**பாசிபந்து** – தோளணிவகை.
**பாசிபற்றினபல்** – ஊத்தையும் பசுமை நிறமும் பிடித்த அழுக்குப் பல்.
**பாசிபற்றுதல், பாசிபிடித்தல்** – பாசியுண்டாதல்.
**பாசிபூத்தல்** – காண்க: **பாசிபற்றுதல்**; பழமையாதல்.
**பாசிமணி** – கரிய மணிவடம்; பச்சை மணிவடம்.

**பாசிமறன்** – போர்மேற் சென்ற படை அகழிப் போர் வெற்றிக்குப்பின் பகைவர் ஊரகத்துப் போர் விரும்புதலைக் கூறும் புறத்துறை.

**பாசிலை** – வெற்றிலை; பச்சையிலை.

**பாசிவரி** – காண்க: **பாசித்தீர்வை.**

**பாசிவிலை** – மீன்விலை.

**பாசினம்** – கிளிக்கூட்டம்.

**பாசீகன்** – சமையற்காரன்.

**பாசு** – பசுமை; மூங்கில்; ஊக்கம்; தளை; அன்பு; தேர்வு முதலியவற்றில் தேர்ச்சி; வெளியில் அல்லது உள்ளே செல்வதற்கோ பொருள் கொண்டுபோவதற்கோ கொடுக்கும் அனுமதிச் சீட்டு.

**பாசுபதம்** – அகப்புறச்சமயவகை; சிவனது அம்பு; காண்க: **பாசுபதாத்திரம்;** நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.

**பாசுபதன்** – சிவனை வழிபடுவோன்; பாசுபதத்தையுடைய சிவபிரான்; சைவர்களுக்குள் பாசுபத முறையைப் பின்பற்றுவோன்.

**பாசுபதாத்திரம்** – சிவபெருமானைத் தேவதையாகக் கொண்ட அம்பு.

**பாசுரம்** – திருப்பாடல்; திருமுகம்; மொழி; வாய்பாடு; புல்லாங்குழலோசை.

**பாசை** – சமைக்கை; மொழி; ஆணை; பாசி.

**பாஞ்சசத்திகம்** – வாத்தியப்பொது.

**பாஞ்சசன்னியம்** – திருமாலின் சங்கம்; தீ; நாணல்.

**பாஞ்சராத்திரம்** – ஒரு வைணவ ஆகமம்.

**பாஞ்சலம்** – காற்று; நெருப்பு; இலாபப் பொருள்.

**பாஞ்சாலபுருடன்** – நல்லிலக்கணமுடையவன்.

**பாஞ்சாலம்** – இலக்கணம்; ஐந்து ஆறுகள் பாயும் ஒரு நாடு.

**பாஞ்சாலி** – திரௌபதி; சித்திரப்பாவை.

**பாஞ்சாலிகம்** – மரப்பாவை விளையாட்டு.

**பாட்டம்** – தோட்டம்; மேகம்; பெருமழை; விட்டுவிட்டுப் பெய்யும் மழை; வரி; கிட்டிப்புள்ளு; விளையாட்டுப் பகுதி; குத்தகை; குறுக்குநிலை; குமாரிலபட்டர் என்பவர் மறையே தெய்வமென்று ஏற்படுத்திய மதம்.

**பாட்டன்** – பெற்றோரின் தந்தை; முன்னோன்; பாட்ட மதத்தான்.

**பாட்டா** – பெற்றோரின் தந்தை: முன்னோன்; புளிப்பு; புளித்த கள்.

**பாட்டாசாரியம்** – பாட்டாசாரியர் வேதமே கடவுளென்று ஏற்படுத்திய கொள்கை.

**பாட்டாள்** – உழைப்பாளி; சோம்பேறி; பாடுபவன்.

**பாட்டாளி** – உழைப்பாளி; பாடுபவன்; சங்கேதத் துறையில் ஓர் அலுவலன்.

**பாட்டி** – பெற்றோரின் தாய்; கிழவி; நரி, நாய், பன்றி இவற்றின் பெண்பாற் பொது; பாடன் மகளிர்.

**பாட்டியம்(மி)** – பிரதமைதிதி.

**பாட்டியர்** – இசைபாடும் பெண்கள்.

**பாட்டு** – பாடுகை; இசைப்பாட்டு; இசை; கொய்சகம் முதலியவற்றின் அடுக்கு; செய்யுள்; சொல்; வசைமொழி; செங்கற்சுவர் எழுப்பும் போது நெடுக்காக வைக்கும் கல்.

**பாட்டுக்கச்சேரி** – இன்னிசை அரங்கு.

**பாட்டுக்காடன்** – பாடுவோன்; இசைவல்லோன்.

**பாட்டுக்கேட்டல்** – இசைகேட்டல்; வசைகேட்டல்.

**பாட்டுடைத்தலைமகன், பாட்டுடைத்தலைவன், பாட்டுநாயகன்** – காப்பியத் தலைவன்.

**பாட்டுப்படித்தல்** – இசைப்பாட்டுப் பாடுதல்; செய்யுளியற்றுதல்.

**பாட்டுமடை** – குரவைக்கூத்து முதலியவற்றின் இடையே பாடும் பாட்டு.

**பாட்டுவாங்குதல்** – வசைமொழி வாங்குதல்.

**பாட்டை** – பாதை; இசை முதலியவற்றின் நடை; ஒழுக்கம்; கடல்மீன்.

**பாட்டைசாரி** – வழிப்போக்கன்.

**பாட்பம்** – கண்ணீர்; வெம்மை.

**பாடகஞ்சொல்லுதல்** – தொன்மக் கதைகளை மனத்திற் படும்படி அபிநயத்துச் சொல்லுதல்.

**பாடகம்** – தெரு; காஞ்சியில் உள்ள ஒரு திருமால் தலம்; வயற்பகுதி; நிழல்; ஒரு வாத்தியக்கருவி வகை; கரை; சூது விளையாடல்; நட்டம்; மகளிர் காலணி; துகில்வகை; சிவப்பு; கூலி; பாடுமிடம்.

**பாடகன்** – பாடுவோன்; சொல்வன்மையுள்ளவன்.

**பாடகி** – பாடுபவள்.

**பாடங்கேட்டல்** – ஆசிரியனிடத்து நூற்பொருள் கற்றல்; படித்த பாடத்தை உசாவுதல்.

**பாடசாலை** – கல்விச்சாலை.

**பாடஞ்செய்தல்** – புகையிலை முதலியன பக்குவப்படுத்தல்; தோலைப் பதப்படுத்தல்; ஒளிவிடுதல்.

**பாடஞ்சொல்லுதல்** – கற்பித்தல்; பாடம் ஒப்பித்தல்.

**பாடணம்** – பேச்சு; போதனை.

**பாடபேதம்** – ஒரு நூலின் படியிற் கண்டவற்றிற்கு வேறான பாடம்.

**பாடம்** – படிக்கும் நூற்பகுதி; படிப்பு; மூல பாடம்; வேதபாடம்; பார்க்காமல் ஒப்பிக்கும்படி கைவந்தது; தெரு; இடையர் வீதி; உடன்பாடு; கடுமை; மிகுதி; பாரம் வைத்து அழுத்துகை; பதப்படுத்துகை; மணி முதலியவற்றின் ஒளி; முடிமாலை; வெற்றிலை; சொல்.

**பாடம்பண்ணுதல்** – மனப்பாடமாக்கல்; ஓலை முதலியவற்றை அடுக்கிவைத்தல்; தோலைப் பதனிடுதல்; புகையிலை முதலியவற்றைப் பக்குவப்படுத்துதல்.

**பாடம்போற்றுதல்** – படித்த பாடத்தைச் சிந்தித்தல்.

**பாடல்** – பாடுகை; இசைப்பா; இசை; பாட்டு; புகழ்; படிக்கை; பாகல்; காண்க: **பாடலிபுரம்.**

**பாடல்பெற்றதலம்** – நாயன்மார்களாலேனும் ஆழ்வார்களாலேனும் பாடப்பெற்ற ஊர்.

**பாடலம்** – சிவப்பு; வெண்சிவப்பு; குங்குமம்; குதிரை; சேரன் குதிரை; பாதிரிமரம்; மழைக் காலத்தில் விளையும் நெல்; சூளுரை.

**பாடலி** – பாதிரிமரம்; பாடலிபுரம் என்னும் நகரம்; கள்; ஒரு நெல்வகை; ஒரு கொடிவகை.

**பாடலிபுரம்** – கங்கை சோணையாறுகள் கலக்குமிடத்தில் இருந்த மகத நாட்டின் தலைநகர்.

**பாடலை** – ஒரு மரவகை; துர்க்கை; பாடலிபுரம்.

**பாடவம்** – வடவைத்தீ; வல்லமை; களிப்பு; நலம்; மகளிர் காலணி.

**பாடவள்** – பாடுபவள்; மிதுனராசி.

**பாடவன்** – பாடுபவன்; மிதுனராசி.

**பாடவை** – மிதுனராசி.

**பாடற்பயன்** – இன்பம், தெளிவு, நிறைவு, ஒளி, வன்சொல், இறுதி, மந்தம், உச்சம் என்னும் எண்வகையான இசைப்பயன்.

**பாடன்மகடூஉ,** / **பாடன்மகள்** – விறலி.

**பாடனம்** – பேசுகை; போதிக்கை; பாடுகை; பிளக்கை.

**பாடனுபவித்தல்** – வருந்துதல்.

**பாடாகுதல்** – கெடுதியடைதல்; அழுதல்.

**பாடாண்,** / **பாடாண்திணை** – பாட்டுடைத் தலைவனது புகழ், வலி, கொடை, அளி முதலியவற்றைப் புகழ்ந்து கூறும் புறத்துறை.

**பாடாணம்** – கல்; மருந்துச் சரக்கு; எண்வகை இன்பங்களுள் பாறைநிலமும் அவற்றில் உண்டாகும் பொருள்களும்.

**பாடாந்தரம்** – பாடவேறுபாடு; வேற்றுமொழி.

**பாடாய்முடிதல்** – கெடுதியாய் முடிதல்.

**பாடாயடித்தல்** – கடுமையாகப் புடைத்தல்.

**பாடாயழிதல்** – மிகக் கேடுறுதல்.

**பாடாவதி** – துன்பம்; பயனற்றது.

**பாடாவறுதி** – மிகுபாடு; பேரிழப்பு; அடிபட்டுப் படுக்கையாகக் கிடக்கை.

**பாடாற்றுதல்** – துன்பம் பொறுத்துக்கொள்ளுதல்.

**பாடி** – நகரம்; சேரி; முல்லைநிலத்தூர்; காண்க: **பாடிவீடு;** கவசம்; படை; உளவாளி; பாடுபவர்; பாடிப் பிச்சையெடுப்போன்; ஒரு பண்வகை; ஓர் ஊர்.

**பாடிக்கதை** – வீண்பேச்சு.

**பாடிக்கொடுத்தல்** – பிறனுக்காகப் பாடலியற்றித் தருதல்; பாடல் இயற்றுதல்.

**பாடிகாப்பார்** – ஊர்காவலர்.

**பாடிகாவல்** – ஊர்காவல்; தலையாரி ஊர் காவற்கு வாங்கும் வரி; பாதுகாவல்; வழக்கு விசாரித்து ஒப்பநாடிச் செய்யும் ஒறுப்பு.

**பாடிசொல்லுதல்** – உளவை வெளிப்படுத்துதல்.

**பாடிதம்** – உச்சரிக்கப்படுவது.

**பாடிமாற்றம்** – வழக்குச் சொற்கள்.

**பாடிமிழ்தல்** – ஒலித்தல்.

**பாடியகாரர்** – பேருரைகாரர்; பதஞ்சலி; பிரம சூத்திரத்திற்குப் பேருரை இயற்றிய இராமானுசாசாரியர்.

**பாடியம்** – பேருரை.

**பாடிரம்** – ஒரு கிழங்குவகை; சந்தனம்; துத்த நாகம்; முகில்; மூங்கிலரிசி; கீல்வாதம்; வயல்.

**பாடிலம்** – நாடு.

**பாடிவீடு** – பாசறை.

**பாடிவீரர்** – படைவீரர்.

**பாடினி** – பாணர்சாதிப் பெண்.

**பாடீரம்** – சந்தனம்; முகில்; கீல்வாதம்; மூங்கிலரிசி; கிழங்குவகை; துத்தநாகம்; வயல்.

**பாடு** – உண்டாகை; நிகழ்ச்சி; அனுபவம்; முறைமை; நிலைமை; செவ்வி; கடமை; கூறு; பயன்; உலகவொழுக்கம்; குணம்; பெருமை; அகலம்; ஓசை; உடல்; உழைப்பு; தொழில்; வருத்தம்; படுக்கைநிலை; விழுகை; தூக்கம்; சாவு; கேடு; குறைவு; பூசுகை; மறைவு; நீசராசி; இடம்; பக்கம்; அருகு; ஏழாம் வேற்றுமையுருபு.

**பாடுகாட்டுதல்** – சாய்ந்துவிழுதல்.

**பாடுகாயம்** – படுகாயம்.

**பாடுகிடத்தல்** – வரங்கிடத்தல்.

**பாடுதல்** – பண் இசைத்தல்; வண்டு முதலியன இசைத்தல்; பாட்டியற்றல்; பாட்டு ஒப்பித்தல்; பாராட்டுதல்; துதித்தல்; கூறுதல்; வைதல்.

**பாடுதாங்குதல்** – துணைநிற்றல்.

**பாடுதுறை** – புலவர் பாடுதற்குரிய போர்த் துறை; தத்துவராயர் செய்த ஒரு நூல்.

**பாடுநர்** – புலவர்; இசைபாடுவோர்.

**பாடுபடுத்துதல்** – துன்பப்படுத்துதல்; கடின வேலை வாங்குதல்.
**பாடுபடுதல்** – மிக உழைத்தல்; வருத்தப்படுதல்.
**பாடுபறப்பு** – கவலை.
**பாடுபார்த்தல்** – தன் வேலையைக் கவனித்தல்; நிமித்தம்பார்த்தல்.
**பாடுபெயல்** – விடாமழை.
**பாடுவ(வா)ன்** – பாடகன்; பாணன்.
**பாடுவி** – புகழ்பவள்.
**பாடுவிச்சி** – பாண்மகள்.
**பாடுவித்தல்** – பாடச்செய்தல்.
**பாடேடு** – தாயேடு; மூலப் படி.
**பாடை** – பிணக்கட்டில்; மொழி; ஆணை; சூள்; குறிஞ்சி யாழ்த்திறவகை; காண்க: **வட்டத் திருப்பி**; பருத்தி.
**பாடைகுலைத்தான்** – பாகற்கொடி.
**பாடைகூறுதல்** – சூளுரைத்தல்; ஆணையிடுதல்.
**பாடைப்பாடல்** – அகநாடகங்களுக்கும் புறநாடகங்களுக்கும் உரிய செய்யுள் உருக்கள்.
**பாடோடிக்கிடத்தல்** – காண்க: **பாடுகிடத்தல்**; துயரத்தினால் கிடையாய்ப் படுத்திருத்தல்.
**பாண்** – பாட்டு; காண்க: **பாணாற்றுப்படை**; பாணர்சாதி; புகழ்ச்சொல்; தாழ்ச்சி; பாழாக்குவது.
**பாண்டம்** – கொள்கலம்; பாத்திரம்; மட்கலம்; உடம்பு; வயிற்றுவீக்கநோய்; காண்க: **பாண்டரங்கம்.**
**பாண்டரங்கம்** – முப்புரத்தை எரித்த காலத்தில் சிவன் வெண்ணீறணிந்து ஆடிய கூத்து.
**பாண்டரங்கன்** – பாண்டரங்கக் கூத்தாடிய சிவன்.
**பாண்டரம்** – வெண்மை; செஞ்சுண்ணாம்பு; காண்க: **பாண்டல்.**
**பாண்டரம்பிடித்தல்** – அழுக்குப்பிடித்தல்.
**பாண்டல்** – பழமை; பாசிபிடித்து நாறுகை.
**பாண்டல்நாற்றம்** – தீநாற்றம்.
**பாண்டல்நெய்** – நாற்ற நெய்.
**பாண்டலடித்தல்** – தீநாற்றம் வீசுதல்.
**பாண்டவர்** – பாண்டுவின் மைந்தர்களான தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் ஆகியோர்.
**பாண்டவர்படுக்கை** – சமணத் துறவியரின் மலைக் கற்படுக்கை.
**பாண்டாகாரம்** – பண்டசாலை; நிதி அறை, கருவூல அறை.
**பாண்டி** – பாண்டிய நாடு; கூடாரப்பண்டி; மாட்டு வண்டி; எருது; பல்லாங்குழிப் பலகை; சிறுபிள்ளை விளையாட்டு; தக்கேசிப் பண்.
**பாண்டிக்குறவன்** – மலைநாட்டுத் தமிழ்க் குறவன்.
**பாண்டிகம்** – பறைவகை.
**பாண்டிகன்** – திருப்பள்ளியெழுச்சி பாடுவோன்.
**பாண்டித்தியம்** – கல்வித்திறம்.
**பாண்டிமண்டலம்** – பாண்டிய நாடு.
**பாண்டியம்** – பாண்டிய நாடு; எருது; உழவு.
**பாண்டியன்** – பாண்டியநாட்டு வேந்தன்.
**பாண்டில்** – வட்டம்; விளக்குத்தகழி; கிண்ணி; கஞ்சதாளம்; குதிரைபூட்டிய தேர்; இரண்டு உருளையுடைய வண்டி; தேர்வட்டை; வட்டக் கட்டில்; கண்ணாடி; வட்டத்தோல்; நாடு; குதிரைச் சேணம்; எருது; இடபராசி; விளக்கின் கால்; வாகைமரம்; காண்க: **சாத்துக்குடி**; மூங்கில்மரம்.
**பாண்டில்விளக்கு** – கால்விளக்கு.
**பாண்டிவடம்** – கண்ணபிரான் கன்றுகள் மேய்த்த பகுதி.
**பாண்டிற்காசு** – வட்டக்காசு என்ற அணிகல வகை.
**பாண்டீரம்** – ஆல்; வெண்மை.
**பாண்டு** – வெண்மை; காமாலை; ஒரு நோய் வகை; நீர்க்கோவை; பஞ்ச பாண்டவர்களின் தந்தை; காண்க: **சிறுபூளை.**
**பாண்டுகம்** – வெண்மை; நோய்வகை.
**பாண்டுகம்பளம்** – இந்திரன் இருக்கை.
**பாண்டுநாகம்** – வெள்ளையானையாகிய ஐராவதம்.
**பாண்டுரம்** – காண்க: **பாண்டுகம்.**
**பாண்டுராகம்** – வெண்மை.
**பாண்டுரை** – பாதிரிமரம்.
**பாண்டுரோகம்** – நோய்வகை.
**பாண்டை** – தீநாற்றம்.
**பாண்டைநாறி** – கெட்ட நாற்றம் வீசுகிற பெண்; முன்கோபி.
**பாண்மகள்** – பாடுபவள், பாடினி.
**பாண்மகன்** – பாணன்.
**பாண்மை** – பாணன் தன்மை; தாழ்ச்சி.
**பாணக்கலப்பை** – இராமபாணமென வழங்கப் படும் பூச்சியாகிய கலப்பை.
**பாணச்சி,**
**பாணத்தி** } – காண்க: **பாணிச்சி.**
**பாணந்தொடுத்தல்** – அம்பெய்தல்; கெடுக்க வழி தேடுதல்; வசைமாரி பொழிதல்.
**பாணம்** – அம்பு; ஆகாசவாணம்; காண்க: **திப்பிலி**; செடிவகை; ஓரங்க நாடகவகை; பட்டாடை; காண்க: **இராமபாணம்.**
**பாணன்** – பாடுங்குலத்தான்; தையற்காரன்; வீணன்; காண்க: **காட்டாமணக்கு**; சிவபக்தனான ஓரசுரன்.
**பாணா** – வயிறுபருத்த பானை; பருத்த பீசம்; மண்சட்டி; சிலம்பக்கழி.

**பாணாத்தடி** – சிலம்பக்கழி.
**பாணாலு** – சூதிலோர் தாயம்.
**பாணாற்றுப்படை** – வள்ளல் ஒருவனிடம் பரிசு பெற்றுவரும் பாணன் ஒருவன், மற்றொரு பாணனை அவ் வள்ளலிடம் பரிசு பெறுதற்கு வழிச்செலுத்துவதைக் கூறும் புறத்துறை.
**பாணான்** – தையற்காரன்.
**பாணி** – காலம்; தாமதம்; நீண்டகாலம்; இசைப் பாட்டு; இசை; ஒலி; இசையுறுப்பாகிய தாளம்; அழகு; அன்பு; முல்லை யாழ்த் திறத்துள் ஒன்று; பறைப்பொது; கூத்து; கை; பக்கம்; சொல்; சருக்கரைக் குழம்பு; கள்; பழச்சாறு; இலைச்சாறு; மிளகும் பனை வெல்லமும் சேர்ந்த ஒரு மருந்துவகை; நீர்; ஊர்; நாடு; ஊர்சூழ் சோலை; காடு; பூம்பந்தர்; பலபண்டம்; கடைத்தெரு; நடை; சரகாண்டபாடாணம்; பாடினி.
**பாணிக்கிரகணம்** – கையைப் பற்றுதல்; திருமணம்.
**பாணிகை** – அகப்பை.
**பாணிச்சாய்** – கள்போன்ற முத்துநிறம்.
**பாணிச்சி** – பாணர்சாதிப் பெண்.
**பாணிச்சீர்** – கைத்தாளம்.
**பாணிசம்** – கைந்நகம்.
**பாணிசரியை** – கயிறு.
**பாணித்தல்** – தாமதஞ்செய்தல்; பின்வாங்குதல்; பாவித்தல்; மதிப்பிடுதல்; நிறைவேற்றுதல்; கொடுத்தல்.
**பாணிதம்** – கருப்பஞ்சாறு; கற்கண்டு.
**பாணிதூங்குதல்** – தாளத்திற்கேற்றவாறு ஆடுதல்.
**பாணிநடை** – தாளத்திற்கு ஏற்ற குதிரைநடை.
**பாணிப்பதம்** – பாகு இருக்கவேண்டிய நிலை; தைலங்காய்ச்சி இறக்கும் பக்குவம்.
**பாணிப்பிடிப்பு** – பூ முதலியவற்றின் சாறுள்ள நிலை.
**பாணிப்பு** – பாவிப்பு; சூழ்ச்சி; தாமதம்; மதிப்பு.
**பாணிப்பூ** – உலர்ந்து எண்ணெய்க்கசிவு கண்ட இலுப்பைப் பூ.
**பாணிபாத்திரம்** – கமண்டலம்.
**பாணிமுகம்** – உடலைவிட்டு உயிர் நீங்கும் முறைகளுள் ஒன்று.
**பாணியாதல்** – வெல்லம் முதலியன கரைதல்.
**பாணியொத்துதல்** – தாளம்போடுதல்.
**பாணு** – பாட்டு.
**பாத்தம்** – செய்தி; தரம்; மருதமரம்.
**பாத்தருதல்** – பரவுதல்; உருகியோடுதல்.
**பாத்தல்** – பங்கிடுதல்.
**பாத்தி** – பகுதி; சிறுசெய்; பங்கு; வீடு.
**பாத்திகட்டுதல், பாத்திகோலுதல்** – கீரைவிதை முதலியன தெளிக்க வரம்புகட்டுதல்.
**பாத்திபம்** – பூமி; புறாமுட்டிப்பூண்டு.
**பாத்தியதை** – உரிமை; உறவு.
**பாத்தியப்படுதல்** – உரிமைப்படுதல்.
**பாத்தியம்** – உரிமை; பிணை; பங்கு; தொடர்பு; காலலம்பக் கொடுக்கும் நீர்.
**பாத்தியன்** – சுற்றத்தான்; உரிமையாளன்; பிணையாளி; கடவுளின் அடியான்.
**பாத்திரப்பிரவேசம்** – நடிப்போர் நாடகமேடையில் வருகை.
**பாத்திரபண்டம்** – பலவகைப் பாண்டங்கள்.
**பாத்திரபதம்** – புரட்டாசி மாதம்; பூரட்டாதி, உத்தரட்டாதி இரேவதி நாள்கள்.
**பாத்திரம்** – கொள்கலம்; பாண்டம்; இரப்போர் கலம்; உண்கலம்; தகுதியுள்ளவன்; நாடகத்தில் வேடம்பூண்டு நடிப்போர்; இலை; உடல்; எட்டுச்சேர் கொண்டது; கட்டளை; மந்திரி; வாய்க்கால்; வரகுபாத்தி; புரட்டாசிமாதம்.
**பாத்திரவாளி(ன்), பாத்திரன்** – தக்கோன்.
**பாத்திரை** – இரப்போர் கலம்.
**பாத்தில்** – வீடு.
**பாத்திலார்** – விலைமகளிர்.
**பாத்து** – பகுக்கை; பங்கு; பாதி; இணை; நீக்கம்; சோறு; கஞ்சி; ஐம்புலவின்பம்; விளைவுக் குறைச்சலுக்காகச் செய்யப்படும் வரித் தள்ளுபடி; நான்கு என்னும் பொருள்கொண்ட குழூஉக்குறி.
**பாத்துதல்** – பகுத்தல்.
**பாத்துப்புலு** – நாற்பது என்னும் பொருள் கொண்ட குழூஉக்குறி.
**பாத்தூண்** – பகுத்துக் கொடுத்து உண்ணும் உணவு; பிச்சை.
**பாதக்கமலம்** – காண்க: **பாதகமலம்.**
**பாதக்காப்பு** – காண்க: **பாதகாப்பு.**
**பாதக்குறடு** – குமிழ்கொண்ட மிதியடி.
**பாதகடகம்** – பாடகம் என்னும் மகளிர் காலணி.
**பாதகம்** – பெரும்பாவம்; தடை.
**பாதகமலம்** – திருவடித்தாமரை.
**பாதகன்** – பெரும்பாவஞ் செய்தோன்.
**பாதகாணிக்கை** – குருதட்சிணை.
**பாதகாப்பு** – செருப்பு, அரணம்; திருவடியாகிய பாதுகாவல்.
**பாதகி** – பெரும்பாவஞ் செய்தவள்.
**பாதகேசம்** – காண்க: **பாதாதிகேசம்.**
**பாதங்கம்** – பொடி.
**பாதச்சனி** – வாக்குத்தானத்துச் சனி.

**பாதசரம்** – பெண்கள் காலணிவகை.
**பாதசாரம்** – கோள்கள் நட்சத்திரங்களில் சஞ்சரிக்கும் சஞ்சாரம்.
**பாதசாரி** – காலாள்; காலால் நடப்போன்.
**பாதசாலகம், பாதசாலம்** – காலணிவகை.
**பாதசுத்தி** – கால்கழுவுகை.
**பாதசேவை** – தொண்டுபுரிகை.
**பாததட்சிணை** – காண்க: **பாதகாணிக்கை.**
**பாததரிசனம்** – பெரியோரை வணங்குதல்.
**பாததாடனம்** – கால்உதை.
**பாததீர்த்தம்** – பெரியோர் திருவடிகளைக் கழுவிய நீர்.
**பாததூளி** – பெரியோரின் அடிப்பொடி.
**பாதப்படி** – அடிவைக்கும் இடம்.
**பாதபங்கயம்** – காண்க: **பாதகமலம்.**
**பாதபம்** – காண்க: **பாதவம்.**
**பாதபரிசம்** – திருவடி படுகை; சீதாங்கபாடாணம்.
**பாதபற்பு** – காண்க: **பாதகமலம்.**
**பாதபீடிகை** – புத்தரது திருவடி அடையாளம் கொண்ட மேடை.
**பாதபூசை** – பெரியோரின் திருவடிகளை மலர் முதலியன இட்டு வழிபடுதல்.
**பாதம்** – கால்; பீடம் முதலியவற்றைத் தாங்கும் கால்; அடிச்சுவடு; காலடியின் அளவு; செய்யுளடி; மலை, மரம் முதலியவற்றின் அடியிடம்; காற்பங்கு; வட்டத்தின் காற்பகுதி; நட்சத்திர பாதம்; சமூகம்; நீர்; கடவுள் அருள்; இராகு; கிரகபாதம்; சைவசமய மார்க்கம்; குறைப்பேறு; யோகவகை.
**பாதமயக்கு** – அடிமயக்கு; வேறு புலவர் பாடிய மூன்றடிகளோடு தாம் ஓரடியைப் பாடி முடிக்கும் மிறைக்கவிவகை.
**பாதமுத்தி** – பரகதி; திருவடிதீட்சை.
**பாதமுத்திரை** – ஆசாரியனது திருவடிச் சுவடு.
**பாதமூலம்** – குதிகால்; முத்தித் திருவடி.
**பாதரசம்** – இதள், இரசம்.
**பாதரட்சை** – செருப்பு, அரணம்.
**பாதரதம்** – காண்க: **பாதரசம்.**
**பாதரோகணம்** – அரசமரம்.
**பாதலத்த(தா)ம்பி** – நிலக்காளான்.
**பாதலம்** – பாதாள உலகம், மூவுலகத்துள் கீழுலகம்; நரகம்; சூரியன் நிற்கும் இராசிக்கு நான்காம் இராசி; மறைவிடம்.
**பாதவக்காணி** – கோயில் வேலைக்காரர்களுக்குரிய படித்தர நிலம்.
**பாதவந்தனிகம்** – தம்மை வணங்கும்போது மணப்பெண்ணுக்குப் பெரியோர்கள் கொடுக்கும் சீர்ப்பொருள்.
**பாதவம்** – மரம்; தோப்பு; மலை.
**பாதன்** – சூரியன்; தீ.
**பாதனம்** – வணக்கம்; கீழ்முகமாகச் செய்கை.
**பாதாக்கிரம்** – காற்பெருவிரல் நுனி.
**பாதாங்குட்டம்** – காற்பெருவிரல்.
**பாதாதி** – காலாட்படை.
**பாதாதிகேசம்** – அடிமுதல் முடிவரை; ஒரு சிற்றிலக்கியவகை.
**பாதாரவிந்தம்** – காண்க: **பாதகமலம்.**
**பாதாளக்கரண்டி** – கிணற்றில் விழுந்த பொருளை எடுக்கும் கருவி.
**பாதாளக்கொலுசு** – காண்க: **பாதாளக்கரண்டி.**
**பாதாளகங்கை** – பூமியின்கீழ் ஓடும் நீரோட்டம்.
**பாதாளத்தார்** – கீழ் உலகத்தார்.
**பாதாளம்** – கீழ் உலகம்; நரகம்; சூரியனுக்கு நான்காமிடம்; மறைவிடம்; பிலம்.
**பாதாளமூலி** – நெருஞ்சில்; ஆடுதின்னாப்பாளை; ஒரு கறையான்வகை; சீந்திற்கொடி; கொடிவகை.
**பாதாளலோகம்** – கீழுலகம்; கீழேழுலகினுள் ஒன்று.
**பாதாளவஞ்சனம்** – பூமிக்குள் உள்ள பொருளைத் தெளியக் காண உதவுவது.
**பாதாளவாகினி** – காண்க: **பாதாளகங்கை.**
**பாதாளி** – மிகச் சிக்கலானது; தொல்லை கொடுப்பவள்.
**பாதி** – இரண்டு சமபாகமாகப் பகுக்கப்பட்ட பொருட்பகுதி; நடு; பகுக்கை.
**பாதிடுதல்** – பங்கிடுதல்; பாதுகாத்தல்; நெருக்குதல்.
**பாதித்தல்** – வருத்துதல்; தடைசெய்தல்; இரண்டு சமபாகங்களாகப் பிரித்தல்.
**பாதிப்பேச்சு** – அரைகுறைப் பேச்சு; பேச்சுக்கு மத்தியில்.
**பாதிமதி** – பிறைச்சந்திரன்.
**பாதிமம்** – நாலில் ஒன்று.
**பாதிரம்** – சந்தனம்; மலையாத்திமரம்.
**பாதிராத்திரி** – நள்ளிரவு.
**பாதிரி** – சிவப்புப் பூமரவகை; வெள்ளைப் பூவுடைய மரவகை; மூங்கில்; பாதிரிமரம்; பொன்னிறமுள்ள பூவுடைய மரவகை; கிறித்தவ குருமார்.
**பாதிரியம்** – செவிடு.
**பாதிவாரம்** – நிலக்கிழாரும் குடியானவனும் விளைச்சலைப் பாதிப்பாதியாகப் பிரித்துக் கொள்ளும் முறை.
**பாதீடு** – பங்கிடுதல்; அரசன் தான் வென்று கொண்ட ஆநிரையை வீரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தலாகிய வெட்சித்துறை; பாதுகாக்கை; செறிக்கை.

**பாது** – பங்கு; கதிரவன்; காவல்.
**பாதுகம்** – காண்க: **பாதுகை.**
**பாதுகாத்தல்** – காப்பாற்றுதல்; வாராமல் தடுத்தல்; ஓம்புதல்.
**பாதுகாப்பு, பாதுகாவல்** – ஆதரித்தல்; காப்பாற்றுதல்.
**பாதுகை** – செருப்பு; சிறுசெருப்படைப்பூடு.
**பாதுகைக்கொட்டை** – மிதியடியின் குமிழ்.
**பாதேயம்** – கட்டுச்சோறு.
**பாதை** – வழி; ஒற்றையடி வழி; முறை; மிதவை; துன்பம்.
**பாதோதகம்** – பெரியோரின் திருவடிகளைக் கழுவிய நீர்.
**பாந்தம்** – உறவுமுறை; சாதிக்கட்டு; இணக்கம்; ஒழுங்கு; பகரவிறுதி.
**பாந்தல்** – பதுங்கல்; துன்பம்.
**பாந்தவம், பாந்தவியம்** – உறவுமுறை.
**பாந்தள்** – பாம்பு; மலைப்பாம்பு.
**பாந்தன்** – வழிச்செல்வோன்.
**பாந்து** – பொந்து; சுவர்க்கற்களின் இடையிலுள்ள சந்து; மேற்கட்டடத்தில் கட்டைகளுக்கு மத்தியிலுள்ள இடம்; எருதுகள்; வளைவுக்கும் சுவருக்குமிடையிலுள்ள பாகம்.
**பாந்துக்கிணறு** – பக்கங்களில் பொந்துவிழுந்த கிணறு.
**பாந்துதல்** – பதுங்குதல்; பிறாண்டுதல்.
**பாந்தை** – பொந்து.
**பாப்படுத்தல்** – பரப்பி விரித்தல்.
**பாப்பம்** – சோறு.
**பாப்பா** – பாவை; சிறுகுழந்தை; கண்ணின் கருவிழி.
**பாப்பாச்சி** – பாவை; ஒரு மிதியடிவகை.
**பாப்பாத்தி** – காண்க: **பார்ப்பனி;** வண்ணத்துப் பூச்சி; கழுகுவகை.
**பாப்பான்** – காண்க: **பார்ப்பான்.**
**பாப்பு** – காண்க: **பார்ப்பான்;** ரோமன் கத்தோலிக்க மதகுரு.
**பாப்புப்பகை** – பாம்பின் பகையான கருடன்.
**பாப்புரி** – காண்க: **பாம்புரி.**
**பாபக்கிரகம்** – இராகு, சனி, செவ்வாய் என்னும் தீக்கோள்கள்.
**பாபசங்கீர்த்தனம்** – பாவம் நீங்க அவற்றைக் குருவிடம் தெரிவித்தல்.
**பாபத்தி** – வேட்டை.
**பாபதத்தம்** – தீவினைகளிற் செலவழிக்கப்படும் பொருள்; கள்வர் முதலியோரால் கவரப்படும் பொருள்.
**பாபம்** – காண்க: **பாவம்.**
**பாபமூர்த்தி** – வேடன்.
**பாபி** – காண்க: **பாவி.**
**பாபு** – மேன்மைப்பொருளில் வரும் ஒரு பட்டப் பெயர்; தலைவன்; கதவு; பகுதி; கணக்கின் தலைப்பு.
**பாம்பணை** – ஆதிசேடனாகிய படுக்கை.
**பாம்பாட்டி** – பாம்பைப் பிடித்துப் பழக்கி ஆட்டுபவன்; பாம்பாட்டிச்சித்தர்; வரிக்கூத்துவகை.
**பாம்பாடி** – காளிங்கன் என்னும் பாம்பின்மீது ஆடிய கண்ணன்.
**பாம்பு** – ஊரும் உயிர்வகை; இராகு அல்லது கேது; நாணலையும் வைக்கோலையும் பரப்பி மண்ணைக் கொட்டிச் சுருட்டப்பட்ட திரணை; ஆயிலியநாள்; நீர்க்கரை; தாளக் கருவிவகை.
**பாம்புக்கண்ணி** – காண்க: **சங்கங்குப்பி.**
**பாம்புக்குத்தச்சன், பாம்புத்தச்சன்** – பாம்புக்கு மனைகட்டும் தச்சனாகிய கறையான்.
**பாம்புகண்டசித்தன்** – கறையானை உண்ணப் புற்றில் வாய்வைத்து உறிஞ்சும்போது பாம்பைக் காணும் சித்தனாகிய கரடி.
**பாம்புச்செவி** – கூர்மையான செவியுணர்வு.
**பாம்புண்பறவை** – பாம்பை உண்ணும் கருடன்.
**பாம்புணிக்கருங்கல்** – ஒரு கல்வகை.
**பாம்புத்திசை** – மேற்கு.
**பாம்புப்புற்று** – பாம்பின் வளை.
**பாம்புரி** – பாம்புத்தோல்; அகழி; மதிலுறுப்பு; அகழில் இறங்க உதவும் படிக்கட்டு.
**பாம்புவயிறு** – நீண்டு ஒட்டிய வயிறு.
**பாம்புவிரல்** – நடுவிரல்.
**பாமகள், பாமடந்தை** – கலைமகள்.
**பாமம்** – பரப்பு; சிரங்கு; புண்; கோபம்; ஒளி.
**பாமரம்** – மூடத்தனம்; மூடன்.
**பாமரன்** – அறிவிலான்; இழிந்தோன்; அரசற்குத் துணைவன்.
**பாமன்** – சூரியன்; மைத்துனன்.
**பாமாரி** – கந்தகம்.
**பாமாலை** – பாக்களால் தொடுக்கப்பெற்ற மாலை.
**பாமினி** – பெண்.
**பாமை** – சிரங்கு; சத்தியபாமை.
**பாய்** – கோரை முதலியவற்றால் முடைந்த விரிப்புவகை; கப்பற்பாய்; வேலைக்காரன்; பரவுதல்; பரப்பு.
**பாய் (வி)** – தாவு; தாண்டு; குதி; பரவு.
**பாய்க்கிடை** – நோயால் படுத்தபடுக்கையாய் இருக்கும் நிலை.
**பாய்கலைப்பாவை** – பாயும் கலைமானை ஊர்தியாக உடைய கொற்றவை.

**பாய்ச்சல்** – தாவுகை; குதிப்பு; எழுச்சி; நீரோட்டம்; சொரிகை; பெருகுகை; முட்டுகை; பாசனம்; கீழ்ப்படியாமை; குத்துகை; செருகுகை; வெடுவெடுப்பு.

**பாய்ச்சல்காட்டுதல்** – எதிர்த்துப் பாயச்செய்தல்; ஏய்த்தல்.

**பாய்ச்சல்மாடு** – பாயுங் காளை; காளைகளை நீண்ட கயிற்றால் கட்டி வெருட்டி வீழ்த்தும் கள்ளர் கொண்டாட்டவகை.

**பாய்ச்சல்விடுதல்** – தாவிச்செல்லுதல்; வேகமாய் வெருட்டுதல்.

**பாய்ச்சி** – கவறு; மீன்வலை.

**பாய்ச்சிகை** – கவறு.

**பாய்ச்சு** – பாய்கை; உருட்டுகை; கவறு; குத்துகை; வரிச்சல்.

**பாய்ச்சுத்தேள்** – பொய்த்தேளிட்டுப் பிறரைக் கலங்கப்பண்ணுதல்போல உண்டாக்கும் திகில்.

**பாய்ச்சுதல்** – நீரை வெளிச்செலுத்துதல்; தள்ளுதல்; குத்துதல்; உட்செலுத்துதல்.

**பாய்ச்சை** – தத்துப்பூச்சி; சிள்வண்டு.

**பாய்த்து** – பாய்ச்சல்; எழுச்சி.

**பாய்த்துதல்** – காண்க: **பாய்ச்சுதல்**.

**பாய்தல்** – தாவுதல்; நீர் முதலியன வேகமாய்ச் செல்லுதல்; மேல்நின்று குதித்தல்; நீருள் மூழ்குதல்; எதிர்செல்லுதல்; பரவுதல்; விரைந்துபடிதல்; விரைந்தோடுதல்; தாக்குதல்; விரைவுபடுதல்; அகங்கரித்தல்; மடிப்பு விரிதல்; கூத்தாடுதல்; ஓடிப்போதல்; தாக்கிப் பேசுதல்; குத்துதல்; வெட்டுதல்; முட்டுதல்.

**பாய்மரக்கூம்பு** – பாய்மரத்தின் உச்சி.

**பாய்மரம்** – கப்பல் முதலியவற்றின் பாய்தூக்கும் நடுமரம்.

**பாய்மா** – குதிரை; புலி.

**பாய்மாலி** – வெள்ள அழிவு.

**பாய்வலித்தல்** – கப்பற்பாயேற்றுதல்; கப்பற்பாய் காற்றுட்கொண்டு விரியச்செய்தல்.

**பாய்விரி** – பசலைக்கீரை.

**பாய்விரித்தல்** – கப்பற்பாய் காற்றுட்கொண்டு விரியச்செய்தல்; பயணப்படுதல்.

**பாயக்கட்டு** – ஊரதிகாரி.

**பாயசம்** – பால், அரிசி, சருக்கரை அல்லது வெல்லம் முதலியவற்றோடு சேர்த்துச் செய்யும் இன்னமுது; பாற்சோற்றிச்செடி.

**பாயதானம்** – பாலன்னம்.

**பாயம்** – புணர்ச்சி விருப்பம்; நீர்; மனத்திற்கு விருப்பமானது.

**பாயமுகம்** – வடவைத்தீ.

**பாயல்** – மக்கட் படுக்கை; உறக்கம்; பாதி.

**பாயலுணர்த்துதல்** – துயில் எழுப்பல்.

**பாயிரம்** – முகவுரை; பொருளடக்கம்; வரலாறு; புறம்பானது.

**பாயிறக்குதல்** – கப்பற்பாயை மடக்குதல்.

**பாயு** – மலவாய்.

**பாயுடுக்கையர்** – பாயை உடுத்துக்கொள்ளும் சமணத்துறவியர்.

**பாயுரு** – காண்க: **பாயு**.

**பார்** – பரப்பு; தேரின் பரப்பு; வண்டியின் நெடுஞ்சட்டம்; பூமி; நிலம் என்னும் பூதம்; நாடு; வன்னிலம்; பாறை; தடை; உரோகிணிநாள்; பருமை; வரம்பு; முத்து விளையும் திட்டு; மறையோன்; புத்தன்; பாத்தி பலகொண்ட பகுதி; அடுக்கு; தடவை.

**பார்க்க** – உறழ்ச்சிப் பொருளில் வரும் சொல்.

**பார்க்கட்டுதல்** – புன்செய்க்கு வரம்பிடுதல்.

**பார்க்கவன்** – பிருகுவின் வழித்தோன்றலான சுக்கிரன்; பரசுராமன்.

**பார்க்கவி** – திருமகள்; மலைமகள்; காண்க: **வெள்ளறுகு**.

**பார்ச்சட்டம்** – வண்டியின் அடிப்பாகத்துள்ள நெடுஞ்சட்டம்.

**பார்சுவகிரகணம்** – குறைக்கிரகணம்.

**பார்சுவம்** – விலாப்பக்கம்; பக்கம்; உதவி; வட்டம்.

**பார்த்தல்** – ஆராய்தல்; நோக்குதல்; அறிதல்; எதிர்பார்த்தல்; விரும்புதல்; தேடுதல்; வணங்குதல்; மதித்தல்; கவனித்தல்; மேற்பார்த்தல்; பார்வையிடுதல்; மருந்து முதலியன கொடுத்தல்; மந்திரித்தல்; கருதுதல்; கடைக்கணித்தல்.

**பார்த்திப** – அறுபதாண்டுக் கணக்கில் பத்தொன்பதாம் ஆண்டு.

**பார்த்திப(வ)ன்** – அரசன்.

**பார்த்திவம்** – பூமி தொடர்பானது; நிலங்களில் இருந்து பெறும் ஊதியம்.

**பார்ப்பதி** – காண்க: **பார்வதி**.

**பார்ப்பனத்தி** – காண்க: **பார்ப்பனி**.

**பார்ப்பனன்** – காண்க: **பார்ப்பான்**.

**பார்ப்பனி** – பார்ப்பனக்குலப் பெண்.

**பார்ப்பான்** – பிராமணன்; பிரமன்; யமன்.

**பார்ப்பி** – காண்க: **பார்ப்பனி**.

**பார்ப்பு** – தவழ்சாதிப் பிள்ளை; விலங்கின் குட்டி; பறவைக்குஞ்சு; பார்ப்பனச்சாதி.

**பார்ப்புத்தேள்** – காண்க: **பார்மகள்**.

**பார்படை** – தானிய அரியைக் களத்திற் பங்கிட்டுக் கொள்ளுகை.

**பார்மகள்** – நிலமகள்.

**பார்மிசைநடந்தோன்,**
**பார்மிசையோன்** } – புத்தன்.

**பார்வதம்** – காண்க: வாலுளுவை; வேம்பு.

**பார்வதி** – பருவதராசன் மகளான உமை; திரௌபதி; இடைச்சி; காவிமண்; ஆனை நெருஞ்சி.

**பார்வதேயம்** – மலையிற் பிறப்பன.

**பார்வல்** – பார்க்கை; காவல்; பறவைக்குஞ்சு; மான் முதலியவற்றின் கன்று; காண்க: பார்வை விலங்கு.

**பார்வை** – காட்சி; கண்; தோற்றம்; நேர்த்தி; மதிப்பு; நோக்கி மந்திரிக்கை; சூனியம்; கண்ணோட்டம்; சோதனை; மேல்விசாரிப்பு; கவனம்; காண்க: பார்வைவிலங்கு.

**பார்வைக்காரன்** – மந்திரித்து நோய் தீர்ப்போன்; மதிப்பிடுவோன்; மேலதிகாரி; அஞ்சனமிட்டுப் புதையல் காண்போன்.

**பார்வைக்குறைவு** – கட்புலன் மங்குகை; பேணுதலில் உண்டாகும் குறை.

**பார்வைத்தாழ்ச்சி** – அசட்டை; பேணுதலில் உண்டாகும் குறை.

**பார்வைபார்த்தல்** – நோய் தீர்க்க மந்திரமுச்சரித்தல்; மதித்தல்; ஆராய்தல்; ஏவல்வைத்தல்.

**பார்வைமான்** – காண்க: பார்வைவிலங்கு.

**பார்வையிடுதல்** – காண்க: பார்வைபார்த்தல்.

**பார்வைவிலங்கு** – விலங்குகளைப் பிடிப்பதற்காகப் பழக்கப்பட்ட விலங்கு.

**பாரகம்** – பூமி; திரைச்சீலை; தோணி.

**பாரகன்** – சுமப்பவன்; தாங்குபவன்; கல்விமிகக் கற்றவன்.

**பாரகாவியம்** – பெருங்காப்பியம்.

**பாரங்கதன்** – கல்விக்கடலில் கரைகண்டவன்.

**பாரங்கம்** – இலவங்கப்பட்டை.

**பாரங்கு** – சிறுதேக்கு; காட்டிலவு; நரிவாழை.

**பாரச்சுமை** – கனத்த சுமை.

**பாரசிகை** – பருந்து.

**பாரணம்** – உண்ணுகை; பட்டினியிருந்து உண்ணல்; மனநிறைவு; மேகம்.

**பாரணை** – காண்க: பாரணம்; பாரிப்பு.

**பாரத்தனம்** – பெருமிதம்.

**பாரத்துவாசம்** – வலியன்குருவி, கரிக்குருவி; காண்க: காடை; கற்பநூலுள் ஒன்று; எலும்பு.

**பாரத்தொந்தரை** – தொந்தரவுமிக்க பெருஞ் செயல்.

**பாரதகண்டம்** – இந்திய நாடு.

**பாரதந்திரியம்** – பிறன்வயமாதல்.

**பாரதப்போர்** – பாண்டவ கௌரவர் போர்; பெருஞ்சச்சரவு.

**பாரதம்** – இந்திய நாடு; பாரதப்போர்; மகாபாரதம்; மிக விரிவுடைய செய்தி; பாதரசம்.

**பாரதர்** – பாண்டவர் கௌரவர் உள்ளிட்ட பரத வமிசத்தவர்; பாரத நாட்டினர்.

**பாரதவருடம்** – காண்க: பாரதகண்டம்.

**பாரதாரிகம்** – காண்க: பாரதாரியம்.

**பாரதாரிகன்** – பிறன்மனைவியை விரும்புபவன்.

**பாரதாரியம்** – பிறன்மனை விழைகை.

**பாரதி** – கலைமகள்; பைரவி; பண்டிதன்; சொல்; மரக்கலம்.

**பாரதிக்கை** – இணைக்கைவகை.

**பாரதியரங்கம்** – சுடுகாடு.

**பாரதிவிருத்தி** – கூத்தன் தலைவனாகவும் நடன் நடிகை பொருளாகவும் வரும் நாடகவகை.

**பாரதூரம்** – மிகத் தொலைவு; முதன்மையானது; ஆழ்ந்த முன்யோசனை.

**பாரப்படுதல்** – பொறுப்புமிகுதல்; சுமைமிகுதல்; நீதிமன்றத்தில் விசாரணைக்கு வைக்கப் படுதல்.

**பாரப்பழி** – பெருங்குற்றம்.

**பாரப்புரளி** – பெரும்பொய்; பெருங்குறும்பு.

**பாரபட்சம்** – ஒருதலைச்சார்பு.

**பாரபத்தியக்காரன்** – மேல்விசாரணை செய்யும் அதிகாரி; வரி வசூலிக்கும் அதிகாரி முதலியோர்; அலுவலகன்; பொறுப்பான வேலையுள்ளவன்.

**பாரபத்தியம்** – மேல்விசாரணை; நீதிபதியின் அதிகாரம்; பொறுப்புமிக்க வேலை; கொடுக்கல் வாங்கல்.

**பாரம்** – பூமி; பருத்திச்செடி; பொறுக்கை; கனம்; சுமை; ஒரு நிறைவகை; பொறுப்பு; பெருங் குடும்பம்; கொடுமை; சுரத்தால் வரும் தலைக் கனம்; பெருமை; கடமை; ஒப்புவிக்கை; குதிரைக்கலணை; கவசம்; தோணி; காவுதடி; கரை; முடிவு; விளையாட்டுவகை; பாதரசம்.

**பாரம்பரம்** – காண்க: பாரம்பரியம்.

**பாரம்பரியநியாயம்** – மரபுவழியாக வரும் வழக்கம்.

**பாரம்பரியம்** – மரபுவழி, பரம்பரை; முறைமை.

**பாரம்பரியரோகம்** – மரபுவழியாய் வரும் நோய்.

**பாரம்பரை** – காண்க: பாரம்பரியம்.

**பாரமார்த்திகம்** – முடிவில் உண்மையானது; உண்மை அறிவிற்குரியது; கபடமற்ற தன்மை; ஈடுபாடு.

**பாரமிதம்** – மேலானது.

**பாரமேட்டி** – ஒருவகைத் துறவி.

**பாரவதம்** – புறா.

**பாரவம்** – வில்லின் நாண்.

**பாராசாரி** – பெருங்குதிரை.

**பாராட்டு** – புகழ்ச்சி; அன்புசெய்தல்; விரித்துரைக்கை; பகட்டுச்செயல்; கொண்டாடுதல்.

**பாராட்டுக்காரன்** – பகட்டன்; புனைந்து கூறுவோன்.

**பாராட்டுதல்** – புகழ்தல்; அன்புகாட்டுதல்; பெருமிதம் உரைத்தல்; கொண்டாடுதல்; பல காலம் சொல்லுதல்; விரித்துரைத்தல்; மனத்தில் வைத்தல்.

**பாராட்டுந்தாய்** – ஈன்ற தாய்.

**பாராட்டுப்பேசுதல்** – புகழ்தல்.

**பாராத்தியம்** – துன்பம்.

**பாராயணம்** – சமயநூலை முறைப்படி ஓதுதல்.

**பாராயணன்** – முறையாக ஓதுவோன்; ஒன்றனைக் குறிக்கொள்வோன்; பார்ப்பான்.

**பாராயணி** – கலைமகள்; முறையாக ஓதுபவர்.

**பாரார்** – பகைவர்; நிலவுலகத்தார்.

**பாராவதம்** – புறா; கரும்புறா; குரங்கு; மலை; கருங்காலிமரம்.

**பாராவலை(ளை)யம்** – வளைதடி.

**பாராவாரம்** – கடல்; கடற்கரை.

**பாரி** – பூமி; நல்லாடை; கட்டில்; கடை வள்ளல்கள் எழுவருள் ஒருவன்; பூந்தாது; கட்பாத்திரம்; யானைகட்டுங் கயிறு; சிறங்கை நீர்; கடல்; மனைவி; சிங்கம்; கள்; பருத்தது; முதன்மையானது; கனவான்; கொட்டுமுழக் குடன் புரியும் இராக்காவல்; இராக்காவலாளர் பாடல்.

**பாரிகன்** – தோட்சுமைக்காரன்.

**பாரிகாரியம்** – தலையாய வேலை.

**பாரிசச்சூலை** – பக்கவாதம்.

**பாரிசஞ்செய்தல்** – பொறுப்பாக்குதல்.

**பாரிசம்** – பக்கம்; உடலின் ஒரு பக்கம்; வசம்; திசை.

**பாரிசவாதம், பாரிசவாயு** – காண்க: **பக்கவாதம்**; குடலிறக்கம்.

**பாரிசாதம்** – ஐவகைத் தருக்களுள் ஒன்று; காண்க: **முள்முருங்கை; பவழமல்லிகை.**

**பாரிடம்** – பூமி; பூதம்.

**பாரித்தல்** – பரவுதல்; பருத்தல்; மிகுதியாதல்; தோன்றுதல்; ஆயத்தப்படுதல்; வளர்த்தல்; தோன்றச்செய்தல்; அமைத்துக்கொடுத்தல்; உண்டாக்குதல்; நிறைத்தல்; அணிதல்; அருச்சித்தல்; வளைத்தல்; உறுதிகொளல்; விரும்புதல்; காட்டுதல்; பரப்புதல்; பரக்கக் கூறுதல்; சுமையாதல்; நோயினால் கனமாதல்; இன்றியமையாததாதல்; சுமத்துதல்; காத்தல்; ஒத்தல்.

**பாரித்தவன்** – பருத்தவன்.

**பாரிப்பு** – பருமன்; பரப்பு; விருப்பம்; வீரச்செயல்; கனம்; அதிகரிப்பு.

**பாரிபத்திரம்** – காண்க: **வேம்பு.**

**பாரிபோதல்** – நடுயாமத்தில் சுற்றுக்காவல் செய்தல்; ஓடிவிடுதல்.

**பாரியம்** – கடுக்காய்; முருக்கு; வேம்பு.

**பாரியாள்** – பெருத்தவன்; மனைவி.

**பாரியை** – மனைவி.

**பாரிவேட்டை** – வேட்டை; கோயில் திருவிழா வகை.

**பாரு** – மருந்து.

**பாருசியம்** – அகில்மரம்.

**பாரை** – கடப்பாரை; புற்செதுக்குங் கருவி; எறிபடைவகை; செடிவகை; ஒரு மீன்வகை.

**பாரோலை** – பழம் வைக்கப்படும் பனையோலை.

**பால்** – குழவி, குட்டி முதலியவற்றை ஊட்டத் தாய் முலையினின்று சுரக்கும் வெண்மையான நீர்மப்பொருள்; பிணத்தை அடக்கம் பண்ணின மறுநாள் அவ்விடத்திற் பாலும் நவதானியமும் சேர்த்துத் தெளிக்கும் சடங்கு; மரம் முதலியவற்றிலிருந்து வடியும் நீர்மப் பொருள்; வெண்மை; சாறு; பகுதி; அம்மை முதலியவற்றிலிருந்து கசியும் சீழ்; பிரித்துக் கொடுக்கை; பாதி; பக்கம்; வரிசை; குலம்; திக்கு; குடம்; குணம்; உரிமை; இயல்பு; ஊழ்; தகுதி; ஐம்பாற்பிரிவு; ஒருமை பன்மை என்ற இருவகைப் பாகுபாடு; அகத்திணை புறத் திணை என்ற பாகுபாடு; இடையர் குறும்பர் களின்வகை.

**பால்கட்டுதல்** – நென்மணி முதலியவற்றில் பால் பற்றுதல்; அம்மைகுத்துதல்.

**பால்கறத்தல்** – பசு முதலியவற்றின் மடியிலிருந்து பாலைக் கறந்தெடுத்தல்.

**பால்காய்ச்சுதல்** – புதுமனை புகுதற்குப் பால் காய்ச்சும் சிறப்பு.

**பால்குனம்** – மாசி வளர்பிறைப் பிரதமை முதல் பங்குனி அமாவாசை முடியவுள்ள சாந்திர மான மாதம்.

**பால்கொடுத்தல்** – முலையுண்ணுமாறு கொடுத் தல்.

**பால்கோவா** – திரட்டுப்பால் என்னும் சிற்றுண்டி வகை.

**பால்சுரம்** – மகளிர்க்குப் பால் மார்பில் கட்டிக் கொள்வதனால் உண்டாகும் காய்ச்சல்.

**பால்சொரிதல், பால்சோர்தல்** – மாடு முதலியவற்றின் மடியில் இருந்து பால் தானே வழிதல்.

**பால்தோய்த்தல்** – உறைகுத்துதல்.

**பால்தோய்தல்** – பால் தயிராக மாறுகை.

**பால்நண்டு** – வெள்ளை நண்டு.

**பால்நரம்பு** – தாய்முலையில் பால் தோன்றும் போது காணும் பச்சை நரம்பு.

**பால்பகாவஃறிணைப்பெயர்** – ஒருமை பன்மைக்குப் பொதுவாய் வரும் அஃறிணைப்பெயர்.

**பால்பற்றிச்சொல்லுதல்** – ஒருசார்பாகப் பேசுதல்.

**பால்பாய்தல்** – தாய்ப்பால் தானே பெருகுகை; வெட்டு முதலியவற்றால் மரத்தினின்று பால் வெளிப்படுகை.

**பால்பிடித்தல்** – நென்மணி முதலியவற்றில் பால் பற்றுதல்.

**பால்பிடிபதம்** – பயிர்க்கதிர் பாலடையும் பருவம்.

**பால்பொழிதல்** – செழிப்பாயிருத்தல்.

**பால்மடி** – நிரம்பக் கறக்கக்கூடிய கால்நடைகளின் மடி.

**பால்மடியழற்சி** – பசு முதலியவற்றின் முலைக் காம்பு வெடித்திருக்கை.

**பால்மணம்** – பாலின் நாற்றம்; கஞ்சி காய்ச்சுகையில் பக்குவமானவுடன் உண்டாகும் நாற்றம்; பால்குடிக்கும் குழந்தைகளின் வாயிலிருந்து வீசும் பால்நாற்றம்; முற்றின அம்மைப்பாலின் நாற்றம்.

**பால்மரம்** – பாலுள்ள மரம்.

**பால்மறத்தல்** – குழந்தை பால் குடிப்பதைத் தவிர்தல்.

**பால்மறுத்தல்** – பால் வற்றுதல்; காண்க: **பால் மறத்தல்.**

**பால்மறை** – பசுக்கொட்டிலில் உள்ள குறை.

**பால்மாறுதல்** – பால் வற்றிப்போதல்; தாய்ப்பால் உண்ணாது பிற உணவு கொள்ளுதல்; சோம்பியிருத்தல்; பின்வாங்குதல்.

**பால்மேனியாள்** – கலைமகள்.

**பால்வண்ணன்** – பலராமன்; சிவன்.

**பால்வரைகிளவி** – எண், அளவு முதலியவற்றின் பகுதியைக் குறிக்கும் சொல்.

**பால்வரைதெய்வம்** – நல்வினை தீவினைகளை வகுக்கும் தெய்வம்.

**பால்வழு** – ஒருபாற்சொல் ஏனைப்பாற்சொல்லோடு முடிதலாகிய குற்றம்.

**பால்வழுவமைதி, பால்வழுவமைப்பு** – பால் வழுவை ஆமென்று அமைத்துக்கொள்கை.

**பால்வறையல்** – பாலைச் சேர்த்துச் செய்த துவட்டல்.

**பால்வன்னத்தி** – சிவசத்தி.

**பால்வாய்க்குழவி** – நற்பேறு பெற்ற குழந்தை.

**பால்வார்த்தல்** – பாம்புப்புற்றில் பாலூற்றிச் செய்யுஞ் சடங்கு.

**பால்வெடித்தல்** – நெற்பயிர் பாலடையாது கெட்டுப்போதல்.

**பாலக்கிரகாரிட்டம்** – கோள்களின் தீய பார்வையால் குழந்தைகட்கு உண்டாகும் பீடை; குழந்தைகளுக்கு உண்டாகும் வயிற்றுப் போக்கு.

**பாலகம்** – காண்க: **எள்; வெண்கோட்டம்.**

**பாலகன்** – காண்க: **பாலன்.**

**பாலகி** – மகள்.

**பாலசந்திரன்** – பிறைச்சந்திரன்.

**பாலசிட்சை** – குழந்தைக்குக் கற்பிக்கை; சிறுவர்க்குரிய பாடப்புத்தகம்.

**பாலசூரியன்** – உதயசூரியன்.

**பாலடி, பாலடிசில்** – பாலில் சமைத்த சோறு.

**பாலடை** – குழந்தைகளுக்குப் பால் புகட்டுகிற சங்கு; காண்க: **சித்திரப்பாலாடை (வி);** பாலகப்பை.

**பாலத்தூண்** – ஆற்றின்மேற் பாலத்தைத் தாங்குதற்குக் கட்டும் முள்ளுக்கட்டை.

**பாலபாடம்** – சிறுவர்க்குரிய புத்தகம்.

**பாலம்** – வாராவதி; நீரின் அணைச்சுவர்; நெற்றி; பூமி; மரக்கொம்பு; வெட்டிவேர்.

**பாலம்மை** – வைசூரி.

**பாலமணி** – அக்குமணி; வெள்ளைப் பாசிமணி.

**பாலமணிக்கோவை** – குழந்தைகளின் கழுத்தணி வகை.

**பாலமிர்தம்** – பாற்சோறு.

**பாலமை** – பிள்ளைமை; அறியாமை.

**பாலர்** – சிறுவர்; காப்பவர்; இடையர்; முல்லை நில மக்கள்.

**பாலரசம்** – பொன்னிறம்.

**பாலலீலை** – குழந்தை விளையாட்டு; இளைஞரின் இன்ப விளையாட்டு.

**பாலலோசனன்** – நெற்றிக்கண்ணுடைய சிவபிரான்.

**பாலவன்** – பால்வண்ணனான சிவன்.

**பாலவி** – காண்க: **பாலமிர்தம்.**

**பாலவோரக்கட்டை** – பாலத்தின் இருகரைகளிலுமுள்ள பக்கச்சுவர்.

**பாலன்** – குழந்தை; புதல்வன்; காப்போன்.

**பாலனம்** – பாதுகாப்பு.

**பாலனன்** – காப்போன்.

**பாலா** – கையீட்டி.

**பாலாசிரியன்** – குழந்தைகளுக்குக் கற்பிக்கும் ஆசிரியன்.

**பாலாடை** – காண்க: பாலேடு; குழந்தைகளுக்குப் பால்புகட்டும் சங்கு.

**பாலாலயம்** – இளங்கோயில், சிறிய ஆலயம்.

**பாலாவி** – பாலின் ஆவி.

**பாலாறு** – நந்திதுர்க்கத்தில் தோன்றித் தமிழ் நாட்டில் பாயும் ஓர் ஆறு.

**பாலி** – ஒரு பழைய மொழி; ஆலமரம்; செம்பருத்தி; காண்க: பாலாறு; கள்.

**பாலிகை** – இளம்பெண்; ஒரு காதணிவகை; கலியாணம் முதலிய நற்காலங்களில் முளைகள் உண்டாக ஒன்பதுவகைத் தானியங்கள் விதைக்குந் தாழி; ஆயுதக்கூர்; உதடு; அடம்பு; கத்திப்பிடி; வட்டம்; நீரோட்டம்; மேற்கட்டி.

**பாலிகைபாய்தல்** – அணையின்றித் தானே நீர் பாய்தல்.

**பாலிசம்** – அறியாமை.
**பாலிசன்** – மூடன்.
**பாலித்தல்** – காத்தல்; கொடுத்தல்; விரித்தல்; அருளுதல்.
**பாலியம்** – குழந்தைப்பருவம்; இளம்பருவம்.
**பாலியன்** – ஆண்குழந்தை; இளைஞன்.
**பாலிறங்குதல்** – பால் தொண்டைவழிச் செல்லுகை; அம்மைப்பால் வற்றுகை.
**பாலிறுவி** – முருங்கைமரம்.
**பாலுகம்** – கருப்பூரம்.
**பாலுண்ணி** – உடம்பில் உண்டாகும் ஒருவகைச் சதைவளர்ச்சி.
**பாலேடு** – காய்ச்சிய பாலின்மேற் படியும் ஆடை.
**பாலேயம்** – கழுதை; சிறுமுள்ளங்கி; மென்மை.
**பாலை** – முல்லையும் குறிஞ்சியும் திரிந்த நிலம்; பாலைத்தன்மை; புறங்காடு; பாலைநிலத்து உரிப்பொருளாகிய பிரிவு; காண்க: **இருள்மரம்**; **முள்மகிழ்**; மரவகை; பெரும்பண்வகை; ஒரு யாழ்வகை; பாலையாழிற் பிறக்கும் எழு வகைப் பண்வகை; புனர்பூசம்; மிருகசீரிட நாள்; கவறாட்டத்து வழங்கும் ஒரு குழூஉக் குறி; பெண்; குழந்தை; பதினாறு அகவைக் குட்பட்ட பெண்; சிவசத்தி; மீன்வகை.
**பாலைக்கிழத்தி** – பாலைக்கு உரியவளான கொற்றவை.
**பாலைத்திறம்** – காண்க: **பாலையாழ்த்திறம்.**
**பாலைநிலப்பூ** – கள்ளி; பாலை; பூளை.
**பாலைநிலம்** – முல்லையும் குறிஞ்சியும் திரிந்த நிலம்.
**பாலைநிலவிலங்கு** – செந்நாய்.
**பாலைப்பண்** – பெரும்பண்வகை.
**பாலைமணி** – அக்குமணி.
**பாலையாழ்** – பெரும்பண்வகை.
**பாலையாழ்த்திறம்** – பாலைப்பண்ணைச் சார்ந்த சிறு பண்கள்.
**பாலைவனம்** – பரந்த மணல்வெளி.
**பாலொடுவை** – காண்க: **கொடிப்பாலை.**
**பாவகம்** – அக்கினி; சேங்கொட்டை; கொலை; கருத்து; தியானம்; இயல்பு; உருவம்; காதலை வெளியிடும் குறிப்பு; பாசாங்கு.
**பாவகன்** – தூய்மையானவன்; தூய்மைசெய்வோன்; அக்கினி; நஞ்சுதீர்க்கும் மருத்துவன்.
**பாவகாரி** – பாவம் செய்வோன்.
**பாவகி** – தீயில் பிறந்தோனாகிய முருகன்.
**பாவச்சுமை** – நுகர்ந்து கழித்தற்குரிய பாவத் திரள்.
**பாவசுத்தி** – பாவம் நீங்குகை; மனத்தூய்மை.
**பாவசேடம்** – நுகர்ந்து கழிக்கவேண்டிய வினைப் பயன்; தூயவரிடத்து எஞ்சியிருக்கும் தீவினை.
**பாவட்டை** – செடிவகை; சிறு மரவகை; ஆடாதோடை.
**பாவடி** – அங்கவடி; பாட்டிலடங்கிய அடி.
**பாவண்ணம்** – நூற்பாச் சந்தம்.
**பாவநாசம்** – பாவநீக்குகை; பாவம் போக்கும் இடம் அல்லது தீர்த்தம்.
**பாவநிவாரணம்** – பாவம் நீக்குதல்.
**பாவபாணம்** – மனோபாவங்களாகிய நல்வினை தீவினைகள்.
**பாவம்** – தீவினைப் பயன்; தீச்செயல்; நரகம்; இரக்கக்குறிப்பு; உளதாந்தன்மை; முறைமை; தியானம்; எண்ணம்; அபிநயம்; விளையாட்டு; நிலைதடுமாற்றம்; ஆத்துமாவிடம் உண்டாகும் பரிணாம விசேடம்; இயக்கம்.
**பாவம்பழி** – கொடுந்தீச்செயல்.
**பாவமன்னிப்பு** – பாவத்தைப் பொறுக்கை.
**பாவமூர்த்தி** – வேடன்.
**பாவர்** – பாவிகள்.
**பாவரசம்** – கருத்துநயம்; அபிநயச்சுவை.
**பாவல்** – மிதியடி; மரக்கல வுறுப்புகளுள் ஒன்று; பாகற்கொடி.
**பாவலர்** – கவிஞர்; புலவர்.
**பாவறை** – கூடாரம்.
**பாவனத்துவனி** – சங்கு.
**பாவனம்** – துப்புரவுசெய்கை; தூய்மை; மருந்து குழைக்கை.
**பாவனன்** – துப்புரவாளன்; அனுமன்; வீமன்.
**பாவனாதீதம்** – எண்ணுதற்கு அரியது.
**பாவனி** – கங்கை; பசு; துளசி; மேளகர்த்தாக்களுள் ஒன்று.
**பாவனை** – நினைப்பு; தெளிகை; ஐம்புலனுள் ஒன்று; தியானம்; தியானிக்கப்படுவது; ஒப்பு; அடையாளம்; போலி; நடத்தை; நடிப்பு; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.
**பாவனைகாட்டுதல்** – ஒன்றன் செயல்போலச் செய்தல்; அபிநயித்தல்; வேடங்கொள்ளுதல்; வரைந்துகாட்டுதல்.
**பாவாடம்** – நாக்கறுத்துக்கொள்ளும் வேண்டுதல்.
**பாவாடை** – பெண்களின் உடைவகை; பெரியோர் முதலியவர் நடந்துசெல்லத் தரைமீது விரிக்குஞ் சீலை; கடவுள் முதலியோர்க்கு முன் ஆடையிற் படைக்கும் அன்னம்; மேலெழ வீசும் ஒருவகை விருதுச்சீலை; மேசைவிரிப்பு; வேலைநாள்.
**பாவாணர்** – பாவலர்.
**பாவாத்துமா** – தீச்செயல் புரிவோன்.
**பாவாபாவம்** – உண்மையும் இன்மையும்.
**பாவார்த்தம்** – கருத்துரை; சொற்பொருள்.
**பாவாற்றி** – நெய்வார் குச்சு.

**பாவாற்றுதல்** – நெசவுப்பாவைத் தறிக்கு ஆயத்தம் செய்தல்.

**பாவி** – தீமையாளன்; சாது; வரக்கூடியது; பேதை.

**பாவி(வி)** – மதி; பாவனைசெய்.

**பாவிகம்** – தொடக்கமுதல் முடிவுவரை வனப்புடையதாக அமையும் காப்பியப் பண்பு.

**பாவிட்டன்** – கொடும்பாவஞ் செய்தவன்.

**பாவித்தல்** – எண்ணுதல்; தியானித்தல்; பாவனைசெய்தல்; பொய்யாக நடித்தல்; நுகர்தல்.

**பாவியம்** – காப்பியம்; பாவிக்கத்தக்கது; தகுதி.

**பாவியர்** – குறிப்புடையவர்.

**பாவிரிமண்டபம்** – சங்கமண்டபம்.

**பாவினம்** – தாழிசை, துறை, விருத்தம் என்னும் முப்பகுதியான பாவின்வகை.

**பாவு** – நெசவுப்பா; இரண்டுபாக வளவு; இரண்டு பலங்கொண்ட நிறுத்தலளவை.

**பாவுகல்** – தளம் பரப்புங் கல்.

**பாவுதல்** – படர்தல்; பரவுதல்; ஊன்றுதல்; தளவரிசையிடுதல்; நாற்றுக்கு நெருக்கி விதைத்தல்; நாற்று நடுதல்; தாண்டுதல்; பரப்புதல்.

**பாவுபலகை** – மேல்தளமாகப் பரப்பும் பலகை.

**பாவை** – பொம்மைபோன்ற அழகிய பெண்; பதுமை; அழகிய உருவம்; கருவிழி; பெண்; குரவமலர்; காண்க: **பாவைக்கூத்து**; நோன்பு வகை; திருவெம்பாவை; திருப்பாவை; இஞ்சிக் கிழங்கு; மதில்.

**பாவைக்கூத்து** – அவுணர் மோகித்து விழுமாறு திருமகள் கொல்லிப்பாவை வடிவுகொண்டு ஆடிய ஆடல்; பொம்மலாட்டம்.

**பாவைத்தீபம்** – கோயிலில் வழங்கும் தீப ஆராதனைக் கருவிவகை.

**பாவைப்பாட்டு** – திருப்பாவை திருவெம்பாவைகளில் உள்ளவைபோல நான்கடியின் மிக்கு வருஞ் செய்யுள்வகை.

**பாவையாடல்** – காண்க: **பாவைக்கூத்து**; பெண்பாற் பிள்ளைத்தமிழின் உறுப்புகளுள் பாட்டுடைத் தலைவி பாவை வைத்து விளையாடுகை.

**பாவையிஞ்சி** – இஞ்சிக்கிழங்கு.

**பாவைவிளக்கு** – பெண் கையில் தாங்கிநிற்பது போல அமைக்கும் விளக்கு, பதுமைவிளக்கு.

**பாவோடல்** – நெசவில் இழையோடுந் தடி.

**பாவோடுதல்** – நெய்வார் தொழிலினொன்று, நூலை நெசவுப் பாவாக்குதல்; சலித்துக் கொண்டே இருத்தல்.

**பாழ்** – அழிவு; இழப்பு; கெடுதி; இழிவு; அந்தக் கேடு; வீண்; வெறுமை; இன்மை; ஒன்றுமில்லாத இடம்; தரிசுநிலம்; குற்றம்; வானம்; மூலப்பகுதி; புருடன்.

**பாழ்க்கடித்தல்** – அழித்தல்.

**பாழ்க்கிறைத்தல்** – காண்க: **பாழுக்கிறைத்தல்**.

**பாழ்க்கோட்டம்** – சுடுகாடு.

**பாழ்ங்கிணறு** – தூர்ந்து அல்லது இடிந்து பாழான கிணறு.

**பாழ்ங்குடி** – சீர்கெட்ட குடும்பம்.

**பாழ்ஞ்சேரி** – குடியிருப்பற்ற ஊர்ப்பகுதி.

**பாழ்த்தல்** – அழிவடைதல்; பயனறுதல்; சீர்குன்றுதல்.

**பாழ்ந்தாறு** – படுகுழி.

**பாழ்ந்துரவு** – காண்க: **பாழ்ங்கிணறு**.

**பாழ்நிலம்** – விளைவுக்குதவாத நிலம்.

**பாழ்படுதல்** – கேடுறுதல்; ஒளிமங்குதல்.

**பாழ்ம்புறம்** – குடியோடிப்போன நிலப்பகுதி.

**பாழ்மூலை** – எளிதிற் செல்லமுடியாது சேய்மையிலுள்ள இடம்.

**பாழ்வாய்கூறுதல்** – நன்றியை மறந்து முணுமுணுத்தல்.

**பாழ்வீடு** – குடியில்லாத வீடு.

**பாழ்வெளி** – வெட்டவெளி; பரவெளி.

**பாழாக்குதல்** – பயனில்லாததாகச் செய்தல்.

**பாழாதல்** – ஊழ்த்தல்; கெடுதல்.

**பாழி** – அகலம்; உரை; குகை; இடம்; கோயில்; நகரம்; மருதநிலத்தூர்; பகைவரூர்; முனிவர் வாழிடம்; மக்கள் துயிலிடம்; விலங்கு துயிலிடம்; சிறுகுளம்; இறங்குதுறை; இயல்பு; எலிவளை; சொல்; வேதம் ஓதும் முறைகளுள் ஒன்று; வெறுமை; வானம்; கடல்; பாசறை; பெருமை; வலிமை; போர்.

**பாழிமை** – வெறுமை; வலிமை.

**பாழிவாய்** – கழிமுகத்துத் திட்டு.

**பாழுக்கிறைத்தல்** – வீணாகச் செயல் செய்தல்.

**பாழூர்** – குடிநீங்கிய ஊர்.

**பாளச்சீலை** – புண்ணுக்கிடும் மருந்துபூசிய சீலை.

**பாளம்** – உலோகக்கட்டி; தகட்டு வடிவம்; வெடித்த தகட்டுத்துண்டு; தோலுரிவு; வெடியுப்பு; சீலையின் கிழிவு; பளபளப்பு.

**பாளயம்** – காண்க: **பாளையம்**.

**பாளாசக்கயிறு** – குதிரையின் காலுக்குக் கட்டுங் கயிறு.

**பாளி** – அடையாளம்; பணித்தூசு; விதானச் சீலை.

**பாளிதம்** – சோறு; பாற்சோறு; குழம்பு; பட்டுப் புடைவை; விதானச்சீலை; பணித்தூசு; கண்ட சருக்கரை; பச்சைக்கருப்பூரம்; சந்தனம்.

**பாளை** – பாக்கு, தெங்கு, பனை முதலியவற்றின் பூவை மூடிய மடல்; செம்பாளைநெல்; பதர்; சுறாவின் ஈரல்; கருப்பருவம்; ஐந்து ஆண்டுக்கு உட்பட்ட பருவம்.

**பாளைக்கத்தி** – கள்ளிறக்குவோர் கைக் கொள்ளும் வெட்டுக்கத்தி.

**பாளைசீவுதல்** – கள்ளிறக்கப் பாளையைச் சீவுதல்.

**பாளையப்பட்டு** – அரசருக்குப் போரில் உதவி செய்யும் நிபந்தனையுடன் படைத் தலைவருக்கு விடப்படும் ஊர்த்தொகுதி.

**பாளையம்** – படை; பாசறை; பொற்றை சூழ்ந்த ஊர்; குறுநிலமன்னரூர்.

**பாளையமிறங்குதல்** – படைவந்து இருத்தல்.

**பாற்கட்டி** – கட்டிப்பால்; குழந்தைகளின் வயிற்றில் உண்டாகும் கட்டி.

**பாற்கட்டு** – குழந்தை குடியாமையால் முலையில் பால்சுரந்து தேங்குகை.

**பாற்கடல்** – ஏழு கடல்களுள் பால்மயமான கடல்.

**பாற்கதிர்** – நிலா.

**பாற்கரன்** – சூரியன்.

**பாற்கரியம்** – பிரமத்தினின்றும் உலகம் தோன்றிற்று என்னும் மதம்.

**பாற்கரியோன்** – இந்திரன்.

**பாற்கலச(ய)ம்** – பால் கறக்கும் கலம்.

**பாற்கவடி** – வெள்ளைச் சோகி.

**பாற்காரன்** – பால் விற்போன்.

**பாற்காரி** – பால் விற்பவள்; குழந்தைகளுக்குத் தன் முலைப்பாலைக் கொடுத்து வளர்க்கும் செவிலித்தாய்.

**பாற்காவடி** – பாற்குடங்கள் கொண்ட காவடி.

**பாற்கிண்டல்** – பால் கலந்த உணவுவகை.

**பாற்குழந்தை** – கைக்குழந்தை.

**பாற்குழம்பு** – நன்றாகக் காய்ந்து ஏடுபடிந்த பால்.

**பாற்குனம், பாற்குனி** } – உத்தரநாள்; பங்குனிமாதம்.

**பாற்கூழ்** – பாற்சோறு.

**பாற்கெண்டை** – ஒரு மீன்வகை.

**பாற்சுண்டு** – பால்காய்ச்சிய பானையின் அடியிற் பற்றிய பாற்பற்று; தலையில் தோன்றும் பொடுகு.

**பாற்சொக்கு** – செல்வமகிழ்ச்சி.

**பாற்சோற்றி** – ஒரு பூண்டுவகை.

**பாற்சோறு** – பால்கலந்த அன்னம்.

**பாற்பசு** – கறவைப்பசு.

**பாற்பட்டார்** – துறவியர்.

**பாற்படுதல்** – ஒழுங்குபடுதல்; நன்முறையில் நடத்தல்.

**பாற்பல்** – முதன்முதல் முளைக்கும் பல்.

**பாற்பாக்கியம்** – கறவைப்பசுக்களை அடைந்திருக்கும் பேறு.

**பாற்புட்டி** – குழந்தைகளுக்குப் பாலூட்டும் புட்டி.

**பாற்பொங்கல்** – பாலில் சமைத்த சோறு.

**பாற்போனகம்** – காண்க: பாற்கூழ்.

**பாற்றம்** – செய்தி.

**பாற்று** – உரியது.

**பாற்றுதல்** – நீக்குதல்; அழித்தல்.

**பாறல்** – எருது; இடபராசி; மழைப்பாட்டம்.

**பாறு** – கேடு; பருந்து; கழுகு; மரக்கலம்.

**பாறுதல்** – அழிதல்; சிதறுதல்; நிலைகெட்டோடுதல்; கிழிபடுதல்; அடிபறிதல்; ஒழுங்கற்றுப் பரந்துகிடத்தல்; பொருதல்; கடத்தல்.

**பாறுபாறாக்குதல்** – சிதைத்தல்.

**பாறை** – பூமியிலுள்ள கருங்கல்திரள்; சிறு திட்டை; மீன்வகை.

**பாறைபடுதல்** – இறுகுதல்.

**பாறையுப்பு** – கல்லுப்பு.

**பான்** – ஒரு வினையெச்ச விகுதி.

**பான்மடை** – காண்க: பாற்சோறு.

**பான்மயக்கம்** – ஒரு பாற்குரிய சொல் வேறொரு பாற்குரிய சொல்லுடன் வழங்கல்.

**பான்மாறுதல்** – பால்குடி மறத்தல்; வருந்துதல்; சோம்பலாயிருத்தல்.

**பான்முல்லை** – தலைவியைக் கூடிய தலைவன் தங்களிருவரையும் கூட்டிவைத்த நல்வினையைப் புகழ்ந்து கூறும் துறை.

**பான்மை** – குணம்; தகுதி; பகுதி; முறைமை; சிறப்பு; நல்வினைப் பயன்.

**பானக்கம், பானகம்** } – சருக்கரை, ஏலம் முதலியன கலந்த குடிநீர்வகை; நீர்மோர்; குடிக்கை.

**பானசம்** – பலாச்சுளையிலிருந்து வடித்த கள்.

**பானசியர்** – சமையற்காரர்.

**பானண்டு** – காண்க: பால்நண்டு.

**பானபரம்** – குடிக்கை.

**பானபாத்திரம்** – கிண்ணம்.

**பானம்** – குடிக்கை; குடித்தற்கு நீர் அளிக்கை; கள்; பருகும் உணவு.

**பானல்** – மருதநிலம்; வயல்; காண்க: கருங்குவளை; கடல்; கள்; குதிரை; வெற்றிலை.

**பானாள்** – நள்ளிரவு.

**பானி** – பருகுவோன்; படை.

**பானித்தல்** – குடித்தல்.

**பானி(னீ)யம்** – நீர்; பருகும் உணவு.

**பானு** – சூரியன்; ஒளி; அழகு; சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று; தலைவன்; அரசன்.

பானுபலை – வாழை.
பானுமைந்தன் – கன்னன்; சனி; சுக்கிரீவன்; யமன்.
பானுவாரம் – ஞாயிற்றுக்கிழமை.
பானை – மண்மிடா; ஓர் அளவு.
பானைக்குடுவை – சிறுபானை.
பானைமூடி – பானையை மூட உதவும் கலன்.

# பி

பி – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+இ); பிறவினை விகுதி.
பிக்கம் – யானைக்கன்று; இருவேலி.
பிக்கல்பிடுங்கல் – தொல்லை.
பிக்காரி – வறிஞன்.
பிக்கு – சிக்கு; பிசகு; குழப்பம்; ஒவ்வாமை; பௌத்தத்துறவி.
பிக்குணி – பௌத்தப் பெண்துறவி.
பிகபந்து – குயிலின் நண்பனான மாமரம்.
பிகம் – குயில்.
பிகவல்லபம் – காண்க: பிகபந்து.
பிகி – பெண்குயில்.
பிகு – இறுக்கம்; பலம்; செருக்கு; எடுத்த குரல்.
பிகுபண்ணுதல் – தன்னை அருமைப்படுத்திக் கொள்ளல்.
பிகுவு – இறுக்கம்; பலம்; செருக்கு; ஓரளவு கொண்ட அவுரிக்கட்டு.
பிகுவேற்றுதல் – இறுகச்செய்தல்; வளைத்தல்.
பிங்கதிருட்டி – பிங்கநிறக் கண்ணுடைய சிங்கம்.
பிங்கம் – பொன்மை கலந்த சிவப்பு.
பிங்கலம் – பொன்; பொன்மைநிறம்; வடக்கு; அரிதாரநிறம்; பிங்கல நிகண்டு; எச்சில் உமிழும் படிக்கம்.
பிங்கலன் – குபேரன்; சிவன்; சூரியன்; தீ; பிங்கல நிகண்டு செய்த ஆசிரியன்.
பிங்கலாதனம் – யோகாசனவகை.
பிங்கலை – பத்து நாடியுள் ஒன்று; வலமூக்கு வழியாக வரும் மூச்சு; ஆந்தைவகை; எண் திசை யானைகளுள் வாமனத்துக்குரிய பெண் யானை; பார்வதி.
பிங்கள – அறுபதாண்டுக்கணக்கில் ஐம்பத்தோராம் ஆண்டு.
பிங்களம் – பொன்னிறம்; அரிதாரநிறம்; வஞ்சகம்; களிம்பு; வேறுபாடு.
பிங்களித்தல் – அருவருத்தல்; பின்வாங்குதல்.
பிங்களை – எண்திசை யானைகளுள் வாமனத்துக்குரிய பெண்யானை; வாழ்நாளுள் மூன்று பகுதியுள் இரண்டாவது.
பிங்காசம் – ஒரு பொன்வகை.
பிங்காசி – காண்க: அவுரி.
பிங்காளம் – பாண்டவகை.
பிங்கி – வன்னிமரம்.
பிங்குசம் – தலைக்கோலம்.
பிச்சடம் – ஈயம்; துத்தநாகம்.
பிச்சப்பழம் – சருக்கரைக்கொம்மட்டிப் பழம்.
பிச்சம் – இறகு; ஆண்பால் மயிர்; பீலிக்குஞ்சம்; பீலிக்குடை; மயிலின் தோகை; எஞ்சி நிற்பது; எட்டிமரம்; காண்க: இருவேரி(லி).
பிச்சன் – பைத்தியக்காரன்; மருண்டவன்; சிவன்.
பிச்சாடனம் – பிச்சையெடுத்தல்.
பிச்சாடனன் – காண்க: பிட்சாடனன்.
பிச்சாபாத்திரம் – இரப்போர் கலம்.
பிச்சி – காண்க: சாதிமல்லிகை; முல்லை; சிறு செண்பகம்; பித்துப்பிடித்தவள்; சைவ தவப் பெண்; ஒரு பெண்பேய்; பைத்தியம் பிடித்தவர்; சருக்கரைக்கொம்மட்டி.
பிச்சியார் – சைவ தவப்பெண்; கலம்பக உறுப்பு வகையுள் ஒன்று.
பிச்சிலம் – ஈரம்; குழம்பு; கஞ்சி.
பிச்சு – பித்தநீர்; பைத்தியம்.
பிச்சுவா – கையீட்டி; நுனியில் கூருடைய கத்தி.
பிச்சை – தருமம்; இரப்போர்க்கிடும் உணவு; வாழைமரம்; நூக்கமரம்; மரகதம்; படிகம்; சருக்கரைக்கொம்மட்டி.
பிச்சைக்காரன் – இரவலன்.
பிச்சைச்சோறு – இரந்து பெற்ற அன்னம்; பிடியன்னம்.
பிச்சைத்தனம் – இரக்குங்குணம்; இழிகுணம்; வறுமை.
பிச்சைத்தேவன் – சிவபிரான்.
பிச்சைப்படி – சிறு படிவகை.
பிசக்கு – தவறு; ஒவ்வாமை.
பிசக்குதல் – அழுக்காக்குதல்; கசக்குதல்.
பிசகு – தவறு; ஒவ்வாமை; இடையூறு; தடை.
பிசகுசொல்லுதல் – குற்றங்கூறுதல்; தடை நிகழ்த்துதல்.
பிசகுதல் – தவறுதல்; உறுப்புப் பிறழ்தல்; வழுக்கி விழுதல்; தடைப்படுதல்; மந்தமாதல்.
பிசகுநாறுதல் – கேடுறுதல்.
பிசங்கம் – காண்க: பிங்கம்.
பிசங்கல் – அழுக்கடைந்த ஆடை.
பிசங்குதல் – அழுக்காதல்.
பிசண்டம் – வயிறு; விலங்கின் முதுகு.

**பிசம்** – இறகு; தாமரைத்தண்டு.
**பிசல்** – தோள்; பிடர்; எருது முதலியவற்றின் திமில்.
**பிசறுதல்** – கலத்தல்.
**பிசனம்** – காண்க: **செஞ்சந்தனம்.**
**பிசாசக்கை** – இணையா வினைக்கைவகை.
**பிசாசம்** – பேய்; காண்க: **பிசாசக்கை.**
**பிசாசன்** – பேய்பிடித்தவன்; தீக்குணமுள்ளவன்.
**பிசாசாடுதல்** – பேய்பிடித்தாடுதல்.
**பிசாசு** – பேய்.
**பிசாசுபிடித்தல்** – பேய்க்கோட்படுகை; பேய்க்கு இருப்பிடமாகை.
**பிசாத்து** – புன்மை.
**பிசான்** – பிசுபிசுப்பு.
**பிசானம்** – ஒரு நெல்வகை; தை மாசி மாதங் களாகிய அறுவடைக் காலம்.
**பிசி** – பொய்; சோறு; உவமேயத்தை உவமானப் பொருளால் குறிப்பித்துக் கூறுவது.
**பிசிதம்** – ஊன்; காண்க: **வேம்பு; மலைவேம்பு.**
**பிசிதாசனர்** – ஊன் தின்னும் இராக்கதர்.
**பிசிர்** – நீர்த்துளி; ஊற்றுநீர்; சிம்பு.
**பிசிர்தல்**– துளியாகச் சிதறுதல்.
**பிசின்** – வெட்டுக்குருத்து; காண்க: **பிரம்பு;** ஒட்டுந்தன்மையுள்ள மரப்பால்; சாம்பிராணி; பஞ்சிநூல்; ஒட்டுகை.
**பிசினம்** – இவறல்; கோட்சொல்லுகை.
**பிசினன், பிசினாறி** – இவறலன்; கோட்சொல்வோன்.
**பிசினி** – இவறல், உலோபம்; இவறலன், உலோபி; கோட்சொல்பவன்; நெல்வகை; வெட்டுக்குருத்து.
**பிசினேறி** – இவறலன்.
**பிசு** – காண்க: **பருத்தி;** குட்டநோய்வகை; நானூறு பலம்கொண்ட எடுத்தலளவை.
**பிசுக்கர்** – புல்லர்.
**பிசுக்கு** – இவறல், உலோபம்; குசர்; பசையுறு பொருள்; பெருமிதம்; பீர்க்கங்கொடி.
**பிசுக்கொட்டுதல்** – ஒட்டுந்தன்மையாதல்.
**பிசுகம்** – காண்க: **வேலிப்பருத்தி.**
**பிசுகுதல்** – பிசிறுதல்; இவறல்; தடுமாறுதல்; பண்டம் வாங்கியபின் மேலும் கொஞ்சம் கொடுக்கும்படி கேட்டல்.
**பிசுபிசுத்தல்** – பசைத்தன்மையாதல்; மழை தூறிக்கொண்டிருத்தல்; வெற்றியில்லையா தல்.
**பிசுபிசுத்தவன்** – இவறலன், உலோபி; மந்தன்.
**பிசுமந்தம்** – வேப்பமரம்; செங்கழுநீர்.
**பிசுனம்** – கோட்சொல்லுகை; இவறல், உலோ பம்; குங்குமம்; மஞ்சள்; பருத்தி; காக்கை.
**பிசுனன்** – காண்க: **பிசினன்.**
**பிசுனாறி, பிசுனி** – காண்க: **பிசினாறி; பிசினி.**
**பிசைதல்** – மா முதலியவற்றைச் சிறிதாக நீர் விட்டுக் கையால் நன்றாகத் துழாவுதல்; கையாற் பிசைதல்; தேய்த்தல்; கசக்குதல்; உரசுதல்.
**பிஞ்சகன்** – அழிப்போன்; சிவன்.
**பிஞ்சடம்** – கண்பீளை.
**பிஞ்சம்** – இறகு; மயிற்றோகை; சத்திக்கொடி.
**பிஞ்சரம்** – அரிதாரம்; கருமை கலந்த செந்நிறம்; பொன்.
**பிஞ்சலம்** – தருப்பை.
**பிஞ்சிற்பழுத்தல்** – இளமையிலே முதிர்வடைதல்; இளமையிலே அறிவு பெருகுதல்; கெட்டுப் போதல்.
**பிஞ்சு** – இளங்காய்; முற்றாமை; இளமை யானது; நகையின் அரும்புக்கட்டு; கால்.
**பிஞ்சுக்கட்டை** – தலையகன்ற தூண்.
**பிஞ்சுப்பிறை** – இளம்பிறை.
**பிஞ்செழுத்து** – ஐந்தெழுத்தில் சத்தியைக் குறிக் கும் 'வ' என்னும் எழுத்து.
**பிஞ்சை** – இளங்காய்; மஞ்சள்.
**பிஞ்ஞகம்** – மகளிர் தலைக்கோலம்.
**பிஞ்ஞகன்** – அழிப்பவனான சிவன்.
**பிஞ்ஞை** – காண்க: **நப்பின்னை.**
**பிட்குதல்** – கத்துதல்.
**பிட்சாகாரம்** – பிச்சையுணவு.
**பிட்சாடனம்** – இரப்பு.
**பிட்சாடனன்** – சிவபிரான்.
**பிட்சாபாத்திரம்** – இரக்கப் பயன்படும் கலம்.
**பிட்சான்னம்** – காண்க: **பிச்சைச்சோறு.**
**பிட்டகம்** – பலகாரம்.
**பிட்டடித்தல்** – கால்கள் பிட்டத்திற்படக் குதித்தல்.
**பிட்டம்** – பரப்பு; பிசைந்த மா; பின்பக்கம்; இடுப்பின் பூட்டு; குண்டி; முதுகு.
**பிட்டன்** – மதத்திற்குப் புறம்பானவன்; ஆடு தின்னாப்பாளை.
**பிட்டி** – பருத்திருக்கை; சிறு கூடை; குழந்தை நோய்வகை; பின்பக்கம்; இடுப்பின் பூட்டு; குண்டி; முதுகு; அரைத்த மா; தரிசுநிலம்; குறைவு; தாழ்வு.
**பிட்டு** – சிற்றுண்டிவகை; தினை மா.
**பிட்டுக்காட்டுதல்** – கூறுபடுத்தி விளக்கிச் சொல்லுதல்; மறை வெளிப்படுத்துதல்.
**பிட்டுவம்** – அரைக்கை.
**பிட்டை** – வீங்கின அண்டம்.
**பிடகம்** – நூல்; கூடை; புத்தநூல்; கொப்புளம்; பிச்சை.

**பிடகன்** – திரிபிடக ஆசிரியனான புத்தன்; மருத்துவன்.
**பிடகாரி** – நஞ்சுமருத்துவன்.
**பிடகை** – பூந்தட்டு.
**பிடங்கு** – கத்தியின் முதுகு; ஆயுதங்களின் அடிப் பாகம்.
**பிடர்** – புறங்கழுத்து; செருக்கு; பெருமை.
**பிடர்த்தலை, பிடரி** – புறங்கழுத்து.
**பிடல்** – கதவு.
**பிடவம்** – குட்டிப்பிடவமரம்; மரக்கிளை.
**பிடவு, பிடா** – ஒரு மரவகை; குட்டிப்பிடவமரம்.
**பிடாகை** – உட்கிடையூர்.
**பிடாந்திரம்** – இல்லாப் பழி.
**பிடாம்** – போர்வை.
**பிடார்** – செருக்கு; பெருமை.
**பிடாரச்சொல்** – மருத்துவச்சொல்; புதிதாய் உண்டாக்கிய சொல்.
**பிடாரன்** – பாம்பு பிடிப்போன்; மருத்துவன்; குறவன்; இசை பாடுவோன்.
**பிடாரி** – ஓர் ஊர்த்தேவதை.
**பிடாரிச்சி** – குறப்பெண்.
**பிடி** – பற்றுகை; மனத்திற் பற்றுகை; நம்பிக்கை; மதக்கொள்கை; கைம்முட்டி; மற்பிடி; ஆயுதப் பிடி; குதிரையின் வாய்க்கருவியிற் கோக்குங் குசை; உபாயம்; உறுதி; உதவி; உள்ளங்கைப் பிடியளவு; பணியாரவகை; நான்கு விரல் கொண்ட ஓர் அளவு; பெண்யானை; பேய்; உலர்ந்தது; காண்க: ஏலம்; சீட்டாட்டத்தில் ஒருமுறை எடுக்கப்படும் சீட்டு.
**பிடிக்கட்டு** – பனையோலையின் சிறுகட்டு.
**பிடிக்கொம்பன்** – சிறுகொம்புள்ள விலங்கு.
**பிடிகம்** – பிள்ளைக் கைவளை.
**பிடிகயிறு** – மாடுகட்டுங் கயிறு.
**பிடிகாரன்** – மீன் பிடிப்பவன்; வேட்டையாடுவோன்.
**பிடிகை** – வண்டிவகை.
**பிடிகொடுத்தல்** – தான் பிடிபடும்படி நிற்றல்; பேச்சு முதலியவற்றில் அகப்படுதல்; இடித்தல்.
**பிடிச்சராவி** – கம்மாளர் கருவியுள் ஒன்று.
**பிடித்தபிடி** – விடாப்பிடி; பிடிவாதமான கொள்கை; பிடிவாதகுணம்.
**பிடித்தம்** – கழிவு; சிக்கனம்; மனப்பொருத்தம்; விருப்பம்.
**பிடித்தல்** – கைப்பற்றுதல்; வயப்படுத்துதல்; அகப்படுத்துதல்; கட்டுதல்; புகலடைதல்; அடைதல்; உட்கொள்ளுதல்; மேற்கொள்ளுதல்; தாங்குதல்; நிறுத்திக்கொள்ளுதல்; நிழற்படமெடுத்தல்; அபிநயம் முதலியன செய்து காட்டுதல்; பற்றிக்கொள்ளுதல்; தெரிதல்; விலைக்கு மொத்தமாகக் கொள்ளுதல்; பொருத்துதல்; உறுதியாகக் கொள்ளுதல்; குறிக்கொள்ளுதல்; சுளுக்குதல்; விதையடித்தல்; அழுத்தித்தடவுதல்; மூடிய கையளவு கொள்ளுதல்; ஒட்டிக்கொள்ளுதல்; பிரியமாதல்; ஏற்றதாதல்; செலவாதல்; நிகழ்தல்; அடங்குதல்.
**பிடித்தாடி** – பலகறை.
**பிடித்து** – கைப்பிடிப்பொருள்; தொடங்கி.
**பிடித்துக்கொள்ளுதல்** – சுளுக்குதல்.
**பிடிதம்** – பிச்சை.
**பிடிநாள்** – நல்ல நாள்.
**பிடிப்பிச்சை** – பிடியளவிடும் பிச்சை.
**பிடிப்பிட்டு** – சிற்றுண்டிவகை.
**பிடிப்பித்தல்** – விதையடித்தல், காயடித்தல்.
**பிடிப்பு** – பற்றுகை; ஒட்டுகை; வாயுப்பற்று; காண்க: **பிடித்தம்**; கருத்து; சேர்க்கப்பட்ட பொருள்; தளை; உறுதி; கைப்பிடி; கைகூடல்; ஆதாரம்.
**பிடிபடுதல்** – அகப்படுதல்; பிடிக்கப்படுதல்; புலப்படுதல்; அடைதல்; இணங்குதல்.
**பிடிபாடு** – பிடிக்கப்பட்டது; சேர்க்கப்பட்டது; ஆதாரம்; பற்று.
**பிடிபிடியெனல்** – விரைவுக்குறிப்பு.
**பிடிமானம்** – காண்க: **பிடித்தம்**; சேர்மானம்; உறுதி; கைப்பிடி.
**பிடியரிசி** – அறஞ்செய்யக் கைப்பிடியளவாக அள்ளிவைக்கும் அரிசி.
**பிடியல்** – சிறுதுகில்; நல்லாடை.
**பிடியாள்** – பிடித்தடைக்கப்பட்டவன்; அமஞ்சி வேலைக்காரன்; கூலிக்காக அமர்த்தப்பட்டவன்.
**பிடிவாதக்காரன்** – தான் கொண்டதை விடாது சாதிப்பவன்.
**பிடிவாதம்** – கொண்டதுவிடாமை; உறுதியுள்ள நிலை.
**பிடிவாதி** – காண்க: **பிடிவாதக்காரன்.**
**பிடிவிடுதல்** – கைப்பிடிப்பு விடுதல்; அன்பு நீங்குதல்.
**பிடுக்கு** – பீசம், விதை.
**பிடுகு** – இடி.
**பிடுங்கல்** – வலிந்து எடுக்கை; பொருள் பறித்தல்; தொந்தரவு; தொந்தரவு செய்பவர்.
**பிடுங்கித்தின்னுதல்** – கொத்தித்தின்னுதல்; கவர்ந்துண்ணுதல்; வருத்துதல்.
**பிடுங்கிவிடுதல்** – வருத்துதல்; ஓடிப்போதல்.
**பிடுங்குதல்** – பறித்தல்; கவர்தல்; தடையை அடித்துக்கொண்டு விரைந்து செல்லுதல்; கொத்துதல்; வருத்துதல்; மிகுதியாதல்; தொல்லைகொடுத்தல்.

**பிடை** – குகை.
**பிண்டக்காப்பு** – சோறு.
**பிண்டகருமம்** – பிண்டம் வைத்துப் பிதிரர்க்குச் செய்யும் சடங்கு.
**பிண்டசூத்திரம்** – தலைமைப் பொருளைப் பொதுப்படக் கூறும் சூத்திரம்.
**பிண்டதன்** – தாயாதி; பந்து; உதவுபவன்.
**பிண்டதானம், பிண்டப்பிரதானம்** – பிதிரர்களுக்குப் பிண்டமளிக்கை.
**பிண்டப்பொருள்** – கருத்து.
**பிண்டபுட்பம்** – அசோகமரம்; காண்க: **செவ்வந்தி.**
**பிண்டம்** – உண்டை; உருவற்ற கரு; உடல்; சோற்றுத்திரள்; பிதிரர் பொருட்டுக் கொடுக்கப்படுஞ் சோற்றுருண்டை; தொகுதி; காண்க: **பிண்டசூத்திரம்;** சூத்திரம், ஓத்து, படலம் என்னும் மூன்றுறுப்புக் கொண்ட நூல்.
**பிண்டம்பிடித்தல்** – உருண்டையாக்குதல்; படைத்தல்; உருச்சிதைத்து உருண்டையாக்குதல்; கரு உண்டாதல்.
**பிண்டம்விழுதல்** – கருச்சிதைவு.
**பிண்டவுரை** – பொழிப்புரை.
**பிண்டாண்டம்** – பிண்டமும் அண்டமும்.
**பிண்டாரன்** – இடையன்; இரவலன்.
**பிண்டாரி** – கொள்ளைக்காரன்.
**பிண்டி** – நுண்ணிய பொடி; காண்க: **பிண்ணாக்கு;** வடிவம்; கூட்டம்; புனர்பூசநாள்; இணையா வினைக்கைவகை; அசோகமரம்.
**பிண்டிக்கை** – இணையா வினைக்கைவகை.
**பிண்டிகரணம்** – தொகுக்கப்பட்டது.
**பிண்டிகை** – இருக்கை; கடிவாளம்.
**பிண்டித்தல்** – திரளையாக்குதல்; தொகுத்தல்; திரளுதல்.
**பிண்டிப்பகவன்** – அருகன்.
**பிண்டிப்பாலம்** – எறியாயுதம்.
**பிண்டியார்** – சமணர்.
**பிண்டியான், பிண்டிவாமன்** – அருகக்கடவுள்.
**பிண்டிவாலம்** – எறியாயுதம்.
**பிண்டீகரணம்** – உருண்டையாக்கல்; திரட்டப்பட்டது.
**பிண்டு** – உடல்.
**பிண்டோதகம்** – பிதிரர்க்கு அளிக்கப்படும் நீர்க்கடன்.
**பிண்ணாக்கு** – எள்ளு, கடலை முதலியவற்றின் எண்ணெய் நீக்கிய சக்கை; காண்க: **எள்ளுப் பிண்ணாக்கு.**
**பிண்ணாக்குமூடன்** – முழுமூடன்.
**பிணக்கட்டில்** – பாடை.
**பிணக்கம்** – மாறுபாடு; ஊடல்; நெருக்கடி; பின்னுகை.
**பிணக்கன்** – மாறுபாடுள்ளவன்.
**பிணக்காடு** – சுடுகாடு; போர்க்களம்.
**பிணக்கு** – காண்க: **பிணக்கம்;** தூறு.
**பிணக்கோலம்** – பிணத்தை அலங்கரிக்கை; பிணம் போல் தோற்றுகை.
**பிணங்குதல்** – மாறுபடுதல்; ஊடுதல்; செறிதல்; பின்னுதல்.
**பிணந்தின்னி** – பிணந்தின்போன்; பிறரைத் துன்புறுத்துவோன்.
**பிணநாற்றம்** – பிணத்தின் கொடிய தீநாற்றம்.
**பிணநெஞ்சு** – உணர்ச்சியற்ற மனம்.
**பிணப்பறை** – சாப்பறை.
**பிணம்** – சவம்; பிசாசம்.
**பிணர்** – சருச்சரை; கோங்கிலவுமரம்.
**பிணவல்** – பன்றி, நாய், மான் முதலியவற்றின் பெட்டை.
**பிணவு** – பெண்.
**பிணன்** – காண்க: **பிணம்.**
**பிணா** – காண்க: **பிணவு.**
**பிணாப்பிள்ளை** – பெண்பிள்ளை.
**பிணாரம்** – பருமனுள்ளது; விலங்கின் பருமன்.
**பிணி** – நோய்; கட்டுகை; கட்டு; பற்று; பின்னல்; அரும்பு; துன்பம்; நெசவுத்தறியின் நூற்படை.
**பிணி** (வி) – கட்டு, பிணிஎன் ஏவல்.
**பிணிக்குறை** – குழந்தைகட்கு நோயை உண்டாக்கும் பேய்க்கோள்.
**பிணிகை** – கச்சு.
**பிணித்தல்** – சேர்த்துக்கட்டுதல்; வயப்படுத்துதல்.
**பிணித்தோர்** – நோயாளிகள்.
**பிணிதல்** – சாதல்.
**பிணிதெறித்தல்** – நோய் குணமாகத் தொடங்குகை.
**பிணிப்பு** – கட்டுகை; கட்டு; பற்று.
**பிணிமுகம்** – மயில்; பறவை; அன்னம்; முருகக் கடவுளின் யானை.
**பிணியகம்** – காவலிடம்.
**பிணியன், பிணியாளன், பிணியாளி** – நோய்வாய்ப்பட்டவன்.
**பிணியோலை** – பிள்ளைகளின் இடுப்பில் எழுதிக் கட்டும் இரட்சையோலை.
**பிணிவீடு** – இடையூறு நீங்குகை.
**பிணுக்கன்** – மாறுபட்ட கொள்கையினன்.
**பிணை** – இணைக்கப்படுகை; உடன்பாடு; பொருத்து; கட்டு; உத்தரவாதம்; விலங்குகளின் பெண்; பெண்மான்; பூமாலை; புறந்தருகை; விருப்பம்; தெப்பம்.
**பிணை** (வி) – பிணையிடு; கட்டு.

**பிணைச்சு** – புணர்ச்சி.

**பிணைசொல்லுதல்** – பிறருக்காகப் பொறுப்பு ஏற்றல்.

**பிணைத்தல்** – இணைத்தல்; கட்டுதல்; கைகோத்தல்.

**பிணைதல்** – சேர்தல்; செறிதல்; புணர்தல்.

**பிணைப்படுதல்** – காண்க: **பிணைபோதல்.**

**பிணைப்பு** – இணைப்பு, சேர்க்கை.

**பிணைபோதல்** – பொறுப்பு ஏற்றுக்கொள்ளுதல்.

**பிணைமாடு** – இணைக்கப்பட்ட மாடுகள்.

**பிணையடித்தல்** – கதிரடிக்க எருதுகளைப் பிணைத்தோட்டுதல்.

**பிணையல்** – ஒன்றுசேர்த்தல்; மலர்மாலை; பிணைமாடு; கதவின் கீல்; புணர்ச்சி; காண்க: **இணைக்கை.**

**பிணையற்கை** – காண்க: **இணைக்கை.**

**பிணையன்மாலை** – மலர்மாலை.

**பிணையாளி** – பிறருக்காகப் பொறுப்பு ஏற்பவன்.

**பிணையிலி** – தக்கோரால் பேணப்படாதவர்.

**பிணைவு** – இணைவு; புணர்ச்சி.

**பித்தக்கட்டி** – ஈரற்குலை நோய்வகை.

**பித்தக்காங்கை** – பித்தத்தால் உண்டாகும் சூடு.

**பித்தக்காசம்** – ஒரு காசநோய்வகை.

**பித்தக்காமாலை** – காமாலை நோய்வகை.

**பித்தக்காய்ச்சல்** – பித்தத்தினால் வரும் நோய்வகை.

**பித்தசாந்தி** – பித்தந் தணிக்கும் மருந்து; காண்க: **பொன்னாங்காணி.**

**பித்தசுரம்** – காண்க: **பித்தக்காய்ச்சல்.**

**பித்தசூடு** – காண்க: **பித்தக்காங்கை.**

**பித்தசோகை** – சோகைநோய்வகை.

**பித்தநாடி** – பித்தநிலையைக் குறிக்கும் நாடி.

**பித்தப்பை** – பித்தநீர் தங்கும் கல்லீரல்.

**பித்தம்** – ஈரலிலிருந்து தோன்றும் நீர்வகை; பித்தம் என்னும் பிணிக்கூறு; மயக்கம்; பைத்தியம்; கூத்தின்வகை; மிளகு; மண்வெட்டிக் கழுத்து.

**பித்தமயக்கம்** – தலைக்கிறுகிறுப்பு; மயக்கநோய்.

**பித்தமேலீடு** – பித்தம் அதிகமாக உண்டாதல்.

**பித்தல்** – நினைவு மாறுபட்டுக் குழறுகை; மண்வெட்டிக் கழுத்து; விளிம்பு.

**பித்தலாட்டம், பித்தலாடகம்** – ஒன்றை மற்றொன்றாய்க் காட்டி வஞ்சிக்கை.

**பித்தவாயு** – குன்மநோய்வகை; கிறுகிறுப்பு நோய்வகை; ஈரல்நோய்வகை.

**பித்தவெடிப்பு** – பித்தத்தினால் காலில் உண்டாகும் பிளப்பு.

**பித்தவெரிவு** – பித்தத்தால் எரிச்சல் உண்டாக்கும் நோய்வகை.

**பித்தளை** – செம்பு, துத்தநாக மிவற்றின் கலப்பு.

**பித்தளையாடகம்** – காண்க: **பித்தலாட்டம்.**

**பித்தன்** – சிவன்; பைத்தியக்காரன்; மூடன்; கள்வன்.

**பித்தாசயம்** – காண்க: **பித்தப்பை.**

**பித்தாதிக்கம், பித்தாதிகாரம்** – பித்தம் அதிகமாக உண்டாதல்.

**பித்தி** – சுவர்; பங்கு; பித்தம்; பின்பக்கம்; காண்க: **சாதிமல்லிகை**; பைத்தியக்காரி.

**பித்திகம்** – காண்க: **சாதிமல்லிகை**; சிறுசண்பகம்.

**பித்திகை** – சுவர்; அண்டச்சுவர்; காண்க: **சாதிமல்லிகை**; சிறுசண்பகம்.

**பித்து** – பித்தநீர்; பைத்தியம்; அறியாமை; மிக்க ஈடுபாடு.

**பித்துக்கொள்ளி** – பைத்தியம் பிடித்தவர்.

**பித்துப்பிடித்தல்** – பைத்தியமாதல்.

**பித்தேறி** – பைத்தியங்கொண்டவர்.

**பித்தை** – மக்கள் தலைமயிர்.

**பித்தோன்மதம்** – பைத்தியவெறி.

**பிதக்குதல்** – நசுங்குதல்.

**பிதகம்** – இடி.

**பிதளை** – எண்ணெய்ப் பாண்டம்.

**பிதற்றர்** – பிதற்றுவோர்.

**பிதற்று** – அறிவின்றிப் பேசும் பேச்சு.

**பிதற்றுதல்** – அறிவின்றிக் குழறுதல்; உணர்வின்றி விடாதுபேசுதல்.

**பிதா** – தந்தை; கடவுள்; பிரமன்; சிவன்; அருகன்; காண்க: **பெருநாரை.**

**பிதாமகன்** – தந்தையைப் பெற்ற பாட்டன்; பிரமன்.

**பிதாமகி** – தந்தையைப் பெற்ற பாட்டி.

**பிதி** – காண்க: **பிதகம்.**

**பிதிகாரம்** – கழுவாய், பரிகாரம்.

**பிதிர்** – பூந்தாது; பொடி; திவலை; துண்டம்; பொறி; காலநுட்பம்; கைந்நொடி; விடுகதை; வியத்தகு செயல்; சேறு; தந்தை; யமலோகத்தில் வாழும் தேவசாதியார்; இறந்த பெற்றோர் முதலியோரின் ஆன்மா.

**பிதிர்** (வி) – பிதுங்கச்செய்.

**பிதிர்க்கடன்** – இறந்தவர்க்குச் செய்யும் கடன்.

**பிதிர்கருமம்** – தந்தைக்குச் செய்யும் ஈமக்கடன்.

**பிதிர்த்தல்** – சொரிவித்தல்; உதிர்த்தல்.

**பிதிர்தல்** – உதிர்தல்; சிதறுதல்; கிழிதல்; பரத்தல்; மனங்கலங்குதல்.

**பிதிர்திதி** – ஆண்டுதோறும் தந்தை இறந்த நாளில் செய்யும் சடங்கு; அமாவாசை.

**பிதிர்தேவர்** – தென்புலத்தார்.

**பிதிர்ந்த** – பிளந்த.

**பிதிர்நாள்** – அமாவாசைபோன்ற பிதிர்க்கடன்கள் செய்தற்குரிய நாள்கள்; மகநாள்.

**பிதிர்பதி** – பிதிரர்களின் தலைவனான யமன்.
**பிதிர்பிண்டம்** – இறந்தோர்க்கிடும் அமுது.
**பிதிர்பிதிர்** – தந்தையைப் பெற்ற பாட்டன்.
**பிதிர்யானம்** – புண்ணியசீலர் தேவலோகத்திற்கு ஏறிச்செல்லும் வானூர்தி.
**பிதிர்வழி** – தந்தைவழி; முன்னோர்வழி.
**பிதிர்வனம்** – சுடுகாடு.
**பிதிர்வனேசுரன்** – சிவபிரான்.
**பிதிரர்** – யமலோகத்தில் வாழும் ஒரு தேவ சாதியார்.
**பிதிரார்ச்சிதம்** – தந்தைவழி முன்னோர் தேடிய சொத்து.
**பிதிருலகம்** – பிதிர்தேவதைகள் வாழும் உலகம்.
**பிதிவி** – ஊழியன்.
**பிது** – பெருமை; தந்தை.
**பிதுக்கம்** – பிதுங்குகை; பிதுங்கியிருக்கும் பாகம்; பிதுக்கப்பட்டது; அண்டவாதம்.
**பிதுக்குதல்** – பிதுங்கச் செய்தல்; உப்பும்படி செய்தல்.
**பிதுங்குதல்** – அமுக்குதலால் உள்ளீடு வெளிக் கிளம்புதல்; சுவரிற் செங்கல் வெளிநீண்டிருத் தல்.
**பிதுர்** – தந்தை; இறந்த பெற்றோர் முதலி யோரின் ஆன்மா; காண்க: **பிதிரர்**.
**பிதுரம்** – காண்க: **பிதகம்**.
**பிதுரு** – காண்க: **பிதுர்**.
**பிந்தியாகாலம்** – சாயங்காலம்.
**பிந்து** – விந்து, சுக்கிலம்; துளி; புள்ளி; சத்தி தத்துவம்.
**பிந்துதல்** – பின்னிடுதல்; தாழ்தல்; விரைவு குறைதல்.
**பிப்பலகம்** – முலைக்காம்பு.
**பிப்பலம்** – அரசமரம்; நீர்; புள்வகை.
**பிப்ப(பி)லி** – காண்க: **திப்பிலி**.
**பிப்பலிகை** – அரசமரம்.
**பிபீலி** – காண்க: **பிபீலிகை**.
**பிபீலிகாவாதம்** – எறும்பு முதலியவற்றின் பேச்சை உணரும் அறிவு.
**பிபீலிகை** – எறும்பு.
**பிம்பம்** – உருவம்; எதிரொளிக்கும் மூலப்பொருள்; பிரதிமை; கோவைக்கனி.
**பிம்பி** – கோவைக்கொடி.
**பிய்த்தல்** – கிழித்தல்; வேறாகும்படி பிரித்தல்; பஞ்சு முதலியன பன்னுதல்; இலை முதலிய வற்றைச் சிதைத்தல்; பிடுங்குதல்; ஊடறுத் தல்; வருத்துதல்.
**பிய்த்துக்காட்டுதல்** – விளங்கும்படி தனித்தனி எடுத்துக்காட்டிச் சொல்லுதல்.
**பிய்தல்** – கிழிதல்; பிரிந்துபோதல்; ஊடறுதல்; சிதைவுறுதல்; பஞ்சு முதலியன பன்னப் பெறுதல்.
**பியந்தை** – மருதப்பண்வகை.
**பியல்** – பிடர்.
**பிரக்கியம்** – அறிவு.
**பிரக்கியாதம்** – கீர்த்தி, புகழ்; வெளிப்படை யானது.
**பிரக்கியாதி** – புகழ்; வெளிப்படை.
**பிரக்கிரமம்** – தொடக்கம்.
**பிரக்கினை** – உணர்வு; அறிவு.
**பிரகடம்** – வெளிப்படுத்துகை.
**பிரகடனம்** – வெளியீடு; விளம்பரம்.
**பிரகதி** – கத்தரிச்செடி; காண்க: **கண்டங்கத்தரி**; தும்புருவின் வீணை.
**பிரகரணப்பிரகணம்** – அறம், பொருள், இன்பம் இவற்றைப் பொருளாகக்கொண்ட நாடக வகை.
**பிரகரணம்** – சமயம்; அத்தியாயம்; வாய்ப்பு; ரூபகம் பத்தனுள் ஒன்று; அறம், பொருள் இவற்றைப் பொருளாகக்கொண்ட நாடக வகை.
**பிரகலை** – கீதவுறுப்புள் ஒன்று.
**பிரகாசத்தி** – அப்பிரகம்.
**பிரகாசம்** – ஒளி; வெயில்; புகழ்; குணம்.
**பிரகாசனம்** – ஒளி; விரித்துவிளக்குகை; வெளிப் படுத்துகை.
**பிரகாசித்தல்** – ஒளிசெய்தல்; மேன்மையடைதல்; அறிவுநிறைதல்; விரிவாய்க் கூறுதல்.
**பிரகாரம்** – தன்மை; விதம்; ஒப்பு; வகுப்பு.
**பிரகிருதி** – பகுதி; இயல்பு; மூலம்; மூலப்பகுதி; குடி.
**பிரச்சினை** – கேள்வி; சிக்கல்.
**பிரசங்கம்** – வெளிப்படுத்துகை; சொற்பொழிவு.
**பிரசங்கி** – சொற்பொழிவாளர்.
**பிரசங்கித்தல்** – விரித்துப் பொருளுரைத்தல்; விளம்பரப்படுத்துதல்; குறிப்பிட்டுச் சொல்லு தல்.
**பிரசண்டம்** – வேகம்; வீரம்; கடுமை.
**பிரசண்டன்** – வலியன்; வீரன்; கடுமையானவன்.
**பிரசத்தி** – தக்க சமயம்; சாசனம்.
**பிரசம்** – பூந்தாது; தேன்; தேனிறால்; கள்; தேனீ; வண்டு.
**பிரசம்சை** – புகழ்ச்சி.
**பிரசலை** – மனக்கலக்கம்.
**பிரசவசன்னி** – மகப்பேற்றுக்குப்பின் காணுஞ் சன்னிநோய்வகை; ஈன்ற பிறகு பசுவுக்கு உண் டாகும் நோய்வகை.
**பிரசவப்பெரும்பாடு** – மகப்பேற்றின் பின்னர்ச் சூதகம் மிகுதியாய் வெளிப்படுகை.

**பிரசவம்** – மகப்பேறு.
**பிரசவமாதல்** – மகப்பெறுதல்.
**பிரசவவலி** – காண்க: **பிரசவவேதனை; பிரசவ சன்னி.**
**பிரசவவேதனை** – மகப்பேறு நிகழ்வதற்கு உண்டாகும் நோவு.
**பிரசவித்தல்** – பிள்ளைபெறுதல், ஈனுதல்.
**பிரசன்னம்** – தெளிவு; கடவுள், பெரியோர் முதலியோரின் காட்சி; மகிழ்ச்சி.
**பிரசன்னமுகம்** – மலர்ந்த முகம்.
**பிரசன்னன்** – காட்சியருளுபவன்.
**பிரசாதப்படுதல்** – உண்ணுதல்; திருவாணை ஏற்றல்.
**பிரசாதம்** – தெளிவு; திருவருள்; கடவுளுக்குப் படைக்கப்படும் உணவு; சோறு.
**பிரசாதித்தல்** – திருவருள் புரிந்து உதவுதல்.
**பிரசாதிபத்தியம்** – மக்களாட்சி.
**பிரசாபத்தியம்** – எண்வகை மணத்துள் ஒன்று, மகள் கொள்ளுதற்குரிய குலத்தார் கொடுத்த பரிசத்து இரட்டித் தம் மகட்கு ஈந்து கொடுக்கும் மணவகை; மக்களாட்சி.
**பிரசாபதி** – பிரமன்; துணைப்பிரமன்; அரசன்; ஆண்குறி; காண்க: **பிரசோற்பத்தி.**
**பிரசாரம்** – பரவுகை; பரவச்செய்கை; வேங்கை மரம்.
**பிரசித்தம்** – அறிவிப்பு; வெளிப்படை; புகழ்; நன்கு அறியப்பட்ட நிலை.
**பிரசித்தி** – புகழ்.
**பிரசினம், பிரசினை** – கேள்வி; சிக்கல்; உபநிடதத்துள் ஒன்று.
**பிரசுரம்** – அறிவிப்பு; நூற்பதிப்பு; மிகுதி.
**பிரசுரன்** – மிக்கவன்; சுக்கிரன்.
**பிரசூதம்** – காண்க: **பிரசவமாதல்.**
**பிரசூதவாயு** – கருப்பவாயு.
**பிரசூனம்** – பூ.
**பிரசை** – குடி; சந்ததி; வெருகன்கிழங்கு.
**பிரசோற்பத்தி** – அறுபதாண்டுக்கணக்கில் ஐந்தாம் ஆண்டு; மக்கட்பெருக்கம்.
**பிரஞ்ஞன்** – அறிஞன்.
**பிரஞ்ஞாபங்கம்** – அறிவுக்கேடு.
**பிரஞ்ஞானம்** – அறிவு.
**பிரஞ்ஞை** – அறிவு; நிறையறிவு; முன் நிகழ்ந்ததை அறியும் அறிவு.
**பிரட்சாளனம்** – நீரால் கழுவுதல்.
**பிரட்டம்** – முதன்மையானது; தள்ளுண்டது; பொரித்தது.
**பிரட்டன்** – நன்னெறியினின்று தவறியவன்; வஞ்சகன்.
**பிரட்டு** – காண்க: **புரட்டு.**
**பிரடை** – யாழ் முதலியவற்றின் முறுக்காணி; முறுக்காணி வில்லை.
**பிரண்டை** – ஒரு கொடிவகை.
**பிரணயகலகம்** – ஊடல்.
**பிரணயம்** – அன்பு.
**பிரணவம்** – ஓங்கார மந்திரம்.
**பிரணாமம்** – கடவுள் அல்லது பெரியோர்முன் செய்யும் வணக்கம்.
**பிரத்தம்** – பத்துப் பதார்த்தங்கொண்ட ஒரு நிறை; அளவுநாழி; பிரமாதம்.
**பிரத்தல்** – எழுத்திலா ஒலி.
**பிரத்தியக்கம்** – காண்க: **பிரத்தியட்சம்.**
**பிரத்தியக்கவிருத்தம்** – காட்சிக்கு மாறுபட்டது.
**பிரத்தியக்கு** – மேற்கு.
**பிரத்தியட்சம், பிரத்தியம்** – காட்சி; அளவை ஆறனுள் காட்சியளவை.
**பிரத்தியயம்** – விகுதி முதலிய இடைச்சொல்.
**பிரத்தியருத்தம்** – எதிருரை, மறுமொழி.
**பிரத்தியாலீடம்** – வில்லோர் நிலை நான்கனுள் இடக்கால் முந்துற வலக்கால் பின்னுற வைக்கும் நிலை.
**பிரத்தியேகம்** – தனிமை; சிறப்பியல்பு.
**பிரதக்கணம், பிரதட்சிணம்** – வலம்வருதல்.
**பிரதமகாலம்** – விடியற்காலம்.
**பிரதமம்** – முதன்மை; தொடக்கம்.
**பிரதமர்** – தலைமை அமைச்சர்.
**பிரதமவிசாரணை** – தொடக்கத்திற் செய்யும் விசாரணை.
**பிரதமை** – முதல் திதி; கடுக்காய்.
**பிரதரம்** – பெரும்பாடு.
**பிரதனம், பிரதனை** – படையிலொரு தொகை.
**பிரதாபம்** – வீரம்; பெருமை; புகழ்; ஒளி.
**பிரதானகோயில்** – முதன்மைத் தெய்வம் உள்ள கோயில்; கிறித்தவர்களின் தலைமைக் கோயில்.
**பிரதானம்** – பிரகிருதி தத்துவம்; தலைமைப் பொருள்; முக்கியம்; கொடுப்பது.
**பிரதானமடித்தல்** – தற்பெருமை கொண்டாடுதல்.
**பிரதானன்** – தலைமையானவன்; அரசியல் செயல்கள் அனைத்தையும் நடத்துபவன்.
**பிரதானி** – அமைச்சர்.
**பிரதானிக்கம்** – கருவூலத் தலைமை; அமைச்சகம்.
**பிரதானை** – பார்வதி.
**பிரதி** – ஒத்த தன்மை; பதில்; விடை; படி, நகல்; நூற்படி; மாறு; போட்டி; பிரதிவாதி; ஒவ்வொரு.
**பிரதிக்கிரகம்** – கொடைபெறுதல்; சேனையின் பின்பகுதி.

**பிரதிக்கினை** – துணிந்த பொருள்; நேர்த்திக் கடன்; சூளுரை; சம்மதி; தீர்மானம்; அனுமான உறுப்புகளில் சாதிக்கவேண்டிய பொருள்; பாவம் நீங்க அவற்றைக் குருவிடம் தெரிவிக்கை.

**பிரதிகருமம்** – செய்தததற்கு மாறுசெய்கை; அலங்கரிக்கை.

**பிரதிகு(கூ)லம்** – தீமை; தடை; கைகூடாமை.

**பிரதிகூலியம்** – தடை.

**பிரதிச்சீட்டு** – எதிர்ச்சீட்டு; நகல்.

**பிரதிசாபம்** – எதிர்ச்சபிப்பு.

**பிரதிசாயை** – காண்க: **பிரதிபிம்பம்.**

**பிரதிசிகுவை** – உள்நாக்கு.

**பிரதிஞ்ஞை** – காண்க: **பிரதிக்கினை.**

**பிரதிட்டாகலை** – சீவான்மாவை முத்தியில் உய்க்குங் கலை.

**பிரதிட்டை** – தெய்வத்தைப் புதுக்கோயிலில் வைத்தல்; நிலைநிறுத்துகை; புகழ்; காண்க: **பிரதிட்டாகலை.**

**பிரதிதானம்** – கைம்மாறு, பிற்பயன் கருதி உதவுங் கொடை; பண்டங்கட்கு விலையாகக் கொடுக்கப்பட்ட பொருள்.

**பிரதிதொனி** – எதிரொலி.

**பிரதிநிதி** – பதில் ஆள்; காலத்தின் தகுதிநோக்கி ஒரு செயலைச் செய்தற்கும் ஒழிதற்கும் உரிமையுள்ள அமைச்சர்.

**பிரதிப்பிரயோசனம்** – காண்க: **பிரதிபலன்.**

**பிரதிபத்தி** – சிறப்பு; மதிப்பு; நம்பிக்கை.

**பிரதிபதம்** – பரியாயச்சொல்; பதவுரை.

**பிரதிபந்தகம், பிரதிபந்தம்** } – தடை.

**பிரதிபலன்** – கைம்மாறு.

**பிரதிபலனம்** – காண்க: **பிரதிபிம்பம்.**

**பிரதிபலித்தல்** – உருவம் தோன்றுதல்.

**பிரதிபாத்தியம்** – எடுத்து விளக்கப்படுவது.

**பிரதிபாதக(ன)ம்** – எடுத்து விளக்குகை.

**பிரதிபாதித்தல்** – எடுத்து விளக்குதல்.

**பிரதிபிம்பம்** – எதிருருவம், கண்ணாடி முதலியவற்றில் தோன்றும் போலியுரு.

**பிரதிபேதம்** – பாடவேறுபாடு.

**பிரதிபை** – புதிதுபுதிதாய்ப் பொருளை ஆராய்ந்து காணும் அறிவு.

**பிரதிமண்டலம்** – சுற்றளவு; கோணவட்டம்.

**பிரதிமாலை** – ஈற்றெழுத்துக் கவி.

**பிரதிமானம்** – யானைக்கொம்புகளுக்கு நடுவிலுள்ள முகப்பகுதி.

**பிரதிமுகம்** – நாடகச்சந்தி ஐந்தனுள் முளைத்து இலைதோன்றி நாற்றாய் முடிவதுபோல நாடகப்பொருள் நிற்பது.

**பிரதிமை** – உருவம்; ஒத்த வடிவம்; உருவச் சிலை.

**பிரதிவாதி** – எதிர்வழக்காடி, வாதத்தில் எதிராளி.

**பிரதீகம்** – உறுப்பு.

**பிரதீசி** – மேற்கு.

**பிரதீபம்** – எதிர்நிலை; காண்க: **எதிர்நிலையணி.**

**பிரதேசம்** – நாட்டுப் பகுதி; இடம்; நாடு; வேற்று நாடு.

**பிரப்பு** – குறுணிவீதம் கொள்கலங்களில் பரப்பி வைக்கும் படையற்பொருள்; குறுணி அளவைக் கொள்ளும் பாண்டம்.

**பிரபஞ்சம்** – உலகம்; உலகவாழ்வு; உலகியல்.

**பிரபஞ்சமாயை** – உலகமாயை; மூலப்பகுதி, பிரகிருதி; உலகப் பொருள்களின் போலித் தோற்றம்.

**பிரபஞ்சமூலம்** – மூலப்பிரகிருதி.

**பிரபஞ்சவாசனை** – உலகத்தின் இன்பதுன்ப நுகர்வு.

**பிரபஞ்சவாழ்வு** – உலகவாழ்க்கை.

**பிரபஞ்சவியாபாரம்** – உலகியற் செயல்.

**பிரபஞ்சவிருத்தி** – உலகச் செய்கை; மாயா காரியம்.

**பிரபஞ்சவைராக்கியம்** – உலக வாழ்க்கையில் உண்டாகும் வெறுப்பு.

**பிரபஞ்சனன்** – காற்று.

**பிரபத்தி** – அடைக்கலம் அடைகை.

**பிரபந்தம்** – சிறுநூல்; தொடர்பு; பாமாலை; தொண்ணூற்றாறு வகைப்பட்ட நூல்; இசையுரு; கட்டுரை.

**பிரபல்லியம், பிரபலம்** } – புகழ்; வல்லமை; வலிவுள்ளது.

**பிரபலன்** – புகழ்பெற்றவன்.

**பிரபவ** – அறுபதாண்டுக் கணக்கில் முதலாம் ஆண்டு.

**பிரபாகரன்** – சூரியன்; அக்கினிதேவன்; சந்திரன்; மீமாம்சா மதவகையைப் பரப்பிய ஆசிரியன்.

**பிரபாகீடம்** – மின்மினி.

**பிரபாதம்** – செங்குத்து; மலைவீழருவி; விடியற் காலை; கரை; தெரு.

**பிரபாதிகம்** – மயில்.

**பிரபாவம்** – ஒளி; புகழ்; மேன்மை; வலிமை.

**பிரபிதாமகன்** – கொள்ளுப்பாட்டன்.

**பிரபிதாமகி** – கொள்ளுப்பாட்டி.

**பிரபு** – பெருமையிற் சிறந்தவன்; அதிகாரி; கொடையாளி; செல்வன்; பாதரசம்.

**பிரபுத்தன்** – விழிப்புடனிருப்பவன்; இளைஞன்.

**பிரபுத்துவம்** – பிரபுவின் தன்மை; ஆட்சி.

**பிரபை** – ஒளி; தண்ணீர்ப்பந்தல்; திருவாசி; துர்க்கை.

**பிரபோதம்** – பேரறிவு.
**பிரம்படி** – பிரம்பினால் அடிக்கும் தண்டனை.
**பிரம்படிக்காரர்** – பிரம்புகொண்டு தண்டிக்கும் அரசனின் ஏவலாளர்.
**பிரம்பு** – கொடிவகை; மூங்கில்; தேர்முட்டி; வரப்பு; கடல்; நெய்.
**பிரம்புகட்டுதல்** – பாத்திரங்கட்கு விளிம்பிலே வளையங்கட்டுதல்.
**பிரம்புத்தடுக்கு** – பிரம்பினாற் செய்த தட்டி.
**பிரம்மசூத்திரம்** – வேதாந்த சூத்திரம்.
**பிரமக்கியானம்** – காண்க: **பிரமஞானம்.**
**பிரமக்கிழத்தி** – இறைவனது சத்தி.
**பிரமக்கொலை, பிரமகத்தி** – பார்ப்பனக்கொலை; பார்ப்பனக் கொலைப்பாவம்; பிரமகத்தி செய்தோனைத் தொடர்ந்துவரும் இறந்தவன் உருவம்.
**பிரமகற்பம்** – பிரமனின் ஆயுட்காலம்; ஒரு பேரெண்.
**பிரமகன்னிகை** – கலைமகள்.
**பிரமகாதகன்** – பார்ப்பனனைக் கொன்றவன்.
**பிரமகாயத்திரி** – பார்ப்பனர் நாள்தோறும் ஓதும் மந்திரவகை.
**பிரமகுலம்** – பார்ப்பனச்சாதி.
**பிரமகூர்ச்சம்** – தருப்பைமுடிச்சு; பசுவிடம் கிடைக்கும் ஐந்து பொருள்கள்.
**பிரமசரியம்** – மாணவம், ஆசிரியனிடம் கற்று விரதங்காக்கும் நிலை; திருமணமில்லா வாழ்க்கை; தவம்; பார்ப்பனர்.
**பிரமசாரி** – திருமணமாகாதவன்; மாணவன், ஓதுதலும் விரதங்காத்தலும் ஆகிய நியமங்களை மேற்கொண்டொழுகுபவன்; வீடுமர்.
**பிரமசைதன்னியம்** – அறிவுவடிவான கடவுள்; காண்க: **பிரமஞானம்.**
**பிரமஞானம்** – கடவுளைப்பற்றிய அறிவு; எல்லாவற்றையும் பிரமமாகக் காணும் அறிவு; சமய சமரச மதம்.
**பிரமஞானி** – கடவுளை அறிந்தவன்; பிரும்ம ஞான மதத்தைச் சார்ந்தவன்.
**பிரமணம்** – சுழலுகை; திரிகை; மயக்கம்.
**பிரமத்துவம்** – கடவுள் தன்மை.
**பிரமதகணம்** – சிவகணம்.
**பிரமதண்டம்** – மந்திர ஆயுதவகை; யோக தண்டம்; நற்செயல்கட்கு உதவாத நட்சத்திரம்.
**பிரமதத்துவம்** – இறைவனது உண்மை இயல்பு.
**பிரமதர்** – காண்க: **பிரமதகணம்.**
**பிரமதனம்** – கடைகை; கொலை.
**பிரமதாயம்** – பார்ப்பனர்களுக்கு விடப்படும் இறையிலிநிலம்.
**பிரமதாளம்** – சச்சரிப்பறைவகை.
**பிரமதேயம்** – பார்ப்பனருக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட ஊர்.
**பிரமதேவன்** – படைப்புக்குரியவனாகிய பிரமன்.
**பிரமநாடி** – காண்க: சுழுமுனை.
**பிரமநாதை** – தாம்பிரபரணியாறு.
**பிரமநிருவாணம்** – கடவுளுடன் ஒன்றியிருத்தல்.
**பிரமப்பொழுது** – சூரியோதயத்துக்கு இரண்டு நாழிகைக்கு முன்னுள்ள இரண்டு நாழிகை நேரம்.
**பிரமபத்திரம், பிரமபத்திரி** – புகையிலை.
**பிரமபதம் (வி)** – பிரமலோகம்; பிரமனது நிலை.
**பிரமபாவனை** – தன்னைப் பிரமமாகப் பாவிக்கை.
**பிரமபுரம்** – சீகாழிநகரம்; காஞ்சிபுரம்.
**பிரமம்** – முழுமுதற்பொருள்; பிரமன்; திருமால்; சிவன்; சூரியன்; சந்திரன்; அக்கினி; முனிவன்; வேதம்; தெய்விகம்; தத்துவம்; தவம்; மந்திரம்; வீடுபேறு; மாணவம், பிரமசரியம்; ஞானம்; ஒழுக்கம்; பிரமசரிய விரதங்காத்தவனுக்குக் கன்னியைத் தானமாகத் தருதல்; நடு; சிட்சை; வீணைவகை; ஆடு; கலக்கம்; சுழல்காற்று; துரிதம்; தவறு; மாயை; தண்டசக்கரம்.
**பிரமமணம்** – பிரமசாரிக்குக் கன்னியைத் தீ முன்னர்க் கொடுக்கும் மணம்.
**பிரமயாகம்** – வேதமோதல்.
**பிரமரகசியம்** – அதிரகசியம்.
**பிரமரந்திரம்** – தலையின் உச்சித்துளை.
**பிரமரம்** – வண்டு; அபிநயவகை; குதிரைச் சுழி வகை.
**பிரமராசனர்** – தபோதனர்.
**பிரமராயன்** – பார்ப்பன அமைச்சர் பட்டப் பெயர்.
**பிரமரி** – சுழற்சி; கூத்தின் விகற்பம்; ஒரு சமண மந்திரம்.
**பிரமலிபி** – பிரமனால் விதியாக எழுதப்பெற்றதென்று கருதப்படும் மண்டை எழுத்து; தெளிவற்ற எழுத்து.
**பிரமலோகம்** – சத்தியலோகம்.
**பிரமவமிசம்** – பிரமனிடந் தோன்றிய மரபு; பார்ப்பனக் குலம்.
**பிரமவாதம்** – உலகமெல்லாம் பிரமனிட்ட முட்டை என்னும் மதம்; வேதமதம்.
**பிரமவாதி** – உலகம் பிரமனிட்ட முட்டை என்று வாதிப்பவன்.
**பிரமவித்தை** – மெய்யறிவு, தத்துவஞானம்; அறிதற்கு அரியது.

**பிரமன்** – மும்மூர்த்திகளுள் ஒருவரும் படைப்புக் கடவுளுமான நான்முகன்; பார்ப்பனன்; வறட்சுண்டி; பிரகிருதிமாயை.
**பிரமன்றந்தை** – பிரமனின் தந்தையான திருமால்.
**பிரமனாள்** – உரோகிணிநாள்.
**பிரமாண்டம்**–உலகம்; மிகப் பெரியது; பதினெட்டு உபபுராணத்துள் ஒன்று.
**பிரமாணஞ்செய்தல்** – உறுதிமொழி கூறல், சத்தியம்பண்ணல்.
**பிரமாணம்** – அளவை; ஆதாரம்; விதி; சான்று; ஆணை; பத்திரம்; கடவுள் நம்பிக்கை; மேற்கோள்; உண்மையான நிலை; மூவகைக் கால அளவை; மெய்யறிவை அறிதற்குதவும் கருவி.
**பிரமாணன்** – மெய்யன்; திருமால்.
**பிரமாணி** – சாத்திரங்களைக் கற்றறிந்தவன்; பிரமாவின் மனைவி; முதன்மையானவன்.
**பிரமாணிக்கம், பிரமாணிகம்** – உண்மை; ஆணை; எடுத்துக் காட்டு.
**பிரமாணித்தல்** – நிதானித்தல்; நம்புதல்; முடிவாக ஒப்புக்கொள்ளுதல்; விதித்தல்.
**பிரமாத்திரம்** – நான்முகன் கணை.
**பிரமாதப்படுதல்** – பெரிதாக்கப்படுதல்.
**பிரமாதம்** – தவறு; அளவில்மிக்கது; அபாயம்; விழிப்பின்மை.
**பிரமாதா** – அளப்பவன்; பிரமாணங்களை அறிபவன்; மாதாமகன்.
**பிரமாதி** – அறுபதாண்டுக் கணக்கில் பதின்மூன்றாம் ஆண்டு.
**பிரமாதீச** – அறுபதாண்டுக் கணக்கில் நாற்பத்தேழாம் ஆண்டு.
**பிரமாயுதம்** – பத்து நூறாயிரம்.
**பிரமானந்தம்** – வீட்டின்பம்; பேரின்பம்.
**பிரமி** – ஒரு பூண்டுவகை.
**பிரமித்தல்** – திகைத்தல், மயங்குதல்.
**பிரமிதி** – அளவையால் அறியும் அறிவு.
**பிரமிப்பு** – மயக்கம், திகைப்பு.
**பிரமியம்** – ஒரு நோய்வகை; ஒரு பூண்டுவகை.
**பிரமிருதம்** – உழவுத்தொழில்; உழவால் வரும் பொருள்.
**பிரமுகம்** – சிறந்தது; நிகழ்காலம்.
**பிரமுகன்** – சிறந்தோன்.
**பிரமேகம்** – வெட்டைநோய்.
**பிரமேயம்** – நியாய அளவையால் அளந்தறியப் பட்ட பொருள்; வாய்ப்பு; சொல்லப்படும் பொருள்; ஐயம்.
**பிரமை** – மயக்கம்; பைத்தியம்; பெருமோகம்; அறியாமை.
**பிரமைபிடித்தல்** – பித்துக்கொள்ளுதல்.
**பிரமோதம்** – பெருமகிழ்ச்சி.
**பிரமோதூத** – அறுபதாண்டுக்கணக்கில் நான்காம் ஆண்டு.
**பிரமோற்சவம்** – ஆண்டுக்கொருமுறை கோயில்களில் நடக்கும் சிறப்புத் திருவிழா.
**பிரயத்தனம்** – முயற்சி.
**பிரயாசப்படுதல்** – முயற்சி எடுத்தல்; வருந்தி உழைத்தல்.
**பிரயாசம்** – உழைப்பு; முயற்சி; வருத்தம்; வேள்விவகை.
**பிரயாசை** – உழைப்பு; முயற்சி; வருத்தம்; முயற்சியுள்ளவர்.
**பிரயாணம்** – பயணம், ஆத்திரை; இறப்பு.
**பிரயுதம்** – பத்துலட்சம்; கோடி.
**பிரயோகம்** – மந்திர ஏவல்; செலுத்துகை; பயன்படுத்துதல்; மருந்து; உவமானம்; மேற்கோள்; குதிரை.
**பிரயோகித்தல்** – செலுத்துதல்; பயன்படுத்துதல்.
**பிரயோசனம்** – பயன்படுகை; ஆதாயம்; சடங்கு; பயன்.
**பிரயோசனம்பண்ணுதல்** – உதவிசெய்தல்.
**பிரயோசனன்** – பயன்படுபவன்; நல்லகுணமுள்ளவன்.
**பிரலம்பம்** – தொங்குகை; அசைவு; கிளை.
**பிரலாபம்** – பிதற்றல்மொழி; புலம்பல்; பிதற்றுதல் உண்டாக்கும் சன்னி.
**பிரலாபித்தல்** – புலம்புதல்; பிதற்றுதல்; ஊன்றிப் பேசுதல்.
**பிரவசனம்** – சொற்பொழிவு.
**பிரவஞ்சம்** – காண்க: **பிரபஞ்சம்**.
**பிரவணம்** – நான்கு தெருக்கள் கூடுமிடம்; வளைவு; பள்ளத்தாக்கு.
**பிரவர்த்தகம்** – முயற்சி; காண்க: **பிரவர்த்தனம்**.
**பிரவர்த்தனம்** – செல்லுதல்; செய்தல்.
**பிரவர்த்தி** – முயற்சி; மலக்கழிவு.
**பிரவர்த்தித்தல்** – முயலுதல்.
**பிரவரம்** – மரபு, வமிசம்.
**பிரவாகம்** – வெள்ளம்; குளம்; தொழில்.
**பிரவாதம்** – காற்று; ஊர்ப்பேச்சு.
**பிரவாலம்** – இளந்தளிர்.
**பிரவாளம்** – பவளம்.
**பிரவிடை** – காண்க: **பிரவுடை**.
**பிரவிருத்தன்** – முயல்பவன்; அதிகாரசிவன்.
**பிரவிருத்தி** – காண்க: **பிரவர்த்தி**.
**பிரவிருத்தித்தல்** – காண்க: **பிரவர்த்தித்தல்**.
**பிரவீணன்** – விரகன்; திறமையானவன்.
**பிரவுடை** – முப்பத்தொன்று முதல் ஐம்பத்தைந்து வயதுவரை உள்ள பெண்பாற்பருவம்; பருவமடைந்த பெண்.
**பிரவேசம்** – வேலை முதலியவற்றின் தொடக்கம்; நடிகர் முதலியோர் தோன்றுதல்; வாயில்.

**பிரவேசனம்** – வாயில்.
**பிரவேசித்தல்** – உட்செல்லுதல்.
**பிரவை** – ஒளி; திருவாசி; துர்க்கை; தண்ணீர்ப் பந்தல்.
**பிரளயகாலம்** – உலக முடிவுகாலம்.
**பிரளயம்** – வெள்ளம்; ஒரு பேரெண்; கற்பமுடிவு; அழிவு; படையிலொரு தொகை.
**பிரளயாக்கினி** – ஊழித் தீ.
**பிரளயாகலர்** – ஆணவகன்ம மலங்களையுடைய உயிர்கள்.
**பிரற்றுதல்** – உரத்துச் சத்தமிடுதல்.
**பிராக்கியன்** – அறிவுடையோன்.
**பிராக்கு** – சென்றது.
**பிராகபாவம்** – முன்னின்மை.
**பிராகாமியம்** – எண்வகைச் சித்திகளுள் ஒன்று, நினைத்த இன்பங்களையடைவது; ஒரே காலத்தில் பெண்கள் பலரோடு இன்பம் நுகரும் ஆற்றல்.
**பிராகாரம்** – கோயில் சுற்றுப்பகுதி; மதில்.
**பிராகிருதம்** – அழியத்தக்கது; இயற்கையானது; பிரகிருதி சம்பந்தமானது; வடமொழித் திரிபாயுள்ள மொழி.
**பிராகிருதர்** – பிரகிருதியில் தோன்றிய பொருள்களையே உண்மை என்று எண்ணுவோர்; சாமானியர்.
**பிராசம்** – அடுத்தடுத்து வரும் எழுத்தோசை ஒற்றுமை; ஓர் ஆயுதவகை.
**பிராசயம்** – ஆதி.
**பிராசனம்** – சோறூட்டுதல்; உண்ணுதல்.
**பிராசாதம்** – கோயில்; உபரிகை; கருவறை; மந்திரம்.
**பிராசாபத்தியம்** – பரிசப்பொருள் பெறாது மகட்கொடை நேரும் மணவகை; காண்க: **பிரசாபத்தியம்;** மைத்துனக் கோத்திரத்தான் மகள் வேண்டிச் சென்றால் மறுக்காது கொடுக்கும் மணவகை; பகலில் ஒன்பதாம் முகூர்த்தம்; உரோகிணிநாள்; தலையிடுகை; விரதவகை.
**பிராசி** – கிழக்கு; முன்னுள்ளது.
**பிராசீனம்** – பழைமை; காண்க: **ஆடுதின்னாப் பாளை.**
**பிராசீனர்** – முன்னோர்.
**பிராஞ்ஞத்துவம்** – நல்லறிவு; நல்லறிவுடைமை.
**பிராஞ்ஞம்** – நல்லறிவு.
**பிராஞ்ஞன்** – அறிவுடையவன்; உயிர்.
**பிராட்டி** – தலைவி; தேவி; இறைவி.
**பிராணசகி** – உயிர்த்தோழி.
**பிராணசங்கடம்** – பெருந்துன்பம்.
**பிராணசினேகம்** – பெருநட்பு.
**பிராணசினேகிதன்** – உயிர்நண்பன்.
**பிராணத்தறுவாய்** – உயிர்போகுஞ் சமயம்.
**பிராணத்தியாகம்** – தானே உயிர்விடுகை.
**பிராணநாதன்,** **பிராணநாயகன்** – கணவன்.
**பிராணநாயகி** – மனைவி.
**பிராணம்** – காண்க: **பிராணன்.**
**பிராணவாயு** – உயிர்வளி; பத்து வாயுக்களுள் மூச்சை நிகழ்விப்பது; வாயுவகை; நோய்வகை.
**பிராணவேதனை** – இறப்புத் துன்பம்.
**பிராணன்** – உயிர்; மூச்சு; பத்துவகை வாயுக்களுள் மூச்சை நிகழ்விப்பது; வலிமை; இரணிய கருப்பன்.
**பிராணாந்தம்,** **பிராணாந்திகம்** – இறுதிக்காலம்; வாழ்நாள் முடிவுவரை.
**பிராணாயாமம்** – எண்வகை யோகத்துள் ரேசகம், பூரகம், கும்பகம் என்னும் மூவகையாய் மூச்சை அடக்கியாளும் யோகமுறை.
**பிராணி** – உயிருள்ளது, உயிரி.
**பிராணித்தல்** – மூச்சுவிடுதல்.
**பிராணேசன்** – காண்க: **பிராணநாதன்.**
**பிராத்தி** – எண்வகைச் சித்தியுள் ஒன்று, வேண்டுவன அடைதல்; பயன்; விதி.
**பிராத்திகன்** – விரும்பியதை அடையச் செய்வோன்.
**பிராத்தித்தல்** – காண்க: **பிரார்த்தித்தல்.**
**பிராதக்காலம்** – விடியற்காலம்.
**பிராதானியம்** – முதன்மை.
**பிராது** – முறையீடு.
**பிராந்தகன்,** **பிராந்தன்** – அறிவு மயங்கியவன்.
**பிராந்தம்** – ஓரம்; நாட்டுப்பகுதி; திரிபுணர்ச்சி.
**பிராந்தி** – மயக்கம்; கழிச்சல்; சாராயம்; கவலை; திரிபுணர்ச்சி.
**பிராந்திஞானம்** – திரிபுணர்ச்சி, ஒன்றை ஒன்றாக உணரும் அறிவு.
**பிராந்திமதாலங்காரம்** – ஒப்புமைபற்றிய மயக்கவணி.
**பிராந்தியம்** – சுற்றுப்புறம்; நாட்டுப்பகுதி.
**பிராந்து** – பருந்து; மயக்கம்; அறிவு மயங்கியவன்.
**பிராப்தி** – பேறு; விரும்பியதை அடைதலாகிய பெரும்பேறு, பயன்; விதி; உரிமம்.
**பிராப்பியம்** – பயன்; பெறத்தக்கது; எய்தப்படுவதாகிய செயப்படுபொருள்.
**பிராமணம்** – பிராமண சம்பந்தமானது; மந்திர பாகமல்லாத வேதப்பகுதி.
**பிராமணன்** – பார்ப்பனன்.
**பிராமணி** – பார்ப்பனி; எழுவகை மாதருள் ஒருத்தி; காண்க: **பாம்பரணை.**
**பிராமணியம்** – பார்ப்பனத்தன்மை; சான்று.

**பிராமமுகூர்த்தம்** – சூரியோதயத்துக்கு இரண்டு நாழிகைக்கு முன்னுள்ள இரண்டு நாழிகை நேரம்.

**பிராமி** – கலைமகள்; வடமொழியின் பழைய வடிவெழுத்துவகை.

**பிராமியம்** – காண்க: **பிராமமுகூர்த்தம்**; யோகம் இருபத்தேழனுள் ஒன்று; சத்தியலோகம்.

**பிராயச்சித்தம்** – பாவசாந்தி, கழுவாய்; பாவத்தைப் போக்குவதற்கான சடங்கு; தண்டனை.

**பிராயம்** – வயது; நிலை; சமானம்.

**பிரார்த்தம்** – பழவினை.

**பிரார்த்தனம், பிரார்த்தனை** – வேண்டுகோள்; நேர்த்திக்கடன்; ஒரு விண்ணப்பம்; துதி.

**பிரார்த்தித்தல்** – வேண்டுதல்; நேர்த்திக்கடன் பூணுதல்; துதித்தல்.

**பிராரத்தம், பிராரத்துவம்** – காண்க: **பிரார்த்தம்.**

**பிராரம்பம்** – தொடக்கம்.

**பிராவண்ணியம்** – ஈடுபாடு.

**பிராவம்** – கொல்லை.

**பிராறு** – நிறைபுனல்; நீரூர்பாதை.

**பிரான்** – தலைவன்; கடவுள்; சிவன்; போற்றுபவன்.

**பிரிசம்** – பொருளின் அருமை.

**பிரிசல்** – பொருளின் அருமை; பாகம்; பிரிந்து கிடக்கும் நிலை.

**பிரித்தல்** – பிரியச்செய்தல்; முறுக்கவிழ்தல்; பகுத்தல்; வகுத்தல்; கட்டவிழ்தல்; பங்கிடுதல்.

**பிரிதல்** – விட்டுவிலகுதல்; கட்டவிழ்தல்; பகுக்கப்படுதல்; வேறுபடுதல்; முறுக்கவிழ்தல்; வகைப்படுதல்; வசூலித்தல்; நினைத்தல்.

**பிரிதி** – அன்பு; விருப்பம்; உவகை; திருமால் தலமான இமயத்துள்ள நந்தப்பிரயாகை; யோகம் இருபத்தேழனுள் ஒன்று.

**பிரிந்திசைக்குறள்** – ஒத்தாழிசைக் கலியுறுப்பினுள் ஒன்றாகிய அம்போதரங்கம்.

**பிரிந்திசைத்துள்ளல்** – பல தளையும் விரவிவரும் கலிப்பா ஓசைவகை.

**பிரிந்திசைத்தூங்கல்** – பல தளையும் விரவிவரும் வஞ்சிப்பா ஓசைவகை.

**பிரிநிலை** –வேறுபடுத்திக்காட்டும் நிலை.

**பிரிநிலையெச்சம்** – பிரிக்கப்பட்ட பொருள் விளங்கக் கூறப்பெறாமல் எஞ்சிநிற்கும் வாக்கியம்; வாக்கியத்தில் கூறப்படாது எஞ்சி நிற்குஞ் சொல்.

**பிரிப்பு, பிரிபு** – வேறுபாடு; பிரிவு.

**பிரிமணை** – காண்க: **புரிமணை.**

**பிரிமொழிச்சிலேடை** – ஒருவகையானின்ற சொல்லைப் பிரித்துத் தொகை வேறுபடுத்திப் பலபொருள் கொள்வது; பிரிக்கப்பட்டுப் பலபொருள் பயக்கும் சொற்றொடர்.

**பிரியகம்** – கடப்பமரம்; வேங்கைமரம்.

**பிரியங்காட்டுதல்** – அன்பு வெளிப்படுத்துதல்.

**பிரியதரிசினி** – வன்னிமரம்.

**பிரியப்படுத்துதல்** – மகிழ்வித்தல்; இச்சகம் பேசுதல்; தன்னுடையதை உயர்த்திப்பேசுதல்.

**பிரியப்படுதல்** – அன்புவைத்தல்.

**பிரியம்** – அன்பு; விருப்பம்; விரும்பிய பொருள்; பண்டங்களின் பெறலருமை.

**பிரியலர்** – ஒருவரை ஒருவர் பிரியாதிருக்கும் நண்பர்.

**பிரியன்** – அன்புள்ளவன்; கணவன்.

**பிரியாம்பு** – மாமரம்.

**பிரியாமை** – நீங்காமை.

**பிரியாவிடை** – உள்ளம் பிரியாதே விடை பெறுகை.

**பிரியாவுடையாள்** – சிவபிரானைப் பிரியாத பார்வதி.

**பிரியை** – பெண்; மனைவி.

**பிரிவாற்றாமை** – தலைவன் பிரிவைத் தலைவி பொறுக்கமுடியாமை.

**பிரிவிலசைநிலை** – தனியே வழங்காது இரட்டித்தே நிற்கும் அசைநிலை.

**பிரிவினை** – வேறுபாடு; பிரிகை; பாகம்; ஒற்றுமையின்மை.

**பிரிவு** – பிரிதல்; வகுத்தல்; பாகம்; ஒற்றுமையின்மை; பகுதி; அவிழ்கை; வேறுபாடு; இடையீடு; மூலமதத்தின் வேறுபட்ட உட்பேதம்; இறப்பு.

**பிரிவுக்கட்டை** – நீரோட்டத்தைப் பிரிக்கும் மதகு.

**பிரீதி** – அன்பு; விருப்பம்; யோகம் இருபத்தேழனுள் ஒன்று.

**பிருகதி** – கத்தரிச்செடி; மாமரம்; ஒரு வீணைவகை.

**பிருகற்பதி** – வியாழன்; புரோகிதன்; அறநூலாசிரியருள் ஒருவர்; அறநூல் பதினெட்டனுள் பிருகற்பதியால் இயற்றப்பட்ட நூல்.

**பிருகு** – பனை முதலியவற்றின் முற்றாக் கிழங்கு; சுக்கிரன்; ஒரு முனிவர்.

**பிருகுடி** – புருவம்; நெற்றியை நெரிக்கை.

**பிருங்கம்** – வண்டு; கரிசலாங்கண்ணி.

**பிருங்கராசம்** – கரிசலாங்கண்ணி.

**பிருங்கிமலை** – பறங்கிமலை.

**பிருசகன்** – கொலைஞன்.

**பிருட்டம்** – பின்பக்கம்; இடுப்பின் பூட்டு; குண்டி; முதுகு; பரப்பு; அரைத்த மா.

**பிருடை** – யாழ் முதலியவற்றின் முறுக்காணி; சுழலாணி; அடைக்குந் தக்கை; பொய்ச் செய்தி; போலி நடிப்பு.
**பிருத்தியன்** – அடிமை.
**பிருதிவி** – நிலம், ஐம்பூதத்தினுள் ஒன்று; கடுக்காய்வகை.
**பிருதிவிலிங்கம்** – காஞ்சி, திருவாரூரிலுள்ள மண்ணாலாகிய இலிங்கம்.
**பிருது** – விருது; சூரிய குலத்தரசருள் ஒருவன்.
**பிருதுமானம்** – யானைக்கொம்புகளுக்கு இடையிலுள்ள முகப்பகுதி.
**பிருதூதரம்** – ஆட்டுக்கடா.
**பிருந்தம்** – கூட்டம்; துளசிச்செடி; விலங்கின் கூட்டம்.
**பிருந்தாவனம்** – துளசிக்காடு; கல்லறை.
**பிருந்தை** – துளசிச்செடி; காண்க: **நெருஞ்சி.**
**பிரேதக்குழி** – கல்லறை.
**பிரேதகருமம், பிரேதகாரியம்** } – சாவுச்சடங்கு.
**பிரேதபதி** – இறந்தோர்க்குத் தலைவனான யமன்.
**பிரேதம்** – பிணம்; பேய்; தெற்கு; பிதிரர்; பின்.
**பிரேதவனம்** – நன்காடு.
**பிரேதவிசாரணை** – ஐயப்பட்ட சாவின் காரணத்தைப்பற்றிய விசாரணை.
**பிரேயம்** – காண்க: **பிழி.**
**பிரேரகப்பிரேரியபாவம்** – தூண்டுவோன் தூண்டப்படுவோன் இருவருக்குமுள்ள தொடர்பு.
**பிரேரகம்** – தூண்டுவது; சத்தியின் இயக்கம்.
**பிரேரகன்** – வினை நடத்துவோன்; ஏவுவோன்; முன்மொழிபவன், பிரேரிப்பவன்.
**பிரேரணம்** – காண்க: **பிரேரணை.**
**பிரேரணை** – தூண்டுகை; முன்மொழிகை, அவையோர் முடிவு அறிய ஒரு செய்தியை முதலில் எடுத்துக் கூறுகை.
**பிரேரித்தல்** – செயற்படுத்துதல்; அவையோர் முடிவு அறிய ஒரு செய்தியை எடுத்துக் கூறுதல்; முன்மொழிதல்; நல்லாசானிடம் மாணாக்கனைச் சேர்ப்பித்தல்; காரியப்படுதல்.
**பிரேரியம்** – செலுத்தப்படுவது.
**பிரை** – உறைமோர்; பாதி; பயன்; பந்தலிட்ட இடம்; தொழிற்சாலை; சுவரின் மாடம்.
**பிரைக்காற்சின்னி** – அரைக்காற் படி.
**பிரைகுத்துதல்** – உறைமோர் குத்துதல்.
**பிரோகம்** – முடிச்சு.
**பிரௌடம்** – பெருமிதமானது.
**பில்குதல்** – சிறுதுவலை வீசுதல்; பொசிதல்; வழிதல்; கொப்புளித்தல்.
**பில்லடை** – இடியப்பம்.
**பில்லாணி** – பெண்கள் கால்விரலில் அணியும் மிஞ்சி.
**பில்லி** – சூனியவித்தை; சூனியக்காரர் ஏவும் தீத்தேவதை; பூனை.
**பில்லு** – நெசவுப்பாவைச் செம்மை செய்யும் கருவிவகை; புல்; பணச்சீட்டு.
**பில்லை** – மங்கிய மஞ்சள்நிறம்; வில்லை; திரண்டு உருண்டது; தலையிலணியும் அணிவகை; சதுர ஓடு; ஆணியின் திருகுவரை; சேவகர் முதலியோர் தரிக்கும் வில்லை.
**பிலகரி** – ஒரு பண்வகை.
**பிலகாரி** – பெருச்சாளி.
**பிலஞ்சுலோபம்** – எறும்பு.
**பிலந்துவாரம்** – கீழுலகஞ் செல்லும் வழி; நிலவறை.
**பிலம்** – பாதாளம்; கீழறை; குகை; வளை.
**பிலம்பி** – புளிச்சைக்காய்.
**பிலவ** – அறுபதாண்டுக் கணக்கில் முப்பத்தைந்தாம் ஆண்டு.
**பிலவகம்** – குரங்கு; தவளை.
**பிலவங்க** – அறுபதாண்டுக் கணக்கில் நாற்பத்தோராம் ஆண்டு.
**பிலவங்கம்** – ஆடு; தவளை; மான்; நஞ்சுள்ள உயிரினங்கள்.
**பிலவம்** – தவளை; ஆடு; காண்க: **வாகை.**
**பிலன்** – எறும்பு.
**பிலா** – பலாமரம்.
**பிலாக்கு** – ஒரு மூக்கணிவகை.
**பிலாச்சை** – கடல்தவளை; மீன்வகை.
**பிலாளகம்** – புழுகுசட்டம்.
**பிலிஞ்சி, பிலிம்பி** } – புளிச்சைக்காய்மரம்.
**பிலிற்றுதல்** – தூவுதல்; வெளிவிடுதல்; கொப்புளித்தல்.
**பிலுக்கன்** – பகட்டன்.
**பிலுக்கி** – பகட்டுக்காரி.
**பிலுக்கு** – பகட்டு.
**பிலுக்குதல்** – பகட்டுதல்.
**பிலுபிலுவெனல்** – இலை முதலியன உதிர்தற் குறிப்பு; மக்கட்கூட்டத்தின் ஒலிக்குறிப்பு; ஒலியோடு கூட்டம் கூடுதற்குறிப்பு; வாயால் அடுக்குதற்குறிப்பு.
**பிவாயம்** – சோறு சமைத்த பானைகளுக்கு இடும் திருநீற்றுக் குறி.
**பிழக்கடை** – வீட்டின் பின்வாயிற்புறம்; கடைமடை; நுழைவாயில்.
**பிழக்கடைநடை** – வீட்டின் பின்புறத்துள்ள நடைவழி.
**பிழக்கு** – பிழை.
**பிழம்பு** – திரட்சி; வடிவு; உடல்; கொடுமை.
**பிழம்புநனியுலர்த்தல், பிழம்புநனிவெறுத்தல்** } – நியமத்தின் உறுப்பாகிய காயக்கிலேசம்.

**பிழற்பெய்மண்டை** – நீருற்றும் ஈமச்சட்டி.
**பிழா** – கொள்கலம்; இறைகூடை; தட்டுப்பிழா.
**பிழார்** – இறைகூடை.
**பிழி** – கள்.
**பிழி (வி)** – வெளிப்படுத்து; சாறு முதலியன பிழி.
**பிழிஞன்** – கள் விற்போன்.
**பிழிதல்** – வடிதல்; சொரிதல்; கையால் இறுக்கிச் சாற்றை வெளியேறச் செய்தல்.
**பிழிந்தபூ** – தேங்காய்ப்பூச் சக்கை.
**பிழியல்** – பிழிகள்.
**பிழிவு** – பிழிந்து எடுக்கப்பட்ட பொருளாகிய சாறு; பொருட்சுருக்கம்.
**பிழுக்கை** – ஆடு முதலியவற்றின் மலம்; ஒன்றுக்கும் உதவாதவர்; வேலைக்காரர்.
**பிழுக்கைமாணி** – சிறிய பிரமசாரி; சிறுபிள்ளை.
**பிழை** – தவறு; குற்றம்; குறைவு.
**பிழை (வி)** – உய்; குற்றஞ்செய்.
**பிழைத்தல்** – குற்றஞ்செய்தல்; பலியாதுபோதல்; சாதல்; தவறிப்போதல்; உய்தல்; கேட்டினின்று தப்புதல்; உயிர்வாழ்தல்; வாழ்க்கை நடத்துதல்; நீங்குதல்; இலக்குத் தவறுதல்.
**பிழைதிருத்தம்** – பிழையும் அதன் திருத்தமும் அடங்கிய அட்டவணை.
**பிழைப்பித்தல்** – பிழைக்கச் செய்தல்.
**பிழைப்பு** – குற்றம்; தப்பி உய்கை; உயிர்வாழ்கை; வாழ்க்கை; கருச்சிதைவு.
**பிழைப்புக்காட்டுதல்** – வாழ வழிகாண்பித்தல்.
**பிழைப்பூட்டுதல்** – உயிர்ப்பித்தல்; காப்பாற்றுதல்.
**பிழைபாடு** – தவறுபடுகை.
**பிழைபார்த்தல்** – தவறுகளைத் திருத்துதல்; தவறு கண்டுபிடித்தல்.
**பிழைமணம்** – ஒழுங்கற்ற திருமணம் அல்லது சேர்க்கை.
**பிழைமொழி** – குற்றமுள்ள சொல்.
**பிள்** – பிள்ளைமையழகு.
**பிள்ளுதல்** – பிளவுண்டாதல்; துண்டுபடுதல்; மனம் வேறுபடுதல்; விள்ளுதல்; நொறுக்குதல்.
**பிள்ளுவம்** – யானை.
**பிள்ளை** – குழந்தை; மகன்; மகள்; இளைஞன்; இளமை; சிறுமை; சாதி; கோட்டில் வாழ் விலங்கின் இளமை; நாயொழிந்த விலங்கின் இளமை; பறப்பன தவழ்வன இவற்றின் இளமை; கரிக்குருவி; காகம்; நெல்லும் புல்லும் ஒழிந்த ஓரறிவுயிரின் இளமைப் பெயர்; பிள்ளைப்பூச்சி; வைரவன்; வேளாளர் பட்டப்பெயர்; சங்கின் ஏறு; மரப் பாவை.
**பிள்ளைக்கவி** – காண்க: **பிள்ளைத்தமிழ்**; முன்னோர் சொல்நடை பொருள்நடை கொண்டு கவிபாடுவோன்.
**பிள்ளைக்கிணறு** – உட்கிணறு.
**பிள்ளைகரைத்தல்** – கருச்சிதைத்தல்.
**பிள்ளைகுட்டிக்காரன்** – பெருங்குடும்பமுடையவன்.
**பிள்ளைகூட்டுதல்** – தத்து எடுத்தல்.
**பிள்ளைத்தமிழ்** – கடவுளையோ பெரியவரையோ பிள்ளையாகக் கருதிக் காப்பு முதலிய பருவங்களை அமைத்துப் பாடும் சிற்றிலக்கிய நூல்.
**பிள்ளைத்தாய்ச்சி** – கருவுற்றிருப்பவள்; கைக் குழந்தையையுடைய தாய்.
**பிள்ளைத்தேங்காய்** – தென்னைநெற்று.
**பிள்ளைநிலை** – போரிற் சென்றறியாத மறக்குடிச் சிறுவர் தாமே செய்யுந் தறுகணாண்மையைக் கூறும் புறத்துறை.
**பிள்ளைப்பன்மை** – மக்கள்.
**பிள்ளைப்பாட்டு** – காண்க: **பிள்ளைத்தமிழ்.**
**பிள்ளைப்பால்** – குழந்தைகளுக்கு அறமாகத் தரும் பால்; முலைப்பால்.
**பிள்ளைப்பிறை** – இளம் பிறைச்சந்திரன்.
**பிள்ளைப்பூச்சி** – சேற்றில் வாழும் பூச்சிவகை.
**பிள்ளைப்பேறறிந்தவள்** – மருத்துவச்சி.
**பிள்ளைப்பேறு** – மகப்பேறு, பிரசவம்.
**பிள்ளைமை** – பிள்ளைத்தன்மை; இளமையிலுள்ள அறியாமை.
**பிள்ளையன்** – வேளாளத் தலைவர் சிலருக்கு வழங்கும் சிறப்புப்பெயர்; இளைஞன்.
**பிள்ளையாண்டான்** – இளைஞன்.
**பிள்ளையார்** – விநாயகர்; முருகக்கடவுள்; மகன்; பெருவயிறன்; காண்க: **ஆளுடையபிள்ளையார்;** நூறு அல்லது ஆயிரத்தைக் குறிக்கும் குழூஉக் குறி.
**பிள்ளையார்சுழி** – எழுதத் தொடங்குங்கால் மங்கலமாக வரையப்படும் 'உ' என்னும் குறி.
**பிள்ளையுண்டாதல்** – கருத்தரித்தல்.
**பிள்ளையெடுத்தல்** – காண்க: **பிள்ளைகூட்டுதல்,**
**பிள்ளைவங்கு** – பாய்மரம் நிற்குங் குழி.
**பிள்ளைவலி** – மகப்பேற்றுவலி.
**பிளகு** – பிரிவு; கமுகவேர்.
**பிளத்தல்** – பிரிவுபடுதல்; வெடிபடுதல்; ஊடுருவப் படுதல்; மனமுடைதல்; திறந்திருத்தல்; வெடிக்கச்செய்தல்; ஊடுருவுதல்; போக்குதல்; பாகுபடுத்துதல்; வெல்லுதல்.
**பிளப்பு** – பிளவு; வெடிப்பு.
**பிளவு** – விரிந்துண்டாஞ் சந்து; துண்டு; வெட்டுப் பாக்கு; அரைக் குன்றிமணி எடை; பிரிந்திசைப்பு; வெடியுப்பு.
**பிளவுப்பிறை** – காண்க: **பிறைக்கொழுந்து.**
**பிளவுபோடுதல்** – தாம்பூலந்தரித்தல்.
**பிளவை** – பிளக்கப்பட்ட துண்டு; புண்கட்டி; மாட்டுநோய்வகை.

**பிளாச்சி(சு)** – மூங்கில் முதலியவற்றின் பிளவு; பிளந்த விறகு; பனங்கிழங்கின் பிளவு.
**பிளிச்சு** – மூங்கில் முதலியவற்றின் பிளவு.
**பிளிர்த்தல்** – கொப்புளித்தல்.
**பிளிற்றுதல்** – ஆரவாரித்தல்; வெகுளுதல்; கக்குதல்.
**பிளிறல்** – பேரோசை; கிளைக்கை; யானையின் முழக்கம்.
**பிளிறு** – பேரோசை.
**பிளிறுதல்** – முழங்குதல்; கிண்டுதல்.
**பிற்கட்டு** – பாட்டின் இறுதியிலுள்ள நல்லோசை அமைதி.
**பிற்கழித்தல்** – வலியிழந்தோடுதல்.
**பிற்கால்** – தம்பி.
**பிற்காலம்** – வருங்காலம்.
**பிற்காலித்தல்** – பிற்படுதல்; பின்வாங்குதல்; தாமதித்தல்.
**பிற்குளம்** – உத்தராடநாள்.
**பிற்சாமம்** – இரவின் கடைச்சாமம்.
**பிற்பக்கம்** – பின்புறம்; தேய்பிறை.
**பிற்பகல்** – பகற்பொழுதின் பின்பகுதி.
**பிற்படுதல்** – பின்னதாதல்; பிந்துதல்.
**பிற்படை** – கூழைப்படை.
**பிற்பாடர்** – பிற்பட்டவர்.
**பிற்பாடு** – பின்நிகழ்ச்சி; பிறகு; தரத்தில் குறைவுடையது.
**பிற்போக்கு** – வீழ்ச்சிநிலை; அறிவு, குணம் முதலியவற்றில் பிந்துகை; முன்னேற்றம் இன்றிப் பழைய முறையிற் போகை.
**பிற்றல்** – மண்வெட்டிக் கழுத்து; பின்வாங்குகை.
**பிற்றி** – பிந்திப்போனது.
**பிற்றை** – பின்பு; பின்னைநாள்.
**பிற்றைநிலை** – வழிபாட்டுநிலை; பிற்பட்டநிலை.
**பிற** – மற்றவை; ஓர் அசைச்சொல்.
**பிறக்கடி** – பின்வாங்கின அடி.
**பிறக்கடியிடுதல்** – நிலைகெட்டோடுதல்.
**பிறக்கணித்தல்** – காண்க: புறக்கணித்தல்.
**பிறக்கம்** – ஒளி; உயர்ச்சி; குவியல்; மரக்கிளை; அச்சம்.
**பிறக்கிடுதல்** – பின்வாங்குதல்; பின்நிகழ்தல்; கொண்டையில் முடித்தல்.
**பிறக்கீடு** – பின்னிடுகை.
**பிறக்கு** – பின்பு; முதுகு; குற்றம்; ஓர் அசைச் சொல்; வேறாக; வாழ்வு.
**பிறக்குதல்** – அடுக்குதல்.
**பிறகிடுதல்** – பின்புறமணிதல்; தோற்றல்; கழிதல்; பின்வாங்குதல்.
**பிறகு** – பின்பு; பின்புறம்; முதுகு; சற்றுப் பொறுத்து; பின்னோக்கி; தாழ்வாக.
**பிறகுகாணுதல்** – தோல்வியுறச்செய்தல்.
**பிறங்கடை** – மகன்; வழித்தோன்றல்; மருகன்; அயலிடம்.
**பிறங்கல்** – பெருமை; மிகுதி; உயர்ச்சி; நிறைவு; திரள்; ஒளி; வீடுபேறு; அரசன்; ஒலி; மலை; சிறுமலை; கற்பாறை.
**பிறங்கியல்** – முதுகாடு, நன்காடு.
**பிறங்கு** – விரலிறை.
**பிறங்குதல்** – விளங்குதல்; உயர்தல்; சிறத்தல்; மிகுதல்; பெருகுதல்; நிலைமாறுதல்; செறிதல்; பெருத்தல்; ஒலித்தல்.
**பிறசான்றோர்** – சங்கப் புலவரல்லாத புலவர் பெருமக்கள்.
**பிறத்தல்** – வெளிவரல்; தோன்றுதல்.
**பிறந்தகம்** – தாய்வீடு; மணமகனுக்கு மணமகள் வீட்டார் அளிக்கும் வரிசை; தலைக் குழந்தைக்குத் தாயைப் பெற்ற பாட்டி அளிக்கும் பரிசு.
**பிறந்தகோலம்** – அம்மணம்.
**பிறந்தநாள்** – பிறந்த தினம்.
**பிறந்தமேனி** – அம்மணம்; மாசின்மை.
**பிறந்தவம்** – பிறப்பு.
**பிறந்தை** – காண்க: பிறவி; பிறப்பு; பாவம்; துன்பம்; பிறந்தகம்; இயல்பு.
**பிறப்பிடம்** – பிறந்த இடம்.
**பிறப்பித்தல்** – உண்டாக்கல்; வெளிப்படுத்தல்.
**பிறப்பில்லான்** – காண்க: பிறப்பிலி.
**பிறப்பிலி** – கடவுள்; சிவன்; உடன்பிறப்பில்லாதவன்.
**பிறப்பிறப்பு** – பிறத்தலும் இறத்தலும்.
**பிறப்பு** – தோற்றம்; உற்பத்தி; சாதி; தொடக்கம்; உடன்பிறந்தவர்; மகளிர் அணியும் தாலிவகை; ஒரு வாய்பாடு; அச்சம்; நெருக்கம்; மயக்கம்.
**பிறப்புவழி** – மரபுவழி, கொடிவழி; குடும்ப இயற்கை.
**பிறப்புவாசி** – பிறவி இயல்பு.
**பிறமுகம்பார்த்தல்** – பிறர் தயவு வேண்டுதல்; விபசாரஞ்செய்தல்.
**பிறர்** – அயலார்.
**பிறர்துயர்காத்தல்** – பிறர்க்கு வந்த துன்பத்தை நீக்குகை.
**பிறர்மனைநயத்தல்** – பிறர்மனைவியை விரும்புதல்; பிறர்மனை செல்லல்.
**பிறவாநெறி** – வீடுபேறு.
**பிறவாயாக்கைப்பெரியோன்** – சிவன்.
**பிறவி** – பிறப்பு; உடன்பிறந்தவர்; இயல்பு; மறு பிறப்பு.
**பிறவிக்கடல்** – பிறவியாகிய கடல்.
**பிறவிக்குணம்** – பிறவி இயல்பு; முன்வினையால் உண்டாகுங் குணம்.

**பிறவிக்குருடன்** – குருடனாய்ப் பிறந்தவன்.
**பிறவிகளறவுரை** – முற்பிறவியைக் கூறுகின்ற அறவோர் உரை.
**பிறவிச்சுபாவம்** – காண்க: **பிறவிக்குணம்.**
**பிறவிச்செல்வம்** – கருவிலே உற்ற திரு.
**பிறவித்துயர், பிறவித்துழதி** – பிறத்தலாகிய துன்பம்; உடன் பிறந்தார் சாவால் உண்டாகும் துயரம்.
**பிறவிநோய்** – பிறப்பிலேயுண்டான நோய்; பிறக்கையாகிய துன்பம்.
**பிறவிப்பயன்** – பிறத்தலின் நன்மை.
**பிறவிவேர்** – பிறத்தலுக்குக் காரணமாகிய அவா.
**பிறவினை** – பிறரைக்கொண்டு செய்விக்குஞ் செயலை உணர்த்தும் வினை; காமம்.
**பிறழ்ச்சி** – மாறுகை; ஒழுங்கின்மை; வாக்கு மாறுகை; புடைபெயர்ச்சி; விளங்குகை; நடுக்கம்.
**பிறழ்தல்** – மாறுதல்; முறைகெடுதல்; வாக்கு மாறுதல்; மாறுபட்டுக் கிடத்தல்; துள்ளுதல்; புடைபெயர்தல்; பெயர்தல்; விளங்குதல்; முரிதல்; திகைத்தல்; நடுங்குதல்; இறத்தல்.
**பிறழ்வு** – காண்க: **பிறழ்ச்சி.**
**பிறள்** – மற்றையாள்.
**பிறன்** – மற்றையான்; அயலான்; மனம் வேறு பட்டவன்; பகைஞன்.
**பிறன்கோட்கூறல்** – தன் நூலினிடத்தில் பிறனது கொள்கையைச் சொல்லுதல்.
**பிறன்பொருளாள்** – பிறன்மனைவி.
**பிறன்மனை, பிறனில்** – அயலான் வீடு; அயலான் மனைவி.
**பிறாண்டு** – பிற இடம்.
**பிறாண்டுதல்** – நகத்தாற் கீறுதல்.
**பிறிகதிர்ப்படுதல்** – கெடுதல்; விட்டுநீங்குதல்.
**பிறிதின்கிழமை** – ஒரு பொருளுக்கும் அதன் உறுப்பாகாத பிற பொருளுக்கும் உள்ள வேறு பாட்டுத் தொடர்பு.
**பிறிது** – வேறானது.
**பிறிதுசாபம்** – சாபமாற்று.
**பிறிதுபடுபாட்டு** – மிறைக்கவியில் ஒன்று.
**பிறிதுமொழிதல்** – கருதிய பொருளை மறைத்து அதனைப் புலப்படுத்தற்கு அதுபோன்ற பிறிதொன்றனைக் கூறும் அணி.
**பிறிதுவிதி** – சிறப்புவிதி.
**பிறியகம்** – கடப்பமரம்; ஞாழல்மரம்; வேங்கை மரம்.
**பிறியோலை** – இடையர் ஆடுகளைப் பிரித்தற்கு உதவும் ஓலைத்தட்டி.
**பிறை** – இளஞ்சந்திரன்; மகளிர் தலையணிவகை; அபிநயவகை.
**பிறைக்கை** – அபிநயவகை.
**பிறைக்கொழுந்து** – இளம்பிறை.
**பிறைச்சந்திரன்** – மூன்றாம் பிறை.
**பிறைச்சிந்தாக்கு** – கழுத்தணிவகை.
**பிறைசூடி** – பிறையைத் தலையில் அணிந்த சிவபிரான்.
**பிறைத்தலையம்பு** – பிறைச்சந்திரன் போன்ற வடிவையுடைய அம்பு.
**பிறைதொழுதல்** – பிறைச்சந்திரனை வணங்குதல்.
**பிறைமலர்** – பிறைபோன்ற மலருடைய அகத்தி.
**பிறைமுகவாளி, பிறையம்பு** – காண்க: **பிறைத்தலையம்பு.**
**பிறையிரும்பு** – கருக்கறுவாள்.
**பிறைவடம்** – சந்திரகாரம் என்னும் அணிகலன்.
**பிறைவடிவு** – வளைவுருவம்.
**பிறைவளைவுக்குறி** – பிறையின் வளைவுபோன்று ஒன்றன் இரு பக்கத்தும் இடும் வளைவுக் குறியீடு.
**பிறைவாய்வாளி** – காண்க: **பிறைத்தலையம்பு.**
**பின்** – பின்னுகை; பின்பக்கம்; இடம்; கடை; பிற்காலம்; தம்பி; பிறகு; ஏழனுருபு.
**பின்கட்டு** – வீட்டின் பின்புறக் கட்டடம்; கைகளைப் பின்புறமாகச் சேர்த்துக் கட்டுகை.
**பின்கதவு** – கொல்லைக்கதவு.
**பின்காட்டுதல்** – புறங்காட்டுதல்; தோற்றோடு தல்.
**பின்குடுமி** – பின்பக்கமாக முடியும் குடுமி.
**பின்சந்ததி** – பின்வரும் கொடிவழி.
**பின்செல்லுதல்** – தொடர்ந்துபோதல்; இணங்கி யொழுகுதல்; வழிபடுதல்; கெஞ்சுதல்.
**பின்தட்டு** – தோணியின் பின்பக்கம்; குதிரையின் பின்கட்டு வார்.
**பின்பக்கம்** – பின்புறம்; வளர்பிறை; பிற்பகுதி.
**பின்பகல்** – பகலின் பிற்பகுதி; அந்திவேளை; இரவு.
**பின்பற்றுதல்** – ஒருவர் செய்ததுபோலச் செய்தல்; பின்தொடர்தல், பின்செல்லுதல்; பிரியப் படுதல்; இணங்குதல்.
**பின்பனி, பின்பனிக்காலம்** – ஆறுவகைப் பருவத்துள் ஒன்றான பனி மிகுதியுடைய மாசி, பங்குனி மாதங்கள்.
**பின்பாட்டு** – தலைமைப் பாடகனைப் பின்பற்றிப் பாடும் பாட்டு; பின்பற்றிப் பாடுவோன்; ஒருவன் சொன்னதையே பின்பற்றுகை.
**பின்பிறந்தாள்** – தங்கை; திருமகள்.
**பின்பிறந்தான்** – தம்பி.
**பின்பு** – பின்னானது; பிறகு.
**பின்புத்தி** – அறிவுக்குறைவு; பின்யோசனை.
**பின்புறணி** – கோள்.
**பின்புறம்** – பின்பக்கம்.

**பின்போக்கு** – தொடர்ச்சி; வீழ்ச்சிநிலை; அறிவு, குணம் முதலியவற்றில் பிந்துகை; முன்னேற்றம் இன்றிப் பழைய முறையில் செல்லுதல்.

**பின்போடுதல்** – தாழ்த்தல்.

**பின்மழை, பின்மாரி** – காலந்தவறின மழை; மழைக் காலத்தின் பிற்பகுதியிற் பெய்யும் மழை.

**பின்மாலை** – வைகறை, விடியற்காலம்.

**பின்முடுகுவெண்பா** – பின்னிரண்டடி முடுக்காய் வரும் வெண்பா.

**பின்மொழிநிலையல்** – 'அடைகடல்' என்னும் தொடரிற்போல முதன்மொழியிற் பொருள் சிறந்து நிற்குந்தொடர்.

**பின்மோனை** – இரண்டாஞ்சீரிலும் இறுதிச் சீரிலும் வரும் மோனை.

**பின்வருநிலை** – முன் வந்துள்ள சொல்லும் பொருளும் தனித்தனியாயினும் கூடியாயினும் பல இடத்தும் பின்னும்வரும் அணிவகை.

**பின்வாங்குதல்** – பின்போதல்; தோல்வியடைதல்; ஒப்பந்தத்தினின்று நெகிழ்தல்; மார்க்கநெறி தவறுதல்.

**பின்றலை** – தலையின் பின்புறம்.

**பின்றாவி** – முதுகுமறையத் தொங்குங் கழுத்தணி வகை.

**பின்றி** – மீள.

**பின்று** – பின்பு.

**பின்றுதல்** – பின்னிடுதல்; கீழ்ப்பட்டிருத்தல்; மீளுதல்; சேய்மையாதல்; ஒழுக்கம் முதலியவற்றிற் பிறழ்தல்; மாறுபடுதல்.

**பின்றை** – பின்னைநாள்; பின்பு.

**பின்றோன்றல்** – தம்பி, பின்பிறந்தான்.

**பின்னகம்** – பின்னிய மயிர்; ஆண்பால் மயிர்முடி; வேறுபாடு; பேதி.

**பின்னகன்** – பேதம் உண்டுபண்ணுவோன்.

**பின்னகுணனம்** – ஒரு பின்னத்தை அது கொண்டே பெருக்குவது.

**பின்னங்கால்** – விலங்கின் பின்புறத்துக் கால்; பாதத்தின் பின்புறம்.

**பின்னடி** – பிற்பட்டது; கடைசி; வருங்காலம்; பிற்சந்ததி; பின்புறம்; உடனே.

**பின்னடைப்பன்** – மூத்திரத்தைத் தடுக்குமொரு மாட்டுநோய்வகை.

**பின்னணி** – பிற்படை; பின்வரிசை.

**பின்னணை** – வீட்டுக்கொல்லை; பின் பிறந்த கன்று அல்லது குழந்தை.

**பின்னதுநிறுத்தல்** – உத்தி முப்பத்திரண்டனுள் ஒன்றான முன்வைக்க வேண்டியதைப் பின்னே வைத்தல்.

**பின்னந்தண்டு** – பின்காற் சீப்பு.

**பின்னந்தலை** – தலையின் பின்புறம்; பிடர்.

**பின்னந்தொடை** – தொடையின் பின்பக்கம்; பின் தொடை இறைச்சி.

**பின்னப்படுத்துதல்** – சிதறுவித்தல்.

**பின்னப்படுதல்** – துன்பமடைதல்; சிதைதல்; தடைப்படுதல்; வேறுபடுதல்.

**பின்னபதம்** – தொகாநிலையாய் நிற்குஞ் சொல்.

**பின்னபேதகம், பின்னபேதம்** – நிறைவேற்றாமை; பகைமை.

**பின்னம்** – மாறுபாடு; வேறுபாடு; வேறாந் தன்மை; சிதைவு; பிளவு; உறுப்புக்கோணல்; கேடு; தடை; கீழ்வாயிலக்கம்; தூள்; பின்னர்; பின்பு; பகுப்பு.

**பின்னர்** – பின்பு; பின்தொடர்வோர்; தம்பியர்; வேளாளர்.

**பின்னரை** – நட்சத்திரத்தின் பின்பாதி; சல்லடை.

**பின்னல்** – பின்னுதல்; முடைதல்; தொடர்ச்சி; பின்னப்பட்டது; அரைஞாண்; சிக்கு; சடை; தவறு; பருத்தி.

**பின்னவர்** – பிற்பட்டவர்; இளையவர்.

**பின்னவருக்கம்** – காண்க: பின்னகுணனம்.

**பின்னவள்** – தங்கை; கடைசியாகப் பிறந்த மகள்.

**பின்னவன்** – தம்பி; கடைசியாகப் பிறந்த மகன்.

**பின்னளபெடை** – இரண்டாஞ் சீர்க்கண்ணும் நான்காஞ் சீர்க்கண்ணும் அளபெடை வரத் தொடுக்குந் தொடை.

**பின்னற்சன்னல்** – வலைக்கதவுகளையுடைய சன்னல்.

**பின்னன்** – காண்க: பின்னவன்.

**பின்னனை** – செவிலித்தாய்.

**பின்னாடி** – பின்பு.

**பின்னாதாரம்** – மூலாதாரத்தினின்று நான்கு விரற்கிடை மேலிருக்கும் உடம்பின் உட்பகுதி.

**பின்னாலே** – பிற்பாடு.

**பின்னாற்போதல்** – பின்செல்லுதல்.

**பின்னி** – தங்கை; சிறிய தாய்.

**பின்னிடுதல்** – பின்செல்லுதல்; பின்புறமாதல்; இணங்காதிருத்தல்; தாக்கித் திரும்புதல்; தோற்றல்; தாமதமாதல்; பின்வாங்குதல்; பிற்படக் கடத்தல்.

**பின்னிடைதல்** – பின்னிடுதல்.

**பின்னிதம்** – மாறுபாடு.

**பின்னிதம்பண்ணுதல்** – புறக்கணித்தல்; இணங்கா திருத்தல்.

**பின்னியாசம்** – பெருங்காயம்.

**பின்னிலவு** – அபரப்பக்கத்தின் பிற்பகுதி; தேய் பிறை.

**பின்னிலை** – குறைவேண்டுகை; வழிபாடு; பிற் காலத்து வருவது; பின்னே சென்று போர் புரிகை.

பின்னிவருதல் – நெருங்கிவருதல்.

பின்னிற்றல் – பிறகிடுதல்; இணங்குதல்; இரந்து நிற்றல்; பின்செல்லுதல்; மறுத்தல்.

பின்னின்மை – அழிவுபட்ட பாவம்.

பின்னுகால் – மாட்டுக்குற்றவகை.

பின்னுதல் – கூந்தல், ஓலை முதலியவற்றை முடைதல்; பிணித்தல்; தழுவுதல்; கூறுதல்; இடறுதல்; மனங்கலத்தல்.

பின்னும் – மேலும்; மறுபடியும்.

பின்னெதுகை – இரண்டாஞ் சீர்க்கண்ணும் நான் காஞ் சீர்க்கண்ணும் எதுகை யமையுமாறு தொடுப்பது.

பின்னே – பின்பு.

பின்னேரம் – பிற்பகல்.

பின்னை – பிந்தின காலம்; தங்கை; தம்பி; மேலும்; பிறகு; திருமகள், நப்பின்னை; தலை மயிர்; புன்னைமரம்; நாய்த்தேக்குமரம்.

பின்னைக்கணம் – வருங்காலம்.

பின்னைகேள்வன் – நப்பின்னைப்பிராட்டியின் மணாளனான திருமால்.

பின்னைநாள் – மறுநாள்.

பின்னோக்குதல் – வருவதை எதிர்பார்த்தல்; பின்னால் பார்த்தல்; பின்வாங்குதல்.

பின்னோடே – அடுத்து; பின்னால்; பின்புறமாய்.

பின்னோதரன் – மாற்றாந்தாய் மகன்.

பின்னோன் – பிற்பட்டவன்; தம்பி; வேளாளன்.

பினத்துதல் – காண்க: பினாத்துதல்.

பினாகபாணி – பினாகவில்லைக் கையிலுடைய சிவபிரான்.

பினாகம் – சிவன் வில்; திரிசூலம்; மணிமாலை; மண்மாரி.

பினாகி – சிவன்; பெண்ணையாறு; அறுகு.

பினாகினி – பெண்ணையாறு.

பினாத்துதல் – புலப்பம், பிதற்றுதல்.

பினாதி – புல்லன், அற்பன்.

பினைதல் – பிசைதல்; பிசைவதுபோல் வயிற்றில் நோவுண்டாதல்; தொல்லைப்படுத்துதல்.

## பீ

பீ – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+ஈ); மலம்; தொண்டிமரம்; அச்சம்; பெருமரம்.

பீக்கம் – எட்டிக்கொட்டை.

பீக்கருவேல் – ஒரு வேலமரவகை; காண்க: உடைவேல்.

பீக்கலாட்டம் – தடை; தொந்தரவு.

பீக்கலாத்தி – காண்க: சங்கங்குப்பி.

பீக்கை – இலேசானது; பசளைக்கிரை; பீச்சாங் குழல்.

பீகம் – பெருமாட்டி; உயர்ந்த நிலையிலுள்ள முகமதியப் பெண்; பூட்டுவகை; திறவுகோல்.

பீங்கான் – ஒரு மட்பாண்டவகை.

பீச்சல் – வயிற்றுக்கழிச்சல்; பீச்சுகை.

பீச்சாக்கத்தி – எழுத்தாணி அமைந்த கைப்பிடி யுள்ள கத்தி; ஒரு நீண்ட கத்திவகை.

பீச்சாங்கட்டி – உலோகக்கட்டி.

பீச்சாங்கத்தி – காண்க: பீச்சாக்கத்தி.

பீச்சாங்குழல் – நீர் முதலியவற்றைப் பீச்சும் கருவி.

பீச்சாங்கை – இடக்கை.

பீச்சாங்கொள்ளி – அச்சமுடையோன்.

பீச்சுதல் – நீர்மப் பொருளைக் கருவிமூலம் வெளியேற்றுதல்; மலங்கழிதல்.

பீச்சுவிளாத்தி – காண்க: சங்கங்குப்பி; விளா மரம்.

பீச்சைக்கால் – இடக்கால்.

பீசகணிதம் – இயற்கணிதம்.

பீசகோசம் – பூவில் விதையுள்ள இடம்.

பீசநியாயம் – காண்க: பீசாங்குரநியாயம்.

பீசபூரம் – மாதுளை.

பீசம் – விதை; மூலம்; அண்டவிதை; சுக்கிலம்; வழித்தோன்றல்; காண்க: பீசாட்சரம்; தாமரைத்தண்டு.

பீசம்வாங்குதல் – விதையடித்தல்.

பீசாங்குரநியாயம் – காரணகாரியம் இதுவதுவென முன்பின் வரையறுக்கப்படா வழக்கு.

பீசாட்சரம் – மந்திரத்தின் சிறப்பெழுத்து.

பீசி – விதையையுடையது; பூவில் விதையுள்ள இடம்.

பீஞ்சல் – காண்க: சங்கங்குப்பி.

பீட்கன்று – கீழ்க்(ங்)கன்று.

பீட்டகம் – தொழில், உத்தியோகம்.

பீட்டன் – இரண்டாம் பாட்டன்; இரண்டாம் பேரன்; பாட்டன்; குதிரைவண்டிவகை.

பீட்டி – பாட்டி; உடுப்பில் இரட்டையாக இணைக்கப்பட்ட மார்பின்துணி.

பீட்டை – பயிரின் இளஞ்சூல்; முதல் அறுவடையின் பின்னுள்ள பயிரின் இளங்கதிர்.

பீடணம் – அச்சம்.

**பீடணி** – குழந்தைகளுக்கு நோயை உண்டாக்கும் தேவதை.

**பீடபூமி** – உயரமான அகன்ற நிலப்பகுதி.

**பீடம்** – இருக்கை; அரியணை; பலிபீடம்; விக்கிரக பீடம்; மேடை; மலவாய்; குறைவட்டத்தின் எஞ்சிய பாகம்.

**பீடர்** – பெருமையுடையவர்.

**பீடரம்** – கோயில்.

**பீடனம்** – வருத்தம்; துன்புறுத்தல்.

**பீடிகை** – பீடம்; பூந்தட்டு; தேர்த்தட்டு; அரியணை; கடைத்தெரு; முகவுரை; அணிகலச் செப்பு; முனிவர் இருக்கை.

**பீடிகைத்தெரு** – கடைவீதி.

**பீடித்தல்** – துன்புறுத்தல்.

**பீடிப்பு** – துன்பம்.

**பீடு** – பெருமை; வலிமை; தரிசுநிலம்; தாழ்வு; துன்பம்; குறைவு; ஒப்பு; குழைவு.

**பீடை** – துன்பம்; காலம், கோள் முதலியவற்றால் நிகழுந் தீமை.

**பீடைமாதம்** – மார்கழிமாதம்.

**பீத்தல்** – காண்க: **பீற்றல்**; தற்பெருமைப் பேச்சு.

**பீத்து** – தற்பெருமைப் பேச்சு.

**பீத்துதல்** – வீண்பெருமை பேசுதல்.

**பீத்தை** – நாடா.

**பீத்தோல்** – மேல்தோல்.

**பீதகம்** – பொன்னிறம்; பொன்; பொன்னரிதாரம்; மஞ்சள்; இருவேரி; துகில்வகை; தேன்; பித்தளை; ஒரு சாந்துவகை.

**பீதகவாடை** – பொன்னாலான ஆடை; பொற்சரிகையுள்ள ஆடை.

**பீதகன்** – வியாழன்.

**பீதகாட்டம்** – செஞ்சந்தனக் கட்டை.

**பீதகாரகம்** – வேங்கைமரம்; சந்தனம்; செவ்வள்ளி.

**பீதகாவேரம்** – மஞ்சள்; பித்தளை.

**பீதகி** – அரிதாரம்.

**பீதசாரம்** – காண்க: **பீதகாரகம்.**

**பீதசாலம்** – வேங்கைமரம்; சந்தனம்.

**பீதத்துரு** – காண்க: **மரமஞ்சள்.**

**பீதுண்டம்** – சிச்சிலி.

**பீதபீசம்** – வெந்தயம்.

**பீதம்** – ஒரு சாந்துவகை; பொன்; பொன்னிறம்; மஞ்சள்; கத்தூரி; இருவேரி; குடிக்கை; அரிதாரம்; அச்சம்; பருமை; நேரம்; நீர்; பன்றி; எலி.

**பீதராகம்** – தாமரைநூல்; பொன்மை.

**பீதரோகிணி** – ஒரு மருந்துச் செடிவகை.

**பீதலகம்** – பித்தளை.

**பீதவண்ணம்** – கடுக்காய்.

**பீதன்** – அஞ்சுபவன்; குடிப்பவன்; சூரியன்.

**பீதாம்பரம்** – காண்க: **பீதகவாடை.**

**பீதாம்பரன்** – பொன்னாடை அணிந்த திருமால்.

**பீதாம்பரி** – பார்வதி.

**பீதி** – அச்சம்; நோவுசெய்யும் நோய்; குடிக்கை; மதுக்கடை.

**பீதிகை** – செம்மல்லிகை.

**பீதை** – பொன்னிறப் பூவுள்ள மருதோன்றிமரம்; மஞ்சள்.

**பீந்துதல்** – கொடுத்தல்.

**பீந்தோல்** – காண்க: **பீத்தோல்.**

**பீநாறி** – ஒரு மரவகை; பெருமரம்.

**பீப்பா, பீப்பாய்** – எண்ணெய் முதலியன அடைக்கும் மரப்பெட்டிவகை.

**பீபற்சு** – சீர்குலைவு; தொந்தரவு; அருச்சுனன்.

**பீமநாதம்** – சிங்கம்; பேரொலி.

**பீமபாகம்** – சிறந்த சமையல்.

**பீமம்** – அச்சம்; பருமை.

**பீமன்** – சிவபிரான்; வீமசேனன்; விதர்ப்பநாட்டு மன்னன்.

**பீமாபத்திரம்** – உறுதியீட்டுச் சாசனம்.

**பீயாக்குதல்** – நாசஞ்செய்தல்.

**பீயு** – ஆந்தை; காகம்; காலம்; சூரியன்.

**பீர்** – பசலைநிறம்; வெளுப்பு; பீர்க்கு; முலைப்பால்; முகம்மதியப் பெரியார்; முகம்மதியச் சப்பரம்; மரவகை; பெருக்கு.

**பீர்க்கங்கூடு** – பீர்க்கின் உள்ளீடற்ற மேல்தோடு.

**பீர்க்கு** – ஒரு கொடிவகை.

**பீர்ச்சாங்குழல்** – காண்க: **பீச்சாங்குழல்.**

**பீர்ச்சுதல்** – காண்க: **பீச்சுதல்.**

**பீர்தங்குதல்** – காண்க: **பீர்பூத்தல்.**

**பீர்பீராய்** – தாரைதாரையாய்.

**பீர்பூத்தல்** – காமநோயால் பீர்க்கம்பூப்போல **உடல் பசத்தல்.**

**பீர்விடுதல்** – பெருக்கெடுத்தல்.

**பீரங்கி** – பெருங்குழாயான வெடிகருவி.

**பீரம்** – காண்க: **பீர்க்கு**; பசலைநிறம்; பூவரச மரம்; காண்க: **வாகை**; தாய்ப்பால்; வீரம்; வலிமை.

**பீராய்தல்** – பொறுக்கல்; ஆராய்தல்; சிறிது சிறிதாகச் சேர்த்தல்; கொழித்தல்.

**பீரிடுதல்** – விரைந்து பாய்தல்; நீர் முதலியன தாரையாகப் பாய்தல்; அலறுசத்தமிடுதல்.

**பீரு** – புருவம்; அச்சமுள்ளோன்.

**பீருகம்** – ஆந்தை; கரடி; காடு.

**பீருகன்** – அச்சமுடையோன்.

**பீருதந்தி** – தண்ணீர்விட்டான்கிழங்கு.

**பீரெனல்** – விரைந்து பாய்தற்குறிப்பு.

**பீரை** – பீர்க்கங்கொடி.

**பீரோ** – நிலைப்பேழை, அலமாரி.

**பீரோடுதல்** – முலைப்பால் வெளிப்படுதல்.

**பீலகம்** – காண்க: **பீலிகை.**
**பீலி** – மயில்தோகை; மயில்; சிற்றாலவட்டம்; வெண்குடை; பொன்; மகளிரிடும் கால் விரலணி; சிறுசின்னம்; வாத்தியப்பொது; பெருஞ்சவளம்; மலை; மதில்; நத்தை ஓடு; பனங்குருத்து; நீர்பாய் தொட்டி; பந்தயமுறி.
**பீலிக்கண்** – மயில்தோகைக்கண்; மயிலிறகு.
**பீலிக்குஞ்சம்** – அலங்காரத் தொங்கல்.
**பீலிக்குடை** – மயில்தோகையாலான குடை; மயிற்குஞ்சம்.
**பீலிக்கொட்டு** – நீர்பாய் தொட்டி.
**பீலிகை** – எறும்பு.
**பீலித்தண்டு** – எறியாயுதம், பிண்டிபாலம்.
**பீலிப்பட்டை** – பெரிய இறைகூடை.
**பீலிபோடுதல்** – பந்தயமுறியிடுதல்.
**பீலியார்** – சமணர்.
**பீலிவாகை** – நீண்ட மரவகை.
**பீலு** – அணு; அச்சம்; உகாமரம்; யானை; எறும்பு.
**பீலுகம்** – கரடி.
**பீலுகன்** – காண்க: **பீருகன்.**
**பீவரம்** – ஆமை; கொழுப்பு.
**பீவரி** – அமுக்கிரா; பசு; பருவப்பெண்; பெண் கிளி.
**பீழ்தல்** – பிடுங்குதல்.
**பீழித்தல்** – வருத்துதல்.
**பீழை** – துன்பம்.
**பீள்** – கரு; தானிய இளங்கதிர்; இளமை.
**பீளல்** – பெண்குறி.
**பீளை** – கண்மலம்.
**பீளைசாடுதல்** – கண்ணழுக்குப் புறப்படல்.
**பீற்றல்** – கந்தை, கிழியல்; கடனாளி.
**பீறல்** – கிழித்தல்; கந்தை, கிழியல்.
**பீறு** – கிழிவு; மலவாய்.
**பீறுதல்** – கிழித்தல்; கிழிதல்; பிளத்தல்; கீறுதல்.
**பீனசம்** – சளிநோய்வகை; மூக்கடைப்புநோய்.
**பீனம்** – பருமை; பெருமை; காண்க: **நீர்ப்பாசி;** கொடிப்பாசி; பேடி; ஊர்.
**பீனிசம்** – காண்க: **பீனசம்.**
**பீனிசவடைப்பு** – சளியால் மூக்கு அடைத்துக் கொள்கை.

# பு

**பு** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+உ); தொழிற் பெயர் விகுதி; பண்புப்பெயர் விகுதி; இறந்த கால வினையெச்ச விகுதி.
**புக்ககம்** – கணவன் வீடு.
**புக்கசன்** – சண்டாளன்.
**புக்கி** – பிராய்மரம்.
**புக்கில்** – உடம்பு; வீடு; புகலிடம்; தங்குமிடம்.
**புக்கு** – காண்க: **புக்கி.**
**புக்குப்புக்கெனல்** – நெருப்பில் காற்றுப்படுவதால் உண்டாகும் ஒலிக்குறிப்பு.
**புக்குழி** – காண்க: **புக்ககம்.**
**புக்கை** – நீரூற்றுள்ள கேணி; ஒரு கூழ்வகை.
**புத்தம்** – உணவு; துய்க்கப்பட்டது.
**புகட்டுதல்** – ஊட்டுதல்; அறிவுறுத்துதல்; உட்புகுத்துதல்.
**புகடு** – அடுப்பின் சுற்றுப்புறத்திலுள்ள மேடு.
**புகடுதல்** – வீசியெறிதல்.
**புகர்** – கபிலநிறம்; கபிலநிறமுள்ள மாடு; நிறம்; ஒளி; அழகு; சுக்கிரன்; புள்ளி; குற்றம்; கறை; அருவி; உயிர்; சோறு; கொக்கு.
**புகர்க்கலை** – புள்ளிமான்கலை.
**புகர்முகம்** – யானை; ஒரு பாணவகை.
**புகர்வு** – புகுகை; மேலேறுகை; உணவு.
**புகரோன்** – சுக்கிரன்.
**புகல்** – புகுகை; இருப்பிடம்; துணை; பற்றுக்கோடு; தஞ்சம்; உடம்பு; தானியக்குதிர்; வழிவகை; போக்கு; சொல்; விருப்பம்; கொண்டாடுகை; பாடும் முறை; வெற்றி; புகழ்; புரையுள்ளது.
**புகல்வி** – விலங்கின் ஆண்.
**புகல்வு** – மனச்செருக்கு; விருப்பம்; புகலுதல்.
**புகலி** – புதிதாகக் குடியேறியவன்; சீகாழி.
**புகலிடம்** – இருப்பிடம்; ஊர்; தஞ்சம்.
**புகலுதல்** – சொல்லுதல்; விரும்புதல்; தெரிதல்; ஒலித்தல்; மகிழ்தல்.
**புகவு** – புகுகை; மேலேறுகை; உணவு.
**புகழ்** – துதி; கீர்த்தி; அருஞ்செயல்; அகத்தி; வாகை.
**புகழ்க்கூத்து** – கதைத்தலைவன் புகழ்குறித்து நிகழும் ஆடல்.
**புகழ்கூறல்** – கீர்த்தியை எடுத்து விளக்குகை.
**புகழ்ச்சி** – துதி.
**புகழ்ச்சிமாலை** – தொண்ணூற்றாறு சிற்றிலக்கிய வகையுள் அகவலடியும் கலியடியும் மயங்கிய வஞ்சிப்பாவால் மகளிரது சிறப்பைக் கூறும் நூல்.
**புகழ்தல்** – உயர்த்திக் கூறுதல்; துதித்தல்; பாராட்டுதல்.
**புகழ்பொருள்** – உவமேயம்.
**புகழ்மாலை** – புகழை வெளிப்படுத்தும் நூல்.
**புகழ்மை** – புகழ்; புகழுடைமை.

**புகழ்வதினிகழ்தல்** – இகழாவிகழ்ச்சி.
**புகழ்வீசுசந்திரன்** – பச்சைக்கருப்பூரம்; கருப்பூர மரம்.
**புகழ்வு** – புகழ்ச்சி.
**புகழாப்புகழ்ச்சி** – பழிப்பதுபோலப் புகழும் அணி வகை.
**புகழாவாகை** – அகத்திமரம்; அகங்காரம்.
**புகழாளன்** – கீர்த்தியுடையோன்.
**புகற்சி** – விருப்பம்; காதல்.
**புகற்றுதல்** – விரும்பச்செய்தல்.
**புகா** – உணவு.
**புகார்** – ஆற்றுமுகம்; கழிமுகம்; காவிரிப்பூம் பட்டினம்; பனிப்படலம்; மந்தாரம்; மழை பெய்யும் மேகம்; கபிலமரம்; பெருங்கூச்சல்; இகழ்விளைக்கும் செய்தி; முறையீடு.
**புகிடி** – மாதர் காதணியுள் ஒன்று.
**புகுடி** – கழி; வாயில்; புருவம்; காண்க: **புகிடி.**
**புகுத்தல்** – போகவிடுதல்; உட்செலுத்துதல்.
**புகுதல்** – அடைதல்; தொடங்குதல்; உட்செல்லுதல்; தாழ்நிலையடைதல்; ஆயுளடைதல்; ஏறுதல்; நிகழ்தல்; உட்படுதல்; அகப்படுதல்.
**புகுதி** – மனைவாயில்; நுழைவாயில்; நிகழ்ச்சி; ஆழ்ந்தறியும் நுண்ணறிவு; வழி; வருவாய்.
**புகுதுதல்** – நிகழ்தல்; நுழைதல்.
**புகுந்தகம்** – காண்க: **புக்ககம்.**
**புகுந்துபார்த்தல்** – ஆழ்ந்துநோக்குதல்.
**புகுபுகெனல்** – விரைவுக்குறிப்பு; ஒலிக்குறிப்பு.
**புகுமுகம்புரிதல்** – ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்ட விடத்துத் தலைவன் தன்னை நோக்குதலை விரும்பும் தலைவியின் உள்ள நிகழ்ச்சி.
**புகை** – நெருப்பிலிருந்து தோன்றும் கரும்படலம்; பனிப்படலம்; ஆவி; தென்கீழ்த் திசைப்பாலன் குறி; யோசனைத்தொலைவு; கண்ணில் விழும் படலவகை; துயரம்; மாணிக்கக் குற்றம்; சாம்பிராணிப்புகை; காண்க: **தூபமணி; புகைவட்டம்.**
**புகைக்கப்பல்** – நீராவிக்கப்பல்.
**புகைக்குண்டு** – நச்சுப்புகை புகைக்கும் பாண்டம்; துப்பாக்கிக்குண்டு.
**புகைக்கூடு** – புகைபோக்கி; வானக்கூடு.
**புகைக்கூண்டு** – காண்க: **புகைக்கூடு;** ஆகாச வாணம்.
**புகைக்கொடி** – தூமகேது, வால்நட்சத்திரம்.
**புகைகட்டுதல்** – புகையேற்றுதல்; புகையால் நிற மூட்டுதல்.
**புகைகாட்டுதல்** – புகைத்து நோய் நீக்குதல்; புகையுண்டாக்குதல்; புகைபடைத்தல்.
**புகைகுடித்தல்** – புகையிலை முதலியவற்றின் புகையை உட்கொள்ளுதல்.
**புகைச்சல்** – புகை; இருள்; பார்வை மயங்குகை; வயிற்றெரிவு; காண்க: **புகையிருமல்;** செய்தி வெளிப்படத் தொடங்குகை; மனவெரிச்சல்.
**புகைத்தல்** – கோபத்தாலுண்டாகும் மனவெரிச்சல்; புகையச்செய்தல்; புகையை உட்புகுத்தி உயிரினங்களை அழித்தல்; கெடுத்தல்; சினக்குறிப்புக் காட்டுதல்.
**புகைதல்** – புகையெழும்புதல்; ஆவியெழுதல்; செய்தி வெளிப்படத் தொடங்குதல்; வருந்துதல்; கோபித்தல்; பயிர் முதலியன தீய்தல்; குடி முதலியன அழிதல்; தொண்டை முதலியன கரகரத்தல்; மாறுபடுதல்.
**புகைநாற்றம்** – கும்பல் வீச்சம்; தீய்ந்த நாற்றம்.
**புகைப்படம்** – ஒளிப்படம், நிழற்படம்.
**புகைப்படலம்** – புகைச்செறிவு.
**புகைபோடுதல்** – காண்க: **தூபம்போடுதல்.**
**புகைமணம்** – காண்க: **புகைநாற்றம்.**
**புகையாற்றி** – ஓட்டடை.
**புகையிருமல்** – வெப்பத்தினால் புகைந்து இருமச் செய்யும் நோய்வகை.
**புகையிலை** – ஒரு செடிவகை.
**புகையிலைகட்டுதல்** – புகையிலைச் சரக்குக் கட்டுதல்; புகையிலையைப் பாடஞ்செய்தல்.
**புகையிலைகுடித்தல்** – புகையிலைப் புகையை உட்கொள்ளுதல்.
**புகையிலைத்தூள்** – மூக்குப்பொடி.
**புகையிலைபோடுதல்** – வெற்றிலையோடு புகையிலையை மெல்லுதல்.
**புகையுண்ணுதல்** – சுருட்டுப்பிடித்தல்; புகைபட்டுப் படத்தின் உருக்கெடுதல்.
**புகையுயிர்த்தல்** – கொதிப்படைதல்.
**புகையுறுப்பு** – நேர்கட்டி, செந்தேன், நிரியாசம், பச்சிலை, சந்தனம், அகில் என்னும் அறுவகைப் புகைச்சரக்கு.
**புகையுறை** – காண்க: **புகையாற்றி.**
**புகையூட்டுதல்** – கூந்தல் முதலியவற்றுக்கு நறும்புகை யூட்டுதல்; புகை பிடிப்பித்தல்; நோவுற்ற உடற்பகுதியில் மருந்துப்புகை யேற்றிச் சிகிச்சைசெய்தல்.
**புகையூர(ற)ல்** – படிந்த புகைத்திரள்.
**புகைவட்டம்** – எழுநரகத்துள் ஒன்று.
**புகைவு** – புகைச்சல்; மனவெரிச்சல்; வறட்டிருமல்.
**புங்கம்** – அம்பின் அடிப்பாகம்; அம்பு; குவியல்; சிறந்தது; உயர்ச்சி; மெல்லாடை; சிறுதுகில்; காண்க: **புன்கு;** தூய்மை.
**புங்கமரம்** – ஒரு மரவகை.
**புங்கர்க்காழகம்** – மெல்லிய ஆடைவகை.
**புங்கவம்** – அம்பு; எருது, நந்தி; சிறந்தது.

**புங்கவன்** – சிறந்தோன்; குரு; தேவன்; புத்தன்; அருகன்; பாடாணவகை.
**புங்கவி** – பார்வதி; தெய்வப்பெண்.
**புங்கவிருகம்** – கத்தூரிமான்.
**புங்கன்** – மூடன்.
**புங்கானுபுங்கம்** – மேன்மேல் தொடுக்கும் அம்புத் தொகுதி; பேசும்போது சொற்கள் அடுத்து வரும் விரைவு.
**புங்கு** – புங்கமரம்.
**புச்சத்தலம்** – மலவாய்.
**புச்சம்** – வால்; பிருட்டம்; வால்நட்சத்திரம்; பின்புறம் தொங்கும் ஆடைக்கொடுக்கு; மயிற்றோகை; தேள்கொடுக்கு; தேள்.
**புச்சி** – காண்க: **எருக்கு.**
**புசகம், புசங்கம்** } – பாம்பு.
**புசம்** – புயம்; கோணத்தின் புறக்கோடு; தயிராடை; எருவறட்டி; பதர்; பேறு.
**புசல்** – பெருங்காற்று; குச்சுமட்டை; ஓர் அளவு.
**புசித்தல்** – உட்கொள்ளுதல்; வினைப்பயன் முதலியன நுகர்தல்.
**புசிப்பன** – உண்டற்குரியன.
**புசிப்பாளி** – நற்பேறு பெற்றவன்.
**புசிப்பு** – உண்ணுகை; உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன ஆகிய நால்வகை உணவு; வினைப்பயன் நுகர்ச்சி; நல்லூழ்.
**புசை** – வட்டத்தின் முதற்கால் அல்லது மூன்றாங் காற்பகுதி; முதலாம் இரண்டாம் மூன்றாம் ஏழாம் எட்டாம் ஒன்பதாம் இராசி.
**புஞ்சம்** – திரட்சி; நூற்குஞ்சம்; கூட்டம்; நெய்த ஆடையின் அளவுவகை.
**புஞ்சின்னம்** – ஆண்குறி.
**புஞ்சுதல்** – ஒன்றுசேர்தல்.
**புஞ்சை** – காண்க: **புன்செய்.**
**புட்கரம்** – வானம்; நீர்; தாமரைப்பூ; நாரை; யானைத் துதிக்கை நுனி; வாள் அலகு; வாள் உறை; அம்பு; போர்; பறையில் அடிக்குமிடம்; வாத்தியவகை; பாண்டத்தின் வாய்; ஒற்றுமை; நோய்வகை; கோட்டம்; வெறி; பாம்புவகை; விண்மீன்வகை; பங்கு; நிறைவு; குகை; பருந்து; வாள்; வடநாட்டில் பொகார் என இக்காலத்தார் வழங்கும் ஒரு புண்ணியதலம்; ஏழு தீவுகளுள் நன்னீர்க்கடலால் சூழப்பட்ட பூபாகம்.
**புட்கரிணி** – தாமரைத்தடாகம்; கோயிற்குளம்; பெண்யானை; ஒரு தீவுவகை.
**புட்கலம்** – நிறைவு; முழுமை; திங்கள், செவ்வாய், வியாழன் என்னுங் கிழமைகளில் ஒன்றும் அமாவாசையும் கூடிய காலம்; காண்க: **புட்கலாவருத்தம்;** பிச்சையுணவு; உடம்பு.
**புட்கலாவருத்தம்** – ஏழு முகிலில் ஒன்றானதும் பொன்பொழிவதுமான மேகம்; மேகநாயகம் நான்கனுள் ஒன்று; நிறைய மழைபெய்யும் மேகம்.
**புட்கலை** – ஐயனார் தேவியருள் ஒருத்தி.
**புட்கலைமணாளன்** – புட்கலை கணவனான ஐயனார்.
**புட்குத்திருப்பி** – காண்க: **வட்டத்திருப்பி.**
**புட்குரல்** – நிமித்தமாகக் கருதப்படும் பறவையொலி.
**புட்கோ** – காண்க: **கருடன்.**
**புட்டகம்** – புடைவை.
**புட்டகமண்டபம்** – கூடாரம்.
**புட்டம்** – காக்கை; நிறைவு; உடலின் மலவாய்ப் பக்கம்; பெண்குறி; புடைவை.
**புட்டல்** – தலைச்சுமை.
**புட்டா** – துணியில் செய்யப்பட்ட பூத்தொழில்; வீங்கின அண்டம்.
**புட்டி** – பருமை; கொழுப்பு; இடை; குப்பி; ஒரு முகத்தலளவைவகை; சிறுபடி; ஒரு நிறுத்தலளவைவகை; நிலவளவைவகை.
**புட்டில்** – அம்பறாத்தூணி; விரலுறை; உறை; கூடை; இறைகூடை; முறம்; குதிரைக்கு உணவுகட்டும் பை; கெச்சையணி; தக்கோலக் காய்; குப்பி.
**புட்டிவெல்லம்** – பனங்கட்டி.
**புட்டு** – காண்க: **பிட்டு.**
**புட்டுக்கூடை** – சிறுகூடை.
**புட்டை** – அண்டவாதம், பெருத்த அண்டம்; உடலின் மலவாய்ப் பக்கம்; பெண்குறி.
**புட்பகத்தேர்** – காண்க: **புட்பகவிமானம்.**
**புட்பகம்** – காண்க: **புட்பகவிமானம்; மூக்கிரட்டை;** இரத்தின கங்கணம்.
**புட்பகவிமானம்** – குபேரன் ஊர்தி.
**புட்பகவூர்தி** – காண்க: **புட்பகவிமானம்;** குபேரன்.
**புட்பகாசம்** – 273 கோபுரங்களையும் 32 மாடிகளையும் உடைய கோயில்; விமானக்கோயில்.
**புட்பகீடம்** – தேன்வண்டு.
**புட்பகேசி** – உமாதேவி.
**புட்பகேது** – மன்மதன்.
**புட்பசயனம்** – மலர்ப்படுக்கை.
**புட்பசரன்** – மலரம்பு கொண்ட மன்மதன்.
**புட்பசாபன்** – மலர்வில்லைக்கொண்ட மன்மதன்.
**புட்பசாமரம்** – தாழை.
**புட்பசாரம்** – பூவின் தேன்.
**புட்பத்திராவகம்** – பூவினின்று வடித்தெடுக்கும் செய்நீர்.
**புட்பதந்தம்** – வடமேற்றிசை யானை.
**புட்பபலம்** – விளாங்கனி.
**புட்பபாணம்** – மன்மதன் அம்பு; வரிக்கூத்துவகை.

**புட்பபுடம்** – குடங்கை இரண்டும் இயைந்து பக்கங் காட்டி நிற்கும் இணைக்கைவகை.

**புட்பம்** – பூ; வாழை; மகளிர் தீட்டு; கண்ணோய் வகை; காண்க: **புட்பகம்.**

**புட்பரசம்** – பூவின் தேன்; மகரந்தம்.

**புட்பரதம்** – பூந்தேர்; பூவின் தேன்; பூந்தூள்.

**புட்பராகம்** – ஒன்பதுவகை மணியுள் ஒன்று.

**புட்பவதி** – பூப்படைந்த பெண்.

**புட்பவருடம்** – மலர்மழை; காண்க: **புட்பாஞ்சலி;** சிறுதூற்றல்.

**புட்பவாகனன்** – அருகன்.

**புட்பவிமானம்** – பூந்தேர்.

**புட்பறை** – பறைவகை.

**புட்பாகன்** – திருமால்.

**புட்பாசவம்** – பூந்தேன்.

**புட்பாசனன்** – பிரமன்.

**புட்பாசனி** – திருமகள்.

**புட்பாஞ்சலி** – கைநிறையக்கொண்ட பூ; பூவிட்டு வணங்கல்; இரண்டு கையுங் குடங்கையாக வந்து ஒன்றும் இணைக்கைவகை.

**புட்பித்தல்** – மலர்தல்; முகமலர்தல்; பூப்படைதல்.

**புடகம்** – இலைத்தொன்னை; தாமரை.

**புடபாகம்** – புடமிடுகை; செரிக்கை; சமைக்கை.

**புடம்** – புடமிடுங்கலம்; மூடி; வெயிலில் வைத்தல் முதலிய வழிகளாற் பக்குவப்படுத்துகை; புடமிடுகை; பக்கம்; இடம்; உள்வளைவு; இலைக்கலம்; கண்ணிமை; கோவணம்; மூடுகை; கோள்களின் உண்மையான அன்றாடப்போக்கு; ஒரு வானவளைவைவகை; தூய்மை.

**புடம்போடுதல்** – காண்க: **புடமிடுதல்;** மிக வருத்துதல்.

**புடமிடுதல்** – பொன் முதலியவற்றைத் தூய்மை செய்தல்; பக்குவப்படுத்துதல்; எரித்தல்.

**புடல்** – ஒரு கொடிவகை; பேய்ப்புடல்.

**புடலை** – படர்கொடிவகை.

**புடவி** – பூமி, நிலவுலகம்.

**புடவித்தல்** – வீங்குதல்.

**புடவிமூலம்** – குறட்டைவகை.

**புடவை** – காண்க: **புடைவை.**

**புடாயம்** – மாணிக்கக் குற்றவகை.

**புடை** – பக்கம்; இடம்; பகுதி; முறை; கிணற்றினுடைய புடைப்பு; எலிவளை; துளை முதலியன; ஏழனுருபு; திரட்சி; அடி; குத்து; அடித்து உண்டாக்கும் ஒலி; பகை; போர்; பழம் முதலியவற்றின் பருத்த பாகம்.

**புடை (வி)** – அடி; குத்து; குட்டு; வீங்கு; விசிறு.

**புடைக்கருத்து** – இனம்பற்றிச் சார்ந்துவரும் கருத்து.

**புடைக்காலம்** – இடைப்பட்ட காலம்.

**புடைக்கொள்ளுதல்** – தட்டுதல்; அருகு பருத்தல்.

**புடைகவலுதல்** – வேறு சிந்தையுடைத்தாதல்.

**புடைகவற்றி** – வேறுசிந்தை.

**புடைகொள்ளுதல்** – காண்க: **புடைக்கொள்ளுதல்;** புரையோடுதல்.

**புடைத்தல்** – அரிசி முதலியவற்றைத் தவிடு, தூசி முதலியன போகும்படி முறத்தில் இட்டுத் தட்டுதல்; அடித்தல்; குத்துதல்; கொட்டுதல்; சிறகடித்தல்; நூல் முதலியன ஏற்றுதல்; துவைத்தல்; குட்டுதல்; உடைத்தல்; நீந்துதல்; வீங்குதல்; பருத்தல்; வெளிப்படுதல்; ஆரவாரித்தல்; அலைத்துப் பெருகுதல்; தட்டுதல்.

**புடைநகர்** – புறநகர்.

**புடைநூல்** – நூல்வகை மூன்றனுள் முதனூல் வழிநூல்களோடு பொருண்முடிபு ஒரு புடையொத்து ஒழிந்தன ஒவ்வாமையுடைய நூல்.

**புடைப்பு** – கொழித்தல்; அடித்தல்; வீங்குதல்; இரகசியம் முதலியன வெளியாகை.

**புடைப்பெண்** – வைப்பாட்டி.

**புடைபடுதல்** – அணுகுதல்; இடம்படுதல்; மிகுதியாதல்; திரண்டு பருத்தல்.

**புடைபரத்தல்** – சுற்று விரிதல்.

**புடைபெயர்ச்சி** – வெளியேறுகை; நிலைமாறுகை; கருத்தாவின் தொழிற்பாடு.

**புடைபெயர்தல்** – நிலைமாறுதல்; வெளியேறுதல்; அசைதல்; எழுந்திருத்தல்; தொழிற்படுதல்.

**புடைமண்** – சுதை.

**புடையல்** – மாலை.

**புடையன்** – ஒரு பாம்புவகை.

**புடையுண்ணுதல்** – அடிபடுதல்.

**புடைவை** – மகளிர் சீலை; ஆடை.

**புடோதகம்** – தெங்கு.

**புடோல்** – காண்க: **புடல்.**

**புண்** – உடல் ஊறு; தசை; வடு; மனநோவு.

**புண்டரம்** – சந்தனம், நீறு முதலியவற்றால் நெற்றி முதலியவற்றில் தரிக்கும் குறி; வெண் கரும்பு; கழுகு; காண்க: **குருக்கத்தி.**

**புண்டரிகத்தவன்** – பிரமன்.

**புண்டரிகத்தி** – திருமகள்.

**புண்டரிகம்** – தென்கீழ்த்திசையானை; புலி; வண்டு; தாமரை; வெண்டாமரை.

**புண்டரிகன்** – திருமால்.

**புண்டரிகை** – திருமகள்.

**புண்டரீகபுரம்** – புலிக்கால் முனிவர் வணங்கிய சிதம்பரம்.

**புண்டரீகம்** – வெண்டாமரை; காண்க: **புண்டரிகம்;** கழுகு; காண்க: **மாசிபத்திரி;** பெருநோய்வகை; வெண்கொற்றக்குடை; வேள்விவகை; புற்று; அரியணை; சவரி.

**புண்டரீகாட்சன்** – தாமரைக்கண்ணனான திருமால்.
**புண்ணழற்சி** – புண்ணால் உண்டாம் எரிவு.
**புண்ணழற்றி** – புண்ணில் வைக்கும் காரமருந்து.
**புண்ணழற்றுதல்** – காண்க: **புண்ணழற்சி.**
**புண்ணளை** – புண்ணின் குழி.
**புண்ணாக்கு** – காண்க: **பிண்ணாக்கு.**
**புண்ணியகருமம்** – நற்செயல்.
**புண்ணியசாந்தம்** – சாணி; திருநீறு.
**புண்ணியதிசை** – வடக்கு.
**புண்ணியபூமி** – காண்க: **ஆரியாவர்த்தம்;** புண்ணிய தலம்.
**புண்ணியம்** – அறம்; தருமம்; நல்வினை; தூய்மை; தெய்வத்தன்மை; நற்செயல்; காண்க: **நவபுண்ணியம்; புண்ணியசாந்தம்;** நீர்த்தொட்டி.
**புண்ணியமுதல்வன்** – கடவுள்; புத்தன்.
**புண்ணியமுதல்வி** – பார்வதி; தவத்திற் சிறந்தவள்.
**புண்ணியமூர்த்தி** – புண்ணியமே உருவெடுத்தாற் போன்றவன்; கடவுள்; புத்தன்; அருகன்.
**புண்ணியவதி, புண்ணியவாட்டி** – பேறு பெற்றவள்; அறச்சிந்தனையுடையவள்; நற்குணமுடையவள்.
**புண்ணியவான்** – புண்ணியமிக்கவன்; அறஞ்செய்பவன்; பேறுபெற்றவன்.
**புண்ணியன்** – காண்க: **புண்ணியவான்;** கடவுள்; சிவபிரான்; அருகன்; புத்தன்.
**புண்ணியை** – காண்க: **புண்ணியவதி;** துளசி.
**புண்ணீர்** – இரத்தம்.
**புண்ணுடம்பு** – பிள்ளைபெற்ற பச்சையுடம்பு; பாவ உடல்.
**புண்ணுறுத்துதல்** – வருத்துதல்.
**புண்படுத்துதல்** – புண்ணுண்டாக்குதல்; வருத்துதல்; மனம் நோவச்செய்தல்.
**புண்படுதல்** – காயமடைதல்; வருந்துதல்.
**புண்வழலை** – புண்ணிலிருந்து வடியும் சீழ்.
**புண்வாய்** – புண்ணின் துளை.
**புணர்** – புதுமை; சேர்க்கை.
**புணர்** (வி) – சேர். அணை; புணர்என் ஏவல்.
**புணர்க்கை** – சேர்க்கை; சூழ்ச்சி; மாயம்.
**புணர்குறி** – தலைவன் தலைவியர் சந்திக்கும் குறியிடம்.
**புணர்ச்சி** – சேர்க்கை; ஒரே நாட்டார் ஆதல்; கலவி; எழுத்து முதலியவற்றின் சந்தி; முன் பின் தொடர்பு; அணிகலன்.
**புணர்ச்சிவிதும்பல்** – புணர்ச்சிக்கு விரையும் விருப்பம்.
**புணர்த்தல்** – சேர்த்தல்; எழுத்து முதலியன சந்திக்கும்படி செய்தல்; நிகழ்த்துதல்; பாகுபடுத்துதல்; கூட்டிச்சொல்லுதல்; கட்டுதல்; படைத்தல்; பிரபந்தமாகச் செய்தல்.
**புணர்தம்** – புனர்பூசநாள்.
**புணர்தல்** – பொருந்துதல்; கலவிசெய்தல்; அளவளாவுதல்; மேற்கொள்ளுதல்; ஏற்புடையதாதல்; விளங்குதல்; எழுத்து முதலியன சந்தித்தல்; உடலிற்படுதல்; கூடியதாதல்; தலைவனும் தலைவியும் கூடுதலாகிய குறிஞ்சி உரிப்பொருள்.
**புணர்தை** – காண்க: **புணர்தம்.**
**புணர்ப்பு** – தொடர்பு; கலவி; சேர்க்கை; எழுத்து முதலியவற்றின் சந்தி; நட்பு; துணை; உடல்; கடல்; சூழ்ச்சி; ஏவல்; பிரபந்தம்; மாயம்; செயல்.
**புணர்வு** – சேர்க்கை; கலவி; இசைப்பு; உடல்.
**புணரி** – கடல்; அலை; கரை; தனிமை.
**புணரியிற்றுயின்றோன்** – கடலிற் பள்ளிகொண்ட திருமால்.
**புணரியோர்** – ஒன்றுகூட்டியவர்.
**புணி** – மயிர்முடி.
**புணை** – தெப்பம்; மரக்கலம்; உதவி; மூங்கில்; விலங்கு; ஈடு; ஆள் பொறுப்பு; ஒப்பு.
**புணைகயிறு** – பூட்டாங்கயிறு.
**புணைசல்விடுதல்** – காண்க: **பிணையடித்தல்.**
**புணைத்தல்** – கட்டல்.
**புணைப்படுதல்** – பொறுப்பாதல்.
**புணையலடித்தல்** – காண்க: **பிணையடித்தல்.**
**புத்தகம்** – நூல்; ஓவியம் தீட்டிய துணி; மயிலிறகு.
**புத்தசேடம்** – உண்ட மிச்சில்.
**புத்தசைத்தியம்** – புத்தாலயம்.
**புத்தப்(ம்)புதிய** – மிகப் புதிய.
**புத்தம்** – புத்தமதம்; உணவு.
**புத்தமதம்** – பௌத்தசமயம்.
**புத்தமுதம்** – புதிய உணவு.
**புத்தர்** – புத்தப் பதவிபெற்ற பெரியோர்கள்; புத்த சமயத்தோர்.
**புத்தன்** – கௌதமர்; புத்தசமயத்தான்; திருமாலவதாரத்துள் ஒன்று; அருகன்; புதியவர்; புதியது; நாணயவகை.
**புத்தாடை** – புதிய ஆடை.
**புத்தாத்திரி** – காண்க: **அருநெல்லி.**
**புத்தி** – அறிவு; இயற்கையுணர்வு; ஆராய்ந்து செய்யும் கரணம்; போதனை; வழிவகை; கழுவாய்; உரிமை; கோளின் நடை; புட்டி.
**புத்திக்கூர்மை** – கூர்த்த அறிவு.
**புத்திகெட்டவன்** – மூடன்; நேர்மையில்லாதவன்.
**புத்திகெட்டுப்போதல்** – உணர்வுகெடுதல்; தவறுதலான செயல் செய்தல்; நேர்மையற்றுப் போதல்.

**புத்திகோசரம்** – அறிவுக்குப் புலப்படுவது.
**புத்திசாலி** – அறிவாளி.
**புத்திதடுமாறுதல்** – காண்க: **புத்திகெட்டுப்போதல்.**
**புத்திதம்** – எட்டிமரம்.
**புத்திநுட்பம்** – அறிவுக்கூர்மை.
**புத்திபண்ணுதல்** – எண்ணிப்பார்த்தல்; உறுதியாகக் கொள்ளுதல்.
**புத்திமட்டு** – புத்திக்குறைவு.
**புத்திமதி** – அறிவுரை.
**புத்திமயக்கம்** – அறிவுக்கலக்கம்; பைத்தியம்.
**புத்திமாறாட்டம்** – பைத்தியம்.
**புத்திமான்** – காண்க: **புத்திசாலி.**
**புத்தியறிதல்** – அறிவுதெளிதல்; பெண்கள் பூப்படைதல்.
**புத்தியீனம்** – அறியாமை.
**புத்தியீனர்** – அறிவுக்கேடர்.
**புத்தியூட்டுதல்** – அறிவுபுகட்டுதல்.
**புத்திரகன்** – விசேட தீட்சை பெற்றவன்; அன்பன்; வஞ்சகன்.
**புத்திரகாமேட்டி** – புதல்வனைப் பெற விரும்பிச் செய்யும் வேள்விவகை.
**புத்திரசந்தானம்** – ஆண்வழி.
**புத்திரசம்பத்து** – மக்கட்செல்வம்.
**புத்திரசோகம்** – பிள்ளையை இழந்த துன்பம்.
**புத்திரத்தானம்** – சந்தானத்தைக் குறிக்கும் இலக்கினத்துக்கு ஐந்தாமிடம்.
**புத்திரநாதன்** – பிள்ளையினால் காக்கப்படுபவன்.
**புத்திரப்பிரதிநிதி** – தத்துப்பிள்ளை.
**புத்திரபௌத்திரபாரம்பரியம்** – வமிசபரம்பரை.
**புத்திரமார்க்கம்** – காண்க: **கிரியாமார்க்கம்.**
**புத்திரலாபம்** – மகப்பேறு.
**புத்திரன்** – மகன்; மாணாக்கன்; அறநூலில் கூறப்படும் பன்னிருவகைப் புதல்வர்களுக்கும் பொதுப்பெயர்.
**புத்திரி** – மகள்; காண்க: **கீழாநெல்லி; கரிமுள்ளி.**
**புத்திரிகாசுதன்** – மகளுடைய மகன்; காண்க: **புத்திரிபுத்திரன்.**
**புத்திரிகை** – மகள்; சித்திரப்பாவை.
**புத்திரிபுத்திரன்** – தன் மகள்வயிற்றுப் பிறந்தவனும் தனக்கே மகனாகக் கொள்ளப்பட்டவனுமாகிய பேரன்.
**புத்திரேடணை** – பிள்ளைகளிடம் அன்பு.
**புத்திவான்** – காண்க: **புத்திசாலி.**
**புத்திவிருத்தி** – அறிவுப்பெருக்கம்.
**புத்து** – புதல்வரில்லாதார் அடையும் நரகவகை; பௌத்தமதம்; புற்று.
**புத்துரை** – புதிய உரை.
**புத்தேணாடு** – காண்க: **புத்தேளுலகம்.**
**புத்தேள்** – புதுமை; புதியவள்; தெய்வம்; தேவர்.
**புத்தேளிர்** – வானோர், தேவர்.
**புத்தேளுலகம்** – வானுலகு.
**புத்தேன்** – எட்டிமரம்.
**புத்தோடு** – புதுப்பானை.
**புத** – வாயில்.
**புதசனன்** – அறிஞன்.
**புதஞ்செய்தல்** – தாவியெழுதல்.
**புதம்** – மேகம்; அறிவு.
**புதமெழுதல்** – காண்க: **புதஞ்செய்தல்.**
**புதர்** – தூறு; புற்சாதி; மருந்துப்பூண்டு; அரும்பு.
**புதரவண்ணான்** – காண்க: **இராப்பாடி.**
**புதல்** – தூறு; ஒரு புல்வகை; மருந்துப்பூண்டு; அரும்பு; புருவம்.
**புதல்வர்ப்பேறு** – ஆண்மக்களைப் பெறுகை.
**புதல்வன்** – மகன்; மாணாக்கன்; குடி.
**புதல்வி** – மகள்.
**புதவம்** – வாயில்; அறுகு.
**புதவாரம்** – புதன்கிழமை.
**புதவு** – கதவு; வாயில்; மதகு; திட்டிவாசல்; குகை; அறுகம்புல்.
**புதளி** – புலால்.
**புதற்பூ** – காண்க: **நிலப்பூ.**
**புதன்** – ஒன்பது கோள்களுள் ஒன்று; கிழமைகளுள் ஒன்று; புலவன்; தேவன்.
**புதா** – கதவு; மரக்கானாரை; பெருநாரை.
**புதானன்** – அறிஞன்; குரு.
**புதிசு(து)** – புதுமையானது; புதியது, திருவிளக்கின்முன் வைக்கப்படும் முதல் விளைச்சற் காணிக்கை.
**புதியது** – அறுவடையானதும் கொண்டாடும் பண்டிகை; புதிதாகச் சமைத்த சோறு.
**புதியதுண்ணுதல்** – முதலில் விளைந்த விளைவை நல்வேளையிற் சமைத்துண்ணுதல்; புதிதாய் ஒன்றைப் புசித்தல்.
**புதியமனிதன்** – அயலான்; வேலையிற் புதிதாக அமர்ந்தவன்; புதிதாகப் பெற்றெடுத்த ஆண் குழந்தை.
**புதியர், புதியவர்** – புதிதாக வந்தவர்; விருந்தினர்.
**புதியனபுகுதல்** – சொல், வழக்கம் முதலியன புதியனவாக உண்டாகை.
**புதியோர்** – காண்க: **புதியவர்.**
**புதிர்** – திருவிளக்கின்முன் வைக்கப்பட்ட முதல் விளைச்சற் காணிக்கை; விடுகதை.
**புதினக்கடுதாசி** – செய்தித்தாள்.
**புதினம்** – புதுமை, நூதனம்; செய்தி; வியப்பு; கதை.
**புதினா** – கீரைவகை.
**புதுக்கட்டு** – புதிய முறை.
**புதுக்கணித்தல்** – அழகுபெறுதல்.

**புதுக்கணிப்பு** – புதியவொளி.
**புதுக்கருக்கு** – வேலைத் தொடக்கத்தில் புதிய ஆளுக்கு உண்டாஞ் சுறுசுறுப்பு; புதுமை.
**புதுக்கலம்** – புதிய மட்பாண்டம்.
**புதுக்குடி** – புதிதாய் வந்தேறிய குடி.
**புதுக்குதல்** – புதுப்பித்தல்; அலங்கரித்தல்.
**புதுக்குப்புறம்** – கோயில் முதலியவற்றைப் புதுப் பித்தற்கு ஒதுக்கிவைக்கப்பட்ட அறக் கட்டளை.
**புதுக்கோள்** – புதிதாகப் பற்றிக்கொள்ளப் பட்டது.
**புதுச்சரக்கு** – புதிய வாணிகப் பண்டம்; காண்க: ஆகாமியம்.
**புதுத்திங்கள்** – பிறைச்சந்திரன்.
**புதுநடை** – புதுமாதிரியான முறை அல்லது ஒழுக்கம்.
**புதுநிறை** – புதுவெள்ளம்.
**புதுநீர்விழவு, புதுநீராட்டு** – ஆற்றில் புதுநீர் வந்தபோது நிகழ்த்தும் கொண்டாட்டம்.
**புதுப்பழக்கம்** – புதிய வழக்கம்; பழக்கமில்லா தவன் செயல்.
**புதுப்பித்தல்** – பழுதுபார்த்தல்; காலத்திற்கு ஏற்ப மாற்றியமைத்தல்.
**புதுப்புனல்விழவு, புதுப்புனலாட்டு** – காண்க: புதுநீர்விழவு.
**புதுப்பெண்** – புதிதாக மணமான பெண்.
**புதுப்பெயல்** – முதன்முதல் பெய்யும் மழை.
**புதுமணம்** – கலியாணம்.
**புதுமணவாளன்** – புதிதாக மணஞ்செய்து கொண்டவன்; நித்திய கல்யாணன்; தினமும் இன்பம் நுகர்பவன்.
**புதுமாடு** – பழக்கப்படாத மாடு.
**புதுமுகனை** – தொடக்கம்.
**புதுமை** – புதிதாந்தன்மை; பழக்கமின்மை; வியப்பு; மிகுதி; எழில்.
**புதுமைகாட்டுதல், புதுமைசெய்தல்** – வியத்தகு செயல் தோற்று வித்தல்; அறியாததுபோல் காட்டிக்கொள்ளுதல்.
**புதுமொழிதல்** – புதிய செய்தி கூறுதல்.
**புதுவது** – புதிது.
**புதுவை** – புதுச்சேரி, சீவில்லிபுத்தூர், புதுக்கோட்டை முதலிய ஊர்ப் பெயர்களின் மரூஉச்சொல்.
**புதுவோர்** – புதிய மாந்தர்; அனுபவமற்றவர்.
**புதை** – மறைவு; காட்டில் மரமடர்ந்த இடம்; மறைபொருள்; புதைபொருள்; மறைவிடம்: உடல்; அம்புக்கட்டு; புதுமை; உட்டுளை; ஆயிரம்.
**புதை (வி)** – மறைத்து வை; சேமி.
**புதைகுழி** – பிணத்தைப் புதைக்கத் தோண்டப் படும் குழி.
**புதைத்தல்** – அடக்கம்பண்ணுதல்; ஒளித்து வைத்தல்; வாய் முதலியவற்றைப் பொத்து தல்; போர்த்தல்; மறைத்துப் பேசுதல்; மணி பதித்தல்; வலிமையைக் குறைத்தல்; அமிழ்த்துதல்.
**புதைதல்** – மறைதல்; அமிழ்தல்; உள்ளடங்கி இருத்தல்.
**புதைபொருள்** – பூமியிற் புதைந்து கிடக்கும் பொருள்; ஆழ்ந்த கருத்துடையது.
**புதைமணல்** – சொரிமணல்.
**புதையல்** – பூமியில் மறைந்துகிடந்த நிதி; ஆழ்ந்த கருத்துடையது; மறைகை; அம்புக்கட்டு; கேடயம்.
**புதையிருள்** – மிகுந்த இருள்.
**புந்தி** – அறிவு; மனம்; புதன்; நெல்வகை.
**புந்தியர்** – புலமையோர்.
**புப்புசம்** – நுரையீரல்.
**பும்** – ஆண்; ஆண்குறி; ஓர் ஒலிக்குறிப்பு.
**புமான்** – ஆண்மகன்; கணவன்; ஆன்மா; காண்க: அசுத்ததத்துவம்.
**புய்த்தல்** – பறித்தல், பிடுங்கல்; பயத்தல்.
**புய்தல்** – பறிக்கப்படுதல்; மறைதல்.
**புயக்கறுதல்** – பசுமையறுதல்; வெளியேறத் தொடங்குதல்.
**புயக்கு** – மனக்கவர்ச்சி; விட்டுநீங்குதல்.
**புயகம்** – பாம்பு.
**புயகாசனன்** – பாம்பை உணவாகக் கொள்ளும் கருடன்.
**புயகோடரம்** – கைக்குழி, கைப்பொருத்து.
**புயங்கநிருத்தம்** – ஒரு நடனவகை.
**புயங்கம்** – பாம்பு; ஒரு நடனவகை.
**புயங்கமலை** – ஆதிசேடனது வடிவமாகக் கருதப் படும் திருவேங்கடமலை.
**புயங்கன்** – பாம்பு; பாம்பணியுடைய சிவபிரான்.
**புயங்கொட்டுதல்** – வீரத்தின் குறியாகத் தோள் தட்டுதல்.
**புயத்தல்** – பறித்தல்; வெளியேறுதல்; பெயர்த்தல்.
**புயத்துணை** – தகுந்த துணைவன்.
**புயம்** – தோள்; புடை; கோணத்தின் பக்கக்கோடு.
**புயமுட்டி** – வில்லைத் தோள்மேல் பிடித்து மேல் நோக்கி அம்பெய்யும்வகை.
**புயல்** – மேகம்; மழைபெய்கை; நீர்; கொடுங் காற்று; சுக்கிரன்.
**புயல்வண்ணன்** – திருமால்.
**புயலேறு** – இடி.

**புயவகுப்பு** – பாட்டுடைத்தலைவனது தோள் வலியை மிகுத்துக் கூறுவதான கலம்பகத்துள் ஓர் உறுப்பு.

**புயவலி** – தோள்வலிமை.

**புயாந்தரம்** – மார்பு.

**புரகரன்** – காண்க: **புரதகனன்.**

**புரசல்** – காண்க: **புரைசல்.**

**புரசு** – பூவரசுமரம்; சிறு பெண்குழந்தை; ஒரு மரவகை.

**புரசை** – யானைக் கழுத்திலிடுங் கயிறு.

**புரட்சி** – மாறுதல்; பிறழ்வு; அரசியல் கெட்ட நிலைமை; ஒழுங்கின்மை.

**புரட்டன்** – மாறாட்டுக்காரன்.

**புரட்டாசி** – தமிழ் மாதங்களுள் ஆறாவது; பூரட்டாதிநாள்.

**புரட்டியடித்தல்** – மாறாட்டமாய்ப் பேசுதல்; உண்மையை மறுத்தல்; நன்றாக அடித்தல்.

**புரட்டு** – கீழ்மேலாகத் திருப்புதல்; மாறுபட்ட பேச்சு; வஞ்சகம்; வயிற்றுவலி; கறிவகை; வாந்திக்குணம்.

**புரட்டுதல்** – உருட்டுதல்; செய்துமுடித்தல்; கீழ் மேலாகத் திருப்புதல்; கறி முதலியவற்றைக் கிண்டி வதக்குதல்; குமட்டுதல்; வஞ்சித்தல்; மாறுபடுத்துதல்; தேய்த்தல்; அமுக்காக்குதல்; மறுத்தல்; புத்தக ஏடுகள் முதலியவற்றைத் திருப்புதல்.

**புரட்டுருட்டு** – மாறாட்டமாகப் பேசுதல்; தந்திரச் செயல்.

**புரட்டை** – பூரட்டாதிநாள்.

**புரண்டை** – பிரண்டைக்கொடி.

**புரணப்பொருள்** – குறிப்பில் தோன்றும் பொருள்.

**புரணம்** – நிறைவு; அசைகை; துடிக்கை; தோன்றுகை; மயக்கம்; ஒளி.

**புரணி** – ஊன்; தோல்; சாரமற்றது.

**புரத்தல்** – காத்தல்; மிகுதியாகக் கொடுத்தல்; வணங்குதல்; அருளுதல்.

**புரதகனன்** – திரிபுரம் அழித்த சிவபிரான்.

**புரந்தரம்** – தோள்.

**புரந்தரலோகம்** – இந்திரலோகம்.

**புரந்தரன்** – இந்திரன்.

**புரந்தார்** – புரவலர்; அரசர்.

**புரப்பு** – பாதுகாப்பு, ஓம்புகை.

**புரப்போர்** – காப்பாற்றுபவர்; அரசர்.

**புரம்** – ஊர்; நகரம்; தலைநகரம்; முப்புரம்; கோயில்; மேன்மாடம்; வீடு; உடல்; தோல்; முன்.

**புரமுன்றெரித்தோன், புரமெரித்தோன்** – காண்க: **புரதகனன்.**

**புரவரியார்** – அரசிறைக் கணக்கர்.

**புரவலன்** – காத்துதவுவோன்; அரசன்; கொடையாளன்.

**புரவாசம்** – நகரத்தில் வாழ்கை.

**புரவாயில்** – கோபுரவாயில்.

**புரவி** – குதிரை; குதிரை, யானை இவற்றைக் கட்டுமிடம்; அசுவினிநாள்; சாதி.

**புரவிசயன்** – திரிபுரம் வென்ற சிவபிரான்.

**புரவித்தேவர்** – குதிரைமுகமுள்ள தேவரான அசுவினிதேவர்கள்.

**புரவிவட்டம்** – குதிரை செலுத்தும் வீதியாகிய வையாளிவீதி.

**புரவிவேள்வி** – காண்க: **அசுவமேதம்.**

**புரவு** – பாதுகாப்பு; அரசு; கொடை; ஆட்சியிடம்; அரசிறை; இறையிலி நிலம்; ஆற்றுநீர் பாயும் வயல்; செழுமை.

**புரவுவரி** – காண்க: **புரவரியார்.**

**புரவுவரித்திணைக்களம்** – அரசிறைக் கணக்கர் கூடும் உத்தியோகசாலை.

**புரளி** – பொய்; வஞ்சனை; குறும்பு; சண்டை; கலகம்; முருட்டுத்தனம்.

**புரளிக்காரன்** – பொய்யன்; புரட்டுச்செய்வோன்; சண்டையிடுபவன்; ஆணையை மீறிக் கலகஞ் செய்பவன்.

**புரளிபண்ணுதல்** – குறும்புசெய்தல்; எள்ளிநகையாடல்.

**புரளுதல்** – உருளுதல்; கழிதல்; அலைமறிதல்; நிரம்பிவழிதல்; அழுக்காதல்; நீரிற்கலத்தல்; சொற்பிறழுதல்; மிகுதல்; மாறிமாறி வருதல்; சாதல்.

**புராகிருதபாவம்** – முன்செய்த தீவினை.

**புராகிருதம்** – முன்செய்தது.

**புராணகன்** – காண்க: **புராணிகன்;** படிப்போன்.

**புராணபுருடன்** – திருமால்.

**புராணம்** – பழைமை; தொன்மம், பழங்கதை; வேதவாக்கியப் பொருள்களை வலியுறுத்தும் நூல்; கோயிலிற் புராணம் படிப்பதற்கு விடப்பட்ட மானியம்.

**புராணன்** – பழமையான கடவுள்.

**புராணிகன்** – புராணப் பிரசங்கம் செய்வோன்; புராணம் செய்த ஆசிரியன்.

**புராணை** – காண்க: **புராதனி.**

**புராதனகாண்டம்** – விவிலிய நூலின் பழைய ஏற்பாடு.

**புராதனம்** – பழமையானது; பழமை; கிழத்தனம்; பழஞ்சோறு.

**புராதனர்** – முன்னோர்.

**புராதனி** – பழமையான பார்வதி.

**புராந்தகன்** – காண்க: **புரமெரித்தோன்.**

**புராந்தகி** – சிவசத்தி.

**புராந்திமகாண்டம்** – *காண்க:* **புராதனகாண்டம்.**
**புராந்திமம்** – பழைமை.
**புராரி** – *காண்க:* **புரமெரித்தோன்.**
**புராவிருத்தம்** – இதிகாசம்.
**புரி** – செய்கை; கயிறு; முறுக்கு; சுருள்; சுரி; சங்கு; விருப்பம்; யாழ்நரம்பு; மாலை; கட்டு; தலைநகர்; மருதநிலத்தூர்; உடல்.
**புரி** (வி) – புரிஎன் ஏவல்; செய்; விரும்பு.
**புரிக்கூடு** – நெற்சேர்.
**புரிகுழல்** – கடைகுழன்று சுருண்ட கூந்தல்.
**புரிகை** – அங்கக்கிரியைவகை.
**புரிசடை** – திரண்டு சுருண்ட சடை.
**புரிசம்** – அருமை; நான்குமுழ நீளம்.
**புரிசாலம்** – கெஞ்சுகை; விண்ணப்பம்.
**புரிசை** – மதில்.
**புரித்தல்** – விரும்பச்செய்தல்; நிரைத்தல்; பதித்தல்; பொருள் விளங்குதல்; விளங்குதல்.
**புரிதல்** – விரும்புதல்; தியானித்தல்; செய்தல்; படைத்தல்; ஈனுதல்; கொடுத்தல்; நுகர்தல்; உற்றுப்பார்த்தல்; விசாரணைசெய்தல்; சொல்லுதல்; நடத்துதல்; மேற்கொள்ளுதல்; முறுக்குக்கொள்ளுதல்; திரும்புதல்; மிகுதல்; அசைதல்; விளங்குதல்; பொருள் விளங்குதல்.
**புரிதிரித்தல்** – கயிற்றுக்காகப் புரிமுறுக்குதல்; கெடுக்க வழிதேடுதல்.
**புரிந்தோர்** – நண்பர்.
**புரிநாண்** – திரித்துச் செய்யப்பெற்ற கயிறு.
**புரிநூல்** – *காண்க:* **புரிமுந்நூல்.**
**புரிப்பித்தல்** – வளைந்து திரும்பச் செய்தல்.
**புரிமணை** – பாண்டம் வைப்பதற்கு வைக்கோல், நார் முதலியவற்றால் அமைத்த பீடம்.
**புரிமுகம்** – கோபுரம்; சங்கு; நத்தை.
**புரிமுந்நூல்** – பூணூல்.
**புரிமுறுக்கல்** – கோள்மூட்டிவிடுதல்.
**புரிமுறுக்கு** – *காண்க:* **புரிமுறுக்கல்;** மலராத தாமரைப் பூ.
**புரிமுறுக்குதல்** – கோட்சொல்லுதல்.
**புரியட்டகம், புரியட்டகாயம்** – நுண்ணுடல்.
**புரியணை** – *காண்க:* **புரிமணை.**
**புரியம்** – கூத்துவகை.
**புரியிட்டீர்த்தல், புரியைக்கட்டியிழுத்தல்** – பழுதையினாற் கட்டி இழுத்தல்; துன்புறுத்தல்.
**புரிவலித்தல்** – கட்டுதல்.
**புரிவளை** – முறுக்குவளையல்.
**புரிவிடுதல்** – கயிறுதிரிக்கப் புரியை முறுக்குதல்.
**புரிவில்புகழ்ச்சியணி** – *காண்க:* **புகழாப்புகழ்ச்சி.**
**புரிவின்மைநயம்** – புத்த சமயத்து நயம் நான்கனுள் ஒன்று.
**புரிவு** – அன்பு; விருப்பம்; தொழில்; தவறு; தப்பி நீங்குகை; வேறுபடுகை; தெளிவு.
**புரீடம்** – மலம்; அழுக்கு.
**புரு** – ஒரு மரவகை; மிகுதி; பருமை; வீடுபேறு; குழந்தை; ஓரரசன்; விருடப தீர்த்தங்கரர்; ஓர் அசுரன்.
**புருகூதன்** – வேள்விகளில் மிகுதியாக அழைக்கப் படும் இந்திரன்.
**புருடகாலம்** – முப்பத்தைந்து ஆண்டுக்காலம்.
**புருடதத்துவம்** – சுத்தாசுத்த தத்துவம் ஏழனுள் ஒன்றாகியதும் மும்மலங்களோடு கூடியது மான தத்துவம்.
**புருடநட்சத்திரம், புருடநாள்** – இரேவதிநாள்.
**புருடம்** – ஐந்துவகைப் பிரமங்களுள் ஒன்றான மந்திரம்; *காண்க:* **தற்புருடம்;** நான்குமுழ நீளம்; புன்னைமரம்.
**புருடமேதம்** – மனிதவேள்வி.
**புருடமோகினி** – பார்வதி.
**புருடராகம்** – ஒன்பதுவகை மணிகளுள் ஒன்று.
**புருடவாகனன்** – *காண்க:* **நரவாகனன்.**
**புருடன்** – ஆண்மகன்; கணவன்; மனிதன்; சிற்றுயிர், சீவான்மா; பேருயிர், பரமான்மா; *காண்க:* **புருடதத்துவம்.**
**புருடாமிருகம்** – மனிதமுகம்கொண்ட விலங்கு வகை.
**புருடாயிதம்** – புணர்ச்சிவகையுள் ஒன்று.
**புருடார்த்தசொரூபம்** – அறம், பொருள், இன்பம், தன்னைத்தான் அறிதல், இறைவனை அறிதல் என ஆன்மாவால் அடையப்படும் ஐவகைப் பேறு.
**புருடார்த்தம்** – மனிதன் அடையவேண்டிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகை உறுதிப்பொருள்.
**புருடோத்தமன்** – சிறந்தவன்; திருமால்.
**புருவநெரித்தல்** – கோபத்தால் புருவங்களை வளைத்தல்.
**புருவம்** – கண்ணின்மேல் உள்ள மயிர்வளைவு; புண்ணின் விளிம்பு; வரம்பு; குதிரை.
**புருவை** – ஆடு; செம்மறியாடு; பெண்ணாடு; இளமை.
**புரூணகத்தி** – கருவழித்தலாகிய பாவச்செயல்.
**புரூணகம்** – *காண்க:* **புரூணகத்தி;** கரு.
**புரூணம்** – கரு; இளமை.
**புரூரம்** – புருவம்.

**புரை** – குற்றம்; உட்டுளைப்பொருள்; குரல் வளை; விளக்குமாடம்; உள்ளோடும் புண்; கண்ணோய்வகை; பொய்; களவு; இலேசு; மடிப்பு; கூறுபாடு; வீடு; ஆசிரமம்; தேவாலயம்; அறை; பெட்டியின் அறை; மாட்டுத்தொழுவம்; இடம்; ஏகதேசம்; பூமி; பழைமை; ஒப்பு; உயர்ச்சி; பெருமை.

**புரைக்கட்டி** – உட்டுளையுடைய புண்கட்டி.

**புரைக்குழல்** – பிடரியில் அல்லது கழுத்தில் தோன்றும் சதைக்கட்டி; உட்டுளையுடைய புண்கட்டி.

**புரைக்கேறுதல்** – காண்க: **புரையேறுதல்.**

**புரைச்சல்** – திணறுமூச்சு.

**புரைசல்** – பொத்தல்; கமுக்கம், இரகசியம்; வலுக்குறைவு; குழப்பம்; சச்சரவு; துளை; மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று; குற்றம்.

**புரைசு** – பலாசுமரம்.

**புரைசை** – காண்க: **புரசை.**

**புரைத்தல்** – குற்றப்படுதல்; தப்புதல்; பெருமையாதல்; மறைவு வெளிப்படுதல்; இசைநழுவுதல்.

**புரைதல்** – ஒத்தல்; தைத்தல்; மறைத்தல்; பொருந்துதல்; நேர்தல்; மூச்சுத்திணறுதல்.

**புரைப்படுதல்** – பொந்துபடுதல்.

**புரைப்பு** – குற்றம்; ஐயம்; ஒப்பு.

**புரைப்புண்** – புரையோடிய புண்.

**புரைபடுதல்** – வருந்துதல்.

**புரைமை** – உயர்ச்சி; பெருமை.

**புரைய** – ஓர் உவமவுருபு.

**புரையன்** – வீடு; இலைக்குடில்.

**புரையிடம்** – தோப்பு.

**புரையுநர்** – ஒப்பவர்.

**புரையுள்** – வீடு.

**புரையேறுதல்** – உணவுப்பொருள் உணவுக் குழலின்வழிச் செல்லாது மூச்சுக்குழலிற் சென்று அடைத்துக்கொள்ளுதல்.

**புரையோடுதல்** – புண்ணில் உட்டுளை உண்டாதல்.

**புரையோர்** – பெரியோர்; மெய்ப்பொருளுணர்ந்தோர்; காதல்மகளிர்; கீழோர்; திருடர்.

**புரைவளர்தல்** – கண்ணில் சதைவளர்தல்.

**புரோக்கணம்** – மந்திரஞ்சொல்லி நீர் தெளித்தல்.

**புரோக்கித்தல்** – மந்திரநீர் தெளித்தல்.

**புரோகதி** – முன்னடப்பது; நாய்.

**புரோகம்** – நாய்.

**புரோகன்** – உயர்ந்தோன்.

**புரோகிதன்** – சடங்கு செய்விப்போன்; வருந்தொழில் சொல்வோன்; ஊர்ச்சோதிடன்; வைதிகப் பார்ப்பான்; இந்திரன்.

**புரோசர்** – குறுநிலமன்னர்.

**புரோசனம்** – பயன்.

**புரோசு** – சடங்கு செய்விக்கும் குரு; ஊர்ச் சோதிடன்; இந்திரன்.

**புரோசை** – காண்க: **புரசை.**

**புரோசித்தல், புரோட்சணம்** } – காண்க: **புரோக்கணம்.**

**புரோடாசம்** – வேள்வித்தீயில் இடும் அரிசிமாவாலாகிய ஓர் அவிப்பொருள்.

**புரோதம்** – குதிரைமூக்கு.

**புரோதயம்** – தூய்மைக்காக நீரில் குளிக்கை.

**புரோவாதம்** – ஒரு பொருளை முன்னர்க் கூறுவது.

**புல்** – தாவரவகை; ஒருசார் விலங்குகளின் உணவு வகை; புதர்; கம்பு; புன்செய்த் தவசம்; காண்க: **புல்லரிசி;** மருந்துச்செடிவகை; பனை; தென்னை; அனுடநாள்; புல்லியது; இழிவு; கபிலநிறம்; புணர்ச்சி; சிவல்; புலி.

**புல்குதல்** – புணர்தல்; அணைதல்; நட்பினராதல்.

**புல்லகண்டம்** – கரும்புவகை; கண்டசருக்கரை.

**புல்லகம்** – மகளிர் நெற்றியணி.

**புல்லணல்** – இளந்தாடி.

**புல்லணை** – புற்படுக்கை.

**புல்லம்** – எருது; இடபராசி; வசைமொழி; மலர்.

**புல்லர்** – கீழ்மக்கள்; வேடம்.

**புல்லரி** – புற்கட்டு; மேய்ச்சல்வரி.

**புல்லரிசி** – புல்லில் விளையும் அரிசி; மூங்கிலரிசி; பஞ்ச காலத்தில் ஏழைகள் உண்ணும் அரிசி போன்ற தானியம்.

**புல்லரித்தல்** – மயிர்க்குச்செறிதல்; மாடு முதலியன உணவு விருப்பமின்றிப் புல்லைத் துழாவுதல்.

**புல்லற்கூறுதல்** – ஏசுதல்.

**புல்லறிவர்** – காண்க: **புல்லறிவாளர்.**

**புல்லறிவாண்மை** – அறிவின்மை.

**புல்லறிவாளர், புல்லறிவினார்** } – அறிவு குறைந்தோர்.

**புல்லறிவு** – அறியாமை.

**புல்லன்** – அறிவீனன்; இழிந்தோன்; ஒழுக்கம் இல்லாதவன்.

**புல்லாங்கழி, புல்லாங்குழல்** } – இசைக்கருவிவகை.

**புல்லாடவன்** – காண்க: **புல்லுரு.**

**புல்லாணி** – திருப்புல்லாணி என்னும் ஊர்.

**புல்லார்** – பகைவர்.

**புல்லார்தல்** – தோல்வியுறுதல்.

**புல்லாள்** – காண்க: **புல்லுரு;** ஆறலைகள்வன்.

**புல்லி** – புறவிதழ்; பூவிதழ்.

**புல்லிகை** – குதிரைகளுக்கு அணியும் கன்ன சாமரை.

**புல்லிங்கம்** – வடசொல்லின் ஆண்பால்.
**புல்லிதழ்** – காண்க: **புல்லி.**
**புல்லிது** – இழிவானது.
**புல்லியார்** – இழிந்தவர்.
**புல்லிலைவைப்பு** – இலைகளால் வேயப்பட்ட குடிசைகளையுடைய ஊர்.
**புல்லினத்தாயன், புல்லினத்தான்** – ஆட்டிடையன்.
**புல்லினம்** – ஆட்டினம்.
**புல்லீரம்** – குறைந்த ஈரம்.
**புல்லு** – புல்; கிட்டிப்புள்; கொடியின் தாங்கு கட்டை.
**புல்லுக்கட்டை** – அறுத்துவிட்ட புல்லின் அடிப் பாகம்.
**புல்லுக்கற்றை** – புல்லுத்திரள்.
**புல்லுத்தரை** – புல் படர்ந்த நிலம்.
**புல்லுதல்** – தழுவுதல்; புணர்தல்; பொருந்துதல்; வரவேற்றல்; ஒத்திருத்தல்; ஒட்டுதல்; நட்புச் செய்தல்.
**புல்லுநர்** – நண்பர்.
**புல்லுமேய்தல்** – புல்லுத்தின்னுதல்; புல்லாற் கூரைபோடுதல்.
**புல்லுயிர்** – குழந்தை; சிற்றுயிர்.
**புல்லுரு** – பயிரையழிக்கும் பறவை விலங்குகளை ஓட்டுதற்காக வயலில் புல்லால் அமைக்கப்படும் உருவம்.
**புல்லுருவி** – மரஞ்செடிகளில் ஒட்டிவளரும் பூண்டுவகை.
**புல்லுறுத்தல்** – நிகழ்த்துதல்.
**புல்லூரி** – காண்க: **புல்லுருவி.**
**புல்லூறு** – ஒரு பறவைவகை.
**புல்லெழுதல்** – புல்லுண்டாதல்; ஆள்வழக்கறுதல்.
**புல்லெனல்** – பொலிவழிதற்குறிப்பு; இழிவு பாட்டுக் குறிப்பு.
**புல்லை** – மங்கலான மஞ்சள்நிறம்.
**புல்வாய்** – கலைமான்.
**புல்வீடு** – புல்வேய்ந்த கூரையுள்ள குடிசை.
**புல்வெட்டிப்பல்** – மாட்டின் முன்வாய்ப் பல்.
**புல்வேய்குரம்பை** – காண்க: **புல்வீடு.**
**புல** – புலால்; புலால்நாற்றம்.
**புலங்கொள்ளுதல்** – விளங்குதல்; தெளிவடைதல்.
**புலச்சாய்வு** – வயற்புறம்.
**புலச்சி** – அறிவு நிறைந்தவள்.
**புலச்செய்கை** – உழவு.
**புலத்தகை** – ஊடல்.
**புலத்தல்** – மனம் வேறுபடுதல்; துன்புறுதல்; வெறுத்தல்; அறிவுறுத்துதல்.
**புலத்தார்** – குடிகள்.
**புலத்தி** – வண்ணாத்தி.
**புலத்தோர்** – அறிவுடைச் சான்றோர்; ஞானியர்.
**புலநெறிவழக்கம்** – புலவரால் கைக்கொள்ளப் படும் செய்யுள் வழக்கு.
**புலப்படுத்துதல்** – தெரிவித்தல்.
**புலப்படுதல்** – தெரிதல்; வெளிப்படுதல்.
**புலப்பம்** – பிதற்று; அலப்பு; அழுகை; நோய் மிகுதியால் வாய்குழறுகை; நன்றாய்த் தெரிகை.
**புலப்பாடு** – நன்றாய்த் தெரிகை; மட்டுக் கட்டுகை.
**புலபுலெனல்** – விரைந்து தொடர்ந்துவருதற் குறிப்பு.
**புலம்** – வயல்; இடம்; திக்கு; மேட்டுநிலம்; பொறி; பொறியுணர்வு; அறிவு; கூர்மதி; துப்பு; நூல்; வேதம்.
**புலம்பல்** – ஒளி; தனிமை கூறுகை; அழுதல்; பிதற்றுதல்; அழுகைப்பாட்டு; அலப்புகை.
**புலம்பன்** – நெய்தல்நிலத் தலைவன்; ஆன்மா.
**புலம்பிடித்தல்** – துப்புக் கண்டுபிடித்தல்.
**புலம்பு** – ஒலி; பிதற்றல்மொழி; அழுகையொலி; தனிமை; பிரிவு; மனக்கலக்கம்; வருத்தம்; வெறுப்பு; அச்சம்; குற்றம்.
**புலம்புதல்** – அழுதல்; ஒலித்தல்; பிதற்றுதல்; தனித்தல்; வருந்துதல்; வாடுதல்; வெறுத்தல்; அடிக்கடி கூறுதல்.
**புலம்புநீர்** – கண்ணீர்.
**புலம்புமுத்து** – அழுகைக் கண்ணீர்.
**புலம்புவித்தல்** – அவசமாக்குதல்.
**புலம்புள்** – அழுகை.
**புலம்பெயர்மாக்கள்** – அயல்நாட்டினர்; கடலோடிகள்.
**புலம்விசாரித்தல்** – உளவறிதல்.
**புலம்வைத்தல்** – உளவு எதிர்பார்த்தல்.
**புலமகள்** – கலைமகள்.
**புலமகன்** – புலமையுள்ளவன்.
**புலமங்கை** – நிலமகள்.
**புலமறிதல்** – காண்க: **புலனறிதல்.**
**புலமாக்குதல்** – தெரிவித்தல்; வெளியாக்குதல்.
**புலமினுக்கி** – துடைப்பம்.
**புலமை** – மெய்யறிவு; செய்யுளியற்றும் ஆற்றல்.
**புலமைபாடுதல்** – பாப்புனைதல்.
**புலமையோர்** – கவி, கமகன், வாதி, வாக்கி என்னும் நால்வகைக் கல்விவல்லோர்; கற்றோர்.
**புலர்** – உலர்கை.
**புலர்காலை** – விடியல்.
**புலர்ச்சி** – வாடுகை; உலருகை; விடிகை.
**புலர்த்துதல்** – உலர்த்துதல்; வாட்டுதல்; பூசுதல்.
**புலர்தல்** – வாடுதல்; உலர்தல்; தளர்தல்; குறைதல்; விலகுதல்; முற்றுதல்; விடிதல்; தெளிதல்.

**புலர்பு(வு)** – காண்க: புலர்காலை.
**புலரி** – காண்க: புலர்காலை; சூரியன்.
**புலரிவைகறை** – வைகறைக்கும் புலரிக்கும் இடைப்பட்ட காலம்.
**புலவர்** – புலமையோர்; பாவாணர்; ஞானிகள்; தேவர்; குறுநிலமன்னர்; கூத்தர்; கம்மியர்; ஓவியம் முதலிய கலைவல்லார்; சாளுக்கியர்; ஒருவகைச் சாதியார்; சில இனத்தவரின் பட்டப்பெயர்.
**புலவராற்றுவழக்கம்** – புலநெறி வழக்கம்.
**புலவரை** – நிலவெல்லை; அறிவின் எல்லை.
**புலவல்** – வெறுப்பு; புலால் நாற்றம்.
**புலவன்** – அறிஞன்; பாவாணன்; தேவன்; புதன்; முருகன்; இந்திரன்; அருகன்; புத்தன்.
**புலவி** – ஊடல்; வெறுப்பு.
**புலவிநீட்டம்** – ஊடல்மிகுதி; கலவியிற் கூச்சம்.
**புலவிநுணுக்கம்** – சிறு காரணங்களைக் கற்பனையாகக்கொண்டு தலைவி ஊடுகை.
**புலவு** – காண்க: புல; இரத்தம்; வெறுப்பு; அலறு; நரகம்; வயல்.
**புலவுதல்** – புலால் நாற்றமடித்தல்; வெறுத்தல்.
**புலவோன்** – அறிஞன்; பாவாணன்; ஆன்மா.
**புலன்** – ஐம்புலன் நுகர்ச்சியாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பவை; பொறி; கருமேந்திரியம்; அறிவுடைமை; அறிவுக் கூர்மை; வெளிப்படக் காண்டல்; உறுப்பு; வயல்; நூல்வனப்புள் ஒன்று.
**புலன்வனப்பு** – இயற்சொல்லால் உரிய பொருள் விளங்கக் கூறுதல்.
**புலன்வென்றோர்** – ஐம்புலன்களை வென்ற முனிவர்.
**புலனறிதல்** – துப்பறிதல்.
**புலனி** – நண்டு.
**புலனிடம்** – வாய்.
**புலனுழுதுண்மார்** – கற்றோர்.
**புலனெறிதல்** – ஐம்புலன்களை வெல்லுதல்.
**புலனொடுக்கம்** – ஐம்புல ஆசையை ஒடுக்குகை.
**புலாகம்** – சோற்றுப்பருக்கை.
**புலாதி** – கவலை; குழப்பம்.
**புலால்** – ஊன் முதலியன; புலால்நாற்றம்; தசை நரம்பு.
**புலால்கட்டி** – முத்துக்குளியலின்போது மீன் முதலியவற்றை வாய்கட்டித் தடுப்போன்.
**புலாவுதல்** – புலால்நாற்றம் அடித்தல்; வெறுத்தல்; ஒலித்தல்; விடிதல்.
**புலாழி** – புலால்நாற்றம் பொருந்திய சக்கரப் படை.
**புலாற்றானம், புலாற்றுருத்தி** – உடம்பு.
**புலான்மறுத்தல்** – ஊன்உணவை விலக்குதல்.
**புலானீர்** – இரத்தம்.
**புலி** – ஒரு விலங்குவகை; ஒரு முனிவன்; வேங்கை மரம்; சிங்கம்; சிம்மராசி; நால்வகைச் சாந்தினுள் ஒன்று; மயிர்ச்சாந்து; உண்ணாக்கு; சூது கருவியுள் ஒன்று.
**புலிக்கண்கல்** – கோமேதகம்.
**புலிக்குடத்தி** – கழுதைப்புலி.
**புலிக்கொடியோன்** – சோழன்.
**புலிகடிமால்** – புலியைக் கொன்று முனிவரை மீட்ட இருங்கோவேள் என்னும் சிற்றரசன்.
**புலிங்கம்** – ஊர்க்குருவி; தீப்பொறி.
**புலிசங்கிலி** – சங்கிலிவகை.
**புலித்தண்டை** – விருதுவகை; கோயில் மரியாதை வகை.
**புலித்தொடர்** – புலிச்சங்கிலிவகை.
**புலித்தோலுடையோன்** – சிவபிரான்.
**புலிதடுக்கி** – காண்க: **புலிதொடக்கி**; தொடரிச் செடி.
**புலிதொடக்கி** – கற்றாழை; கொடிவகை.
**புலிந்தன்** – காண்க: **புளிஞன்.**
**புலிநகக்கொன்றை** – புலிநகம் போன்ற பூவையுடைய கொன்றைமரம்.
**புலிப்பற்றாலி** – புலிப்பல்லால் ஆன கழுத்தணி.
**புலிப்பொறி** – மதிற்பொறிவகை.
**புலிப்போத்து** – புலிக்குட்டி.
**புலிமுகப்பு, புலிமுகமாடம்** – புலியுருவத்தை முகப்பிற் செய்துவைத்துள்ள மாளிகை.
**புலிமுகவாயில்** – புலிமுக உருவம் அமைந்த வாயில்.
**புலியுயர்த்தோன்** – புலிக்கொடியை உயர எடுத்தவனாகிய சோழன்.
**புலியுறுமி** – புலிபோல் முழங்கும் ஒரு பறை வகை; கிறிச்சான்; புள்ளோட்டும் கருவி.
**புலியுறை** – புலித்தோலாற் செய்த ஆயுதத்தின் மேலுறை.
**புலியூர்** – புலிக்கால் முனிவர் வழிபட்ட நகரமாகிய சிதம்பரம்.
**புலு** – பத்தைக் குறிக்கும் குழூஉக்குறி.
**புலுட்டுதல்** – ரொட்டி முதலியன கருக்குதல்; சுடுதல்.
**புலுட்டை** – செழிப்பற்றது; மங்கின நிறம்; செழிப்பற்ற தன்மை.
**புலுண்டல்** – கருகல் உணவு; செழிப்பற்ற தன்மை.
**புலுண்டுதல்** – கருகுதல்.
**புலுதம்** – உயிரளபெடை; மெய்யெழுத்து; குதிரை முழுவோட்டம்; இசையின் காலவகை.
**புலை** – இழிவு; அழுக்கு; தீட்டு; தீயநெறி; பொய்; ஊன்; கீழ்மகன்; தீநாற்றம்.

**புலைச்சி** – புலைப்பெண்; எவட்சாரம்.
**புலைச்சேரி** – புலையர் வாழும் இடம்.
**புலைசு** – புலால்.
**புலைஞர்** – இழிந்தோர், சண்டாளர்.
**புலைத்தனம்** – இழிகுணம்; கொலைக்குணம்.
**புலைத்தி** – இழிகுலப் பெண்; வண்ணாத்தி.
**புலைத்தொழில்** – இழிசெயல்.
**புலைப்பாடி** – காண்க: **புலைச்சேரி.**
**புலைமகன்** – கீழ்ச்சாதியான்; புரோகிதன்; நாவிதன்.
**புலைமை** – இழிவு; இழிவான நடை.
**புலையன்** – கீழ்மகன்; சண்டாளன்; ஒருசார் மலைச்சாதி; புரோகிதன்; பாணன்.
**புலையாட்டம்** – நிலையின்மை.
**புலையாடி** – புலையன் எனப் பொருள்படும் நிந்தைச்சொல்.
**புலைவினையர்** – இழிதொழிலாளர்.
**புலோமசித்து** – புலோமன் என்பவனை வென்ற இந்திரன்.
**புலோமசை** – புலோமன் மகளாகிய இந்திராணி.
**புவ்வத்தாமரை** – திருமாலின் கொப்பூழினின்று எழுந்த தாமரை.
**புவம்** – வானம்.
**புவலோகம்** – மேல் ஏழுலகுள் ஒன்று, பூலோகம்.
**புவன்** – தானே தோன்றிய இறைவன்.
**புவனகோசம்** – பூமி.
**புவனநாயகன்** – உலகிற்கிறைவன்.
**புவனம்** – உலகம்; பூமி; இடம்; மானுடசாதி; நீர்.
**புவனி** – பூமி.
**புவனை** – பார்வதி.
**புவி** – பூமி; இடம்.
**புவிதவிருக்கம்** – பெருவாகைமரம்; வேலிப் பருத்தி.
**புவிப்பாத்திரம்** – மண்கலம்.
**புழக்கம்** – அறிமுகம்; பழக்கம்; தோற்றம்; இடை வெளிவிட்ட தன்மை.
**புழகு** – மலையெருக்கு; புனமுருங்கை; செந்நிறப் பூவுள்ள செடி.
**புழங்குதல்** – கையாளுதல்; பழகுதல்.
**புழல்** – உட்டுளை; சலதாரை; பணியாரம்; மீன் சாதி.
**புழற்கால்** – துளையுள்ள நாளம்.
**புழு** – கிருமி; கரு.
**புழுக்கம்** – வெப்பம்; வேர்வை; துன்பம்; பொறாமை; வன்மம்.
**புழுக்கல்** – அவித்தது; சோறு; புழுங்கலரிசி; முதிரைப்பண்டம்.
**புழுக்கறை** – புழுங்கச்செய்யும் அறை.
**புழுக்கு** – அவிக்கை; புழுங்கவைத்த உணவு; குழையச் சமைத்த பருப்பு; பருப்புச்சோறு; இறைச்சி; அம்புக்கட்டு.
**புழுக்குதல்** – அவித்தல்; தீய்த்தல்.
**புழுக்குவது** – அவித்தது; புழுக்கின நெல்.
**புழுக்கூடு** – நத்தை முதலியவற்றின் கூடு; உடல்.
**புழுக்கை** – பிழுக்கை; அடிமை; காண்க: **தொழுத்தை.**
**புழுக்கையன்** – மிக இழிந்த மனிதன்; அடிமை யானவன்.
**புழுக்கொல்லி** – காண்க: **ஆடுதின்னாப்பாளை; நாகமல்லி.**
**புழுகு** – ஒரு மணப்பண்டவகை; புழுகுபூனை; பெரிய புனுகுபூனை, நாவிப்புழுகு; அம்புத் தலை; புளுகு.
**புழுகுசட்டம்** – புனுகுதோன்றும் பூனையின் உறுப்பு; ஒரு நறுமணப் பொருள்.
**புழுகுசம்பா** – ஒரு நெல்வகை.
**புழுகுநெய்** – புழுகுசட்டத்திலிருந்து எடுக்கும் நறுமணப் பொருள்.
**புழுகுபூனை** – ஒருவகை மணப்பொருள் தரும் பூனைவகை.
**புழுங்கல்** – அவிகை; அவித்தது; புழுக்கின தானியம்; சினக்குறிப்பு; புழுக்கம்; வேர்க்கை; பண்படுத்திய புன்செய்; நாணயக் குற்றவகை.
**புழுங்கலரிசி** – புழுக்கிய நெல்லின் அரிசி.
**புழுங்குதல்** – ஆவியெழ வேகுதல்; சிறுக வேகுதல்; வெப்பத்தாற் புழுக்கமாதல்; கோபத்தால் வெம்புதல்; வேர்த்தல்; காற்றில்லாது வெப்ப மாயிருத்தல்; பொறாமைப்படுதல்; வாடுதல்; வருந்துதல்; சினத்தல்.
**புழுத்தல்** – புழுவுண்டாதல்; கருத்தரித்தல்; மிகுதல்; பயனற்றதாதல்; பழித்தல்.
**புழுதி** – மண்தூள்; துகள்; காய்ந்த நிலம்; காண்க: **புழுதிக்கால்.**
**புழுதிக்காப்பு** – காப்பாக நெற்றியிலிடும் மண் பொட்டு.
**புழுதிக்கால்** – ஈரப்பற்றில்லாதபோது நாற்றங் காலுக்கு உழுத நன்செய்.
**புழுதிப்படலம்** – புழுதியின் கூட்டம்.
**புழுதிப்பயிர்** – புழுதிக்காலில் முளைத்த பயிர்.
**புழுதிபாடு** – தரிசுநிலம்.
**புழுதிபோடுதல்** – புழுதியில் உழுது விதைத்தல்.
**புழுதிமாயம்** – ஏமாற்று; வீண்செலவு செய்கை.
**புழுதியளைதல், புழுதியாடுதல்** – புழுதியிற் புரளுதல்; தூசி படிதல்.
**புழுதிவிதைப்பு** – காய்ந்த வயலை உழுது விதைக்கை.
**புழுது** – அம்புக்குதை.
**புழுப்பகை** – காண்க: **வாயுவிளங்கம்.**

**புழுப்பூனை** – காண்க: புழுகுபூனை.

**புழுமேய்தல்** – புழுவரித்துச் சொறியுண்டாதல்; புழுவரித்துப்போதல்; மயிர் உதிர்ந்து வழுக்கையாகை.

**புழுவதை** – தேனடை.

**புழுவுணவு** – புழுக்களே உணவாகும் நரகவகை.

**புழுவெட்டு** – புழுவரித்தது; மயிரை உதிரச் செய்யும் நோய்வகை; சொத்தைப் பல்; கண்ணிமை நோய்வகை.

**புழுவெட்டுதல்** – புழுவரித்தல்.

**புழுவைத்தல்** – புழுத்தல்.

**புழை** – துளை; குழாய்; சிறுவாயில்; வாயில்; காட்டுவழி; ஒடுக்கவழி; சாளரம்; ஏவறை; நரகம்; அளறு.

**புழைக்கடை** – வீட்டின் பின்வாயிற்புறம்; கடைமடை; நுழைவாயில்.

**புழைக்கை** – துதிக்கை; யானை.

**புழைத்தல்** – துளையிடுதல்.

**புள்** – பறவைப்பொது; வண்டு; கணந்துட் பறவை; பறவை நிமித்தம்; அவிட்டநாள்; கைவளை; மதுபானம்; கிட்டிப்புள்.

**புள்வாய்கீண்டோன்** – நாரையாக வந்த பகாசுரன் வாயைப் பிளந்த கண்ணபிரான்.

**புள்ளகம்** – மகிழ்ச்சி.

**புள்ளடி** – பறவையின் பாதம்; அடிச்சுவட்டை யொத்த அடையாளம்; உரைகல்; ஒரு செடிவகை; ஏணி; மணிக்குற்றங்களுள் ஒன்று.

**புள்ளடித்தல்** – கிட்டிப்புள் ஆடுதல்.

**புள்ளடிபோடுதல்** – கையெழுத்தில் புள்ளடிக் குறியிடுதல்; கீறல் போடுதல்.

**புள்ளம்** – அரிவாள்; கொடுவாள்; அரிவாள் மணை.

**புள்ளரசு, புள்ளரையன்** – கருடன்.

**புள்ளி** – அடையாளம்; பொட்டுக்குறி; எழுத்தின்மே லிடும் குத்து அல்லது சுழிக்குறி; மெய்யெழுத்து; ஆய்தம்; குற்றியலிகர உகரங்கள்; சரக்கின்மே லிடும் விலைமதிப்புக்குறி; கவற்றின் கட்டம்; மதிப்பு; ஆள்; பேரேடு; பெருந்தொகை; இமயமலை; பல்லி; நண்டு.

**புள்ளிக்கண்** – மாட்டின் கடைக்கண்ணில் விழும் வெண்ணிறப் புள்ளி.

**புள்ளிக்கணக்கு** – தொழிலுக்குப் பயன்படுங் கணக்கு; சாகுபடி மதிப்பு; வரவுசெலவு மதிப்புத் திட்டம்.

**புள்ளிக்காரன்** – கணக்கன்; செல்வன்.

**புள்ளிகுத்துதல்** – கணக்கெழுதல்; ஏட்டெழுத்தில் அடிப்புக் குறியாக எழுத்தின்மேல் குத்திடுதல்.

**புள்ளிபார்த்தல்** – அறுவடைக்குமுன் வயலின் விளைவை மதிப்பிடுதல்; கணக்கை முடித்தல்.

**புள்ளிபோடுதல்** – காண்க: **புள்ளிபார்த்தல்**; குறியிடுதல்; குறிப்பெழுதுதல்.

**புள்ளிமான், புள்ளிமிருகம்** – புள்ளிகளையுடைய மான் வகை.

**புள்ளியம்** – சிறுகுறிஞ்சாக்கொடி.

**புள்ளியற்கலிமா, புள்ளியன்மா** – பறவையின் வேகமுடைய குதிரை.

**புள்ளியிடுதல்** – கணக்கிற் குறித்துக்கொள்ளுதல்; பொருள் விளங்கும்படி சொற்றொடரில் குறியிடுதல்.

**புள்ளியிரலை** – காண்க: **புள்ளிமான்.**

**புள்ளிவண்டு** – கழுதைவண்டு.

**புள்ளீடு** – சிவகணங்களுள் ஒருவகைப் பேய்க் கூட்டம்; பிள்ளைநோய்.

**புள்ளு** – பறவை; சிறுபுள்ளடிப்பூண்டு.

**புள்ளுரைத்தல்** – பறவை ஒலிகொண்டு நிமித்தம் கூறுதல்.

**புள்ளுவம்** – பறவையின் ஓசை; வஞ்சகம்.

**புள்ளுவன்** – வஞ்சகன்; வேடன்; பாலைநிலமகன்; கீழ்மகன்.

**புள்ளூர்கடவுள்** – கருடன்மே லேறிச் செல்லும் தெய்வமாகிய திருமால்.

**புள்ளோச்சல், புள்ளோப்புதல்** – பறவையை ஓட்டுதல்.

**புள்ளோம்பல்** – பறவை காத்தல்; பறவை வளர்த்தல்.

**புளகம்** – மயிர்க்குச்செறிதல்; மகிழ்ச்சி; சோறு; கண்ணாடி.

**புளகித்தல்** – மிக மகிழ்தல்; மயிர் சிலிர்த்தல்.

**புளகிதம்** – மயிர்ச்சிலிர்ப்பு; பெருமகிழ்ச்சி.

**புளி** – புளிப்புச்சுவை; மரவகை; புளிங்கறி; பெண் சரக்குவகை; தித்திப்பு.

**புளி** (வி) – புளிக்கச்செய்; நெருங்கு.

**புளிக்கரைத்தல்** – கறிக்காகப் புளியை நீரில் கலத்தல்; கவலைப்படுதல்; கவலைப்படச்செய்தல்.

**புளிக்கறி** – புளிச்சாறிட்டு ஆக்கிய கறி.

**புளிக்குடித்தல்** – பிள்ளை பெற்றிருத்தல்.

**புளிக்குழம்பு** – புளியிட்டுச் செய்யும் குழம்பு.

**புளிங்கறி** – காண்க: **புளிக்கறி.**

**புளிங்கூழ்** – புளியிட்டாக்கிய கூழ்வகை.

**புளிச்சி** – பருத்திவகை.

**புளிச்சை** – ஒரு செடிவகை; பீளை.

**புளிஞ்சோறு** – புளியிட்டுச் சமைத்த சோறு.

**புளிஞன்** – வேடன்.

**புளித்தல்** – புளிப்பேறியிருத்தல்; தன்மை திரிதல்; கைக்கு எட்டாது என்ற காரணத்தால் விட்டுவிடுதல்; கன்றுதல்; வெறுத்துப்போதல்; செறிதல்; சிறுமரவகை.

**புளித்துப்போதல்** – மா முதலியன புளிப்பேறுதல்; எதிர்பார்த்துக் கிட்டாமற்போதல்; அருவருத்துப்போதல்.
**புளிதம்** – ஊன்; ஓர் உணவுவகை.
**புளிந்தயிர்** – புளித்த தயிர்.
**புளிந்தன்** – காண்க: **புளிஞன்.**
**புளிநர(ற)ளை** – ஒரு பூண்டுவகை.
**புளிப்பு** – அறுவகைச் சுவையுள் ஒன்று; புளிக்கை; புளிப்புள்ள மருந்துச்சரக்கு.
**புளிப்புத்தட்டுதல்** – சிறிது புளிப்புடையதாதல்; சுவையறுதல்; காண்க: **புளித்துப்போதல்.**
**புளிமா** – புளிப்புள்ள மாமரம்; நிரைநேர் வாய்பாடு; ஒரு மரவகை.
**புளிமாங்கனி** – நிரைநேர்நிரை வாய்பாடு.
**புளிமாங்காய்** – நிரைநேர்நேர் வாய்பாடு; பெண் சரக்குவகை.
**புளிமாந்தண்ணிழல்** – நிரைநேர்நேர்நிரை வாய்பாடு.
**புளிமாந்தண்பூ** – நிரைநேர்நேர்நேர் வாய்பாடு.
**புளிமாநறுநிழல்** – நிரைநேர்நிரைநிரை வாய்பாடு.
**புளிமாநறும்பூ** – நிரைநேர்நிரைநேர் வாய்பாடு.
**புளிமாறு** – புளியம் வளார்.
**புளிமிதவை** – காண்க: **புளிங்கூழ்.**
**புளியமரம்** – ஒரு மரவகை.
**புளியாரை** – பூண்டுவகை.
**புளியோதரை, புளியோதனம், புளியோரை** – புளியிட்டுச் சமைத்த சோறு.
**புளினம்** – மணற்குன்று; ஆற்றிடைத் திட்டு.
**புளினன்** – காண்க: **புளிஞன்.**
**புளுகன்** – பொய்யன்.
**புளுகு** – பொய்; கற்பனை.
**புளுகுதல்** – மெய்போற் பொய்கூறல்; கற்பித்தல்.
**புளைத்தல், புளைதல்** – அலங்கரிக்கப்படுதல்.
**புற்கசன்** – புலையன்.
**புற்கட்டை** – அறுகம்புல்லின் அடிக்கட்டை; அறுத்த பயிர்த்தாளடி.
**புற்கம்** – குறைவு; புல்லறிவு; மாயம்.
**புற்கலம்** – உடல்; கல் முதலிய உயிரற்ற பொருள்.
**புற்கலன்** – ஆன்மா.
**புற்கவ்வுதல்** – தோல்வியை ஒத்துக்கொள்ளுதல்.
**புற்கற்றை** – புல்திரள்.
**புற்கு** – கபிலநிறம்.
**புற்கெனல்** – ஒளிமழுங்கற் குறிப்பு; பயனில்லாமைக் குறிப்பு; புன்மைக்குறிப்பு.
**புற்கை** – ஒருவிதக் கஞ்சி; சோறு; பற்று.
**புற்பதி** – பனைமரம்; வாழைக்கிழங்கு.
**புற்புதம்** – நீர்க்குமிழி.
**புற்புல்லெனல்** – விடிதற்குறிப்பு.
**புற்றம்** – கறையான் கட்டிய மண்கூடு.
**புற்றாஞ்சோறு** – காண்க: **புற்றாம்பழஞ்சோறு;** பூஞ்சணம்.
**புற்றாம்பழஞ்சோறு** – புற்றில் கறையான் இருக்கும் சோறுபோன்ற திரட்சிப் பொருள்.
**புற்றாளி** – பனைமரம்; அனுடநாள்.
**புற்று** – கறையான் கட்டிய மண்கூடு; எறும்பு வளை; புரைவைத்த புண்; தலை; எழுத்து.
**புற்றுக்காளான்** – காளான்வகை.
**புற்றுத்தேன்** – மதிலிடுக்கு முதலியவற்றில் தேனீக்களால் வைக்கப்படுந் தேன்.
**புற்றுமண்** – கறையானால் சேர்த்துவைக்கப்பட்ட மண்.
**புற்றுவைத்தல்** – கறையானால் புற்றுண்டாதல்; புண் புரைவைத்தல்.
**புற்றெடுத்தல்** – கறையான் முதலியன வளை தோண்டல்.
**புற** – காண்க: **புறா.**
**புறக்கட்டு** – வீட்டின் வெளிக் கட்டடம்; கையை முதுகிலேவைத்துக் கட்டுதல்.
**புறக்கடன்** – பின் அடைமானம்.
**புறக்கடை** – வீட்டின் பின்புறம்.
**புறக்கண்** – கண்ணிமையின் வெளிப்புறம்; தூலக்கண்.
**புறக்கணித்தல்** – பாராமுகமாதல்; வெறுத்தொதுக்கல்.
**புறக்கந்து** – வண்டி அச்சின் முனை; களத்தில் தூற்றி விழுந்த பதர்க்குப்பை.
**புறக்கரணம்** – கை, கால் முதலிய உறுப்பு; தொழிற்கு உதவியாயுள்ள வெளிக்கருவி.
**புறக்கழுத்து** – பிடர்.
**புறக்காப்பு** – புறத்தே அமைக்கப்படுங் காவல்.
**புறக்காவல்** – மெய்காவல்.
**புறக்காழ்** – பனை முதலியவற்றிலுள்ள வெளிவயிரம்; பெண்மரம்.
**புறக்கிடுதல்** – முதுகுகாட்டி ஓடுதல்.
**புறக்கு** – வெளிப்புறம்.
**புறக்குடி** – நகருக்கு வெளியே மக்கள் வாழும் ஊர்; வெளியூரில் சென்று பயிரிடும் குடியானவன்; நிலக்கிழாருக்குக் கட்டுப்படாத குடியானவன்.
**புறக்குடை** – உடலின் பின்புறம்.
**புறக்கூத்து** – கூத்துவகை.
**புறக்கை** – காண்க: **புறங்கை;** வெளிப்புறம்; வலப்புறம்.
**புறக்கொடுத்தல்** – தோற்றோடுதல்; போகவிடுதல்.
**புறக்கொடை** – போரில் முதுகுகாட்டல்; உடலின் பின்புறம்.

**புறக்கோடி** – காண்க: **புறக்கடை.**

**புறகிடுதல்** – காண்க: **புறக்கிடுதல்.**

**புறகு** – புறம்பானவர்; புறம்பானது.

**புறங்கடை** – வீட்டின் வெளிப்புறம்; வெளி வாயில்; பின்பிறந்தோன்.

**புறங்காட்டுதல்** – அவமதிப்புண்டாகப் பின்புறம் திரும்புதல்; தோற்றோடுதல்; வெளிக்குக் காட்டுதல்; முறியடித்தல்.

**புறங்காடு** – சுடுகாடு; இடுகாடு.

**புறங்காணுதல்** – முறியடித்தல்.

**புறங்காத்தல்** – பாதுகாத்தல்.

**புறங்கால்** – பாதத்தின் மேற்புறம்; குதிங்காலின் மேற்புறம்.

**புறங்காழ்** – காண்க: **புறக்காழ்.**

**புறங்கான்** – முல்லைநிலம்.

**புறங்கூற்றாளன்** – பிறரைக் காணாவிடத்துப் பழிப்போன்.

**புறங்கூற்று** – காணாவிடத்துப் பிறர்மேல் பழி தூற்றுகை.

**புறங்கூறுதல்** – பிறரைக் காணாவிடத்து அவர் மீது குற்றம் கூறுதல்; மறைபொருளை வெளிப்படுத்துதல்.

**புறங்கை** – கையின் பின்புறம்.

**புறங்கொடுத்தல்** – தோற்றோடுதல், புறங் காட்டுதல்.

**புறச்சபை** – நற்கருணை அனுபவியாத கிறித்தவர் கூட்டம்.

**புறச்சமயம்** – மாறுபட்ட கொள்கையுள்ள மதம்.

**புறச்சுட்டு** – மொழிக்குப் புறத்துறுப்பாய் வரும் சுட்டெழுத்து.

**புறச்சுவர்தீற்றுதல்** – தன்னை அடுத்தாரைவிட்டு அயலார்க்குத் துணைசெய்தல்; உளத்தூய்மை யில்லாதவர் வெளியில் ஒழுங்கானவர்போல் நடத்தல்.

**புறச்சுற்று** – சுற்றுப்புறப்பகுதி; சுற்றுப்புற வமைதி.

**புறச்சேரி** – நகர்க்குப் புறம்பே மக்கள் வாழும் பகுதி; பறைச்சேரி.

**புறச்சொல்** – நாடகத்தில் எல்லோரும் கேட்கும் படியாக உரைக்குஞ் சொல்.

**புறஞ்சாய்தல்** – தோற்றல்.

**புறஞ்சிறை** – வீட்டிற்கு அருகிலுள்ள இடம்; புறம்பானது; காண்க: **புறஞ்சேரி.**

**புறஞ்சிறைப்பாடி** – நகரின் வெளிப்புறச் சேரி.

**புறஞ்சுவர்கோலஞ்செய்தல்** – உட்குற்றம் களை யாது உடம்பை அலங்கரித்தல்.

**புறஞ்செய்தல்** – உடம்பை அலங்கரித்தல்; காப்பாற்றுதல்; வெளியேற்றுதல்.

**புறஞ்சேரி** – நகர்க்கு வெளியே மக்கள் வாழு மிடம், புறநகர்.

**புறஞ்சொல்** – பழிச்சொல்; வெளியில் கூறும் அலர்மொழி.

**புறஞ்சொல்லுதல்** – கோட்சொல்லுதல்.

**புறண்டுதல்** – காண்க: **பிறாண்டுதல்.**

**புறணி** – புறங்கூறல்; மரப்பட்டை; மட்டை முதலியவற்றின் புறத்துள்ள நார்; தோல்; ஊன்; புறம்பானது; குறிஞ்சிநிலம்; முல்லை நிலம்; மண்கட்டி.

**புறணிநாடு** – எல்லைப்புறமாயுள்ள நாடு; அயல் நாடு.

**புறத்தவன்** – அயலான்; ஊருக்கு வெளியே இருப்பவனான ஐயனார்.

**புறத்தி** – புறம்பானது; சாயல்.

**புறத்திடுதல்** – வெளிவிடுதல்.

**புறத்திணை** – வெட்சி, வஞ்சி, காஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண் முதலிய புறப்பொருள்பற்றிய ஒழுக்கம்.

**புறத்தியான்** – அயலான்.

**புறத்திருத்தல்** – வெளியே காத்திருத்தல்.

**புறத்திறுத்தல்** – முற்றுகையிடுதல்.

**புறத்திறை** – வேற்றரசனுடைய மதிலை மேற் சென்ற வேந்தன் முற்றுகை செய்தலைக் கூறும் புறத்துறை.

**புறத்துறவு** – அகப்பற்று விடாமல் துறவிபோல் வேடங்கொள்ளுகை.

**புறத்துறுப்பு** – இடம் பொருள் ஏவல்களாகிய பக்கத்துணை; உடலின் வெளிப்புற உறுப்பு.

**புறத்துறை** – புறத்திணையின் பகுதி.

**புறத்தொழுக்கம்** – பரத்தையரோடு கூடி ஒழுகுகை.

**புறந்தருதல்** – பாதுகாத்தல்; கைவிடுதல்; போற்றுதல்; தோற்றுப்போதல்; நிறம் உண்டாதல்.

**புறந்தருநர்** – பாதுகாப்பவர்.

**புறந்தாள்** – காண்க: **புறங்கால்.**

**புறந்துரத்தல்** – எருதுகளை முதுகிலே யடித்து ஓட்டுதல்.

**புறநகர்** – நகரின் வெளிப்பகுதி.

**புறநடம்** – காண்க: **புறநாடகம்.**

**புறநடை** – விதித்தவற்றுள் அடங்காதவற்றை அமைத்துக்காட்டும் பொதுச் சூத்திரம்.

**புறநாடகம்** – உவகைச் சுவை தவிர மற்றைச் சுவைபற்றிவரும் நாடகவகை.

**புறநிலை** – வெளிப்புறம்; வேறுபட்ட நிலை; நூல்வகை; உதவிநோக்கிப் பிறர் புறங் கடையில் நிற்கும் நிலை; ஏவல் செய்து பின்னிற்கை; சாதிப் பெரும்பண் நான்கனுள் ஒன்று.

**புறநிலைமருதம்** – பெரும்பண்வகை.

**புறநீங்குதல்** – தன் விருப்பமாய் விலகிப்போதல்; விலக்கப்படுதல்.

**புறநீர்மை** – பண்வகை.

**புறப்பகை** – வெளிப்படையான பகை; பகைவன்.

**புறப்பட்டுக்கொள்ளுதல்** – வெளியேறுதல்.

**புறப்படுத்துதல்** – வெளிப்படுத்துதல்.

**புறப்படுதல்** – பயணமாதல்; புறம்பே செல்லுதல்; புறத்தில் தோன்றுதல்; புண் முதலியன உண்டாதல்; பொசிதல்.

**புறப்படைவீடு** – நகருக்குப் புறம்பே மக்கள் வாழும் இடம்.

**புறப்பணை** – முல்லைநிலம்.

**புறப்பத்தியம்** – மறுபத்தியம்.

**புறப்பற்று** – 'எனது' என்னும் பற்று.

**புறப்பாட்டு** – புறப்பொருளைப்பற்றிய செய்யுள்; எட்டுத்தொகையுள் ஒன்றானதும் புறப்பொருளைப்பற்றிய நானூறு பாடல்களைக் கொண்டதுமான தொகைநூல், புறநானூறு.

**புறப்பாட்டுவண்ணம்** – இறுதியடி முடியாதிருப்பவும் தான் முடிந்த அடிபோலக் காட்டும் சந்தம்.

**புறப்பாடு** – வெளியேறுதல்; பயணம்; கோயில் மூர்த்தி வெளியில் எழுந்தருளுதல்; புறந்தோன்றுகை; புண்கட்டிவகை.

**புறப்புண்** – முதுகிற்பட்ட காயம்.

**புறப்புறக்கருவி** – முழவுவகை.

**புறப்புறம்** – முற்றும் அயலானது.

**புறப்புறமுழவு** – காண்க: புறப்புறக்கருவி.

**புறப்பெண்டிர்** – பரத்தையர்.

**புறப்பொருள்** – காண்க: **புறத்திணை**; வீரம்; வெளிப்படையான பொருள்.

**புறம்** – வெளியிடம்; அன்னியம்; காண்க: **புறத்திணை; புறக்கொடை**; புறநானூறு; வீரம்; பக்கம்; முதுகு; பின்புறம்; புறங்கூற்று; அலர்மொழி; ஒருசார்பு; இடம்; இறையிலி நிலம்; ஏழனுருபுள் ஒன்று; திசை; காலம்; உடம்பு; மருதநிலத்தூர்; மதில்.

**புறம்படி** – நகரின் புறப்பகுதி.

**புறம்பணை** – முல்லைநிலம்; குறிஞ்சிநிலம்; நகர்ப்புறமாகிய மருதநிலம்.

**புறம்பணையான்** – ஊருக்கு வெளியே இருப்பவனான ஐயனார்.

**புறம்பர்** – வெளிப்பக்கம்.

**புறம்பாக்குதல்** – நீக்குதல்; சாதியினின்றும் நீக்குதல்.

**புறம்பு** – வெளியிடம்; தனியானது; மற்றை; முதுகு.

**புறம்புல்குதல்** – பின்புறத்தைக் கட்டித் தழுவுதல்.

**புறம்பெறுதல்** – புறக்கொடையைப் பெறுதல்; முதுகுகாணுதல்.

**புறம்பொசிதல்** – வெளியிற் கசிதல்; வெளிப்படுதல்.

**புறம்போக்கு** – ஊர்ப்புறத்தில் குடிகள் வாழ்தலில்லாத நிலப்பகுதி; பொதுமகள்.

**புறம்போக்குதல்** – அகற்றுதல்.

**புறம்விடுதல்** – விலக்கிவிடுதல்.

**புறமடை** – வெளிவாய்க்கால்; மதகின் வெளிப்புறம்; வெளிமடை; கோயிற்புறத்துள்ள சிறுதெய்வங்கட்கு இடும் படைப்பு.

**புறமதில்** – கோட்டையின் வெளிமதில்.

**புறமதிற்சேரி** – காண்க: **புறஞ்சேரி**.

**புறமலை** – பக்கமலை.

**புறமறிப்பார்த்தல்** – உட்பக்கத்தை வெளிப்புறமாகத் திருப்பிப் பார்த்தலாகிய நன்கு ஆராய்தல்.

**புறமறைத்தல்** – வெளித்தோன்றாமல் மறைத்தல்.

**புறமாக** – பக்கமாய்; வெளிப்படையாய்.

**புறமாறுதல்** – இடம் மாறுதல்; வலிமை இழத்தல்; கைவிடுதல்.

**புறமுழவு** – பறைவகை.

**புறமொழி** – புறங்கூற்று.

**புறவடி** – பாதத்தின் மேற்புறம்.

**புறவணி** – முல்லைநிலம்; குறிஞ்சிநிலம்.

**புறவம்** – காடு; முல்லைநிலம்; குறிஞ்சிநிலம்; சீகாழி; தோல்; புறா.

**புறவயிரம்** – மரத்தின் வெளிவயிரம்.

**புறவரி** – தலைவனுடன் அணையாது தலைவி புறத்தே நின்று நடிக்கும் நடிப்பு.

**புறவழி** – பின்பக்கம்.

**புறவாயம்** – பணமாகத் தண்டப்படும் செக்கிறை முதலிய சில்லறை வரிகள்.

**புறவாயில்** – வெளிவாயில்.

**புறவாழி** – பெரும்புறக்கடல்.

**புறவிடை** – பிரிதற்குப் பெறும் விடை; வீட்டுக் கொல்லை.

**புறவிதழ்** – பூவின் வெளிப்புறத்துள்ள இதழ்.

**புறவிரல்** – விரலின் வெளிப்பக்கம்.

**புறவீடு** – படையெடுப்புக்குமுன் நல்வேளையில் வாள், குடை முதலியவற்றை வெளியே செல்லவிடுதல்; பயணத்திற்காக நல்லநேரத்தில் தன் வீடுவிட்டுப் பிறர் வீட்டில் இருக்கை.

**புறவீதி** – நகரின் வெளிவீதி; கோயில் முதலியவற்றின் வெளிவீதி.

**புறவு** – புறா; காடு; சிறுகாடு; முல்லைநிலம்; குறிஞ்சிநிலம்; பயிரிடும் நிலம்; முல்லைக் கொடி.

**புறவுரு** – உடம்பினுறுப்பு.

**புறவுரை** – பாயிரம்.
**புறவெட்டு** – மேல்வெட்டு; மரத்துண்டின் மேற் பட்டை; எதிர்ப்பேச்சு; தனியான.
**புறன்** – பழிச்சொல்; காணாதபோது; காண்க: **புறம்.**
**புறனடை, புறனடைச்சூத்திரம்** – காண்க: **புறநடை.**
**புறனழித்தல்** – புறங்கூறுதல்.
**புறனிலை** – பின்னிலை.
**புறனுரை** – வெற்றுரை; பழிச்சொல்.
**புறனோக்குதல்** – ஒருவன் நீங்கும்வரை பார்த்தல்.
**புறா** – பறவைவகை.
**புறாக்காலி** – ஒரு பூண்டுவகை.
**புறாக்கூடு** – புறாக்கள் வாழ்தற்காகக் கட்டப் பட்ட கூண்டு; சிற்றறை.
**புறாத்தலை** – சிறிய தலை.
**புறாமாடம்** – காண்க: **புறாக்கூடு.**
**புன்கண், புன்கண்மை** – துன்பம்; நோய்; மெலிவு; வறுமை; பொலிவழிவு; அச்சம்; இழிவு.
**புன்கம்** – சோறு; ஒரு மரவகை.
**புன்காலி** – பாதிரிமரம்; காயாமரம்.
**புன்கு** – புங்கமரம்; மரவகை; புரசுமரம்.
**புன்கூர்தல்** – வருந்துதல்.
**புன்சிரிப்பு** – இளமுறுவல்.
**புன்செய்** – புன்செய்ப்பயிர் விளையும் நிலம்; கொல்லைநிலம்; புன்செய்ப்பயிர்.
**புன்செய்ப்பயிர்** – நெல்லொழிந்த மற்றைப் பயிர்கள்.
**புன்சொல்** – பழித்துரை.
**புன்பயிர்** – காண்க: **புன்செய்ப்பயிர்**; குறைந்த விளைவு.
**புன்புலம்** – புல்லிய இடம்; புல்லிய அறிவு; புன்செய்நிலம்; தரிசுநிலம்.
**புன்மக்கள்** – இழிந்தவர்.
**புன்மரம்** – புறவயிரம் உள்ள மரம்; தென்னை.
**புன்மாலை** – புற்கென்ற மாலைக்காலம்.
**புன்மானம்** – விடியற்காலை.
**புன்முறுவல், புன்மூரல்** – காண்க: **புன்சிரிப்பு.**
**புன்மை** – மறதி; இழிவு; அழுக்கு; துன்பம்; சிறுமை; வறுமை; குற்றம்; புகர்நிறம்; பார்வை மழுக்கம்.
**புன்றலை** – சிறிய தலை; இளந்தலை; சிவப்பு மயிருள்ள தலை.
**புன்றுமி** – தூறல்.
**புன்றொழில்** – இழிதொழில்; தீச்செயல்.
**புன்னகை** – காண்க: **புன்சிரிப்பு.**
**புன்னம்புலரி** – வைகறை.
**புன்னறவம்** – இஞ்சி.
**புன்னாகம்** – புன்னைமரம்; குரங்குமஞ்சள்நாறி; கோழிக்கீரை.
**புன்னாகவராளி** – ஒரு பண்வகை.
**புன்னாதர்** – இழிவறிவாளர்.
**புன்னிலம்** – பயனற்ற நிலம்.
**புன்னீர்** – கழிவுநீர்; குருதி.
**புன்னெறி** – தீயவழி; பொய்ச் சமயம்.
**புன்னை** – புன்னைமரம்.
**புனக்கரணம்** – தாளத்தின் ஆவர்த்தம்.
**புனக்காவல்** – தினைப்புனங் காக்கை.
**புனக்குளம்** – மழைத்தண்ணீர் தேங்கிநிற்கும் குட்டை.
**புனம்** – மலையைச் சார்ந்த கொல்லை.
**புனமுருக்கு, புனமுருங்கை** – ஒரு மரவகை.
**புனர்தம்** – புனர்பூசம்.
**புனர்ப்பவம்** – மீண்டும் பிறக்கை; நகம்; மறு படைப்பு.
**புனர்ப்பாகம்** – இருமுறை சமைத்த நீர்த்தன்மை யான பத்திய உணவு.
**புனர்பூசம், புனர்வசு** – புனர்பூசநாள்.
**புனரி** – ஒரு பூடுவகை.
**புனருத்தம்** – காண்க: **புனருத்தி.**
**புனருத்தாரணம்** – மீண்டும் நிலைநிறுத்துகை.
**புனருத்தி** – கூறியதுகூறல்.
**புனல்** – ஆறு; நீர்; குளிர்ச்சி; பூராடநாள்; வாலுளுவை; வாய் குறுகிய குப்பிகளில் நீர்மப் பொருளை ஊற்ற உதவுங் கருவி.
**புனல்பாய்தல்** – நீரில் விளையாடுதல்.
**புனல்வாயில்** – மதகு.
**புனல்வேந்தன், புனலவன்** – வருணன்.
**புனலாடையாள்** – நீராடை உடுத்த நிலமடந்தை.
**புனலி** – காண்க: **காட்டுமல்லி; புனலிக்கொடி.**
**புனலிக்கொடி** – ஒரு கொடிவகை.
**புனலை** – பூவந்தி எனப்படும் நெய்க்கொட்டான் மரம்.
**புனவர்** – குறிஞ்சிநில மக்கள்.
**புனவேடு** – வரிக்கூத்துவகை.
**புனற்கடல்** – காண்க: **நன்னீர்க்கடல்.**
**புனற்கரசன், புனற்செல்வன்** – வருணன்.
**புனற்படுநெருப்பு** – வடவைத்தீ.
**புனறருபுணர்ச்சி** – வெள்ளநீரிடையே வீழ்ந்த தலைவியைத் தலைவன் காத்ததனால் அவ்விருவருக்கும் உண்டான கூட்டம்.
**புனனாடன்** – நீர்நிறைந்த நாட்டையுடைய சோழஅரசன்.
**புனனாடு** – சோணாடு.

**புனிதம்** – தூய்மை; ஏழாவது நட்சத்திரமாகிய புனர்பூசம்.

**புனிதன்** – தூய்மையானவன்; சிவன்; இந்திரன்; அருகன்; புத்தன்.

**புனிற்றா** – ஈன்றணிமையுள்ள பசு அல்லது எருமை.

**புனிற்றுமதி** – இளமதி.

**புனிறு** – ஈன்றணிமை; அண்மையில் ஈனப்பட்டது; பிஞ்சுத்தன்மை; மகப்பேற்றாலான தீட்டு; புதுமை; தோல்.

**புனுகு** – புழுகு.

**புனை** – அழகு; பொலிவு; அலங்காரம்; அணிகலன்; கால்விலங்கு; சீலை; புதுமை; நீர்.

**புனைசுருட்டு** – மோசம்.

**புனைதல்** – அணிதல்; தரித்தல்; அலங்கரித்தல்; சித்தம்செய்தல்; ஓவியம் வரைதல்; கட்டுதல்; முடைதல்; சூடுதல்; ஒழுங்காக அமைத்தல்; சிறப்பித்தல்; கற்பித்தல்; செய்யுளமைத்தல்; செய்தல்.

**புனைந்துரை** – கற்பனை; அலங்கரித்துரைக்கும் வாசகம்; பாயிரம்.

**புனைந்தோர்** – கம்மாளர்.

**புனைபெயர்** – கற்பித்துக்கொண்ட பெயர்.

**புனைமொழி** – அலங்காரச் சொல்.

**புனையல்** – மாலை.

**புனையிறும்பு** – செய்காடு.

**புனைவன்** – கம்மியன்.

**புனைவிலி** – உவமானப் பொருள்.

**புனைவு** – அலங்காரம்; அழகு; செழிப்பு; செய்கை.

**புனைவுளி** – உவமேயப் பொருள்.

# பூ

**பூ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+ஊ); அழகு; கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ, புதற்பூ என நால்வகைப்பட்ட மலர்; தாமரைப்பூ; பூத்தொழில்; சேவலின் தலைச்சூடு; நிறம்; நீலநிறம்; பொலிவு; மென்மை; யானையின் நுதற்புகர்; யானையின் நெற்றிப்பட்டம்; கண்ணின் கருவிழியில் விழும் வெண்பொட்டு; விளைவுப் போகம்; ஆயுதப் பொருக்கு; தீப்பொறி; நுண்பொடி; தேங்காய்த் துருவல்; சூரியனின் கதிர்படுதற்கு முன்னுள்ள பூநீற்றின் கதிர்; இலை; காண்க: முப்பூ; இந்துப்பு; வேள்வித் தீ; கூர்மை; நரகவகை; பூப்பு; பூமி; பிறப்பு.

**பூ (வி)** – அலர், மலர்.

**பூக்கஞ்சா** – ஒரு செடிவகை.

**பூக்கட்டுதல்** – மலர்மாலை தொடுத்தல்.

**பூக்கம்** – கமுகமரம்; ஊர்; மருதநிலத்தூர்.

**பூக்கவர்ந்துண்ணி** – குரங்கு.

**பூக்காரன்** – பூ விற்பவன்.

**பூக்குட்டான், பூக்குடலை** – நீளமாக முடைந்த பூக்கூடைவகை.

**பூக்குதல்** – நினைக்கை; தோன்றுகை.

**பூக்குழி** – தீக்குழி.

**பூக்குறடு, பூக்கூடம்** – பூமாலை தொடுக்கும் மேடை.

**பூக்கொய்தல்** – பூப்பறித்தல்.

**பூக்கோணிலை, பூக்கோள்** – போரை மேற்கொள்ளும் போது வெட்சி முதலிய மலர்களை அரசனிடமிருந்து வீரன் பெற்றுக்க் கூறும் புறத்துறை.

**பூகண்டகர்** – உலகின் பகைவரான அசுரர்.

**பூகண்டம்** – பூவலயம்; நிலப்பரப்பின் பெரும் பகுதி.

**பூகதம்** – கமுகமரம்; பூமியை அடைந்தது.

**பூகதம்பம்** – நிலக்கடப்பஞ்செடி.

**பூகதர்** – புகழ்வோர்.

**பூகதன்** – பூமியை அடைந்தவன்.

**பூகம்** – பாக்குமரம்; நேரம்; ஒருவகைச் சாதிக்கூட்டம்; திரட்சி; திப்பிலிப்பனைமரம்; இயல்பு; இருள்; நேரம்; பிளப்பு; கமுகு; பலா.

**பூகம்பம்** – நிலநடுக்கம்; சூரியன் நின்ற நாளுக்கு ஏழாம் நாள்.

**பூகரம்** – கையாந்தகரை.

**பூகலம்** – மதர்த்த குதிரை.

**பூகாகம்** – அன்றில்; கரும்புறா.

**பூகேசம்** – ஆலமரம்; நீர்ப்பாசி.

**பூங்கஞ்சா** – காண்க: **பூக்கஞ்சா.**

**பூங்கணை** – பூவாகிய அம்பு; மன்மதபாணம்.

**பூங்கதிர்** – வெண்கதிர்; ஒளி.

**பூங்கரும்பு** – செங்கரும்புவகை.

**பூங்கருவி** – ஒரு படைக்கலவகை.

**பூங்கலன்** – காண்க: **பூக்குடலை.**

**பூங்கற்று** – பூதம்; அழகு.

**பூங்கா** – நந்தவனம், பூஞ்சோலை.

**பூங்காடு** – இளங்காடு.

**பூங்காரம்** – பூநீற்றுக்காரம்; மந்தாரம்.

**பூங்காவனம்** – காண்க: **பூங்கா.**

**பூங்காவி** – ஒரு காவிநிறவகை; காவிக்கல்வகை.

**பூங்கு** – பல.

**பூங்குடம்** – பூக்களால் அலங்கரிக்கப்பட்ட பானை.
**பூங்கொடி** – மலர்களைக்கொண்ட கொடி; அழகிய கொடி.
**பூங்கொத்து** – பூவின் தொகுதி.
**பூங்கொல்லை** – காண்க: பூங்கா.
**பூங்கோயில்** – திருவாரூர்ச் சிவாலயம்.
**பூங்கோரை** – கோரைவகை.
**பூச்சக்கரம்** – பூமண்டலம்; நிலநடுக்கோடு; சக்கரவாணம்.
**பூச்சக்கரவாளக்குடை** – கோயில்மூர்த்திகட்குப் பிடிக்கும் பெரிய வெண்குடை.
**பூச்சக்கரன்** – அரசன்.
**பூச்சாண்டி** – குழந்தைகளுக்கு அச்சமுண்டாக்கும் உருவம்.
**பூச்சாரம்** – நிலவளம்; தாதுப்பொருள்.
**பூச்சி** – சிற்றுயிர்; குடற்புழு; குழந்தைகளை அச்சுறுத்தற்கேனும் சிரிப்பிப்பதற்கேனும் சொல்லும் சொல்.
**பூச்சிக்கடி** – பூச்சியின் கடி; பூச்சியால் உடலிற் படரும் பற்று; புண்கட்டிவகை.
**பூச்சிகாட்டுதல்** – அச்சுறுத்தல்.
**பூச்சிதம்** – மதிப்பு.
**பூச்சிப்பல்** – சொத்தைப் பல்.
**பூச்சிபிடித்தல்** – பண்டம் புழுவுண்டாகிக் கெட்டுப்போதல்; இச்சகமாக நடத்தல்; வேண்டாத இடத்துக் கவனமாகச் செயல் புரிதல்.
**பூச்சிபூச்சியெனல்** – அச்சுறுத்தற் குறிப்பு; அச்சுறுதற் குறிப்பு.
**பூச்சியத்துவம்** – சிறப்புத் தன்மை.
**பூச்சியம்** – பகட்டு; வழிபடத்தக்கது; நன்கு மதிப்பு; இன்மை; இன்மைப்பொருள் உணர்த்தும் சுன்னம்; திருவுளச்சீட்டில் பயனின்மை காட்டும் வெற்றுச்சீட்டு; நற்பேறின்மை; அருமை; குற்றமறைக்கை; மதிப்பின்மை.
**பூச்சியம்பண்ணுதல்** – சிறப்பித்தல்; குற்றம் முதலியன மறைத்தல்; பழைய வீடு முதலியவற்றைப் புதிதாகக் கட்டுதல்; பாக்கியின்றிக் கணக்குத் தீர்த்தல்; தகாத மதிப்பு வரும்படி நடத்தல்; இல்லாமற் செய்தல்.
**பூச்சியவார்த்தை** – கண்ணியப் பேச்சு.
**பூச்சியன்** – வழிபடத்தக்கவன்; கறுப்பும் வெள்ளையுமான வண்டிமாடு.
**பூச்சிலை** – கல்வகை.
**பூச்சு** – தடவுகை; மேற்பூசுகை; வெளிப்பகட்டு; கஞ்சிப்பசை; மருந்துப்பற்று; குற்றம் முதலியன மறைக்கை; இதமான செயல் முதலியன.
**பூச்சுவேலை** – சுவர்களில் சுண்ணந்தீற்றும் வேலை; மெருகிடும் வேலை; வெளிப்பகட்டு.
**பூச்சூட்டு** – முதற் கருவுற்ற மகளிர்க்குச் செய்யும் ஒரு சடங்கு.
**பூச்செண்டு** – பூவினால் அமைந்த செண்டு.
**பூச்சேலை** – பூவேலை அமைந்த புடைவை.
**பூச்சை** – பூனை.
**பூச்சொக்காய்** – பூவேலையுள்ள துணியில் தைத்த சட்டை.
**பூசகன்** – அருச்சகன்.
**பூசங்கள்** – புனர்பூச பூச நாள்கள்.
**பூசணம்** – காண்க: பூஞ்சணம்; அழுக்கு; நேர்த்திக்கடனாக முடித்துவைக்கும் காசு முதலியன; அணிகலன்.
**பூசணி** – கொடிவகை.
**பூசந்தி** – கடலைப் பிரிக்கும் சிறுநிலம்.
**பூசம்** – எட்டாம் நட்சத்திரம்.
**பூசல்** – போர்; பேரொலி; பலரறிகை; கூப்பீடு; வருத்தம்; ஒப்பனை.
**பூசல்நெற்றி** – போர்முகம்.
**பூசலிசைத்தல்** – கலகச்சொல்லால் சண்டை மூட்டுதல்.
**பூசலிடுதல்** – முறையிடுதல்; பேரொலிபடக் கதறுதல்; கூட்டுதல்.
**பூசற்களம்(ரி)** – போர்க்களம்.
**பூசற்பறை, பூசற்றுடி** – பாலைநிலத்துப் பறையுள் ஒன்று.
**பூசறுத்தல்** – வாய் முதலியன கழுவும் தொழிலை முடித்தல்.
**பூசன்மாற்று** – நிரைகவர்ந்த வெட்சியார் மீட்க வந்த கரந்தையாரைப் போரில் அழித்தமை கூறும் புறத்துறை.
**பூசனம்** – ஆராதனை; மரம் முதலியவற்றின்மேல் ஈர நைப்பினால் உண்டாகும் பாசி.
**பூசனி** – அடைக்கலாங்குருவி; கொடிவகை; மரம் முதலியவற்றின்மேல் ஈர நைப்பினால் உண்டாகும் பாசி.
**பூசனை** – நாள் வழிபாடு; சிறப்பித்தல்.
**பூசனைபடைத்தல்** – வணக்கஞ்செய்தல்.
**பூசாகாலம்** – பூசைக்குரிய வேளை.
**பூசாந்திரம்** – அருமைபண்ணுகை; மரவகை.
**பூசாபலம்** – பூசையின் பலன்; தெய்வ வழிபாட்டால் உண்டாகும் பலன்.
**பூசாரி(லி)** – கோயிற்பூசை பண்ணுபவன்; பேயோட்டும் மந்திரவாதி.
**பூசாவிதி** – பூசைமுறை.
**பூசாவிருத்தி** – கோயிற்பூசைக்கு விடப்பட்ட இறையிலிநிலம்.
**பூசித்தல்** – பூசைசெய்தல்; மரியாதை காட்டுதல்; கொண்டாடுதல்.
**பூசிதம்** – காண்க: பூசிதை.

**பூசிதன்** – பூசிக்கப்படுவோன்.

**பூசிதை, பூசிப்பு** – வணக்கம்.

**பூசிமெழுகுதல்** – குற்றத்தை மறைக்கப் பார்த்தல்.

**பூசு** – பூசுகை; தானியத்தின் உமி அல்லது தோல்; ஒட்டடை; தூசு.

**பூசுசாந்தாற்றி** – சிறு விசிறி.

**பூசுத்தி** – பூமியில் நீரைத் தெளித்துச் செய்யும் துப்புரவு.

**பூசுதல்** – தடவுதல்; கழுவுதல்; அலங்கரித்தல்; மெழுகுதல்; நீரால் அலம்புதல்; இயைதல்.

**பூசுதன்** – பூமியின் புதல்வனான செவ்வாய்.

**பூசுதை** – பூமியின் புதல்வியாகிய சீதை.

**பூசுரன்** – பார்ப்பான்.

**பூசுறுதல்** – அலங்கரித்தல்.

**பூசை** – ஆராதனை; அடியார் அமுதுசெய்கை; பலத்த அடி; நெட்டி; பூனை; காண்க: **காட்டுப்பூனை.**

**பூசைப்பெட்டி** – ஆன்மார்த்த இலிங்கம் வைக்கும் பெட்டி.

**பூசைபண்ணுதல்** – ஆராதனை செய்தல்; உணவருந்தல்.

**பூசைபோடுதல்** – பலிகொடுத்தல்; உணவருந்தல்; பலமாக அடிகொடுத்தல்.

**பூசைமுகம்** – பூசை நடக்கும் இடம்.

**பூசைவேளை** – பூசை செய்வதற்குரிய காலம்.

**பூஞ்சக்கல்** – ஒருவித நீலக்கல்.

**பூஞ்சணம்** – மரம் முதலியவற்றின்மேல் ஈரநைப்பினால் உண்டாகும் பாசி; ஒட்டடை.

**பூஞ்சல்** – மங்கல்நிறம்; கண்ணொளி மங்கல்; வலுவற்றவன்.

**பூஞ்சலாடுதல்** – கண்ணொளி மங்குதல்.

**பூஞ்சற்கண்** – குழிந்த கண்; பீளைக்கண்; ஒளி மங்கிய கண்.

**பூஞ்சாளம்** – காண்க: **பூஞ்சணம்.**

**பூஞ்சான்** – ஒரு புல்வகை.

**பூஞ்சி** – தூசி; மங்கல்.

**பூஞ்சிட்டு** – ஒரு குருவிவகை.

**பூஞ்சிறகு** – பறவைக்குஞ்சின் சிறகு.

**பூஞ்சு** – ஒட்டடை; மரத்தின்மீது ஈரத்தாலுண்டாகும் பாசி; மங்கல்நிறம்; பலாச்சுளையின் மேலுள்ள நார்ப்பகுதி.

**பூஞ்சுண்ணம்** – பூந்தாது.

**பூஞ்சுமடு** – பூவினாலாகிய சும்மாடு.

**பூஞ்சை** – மங்கல்நிறம்; வலுவற்றவன்; கண்ணொளி மங்கல்; பாழ்; ஒட்டடை.

**பூஞ்சைநிலம்** – பாழ்நிலம்.

**பூஞ்சோலை** – மலர்ச்சோலை.

**பூஞை** – பூனை; காண்க: **பூஞையாதனம்.**

**பூஞையாதனம்** – பூனைபோல் முழங்காலை மடக்கிக் கைகளை ஊன்றி வானத்தைப் பார்த்திருக்கும் ஆசனவகை.

**பூட்கை** – கொள்கை; மனவுறுதி; வலிமை; சிங்கம்; யானை; யானையாளி.

**பூட்சி** – பூணுகை; அணிகலன்; உடல்; புணர்ப்பு; கொள்கை; மனவுறுதி; வரிவகை; உரிமை.

**பூட்டகம்** – வீண்பெருமை; போலிவேலை; வஞ்சகம்; கமுக்கம்.

**பூட்டகம்பண்ணுதல்** – வீண்பெருமை பாராட்டுதல்; வீம்படித்தல்.

**பூட்டங்கம்** – வஞ்சகம்; அகப்படுத்துகை; வில்லங்கம்.

**பூட்டழித்தல்** – கட்டுக்குலைத்தல்.

**பூட்டறுதல்** – கட்டுக்குலைதல்; நுகத்தினின்றும் விடுபடுதல்.

**பூட்டன்** – பாட்டனுக்குத் தந்தை.

**பூட்டாங்கயிறு** – எருதைப் பிணைக்கும் நுகக்கயிறு.

**பூட்டி** – பாட்டனைப் பெற்ற தாய்.

**பூட்டு** – பிணிப்பு; திறவுகோல்; பூட்டுங்கருவி; கொக்கி; நாண்கயிறு; உடற்பொருத்து; மல்லுக்கட்டு; இறுக்கம்; கேடு; மகளிர் தலையணிவகை; சேனைக்கட்டு; தளைக்கும் விலங்கு; அடுக்கு.

**பூட்டுதல்** – மாட்டுதல்; இணைத்தல்; வைத்தல்; எருது முதலியவற்றைப் பிணைத்தல்; தொழுவில் அடித்தல்; விலங்கு மாட்டுதல்; பொறுப்பேற்றுதல்; அணிதல்; இறுகக்கட்டுதல்; பொருத்திக் கூறுதல்; அகப்படுத்துதல்; நாணேற்றுதல்; இறுக்குதல்; வழக்குத் தொடுத்தல்.

**பூட்டுநழுவுதல்** – காண்க: **பூட்டுவிலகுதல்.**

**பூட்டுநோவு** – உடற்சந்துகளில் ஏற்படும் வலி.

**பூட்டுப்போடுதல்** – திறவுகோலாற் பூட்டிடுதல்; பேசவொட்டாது செய்தல்.

**பூட்டுவாய்** – திறவுகோல் புகும் துளை; நெருக்கடியான சமயம்.

**பூட்டுவிடுதல், பூட்டுவிலகுதல்** – உடற்பொருத்துவாய் விலகிப் போதல்.

**பூட்டுவிற்பொருள்கோள்** – செய்யுள் முதலினும் இறுதியினும் நிற்குஞ் சொற்கள் தம்முள் இயையப் பொருள்கொள்ளும் முறை.

**பூட்டை** – ஏற்றமரம்; இராட்டினத்தின் சக்கரம்; இறைகூடை; நீர்இறைக்குங் கருவிவகை; செக்கு; பூட்டாங்கயிறு; சோளக்கதிர்.

**பூட்டைப்பொறி** – நீர் இறைக்கும் கருவிவகை.

**பூட்டைவாங்குதல்** – சோளப்பயிர் முதலியன கதிர்விடுதல்.

**பூடணம்** – அணிகலன், நகை.

**பூடு** – காண்க: **பூண்டு.**

**பூண்** – அணி; உலக்கை முதலியவற்றிற்கு இடும் பூண்; கவசம்; யானைக்கோட்டின் கிம்புரி.

**பூண்கட்டுதல்** – உலக்கை முதலியவற்றிற்குப் பூண்பிடித்தல்; பலப்படுத்துதல்; போற்றுதல்.

**பூண்கடைப்புணர்வு** – அணிகலக்கொக்கி.

**பூண்டறுத்தல்** – அடியோடழித்தல்.

**பூண்டான்** – கணவன்.

**பூண்டி** – ஊர்; தோட்டம்; திடர்பட்ட கடற்பகுதி.

**பூண்டு** – சிறு செடி; உள்ளிப்பூண்டு; சிற்றடையாளம்.

**பூணாரம்** – அணிகலன்.

**பூணாரவெலும்பு** – மணிக்கட்டினெலும்பு; காறை எலும்பு.

**பூணி** – எருது; ஆனினம்; இடபராசி; நீர்ப் பறவைவகை.

**பூணித்தல்** – தோற்றுவித்தல்; குறிப்பிடுதல்; தீர்மானம்செய்தல்.

**பூணிப்பு** – நோன்புநோற்றல்; தீர்மானம்.

**பூணுதல்** – அணிதல்; மேற்கொள்ளுதல்; விலங்கு முதலியன தரித்தல்; சூழ்ந்துகொள்ளுதல்; உடைத்தாதல்; சிக்கிக்கொள்ளுதல்; நுகத்திற் கட்டப்படுதல்; நெருங்கியிறுகுதல்.

**பூணுநூல், பூணூல்** – பார்ப்பனர், கம்மாளர் அணியும் நூல்; இருபிறப்பாளர் தரிக்கும் முப்புரிநூல்.

**பூணை** – முல்லைநிலம்.

**பூத்தருபுணர்ச்சி** – தனக்கு எட்டாத மரத்தினின்றும் தான் விரும்பிய பூவைப் பறித்துதவிய தலைவனொடு தலைவி கூடும் கூட்டம்.

**பூத்தல்** – மலர்தல்; தோன்றுதல்; உண்டாதல்; பொலிவுபெறுதல்; பூப்படைதல்; கண்ணொளி மங்குதல்; பூஞ்சணம் பிடித்தல்; பயனின்றிப் போதல்; தோற்றுவித்தல்; படைத்தல்; பெற்றெடுத்தல்.

**பூத்தானம்** – அருமை பாராட்டுதல்; புதுமை.

**பூத்திரம்** – மலை.

**பூத்துப்பூத்தெனல்** – ஓடுதல் முதலியவற்றால் உண்டாகும் மூச்சிழைத்தற் குறிப்பு; உடல் வீக்கக் குறிப்பு.

**பூத்துப்போதல்** – நெருப்பில் நீறுபடர்தல்; கண் பார்வை மங்குதல்.

**பூத்தொடுத்தல்** – பூமாலை கட்டுதல்; பண்டங்களை நெருக்கமின்றி வைத்துப் பெரிதாகக் கட்டுதல்; கதைகட்டுதல்.

**பூதக்கண்ணாடி** – சிறியதைப் பெரிதாகக் காட்டுங் கண்ணாடிவகை.

**பூதகணம்** – பூதங்களின் கூட்டம்.

**பூதகாலம்** – காண்க: **இறந்தகாலம்.**

**பூதகிருதாயி** – இந்திராணி.

**பூதகிருது** – இந்திரன்.

**பூதசஞ்சாரம்** – உலகவாழ்வு.

**பூதசதுக்கம்** – காவிரிப்பூம்பட்டினத்தில் பூதம் நின்று காவல் காத்துவந்த நாற்சந்தி.

**பூதசரீரம்** – பருவுடல்.

**பூதசாரசரீரம்** – தேவன் உடல்.

**பூதசாரம்** – ஐம்பூத மூலம்.

**பூதசாரவுடம்பு** – துறக்க இன்பத்தை நுகர ஆன்மா எடுக்கும் தெய்வத்தன்மையுள்ள உடம்பு.

**பூதசுத்தி** – பாவம் நீங்குதற்குச் செய்யப்படும் ஒரு சடங்கு.

**பூதத்துணர்** – புனமுருங்கைமரம்.

**பூததயவு, பூததயை** – உயிர்களிடம் காட்டும் அன்பு.

**பூததாரன்** – சிவபிரான்.

**பூததானியம்** – எள்.

**பூதநாசினி** – பெருங்காயம்.

**பூதநாடி** – பேய்பிடித்தவர்களிடம் காணப்படும் நாடித்துடிப்புவகை.

**பூதநாதன், பூதநாயகன்** – பூதங்கட்குத் தலைவனான சிவபிரான்; கடவுள்.

**பூதநாயகி** – பார்வதி.

**பூதப்படையோன்** – பூதப்படைகளையுடைய சிவபிரான்.

**பூதபதி** – காண்க: **பூதநாதன்.**

**பூதபரிணாமதேகம்** – ஐம்பூதங்களின் வேறுபாட்டால் தோன்றிய உடம்பு.

**பூதபரிணாமம்** – ஐம்பூதங்களின் வேறுபாடு.

**பூதம்** – ஐவகைப் பூதம்; ஐவகைப் பூதங்களின் அதிதேவதைகள்; உடம்பு; இறந்தவர்களின் பேயுருவம்; பூதகணம்; பரணிநாள்; உயிர் வர்க்கம்; பருத்தது; காண்க: **பூதவேள்வி; சடாமாஞ்சில்;** அடியான்; இருப்பு; இறந்த காலம்; உள்ளான்பறவை; கமுகு; கூந்தற் பனை; தூய்மை; வாய்மை; தருப்பை; சங்கு; ஆலமரம்; பூரான்; உயிரெழுத்து.

**பூதமிவர்ந்தோன்** – விநாயகக் கடவுள்.

**பூதயாகம்** – உயிர்கட்குப் பலியுணவு தருதல்.

**பூதர்** – பதினெண்கணத்துள் ஒருவரான மாந்தர்.

**பூதரநாதன்** – மலைகட்குத் தலைவனான இமவான்.

**பூதரம்** – மலை; இமயம்; மேரு.

**பூதரன்** – அரசன்; திருமால்.

**பூதரோதரம்** – மலைக்குகை.

**பூதலம்** – பூமி.

**பூதவக்குருக்கண்** – ஆலம்விழுது

**பூதவம்** – ஆலமரம்; மருதமரம்.
**பூதவாதம்** – பூதங்களின் சேர்க்கையால் ஆன்மா உண்டானதென்று கூறும் வாதம்.
**பூதவாதி** – பூதவாத மதத்தவன்.
**பூதவாளி** – காண்க: **பூதபதி.**
**பூதவிகாரம்** – ஐம்பூதங்களின் மாறுபாடு.
**பூதவிருக்கம்** – காண்க: **பெருவாகை;** ஆலமரம்; பீநாறிமரம்.
**பூதவிருட்சம்** – பப்பரப்புளி; பீநாறிமரம்.
**பூதவிருள்** – அண்டகோளத்தைச் சூழ்ந்திருக்கும் புறவிருள்; அந்தகாரம்.
**பூதவீடு** – ஐவகைப் பூதங்களாகிய உடம்பு.
**பூதவுரு** – நிலம், நீர், தீ, காற்று ஆகிய நான்குங் கொண்ட உருவப்பகுதி.
**பூதவேள்வி** – ஐவகை வேள்விகளுள் விதிப்படி உயிர்கட்குப் பலியுணவு ஈகை.
**பூதன்** – ஆன்மா; மகன்; தேய்பிறைப் பதினான்காம் திதி; பூதத்தாழ்வார்; கடுக்காய்; தூயன்.
**பூதாக்கலம்** – மாப்பிள்ளைக்கு மணவாட்டி முதல்முறை சோறிடுகை.
**பூதாக்கலம்பண்ணுதல்** – மணவாளனும் மணவாட்டியும் முதன்முறை ஒரு கலத்தில் உண்ணுதல்.
**பூதாகாரம்** – மிகப் பருத்தது.
**பூதாண்டம்** – பிரகிருதி; அண்டம்.
**பூதாத்திரி** – காண்க: **கீழாநெல்லி.**
**பூதாத்துமன்** – துறவி.
**பூதாத்துமா** – சீவாத்துமா; உடல்; துணைக் காரணம்; நான்முகன்.
**பூதாரம்** – பூமியைப் பிளப்பதாகிய பன்றி.
**பூதாரன்** – பூமியின் பதியாகிய அரசன்.
**பூதாரி** – காண்க: **பூதநாசினி.**
**பூதாவேசி** – காண்க: **வெண்ணொச்சி.**
**பூதானம்** – நிலக்கொடை.
**பூதி** – திருநீறு; சாம்பல்; செல்வம்; பொன்; புழுதி; சேறு; பூமி; ஊன்; கொடுமை; நாய்வேளைச் செடி; உடம்பு; பொதுமை; காரணமின்றிக் குற்றம் சுமத்துகை; தீநாற்றம்; புனுகுசட்டம்; எழுநரகத்துள் ஒன்று.
**பூதிகந்தம், பூதிகந்திகம்** } – தீநாற்றம்.
**பூதிகம்** – பூமி; உடம்பு; காண்க: **நிலவேம்பு; சாதிக்காய்;** அகில்; ஒரு மணப்புல்வகை; ஆயில்மரம்; புன்கமரம்.
**பூதிசாதனம்** – திருநீறு, உருத்திராக்கம் முதலிய சிவசின்னங்கள்.
**பூதிசாரிசை** – புனுகுபூனை.
**பூதிப்படியாய்** – பொதுவாய்.
**பூதிமம்** – காண்க: **தூதுவளை.**
**பூதியம்** – உடல்; பூமி; ஐம்பூதம்.
**பூதுரந்தரர்** – அரசர்.
**பூதேசன்** – சிவபிரான்.
**பூதேவி** – பூமிதேவி.
**பூதை** – அம்பு.
**பூந்தட்டம், பூந்தட்டு** } – பூ வைத்தற்குரிய தட்டு.
**பூந்தராய்** – சீர்காழி.
**பூந்தவிசு** – பூவாலாகிய இருக்கை.
**பூந்தாது** – காண்க: **கோங்கு;** மகரந்தப்பொடி.
**பூந்தி** – காண்க: **புன்கு;** ஓர் இனிப்புப்பண்டம்; பூவந்திமரம்.
**பூந்துகள்** – காண்க: **பூந்தாது.**
**பூந்துகில்** – பூவேலை செய்த ஆடை; பொன்னாலாகிய ஆடை.
**பூந்துணர்** – பூங்கொத்து; புனமுருங்கை.
**பூந்துளிர்** – மெல்லிய தளிர்.
**பூந்தூள்** – காண்க: **பூந்தாது.**
**பூந்தேன்** – பூவின் தேன்.
**பூந்தை** – பூதன் என்பவனது தந்தை.
**பூந்தோட்டம்** – காண்க: **பூங்கா.**
**பூந்தோடு** – பூவின் இதழ்.
**பூநாகம்** – பூவிலுள்ள சிறுபாம்பு; நாகப்பூச்சி, நாங்கூழ்; காண்க: **பூநீறு.**
**பூநாதம்** – வெடியுப்பு.
**பூநிம்பம்** – காண்க: **நிலவேம்பு.**
**பூநிறம்** – மாந்தளிர்க்கல்.
**பூநீர்** – பனிநீர்; அரக்குநீர்; உவர்மண்ணில் எடுக்கும் நீர்.
**பூநீறு** – ஒரு வெள்ளை உவர்மண்வகை; ஒரு மருந்துப்பொடிவகை.
**பூநொய்** – சிறுநொய்.
**பூப்பகம்** – பெண்குறி.
**பூப்பந்தல்** – பூவினால் அலங்கரிக்கப்பட்ட பந்தல்.
**பூப்பல்லக்கு** – பூவினால் அலங்கரிக்கப்பட்ட பல்லக்கு.
**பூப்பலி** – அருச்சனை; பூசைக்குரிய பூ.
**பூப்பிஞ்சு** – இளம்பிஞ்சு.
**பூப்பிள்ளை** – சிவபூசையின்போது உதவியாக இருப்பவன்.
**பூப்பு** – பூப்படைதல்; மாதவிடாய்.
**பூப்பேசுதல்** – விலைமகளுக்குரிய நாட்பரிசம் பேசி முடித்தல்.
**பூப்போடுதல்** – ஆடையிற் பூவேலை செய்தல்.
**பூப்போல** – பூவைப்போல மெதுவாய்.
**பூபதி** – அரசன்; ஒரு குளிகைவகை; ஆதிசேடன்; மல்லிகை.
**பூபன்** – அரசன்.
**பூபாகம்** – நிலப்பரப்பு.

**பூபாலன்** – அரசன்; வேளாளன்; உயர்சாதிக் குதிரை; பூமியின் மகனான செவ்வாய்.
**பூபாளம்** – காலையில் பாடும் ஒரு பண்வகை.
**பூம்பட்டு** – மெல்லிய பட்டு.
**பூம்பந்தர்** – காண்க: **பூப்பந்தல்.**
**பூம்பந்து** – பூவினால் அமைந்த பந்து.
**பூம்பறியல்** – உணவுக்குறைவு.
**பூம்பாளை** – இளம்பாளை; ஒரு நெல்வகை.
**பூம்பிஞ்சு** – இளம்பிஞ்சு.
**பூம்பிடகை, பூம்பிடா** – பூங்கூடை.
**பூம்பிள்ளை** – இளம்பிள்ளை.
**பூம்புகை** – மணப்புகை.
**பூம்பொருக்கு** – வாடற்பூ.
**பூம்போர்வை** – பூத்தொழிலையுடைய மேற் போர்வை.
**பூமகள்** – நிலமகள்; திருமகள்; கலைமகள்.
**பூமகன்** – பிரமன்; பூமியின் மகனான செவ்வாய்.
**பூமங்கை, பூமடந்தை** – காண்க: **பூமகள்.**
**பூமடல்** – வாழை முதலியவற்றின் பூவிலுள்ள மடல்.
**பூமடை** – காண்க: **பூப்பலி.**
**பூமண்டலம்** – நிலவுலகம், நிலவட்டம்.
**பூமத்தியரேகை** – நிலநடுக்கோடு.
**பூமருது** – மருதமரவகை; ஒரு மரவகை.
**பூமழை** – மலர்மாரி.
**பூமன்** – அரசன்; பிரமன்; காமன்; செவ்வாய்.
**பூமாதுளை** – பூமாத்திரம் விடும் மாதுளை.
**பூமாதேவி** – நிலமகள்.
**பூமாரி** – பூமழை; காண்க: **வேம்பு.**
**பூமாலை** – பூவினால் தொடுத்த மாலை.
**பூமான்** – அரசன்; கணவன்; திருமகள்.
**பூமி** – பூவுலகு, மூவுலகத்துள் ஒன்று; நிலமகள்; நிலப்பகுதி; மனை; நாடு; இடம்; கோணங்களின் கீழ்வரி; நிலை; பொறிக்குரிய செய்தி; நாக்கு; ஒரு மருந்துப்பொடிவகை.
**பூமிகதனாதல்** – பிறத்தல்.
**பூமிகுருவகம்** – காண்க: **வெள்ளெருக்கு.**
**பூமிகொழுநன்** – நிலமகளின் கணவனான திருமால்.
**பூமிசம்** – பூமியிலுண்டானது; நரகம்.
**பூமிசம்பவை** – பூமியினின்றும் பிறந்த சீதாபிராட்டி.
**பூமிசன்** – செவ்வாய்; நரகாசுரன்.
**பூமிசை** – திருமகள்; சீதாபிராட்டி.
**பூமிசைநடந்தோன்** – தாமரைப்பூவில் நடந்த அருகக்கடவுள்; புத்தன்.
**பூமித்தைலம்** – மண்ணெண்ணெய், கன்னெய்.
**பூமிதேவி** – காண்க: **பூமாதேவி.**
**பூமிநாதம்** – காந்தம்; வெடியுப்பு; ஒரு மருந்துப் பொடிவகை.
**பூமிநாயகன்** – திருமால்; காஷ்மீரப் படிகம்; காண்க: **நிலவேம்பு**; அரசன்.
**பூமிபரீட்சை** – கலையறிவு அறுபத்து நான்கனுள் ஒன்றான நிலத்தியல்பு அறியும் வித்தை.
**பூமிபாரம்** – அரசபாரம்; நிலத்திற்குப் பொறையாயிருப்பவரான தீயோர்.
**பூமியதிர்ச்சி** – நிலநடுக்கம்.
**பூமிவேர்** – நாக்குப்பூச்சி.
**பூமின்** – காண்க: **பூமகள்.**
**பூமுகம்** – பொலிந்த முகம்; வீட்டு முன்முகப்பு.
**பூயம்** – சீழ்; வெறுக்கத்தக்க பொருள்.
**பூர்ணகர்ப்பம்** – காண்க: **பூரணகர்ப்பம்.**
**பூர்ணம்** – பூரணம்; முழுமை, நிறைவு.
**பூர்ணிமை** – பௌர்ணமி, முழுநிலாநாள்.
**பூர்த்தி** – நிறைவு; திருப்தி; கடவுளிடத்து ஐக்கியம்.
**பூர்த்திபண்ணுதல்** – செய்துமுடித்தல்; நிரப்புதல்.
**பூர்த்தியன்** – வேலைசெய்து கூலிபெறுவோன்.
**பூர்தல்** – நுழைதல்.
**பூர்வகதை** – பண்டைக்கால வரலாறு; கதையின் முன்தொடர்ச்சி.
**பூர்வகாலம்** – சென்ற காலம்.
**பூர்வசைவன்** – தீட்சையினால் வீடுபேறு அடையலாம் என்னும் கொள்கையுள்ள சைவமதப் பிரிவினன்.
**பூர்வஞானம்** – முற்பிறப்புணர்ச்சி.
**பூர்வபதம்** – தொகைமொழியுள் முதலிலுள்ள சொல்.
**பூர்வம்** – ஆதி; பழைமை; முதன்மை; முற்காலம்; கிழக்கு; சமண ஆகமம் மூன்றனுள் ஒன்று; முன்னிட்டு.
**பூர்வாகமம்** – சமண ஆகமம் மூன்றனுள் ஒன்று.
**பூர்வாசிரமம்** – துறவியின் முந்திய நிலை.
**பூர்விகம்** – முற்காலம்; மூலவரலாறு.
**பூர்வீகன்** – பழமையோன்; வயதுமுதிர்ந்தவன்.
**பூர்வோத்தரம்** – முன்வரலாறு; வடகிழக்கு.
**பூரகம்** – நிரப்புகை; மூச்சை உள்ளிழுத்தல்; மத்தங்காய்ப் புல்.
**பூரட்டாதி** – இருபத்தைந்தாம் நட்சத்திரம்.
**பூரணகர்ப்பம்** – முதிர்ந்த சூல்.
**பூரணகர்ப்பிணி** – நிறைசூலி.
**பூரணகலசம், பூரணகுடம், பூரணகும்பம்** – மாவிலை வைத்த நீர்நிறைந்த குடம்.
**பூரணம்** – முழுமை; நிறைவு; மிகுதி; முடிவு; மன நிறைவு; அபிநயக்கைவகை; இரண்டாவது மூன்றாவது என எண்கள் நிறுத்தமுறையைக் குறிக்கும் எண்; பலகாரத்தின் உள்ளீடு பிதிர்ப்பிண்டம்; ஆடையின் குறுக்கிழை; மழை; வளர்பிறைப் பதினைந்தாம் திதி; பூஞ்சணம்.

**பூரணமி** – வளர்பிறைப் பதினைந்தாம் திதி.
**பூரணவயசு** – நூறு பிராயம்.
**பூரணவித்தை** – நிறைகல்வி; குறைவில்லாத கலை.
**பூரணன்** – குணங்கள் நிரம்பினவன்; கடவுள்; மூர்த்தபாடாணம்.
**பூரணாகுதி** – வேள்விமுடிவுச் சடங்கு.
**பூரணி** – இலவமரம்; பார்வதி; பூமி; காடு; குணங்கள் நிரம்பினவன்.
**பூரணை** – நிறைவு; முழுநிலா; பஞ்சமி, தசமி, உவா என்னும் திதிகள்; சமவசரணத்தின் வடபுறமுள்ள வாவி; ஐயனார் தேவி.
**பூரணைகேள்வன்** – ஐயனார்.
**பூரப்பாளை** – தலைக்கோலத்தின் ஓர் உறுப்பு.
**பூரபதி** – பச்சைக்கருப்பூரம்.
**பூரம்** – கருப்பூரம்; பச்சைக்கருப்பூரம்; இரசகருப்பூரம்; மருந்துவகை; பூரநாள்; ஒரு மணச்சடங்கு; பூரான்; தேள்; பழம்; பொன்; நிறைவு; வெள்ளம்; வைப்புப் பாடாணவகை; சமவசரணத்தின் வடபுறமுள்ள வாவி.
**பூரவாகினி** – கலைமகள்.
**பூரா** – முழுதும்; முழுதுமான; நேர்த்தியான பழுப்புச்சருக்கரைவகை.
**பூராடம்** – ஒரு நட்சத்திரம்.
**பூராயக்கதை** – பழங்கதை.
**பூராயம்** – ஆராய்ச்சி; விசித்திரமானது; குழந்தைகளின் கவனத்தைக் கவரும் பொருள்.
**பூரான்** – ஊரும் உயிரிவகை; குதிரையில் உள்ள தீச்சுழி; பனைமுளை.
**பூரி** – மிக்க; மிகுதி; சிறப்புக் காலங்களில் பார்ப்பனர்களுக்குக் கொடுக்கும் தட்சிணை; பொன்; மொத்தம்; ஒரு பேரெண்; ஊதுகருவி வகை; வில்லின் நாண்; குற்றம்; கலப்புநெல்; பலகாரவகை; விரிந்த பாளையின் உள்ளிருக்கும் பூத்தொகுதி; காண்க: **பூரியரிசி**; பப்பரப்புளி; பூரிசகந்நாதம் என்னும் தலம்.
**பூரி (வி)** – முழக்கு; பெருகு; தொனி; மகிழ்.
**பூரிகம்** – அப்பவருக்கம்.
**பூரிகலியாணி** – ஒரு பண்வகை.
**பூரிகா** – அகில்மரம்.
**பூரிகை** – ஊதுகுழல்; அப்பவருக்கம்; நிரப்புகை; பிராணாயாமத்துக்கு உறுப்பானதும் காற்றை உள்ளிழுப்பதுமான செயல்.
**பூரித்தல்** – நிறைதல்; குறைவற நிரம்புதல்; களித்தல்; பருத்தல்; பொலிதல்; மிகுதல்; பூரகஞ்செய்தல்; நிறைத்தல்; பொதிந்துள்ள கருத்தை வெளியிட உரிய சொற்களைச் சேர்த்தல்; படைத்தல்.
**பூரிதம்** – நிரப்பப்பட்டது; மிகுகளிப்பு; மிகுதி.
**பூரிப்பு** – களிப்பு; நிறைவு; பருமன்; மிகுமகிழ்ச்சி; மிகுதி; ஒளி.
**பூரிமம்** – தெருப்பக்கம்; சாந்திட்டுக் கட்டிய தொட்டி.
**பூரிமாயன்** – நரி.
**பூரிமாயு** – நரி; பழைமை.
**பூரியம்** – ஊர்; மருதநிலத்தூர்; வேந்தர் வீதி; அரசிருக்கை; கலப்புநெல்; பப்பரப்புளி.
**பூரியமாக்கள், பூரியர்** – கீழ்மக்கள்; கொடியவர்.
**பூரியரிசி** – மட்டையரிசி; தசராப் பண்டிகையில் வழங்கப்படும் கொடையரிசி; வெள்ளையரிசி.
**பூரியார்** – காண்க: **பூரியர்**.
**பூரு** – குருகுலத்தரசருள் ஒருவன்; புருவம்.
**பூருகம்** – பூமியில் முளைக்கும் மரம்.
**பூருண்டி** – மல்லிகைச்செடி; வேலிப்பருத்தி; காண்க: **தேட்கொடுக்கி**.
**பூருவகங்கை** – நருமதை.
**பூருவகரு(ன்)மம்** – ஊழ்வினை.
**பூருவகௌளம்** – ஒரு பண்வகை.
**பூருவஞானம்** – முன்னனுபவத்தையறியும் அறிவு.
**பூருவதிக்கு, பூருவதிசை** – கிழக்கு.
**பூருவபக்கம்** – வளர்பிறைப்பக்கம்; பிராது.
**பூருவம்** – பழைமை; கிழக்கு; முன்பு; காண்க: **பூர்வாகமம்**.
**பூரை** – நிறைவு; போதியது; முடிவு; இன்மை; ஒன்றுக்கும் உதவாதவர்; ஒன்றுக்கும் உதவாதது.
**பூரைபூரையெனல்** – போதும் போதுமெனல்.
**பூரையிடுதல்** – முடிவடைதல்; அலுப்புண்டாக்குதல்.
**பூல்** – காண்க: **பூலா**.
**பூலத்தி** – மருதமரம்.
**பூலதை** – பூநாகம்; காண்க: **கோடாஞ்சி**.
**பூலா** – செடிவகை; மரவகை.
**பூலாச்செண்டு** – பூச்செண்டு; திருமணத்தில் நலங்கில் மணமக்கள் நிகழ்த்தும் பூச்செண்டாட்டம்.
**பூலித்தல்** – உடம்பு பூரித்தல்.
**பூலோககயிலாயம்** – திருக்குற்றாலம், சிதம்பரம் போன்ற சிவதலங்கள்.
**பூலோகம்** – மேலேழு உலகத்துள் மூன்றாவது.
**பூலோகவைகுண்டம்** – திருவரங்கம்.
**பூவணி** – பூமாலை; சதுக்கம்.
**பூவணை** – மலர்ப்பள்ளி.
**பூவந்தி** – புன்கமரம்; ஒரு மரவகை; பலகாரவகை; ஒருமருந்துவகை.

**பூவம்பர்** – ஒரு மணப்பொருள்வகை.
**பூவம்பன்** – மன்மதன்.
**பூவமளி** – எண்வகைப் புணர்ச்சிக்கு இயைந்த மலர்ப்படுக்கை.
**பூவமுதம்** – தேன்.
**பூவர்க்கம்** – பூத்திரள்.
**பூவரசு** – ஒரு மரவகை.
**பூவராகம்** – திருமாலின் பன்றிப்பிறப்பு.
**பூவராகன்** – பன்றியின் அடையாளம் குறித்த பொன்நாணயம்.
**பூவல்** – சிவப்பு; செம்மண்; துரவு; பூத்திடுகை.
**பூவல்லிகொய்தல்** – பூக்கொய்தாடும் மகளிர் விளையாட்டுவகை.
**பூவலியம்** – மண்ணுலகம்.
**பூவழலை** – காண்க: **பூநீறு.**
**பூவன்** – பிரமன்; காண்க: **செவ்வாழை;** வாழை வகை.
**பூவாடைக்காரி, பூவாடையம்மன்** – மாங்கலியத்துடன் இறந்து தெய்வமான மாது.
**பூவாணியன்** – வெற்றிலை, காய்கறி முதலியன விற்போன்.
**பூவாளி** – மன்மதன்; மன்மதனின் மலர்க்கணை.
**பூவிதழ்** – மலரேடு.
**பூவிந்து** – அப்பிரகம்; வீரம் என்னும் மருந்துச் சரக்கு.
**பூவிந்துநாதம்** – அப்பிரகம்.
**பூவிரணம்** – ஆண்குறி மலரிலுள்ள புண்.
**பூவில்** – மன்மதனது மலர்வில்.
**பூவிலி** – பிறப்பற்றவர்.
**பூவிலை** – விலைமாதர் பெறும் அற்றைக்கூலி.
**பூவிழுதல்** – கண்ணின் கருவிழியில் வெள்ளை விழுகை; சுரசுரப்பு நீங்குகை.
**பூவிற்கொம்பு, பூவின்கிழத்தி** – திருமகள்.
**பூவினன்** – பிரமன்.
**பூவுக்கிடுதல்** – காதலன் காதலிக்குப் பரிசங் கொடுத்தல்.
**பூவுயிர்த்தல்** – மலர்தல்.
**பூவுலகம், பூவுலகு** – நிலவுலகம்.
**பூவெடுத்தல்** – கோயிற்பூசைக்கு மலரெடுத்தல்; கண்ணில் விழுந்த பூவை நீக்குதல்.
**பூவேலை** – பூப்போன்ற சித்திரவேலை.
**பூவை** – நாகணவாய்ப்புள்; காயாமரம்; குயில்; பெண்.
**பூவைசியர்** – உழவர், வேளாளர்.
**பூவைநிலை** – காயாம்பூவை மாயவன் நிறத்தோடு உவமித்துப் புகழும் புறத்துறை; அரசனைத் தேவரோடு ஒப்புக்கூறும் புறத்துறை.
**பூவைவண்ணன்** – காயாம்பூ மேனியனாகிய திருமால்.
**பூவொல்லி** – உள்ளீடற்ற தேங்காய்வகை.
**பூழ்** – காடைவகை; கானாங்கோழி; துளை.
**பூழ்க்கை** – யானை.
**பூழ்தி** – இறைச்சி; முடைநாற்றம்; புழுதி; கொடுமை.
**பூழான்** – கவுதாரி; கானாங்கோழி.
**பூழி** – குழைசேறு; சேற்றிலெழுங் குமிழி; புழுதி; தூள்; திருநீறு; கொடுந்தமிழ் நாட்டினுள் ஒன்று.
**பூழியன்** – பூழி நாட்டுக்குத் தலைவனான சேரன்; பாண்டியன்.
**பூழியான்** – திருநீறு அணிந்த சிவபிரான்; புழுதியிடத்துள்ளவன்.
**பூழில்** – அகில்மரம்; பூமி.
**பூழை** – சிறுவாயில்; மலைக்கணவாய்; துளை.
**பூளம்** – பூவரசமரம்.
**பூளை** – இலவமரம்; செடிவகை; வெற்றிப்பூ; பீளை.
**பூளைசூடி** – பூளை அணிந்த சிவபிரான்.
**பூளைப்பூ** – பூளைப்பஞ்சு; பூளைச்செடி.
**பூன்றம்** – முழுமை.
**பூன்றாகுதி** – காண்க: **பூரணாகுதி.**
**பூனதம்** – பொன்.
**பூனை** – ஒரு விலங்குவகை.
**பூனைக்கண்** – வைடூரியவகை; பூனையின் கண் போன்ற கண்.
**பூனைக்காய்ச்சி** – தீய்ந்த பயிர்; கொடிவகை.
**பூனைக்காலி** – ஒரு செடிவகை; கொடிவகை; காண்க: **சிமிக்கிப்பூ.**
**பூனைத்திசை** – தென்கிழக்கு.
**பூனைப்பிடுக்கன்** – ஒரு கொடிவகை; ஒரு செடி வகை.
**பூனைமயிர்** – பூனையின் மயிர்போன்ற வெண் மயிர்; கொடிவகை.
**பூனைமூலி** – குப்பைமேனி.
**பூனைவணங்கி** – குப்பைமேனி; நாயுருவி.

# பெ

**பெ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+எ).
**பெகுலம்** – மிகுதி.
**பெங்கு** – தீயொழுக்கம்; ஒரு கள்வகை.
**பெட்டகம்** – பெட்டி; வரிசைப்பெட்டி.
**பெட்டல்** – விருப்பம்.
**பெட்டன்** – பொய்யன்.

**பெட்டார்** – நண்பர்; விரும்பியவர்.

**பெட்டி** – பண்டங்கள் வைக்கும் கலம்; கூடை; தொடர்வண்டி முதலியவற்றின் அறை; வண்டியோட்டி உட்காருமிடம்; சாட்சிக் கூண்டு; நெல்வகை.

**பெட்டிக்கோரை** – கோரைவகை.

**பெட்டிலிக்குழல்** – நீளமான குழல்.

**பெட்டிவரிசை** – ஆதிதிராவிடரில் மணப்பெண் புக்ககம் செல்லும்போது எடுத்துச் செல்லும் வரிசை.

**பெட்டு** – பொய்; மயக்குச் சொல்; சிறப்பு; மதிப்பு.

**பெட்டெனல்** – விரைவுக்குறிப்பு.

**பெட்டை** – விலங்கு, பறவை இவற்றின் பெண் பால்; பெண்; குருடு; குறைவு.

**பெட்டைக்கட்டு** – தளர்ந்த முடிச்சு.

**பெட்டைக்கண்** – ஊனமுள்ள கண்; சாய்ந்த கண்; சிறு கண்; தேங்காயின் சிரட்டையி லுள்ள துளையில்லாக் கண்கள்.

**பெட்டையன்** – ஆண்மையற்றவன்.

**பெட்ப** – மிக.

**பெட்பு** – பெருமை; விருப்பம்; அன்பு; தன்மை; பேணுகை; பாதுகாப்பு.

**பெடம்** – காண்க: **பெகுலம்.**

**பெடை** – பறவைகளின் பெண்.

**பெண்** – மகள்; சிறுமி; மணமகள்; மனைவி; பதுமினி, சித்தினி, சங்கினி, அத்தினி என நால்வகைப்படும் பெண்; விலங்கு தாவரங் களின் பெடை; காண்க: **கற்றாழை.**

**பெண்கட்டுதல்** – பெண்ணைத் திருமணம் செய் தல்.

**பெண்கரு** – கருவுக்குக் காரணமான பெண்ணின் சுரோணிதம்.

**பெண்கலை** – வண்ணப்பாவின் பிற்பகுதி.

**பெண்குறி** – அல்குல், பிறப்புறுப்பு.

**பெண்கேட்டல்** – திருமணம் செய்துகொடுக்கும் படி பெண்ணைப் பெற்றோரிடம் கேட்டல்.

**பெண்கோலம்** – மகளிர் பூணுங் கோலம்; பெண் வேடம்.

**பெண்கோள்** – பெண்ணை மணம்புரிந்து சம்பந்தஞ் செய்துகொள்கை; சந்திர சுக்கிரர் களாகிய பெண்பாற் கோள்கள்.

**பெண்சரக்கு** – படிக்காரம், காடி முதலிய புளிப் புள்ள சரக்குகள்.

**பெண்சனம்** – மகளிர் கூட்டம்.

**பெண்சாதி** – பெண்பாலர்; மனைவி.

**பெண்டகம்(ன்)** – அலி.

**பெண்டகை,**
**பெண்டகைமை** } – பெண்மைக்குணம்.

**பெண்டன்** – காண்க: **பெண்டகம்(ன்).**

**பெண்டாட்டி** – மனைவி; பெண்; வேலைக்காரி.

**பெண்டு** – மனைவி; பெண்.

**பெண்டுகம்** – கழற்சிக்கொடி.

**பெண்டுபிள்ளை** – மனைவி குழந்தைகள் அடங்கிய குடும்பம்.

**பெண்டுருவன்** – மோகினி உருக்கொண்டவ னாகிய திருமால்.

**பெண்ணடி** – பெண்வழி.

**பெண்ணரசி** – அழகிற் சிறந்தவள்; இராணி.

**பெண்ணரசு** – காண்க: **பெண்ணரசி;** குடும்பத்தில் பெண் நடத்தும் ஆட்சி.

**பெண்ணருங்கலம்** – பெண்களிற் சிறந்தவள்.

**பெண்ணலம்** – பெண்மைக்குணம்; பெண்ணின் அழகு முதலியன; பெண்ணின்பம்.

**பெண்ணலி** – பெண்தன்மை மிக்க அலி.

**பெண்ணழைத்தல்** – திருமணத்திற்கு மணமகளை மணமகன் வீட்டிற்கு அழைத்தல்; திருமணம் செய்தல்.

**பெண்ணன்** – வீரமில்லாதவன்.

**பெண்ணாசை** – பெண்மீது வைக்கும் பற்று.

**பெண்ணாயகம்** – பெண்களுக்குள் அரசி.

**பெண்ணாள்** – நடவு முதலிய பயிர்வேலை செய்யும் உழத்தி; பெண்நட்சத்திரம்.

**பெண்ணாறு** – கிழக்குநோக்கி ஓடும் ஆறு; ஓர் ஆற்றின் பெயர்.

**பெண்ணிராசி** – இடபம், கடகம், கன்னி, விருச் சிகம், மகரம், மீனம் என்னும் ஆறு இரட்டை ராசிகள்.

**பெண்ணீர்மை** – பெண்மைக்குணம்.

**பெண்ணீலி** – கொடியவள்; பெண்பேய்.

**பெண்ணுறுப்பு** – பெண்ணுக்குரிய அங்கங்கள்; பெண்குறி.

**பெண்ணெடுத்தல்** – திருமணம் செய்தல்.

**பெண்ணெழுத்து** – உயிர்மெய்; ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் நெட்டெழுத்துகள்.

**பெண்ணை** – பனைமரம்; பெண்ணையாறு; அனுடநாள்; காண்க: **நீர்முள்ளி; பெண்மரம்.**

**பெண்தானையான்** – பெண்படையையுடைய காமன்.

**பெண்பருவம்** – காண்க: **மகளிர்பருவம்.**

**பெண்பழி** – பெண்கொலை புரிதலால் உண்டாம் பழி; பெண்ணை வருத்தல் அல்லது வலாற் காரம் செய்தலால் நேரும் பழி.

**பெண்பனை** – காய்க்கும் பனை.

**பெண்பாகன்** – சிவபிரான்.

**பெண்பாடு** – பெண்பிள்ளையின் உழைப்பு.

**பெண்பார்த்தல்** – திருமணத்திற்கு மணமகளைத் தேர்ந்தெடுத்தல்.

**பெண்பால்** – ஐம்பால்களுள் ஒன்று; மகளிர் இனம்.
**பெண்பாலெழுத்து** – நெட்டெழுத்து.
**பெண்பாவம்** – பெண்பழி.
**பெண்பாற்பருவம்** – காண்க: **மகளிர்பருவம்.**
**பெண்பிள்ளை** – பெண்குழந்தை; பெண்மனைவி.
**பெண்பிறத்தல்** – பெண்பிறவி எடுத்தல்.
**பெண்பிறந்தார்** – பெண்டிர்.
**பெண்பிறப்பு** – பெண்ணாகப் பிறக்கை.
**பெண்புத்தி** – பெண்டிர்க்குரிய புத்தி.
**பெண்பெருமாள்** – பெண்ணரசி.
**பெண்பேசல்** – பெண்ணை மணம்பேசுதல்.
**பெண்போகம்** – எண்வகைப் போகத்துள் சிற்றின்பம் துய்க்கை; முப்பத்திரண்டு அறங்களுள் பெண்ணின்பந் துய்க்கப் பிறனுக்கு உதவும் அறம்.
**பெண்மகள்** – பெண்; பெண்மகவு.
**பெண்மதி** – காண்க: **பெண்புத்தி.**
**பெண்மரம்** – புறவயிரம் உள்ள மரம்; காய்க்கும் மரம் அல்லது செடி.
**பெண்மாயம்** – காண்க: **பெண்வலை.**
**பெண்மூச்சு** – பிடிவாதம்.
**பெண்மை** – பெண்தன்மை; காண்க: **பெண்பிறப்பு;** பெண்ணுக்குரிய குணம்; பெண் இன்பம்; அமைதித்தன்மை; நிறை.
**பெண்வலை** – பெண்டிர் செய்யும் வசீகரம்.
**பெண்வழி, பெண்வழிச்சுற்றம்** – பெண்ணைப்பற்றி வரும் உறவு.
**பெண்வழிச்சேறல்** – மனைவி விருப்பத்தின்படி ஒழுகல்.
**பெண்விளக்கு** – பெண்களிற் சிறந்தவள்; பாவை விளக்கு.
**பெண்வீட்டார்** – மணமகளைச் சேர்ந்த சம்பந்திகள்.
**பெத்தகாலம்** – ஆன்மா பாசபந்தத்திற்கு உட்பட்ட காலம்.
**பெத்ததசை** – ஆன்மா பாசத்திற்குட்பட்டிருக்கும் நிலை.
**பெத்தம்** – ஆன்மாவின் பாசபந்தம்; கட்டு; சேர்மானம்.
**பெத்தமுத்தி** – பந்தமும் வீடும்; இலயமுத்தி.
**பெத்தர்** – பாசத்தோடு கூடிய உயிர்கள்.
**பெத்தரிக்கம்** – அகந்தை; பெருமை; குழப்பம்.
**பெத்தல்** – பெருங்குரும்பைச்செடி.
**பெத்தான்மா** – பாசபந்தமுள்ள உயிர்.
**பெதரிகாலம்** – எட்டிமரம்.
**பெதும்பை** – எட்டு முதல் பதினொரு வயது வரையுள்ள பெண்; பெண்.
**பெந்தம்** – தொடர்பு; கட்டு.
**பெந்தித்தல்** – காண்க: **பந்தித்தல்;** சித்திரகவிகளில் எழுத்துகளை அடைக்கை.
**பெந்து** – சுற்றம்.
**பெந்தை** – அழகின்றிப் பருத்தது; கலப்பையின் ஓர் உறுப்பு.
**பெந்தைக்கயிறு** – கொழுவுள்ள கட்டையை மேழியோடிணைக்குங் கயிறு; நன்கு திரிக்காத கயிறு.
**பெந்தைவிழி** – உருண்டைவிழி; அச்சத்தால் கண் மருண்டு பார்க்கை.
**பெம்மான்** – பெருமான்; கடவுள்.
**பெய்கலம்** – கொள்கலம்; பாண்டம்.
**பெய்தல்** – மேல்நின்று பொழிதல்; வார்த்தல்; இடுதல்; எறிந்துபோடுதல்; இடைச்செருகுதல்; கொடுத்தல்; அமைத்தல்; பரப்புதல்; புகவிடுதல்; எழுதுதல்; அணிதல்; பயன்படுத்தல்; கட்டுதல்; சிறுநீர் முதலியன ஒழுகவிடுதல்; தூவுதல்; பங்கிடுதல்; செறித்தல்.
**பெய்தளத்தல்** – படியால் அளக்கும் அளவைவகை.
**பெய்துரை** – பாயிரம்; இடைப்பெய்துரைப்பது.
**பெயர்** – பேர், நாமம்; புகழ்; பெருமை; ஆள்; வடிவு; பொருள்; காண்க: **பெயர்ச்சொல்;** வஞ்சினம்; முதல் வேற்றுமை.
**பெயர்** (வி) – வேறுபடுத்து; பேர்; பெயர்த்து.
**பெயர்ச்சி** – இடமாறுகை; இடமாற்றுகை.
**பெயர்ச்செவ்வெண்** – பெயர்களில் எண்ணிடைச்சொல் தொக்கு விட்டிசைத்துவரும் தொடர்.
**பெயர்ச்சொல்** – நால்வகைச் சொற்களுள் பொருளைக் குறிக்க வழங்கும் சொல்.
**பெயர்த்தல்** – போக்குதல்; நிலைமாறச்செய்தல்; அப்புறப்படுத்துதல்; திருப்பிப்போடுதல்; பிடுங்கல்; கெடுத்தல்; ஒடுங்கிக்கொள்ளுதல்; பிரித்தல்; மீட்குதல்; வசூலித்தல்; செலுத்துதல்; விடுத்தல்.
**பெயர்த்தி** – மக்கள்வயிற்றுப் பெண்; பாட்டி; கோள் முதலியவற்றின் பெயர்ச்சி.
**பெயர்த்திரிசொல்** – திரிந்து வழங்கும் பெயர்ச்சொல்; தம் பொருளை அரிதில் விளக்கும் பெயர்ச்சொல்.
**பெயர்த்து, பெயர்த்தும்** – பின்னும்.
**பெயர்த்தெழுதுதல்** – படியெடுத்தல்; மொழிபெயர்த்தல்.
**பெயர்தல்** – போதல்; பிறழ்தல்; மீளுதல்; மாறுதல்; சிதைவுறுதல்; இணைப்பு நெகிழ்தல்; கூத்தாடுதல்; சலித்தல்; அசையிடுதல்; இடம்விட்டு மாறுதல்; பிரிதல்; கிளர்தல்; தேய்தல்; நாணயம் வழங்குதல்; வசூலாதல்.
**பெயர்திறம்** – முல்லை யாழ்த்திறவகை.
**பெயர்ந்து** – மறுபடியும்; பிற்பாடு.
**பெயர்நேரிசை** – ஓர் இலக்கியவகை.

**பெயர்ப்படுத்தல்** – பேரிடுதல்.
**பெயர்ப்பு** – பெயரச்செய்கை; மொழிபெயர்ப்பு.
**பெயர்புறம்** – புறங்கொடுக்கை.
**பெயர்பொறித்தல்** – புகழை நிலைநிறுத்துதல்.
**பெயர்போதல்** – புகழடைதல்.
**பெயர்வழி** – ஆள்; தலைமுறை; பொருள் அட்டவணை.
**பெயர்வேற்றுமை** – முதல் வேற்றுமை.
**பெயரகராதி** – சதுரகராதியில் பெயர்ச்சொற் பொருளை விளக்கும் பகுதி.
**பெயரடி** – பகுபதத்தில் பெயராகிய பகுதி.
**பெயரப்பெயர** – மீண்டும்மீண்டும்.
**பெயரன்** – பெயரை உடையவன்; மக்கள் வயிற்று ஆண்; பாட்டன்.
**பெயரிடுதல்** – பெயர்வைத்தல்.
**பெயரிடைநிலை** – பெயரின் பகுதி விகுதிகட்கு இடைநிற்கும் எழுத்து.
**பெயரிய** – பெயர்பெற்ற; பெயரால் அழைத்த.
**பெயரியற்சொல்** – தன் பொருளை இயல்பில் விளக்கும் பெயர்ச்சொல்.
**பெயரின்மை** – இறைவன் எண்குணத்துள் ஒன்றான பெயர் சொல்லமுடியாத தன்மை.
**பெயருரிச்சொல்** – பெயர்ச்சொல்லைத் தழுவி வரும் சொல்.
**பெயரெச்சம், பெயரெஞ்சுகிளவி** – பெயர்கொண்டு முடியும் வினைக்குறை.
**பெயரெடுத்தல்** – புகழடைதல்; ஒருவன் பெயரைப் பதிவுப் புத்தகத்தினின்று நீக்குதல்.
**பெயரேடு** – காண்க: **பேரேடு.**
**பெயல்** – பொழிகை; மழை; மழைத்துளி; மேகம்.
**பெயலை** – மழை.
**பெரிசு(து)** – பெரியது; மிகவும்.
**பெரிய** – பெரிதான; மூத்த; இன்றியமையாத.
**பெரியகுடியானவன்** – பேருழவன்; ஊர்ப் பெரிய தனக்காரன்.
**பெரியகுணம்** – தாராளமனம்; உலகப்பற் றின்மை.
**பெரியகை** – தாராளமான கை; செல்வன்; செல்வாக்குள்ள கட்சி.
**பெரியகோயில்** – திருவரங்கம் கோயில்; தஞ்சைக் கோயில்.
**பெரியதகப்பன்** – தந்தையின் அண்ணன்; தாயின் அக்காள் கணவன்.
**பெரியதலை** – பெரியவன்.
**பெரியதனக்காரன்** – ஊர் மணியக்காரன்; பெரு நிலக்கிழார்.
**பெரியதனம்** – மேட்டிமை; பெருந்தன்மை; மேற் பார்வை; பெருமை; காண்க: **பெரியதனக் காரன்.**
**பெரிய தாய்** – தாய்க்குமுன் பிறந்தாள்; தந்தையின் அண்ணன் மனைவி.
**பெரியதிருநாள்** – ஆண்டுப் பெருவிழா.
**பெரியதிருவடி** – கருடாழ்வார்.
**பெரியநடை** – நல்லொழுக்கம்.
**பெரியப்பன்** – காண்க: **பெரியதகப்பன்.**
**பெரியபிராட்டி** – திருமகள்.
**பெரியபிள்ளை** – ஊர் அல்லது குடும்பத்திற்குத் தலைமையாக மதிக்கப்பட்டவன்; மூத்த பிள்ளை.
**பெரியபெயர்** – பெரும்புகழ்.
**பெரியபெருமாள்** – திருவரங்கத்துத் திருமால்; பேரரசன்.
**பெரியபொருள்** – பரப்பிரமம்.
**பெரியம்மாள்** – காண்க: **பெரிய தாய்**; வீட்டுக்குத் தலைமையானவள்.
**பெரியம்மை** – காண்க: **பெரியம்மாள்**; ஓர் அம்மை நோய்வகை; மூதேவி.
**பெரியமனம்** – இளகிய நெஞ்சம்; அருள்.
**பெரியமனிதன்** – சிறந்தோன்; செல்வமும் செல் வாக்கும் உள்ளவன்; உயர்ந்த நிலையிலுள்ள வன்; ஆண்டு முதிர்ந்தவன்.
**பெரியமூளை** – மூளையின் மேற்பாகம்; அறி வாற்றல் மிக்கவன்.
**பெரியர்** – காண்க: **பெரியா(யோ)ர்.**
**பெரியவர்** – உயர்ந்தோர்; முன்னோர்; முதியோர்.
**பெரியவராடி** – பாலை யாழ்த்திறவகை.
**பெரியவள்** – ஆண்டு முதிர்ந்தவள்; பூப் படைந்தவள்.
**பெரியவன்** – தக்க வயது அடைந்தவன்; மூத்தோன்; பெரிய நிலையில் உள்ளவன்.
**பெரியவாய்** – அலப்புவாயன்; மரவகை.
**பெரியவுடையநாயனார்** – தஞ்சைக்கோயில் மூர்த்தியாகிய பிரகதீசுரர்.
**பெரியவுடையார்** – சடாயு.
**பெரியவெண்ணம்** – உயர்ந்த சிந்தை; வீண் பெருமை.
**பெரியாத்தாள்** – காண்க: **பெரியம்மாள்.**
**பெரியாநங்கை** – ஒரு செடிவகை.
**பெரியாயி** – காண்க: **பெரியம்மாள்.**
**பெரியா(யோ)ர்** – மூத்தோர்; சிறந்தோர்; ஞானியர்; அரசர்.
**பெரியோர்பெருமான்** – பிரமன்.
**பெரியோன்** – உயர்ந்தோன்; கடவுள்.
**பெருக்கம்** – வளர்ச்சி; மிகுதி; செல்வம்; வெள்ளம்; நிறைவு; நீடிப்பு.
**பெருக்கல்** – துடைப்பத்தால் குப்பை கூட்டுதல்; எண்களைப் பெருக்குதல்; விருத்திசெய்தல்.

**பெருக்கல்வாய்பாடு** – எண்களைப் பெருக்குவதாலுண்டாகும் தொகையைக் காட்டும் வாய்பாடு.

**பெருக்கலங்காரம்** – வியப்பணி.

**பெருக்காச்சவட்டு** – வெறுப்பு; கவனமின்மை.

**பெருக்காளர்** – சிறப்புடையோர்; வேளாளர்.

**பெருக்காறு** – பெருகியோடும் ஆறு.

**பெருக்கி** – சுக்கிலம்; பெருக்கிக்காட்டுவது.

**பெருக்கு** – வெள்ளம்; கடல்நீரேற்றம்; இரத்தவோட்டத்தின் மிகுதி; மிகுதி; பப்பரப்புளி; ஒரெண்ணை மற்றோர் எண்ணால் சுட்டிய மடங்கு அதிகப்படுத்துகை; காண்க: **பெருக்குத்தொகை.**

**பெருக்கு** *(வி)* – குணி; பெருகச்செய்.

**பெருக்குத்தொகை** – இரண்டு எண்களைப் பெருக்கியதாற் கூடிய தொகை.

**பெருக்குதல்** – விரியச்செய்தல்; நீர் நிரப்புதல்; மோர் முதலியவற்றை நீர் கலந்து பெருகச் செய்தல்; குப்பை கூட்டுதல்; ஒரெண்ணை மற்றோர் எண்ணால் சுட்டிய மடங்கு அதிகப்படுத்துதல்.

**பெருக்குமெண்** – மற்றொன்றைப் பெருக்குதற்கு உரிய எண்.

**பெருக்குரல்** – பாடுகையில் தோன்றும் வெடித்த குரல்.

**பெருக்குவேளை** – உச்சிப்பொழுது; கடலின் நீர் ஏற்றக்காலம்; உடலில் இரத்தவோட்டம் மிகுந்த காலம்.

**பெருக்கெடுத்தல்** – வெள்ளம் அதிகமாதல்.

**பெருக** – நிரம்ப.

**பெருகல்** – மிகுதி.

**பெருகியல்** – சாதிப் பெரும்பண் நான்கனுள் ஒன்று.

**பெருகியன்மருதம்** – ஒரு பண்வகை.

**பெருகு** – தயிர்; அணிகலவகை.

**பெருகுசாதி** – பண்ணியல் திறவகைகளுள் ஒன்று.

**பெருகுதல்** – அளவு மிகுதல்; நீர் மிகுந்தெழுதல்; நிறைதல்; வளர்தல்; முதிர்தல்; ஆக்கம் தருதல்; கேடுறுதல்; மங்கலநாண் அற்று விழுதல்; விளக்கணைதல்.

**பெருங்கட்டி** – பிளவை.

**பெருங்கணக்கு** – பெருந்தொகை; பெரும்படியானது; அகந்தை.

**பெருங்கணி** – தலைமை நிமித்திகன்.

**பெருங்கதை** – நீண்ட கதை; பரவலான செய்தி; பிள்ளையார் கதை படிப்பதில் இறுதிப்படிப்பு; ஒரு காப்பியம்.

**பெருங்கரம்** – கோவேறுகழுதை.

**பெருங்கலக்குறுத்துதல்** – பெரிய குழப்பமுண்டு பண்ணுதல்.

**பெருங்கலம்** – ஆயிரம் நரம்புடைய பேரியாழ்.

**பெருங்கலையன்** – ஒரு நெல்வகை.

**பெருங்கவி** – காண்க: **வித்தாரகவி,** விரிவாகப் பாடவல்லவன்.

**பெருங்களன்செய்தல்** – தெய்வ வழிபாட்டுக்குரிய இடமாகத் தயார்செய்தல்.

**பெருங்காஞ்சி** – ஒவ்வொருவரையும் கூற்றம் அணுகுமென்று சான்றோர் கூறுதலைப்பற்றிச் சொல்லும் புறத்துறைவகை; வீரர் படைமுகத்துத் தம் ஆற்றல் தோற்றுவித்தலைக் கூறும் புறத்துறைவகை.

**பெருங்காடு** – பெரிய வனம்; சுடுகாடு.

**பெருங்காப்பியம்** – நூல் இயல்புகள் எல்லாவற்றையும் குறைவறக்கொண்ட தொடர்நிலைச் செய்யுள்வகை.

**பெருங்காயம்** – ஒரு மருந்துவகை; கறிப்பெருங்காயம்; ஒரு மரவகை; ஒரு மரப்பிசின்வகை; காண்க: **பெருஞ்சீரகம்.**

**பெருங்கால்** – பெரிய வாய்க்கால்; யானைக்கால்; புயல்காற்று.

**பெருங்காற்று** – புயல்காற்று.

**பெருங்கிராமம்** – ஐந்நூறு குடிகளுடைய ஊர்.

**பெருங்கிழங்கு** – காண்க: **பெருமருந்து.**

**பெருங்கிழமை** – முழு உரிமை; மிகுநேயம்.

**பெருங்குடல்** – குடற்பிரிவு.

**பெருங்குடி** – உயர்குடி; வணிகருள் ஒரு பிரிவினர்; நிலக்கிழார்.

**பெருங்குடியர்** – காண்க: **பெருங்குடிவாணிகர்.**

**பெருங்குடியாட்டம்** – நாட்டாண்மை.

**பெருங்குடிவாணிகர்** – வணிகருள் ஒரு பிரிவினர்.

**பெருங்குமிழ்** – ஒரு மரவகை.

**பெருங்குயம்** – குயவர்க்கு அரசரளிக்கும் பட்டப் பெயர்.

**பெருங்குருகு** – யானையுண்குருகு; தலைச் சங்கத்து வழங்கிய ஓர் இசைத்தமிழ் நூல்.

**பெருங்குழி** – பெரிய பள்ளம்; கடல்; சதுர அளவை; முக்கால் ஏக்கர்கொண்ட நில அளவு.

**பெருங்குழுவைந்து** – காண்க: ஐம்பெருங்குழு.

**பெருங்குறட்டை** – காண்க: **பெருமருந்து;** காக்கணங்கொவ்வை; உறக்கத்தில் விடும் உரத்த மூச்சினொலி.

**பெருங்குறடு** – விறகு முதலியன பிளப்பதற்காக அடியில் வைக்குந் தாங்குகட்டை.

**பெருங்குறி,**
**பெருங்குறிச்சபை** } – ஊர்ப்பேரவை.

**பெருங்குறிஞ்சி** – கொடிவகை; பூண்டுவகை; குறிஞ்சிப்பாட்டு.

**பெருங்கை** – காண்க: பெரியகை; யானை.

**பெருங்கொடை** – எல்லோருக்கும் ஏராளமாகக் கொடுக்கை.

**பெருங்கோடணை** – ஒரு முரசுவகை.

**பெருங்கோநங்கை, பெருங்கோப்பெண்டு** } – பட்டத்தரசி.

**பெருச்சாளி** – எலிவகை.

**பெருஞ்சவளம்** – குந்தாயுதவகை.

**பெருஞ்சாந்தி** – கோயிற் பெரிய திருவிழா முடிவில் நடக்கும் நீர்முழுக்கு.

**பெருஞ்சாய்** – பேராற்றல்.

**பெருஞ்சிறப்பு** – பெரிய மரியாதை; உயர்ந்த கொண்டாட்டச் சூழல்.

**பெருஞ்சீரகம்** – ஒரு செடிவகை.

**பெருஞ்சுட்டு** – பெரும்புகழ்.

**பெருஞ்செய்** – மேம்பாடுள்ள செயல்.

**பெருஞ்செய்யாளன்** – பெரிய வீரச் செயலுள்ளவன்.

**பெருஞ்சொல்** – பலரறிசொல்.

**பெருஞ்சோற்றுநிலை, பெருஞ்சோற்றுவஞ்சி** } – போர் மேற்கொண்ட அரசன் படையாளர்க்கு உண்டியளித்து முகமன் செய்தலைக் கூறும் புறத்துறை.

**பெருஞ்சோறு** – அரசன் படைத்தலைவர்களுக்கு அளிக்கும் பேருணவு; பரணிநாள்.

**பெருத்தல்** – அதிகப்படல்; பருமையாதல்; மிகுதல்.

**பெருந்தகவு** – பெருமை; பெருந்தன்மை.

**பெருந்தகளி** – பல முகங்களை உடைய விளக்கு.

**பெருந்தகை** – மிக்க பெருமையுடையவர்; காண்க: பெருந்தன்மை; மிக்க அழகு.

**பெருந்தன்மை** – மேம்பாடு; அகந்தை.

**பெருந்தனம்** – கணிகையருள் ஒரு பிரிவினர்; சோழரது அரசாங்க உத்தியோகங்களில் ஒன்று.

**பெருந்தாதை** – காண்க: பெரியப்பன்.

**பெருந்தாய்** – காண்க: பெரிய தாய்.

**பெருந்தானம்** – நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணம், உதடு, பல், தலை ஆகிய ஒலி எழும் எட்டு உறுப்புகள்.

**பெருந்திசை** – வடக்கு முதலிய முதன்மைத் திசை; நீண்ட நிலப்பரப்புள்ள திக்கு.

**பெருந்திணை** – பொருந்தாக் காமம், மனம் ஒவ்வாத காதல்.

**பெருந்திருவமிர்து** – கடவுட்குப் படைக்கும் பெரிய நிவேதனம்.

**பெருந்திருவி** – பெருஞ்செல்வமுள்ளவள்.

**பெருந்தில்லை** – ஒரு மரவகை.

**பெருந்துத்தி** – துத்திச்செடிவகை.

**பெருந்துருத்தி** – நீர்வீசுங் கருவிவகை.

**பெருந்துறை** – பெரிய துறைமுகம்; திருப்பெருந்துறை என்னும் ஊர்.

**பெருந்தூறு** – பெரும்புதர்.

**பெருந்தெரு** – நகரின் தலைமை வீதி.

**பெருந்தேவபாணி** – இசைப்பாவகையுள் ஒன்று; ஓர் இலக்கியம்.

**பெருந்தேவி** – காண்க: பெருங்கோப்பெண்டு.

**பெருந்தேன்** – தேனீக்கள் கூட்டுகின்ற தேன்; பெரிய தேனீவகை.

**பெருநகரத்தார்** – வணிகர்.

**பெருநகை** – பெருஞ்சிரிப்பு; பேரிகழ்ச்சி.

**பெருநடை** – உயர்ந்த நடை; விரைந்த செலவு; புறக்கூத்துக்குரிய ஆடல்களுள் ஒன்று; உயர்ந்த ஒழுக்கம்.

**பெருநம்பி** – இளவரசருக்குரிய பட்டப்பெயர்; மந்திரியின் பட்டம்.

**பெருநயப்புரைத்தல்** – பெருவிருப்பைக் கூறுதல்.

**பெருநறளை** – நீண்ட கொடிவகை.

**பெருநறுவிலி** – ஒரு மரவகை.

**பெருநாரை** – நாரைவகை; தலைச்சங்கத்து வழங்கிய இசைநூலுள் ஒன்று.

**பெருநாள்** – திருநாள்; இரேவதிநாள்; முகமதியப் பண்டிகை; நெடுங்காலம்.

**பெருநாளிருக்கை** – அரசனது சிறப்பு நாளோலக்கம்.

**பெருநான்கெல்லை** – ஊர் அல்லது நிலத்தாக்கின் பேரெல்லை; எல்லை.

**பெருநிலம்** – பூமி; பரமபதம்.

**பெருநிலை** – ஒருசார்பு; விடாப்பிடி; சாட்சி.

**பெருநிலைநிற்றல்** – உதவிசெய்தல்; சாட்சி சொல்லுதல்; செய்துமுடித்தல்.

**பெருநீர்** – கடல்; மழைக்காலத்துப் பாய்ச்சல் முறையின்றித் தாராளமாக ஓடும் நீர்ப் பெருக்கு.

**பெருநெஞ்சு** – செருக்கு; ஆண்மை.

**பெருநெறி** – வீட்டுநெறி; பெருவழி.

**பெருப்பம்** – பருமன்.

**பெருப்பித்தல்** – பெரிதாக்குதல்; புனைந்து கூறுதல்.

**பெருப்பு** – பெருக்கை.

**பெரும்பஞ்சமூலம்** – தழுதாழை, பாதிரி, பெருங் குமிழ், வாகை, வில்வம் என்னும் ஐந்து மரங் களின் வேர்களைக்கொண்டு செய்த கூட்டு மருந்துவகை.

**பெரும்படி** – முருடு; உத்தேசமதிப்பு; பருமன்; உயர்தரம்; தாராளம்; அகந்தை.

**பெரும்படை** – பெரிய சேனை; இறந்த வீரனின் புகழை நடுகல்லிற் பொறிப்பதைக் குறிக்கும் புறத்துறை; தெய்வமாகிய நடுகற்குப் பெருஞ் சிறப்புப் படைத்தலைக் கூறும் புறத்துறை.

**பெரும்பணி** – கிடைத்தற்கரியது.

**பெரும்பதம்(வி)** – வீடுபேறு.

**பெரும்பதி** – மருங்கில் ஊர்சூழ் பதி.

**பெரும்பயறு** – காராமணி.

**பெரும்பராக்கு** – மிகுந்த கவனக்குறைவு; விழிப்பின்மை.

**பெரும்பற்றப்புலியூர்** – சிதம்பரம்.

**பெரும்பற்று** – அரசாங்கத்திற்குச் சொந்தமான நிலம்.

**பெரும்பறை** – ஒரு தோற்கருவிவகை.

**பெரும்பனையன்** – அம்மைநோய்வகை.

**பெரும்பாடு** – பேருழைப்பு; தீட்டுவெளிப்பாட்டு நோய், கருப்பவுதிர இறைப்பு.

**பெரும்பாண், பெரும்பாணர்** – யாழ் வாசிக்கும் பாணர்சாதி வகையார்.

**பெரும்பாந்தள்** – பெரிய பாம்பு.

**பெரும்பாலார்** –மிகுதியானவர்.

**பெரும்பாலும்** – அநேகமாய்.

**பெரும்பாலை** – பெரும்பண்வகை.

**பெரும்பாவி** – கொடுந் தீவினையாளன்.

**பெரும்பாழ்** – பெருவெளி; மூலப்பிரகிருதி; முற்றுமழிவு.

**பெரும்பாழ்செய்தல்** – முழுதும் அழித்தல்.

**பெரும்பான்மை** – பெரும்பாலும்; புகழுரை.

**பெரும்பிடி** – கட்டாய வசூல்.

**பெரும்பிழுக்கை** – வரிக்கூத்துவகை.

**பெரும்பிறிது** – இறப்பு.

**பெரும்புயல்** – பெருங்காற்று; கனத்த மழை.

**பெரும்புலர்காலை, பெரும்புலர்விடியல்** – அதிகாலை.

**பெரும்புள்** – பெருங்கோட்டான்; காண்க: **சரபம்.**

**பெரும்புறக்கடல்** – சக்கரவாளமலையைச் சூழ்ந்துள்ள கடல்.

**பெரும்புறம்** – பெருவெளி.

**பெரும்பூ** – நிலத்தின் ஆண்டுவருவாய்.

**பெரும்பூண்** – மார்பில் பூணும் பேரணி.

**பெரும்பூழை** – கதவிலிடும் வாயில்.

**பெரும்பூளை** – ஒரு செடிவகை.

**பெரும்பெயர்** – பெரும்புகழ்; வீடுபேறு.

**பெரும்பெயருலகம்** – துறக்கம்.

**பெரும்பெயல்** – கனத்த மழை.

**பெரும்பேச்சு** – பலரறிசொல்; அலப்பற் பேச்சு; புகழ்.

**பெரும்பேது** – பெரும்பித்து; சாக்காடு; பைத்தியம்.

**பெரும்பொங்கல்** – காண்க: **தைப்பொங்கல்;** ஊர்த் தெய்வத்துக்கு ஊராரிடும் பொங்கல்.

**பெரும்பொருள்** – சிறப்புடைய பொருள்; அறம்; ஞானம்; வீடுபேறு; அகப்பொருள்பற்றிய நூல்.

**பெரும்பொழுது** – கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் பருவங்கள்.

**பெரும்பொன்படுதல்** – தோற்றப் பொலிவுண்டாதல்.

**பெரும்போக்கு** – பெருந்தன்மை; சாவு.

**பெரும்போகம்** – மிகுந்த விளைவு; பேரின்பம்.

**பெருமக்கள்** – பெரியோர்; ஊர்ச்செயல்களை மேற்பார்வைசெய்யும் சபைப் பெரியோர்.

**பெருமகன்** – பெரியோன்; அரசன்; தலைவன்; அருகதேவன்.

**பெருமங்கலம்** – வாழ்த்துப்பாடல்; நன்னாள்; அரசன் தன் பிறந்தநாளில் குடிகட்கு அருள் செய்வதைக் கூறும் புறத்துறை; அரசனது பிறந்தநாள் மங்கலத்தைக் கூறும் நூல்.

**பெருமஞ்சிகன்** – நாவிதன்.

**பெருமடை** – தெய்வங்களுக்குப் படைக்கும் சோற்றுப்படையல்.

**பெருமணம்** – கலியாணம்.

**பெருமருந்து** – ஒரு கொடிவகை.

**பெருமலை** – மகாமேருமலை.

**பெருமழை** – காண்க: **பெரும்பெயல்.**

**பெருமா** – யானை.

**பெருமாட்டி** – தலைவி.

**பெருமாள்** – பெருமையிற் சிறந்தவர்; சேரர் பட்டப்பெயர்; திருமால்; முருகன்; கடவுள்.

**பெருமாள்கோயில்மாடு** – திருமால் கோயில் எருது; உடம்பு கொழுத்தவன்.

**பெருமான்** – அரசன்; கடவுள்; பெருமையிற் சிறந்தவன்; மூத்தோன்; பெருமாட்டி.

**பெருமானடிகள்** – சுவாமி; அரசர் தலைவர் பட்டப்பெயர்.

**பெருமிடறுசெய்தல்** – உரத்தழுதல்.

**பெருமிதம்** – பேரெல்லை; மேம்பாடு; தருக்கு; உள்ளக்களிப்பு; கல்வி முதலிய பெருமைகளில் மேம்பட்டுநிற்கை.

**பெருமுதலி** – தலைவன்.

**பெருமுளை** – இசைப்பாட்டுவகை.

**பெருமூச்சு** – பெரிதாக விடும் மூச்சு.

**பெருமை** – மாட்சிமை; மிகுதி; பருமை; புகழ்; வல்லமை; அகந்தை; அருமை.

**பெருவங்கியம்** – யானைத் துதிக்கைபோலும் வடிவுள்ள இசைக்குழல்.

**பெருவஞ்சி** – பகைவர் நாட்டை எரிகொளுத்துவதைக் கூறும் புறத்துறை.

**பெருவயிறு** – பருத்த வயிறு, மகோதரம்.

**பெருவர்** – பெருமையுடையவர்.

**பெருவரை** – மகாமேரு.

**பெருவலி** – மிகு வலிமையுடையது; பெருநோவு.

**பெருவழக்கு** – பலரும் கையாளும் முறை; எங்கும் பரவியிருத்தல்.

**பெருவழி** – நெடுஞ்சாலை; வீட்டுநெறி.

**பெருவளைப்பு** – பெரிய காவல்.

**பெருவனம்** – கடல்.
**பெருவாகை** – ஒரு மரவகை; வேலிப்பருத்தி.
**பெருவாடை** – பெருவளி, சண்டமாருதம்.
**பெருவாய்மலர்** – காண்க: இருவாட்சி.
**பெருவாயன்** – கழுதை; அலப்புபவன்.
**பெருவாயில்** – கோபுரம்; தோரணவாயில்.
**பெருவார்த்தை** – பெருமையுடைய உரை.
**பெருவாரல்வலை** – மீன்பிடிக்கும் பெரிய வலை வகை.
**பெருவாரி** – பெருவெள்ளம்; மிகுதி; கொள்ளை நோய்; பரவல்நோய்.
**பெருவாழ்வு** – நிரம்பிய பேறு; பேரின்பம்.
**பெருவியாதி** – குட்டநோய்.
**பெருவிரல்** – கட்டைவிரல்; நெல் எட்டுக் கொண்ட நீட்டலளவைவகை.
**பெருவிருந்து** – ஊர்விருந்து.
**பெருவிலை** – மிக்க விலை.
**பெருவிலையன்** – மிக்க விலைபெறுவது.
**பெருவிறல்** – மிகுவலி; காண்க: பெருவிறலாளி; முருகக்கடவுள்.
**பெருவிறலாளி** – மிக்க வலிமையுடையவன்.
**பெருவுடையார்** – எல்லாவற்றையும் உடைமையாகக் கொண்டுள்ள இறைவன்; தஞ்சைக் கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன் பெயர்.
**பெருவெழுத்து** – 'நமசிவாய' என்னும் ஐந்தெழுத்து மந்திரத்தில் சிவனைக் குறிக்கும் 'சி' என்னும் எழுத்து.
**பெருவெள்ளை** – ஒரு நெல்வகை.
**பெருவெளி** – விரிந்த வெளியிடம்; வானவெளி; வெட்டவெளி.
**பெலத்தல்** – காண்க: பலத்தல்.
**பெலம்** – காண்க: பலம்.
**பெலவந்தம்** – காண்க: பலவந்தம்.
**பெற்றத்துவசன்** – ஏற்றுக்கொடியுடைய சிவன்.
**பெற்றபிள்ளை** – சொந்த மகன்(ள்).
**பெற்றம்** – பெருமை; காற்று; எருது; மாடு; இடபராசி.
**பெற்றவர்** – காண்க: பெற்றோர்.
**பெற்றவன்** – தகப்பன்.
**பெற்றார்** – காண்க: பெற்றோர்.
**பெற்றான்** – தந்தை; கணவன்.
**பெற்றி** – இயல்பு; தன்மை; குணம்; விதம்; செயல்முறை; பெருமை; நிகழ்ச்சி; பேறு; நோன்பு.
**பெற்றிமை** – பெருமை; செய்யவேண்டும் முறை; சாதி.
**பெற்று** – செல்வாக்கு; அடுக்கு; பெருக்கம்; எருது.
**பெற்றோர்** – தாய்தந்தையர்.
**பெறுக்கல்** – அரிசி.
**பெறுக்குதல்** – பொறுக்குதல்.
**பெறுத்துதல்** – அடைவித்தல்; உண்ணுதல்.
**பெறுதல்** – அடைதல்; பிள்ளைபெறுதல்; பிறப்பித்தல்; அறிதல்; விலைத் தகுதியுடையதாதல்.
**பெறுதி** – இலாபம்; அடையத்தகும் பொருள்; காண்க: பெறுமதி.
**பெறுமதி** – தகுதி; தெம்பு, ஆற்றல்; உறுதி; வெகுமதி.
**பெறுமானம்** – மதிப்பு; கடன்தீர்க்குந் தகுதி.
**பெறுவதுகொள்வா(வோ)ர்** – காண்க: பொதுமகள்.
**பென்னம்பெரிய** – மிகப் பெரிய.
**பென்னை** – யானை.

# பே

**பே** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+ஏ); நுரை; அச்சம்; மேகம்; 'இல்லை' என்னும் பொருள் தரும் சொல்.
**பேகணித்தல்** – மனங்கலங்குதல்; நிறம் வேறுபடுதல்.
**பேகணிப்பு** – துயரம்; நிறம் வேறுபடுகை.
**பேகம்** – தவளை; மேகம்; உயர்ந்த நிலையிலுள்ள முகமதியப் பெண்.
**பேகன்** – கடையேழு வள்ளலுள் ஒருவன்; ஆண் தவளை.
**பேகி** – பெண்தவளை.
**பேச்சடைப்பு** – பேசமுடியாமற் செய்யும் நோய்.
**பேச்சழிதல்** – சொன்னசொல் தவறுதல்.
**பேச்சற்றவன்** – பேசமாட்டாதவன்; பேசா நோன்பு பூண்டவன்; வாக்குறுதி இல்லாதவன்.
**பேச்சறுதி** – ஒப்பந்தத்தில் முடிவான பேச்சு.
**பேச்சாட்டுத்துணை** – பேச்சுக்குத் துணையானவன்.
**பேச்சாளி** – பேச்சில் வல்லவன்; சொல் உறுதியுள்ளவன்.
**பேச்சு** – பேசுதல்; சொல்; மொழி; புகழ்; உரையாடல்; செய்தி; வதந்தி; கட்டுரை.
**பேச்சுக்காரன்** – சொல்வன்மையுடையவன்; வாயாடி.
**பேச்சுக்கிடம்** – பேசுமுரிமை; பழிக்குக் காரணம்.
**பேச்சுக்கொடுத்தல்** – இரகசியமறிய வார்த்தையாடுதல்; பேச்சு வளர்த்தல்; பொழுதுபோக்காக வார்த்தையாடுதல்.
**பேச்சுத்தட்டுதல்** – சொல் தடுமாறுதல்; வாக்குத் தவறுதல்; பிறர் சொல்லை மறுத்தல்.
**பேச்சுத்தடுமாறுதல்** – சொல் குழறுதல்; வாக்குத் தவறுதல்.

**பேச்சுத்தாராளம்** – வெறும் வாய்ச்சொல்; சொல் வன்மை; பேச்சுத்திறம்.
**பேச்சுத்துணை** – பேசிப் பொழுதுபோக்குதற்குத் துணையாக இருக்கும் ஆள்.
**பேச்சுப்பிடுங்குதல்** – சொல்லாடி இரகசியத்தை அறிதல்.
**பேச்சுமூச்சில்லாமை** – அமைதி; அடங்கியிருக்கை.
**பேச்சுவளர்த்தல்** – நீண்ட உரையாடல்; வாய்ச் சண்டையில் வசவு மிகுகை.
**பேச்சுவார்த்தை** – உரையாடல்; வாக்குவாதம்; நட்பு.
**பேசகம்** – ஆந்தை; கூகை; முகில்; யானை வாலினடி; யானை வால்நுனி; வாயில்.
**பேசகி** – காண்க: **பென்னை.**
**பேசங்கை** – மலங்கழிக்கை.
**பேசல்** – பேசுதல்; வஞ்சினமுடித்தல்.
**பேசலம்** – மரகதக் குணங்களுள் ஒன்று.
**பேசாதபேச்சு** – அவையில் பேசத்தகாத சொல்; தகுதியற்ற சொல்.
**பேசாநிலை** – மோனநிலை.
**பேசாமை** – மௌனம்.
**பேசார்** – ஊமைகள்.
**பேசாவெழுத்து** – காண்க: **பெருவெழுத்து.**
**பேசி** – இடியேறு; உடை; முட்டை; தசை; நரம்பு; பூமொட்டு.
**பேசிலம்** – காண்க: **பேசகி.**
**பேசுதல்** – சொல்லாடுதல்; வஞ்சினமுடித்தல்; வீணை நரம்பு முதலியன இசைத்தல்; சத்த மிடுதல்; சொல்லுதல்; பலமுறை சொல்லுதல்; நாடி முதலியன துடித்தல்; துதித்தல்; செயலைப் பேசி முடிவுசெய்தல்.
**பேசும்எழுத்து** – 'நமசிவாய' என்பதில் சத்தியைக் குறிக்கும் 'வ' என்னும் எழுத்து.
**பேட்டி** – பெரியோரை நேர்காணல்.
**பேட்டு** – பட்டைக்கரை; சரடு.
**பேட்டை** – நகரத்தருகில் சந்தை கூடுமிடம்; புற நகர்; பயணவண்டி முதலியன தங்கும் இடம்.
**பேட்பு** – விருப்பம்; பெருமை.
**பேடகம்** – பெட்டகம்; பெட்டி; கூடை; திரள்; ஒரு கூத்துவகை; ஒரு துகில்வகை.
**பேடணம்** – அரைத்துப் பொடிசெய்தல்; திரிகைக்கல்.
**பேடம்** – தெப்பம்; வெள்ளாடு.
**பேடன்** – ஆண்தன்மை மிகுந்த அலி.
**பேடாடல்** – கூத்துவகை.
**பேடி** – பெண்தன்மை மிகுந்த அலி; வீரிய மின்மை; நடுவிரல்; அச்சம்.
**பேடிகை** – கூடை; உறை.
**பேடிசம்** – மாய்மாலம்.
**பேடு** – பெண்தன்மை மிகுந்த அலி; கூத்துவகை; பெண்பால்; பறவையின் பெண்; விலங்குகளின் பெண்; ஊர்; சிறுமை; நடுவிரல்; உள்ளீடின்றிப் பயனற்றது.
**பேடை** – பறவையின் பெண்; கூடை.
**பேண்** – விருப்பம்; பாதுகாப்பு; காண்க: **பேண் மரம்.**
**பேண்மரம்** – துலாத்தாங்கும் மரம்.
**பேணகம்** – பலகாரவகை.
**பேணம்** – பேணுதல்; மதிப்பு; பதனம்.
**பேணல்** – பேணுதல்; மிகுவிருப்பம்; மிகுதல்; கருதுதல்.
**பேணல(லா)ர்** – காண்க: **பேணார்.**
**பேணாமாக்கள்** – திக்கற்றோர்.
**பேணாமை** – பகைமை.
**பேணார்** – பகைவர்.
**பேணி** – ஒரு பணிகாரவகை.
**பேணியார்** – விரும்பப்பட்டோர்.
**பேணுதல்** – போற்றுதல், உபசரித்தல்; ஒத்தல்; மதித்தல்; விரும்புதல்; பாதுகாத்தல்; வழிபடுதல்; பொருட்படுத்துதல்; ஓம்புதல்; அலங்கரித்தல்; கருதுதல்; குறித்தல்; உட்கொள்ளுதல்; அறிதல்.
**பேணுநர்** – பாதுகாப்பவர்.
**பேத்தி** – பேர்த்தி; பேயத்தி.
**பேத்துதல்** – காண்க: **பிதற்றுதல்.**
**பேத்துவம்** – அமுதம்; நெய்.
**பேத்தை** – ஒரு மீன்வகை; வயிற்றுவீக்கம்; பல் வீக்கம்.
**பேதகம்** – மனவேறுபாடு; தன்மை வேறுபாடு; வஞ்சனை.
**பேதகம்பண்ணுதல்** – வேற்றுமை காட்டுதல்; நட்புக்குலைத்தல்.
**பேதகன்** – கருத்து வேறுபட்டவன்; கலப்புச்சாதியான்.
**பேதப்படுதல்** – வேற்றுமைப்படுதல்; மயங்குதல்.
**பேதம்** – வேறுபாடு; மனமாறுகை; விகற்பம்; திரிபு; இணக்கமின்மை; பிறிதொன்றற்கில்லாத ஏற்றம்; பகுப்பு; நால்வகைச் சூழ்ச்சியுள் ஒருவருக்கொருவர் பகையுண்டாக்கும் நெறி; சுகதபேதம், சுசாதிபேதம், விசாதிபேதம் எனும் மூன்றுவகை வேறுபாடு.
**பேதலித்தல்** – வேற்றுமைப்படுதல்; மாறுதல்; மனங்குழம்புதல்; ஐயமுறல்.
**பேதலிப்பு** – வேற்றுமை.
**பேதவாதசைவம்** – இறைவனும் ஆன்மாவும் முத்திநிலையில் தலைவனும் தலைவியும் போல்வர் என்னும் சமயம்.
**பேதறுத்தல்** – கலக்கத்தை ஒழித்தல்.

**பேதாபேதம்** – வேற்றுமையும் ஒற்றுமையும்; வேற்றுமைப் பொருள்களின் கூட்டம்.

**பேதாமாற்று** – சதுரங்கத்தில் காயினால் கட்டுகை.

**பேதி** – பிரிப்பது; கழிச்சல்; பேதமானவன்; பேதி மருந்து; இரசம்; நேர்வாளம்.

**பேதிக்குக்கொடுத்தல்** – பேதிமருந்து கொடுத்தல்; அச்சமுண்டாக்குதல்.

**பேதிகாரி** – பேதியாக்கும் மருந்து; பேய்க் கொம்மட்டிக்கொடி.

**பேதித்தல்** – மாறுபடுதல்; பேதியாதல்; கெடுதல்; குழம்புதல்; மனம் மாறுபடுதல்; பகையாதல்; பிரித்தல்; வேற்றுமைப்படுத்தல்; மனமலையச் செய்தல்; மாற்றுதல்; வெட்டுதல்.

**பேதிதம்** – பிளத்தல்.

**பேதிமருந்து** – கழிச்சலுண்டாக்கும் மருந்து.

**பேதியாதல்** – மலங்கழிதல்; வாந்திபேதியால் மலம் நீராகக் கழிதல்.

**பேது** – அறிவின்மை; மயக்கம்; தடுமாற்றம்; உன்மத்தம்; வருத்தம்; இரகசியம்.

**பேதுறவு** – மயக்கம்; துன்பம்.

**பேதுறுத்தல்** – வருத்துதல்.

**பேதுறுதல்** – மயங்குதல்; பித்துப்பிடித்தல்; வருந்துதல்; அறியாதிருத்தல்.

**பேதை** – அறிவிலி; பெண்; பாலைநிலப் பெண்; ஐந்து வயதுமுதல் ஏழு வயதுவரையுள்ள பருவத்துப் பெண்; வறிஞன்; அலி; கள்.

**பேதைப்படுத்தல்** – மடைமையாக்குதல்.

**பேதைப்பருவம்** – அறியாப்பருவம்.

**பேதைமை** – உய்த்துணராமை; மடமை.

**பேந்துதல்** – மருளுதல்.

**பேம்** – அச்சம்.

**பேய்** – பிசாசம்; காட்டுத்தன்மை; தீமை; வெறி.

**பேய்க்கண்** – சுழல்விழி; அஞ்சத்தக்க விழி.

**பேய்க்கரும்பு** – ஒரு நாணல்வகை.

**பேய்க்கனி** – ஒரு வாழைவகை.

**பேய்க்காஞ்சி** – புண்பட்ட வீரனைக் கங்குல் யாமத்துப் பேய்காத்தமை கூறும் புறத்துறை.

**பேய்க்காடு** – பிசாசு வசிக்கும் வனம்.

**பேய்க்காற்று** – சுழல்காற்று.

**பேய்க்குணம்** – அருவருக்கத்தக்க தீக்குணம்.

**பேய்க்கூத்து** – பேயாட்டம்; குழப்பம்.

**பேய்க்கொம்மட்டி** – ஒரு கொடிவகை.

**பேய்க்கோலம்** – பேயின் வடிவம்; அவத்தோற்றம்.

**பேய்காணுதல்** – பேய்பிடித்தல்.

**பேய்ச்சி** – பெண்பேய்; பேய்பிடித்தவள்.

**பேய்ச்சுரை** – ஒரு சுரைவகை.

**பேய்த்தண்ணீர்** – சாராயம்.

**பேய்த்தனம்** – மூர்க்ககுணம்; பைத்தியம்; அறிவுக் குறை.

**பேய்த்தும்பை** – காண்க: **காசித்தும்பை;** பேய் மருட்டிச்செடி.

**பேய்த்தும்மட்டி** – பேய்க்கொம்மட்டிக்கொடி.

**பேய்த்தேர்** – கானல்நீர்.

**பேய்நடம்** – வெறியாட்டு.

**பேய்நாய்** – வெறிபிடித்த நாய்.

**பேய்நிலை** – எண்வகை மணங்களுள் ஒன்றான பைசாசம்.

**பேய்ப்பசலை(ளை)** – ஒரு பசலைக்கீரைவகை.

**பேய்ப்பயல்** – கொடியன்.

**பேய்ப்பிடி** – விடாப்பிடி; பேய்மருட்டிச்செடி.

**பேய்ப்பிள்ளை** – அடங்காப் பிள்ளை; அறிவில்லாத பிள்ளை.

**பேய்ப்பீர்க்கு** – ஒரு பீர்க்கங்கொடிவகை.

**பேய்ப்புடல்** – ஒரு பூடுவகை.

**பேய்ப்புத்தி** – அறிவின்மை.

**பேய்ப்புல்** – சுணைப்புல்.

**பேய்ப்பெண்** – அறிவில்லாத பெண்.

**பேய்ப்போக்கு** – ஒழுங்கீனமான நடை.

**பேய்பிடித்தல்** – பேயால் பிடிக்கப்படுகை.

**பேய்மகன்** – கெட்டவன்; முரடன்.

**பேய்மனம்** – அறிவற்ற மனம்; இழிந்த மனம்.

**பேய்முகம்** – கோரமுகம்.

**பேய்முசுட்டை** – ஒரு கொடிவகை.

**பேய்மை** – பேயின் தன்மை.

**பேய்வித்தை** – சூனியவித்தை.

**பேயத்தி** – அத்திமரவகை.

**பேயம்** – நீர்; பால்போன்ற பருகும் உணவு.

**பேயமன்று** – பானசாலை.

**பேயன்** – பேய்பிடித்தவன்; பைத்தியக்காரன்; மதிகேடன்; வாழைவகை.

**பேயன்வாழை** – ஒரு வாழைவகை.

**பேயாட்டம்** – பேய்க்கூத்து; பேய்த்தன்மை; கலக்கம்.

**பேயாட்டுதல்** – குறிசொல்வதற்குப் பேயாவேசம் கொள்ளச் செய்தல்; காண்க: **பேயோட்டுதல்.**

**பேயாடுதல்** – பேய்பிடித்தாடுதல்.

**பேயாமணக்கு** – ஆமணக்குவகை.

**பேயார்** – பேயாழ்வார்; காரைக்காலம்மையார்.

**பேயுள்ளி** – நரிவெங்காயம்.

**பேயூமத்தை** – மருளூமத்தை.

**பேயோட்டி** – பிசாசை ஓட்டும் மந்திரவாதி; மர வகை.

**பேயோட்டுதல்** – பேயை மந்திரத்தால் வெளி யேற்றுதல்.

**பேயோடாடி** – பேயுடன் ஆடுபவனான சிவபிரான்.

**பேர்** – பெயர்; ஆள்; உயிரி; புகழ்; பெருமை; பொலிவு.

**பேர்த்தல்** – இடம்விட்டு நீக்குதல்; அழித்தல்; முறித்தல்; மாற்றுதல்.
**பேர்த்தி** – மக்களின் மகள்; பாட்டி.
**பேர்த்து, பேர்த்தும்** – காண்க: **பெயர்த்து, பெயர்த்தும்.**
**பேர்தல்** – சிதைதல்; பிரிதல்; போதல்; அழிதல்; பிறழ்தல்; அசைதல்; குறைதல்; பின்வாங்குதல்; நிலைமாறுதல்; முறைபிறழ்தல்.
**பேர்ந்தும்** – காண்க: **பேர்த்தும்.**
**பேர்படைத்தல்** – காண்க: **பேர்பெறுதல்.**
**பேர்பாதி** – சரிபாதி.
**பேர்பெறுதல்** – புகழ்பெறுதல்.
**பேர்மகிழ்** – பெருமகிழ்ச்சி.
**பேர்மல்லி** – காண்க: **கஞ்சாங்கோரை.**
**பேர்வழி** – பெயர் அட்டவணை; கொடிவழி; ஆள்.
**பேரசம்** – அகன்ற சதுப்புநிலம்.
**பேரடித்தல்** – பேரைப் பதிவுப் புத்தகத்தினின்று நீக்குதல்.
**பேரடிபடுதல்** – எங்கும் பேசப்படுதல்.
**பேரண்டம்** – பெரிய உலகம்; தலையோடு; மூளை; நரி.
**பேரணிகலம்** – பெரும்பதக்கம்.
**பேரணை** – பெரிய அணைக்கட்டு; பெருந்தடை.
**பேரத்தி** – காண்க: **கரிமுள்ளி.**
**பேரப்பிள்ளை** – மக்களின் மக்கள்.
**பேரம்** – விற்பனை; விலைபேசுதல்; அருவிலை; வடிவம்; உடம்பு; சிலை.
**பேரம்பலம்** – சிதம்பரத்துள்ள பொன்னம்பலம்.
**பேரரத்தை** – ஒரு மருந்துச் செடிவகை.
**பேரருவி** – பெரிய அருவி.
**பேரருளாளன்** – மிக்க கருணையுள்ளவன்; திருமால்.
**பேரருளுடைமை** – சிவன் எண்குணத்தொன்றாகிய பெருங்கருணையுடைமை.
**பேரவ்வை** – பெரிய தாய்.
**பேரவா** – பேராசை.
**பேரவை** – பெரிய சபை; சுயம்வரமண்டபம்.
**பேரளவு** – பேரறிவு; பெருஞ்சிறப்பு.
**பேரறிவு** – பகுத்தறிவு; மெய்யறிவு; மூதறிவு.
**பேரன்** – மக்கள் மகன்; பாட்டன்.
**பேராசை** – பெருவிருப்பம்; மிக்க பொருளாசை.
**பேராட்டி** – பெருமையுடையவள்.
**பேராண்டு** – அறுபது ஆண்டுகொண்ட காலம்.
**பேராண்மை** – அரிய வீரச்செயல்; மிக்க வீரம்; மானம்.
**பேராந்தை** – ஆந்தைவகை; காண்க: **சகோரம்.**
**பேராமுட்டி** – செடிவகை.
**பேராயிரம்** – கடவுளின் ஆயிரம் திருப்பெயர்கள்.
**பேராலவட்டம்** – பெரிய விசிறிவகை.
**பேராழம்** – மிக்க ஆழம்.
**பேராழி** – பெருங்கடல்.
**பேராளன்** – பெருமையுடையவன்; பல பெயர்களைத் தரித்தவன்; மிருகசீரிடம்; உரோகிணி நாள்.
**பேராளி** – ஒருவன் பெயரைக் கொண்டவர்; புகழ் வாய்ந்தவர்.
**பேராறு** – மலையில் பிறந்து கடலில் கலக்கும் ஓர் ஆறு; கிருஷ்ணாநதி; மேல்கடலில் கலக்கும் ஓர் ஆறு.
**பேரானந்தம்** – வீடுபேறு; மிகப் பெரிய இன்பம், பரமானந்தம்.
**பேரி** – முரசு; பறைப்பொது; மரவகை.
**பேரிகை** – முரசு.
**பேரிசை** – பெரும்புகழ்; கடைச்சங்கத்து ஓர் இசைநூல்; ஐவகைப்பட்ட வெண்டுறைச் செந்துறையுள் ஒன்று.
**பேரிடுதல்** – காண்க: **பெயரிடுதல்.**
**பேரியம்** – காண்க: **பேரிகை.**
**பேரியல்** – பெருந்தன்மை.
**பேரியற்காஞ்சி** – கேட்டின் இயல்புகளைப் புலவர் எடுத்துக்கூறும் துறைவகை.
**பேரியாழ்** – நால்வகை யாழுள் இருபத்தொரு நரம்புள்ளது.
**பேரிரையான்** – மிகுதியாக உண்போன்.
**பேரில்** – மீது.
**பேரிளம்பெண்** – முப்பத்திரண்டு வயதுக்குமேல் நாற்பது வயதுவரையுள்ள பெண்; முப்பதுக்கு மேல் ஐம்பத்தைந்து வயதுவரையுள்ள பெண்.
**பேரிளமை** – இளமைத் தொடக்கம்; நடுப்பருவம்.
**பேரின்பம்** – பேரானந்தம்; வீட்டின்பம்.
**பேரின்பவாழ்வு** – வீட்டுவாழ்வு.
**பேரீச்சு, பேரீந்து** – ஒரு மரவகை.
**பேரு** – கடல்; கதிரவன்; பொன்மலை.
**பேருண்டி** – பேருணவு; ஒரு நாளில் கொள்ளும் முக்கிய உணவு.
**பேருதவி** – பெருநன்றி.
**பேருந்து** – உந்துவண்டி.
**பேருறக்கம்** – பெருந்தூக்கம்; இறப்பு.
**பேரூர்** – நகரம்; மருதநிலத்தூர்; மேலைச் சிதம்பரம்.
**பேரெடுத்தல்** – புகழடைதல்; பதிவேட்டிலிருந்து பெயரை நீக்கிவிடுதல்.
**பேரெண்** – அளவடி யீரடியாக வரும் அம்போதரங்க உறுப்புவகை; பெருந்தொகை.
**பேரெழும்புதல்** – பெயர் அடிபடுதல்; புகழ் பரவுதல்.
**பேரேடு** – பெயர்க் கணக்கேடு.
**பேரொளி** – மிக்க ஒளி; சூரியன்; சந்திரன்; பரஞ்சுடர்.

**பேரோலக்கம்** – அரசர் பெருஞ்சபை.

**பேலகம்** – தெப்பம்.

**பேலிகை** – எச்சில்.

**பேலுதல்** – மலங்கழித்தல்.

**பேழ்** – பெருமை.

**பேழ்கணித்தல்** – காண்க: **பேகணித்தல்**; அஞ்சுதல்; கண்மூடுதல்; மருண்டு விழித்தல்.

**பேழ்வாய்** – பெரிய வாய்.

**பேழி** – புடைவை.

**பேழை** – பெட்டி; கூடை; பெருமை; கோலிக்காய்.

**பேறு** – பெறுகை; அடையத்தக்கது; இலாபம்; நன்கொடை; பயன்; தகுதி; பதினாறு வகைப்பட்ட செல்வம்; செல்வம்; நல்லூழ்; நிலத்தின் அனுபோகவகை; இரை; படைப்பு; முடிவு.

**பேறுகாலம்** – பிள்ளைபெறுங் காலம்.

**பேன்** – தலையிலுண்டாகும் சிறுபூச்சி.

**பேனம்** – காண்க: **நுரை**.

**பேனன்** – சூரியன்; சந்திரன்.

**பேனாசனி** – இந்திரன்.

## பை

**பை** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+ ஐ); நிறம்; அழகு; பசுமை; இளமை; உடல்வலி; துணி, தோல் முதலியவற்றால் அமைந்த கொள்கலம்; பாம்புப்படம்; குடல், மூத்திரப்பை முதலிய உடல் உறுப்பு; நாணயவகை.

**பை** (வி) – கோபி; விரி.

**பைக்கம்** – பிச்சை.

**பைக்கலம்** – பச்சைக்குப்பி.

**பைகிரி** – நாய்.

**பைங்கண்** – குளிர்ந்த கண்; பசிய உடம்பு; சினத்தால் பசிய கண்; பசுமையாய் உள்ள இடம்.

**பைங்கிளி** – பச்சைக்கிளி; அழகிய இளம்பெண்.

**பைங்குழி** – கருத்தங்கும் இடம்.

**பைங்கூழ்** – இளம்பயிர்; விளைநிலம்; நோய்.

**பைங்கொடி** – பச்சிலைக்கொடிவகை.

**பைசந்தி** – காண்க: **பைங்குழி**; வாக்கு நான்கனுள் ஒன்றாயும் நாதரூபமாயுள்ள ஒலிவடிவெழுத்து.

**பைசல்** – பையன்; தீர்ப்பு; வழக்கு முதலியவற்றின் தீர்மானம்; இறப்பு.

**பைசா** – ரூபாவில் நூறில் ஒரு பகுதி; சில்லறை.

**பைசாசசத்துவம்** – பெண்டிரது பத்துச் சத்துவங்களுள் ஒன்று.

**பைசாசநிலை** – ஒரு காலில் நின்று பிறிதொரு காலை முடக்கி நிற்றல்.

**பைசாசம்** – பேய்; வில்லோர் நிலை நால்வகையுள் ஒரு காலை நிலையாக ஊன்றி ஒரு காலை முடக்கி நிற்கும் நிலை; எண்வகை மணங்களுள் துயின்றாள், களித்தாள், மூத்தாள், இழிந்தாள் முதலிய மகளிரைச் சேரும் மணம்; இரும்பு.

**பைசாசி** – பெண்பிசாசு; காண்க: **சடாமாஞ்சில்**; பிராகிருத மொழிகளுள் ஒன்று.

**பைசுனம்** – இவறல்; புறங்கூறுகை.

**பைஞ்சாய்** – கோரைப்புல்.

**பைஞ்சேறு** – சாணம்.

**பைஞ்ஞிணம்** – புதிய இறைச்சி.

**பைஞ்ஞிலம்**, **பைஞ்ஞீல்** – மக்கள்தொகுதி.

**பைஞ்ஞீலம்**, **பைஞ்ஞீலி** – மக்கள்தொகுதி; பசிய நிலம்; வாழைவகை.

**பைத்தல்** – பசுமையாதல்; ஒளிர்தல்; பாம்பு படம் விரித்தல்; கோபித்தல்; பொங்குதல்; மிகுதல்.

**பைத்தியக்காரன்** – பித்துப்பிடித்தவன்.

**பைத்தியம்** – கிறுக்கு; மூடத்தனம்.

**பைத்து** – பசுமை.

**பைதல்** – இளையது; சிறுவன்; குளிர்; துன்பம்.

**பைதிரம்** – நாடு.

**பைதிருகம்** – தந்தைக்குரியது; தந்தை வழியாக வந்த பொருள்; பகல் பதினைந்து முகூர்த்தத்துள் நான்காவது.

**பைது** – பசுமை; ஈரம்.

**பைந்தார்** – செவ்விமாலை.

**பைந்தினை** – ஒரு தினைவகை; தினை.

**பைந்து** – பந்து.

**பைந்தொடி** – பொன்வளையல்; பெண்.

**பைந்நாகம்** – நாகப்பாம்பு; பல்லக்கு முதலியவற்றின் மேற்கட்டி.

**பைப்பய** – மெல்லமெல்ல.

**பைபீலம்** – எறும்பு.

**பைபீலவாதம்** – எறும்புகளின் பேச்சறிதல்; அணுப்பரிணாம வாதம்.

**பைபீலிகை** – காண்க: **பைபீலம்**.

**பைம்பூண்** – பசுமையான பொன்னாற் செய்யப்பட்ட அணிகலன்.

**பைம்பொன்** – பசும்பொன்; மேருமலை.

**பைம்மறித்தல்** – காண்க: **பைமறி**; பையின் வாயை மூடுதல்.

**பைம்மை** – பசுமை; அருகதவப்பெண்.

**பைமறி** – பையின் உட்புறத்தை வெளிப்புறமாகத் திருப்புதல்.

**பைமை** – காண்க: **பைம்மை.**
**பைய** – மெல்ல.
**பையப்பைய** – மெல்லமெல்ல; கொஞ்சங் கொஞ்சமாக.
**பையம்** – கூடை; காண்க: **கோரை.**
**பையர, பையரவு** – நாகம்.
**பையல்** – காண்க: **பொடியன்.**
**பையன்** – சிறுவன்; மகன்.
**பையாத்தல்** – வருந்துதல்; அச்சந்தோன்றுதல்.
**பையாப்பு** – துன்பம்.
**பையுள்** – சிறுமை; துன்பம்; நோய்; மயக்கம்.
**பையெனல்** – மெதுவாதற்குறிப்பு; ஒளி மழுங்குதற்குறிப்பு; வருந்தற்குறிப்பு.
**பையோடதி** – பச்சைக்கொடி.
**பையோலை** – பச்சோலை.
**பைரவம்** – அச்சம்; பயங்கரம்; சைவசமயவகை; செவ்வழி யாழ்த்திறங்களுள் ஒன்று.
**பைரவர்** – துர்க்கையின் படையினரான கணங்கள்.
**பைரவன்** – சிவமூர்த்தங்களுள் ஒருவரான வைரவக்கடவுள்.
**பைரவி** – துர்க்கை; ஒரு பண்வகை.
**பைவர்** – துன்பமுடையவர்.
**பைவருதல்** – துயருறுதல்.

# பொ

**பொ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+ஒ).
**பொக்கணம்** – முடிச்சு; பெருமருந்துக்கொடி.
**பொக்கணி** – குழியுரல்; விரிந்த தொப்புள்; ஒரு வகைப் பான ஏனம்.
**பொக்கணை** – மரப்பொந்து; கல்வளை; குழியுரல்.
**பொக்கம்** – பொய்; வஞ்சகம்; குற்றம்; மிகுதி; உயரம்; பொலிவு; அச்சம்.
**பொக்கரணி** – கோயிலை அடுத்துள்ள குளம்.
**பொக்கல்** – காண்க: **பொக்கை.**
**பொக்கல்வாய்** – காண்க: **பொக்கைவாய்.**
**பொக்கன்** – தோற்றப்பொலிவுள்ளவன்.
**பொக்கிப்பயல்** – தறிதலை.
**பொக்கிப்போதல்** – கொப்புளமுண்டாதல்; புண் கட்டி உண்டாதல்.
**பொக்கு** – மரப்பொந்து; குற்றம்; உள்ளீடு முற்றாத தானியம்; தானிய நொறுங்கு; பொருக்கு.
**பொக்குதல்** – கொப்புளங்கொள்ளுதல்.
**பொக்குப்பொக்கெனல்** – ஒலிக்குறிப்பு; விரைவுக் குறிப்பு; சுடர் விட்டுவிட்டு வீசுதற்குறிப்பு.
**பொக்குவாய்** – காண்க: **பொக்கைவாய்.**
**பொக்குள்** – கொப்பூழ்.
**பொக்குளம்** – கொப்புளம்.
**பொக்குளித்தல்** – கொப்புளம் கிளம்புதல்.
**பொக்குளிப்பான்** – அம்மைவகை.
**பொக்கெனல்** – விரைவுக்குறிப்பு.
**பொக்கை** – சிறுதுளை; மூளியாயிருக்கை; நொய் முதலியவற்றின் நொறுங்கு; குற்றம்.
**பொக்கைப்பல்** – ஒட்டையான பல்வரிசை.
**பொக்கைவாய்** – பல்லுப்போன வாய்.
**பொகடி** – மகளிர் காதணிவகை.
**பொகில்** – அரும்பு.
**பொகுட்டு** – கலங்கல்நீரில் எழுங் குமிழி; தாமரை அல்லது கோங்கின் பூவிலுள்ள கொட்டை; மலை.
**பொகுத்தல்** – ஒட்டை செய்தல்.
**பொகுவல்** – பறவைவகை.
**பொங்கடி** – யானை; சிங்கம்.
**பொங்கத்தம்பொங்கு(கோ)** – போரில் தோற்றவர் ஆடிக்கொண்டு கூறும் அடைக்கலக் குரல்.
**பொங்கம்** – மகிழ்ச்சி; மிகுதி; ஒழுங்கு; நெற்றி; நறுமணம்; பொலிவு.
**பொங்கர்** – மரக்கொம்பு; மலை; சோலை; இலவ மரம்; வாடற்பூ.
**பொங்கல்** – பொங்குதல்; பெருங்கோபம்; மிளகு, சீரகம், உப்பு, நெய் முதலியன கலந்து இட்ட அன்னம்; தைப்பொங்கல் திருவிழா; பருமை; மிகுதி; பொலிவு; கள்.
**பொங்கல்வைத்தல்** – தெய்வத்துக்குப் பொங்கல் அன்னஞ் சமைத்தல்; அழித்தல்.
**பொங்கலாடுதல்** – பஞ்சுபோற் பறத்தல்.
**பொங்கலிடுதல்** – காண்க: **பொங்கல்வைத்தல்.**
**பொங்கலோபொங்கல்** – தைப்பொங்கலிற் பால் பொங்கும்போதும் மாட்டுப்பொங்கலில் மாட்டை ஓட்டிவிடும்போதும் மகிழ்ச்சியுடன் கூறும் பேரொலி.
**பொங்கழி** – தூற்றாத நெற்பொலி.
**பொங்கற்படி** – தைப்பொங்கல் நாளன்று கொடுக்கும் கொடை; புது மணமக்களுக்குத் தைப்பொங்கலுக்காக அளிக்கும் சீர்வரிசை.
**பொங்கற்பண்டிகை** – தைமாதம் முதல்நாள் அன்று சூரியனை வழிபட்டுப் பொங்கல் படைக்கும் திருவிழா.
**பொங்கற்பானை** – தைப்பொங்கலுக்குப் பயன் படுத்தும் புதுப்பானை; வயிறுபெருத்தவன்.
**பொங்காரம்** – பொங்குதல்; பெருந்துயர்; வளையலுப்பு.

**பொங்கிவழிதல்** – சோறு முதலியன கொதித்துப் புறத்து வடிதல்; செல்வம் பெருகுதல்.

**பொங்கு** – செல்வச்செழிப்பு; நற்பேறு.

**பொங்குகாலம்** – செழிப்புக் காலம்.

**பொங்குகிறவன்** – சமையற்காரன்.

**பொங்குங்காலம்** – காண்க: **பொங்குகாலம்.**

**பொங்குசனி** – வாழ்நாளில் இரண்டாம் முறை வரும் ஏழரையாண்டுச் சனி; வளர்பிறைச் சனிக்கிழமை.

**பொங்குதல்** – காய்ந்து கொதித்தல்; கொந்தளித் தல்; மிகுதல்; பருத்தல்; மேற்கிளர்தல்; மகிழ்ச்சிகொள்ளுதல்; கோபித்தல்; செருக் குறுதல்; நுரைத்தெழுதல்; விளங்குதல்; மயிர் சிலிர்த்தல்; வீங்குதல்; விரைதல்; துள்ளுதல்; கண் சூடுகொள்ளுதல்; உயர்தல்; செழித்தல்; ஒலித்தல்; சமைத்தல்.

**பொச்சம்** – பொய்; குற்றம்; அவா; தேங்காய் மட்டை; உணவு.

**பொச்சாத்தல்** – மறத்தல்; இகழ்தல்.

**பொச்சாப்பன்** – மறதியுள்ளவன்.

**பொச்சாப்பு** – மறதி; பொல்லாங்கு; குற்றம்; உறுதியின்றி மனம் நெகிழ்ந்திருக்கை.

**பொச்சு** – குற்றம்; பழத்தில் கேடடைந்த பகுதி; தேங்காய்மட்டை; பெண்குறி; பெண்குறி மயிர்; மலத்துளை; மயிர்க்கொத்து.

**பொச்செரிப்பு** – பொறாமை.

**பொச்சை** – காடு; கரிகாடு; சிறுமலை; மலை; புழுக்கூடு; குற்றம்; தொப்பைவயிறு.

**பொசி** – கசிவது; ஊன்நீர்; துத்தம்.

**பொசித்தல்** – காண்க: **புசித்தல்.**

**பொசிதல்** – கசிதல்; வடிதல்; மனமுருகல்; செய்தி வெளியாதல்.

**பொசிவு** – நெகிழ்வு; கசிவு.

**பொசுக்குதல்** – சாம்பலாக எரித்தல்; வெதுப்பு தல்; தீயில் வாட்டுதல்; துன்பப்படுதல்; குசு விடுதல்.

**பொசுக்கெனல்** – விரைவுக்குறிப்பு.

**பொசுங்கல்** – கருகினது; மந்தன்; வலுவில்லான்; சிறுதூற்றல்.

**பொசுங்குதல்** – எரிக்கப்படுதல்; காய்தல்; வாட்டப்படுதல்; அழிவுறுதல்; இணங்குதல்.

**பொசுபொசுத்தல்** – இரகசியம் பேசுதல்; மெது வாகக் கசிதல்; எரிச்சல் உண்டாகும்படி அடிக்கடி பேசுதல்; மழை துளித்தல்.

**பொசுபொசெனல்** – வலியற்றுப்போதல், எளிதில் எரிதற்குறிப்பு; இலேசாய்ப் பெய்தற்குறிப்பு; விரைவுக்குறிப்பு.

**பொஞ்சுதல்** – செழித்தல்; இணங்குதல்.

**பொட்ட** – விரைவாக; முழுதும்.

**பொட்டச்சி** – காண்க: **பொட்டைச்சி.**

**பொட்டணம், பொட்டணி** – சிறுமூட்டை; ஒற்றடமிடும் சீலைப்பந்து.

**பொட்டல்** – பாழிடம்; திறந்த வெளியிடம்; தலை வழுக்கை.

**பொட்டலம்** – சிறுமூட்டை; கதவுகளில் அமைந்த வேலைவகை.

**பொட்டி** – பெட்டி; விலைமகள்.

**பொட்டிமகன்** – வேசிமகன்; கெட்டிக்காரன்.

**பொட்டில்** – திருவிழா முதலியவற்றில் வெடிச் சத்தம் செய்யும் கருவிவகை.

**பொட்டில்சுடுதல்** – கைத்துப்பாக்கியால் சுடுதல்.

**பொட்டிலி** – காண்க: **பொட்டில்.**

**பொட்டிலுப்பு** – வெடியுப்பு.

**பொட்டு** – நெற்றியிலிடும் பொட்டு; பொன்னாற் செய்த ஒரு தாலிவகை; ஓர் அணிவகை; கன்னத்தின் மேற்பொருத்து; புல்லிது; வட்ட வடிவான குறி; துளி; புழு; பூச்சிவகை; பொட்டுப்பூச்சி; பிறரை ஏமாற்றிப் பெறும் நன்மதிப்பு; நுழைவழி; தானியங்களின் தோலோடுகூடிய துகள்; பொடி; பொடுகு.

**பொட்டுக்கட்டுதல்** – கோயிலுக்கு உரிமையாக் கித் தாசிக்குத் தாலிகட்டும் சடங்கு.

**பொட்டுக்கம்பு** – கம்புவகை.

**பொட்டுக்காறை** – மகளிர் கழுத்தணிவகை.

**பொட்டுக்குத்துதல்** – பச்சைகுத்துதல்.

**பொட்டுத்தாலி** – பொட்டு வடிவான மங்கல நாண்.

**பொட்டுப்பொட்டெனல்** – ஒலிக்குறிப்புவகை.

**பொட்டுப்பொடி** – சிறுபண்டம்.

**பொட்டெழுதல்** – அழிவுறுதல்.

**பொட்டெனல்** – விரைவுக்குறிப்பு.

**பொட்டை** – குருடு; கண்ணொளி மழுக்கம்; சூதாடுவோர் குழூஉக்குறி; விலங்கு, பறவை இவற்றின் பெண்பால்; பெண்.

**பொட்டைக்கண்** – குருட்டுவிழி.

**பொட்டைச்சி** – பெண்.

**பொட்டையன்** – குருடன்; பெண்வழிச் செல்லும் கணவன்.

**பொடி** – புழுதி; தூள்; மூக்குத்தூள்; சொக்குப் பொடி; உலோகங்களைப் பற்றவைக்கும் பொடி; சாம்பல்; திருநீறு; சிறிய துண்டு; சிறியது; சிறிய இரத்தினம்; சிறுபிள்ளை.

**பொடி (வி)** – புழுதியாக்கு; பொடிசெய்.

**பொடிச்சல்லி** – கட்டட வேலைக்காக உடைத்த கருங்கல் அல்லது செங்கல் சிறுதுண்டு.

**பொடிச்சிலை** – மஞ்சள்நிறக் கல்வகை.

**பொடிசு** – சிறியது; சிறுமி.

**பொடித்தரை** – பொடி மிகுதியான பூமி.

**பொடித்தல்** – துகளாக்குதல்; கெடுத்தல்; தோற்றுவித்தல்; அரும்புதல்; தோன்றுதல்; விளங்குதல்; வியர்வை அரும்புதல்; புளகித்தல்; பொடியாதல்.

**பொடிதல்** – தூளாதல்; கெடுதல்; தீய்தல்; ஒளி மங்குதல்; சினங்கொள்ளுதல்; கண்டித்தல்; வெறுத்தல்.

**பொடிதூவுதல்** – மரக்கறியில் மாப்பொடி கலத்தல்; ஏமாற்றுதல்.

**பொடிப்பு** – புளகம்; காண்க: பொடுகு.

**பொடிப்போடுதல்** – மூக்குள் புகையிலைத் தூளிடுதல்; மாயப்பொடியிடுதல்.

**பொடிபடுதல்** – உடைபடுதல்.

**பொடிபண்ணுதல்** – தூளாக்குதல்; துண்டித்தல்.

**பொடிபொட்டு** – சிறியது; பதரானது.

**பொடியல்** – இரும்பில் துளைபோடுங் கம்மக் கருவி.

**பொடியன்** – சிறுவன்; புல்லன், அற்பன்.

**பொடியாடி** – சிவபிரான்.

**பொடியாணி** – சிற்றாணி.

**பொடியாதல்** – அழிதல்.

**பொடியிழைப்புளி** – இழைப்புளிவகை.

**பொடியீர்** – இடுக்கிவகை.

**பொடிவு** – சிதைவு; வசவு.

**பொடிவெட்டி** – பொன், வெள்ளி முதலியன வெட்டுங் கத்தரிக்கோல்வகை.

**பொடிவைத்தல்** – உலோகங்களைப் பற்றவைத்தல்; தந்திரமாய்ப் பேசுதல்; கோட்சொல்லுதல்.

**பொடுகன்** – சிற்றுருவமுள்ளவன்.

**பொடுகு** – தலைச்சுண்டு; சிறுமை; பூடுவகை.

**பொடுத(தி)லை** – ஒரு பூடுவகை.

**பொடுபொடுத்தல்** – வெடித்தல்; துளித்தல்; குறைதல்; விரைவாய்ப் பேசுதல்; வயிறிரைதல்; கல் முதலியன ஒலியுடன் விழுதல்; சினங்கொள்ளுதல்.

**பொடுபொடெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; விரைந்து பேசுதற்குறிப்பு.

**பொண்டுதல்** – கெட்டுப்போதல்.

**பொத்தகம்** – மயிலிறகு; புத்தகம்; சித்திரப் படாம்; நிலக்கணக்கு.

**பொத்தம்பொது** – பொது.

**பொத்தல்** – துளை; துளைத்தல்; மூடுதல்; கடன்; குற்றம்; போத்தல்.

**பொத்தலடைத்தல்** – சுவர், கூரை முதலியவற்றிலுள்ள துளையையடைத்தல்; கடன் தீர்த்தல்; குற்றத்தை மறைத்தல்.

**பொத்தாறு, பொத்தாறுக்கட்டை** – ஏர்க்கால்.

**பொத்தி** – நார்மடி; சீலை; மடல்விரியா வாழைப்பூ; சோளக்கதிர்; தானியக்கதிர்; மணிவகை; தோலுரியாத பனங்கிழங்கு; அண்டம்; ஒரு பழைய சோழநகர்; வரால்; பொது.

**பொத்திக்கரப்பான்** – கரப்பான்வகை.

**பொத்தித்தேவாத்தி** – நார்மடி.

**பொத்திதள்ளுதல்** – வாழை முதலியன குலை போடுதல்.

**பொத்திரம்** – எறியாயுதம்.

**பொத்திலம்** – மரப்பொந்து.

**பொத்துவைத்தல்** – மறைத்தல்; பத்திரப்படுத்துதல்.

**பொத்து** – மூடுகை; அடைப்பு; பொத்தல்; பொந்து; வயிறு; தவறு; தீயொழுக்கம்; பொய்; கெவுளி.

**பொத்துதல்** – புதைத்தல்; வாய், கண் முதலியவற்றை மூடுதல்; விரலை மடக்கி மூடுதல்; உள்ளங்கையை தைத்து மூடுதல்; மூட்டுதல்; தைத்தல்; மறைத்தல்; அடித்தல்; தீமூட்டல்; மாலைகட்டுதல்; கற்பனைசெய்தல்; கலத்தல்; நிறைதல்.

**பொத்துப்படுதல்** – தவறுதல்; செயல் கைகூடாது தீமை பயத்தல்.

**பொத்துப்பொத்தெனல்** – ஒலிக்குறிப்புவகை; தடித்திருத்தற்குறிப்பு.

**பொத்துமான்** – ஒரு மான்வகை.

**பொத்தெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**பொத்தை** – துளை; பருமையானது; சிறுமலை; சிறுதூறு; கற்பாறை; மலை; கரிகாடு; காடு; உடம்பு; கடன்; குற்றம்; மீன்வகை.

**பொத்தைக்கால்** – யானைக்கால்.

**பொத்தையன்** – தடித்தவன்.

**பொதி** – மூட்டை; நிறைவு; பலபண்டம்; நிதி; சொற்பயன்; ஒரு நிறையளவுவகை; நீர்மப் பொருள் அளவுவகை; நிலவளவுவகை; பிணிப்பு; கட்டுச்சோறு; தொகுதி; அரும்பு; கொத்து; மூளை; உடல்; தவிடு; கரிகாடு; மூங்கில் முதலியவற்றின் பட்டை; குடையோலை; பசு முதலியவற்றின் மடி; பருமன்; ஓலைக்குடை; அம்பலம்; பொதியமலை; காய்ந்த நன்செய்.

**பொதிகாரன்** – பொதிமாடு செலுத்துவோன்.

**பொதிகை** – பொதியமலை.

**பொதிசோறு** – கட்டுச்சோறு.

**பொதிதல்** – நிறைதல்; சேமித்தல்; உள்ளடக்குதல்; மறைத்தல்; பிணித்தல்; கடைப்பிடித்தல்.

**பொதிந்துவைத்தல்** – இடைவிடாது மனத்துட் கொள்ளுதல்.

**பொதிப்போதா** – பெருநாரை.
**பொதிமாடு** – மூட்டை சுமக்கும் எருது.
**பொதியப்பொருப்பன்** – காண்க: **பொதியவெற்பன்.**
**பொதியம்** – பாண்டிய நாட்டில் உள்ளதும் அகத்தியரின் இருப்பிடமுமான பொதிய மலை.
**பொதியவிழ்த்தல்** – தன் வரலாறு விரித்தல்; பண்டப் பொதியைப் பிரித்தல்.
**பொதியவிழ்தல்** – அரும்பு முறுக்கவிழ்தல்.
**பொதியவெற்பன்** – பொதியமலைக்குரிய பாண்டியன்.
**பொதியறுத்தல்** – பணத்தைக் கவர்தல்.
**பொதியறை** – காற்றோட்டமில்லாத கீழறை.
**பொதியன்** – பொதியமலையில் வாழ்ந்த அகத்திய முனிவர்.
**பொதியில்** – அம்பலம்; பொதியமலை.
**பொதியெருது** – மூட்டை சுமக்கும் எருது.
**பொதிர்** – நடுக்கம்.
**பொதிர்த்தல்** – குத்துதல்; முரித்தல்; பருத்தல்.
**பொதிர்தல்** – வீங்குதல்; மிகுதல்; நடுங்குதல்; அஞ்சுதல்.
**பொதிர்ப்பு, பொதிர்வு** – நடுக்கம்; அச்சம்.
**பொதிரெறிதல்** – நடுங்குதல்.
**பொதிவு** – பொதியாகக் கட்டுகை; ஒற்றுமை.
**பொதிவைத்தல்** – புதையல் வைத்தல்.
**பொது** – பொதுமையானது; சிறப்பின்மை; சாதாரணம்; வழக்கமானது; நடுவுநிலை; ஒப்பு; குறிப்பான பொருளின்மை; வெளிப்படையானது; சபை; தில்லையம்பலம்.
**பொதுக்காரியம்** – சமூகநலத்துக்குற்ற செயல்.
**பொதுக்கு** – விலக்கு; மறைப்பு; ஒதுக்கு.
**பொதுக்குணம்** – காண்க: **பொதுத்தன்மை.**
**பொதுக்குதல்** – விலக்குதல்; மறைத்தல்; கவர்தல்; புகையிற் பழுக்கவைத்தல்.
**பொதுக்கை** – பல கூத்துக்கும் பொதுவான அபிநயக்கைவகை.
**பொதுங்குதல்** – வருந்துதல்.
**பொதுச்செலவு** – பொதுப் பணத்திலிருந்து ஊரார் பொதுச் செயலுக்குச் செலவிடுந் தொகை; களத்தில் நிலக்கிழார் காவல் முதலியவற்றிற்குச் செலவிடும் தானியம்.
**பொதுச்சொல்** – இருதிணைகட்கும் பொதுவாயிருக்குஞ் சொல்; எல்லோரும் அறிந்த சொல்; உலகம் பலர்க்கும் பொது என்னும் மொழி; படலமுதலிய நூற்பகுதிக்குத் தலைப்பாக இடும் சொல்.
**பொதுத்தல்** – முள்பாய்தல்; துளைத்தல்.
**பொதுத்தன்மை** – நடுவுநிலைமை; பெரும்பாலும் காணப்படும் குணம்; உவமான உவமேயங்களில் அமைந்துள்ள பொது ஒப்புமை.
**பொதுத்திணை** – இருதிணைகட்கும் பொதுச் சொல்.
**பொதுதல்** – துளைபடுதல்.
**பொதுநடுவர்** – நடுநிலையாளர்; வழக்குத்தீர்ப்பவர்.
**பொதுநலத்தார்** – பொதுமகளிர்.
**பொதுநலம்** – காண்க: **பொதுநன்மை;** பொருள் கொடுப்பார் பெறுஞ் சிற்றின்பம்.
**பொதுநன்மை** – மக்களுக்குச் செய்யும் நன்மை.
**பொதுநிலம்** – பலருக்குப் பொதுவான நிலம்; மக்கள் நன்மைக்காக ஊர்ப்பொதுவுக்கு விடப்பட்ட நிலம்.
**பொதுநிறம்** – மாநிறம்.
**பொதுநீக்குதல்** – பொதுமையை விடுத்தல்; தனக்கே உரிமையாக்கிக் கொள்ளுதல்.
**பொதுநீங்குவமை** – காண்க: **இயைபின்மையணி.**
**பொதுநெறி** – யாவரும் செல்லும் வழி.
**பொதுநோக்கு** – சமநோக்கு; எல்லோரையும் ஒப்பநோக்குகை; விருப்புவெறுப்பற்ற பார்வை; இயற்கையாக அமைந்த அறிவு.
**பொதுப்படுதல்** – பொதுவாதல்; ஒப்பாதல்.
**பொதுப்பண்** – இரவும் பகலும் பாடற்குரிய பண்.
**பொதுப்பெண், பொதுப்பெண்டு** – காண்க: **பொதுமடந்தை.**
**பொதுப்பெயர்** – பல பொருட்குப் பொதுவாகிய பெயர்; இருதிணைக்கும் அல்லது அஃறிணை இருபாற்கும் பொதுவாக வரும் பெயர்.
**பொதுப்பேச்சு** – பொதுப்படையான சொல்; கவர்பொருள் உள்ள மொழி.
**பொதுபொதெனல்** – வரவர மிகுதியாதற் குறிப்பு; ஆடை முதலியன அழுத்தமின்மைக் குறிப்பு; ஈரத்தால் நனைந்திருத்தற் குறிப்பு.
**பொதும்பர்** – மரம் செறிந்த இடம்; இளமரச் சோலை; சோலை.
**பொதும்பு** – சோலை; குறுங்காடு; மரப்பொந்து; குழி; குகை.
**பொதுமக்கள்** – சிறப்பில்லாத மக்கள், பொது சனங்கள்.
**பொதுமகள்** – விலைமகள்; இடைக்குலப்பெண்.
**பொதுமடந்தை** – விலைமகள்.
**பொதுமனிதன்** – நடுநிலையாளன்; விருப்பு வெறுப்பற்றவன்.
**பொதுமாது** – காண்க: **பொதுமடந்தை.**
**பொதுமுதல்** – கூட்டுவாணிகத்தின் மூலதனம்.
**பொதுமை** – பொதுவுடைமை; சாமானியம்; நன்மை.

**பொதுமொழி** – சிறப்பில்லாத சொல்; குறிப்பான பொருளில்லாத சொல்; பொதுவான சொல்; பிரியாது நின்றவிடத்து ஒரு பொருளும் பிரித்த விடத்து வேறு பொருளும் பயக்கும் சொல்; காண்க: **பொதுச்சொல்.**

**பொதுவசனம்** – பலபொருள் தரும் ஒரு சொல் அல்லது தொடர்; ஊரில் வழங்கும் பேச்சு; குறிப்பான பொருளில்லாத சொல்; பொதுப் படையான சொல்.

**பொதுவர்** – இடையர்; பொதுமகளிர்; நடுவர்.

**பொதுவறிவு** – சாதாரண அறிவு.

**பொதுவறுசிறப்பு** – தனக்கேயுரிய சிறப்பு.

**பொதுவறுதல்** – ஒருவனுக்கே யுரியதாதல்.

**பொதுவனுமானம்** – ஒன்று உள்ளது கொண்டு அதனுடன் காணப்படும் வேறொன்று உளது என்று கொள்ளும் அனுமானவகை.

**பொதுவாக** – சிறப்பித்துக் கூறாமல்; ஒரு சார்பின்றி.

**பொதுவாள்** – காண்க: **பொதுமனிதன்**; கோயில் விசாரணை செய்யும் மலையாளச் சாதியில் ஒரு பிரிவினர்.

**பொதுவிதி** – பொதுவான இலக்கணம்.

**பொதுவியர்** – இடைச்சியர்; உழத்தியர்.

**பொதுவில்** – அம்பலம்.

**பொதுவிலேவிடுதல்** – ஒரு பொருளை எல்லோருக்கும் பயன்படும்படி நியமித்தல்; பொருளைப் பாதுகாவாது விடுதல்.

**பொதுவை** – காண்க: **பொதுமகள்.**

**பொதுளகரம்** – தமிழுக்கும் வடமொழிக்கும் பொதுவான 'ள' என்னும் எழுத்து.

**பொதுளுதல்** – நெருங்குதல்; நிறைதல்; தழைத்தல்.

**பொதை** – புதர்ச்செடி.

**பொந்தர்** – ஒரு நீர்ப்புள்வகை; பொந்து.

**பொந்தி** – உடல்; பருமை; மரவாள்.

**பொந்திகை** – மனநிறைவு, திருத்தி.

**பொந்து** – மரப்பொந்து; எலிவளை; பல்லி.

**பொந்தை** – உடல்; சீலையோட்டை; மயிர்ச்சிக்கு.

**பொம்மல்** – பொலிவு; மிகுதி; பருமன்; கூட்டம்; சோறு; மகிழ்ச்சி; பிரதிமை.

**பொம்மலாட்டம், பொம்மலாட்டு** – பாவைக்கூத்து; பொம்மைகளை வைத்தாட்டும் காட்சி; மாயம்.

**பொம்மலி** – பருத்தவள்.

**பொம்முதல்** – பொலிதல்; மிகுதல்.

**பொம்மெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; விரைவுக் குறிப்பு; அடர்ச்சிக்குறிப்பு.

**பொம்மை** – பாவை; கைப்பிடிச்சுவர்.

**பொய்** – மாயை; போலியானது; உண்மையல்லாதது; நிலையாமை; உட்டுளை; மரப்பொந்து; செயற்கையானது; சிறு சிறாய்.

**பொய்க்க** – பொய்பட; மெதுவாய்.

**பொய்க்கதை** – கட்டுக்கதை; கட்டிவிடப்பட்ட செய்தி.

**பொய்க்கரி** – காண்க: **பொய்ச்சாட்சி.**

**பொய்க்கரிமாக்கள், பொய்க்கரியாளர்** – பொய்ச்சாட்சி கூறுபவர்.

**பொய்க்கால்** – போலிக்கால்; கால்களால் ஏறிச் செலுத்தும் கழி.

**பொய்க்குரல்** – போலிச்சத்தம்.

**பொய்க்குழி** – பார்வைக்கு மூடியதுபோன்றிருந்து கால் வைத்தால் உள்ளே ஆழ்த்துங் குழி; கோலி விளையாட்டில் தனியே விடப்பட்ட குழி; நாற்று நட்ட குழி.

**பொய்க்கூடு** – உடல்.

**பொய்க்கை** – ஒரு மீன்வகை.

**பொய்க்கொண்டை** – நெட்டியாற் செய்யப்பட்ட கொண்டைவகை.

**பொய்க்கோலம்** – உண்மை உருவை மறைக்கும் போலிவேடம்; வஞ்சகம்.

**பொய்கை** – இயற்கையான நீர்நிலை; நீர்நிலை; கோட்டான்; ஒரு நூலாசிரியர்; பொய்கை யாழ்வார்.

**பொய்ச்சத்தியம்** – பொய்யாகச் செய்யும் உறுதி மொழி.

**பொய்ச்சாட்சி** – காண்க: **பொய்ச்சான்று**; பொய்ச் சாட்சிக்காரன்.

**பொய்ச்சான்று** – உண்மைக்கு மாறான சான்று.

**பொய்ச்சான்றேறுதல்** – பொய்ச்சாட்சி சொல்லுதல்.

**பொய்ச்சீத்தை** – பொய்யே பேசுங் கீழ்மகன்.

**பொய்ச்சு** – பழத்தின் குற்றம்.

**பொய்ச்சுற்றம்** – அன்பற்ற உறவு.

**பொய்ச்சுற்றம்பேசுதல்** – மனமார அன்றி உறவு முறை கொள்ளுதல்.

**பொய்ச்சூள்** – பொய்யாணை.

**பொய்த்தல்** – பொய்யாதல்; தவறுதல்; பின் வாங்குதல்; கெடுதல்; பொய்யாய்ப் பேசுதல்; வஞ்சித்தல்.

**பொய்த்தலை** – கன்னமிடுவோர் கன்னத்துளை வழியாய் உட்செலுத்தும் போலித் தலை.

**பொய்த்தூக்கம்** – குறையுறக்கம்; கள்ளத்தூக்கம்.

**பொய்தல்** – பிடுங்கப்படுதல்; துளைக்கப்படுதல்; வீழ்த்துதல்.

**பொய்ந்நீர்** – கானல்நீர்.

**பொய்ந்நெறி** – தீயவழி.

**பொய்ப்பத்திரம்** – கள்ளச்சீட்டு.

**பொய்ப்பாடு** – தவறுகை; பொய்ப்படுகை.

**பொய்ப்பு** – உண்மையற்றது.

**பொய்ப்பூ** – காய் பிடியாது உதிரும் முதற்பூ.

**பொய்படுதல்** – பொய்யாதல்; பயன் விளையாது அழிந்திடுதல்.

**பொய்ம்மணல்** – புதைமணல்.
**பொய்ம்மை** – பொய்; மாயம்; போலி.
**பொய்முயக்கம்** – அன்பிலாக் கூட்டம்.
**பொய்மையாளர்** – பொய்யர்.
**பொய்யடி** – போலியடி; பொய்யால் பிறரை வஞ்சிக்கை; அச்சுறுத்துகை.
**பொய்யடிமை** – போலிப்பத்தி.
**பொய்யடிமையில்லாத புலவர்** – சிவபிரானை வழி படும் சங்கப் புலவர்களான தொகையடியார்.
**பொய்யம்பு** – விளையாட்டம்பு.
**பொய்யவியல்செய்தல்** – புழுக்குதல்.
**பொய்யறை** – பெட்டகத்தின் மறைவறை; பார் வைக்கு மூடியதுபோன்றிருந்து கால் வைத் தால் உள்ளே ஆழ்த்தும் குழி.
**பொய்யன்** – பொய் பேசுவோன்.
**பொய்யாடல்** – வஞ்சகமில்லாத சிறுபிள்ளைகள் விளையாட்டு.
**பொய்யாணை** – காண்க: **பொய்ச்சத்தியம்.**
**பொய்யாமை** – பொய்பேசாமை; நடுவுநிலைமை.
**பொய்யாமொழி** – என்றும் தவறாத சொல்; உண்மையுரை; திருக்குறள்; வேதாகமம்; தஞ்சைவாணன்கோவை ஆசிரியர்.
**பொய்யாறு** – காண்க: **பொய்ந்நெறி.**
**பொய்யிகந்தோர்** – முனிவர்.
**பொய்யிடை** – நுண்ணிய இடை.
**பொய்யில்புலவன்** – மெய்ஞ்ஞானி; திருவள்ளுவர்.
**பொய்யுகம்** – கலியுகம்.
**பொய்யுடல்** – நிலையற்ற உடல்.
**பொய்யுரம்** – பொய்நின்ற ஞானம்.
**பொய்யுறக்கம், பொய்யுறக்கு** – பொய்த்தூக்கம்.
**பொய்யுறங்குதல்** – உறங்குவதுபோல் நடித்தல்.
**பொய்வாழ்வு** – நிலையற்ற வாழ்க்கை; போலி ஒழுக்கமுள்ள வாழ்க்கை.
**பொரி** – நெல் முதலியவற்றின் பொரி; பொரிக்கப் பட்டது; பொரிக்கறி; கரிந்த காடு; எருமைக்கன்று; நன்றாகச் சமைக்காத சோறு.
**பொரிக்கஞ்சி** – பொரிமாவால் செய்த கஞ்சி.
**பொரிக்கறி** – பொரியல்; புளியிடாமற் சமைத்த கறிவகை.
**பொரிகாரம்** – வெண்காரம்; படிக்காரம்.
**பொரிச்சகுழம்பு** – புளியில்லாமல் ஆக்கிய குழம்பு உணவு.
**பொரித்தல்** – பொரியச்செய்தல்; வறுத்தல்; கிழங்கு சுடுதல்; அடைகாத்துக் குஞ்சுண்டாக்கு தல்; போக்குதல்; தீய்த்தல்; புளியில்லாமல் சமைத்தல்; குறைந்த விலைக்கு விற்றல்.
**பொரிதல்** – பொரியாதல்; வறுபடுதல்; தீய்தல்; விரைவாகப் பேசுதல்; அலப்புதல்; உப்பு முதலியன தரையில் படிதல்; பூத்தல்; மெல்ல ஒலித்தல்; வாணப்பொறி மிகுந்து சொரிதல்; பொருக்கு வெடித்தல்.
**பொரிபொரியெனல்** – வசைபொழிதற்குறிப்பு; விரைந்து பேசுதற்குறிப்பு.
**பொரிபோடுதல்** – திருமணத்தில் வேள்வித் தீயில் நெற்பொரியிடுதல்.
**பொரிமலர்** – புன்கமரம்.
**பொரிமா** – வறுத்த அரிசிமாவு.
**பொரியரிசி** – வறுத்த அரிசி.
**பொரியரை** – பிளவுபட்டுக் கரடுமுரடான மரத் தின் அடிப்பகுதி.
**பொரியல்** – பொரிதல்; பொரித்த உணவு.
**பொரியுருண்டை** – நெற்பொரியைப் பாகிட்டுத் திரட்டிய உருண்டை.
**பொரிவிளங்காய்** – பொரியரிசிமா அல்லது சிறு பயற்ற மாவோடு சருக்கரை சேர்த்துச் செய்த பணிகாரம், கெட்டியுருண்டை.
**பொரிவு** – மாணிக்கக் குற்றவகை; மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்று.
**பொரு** – ஒப்பு; உவமை; எதிர்த்தடை.
**பொருக்க** – விரைவாக.
**பொருக்கு** – பருக்கை; காய்ந்த சேற்றேடு; மரப் பட்டை; காண்க: **பொருக்குமண்.**
**பொருக்குமண்** – செதிளாய்ப் பேர்ந்த மண்.
**பொருக்கெனல்** – விரைவுக்குறிப்பு.
**பொருகளம்** – போர்க்களம்.
**பொருகு** – சோறு.
**பொருட்குற்றம்** – பாட்டின் பொருளில் உண்டாம் பிழை.
**பொருட்குன்று** – மேருமலை.
**பொருட்கை** – பாடற்பொருள் பொருந்தக் காட் டும் அபிநயக்கை.
**பொருட்சம்பந்தம்** – பொருளின் இயைபு.
**பொருட்சார்பு** – பொருளிடத்துற்ற அவா.
**பொருட்சிதைவு** – சொத்திழப்பு; சொல் கால வேறுபாட்டாற் கருத்தில் மாறுகை; காண்க: **பொருட்குற்றம்.**
**பொருட்சுவை** – பாட்டின் பொருளால் வரும் இன்பம்.
**பொருட்செல்வி** – திருமகள்.
**பொருட்சேதம்** – சொத்திழப்பு.
**பொருட்டன்மை** – பொருளின்கணுள்ள உருவ இயல்புகளை உள்ளவாறு அலங்கரித்துக் கூறும் அணிவகை.
**பொருட்டால்** – காண்க: **பொருட்டு.**
**பொருட்டிரிபு** – ஒரு சொல்லில் அல்லது சொற் றொடரிலுள்ள பொருள் மாறுபாடு.
**பொருட்டு** – காரணம்; மதிப்பிற்குரியது; நிமித்தமாக.
**பொருட்டொடர்நிலைச்செய்யுள்** – காப்பியம்.

**பொருட்படுத்துதல்** – மதித்தல்.
**பொருட்படுதல்** – பயன்படுதல்.
**பொருட்பிரபஞ்சம்** – பிருதிவி முதல் நாதம் ஈறாக உள்ள தத்துவங்கள்.
**பொருட்பின்வருநிலை** – முன் வந்த பொருளே பின்னும் பல இடங்களில் வரும் அணி.
**பொருட்பெண்டிர்** – காண்க: பொதுமகள்.
**பொருட்பெயர்** – பொருளடியாகப் பிறந்த பெயர்ச் சொல்; ஒரு பொருளுக்குரிய பெயர்.
**பொருண்மன்னன்** – குபேரன்.
**பொருண்முடிவு** – கருத்துமுடிவு; முடிந்த கருத்து; பயனிலை; பொருள் முற்றிய வாக்கியம்.
**பொருண்மை** – பொருளின் தன்மை; கருத்துப் பொருள்.
**பொருண்மொழி** – உபதேசமந்திரம்; மெய்ச் சொல்.
**பொருணயம்** – நூலின் கருத்துநயம்.
**பொருணான்கு** – அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப்பட்ட உறுதிப்பொருள்.
**பொருணி** – கள்.
**பொருணிலை** – பயனிலை; பொருளின் தன்மை.
**பொருணூல்** – அகப்பொருள்பற்றிய நூல்; அர்த்தசாத்திரம்.
**பொருத்தம்** – இணக்கம்; தகுதி; பொருந்துகை; உடன்படிக்கை; மணமக்களின் சாதக இணக்கம்; மனநிறைவு; சரிபார்க்கை.
**பொருத்தம்பார்த்தல்** – மணமக்களின் சாதக இணக்கம் பார்த்தல்.
**பொருத்த(தி)னை** – பொருத்துகை.
**பொருத்து** – இணைப்பு; உடல்மூட்டு; மரக்கணு; ஒன்றுசேர்க்கை; ஒப்பந்தம்; மரத்தின் இணைப்பு; கன்னப்பொட்டு.
**பொருத்துதல்** – பொருந்தச்செய்தல்; உடன் படுத்துதல்; கூட்டுதல்; வேலைக்கமர்த்துதல்; அமையச்செய்தல்; இரு பொருள்களை இசைத்தல்; போர்மூட்டுதல்; விளக்கு முதலியன ஏற்றுதல்.
**பொருதல்** – போர்செய்தல்; சூதாடுதல்; மாறு படுதல்; வீசுதல்; தடவுதல்; ஒப்பாதல்; தாக்குதல்; கடைதல்; முட்டுதல்; பொருந்து தல்; காண்க: தும்பை.
**பொருதுதல்** – ஒன்றுதல்; போர்செய்தல்; இணைத்தல்.
**பொருந்தம்** – காண்க: பொருநை.
**பொருந்தர்** – நெய்வோர்; கூடை முதலியன முடைவோர்.
**பொருந்தல்** – பொருந்துதல்; உடன்படுதல்.
**பொருந்தலன்** – பகைவன்.
**பொருந்தவிடுதல்** – சந்திபண்ணுதல்.
**பொருந்தாமை** – இணக்கமின்மை; வெறுப்பு.
**பொருந்தார்** – பகைவர்.
**பொருந்திவிடுதல்** – முறிந்த எலும்பு முதலியன கூடுதல்; ஒப்பந்தமாதல்.
**பொருந்துதல்** – மனம் இசைவாதல்; தகுதி யாதல்; அமைதல்; உடன்படுதல்; நெருங்கு தல்; நிகழ்தல்; பலித்தல்; இயலுதல்; கலத்தல்; அடைதல்; அளவளாவுதல்; புணர்தல்.
**பொருந்துமாறு** – உத்தி, யுக்தி.
**பொருநல்** – காண்க: பொருநை.
**பொருநன்** – படைவீரன்; திண்ணியன்; அரசன்; குறிஞ்சிநிலத் தலைவன்; படைத்தலைவன்; உவமிக்கப்படுபவன்; தலைவன்; ஏர்க்களத் தேனும் போர்க்களத்தேனும் சென்று பாடும் கூத்தன்; நடிகன்.
**பொருநை** – தாமிரபரணியாறு; ஆன்பொருநை ஆறு.
**பொருநைத்துறைவன்** – சேரன்; பாண்டியன்.
**பொருப்பரையன்** – இமயமலை.
**பொருப்பன்** – குறிஞ்சிநிலத் தலைவன்; குறிஞ்சி நில வேடன்; பொதியமலைக்குரியவனான பாண்டியன்; இமயமலை; மலைக்கு உரியவன்.
**பொருப்பு** – பக்கமலை.
**பொருப்புவில்லான்** – சிவன்.
**பொருப்பெறிந்தான்** – கிரவுஞ்சமலையை வேலால் எறிந்த முருகக்கடவுள்.
**பொருபுவி** – பாலைநிலம்; போர்க்களம்.
**பொருபொருத்தல்** – அறத் தீய்தல்; முணுமுணுத் தல்.
**பொருபொருப்பான்** – ஒரு மரவகை.
**பொருபொரெனல்** – தீய்தற்குறிப்பு; முணுமுணுத் தற்குறிப்பு.
**பொருமல்** – அச்சம்; துன்பம்; அழாது விம்முதல்; பூரிப்பு; பொறாமை; வயிறூதும் நோய்வகை.
**பொருமலி** – தடித்தவள்.
**பொருமிநாதம்** – இரசகருப்பூரம்.
**பொருமுகவெழினி** – அரங்கின் இரண்டு வலத் தூணிடத்தும் பொருந்திய உருவுதிரை.
**பொருமுதல்** – துன்புறுதல்; விம்மியழுதல்; உப்பு தல்; பூரித்தல்; பொறாமைப்படுதல்; ஈரித்துப் பருத்தல்.
**பொருவ** – ஓர் உவமவுருபு.
**பொருவிலி** – ஒப்பிலி; சிவபிரான்.
**பொருவு** – ஒப்பு.
**பொருவுசாரம்** – பொறாமை.
**பொருவுதல்** – ஒத்தல்; நேர்தல்.
**பொருள்** – சொற்பொருள்; செய்தி; உண்மைக் கருத்து; செய்கை; தத்துவம்; மெய்ம்மை; நன்கு மதிக்கப்படுவது; அறிவு; கொள்கை; அறம்; பயன்; வீடுபேறு; கடவுள்; பலபண்டம்; பொன்; மகன்; தந்திரம்; முலை; உவமேயம்; அருத்தாபத்தி; அகமும் புறமுமாகிய திணைப் பொருள்கள்; அர்த்தசாத்திரம்; தலைமை.

**பொருள்கோள்** – எண்வகையாகச் செய்யுளுக்குப் பொருள்கொள்ளும் முறை; ஒரு திருமண வகை.

**பொருள்செய்தல்** – உரையிடுதல்; செல்வந் தேடுதல்.

**பொருள்செய்வோர்** – வணிகர்.

**பொருள்வயிற்பிரிவு** – பொருள் தேடுதலின் பொருட்டுத் தலைவன் தலைவியைவிட்டுப் பிரிதல்.

**பொருள்விலையாட்டி** – விலைமாது.

**பொருளட்டவணை** – நூல் முதலியவற்றின் செய்திக்குறிப்பு.

**பொருளறை** – கருவூல அறை.

**பொருளன்** – பரம்பொருள்.

**பொருளாகுபெயர்** – முதற்பொருளின் பெயர் அதன் சினைக்காகும் ஆகுபெயர்.

**பொருளாசை** – பொருள்மேல் உள்ள அவா.

**பொருளாள்** – மனைவி.

**பொருளானந்தம்** – ஆனந்தக்குற்றம்.

**பொருளிலக்கணம்** – அகம், புறம் என்பவற்றை விளக்கும் இலக்கணநூல்.

**பொருளின்பம்** – காண்க: **பொருட்சுவை.**

**பொருளுரை** – மெய்யுரை; காரிய வார்த்தை; புகழுரை; மந்திரம்.

**பொருளுரையாளர்** – சான்றோர்.

**பொருளுவமை** – பொருளின் தன்மையை உவமித்துக் கூறும் அணிவகை.

**பொருனை** – காண்க: **பொருநை.**

**பொரேரெனல்** – விரைவுக்குறிப்பு.

**பொல்** – பதர்.

**பொல்லது** – தீயது.

**பொல்லம்** – தைக்கை; இணைக்கை; சேர்த்துத் தைக்க உதவும் சிறு துண்டு.

**பொல்லம்பொத்துதல்** – கிழிந்த துணியின் இரண்டு தலைப்பையுங் கூட்டித் தைத்தல்.

**பொல்லர்** – சக்கிலியர்; தையற்காரர்.

**பொல்லாக்காட்சி** – மயக்கவறிவு.

**பொல்லாக்காலம்** – கெட்டகாலம்.

**பொல்லாங்கு** – தீது; குற்றம்; கேடு; ஈனம்; மறதி.

**பொல்லாச்சாம்பற்றரை** – கட்டடத்திற்குத் தகுதியில்லாத தரைவகை.

**பொல்லாத** – தீமையான; கடுமையான.

**பொல்லாதவன்** – தீயவன்; கடுமையானவன்.

**பொல்லாது** – தீயது; உடல் முதலியன கேடுற்ற நிலை.

**பொல்லாநிலம்** – சேற்றுநிலம்; முதுகாடு.

**பொல்லாப்பு** – இணக்கமின்மை; தீது; குற்றம்; துன்பம்; மறுப்பு.

**பொல்லாமணி** – காண்க: **பொள்ளாமணி.**

**பொல்லாமை** – குற்றம்; தீது.

**பொல்லாவாறு** – தீச்செயல்.

**பொல்லான்** – தீயவன்; அறிவிலி; குதிரைவகை.

**பொல்லு** – பதர்; தடி; ஊன்றுகோல்.

**பொல்லுதல்** – காண்க: **பொள்ளுதல்.**

**பொலங்கலம்** – பொன்னகை.

**பொலங்கா** – இந்திரனுடைய சோலை.

**பொலம்** – அழகு; பொன்; அணிகலன்; பொன்னிறம்; பொல்லாங்கு.

**பொலம்புள்** – காண்க: **பொன்வாய்ப்புள்.**

**பொலன்** – அழகு.

**பொலி** – தூற்றா நெற்குவியல்; தூற்றிய நெல்; விளைவின் அளவு; தானியமாகக் கொடுக்கும் வட்டி; களத்தில் நெல் அளக்கும்போது முதல் மரக்காலுக்கு மங்கலமாக வழங்கும் பெயர்; புணர்ச்சி.

**பொலிக்கொடி** – வைக்கோல்.

**பொலிகடா** – காண்க: **பொலியெருது;** பொலியாடு; தன் மனம்போனபடி திரியும் தடியன்.

**பொலிகாளை** – பசுக்களைச் சினையாக்குதற் பொருட்டு வளர்க்கப்படும் காளை.

**பொலிகூறுதல்** – அறுவடை முடிவில் களத்தே மகிழ்ச்சிக்குறியாகவும் பண்ணையாருக்கு வாழ்த்தாகவும் பாடிப் 'பொலியோ பொலி' என்று கூவுதல்.

**பொலிகை** – காண்க: **பொலிசை.**

**பொலிச்சல்** – புணர்ச்சி.

**பொலிசை** – வட்டி; இலாபம்.

**பொலிசையூட்டு** – வட்டிபெறுகை.

**பொலிதல்** – செழித்தல்; பெருகுதல்; மிகுதல்; விலங்குதல்; சிறத்தல்; மங்கலமாதல்; நீடு வாழ்தல்; நிகழ்தல்; புணர்தல்.

**பொலிதூற்றுதல்** – களத்தில் நெல்லைப் பதர் போகக் காற்றில் தூற்றுதல்.

**பொலிப்பாட்டு** – அறுவடை முடிவில் களத்தே தலைவனை வாழ்த்தி உழவர் பாடும் பாட்டு; கடுமையான நிந்தனை.

**பொலிப்பாடு** – பொலியாடு.

**பொலிப்பாய்** – மெதுவாய்.

**பொலிப்புக்கடா** – காண்க: **பொலிகாளை.**

**பொலிபாடுதல்** – களத்தில் சூடடிக்கும்போது உழவர் பாட்டுப் பாடுகை; பொலிப்பாட்டுப் பாடுகை.

**பொலியெருது** – காண்க: **பொலிகாளை;** களத்துப் பிணையல் மாடுகளுள் முதலிற் செல்லுங் கடா.

**பொலிவீசுதல்** – காண்க: **பொலிதூற்றுதல்.**

**பொலிவீடு** – கோயிற்செலவுகளுக்கு விடப்படும் ஊர்.

**பொலிவு** – அழகு; முகமலர்ச்சி; தோற்றப் பொலிவு; செழிப்பு; பருமை; மிகுதி; எழுச்சி; பொன்; வெறுந்தோற்றம்; புணர்ச்சி.

**பொலிவுமங்கலம்** – மன்னவன் மகிழப் பிறந்த மகனைப் பலரும் கொண்டாடுதலைக் கூறும் புறத்துறை.

**பொலிவேடு** – காண்க: **பொலிவீடு.**

**பொலுகுதல்** – அதிகப்படுதல்; நீர் ஒழுகுதல்.

**பொலுபொலெனல்** – உதிர்தற்குறிப்பு; நொறுங்கு தற்குறிப்பு.

**பொழி** – வயல்வரம்பு; கணு; உரிக்கப்பட்டது; கடலுக்கும் கழிநீர்நிலைக்கும் இடையிலுள்ள சிறுகரை; எல்லை.

**பொழிதல்** – மழைபெய்தல்; மிகச்செலுத்துதல்; வரையின்றிக் கொடுத்தல்; தட்டுத்தடங்க லின்றிப் பேசுதல்; நிறைந்தொழுகுதல்; நிறைதல்; தங்குதல்.

**பொழிப்பு** – காண்க: **பொழிப்புரை; பொழிப்புத் தொடை;** நூற்பதிகம்; குறிப்பு; அனுமானம்.

**பொழிப்புத்திரட்டுதல்** – பொதுவான திரண்ட கருத்துப் பொருளைக் கூறுதல்.

**பொழிப்புத்தொடை** – அளவடியுள் முதற்சீர்க் கண்ணும் மூன்றாஞ் சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது.

**பொழிப்புரை** – பொருளைத் தொகுத்துரைக்கும் உரை.

**பொழில்** – சோலை; பூந்தோட்டம்; பெருமை; உலகம்; நாடு; நாட்டின் பகுதி.

**பொழிவு** – பொழிகை; ஆதாயம்; நிறைவு; விருத்தி.

**பொழுதறுதி** – சூரியன் மறையும் வேளை; முழு நாளும்.

**பொழுதிருக்க** – சூரியன் மறைவதற்குமுன்.

**பொழுதிற்கூடல்** – காண்க: **பொழுதொடு புணர்தல்.**

**பொழுதிறங்குதல்** – சூரியன் மறைதல்.

**பொழுது** – காலம்; தக்க சமயம்; வாழ்நாள்; கணம்; சிறுபொழுது பெரும்பொழுதுகள்; சூரியன்.

**பொழுதுசாய்தல், பொழுதுபடுதல்** – காண்க: **பொழுதிறங்குதல்.**

**பொழுதுபோக்கு** – பராக்கு; காலங்கழிக்கை; இளைப்பாறும்பொருட்டு விளையாடுகை.

**பொழுதுபோக்குதல்** – காலங்கழித்தல்; சோம்பிக் கழித்தல்.

**பொழுதுபோதல்** – சூரியன் மறைதல்; காலங் கழிக்கை.

**பொழுதுவணங்கி** – சூரியகாந்திப்பூ.

**பொழுதுவிடிதல்** – சூரியன் தோன்றும் காலம்; காலம்.

**பொழுதொடுபுணர்தல்** – வணிகர் எண்குணத் தொன்றான வினைகளைக் காலத்துக்கேற்பக் கொண்டு நடத்துகை.

**பொழுதோடு** – காண்க: **பொழுதிருக்க;** தகுதியான காலத்தில்.

**பொள்** – துளை; விரைவுக்குறிப்பு.

**பொள்ளல்** – துளைத்தல்; பொளிதல்; துளை; மரப்பொந்து; அம்மைவடு; அப்பவர்க்கம்; கொப்புளம்; குற்றம்.

**பொள்ளாமணி** – துளையிடாத மணி; குற்றமற்ற மணி; மாசற்ற பரம்பொருள்.

**பொள்ளுதல்** – துளைத்தல்; கிழிதல்; பொளி தல்; கொப்புளம் உண்டாதல்.

**பொள்ளை** – தொளை.

**பொள்ளெனல்** – விரைவுக்குறிப்பு.

**பொளி** – உளியாலிட்ட துளை; மண்வெட்டியின் வெட்டு; பாய்முடைதற்கு வகிர்ந்து வைக்கும் ஓலை; காண்க: **பொளிமண்.**

**பொளித்தல்** – துளைசெய்தல்; கிழித்தல்.

**பொளிதல்** – உளியாற் கொத்துதல்; பிளத்தல்; இழத்தல்; துளைசெய்தல்; ஓட்டையாதல்; பள்ளமாதல்.

**பொளிமண்** – மண்வெட்டியாற் புல்லோடு சேர்த் தெடுத்த வரப்பு மண்.

**பொற்கசை** – காண்க: **பொற்கம்பி.**

**பொற்கட்டி** – தங்கக்கட்டி.

**பொற்கணக்கு** – பொன்னிறையளவு.

**பொற்கம்பி** – தங்கக்கம்பி.

**பொற்கலசம்** – கோபுரம் முதலியவற்றின்மேல் வைக்கும் பொன்னாலாகிய கும்பம்; பொற் பாண்டம்.

**பொற்கலம்(ன்)** – பொற்பாண்டம்; பொன்னா லியன்ற அணிகலன்.

**பொற்கலனிருக்கை** – காண்க: **பொற்பண்டாரம்.**

**பொற்காசு** – பொன்நாணயம்.

**பொற்காரை** – பொன்னாலான கழுத்தணிவகை.

**பொற்கிழி** – சீலையின் முடிந்த நிதிப்பொதி.

**பொற்கூடம்** – இமயமலைக்கு வடக்கேயுள்ள ஏம கூட மலை.

**பொற்கெனல்** – பொன்னிறமுடையதாதற் குறிப்பு.

**பொற்கொல்லன்** – தட்டான்.

**பொற்கோள்** – வியாழன்.

**பொற்சபை** – சிதம்பரத்தில் உள்ள பொன்னம் பலம்.

**பொற்சரிகை** – ஆடைக்கரை முதலியவற்றிற் சேர்க்கப்படும் பொன்னால் அமைத்த இமை.

**பொற்சிலை** – பொன்னாலான பொம்மை; மகாமேரு.

**பொற்சின்னம்** – போருக்குச் செல்லும் வீரர் வாயிலிட்டுக்கொள்ளும் பொன்துண்டு.

**பொற்சீந்தில்** – சீந்தில்வகை.

**பொற்சுண்ணம்** – விழாக்களில் மக்கள் உடலின் மீது தூவப்படும் நறுமணச் சுண்ணம்; அலங்காரமாக உடலில் அப்பிக்கொள்ளுதற் குரிய பொற்றூள்.

**பொற்சுண்ணமிடித்தல்** – மணப்பண்டங் கலந்து மஞ்சள் இடிக்கை.

**பொற்சூட்டு** – நெற்றிப்பட்டம்.

**பொற்ப** – பொலிவுபெற; ஓர் உவமவுருபு.

**பொற்படி** – பொன்னுலகம்.

**பொற்படை** – குதிரை, யானை முதலியவற்றின் மேலீடு.

**பொற்பண்டாரம்** – பொன்னும் பொற்கலங்களும் வைக்கும் நிதி அறை.

**பொற்பணிதி** – பொன்னணி.

**பொற்பாதம்** – திருவடி.

**பொற்பாவை** – காண்க: **பொற்சிலை**; அழகிய பெண்.

**பொற்பாளம்** – பெரிய பொற்கட்டி.

**பொற்பித்தல்** – அலங்கரித்தல்.

**பொற்பிதிர்** – பசலை.

**பொற்பு** – அழகு; பொலிவு; மிகுதி; தன்மை; ஒப்பனை.

**பொற்புவி** – பொன்னுலகம்.

**பொற்புறுத்துதல்** – அழகுபடுத்தல்.

**பொற்பூ** – பொன்மலர்; அரசர் பாணர்க்கு அளிக்கும் தாமரை வடிவான பொன்னணிகல வகை.

**பொற்பூச்சு** – பொன்முலாம் பூசுகை; பொன்னின் ரேக்கு.

**பொற்பொது** – காண்க: **பொற்சபை**.

**பொற்ற** – பொன்னாலாகிய; சிறந்த.

**பொற்றகடு** – பொன்னின் தகடு; காண்க: **பொற்சின்னம்**.

**பொற்றாப்பு** – மயிலாப்பூர் சிவன்கோயில் திருவிழாக்களுள் ஒன்று; பொன்வடத்தால் அமைந்த ஊசல் திருவிழா.

**பொற்றாமரை** – பொன்மயமான தாமரை; மதுரைக் கோயிலில் உள்ள நீர்நிலை; காண்க: **பொற்பூ**.

**பொற்றாலம்** – பொன்னுலகம்; பொன்னாலான தட்டு.

**பொற்றாலி** – பொன்னால் செய்யப்பெற்ற தாலி; மனைவி.

**பொற்றேரை** – காண்க: **பொற்றோரை**.

**பொற்றை** – சிறுமலை; கற்பாறை; சிறுதூறு; காடு.

**பொற்றொடி** – பொன்னாலாகிய தோள்வளை; பொன் தோள்வளை அணிந்த பெண்.

**பொற்றோரை** – இடையில் அணியும் பொன்வடம்.

**பொறாமை** – பிறர் செல்வ முதலியவற்றைக் கண்டு மனங்கொளாமை; பொறுமையின்மை.

**பொறி** – வரி, கோடு; புள்ளி; தழும்பு; அடையாளம்; எழுத்து; இலாஞ்சனை; விருது; உயர்ந்த உடல் இலக்கணம்; வண்டு; பீலி; தேமல்; பதுமை; விதி; கன்னப்பொருத்து; மூட்டுவாய்; மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறி; ஆண்குறி; மனம்; அறிவு; அனற்றுகள்; ஒளி; எந்திரம்; மதிலுறுப்பு; மரக்கலம்; விரகு; நெற்றிப்பட்டம்; திருமகள்; செல்வம்; பொலிவு; முன்வினைப் பயன்; திரட்சி; ஊழ்.

**பொறிகலங்குதல்** – அறிவு மயங்குதல்.

**பொறிசிதறுதல்** – தீப்பொறி பறத்தல்; காண்க: **பொறிகலங்குதல்**.

**பொறிசிந்துதல்** – தீப்பொறி கக்குதல்; மினுமினுத்தல்.

**பொறித்தல்** – இலாஞ்சனையிடுதல்; எழுதுதல்; ஓவியம் வரைதல்; தெறித்தல்; பறிதல்; கலைத்தல்; தீச்சுடர் சிதறுதல்; அழுந்துதல்.

**பொறிதல்** – பறிதல்; தீச்சுடர் சிதறுதல்; சறுக்குதல்; சரிதல்; விழப்புகுதல்; கலைதல்.

**பொறிதொலைத்தல்** – ஒரு செயலை மனமின்றித் தீராக் கடமையாக முடித்தல்.

**பொறிப்பு** – பறிகை; எழுதுகை.

**பொறிபறத்தல்** – தீப்பொறி சிதறுகை; தீப் பறக்கப் பார்க்கை.

**பொறிமுதல்** – இந்திரியங்களின் தலைவனாகிய ஆன்மா.

**பொறியற்றார்** – கீழோர்.

**பொறியறை** – அறிவற்றவர்; திருவிலி.

**பொறியிலார்** – கீழ்மக்கள்.

**பொறியிலி** – அறிவிலி; உறுப்புக்குறையுடையவர்; நற்பேறற்றவர்.

**பொறியொற்றோலை** – முத்திரையிட்ட ஓலைக் கடிதம்.

**பொறிவாயில்** – புலன்.

**பொறிவாயிற்காட்சி** – புலன்களால் அறியும் அறிவு.

**பொறிவு** – பறிகை; சறுக்கல்.

**பொறிவைத்தல்** – வலைவீசுதல்.

**பொறுக்குதல்** – ஆய்ந்தெடுத்தல்; அங்குமிங்கும் சிதறிய பொருளைத் தெரிந்தெடுத்தல்.

**பொறுத்தல்** – தாங்குதல்; சகித்தல்; சுமத்தல்; அணிதல்; இளக்காரம் கொடுத்தல்; மன்னித்தல்; உத்தரவாதமாதல்; தாமதித்தல்; உவமையாகப் பெறுதல்; சாந்தமாயிருத்தல்.

**பொறுதி** – பொறுமை; மன்னிப்பு; ஒய்வு; தாமதம்; இளக்காரம்.

**பொறுப்பற்றவன்** – அவசரக்காரன்; உதவியற்றவன்; பொறுப்பில்லாதவன்.

**பொறுப்பாளி** – காண்க: **பொறுப்புக்காரன்.**

**பொறுப்பித்தல்** – பொறுப்புக்கட்டுதல்; முட்டுக் கொடுத்தல்; பொறுக்குமாறு செய்தல்; ஓம்புதல்; நடத்தல்.

**பொறுப்பு** – பதவி; கடமை; பாரம்; முட்டு; உத்தரவாதம்; முக்கியம்; தகுதி; பொறுமை; வரி.

**பொறுப்புக்கட்டுதல்** – ஒப்படைத்தல்; உத்தரவாதமேற்றுதல்; ஈடுகாட்டுதல்; முற்றுவித்தல்.

**பொறுப்புக்காரன்** – உத்தரவாதி.

**பொறுமை** – அடக்கம்; பொறுத்தல், சகித்தல்.

**பொறுமைக்காரன்,** **பொறுமைசாலி** – சாந்தமுள்ளவன், அமைதியானவன்.

**பொறை** – பாரம், சுமை; கனம்; மலை; சிறு குன்று; கல்; பூமி; பொறுமை; அடக்கம்; கருப்பம்; வலிமை.

**பொறைநிலை** – மனத்தை ஒருவழி நிறுத்துவதான எண்வகை யோகத்துள் ஒன்று.

**பொறைமை** – காண்க: **பொறுமை.**

**பொறையன்** – சுமப்பவன்; சேரன்; தருமராசன்.

**பொறையாட்டி** – பொறுமையுடையவள்; பலி கொடுக்கும் பூசாரிப்பெண்.

**பொறையாளன்** – அடக்கமுடையான்; தருமபுத்திரன்.

**பொறையிலான்** – பொறுமையில்லாதவன்; வேடன்.

**பொறையுயிர்த்தல்** – இளைப்பாறும்படி சுமை யிறக்குதல்; மகப்பெறுதல், ஈனுதல்.

**பொன்** – சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் என்னும் நான்கு வகைப்பட்ட தங்கம்; உலோகம்; இரும்பு; செல்வம்; அணிகலன்; திருமங்கலியம்; பொன்நாணயம்; மேருமலை; பொலிவு; பசலை; ஒளி; அழகு; ஏற்றம்; திருமகள்; வியாழன்; சூரியன்; பெண்குறி.

**பொன்காத்தபூதம்** – புதையல் காத்த பூதம்; பயன்படுத்தாது பொருளைப் பூட்டிவைத்துக் காப்பவன்.

**பொன்செய்கொல்லன்** – காண்க: **பொற்கொல்லன்.**

**பொன்செய்தல்** – நற்செயல் செய்தல்.

**பொன்செய்புலவன்** – தட்டான்; பொன்னரிப்போன்.

**பொன்ஞெகிழி** – பரல்பெய்த பொற்சிலம்பு.

**பொன்படுதல்** – தோற்றப் பொலிவுறுதல்.

**பொன்பாவை** – திருமகள்.

**பொன்புனைதல்** – திருமங்கலியம் பூட்டி மணத்தல்.

**பொன்பூணுதல்** – நகையணிதல்.

**பொன்மணல்** – பொற்றுகள்கொண்ட மணல்.

**பொன்மணி** – பொன்னாலாகிய உருண்டைமணி; பொன்மணியாலான அணிகலவகை.

**பொன்மயம்** – பொன்னிறமான பளபளப்பு.

**பொன்மரம்** – துறக்கத்துள்ள பொன்மயமான மரம்.

**பொன்மலை** – காண்க: **பொன்வரை;** முப்புரங்களுள் ஒன்று; ஓர் ஊர்.

**பொன்மலைவல்லி** – பார்வதிதேவி.

**பொன்மழை** – புட்கலாவர்த்தம் என்னும் முகில் பொழியும் சொன்னமழை.

**பொன்மனம்** – உயர்ந்த உள்ளம்.

**பொன்மாலை** – கழுத்தணிவகை.

**பொன்மாளிகை** – அரசன் தங்கும் ஆடகமாடம்.

**பொன்முலாம்** – பொன்பூச்சு.

**பொன்மெழுகு** – பொன்னுரை எடுக்கும் மெழுகு.

**பொன்மை** – பொன்னிறம்.

**பொன்வண்டு** – பொன்னிறமுள்ள வண்டுவகை.

**பொன்வரி** – பழைய வரிவகை.

**பொன்வரை** – மாமேருமலை; அத்தகிரி; இமயமலை.

**பொன்வாணிகர்** – தங்கம் விற்பவர்.

**பொன்வாய்ப்புள்** – சிச்சிலிக்குருவி.

**பொன்வித்து** – நாகமணல்.

**பொன்வில்லி** – மேருவை வில்லாகக்கொண்ட சிவபிரான்.

**பொன்விலை** – ஏற்றமான விலை.

**பொன்விலைப்பாவையர்,** **பொன்விலைமகளிர்** – காண்க: **பொதுமகள்.**

**பொன்விழா** – ஐம்பதாம் ஆண்டுக் கொண்டாட்டம்.

**பொன்வினைசெய்வோர்,** **பொன்வினைமாக்கள்** – காண்க: **பொற்கொல்லன்.**

**பொன்றக்கெடுதல்** – முற்றவும் அழிதல்.

**பொன்றாவல்லி** – சீந்திற்கொடி.

**பொன்றுதல்** – அழிதல்; இறத்தல்; தவறுதல்; பார்வை முதலியன குறைதல்.

**பொன்றொடுதல்** – பொன்னைத் தொட்டுச் சூளுறுதல்.

**பொன்னகர்** – பொன்மயமான அமராவதி; சிவலோகம்.

**பொன்னகர்க்கிறைவன்,** **பொன்னகர்ச்செல்வன்** – இந்திரன்.

**பொன்னகரம்** – காண்க: **பொன்னகர்.**

**பொன்னஞ்சிலம்பு** – காண்க: **பொன்வரை.**
**பொன்னடர்** – தகட்டுப்பொன்.
**பொன்னணி** – தங்கநகை.
**பொன்னணிதல்** – காண்க: **பொன்புனைதல்.**
**பொன்னத்துப்பெட்டி** – தாலி, கூறை வைத்துக் கொண்டுபோகும் பெட்டி.
**பொன்னப்பிரகம்** – ஓர் அப்பிரகவகை.
**பொன்னம்பர்** – ஒரு மணப்பண்டவகை.
**பொன்னம்பலம்** – பொன்னால் அமைந்த கூடம்; சிதம்பரத்திலுள்ள பொற்சபை.
**பொன்னரி** – கிண்கிணி முதலியவற்றினுள் இடும் பொற்பரல்.
**பொன்னரித்தல்** – வேறு பொருள்களினின்றும் தங்கத்தைப் பிரித்தல்.
**பொன்னரிமாலை** – ஒரு கழுத்தணிவகை.
**பொன்னலரி** – காண்க: ஈழத்தலரி; அலரிவகை.
**பொன்னவன்** – பொன்போல் அருமையானவன்; வியாழன்; இரணியகசிபு.
**பொன்னறை** – பொற்பேழை; அரசன் தங்கும் பொன்மண்டபம்; நிதி அறை.
**பொன்னன்** – பொன்னுடையவன்; காண்க: **பொன்னவன்**; அருகக்கடவுள்.
**பொன்னாகத்தான்** – இரணியகசிபு.
**பொன்னாங்கண்ணி, பொன்னாங்காணி** – ஒரு பூடுவகை.
**பொன்னாங்கொட்டை** – பூவந்திக்கொட்டை.
**பொன்னாசி** – குருதிவடியும் மூக்கு; ஆண்குறி.
**பொன்னாசை** – பொருளில் வைக்கும் பற்று.
**பொன்னாட்சி** – வியாழக்கிழமை.
**பொன்னாடை** – பட்டுக்கரையுள்ள ஆடை.
**பொன்னாம்பழம்** – காண்க: **நெய்க்கொட்டான்**, ஒரு மரவகை.
**பொன்னாவிரை** – ஒரு செடிவகை.
**பொன்னி** – காவேரி ஆறு; எட்டாம் பாட்டன்; குருதிவடியும் மூக்கு.
**பொன்னித்துறைவன், பொன்னிநாடன்** – சோழன்.
**பொன்னிநாடு** – சோழநாடு.
**பொன்னிமிளை** – தாதுப்பொருள்வகை.
**பொன்னிலக்கம்** – எண் வாய்பாடு; பொன்னிறை வாய்பாடு.
**பொன்னிலம்** – தேவருலகம்.
**பொன்னிற்பொதிதல்** – பொன்போலப் பேணிக் கொள்ளுதல்.
**பொன்னுக்குவீங்கி** – கூகைக்கட்டு, கன்னம் வீங்கும் நோய்.
**பொன்னுடம்பு** – தேவ உடல்; பெண்குறி.
**பொன்னுரை** – உரைத்த பொன்னின் தேய்மானம்; ஒரு நெல்வகை.
**பொன்னுலகம்** – தேவருலகம்; காண்க: **பொன்னெயில் வட்டம்.**
**பொன்னுலகாளி** – இந்திரன்.
**பொன்னுலகு** – காண்க: **பொன்னுலகம்.**
**பொன்னூசல்** – பொன்னாலாகிய ஊஞ்சல்.
**பொன்னூல்** – பொற்கம்பி; கழுத்தணிவகை; பொற்பூணூல்.
**பொன்னெயில்வட்டம்** – தேவர்களால் நிறுவப்பட்ட சினாலயம்.
**பொன்னெயிற்கோன்** – அருகக்கடவுள்.
**பொன்னெழுத்து** – ஒரு துகில்வகை; அழகான எழுத்து; சிறந்த எழுத்து.
**பொன்னேர், பொன்னேர்க்கட்டு, பொன்னேர்ப்பூட்டு** – சித்திரைப் பட்டத்தில் நல்ல நாளில் முதல் முறையாக உழுதல்.
**பொன்னோர்** – தேவர்கள்.
**பொன்னோலை** – மகளிர் காதணிவகை.

# போ

**போ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+ஓ); ஓர் அசைச்சொல்; தெரிநிலை வினைப்பகுதி.
**போக்கடி** – இழக்கை; மாற்று; பொருளாதரவு; தன்விருப்பு; புகல்; வாய்ப்பு.
**போக்கடித்தல்** – இழத்தல்; வீணாக்குதல்; விலக்குதல்; போகச்செய்தல்.
**போக்கடியறுதல்** – கதியில்லையாதல்; செயலறுதல்.
**போக்கணம்** – இலச்சை; கட்டுச்சோறு; புகல்.
**போக்கம்** – பொலிவு.
**போக்கறுதல்** – குற்றம் நீங்குதல்; கதியறுதல்.
**போக்கறுவான்** – போக்கிடமில்லாதவன்.
**போக்கன்** – வழிச்செல்வோன்; பரதேசி; பயனற்றவன்; கொடியன்.
**போக்காடு** – பாவம் போக்கலுக்காகக் காட்டுக்குப் போகவிடப்படும் ஆட்டுக்கடா; சாவு.
**போக்காளி** – இளமையில் இறந்தவர்; உதவாதவன்.
**போக்கி** – பின்பு; தவிர; பரதேசி.
**போக்கிடம்** – ஒதுக்கிடம்; புகலிடம்.
**போக்கியதார்** – அனுபவ ஒற்றிக்காரன்.
**போக்கியப்பொருள்** – நுகர்ச்சிக்குரிய பண்டம்.
**போக்கியம்** – இன்பநுகர்வுக்குரியது; கருமானுபவம்; செல்வம்; ஒற்றியுரிமையின் வருவாய்; ஒற்றியுரிமை; கன்மமலத்துள் ஒன்று; செலவு செய்யும் பொருள்.
**போக்கியல்** – கலிப்பா உறுப்புகளுள் ஒன்றாகிய சுரிதகம்.

**போக்கிரி** – கொடியவன்.
**போக்கிலி** – கதியற்றவன்; கொடியவன்.
**போக்கு** – போகச்செய்கை; வழி; சுரங்கவழி; நடை; மீட்சி; புகல்; இடம்; நிலத்தின் தரம்; மனச்சாய்வு; விருப்பம்; சாக்கு; பழக்கம்; நடைமுறை; ரீதி; காண்க: **போக்கியல்**; நீர் முதலியவற்றின் ஓட்டம்; மலம் முதலியன வெளிப்படுகை; கேடு; செலவு; இறப்பு; குற்றம்; கழிப்புக்கழிக்கை; மரக்கன்று; செல்லுகை.
**போக்குக்காட்டுதல்** – வழிகாட்டுதல்; சாக்குச் சொல்லுதல்; குறிப்புக்காட்டுதல்.
**போக்குச்சொல்லுதல்** – சாக்குக் காட்டுதல்.
**போக்குதல்** – போகச்செய்தல்; செய்தல்; செய்து முடித்தல்; கொடுத்தல்; உணர்த்தல்; உட்புகுத்துதல்; மெலிவுறச்செய்தல்; இல்லாமற் செய்தல்; கழித்தல்; அழித்தல்.
**போக்குநீக்கு** – பழக்கம்; போக்குவரத்து; பாட்டை; புகலிடம்; விரகு.
**போக்குவரத்து** – போதலும் வருதலும்; ஊடாடுகை; விருந்தினர்; வரவுசெலவு.
**போக்குவரவு** – காண்க: **போக்குவரத்து**; இறத்தலும் பிறத்தலும்; ஒரு துறை; பட்டா மாறுகை.
**போக்குவீடு** – செல்லவிடுகை; சொற்செயல்களால் உணர்ச்சிக்கு வழிவிடுகை.
**போக** – தவிர; பகுதிப்பொருளில்வரும் ஒரு துணைச்சொல்.
**போகக்கலப்பை** – இன்பநுகர்ச்சிக்குரிய பலவகைப் பண்டம்.
**போகக்கலவை** – உயர்ந்த கலவைச் சாந்து.
**போககாரகன்** – சாதகனின் இன்பங்களைக் குறிக்கும் சுக்கிரன்.
**போகசிவன்** – சதாசிவன்.
**போகடுதல்** – போகவிடுதல்; கழித்தல்; விலகுதல்.
**போகண்டன்** – ஐந்தாண்டு தொடங்கிப் பதினைந் தாண்டிற் குட்பட்டவன்.
**போகணி** – ஒரு பாண்டம்.
**போகத்தானம்** – உடல்; காண்க: **ஆனந்தமய கோசம்**; இன்பங்களைக் குறிக்கும் ஏழாமிடம்.
**போகநீர்** – சுக்கிலம்.
**போகப்போக** – காலம் செல்லச்செல்ல.
**போகபதி** – தலைவன், அதிபதி.
**போகபுவனம்** – வினைப்பயனை நுகரும் நல்லுலகம்.
**போகபூமி** – விளைநிலம்; அறுவகைப்பட்ட போகநுகர்ச்சித் தானம்; துறக்கம்; முப்பத் தாறு தத்துவங்கள்.
**போகபோக்கியம்** – நுகர்ச்சிப்பொருள்; செல்வம் நுகர்கை.

**போகம்** – இன்பம்; நுகர்வு; எண்வகைப் போகம்; புணர்ச்சி; புசிக்கை; செல்வம்; விளைவு; கூலி; பாம்பினுடல்; பாம்பின்படம்; பாம்பு; நால்வகைப் படையை ஒன்றுக்குப்பின் ஒன்றாக நிறுத்தும் அணிவகுப்புவகை; நிலவனுபவம்; கடவுளின் அவத்தை மூன்றனுள் ஞானமும் கிரியையும் சமமாகவுள்ள நிலை; பின்னத்தின் மேலெண்.
**போகம்பண்ணுதல்** – சேர்தல்.
**போகமகள்** – இன்பநுகர்ச்சிக்குரிய பெண்; மனைவி; வைப்பாட்டி; கணிகை.
**போகமீன்றபுண்ணியன்** – சிவபெருமான்.
**போகர்** – உலக இன்பங்களை நுகர்பவர்; ஒரு சித்தர்.
**போகல்** – உயர்ச்சி; நீளம்.
**போகவழி** – நாகலோகத்தின் தலைநகரம்; நல்லனுபவமுடைய பெண்.
**போகவாஞ்சை**, **போகவிச்சை** } – புணர்ச்சிவிருப்பு.
**போகவிடயம்** – புணர்ச்சியின்பம்.
**போகவிடுதல்** – நழுவவிடுதல்.
**போகாந்தராயம்** – துய்த்தற்குரிய இன்பங்களை விலக்குகை.
**போகாப்புல்** – செங்கழுநீர்போன்ற களையை முடியாத களைவகை.
**போகாறு** – பொருள் செலவாகும் வழி.
**போகி** – சதாசிவன்; இந்திரன்; சுக்கிரன்; பாம்பு; நல்லனுபவமுடையான்; இன்பந்துய்ப்போன்; தலைமைக்காரன்; காண்க: **போகிப்பண்டிகை**; சிவிகை சுமப்போன்; வணிகன்; நாவிதன்.
**போகித்தல்** – இன்பதுன்பங்களை நுகருதல்; வினைப்பயன் நுகர்தல்; புணர்தல்.
**போகிப்பண்டிகை** – பொங்கற் பண்டிகைக்கு முந்தின நாளில் கொண்டாடும் விழா.
**போகில்** – பறவை; பூவரும்பு; கொப்பூழ்.
**போகின்றகாலம்** – நிகழ்காலம்.
**போகு** – நெடுமை; உயரம்; நீளம்.
**போகுகாலம்** – எதிர்காலம்.
**போகுடி** – ஊரைவிட்டுப்போன குடும்பம்; வாரிசில்லாமல் மறைந்துபோனவருடைய சொத்து.
**போகுதல்** – காண்க: **போதல்**.
**போகுயர்தல்** – வளர்தல்; உயர்தல்.
**போகூழ்** – இழக்கச்செய்யும் விதி.
**போகை** – போதல்; செலவு.
**போகொட்டுதல்** – போகவிடுதல்.
**போங்கம்** – மஞ்சாடிமரவகை.
**போங்காலம்** – துன்புறும் வேளை; இறக்குங் காலம்; அழிவுகாலம்.
**போங்கு** – நடைமுறை.

**போசக்கை** – மாயம்; மேற்பூச்சு; போலித் தோற்றம்.
**போசகம்** – நுகர்தற்குரியது.
**போசர்** – காவி; வினைக்குடையவர்.
**போசனக்குறடா** – மிளகாய்த் தொகையல்; பொடி முதலியன.
**போசனசாலை** – அன்னம் படைக்கும் இடம்; விலைக்கு உணவுபெறும் இடம்.
**போசனசௌக்கியம்** – நல்லுணவு; இன்ப வாழ்க்கை.
**போசனப்பதார்த்தம்** – உணவுப்பண்டம்.
**போசனப்பிரியன்** – உணவு விருப்பமிக்கவன்; விநாயகக்கடவுள்.
**போசனம்** – உணவு; புசித்தல்.
**போசனாங்கம்** – நால்வகை உண்டிகளையும் உதவும் கற்பகம்.
**போட்கன்** – பொய்யன்; சுணைகேடன்.
**போட்டடைத்தல்** – திணித்தல்.
**போட்டி** – எதிரிடை; கேலி.
**போட்டிக்காரன்** – எதிரி; கேலிக்காரன்.
**போட்டிவழக்கு** – இடையறா எதிர்வழக்கு.
**போட்டுக்கொடுத்தல்** – கூடச் சேர்த்தளித்தல்; பிறனுக்காகச் செய்தல்; அடித்தல்.
**போட்டுக்கொள்ளுதல்** – தரித்தல்; ஏற்றுக் கொள்ளுதல்.
**போட்டுவிடுதல்** – நழுவவிடுதல்; எறிதல்; இடித் தல்; கொன்று கைவிடுதல்; மேற்போதல்.
**போட்டுவைத்தல்** – சேமித்துவைத்தல்; தாமதப் படுத்துதல்.
**போடகம்** – புண்; அம்மைக்கொப்புளம்; கொப்புளிப்பான்; அம்மை.
**போடி** – சம்புநாவல்மரம்; எதிரிடை; நிலக்கிழார்.
**போடு** – எடுப்பாயுள்ளது; நற்பேறு; மொட்டை; கோட்டையடுப்பு; பொந்து; அடி.
**போடுகாடு** – மலைச்சரிவில் புன்செய்ப்பயிர் செய்யக்கூடிய நிலம்.
**போடுதல்** – எறிதல்; இடுதல்; தாழ் முதலியன இடுதல்; தரித்தல்; ஈனுதல்; அச்சிட்டு வெளிப் படுத்துதல்; கணக்குச்செய்தல்; வரைதல்; பரி மாறுதல்; அடித்தல்; விதைத்தல்; பயன் படுத்தல்; கள் முதலியன குடித்தல்; விடுத்தல்; பணம் முதலியன கட்டுதல்; பிரித்து இடுதல்; உண்டாதல்; ஒரு துணைவினை.
**போணம்** – சோறு.
**போணி** – முதலாவது செய்யும் வாணிகம்; விதைக்கும் பருவம்; நீர் வார்த்தற்குரிய கலம்.
**போத்தருதல்** – போய்க் கொண்டுவருதல்; உரிய சொல்லை வருவித்துரைத்தல்; கொடுத் தனுப்புதல்; புறப்படவிடுதல்; போதல்; வெளிவருதல்.
**போத்திரி** – பன்றி.
**போத்து** – மயில், எழால் என்பவற்றின் ஆண்; முதலை, சுறாப்போன்ற நீர்வாழ் சாதியின் ஆண்; ஓரறிவு உயிரின் இளமை; புதுக்கிளை; காண்க: **செம்போத்து**; பொந்து; விலங்கு துயிலிடம்; மனக்குற்றம்.
**போத்துக்கால்** – கரும்பு.
**போத** – செவ்வையாக; போதிய அளவு; விரைவாக.
**போதகப்படை** – பகைவனது அம்பினால் உண் டாகும் மாயைகளை விலக்கும் அம்புவகை.
**போதகம்** – இளமை; யானைக்கன்று; யானை; விலங்கின் பிள்ளை; நல்லுரை; சொல்லிக் கொடுத்த புத்தி; இனிப்புவகை; எட்டிமரம்; ஓரறிவுயிரின் இளமை; கீரைவகை.
**போதகன்** – கல்வி கற்பிப்பவன்; குரு; ஒற்றன்; நாட்டு ஐயர்.
**போதகாசிரியன்** – கல்வி கற்றுக்கொடுப்போன்; சமயகுரு.
**போதந்து** – ஒருசொல் விழுக்காடு.
**போதம்** – ஞானம், அறிவு; மரக்கலம்; பரணி நாள்; யானைக்கன்று; மனைக்கட்டு.
**போதர** – அதிகமாக.
**போதரவு** – நயச்சொல்; போற்றுகை; இச்சகம்; பேணுதல்; போகை; செலுத்துகை; கொண்டு வருகை.
**போதருதல்** – செல்லுதல்; திரும்புதல்; வருதல்; பெறப்படுதல்; கொண்டுபோதல்; கொண்டு வருதல்; எதிர்கொண்டுபோதல்; விலக்குதல்.
**போதல்** – செல்லுதல்; அடைதல்; உரியதாதல்; பிறத்தல்; நீண்டுசெல்லுதல்; தகுதியாதல்; நெடுமையாதல்; நேர்மையாதல்; பரத்தல்; நிரம்புதல்; மேற்படுதல்; ஓங்குதல்; நன்கு பயிலுதல்; கூடியதாதல்; பிரிதல்; ஒழிதல்; நீங்குதல்; கழிதல்; மறைதல்; காணாமற் போதல்; மாறுதல்; கழிக்கப்படுதல்; வகுக்கப் படுதல்; சாதல்; முடிவாதல்; ஒலியடங்குதல்; தொடங்குவதைக் குறிக்கும் துணைவினை; பகுதிப்பொருளையே வற்புறுத்தும் துணைவினை.
**போதலிப்பு** – நயச்சொல்; போற்றுகை; முகமுன் புகழ்தல்; பேணுகை.
**போதன்** – அறிவுடையோன், ஞானி; அருகன்; பிரமன்.
**போதனை** – கற்பிக்கை; அறிவு, ஞானம்; தூண்டுகை.
**போதா** – பெருநாரை.
**போதாக்காலம்**, **போதாதவேளை** – தீய காலம்.

**போதாந்தம்** – அறிவின் எல்லை, ஞானமுடிவு.
**போதாந்தன்** – கடவுள்.
**போதாமை** – குறைவு; மனப்பிடித்தமின்மை.
**போதாலயம்** – அறிவிற்கிருப்பிடம்.
**போதி** – அரசமரம்; அறிவு; மலை; காண்க: **போதிகைக்கட்டை.**
**போதிக்கிறைவன்** – புத்தன்.
**போதிகன்** – ஆன்மா.
**போதிகை, போதிகைக்கட்டை** – குறுந்தறி; தூண் மேல் வைக்கும் தாங்குகட்டை.
**போதிசத்துவன்** – அறிவு முதிர்ந்து அடுத்த பிறவியில் புத்தனாக ஆவதற்குரியவன்; புத்தன்.
**போதித்தல்** – கற்பித்தல்; விருப்பமுண்டாதல்; தீயுரை புகட்டல்.
**போதித்தலைவன், போதிப்பகவன்** – புத்தன்.
**போதிப்பு** – அறிவு; படிப்பினை.
**போதிமாதவன்** – காண்க: **போதிப்பகவன்.**
**போதிய** – போதுமான.
**போதியகுடி** – மதிப்புள்ள குடும்பம்.
**போதியவன்** – கண்ணியவான்.
**போதியார்** – புத்தர்; பௌத்தர்.
**போதிவேந்தன்** – காண்க: **போதிப்பகவன்.**
**போதினன்** – தாமரைப் பூவிலிருப்பவனான பிரமன்.
**போது** – மலரும்பருவத்து அரும்பு; மலர்; செவ்வி; காலம்; தக்க சமயம்; வாழ்நாள்; பொழுது.
**போதுகாலம்** – பிள்ளைபெறுங் காலம்.
**போதுசெய்தல்** – மலருதல்; உண்ணுதல்; மூடுதல்; குரல் மாறுதல்; பேரரும்பாதல்.
**போதுதல்** – போதியதாதல்; தகுதியாதல்; ஒழுகுதல்; மதிக்கப்படுதல்; செல்லுதல்.
**போதுபோக்கு, போதுபோக்குதல்** – காண்க: **பொழுதுபோக்கு.**
**போதுவைகுதல்** – காலம் நீட்டிக்கை.
**போதை** – மூதறிவு; இலாகிரி மயக்கம்.
**போதைப்புல்** – காண்க: **காவட்டம்புல்**; கருப்பூரப் புல்.
**போந்த** – தகுந்த; பழகின; தீர்மானமான.
**போந்தி** – வீக்கம்; யானைக்கால்.
**போந்திக்கால்** – யானைக்கால்.
**போந்தின்கண்ணிக்கோன், போந்தின்றாரோன்** – பனம்பூமாலையையுடைய சேரன்.
**போந்து** – காண்க: **போந்தை**; பல்லி.
**போந்தை** – பனை; இளம்பனைமரம்; அனுடநாள்.
**போபடி** – சாடை.
**போம்** – ஓர் அசைச்சொல்.
**போம்பல்** – காண்க: **நீர்க்கடம்பு.**
**போய்ப்பாடு** – புகழ்; பெரிதாயிருக்கை.
**போயகாலம்** – சென்ற காலம்.
**போயிற்று** – ஓர் அசைநிலை.
**போர்** – சண்டை; மல்யுத்தம்; இகல்; செறிந்து பொருந்துகை; குவியல்; சாணி; கதிர் வைக்கோல்களின் படப்பு; சதயநாள்; மரப் பொந்து.
**போர்க்கடம்** – சண்டை செய்வதாகிய வீரர் கடமை.
**போர்க்கடா** – சண்டைக்காக வளர்க்கப்படும் ஆட்டுக்கடா.
**போர்க்கண்** – காண்க: **போர்க்களம்(ரி).**
**போர்க்கதவு** – பலகைகளை இணைத்த கதவு, இரட்டைக்கதவு.
**போர்க்களத்தொழிதல்** – போரிற் புறங்கொடாது வீரன் பூசற்களரியிலே பட்டதைக் கூறும் புறத்துறை.
**போர்க்களம்(ரி)** – சண்டை செய்யுமிடம்.
**போர்க்கோலம்** – போருக்குரிய உடைதரித்தல்.
**போர்கலத்தல்** – போர்புரிதல்.
**போர்ச்சேவகன்** – படைவீரன்.
**போர்ச்சேவல்** – சண்டைக்காக வளர்க்கப்படும் சேவல்.
**போர்த்தல்** – தரித்தல்; மூடுதல்; சூழ்தல்.
**போர்த்துக்கட்டுதல்** – உள்ளுக்குள்ளே சரிப்படுத்துதல்; மறைத்து அடக்கிக்கொள்ளுதல்.
**போர்த்துமூடுதல்** – மறைத்து அடக்கிக்கொள்ளுதல்.
**போர்நிறம்** – போர்ப்பொலிவு.
**போர்ப்பறை** – போர்முரசம்.
**போர்ப்பு** – மூடுகை; நெற்போர்.
**போர்ப்பூ** – போரில் வீரர் அணிந்துகொள்ளும் அடையாளப் பூ.
**போர்ப்பை** – உழவுகாலின் உட்குழிவு; களைக்கொட்டின் அடி.
**போர்ப்பைக்காளை, போர்ப்பையன்** – பொலிகாளை; உழவுக்குரிய காளை.
**போர்பு** – காண்க: **போர்வு.**
**போர்போடுதல்** – தானியமணிகளைப் பிரித்தபின் வைக்கோலை மழையிற் கெடாதபடி குவித்து மூடுதல்.
**போர்மகள், போர்மடந்தை** – கொற்றவை, துர்க்கை, வெற்றித்திருமகள்.
**போர்முகம்** – போர் முனைந்து நிகழுமிடம்.
**போர்முரசு** – காண்க: **போர்ப்பறை.**
**போர்முள்** – சேவலின் முன்னங்கால் முள்.
**போர்முனை** – காண்க: **போர்முகம்.**
**போர்மூட்டுதல்** – சண்டைசெய்யத் தூண்டுதல்; பேதகஞ்செய்தல்.
**போர்மை** – அருள்.
**போர்வு** – தானியப்போர்.

**போர்வை** – மூடுதல்; மேல்மூடும் துணி; தோல்; வாள் முதலியவற்றின் உறை; கவசம்; தேர்த் தட்டின் வெளி மறையப் பாவின பலகை.

**போர** – மிகவும்.

**போரடி** – தலையடிக் கதிர்ப்போரைக் கடாவிட்டு அடித்து நெல்லைப் பிரிக்கை; நெற்களம்; ஒரு விளையாட்டுவகை.

**போரடித்தல்** – நெற்கதிரை அடித்தல்; வாதாடு தல்; சோர்வுதட்டுதல்.

**போரப்பொலிய** – முழுதும்.

**போராட்டம்** – சண்டையிடுகை; போட்டி; சண்டை; விடாமுயற்சி.

**போராடுதல்** – பொருதல்; தொல்லைப்படுதல்; விலை முதலியவற்றில் வாதம்செய்தல்.

**போரான்** – குதிரைவகை.

**போரி** – பொருவோன்; முருகக்கடவுளின் தலங்களில் ஒன்றான திருப்போரூர்.

**போரிக்கட்டை,** **போரிகை** – காண்க: **போதிகைக்கட்டை.**

**போருதல்** – செல்லுதல்; மீண்டுவருதல்; எட்டு தல்; பொருள் பெறப்படுதல்; போதியதாதல்.

**போருதவி** – போர்வீரனுக்கு உதவிசெய்கை.

**போருந்து** – போர்க்கருவிகளுள் ஒன்று, டாங்கிப் படை.

**போரெதிர்தல்** – போர்செய்தலை மேற்கொள்ளு தல்.

**போரேறு** – போர் செய்யவல்ல காளை; படை வீரன்; செவ்வாய்.

**போல்** – ஓர் உவமவுருபு; பொய்; ஓர் அசைச் சொல்; உள்ளீடில்லாதது; பதர்; மூங்கில்; வெற்றி; படை; வாள்.

**போல்மரம்** – வண்டியின் முன்புறத்துள்ள நீண்ட மரக்கட்டை.

**போல** – ஓர் உவமவுருபு.

**போலி** – ஒன்றுபோல் ஒன்றிருத்தல்; ஒப்புடைய வர்; ஒப்புடையது; ஒப்பு; சாயல்; கள்ளப் பொருள்; படி, பிரதி; பொய்; வஞ்சகம்; கேலி; காண்க: **போலியெழுத்து; இலக்கணப் போலி;** நியாயாபாசம்.

**போலிச்சமயம்** – பொய்யான மதம்.

**போலிச்சரக்கு** – உண்மைச் சரக்கைப்போலச் செய்த பண்டம்; வெளிப்பகட்டுள்ள பொருள்.

**போலித்தனம்** – உண்மையல்லாத வெளித் தோற்றம்.

**போலிநடை** – வெளிப்பகட்டான நடத்தை; இழி வான நடத்தை.

**போலிநியாயம்** – பொய்க்காரணம்; நியாயம் போல் காணப்படும் நியாயமற்றது.

**போலிமனிதன்** – மக்கட் பண்பற்றவன்.

**போலிமை** – ஒப்பு.

**போலிமொழி** – காண்க: **இலக்கணப்போலி.**

**போலியாள்** – வெளிவேடக்காரன்; மேல்வாரியாக வேலை செய்பவன்.

**போலியெழுத்து** – ஓர் எழுத்துக்குப் பதிலாக அவ் வொலியில் அமையும் எழுத்து.

**போலிவேலை** – கள்ளத்தனமான வேலை.

**போலுதல்** – ஒத்தல்; இணையொத்தல்.

**போலும்** – ஓர் அசைச்சொல்; ஐயப்பாட்டைக் குறிக்குஞ் சொல்.

**போவித்தல்** – போக்குதல்.

**போவு** – போகை.

**போவுலித்தல்** – போக்குதல்.

**போழ்** – பிளவு; தகடு; தோலால் அமைந்த வார்; துண்டம்; பனங்குருத்து.

**போழ்க்கமை** – ஒழுக்கக்கேடு.

**போழ்க்கன்** – ஒழுக்கக்கேடன்.

**போழ்தல்** – பிளவுபடுதல்; பிரிவுபடுதல்; பிளத் தல்; ஊடுருவுதல்; அழித்தல்.

**போழ்து** – காண்க: **பொழுது;** நல்வேளை.

**போழ்முகம்,** **போழ்முகி** – பன்றி.

**போழ்வாய்** – பொக்கைவாய்; பிளந்த வாய்.

**போழ்வு** – பிளவு.

**போழம்** – மாறுபடும் சொல்.

**போளம்** – மணப்பண்டவகை; நிலக்கடம்புப் பூண்டு.

**போளி** – ஓர் இனிப்புப் பலகாரவகை; மூடன்.

**போற்றரவு** – பேணுகை.

**போற்றலர்** – காண்க: **போற்றார்.**

**போற்றன்** – பாட்டன்.

**போற்றார்** – பகைவர்.

**போற்றி** – துதிச்சொல்வகை; துதித்தல், புகழ் மொழி; கோயிற்பூசை செய்யும் மலையாள நாட்டுப் பார்ப்பனன்; பாட்டன்.

**போற்றிசெய்தல்,** **போற்றிசைத்தல்** – புகழ்தல், துதித்தல்.

**போற்றிமை** – வணக்கம்.

**போற்றியாதல்** – இடுக்குகை.

**போற்றீடு** – பாதுகாவல்வகை.

**போற்று** – துதி; காப்பு.

**போற்றுதல்** – வணங்குதல்; துதித்தல்; பாது காத்தல்; வளர்த்தல்; பரிகரித்தல்; கடைப் பிடித்தல்; உபசரித்தல்; விரும்புதல்; கருதுதல்; மனத்துக்கொள்ளுதல்; கூட்டுதல்.

**போற்றுநர்** – சுற்றத்தார்; நன்குணர்வார்.

**போறல்** – போலுதல், ஒத்திருத்தல்.

**போறை** – பொந்து; கிணறு முதலியவற்றின் பக்கம்.

**போன்** – எலி பிடிக்கும் பொறி; பொறி; மலைக் குகை; உலைக்குந் துருத்திக்கும் இடையில் சாய்வாகச் செல்லும் அடுப்புப் பாகம்.
**போனக்குருத்து** – நுனியுள்ள வாழையிலை.
**போனகச்சட்டி** – அன்னம் பரிமாறும் சட்டி.
**போனகத்தி** – ஊட்டுந்தாய்; சமைக்கிறவள்; வெள்ளாட்டி.
**போனகப்பெட்டி** – உணவுப்பண்டங்களை வைக்கும் ஓலைக்கூடைவகை.
**போனகம்** – உணவு; அன்னம்; அப்பவருக்கம் உண்கை.
**போனகாலம்** – சென்ற காலம்.
**போனபோக்கு** – மனஞ்சென்ற வழி; அழிவுநிலை.
**போனம்** – உணவு; அன்னம்; நிலக்கடம்புப் பூண்டு.
**போனு** – பொறி.

# பௌ

**பௌ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ப்+ஔ).
**பௌஞ்சு** – சேனை.
**பௌடம்** – தைமாதம்.
**பௌடிகம்** – இருக்குவேதம்; பதினெண் புராணத்துள் ஒன்று.
**பௌத்தன்** – புத்த சமயத்தினன்; காண்க: **பௌத்தாவதாரம்.**
**பௌத்தாவதாரம்** – திருமால் பிறப்புகளுள் ஒன்று.
**பௌத்திரம்** – தூய்மை; மலவாய்க்கு அருகில் உண்டாகும் கட்டிவகை.
**பௌத்திரன்** – பேரன்; தூயன்.
**பௌத்திரி** – மக்களின் மகள்.
**பௌதிகசாத்திரம்** – இயற்பியல் நூல்.
**பௌதிகதீட்சை** – சைவசமய தீட்சைகளுள் ஒன்று
**பௌதிகம்** – இயற்பியல்; பூதசம்பந்தமானது; உலகம்; காண்க: **கருநெல்லி.**
**பௌதிகன்** – சிவபிரான்.
**பௌதீகம்** – காண்க: **பௌதிகம்.**
**பௌமம்** – பூமி சம்பந்தமானது.
**பௌமன்** – செவ்வாய்; நரகாசுரன்.
**பௌமி** – பூமியின் புதல்வியான சீதை.
**பௌர்ணசந்திரன், பௌர்ணமி, பௌர்ணமை** – வெள்ளுவா, நிறைமதி நாள்.
**பௌரகம்** – நகர்சூழ் சோலை.
**பௌரணை** – காண்க: **பௌர்ணமி;** மரக்கன்று; கடல்.
**பௌரம்** – நகரசம்பந்தமானது.
**பௌரன்** – நகர்வாழ்நன்.
**பௌராணிகம்** – புராணத்தைப் பின்பற்றும் மதம்.
**பௌராணிகமந்திரம்** – பிரணவம் இல்லாத மந்திரம்.
**பௌராணிகன்** – புராணக் கொள்கையுடையவன்; புராணஞ் சொல்பவன்.
**பௌரி** – பெரும்பண்வகை.
**பௌரிகன்** – குபேரன்.
**பௌரோகித்தியம்** – புரோகிதத் தன்மை.
**பௌலோமி** – இந்திரன் மனைவி, புலோமசை; புலோமசை மகள்.
**பௌவம்** – உப்பு; கடல்; நீர்க்குமிழி; ஆழம்; நுரை; மரக்கணு; நிறைநிலா; பருவகாலம்.
**பௌழியம்** – இருக்குவேதம்.
**பௌழியன்** – பூழிநாட்டுத் தலைவனான சேர அரசன்; இருக்குவேதக் கடவுள்.
**பௌளி** – ஒரு பண்வகை.

# ம

**ம** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம்+அ); மத்திமம் எனப்படும் இசையின் எழுத்து; சந்திரன்; சிவன்; யமன்; காலம்; பிரமன்; திருமால்; நஞ்சு.
**மஃகான்** – மகரவொற்று.
**மக்கட்கதி** – நாற்கதியுள் மக்களாய்ப் பிறக்கும் பிறப்பு.
**மக்கட்சேவகம்** – ஊழியம்.
**மக்கட்சேவகன்** – ஊழியன்.
**மக்கட்டம்பிடித்தல்** – இழுபறிப்படுதல்.
**மக்கட்டாயம்** – மகன்முறையாய் வரும் தாய உரிமை.
**மக்கட்டு** – அரையில் ஆடையின்மேற் கட்டுங் கட்டு; மணிக்கட்டு.
**மக்கட்டொகுதி, மக்கட்பரப்பு** – மக்கள்தொகை; மக்கட் கூட்டம்.
**மக்கட்பாடு** – மக்களுடைய முயற்சி.
**மக்கட்பேறு** – குழந்தைச்செல்வம்.
**மக்கடா** – புத்தியீனன்.
**மக்கடித்தல்** – உருவழித்தல்.

**மக்கண்முரி** – வடிவிற் சிறியவர்.
**மக்கம்** – நெய்வோர் தறி; காண்க: **எருக்கு**; முகம்மது நபி பிறந்த இடம்.
**மக்கர்** – இடக்கு.
**மக்கல்** – கெட்டுப்போன பொருள்; கூளம்.
**மக்கள்** – மானுடவினம்; ஐம்பொறியுணர்வோடு மனவறிவுடைய உயிர்கள்; பிள்ளைகள்.
**மக்களித்தல்** – குணமடைந்த நோய் திரும்புதல்; உடற்சந்து பிசகுதல்; சறுக்குதல்; மாற்றுதல்.
**மக்களிப்பு** – புரளல்; காண்க: **மக்களித்தல்**.
**மக்கன்** – காண்க: **மக்கு**.
**மக்கனம்** – மூழ்குகை; அவமானம்.
**மக்காச்சோளம்** – ஒரு சோளவகை.
**மக்கி** – இரேவற்சின்னிப்பால்; காண்க: **இரேவற் சின்னி**; குளிகைவகை; ஈ; வெண்பார்க்கல்.
**மக்கினம்** – காண்க: **மக்கனம்**.
**மக்கு** – அடைமண்; மந்தகுணம்; அறிவீனன்; மரவேலையில் சந்து தெரியாமல் அடைக்கும் பொடி.
**மக்குதல்** – அழிதல்; மந்தமாதல்; கெடுதல்; அழுக்கேறுதல்; ஈரத்தாற் கெட்டுப்போதல்.
**மக** – மகன் அல்லது மகள்; பிள்ளை; இளமை; நிலவரிவகை.
**மகக்குழை** – மாவிலை.
**மகங்காரம்** – ஆணவம்.
**மகச்சோறு** – முப்பத்திரண்டு அறங்களுள் குழந்தைகளுக்குச் சோறளிக்கும் அறம்.
**மகசர்** – பலர் கையெழுத்திட்ட பொது விண்ணப்பம்.
**மகசூல்** – நிலத்தின் விளைச்சல்.
**மகட்கருமம்** – பெண்ணை மணந்துகொள்கை.
**மகட்கொடை** – மகளை மணஞ்செய்து கொடுத்தல்.
**மகட்கோடல்** – பெண்ணை மணம்புரிகை.
**மகட்பாற்காஞ்சி** – முதுகுடித் தலைவனிடம் மகளைத் தருகவென்று கேட்கும் அரசனோடு அவன் மாறுபட்டு நிற்பதைக் கூறும் புறத்துறை.
**மகட்பேசுதல்** – திருமணத்திற்குப் பெண் உறுதி செய்தல்.
**மகடு** – காண்க: **மகடூஉ**; **மகுடி**.
**மகடூஉ** – பெண்; மனைவி.
**மகடூஉக்குணம்** – பெண்தன்மைக்குரிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நாற்குணம்.
**மகடூஉமுன்னிலை** – பெண்ணை முன்னிலைப் படுத்திக் கூறுகை.
**மகண்மறுத்தல், மகண்மறுத்துமொழிதல்** – பகைவீரன் தம் மகளை மணங்கோடற்கு விரும்பிக் கேட்கச் சிற்றரசர் மறுத்தலைக் கூறும் புறத்துறை.
**மகண்மா** – பெண்ணுருக்கொண்ட ஒரு விலங்கு; அலி.
**மகண்மை** – மகளாகும் தன்மை; பெண்தன்மை; காண்க: **மகமை**.
**மகத்தத்துவம்** – அறிவுத்தத்துவம்.
**மகத்து** – பெரியது; அதிகமானது; பெருமையானது; மகாத்துமா; நாடு; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.
**மகத்துவம்** – பெருமை.
**மகத்துறை** – வேள்வி செய்யுமிடம்.
**மகத்தூண்** – வேள்விப் பசுவைக் கட்டிய தூண்.
**மகதத்துவம்** – காண்க: **மகத்தத்துவம்**.
**மகதம்** – நாடு ஐம்பத்தாறனுள் ஒன்று; நடுநாட்டில் திருக்கோவலூரைச் சார்ந்த ஒரு பகுதி; பதினெண் மொழியுள் ஒன்று.
**மகதவன்** – மகதநாட்டவன்.
**மகதி** – நாரதன் வீணை; பார்வதி; திப்பிலி.
**மகதை** – திப்பிலி; நடுநாட்டில் திருக்கோவலூரைச் சார்ந்த ஒரு பகுதி.
**மகந்தரம்** – கள்; பதநீர்.
**மகப்பால்வார்த்தல்** – அநாதப் பிள்ளைக்குப் பால் வார்த்தல்.
**மகப்பேறு** – பிள்ளைப்பேறு.
**மகபதி** – வேள்விக்கு தலைவனாகிய இந்திரன்.
**மகம்** – மகநாள்; வேள்வி; பலி; இன்பம்; பிரபை; விழவு.
**மகம்பூ** – செடிவகை.
**மகமாயி** – பார்வதி; பெரியம்மைக்குரிய தேவதை.
**மகமுறை** – விருந்து; வேள்விசெய்யும் முறை.
**மகமேரு** – மேருமலை.
**மகமை** – கோயில், சத்திரம் முதலியவற்றின் செலவிற்காக வசூலிக்கும் வரி; வணிகர்கள் தங்கள் ஊதியத்திலிருந்து அறச்செயலுக்குக் கொடுக்கும் நிதி; பழைய நிலவரிவகை.
**மகரக்குழை** – சுறாமீன் வடிவமைந்த காதணி.
**மகரக்குறுக்கம்** – தன் மாத்திரையிற் குறைந்து நிற்கும் மகரமெய்.
**மகரக்கொடியோன்** – மீனைக் கொடியிலுடைய மன்மதன்.
**மகரகண்டிகை** – கழுத்தணிவகை; காண்க: **மகர தோரணம்**.
**மகரகுண்டலம்** – காண்க: **மகரக்குழை**.
**மகரகேதனம்** – மீனக்கொடி.
**மகரகேதனன்** – காண்க: **மகரக்கொடியோன்**.
**மகரசங்கராந்தி** – தைமாதப் பிறப்பு.
**மகரத்துவசன்** – காண்க: **மகரக்கொடியோன்**.
**மகரதோரணம்** – மகரமீன் வடிவம் போன்ற ஓர் அலங்காரத் தோரணம்.

**மகரந்தப்பொடி** – பூந்தேன்; பூந்தாது.
**மகரந்தம்** – மலர்த்தாது; பூந்தேன்; கள்; வண்டு; குயில்; செடிவகை.
**மகரந்தவதி** – பாதிரிப்பூ.
**மகரந்தோய்த்தல்** – செங்காவி நிறமூட்டுதல்.
**மகரநீர்** – கடல்.
**மகரப்பகுவாய்** – திறந்த சுறாவினது வாய்போலச் செய்யப்பட்ட ஒரு தலைக்கோலவகை.
**மகரம்** – சுறாமீன்; முதலை; குபேரனது ஒன்பது வகை நிதியுள் ஒன்று; ஒரு பேரெண்; காண்க: **மகரக்குழை; மகரராசி;** குறங்குசெறியணி; தைமாதம்; அபிநயக்கைவகை; அரச சின்னத்துள் ஒன்று; மணமேடை அலங்கரிப்பு; காதல்; மலர்த்தாது; மங்கிய சிவப்புநிறம்; தேவருலகம்.
**மகரமாதம்** – தைமாதம்.
**மகரமீன்** – சுறாமீன்.
**மகரமுகம்** – அபிநயவகை.
**மகரமுயர்த்தோன்** – காண்க: **மகரக்கொடியோன்;** மீனைக் கொடியிலுடைய மன்மதன்.
**மகரயாழ்** – நால்வகை யாழினுள் மகரவடிவம் அமையப்பெற்றுப் பத்தொன்பது நரம்புடைய யாழ்.
**மகரயூகம்** – காண்க: **மகரவியூகம்.**
**மகரராசி** – பத்தாம் இராசி.
**மகரரேகை** – செல்வன் என்பதைக் காட்டும் குறியாக உள்ளங்கையில் அமையும் மீன்வடிவ வரி.
**மகரவலயம்** – காண்க: **மகரப்பகுவாய்.**
**மகரவாகனன்** – வருணன்.
**மகரவாய்** – காண்க: **மகரப்பகுவாய்;** மகரமீனின் வாய்போலச் செய்யப்பட்ட நீர்த்தூம்பு.
**மகரவாய்மோதிரம்** – மகரமீனின் வடிவமைந்த கால்விரலணிவகை.
**மகரவாழை** – ஒரு மல்லிகைவகை; வாழைவகை.
**மகரவியூகம்** – மகரமீனின் வடிவான படை வகுப்பு.
**மகரவீணை** – காண்க: **மகரயாழ்.**
**மகரவுச்சன்** – செவ்வாய்.
**மகரன்** – சனி.
**மகராகரம்** – கடல்.
**மக(கா)ராசன்** – பேரரசன்; குபேரன்; பெருஞ்செல்வன்; கவலையற்றவன்; சமணகுரு.
**மகராசி** – செல்வமுள்ளவள்; அரசி.
**மகராயனம்** – சூரியன் வடக்கு நோக்கித் திரும்புங்காலம்.
**மகராலயம், மகரி** } – காண்க: **மகராகரம்.**

**மகரிகை** – மகரமீன் வடிவமாகச் செய்யப்பட்ட குறங்குசெறி என்னும் அணிகலன்; ஒரு பேரெண்; தோரணம்; மகரவடிவாய்ச் செய்த பெட்டி.
**மகருதம்** – காண்க: **கொடிவேலி.**
**மகலோகம்** – மேலேழுலகினுள் ஒன்று.
**மகவதி** – இந்திராணி.
**மகவன்** – இந்திரன்; சிவன்.
**மகவாட்டி** – மகப்பேறுள்ளவள்.
**மகவான்** – காண்க: **மகவன்;** மகப்பேறுடையவன்; வேள்வி செய்பவன்.
**மகவின்கோள்** – வியாழன்.
**மகவு** – குழந்தை; மகன்; கோட்டில்வாழ் விலங்கின் பிள்ளை.
**மகவுவளர்த்தல்** – குழந்தைகளை வளர்த்தல்.
**மகவேள்வி** – ஆண்மகவு வேண்டிச் செய்யும் யாகம்.
**மகள்** – பெண்; புதல்வி; மனைவி.
**மகளிக்கீரை** – ஒரு கீரைவகை.
**மகளிர்** – பெண்டிர்.
**மகளிர்சாதி** – அருணி, வடவை, அத்தினி என்னும் மூவகைப் பெண்கள்.
**மகளிர்பருவம்** – பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்னும் எழுவகைப் பெண்பருவம்; வாலை, தருணி, பிரவுடை, விருத்தை என்னும் நால்வகைப் பெண்பருவம்.
**மகற்பலம்** – பெரும்பலன்.
**மகன்** – புதல்வன்; ஆண்பிள்ளை; குழந்தை; சிறந்தோன்; வீரன்; கணவன்.
**மகன்மை** – ஆண்தன்மை; புதல்வன் தன்மை; பழைய வரிவகை.
**மகன்றில்** – ஆண்பெண்களுள் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாத ஒரு நீர்வாழ் பறவை.
**மகா** – பெருமையான; அளவற்ற; உயர்ந்த; மிகுந்த.
**மகாகதம்** – காய்ச்சல்.
**மகாகர்வம்** – பத்துலட்சங்கோடி.
**மகாகவம்** – பெரும்போர்.
**மகாகவி** – பெருங்கவி.
**மகாகாசம்** – பெருவெளி; பெருஞ்சிரிப்பு.
**மகாகாயம்** – பெருவெளி; யானை.
**மகாகாலம்** – நெடுங்காலம்; மாமரம்.
**மகாகாலன்** – உருத்திரன்.
**மகாகாளி** – சத்திகளுள் ஒருத்தி.
**மகாகிதி** – கோடிகோடாகோடி.
**மகாகோடி** – ஒரு பேரெண்.
**மகாகோரம்** – காணப் பொறுக்காத கொடுமை; நரகவகை.

**மகாச்சாயம்** – ஆலமரம்.
**மகாசங்கம்** – மாநாடு; ஆயிரங்கோடாகோடி; குபேரன் நிதியினுள் ஒன்று; எலும்பு; நெற்றி.
**மகாசத்தி** – சிவசத்தி; முருகக்கடவுள்.
**மகாசபை** – ஊர்ப் பொதுச்செயல்களைப் பார்க்கும் மன்றம்.
**மகாசம்பு** – பெருநாவல்.
**மகாசமுத்திரம்** – பெருங்கடல்; ஒரு பேரெண்.
**மகாசனம்** – மக்கட்கூட்டம்; ஊரில் முதன்மையானவர்; உயர்ந்தோர்; பார்ப்பனர்.
**மகாசாத்தா** – ஐயனார்.
**மகாசாத்திரன்** – சமயங்களின் மூலசாத்திரங்களைப் பயின்றவன்; ஐயனார்.
**மகாசாமந்தன்** – பெரிய படைத்தலைவன்.
**மகாசூதம்** – போர்ப்பறை.
**மகாசூரன்** – பெருவீரன்; தறுகணாளன்.
**மகாசேனன்** – படைத்தலைவன்; கந்தன்; அருகன்; புத்தன்.
**மகாசோபம்** – நூறுகோடி கோடாகோடி.
**மகாண்டு** – அறுபது ஆண்டுகொண்ட வியாழ வட்டம்.
**மகாத்தியாகம்** – பெருந்துறவு.
**மகாத்துமா** – பேரறிஞர்; பரமஞானி.
**மகாதசை** – சாதகனுக்கு ஒரு கோளின் நடப்புக் காலம்.
**மகாதலம்** – பூமி; அரிதாரம்; புண்ணியத்தலம்; முதன்மைத் தலம்; கீழேழுலகினுள் ஒன்று.
**மகாதனம்** – பொன்; வேளாண்மை; புகை.
**மகாதுந்துமி** – போர்ப்பறை.
**மகாதுருமம்** – அரசமரம்.
**மகாதேவன்** – கடவுள்; சிவபிரான்; வருணன்.
**மகாதேவி** – பார்வதி; பட்டத்தரசி.
**மகாதோரை** – ஒரு பேரெண்.
**மகாநடன்** – சிவபிரான்.
**மகாநதி** – பேராறு; கங்கை; ஓர் ஆறு.
**மகாநவமி** – கலைமகள் பூசை நிகழும் ஒன்பான் இரவின் இறுதிநாள்.
**மகாநாகம்** – சுரபுன்னைமரம்; பெரும்பாம்பு.
**மகாநாதம்** – சங்கு; சிங்கம்; பேரொலி; முகில்; யானை; வாத்தியக் கருவி.
**மகாநித்திரை** – இறப்பு; பெருந்துயில்.
**மகாநிம்பம்** – காண்க: பூவரசு; மரவகை; பெருங்கள்ளி; பீநாறி; மலைவேம்பு.
**மகாநேமி** – காகம்.
**மகாப்பிரசாதம்** – கோயில்களில் கடவுளுக்குப் படைத்து அடியார்களுக்கு வழங்கும் பொங்கல் முதலியன.
**மகாப்பிரபு** – பெருஞ்செல்வன்; பெருங்கொடையாளி.
**மகாபத்திரம்** – பனைமரம்.
**மகாபதுமம்** – குபேரனுக்குரிய ஒன்பதுவகை நிதியுள் ஒன்று; ஒரு பேரெண்; வெண்டாமரை; 176 சிகரங்களையும் 22 மேனிலைக் கட்டுகளையும் உடைய கோயில்; சித்திரகவிவகை.
**மகாபலம்** – தெங்கு; வில்வம்; கொழிஞ்சி; தூதுவளை.
**மகாபலை** - வில்வம்.
**மகாபாதகம்** – பொய், கொலை, களவு, கள், காமம் என்னும் ஐம்பெரும் பாதகம்.
**மகாபிரதானி** – முதல்மந்திரி.
**மகாபுருடன்** – சான்றோன்.
**மகாபூரி** – ஒரு பேரெண்.
**மகாபோதி** – கௌதமர் தங்கியிருந்து ஞானோதயம் பெற்றுப் புத்தரான அரசமரம்.
**மகாமகம்** – பன்னீராண்டிற் கொருமுறை மாசி மகத்தில் கும்பகோணத்தில் நிகழும் விழா.
**மகாமண்டபம்** – கோயிலில் அர்த்தமண்டபத்தை அடுத்துள்ள பெரிய மண்டபம்.
**மகாமந்திரமூர்த்திகள்** – ஏழரைக் கோடியினரான உயர்தர ஆன்மாக்கள்.
**மகாமாயி** – துர்க்கை.
**மகாமாயை** – பார்வதி; காண்க: **சுத்தமாயை.**
**மகாமார்க்கம்** – சிறந்த சமயநெறி.
**மகாமாரி** – துர்க்கை; கொள்ளைநோய்.
**மகாமிருகம்** – யானை.
**மகாமுகம்** – முதலை.
**மகாமுனி** – பெருந்தபோதனன்; அகத்தியன்; புத்தன்.
**மகாமேதை** – பேரறிவு; பேரறிவாளன்; மருள் ஊமத்தை.
**மக(கா)மேரு** – பொன்மலை, மேருமலை.
**மகாயுகம்** – நான்கு யுகம் கூடியதும் 43,20,000 ஆண்டுகள் கொண்டதுமான காலம்.
**மகார்** – புதல்வர்; பாலர்; மக்கள்; இடக்கு.
**மகாரதன்** – பதினோராயிரம் தேர்வீரரோடு போர்செய்வோன்.
**மகாராணி** – பேரரசி.
**மகாரோகம்** – குட்டம் முதலிய பெருநோய்.
**மகாலட்சுமி** – திருமகள்.
**மகாலயம்** – கோயில்; பிதிரர்க்குப் புரட்டாசி மாதத்துத் தேய்பிறையில் செய்யும் சிராத்தம்; பிரமலோகம்; புரட்டாசி மாதத்துத் தேய்பிறை.
**மகாலயன்** – கடவுள்; நான்முகன்.
**மகாவற்புதம்** – ஒரு பேரெண்.
**மகாவாக்கியம்** – 'தத்துவமசி' என்னும் தொடர்; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று.
**மகாவிந்தம்** – ஒரு பேரெண்; நளனது தலைநகரம்; வைகுந்தம்.

**மகாவிந்து** – அப்பிரகம்.
**மகாவிரதம்** – சைவத்தின் உட்சமயம் ஆறனுள் ஒன்று; சமண நோன்புவகை.
**மகாவிலயம்** – வானம்; இதயம்; குகை; நீர்ச்சாடி.
**மகாவீரன்** – அக்கினி; அருகதேவன்; கருடன்; திருமால்; பெருவீரன்.
**மகான்** – அறிவுத்தத்துவம்; பெரியோன்.
**மகானுபாவன்** – பேரறிஞன்; சிறந்தவன்; ஞானி; கொடைப்பண்பினன்.
**மகி** – பூமி; பசு.
**மகிடம்** – எருமைக்கடா.
**மகிடமர்த்தனி** – துர்க்கை.
**மகிடவாகனன்** – எருமையை ஊர்தியாகவுடைய யமன்.
**மகிடவாகனி** – எருமையை ஊர்தியாகவுடைய துர்க்கை.
**மகிடற்செற்றாள், மகிடாசுரமர்த்தனி** – மகிடாசுரனைக் கொன்ற துர்க்கை.
**மகிடி** – காண்க: **மகுடி**; வெளிக்காணாமல் புதைத்தும் புதைத்ததைக் கண்டெடுத்தும் ஆடும் விளையாட்டுவகை; மந்திரத்தால் பொருளை மறைத்தலும் அதனைக் கண்டெடுத்தலுமாகிய விவாதத்தில் மாந்திரி கருக்குள் நிகழும் போட்டி.
**மகிடித்தல்** – மக்களித்தல்; தலைகீழாக விழுதல்.
**மகிணன்** – காண்க: **மகிழ்நன்**; சுவாமி.
**மகிதம்** – சிவபிரானது திரிசூலம்.
**மகிதலம்** – பூமி.
**மகிந்தகம்** – எலி; கீரி.
**மகிபன், மகிபாலன்** – அரசன்.
**மகிமா** – எண்வகைச் சித்திகளுள் விருப்பம்போல உருவத்தைப் பருக்கச் செய்யும் பேராற்றல்.
**மகிமை** – பெருமை; காண்க: **மகமை**; சிறப்பு, மதிப்பு.
**மகிலை** – பெண்; வெறிபிடித்தவள்.
**மகிழ்** – இன்பம்; குடிவெறி; மது; மரவகை.
**மகிழ்ச்சி** – உவகை; காண்க: **மகிழ்ச்சியணி.**
**மகிழ்ச்சிநிலை** – உள்ளமிகுதி.
**மகிழ்ச்சியணி** – மகிழ்ந்து சொல்லுகையாகிய அலங்காரவகை.
**மகிழ்ச்சிவினை** – புண்ணியம், நல்வினை.
**மகிழ்த்தாரான்** – மன்மதன்.
**மகிழ்தல்** – அகங்களித்தல்; உணர்வழிய உவகை எய்துதல்; குமிழியிடுதல்; விரும்புதல்; உண்ணுதல்.
**மகிழ்நன்** – கணவன்; மருதநிலத் தலைவன்.
**மகிழ்வு** – இன்பம்.
**மகிழம்** – மகிழமரம்.
**மகிழலகு** – மகிழம்விதை.
**மகிளம்** – பூவிதழ்.
**மகீதரம்** – மலை.
**மகீபதி, மகீபன்** – அரசன்.
**மகீருகம்** – பூமியில் முளைப்பதான தாவரம்.
**மகீலதை** – நாங்கூழ்.
**மகுடம்** – மணிமுடி; தலைப்பாகைவகை; தலையணி; பல பாடல்களில் ஓர் இறுதியாக வரும் முடிவு; கட்டுரைத் தலைப்பு; சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று; ஓலைச்சுவடியின் மணிமுடிச்சுக் கொண்டை; மாதர் காதணி வகை; மத்தளத்தின் விளிம்பு; பறைவகை; ஒளிமங்கல்.
**மகுடராகம், மகுடராமக்கிரியம்** – ஒரு பண்வகை.
**மகுடவர்த்தனர்** – முடிமன்னர்.
**மகுடாதிபதி** – முடியுடை வேந்தன்.
**மகுடி** – இசைக்கருவிவகை; பாம்பாட்டியின் ஊது குழல்வகை.
**மகுரம்** – கண்ணாடி; பளிங்கு; பூமொட்டு; தண்டசக்கரம்.
**மகுலம்** – காண்க: **மகிழம்.**
**மகுளி** – ஓசை; எட்பயிர் நோய்வகை.
**மகுளிபாய்தல்** – பெருமழையால் நிலம் இறுகி விடுதல்; நீரின்மையால் எள்ளு முதலிய செடி கொடிகள் செந்நிறமடைதல்.
**மகூலம்** – மலர்ந்த பூ.
**மகேச்சுரன், மகேசன்** – சிவபெருமான்.
**மகேசுரவடிவம்** – இலிங்க வடிவொழிந்த சிவமூர்த்தங்கள்.
**மகேசுவரன்** – காண்க: **மகேச்சுரன்.**
**மகேசுவரி** – பார்வதி.
**மகேந்திரசாலம்** – வியப்பைக் காட்டும் வித்தை.
**மகேந்திரம்** – ஒரு மலை.
**மகேந்திரன்** – இந்திரன்.
**மகேசுவரியம்** – பெருஞ்செல்வம்.
**மகோததி** – கடல்; தனுக்கோடிக்கு வடக்கிலுள்ள கடற்பிரிவு.
**மகோதயம்** – ஒரு புண்ணியகாலம்; பெருமை; வீடுபேறு; மேன்மை.
**மகோதரம்** – பூதம்; பெருவயிற்றுநோய்.
**மகோதை** – கொடுங்கோளூர்.
**மகோற்சவம்** – பெரிய திருவிழா.
**மகோன்மதம்** – மிகுவெறி.
**மகோன்னதம்** – மிக்க உயரம்; உயர்ந்த நிலை; பனை.
**மகௌடதம்** – சுக்கு; திப்பிலி; வசம்பு; நன்மருந்து.

**மங்கல்** – கெடுதல்; ஒளிமங்குதல்; இருள்நேரம்.
**மங்கல்யம்** – காண்க: **மாங்கலியம்.**
**மங்கலக்கருவி** – யாழ் முதலிய இசைக்கருவிகள்; சவரக்கத்தி.
**மங்கலக்கிழமை** – செவ்வாய்க்கிழமை.
**மங்கலகாரியம்** – நற்செயல்.
**மங்கலகீதம்** – காண்க: **மங்கலப்பாட்டு.**
**மங்கலகௌசிகம்** – ஒரு பண்வகை.
**மங்கலச்சொல்** – மங்கலமொழி, நன்மையைக் குறிக்கும் மொழி; வாழ்த்துரை; செய்யுள்களின் முதலில் வரற்குரிய திரு, பூ, உலகம் முதலிய நன்மொழிகள்.
**மங்கலசூத்திரம்** – தாலிக்கயிறு.
**மங்கலத்திருநாள்** – புண்ணியதினம், திருவிழாவில் சிறந்த நாள்.
**மங்கலத்துகில்** – வெண்துகில்.
**மங்கலதினம்** – காண்க: **மங்கலநாள்.**
**மங்கலநாண்** – தாலிக்கயிறு, கழுத்திலணியும் திருமங்கலியச் சரடு.
**மங்கலநாள்** – நன்னாள்.
**மங்கலப்பாட்டு** – நல்ல காலங்களில் பாடும் பாட்டு.
**மங்கலப்பிரதை** – மஞ்சள்.
**மங்கலப்பொருத்தம்** – செய்யுள் முதன்மொழிப் பொருத்தம் பத்தனுள் முதன்மொழியிடத்து மங்கலச்சொல் நிற்பது.
**மங்கலபத்திரிகை** – திருமண அழைப்பிதழ்.
**மங்கலபாடகர்** – அரசர் முதலியோரைப் பாடுவோர்.
**மங்கலபேரிகை** – நல்ல காலங்களில் முழக்கும் முரசம்.
**மங்கலம்** – திருமணம்; ஆக்கம்; பொலிவு; நற்செயல்; நன்மை; தாலி; தருமம்; சிறப்பு; வாழ்த்து; காண்க: **மங்கலவழக்கு**; எண்வகை மங்கலம்; சேகரிப்பு; தகனபலி; சில ஊர்ப் பெயர்களின்பின் இணைக்கப்படும் துணைச் சொல்.
**மங்கலம்பதினாறு** – கவரி, நிறைகுடம், கண்ணாடி, கோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைக்கயல் என்னும் எண்வகை மங்கலத்தோடு வாள், குடை, ஆலவட்டம், சங்கம், தவிசு, திரு, அரசியலாழி, ஓமாலிகை என்னும் எட்டுஞ் சேர்ந்த பதினாறு வகையான எடுபிடிகள்.
**மங்கலமகளிர், மங்கலமங்கையர்** – சுமங்கலிகள்.
**மங்கலமடந்தை** – கணவனுடன் வாழ்பவள்; ஒரு பெண்தேவதை.
**மங்கலமரபு** – காண்க: **மங்கலவழக்கு.**
**மங்கலமாந்தர்** – மங்கலச் செயல்களைச் செய்பவர்.
**மங்கலமுகூர்த்தம்** – காண்க: **மங்கலவேளை.**
**மங்கலமுரசு, மங்கலமுழவம்** – விழாக்காலங்களில் முழக்கும் முரசு.
**மங்கலமொழி** – காண்க: **மங்கலச்சொல்.**
**மங்கலவண்ணம்** – மங்கலக்குறியான வெண்ணிறம்.
**மங்கலவணி** – திருமங்கலியம்; இயற்கையழகு; மங்கலக்குறியாக அணியும் வெள்ளணி.
**மங்கலவழக்கு** – தகுதிவழக்கு மூன்றனுள் மங்கலமல்லாததை மங்கலமாகக் கூறும் வழக்கு.
**மங்கலவள்ளை** – உயர்குல மங்கையை ஒன்பது வெண்பாக்களால் வகுப்புறப் பாடும் நூல்.
**மங்கலவார்த்தை** – நல்லுரை; நற்செய்தி.
**மங்கலவாரம்** – செவ்வாய்க்கிழமை; நல்ல நாள்.
**மங்கலவாழ்த்து** – நூலின் முதலில் அல்லது இறுதியில் செய்யப்படும் துதி; மணமக்களுக்கு வாழ்த்துக் கூறுகை.
**மங்கலவினைஞன்** – நாவிதன்; நற்செயல் செய்யத் தகுதியுள்ளவன்.
**மங்கலவெள்ளை** – சந்தனக்குழம்பு; நூல்வகை.
**மங்கலவேளை** – நல்வேளை.
**மங்கலன்** – நாவிதன்; செவ்வாய்.
**மங்கலாதேவி** – ஒரு பெண்தேவதை.
**மங்கலி** – சுமங்கலி; நாவிதன்.
**மங்கலியசூத்திரம்** – காண்க: **மங்கலசூத்திரம்.**
**மங்கலியப்பிச்சை** – கணவன் உயிரைக்காக்குமாறு மனைவி இரந்து கேட்கை.
**மங்கலியப்பெண்டுகள்** – தெய்வமாகக் கொண்டாடப்படும் பெண்டிர்; சுமங்கலிகளாய் இறந்த மகளிர்.
**மங்கலியப்பொருத்தம்** – திருமணப் பொருத்தத்துள் ஒன்று.
**மங்கலியம்** – திருமணத்தில் கட்டப்படும் தாலி; சந்தனம்; தயிர்; பொன்; செவ்வீயம்.
**மங்கலியவதி** – சுமங்கலி.
**மங்கலை** – சுமங்கலி, கணவனோடு வாழ்பவள்; திருமகள்; பார்வதி; துர்க்கை; அம்பட்டத்தி.
**மங்களகரம்** – நன்மையானது.
**மங்களம்** – காண்க: **மங்கலம்.**
**மங்களம்பாடுதல்** – நற்செயல் முடிவில் வாழ்த்துப் பாட்டுப் பாடுதல்; செயலை முடித்தல்.
**மங்களரேகை** – ஒருவனுக்கு உண்டாகும் நன்மைகளைக் குறிப்பதாகக் கருதப்படும் உள்ளங்கை வரி.
**மங்களவாத்தியம்** – நற்காலங்களில் இசைக்கும் இசைக்கருவி.
**மங்களவாரம்** – காண்க: **மங்கலக்கிழமை.**

**மங்களாசரணை** – வாழ்த்து, வணக்கம், வரு பொருள் என்னும் முப்பகுதியுடைய நூன் முகம்.

**மங்களாசாசனம்** – நன்மையை வேண்டுகை; பெரியோர்கள் வழிபாடு; ஆழ்வாராதியரால் துதிக்கப்பெறுகை.

**மங்களாரத்தி** – கடவுளுக்குச் சுழற்றியெடுக்கும் கருப்பூர ஆரத்தி; நல்ல காலங்களில் மஞ்சள் நீர் சுற்றுகை.

**மங்களை** – பார்வதி; மக்களின் பருவநிலைகளுள் ஒன்று; யோகினிதிசையி னொன்று.

**மங்கினி** – மிக்க மந்தபுத்தியுள்ளவர்; பயனற்றவர்.

**மங்கு** – வங்கு; கேடு; சாடி.

**மங்குங்காலம்** – தீமைக்காலம்.

**மங்குசனி** – ஒருவனுடைய வாழ்நாளில் முதலில் வந்து தீமை செய்யும் ஏழரையாண்டுச் சனி.

**மங்குதல்** – ஒளிமழுங்குதல்; குறைதல்; நிறங் குன்றுதல்; பெருமை குறைதல்; வாட்டமுறு தல்; கெடுதல்; சாதல்.

**மங்குரம்** – பளிங்கு.

**மங்குல்** – வானம்; மேகம்; மூடுபனி; இரவு; இருட்டு; திசை.

**மங்குல்வாணி** – தெய்வவாக்கு, வானொலி.

**மங்குலம்** – மழுக்கம்; கலக்கம்; முகவாட்டம்; பார்வை மந்தம்; ஐயம்; நிறக்குறைவு.

**மங்குலி** – மேகத்தின் தலைவனாகிய இந்திரன்.

**மங்குளம்** – காண்க: **மங்குலம்.**

**மங்கை** – பெண்; பன்னிரண்டு முதல் பதின்மூன்று வயதுவரையுள்ள பெண்; கற்றாழை; பாதரசம்; சில ஊர்ப்பெயர்களின்பின் இணைக்கப்படும் துணைச்சொல்.

**மங்கைபங்கன், மங்கைபங்காளன், மங்கைபாகன்** – உமையொருபாகன், சிவபெருமான்.

**மச்சக்கொடி** – காமனுக்கும் பாண்டியனுக்கும் உரியதான மீனக்கொடி.

**மச்சப்பொன்** – மாற்றறிய வைத்திருக்கும் மாதிரிப் பொன்.

**மச்சம்** – காண்க: **மச்சாவதாரம்**; மீன்; மீனராசி; பங்குனிமாதம்; பதினெண் புராணத் துள் ஒன்று; மாற்றறிய வெட்டும் பொன; மச்சநாடு; சுவடு; உடம்பில் உண்டாம் புள்ளி.

**மச்சாவதாரம்** – திருமாலின் பத்துப்பிறப்புகளுள் முதலாவதான மீன்பிறப்பு.

**மச்சாவி** – அண்ணி.

**மச்சாள்** – மனைவியின் உடன்பிறந்தாள்; தாய் மாமன் அல்லது அத்தையின் மகள்.

**மச்சான்** – தாய்மாமன் மகன் அல்லது அத்தை மகன்; மனைவியின் உடன்பிறந்தான்; உடன் பிறந்தாளின் கணவன்.

**மச்சி** – காண்க: **மச்சாள்**; கொடிவகை.

**மச்சிகை** – மோர்; ஈ.

**மச்சினச்சி** – காண்க: **மைத்துனி.**

**மச்சினன்** – காண்க: **மைத்துனன்.**

**மச்சினி, மச்சினிச்சி** – காண்க: **மைத்துனி.**

**மச்சு** – மட்டமாகச் செங்கல்குத்திப் பாவிய மேல்தளம்; மேல்தளத்தில் பாவும் பலகை; உத்தரமட்டத்தின் மேலுள்ள பலகைத்தடுப்பு; மேல்மாடம்; காண்க: **மச்சப்பொன்**; குற்றம்; தகாதது; கொடிவகை; ஓர் அசைநிலை.

**மச்சுக்கல்** – மேல்தளத்தில் பதிக்கும் செங்கல் வகை.

**மச்சுப்பாவுதல்** – மேல்தளத்தைப் பலகை முதலிய வற்றால் மூடுதல்.

**மச்சுவீடு** – மேல்தளமுள்ள கட்டடம்; பலகை யடைப்புள்ள மேன்மாடி வீடு.

**மச்சுனமை** – மைத்துனவுரிமை.

**மச்சுனன்** – காண்க: **மைத்துனன்.**

**மச்சுனி** – காண்க: **மைத்துனி.**

**மச்சை** – அம்பு எய்தற்குரிய குறி; உடம்பிலுண் டாம் புள்ளி; ஏழு தாதுவில் ஒன்று; உட்சுரம்; காண்க: **மீனம்பர்.**

**மசக்குதல்** – மயக்குதல்; குழப்புதல்; ஆடையைக் கஞ்சிப்பற்று நீங்கும்படி கசக்குதல்.

**மசக்கை** – சூதகக்கட்டு; கருக்கொண்ட பெண்ணுக்கு மயக்கம் முதலியவற்றை உண் டாக்கும் ஒரு நோய்வகை.

**மசகம்** – கொசு; நீர்த்துருத்தி; மயிர்; மயக்கம்.

**மசகவரி, மசகாரி** – சித்திரப்பணி எழுதியதும் கொசுக் களை விலக்குவதுமான அமளித் திரை.

**மசகி** – அத்திமரம்.

**மசகிற்புள்** – கடற்பறவைவகை.

**மசகு** – நடுக்கடலில் திசைதெரியாது ஆழ்ந்து அகன்ற இடம்; வைக்கோற் கரியோடு எண்ணெய் கலந்து கட்டைவண்டியின் அச்சி லிடும் மை; திகைப்பு.

**மசகுதல்** – சுணங்கிநிற்றல்; மனந்தடுமாறுதல்.

**மசங்கல்** – மயக்கம்; அந்திப்பொழுது.

**மசங்குதல்** – மயங்குதல்; ஒளிகுறைதல்; கசங்கு தல்.

**மசடன்** – குணங்கெட்டவன்.

**மசண்டை** – அந்திநேரம்.

**மசம்** – கொசு.

**மசமசத்தல்** – தினவெடுத்தல்; செயலை முடியாது தாழ்த்தல்.

**மசமசெனல்** – தினவு எடுத்தற்குறிப்பு; பேச்சு முதலியவற்றில் தீர்மானமின்றி இழுத்தற் குறிப்பு.

**மசரதம்** – கானல்நீர், பேய்த்தேர்.

**மசனம்** – வருத்தல்.
**மசாலை** – கறிச்சரக்கு; குதிரை முதலிய விலங்குகட்குக் கொடுக்கும் மருந்து.
**மசானக்கொள்ளை** – பகற்கொள்ளை.
**மசானம்** – சுடுகாடு.
**மசி** – எழுதும் மை; வண்டியின் அச்சிலிடும் மசகு.
**மசிக்கூடு** – எழுதும் மைவைக்குங் குப்பி.
**மசிகம்** – புற்று.
**மசித்தல்** – கடைதல் முதலியவற்றால் குழையச் செய்தல்; குழப்புதல்.
**மசிதல்** – வழுவழுப்பாயிருத்தல்; விட்டுக் கொடுத்தல்.
**மசிபதம்** – இறகுபேனா.
**மசிமையிலி** – நாணமில்லாதவன்.
**மசியல்** – கடைந்து செய்த உணவு முதலியன.
**மசிர்** – அறுகம்புல்; மயிர்.
**மசுக்கரம்** – மூங்கில்மரம்.
**மசூரம்** – கடலை.
**மசூதி** – பள்ளிவாயில்.
**மசூரம்** – மூட்டுப்பூச்சி; தானியவகையுள் ஒன்று.
**மசோதா** – சட்ட முன்வடிவு, சட்டமாவதற்கு முன் சட்டப் பேரவைக்குக் கொணரப்படும் சட்ட நகலின் குறிப்பு; மூலப்பத்திரத்துக்கு முன் குறிக்கப்படும் நகல்.
**மஞ்சகம்** – கட்டில்; கொக்குவகை.
**மஞ்சட்காப்பு** – காப்பாக நெற்றியிலிடும் மஞ்சள் பொட்டு; கோயிலில் தெய்வங்களுக்குச் சாத்தும் அரைத்த மஞ்சட் குழம்பு; ஓலைக்கு மஞ்சற் பூசுதல்.
**மஞ்சட்காமாலை** – ஒரு கண்நோய்வகை.
**மஞ்சட்குருவி** – ஒரு குருவிவகை.
**மஞ்சட்குளி** – மஞ்சள் தேய்த்துக் குளிக்கை; மஞ்சள்நீர் விளையாட்டு.
**மஞ்சட்கொத்து** – கிழங்குடன் கூடிய மஞ்சட்செடி.
**மஞ்சட்பால்கொடுத்தல்** – தத்தெடுத்தல்.
**மஞ்சட்பாவாடை** – ஊர்த்தேவதைகளை வழிபடும்போது அணியும் மஞ்சள்நீரில் தோய்த்த புத்தாடை.
**மஞ்சட்பூ** – காண்க: **பவழமல்லிகை.**
**மஞ்சட்பூச்சு** – மகளிர் குளிக்கும்போது மஞ்சள் அரைத்துப் பூசிக்கொள்கை.
**மஞ்சணம்** – பற்பொடி.
**மஞ்சணீர்** – நல்ல காலத்தில் பயன்படுத்தும் மஞ்சட் கரைத்த நீர்; கலியாணத்தில் விருந்தினர்மீது மஞ்சள்நீர் தெளிக்கும் சடங்கு.
**மஞ்சணீர்ச்சீட்டு** – வளர்ப்புப் பிள்ளையை எடுத்தற்கு உரித்தாக்குஞ் சீட்டு.
**மஞ்சணீர்நதி** – காஞ்சிபுரத்தருகில் ஓடும் வேகவதி ஆறு.
**மஞ்சணீர்ப்பிள்ளை** – வளர்ப்புப்பிள்ளை.
**மஞ்சணை** – சில சாதி மகளிர் கழுத்திலும் சிறு தேவதைகளின் உருவங்களிலும் பூசப்படும் எண்ணெய்க் குங்குமக்குழம்பு; மரவகை.
**மஞ்சத்தலம்** – அரியணை.
**மஞ்சம்** – கட்டில்; இருக்கையிடுதற்குரிய மேடை; சப்பரம்; காண்க: **கொம்மட்டிமாதுளை.**
**மஞ்சரி** – தளிர்; பூங்கொத்து; பூமாலை; மலர்க் காம்பு; ஒழுக்கம்; ஒரு நூல்வகை; மருந்து வகை; முத்து; நாயுருவிச்செடி; பண்வகை.
**மஞ்சரிப்பா** – நூல்வகை.
**மஞ்சள்** – செடிவகை; மஞ்சள்நிறம்; எலுமிச்சை; காண்க: **மஞ்சட்குருவி.**
**மஞ்சள்வெயில்** – மாலைநேர வெயில்.
**மஞ்சளாலாத்தி** – கண்ணேறு போக்க மஞ்சள் நீரால் எடுக்கும் ஆராத்தி.
**மஞ்சன்** – ஆண்மகன்; மஞ்சள்நிறமுடையவன்.
**மஞ்சனசாலை** – குளியலறை.
**மஞ்சனநீர்** – முழுக்குநீர்.
**மஞ்சனம்** – நீராட்டம்; காண்க: **மஞ்சனநீர்.**
**மஞ்சனமாடுதல்** – நீராடுதல்.
**மஞ்சனி** – காண்க: **வேலிப்பருத்தி**; பெண்.
**மஞ்சா** – காண்க: **இலைக்கள்ளி.**
**மஞ்சாடி** – ஒரு மரவகை; காண்க: **மஞ்சாளி;** செவ்வள்ளி; நுணாப்பட்டை.
**மஞ்சாடிமரம்** – ஒரு மரவகை.
**மஞ்சாரி** – காண்க: **கஞ்சாங்கோரை.**
**மஞ்சாளி** – இரண்டு குன்றிமணி எடைகொண்ட மஞ்சாடி வித்து.
**மஞ்சி** – சிறுவரம்பு; படகு; சணல்நார்; காண்க: **சணல்**; குறுமாடி; மூடுபனி; சுங்கம்வாங்கி; புல்வகை.
**மஞ்சிகம்** – பெட்டி; தாளிக்கொடி.
**மஞ்சிகன்** – நாவிதன்.
**மஞ்சிகை** – பெட்டி; கொட்டாரம்; தொம்பை; தாளிக்கொடி; கையாந்தகரை; காதணிவகை.
**மஞ்சிட்டி** – ஒரு நீர்ப்பூடுவகை.
**மஞ்சிபலை** – வாழை.
**மஞ்சிமம்** – அழகு.
**மஞ்சிரம்** – காலாழி.
**மஞ்சில்** – முதுவரப்பு வழி; பாதையில் தங்கிச் செல்லும் இடம்.
**மஞ்சிலிக்கான்** – திருநீற்றுப்பச்சை.
**மஞ்சிலை** – செங்கல்.
**மஞ்சிவிரட்டு** – காண்க: **சல்லிக்கட்டு.**
**மஞ்சிறு** – காண்க: **கையாந்தகரை.**
**மஞ்சீரம்** – காற்சிலம்பு.
**மஞ்சு** – அழகு; அணிகலன்; மேகம்; வெண் மேகம்; பனி; மூடுபனி; யானையின் முதுகு; களஞ்சியம்; கட்டில்; குறுமாடியின் அடைப்பு; வீட்டு முகடு; இளமை; வலிமை.

**மஞ்சுகம்** – கொக்குவகை.
**மஞ்சுளம்** – அழகு; மிருது.
**மஞ்சூடை** – பெரிய கூடை; பெட்டி.
**மஞ்சூர்நகல்** – சரிபார்த்து ஒப்புக்கொண்ட படி.
**மஞ்சூரம்** – கடலை.
**மஞ்ஞை** – மயில்.
**மஞ்ஞையீர்க்கு** – மயிலிறகு.
**மஞ்ஞையூர்தி** – மயில் ஊர்தியனாகிய முருகக் கடவுள்.
**மட்கலம்** – மட்பாண்டம்.
**மட்குகை** – மண்குகை; மழுங்குதல்.
**மட்குதல்** – ஒளிமங்குதல்; வலிகுன்றுதல்; மயங்குதல்; அழுக்கடைதல்; அழிதல்.
**மட்சாந்து** – சுவர்கட்ட உதவும் குழைத்த மண் சேறு.
**மட்சுவர்** – மண்ணாலாகிய சுவர்.
**மட்டக்கோல்** – சமனறியும் தச்சுக்கருவி; கொத்து வேலைக் கருவிகளுள் ஒன்று.
**மட்டங்கட்டுதல்** – தளம் முதலியவற்றின் ஏற்றத் தாழ்வைச் சமனாக்குதல்; தராசின் தட்டு களைத் தடைப்பொருளிட்டுச் சமனாக்குதல்.
**மட்டச்சுவர்** – சிறுசுவர்.
**மட்டஞ்செய்தல்** – சமனாக்குதல்; செவ்விதாகச் செய்தல்.
**மட்டத்துருத்தி** – நீர் முதலியன வீசுங் கருவிவகை; கம்மக்கருவிவகை; நறுமணம் புகைக்கும் கலம்.
**மட்டந்தட்டுதல்** – சமனாக்குதல்; செருக்கடக்கு தல்.
**மட்டப்பலகை** – சமனறியுந் தச்சுக்கருவி; மணி யாசிப்பலகை; வயலில் மண்கொண்டு செல்லும் தட்டுப்பலகை; சமனிலை காட்டுங் கொத்துக் கருவி; உயர்வு தாழ்வுகளைக் காட்ட உதவும் அளவுகோடிட்ட பலகை.
**மட்டப்பொன்** – மாற்றுக் குறைவான பொன்.
**மட்டம்** – அளவு; சமனிலை; அளவுகோல்; எல்லை; எதிர்பார்ப்பு; ஒப்பு; சிறுமை; தாழ்வு; மிதம்; செட்டு; மையநிலை; சிறுகுதிரை; ஆண் யானைக்குட்டி; வாழை, கரும்பு முதலிய வற்றின் கன்று; பொன்மணியின் உறுப்பு; ஒரே உயரமுள்ள நிலை; சமவெண்; மூன்று ஒத்துடைய தாளம்; குறைவு; கேடகம்; கள்.
**மட்டம்பார்த்தல்** – பாதை, சுவர் முதலியவற்றின் ஒழுங்கைக் கவனித்தல்.
**மட்டம்பிடித்தல்** – சமனாக்குதல்; மதிப்பிடுதல்.
**மட்டம்போடுதல்** – வேண்டுமென்று வேலை முதலியவற்றிற்கு வாராதிருத்தல்.
**மட்டம்வெடித்தல்** – கிளைகப்புகள் உண்டாதல்.
**மட்டவேலை** – பரும்படியான வேலை.
**மட்டறிதல்** – அளவறிதல்; மதிப்பிடுதல்; பழகியறி தல்; ஒப்பிடுதல்; குறிப்பறிதல்.
**மட்டன்** – மூடன்.
**மட்டனம்** – பூசுகை.
**மட்டாய்** – மிதமாய்; வேண்டியவளவாக; ஏற்கத் தக்கதாக; செட்டாக.
**மட்டாயுதம்** – வாள்.
**மட்டி** – மூடன்; ஒழுங்கின்மை; பரும்படியாக அரைத்த சுண்ணச்சாந்து; பரும்படி; மக்கு; சிப்பிமீன்; ஆயுதம்; மண்டலிக்கை; வாழை வகை.
**மட்டிடுதல்** – காண்க: **மட்டறிதல்.**
**மட்டித்தல்** – அழித்தல்; முறித்தல்; பேசுதல்; மெழுகுதல்; பிசைதல்; உறுதிசெய்தல்; மண்டலித்தல்; வட்டமாக்குதல்.
**மட்டித்தனம்** – மூடத்தனம்.
**மட்டித்தையல்** – பரும்படியான தையல்.
**மட்டிப்பால்** – மரவகை; ஒரு மணப்பொருள் வகை.
**மட்டியம்** – எழுவகைத் தாளத்துள் ஒன்று.
**மட்டிலை** – காண்க: **பச்சிலை.**
**மட்டு** – அளவு; எல்லை; எதிர்பார்ப்பு மதிப்பு; மிதம்; சாமானியம்; நிலவளவுவகை; ஒப்பு; சிறுமை; தாழ்வு; குறைவு; தேன்; கள்; சாறு; காமபானம்; மதுவைக்குஞ் சாடி; மணம்.
**மட்டுக்கட்டுதல்** – நிதானித்தல்; இனம் அறிந்து கொள்ளுதல்; உணர்தல்; மதிப்பிடுதல்; அனு மானித்தல்; அளவுக்குட்படுத்தல்; தடுத்தல்; சரிநிலைக்கு வருதல்.
**மட்டுக்குமிஞ்சுதல்** – அளவுகடத்தல்.
**மட்டுக்குழி** – அளவாக வெட்டிய குழி.
**மட்டுக்கோணம்** – நேர்கோணம்.
**மட்டுக்கோல்** – அளவுகழி.
**மட்டுத்தப்பு** – நிதானமின்மை.
**மட்டுத்தப்புதல்** – இலக்குத் தவறுதல்; மரியாதை தவறுதல்; அளவுகடந்து செலவிடுதல்; மித மிஞ்சுதல்.
**மட்டுத்திட்டம்** – மதிப்பு; அளவு; நன்னடத்தை.
**மட்டுப்படுதல்** – அளக்கப்படுதல்; வரையறைப் படுதல்; உணரப்படுதல்; குறைதல்.
**மட்டும்** – வரை; மாத்திரம்.
**மட்டுமதிப்பு** – தகுதிக்கேற்ற மரியாதை; நன்னடை.
**மட்டுமதியம்** – சரியளவு; அளவு; மதிப்பு; நன் னடத்தை.
**மட்டுமரியாதை** – காண்க: **மட்டுமதிப்பு.**
**மட்டுமிஞ்சுதல்** – அளவுமீறுதல்.

**மட்டை** – தென்னை, பனை முதலியவற்றின் மடல்; தேங்காயின் மேல்தோடு; நாற்பத்தைந்து கவளிகொண்ட வெற்றிலைக் கட்டு; பந்தடிக்கும் மட்டை; பாம்பு; மொட்டை; அட்டை; உடற்குறை; மூடன்; பயனற்றவர்; பயனற்றது; ஒரு மட்டமான நெல்வகை; மாசுள்ள நெல்மணி; பிணம்.

**மட்டைத்தும்பு** – பனைநார்.

**மட்டையர்** – சமணர்.

**மட்பகை** – மட்கலமறுக்குங் கருவி; குயவன்.

**மட்பகைஞன்** – குயவன்.

**மட்பலகை** – சுடாத செங்கல்.

**மட்பாண்டம்** – குயக்கலம்.

**மட்பாம்பு** – காண்க: **ஆதிசேடன்.**

**மடக்கடி** – கோணல்; சமனின்மை; அபாயம்; தந்திரம்; வலைக்குட்படுத்துகை; சூதுமொழி.

**மடக்கம்** – வளைவு; பணிவு; மனவடக்கம்; வணக்கம்; நோய் திரும்புகை.

**மடக்கிடுதல்** – மேற்செல்லாது தடுத்துவைத்தல்; வாய்மடுத்தல்.

**மடக்கிளி** – இளங்கிளி; பெண்; ஒரு மீன்வகை.

**மடக்கு** – மூலைமுடுக்கு; வளைவு; திருப்பு; மடிப்பு; பிடிக்குள் மடக்கிவைக்கும் கத்தி; தடை; மாறிமாறி வருகை; தாறுமாறு; நிலவளவுவகை; பெரிய மண்ணகல்; செய்யுளில் சொல், சீர் முதலியன பொருள் வேறுபட்டு மீண்டும் மீண்டும் வருவதாகிய சொல்லணி வகை; ஒரு தடவையில் உட்கொள்ளக்கூடிய நீர்.

**மடக்குக்கட்டில்** – மடிக்கக் கூடிய கட்டில்.

**மடக்குதல்** – மடித்தல்; திருப்புதல்; மாறிமாறிச் செய்தல்; வென்று கீழ்ப்படுத்துதல்; வாயடக்குதல்; கால்நடை முதலியவற்றை ஒருசேர அடக்கிவைத்தல்; பண்டம் முதலியவற்றைத் தன்வயப்படுத்துதல்; ஒதுக்கிக்கட்டுதல்; தடுத்தல்; அழித்தல்; பணிவாக்குதல்; தானிய அரியறுத்தல்; உடற்கட்டுக் குலைத்தல்; மருந்து முதலியவற்றின் கடுமை முதலியவற்றை முறித்தல்; உடுத்துதல்; திரும்பத் திரும்ப வருதல்.

**மடக்குப்பிடிக்கத்தி** – பிடிக்குள் மடக்கிவைக்கும் கத்திவகை.

**மடக்குமடக்கெனல்** – நீர்குடிப்பதால் உண்டாகும் ஒலிக்குறிப்பு.

**மடக்குமேசை** – கால்களை மடக்கி வைத்தற்குரிய மேசை.

**மடக்குவரி** – இரண்டாம் விளைச்சலின்மேல் விதிக்கும் வரி; வரிமேல் வரி.

**மடக்கொடி** – பெண்.

**மடங்கக்கூறுதல்** – திரும்பக்கூறுதல்.

**மடங்கடித்தல்** – தோற்றோடச் செய்தல்; திரும்பச் செய்யும்படி பண்ணுதல்.

**மடங்கல்** – வளைகை; கோணம்; மீளுகை; மழுங்கிப்போகை; அடக்கம்; ஒடுக்கம்; முடிவு; இடி; வடவைத்தீ; ஊழிக்காலம்; யமன்; யமனேவல் செய்யுங் கூற்றம்; சிங்கம்; காண்க: **நரசிங்கம்**; யாளி; நோய்வகை; முற்றிய கதிர்; கோடைப்பயிர்; காண்க: **தாழை.**

**மடங்கலர்** – பகைவர்.

**மடங்கலூர்தி** – சிங்க ஊர்தியையுடைய துர்க்கை.

**மடங்கற்கொடியோன்** – சிங்கக் கொடியோனாகிய வீமன்.

**மடங்காநீர்** – வற்றாத நீரூற்று.

**மடங்கு** – அளவு; அடக்கம்; தண்டவரி; நோய்; இழைக்கயிறு; நிறைவகை.

**மடங்குதல்** – வளைதல்; முடங்குதல்; கோணுதல்; வளைந்துசெல்லுதல்; மீளுதல்; சொல் முதலியன திரும்ப வருதல்; திருகுறுதல்; குறைதல்; சுருங்குதல்; ஒடுங்குதல்; நெளிதல்; கீழ்ப்படுதல்; தாழ்தல்; செயலறுதல்; கடுமையடங்குதல்; நிறுத்தப்பெறுதல்; தடுக்கப்படுதல்; வாயடங்குதல்; சொத்து முதலியன ஒருவன்பால் அடைந்துவிடுதல்.

**மடத்தகை** – இளமைத்தன்மை.

**மடத்தனம்** – அறியாமை.

**மடந்தை** – பெண்; பதினான்கு முதல் பத்தொன்பது வயதுவரையுள்ள பெண்; பருவமாகாத பெண்; சேம்புவகை.

**மடந்தையாயிருத்தல்** – மகப்பெறும் பருவத்தினளாதல்.

**மடநடை** – மென்னடை.

**மடநோக்கு** – மருண்ட பார்வை.

**மடப்பம்** – பேதைமை; மென்மை; இணக்கம்; ஐந்நூறு ஊருக்குத் தலையூர்; அரண்மனையிற் பெண்; மருதநிலத்தூர்.

**மடப்பள்ளி, மடப்பளி** – காண்க: **மடைப்பள்ளி.**

**மடப்பற்று** – மடத்தைச் சார்ந்த சொத்து.

**மடப்புறம்** – மடத்துக்கு விடப்பட்ட இறையிலி நிலம்.

**மடம்** – அறியாமை; பொருண்மை அறியாது திரியக்கோடல்; பேதைமை; அழகு; மென்மை; இணக்கம்; முனிவர் வாழிடம்; சத்திரம்; சாவடி; கோயில்; இடம்; தேர்; பிரமசாரிகளும் துறவியரும் வாழும் இடம்.

**மடமடத்தல்** – ஒலித்தல்.

**மடமடெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; விரைவுக் குறிப்பு.

**மடமயில்** – அழகிய பெண்.

**மடமான்** – பெண்.

**மடமை** – பேதைமை.

**மடல்** – பனை முதலியவற்றின் ஏடு; தோண் மேலிடம்; கை; ஏற்றக்கழி; பனங்கருக்கு; காண்க: **மடன்மா**; உலாமடல்; பூவிதழ்; கிளை; சிறுவாய்க்கால்; கண்ணிமை; திருநீறும் சந்தனமும் வைக்குங் கலம்; சோளக்கதிர் முதலியவற்றின் மேலுறை; காதுமடல்; ஆயுத வலகு.

**மடலவிழ்தல்** – இதழ்விரிதல்.

**மடலி** – இளம்பனை.

**மடலூர்தல், மடலேறுதல்** – தலைவன் தான் காதலித்த தலைவியை அடைதல்வேண்டிப் பனைமடலால் ஆன குதிரையின்மீது ஏறுதல்.

**மடவரல்** – பெண்; மடப்பம்.

**மடவள்** – அறிவிலாள்.

**மடவளாகம்** – கோயிலைச் சூழ்ந்துள்ள தெரு.

**மடவன்** – அறிவிலான்.

**மடவாதல்** – மடப்பம் வருதல்.

**மடவாயம்** – மகளிர் விளையாட்டுக் கூட்டம்.

**மடவார்** – பெண்டிர்; மூடர்.

**மடவாள்** – பெண்.

**மடவியர்** – காண்க: **மடவார்**.

**மடவை** – கவைக்கால்; துடுப்பு; காண்க: **தணக்கு**; மீன்வகை.

**மடவைக்கெண்டை** – ஒரு மீன்வகை.

**மடவோர்** – காண்க: **மடவார்**.

**மடற்பனை** – கருக்குமட்டை விழாத ஆண்பனை.

**மடற்பாளை** – பூம்பாளை.

**மடன்** – அறியாமை; அறிவிலான்; கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை.

**மடன்மா** – காதலித்த தலைவியைப் பெறா விடத்துத் தலைவன் ஏறுதற்பொருட்டுப் பனங்கருக்காற் குதிரைபோல் செய்த ஊர்தி.

**மடா** – பாண்டவகை.

**மடாதிபத்தியம்** – கோயில் அல்லது மடத்தின் ஆளுகை.

**மடாரெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**மடாலயம்** – முனிவர் வாழுமிடம்; பிரமசாரிகளும் சந்நியாசிகளுமான ஆசாரியார் வாழும் இடம்.

**மடி** – மடங்குகை; வயிற்றுமடிப்பு; வயிறு; அரை; மடித்த தொடையின் மேற்பாகம்; ஆடை; தாள் முதலியவற்றின் மடிப்பு; பை போன்ற முந்திச்சுருக்கு; வலைவகை; பசு முதலியவற்றின் முலையிடம்; அடக்கம்; தனிமை; சோம்பல்; சோம்பலுடையவன்; நோய்; மீன்வலையோடு சேர்ந்த பெரும்பை; கேடு; பகை; பொய்; தீநாற்றம்; ஆடைவகை; தீட்டில்லா நிலை; இரட்டைக் கட்டுமரம்; சோறு; தாழை; தாழைவிழுது; மடங்கு.

**மடிகட்டுதல்** – ஆசார உடை அணிதல்; ஆடையை உலர்த்தல்; மணப்பெண்ணின் மடியில் வெற்றிலை பாக்கு பழங்கட்டுதல்; அதிகமாக எடுத்துக்கொள்ளுதல்.

**மடிச்சீலை** – ஆசார உடை; கோவணம்; மடியிற் கட்டிக்கொள்ளும் பணப்பை.

**மடிசஞ்சி** – புல் அல்லது கம்பளியாலான பை.

**மடித்தல்** – மடக்குதல்; வளைத்தல்; பேச்சில் மடங்க வடித்தல்; அழித்தல்; உழக்குதல்.

**மடிதடவுதல்** – பிறன்பொருளைக் கவர்தல்; ஏதேனும் மறைத்து வைத்திருப்பதைப் பார்க்க மடியை ஆராய்தல்.

**மடிதல்** – மடங்குதல்; நுனிமழுங்குதல்; தலைசாய்தல்; வீழ்தல்; வாடுதல்; சுருளுதல்; முயற்சி அறுதல்; தூங்குதல்; சுருங்குதல்; ஊக்கங்குறைதல்; அழிதல்; சாதல்; தானியங் கேடுறுதல்; திரண்டுசெல்லுதல்; கொப்புளம் உடைதல்; மறத்தல்.

**மடிதாறு** – உடையின் பின்கச்சம்.

**மடிப்பணம்** – கைப்பணம்.

**மடிப்பிச்சை** – மடிச்சீலையில் வாங்கும் பிச்சை; தாழ்மையாகக் கேட்கும் இரத்தற்பொருள்.

**மடிப்பிளை(னை)** – வங்கமணல்.

**மடிப்பு** – ஒன்றைப் பல பகுதிகளாக மடித்திருப்பது; மடித்துத் தைக்கும் தையல்; மடிப்படையாளம்; மோசம்; தொந்திமடிப்பு; இருபோகம்.

**மடிப்புக்காரன்** – வஞ்சகன்.

**மடிப்புடைவை** – மடித்தலுடைய ஆடை; மகளிரின் ஆசாரச் சீலை.

**மடிப்புப்பேச்சு** – கவர்பொருள் படும் சொல்.

**மடிப்பை** – அடிப்பை; காண்க; **மடிசஞ்சி**; அரை மடியிற் கட்டிய பை.

**மடிபிசைதல்** – பால் சுரக்கும்படியாகப் பசுவின் மடியைத் தடவுதல்.

**மடிபிடி** – மடிச்சீலையிற் பிடிக்கும் பிடி; கட்டாயப்படுத்தல்; சண்டை.

**மடிபிடித்தல்** – கட்டாயப்படுத்தல்; வழக்காடுதல்; வலுவிற் சண்டைக்கு அழைத்தல்.

**மடிமாங்காய்போடுதல், மடிமாங்காயிடுதல்** – பொய்க்குற்றஞ் சாட்டுதல்; இலஞ்சங் கொடுத்தல்.

**மடிமை** – சோம்பல்.

**மடியில்** – கூடாரம்.

**மடியிறக்குதல்** – ஈனுதற்கு முன் பசுவின் மடி பருத்தல்.

**மடியுறை** – விம்மிதம்.

**மடியேந்துதல், மடியேற்றல்** – இரத்தல்.

**மடிவிடுதல்** – காண்க: **மடியிறக்குதல்.**

**மடிவித்தல்** – கொல்லுதல்; முனைமழுங்கச் செய்தல்.

**மடிவு** – சோம்பல்; ஊக்கக்குறைவு; அழிவு; சாவு.

**மடிவை** – தழை.

**மடு** – நீர்நிலை; குளம்; ஆற்றிடைப் பள்ளம்.

**மடுத்தல்** – உண்ணுதல்; நிறைத்தல்; சேர்த்தல்; அடக்கிக்கொள்ளுதல்; ஊட்டுதல்; தீமூட்டுதல்; அமிழ்த்துதல்; குத்துதல்; மோசம் பண்ணுதல்; விழுங்குதல்; மயக்குதல்; செலுத்துதல்; இடையூறு எதிர்ப்படுதல்.

**மடுப்படுத்தல்** – ஆழ்ந்திருத்தல்.

**மடுப்பு** – அடைவு; நிறைப்பு; உண்கை; மோசஞ் செய்கை; ஏமாற்றம்; கேடு; காண்க: **மடிப்பு.**

**மடுவங்கரை** – குளக்கரை.

**மடை** – சமையல்வேலை; சோறு; தெய்வபலி; மதகு; தொளை; மதகுபலகை; நீரணை; ஓடை; அணிகலக் கடைப்பூட்டு; பழைய நாணயவகை; ஆயுதமூட்டு; ஆணி; பகுதி.

**மடைக்கடல்** – ஆறு கடலொடு கலக்கும் இடம்.

**மடைக்கலம்** – சமையற்பாண்டம்.

**மடைகோலுதல்** – வயலுக்கு நீர்பாய்ச்சுதல்.

**மடைத்தலை** –மதகு.

**மடைத்தனம்** – காண்க: **மடத்தனம்.**

**மடைத்தொழில்** – சமையல்வேலை.

**மடைத்தொழிலோன்** – சமையற்காரன்.

**மடைநூல்** – அட்டிற்கலை.

**மடைப்பள்ளி** – கோயில் முதலியவற்றின் அடுக்களை; ஒரு சாதி; அரண்மனைச் சரக்கறைத் தலைவன்.

**மடைபரவுதல்** – அலங்கார நிவேதனஞ் செய்தல்.

**மடைமாறி** – புரட்டுக்காரன்.

**மடைமுகம்** – மதகு; காண்க: **மடைக்கடல்.**

**மடையடைத்தல்** – நீர்பாயுங் காலை மூடுதல்; தீர்மானமான விடை சொல்லுதல்.

**மடையன்** – சமையற்காரன்; நீர்மடை திறப்போன்; அறிவிலான்.

**மடையான்** – நீர்மடை திறப்போன்; ஒரு பறவை வகை; உள்ளான்வகை.

**மண்** – நிலவுலகம்; நீராடுங்கால் பூசிக்கொள்ளும் பத்துவகை மண்; பூமி; புழுதி; காண்க: **திருமண்;** தரை; அணு; சுண்ணச்சாந்து; மத்தளம் முதலியவற்றில் பூசும் மார்ச்சனை; மனை; வயல்; கழுவுகை; ஒப்பனை; மாட்சிமை.

**மண்கட்டுதல்** – புற்றுக்கட்டுதல்; உலோகங்களை உருக்குவதற்காகக் கருக்கட்டுதல்.

**மண்கணை** – குடமுழவுவகை; முழவுப்பொது.

**மண்கல்** – செங்கல்; வெள்ளைச் சுக்கான்கல்.

**மண்கிடங்கு, மண்கிணறு** – மண்ணெடுத்த குழி; கல்லறை; களிமண்ணில் தோண்டிய கட்டப்படாத கிணறு; மணற்பாங்கில் தோண்டப்பட்ட கிணறு.

**மண்குகை** – நிலவறை; குளவிக்குகை, மண்ணாலான குகை.

**மண்குத்துநோவு** – மகப்பேற்றுக்குப் பின் உண்டாகும் நோவு.

**மண்கும்பம்** – மண்ணாலான மேடு.

**மண்குளித்தல்** – புழுதியாடுதல்.

**மண்கூட்டாளன்** – குயவன்.

**மண்கொட்டு** – காண்க: **மண்வெட்டி.**

**மண்கொத்தளம்** – மண்ணாற் செய்த மதிலுறுப்பு.

**மண்சாந்து** – குழைத்த சேறு.

**மண்சிலை** – கற்காவி.

**மண்சீலை** – மருந்தைப் புடமிடக் கலத்தின்மேல் சுற்றும் மண்ணூட்டிய துணி.

**மண்செய்கை** – காண்க: **மண்வேலை.**

**மண்சேய்** – நிலமகள் மகனாகிய செவ்வாய்.

**மண்டக்கம்** – முத்துக்குளிப்பவர்களை இழுக்குங் கயிறு.

**மண்டக்கன், மண்டக்காள்** – முத்துக்குளிப்பவனைக் கயிறு கொண்டு மேலிழுப்பவன்.

**மண்டக்கு** – காண்க: **மண்டக்கம்.**

**மண்டகப்படி** – கேலி; அடி; காண்க: **மண்டபச் செலவு.**

**மண்டகம்** – சருக்கரை போடாத கோதுமைப்பூரி; அலங்காரப் பந்தல்; திருநாளில் சுவாமி தங்குவதற்காகக் கட்டப்பட்ட கற்கட்டடம்; சாவடி.

**மண்டபச்செலவு** – உற்சவமூர்த்தி மண்டபத்தில் எழுந்தருளுவதற்காகச் செய்யும் செலவு.

**மண்டபப்படி** – அலங்கார நைவேத்தியம்; திருவிழாவில் சுவாமி தங்குமிடம்; திருநாட் சிறப்பு; காண்க: **மண்டபச்செலவு.**

**மண்டபம்** – திருநாளில் சுவாமி தங்குவதற்காகக் கட்டப்பட்ட கற்கட்டடம்; மந்திரச் சக்கரம்; அலங்காரப் பந்தல்; சாவடி.

**மண்டபவெழினி** – கூடாரம்.

**மண்டம்** – நீர்மப்பொருளைக் காய்ச்சும்போது அல்லது புளிப்புச் சேர்க்கும்பொழுது மேலெழும் ஏடு; தயிரேடு; ஆமணக்கஞ்செடி.

**மண்டர்** – படைவீரர்.

**மண்டலசெயம்** – திக்குவிசயம்.

**மண்டலநிலை** – வில்லோர் நிலையுள் ஒன்று.

**மண்டலம்** – நாடு; வட்டம்; பூமி; வட்டவடிவம்; சூரியவீதி; நாட்டுப்பகுதி; பாம்பு முதலியவற்றின் சுற்று; வட்டவடிவமான படைவகுப்புவகை; நாட்டின் பெரும்பகுதி; ஊர்; மந்திரச்சக்கரம்; தேசிக்கூத்தின்வகை; 40, 41 அல்லது 45 நாள்கொண்ட காலவளவு; குதிரை நடைவகை; கூட்டம்; பரிவேடம்; அபிநயவகை; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; அடையாளம்; வில்லோர் நிலையுள் ஒன்று.

**மண்டலம்போடுதல்** – பாம்பு முதலியன வட்டமாகச் சுற்றியிருத்தல்; சுற்றிச்சுற்றி வட்டமிடுதல்; சக்கரம் முதலியன வரைதல்; காண்க: **மண்டலமிடுதல்.**

**மண்டலமழை** – எங்கும் பொழியும் மழை.

**மண்டலமாக்கள்** – அரசர்; காண்க: **மண்டிலமாக்கள்.**

**மண்டலமிடுதல்** – காண்க: **மண்டலம்போடுதல்;** நீர் தெளித்துத் தடவி இடம் பண்ணுதல்; ஒரு மண்டலகாலம் வழிபடுதல்; பரிவேடங்கொள்ளுதல்.

**மண்டலவந்தாதி** – ஈற்றடியிறுதியும் முதலடி முதலும் ஒன்றாகவரும் அந்தாதிவகை.

**மண்டலவியூகம்** – வட்டமாக அமைக்கும் படைவகுப்பு.

**மண்டலாகாரம்** – வட்டவடிவம்.

**மண்டலி** – ஒரு பாம்புவகை; காட்டுப்பூனை; ஒரு எலிவகை; நாய்; கூட்டம்; பூமி.

**மண்டலிகன்** – காண்க: **மண்டலீகன்.**

**மண்டலிசிதம்** – கடுகு; தேன்; வியர்வை.

**மண்டலித்தல்** – காலை வளைத்து வட்டமாக்குதல்; காண்க: **மண்டலம்போடுதல்;** வளைத்தல்; இசைத்தல்.

**மண்டலீகன்** – அரசன்; நாட்டின் பகுதியை ஆளும் ஆதிகாரி.

**மண்டலேச்சுவரன், மண்டலேசன், மண்டலேசுரன்** – அரசன்; சிவதீட்சையில் மத்திய கும்பத்தின் கீழிடப்படும் எந்திரம்.

**மண்டா** – மீன், பன்றி முதலியவற்றைக் குத்த உதவும் ஈட்டிவகை.

**மண்டி** – காலை முடக்கி முழந்தாளால் நிற்கை; வண்டல்; தானியம் மிகுதியாக விற்கும் இடம்; மொத்தவாணிகம் செய்யும் பண்டசாலை.

**மண்டிகை** – அப்பவருக்கம்.

**மண்டிபோடுதல், மண்டியிடுதல்** – முழங்கால் முட்டிமேல் நிற்றல்.

**மண்டிரவல்** – இரவலாக வாங்கிய நகையை வறுமையால் அடகுவைக்கை.

**மண்டிலக்கடவுள்** – சந்திரன்.

**மண்டிலநிலை** – தேசிக்கூத்தின்வகை; வில்லோர் நிலையுள் ஒன்று.

**மண்டிலம்** – வட்டம்; வட்டவடிவம்; வட்டமாயோடுகை; குதிரை; குதிரைநடைவகை; பூமி; சூரியன்; சந்திரன்; பரிவேடம்; வானம்; கண்ணாடி; நாட்டின் பெரும்பகுதி; ஊர்; தேசிக்கூத்தின்வகை.

**மண்டிலமாக்கள்** – நாட்டின் பகுதியை ஆளும் அதிகாரிகள்.

**மண்டிலயாப்பு** – நாற்சீரடிச் செய்யுள்.

**மண்டிவியாபாரம்** – மொத்த வாணிகம்.

**மண்டு** – செறிவு; மிகுதி; மூடன்; பொதுவிடம்.

**மண்டுகால்** – முட்டுக்கால்.

**மண்டுதல்** – நெருங்குதல்; விரைந்து செல்லுதல்; திரளுதல்; கடுமையாதல்; மிக ஒளிவிடுதல்; அதிகமாதல்; ஈடுபடுதல்; செலுத்துதல்; நெருங்கித் தாக்குதல்; நிரம்ப உண்ணுதல்; சேரவிணைத்தல்; மூண்டு பொருதல்; கவர்தல்; தாங்குதல்.

**மண்டூகம்** – தவளை; மூடன்; காண்க: **மண்டூரம்.**

**மண்டூகை** – விலைமகள்.

**மண்டூரசிந்தூரம்** – இரும்புக்கிட்டத்தாற் செய்த செந்நிறப் பொடி.

**மண்டூரம்** – இரும்புக்கிட்டம்.

**மண்டை** – தலை; தலையோடு; தென்னை முதலியவற்றின் தலைப்பக்கம்; இரப்போர் கலம்; கலம்; ஓரளவை; விலைமகள்.

**மண்டைக்கண்** – குழிந்த கண்.

**மண்டைக்கரப்பான்** – தலையில் வரும் கரப்பான் நோய்வகை.

**மண்டைக்கருவம்** – மிகுசெருக்கு.

**மண்டைக்கனம்** – நீர்க்கோவையால் தலை கனத்திருக்கை; காண்க: **மண்டைக்கருவம்.**

**மண்டைக்குடைச்சல்** – தலைநோவுவகை.

**மண்டைச்சூலை** – ஒரு நோய்வகை.

**மண்டைப்பாணர்** – உண்கலம் ஏந்தி இரக்கும் பாணர்வகையார்.

**மண்டைப்பீனசம்** – பீனசநோய்வகை.

**மண்டையோடு** – தலையோடு, கபாலம்.

**மண்ணகம்** – நிலவுலகம்.

**மண்ணகமடந்தை** – நிலமகள்.

**மண்ணங்கட்டி** – காண்க: **மண்ணாங்கட்டி.**

**மண்ணசை** – காண்க: **மண்ணாசை.**

**மண்ணடித்தல்** – மண்கொணர்ந்து கொட்டுதல்; மண்மேடிடுதல்; சீர்கொடுத்தல்.

**மண்ணம்** – நீற்றிய சுண்ணாம்பு.

**மண்ணரிநார்** – குயவன் வனைந்த கலங்களை அரியுங் கயிறு.

**மண்ணரிவாளன்** – குயவன்.

**மண்ணரைத்தல்** – சோம்பியிருத்தல்.

**மண்ணவர்** – மனிதர்.

**மண்ணறை** – மண்பூச்சு.

**மண்ணன்** – மந்தன்; சின்னம்மை நோய்வகை.
**மண்ணாங்கட்டி** – மண்கட்டி.
**மண்ணாசை** – நிலத்தை அடைவதிலுள்ள பற்று.
**மண்ணாந்தை** – அறிவிலி.
**மண்ணி** – மந்தன்; ஒரு மீன்வகை; சோழ நாட்டில் இருந்த ஓர் ஆறு.
**மண்ணிடுதல்** – மண்மேடிடுதல்; மண்பூசுதல்; கால் கழுவுகையில் மண்ணால் தூய்மை செய்தல்.
**மண்ணில்(ல)வேந்தன்** – அரசமரம்; முடிதும்பை; வெற்றிலை; பூவரசமரம்.
**மண்ணிலம்** – பூமி.
**மண்ணினாதம், மண்ணினாதனம்** – உவர்மண்.
**மண்ணீட்டாளர்** – சிற்பாசிரியர்; குயவர்; சுதையால் பாவை முதலியன செய்வோர்.
**மண்ணீடு** – திண்ணை; வேயாமாடம்; சாந்தினால் செய்த பாவைவடிவம்; மாடப்புரை.
**மண்ணீர்** – கழுவ உதவும் நீர்.
**மண்ணீர்மை** – உலகவியல்பு.
**மண்ணீரல்** – இடவிலாவை ஒட்டியுள்ள ஈரல்.
**மண்ணுடையான்** – அரசன்; குயவன்; நிலவுரிமைக்காரன்.
**மண்ணுண்ணுதல்** – மண்ணைப் புசித்தல்; தோற்றுவிழுதல்.
**மண்ணுணி** – காண்க: **மண்ணுளிப்பாம்பு**; திருமால்; ஒன்றுக்கும் உதவாதவன்.
**மண்ணுதல்** – நீராடுதல்; மூழ்குதல்; கழுவுதல்; பூசுதல்; செய்தல்; அலங்கரித்தல்; செப்பமிடுதல்.
**மண்ணுநீர்** – மஞ்சனநீர்; காண்க: **மண்ணீர்**.
**மண்ணுப்பு** – உப்புவகை.
**மண்ணுப்பெய்தல்** – குளிப்பாட்டுதல்.
**மண்ணுமங்கலம்** – அரசன் முடிபுனைந்த காலந் தொடங்கி ஆண்டுதோறும் முடிபுனைந்து நன்னீராடுதலைக் கூறும் புறத்துறை.
**மண்ணுலகு** – நிலவுலகம்.
**மண்ணுள்ளார்** – காண்க: **மண்ணோர்**.
**மண்ணுளிப்பாம்பு** – ஒரு பாம்புவகை; மண்ணில் உண்டாகும் புழுவகை.
**மண்ணுறுத்தல்** – அலங்கரித்தல்; கழுவுதல்; மஞ்சனமாட்டுதல்.
**மண்ணெடுத்தல்** – குழியினின்று மண்ணை நீக்குதல்; மண்ணைப் பறித்துக் கிளப்புதல்; வயலை வெட்டித் திருத்துதல்; கோட்டுமண் கொள்ளுதல்.
**மண்ணெண்ணெய்** – தைலவகை; கன்னெய், பூமியிலிருந்து எடுப்பதும் எரிப்பதற்கு உதவுவதுமான எண்ணெய்வகை.
**மண்ணை** – பேய்; இளமை; மூடன்; கூர்மழுக்கம்; காலின் கெண்டைச்சதை; கொடிவகை.
**மண்ணொட்டர்** – மண்சுமப்போர்; மண்வேலை செய்வோர்.
**மண்ணோர்** – மனிதர்.
**மண்தோண்டி** – மண் சேறுகளைத் தோண்டி எடுக்கும் இயந்திரம்.
**மண்பாக்கு** – ஒரு மட்டமான பாக்குவகை.
**மண்பாடு** – பூமியின் இயல்பு.
**மண்பாண்டம்** – மண்ணாலான பாண்டம்.
**மண்பார்** – கிணறு வெட்டுகையில் பாறையின் கீழ்க் காணப்படும் கெட்டிமண்.
**மண்புரை** – மண் பொதிந்த வீடு.
**மண்பூசுதல்** – சுவர் முதலியவற்றிற்கு மண்சாந்து தீற்றுதல்.
**மண்பொதுத்தந்தை** – பிரமன்.
**மண்பொறி** – மண்ணிட்டு அதன்மேல் பொறித்த இலாஞ்சனை.
**மண்மக்கள்** – காண்க: **மண்மகள்புதல்வர்**.
**மண்மகள்** – நிலமகள்.
**மண்மகள்புதல்வர்** – வேளாளர், உழவர், நான்காம் வகுப்பார்.
**மண்மகன்** – குயவன்.
**மண்மடந்தை** – நிலமடந்தை; பூலோகத்துப் பெண்.
**மண்மலி** – காண்க: **மருக்கொழுந்து**.
**மண்மழை, மண்மாரி** – மண்ணாகப் பெய்யும் மழை; வறுமை.
**மண்மூசை** – மருந்து செய்யவும் உலோகம் உருக்கவும் உதவும் மண்ணாலான குகை.
**மண்மேடிடுதல்** – ஆறு, வயல் முதலியன மணலால் தூர்ந்து மேடாய்ப்போதல்.
**மண்மேடு** – மண்ணாலான குன்று.
**மண்வாரி** – பெருங்காற்று.
**மண்வினைமாக்கள்** – குயவர்.
**மண்வெட்டி** – மண்ணை வெட்டி எடுக்கும் கருவி.
**மண்வேலை** – மண்ணால் கரை முதலியன இடுந் தொழில்.
**மணக்கால்** – கலியாணப் பந்தலிடுவதற்கு முதலில் நடும் முகூர்த்தக்கால்.
**மணக்கோல்** – மன்மதனின் மலரம்பு.
**மணக்கோலம்** – கலியாணத்துக்குரிய அலங்காரம்.
**மணங்கட்டுதல்** – நறுமணமூட்டுதல்.
**மணங்கல்** – பெரும்பானை.
**மணங்கு** – ஆட்டுக்குட்டி; நிறைவகை; அளவு; காண்க: இருவாட்சி.
**மணங்குலைதல்** – நிலைகெடுதல்.
**மணத்தல்** – கமழ்தல்; விளங்குதல்; மணம்புரிதல்; புணர்தல்; கூடியிருத்தல்; அணைத்தல்; கலத்தல்; வந்துகூடுதல்; நேர்தல்; பொருந்துதல்.

**மணத்தூண்** – திருவரங்கத்தில் அரங்கநாதர் சன்னதியின் உட்புறத்திலுள்ள இரட்டைத் தூண்கள்.

**மணந்தட்டுதல்** – பரிமளித்தல்.

**மணப்பந்தல்** – கலியாணத்தில் இடப்படும் அலங் காரப் பந்தல்.

**மணப்பு** – நறுமணம்; சாரம்; புணர்ச்சி; செல்வ முடைமை.

**மணப்பூச்சு** – உடம்பில் பூசும் சந்தனக்குழம்பு முதலியன.

**மணப்பெண்** – காண்க: **மணமகள்.**

**மணப்பொருத்தம்** – இராசி, இராசித் தலைவர், இரச்சு, கணம், திரிதீர்க்கம், தினம், மாகேந் திரம், யோனி, வசியம், வேதை என்னும் பத்துக் கலியாணப் பொருத்தங்கள்; திருமண உடன்படிக்கை.

**மணம்** – கூடுதல்; நறுநாற்றம்; மணப்பொருள்; மதிப்பு; நன்னிலை; எண்வகை மணம்.

**மணம்பிடித்தல்** – மோப்பம்பிடித்தல்; தீநாற்றம் வீசுதல்; நாற்றத்தால் இழுக்கப்படுதல்.

**மணம்புரிதல்** – கலியாணம் செய்தல்.

**மணமகள்** – கலியாணப் பெண்.

**மணமகன்** – கலியாண மாப்பிள்ளை; கணவன்.

**மணமண்டபம்** – திருமணக்கூடம்.

**மணமாலை** – கலியாணத்தில் மணமக்கள் அணியும் பூமாலை.

**மணமுரசு** – விழாமுரசு.

**மணமுழவு** – மருதநிலப் பறை.

**மணல்** – பொடியாயுள்ள பிதிர்மண்; மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்று.

**மணல்வாரி** – காண்க: **மண்தோண்டி;** மணல் நீக்குங் கருவி; நெல்வகை; புல்வகை; சின்னம்மைவகை.

**மணலி** – மணலிக்கீரை; மருக்கொழுந்து; ஒரு நெல்வகை; ஒரு பாம்புவகை; ஓர் ஊர்.

**மணலேறு** – முத்துக்குற்றவகை.

**மணவணி** – காண்க: **மணக்கோலம்.**

**மணவறை** – திருமணமண்டபம்; பள்ளியறை.

**மணவறைத்தோழன்** – மாப்பிள்ளைத் தோழன்.

**மணவாட்டி** – மணமகள்; மனைவி.

**மணவாளன்** – மணமகன்; தலைவன்; கணவன்.

**மணவினை** – திருமணச்சடங்கு.

**மணவை** – அடுப்பு.

**மணவோலை** – திருமண அழைப்பிதழ்.

**மணற்கால்** – மணற்பாங்கான நிலம்.

**மணற்குன்று** – மணலின் திட்டை.

**மணற்கூகை** – தவளை.

**மணற்கோட்டை, மணற்கோடு** – மணலாலான கோட்டை; வெள்ளத்தைத் தடுக்க இடும் மணற்குவியல்.

**மணற்சோறு** – குழந்தைகள் விளையாட்டில் சோறாகக் கருதும் மணல்.

**மணற்பாக்கு** – கெடாமலிருப்பதற்காக மணலில் புதைத்து வைக்கும் பாக்கு.

**மணாட்டு** – மணமகளாகும் நிலை.

**மணாட்டுப்பெண்** – மருமகள்.

**மணாளன்** – காண்க: **மணவாளன்.**

**மணி** – கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வயிரம் என்னும் ஒன்பதுவகை இரத்தினங்கள்; நீலமணி; காண்க: **சிந்தாமணி;** பளிங்கு; கண்மணி; உருத்திராக்கம்; தாமரைமணி முதலியன; தானியமணி; நஞ்சுநீக்குங் கல்; சந்திரகாந்தக்கல்; மணிமாலை; அணிகலன்; உருண்டை வடிவமாயுள்ள பொருள்; மீன் வலையின் முடிச்சு; ஆட்டினதர்; வீடுபெற்ற ஆன்மா; அழகு; சூரியன்; ஒளி; நன்மை; சிறந்தது; கருமை; கண்டை; அறுபது நிமிட முள்ள நேரம்; ஒன்பது; ஆண்குறியின் நுனி; பெண்குறியின் ஓர் உள்ளுறுப்பு.

**மணிக்கட்டு** – கைத்தலத்திற்கும் முன்கைக்கும் உள்ள மூட்டுவாய்.

**மணிக்கணக்கு** – கடிகாரப்படியுள்ள ஒழுங்கு.

**மணிக்கயிறு** – கண்டாமணியை இழுத்தடிக்குங் கயிறு; முடிச்சுள்ள சாட்டைக்கயிறு; பாசக் கயிறு; முத்துவடம்; முறுக்கு நன்கமைந்த கயிறு.

**மணிக்காடை** – சிறு காடைவகை.

**மணிக்காம்பு** – இரத்தினம் இழைத்துச் செய்த கால்; காண்க: **தக்காளி.**

**மணிக்காலறிஞர்** – இரத்தினங்களின் குணாகுணங் களையறிந்த வணிகர்.

**மணிக்காற்பள்ளி** – அரசர்க்குரிய சிவிகைவகை.

**மணிக்குடல்** – சிறுகுடல்.

**மணிக்கூடு** – காண்க: **மணிக்கூண்டு;** கடிகாரம்; கடிகாரக்கூடு; நாழிகைவட்டில்; சாயப்பூடு வகை.

**மணிக்கூண்டு** – கடிகாரம் அமைந்த கோபுரம்; மணிதூங்குமாடம்.

**மணிக்கை** – மணிக்கட்டு.

**மணிக்கோவை** – இரத்தினமாலை.

**மணிகண்டன்** – நீலகண்டத்தையுடைய சிவன்.

**மணிகம்** – நீர்க்குடம்.

**மணிகர்ணிகை, மணிகன்றி(னி)கை,** – காசியிலுள்ள ஒரு தீர்த்தம்.

**மணிகாசம்** – கண்ணோயுள் ஒன்று.

**மணிகாரகன்** – இரத்தினவேலை செய்வோன்.

**மணிச்சட்டம்** – குழந்தைகளுக்கு எண் அறிவிக்க உதவும் மணிகள் கோத்த சட்டம்.

**மணிச்சட்டி** – விளிம்பில் மணிவடிவாய் அமைந்த மண்சட்டி.

**மணிச்சிகை** – குன்றிமணி.

**மணிச்செப்பு** – மணியிழைத்த செப்பு.

**மணித்தக்காளி** – ஒரு செடிவகை, மணத்தக்காளி.

**மணிதனு** – வானவில்.

**மணிநா** – மணியின் நாக்கு.

**மணிநிறம்** – கருநீலநிறம்.

**மணிநிறவண்ணன்** – திருமால்.

**மணிநீர்** – மணிபோலும் நிறத்தினையுடைய நீர்; இரத்தினத்திலுள்ள நீர்.

**மணிப்பாரி** – இராக்காவலர்களின் பாட்டுவகை; அரண்மனைவாயிலில் மணியடித்துக் காவல் புரியும் வேலை.

**மணிப்பிடிப்பு** – நெற்கதிரில் தானியமணி தோன்றுகை.

**மணிப்பிரவாளம்** – மணியும் பவளமும் கலந்தமை போன்று வடமொழியும் தென்மொழியும் கலந்த நடை.

**மணிப்புறா** – ஒரு புறாவகை.

**மணிபந்தம்,** **மணிபந்து** – காண்க: **மணிக்கட்டு.**

**மணிபிடித்தல்** – கதிரில் தானியம் பிடித்தல்.

**மணிபூரகம்,** **மணிபூரம்** – ஆறு நிலைக்களங்களுள் ஒன்றாகிய நாபித்தானம்.

**மணிமகுடம்** – இரத்தினமுடி; ஏட்டுச் சுவடியைக் கட்டுங் கயிற்றின் தலைமுடிச்சு.

**மணிமண்டபம்** – காண்க: **மணிக்கூண்டு**; சபைக் கூடம்.

**மணிமந்தம்** – இந்துப்பு.

**மணிமலர்** – குவளை.

**மணிமலை**– மேருமலை.

**மணிமாடம்** – சிறந்த மாளிகை; திருநறையூர்த் திருமால்கோயில்.

**மணிமாலை** – முத்துவடம்; ஒரு நூல்வகை; திருமகள்; திருவாசியாகிய பிரபை; காதலியின் உடலில் காதலனாற் செய்யப்பட்ட பற்குறி.

**மணிமாளிகை** – காண்க: **மணிமண்டபம்.**

**மணிமான்** – கதிரவன்.

**மணிமிடைபவளம்** – மணியும் பவளமுங் கலந்த அணிகலன்; அகநானூற்றின் இரண்டாம் பிரிவு.

**மணிமுடி** – இரத்தினகிரீடம்; இறுகித் திரண்ட முடிச்சு.

**மணிமேகலாதெய்வம்** – இந்திரன் ஏவலால் தீவுகள் சிலவற்றைக் காவல்புரிந்து வந்த தெய்வம்.

**மணிமேகலை** – கோவலனுக்கு மாதவியிடம் பிறந்த மகள்; சாத்தனார் இயற்றிய நூல்; காண்க: **மணிமேகலாதெய்வம்**; இடையில் அணியும் அணிவகை.

**மணியக்காரன்,** **மணியகாரன்** – ஊர்க்கோயில் முதலியவற்றைக் கண்காணிப்பவன்; ஊர்வரி வாங்குவோன்.

**மணியச்சட்டம்** – அதிகாரம்.

**மணியம்** – ஊர், கோயில், மடம் முதலியவற்றை மேற்பார்க்கும் வேலை.

**மணியம்பலம்** – சபைமண்டபம்.

**மணியரங்கம்** – நிலாமுற்றம்.

**மணியாசிக்கட்டை,** **மணியாசு,** **மணியாசுப்பலகை** – சுவர்த்தலத்திற்கு மெருகிடும் பலகை.

**மணியாட்டி** – பூசாரி.

**மணியாடி** – குலகுரு.

**மணியீரல்** – குடலின் ஒரு பகுதி.

**மணியுயிர்** – வீடுபேறடைந்த உயிர்.

**மணியெண்ணி** – நென்மணி எண்ணுபவன்; இவறலன்.

**மணிரங்கு** – ஒரு பண்வகை.

**மணிலாக்கொட்டை** – நிலக்கடலை.

**மணிவட்டம்** – வீரக்கழல்; சிலம்பு; சேகண்டி.

**மணிவடம்** – முத்துமாலை; இரத்தினமாலை; அக்கமாலை; உருத்திராக்கம் முதலிய மணிகளாலான மாலை; வீரக்கழல்; பாதசாலம்.

**மணிவண்ணன்** – நீலமணிபோன்ற நிறமுடைய திருமால்.

**மணிவலை** – மீன்பிடிக்கும் ஒரு வலைவகை.

**மணிவாசல்** – அலங்காரத் தலைவாயில்.

**மணிவினைஞர்** – இரத்தின வேலைக்காரர்; முத்துக்கோப்போர்.

**மணிவீசம்** – மாதுளை.

**மணீசகம்** – காண்க: **சந்திரகாந்தக்கல்.**

**மணை** – அமரும் பலகை; சிறுபீடம்; மணமேடை; யானைமேற்றவிசு; பலகை; வெட்டுக்கருவியின் அடிக்கட்டை; பாதம் வைக்கும் படி; பருத்தியினின்று பஞ்சுபிரிக்குங் கருவி; தேங்காய் துருவலகு; மழுங்கலாயுதம்; மழுங்கல்.

**மத்தகக்குழிவு,** **மத்தகங்குழிதல்** – மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று.

**மத்தகசம்** – மதயானை.

**மத்தகம்** – தலை; உச்சி; நெற்றி; தலைக்கோலம்; யானையின் தலைநெற்றி; முகப்பு; மலைநெற்றி; தரிசுநிலம்.

**மத்தகன்** – மதிமயங்கியவன்.

**மத்தகுணம்** – மதகுணம்; யானை.

**மத்தங்காய்** – செஞ்சாமையரிசி; கடுக்காய்; பூசணி.

**மத்தங்காய்ப்புல்** – ஒரு புல்வகை.

**மத்தம்** – களிப்பு; மயக்கம்; யானைமதம்; பைத்தியம்; செருக்கு; ஊமத்தஞ்செடி; எருமைக்கடா; குயில்; மத்து.

**மத்தமா, மத்தமாதங்கம்** – யானை.

**மத்தவாரணம்** – காண்க: **மத்தகசம்;** மச்சின்மேல் உள்ள தாழ்வாரம்; வீட்டின் மேன்மாடத்து உறுப்பு; நந்தவனம்; திண்டு; பாக்குவெற்றிலைத் துவையல்.

**மத்தளம்** – ஒரு பறைவகை.

**மத்தளி** – வாத்தியவகை; உடல்; காண்க: **மத்தளிகன்.**

**மத்தளிகன்** – மத்தளங் கொட்டுவோன்.

**மத்தன்** – அதிக உற்சாகமுள்ளவன்; பைத்தியம் பிடித்தவன்; புத்திமயக்கம் அடைந்தவன்; கொழுப்புள்ளவன்.

**மத்தனம்** – கடைகை; அமுத்திப்பிடிக்கை.

**மத்தாடி** – செடிவகை.

**மத்தாடுதல்** – பெண்கள் கைகோத்தாடுதல்.

**மத்தாப்பு** – வெளிச்சம் தருவதற்குக் கொளுத்தப் படும் வாணவகை.

**மத்தி** – நடு; ஒரு மீன்வகை.

**மத்திகை** – குதிரைச் சம்மட்டி; விளக்குத்தண்டு; கழி; பூமாலை.

**மத்திடுதல்** – கடைதல்.

**மத்தித்தல்** – கடைதல்; அடித்தல்; தேய்த்தல்; மருந்துகலத்தல்.

**மத்திபம்** – நடுத்தரம்; மட்டமானது; நடு.

**மத்திமதானம்** – ஏழை, குருடர் முதலியோர்க்குக் கொடுக்கும் கொடை.

**மத்திமதீபம்** – காண்க: **இடைநிலைத்தீவகம்.**

**மத்திமபட்சம்** – நடுத்தரம்.

**மத்திமபூமி** – பூகோளத்தின் நடுப்பாகம்; தட்ப வெப்பம் சமமான பூமி.

**மத்திமம்** – காண்க: **மத்திபம்;** சமனிசை; சத்த சுரத்தில் நான்காவதாகிய 'ம' என்னும் சுரம்; இலயவகை; இடையுறுப்பு; சராசரி அளவை; குதிரைநடையுள் ஒன்று; ஒரு நாடு.

**மத்திமன்** – நடுத்தரமானவன்; சாமானியன்; நடுநிற்போன்.

**மத்திமை** – நடுவிரல்; சமனிசை; நாதரூபமான ஒலி.

**மத்தியகாலம்** – இடைப்பட்ட காலம்; நடுத்தர மாகப் பாடும்முறை; கிரகண நடுக்காலம்.

**மத்தியத்தன்** – நடுவுநிலையை உடையவன்.

**மத்தியபானம்** – கள்ளுண்ணுகை.

**மத்தியம்** – நடு; சராசரியளவை; இடுப்பு, இடை; விபரீதசாதனை; கள்; மேற்கு; படையின் நடுவிடமாகிய உறுப்புவகை; ஒரு பேரெண்; சத்தசுரத்தில் நான்காவதாகிய 'ம' என்னும் சுரம்.

**மத்தியலோகம்** – நிலவுலகம்.

**மத்தியவிருத்தம்** – உந்தி.

**மத்தியன்** – வேகமும் மந்தமும் இன்றி நடுத்தர மாக வேலைசெய்யும் பணியாளன்.

**மத்தியானம்** – நடுப்பகல்.

**மத்திரித்தல்** – கோபித்தல்; போட்டியிடுதல்.

**மத்திரிப்பு** – கோபம்; போட்டி.

**மத்து** – தயிர் முதலியன கடையுங் கருவி; காண்க: **ஊமத்தை;** மோர்; தயிர்.

**மத்தை** – ஊமத்தஞ்செடி; சத்துள்ளது.

**மத** – வலிமை; அழகு; மிகுதி; மடமை.

**மதக்கம்** – பேருண்டி, குடி, கஞ்சா முதலியவற்றா லுண்டாகும் மயக்கம்; வதங்குகை; சோர்வு.

**மதகம்** – யானை மத்தகம்; சுக்கு.

**மதகயம், மதகரி** – ஆண்யானை.

**மதகரிக்கணை** – யானைத்திப்பிலி.

**மதகு** – சக்கரவாளகிரி; குளம் முதலியவற்றில் நீர்பாயும் மடைவகை.

**மதங்கம்** – சிறுவாத்தியவகை; யானை; முகில்; ஒரு மலை; ஓர் ஆகமம்; கலம்பகவுறுப்புப் பதினெட்டனுள் ஒன்று.

**மதங்கயம்** – காண்க: **மதமலை.**

**மதங்கன்** – பாணன்; பெரும்பாணன்; ஒரு முனிவன்.

**மதங்கி** – பாண்மகள்; பார்வதி; காளி; ஆடல் பாடல்களில் வல்லவள்.

**மதங்கியார்** – இரண்டு கைகளிலும் வாள் எடுத்துச் சுழற்றியாடும் இளம்பெண்ணான மதங்கிமீது ஒருவன் காமுறுவதாகப் பாடும் கலம்பக உறுப்பு.

**மதத்தல்** – மதங்கொள்ளுதல்; கொழுத்தல்; காமமிகுதல்; செருக்குதல்; மயங்குதல்.

**மதத்தன்** – சமயவாதி; செருக்குப்பிடித்தவன்.

**மதத்து** – பண உதவி; வெறியுண்டாக்கும் கூட்டு மருந்துவகை.

**மததயிலம், மதநீர்** – யானையின் மதநீர்; விந்து, வீரியம்.

**மதப்பு** – களிப்பு: மிகுகாமம்; வெறிகொள்ளுகை; நிலம் முதலியவற்றின் செழிப்பு.

**மதபேதம்** – கொள்கைவேறுபாடு; புறச்சமயம்.

**மதம்** – கருத்து, கொள்கை; சமயம்; அறிவு; இசைவு; போதனை; பெற்றதைப் பெரிதாக மதிப்பது; பல; ஆறு; மகிழ்ச்சி; யானையின் மதநீர்; வலிமை; செருக்கு; சாரம்; தேன்; வெறி; காமவிகாரத்தின் மிகுதி; நிலவளம்; மதுக்களிப்பு; கத்தூரி; கன்மதம்; வீரியம்; மிகுதி; பெருமை.

**மதமத்தகம்** – கஞ்சாச்செடி.

**மதமத்தம்** – ஒரு செடிவகை.
**மதமத்தன்** – மதத்தினால் மயங்கிக் கிடப்போன்.
**மதமத்தை** – ஒரு செடிவகை.
**மதமதக்கத்தாழி** – முதுமக்கட்டாழி.
**மதமதப்பு** – உணர்ச்சியின்மை; திமிர்; செழிப்பு.
**மதமதர்த்தல்** – களிப்பு மிகுதல்.
**மதமதெனல்** – மதமுறுதற்குறிப்பு; உடல் உறுப்பு மரத்துப்போதற்குறிப்பு; செழித்து வளர்தற் குறிப்பு; நீர் குடிக்கும்போதுண்டாகும் ஒலிக் குறிப்பு; விரைவுக்குறிப்பு.
**மதமலை, மதமொய்** – யானை.
**மதர்** – மிகுதி; செருக்கு; மகிழ்ச்சி; வீரம்; பாய்ச்சல்; மதநீர்.
**மதர்த்தல்** – செழித்தல்; மரஞ்செடி முதலியன பயனறும்படி மிதமிஞ்சிக் கொழுத்தல்; மதங் கொள்ளுதல்; செருக்குதல்; களித்தல்; மிகுதல்.
**மதர்ப்பு, மதர்வு** – செழிப்பு; இறுமாப்பு; உள்ளக் களிப்பு; ஆசைப்பெருக்கம்; அழகு; வலிமை; மிகுதி; புலவி; இடம்; பூமி.
**மதர்வை** – மயக்கம்; செழிப்பு; செருக்கு; களிப்பு.
**மதரணி** – ஒளிமிக்க அணிகலன்.
**மதலிகை** – அணிகலத்தொங்கல்; அலங்காரத் தொங்கல்.
**மதலை** – மகன்; குழந்தை; மழலைமொழி; பாவை; பற்றுக்கோடு; தூண்; வேள்வித்தூண்; வீட்டின் கொடுங்கை; பற்று; மரக்கலம்; கொன்றைமரம்; காண்க: **சரக்கொன்றை.**
**மதலைக்கிளி** – இளங்கிளி.
**மதலைத்தூக்கு** – இருசீருடைய இசைத்தூக்கு.
**மதலைப்பள்ளி** – கொடுங்கையைத் தாங்கும் பலகையாகிய கபோதகத்தலை.
**மதவலி** – மிகுவலி; மிக்க வலிவுடையவன்; முருகன்.
**மதவாதி** – சமயவாதஞ் செய்வோன்.
**மதவு** – வலிமை; அழகு; மிகுதி; மடமை; மதகு.
**மதளை** – மழலைமொழி.
**மதன்** – அழகு; மாட்சிமை; மிகுதி; செருக்கு; வலிமை; மதவெழுச்சி; மடமை; கலக்கம்; மன்மதன்.
**மதன்றாய்** – மன்மதன் தாயாகிய திருமகள்.
**மதனகீதம்** – காமப்பாடல்.
**மதனபாடகம்** – காமத்தைத் தூண்டும் பாட்டினை உடையதான குயில்.
**மதனம்** – காமம்; மன்மதன் கணைகளுள் புணர்ச்சி விருப்பத்தைத் தருவது; பெருமிதம்; இளவேனில்; வசந்தகாலம்; தேனீ; தேன் மெழுகு; காண்க: **மருக்காரை**; கடைகை; அழிக்கை; மனக்கலக்கம்; மௌனம்; கடல் மீன்வகை.
**மதனலீலை** – காமவிளையாட்டு.
**மதனவேள்** – மன்மதன்.
**மதனன்** – மன்மதன்; காமுகன்.
**மதனாங்குசம்** – பெண்குறி; நகம்.
**மதனாலயம்** – தாமரை; பெண்குறி.
**மதனாவத்தை** – பிரிவுத்துயர்.
**மதனி** – அண்ணன் மனைவி.
**மதனைவென்றோன்** – அருகக்கடவுள்.
**மதாசாரம்** – சமயவொழுக்கம்.
**மதாணி** – கழுத்தணியின் தொங்கல்; அணிகலன்.
**மதாபிமானி** – சமயப்பற்றுள்ளவன்.
**மதார்** – செருக்கு.
**மதாரம்** – கத்தூரி; பன்றி; யானை.
**மதாலம்** – கொன்றைமரம்.
**மதாவளம்** – யானை.
**மதாளித்தல்** – செழித்து வளர்தல்; பயிர் முதலியன பயன்படாதபடி கொழுத்துக் கெடுதல்.
**மதி** – சந்திரன்; மாதம்; ஒன்று என்னும் எண்ணைக் குறிக்கும் குழூஉக்குறி; இராசி; குபேரன்; இடைகலை; காண்க: **மதிநாள்; மதிஞானம்**; கற்கடகராசி; இயற்கையறிவு; பகுத்தறிவு; வேதத்தின்படி நடத்தல்; மதிப்பு; காசியபரின் மனைவி; அசோகமரம்; அதிமதுரம்; ஒரு முன்னிலை யசைச்சொல்; ஒரு படர்க்கை யசைச்சொல்; யானை.
**மதிக்கண்ணியான்** – சிவபிரான்.
**மதிக்கணம்** – காண்க: **சந்திரகணம்.**
**மதிக்கலை** – சந்திரகலை; பதினாறு.
**மதிக்கொழுந்து** – இளஞ்சந்திரன்.
**மதிகம்** – செடிவகை.
**மதிகூர்மை** – காண்க: **இந்துப்பு.**
**மதிகேடன்** – அறிவில்லாதவன்.
**மதிகேடி** – அறிவில்லாதவள்.
**மதிகேடு** – புத்திக்குறைவு.
**மதிச்சடையன்** – சந்திரனைச் சடையிலே தரித்த சிவபிரான்.
**மதிசகன்** – சந்திரனது தோழனாகிய மன்மதன்.
**மதிசூடி** – காண்க: **மதிச்சடையன்.**
**மதிஞன்** – அறிஞன்.
**மதிஞானம்** – இயற்கையறிவு.
**மதித்தல்** – அளவிடுதல்; பொருட்படுத்துதல்; கருதுதல்; தியானித்தல்; துணிதல்; கடைதல்; கொழுத்தல்; மதங்கொள்ளுதல்; சாதல்; உப்புதல்.
**மதிதம்** – மோர்; தயிர்.
**மதிதிசை** – வடக்கு.
**மதிநாள்** – மிருகசீரிடநாள்.
**மதிநுட்பம்** – இயற்கை நுண்ணறிவு.

**மதிநெறி** – சந்திரமரபு.
**மதிப்ப** – ஓர் உவம வாய்பாடு.
**மதிப்பகை** – இராகு.
**மதிப்பாகம், மதிப்பாகு, மதிப்பிள்ளை, மதிப்பிளவு** – பிறைச்சந்திரன்.
**மதிப்பு** – அளவிடுகை; சிறப்பிக்கை; கருத்து; கடைகை; கொழுத்திருக்கை.
**மதிமகன்** – புதன்.
**மதிமண்டலம்** – புருவமத்தி; நாபித்தானம்; உச்சித்துளையின் நுனிப்பகுதி.
**மதிமணல்** – வெள்ளிமணல்.
**மதிமயக்கம்** – புத்திமாறாட்டம்.
**மதிமான்** – புத்திமான்.
**மதிமுகம்** – சந்திரன்போன்ற முகம்; மந்திர வித்தைவகை.
**மதிமேகக்கல்** – குருவிந்தக்கல்.
**மதிமை** – அறிவு.
**மதிமோசம்** – அறிவின்மை.
**மதியங்கு** – ஒரு மணப்பண்டவகை.
**மதியந்திரும்புதல்** – பொழுதுசாய்தல்.
**மதியப்பூப்பு** – சந்திரோதயம்.
**மதியம்** – சந்திரன்; முழுநிலா; மாதம்; நடு; மத்தியானம்; மதிப்பு.
**மதியாணி, மதியாணிக்கட்டை** – காண்க: **பகலாணி, நுகத்தின் நடுவாணி.**
**மதியிலி** – அறிவில்லாதவர்; அறிவற்றது.
**மதியீனம்** – புத்திக்குறைவு.
**மதியுடம்படுதல்** – தலைவி தலைவன் கருத்தோடு இணங்கியவளாதல்; தலைவன் தலைவியர் இருவர்க்கும் கூட்டமுண்மையை அவர்தம் கருத்தொற்றுமைபற்றித் தோழியுணர்தல்.
**மதியுணி** – இராகு.
**மதியுப்பு** – வளையலுப்பு; காண்க: **இந்துப்பு.**
**மதியையழைத்தல்** – காண்க: **அம்புலிப்பருவம்.**
**மதிரம், மதிரை** – கள்.
**மதில்** – கோட்டைச்சுவர்; சுவர்; சுவரின் மேற்கட்டு; இஞ்சி.
**மதிலரண்** – நால்வகை அரண்களுள் ஒன்று.
**மதிலுண்மேடை** – கொத்தளம்.
**மதிவல்லோர்** – அறிவாளர்; அமைச்சர்.
**மதிற்சுற்று** – சுற்றுமதில், பிராகாரம்.
**மதிற்சூட்டு** – கோட்டைமதிலின் தலையீடான உறுப்பு.
**மதின்மரம்** – கோட்டைமதிலின் கதவிலிடுங் கணையமரம்.
**மதினி** – காண்க: **மதனி**; மைத்துனி; மாமன் மகளிருள் தனக்கு மூத்தவள்.
**மது** – தேன்; கள்; இலுப்பைப்பூ முதலியவற்றினின்று வடிக்கும் செய்நீர்; மகரந்தம்; இனிமை; நீர்; அமுதம்; பால்; இளவேனில்; அசோகமரம்; காண்க: **அதிமதுரம்**; திருமாலால் கொல்லப்பட்ட ஓர் அசுரன்.
**மதுகந்தம்** – இருப்பைமரம்; மகிழமரம்.
**மதுகம்** – வண்டு; செடிவகை; தித்திப்பு; தரா என்னும் உலோகம்; இருப்பைமரம்; மதிரை; எட்டிமரம்; அழகு.
**மதுகரம்** – தேனீ; ஆண்வண்டு; கள்; வச்சநாபி; எட்டிமரம்.
**மதுகரன்** – அன்பன்.
**மதுகை** – அறிவு; வலிமை.
**மதுங்குதல்** – இனிமையாதல்.
**மதுசகன்** – வசந்தனின் நண்பனான மன்மதன்.
**மதுசூதனன், மதுசூதன்** – மதுவென்னும் அசுரனைக் கொன்ற திருமால்.
**மதுத்தண்டு** – கள்ளடைக்கும் மூங்கிற்குழாய்.
**மதுத்திருமணம்** – கரும்பு.
**மதுப்பிரமேகம்** – நீரிழிவு.
**மதுபதி** – காளி; பார்வதி.
**மதுபம்** – கள்; வண்டு.
**மதுபர்(ரு)க்கம்** – தேன், பழம், பால் முதலியவற்றோடு கூடிய உணவு.
**மதுபானம்** – கள்; கட்குடிக்கை.
**மதுபானி** – கட்குடியன்.
**மதுமா** – மாமரம்.
**மதுமாமிசம்** – கள்ளும் இறைச்சியும்.
**மதுரகவி** – நாற்கவிகளுள் இனிமை பெருகப் பாடுங் கவி; சொற்சுவை, பொருட்சுவை முதலியன நிரம்பிய பாட்டு; பன்னிரு ஆழ்வாருள் ஒருவர்.
**மதுரகிரந்தம்** – இனிய நூல்.
**மதுரசம்** – கரும்பு; காண்க: **கொடிமுந்திரிகை**; சாராயம்; இனிமை; பேரீந்து; பனை.
**மதுரம்** – இனிமை; நாற்கவிகளுள் இனிமை பெருகப் பாடுங் கவி; இன்குணம்; சமனிசை; செடிவகை; காண்க: **கொடிமுந்திரிகை**; செஞ்சந்தனமரம்; முளை; நஞ்சு; எட்டிமரம்; துத்தநாகம்.
**மதுரவசனம்** – இனிமையாகப் பேசுந் திறமை; வாய்ப்பாட்டு.
**மதுரவள்ளி** – கொம்மட்டிக்கொடி; சருக்கரை வள்ளிக்கொடி.
**மதுரவாக்கு** – இன்சொல்.
**மதுரித்தல்** – தித்தித்தல்; செவிக்கினியவாதல்; இனிப்பாகச் செய்தல்.
**மதுரேசன்** – கண்ணபிரான்; பாண்டியன்; மதுரையிற் கோயில்கொண்டிருக்குஞ் சோமசுந்தரக் கடவுள்.

**மதுரை** – கள்; இனிமையானது; ஒரு நகரம்.

**மதுரைச்சங்கம்,** **மதுரைத்தொகை** – மதுரையிலிருந்த மூன்றாம் தமிழ்ச்சங்கம்.

**மதுரைமாதெய்வம்** – மதுரையின் காவற்றெய்வமாகிய மதுராபதி.

**மதுரோதயவளநாடு** – கோயில்பட்டி வட்டத்தைச் சுற்றியுள்ள ஒரு பழந்தமிழ்நாட்டுப் பிரிவு.

**மதுவம்** – கள்; தேன்; வண்டு.

**மதூகம்** – இருப்பைமரம்.

**மதூத்தம்** – சிறுநாகப்பூ.

**மதைஇய** – மதர்த்த; அழகிய; மடமையான; வலிய.

**மதோமதி** – பெருங்களிப்புடையாள்.

**மதோற்கடம்** – மதயானை; யானைமத்தகம்.

**மதோன்மத்தன்** – மிகு களிப்புடையோன்; செருக்கு மிக்குடையோன்.

**மந்தக்குணம்** – தாமதத்தன்மை; உணவு செரியாமையால் உண்டாகும் நோய்வகை.

**மந்தகதி** – தாமதநடை; தாமதத்தன்மை.

**மந்தகாசம்** – புன்னகை, புன்சிரிப்பு; காசநோய் வகை.

**மந்தகுணம்** – காண்க: **மந்தக்குணம்.**

**மந்தணம்** – சூழ்வினை; கமுக்கம், இரகசியம்.

**மந்தப்புத்தி** – அறிவுக்குறைவு; குறைந்த அறிவுடையவன்.

**மந்தம்** – தாமதம்; அறிவுமழுக்கம்; சோம்பல்; புன்மை; மென்மைத்தன்மை; பாடற்பயன் எட்டனுள் ஒன்றான சமனிசை; படுத்தலிசை; தென்றல்; குதிரைநடைவகை; தனக்கு மாத்திரங் கேட்கும்படி மந்திரோச்சாரணஞ் செய்கை; செரியாமை; குடிவெறி; மத்து; செறிவு; செவ்வியழியாமை.

**மந்தமந்தம்** – மெல்லமெல்ல.

**மந்தமந்திரம்** – தனக்கு மாத்திரங் கேட்கும்படி உச்சரிக்கும் மந்திரம்.

**மந்தமா** – யானை.

**மந்தமாருதம்** – தென்றல்.

**மந்தரம்** – ஒரு மலை; மகாமேரு; துறக்கம்; கோயில்; படுத்தலோசை; 'நி' என்னும் ஏழாம் சுரம்.

**மந்தரன்** – ஒற்றன்; சோம்பன்.

**மந்தல்** – சோம்பல்.

**மந்தவறிவு** – மழுங்கலான அறிவு.

**மந்தவாடை** – இளவாடைக் காற்று.

**மந்தவாரம்** – சனிக்கிழமை.

**மந்தவிசை** – படுத்தலோசை.

**மந்தன்** – அறிவு மழுங்கியவன்; தாமதமாக வேலை செய்யும் பணியாளன்; யமன்; சனி.

**மந்தனம்** – யானை முகபடாம்; ஆலோசனை; காண்க: **மந்தணம்.**

**மந்தாகினி** – வானகங்கை; பால்வீதிமண்டலம்; கங்கையாறு; அறுபது வயதுள்ளவள்.

**மந்தாரச்சிலை** – ஒரு மருந்துக் கல்வகை.

**மந்தாரம்** – மேகமூட்டம்; ஐவகைத் தருவிலொன்று; முள்முருக்கு; செம்பரத்தை.

**மந்தாரம்போடுதல்,** **மந்தாரித்தல்** – மேகமூட்டமாயிருத்தல்.

**மந்தாரை** – ஒரு மரவகை.

**மந்தானம்** – மத்து.

**மந்தானிலம்** – காண்க: **மந்தமாருதம்.**

**மந்தி** – பெண்குரங்கு; குரங்கு; வண்டு; சூரியன்; காண்க: **ஆடுதின்னாப்பாளை.**

**மந்தித்தல்** – தாமதித்தல்; செரியாமை; மந்தமடைதல்.

**மந்திப்பு** – சுறுசுறுப்பின்மை; செரியாமை.

**மந்திரக்கலப்பை** – மந்திரசெபத்துக்குரிய பண்டம்.

**மந்திரக்கிழவர்** – சூழ்வினையாளர்.

**மந்திரக்கூறை** – பூசைப்பட்டு.

**மந்திரக்கோட்டி** – ஆலோசனை செய்யும் சபை.

**மந்திரக்கோடி** – மந்திரவாழ்த்துகளோடு மணமகள் பெறும் கூறைப்புடைவை.

**மந்திரகலை** – மந்திரங்களைக் கூறும் நூல்.

**மந்திரகாவி** – செங்காவி தோய்த்த சன்னியாச உடை.

**மந்திரகூடன்** – தூதன்; ஒற்றன், வேவுகாரன்.

**மந்திரகூர்மை** – இந்துப்பு.

**மத்திரச்சுற்றம்** – அமைச்சர்குழு.

**மந்திரசத்தி** – அமைச்சரின் சூழ்ச்சிவன்மையால் அரசருக்கு உண்டாகும் ஆற்றல்; மந்திரத்திற்குள்ள ஆற்றல்.

**மந்திரசாலை** – மந்திரிகளுடன் சூழ்வினை புரியும் தனி மண்டபம்.

**மந்திரசித்தி** – மந்திரத்தால் பெற்ற பேறு.

**மந்திரத்துணைவர்** – காண்க: **மந்திரக்கிழவர்.**

**மந்திரத்தோழி** – தலைவியின் அணுக்கமான பாங்கி.

**மந்திரதந்திரம்** – மந்திரமும் கிரியையும்.

**மந்திரபாரகர்** – சூழ்வினையில் தேர்ந்தவர்.

**மந்திரபுட்பம்** – அஞ்சலியிற்கொண்டு மந்திரம் ஓதித் தூவப்படும் மலர்.

**மந்திரம்** – ஆலோசனை; அமைச்சர்கள் அவை; எண்ணம்; வேதமந்திரம்; காண்க: **திருமந்திரம்;** வீடு; அரண்மனை; தேவர் கோயில்; மண்டபம்; உறைவிடம்; குகை; அறச்செயல் வகை; குதிரைச்சாலை; குதிரைக்கூட்டம்; கள்; யானைவகை; மேருமலை.

**மந்திரமாக்கள்** – காண்க: **மந்திரக்கிழவர்.**

**மந்திரமாடம்** – ஆலோசனை செய்யும் மண்டபம்.

**மந்திரமாலிகை, மந்திரமாலை** – காண்க: **திருமந்திரம்.**

**மந்திரமூர்த்தி** – மந்திரநாயகன்; மந்திர வடிவமான கடவுள்; மந்திரசித்தியால் பேயோட்டுதல் முதலியன செய்பவன்.

**மந்திரர்** – அமைச்சர்.

**மந்திரவாதி** – மந்திரவித்தைக்காரன்; மந்திர சித்தியால் பேயோட்டுதல் முதலியன செய்பவன்.

**மந்திரவித்தை** – ஒரு தேவதையை அதற்குரிய மந்திரத்தால் வழிபடுகை; மந்திரங்களைப் பற்றிய வித்தை; மாயவித்தை.

**மந்திரவிதி** – மந்திரம் பயன்படுத்தும் முறை.

**மந்திரவீதி** – மாடவீதி.

**மந்திரவோலை** – அரசன் திருமுகம்.

**மந்திராலோசனை** – அரசன் அமைச்சர்களுடன் ஆராய்கை.

**மந்திரி** – அமைச்சன்; வியாழன்; சுக்கிரன்; குபேரன்; வரும்பொருள் உரைப்போன்; படைத்தலைவன்; புதன்; பித்தம்; காண்க: **திராய்.**

**மந்திரித்தல்** – மந்திர ஆற்றலால் அடக்குதல்; மந்திரத்தால் சக்தியுண்டாகச்செய்தல்; மந்திரத்தால் தியானித்தல்; ஆலோசித்தல்; மந்திரஞ்செபித்தல்; தீயுரைசொல்லுதல்.

**மந்தினி** – தயிர்கடை தாழி; காண்க: **ஆடு தின்னாப்பாளை.**

**மந்து** – அரசன்; மனிதன்; குற்றம்; நாய்வேளைப் பூண்டு; காண்க: **மந்துகால்.**

**மந்துகால்** – யானைக்கால்நோய்.

**மந்துரம், மந்துரை** – குதிரைப்பந்தி; குதிரைச்சாலை; தொழுவம்; படுக்கை.

**மந்தை** – ஆடுமாடுகளின் கூட்டம்; பொதுமேய்ச்சலிடம்; ஊர்ப்பொது வெளியிடம்; சட்டையின் பின்பக்கத்து ஒட்டுத்துணி.

**மந்தைக்கல்** – காண்க: **ஆவுரிஞ்சுதறி.**

**மந்தைமறித்தல்** – மந்தையைக் காத்தல்.

**மந்தையன்** – அறிவுமழுங்கியவன்.

**மந்தைவெளி** – மேய்ச்சல்நிலம்; கால்நடையை அடைத்துவைக்கும் அடைப்பிடம்.

**மப்பன்** – காண்க : **மந்தையன்.**

**மப்பு** – மேகமூட்டம்; செரியாமை; மயக்கம்; மட்டித்தனம்; செருக்கு.

**மப்புமந்தாரம்** – மேகமூட்ட நிலை.

**மம்மட்டி** – மண்வெட்டி; சிற்றாமுட்டிச்செடி.

**மம்மர்** – அறியாமையாகிய மயக்கம்; துயரம்; கல்லாமை; காமம்.

**மம** – நற்பேறு; நீர்; என்னுடைய.

**மமகாரம், மமதை** – செருக்கு.

**மயக்கடி** – மயக்கம்; குடிவெறி.

**மயக்கம்** – அறிவின் திரிபு; அவித்தை; பிழைபட உணர்கை; விரகநோய்; மூர்ச்சை; படைப்பில் அலித்தன்மை முதலிய கலப்பு; கூடல்; கலப்பு; எழுத்துப்புணர்ச்சி; சாவுச்சடங்கினுள் ஒன்று; சோம்பேறித்தனம்.

**மயக்கவணி** – ஒற்றுமைபற்றி ஒரு பொருளை வேறொரு பொருளென மயங்குவதாகக் கூறும் அணி.

**மயக்கிடை** – காண்க: **மயக்கம்.**

**மயக்கிமாலை** – தந்திரக்காரி, விரகி.

**மயக்கு** – காண்க: **மயக்கம்**; போர்செய்கை; வியக்கச்செய்யும் செயல்.

**மயக்குதல்** – மனங்குழம்பச் செய்தல்; மலைக்கச் செய்தல்; தன்வயமிழக்கச் செய்தல்; கலத்தல்; சேர்த்தல்; சிதைத்தல்; நிலைநெகிழ்த்துதல்; ஊடல் உணர்த்துதல்; மூர்ச்சையடையச் செய்தல்.

**மயங்கக்கூறல், மயங்கவைத்தல்** – நூற்குற்றம் பத்தனுள் இன்னது என்று துணியக் கூடாமற் கூறும் குற்றம்.

**மயங்கியோர்** – அறிவுதிரிந்தோர்.

**மயங்குகால்** – சுழல்காற்று.

**மயங்குதல்** – மருளுதல்; தன்னை மறத்தல்; வெறிகொள்ளுதல்; மாறுபடுதல்; நிலையழிதல்; வருந்துதல்; தாக்கப்படுதல்; ஐயுறுதல்; தயங்குதல்; கலத்தல்; போலுதல்; நெருங்குதல்; கைகலத்தல்; அறிவுகெடுதல்; கலக்கமுறுதல்; உணர்ச்சியிழத்தல்.

**மயங்குதிணைநிலைவரி** – வரிப்பாட்டுவகை.

**மயத்தல்** – மயங்குதல்.

**மயம்** – அழகு; தன்மை; நிறைவு; சொத்து; பொருள்; மகிழ்ச்சி; செருக்கு; கோமயம்; ஒட்டகம்.

**மயர்** – மயக்கம்.

**மயர்தல்** – மயங்குதல், உணர்வறுதல்; சோர்தல்; திகைத்தல்.

**மயர்வு** – அறியாமை; சோர்வு; அறிவுமயக்கம்.

**மயரி** – உன்மத்தன்; காமுகன்; அறிவீனன்.

**மயல்** – மயக்கம்; பைத்தியம்; ஆசை; காம விருப்பு; மாயை; ஐயம்; அச்சம்; செத்தை; நெருப்பு; மந்தம்; பிசாசம்.

**மயற்கை** – செத்தை; மயக்கம்.

**மயற்பகை** – பித்து; பித்துக்குக் காரணமாகிய மருந்து.

**மயன்** – தச்சன்; சிற்பி; அசுரத்தச்சன்; கின்னரன்.

**மயானக்கரை** – காண்க: **மயானம்.**

**மயானக்கிரியை** – ஈமச்சடங்கு.

**மயானம்** – சுடுகாடு.
**மயானவாசினி** – சுடுகாட்டில் இருப்பவளாகிய துர்க்கை.
**மயானவைராக்கியம்** – மயானத்தைக் கண்டதும் உடல் அழியுந்தன்மை உடையதென்று தாற்காலிகமாகத்தோன்றும் பற்றின்மை; இறக்கும் வரை ஒருவருக்கொருவர் உண்மையாய் நடந்து கொள்வதாக மணமக்கள் கூறும் உறுதிமொழி.
**மயிடம்** – எருமை; இலவம்பிசின்.
**மயிடற்செற்றாள்** – துர்க்கை.
**மயிந்துதல்** – பதுங்குதல்.
**மயிர்** – உரோமம்; சாமரை; தூவி.
**மயிர்க்கட்டு** – தலைமயிர்முடிச்சு; தலைப்பாகை.
**மயிர்க்கத்தி** – சவரக்கத்தி.
**மயிர்க்கால்** – மயிர்த்துளை.
**மயிர்க்கிடுகு** – மயிர்செறிந்த தோலால் மூடப்பட்ட கேடகம்.
**மயிர்க்கிடை** – மயிரின் அகலவளவு.
**மயிர்க்குச்சு** – மயிர்சிலிர்த்தல்; துகிலிகை; கொண்டையூசி; தலையணிவகை.
**மயிர்க்குச்செறிதல்** – உடம்பு சிலிர்த்தல்.
**மயிர்க்குட்டி** – காண்க: **மயிர்ப்புழு.**
**மயிர்க்குடி** – மயிர்ச்செறிவு.
**மயிர்க்குழற்சி** – மயிர்க்குழைவு; உடம்பு சிலிர்த்தல்.
**மயிர்க்கூச்சு** – மயிர்சிலிர்க்கை.
**மயிர்க்கேடகம்** – காண்க: **மயிர்க்கிடுகு.**
**மயிர்க்கோள்** – காண்க: **மயிர்க்கூச்சு.**
**மயிர்கழித்தல், மயிர்களைதல்** – மழித்தல், சவரஞ்செய்தல்.
**மயிர்களைவோன்** – காண்க: **மயிர்வினைஞன்.**
**மயிர்குறைகருவி** – மயிர்க்கத்தரி; சவரக்கத்தி.
**மயிர்ச்சந்தனம், மயிர்ச்சாந்தம், மயிர்ச்சாந்து** – கூந்தலுக்கு இடும் மணச்சாந்து.
**மயிர்ச்சிகைப்பூண்டு** – காண்க: **அரிவாள் முனைப்பூண்டு.**
**மயிர்ச்சுருள்** – மயிர்க்குழைவு; மயிரின் சுருள்.
**மயிர்ச்சேணம்** – மயிரடைத்துச் செய்த மெத்தை.
**மயிர்த்தவிசு** – மயிரடைத்துச் செய்த இருக்கை.
**மயிர்ப்படம்** – கம்பளியாடை.
**மயிர்ப்பாடு** – மயிர் செறிந்து தோன்றுகை.
**மயிர்ப்பிளவை** – தலைப்பொடுகு.
**மயிர்ப்புழு** – கம்பளிப்பூச்சி.
**மயிர்பிடித்துக்கொள்ளுதல்** – சண்டைபோடுதல்.
**மயிர்பொடித்தல்** – மயிர்சிலிர்த்தல்.
**மயிர்மாட்டி** – ஓர் அணிகலவகை.
**மயிர்மாணிக்கம்** – அரிவாள்முனைப்பூண்டு; ஒரு செடிவகை; பூடுவகை; மரவகை; கொடிவகை; கோரோசனை.
**மயிர்முடி** – முடிந்த மயிர்.
**மயிர்முள்** – முள்ளம்பன்றியின் மயிர்.
**மயிர்வாங்கி** – காண்க: **சிமிட்டா.**
**மயிர்வாரி** – சீப்பு.
**மயிர்வினை** – சவரம்; குழந்தைகளுக்கு முதன் முதலில் மயிர்கழிக்கும் சடங்கு; கத்தரிக்கோல்; காண்க: **மயிர்வினைஞன்;** சவரக்கத்தி.
**மயிர்வினைஞன்** – நாவிதன்.
**மயிரிழவு** – துன்பக்குறியாக மயிர்நீக்குகை.
**மயிருதிரல்** – வழுக்கைநோய்.
**மயிரெறிகருவி** – காண்க: **மயிர்குறைகருவி.**
**மயிரெறிதல்** – மயிர் சிலிர்த்தல்.
**மயிரொழுக்(ங்)கு** – மயிர்வரிசை.
**மயில்** – பறவைவகை; செடிவகை; சிறு மரவகை; இருக்கைவகை.
**மயில்வாகனன்** – மயிலேறிச் செல்லும் முருகக்கடவுள்.
**மயில்விசிறி** – மயில்தோகையால் அமைந்த ஆலவட்டம்.
**மயிலடி** – மாதர் காலணியுள் ஒன்று, காற்பீலி; காட்டுநொச்சிமரம்; மரவகை; எருமை.
**மயிலம்** – மயிலிறகு; ஓர் ஊர்; பருத்திவகை; குப்பைமேனி.
**மயிலாப்பு, மயிலாபுரி** – மயிலாப்பூர்.
**மயிலார்** – கன்னிப்பெண்கள் நோற்கும் சடங்குவகை; பொங்கற்பண்டிகையின் பின்பு வண்ணார் கும்பிடுந் தெய்வவழிபாடு.
**மயிலாளி** – மயிலை ஏறி ஆள்வோனாகிய முருகக்கடவுள்.
**மயிலியம்** – செடிவகை.
**மயிலியல்** – மயில்போலுஞ் சாயலுள்ள பெண்.
**மயிலூர்தி** – காண்க: **மயில்வாகனன்.**
**மயிலெண்ணெய்** – மயிலின் கொழுப்பிலிருந்து எடுக்கும் எண்ணெய்வகை.
**மயிலெள்** – ஓர் எள்வகை.
**மயிலை** – இருவாட்சி; மீன்; மீனராசி; காண்க: **வெட்சி;** காட்டுநொச்சிமரம்; மரவகை; மயிலாப்பூர்; அழுக்கு; வெண்மை கலந்த கருநிறம்.
**மயிலைநந்தி** – ஒரு செடிவகை.
**மயிலைப்பச்சை** – கருமை கலந்த பச்சை.
**மயிற்கழுத்து** – மயிலின் கழுத்து உருவும் வண்ணமுமமைந்த மாலைவகை.
**மயிற்கூத்து** – ஒரு காலை யூன்றி ஒரு காலைத் தூக்கியாடுங் கூத்துவகை; ஒன்றை நாட்டும் வழி மற்றொன்று விட்டுப்போவதைக் காட்டும் ஒருவகை நியாயம்.
**மயிற்கொடி** – தாலிவகை; முருகக்கடவுட்குரிய மயில் எழுதிய கொடி.

**மயிற்கொன்றை** – ஒரு செடிவகை; ஒரு மரவகை.
**மயிற்கொன்றைமரம்** – கொன்றை மரவகை.
**மயிற்சிகை** – மயிலின் கொண்டை; ஒரு கொடி வகை.
**மயிற்பகை** – பச்சோந்தி.
**மயிற்பிச்சம்** – மயிலிறகால் செய்த குடை; மயில் தோகை விசிறி.
**மயிற்பீலி** – மயிலிறகு; மயில்தோகை விசிறி.
**மயிற்பீலிக்குடை** – மயிலிறகாற் செய்த குடை.
**மயிற்றுத்தம்** – ஒரு மருந்துவகை.
**மயிற்றோகை** – வாலாக நீண்ட மயிலின் இறகு.
**மயூகம்** – அழகு; நாழிகைவட்டத்தின் ஊசிநிழல்; கதிர்; சுடர்; ஒளி.
**மயூரகதி** – குதிரைநடை ஐந்தனுள் ஒன்று.
**மயூரகம்** – மயில்; மருந்துவகை; நாயுருவிச்செடி; நாய்வேளைப்பூண்டு; காண்க: **மயூரகதி**; செடி வகை.
**மயூரம்** – மயில்; சிறுமரம்; ஆசனவகை; காண்க: **மயூரகதி**; செடிவகை.
**மயூராரி** – பல்லி; பச்சோந்தி.
**மயேச்சுரன்** – சிவபிரான்; யாப்பிலக்கண நூலாசிரியருள் ஒருவர்.
**மயேசன்**, **மயேசுரன்**, **மயேசுவரன்** – சிவபிரான்.
**மயேசுவரி** – பார்வதி.
**மயேடம்** – இலவம்பிசின்.
**மயேந்திரசாலம்** – மாயவித்தைகளுள் ஒன்று; வியத்தகு செயல் செய்யும் வித்தை.
**மயேனம்** – வால்மிளகு.
**மர்க்கடகம்** – பெருங்காயம்.
**மர்க்கடம்** – குரங்கு.
**மர்க்கடமுட்டி** – குரங்குப்பிடி.
**மர்த்தித்தல்** – காண்க: **மத்தித்தல்.**
**மர்த்தியம்** – நிலவுலகம்.
**மர்மம்** – காண்க: **மருமம்.**
**மரக்கண்** – காண்க: **மரக்கணு**; புலனற்ற கண்; மரப்பாவையின் கண்.
**மரக்கணு** – மரத்தில் கிளையுண்டாகும் முடிச்சு.
**மரக்கரி** – அடுப்புக்குப் பயன்படும் கரி.
**மரக்கலம்** – கப்பல்.
**மரக்கறி** – காய்கறி; சமைத்த காய்கறியுணவு.
**மரக்கன்று** – இளமரம்.
**மரக்கா** – பூஞ்சோலை; ஓர் அளவுவகை.
**மரக்காயர்** – தமிழ்த் துலுக்கவகையினர்; மரக் கலம் ஓட்டுபவர்.
**மரக்கால்** – முகத்தலளவைக் கருவி; ஓர் அளவு வகை; ஒரு மரக்கால் விதைப்பாடு; ஒரு குறுணி; ஆண்டுமழையின் அளவு; மரத்தாற் செய்த பாதம்; திருமால் கூத்துவகை; கொற்றவை மரத்தால் செய்த காலைக்கொண்டு ஆடிய கூத்து; உப்பளம்; ஆயிலியநாள்; சோதிநாள்.
**மரக்காலாடல்** – கொற்றவை மரத்தால் செய்த காலைக்கொண்டு ஆடிய கூத்து.
**மரக்காழ்** – மரவயிரம்.
**மரக்காளான்** – மரத்தில் முளைக்கும் காளான் வகை.
**மரக்காற்கூத்து** – திருமால் கூத்து; **காண்க: மரக்காலாடல்.**
**மரக்கானாரை** – நாரைவகை.
**மரக்கோவை** – காண்க: **மரக்கலம்.**
**மரகதக்குணம்** – நெய்த்தல், கிளிக்கழுத்தொத் தல், மயிற்கழுத்தொத்தல், பயிரிற் பசுத்தல், பொன்மையுடன் பசுத்தல், பத்திபாய்தல், பொன்வண்டின் வயிறொத்தல், தெளிதல் என்னும் எட்டுவகைப் பச்சைமணிக்குணம்.
**மரகதக்குற்றம்** – கருகல், வெள்ளை, கல், மணல், கீற்று, பொரிவு, தராசம், இறுகுதல் என்னும் எண்வகையான பச்சைமணிக் குற்றம்.
**மரகதநாயகம்** – நடுவிற் பச்சைக்கல் வைத்து இழைத்த காலாழிவகை.
**மரகதப்பச்சை** – நாகப்பச்சை.
**மரகதம்** – ஒன்பதுவகை மணியுள் ஒன்றான பச்சைமணி; பச்சைநிறம்.
**மரகதமேனியன்** – திருமால்.
**மரகதவல்லி** –பார்வதி; அறக்கடவுள்.
**மரகதன்** – குபேரன்.
**மரங்கொத்தி** – ஒரு பறவைவகை.
**மரச்சக்கை** – சிறாய்.
**மரச்செவி** – மரப்பாவையின் காது; சற்றுங் கேளாத காது.
**மரச்செறிவு** – சோலை.
**மரணக்கொடி** – இறப்பச்சம்.
**மரணசனி** – சாவைக் குறிப்பதும் வாழ்நாளுள் மூன்றுமுறை வருவதுமான ஏழரையாண்டுச் சனி.
**மரணசாசனம்** – சாகுந்தறுவாயில் ஒருவன் தன் சொத்தைப் பிரித்துக் கொடுப்பதைக் குறித்து எழுதிவைக்கும் ஆவணம், இறுதிமுறி.
**மரணதண்டனை** – உயிர்நீக்குமாறு கொடுக்கப் படும் தூக்குத்தண்டனை.
**மரணம்** – சாவு; ஐவகை அவத்தையுள் மிகு மயக்கமும் அயர்ச்சியும் உண்டாகும் நிலை.
**மரணயோகம்** – கெடுதியை விளைவிக்கும் யோக வகை; தீங்கைக் குறிக்கும் வேளை.
**மரணவாக்குமூலம்** – சாவு நேர்வதாகக் கருதப் படுங் காலத்தில் கொடுக்கும் உறுதிமொழி.
**மரணவேதனை** – சாகும்வேளையிற் படும் அவத்தை.
**மரணித்தல்** – சாதல்.

**மரணை** – சாதல்; நினைவு; உணர்ச்சி.
**மரத்தல்** – காண்க: **மரத்துப்போதல்.**
**மரத்தார்** – பகுத்தறிவில்லாதவர்.
**மரத்துப்பால்** – கள்.
**மரத்துப்போதல்** – கால் முதலியன உணர்ச்சி யற்றுப்போதல்; விறைத்தல்; திகைத்தல்.
**மரத்தோல்** – காண்க: **மரப்பட்டை, மரவுரி.**
**மரந்தம்** – பூந்தேன்.
**மரந்தலை ஆயக்கட்டு** – ஊரிலுள்ள மரங்களின் விவரங்குறிக்கும் பட்டி.
**மரநாய்** – விலங்குவகை.
**மரப்பட்டை** – மரத்தின்மேலுள்ள தோல்.
**மரப்பத்தல்** – இறைமரம்.
**மரப்பந்தர்** – சோலை.
**மரப்பாச்சி, மரப்பாவை** – சிறுவர் விளையாட்டுக்குரிய மரப் பொம்மை.
**மரப்புணை** – மரத்தால் செய்யப்பட்ட தெப்பம்.
**மரப்பெட்டி** – மரத்தாலான பெட்டி.
**மரப்பொது** – சோலை.
**மரபியல்** – முன்னோர் வழங்கிய சொல்வழக்கைக் கூறும் இலக்கணப்பகுதி.
**மரபினோர்** – வழித்தோன்றியவர்; மூதாதையர்; ஒரு குடியினர்; சுற்றத்தார்.
**மரபு** – முறைமை; சான்றோரின் சொல்வழக்கு முறை; பழைமை; வமிசம்; பாரம்பரியம்; இயல்பு; இலக்கணம்; நல்லொழுக்கம்; பெருமை; பாடு; நியாயம்; வழிபாடு; பருவம்.
**மரபுச்சொல், மரபுப்பெயர்** – ஒன்றற்குத் தொன்றுதொட்டு வழங்கிவரும் பெயர்.
**மரபுமயக்கம், மரபுவழு** – தொன்றுதொட்டு வழங்கி வரும் முறைமைக்கு மாறானது.
**மரபுவழுவமைதி** – மரபுவழுவை அமைதியுடைய தென்று சான்றோர் அமைத்துக்கொள்வது.
**மரபுளோர்** – காண்க: **மரபினோர்.**
**மரம்** – உள்வயிரமுள்ள தாவரம்; அறுக்கப்பட்ட மரம்; மூலிகை; தொழுமரம்; மரக்கலம்; காண்க: **இயமரம்;** உழுத வயலைச் சமப்படுத் தும் பலகை.
**மரமஞ்சள்** – ஒரு கொடிவகை.
**மரமுலை** – ஆண் பெண்ணுருக் கொள்ளும்போது கட்டிக்கொள்ளும் பொய்ம்முலை.
**மரமேறி** – கள் இறக்குவதற்குத் தென்னை, பனை முதலிய மரமேறுஞ் சாணான்.
**மரயம்** – புளியம்புறணி.
**மரல்** – சிறு செடிவகை.
**மரல்மஞ்சி** – மரல்நார்.
**மரலுகம்** – குங்குமப்பூ.
**மரவட்டணம்** – மரத்தட்டு; நெடும்பரிசை.
**மரவட்டை** – பூச்சிவகை; மரவகை.
**மரவடி** – பாதக்குறடு.
**மரவம்** – குங்குமமரம்; வெண்கடம்பு; மரவகை.
**மரவள்ளி** – ஒரு செடிவகை.
**மரவாடி** – மரக்கடை.
**மரவாணி** – மரத்தாலாகிய ஆணி.
**மரவிடை** – பயன்தரும் மரம்; பத்திரம் எழுது வோர் விற்கும் நிலத்திலுள்ள மரங்களைக் குறிக்கும் சொல்.
**மரவினைஞர், மரவினையாளர்** – தச்சர்.
**மரவுப்பு** – ஓர் உப்புவகை.
**மரவுரல்** – மரத்தாலான உரல்.
**மரவுரி** – மரப்பட்டையால் செய்த ஆடை; முனிவர் உடுக்கும் மரப்பட்டை ஆடைவகை; மரவகை; காண்க: **சீரகம்.**
**மரவை** – மரத்தாலான பாண்டம்.
**மராட்டம்** – புறமயிர்; பெண்மயிர்; மகாராட்டிர மாநிலம்; இடம்.
**மராடி** – மரத்தின் அடிப்பகுதி; பாதுகை.
**மராம்** – வெண்கடப்பமரம்; கடப்பமரம்; காண்க: **செங்கடம்பு.**
**மராமத்திலாகா** – பொதுப்பணித்துறை.
**மராமத்து** – கட்டடம் முதலியவற்றின் சீர்திருத்த வேலை.
**மராமரம்** – அரசமரம்; ஆச்சாமரம்.
**மராளம்** – அன்னம்; பூநாரை; பாம்பு; மாதுளை.
**மரிச்சம்** – மாமரம்.
**மரிசம்** – மிளகு.
**மரிசி** – புது வரம்புவழி; செடி.
**மரிசிதம்** – பொறுமை.
**மரிசு** – வரம்பு; வரம்பருகு.
**மரித்தல்** – சாதல்; நினைத்தல்.
**மரியவர்** – பின்பற்றி நடப்பவர்.
**மரியாதை** – சிறப்பான நடக்கை; சாதி யொழுக்கம்; நேர்மையான ஒழுக்கம்; நீதி; விதம்; வரம்பு; நன்கொடை.
**மரியாதைக்காரன்** – நல்லொழுக்கமுள்ளவன்; சிறப்பித்தற்குரியவன்.
**மரியாதைப்பிழை** – மதிப்புக் குறைவான நடத்தை.
**மரீசம்** – காண்க: **மரிசம்.**
**மரீசி** – பிரமன் புதல்வர்களுள் ஒருவரான முனிவர்; மிளகு; கதிர்; வரம்பு.
**மரீசிகை** – கானல்.
**மரீசினம்** – வால்மிளகு.
**மரு** – மணம்; மருக்கொழுந்து, ஒரு மணச்செடி; மணமகனுக்குப் பெண்வீட்டார் இடும் முதல் விருந்து; இடம்; நீரும் நிழலுமற்ற இடம்; மலை.
**மருக்கட்டி** – மச்சம்; பாலுண்ணி.

**மருக்கம்** – காற்று; குரங்கு; உடம்பு; மிளகு; காண்க: **மருக்கொழுந்து.**
**மருக்காரை** – சிறுமரவகை; காரைவகை.
**மருக்கொழுந்து** – ஒரு மணச்செடிவகை.
**மருக்கொழுந்துச்சக்களத்தி** – அளத்துப்பச்சை; மரவகை; பூடுவகை.
**மருகம்** – மான்வகை; ஆதொண்டைச்செடி.
**மருகன்** – காண்க: **மருமகன்**; மகளின் கணவன்; வழித்தோன்றல்.
**மருகி** – காண்க: **மருமகள்.**
**மருகு** – ஒரு மணச்செடிவகை; பூண்டுவகை; காட்டுமல்லிகை; மகரவாழை; மருகன்; காண்க: **மருமகன்**; வழித்தோன்றல்.
**மருங்கு** – பக்கம்; விலாப்பக்கம்; இடை; வடிவு; எல்லை; இடம்; சுவடு; சுற்றம்; குலம்; ஒழுங்கு; செல்வம்; நூல்.
**மருங்குல்** – இடை, இடுப்பு; வயிறு; உடம்பு.
**மருங்குற்பக்கம்** – இடுப்பு.
**மருங்கை** – பிள்ளைபெற்ற ஐந்தாம் நாள்.
**மருச்சகன்** – இந்திரன்; அக்கினி.
**மருச்சுதன்** – வீமன்; அனுமான்.
**மருஞ்சகம்** – காண்க: **இரசகருப்பூரம்.**
**மருட்கை** – மெய்ப்பாடு எட்டனுள் ஒன்றாகிய வியப்பு; மயக்கம்.
**மருட்சி** – பொய்யுணர்வு; மயக்கம்.
**மருட்டம்** – மயக்கந்தருவது; ஏமாற்று; கள்.
**மருட்டி** – மயக்கந்தருவது; கள்; மயங்கும்படி மினுக்குபவள்.
**மருட்டு** – அச்சுறுத்துகை; மயக்குகை.
**மருட்டுதல்** – மயக்குதல்; அச்சுறுத்துதல்; மாறுபடச் செய்தல்; ஒத்தல்; மனங்கவியச் செய்தல்; ஏமாற்றுதல்; மறக்கச்செய்தல்.
**மருட்பா** – வெண்பாவும் ஆசிரியப்பாவும் கலந்து வரும் செய்யுள்வகை.
**மருண்மா** – யானை.
**மருண்மாலை** – அந்திநேரம்.
**மருத்தன்** – மருத்துவன்; வாயுபகவான்.
**மருத்தீடு** – வசியமருந்திடுகை; வசியமருந்து இடுதலால் வரும் நோய்வகை.
**மருத்து** – காற்று; வாயுதேவன்; வாதநோய்.
**மருத்துச்சஞ்சீவி** – மருந்தாக உதவும் புல், மரம், புதல், பூடு, கொடி முதலியன.
**மருத்துண்ணி** – காற்றை உண்ணும் பாம்பு.
**மருத்துபலம்** – ஆலங்கட்டிமழை.
**மருத்துபாலன்** – இந்திரன்.
**மருத்துவக்கலைஞன்** – காண்க: **மருத்துவநூலோன்.**
**மருத்துவச்சி** – மருந்து கொடுத்து நோய் நீக்குபவள்; மகப்பேற்றுக்கு உதவுவோள்.
**மருத்துவதி** – தாமிரபரணி.
**மருத்துவநாள்** – அசுவினிநாள்.
**மருத்துவநூலோன்** – மருத்துவன்.
**மருத்துவப்பதம்** – பரிகாரஞ் செய்யக்கூடியதாகிய நோயின் நிலைமை.
**மருத்துவம்** – வைத்தியம்; மருந்து; பரிகாரம்; மகப்பேறு பார்க்கும் தொழில்; ஒரு யாழ் வகை.
**மருத்துவர்** – வைத்தியர்; அசுவினிதேவர்.
**மருத்துவ(வா)ன்** – வைத்தியன்; இந்திரன்.
**மருத்துவி** – மருத்துவம் செய்பவள்.
**மருத்துவிச்சி** – காண்க: **மருத்துவச்சி.**
**மருதக்கிழவன்** – மருதநிலத் தலைவன்; மருத நிலத்துக்குரிய கடவுளான இந்திரன்.
**மருதணி** – ஐந்திணையுள் ஒன்றான வயலும் வயல் சார்ந்த இடமும்; செடிவகை.
**மருதத்திணை** – ஐந்திணையுள் ஒன்றான வயலும் வயல் சூழ்ந்த இடமும்.
**மருதநாதன்** – காண்க: **மருதநிலவேந்தன்.**
**மருதநிலப்பறை** – மருதநிலத்திற்குரிய பறை.
**மருதநிலம்** – காண்க: **மருதத்திணை.**
**மருதநிலவேந்தன்** – இந்திரன்.
**மருதப்பண்** – மருதநிலத்துக்குரிய காலைப்பண் வகை.
**மருதப்பறை** – காண்க: **மருதநிலப்பறை.**
**மருதம்** – காண்க: **மருதத்திணை; மருதப்பண்;** அகத்திணை ஏழனுள் ஒன்றானதும் ஊடியுங் கூடியும் இன்பம் நுகர்வதுமான ஒழுக்கம்; வயல்; மருதமரம்.
**மருதயாழ்** – மருதநிலத்துக்குரிய யாழ்வகையுள் ஒன்று; காண்க: **மருதப்பண்.**
**மருதயாழ்த்திறம்** – நவிர், வடுகு, வஞ்சி, செய்திறம் என நால்வகைப்பட்ட மருதப் பண்வகை.
**மருதவைப்பு** – காண்க: **மருதம்.**
**மருதாணி** – காண்க: **மருதோன்றி.**
**மருது** – நீர்மருது; கருமருது; பூமருது.
**மருதூணி, மருதோன்றி** – ஒரு மரவகை; செடிவகை.
**மருந்தகம்** – மருந்து கிடைக்குமிடம்; மருந்து விற்குமிடம்.
**மருந்தம்** – நஞ்சு; பாடாணவகை.
**மருந்திடல்** – வசியமருந்து கொடுக்கை; கருவுற்றாளுக்கு மருந்துகொடுக்குஞ் சடங்கு.
**மருந்தீடு** – காண்க: **மருத்தீடு.**
**மருந்து** – அமுதம்; ஔடதம்; பரிகாரம்; வசிய மருந்து; சோறு; குடிதண்ணீர்; இனிமை; வெடி மருந்து; முள்ளுக்கடம்பு; புதற்புல் என்னும் புல்வகை.
**மருந்துக்குக்கூட, மருந்துக்கும்** – கொஞ்சமும்.

**மருந்துச்சரக்கு** – மருந்து செய்ய உதவும் பண்டம்.
**மருந்துச்சாலை** – மருந்துச்சரக்கு விற்கும் கடை; வெடிமருந்துக் கிடங்கு.
**மருந்துபோடுதல்** – காண்க: **மருந்துவைத்தல்**; பூச்சிமருந்து தெளித்தல்.
**மருந்துவைத்தல்** – வசியமருந்திடுதல்.
**மருந்தெண்ணெய்** – மருந்துச்சரக்குகள் கூட்டிக் காய்ச்சிய தைலம்.
**மருநிலம்** – நீரும் நிழலுமற்ற நிலம்.
**மருப்பு** – விலங்கின் கொம்பு; யானைத்தந்தம்; யாழின் உறுப்புவகை; மரக்கொம்பு; பிறைச் சந்திரனின் இருகோடு; இஞ்சி.
**மருப்புத்தாடி** – யானைத் தந்தத்தாற் செய்த விரலுறை.
**மருபுகா** – ஒரு வாழைவகை.
**மருபூ** – காண்க: **மருநிலம்.**
**மருமக்கட்டாயம்** – மலையாளத்தில் ஒருவனுடைய சொத்தை அவனுக்குப்பின் அவனுடைய உடன்பிறந்தாளின் ஆண்மக்கள் அடையும் உரிமைமுறை.
**மருமக்கள்** – ஒருவனின் உடன்பிறந்தாள் மக்கள்; ஒருத்தியின் உடன்பிறந்தான் மக்கள்.
**மருமகப்பிள்ளை** – காண்க: **மருகன்.**
**மருமகள்** – மகன் மனைவி; ஒருத்தியின் உடன் பிறந்தான் மகள்; ஒருவனின் உடன்பிறந்தாள் மகள்.
**மருமகன்** – மகள் கணவன்; ஒருவனின் உடன் பிறந்தாள் மகன்; ஒருத்தியின் உடன் பிறந்தான் மகன்.
**மருமதாரை** – உயிர்நிலை; மார்பு.
**மருமம்** – காண்க: **மருமதாரை**; விதைப்பை; கமுக்கம், இரகசியம்; உடம்பு.
**மருமராஞ்சம்** – வில்லின் நாணொலி; காற்றால் அசையுஞ் சீலையாலும் இலையாலும் எழும் ஒலி.
**மருமாட்டி** – வழித்தோன்றியவள்; மருமகள்.
**மருமான்** – காண்க: **மருமகன்**; வழித்தோன்றல்.
**மருவகம்** – காண்க: **மருக்காரை**; மருக்கொழுந்து; கடாரநாரத்தை.
**மருவல(லா)ர், மருவார்** – பகைவர்.
**மருவாளி** – பச்சைக்கருப்பூரம்; வைப்புச் சூடன் வகை.
**மருவிதழ்** – பூவிதழ்.
**மருவீட்டுச்சடங்கு, மருவீடு** – திருமணத்திற்குப்பின் மணமக்களைப் பெண் வீடு அல்லது பிள்ளைவீட்டுக்கு அழைத்துச் செல்லுஞ் சடங்கு.
**மருவு** – மருவுகை; மணம்; மணச்செடிவகை; மணமகனுக்குப் பெண்வீட்டார் இடும் முதல் விருந்து.
**மருவுதல்** – கலந்திருத்தல்; வழக்கப்படுதல்; தோன்றுதல்; கிட்டுதல்; தழுவுதல்; பயிலுதல்; புணர்தல்; தியானித்தல்; பதித்தல்.
**மருள்** – மயக்கம்; திரிபுணர்ச்சி; வியப்பு; உன்மத்தம்; கள்; குறிஞ்சியாழ்த்திறம் எட்டனுள் ஒன்று; பண்வகை; எச்சம் எட்டனுள் பிறவிமுதல் அறிவின்றி மயங்கியிருக்கும் நிலை; சிறு செடிவகை; புதர்; பேய்; ஆவேசம்; புல்லுரு.
**மருள** – ஓர் உவமவுருபு.
**மருளல்** – அஞ்சல்; மயங்கல், எழுத்திலாவோசை; பேசலால் எழும் ஒலி; வியத்தல்; ஒப்பாதல்.
**மருளன்** – அறிவுமயக்கமுள்ளவன்; தெய்வமேறப் பெற்றவன்; மதவெறிபிடித்தவன்.
**மருளாளி** – பேயாவேசங்கொண்டு குறி சொல்லும் பூசாரி; ஒருசார் சிறுதெய்வங்களை வழிபடுவோன்.
**மருளி** – மயக்கம்; புத்திமயக்கமுள்ளவன்.
**மருளிந்தம், மருளிந்தராகம், மருளிந்தளம்** – ஒரு பண்வகை.
**மருளுதல்** – மயங்குதல்; வெருவுதல்; வியத்தல்; ஒப்பாதல்.
**மருளூமத்தை** – ஊமத்தைவகை.
**மரூஉ, மரூஉமொழி** – நட்பு; இயல்புவழக்கு மூன்றனுள் இலக்கணம் சிதைந்து மருவி வழங்கும் சொல்.
**மரை** – ஒரு மான்வகை; காட்டுப்பசு; தவளை; இரத்தினக்குற்றம்; திருகுவகை; விளக்கின் திரியை ஏற்றவுமிறக்கவும் உதவும் திருகுள்ள காய்; தாமரை.
**மரைக்காயர்** – துருக்கரில் ஒருவகையார்.
**மரைக்கிட்டி** – வில்முடுக்கு.
**மரைநீகம்** – தவளை.
**மரையா** – காட்டுப்பசு.
**மரையாடு** – ஆட்டுவகை.
**மரையான்** – காண்க: **மரையா.**
**மல்** – வளம்; வருவாய்; வலிமை; மல்தொழில்; மற்போர் செய்பவன்; திருமாலாடிய கூத்து; பருமை; காண்க: **மல்லுச்சட்டம்**; துகில்வகை.
**மல்காத்தல்** – காண்க: **மல்லாத்தல்.**
**மல்குதல்** – நிறைதல்; செழித்தல்; அதிகமாதல்.
**மல்லகசாலை** – மல்வித்தை பயிலுமிடம்.
**மல்லகதி** – குதிரையின் ஐவகை நடையினுள் ஒன்று.
**மல்லசம்** – மிளகு.
**மல்லம்** – மற்போர்; மல்லகதி; வலிமை; கிண்ணம்; தட்டம்; கதுப்பு; வேள்வியில் எஞ்சியது; பள்ளியறை.

**மல்லமார்க்கம்** – காண்க: **மல்லகதி.**

**மல்லயுத்தம்** – அறுபத்துநான்கு கலைகளுள் ஒன்றான மற்போர்.

**மல்லர்** – மற்போர் செய்வோர்; வலியர்; திருக்குறள் உரையாசிரியருள் ஒருவர்.

**மல்லரங்கம்** – காண்க: **மற்பயிலிடம்.**

**மல்லரி** – பறைவகை.

**மல்லல்** – வளம்; வலிமை; மிகுதி; பொலிவு; அழகு; செல்வம்.

**மல்லன்** – மற்போர் செய்வோன்; பெருமையிற் சிறந்தோன்.

**மல்லாக்கடித்தல்** – காண்க: **மல்லாத்தல்.**

**மல்லாட்டம்** – சண்டை.

**மல்லாடல்** – திருமால் கூத்தினுள் ஒன்று.

**மல்லாத்தல்** – மேல்முகமாகக் கிடக்கச்செய்தல்; தோற்றுப்போதல்.

**மல்லாத்துதல்** – முதுகுகீழாக முகம் மேலாகக் கிடக்கச்செய்தல்.

**மல்லாய்** – இரப்போர் கலம்.

**மல்லாரி** – பறைவகை; பண்வகை; சண்டைக்காரி.

**மல்லி** – குடமுல்லை; காண்க: **எருமைமுல்லை; காட்டுமல்லி;** பருத்துத்தடித்தவள்; தீர்த்தங்கரருள் ஒருவர்; பேராமல்லிகை; கொத்துமல்லி.

**மல்லிகை** – பூங்கொடிவகை; குடமல்லிகை; விளக்குத்தண்டு; இரப்போர் கலம்; பாண்டம்; மகரந்தமல்லிகை.

**மல்லிகைமொட்டு** – மலராத மல்லிகைப்பூ; மகளிர் தலையணிவகை; மொட்டம்பு.

**மல்லுக்கட்டுதல்** – மற்போர்புரிதல்; பொருதல்; கட்டாயப்படுத்துதல்; வற்புறுத்தல்.

**மல்லுச்சட்டம்** – குறுக்குவிட்டம்.

**மல்லுப்பிடித்தல்** – காண்க: **மல்லுக்கட்டுதல்.**

**மல்லூகம்** – புழு.

**மல்லை** – வளம்; பெருமை; காண்க: **மல்லாய்;** வட்டம்; மாமல்லபுரம்.

**மல்வென்றி** – வாகைத்திணையுள் மற்போரில் வெற்றியைக் கூறும் ஒரு புறத்துறை.

**மலக்கட்டு** – காண்க: **மலச்சிக்கல்.**

**மலக்கடி** – மனக்கலக்கம்.

**மலக்கம்** – காண்க: **மலக்கடி;** துன்பம்; மாறுபாடு.

**மலக்கு** – மயக்கம்; தேவன்.

**மலக்குண்ணுதல்** – கலக்கப்படுதல்.

**மலக்குதல்** – கலக்குதல்.

**மலகரி** – குறிஞ்சிப்பண்வகை.

**மலங்கல்** – குளம்; காண்க: **மலங்கு.**

**மலங்கழித்தல்** – உடல்மலத்தை வெளியேற்றுதல்; ஆணவம் முதலிய மலம் நீக்குதல்.

**மலங்கழிதல்** – உடல் மலம் வெளியேறுதல்; ஆணவம் முதலிய மலம் நீங்குதல்.

**மலங்கு** – விலாங்குமீன்.

**மலங்குதல்** – நீர் முதலியன குழம்புதல்; கெடுதல்; மனங்கலங்குதல்; பிறழ்தல்; ததும்புதல்.

**மலச்சிக்கல், மலச்சிக்கு** – மலவடைப்பு.

**மலசகிதர்** – மும்மலத்தோடு கூடியவர்.

**மலசலம்** – மலமூத்திரங்கள்.

**மலட்டா** – கன்று போடாத பசு.

**மலட்டாறு** – காடுகளில் ஓடுவதும் விரைவில் நீர் வற்றுவதுமான ஆறு.

**மலடன்** – பிள்ளையில்லாதவன்.

**மலடி** – மகப்பேறில்லாதவள்; கருத்தரியாமை; ஈனாதவள்; ஈனாதது.

**மலத்திரயம்** – காண்க: **மும்மலம்.**

**மலநானம்** – தூய்மையான இடத்தில் எண்விரலுக்குக் கீழாகவுள்ள மண்ணையெடுத்து மந்திரஞ் சொல்லி உடம்பிற்றேய்த்து நீரில் மூழ்குகை.

**மலநீர்** – சிறுநீர்; மலமூத்திரம்.

**மலப்பு** – கடவுள் திருமுன்னர் ஆடும் ஒரு கூத்துவகை.

**மலப்பை** – மலம் தங்குமிடம்; உடம்பு.

**மலபந்தம்** – காண்க: **மலச்சிக்கல்;** மும்மலத்தாற் கட்டுண்கை.

**மலபரிபாகம்** – மலங்கள் தேய்தற்குரிய காரணங்களோடு கூடிய நிலை.

**மலபாண்டம்** – உடம்பு.

**மலம்** – அழுக்கு; பவ்வீ; சுக்கிலம்; தீட்டு; மூத்திரம் முதலிய உடல்மாசு; வண்டல்; துரு; காண்க: **மும்மலம்;** பாவம்; கருப்பூரம்.

**மலம்பாதை** – மலைவழி.

**மலமலத்தல்** – ஓர் ஒலிக்குறிப்பு.

**மலமலெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; கண்ணீர் பெருகுதற்குறிப்பு.

**மலயக்கால்** – காண்க: **மலையக்கால்.**

**மலயக்கோ** – பொதியமலைக்குத் தலைவனான பாண்டியன்.

**மலயசம்** – காண்க: **மலையசம்.**

**மலயம்** – பொதியமலை; சந்தனமரம்.

**மலயமாருதம்** – காண்க: **மலையக்கால்;** பண்வகை.

**மலயமுனி** – அகத்தியர்.

**மலர்** – பூ; தாமரை; ஒரு பேரெண்; ஆயுதம் முதலியவற்றின் மேற்குமிழ்; வெண்பாவின் இறுதிச்சீர் வாய்பாடுகளுள் ஒன்று; மும்மலமுடையவர்.

**மலர்க்கடை** – பூ விற்கும் கடை.

**மலர்க்கணையோன்** – பூக்களை அம்பாகவுடைய மன்மதன்.

**மலர்க்கா** – பூங்காவனம்.

**மலர்க்காம்பு** – பூவில் இதழின் கீழுள்ள பாகம்.

**மலர்ச்சி** – பொலிவு; மகிழ்ச்சி; மலர்தல்.
**மலர்த்தல்** – நிமிரச்செய்தல்; மலரச்செய்தல்.
**மலர்த்தாது** – காண்க: **பூந்தாது.**
**மலர்த்தாள்** – காண்க: **மலர்க்காம்பு.**
**மலர்த்திரள்** – பூங்கொத்து.
**மலர்த்துதல்** – மலரச்செய்தல்; மூடிய கை, குடை முதலியவற்றை விரித்துத் திறத்தல்; மல்லாத்துதல்.
**மலர்த்தூள்** – பூந்தாது.
**மலர்த்தேவி** – காண்க: **மலர்மகள்.**
**மலர்த்தேன்** – பூவிலுண்டாகும் தேன்; பூந்தாது தங்குமிடம்.
**மலர்தல்** – பூவின் மொட்டவிழ்தல்; பரத்தல்; மனமகிழ்தல்; தோன்றல்; எதிர்தல்; அகலுதல்; மிகுதல்.
**மலர்தொடுத்தல்** – பூவை இணைத்துக் கட்டுதல்.
**மலர்ப்பலி** – கைநிறையக் கொண்டு வழிபாடாக இடும் பூ.
**மலர்ப்பள்ளி** – பூவாலாகிய படுக்கை.
**மலர்ப்பு** – மலர்விக்கை; வெளிப்படக் காட்டுகை.
**மலர்மகள், மலர்மங்கை** – திருமகள்.
**மலர்மண்டபம்** – பூத்தொடுக்கும் மண்டபம்.
**மலர்மிசைநடந்தான், மலர்மிசையேகினான்** – தாமரைப்பூவில் நடந்த அருகன்; பரம்பொருள்.
**மலர்மிசையோன்** – தாமரையிலிருப்பவனான பிரமன்.
**மலரகிதர்** – மும்மலம் நீங்கப்பெற்றவர்.
**மலரடி** – பெரியார் அல்லது தெய்வத்தின் தாமரைபோன்ற திருவடி.
**மலரணை** – காண்க: **மலர்ப்பள்ளி.**
**மலரவன்** – காண்க: **மலரோன்.**
**மலருக்குநாயகம்** – கருவண்டு.
**மலரோன்** – காண்க: **மலர்மிசையோன்.**
**மலவாசயம்** – காண்க: **மலப்பை.**
**மலவாயில்** – உடலினின்றும் மலங்கழியும் வழி.
**மலவைரி** – சிவபிரான்.
**மலாகை** – தூதுசெல்பவள்; காமமிக்கவள்; பெண்யானை.
**மலாசு** – காண்க: **சிறுபூளை.**
**மலாஞ்சி** – வெள்ளுள்ளி.
**மலாடு** – பன்னிரண்டு கொடுந்தமிழ் நாட்டினுள் ஒன்றான திருக்கோவலூரைச் சூழ்ந்த நாடு.
**மலாம்** – முலாம்பூசுகை.
**மலார்** – வளார்.
**மலாரம்** – வளையற்கோவை.
**மலாவகம்** – பிண்ணாக்கு.
**மலிசம்** – அரசமரம்.
**மலிதல்** – நிறைதல்; பெருகல்; மிகுதல்; நெருங்குதல்; புணர்ச்சியில் மகிழ்தல்; செருக்குதல்; விம்முதல்; பரத்தல்; விரைதல்; விலைநயத்தல்; சொல்லுதல்.
**மலிபு** – மிகுதி; நிறைவு; காதலரின் சேர்க்கை வகை; உவகை; நயவிலை; தன்மை; உயர்வு; உத்தமம்.
**மலிர்தல்** – பெருகுதல்; நீர் முதலியன ஒழுகுதல்; பயிலுதல்.
**மலிர்நிறை** – பெருவெள்ளம்; நீரூற்று.
**மலினம்** – கருமை; மாசு; மரவகை; தீயகுணம்; பாவம்; குற்றம்; கெடுதி; மோர்.
**மலினமுகன்** – அக்கினி; பிசாசு; கருங்குரங்கு; கொடியவன்; கருவண்டு.
**மலினி** – தீட்டாயுள்ள பெண்.
**மலீமசம்** – அழுக்கு; இரும்பு.
**மலூகம்** – குருவி.
**மலை** – ஈட்டம்; காண்க: **மலைக்கட்டுக்குளம்.**
**மலைக்கட்டுக்குளம்** – மலையடிவாரத்தில் அமைக்கப்பெற்ற குளம்.
**மலைக்கால்** – ஆட்டுக்கல்.
**மலைக்குகை** – மலையிலே தானாகவாவது குடையப்பட்டாவது அமைந்த உள்ளிடம்.
**மலைக்குடவு** – இருமலைகளின் இடைப்பட்ட பள்ளம்.
**மலைக்குண்டுவேர்** – ஒரு செடிவகை.
**மலைக்கொடிமன்னன்** – தடாதகைப்பிராட்டியின் தந்தையாகிய பாண்டியமன்னன்.
**மலைக்கோன்** – கொன்றைமரவகை.
**மலைகலக்கி** – ஒரு பூண்டுவகை.
**மலைகுனியநின்றபிரான், மலைகுனியநின்றான்** – திருவேங்கடமுடையான்.
**மலைச்சரக்கு** – கருப்பூரவகை; மலையில் உண்டாகும் மூலிகைகளிலிருந்து எடுத்த மருந்துச்சரக்கு.
**மலைச்சார்பு(வு)** – மலைப்பகுதி.
**மலைச்சாரல்** – மலையின் சரிவான பகுதி; மலையிற் சாரலாகப் பெய்துசெல்லும் மேகம்; மலையில் விழும் மழை; சாரற்காற்று.
**மலைச்சிகரம்** – மலையினுச்சி.
**மலைத்தல்** – மாறுபடுதல்; பொருதல்; மயங்குதல்; வருத்துதல்; திகைத்தல்; வியத்தல்.
**மலைத்தாரம்** – காண்க: **மலைபடுபொருள்.**
**மலைத்துவரை** – ஒரு துவரைவகை.
**மலைத்தேன்** – மலையில் உண்டாகுந் தேன்; இன்சுவையுள்ள பலாப்பழம்.
**மலைதல்** – சூடுதல்; மேற்கொள்ளுதல்; ஒத்தல்; பறித்தல்; எதிர்த்தல்; பகைத்து மாறுபடுதல்; மயங்குதல்; வாதாடுதல்.
**மலைதாங்கி** – காண்க: **அரிவாள்முனைப்பூண்டு;** செடிவகை; வட்டத்திருப்பி.

**மலைநாடன்** – மலைவளமுடைய நாட்டுக்கு அரசன்; சேரன்.

**மலைநாடு** – மலைப்பாங்கான நாடு; சேரநாடு.

**மலைநாதம்** – கன்மதம்; சகஸ்ரபேதி; வக்கிராந்த பாடாணம்.

**மலைநார்** – காண்க: **கல்நார்.**

**மலைநெல்** – நெல்வகை.

**மலைப்பக்கம்** – மலையின் சரிவான பாகம்.

**மலைப்பச்சை** – ஒரு செடிவகை.

**மலைப்பள்ளி** – அருந்தவர் வாழும் மலையிடம்.

**மலைப்பாம்பு** – ஒரு பாம்புவகை.

**மலைப்பாழி** – காண்க: **மலைக்குகை.**

**மலைப்பிஞ்சு** – சிறுகல்.

**மலைப்பிளப்பு** – மலையில் உள்ள விடர்.

**மலைப்பிறங்கம்** – உலோகமணல்.

**மலைப்பு** – அறிவுமயக்கம்; திகைப்பு; போர்; மாறுபாடு; கூத்தின் விகற்பம்; மயக்கம்; சம்பிரமம்.

**மலைப்புறம்** – காண்க: **மலைச்சார்பு(வு).**

**மலைப்புனம்** – தினைவிளையும் நிலம்.

**மலைபடுபொருள்** – மலையில் உண்டாகும் மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமம் என்னும் ஐவகை மணப்பண்டம்.

**மலைமகள்** – பார்வதி.

**மலைமஞ்சி** – பெருங்குரும்பை எனும் செடிவகை.

**மலைமடந்தை** – காண்க: **மலைமகள்.**

**மலைமதம்** – கன்மதம்.

**மலைமல்லிகை** – காட்டுமல்லி, மரமல்லிகை.

**மலைமாது(ன்)** – காண்க: **மலைமகள்.**

**மலைமுழக்கு** – மலையினின்று கேட்கும் எதிரொலி.

**மலைமுழை, மலைமுழைஞ்சு** – காண்க: **மலைக்குகை.**

**மலைய** – ஓர் உவம வாய்பாடு.

**மலையக்கால்** – பொதியமலையிலிருந்து வரும் தென்றற்காற்று.

**மலையசம்** – சந்தனமரம்; தென்றற்காற்று; மலையாடு.

**மலையடி** – தாழ்வரை; சேவற்கோழி; கொங்கு வேளாளர்.

**மலையடிப்படி** – குறிஞ்சிநிலத்தூர்.

**மலையடிவாரம்** – தாழ்வரை.

**மலையப்பொருப்பன்** – பாண்டியன்.

**மலையம்** – மலையினுச்சி; குறிஞ்சியாழ்த் திறத்துள் ஒன்று; பொதியமலை.

**மலையமாருதம்** – காண்க: **மலையக்கால்.**

**மலையமான்** – சேரன்; உடையார்சாதியின் உட்பிரிவினர்; மலாடு ஆளும் அரசன்.

**மலையமானாடு** – செந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் திருக்கோவலூரைச் சூழ்ந்த நாடு.

**மலையரசன்** – மலைநாட்டுக்கு அரசன்; மலாடு ஆளும் அரசன்; இமயமலைக்கு அரசன்.

**மலையரண்** – அரண் நான்கனுள் ஒன்றான மலையாகிய காப்பிடம்; மலைமேற்கோட்டை.

**மலையருவி** – மலையிலிருந்து விழும் நீர்வீழ்ச்சி.

**மலையரையன்** – காண்க: **மலையரசன்.**

**மலையன்** – குறிஞ்சிநிலத் தலைவன்; சேர மன்னன்; கடையெழு வள்ளலுள் ஒருவனான காரி; தமிழ்நாட்டுப் பணிக்கச் சாதியினர்.

**மலையாட்டி** – மலைநாட்டுப் பெண்.

**மலையாரம்** – சந்தனமரம்.

**மலையாள்** – காண்க: **மலைமகள்.**

**மலையாளபகவதி** – மந்திரங்களுக்கு அதிதேவதையாகக் கருதப்படும் துர்க்காதேவி; பெருமோசக்காரன்.

**மலையாளர்** – மலைநாட்டார்.

**மலையாளி** – மலையில் வாழ்பவன்; மலையாள நாட்டான்; வேளாள வகுப்பின் ஒரு பிரிவினர்; மிளகு.

**மலையானிலம்** – காண்க: **மலையக்கால்.**

**மலையிடறு** – பெருந்தடை.

**மலையிலக்கு** – வெளிப்படையானது.

**மலையிறக்கம்** – மலையின் இறங்குசரிவு.

**மலையின்முனிவன்** – அகத்திமரம்; மிளகு; அத்திவகை.

**மலையீந்து** – ஒரு மரவகை.

**மலையேறுதல்** – தெய்வம் இடத்தினின்று நீங்குதல்; முடிவடைதல்; மாவிளக்கு நெய்யற்று அணைந்துபோதல்; மலையின்மேல் ஏறுதல்.

**மலைவசம்பு** – ஒரு செடிவகை; மிளகு.

**மலைவட்டை** – ஒரு மரவகை.

**மலைவமைதி** – இடம், காலம், கலை முதலிய அறுவகை மலைவும் சில காரணங் கருதிப் பொருத்தமுடையனவாக அமைத்துக் கொள்ளப்படுவது.

**மலைவளம்** – மலைநிலத்தின் செழிப்பு; காண்க: **மலைபடுபொருள்.**

**மலைவளர்காதலி** – காண்க: **மலைமகள்.**

**மலைவாசம்** – மிளகு; உடல்நலம் கருதி மலையிற் சென்று வசிக்கை.

**மலைவாசி** – மலையில் வாழ்பவர்; மலையில் வாழ்வது.

**மலைவாசிக்கொம்பு** – பன்றிக்கொம்பு.

**மலைவாணர்** – மலைவாழ்நர்.

**மலைவாழை** – ஒரு வாழைவகை.

**மலைவீரியம்** – அன்னபேதி.

**மலைவு** – உவமச்சொல்; மயக்கம்; மாறுபாடு; திகைப்பு; உரை செயல்களின் முன்னுக்குப் பின் முரண்; இடம், காலம், கலை, உலகம், நியாயம், ஆகமம் என்பவற்றைப் பொருத்த மின்றிக் கூறுகையாகிய குற்றம்; போர்.

**மலைவேம்பு** – வேப்பமரவகை; பெருமரவகை.

**மவ்வம்** – அழகு.

**மவ்வல்** – காண்க: **மௌவல்.**

**மவுட்டியம்** – அறியாமை.

**மவுணன்** – கணவன்.

**மவுலி** – முடி; சடை; தலை.

**மவுனம்** – மோனம், பேசாமை.

**மவுனி** – ஆமை; மவுனஞானி.

**மழ** – காண்க: **மழவு.**

**மழகொங்கம், மழநாடு, மழபுலம்** – திருச்சிராப்பள்ளிக்கு மேல்பால் காவிரியாற்றுக்கு வடபாகத்திலுள்ள பகுதி.

**மழபுலவஞ்சி** – பகைவர் நாட்டைப் பாழ்படுத்தும் புறத்துறை.

**மழபுலவர்** – பள்ளியிற் படிக்கும் சிறுவர்.

**மழமழத்தல்** – வழவழப்பாதல்.

**மழமழப்பு** – மெதுத்தன்மை; உரை செயல்களில் உறுதியின்மை.

**மழமழெனல்** – மெத்தெனற்குறிப்பு.

**மழலை** – குழந்தைகளின் திருந்தாச் சொல்; மென்மொழி; இளமை; மெல்லோசை.

**மழலைத்தேன்** – புதுத்தேன்.

**மழலைப்பேச்சு** – குதலைச்சொல்; திருந்தாப் பேச்சு.

**மழவன்** – இளைஞன்; வீரன்; மழநாட்டான்.

**மழவு** – இளமை; குழந்தை; மயக்கம்.

**மழறுதல்** – மென்மையாதல்; தெளிவில்லாதிருத்தல்.

**மழித்தல்** – மொட்டையடித்துக்கொள்ளுதல்.

**மழித்தலை** – மொட்டைத்தலை.

**மழு** – கோடரி; காண்க: **மழுவாள்;** பழுக்கக் காய்ச்சிய இரும்பு; கடல்; மழுங்கிய; அதிகமான.

**மழு (வி)** – கப்பு; மங்கு.

**மழுக்கம்** – கூரின்மை; நிலைமைத்தாழ்வு; ஒளி மழுங்குகை; விவேகமின்மை; மொட்டை.

**மழுக்கல்** – நெல்லை ஒருமுறை குற்றியெடுத்த தவிடு நீங்காத அரிசி.

**மழுக்குதல்** – மழுங்கச்செய்தல்; ஒளிகுறையச் செய்தல்; விவேகத்தைக் குறைத்தல்; நெற்குற்றுதல்; அடித்தல்; மொக்குதல்.

**மழுகுதல்** – மழுங்குதல்; ஒளிகுறைதல்.

**மழுகூழை** – வாலிழந்த விலங்கு; மூடன்.

**மழுங்கல்** – மழுங்கினது; நாணிலி; மூடன்; மட்டமான பொன்வகை.

**மழுங்குணி** – அறிவற்றவன்.

**மழுங்குதல்** – கூர்நீங்குதல்; பொலிவழிதல்; கெடுதல்; ஒளிகுறைதல்; அறிவுக்கூர்மை குறைதல்; கவனிப்பின்றி மறைந்துபோதல்.

**மழுப்பன்** – செயலை மழுப்பிவிடுவோன்; தாமதப்படுத்துவோன்; குதர்க்கம் பேசுவோன்.

**மழுப்புதல்** – நெகிழவிடுதல்; செயலைப் பயனற்றதாக நெகிழ்த்துதல்; தாமதப்படுத்தல்; ஏமாற்றுதல்.

**மழுமட்டை** – கூர்மழுங்கினது; முழுமூடத்தனம்.

**மழுமாறி** – புரட்டன்.

**மழுமாறுதல்** – தந்திரம் பண்ணுதல்.

**மழுமொட்டை** – கூர்மழுங்கினது; முழுமொட்டையான தலை.

**மழுவலான்** – காண்க: **மழுவாளி.**

**மழுவன்** – அஞ்சாதவன்; நகர்காப்போன்; பிடிவாதமுள்ளவன்.

**மழுவாள்** – பரசாயுதம்.

**மழுவாளி** – காண்க: **மழுவோன்;** பரசுராமன்.

**மழுவி** – நாணமிழந்தவள்.

**மழுவெடுத்தல்** – கை, நா முதலியவற்றிலே மழுவையேந்திச் சூளுரைத்தல்.

**மழுவேந்தி** – காண்க: **மழுவாளி;** பொய்யன்.

**மழுவோன்** – மழுவை ஆயுதமாகக் கொண்டவனான சிவபிரான்.

**மழை** – மேகத்தினின்று பொழியும் நீர்; நீருண்ட மேகம்; காண்க: **மழைக்கால்;** நீர்; கருமை; குளிர்ச்சி; மிகுதி.

**மழைக்கண்ணி** – ஒரு பறவைவகை.

**மழைக்கரு** – மேகம் நீர்கொள்ளுதல்; புகை.

**மழைக்கால்** – பெய்யும் நிலையில் கருநிறத்தோடு மேகத்திலிருந்து இறங்கும் நீர்க்கால்.

**மழைக்காலிருட்டு** – மழைபெய்யுங் காலத்து இரவிலுண்டாகும் பேரிருள்.

**மழைக்குணம், மழைக்குறி** – காண்க: **மழைத்தோற்றம்.**

**மழைக்கோள்** – சுக்கிரன்.

**மழைக்கோளாறு** – காண்க: **மழைத்தோற்றம்;** புயலெடுக்கை.

**மழைகாலம்** – மாரிக்காலம்.

**மழைச்சிலை** – வானவில்.

**மழைத்தல்** – மழை நிறைந்திருத்தல்; கருநிறமாதல்; குளிர்தல்; மழைபெய்தல்.

**மழைத்தாரை** – விடாது பொழியும் மழைநீர்.

**மழைத்துளி** – மழைநீர்ச்சொட்டு.

**மழைத்தூவ(ற)ல்** – சிறு திவலையாகத் தூற்றும் மழை.
**மழைத்தோற்றம்** – மழை வருவதற்குக்குறியான மந்தாரம்.
**மழைதாங்கி** – கொங்காணி; குடை.
**மழைப்புகார்** – காண்க: **மழைத்தோற்றம்.**
**மழைபெய்தல்** – மேகத்தினின்று நீர்விழுதல்.
**மழைமுகில்** – சூற்கொண்ட மேகம்.
**மழையடை** – விடாது பெய்யும் மழை.
**மழையலர்** – நீர்.
**மழையான்** – காண்க: **மழைவண்ணன்.**
**மழையேறு** – இடி.
**மழையொறுத்தகாலம்** – வறண்ட காலம்.
**மழைவண்ணக்குறிஞ்சி** – மேகவண்ணப் பூவுள்ள மருதோன்றி.
**மழைவண்ணன்** – திருமால்.
**மழைவறங்கூர்தல்** – மழை பெய்யாதொழிதல்.
**மழைவீற்றிருத்தல்** – பருவமழை பெய்கை.
**மள்குதல்** – குறைதல்.
**மள்ளம்(ல்)** – வலிமை.
**மள்ளன்** – உழவன்; திண்ணியோன்; வலிமையுடையவன்; படைத்தலைவன்; படைவீரன்; இளைஞன்; மருதநிலத்தோன்; குறிஞ்சிநிலத்து வாழ்வோன்.
**மள்ளு** – கைம்மரம்.
**மளமளத்தல்** – மரக்கொம்பு முதலியன முறியும் போது ஒலியெழும்புதல்.
**மளமளப்பு** – முறிதற்குறிப்புள்ள ஒலி.
**மளமளெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு; விரைவுக் குறிப்பு.
**மளாரெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**மளிகாரம்** – வெண்காரம்.
**மளிகை, மளிகைக்கடை** – பலசரக்குக்கடை.
**மளுக்கெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**மற்கடம்** – குரங்கு.
**மற்கரை** – குகை; மலடி.
**மற்கு** – கோபம்.
**மற்குணம்** – மூட்டுப்பூச்சி.
**மற்கூத்து** – திருமால் ஆடிய கூத்து.
**மற்கோல்** – பகை.
**மற்சம்** – மீன்; மீனராசி; ஆசனவகை.
**மற்சரம்** – பொறாமை; போட்டி.
**மற்சரித்தல்** – போட்டியிடுதல்.
**மற்சியம்** – காண்க: **சுவடு;** மற்சம்; மாற்றறிய வைத்திருக்கும் மாதிரிப்பொன்; சுவடு; உடம்பிலுண்டாகும் புள்ளி.
**மற்பயிலிடம்** – மல்வித்தை கற்குங் கூடம்.
**மற்ற** – பிற.
**மற்றது** – ஏனையது.
**மற்றநாள்** – மறுநாள்; நாளைநின்று மறுநாள்.
**மற்றப்படி** – வேறுவகையில்.
**மற்றவர்** – பிறர்; ஏனையோர்.
**மற்று** – ஓர் அசைநிலை; பிறிதின் பொருட் குறிப்பு; வினைமாற்றுக்குறிப்பு; மறுபடியும்; பின்; காண்க: **மற்றப்படி.**
**மற்றும்** – மேலும்; மீண்டும்.
**மற்றை** – காண்க: மற்ற.
**மற்றையது** – குறித்த பொருளுக்கு இனமான வேறு ஒன்று.
**மற்றொழில்** – மல்வித்தை.
**மற்றொன்று** – பிறிதொன்று.
**மறக்கருணை** – அழித்து நலமுண்டாக்கும் அருள்.
**மறக்களம்** – போர்க்களம்.
**மறக்களவழி** – போரிற் பகையழிக்கும் ஒருவனை உழும் வேளாளனாக மிகுத்துக்கூறும் புறத்துறை.
**மறக்களவேள்வி** – காண்க: **களவேள்வி.**
**மறக்கற்பு** – பத்தினி தன் சீற்றத்தாற் கடுஞ் செயல் தோற்றுவிக்குங் கற்பு.
**மறக்காஞ்சி** – போரில் விழுப்புண்பெற்ற வீரன் தன் வாழ்க்கை வேண்டாது அப் புண்ணைக் கிழித்துக்கொண்டு இறத்தலைக் கூறும் புறத்துறை.
**மறக்குடி** – வீரகுலம்; மறவர்குலம்.
**மறங்குதல்** – கலங்குதல்.
**மறச்செவி** – பாவம் பயக்கும் மொழிகளைக் கேட்குங் காது.
**மறத்தல்** – அயர்த்தல்; அசட்டைபண்ணல்; ஒழிதல்; நினைவின்றிப்போதல்; பொச்சாப்பு.
**மறத்தி** – மறக்குடிப் பெண்; பாலைநிலப் பெண்; குறிஞ்சிநிலப் பெண்.
**மறத்துறை** – பாவநெறி; வீரச்செயல்கள்.
**மறதி** – நினைவின்மை.
**மறநிலைப்பொருள்** – வெற்றி, திறை, தண்டம் முதலியவற்றால் அரசன் தேடிய பொருள்.
**மறநிலையறம்** – அரசன் பகையறுத்து நாட்டினைக் காவல்புரியும் அறச்செயல்.
**மறநிலையின்பம்** – வீரச்செயல், குறியெய்தல், ஏறுதழுவல், வலிதிற்கோடல் முதலியவற்றால் விரும்பிய கன்னியை அரசன் மணமுடித்து இன்புறல்.
**மறப்பிலி** – கடவுள்.
**மறப்பு** – நினைவின்மை; மறுப்பு.
**மறப்புகழ்** – வீரச்செயலால் வருங் கீர்த்தி.
**மறப்புலி** – கொடிய புலி; சிங்கம்.

**மறம்** – வீரம்; கோபம்; பகை; வலிமை; வெற்றி; போர்; கொலைத்தொழில்; யமன்; கெடுதி; பாவம்; கலம்பகத்தின் ஓர் உறுப்பு; மறவர் குலம்; மயக்கம்.

**மறமலி** – யானை.

**மறமுல்லை** – வேந்தன் வேண்டியது கொடுப்பவும் கொள்ளாத வீரனது பயன்கருதா நிலையைக் கூறும் புறத்துறை.

**மறல்** – பகை; பிணக்கு; போர்; யமன்; மரணம்; எழுச்சி; ஒரு கூத்துவகை; மறதி; மயக்கம்; மறுத்தல்; வறுமை; குற்றம்.

**மறலி** – மறதி; மயக்கம்; யமன்; பொறாமை.

**மறலிமறலி** – சிவன்.

**மறலுதல்** – மாறுபடுதல்; போர்செய்தல்; கொல்லுதல்.

**மறலை** – புல்லறிவாளன்.

**மறவணம்** – பாவகுணம்.

**மறவன்** – பாலைநிலத்தான்; மலைவேடன்; மறக்குடியான்; வீரன்; வலியவன்; படைத் தலைவன்; கொடியோன்.

**மறவாணர்** – மலைவேடர்.

**மறவி** – மறதி; கள்; தேன்; பதநீர்; மறதியுள்ள வன்; அழுக்காறு; இழிவு; குற்றம்.

**மறவுரை** – தீய உபதேசமொழி.

**மறவை** – வன்கண்மையுடையது.

**மறவோன்** – வீரன்; பத்துக்குமேல் பதினான்கு வயதுக்குட்பட்ட ஆண்மகன்.

**மறி** – ஆடு, குதிரை, மான் இவற்றின் குட்டி; ஆடு, குதிரை, மான் இவற்றின் பெண்; ஆடு; மேடராசி; அழுங்கு; அழுங்கின் குட்டி; மான்; நிறுத்துகை.

**மறிக்கையான்** – சிவபிரான்.

**மறிகாணுதல்** – குதிரை, மான் முதலியன குட்டி போடுதல்.

**மறித்தல்** – தடுத்தல்; திருப்புதல்; மேல்கீழாக்கு தல்; அழித்தல்; தடுத்தற்குறியாகக் கையசைத் தல்; திரும்பச்செய்தல்.

**மறித்தும்** – மீண்டும்.

**மறிதரல்** – மீளுகை.

**மறிதல்** – கீழ்மேலாதல்; மீளுதல்; முதுகிடுதல்; விழுதல்; சாய்தல்; கிளர்தல்; முறுக்குண்ணு தல்; பலகாலுந்திரிதல்; தடைப்படுதல்; நிலை குலைதல்; அறுபடுதல்; சாதல்; துள்ளுதல்.

**மறிந்து** – மீண்டும்.

**மறிபடுதல்** – தடுக்கப்படுதல்; இடையூறுபடுதல்.

**மறியல்** – நிறுத்துகை; தடை; வழக்கில் செய்யும் தடையாணை; வேலைநிறுத்தம்; வாணிகம் நடக்கவொட்டாதபடி தடுத்துநிறுத்துகை.

**மறிவு** – திரும்புகை; கேடு.

**மறு** – குற்றம்; களங்கம்; தீமை; அடையாளம்; மச்சம்; பாலுண்ணி; மற்ற.

**மறுக்கம்** – சுழற்சி; துன்பம்; மனக்கலக்கம்.

**மறுக்களித்தல்** – மறுத்தல்; காண்க: **மறுகலித்தல்.**

**மறுக்களித்துப்பேசுதல்** – சொன்னதை மறுத்துப் பேசுதல்.

**மறுக்குத்து** – ஒரு செடிவகை.

**மறுக்குதல்** – புளி முதலியன சேர்த்து எண்ணெயி லுள்ள கெடுதிகளை நீக்குதல்; மனத்தைக் கலக்குதல்; எண்ணெய் முதலியவற்றால் தொண்டை கரகரத்தல்.

**மறுகரை** – எதிர்க்கரை.

**மறுகல்** – நோய்திரும்பல்; சுழலல்; கலங்குதல்.

**மறுகலித்தல்** – நோய் முதலியன திரும்புதல்.

**மறுகால்** – மதகு; அதிக நீரை வெளியேற்றும் வாய்க்கால்; மறுபடி; இரண்டாம் முறை பயிரிட்ட பயிர்.

**மறுகு** – தெரு; குறுந்தெரு; அறுத்த தாளினின்று உண்டாகும் இரண்டாம் விளைச்சல்.

**மறுகுசிறை** – தெருவின் இருபுறத்துமுள்ள வீட்டு வரிசை.

**மறுகுதல்** – சுழலுதல்; பலகாலுந் திரிதல்; மனம் கலங்குதல்; வருந்துதல்; சிதைதல்; அரைபடு தல்; கொண்டுபோதல்.

**மறுகை** – தெரு; மாட்டின் பொதிப்பாரத்தில் பாதியளவு; நுங்கு.

**மறுசொல்** – பதில்விடை.

**மறுத்தருதல்** – மீட்டல்.

**மறுத்தல்** – தடுத்தல்; திருப்புதல்; இல்லை யென்னுதல்; நீக்குதல்; வெட்குதல்; திரும்பச் செய்தல்; இல்லாமற்போதல்.

**மறுத்து** – மறுபடியும்; மேலும்.

**மறுத்துப்போதல்** – பலன் கொடுக்காமற் போதல்.

**மறுத்துமொழிநிலை** – ஓர் அணிவகை.

**மறுத்துரைத்தல்** – எதிர்ப்புக்கூறல்.

**மறுத்தரவு, மறுதரவு** – மீட்கை.

**மறுதலித்தல்** – வேறுபடுதல்; மாறுபடுதல்; மறுத் தல்; நெறியைவிட்டு நீங்குதல்; காண்க: **மறுகலித்தல்.**

**மறுதலிப்பு** – மறுக்கை; வேறுபடுகை.

**மறுதலை** – எதிர்க்கட்சி; பூர்வபட்சம்; பகைப் பொருள்; பகை; நிகர்; இரண்டாம் முறை.

**மறுதலைத்தல்** – எதிரிட்டுத் தோன்றுதல்; மறுத் தல்.

**மறுதலைப்பெண்** – காண்க: **மறுதாரம்.**

**மறுதாக்கல்** – எதிருரை; விடை.

**மறுதாய்** – மாற்றாந்தாய்.

**மறுதாரம்** – இரண்டாந்தாரம்.
**மறுதொழில்** – பாவம்.
**மறுநாள்** – அடுத்த தினம்.
**மறுநோய்** – மறுக்களித்த நோய்; பழம்பிறப் புணர்வு.
**மறுப்ப** – ஓர் உவம வாய்பாடு.
**மறுப்படுதல்** – வசைப்பாடல்; சிதைவுறுதல்; புள்ளியுடைத்தாதல்; துன்பப்படுதல்.
**மறுப்பு** – மறுத்தல்; எதிர்த்தல்; கண்டனம்; மறு உழவு; முன்னுழுத சாலுக்குக் குறுக்காக உழுகை.
**மறுபடி** – விடை; காண்க: **மறுபடியும்**.
**மறுபடியும்** – மீளவும்.
**மறுபாடு** – பின்பக்கம்.
**மறுபாடுருவ** – நன்றாக.
**மறுபாடுருவுதல்** – ஊடுருவிப்போதல்.
**மறுபாவி** – பகைவன்.
**மறுபிறப்பு, மறுபிறவி** – முற்பிறப்பு; இனி உண்டாகப் போகும் பிறப்பு; புதுப்பிறப்பு.
**மறுபுலம்** – பாலைநிலம்.
**மறுபேச்சு** – மாற்றிக் கூறும் சொல்; தடுத்துரைக்கை; காண்க: **மறுசொல்**.
**மறுபோகம்** – ஆண்டின் இரண்டாம் முறை விளைச்சல்.
**மறுமணம்** – கணவன் அல்லது மனைவி இறந்தபின் மீண்டும் செய்துகொள்ளுங் கலியாணம்.
**மறுமனசுபடுதல்** – முன்னிருந்த எண்ணம் மாறுதல்.
**மறுமாடி** – வீட்டின் உத்தரமட்டத்துக்கு மேலுள்ள அடைப்புச்சுவர்; மாடிக்குமேல் மாடி; மலைப்பிளவு; வரம்பு.
**மறுமாற்றம்** – காண்க: **மறுசொல்**; கறிப்பொருள்.
**மறுமுகம்** – வேறு பக்கம்; அயலான் முகம்.
**மறுமுள்** – பாலுண்ணி; அம்மை முத்தின் மேலுண்டாம் மறுமுத்து; ஆறிவரும் புண்ணில் தோன்றும் சிரங்கு.
**மறுமுறை** – மறுதடவை; மறுபிறப்பு.
**மறுமை** – மறுபிறவி; மறுவுலகம்.
**மறுமொழி** – பதில்விடை; அனுப்புஞ் செய்தி.
**மறுவருதல்** – மனஞ்சுழலுதல்.
**மறுவல்** – கத்தூரிவிலங்கு; கத்தூரி; மீட்டும்.
**மறுவலிடுதல்** – திரும்புதல்; சிறிது எஞ்சிநிற்றல்.
**மறுவலும்** – மீண்டும்.
**மறுவி** – காண்க: **மறுவல்**.
**மறை** – மறைக்கை; இரகசியம்; மந்திராலோசனை; வேதம்; உபநிடதம்; ஆகமம்; மந்திரம்; உபதேசப் பொருள்; சிவப்புப் புள்ளிகளையுடைய மாடு முதலியன; களவுப் புணர்ச்சி; பெண்குறி; உருக்கரந்த வேடம்; திருகுவகை; விளக்கின் திரியை ஏற்றவும் இறக்கவும் உதவும் திருகுள்ள காய்; புகலிடம்; சிறைக்கூடம்; மறைவிடம்; வஞ்சனை; இரண்டாம் உழவு; கேடகம்; எதிர்மறை; விலக்குகை; புள்ளி; சங்கின் முறுக்கு.
**மறைக்கிழவன்** – காண்க: **மறைக்கோ**.
**மறைக்கொடியோன்** – துரோணாச்சாரியன்; பார்ப்பனன்; பிரமன்.
**மறைக்கோ** – பிரமன்.
**மறைச்சி** – புள்ளியுள்ள பெண்விலங்கு; பார்ப்பனத்தி.
**மறைச்சிரம்** – உபநிடதம்.
**மறைசை** – மறைக்காடு, வேதாரணியம்.
**மறைசொல்** – காண்க: **மறைமொழி**.
**மறைத்தல்** – மறையச்செய்தல்; மூடுதல்; தீது வாராமற் காத்தல்.
**மறைத்தலைவி** – திருமகள்.
**மறைத்துமொழிகிளவி** – இடக்கரடக்கல்.
**மறைதல்** – ஒளிந்துகொள்ளுதல்; தோன்றாமற் போதல்.
**மறைப்பு** – நிரைச்சல்; ஒளிப்பு.
**மறைப்புச்சுவர்** – வீட்டுக்குள் கட்டப்படும் கனமில்லாத சுவர்.
**மறைபதி** – கள்ளக்கணவன்.
**மறைபுகல்** – அடைக்கலம் புகுதல்.
**மறைபொருள்** – உட்கருத்து; ஒளிக்கத்தக்கது; இரகசியம்.
**மறைமுடுக்கி** – வில்முடுக்கி.
**மறைமுடிவு** – வேதாந்தம்; கடவுள்.
**மறைமுதல்** – கடவுள்; சிவபிரான்; பிரணவம்.
**மறைமுதல்வன்** – கடவுள்; வேதம்வல்ல அந்தணன்.
**மறைமுதலி** – காண்க: **மறைமுதல்**.
**மறைமூலம்** – உச்சிமையம்; பிரமரந்திரம்.
**மறைமொழி** – மந்திரம்; வேதம்; இடக்கரடக்கல்.
**மறையான்** – பிரமன்; காண்க: **மறைபதி**.
**மறையிலார்** – இழிந்தோர்.
**மறையிறை** – காண்க: **மறுசொல்**.
**மறையீறு** – உபநிடதம்.
**மறையோன்** – பிரமன்; வியாழன்; அந்தணன்.
**மறைவாணர்** – பார்ப்பனர்.
**மறைவிடம்** – வெளியிலிருந்து காணவியலாத இடம்; கழிவிடம்.
**மறைவிடை** – மறுத்துக்கூறும் விடை.
**மறைவு** – மறைகை; ஒளிப்பிடம்; இரகசியம்; நிரைச்சல்; கோள்கள் ஒன்றாலொன்று மறைகை.

**மன்** – ஓர் அசைநிலை; எதிர்காலங் காட்டும் இடைநிலை; ஒழியிசைக்குறிப்பு; பிறிதொன் றாகைக் குறிப்பு; மிகுதிக்குறிப்பு; ஆக்கக் குறிப்பு; கழிவுக்குறிப்பு; நிலைபேற்றுக்குறிப்பு; ஒரு பெயர்விகுதி; அரசன்; வீரன்; தலைவன்; கணவன்; உத்தரட்டாதிநாள்; பெருமை; இழிவு; மந்திரம்; மணங்கு.

**மன்பது** – மக்கட்பரப்பு.

**மன்பதை** – காண்க: **மன்பது**; படை.

**மன்மகளிர்** – அரசனால் தலைக்கோல் பெற்ற ஆடல்மகளிர்.

**மன்மத** – அறுபதாண்டுக் கணக்கில் இருபத் தொன்பதாம் ஆண்டு.

**மன்மததந்திரம்** – மன்மதனுடைய மலர்க் கணை.

**மன்மதபாணம்** – காண்க: **சாதிமல்லிகை; மன்மத தந்திரம்.**

**மன்மதன்** – காமன்.

**மன்மதன்கணை** – மன்மதனின் மலரம்பு; மாமரம்.

**மன்மதோபாலம்பனம்** – காமனைப் பழிக்கை.

**மன்மம்** – தீராப்பகை; வஞ்சினம்.

**மன்ற** – ஓர் அசைச்சொல்; உறுதியாக; தெளி வாக; மிக.

**மன்றகம்** – அவை.

**மன்றம்** – அவை; கழகம்; வழக்குமன்றம்; ஊருக்கு நடுவாயுள்ள மரத்தடிப் பொதுவிடம்; காண்க: **செண்டுவெளி**; வெளியிடம்; போர்க்களப் பரப்பின் நடுவிடம்; சிதம்பரம்; வீடு; பசுவின் தொழுவம்; நெடுந்தெரு; மெய்ம்மை; உறுதி; மணம்.

**மன்றல்** – திருமணம்; மணம்; புணர்ச்சி; நெடுந் தெரு; பாலைப்பண்வகை.

**மன்றவாணன்** – தில்லைச் சிவபிரான்.

**மன்றன்** – சிவபிரான்.

**மன்றாட்டம்** – வேண்டுகோள்; தொந்தரவு.

**மன்றாட்டு** – வேண்டுகோள்.

**மன்றாடி** – சிவபெருமான், கூத்தப்பிரான்; பிறர்க்காக வழக்கெடுத்துரைப்போன்; சபை யில் வழக்காடுபவன்; சில சாதியாரின் பட்டப் பெயர்; ஆட்டிடையன்.

**மன்றாடுதல்** – குறையிரந்து வேண்டுதல்; வழக் காடுதல்; பிறர்க்காக வழக்கெடுத்துரைத்தல்.

**மன்றில்** – வாயில்முற்றம்.

**மன்று** – சபை; தில்லையிலுள்ள பொன்னம்பலம்; நீதிமன்றம்; பசுத்தொழுவம்; பசுமந்தை; மரத்தடிப் பொதுவிடம்; தோட்டத்தின் நடு; நாற்சந்தி; மணம்.

**மன்றுதல்** – தண்டஞ்செய்தல், ஒறுத்தல்.

**மன்றுபடுதல்** – வெளிப்படுதல்.

**மன்றுபாடு** – தருமாசனத்தின்முன் அபராதமாகக் கொடுக்கும் பொருள்.

**மன்றுளாடி** – சிவபிரான்.

**மன்னகுமரன்** – இளவரசன்.

**மன்னர்பின்ன(னோ)ர்** – வணிகர்.

**மன்னர்மன்னவன்** – பேரரசன், சக்கரவர்த்தி; துரியோதனன்.

**மன்னர்விழைச்சி** – அரசனால் நுகர்தற்குரியது.

**மன்னல்** – நிலைபேறு; வலிமை; பெருமை; உயர்ச்சி; விடாமுயற்சி.

**மன்னவன்** – காண்க: **மன்னன்; இந்திரன்.**

**மன்னன்** – அரசன்; எப்பொருட்கு மிறைவன்; கணவன்; தலைவன்; முப்பத்திரண்டுக்குமேல் நாற்பத்தெட்டு வயதுக்குட்பட்ட ஆடவன்; உத்தரட்டாதிநாள்.

**மன்னாப்புக்குற்றவாளி** – அரசாங்கத்தாரால் மன்னிப்புப்பெற்றுச் சாட்சிகூறுங் குற்றவாளி.

**மன்னார்** – பகைவர்.

**மன்னாவுலகம்** – காண்க: **மன்னுலகம்.**

**மன்னி** – அண்ணன் மனைவி.

**மன்னித்தல், மன்னிப்பு** – குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளல்.

**மன்னியர்** – மதிக்கத்தக்கவர்.

**மன்னிறைதருதல்** – அரசனுக்குரிய வரியைத் தருதல்.

**மன்னினை** – வரிவிலக்கு.

**மன்னுதல்** – நிலைபெறுதல்; தங்குதல்; பொருந்து தல்; விடாது முயலுதல்; உறுதியாய் நிற்றல்; அடுத்தல்; மிகுதல்; ஆடையைத் தூக்கிப் பிடித்துக்கொள்ளுதல்.

**மன்னும்** – பெரும்பான்மையும்; ஓர் இடைச் சொல்.

**மன்னுமான்** – கடவுள்.

**மன்னுயிர்** – நிலைபெற்ற உயிர்; விலங்குச்சாதி; மானிடச்சாதி; ஆன்மா.

**மன்னுயிர்முதல்வன்** – கடவுள்.

**மன்னுலகம், மன்னுலகு** – துறக்கம்.

**மன்னை** – தொண்டை; கோபம்; கதுப்பு; காண்க: **மன்னைக்காஞ்சி.**

**மன்னைக்காஞ்சி** – இறந்தவனைப்பற்றிச் சிறப் பித்து ஏனையோர் இரங்கிக் கூறும் புறத்துறை.

**மன்னைப்பிடி** – தொண்டையை இறுகப்பிடிக்கை.

**மன்னைப்பிடித்தல்** – தொண்டையைப் பிடித்தல்; ஒருவனைத் தாங்கிக்கேட்டல்.

**மன** – மிகவும்; வினைமுற்று வினையெச்சங்கட்கு இறுதியாக வரும் இடைச்சொல்.

**மனக்கசப்பு** – வெறுப்பு.

**மனக்கசிவு** – காண்க: **மனவுருக்கம்.**

**மனக்கடினம்** – நெஞ்சழுத்தம்.
**மனக்கடுப்பு** – உட்கோபம்.
**மனக்கண்** – மனமாகிய கண்.
**மனக்கலக்கம்** – மனந்தடுமாறுகை.
**மனக்கவலை, மனக்கவற்சி** – ஒன்றைப்பற்றி மனத்தில் உண்டாகும் கலக்கம்.
**மனக்களிப்பு** – அகமகிழ்ச்சி.
**மனக்கனிவு** – காண்க: **மனவுருக்கம்.**
**மனக்காய்ச்சல்** – காண்க: **மனவெரிச்சல்.**
**மனக்கிடக்கை, மனக்கிடை** – உள்ளக்கருத்து.
**மனக்கிலேசம்** – காண்க: **மனத்துயர்.**
**மனக்குருடு** – அறிவின்மை.
**மனக்குழப்பம்** – மனக்கலக்கம்.
**மனக்குள்ளம்** – வஞ்சகம்; விரகு.
**மனக்குறிப்பு** – உட்கருத்து; மதிப்பு.
**மனக்குறை** – வருத்தம்; திருப்தியின்மை.
**மனக்கொதி** – மனவெரிச்சல்.
**மனக்கொள்ளுதல்** – நன்கறிதல்.
**மனக்கோட்டம்** – புத்தியின் கோணல்; அழுக்காறு.
**மனக்கோட்டரவு** – ஊக்கக்குறைவு; துணிவின்மை.
**மனக்கோட்டை** – வீண் எண்ணம்; புலவிநீட்டம்.
**மனக்கோண்** – அழுக்காறு.
**மனக்கோழை** – துணிவில்லாதவர்.
**மனக்கோள்** – காண்க: **மனக்குறிப்பு.**
**மனங்கசிதல்** – மனமுருகல்.
**மனங்கரைதல்** – நெஞ்சிளகுதல்; பின்னிரங்குதல்; துயரப்படுதல்.
**மனங்குத்துதல்** – தன் குற்றம்பற்றி மனத்தில் தோன்றும் கழிவிரக்கம்.
**மனங்குவிதல்** – மனமொடுங்குதல்; மனவமைதி கொள்ளுதல்.
**மனங்கூசுதல்** – மனம் பின்னிடைதல்.
**மனங்கூம்புதல்** – ஊக்கங்குன்றுதல்; மனவமைதி கொள்ளுதல்.
**மனங்கொதித்தல்** – கோபங்கொள்ளுதல்; துக்கித்தல்; பேராவல்கொள்ளுதல்.
**மனங்கொள்ளுதல்** – மனத்திற் கொள்ளுதல்; விரும்புதல்.
**மனங்கோணுதல்** – மனமாறுதல்; வெறுப்படைதல்; கோபங்கொள்ளுதல்.
**மனச்சஞ்சலம்** – மனக்குழப்பம்.
**மனச்சலிப்பு** – வெறுப்பு; துயரம்.
**மனச்சாட்சி** – அந்தக்கரணமாகிய சான்று.
**மனச்சாய்வு** – காண்க: **மனப்போக்கு;** ஒருசார்பு.
**மனச்சார்பு** – மனப்பற்று; காண்க: **மனப்போக்கு.**
**மனச்செருக்கு** – அகம்பாவம்; காண்க: **மனக்களிப்பு.**
**மனச்சோர்வு** – ஊக்கக்குறைவு.
**மனசறிந்தவன்** – உண்மையான நண்பன்; அந்தக்கரண சுத்தியாக நடப்பவன்.
**மனசறிய** – நெஞ்சறிய; மனச்சாட்சிப்படி.
**மனசார** – காண்க: **மனசறிய;** முழுமனத்துடன்.
**மனசிரங்குதல்** – நெஞ்சிளகுதல்.
**மனத்தழுக்கு** – அழுக்காறு.
**மனத்தளர்ச்சி** – காண்க: **மனச்சோர்வு.**
**மனத்தாபம்** – துக்கம்; வெறுப்பு; இணக்கமின்மை; மனந்திரும்புகை.
**மனத்தாழ்மை** – பணிவான எண்ணத்துடன் இருக்கை.
**மனத்திட்டம்** – மதிப்பு; மனநேர்மை.
**மனத்திட்பம், மனத்திடம்(ன்)** – மனவுறுதி.
**மனத்திருத்தி** – மனநிறைவு; கிடைத்தது போதுமெனக்கொண்டு மகிழ்கை.
**மனத்துக்கம்** – காண்க: **மனத்துயர்.**
**மனத்துடிப்பு** – மிகுந்த ஆசை; விரைவு.
**மனத்துப்புரவு** – காண்க: **மனத்தூய்மை.**
**மனத்துயர்** – மனத்துன்பம்.
**மனத்தூய்மை** – மனமாசின்மை; மனத்தின் நேர்மை.
**மனத்தெளிவு, மனத்தேற்றம்** – மனம் கலங்குதலின்மை.
**மனதார** – நெஞ்சறிய; முழுமனத்துடன்.
**மனது** – காண்க: **மனம்.**
**மனந்தளம்புதல்** – உள்ளம் நிலைதடுமாறுதல்; கவலையால் உள்ளம் வருந்துதல்.
**மனந்தளர்தல்** – ஊக்கங்குறைதல்.
**மனந்திரும்புதல்** – மனமாறுதல்; செய்த பிழைக்கு வருத்தமுறல்.
**மனந்தீய்தல்** – ஏங்குதல்; மனம்புழுங்குதல்.
**மனநடுக்கம்** – அச்சம்.
**மனநிதானம்** – காண்க: **மனத்திட்டம்; மனத்திடம்(ன்).**
**மனநியாயம்** – மனச்சாட்சிக்குரிய நீதி.
**மனநிலை** – உளப்பாங்கு; மனம் ஒருநிலையில் நிற்கை.
**மனநிறை** – மனம் ஒருநிலையில் நிற்கை; மனங்கோடாமை; மனவடக்கம்.
**மனநெகிழ்ச்சி** – பிறர் துயரம், அச்சம் முதலியவற்றால் உண்டாம் மனவேறுபாடு.
**மனநேர்மை** – மனத்தின் வஞ்சகமற்ற நிலை.
**மனநோதல்** – வருந்துதல்.
**மனநோய்(வு)** – மனவருத்தம்.
**மனப்படுத்துதல்** – இணக்குதல்; மனப்பாடஞ்செய்தல்.
**மனப்பதற்றம்** – காண்க: **மனநடுக்கம்.**
**மனப்பதைப்பு** – மனக்கவலை; மனத்திற்கு உகந்தது.

**மனப்பரிப்பு** – காண்க: **மனத்துயர்.**
**மனப்பரியயஞானம்** – பிறர் கருத்துகள், முற்பிறப்புகள் முதலியவற்றை அறியும் அறிவு.
**மனப்பற்று** – விருப்பு; மனம் அழுந்தியிருக்கை.
**மனப்பாங்கு** – காண்க: **மனநிலை.**
**மனப்பாடம்** – கற்றதை மறதியின்றிச் சொல்லும் பாடம்.
**மனப்பால்குடித்தல்** – கைகூடாதவற்றைப்பற்றி நெடுக எண்ணி அகமகிழ்தல்.
**மனப்பிடிப்பு** – காண்க: **மனப்பற்று.**
**மனப்பிரமை** – மனத்தில் உண்டாகும் மயக்கம்.
**மனப்பிரிப்பு** – காண்க: **மனக்கலக்கம்.**
**மனப்பூர்த்தி, மனப்பூர்வம், மனப்பூரணம்** – மனநிறைவு; முழுமனம்; மிகுகளிப்பு; மனநேர்மை.
**மனப்பூரிப்பு** – மிகுகளிப்பு; முழுமனநிறைவு.
**மனப்பொருத்தம்** – மனவொன்றிப்பு; தன் மனத்துக்கு ஏற்றதாகை.
**மனப்பொறுப்பு** – மனஞ்சகிக்கை.
**மனப்போக்கு** – மனம்போகும் வழி.
**மனம்** – நெஞ்சம்; எண்ணம்; விருப்பம்; இந்துப்பு.
**மனம்பதிதல்** – கருத்துவைத்தல்.
**மனம்பேதித்தல்** – கருத்துவேறுபடுதல்; மனங் கலங்குதல்.
**மனம்பொங்குதல்** – மனம் அலைவுறுதல்; சினங் கொள்ளல்.
**மனம்பொருந்துதல்** – இசைதல்; ஏற்றுக் கொள்ளல்; மனமொற்றுமையாதல்.
**மனம்போனபோக்கு** – சிந்தை சென்றவழியே செல்லுகை.
**மனமகிழ்ச்சி** – அகக்களிப்பு.
**மனமடிவு** – காண்க: **மனச்சோர்வு**; மனமழிகை.
**மனமலர்ச்சி** – காண்க: **மனமகிழ்ச்சி.**
**மனமாசு** – மனக்குற்றம்.
**மனமிடுக்கு** – காண்க: **மனத்திடம்(ன்).**
**மனமிளகுதல்** – மனமிரங்குதல்.
**மனமிறுகுதல்** – கடினமனமாதல்; உலோபகுணங் கொள்ளுதல்.
**மனமுடைதல்** – காண்க: **மனமுறிதல்.**
**மனமுளைதல்** – மனம் வருந்துதல்.
**மனமுறிதல்** – துன்பத்தால் ஊக்கங்குன்றுதல்.
**மனமுறிவு** – ஊக்கமிழக்கை.
**மனவிகற்பம்** – மனவேறுபாடு.
**மனவிகாரம்** – மனத்திரிபு; பைத்தியம்.
**மனவிருப்பம்** – ஆசை; மனத்திற்கு உகந்தது.
**மனவிழி** – இசைப்பாட்டுவகை.
**மனவு** – மணி; அக்குமணி; சங்கு; அரையிற் கட்டும் பட்டிகை; புடைவை.
**மனவுருக்கம்** – மனமிளகுதல்.
**மனவுறுதி, மனவூக்கம்** – காண்க: **மனத்திடம்(ன்).**
**மனவெரிச்சல்** – பொறாமை.
**மனவெழுச்சி** – உள்ளக்கிளர்ச்சி.
**மனவேகம்** – மனத்தின் வேகம்போன்ற விரைவு; சினம்.
**மனவொடுக்கம்** – மனத்தை ஒருமுகப்படுத்துகை; அமைதி; அடக்கம்.
**மனவொன்றிப்பு** – மனவொற்றுமை; மனத்தை ஒருமுகப்படுத்துகை.
**மனனம்** – சிந்திக்கை; நினைவில் வைக்கை; எல்லாமறிகை; எண்ணம்.
**மனா** – அக்குமணி; அரையிற் கட்டும் பட்டிகை.
**மனாகுலம்** – காண்க: **மனத்துயர்.**
**மனாலம்** – குங்குமமரம்; காண்க: **சாதிலிங்கம்.**
**மனாவு** – அரையிற் கட்டும் பட்டிகை.
**மனிச்சடித்தல்** – பெருமையாகப் பேசுதல்.
**மனிச்சர்** – மனிதர்.
**மனிச்சு** – ஆண்தகைமை.
**மனிசன்** – மனிதன்.
**மனிதகணம்** – காண்க: **மனுகுலம்**; உரோகிணி, பரணி, திருவாதிரை, பூரத்திரயம், உத்தரத்திரயம் ஆகிய ஒன்பது நட்சத்திரங்கள்.
**மனிதசஞ்சாரம்** – மனிதர் நடமாடுகை.
**மனித்தன், மனிதன்** – ஆண்மகன்.
**மனிலாக்கொட்டை, மனிலாப்பயறு** – காண்க: **மணிலாக் கொட்டை.**
**மனு** – சூரியகுலத்து முதலரசனான ஏழாம் மனு; அறநூல் பதினெட்டனுள் ஒன்றான மனுதரும சாத்திரம்; அறநூல்; மந்திரம்; மனிதன்; சோழமன்னர்களின் முன்னோன்; விண்ணப்பம்; சொல்; அளவுவகை; பதினான்கு ஆதி அரசர்.
**மனுகுலம்** – மனிதசாதி; சூரியமரபு.
**மனுசரிதன்** – மனுநீதிப்படி அரசியல் புரிவோன்.
**மனுச(ட)ன்** – ஆண்மகன்.
**மனுதார்** – விண்ணப்பஞ் செய்வோன்.
**மனுதாரி** – விண்ணப்பஞ் செய்பவள்.
**மனுநெறி** – அளவுவகை; நீதி.
**மனுப்படுதல்** – பூப்படைதல்; பசு முதலியன சினையாதல்; பயன்படுதல்.
**மனுமக்கள்** – மனிதர்கள்.
**மனுமகன்** – உயர்குடியிற் பிறந்தவன்; நாணய மானவன்.
**மனுவர்** – கொல்லர்; மனிதர்.
**மனை** – வீடு; வீடுகட்டுதற்குரிய நிலம்; நிலஅளவு வகை; குடும்பம்; மனைவி; இல்வாழ்க்கை; சூதாடுபலகையின் அறை; நற்றாய்.
**மனைக்கட்டு** – வீடுகட்டுதற்குரிய இடம்.
**மனைக்கிழத்தி** – வீட்டுக்குரியவளான மனைவி.

**மனைக்கிழவன்** – வீட்டுக்குரியவனான கணவன்.
**மனைக்கோள்** – பல்லி.
**மனைகட்டுதல்** – சொக்கட்டானில் ஓர் ஆட்டம் வெல்லுதல்.
**மனைகோலுதல்** – வீடுகட்டுதல்.
**மனைச்சீட்டு** – மனையின் விலையாவணம்.
**மனைத்தாயம்** – இல்லறவொழுக்கம்.
**மனைப்படப்பு(பை)** – வீட்டுக்கொல்லை.
**மனைப்பலி** – மனையுறை தெய்வங்கட்கு இடும் பலி.
**மனைமரம்** – தேற்றாமரம்.
**மனைமுதல்** – மனைவி.
**மனையறம்** – இல்லறம்.
**மனையாட்டி,**
**மனையாள்** } – மனைவி.
**மனையிறை** – வீட்டுவரி.
**மனையுறைமகள்** – திருமணமான பெண்.
**மனையோள்** – மனைவி.
**மனைவழி** – வீட்டுக்குரிய இடம்.
**மனைவாழ்க்கை** – இல்வாழ்க்கை.
**மனைவி** – இல்லாள்; மருதநிலத்தின் தலைவி; மனையையுடையாள்.
**மனைவீடு** – மனையும் வீடும்; ஊர்நத்தம்.
**மனைவேலி** – வீட்டின் எல்லைச்சுவர்.
**மனைவேள்வி** – இல்லறம்.
**மனோக்கியம்** – இன்பமானது; விரும்பப்படுந் தன்மை; அழகுடைத்தன்மை.
**மனோகதி** – மனத்தின் வேகம்.
**மனோகரம்** – காண்க: **மனோக்கியம்**; பலகார வகை.
**மனோசன்** – மனத்தில் உதித்தவனான மன்மதன்.
**மனோசியை** – பிறவிப்பாடாணவகை.
**மனோதண்டம்** – மனத்தை ஒறுக்கை.
**மனோதிடம்,**
**மனோதைரியம்,** } – காண்க: **மனத்திடம்(ன்).**
**மனோபலம்**
**மனோபவம்** – எண்ணம்.
**மனோபவன்** – காண்க: **மனோசன்.**
**மனோபாவம்(னை)** – மனப்பாவிப்பு; மனநிலை.
**மனோபு** – காண்க: **மனோசன்.**
**மனோபூசை** – காண்க: **மானதபூஜை.**
**மனோமயம்** – ஐந்து உறையுள் ஒன்றான மனம்.
**மனோரஞ்சிதம்** – இன்பமானது; ஒரு பூவகை.
**மனோரதம்** – காண்க: **மனவிருப்பம்; மனோபாவம்(னை).**
**மனோரம்மியம்** – மனநிறைவு; இன்பமானது.
**மனோராச்சியம்** – மனோபாவனையில் எண்ணியது.
**மனோராசி** – சம்மதம்.
**மனோலயம்** – மனவொடுக்கம்.
**மனோவதி** – பிரமன் நகரம்.
**மனோவாயு** – பத்து வாயுக்களுள் மூச்சை நிகழ்விப்பது.
**மனோவிகாரம்** – மனநிலை; அறிவுதிரிகை.
**மனோவியாபாரம்** – மனத்தின் தொழில்.
**மனோவிருத்தி** – மனத்தின் தொழில்; வீட்டுச் செலவு.
**மனோவேகம்** – மனத்தின்வேகம்போன்றவிரைவு.
**மனோற்சாகம்** – உள்ளக்கிளர்ச்சி.
**மனோற்பவன்** – காண்க: **மனோசன்.**
**மனோன்மணி** – பார்வதி.

## மா

**மா** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம்+ஆ); விலங்கு; குதிரை; யானை; குதிரை, பன்றி, யானை ஆகியவற்றின் ஆண்; சிம்மராசி; வண்டு; அன்னம்; விலங்கு வடிவமாய்ப் பிறக்கும் மானுடம்; மாமரம்; அழைக்கை; சீலை; ஆணி; துன்பம் பொறுக்கை; ஓர் அசைச்சொல்; திருமகள்; செல்வம்; கலைமகள்; மாற்று; ஒரு நிறை; கீழ் வாயிலக்கத்துள் ஒன்று; நிலவளவை வகை; வயல்; நிலம்; வெறுப்பு; கானல்; ஆகாது என்னும் பொருளில் வரும் ஒரு வடசொல்; பெருமை; வலி; அழகு; கருமை; நிறம்; மாமைநிறம்; அரிசி முதலியவற்றின் மாவு; துகள்; நஞ்சுக்கொடி; அளவை; இயற்சீர் இறுதியிலுள்ள நேரசையைக் குறிக்கும் சொல்.
**மாக்கருவி** – குதிரைச்சேணம்.
**மாக்கல்** – பலப்பம் முதலியவை செய்தற்குரிய கல்; சவர்க்காரக்கல்.
**மாக்கள்** – மனிதர்கள்; பகுத்தறிவிலார்; குழந்தைகள்; விலங்குகள்.
**மாக்காப்பு** – தெய்வத் திருமேனிகட்குச் சாத்தும் அரிசிமாச் சாத்துப்படி.
**மாக்கிகம்** – நிமிளை; தேன்.
**மாக்குளித்தல்** – மகளிர் விளையாட்டுவகை.
**மாக்கோலம்** – நீர் சேர்த்த அரிசிமாவால் பூமியிவிடும் சித்திரங்கள்.
**மாகத்தார்** – தேவர்; ஒரு குழுவினர்.
**மாகதி** – காண்க: **திப்பிலி**; முல்லைவகை; ஊசி முல்லை; சருக்கரை; பிராகிருதமொழிவகை.
**மாகந்தம்** – மாமரம்.
**மாகந்தி** – நெல்லிமரம்; காண்க: **அமுக்கிரா.**
**மாகபதி** – இந்திரன்.
**மாகம்** – மாசிமாதம்; மகநாள்; மேலிடம்; வானம்; துறக்கம்; திக்கு; மேகம்.

**மாகரி** – ஆண்யானை.
**மாகவதி** – கீழ்த்திசை.
**மாகனன்** – பார்ப்பனன்.
**மாகாணம்** – மாநிலம்; நாடு; சனக்கட்டு; நாட்டின் பெரும்பகுதி.
**மாகாணி** – ஓர் அளவு; பதினாறில் ஒரு பாகம்.
**மாகாளி** – கொற்றவை; எழுமாதர்களுள் ஒருத்தி; காண்க: **மாகாளிக்கிழங்கு**; களாவகை.
**மாகாளிக்கிழங்கு** – மலையில் விளையும் நன்னாரி வகை.
**மாகு** – வலை; வலையில் கோத்த மணி.
**மாகுலர், மாகுலவர்** – வேடர்.
**மாகுலி** – உயர்குடியிற் பிறந்தவள்.
**மாகேச்சுவரி** – பார்வதி; எழுமாதருள் ஒருத்தி.
**மாகேசம்** – வரிக்கூத்துவகை.
**மாகேசுவரபூசை** – சிவனடியார்க்கு உணவிடுதல்.
**மாகேயம்** – பவளம்.
**மாகை** – பசு.
**மாங்கல்லியம், மாங்கலியசூத்திரம்** – காண்க: **மாங்கலியம்.**
**மாங்கலியதாரணம்** – தாலிகட்டுஞ் சடங்கு.
**மாங்கலியப்பிச்சை** – தான் மாங்கலியத்துடன் வாழும்படி தன் கணவனுயிரைக் காக்குமாறு ஒருத்தி வேண்டுகை.
**மாங்கலியம்** – தாலி.
**மாங்கன்று** – மாஞ்செடி.
**மாங்காய்** – மாவின் காய்; கழுத்தணிவகை; விலங்குகளின் மூத்திரப்பை.
**மாங்காய்ப்பூட்டு** – ஒரு பூட்டுவகை.
**மாங்காய்மாலை** – மாங்காய் வடிவமான உருக்கள் கோத்த கழுத்தணிவகை.
**மாங்காயீரல்** – மூத்திராசயம்.
**மாங்கிசம்** – காண்க: **மாமிசம்.**
**மாங்கு** – பிறந்த குழந்தையின்மேற் பற்றியிருக்கும் ஒரு பசைவகை.
**மாச்சரியம்** – பொறாமை; பகைமை.
**மாச்சல்** – சாதல்; மிக்க வருத்தம்; சோம்பல்.
**மாச்சி** – கைவிலங்கு; அருவதா.
**மாச்சீர்** – நேரசையால் இறும் இயற்சீர்.
**மாச்சு** – விலங்கு; குற்றம்; பிள்ளை விளையாட்டு.
**மாசக்கடன்** – மாதந்தோறும் பகுதி பகுதியாகச் செலுத்தவேண்டிய கடன்தொகை.
**மாசக்காய்** – ஒரு மருந்துச்சரக்குவகை; செடிவகை; மரவகை.
**மாசச்சந்துக்கட்டு** – பணமுடையேற்படும் மாத முடிவிலுள்ள நாள்கள்.
**மாசப்பிறப்பு** – மாதத்தொடக்கம்.
**மாசம்** – சாந்திரமானமாதம்; ஆண்டின் பன்னிரண்டில் ஒரு பகுதி; சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி என்னும் பன்னிரு சௌரமானமாதங்கள்.
**மாசமாசம்** – காண்க: **மாசாமாசம்.**
**மாசலம்** – நோய்; முதலை.
**மாசலன்** – கள்வன்.
**மாசறுதல்** – குற்றம் நீங்குதல்.
**மாசனம்** – மக்கட்கூட்டம்; மந்திரி, புரோகிதர் முதலியோர்; ஒரு போதைமருந்து.
**மாசாந்தம்** – பெரும் பொறுமை; மாதமுடிவு; அமாவாசை; மாதக்கடைசியில் வரும் கிழமையொன்றில் கோயிலில் செய்யும் வழிபாடு.
**மாசாந்தரம், மாசாமாசம்** – காண்க: **மாதாந்தரம்.**
**மாசாலம்** – ஒரு மாயவித்தை; சிணுங்குகை.
**மாசி** – மேகம்; பதினோராம் மாதம்; புதுவரம்பு; மகநாள்; கடல்மீன்வகை.
**மாசிகம்** – இறந்தோர்க்கு இறந்த ஆண்டில் மாதந்தோறுஞ் செய்யும் சிராத்தம்.
**மாசிகை** – பறவை.
**மாசிங்கம்** – கலைமான்கொம்பு.
**மாசிதறிருக்கை** – பகைவரிடத்துக் கவர்ந்த யானை, பசு முதலிய விலங்குகளை இரப்போர்க்கு அளவிறந்து கொடுக்கும் பாசறை.
**மாசிபத்திரி** – மணப்பூடுவகை; கொட்டைக் கரந்தைவகை.
**மாசிமகம்** – மாசிமாத முழுநிலவும் மகநாளும் கூடிய புண்ணியநாள்.
**மாசியம்** – காண்க: **மாசிகம்**; கஞ்சாவைக்கொண்டு செய்யும் ஒரு போதைப்பண்டவகை.
**மாசிலாமணி** – மறுவற்ற மணி; கடவுள்.
**மாசு** – அழுக்கு; குற்றம்; மறு; மாறுபாடு; கருமை; இருள்; மேகம்; பாவம்; தீமை; தூளி; புழுதி; புன்மை; பால்வீதிமண்டலம்; மெய்ம்மலம்; நஞ்சுக்கொடி; பித்தநீர்; கோழை; கண்ணின் காசபடலம்; வலைவடம்; குழப்பின மா.
**மாசுகம்** – காண்க: **பீர்க்கு**; மிகு இன்பம்.
**மாசுணம்** – பாம்பு; பெரும்பாம்பு.
**மாசுதீர்ப்பான்** – நாவிதன்.
**மாசுமறு** – குற்றம்.
**மாசூல்** – பயிரின் விளைச்சல்.
**மாசேனன்** – அருகன்; திருமால்; கடவுள்; முருகன்.
**மாசை** – பொன்; உழுந்து நிறையளவுள்ள பழைய நாணயம்.
**மாஞ்சம்** – காண்க: **மாமிசம்.**
**மாஞ்சி** – மணப்பண்டம்; காண்க: **சடாமாஞ்சில்**; சணல்; ஒரு பண்வகை.

**மாட்சி** – பெருமை; விளக்கம்; இயல்பு; அழகு.
**மாட்சிமை** – பெருமை.
**மாட்டடி** – மாட்டின் அடிவைப்பு; கடுமையான அடி.
**மாட்டல்** – மகளிர் காதணியிலிருந்து தலைமயிரில் மாட்டும் ஓரணி.
**மாட்டாங்கோல்** – மாட்டையோட்டுங் கோல்.
**மாட்டாதார், மாட்டார்** – வல்லமையில்லாதார்.
**மாட்டிக்கொள்ளுதல்** – சிக்கிக்கொள்ளுதல்.
**மாட்டிவிடுதல்** – தொழுக்கட்டை முதலியவற்றிற் சேரவிணைத்தல்; அகப்படுத்துதல்.
**மாட்டிறக்கம்** – ஆற்றிலே மாடிறக்குந் துறை.
**மாட்டு** – அகன்று கிடப்பினும் அணுகிய நிலையில் கிடப்பினும் பொருள் முடியுமாற்றாற் கொண்டுகூட்டிய சொல் முடிவுகொள்ளும் முறை; அடி; சொல்.
**மாட்டுக்காரன்** – மாட்டிற்குரியவன்; மாடுமேய்ப்பவன்.
**மாட்டுக்கிடை** – மாட்டுமந்தை; பசுத்தொழுவம்.
**மாட்டுக்கொட்டகை, மாட்டுக்கொட்டில்** – மாடு கட்டும் இடம்.
**மாட்டுத்தனம்** – விலங்குத்தன்மை.
**மாட்டுத்தும்பு** – மாடு கட்டுவதற்கான கவையுள்ள புரிக்கயிறு.
**மாட்டுதல்** – இணைத்தல்; தொடுத்தல்; செருகுதல்; செலுத்துதல்; உட்கொள்ளுதல்; கற்று வல்லனாதல்; அடித்தல்; விளக்கு முதலியன கொளுத்துதல்; எரித்தல்; கூடியதாதல்; வலிபெறுதல்; மாளச்செய்தல்; அழித்தல்; போக்குதல்.
**மாட்டுப்பறங்கிக்காய்** – காண்க: **சாம்பற்பூசணி.**
**மாட்டுப்புத்தி** – மிகுந்த அறிவுக்குறைவு.
**மாட்டுப்பெண்** – மகனின் மனைவி.
**மாட்டுப்பொங்கல்** – தைமாதம் இரண்டாம் நாள் மாட்டுக்கு நன்றிசெலுத்தப் பொங்கலிடுவதான பண்டிகை.
**மாட்டுவாரம்** – குடியானவன் உதவும் உழவு மாட்டுக்குத் தக்கபடி மேல்வாரக்காரன் அவனுக்குக் கொடுக்கும் விளைச்சலின் பங்கு.
**மாட்டுவித்தல்** – அழியச்செய்தல்; இணையும்படி செய்தல்.
**மாட்டெறிதல்** – ஏறிட்டுக் கூறுதல்; ஆவணத்தின் மேற்புறத்தே விவரக்குறிப்பு எழுதுகை.
**மாட்டேறு** – முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்றானதும் ஒரு சூத்திரத்தில் கூறிய விதியை அதனையொத்த சூத்திரங்கட்கும் இணைத்துக் கொள்வதுமான உத்தி.
**மாடக்குழி** – சுவரில் உள்ளடங்கிய புரை.
**மாடகம்** – யாழின் முறுக்காணி.
**மாடகூடம்** – காண்க: **மாடிவீடு.**
**மாடநிலை** – உபரிகை.
**மாடப்புறா** – ஒரு புறாவகை.
**மாடம்** – உபரிகையுள்ள வீடு; வீடு; குடிசை; காண்க: **மாடக்குழி;** உழுந்து; ஒரு நிறை; மேட்டிடத்தில் குறுகிய வழியுள்ளதாகக் கோச்செங்கணான் கட்டிய சிவாலயம்.
**மாடமாளிகை** – காண்க: **மாடகூடம்.**
**மாடவீதி** – கோயிலைச் சுற்றியுள்ள தெரு.
**மாடன்** – ஒரு சிறுதெய்வம்; மூடன்.
**மாடாபத்தியம்** – மடத்தின் தலைமை அதிகாரம்; கோயில்விசாரணை.
**மாடி** – உபரிகை; இக்கட்டு; கோபம்; புடைவையோரம்; ஓர் ஊர்த்தேவதை.
**மாடியம்** – காப்புச்சட்டை, கவசம்.
**மாடிவீடு** – உபரிகையுள்ள வீடு.
**மாடு** – எருது; பக்கம்; இடம்; ஏழனுருபு; செல்வம்; பொன்; சீதனம்; அகன்மணி.
**மாடுசாய்த்தல்** – மாடுகளை ஒருசேர ஓட்டிச் செலுத்துதல்.
**மாடுசாய்தல்** – மாடுகள் ஒருசேர மாலையில் வீடு நோக்கி வருகை.
**மாடுவரும்வேளை** – மேய்ச்சலானபின் மாடுகள் திரும்பிவரும் காலம்; மாலைவேளை.
**மாடை** – பொன், அரை வராகன்; ஒரு பழைய நாணயவகை; மாட்டுக்கொம்பு முதலியன கீழ்நோக்கி வளைந்திருத்தல்.
**மாடைக்கொம்பன்** – கீழ்நோக்கி வளைந்த கொம்புள்ள மாடு.
**மாடோட்டும்வேளை** – மாடுகளை மேய்ச்சலுக்கு விடும் காலைவேளை.
**மாண்** – மாட்சிமை; மடங்கு; மாணவன்; பிரமசாரி; குள்ளமானவர்.
**மாண்டல்** – மாட்சிமைப்படுதல்; இறத்தல்.
**மாண்டவர், மாண்டார்** – மாட்சிமையுள்ளவர்; இறந்தவர்.
**மாண்பு** – பெருமை; அழகு; நன்மை; மாட்சிமை.
**மாணம்** – மாட்சிமை.
**மாணல்** – மாட்சிமை; நன்மை.
**மாணவ்வியம்** – பிள்ளைத்தன்மை; மாணவர் கூட்டம்.
**மாணவகம்** – கல்வி.
**மாணவகன்** – பிரமசாரி; மாணாக்கன்; எட்டு முதல் பதினாறு ஆண்டிற்குட்பட்ட சிறுவன்; அறிவீனன்.
**மாணவம்** – பிரமசரியம்; பதினாறு கோவையுள்ள முத்தாரம்.
**மாணவன்** – பிரமசாரி; மாணாக்கன், படிக்கும் சீடன்.

**மாணவி** – காண்க: **மாணாக்கி.**

**மாணாக்கன்** – பள்ளியில் படிக்கும் சிறுவன்.

**மாணாக்கி** – பள்ளியில் படிக்குஞ் சிறுமி.

**மாணார்** – மாட்சிமையற்ற பகைவர்.

**மாணி** – பிரமசாரி; குறள்வடிவம்; அழகு; ஆண்குறி.

**மாணிக்கத்தாள்** – விலைமகள்.

**மாணிக்கப்பட்டை** – கோயிலின் திருமதில் முதலியவற்றில் அடிக்கும் சிவப்புப்பட்டை.

**மாணிக்கப்பீடம்** – மணி வைத்து இழைத்த மோதிரம்.

**மாணிக்கம்** – ஒன்பான் மணியுள் ஒன்றான சிவப்பு மணி.

**மாணிக்கமாலை** – வெள்ளை சிவப்பு வளையங்கள் மாறிமாறிவரத் தொடுத்த பூமாலைவகை.

**மாணை** – ஒரு கொடிவகை.

**மாத்தகை** – பெருந்தகுதியுள்ளவன்.

**மாத்தான்** – பெரியோன்.

**மாத்திக்கு** – வீட்டுநெறி.

**மாத்திரத்தில்** – உடனே.

**மாத்திரம்** – தனிமை; மட்டும்; அளவு; தும்பி.

**மாத்திரை** – கணப்பொழுது; கண்ணிமைத்தல் அல்லது கைந்நொடித்தல் அளவான காலம்; செய்யுளில் வரும் எழுத்தொலியின் அளவு; குற்றெழுத்து; குருவிற்பாதி; காலவிரைவு; மிகச் சுருக்கமான இடம்; குளிகை; துறவியின் தண்டகமண்டலங்கள்; பேறு.

**மாத்திரைக்கோல்** – சித்தர் முதலியோர் கையில் கொள்ளும் மந்திரக்கோல்; மந்திரவாதியின் கைக்கோல்; அளவுகோல்.

**மாத்து** – பெருமை; செருக்கு; சதுரங்க ஆட்டத்தில் அரசனை அசையவொண்ணாது பேதாக் காய் தடுத்துநிற்கை.

**மாத்துவம்** – பெருமை; காண்க: **துவைதம்.**

**மாதங்கம்** – யானை; அரசமரம்; இளமை; கடல்; உத்தி; தலையணிவகை.

**மாதங்கன்** – கீழ்மகன்; வேடன்; அரசமாதுக்கும் வேடனுக்கும் பிறந்தோன்; புலையன்.

**மாதங்கி** – காளி; பார்வதி; யாழ்த்தெய்வம்; ஆடல்பாடலில் வல்லவள்.

**மாதண்டம்** – இராசவீதி.

**மாதத்தீட்டு, மாததூரம்** – காண்க: **மாதவிடாய்.**

**மாதப்பிறப்பு** – சூரியன் ஒரு ராசியிலிருந்து மற்றொரு ராசிக்குப் போகும் காலம்; மாதத்தின் முதல் நாள்.

**மாதம்** – ஏறக்குறைய முப்பது நாட்கொண்ட காலம்.

**மாதர்** – பெண்; அழகு; பொன்; காதல்; ஓர் இடைச்சொல்.

**மாதராள்** – பெண்.

**மாதரி** – காளி; கண்ணகியைப் போற்றிய ஓர் இடைச்சி.

**மாதலம்** – கீழேழுலகத்துள் ஒன்று.

**மாதலி** – இந்திரனின் சாரதி.

**மாதவம்** – பெருந்தவம்; இளவேனில்; வைகாசி மாதம்; இனிமை; மது.

**மாதவர்** – சிறந்த தவத்தினையுடையவர், முனிவர்.

**மாதவர்பள்ளி** – முனிவர் ஆசிரமம்.

**மாதவழிச்செலவு** – மாதச்செலவு.

**மாதவறுதி** – மாதமுடிவு.

**மாதவன்** – திருமால்; வசந்தன்.

**மாதவி** – துளசி; துர்க்கை; கிருட்டினனின் தங்கையான சுபத்திரை; கூட்டிக்கொடுப்பவள்; காண்க: **கள்ளி;** சீனி; கோவலனின் ஆசைநாயகி; கண்ணன் மனைவி; குருக்கத்திக் கொடி; பனைவெல்லம்.

**மாதவிகொழுநன்** – அருச்சுனன்.

**மாதவிடாய்** – மகளிரின் மாதத்தீட்டு.

**மாதவிப்பந்தல்** – குருக்கத்திக் கொடிகளாலான பந்தல்.

**மாதளை** – காண்க: **மாதுளை.**

**மாதா** – தாய்; பார்வதி; அறிபவன்; கலைமகள்.

**மாதாந்தம், மாதாந்தரம்** – மாதந்தோறும் கோயிலுக்குச் சென்று வழிபடுகை; காண்க: **மாசாந்தம்.**

**மாதாமகன்** – தாயைப் பெற்ற பாட்டன்.

**மாதாமகி** – தாயைப் பெற்ற பாட்டி.

**மாதானுபங்கி** – திருவள்ளுவர்.

**மாதி** – வட்டமாயோடல்; கோளின் சுற்று; மாமரம்.

**மாதிகம்** – குதிரைபோகும் வழி.

**மாதிமை** – தகுதி; காதல்.

**மாதிரம்** – வானம்; திசை; மலை; யானை; நிலம்; மண்டிலம்.

**மாதிரி** – காண்க: **அதிவிடை;** தினுசு; முறை; தன்மை.

**மாதிரிகை** – தினுசு; முறை; தன்மை; மூலப்படி.

**மாதிரு** – மாதா; வானம்; திருமகள்; பசு; பூமி; பார்ப்பனி; இரேவதி.

**மாதிருகை** – நெடுங்கணக்கு; கைத்தாய்; தாய்; தேவி.

**மாது** – பெண்; அழகு; காதல்; பெருமை; குற்றம்; ஓர் அசைச்சொல்.

**மாதுகரம்** – வண்டுகள் பல மலர்களினின்று தேனைச் சேர்ப்பதுபோலப் பல வீடுதோறும் சென்று பிச்சையெடுத்தல்.

**மாதுபங்கன்** – காண்க: **மாதொருபாகன்.**
**மாதுமை** – பெண்தன்மை; அறிவின்மை.
**மாதுரம்** – மல்லிகைவகை.
**மாதுரி** – சாராயம்.
**மாதுரியம்** – இனிமை.
**மாதுருகோத்திரம்** – தாய்வழிச்சுற்றம்.
**மாதுலங்கம்** – காண்க: **கொம்மட்டிமாதுளை;** மரவகை.
**மாதுலன்** – காண்க: **மாமன்.**
**மாதுலி** – மாமன் மனைவி; காண்க: **மாதலி.**
**மாதுலுங்கம்** – காண்க: **மாதுலங்கம்.**
**மாதுவம்** – கள்; பேரீந்து.
**மாதுவான்** – பெண்குதிரை; நகச்சுற்று.
**மாதுளங்கம்** – காண்க: **மாதுலங்கம்.**
**மாதுளம், மாதுளை** – ஒரு மரவகை; பேரெலுமிச்சை.
**மாதூகரம்** – காண்க: **மாதுகரம்.**
**மாதேவன்** – சிவபிரான்; பதினோர் உருத்திரருள் ஒருவர்.
**மாதேவி** – பார்வதி; பட்டத்தரசி; செங்கழுநீர்ப் பூ.
**மாதொருபாகன்** – சிவன்.
**மாதோ** – ஓர் அசைச்சொல்.
**மாதோபவாசம்** – ஒரு மாதகாலம் பட்டினி யிருக்கை.
**மாதோயம்** – கடல்; பெருநீர்.
**மாந்தக்கொதி** – குழந்தைநோய்வகை.
**மாந்தசன்னி** – மாந்தத்தால் குழந்தைகளுக்கு வரும் சன்னி.
**மாந்தம்** – குழந்தைநோய்வகை; ஒரு புல்வகை; மந்தத்தால் குழந்தைகளுக்கு வரும் கணை நோய்; செரியாமை.
**மாந்தர்** – மனிதர்; ஆடவர்; ஊர்காவலர்.
**மாந்தளிர்** – துவர் பத்தனுள் ஒன்றாகிய மாமரத் துளிர்.
**மாந்தளிர்க்கல்** – ஒரு மாணிக்கவகை.
**மாந்தளிர்ச்சிலை** – காவிக்கல்.
**மாந்தளிர்நாணான்** – மன்மதன்.
**மாந்தன்** – ஆண்மகன்; வாழைவகை.
**மாந்தி** – மாமரம்; கலியாணச்சடங்கு; காண்க: **குளிகன்.**
**மாந்திரிகன்** – மந்திரபலத்தால் சிறப்பாற்றலைச் செலுத்துபவன்.
**மாந்திரீகம்** – மந்திரபலத்தால் சிறப்பாற்றலைச் செலுத்தும் வித்தை.
**மாந்துதல்** – குடித்தல்; உண்ணுதல்; வருந்துதல்; அவிந்தடங்கல்; இறத்தல்; நுகர்தல்; ஊக்க மழிதல்.
**மாந்தை** – ஒரு நோய்வகை; ஒரு நகரம்.
**மாநாகம்** – ஒரு பாம்புவகை.
**மாநிருத்தாதனம்** – ஒரு காலைத் தூக்கி நிற்கும் யோகநிலை.
**மாநிலம்** – ஒரு நாட்டின் பெரும்பிரிவு; பூமி.
**மாநிறம்** – மாந்தளிர்போன்ற நிறம்.
**மாப்பிள்ளை** – மணவாளப்பிள்ளை; மகளின் கணவன்; மைத்துனன்; மாமன்மகன்; மாமி மகன்; தங்கை கணவன்; ஒரு பட்டப்பெயர்; ஒரு முகம்மதிய வகுப்பார்.
**மாப்பு** – மன்னிப்பு; மிகுதி; மீன்றிரள்.
**மாப்புவிடுதல்** – மன்னித்தல்.
**மாபலன்** – காற்று.
**மாபனம்** – அளவு; தராசு.
**மாபாடியம்** – பேருரை; பாணினி சூத்திரங் களுக்குப் பதஞ்சலியார் செய்த பேருரை.
**மாபாதகம்** – காண்க: **மகாபாதகம்.**
**மாபாவி** – பெரும்பாவி.
**மாபுலி** – சிங்கம்.
**மாபுறயாகம்** – வெளிப்பூசை.
**மாபெலை** – பார்வதி.
**மாம்பழம்** – மாங்கனி; புடைவை உடுத்தும்போது செருகும் முடிப்பு.
**மாம்பால்** – மாங்காயின் காம்பிலுண்டாம் பால்; ஒரு கூழ்வகை.
**மாம்போழ்** – மாவடுவின் பிளவு.
**மாமகம்** – காசாயவகை; காண்க: **மகாமகம்.**
**மாமகன்** – அம்மான்; இவறலன்; திருமகளின் மகனான மன்மதன்.
**மாமடி, மாமடிகள்** – கணவன் அல்லது மனைவியின் தந்தை; தாயின் உடன்பிறந்தான்.
**மாமணி** – மாணிக்கம்.
**மாமரம்** – ஒரு மரவகை.
**மாமல்லை** – மாமல்லபுரம் என்னும் ஊர்.
**மாமலர்** – காண்க: **சரக்கொன்றை.**
**மாமன்** – தாயுடன் பிறந்தோன்; கணவன் அல்லது மனைவியின் தந்தை; மாமனார்; அத்தை கணவன்; சிற்சில வகுப்புப் பெண்கள் தங்கள் கணவரை அழைக்கும் பெயர்.
**மாமனார்** – கணவன் அல்லது மனைவியின் தந்தை.
**மாமா** – காண்க: **மாமன்.**
**மாமாங்கம்** – கும்பகோணத்தில் பன்னீராண்டு கட்கு ஒரு முறை மாசிமகத்தன்று நிகழும் ஒரு திருமுழுக்கு விழா.
**மாமாத்திரன்** – மருத்துவன்.
**மாமாத்து** – மிகப் பெரியது; பெருஞ்செருக்கு; மாய்மாலம்.
**மாமாயை** – பார்வதி; சுத்தமாயை.
**மாமாலம்** – பெருவஞ்சனை; பாசாங்கு.
**மாமான்** – காண்க: **மாமன்.**

**மாமி** – அம்மான் மனைவி; மனைவியின் அல்லது கணவனின் தாய்; அத்தை.

**மாமிசதாரி** – புலாலுண்போன்.

**மாமிசபட்சணி** – புலாலுண்ணி.

**மாமிசபேதி** – தசையைக் கரைவிக்கும் ஒரு பூண்டு வகை.

**மாமிசம்** – தசை; இறைச்சி.

**மாமியார்** – காண்க: **மாமி**

**மாமுகத்தன், மாமுகவன்** – விநாயகர்.

**மாமுனி** – பெருந்துறவி; அருகன்; வசிட்டன்; நாயுருவிச்செடி.

**மாமூல்** – பரம்பரை வழக்கம்.

**மாமேரு** – மேருமலை.

**மாமை** – நிறம்; அழகு; கருமை; மேனி; துன்பம்.

**மாமோகம்** – ஐம்புல நுகர்ச்சியிற் பற்று.

**மாய்ச்சல்** – காண்க: **மாய்ப்பு.**

**மாய்ச்சி** – பூட்டுவிலங்கு.

**மாய்த்தல்** – மறைத்தல்; கொல்லுதல்; அழித்தல்; வருத்துதல்; தீட்டுதல்.

**மாய்தல்** – மறைதல்; அழிதல்; சாதல்; ஒளி மழுங்குதல்; கவலை மிகுதியால் வருந்துதல்; அறப்பாடுபடுதல்; மறத்தல்.

**மாய்ப்பு** – மாய்த்தல்; சாவு; மறைவு.

**மாய்மாலம்** – பாசாங்கு; மோசடி.

**மாய்வு** – சாவு; மறைவு.

**மாயக்கள்ளி** – மயக்கி ஏமாற்றுபவள்.

**மாயக்காரன்** – வஞ்சகன்; மாயவித்தைக்காரன்.

**மாயக்காரி** – காண்க: **மாயக்கள்ளி.**

**மாயக்குரம்பை** – காண்க: **மாயாதேகம்.**

**மாயக்கூத்தன்** – திருமால்.

**மாயசாலம்** – வஞ்சனை.

**மாயப்புணர்ச்சி** – தலைவன் தலைவியரது களவுக் கூட்டம்.

**மாயப்பெண்** – மாறுவேடம் பூண்ட பெண்; பெண் வேடம் பூண்ட ஆண்.

**மாயப்பொடி** – மாயத்தன்மை செய்யும் பொடி.

**மாயப்போர்** – அற்புதமான போர்; வஞ்சக யுத்தம்.

**மாயம்** – மாயை; வஞ்சனை; பித்தளை; பாசாங்கு; அறியாமை; கனவு; பொய்; நிலையின்மை; வியப்பு; அழகு; தீமை; கயமைத் தன்மை; கறுப்பு; உயரம்; நீளம்; தொகை.

**மாயமந்திரம்** – மாயம்பண்ணும் மந்திரம்.

**மாயரூபம்** – மெய்போலத் தோற்றும் பொய் யுருவம்.

**மாயவண்ணன்** – திருமால்.

**மாயவள்** – கரியநிறமுடையவள்; துர்க்கை; தெய்வப்பெண்; காண்க: **இடாகினி.**

**மாயவன்** – திருமால்.

**மாயவிஞ்சை, மாயவித்தை** – இந்திரசால வித்தை.

**மாயவேடம்** – பொய்வேடம்.

**மாயன்** – கரியவன்; திருமால்; வஞ்சகன்;

**மாயாகாரியம்** – மாயையின் தோற்றமாகிய பிரபஞ்சம் முதலியன; தனுகரண புவன போகங்களாகிய மாயையின் விளைவுகள்.

**மாயாசத்தி** – மாயையாகிய சத்தி.

**மாயாசூனியம்** – மாயையால் மறைவின்மை.

**மாயாதேகம்** – நிலையற்ற வுடல்.

**மாயாதேவி** – மாயையாகிய தேவி; கௌதம புத்தரின் தாய்.

**மாயாபஞ்சகம்** – தமம், மாயை, மோகம், அவித்தை, அநிருதம் என்னும் ஐந்து விதமாயுள்ள மாயை.

**மாயாபாசம்** – மாயையாகிய பந்தம்

**மாயாபுரி** – உடம்பு; பித்தளை; அரித்துவாரம் என்னும் புண்ணியத்தலம்.

**மாயாவி** – மாயை செய்வோன்; அமானுடசத்தியால் வேண்டும் உருக்கொள்வோன்; வஞ்சகன்.

**மாயாவிநோதம்** – இந்திரசால வித்தை.

**மாயாவிமோசனம்** – மாயையினின்று நீங்குகை.

**மாயி** – துர்க்கை; ஆண்பெண்களைக் களவிற் புணர்ப்பிக்கும் ஆண்மகன்; மாயாவாதி.

**மாயிடம்** – எருமை.

**மாயிரம்** – புறமாயுள்ளது.

**மாயுநாடி** – காண்க: **பித்தநாடி.**

**மாயூரம்** – மயில்; மயிலாடுதுறை என்னும் சிவதலம்.

**மாயேயம்** – ஐந்து மலத்துள் ஒன்றும் அசுத்த மாயையின் காரியமுமான கலை, வித்தை, இராகம், புருடன், மாயை, காலம், நியதி முதலிய ஏழு தத்துவங்கள்.

**மாயை** – மூலப்பிரகிருதி; விந்து, மோகினி; மாயேயம் என்னும் மூவகைப்பட்ட மலம்; மாயா பஞ்சகத்துள் ஒன்றாகிய மாயை; பொய்த் தோற்றம்; மாயவித்தை; வஞ்சகம்; அமானுடசத்தி; காளி; பார்வதி; காண்க: **அசுத்தமாயை; மாயாதேவி; மாயாபுரி; திரோதான சத்தி;** ஒரு நரகவகை.

**மாயையுற்றாள்** – காளி.

**மாயோள்** – கருநிறமுடையவள்; மாமை நிறமுடையவள்; பெண்; வஞ்சகி.

**மாயோன்** – கருநிறமுடையோன்; திருமால்.

**மாயோன்பூடு** – காண்க: **மால்தொடை.**

**மாயோன்மருகன்** – திருமாலின் மருகனான முருகக்கடவுள்.

**மாயோனாடல்** – அல்லியம், மற்கூத்து, குடக்கூத்து எனத் திருமாலாடிய கூத்துவகைகள்.

**மாயோனாள்** – திருவோணநாள்.

**மார்** – நெஞ்சு; முலை; மார்பு; நான்குமுழ அளவுள்ள நீட்டலளவை; ஓர் அசை; பல்லோர் படர்க்கை விகுதியுள் ஒன்று; ஒரு வியங்கோள் விகுதி; பன்மைவிகுதி.

**மார்க்கட்டி** – மார்பில்வரும் புண்.

**மார்க்கட்டு** – மார்பின் உறுதியமைப்பு; இரவிக்கை; மார்பின் குறுக்கேயிடும் வேட்டிக் கட்டு; சந்தை.

**மார்க்கடம்** – காண்க: **மர்க்கடம்**; குரங்குக்கூட்டம்.

**மார்க்கண்டம்** – மார்பெலும்பு.

**மார்க்கணம்** – அம்பு; இரப்பு; தேடுகை; நெஞ்சுப் பகுதி.

**மார்க்கம்** – நெறி, வழி; நெடுந்தெரு; ஒழுங்கு; முறை; ஒழுக்கம்; சமயம்; மூலம்; மரபுவழி; மறுதலை; ஆராய்ச்சி; மார்கழிமாதம்; கத்தூரி; அகப்பொருட்டுறை; கூத்துவகை; தாளப்பிரமாணத்துள் ஒன்று; குதிரைநடை; காண்க: **மார்க்கவம்**; உலகம்.

**மார்க்கவசம்** – மார்பிலணியும் காப்புச்சட்டை.

**மார்க்கவம்** – கையாந்தகரைப்பூண்டு.

**மார்க்கிகன்** – வழிச்செல்வோன்; வேடன்.

**மார்க்சியம்** – காரல்மார்க்ஸ் என்பவரின் கொள்கை.

**மார்கழி** – சௌரமான மாதம் பன்னிரண்டனுள் ஒன்பதாம் மாதம்.

**மார்கழிநீராடுதல்** – மார்கழி மாதத்தில் இளம் பெண்கள் நாடோறும் அதிகாலையில் குளத் திற்குச் சென்று நீராடுகை.

**மார்ச்சரியம்** – பொறாமை.

**மார்ச்சளி** – காண்க: **மார்புச்சளி**.

**மார்ச்சனம்** – துடைத்தல்; தூய்மைசெய்தல்; கடவுள் திருமுன் இடக்கையினின்று ஒழுகவிடும் நீரை மந்திரபூர்வமாய்த் தலையில் தெளிக்கை.

**மார்ச்சனி** – துடைப்பம்; சீமையால்.

**மார்ச்சனை** – இனிது ஒலிக்க மேளத்திடும் கரிய மட்சாந்து; முழவின் வார்.

**மார்ச்சாலம்** – பூனை; காண்க: **மரநாய்**.

**மார்ச்சிலந்தி** – முலைப்பக்கத்துண்டாகும் புண்.

**மார்த்தவம்** – மென்மைத்தன்மை.

**மார்த்தாண்டன்** – சூரியன்.

**மார்தட்டுதல்** – போட்டிபோடுதல்; குறித்த ஒரு துறையில் தான் மேன்மையானவன் என்பதைக் குறிப்பிக்குமாறு மார்பைத் தட்டுதல்; தற்பெருமையடைதல்.

**மார்பகம், மார்பம்** – நெஞ்சு; முலை.

**மார்பாக** – மூலமாய்.

**மார்பாணி** – ஒரு மார்பின் புண்வகை; தலைமையாணி; தண்டனையாக மார்பில் தைக்கும் ஆணி.

**மார்பு** – நெஞ்சு; முலை; வடிம்பு; தடாகம்; அகலம்; கருப்பூரவகை; நான்குமுழ அளவுள்ள நீட்டலளவை.

**மார்புக்குழி** – மார்பெலும்பின் கீழுள்ள குழி; இதயம், நுரையீரல் முதலிய உறுப்புகளடங்கிய நெஞ்சின் அறை.

**மார்புச்சளி** – நெஞ்சில் சளிபிடிக்கும் நோய்வகை.

**மார்புநோவு** – மார்பில் உண்டாகும் வலிவகை; மார்த்தசையில் உண்டாகும் நோவுவகை.

**மார்பெலும்பு** – மார்பிலுள்ள எலும்பு.

**மார்வம்** – நெஞ்சு.

**மார்வலி** – காண்க: **மார்புநோவு**.

**மாரகம்** – சாவு; இறப்பைத்தருவது; கொடுமையான தொற்றுநோய்.

**மாரகன்** – சாவுக்குக் காரணமான கோள்; சாவை உண்டாக்குவோன்.

**மாரகாகளம்** – மன்மத வாத்தியமான குயில்.

**மாரசயன்** – மாரனை வென்றவனான அருகன்.

**மாரடித்தல்** – இன்னற்படுதல்; இழவில் அழும் போது மார்பில் மகளிர் அடித்துக்கொள்ளுகை.

**மாரடைப்பு** – நெஞ்சடைப்பு, மூர்ச்சை; சூதக நோய்; மார்பில் உண்டாகும் வலிவகை.

**மாரணம்** – சாவு; அழித்தல்; எண்வகை மாய வித்தையுள் ஒருவனை மந்திரத்தால் இறக்கச் செய்யும் வித்தை.

**மாரதந்தி** – காமன் யானையான இருள்.

**மாரதன்** – தான் ஒருவனே பத்தாயிரம் வீரரை எதிர்த்துப் போர் செய்யவல்ல தேர்வீரன்.

**மாரப்பற்று** – கருப்பூரவகை.

**மாரபேரி** – காமன் முரசான கடல்.

**மாரம்** – செடிவகை.

**மாரவேள்** – காமன்.

**மாரன்** – மன்மதன்; புத்தரை மயக்க முயன்று தோற்ற ஒரு தேவன்.

**மாரனாலயம்** – மன்மதன் இருக்கை; பெண்குறி.

**மாராட்டம்** – துன்பம்; ஆள்மாறாட்டம்; மகாராட்டிரதேசம்; ஊர்.

**மாராப்பு** – பெண்கள் தம் மார்பின் குறுக்கேயிடும் சீலைப்பகுதி; முதுகுடன் இணைத்து மூட்டை கட்டுங் கச்சை.

**மாராயஞ்சொல்லுதல்** – நற்செய்தி கூறுதல்.

**மாராயம்** – வேந்தனால் பெறும் சிறப்பு; மகிழ்ச்சி; நற்செய்தி; பாராட்டுச்சொல்; பெண் பூப்படைந்தமையைச் சுற்றத்தாருக்கு அறிவிக்கை.

**மாராயவஞ்சி** – அரசனாற் சிறப்பெய்திய வெற்றி வீரனின் பெற்றிமை கூறும் புறத்துறை.

**மாராயன்** – அரசன்; அரசனாற் பெறும் பட்டப் பெயர்; திருவிதாங்கூரில் உவச்சரையொத்த ஒரு சாதி.
**மாராழம்** – மார்பளவுள்ள ஆழம்.
**மாரி** – மழை; நீர்; மேகம்; மழைக்காலம்; பூராட நாள்; புள்வகை; சாவு; அம்மைநோய்; ஒரு தேவதை; துர்க்கை.
**மாரிக்காலம்** – மழைக்காலம்.
**மாரிநாள்** – உத்தரநாள்.
**மாரிபம்** – மூலம்.
**மாரிமழை** – வேனிற்காலத்திற் பெய்யும் மழை.
**மாரிமறுத்தல்** – மழை நின்றுவிடுகை; மழை யில்லாமை.
**மாரிமுத்து** – அம்மைநோய்.
**மாரியம்மன்** – அம்மைக்குரிய தேவதை.
**மாரீசம்** – வஞ்சகம்; மூர்ச்சை; உபபுராணத்துள் ஒன்று; மிளகுதைலம்.
**மாருதப்படை** – வாயுதேவனின் அம்பு.
**மாருதம்** – காற்று.
**மாருதன்** – வாயுபகவான்.
**மாருதி** – அனுமான்; வீமன்.
**மாருதிநாதம்** – வங்கமணல்.
**மாருதேயன்** – அனுமான்.
**மாரெரிச்சல்** – செரியாமையால் உண்டாகும் மார்பெரிச்சல் நோய்.
**மாரோடம்** – செங்கருங்காலி.
**மால்** – பெருமை; பெருமையுடையவன்; திருமால்; அருகன்; இந்திரன்; காற்று; புதன்; சோழன்; மலை; வளமை; செல்வம்; பழைமை; மேகம்; கண்ணேணி; மயக்கம்; ஆசை; காமம்; கருமை; விட்டுணுக்கரந்தை; எழுதகக்கருவி; செங்கற் கட்டளை; காளவாய்; மாதிரி; எல்லை; வலை வகை; இலாயம்; அரசிறைவகை; சொத்து; அரண்மனை.
**மால்தங்கை** – உமை; பாடாணவகை.
**மால்தொடை** – துளசி.
**மால்பு** – கண்ணேணி.
**மால்முடிதல்** – வலைபின்னுதல்.
**மால்முருகு** – துளசி.
**மால்மைத்துனன்** – சிவபிரான்; துருசு.
**மால்வீடு** – காண்க: **சாளக்கிராமம்.**
**மாலகம்** – வேப்பமரம்; செம்பரத்தைவகை.
**மாலதி** – சிறுசண்பகம்; மல்லிகை; காட்டு மல்லிகை; விளக்குத்தண்டு; நிலவின்கதிர்; நிருவாணம்.
**மாலதிபலம்** – சாதிக்காய்.
**மாலம்** – குங்குமமரம்; பேய்.
**மாலமாயம்** – பேயின் தந்திரம்.
**மாலயம்** – சந்தனமரம்; காண்க: **மாளயம்.**
**மாலர்** – கவசம்; வேடர்; புலையர்.
**மாலவன்** – புதன்; திருமால்.
**மாலி** – மாலையணிந்தவன்; சூரியன்; ஓர் அரக்கன்; கள்; தோட்டக்காரன்.
**மாலிகன்** – பூ விற்போன்.
**மாலிகை** – மாலை; வரிசை; சீமைச்சணல்.
**மாலிமி** – இளமைப் பருவத்திற் செய்யும் நட்பு; காண்க: **மாலுமி.**
**மாலியம்** – கடவுளுக்குப் படைக்கும் மலர்; பூ.
**மாலிருஞ்சோலை** – மதுரை மாவட்டத்திலுள்ள அழகர்மலை.
**மாலினி** – பார்வதி; துர்க்கை.
**மாலுக்கிளையாள்** – துர்க்கை.
**மாலுகம்** – காண்க: **மாலகம்.**
**மாலுதல்** – மயங்குதல்; மாட்சிமைப்படுதல்; எழுதகம் அமைத்தல்.
**மாலுதானம்(ன்)** – காண்க: **பச்சைப்பாம்பு.**
**மாலுந்திவந்தோன்** – திருமாலின் கொப்பூழில் உதித்தவனான பிரமன்.
**மாலுமி** – கப்பலோட்டி.
**மாலூர்தி** – திருமாலின் ஊர்தியான கருடன்.
**மாலூரம்** – வில்வமரம்; மாவிலிங்கமரவகை.
**மாலை** – அந்திப்பொழுது; இரவு; இருள்; சமயம்; குற்றம்; மரகதக்குற்றவகை; இயல்பு; குணம்; தொடுக்கப்பட்டது; தொடுத்த பூந்தொடை; மாதரணிவடம்; நூல்வகை; வரிசை; பாசம்; விறலி; பெண்.
**மாலைக்கண்** – இரவில் கண் தெரியாமை; பார்வைக்குறைவு.
**மாலைக்கண்ணன்** – இராக்குருடன்; பார்வைக் குறைவுள்ளவன்.
**மாலைக்காரன்** – மாலை தொடுப்போன்.
**மாலைக்குளியல்** – அந்திநேரத்துக் குளிக்கை.
**மாலைக்குளியன்** – மாலையிற் குளித்து அலங் கரித்துக்கொள்ளும் பகட்டன்.
**மாலைகட்டி** – கோயிலுக்குப் பூமாலை கட்டு வோன்.
**மாலைசாத்துதல்** – மாலையால் அலங்கரித்தல்.
**மாலைசூட்டு** – காண்க: **சுயம்வரம்.**
**மாலைசூட்டுதல்** – மாலை சூட்டி மணத்தல்.
**மாலைநிலை** – இறந்த கணவனுடைய சிதையில் தீப்பாயும்பொருட்டு அவன் மனைவி மாலைக் காலத்து நின்ற நிலை கூறும் புறத்துறை.
**மாலைநேரம்** – அந்திவேளை.
**மாலைப்படிகம்** – பளிங்கு.
**மாலைமசங்கல்** – அந்திக்காலத்து மங்கற் பொழுது.

**மாலைமாற்று** – எழுத்துகளை ஈறுமுதலாகப் படிக்குமிடத்தும் பாட்டு மாறாமலிருக்கும் மிறைக்கவிவகை; திருமணத்தில் மாலை மாற்றுதல்.

**மாலைமாற்றுதல்** – திருமணத்தில் மணமக்கள் ஒருவருக்கொருவர் மாறிமாறி மாலையிடுதல்.

**மாலையணி** – ஓர் அணிவகை.

**மாலையணிதல்** – மாலையால் அலங்கரித்தல்; புணர்ச்சியின்பந் துய்த்தல்.

**மாலையந்தி** – காண்க: **மாலைநேரம்.**

**மாலையிட்டவன்** – கணவன்.

**மாலையிடுதல்** – காண்க: **மாலைசூட்டுதல்.**

**மாலையீடு** – காண்க: **மாலைசூட்டு;** உடன்கட்டை யேறிய பெண்ணின்பொருட்டு எழுப்பிய நினைவுக் கட்டடம்; அரசர் முதலியவரின் நினைவுச்சின்னம் அமைந்த ஈமம்.

**மாலையுவமை** – பூமாலைபோல் உவமை பல ஒன்றற்கொன்று தொடர்புடையதாய் வரும் அணிவகை.

**மாலைவாங்குதல்** – மாலையை விலைக்கு வாங்கு தல்; பரிசங் கொடுத்தல்.

**மாலைவெயில்** – அந்திப்பொழுதின் மஞ்சள் வெயில்.

**மாலைவெள்ளி** – அந்தியில் தோன்றும் சுக்கிரன்.

**மாலோகம்** – மேலேழுலகத்துள் ஒன்று; மிகுதி.

**மாலோன்** – காண்க: **மாலவன்; இந்திரன்.**

**மாவட்டணம்** – நெடும்பரிசை.

**மாவட்டம்** – மாநிலத்தின் ஒரு பிரிவு.

**மாவடம்** – மாம்பலகை.

**மாவடி** – மாவடு; மாவடுவின் பிளவு.

**மாவடு** – மாவின் பிஞ்சு.

**மாவடை** – நிலத்திலடங்கிய விலங்குகள்; ஊரில் கால்நடை அடையும் இடம்.

**மாவயிரக்கல்** – நிலத்தில் அகப்படுங் கனிப் பொருள்வகை.

**மாவரி** – சல்லடை.

**மாவல(லா)ன்** – குதிரையேற்றத்தில் வல்லவன்; குதிரைப்பாகன்; யானைப்பாகன்.

**மாவலி** – திருமாலால் ஒடுக்கப்பட்ட ஓர் அசுரன்; தீப்பொறி சிதறும் கார்த்திகை வாணவகை.

**மாவிட்டம்** – கடல்நுரை.

**மாவிடை** – காண்க: **மாவடை.**

**மாவித்தன்** – காண்க: **மாவுத்தன்.**

**மாவிரதம்** – சைவ உட்சமயங்களுள் ஒன்று; பாதகங்கள் யாவும் விலகக்கொள்ளும் உறுதி மொழி.

**மாவிரதியர்** – மாவிரத சமயத்தைச் சார்ந்த சைவத்துறவியர்.

**மாவிருக்கம்** – காண்க: **சதுரக்கள்ளி.**

**மாவிலங்கம்** – ஒரு மரவகை.

**மாவிலங்கு** – ஒரு மரவகை; இலிங்கபாடாணம்.

**மாவிலங்கை** – இலிங்கபாடாணம்; திண்டிவனத்தி லிருந்த ஒய்மான் நல்லியக்கோடனது தலைநகர்.

**மாவிலிங்கம்** – ஒரு மரவகை; இலிங்கபாடாணம்.

**மாவிலைத்தோரணம்** – மங்கலமாக வீடு முதலிய வற்றின் முகப்பில் மாவிலையாற் கட்டுந் தோரணம்.

**மாவிளக்கு** – மாவினாற் செய்த நெய்விளக்கு.

**மாவிளம்** – வில்வமரம்.

**மாவுத்தன்** – யானைப்பாகன்.

**மாவெனல்** – அழைத்தற்குறிப்பு.

**மாழ்கி** – காண்க: **தொட்டாற்சிணுங்கி.**

**மாழ்கு** – மிருகசீரிடநாள்; சுருள்.

**மாழ்குதல்** – மயங்குதல்; கெடுதல்; சோம்புதல்; கலத்தல்.

**மாழாத்தல்** – மயங்குதல்; ஒளிமழுங்குதல்.

**மாழாம்பலம்** – தூக்கம்.

**மாழை** – இளமை; அழகு; பேதைமை; மாமரம்; மாவடு; மாதர் கூட்டம்; ஓலை; உலோகக் கட்டி; பொன்; திரட்சி.

**மாள** – ஒரு முன்னிலை அசை.

**மாளம்** – கத்தூரி.

**மாளயம்** – புரட்டாசி மாதத்தில் இறந்தவரை நினைத்து அன்னார்க்குச் செய்யும் சிராத்தம்; சாந்திரமான மாதத்துத் தேய்பிறை.

**மாளவகவுளம், மாளவி** – ஒரு பண்வகை.

**மாளிகை** – அரண்மனை; கோயில்; மாடிவீட்டின் மேல்நிலம்; மாடமுள்ள பெருவீடு; வீடு.

**மாளிகைச்சாந்து** – உயர்ந்த கலவைச்சந்தனம்.

**மாளுதல்** – சாதல்; அழிதல்; கழிதல்; இயலுதல்.

**மாளை** – புளியம்பட்டை.

**மாற்சரியம்** – பொறாமை.

**மாற்ற** – ஓர் உவமச்சொல்.

**மாற்றம்** – சொல்; விடை; வஞ்சினமொழி; மாறு பட்ட நிலை; பகை; கழுவாய்; வாதம்.

**மாற்றல்** – கொடாமை; ஒன்று கொடுத்து ஒன்று வாங்கல்; ஒன்றை வேறொன்றாக்கல்; தீர்த் தல்; இடம் மாறல்; மாற்றுதல்.

**மாற்றலர்** – பகைவர்.

**மாற்றவள், மாற்றாட்டி** – காண்க: **மாற்றாள்.**

**மாற்றாண்மை** – பகைமை.

**மாற்றாந்தாய்** – தந்தையின் மறுதாரம்.

**மாற்றாள்** – சக்களத்தி.

**மாற்றான்** – பகைவன்; ஒட்டுப்பலகை; மாற்று மருந்து.

**மாற்று** – வேறுபடுத்துகை; ஒழிக்கை; கொடிய மருந்து, நஞ்சு முதலிய குற்றத்தை நீக்கக் கொடுக்கும் மருந்து; பண்டமாற்று; விலை; வண்ணான் வெளுத்த உருப்படி; மாற்றி உடுத்தும் சீலை; பொன் வெள்ளிகளின் உரை மாற்று; தங்கம்; எதிர்; உவமை; வலிமை; வண்ணம்.

**மாற்றுக்குறைச்சல்** – பொன் முதலியவற்றின் தாழ்ந்த தரம்.

**மாற்றுத்தாய்** – காண்க: **மாற்றாந்தாய்.**

**மாற்றுதல்** – வேறுபடுத்துதல்; செம்மைப்படுத்து தல்; நீக்குதல்; கெடுத்தல்; ஓடச்செய்தல்; தடுத்தல்; மறுத்துரைத்தல்; அழித்தல்; ஒடுக்கு தல்; மறைத்தல்; நாணயம் மாற்றுதல்; பண்ட மாற்றுதல்; இருப்பிடம் வேறுபடுத்துதல்; பெருக்கித் துப்புரவு செய்தல்; இடைவிடுதல்; ஒழிதல்; தாமதித்தல்; ஓரிடத்துச் சமைத்த உணவை வேறிடத்துக்கு அனுப்புதல்.

**மாற்றுபகாரம்** – கைம்மாறு.

**மாற்றுமை** – மாறுபாடு.

**மாற்றுவேந்தன்** – பகையரசன்.

**மாற்றோர்** – காண்க: மாற்றலர்.

**மாற்றோலைப்படுதல்** – ஓர் அட்டவணை யினின்றும் நீக்கி வேறோர் அட்டவணையிற் சேர்க்கப்படுதல்.

**மாறன்** – பாண்டியன்; சடகோபர் என்னும் நம்மாழ்வார்; பகைவன்.

**மாறாட்டம்** – மாற்றுகை; புரட்டு; தடுமாற்றம்; பைத்தியம்; தவறு.

**மாறாட்டு** – புரட்டு; காண்க: **பரிவருத்தனை.**

**மாறாடுதல்** – உருவம் முதலியன மாறுதல்; தடு மாறுதல்; எதிர்த்துநிற்றல்; மாறிப்புகுதல்; புரட்டுதல்.

**மாறிப்போடுதல்** – மாற்றுதல்.

**மாறியடித்தல்** – காற்றுத் திருப்பிவீசுதல்; ஏவின வனையே பேய் திருப்பித் தாக்குதல்.

**மாறியாடுதல்** – காலை மாற்றி நடனமாடுதல்.

**மாறிருமார்பினள்** – திருமகள்.

**மாறு** – வேறுபாடு; பகை; ஒவ்வாதது; ஒப்பு; இறந்துபாடு; பிறவி; பதிலுதவி; பதில்; துடைப்பம்; மிலாறு; பருத்தி முதலியவற்றின் தூறு; எதிர்; பதிலியாகக் கொள்ளுவது; பிரம்பு; விதம்; காரணப் பொருளுணர்த்தும் ஓர் இடைச்சொல்.

**மாறு** (வி) – குணி; ஒன்றை மற்றொன்றாக்கு; வேறாக்கு; மாற்று.

**மாறுகண்** – சாய்ந்த பார்வை, ஓரப்பார்வை.

**மாறுகம்** – சீலை.

**மாறுகால்** – தேசிக்கூத்திற்குரிய கால்வகை.

**மாறுகால்மாறுகைவாங்குதல்** – ஒரு பக்கத்துக் கையையும் மறுபக்கத்துக் காலையும் தண்டனையாக வெட்டுதல்.

**மாறுகொள்ளுதல்** – காண்க: **மாறுபடுதல்.**

**மாறுகொளக்கூறல்** – நூற்குற்றம் பத்தனுள் முன்னோடு பின் முரணாகக் கூறும் குற்றவகை.

**மாறுகோள்** – வக்கிரம்; ஒவ்வாமை.

**மாறுத்தரம்** – பதில்.

**மாறுதல்** – வேறுபடுதல்; குணமாதல்; சரிப்படு தல்; பின்வாங்குதல்; இருப்பிடம் வேறு படுதல்; நீங்குதல்; முதுகிடுதல்; கூத்தாடுதல்; இறத்தல்; இல்லையாதல்; பொய்யாதல்; விற்றல்; பணிசெய்தல்; கைவிடுதல்; பிறனுக் குதவுதல்; கழித்தல்; மறுத்தல்; எண் பெருக்குதல்; அடித்தல்.

**மாறுபடல், மாறுபடுதல்** – மாறிப்போதல்; முரணுதல்; பகைமைகொள்ளுதல்.

**மாறுபடுபுகழ்நிலை** – சொல்லக்கருதிய பொருளை விடுத்து அதனைப் பழிக்கும் பொருட்டு வேறொன்றை வெளிப்படையாகப் புகழும் அணிவகை.

**மாறுபடுபொருண்மொழி** – முன்மொழிந்ததற்கு மாறாகப் பொருள் தோன்றிவருஞ் சொல் லுடையதாகிய அணிவழு.

**மாறுபாடு** – பகைமை; வேறுபடுதல்; ஒவ்வாமை; புரட்டு.

**மாறுமுகம்** – நினைத்தவாறு மாற்றிக்கொள்ளும் முகவடிவு.

**மாறுரை** – காண்க: **மாறுத்தரம்.**

**மான்** – ஒரு விலங்குவகை; விலங்கின் பொது; குதிரை; சிங்கம்; மகரமீன்; மகரராசி; ஒரு பெயர் விகுதி; படியாக என்னும் பொருளில் வரும் இடைச்சொல்; காண்க: **மகத்தத்துவம்;** மூலப் பகுதி; மானுடன்; பெரியோன்; மலை; ஒப்பு.

**மான்குளம்பு** – மானின் பாதம்; காண்க: **அடம்பு.**

**மான்கொம்பு** – பாதிரிமரம்.

**மான்மகன்** – காண்க: **மான்மைந்தன்.**

**மான்மதச்சாந்து, மான்மதச்சேறு** – கத்தூரியாற் செய்த நறு மணக் குழம்பு.

**மான்மதம்** – கத்தூரி; சவ்வாது.

**மான்மறி** – மான்குட்டி; பெண்மான்; வள்ளி நாயகி.

**மான்மியம்** – பெருமை; தலப்பெருமையைக் கூறும் நூல்.

**மான்முருகு** – காண்க: **மால்முருகு;** துரிசு.

**மான்மைத்துனன்** – சிவபிரான்; காண்க: **மான் முருகு.**

**மான்மைந்தன்** – திருமாலின் மைந்தனான மன் மதன்; நான்முகன்.

**மான்றல்** – மயக்கம்.

**மான்றலை** – மிருகசீரிடநாள்; அபிநயவகை.

**மான்றார்** – புத்திமயங்கியவர்.
**மான்றோல்** – மானின் தோல்.
**மான** – ஓர் உவமவுருபு.
**மானக்கவரி** – சாமரை; கவரிமான்.
**மானக்குருடன்** – முழுக்குருடன்.
**மானக்குறை, மானக்கேடு** – பெருமைக்கேடு.
**மானகவசன்** – மானத்தையே கவசமாகத் தரித்தோன்.
**மானகீனன்** – மானங்கெட்டவன்.
**மானங்காத்தல்** – ஒருவன் அல்லது ஒருத்தியின் மானத்தைப் பேணுதல்.
**மானசம்** – மானத்தொடர்பானது; கருத்து; மனம்; ஒரு புண்ணியதீர்த்தம்.
**மானசி** – உமை.
**மானசிகம்** – மனத்தாற் செய்யுந் தவம்.
**மானசூத்திரம்** – அரைஞாண்.
**மானத்தாழ்ச்சி** – காண்க: **மானக்கேடு.**
**மானதக்காட்சி** – ஆன்மா புத்தி தத்துவத்தில் நின்று சவிகற்பமாய் அறியும் அறிவு.
**மானதபூசை** – மனப்பாவனையால் வழிபடுதல்.
**மானதம்** – மனத்தால் மந்திரம் நினைத்தல்; பாவனை; மனம்; ஒரு புண்ணியதீர்த்தம்.
**மானதன்** – பகைவரது மானத்தை அழிப்பவனான அரசன்; மனத்தினின்று தோன்றியவன்.
**மானதுங்கன்** – மானமிக்கவன்.
**மானபங்கம்** – மானக்குறைவு.
**மானபரன்** – தன்மதிப்புள்ளோன்; அரசர் சிலர் பூண்ட பட்டப்பெயர்.
**மானம்** – மதிப்புடைமை; கற்பு; பெருமை; புலவி; வலிமை; வஞ்சினம்; கணிப்பு; அளவு கருவி; ஒப்புமை; அளவை; அன்பு; பற்று; இகழ்ச்சி; வெட்கம்; குற்றம்; வானூர்தி; கோயில்விமானம்; மண்டபம்; கத்தூரி; சவ்வாது; வானம்; ஒரு தொழிற்பெயர் விகுதி; ஓர் இடைச்சொல்.
**மானம்பார்த்தபூமி** – மழைநீரை நம்பிப் பயிரிடப் படும் நிலம்.
**மானமரியாதை** – மதிப்பு, சிறப்பு.
**மானமா** – காண்க: **கவரிமான்.**
**மானமுறுதல்** – பார்த்தல்.
**மானமூடுதல்** – உடை முதலியவற்றால் உடலை மறைத்து மானங்காத்தல்.
**மானரந்தரி** – நாழிகைவட்டில்.
**மானரியம்** – விந்தையானது.
**மானல்** – ஒப்பு; ஐயுறுதல்; நாணம்; மயக்கம்.
**மானவர்** – மாந்தர்.
**மானவன்** – மனிதன்; பெருமையுடையோன்; அரசன்; படைத்தலைவன்; வீரன்.
**மானவாரி** – காண்க: **மானம்பார்த்தபூமி;** மழை பெய்து விளையும் விளைச்சல்; ஒரு நெல் வகை.
**மானவாரிநிலம்** – காண்க: **மானம்பார்த்தபூமி.**
**மானவிலங்கு** – காண்க: **மானமா.**
**மானவிறல்வேள்** – முற்காலத்துச் சிற்றரசர் சிலருக்கு வழங்கிய பட்டப்பெயர்.
**மானவீனம்** – காண்க: **மானக்கேடு.**
**மானவு** – தெளிவு.
**மானன்** – தலைவன்; மூடன்; வேடன்; மதிப்புள்ளவன்.
**மானா** – பாட்டன்; தகப்பன்.
**மானாகம்** – காண்க: **பெருநாரை.**
**மானாங்காணி** – யோசனையின்மை; ஒழுங்கீனம்.
**மானாபரணன்** – மானமாகிய அணிகலனை அணியாக அணிந்தவன்.
**மானார்** – பெண்டிர்; பகைவர்.
**மானாவாரி** – மனப்போக்கு; ஒரு விளைச்சல்; விழிப்பின்மை; மழைபெய்து விளையும் விளைச்சல்.
**மானாவி** – நவராத்திரி விழா; காண்க: **மானாவிச் சோலை.**
**மானாவிச்சோலை** – ஒன்பான் இரவு (நவராத்திரி) விழாவில் அமைக்கும் அலங்காரச் சோலை.
**மானாள்** – காண்க: **மானுடத்தி.**
**மானி** – மதிப்புள்ளவர்; செருக்குடையவர்; மங்கையர்க்கரசியார்; மாமன்.
**மானிகை** – சாராயம்.
**மானிடச்சட்டை** – தெய்வந்தாங்கும் மானிட வடிவம்.
**மானிடசாதி, மானிடசென்மம்** – மக்கட்பிறப்பு; காண்க: **மானிடம்.**
**மானிடத்தன்** – மானை இடக்கையில் ஏந்தியவனாகிய சிவபிரான்.
**மானிடத்தன்மன்** – குபேரன்.
**மானிடம்** – மக்கள்தொகுதி; மனிதன்.
**மானிடமேந்தி** – காண்க: **மானிடத்தன்.**
**மானிடவன்** – காண்க: **மானுடவன்.**
**மானிடவேள்வி** – விருந்தினரைப் போற்றுதல்.
**மானிடன்** – மனிதன்; காண்க: **மானிடத்தன்.**
**மானித்தல்** – நாணுதல்; செருக்குக்கொள்ளுதல்; பெருமைப்படுத்துதல்.
**மானிதம், மானிதை** – சிறப்பு.
**மானியக்காரன்** – சொந்தநிலக்காரன்.
**மானியம்** – இறையிலி நிலம்; அளவிடுகை; நிலத்தின் தீர்வையை இனாமாகப் பெறும் உரிமை.
**மானினி, மானுடத்தி** – பெண்.

**மானுடம்** – காண்க: மானிடசாதி; மானிடவேள்வி.
**மானுடமடங்கல்** – திருமாலின் நரசிம்மாவதாரம்.
**மானுடயாகம்** – காண்க: மானிடவேள்வி.
**மானுடவன்** – மனிதன்.
**மானுதல்** – ஒத்தல்.
**மானேறு** – உத்தரநாள்; கலைமான்.

## மி

**மி** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம் + இ).
**மிக்க** – மிகுந்த; உயர்ந்த.
**மிக்கசெயல்** – பெருந்தன்மை; அளவிலா ஆற்றல்.
**மிக்கது** – மிகுதியானது; சிறந்தது; ஒன்றின் மேம்பட்டது; மீறிய செய்கை; எஞ்சியது; வேறானது; நியாயமற்றது.
**மிக்கபெயல்** – அதிகமழை.
**மிக்கவன்** – உயர்ந்தோன்; பெருமையிற் சிறந்தவன்.
**மிக்கவை** – மிகுதியானவை; தீயவை; சோறு; ஊன்; நிறைகை.
**மிக்கார்** – பெரியோர்; மேம்பட்டவர்; காண்க: **மிக்கோர்**; பெரும்பாலோர்; தீமை செய்பவர்; பகைவர்.
**மிக்கிளமை** – குழந்தைப்பருவம்.
**மிக்கு** – காண்க: **மிக.**
**மிக்கோர்** – அறிவுடையோர்.
**மிக்கோன்** – பெரியோன்.
**மிக** – மிகவும்.
**மிகல்** – மிகுதல்; பெருமை; வெற்றி; எழுத்து இரட்டிக்கை.
**மிகவு** – காண்க: **மிகுதி.**
**மிகற்கை** – எழுத்து இரட்டிக்கை.
**மிகிரம்** – காற்று; முகில்.
**மிகிரன்** – சந்திரன்; சூரியன்.
**மிகு** – பெரிய; ஓர் உவமவுருபு.
**மிகுகொடையாளன்** – கொடையிற் சிறந்தவனான **கன்னன்.**
**மிகுத்தல்** – அதிகப்படுத்துதல்; விஞ்சுதல்; பெருக்குதல்; பெருமையாகக் கருதுதல்; மிச்சப்படுத்துதல்.
**மிகுத்துச்சொல்லல்** – விதந்து சொல்லல்; கூறுதல்.
**மிகுத்துதல்** – மிச்சப்படுத்துதல்.
**மிகுதம்** – மிகுதி.
**மிகுதல்** – அதிகமாதல்; பெருகுதல்; மிஞ்சுதல்; பொங்குதல்; எழுத்து அதிகரித்தல்; நெருங்குதல்; சிறத்தல்; ஒன்றின் மேம்படுதல்; செருக்கடைதல்; எஞ்சுதல்; தீமையாதல்.
**மிகுதி** – அதிகம்; எழுத்து இரட்டிக்கை; நிறைவு; திரள்; பொலிவு; மீதி; சிறப்பு; செருக்கு.
**மிகுதிக்குறைமை** – மிகுவதும் குறைவதும்.
**மிகுதிச்சொல்** – வரம்புகடந்த சொல்.
**மிகுதியாய், மிகுதியும்** – மிகவும்; பெரும்பாலும்.
**மிகுந்த** – அதிகமான; மிச்சமான.
**மிகுபெயல், மிகுமழை** – அதிக மழை.
**மிகை** – மிகுதி; சிறந்த பொருள்; மேன்மை; பெருமை; தேவையற்றது; வேண்டுமளவின் மிக்கதென்னுங் குற்றம்; மிகுதிப்பொருள்; அதிகப்படியானது; செருக்கு; தீச்செயல்; தவறு; தண்டனை; வேதனைசெய்கை; வருத்தம்; துன்பம்; கேடு.
**மிகைசொல்லுதல்** – பொய்க்குற்றஞ்சாட்டுதல்.
**மிகைத்தல்** – அதிகமாதல்; செருக்குறுதல்.
**மிகைபடக்கூறல்** – நூற்குற்றம் பத்தனுள் வேண்டுமளவின் மிக்கதைக் கூறும் குற்றம்.
**மிகைபடுதல்** – அதிகப்படுதல்; குற்றப்படுதல்.
**மிகைமொழி** – காண்க: **உயர்வுநவிற்சியணி.**
**மிச்சம்** – மீதி; பொய்; அதிகம்; காண்க: **மித்தியாத்துவம்.**
**மிச்சம்பிடித்தல்** – செட்டாயிருந்து பொருள் சேர்த்தல்.
**மிச்சிரம்** – கலப்பு; கலப்பானது.
**மிச்சில்** – எஞ்சிய பொருள்; எச்சில்; கரி.
**மிச்சில்சீப்பவர்** – எச்சிலிலை முதலியன எடுத்துத் தூய்மை செய்வோர்.
**மிச்சை** – அறியாமை; வறுமை; காண்க: **இலாமிச்சு(சை)**; பொய்.
**மிசிரம்** – கலப்பு; கலப்புச்சாதி; கலப்பானது.
**மிசுக்கன்** – ஈனன்; வறிஞன்.
**மிசுக்கை** – புல்லியது.
**மிசை** – உணவு; சோறு; உயர்ச்சி; மேலிடம்; மேடு; வானம்; முன்னிடம்; ஏழனுருபு.
**மிசைஞர்** – உண்பவர்.
**மிசைத்திரள்** – காற்கரடு.
**மிசைதல்** – உண்ணுதல்; நுகர்தல்.
**மிசைவடம்** – வீரக்கழல்.
**மிசைவு** – உண்கை; உணவு.
**மிஞ்சி** – காலில் அணியும் மோதிரவகை.
**மிஞ்சிகம்** – பெண்பால் மயிர்முடி.
**மிஞ்சிகை** – குண்டலம்; பேழை.
**மிஞ்சிப்போதல்** – கைகடந்துபோதல்; அளவுக்கு மீறுதல்.

**மிஞ்சினவன்** – அடங்காதவன்; மேற்பட்டவன்.
**மிஞ்சு** – மிகுவது; வண்டு.
**மிஞ்சுதல்** – வரம்புமீறுதல்; மிகுதியாதல்; செருக்குதல்.
**மிஞிறு** – வண்டு; தேனீ.
**மிட்டாய்** – இனிப்புவகை.
**மிட்டாய்க்காரன்** – மிட்டாய் விற்பவன்.
**மிடல்** – காண்க: **மிடன்.**
**மிடறு** – கழுத்து; ஒலியெழும் கண்ட உறுப்பு; ஒரு வாய் கொண்ட நீர்ப்பொருள்; கீழ்வாய்; தொண்டை; இன்குரற் கருவியாகிய கண்டம்.
**மிடன்** – வலிமை; மகன்; சந்திரன்.
**மிடா** – தடா; பானை, குழிசி.
**மிடி** – வறுமை; துன்பம்.
**மிடித்தல்** – வறுமையுறுதல்; குறைவுறுதல்.
**மிடிமை** – காண்க : **மிடி.**
**மிடியன்** – வறியவன்.
**மிடிவு** – காண்க: **மிடி.**
**மிடுக்கன்** – வலிமையுள்ளவன்; முருடன்; இறுமாப்புடையவன்; முருட்டுத்தனம்.
**மிடுக்கு** – வலிமை; செருக்கு.
**மிடுமிடுத்தல்** – விரைதல்.
**மிடை** – பரண்; புணர்ச்சி; நெருக்கம்; தூறு.
**மிண்டன்** – திண்ணியன்; அறிவில்லாதவன்.
**மிண்டி** – நெம்புதடி.
**மிண்டு** – வலிமை; முட்டு; துணிவு; அறிந்து செய்யுங் குற்றம்; துடுக்கு; இடக்கர்ப்பேச்சு; செருக்கிக்கூறும் மொழி.
**மிண்டுதல்** – நெருங்குதல்; வலியதாதல்; நிறைதல்; மதங்கொள்ளுதல்; போரிற் கலத்தல்; நெம்புதல்; குத்துதல்; செருக்காகப் பேசுதல்; முன்தள்ளுதல்.
**மிண்டை** – கண்ணின் கருவிழி.
**மிணுமிணுத்தல்** – காண்க : **முணமுணத்தல்;** இரகசியம் பேசுதல்; மந்திரஞ் செபித்தல்.
**மிணுமிணுப்பு** – முணுமுணுப்பு.
**மித்திஞ்சயம்** – காண்க: **மிருத்தியுஞ்சயம்.**
**மித்தியம்** – பொய்.
**மித்தியாத்துவம்** – உண்மைநிலை மறைகை; பிரகிருதி தத்துவங்களுள் ஒன்று.
**மித்தியாமதி** – அறியாமை; பிழை.
**மித்தியை** – பொய்; கபடம்.
**மித்திரநாள்** – அனுடநாள்.
**மித்திரபேதம்** – நட்பினரைப் பிரித்தல்.
**மித்திரம்** – நட்பு; பொய்கூறுகை; கோள்.
**மித்திரன்** – நண்பன்; உறவினன்; பதினோர் ஆதித்தருள் ஒருவன்; சூரியன்.
**மித்திரை** – தோழி.
**மித்துரு** – நண்பன்.
**மித்துருத்தானம்** – சன்மலக்கினத்துக்கு நாலாமிடம்.
**மித்தை** – பொய்.
**மிதத்தல்** – நீர் முதலியவற்றின்மேற் கிடத்தல்; மேலெழும்புதல்; அளவிற்குமேற் குவிதல்; மிகுதல்; வீண்பெருமை பண்ணுதல்.
**மிதப்பு** – உயர்ச்சி; மேடு; தெப்பம்; செழிப்பு; பொருட்படுத்தாமை; மேலெழுந்த தன்மை; நீர் முதலியவற்றின்மேற் கிடக்கை; தூண்டில், வலை முதலியவற்றில் நீர்மேல் மிதக்குமாறு அமைத்த மரச்சக்கை.
**மிதம்** – அளவு; நிதானம்; நடுத்தரமானது.
**மிதலை** – கொப்பூழ்.
**மிதவாதி** – தணிப்பாளன், நிதானமான கொள்கையாளன்.
**மிதவை** – தெப்பம்; சோறு; கூழ்; கும்மாயம்.
**மிதாசனி** – அளவாக உண்பவர்; சிறியவளவு உண்பவர்.
**மிதி** – மிதிக்கை; அடிவைப்பு; படிக்கல்; நெய்வார் கருவியுள் ஒன்று; மிதித்துத் திரட்டப் பெற்ற கவளம்; நடை; அளவு; அறிவு; சான்று.
**மிதித்தல்** – அடிவைத்தல்; காலால் துவைத்தல்; அவமதித்தல்; பாய்தல்; குதித்தல்.
**மிதிதோல்** – துருத்தி.
**மிதிபலகை** – அடி வைக்கும் படிப்பலகை.
**மிதிபாகல்** – ஒரு பாகல்வகை.
**மிதியடி** – பாதுகை, செருப்பு.
**மிதியிடுதல்** – அடியால் குறிசெய்தல்; காலால் துவைத்தல்.
**மிதிலைநாடி** – சீதை.
**மிதிவண்டி** – மிதித்து ஓட்டும் சைக்கிள்வண்டி, ஈருருளி.
**மிதுக்கை** – தும்மட்டிக்கொடி.
**மிதுனம்** – இரட்டை; புணர்ச்சி; மிதுனராசி; ஆனிமாதம்; ஆண்பெண் இரட்டை; ஒரு பறவைவகை.
**மிதுனவீதி** – சூரியவீதியுள் ஒன்று.
**மிதுனன்** – மிதுனராசிக்குடையவனான புதன்.
**மிதுனி** – காண்க: **கரிக்குருவி.**
**மியா** – ஒரு முன்னிலை அசைச்சொல்.
**மிரட்டுதல்** – அச்சுறுத்தல்; மயக்குதல்; ஓட்டுதல்.
**மிரதம்** – பாம்பு.
**மிரள்(ளு)தல்** – மயங்கி அஞ்சுதல்.
**மிராசி(சு)** – மரபுவழி நிலவுரிமை; நிலம், உத்தியோகம் இவை தொடர்பாக வழிவழியாய் வரும் முழு உரிமை.
**மிராசுகுடி** – வழிவழி நிலவுரிமை உடையவன்.
**மிரிநாளம்** – தாமரை.
**மிரியம்(ல்)** – மிளகு.
**மிருகசஞ்சாரம்** – விலங்கு திரியுமிடம்; நாணமில்லாப் புணர்ச்சி; விலங்கோடு புணர்கை.

**மிருகசீரிடம்** – ஐந்தாம் நட்சத்திரம்.
**மிருகதரன்** – சந்திரன்.
**மிருகதூர்த்தகன்** – நரி.
**மிருகநாதன்** – காண்க: **மிருகபதி.**
**மிருகநாபி** – கத்தூரி; கத்தூரிமான்.
**மிருகபதி** – விலங்குகட்கு அரசனான அரிமா.
**மிருகம்** – விலங்கு; மான்; விலங்கின் பொது; மிருகசீரிடநாள்; பன்றி; யானைவகை; கத்தூரி மான்; பாம்பு.
**மிருகமதம்** – கத்தூரி; கத்தூரிவிலங்கு; கத்தூரி மஞ்சள்.
**மிருகராசன்** – விலங்குகட்கு அரசனான அரிமா; வேங்கைப்புலி.
**மிருகவாகனன்** – மானை ஊர்தியாகவுடைய வாயுதேவன்.
**மிருகாங்கம்** – காற்று; சந்திரன்.
**மிருகாங்கன்** – சிவன்; சந்திரன்.
**மிருகாசனம்** – அரிமா; புலி.
**மிருகாண்டி** – விலங்காண்டி, காட்டுமிராண்டி.
**மிருகாதனம்** – காண்க: **மிருகாசனம்**; சிவிங்கி; கழுதைப்புலி.
**மிருகாதிபதி** – காண்க: **மிருகபதி**; ஐயனார்.
**மிருகாரி** – காண்க: **மிருகாசனம்**; நாய்; நரி.
**மிருகேந்திரன்** – அரிமா; சிம்மராசி.
**மிருசம்** – காட்சி.
**மிருஞ்சி** – செம்முருங்கை.
**மிருடன்** – சிவபிரான்.
**மிருடார்த்தகம்** – இல்லாதது.
**மிருடானி** – பார்வதி.
**மிருடை** – துர்க்கை.
**மிருத்தஞ்சயன்** – காண்க: **மிருத்தியுஞ்சயன்.**
**மிருத்தனம்** – காண்க: **துவரை.**
**மிருத்தாலகம்** – உவர்மண்; துவரை.
**மிருத்திகை** – மண்; நிலம்.
**மிருத்தியம்** – மண்.
**மிருத்தியு** – இறப்பு; யமன்; தீராப்பகைவன்; காண்க: **ஆணவமலம்.**
**மிருத்தியுஞ்சயம்** – இறப்பை நீக்கவல்ல மந்திரம்.
**மிருத்தியுஞ்சயன்** – யமனை வென்றவனான சிவபெருமான்.
**மிருத்து** – மண்; யமன்; சாவு.
**மிருதகம்** – பிணம்.
**மிருதங்கம்** – மத்தளம்; முழவு; ஒலி; மூங்கில்; ஒலிக்கருவிகளுள் ஒன்று.
**மிருதசஞ்சீவி, மிருதசஞ்சீவினி** – உயிர்தரும் மருந்து.
**மிருதண்டன்** – சூரியன்.
**மிருதம்** – பிணம்; சாவு; போர்; நஞ்சு; வச்சநாபி; இரந்து தேடிய பொருள்; பிறவிப் பாடாணவகை; காண்க: **தண்ணீர்விட்டான்.**
**மிருதாண்டன்** – காண்க: **மிருதண்டன்.**
**மிருதாரசிங்கி** – தூய்மை செய்யப்படாத ஈயம்; ஈயம்; பூண்டுவகை; வைப்புப் பாடாணவகை.
**மிருதி** – சாவு; நினைவு; அறநூல்; அறநூல் வல்லோன்; பார்வதி.
**மிருதித்தல்** – இறத்தல்.
**மிருது** – மென்மை; சாந்தம்; மந்தம்; மழுங்கல்; நொய்ம்மை; சமுத்திரப்பாலை; வெள்ளரி; சாவு.
**மிருதுபலம்** – காண்க: **பேரீந்து.**
**மிருதுமம்** – காண்க: **இலாமிச்சு(சை).**
**மிருதுவாதம்** – சிறுதென்றல்.
**மிருதுளம்** – மென்மையானது.
**மிருதுன்னகம்** – பொன்.
**மிருதை** – பூமி.
**மிருநாளம்** – தாமரைத்தண்டு; காண்க: **இலாமிச்சு(சை).**
**மிலாங்கிலி** – காண்க: **செங்காந்தள்; திருநீற்றுப் பச்சை.**
**மிலாரடி** – கலக்கம்; உன்மத்தம்.
**மிலாறு** – வளார், இளங்கொம்பு.
**மிலேச்சன்** – நாகரிகமற்ற புறநாட்டான்; திருத்தமற்ற மொழியைப் பேசுவோன்; அனாரியன்; அறிவீனன்; வணிகனுக்கும் பார்ப்பனப் பெண்ணுக்கும் பிறந்த மகன்; தாழ்ந்தவன்; வேடன்; சூரியன்.
**மிலைச்சுதல்** – காண்க: **மிலைதல்.**
**மிலைத்தல்** – மயங்குதல்; கனைத்தல்.
**மிலைதல்** – சூடுதல்.
**மிழலை** – மழலைச்சொல்; சோழநாட்டின் ஒரு பகுதி.
**மிழற்றல்** – சொல்லுதல்; மழலைச்சொல்; பேசலால் எழுமொலி.
**மிழற்றுதல்** – மெல்லக் கூறுதல்; மழலைச்சொல் சொல்லுதல்.
**மிளகரணை** – காட்டுமிளகு.
**மிளகாய்** – காரமுள்ள காய்விளையும் செடிவகை.
**மிளகாய்ப்பொடி** – உணவுக்குக் கூட்டாகச் சேர்க்கும் மிளகாயின் தூள்; குழம்பிற்குப் பயன்படுத்தும் மிளகாய் முதலியவற்றாலான கூட்டுத்தூள்.
**மிளகி** – ஒரு சிறுநெல்வகை.
**மிளகு** – காட்டுமிளகு; திரிகடுகத்துள் ஒன்றான மிளகுகொடியின் காய்; காண்க: **மிளகுசம்பா.**
**மிளகுகரணை** – காண்க: **மிளகரணை.**
**மிளகுசம்பா** – மிளகுபோன்ற சிறுமணிகளையுடைய உயர்ந்த சம்பாநெல்வகை.
**மிளகுசாதம்** – மிளகுபொடி, சீரகம் முதலியன சேர்த்துச் செய்த பொங்கல்வகை.

**மிளகுசாறு, மிளகுதண்ணீர்** – மிளகு அதிகம் சேர்த்த இரசம்.
**மிளகுதிரி** – அம்மைவகை.
**மிளகுதைலம்** – மிளகு சேர்த்துச் செய்த தைலம்.
**மிளகுபொடி** – மிளகுதூள்; மிளகும் சீரகமும் உப்பும் கலந்து சோற்றோடு உண்ண உதவும் பொடி.
**மிளகுரசம்** – காண்க: **மிளகுசாறு.**
**மிளப்பு** – இலவங்கம்.
**மிளிர்** – பெருமை; ஒளி.
**மிளிர்த்தல்** – புரட்டுதல்; கீழ்மேலாக்குதல்.
**மிளிர்தல்** – புரளுதல்; கீழ்மேலாதல்; குதித்தல்; ஒளிசெய்தல்; பெருமையடைதல்.
**மிளிறு** – கரடி.
**மிளை** – காவற்காடு; குறுங்காடு; சிறுதூறு; காட்டுவேலி; காவல்.
**மிற்கு** – இரை; மென்மை; பேசுதல்.
**மிறல்** – பெருமை.
**மிறுக்கு** – மிடுக்கு; வருத்தம்.
**மிறை** – அச்சம்; குற்றம்; வருத்தம்; வேதனை; வளைவு; அரசிறை.
**மிறைக்கவி** – காண்க: **சித்திரகவி.**
**மிறைக்கொளிதிருத்துதல், மிறைக்கொளுவுதல்** – ஆயுதத்தின் வளைவுநீக்குதல்.
**மிறைத்தல்** – துன்புறுத்தல்; விறைத்தல்; மிடுக்காயிருத்தல்; துன்பப்படல்; பாடுபடல்.
**மின்** – மின்னல்; ஒளி; பெண்; முன்னிலையேவற் பன்மை விகுதியுள் ஒன்று.
**மின்சாரக்கம்பி** – மின்னாற்றல் செல்லும் கம்பி.
**மின்சாரம்** – பொருளணுக்களின் அசைவால் ஏற்படும் ஒருவகையாற்றல்.
**மின்சாரயந்திரம்** – மின்னாற்றலை உண்டாக்கும் பொறி.
**மின்சாரவண்டி** – மின்னாற்றலால் இயங்கும் தொடர்வண்டி.
**மின்மினி, மின்மினிப்பூச்சி** – ஒளிவீசும் ஒரு பூச்சிவகை.
**மின்மினிபறத்தல்** – ஒளிமிகுதியால் கண்ணொளி மழுங்குதல்.
**மின்விளக்கு** – மின்னாற்றலால் ஒளிதரும் விளக்கு.
**மின்வெட்டு** – மின்னல் பாய்கை.
**மின்னல்** – மழைமேகத்தில் தோன்றும் மின்னொளி; ஒளிமிக்க நாணயம்.
**மின்னற்கொடி** – மின்னலின் ஒளிவீச்சு.
**மின்னார்** – அழகிய பெண்டிர்.
**மின்னி** – நீர்ப்பயறு; கருங்காக்கணம்.
**மின்னுக்கொடி** – காண்க: **மின்னற்கொடி.**
**மின்னுதல், மின்னெறிதல்** – மின்னல்; ஒளிவீசுதல்.
**மினுக்கம்** – காண்க: **மினுக்கு.**
**மினுக்கி** – தன்னை அழகுபடுத்துபவள், பகட்டுபவள்.
**மினுக்கு** – ஒளி; சிறப்பு; பகட்டு.
**மினுக்குதல்** – பளபளப்புண்டாக்குதல்; பகட்டுதல்; அரிசி தீட்டுதல்.
**மினுக்குமினுக்கெனல்** – விட்டுவிட்டு ஒளிவீசல்.
**மினுக்கெண்ணெய்** – உடலுக்குப் பளபளப்புண்டாக்கும் தைலவகை; மரப்பொருள்களுக்குரிய பூச்செண்ணெய்.
**மினுங்குதல்** – ஒளிவீசுதல்; விளக்கமாய்த் தோன்றுதல்.
**மினுமினுத்தல்** – ஒளிவீசல்; ஒளிகுன்றுதல்.
**மினுமினுப்பு** – ஒளி.

## மீ

**மீ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம்+ஈ); மேலிடம்; உயரம்; வானம்; மேன்மை.
**மீக்கட்டணம்** – மேல்கட்டணம்; மேல்வரி.
**மீக்குணம்** – பெருமிதமாய் நடக்குந்தன்மை.
**மீக்குவம்** – மருதமரம்.
**மீக்கூர்தல்** – மிகுதல்.
**மீக்கூற்றம், மீக்கூற்று** – புகழ்; மேலாக மதிக்கப்படுஞ் சொல்.
**மீக்கூறல்** – மேம்பாடு; மிகுத்துக்கூறல்.
**மீக்கூறு** – புகழ்.
**மீக்கூறுதல்** – உயர்த்திக் கூறுதல்.
**மீக்கொள்ளுதல்** – உயர்தல்; மிகுதல்; மேலாக மதித்தல்; மிகுதியாகக் கொள்ளுதல்; மேலே தரித்தல்.
**மீக்கோள்** – ஏறுதல்; மேல்தாங்குகை; பொலிவு; மேற்போர்வை.
**மீகண்** – கண்ணின் மேலிடம்; மேலிடம்.
**மீகாமன்** – காண்க: **மீகான்.**
**மீகாரம்** – மாளிகையின் மேலிடம்.
**மீகான்** – மாலுமி.
**மீகை** – மேலெடுத்த கை; கொடிவகை.
**மீச்செலவு** – நீதி தவறிய செயல்; மேற்போதல்.
**மீசரம்** – மேலானது; விரைவு; மிகுதி.
**மீசரன்** – மேலானவன்.
**மீசு** – காண்க: **மீது;** மிகுதி.
**மீசுமீட்டல்** – மேலாக எடுக்கை.
**மீசுரம்** – காண்க: **மீசரம்;** மிகக் கடுமையானது.
**மீசுவைத்தல்** – மேலே வைக்கை.

**மீசை** – உதட்டின்மேலுள்ள மயிர்; மேலிடம்.

**மீட்சி** – திரும்புகை; விடுதலைசெய்கை; எஞ்சுவதைக் கொள்ளுகையாகிய பிரமாணம்; கைம்மாறு.

**மீட்டு, மீட்டும்** – காண்க: **மீண்டு, மீண்டும்.**

**மீட்டுதல்** – மீளச்செய்தல்; யாழ் முதலியவற்றின் நரம்பைத் தெறித்தல்; ஒற்றி முதலியவற்றைத் திருப்புதல்; காப்பாற்றுதல்; அள்ளுதல்; நாணேற்றுதல்.

**மீட்டெடுத்தல்** – காப்பாற்றுதல்; மேலாக எடுத்தல்; இரையெடுத்தல்.

**மீட்பர்** – காப்பாற்றுவோர்.

**மீட்பு** – மீட்கை.

**மீடம்** – சிறுநீர்.

**மீண்டு, மீண்டும்** – திரும்ப.

**மீத்துவைத்தல்** – மிச்சப்படுத்துதல்.

**மீத்தோல்** – மேல்தோல்.

**மீதாட்சி** – நிலம் முதலியவற்றில் மேலாணை.

**மீதாடுதல்** – கடந்துசெல்லுதல்.

**மீதாரி** – மிச்சம்; ஒரு கலப்புவகை; நறுமணப் புகை.

**மீதி** – மிச்சம்; காட்டுக்கத்தரி; எட்டிமரம்.

**மீதிடல்** – வளர்தல்.

**மீது** – மேற்புறம்; மேடு; மேல்; அதிகம்.

**மீதுரை** – பலகால் கூறுதல்.

**மீதூர்தல்** – மேன்மேல் வருதல்; அடர்தல்; அடர்த்தல்.

**மீதோல்** – காண்க: **மீத்தோல்.**

**மீந்தது** – மிச்சம்.

**மீந்தோல்** – காண்க: **மீத்தோல்.**

**மீநீர்** – நீரின் மேற்பரப்பு.

**மீப்பு** – மிகுதி; மேன்மை.

**மீப்போர்த்தல்** – மேலே போர்த்தல்.

**மீப்போர்வை** – மேற்போர்வை.

**மீமாங்கிசன், மீமாஞ்சகன்** – பூர்வ மீமாஞ்சையில் வல்லவன்.

**மீமாஞ்சை** – வேதப்பொருள் அறிவிக்கும் நூல்; பூர்வமீமாஞ்சை.

**மீமிசை** – மிக்கது; காண்க: **மீமிசைச்சொல்;** மேலிடத்தில்.

**மீமிசைச்சொல்** – சிறப்புப் பொருளைத் தெரிவித்தற்கு முன்னுள்ள சொல்லின் பொருளிலேயே அடுத்துவரும் சொல்.

**மீமிசையண்டம்** – வீடுபேறு.

**மீயடுப்பு** – புடையடுப்பு.

**மீயாட்சி** – காண்க: **மீதாட்சி.**

**மீயாளுதல்** – மேலதிகாரஞ் செய்தல்.

**மீயான்** – காண்க: **மீகான்.**

**மீயை** – செங்குடை.

**மீரம்** – கடல்.

**மீலம்** – வானம்.

**மீலனம்** – கண்சிமிட்டு.

**மீவான்** – காண்க: **மீகான்.**

**மீள, மீளவும்** – மறுபடியும்.

**மீளாக்கதி, மீளாக்காட்சி, மீளாவழி** – வீடுபேறு; திரும்பிவாராநெறி.

**மீளி** – மீளுகை; இரங்கல்; தலைவன்; பாலைநிலத் தலைவன்; படைத்தலைவன்; இறை; வலியவன்; பெருமையிற் சிறந்தோன்; வலிமை; வீரம்; பெருமை; தலைமை; கூற்றுவன்; பேய்; இளைஞன்; ஏழு அகவைக்கு மேல் பத்து அகவை முடியுமளவுள்ள பருவம்.

**மீளிமை** – வீரம்; வலிமை.

**மீளுதல்** – திரும்புதல்; இல்லையாதல்; காப்பாற்றப்படுதல்; கடத்தல்.

**மீறுதல்** – ஆணை முதலியன கடத்தல்; மேற்போதல்; அதிகாரஞ்செய்தல்; மிகுதல்; எஞ்சியிருத்தல்; பெரியதாய் வளர்தல்; செருக்கடைதல்.

**மீன்** – நீர்வாழ் உயிரி; விண்மீன்; சித்திரைநாள்; அத்தநாள்; மீனராசி; சுறா; நெய்தல்நிலப் பறை.

**மீன்கவிச்சு** – மீனின் நாற்றம்.

**மீன்காரன்** – மீன்விற்போன்; செம்படவன்.

**மீன்காரி** – மீன்விற்பவள்; செம்படத்தி.

**மீன்குஞ்சு** – மீனின் இளமை.

**மீன்குத்தி** – மீன்கொத்திப்பறவை; பாரைக் கோல்.

**மீன்கொடியோன்** – காண்க: **மீனக்கொடியோன்.**

**மீன்கொத்தி** – சிச்சிலிப்பறவை.

**மீன்கொழுப்பு** – திமிங்கிலநெய்.

**மீன்கோட்பறை** – நெய்தல்நிலப் பறை.

**மீன்சிதள்** – காண்க: **மீன்செதில்(ள்).**

**மீன்சிறகு** – சிறகுபோலக் காணப்படும் மீனின் உறுப்பு.

**மீன்சினை** – மீன்முட்டை; மீனின் கொழுப்பு.

**மீன்செகிள், மீன்செதில்(ள்), மீன்செலு** – மீனின் மேற்புறத்தேயுள்ள பிரால்.

**மீன்பறி** – மீன்பிடிக்குங் கூட்டுப்பொறி.

**மீன்பாடு** – மீன்கள் வலையுட்படுகை.

**மீன்பிரால்** – காண்க: **மீன்செதில்(ள்).**

**மீன்மடை** – குளங்குட்டைகளில் மீன்பிடித்தற்கு அமைத்த சிறிய மண்ணணை.

**மீன்முள்** – மீனெலும்பு.

**மீன்வேட்டை** – மீன்பிடிக்கை.

**மீனக்கொடியோன், மீனகேதனன்** – மீன் வடிவமெழுதிய கொடியையுடைய பாண்டியன்; மன்மதன்.

**மீனங்கம்** – காண்க: மீன்முள்.

**மீனச்சனி** – மீனராசியிலுள்ள சனி.

**மீனத்துவசன்** – காண்க: மீனக்கொடியோன்.

**மீனநிலயம்** – காண்க: மீனாலயம்.

**மீனம்** – உடு; மீன்; காண்க: மீனராசி; பங்குனி மாதம்.

**மீனம்பர்** – மீன்வயிற்றில் அகப்படும் ஒரு மணப் பண்டவகை.

**மீனரசு** – உடுக்களின் அரசான சந்திரன்.

**மீனராசி** – மேடத்திலிருந்து பன்னிரண்டாம் ராசி.

**மீனவன்** – மீன்கொடியையுடையவனான பாண்டியன்.

**மீனவுச்சன்** – மீனராசியை உச்சத்தானமாகக் கொண்டவனான சுக்கிரன்.

**மீனன்** – மீனராசியை வீடாக உடைய வியாழன்.

**மீனா** – வயிரமுள்ள மரவகை.

**மீனாட்சி** – மதுரைத் தெய்வமாகிய உமாதேவி, அங்கயற்கண்ணி; பொன்னாங்காணிக்கீரை.

**மீனாண்டி** – சருக்கரை.

**மீனாம்பூச்சி** – காண்க: மின்மினிப்பூச்சி.

**மீனாய்** – நீர்நாய்.

**மீனாலயம்** – மீன்களின் இருப்பிடமான கடல்.

**மீனிலா** – உடுக்களின் வெளிச்சம்.

**மீனுணங்கல்** – கருவாடு.

**மீனூர்தி** – மீனை ஊர்தியாகவுடைய வருணன்.

**மீனெண்ணெய், மீனெய்** – ஒருவகை மீனிலிருந்து எடுக்கும் நெய்.

**மீனெறிபறவை** – மீன்கொத்திப்பறவை.

**மீனேறு** – சுறாமீன்.

## மு

**மு** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம்+உ).

**முக்கட்செல்வன்** – மூன்று கண்களையுடைய கடவுளாகிய சிவபிரான்.

**முக்கட்டு** – காண்க: முச்சந்தி; விரலின் பொருத்து; துன்பநிலை.

**முக்கட்பகவன்** – காண்க: முக்கட்செல்வன்.

**முக்கடுகம், முக்கடுகு** – சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்று மருந்துச்சரக்கு.

**முக்கண்டகம், முக்கண்டகி** – காண்க: நெருஞ்சி.

**முக்கண்ணப்பன்** – காண்க: முக்கட்செல்வன்.

**முக்கண்ணன்** – சிவன்; விநாயகன்; வீரபத்திரன்.

**முக்கண்ணி** – பார்வதி; காளி; தேங்காய்.

**முக்கணன்** – காண்க: முக்கண்ணன்.

**முக்கப்பு** – சூலப்படை.

**முக்கம்** – பல்லி செய்யும் ஒலி; நாவாற் கொட்டும் ஒலி.

**முக்கரணம்** – மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்கள்; பிடிவாதம்; குட்டிக்கரணம்.

**முக்கரணம்போடுதல்** – குட்டிக்கரணம்போடுதல்; பிடிவாதங்காட்டுதல்.

**முக்கரம்** – பிடிவாதம்.

**முக்கல்** – மூச்சை இறுகப்பிடித்து மெல்ல வெளிவிடுதல்; பேசலால் எழும் ஒலி; பெருமுயற்சி; எடுத்தலோசை; தீநாற்றம்.

**முக்கனி** – மா, பலா, வாழை என்னும் மூவகைப் பழங்கள்.

**முக்காட்டங்கி** – மகளிருடைய தலைமறைவுச் சீலை.

**முக்காட்டுக்கூறை** – மணப்பெண்ணுக்குப் பெற்றோர் உதவும் தலைமறைவுச் சீலை; ஒருத்தி கைம்பெண்ணாகும்போது அவளது பெற்றோர் கொடுக்கும் சீலை.

**முக்காட்டுச்சீலை** – காண்க: முக்காட்டங்கி.

**முக்காடு** – தலைமறைவுச் சீலை.

**முக்காணி** – எண்பதில் மூன்று பங்குடைய ஒரு பின்னவெண்; மாட்டின் கழுத்திலிடும் முக்கோணத் தளை; முன்குடுமி தரிக்கும் பார்ப்பனர்; மூன்று காணியாகிய அளவு.

**முக்காரம்** – எருதின் முழக்கம்; மரக்கட்டை; பிடிவாதம்; தாழ்ப்பாள்.

**முக்காரமிடுதல்** – துளை முதலியன அடைத்தல்; எருது போர்விளைக்கும் ஒலி; தாழ்ப்பாள்.

**முக்கால்** – மூன்றாம் முறை; மூன்றுமுறை; நான்கில் மூன்று பங்குடைய பின்னவெண்; ஒரு சந்தவகை; காண்க: முக்காலம்.

**முக்காலம்** – இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் மூன்று காலங்கள்; காலை, மாலை, உச்சி என்னும் ஒரு நாளின் மூன்று வேளை.

**முக்காலமறிந்தவன்** – காண்க: தீர்க்கதரிசி.

**முக்காலி** – மூன்றுகால் பீடம்.

**முக்காழ்** – மூன்று கோவையாலான முத்துவடம்.

**முக்காழி** – மூன்று கொட்டையுள்ள பனம்பழம் முதலியன.

**முக்கிமுனங்குதல்** – மனமின்மை காட்டி முணுமுணுத்தல்; மிகத் துன்புறுதல்.

**முக்கியப்பொருள்** – இலக்கணையாகவன்றிச் சொல்லின்படி நேராகக் கொள்ளும் பொருள்.

**முக்கியம்** – இன்றியமையாதது; சிறப்பானது; தலைமை.

**முக்கியன்** – தலைவன்.

**முக்கு** – மூச்சுத்திணறுகை; நோய்வகை; மூலை; சந்து; பெருமுயற்சி; மூச்சை இறுகப்பிடித்து மெல்ல விடுதல்.

**முக்குடுமி** – சூலம்; குடுமிவகை.

**முக்குடை** – அருகனுக்குரியதும் சந்திராதித்தம், சகலபாசனம், நித்தியவிநோதம் என மூன்று அடுக்குள்ளதுமான குடை.

**முக்குடைக்கல்** – சமண அறக்கட்டளைக்கு விடப்பட்ட நிலத்தின் எல்லையைக் குறிக்கும் முக்குடை வடிவு செதுக்கப்பட்ட கல்.

**முக்குடைச்செல்வன், முக்குடையா(யோ)ன்** – முக்குடை உடைய அருகன்.

**முக்குணம்** – சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் மூன்று குணங்கள்.

**முக்குணுக்கிடுதல்** – மூன்று வளைவு உண்டாகும்படி செய்தல்.

**முக்குதல்** – மூச்சை இறுகப்பிடித்து மெல்ல வெளிவிடுதல்; பெருமுயற்சிசெய்தல்; நிரம்பவுண்ணுதல்; மூழ்குதல்; மூழ்குவித்தல்.

**முக்குலம்** – அக்கினிமரபு, சந்திரமரபு, சூரியமரபு என்னும் மூன்று அரசர் குலம்.

**முக்குழி** – மூன்று வேதாக்கினிகளை வளர்க்குங் குழிகள்.

**முக்குழிச்சட்டி** – பணியாரம் சுடும் மூன்று குழியுள்ள சட்டிவகை.

**முக்குளம்** – கங்கை, சரசுவதி, யமுனை என்னும் மூன்று ஆறுகள் கூடுமிடம்; பூராடநாள்.

**முக்குளி** – காண்க: **கோழிமுளையான்.**

**முக்குளித்தல்** – முழுகுதல்.

**முக்குற்றங்கடிந்தோன்** – முக்குற்றத்தையும் ஒழித்தவனான புத்தன்.

**முக்குற்றம், முக்குறும்பு** – காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூவகை உயிர்க் குற்றங்கள்.

**முக்கூட்டரத்தம்** – வெற்றிலை பாக்குச் சுண்ணாம்புகளை மெல்லுதலால் உண்டாகும் செந்நிறம்.

**முக்கூட்டு** – மூன்று சரக்குகளாலாகிய மருந்து; பசுவின்நெய், விளக்கெண்ணெய், நல்லெண்ணெய் ஆகிய மூன்றுஞ் சேர்ந்த மருந்தெண்ணெய்; மூன்று கட்டிகளைக் கூட்டியமைத்த அடுப்பு; மூன்று வழிகள் சேருமிடம்; பரணிநாள்.

**முக்கூடல்** – மூன்று ஆறுகள் கூடும் புண்ணியத் துறை; ஓர் ஊர்.

**முக்கைப்புனல்** – மூன்றுமுறை குடங்கையால் நீர் முகந்து தென்புலத்தார்க்குச் செய்யும் நீர்க்கடன்.

**முக்கோட்டை** – தன்னை வழிபட்டோர்க்குப் பாடுமாற்றலை அளிக்கும் கொற்றவை கோயில்.

**முக்கோண், முக்கோணம்** – மூன்று நிலை; மூன்று கோணங்களை உடைய வடிவம்; நரகவகை.

**முக்கோல்** – தவசிகளுக்குரிய திரிதண்டம்; திருவோணநாள்.

**முக்கோற்பகவர்** – திரிதண்டந் தாங்கிய துறவியர்.

**முக்தகஞ்சுகம்** – தோலுரித்த பாம்பு.

**முக்தாபலம்** – கருப்பூரம்; முத்து.

**முக்தி** – காண்க: **முத்தி.**

**முகக்கட்டை** – மோவாய்க்கட்டை.

**முகக்கடுப்பு** – முகத்தில் காணும் கடுமைக்குறி.

**முகக்கயில்** – உடைந்த தேங்காயின் கண்ணுள்ளதாகிய மேல்மூடி.

**முகக்கருவி** – கடிவாளம்.

**முகக்களை** – முகத்தினழகு.

**முகக்கிளர்ச்சி** – முகமலர்வு.

**முகக்குறி** – முகத்தில் தோன்றும் குறிப்பு.

**முகக்கொள்ளி** – கொள்ளிவாய்ப் பிசாசு.

**முகக்கொள்ளுதல்** – அளந்து கொள்ளுதல்.

**முகக்கோட்டம்** – வெறுப்பு, துயரம் முதலியவற்றின் குறியாக முகங்கோணுகை.

**முகங்கடுத்தல்** – சினம், வெறுப்பு முதலியவற்றின் குறியாக முகத்திற் கடுமைகாட்டுதல்.

**முகங்கவிழ்தல்** – நாணம் முதலியவற்றால் தலைகுனிதல்.

**முகங்காட்டுதல்** – முகத்தைக் காட்டுதல்; காட்சிகொடுத்தல்; காண்க: **முகங்காண்பித்தல்.**

**முகங்காண்பித்தல்** – பெரியோரைச் சென்று காணுதல்.

**முகங்காணுதல்** – கட்டி உடைவதற்குமுன் வாய் திரளுதல்; பிறந்த குழந்தையின் முகத்தைத் தந்தை பார்த்தல்; தாய்முகம் பார்த்தல்.

**முகங்குறாவுதல்** – துன்பத்தால் முகப்பொலிவிழத்தல்.

**முகங்கொடுத்தல்** – இன்முகங் காட்டுதல்; காட்சி கொடுத்தல்; செவிசாய்த்தல்; செல்லங்கொடுத்தல்.

**முகங்கொள்ளுதல்** – ஒப்புதல் பெறுதல்; உடன்பாட்டுக்குறி காட்டுதல்; காண்க: **முகங்காணுதல்.**

**முகங்கோடு(ணு)தல்** – முகத்தில் வெறுப்புக்குறி காட்டடல்.

**முகச்சரக்கு** – கடையின்முன் பார்வைக்காக வைக்கப்படும் பண்டம்.

**முகச்சவரம்** – முகத்தளவில் செய்துகொள்ளும் சவரம்.

**முகச்சாடை** – முகக்குறி; காண்க: **முகச்சாயல்;** கண்டுங்காணாமை.

**முகச்சாயல்** – முகத்தின் தோற்றம்.

**முகச்சார்த்து** – சார்த்துவரி என்னும் இசைப் பாட்டுவகை.

**முகச்செழிப்பு** – காண்க: **முகக்களை.**

**முகசந்தி** – நாடகச்சந்தி ஐந்தனுள் முதலிலுள்ள சந்தி.

**முகசோதி** – எலுமிச்சை.

**முகஞ்சுண்டுதல்** – வெட்கப்படுதல்; சினமுதலிய வற்றால் முகம் கன்றுதல்; காண்க: **முகங் கடுத்தல்.**

**முகஞ்சுளித்தல்** – காண்க: **முகங்கடுத்தல்.**

**முகஞ்செய்தல்** – நோக்குதல்; தோன்றுதல்; முன்னாதல்.

**முகட்டாணி** – கூரையின் உச்சியிலுள்ள மர ஆணி வகை.

**முகட்டுத்துவாரம்** – கூரையில் காற்றுச் செல்ல விடும் வழி.

**முகட்டுப்பந்தல்** – முகடு வைத்த சாய்வுப் பந்தல்.

**முகட்டுப்பூச்சி** – மூட்டுப்பூச்சி.

**முகட்டுவளை** – கூரைமுகட்டின் நீட்டுவளை.

**முகடி** – மூதேவி.

**முகடு** – உச்சி; மலை, வீடு முதலியவற்றின் உச்சி; முகட்டுவளை; அண்டமுகடு; உயர்வு; வாயில்; திண்ணை; சபைக்குறடு; தலை; முதுகு; பாழ்; வீடுபேறு; முலைமுகம்.

**முகத்தல்** – மொள்ளுதல்; அளத்தல்; தாங்கி யெடுத்தல்; விரும்புதல்; நிரம்பப்பெறுதல்; மணம் பார்த்தல்; காண்க: **முகத்தலளவு(வை).**

**முகத்தலளவு(வை)** – தானியங்களை முகந்து அளக்கும் அளவை.

**முகத்தாலடித்தல்** – காண்க: **முகத்திலடித்தல்.**

**முகத்திரியக்குநாடி** – முகத்தில் குறுக்காய் ஓடும் அரத்தக்குழாய்.

**முகத்திலடித்தல்** – நேரே நிந்தித்தல்; கடுமுகங் காட்டிக் கண்டித்தல்; அருவருப்பாதல்.

**முகத்திலீயாடாமை** – கவலைகொண்ட முகங் கொள்ளுகை.

**முகத்துதி** – ஒருவன்முன் புகழ்தல்.

**முகத்துநாடி** – முகத்திலோடும் அரத்தக்குழாய்.

**முகத்துரை** – தானே நேரில்நின்று பேசுகை.

**முகத்துவாரம்** – கழிமுகம்.

**முகத்தெளிவு** – காண்க: **முகக்களை.**

**முகதலை** – சீலையின் முன்றானை; கைம்மாற்றுக் கடன்; எதிர்முகமாக்குகை.

**முகதலைத்தல்** – எதிர்முகமாக்குதல்.

**முகதாட்சிணியம்** – ஒருவன் முன்னிலையில் காட்டும் கண்ணோட்டம்.

**முகந்திரிதல்** – காண்க: **முகமாறுதல்.**

**முகந்திருத்துதல்** – முகவாட்டந் தவிர்த்தல்.

**முகந்துடைத்தல்** – முகச்சவரஞ் செய்தல்.

**முகநட்பு** – வெளிநட்பு.

**முகநிலை** – இசைப்பாட்டுவகை.

**முகநிலைப்பாசம்** – பெருவிரலும் சுட்டுவிரலும் முகங்கூடி உகிர்விட்டிருக்கும் பசாசக்கைவகை.

**முகநோக்குதல்** – நோக்கெதிர் நோக்குதல்.

**முகப்படுதல்** – முன்தோன்றுதல்.

**முகப்பணி** – காண்க: **முகச்சவரம்.**

**முகப்பரு** – முகத்தில் தோன்றும் சினைப்பு.

**முகப்பழக்கம்** – அறிமுகம்.

**முகப்பு** – தலைப்பு, முற்பகுதி; முன்னிலை; வீட்டு முன் கூரைக் கட்டடம்; அணிகலப் பொருத்து வாய்; மகளிரின் சீலை முன்றானை.

**முகப்புமடை** – தலைமடை.

**முகப்பூச்சு** – முகத்தில் தடவும் பொடி; வெளிப் பகட்டு.

**முகப்பொருத்தம்** – காண்க: **முகராசி;** வெளிநட்பு.

**முகப்பொலிவு** – முகத்தின் அழகு.

**முகப்போதரவு** – இச்சகம்.

**முகபடாம்** – யானையின் முகத்திலிடும் அலங் காரத் துணி.

**முகம்** – தலையில் நெற்றிமுதல் மோவாய் வரை யுள்ள முன்புறம்; வாய்; வாயில்; கழி; இடம்; மேலிடம்; நுனி; தொடக்கம்; வடிவு; நோக்கு; தியானம்; முகத்துதி; காரணம்; ஏழாம் வேற்றுமையுருபு; முன்பு; நாடகச்சந்தி ஐந்தனுள் முதலிலுள்ள சந்தி; நடிகர்கள் அரங்கிற்கு வருமுன் நிகழுங் கூத்து; இயல்பு; நிலை; தோற்றம்; கட்டி முதலியவற்றின் முனையிடம்; முதன்மை; பக்குவம்; பக்கம்; உவமவுருபு; மூலம்; யாகம்; வகை; இந்திர கோபம்.

**முகம்பார்த்தல்** – நேர்நோக்குதல்; அன்புசெய் தல்; நன்குமதித்தல்; குழந்தை பிறர் முகத்தைக் கவனித்து இனந்தெரிதல்.

**முகம்புகுதல்** – முகப்பொலிவு கொள்ளுதல்; அருள்காட்டும்படி எதிர்சென்று நிற்றல்.

**முகம்புடைத்தல்** – துக்கக் குறியாக முகத்தில் அடித்துக்கொள்ளுதல் காண்க: **முகங்காணு தல்.**

**முகம்புதைத்தல்** – முகத்தை மூடுதல்.

**முகம்பெறுதல்** – தோன்றுதல்.

**முகமண்டபம்** – கோயிலின் முன்மண்டபம்.

**முகமண்டலம்** – தலையில் நெற்றிமுதல் மோவாய் வரையுள்ள முன்புறம்.

**முகமயக்கு** – பார்வையால் மயக்கும் மாய வித்தை; காண்க: **முகமாயம்.**

**முகமலர்ச்சி** – முகத்தில் தோன்றும் மகிழ்ச்சி.

**முகமறிதல்** – அறிமுகமாதல்.

**முகமறுத்தல்** – இரக்கமின்றிப் பேசுதல்; கணக்காய்ப் பேசுதல்.

**முகமன்** – உபசாரச் சொற்கள்; முகத்துதி; துதி.

**முகமாதல்** – உடன்படுதல்.

**முகமாயம்** – முகவழகில் உண்டாகும் கவர்ச்சி.

**முகமாறுதல்** – காண்க: **முகங்கோணுதல்.**

**முகமில்வரி** – இசைப்பாட்டுவகை.

**முகமுகங்கணோக்குதல், முகமுகம்பார்த்தல்** – முகத்தை முகம் பார்த்தல்.

**முகமுகமாய்** – நேருக்கு நேராய்.

**முகமுடைவரி** – மூன்றடிமுதல் ஏழடிவரை வரும் இசைப்பாட்டுவகை.

**முகமுறித்தல்** – இரக்கமின்றித் துன்புறுத்துதல்; சினமூட்டுதல்.

**முகமுறிதல்** – இரக்கமறுதல்; மனநோதல்.

**முகமுறிவு** – வெறுப்பு; அருளின்றி நடந்து கொள்ளுதல்.

**முகமுன்னிலை** – நேர்முகம்.

**முகமூடி** – பிறக்கும்பொழுது குழந்தையின் முகத்தை மூடியுள்ள பை; முக்காடு; பிணத்தின் முகத்தை மூடும் ஆடை; முகத்தை மறைக்கும் துணி.

**முகர்தல்** – காண்க: **முகருதல்.**

**முகர்வைத்தல்** – முத்திரையிடுதல்.

**முகரதம்** – முகத்திற் புணர்கை.

**முகரம்** – கடிய ஒலி; சங்கு; காகம்.

**முகரன்** – பயனில்சொல் சொல்லுவோன்.

**முகராசி** – முகக்கவர்ச்சி; நற்பேறு.

**முகரி** – மல்லிகைப்பூ; தாழைமரம்; ஆரவாரஞ் செய்வோன்; முன்புறம்; தொடக்கம்; தலைமை; மூக்கின் அடி; ஓர் ஆறு; காண்க: **மூரி.**

**முகரிமை** – பேரறிவு; தலைமை.

**முகரியோலை** – முடங்கின பனையோலை.

**முகருதல்** – மூக்கால் மோத்தல்.

**முகரை** – மூக்கின் அடி; காண்க: **முகரைக்கட்டை.**

**முகரைக்கட்டை** – முகம்; முகவாய்க்கட்டை.

**முகரோமம்** – மீசைமயிர்.

**முகவங்கு** – முகத்திற் படரும் தேமல்.

**முகவசிகரம், முகவசியம்** – முகத்தின் அழகு; பார்வையால் மயக்கும் மாயவித்தை; முக இரக்கமான பார்வை.

**முகவட்டு** – விலங்கின் தலையணிவகை.

**முகவணை** – முகவுரை; முகப்பு; வண்டியின் முகப்பில் வண்டிக்காரன் இருந்தோட்டும் இடம்; காண்க: **முகவணைக்கல்; முகவீணை.**

**முகவணைக்கல்** – வாசலின் மேலுள்ள உத்திரப் படிக்கல்.

**முகவபிநயம்** – பதினான்கு வகையாய் முகத்தாற் குறிக்கும் அபிநயங்கள்.

**முகவரி** – மேல்விலாசம்.

**முகவல்லபம்** – மாதுளை.

**முகவழி** – மூலம்.

**முகவாசம்** – வாயிலிடும் நறுமணப் பண்டம்; வெற்றிலை; முகப்பழக்கம்; பிணத்தின் முகத்தை மூடும் ஆடை.

**முகவாசல்** – தலைவாசல்.

**முகவாட்டம்** – முகத்தில் தோன்றும் சோர்வு.

**முகவாய்க்கட்டை** – மோவாய்.

**முகவாள்** – கலப்பைக்கூர்.

**முகவிச்சகம்** – எதிர்நின்று கூறும் புகழ்ச்சிமொழி.

**முகவிச்சை** – காண்க: **முகத்துதி;** முகவழகில் ஈடுபட்டு உண்டாகிய காதல்.

**முகவியர்** – இன்முகமுள்ளோர்.

**முகவிலாசம்** – முகப்பொலிவு.

**முகவீணை** – ஓர் இசைக்கருவிவகை.

**முகவுரை** – முன்னுரை; திருமுகம் முதலியவற்றின் தொடக்கத்தில் எழுதும் மங்கலச்சொல்; கணக்குப் புத்தகம் முதலியவற்றின் தலைப்பில் எழுதும் ஆண்டு, மாதம், நாள் முதலிய குறிப்பு.

**முகவெட்டு** – காண்க: **முகவசிகரம்.**

**முகவெழுத்து** – முகத்தில் எழுதிப் புனையும் அலங்காரம்.

**முகவேலை** – காண்க: **முகச்சவரம்;** முகப்பில் செய்யப்படும் அலங்காரம்.

**முகவை** – முகந்துகொள்ளுகை; மிகுதியாகக் கொடுக்கும் பொருள்; நீர் முகக்குங் கருவி; அகப்பை; நெற்பொலி; இராமநாதபுரம்.

**முகவைப்பாட்டு** – களத்தில் சூடடிக்கும்போது பாடும் பொலிப்பாட்டு.

**முகவோலை** – அரசர் முதலியோர் எழுதுந் திருமுகம்.

**முகனை** – முன்புறம்; தலைமை; தொடக்கம்; முன்கோபம்; பொழுது.

**முகனைக்கல்** – கோயில் முதலியவற்றின் வாசற்காலின்மேல் உள்ள உத்திரக்கல்.

**முகனைக்காரன்** – முதலாளி.

**முகாந்த(தி)ரம்** – காரணம்; மூலம்; வேறுசெய்தி.

**முகாம்** – சுற்றுப்பயணத்தில் தங்குமிடம்.

**முகாமை** – முதன்மை.

**முகாமைக்காரன்** – முன்னின்று நடத்துவோன்.

**முகாரி** – ஒரு பண்வகை; காண்க: **முகாமைக்காரன்.**

**முகித்தல்** – முடித்தல்.

**முகிதல்** – முடிதல்.
**முகிரம்** – அன்பு; காமம்.
**முகிரன்** – காமன்; மூடன்.
**முகில்** – மேகம்; திரள்.
**முகில்வண்ணன்** – மேகநிறம் வாய்ந்த திருமால்.
**முகில்வாகனன், முகிலூர்தி** – மேகத்தை ஊர்தியாகவுடைய இந்திரன்.
**முகிவு** – முடிவு.
**முகிழ்** – அரும்பு; காண்க: **முகிழ்ப்புறம்**; தேங்காய் முதலியவற்றின் மடல்; ஐந்து விரலும் தம்மில் தலைகுனிந்து உயர்ந்து நிற்கும் இணையா வினைக்கைவகை; தயிர் முதலியவற்றின் கட்டி.
**முகிழ்காங்கூலம்** – காங்கூலக் கைவகை.
**முகிழ்த்தம்** – காண்க: **முகூர்த்தம்.**
**முகிழ்த்தல்** – அரும்புதல்; தோன்றுதல்; குவிதல்; தோற்றுவித்தல்; ஈனுதல்.
**முகிழ்தல்** – குவிதல்.
**முகிழ்நகை** – புன்சிரிப்பு.
**முகிழ்ப்புறம்** – காய், பூ முதலியவற்றின் காம்படி.
**முகிழம்** – மலரும்பருவத்து அரும்பு.
**முகிழித்தல்** – காண்க: **முகிழ்தல்.**
**முகிழிதம்** – அரும்பு, காய், பூ முதலியவற்றின் காம்படி; தேங்காய் முதலியவற்றின் மடல்; தயிர் முதலியவற்றின் கட்டி; இணையா வினைக்கைவகை.
**முகிள், முகிளம்** – அரும்பு.
**முகிளிதம்** – அரும்பு; சிறிது குவிகை.
**முகிற்குன்றம்** – மேகமூடிய மலை; வக்கிராந்த பாடாணம்.
**முகின்மேனி** – காண்க: **முகில்வண்ணன்.**
**முகினாயகன்** – வருணன்.
**முகினி** – புளியமரம்.
**முகு** – விருப்பம்; மனநிறைவு.
**முகுடம்** – முடி; முடியுறுப்பு ஐந்தனுள் ஒன்று.
**முகுத்தம்** – காண்க: **முகூர்த்தம்.**
**முகுந்தம்** – குபேரன் நவநிதிகளுள் ஒன்று.
**முகுந்தன்** – திருமால்.
**முகுர்த்தம்** – காண்க: **முகூர்த்தம்.**
**முகுரம்** – கண்ணாடி; பெருமல்லிகை; தளிர்.
**முகுலி** – தாழைமரம்.
**முகுளம்** – அரும்பு; தாமரைத்தண்டு; ஐந்து விரலும் தம்மில் தலைகுவிந்து உயர்ந்துநிற்கும் இணையாவினைக்கைவகை; யோகாசனவகை; ஆசனவகை; மூளையின் பின்பகுதி.
**முகுளாதனம்** – இரண்டு கையும் முதுகிலே கூட்டிக் கும்பிட்டிருக்கும் ஆசனவகை.
**முகுளித்தல்** – காண்க: **முகிழ்தல்.**
**முகூர்த்தக்கால்** – கலியாணப் பந்தலுக்கு நல்வேளையில் முதலாக நாட்டும் பந்தற்கால்.
**முகூர்த்தம்** – நேரம்; நல்வேளை; ஒன்றரை மணி நேரங்கொண்ட காலவளவை; இரண்டு நாழிகைகொண்ட நேரம்; திருமணம்.
**முகூர்த்தம்பார்த்தல்** – திருமணம் முதலிய நற்செயல்களுக்கு நல்வேளை ஆராய்தல்; காண்க: **முகூர்த்தம்வைத்தல்.**
**முகூர்த்தம்வைத்தல்** – திருமணம் உறுதிசெய்தல்; நல்வேளை குறித்தல்.
**முகூர்த்தவிதானி** – முகூர்த்தம் விதிப்பவன்.
**முகேரெனல்** – ஓர் ஒலிக்குறிப்பு.
**முகை** – அரும்பு; மொட்டு; குகை; கூட்டம்; மிடா.
**முகைத்தல், முகைதல்** – அரும்புதல்.
**முகைதிறத்தல்** – அரும்பு மலர்தல்.
**முங்குதல்** – நீரில் மூழ்குதல்; அமிழ்தல்; நிறைதல்.
**முச்சக்கரம், முச்சகம்** – மூவுலகங்களான துறக்க மத்திய பாதாள உலகங்கள்.
**முச்சங்கம்** – பாண்டியமன்னர் ஆதரவில் புலவர்கள் கூடி ஆராய்ந்த தலை, இடை, கடைச் சங்கம் என்னும் மூவகைத் தமிழ்ச் சங்கங்கள்.
**முச்சட்டை** – அழகு; ஒழுங்கு.
**முச்சத்தி** – பிரபுசத்தி, மந்திரசத்தி, உற்சாக சத்தி என்னும் அரசர்க்குரிய மூவகை ஆற்றல்.
**முச்சதுரம்** – முக்கோணம்; காண்க: **சதுரக்கள்ளி.**
**முச்சந்தி** – காலை, உச்சி, மாலை என்னும் முக்கால சந்தி; மூன்று தெருக்கள் கூடுமிடம்.
**முச்சலிக்கா(கை)** – உடன்படிக்கைப் பத்திரம்; பிணையப் பத்திரம்.
**முச்சலிகை** – வாய்நீர், சிறுநீர், நாதநீர் என்னும் மூவகைநீர்.
**முச்சாரிகை** – குதிரை, தேர், யானை என்னும் இவை மூன்றும் சேர்ந்துபோதல்.
**முச்சி** – தலையுச்சி; கொண்டைமுடி; சிறுசுளகு; சூட்டு; வேலையாள்; தோல்வினைஞன்; உறைகாரன்; வன்னக்காரன்; தச்சன்.
**முச்சியர்** – வன்னக்காரர்; மரவினையாளர்.
**முச்சிரம்** – சூலம்; பெருஞ்சீரகம்.
**முச்சில்** – சிறுமுறம்.
**முச்சுடர்** – சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்று சோதிகள்.
**முச்சூடும்** – முழுதும்.
**முச்செயல்** – காண்க: **முத்தொழில்.**

**முச்சொல்லலங்காரம்** – ஒரு தொடர் மூன்றுவகையாகப் பிரிக்கப்பட்டு மூன்று பொருள்கொண்டு நிற்கும் சொல்லணிவகை.

**முசகம்** – எலி.

**முசர்(ரு)** – தயிர்; மோர்.

**முசல்** – முயல்; கொம்மட்டி; ஒரு பூண்டுவகை.

**முசல்வலி** – ஒரு வலிப்புநோய்வகை.

**முசலகன்** – நடராசப் பெருமான் ஏறி நடித்து மிதிக்கும் பூதம்; ஒரு நோய்வகை.

**முசலம்** – உலக்கை; ஓர் ஆயுதம்.

**முசலி** – உடும்பு; பல்லி; முதலை; கடல்மீன்; நிலப்பனை; வெருகங்கிழங்கு; தாழைமரம்; முசலத்தையுடைய பலராமன்; பச்சோந்தி.

**முசலிகை** – உடும்பு; இரண்டு கையும் காலும் சம்மணம் கூட்டுவதுபோல மடக்கி மார்பு நிலத்திலே தோயக் கிடக்கை.

**முசலை** – கோரைக்கிழங்கு.

**முசற்காது** – மருந்துப்பூண்டு; அடப்பங்கொடி.

**முசாதகம்** – வெண்டாமரை.

**முசிகுந்தம்** – குபேரன் வில்; சூரியன் கைச்சங்கு.

**முசித்தல்** – களைத்தல்; இடர்ப்படுதல்; மெலிதல்; அழிதல்; கசக்குதல்; திருகுதல்.

**முசிதல்** – அறுதல்; கசங்குதல்; களைத்தல்; மெலிதல்; அழிதல்; குன்றுதல்.

**முசிப்பாற்றி** – இளைப்பாற்றுகை.

**முசிப்பாறுதல்** – இளைப்பாறுதல்.

**முசிப்பு** – இடை; மெலிவு; களைப்பு; அழிவு.

**முசிரம்** – வள்ளல்தன்மை.

**முசிரன்** – கொடையாளி.

**முசிறு** – காண்க: முசுறு; கருங்குரங்குவகை.

**முசு** – கருங்குரங்கு; திமில்.

**முசுக்கட்டை** – பட்டுப்பூச்சி வாழும் மரம்; கம்பளிப்பூச்சி; மரவகை.

**முசுக்கட்டைப்பூச்சி** – கம்பளிப்பூச்சிவகை.

**முசுட்டை** – ஒரு கொடிவகை.

**முசுடர்** – காண்க: முசுண்டர்.

**முசுடி** – நொடி; கோபக்காரி.

**முசுடு** – காண்க: முசிறு.

**முசுண்டர்** – கீழ்மக்கள்.

**முசுண்டி** – ஆயுதவகை.

**முசுண்டை** – ஒரு கொடிவகை.

**முசுப்பதி** – போர்வீரர் உறையுமிடம்.

**முசுப்பு** – திமில்.

**முசுமுசுக்கை** – ஒரு மருந்துக்கொடிவகை.

**முசுமுசுத்தல்** – குறட்டைவிடல்; நீர் முதலியன கொதித்தல்; தினவெடுத்தல்; உறிஞ்சுதல்.

**முசுமுசெனல்** – தினவுக்குறிப்பு; நீர் முதலியன கொதித்தற்குறிப்பு.

**முசுறு** – செந்நிற எறும்பு; கடுகடுப்புள்ளவர்.

**முஞ்சகேசன், முஞ்சகேசி** – திருமால்.

**முஞ்சம்** – குழந்தைகளின் தலையணிவகை.

**முஞ்சரம்** – தாமரைக்கிழங்கு.

**முஞ்சி** – நாணற்புல்; பார்ப்பனப் பிரமசாரிகள் அரையிற் கட்டும் நாணற்கயிறு.

**முஞ்சுதல்** – சாதல்; முடிதல்.

**முஞ்ஞை** – மரவகை.

**முஞல்** – கொசு.

**முட்கரம்** – ஓர் ஆயுதவகை.

**முட்கீரை** – ஒரு கீரைவகை.

**முட்கோல்** – குதிரையைத் தூண்டும் தாற்றுக்கோல்.

**முட்சங்கு** – முள்ளுள்ள சங்குவகை; சங்கஞ்செடி.

**முட்செவ்வந்தி** – ரோசா, நிலத்தாமரை.

**முட்ட** – முழுதும்; மிகவும்.

**முட்டடி** – அண்மை; நெருக்கம்.

**முட்டத்தட்டுதல்** – முழுதும் பறித்தல்; முழுதும் இல்லையாதல்.

**முட்டத்தனம்** – மூடத்தன்மை.

**முட்டம்** – ஊர்; பக்கம்; காக்கை; காண்க: முட்டான்; ஒரு திருமால் தலம்.

**முட்டமுடிய** – காண்க: முட்ட.

**முட்டாக்கிடுதல்** – முகத்தைப் போர்த்தல்; உள்ளடக்குதல்.

**முட்டாக்கு** – தலைமூடுசீலை; போர்வை.

**முட்டாட்டம்** – முட்டுகை; முட்டாள்தன்மை; செருக்கு.

**முட்டாள்** – மூடன்; கொத்துவேலைச் சிற்றாள்; ஊர்தியின் அடியில் அதைத் தாங்குவதுபோல் வைக்கும் பதுமை.

**முட்டாள்வேலை** – மூடச்செயல்.

**முட்டாறு** – காண்க: முட்கோல்.

**முட்டான்** – அணையாது வைக்கும் நெருப்பு மூட்டம்; திருநீறு நீற்றுவதற்குரிய சாணவுருண்டை.

**முட்டி** – விரல் முடக்கிய கை; கைக்குத்து; அபிநயவகை; கைப்பிடியளவு; பிச்சை; ஆயுதம் பிடிக்கும்வகை; அறுபத்துநான்கு கலைகளுள் கையுள் மறைத்ததை இன்னதென்று அறிந்து கூறும் வித்தை; ஒரு பலம் அளவு; சிறுபானை; பலிச்சோறு; வெல்லம்; செங்கலின் துண்டு; சிற்றாமுட்டி பேராமுட்டிகள்; காண்க: **பேய்க்கொம்மட்டி**; சிப்பிவகை; வரிவகை; நஞ்சு தீர்க்கும் மந்திர சிகிச்சைவகை.

**முட்டிக்கால்** – முழங்காற்சிப்பி; முட்டிக்காற் பின்னல்.

**முட்டிக்காலன்** – முட்டுக்கால் தட்டும்படி நடப்பவன்.
**முட்டிக்கொள்ளுதல்** – சினம், துயரம் முதலியவற்றால் தலையை மோதிக்கொள்ளுதல்; பெருமுயற்சி எடுத்தல்.
**முட்டிகன்** – தட்டான்.
**முட்டிகை** – தட்டார் சிறுசுத்தி.
**முட்டிடை** – நெருக்கடி; நெருக்கம்.
**முட்டிமுரண்டுதல்** – பெருமுயற்சி எடுத்தல்.
**முட்டியடித்தல்** – திண்டாடுதல்.
**முட்டியுத்தம்** – கைக்குத்துச்சண்டை.
**முட்டு** – விலங்கு முதலியன கொம்பு முதலியவற்றால் தாக்குகை; தடை; தட்டுப்பாடு; சங்கடம்; குறைவு; உட்சென்று கடத்தலருமை; கண்டுமுட்டுக் கேட்டுமுட்டு முதலிய தீட்டுகள்; மாதவிடாய்; கருவி; சில்லறைப் பொருள்கள்; பற்றுக்கோடு; முழங்கால், முழங்கை, விரல்கள் இவற்றின் பொருத்து; மேடு; குவியல்.
**முட்டுக்கட்டியாடுதல்** – பொய்க்கால்களில் நின்று நடத்தல்.
**முட்டுக்கட்டுதல்** – கட்டை முதலியன ஆதரவாகக் கொடுத்தல்; வழியை அடைத்தல்; வயல் முதலியவற்றுக்கு எல்லை கட்டுதல்; முழந்தாளைக் கைகளால் கட்டுதல்.
**முட்டுக்கட்டை** – தாங்குகம்பம்; தடை செய்பவர்; தடைசெய்வது.
**முட்டுக்கால்** – தாங்குகால்; காண்க: **முட்டிக்கால்**.
**முட்டுக்கொடுத்தல்** – ஆதாரக்கால் நிறுத்துதல்; இடையூறு செய்தல்.
**முட்டுக்கோல்** – கிட்டி.
**முட்டுச்சட்டம்** – உதைமானச் சட்டம்.
**முட்டுச்சுவர்** – உதைமானச் சுவர்.
**முட்டுதல்** – மோதுதல்; தடுத்தல்; எதிர்த்தல்; எதிர்ப்படுதல்; பிடித்தல்; தேடுதல்; குன்றுதல்; நிறைதல்; முடிதல்; தடைப்படுதல்; பொருதல்; வழுவுதல்.
**முட்டுப்படுதல்** – துன்புறுதல்; தடைப்படுதல்.
**முட்டுப்பாடு** – இடையூறு; நெருக்கிடை; சங்கடம்; தட்டுப்பாடு; ஆயுதவகை; தீமை.
**முட்டுவீக்கம்** – முட்டுக்காலில் வீங்குகை.
**முட்டுற்றவன்** – அறிவில்லாதவன்; குறைவுள்ளவன்.
**முட்டை** – அண்டம்; அண்டகோளம்; உடம்பு; சாணங்கொண்டு தட்டிய வறட்டி; தவிடு; சிறுகரண்டி.
**முட்டைக்கண்** – உருண்டை விழி.
**முட்டைக்கோசு** – ஒரு செடிவகை.
**முட்டைவடிவு** – நீண்ட உருண்டை வடிவம்.
**முட்டொறடு** – இறைச்சி தொங்கவிடும் முள்.
**முட்பன்றி** – காண்க: **முள்ளம்பன்றி**.
**முட்புறக்கனி** – பலாப்பழம்.
**முடக்கடி** – தடை; தொல்லை.
**முடக்கம்** – தடை; அடக்கம்; கைகால் முடங்குதல்; வளைவு; பணமுடை.
**முடக்கற்றான்** – காண்க: **முடக்கொற்றான்**.
**முடக்கறை** – காண்க: **ஏவறை**.
**முடக்கன்** – தாழைமரம்.
**முடக்கு** – வளைவு; நாக்கு; தெருவின் கோணம்; விரலணியுள் ஒன்று; காண்க: **ஏவறை**; தடை; தாமதம்; சினம்; வேலையின்மை; நோய்வகை.
**முடக்குச்சரக்கு** – விலைபடாது முடங்கிக் கிடக்குஞ் சரக்கு.
**முடக்குமோதிரம்** – நெளிமோதிரம்.
**முடக்குவாதம்** – கைகால் உறுப்புகளை முடங்கச் செய்யும் நோய்வகை.
**முடக்கொற்றான்** – ஒரு கொடிவகை.
**முடங்கர்** – ஈன்றணிமையில் உண்டாகும் மெலிவு.
**முடங்கல்** – மடங்குகை; தடைப்படுகை; பணம் முதலியன தேங்கிக்கிடக்கை; காண்க: **முடக்குவாதம்**; முள்ளி; மூங்கில்; சுருளோலைக் கடிதம்; சிறுமை; தாழைமரம்.
**முடங்கி** – நோயால் படுக்கையாய்க் கிடப்பவன்; நிலத்தின் மூலைநீட்டம்.
**முடங்கிறை** – கூடல்வாய்.
**முடங்கு** – முடக்குவாதம்; தெருச்சந்து; தெருவளைவு; நிலத்தின் மூலைநீட்டம்.
**முடங்குதல்** – சுருங்குதல்; கைகால் வழங்காமற் போதல்; தடைப்படுதல்; வளைதல்; படுத்துக் கொள்ளுதல்; கெடுதல்; தங்குதல்.
**முடங்குளை** – பிடரிமயிர்; பிடரிமயிருடைய சிங்கம்.
**முடத்தி** – முடப்பெண்; வளைவுள்ளது.
**முடத்தெங்கு** – கோணலாக வளர்ந்த தென்னை.
**முடந்தை** – முடம்; வளைந்தது; சூதகக்கட்டு நோய்வகை.
**முடம்** – கைகால் செயலற்றுப்போகும் நிலை; வளைவு; வளைந்தது; ஆடல், பாடல் முதலியவற்றின் குற்றம்.
**முடமயிர்** – ஒருபுருவமயிர் நோய்வகை; தொண்டையில் மயிர் முளைப்பதால் உண்டாவதாகக் கருதப்படும் நோய்வகை.
**முடமுடெனல்** – ஒலிக்குறிப்புவகை.
**முடலை** – பெருமை; வலி; புலால்நாற்றம்; உருண்டை; முறுக்கு; முருடு; கழலை; மனவன்மை; திரட்சி; பெருங்குறடு.
**முடவன்** – நொண்டி; அருணன்; சனி.
**முடவன்முழுக்கு** – காவிரியில் ஐப்பசிக் கடைமுகத்து நீராடற்பலனை அளிக்கும் கார்த்திகை முதல்நாள் முழுக்கு.

**முடவுதல்** – நொண்டுதல்.

**முடி** – முடிச்சு; உச்சியில் முடித்தல்; குடுமி; மயிர்; தலை; உச்சி; தலையணி; முடிவு; நாற்றுமுடி; பறவைபடுக்குங் கண்ணி; தேங்காய்க் குடுமி; தேங்காயிற் பாதி; காண்க: **துளசி.**

**முடிக்கண்ணி** – காண்க: **முடிமாலை.**

**முடிக்கலம்** – கிரீடம்.

**முடிக்காணிக்கை** – தெய்வவேண்டுதலின் பொருட்டு வளர்த்த மயிர்முடியைக் கழித்துக் காணிக்கையாகத் தருதல்.

**முடிகவித்தல்** – காண்க: **முடிசூட்டுதல்.**

**முடிச்சவிழ்க்கி** – காண்க: **முடிச்சுமாறி.**

**முடிச்சவிழ்த்தல்** – திருடுதல்; முடிச்சை அவிழ்த்தல்.

**முடிச்சாத்து** – தலைப்பாகை.

**முடிச்சு** – முடியப்பட்டது; கண்டறிந்து தீர்த்தற்குரிய தந்திரம்; முட்டு; கட்டு; மயிர்முடி; சிறு மூட்டை; கணு; மகளிர் காதணிவகை.

**முடிச்சுப்போடுதல்** – சண்டைமூட்டுதல்; சம்பந்தப் படுத்துதல்; இணைத்தல்.

**முடிச்சுமாறி** – திருடன்; முடிச்சை அவிழ்ப்பவன்.

**முடிசாய்த்தல்** – படுத்துக்கொள்ளுதல்; வணங்குதல்; ஒரு பக்கமாய்த் தலையைச் சாய்த்தல்.

**முடிசாய்தல்** – இறத்தல்.

**முடிசூட்டுதல்** – அரசுக்குரிய முடியணிதல்.

**முடித்தகேள்வி** – கரைகண்ட கேள்வி.

**முடித்தல்** – முற்றுவித்தல்; நிறைவேற்றுதல்; அழித்தல்; கட்டுதல்; சூட்டுதல்.

**முடித்துக்காட்டல்** – மேலோர் முடித்தவாறு முடித்துக்காட்டுவது.

**முடித்துக்கொடுத்தல** – நிறைவேற்றித் தருதல்.

**முடிதரித்தல்** – காண்க: **முடிசூட்டுதல்.**

**முடிதல்** – முற்றுப்பெறுதல்; நிறைவேறுதல்; அழிதல்; சாதல்; தோன்றுதல்; இயலுதல்; சண்டைமூட்டுதல்; சம்பந்தப்படுத்துதல்; முடிச்சிடுதல்; சூடுதல்.

**முடிதீட்டுதல்** – வணங்குதல்.

**முடிதுளக்குதல்** – தலையசைத்தல்; வணங்குதல்.

**முடிந்தகணம்** – நிகழ்காலம்.

**முடிந்தகொள்கை** – முடிவான தீர்மானம்.

**முடிந்ததுமுடித்தல்** – சிறப்பு வாய்பாட்டால் முடிந்ததைப் பொதுவாய்பாட்டால் முடித்துக் காட்டும் நூல் உத்தி முப்பத்திரண்டனுள் ஒன்று.

**முடிந்தபொழுது** – முதிர்ந்த பருவம்; இயன்ற போது.

**முடிநடை** – தலையால் நடக்கை.

**முடிநர்** – கட்டுபவர்.

**முடிநாதம்** – காண்க: **இந்திரகோபம்.**

**முடிநாறு** – நாற்றுமுடி.

**முடிப்பிசைக்குறி** – சொற்றொடரின் முடிவைக் காட்டும் முற்றுப்புள்ளி.

**முடிப்பு** – முடிபோடுகை; முடிச்சு; கட்டு; தலையிலணியும் பொருள்; பணமுடிச்சு; சொத்து; மொத்தத்தொகை; தீர்மானம்; முடிவு.

**முடிப்புக்கட்டுதல்** – முடிவுசெய்தல்; பணமுடிப்புச் சேர்த்துவைத்தல்.

**முடிபு** – காண்க: **முடிவு.**

**முடிபெழுத்து** – எழுத்துவகைகளுள் ஒன்று.

**முடிபொருட்டொடர்நிலை** – காப்பியம்.

**முடிபோடுதல்** – ஒன்றோடொன்று மாட்டிப் பிணைத்தல்; கணவன் மனைவியர் ஆவதற்கு விதியமைதல்.

**முடிமணி** – தலைமணி; சூடாமணி.

**முடிமயிர்** – சேர்த்துமுடித்த தலைமயிர்; மகளிர் தலைமயிரோடு சேர்த்துமுடியும் கட்டுமயிர், இடுமயிர்; தெய்வத்துக்குக் காணிக்கையாக மழித்து இடும் தலைமயிர்.

**முடிமார்** – முடிப்பவர்.

**முடிமாலை** – தலையில் அணியும் மாலை.

**முடிமேலழகி** – கோடகசாலைப்பூண்டு.

**முடிய** – முழுதும்.

**முடியரசன்** – முடிசூடிய மன்னன்.

**முடியல்** – எல்லாம்.

**முடியிறக்குதல்** – வேண்டுதலுக்காக மயிர்கழித்தல்; அவமானஞ் செய்தல்.

**முடியுயர்தல்** – அரசு செழித்தல்.

**முடியுலகம், முடியுலகு** – மேலுலகம்.

**முடியுறுப்பு** – தாமம், முகுடம், பதுமம், கோடகம், கிம்புரி என்னும் ஐவகையான மகுட வகுப்புகள்.

**முடியெடுத்தல்** – தலைமயிர் நீக்குதல்; தலையெடுத்தோங்குதல்; அவமானஞ் செய்தல்.

**முடிவறிதல்** – நன்றாக உணர்தல்.

**முடிவாங்குதல்** – காண்க: **முடியிறக்குதல்.**

**முடிவிடங்கூறல்** – தான் சொல்லும் இலக்கணத்திற்கு விதிகூறும் இடத்தைக் குறிப்பது.

**முடிவிலாற்றல், முடிவிலாற்றலுடைமை** – சிவன் எண்குணத்துள் ஒன்றாகிய அளவிலா ஆற்றல்.

**முடிவினை** – ஊழ்வினை.

**முடிவு** – இறுதி; எல்லை; தீர்மானம்; முடிவான உட்கோள்; நிறைவு; பயன்; இசைப் பாகுபாடு; சாவு.

**முடிவுகட்டுதல்** – தீர்மானித்தல்.

**முடிவுகாலம்** – இறுதிக்காலம்.

**முடிவுசொல்லுதல்** – தீர்ப்புச்சொல்லுதல்.

**முடிவுபோக்குதல்** – நிறைவேற்றுதல்.

**முடிவுபோதல்** – நிறைவேறுதல்.

**முடிவுரை** – நூலிறுதியில் அமையும் கட்டுரை.
**முடிவெட்டுதல்** – மயிர் கத்தரித்தல்.
**முடிவேந்தர்** – முடிசூடிய மன்னர்.
**முடுக்கம்** – விலையேற்றம்; இறுகல்.
**முடுக்கர்** – குறுந்தெரு; அருவழி; தெருச்சந்து; கோணத்தெரு; மலைக்குகை; நீர்க்குத்தான இடம்; இடைவெளி.
**முடுக்கன்** – வலியோன்.
**முடுக்கு** – விரைவுபடுதல்; மூலை; கோணல்தெரு; மிகுதி; வலிமை; ஆணவம்.
**முடுக்குதல்** – விரைவுபடுத்துதல்; திருகாணி முதலியவற்றை உட்செலுத்துதல்; விரைவாகச் செலுத்துதல்; விரைந்து கடித்தல்; உழுதல்; தூண்டிவிடுதல்; உணர்ச்சிமிகுதல்; மிகுதல்; விரைதல்.
**முடுக்குவழி** – ஒடுக்குவழி; சிறுசந்து.
**முடுகடி** – அண்மை; விரைவுக்குறிப்பு.
**முடுகல்** – விரைவு; வலிமை.
**முடுகியல்** – அராகம் என்னும் கலிப்பாவுறுப்பு.
**முடுகு** – முடுகிச் செல்லும் சந்தவகை; நாற்றம்; அரக்காற் செய்யப்பட்ட கங்கணம்; கடமை; தோணிவகை; மோதிரவகை; விலங்கின் பெண்; விரைவு.
**முடுகுதல்** – விரைந்து செல்லுதல்; நெருங்குதல்; வலிமையாதல்; எதிர்தல்.
**முடுகுவண்ணம்** – அராகந் தொடுத்த அடியோடு பிற அடி சேர்ந்து தொடர்ந்தோடுஞ் சந்தம்.
**முடுத்தார்** – மூடுகை.
**முடுவல்** – பெண்ணாய்; செந்நாய்; நாய்.
**முடுவற்படையோன்** – நாய்ப்படை உடையவனான வயிரவன்.
**முடை** – காண்க: முடைநாற்றம்; தவிடு; குடையோலை; ஓலைக்குடை; நெருக்கடி.
**முடைச்சேரி** – முல்லைநிலத்தூர்.
**முடைசல்** – முடைகை; முடையப்பட்டது; வெள்ளத்தடுப்பு.
**முடைஞ்சல்** – இடையூறு.
**முடைதல்** – பின்னுதல்; மெலிதல்.
**முடைநாற்றம்** – புலால்; தீநாற்றம்; புளித்த மோர் முதலியவற்றின் மணம்.
**முடைப்படுதல்** – நெருக்கடி உண்டாதல்.
**முண்டகம்** – முள்; முள்ளுடைத் தூறு; தாழை மரம்; தாமரை; காண்க: நீர்முள்ளி; கழிமுள்ளி; கருக்குவாய்ச்சிமரம்; பதநீர்; கள்; கருப்புக் கட்டி; நெற்றி; தலை; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; வாழை; கடல்.
**முண்டகன்** – பிரமன்.
**முண்டகாசனி(னை)** – தாமரையில் இருப்பவளான திருமகள்.
**முண்டம்** – தலை; நெற்றி; மழித்த தலை; வழுக்கைத்தலை; கபாலம்; உடற்குறை; உறுப்புக்குறை; நிரம்பாக் கருப்பிண்டம்; நிருவாணமான உடல்; அறிவில்லாதவன்; திரட்சி; குற்றி; காண்க: மண்டூரம்; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; சிவனை வழிபடல்; புண்டரம்; பிட்டு; கணுக்காற் பொருத்து; மரத்துண்டு; கட்டி.
**முண்டன்** – மொட்டைத்தலையன்; கையில் மண்டையோட்டையுடைய சிவபிரான்; சைவன்; அமணன்; நாவிதன்; இராகு; வலியவன்; விடாப்பிடியன்; கிழங்கின் கடினமான பகுதி.
**முண்டனம்** – தலைசிரைத்தல்.
**முண்டா** – தோள்.
**முண்டாசு** – தலைப்பாகைவகை.
**முண்டி** – மழித்த தலையன்; நாவிதன்; நெற்றியில் திரிபுண்டரம் அணிந்தவன்; காண்க: கல்லுளிமங்கன்.
**முண்டித்தல்** – மொட்டையாய்ச் சிரைத்தல்.
**முண்டிதம்** – மொட்டையடித்தல்; வரிக்கூத்து வகை.
**முண்டிதன்** – மொட்டைத்தலையன்.
**முண்டு** – முருட்டுத்தனம்; முனைந்து செய்யும் எதிர்ப்பு; மடமை; மரம் முதலியவற்றின் கணு; திரட்சி; சிறுகட்டை; உடற்சந்து; திமில்; துண்டுவேட்டி.
**முண்டுதல்** – முரண்டுபண்ணுதல்; முனைந்து நிற்றல்.
**முண்டை** – கைம்பெண்; கண்ணின் கருவிழி; முட்டை.
**முண்டைக்கண்** – வெளியில் பிதுங்கியுள்ள பருத்த கண்.
**முண்மா** – முள்ளம்பன்றி.
**முணக்குதல்** – உள்வளைத்தல்.
**முணங்கு** – அடக்கம்; சோம்பல்முரிப்பு; சோம்பு.
**முணங்குதல்** – உள்ளடங்குதல்; அடங்குதல்; குரலையடக்கிப் பேசுதல்.
**முணங்குநிமிர்தல்** – சோம்பல்முரித்தல்.
**முணமுணத்தல்** – காண்க: முணுமுணுத்தல்.
**முணவல்** – சினம்.
**முணவுதல்** – வெறுத்தல்; சினத்தல்.
**முணுமுணுத்தல்** – வாய்க்குட் பேசுதல்.
**முணை** – மிகுதி; வெறுப்பு.
**முணைதல்** – வெறுத்தல்.
**முத்தக்காசு** – கோரைக்கிழங்கு; கோரைவகை.
**முத்தகம்** – தனிநின்று பொருள் முடியுஞ் செய்யுள்; இசைப்பாவகையுள் ஒன்று; எறியாயுதம்; குருக்கத்திச்செடி; கருக்குவாளிமரம்.
**முத்தங்கொடுத்தல்** – காண்க: முத்தமிடுதல்.

**முத்தங்கொள்ளுதல்** – காண்க: **முத்தமிடுதல்;** பொருந்துதல்; புல்லுதல்.

**முத்தண்டு** – முக்கோல்.

**முத்தந்தருதல்** – அன்பிற்கறிகுறியாக கன்னம் முதலியவற்றில் முத்தமிடுதல்.

**முத்தம்** – உதடு; அன்பிற்கறிகுறியாக ஒருவகை ஒலி உண்டாக உதடுகளால் தொடுகை: பிள்ளைத்தமிழ்ப் பருவங்களுள் குழந்தையை முத்தந் தரும்படியாகப் பாடும் பகுதி; மருத நிலம்; முத்து; முத்துக்கொட்டை; செடிவகை; மரகதக் குணங்களுள் ஒன்று; ஆண்குறி; அன்பு; மகிழ்ச்சி; யோகாசனவகை; முற்றம்; கோரைக்கிழங்கு; விடுதலை; கோரை.

**முத்தமாலை** – காண்க: **முத்துமாலை.**

**முத்தமிடுதல்** – அன்பிற்கறிகுறியாக உதடுகளால் கன்னம் முதலியவிடங்களில் தொடுகை.

**முத்தமிழ்** – இயல், இசை, நாடகம் என்னும் மூவகைத் தமிழ்.

**முத்தமிழுரியோன்** – அகத்தியன்; வயிரவன்.

**முத்தமுண்ணுதல்** – காண்க: **முத்தமிடுதல்.**

**முத்தர்** – திடர்.

**முத்தரை** – அரையிலணியும் முத்துவடம்.

**முத்தலை, முத்தலைக்கழு, முத்தலைவேல்** – சூலம்.

**முத்தலைவேலோன்** – பைரவன்.

**முத்தவள்ளி** – முத்துக்கோத்த கொடிபோன்ற கழுத்தணி.

**முத்தவி** – ஆமணக்கெண்ணெய்.

**முத்தழல்** – காண்க: **முத்தீ.**

**முத்தளகி** – முருங்கைமரம்.

**முத்தன்** – வீடுபேறடைந்தோன்; இயல்பாகவே தளைகளிலிருந்து நீங்கியவனான சிவபிரான்; திருமால்; அருகன்; வயிரவன்; பிரியன்; மூடன்; புத்தன்.

**முத்தாடுதல்** – முத்தமிடுதல்.

**முத்தாத்துக்கோல்** – தூக்குக்கோல்.

**முத்தாத்துமா** – வீடுபெற்ற உயிர்.

**முத்தாந்தம்** – வீடுபேறாகிய உயர்நிலை.

**முத்தாபலம்** – முத்து; காண்க: **சங்கஞ்செடி.**

**முத்தாமணக்கு** – ஓர் ஆமணக்கஞ்செடிவகை.

**முத்தாரம்** – முத்துமாலை.

**முத்தாவளி** – முத்துமாலை; ஒரு பண்வகை.

**முத்தானம்** – அடுப்பு.

**முத்தி** – வீடுபேறு; விடுபடுகை; இருவகை முத்தி நிலை; திசை; முத்தம்; திருமகள்; தேமல்.

**முத்திக்கை** – அரண்வளைப்பு.

**முத்திதசை** – பற்றுகளினின்று விடுபட்ட நிலை.

**முத்திநகரங்கள்ஏழு** – மதுரை, அயோத்தி, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை ஆகிய நகரங்கள்.

**முத்திநெறி** – வீட்டுநெறி.

**தித்திப்பேறு** – வீட்டுவாழ்வு.

**முத்திபதம்** – மோட்சபதவி; ஞானநிலை.

**முத்திமார்க்கம்** – வீட்டுநெறி; கருமவிதி மார்க்கம்.

**முத்திமுத்திரை** – தாமிரபரணி ஆறு.

**முத்திமுதல்** – முத்தியைப் பெறுதற்கு முதலாகிய ஆன்மா.

**முத்தியெறிதல்** – கழித்தல்.

**முத்திராசாலை** – அச்சுக்கூடம்.

**முத்திராதாரணம்** – சங்கு, சக்கரம் முதலிய முத்திரைகளை உடலில் ஏற்றுக்கொள்கை.

**முத்திரிகை** – எழுத்துப் பதிக்கப்பெற்ற மோதிரம்.

**முத்திரித்தல்** – முத்திரையிடுதல்.

**முத்திரை** – அடையாளம்; இலாஞ்சனை; அஞ்சல் முத்திரை முதலியன; அடையாளவில்லை; நூல் இறுதியில் வரும் ஆக்கியோன் பெயர்ப்பதிவு; காதிலணியும் குண்டலவகை; அபிநயக்குறி; பூசை செய்யும்போது காட்டும் கையடையாளம்; வங்கியம் நாகசுரம் வாசிக்கும்போது தொழிற்படாத துளை.

**முத்திரைக்கூடம்** – காவலறை; பண்டங்களின் மேல் முத்திரையிடும் இடம்.

**முத்திரைச்சூடு** – கால்நடைகளுக்கு இடும் சூடு.

**முத்திரைச்சேவகன்** – வில்லைச்சேவகன்.

**முத்திரைத்தாள்** – முத்திரையிடப்பட்ட பத்திரம்.

**முத்திரைப்படி** – அரசாங்க அடையாளமிடப்பட்ட படி.

**முத்திரைமண்** – தானியக் குவியலில் இடும் மண் குறி; முத்திரையிடுதற்குரிய மண் முதலிய பொருள்.

**முத்திரைமோதிரம்** – முத்திரையிட்ட மோதிரம்.

**முத்திரையுட்சிக்கு** – நாணய முத்திரையில் உள்ள குறைவகை.

**முத்திறங்குதல்** – அம்மையில் முத்துகள் பால் வடிந்து மறைகை.

**முத்திறமணி** – காண்க: **திரிமணி.**

**முத்தீ** – ஆகவனீயம், தட்சிணாக்கினி, காருகபத்தியம் என்னும் மூவகை வேதாக்கினி; வயிற்றுத்தீ, காமத்தீ, சினத்தீ என்னும் மூவகை நெருப்பு; காண்க: **ஆயுர்வேதாக்கினி.**

**முத்தீமரபினர்** – வேதாக்கினி மூன்றையும் பேணும் குலத்தவராகிய பார்ப்பனர்.

**முத்து** – ஒன்பான் மணியுள் ஒன்று; கண்ணீர்; ஆமணக்குவிதை; அம்மைக் கொப்புளம்; நெய்யுள்ள விதை; மாதுளையின் விதை; அரிசி; 7/8 பணவெடைகொண்ட ஒரு பொன்னிறை; ஆட்டக்காய்கள்; மேலானது; அழகு; மகிழ்ச்சி; அன்பு; முத்தம்; வெண் குருகு.

**முத்துக்கற்கம்** – முத்துக்கொட்டைப் பிண்ணாக்கு; முத்தைப் புடமிட்டுச் செய்யும் மருந்துவகை.
**முத்துக்குடை** – அருகனது மூன்று குடையுள் ஒன்று.
**முத்துக்குமாரன்** – முருகக்கடவுள்.
**முத்துக்குளித்தல்** – முத்தெடுக்கக் கடலில் மூழ்குதல்.
**முத்துக்குறி** – கையிலுள்ள முத்துகளைக் கணக்கிட்டுப் பலன்சொல்லும் குறி.
**முத்துக்கொட்டை** – ஆமணக்குவிதை.
**முத்துக்கோவை** – காண்க: **முத்துமாலை.**
**முத்துச்சம்பா** – ஒரு நெல்வகை.
**முத்துச்சலாபம்** – முத்துக்குளிக்கை; முத்துக்குளிப்பில் அடையும் பேறு.
**முத்துச்சிப்பி** – முத்துள்ள ஒட்டினையுடைய நீர்வாழ் உயிரி; முத்துத் தங்கிய சிப்பியோடு.
**முத்துச்சிவிகை** – முத்துகளால் அலங்கரிக்கப்பட்ட பல்லக்கு.
**முத்துச்சொரிதல்** – அன்னம் படைத்தல்; வேண்டுதலுக்காக நென்மணியைச் சொரிதல்.
**முத்துத்தரியம்** – முத்தினால் அலங்கரித்த மேலாடை.
**முத்துத்தாமம்** – காண்க: **முத்துமாலை**; முத்துக் கோத்த தொங்கல்.
**முத்துதல்** – சேர்தல்; முத்தமிடுதல்.
**முத்துநீர்** – பனிநீர்த் திவலை.
**முத்துப்பந்தர்** – முத்துமாலைகளால் அலங்கரித்த மேற்கட்டி அமைந்த பந்தல்.
**முத்துப்புரி** – முத்துக் கோத்த தொங்கல்.
**முத்துப்போடுதல்** – அம்மைநோயில் முத்துப் போடுதல்.
**முத்துமணல்** – மணல்போன்ற சிறிய முத்து.
**முத்துமழை** – பருவமழை.
**முத்துமழைபெய்தல்** – செல்வம் பொங்குதல்.
**முத்துமாலை** – முத்துக் கோத்த கழுத்தணி.
**முத்துலையிடுதல்** – ஒன்றுக்கு மூன்று கற்பித்தல்.
**முத்துவடம்** – காண்க: **முத்துமாலை**; ஒரு புடைவைவகை.
**முத்துவண்ணச்சேலை** – முற்காலத்து வழங்கிய புடைவைவகை.
**முத்துவர்ணம்** – வெள்ளைநிறம்.
**முத்துளம்** – மூங்கில்.
**முத்தெயில்** – பழமையான மதில்.
**முத்தேவர்** – பிரமன், சிவன், திருமால் என்னும் மூவர்.
**முத்தை** – முன்னிடம்; சோற்றுருண்டை; திரட்சி; பேதைப்பருவத்தாள்; கோரைக்கிழங்கு.
**முத்தையன்** – முருகக்கடவுள்.
**முத்தொழில்** – படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் கடவுளின் மூவகைச் செயல்கள்.
**முத்தொழிலர்** – உழவு, வாணிகம், ஆனிரை காத்தலாகிய மூன்று தொழில்களையுடைய வணிகர்.
**முத்தொழிற்பகவன்** – கடவுள்.
**முதம்** – உவகை.
**முதல்** – ஆதி; இடம் முதலியவற்றில் முதலாயிருப்பது; காரணம்; மூலகாரணனான கடவுள்; முதலானவன்; ஏற்றம்; மூலதனம்; வேர்; கிழங்கு; அடிப்பாகம்; மரம் முதலியவற்றின் அடி; இடம்; அகப்பொருட்குரிய நிலம்; பொழுதுகளின் இயல்பு; பிண்டப் பொருள்; செலவுக்காகச் சேமிக்கும் பொருள்; இசைப்பாட்டுள் ஒன்று; சொத்தின் கொள் முதல் விலை; பன்னிரு உயிரெழுத்தும் பதினெட்டு மெய்யெழுத்தும்; தொடக்கமாகவுடைய; ஏழாம் வேற்றுமையுருபு; ஐந்தாம் வேற்றுமையுருபு; பத்திரம்.
**முதல்மரியாதை** – கோயில் முதலியவற்றில் முதலாவதாகப் பெறும் போற்றுகை.
**முதல்முதல்** – தொடக்கம்.
**முதல்ரகம்** – உயர்தரம்.
**முதல்வஞ்சி** – காண்க: **முதுமொழிவஞ்சி.**
**முதல்வர்** – வானோர்; முதலாயினார்.
**முதல்வன்** – தலைவன்; அரசன்; எல்லாப் பொருட்கும் காரணனான கடவுள்; தந்தை.
**முதல்வன்வாக்கு** – ஆகமம்.
**முதல்வி** – தலைவி.
**முதல்வெண்குருத்து** – முதலாவது தோன்றும் குருத்து.
**முதலக்கரம்** – காண்க: **முதலெழுத்து.**
**முதலடி** – தொடக்கம்; ஆண்டின் முதல் விளைச்சல்.
**முதலவன்** – காண்க: **முதல்வன்.**
**முதலற்றுப்போதல்** – அடியோடழிதல்.
**முதலாளி** – மூலதனமுள்ளவன்; தலைவன்; சொந்தக்காரன்; நிலமுடையவன்.
**முதலான** – தொடக்கமாகவுடைய.
**முதலி** – தலைவன்; பெரியோன்; ஒரு பட்டப் பெயர்; தாழைமரம்; சீமை இலுப்பை; அரசாங்கத் தலைமை அதிகாரி; தொடக்கமாகவுடைய.
**முதலிய** – காண்க: **முதலான.**
**முதலீடு** – முதலில் இடுகை; முதலில் இட்ட பொருள்; ஆண்டின் முதல் அறுவடை; வாணிக முதல்; முதலிற் செலுத்துந் தொகை; அசல்கடன் தொகைக்குப் பணம் செலுத்துகை.

முதலீற்று – முதன்முதலாக ஈனுகை; தலையீற்றுக் கன்று.

முதலுதல் – முதலாதல்; தலைமையாதல்; தொடக்கமுடையதாதல்.

முதலூழி – கிருதயுகம்.

முதலெழுஞ்சனி – மகநாள்.

முதலெழுத்து – உயிரும் மெய்யுமாகிய முப்பதெழுத்து.

முதலை – நீர்வாழ் உயிரி; காண்க: **செங்கிடை;** இறகின் அடிக்குருத்து.

முதலோன் – கடவுள்.

முதள் – மொக்கு.

முதற்கடவுள் – பரதெய்வம்.

முதற்கடன் – தலைமையான கடமை; உழவுத் தொழிலுக்காக முன்கொடுக்கும் பணம்.

முதற்கருவி – மத்தளம்; காண்க: **முதற்காரணம்.**

முதற்காரணம் – காரிய நிகழ்ச்சிக்கு இன்றியமையாத காரணம்.

முதற்காலம் – இசையின் தொடக்ககாலம்; கோயிலிற் காலையிற் செய்யும் முதற்பூசை.

முதற்குறை – சொல்முதலில் எழுத்துக் குறைந்து வரும் செய்யுள் விகாரவகை; செயல்தொடக்கத்தில் குறை; முதலாவதாயுள்ள தேவை.

முதற்கைகொடுத்தல் – கையால் தழுவி அன்பு காட்டுதல்.

முதற்கொடி – இளந்தளிர்.

முதற்கொண்டு – தொடங்கி.

முதற்சங்கம் – முச்சங்கங்களுள் முதலாவது.

முதற்சீர் – ஈரசைச்சீர்.

முதற்பா – வெண்பா.

முதற்பெயர் – உறுப்புகளையுடைய முழுப் பொருளைக் குறிக்கும் பெயர்.

முதற்பேறு – தலைப்பிள்ளை; முதற் பலன்.

முதற்பொருள் – கடவுள்; மூலதனம்; அகப் பொருட்குரிய நிலம் பொழுதுகளின் இயல்பு; காண்க: **முதற்பெயர்.**

முதன்மடை – முதலில் நீர்பாயும் நிலம்; தலைவாய்க்கால்.

முதன்முதல் – தொடக்ககாலம்.

முதன்முன்னம் – தொடக்கம்.

முதன்மை – தலைமை.

முதனடை – இயக்கம் நான்கனுள் மிகத் தாழ்ந்த செலவினையுடைய பாடல்.

முதனா – நாக்கின் அடிப்பாகம்.

முதனாள் – அசுவினிநாள்; முதல் நாள்; முந்தின நாள்.

முதனிலை – முதலில் நிற்பது; காரணம்; பகுதி; தலைவாயில்.

முதனிலைத்தீவகம் – ஒரு சொல் பாடலின் முதலில் நின்று குணம் முதலிய பொருள் குறித்து ஏனையிடத்துஞ் சென்று பொருள்விளக்கும் விளக்கணிவகை.

முதனிலைத்தொழிற்பெயர் – தன்னியல்பின் மாறாத வினைப்பகுதியே தொழிற்பெயராக நிற்பது.

முதனிலைவிளக்கு – காண்க: **முதனிலைத்தீவகம்.**

முதனினைப்பு – நூல் அல்லது உதாரணப் பாடல்களை நினைப்பூட்டும் அப் பாடல்களின் முதற் குறிப்புச் செய்யுள்.

முதனீர் – கடல்.

முதனூல் – முதல்வன் வாக்கு; மறை; பிறநூலைப் பின்பற்றாது முதலில் செய்யப்படும் நூல்; வழிநூலுக்கு மூலமாகவுள்ள நூல்.

முதாரி – முதுமையுறுகை; காண்க: **முதாரு;** முற்றியது; முன்கை வளையல்.

முதாரு – பால்மறக்குங் கன்று; பால்மறுக்கும் நிலையிலுள்ள பசு.

முதிதபாவனை – செற்றத்தை நீக்கும்பொருட்டுப் பௌத்தர்களால் செய்யப்படும் தியானம்.

முதிதை – மகிழ்ச்சி; மனத்தூய்மை; தியானம்.

முதியகுழல் – குதிரைவாலிப் புல்.

முதியம் – நாய்வேளைப்பூண்டு.

முதியவன், முதியன் – மூத்தவன்; வயதுமுதிர்ந்தவன்; பிரமன்.

முதியாள் – மூத்தவள்; காண்க: **தேவராட்டி.**

முதியான் – ஒரு பறவைவகை; முதியவன்; முது கன்று.

முதியோர் – அறிஞர்.

முதிர்காடு – பழங்காடு.

முதிர்காற்று – கடுங்காற்று.

முதிர்ச்சி – பக்குவம்; வயதின் முதுமை; முதுக் குறைவு; செருக்கு.

முதிர்தல் – இளமைத்தன்மை நீங்கி முற்றுதல்; பக்குவமாதல்; நிறைதல்; முற்படுதல்; ஒழிதல்; உலர்தல்; சூழ்தல்.

முதிர்ந்தகுறிஞ்சி – ஒரு பண்வகை.

முதிர்ந்தவிந்தளம் – குறிஞ்சி யாழ்த்திறவகை.

முதிர்ப்பு – மனக்கலக்கம்; பக்குவம்; வயதின் முதுமை.

முதிர்பு(வு) – பக்குவம்; வயதின் முதுமை; மிகுதி.

முதிர்வேனில் – பருவம் ஆறனுள் ஆனி ஆடி மாதங்களாகிய கோடைக்காலம்.

முதிரம் – மேகம்; குமணனுக்குரிய மலை.

முதிரன் – காமுகன்.

முதிராப்பிண்டம் – முற்றாத கரு.

முதிரை – அவரை, துவரை முதலியன; துவரம் பருப்பு; மரவகை.

முது – பேரறிவு.

**முதுக்குடி** – காண்க: **முதுகுடி.**

**முதுக்குறை** – காண்க: **முதுக்குறைமை(வு).**

**முதுக்குறைதல்** – அறிவுமிகுதல்.

**முதுக்குறைமை(வு)** – பேதைமை; பேரறிவு; பெண் தெருளுகை.

**முதுகண்** – முதன்மையான ஆதாரம்.

**முதுகயம்** – கடல்.

**முதுகன்று** – பால்குடி மறந்த கன்று.

**முதுகாஞ்சி** – அறிவின்மிக்க மூத்தோர் அறிவில்லாத இளையோர்க்கு இளமை நிலையாமை முதலியவற்றை எடுத்துமொழியும் புறத்துறை; முதுகாஞ்சித்துறை பற்றிய நூல்வகை.

**முதுகாடு** – பழங்காடு; சுடுகாடு.

**முதுகால்** – ஓராண்டுக்கு மேற்பட்ட கொடிகளையுடைய வெற்றிலைத்தோட்டம்.

**முதுகிடுதல்** – புறங்காட்டுதல்.

**முதுகு** – உடம்பின் பின்புறம்; முருடு; நாற்காலி முதலியவற்றின் பின்புறம்; நடுவிடம்; வரப்பு மேடு.

**முதுகுகாட்டுதல்** – காண்க: **முதுகிடுதல்.**

**முதுகுகாணுதல்** – தோல்வியுறச்செய்தல்.

**முதுகுகொடுத்தல்** – புறங்காட்டுதல்; துணைசெய்தல்; குதிரை முதலியன தன்மே லேற இடங்கொடுத்தல்; விளையாட்டாகவும் தண்டனையாகவும் முதுகிற் பிறனைத் தூக்கிச் சுமத்தல்.

**முதுகுடி** – தொன்றுதொட்டுவரும் குடி.

**முதுகுதாங்கி** – சார்மணை.

**முதுகுநீர்ச்சடங்கு** – முதுகில் நீரூற்றிச் செய்யும் சீமந்தச்சடங்கு.

**முதுகுநெளித்தல்** – வேலைக்குச் சோம்புதல்.

**முதுகுரவர்** – தாய்தந்தையர், பெற்றோர்.

**முதுசொல்** – பழமொழி.

**முதுதலை** – மரத்தின் முற்றிய அடிப்பாகம்.

**முதுநிலம்** – களர்நிலம்; பெரும்பாழ்நிலம்; பாலை நிலம்.

**முதுநீர்** – நிலத்துக்குமுன் தோன்றியதான கடல்.

**முதுபயிர்** – முற்றிய பயிர்; கனி தரக்கூடிய மரம்; காண்க: **முதுகால்.**

**முதுபாலை** – கணவனை இழந்த தலைவி காட்டில் தனிநின்று புலம்புவதைக் கூறும் புறத்துறை.

**முதுபாழ்** – காண்க: **முதுநிலம்.**

**முதுபுண்** – நெடுநாட்புண்.

**முதுபெண்டு** – காண்க: **பேரிளம்பெண்;** சூதகம் நின்றுபோன பெண்; வயதானவள்.

**முதுபொருள்** – மரபுவழிச் சொத்து.

**முதுமக்கட்டாழி** – இறந்தவரை இட்டுப் புதைக்கும் மட்பாண்டம்; பெருந்தாழிவகை; மிகவும் முதிர்ந்தவர்களை வைத்துப் பாதுகாக்கும் சாடிவகை.

**முதுமக்கள்** – வயதுசென்றோர்.

**முதுமகள்** – கிழவி; சூதகம் நீங்கிய பெண்; வயதானவள்.

**முதுமகன்** – வயதுசென்றவன்; முப்பதுக்கு மேற்பட்ட அகவையுள்ளவன்; சனி.

**முதுமரம்** – ஆலமரம்.

**முதுமுறை** – மூத்த முறைமை.

**முதுமூப்பு** – மிக முதிர்ந்த வயது.

**முதுமை** – பழைமை; மூப்பு; பழமொழி; முற்றின தன்மை; காண்க: **முதுகாஞ்சி.**

**முதுமொழி** – பழமொழி; அறிவுரை; சான்றோர் செய்யுள்; வேதம்; பிரணவம்; திருக்குறள்.

**முதுமொழிவஞ்சி** – மகன் தகப்பனுடைய வீரச் செயலைக் கூறும் புறத்துறை.

**முதுவர்** – மூத்தோர்; அறிவால் உயர்ந்தோர்; புலவர்; மலைச்சாதியார்; மந்திரிகள்.

**முதுவல்** – பழமையாற் பழுதானது.

**முதுவேனில்** – பருவம் ஆறனுள் ஆனி ஆடி மாதங்களாகிய கோடைக்காலம்.

**முதுவோர்** – பெரியோர்; மூத்தோர்; அறிவின் மிக்கோர்; மந்திரிகள்; அரசன், ஆசிரியன், தாய்தந்தை, அண்ணன் முதலியோர்; புலவர்.

**முதை** – காண்க: **முதைப்புனம்; சங்கஞ்செடி.**

**முதைப்புனம்** – பழங்கொல்லை; காடுவெட்டிப் பயிரிடத்தக்கதாக அமைத்த நிலம்.

**முதையல்** – பழங்காடு; காடு.

**முந்தல்** – முற்படல்; முனை; முச்சந்தி.

**முந்தன்** – கடவுள்.

**முந்தாநாள்** – நேற்றை என்பதற்கு முன்தினம்.

**முந்தானை** – காண்க: **முன்றானை.**

**முந்தி** – முன்னிடம்; காண்க: **முன்றானை;** முற்காலம்.

**முந்திசினோர்** – முன்னோர்.

**முந்திரி** – 1/320 ஐக் குறிக்கும் ஒரு பின்னவெண்; முந்திரிகைமரம்; மரவகை; திராட்சை.

**முந்திரிக்கொட்டை** – முந்திரியின் விதை; தேவையில்லாமல் எதிலும் தலையிடுபவன்.

**முந்திரிகை** – காண்க: **முந்திரி.**

**முந்து** – முற்காலம்; ஆதி; முன்பு; வெண்ணாரை.

**முந்துதல்** – மேலெழுதல்; விரைதல்; எதிர்ப்படுதல்; முதன்மையாதல்; சிறத்தல்; பழமையாதல்; காலம், இடம் முதலியவற்றால் முற்படுதல்.

**முந்துநூல்** – முதனூல்; வேதம்.

**முந்துறுத்தல்** – தோற்றுவித்தல்; காட்டிக்கொள்ளுதல்; ஒருவன் முன்னிலையில் அறிவித்தல்; முதலாதல்.

**முந்துறுதல்** – முன்னிலையாதல்; முற்படுதல்.

**முந்தூழ்** – பழவினை; மூங்கில்.
**முந்தை** – பழைமை; முற்காலம்; முன்னோன்; முன்; சிறு பாண்டவகை.
**முந்தைநாள்** – முற்காலம்; காண்க: **முந்தாநாள்.**
**முந்தையோர்** – முன்னோர்.
**முந்நாடு** – சேர சோழ பாண்டிய நாடுகள்.
**முந்நீர்** – பூமியைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று தன்மையையுடையதும் ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் என்னும் மூன்று நீர்களை உடையதுமான கடல்.
**முந்நூல்** – பூணூல்; மகளிர் கழுத்தணிவகை.
**முப்பகை** – காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்கள்; பிசாசு, உலகு, உடல் ஆகிய மனிதனின் மூன்று எதிரிகள்.
**முப்பத்திரண்டறம்** – ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க்கு உணவு, அறுசமயத்தார்க்கு உண்டி, பசுவுக்குத் தீனி, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டம் ஈதல், அறவைச்சோறு, பிள்ளை பெறுவித்தல், பிள்ளை வளர்த்தல், பிள்ளைக்குப் பால் வார்த்தல், அறவைப் பிணஞ்சுடல், அழிந்தோரை நிறுத்துதல், சுண்ணம், நோய்க்கு மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கு எண்ணெய், பெண்போகம், பிறர் துயர் காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்து உயிர்காத்தல், கன்னிகாதானம் என்னும் முப்பத்திரண்டு வகையான அறம்.
**முப்பத்துமூன்றுதேவர்** – ஆதித்தர் பன்னிருவர், அசுவினிகள் இருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர் ஆகியோரின் திரள்.
**முப்பதம்** – 'தத்துவமசி' என்னும் மூன்று சொற்களாலான தொடர்.
**முப்பலை** – கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் என்பன.
**முப்பழம்** – முக்கனிகளாகிய மாம்பழம், பலாப்பழம், வாழைப்பழம்.
**முப்பா** – ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன.
**முப்பாட்டன்** – பாட்டனுக்குத் தந்தை; பாட்டனுக்குப் பாட்டன்.
**முப்பாட்டி** – முப்பாட்டனின் மனைவி; பாட்டனுக்குப் பாட்டி; பாட்டியின் தாய்.
**முப்பால்** – அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பகுதிகள்; முப்பாலை விரித்துக் கூறும் திருக்குறள்; ஆண்பால், பெண்பால், அலிப்பால் என்பன; காய்ச்சுப்பால், திரட்டுப்பால், குழம்புப்பால் என்னும் மூவகைப் பால்; தாய்ப்பால், ஆவின்பால், ஆட்டுப்பால் என்னும் மூவகைப் பால்.
**முப்பாலகர்** – பால் குடிப்பவர், பாலும் அன்னமும் உண்பவர், அன்னம் மாத்திரம் உண்பவர் என மூவகைப்பட்ட குழந்தைகள்.
**முப்பாழ்** – நிலத்திற்குண்டாகும் வெயிற்பாழ், வெள்ளப்பாழ், குடிப்பாழ் என்னும் மூவகைக் கேடுகள்; உடம்புக்குள் சூனியமான மூன்றிடம்.
**முப்பாற்புள்ளி** – ஆய்தவெழுத்து; குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்னும் புள்ளியுள்ள மூன்றெழுத்துகள்.
**முப்பான்** – மூன்று பத்து.
**முப்பிறைச்சுமை** – கக்குவான், கக்கலிருமல்.
**முப்பு** – அகத்தியர் வாகடநூல்; காண்க: **முப்பூ.**
**முப்புடி** – இராசதம், சாத்துவிகம், தாமதம் ஆகிய மூன்று குணங்கள்; காண்க: **திரிபுடி.**
**முப்புடைக்கனி, முப்புடைக்காய்** – மூன்று பிரிவுகளையுடைய தேங்காய்.
**முப்புரம்** – திரிபுரங்களான பொன், வெள்ளி, இரும்பு இவற்றாலான கோட்டைகள்.
**முப்புரமெரித்தோன்** – சிவபெருமான்; காண்க: **சிவனார்வேம்பு;** ஆடுதின்னாப்பாளை.
**முப்புரி** – மூன்று நூல் சேர்த்துத் திரித்த கயிறு; காண்க: **முப்புரம்.**
**முப்புரிநூல்** – பூணூல்.
**முப்புரிநூலோர்** – பார்ப்பனர்.
**முப்புவனம்** – துறக்கம், பூமி, பாதலம் ஆகிய மூன்று உலகங்கள்.
**முப்புள்ளி** – ஆய்தவெழுத்து.
**முப்பூ** – இரும்பு முதலியவற்றைப் பொன்னாக்கவும் நூறாயிரம் ஆண்டு உயிர்வாழச் செய்யவும் வல்ல மருந்து.
**முப்பொருள்** – இறை, உயிர், தளை (பதி, பசு, பாசம்) என்னும் மூன்று முதற்பொருள்கள்; பிரமன், திருமால், உருத்திரன் என்னும் மும்மூர்த்திகள்.
**முப்பொழுது** – காண்க: **முப்போது.**
**முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்** – ஆதிசைவ குருக்கள்.
**முப்பொறி** – எண்ணம், சொல், உடல் (மனம், வாக்கு, காயம்) என்னும் மூன்று கரணங்கள்.
**முப்போது** – காலை, உச்சி, மாலை என்னும் மூன்று வேளைகள்.
**மும்மடங்கு** – மூன்று பங்கு.
**மும்மடி** – மூன்று மடங்கு; அழகின் அறிகுறியாக மகளிர் வயிற்றிற் காணப்படும் மூன்று மடிப்பு.
**மும்மண்டலம்** – பூமி, அந்தரம், துறக்கம் என்னும் மூன்று பகுதிகள்; சூரிய சந்திர அக்கினி ஆகிய மூன்று மண்டலங்கள்.

**மும்மணி** – புருடராகம், வைடூரியம், கோமேதகம் என்னும் மூவகை இரத்தினங்கள்; அணிகலவகை; காண்க: **திரிமணி.**

**மும்மணிக்காசு** – அணிகலவகை.

**மும்மதத்தன்** – விநாயகர்.

**மும்மதம்** – மதயானையின் கன்னமதம், கைம்மதம், கோசமதம் என மூவகைப்பட்ட மதநீர்.

**மும்மதில்** – காண்க: **முப்புரம்;** சமவசரணத்துள்ள உதயதரம், பிரீதிதரம், கல்யாணதரம் என்னும் மூன்று மதில்கள்.

**மும்மரித்தல்** – காண்க: **மும்முரித்தல்.**

**மும்மலம்** – ஆணவம், கன்மம், மாயை என்னும் மூவகை மலங்கள்; காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூவகை உயிர்க்குற்றங்கள்.

**மும்மாரி** – ஒரு மாதத்தில் பெய்யும் மூன்று மழை.

**மும்மீன்** – மிருகசீரிடநாள்.

**மும்முட்டி** – சிற்றாமுட்டி, பேராமுட்டி, நாகமுட்டி என்னும் செடிகள்.

**மும்முடிச்சோழன்** – தமிழ்நாட்டு வேந்தர் மூவருக்குரிய முடிகளைத் தரித்த சோழனான முதலாம் இராசராசன்.

**மும்முரசு** – மணமுரசு, வெற்றிமுரசு, கொடைமுரசு என்னும் மூன்று முரசுகள்; நியாயமுரசு, வீரமுரசு, தியாகமுரசு என்னும் மூவகை முரசுகள்; சேர சோழ பாண்டியர்க்குரிய மூன்று முரசுகள்.

**மும்முரம்** – கடுமை; விரைவு; பகட்டு; கவனம்.

**மும்முரித்தல்** – வேகங்கொள்ளல்.

**மும்முறை** – மூன்றுதரம்.

**மும்மூடர்** – முழுமூடர்.

**மும்மூர்த்தி** – பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூன்று மூர்த்திகள்; சுக்கு, திப்பிலி, மிளகு என்னும் திரிகடுகங்கள்.

**மும்மை** – மூன்றாயிருக்குந் தன்மை; மூன்று; உம்மை, இம்மை, மறுமை என்னும் முப்பிறப்பு; இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று காலங்கள்.

**மும்மொழி** – பழிகூறல், புகழ்கூறல், மெய்கூறல் என்னும் மூவகைப்பட்ட மொழி.

**முமுட்சு** – வீடுபேற்றில் நாட்டமுடையவன்.

**முமுடம்** – முழுத் துறவு.

**முயக்கம், முயக்கு** } – தழுவுதல்; புணர்ச்சி; சம்பந்தம்.

**முயங்கிக்கொள்ளுதல்** – கணவன் மனைவியராய் வாழ்தல்.

**முயங்குதல்** – தழுவுதல்; புணர்தல்; பொருந்துதல்; செய்தல்.

**முயல்** – போர்; சிறுவிலங்குவகை.

**முயல்வலி** – வலிப்புநோய்வகை.

**முயல்வு** – முயலுகை.

**முயலகன்** – காண்க: **முசலகன்.**

**முயலின்கூடு** – காண்க: **முயற்கூடு.**

**முயலுதல்** – காரியம் முற்றுப்பெறும்பொருட்டு ஊக்கத்தோடு செய்தல்; வருந்துதல்; தொடங்குதல்.

**முயற்களங்கம், முயற்கறை** } – நிலவினிடத்துள்ள களங்கம்.

**முயற்கூடு** – சந்திரன்.

**முயற்கொம்பு, முயற்கோடு** } – முயலின் கொம்பு; உலகில் இல்லாத பொருள்.

**முயற்சி** – ஊக்கம்; இடைவிடாத உழைப்பு; வேலை.

**முயற்புல்** – அறுகம்புல்.

**முயற்றிசை** – வடகீழ்த்திசை.

**முயற்று** – ஊக்கம்.

**முயிற்றுப்புல்** – ஒரு புல்வகை.

**முயிறு** – ஓர் எறும்புவகை.

**முரகரி** – திருமால்.

**முரங்கினம்** – மிளகு.

**முரச்சுதல்** – முற்றுவித்தல்.

**முரசக்கொடியோன்** – முரசத்தைக் கொடியிலுடைய தருமன்.

**முரசம்** – பறைவகை; மருதநிலப் பறைவகை; போர்ப்பறை.

**முரசறைதல்** – யாவரும் அறியப் பறையடித்துச் சொல்லுதல்; வெளியிடுதல்.

**முரசு** – பல்லின் அடித்தசை; காண்க: **முரசம்;** உத்தரட்டாதிநாள்.

**முரசுகட்டில்** – அரசற்குரிய முரசினை வைக்கும் இருக்கை.

**முரஞ்சு** – முதிர்கை; பாறை.

**முரஞ்சுதல்** – முதிர்தல்; வலிபெறுதல்; நிரம்புதல்.

**முரட்கை** – கலிப்பா.

**முரட்டடி, முரட்டாட்டம்** } – இணக்கமற்ற குணம்.

**முரட்டுக்கழுத்து** – வணங்காத குணம்; நுகம் பூணாத எருதின் கழுத்து.

**முரட்பயம்பு** – ஏற்றிழிவையுடைய நிலத்திலுள்ள குழி.

**முரடன்** – காண்க: **முருடன்.**

**முரடு** – கரடு; மரியாதையின்மை; மரக்கணு; உடலின் மூட்டு; பிடிவாதம்; பருமன்.

**முரண்** – பகை; போர்; வலிமை; பெருமை; மாறுபாடு; காண்க: **முரண்டொ(தொ)டை;** முருட்டுக்குணம்; கொடுமை; மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று.

**முரண்டல்** – பகைத்தல்.

**முரண்டன்** – மாறுபாடுள்ளவன்; பிடிவாதக்காரன்; பொறுமையில்லாதவன்; அவசரக்காரன்.

**முரண்டு** – பிடிவாதம்; மாறுபாடு; வளையாமை; அமையாமை.

**முரண்டொ(தொ)டை** – தொடை ஐந்தனுள் சொல்லாலும் பொருளாலும் மறுதலைப்படப் பாட்டுத் தொடுப்பது.

**முரண்படுதல்** – மாறுபடுதல்.

**முரண்மொழி** – எதிர்மொழி; பொருள் மாறுபடும் சொல்; செய்யுள் குற்றங்களுள் ஒன்று.

**முரண்விளைந்தழிவணி** – மேனோக்கில் மாறுபாடு தோன்றக் கூறும் அணி.

**முரணணி** – சொல்லேனும் பொருளேனும் முரண் பட அமையும் ஓரணிவகை.

**முரணர்** – பகைவர்.

**முரணுதல்** – மாறுபடுதல்; பெருக்குதல்; வலிமை பெறுதல்.

**முரப்பா** – பாகில் ஊறவைத்த தின்பண்டம்.

**முரப்பு** – கைக்கு மென்மையில்லாமல் காணப் படும் தன்மை.

**முரம்பு** – பருக்கைக்கல்லுள்ள மேட்டுநிலம்; மேடு; பாறை; வன்னிலம்; கழி; உப்பளம்.

**முரமுரெனல்** – நுரைத்தற்குறிப்பு; வாய்க்குள் கரகரப்பாயிருத்தற்குறிப்பு; தூய்மையா யிருத்தற்குறிப்பு.

**முரல்** – ஒரு மீன்வகை.

**முரல்வு** – யாழின் மெல்லோசை.

**முரலல்** – ஒலித்தல்; எடுத்தலோசை; கலப் போசை.

**முரலி** – காண்க: முரளி.

**முரலுதல்** – ஒலித்தல்; கதறுதல்; பாடுதல்.

**முரவம்** – பறைவகை; முழக்கம்.

**முரவு** – முரிவு; பறைவகை.

**முரவை** – அரிசியிலுள்ள வரி.

**முரள்** – சிப்பிவகை.

**முரளி** – வேய்ங்குழல்; மூக்கால் ஊதுங் குழல்.

**முரற்கை** – ஒலி; கயிறு; கலிப்பா; தாளவகை.

**முரற்சி** – ஒலி; பாட்டு; கயிறு.

**முரற்றுதல்** – ஒலித்தல்; கதறுதல்.

**முரற்றுமம்** – குடம்.

**முரன்றுபாடுதல்** – ஆலாபனஞ் செய்தல்.

**முராந்தகன், முராரி** – முரன் என்ற அசுரனைக் கொன்ற திருமால்.

**முரி** – துண்டு; நொய்யரிசி; முழுதிற் குறை வானது; சிதைவு; வளைவு; இசைப்பாவில் இறுதிப்பகுதி; நாடகத்தமிழின் இறுதியில் வருஞ் சுரிதகம்; பத்திரம்.

**முரிகம்** – மயிர்ப்படாம்.

**முரித்தல்** – ஒடித்தல்; அழித்தல்; தோல்வியுறச் செய்தல்; நடத்துதல்.

**முரிதல்** – ஒடிதல்; கெடுதல்; சிதறுதல்; தவறு தல்; தோல்வியுறுதல்; நீங்குதல்; நிலைகெடு தல்; குணங்கெடுதல்; வளைதல்; தளர்தல்.

**முரிநிலை** – இயற்பாவில் இறுதியிற் பாடுந் தரவு.

**முரிப்பு** – முரித்தல்; எருத்துத் திமில்.

**முரிமுரிதல்** – வளைதலைச் செய்தல்.

**முரியல்** – துண்டு; எளிதில் முரிவது.

**முரிவரி** – வரிப்பாட்டுவகை.

**முரிவாய்** – இடித்துண்டாக்கின வாசல்; கன்ன வாயில்; முரிந்த குறடு.

**முரிவு** – ஒடிகை; சுருக்குகை; நீங்குகை; வருத்தம்; ஊழ்; பெருமை; மடிப்பு; சோம்பு.

**முருக்கு** – எலுமிச்சைமரம்; முள்முருக்கமரம்; குருகு; கொலை; பலாசமரம்.

**முருக்குதல்** – அழித்தல்; கொல்லுதல்; முரித்தல்; உருக்குதல்; கரைத்தல்.

**முருகக்கடவுள்** – குமரக்கடவுள்.

**முருகயர்தல்** – முருகக்கடவுளுக்குப் பூசை செய் தல்; வெறியாடுதல்; விருந்திடலாகிய வேள்வி செய்தல்.

**முருகவேள்** – காண்க: முருகக்கடவுள்.

**முருகன்** – கட்டிளமையோன்; குமரன்; முருகக் கடவுள்; வெறியாட்டாளன்; பாலைநிலத் தலைவன்.

**முருகனாடல்** – துடி, குடை என்னும் இருவகைக் கூத்து.

**முருகியம்** – குறிஞ்சிநிலத்தில் முருகனுக்குரிய வெறியாட்டுப் பறை.

**முருகு** – இளமை; முருகன்; மணம்; அழகு; தெய்வத்தன்மை; வெறியாட்டு; வேள்வி; திருவிழா; பூத்தட்டு; தேன்; கள்; எலுமிச்சை; எழுச்சி; காண்க: அகில்; திருமுருகாற்றுப் படை; விறகு; காதணியுள் ஒன்று.

**முருகேசன்** – குமரக்கடவுள்.

**முருகை** – ஒரு கல்வகை.

**முருங்குதல்** – அழிதல்; முரிதல்; அடங்கியெரி தல்.

**முருங்கை** – ஒரு மரவகை.

**முருட்டுகையர்** – அடங்கா ஒழுக்கமுள்ளவர்.

**முருட்டுத்தன்மை** – ஆராயாது செய்யுங் குணம்.

**முருடன்** – மூடன்; முன்பின் யோசனையில்லாத வன்; பிடிவாதமுள்ளவன்; வேடன்; நாகரிக மற்றவன்.

**முருடு** – கரடுமுரடு; பிடிவாதம்; கொடுமை; மரக்கணு; வெட்டிய மரத்தினடி; விறகு; மரக் கட்டை; பறைப்பொது; மத்தளவகை; பத்தல்; பருமை; பெருங்குறடு.

**முருந்தம்** – இளந்தளிர்.

**முருந்தன்** – திறமையுள்ளவன்; விளக்கமானவன்.

**முருந்து** – இறகின் அடிக்குருத்து; மயிலிறகின் அடிக்குருத்து; தென்னை முதலியவற்றின் அடி வெண்குருத்து; கொழுந்து; இளந்தளிர்; வேரின் மேல்தண்டு; குருத்தெலும்பு; எலும்பு; வெண்மை; முத்து; பூவின் தாள்.

**முரைசு** – காண்க: **முரசு.**

**முல்லை** – ஒரு பூக்கொடிவகை; காட்டுமல்லிகைச் செடி; காண்க: **ஊசிமல்லிகை;** காடும் காடு சார்ந்த இடமும்; முல்லைநிலப் பண்வகை; சாதாரிப்பண்; உரிப்பொருளில் ஒன்றாகிய இருத்தல்; கற்பு; சிறப்பியல்பு; வெற்றி; முல்லைப்பாட்டு; **முல்லைக்குழல்.**

**முல்லைக்காரன்** – குத்தகைக்காரன்; பண்ணை வேலை பார்ப்பவன்.

**முல்லைக்குழல்** – முல்லைக்கொடியால் அமைத்த வளையத்தை வாயினிடத்தே செறித்த இசைக் குழல்.

**முல்லைச்சூட்டு** – கற்பிற்கறிகுறியாகத் தலையில் அணியும் முல்லைப்பூவாலாகிய மாலை.

**முல்லையர்** – முல்லைநில மக்கள்.

**முல்லையாழ்த்திறம்** – செவ்வழிப்பண்ணினம்.

**முல்லையாளர்** – காண்க: **முல்லையர்.**

**முலாம்** – பொன்வெள்ளிப் பூச்சு.

**முலை** – கொங்கை, தனம்; பாலூட்டு இனங் களின் உடலில் பாலுண்டாகும் இடம்.

**முலைக்கச்சு** – இரவிக்கை.

**முலைக்கடுப்பு** – பால் அதிகம் தங்குவதால் தனத்தில் உண்டாகும் வலி.

**முலைக்கண், முலைக்காம்பு** – முலையின் நுனிப்பகுதி.

**முலைக்கால்** – முலை; ஆட்டுக்கல்.

**முலைக்கோள்** – முலைப்பால் உண்ணுகை.

**முலைத்தாய்** – ஐவகைத் தாயருள் குழந்தைக்குப் பால்கொடுப்பவள்.

**முலைப்பால்** – தாய்ப்பால்.

**முலைமுகம்** – காண்க: **முலைக்காம்பு;** முலை.

**முலைவிலை** – மணமகன் மணமகளுக்காகக் கொடுக்கும் பரிசப்பணம்.

**முலைவெடிப்பு** – முலைக்காம்பு புண்படுகை.

**முழக்கம்** – பேரொலி, ஆரவாரம்.

**முழக்கு** – ஒலி.

**முழக்குதல்** – ஒலிப்பித்தல்; விளம்பரம் பெறச் செய்தல்.

**முழக்கோல்** – அளவுகோல்; எட்டு முழங்கொண்ட அளவுகோல்.

**முழங்கால்** – முழங்கால் மூட்டுக்கும் கணுக்காலுக் கும் இடையிலுள்ள உறுப்பு; தொடையும் காலும் சேருமிடம்.

**முழங்கால்சிப்பி, முழங்கால்சில்** – காலையும் தொடையையும் சேர்க்கும் எலும்புப்பூட்டின் மேற்பாகம்.

**முழங்கால்வாதம்** – கீல்பிடிப்பு.

**முழங்குதல்** – பெரிதொலித்தல்; பலருமறியக் கூறப்படுதல்.

**முழங்கை** – கையில் மணிக்கட்டுக்கும் தோளுக்கும் இடையிலுள்ள பாகம்; கையின் மேற்பாகமும் அதன் கீழ்ப்பாகமும் கூடுமிடம்.

**முழந்தாள், முழந்து** – காண்க: **முழங்கால்.**

**முழம்** – இருசாண் கொண்டதான முழங்கை நீள அளவு.

**முழம்போடுதல்** – கையால் முழவளவாக அளத் தல்; ஆழம்பார்த்தல்; பொருந்தாப் பொய் பேசுதல்.

**முழல்** – கழற்சிக்கொடி.

**முழவம்** – முரசு; குடமுழா.

**முழவு** – மத்தளம்; காண்க: **முழவம்;** பால் கறத் தற்குரிய பாண்டம்; பாண்டம் முதலியன வார்ப்பதற்குரிய கரு.

**முழவுக்கனி** – பலாப்பழம்.

**முழவுமண்** – கருக்கட்டுங் களிமண்; இனிது ஒலிக்க முழவில் வாய்ப்பூச்சிடும் கரிய சாந்து.

**முழவுமேளம்** – பறைவகை; முழவு முதலிய கருவி களின் கூட்டம்.

**முழா** – முரசு; குடமுழா; தம்பட்டம்.

**முழாசு** – சுடர்.

**முழால்** – தழுவுகை.

**முழாள்** – வயதுவந்த வேலையாள்.

**முழி** – விழி; எலும்புப்பூட்டு.

**முழித்தல்** – விழித்தல்.

**முழிதல்** – உமிழ்தல்.

**முழு** – எல்லாம்; பருத்த.

**முழுக்க** – முழுதும்.

**முழுக்காட்டுதல்** – நீராட்டுவித்தல்.

**முழுக்காடுதல்** – நீராடுதல்.

**முழுக்காப்பு** – ஆலயங்களில் தெய்வத்திருமேனி மீது சந்தனம் அப்பி அலங்கரிக்குஞ் சடங்கு.

**முழுக்காளி** – முத்துக்குளிப்பவன்; ஒருவன் இறந் தால் அவன்பொருட்டு நீராடவேண்டிய நெருங்கிய உறவினன்.

**முழுக்கு** – நீராடல்; மாதவிடாய்.

**முழுக்குதல்** – அமிழ்த்துதல்.

**முழுக்குழவி** – முதுகன்று.

**முழுக** – முழுவதும்.

**முழுகாமலிருத்தல்** – கருவுறல்.

**முழுகிக்கிடத்தல்** – முழுவதும் முடங்கிக்கிடத் தல்; ஈடுபட்டிருத்தல்; நீரிலாழ்தல்.

**முழுகிப்போதல்** – அமிழ்தல்; அடியோடு கெடுதல்; சொத்து மீட்கமுடியாதபடி கடனுள் அமிழ்ந்துபோதல்.
**முழுகுதல்** – நீராடுதல்; அழுந்தியிருத்தல்; அமிழ்ந்துபோதல்; மாதவிடாய் அடைதல்; சொத்து மீட்கமுடியாமல் கடனுள் அமிழ்ந்து போதல்.
**முழுங்குதல்** – விழுங்குதல்.
**முழுச்சோம்பேறி** – அதிகச் சோம்பலுள்ளவன்(ள்).
**முழுசு** – காண்க: **முழுது.**
**முழுசுதல்** – உட்புகுதல்; நெருங்கிப்போதல்; முட்டுதல்.
**முழுத்த** – முதிர்ச்சிபெற்ற; முழுதும்.
**முழுத்தம்** – காண்க: **முகூர்த்தம்.**
**முழுத்துதல்** – காண்க: **முழுத்துவித்தல்.**
**முழுத்தும்** – காண்க: **முழுதும்.**
**முழுத்துவித்தல்** – அமிழ்த்தல்.
**முழுத்தொகை** – மொத்தம்; வட்டியுடன்கூடிய தொகை.
**முழுது** – எல்லாம்; முற்றும்.
**முழுதும்** – மிச்சமின்றி.
**முழுதும்பாவம்** – அபாவம் நான்கனுள் முழுதுமின்மை.
**முழுதொருங்குணர்ந்தோன்** – அருகன்; கடவுள்; சிவபிரான்.
**முழுதோன்** – கடவுள்.
**முழுந்து** – எல்லாம்.
**முழுநாள்** – ஓர் இராசிக்குள்ளேயே முழுதும் அமையும் நட்சத்திரம்.
**முழுநெறி** – இதழொடிக்கப்படாத முழுப் பூ; புறவிதழொடிக்கப்பட்ட முழுப் பூ.
**முழுநோக்கு** – ஒரு கோள் முழுப் பலத்தோடு நோக்குகை.
**முழுப்பங்கு** – நிலத்துரிமையில் உட்பிரிவில்லாத தனிப் பங்கு.
**முழுப்புளுகன்** – பெரும்பொய்யன்.
**முழுப்பொய்** – பெரும்பொய்.
**முழுப்பொருள்** – கடவுள்.
**முழுமக்கள்** – அறிவிலார்.
**முழுமகன்** – அறிவிலான்.
**முழுமணி** – துளையிடாத மணி; குற்றமற்ற இரத்தினம்.
**முழுமதி** – நிறைநிலா.
**முழுமன்** – அறிவிலான்; அரைக்கும்போது சிதையாது விழும் முழுத் தானியம்.
**முழுமனை** – 2400 சதுரஅடிகொண்ட நிலப் பகுதி.
**முழுமுதல்** – கடவுள்; அடிமரம்.
**முழுமுற்றும்** – காண்க: **முழுதும்.**
**முழுமூச்சு** – விடாத் தீர்மானம்; மூச்சுத் திணறுகை; முழு வலுவுடன் செய்யும் முயற்சி.
**முழுமை** – எல்லாம்; பருமை.
**முழுவதும்** – முழுமையும்.
**முழுவல்** – நீர்ப்பறவைவகை; விடாது தொடர்ந்த அன்பு.
**முழுவலயம்** – முழுவட்டம்; வெற்றி.
**முழுவலி** – நிறைந்த வலிமை; முழுவலுவுடையவர்.
**முழுவாசி** – முழுமை; முற்றின நென்மணி; பெரும்பகுதியும்.
**முழுவுதல்** – முத்தமிடுதல்.
**முழுவென்பு** – எலும்புக்கூடு.
**முழை** – மலைக்குகை; துடுப்பு.
**முழைஞ்சு** – மலைக்குகை; துளை.
**முழைத்தல்** – துளைத்தல்; எழுத்தில்லா வோசை; எழுத்தில்லா மொழி.
**முழைதல்** – நுழைதல்.
**முள்** – மரஞ்செடிகளில் கூர்மையுடையதாய்ச் சிறுகுச்சிபோற் காணப்படும் பகுதி; குத்தக்கூடிய கூர்மையுடைய பொருள்; தாற்றுக்கோல்; கடிவாளம்; இறகினடி; முள்வடிவாகச் செய்யப்பட்ட கருவி; துலாக்கோலின் நடுவில் சமனிலையைக் காட்டும் ஊசி; கடிகாரத்தில் காலத்தைக் காட்டும் ஊசி; கூர்மை; நுண்மை; புறாவின் ஆண்குறி.
**முள்காத்தல்** – குந்தியிருத்தல்.
**முள்குதல்** – முயங்குதல்; உட்செல்லுதல்.
**முள்மகிழ்** – ஒரு மரவகை.
**முள்முருங்கை** – ஒரு மரவகை.
**முள்வறையன்** – மரத்தை அரிக்கும் கறையான்.
**முள்வாங்கி** – முள்ளெடுக்குங் கருவி.
**முள்வாயன்** – ஒரு மரவகை.
**முள்வேலி** – முள்ளாலான அடைப்பு; முட்களையுடைய இரும்புக்கம்பியாலான வேலி.
**முள்ளங்கி** – செடிவகை.
**முள்ளடிக்கூலி** – துப்பறிவதற்குரிய கூலி.
**முள்ளந்தண்டு** – முதுகிலுள்ள நடு எலும்பு.
**முள்ளந்தண்டுக்கொடி** – முள்ளந்தண்டிற்குள் அமைந்த நரம்புச்சவ்வு.
**முள்ளம்பன்றி** – முள் அடர்ந்துள்ள பன்றிவகை.
**முள்ளி** – முட்செடிவகை; கத்தரிவகை; மருதோன்றி; காண்க: **தாழை; கள்;** வற்றிய பொருள்.
**முள்ளிப்பூ** – வரிக்கூத்துவகை.
**முள்ளிலவம், முள்ளிலவு** – இலவுவகை.
**முள்ளுப்போடுதல்** – இடையூறு செய்தல்; முள்வேலி போடுதல்.
**முள்ளுமுருங்கை** – காண்க: **முள்முருங்கை.**

**முள்ளெலும்பு** – முள்ளந்தண்டின் எலும்பு; முதுகெலும்பு.

**முளரி** – தாமரை; பதுமம் என்னும் ஒரு பேரெண்; பிரமலோகம்; முட்செடி; காடு; முள்ளுள்ள கள்ளி; விறகு; சமிதை; நெருப்பு; கடைக்கொள்ளி; காய்ச்சல்; நுண்மை.

**முளரிப்பகை** – தாமரைக்குப் பகையாகிய சந்திரன்.

**முளரிப்பாவை** – காண்க: மலர்மகள்.

**முளரியான்** – காண்க: மலர்மிசையோன்.

**முளவு** – முள்ளம்பன்றி; முட்கோல்.

**முளா** – முள்ளம்பன்றி; செடிவகை.

**முளி** – உலர்ச்சி; வாட்டம்; வற்றிய பொருள்; உடல்மூட்டு; மரக்கணு; கணுக்கால்; மரவகை.

**முளித்தல்** – உலர்தல்; வறளுதல்; காய்தல்.

**முளிதல்** – வேதல்; உலர்தல்; கெடுதல்; முற்றுதல்; தோய்தல்.

**முளை** – வித்தினின்று வெளிவருவது; இளமை; மரக்கன்று; காண்க: முளையான்; மூங்கில்; மகன்; புண்முளை; தண்டாயுதம்; மூலமுளை; குறுந்தறி; திரிகையின் கைப்பிடி; பிளப்பில் அடிக்க உதவும் கூருடைய சிறு மரத்துண்டு; கதவு முதலியவற்றின் குடுமி; முனை.

**முளைக்கட்டுதல்** – செம்மண்கொண்டு துவரையைப் பதப்படுத்துதல்.

**முளைக்காற்கோதை** – நெல்முளைகளால் தொடுக்கப்பட்ட மாலை.

**முளைக்கீரை** – ஒரு கீரைவகை.

**முளைக்குச்சி** – நுகத்திற் செருகுங் கோல்.

**முளைக்குடம்** – பாலிகைக்குடம்.

**முளைக்கொட்டு** – கரகமெடுத்தல் முதலிய விழா இறுதியில் மகளிர் பாலிகையை எடுத்துக் கொண்டுபோய் நீரில்விடுஞ் சடங்கு; மகளிர் ஆடுங் கும்மிக்கூத்துவகை.

**முளைக்கோல்** – குத்தி நாட்டிய கோல்.

**முளைகட்டல்** – திருமணம் முதலியவற்றில் ஒன்பதுவகைக் கூலங்களைப் பாலிகைகளில் விதைக்கும் ஒரு நற்சடங்கு.

**முளைகட்டுதல்** – காண்க: முளைக்கட்டுதல்.

**முளைத்தண்ணீர்** – நெல்முளைக்குப் பாய்ச்சிய நீர்; முளை கிளம்பியதும் வயலினின்று வடிக்கும் நீர்.

**முளைத்தல்** – முளை முதலியன தோன்றுதல்; உதித்தல்.

**முளைத்தாலி** – கழுத்தணியிற் கோக்கும் முளை போன்ற பொன்னணிகலன்.

**முளைத்தானியம்** – ஒன்பதுவகைக் கூலம்; நனைத்து முளையுண்டானபின் உலர்த்தி வறுத்த தானியம்.

**முளைத்திங்கள்** – பிறைச்சந்திரன்.

**முளைதெளித்தல்** – மங்கல நிகழ்ச்சிகளின்போது பாலிகைகளில் ஒன்பதுவகைக் கூலம் விதைத்தல்; முளைத்த விதையை வயலில் இடுதல்.

**முளைப்பாலிகை** – மங்கல நிகழ்ச்சிகளில் ஒன்பது வகைத் தானியத்தை முளைக்கவைத்த மட்பாண்டம்.

**முளையடித்தல்** – முளையையடித்து உட்செலுத்துதல்; ஆப்பறைதல்; நாணயத்தில் முத்திரை பதித்தல்.

**முளையரில்** – மூங்கில்தூறு.

**முளையாணி** – கதவுநிற்கும் இரும்பு; தாழ்ப்பாள் விழும் இரும்புக்கூடு.

**முளையான்** – சிறுகுழந்தை.

**முற்கட்டு** – பாட்டின் தொடக்கத்திலுள்ள எடுப்பு.

**முற்கந்தெரித்தல்** – பல்லிசொல்லுதல்; நாவாற் கொட்டுதல்; சம்மதமின்மைக் குறிப்பாகச் சத்தங்காட்டுதல்.

**முற்கம்** – பல்லிசெய்யும் ஒலி; நாவாற் கொட்டும் ஒலி; பச்சைப்பயறு; அவரை, துவரை முதலியன.

**முற்கரம்** – ஒரு படைக்கலவகை; பெரிய தடி; சம்மட்டி.

**முற்கரவன்** – குபேரன்.

**முற்கான்னம்** – பருப்புச்சோறு.

**முற்கு** – எழுத்தாகா ஒலி, நாவாற் கொட்டும் ஒலி.

**முற்குளம்** – பூராடநாள்.

**முற்கூறு** – முற்பகுதி; தொடக்கம்.

**முற்கொழுங்கால்** – பூரட்டாதிநாள்.

**முற்சனி** – மகநாள்.

**முற்சீர்** – காண்க: முதற்சீர்.

**முற்பக்கம்** – முன்பகுதி; சாந்திரமான மாதத்தின் முற்பகுதியான வளர்பிறை.

**முற்பகல்** – பகற்பொழுதின் முற்பகுதி; முன்னாள்; முற்காலம்.

**முற்படர்தல்** – முன்னே செல்லுதல்; மேம்படுதல்.

**முற்படுதல்** – முந்துதல்; முன் அமைதல்; எதிர்ப்படுதல்.

**முற்பணம்** – காண்க: முன்பணம்.

**முற்பவம்** – முற்பிறப்பு; பழைய பாவம்; முற்பிறப்பின் பாவம்; இப் பிறவியில் முன்செய்த பாவம்.

**முற்பனி** – காண்க: முன்பனி.

**முற்பா** – நால்வகைப் பாவினுள் முதலாவதாகிய வெண்பா.

**முற்பாடன்** – முற்பட்டவன்.

**முற்பாடு** – முன்னிடுகை; முன்னிடம்.

**முற்பால்** – காண்க: **முன்பு.**
**முற்பாற்கிழமை** – பழமையான நட்புரிமை.
**முற்பிறப்பு** – முற்பிறவி.
**முற்பூண்** – தாலி.
**முற்பெரியான்** – பிரமன்.
**முற்போக்கு** – முன்னேற்றம்.
**முற்ற** – முழுதும்; மிகவும்.
**முற்றகப்படுதல்** – முற்றுகையில் அகப்படுதல்.
**முற்றத்துறத்தல்** – முழுதும் துறத்தல்.
**முற்றம்** – வீட்டின் முன்பக்கம்; தொட்டிமுற்றம்; பரப்பு; ஊரின் வெளியிடம்.
**முற்றல்** – முதிர்ச்சி; முற்றியது; வைரங்கொள்ளல்; முற்றிய காய்; முடிதல்; திண்மை; மூப்பு; முற்றுதல்; வளைவு; வெறுத்தல்.
**முற்றவிடுதல்** – முதிரவிடுதல்; காண்க: **முற்றத் துறத்தல்.**
**முற்றவும்** – காண்க: **முற்றிலும்.**
**முற்றவை** – அறிவுமுதிர்ந்தோர் கூடிய அவை; பாட்டி.
**முற்றவெளி** – வெளியிடம்.
**முற்றளபெடை** – அடியின் எல்லாச் சீர்க்கண்ணும் அளபெடை வரத் தொடுப்பது.
**முற்றறிவன்** – எல்லாமறிந்தவனான கடவுள்.
**முற்றறிவு** – எல்லாவற்றையும் அறியும் அறிவு.
**முற்றன்** – முழுமையன்.
**முற்றாமை** – முடிவுபெறாமை; இயலாமை.
**முற்றாய்தம்** – தனது மாத்திரையில் குறையாத ஆய்தவெழுத்து.
**முற்றாவுரு** – குறை உரு.
**முற்றிக்கை** – கோட்டை முதலியவற்றை முற்றுகையிடுதல்; நெருக்கடி.
**முற்றித்தல்** – முடித்தல்.
**முற்றிமை** – முதிர்ந்த அறிவு.
**முற்றியலிகரம்** – தனது மாத்திரையில் குன்றாத இகரம்.
**முற்றியலுகரம்** – தனது மாத்திரையிற் குறையாத உகரம்.
**முற்றியார்** – முற்றுகைசெய்தவர்.
**முற்றியைபு** – அடியின் எல்லாச் சீர்க்கண்ணும் இயைபு வரத் தொடுப்பது.
**முற்றில்** – சிறுமுறம்; விசாகநாள்; வீட்டுள் முன்னிடம்; சிப்பிவகை.
**முற்றிலும்** – முழுதும்.
**முற்று** – முழுமை; முழுமையானது; முதிர்ச்சி; முடிவு; வினைமுற்று; காண்க: **முற்றுகை.**
**முற்றுகரம்** – காண்க: **முற்றியலுகரம்.**
**முற்றுகை** – கோட்டை முதலியவற்றை வளைக்கை; சூழுகை; நிறைவேற்றுகை; நெருக்கடி.
**முற்றுச்சொல்** – வினைமுற்றாகிய சொல்.
**முற்றுணர்வு** – காண்க: **முற்றுமுணர்தல்.**
**முற்றுத்தொடை** – அளவடி நான்கு சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது.
**முற்றுதல்** – முதிர்தல்; முழுவளர்ச்சி பெறுதல்; முதுமையாதல்; பெருகுதல்; வைரங்கொள்ளுதல்; தங்குதல்; நிறைவேறுதல்; முடிதல்; இறத்தல்; போலுதல்; செய்துமுடித்தல்; அழித்தல்; சூழ்தல்; வளைத்தல்; அடைதல்; மேற்கொள்ளுதல்; தேர்தல்.
**முற்றுப்பெறுதல்** – முடிவடைதல்.
**முற்றும்** – எல்லாம்; முழுதும்; முடிவு.
**முற்றுமடக்கு** – ஒரு செய்யுளின் முதலடி முழுதும் பின் மூன்றடிகளாக மடங்கிவரும் சொல்லணி வகை.
**முற்றுமுணர்தல்** – எல்லாம் அறியுந் தன்மை.
**முற்றுருவகம்** – உறுப்பும் உறுப்பியும் முற்றும் உருவகஞ் செய்யப்படும் அணி.
**முற்றுவிடுத்தல்** – முற்றுகை நீக்குவித்தல்.
**முற்றுவினை** – வினைமுற்று.
**முற்றூட்டு** – முழு உரிமையாக்கப்பட்ட இறையிலி நிலம்.
**முற்றெதுகை** – எல்லாச் சீர்க்கண்ணும் எதுகை வரத் தொடுப்பது.
**முற்றை** – முன்பு.
**முற்றொப்பு** – முழுதுமொத்திருக்கை.
**முறக்கன்னன்** – முறம்போன்ற காதுடையவனாகிய கணபதி.
**முறண்டு** – காண்க: **முரண்டு.**
**முறம்** – தானியம் முதலியவற்றைப் புடைக்க உதவுங் கருவி; விசாகநாள்.
**முறமுறத்தல்** – தூய்மையாயிருத்தல்; முறுமுறுப்பாதல்.
**முறமுறப்பு** – தூய்மை; முறுமுறுப்பு.
**முறி** – துண்டு; பாதி; பத்திரம்; ஓலையில் எழுதிய பற்றுச்சீட்டு; துணி; முருட்டுத்துணி; தளிர்; கொழுந்திலை; இலை; சேரி; அறை; மூலையிடம்; சூலைநோய்வகை; உயர்ந்த வெண்கலம்.
**முறிக்கட்டி** – உயர்ந்த வெண்கலம்.
**முறிக்கலைச்சுருக்கு** – துறவியின் முக்கோலிற் சுருக்கிக் கட்டிய சிறுதுணி.
**முறிகரை** – இடிந்த கரை.
**முறிகுளம்** – கரை உடைந்த குளம்; வடிகால் நீர் தேங்குங் குளம்; பூராடநாள்.
**முறிச்சல்** – முறிகை; குறைவு.
**முறிச்சி** – அடிமைப்பெண்.
**முறிச்சீட்டு** – உடன்படிக்கைச் சீட்டு; அடிமையோலை.
**முறிசெய்தல்** – அடிமையாக்குதல்.

**முறித்தல்** – ஒடித்தல்; கீறுதல்; நிறுத்திவிடுதல்; தன்மை மாற்றுதல்; நெசவுத்தறியில் உண்டை மறித்தல்.

**முறிதல்** – ஒடிதல்; தோல்வியுறல்; குலைதல்; நிலைகெடுதல்; அழிதல்; தன்மைமாறுதல்; தப்புதல்; துளிர்த்தல்; பயனிலதாதல்; அருள் மாறுதல்.

**முறிப்பத்திரம்** – காண்க: **முறிச்சீட்டு.**

**முறிப்பு** – கடுமை; மாற்றுமருந்து; செருக்கு; காண்க: **முரிப்பு;** நட்புமாறுகை.

**முறியடித்தல்** – தோல்வியுறச்செய்தல்.

**முறியல்** – காண்க: **முறிவு.**

**முறியன்** – ஆணடிமை; பயிரில் காணும் ஒரு நோய்வகை.

**முறியெழுதுதல்** – பத்திரமெழுதுதல்.

**முறிவு** – முறிகை; பிளப்பு; பிணக்கம்; மாற்று மருந்து; எலும்பு ஒடிகை; வைரக் குற்றவகை.

**முறிவுமருந்து** – மாற்றுமருந்து.

**முறுக்கடித்தல்** – மறுத்தல்.

**முறுக்கவிழ்தல்** – அரும்புமலர்தல்; காண்க: **முறுக்காறுதல்.**

**முறுக்காணி** – வீணை முதலியவற்றின் நரம்பினை இறுக்கும் கருவி.

**முறுக்காறுதல்** – கயிற்றின் புரி ஒருநிலைப்பட்டு நேராதல்.

**முறுக்கிக்கொள்ளுதல்** – கயிறு முதலியன திரித்தல்; திருக்குதல்; ஒடித்தல்; வெற்றிலை உண்ணுதல்.

**முறுக்கிவிடுதல்** – சுற்றிவிடுதல்; திருகிவிடுதல்; தூண்டிவிடுதல்; பகையுண்டாக்குதல்.

**முறுக்கு** – திரிக்கை; திருகாணியின் சுற்று; மாறுபாடு; செருக்கு; மிடுக்கு; அரும்புத்தன்மை; மாவினாற் செய்த பலகாரவகை; வலிப்பு; கடுமை; நெறிப்பு; நூலுருண்டை.

**முறுக்குடைத்தல்** – காண்க: **முறுக்குவாங்குதல்.**

**முறுக்குதல்** – காண்க: **முறுக்கிக்கொள்ளுதல்;** சுழற்றுதல்; மாறுபடுதல்; செருக்குதல்; சினத்தல்; கைகால்களைப் பிசைந்து தேய்த்தல்.

**முறுக்குப்பண்ணுதல்** – செருக்குக் காட்டுதல்.

**முறுக்குமீசை** – முறுக்கிவிட்ட மீசை.

**முறுக்குவாங்குதல்** – புரிநெகிழ்த்துதல்; உடற்கட்டுவிடுதல்.

**முறுகல்** – காய்ந்து கரிந்தது.

**முறுகு** – திண்மை.

**முறுகுகொளுந்துதல்** – வலிமைபெறுதல்.

**முறுகுதல்** – திருகுதல்; விரைதல்; முதிர்தல்; மிகுதல்; கடுமையாதல்; காந்திப்போதல்; மீறுதல்; செருக்குதல்.

**முறுகுநெய்** – பதங்கெடக் காய்ந்த நெய்.

**முறுமுறுத்தல்** – காண்க: **முணுமுணுத்தல்.**

**முறுவஞ்சி** – முத்து.

**முறுவல்** – பல்; புன்னகை; மகிழ்ச்சி; செடிவகை; இறந்தொழிந்த நாடகத்தமிழ் நூல்களுள் ஒன்று.

**முறுவலித்தல்** – புன்னகைசெய்தல்.

**முறை** – நீதி; அடைவு; நியமம்; ஆள் மாறிமாறி வேலைசெய்யும் நியமம்; தடவை; பிறப்பு; ஒழுக்கம்; உறவு; உறவுமுறைப் பெயர்; அரசநீதி; பழைமை; ஊழ்; கூட்டு; நூல்; தன்மை; காண்க: **முறையீடு;** கற்பு.

**முறைக்காய்ச்சல்** – ஒன்றுவிட் டொருநாள் வருஞ் சுரம்.

**முறைக்காரன், முறைகாரன்** – முறைப்படி வேலை பார்ப்போன்; காண்க: **முறைமாப்பிள்ளை;** கோயில் முதலியவற்றில் வேலை செய்யும் உரிமையுடையவன்.

**முறைகேடு** – நீதித்தவறு; தகுதியற்ற செயல்; ஒழுங்கின்மை; தீ நடத்தை.

**முறைசிறத்தல்** – ஒன்று ஒன்றனிற் சிறந்துவருதல்.

**முறைசெய்தல்** – அரசநீதி அளித்தல்; ஒறுத்தல்.

**முறைசெய்வோர்** – கட்டளை நிறைவேற்றும் ஏவலாளர்.

**முறைத்தல்** – ஏற விழித்துப் பார்த்தல்; செருக்குறுதல்; நெறித்து நிமிர்தல்.

**முறைத்துப்பார்த்தல்** – ஏற விழித்து நோக்குதல்; செருக்குறுதல்; குதிரை முதலியன வெருண்டு நோக்குதல்.

**முறைநிலைப்பெயர்** – காண்க: **முறைப்பெயர்.**

**முறைநீர்** – நீர்ப்பற்றாக்குறைக் காலத்தில் வயலுக்கு முறைப்படி விடப்படும் பாசனநீர்.

**முறைப்படுதல்** – அடைவுபடுதல்; முறையிடுதல்.

**முறைப்பாடு** – நீதிவேண்டிக் குறைகூறுதல்; அரசிறை.

**முறைப்பு** – விறைப்பு; செருக்கு; விலையேற்றம்.

**முறைப்பெண்** – ஒருவனை மணம்புரியும் உறவு முறையுள்ள அத்தை அல்லது அம்மான் மகள்.

**முறைப்பெயர்** – உறவுமுறை காட்டும் பெயர்ச்சொல்.

**முறைமயக்கி** – காண்க : **குப்பைமேனி.**

**முறைமயக்கு** – ஒழுங்கின்மை.

**முறைமாப்பிள்ளை** – ஒருத்தியை மணம்புரியும் உறவுமுறையுள்ள அத்தை அல்லது அம்மான் மகன்.

**முறைமாறுதல்** – ஒழுங்குதப்பி வருதல்; முறைப்படி தண்ணீர் பாய்ச்சுதல்; சாதி வழக்கத்திற்கு மாறாக மணம்புரிதல்.

**முறைமுதற்கட்டில்** – அரியணை.

**முறைமை** – உரிமை; ஒழுக்கம்; அடைவு; உறவு; அரசநீதி; ஊழ்; தன்மை.

**முறையிடுதல்** – குறை சொல்லிக்கொள்ளுதல்.
**முறையிலார்** – கீழ்மக்கள்.
**முறையின்வைப்பு** – நூலழகு பத்தனுள் எடுத்துக் கொண்ட பொருள்களை வரிசைப்படி வைப்பது.
**முறையீடு** – நீதிவேண்டிக் குறையிரக்கை.
**முறையுளி** – நியமப்படி.
**முறையோர்** – காண்க: முறைசெய்வோர்.
**முறைவன்** – சிவபிரான்; பாகன்.
**முன்** – இடத்தால் முன்; காலத்தால் முன்; உயர்ச்சி; முதல்; பழைமை; ஏழனுருபு; மனக் குறிப்பு; காண்க: முன்றோன்றல்.
**முன்கட்டு** – முன்னாலே கைமடித்துக் கட்டுதல்; வீட்டின் முன்பக்கம்.
**முன்கடை** – வீட்டுவாயில்.
**முன்குடுமி** – தலையில் முன்பக்கமாக வைத்துக் கொள்ளும் குடுமி.
**முன்கை** – முன்னங்கை; கைத்தலம்.
**முன்கோபம்** – உடன்தோன்றுஞ் சினம்.
**முன்சொல்** – பழமொழி.
**முன்பணம்** – அச்சாரத்தொகை.
**முன்பன்** – வலியுடையவன்; தலைவன்; நிதிச் சீட்டை நடத்துபவன்.
**முன்பனி, முன்பனிப்பருவம்** – இரவின் முற்பகுதியில் பனி மிகுதியையுடைய மார்கழி தை மாதங்கள்.
**முன்பால்** – முன்னாக.
**முன்பில்** – இடத்தால் முன்; காலத்தால் முன்; உயர்ச்சி; முதல்; பழைமை; காண்க: முன்றோன்றல்.
**முன்பிற்படி** – முன்போல.
**முன்பிறந்தாள்** – காண்க: முன்னவள்.
**முன்பிறந்தான்** – தமையன்.
**முன்பின்** – முந்தியும் பிந்தியும்; ஏறக்குறைய.
**முன்பு, முன்புத்தை** – முன்னிடம்; பழைமை; மெய் வலி; பெருமை; முன்னால்.
**முன்புள்ளார்** – பழைமைக் குடியினர்.
**முன்புற்றை** – காண்க: முன்பு.
**முன்மடி** – ஆடையின் மடியிற் செய்துகொள்ளும் பை.
**முன்மறம்** – காண்க: முன்கோபம்.
**முன்மாதிரி** – எடுத்துக்காட்டு.
**முன்முறை** – முற்பிறப்பு.
**முன்மொழி** – பழமொழி; தொகைமொழியில் இரண்டாவதாக வரும் மொழி.
**முன்மொழிந்துகோடல்** – உத்தி முப்பத்திரண் டனுள் பின்னர் அடிக்கடி கூறவேண்டியவற்றை முன்னர் எடுத்துக்கூறும் உத்திவகை.
**முன்மொழிநிலையல்** – தொகைமொழியுள் இரண்டாம் மொழிக்கண்ணே பொருள் சிறந்து நிற்கை.
**முன்வளம்** – தோணியின் முன்பக்கம்; முன்னிடம்.
**முன்வாய்** – வாயின் முன்பக்கம்; உதடு; பொலி தூற்றுவதில் காற்றுக்கு எதிர்ப்பக்கம்.
**முன்றாதை** – பாட்டன்.
**முன்றாய்** – பாட்டி.
**முன்றானை** – சீலைத்தலைப்பு; மேற்போர்வை.
**முன்றானைவிரித்தல்** – ஒருவனுக்குப் பெண்டா யிருத்தல்.
**முன்றிணைமுதல்வன்** – குலமுன்னோருள் முதல்வன்.
**முன்றில்** – வீட்டின் முன்னிடம்; வெளியிடம்.
**முன்றுறை** – துறைமுகம்.
**முன்றூதன்** – சென்று அறிவிப்போன்.
**முன்றோன்றல்** – முன்பிறந்தவன்; தமையன்.
**முன்னங்கால்** – முன்பக்கத்துக் கால்; முழங் காலின் முன்பக்கம்; பாதத்தின் மேற்புறம்.
**முன்னங்கை** – கையின் முன்பகுதி.
**முன்னடி** – வீட்டின் முகப்பிடம்; அண்மை; விளிம்பு; பாட்டின் முதலடி; முன்பு; கோயி லின் வாயிலிலுள்ள சிறுதேவதை.
**முன்னடிவிளக்கு** – முன்னால் கொண்டுசெல்லும் கைவிளக்கு.
**முன்னடைப்பன்** – அசைபோடாமற் செய்யும் மாட்டுநோய்வகை.
**முன்னடையாளம்** – முன்னறிகுறி.
**முன்னணி** – தூசிப்படை.
**முன்னணிசு** – தலைமுண்டாசுவகை.
**முன்னணை** – மாட்டுத்தொட்டி; கொண்டி மாட்டுக்கு முன்னங்காலிற் கட்டுந் தளை; அணைக்குமுன் தாற்காலிகமாகப் போடும் அணை; முன்பிறந்த குழந்தை அல்லது கன்று.
**முன்னதாக** – முன்பு.
**முன்னந்தம்** – முன்பார்வை.
**முன்னந்தலை** – நெற்றியிலிருந்து உச்சிவரை யுள்ள தலைப்பாகம்.
**முன்னம்** – முற்காலம்; கருத்து; மனம்; குறிப்பு; இம்மொழி சொல்லுதற்கு உரியாரும் கேட்டற்கு உரியாரும் இன்னோரெனப் படிப் பார் அறியுமாறு செய்யப்படுவதாகிய செய்யு ளுறுப்பு; அரிமா; சீக்கிரிமரம்.
**முன்னர்** – முன்பு; முற்காலத்தில்.
**முன்னல்** – நினைவு; நெஞ்சு.
**முன்னவள்** – தமக்கை; மூதேவி.
**முன்னவன்** – கடவுள்; சிவபிரான்; தமையன்.
**முன்னவிலக்கு** – குறிப்பினால் ஒன்றனை மறுத்து மேன்மை தோன்றச் சொல்லும் விலக்கணி வகை.

**முன்னறிகுறி** – பின்னிகழ்ச்சிக்கு அறிகுறியாக முன்னிகழ்வது.

**முன்னன்** – தமையன்.

**முன்னாடி** – முன்னமே, முன்னதாக.

**முன்னிட்டி** – விலங்கிற்கு உணவிடுந் தொட்டி.

**முன்னிடுதல்** – நேரிடுதல்; முந்துதல்; சித்தமாயிருத்தல்; உதவியாதல்; முன்வைத்தல்; எதிர்ப்படுதல்; முன்போகவிடுதல்; துணைக்கொள்ளுதல்; நோக்கமாகக் கொள்ளுதல்.

**முன்னிருட்டு** – முன்னிரவின் இருள்.

**முன்னிருப்பு** – முன்னிலைமை; மரபுவழி வந்த உடைமை; கையிருப்புத்தொகை; கணக்கில் முன்னேட்டிலிருந்து எடுத்தெழுதும் இருப்புத் தொகை.

**முன்னிரை** – பெருந்தொகை.

**முன்னிலவு** – முன்னிரவின் நிலவு.

**முன்னிலை** – முன்னிற்பவர்; முன்னிற்பது; தன்மை முதலிய மூவிடங்களுள் ஒன்று; காரணம்; சமூகம்; முதன்மையானது; வெளிப்படும் இடம்.

**முன்னிலைக்காட்சி** – இறைவனை அணித்துறக் காணுங் காட்சி.

**முன்னிலைப்படர்க்கை** – முன்னிலைப் பொருளில் வழங்கும் படர்க்கைச்சொல்.

**முன்னிலைப்பரவல்** – கடவுளை முன்னிலைப் படுத்திப் புகழ்தல்.

**முன்னிலைப்பாடு** – பிணைப்பொருள்.

**முன்னிலைப்புறமொழி** – முன்னிலையாரைப் படர்க்கையில் வைத்துப் பேசுதல்.

**முன்னிலைப்பெயர்** – முன்னிலையிடத்து வரும் பெயர்ச்சொல்.

**முன்னிலையசை** – முன்னிலையில் வழங்கும் அசைச்சொல்.

**முன்னிளவல்** – முன்பிறந்தவன்; தமையன்.

**முன்னீடு** – முன்செல்லுகை; முன்னிடுகை; தலைமை; பொறுப்பாளி; பெண்டிர் காதணி; முதல் அடைமானம்.

**முன்னீர்** – நிலத்துக்குமுன் தோன்றியதான கடல்.

**முன்னுக்குவருதல்** – வளர்ச்சியடைதல்.

**முன்னுதல்** – கருதுதல்; எதிர்ப்படுதல்; அடைதல்; அணுகுதல்; பொருந்துதல்; பின்பற்றுதல்; கிளர்தல்; படர்ந்துசெல்லுதல்; முற்படுதல்; நிகழ்தல்.

**முன்னுரை** – முகவுரை; பழமொழி; முன் வரலாறு.

**முன்னுற** – முன்பாக.

**முன்னுறவுணர்தல்** – தலைவிக்கு முன்னுற்ற களவுநிலையைத் தோழி அறிதலைக் கூறும் அகத்துறை.

**முன்னுறுபுணர்ச்சி** – காண்க: **இயற்கைப்புணர்ச்சி.**

**முன்னூல்** – முதனூல்; பழைய நூல்; மறை, வேதம்.

**முன்னூற்கேள்வன்** – கடவுள்.

**முன்னெண்ணம்** – முன்னிகழ்ச்சிபற்றிய நினைவு; முன்னாலோசனை.

**முன்னெற்றி** – நெற்றியின் மேற்பாகம்.

**முன்னே** – முன்பு; எதிரில்.

**முன்னேர்** – உழவில் முதலில் செல்லும் ஏர்.

**முன்னேர்க்குண்டை** – உழவில் முந்திச்செல்லும் ஏர்மாடு.

**முன்னேரம்** – இளம்பகல்; விடியற்பொழுது; அந்திவேளை.

**முன்னேற்றம்,** **முன்னேறுதல்** – வளர்ச்சியடைதல்; முந்துதல்.

**முன்னை** – பழைமை; அக்காள்; அண்ணன்; முன்னைமரம்; காண்க: **பீநாறி.**

**முன்னைக்கணம்** – சென்றகாலம்.

**முன்னையோர்** – முன்னோர்; பெரியோர்.

**முன்னைவினை** – பழவினை.

**முன்னோடி** – முதல் வழிகாட்டி; முன்மாதிரி; உளவுகாரன்.

**முன்னோர்** – குலத்தலைவர்; முற்பட்டோர்; பழங்குடியினர்; அமைச்சர்.

**முன்னோன்** – விநாயகன்; அருகன்; கடவுள்; குலத்தலைவன்; தகப்பன்; தமையன்.

**முனக்கம்** – முணுமுணுக்கை; புலப்பம்.

**முனகர்** – கயவர்.

**முனகு** – குற்றம்.

**முனகுதல்,** **முனங்குதல்** – முணுமுணுத்தல்; புலம்புதல்.

**முனாது** – முன்னிடத்துள்ளது; முன்புள்ளது.

**முனி** – வில்; யானைக்கன்று; பேய்; முனிவன்; புத்தன்; அகத்திமரம்.

**முனித்துறை** – சடங்கு.

**முனிதல்** – வெறுத்தல்; சினங்கொள்ளுதல்.

**முனிந்துரை** – காண்க: **வெந்தயம்.**

**முனிமரபு** – இறைமை; தெய்வத்தன்மை.

**முனிமூத்திரம்** – கல்லுப்பு.

**முனிமை** – முனிவனுக்குரிய தன்மை.

**முனிவர்** – இருடிகள்; பதினெண்கணத்துள் ஒரு தொகுதியினர்.

**முனிவரன்** – முனிவருள் சிறந்தோன்.

**முனிவன்** – ஞானி; கடவுள்.

**முனிவு** – சினம்; வெறுப்பு; களைப்பு; வருத்தம்; முயற்சி.

**முனீந்திரன்** – முனிவருள் சிறந்தவன்; புத்தன்; அருகன்.

**முனை** – நுனி; பகை; போர்; போர்க்களம்; பகைப்புலம்; வெறுப்பு; தவம்; துணிவு; திரள்; முன்; முகம்; தலைமை; கடலுள் செல்லும் நீண்டு கூரிய தரைப்பாகம்.

**முனைகுலைதல்** – ஊக்கங்குறைதல்.

**முனைஞர்** – படைத்தலைவர்.

**முனைத்தல்** – எதிர்த்தல்; செயலில் முற்படுதல்; மூண்டுநிற்றல்; நிறை அதிகமாதல்.

**முனைதல்** – பொருதல்; ஊக்கங்கொள்ளுதல்; மூண்டுநிற்றல்; சினத்தல்; வெறுத்தல்.

**முனைந்தோர்** – காண்க: முனையோர்.

**முனைப்பதி, முனைப்புலம்** – பாசறை.

**முனைமழுங்குதல்** – கூர்மை கெடுதல்; ஊக்கங் குன்றுதல்.

**முனைமுகம்** – போர்க்களத்தின் முன்னிடம்; போர்க்களம்; போரின் தொடக்கம்.

**முனைமேற்செல்லுதல்** – பகைமேற் படையெடுத்தல்.

**முனையிடம்** – போர்க்களம்; பாலைநிலத்தூர்.

**முனையோர்** – பகைவர்.

**முனைவன்** – கடவுள்; முனிவன்; தலைவன்; புத்தன்; அருகன்; பகைவன்.

**முனைவு** – வெறுப்பு; அவாவின்மை; சினம்.

## மூ

**மூ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம் + ஊ); மூப்பு; மூன்று.

**மூக்கடைப்பான்** – காண்க: மூக்கடைப்பு; மாட்டு நோய்வகை.

**மூக்கடைப்பு** – நீர்க்கோள் அடைப்பு; மூக்குநோய் வகை.

**மூக்கணாங்கயிறு** – மாட்டிற்கு மூக்கிலிடுங் கயிறு.

**மூக்கணை** – காண்க: மூக்கணாங்கயிறு; வண்டியின் முகப்பில் வண்டிக்காரன் இருந்தோட்டும் இடம்.

**மூக்கணைமரம்** – வண்டியின் ஏர்க்கால்மரம்.

**மூக்கம்** – சீற்றம்.

**மூக்கர்** – கீழ்மக்கள்.

**மூக்கரிகத்தி** – வெற்றிலையின் காம்பரிகருவி.

**மூக்கறுத்தல்** – மூக்கையறுத்தல்; இழிவுபடுத்தல்; அவமானஞ்செய்தல்.

**மூக்கறுப்பு** – இழிவு; அவமானம்.

**மூக்கறை** – குறைமூக்குள்ளவர்; குறை மூக்குள்ளது.

**மூக்கறைச்சி** – குறைமூக்குள்ளவள்; செடிவகை; அரிதாரம்.

**மூக்கன்** – எடுப்பான மூக்குள்ளவன்; மீன் கொத்தி; கீழ்மகன்; கடுஞ்சினம்.

**மூக்காங்கொழுந்து** – மூக்குமுனை.

**மூக்காந்தண்டு** – மூக்கின் எலும்புள்ள மேற் பாகம்.

**மூக்காலழுதல்** – சிணுங்குதல்.

**மூக்கிரட்டை** – ஒரு கொடிவகை.

**மூக்கில்** – வசம்பு.

**மூக்கில்வேர்த்தல்** – இரையின் மோப்பத்தால் கழுகுக்கு மூக்கில் வேர்வை உண்டாதல்; முன்னடையாளம் தெரிதல்.

**மூக்கிலழகி** – காண்க: நிலக்குமிழ்.

**மூக்கிலி** – காண்க: மூக்கறை; பசலைவகை.

**மூக்கு** – நாசி; பறவையலகு; யானைத்துதிக்கை; பாண்டத்தின் வாயிலுள்ள மூக்குப்போன்ற உறுப்பு; வண்டிப்பாரின் தலைப்பகுதி; முளை தோன்றும் வித்தின் முனை; இலைக்காம்பு; குறுநொய்; முரட்டுப்பேச்சு.

**மூக்குக்கண்ணாடி** – பார்வை நன்கு தெரியுமாறு மூக்கின்மேல் அணியும் கண்ணாடி.

**மூக்குக்குத்துதல்** – சிறுமிகளின் மூக்கில் துளை யிடுதல்.

**மூக்குச்சளி** – மூக்கினின்று வெளிப்படுஞ் சளி.

**மூக்குச்சிந்துதல்** – மூக்குச்சளியை வெளிப் படுத்துதல்.

**மூக்குத்தி** – மகளிர் மூக்கணி; மூக்குவாளி; கொடி வகை.

**மூக்குத்தூள்** – மூக்கால் உறிஞ்சப்படும் புகை யிலைப் பொடி.

**மூக்குப்பிடிக்கவுண்ணுதல்** – நிரம்பவுண்ணுதல்.

**மூக்குப்பீனசம்** – மூக்கிற் சதைவளரும் நோய்; பீனசநோய்.

**மூக்குயர்த்தல்** – பிறந்த குழந்தையின் மூக்கைச் சப்பையாகாம விருப்பதற்காக இழுத்து விடுதல்.

**மூக்குறிஞ்சுதல்** – ஓசையுண்டாக மூக்கினால் மூச்சை உள்வாங்குதல்.

**மூக்கூளை** – காண்க: மூக்குச்சளி.

**மூக்கை** – மொட்டு.

**மூக்கைச்சொறிதல்** – எளிமைகாட்டுதல்.

**மூக்கொலி** – மூக்கின்வழிப் பிறக்கும் ஓசை.

**மூக்கொலியன்** – சங்கு.

**மூகம்** – மோனம்; ஊமை; வறுமை; பைசாச வகை; ஒரு மீன்வகை.

**மூகன்** – ஓர் அசுரன்; ஊமையன்; வறிஞன்.
**மூகாத்தல்** – வாய்பேசாதிருத்தல்.
**மூகி** – கேழ்வரகு.
**மூகை** – ஊமை; ஈரற்குலை; படைக்கூட்டம்; சங்கஞ்செடி.
**மூகைமை** – ஊமையாயிருக்குந் தன்மை.
**மூங்கர்** – ஊமையர்.
**மூங்கா** – கீரிப்பிள்ளை; ஆந்தை.
**மூங்கி** – பாசிப்பயறு.
**மூங்கில்** – புறக்காழுள்ள பெரும்புல்வகை; புனர்பூசநாள்.
**மூங்கிலரிசி** – மூங்கிலினின்று உண்டாகும் விதை.
**மூங்கிலாடை** – மூங்கிலின் உட்புறத்தில் மெல்லிதாகவுள்ள தாள்.
**மூங்கிலுப்பு** – நோய்கொண்ட மூங்கிற் கணுக்களினின்று வடியும் பிசின்.
**மூங்கிற்குழல், மூங்கிற்குழாய்** – புல்லாங்குழல்; பருகும் மது முதலியவற்றை வைக்க உதவும் மூங்கிற் பாண்டம்.
**மூங்கிற்கோல்** – காண்க: மூங்கிற்றண்டு.
**மூங்கிற்பண்ணை** – அடர்த்தியான மூங்கிற்காடு.
**மூங்கிற்பத்தை** – நீளவாக்கிற் பிளந்த மூங்கில் துண்டு, பிளாச்சு.
**மூங்கிற்புதர்** – நெருங்கி வளர்ந்த மூங்கில் தொகுதி.
**மூங்கிற்றண்டு** – மூங்கிற்கழி.
**மூங்கு** – காண்க: மூங்கி.
**மூங்கை** – ஊமை.
**மூங்கையான்** – ஊமையன்.
**மூச்சடக்குதல்** – மூச்சை உள்ளடக்குதல்.
**மூச்சடைத்தல்** – மூச்சுத் திணறச்செய்தல்.
**மூச்சடைப்பு** – மூச்சுவாங்குகை; முட்டுமூச்சு வாங்குகை.
**மூச்சு** – உயிர்ப்பு; ஆண்மை; பலம்; முயற்சி.
**மூச்சுக்காட்டுதல்** – ஆண்மை காட்டுதல்; ஆள் அரவஞ்செய்தல்.
**மூச்சுப்பறிதல்** – சுவாசம் வெளியே செல்லல்; பலவீனப்படுகை.
**மூச்சுப்பிடித்தல்** – மூச்சை உள்ளடக்குதல்; மூச்சுத் திணறுதல்; இடுப்பில் சுளுக்கிக்கொள்ளுதல்; கடுமையாக முயலுதல்.
**மூச்சுப்பிடிப்பு** – ஒரு மூச்சுநோய்வகை; மூச்சை உள்ளே அடக்குகை; இடுப்பிலுண்டாகுஞ் சுளுக்கு.
**மூச்சுப்பேச்சு** – பேசுகை; உயிரிருக்கும் குறி.
**மூச்சுவாங்குதல்** – காண்க: மூச்சடக்குதல்; பெருமூச்சு விடுதல்; வெடிப்புக் காணுதல்; இளைப்பினால் பெருமூச்சு வருகை; இறுதிக்காலத்தில் நெடுமூச்சு விடுகை.
**மூச்சுவிடாமல்** – வாய்திறவாமல்; இடைவிடாமல்.
**மூச்சுவிடுதல்** – உட்கொண்ட காற்றை வெளியிற் போக்குதல்; வெடிப்புக் காணுதல்.
**மூச்செறிதல்** – காண்க: மூச்சுவிடுதல்.
**மூச்சை** – காண்க: மூர்ச்சை.
**மூச்சொடுங்குதல்** – மூச்சடங்கல்; சாதல்.
**மூசல்** – மொய்த்தல்; சாதல்; கெடுதல்.
**மூசாந்தம்** – வெண்டாமரை.
**மூசாப்பு** – மந்தாரம்; மூச்சுமுட்டல்.
**மூசு** – மொய்த்தல்; இளங்காய்.
**மூசுண்டை** – தின்பண்டம்; கேடுற்ற பணிகாரம்.
**மூசுதல்** – காண்க: மூசல்; மோப்பம்பிடித்தல்.
**மூசை** – மண்ணாலான குகை, உலோகங்களை உருக்கி வார்ப்பதற்கான மட்கரு.
**மூஞ்சி** – முகம்.
**மூஞ்சிசுண்டுதல்** – முகங்கருகல்; முகத்தைச் சுளித்தல்.
**மூஞ்சு(சூ)று** – எலிவகை; மாட்டுநோய்வகை.
**மூஞ்சை** – கோணிய முகம்; நீண்ட முகம்; நீண்ட மூக்கு.
**மூஞ்சையன்** – முகங்கோணியவன்.
**மூட்குதல்** – அகப்பையால் எடுத்தல்; சிக்கலை விடுவித்தல்.
**மூட்சி** – சினமிகுதி.
**மூட்டங்கட்டுதல்** – உலோகமுருக்கக் குழியுண்டாக்குதல்; மேகம் ஒருங்குசேர்தல்; மண் முதலியவற்றால் மூடுதல்; ஆயத்தப்படுத்துதல்; தொடங்குதல்.
**மூட்டங்கலைத்தல்** – மூடியுள்ள மூட்டத்தை நீக்குதல்.
**மூட்டம்** – மூடியிருப்பது; மேகமூட்டம்; உலைமுகம்; மூடுதழல்; மூடிய தானியக்குவியல்; விறகு; சொக்கப்பனை; ஆயத்தம்; கம்மக்கருவிவகை; மகளிர்க்கு மகப்பேற்றின் பின்னும் அடுத்துவரும் மாதவிடாய்க்கு முன்னுமுள்ள காலம்.
**மூட்டு** – உடல் முதலியவற்றின் பொருத்து; சந்திப்பு; குதிரைக் கடிவாளம்; கோள்; கட்டு; கட்டப்பட்டது; தையல்; மனவெழுச்சி; மூடுகின்ற பொருள்; மூடியிருப்பது.
**மூட்டுதல்** – மூளச்செய்தல்; செலுத்துதல்; இசைத்தல்; தைத்தல்; தூண்டிவிடுதல்; அதிகப்படுத்துதல்.
**மூட்டுநழுவல்** – உடற்பொருத்துப் பிசகல்.
**மூட்டுப்பூச்சி** – பூச்சிவகை; கம்பளிப்பூச்சி.
**மூட்டுவாய்** – பொருத்து.
**மூட்டை** – உள்ளே பண்டம் வைத்துக் கட்டப்பட்ட கட்டு; பொதி; பெரும்பொய்; கம்பளிப் பூச்சி; ஓர் அளவு.

**மூட்டைதூக்கி** – பொருள்களைத் தூக்கிச் செல்லும் கூலியாள்.

**மூடகருப்பம்** – கருப்பத்திலிறந்த பிள்ளை; பேறு காலத்திற் குழந்தை எளிதில் வெளியேறாமற் செய்யும் நோய்வகை.

**மூடத்தனம்,**
**மூடதை** } – அறிவின்மை.

**மூடபத்தி** – காரணமறியாமற் செய்யும் பத்தி.

**மூடம்** – மந்தாரம்; குளிர்; எட்டு மரக்கால் கொண்ட முகத்தலளவை; மறைந்த இடம்; அறிவின்மை; மயக்கம்; ஐயம்.

**மூடமதி** – அறிவிலி.

**மூடர்** – அறிவில்லார்.

**மூடல்** – மூடுதல்; மூடி.

**மூடன்** – அறிவில்லான்; கீழ்மகன்.

**மூடனம்** – மிளகு; அறிவின்மை.

**மூடாத்துமா** – மதிகேடன்.

**மூடி** – மூடுகருவி; தேங்காய்மூடி; கொத்துமல்லிப் பூண்டு; மூடப்பெண்.

**மூடிகம்** – எலிவகை.

**மூடிவைத்தல்** – பாதுகாப்பாக வைத்தல்; இரகசியமாக மறைத்துவைத்தல்.

**மூடு** – வேர்; காரணம்; சிறுதூறு; பெண்ணாடு; பூச்சிவகை; அறிவிலான்; நிலை.

**மூடுகுப்பாயம்** – மேற்போர்வை; நீண்ட அங்கி.

**மூடுசீலை** – போர்த்தும் ஆடை.

**மூடுதல்** – போர்த்தல்; மறைத்தல்; சுற்றிக் கொள்ளுதல்; நோய் முதலியன மிகுதல்.

**மூடுதிரை** – காண்க: **மூடுசீலை.**

**மூடுபனி** – அடர்ந்து பெய்யும் பனி.

**மூடுபாறை** – தூம்பின்மேல் மூடுங் கல்.

**மூடுமந்திரம்** – மிகக் கமுக்கம், பரம இரகசியம்.

**மூடுவழி** – கோட்டை முதலியவற்றில் கட்டடத்தால் மூடிக் காக்கப்பட்ட வழி, சுருங்கை.

**மூடை** – பண்டமூட்டை; தானியக்கோட்டை; தானியக்குதிர்.

**மூண்டன்** – மிளகு.

**மூத்ததிகாரம்** – தலைமையதிகாரம்.

**மூத்தநாயனார்** – சிவபிரானின் மூத்த புதல்வரான விநாயகர்.

**மூத்தப்பன்** – பாட்டன்.

**மூத்தபிள்ளையார்** – காண்க: **மூத்தநாயனார்.**

**மூத்தம்** – காண்க: **முகூர்த்தம்.**

**மூத்தல்** – முதுமையுறுதல்; கேடுறுதல்; முடிதல்.

**மூத்தவன்** – ஆண்டில் முதிர்ந்தவன்; தமையன்; மேலோன்.

**மூத்தார்** – கணவனுடைய தமையன்; முதியவர்.

**மூத்தாள்** – முதியவள்; முன்பிறந்தாள்; மூதேவி; முதல் மனைவி.

**மூத்திரக்கிருச்சிரம்** – வருத்தத்துடன் சிறிது சிறிதாக மூத்திரம் போகச்செய்யும் நோய்வகை.

**மூத்திரக்குண்டிக்காய்** – இரத்தத்திலுள்ள கெட்டநீரைப் பிரித்து மூத்திரமாக்கும் உடலுறுப்பு.

**மூத்திரக்குழல்** – மூத்திரக்குண்டிக்காயுள் சிறுநீர் சுரக்குங் குழல்; மூத்திரக் குண்டிக்காயினின்றும் மூத்திரப்பைக்குச் செல்லும் சிறுநீர்க் குழல்.

**மூத்திரசங்கம்** – நீரிழிவுநோய்.

**மூத்திரசுக்கிலம்** – சிறுநீருடன் விந்து இறங்கும் வெட்டைநோய்.

**மூத்திரப்பை** – உடலில் சிறுநீர் தங்கும் உறுப்பு.

**மூத்திரபுடம்** – அடிவயிறு.

**மூத்திரபுரீடங்கள்** – சலமலங்கள்.

**மூத்திரம்** – சிறுநீர்.

**மூத்திரம்பெய்தல்** – சிறுநீரை வெளிவிடுதல்; புறக்கணித்தல்.

**மூத்திராசயம்** – காண்க: **மூத்திரப்பை.**

**மூத்தோர்** – முதியவர்; பண்டிதர்; அமைச்சர்.

**மூத்தோன்** – முதியவன்; தமையன்; விநாயகன்; நாற்பத்தெட்டு வயதுக்குமேல் அறுபத்து நான்கு வயதுக்குட்பட்ட மனிதன்.

**மூதண்டம்** – பிரமாண்டம்; பிரம அண்டத்தின் முகடு; அறுகம்புல்.

**மூதணங்கு** – கொற்றவை.

**மூதம்** – இந்திரியம்.

**மூதரி(லி)த்தல்** – மெய்ப்பித்தல்.

**மூதறிதல்** – அறிவுமுதிர்தல்; பழைமையான செய்திகளை அறிதல்.

**மூதறிவாளன்** – அறிவுமுதிர்ந்தோன்.

**மூதறிவு** – பேரறிவு.

**மூதா** – கிழட்டுப்பசு; காண்க: **இந்திரகோபம்.**

**மூதாக்கள்** – முன்னோர்.

**மூதாட்டி** – முதியவள்.

**மூதாதை** – பாட்டன்.

**மூதாய்** – பாட்டி; காண்க: **இந்திரகோபம்.**

**மூதாளர்** – முதியவர்.

**மூதானந்தம்** – பேரின்பம்; தன் கணவன் இறந்தபோதே மனைவி உயிர்நீங்கிய பேரன்பைக் கண்டோர் கூறும் புறத்துறை.

**மூதிக்கம்** – காண்க: **சிவனார்வேம்பு.**

**மூதிரி** – எருமை.

**மூதிரை** – திருவாதிரைநாள்; சிவபிரான்.

**மூதில்** – பழங்குடி; பழைய மறக்குடி.

**மூதிற்பெண்டிர்** – மறக்குடி மகளிர்.

**மூது** – முதுமை; ஈகை.

**மூதுணர்தல்** – நன்றாகவுணர்தல்.

**மூதுணர்ந்தோர்** – அறிவுமுதிர்ந்தோர்.

**மூதுணர்வு** – முதிர்ந்த அறிவு.
**மூதுரை** – பழமொழி; ஒரு நீதிநூல்; மறை, வேதம்.
**மூதுவர்** – முன்னோர்.
**மூதூர்** – பழைய ஊர்.
**மூதேவி** – திருமகளுக்கு முன்பிறந்தாள்; அழகில்லாள்; தீப்பேற்றின் அதிதேவதை.
**மூதேவிகொடி** – மூதேவியின் கொடியாகிய காகம்.
**மூதேவிபடை** – மூதேவியின் ஆயுதமான துடைப்பம்.
**மூதேவியூர்தி** – மூதேவி ஏறும் கழுதை.
**மூதை** – வெட்டித்திருத்திய காடு; காண்க: மூதணங்கு; முந்தை; சங்கஞ்செடி.
**மூப்பர்** – பெரியோர்; கிறித்தவமதத் தலைவருள் ஒருவகையார்.
**மூப்பன்** – ஒருசார் சாதியாரின் தலைமைக்காரன்; சில சாதியாரின் பட்டப்பெயர்; முதியோன்.
**மூப்பி** – முதுமகள்; தலைவி.
**மூப்பு** – முதுமை; தலைமை; பிடிவாதம்.
**மூய்** – மூடி; பூப்பெட்டி.
**மூய்தல்** – மூடுதல்; நிரப்புதல்; நெருங்கிச் சூழ்தல்; முடிதல்; துப்புதல்.
**மூர்க்ககுணம், மூர்க்கத்தனம்** – மூடத்தன்மை; கடுஞ்சினம்; பிடிவாதம்.
**மூர்க்கம்** – காண்க: மூர்க்ககுணம்; நாக்குப்பூச்சி; கொண்ட கருத்துவிடாமை; முரட்டுப்பலம்; நாகப்பாம்பு.
**மூர்க்கவெறி** – அடங்காத கடுஞ்சினம்.
**மூர்க்கன்** – மூடன்; கடுஞ்சினமுள்ளவன்; பிடிவாத குணமுள்ளவன்; அகங்காரன்; நாகப்பாம்பு; மரவகை.
**மூர்க்கு** – பிடிவாதம்; செருக்கு.
**மூர்க்கை** – பிடிவாத குணமுள்ளவள்; அகங்காரி; மூடத்தன்மை; கடுஞ்சினம்; பிடிவாதம்.
**மூர்ச்சனம்** – நினைவுமயங்குதல்; நெட்டுயிர்ப்பு.
**மூர்ச்சனை** – காண்க: மூர்ச்சனம்; கமகம் பத்தனுள் ஒன்று.
**மூர்ச்சித்தல்** – நினைவுமயங்கிக் கிடத்தல்; பெருமூச்சு விடுதல்.
**மூர்ச்சிதம்** – அறிவின்மை; உயரம்; நினைவு மயக்கம்; வாட்டம்.
**மூர்ச்சை** – நினைவுமயங்கிக் கிடத்தல்; வாட்டம்; கமகம் பத்தனுள் ஒன்று; கூர்மை.
**மூர்த்தம்** – வடிவுடைய பொருள்; உடம்பு; உறுப்பு; தலை; காண்க: முகூர்த்தம்.
**மூர்த்தன்னியம்** – தலைமை; ஊக்கமிகுதி.
**மூர்த்தன்னியன்** – தலைமையானவன்; கிளர்ச்சியுடையவன்; ஊக்க மிகுதியுடையோன்.
**மூர்த்தி** – உடல்; உருவம்; கடவுள்; அருகன்; புத்தன்; சிவன்; சத்தி; தவவேடமுடையவன்; பெரியோர்; தலைவன்; பொருள்; மாதிரி.
**மூர்த்திகரம்** – தெய்வத்தன்மை; தெய்வச்செயல்.
**மூர்த்திகன்** – குமரன்; வயிரவன்.
**மூர்த்திமான்** – திருமேனி.
**மூர்த்தீகரித்தல்** – தெய்வம் முதலியன வடிவு கொள்ளுதல்.
**மூரல்** – பல்; புன்சிரிப்பு; சோறு; பால்.
**மூரலித்தல்** – புன்முறுவல் செய்தல்.
**மூரன்முறுவல்** – புன்சிரிப்பு.
**மூரி** – வலிமை; பெருமை; பழைமை; கிழம்; எருமை; எருது; இடபராசி; திமில்; துண்டம்; காண்க: முகரியோலை; முரண்; சோம்பல் முரிப்பு; சோம்பல்; நெரிவு.
**மூரிநிமிர்தல், மூரிபோதல்** – சோம்பல்முரித்தல்.
**மூருவம்** – சிறுசெடிவகை.
**மூலக்கடுப்பு** – நோய்வகை.
**மூலக்கிரந்தி** – நல்ல இரத்தம் கெடுதலால் வரும் நோய்வகை; மூலநோய்வகை.
**மூலக்கூறு** – பொருள்களின் அடிப்படையான தத்துவம்.
**மூலகந்தம்** – காண்க: இருவேரி(லி).
**மூலகபல்லவம்** – முருங்கைமரம்.
**மூலகம்** – கிழங்கு; முள்ளங்கிக்கிழங்கு; காண்க: ஆடுதின்னாப்பாளை.
**மூலகவொளி** – மூலாதாரத்திலுள்ள சூடு; வயிற்றுத் தீ.
**மூலகாரணம்** – முதற்காரணம்.
**மூலச்சூடு** – நோய்வகை; காண்க: கணைச்சூடு; மூலநோயால் உண்டாகும் எரிச்சல்.
**மூலச்சோதி** – கடவுள்.
**மூலட்டம், மூலட்டானம்** – திருவாரூரிலுள்ள சிவ ஆலயம்.
**மூலட்டானன்** – திருவாரூரில் கோயில்கொண்டுள்ள சிவபிரான்; காண்க: மூலவர்.
**மூலத்தானம்** – ஆலயங்களின் கருவறை; அடிப்படை; காண்க: மூலவர்; அரசிருக்கை.
**மூலதனம்** – முதற்பொருள்; முன்னோர் சொத்து; ரொக்கப்பணம்.
**மூலநாசம்** – அடியோடு அழிகை.
**மூலநாடி** – காண்க: சுழுமுனை.
**மூலநாள்** – பத்தொன்பதாம் நட்சத்திரம்.
**மூலநோய்** – மலவாயிற் காணும் நோய்வகை; காண்க: ஆணவமலம்.
**மூலப்பகுதி** – முக்குணமுந் தோன்றுதற்கிடமாகிய பிரகிருதி தத்துவம்; பிரகிருதி.
**மூலப்படை** – அறுவகைப் படையுள் நெடுங்காலமாகத் தொடர்ந்துவரும் படை.

**மூலப்பிரகிருதி** – காண்க: **மூலப்பகுதி.**

**மூலபண்டாரம்** – சேமவைப்பு.

**மூலபதம்** – சொல்லின் பகுதி.

**மூலபலம்** – காண்க: **மூலப்படை.**

**மூலபவுந்திரம்** – மூலத்தில் உண்டாகும் புண்கட்டி.

**மூலபாடம்** – உரையில்லாத மூலம்.

**மூலம்** – வேர்; அடி; கிழங்கு; ஆதி; வாயில்; காரணம்; முதன்மை; காண்க: **மூலவர்; மூலப்பகுதி; மூலதனம்;** மரம்; மூலநாள்; மூலபாடம்; மூலநோய்; அண்மை; சொந்தம்; பாதரசம்; சித்திரமூலம்; பாடாணவகை; ஆதாரபத்திரம்.

**மூலமந்திரம்** – தலைமை மந்திரம்; பிரணவம்.

**மூலமலம்** – காண்க: **ஆணவமலம்.**

**மூலர்முறை** – திருமூலர் அருளிய திருமந்திரம்.

**மூலவர்** – கோயிலின் கருவறையிலுள்ள மூலத்தான மூர்த்தி.

**மூலவல்லி** – வெற்றிலை.

**மூலவாசல்** – கோயிலின் கருவறை வாயில்; காண்க: **பிரமரந்திரம்.**

**மூலவாயு** – குடலில் வாதத்தினால் உண்டாகும் நோய்.

**மூலவிக்கிரகம்** – காண்க: **மூலவர்.**

**மூலவியாதி** – காண்க: **மூலநோய்.**

**மூலவிருள்** – ஆன்மாவை அநாதியே பற்றியிருக்கும் மலம்; காண்க: **ஆணவமலம்.**

**மூலவெழுத்து** – பிற எழுத்துகளுக்குக் காரணமான அகரம்; 'ஓம்' என்னும் பிரணவம்.

**மூலவேர்** – அடிவேர்.

**மூலவோலை** – மூலசாசனம்.

**மூலாக்கினி** – உயிர்த்தீயுள் ஒன்றான வயிற்றுத்தீ; மூலாதாரத்திலுள்ள சூடு.

**மூலாதாரம்** – அடிப்படை; பிறப்புறுப்புக்கும் மலவாய்க்கும் இடையில் உள்ள நான்கிலைத் தாமரை போலிருக்கும் சக்கரம்.

**மூலி** – செடிகொடி; மூலிகை; காரணபூதன்.

**மூலிகை** – பச்சிலை; மருந்தாகப் பயன்படுத்தும் செடிகொடிகளின் வேர்.

**மூலியம்** – விலைக்குக் கொண்ட பொருள்; விலை; சம்பளம்; நிமித்தம்.

**மூலை** – கோணம்; வீடு; மூலைத்திசை.

**மூலைக்கச்சம்** – பின் கச்சத்திலிருந்து ஆடை நுனி தொங்கும்படி கட்டும் உடைவகை.

**மூலைக்கால்** – காண்க: **முகூர்த்தக்கால்.**

**மூலைக்குமூலைவரிசை** – ஒன்றுவிட்டு ஒருகல் எதிர்முகமாகச் சாயும்படி அமைக்கும் கட்டட முறை.

**மூலைக்கை** – வீட்டின் மூலைமுகட்டுச் சட்டம்.

**மூலைமட்டம்** – நேர்கோணம்; மூலைமட்டம் பார்க்குங் கருவி.

**மூலைமுடக்கு** – காண்க: **மூலைமுடுக்கு;** வளைந்துசெல்லும் வழி.

**மூலைமுடுக்கு** – சந்துபொந்து.

**மூலையடிவழி** – குறுக்குவழி.

**மூலையோட்டம்** – நேர்கோணமின்றி மூலையாய் அமைகை.

**மூலைவாட்டம்** – மூலை கோணிய நிலை.

**மூலோங்காரம்** – பிரணவம்.

**மூவசைச்சீர்** – மூன்று அசைகள்கொண்டு வரும் உரிச்சீர்.

**மூவட்சி** – மூன்று கண்களுடைய தேங்காய்.

**மூவடிவு** – ஆண், பெண், அலி என்னும் மூவகை உருவம்.

**மூவர்** – பிரமன், திருமால், சிவன் ஆகிய மும்மூர்த்திகள்; அப்பர், சுந்தரர், திருஞானசம்பந்தர் ஆகிய மூன்று நாயன்மார்கள்; காண்க: **மூவேந்தர்.**

**மூவரசர்** – காண்க: **மூவேந்தர்.**

**மூவாசை** – மண், பெண், பொன் என்னும் மூன்றன்பாலுள்ள பற்று; சவத்தின்மேல் மூடுஞ் சீலை.

**மூவாமருந்து** – அமிழ்தம்.

**மூவாமலை** – மேருமலை.

**மூவாமுதல்** – கடவுள்.

**மூவார்** – மூப்பில்லாதவரான தேவர்.

**மூவிடம்** – தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்றிடங்கள்.

**மூவிலை** – திரிசூலம்; வில்வம்; வயற் பயறுவகை.

**மூவிலைச்சூலம், மூவிலைவேல்** } – திரிசூலம்.

**மூவிலைவேலோன்** – திரிசூலத்தைத் தாங்கியவனாகிய வயிரவன்.

**மூவினம்** – பசு, எருமை, ஆடு ஆகிய மூவகைப்பட்ட கால்நடை; வல்லினம், மெல்லினம், இடையினம் என்னும் மூவகை மெய்யெழுத்து.

**மூவுதல்** – விலகுதல்.

**மூவுலகம்** – விண்ணுலகம், மண்ணுலகம், பாதாளவுலகம் ஆகிய மூன்று உலகங்கள்.

**மூவுலகளந்தோன்** – திருமால்.

**மூவுலகாளி** – இந்திரன்; கடவுள்.

**மூவுலகு** – காண்க: **மூவுலகம்.**

**மூவெயில்** – காண்க: **திரிபுரம்.**

**மூவேந்தர்** – சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூன்று தமிழரசர்.

**மூழ்கடித்தல்** – மூழ்கச்செய்தல்.

**மூழ்குதல்** – அமிழ்தல்; மறைதல்; புகுதல்; அழுந்துதல்; தங்குதல்.

**மூழ்த்தம்** – காண்க: **முகூர்த்தம்.**

**மூழ்த்தல்** – மூழ்கச்செய்தல்; முதிர்தல்; மொய்த்தல்; மூடுதல்; வளைத்தல்.

**மூழ்தல்** – பற்றிக்கொள்ளுதல்.

**மூழக்கு** – காண்க: **மூழாக்கு.**

**மூழல்** – மூடி; கழற்சிக்காய்.

**மூழாக்கு** – மூன்று உழக்கு.

**மூழி** – அகப்பை; மத்து; கமண்டலம்; நீர்நிலை; சோறு; வேள்விப்பாண்டம்.

**மூழிவாய்** – பூக்கூடை.

**மூழை** – அகப்பை; சோறு; மத்து; குழிந்த இடம்.

**மூள்தல்** – காண்க: **மூளுதல்.**

**மூளி** – உறுப்புக்குறை; உறுப்பறை; தலைப்பகுதி பழுதுபட்டிருப்பது; குறைவுற்றது; வழக்கமாயுள்ள அணிகலன் இல்லாதவர்; வழக்கமாயுள்ள அணிகலன் இல்லாதது; அழகற்றவள்.

**மூளியுதடு** – பிளந்த உதடு.

**மூளுதல்** – நெருப்பு முதலியன பற்றுதல்; சினங்கிளம்புதல்; ஊக்கத்துடன் முயலுதல்.

**மூளை** – மண்டையின் உள்ளீடு; மச்சை; அறிவு.

**மூளைகெடுதல்** – அறிவுகுறைதல்.

**மூளையதிர்ச்சி** – தலையில் அடிபடுவதால் உண்டாகும் மூளைக்கலக்கம்.

**மூளையில்லாதவன்** – மூடன்.

**மூற்றை** – மும்மடங்கு.

**மூறுவா** – ஒரு செடிவகை.

**மூன்றாங்கால்** – திருமணத்துக்கு மூன்று நாள் முன்பு நடும் பந்தற்கால்; மூன்றாந் தலைமுறை உறவு; மூன்றாம் ஆண்குழந்தை.

**மூன்றாம்பாட்டன்** – காண்க: **முப்பாட்டன்.**

**மூன்று** – இரண்டுக்குமேல் அடுத்துள்ள எண்.

**மூன்றுதண்டர்** – முக்கோல் பகவர்.

**மூன்றுநூல்** – பூணூல்.

**மூனாயம்** – குற்றம்.

## மெ

**மெ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம் + எ).

**மெச்சு** – உவப்பு.

**மெச்சுதல்** – புகழ்தல்; மதித்தல்; வியத்தல்.

**மெட்டி** – காண்க: **மிஞ்சி.**

**மெட்டு** – மேடு; வெட்டும் பள்ளத்தின் நடுவில் வெட்டளவின் உயரத்தைக் காட்ட விடும் மண் திட்டு; பிடியில் வைக்கும் மிதப்புக்கட்டை; ஊர்சூழ் காடு; காண்க: **மெட்டி**; ஆயத்துறை; தடை; சிறப்பு; நாகரிகப்பாங்கு; பாட்டின் இராகப்போக்கு.

**மெட்டுக்காரன்** – சுங்கம் வசூலிப்பவன்.

**மெட்டுதல்** – காலால் தாக்குதல்.

**மெத்த** – மிகவும்.

**மெத்தனவு** – கவலையின்மை; காண்க: **மெத்தெனவு.**

**மெத்து** – மென்மை.

**மெத்துதல்** – மிகுதல்; நிரம்புதல்; நிரப்புதல்; அப்புதல்.

**மெத்தெனல்** – மென்மைக்குறிப்பு; அமைதிக் குறிப்பு; காலத்தாழ்ச்சிக்குறிப்பு; மந்தக் குறிப்பு.

**மெத்தெனவு** – சாந்தகுணம்; வளைந்து கொடுக்குந் தன்மை.

**மெத்தை** – படுக்கை; பஞ்சணை; துயிலிடம்; சட்டை; வேட்டையாடும்போது தோளிலிடும் கருவி; மாடிவீடு; ஒரு பூண்டுவகை.

**மெத்தைப்பாய்** – ஒரு பாய்வகை; மெத்தைமேல் விரிக்கும் பாய்.

**மெத்தைவீடு** – மாடிவீடு; மேனிலைமாடம்; மொட்டைமாடிவீடு.

**மெது** – மிருது; அமைதி; தாமதம்; மந்தம்; கூர்மழுக்கம்.

**மெதுக்கு** – கிச்சிலிவகையான பம்பளிமாசு; சோறு.

**மெதுமெதுத்தல், மெதுமெதுப்பு** – மென்மையாயிருத்தல்.

**மெந்திரி** – பரண்கட்டு.

**மெய்** – உண்மை; உடல்; உயிர்; உணர்ச்சி; மார்பு; ஒற்றெழுத்து.

**மெய்க்கலவை** – உடம்பில் பூசுங் கலவைச் சாந்து.

**மெய்க்கவசம்** – காண்க: **மெய்யுறை.**

**மெய்க்காட்டு** – படையைப் பார்வையிடுகை; நேரில்வந்து தோற்றுகை; காண்க: **மெய்க் காட்டுவேலை.**

**மெய்க்காட்டுதல்** – நேரில்வந்து தோற்றுதல்.

**மெய்க்காட்டுவேலை** – குத்தகைக்கு விடாமல் நேரில் நடத்தும் வேலை.

**மெய்க்காவல்** – காண்க: **மெய்காவலன்.**

**மெய்க்கீர்த்தி** – புகழ்; பாடல்வகை.

**மெய்க்குற்றம்** – கொட்டாவி, நெட்டை, குறுகுறுப்பு, கூன்கிடை, நட்டுவிழல் என்பனவாகிய உடலில் உண்டாகும் ஐந்துவகைக் குற்றங்கள்; நிலைநின்ற குறை.

**மெய்க்கூத்து** – தேசி, வடுகு, சிங்களம் என்னும் முப்பாற்பகுதியையுடைய அபிநயக்கூத்து.

**மெய்க்கொள்ளுதல்** – உண்மையாகக்கொள்ளுதல்.

**மெய்க்கோள்** – உண்மையாகக் கொள்ளுகை; அச்சாரம்.
**மெய்கண்டசந்தானம்** – மெய்கண்டதேவருடைய சித்தாந்தத்தைப் பின்பற்றுவோர்.
**மெய்காணுதல்** – உண்மையை ஆராய்ந்தறிதல்.
**மெய்காவல்** – ஒருவனைப் பாதுகாக்கை; சிறை.
**மெய்காவலன்** – பிறனுக்குக் கேடு நேராமற் காப்பவன்.
**மெய்கூறல்** – உண்மை பேசல்.
**மெய்ச்சுதல்** – காண்க: **மெச்சுதல்.**
**மெய்சிலிர்த்தல்** – மயிர்க்குச்செறிதல்.
**மெய்ஞ்ஞானம்** – உண்மையறிவு.
**மெய்ஞ்ஞானி** – தத்துவஞானி.
**மெய்த்தகை** – புனையாத இயற்கையழகு; உண்மைக் கற்பு.
**மெய்த்தல்** – உண்மையாதல்.
**மெய்த்திறம்** – சமய உண்மையை உணர்த்தும் நூல்.
**மெய்தீண்டுதல்** – அன்போடு ஒருவன் உடலைத் தொடுதல்; ஒருத்தியின் கற்பைக் கெடுத்தல்.
**மெய்தீய்தல்** – சத்தியந் தவறுதல்.
**மெய்தொட்டுப்பயிறல்** – தலைவியின் மனக் குறிப்பை அறிதற்பொருட்டு அவளைத் தொட்டுப் பழகுவதைக் கூறும் அகத்துறை.
**மெய்ந்நலம்** – வலிமை; உடம்பின் அழகு.
**மெய்ந்நவை** – காண்க: **மெய்க்குற்றம்.**
**மெய்ந்நிலை** – உண்மைத்தன்மை; அபிநயவகை.
**மெய்ந்நிலைமயக்கம்** – சொற்களில் ஒற்றெழுத்து இயைந்து வருகை.
**மெய்ந்நீர்மை** – உண்மை; வீடுபேறு.
**மெய்ந்நூல்** – உண்மை உணர்த்தும் நூல்.
**மெய்ப்படாம்** – உடலை மூடும் போர்வை.
**மெய்ப்படுதல்** – உண்மையாதல்; ஆவேசிக்கப் பெறுதல்.
**மெய்ப்பரிசம்** – தொட்டுணரும் உணர்வு; ஊன்றல், கட்டல், குத்தல், தடவல், தட்டல், தீண்டல், பற்றல், வெட்டல் என்னும் எண் வகைப்பட்ட உடலுணர்ச்சிக் காரணங்கள்.
**மெய்ப்பாட்டிசைக்குறி** – வியப்பைக் குறிக்கச் சொல்லின்பின் இடும் அடையாளம்.
**மெய்ப்பாட்டியற்கை** – சமணப் பரமாகமம்.
**மெய்ப்பாடு** – உள்ளத்தின் நிகழ்ச்சி புறத்தார்க்கு வெளிப்படுதல்; புகழ்; இயற்கைக்குணம்.
**மெய்ப்பித்தல்** – உண்மையை நிறுவுதல், நிரூபித்தல்.
**மெய்ப்பிரம்** – மேகம்.
**மெய்ப்பு** – நிரூபணம்; பகட்டு; புகழ்ச்சி.
**மெய்ப்பூச்சு** – உடலின்மேற் பூசும் கலவைச்சாந்து.
**மெய்ப்பை** – சட்டை.
**மெய்ப்பொருள்** – உண்மையான செல்வம்; உண்மை; கடவுள்; நாயனார் அறுபத்து மூவருள் ஒருவர்.
**மெய்ப்பொறி** – உடல் உறுப்பிலக்கணம்; உடல்.
**மெய்படுபருவம்** – பாளை, பாலன், காளை, இளையோன், முதியோன் என்னும் ஐவகை ஆண்மக்கட் பருவம்.
**மெய்புகுகருவி, மெய்புதையரணம்** – காப்புச்சட்டை.
**மெய்பெறுதல்** – எழுத்துகள் திருந்திய ஒலிவடிவு பெறுதல்.
**மெய்ம்மயக்கம், மெய்ம்மயக்கு** – காண்க: **மெய்ந்நிலைமயக்கம்.**
**மெய்ம்மறத்தல்** – அறிவுநீங்குதல்; தன்னை மறத்தல்.
**மெய்ம்மறதி** – அறிவுநீங்குகை; தன்னை மறத்தல்; கோபவெறி; வெறி.
**மெய்ம்மறை** – காண்க: **மெய்புகுகருவி.**
**மெய்ம்மை** – உண்மை; இயற்கையான தன்மை; சத்து; பொருண்மை.
**மெய்ம்மையாதல்** – உண்மையாதல்; இயல்பாதல்.
**மெய்ம்மொழி** – உண்மையான வாக்கு; வேதம்; முனிவரின் வெகுளி அருட்சொற்கள்.
**மெய்மாசு** – உடலழுக்கு; பவ்வீ.
**மெய்யவற்குக்காட்டல்வினா** – பிறனை அறிவுறுத்தற்குக் கேட்கும் வினாவகை.
**மெய்யன்** – உண்மையுணர்ந்தோன்; உண்மையாளன்; முனிவன்; வேதியன்; உண்மை புகலுவோன்; கடவுள்; மகன்.
**மெய்யீறு** – மெய்யெழுத்தை இறுதியிலுடைய சொல்.
**மெய்யுணர்தல், மெய்யுணர்வு** – தத்துவஞானம்.
**மெய்யுரை** – நூற்குப் பொருத்தமான உரை; உண்மைமொழி.
**மெய்யுவமம்** – உண்மையையே எடுத்து உவமித்துக் கூறுவது; வடிவுபற்றி வரும் உவமை.
**மெய்யுறுபுணர்ச்சி** – உடலால் கூடுங் கூட்டம்.
**மெய்யுறை** – உடலிலிடும் காப்புச்சட்டை.
**மெய்யெழுத்து** – உயிரெழுத்திற்கு உடம்பாக இருப்பதான ஒற்றெழுத்து.
**மெய்வலி** – உடலின் பலம்.
**மெய்வார்த்தை** – உண்மையான மொழி.
**மெய்வாழ்த்து** – ஒருவனை வாழ்த்திக் கூறும் பாட்டுவகை.
**மெய்விடுதல்** – இறத்தல்.
**மெய்விரதன்** – உதிட்டிரன்; வீடுமன்.
**மெய்விவாகம்** – பெற்றோரின் இசைவுடன் செய்து கொள்ளும் திருமணம்; சட்டப்படியான மணம்.

**மெய்வேறு** – தனித்தனியாய்.
**மெய்வைத்தல்** – காண்க: **மெய்விடுதல்.**
**மெருகிடுதல்** – பளபளப்பு உண்டாகச்செய்தல்.
**மெருகு** – பளபளப்பு; வெருகஞ்செடி.
**மெருகுமண்** – தட்டார் மெருகிடுவதற்கு உதவும் மண்வகை.
**மெருகெண்ணெய்** – மரப்பொருள் முதலியவற்றிற்கிடும் மேற்பூச்சுத் தைலம்; மினுக்கெண்ணெய்.
**மெருள்** – அச்சம்.
**மெல்** – மிருதுவான.
**மெல்குதல்** – மென்மையாதல்; இலேசாதல்; காண்க: **மெல்லுதல்.**
**மெல்கோல்** – பற்குச்சி.
**மெல்ல** – மெதுவாக.
**மெல்லடை** – அப்பவருக்கம்.
**மெல்லணை** – காண்க: **மெத்தை.**
**மெல்லம்புலம்பன்** – நெய்தல்நிலத் தலைவன்.
**மெல்லம்புலம்பு** – நெய்தல்நிலம்.
**மெல்லரி** – உயர்ந்த அரிசிவகை.
**மெல்லி** – காண்க: **மெல்லியலாள்.**
**மெல்லிக்கை** – பருமனற்றது.
**மெல்லிசு** – காண்க: **மெல்லிது.**
**மெல்லிசை** – மென்மையான ஓசை.
**மெல்லிசைவண்ணம்** – மெல்லெழுத்து மிகுந்து வரும் சந்தம்.
**மெல்லிது** – மென்மைவாய்ந்த பொருள்; ஒல்லி.
**மெல்லியர்** – வலிமையில்லாதவர்; உடல் மெலிந்தவர்; எளியவர்; இழிகுணமுடையவர்; பெண்டிர்.
**மெல்லியல்** – மென்மையான இயல்பு; பெண்; மரத்தின் இளங்கொம்பு.
**மெல்லியலாள்** – பெண்.
**மெல்லிலை** – வெற்றிலை; வெற்றிலைக்கொடி.
**மெல்லினம்** – மூவினத்துள் மெல்லோசையுடைய எழுத்துகளின் வர்க்கம்.
**மெல்லுதல்** – வாயாற் குதப்புதல்; கடித்தல்.
**மெல்லெழுத்து** – மெல்லோசையுடைய ங் ஞ் ண் ந் ம் ன் என்னும் எழுத்துகள்.
**மெல்லென** – காண்க: **மெல்ல.**
**மெல்லெனல்** – மெத்தெனற்குறிப்பு; குரல் தாழ்ந்துபேசுதற்குறிப்பு; மந்தக்குறிப்பு.
**மெல்லொற்று** – காண்க: **மெல்லெழுத்து.**
**மெல்வினை** – சரியை கிரியைகள்.
**மெலி** – காண்க: **மெல்லெழுத்து;** இளைப்பு.
**மெலிகோல்** – கொடுங்கோல்.
**மெலித்தல்** – வலிகுறைத்தல்; உடலை மெலியச் செய்தல்; வருத்துதல்; அழித்தல்; சுரத்தைத் தாழ்த்தல்; வல்லினத்தை இனமொத்த மெல்லினவெழுத்தாக மாற்றுதல்.
**மெலிதல்** – வலிமை குறைதல்; உடல் இளைத்தல்; வருந்துதல்; அழிதல்; எளியதாதல்; வல்லினம் தனக்கினமான மெல்லினமாக மாறுதல்; ஓசையில் தாழ்தல்.
**மெலிந்தோன்** – நோய் முதலியவற்றால் உடல் மெலிந்தவன்; வலியற்றவன்; ஏழை.
**மெலிப்பு** – காண்க: **மெலித்தல்; மெல்லெழுத்து.**
**மெலியார்** – வலியிலார்.
**மெலிவடைதல்** – வாடல்; கலங்கல்; வலுக்குறைதல்.
**மெலிவித்தல்** – கனங்குறைத்தல்; வாட்டல்; மிருதுவாக்கல்.
**மெலிவு** – வருத்தம்; தளர்ச்சி; களைப்பு; துன்பம்; தோல்வி; கொடுமை; படுத்தலோசை.
**மெலுக்கு** – வெளியலங்காரம்; மென்மை; விழிப்பு.
**மெலுக்குவை** – மென்மை; விழிப்பு.
**மெழுக்கம்** – சாணத்தால் மெழுகிவைத்த இடம்.
**மெழுக்கு** – சாணம்; மெழுகுதல்; மெழுகும் பொருள்; மருந்துவகை; தேனடையின் சக்கை.
**மெழுக்கூட்டுதல்** – மேற்பூச்சிடுதல்.
**மெழுகிடுதல்** – காண்க: **மெழுகுதல்; மெழுகுகட்டுதல்;** நூலின்மேல் மெழுகு பூசுதல்.
**மெழுகு** – அரக்கு; சாணம்; மென்மை; தேனடையின் சக்கை; பிசின்; பிசுபிசுத்த தன்மையுடைய மருந்து.
**மெழுகுகட்டுதல்,** **மெழுகுசாத்துதல்** } – விக்கிரகம் வார்க்க மெழுகினாற் கருக்கட்டுதல்.
**மெழுகுசீலை** – நீர் ஊறாதிருப்பதற்காக மெழுகு பூசின துணி; நனையாதிருப்பதற்காக மேற்பூச்சிட்ட துணி; தார்த் தைலமிட்ட கூரைப்பாய்.
**மெழுகுதண்டு** – காண்க: **மெழுகுவத்தி.**
**மெழுகுதல்** – தரையைச் சாணமிட்டுத் தூய்மை செய்தல்; பூசுதல்; குற்றத்தை மறைத்துட் பூசிவிடுதல்.
**மெழுகுதிரி** – காண்க: **மெழுகுவத்தி.**
**மெழுகுபதம்** – காய்ச்சப்பட்ட மருந்தெல்லாம் மெழுகுபோலத் திரளும் பக்குவம்.
**மெழுகுமண்** – கருக்கட்டும் பசைமண்.
**மெழுகுவத்தி** – எரிய உதவும்படி நடுவே திரியிட்டுச் செய்யப்பட்ட மெழுகுகோல்.
**மெள்ள** – காண்க: **மெல்ல.**
**மெள்ளென** – காண்க: **மெல்லென.**
**மென்கண்** – இரக்கம்.
**மென்கணம்** – காண்க: **மெல்லினம்.**
**மென்கால்** – தென்றல்.
**மென்சொல்** – இனியசொல்; அன்பான மொழி.
**மென்பறை** – பறவைக்குஞ்சு.
**மென்பால்** – மருதநிலம்.
**மென்பிணி** – சிறுதுயில்.

**மென்பு** – மென்மை.

**மென்புலம்** – மருதநிலம்; நெய்தல்நிலம்.

**மென்மெல** – மெல்ல.

**மென்மேல்** – மேலும் மேலும்.

**மென்மை** – நுண்மை; மென்மைத்தன்மை; தாழ்வு; வலியின்மை; அமைதி; காண்க: **மெல்லெழுத்து.**

**மென்றொடர், மென்றொடர்க்குற்றியலுகரம், மென்றொடர்மொழி** – மெல்லொற்றைத் தொடர்ந்துவரும் குற்றியலுகரம்.

**மென்னகை** – புன்சிரிப்பு.

**மென்னடை** – மெதுவான நடை; அன்னம்.

**மென்னி(னை)** – மிடறு, கழுத்து.

**மெனக்கெடுத்தல்** – வினைகெடுத்தலின் திரிபு; பயனின்றிப் போகச்செய்தல்.

## மே

**மே** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம்+ஏ); மேம்பாடு; அன்பு.

**மேக்கடித்தல்** – வஞ்சித்தல்; ஆப்பறைதல்.

**மேக்கு** – மேலிடம்; மேலான தன்மை; மேற்கு; ஆப்பு; மரஆணி.

**மேகக்கல்** – ஆட்டுரோசனை.

**மேககர்ச்சனை, மேககர்ச்சிதம்** – மேகங்களினூடே உண்டாகும் ஒலி.

**மேககாலம்** – கார்காலம்.

**மேகச்சிரங்கு** – கெட்டநீரால் தோன்றும் சிரங்கு வகை.

**மேகச்சிலை** – மாக்கல்; சுக்கான்கல்.

**மேகசஞ்சாரம்** – மேகநோய் படருகை; மழை முகிற் கூட்டத்தின் சஞ்சரிப்பு.

**மேகசம்** – முத்து.

**மேகசாரம்** – கருப்பூரம்.

**மேகசாலம்** – முகிற்கூட்டம்; ஒரு மணிவகை.

**மேகதனு** – இந்திரவில்.

**மேகதாரி** – மயிலிறகு.

**மேகதீபம்** – மின்னல்.

**மேகநாதம்** – மேகமுழக்கம்; சிறுகீரை; பலாச மரம்; பச்சிலை.

**மேகநாதன்** – இராவணனின் மகனான இந்திரசித்து; வருணன்; நவச்சாரம்.

**மேகநீர்** – வெட்டைநோய்; கெட்டநீர்.

**மேகப்படை** – தோலின்மேல் உண்டாகும் சொறி வகை.

**மேகப்புள்** – வானம்பாடி.

**மேகபடலம்** – ஒரு கண்ணோய்வகை; மேகத் தொகுதி; மேகநோயாற் படரும் புண்வகை.

**மேகபந்தி** – மேகக்கூட்டம்.

**மேகம்** – முகில்; எழுவகை மேகம்; நீர்; குயில்; காண்க: **முத்தக்காசு**; தீநீர், தீநடத்தை, மூத்திரக்கோளாறு என்பவற்றால் உண்டாகும் நோய்; வெள்ளைநோய்.

**மேகமண்டலம்** – மேகம் திரியும் வானவெளி.

**மேகமுட்டம்** – மேகம் பரந்துநிற்கை.

**மேகமூர்ந்தோன்** – இந்திரன்.

**மேகயோனி** – புகை.

**மேகரணம்** – பறங்கிப்புண்; குட்டம்.

**மேகராகக்குறிஞ்சி** – குறிஞ்சித்திறத்தின் ஒன்று.

**மேகராகம்** – பாலையாழ்த்திறவகை.

**மேகராடி** – மயிலடிக் குருந்துமரம்.

**மேகலாபதம்** – இடை.

**மேகலை** – அரைஞாண்; பிரமசாரி தன் இடையிலணிவதற்கு உரிய நாணலாலியன்ற முப்புரிக் கயிறு; மகளிர் இடையிலணியும் ஏழு கோவையுள்ள அணிவகை; ஆடை; புடைவை; கோயில்விமானத்தின் வெளிப்புறத்திற் செய்யப்பட்ட எழுதகவேலை; தூணைச் சுற்றியுள்ள வளையம்; ஓமகுண்டத்தைச் சுற்றி இடுங் கோலம்; மலைச்சரிவு; மேருமலையின் சிகரத்தொடர்; குதிரையின் கொப்பூழுக்கு மேலே காணப்படும் நற்சுழி.

**மேகவண்ணக்குறிஞ்சி** – மேகவண்ணப் பூவுள்ள செடிவகை.

**மேகவண்ணன்** – மேகம்போன்ற கருநிறமுள்ள திருமால்.

**மேகவர்ணம்** – கருநீலம்; பலபடியாக மாறித் தோன்றும் நிறம்.

**மேகவருணை** – அவுரி.

**மேகவாகனன்** – இந்திரன்; சிவன்; கருங்கல்.

**மேகவாய்** – தயிர்.

**மேகவாயு** – மேகநோய் வெப்பத்தாலுண்டாகும் வாயு; வாதநோய்வகை.

**மேகவிடுதூது** – காதலரிடம் மேகத்தைத் தூது விடுவதாகக் கூறும் நூல்வகை.

**மேகவிநாசம்** – மழைமேகம் கலைகை.

**மேகவியாதி** – கெட்டநீரால் உண்டாகும் நோய் வகை.

**மேகவூறல்** – கெட்டநீர் பரவுகை; காண்க: **மேகப் படை.**

**மேகவெட்டை** – வெட்டைநோய்வகை.

**மேகனம்** – ஆண்குறி.

**மேகாந்தகாரம்** – மழைக்காலிருட்டு.
**மேகாநந்தி, மேகாரம்** – மயில்.
**மேகாரி** – காண்க: **அறுகு; அவரை.**
**மேகை** – இறைச்சி.
**மேங்காவற்காரன்** – நாட்டில் களவு முதலியன நேராமல் காப்பவன்.
**மேசகம்** – இருள்; கருமை; புகை; முகில்; விரிந்த மயில்தோகை; குதிரையின் பிடரிமயிர்.
**மேசை** – காலுள்ள பலகை; சீட்டாட்டத்தில் வைக்கும் பந்தயப்பணம்.
**மேட்டி** – அகந்தை; மேன்மை; தலைவன்; உதவி வேலைக்காரன்; ஊர்த்தலைவனுக்கு விடப் பட்ட மானியம்.
**மேட்டிமை** – அகந்தை; மேன்மை; தலைமை.
**மேட்டுநிலம்** – உயர்வான பூமி.
**மேட்டுப்பாய்ச்சல்** – நீர்ஏறிப் பாயவேண்டியதான மேட்டுநிலம்; மேட்டில் நீரிறைத்துப் பாய்ச் சுகை; அரும்பணி.
**மேடகம்** – ஆடு; இராசிமண்டலத்தின் முதற் பகுதி.
**மேடம்** – காண்க: **மேடகம்;** சித்திரைமாதம்; காப்புச்சட்டை.
**மேடமதி, மேடமாதம்** – சித்திரைமாதம்.
**மேடவீதி** – இடபம், மிதுனம், கடகம், சிம்மம் ஆகிய இராசிகள் சேர்ந்த சூரியவீதியின் பகுதி.
**மேடன்** – மேடராசிக்கு உடையவனான செவ்வாய்.
**மேடாயனம்** – மேடராசியில் சூரியன் புகுங்காலம்; காண்க: **மேடவீதி.**
**மேடு** – உயரம்; சிறுதிடர்; பெருமை; வயிறு; மேலிடம்.
**மேடூகம்** – சுவர்.
**மேடை** – செய்குன்று; மாடி; தளமுயர்ந்த இடப் பகுதி.
**மேண்டம்** – ஆடு.
**மேத்தியம்** – தூய்மை; சீரகம்.
**மேத்தியாசம்** – வசம்பு.
**மேத்திரம்** – ஆட்டுக்கடா.
**மேதகம்** – கோமேதகம்; மதிப்பு; மேன்மை; பாடாணவகை.
**மேதகவு** – மேன்மை, மதிப்பு.
**மேதகு** – மேன்மைபொருந்திய, மேன்மையான.
**மேதகுதல்** – மேன்மையாதல்.
**மேதகை** – மேன்மை.
**மேதசு** – கொழுப்பு.
**மேதம்** – கொலை; கொழுப்பு; வேள்வி.
**மேதரம்** – மலை.
**மேதரவர், மேதவர்** – மூங்கில்வேலை செய்து வாழும் சாதியார்.
**மேதன், மேதாவி** – புத்தியுள்ளவன்.
**மேதாவினி** – காண்க: **நாகணவாய்ப்புள்.**
**மேதி** – எருமை; ஓர் அசுரன்; வெந்தயம்; பொலி காளைகளைக் கட்டும் கட்டை; நெற்களம்.
**மேதித்தலைமிசைநின்றாள்** – கொற்றவை, துர்க்கை.
**மேதியான்** – எருமையை யூர்பவனாகிய யமன்.
**மேதினி** – உலகம்.
**மேதினிபடைத்தோன்** – பூமியைப் படைத்தவ னாகிய பிரமன்; பூமிநாயகனாகிய திருமால்.
**மேதை** – பேரறிஞர்; பேரறிவு; மேன்மை; புதன்; கள்; கொழுப்பு; இறைச்சி; தோல்; நரம்பு; உடலிலுள்ள யோகத்தானங்களாகிய பதினாறு கலையுள் ஒன்று; பொற்றலைக் கையாந்தகரை.
**மேதைமை** – பேரறிவு.
**மேதையர்** – புலவர்.
**மேந்தலை** – மேன்மை; கப்பலின் காற்றுத் தாக்கும் பக்கம்; தலைவன்.
**மேந்தி, மேந்திகை** – வெந்தயம்.
**மேந்தோல்** – காண்க: **மீத்தோல்.**
**மேந்தோன்றுதல்** – மேம்பட்டு விளங்குதல்.
**மேம்படுதல்** – சிறத்தல்.
**மேம்படுநன்** – மேம்பாடுற்றவன்.
**மேம்பாடு** – சிறப்பு.
**மேம்பார்வை** – வேலைகளைக் கண்காணிக்கை; அழுத்தமில்லாத நோக்கு.
**மேம்பாலம்** – இருப்புப்பாதை, ஆறு முதலிய வற்றின் மேலே கட்டப்பட்ட பாலம்; கீழுள்ள ஆறு அல்லது வாய்க்காலுக்கு மேலே குறுக்காக நீரோடும்படி கட்டிய பாலம்.
**மேய்க்கி** – ஆடுமாடு முதலியன மேய்ப்பவன்.
**மேய்கானிலம்** – காண்க: **மேய்ச்சற்றரை.**
**மேய்ச்சல்** – மேய்கை; மேய்ச்சற்றரை; தீனி; சேடுற்றது; காமுகனாய்த் திரிகை.
**மேய்ச்சற்றரை** – ஆடுமாடுகள் மேயுமிடம்.
**மேய்த்தல்** – புல் முதலியவற்றை விலங்குகள் தின்னச்செய்தல்; மருந்து முதலியன செலுத் தல்; அடக்கியாளுதல்.
**மேய்தல்** – விலங்கு முதலியன உணவுகொள்ளு தல்; பருகுதல்; கெடுத்தல்; மேற்போதல்; திரிதல்; காமுகனாய்த் திரிதல்; கவர்ந்து நுகர்தல்; கூரை முதலியன போடுதல்.
**மேய்ப்பன்** – ஆடுமாடுகளை மேய்ப்பவன்; இடையன்; அடக்கியாளுபவன்.
**மேய்ப்பு** – மேய்க்கை; மேய்க்கைக்குரிய நிலம்.
**மேய்மணி** – நாகமணி.

**மேயம்** – அளவிடற்குரியது; அறியத்தகுந்தது; உவமேயம்.

**மேயல்** – மேய்கை; மேயும் புல் முதலியன; கவர்ந்து நுகர்கை.

**மேயவன், மேயான்** – உறைபவன்.

**மேரு** – கோள்கள் சுற்றிவரும் பொன்மலை; மலை; பன்னீர்ச்சாடிவகை; உயரமான கோயில்; பெண்குறி; இருக்கைப்பலகை; காண்க: மேருமணி.

**மேருத்தீபம்** – கடவுளர்முன் எடுக்கும் அடுக்கு விளக்கு.

**மேருமணி** – செபமாலை முதலியவற்றின் நாயக மணி.

**மேருவில்லாளன், மேருவில்லி** – மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபிரான்.

**மேருவின்வாரி** – பொன்மணல்.

**மேரை** – வகை; மரியாதை; குடிமக்களுக்குக் களத்தில் கொடுக்கும் தானியம்; எல்லை; அடக்கம்.

**மேல்** – மேலிடம்; அதிகப்படி; வானம்; மேற்கு; தலை; தலைமை; மேன்மை; உயர்ந்தோர்; உடம்பு; இடம்; மேலெழுந்தவாரியானது; முன்புள்ளது; பின்புள்ளது; அதிகமாக; முன்; பற்றி; அப்பால்; இனி; ஒரு முன்னொட்டு; ஏழனுருபு.

**மேல்கடல்** – மேல்திசையிலுள்ள சமுத்திரம்.

**மேல்கால், மேல்காற்று** – கோடைக்காற்று.

**மேல்கை** – மேடு; மேற்கு; அப்பாலானது; உயர் தரம்.

**மேல்சாந்தி** – கோயிலின் தலைமைப் பூசாரி.

**மேல்பாதி** – மேல்வாரம்; மேற்குப்பகுதி.

**மேல்பால்** – மேற்குப்பக்கம்.

**மேல்மட்டம்** – மேல்புறத்தின் மட்டம்; மட்டப் பலகை.

**மேல்மடை** – நீர்மடையை அடுத்துள்ள விளை நிலம்; மேட்டிலுள்ள வாய்க்கால்.

**மேல்மாடி** – வீட்டின் மேனிலைக்கட்டு.

**மேல்முகம்** – மேற்குப்பகுதி.

**மேல்மூச்சு** – முயற்சி முதலியவற்றால் மேலெழும் பெருமூச்சு; காண்க: மேற்சுவாசம்.

**மேல்வக்கணை** – காண்க: முகவரி; வீண்பேச்சு.

**மேல்வட்டம்** – நகரம் முதலியவற்றின் வெளிச் சுற்று; முதன்மை; மதிப்பு.

**மேல்வரிச்சட்டம்** – முன்மாதிரியாய் அமைந்தது.

**மேல்வரிசை** – மேலிடமாக அமைந்துள்ள வரிசை; செங்கற் கட்டடத்தில் எழுதகத்துக்கு மேலுள்ள படைச்சுவர்.

**மேல்வருதல்** – எழுதல்; ஒருவர்மீது எதிர்த்து வருதல்; நெருங்கிவருதல்.

**மேல்வரும்படி** – சம்பளத்திற்குமேல் அதிகப்படியாகக் கிடைக்கும் வருமானம்.

**மேல்வாசி** – அறம் முதலியவற்றிற்குச் செலவிடும் தானியம்; மதிப்பிற்குமேல் விளைச்சல் காணும்போது மேல்வாரதாருக்கு அதிகப் படியாகக் கிடைக்குந் தானியம்; அயல்நிலங் களினும் அதிக வருவாயுள்ள நிலம்.

**மேல்வாய்** – ஒன்று முதலாய் மேற்பட்ட கணக்கு; வாயின் மேற்பகுதி.

**மேல்வாரதார்** – நிலத்தின் சொந்தக்காரர்.

**மேல்வாரம்** – விளைவிலிருந்து நிலச் சொந்தக் காரருக்குக் கொடுத்தற்குரிய தானியப்பகுதி.

**மேல்விசாரணை** – கண்காணிப்பு; மேற்கொண்டு செய்யும் நியாயவிசாரணை.

**மேல்விரி** – படுக்கையின் மேல்விரிப்புச் சீலை.

**மேல்விலாசம்** – கடிதத்தின்புறத்தே கடிதத்தைப் பெறுவோரின் ஊர், பெயர் முதலியன குறிக்கும் வாசகம், முகவரி.

**மேல்விழுதல்** – முன்சென்று பாய்தல்; வலியப் புகுதல்; ஊக்கத்துடன் வினையில் முந்துதல்.

**மேல்விளைவு** – பிற்பயன்; மேற் செய்யவேண்டுஞ் செயல்; ஓராண்டில் அதிகப்படி பயிரிட்டுப் பெறும் விளைச்சல்.

**மேல்வினை** – பிற்பயன்; காண்க: ஆகாமியம்.

**மேல்வீடு** – மெத்தைவீடு; மாடி; வீடுபேறு.

**மேல்வெள்ளம்** – முதல் வெள்ளத்திற்குப்பின் வரும் வெள்ளம்.

**மேலகம்** – மாடி.

**மேலங்கம்** – வெளிப்பகட்டு.

**மேலங்கி** – மேற்சட்டை.

**மேலவரிறைவன்** – இந்திரன்; முருகன்.

**மேலவன்** – பெரியோன்; அறிஞன்; தேவன்; மேலிடத்துள்ளவன்.

**மேலனம்** – கலக்கை; கூட்டம்; பழக்கம்.

**மேலாக்கு** – மகளிர் மார்பின் குறுக்கே அணியும் சீலை.

**மேலாடை** – தோள்மேல் அணியும் ஆடை.

**மேலாத்தம்** – மேற்புறமாக்குதல்.

**மேலாதல்** – சிறத்தல்.

**மேலாப்பு** – மேற்கட்டி.

**மேலாயினார்** – உயர்ந்தோர்.

**மேலார்** – காண்க: மேலாயினார்; வீரர்.

**மேலாலம்** – மழை.

**மேலாழியார்** – வித்தியாதர மன்னர்.

**மேலிடுதல்** – அதிகரித்தல்; முன்சென்று பாய்தல்; மேலே எழுதல்; வாந்தியாதல்; மேற்கொள்ளுதல்.

**மேலீடு** – மேலிடுவது; குதிரைச்சேணம் முதலியன; மேற்பார்வை; மிகுதியாக இருத்தல்; கூட்டுக்கறி; மகளிர் காதணிவகை; அடுத்த தடவை; வெளிப்பகட்டு; வரிசை அல்லது அடுக்கில் மேலிருப்பது.

**மேலுக்கு** – அந்தரங்கமாக அல்லாமல்; மேற்புறமாக.

**மேலுக்கெடுத்தல்** – வாயாலெடுத்தல்.

**மேலும்** – பின்னும்.

**மேலுலகம்** – தேவருலகம்; பூலோகம் முதல் ஏழு உலகங்கள்.

**மேலுறுதி** – துணைச்சாட்சி.

**மேலெழுச்சி** – மேற்கிளம்புகை; செருக்கு; ஊன்றிநோக்காத் தன்மை.

**மேலெழுத்திடுதல்** – ஒப்புக்கொண்டதற்கு அறிகுறியாகக் கையெழுத்திடுதல்.

**மேலெழுத்து** – சாட்சிக் கையெழுத்து; காண்க: முகவரி; அரசியற் கணக்கதிகாரி; மேலதிகாரி அனுப்புங் கடிதம்; தலைமை எழுத்தாளன்.

**மேலெழுந்தவாரி** – உழைப்பின்மை; ஊன்றிக் கவனியாமை.

**மேலேழுலகம்** – பூலோகம், புவலோகம், சுவர்க்கலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம், மகலோகம் என்று ஒன்றன்மேல் ஒன்றாய் அமைந்த எழுவகைப்பட்ட மேல் உலகங்கள்.

**மேலை** – மேலிடமான; வருங்காலம்; மேற்கு; முந்தின; அடுத்த; முன்பு; அஞ்சனக்கல்; மை.

**மேலைக்கரை** – மேற்குக்கரை; காண்க: மேல்பால்.

**மேலையுலகு** – துறக்கம்.

**மேலைவீடு** – காண்க: மேல்வீடு.

**மேலைவெளி** – பரமன் உறையும் ஞானாகாசம்.

**மேலொப்பம்** – கையெழுத்து; எழுத்து அல்லது பேச்சால் ஒப்புக்கொள்ளுகை.

**மேலோர்** – மேலிடத்தோர்; உயர்ந்தோர்; புலவர்; முன்னோர்; வானோர்.

**மேவருதல்** – பொருத்தமாதல்.

**மேவல்** – சார்தல்; ஆசை; கலக்கை.

**மேவலர்,** **மேவார்** } – பகைவர்.

**மேவித்தல்** – தங்கச்செய்தல்.

**மேவினர்** – உறவோர்; நண்பர்.

**மேவு** – விருப்பம்; மேம்பாடு.

**மேவுதல்** – அடைதல்; விரும்புதல்; நேசித்தல்; உண்ணுதல்; ஓதுதல்; நிரவிச் சமனாக்குதல்; மேலிட்டுக்கொள்ளுதல்; வேய்தல்; அமர்தல்; பொருந்துதல்.

**மேழகம்,** **மேழம்** } – கவசம்; ஆடு.

**மேழி** – கலப்பை; கலப்பையின் கைப்பிடி.

**மேழிச்செல்வம்** – உழவுச்செல்வம்.

**மேழிப்படை** – கலப்பை.

**மேழிப்படையோன்** – பலதேவன்.

**மேழியர்** – உழவர்; மருதநில மக்கள்; வேளாளர்.

**மேழிவாரம்** – வேளாண்மைச் செலவு.

**மேழை** – கஞ்சி; கரடி; கொம்பில்லாத விலங்கு.

**மேளக்கச்சேரி** – கச்சேரியாக மேளவாத்தியம் வாசிக்கை.

**மேளகர்த்தா** – பண்களுக்கு மூலமாகிய பண்கள்.

**மேளகாரன்** – மேளம் அடிப்போன்; வாத்தியத் தொழில் செய்யும் சாதியான்.

**மேளதாளம்** – நாகசுரம், ஒத்து, தவில், தாளம் என்பவற்றின் தொகுதி; பகட்டு.

**மேளம்** – வாத்தியப்பொது; பண் உறுப்பு; நாகசுரம், ஒத்து, தவில், தாளம் என்பவற்றின் தொகுதி; காண்க: **மேளகர்த்தா**; தவில் வாத்தியம்; நல்ல சாப்பாடு; கவலையற்ற இன்பவாழ்வு; கலவைமருந்து.

**மேளமடித்தல்** – தவிலடித்தல்; வெளிப்படுத்தல்; பக்கவாத்தியங்களோடு நாகசுரம் வாசித்தல்; ஒத்துப்போதல்; வருந்தி முயலுதல்.

**மேளனம்** – கூட்டம்; கலக்கை; இசைக்கருவிகளின் சுருதியியைபு.

**மேளித்தல்** – கூட்டுதல்.

**மேற்கட்டி** – மேல்விதானம்.

**மேற்கட்டு** – மேல்வீடு; துணையாதாரம்; மாடி; மேலாடை; அலங்காரம்.

**மேற்கத்தியான்** – மேற்குநாட்டவன்.

**மேற்கதி** – வீடுபேறு; மேனோக்கிச் செல்லும் தன்மை.

**மேற்கதுவாய்,** **மேற்கதுவாய்த்தொடை** } – அளவடியுள் முதலயற் சீர்க்கணின்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது.

**மேற்காது** – காதின் மேற்புறம்.

**மேற்காவல்** – மேல்விசாரணை; மேல்விசாரணை செய்பவன்.

**மேற்கு** – மேலைத்திசை.

**மேற்குடி** – காணியாளர்.

**மேற்கூரை** – வீட்டின்மேல் வேய்ந்த கூரை; வீட்டின் கூரைப்பகுதி; அடிநிலம் நீங்கலான கட்டடம்.

**மேற்கொண்டு** – மேலும்; இனிமேல்.

**மேற்கொள்ளுதல்** – மேலேறுதல்; மேம்படுதல் பொறுப்பேற்றல்; உறுதிமொழிகூறல்; ஏற்றுக் கொள்ளுதல்; முயலுதல்; வஞ்சினம் உரைத்தல்.

**மேற்கோண்மலைவு** – வாதத்தில் முற்கூறியதற்கு மாறுபடக் கூறுகையாகிய குற்றம்.

**மேற்கோப்பு** – வீட்டின் கூரைப்பகுதி.

**மேற்கோள்** – ஏற்றுக்கொள்ளுகை; எடுத்துக் காட்டு; போர்வை; பொறுப்பேற்கை; ஊக்கம்; உறுதிப்பாடான நோக்கம்; வஞ்சினம்; உறுதிமொழி; மேன்மை; சனி.

**மேற்சுவாசம்** – இறக்குந்தறுவாயில் மேனோக்கி எழும் மூச்சு.

**மேற்செம்பாலை** – பாலை யாழ்த்திறவகை.

**மேற்செல்லுதல்** – அப்பாற்போதல்; மேற்படுதல்; போருக்குச் செல்லல்; விரைதல்.

**மேற்செலவு** – படையெடுப்பு; வீட்டின் அன்றாடச் செலவு.

**மேற்பட்டை** – மரத்தின்மேலுள்ள தோல்.

**மேற்படி** – கதவுநிலையின் மேற்பாகத்திலிருக்கும் மரம்; முன்குறித்தது.

**மேற்பரப்பு** – தரை முதலியவற்றின் வெளிப் பரப்பு.

**மேற்பலகை** – நகம்; கதவுநிலையின் மேற்பாகத்தி லிருக்கும் மரம்.

**மேற்பாதி** – விளைவிலிருந்து நிலக்கிழாருக்குக் கொடுத்தற்குரிய தானியம்.

**மேற்பாதிநிலம்** – மேடாயிருக்கும் பக்கநிலம்.

**மேற்பார்த்தல்** – கண்காணித்தல்.

**மேற்பார்வை** – மேல்விசாரணை; மேலெழுந்த பார்வை; செருக்கான நோக்கம்; தொலை நோக்கு; சாகுந்தறுவாயில் மேல்நோக்கி நிற்கும் பார்வை.

**மேற்பாரம்** – அமுங்கும்படி ஒன்றன்மேலே வைக்கும் சுமை; அதிகமாகச் சேர்க்கும் சுமை.

**மேற்பால்** – உயர்குலம்.

**மேற்பாலம்** – காண்க: **மேம்பாலம்.**

**மேற்புத்தி** – மேலானவரிடத்திற் பெறும் புத்திமதி.

**மேற்புரம்** – துறக்கம்.

**மேற்புலவர்** – தேவர்.

**மேற்புறணி** – காண்க: **மேற்பட்டை.**

**மேற்புறம்** – வெளிப்புறம்; கப்பலிற் காற்றுத் தாக்கும் பக்கம்; மேலண்டைப்பக்கம்.

**மேற்பூச்சு** – வெளிப்பூச்சு; குற்றத்தை மறைக்கை; மனம் ஈடுபடாத நடத்தை முதலியன.

**மேற்பேச்சு** – வெளி உபசாரச்சொல்; மேற் கொண்டு விவரித்தல்.

**மேற்போட்டுக்கொள்ளுதல்** – வலிய ஏற்றுக் கொள்ளுதல்; பிறனுக்காகப் பிணையேற்றல்.

**மேற்றட்டு** – நிலைப்பேழை முதலியவற்றின் மேலறை; உயர்தரம்; கப்பலின் மேற்புறத் துள்ள தட்டு; மேல்தளம்; பரண்போன்ற மேலிடம்; அடுக்குப்பாண்டத்திலுள்ள மேல் தட்டு; உடுத்திருக்கும் சேலையின் வெளிச் சுற்று; உயர்சாதி மட்டக்குதிரை.

**மேற்றலை** – தலையின் மேற்பகுதி; மேற்புறம்; ஆறு முதலியன தொடங்குமிடம்; கப்பலில் காற்றுத்தாக்கும் பக்கம்; மேலண்டைப்பக்கம்.

**மேற்றளம்** – மேல்மாடி; கப்பலின் மேற்பக்கம்; புறவிதழ்; மெய்காவற்படை.

**மேற்றிசை** – மேற்கு.

**மேற்றிசைப்பாலன்** – வருணன்.

**மேற்றிணை** – உயர்குலம்.

**மேற்றிராணி** – அதிகாரம்; கிறித்தவக் கண்காணி யார்.

**மேற்றொழில்** – சிறந்த செயல்.

**மேற்றோன்றி** – செங்காந்தள்மலர்.

**மேன்** – மேலிடம்.

**மேன்மக்கள்** – உயர்ந்தோர்.

**மேன்மலை** – சூரியன் மறையுமிடமான மேற்குப் புறத்தேயுள்ள மலை; மேற்குமலை.

**மேன்மாடம்** – உப்பரிகை.

**மேன்முறையாளர்** – காண்க: **மேன்மக்கள்.**

**மேன்மேல், மேன்மேலும்** – பின்னும் பெருக.

**மேன்மை** – சிறப்பு; பெருமை; கண்ணியம்.

**மேன்றலை** – மரக்கலத்தின் முன்புறம்.

**மேன** – ஏழாம் வேற்றுமை உருபு.

**மேனாடு** – துறக்கம்; பீடபூமி; கருநாடக மாநிலம்; மேலுள்ள நாடு; காண்க: **பொன்னாங்காணி.**

**மேனாணித்தல்** – பெருமிதங்கொள்ளுதல்.

**மேனாணிப்பு** – பெருமிதம்.

**மேனாள்** – முன்னாள்; பின்னாள்.

**மேனி** – நிறம்; வடிவம்; உடல்; அழகு; நன் னிலைமை; நிலத்தின் சராசரி விளைச்சல்; காண்க: **குப்பைமேனி.**

**மேனிகரப்போர்** – தம் உருவத்தை மறைக்க வல்ல வரான அசுரர்.

**மேனிகுலைதல்** – அழகு குன்றல்; சீர்குலைதல்; உருவங்கெடுதல்; கலக்கமுறுதல்.

**மேனிமினுக்கி** – எப்போதும் அலங்காரம் செய்து கொண்டு திரிபவர்.

**மேனிலர்** – தேவர்.

**மேனிலை** – மேல்மாடி; முன்னர் உள்ளது.

**மேனிலைக்கட்டு** – கோபுர முதலியவற்றின் மேல் மாடி.

**மேனீர்** – மழைநீர்; மேலிருந்துவரும் நீர்; பூமி மேலே தங்கி ஓடும் நீர்; நிலமட்டத்தை அடுத்துக் காணும் ஊற்றுநீர்.

**மேனை** – மலையரசன் மனைவி.

**மேனைமகள்** – பார்வதி.

**மேனோக்கம்** – மேல்நோக்கிக் கிளம்புகை; தாராள சிந்தை; மேலெழுந்த பார்வை; பேரவா; செருக்கு.

**மேனோக்குதல்** – மேலெழுதல்; வாயாலெடுத்தல்; பேரவாக்கொள்ளுதல்; செருக்கடைதல்.

## மை

**மை** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம்+ஐ); கண்ணுக்கிடும் அஞ்சனம்; மசி; வண்டிமசகு; கருநிறம்; இருள்; பசுமை; களங்கம்; கருமேகம்; வானம்; குற்றம்; பாவம்; அழுக்கு; பிறவி; மலடு; மலடி; மலட்டு எருமை; மேடராசி; ஆடு; இளமை; நீர்; மந்திரவாதத்தில் பயன்படுத்தும் மை; பண்புப்பெயர்விகுதி; தொழிற்பெயர்விகுதி; வினையெச்சவிகுதிகளுள் ஒன்று; அறியாமை.

**மைக்காநாள்** – மறுநாள்.

**மைக்காப்பு** – எழுத்து நன்கு தெரியுமாறு ஏட்டுச் சுவடிக்கு மைதடவுகை.

**மைக்காலிருட்டு** – காண்க: **மையிருட்டு**.

**மைக்கூடு, மைக்கூண்டு** – எழுதும் மைவைக்குங் கூடு; காண்க: **மைப்பரணி**.

**மைகூட்டுதல்** – மை தயாரித்தல்.

**மைச்சாலி** – கருங்குறுவைநெல்.

**மைஞ்சன்** – மைந்தன்.

**மைஞ்சு** – அழகு; அணிகலன்; மேகம்; பனி.

**மைத்தல்** – கறுத்தல்; ஒளிமழுங்குதல்.

**மைத்திரம்** – நட்பு; பகல் பதினைந்து முகூர்த்தங்களுள் மூன்றாவது.

**மைத்திராவருணி** – அகத்தியமுனிவர்.

**மைத்திரி** – நட்பு; காண்க: **மைத்திரீபாவனை**.

**மைத்திரீபாவனை** – எல்லா உயிர்களிடத்தும் அன்புபாராட்டி அவற்றின் நல்வாழ்வைக் கருதி பௌத்தபிட்சு புரியும் தியானவகை.

**மைத்துனத்தோழன்** – நகையாடி விளையாடும் முறைமையுடைய தோழன்.

**மைத்துனமை** – மைத்துனமுறைமை.

**மைத்துனர்(ன்)** – மனைவி அல்லது கணவனுடன் பிறந்தான்; மாமன் அல்லது அத்தையின் மகன்; உடன்பிறந்தாளின் கணவன்.

**மைத்துனி** – மனைவியின் உடன்பிறந்தாள்; மாமன் அல்லது அத்தையின் மகள்; உடன்பிறந்தான் மனைவி.

**மைதா** – கள்மயக்கம்; மாவுவகை.

**மைதானம்** – திறந்தவெளியிடம்.

**மைதிலி** – மிதிலையரசனின் மகளான சீதை.

**மைதீட்டுதல்** – கண்ணுக்கு மைபூசுதல்.

**மைதுனம்** – புணர்ச்சி; திருமணம்.

**மைந்தன்** – மகன்; வலியவன்; திண்ணியன்; ஆண்மகன்; மாணாக்கன்; வீரன்; கணவன்; வலிமையுடையோன்; இளைஞன்; விலங்கு ஊர்வனவற்றின் குட்டி.

**மைந்து** – அழகு; வலிமை; விருப்பம்; காமமயக்கம்; பித்து; யானையின் மதம்; அறியாமை.

**மைந்நூறு** – அஞ்சனப்பொடி.

**மைப்பரணி** – அஞ்சனம் வைக்குஞ் சிமிழ்.

**மைப்பு** – கறுப்பு.

**மைப்புயல்** – இருண்ட மேகம்.

**மைப்போது** – காண்க: **மைம்மலர்**.

**மைபோடுதல்** – வண்டியச்சுக்கு மசகு இடுதல்; மயக்கித் தன்வயப்படுத்தல்; ஓலைக்கு மைதடவுதல்.

**மைம்மலர்** – கருங்குவளைப் பூ.

**மைம்மா** – கரும்பன்றி.

**மைம்மீன்** – சனி.

**மைம்முகன்** – கருங்குரங்கு.

**மைம்மை** – மலட்டு எருமை; மலடி.

**மைம்மைப்பு** – பார்வைக்குறைவு.

**மைமல்** – மாலைநேரம்.

**மைமை** – பூசை.

**மையக்கட்டை** – வண்டியில் அச்சின்மேற் போடுங் கட்டை.

**மையம்** – நடு; நடுத்தரமானது; ஐயமானது; மேல் வளைவைத் தாங்கும் தூணின் மேலுறுப்பு.

**மையம்பாய்தல்** – இருபக்கமுஞ் சாய்தலால் ஒவ்வாமல் நிற்றல்.

**மையமண்டபம்** – தெப்பக்குளத்தின் நடுவில் அமைந்த மண்டபம்.

**மையல்** – காண்க: **மையன்மை**; செல்வம் முதலியவற்றால் வரும் செருக்கு; யானையின் மதம்; காண்க: **கருவூமத்தை**.

**மையலவர்** – பித்தர்.

**மையலார்** – மாயவித்தைக்காரர்.

**மையவாடி** – இடுகாடு; முள்வேலியுள்ள இடம்.

**மையன்மா** – யானை.

**மையன்மை** – காமமயக்கம்; பித்து.

**மையனோக்கம்** – துயரப்பார்வை.

**மையா** – மலட்டுப்பசு.

**மையாடுதல்** – காண்க: **மையோலைபிடித்தல்**; கருமையாதல்.

**மையாத்தல்** – மயங்குதல்; ஒளிமழுங்குதல்; பொலிவழிதல்.

**மையான்** – எருமை.

**மையிடுதல்** – கண்ணுக்கு மைதீட்டுதல்; மந்திர மை தடவுதல்.
**மையிருட்டு** – காரிருள்.
**மையிழுது** – கண்ணுக்கிடும் மை; ஆட்டுநிணநெய்.
**மையுடை** – காண்க: **கருவேல்.**
**மையூட்டுதல்** – கண்ணுக்கு மையிடுதல்; ஓலைக்கு மைதடவுதல்.
**மையெழுதுதல்** – கண்ணுக்கு மையிடுதல்.
**மையொற்றி** – எழுதுமையை ஒற்றும் தாள்.
**மையோலைபிடித்தல்** – கற்கத் தொடங்கும்போது மைதடவிய எழுத்துள்ள ஓலையைக் கைக்கொள்ளுதல்.
**மைரேயம்** – ஒரு மதுவகை; ஒரு மருந்துத் தைலவகை.
**மைவாகனன்** – ஆட்டுவாகனமுடையோனான அக்கினிதேவன்.
**மைவிடை** – ஆட்டுக்கடா.
**மைவிளக்கு** – எரிவிளக்கு.
**மைவைத்தல்** – அஞ்சனமிட்டு மயக்குதல்; கண்ணுக்கு அஞ்சனந் தயாரித்தல்; வெறி உண்டாகும்படி கட்குடித்தல்.
**மைனம்** – மீன்.
**மைனா** – காண்க: **நாகணவாய்ப்புள்.**
**மைனிகன்** – கறையான்.

## மொ

**மொ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம்+ஒ).
**மொக்கட்டை** – முகம்; மழுக்கமானது.
**மொக்கணி** – குதிரைக்குக் கொள்ளுக்கட்டும் பை; கருவிவகை.
**மொக்களித்தல்** – பயணத்தில் தடைசெய்தல்; பயணத்தில் தங்குதல்.
**மொக்கன்** – தடித்தவர்; தடித்தது.
**மொக்கு** – பூமொட்டு; சீலைகளில் செய்யும் மொட்டு வேலைப்பாடு; தரையிலிடும் பூக்கோலம்; குத்துவிளக்கின் தகழி; மரக்கணு; காண்க: **மொக்கை.**
**மொக்குதல்** – ஒருசேர விழுங்கியுண்ணுதல்; அடித்தல்.
**மொக்குமா** – ஒரு கோலப்பொடிவகை.
**மொக்குள்** – மலரும்பருவத்தரும்பு; நீர்க்குமிழி.
**மொக்குளித்தல்** – குமிழி உண்டாதல்; திரளுதல்.
**மொக்கை** – கூரின்மை; பருமை; மரத்துண்டு; அவமானம்; தாழ்வு; மதிப்பு; முகம்.
**மொக்கைகுலைதல்** – இழிவடைதல்.
**மொக்கைச்சோளம்** – ஒரு சோளவகை, மக்காச்சோளம்.
**மொக்கைபோதல்** – அவமானப்படுதல்; முனை மழுங்குதல்.
**மொகமொகெனல்** – நீரூற்றில் உண்டாகும் ஈரடுக்கொலிக்குறிப்பு; நீர்க்கொதிப்பின் ஒலிக்குறிப்பு.
**மொகுமொகுத்தல்** – ஒலித்தல்.
**மொகுமொகெனல்** – ஒலிக்குறிப்பு; நீர்பெருகுதற்குறிப்பு.
**மொங்கன்** – காண்க: **மொக்கன்.**
**மொங்கான்** – இடிகட்டை; பெருத்துக் கனத்த பொருள்.
**மொச்சட்டங்கொட்டுதல்** – நாவாற்கொட்டி ஒலித்தல்.
**மொச்சியன்** – ஓவியன்.
**மொச்சு** – தீநாற்றம்.
**மொச்சை** – ஒரு பயறுவகை; காண்க: **மொச்சு.**
**மொச்சையடித்தல்** – நாட்பட்ட தயிர் முதலியன தீநாற்றம் வீசுதல்.
**மொசித்தல்** – தின்னுதல்.
**மொசிதல்** – மொய்த்தல்.
**மொசுப்பு** – செருக்கு.
**மொசுமொசுக்கை** – காண்க: **முசுமுசுக்கை.**
**மொசுமொசுத்தல்** – தினவுக்குறிப்பு; அடிக்கடி தொல்லைதருதல்.
**மொஞ்சகம்** – பீலி.
**மொஞ்சி** – முலை; முலைப்பால்.
**மொஞ்சிநாற்றம்** – முலைப்பால் மணம்.
**மொட்டம்பு** – கூரற்ற அம்பு.
**மொட்டித்தல்** – குவிதல்; அரும்புதல்.
**மொட்டு** – பூவரும்பு; தேரின் கூம்பு; ஆண்குறியின் நுனி; வெறுமை.
**மொட்டை** – மயிர்நீங்கிய தலை; கூரின்மை; அறிவின்மை; வெறுமை; முழுமையின்மை; மணமாகாத இளைஞன்; கையெழுத்திடப் பெறாத மனு.
**மொட்டைச்சி** – மயிரற்ற தலையுடையவள்; கைம்பெண்; ஒரு மருந்துப்பொடிவகை.
**மொட்டைத்தலை** – மயிர்நீங்கிய தலை.
**மொட்டைதட்டுதல்** – முழுதும் கொள்ளை கொள்ளுதல்.
**மொட்டைப்புத்தி** – மழுங்கின அறிவு.
**மொட்டைமரம்** – பட்டுப்போன மரம்; காயா மரம்; இலை, பழம் முதலியன முற்றும் உதிர்ந்த மரம்.
**மொட்டைமாடி** – கட்டடம் அமையப்பெறாத மேற்றளம்.

**மொட்டைமாடு** – கொம்பில்லாத மாடு.

**மொட்டையடித்தல்** – தலைமுழுதும் மழித்தல்; முழுதும் கொள்ளையடித்தல்.

**மொட்டையன்** – மொட்டைத்தலையன்; முழுதும் இழந்தவன்.

**மொட்டைவசனம்** – முடிவில்லா வாக்கியம்; மெய்ப்பிக்கப்படாத செய்தி.

**மொட்டைவண்டி** – மேற்கூடில்லாத வண்டி.

**மொடமொடெனல்** – காண்க: மொடுமொடெனல்.

**மொடு** – பருமை; மிகுதி; விலை முதலியவற்றின் நயம்.

**மொடுக்குமொடுக்கெனல்** – ஒலிக்குறிப்புவகை.

**மொடுமொடெனல்** – உலர்ந்த தோல் முதலியவற்றின் ஒலிக்குறிப்பு; வயிறு இரைதற் குறிப்பு; விரைதற்குறிப்பு.

**மொண்டணி** – மரக்கணு.

**மொண்டல்** – மொள்ளுகை.

**மொண்டி** – நொண்டி; சாமைவகை; முரண்டு செய்வோன்; தொந்தரவு செய்பவன்.

**மொண்டு** – முரண்டு; தொந்தரவு.

**மொண்ணன்** – வழுக்கைத்தலையன்.

**மொண்ணை** – வழுக்கை; கூர்மையின்மை.

**மொத்தம்** – கூட்டுத்தொகை; முழுமை; பொது; பருமை.

**மொத்தளம்** – கூட்டம்; கூட்டுத்தொகை.

**மொத்தி** – புடைப்பு; புத்தியில்லாதவன்.

**மொத்தினி** – நுரை.

**மொத்து** – அடி; மூடமானவர்; மூடமானது; சுறுசுறுப்பில்லாதவர்; சுறுசுறுப்பில்லாதது.

**மொத்துதல்** – அடித்தல்; வீங்குதல்.

**மொத்தை** – உருண்டை; பருமன்; மூடப்பெண்.

**மொதுமொதெனல்** – விழுங்கல் அல்லது உறிஞ்சல் ஒலிக்குறிப்பு; திரளுதற்குறிப்பு; கொழுத்து வளர்தற்குறிப்பு.

**மொந்தணி** – மரக்கணு; பருமை; உருண்டை.

**மொந்தணியன்** – பருத்தது; உருண்டையானது.

**மொந்தன்** – ஒரு வாழைவகை.

**மொந்தை** – சிறு மட்பாண்டவகை; சிறு மரப் பாண்டவகை; சிறு பாண்டவகை; ஒருகட் பறைவகை; பருத்தது.

**மொந்தையுரு** – நெட்டுரு.

**மொப்படித்தல்** – வெடிநாற்றம் வீசுதல்.

**மொப்பு** – வெடிநாற்றம்; குட்டி பாலைக் குடியாதபடி ஆட்டின் மடியில் சுற்றிவைக்குந் துணி.

**மொய்** – நெருக்கம்; கூட்டம்; இறுகுகை; பெருமை; வலிமை; போர்; போர்க்களம்; பகை; யானை; வண்டு; தாய்; காண்க: **மொய்ப்பணம்**; மகமை; அழகு; அத்தி.

**மொய்க்கணக்கு** – திருமணம் முதலியவற்றில் வழங்கும் அன்பளிப்புகளின் குறிப்பு.

**மொய்கதிர்** – முலை; முலைக்காம்பு; அடர்ந்த கதிர்.

**மொய்த்தல்** – நெருங்கல்; மேல் பரவுதல்; மூடுதல்; இருத்தல்; நெருங்கிச் சுற்றுதல்; துன்புறுத் தல்; கொடுத்தல்.

**மொய்த்தாய், மொய்தாய்** – தாய்.

**மொய்ப்பணம்** – திருமணம் முதலியவற்றில் வழங்கும் நன்கொடைப் பணம்.

**மொய்ப்பு** – கூட்டம்.

**மொய்ம்பன்** – வீரன்.

**மொய்ம்பு** – வலிமை; தோள்.

**மொய்யெழுத்து** – தருமசாசனம்.

**மொய்யெழுதுதல்** – மணம் முதலிய விழாக்களில் நன்கொடையளித்தல்; அறத்திற்குச் சிறு தொகை உதவுதல்; கொடுத்துத் திரும்பக் கிடையாதனவற்றைச் செலவாக எழுதுதல்.

**மொரமொரப்பு** – முறுக்காயொலிக்கை; தூய்மை; முறுமுறுப்பு.

**மொரமொரெனல்** – தூய்மையாயிருத்தல்; முறுக்கா யிருத்தற்குறிப்பு.

**மொருமொருத்தல்** – முணுமுணுத்தல்; காண்க: **மொரமொரப்பு.**

**மொருமொரெனல்** – முணுமுணுத்தற்குறிப்பு; காண்க: **மொரமொரெனல்.**

**மொலுமொலெனல்** – விடாது பேசற்குறிப்பு; முணுமுணுத்தற்குறிப்பு; தினவெடுத்தற் குறிப்பு; சொறிதற்குறிப்பு; இரைச்சற்குறிப்பு.

**மொழி** – சொல்; கட்டுரை; சொற்றொகுதி; பேச்சுமுறை; வாக்குமூலம்; பொருள்; மணிக் கட்டு, முழங்கால், கணுக்கால் முதலியவற்றின் பொருத்து; மரக்கணு.

**மொழிச்சாரியை** – இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட எழுத்துகளால் ஆகிய சாரியை.

**மொழிதடுமாறுதல்** – திக்கிப்பேசுதல்; வாய்குழறு தல்.

**மொழிதல்** – சொல்லுதல்.

**மொழிநூல்** – மொழியின் வரலாற்றைக் கூறும் நூல்.

**மொழிப்பிசகு** – காண்க: **மொழிபிசகுதல்.**

**மொழிப்பொருள்** – சொல்லுக்கு ஏற்பட்ட பொருள்; நிமித்தச்சொல்; மந்திரம்.

**மொழிபிசகுதல், மொழிபிறழ்தல்** – வாக்குத்தவறுதல்; உடற் பொருத்து இடம்விட்டு விலகுதல்.

**மொழிபெயர்த்தல், மொழிபெயர்ப்பு** – ஒரு மொழியில் உள்ளதை மற்றொரு மொழிக்கு மாற்றி எழுதுதல்.

**மொழிமாற்று** – ஏற்ற பொருளுக்கு இயையுமாறு மொழிகளை மாற்றிப் பொருள்கொள்ளுதல்.

**மொழிமை** – பழமொழி.

**மொழியொலிக்குறிப்பு** – சொல்லின் அழுத்தமான உச்சரிப்பு.

**மொழியோசை** – பலுக்குதல், உச்சரிப்பு.

**மொழுக்கன்** – தடித்தவன்; மட்டமான வேலை; வேலைப்பாடில்லாத அணிகலன்.

**மொழுக்கெனல்** – சடக்கென ஓடிதற்குறிப்பு; எண்ணெய்ப்பசையா யிருத்தற்குறிப்பு.

**மொழுங்கன்** – காண்க: **மொழுக்கன்.**

**மொழுப்பு** – கட்டு; சோலைசெறிந்த பகுதி.

**மொழுப்புதல்** – செயலை மழுப்புதல்.

**மொழுமொழுத்தல்** – கொழுகொழுப்பாயிருத்தல்.

**மொள்ளுதல்** – தண்ணீர் முதலியன முகத்தல்.

**மொறமொறப்பு** – தூய்மை; சருக்கரை; உலர்ச்சி.

**மொறுமொறுத்தல்** – வெறுப்புக்குறிப்புக் காட்டுதல்.

**மொறுமொறெனல்** – காண்க: **மொரமொரெனல்.**

# மோ

**மோ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம்+ஓ); ஒரு முன்னிலை யசைச்சொல்.

**மோக்கம்** – வீடுபேறு; விடுபடுகை.

**மோகப்படைக்கலம்** – எதிரியை மயக்கும் படைக்கலன்.

**மோகம்** – ஆசை; காமமயக்கம்; விருப்பம்; வேட்கை; மூர்ச்சை; மாயையால் நிகழும் மயக்கவுணர்ச்சி; திகைப்பு; பாதிரிமரம்; மோர்; முருங்கைமரம்; வாழைமரம்.

**மோகர்** – ஓவியர்; மோகமுடையவர்.

**மோகரம்** – பேராரவாரம்; கடுமை; மனமயக்கம்.

**மோகரித்தல்** – ஆரவாரித்தல்; மயங்குதல்.

**மோகலீலை** – காமத்தைத் தூண்டும் நடத்தை.

**மோகவிலை** – விருப்பத்தின்மேற் கொடுக்கும் அதிக விலை.

**மோகவுவமை** – பொருள்மேலுள்ள வேட்கையால் உவமான உவமேயங்களை மயங்கக்கூறும் உவமையணிவகை.

**மோகன்** – மன்மதன்.

**மோகனக்கல்** – பூசைக்குரிய பொருள்களை வைக்கும் கல்மேடை; கோயில் முதலியவற்றின் வாசற்காலின் மேலுள்ள உத்திரக்கல்.

**மோகனச்சுண்ணம்** – மயக்கப்பொடி.

**மோகனநாட்டியம்** – மகளிர்கூத்து.

**மோகனம்** – மயக்கமுண்டாக்குகை; மனமயக்கம்; காண்க: **மோகனை;** காமனது மோகம் உண்டாக்கும் அம்பு; ஆசைமிகுகை; ஒரு பண்வகை; ஏமாற்றுகை.

**மோகனமாலை** – பொன்னும் பவளமுங் கோத்த மாலைவகை.

**மோகனாங்கனை, மோகனாங்கினி** – அழகு முதலியவற்றாற் காண்போரை மயக்கும் பெண்.

**மோகனை** – பிறரை மயங்கச்செய்யும் வித்தை.

**மோகாதி** – காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்கள்.

**மோகி** – கஞ்சா; அபின்.

**மோகித்தல்** – காமத்தால் மயங்குதல்; மனந்திகைத்தல்.

**மோகிதம்** – காமமயக்கம்.

**மோகிதன்** – மோகமுள்ளவன்.

**மோகினி** – கண்டாரை மயங்கச்செய்யும் திருமாலின் பெண்வடிவான பிறப்பு; தன்னைக் காண்பவரை மயக்கும் உருவத்தையுடைய பெண்; அசுத்தமாயாதத்துவம்; பெண்பேய் வகை.

**மோங்கில்** – திமிங்கிலவகை.

**மோசக்காரன்** – வஞ்சகன்.

**மோசகன்** – விடுவிப்பவன்; துறவி; வெளிவிடுவோன்; திருடன்; தட்டான்.

**மோசகி** – கிலுகிலுப்பைச்செடி.

**மோசடி** – ஏமாற்றம்.

**மோசம்** – வஞ்சனை; கேடு; தவறு; முருங்கைமரம்; வாழைமரம்.

**மோசம்போதல்** – வஞ்சிக்கப்படுதல்; கேட்டுக்குள்ளாதல்; பிசகுதல்.

**மோசனம்** – விடுபடுதல்; ஒரு நெல்வகை.

**மோசாடம்** – சந்தனம்; வாழைப்பழம்.

**மோசித்தல்** – பிசகிப்போதல்; விட்டொழிதல்.

**மோசிமல்லிகை** – காண்க: **காட்டுமல்லி.**

**மோசை** – அவுரி; இலவமரம்; வாழை; வசம்பு; விரலணிவகை.

**மோட்சம்** – வீடுபேறு; விடுபடுகை; பதமுத்தி; வினைத்தொடர்பினின்று முற்றும் நீங்கும் நிலை.

**மோட்சமார்க்கம்** – வீட்டுநெறி, வீடுபேற்றிற்குரிய வழி.

**மோட்சவான்** – வீடுபேறடைந்தவன்.

**மோட்சவிளக்கு** – வீரசைவர் தமது பிணத்தைப் புதைக்கும் மண்மேடுமீது வைக்கும் விளக்கு; இறந்தவர்பொருட்டு ஏற்றப்படும் விளக்கு.

**மோட்டன்** – மூர்க்கன்.
**மோட்டுமீன்** – விண்மீன்.
**மோட்டுவலயம்** – மாலைவகை.
**மோட்டோடு** – வீட்டு முகட்டிலிடும் வளைவோடு.
**மோட்டோலை** – கூரைமோடு வேயும் ஓலை.
**மோடம்** – மப்புமந்தாரம்; மூடத்தனம்.
**மோடன்** – வளர்ந்தவன்; மூடன்.
**மோடனம்** – காற்று; அரைக்கை; அவமானம்; மாயவித்தை; மூடத்தனம்.
**மோடி** – துர்க்கை; செருக்கு; விதம்; பகட்டு; பெருமிதம்; வேடிக்கைக் காட்சி; பிணக்கு; வஞ்சகம்; மொத்தம்; கண்டதிப்பிலி; திப்பிலி மூலம்; மகுடி; ஓர் ஊதுகுழல்வகை.
**மோடிக்காரன்** – பிணக்கங்காட்டுவோன்; அலங் காரப்பிரியன்; வஞ்சகன்.
**மோடிடுதல்** – ஆறு முதலியவற்றில் மணலால் மேடு உண்டாதல்; சோரத்தில் கருப்பமாதல்.
**மோடு** – மேடு; உயர்ச்சி; முகடு; கூரையின் உச்சி; பருமை; பெருமை; உயர்நிலை; வயிறு; கருப்பை; பிளப்பு; உடம்பு; மடமை.
**மோடுபருத்தல்** – பிடரியிற் சதை திரண்டிருத்தல்.
**மோணம்** – பழத்தின் வற்றல்; பாம்புப்பெட்டி.
**மோத்தல்** – மூக்கால் நுகர்தல்; மொள்ளுதல்; மேற்கொள்ளுதல்.
**மோத்தை** – ஆட்டுக்கடா; வெள்ளாட்டுக்கடா; முற்றாத தேங்காய்; மடல்விரியாத பூ; மேடராசி.
**மோதகப்பிரியன்** – விநாயகன்.
**மோதகம்** – அப்பவருக்கம்; கொழுக்கட்டை; பிட்டு; தோசை; மகிழ்ச்சி; இணக்கம்.
**மோதகமரம்** – பீநாறிமரம்.
**மோதம்** – மகிழ்ச்சி; களிப்பு; மணம்; ஓமம்.
**மோதயந்தி** – மல்லிகைவகை.
**மோதரம்** – காண்க: **மோதிரம்.**
**மோதலை** – கைமாற்றுக்கடன்; முன்றானை; போர்முனை.
**மோதவம்** – மணம்.
**மோதிரம்** – கணையாழி, விரலணி.
**மோதிரமாற்றுதல்** – திருமணத்தில் மணமக்கள் கணையாழியை மாற்றிக்கொள்ளுதல்.
**மோதிரவிரல்** – சுண்டுவிரலுக்கு அடுத்த விரல்.
**மோது** – தாக்கு; வைக்கோற்கட்டு; எண்ணெய் வடிக்கும்பொருட்டுச் சேர்த்துக் காய்ச்சும் நீர்.
**மோதுதல்** – புடைத்தல், தாக்குதல்; அப்புதல்.
**மோதை** – வசம்பு.
**மோந்தை** – தோற்கருவிவகை.
**மோப்பம்** – மணம்; மூக்கு.
**மோப்பம்பிடித்தல்** – காமவிச்சையுடன் ஒருத் தியைத் தொடர்தல்; நாற்றத்தால் ஒன்றை அறிதல்.
**மோப்பி** – கைம்பெண்; காண்க: **மோப்பம்.**
**மோப்பு** – காதல்.
**மோம்பழம்** – மணமுள்ள கனி.
**மோய்** – 'அம்மோய்' என்பதன் முதற்குறை; தாய்.
**மோர்** – நீர்விட்டுக் கடைந்த தயிர்; முத்திரை.
**மோரடகம், மோரடம்** – கரும்புவேர்; வீழிப்பூடு.
**மோரை** – முகம்; முகவாய்க்கட்டை.
**மோரைக்கயிறு** – மாட்டின் வாயைச்சுற்றிக் கட்டுங் கயிறு.
**மோலி** – மயிர்முடி; சடைமுடி; மணிமுடி.
**மோவம்** – ஆன்மாவிற்கு மயக்கத்தைச் செய்யும் குற்றம்.
**மோவாய்** – காண்க: **மோவாய்க்கட்டை;** தாடி.
**மோவாய்க்கட்டை** – வாய்க்குக் கீழுள்ள இடம்.
**மோழல்** – காண்க: **மோழைமுகம்.**
**மோழலம்பன்றி** – ஆண்பன்றி.
**மோழி** – குழம்புவகை; மேழி.
**மோழை** – கொம்பில்லாத விலங்கு; மொட்டை; மரத்தின் அடிமுண்டம்; மடமை; வெடிப்பு; கீழாறு; குமிழி; மடு; கஞ்சி.
**மோழைமுகம்** – பன்றி.
**மோழைமை** – மடமை; இகழ்மொழி.
**மோழைவழி** – நுழைவழி.
**மோறாத்தல்** – சோம்பியிருத்தல்; அங்காத்தல்.
**மோறை** – மோவாய்; முகம்; முருட்டுத்தனம்.
**மோறைக்கட்டை** – முகம்.
**மோனம்** – அமைதி; பேசாதிருத்தல்.
**மோனமுத்திரை** – மௌனநிலையைக் காட்டும் முத்திரைவகை.
**மோனர்** – பேசாநோன்பு மேற்கொண்ட துறவியர்.
**மோனி** – பேசாநோன்பு பூண்டவன்.
**மோனீகம்** – பெருச்சாளி.
**மோனை** – முதன்மை; மகன்; சீர்களின் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுக்குந் தொடை.

# மௌ

**மௌ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ம் + ஔ).
**மௌக(கு)லி** – காகம்.
**மௌசலம்** – தண்டாயுதத்தால் செய்யும் போர்.
**மௌசு** – மிகுவிருப்பம்; கவர்ச்சி; பகட்டு.

**மௌஞ்சி** – ஒரு நாணல்வகை; நாணற்புல்லாற் செய்த அரைஞாண்.
**மௌட்டியம்** – அறியாமை.
**மௌண்டிதன்** – தலைமழிக்கப் பெற்றவன்.
**மௌத்திகம்** – முத்து.
**மௌர்(ர)வி** – வில்லின் நாண்.
**மௌலி** – காண்க: **மோலி**; தலை; தார்; கோபுர உச்சி; கள்.
**மௌவல்** – முல்லை; காட்டுமல்லிகை; தாமரை.
**மௌவை** – தாய்.
**மௌனசாமியார்** – பேசாநோன்பு பூண்ட பெரியோர்.
**மௌனம்** – பேசாமை.
**மௌனமந்திரம்** – மனத்துள் செபிக்கும் மந்திர வகை.
**மௌனவிரதம்** – பேசாநோன்பு.
**மௌனி** – காண்க: **மோனி**; ஆமை.

## ய

**ய** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ய் + அ).
**யக்கதரு** – ஆலமரம்.
**யக்கராசன்** – இயக்கர்களுக்கு அரசனான குபேரன்.
**யக்கியபுருடன்** – திருமால்.
**யக்கியம்** – வேள்வி; துவாபரயுகம்.
**யக்கியாரி** – தக்கன் யாகத்தை அழித்த சிவபிரான்.
**யசசு** – புகழ்.
**யசனம்** – வேள்விசெய்கை.
**யசுர்** – இரண்டாம் வேதம்.
**யசோதை** – கண்ணனை வளர்த்த தாய்.
**யஞ்ஞம்** – வேள்வி.
**யஞ்ஞமூர்த்தி** – திருமால்; அக்கினிதேவன்.
**யஞ்ஞவராகம்** – திருமாலின் பன்றிப்பிறப்பு.
**யஞ்ஞன்** – தீக்கடவுள்.
**யட்சம்** – நாய்; மந்திரம்.
**யட்சிணி** – இயக்கி; குபேரன் மனைவி; துர்க்கைக்குப் பணிசெய்யும் பெண்தேவதை.
**யட்டி** – அதிமதுரம்; தண்டாயுதம்; ஊன்றுகோல்; முத்துமாலை.
**யதார்த்தவாதி** – உண்மைபேசுவோன்.
**யதி** – துறவி; சீரோசை முடியுமிடம்; தாளப் பிரமாணம் பத்தனுள் அங்கம் பலவற்றை ஒழுங்குசெய்வது; அடக்கம்; இளைப்பாற்றி; ஒன்றிப்பு; மோனை; கைம்பெண்.
**யதிவழு** – ஓசையறும்வழி நெறிப்பட வாராமல் நிற்பது.
**யதேச்சாதிகாரம்** – விருப்பப்படி ஆணை செலுத்துகை.
**யதேச்சை, யதேச்சையாய்** – மிகுதியாய்; விருப்பின்படி.
**யதேந்திரியம்** – கற்புடைமை.
**யந்திரு** – ஆளுவோன்; குதிரைப்பாகன்; தேர்ப் பாகன்.
**யமகண்டம்** – ஒருவன் வாழ்நாளில் உயிருக்கு அபாயமான காலம்; யமனுக்குரிய மூன்றே முக்கால் நாழிகைப் பொழுது.
**யமகண்டம்பாடுதல்** – உயிருக்குக் கேடுபயக்கும் விதிமுறைக்குட்பட்டுப் பாப்புனைதல்.
**யமகண்டன்** – வலியோன்; ஒரு காணாக் கோள்; யமனுக்குரிய மூன்றே முக்கால் நாழிகைப் பொழுது.
**யமகண்டி** – பொல்லாதவள்.
**யமகம்** – ஓர் அடியின் முதலில் வந்த சொற்களே மற்ற அடிகளின் முதலிலும் வரும் செய்யுள் அணி.
**யமகிங்கரன்** – யமனது ஏவலன்.
**யமப்பிரியம்** – ஆலமரம்; அத்திமரம்.
**யமபடன்** – யமனது வேலையாள்.
**யமம்** – காண்க: **இயமம்**; தவம்; காக்கை; சனி; அறநூல் பதினெட்டனுள் ஒன்று; திருவிழா.
**யமரதம்** – காண்க: **யமவாகனம்.**
**யமலோகம்** – யமனுடைய உலகம்; நரகம்.
**யமவாகனம்** – யமனது ஊர்தியாகிய எருமைக் கடா.
**யமவிரதம்** – இயமத்தைக் கடைப்பிடித்தல்; ஒரு சார்பின்றி அரசுமுறை நடத்தல்.
**யமளம்** – இரட்டை.
**யமன்** – தென்திசைக்குரிய கடவுள்; பாம்பின் நச்சுப்பல்.
**யமாந்தகன், யமாரி** – யமனுக்குப் பகைவனான சிவபிரான்.
**யமி** – முனிவன்; யமுனையாறு.
**யமுனாசனகன்** – யமுனையின் தந்தையான சூரியன்.
**யமுனை** – ஓர் ஆறு.
**யமுனைத்துறைவன்** – கண்ணபிரான்; இராமானுசருக்கு ஆசிரியராகிய ஆளவந்தார்.
**யயு** – அசுவமேதக் குதிரை.
**யவசி** – கழுதைப்பாலை.
**யவபலம்** – மூங்கில்.
**யவம்** – நெல்; வாற்கோதுமை.
**யவன்** – எவன்.
**யவனத்தச்சர்** – யவனநாட்டுத் தச்சர்.

**யவனப்பிரியம்** – மிளகு.
**யவனப்பேழை** – யவனநாட்டு வேலைப்பாடமைந்த பெட்டி.
**யவனம்** – ஒரு நாடு; விரைவு; வரிப்பணம்.
**யவனர்** – யவனநாட்டார்; கண்ணாளர்; சித்திரகாரர்; தோற்கருவி வாசிப்பவர்.
**யவனாள்** – யுவதி.
**யவனிகை** – இடுதிரை.
**யவாகு** – கஞ்சி.
**யவை** – வாற்கோதுமை; நீட்டலளவை; துவரை; நெல்வகை.

## யா

**யா** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ய்+ஆ); யாவை; ஓர் அசைச்சொல்; ஒரு மரவகை; அகலம்.
**யாக்கை** – கட்டுகை; உடம்பு.
**யாக்கைக்குற்றம், யாக்கைக்குறுகுற்றம்** – கொட்டாவி, நெட்டை, குறுகுறுப்பு, கூன்கிடை, நட்டுவிழல் என்பனவாகிய மெய்க் குற்றம்; யாக்கைக்குரிய பசி, நீர் வேட்கை முதலிய பதினெட்டு வகைக் குற்றங்கள்.
**யாககுண்டம்** – வேள்விக்குழி.
**யாகசாலை** – வேள்விச்சாலை; கோயிலுள் வேள்விசெய்யும் மண்டபம்.
**யாகத்திரவியம்** – வேள்விப்பொருள்.
**யாகநிலை** – வேள்விச்சாலை.
**யாகப்பிறையான்** – தக்கனது வேள்வித்தீயில் தோன்றிய சந்திரன்.
**யாகபத்தினி** – வேள்விசெய்பவன் மனைவி; திரௌபதி.
**யாகபதி** – வேள்விசெய்யும் தலைவன்; இந்திரன்.
**யாகபன்னி** – யாகபதியின் மனைவி.
**யாகபேரம்** – கோயிலுள் வேள்விச்சாலைக்குரிய மூர்த்தி.
**யாகபோசனர்** – வானோர்.
**யாகம்** – வேள்வி; பதினெண்வகை வேள்வி.
**யாகமண்டபம்** – காண்க: யாகசாலை.
**யாகவிபாகம்** – வேள்வியிற் கிடைக்கும் அவிர்ப்பாகம்.
**யாங்கண்** – காண்க: யாண்டை.
**யாங்கணும்** – எங்கும்.
**யாங்கர்** – அரக்கர்.
**யாங்கனம், யாங்கு, யாங்ஙனம்** – எங்கு; எப்படி; எவ்வாறு; எவ்விடம்.
**யாசகம்** – இரப்பு; மதயானை; பட்டத்தியானை.
**யாசகன்** – இரவலன்; வேள்வி இயற்றுபவன்.
**யாசித்தல்** – இரத்தல்.
**யாசிதம்** – இரப்புத்தொழில், வட்டி அல்லது வாடகையின்றித் திருப்பிக்கொடுப்பதாகப் பெற்ற பொருள்.
**யாடம்** – காண்க: சிறுகாஞ்சொறி.
**யாடு** – ஆடு.
**யாண்டு** – எங்கு; எப்பொழுது; ஆண்டு.
**யாண்டும்** – எப்போதும்; எவ்விடத்தும்.
**யாண்டை** – எவ்விடம்.
**யாணர்** – புதிதுபடல்; புதிய வருவாய்; வளமை; செல்வம்; நன்மை; முறைமை; அழகு; தச்சர்.
**யாணன்** – அழகுள்ளவன்.
**யாணு** – அழகு.
**யாத்தல்** – செய்யுளமைத்தல்; கட்டுதல்; பிணித்தல்; நீர் முதலியன அணைத்தல்; விட்டு நீங்காதிருத்தல்; சொல்லுதல்.
**யாத்தார்** – உற்ற நண்பர்.
**யாத்திரிகர்விடுதி** – பயணஞ்செய்வோர் தங்குமிடம்.
**யாத்திரிகன்** – புண்ணிய இடங்கட்குப் பயணம் செய்வோன்.
**யாத்திரை** – பயணம்; படையெழுச்சி; காலட்சேபம்; வழக்கம்; திருவிழா; கூத்து.
**யாத்து** – தைப்பு.
**யாதபதி** – கடல்; வருணன்.
**யாதம்** – யானைத்தோட்டி; காண்க: யாதவம்.
**யாதவம்** – மாட்டுமந்தை.
**யாதவர்** – யதுகுலத்தவர்; இடையர்.
**யாதவன்** – கண்ணபிரான்; இடையன்.
**யாதவி** – குந்தி; உமை; யதுகுலத்தவள்.
**யாதனம்** – தெப்பம்; மரக்கலம்; வேதனை; துயரம்.
**யாதனாசரீரம்** – நரகம் நுகர்தற்குரிய உடம்பு.
**யாதனை** – வேதனை; நரகவேதனை; துன்பம்.
**யாதிகன்** – வழிச்செல்வோன்.
**யாது** – எது; இராக்கதன்; பிசாசு; கள்; நினைவு.
**யாதுதானன்** – இராக்கதன்.
**யாதும்** – எதுவும்.
**யாப்பண்டம்** – கருவுற்றவள் விரும்பும் தின்பண்டம்.
**யாப்பதிகாரம்** – செய்யுளிலக்கணங் கூறும் நூற்பகுதி.
**யாப்பறை** – கற்பில்லாதவள்.
**யாப்பியம்** – பொழுதுபோக்கு; காலவரையறையுள்ளது; புல்லியது; நோய்வகை.

**யாப்பு** – கட்டுகை; கட்டு; செய்யுள்; யாழ்ப் பத்தரிற் குறுக்கே வலிவுறச் செய்யுங் கட்டு; சிறப்புப்பாயிர இலக்கணம் பதினொன்றனுள் இன்ன நூல் கேட்டபின் இன்னது கேட்கத் தக்கதென்னும் தொடர்பு; அன்பு; உறுதி; சூழ்ச்சி; பொருத்தம்; பாம்பு.
**யாப்புறவு** – தள்ளத்தகாத நியதி; தகுதி.
**யாப்புறுத்தல்** – வலியுறுத்தல்.
**யாப்புறுதல்** – பொருள் நிரம்பியிருத்தல்; ஏற்புடையதாதல்; ஈட்டுதல்.
**யாபனம்** – பொழுதுபோக்குதல்; இகழுதல்; தாமதிக்கை.
**யாபித்தல்** – பொழுதுபோக்குதல்; நுகர்தல்; கவர்தல்.
**யாம்** – தன்மைப் பன்மைப் பெயர்.
**யாமக்கோட்டம்** – அந்தப்புரம்.
**யாமகோடம்** – சேவல்; நாழிகைவட்டில்.
**யாமங்கொள்பவர்** – ஊர்காவலர்; நாழிகைக் கணக்கர்.
**யாமசரிதன்** – இரவில் திரிபவனான அரக்கன்.
**யாமபதி** – சந்திரன்.
**யாமபேரி** – இரவில் ஒவ்வொரு சாமத்தின் தொடக்கத்திலும் கொட்டும் பேரிகை.
**யாமம்** – நள்ளிரவு; சாமம்; இரவு; இடக்கை மேளம்; மாலைப்பொழுதின் பின் பத்து நாழிகை; அகலம்; தெற்கு.
**யாமயாழ்** – நள்ளிரவில் மீட்டும் யாழ்.
**யாமவதி** – இரவு.
**யாமளபுராதனர்** – காளியின் படைவீரர்.
**யாமளம்** – காளியைத் தெய்வமாகக்கொண்ட ஒரு வேதம்; இரட்டை; பச்சை; இளமை.
**யாமளை** – பார்வதி; காளி.
**யாமி** – இராத்திரி; யமன்தேவி; கற்புடையாள்; உடன்பிறந்தாள்; தெற்கு; மகள்; மருமகள்.
**யாமிகன்** – இரவில் நகரைக் காக்கும் காவற்காரன்.
**யாமியம்** – தெற்கு; சந்தனம்; தவம்.
**யாமினி** – மூன்று யாமங்களையுடைய இரவு.
**யாமுனம்** – அஞ்சனக்கல்.
**யாமை** – ஆமை; இரவு; காண்க: யாழ்பதங்காளி; தெற்கு.
**யாமைமணை** – ஆமையின் வடிவமைந்த ஓர் இருக்கை.
**யாய்** – தாய்.
**யார்** – யாவர்; காண்க: நத்தைச்சூரி.
**யாரள்** – காண்க: யாவள்.
**யாரி** – கதவு; கள்ளக்கணவன்; எதிரி.
**யாரும்** – எவரும்.
**யாலம்** – ஆச்சாமரம்; இரவு.
**யாவகம்** – செம்பஞ்சு; காண்க: பெரும்பயறு.
**யாவண்** – எவ்விடம்.
**யாவது** – எது; எவ்விதம்.
**யாவதும்** – சிறிதும்; காண்க: யாவும்.
**யாவர்** – எவர்.
**யாவரும்** – எல்லோரும்.
**யாவள்** – எவள்.
**யாவன்** – எவன்.
**யாவும்** – எல்லாம்.
**யாவை** – எவை.
**யாழ்** – பேரியாழ், சகோடயாழ், மகரயாழ், செங்கோட்டியாழ் என்னும் நால்வகை நரம்புக் கருவி; மிதுனராசி; அசுவினிநாள்; திருவாதிரை நாள்; பண்; ஆந்தை.
**யாழ்க்கரணம்** – யாழ்மீட்டற்குரிய செய்கை.
**யாழ்செய்தல்** – பாடுதல்.
**யாழ்த்திறம்** – பண்; ஐந்து சுரமுள்ள இசை.
**யாழ்தரித்தாள்** – பார்வதிதேவி.
**யாழ்ப்பாணர்** – யாழ்மீட்டும் பாணர் வகையினர்; யாழ்ப்பாண நாட்டார்.
**யாழ்பதங்காளி** – செவ்வழி யாழ்த்திறத்துள் ஒன்று.
**யாழ்முனிவன்** – நாரதர்.
**யாழ்வல்லோர்** – காண்க: யாழோர்.
**யாழ** – ஒரு முன்னிலை யசைச்சொல்.
**யாழல்** – கறையான்.
**யாழோர்** – கந்தருவர்.
**யாழோர்கூட்டம், யாழோர்மணவினை** – எண்வகை மணத்துள் ஒன்றான கந்தருவ மணம்.
**யாளி** – யானையின் துதிக்கையும் சிங்கத்தின் முகமுமுடைய விலங்கு; அரிமா; சிம்மராசி; யானை; இறைகூடைவகை.
**யாளியூர்தி** – யாளியை ஊர்தியாக உடைய காளி.
**யாற்றுநீர்** – அடிதொறும் ஆற்றுநீர் ஒழுக்குப் போல நெறிப்பட்டு அற்றுஅற்று ஒழுகுவதான எண்வகைப் பொருள்கோளுள் ஒன்று.
**யாறு** – ஆறு.
**யான்** – தன்மை யொருமைப் பெயர்.
**யான்மை** – அகங்காரம்.
**யானஞ்செய்தல்** – செல்லுதல்.
**யானம்** – ஊர்தி; சிவிகை; மரக்கலம்; போர்ச் செலவு; அறைவீடு; கள்.
**யானெனதெனல்** – தன்முனைப்பும் பற்றுடைமையும் வெளிப்படப் பேசுதல்.
**யானை** – துதிக்கையுடைய விலங்குவகை; ஆனை மரம்.
**யானைக்கச்சை** – யானையின் கழுத்திலிடும் கயிறு.

**யானைக்கண்** – சிறுகண்; இலை, காய் முதலிய வற்றில் விழும் புள்ளி.
**யானைக்கதி** – நடனம், துரிதம், மந்தரம், ஓட்டம் என்னும் நான்கு வகைப்பட்ட யானை நடை.
**யானைக்கவடு** – யானைபோல் மனத்துள் மறைத்துவைத்திருக்கும் பகைமை.
**யானைக்கன்று** – யானைக்குட்டி.
**யானைக்கால்** – ஒரு நோய்வகை.
**யானைக்குப்பு** – சதுரங்கம்.
**யானைக்குருகு** – சக்கரவாகப்புள்.
**யானைக்கை** – தும்பிக்கை; கைவீக்கங் காணும் நோய்வகை.
**யானைகைக்கோள்** – பகைவரை எறிந்து அவர் யானையையும் காவலையும் கைக்கொண் டதைக் கூறும் புறத்துறை.
**யானைச்சாலை** – காண்க: **யானைத்தொழு.**
**யானைத்தண்டம்** – யானை செல்லும் வழி.
**யானைத்தந்தம்** – யானைக்கொம்பு; யானையின் எலும்பு.
**யானைத்தலைவன்** – யானைக் கூட்டத்துள் தலைமைதாங்கும் யானை.
**யானைத்தறி** – காண்க: **யானைத்தூண்.**
**யானைத்திசை** – வடக்கு.
**யானைத்திப்பிலி** – ஒரு திப்பிலிவகை.
**யானைத்தீ** – தணியாப் பசியைத்தரும் நோய்.
**யானைத்தூண்** – யானைகட்டும் கம்பம்.
**யானைத்தொழு** – யானைகள் கட்டுமிடம்.
**யானைநெருஞ்சி** – பெருநெருஞ்சி.
**யானைப்பட்டம்** – யானையின் முகவோடை.
**யானைப்படுகுழி** – யானையை அகப்படுத்துங் குழி.
**யானைப்பல்** – யானையின் கொம்பு.
**யானைப்பாகன்** – யானையை நடத்துவோன்.
**யானைப்போர்** – யானைகள் ஒன்றோடொன்று செய்யும் போர்.
**யானைபாய்ச்சுதல்** – யானையை மதம்படுமாறு செய்தல்.
**யானைமதம்** – யானையினின்று பாய்வதாகக் கருதப்படும் மதநீர்.
**யானைமறம்** – அரசனது யானையின் போர் வீரத்தைச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை.
**யானைமால்** – காண்க: **யானைத்தொழு.**
**யானைமுகவற்கிளையோன்** – முருகன்; வீர பத்திரக் கடவுள்.
**யானைமுகவன்** – விநாயகன்.
**யானையடி** – சதுரங்க ஆட்டத்தில் யானை செல்லும் நெறி; நேர்வழி; பெரிய வட்டமா யுள்ளது; செடிவகை.
**யானையுண்குருகு** – ஆனையிறாஞ்சிப்புள்; காண்க: **யானைக்குருகு.**
**யானையுரித்தோன்** – யானையின் தோலை உரித்தவனாகிய சிவபிரான்.
**யானையேற்றம்** – யானைமீதேறி அதனையடக்கி நடத்தும் வித்தை.
**யானைவணங்கி** – காண்க: **தேட்கொடுக்கி; யானைநெருஞ்சி.**
**யானைவாரி** – காண்க: **யானைத்தொழு;** யானை பிடிக்குமிடம்.
**யானைவீரர்** – எண்பெருந் துணைவருள் யானை மேலிருந்து போர்புரியும் வீரர்.
**யானைவென்றி** – ஒரு யானை பிறிதொன்றோடு பொருது வெற்றிபெறுதலைக் கூறும் புறத் துறை.
**யானைவேட்டுவன்** – யானைவேட்டையாடு வோன்.

# யு

**யு** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ய் + உ).
**யுக்தி** – கூரிய அறிவு; பொருத்தம்; அனுமானம்; நியாயம்; சூழ்ச்சி; ஆராய்வு; வழிவகை; அறிவுக்கூர்மை; புத்திமதி.
**யுகதருமம்** – யுகபேதத்தினா லுண்டாகும் நடை முறை.
**யுகந்தரம்** – ஏர்க்கால்; ஒரு நாடு.
**யுகப்பிரளயம்** – நான்கு யுகத்தின் முடிவில் நிகழும் அழிவு.
**யுகம்** – கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்று நால்வகைப்பட்ட யுகங்கள்; இரட்டை; நுகத்தடி; நாலுமுழங்கொண்ட அளவு; பூமி.
**யுகளம், யுகளி** – இரட்டை.
**யுகாதி** – அருகன்; கடவுள்; தெலுங்கர், கன்னடர் முதலியோரின் ஆண்டுப்பிறப்பு; யுகத்தின் தொடக்கம்.
**யுகாந்தம்** – யுகமுடிவு; உலக முடிவுகாலம்.
**யுஞ்சானன்** – உடற்பயிற்சி செய்வோன்.
**யுத்தகளம்** – போர்க்களம்.
**யுத்தசன்னத்தன்** – போருக்கு ஆயத்தமானவன்.
**யுத்தம்** – போர்; பொருத்தமானது; நான்குமுழங் கொண்டது.
**யுத்தமுகம்** – போர்முனை.

**யுத்தாயுத்தம்** – தக்கதும் தகாததும்.

**யுத்தி** – காண்க: **யுக்தி.**

**யுவ** – அறுபதாண்டுக் கணக்கில் ஒன்பதாம் ஆண்டு.

**யுவதி** – பதினாறு வயதுடைய பெண்; இளம் பெண்.

**யுவராசன்** – இளவரசன்.

**யுவன்** – இளைஞன்.

## யூ

**யூ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ய் + ஊ).

**யூகசாலி** – புத்திக்கூர்மையுள்ளவன்.

**யூகம்** – எதிர்பார்ப்பு; அறிவுக்கூர்மை; கருத்து; காந்தி; வாதம்; படையின் முன்னணிவகுப்பு; படை; உடற்குறை; கோட்டான்; கருங் குரங்கு; பெண்குரங்கு; பேன்.

**யூகவான், யூகி** – காண்க: **யூகசாலி.**

**யூகித்தல்** – எதிர்பார்த்தல்; அனுமானித்தல்; ஆராய்தல்.

**யூகை** – கல்வி; அறிவாளி; மூலத்திலிருந்து உரைகாரர் அனுமானிக்குங் கருத்து; அறிவுக் கூர்மை; பேன்.

**யூதநாதன்** – காண்க: **யூதபம்.**

**யூதநாயகன்** – படைத்தலைவன்.

**யூதபதி** – காண்க: **யூதபம்.**

**யூதபம்** – யானைக்கூட்டத்துக்குத் தலைமை யானை.

**யூதம்** – யானைக்கூட்டம்; பெரும்படை.

**யூதிகை** – முல்லை.

**யூபத்தம்பம்** – வேள்வித்தூண்.

**யூபம்** – காண்க: **யூபத்தம்பம்;** வேள்வி; படையின் அணிவகுப்பு; உடற்குறை.

## யோ

**யோ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ய் + ஓ).

**யோக்கியத்துக்குக்கொடுத்தல்** – ஒருவனது தகுதியின்மேல் ஆதாரமின்றிக் கடன்கொடுத்தல்.

**யோக்கியதாபட்சம்** – தகுதிபற்றிய மதிப்பு.

**யோக்கியதாபத்திரம்** – கல்வித்தேர்ச்சியைக் குறிக்கும் நற்சான்றிதழ்; நல்லொழுக்கத்தைக் குறிக்கும் பத்திரம்.

**யோக்கியதை** – தகுதி; நேர்மை; தொடரில் சொற்கள் பொருள்பொருத்த முற்றிருக்கை; ஆற்றல்; கல்வி, ஒழுக்கம் முதலியவற்றால் வருஞ் சிறப்பு; பயன்படுத்தற்கேற்ற தன்மை.

**யோக்கியம்** – தகுதி; நேர்மை; நன்மையானது; ஒழுங்கானது; தூய்மை.

**யோக்கியன்** – தகுந்தவன்; குணவான்; பயன்படுபவன்.

**யோகக்காட்சி** – யோகத்தாற் காணுமறிவு.

**யோகக்காரன்** – நல்வினையாளன்.

**யோகசத்தி** – நவச்சாரம்.

**யோகசம்பந்தம்** – கூட்டம், புணர்ச்சி.

**யோகசமாதி** – ஆன்மா உடலையும் மனத்தையும் விட்டு நீங்கிநிற்கும் யோகநிலை.

**யோகசரன்** – அனுமான்.

**யோகசாதனம், யோகசாதனை** – யோகப்பயிற்சி.

**யோகசித்தி** – யோகஞ் செய்ததனால் பெற்ற பேறு

**யோகதண்டம்** – யோகியின் கையிலுள்ள கோல்.

**யோகதீட்சை** – யோகநெறியால் குரு சீடனது உடலுட்புகுந்து அவனது ஆன்மாவை ஈர்த்துச் சிவன் திருவடியிற் சேர்ப்பிக்கும் தீட்சைவகை; தீட்சை ஏழனுள் நிராதாரயோகத்தைப் பயிற்றுவிக்கை.

**யோகநித்திரை** – உறங்குவது போன்றிருந்தும் அறிவுற்றிருக்கும் யோகநிலை.

**யோகநிலை** – யோகமுறையில் தியானத்தில் அமர்ந்திருக்கை.

**யோகபரன்** – யோகசிந்தையுடையவன்.

**யோகபாதம்** – கடவுளை அகத்தான் வழிபடும் நெறி; யோகத்தைப்பற்றிக் கூறும் சிவாகமத்தின் இரண்டாம் பகுதி.

**யோகம்** – சேர்க்கை; புணர்ச்சி; கூட்டல்; நற்பேறு; உயர்ச்சி; ஊக்கம்; தகுதி; காரணப் பெயர்; சூத்திரம்; வழி; மருந்து; ஏமாற்று; அரைப்பட்டிகை; நற்சுழி; காண்க: **யோகு;** உணர்ச்சி; கடவுளை அகத்தான் வழிபடுகையாகிய நெறி; எண்வகைப்பட்ட யோகாப்பியாச அங்கங்கள்; ஆறுவகை யோகங்கள்; ஒவ்வொரு சிவாகமத்திலும் யோகத்தைப் பற்றிக் கூறுவதாயுள்ள இரண்டாம் பகுதி.

**யோகமார்க்கம்** – யோகமுறை.

**யோகர்** – யோகியர்; முனிவர்; சமணமுனிவர்.

**யோகரூடி** – காரண இடுகுறி.

**யோகவான்** – நற்பேறுபெற்றவன்.

**யோகவிபாகம்** – ஒரு சூத்திரத்தில் ஒரு பகுதியைத் தனியே பகுத்து வேறு சூத்திரமாக்கிப் பொருள் கோடலாகிய நூற்புணர்ப்பு.

**யோகாசனம்** – யோகத்திற்குரிய இருக்கை; முழங்காலிட்டுக் குந்தியிருக்கும் இருப்பு.

**யோகாதிசயம்** – இன்பநிலை.

**யோகி** – யோகப்பயிற்சியுடையவன்; சன்னியாசி; சிவன்; அருகன்; முனிவன்; உடலை வளைக்க உதவும் தசை; ஐயனார்.

**யோகித்தல்** – தியானித்தல்.

**யோகிப்பு** – தியானம்.

**யோகினி** – மந்திரவாதந் தெரிந்தவள்; காளியின் ஏவல்செய் மகளிர்; தெய்வப்பெண்; காளி; தேவதை.

**யோகினிச்சி** – வரிக்கூத்துவகை.

**யோகீசுவரன்** – யோகத்தில் வல்லவன்.

**யோகு** – ஆழ்ந்த தியானம்.

**யோசனம்** – காண்க: **யோசனை.**

**யோசனவல்லி** – மஞ்சிட்டிவேர்; வல்லாரை.

**யோசனன்** – கடவுள்.

**யோசனை** – சிந்தனை; கருத்து; புத்திமதி; வழிவகை; அறிவுக்கூர்மை; நான்கு குரோசங் கொண்ட நீட்டலளவை; ஓசை.

**யோசனைக்காரன்** – முன்னாலோசனை உடையவன்.

**யோசனைசாலி** – கூரிய அறிவினன்.

**யோசித்தல்** – ஆராய்தல்; சேர்த்தல்; சிந்தித்தல்; ஆலோசனை கேட்டல்.

**யோதனம்** – போர்.

**யோனி** – பெண்குறி; பிறப்பிடம்; கருப்பப் பை; பிறவி; காரணம்; காண்க: **ஆவுடையார்(ள்)**; ஒரு நாடகவுறுப்பு; பூரநாள்; நீர்.

**யோனிப்படுதல்** – பிறத்தல்.

**யோனிப்பொருத்தம்** – மணப்பொருத்தம் பத்தனுள் ஒன்று.

**யோனிபேதம்** – எண்பத்துநான்கு நூறாயிரமாகக் கூறப்படும் பிறப்புவகை.

**யோனிலிங்கம்** – பெண்குறியின் ஓர் உள்ளுறுப்பு.

**யோனிவாய்ப்படுதல்** – காண்க: **யோனிப்படுதல்.**

## யௌ

**யௌ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ய் + ஔ).

**யௌகிகம்** – பகுபதம்.

**யௌதகம்** – மகளுக்குத் தருஞ் சீர்ப்பொருள்.

**யௌதம்** – பெண்கள் கூட்டம்; ஒரு நீட்டலளவு.

**யௌவனகண்டகம்** – முகப்பரு.

**யௌவனதசை** – இளம்பருவம்.

**யௌவனம்** – இளமை; அழகு; களிப்பு; மகளிர் கூட்டம்.

**யௌவனலட்சணம்** – அழகு; கொங்கை.

**யௌவனிகை** – பதினாறு வயது தொடங்கி ஐம்பது வயதுக்குட்பட்ட பெண்.

## ர

**ர** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ர் + அ).

**ரகளை** – குழப்பம்; கலவரம்; கன்னடப்பாட்டு வகை.

**ரசதமலை** – கயிலைமலை; வெள்ளிமலை.

**ரசீது** – பெற்றுக்கொண்டதைக் குறிப்பிட்டுக் கொடுக்குஞ் சீட்டு.

## ரீ

**ரீ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (ர் + ஈ).

**ரீங்காரம்** – வண்டு முதலியவற்றின் ஒலி.

**வ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (வ் + அ); கால் என்னும் பின்னவெண்ணின் குறி; பலவின்பால் விகுதியுள் ஒன்று.

**வக்கணித்தல்** – விவரித்துரைத்தல்; மனம் கோணியிருத்தல்.

**வக்கணை** – கடிதம் முதலியவற்றின் முகப்புரை; போற்றுரை; வருணனை; பட்டப்பெயர்; நாகரிகம்; ஒழுங்கு; நிந்தை; திறமையான பேச்சு.

**வக்கரன்** – காண்க: **வக்கிரன்.**

**வக்கரனை** – எல்லாப் பண்களும் குழலின் ஆறு துளைகளாலேயே உண்டாகும்படி விரல்களால் சமன்செய்து ஆராய்கை.

**வக்கரித்தல்** – காண்க: **வக்கிரித்தல்.**

**வக்கரை** – வரிந்துகட்டும் முகட்டுக்கட்டை; அங்கவடி; பற்கறை.

**வக்கா** – கொக்குவகை; சிப்பிவகை.

**வக்காணம்** – ஆலாபனம்.

**வக்காணிக்குமண்டபம்** – சாத்திர சம்பந்தமாக வாதம் நிகழுமிடம்.

**வக்காணித்தல்** – விரித்துரைத்தல்; வாதஞ் செய்தல்.

**வக்காலத்து** – வழக்கு முதலியன நடத்துவதற்கு வழக்கறிஞருக்குக் கொடுக்கும் அதிகாரப் பத்திரம்.

**வக்கிரக்கண்** – மாறுகண்.

**வக்கிரக்கிரீவம்** – வளைந்த கழுத்துடைய ஒட்டகம்.

**வக்கிரகம்** – மழையால் உண்டாகும் தடை.

**வக்கிரசந்திரன்** – இளம்பிறை.

**வக்கிரதந்தம்** – வளைந்த பல்.

**வக்கிரதுண்டன்** – விநாயகன்.

**வக்கிரநாசிகம்** – வளைந்த அலகுடைய கிளி; ஆந்தை.

**வக்கிரம்** – வளைவு; வட்டம்; சென்றவழியே மீளுகை; நேர்மையற்ற செலவு; கொடுமை; பொய்; பொறாமை; கோளின் பிற்போக்கான நடை; வஞ்சனை; கலக்கம்; கோணல்வழி.

**வக்கிரவுத்தி** – சொன்ன சொற்களுக்கு வெவ்வேறு பொருள்கொண்டு மறுமொழி யுரைப்பதாகிய அணி.

**வக்கிரன்** – மாறுபாடுள்ளவன்; குரூரன்; சனி; செவ்வாய்; உருத்திரன்; தந்தவக்கிரன்; ஓர் அசுரன்.

**வக்கிராங்கம்** – வளைந்த வடிவுடைய அன்னப் பறவை.

**வக்கிராங்கி** – காண்க: **கடுகுரோகிணி.**

**வக்கிரித்தல்** – கோள் மடங்கித் திரும்புதல்; கோணியிருத்தல்; மனங்கோணியிருத்தல்; ஆலாபனஞ்செய்தல்.

**வக்கு** – வேகுகை; தோல்; ஊமைக்காயம்; நீர்த் தொட்டி; மூத்திரக்குண்டிக்காய்; வழி; அண்ட விதை.

**வக்குத்திரிகரணம்** – படுக்கை.

**வக்குதல்** – வதக்குதல்.

**வக்குரித்தல்** – வேதல்.

**வகச்சல்** – மாலைவகை.

**வகதி** – எருது; காற்று; நண்பன்.

**வகந்தம்** – காற்று; குழந்தை.

**வகம்** – காற்று; வழி; ஊர்தி; குதிரை.

**வகிடு** – வகிர்ந்த முன்தலைமயிரின் இடைவெளி யொழுங்கு.

**வகித்தல்** – தாங்குதல்.

**வகிர்** – பிளவு; கீறு; வழி; காண்க: வகிடு; வார்க்கச்சு; தோல்வார்; நரம்பு; பிளந்த துண்டு.

**வகிர்தல்** – துண்டாக அறுத்தல்; பிளத்தல்; கீறுதல்; கோதுதல்; பங்குசெய்தல்; காண்க: **வகிரெடுத்தல்.**

**வகிரங்கம்** – வெளிப்படை; வெளியுறுப்பு.

**வகிரியாகம்** – வெளியரங்கப் பூசை.

**வகிரெடுத்தல்** – உச்சியினின்று நெற்றியின் மத்தி வரை மயிரை ஒழுங்குபடப் பிரித்தல்.

**வகிரேந்திரியம்** – அறிகருவியாகிய புலன்.

**வகுஞ்சம்** – இரவு.

**வகுணி** – காண்க: **வகுளி.**

**வகுத்தல்** – கூறுபடுத்தல்; பகிர்ந்துகொடுத்தல்; இனம்பற்றிப் பிரித்தல்; பகுத்துக் கணக்கிடல்; அமர்த்துதல்; வகைப்படுத்தல்; நியமத்தோடு செலவிடுதல்; பூசுதல்; படைத்தல்.

**வகுத்தான்** – ஊழ்.

**வகுத்திரம்** – தெப்பம்.

**வகுத்துக்காட்டல்** – முப்பத்திரண்டு நூல் உத்திகளுள் ஒன்றான தொகுத்துக் காட்டியவற்றை வேறுபிரித்துக் காட்டுதல்.

**வகுதல்** – பிளத்தல்.

**வகுதி** – வகுப்பு.

**வகுந்து** – வழி.

**வகுப்பு** – கூறுபடுத்துகை; இனம்பற்றிப் பிரிக்கை; பிரிவு; சாதி; தரம்; காண்க: வகிடு; தடுக்கப் பட்ட அறை; பொலிவு; சந்தம்; அழகு.

**வகுப்புவாரி** – சாதிவீதம்.

**வகுமை** – மகிழ்ச்சி.

**வகுலி** – மீன்.

**வகுளம்** – மகிழமரம்.

**வகுளாபரணர்** – மகிழம்பூவை அணிந்த நம்மாழ்வார்.

**வகுளி** – ஒலி.

**வகை** – கூறுபாடு; சாதியினம்; இனம்; முறை; வழி; காரணம்; தந்திரம்; வலிமை; தன்மை;

வாழ்க்கைக்குரிய பொருள் முதலியன; வணிக முதல்; இடம்; உறுப்பு; குறுந்தெரு; மனையின் பகுப்பு; விவரம்; கூட்டப்படும் எண்கள்.

**வகைச்சூத்திரம்** – தொகுத்துச் சொல்லப் பட்டதனை வேறுவேறாக வகுத்துரைக்குஞ் சூத்திரம்.

**வகைசெய்தல்** – ஏற்பாடுசெய்தல்; வழிசெய்தல்; கணக்கிற் பதிவுசெய்தல்; நிலங்களுக்குத் தீர்வை ஒழுங்குசெய்தல்.

**வகைசொல்லுதல்** – விவரஞ் சொல்லுதல்; கணக்குக்காட்டுதல்.

**வகைத்தார்** – காண்க: **வகைமாலை.**

**வகைதெரிவு** – பகுத்தறிவு.

**வகைநிலைக்கொச்சகம்** – கொச்சகவகை.

**வகைப்படுத்துதல்** – பங்கிடுதல்; வகையாகப் பிரித்தல்.

**வகைபண்ணுதல்** – ஏற்பாடுசெய்தல்; கணக்கிற் பதிவுசெய்தல்; வழிசெய்தல்.

**வகைமாலை** – தளிரும் பூவும் விரவத் தொடுத்த மாலை.

**வகைமுதலடுக்கலங்காரம்** – பலவகையான முதற் பொருள்களை அடைசினை புணராது செய்யுள் முழுதும் அடுக்கிக் கூறுவதாகிய அணி.

**வகைமோசம்** – இரண்டகம், நம்பிக்கைமோசம்; திக்கற்ற நிலை.

**வகையறா** – சார்ந்தது.

**வகையறிதல்** – செய்யும்முறை தெரிதல்; கூறுபாடறிதல்.

**வகையறுத்தல்** – வழக்குத் தீர்த்தல்; பகுத்தறிதல்.

**வகையறுதல்** – கதியற்றுப்போதல்.

**வகையார்** – இனத்தார்.

**வகையுளி** – அசைமுதல் உறுப்புகளைச் சொல் நோக்காது இசைநோக்கி வண்ணமறுக்கை.

**வகைவைத்தல்** – காரியமாகக் கொள்ளுதல்; கணக்கில் வரவுவைத்தல்.

**வங்கக்கல்** – சுக்கான்கல்.

**வங்கசிந்தூரம்** – ஈயத்தின் சிந்தூரம்.

**வங்கணத்தி** – உற்ற தோழி; கொடியவள்.

**வங்கணம்** – நட்பு; காதல்; தகுதி; செடிவகை.

**வங்கணன்** – உற்ற தோழன்; கொடியவன்.

**வங்கநீர்** – கடல்.

**வங்கநீறு** – ஈயமணல்.

**வங்கப்பாண்டி** – ஊர்திவகை.

**வங்கப்பாவை** – மருந்துச்சரக்குவகை.

**வங்கம்** – கப்பல்; ஓர் ஊர்திவகை; ஈயம்; தகரம்; துத்தநாகம்; வெள்ளி; ஒரு நாடு; ஒரு மொழி; அலை; ஆற்றுவளைவு; கருத்து; வறுமை; கத்தரிச்செடி.

**வங்கர்** – நெய்தல்நில மக்கள்; வங்கநாட்டார்.

**வங்கன்** – சண்டாளன்; வறிஞன்.

**வங்கா** – பறவைவகை; ஊதுகொம்புவகை.

**வங்காரம்** – பொன்; உலோகக்கட்டி; செப்பம்.

**வங்காளி** – வங்கநாட்டான்; வங்கமொழி; வாழை.

**வங்கி** – தோளணிவகை; வளைந்த ஆயுதவகை; பாங்கி; சம்பாநெல்வகை; கொடிவேலி.

**வங்கிசம்** – வமிசம்; காண்க: **வங்கியம்.**

**வங்கியம்** – இசைக்குழல்; மூங்கில்.

**வங்கு** – கல் முதலியவற்றின் அளை; எலிவளை; மலைக்குகை; மரப்பொந்து; கப்பலின் விலாச் சட்டம்; பாய்மரக்குழி; நாய்ச்சொறி; கழுதைப்புலி; தாழம்பூவின் மகரந்தம்.

**வங்குக்கால்** – கப்பலின் விலாப்பலகைகளைத் தைக்குஞ் சட்டம்.

**வங்கூழ்** – காற்று; வாதம்.

**வங்கை** – பகை; குறும்பு.

**வச்சகம்** – மலைமல்லிகைச்செடி; வெட்பாலை.

**வச்சணத்தி** – அன்பு.

**வச்சநாபி(வி)** – பச்சநாவி, நச்சுச்செடிவகை.

**வச்சம்** – கன்று; ஒரு நாடு.

**வச்சயம்** – கலைமான்; கருநிறமுள்ள மான்வகை.

**வச்சரி** – வேம்பு.

**வச்சலமணி** – கோரோசனை.

**வச்சனி** – மஞ்சள்.

**வச்சி** – காயாமரம்.

**வச்சிரக்கட்டு** – பலமான அமைப்பு.

**வச்சிரக்கபாய்** – உறுதியான காப்புச்சட்டை.

**வச்சிரக்கல்** – வைரமணி.

**வச்சிரகங்கடம்** – மிக்க உறுதியுள்ள சட்டை வகை.

**வச்சிரகங்கடன்** – அனுமான்.

**வச்சிரகாயம், வச்சிரசரீரம்** – காண்க: **வச்சிரயாக்கை.**

**வச்சிரதரன்** – வச்சிரப்படையுடைய இந்திரன்.

**வச்சிரதுண்டம்** – கருடன்; கொக்கு; வலியான்.

**வச்சிரநிம்பம்** – கருவேம்புமரம்.

**வச்சிரப்படை** – இருதலைச் சூலமாய் நடுவுபிடியாயுள்ள ஓராயுதம்; கோபுரத்தின் அடிநிலைக் கட்டடம்.

**வச்சிரப்படையோன், வச்சிரபாணி** – காண்க: **வச்சிரதரன்.**

**வச்சிரபாதம்** – இடியேறு.

**வச்சிரபீசம்** – கெட்டியான விதையுடைய கழற்சிக் காய்.

**வச்சிரம்** – இருதலைச் சூலமாய் நடுவு பிடியாயுள்ள ஓராயுதம்; மிகவும் உறுதியானது; வைரமணி; மரத்தின் காழ்; சதுரக்கள்ளி; மல்லர் கருவிவகை; ஒரு பசைவகை; சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று; யோகம் இருபத்தேழனுள் ஒன்று; வச்சிரநாடு.
**வச்சிரமணி** – வைரக்கல்.
**வச்சிரமாலை** – இந்திரர் முதலிய தேவர் தோளிலணியும் மாலை.
**வச்சிரயாக்கை** – உறுதியான உடல்.
**வச்சிரயாப்பு** – மரங்களை வச்சிரப்பசையினாற் சேர்க்கை; வச்சிரப்படையால் எழுதியது போன்று என்றும் அழியாவெழுத்து.
**வச்சிரரேகை** – பெண் மகப்பேறடைவதைக் குறிப்பதாகக் கருதப்படும் இரேகைவகை.
**வச்சிரலேபம்** – ஒன்றாக இணைக்கும் பசைவகை.
**வச்சிரவண்ணன், வச்சிரவணன்** – குபேரன்.
**வச்சிரவல்லி** – பிரண்டைக்கொடி; சூரியகாந்தி.
**வச்சிரன்** – இந்திரன்.
**வச்சிராங்கம்** – சதுரக்கள்ளிமரம்.
**வச்சிராங்கி** – உறுதியான கவசம்; வைரம்பதித்த கவசம்.
**வச்சிராசனி** – இந்திரனது வச்சிரப்படை; இந்திரனின் கொடி.
**வச்சிராட்சி** – பிரண்டைக்கொடி.
**வச்சிராயுதம்** – இருதலைச் சூலமாய் நடுவு பிடியாயுள்ள ஓராயுதம்; இந்திரனின் ஆயுதம்.
**வச்சிராவர்த்தம்** – இராமன் வில்.
**வச்சிரி** – காண்க: **வச்சிரதரன்.**
**வச்சை** – வாஞ்சை; இவறல்; பழிப்பு.
**வச்சைமாக்கள்** – உலுத்தர், இவறலர்.
**வச்சையம்** – கலைமான்.
**வச்சையன்** – உலுத்தன்.
**வசக்கட்டு** – வாணிகக் கூட்டாளியிடம் கொடுத்த தொகை; ஒப்படைத்த பொருள்; செலவுக்கென்று முன்னதாகக் கொடுத்த பணம்; ஆட்சி.
**வசக்குதல்** – வளையப்பண்ணுதல்; நிலத்தைத் திருத்துதல்; வயப்படுத்துதல்.
**வசங்கண்டவன்** – உண்மையறிந்தவன்; பட்டறிவுள்ளவன்; ஒரு பழக்கத்தில் விழுந்தவன்.
**வசங்கெட்டவன்** – விருப்பமில்லாதவன்; நலமில்லாதவன்; நிலைமைகெட்டவன்; மனமின்றி வேலைசெய்பவன்; கட்டினின்று விடுபட்டவன்; ஒழுங்கீனன்; நட்பற்றவன்.
**வசஞ்செய்தல்** – வயப்படுத்துதல்; அடக்குதல்; கைப்பற்றுதல்.
**வசதி** – வீடு; மருதநிலத்தூர்; நல்லிடம்; ஏந்து; இரவு; சினாலயம்.
**வசந்தகாலம்** – காண்க: **இளவேனில்.**
**வசந்தத்திருவிழா** – இளவேனிலில் நடைபெறும் திருவிழா; காமன்பண்டிகை.
**வசந்ததரு** – மாமரம்.
**வசந்ததூதம்** – குயில்; மாமரம்; சித்திரைமாதம்; பாதிரிமரம்; ஒரு பண்வகை.
**வசந்தபஞ்சமி** – காமனுக்குரியதாய் மாசி மாதத்து வளர்பிறையில் வரும் பஞ்சமிதிதி.
**வசந்தம்** – இளவேனிற் பருவம்; சித்திரைமாதம்; வசந்தத் திருவிழா; நறுமணம்; தென்றற் காற்று; ஒரு பண்வகை; மணப்பொடி; காதற் பேச்சு; சிறிய முத்து; இந்திரன் மாளிகை.
**வசந்தமண்டபம்** – பூஞ்சோலை நடுவணுள்ள மண்டபம்.
**வசந்தமலர்** – இலவங்கம்.
**வசந்தமாலை** – தென்றலைச் சிறப்பித்துக் கூறும் நூல்வகை.
**வசந்தருது** – காண்க: **இளவேனில்.**
**வசந்தவிழா** – காண்க: **வசந்தத்திருவிழா.**
**வசந்தன்** – மன்மதன்; காமனின் நண்பன்; இளவேனிற் காலத்துக்குரிய தேவன்; தென்றல்; ஒரு கூத்துவகை.
**வசந்தனடித்தல்** – கும்மியடித்தல்; வசந்தன் கூத்து ஆடுதல்.
**வசந்தா** – ஒரு பண்வகை.
**வசந்தி** – காண்க: **இருவாட்சி.**
**வசந்திகை** – தேமல்.
**வசந்தோற்சவம்** – காண்க: **வசந்தத்திருவிழா.**
**வசநாவி** – காண்க: **வச்சநாபி(வி).**
**வசப்படுத்துதல்** – தன்னுடையதாக்குதல்.
**வசப்படுதல்** – வயமாதல்; அகப்படுதல்.
**வசம்** – தன்வயம்; ஆட்சி; கீழ்ப்படிதல்; ஒழுங்கு; நிலைமை; இயலுகை; நேர்; பக்கம்; மூலமாய்; படியெடுக்குந் தாள்; வசம்பு.
**வசம்பு** – ஒரு மருந்துச்செடிவகை.
**வசரம்** – கோழி.
**வசலை** – பசளைக்கொடி.
**வசவன்** – பசுவின் ஆண்கன்று; வசுவதேவர்.
**வசவி** – தேவதாசி; கெட்டநடத்தை யுள்ளவள்.
**வசவிர்த்திக்கொள்ளுதல்** – தன் விருப்பப்படி வேலைவாங்குதல்.
**வசவு** – இழிவுரை.
**வசன்** – எல்லை; நேர்.
**வசனநடை** – உரைநடை.
**வசனம்** – சொல்; பேசுகை; உரைநடை; பழமொழி; ஆகமவளவை; உடை; அரைப்பட்டிகை; நோன்பு.
**வசனாவி** – காண்க: **வச்சநாபி(வி).**
**வசனித்தல்** – சொல்லுதல்; விவரித்தல்.

**வசி** – பிளவு; கூர்மை; நுனி கூர்மையான கோல்; கழுக்கோல்; தழும்பு; வாள்; சூலம்; இருப்பிடம்; வசியம்; தன்வயப்படுத்துவது; தாழ்ச்சி; தேற்றுகை; வசியவித்தைக்குரிய சொல்; காண்க: **வசித்துவம்**; உரைநடை; வாசிக்கை; ஐந்தெழுத்து மந்திரவகை; மழை; நீர்; குற்றம்; வெள்வெங்காயம்.

**வசிகம்** – மிளகு.

**வசிகரணம்** – கலைஞானம்; புணர்ச்சிக்கு இணக்கம்; காண்க: **வசீகரணம்**.

**வசிகரம்** – காண்க: **வசீகரணம்**; அழகு; ஆனைத் திப்பிலி; சீந்திற்கொடி.

**வசிகரித்தல்** – தன்வயப்படுத்துதல்; வேண்டுதல்.

**வசிகரிப்பு** – விண்ணப்பம்.

**வசிகன்** – தன்வயத்தன்.

**வசித்தல்** – வாழ்தல்; தங்குதல்; பேசுதல்; காண்க: **வசிதல்**; வசியஞ்செய்தல்.

**வசித்துவம்** – எண்வகைச் சித்திகளுள் ஒன்று; யாவரையும் தன்வயப்படுத்தி நிற்குந் தன்மை.

**வசிதடி** – கண்டமாக்கிய துண்டம்.

**வசிதல்** – பிளத்தல்; வடுப்படுதல்; வளைதல்.

**வசிதை** – தடுத்தற்கரிய ஆற்றலுடைமை.

**வசியகுளிகை** – தன்னை வைத்திருப்பவனுக்குப் பிறரை வசமாகச் செய்விக்கும் மாய மாத்திரை.

**வசியப்பொருத்தம்** – கலியாணப் பொருத்தம் பத்தனுள் ஒன்று.

**வசியம்** – வசப்படுகை; காதல்; கைவசம்; ஒரு வித்தைவகை; கிராம்பு.

**வசியை** – கற்புடையவள்.

**வசிரம்** – ஆனைத்திப்பிலி; கடலுப்பு.

**வசிவு** – பிளத்தலால் உண்டாகும் வடு; வளைவு; காமன்.

**வசீகரணம்** – வசியப்படுத்தல்; காமன் கணைகளுள் வசீகரத்தைச் செய்யும் அம்பு; பிறரை வசஞ்செய்யும் வித்தை.

**வசீகரம்** – வசமாக்கல்.

**வசீகரன்** – வசியப்படுத்துவோன்.

**வசீகரித்தல்** – தன்வயமாக்குதல்.

**வசீரன்** – வீரன்; குதிரைவீரன்; திப்பிலி.

**வசு** – எண்வகை வசுக்கள்; சுடர்; அக்கினி தேவன்; பொன்; செல்வம்; கதிர்; இரத்தினம்; நீர்; மரப்பொது; பசுவின் கன்று; வெள்வெங்காயம்.

**வசுகம்** – எருக்கஞ்செடி.

**வசுகிரி** – பொன்மலை; மேருமலை.

**வசுதை, வசுந்தரை** – காண்க: **வசுமதி**.

**வசுநாள்** – அவிட்டநாள்.

**வசுமதி** – பூமி.

**வசுவ(வா)சி** – சாதிபத்திரி.

**வசூரை** – விலைமகள்.

**வசூல்** – சேகரிப்பு; சேகரிக்கும் வரி முதலியன.

**வசூல்பாக்கி** – நிலுவைத்தொகை.

**வசூலித்தல்** – வரி முதலியவற்றைத் தண்டுதல்.

**வசை** – நிந்தை; பழிப்பு; இகழ்ச்சி; வசைகூறும் பாடல்; குற்றம்; அகப்பை; மலட்டுப்பசு; பசு; பெண்யானை; கணவனுடன் பிறந்தாள்; பெண்; மகள்; நிணம்; மனைவி.

**வசைக்கூத்து** – நகைச்சுவைபற்றி வரும் கூத்து.

**வசைகவி** – வசைகூறும் பாடல்; வசைபாடுவோன்.

**வசைச்சொல்** – நிந்தைச்சொல்.

**வசைத்தல்** – வளைத்தல்; சூழ்தல்.

**வசைதல்** – வசைகூறுதல்; வளைதல்; சூழப்படல்.

**வசைப்படுதல்** – வடுப்படுதல்; குற்றமுறல்.

**வசைப்பாட்டு** – வசைகூறும் பாடல்.

**வசையுநர்** – வசைகூறுவோர்; பகைவர்.

**வசைவு** – பழிப்பு; குற்றம்.

**வஞ்சகச்சொல்** – ஏமாற்றும் பேச்சு.

**வஞ்சகம்** – விரகு; ஏமாற்றம்; மறைவு; நரி.

**வஞ்சகமுடி** – ஆமை.

**வஞ்சகன்** – சூழ்ச்சிக்காரன்; ஏமாற்றுபவன்; கயவன்; நரி.

**வஞ்சகி** – சூழ்ச்சிக்காரி; ஏமாற்றுபவள்.

**வஞ்சந்தீர்தல்** – பழிவாங்குதல்.

**வஞ்சப்புகழ்ச்சியணி** – பழிப்பினால் புகழ்ச்சியும் புகழ்ச்சியால் பழிப்பும் தோன்றக் கூறும் ஓர் அணி.

**வஞ்சப்பெண்** – காளியேவல் செய்பவள்; காண்க: **வஞ்சகி**.

**வஞ்சபாவம்** – வஞ்சகத்தன்மை.

**வஞ்சம்** – கபடம்; பொய்; கொடுமை; வாள்; வஞ்சினம்; பழிக்குப்பழி; மாயம்; சிறுமை; அழிவு; மரபு; பிரபஞ்சம்.

**வஞ்சம்வைத்தல்** – பழிவாங்கப்பார்த்தல்.

**வஞ்சவம்** – பாம்பு.

**வஞ்சவிறுதி** – பொய்ச்சாக்காடு.

**வஞ்சன்** – வஞ்சகமுள்ளவன்.

**வஞ்சனம்** – வஞ்சகம்; ஒரு மீன்வகை.

**வஞ்சனி** – காண்க: **வஞ்சப்பெண்**; **வஞ்சகி**; பார்வதி; மாயையென்னுந் தேவதை; பெண்; ஆணை.

**வஞ்சனை** – தந்திரம்; பொய்; மாயம்; காண்க: **வஞ்சனைப்புணர்ப்பு**; ஆணை; தெய்வப்பெண்; பெண்.

**வஞ்சனைப்புணர்ப்பு** – இசைகொள்ளாவெழுத்துகளின் மேலே வல்லொற்று வந்தபோது மெல்லொற்றுப்போல நெகிழ்த்துப் புணர்க்கை.

**வஞ்சனையாளன்** – வஞ்சிப்போன்.

**வஞ்சி** – பெண்; வஞ்சிப்பா; மருத யாழ்த் திறத்துள் ஒன்று; வஞ்சிக்கொடி; சீந்திற் கொடி; புறத்திணையுள் மண்கொள்ளப் பகைவர்மேற் செல்வதைக் கூறுவது; அரசன் வஞ்சிப்பூவைத் தலையிற் சூடிப் பகைவர் நாட்டைக் கொள்ளுமாறு அவர்மேற் செல்லக் கருதியதைக் கூறும் புறத்துறை; சேரர் தலை நகரான கருவூர்; கொடுங்கோளூர்; சேரநாடு; குடை; காண்க: **கூகைநீறு**; படகு; கோயிலிற் காணிக்கை செலுத்தும் உண்டியல் பெட்டி.

**வஞ்சிக்களம்** – காண்க: வஞ்சைக்களம்.

**வஞ்சிக்கொடி** – ஒரு கொடிவகை.

**வஞ்சிச்சீர்** – காண்க: வஞ்சியுரிச்சீர்.

**வஞ்சித்தல்** – ஏமாற்றுதல்.

**வஞ்சித்திணை** – புறத்திணையுள் மண் கொள்ளப் பகைவர்மேற் செல்வதைக் கூறுவது.

**வஞ்சித்துறை** – இருசீரடி நான்காய் ஒருபொருண் மேல் ஒரு செய்யுள் வருவதாகிய வஞ்சிப் பாவினம்; அரசன் வஞ்சிப்பூவைத் தலையிற் சூடிப் பகைவர் நாட்டைக் கொள்ளுமாறு அவர்மேற் செல்லக் கருதியதைக் கூறும் புறத்துறை.

**வஞ்சித்தூக்கு** – பரிபாடலில் வஞ்சியடிகளால் வரும் பகுதி.

**வஞ்சிநாடு** – சேரநாடு.

**வஞ்சிப்பா** – நால்வகைப் பாவினுள் ஒன்று.

**வஞ்சிய(யா)ன்** – சேரமன்னன்; சேரநாட்டான்.

**வஞ்சியுரிச்சீர்** – தேமாங்கனி, புளிமாங்கனி, கூவிளங்கனி, கருவிளங்கனி என்று நான்கு வகைப்பட்ட நிரையசையீற்றவான மூவசைச் சீர்கள்.

**வஞ்சிவிருத்தம்** – முச்சீரடி நான்காய் வரும் வஞ்சிப்பாவினம்.

**வஞ்சிவேந்தன்** – மண்வேட்கையால் மேற்சென்றேனும் எதிர்த்தேனும் போர்செய்யும் அரசன்; வஞ்சிநகர்த் தலைவனான சேரன்.

**வஞ்சினம்** – சூளுரை; கடுஞ்சினம்.

**வஞ்சுளம்** – வேங்கைமரம்; அசோகமரம்; வஞ்சிக் கொடி.

**வஞ்சுளன்** – கரிக்குருவி.

**வஞ்சை, வஞ்சைக்களம்** – சேரர் தலைநகரான கருவூர்; கொடுங்கோளூர்.

**வட்கர்** – குற்றம்; காண்க: வட்கார்; இடைமுரிவு.

**வட்கல்** – வெட்கம், நாணம், கூச்சம்; கேடு; ஒளி மழுக்கம்.

**வட்கார்** – பகைவர்.

**வட்காரம்** – வெடிகாரம்.

**வட்கிலான்** – பகைவன்.

**வட்கு** – வெட்கம், நாணம்; கேடு.

**வட்குதல்** – வெட்குதல், கூசுதல்; கெடுதல்; தாழ்தல்; ஒளிமழுங்குதல்; வளம்பெறுதல்.

**வட்டக்கட்டில்** – வட்டமான அலங்காரத்துடன் செய்த கட்டில்வகை.

**வட்டக்குடில்** – பெருங்குடிசை.

**வட்டக்குடை** – அரசருக்குரிய குடை.

**வட்டக்கோள்** – காண்க: வட்டம்.

**வட்டகை** – நாட்டுப்பகுதி; சுற்றுப்பகுதி; சிறு கிண்ணம்; வட்டில்; காண்க: **வட்டகைநிலம்**; சில ஊர்களைக்கொண்ட பகுதி; வண்டிச்சக்கர வட்டை.

**வட்டகைநிலம்** – அடைப்புக் கட்டிய நிலம்.

**வட்டணம்** – பரிசை; நெடும்பரிசைவகை.

**வட்டணித்தல்** – வட்டமாக்குதல்; வட்டமாதல்.

**வட்டணை** – மண்டலம்; உருண்டை; வட்டமான செலவு; இடசாரி வலசாரியாகச் சுற்றுகை; காண்க: **கமலவருத்தனை; வட்டத்தோல்**; தாளக்கருவி; தாளம்போடுகை; அடிக்கை; மொத்துகை; வட்டமான அணை.

**வட்டணையுறுத்தல்** – தாளம்போடல்.

**வட்டத்திரி** – துப்பாக்கிக்கு நெருப்புவைக்குந் திரி; காதிடு திரி.

**வட்டத்திருப்பி** – காண்க: **ஆடுதின்னாப்பாளை**; கொடிவகை; பூண்டுவகை.

**வட்டத்துத்தி** – ஒரு சிறுசெடிவகை.

**வட்டத்தோல்** – கேடகம்.

**வட்டப்பாலை** – தமிழிசையின் நால்வகைப் பாலையுள் ஒன்று.

**வட்டப்பாறை** – வட்டமான பாறை; விளைவற்ற கற்பாங்கான பகுதி; சந்தனக்கல்.

**வட்டப்பூ** – கால்விரலணிவகை.

**வட்டம்** – மண்டலம்; பரிவேடம்; குயவன் திரிகை; வண்டிச்சக்கரம்; தடவை; சுற்று; ஒரு கோள் வானமண்டலத்தை ஒருமுறை சுற்றி வருங் காலம்; சுற்றுப்பகுதி; சில ஊர்களைக் கொண்ட பகுதி; வட்டமான செலவு; அப்ப வகை; சந்தனக்கல்; ஆலவட்டம்; வாகுவலயம்; தராசுத்தட்டு; கைம்மணி; கேடகம்; முத்துவகை; பீடம்; குளம்; கொள்கலம்; நீர்ச்சால்; நீர்வீசுகருவி; வளைவு; பாரா வளை; ஆடை; எல்லை; திருத்தம்; யானையின் நடுச்செவி; ஐந்நூறு சால்கொண்ட நீரளவு; தாழ்வு; காட்டுமரவகை; தோறும்; நாணயமாற்றின் வட்டம்; ரொக்க வாணிகத்திற் கொடுக்குந் தள்ளுபடி; ஊதியம்.

**வட்டம்போடுதல்** – காண்க: வட்டமிடுதல்; சூடடிக்க நெற்கதிர்களை நிலத்திற் பரப்புதல்.

**வட்டமிடுதல்** – பறவைமுதலியன சுற்றிவருதல்; உருண்டையாதல்; சூழ்ந்துவருதல்; நோக்கங் கொண்டு சுற்றுதல்.

**வட்டரவு** – வட்டவடிவு.

**வட்டன்** – வட்டுப்போன்ற உடலுடையவன்; ஒவ்வொரு முறையும்.

**வட்டா** – வாயகன்ற பாண்டம்.

**வட்டாட்டு** – வட்டுக்கொண்டாடுஞ் சூதாட்டம்.

**வட்டாடுதல்** – வட்டை உருட்டிச் சூதாடுதல்.

**வட்டாணி** – திறமை.

**வட்டாரம்** – காற்றுப்பகுதி; வீட்டின் சுற்றுப் புறம்; வீடு; தானியக்களஞ்சியம்.

**வட்டி** – கடகப்பெட்டி; கூடை; ஒரு படி அளவு கொண்ட முகத்தலளவை; பலகறை; வழி; கிண்ணம்; கருவுற்றாளுக்கு உண்டாகும் மயக்கம்; ஒரு விருதுவகை; பணத்தைப் பிறன் பயன்படுத்தியதற்காக உடையவன் பெறும் ஊதியம்; இலாபம்.

**வட்டிக்குவட்டி** – வட்டித்தொகைக்குக் கொடுக்கும் மேல்வட்டி; வட்டியை முதலோடு சேர்த்துக் கணக்கிட்டுக் கொடுக்கும் வட்டி.

**வட்டிகை** – சித்திரம் எழுதுங் கோல்; சித்திரம்; சுற்றளவு; வட்டம்; கைம்மணி; கூடை; ஒரு விருதுவகை; ஓர் ஓடவகை; நால்வகைச் சாந்தினுள் ஒன்று.

**வட்டிகைப்பலகை** – ஓவியனுக்குப் பயன்படும் வண்ணக்குழம்பு வைக்கும் பலகை.

**வட்டிகைப்பாவை** – சித்திரப்பதுமை.

**வட்டித்தல்** – வட்டமாதல்; சுழலுதல்; உறுதி மொழி யெடுத்தல்; தாளம்போடல்; தோள் புடைத்தல்; சுழற்றுதல்; உருட்டுதல்; பரிமாறுதல்; கட்டுதல்; எழுதுதல்; வளைத்தல்; கடிதல்.

**வட்டிப்பு** – வட்டம்; சூள்.

**வட்டியில்லாக்கடன்** – வட்டியின்றிக் கொடுக்குங் கடன்தொகை; திருப்பிச்செய்தலை எதிர் நோக்கிக் கொடுக்கும் நன்கொடை; மொய்.

**வட்டில்** – கிண்ணம்; உண்கலம்; ஒரு படி அளவு கொண்ட முகத்தலளவை; நாழிகைவட்டில்; அம்புக்கூடு; கூடை; வழி; ஒரு விருதுவகை; அப்பளஞ் செய்யுமாறு உருட்டிவைக்கும் மாவுருண்டை.

**வட்டிற்பூ** – தாமரைப்பூ.

**வட்டினி** – பந்தயப்பொருள்.

**வட்டு** – சூதாடுங் கருவி; திரட்சி; திரண்ட பொருள்; நீர்வீசு கருவிகளுள் ஒன்று; ஒரு விளையாட்டுக் கருவிவகை; அப்பளஞ் செய்யுமாறு உருட்டிவைக்கும் மாவுருண்டை; முள்ளிச்செடி; சிறுதுணி; கண்டசருக்கரை; குடையில் கம்பிகள் கூடுமிடம்.

**வட்டுடை** – முழந்தாளளவாக உடுக்கும் சிறப்புடை; ஆடை.

**வட்டுப்போர்** – சூதாட்டம்.

**வட்டுவப்பை, வட்டுவம்** – வெற்றிலை முதலியன வைக்கும் பை; மருந்துப்பை; பையின் உட்பை.

**வட்டெலி** – மரவெலி.

**வட்டெழுத்து** – பழைய தமிழெழுத்து.

**வட்டை** – வழி; சக்கரத்தின் மேல் வளைமரம்; தேர்; வயல்; பெருங்காடு; திக்கு; மலை வட்டைமரம்; மரவட்டைவகை; நாட்டுப் பகுதி; புலியின் உடல்வரி; அகன்று வட்ட வடிவமாயமைந்த பக்காப்படிவகை.

**வட்புலி** – அரிமா.

**வடக்கயிறு** – ஏர்நாழிக்கயிறு; தேர் முதலிய வற்றை யிழுக்குங் கயிறு.

**வடக்கிருத்தல்** – உயிர்துறக்குந் துணிவுடன் வடக்கு நோக்கியிருந்து உயிர்விடுதலை மேற் கொள்ளுதல்.

**வடக்கு** – நான்கு திசையுள் ஒன்று.

**வடக்குநோக்கி** – காந்தவூசி.

**வடக்குமலையான்** – காண்க: வடமலையான்.

**வடகம்** – கறிப்பொருள்களை அரைத்த மாவுடன் சேர்த்து வெயிலில் உலர்த்திய சிறிய உருண்டை; வற்றல்; மேலாடை; துகில்வகை; காண்க: வடகு.

**வடகயிலை** – வெள்ளியங்கிரி.

**வடகலை** – வடமொழி; வடமொழிநூல்; வைணவப் பிரிவினர்; வடகலை வைணவர் தரிக்குந் திருமண்காப்பு.

**வடகாற்று** – வாடை.

**வடகிரி** – மேருமலை.

**வடகிழக்கு, வடகீழ்த்திசை** – வடக்குங் கிழக்குஞ் சேருங் கோணத்திசை.

**வடகீழ்த்திசைப்பாலன்** – ஈசானன்.

**வடகு** – தோல்.

**வடகோடு** – பிறைச்சந்திரனின் வடக்குமுனை.

**வடசொல்** – காண்க: வடமொழி.

**வடதளம்** – ஆலிலை.

**வடதிசைப்பாலன்** – குபேரன்.

**வடதுருவம்** – வடக்கிலுள்ள முனை.

**வடந்தை** – வடதிசையில் உள்ளது; வடகாற்று.

**வடந்தைத்தீ** – பெண்குதிரை முகத்தின் வடிவோடு கடலுக்குள் தங்கியிருந்து ஊழி முடிவில் மேலே கிளம்பி உலகத்தை எரித்து விடுவதாகக் கருதப்படுந் தீ.

**வடநூல்** – வடமொழியிலுள்ள நூல்.
**வடபல்லி** – தலைக்கோலத்திற் புல்லகமென்னும் அணிகலன்.
**வடபுலம்** – வடநாடு; உத்தரகுரு.
**வடபூமி** – வடநாடு.
**வடபொழில்** – வடக்கிலுள்ள நாட்டுப்பகுதி.
**வடம்** – கனமான கயிறு; தாம்பு; வில்நாண்; மணிவடம்; சரம்; ஒழுங்கு; ஆலமரம்; மண்டலம்; பலகை.
**வடமகீதரம்** – காண்க: வடகிரி.
**வடமரம்** – ஆலமரம்; கப்பலின் நடுவிலிருக்கும் பாய்மரம்.
**வடமலை** – மேருமலை; இமயமலை; திருப்பதி மலை; மந்தரமலை.
**வடமலையான்** – திருப்பதித் திருமால்.
**வடமீன்** – அருந்ததி; துருவமீன்.
**வடமூலகன்** – சிவன்.
**வடமேரு** – மேருமலை.
**வடமேற்றிசைக்குறி** – கழுதை.
**வடமேற்றிசைப்பாலன்** – வாயு.
**வடமொழி** – சமஸ்கிருதம்.
**வடரம்** – தலைச்சீலை; பாய்.
**வடலி** – இளம்பனைமரம்.
**வடவர்** – வடநாட்டார்.
**வடவரை** – மேருமலை; மந்தரமலை.
**வடவளம்** – வடநாட்டில் விளைந்த பண்டம்.
**வடவனல், வடவனலம், வடவாக்கினி, வடவாமுகம், வடவாமுகாக்கினி, வடவானலம்** – காண்க: வடந்தைத்தீ.
**வடவு** – மெலிவு.
**வடவேங்கடம்** – திருப்பதிமலை, வடமலை.
**வடவை** – பெண்குதிரை; காண்க: வடந்தைத்தீ; அடிமைப்பெண்; குதிரைச்சாதிப் பெண்; எருமை; பெண்யானை.
**வடவைக்கனல், வடவைத்தீ** – காண்க: வடந்தைத்தீ.
**வடாது** – வடக்கிலுள்ளது; வடக்கு.
**வடாரகம்** – கயிறு.
**வடி** – தேன்; கள்; நீளுகை; வடித்தெடுக்கை; கூர்மை; வாரிமுடிக்கை; ஆராய்ச்சி; காண்க: வடிகயிறு; மாவடு; கயிறு; நாய்; மாம்பிஞ்சின் பிளவு; காற்று; உருவம்; சிறுதடி.
**வடிக்கண்** – வடுவகிர்போலும் கண்.
**வடிக்கதிர்** – நூல்முறுக்குங் கருவி.
**வடிகட்டுதல்** – வடித்தெடுத்தல்; சாரத்தைத் திரட்டுதல்.
**வடிகயிறு** – குதிரைவாய்க் கயிறு.
**வடிகாது** – தொங்குந் துளைச்செவி.
**வடிகால்** – நீரை வடியவிடுங் கால்வாய்.
**வடிசம்** – தூண்டில்.
**வடிசல்** – நீர் முதலியன வடிதல்; வடிக்கை; வடித்த சோறு; நீளுகை.
**வடிசாந்து** – நற்சாந்து.
**வடித்தல்** – வடியச்செய்தல்; வடிகட்டுதல்; பிழிதல்; தைலமிறக்குதல்; திருத்தமாகச் செய்தல்; சாரமான சொல்லால் அமைதல்; வசமாக்குதல்; பழக்குதல்; பயிலுதல்; சோறுசமைத்தல்; கூராக்குதல்; வாரிமுடித்தல்; தகடாக்குதல்; நீளமாக்குதல்; யாழ்நரம்பை உருவுதல்; அலங்கரித்தல்; ஆராய்தல்; ஆராய்ந்தெடுத்தல்; கிள்ளியெடுத்தல்.
**வடிதமிழ்** – தெளிந்த தமிழ்.
**வடிதயிர்** – கட்டித்தயிர்.
**வடிதல்** – நீர்முதலியன வற்றுதல்; ஒழுகுதல்; திருந்துதல்; தெளிதல்; அழகுபெறுதல்; நீளுதல்.
**வடிப்பம்** – வடிவழகு; செப்பம்; அழகு; திறம்.
**வடிப்போர்** – யானை முதலியன பயிற்றுவோர்.
**வடிம்பிடுதல்** – கட்டாயப்படுத்தல்; தேரை நிறுத்திக் கிளப்புதல்; தூண்டுதல்; பழிகூறுதல்.
**வடிம்பு** – விளிம்பு; கூரைச்சாய்வு; தேர் முதலியவற்றைக் கிளப்புந் தணிமரம்; தாங்குமரம்; தழும்பு; பழி.
**வடிம்புக்கழி** – குறுக்குவிட்டம்.
**வடிமணி** – தெளிந்த ஓசையுள்ள மணி.
**வடியல்** – வடிதல்; ஒன்றிலிருந்து நீக்கிய வடித்த நீர் முதலியன; சமைக்கப்பட்டது.
**வடியிடுதல்** – வடித்தெடுத்தல்.
**வடிவணங்கு** – அழகிய பெண்.
**வடிவம்** – உருவம்; உடம்பு; அழகு; நிறம்; ஒளி; மெய்ச்சொல்.
**வடிவவுவமம்** – உருவத்தை ஒப்பித்துக் கூறும் உவமை.
**வடிவாளன்** – அழகுள்ளவன்.
**வடிவிலாக்கூற்று** – அசரீரிவாக்கு, வானொலி.
**வடிவு** – காண்க: வடிவம்; அல்குல்; வடிந்தது; வடிந்த நீர்.
**வடிவெழுத்து** – திருந்திய கையெழுத்து; ஒலியின் குறியாக எழுதப்படும் எழுத்து.
**வடிவேல்** – கூரிய வேல்; முருகக்கடவுள்.
**வடு** – தழும்பு; மாம்பிஞ்சு; இளங்காய்; உடல் மச்சம்; உளியாற் செதுக்கின உரு; புண்வாய்; குற்றம்; பழி; கேடு; கருமணல்; செம்பு; வாள்; வண்டு; பிரமசாரி; இளைஞன்; வைரவன்; புத்திசாலிப் பையன்.
**வடுக்கொள்ளுதல்** – தழும்புபடுதல்; புண் முதலியன ஆறத்தொடங்குதல்.

**வடுகக்கடவுள்** – வைரவமூர்த்தி.
**வடுகச்சி** – வடுகப்பெண்.
**வடுகர்** – தெலுங்கர்; தமிழகத்தில் வாழும் தெலுங்கு இனத்தவர்.
**வடுகன்** – வைரவன்; பிரமசாரி; இளைஞன்; மூடன்; தெலுங்கநாட்டான்.
**வடுகன்றாய், வடுகி** – காளி.
**வடுகு** – தமிழ்நாட்டின் வடவெல்லையிலுள்ள நாடு, ஆந்திரமாநிலம்; தெலுங்குமொழி; தெலுங்கர் சாதி; மருத யாழ்த்திறத்துள் ஒன்று; இந்தளராகம்; மெய்க்கூத்துவகை; பூணூல் அணிவிக்குஞ் சடங்கு; இரத்தினக் குற்றவகை.
**வடுச்சொல்** – பழிமொழி.
**வடுத்தல்** – பிஞ்சுவிடுதல்; வெளிப்படுத்துதல்.
**வடுமாங்காய்** – மாம்பிஞ்சு.
**வடுவகிர்** – மாவடுவின் பிளவு.
**வடுவரி** – வண்டு.
**வடை** – உழுந்தாற் செய்யப்படும் ஒரு பலகார வகை.
**வடையம்** – பொட்டலமாகக் கட்டிய வெற்றிலை பாக்கு; நெல்லிக்கனி முதலியவற்றை அரைத்துத் தட்டிய வடை.
**வடையற்றது** – வீணானது.
**வண்களமர்** – வேளாளர்.
**வண்சிறை** – மதில்.
**வண்டத்தனம்** – குறும்புத்தனம்; அவையில் கூறத்தகாத சொல்.
**வண்டம்** – குந்தப்படை.
**வண்டயம்** – கழல்; காண்க: **வண்டவாளம்.**
**வண்டர்** – அரசனுக்கு நாழிகை யறிவிக்குங் கடிகையார்; மங்கலப்பாடகர்; வீரர்.
**வண்டல்** – மகளிர் விளையாட்டுவகை; மகளிர் கூட்டம்; விளையாட்டாக இழைத்த சிற்றில்; நீர் முதலியவற்றி னடியில் தங்கிய பொடிமண் முதலியன; நீரொதுக்கிவிட்ட மண்; பருக்கைக் கல்; பொருக்கு; நீர்ச்சுழி.
**வண்டலடித்தல்** – வயலுக்கு உரமாக வண்டல் பரப்புதல்; வயல் மண்மேடிடுதல்.
**வண்டலம்** – சேறு.
**வண்டலவர்** – விளையாட்டு மகளிர்.
**வண்டலாயம்** – விளையாடுந் தோழியர் கூட்டம்.
**வண்டலிழைத்தல்** – மணலால் சிற்றில் இழைத்து விளையாடுதல்.
**வண்டவாளம்** – நிலைமை; முதல்.
**வண்டற்படுகை** – வண்டலிட்ட ஆற்றோரம்.
**வண்டற்பாவை** – வண்டலாற் செய்த விளை யாட்டுப் பாவை.
**வண்டன்** – குள்ளன்; திண்ணியன்; தீயோன்; விருத்தசேதனம் பண்ணப்பட்டவன்.
**வண்டனான்** – முனிவன்.
**வண்டாலம்** – குந்தாலி; ஆயுதவகை; சூரயுத்தம்.
**வண்டானம்** – நாரைவகை.
**வண்டி** – சகடம்; வண்டிப்பாரம்; வயிறு; அடிமண்டி.
**வண்டிக்காரன்** – வண்டியோட்டுபவன்; வண்டிக்கு உரியவன்.
**வண்டிகட்டுதல்** – மாட்டை வண்டியில் பூட்டுதல்; யாத்திரை முதலியன தொடங்குதல்.
**வண்டிச்சத்தம்** – வண்டிவாடகை.
**வண்டித்தடம்** – வண்டிபோகும் வழி.
**வண்டிப்பாரம்** – வண்டியிலேற்றுஞ் சுமை; தானிய அளவுவகை.
**வண்டில்** – சக்கரம்; சகடம்.
**வண்டு** – அறுகாற் சிறுபறவைவகை; மறவருள் ஓர் உட்பிரிவினர்; அம்பு; குற்றம்; கைவளை; சங்கு; நூல்; பூசநாள்; அபிநயவகை; சிற்றொழுக்கம்; மரவகை; வைக்கோற்கூடு.
**வண்டுகடி** – வண்டுகொட்டுகை; மேகப்படை; செடிவகை.
**வண்டுச்சிலந்தி** – ஒரு புண்வகை.
**வண்டுணாமலர்** – சண்பகப்பூ; வேங்கைப்பூ.
**வண்டுநாணான்** – வண்டுகளை வில்லின் நாணாக உடைய காமன்.
**வண்டுருவன்** – திருமால்.
**வண்டுறை** – எழுத்திலாவோசை.
**வண்டெச்சில்** – தேன்.
**வண்டை** – வெண்டைச்செடி; கொச்சையானது.
**வண்ணக்கட்சி** – காண்க: **வண்ணக்களஞ்சியம்.**
**வண்ணக்கம்மர்** – வண்ணவேலை செய்வோர்.
**வண்ணக்களஞ்சியம்** – வண்ணக்கவி பாடுவதில் வல்லவன்.
**வண்ணக்கன்** – நாணயசோதகன்.
**வண்ணக்கிரமம்** – அகரமுதலிவரிசை; சாதி யொழுங்கு.
**வண்ணக்குழிப்பு** – வண்ணச்செய்யுளின் சந்த வாய்பாடு.
**வண்ணகம்** – வருணித்துப் புகழுகை; சந்தனம்; மணம்; அராகம் என்னும் கலிப்பாவுறுப்பு.
**வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா** – ஒரு தரவு, மூன்று தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் இவ்வாறு உறுப்பினையும் கொண்டுவரும் கலிப்பாவகை.
**வண்ணச்சுவையமுதம்** – காண்க: **வண்ணமுதம்.**
**வண்ணடை** – துகில்வகை.
**வண்ணத்தரு** – ஒரு பாடல்வகை.
**வண்ணத்தான்** – வண்ணான்.
**வண்ணத்துப்பூச்சி** – தட்டாரப்பூச்சி.

**வண்ணத்தூதன்** – திருமுகங் கொண்டு போவோன்.
**வண்ணநீர்** – அரக்குநீர்.
**வண்ணம்** – நிறம்; சித்திரமெழுதற்குரிய கலவை; சாந்துப்பொது; அழகு; இயற்கையழகு; ஒப்பனை; குணம்; நன்மை; சிறப்பு; கனம்; வடிவு; சாதி; இனம்; வகை; பாவின்கண் நிகழும் ஓசைவிகற்பம்; சந்தப்பாட்டு; காண்க: முடுகியல்; பண்; இசைப்பாட்டு; மாலை; செயல்; எண்வகை.
**வண்ணமகள்** – கோலஞ்செய்வாள்.
**வண்ணமாலை** – நெடுங்கணக்கு.
**வண்ணமுதம்** – பருப்புச்சோறு.
**வண்ணவுவமம்** – நிறம்பற்றிக் கூறும் உவமை.
**வண்ணாத்தான்** – காண்க: **வண்ணத்தான்.**
**வண்ணாத்தி** – ஒரு பறவைவகை; வண்ணாரப் பெண்; மருந்துப்பொடி; பூநீறு; தட்டாரப் பூச்சி; ஒரு மீன்வகை; நாகணவாய்ப்புள்.
**வண்ணாத்திப்பூச்சி** – காண்க: **வண்ணத்துப்பூச்சி.**
**வண்ணாரத்துறை** – காண்க: **வண்ணான்றுறை.**
**வண்ணான்** – ஆடைவெளுப்பவன்.
**வண்ணான்றுறை** – வண்ணான் ஆடைவெளுக்கும் நீர்த்துறை.
**வண்ணிகன்** – எழுத்தாளன்.
**வண்ணிகை** – மருந்துச்சரக்குவகை.
**வண்ணித்தல்** – புனைந்துரைத்தல்; புகழ்தல்; மிகைபடக் கூறுதல்; விரித்தல்.
**வண்புகழ்** – கொடையால் வரும் கீர்த்தி.
**வண்மை** – வளப்பம்; ஈகை; குணம்; வாய்மை; வலிமை; அழகு; புகழ்; வாகைமரம்.
**வணக்கம்** – காண்க: வணக்கு; சிறப்பித்தல்; கீழ்ப்படிதல்.
**வணக்கு** – வளைகை; வழிபாடு; வணக்கங் கூறுகை.
**வணக்குதல்** – பணியச்செய்தல்; வளையச்செய் தல்.
**வணங்காமுடியோன்** – பிறர்க்குக் கீழ்ப்படாத அரசன்; மற்றொருவரை வணங்காதவன்; துரியோதனன்.
**வணங்குதல்** – நுடங்குதல்; அடங்குதல்; ஏவற் றொழில் செய்தல்; வழிபடுதல்; சூழ்ந்து கொள்ளுதல்.
**வணர்** – கட்டடவேலை; வளைவு.
**வணர்தல்** – வளைதல்; மயிர் சுருண்டிருத்தல்.
**வணிகம்** – பொருள்களை வாங்கிவிற்றல்.
**வணிகர்தொழில்** – வணிகரின் ஆறு தொழில் களான ஓதல், வேட்டல், ஈதல், உழவு, நிரையோம்பல், வாணிகம் ஆகியன.
**வணிகன்** – பொருள்களை வாங்கிவிற்பவன்; வைசியன்; துலாராசி.
**வணிகு** – வைசியன்.
**வணிதம்** – நாட்டுப்பகுதி; செப்பம்.
**வணைத்தல்** – வளைத்தல்; தண்ணீர் ஊற்றுதல்.
**வணைதல்** – வளைதல்.
**வத்தகம்** – வணிகம்; வெட்பாலை; வளர்ச்சி.
**வத்தகன்** – வணிகன்.
**வத்தகாலம்** – நிகழ்காலம்; நடக்கின்ற காலம். காண்க: **வர்த்தமானகாலம்.**
**வத்தம்** – சோறு.
**வத்தமம்** – ஆமணக்குஞ்செடி.
**வத்தமானம்** – நிகழ்காலம்.
**வத்தனை** – ஆக்கம்; மரபுவழி; உயிர்வாழ்க்கை; கூலி.
**வத்தா** – சொல்பவன்; நூலாசிரியன்; நாவிதன்.
**வத்தாக்கு** – கொம்மட்டிக்கொடி.
**வத்தாலை** – கொடிவகை.
**வத்தி** – திரி; ஊதுவத்தி; தீக்குச்சி; விளக்குத் தகழி; மெழுகுவத்தி; ஆடையின் அருகு; மணி யின்கீழ்ப் பதிக்கும் வண்ணத்தகடு.
**வத்தித்தல்** – பெருகுதல்; உளதாதல்.
**வத்திப்பெட்டி** – தீப்பெட்டி.
**வத்தியம்** – காண்க: **வதகம்.**
**வத்திரம்** – ஆடை; முகம்; போர்க்கருவி.
**வத்திவைத்தல்** – வெடிகொளுத்துதல்; சண்டை மூட்டுதல்; கோட்சொல்லுதல்; புண்ணிற்குக் காரம்வைத்தல்.
**வத்தினை** – உரிமைப்பேறு.
**வத்து** – பொருள்; மது; உவமை.
**வத்துநிச்சயம், வத்துநிண்ணயம்** – கடவுளது உண்மைத் தன்மை, உருவம் என்பவற்றைப்பற்றிச் செய்யும் முடிவு.
**வத்துபரிச்சேதம்** – ஒன்று இன்ன பொருளாகத் தான் இருக்கும் இன்ன பொருளாக இராது என்று பொருளினால் அளவிடுகை.
**வத்துளம்** – வட்டமானது; சக்கரம்.
**வத்தூரம்** – கீரைவகை.
**வத்தை** – மரத்தோணி; உள்வயிரமற்றது; உயிர் வாழ்க்கை; கூலி.
**வதக்கம்** – வாடுதல்; இளைப்பு.
**வதக்குதல்** – வாட்டுதல்; வருத்துதல்.
**வதகம்** – இறப்பு.
**வதகன்** – கொலைகாரன்.
**வதங்கல்** – வாடியது; ஈரப்பசை நீங்காத உணவுப்பண்டம்; உடல்வலியற்றவர்; உடல் வலியற்றது.
**வதங்குதல்** – வாடுதல்; சோர்தல்.
**வதந்தி** – புரளி, உறுதிபடுத்தப்படாத பேச்சு; பிரஸ்தாபம்.
**வதம்** – கொலை; நோன்பு.
**வதரி** – இலந்தைமரம்; காண்க: **பதரிகாசிரமம்.**

**வதவல்** – வாடியது; அரைக்காய்ச்சலானது; உடல் வலியற்றவர்; உடல் வலியற்றது.
**வதறுதல்** – வாயாடுதல்; திட்டுதல்; மழலை மொழிதல்.
**வதன்** – காண்க: **வதகன்.**
**வதனம்** – முகம்; முக்கோணத்தின் மேற்கோணம்.
**வதாங்கம்** – நஞ்சு.
**வதானியன்** – வரையாது கொடுப்போன்; குபேரன்.
**வதி** – விலங்கு முதலியன தங்குமிடம்; சேறு; வழி; கால்வாய்.
**வதிட்டன்** – வசிட்டன்; பருத்தவன்; பருத்தது.
**வதிதல்** – தங்குதல்; துயிலுதல்.
**வதிர்** – செவிடு.
**வதிரன்** – செவிடன்.
**வதில்(ள்)** – பிரதி; விடை.
**வது** – மணமகள்; மகனின் மனைவி; மனைவி.
**வதுக்கு** – நன்னிலை.
**வதுகி** – வைக்கோல்.
**வதுகை** – மனைவி.
**வதுவர்** – குதிரைப்பாகர்; யானைப்பாகர்.
**வதுவை** – மணமகள்; திருமணம்; மணமாலை; புணர்ச்சி; வலாற்காரம்; மணம்.
**வதுவைச்சூட்டணி** – மணமாலை.
**வதுவைநாற்றம்** – புதுமணம்.
**வதுவைமுளை** – திருமணத்தில் ஒன்பதுவகைக் கூலம் விதைக்கும் பாலிகை.
**வதூ** – காண்க: **வது.**
**வதூவரர்** – மணமக்கள்.
**வதை** – கொலை; தொல்லை; தேன்கூடு.
**வதைத்தல்** – கொல்லுதல்; வருத்துதல்; மிக வருந்துதல்.
**வந்தனம்** – வணக்கம்; பணிவு; நன்றிகூறும் மரியாதைச்சொல்; முகம்.
**வந்தனி** – கோரோசனை; காண்க: **வந்தனை.**
**வந்தனித்தல்** – பணிதல்.
**வந்தனை** – வணக்கம்.
**வந்தி** – வணக்கம்; மங்கலப்பாடகன்; புகழ்வோன்; அரசர் புகழ் கூறுஞ் சூதன்; பாணன்; காண்க: **வந்தியை; கைவந்தி;** வலாற்காரம்; கட்டாயம்; முரண்டு; சண்டை; ஏணி.
**வந்திகட்டுதல்** – வலாற்காரம் பண்ணுதல்.
**வந்திகை** – கையில் தோளின்கீழ் அணியப்படும் அணிகலன்; நுதலணிவகை; அணிகலன்; அழகு தேமல்; மலடி; காண்க: **கைவந்தி.**
**வந்தித்தல்** – வணங்குதல்; புகழ்தல்; கட்டுதல்.
**வந்தித்துநிற்போர்** – பாணர்.
**வந்திபற்றுதல்** – வலிந்து கவர்தல்.
**வந்திபாடம்** – புகழ்ந்து பாடிய பாட்டு.
**வந்தியை** – மலடி.
**வந்து** – காற்று; ஓர் அசைச்சொல்.
**வந்தேறி** – புதியதாகக் குடியேறியவன்; இடையில் வந்தது.
**வந்தேறுங்குடி** – ஓரூரில் புதிதாகக் குடியேறுங் குடி.
**வந்தேறுதல்** – புதிதாக வந்து குடியேறுதல்.
**வந்தை** – மலடி; பெருமை; புல்லுருவி.
**வபனம்** – மயிர்களைதல்; விதைத்தல்; விதைத் தானியம்; சுக்கிலம்.
**வபு** – உடல்.
**வபை** – வயிற்றுக் கொப்பூழினருகில் இருக்கும் நிணம்; முதன்மையானது.
**வம்சம்** – காண்க: **வமிசம்.**
**வம்பக்கோட்டி** – பயனில்சொற்களைச் சொல்லுவோரின் கூட்டம்.
**வம்படித்தல்** – காண்க: **வம்பளத்தல்.**
**வம்பப்பரத்தர்** – புதிய நுகர்ச்சியை விரும்புங் காமுகர்.
**வம்பப்பரத்தை** – மிகுந்த காமத்தை உடைய கணிகை.
**வம்பமாக்கள்** – அயல்நாட்டு மாந்தர்.
**வம்பமாந்தர்** – புதியோர்; ஒரு கூட்டத்திலுஞ் சேராத மாந்தர்.
**வம்பமாரி** – காலமல்லாத காலத்தில் பெய்யும் மழை.
**வம்பல்** – திசை.
**வம்பலன்** – புதியோன்; அயலான்; வழிப் போக்கன்.
**வம்பலாட்டம்** – குழப்பம்.
**வம்பளத்தல்** – பயனில்லாத சொற் பேசுதல்; அவதூறு பேசுதல்; சரசம் பேசுதல்; தீது பேசுதல்; நிந்தைபேசுதல்.
**வம்பன்** – பயனற்றவன்; வம்பளப்போன்; தீயோன்; சோரபுத்திரன்.
**வம்பி** – வம்பளப்பவள்; பயனற்றவள்; தீயமாது; கருவண்டு.
**வம்பு** – வஞ்சனை; புதுமை; நிலையின்மை; பயனிலாமை; வீண்பேச்சு; பழிமொழி; தீம்புச்சொல்; படிறு; சிற்றொழுக்கம்; அவையல்கிளவி; சரசச்செயல்; சண்டை; காண்க: **வம்பமாரி;** சோரத்தில் பெற்ற பிள்ளை; உவமை; மணம்; அரைக்கச்சு; முலைக்கச்சு; யானைக்கச்சு; கையுறை; மேற் போர்வை; பெரிய பானை; மரவகை; சிவிகையின் வளைகொம்பு.
**வம்புத்தனம்** – வீண்பேச்சு; குறும்பு; வஞ்சகம்.
**வம்புதும்பு** – வீண்பழிச்சொல்; குறும்புத்தனம்.
**வம்புப்பேச்சு** – வீண்பேச்சு.

**வம்புவளர்த்தல்** – காண்க: வம்பளத்தல்.
**வம்மை** – பெற்றோர் மணமகட்குக் கொடுக்குஞ் சீர்.
**வமனம்** – வாயாலெடுத்தல்; வாந்திசெய் மருந்து.
**வமிசபரம்பரை** – குலமுறை; குலமுறையாய் வருவது.
**வமிசம்** – குலம்; மூங்கில்; வேய்ங்குழல்.
**வமிசவிருத்தி** – மரபிற்குரிய இயல்பு; குலத்தைப் பெருக்குகை.
**வமிசாவளி** – மரபுவழி; வமிசபரம்பரையைத் தெரிவிக்கும் அட்டவணை.
**வய** – வலி; மிகுதி.
**வயக்கம்** – ஒளி; விளக்கம்.
**வயக்கு** – ஒளி.
**வயக்குதல்** – விளங்கச்செய்தல்; திருத்துதல்; பழக்குதல்.
**வயகுண்டம்** – கவிழ்தும்பை.
**வயங்கல்** – கண்ணாடி.
**வயங்குதல்** – ஒளிசெய்தல்; விளங்குதல்; தெளிதல்; தோன்றுதல்; மிகுதல்; நடத்தல்.
**வயசானவன்** – முதியவன்.
**வயசு** – காண்க: வயது.
**வயசுகாலம்** – இளமைப்பருவம்; முதுமைப் பருவம்.
**வயசுப்பிள்ளை** – இளைஞன்; பகுத்தறியும் பருவமடைந்தவன்.
**வயஞானம்** – உண்மையுணர்வு.
**வயணம்** – விதம்; நிலைமை; விவரம்; உணவு முதலியவற்றின் வளம்; நல்லமைப்பு; நேர்த்தி; காரணம்; ஏற்றது.
**வயத்தம்பம்** – இளமைநிலை மாறாமல் நிறுத்தும் வித்தை.
**வயத்தன்** – வசப்பட்டவன்.
**வயதரம்** – கடுக்காய்.
**வயது** – அகவை; ஆண்டு; இளமை.
**வயதுசென்றவன்** – முதியவன்; பகுத்தறியும் பருவமடைந்தவன்.
**வயதுவருதல்** – பகுத்தறியும் பருவமடைதல்.
**வயதெற்றி** – திப்பிலி.
**வயந்தக்கிழவன்** – காண்க: வயந்தமன்னவன்.
**வயந்தகம்** – மகளிர் தலைக்கோலத் தொங்கல் உறுப்பு.
**வயந்தமன்னவன்** – மன்மதன்.
**வயப்படுதல்** – வசமாதல்; தலைப்படுதல்.
**வயப்புலி, வயப்போத்து** – அரிமா.
**வயம்** – வலிமை; வெற்றி; பூமி; வேட்கை; பறவை; வசம்; மூலம்; சம்பந்தம்; ஏற்றது; நீர்; இரும்பு; குதிரை; ஆடு; முயல்; கிராம்பு.
**வயமம்** – அத்தி.
**வயமா** – அரிமா; ஆவணிமாதம்; புலி; யானை; குதிரை.
**வயமான்** – அரிமா; புலி.
**வயமீன்** – உரோகிணிநாள்.
**வயல்** – கழனி; மருதநிலம்; வெளி.
**வயலை** – பசலைக்கொடி; வெளி.
**வயவரி** – புலி.
**வயவன்** – வீரன்; திண்ணியன்; படைத்தலைவன்; காதலன்; கணவன்; காரிப்பிள்ளை.
**வயவு** – வலிமை; காண்க: **வயவுநோய்**; விருப்பம்.
**வயவுநோய்** – கருப்பகாலத்து மகளிர்க்கு உண்டாகும் மயக்கம்.
**வயவெற்றி** – காண்க: **வயதெற்றி**.
**வயவை** – வழி.
**வயளை** – பசலைக்கொடி.
**வயற்கடைதூரம்** – வயலளவுள்ள தொலைவு.
**வயற்கரை** – வயலுள்ள பகுதி; வயல்; வரப்பு.
**வயற்சார்பு** – மருதநிலம்.
**வயறு** – கொக்கி; கயிறு.
**வயன்** – விதம்; நிலைமை; இனிய உணவு; நல்லமைப்பு; விவரம்; நேர்த்தி; ஏற்றது; காரணம்.
**வயனம்** – உரை; வகை; வேதம்; பழிமொழி; காண்க; **வயன்**.
**வயனர்** – பறவை வடிவினர்.
**வயா** – வேட்கைப்பெருக்கம்; காண்க: **வயவு நோய்**; கருப்பம்; கருப்பை; மகப்பேற்றுநோய்; வருத்தம்; நோய்.
**வயாநோய்** – காண்க: **வயவுநோய்**.
**வயாப்பண்டம்** – கருக்கொண்ட மகளிர் விரும்பும் தின்பண்டம்.
**வயாமது** – சீந்திற்கொடி.
**வயாவு** – காண்க: **வயா**.
**வயாவுதல்** – விரும்புதல்.
**வயாவுயிர்த்தல்** – கருவீனுதல்; வருத்தந் தீர்தல்.
**வயானம்** – பறவை; சுடுகாடு.
**வயிடூயம், வயிடூரியம்** – காண்க: **வயிரக்கல்**.
**வயித்தியம்** – மருத்துவம், சிகிச்சை; மருத்துவ நூல்; மருத்துவனது தொழில்.
**வயிந்தவம்** – மாயை; குதிரை.
**வயிர்** – கூர்மை; ஊதுகொம்பு; மூங்கில்.
**வயிர்த்தல்** – வயிரங்கொள்ளுதல்; கோபங் கொள்ளுதல்.
**வயிரக்கல்** – ஒன்பதுவகை மணியுள் ஒன்று.
**வயிரகரணி** – செடிவகை.
**வயிரச்சங்கிலி** – சரப்பணி எண்ணும் அணி.
**வயிரப்படை** – வச்சிரப்படை.

**வயிரப்படையோன்** – இந்திரன்.
**வயிரம்** – காண்க: வயிரக்கல்; வயிரவாள்; மர வயிரம்; திண்மை; வலிமை; கூர்மை; கிம்புரி; தண்டாயுதம்; திருவோணநாள்; கோபம்; மயிர்ப்படாம்.
**வயிரமணி** – காண்க: வயிரக்கல்; பொன்னா லாகிய மணிவகை.
**வயிரவம்** – ஓர் அகப்புறச் சமயம்; அச்சம்.
**வயிரவல்லி** – ஒரு கொடிவகை.
**வயிரவன்** – சிறுகீரை; சிவமூர்த்தங்களுள் ஒன்று.
**வயிரவன்வாகனம்** – நாய்.
**வயிரவாள்** – வச்சிரப்படை.
**வயிரவி** – துர்க்கை; ஒரு பண்வகை.
**வயிரவூசி** – கண்ணாடியறுக்கும் கூரிய வயிரம்; முத்துத் துளைக்கும் ஊசி.
**வயிராக்கியன்** – பற்றற்றவன்; பிடிவாதமுள்ள வன்; ஊக்கமுள்ளவன்.
**வயிராகம்** – பற்றின்மை; ஊக்கம்; பிடிவாதம்.
**வயிரி** – பகைவன்; வன்னெஞ்சுடையோன்; காண்க: வல்லூறு.
**வயிரித்தல்** – மனம்முதலியன கடினமாதல்; பிடிவாதமாயிருத்தல்.
**வயிரிப்பு** – கடினமாகை; பிடிவாதம்.
**வயிரியம்** – மயிர்ச்சீலை.
**வயிரியமாக்கள், வயிரியர்** – கூத்தர்; பாடகர்.
**வயிற்றிசிவு** – காண்க: வயிற்றுவலி; மகப்பேற்று நோவு.
**வயிற்றிலடித்தல்** – பிழைப்பைக் கெடுத்தல்.
**வயிற்றிற்கொள்ளுதல்** – உண்ணுதல்; காத்தல்; மனத்திற்கொள்ளுதல்.
**வயிற்றுக்கடுப்பு** – சீதபேதி; வயிற்றில் உண்டா கும் வலி.
**வயிற்றுக்கழிச்சல்** – காண்க: வயிற்றுப்போக்கு.
**வயிற்றுக்கிருமி** – வயிற்றில் உண்டாகும் புழு.
**வயிற்றுக்கொதி** – பசி; காண்க: வயிற்றுப்போக்கு.
**வயிற்றுத்தீ** – பெரும்பசி எடுக்கும் நோய்வகை.
**வயிற்றுநோய்** – காண்க: வயிற்றுவலி.
**வயிற்றுப்பிழைப்பு** – உயிர்வாழ்வு.
**வயிற்றுப்பொருமல்** – காண்க: வயிற்றெரிச்சல்; வயிறுப்பசம்.
**வயிற்றுப்போக்கு** – பேதியாதல்; செரியாமல் மலங்கழிகை.
**வயிற்றுமாரி** – பெருந்தீனிக்காரன், சாப்பாட்டு ராமன்.
**வயிற்றுவலி** – வயிற்றில் உண்டாகும் நோவு வகை; செரியாமையால் உண்டாகும் நோய்.
**வயிற்றுளைவு** – காண்க: வயிற்றுப்போக்கு; வயிற்றில் உண்டாகும் வலி.
**வயிற்றெரிச்சல்** – வயிற்றிற் காணும் எரிவு; பொறாமை; மனவருத்தம்; இரக்கம்.
**வயிற்றைக்கட்டுதல்** – குறைவாய் உண்ணுதல்; வயிற்றுப்போக்கை நிறுத்துதல்.
**வயிற்றைப்பெருக்குதல்** – உண்ணும் அளவை அதிகப்படுத்துதல்; நிரம்ப உண்ணுதல்.
**வயிற்றையொடுக்குதல், வயிற்றையொறுத்தல்** – உணவைக் குறைத் தல்.
**வயிற்றைவளர்த்தல்** – காண்க: வயிறுவளர்த்தல்.
**வயிறடித்தல்** – துயரக்குறியாக வயிற்றிலடித்துக் கொள்ளுதல்.
**வயிறடைத்தல்** – உண்ணும் விருப்பம் இல்லா திருக்கை; பூப்பு நின்றுபோகை; கருத்தரிக்குந் தன்மை யற்றுப்போதல்; மலடாயிருக்கை.
**வயிறலைத்தல்** – காண்க: வயிறடித்தல்.
**வயிறழிதல்** – கருச்சிதைதல்; வெளிவிடுதல்.
**வயிறு** – உதரம்; கருப்பப்பை; நடுவிடம்; உள்ளிடம்; மனம்.
**வயிறுகழிதல்** – பேதியாதல்.
**வயிறுகழுவுதல்** – காண்க: வயிறுவளர்த்தல்.
**வயிறுகாந்துதல், வயிறுகிள்ளுதல்** – பசித்தல்; பட்டினியா யிருத்தல்.
**வயிறுகுத்துதல்** – வயிற்றில் வலியுண்டாகை.
**வயிறுகுளிர்தல்** – உணவால் வயிறு நிறைதல்.
**வயிறுதாரி** – பெருவயிறன்; பெருந்தீனிக்காரன்; தன்னலம் ஒன்றையே கருதுபவன்.
**வயிறுப்பசம்** – உணவு செரியாமையால் வயிறு பெருக்கை.
**வயிறுபேதித்தல்** – காண்க: வயிறுகழிதல்.
**வயிறுவளர்த்தல்** – பாடுபட்டு உணவுதேடி வாழ் தல்.
**வயிறுவாய்த்தல்** – மகப்பெறுதல்; கருக்கொள்ளு தல்.
**வயிறெரிதல்** – பொறாமைகொள்ளுதல்; மிக்க வருத்தமுறுதல்.
**வயின்** – இடம்; பக்கம்; வீடு; வயிறு; பக்குவம்; முறை; எல்லை; ஏழனுருபு; ஓர் அசைச்சொல்.
**வயினதேயன்** – கருடன்.
**வயினம்** – பறவை.
**வயேகடம்** – காண்க: மரமஞ்சள்.
**வயோதிகம்** – முதுமை.
**வயோதிகன்** – கிழவன், முதியவன்.
**வர்க்கம்** – ஒத்த பொருள்களின் கூட்டம்; வகுப்பு; அத்தியாயம்; இனம்; வமிசம்; எருக்கம்பால்; தீ; பிசாசு; காண்க: வருக்கம்.
**வர்க்கை** – இனம்; உயிர், மெய் முதலிய எழுத்து களின் இனம்.
**வர்ச்சியம்** – விலக்கத்தக்கது.
**வர்ணகம்** – சந்தனம்; மரவகை.

**வர்ணம்** – நிறம்; சாதி; குலம்; அழகு; ஒளி; பொன்னுரை; பொன்; புகழ்; மணம்; துதி; குங்குமம்; பூச்சுப்பொருள்; எழுத்து; ஓசை; சுரத்தின் எழுத்து; மஞ்சள்; வேடம்; குணம்; மாற்று.

**வர்ணவேலை** – சித்திரமெழுதுந் தொழில்.

**வர்ணனை** – புகழ்ந்துரைத்தல்; தோத்திரம்.

**வர்ணித்தல்** – புனைந்துரைத்தல்; தோத்திரித்தல்; மிகைபடக் கூறுதல்; உவமித்தல்.

**வர்ணியம்** – உவமேயம்.

**வர்த்தகம்** – வணிகம்; பெருக்குவது.

**வர்த்தகன்** – வணிகன்; பெருக்குபவன்.

**வர்த்தமானகாலம்** – நடக்கின்ற காலம், நிகழ் காலம்.

**வர்த்தமானம்** – செய்தி; தற்கால நிகழ்ச்சி; காண்க: **ஆமணக்கு; வர்த்தமானகாலம்.**

**வர்த்தனம்** – தொடங்குதல்; வளர்த்தல்; பெருகுதல்.

**வர்த்தனை** – பெருகுகை; வளர்ச்சி; செல்வம்; மானிய சுதந்தரம்; ஏற்றஇறக்கமுறையில் சுரம்பாடுதல்; ஒருவன் தசையான ஆண்டை மூன்றால் பெருக்கின எண்.

**வர்த்தித்தல்** – உளதாதல்; நிகழ்தல்; தங்குதல்; பெருகுதல்.

**வர்த்துலம்** – வட்டவடிவு; உருண்டை.

**வர்மம்** – உட்பகை; காண்க: **மருமம்.**

**வர்மித்தல்** – பகைத்தல்.

**வர** – அசைச்சொல்; வரை.

**வரகதி** – மேலான நிலை.

**வரகவி** – அருட்கவி; சிறந்த செய்யுள்.

**வரகாத்திரம்** – தலை; யானைத்தலை.

**வரகு** – தானியவகை; சாமைவகை.

**வரகுணம்** – உயர்ந்தகுணம்.

**வரகுதிரிகை** – வரகு அரைக்கும் எந்திரம்.

**வரங்கிடத்தல்** – வரம்வேண்டுதல்.

**வரடம்** – அன்னம்; கொடிவகை.

**வரண்டகம்** – உண்டை; சுவர்; யானைமேற்றவிசு; காண்க: **வரண்டகை; முகப்பரு.**

**வரண்டகை** – நாகணவாய்ப்புள்.

**வரண்டியம்** – செடிவகை.

**வரணம்** – தெரிந்தெடுத்தல்; அமர்த்தல்; சூழ்தல்; மதில்; மறைத்தல்; சட்டை; ஒட்டகம்; பால்; மரவகை.

**வரத்து** – வருகை; நீர்வரும் வழி; வரும்படி, வருவாய்; பெருக்கு; எல்லை; வரவுதொகை காட்டுங் கணக்கு; ஆணை; மரபுவழி.

**வரதட்சிணை** – மணமகனுக்குப் பெண்வீட்டார் கொடுக்கும் பொருள்.

**வரதநூல்** – சகுனசாத்திரம்.

**வரதம்** – வரமளிப்பது; நல்லுடை; அருள்; குபேரன் நிதி; வரந்தருவதற்கு அறிகுறியாக அமையும் கை.

**வரதன்** – வரமளிப்பவன்; கடவுள்; உதவுவோன்; காளமேகப் புலவரின் இயற்பெயர்; சட்டநூல் இயற்றிய ஆசிரியர்.

**வரதை** – பார்வதி; கன்னி; வரந்தருபவள்.

**வரநதி** – கங்கையாறு.

**வரப்படுத்துதல்** – மனப்பாடஞ்செய்தல்; வந்ததைப் பெற்றுக்கொள்ளுதல்.

**வரப்பண்ணுதல்** – வரவழைத்தல்; காண்க: **வரப்படுத்துதல்.**

**வரப்பிரசாதம்** – கடவுளரின் அருட்கொடை.

**வரப்பிரதானம்** – வரமளிக்கை; நன்கொடை.

**வரப்பு** – வயலின் கரை; எல்லை.

**வரப்புக்கடா** – நண்டுவகை.

**வரப்புள்** – வயல்.

**வரபலம்** – வரத்தினாலாகிய தன்மை; தென்னை மரம்.

**வரம்** – தெய்வம் முதலியவற்றாற் பெரும் பேறு; அருள்; வாழ்த்து; வேண்டுகோள்; விருப்பம்; மேன்மை; ஒரு நிதி; சூழல்; அடைக்கலாங் குருவி; எறும்பு; மஞ்சள்.

**வரம்பழிதல், வரம்பிகத்தல்** – அளவிலதாதல்; அளவுகடத்தல்.

**வரம்பில்காட்சி** – பேரறிவு.

**வரம்பிலறிவன்** – கடவுள்.

**வரம்பிலாற்றல்** – முடிவிலா ஆற்றல்.

**வரம்பிலின்பம்** – அளவிலா ஆனந்தம்.

**வரம்பிலின்பமுடைமை** – சிவன் எண்குணத்துள் ஒன்றான அளவிலா ஆனந்தம் உடைமை.

**வரம்பு** – எல்லை; வரப்பு; அணை; வழி; விளிம்பு; ஒழுங்கு; வட்டி; மனை.

**வரம்புகட்டுதல்** – அணைகட்டுதல்; எல்லைகட்டுதல்; முடித்தல்; கடிப்புண் வட்டமாகத் தடித்தல்.

**வரயோகம்** – யோகவகை.

**வரர்** – சிறந்தவர்; வானோர்.

**வரலாற்றுமுறைமை** – வழிவழியாகக் கையாளப்படும் அடிப்பட்ட வழக்கு.

**வரலாறு** – சரித்திரம்; முன்வரலாறு; நிகழ்ச்சி முறை; செய்தி; விவரம்; ஒழுங்கு; வழிவகை; எடுத்துக்காட்டு.

**வரவர** – மேலும்மேலும்; படிப்படியாய்.

**வரவழைத்தல்** – வருவித்தல்.

**வரவிடுதல்** – அனுப்புதல்.

**வரவிருத்தன்** – சிவபிரான்.

**வரவு** – வருவாய்; வருகை; வரலாறு; விளைவு; வழி; வணங்குகை.

**வரவுதாழ்த்தல்** – தாமதித்து வருதல்.
**வரவுமுறை** – வருவாய்.
**வரவுவைத்தல்** – செலுத்திய தொகையைக் குறித்து எழுதிவைத்தல்.
**வரவேற்றல்** – எதிர்கொண்டு அழைத்தல்.
**வரவை** – வயல்தாக்கு; வரி.
**வரன்** – சிறந்தவன்; கடவுள்; பிரமன்; தமையன்; மணமகன்; கணவன்; சீவன்முத்தருள் பிரமவரர் எனப்படும் வகையினன்.
**வரன்முறை** – வரலாற்றுமுறை; அடிப்படவந்த முறை; வரலாறு; ஊழ்; பெரியோர்க்குச் செய்யும் போற்றுகை.
**வரன்றுதல்** – வாருதல்.
**வராக்கடன்** – காண்க: **வாராக்கடன்.**
**வராககற்பம்** – திருமால் பன்றிப்பிறப்பெடுத்த காலம்.
**வராகபுடம்** – இருபது அல்லது ஐம்பது வறட்டி வைத்துப் போடப்படும் புடம்.
**வராகம்** – பன்றி; திருமால் பிறப்புகளுள் ஒன்று; பதினெண் புராணத்துள் ஒன்று; நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; கணிதநூல்; காண்க: **நிலப்பனை**; ஒரு நாட்டுப் பகுதி; போர்; ஆசன வகை.
**வராகன்** – பன்றி உருக்கொண்ட திருமால்; மூன்றரை ரூபா மதிப்புள்ள பொன் நாணயம்; காண்க: **வராகன்பூண்டு**; அருகன்.
**வராகன்பூண்டு** – மூக்குத்திப்பூண்டு.
**வராகனெடை** – பொன்நிறுக்கும் நிறைவகை.
**வராகி** – சிறுகுறட்டை; காண்க: **சிற்றரத்தை; நிலப்பனை; வராகபுடம்**; சிறுகுறிஞ்சாக்கொடி; வாராகி.
**வராகிவேய்** – முள்ளம்பன்றிமுள்.
**வராங்ககம்** – இலவங்கப்பட்டை.
**வராங்கம்** – தலை; அழகிய உருவம்; உடல்; யானை; இலவங்கம்; வானவரின் உடம்பு.
**வராங்கனை** – உருவிற்சிறந்தவள்; கூந்தற்பனை.
**வராசனன்** – வாயிற்காப்போன்; கள்ளக்கணவன்.
**வராசான்** – கருப்பூரவகை.
**வராடகம்** – தாமரையின் காய்; பலகறை; கயிறு.
**வராடி** – பலகறை; பாலை யாழ்த்திறத்துள் ஒன்று; முரட்டுநூற் சீலை.
**வரால்** – ஒரு மீன்வகை.
**வராலி** – செடிவகை.
**வராளம்** – பாம்பு.
**வராளி** – சந்திரன்; ஒரு பண்வகை; யாழ் வகை; மண்ணீரல்.
**வராற்பகடு** – ஆண்வரால்.
**வராற்போத்து** – இளவரால்.
**வரானி** – செடிவகை; பாலை.
**வரி** – கோடு; தொய்யில் முதலிய வரி; கைரேகை; ஒழுங்குநிரை; எழுத்து; புள்ளி; தேமல்; வண்டு; கடல்; கட்டு; பல தெருக்கள் கூடுமிடம்; வழி; இசை; இசைப்பாட்டு; கூத்துவகை; கடைச்சங்கத்து நூல்களுள் ஒன்று; உயர்ச்சி; நீளம்; குடியிறை; தீ; நிறம்; அழகு; வடிவு; நெல்.
**வரிக்கடை** – வண்டு.
**வரிக்கயிறு** – வடக்கயிறு.
**வரிக்கல்** – நீளமாக அடித்துத் திருத்திய கல்.
**வரிக்காரன்** – வரி வாங்குபவன்; வரி கொடுப்பவன்; வடக்கயிறு திரிப்போன்.
**வரிக்குதிரை** – பலநிறக் கோடுள்ள குதிரை; சேணம்வேண்டாக் குதிரை; விலங்குவகை.
**வரிக்கூத்து** – கூத்துவகை.
**வரிக்கூறுசெய்வார்** – அரசிறை அதிகாரிகள்.
**வரிக்கோலம்** – தொய்யிலின் பத்திக்கீற்று.
**வரிகயிறு** – வண்டியில் மூட்டையைப் பிணைத்துக் கட்டுங் கயிறு.
**வரிகோலம்** – காண்க: **வரிக்கோலம்.**
**வரிச்சந்தி** – பல தெருக்கள் கூடுமிடம்.
**வரிச்சல், வரிச்சு** – கட்டுவரிச்சல், கூரையிலிடுங் குறுக்குச்சட்டம்.
**வரிச்சுருள்** – செவ்வட்டை.
**வரிசி** – தூண்டில்.
**வரிசை** – ஒழுங்கு; நிரையொழுங்கு; வேலை முறை; அரசர் முதலியோரால் பெறுஞ் சிறப்பு; அரசசின்னம்; மரியாதை; மேம்பாடு; தகுதி; பாராட்டு; நல்லொழுக்கம்; நன்னிலை; சீராகச் செய்யும் நன்கொடை; வீதம்; ஊர்வரி வகை; பயிர்விளைவில் உழவனுக்குரிய பங்கு.
**வரிசைக்கிரமம்** – ஒழுங்குமுறை.
**வரிசைசெய்தல்** – மரியாதைசெய்தல்; காண்க: **வரிசையெடுத்தல்.**
**வரிசைபார்த்தல்** – ஒழுங்குமுறையை அளவுக்கு மிஞ்சிக் கவனித்தல்.
**வரிசைமகளிர், வரிசைமாதர்** – விறலியர்.
**வரிசையாளர்** – நிலத்தைப் பயிரிடுங் குடிகள்.
**வரிசையெடுத்தல்** – பலரும் அறியச் சீர் எடுத்தல்.
**வரிட்டம்** – மிகச் சிறந்தது.
**வரிட்டன்** – மேலானவன்; சீவன்முத்தருள் பிரமவரிட்டர் வகையினன்.
**வரித்தல்** – எழுதுதல்; சித்திரமெழுதுதல்; பூசுதல்; கட்டுதல்; மொய்த்தல்; கோலஞ்செய்தல்; ஓடுதல்; தேர்ந்துகொள்ளுதல்; அமர்த்தல்; அழைத்தல்.
**வரிதகம்** – முப்பத்திரண்டு அடியான் வரும் இசைப்பாட்டு.
**வரிதல்** – எழுதுதல்; ஓவியந் தீட்டுதல்; பூசுதல்; மூடுதல்; கட்டுதல்.

**வரிந்துகட்டுதல்** – இறுக்கிக்கட்டுதல்; வேலைக்கு ஆயத்தமாதல்.
**வரிநிழல்** – செறியாத நிழல்.
**வரிப்பணம்** – குடியிறை.
**வரிப்பிளந்தெழுதுதல்** – கையெழுத்து வரியில் இடைச்செருகி எழுதுதல்.
**வரிப்பிளப்பு** – இடைச்செருகி எழுதுவது.
**வரிப்புலி** – வேங்கைப்புலி.
**வரிப்புறம்** – அணில்வகை.
**வரிப்பூனை** – காட்டுப்பூனைவகை.
**வரிமணல்** – அறலினையுடைய மணல்.
**வரியரிசி** – சீரகம்.
**வரியாடல்** – எழுதுகை.
**வரியிலார்** – காண்க: வரிக்கூறுசெய்வார்.
**வரியோலை** – உடன்படிக்கைப் பத்திரம்.
**வரிவடிவு** – ஒலியெழுத்திற்கு அறிகுறியான கீற்றுவடிவு.
**வரிவயம்** – புலி.
**வரிவரி** – தண்ணீர்விட்டான்கிழங்கு.
**வரிவரிமணலி** – கற்றாழை.
**வரிவனம்** – தில்லைமரம்.
**வரிவைத்தல்** – குடியிறைவிதித்தல்; வரிசையாகக் கட்டுதல்; பொதுநிதி முதலியவற்றிற்காக வீதாசாரத்தொகை குறிப்பிடுதல்.
**வருக்கம்** – இனம்; குலம்; தொகுதி; சதுரம்; குறிப்பிட்ட எண்ணை அதே எண்ணால் பெருக்கிவருந் தொகை; அத்தியாயம்; ஒழுங்கு.
**வருக்கமூலம்** – வருக்கத் தொகைக்கு மூலமாயுள்ள எண்.
**வருக்கமோனை** – பாடல் அடிகளில் முதலெழுத்துகள் வருக்கவெழுத்துகளால் அமையும் மோனைவகை.
**வருக்கவெதுகை** – இனவெழுத்துகளால் ஆகும் எதுகைத்தொடை.
**வருக்கவெழுத்து** – உயிர் அல்லது ஒரு மெய்யின் இனத்தைச் சேர்ந்த எழுத்து.
**வருக்கித்தல்** – ஓர் எண்ணை அதே எண்ணாற் பெருக்குதல்.
**வருக்கு** – கஞ்சி; பேரேடு.
**வருக்கை** – இனவரிசை; வேர்ப்பலா; உயிர்மெய் முதலிய எழுத்துகளின் இனம்; மீன்வகை.
**வருகம்** – மயிற்றோகை; இலை; பரிவாரம்.
**வருகாலம், வருங்காலம்** – இனி வரப்போகுங் காலப்பகுதி, எதிர்காலம்.
**வருச்சித்தல்** – கைவிடுதல்; விலக்குதல்.
**வருட்டம்** – வேப்பமரம்; முட்டை.
**வருட்டுதல்** – தேற்றுதல்; வயப்படுத்தல்.
**வருடகம்** – முடக்கொற்றான்.
**வருடப்பாதி** – அரையாண்டு, அயனம்.
**வருடம்** – ஆண்டு; மழை; பூகண்டம்; ஆவணி புரட்டாசி மாதங்களைக்கொண்ட மழைக் காலம்.
**வருடம்அறுபது** –

| | | | |
|---|---|---|---|
| 1. | பிரபவ | 31. | ஏவிளம்பி |
| 2. | விபவ | 32. | விளம்பி |
| 3. | சுக்கில | 33. | விகாரி |
| 4. | பிரமோதூத | 34. | சார்வரி |
| 5. | பிரசோற்பத்தி | 35. | பிலவ |
| 6. | ஆங்கீரச | 36. | சுபகிருது |
| 7. | சீமுக | 37. | சோபகிருது |
| 8. | பவ | 38. | குரோதி |
| 9. | யுவ | 39. | விசுவாவசு |
| 10. | தாது | 40. | பராபவ |
| 11. | ஈசுவர | 41. | பிலவங்க |
| 12. | வெகுதானிய | 42. | கீலக |
| 13. | பிரமாதி | 43. | சௌமிய |
| 14. | விக்கிரம | 44. | சாதாரண |
| 15. | விசு | 45. | விரோதிகிருது |
| 16. | சித்திரபானு | 46. | பரிதாபி |
| 17. | சுபானு | 47. | பிரமாதீச |
| 18. | தாரண | 48. | ஆனந்த |
| 19. | பார்த்திப | 49. | இராட்சச |
| 20. | விய | 50. | நள |
| 21. | சர்வசித்து | 51. | பிங்கள |
| 22. | சர்வதாரி | 52. | காளயுக்தி |
| 23. | விரோதி | 53. | சித்தார்த்தி |
| 24. | விகிர்தி | 54. | இரௌத்திரி |
| 25. | கர | 55. | துன்மதி |
| 26. | நந்தன | 56. | துந்துபி |
| 27. | விசய | 57. | உருத்திரோற்காரி |
| 28. | சய | 58. | இரத்தாட்சி |
| 29. | மன்மத | 59. | குரோதன |
| 30. | துன்முகி | 60. | அட்சய |

இவற்றுள் முதல் இருபதாண்டு உயர்ந்தவை; இடை இருபதாண்டு இடைப்பட்டவை; கடை இருபது ஆண்டு இழிந்தவை என்பர்.
**வருடாகாலம்** – மழைக்காலம்.
**வருடாந்தரம்** – ஆண்டுமுடிவு; ஆண்டுதோறும்; ஆண்டுக்கொருமுறையான.
**வருடித்தல்** – மழைபொழிதல்; சொரிதல்.
**வருடுதல்** – தடவுதல்.
**வருடை** – வரையாடு; ஆடு; மேடராசி; எண்காற் பறவை; மாற்சரியம்.
**வருடைமான்** – மலையாடு.
**வருணசரம்** – செம்மணிகளாற் செய்த கழுத்தணி.
**வருணதிசை** – மேற்கு.

**வருணம்** – நிறம்; சாதி; குலம்; எழுத்து; அழகு; ஒளி; மஞ்சள்; பொன்னுரை; பொன்; புகழ்; துதி; மணம்; பூச்சுப்பொருள்; குணம்; மாதிரி; நீர்; யானை; வேடம்; விதம்; சதயநாள்.

**வருணமண்டலம்** – வருணனது உலகம்.

**வருணவிந்து** – முத்துச்சிப்பி.

**வருணன்** – மேற்றிசைப்பாலனும் கடலுக்கும் நெய்தல்நிலத்துக்கும் உரியவனும் மழைக்குத் தலைவனுமாகிய கடவுள்; பன்னிரு ஆதித்தருள் ஒருவன்.

**வருணனாள்** – சதயநாள்.

**வருணனை** – புனைவுரை; தோத்திரம்; புகழ்ந்துரைத்தல்.

**வருணாலயம்** – கடல்.

**வருணி** – பிரமசாரி; பொன்.

**வருணித்தல்** – புனைந்துரைத்தல்; தோத்திரித்தல்; மிகைபடக் கூறுதல்; உவமித்தல்.

**வருத்தம்** – துன்பம்; முயற்சி; களைப்பு; நோயாளியின் அபாயநிலை; அரிதில் நிகழ்வது.

**வருத்தமானம்** – இறந்துபட்ட ஒரு கணிதநூல்; காண்க: வர்த்தமானம்.

**வருத்தனம்** – உண்டை; காண்க: வருத்தனை.

**வருத்தனை** – பிழைப்பு; தொழில்; கூத்தின் செயல்; பெருகுதல்; செல்வம்; சம்பளம்; வழி; மானியஉரிமை; காண்க: வர்த்தனை.

**வருத்தித்தல்** – பெருகுதல்; உண்டாக்குதல்; ஓவியம் எழுதுதல்.

**வருத்து** – துன்பம்; காண்க: வரத்து.

**வருத்துதல்** – வருவித்தல்; பெருகுதல்; உண்டாக்குதல்; மனப்பாடஞ்செய்தல்; பயில்வித்தல்; வருந்தச்செய்தல்.

**வருத்துலம்** – வட்டவடிவு; உருண்டை வடிவமான மாணிக்கம்.

**வருதி** – ஆணை.

**வருந்திக்கழித்தல்** – வருத்தத்துடன் காலம் போக்குதல்.

**வருந்திக்கேட்டல்** – கெஞ்சுதல்.

**வருந்துதல்** – துன்புறுதல்; உடல்மெலிதல்; மிக முயலுதல்; வருந்தி வேண்டிக்கொள்ளுதல்.

**வருந்துரு** – மரவகை.

**வருநர்** – புதிதாய் வருபவர்; விருந்தினர்.

**வருநாள்** – எதிர்காலம்.

**வருபிறப்பு** – மறுபிறப்பு, மறுமை.

**வருபுனல்** – பெருகிவரும் நீர்; ஆறு; ஆற்றுநீரும் ஊற்றுநீரும் அல்லாத வேற்றுநீர்.

**வருபொருள்** – எதிர்கால நிகழ்ச்சி; வருவதன் கருத்து.

**வருபோகம்** – மறுபோக விளைவு.

**வரும்படி, வருமதி** – காண்க: வருமானம்.

**வருமாறு** – வரும்விதம்; நிகழ்ச்சிமுறை.

**வருமானம்** – வருவாய்.

**வருமானவரி** – வருவாயின்மேல் விதிக்கும் அரசிறை.

**வருமை** – மறுபிறப்பு.

**வருமொழி** – நிலைமொழிக்குப் பின்மொழி.

**வருவாய்** – தோன்றுமிடம்; வருமானம்.

**வருவித்தல்** – வரச்செய்தல்; வேண்டியது ஒன்றைப் பொருந்த விரித்துக்கொள்ளுதல்.

**வருவியம்** – முழங்கால்.

**வரூதம்** – வாழுமிடம்; பலகைத்தடுக்கு; கவசம்; பரிசை.

**வரூதினி** – படை.

**வரேந்திரன்** – அரசன்; இந்திரன்.

**வரை** – மலை; மலையுச்சி; பக்கமலை; உயர்ந்த மலை; கல்; சிறுவரம்பு; நீர்க்கரை; எல்லை; அளவு; விரலிறை அளவு; கோடு; எழுத்து; ஏற்றத்தாழ்வு நோக்குகை; முத்துக்குற்றத்துள் ஒன்று; மூங்கில்; காலம்; இடம்.

**வரைகம்பு** – கம்மாளர் கருவியுள் ஒன்று.

**வரைச்சிலம்பு** – மலைச்சாரல்.

**வரைத்தாள்** – தாழ்வரை.

**வரைதல்** – எழுதுதல்; ஓவியம் எழுதுதல்; கணித்தல்; அளவுபடுத்தல்; அடக்குதல்; விலக்குதல்; கைவிடுதல்; ஒப்புக்காணல்; அறவழியில் பொருளீட்டுதல்; தனக்குரியதாக்குதல்; திருமணஞ்செய்தல்.

**வரைநீர்** – மலையருவி.

**வரைநேமி** – சக்கரவாளமலை.

**வரைப்பகை** – மலைக்குப் பகைவனான இந்திரன்.

**வரைப்பு** – எழுதுகை; எல்லை; மதில்; சுவர் சூழ்ந்த இடம்; மாளிகை; உலகம்; குளம்.

**வரைபாய்தல்** – மலையுச்சியினின்று விழுதல்.

**வரைபொருட்பிரிதல்** – களவில் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதலைக் கூறும் அகத்துறை.

**வரையமிர்து** – காண்க: மலைபடுபொருள்.

**வரையரமகளிர்** – மலையில் வாழும் தெய்வ மங்கையர்.

**வரையரையன்** – இமவான்.

**வரையறவு** – காண்க: வரையறை.

**வரையறுத்தல்** – கணித்தல், மதிப்பிடுதல்; எல்லைப்படுத்துதல்; வளைத்தல்.

**வரையறை** – எல்லை; அளவு; திட்டம்; அடக்கவொடுக்கம்; கண்டிப்பு; முடிவு.

**வரையாடு** – மலையாடு; மான்வகை.

**வரையாநுகர்ச்சி** – களவுப்புணர்ச்சி.

**வரையாவீகை** – பெருங்கொடை.

**வரையாழி** – சக்கரவாளமலை; மலை.

**வரைவாழை** – மலைவாழை.

**வரைவில்லி, வரைவின்மகளிர், வரைவின்மாதர்** – பொதுமகளிர்.

**வரைவு** – அளவு; எல்லை; எழுதுகை; சித்திர மெழுதுகை; ஏற்றத்தாழ்வு நோக்குகை; திருமணம்; நீக்கம்; பிரிவு.

**வரைவுகடாதல்** – தலைவியை மணம்புரிந்து கொள்ளுமாறு தோழி தலைமகனை வற்புறுத்தும் அகத்துறை.

**வரைவுடன்படுதல்** – தலைவியின் சுற்றத்தார் தலைமகனுக்கு அவளை மணம்புரிவிக்க இசையும் அகத்துறை.

**வரைவுமலிதல்** – மணம் நிகழ்வதுபற்றி மகிழ்வுறுதல்.

**வரோதயன்** – தெய்வவரத்தால் தோன்றியவன்.

**வல்** – வலிமை; திறமை; மேடு; சூதாடுகருவி; முலைக்கச்சு; விரைவு.

**வல்கம்** – மரப்பட்டை.

**வல்சி** – உணவு; அரிசி; சோறு; நெல்.

**வல்மீகம்** – கறையான்புற்று; யானைக்கால் நோய்.

**வல்ல** – வலிமையுள்ள; திறமையுள்ள.

**வல்லடி** – வலிமை; திறமை; வலாற்காரம்; கொடுமை; கொடுஞ்செயல்; அருஞ்செயல்; காலமல்லாக் காலத்து ஏற்படும் சாவு.

**வல்லடிக்காரன்** – வலாற்காரம் செய்வோன்; கொள்ளைக்காரன்.

**வல்லடிவம்பன்** – வலுக்கட்டாயத்தால் செயலை முடித்துக்கொள்வோன்.

**வல்லடிவழக்கு** – அநியாய வழக்கு; நியாயமின்றிப் பலத்தைப் பயன்படுத்துகை.

**வல்லணங்கு** – காளி.

**வல்லநாய்** – சூதாடுகருவியாகிய நாய்.

**வல்லப்பலகை** – சூதாடுதற்குரிய பலகை.

**வல்லபசத்தி** – காண்க: குண்டலிசத்தி; மிகுவலி.

**வல்லபடி** – காண்க: வல்லாங்கு.

**வல்லபம்** – வலிமை; திறமை; கொடுஞ்செயல்; அருஞ்செயல்; விருப்பம்; உயர்சாதிக் குதிரை வகை.

**வல்லபன்** – கணவன்; அன்பிற்குரியவன்; இடையருள் தலைவன்; குதிரைகளை மேற்பார்ப்போன்; வலிமையுள்ளவன்.

**வல்லபி** – பார்வதி; காண்க: வல்லவி.

**வல்லபை** – மனைவி; தலைவி; வலிமையுள்ளவர்; திறமையுள்ளவர்; விநாயக்கடவுளின் தேவி.

**வல்லம்** – ஆற்றல்; மனைவி; ஓர் ஊர்; ஒரு சிவ தலம்; வாழை; ஓலையால் முடைந்த கூடை; இரண்டு மஞ்சாடி நிறை; பளிங்குக் கல்வகை.

**வல்லமை** – வலிமை.

**வல்லயம்** – ஓர் ஈட்டிவகை.

**வல்லரி** – தளிர்; பூங்கொத்து; பசுங்காய்; காய்க்குலை; கொடி.

**வல்லவன்** – வலியவன்; கணவன்; இடையன்; திறமையுடையவன்; சமைப்போன்; வீமன்; மேலைச் சாளுக்கிய அரசன்.

**வல்லவாட்டு** – இடத்தோள்மேல் அணியும் ஆடை; கழுத்தைச்சுற்றித் தொங்கவிடும் ஆடை.

**வல்லவாறு** – காண்க: வல்லாங்கு.

**வல்லவி** – மனைவி; திறமையுள்ளவர்; வலிமையுள்ளவர்.

**வல்லவைமன்** – விநாயகன்.

**வல்லா** – முடியாதவை.

**வல்லாங்கு** – இயன்றவளவில்.

**வல்லாட்டு** – குறும்பு.

**வல்லாண்முல்லை** – ஒருவனது குடியையும் பதியையும் இயல்புகளையும் புகழ்ந்து அவனது ஆண்மை பெருகச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை.

**வல்லாண்மை** – பேராற்றல்.

**வல்லாமை** – இயலாமை; தள்ளாமை.

**வல்லார்** – வலிமையுடையவர்; திறமையுள்ளவர்; வலுக்குறைந்தோர்; திறமையில்லாதவர்.

**வல்லார்கொள்ளை** – பாதுகாப்பில்லாது பலராற் கவரப்படும் சொத்து.

**வல்லாரை** – கொடிவகை; கேட்டைநாள்.

**வல்லாளகண்டன்** – மிக்க துணிவுள்ளவன்; பேராற்றலுள்ளவன்.

**வல்லாளன்** – வலிமையுள்ளவன்; திறமையுடையவன்; ஓர் அரசன்.

**வல்லான்** – வலிமையுள்ளவன்; திறமையானவன்; கடவுள்; சூதாடுபவன்.

**வல்லி** – படர்கொடி; மருந்துச்செடி; இளம் பெண்; முருகக்கடவுளின் தேவியாகிய வள்ளியம்மை; உபநிடதம்; பதாகை; முருக்கமரம்; திருமணம்; இடைச்சேரி; விரைவு; பிரிகை; அளவுவகை; சூதாடுபவன்; கால்விலங்கு.

**வல்லிக்கயிறு** – உடைமேல் தரிக்கும் அரைஞாண்.

**வல்லிகம்** – மிளகு; கொடி; மஞ்சள்.

**வல்லிகை** – குதிரையின் கழுத்தில் கட்டும் ஒரு வடம்; காதணிவகை; யாழ்.

**வல்லிசம்** – மிளகு.

**வல்லிசாதகம், வல்லிசாதம்** – கற்பகமரத்தில் படருங் கொடி வகை.

**வல்லிசாதி** – தெய்வத்தன்மையுள்ள கொடி.

**வல்லிசை** – உச்ச இசை; வல்லோசை; பாம்பு.

**வல்லிசைவண்ணம்** – வல்லெழுத்து மிக்குப் பயின்றுவருஞ் சந்தம்.

**வல்லிதின்** – காண்க: வல்லாங்கு; வல்லே.
**வல்லிமண்டபம்** – கொடிப்பந்தல்.
**வல்லிமரம்** – கப்பலின் தலைப் பாய்மரம்.
**வல்லிமொடி** – ஒரு கொடிவகை.
**வல்லியம்** – புலி; கொல்லிமலை; கொடி; காண்க: செவ்வள்ளி; மஞ்சள்; இடைச்சேரி.
**வல்லியம்பொருப்பு** – கொல்லிமலை.
**வல்லினம்** – க், ச், ட், த், ப், ற் என்னும் வல்லோசையுள்ள மெய்யெழுத்துகள்.
**வல்லீகம்** – பெருங்காயம்.
**வல்லீட்டுக்குற்றி** – பனை முதலிய பெரிய மரங்களைப் பிளக்கும் முளை; கொட்டாப்புளி; தாங்கறகட்டை.
**வல்லுதல்** – செய்யவியலுதல்; ஒழுங்கு.
**வல்லுநர்** – வல்லோர்.
**வல்லுப்பலகை** – காண்க: வல்லப்பலகை.
**வல்லுயிர்** – அரிதாய்ப் பிழைத்திருக்கும் உயிர்.
**வல்லுரம்** – காடு; புற்றரை; வயல்; மணல்; பூங்கொத்து; காட்டுப்பன்றியிறைச்சி; தனிமை.
**வல்லுவம்** – வெற்றிலைப் பை.
**வல்லுளி** – பன்றி.
**வல்லூகம்** – கரடி; ஆண்குரங்கு; முசு.
**வல்லூரம்** – வனம்; பாழ்நிலம்; இறைச்சி.
**வல்லூற்று** – பாறையிடையினின்று வரும் நீரூற்று.
**வல்லூறு** – 'இராசாளி' என்னும் பறவை.
**வல்லெழுத்து** – காண்க: வல்லினம்.
**வல்லெனல்** – வலிதாதற்குறிப்பு; விரைதற்குறிப்பு.
**வல்லே** – விரைவாக.
**வல்லேறு** – இடி.
**வல்லை** – வலிமை; பெருங்காடு; மேடு; கோட்டை; வயிற்றுக்கட்டிவகை; வருத்தம்; மரவகை; புனமுருங்கை; வட்டம்; விரைவு.
**வல்லைக்கட்டி** – வயிற்றுக்கட்டிவகை.
**வல்லையம்** – ஈட்டிவகை.
**வல்லொற்று** – காண்க: வல்லினம்.
**வல்லோன்** – வலிமையுடையோன்.
**வல்வருத்தம்** – கடுவருத்தம்.
**வல்வாயன்** – பேச்சில் திறமையுடையோன்.
**வல்விடம்** – கடுநஞ்சு.
**வல்விரைதல்** – மிக வேகமாதல்.
**வல்வில்** – ஒரே காலத்தில் பல பொருள்களை ஊடுருவிச் செல்லும்படி ஓரம்பை எய்யுந் திறமை.
**வல்வில்லி** – ஒரே காலத்தில் பல பொருள்களை ஊடுருவிச் செல்லும்படி ஓர் அம்பை எய்யுந் திறனுடையவன்.
**வல்விலங்கு** – யானை.
**வல்வினை** – வலியதாகிய ஊழ்; தீவினை; கொடுஞ்செயல்; வலியதாகிய தொழில்.

**வலக்காரம்** – பொய்; விரகு; கட்டாயப்படுத்தல்; வெற்றி.
**வலக்கை** – வலப்பக்கக் கை; வலப்பக்கம்.
**வலக்கைகொடுத்தல், வலக்கைதருதல்** – உதவியளித்தல்; உறுதி கூறுதல்.
**வலக்கையடித்தல்** – உறுதிகூறுதல்.
**வலங்கம்** – பெருங்குடும்பம்.
**வலங்காரம்** – மத்தளத்தின் மார்ச்சனை பூசிய பக்கம்.
**வலங்கை** – வலப்பக்கத்துக் கை; தமிழ்நாட்டுச் சாதியாருள் ஒரு சார் கூட்டத்தினர்.
**வலங்கொள்ளுதல்** – காண்க: வலம்வருதல்; வெற்றிகொள்ளுதல்; வெல்லுதல்.
**வலசை** – இடம்விட்டு இடம் குடிபெயர்கை; கூட்டம்; வடுகச்சாதியார்; வரிச்சல்.
**வலசைபோதல்** – பறவைகள் இடம்விட்டு இடம் பெயர்தல்.
**வலசைவாங்குதல்** – வேற்றாருக்குக் கூட்டத்தோடு குடிபோதல்.
**வலஞ்சுழி** – வலமாகச் சுழலுகை; வலப்புறமாகச் சுழியுஞ் சுழி; குதிரையின் நற்சுழிவகை; திருவலஞ்சுழி யென்னுஞ் சிவதலம்.
**வலஞ்சுழித்தல்** – வலமாகச் சுற்றச்செய்தல்; வலப்புறமாகச் சுழியும்படி கீறுதல்.
**வலஞ்சுழிதல்** – வலமாகச் சுழலுதல்; வலப்புறமாகச் சுழிந்திருத்தல்.
**வலஞ்செய்தல்** – காண்க: வலம்வருதல்.
**வலட்டி** – வல்லமையுள்ளது.
**வலத்தல்** – சுற்றுதல்; பின்னுதல்; பிணித்தல்; தொடுத்தல்; கொழுத்தல்; சொல்லுதல்; வளைத்தல்.
**வலது** – வெற்றி; வலப்பக்கம்; திறமை; செயல்; ஒருவன் சத்திக்குள் அடங்கியது; யாதொரு குறையுமின்றி வாழும் வாழ்க்கை.
**வலந்தம்** – உரை; வளைவு.
**வலம்** – வெற்றி; வலிமை; படை; ஆணை; வலப்பக்கம்; வலமாகச் சுற்றிவருதல்; கனம்; மேலிடம்; ஏழனுருபு; பவ்வீ; உயர்வு.
**வலம்பம்** – நேர்கோடு.
**வலம்பாய்தல்** – வெற்றியுண்டாதல்; இடப்பக்கத்திலிருந்து வலப்பக்கஞ் செல்லுதல்.
**வலம்புரி** – வலப்பக்கம் முறுக்குண்ட சங்கு; காண்க: **வலம்புரிச்சங்கு; நந்தியாவட்டம்;** வலமாகச் சுழிந்திருப்பது; வலம்புரிச்சங்கு வடிவிலுள்ள கைவரி; வலம்புரிச்சங்கு வடிவாகச் செய்த தலையணி; செடிவகை; அபிநயவகை; வலமாகச் சுற்றிவருதல்.
**வலம்புரிச்சங்கு** – வலமாகச் சுழிந்துள்ள சங்கு வகை.

**வலம்வருதல்** – திருக்கோயில் முதலியவற்றை இடமிருந்து வலப்பக்கமாகச் சுற்றிவருதல்.
**வலமன்** – வலப்பக்கம்.
**வலயம்** – வட்டம்; சக்கரப்படை; கடல்; குளம்; கைவளையம்; தாமரையின் சுருள்; சுற்றிடம்; நீர்நிலை; பாத்தி; தோட்டம்; எல்லை.
**வலவன்** – திறமையுடையவன்; வெற்றியாளன்; தேர்ப்பாகன்; திருமால்; வலப்பக்கத்து உள்ளவன்; ஓர் அசுரன்.
**வலவாய்** – வலப்பக்கம்;
**வலவை** – விநாயகன் தேவி; திறமை; வல்லவன்(ள்); காளி; இடாகினி; வஞ்சகப் பெண்.
**வலற்காரம்** – பொய்.
**வலன்** – வெற்றி; வலப்பக்கம்; மேலிடம்; ஆணை; வலி; சேனை; வலம்வருதல்; வலப் பக்கத்தில் இருப்பவன்; திறமையானவன்; ஓர் அசுரன்; ஏழனுருபு.
**வலாகம்** – கொக்கு; நீர்.
**வலாகு(கை)** – கொக்கு.
**வலாட்டிகன்** – திண்ணியன்.
**வலார்** – காண்க: வளார்.
**வலாரி** – வலன் என்னும் அசுரனின் பகைவனான இந்திரன்.
**வலாற்காரம்** – கட்டாயப்படுத்தல்.
**வலி** – வன்மை; காண்க: வலாற்காரம்; நறுவிலி; அகங்காரம்; வல்லெழுத்து; தொகைநிலைத் தொடர் மிக்கு வருஞ் செய்யுட்குணம்; பற்றுக் கோடு; பற்றிரும்பு; தொல்லை; நோவு; ஒலி; சூள்; வஞ்சம்; இழுக்கை; இசிவுநோய்வகை; வலிமைமிக்கவன்; கோடு; குரங்கு.
**வலி** (வி) – உடன்படுத்து; இழு.
**வலிக்கட்டு** – யாழ்நரம்பின் வலிந்த கட்டு.
**வலிகுன்மம்** – வலிப்பு முதலியவற்றோடு கூடிய சுரநோய்.
**வலிங்கம்** – வலாற்காரம்.
**வலிச்சல்** – தசை முதலியவற்றின் கடினத் தன்மை; பனையின் கடுங்காய்; காய்ந்தது; கட்டுவரிச்சல்.
**வலிசெய்தல்** – மிடுக்குச்செய்தல்; வல்வழக் குரைத்தல்.
**வலித்தல்** – கட்டாயப்படுத்துதல்; பற்றிக் கொள்ளுதல்; இடர்ப்பட்டுப் பொருள்கொள் ளுதல்; அழுத்தி உச்சரித்தல்; மெல்லெழுத்தை வல்லெழுத்தாக்குதல்; துணிதல்; வற்றச்செய் தல்; திண்ணியதாதல்; வற்றுதல்; நோவுண் டாதல்; முயலுதல்; கொழுத்தல்; சொல்லு தல்; ஆலோசித்தல்; கருத்தோடு செய்தல்; உடன்படுதல்; இழுத்தல்; வளைத்தல்; அழகு காட்டுதல்; துடுப்பால் படகு தள்ளுதல்; கப்பற்பாய் தூக்குதல்; புகை குடித்தல்; இசிவு காணுதல்; ஏங்குதல்; மெல்லொற்றை வல்லொற்றாக மாற்றுதல்.
**வலிதம்** – சுற்றுவட்டம்; அசைவு.
**வலிதல்** – திண்ணியதாதல்; உச்சரிப்பில் அழுத்த மாதல்; மெல்லெழுத்து வல்லெழுத்தாதல்; நேர்வழியில் பொருள்கொள்ளாது இடர்ப்படு தல்; முயலுதல்; உய்தல்; தங்குதல்; கட்டாயப் படுத்தல்; துணிதல்; மீறுதல்; இழுத்தல்.
**வலிதின்** – வலாற்காரமாக.
**வலிது** – வலிமையுள்ளது; வலாற்காரம்.
**வலிதை** – நிருத்தக்கைவகை.
**வலிந்துகொள்ளுதல்** – இடர்ப்பட்டுப் பொருள் கொள்ளுதல்; வலாற்காரமாய்க் கைப்பற்றல்.
**வலிநோய்** – காக்கைவலிப்புநோய்.
**வலிப்பற்று** – பற்றுக்குறடு.
**வலிப்பு** – இசிவு; நோவு; இழுக்கை; தண்டு வலிக்கை; அழகுகாட்டுகை; நிலைபேறு; வருத்தம்; மெல்லொற்று வல்லொற்றாகை.
**வலிப்புறுத்தல்** – வற்புறுத்துதல்; நிலைபெறுத்து தல்.
**வலிபடுதல்** – பற்றியிழுக்கப்படுதல்; மாறுபடுதல்; வலிமையறுதல்.
**வலிமுகம்** – குரங்கு.
**வலிமுன்பு** – மிக்க வலி.
**வலிமை** – வன்மை; திறமை; திண்மை; வலாற் காரம்.
**வலிமைசெய்தல்** – கட்டாயப்படுத்தல்.
**வலிய** – தானாக; பெரிய; வலிமையுள்ள; கட்டாயமாக.
**வலியவன்** – வலிமையுள்ளவன்; வல்லவன்.
**வலியறிதல்** – பகைவனுடைய வலிமையைத் தெரிந்துகொள்ளுதல்.
**வலியன்** – வலிமையுடையான்; திறமையானவன்; உடல்நலமுடையவன்; கரிக்குருவி; இறுகிய நிலையுடையது.
**வலியாடுதல்** – துன்பப்படுத்துதல்.
**வலியான்** – காண்க: வலியன்.
**வலியுறுத்துதல்** – பலப்படுத்துதல்; வற்புறுத்து தல்; உறுதிப்படுத்துதல்; இவறுதல்.
**வலிவு** – வலிமை; உச்சவிசை.
**வலீநகம்** – தாழை.
**வலீமுகம்** – திரைந்த முகமுடைய குரங்கு.
**வலு** – வலிமை; திறமை; கனம்; கொசு; ஒரு பசைமருந்து; பற்று; எட்டு; பலமான; மிகுதியான.
**வலுக்காரன்** – திறமையுள்ளவன்.
**வலுச்சண்டை** – வலியத்தொடங்குஞ் சண்டை.

**வலுத்தல்** – வன்மையாதல்; திடப்படுதல்.
**வலுமை** – பலம்; வலாற்காரம்.
**வலுவந்தம்** – வலாற்காரம்; வன்மை.
**வலுவன்** – திறமைமிக்கவன்.
**வலூகம்** – தாமரைக்கிழங்கு.
**வலை** – உயிர்களை அகப்படுத்துதற்குரிய கருவி; சூழ்ச்சி; யாகபத்தினி நெற்றியில் அணிந்து கொள்ளும் அணிவகை.
**வலைக்கண்** – வலையின் சிறுதுளை.
**வலைக்குணுக்கு** – வலையை நீருள் தாழச் செய்யும் உலோக உருண்டை.
**வலைகாரன்** – மீன்பிடிப்போன்.
**வலைகொள்ளுதல்** – சூழ்தல்.
**வலைச்சி** – நெய்தல்நிலப் பெண்; செம்படவப் பெண்.
**வலைப்படுதல்** – வலையில் அகப்படுதல்; சூழ்ச்சிக் குட்படுதல்.
**வலைப்பை** – வலைபோற் கண்களுள்ள பை.
**வலையச்சேரி** – நெய்தல்நிலம்; வலைஞர் வாழிடம்.
**வலையம்** – காண்க: **வலயம்.**
**வலையன்** – நெய்தல்நிலத்தான்; சாமைவகை; ஒரு சாதியான்.
**வலைவன், வலைவாணன், வலைவாழ்நன்** – நெய்தல் நிலத்தவன்; ஒரு சாதியான்.
**வலைவீசுதல்** – மீன் முதலியன பிடிக்க வலையை எறிதல்; வயப்படுத்த முயலுதல்.
**வலோற்காரம்** – காண்க: **வலாற்காரம்.**
**வவ்வலிடுதல்** – குளிர்மிகுதியால் பற்கள் ஒலி யுண்டாக விரைந்து மோதிக்கொள்ளுதல்.
**வவ்வலொட்டி** – காண்க: **வவ்வாலொ(லோ)ட்டி.**
**வவ்வால்** – ஒரு மீன்வகை; ஒரு பறவைவகை.
**வவ்வாலொ(லோ)ட்டி** – ஒரு செடிவகை.
**வவ்வு** – கவருதல்; சுவருக்கும் கூரைக்கும் இடை யிலுள்ள வெளி.
**வவ்வுதல்** – கவர்தல்; பற்றுதல்; வாருதல்.
**வழக்கச்சொல்** – உலகில் வழங்குஞ் சொல்.
**வழக்கடிப்பாடு** – தொன்றுதொட்டு வரும் பயிற்சி.
**வழக்கம்** – பழக்கம்; தொன்றுதொட்டு நடை பெறுதல்; ஈகை; பொதுவானது; பயன் படுத்துகை.
**வழக்கமாய்** – முன்வழக்கப்படி; பெரும்பாலும்.
**வழக்கர்** – நீள்வழி; வழக்கம்.
**வழக்கழிவு** – முறைகேடு.
**வழக்கறிஞன்** – வழக்குரைஞன்.
**வழக்கறிதல்** – வழக்கங்களை அறிதல்; சட்ட மறிதல்.
**வழக்கறுத்தல்** – போக்கைத் தடுத்தல்; வழக்கைத் தீர்த்துவிடுதல்.
**வழக்கறுதல்** – வழக்கத்தினின்று நீங்குதல்.
**வழக்கன்** – காண்க: **வழக்காளி;** செலவிடுதற் குரியது.
**வழக்காட்டு** – வாதாடுகை; ஊடல்.
**வழக்காடுதல்** – வாதாடுதல்; வழக்குத் தொடுத் தல்; ஊடுதல்.
**வழக்காளி** – வழக்குத்தொடுத்தவன்; வாதாடு வோன்; வழக்கவிவகாரங்கள் அறிந்தவன்.
**வழக்காறு** – பழக்கவொழுக்கம்.
**வழக்கிடுதல்** – விவகாரம் பண்ணுதல்; வாதாடு தல்; தர்க்கித்தல்.
**வழக்கியல்** – உலக வழக்கான நடை; வழக்காறு.
**வழக்கு** – இயங்குகை; உலகவழக்கு, செய்யுள் வழக்கு என்னும் இருவகை வழக்குகள்; இயல்புவழக்கு தகுதிவழக்குகள்; பழக்க வொழுக்கம்; நீதி; நெறி; நீதிமன்றத்தில் முறையிடுதல்; விவகாரம்; வாதம்; வண்மை.
**வழக்குதல்** – போக்குதல்.
**வழக்குப்பேசுதல்** – வாதாடுதல்; நியாயம் எடுத்துரைத்தல்.
**வழக்கோரம்** – ஒருசார் நிற்றல்; ஒரு பக்கஞ் சார்ந்துபேசும் நியாயம்.
**வழகம்** – பவளம்.
**வழகு** – மென்மை.
**வழங்காத்தேர்** – பேய்த்தேர், கானல்நீர்.
**வழங்காவழி** – புதுவழி.
**வழங்குதல்** – இயங்குதல்; உலாவுதல்; நடைபெறு தல்; அசைந்தாடுதல்; கூத்தாடுதல்; நிலை பெறுதல்; பயிற்சிபெறுதல்; கொண்டாடப் படுதல்; தகுதியுடையதாதல்; பயன்படுத்தல்; கொடுத்தல்; செய்துபார்த்தல்; சொல்லுதல்; நடமாடுதல்.
**வழப்பம்** – காண்க: **வழக்கம்.**
**வழலிக்கை** – இளைப்பு.
**வழலுதல்** – தோலுரிதல்.
**வழலை** – புண்ணினின்று வடியும் நீர்; பாம்பு வகை; ஓர் உப்புவகை; சலவைக்கட்டி; கோழை.
**வழவழத்தல்** – வழுக்குந்தன்மையாதல்; உறுதியற் றிருத்தல்; மழமழத்தல்; தெளிவின்றிப் பேசுதல்.
**வழவழவெனல்** – வழுக்குதற்குறிப்பு; தெளி வின்றிப் பேசுதற்குறிப்பு.
**வழாஅல்** – தவறுகை; வழுக்குகை.
**வழாநிலை** – சொற்கள் அல்லது தொடர்கள் இலக்கணவிதியினின்றும் விலகாது அமைகை.
**வழாறு** – நிறைபுனல் உள்ள ஆறு அல்லது குளம்.

**வழி** – நெறி; காரணம்; கழுவாய்; வழிபாடு; ஒழுக்கம்; முறைமை; பின்சந்ததி; மரபு; மகன்; சுற்றம்; உடன்பிறந்தான்; பரம்பரை; நூல் வந்த நெறி; சுவடு; பின்னானது; வழக்கு; பழைமை; மலைப்பக்கம்; இடம்; திரட்சி; வரம்; பின்பு; வினையெச்சவிகுதி; ஏழனுருபு.

**வழிக்கரை** – வழிப்பக்கம்.

**வழிக்குவருதல்** – இணங்குதல்; நல்வழிப்படுதல்.

**வழிக்கொள்ளுதல்** – பின்பற்றிச் செல்லுதல்; பயணப்படுதல்.

**வழிகட்டுதல்** – வழிமறித்தல்; எத்தனஞ்செய்தல்; வழிகாட்டுதல்.

**வழிகாட்டி** – செல்லுதற்குரிய வழியைக் காட்டுபவர்; பிறர் பின்பற்றுதற்குரிய முன்மாதிரியாக இருப்பவர்; வழிகாட்டிமரம்.

**வழிகாட்டுதல்** – செல்லும் நெறியை அறிவித்தல்; நன்னெறி உணர்த்துதல்; வழிவகை கூறுதல்.

**வழிகெடுதல்** – சுவடுதெரியாமல் அழிதல்.

**வழிச்செல்வோன்** – பயணி.

**வழிச்செலவு** – பயணச்செலவு; பயணம்.

**வழிசீத்தல்** – செல்லும் வழியைச் செப்பனிடுதல்.

**வழிசெய்தல்** – வகைசெய்தல்.

**வழித்தடை** – பயணத்திற்கு நேரும் இடையூறு.

**வழித்தல்** – வடித்தல்; அரைத்த சந்தனம் முதலியவற்றைத் திரட்டியெடுத்தல்; பூசுதல்; துடைத்தெடுத்தல்; வழிக்குதல்; சவரம் பண்ணுதல்; ஆடையைத் திரைத்தல்.

**வழித்திண்ணை** – வீடு, கோபுரம் முதலியவற்றின் வெளித்திண்ணை.

**வழித்துணை** – பயணத்தில் உடன்வருவோன்; வழிக்குத் துணையாவோன்; வழிவழியாக உதவிவரும் குடும்பத்துணை.

**வழித்தெய்வம்** – குலதெய்வம்.

**வழித்தொண்டு** – வழிவழியடிமை.

**வழித்தோன்றல்** – மரபிற் பிறந்த பிள்ளை, மகன்.

**வழிதல்** – நிரம்பிவடிதல்; தோல்வழலுதல்.

**வழிதிகைத்தல்** – செல்வழி தெரியாது மயங்குதல்; செய்வகை தெரியாது கலங்குதல்.

**வழிதுறை** – வழியும் துறையும்; பக்கத்துணை; வழிவகை.

**வழிநடத்தல்** – ஏவல் செய்தல்.

**வழிநடை** – வழிச்செல்லுகை; நடைபாதை.

**வழிநாள்** – பின்வருநாள்.

**வழிநிலை** – பின்னின்று ஏவல் செய்தல்; பின் நிகழ்வது; அலங்காரவகை.

**வழிநிலைக்காட்சி** – இயற்கைப் புணர்ச்சியை அடுத்த இடந்தலைப்பாட்டில் தலைவன் தலைவியைக் காணுங் காட்சி.

**வழிநிற்றல்** – ஏவல்செய்தல்.

**வழிநூல்** – நூல் மூன்றனுள் ஒன்றான முதனூல் வழியை விகற்பிக்கும் நூல்.

**வழிப்படுத்தல்** – பயணப்படுத்துதல்; நல்வழிச் செலுத்துதல்; சீர்திருத்துதல்; வசப்படுத்துதல்; வணக்கஞ் செய்வித்தல்.

**வழிப்படுதல்** – காண்க: வழிபடுதல்; நேர்படுதல்; சந்தித்தல்; வணங்குதல்.

**வழிப்பயணம்** – ஆத்திரை, பிரயாணம்.

**வழிப்பறி** – வழிக்கொள்ளை.

**வழிப்பறித்தல்** – ஆறலைத்தல்.

**வழிப்பிரிவு** – பலவழி கூடுமிடம்.

**வழிப்புரை** – வழிப்போக்கர் இளைப்பாறத் தங்குமிடம்.

**வழிப்பெருந்தேவி** – பட்டத்தரசிக்கு அடுத்த தேவி.

**வழிப்போக்கு** – வழியிற்போகை; வழி; வயல்களில் உள்ள வழிப்பாதை; பாழ்நிலம்.

**வழிப்போதல்** – பயணமாதல்; பின்பற்றுதல்.

**வழிபடுகடவுள்** – ஒருவன் தன் குலத்துக்கும் தனக்குமுரித்தாக வணங்கும் கடவுள்.

**வழிபடுத்தல்** – காண்க: வழிப்படுத்தல்.

**வழிபடுதல்** – பின்பற்றுதல்; பயணமாதல்.

**வழிபடுதெய்வம்** – காண்க: வழிபடுகடவுள்.

**வழிபண்ணுதல்** – வகைசெய்தல்.

**வழிபயத்தல்** – பிற்பயத்தல்; மறுக்காது கொடுத்தல்.

**வழிபறி** – காண்க: வழிப்பறி.

**வழிபறித்தல்** – காண்க: வழிப்பறித்தல்.

**வழிபாடு** – வழியிற் செல்லுகை; பின்பற்றுகை; வணக்கம்; பூசனை; வழக்கம்; சமயக் கோட்பாடு.

**வழிபார்த்தல்** – எதிர்பார்த்தல்; வகைபார்த்தல்; சமயம் பார்த்தல்; சூழ்ச்சி தேடுதல்.

**வழிபோவார்** – பயணிகள்.

**வழிமடக்குதல், வழிமறித்தல்** – செல்வதைத் தடுத்தல்.

**வழிமார்க்கம்** – நல்லொழுக்கம்.

**வழிமுட்டு** – செல்லமுடியாத வழி.

**வழிமுதல்** – குலமுதல்வன்; காண்க: வழிபடு கடவுள்.

**வழிமுரண்** – ஒரு செய்யுளில் முரண்டொடை மிகுதியாகப் பயில்வது.

**வழிமுறை** – தலைமுறை; பின்பு.

**வழிமுறைத்தாய்** – தகப்பனுக்கு இரண்டாந் தாரமாகிய சிறிய தாய்.

**வழிமுறைத்தாரம்** – முதல் மணத்துக்குப்பின் மணந்துகொண்ட தாரம்.

**வழிமொழி** – ஒரு சந்தப்பாட்டுவகை; அணிவகை.

**வழிமொழிதல்** – வழிபாடு கூறுதல்; பின்மொழிதல்; அனுசரித்துக் கூறுதல்.

**வழிமோனை** – மோனைகளுள் ஒன்று.
**வழியட்டுதல்** – வழியவிடுதல்.
**வழியடியார்** – பரம்பரைத் தொண்டர்.
**வழியடை** – இடையூறு; தாயத்தின் பின் உரிமையுடையோன்.
**வழியடைத்தல்** – செல்லவிடாது வழித்தடை செய்தல்; தடுத்தல்.
**வழியம்பலம்** – சாலையில் தங்குவதற்குரிய சத்திரம்.
**வழியல்** – வழித்தெடுக்கப்பட்டது; வழிந்தோடுவது.
**வழியலைத்தல்** – வழியில் கொள்ளையடித்தல்.
**வழியளவை** – கருதலளவை.
**வழியனுப்புதல்** – பயணப்படுத்திவிடுதல்.
**வழியாயம்** – சுங்கம்.
**வழியிரங்குதல்** – பின் வருந்துதல்.
**வழியிலார்** – வழித்தோன்றல்; திக்கற்றவர்.
**வழியுணவு** – கட்டுச்சோறு.
**வழியுரைத்தல்** – தூதுசொல்லுதல்.
**வழியுரைப்போர்** – தூதர்.
**வழியெஞ்சுதல்** – மரபற்றுப்போதல்.
**வழியெதுகை** – ஒரு செய்யுளில் அடிதோறும் முதன் மூன்று சீர்க்கண்ணும் வரும் எதுகை வகை.
**வழியொழுகுதல்** – பின்செல்லுதல்; நேர்வழியிற் செல்லுதல்; ஏவலின்படி நடத்தல்.
**வழியோன்** – காண்க: **வழித்தோன்றல்.**
**வழிவகை** – இடம் பொருள் ஏவல்கள்.
**வழிவந்தான்** – மரபிற் பிறந்தவன்; பின்பற்றியொழுகுவோன்; நற்குடியிற் பிறந்தோன்.
**வழிவருத்தம்** – பயணத்தாலுண்டான இளைப்பு.
**வழிவருதல்** – மரபுவழியாய் வருதல்; தொன்றுதொட்டு வருதல்; நற்குடிப் பிறத்தல்; பின்பற்றி யொழுகுதல்; சாத்திரங்களில் கூறிய முறை தப்பாமல் நடத்தல்.
**வழிவழி** – மரபுவழி.
**வழிவழியாய்ப்போதல்** – வெவ்வேறு வழியாகப் பிரிந்துபோதல்.
**வழிவிடுதல்** – பயணமனுப்புதல்; வழிவிட்டு ஒதுங்குதல்; செல்வழியைத் திறத்தல்; நெறி தவறுதல்; இடையூறுகளைப் போக்குதல்; இறக்குந்தறுவாயில் கழுவாய்ச் சடங்கு செய்தல்.
**வழு** – தவறு; கேடு; பாவம்; பழிப்புரை; குற்றம்; கன்று முதலியன பிறக்கும்போது காணப்படும் சவ்வு முதலியன.
**வழுக்கட்டை** – உருண்டுதிரண்டிருக்கை; மூடத்தன்மை; சிறுவன்.
**வழுக்கம்** – தவறு; ஒழுக்கத்தவறு.
**வழுக்கல்** – சறுக்குகை; காண்க: **வழுக்குநிலம்; வழுக்கை; வழுக்காய்.**
**வழுக்காய்** – வழுக்கலுள்ள இளந்தேங்காய்.
**வழுக்கு** – தோல்வி; சறுக்குகை; தவறு; மறதி; பயன்படாது கழிவது; கொழுப்பு; வழுவழுப்பான நீர்ப்பண்டம்.
**வழுக்குதல்** – சறுக்குதல்; தவறுசெய்தல்; தப்புதல்; மறத்தல்; அசைதல்; ஒழிதல்; அடித்தல்; மோதுதல்.
**வழுக்குநிலம்** – சறுக்கலான தரை.
**வழுக்குமரம்** – விளையாடுதற்குரிய சறுக்குமரம்.
**வழுக்கை** – இளந்தேங்காயின் உள்ளீடு; தலைமயிர் உதிர்ந்து வளராத நிலை.
**வழுக்கைத்தலை** – பொட்டலாயிருக்குந் தலை.
**வழுத்தரல்** – இறந்துபோதல்.
**வழுத்துதல்** – வாழ்த்துதல்; துதித்தல்; மந்திரித்தல்.
**வழுதலை** – கத்தரிச்செடி; கண்டங்கத்தரிவகை; புல்லுருவிச்செடி; திருடர்களை அச்சுறுத்துவதற்காகப் புனத்திடும் பொய்க்கழு.
**வழுதி** – பாண்டியன்.
**வழுதிவளநாடு** – ஆழ்வார்திருநகரியைச் சூழ்ந்த நாடு.
**வழுது** – பொய்; வைக்கோல்; அரிதாள்.
**வழுதுணங்காய்** – கத்தரிக்காய்; கண்டங்கத்தரி வகை.
**வழுதுணை** – கத்தரிச்செடி.
**வழுந்துதல்** – தோலுரிதல்.
**வழுநிலை** – சொல் முதலியன இலக்கணத் தவறாக வருகை.
**வழுநீர்** – கண்பீளை.
**வழும்பு** – குற்றம்; தீங்கு; நிணம்; வழுவழுப்பான நீர்ப்பண்டம்; அழுக்கு.
**வழுவமைத்தல், வழுவமைதி** – இலக்கண வழுவாயினும் அமைவதாகக் கொள்ளுதல்.
**வழுவல்** – நழுவுதல்; தவறு; கேடு; இளந்தேங்காயின் வழுக்கல்.
**வழுவழுத்தல்** – வழுக்குதல்; வழுவழுப்பாதல்; உறுதியறிதல்.
**வழுவழுப்பு** – கொழகொழப்பு; வழுக்குந்தன்மை; மென்மை; பளபளப்பு; எண்ணெய்ப்பசையுடைமை.
**வழுவழெனல்** – மென்மைக்குறிப்பு; விரைதற்குறிப்பு; வழுக்குதற்குறிப்பு.
**வழுவாடி** – செயலை நழுவவிடுபவன்.
**வழுவாமை** – நேர்மை; தவறுறாமை.
**வழுவாய்** – தப்புகை; பாவம்.
**வழுவு** – தவறு; குற்றம்; கேடு; பாவம்; பழிப்புரை.

**வழுவுடைக்காமம்** – பிறர் பொருள் விரும்பல்; பெருந்திணை.
**வழுவுதல்** – தவறுதல்; நழுவுதல்; சறுக்குதல்; குறைவுடையதாதல்.
**வழுவை** – யானை.
**வழூஉ** – காண்க: வழுவு.
**வழூஉச்சொற்புணர்த்தல்** – குற்றமுடைய சொற்களைச் செய்யுளிலும் உரைநடையிலும் சேர்த்தல்.
**வழை** – புன்னைமரம்; காண்க: வழைச்சு.
**வழைச்சு** – புதுமை.
**வள்** – வளம்; பெருமை; நெருக்கம்; கூர்மை; வாள்; வார்; வாளுறை; கடிவாளம்; காது; படுக்கை; வலிமை; வலிப்பற்றிரும்பு.
**வள்பு(வு)** – வார்.
**வள்ளடி** – காதினடி.
**வள்ளம்** – உண்ணும் வட்டில்; நாழிகை; அளவு வகை; சிறுதோணி.
**வள்ளல்** – வரையாது கொடுப்போன்; வண்மை; திறமை; கமுக்கச்செயல்; கொடிவகை.
**வள்ளற்றனம், வள்ளன்மை** – கொடைக்குணம், கொடைப் பண்பு.
**வள்ளி** – கொடிவகை; நிலப்பூசணி; தண்டு; கொடிபோன்று தொடர்ந்திருப்பது; கைவளை; தொய்யிற்கொடி; காண்க: **வள்ளித் தண்டை**; முருகக்கடவுளின் தேவி; குறிஞ்சி நிலப் பெண்; முருகக்கடவுட்கு மகளிர் மனநெகிழ்ந்து வெறியாடுதலைக் கூறும் புறத் துறை; குறிஞ்சி மகளிர் கூத்துவகை; சந்திரன்.
**வள்ளிக்கண்டம்** – சீந்திற்கொடி.
**வள்ளிக்கூத்து** – குறிஞ்சிநில மக்களின் கூத்து வகை.
**வள்ளிகேள்வன்** – முருகக்கடவுள்.
**வள்ளிசாய்** – முழுவதும்; நேர்த்தியாய்; சரியாய்.
**வள்ளிசு** – நேர்த்தி; முழுமை; துல்லியம்.
**வள்ளித்தண்டை** – பிரம்பினால் ஆன கேடகம்.
**வள்ளிநாய்ச்சியார்** – முருகக்கடவுளின் தேவி.
**வள்ளிமணாளன்** – காண்க: **வள்ளிகேள்வன்.**
**வள்ளியம்** – ஊதுகுழல்; மரக்கலம்; மெழுகு; மிளகு.
**வள்ளிய(யோ)ன்** – வண்மையுடையோன்.
**வள்ளுரம்** – பசுந்தசை; பசுவின் இறைச்சி.
**வள்ளுவப்பயன்** – திருக்குறள்.
**வள்ளுவன்** – ஒரு சாதியான்; நிமித்திகன்; திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர்.
**வள்ளூரம்** – சூட்டிறைச்சி; பசுந்தசை.
**வள்ளெனல்** – குரைக்கும் ஒலிக்குறிப்பு.
**வள்ளை** – காண்க: **வள்ளைப்பாட்டு**; ஒரு கொடி வகை.
**வள்ளைப்பாட்டு** – மகளிர் நெல் குற்றும்போது ஒரு தலைவனைப் புகழ்ந்து பாடும் பாட்டு.
**வளகம்** – பவளம்.
**வளகு** – நீண்ட மரவகை; செழிப்பு.
**வளங்கோலுதல்** – செயல்முடிவுக்கு வழிதேடுதல்.
**வளந்து** – பெரிய மிடா.
**வளநாடு** – செழிப்புள்ள நாடு.
**வளப்பம்** – செழுமை; நன்மை; மாட்சிமை; வழக்கம்.
**வளப்பாடு** – செழுமை; பெருக்கம்.
**வளம்** – செல்வம்; செழுமை; மிகுதி; பயன்; வருவாய்; நன்மை; மாட்சிமை; தகுதி; அழகு; பதவி; புனல்; உணவு; வாணிகப் பண்டம்; வெற்றி; வழி; பக்கம்.
**வளமை** – செழிப்பு; நன்மை; செல்வம்; உதவி; பொருள்; மாட்சிமை.
**வளமையர்** – வேளாளர்; மாட்சிமையுள்ளோர்; பணச்செழிப்புள்ளவர்.
**வளயம்** – காண்க: **வளையம்.**
**வளர்** – இளங்கொம்பு; ஓர் உவமச்சொல்.
**வளர்கிடாய்** – வீட்டில் வளர்த்த ஆட்டுக்கடா.
**வளர்ச்சி** – வளர்தல்; உயரம்; நீட்சி; உறக்கம்.
**வளர்த்தல்** – பாதுகாத்தல்; பெருக்குதல்; காண்க: **வளர்த்துதல்**; ஓம்புதல்.
**வளர்த்தாள்** – செவிலித்தாய்; கைத்தாய்.
**வளர்த்தி** – காண்க: **வளர்ச்சி.**
**வளர்த்துதல்** – உறங்கச்செய்தல்; வளரச்செய்தல்; நீட்டுதல்; பொன் முதலியவற்றைத் தகடாக அடித்தல்; கிடத்துதல்.
**வளர்தல்** – பெரிதாதல்; மிகுதல்; நீளுதல்; களித்தல்; உறங்குதல்; தங்குதல்.
**வளர்ப்பு** – வளர்க்கை; காண்க: **வளர்ப்புப்பிள்ளை**; பிறனைச் சார்ந்து வாழ்பவன்; தாசியின் தத்துப்பெண்.
**வளர்ப்புப்பிள்ளை** – தத்துப்பிள்ளை.
**வளர்பிறை** – முன்பக்கம்; முன்பக்கத்து நிலா.
**வளர்மயிர்** – மயிர்க்குழற்சி.
**வளர்வு** – வளர்தல்.
**வளரறம்** – மிகுகின்ற அறம்.
**வளவளத்தல்** – வீணே பிதற்றுதல்; சுருக்கமின்றிச் சொற்களைப் பெருக்குதல்.
**வளவளப்பு** – வீண் பிதற்றல்; பயனற்ற சொல்.
**வளவன்** – சோழன்; வேளாளன்.
**வளவி** – வீட்டிறப்பு.
**வளவு** – வீடு; வீட்டுப்புறம்.
**வளவுதல்** – வளர்த்தல்.
**வளன்** – காண்க: **வளம்.**
**வளா** – பரப்பு; வியப்புக்குறிப்பு.
**வளாகம்** – இடம்; வளைத்தல்; உலகம்; நிலவுலகம்; நாடு; தினைப்புனம்; பரப்பு; தோட்டம்.

**வளார்** – இளங்கொம்பு.
**வளால்** – தரைக்கூறுவகை.
**வளாவுதல்** – சூழ்தல்; மூடுதல்; கலத்தல்; அளவளாவுதல்.
**வளி** – காற்று; சுழல்காற்று; உடல்வாதம்; அண்டவாதநோய்; சிறிய காலவளவுவகை.
**வளிச்செல்வன்** – வாயுதேவன்.
**வளிசம்** – தூண்டில்.
**வளிநிலை** – கோபுரம்.
**வளிமகன்** – காற்றின் மக்களான அனுமான் அல்லது வீமன்.
**வளிமறை** – கதவு; வீடு.
**வளு** – இளமை; இளைது.
**வளும்பு** – நிணம்; நிணம் முதலியவற்றின் மேலுள்ள வழுவழுப்பான நீர்ப்பண்டம்; அழுக்கு.
**வளுவளுத்தல்** – வழுக்குந்தன்மையாதல்; பேச்சில் தெளிவில்லாதிருத்தல்.
**வளை** – சுற்றிடம்; சங்கு; கைவளை; சக்கரப்படை; துளை; எலி முதலியவற்றின் பொந்து; நீண்ட மரத்துண்டு; தூதுவளை என்னும் கொடிவகை; சிறிய உத்திரம்.
**வளை** (வி) – தடைசெய்; கட்டு; வாரு; முற்றுகையிடு.
**வளைக்கரன்** – சங்கை ஏந்திய திருமால்.
**வளைகாப்பு** – முதலாவதாகக் கருவுற்ற பெண்ணுக்கு ஐந்து அல்லது ஏழாம் மாதத்தில் வளையலணியுஞ் சிறப்பு நிகழ்ச்சி.
**வளைச்சல்** – வளைவு; வளைவுள்ளது; வீடு முதலியவற்றின் சுற்றுப்புறம்.
**வளைத்தல்** – வளையச்செய்தல்; சூழ்தல்; தடுத்தல்; பற்றுதல்; கவர்தல்; பேச்சு முதலியவற்றைத் திருப்புதல்; எழுதுதல்; அணிதல்.
**வளைத்துவைத்தல்** – அப்பாற்போகவொட்டாது மடக்குதல்; சிறையகப்படுத்துதல்.
**வளைதடி** – ஓர் எறிபடைவகை.
**வளைதல்** – சூழ்தல்; சுற்றுதல்; சுற்றிவருதல்; தாழ்தல்; கோணுதல்; திடமறுதல்; நேர்மையினின்று விலகுதல்; வருந்துதல்.
**வளைநீர்** – உலகை வளைத்துக்கிடக்கும் கடல்.
**வளைப்பு** – வளைத்தல்; வளைவு; சூழ்தல்; முற்றுகையிடுதல்; குடியிருப்பிடம்; சிறை; காவல்; உழவுசால்.
**வளைபோழ்(மு)நர்** – காண்க: **சங்கறுப்போர்.**
**வளைமணி** – அக்குமணி, சங்குமணி.
**வளையக்கொடி** – காண்க: **அண்ண(ணா)ந்தாள்.**
**வளையக்கோலுகை** – சுற்றுகை; தனக்குமட்டும் உரிமையாக்கிக்கொள்ளுகை.
**வளையகம்** – சங்கு.
**வளையம்** – தாமரைச்சுருள்; சுற்று; முடியில் வளைத்துச்சூடும் மாலை; குளம்; கைவளை; சங்கு; எல்லை; மண்டலம்; ஒரு கோள் வானமண்டலத்தை ஒருமுறை சுற்றிவரும் காலம்.
**வளையம்போடுதல்** – வட்டம் இடுதல்; சூதாட்டத்தில் வளையமெறிதல்; ஒருவனைச் சுற்றித்திரிதல்.
**வளையமாலை** – முடியில் வளைத்துச் சூடும் மாலை.
**வளையமுடித்தல்** – திரளக் கூட்டிமுடித்தல்.
**வளையல்** – மகளிர் கையணிவகை; கண்ணாடி; வளைவுள்ளது.
**வளையலுப்பு** – ஒரு மருந்துப்புவகை.
**வளையற்காரன்** – வளையல் விற்பவன்.
**வளையில்** – காண்க: **வளையல்.**
**வளைவாணன்** – பலராமன்; நாகநாட்டரசன்.
**வளைவாணி** – கொக்கி.
**வளைவாயுதம்** – உள்வளைந்த இடங்களை இழைக்கும் இழைப்புளிவகை.
**வளைவி** – வீட்டிறப்பு; மகளிரது கையணிவகை.
**வளைவிற்பொறி** – வளைந்து தானே எய்யும் இயந்திரவில்.
**வளைவு** – சுற்று; கோணல்; கட்டடத்தில் அமைக்கும் வில்வளைவு; வீட்டுப்புறம்; வட்டம்; பணிவு.
**வளைவெடுத்தல்** – வளைவை நிமிர்த்துதல்; வளைவுகட்டுதல்.
**வற்கடம்** – வறட்சி; பஞ்சம்.
**வற்கம்** – குதிரையின் கடிவாளம்; குதிரைக்குரிய கலணை முதலியன; இனம்; ஒத்த பொருள்களின் கூட்டம்; பிசாசு; அத்தியாயம்; ஒழுங்கு; மரப்பட்டை; குறிப்பிட்ட எண்ணை அதே எண்ணால் பெருக்கிவரும் தொகை; மரபு.
**வற்கமார்க்கம்** – நாயுருவிச்செடி.
**வற்கரி** – கரகம்; குதிரையின் கடிவாளம்.
**வற்கலம்,** **வற்கலை** } – மரவுரி, மரப்பட்டை.
**வற்காலம்** – வறட்சிக்காலம்.
**வற்காலி** – வெள்ளாடு; ஆடு.
**வற்கித்தல்** – ஒரு தொகையை அத் தொகையாற் பெருக்குதல்.
**வற்குணம்** – கொடுமை.
**வற்கெனல்** – வலிதாதற்குறிப்பு.
**வற்சதரம்** – இளங்கன்று.
**வற்சவம்** – எருமை, பசு இவற்றின் கன்று; குழந்தைப் பருவம்; ஒரு நாடு; மார்பு.
**வற்சரம்** – ஆண்டு.
**வற்சலம்** – காண்க: **வற்சலை; பேரன்பு.**
**வற்சலை** – ஈன்ற பசு.

**வற்சன்** – குழந்தை.
**வற்சை** – மலட்டுப்பசு; குழந்தை.
**வற்பம்** – வன்மை; வறட்சி.
**வற்பு** – உறுதிப்பாடு; வலிமை.
**வற்புலம்** – மேட்டுநிலம்.
**வற்புறுத்துதல்** – உறுதிப்படுத்திச் சொல்லுதல்; வலிமைப்படுத்துதல்.
**வற்புறுதல்** – உறுதிப்படுதல்; திடப்படுதல்; ஆறுதலடைதல்.
**வற்றம்** – கடல்நீர் வடிகை; வறட்சி.
**வற்றல்** – வடிகை; வறளுகை; உலர்ந்தது; உலர வைத்த காய், இறைச்சி முதலிய உணவு.
**வற்றனோய்** – இரத்தங் குன்றி உடலை மெலிவிக்கும் நோய்.
**வற்று** – கடல்நீர் வடிகை; கூடியது; ஒரு சாரியை.
**வற்றுதல்** – சுவறுதல்; கடல்நீர் முதலியன வடிதல்; புண் முதலியன உலர்தல்; வாடுதல்; மெலிதல்; பயனற்றுப்போதல்.
**வறக்கடை** – தீ முதலியவற்றா லுண்டாகிய வறட்சி.
**வறக்காலன்** – தன் குடும்பத்திற்கு இழப்புண்டாக வந்தவன்.
**வறக்காலி** – தன் குடும்பத்திற்கு இழப்புண்டாக வந்தவள்.
**வறங்கூர்தல்** – மழைபெய்யாதுபோதல்; பஞ்சம் மிகுதல்.
**வறட்காலம்** – பஞ்சகாலம்; மழையில்லாக் காலம்.
**வறட்கேடு** – மழையின்மையா லுண்டாகுந் துன்பம்.
**வறட்சாவி** – மழையில்லாமையாலான பயிர்ச் சாவி.
**வறட்சி** – நீரற்றுப்போதல்; உடற்காங்கை; சொறி; உடலை மெலியச்செய்யும் நோய்.
**வறட்சுண்டி** – காண்க: ஆடுதின்னாப்பாளை; சுண்டிவகை.
**வறட்டாடு** – மலட்டு ஆடு.
**வறட்டி** – அடைபோல் தட்டிக் காய்ந்த சாணம்.
**வறட்டிருமல்** – தொண்டையை வறளச்செய்யும் இருமல்வகை.
**வறட்டுதல்** – வற்றச்செய்தல்; காயச்செய்தல்; வறுத்தல்.
**வறட்டுப்பசு** – மலட்டுப் பசு.
**வறட்பால்** – காய்ந்து கட்டியான பால்.
**வறடன்** – மெலிந்தவன்; ஆண்மையற்றவன்.
**வறடி** – மெலிந்தவள்; மலடி.
**வறடு** – வறட்சி; ஈனாத பசு முதலியன.
**வறண்டி** – குப்பை முதலியன வாருங் கருவி; வழிக்குங் கருவி.
**வறண்டுதல்** – தெள்ளுதல்; பிறாண்டுதல்; திருடுதல்.
**வறத்தல்** – காய்தல்; வறுமையாதல்; மழை பெய்யாது போதல்; குறைந்து மெலிதல்.
**வறம்** – காண்க: வறன்.
**வறல்** – உலர்தல்; வறண்ட நிலம்; சுள்ளி; நீரில்லாமை; வறுத்தல்; உலரவைத்த காய், இறைச்சி முதலிய உணவு.
**வறவறெனல்** – உலர்ந்து கடினமாதற்குறிப்பு.
**வறவு** – கஞ்சி.
**வறள்** – உலர்கை; வறட்சியான நிலம்; மணற் பாங்கு.
**வறளி** – காண்க: வறட்டி; உலர்ந்தது.
**வறளுதல்** – வற்றுதல்; உடம்பு மெலிதல்.
**வறற்காலை** – நீரில்லாத காலம்.
**வறன்** – வற்றுகை; நீரில்லாமை; கோடைக் காலம்; பஞ்சம்; வறுமை; வறண்ட பூமி.
**வறனுழத்தல்** – நீரின்றி வருந்துதல்; வறுமையுறுதல்.
**வறிஞன்** – பொருளில்லாதவன்.
**வறிது** – சிறிது; பயனின்மை; அறியாமை; குறைவு; வறுமை; உள்ளீடற்றது; இயலாமை.
**வறிய(யா, யோ)ன்** – காண்க: வறிஞன்; அறிவிலான்.
**வறுகடலை** – வறுத்த கடலை.
**வறுகறி** – வறுத்த கறி.
**வறுகுதல்** – பிறாண்டுதல்; இறுகப்பிடித்தல்.
**வறுங்காலம்** – வறுமைக்காலம்; நீரில்லாக்காலம்; பஞ்சகாலம்.
**வறுங்கோட்டி** – அறிவிலார் கூட்டம்.
**வறுங்கோடை** – மழையில்லாத கோடை.
**வறுத்தல்** – பொரியச்செய்தல்; தொந்தரவு படுத்துதல்.
**வறுதல்** – வறுபடுதல்.
**வறுநகை** – புன்னகை.
**வறுநிலம்** – பாழ்நிலம்.
**வறுநுகர்வு** – உண்மையில்லா அனுபவம்.
**வறுபடுதல்** – தீயாற் பொரிதல்.
**வறும்புனம்** – அறுவடையானபின் தரிசாய்க் கிடக்கும் புன்செய்நிலம்; பாலைநிலம்.
**வறுமை** – துன்பம்; வெறுமை; திக்கற்ற தனிமை.
**வறுமொழி** – பயனில்சொல்.
**வறுவல்** – எண்ணெய் அல்லது நெய்யில் பொரித்த கறிவகை.
**வறுவிது** – குறையாக இருப்பது.
**வறுவிதை** – வறுத்த வித்து.
**வறுவியோர்** – வறிஞர்.
**வறுவிலி** – திக்கற்றவன்; வறியவன்.
**வறுவோடு** – காண்க: வறையோடு.
**வறை** – பொரிக்கறி.
**வறைநாற்றம்** – தீநாற்றம்.

**வறைமுறுகல்** – கருகிப்போனது; பயனற்றது; கரடுமுரடானது.
**வறையல்** – காண்க: **வறை; பிண்ணாக்கு.**
**வறையோடு** – பொரிக்குஞ் சட்டியோடு; பயனற்றவர்; பயனற்றது.
**வன்கண்** – மனக்கொடுமை; வீரத்தன்மை; பகைமை; பொறாமை; கொடும்பார்வை.
**வன்கண்ணன்** – கொடுமையுள்ளவன்; வீரமுள்ளவன்.
**வன்கண்மை** – கொடுமை; வீரம்.
**வன்கணம்** – காண்க: **வல்லினம்.**
**வன்கணாளன்** – கொடியோன்; வீரன்.
**வன்கனி** – செங்காய்.
**வன்காய்** – கடுக்காய்; முற்றிய காய்.
**வன்காரம்** – வெண்காரம்; வலாற்காரம்.
**வன்கிழம்** – தொண்டுகிழம்; மிக்க இளமையிலே உண்டாகும் அறிவுமுதிர்ச்சி.
**வன்கை** – வலிய கரம்; தோற்கருவிவகை
**வன்கொலை** – கடுங்கொலை.
**வன்சிறை** – கடுங்காவல்; மதில்; கொடுமைக்கு உள்ளாக்கும் அடிமைத்தனம்.
**வன்செலல்** – விரைந்துசெல்லுகை.
**வன்செவி** – உணர்ச்சியற்ற காது.
**வன்சொல்** – கடுஞ்சொல்; மிலேச்சமொழி.
**வன்பகை** – கடும்பகை.
**வன்பாடு** – வலியதன்மை; முருட்டுத்தன்மை.
**வன்பார்** – இறுகிய பாறைநிலம்.
**வன்பால்** – காண்க: **வன்பார்;** பாலைநிலம்; குறிஞ்சிநிலம்; மேடு.
**வன்பு** – வலிமை; கடினத்தன்மை; கருத்து; தோல் முதலியவற்றின் வார்.
**வன்புல்** – புறக்காழுள்ள மரஞ்செடி முதலியன.
**வன்புலம்** – வலியநிலம்; குறிஞ்சிநிலம்; முல்லைநிலம்.
**வன்புறுத்தல்** – தலைவியைத் தலைவன் ஆற்றுவித்தல்.
**வன்புறை** – தலைவியைத் தலைவன் ஆற்றிவற்புறுத்துகை; தலைவன் பிரிவின்கண் வாயில்கள் தலைவியை ஆற்றுவித்தலைக் கூறும் அகத்துறை; வற்புறுத்திச் சொல்பவன்.
**வன்புறையெதிரழிதல்** – தலைவன் ஆற்றுவித்துப் பிரிந்தபின் தனிமையில் தலைவி வருந்துதலைக் கூறும் அகத்துறை.
**வன்பொறை** – பெரும்பாரம்.
**வன்மம்** – தீராப்பகை; வலிமை; சூளுரை; உடலின் முக்கிய பாகம்; இரகசியச் சொல்.
**வன்மரம்** – அகக்காழுள்ள மரம்.
**வன்மனம்** – **கன்னெஞ்சு.**
**வன்மா** – குதிரை; அரிமா.
**வன்மான்** – அரிமா.
**வன்மி** – பகைவன்.
**வன்மித்தல்** – கன்னெஞ்சு படைத்தல்; தீராப் பகை காட்டுதல்; சூளுரைத்தல்; மரம் காழ் கொள்ளுதல்.
**வன்மீகம்** – கறையான்புற்று; ஒருவகை உடல் வீக்கநோய்.
**வன்மீன், வன்மீனம்** – முதலை.
**வன்மை** – வலிமை; கடினம்; **வன்சொல்;** ஆற்றல்; வலாற்காரம்; சொல் அழுத்தம்; கோபம்; கருத்து; வல்லெழுத்து.
**வன்மொழி** – கடுஞ்சொல்.
**வன்றி** – பன்றி.
**வன்னசரம்** – பலவகை மணிகளினாலியன்ற கழுத்தணிவகை.
**வன்னம்** – நிறம்; எழுத்து; தங்கம்.
**வன்னரூபி** – உமை; கலைமகள்.
**வன்னனை** – காண்க: **வருணனை.**
**வன்னி** – நெருப்பு; குதிரை; வன்னிமரம்; காண்க: **கொடிவேலி;** தணக்கு; **வன்னியன்;** பிரமசாரி; கிளி.
**வன்னிகை** – எழுதுகோல்.
**வன்னிசகாயன்** – நெருப்புக்குத் துணையாகிய காற்று.
**வன்னித்தல்** – வண்ணம்வைத்தல்; வருணித்தல்.
**வன்னிமன்றம்** – வன்னிமரமுள்ள பொதுவிடம்.
**வன்னியம்** – வருணிக்கப்பட்டது; சிற்றரசரின் தன்மை; சுதந்தரம்; பகைமை.
**வன்னியமறுத்தல்** – சிற்றரசரை அழித்தல்.
**வன்னியன்** – சாமந்தன்; ஒரு சாதியாரின் பட்டப் பெயர்.
**வன்னிலம்** – பாறைப்பாங்கான பூமி.
**வன்னிவகன்** – தீயைத் தாங்குபவனாகிய காற்று.
**வன்னிவண்ணம்** – செந்தாமரை; செவ்வாம்பல்.
**வன்னெஞ்சு** – கடுமையான மனம்.
**வனகவம்** – காட்டுப்பசு.
**வனச்சார்பு** – காட்டுப்பாங்கான முல்லைநிலம்.
**வனச்சுவை** – நரி; புலி; புனுகுபூனை.
**வனசஞ்சாரம்** – காட்டிலே திரிந்துவாழ்கை.
**வனசந்தனம்** – வண்டுகொல்லி; மரவகை.
**வனசம்** – தாமரை.
**வனசமூகம்** – பூஞ்சோலை.
**வனசரம்** – காட்டுவிலங்கு; காட்டானை; காடு.
**வனசரர்** – பாலைநில மக்கள்; வேடர்.
**வனசரிதன்** – காண்க: **வனவாசி.**
**வனசன்** – காமன்.
**வனசுரம்** – பாலைநிலம்.
**வனசை** – திருமகள்; சந்தனமரம்.

**வனசோபனம்** – காண்க: **வனசம்.**
**வனதீபம்** – காண்க: **சண்பகம்.**
**வனதுர்க்கம்** – காட்டரண்.
**வனதேவதை** – காடுறை தெய்வம்.
**வனநரம்** – காண்க: **வானரம்.**
**வனப்பிரியம்** – குயில்.
**வனப்பு** – அழகு; இளமைநிறம்; பலவுறுப்புத் திரண்டவழிப் பெறுவதொரு செய்யுள் அழகு; பெருந்தோற்றம்.
**வனப்புவண்ணம்** – இசைவகை.
**வனபதி** – பூவாது காய்க்கும் மரம்.
**வனபந்தம்** – தடாகம்.
**வனபலம்** – காண்க: **ஆனைத்திப்பிலி.**
**வனபோசனம்** – சோலை முதலியவற்றில் நடத்தும் விருந்து; திருவிழா.
**வனம்** – காடு; ஊர் சூழ்ந்த சோலை; சுடுகாடு; நீர்; மலையருவி; உறைவிடம்; வழி; துளசி; புற்று; அழகு; மிகுதி; நிறம்.
**வனமரை** – காண்க: **ஓரிதழ்த்தாமரை.**
**வனமல்லிகை** – காட்டுமல்லிகை; ஊசிமல்லிகை.
**வனமா** – காண்க: **கொடிவேலி;** மரவகை.
**வனமாலி** – திருமால்; துளசி.
**வனமாலை**– பலவகை நிறமுள்ள மலருந்தழையுங் கொண்டு தொடுக்கப்பட்ட மாலை; துளசி மாலை.
**வனரஞ்சனி** – முலைப்பால்.
**வனராசன்** – அரிமா.
**வனருகம்** – காண்க: **வனசம்.**
**வனலட்சுமி** – வாழை.
**வனவசம்** – சந்தனமரம்.
**வனவன்** – வேடன்.
**வனவாசம்** – காட்டில் வாழ்கை.
**வனவாசி** – காட்டில் வாழ்பவன்.
**வனாந்தரம்** – காட்டின் உட்பகுதி; பாலைவனம்.
**வனாந்தரமாய்க்கிடத்தல்** – மிகுதியாய் இருத்தல்.
**வனி** – சுரம்.
**வனிகை** – தோப்பு.
**வனிதம்** – சிறப்பு; மேன்மை.
**வனிதை** – பெண்; மனைவி.
**வனைதல்** – உருவம் அமையச்செய்தல்; அலங்கரித்தல்; ஓவியம் எழுதுதல்.

## வா

**வா** – ஓர் உயிர்மெய்யெழுத்து (வ்+ஆ); தாவுதல்.
**வாக்கல்** – வடிக்கப்பட்ட சோறு.
**வாக்களித்தல்** – உறுதிகூறுதல்; வாக்குச் சீட்டுப் போடுதல்.
**வாக்கன்** – மாறுகண்ணன்.
**வாக்காட்டுதல்** – ஏய்த்தல்.
**வாக்காடுதல்** – பேசுதல்; வாதாடுதல்.
**வாக்காள்** – நாமகள்.
**வாக்காளன்** – ஓர் இடத்திற்கு உரியவனாக ஒருவனைத் தேர்ந்தெடுப்பது முதலியவற்றில் தன் கருத்தைத் தெரிவிக்கும் உரிமையுள்ளவன்.
**வாக்கி** – அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருட் பயன்களைக் கேட்க வேட்கையோடு விரித்துக் கூறுவோன்; எளிதிற் பாப்புனையும் ஆற்றலுள்ளவன்; மாறுகண்ணுள்ளவன்.
**வாக்கிடுதல்** – வாக்குத்தத்தஞ் செய்தல்; தீப் பலனைக் கொடுக்கும் சொற் கூறுதல்.
**வாக்கியக்கட்டளை** – நன்கு யாத்த சொற்றொடர்.
**வாக்கியசேடம்** – காண்க: **புறனடைச்சூத்திரம்.**
**வாக்கியம்** – சொல்; எழுவாய் பயனிலை முதலிய பொருளோடுகூடிய தொடர்; பொருள் நிரம்பிய பழமொழி; மேற்கோள்; சோதிட கணித வாய்பாடுவகை.
**வாக்கியார்த்தம்** – சொற்றொடர்ப் பொருள்; பொழிப்புரை.
**வாக்கியை** – பார்வதி.
**வாக்கின்செல்வி** – கலைமகள்.
**வாக்கு** – சொல்; திருத்தம்; திருந்திய வடிவு; வளைவு; ஒழுங்கின்மை; ஒரு வினையெச்ச விகுதி; வார்த்தல்; பேசற்கருவியான வாய்; அசரீரி; வாக்குத்தத்தம்; புகழ்ச்சிச்சொல்; எளிதிற் கவிபாடுந்திறம்; நூலின் நடை; ஒலி; பக்கம்; ஓர் இடத்திற்கு உரியவனாக ஒருவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை.
**வாக்குக்கடன்** – கைம்மாற்றுக்கடன்; வாய்மொழி நிபந்தனை.
**வாக்குக்கண்** – மாறுகண்.
**வாக்குக்குற்றம்** – சொற்பிழை.
**வாக்குக்கொடுத்தல்** – வாக்குறுதி கூறுதல்; விருப்பத்தைச் சீட்டுமூலமாய்த் தெரிவித்தல்; பேச்சுக்கொடுத்தல்.
**வாக்குச்சகாயம்** – சொல்லால் பிறர்க்குச் செய்யும் உதவி.
**வாக்குச்சித்தி** – பிறர் ஏற்கும்படி சொல்லுந் திறம்; சொற்கள் பலிக்கும்படி சொல்லும் ஆற்றல்.

**வாக்குச்சுத்தம்** – காண்க: **வாக்குநாணயம்.**

**வாக்குத்தண்டம்** – கடிந்துபேசுதல்.

**வாக்குத்தத்தம்** – உறுதிமொழி கூறல்.

**வாக்குத்தம்பம்** – அறுபத்துநான்கு கலையுள் பிறர் வாக்கைத் தடைசெய்தலான வித்தை.

**வாக்குத்தானம்** – சாதக சக்கரத்தில் வாக்கு, கல்வி முதலியவற்றைக் குறிக்கும் இரண்டாமிடம்.

**வாக்குதல்** – வார்த்தல்.

**வாக்குதேவி** – காண்க: **வாக்கின்செல்வி.**

**வாக்குநயம்** – சொல்வன்மை; காண்க: **வாக்குவசீகரம்;** நிந்தனை; பேச்சுவன்மை.

**வாக்குநாணயம்** – சொன்னசொல்லை நிறைவேற்றுங் குணம்.

**வாக்குப்பிசகுதல்** – சொல்தவறுதல்; உச்சரிப்புத் தடுமாறுதல்.

**வாக்குபதி** – வியாழன்.

**வாக்குமாறுதல்** – சொல்தவறுதல்; புத்தி மழுங்குதல்; கிழத்தனம்வருதல்.

**வாக்குமி** – பேச்சாற்றலுள்ளவன்.

**வாக்குமூலம்** – வாய்ச்சாட்சி; எதிர்வழக்காடுவோன் எழுதிக்கொடுக்கும் உறுதிமொழி.

**வாக்குரிமை** – பிரதிநிதியாக ஒருவனைத் தேர்ந்தெடுக்க உள்ள உரிமை.

**வாக்குவசீகரம்** – பேச்சால் பிறரை ஈர்க்கும் செய்கை.

**வாக்குவடிவு** – வடிவழகு.

**வாக்குவந்தனம்** – அவையடக்கம்.

**வாக்குவாதம்** – தருக்கம்; வாய்ச்சண்டை.

**வாக்குவிற்றல்** – வாக்குறுதி கொடுத்தல்.

**வாக்குறுதி** – காண்க: **வாக்குத்தத்தம்;** சொன்ன சொல்லைக் காப்பாற்றுகை.

**வாக்கெடுத்தல்** – வாக்காளர்களின் கருத்தை அறிதல்; தலைமயிர் வகிர்தல்.

**வாகடம்** – மருத்துவநூல்.

**வாகம்** – காண்க: **வாகனம்;** குதிரை; எருது; எருமைக்கடா; காற்று; சக்கரவாகப்புள்; கீரைவகை; பாடாணவகை.

**வாகன்** – அழகுள்ளவன்; பல்லக்கு முதலியன தூக்குபவன்; பாடைதூக்கிச் செல்லுபவன்.

**வாகனம்** – ஊர்தி; சீலை; விடாமுயற்சி; ஆடைவகை.

**வாகி** – அழகுள்ளவன்.

**வாகிடி** – நீர்ப்பன்றி.

**வாகியம்** – புறம்; வெளி; ஊர்தி.

**வாகினி** – படை; படையினோர் தொகை; ஒரு பேரெண்; பாதிரிமரம்; படைத்தலைவன்.

**வாகினியுள்ளவன்** – செல்வாக்குள்ளவன்.

**வாகீசர்** – சைவசமய குரவர் நால்வருள் ஒருவரான திருநாவுக்கரசர்.

**வாகீசன்** – ஆக்கியோன்; பிரமன்; காண்க: **வாகீசர்.**

**வாகீசுவரி** – காண்க: **வாக்கின்செல்வி;** பார்வதி.

**வாகீசை** – காண்க: **வாக்கின்செல்வி.**

**வாகு** – அழகு; ஒளி; ஒழுங்கு; திறமை; செடிவகை; தோள்; பக்கம்; முக்கோணத்தின் அடிப்பக்கம்.

**வாகுரம்** – வெளவால்; வலை.

**வாகுலேயன்** – முருகன்.

**வாகுவலயம்** – தோளணி.

**வாகை** – மரவகை; கருவாகை; அகத்தி; வெற்றியாளர் அணியுமாலை; வெற்றி; பகையரசரைக் கொன்று வாகைப்பூச் சூடி வெற்றியில் ஆரவாரிப்பதைக் கூறும் புறத்துறை; நான்கு வருணத்தாரும் முனிவரும் பிறரும் தத்தங் கூறுபாடுகளை மிகுதிப்படுத்தலைக் கூறும் திணை; நல்லொழுக்கம்; ஈகை; மிகுதி; பண்பு; தவம்.

**வாகைமாலை** – வெற்றிமாலை; நூல்வகை.

**வாகையரவம்** – வெற்றிக்குறியான வெள்ளை மாலை, வீரக்கழல், செங்கச்சு முதலியவற்றை வீரர் அணிதலைக் கூறும் புறத்துறை.

**வாகைவில்லான்** – மன்மதன்.

**வாங்கல்** – பிறர் கொடுக்க ஏற்கை; கடன்வாங்குகை; விலைக்குக் கொள்கை; வளைவு; குறைவு; தொலைவு; பிணக்கு; ஒரு நாடு; ஆழம்; வழுக்கல்; பொன், வெள்ளி முதலியன மாற்றுக் குறைவாயிருக்கை.

**வாங்கு** – வளைவு; அடி; வசவு; பிச்சுவா; கால்களுள்ள பலகையாசனம்.

**வாங்குதல்** – வளைத்தல்; நாண்பூட்டுதல்; இழுத்தல்; மூச்சு முதலியன உட்கொள்ளுதல்; ஏற்றல்; விலைக்குக் கொள்ளுதல்; பெறுதல்; வரைதல்; ஒதுக்குதல்; மீட்டும் பெறுதல்; செலுத்துதல்; தப்பும்படி பாதுகாத்தல்; தழுவுதல்; ஒத்தல்; அழைத்தல்; நீக்குதல்; பிரித்தெடுத்தல்; பெயர்த்தல்; முறித்தல்; வெட்டுதல்; அடித்தல்; அழித்தல்; வைதல்; வளைதல்; அலைதல்; குலைதல்; மெலிதல்; குறைதல்; பின்வாங்குதல்; தாழ்தல்; களைத்துப்போதல்; நீங்குதல்; திறந்திருத்தல்; ஒரு பக்கமாக ஒதுங்குதல்.

**வாச்சி** – மரஞ்செதுக்கும் ஆயுதம்; காண்க: **ஆடாதோடை.**

**வாச்சியம்** – வாத்தியம், இசைக்கருவி; பறைப்பொது; வாசகத்தின் பொருள்; வெளிப்படையானது; சொல்லப்படத்தக்கது; நிந்தை.

**வாச்சியீடன்** – வாச்சியிட்டு வெட்டினாற்போலக் கண்டிப்பாகப் பேசுபவன்.

**வாசகஞ்செய்தல்** – தோத்திரஞ்செய்தல்; புகழ்தல்.
**வாசகதாட்டி** – பேச்சுவன்மை.
**வாசகம்** – சொல்; செய்தி; சொற்றொடர்; செய்யுள்; பிறர் கேட்கச் செபிக்கை; உரைநடை; வாய்பாடு; கடிதம்; தோத்திரம்; குரு சீடனுக்கு உபதேசிக்கும் தீட்சை; காண்க: **திருவாசகம்.**
**வாசகன்** – பேசுவோன்; அரசர் திருமுன் கடிதம் படிப்போன்; தூதன்.
**வாசஞ்செய்தல்** – வாழ்தல்.
**வாசத்தானம்** – வாழுமிடம்.
**வாசந்தம்** – தென்றல்; ஒட்டகம்; குயில்; விலங்கின் இளங்கன்று.
**வாசந்தி** – காண்க: **குருக்கத்தி; ஆடாதோடை; திப்பிலி; சண்பகம்.**
**வாசநெய்** – புழுகு; மணவெண்ணெய்.
**வாசபதி** – காண்க: **வாக்குபதி.**
**வாசம்** – வாழ்கை; இருப்பிடம்; ஊர்; மணம்; மணப்பண்டம்; காண்க: **இலாமிச்சு(சை);** ஆடை; இறகு; வாக்கியம்; அம்பு; நெய்; அரிசி; நீர்; மந்திரவகை; பேச்சு; வேகம்; கைமரம்; கலைமகள்.
**வாசரம்** – நாள்.
**வாசரி** – வாக்கால் கண்டிக்கை.
**வாசல்** – கட்டடத்தின் முகப்புவழி; வீட்டின் உள் முற்றம்; அரசன்மண்டபம்.
**வாசல்வித்துவான்** – அரசவைப் புலவன்.
**வாசவன்** – இந்திரன்; மணப்பொருள் விற்பவன்.
**வாசவன்மருகோன்** – இந்திரன் மருகனான முருகக்கடவுள்.
**வாசவுண்டை** – மணப்பண்டங்களைத் திரட்டியமைத்த உருண்டை.
**வாசவெண்ணெய்** – காண்க: **வாசநெய்.**
**வாசற்கதவு** – வீட்டின் முகப்புநிலைக் கதவு.
**வாசற்காவல்** – வாயில்காப்பு; காண்க: **வாசற்காவலாளன்.**
**வாசற்காவலாளன்** – வீட்டுவாயிலிற் காவல் புரிபவன்.
**வாசற்படி** – வாசல்; வாயில்நிலையின் அடிப்பாகம்; வாயில்நிலையின் மேற்பாகம்.
**வாசன்** – வசிப்பவன்; பன்னிரு சூரியருள் ஒருவன்.
**வாசனம்** – மணம்; அறிவு; புடைவை; வாசிப்பு; குரல்.
**வாசனி** – மேற்கட்டி.
**வாசனை** – நன்மணம்; பிறர் பழக்கத்தால் உண்டாகும் செயற்கைக் குணம்; பற்று; குரல்; வாசிப்பு.
**வாசனைகட்டுதல்** – பண்டங்களுக்கு நறுமணங் கூட்டுதல்.
**வாசனைத்திரவியம்** – நறுமணப்பண்டம்.
**வாசனைதட்டுதல்** – மணம்வீசுதல்; புலனுக்குத் தெரிதல்.
**வாசனைப்பண்டம்** – காண்க: **வாசனைத்திரவியம்.**
**வாசனைப்பொடி** – மணப்பொடி; மணமுள்ள மூக்குத்தூள்.
**வாசாகயிங்கர்யம்** – வெறும்பேச்சு; வாயினாற் செய்யும் பணி.
**வாசாகாரம்** – அந்தப்புரம்.
**வாசாஞானம்** – அனுபவமில்லாமல் ஞானம் பேசுதல்; போலி ஞானப்பேச்சு.
**வாசாதி** – காண்க: **ஆடாதோடை.**
**வாசாமகோசரம்** – வாக்கிற்கெட்டாதது.
**வாசாலகம்** – சொல்வன்மை.
**வாசாலகன், வாசாலன்** } – பேச்சில் வல்லவன்.
**வாசாலை** – வாக்கில் வல்லவள்.
**வாசி** – வேறுபாடு; இயல்பு; குணம், தன்மை; தகுதி; நல்ல நிலைமை; நிமித்தம்; வீதம்; நாணயவட்டம்; இசைக்குழல்; இசைப்பாட்டு; குதிரை; அசுவினி; பறவை; அம்பு; மூச்சு; நியாயம்; வசிப்பவன்; குறியீட்டுச்சொல்; வாகனப்பிரபை; இருப்பிடம்.
**வாசிக்கோவை** – குதிரைக் கிண்கிணிமாலை.
**வாசிகம்** – வாக்காற் செய்யப்படுவது; வாய்ச் செய்தி; செய்தி.
**வாசிகன்** – தூதன்.
**வாசிகை** – செறியுமாறு கோத்த மாலை; சிகைமாலை; மாலை; வாகனப்பிரபை; வணிகர் வாழும் சேரி.
**வாசித்தல்** – படித்தல்; கற்றல்; வீணை முதலியன இசைக்க ஒலிப்பித்தல்; மணத்தல்.
**வாசிதம்** – அறிவு; குடியேற்றுதல்; பறவை முதலியவற்றின் குரல்.
**வாசிப்பு** – கல்வியறிவு; படிப்பு; தேசிக்கூத்துக்குரிய கால் அமைப்புவகை.
**வாசிமேதம்** – காண்க: **அசுவமேதம்.**
**வாசிரம்** – நாற்சந்தி; வீடு; பகல்.
**வாசிவாரியன்** – குதிரையைப் பழக்குவதில் வல்லவன்.
**வாசினி** – பெண்குதிரை; குடியிருப்பவள்.
**வாசினை** – படித்தல்; யாழ் முதலியன இசைத்தல்.
**வாசு** – கடவுள்; திருமால்; இருவேலிப்புல்.
**வாசுகி** – திருவள்ளுவரின் மனைவி; எண்வகை நாகத்துள் பூமியைக் கிழக்குப்புறத்துத் தாங்கும் நாகம்; விந்து.
**வாசுரை** – இரவு; பூமி; பெண்; பெண்யானை.

**வாசை** – காண்க: ஆடாதோடை.

**வாஞ்சனம், வாஞ்சனை** } – காண்க: வாஞ்சை.

**வாஞ்சித்தல்** – விரும்புதல்.

**வாஞ்சிதம்** – விரும்பியது.

**வாஞ்சை** – விருப்பம்.

**வாட்குடி** – மறக்குடி.

**வாட்கூத்து** – வாளைப் பிடித்து ஆடுங் கூத்து.

**வாட்கை** – காண்க: வாழ்க்கை.

**வாட்கோரை** – கோரைவகை.

**வாட்செலவு** – எதிர்த்துவந்த அரசனது பொரு படையிடத்து எதிரூன்றும் வேந்தன் தன் அரசவாளை முன்னதாக விடுத்தலைக் கூறும் புறத்துறை.

**வாட்டசாட்டம்** – தோற்றப்பொலிவு.

**வாட்டம்** – வாடுதல்; உலர்ச்சி; மெலிவு; வருத்தம்; ஒழுங்கான சாய்வு; வடிவழகு; அதிகமாய்; காண்க: வாட்டசாட்டம்; நீட்டம்; நிறைவு; அனுகூலம்; தோட்டம்; தெரு; வழி.

**வாட்டரவு** – சோர்வு; உலர்கை.

**வாட்டல்** – வாட்டப்பட்ட பொருள்.

**வாட்டானை** – அறுவகைத் தானைகளுள் ஒன்றான வாட்படை.

**வாட்டி** – தடவை; வயிரமண்; களம் அடிக்கும் கடைசிப் பிணையல் மாடு.

**வாட்டியபுட்பம்** – சந்தனம்; மஞ்சள்.

**வாட்டியம்** – தோட்டம்; வீடு.

**வாட்டு** – பொரியல்; தொல்லை; ஒழுங்கான சாய்வு; அழகானது; தகுதியானது; சார்பு; மலிவு.

**வாட்டுதல்** – வருத்துதல்; வதக்குதல்; உலர்த்து தல்; கெடுத்தல்; ஆடைவெளுத்தல்.

**வாட்படை** – வாள்தரித்த வீரர் கூட்டம்.

**வாட்படையாள்** – துர்க்கை.

**வாட்போர்** – வாளால் செய்யும் சண்டை.

**வாடகை** – கூலி; குடிக்கூலி; சுற்றுவட்டம்; தெரு; வாகனசாலை; மண்சுவர்.

**வாடல்** – வாடுகை; வாடினபொருள்; உலர்ந்த பூ.

**வாடாமல்லிகை** – ஒரு பூச்செடிவகை.

**வாடாமாலை** – பூமாலைபோன்று வாடாததான பொன்னரிமாலை; கிழி, கிடை முதலிய வற்றால் செய்யப்படும் மாலை.

**வாடாவஞ்சி** – சேரர் தலைநகரமான கருவூர்.

**வாடாவள்ளி** – ஒரு கூத்துவகை; ஓவியம்.

**வாடி** – செடிவகை; தோட்டம்; மதில்; முற்றம்; வீடு; மீன் உலர்த்தும் இடம்; பட்டி; சாவடி; அடைப்புள்ள இடம்; மரம் விற்குமிடம்.

**வாடிக்கை** – வழக்கம்; வழக்கமாகப் பற்றுவரவு செய்கை; முறை; காண்க: **வாடிக்கைக்காரன்.**

**வாடிக்கைக்காரன்** – வழக்கமாக ஓரிடத்துப் பற்றுவரவு செய்வோன்; பண்டங்களை வழக்கமாக ஓரிடத்து விலைக்கு வாங்குவோன்.

**வாடு** – வாடற்பூ.

**வாடுதல்** – உலர்தல்; மெலிதல்; பொலிவழிதல்; மனமழிதல்; தோல்வியடைதல்; கெடுதல்; நீங்குதல்; குறைதல்; நிறைகுறைதல்.

**வாடூன்** – உப்புக்கண்டம்.

**வாடை** – வடகாற்று; குளிர்காற்று; காற்று; மணம்; காண்க: **வடவைத்தீ**; தெருச்சிறகு; தெரு; இடையர் அல்லது வேடர் வாழும் வீதி; சிற்றூர்; மருந்து; கூலி.

**வாடைக்கச்சான்** – வடமேல்காற்று.

**வாடைக்காற்று** – வடகாற்று.

**வாடைக்கொண்டல்** – வடகீழ்காற்று.

**வாடைப்பாசறை** – பாசறைக்கண் வீரர் தம் காதன்மகளிரை நினைந்து துயருறும்படி செய் கின்ற வாடைக்காற்றின் மிகுதியைக் கூறும் புறத்துறை.

**வாடைப்பொடி** – மணத்தூள்; வசியப்படுத்தும் பொடி.

**வாடையா(யி)லோடுதல்** – வடகாற்றின் உதவி யால் மரக்கலம் பாய்விரித்துச் செல்லுதல்.

**வாண்மங்கலம்** – பகையரசை வென்ற வேந்தன் தன் வாளினைக் கொற்றவைமேல் நிறுத்தி நீராட்டுதலைக் கூறும் புறத்துறை; வீரனது வாள்வெற்றியால் பசிப்பிணி தீர்ந்த பேய்ச் சுற்றம் அவன் வாளினை வாழ்த்துதலைக் கூறும் புறத்துறை.

**வாண்மண்ணுநிலை** – நன்னீரில் ஆட்டிய அரச வாளின் வீரம் குறிக்கும் புறத்துறை.

**வாண்முகம்** – வாளின் வாய்.

**வாண்முட்டி** – வாளின் பிடி.

**வாணக்கந்தகம்** – பொறிவாணம் முதலியன செய்தற்குரிய கந்தகவகை.

**வாணக்கல்** – வீடு முதலியவற்றின் அடிப்படைக் கல்.

**வாணகம்** – அம்பு; தீ; தனிமை; பசுவின் மடி; வேய்ங்குழல்.

**வாணகன்** – திருமால்.

**வாணம்** – அம்பு; தீ; மத்தாப்பு முதலியன; அடிப் படைக் குழி.

**வாணம்பறித்தல்** – அடிப்படை தோண்டுதல்.

**வாணன்** – வாழ்பவன்; ஏதேனும் ஒரு தொழிலால் வாழ்பவன்; நல்வாழ்வுள்ளவன்; ஓரசுரன்; கார்த்திகைநாள்; நெல்வகை.

**வாணாத்தடி** – சிலம்பக்கோல்.

**வாணாள்** – வாழ்நாள்; உயிர்.

**வாணாளளப்போன்** – சூரியன்.

**வாணி** – கலைமகள்; நாதந்தோன்றுமிடம்; ஒரு கூத்து; சொல்; கல்வி; சரசுவதிநதி; அம்பு;

ஓமம்; நீர்; இந்துப்பு; காண்க: **மனோசிலை**; ஆடுமாடுகளின் தலைக்கறி.

**வாணிகச்சாத்து** – வாணிகர் கூட்டம்.

**வாணிகம்** – வியாபாரம்; ஊதியம்.

**வாணிகன்** – வியாபாரி; வைசியன்; துலாக்கோல்; துலாராசி.

**வாணிகேள்வன்** – பிரமன்.

**வாணிச்சி** – காண்க: **வாணியச்சி, வணிகச்சாதிப்** பெண்.

**வாணிச்சியம்** – காண்க: **வாணியம்.**

**வாணிதம்** – கள்.

**வாணிதி** – காண்க: **வாணினி.**

**வாணிபம்** – காண்க: **வாணிகம்.**

**வாணிமலர்** – வெண்டாமரை.

**வாணிமன்** – காண்க: **வாணிகேள்வன்.**

**வாணியச்சி** – செக்கார்சாதிப் பெண்.

**வாணியம்** – காண்க: **வாணிகம்.**

**வாணியன்** – காண்க: **செக்கான்.**

**வாணினி** – நாடகக்கணிகை; நாணமற்றவள்.

**வாணீசன்** – பிரமன்.

**வாணுதல்** – ஒளிபொருந்திய நெற்றி; ஒள்ளிய நெற்றியுள்ள பெண்.

**வாத்தி** – ஆசிரியன்.

**வாத்தியப்பெட்டி** – ஆர்மோனியப்பெட்டி; இசையெழுப்பும் இயந்திரப்பெட்டி.

**வாத்தியம்** – இசைக்கருவி.

**வாத்தியாயர்** – ஆசிரியர்.

**வாத்தியார்** – ஆசிரியர்; புரோகிதன்; நாடகம், கூத்து முதலியன பயிற்றுவிப்போன்.

**வாத்து** – தாரா; பெருந்தாரா; மரக்கொம்பு; மனை; இல்லுறைதெய்வம்.

**வாதக்குடைச்சல்** – சந்துவாதத்தால் உண்டாகும் வலி; நரம்புநோய்வகை.

**வாதகம்** – இடையூறு.

**வாதகேது** – புழுதி.

**வாதசுரம்** – வாதத்தைப்பற்றியெழுந்த காய்ச்சல்.

**வாதசெபம்** – வாயுவேகம்.

**வாதநாசனம்** – காண்க: **ஆமணக்கு.**

**வாதநாடி** – நாடி மூன்றனுள் வாதநிலையை அறிவிக்கும் நாடி.

**வாதநீர்** – உடலில் திமிர் உண்டாக்கும் கெட்டநீர்.

**வாதநோய்** – உடலுறுப்புகளில் வலியை உண்டுபண்ணும் நோய்வகை.

**வாதப்பிடிப்பு** – வாயுப்பிடிப்பு.

**வாதபாடணர்** – கோட்சொல்பவர்.

**வாதம்** – உடலில் வாயு மிகுதலாகிய பிணிக்கூறு; காண்க: **வாதநோய்; வாதநாடி;** பத்துவகை வாயு; காற்று; சொல்; வாதம் முதலிய வற்றால் ஒரு பக்கத்தை எடுத்துக்கூறுகை; தருக்கம்; உரையாடல் இரசவாதவித்தை; **வில்வமரம்.**

**வாதமடக்கி** – வாதநோய் போக்கும் மருந்துமரவகை; செடிவகை.

**வாதலம்** – செடிவகை.

**வாதவூரர்** – மதுரைமாநகரடுத்த திருவாதவூரில் பிறந்தவரான மாணிக்கவாசகர்.

**வாதனம்** – சீலை.

**வாதனை** – நறுமணம்; செயற்கைக்குணம்; இம்மையில் உண்டாகும் பற்று; துன்பம்.

**வாதாசனம்** – காற்றை உண்ணுவதான பாம்பு.

**வாதாட்டம்** – சொற்போர்.

**வாதாட்டுதல்** – சொற்போருக்கழைத்தல்; வருத்துதல்.

**வாதாடுதல்** – தர்க்கம்செய்தல்; வழக்காடுதல்.

**வாதாயனம்** – பலகணி, சாளரம்; மண்டபம்.

**வாதாரி** – காண்க: **ஆமணக்கு; வேம்பு.**

**வாதானுவாதம்** – தருக்கத்தில் நிகழும் வினா விடைகள்.

**வாதி** – வழக்காடுபவன்; எடுத்துப் பேசுபவன்; தருக்கம் செய்பவன்; வழக்குத்தொடுப்போன்; தன் கொள்கையை நிலைநிறுத்துவோன்; இரசவாதி; வருத்துபவன்; பண்ணின் முக்கிய சுரம்.

**வாதிகன்** – நறுமணப்பொருள்கள் கூட்டுவோன்.

**வாதித்தல்** – வாதாடுதல்; வருத்துதல்; தடுத்தல்.

**வாதிப்பு** – துன்பம்.

**வாது** – தருக்கம்; சண்டை; நியாயத்தலவழக்கு; சூளுரை; மரக்கிளை.

**வாதுகை** – மனைவி.

**வாதுதல்** – அறுத்தல்.

**வாதுமை** – மரவகை.

**வாதுவன்** – யானைப்பாகன்; குதிரைப்பாகன்.

**வாதூகம்** – செம்பு.

**வாதை** – துன்பம்; வேதனைசெய்யும் நோய்.

**வாந்தி, வாந்தியெடுத்தல்** – வாயாலெடுத்தல்.

**வாபம்** – மயிர்கழிக்கை; நெய்கை; வித்து.

**வாம்பல்** – மூங்கில், கழை.

**வாமதேவன்** – சிவபிரான்; ஒரு முனிவன்.

**வாமம்** – அழகு; ஒளி; இடப்பக்கம்; நேர்மையின்மை; எதிரிடை; தீமை; சத்தியே தெய்வம் எனக் கூறும் மதம்; பாம்புவகை; முலை; செல்வம்; சிவன் ஐம்முகத்துள் ஒன்று; குறள் வடிவம்; துடை.

**வாமல்** – கற்றாழை.

**வாமலோசனன்** – திருமால்.

**வாமலோசனை** – அழகிய கண்ணுடையாள்; திருமகள்.

**வாமலோசிகம்** – காண்க: **வாமல்.**

**வாமன்** – அருகன்; புத்தன்; சிவன்; திருமால்.

**வாமனக்கல்** – வாமனாவதார உருவமைந்த எல்லைக்கல்.

**வாமனம்** – குறள்வடிவம்; காண்க: **வாமனாவதாரம்**; பதினெண்புராணத்துள் ஒன்று; தென் திசையைக் காக்கும் யானை; எண்பத்து நான்கு அங்குல உயரமுள்ள உருவம்.

**வாமனன்** – குறள்வடிவைக்கொண்ட திருமால்.

**வாமனாவதாரம்** – குறள்வடிவான திருமால் பிறப்பு.

**வாமா** – ஒரு சிவசத்தி; திருமகள்; கலைமகள்; பெண்.

**வாமாசாரம்** – வாமதந்திர மார்க்கப்படி செய்யுஞ் சத்திவழிபாடு.

**வாமாட்சி** – காண்க: **வாமலோசனை.**

**வாமான்** – குதிரை.

**வாமி** – துர்க்கை; பார்வதி; சத்தி வழிபாட்டின் படி நடப்போன்.

**வாமை** – பெண்; ஒரு சிவசத்தி; திருமகள்; கலைமகள்.

**வாய்** – உதடு அல்லது அலகு இவற்றினிடையிலுள்ள உறுப்பு; பாண்டம் முதலியவற்றின் திறந்த மேற்பாகம்; வாய்கொண்ட அளவு; உதடு; விளிம்பு; ஆயுதத்தின் முனை; மொழி; வாக்கு; குரல்; மெய்ம்மை; சிறப்பு; சிறப்புடைய பொருள்; வாசல்; வழி; மூலம்; இடம்; துலாக்கோலின் வரை; தழும்பு; துளை; வாத்தியக்குழல்; ஏழனுருபு; ஓர் உவமவுருபு.

**வாய்க்கட்டு** – கண்டதைத் தின்னாமலிருக்கை; மந்திரத்தால் பேசமுடியாமலும் வாயைத் திறக்க முடியாமலுஞ் செய்கை.

**வாய்க்கட்டை** – சிறுவர்க்குரிய தின்பண்டம்; இலஞ்சம்.

**வாய்க்கணக்கு** – வாயால் சொல்லுங் கணக்கு; மனக்கணிதம்.

**வாய்க்கயிறு** – கடிவாளக்கயிறு.

**வாய்க்கரிசி** – பிணத்தைக் கொளுத்துமுன் அல்லது புதைக்குமுன் அதன் வாயில் இடும் அரிசி; இலஞ்சம்; மனமில்லாமற் கொடுப்பது.

**வாய்க்கருவி** – கடிவாளம்; விளையாட்டு ஊதுகோல்.

**வாய்க்கரை** – கிணறு முதலியவற்றின் விளிம்பு; உதடு.

**வாய்க்கரைப்பற்று** – நீர்நிலைக்கருகிலுள்ள வயல்; உதடு.

**வாய்க்காரன்** – பேச்சில் வல்லவன்; செருக்கால் மிதமிஞ்சிப் பேசுவோன்; பிறரைத் திட்டும் இயல்புள்ளவன்; பள்ளருள் ஒருவகையார்.

**வாய்க்கால்** – கால்வாய்; மகநாள்.

**வாய்க்கிரந்தி** – வாய்ப்புண்.

**வாய்க்கிலைகெட்டவன்** – பெரும்வறிஞன்; பயனற்றவன்.

**வாய்க்குட்பேசுதல்** – முணுமுணுத்தல்.

**வாய்க்குற்றம்** – தன்னை அறியாமற் பேச்சில் நேரும் பிழை; பேச்சுக்குற்றம்.

**வாய்க்கூடு** – விலங்கின் வாயின்மே லிடுங் கூடு.

**வாய்க்கூலி** – இலஞ்சம்.

**வாய்க்கேள்வி** – அரசனின் கட்டளை; பிறர் சொல்லக் கேட்ட செய்தி.

**வாய்க்கேள்வியர்** – அரசனின் கட்டளைகளை நிறைவேற்றுவோர்.

**வாய்க்கொழுப்பு** – மதியாப்பேச்சு.

**வாய்க்கோணல்** – நோய்வகை.

**வாய்க்கோமாரி** – மாட்டுக்கு வாயில்வரும் நோய் வகை.

**வாய்கட்டுதல்** – மந்திரத்தால் வாய்திறவாமற் பண்ணல்; பேசாதிருக்கச் செய்தல்; பிணத்தின் வாயை ஆடையாற் கட்டுதல்; உணவில் பத்தியமாக இருத்தல்; சிக்கனமாக உணவுகொள்ளுதல்.

**வாய்கரை** – இறங்குதுறை.

**வாய்கரையர்** – ஆழ்ந்தறியாது மேலெழுந்த அறிவுள்ளவர்கள்.

**வாய்கனத்தல்** – தெளிவின்றிப் பேசுதல்.

**வாய்காட்டுதல்** – அதிகப்பேச்சுப் பேசுதல்; கெஞ்சுதல்.

**வாய்குமட்டல்** – வாயாலெடுக்கவருகை.

**வாய்குளிரப்பேசுதல்** – மேலுக்கு இனிமையாகப் பேசுதல்.

**வாய்கூப்புதல்** – புகழ்தல்.

**வாய்கூம்புதல்** – குவிதல்.

**வாய்கொடுத்தல்** – வாக்குத்தத்தஞ் செய்தல்; பேச்சுக்கொடுத்தல்; வாய்ச்சண்டை வளர்த்தல்.

**வாய்ச்சி** – மரஞ்செதுக்குங் கருவி; செங்கல் செதுக்குங் கருவி.

**வாய்ச்சொல்** – வாயினின்று வருஞ்சொல்; வெறுஞ்சொல்; துணைச்சொல்.

**வாய்சலித்தல்** – பேசி வாய்அயர்தல்.

**வாய்சோர்தல்** – வாய் பிதற்றுதல்; பேசி வாய் அயர்தல்; வாய் தடுமாறுதல்; பேசுவதில் பிழைபடுதல்.

**வாய்த்தல்** – சித்தித்தல்; உறுதியாய் நிகழ்தல்; ஏற்றதாதல்; சிறத்தல்; நன்கமைதல்; செழித்தல்; மதர்த்தல்; சேர்தல்; திரட்டுதல்.

**வாய்த்தலை** – வாய்க்காலின் தலைப்பு; தொடங்குமிடம்.

**வாய்த்தீர்த்தம்** – காண்க: **வாய் நீர்.**

**வாய்த்துடுக்கு** – பேச்சிற்காட்டும் ஆத்திரம்; செருக்கு.
**வாய்தடுமாறுதல்** – வாய் பதறுதல்; பேசுவதிற் பிழைபடுதல்.
**வாய்தல்** – காண்க: வாய்த்தல்.
**வாய்தற்படி** – கதவின் நிலைப்படி.
**வாய்தா** – தவணை; கெடு; கெடுவைத் தள்ளிப் போடுகை; வரி.
**வாய்திறத்தல்** – வாயை அகலவிரித்தல்; மலர்தல்; புண்கட்டி உடைதல்; வெள்ளம் கரையை உடைத்தல்; மலர்த்துதல்; பேசுதல்.
**வாய்தீட்டுதல்** – ஆயுதம் முதலியவற்றின் முனை தீட்டுதல்.
**வாய்ந்துகொள்ளுதல்** – வென்று கைப்பற்றுதல்.
**வாய்நாற்றம்** – வாயின் மணம்; வாயிலிருந்து தோன்றுந் தீநாற்றம்.
**வாய்நீர்** – உமிழ்நீர்.
**வாய்நீளம்** – குறைகூறுந் தன்மை.
**வாய்நெகிழ்தல்** – பூ மலர்தல்.
**வாய்நேர்தல்** – பேச்சால் உடன்படுதல்; நேர்த்திக் கடனைக் குறிப்பிட்டுச் சொல்லுதல்; தருவதாக வாக்களித்தல்.
**வாய்ப்பக்காட்டுதல்** – விளங்கவுணர்த்துதல்.
**வாய்ப்பட்சி** – காக்கை.
**வாய்ப்பட்டி** – வாய்க்கு வந்தபடி பேசுவோர்; கண்டதைத் தின்பவர்.
**வாய்ப்படுதல்** – வழிப்படுதல்; சுவைபடுதல்.
**வாய்ப்பந்தல்** – பயனற்ற பேச்சு.
**வாய்ப்பலி** – காண்க: வாய்க்கரிசி.
**வாய்ப்பறையறைதல்** – பலரும் அறிய வெளியிடுதல்.
**வாய்ப்பாட்டு** – வாயினால் பாடும் பாட்டு.
**வாய்ப்பாடம்** – ஏடு பாராமற் சொல்லும் பாடம்; புத்தகமின்றிக் கேள்வியாற் படித்த பாடம்.
**வாய்ப்பிணி** – வாயிலுண்டாகும் நோய்.
**வாய்ப்பிறப்பு** – வாயிலிருந்துவரும் மொழி.
**வாய்ப்பு** – ஆதாயம்; கைகூடுநிலை; நேர்பாடு; நன்கமைந்தது; பொருத்தம்; அழகு; சிறப்பு; செழிப்பு; பேறு.
**வாய்ப்புண்** – உள்வாயில் தோன்றும் புண்; நாக்குப் புண்; வைதலால் உண்டாகும் மனநோவு.
**வாய்ப்புள்** – நற்சொல்லாகிய நிமித்தம்.
**வாய்ப்புற்று** – வாயிலுண்டாகும் நோய்வகை.
**வாய்ப்புறம்** – உதடு.
**வாய்ப்பூச்சு** – வாயை நீரால் துடைக்கை; காண்க: ஆசமனம்; வார்த்தையால் மழுப்புகை.
**வாய்ப்பூட்டு** – தாடையெலும்பின் பொருத்து; விலங்கின் வாயின்மேல் இடும் கூடு; பேசாமல் தடுக்கை; வாயில் சுழியுள்ள மாட்டுக்குற்ற வகை; இலஞ்சம்.
**வாய்ப்பூட்டுச்சட்டம்** – பொதுக்கூட்டங்களில் பேசுவதைத் தடுக்கும் சட்டம்.
**வாய்ப்பெய்தல்** – வாயிலிட்டுத் தின்னுதல்.
**வாய்ப்பேச்சு** – வாயினாற் பேசுகை; வெறும் பேச்சு.
**வாய்ப்பை** – கடன்.
**வாய்ப்பொய்** – மெய்ம்மையின்பாற்படும் பொய்.
**வாய்ப்பொன்** – கடிவாளத்தின் ஓர் உறுப்பு.
**வாய்பாடு** – குறியீடு; மரபுச்சொல்; பெருக்கல் முதலியன காட்டும் அட்டவணை; வழக்கம்; சொல்வன்மை; வாயில் ஆட்சிப்பட்டுவரும் பேச்சு.
**வாய்பாறுதல்** – அலப்புதல்; பிதற்றுதல்.
**வாய்பிதற்றுதல்** – நாக்குழறிப்பேசுதல்.
**வாய்பிளத்தல்** – அங்காத்தல்; திகைத்தல்; முடியாதென்று கைவிடுதல்; இறத்தல்.
**வாய்பினற்றுதல்** – காண்க: வாய்பிதற்றுதல்.
**வாய்புதைத்தல்** – வாய்மூடுதல்.
**வாய்புலற்றுதல்** – பலகாற் சொல்லுதல்; காண்க: வாய்பிதற்றுதல்.
**வாய்பூசுதல்** – வாய்கழுவுதல்; இரகசியத்தை வெளியிடாதிருக்குமாறு இலஞ்சம் கொடுத்தல்; புகழ்ந்துபேசுதல்.
**வாய்பேசுதல்** – தற்பெருமைபடப் பேசுதல்.
**வாய்பொத்துதல்** – காண்க: வாய்புதைத்தல்.
**வாய்போக்குதல்** – எளிதில் வாக்குக்கொடுத்தல்.
**வாய்மடிதல்** – கூர்மழுங்குதல்.
**வாய்மடுத்தல்** – வாயினுட் கொள்ளுதல்.
**வாய்மடை** – செய்வரம்பில் நீர்பாயும் வழி.
**வாய்மண்போடுதல்** – பிழைப்பைக் கெடுத்தல்; கொடுமைசெய்தல்.
**வாய்மணியம்** – வாங்கத் திறமையின்றி வாயாற் செய்யும் அதிகாரம்; செல்வாக்கு.
**வாய்மதம்** – மதியாது பேசுகை.
**வாய்மலர்தல்** – பேசுதல்.
**வாய்முத்தம், வாய்முத்து** – முத்தம்; பல்.
**வாய்மூடுதல்** – வாய்பொத்தல்; பேச்சு, அழுகை முதலியன நிறுத்துதல்; குவிதல்.
**வாய்மூப்பன்** – பேச்சிற் சிறந்தவன்; பிறர்வழக்கையெடுத்து வாதாடுவோன்.
**வாய்மூழ்த்தல்** – வாய்மூடுதல்.
**வாய்மை** – உண்மை; சொல்; தவறாச்சொல்; பௌத்தசமய **உண்மைகள்**; வலி.
**வாய்மொழி** – சொல்; உண்மையான மொழி; வாயினாற் சொல்வது; வேதம்; காண்க: **திருவாய்மொழி**.
**வாய்மொழிதல்** – கூறுதல்; மந்திரத்தால் ஆற்றலுண்டாக்கல்.
**வாய்வடம்** – குதிரையின் வாய்க்கயிறு.

**வாய்வது** – உண்மை; கிட்டுவது.
**வாய்வலம்** – சொல்வன்மை.
**வாய்வலி** – காண்க: **வாய்வலம்;** அம்பு முதலிய ஆயுதங்களின் முனை உறுதி.
**வாய்வழங்குதல்** – உண்ணுதல்; பேசுதல்.
**வாய்வாயெனல்** – அச்சுறுத்தற்குறிப்பு; அளவுக்கு மிஞ்சிப் பேசுதல்.
**வாய்வார்த்தை** – வாய்ப்பேச்சு; நயம்பொருந்திய சொல்.
**வாய்வாள்** – குறிதப்பாத வாள்.
**வாய்வாளாமை** – பேசாதிருக்கை.
**வாய்வாளார்** – வாய்பேசாதார்.
**வாய்விட்டுப்பேசுதல்** – வெளிவிட்டுத் தெளிவாகப் பேசுதல்.
**வாய்விடு** – வஞ்சினம்; ஆரவாரம்.
**வாய்விடுதல்** – பேசுதல்; வெளிவிட்டுத் தெளிவாகச் சொல்லுதல்; வெளிப்படுத்துதல்; மலர்தல்; உரக்கச் சத்தமிடுதல்; வஞ்சினங்கொள்ளுதல்; கொட்டாவிவிடுதல்; ஒலித்தல்.
**வாய்விரிதல்** – அங்காத்தல்; அலப்புதல்; கொட்டாவிவிடுதல்.
**வாய்விள்ளுதல்** – மலர்தல்; வாயைத் திறத்தல்.
**வாய்விளங்கம்** – ஒரு கொடிவகை.
**வாய்வு** – காண்க: **வாயு.**
**வாய்வெருவுதல்** – தூக்கத்தில் கனவு முதலியவற்றால் வாய்குழறுதல்; வாய்பிதற்றுதல்.
**வாய்வைத்தல்** – உண்ணுதல்; ஊதுதல்; சுவைபார்த்தல்; தலையிடுதல்; சிறிது பயிலுதல்; கடித்தல்; கேட்டல்.
**வாயகம்** – கூட்டம்.
**வாயசம்** – காக்கை; காக்கைக்கிடும் சோற்றுத் திரளை.
**வாயசி** – பெண்காகம்; செம்மணித்தக்காளி.
**வாயடித்தல்** – வாய்ப்பேச்சால் மருட்டி வெல்லுதல்; மருட்டிப்பேசுதல்; வாயிலே அடித்துக் கொள்ளுதல்; அலப்புதல்.
**வாயடை** – உணவு; பற்கிட்டிநோய்.
**வாயடைத்தல்** – பேசவிடாமற்செய்தல்.
**வாயதம்** – காண்க: **வாயசம்.**
**வாயம்** – நீர்; பெய்குதல்.
**வாயல்** – வாயில்; பக்கம்.
**வாயலம்புதல்** – உண்டபின் வாயைத் தூய்மை பண்ணல்.
**வாயவி** – வடமேற்குத்திசை.
**வாயவியம்** – வாயு சம்பந்தமானது; ஒரு புராணம்; வடமேற்றிசை; முகூர்த்தத்துள் பதினைந்தாவது; வாயுதேவனை அதிதேவதையாகக்கொண்ட அம்பு.
**வாயன்** – தூதன்; ஆயன்.

**வாயாகுதல்** – உண்மையாதல்.
**வாயாடி** – வாய்வல்லவர்; அதிகமாகப் பேசுவோர்.
**வாயாடுதல்** – வீண்பேச்சுப் பேசுதல்; அதிகமாகப் பேசுதல்; ஓயாது மென்றுகொண்டிருத்தல்.
**வாயார** – முழுக் குரலோடு; வாய்நிரம்ப.
**வாயாலெடுத்தல்** – கக்குதல், வாந்தியெடுத்தல்.
**வாயாவி** – கொட்டாவி; மூச்சு.
**வாயிதா** – வரி.
**வாயில்** – வழி; கட்டடத்துள் நுழையும் வாசல்; ஐம்பொறி; ஐம்புலன்; துளை; இடம்; காரணம்; கழுவாய்; அரசவை; வாயில் காப்போன்; தூதன்; தலைவனையும் தலைவியையும் இடைநின்று கூட்டுந் தூது; திறம்; கதவு; வரலாறு.
**வாயில்மண்போடுதல்** – கேடுவிளைத்தல்.
**வாயில்விழைச்சு** – உமிழ்நீர்.
**வாயில்வேண்டல்** – தலைவனுக்கு முகங்கொடுக்குமாறு தலைவியைப் பாணன் முதலிய தூதுவர் வேண்டிக்கொள்வதைக் கூறும் அகப்பொருள் துறை.
**வாயிலடித்தல்** – முற்றுங்கெடுத்தல்.
**வாயிலாச்சீவன்** – விலங்கு.
**வாயிலாளன்** – வாயில்காப்போன்.
**வாயிலேபோடுதல்** – பேசவொட்டாது குறுக்கிட்டுப் பேசித் தடைசெய்தல்; கவர்தல்.
**வாயிலோர்** – வாயில்காப்போர்; தமிழ்க்கூத்தர்; தூதுவர்.
**வாயிற்காட்சி** – ஐம்பொறிகளாற் காணுதல்.
**வாயிற்கூட்டம்** – பாணன் முதலியோரால் கூடும் தலைவன் தலைவியரின் சேர்க்கை; வாயிலின்கண் தொழிலாளர் கூடும் கூட்டம்.
**வாயிற்கூத்து** – கூத்துவகை.
**வாயிற்படி** – வீட்டுவாசலின் படி.
**வாயின்மறுத்தல்** – தூதுவந்த பாணன் முதலியவர்க்குத் தலைவி முகங்கொடுக்க மறுத்தலைக் கூறும் அகத்துறை.
**வாயின்மாடம்** – கோபுரம்.
**வாயினிலை** – அரசனிடத்தில் தன் வரவு கூறுமாறு வாயில்காப்போனுக்குப் புலவன் சொல்வதாகக் கூறும் புறத்துறை.
**வாயினேர்வித்தல்** – தலைவியிடம் தூதுசெல்லுமாறு தலைவன் தூதுவரை உடன்படுத்துவதைக் கூறும் அகத்துறை.
**வாயு** – காற்று; ஐவகை பூதத்துள் ஒன்று; வாதம்; வடமேற்கு மூலைக்குத் தலைவனான தேவன்; அபானவாயு; வயிற்றுப்பொருமல்; காற்றுவகை.
**வாயுகுமாரன்** – காண்க: **வளிமகன்.**
**வாயுகோணம்** – வடமேற்குமூலை.

**வாயுச்சகன், வாயுசகன்** – தீ.
**வாயுசன்** – காண்க: வளிமகன்.
**வாயுத்தம்பம், வாயுத்தம்பனம்** – காற்றை இயங்காமல் நிறுத்தும் வித்தை.
**வாயுதவி** – காண்க: வாயுபகாரம்.
**வாயுதாரணை** – காண்க: வாயுத்தம்பம்.
**வாயுதாரு** – முகில்; மூங்கில்.
**வாயுப்பறிதல்** – அபானவாயு வெளியேறுகை.
**வாயுப்பிடிப்பு** – வாதத்தால் ஏற்படும் உடற் பிடிப்பு.
**வாயுபகாரம்** – வாயாற் செய்யும் உதவி.
**வாயுபசாரம்** – வாயளவிற் காட்டும் மரியாதை; வாயுபகாரம்.
**வாயுபலம்** – மழை; வானவில்.
**வாயுமண்டலம்** – காற்றுமண்டலம்.
**வாயுமலடு** – உடற்சதை மிகுதியால் பெண்களுக்கு அமையும் மலட்டுத்தன்மை.
**வாயுமானி** – காற்றின் அழுத்தத்தை அளந்தறியுங் கருவிவகை.
**வாயுமூலை** – வடமேற்கு.
**வாயுமைந்தன்** – அனுமன்; வீமன்.
**வாயுவிளக்கம்** – கொடிவகை; வாயுவிளங்கத்தின் அரிசிபோன்ற மணி.
**வாயுவிளங்கம்** – ஒரு கொடிவகை.
**வாயுவேகம்** – காற்றின் வேகம்போன்ற விரைவு.
**வாயுள்ளவன்** – கேட்டு அறிந்துகொள்ளக் கூடியவன்.
**வாயுறுத்தல்** – வாக்கினால் மெய்ம்மையை அறிவுறுத்துதல்; வாயிலூட்டுதல்.
**வாயுறை** – உண்கை; உணவு; அறுகம்புல்; அன்னப்பிராசனம்; கவளம்; மருந்து; உறுதி மொழி; மகளிர் காதணி.
**வாயுறைவாழ்த்து** – தலைவன் வேண்டானாயினும் அவற்கு உறுதிமொழிகளைச் சான்றோர் கூறும் புறத்துறை; ஒரு நூல்வகை.
**வாயூறுதல்** – வாயில் நீர் ஊறுதல்; விரும்பல்.
**வாயெடுத்தல்** – பேசத்தொடங்கல்; குரலெடுத்தல்.
**வாயைக்கட்டுதல்** – உணவிற் பத்தியமாக இருத்தல்; காண்க: வாய்க்கட்டு; வாயை மூடுதல்.
**வாயொடுங்குதல்** – பேச்சடங்குதல்.
**வாயொலி** – பாடல்.
**வாயோடு** – உடைந்த பானையின் வாய்ச்சில்லு; குற்றும் அரிசி முதலியன சிதறாதபடி உரலின் மேல் வைக்கும் பானைக்கழுத்துப்போன்ற கருவி.
**வார்** – நெடுமை; கடைகயிறு; தோல்வார்; நுண்மை; நேர்மை; வரிசை; உயர்ச்சி; நீர்; தோல்; முலைக்கச்சு; துண்டு.
**வார்க்கட்டு** – வாரால் கட்டப்பட்டது; யாழ்த் தந்தியுள்ள நரம்புக்கட்டு.
**வார்க்குத்தி(து)** – நீர்ப்பெருக்குச் சுழித்தோடும் இடம்.
**வார்காது** – தொங்கும் துளைச்செவி.
**வார்த்தல்** – ஊற்றுதல்; உலோகத்தையுருக்கி அச்சில் ஊற்றி உருவஞ்செய்தல்; அம்மை நோயில் முத்து வெளிப்படுதல்; தோசை முதலியன சுடுதல்.
**வார்த்தாகம்** – கத்தரிச்செடி.
**வார்த்திகம்** – வாணிகம்; வாழ்க்கை; சூத்திரக் கருத்தை விளக்கும் ஓர் உரைவகை; நான்கு மாத்திரைகூடிய களை; கிழத்தன்மை.
**வார்த்திகன்** – தூதன்; வணிகன்.
**வார்த்தை** – சொல்; மறுமொழி; வாக்குத்தத்தம்; செய்தி; அணிவகை; உழவு, பசுக்காவல், வாணிகம் என்னும் வணிகர் தொழில்; ஒரு நூல்.
**வார்த்தைகொடுத்தல்** – பேசுதல்; உறுதிமொழி தருதல்; பேச இடங்கொடுத்தல்.
**வார்த்தைத்தொழிலோர்** – உழவர்.
**வார்த்தைதடித்தல்** – பேச்சுக் கடுமையாய் வளர்தல்.
**வார்த்தைநாணயம்** – சொல் தவறாமை.
**வார்த்தைப்பாடு** – உறுதிமொழி; திருமணத்தில் மணமக்கள் சொல்லும் உறுதிமொழி; பொருள் முக்கியம் இன்றி வாக்கியத்தில் விழுஞ் சொல்; பேச்சுறுதி; நயமொழி.
**வார்த்தையாடுதல்** – உரையாடுதல்.
**வார்த்தையெடுத்தல்** – பேச்சுத் தொடங்கல்; உரையாடல்.
**வார்தல்** – ஒழுகுதல்; வெளிவிடுதல்; நெடுமையாதல்; நேராதல்; உயர்தல்; ஒழுங்குபடுதல்; நென்மணி முதலியன பால்கட்டுதல்; உரிதல்; மயிர்கோதுதல்; தெரிதல்; யாழில் சுட்டு விரலால் செய்யும் தொழில்.
**வார்ப்படம்** – உருக்கிவார்க்கும் தொழில்.
**வார்ப்பு** – ஒழுக்குகை; உலோகங்களை உருக்கி வார்த்தல்; உருக்கி வார்க்கப்பட்டது; அகன்ற பாண்டவகை; கைவளை; மாணிக்கத்தில் ஏற்றிய மேற்பூச்சு.
**வார்ப்புவேலை** – உருக்கிவார்த்தல் வேலை; உருக்கி வார்க்கப்பட்டது.
**வார்பு** – நீளவாக்கில் சீவப்படுகை.
**வார்மை** – ஒழுக்கம்; நேர்மை; மரியாதை.
**வாரக்கம்** – உழவர்கட்கு உதவியாகக் கொடுக்கும் முன்பணம்; படைவீரனாகப் பதிந்துகொள்வோர்க்குக் கொடுக்கும் முன்பணம்.
**வாரக்காரன்** – உழுங் குடியானவன்.

**வாரக்குடி** – நிலத்தைப் பயிரிட்டுப் பங்குபெறுங் குடியானவன்.

**வாரகம்** – உழவர்கட்கு உதவியாகக் கொடுக்கும் முன்பணம்; நெல்வட்டிக்குக் கொடுக்கும் பணம்; குதிரை; குதிரைநடை; கடல்; காண்க: **நிலப்பனை**.

**வாரசுந்தரி** – விலைமகள்.

**வாரசூலை** – சிவபிரானது சூலம் நிற்பதால் இன்ன இன்ன திக்கு இன்ன இன்ன கிழமையில் பயணத்துக்கு ஆகாதென்று விலக்கப்பட்ட கிழமைக்குற்றம்.

**வாரநடை** – பனை முதலியவற்றின் ஓலையீர்க்கு; தராசின் ஏற்றத்தாழ்வான நிலை; தோல்வார்.

**வாரணம்** – சங்கு; யானை; பன்றி; தடை; மறைப்பு; கவசம்; சட்டை; காப்பு; கேடகம்; உன்மத்தம்; கோழி; உறையூர்; கடல்; காசி நகரம்; மரவகை; நீங்குகை.

**வாரணரேகை** – மக்களின் நல்வாழ்வைக் காட்டும் உள்ளங்கைக் கோடு.

**வாரணன்** – கணபதி.

**வாரணாசி** – காசிநகரம்.

**வாரணை, வாரணையம்** } – தடை.

**வாரத்துக்குவளர்த்தல்** – விற்பதால் கிடைக்கும் இலாபத்தைச் சொந்தக்காரனோடு பகுத்துக் கொள்வதாக ஒப்புக்கொண்டு கோழி பன்றி முதலியன வளர்த்தல்.

**வாரப்பாடு** – அன்பு; உருக்கம்; ஒருசார்பு.

**வாரம்** – ஏழு கிழமைகள்கொண்ட காலப்பகுதி; உரிமை; குடியிறை; வாடகை; தானியக் கட்டுக்குத்தகை; மேல்வாரக் குடிவாரங்களாகிய விளைச்சற் பங்கு; பங்கு; பாதி; அன்பு; ஒருசார்பு பற்றிநிற்றல்; தடை; திரை; வாயில்; திரள்; கடல்; பாண்டம்; தடவை; வேதச்சந்தை; வரம்பு; நீர்க்கரை; மலைச்சாரல்; தாழ்வாரம்; பக்கம்; சொல்லொழுக்கும் இசையொழுக்குமுடைய இசைப் பாட்டு; கலிப்பாவுறுப்புகளுள் ஒன்றான சுரிதகம்; பின்பாட்டு; தெய்வப்பாடல்; கூத்துவகை; தூண்.

**வாரம்படுதல்** – நடுநிலைதவறுதல், ஒரு பக்கமாய்ப் பேசுதல்.

**வாரம்பாடுதல்** – பின்பாட்டுப் பாடுதல்.

**வாரம்பிரித்தல்** – சாகுபடி நெல் முதலியவற்றைக் குடிவார மேல்வார முதலிய விகிதப்படி பிரித்தல்.

**வாரம்வைத்தல்** – விருப்பப்படுதல்.

**வாரமாதர்** – பொதுமகளிர்.

**வாராக்கடன்** – செலவெழுதவேண்டிய கடன்.

**வாராக்கதி** – வீடுபேறு.

**வாராகம்** – திருமாலின் பன்றிப்பிறவி; ஒரு சோதிடக் கணிதநூல்.

**வாராகரம்** – கடல்.

**வாராகன்** – பன்றிப்பிறவி எடுத்த திருமால்.

**வாராகி** – எழுவகை மாதருள் ஒருத்தி; பெண் பன்றி; ஒரு கிழங்குவகை; பூமி.

**வாராவதி** – பாலம்.

**வாராவரவு** – அருகிய வருகை.

**வாராவாரம்** – வாரந்தோறும்.

**வாராவுலகம்** – வீடுபேறு; வீரர் முதலியோர் அடைதற்குரிய துறக்கம்.

**வாரானை** – பிள்ளைத்தமிழில் குழந்தையைத் தம்மிடம் வருக என்று தாய் முதலியோர் அழைப்பதைக் கூறும் பருவம்.

**வாரி** – வருவாய்; விளைவு; தானியம்; செல்வம்; மூட்டைகளைக் கட்டவுதவும் கழி; கூரையினின்று வடியும் நீரைக் கொண்டுசெல்லுங் கால்; தோணிப்பலகை; மடை; சீப்பு; குப்பை வாருங் கருவி; தடை; மதிற்சுற்று; செண்டுவெளி; பகுதி; நீர்; வெள்ளம்; கடல்; நீர்நிலை; நூல்; திருமகள்; வீணைவகை; இசைக்குழல்; யானையகப்படுத்தும் இடம்; யானைகட்டுங் கயிறு; யானைக்கோட்டம்; வாயில்; கதவு; வழி; முறையில் என்னும் பொருளில் வரும் சொல்.

**வாரிகம்** – செடிவகை.

**வாரிச்சி** – நடனவகை.

**வாரிசம்** – நீரில் தோன்றும் தாமரை; உப்பு; சங்கு.

**வாரிசன்** – திருமால்.

**வாரிசாதம்** – தாமரை.

**வாரிசாதை** – திருமகள்.

**வாரிசு** – ஒருவன் ஆயுளுக்குப்பின் அவனது சொத்தையடைதற்கு உரியவன்.

**வாரித்தல்** – தடுத்தல்; ஆணையிட்டுக் கூறுதல்; நடத்துதல்.

**வாரித்திரம்** – ஓலைக்குடை; காண்க: **சாதகப்புள்**.

**வாரிதம்** – மேகம்; தடை.

**வாரிதி** – கடல்.

**வாரிதித்தண்டு** – பவளம்.

**வாரிதிநாதம்** – சங்கு.

**வாரிதிவிந்து** – கடல்நுரை.

**வாரிநாதன்** – வருணன்.

**வாரிநிதி** – கடல்.

**வாரியப்பெருமக்கள்** – ஊராளும் சபையோர்.

**வாரியம்** – மேல்விசாரணை செய்யும் உத்தியோகம்; கழகம்; துறை.

**வாரியன்** – மேல்விசாரணை செய்வோன்; மேலதிகாரி; குதிரைப்பாகன்.

**வாரியிறைத்தல்** – வீணாக்குதல்; மிகுதியாகக் கொடுத்தல்; சிதறச்செய்தல்.
**வாரியோட்டு** – நீரோடை.
**வாரிவளைத்தல்** – ஒருசேரத் திரட்டுதல்.
**வாரிவாகம்** – மேகம்.
**வாரிவிடுதல்** – மிகுதியாகக் கொடுத்தல்.
**வாருகம்** – வெள்ளரி; காண்க: **பேய்க்கொம்மட்டி.**
**வாருகோல்** – துடைப்பம்.
**வாருண்டகம்** – எண்காற்பறவை.
**வாருண்டம்** – எண்காற்பறவை; பீளை; குறும்பி.
**வாருணதீர்த்தம்** – ஆறு முதலியவற்றின் நன்னீரில் நீராடல்.
**வாருணப்படை** – வருணனைத் தேவதையாகக் கொண்ட பாணம்.
**வாருணம்** – வருணனுக்குரியது; மேற்கு; பகல் பதினைந்து முகூர்த்தத்துள் பதின்மூன்றாவது; ஒரு புராணம்; கடல்; குதிரைவகை; மாவிலிங்கமரம்; கள்.
**வாருணி** – அகத்தியன்; வருணன்மகள்; வருணன் மனைவி; கள்; மேற்கு; சதயநாள்; கொடிவகை.
**வாருதல்** – அள்ளுதல்; கொள்ளுதல்; தொகுத்தல்; மிகுதியாகக் கொண்டுசெல்லுதல்; கவர்தல்; திருடுதல்; தோண்டியெடுத்தல்; கொழித்தல்; மயிர்சீவுதல்; அரித்தல்; யாழ் நரம்பைத் தடவுதல்; ஓலையை எழுதுதற்குரிய இதழாகச் செம்மைசெய்தல்; பூசுதல்.
**வாரை** – மூங்கில்; கர்வுதடி; மூட்டைகளை இறுக்கிக்கட்ட உதவும் கழி; கைமரம்; நீண்டு ஒடுக்கமானது; காண்க: **ஆவிரை**; மீன்வகை.
**வால்** – இளமை; தூய்மை; வெண்மை; நன்மை; பெருமை; மிகுதி; விலங்குகளின் பின்புறத்தில் நீண்டு தொங்கும் உறுப்பு; நீளமானது; குறும்புசெய்பவர்; குறும்பு; காண்க: **வாலுளுவை.**
**வால்நட்சத்திரம்** – நீண்ட உடலுடன் வானில் சுழன்றுவரும் ஒளிப்பிழம்பு; தூமகேது; வால்மீன்.
**வால்மிளகு** – ஒரு கொடிவகை.
**வால்முளைத்தல்** – குறும்புசெய்தல்.
**வால்வரிக்கொடுங்காய்** – வெள்ளரிக்காய்.
**வால்வெடித்தல்** – சினத்தினால் வாலைத் தூக்கி அடித்தல்.
**வால்வெள்ளி** – காண்க: **வால்நட்சத்திரம்.**
**வாலகம்** – விலங்கின் வால்.
**வாலகிரகம்** – இளம்பிள்ளைகட்கு வருகின்ற கோள்பற்றிய நோய்.
**வாலகன்** – காண்க: **வாலிபன்.**
**வாலகில்லியர், வாலகிலர், வாலகிலியர்** – கட்டைவிரலளவு வடிவுடைய ஒருசார் முனிகணத்தார்.
**வாலசரிதைநாடகம்** – கண்ணபிரான் இளமைப் பருவத்து நடித்த கூத்து.
**வாலதி** – வால்; யானையின் வால்.
**வாலம்** – வால்; தலைமயிர்; நீண்டு அகலம் குறுகிய துண்டு; கந்தைத்துணி; இளமை; எறிபடைவகை; தனியாகக் கட்டடம் செய்த புத்தகம்.
**வாலமதி** – இளஞ்சந்திரன்.
**வாலமனை** – அகப்புறத்தமைந்த சிறுவீடு.
**வாலமாலம்** – அரிதாரம்.
**வாலரசம்** – சாதிலிங்கத்தில் வடித்த ரசம்.
**வாலரவி** – உதயகாலச் சூரியன்.
**வாலரிக்கொடுங்காய்** – காண்க: **வால்வரிக்கொடுங்காய்.**
**வாலவயது** – இளமை.
**வாலவாயசம், வாலவாயம்** – வைடூரியம்.
**வாலவிளையாட்டு** – இளமை விளையாட்டு.
**வாலறிவன்** – கடவுள்.
**வாலறிவு** – பேரறிவு; உண்மை.
**வாலன்** – இளைஞன்; குறும்புசெய்பவன்; ஒரு நெல்வகை; பாலன்.
**வாலாசம்** – மாடு குதிரைகளின் வாலின் அடியிலிருக்கும் வார்.
**வாலாட்டு** – குறும்பு; செருக்கான செயல்.
**வாலாட்டுதல்** – குறும்புசெய்தல்; வீண்பெருமை காட்டுதல்.
**வாலாதபம்** – காலைவெயில்.
**வாலாதி** – பந்தயக்குதிரை.
**வாலாமை** – தூய்மையின்மை; அழுக்கு; மகளிர் தீட்டு.
**வாலாயம்** – வழக்கம்; பொதுவானது; மிக்க பழக்கம்; வைடூரியம்.
**வாலி** – வெண்ணிறமுள்ள பலராமன்; கிட்கிந்தை மன்னன்; வாலுடையது; கரிக்குருவி; மழைத்தூறல்; குதிரைவாலி; திருவாலியமுதனார்; சீனிவாலி.
**வாலிகை** – மணல்.
**வாலிது** – தூயது; வெண்மையானது; நன்மையானது; வலிமை.
**வாலிபம்** – இளமை.
**வாலிபன்** – இளைஞன்.
**வாலிமை** – பெருமை; வலிமை.
**வாலியம்** – காண்க: **வாலிபம்**; கந்தைத்துணி.
**வாலியன்** – தூய்மையுடையவன்; இளைஞன்.
**வாலூகம்** – மணல்; வெண்மணல்.
**வாலுருவிவிடுதல்** – துன்பஞ்செய்யத் தூண்டிவிடுதல்.
**வாலுவன்** – சமையற்காரன்.

**வாலுளுவை** – ஒரு கொடிவகை.
**வாலுறை** – அடுப்பு.
**வாலூகம்** – நஞ்சு.
**வாலேப(ய)ம்** – கழுதை.
**வாலை** – இளம்பருவத்திலுள்ள பூப்படையாத பெண்; சத்திபேதங்களுள் ஒன்று; செய்நீர் வடிக்கும் பாண்டம்; தூய்மை; பாதரசம்; சித்திராநதி.
**வாலைரசம்** – காண்க: இரசகருப்பூரம்.
**வாவயம்** – காண்க: துளசி.
**வாவரசி** – காண்க: வாழ்வரசி, இல்லாள்.
**வாவல்** – தாண்டுகை; கூத்து; வௌவால்; கடல் மீன்; வயா.
**வாவி** – நீர்நிலை; நடைக்கிணறு; ஆற்றோடை.
**வாவிப்புள்** – அன்னம்.
**வாவு** – காண்க: உவா; விடுமுறைநாள்.
**வாவுதல்** – தாண்டுதல்.
**வாழ்** – முறைமை.
**வாழ்க்கை** – வாழ்தல்; வாழ்நாள்; இல்வாழ்க்கை; மனைவி; நல்வாழ்வுநிலை; செல்வநிலை; ஊர்; மருதநிலத்தூர்.
**வாழ்க்கைத்துணை** – மனைவி.
**வாழ்க்கைப்படுத்துதல்** – திருமணஞ்செய்து கொடுத்தல்.
**வாழ்க்கைப்படுதல்** – திருமணமாதல்.
**வாழ்கிறவள்** – காண்க: வாழ்வரசி.
**வாழ்ச்சி** – வாழ்க்கை; செல்வநிலை; வெற்றியாகிய செல்வநிலை.
**வாழ்ச்சிப்படுத்துதல்** – வாழவைத்தல்.
**வாழ்த்தணி** – இன்னார்க்கு இன்ன நன்மை இயைக என்று முன்னியது விரிக்கும் அணிவகை.
**வாழ்த்து** – துதி; ஆசி; கடவுளை வாழ்த்துகை; மங்களம் பாடுகை; அணிவகை.
**வாழ்த்துதல்** – நல்லுரை கூறுதல்; துதித்தல்; மங்களம்பாடுதல்.
**வாழ்த்தெடுத்தல்** – துதித்தல்.
**வாழ்தல்** – இருத்தல்; செழித்திருத்தல்; மகிழ்தல்; சுமங்கலியாக இருத்தல்; விதிப்படி ஒழுகுதல்.
**வாழ்நர்** – வாழ்வோர்.
**வாழ்நாள்** – ஆயுட்காலம்.
**வாழ்முதல்** – வாழ்வுக்கு முதற்காரணனான கடவுள்.
**வாழ்வரசி** – கணவனோடு வாழ்பவள், சுமங்கலி.
**வாழ்வித்தல்** – வாழவைத்தல்; நீதிமன்றமூலம் சொத்தை உரியவனுக்கு ஒப்படைத்தல்.
**வாழ்விழத்தல்** – கைம்பெண்ணாதல்; தாரமிழத்தல்.
**வாழ்விழந்தவள்** – கைம்பெண்.
**வாழ்வினை** – கணவன் தன்மை.
**வாழ்வு** – நல்வாழ்க்கை; பிழைப்பு; வாழ்க்கைக்காக விடப்பெற்ற இறையிலிநிலம்; வசிக்கை; உறைவிடம்; ஊர்; உயர்ந்த பதவி; செல்வம்; முறைமை.
**வாழ்வுதாழ்வு** – ஒருவனது வாழ்க்கையில் ஏற்படும் செல்வநிலையும் வறுமைநிலையும்.
**வாழகம்** – வெள்ளைக்குங்கிலியம்.
**வாழாக்கேடி** – காண்க: வாழாவெட்டி.
**வாழாதவள்** – காண்க: வாழாவெட்டி; கைம்பெண்.
**வாழாவெட்டி** – கணவனோடு சேர்ந்துவாழப் பெறாதவள்.
**வாழி** – வாழ்க என்னும் பொருளில் வரும் வியங்கோள் சொல்; ஓர் அசைச்சொல்.
**வாழிப்பு** – மதர்ப்பு.
**வாழிய** – காண்க: வாழி; முன்னிலையசைச்சொல்.
**வாழுமோர்** – வாழ்பவர்.
**வாழை** – ஒரு மரவகை.
**வாழைக்கன்று** – இளவாழை.
**வாழைத்தண்டு** – குலையீன்ற வாழையின் உட்புறத் தண்டு.
**வாழைப்பூ** – வாழையின் பூ; மீன்.
**வாழைமலடி** – ஒரே பிள்ளையைப் பெற்றவள்.
**வாழைமுகை** – வாழையின் பூ.
**வாழையடிவாழை** – இடையறாது தொடர்ந்து வருஞ் சந்தானம்.
**வாள்** – ஒளி; கத்தி; கத்தரிகை; கூர்மை; ஈர்வாள்; விளக்கம்; புகழ்; கொல்லுகை; கலப்பை; உழுபடையின் கொழு; கயிறு; நீர்; கச்சு.
**வாள்கைக்கொண்டாள்** – கொற்றவை.
**வாள்வட்டணை** – வாட்போரில் இடசாரி வலசாரியாகச் சுற்றுகை.
**வாள்வரி** – புலி.
**வாள்வரிக்கொடுங்காய்** – வெள்ளரிக்காய்.
**வாள்வலம்** – வாள்வீரம்.
**வாள்வாளெனல்** – அழுது கதறுதற்குறிப்பு.
**வாள்வீச்சு** – வாளைச் சுழற்றுகை.
**வாள்வீரம்** – வாட்போர்த்திறமை; வில்வமரம்.
**வாளகம்** – வெட்டிவேர்.
**வாளகிரி** – சக்கரவாளமலை.
**வாளம்** – வாள்; காண்க: யாளி; வட்டம்; சக்கரவாளமலை; சக்கரவாகப்புள்; காண்க: நேர்வாளம்.
**வாளமலை** – காண்க: வாள்வீச்சு.
**வாளரம்** – ஈர்வாளைக் கூர்மையாக்க உதவும் அரம்; மரமறுக்கும் வாள்.
**வாளரி** – அரிமா.
**வாளவரை** – கொடிவகை.
**வாளா, வாளாங்கு** – மோனமாய்; அலட்சியமாய்; பயனின்றி.

**வாளாண்மை** – வாட்போர்த்திறமை.
**வாளாது** – காண்க: **வாளா.**
**வாளாமை** – மௌனம்; பொருட்படுத்தாமை; பயனின்மை; உள்ளீடின்மை.
**வாளி** – வாள்வீரன்; வட்டமாயோடல்; மாதர் காதணியுள் ஒன்று; நீர்ச்சால்வகை.
**வாளிகை** – ஒரு காதணிவகை.
**வாளிபோதல்** – குதிரை முதலியன வட்டமா யோடுதல்.
**வாளியம்பு** – அலகம்பு.
**வாளுழத்தி** – கொற்றவை.
**வாளுழவன்** – வாள்வீரன்; படைவீரன்; தானைத் தலைவன்.
**வாளெடுப்பான்** – அரசனது வாளைத் தாங்கிச் செல்வோன்.
**வாளேந்தி** – வாள்தரித்த வீரன்; துர்க்கை.
**வாளேறு** – வாள்வெட்டு; ஒளியெறிகை.
**வாளை** – ஒரு மீன்வகை.
**வாற்கலம்** – காண்க: **வற்கலை.**
**வாற்கிண்ணம்** – எண்ணெய் முதலியன வைத்தற் குரியதும் கைப்பிடி யுள்ளதுமான கிண்ண வகை.
**வாற்கோதுமை** – நீண்ட கோதுமைவகை.
**வாற்சகம்** – கன்றுக்கூட்டம்; பசுவின் கூட்டம்.
**வாற்சல்லியம்** – உருக்கமான அன்பு.
**வாறான்** – கப்பற்பாய் கட்டுங் கயிறு.
**வாறு** – விதம்; பேறு; வலிமை; வரலாறு.
**வாறோசுகூடன்** – கருப்பூரவகை.
**வான்** – வானம்; மூலப்பகுதி; மேகம்; மழை; அமிர்தம்; துறக்கம்; நன்மை; பெருமை; அழகு; வலிமை; நேர்மை; மரவகை; ஒரு வினையெச்ச விகுதி.
**வான்கண்** – வானத்தின் கண்ணாகிய சூரியன்.
**வான்கழி** – பரலோகம்.
**வான்கொடி** – மின்னற்கொடி.
**வான்கோழி** – கோழிவகை.
**வான்பதம்** – வீடுபேறு.
**வான்புலம்** – உண்மையறிவு.
**வான்மகள்** – இந்திராணி.
**வான்மணி** – காண்க: **வான்கண்.**
**வான்மிகம்** – இந்திரவில்; புற்று.
**வான்மீன்** – விண்மீன்; காண்க: **வால்நட்சத்திரம்.**
**வான்மை** – வெண்மை; தூய்மை.
**வான்மைந்தன்** – வாயுதேவன்.
**வான்மொழி** – வானொலி.
**வான்வளம்** – மழை.
**வான்விளக்கம்** – சூரியன்.
**வான்வெளிச்செலவு** – வான்வழிப் பயணம்.
**வான்றரு** – கற்பகமரம்.
**வான்றேர்ப்பாகன்** – விண்ணில் உலவுந் தென்ற லாகிய தேரைச் செலுத்துகின்ற மன்மதன்.
**வானக்கல்** – காகச்சிலை.
**வானகம்** – விண்; விண்ணுலகம்; மரவகை.
**வானசாத்திரம்** – விண்மீன் முதலியவற்றின் செயல்களை அறிவிக்கும் நூல்.
**வானதி** – கங்கை.
**வானநாடன்** – மேலுலகத்திற்குத் தலைவன்; துறக்கவுலகத்தான்.
**வானநாடி** – துறக்கவுலகத்தாள்; கீரைவகை.
**வானநாடு** – வீட்டுலகம்; காண்க: **வானநாடி.**
**வானப்பத்தியம்** – பூத்தோன்றாது காய்க்கும் மரம்.
**வானப்பிரத்தம்** – மனைவியோடு காட்டில் தவம் செய்தல்.
**வானப்பிரத்தன்** – இல்லாளுடன் கானகம் புகுந்து தவஞ்செய்வோன்.
**வானப்பிரியை** – மரம்; இலுப்பைமரம்.
**வானம்** – விண்; தேவருலகு; அக்கினி; மேகம்; மழை; உலர்ந்தமரம்; மரக்கனி; உலர்ந்த காய்; உலர்ச்சி; உயிரோடு இருக்கை; போகை; மணம்; நீர்த்திரை; புற்பாய்; கோபுரத்தின் ஒருறுப்பு.
**வானம்பாடி** – ஒரு பாடும் பறவைவகை; சாதகப் புள்; ஆசனவகை.
**வானம்பார்த்தபயிர்** – மழையால் விளையும் பயிர்.
**வானம்பார்த்தபூமி** – பாசனவழி யில்லாது மழை யால் விளையும் பூமி.
**வானமண்டலம்** – விண்வெளி.
**வானமாமலை** – திருமால்; ஓர் ஊர்.
**வானர்** – காண்க: **வானவர்.**
**வானரக்கொடியோன்** – காண்க: **அனுமக்கொடி யோன்.**
**வானரகதி** – குதிரைநடை ஐந்தனுள் குரங்கைப் போல நடக்கும் நடை.
**வானரப்பகை** – நண்டு.
**வானரம்** – குரங்கு.
**வானரமகள்** – காண்க: **வானரமங்கை;** பெண் குரங்கு.
**வானரமங்கை** – வானுலகத்துப் பெண்.
**வானவர்** – தேவர்.
**வானவர்கோன்** – இந்திரன்.
**வானவர்முதல்வன்** – பிரமன்.
**வானவர்முதுவன்** – காண்க: **வானோர்முதுவன்.**
**வானவரம்பன்** – சேரன்.
**வானவருறையுள்** – கோயில்.
**வானவல்லி** – மின்னற்கொடி.
**வானவன்** – தேவன்; காண்க: **வானோர்முதல்வன்;** சூரியன்; சேர அரசன்.

**வானவில்** – இந்திரவில்.
**வானவூர்தி** – ஆகாயவிமானம்.
**வானவெளி** – திறந்தவெளியாயிருக்கும் வீட்டின் உள்முற்றம்; விண்வெளி.
**வானாடு** – காண்க: வானநாடு.
**வானி** – மேற்கட்டி; துகிற்கொடி; கூடாரம்; ஆன்பொருநை; பவானியாறு; மரவகை; காற்றாடிப்பட்டம்; இடிக்கொடி; படை; செடிவகை.
**வானிதம்** – மணல்போன்று நுண்ணியதா யிருக்குஞ் சருக்கரை.
**வானிழல்** – விண்ணிலிருந்து எழும் ஒலி, வானொலி.
**வானிறை** – நீர்நிறைந்த மேகம்.
**வானீரம்** – வஞ்சிக்கொடி.
**வானுலகம், வானுலகு** – துறக்கம்; வீட்டுலகம்.
**வானேறு** – இடியேறு.
**வானோங்கி** – ஆலமரம்.
**வானோர்** – காண்க: **வானவர்.**
**வானோர்க்கிறை, வானோர்கிழவன், வானோர்கோமான்** – இந்திரன்.
**வானோர்மாற்றலர்** – அசுரர்; இராக்கதர்.
**வானோர்முதல்வன்** – பிரமன்; இந்திரன்.
**வானோர்முதுவன்** – பிரமன்; சேரன்.

# வி

**வி** – ஓர் உயிர்மெய்யெழுத்து (வ்+இ); தொழிற் பெயர் விகுதி; பிறவினை விகுதி; விசும்பு; பறவை; காற்று; கண்; திசை; அழகு; இன்மை, எதிரிடை, மாறுபாடு, மிகுதி முதலிய பொருளுணர்த்தும் ஒரு முன்னொட்டு.
**விக்கல்** – தொண்டை விக்குகை.
**விக்கனம்** – இடையூறு; தீது.
**விக்கிதம்** – ஐவகைத் தாரைகளுள் ஒன்றான குதிரைநடை.
**விக்கிரகம்** – உருவம்; தெய்வத்திருமேனி; கடவுளின் அருச்சனாபிம்பம்; சிலை; உடல்; சாயல்; பகை; போர்.
**விக்கிரகவணக்கம், விக்கிரகாராதனை** – தெய்வ உருவங்களை வைத்துப் பூசிக்கை.
**விக்கிரம** – அறுபதாண்டுக்கணக்கில் பதினான் காம் ஆண்டு.
**விக்கிரமம்** – பேராற்றல்; மிகுபலம்; திறமை; அடியெடுத்துவைக்கை.
**விக்கிரமன்** – வீரன்; ஓர் அரசன்.
**விக்கிரமி** – அரிமா; வீரன்.
**விக்கிரயச்சீட்டு** – விற்பனைப்பத்திரம், விலை ஆவணம்.
**விக்கிரயம்** – விற்பனை.
**விக்கிரயிகன்** – விற்போன்.
**விக்கிரேயம்** – விற்கப்படும் பொருள்.
**விக்கிள்** – காண்க: **விக்கல்.**
**விக்கினம்** – இடையூறு; தடை; தீது.
**விக்கினராசன், விக்கினவிநாயகன், விக்கினேசன், விக்கினேசுவரன்** – விநாயகன்.
**விக்கு** – விக்கல்.
**விக்குதல்** – விக்கலெடுத்தல், விம்மிநிறைதல், விக்கி வெளித்தள்ளுதல்.
**விக்குள்** – காண்க: **விக்கல்.**
**விகங்கம்** – பறவை; அன்னம்; காற்றாடி; அம்பு; சந்திரன்; சூரியன்; முகில்.
**விகங்கராசன்** – கருடன்.
**விகசம்** – மலர்ந்தது; மொட்டை; மரவகை.
**விகசித்தல்** – மலர்தல்.
**விகசிதம்** – மலர்ச்சி; புரசுமரம்.
**விகடக்காரன்** – சிரிப்பு விளைவிப்போன்.
**விகடகவி** – பரிகாசப்பாடல்; நகைச்சுவை தோன்றப் பாடுவோன்.
**விகடசக்கரன்** – காஞ்சியில் உள்ள விநாயகன்.
**விகடப்பிரசங்கி** – நகைச்சுவை மிகும்படி சொற் பொழிவாற்றுபவன்.
**விகடம்** – வேறுபாடு; வரிக்கூத்துவகை; பயங்கர மானது; கரடுமுரடு; நகைச்சுவை; பரப்பு; மிகுதி; அழகு; பிராந்தி; உன்மத்தம்; தொந்தரை.
**விகடன்** – செருக்குள்ளவன்; காண்க: **விகடக் காரன்.**
**விகடி** – நகைச்சுவை விளைவிப்பவர்; கபட முடையவர்; நீர்.
**விகண்டித்தல்** – மறுத்தல்.
**விகண்டிதம்** – பிரிவு; வேறுபாடு; கண்டிப் பின்மை.
**விகண்டை** – மறுப்பு; காண்க: **விதண்டை;** பகைமை; தீய எண்ணம்; உறுதி.
**விகணிதம்** – தீர்ப்பு; கணிப்பில் அடங்காமை.
**விகத்தனம்** – இகழாஇகழ்ச்சி; தற்புகழ்ச்சி; புகழ்ச்சி.
**விகம்பிதம்** – நடுக்கம்.
**விகமனம்** – தீநடத்தை.
**விகர்த்தனன்** – சூரியன்.
**விகலம்** – குறைவு; சிதைவு; கலக்கம்; காண்க: **விகலை.**

**விகலன்** – குறைவுடையோன்.
**விகலிதம்** – சிந்துகை; வடிகை; சரிவின்மை.
**விகலை** – நாழிகை; கலையின் அறுபதில் ஒரு பாகம்.
**விகற்பக்காட்சி** – பொருளின் வேறுபாடுகளைக் கண்டறியுங் காட்சி.
**விகற்பத்தின்முடித்தல்** – பொருள் விளங்குதற் பொருட்டுப் பலதிறப்பட்ட வாய்பாட்டாற் முடித்துக்காட்டும் உத்திவகை.
**விகற்பம்** – வேறுபாடு; மனமாறுபாடு; காண்க: **விகற்பக்காட்சி**; மனக்கோணல்; ஐயம்; தவறு; ஓர் இலக்கணவிதி ஒருகால் வந்து ஒருகால் வாராமை; இனம்.
**விகற்பமில்லாக்காட்சி** – பொருளின் உண்மை மாத்திரம் உணரும் உணர்வு.
**விகற்பவுணர்வு** – பொருளின் வேறுபாடுகளைக் கண்டறியும் உணர்வு.
**விகற்பித்தல்** – வேறுபடுத்துதல்; பகுத்தறிதல்; மாறுபடுதல்; ஓர் இலக்கணவிதி ஒருகால் வந்து ஒருகால் வாராதிருத்தல்.
**விகற்பு** – வேறுபாடு; ஓர் இலக்கண விதி ஓர் இடம் வந்து மற்றோரிடம் வாராதிருத்தல்.
**விகாசம்** – மலர்ச்சி; முகமலர்ச்சி; விரித்தல்.
**விகாதம்** – இடையூறு; கேடு.
**விகாதித்தல்** – தடைசெய்தல்.
**விகாய்** – ஒரு மரவகை.
**விகாரம்** – வேறுபாடு; காண்க: **செய்யுள்விகாரம்**; புணர்ச்சியில் வரும் தோன்றல், திரிதல், கெடுதல் ஆகிய விகாரங்கள்; மனக்கலக்கம்; அழகின்மை; காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், இடும்பு, அசூயை என எண்வகைப்பட்ட தீக்குணம்; புத்தாலயம்.
**விகாரவுவமை** – உவமானத்தின் வேறுபாடே உவமேயமென்று சொல்லும் உவமையணி வகை.
**விகாரி** – விகாரமுடையவன்; காமுகன்; அறுபதாண்டுக் கணக்கில் முப்பத்துமூன்றாம் ஆண்டு.
**விகாரித்தல்** – வேறுபடுத்தல்; மோகித்தல்.
**விகாரியம்** – வேறுபடுத்தப்படுவதாகிய செயப்படுபொருள்.
**விகிதம்** – வீதம்; நட்பு; விதிமுறை; தகுதி; அனுகூலம்; செயல்.
**விகிர்தம்** – காண்க: **விகிருதம்**; நகரம்.
**விகிர்தன்** – கடவுள்; மாறுபட்ட செயலினன்.
**விகிர்தி** – அறுபதாண்டுக் கணக்கில் இருபத்து நான்காம் ஆண்டு; வேறுபாடு.
**விகிரம்** – சிதறுகை; இறைக்கப்பட்ட சோறு; துண்டு; பறவை; வெள்ளெருக்கு.
**விகிருதம்** – வேறுபாடு; பொய்; வெறுப்பு; அச்சம்; ஒருபடித்தல்லாது வேறுபட்ட செயல்; தலைவி தலைவனுக்குத் தன் காதலைச் சொல்ல நாணுகை.
**விகிருதன்** – மாறுபட்ட செயலினன்; கடவுள்.
**விகிருதி** – வேறுபாடு; முன்புள்ளதிலிருந்து உண்டானது; பகுபதவுறுப்பினுள் இறுதிநிலையான உறுப்பு; அறுபதாண்டுக் கணக்கில் இருபத்து நான்காம் ஆண்டு.
**விகுணம்** – குணமின்மை.
**விகுணி** – குணமில்லாதவர்; குணங்கெட்டது; கள்.
**விகுதி** – மாறுபாடு; முன்புள்ளதிலிருந்து உண்டானது; பகுபதவுறுப்புகளுள் இறுதியானது.
**விங்களம்** – குறைவு; திரிவு; நட்பின்மை; உதவி புரியப் பின்வாங்குதல்; கபடம்; களிம்பு.
**விங்களித்தல்** – சூதுசெய்தல்; வேறுபடுத்தல்; நட்பில் மனம் வேறுபடுதல்; நிலையற்றிருத்தல்; பிரித்தல்.
**விங்குதல்** – மிகுதல்; துளைத்தல்.
**விச்சம்** – தாமரைவகை.
**விச்சவம்** – அம்பு.
**விச்சாதரர்** – பதினெண்கணத்துள் ஒருசாரார்.
**விச்சாவாதி** – வித்தையால் திறமையாக வாதிப்பவன்.
**விச்சிரமித்தல்** – இளைப்பாறுதல்; இளைப்பாறச் சயனித்தல்.
**விச்சிராந்தி** – இளைப்பாறுகை.
**விச்சிரானம்** – பேதிமருந்து.
**விச்சின்னம்** – இடையில் விட்டுப்போகை; இடையில் சிதைவுறுகை.
**விச்சு** – விதை; மிகுதி.
**விச்சுதல்** – விதைத்தல்; பரப்புதல்; பிறர் மனத்தில் பதியவைத்தல்.
**விச்சுவம்** – எல்லாம்; நெடுமால்; சுக்கு; முழுமையும்.
**விச்சுளி** – மீன்கொத்திப்பறவை; சுறுசுறுப்புள்ளவர்; ஒல்லி.
**விச்சுளிப்பாய்தல்** – விரைவாகப் பாய்தல்.
**விச்சுளியன்** – சுறுசுறுப்புள்ளவன்; அறிவாளன்.
**விச்சை** – வித்தை; கல்வி; அறிவு; மாயவித்தை; மந்திரம்; காண்க: **வித்தியாதத்துவம்**; தெரு; வெள்ளெருக்கு.
**விச்சையன்** – கல்வியாளன்; மாயவித்தைக்காரன்.
**விச்சொருபம்** – வேறுபட்ட வடிவம்.
**விசகலி** – மல்லிகை.
**விசகலிதம்** – சிதைவு.
**விசசனம்** – கொடுவாள்; கொலை; தண்டம்; ஒரு நரகம்.

**விசதம்** – வெளிப்படையானது; அழுக்கற்றது; வெண்மை; தூய்மை; எச்சில்.
**விசம்** – தாமரைநூல்; நஞ்சு; விகிதம்; செலவு; படித்தரம்.
**விசமம்** – சமமின்மை.
**விசய** – அறுபதாண்டுக்கணக்கில் இருபத்தேழாம் ஆண்டு.
**விசயசரிதன்** – வெற்றியாளன்.
**விசயஞ்செய்தல்** – குரு, அரசர்போன்ற பெரியோர் எழுந்தருளுதல்.
**விசயம்** – காண்க: **விசையம்**; நூற்றுமுப்பத்தைந்து சிகரங்களையும் பதினேழு மேனிலைக் கட்டுகளையுமுடைய கோயில்; ஐயம்; ஆராய்வு; தருமபுத்திரனுடைய சங்கு; அடைக்கலம்.
**விசயமுரசம்** – வெற்றிமுரசு.
**விசயலக்குமி** – வெற்றித்திருமகள்.
**விசயன்** – அருச்சுனன்; திருமாலின் வாயில்காப்போன்; வெற்றியாளன்; பதினோர் உருத்திரருள் ஒருவர்; சாலிவாகனன்; கடுக்காய் வகை.
**விசயார்த்தம்** – வெள்ளிமலை, கைலைமலை.
**விசயை** – வெற்றித்திருமகள், துர்க்கை; பார்வதி.
**விசர்** – பைத்தியம்.
**விசர்க்கம்** – ஒரு வடமொழி எழுத்து; ஒழிகை; விட்டுவிடுதல்; மலங்கழித்தல்; அபானவாயு; தட்சிணாயனமார்க்கம்.
**விசரம்** – கூட்டம்; கொலை; மரவகை.
**விசலம்** – கஞ்சி; தளிர்.
**விசலி** – சீந்திற்கொடி.
**விசலிகை** – காண்க: **கொடிமல்லிகை.**
**விசவல்லி** – காண்க: **கீழாநெல்லி.**
**விசளை** – சட்டி; சட்டியளவு.
**விசனப்படுதல்** – துன்புறுதல்.
**விசனம்** – துன்பம்; விடாமுயற்சி; வேட்டை முதலியவற்றில் மிக்க விருப்பு; பேராசை; மனிதரில்லாவிடம்; விசிறி; தனிமை.
**விசனம்பண்ணுதல்** – நெருக்கித் துன்புறுத்துதல்.
**விசாகம்** – பதினாறாம் நட்சத்திரம்; வைகாசி.
**விசாகன்** – விசாகநாளில் பிறந்த முருகக்கடவுள்.
**விசாணம்** – விலங்கின் கொம்பு.
**விசாதி** – நோய்; வேறான சாதி; காண்க: **விசாதி பேதம்.**
**விசாதிபேதம்** – வேறுபாடு மூன்றனுள் ஒன்றான சாதியால் உண்டாகும் வேறுபாடு.
**விசாய்தல்** – மேலிடுதல்.
**விசாரகன்** – நியாயவிசாரணை செய்பவன்.
**விசாரணம்** – ஆராய்ச்சி.
**விசாரணை** – ஆராய்ச்சி; நியாயவிசாரிப்பு; மேற்பார்வை; போற்றுகை; மரவகை.
**விசாரணைக்காரன்** – மேற்பார்ப்போன்.
**விசாரம்** – சூழ்வினை; ஆராய்ச்சி; கவலை.
**விசாரி** – ஆராய்வோன்.
**விசாரித்தல்** – ஆராய்தல்; வினாவுதல்; நினைத்தல்; பாதுகாத்தல்; போற்றுதல்.
**விசாரிப்பு** – ஆராய்ச்சி; நியாயவிசாரிப்பு; போற்றுகை, உபசாரம்; மேற்பார்வை; கண்காணிப்பாளன்; ஊர்ப்பணியாளருள் ஒருவன்.
**விசாலபுத்தி** – பரந்த அறிவு.
**விசாலம்** – இடப்பரப்பு; பெரியது; பொலிவு; மான்வகை; ஒரு பறவைவகை; ஒரு நாடு; சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று; வெண்கடம்பு; வாழை; மரவகை; வாயுவிளங்கம்.
**விசாலாட்சன்** – சிவபிரான்; கருடன்.
**விசாலாட்சி** – காசியில் உள்ள பார்வதி; தடங்கண்ணி.
**விசாலித்தல்** – விரிவுபெறுதல்.
**விசாலை** – அவந்திநகர்; மிதிலைப்பட்டணம்.
**விசானம்** – சுடுகாடு.
**விசி** – கட்டு; பறையிறுக்கும் வார்; விசிப்பலகை; கட்டில்; தண்டு; அலை.
**விசிக்கோல்** – அம்பு.
**விசிகம்** – அம்பு; இருப்புலக்கை; அலை.
**விசிகரம்** – அலை.
**விசிகை** – முலைக்கச்சு; கருத்து; தெரு; கடப்பாரை; மருத்துவமனை.
**விசிட்டஞானம்** – இறையறிவு.
**விசிட்டம்** – குணத்தோடு கூடியது; மேன்மையுள்ளது.
**விசிட்டன்** – பெரியோன்.
**விசித்தல்** – இறுகக்கட்டுதல்; விம்முதல்.
**விசித்தி** – கடுகு.
**விசித்திரம்** – வியப்பு; சிறப்பு வேலைப்பாடு அல்லது நிறமுடையது; பலதிறப்பட்டது; விநோதமானது; பேரழகு; வேடிக்கை; கம்மத்தொழில்; இறுமாப்பு; மேன்மை.
**விசித்திராங்கம்** – மயில்.
**விசிதம்** – திருநீறு; வெண்மை.
**விசிப்பலகை, விசிப்பு** – ஊஞ்சற்பலகை.
**விசிமந்தம்** – வேம்பு.
**விசிரமித்தல்** – இளைப்பாறுதல்.
**விசிராமம்** – மனவமைதி; இளைப்பாறுகை.
**விசிலம்** – கஞ்சி.
**விசிறி** – உடம்பு முதலியவற்றில் படும்படி காற்றை அசைவிக்கப் பயன்படுத்தும் கருவி; ஒரு செடிவகை; வண்ணக்கோடுள்ள சீலை வகை.

**விசிறுதல்** – விசிறியால் காற்றெழுப்புதல்; வாள் முதலியவற்றை வீசுதல்; வலை முதலியவற்றை விரித்தெறிதல்; சுழற்றுதல்; சொரிதல்; வெளித்தள்ளுதல்; போக்குதல்; கை முதலியன வீசுதல்; விசிறியால் காற்றடிக்கச் செய்தல்.

**விசு** – மேட துலா இராசிகளில் சூரியன் புகும் காலம்; அறுபதாண்டுக்கணக்கில் பதினைந் தாம் ஆண்டு.

**விசுக்கிடுதல்** – வெறுப்புக்கொள்ளுதல்; மன வருத்தங் கொள்ளுதல்.

**விசுக்கு** – வெறுப்பு.

**விசுத்தம்** – மிகு தூய்மை.

**விசுத்தி** – ஆறாதாரத்துள் ஒன்றான அடிநா விடம்; பந்தநீக்கம்; ஐயம்; திருத்தம்; தூய்மை; ஒப்பு.

**விசுப்பலகை** – காண்க: **விசிப்பலகை.**

**விசும்பு** – வானம்; தேவலோகம்; மேகம்; திசை; வீம்பு; செருக்கு.

**விசும்புதல்** – வெறுப்புடன் விலக்குதல்; கயிறு முதலியவற்றைச் சுண்டியிழுத்தல்.

**விசும்புவில்** – சோதிச்சக்கரம், வானவட்டம்.

**விசும்பேறு** – இடியேறு.

**விசுவகுத்தன்** – உலகத்தைக் காப்பவன்.

**விசுவசித்தல்** – நம்புதல்; அன்புசெய்தல்.

**விசுவதேவர்** – தேவசாதிவகையினர்; சிவ பெருமான்.

**விசுவநாதன்** – எப்பொருட்குமிறைவன்; காசியிலெழுந்தருளியுள்ள சிவபெருமான்.

**விசுவநாள்** – உத்தராடநாள்.

**விசுவம்** – எல்லாம்; உலகம்; நெடுமால்; சுக்கு; சமராத்திரம்; காண்க: **அதிவிடையம்.**

**விசுவம்பரன்** – எல்லாவற்றையும் தாங்கு பவனான கடவுள்; திருமால்; இந்திரன்.

**விசுவம்பரை** – பூமி.

**விசுவரூபம்** – பேருருவம்; கோயிலிலே கடவுளின் நிலை; பள்ளியெழுச்சிக்காலத்துச் செய்யும் வணக்கம்.

**விசுவரூபன்** – உலகம் அனைத்துமாயுள்ள கடவுள்; திருமால்.

**விசுவன்** – கடவுள்; சீவான்மா.

**விசுவாசகன்** – நம்பிக்கையுள்ளவன்.

**விசுவாசகாதகன்** – நம்பிக்கைக்கேடு செய்பவன்.

**விசுவாசம்** – நம்பிக்கை; தெய்வநம்பிக்கை; அன்பு; அக்கறை; பாசம்; உண்மை.

**விசுவாசி** – நம்பிக்கையுள்ளவன்; தெய்வ நம்பிக்கையுள்ளவன்; செய்ந்நன்றி மறவாத வன்; அன்புள்ளவன்; நாய்; வேங்கை என்னும் மரம்.

**விசுவாசித்தல்** – நம்புதல்; அன்புசெய்தல்.

**விசுவாத்துமன்** – கடவுள்.

**விசுவாவசு** – ஒரு கந்தருவன்; அறுபதாண்டுக் கணக்கில் முப்பத்தொன்பதாம் ஆண்டு.

**விசுவான்மா** – நான்முகன்; கடவுள்.

**விசுவேசன், விசுவேசுரன்** – உலக நாயகன்; காசியில் கோயில் கொண்டுள்ள சிவபிரான்.

**விசுவேசுவரி** – பார்வதி.

**விசுளி** – கள்.

**விசூகை** – தலைச்சுழற்சி மிகுவிக்கும் நோய் வகை.

**விசேடணம்** – அடைமொழி.

**விசேடதீட்சை** – தீட்சை மூன்றனுள் மாணாக் கனைச் சிவபூசை செய்தற்குத் தகுதியாக்கும் இரண்டாம் தீட்சை.

**விசேடம்** – மேன்மை, சிறப்பு; அடைமொழி; ஒரு பொருளை மேம்படக் கூறும் அணிவகை; சொற்பொருள் தருதல்; சிறப்பாக நடை பெறும் விருந்துச் சடங்கு முதலியன; மிகுதி; வகை; சிறப்பியல்; முக்கியமான செய்தி.

**விசேடித்தல்** – சிறப்பித்தல்; அடைகொடுத்துக் கூறுதல்; சிறப்பாதல்; மிகுதியாதல்.

**விசேடியம்** – அடையடுத்த பொருள்.

**விசை** – வேகம்; விரைவு; நீண்டு சுருங்குந் தன்மை; எந்திரம்; பலம்; பொறி; பக்கம்; பற்றுக்கோடு; மரவகை; வெற்றி; தடவை.

**விசைக்கம்பு** – நெய்வார் கருவியுள் ஒன்று.

**விசைக்காற்று** – ஒருவன் விரைந்துசெல்லும் விசையினால் உண்டாகும் காற்று.

**விசைக்கொம்பு** – தாழ வளைத்துவிட்டதும் மீண்டு மேற்கிளம்பும் மரக்கிளை.

**விசைகொள்ளுதல்** – விரைதல்; நீண்டு சுருக்குந் தன்மையாதல்.

**விசைத்தடி** – காண்க: **விசைக்கம்பு;** உயிரினங் களைப் பிடிக்கும் பொறியின் ஒரு பகுதி.

**விசைத்தல்** – விரைவுபண்ணுதல்; வீசுதல்; துள்ளுதல்; சிதறுதல்; கோபப்படுதல்; கடுமை யாதல்.

**விசைதிறத்தல்** – வேகமாக வெளிப்படுதல்.

**விசையசாரதி** – கண்ணபிரான்.

**விசையம்** – கருப்பஞ்சாறு; கருப்புக்கட்டி; பாகு; வெற்றி; வருகை; வீற்றிருப்பு; குதிரையின் மார்பில் காணப்படும் இரட்டைச்சுழி; சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று; தேவ விமானம்; பொருள்; பரிவேடம்; சூரியமண்ட லம்; வையம்.

**விசையன்** – காண்க: **விசயன்;** வெற்றியாளன்.

**விசையேற்றுதல்** – மூட்டிவிடுதல்; எந்திரம் முதலியவற்றைத் தொழிற்படுத்தத் தயார்ப் படுத்தி வைத்தல்.

**விஞ்சதி** – இருபது.

**விஞ்சம்** – விந்தியமலை.

**விஞ்சனம்** – அடையாளம்; கறி.
**விஞ்சுதல்** – மிகுதல்; மேலாதல்; மிஞ்சுதல்.
**விஞ்சை** – கல்வி; மாயவித்தை; கலை; இறையறிவு; அறிவு; மந்திரம்; வித்தியாதரர் உலகு.
**விஞ்சைமகள்** – வித்தியாதரப்பெண்.
**விஞ்சையர்** – பதினெண்கணத்துள் ஒரு சாரார்.
**விஞ்சையன்** – புலவன்; வித்தையையுடையவன்; வித்தியாதரன்.
**விஞ்ஞாதம்** – அறியப்பட்டது; மேலாய அறிவு.
**விஞ்ஞானகலர்** – ஆணவமலம் மட்டும் உள்ள ஆன்மாக்கள்.
**விஞ்ஞானம்** – அறிவியல்; உண்மை அறிவு; பேரறிவு, சிவபிரானது அறிவாற்றல்.
**விஞ்ஞானமயகோசம்** – அறிவுமயமாய் உள்ள உறை.
**விஞ்ஞானவாதி** – அறிவு மாத்திரமேயுள்ளது என்று கூறும் யோகாசாரன்.
**விஞ்ஞானாகலர்** – காண்க: விஞ்ஞானகலர்.
**விஞ்ஞை** – காண்க: விஞ்சை.
**விட்கம்பம்** – வித்தாரம்; யோகம் இருபத்தேழனுள் ஒன்று; நாடகவுறுப்புகளுள் ஒன்று; வட்டத்தின் குறுக்களவு.
**விட்சேபம்** – கலக்கம்; அச்சம்; எறிகை; ஒடுங்கி விரியும் சத்தி; கூத்துவகை; வானமண்டலத்து அட்சரேகை.
**விட்டகுறை** – முன்பிறப்பில் பயின்று விட்டதன் குறை.
**விட்டபட்டினி** – தொடர்ந்து பலநாள் கிடக்கும் பட்டினி.
**விட்டபிறப்பு** – சென்ற பிறப்பு.
**விட்டம்** – வட்டக் குறுக்களவு; குறுக்காக இடப்பட்டது; உத்திரம்; உடல்; அவிட்டநாள்.
**விட்டரம்** – தவத்தோர் பீடம்; இருப்பிடம்; மரம்; கொள்கலம்; ஒருபிடித் தருப்பைப்புல்.
**விட்டரி** – அகத்திமரம்.
**விட்டல்** – விடுதல்.
**விட்டலக்கணை** – காண்க: விட்டவாகுபெயர்.
**விட்டவர்** – பகைவர்; துறந்தோர்.
**விட்டவாகுபெயர்** – இலக்கணை மூன்றனுள் சொல்லப்பட்ட சொல்லின் பொருளை இயைபின்மையால் கைவிட்டு அச் சொல்லிற்கு வேறு பொருள் கொள்ளுமாறு நிற்பது.
**விட்டவாசல்** – சிறப்புக்காலங்களில் அரசர் முதலியோர் சென்றுவரும் கோயிலின் தனிவாயில்.
**விட்டார்த்தம்** – பாதிவிட்டம்.
**விட்டாற்றி** – இளைப்பாறுகை.
**விட்டி** – கோழி; முன்தள்ளிய வயிறு; சிறுமரவகை.
**விட்டிகை** – விட்டில்.
**விட்டிசை** – அசையுள் எழுத்து முதலியன பிரிந்திசைக்கை; பாட்டில்வருந் தனிச்சொல்.
**விட்டிசைத்தல்** – அசைமுதலியன பிரிந்திசைத்தல்.
**விட்டித்தல்** – மலங்கழித்தல்.
**விட்டிருத்தல்** – பகைமேற் சென்றோர் பாசறையில் தங்குதல்.
**விட்டில்** – வெட்டுக்கிளி; சிறு பூச்சிவகை; கொலை; பிராய்மரம்; நீண்ட மரவகை.
**விட்டு** – திருமால்; வானம்.
**விட்டுக்கொடுத்தல்** – காட்டிக்கொடுத்தல்; கூட்டிக்கொடுத்தல்; இணக்கங் காட்டுதல்; பிறனைக் கருவியாகக்கொண்டு ஒரு செயலை அறிதல்; அடிப்பதற்குப் பந்தயத் தேங்காய் உருட்டிவிடுதல்.
**விட்டுச்சொல்லுதல்** – மனத்திலுள்ளதை வெளியிட்டுக் கூறுதல்.
**விட்டுசித்தர்** – பெரியாழ்வார்.
**விட்டுணு** – திருமால்; எங்கும் நிறைந்தவன்; பன்னிரு ஆதித்தருள் ஒருவர்.
**விட்டுணுக்கரந்தை** – ஒரு செடிவகை.
**விட்டுணுப்பிரியம்** – காண்க: துளசி.
**விட்டுணுபதம்** – வானம்; வைகுண்டம்; காண்க: திருப்பாற்கடல்.
**விட்டுணுவல்லபை** – திருமகள்.
**விட்டுப்பாடுதல்** – குரலை அடக்காது முழுக் குரலுடன் பாடுதல்.
**விட்டுப்பிடித்தல்** – ஒரு செயலைச் சிறிதுகாலம் விட்டிருந்து மீண்டுந் தொடங்குதல்; கண்டிக்காமற் சிறிது இடங்கொடுத்தல்; சற்றுப் பொறுத்து மறுபடியும் தொடர்தல்; துளைக் கருவியை விரலால் தடவி வாசித்தல்.
**விட்டுப்போதல்** – நீங்கிவிடுதல்; மிக்க நோவாயிருத்தல்.
**விட்டும்விடாத இலக்கணை** – இலக்கணை மூன்றனுள் ஒன்று.
**விட்டுரைத்தல்** – காண்க: விட்டுச்சொல்லுதல்.
**விட்டுவிடுதல்** – பிடிப்புவிடுதல்; விலகிவிடுதல்.
**விட்டுவிளங்குதல்** – நன்றாக ஒளிவிடல்.
**விட்டெறிதல்** – தூரவிழும்படி எறிதல்; நீக்குதல்.
**விட்டேற்றி** – சுற்றத்தினின்றும் நட்பினின்றும் நீங்கிப் பிறரையும் அவ்வண்ணம் செய்விப்போன்; தொடர்பற்றவன்(ர்).
**விட்டேறு** – எறிகோல்; வேல்; இகழ்ச்சிச்சொல்.
**விட்டை** – விலங்குகளின் மலம்.
**விட்புலம்** – மேலுலகம்.
**விட** – மிகவும்; காட்டிலும்.
**விடக்கு** – இறைச்சி; பிணம்.
**விடக்கோள்** – குளிகன்.
**விடகண்டன்** – சிவன்.
**விடகாரி** – நச்சகற்றும் மருத்துவன்.

**விடங்கம்** – புறாக்கூடு; கொடுங்கை; சுவர்ப் புறத்து வெளிவந்துள்ள உத்திரக்கட்டை; வீட்டின் முகடு; வீதிக்கொடி; உளியினாற் செய்யப்படாது இயற்கையாயமைந்த இலிங்கம்; அழகு; ஆண்மை; இளமை.

**விடங்கர்** – சிறுவழி; முதலை.

**விடங்கன்** – தானே உண்டான இலிங்கம்; நல்லுருவமுடையவன்; காமுகன்; வம்பளப்பவன்.

**விடங்கு** – அழகு; அணிகலன்களின் உறுப்பு; இன்பக்குறிப்பு.

**விடங்கொல்லி** – சிறியாநங்கைப்பூண்டு.

**விடத்தர்** – முள்ளுடைய மரவகை.

**விடத்தேதொடரி, விடத்தோ(ரை)** – ஒரு மருந்துமூலிகை; முள்ளுடைய மரவகை.

**விடதம்** – முகில்; துரிசு.

**விடதரம்** – பாம்பு; மேகம்; துரிசு.

**விடதரன்** – சிவபிரான்.

**விடதாரி** – காண்க: **விடகாரி**.

**விடதாலி** – பூரான்.

**விடப்பு** –: நிலப்பிளவு.

**விடபகதி** – குதிரைநடை ஐந்தனுள் ஒன்று.

**விடபம்** – எருது; இடபராசி; மரக்கொம்பு; பெருந்தூறு; தூண்; தளிர்; அண்டத்திலுள்ள விதை; விரிவடைதல்.

**விடபி** – மரப்பொது; அத்திமரம்.

**விடம்** – நஞ்சு; பாடாணம்; கேடுவிளைப்பது; தேள்; சுக்கின் தோல்; நீர்; தாமரைநூல்; காண்க: **அதிவிடையம்**; கயமைத்தனம்; மரக்கொம்பு; மலை; இடம்; ஐந்துப்புள் ஒன்று; நச்சுப்பூடுவகை.

**விடம்பம்** – உள்ளொன்று புறம்பொன்றான தன்மை; உண்மைபோன்று நடிக்கும் நடிப்பு; வேடம்பூணுகை.

**விடம்பனம்** – நடிப்பு; நிந்தை; தொல்லை.

**விடம்பு** – காண்க: **விடப்பு**.

**விடம்பை** – பிளப்பு.

**விடமம்** – சமமின்மை; கரடுமுரடு; இசைவற்றது; தாளவங்கங்கள் விரவிவரும் நிலை; குறும்பு; சங்கடம்; அழுத்தமின்மை; அச்சம்.

**விடமரம்** – எட்டிமரம்.

**விடமன்** – குறும்புசெய்பவன்.

**விடமி** – குறும்புசெய்பவர்.

**விடமுள்** – தேள்.

**விடமூங்கில்** – ஒரு செடிவகை.

**விடயம்** – செயல்; புலன்; புலனால் அறியும் பொருள்; நூல் நுதலிய பொருள்; காரணம்; நாடு; பயன்; காமவின்பம்; சுக்கிலம்; பாக்குடன் கூடிய வெற்றிலை மடிப்பு; அடைக்கலம்.

**விடயி** – ஐம்பொறி; அரசன்.

**விடயித்தல்** – பொறிகள் புலனைப் பற்றுதல்.

**விடர்** – நிலப்பிளப்பு; மலைப்பிளப்பு; மலைக்குகை; முனிவர் இருப்பிடம்; காடு; பெருச்சாளி.

**விடர்வு** – காண்க: விடப்பு.

**விடரகம்** – மலைக்குகை; மலை.

**விடரவன்** – பூனை.

**விடரளை** – மலைப் பிளப்பிடம்.

**விடரி** – மலை.

**விடருதம்** – பூனை; பாம்பு.

**விடல்** – முற்றும் நீங்குகை; ஊற்றுகை; குற்றம்.

**விடலம்** – உள்ளி; குதிரை; நஞ்சு.

**விடலி** – கெட்டபெண்; பூப்புடையாள்; பன்னீரகவையுள்ள பெண்; மலடி; புல்வகை; மணத்துக்குமுன் பூப்படைந்தாள்.

**விடலை** – பதினாறு முதல் முப்பது ஆண்டுவரையுள்ளவன்; திண்ணியோன்; பெருமையிற் சிறந்தோன்; வீரன்; பாலைநிலத் தலைவன்; மருதநிலத் தலைவன்; மணவாளன்; ஆண்மகன்; இளங் காளைமாடு; சூறைத்தேங்காய்; இளநீர்.

**விடவல்லி** – ஒரு செடிவகை.

**விடவி** – மரம்.

**விடவிடெனல்** – குளிர் முதலியவற்றால் உண்டாகும் நடுக்கக்குறிப்பு; சுறுசுறுப்பாயிருத்தற் குறிப்பு; மெலிவுக்குறிப்பு.

**விடவு** – நிலப்பிளப்பு; கயமைத்தன்மை.

**விடன்** – காமுகன்; கள்ளக்கணவன்; வீரன்.

**விடாக்கண்டன்** – பிடிவாதமாக நின்று ஒன்றை நிறைவேற்றுபவன்.

**விடாணம்** – விலங்கின் கொம்பு.

**விடாணி** – கொம்புள்ளது; யானை.

**விடாதம்** – மயக்கம்.

**விடாதவாகுபெயர்** – இலக்கணை மூன்றனுள் வாசகத்தின் பொருட்கும் இயைபுற நிற்கும் இலக்கணை.

**விடாந்தகன்** – பாற்கடலிலுண்டாகிய நஞ்சைக் கெடுத்தவனாகிய சிவபிரான்.

**விடாப்படை** – கையினின்றும் விடுபடாத வாள்; குந்தம் போன்ற ஆயுதம்.

**விடாப்பிடி** – பிடித்த பிடி, உறுதியாகப் பற்றுகை; உறுதியாக நிற்கை; பிடிவாதம்; மாறாமல் ஒரே நிலையி லிருக்கை.

**விடாமழை** – இடையீடின்றிப் பெய்யும் மழை.

**விடாய்** – வேட்கை; ஆசை; களைப்பு; விடுமுறை நாள்; வெப்பம்.

**விடாய்த்தல்** – வேட்கையுறுதல்; களைப்படைதல்; விரும்புதல்; செருக்குக்கொள்ளுதல்.

**விடாய்ப்பு** – வேட்கை; களைப்பு; ஆசை.
**விடாயன்** – வேட்கையுள்ளவன்; களைப்புற்றவன்; காமுகன்.
**விடாயுதம்** – பாம்பு.
**விடாயெடுத்தல்** – தாகமெடுத்தல்.
**விடாலகம்** – பூனை; பொன்னரிதாரம்.
**விடி** – காண்க: **விடிகாலை**; தனிப்பட்டது; திரைச்சீலை; சிறுமரவகை.
**விடிகாலை** – பொழுது விடிகின்ற நேரம்.
**விடிதல்** – உதயமாதல்; முடிவுபெறுதல்; துன்பம் நீங்கி இன்புறுதல்.
**விடிமீன்** – காண்க: **விடிவெள்ளி**.
**விடியல்** – காண்க: **விடிகாலை**; மலங்கழித்தல்; வயிற்றுப்போக்கு; வெளியிடம்.
**விடியல்வைகறை** – பொழுது விடிதற்கு முன்னர்த்தாகிய வைகறை.
**விடியற்காலம்** – வைகறை.
**விடியாவழக்கு** – ஒருபொழுதும் முடிவுபெறாத வழக்கு.
**விடியாவிளக்கு** – காண்க: **நந்தாவிளக்கு**.
**விடிவிளக்கு** – விடியும்வரை எரியும் விளக்கு.
**விடிவு** – காண்க: **விடிகாலை**; துன்பம் நீங்கி இன்பம் வருகை; ஒழிவுவேளை; வெளியிடம்; அச்சம்; நறும்புகை.
**விடிவெள்ளி** – விடியற்காலையில் கிழக்கில் தோன்றும் சுக்கிரன்.
**விடிவேளை,** **விடிவை** } – வைகறை.
**விடிவோரை** – அதிகாலை.
**விடு** – பகலிரவுகள் நாழிகையளவில் ஒத்த நாள்.
**விடுகதை** – விடுவிக்கவேண்டிய புதிர்.
**விடுகவி** – தனிப்பாட்டு.
**விடுகாது** – வளர்த்துத் தொங்கவிடும் தொள்ளைக் காது.
**விடுகாலி** – பட்டிமாடு; கட்டுக்கடங்காதவர்.
**விடுகுதிரை** – பகைவர்மேல் விடுங் குதிரைப் பொறி.
**விடுத்தம்** – தடவை; எட்டிமரம்.
**விடுத்தல்** – அனுப்புதல்; போகவிடுதல்; பந்தம் விடுவித்தல்; நெகிழ்த்துதல்; பிரித்தல்; நீங்குதல்; நீக்குதல்; விலக்குதல்; கைவிடுதல்; நிறுத்துதல்; ஒழித்துவிடுதல்; முடித்தல்; எறிதல்; சொரிதல்; கொடுத்தல்; இசைவுதருதல்; காட்டித்தருதல்; வெளிப்படுத்துதல்; உண்டாக்குதல்; செலுத்துதல்; சொல்லுதல்; வெளிவிடுதல்; வெளிப்படக்கூறுதல்; விவரமாகக்கூறுதல்; விடைகூறல்; விடைபெறுதல்; தங்குதல்.
**விடுத்துவிடுத்து** – அடிக்கடி.
**விடுதருதல்** – கொடுத்தனுப்புதல்; தடையின்றி முன்செல்லுதல்.
**விடுதல்** – நீங்குதல்; நீக்குதல்; விலக்குதல்; பிரித்தல்; கைவிடுதல்; போகவிடுதல்; அனுப்புதல்; பந்தம் விடுத்தல்; நிறுத்துதல்; ஒழித்துவிடுதல்; முடித்தல்; வெளிவிடுதல்; செலுத்துதல்; எறிதல்; சொரிதல்; கொடுத்தல்; சொல்லுதல்; வெளிப்படக் கூறுதல்; விவரமாகக்கூறுதல்; இசைவளித்தல்; காட்டித்தருதல்; வெளிப்படுத்துதல்; பிரிதல்; புதிர் விள்ளுதல்; கட்டு அவிழ்தல்; மலர்தல்; உண்டாக்குதல்; மிகுதல்; தங்குதல்; தவிர்தல்; பிளந்திருத்தல்; பலம் குறைதல்; அறுபடுதல்; விலகுதல்; துணைவினை; விடுதலை.
**விடுதலம்** – நிலாமுற்றம்; பொதுமக்களின் பயன்பாட்டுக்காக விடப்பட்ட காலிநிலம்.
**விடுதலை** – சுதந்தரம்; ஓய்வு; பந்தநீக்கம்.
**விடுதலைப்பத்திரம்** – சொத்தில் உரிமையில்லை என்பதை உறுதிப்படுத்தும் ஆவணம்.
**விடுதி** – தங்குமிடம்; காலிநிலம்; தனித்தது; ஆணை.
**விடுதிப்பூ** – காண்க: **விடுபூ**.
**விடுதியாள்** – வேலையில்லாதவன்; குடும்பபாரமில்லாத தனித்த ஆள்.
**விடுது** – ஆலம் விழுது; தூக்குருண்டை; ஆழம் பார்ப்பதற்காக ஒரு முனையில் ஈயவுருண்டை கட்டிய கயிறு.
**விடுதுறை** – படிக்கும்போது நிறுத்துமிடம்.
**விடுதோல்** – மேற்றோல்.
**விடுந்தலைப்பு** – சீலையின் முன்றானை.
**விடுநகம்** – கிட்டிக்கோல்.
**விடுநாண்** – அரைஞாண்.
**விடுநிலம்** – தரிசுநிலம்.
**விடுப்பு** – நீக்கம்; விடுமுறை; துருவியறியுந் தன்மை; விநோதமானது; விருப்பம்.
**விடுபடுதல்** – நீக்கப்படுதல்; விடுதலையடைதல்.
**விடுபடை** – எறியப்படும் படை.
**விடுபதி** – மருமகன்.
**விடுபாட்டு** – தனிப்பாடல்.
**விடுபூ** – தொடுக்காத பூ.
**விடுமலர்** – மலர்ந்த பூ.
**விடுமுறை** – ஓய்வுநாள்.
**விடுவாய்** – காண்க: **விடப்பு**.
**விடுவாய்செய்தல்** – அரிதல்.
**விடுவிடெனல்** – சுறுசுறுப்பாயிருத்தற் குறிப்பு; அச்சக்குறிப்பு; சினத்தற்குறிப்பு.
**விடுவித்தல்** – விடுதலைசெய்தல்; உட்பொருளைக் கூறுதல்.
**விடுசி** – அம்பு.

**விடேல்விடேலெனல்** – ஈரடுக்கொலிக்குறிப்பு.
**விடேலெனல்** – ஓசைக்குறிப்பு.
**விடை** – பதில், எதிர்மொழி; இசைவு; காண்க: **விடைக்கோழி**; அசைவு; மிகுதி; வருத்தம்; எருது; இடபராசி; எருமைக்கடா; மரையின் ஆண்; ஆட்டுக்கடா; வெருகு; தோட்டா; குதிரை; இளம்பாம்பு.
**விடைக்கந்தம்** – செம்மணித்தக்காளி.
**விடைக்குறி** – எருதுமுத்திரை.
**விடைக்கொடி** – ஏற்றுக்கொடி.
**விடைக்கொடியன்** – ஏற்றுக்கொடியையுடைய சிவபிரான்.
**விடைக்கோழி** – தாயைவிட்டுப் பிரிந்து திரியக் கூடிய பருவத்துள்ள கோழிக்குஞ்சு.
**விடைகொடுத்தல்** – அனுமதியளித்தல்; மறுமொழி பகர்தல்.
**விடைகொள்ளுதல்** – வெளியேற ஆணைபெறுதல்; வந்துசேர்தல்.
**விடைகோள்** – காண்க: விடைதழால்.
**விடைத்தல்** – வேறுபடுத்துதல்; அடித்தல்; கண்டித்தல்; வெளிப்படுத்துதல்; மிகுதல்; கடுகுதல்; தடுத்தல்; வருந்துதல்; சோர்தல்; விம்முதல்; பெருஞ்சினங்கொள்ளுதல்; வலிப்புக்கொள்ளுதல்; விறைத்துநிற்றல்; செருக்குக்கொள்ளுதல்.
**விடைதல்** – சினங்கொள்ளுதல்; பிரிதல்; குற்றஞ் சொல்லுதல்.
**விடைதழால்** – கோபம் மூட்டிவிடப்பட்ட ஏற்றினைத் தழுவிப்பிடிக்கை.
**விடைப்பாகன்** – சிவபிரான்.
**விடைப்பு** – வேறுபடுத்துகை; கோபங்காட்டுகை; கருவம்; குற்றம்; நீக்குகை.
**விடைமுகன்** – நந்தி.
**விடைமுரிப்பு** – எருத்தின் திமில்.
**விடையம்** – காட்சிப்பொருள்; காரியம்; நூல் நுதலிய பொருள்; ஒரு நாடு; காண்க: **அதிவிடையம்.**
**விடையவன்** – சிவபிரான்; வருணன்.
**விடையன்** – சிவபிரான்; காமுகன்.
**விடையாற்றி** – விடாயாற்றியின் மரூஉ; திருவிழாவையடுத்து இளைப்பாற்றலாகக் கோயிலுக்குள் நடைபெறும் விழா.
**விடையாயம்** – பசுக்கூட்டத்திடையே காளைகள் இருத்தல்; ஏற்றையுடைய ஆனிரை.
**விடையில்அதிகாரி** – அரசாணை விடுக்கும் அதிகாரி.
**விடையுச்சன்** – சந்திரன்.
**விடையூர்தி, விடையோன்** – காளையை ஊர்தியாகவுடைய சிவபிரான்.

**விண்** – வானம்; மேலுலகம்; மேகம்; காற்றாடிப் பட்டத்தின் ஒரு கருவி.
**விண்கொள்ளி** – விண்ணினின்று விழும் நட்சத்திரம்போன்ற சுடர்.
**விண்கோ** – இந்திரன்.
**விண்டல்** – மூங்கில்.
**விண்டலம்** – வானம்; மேலுலகம்.
**விண்டவர்** – பகைவர்.
**விண்டாண்டு** – ஊஞ்சல்.
**விண்டார்** – காண்க: **விண்டவர்.**
**விண்டு** – திருமால்; அறநூல் பதினெட்டனுள் ஒன்று; வானம்; மேலுலகம்; மேகம்; மலை; மூங்கில்; காற்று; தாமரை; செடிவகை.
**விண்டுசித்தன்** – காண்க: **விட்டுசித்தர்.**
**விண்டுநதி** – ஆகாயகங்கை, சுரநதி.
**விண்டுபதம்** – வானம்.
**விண்டேர்** – கானல்.
**விண்ணகர்** – வைகுந்தம்; காண்க: **விண்ணகரம்.**
**விண்ணகரம்** – திருமால்கோயில்; தஞ்சாவூரில் ஒப்பிலியப்பன் கோயில் என வழங்கப்படும் விட்டுணுத்தலம்.
**விண்ணதிர்ப்பு** – இடிமுழக்கம்.
**விண்ணப்பம்** – வேண்டுகோள்; பணிவுடன் கேட்குதல்; மன்றாட்டம்; பெரியோர்முன் பணிந்து கூறும் அறிவிப்பு; கடவுளின் திருமுன்பு பாசுரம் முதலியன ஓதுகை; மனு.
**விண்ணப்பித்தல்** – பெரியோர்முன் பணிந்தறிவித்தல்; பாசுரங்களைக் கடவுள்முன்பு ஓதுதல்; மனுச்செய்தல்.
**விண்ணல்** – காண்க: **காவட்டம்புல்.**
**விண்ணவன்** – அருகன்; தேவன்.
**விண்ணவிணைத்தல்** – மிக்க ஒளியால் கண் தெறித்தல்.
**விண்ணாங்கு** – ஒரு மரவகை.
**விண்ணாணம்** – விஞ்ஞானம்; அறிவு; நாகரிகம்; விரகு; பகட்டு.
**விண்ணு** – திருமால்.
**விண்ணுலகம், விண்ணுலகு** – துறக்கம், மேலுலகம்.
**விண்ணெனல்** – ஓசைக்குறிப்பு; கண் முதலியன தெறித்தற்குறிப்பு; விரைவுக்குறிப்பு; வெளியாதற்குறிப்பு; இறுகியிருத்தற்குறிப்பு.
**விண்ணேறு** – இடி.
**விண்ணோர்** – தேவர்.
**விண்பகல்** – காண்க: **விண்டல்.**
**விண்மணி** – காண்க: **வான்மணி.**
**விண்மீன்** – உடு.
**விண்முழுதாளி** – இந்திரன்.
**விண்விண்ணெனல்** – யாழ்நரம்பு முதலியன ஒலித்தற்குறிப்பு; புண் முதலியன தெறித்து நோவெடுத்தற்குறிப்பு.

**விண்விணைத்தல்** – காண்க: **விண்ணவிணைத்தல்.**

**விண்வீழ்கொள்ளி** – விண்ணினின்று விழும் உடுப் போன்ற சுடர்.

**வித்தகம்** – அறிவு; கல்வி; பொன்; காண்க: **சின்முத்திரை;** திறமை; திருத்தம்; வியப்பு; பெருமை; நன்மை; வடிவின் செம்மை; சிற்பம் முதலிய சிறந்த கைத்தொழில்.

**வித்தகன்** – வியத்தகு தன்மையுடையவன்; வல்லவன்; வைரவன்; கம்மாளன்; தூதன்; இடையன்; பேரறிவாளன்.

**வித்தம்** – அறிவு; பொருள்; பொன்; பேறு; பழிப்பு; கூட்டம்; காண்க: **வித்தாயம்.**

**வித்தரித்தல்** – பெருக்குதல்; விரித்துச்சொல்லுதல்.

**வித்தன்** – பண்டிதன்; அறிஞன்; பிறருக்குதவுவோன்; ஈடுபாடுடையவன்; தவசி.

**வித்தாண்மை** – புலமை.

**வித்தாயம்** – சூதிற் சிறுதாயம்.

**வித்தாரகவி** – விரித்துப் பாடப்பெறும் பாட்டு; விரிவாகப் பாடும் நூல்; வித்தாரகவி பாடுவோன்.

**வித்தாரம்** – விரிவு; விரிவாகப் பாடும் நூல்; சிற்ப நூல் முப்பத்திரண்டனுள் ஒன்று; விற்பன்னம்.

**வித்தாரி** – நயம்படப் பேசுபவன்; அறிஞன்.

**வித்தியர்** – கம்மாளர்.

**வித்தியாகலை** – ஆன்மாக்களுக்கு அனுபவ ஞானத்தைத் தரும் சிவசத்தி.

**வித்தியாசம்** – வேறுபாடு.

**வித்தியாசாலை** – கல்விகற்குஞ்சாலை.

**வித்தியாதத்துவம்** – சுத்தாசுத்த தத்துவம் ஏழனுள் ஆன்மாக்களுக்குப் பகுத்தறிவைத் தரும் தத்துவம்.

**வித்தியாதரர்** – ஒருவகைத் தேவசாதியார்.

**வித்தியாபாரகன்** – கல்வியைக் கரைகண்டவன்.

**வித்தியார்த்தி** – கல்விகற்போன்.

**வித்தியாலயம்** – காண்க: **வித்தியாசாலை.**

**வித்தியாவினோதன்** – கல்வியால் பொழுது போக்குவோன்.

**வித்தீரணம்** – பரப்பு.

**வித்து** – மரஞ்செடிகொடிகள் முளைக்கக் காரணமாயிருக்கும் விதை; விந்து; மரபுவழி; வழித்தோன்றல்; சாதனம்; காரணம்.

**வித்துத்தெளித்தல்** – விதையைத் தூவுதல்.

**வித்துதல்** – விதைத்தல்; பரப்புதல்; பிறர் மனத்துப் பதியவைத்தல்.

**வித்துரு** – பவளம்; மின்னல்.

**வித்துருமம்** – பவளம்; இளந்தளிர்.

**வித்துவசனம்** – புலவர் குழு.

**வித்துவஞ்சம்** – இகழ்ச்சி; வெறுப்பு; பகை.

**வித்துவமுத்திரை** – அறிஞர் பட்டம்.

**வித்துவாமிசன்** – புலவன்; பேரறிஞன்.

**வித்துவான்** – புலவன்; அறிஞன்.

**வித்துவேடணம், வித்துவேடணை** – எண்வகைச் செயலுள் ஒன்றான பகைத்தல்.

**வித்துவேடம்** – பகைமை.

**வித்தெறிதல்** – விதைவிதைத்தல்.

**வித்தை** – கல்வி; அறிவு; மாயவித்தை; ஆன்மாவுக்குப் பேரறிவைக் கொடுக்கும் தத்துவம்; காண்க: **இச்சாசத்தி;** நடைமுறைப்படுத்தத் தக்கது; நால்வேதம், ஆறங்கம், மீமாஞ்சை, தருக்கம், தருமநூல், புராணம் என்னும் பதினான்கு நூல்கள்.

**வித்தைக்கவி** – செய்யுளிலக்கண முதலியன கற்றுக் கவிபாடுவோன்.

**வித்தைக்காரன்** – சாலவித்தை செய்வோன்; விரகன்.

**வித்தைக்கோள்** – புதன்.

**விதண்டம்** – காண்க: **விதண்டை.**

**விதண்டவாதி** – விதண்டைசெய்பவன்.

**விதண்டாவாதம், விதண்டை** – பிறர் கூறுவதை மறுத்துத் தன் கொள்கையை நாட்டாது வீணே கூறும் வாதம்; பகை.

**விதத்தல்** – மிகுதல்; சிறப்பித்துரைத்தல்.

**விததி** – கூட்டம்; வரிசை; பரப்பு; விரிவு.

**விதந்து** – கைம்பெண்.

**விதந்தோதுதல்** – சிறப்பாக எடுத்துச் சொல்லுதல்.

**விதப்பு** – காண்க: **விதந்தோதுதல்; விதப்புவிதி;** விவரம்; வியப்பு; மதிலுறுப்பு; மிகுதி; விரைவு; நடுக்கம்; ஆசை.

**விதப்புக்கிளவி** – மிகைமொழி, சிறப்பித்துச் சொல்லும் மொழி.

**விதப்புவிதி** – சிறப்புவிதி.

**விதம்** – மாதிரி; வகை; வழிவகை; சூத்திரம்.

**விதர்க்கணம்** – சூழ்தல்; உரையாடல்.

**விதர்க்கம்** – எண்ணம்; காண்க: **மனோமயம்;** ஐயம்; ஆராய்வு; நியாயம்.

**விதர்ப்பு** – அச்சம்; நெருக்கம்; போர்; வெற்றி.

**விதரணம்** – கொடை; இரக்ககுணம்; திறமை; அறிவுக்கூர்மை.

**விதரணன்** – கொடையாளன்; சொல்வன்மையுள்ளவன்; கூரிய அறிவுடையவன்.

**விதரணிகன்** – கொடையாளன்.

**விதரணை** – கொடை; இரக்ககுணம்; விவேகம்; திறமை.

**விதரம்** – பிளப்பு.

**விதலம்** – கீழேழ் உலகங்களுள் ஒன்று.

**விதலை** – நடுக்கம்; நிலம்.

**விதலையாப்பு** – செய்யுளின் முதலும் இடையும் கடையும் பொருள்கொள்ளும் முறை.
**விதவிடுதல்** – சிறப்பித்துரைத்தல்.
**விதவை** – கைம்பெண்; சோறு; கூழ்; குழம்பு; குழைகை; கைம்மணி.
**விதறு** – நடுக்கம்.
**விதறுதல்** – நடுங்குதல்; பதறுதல்.
**விதனம்** – துன்பம்; மனத்துயர்; ஏழுவகைக் குற்றம்; களைப்பு; உடல்நோவு.
**விதனித்தல்** – துயருறுதல்.
**விதாகம்** – உறைப்பு; வெப்பம்.
**விதாதா** – பிரமன்; அருகன்.
**விதாதிரு** – பிரமன்; விதி; காமன்.
**விதாயகம்** – விதிப்பது; முடிவு.
**விதாரகம்** – கிணறு.
**விதாரணம்** – பிளத்தல்; கிழித்தல்; கொல்லல்; போர்.
**விதாரம்** – காண்க: முள்ளிலவு; சூழ்தல்; ஆராய்ச்சி; கவலை.
**விதாவிதம்** – பலவிதம்.
**விதானம்** – மேற்கட்டி; தொகுதி; வேள்வி; மந்தம்; பயனின்மை; ஒய்வு; விரிவு; சட்டம்; விதிக்கை; ஏற்பாடு; கற்பித்துக்கொள்ளுகை; செய்கை; ஒழுங்கு; மாதிரி; ஊழ்; பேறு; செல்வம்; விரகு; வணக்கம்; வன்மம்; ஒரு பண்; யானை; உணவு.
**விதி** – சட்டம்; தீர்ப்பு; விதித்தன செய்க என்னும் ஆணை; கட்டளை; கடமை; ஒழுக்கமுறை; அமைக்குமுறை; நீதி; ஊழ்; பிரமன்; காசிபன்; திருமால்; காலம்; நல்வினைப்பயன்; பயன்; பேறு; செல்வம்; இயல்பு; உண்மை; அறிவு; செய்தொழில்; குதிரை முதலியவற்றின் உணவு.
**விதிக்கு** – கோணத்திசை.
**விதிச்சூத்திரம்** – இன்னதற்கு இது என்று முன்னில்லாததை மொழியும் சூத்திரம்.
**விதித்தல்** – செய்யுமாறு ஏவுதல்; தண்டம் முதலியன அமைத்தல்; உண்டாக்குதல்; செய்தல்; உறுதிப்படுத்தல்.
**விதித்தோன்** – நான்முகன்; கடவுள்.
**விதிதம்** – வெளிப்படை.
**விதிப்பு** – விதிக்கை; நூலில் விதித்துள்ள முறை.
**விதிபாதம்** – யோகம் இருபத்தேழனுள் ஒன்று.
**விதிமுறை** – நெறிப்படி, நியமம்.
**விதியர்** – அமைச்சர்; தந்திரிகள்; கணக்கர்.
**விதியுளி** – வேள்வி; திருமணம்; தூதர்; முறைப்படி.
**விதிர்த்தல்** – நடுங்குதல்; அஞ்சுதல்; சிதறுதல்; தெறித்தல்; அசைத்தல்; உதறுதல்; பலவாகப் போகவிடுதல்; சொரிதல்.
**விதிர்தல்** – நடுங்குதல்.
**விதிர்ப்பு** – அச்சம்; நடுக்கம்; மிகுதி.
**விதிர்விதிர்த்தல்** – நடுங்குதல்; விருப்பங்கொள்ளுதல்.
**விதிரேகம்** – வேறுபாடு; எதிர்மறை; வேற்றுமையணி.
**விதிவசம்** – ஊழ்வலி.
**விதிவத்து** – முறைப்படி; முறையுடையது.
**விதிவிலக்கு** – விதித்தலும் விலக்கலும்; விதிக்கு விலக்கைக் கூறுஞ் சூத்திரம்.
**விதிவினை** – உடன்பாட்டால் முடியும் வினை; ஊழ்.
**விது** – சந்திரன்; திருமால்; பிரமன்; குபேரன்; வாயு; கருப்பூரம்; பாவம்நீக்கச் செய்யும் பலி.
**விதுடன்** – கற்றறிந்தவன்.
**விதுடி** – கற்றவன்; அறிவாளி.
**விதுதமுகம்** – முக அபிநயம் பதினான்கனுள் வேண்டாமைக் குறிப்பாகத் தலையசைக்கும் அபிநயம்.
**விதுப்பு** – நடுக்கம்; விரைவு; பரபரப்பு; வேட்கை.
**விதும்பு** – நடுக்கம்.
**விதும்புதல்** – நடுங்குதல்; விரைதல்; விரும்புதல்.
**விதுரம்** – கலக்கம்; காதலர்பிரிவு.
**விதுரன்** – அறிஞன்; திண்ணியன்; மனைவியை இழந்தவன்; திருதராட்டிரன் பாண்டு இவர் கட்குத் தம்பி.
**விதுலம்** – ஒப்பின்மை.
**விதுலன்** – ஒப்பில்லாதவன்.
**விதுவிதுத்தல்** – மகிழ்ச்சியுறுதல்.
**விதுவிதுப்பு** – குத்துநோய்; நடுக்கம்; விருப்பம்.
**விதூடகக்கூத்து** – நகைவிளைக்கும் ஒரு கூத்து வகை.
**விதூடகன்** – நகைச்சுவை விளைப்போன்.
**விதூடணம்** – பெருநிந்தை.
**விதூரசம்** – வைடூரியம்.
**விதை** – மரஞ்செடிகொடிகள் முளைப்பதற்குக் காரணமாயிருக்கும் வித்து; பீசம்; தன் மாத்திரை; அறிவு; பெருமை.
**விதைத்தல்** – விதை தெளித்தல்; பரப்புதல்; செலுத்துதல்.
**விதைநெல்** – விதைப்பதற்காக வைக்கப்பட்ட நெல்மணி.
**விதைப்புக்காலம்** – விதை தெளிக்கும் பருவம்.
**விதைப்புனம்** – சமன்செய்த புதிய நிலம்.
**விதைமணி** – விதைப்பதற்குரிய தானியம்.
**விதையடித்தல்** – மாடு முதலியவற்றின் விதையை நசுக்குதல்.

**விந்தம்** – விந்தியமலை; குருவிந்தம்; தாமரை; ஒரு பேரெண்; காடு; பச்சைக்கருப்பூரம்; மேலோர்; மரவகை; பாடாணவகை; செம்புளிப்பச்சை.

**விந்தமட்டோன்** – அகத்தியன்.

**விந்தன்** – இடையன்.

**விந்தியம்** – விந்தியமலை.

**விந்தியவாசி, விந்தியவாசினி** – துர்க்கை.

**விந்து** – புள்ளி; துளி; நீர்த்துளி அளவு; சுக்கிலம்; பாதரசம்; வயிரக்குற்றம்; குறி; நெற்றித் திலகம்; நெல்மூக்கு; புருவநடு; வட்டம்; சிவதத்துவம்; சுத்தமாயை; பதினாறு கலையுள் ஒன்று.

**விந்துத்தீ** – காண்க: **காமத்தீ.**

**விந்துவழி** – பிறவிமுறை.

**விந்தை** – சாலவித்தை; கல்வி; துர்க்கை; வெற்றித்திருமகள்; பார்வதி; திருமகள்; அழகு; வியப்பு; ஓரகத்தி; விந்தியமலை.

**விந்தைக்காரன்** – சிற்பி.

**விந்தைமகள்** – திருமகள்.

**வினயம்** – வணக்கம்; மரியாதை; ஒழுக்கம்; நயமொழி; பணிவு; அவையடக்கம்; காண்க: **தேவபாணி;** கட்டளை; விரகு; நன்னடை; தருமம்.

**விநாடி, விநாடிகை** – ஒரு காலநுட்பம்.

**விநாயகசதுர்த்தி** – பிள்ளையாருக்குத் திருவிழாச் செய்யும் ஆவணி மாதத்து வளர்பிறை நாலாம் நாள் விழா.

**விநாயகன்** – கணபதி; அருகன்; புத்தன்; கருடன்; குரு.

**விநாழிகை** – காண்க: **விநாடிகை.**

**விப்பிரகாரம்** – எதிரிடை; தீங்கு; நிந்தை.

**விப்பிரநாராயணர்** – தொண்டரடிப்பொடியாழ்வார்.

**விப்பிரம்** – அழகு; ஐயம்; சுழலுதல்; தவறு.

**விப்பிரமம்** – சுழற்சி; மயக்கம்; மனக்குழப்பம்; குற்றம்; அழகு; மோகலீலை; காமப்பிணக்கு.

**விப்பிரயோகம்** – காதலரின் பிரிவு; வெய்துயிர்த்து இரங்கல்.

**விப்பிரலம்பம்** – வஞ்சகம்; சண்டை; தாமசம்; காதலர் பிரிவு.

**விப்பிரன்** – பார்ப்பனன்.

**விப்பிரியம்** – விருப்பமின்மை.

**விப்பிலவம்** – அநியாயப் போர்; தொல்லை; கலகம்; பொல்லாங்கு.

**விப்புருதி** – புண்.

**விப்புருதிக்கட்டி** – குழந்தைகட்கு அக்குளில் வரும் ஒரு புண்கட்டிவகை.

**விபக்கம்** – எதிர்க்கட்சி; எதிரிடையான கொள்கை; அனுமான உறுப்புள் துணிபொருள் இல்லா இடம்.

**விபக்கன்** – பகைவன்.

**விபகரித்தல்** – வழக்குச்சொல்லல்.

**விபகலிதம்** – கழித்தல்.

**விபகாரம்** – காண்க: **விவகாரம்.**

**விபசாரம்** – தீயநடத்தை; சோரம்போகை.

**விபசாரி** – விலைமகள்; சோரம்போனவள்.

**விபஞ்சி** – வீணைவகை; குறிஞ்சியாழ்த்திறத்துள் ஒன்று.

**விபஞ்சிகம், விபஞ்சிகை** – வீணைவகை.

**விபத்தம்** – எட்டிமரம்.

**விபத்தன்** – குடும்பத்தினின்றும் பிரிந்தவன்.

**விபத்தி** – வேறுபாடு; வேற்றுமை; வேற்றுமையுருபு; காண்க: **விபத்து.**

**விபத்து** – நற்பேறின்மை; வேதனை; சாவு; ஆபத்து; வறுமை; அழிவு.

**விபரம்** – காண்க: **விவரம்.**

**விபரியாசம்** – எதிரிடை; வேறுபாடு.

**விபரீதகாலம்** – கேடு விளைக்குங் காலம்.

**விபரீதஞானம்** – திரிபுணர்ச்சி.

**விபரீதம்** – மாறுபாடு; கைகூடாமை; திரிபுணர்ச்சி; வியப்பு; மிகுதி.

**விபரீதலட்சணை** – காண்க: **எதிர்மறையிலக்கணை.**

**விபரீதவுவமை** – தொன்றுதொட்டு வழங்கும் உவமையைப் பொருளாக்கியும் பொருளை உவமையாக்கியும் உரைக்கும் அணிவகை.

**விபவ** – அறுபதாண்டுக் கணக்கில் இரண்டாம் ஆண்டு.

**விபவம்** – பெருமை; செல்வம்; வாழ்வு; வீடுபேறு; திருமாலின் அவதாரநிலை.

**விபன்னம்** – குற்றம்; மெலிவு.

**விபன்னன்** – துன்பப்பட்டவன்.

**விபாகம்** – பிரிவு; குடும்பச் சொத்தைப் பிரிக்கை; வரையறை செய்த பகுதி.

**விபாகரன்** – சூரியன்.

**விபாடம்** – பிளத்தல்.

**விபாதம்** – உதயகாலம்.

**விபாவரி** – இரவு; பார்வதி.

**விபாவனம்** – ஆராய்ச்சி; தூய்மையின்மை.

**விபாவனை** – காரணமின்றிக் காரியம் பிறந்ததாகச் சொல்லும் அணிவகை; பார்வதி.

**விபினம்** – காடு.

**விபீதகம்** – தான்றிமரம்.

**விபு** – எங்கும் பரவியுள்ளது; கடவுள்; தலைவன்.

**விபுணன்** – வல்லுநன்; சிறந்தோன்; வெற்றியையுடையோன்.

**விபுத்துவம்** – எங்கும் பரவுந்தன்மை.
**விபுதன்** – அறிஞன்; தேவன்; சந்திரன்.
**விபுலம்** – விரிவு; அகலம்; பெருமை; மேரு; இமயமலை; பூமி.
**விபுலை** – பூமி.
**விபூடணம்** – அணிகலன்.
**விபூதி** – திருநீறு; எண்வகைச் சித்தி; சாம்பல்; செல்வம்; பெருமை; கேடுற்ற தசை; ஒரு நரகம்; கொடுமை; குற்றம்; வரிவகை.
**விபூதிபோடுதல், விபூதியிடுதல்** – திருநீறு பூசுதல்; மந்திரித்துத் திருநீறு கொடுத்தல்.
**விபோதம்** – அறிவு.
**விம்பம்** – வடிவம்; நிழல்; எதிரொளி; வட்டம்; விக்கிரகம்; உடல்; ஒளி; கொவ்வைக்கொடி; பாடாணவகை.
**விம்பிகை** – கொவ்வைக்கொடி.
**விம்பித்தல்** – எதிரொளித்தல்.
**விம்மம்** – தேம்பியழுகை; துன்பம்.
**விம்மல்** – காண்க: **விம்மம்**; ஏக்கம்; வீங்குகை; உள்ளப்பூரிப்பு; கலக்கம்; ஒலிக்கை; யாழ்நரம் போசை.
**விம்மாத்தல்** – தேம்பியழுதல்; வருந்துதல்; மகிழ் வுறுதல்.
**விம்மிதம்** – உடல்; அச்சம்; வியப்பு; உவகை.
**விம்மு** – கனம்.
**விம்முதல்** – காண்க: **விம்மாத்தல்**; நிறைதல்; பருத்தல்; மிகுதல்; மலர்தல்; ஒலித்தல்; ஈனுதல்.
**விம்முயிர்த்தல்** – பெருமூச்சுவிடுதல்.
**விம்முறவு** – வருத்தம்.
**விம்முறுதல்** – வருந்துதல்.
**விம்மெனல்** – இறுகியதாதற்குறிப்பு.
**விமர்த்தனம்** – அரைத்துப் பொடிசெய்கை; இடிக்கை; அழிக்கை; பிசைகை; கிரகணம்.
**விமரிசம், விமரிசனம்** – திறனாய்வு, ஆராய்ச்சி; மனனம்; புத்தித்தெளிவு.
**விமரிசை** – காண்க: **விமரிசம்**; பகட்டு; சிறப்பு; பார்வதி.
**விமலம்** – அழுக்கின்மை; வெண்மை; தூய்மை; தெளிவு; சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று.
**விமலன்** – கடவுள்; குற்றமற்றவன், தூயன்; சிவ பிரான்; அருகன்; தீர்த்தங்கரர் இருபத்து நால்வருள் ஒருவர்.
**விமலி** – பார்வதி; காண்க: **குப்பைமேனி**.
**விமலை** – தூய்மையுடையவள்; திருமகள்; கலை மகள்; பார்வதி; துர்க்கை; குற்றமற்றவள்; கங்கை; கோதாவரி.
**விமார்க்கம்** – தீயொழுக்கம்; விளக்குமாறு.
**விமானம்** – வானூர்தி; சந்திரன்ஊர்தி; ஊர்தி; தூண்; ஏழடுக்கு மெத்தையுள்ள மாளிகை; அரண்மனை; தேவர்கோயில்; தேவலோகம்; உரோகிணிநாள்.
**விமானவாயில்** – கோயில்வாயில்.
**விமோசனம்** – நீங்குகை.
**விய** – அறுபதாண்டுக் கணக்கில் இருபதாம் ஆண்டு.
**வியக்கம்** – பெருமை.
**வியக்களை** – குடிக்கூலி.
**வியங்கம்** – இயற்கையான குற்றம்; பிறவிக் குறை; தவளை.
**வியங்கியம்** – குறிப்புப்பொருள்; குத்தலான பேச்சு.
**வியங்கொள்ளுதல்** – ஏவலைக் கொள்ளுதல்; செலுத்துதல்.
**வியங்கோள்** – ஏவல்; வினைமுற்றுவகை.
**வியஞ்சகம்** – விளங்கும்படி செய்கை; விளக்குங் கருவி; குறிப்புப்பொருள்; அபிநயம்.
**வியஞ்சனம்** – மெய்யெழுத்து; உணவுக்குரிய கறிகள்; அடையாளம்; கறிக்குதவும் பொருள் கள்; குறிப்பில் பொருளுணர்த்தும் சொல் லினது ஆற்றல்.
**வியட்டி** – தனிப்பட்டது.
**வியட்டிரூபம்** – பருவுடல்.
**வியத்தம்** – வெளிப்படை; புலன்களுக்குத் தெரிவது.
**வியத்தல்** – செருக்குறுதல்; அதிசயப்படல்; நன்கு மதித்தல்; பாராட்டுதல்; கொடுத்தல்; கடத் தல்.
**வியத்திகை** – பெருமை.
**வியதிபாதம்** – யோகம் இருபத்தேழனுள் ஒன்று.
**வியதிரேகம்** – வேறுபாடு; எதிர்மறை; உடனில் லாத நிலை; வேற்றுமையணி.
**வியந்தம்** – பண்வகை.
**வியந்தரம்** – பிசாசு.
**வியநெறி** – பெரும்பாதை.
**வியப்ப** – ஓர் உவம வாய்பாடு.
**வியப்பணி** – ஒரு பயனைக் கருதி அதற்கு மாறாகிய முயற்சிசெய்வதாகக் கூறும் அணி.
**வியப்பம்** – வியப்பு.
**வியப்பு** – அதிசயம்; வியப்பணி; பாராட்டு; மேம் பாடு; அளவு; சினம்; சினக்குறிப்பு.
**வியபிசாரம்** – கற்புநெறி தவறுதல்; சாத்திய மில்லாதவிடத்து ஏது விருப்பதாகிய ஏதுப் போலி.
**வியபிசாரி** – கற்புநெறி தவறியவள்.
**வியம்** – ஏவல்; உடல்; போக்கு; வழி; ஒற்றைப் படை எண்; சமமற்றது; முருட்டுத்தன்மை; வேறுபாடு; விரிவு; உயரம்; பறவை.

**வியமம்** – பாராட்டத்தக்கது.
**வியயம்** – பயணச்செலவு.
**வியர்** – உடலின் மேற்புறத்துத் தோன்றும் நீர்த் துளி; இளைப்பு.
**வியர்த்தம்** – பயனின்மை; பொருளின்மை.
**வியர்த்தல்** – பொறாமை முதலியவற்றால் மனம் புழுங்குதல்; கோபித்தல்; உடலின் மேற் புறத்துத் தோன்றும் நீர்த்துளி.
**வியர்ப்பு** – வியர்வை; சினம்; சினக்குறிப்பு.
**வியர்வு(வை)** – உடலின்மீது நீர்த்துளி உண்டா தல்; சினக்குறிப்பு.
**வியல்** – பெருமை; அகலம்; மிகுதி; பொன்; காடு; மரத்தட்டு; பலதிறப்படுகை.
**வியல்பூதி** – வில்வம்.
**வியலகம்** – பூமி.
**வியலிகை** – பெருமை.
**வியலிடம்** – பூமி; அகலம்.
**வியலுள்** – அகன்ற இடம்.
**வியவகரித்தல்** – பேசுதல்; வாதம்செய்தல்.
**வியவன்** – ஏவல் செய்வோன்; ஏவுவோன்; தலைவன்; திண்ணியன்; வழிச்செல்வோன்.
**வியவு** – வேறுபாடு.
**வியன்** – வானம்; பெருமை; சிறப்பு; வியப்பு; அகலம்; எண்ணின் ஒற்றை.
**வியனிலைவஞ்சி** – மூச்சீரடி வஞ்சிப்பா.
**வியனுலகம்** – பரந்த உலகம்; தேவலோகம்.
**வியாக்கியானம்** – உரை.
**வியாக்கியானி** – உரையாசிரியன்.
**வியாக்கிரம்** – புலி.
**வியாக்கிராசனம்** – புலித்தோலால் ஆன இருக்கை.
**வியாக்கினம்** – விளக்கவுரை.
**வியாகரணம்** – கலைஞானம் அறுபத்து நான்கனுள் ஒன்றான இலக்கணம்; வேதாங்கம் ஆறனுள் ஒன்றான வடமொழியிலக்கணம்.
**வியாகுலம்** – வருத்தம்; துக்கம்; கவலை; மயக்கம்.
**வியாகுலித்தல்** – துயரப்படுதல்.
**வியாத்தி** – எங்கும் நிறைந்திருத்தல்; பரந்திருத் தல்; முறையான உடனிகழ்ச்சி.
**வியாத்திரன்** – தொழில்நடத்துவோன்.
**வியாத்துவம்** – எங்கும் இருக்குந்தன்மை.
**வியாதம்** – வேறுபாடு.
**வியாதன்** – வேடன்; கீழ்மகன்; வியாசன்.
**வியாதி** – நோய்; பெருநோய்.
**வியாப்தம்** – பரந்திருக்கப்பட்டது.
**வியாப்தி** – எங்குமிருக்கை; பரந்திருக்கை; முறையான உடனிகழ்ச்சி.
**வியாபகத்துவம்** – நிறைந்திருத்தல்.
**வியாபகம்** – எங்கும் நிறைந்த தன்மை; பரவி யிருக்குந் தன்மை.
**வியாபகன்** – எங்கும் இருப்பவனாகிய கடவுள்; எங்கும் அறியப்பட்டவன்.
**வியாபகி** – எங்கும் வியாபிக்குஞ் சிவசத்தி.
**வியாபரித்தல்** – தொழிற்படுதல்; சொல்லுதல்; நன்கொடை திரட்டுதல்.
**வியாபாதம்** – நன்கொடை திரட்டுதல்; வஞ்சகம்.
**வியாபாரம்** – வாணிகம்; தொழில்.
**வியாபாரி** – வாணிகன்.
**வியாபி** – எங்கும் நிறைந்தது.
**வியாபித்தல்** – எங்கும் பரந்து நிறைந்திருத்தல்.
**வியாமம்** – நான்குமுழ அளவு.
**வியாமோகம்** – பெருமோகம்.
**வியாயாமம்** – உடற்பயிற்சி.
**வியாழக்குறிஞ்சி** – குறிஞ்சி யாழ்த்திறத்துள் ஒன்று.
**வியாழம்** – காண்க: வியாழன்.
**வியாழவட்டம்** – வானமண்டலத்தில் குருவின் பன்னிரு ஆண்டுச் சுற்று; வியாழக்கிழமை தோறும்.
**வியாழன்** – தேவகுரு; ஒரு கோள்; வியாழக் கிழமை.
**வியாளம்** – புலி; பாம்பு; கெட்ட குணமுள்ள யானை; ஒரு விலங்கு.
**வியானன்** – உடல் வாயுக்களில் ஒன்றான இரத்த ஓட்டத்தை உண்டாக்கும் வாயு.
**வியூகபேதம்** – படை அணி முறிதல்.
**வியூகம்** – படைவகுப்பு; திரள்; விலங்கின் கூட்டம்.
**வியோகம்** – சாவு; பிறவிநீக்கம்; பிரிவு.
**வியோமம்** – வானம்.
**விரக்தி** – காண்க: விரத்தி; துறவு; வெறுப்பு.
**விரகநோய்** – காதலர்க்குப் பிரிவாலுண்டாகும் துன்பம்.
**விரகம்** – பிரிவு; உலர்த்துகை; காதலர்க்குப் பிரிவாலுண்டாகும் துன்பம்; காமம்.
**விரகவேதனை** – காண்க: **விரகநோய்.**
**விரகன்** – திறமைமிக்கவன்; வல்லவன்; அறிஞன்; சுற்றத்தான்.
**விரகு** – வழிவகை; திறமை; தந்திரம்; சூழ்ச்சி; விவேகம்; ஊக்கம்; தின்பண்டம்.
**விரசம்** – வெறுப்பு; நிந்தை.
**விரசுதல்** – செறிதல்; பொருந்துதல்; மிகவும் விரைவுபடுத்துதல்; சொல்லால் கடிந்து வெருட்டுதல்.
**விரசை** – வைகுண்டலோகத்திலுள்ள ஆறு; தருப்பை; மாட்டுத்தொழுவம்.
**விரட்டுதல்** – அச்சுறுத்துதல்; துரத்துதல்; விரைவு படுத்துதல்.

**விரணம்** – புண்; காயம்; புண்கட்டி; சிலந்திப் புண்; பகைமை; முரிவு; புல்வகை.
**விரத்தம்** – துறவு; வெறுப்பு.
**விரத்தன்** – உலகப்பற்றில்லாதவன்; வெறுப்புள்ளவன்; தவசி; மணமின்றி யிருப்பதாக உறுதி செய்துகொண்டவன்.
**விரத்தி** – உலகப்பற்றில்லாதவள்; தவத்தி; வெறுப்பு; பற்றின்மை; மணமின்றியிருப்பதாக உறுதி செய்துகொண்டவள்.
**விரதங்காத்தல்** – நோன்பு மேற்கொண்டொழுகுதல்.
**விரதம்** – நோன்பு; உறுதி; தவம்; அருவருப்பு; ஒழிகை.
**விரதம்பிடித்தல்** – பட்டினிகிடத்தல்.
**விரதன், விரதி** – நோன்பு மேற்கொண்டோன்; பிரமசாரி; துறவி.
**விரயம்** – செலவு; மிகுசெலவு; பேதியாதல்.
**விரல்** – கைகால்களின் இறுதியில் ஐந்தாகப் பிரியும் உறுப்பு; விரல் அகலமுள்ள அளவு.
**விரல்நொடி** – விரலைச் சொடுக்குகை.
**விரலணி** – மோதிரம்.
**விரலம்** – காண்க: **விரளம்.**
**விரலாழி** – மோதிரம்.
**விரலி** – மஞ்சள்; வெள்ளரி.
**விரலேறு** – ஒரு தோற்கருவி.
**விரவல்** – கலத்தல்.
**விரவலர், விரவார்** – பகைவர்.
**விரவு** – கலப்பு.
**விரவுத்திணை** – உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொதுவாகவருஞ் சொல்லின் திணை.
**விரவுதல்** – கலத்தல்; அடைதல்; ஒத்தல்; பொருந்துதல்; நட்புக்கொள்ளுதல்.
**விரவுப்பெயர்** – பொதுப்பெயர்.
**விரளம்** – செறிவின்மை; இடைவெளி; அவகாசம்; அருமை.
**விரளல்** – நெருக்கம்.
**விரற்க(கி)டை** – ஒரு விரல் அகலமுள்ள அளவு.
**விரற்சாடு** – விரலுறை.
**விரற்செறி** – நெளிமோதிரம்.
**விரற்புட்டில்** – விரலுறை.
**விரற்பூண்** – காண்க: **விரலாழி.**
**விரனெரித்தல்** – பெருந்துயரத்தால் விரல்களை நெரித்தல்.
**விராகம்** – பற்றின்மை.
**விராகன்** – பற்றில்லாதவன்; அருகன்; கடவுள்.
**விராகு** – காண்க: **விராகம்.**
**விராட்டு** – பரப்பிரமம்; ஓரடியுள் இரண்டெழுத்துக் குறைந்து சீரொத்துவரும் செய்யுள்; புள்ளரசு; ஓர் அரசன்.
**விராட்புருடன்** – பிரபஞ்ச ரூபமான பரப்பிரமம்.
**விராதம்** – கைவேலை; தடை; நாட்கூலிவேலை.
**விராதனன்** – கொலைஞன்.
**விராமம்** – முடிவு; தூக்கு; ஒற்றெழுத்து; இளைப்பாறுகை; ஓய்வுநாள்.
**விராய்** – விறகு; பூச்செடிவகை; தளவாடம்.
**விரால்** – காண்க: **வரால்.**
**விராலம்** – பூனை.
**விராவுதல்** – காண்க: **விரவுதல்.**
**விரி** – விரிந்த அளவு; விரித்தல்; பொதியெருதின் மேலிடுஞ் சேணம்; திரை; விரியன்பாம்பு; காட்டுப்புன்னை; விரிக்கும் கம்பளம் முதலியன.
**விரிகாங்கூலம்** – நிருத்தக்கைவகை.
**விரிகுளம்பு** – பிளவுபட்ட காற்குளம்பு.
**விரிகொம்பு** – விலங்கின் பரந்த கொம்பு.
**விரிச்சி** – வாய்ச்சொல்லாகிய நன்னிமித்தம்.
**விரிச்சிகன்** – கதிரவன்; நிமித்தங் கூறுவோன்.
**விரிச்சிநிற்றல், விரிச்சியோர்த்தல்** – நற்சொற் கேட்க விரும்பி நிற்றல்.
**விரிசல்** – பிளவு; அலை; காண்க: **விரியல்.**
**விரிசிகை** – முப்பத்திரண்டு கோவையுள்ள மாதர் இடையணி.
**விரிஞ்சன், விரிஞ்சனன்** – பிரமன்.
**விரிஞ்சி** – பிரமன்; சித்திரான்னவகை.
**விரித்தல்** – விரியச்செய்தல்; விளக்கியுரைத்தல்; பரப்புதல்; கூந்தல் முதலியவற்றை அவிழ்த்து நெகிழவிடுதல்; செய்யுள்விகாரம் ஒன்பதனுள் சொல்லிடையே எழுத்துத் தோன்றுவது; நூல் யாப்பு நான்கனுள் முன்னூலில் தொகுத்துக் கூறப்பட்டதனை விளங்குமாறு விரித்துக் கூறுவது.
**விரித்துரை** – அகலவுரை.
**விரிதல்** – மலர்தல்; முற்றுதல்; அவிழ்தல்; பிளவு கொள்ளுதல்; பரத்தல்; தொக்க வேற்றுமை உருபு முதலியன வெளிப்பட விரிதல்.
**விரிதூறு** – புதர்.
**விரிநூல்** – தொகுத்துக் கூறாது விரித்துக் கூறும் நூல்; ஆகமங்கள்.
**விரிப்பு** – விரித்தல்; விரிக்கும் கம்பளம் முதலியன; மலர்த்துகை; மாட்டுக் காய்ச்சல் வகை; பிளப்பு.
**விரிபம்** – சிறுதுகில்.
**விரிமுரண்** – இசைப்பாவகையுள் ஒன்று.
**விரியல்** – பரப்பு; ஒளி; மலர்ச்சி; பூமாலை; தென்னோலையால் முடைந்த தட்டிவகை.
**விரியன்** – ஒரு பாம்புவகை; சிறுமரவகை.
**விரியாப்பு** – களைப்பால் வரும் மயக்கம்.
**விரியுவமம்** – பொதுத்தன்மை விரிந்து நிற்றலுடைய உவமம்.

**விரியோலை** – குருத்து விரிந்து முதிரும் பனையோலை; தென்னோலையால் முடைந்த தட்டி வகை; ஓலைப்பாய்.
**விரிவாக** – தெளிவாக; நிறைய.
**விரிவு** – அகற்சி ; நூலின் விரிவானவுரை; பிளவு.
**விரிவுரை** – சொற்பொழிவு; நூலின் விரிவான உரை.
**விரீஇ** – நெல்.
**விரீகி** – நெல்; அரிசி; காரேலம்.
**விரீடம்** – வெட்கம்.
**விருக்கநாதன்** – அரசமரம்.
**விருக்கம்** – மரம்.
**விருகம்** – செந்நாய்; விலங்கு.
**விருகற்பதி** – வியாழன்.
**விருச்சி** – சிற்றாமணக்கு.
**விருச்சிகம்** – தேள்; இராசி மண்டலத்தின் எட்டாம் பகுதி; கார்த்திகை மாதம்; நண்டு; காண்க: **சாரணை.**
**விருச்சிகன்** – சூரியன்.
**விருசம்** – இஞ்சி; எலி; நறுவிலிமரம்.
**விருசு** – ஆகாயவாணம்; நறுவிலிமரம்.
**விருட்சநாதம்** – காண்க: **விருக்கநாதன்.**
**விருட்சம்** – காண்க: **விருக்கம்.**
**விருட்டி** – மழை.
**விருட்டிணி** – கண்ணபிரான்.
**விருடபம்** – எருது.
**விருடம்** – எருது; எலி; தருமம்; மேன்மை.
**விருடலம்** – உள்ளி; குதிரை.
**விருடாங்கம்** – தாமிரபரணிப் பகுதி.
**விருடியம்** – பருத்திருக்கை.
**விருத்தகங்கை** – பழமையாய ஆறான கோதாவரி.
**விருத்தகிரி** – திருமுதுகுன்றம்; ஒரு சிவதலம்.
**விருத்தசேதனம்** – காண்க: **சுன்னத்துச்செய்தல்.**
**விருத்தம்** – வட்டம்; சொக்கட்டான் ஆட்டத்தில் விழும் தாயவகை; பாவினம் மூன்றனுள் ஒன்று; ஒழுக்கம்; செய்தி; தொழில்; ஒரு சிற்ப நூல்; நிலக்கடம்புச்செடி; ஆமை; வெள்ளெருக்கு; மூப்புப்பருவம்; பழைமை; அறிவு; முரண்; பகைமை; குற்றம்; பொல்லாவொழுக்கம்; இடையூறு; ஏதுப்போலிகளுள் ஒன்று; கூட்டம்.
**விருத்தன்** – முதுமையோன்; மேலோன்; அதிகாரி.
**விருத்தாந்தம்** – வரலாறு; கதை; நிகழ்ச்சி; செய்தி; இயல்பு; விதம்; முழுமை; இளைப்பாறுகை.
**விருத்தாப்பியம்** – முதுமை.
**விருத்தி** – ஒழுக்கம்; இயல்பு; தொழில்; தொண்டு; பிழைப்பு; பிழைப்புக்காக விடப்பட்ட நிலம்; அடிமை; விரிவுரை; உரிய பொருள்; உரிய சொல்; சாத்துவதி, ஆரபடி, கைசிகி, பாரதி என நான்குவகைப்பட்ட நாடக நூலின் நடை; இருக்கை; தூய்மை; வட்டம்; தாயவகை; வளர்ச்சி; இலாபம்; வட்டி; செல்வம்; பெருக்கம்; யோகம் இருபத்தேழனுள் ஒன்று; விவரம்; அபராதம்; வடமொழிச் சந்தி; கருமருதமரம்.
**விருத்திக்கடன்** – வட்டிக்கு வாங்கும் கடன்.
**விருத்திசந்திரன்** – வளர்பிறை.
**விருத்தியன்** – வேலையாள்.
**விருத்தியுரை** – விரிவுரை.
**விருத்திராரி** – விருத்திராசுரனைக் கொன்ற இந்திரன்.
**விருத்தூண்** – புதிய உணவு.
**விருத்தை** – ஐம்பத்தைந்து அகவை கடந்தவள்; கிழவி.
**விருதம்** – வெள்ளெருக்கு.
**விருதர்** – படைவீரர்.
**விருதா** – பயனின்மை; வீணாய்.
**விருதாவன்** – பயனற்றவன்.
**விருது** – பட்டம்; கொடி; வெற்றிச்சின்னம்; மரபுவழி; நோன்பு.
**விருதுகட்டுதல்** – முடிவெடுத்துக்கொள்ளுதல்.
**விருந்தம்** – பூ, பழம் முதலியவற்றின் காம்பு; வேம்பு; பானை முதலியவற்றை வைக்கும் பாதம்; பந்துவர்க்கம்; விலங்கின் கூட்டம்; குவியல்; மனைவி.
**விருந்தனை** – மனைவி.
**விருந்தாட்டு** – விருந்தளிக்கை; ஆண்டுவிழா.
**விருந்தாடி** – காண்க: **விருந்தாளி.**
**விருந்தாரம்** – அழகு; மேன்மை.
**விருந்தாளி** – விருந்தினர்; அதிதி.
**விருந்தாற்றுதல், விருந்திடுதல்** – நண்பர்க்கு உணவளித்துப் போற்றுதல்.
**விருந்தினன்** – புதியவன்; அதிதி.
**விருந்து** – புதியராய் வருபவரை உணவளித்துப் போற்றுதல்; காண்க: **விருந்தினன்;** புதுமை; நூலுக்குரிய எண்வகை வனப்புகளுள் ஒன்று.
**விருந்துக்கூடம்** – விருந்தினரைப் போற்றும் மாளிகைப் பகுதி.
**விருந்துசொல்லுதல்** – விருந்துக்கழைத்தல்.
**விருந்துவைத்தல்** – விருந்தூண் அளித்தல்.
**விருந்தை** – துளசிச்செடி.
**விருந்தோம்பல்** – புதிதாய் வருபவரை உண்டி முதலியவற்றால் போற்றுதல்.
**விருந்தோர்** – புதியவர்.
**விருப்பம்** – ஆசை; அன்பு; பற்று.
**விருப்பன்** – ஆசையுள்ளவன்; அன்புள்ளவன்.

**விருப்பு** – காண்க: **விருப்பம்.**
**விருப்புவெறுப்பு** – வேண்டுதல்வேண்டாமை.
**விருபன்** – வெள்ளெலி.
**விரும்பன்** – காண்க: **விருப்பன்.**
**விரும்புதல்** – ஆசைப்படுதல்; அழுத்தமாய்க் கருதுதல்.
**விருவிருத்தல்** – கடுத்தல்; உறைப்பாயிருத்தல்; சினத்தாற் பரபரத்தல்; காமம் முதலிய வற்றால் உடலூருதல்; விரைதல்.
**விருவிருப்பு** – நஞ்சு முதலியன ஏறுங்குறிப்பு; கடுப்பு; காமம் முதலியவற்றால் உடல் ஊருகை; உறைப்பு; சினத்தால் உண்டாகும் பரபரப்பு; விரைவு.
**விருவிரெனல்** – கடுப்புக்குறிப்பு; காமம் முதலிய வற்றால் உடலூருதற்குறிப்பு; உறைப்பாய் இருத்தற்குறிப்பு; சினத்தால் உண்டாகும் பரப்பரப்புக்குறிப்பு; விரைவுக்குறிப்பு.
**விருளை** – கடிவாளப்பூண்.
**விரூபக்கண்ணன்** – சிவபிரான்.
**விரூபகவுருவகம்** – ஒரு பொருட்குக் கூடாத தன்மைகள் பலவுங் கூட்டிச் செய்யும் உருவகம்.
**விரூபம்** – விகாரவுருவம்; வேற்றுமை.
**விரூபாக்கன்,** **விரூபாட்சன்** } – சிவன்.
**விரேசனம்** – பேதிமருந்து; மலங்கழிகை.
**விரேசித்தல்** – பேதியாதல்.
**விரை** – நறுமணம்; கோட்டம், துருக்கம், தகரம், அகில், சந்தனம் என்னும் ஐவகை மணப் பண்டம்; நறும்புகை; கலவைச்சாந்து; பூந் தேன்; மலர்; விதை; அண்டபீசம்.
**விரைக்கரும்பு** – நடுதற்குரிய கரும்பு.
**விரைக்கால்** – விதைக்குப் பயன்படும் முற்றற் காய்; அண்டபீசம்.
**விரைக்குவிடுதல்** – விதைக்கு உதவுமாறு கொடி மரங்களிற் காய்களை முற்றவிடுதல்.
**விரைக்கொட்டை** – நிலக்கடலைமணி; அண்ட பீசம்.
**விரைக்கோட்டை** – ஒரு கோட்டை விதை விதைத் தற்குரிய நிலவளவு; விதைப்பதற்குரிய தானியத்தை உள்ளடக்கிச் சுற்றிக்கட்டிய வைக்கோற்கட்டு; பீசப்பை.
**விரைகால்** – விதைத்தற்குரிய நிலம்.
**விரைசொல்** – விரைவைக் குறிக்கும் அடுக்குச் சொல்.
**விரைத்தல்** – விதைத்தல்; மணங்கமழ்தல்; பரவச் செய்தல்; திகைத்தல்; மரத்துப்போதல்; குளிர் முதலியவற்றால் நடுங்குதல்; செருக்குக் காட்டுதல்.
**விரைதல்** – வேகமாதல்; அவசரப்படுதல்; ஆத்திரங்காட்டுதல்; மனங்கலங்குதல்.
**விரைதெளித்தல்** – நாற்றுக்காக விதையிடுதல்; அச்சுதந்தெளித்தல்.
**விரைப்பு** – விதைப்பு; காண்க: **விறைப்பு.**
**விரைபோடுதல்** – விதையிடுதல்; செயல் தொடங்குதல்.
**விரையாக்கலி** – சிவபிரானது திருவாணை; சிவபிரானை முன்னிட்டுச் செய்யும் ஆணை.
**விரைவழித்தல்** – நறுமணப்பண்டம் பூசுதல்.
**விரைவாதம்** – விதைவீக்கம்; நீர்ச்சூலை; பீச நோய்வகை.
**விரைவித்து** – விதை.
**விரைவினர்** – வேகமுடையவர்.
**விரைவு** – வேகம்; வெம்மை; போற்றுகை; வேண்டுதல்.
**விரைவைத்தல்** – விதைப்பதற்கு நெல்லைத் தயார்செய்து வைத்தல்.
**விரோசனம்** – காண்க: **விரேசனம்.**
**விரோசனன்** – சூரியன்; சந்திரன்; அக்கினி; பிரகலாதனின் மகன்.
**விரோசினி** – கடுக்காய்வகை.
**விரோதக்காரன்** – பகைவன்.
**விரோதம்** – பகை; மாறுபாடு; காண்க: **விரோத வணி;** இருள்; மயிர்.
**விரோதவணி** – சொல்லாலாவது பொருளாலா வது மாறுபாட்டுத்தன்மை தோன்ற உரைக் கும் அணிவகை.
**விரோதவுவமை** – உவமான உவமேயங்கள் தம்முள் முரண் குணமுடையனவாகச் சொல்லும் உவமைவகை.
**விரோதார்த்தம்** – எதிர்மாறான பொருள்; பிடி வாதமாக எதிர்க்கை.
**விரோதி** – பகைவன்; அறுபதாண்டுக் கணக்கில் இருபத்துமூன்றாம் ஆண்டு.
**விரோதிகிருது** – அறுபதாண்டுக் கணக்கில் நாற் பத்தைந்தாம் ஆண்டு.
**விரோதித்தல்** – பகைத்தல்; முரண்படுதல்; எதிர்த்துநிற்றல்.
**வில்** – அம்பெய்தற்குரிய கருவி; வில்லின் நாண்; காண்க: விற்கிடை; வானவில்; மூலநாள்; ஒளி.
**வில்மாடம்** – வில்போல் வளைந்த கட்டடப்பகுதி.
**வில்யாழ்** – வில்வடிவான யாழ்.
**வில்லகவிரல்** – விற்பிடிப்பில் இணைந்து செறிந்த விரல்.
**வில்லங்கப்படுதல்** – தொந்தரவுக்குட்படுதல்; அடைமானம் முதலிய பந்தகத்துக்குட்படுதல்.
**வில்லங்கம்** – தடை; துன்பம்; வழக்கு; அடை மானம் முதலிய பந்தகம்; வியவகாரம்; சொத் துரிமையில் உள்ள குற்றம்; முட்டுப்பாடு; வலாற்காரம்.

**வில்லடை** – இடையூறு; தடை; பகைமை.
**வில்லண்டம்** – வலாற்காரம்; முட்டுப்பாடு.
**வில்லரணம்** – விற்படையாலாகிய காவல்.
**வில்லவன்** – கரும்புவில்லையுடைய மன்மதன்; விற்கொடியை உடைய சேரன்.
**வில்லாண்மை** – வில்லாற்றல்.
**வில்லார்** – வில்லுடையவர்; வேடர்.
**வில்லாள், வில்லாளன், வில்லாளி** – விற்றொழிலில் வல்லவன்.
**வில்லி** – காண்க: **வில்லாளன்**; மன்மதன்; வீரபத்திரன்; அருச்சுனன்; வேடன்; வில்லிபுத்தூராழ்வார்.
**வில்லிடுதல்** – காண்க: **வில்வீசுதல்.**
**வில்லிமை** – வில்திறமை.
**வில்லியர்** – வேடர்; வில்வல்லோர்; ஒரு சாதியார்.
**வில்லுவம்** – வில்வமரம்.
**வில்லேப்பாடு** – அம்புவிழும் எல்லை.
**வில்லேருழவர்** – வீரர்; வேடர்; பாலைநில மக்கள்.
**வில்லை** – வட்டமாயிருப்பது; மணப்பில்லை; ஒட்டுத்துணி; காதணிவகை; சேவகர் தரிக்கும் வட்டமான உலோகத்தகடு; கோயில்களில் கிடைக்கும் பட்டைச்சோறு.
**வில்வட்டம்** – விற்றொழில்.
**வில்வம்** – மரவகை; பெரியமாவிலிங்கம்.
**வில்வாள்** – ஓர் இரம்பவகை.
**வில்வித்தை** – வில்லிலிருந்து அம்பெய்யும் கல்வி.
**வில்விழா** – விற்போர்; வேடர் தம் சிறுவர்க்கு விற்றொழில் பயிற்றத் தொடங்கும் சடங்கு.
**வில்வீசுதல்** – ஒளிவீசுதல்.
**விலஃகுதல்** – காண்க: **விலக்குதல்.**
**விலக்கடி** – விலக்கத்தக்கது; மாறானது; விலக்காக வுள்ளது; தடை; புறம்பாக்குகை.
**விலக்கணம்** – காண்க: **விலட்சணம்.**
**விலக்கணன்** – சிறப்பியல்புடையவன்.
**விலக்கம்** – விலகியிருக்கை; மாதவிடாய்; ஊரை விட்டு நீங்குகை; வழங்காமல் விலக்குகை; புறம்பாக்குகை.
**விலக்கற்பாடு** – ஒழிபு.
**விலக்கியற்கூத்து** – ஒரு கூத்துவகை.
**விலக்கு** – வேண்டாததென்று ஒதுக்குகை; தனி; சிறப்புவிதி; தடை; வீரன் தன்மேல் வரும் அம்புகளைத் தடுக்கை; மாதவிடாய்; வழு; அணிவகை.
**விலக்குதல்** – விலகச்செய்தல்; கூடாதென்று தடுத்தல்; தடைசெய்தல்; அழுத்துதல்; மாற்றுதல்; வேலையினின்று தள்ளுதல்; நீக்கி விடுதல்; **கண்டனம் செய்தல்**; பிரித்தல்.
**விலக்குருவகம்** – உருவகிக்கப்பட்ட பொருளினிடத்து அத் தன்மை இல்லை என்ற விலக்கோடு கூடிவரும் உருவகவணி.
**விலக்குவமை** – உவமேயத்திற்கு உயர்வு தோன்ற உவமானத்திலே ஒப்புடைமைக்கு விலக்காயுள்ள சில தன்மைகள் புலப்படக் கூறும் அணிவகை.
**விலகுதல்** – நீங்குதல்; பின்னிடுதல்; ஒதுங்குதல்; இடம்விட்டுப் பெயர்தல்; ஒழுங்கு தவறுதல்; ஒளிவிடுதல்; எறிதல்; விட்டு நீங்குதல் பிரிதல்; அசைதல்; செல்லுதல்; தூரத்தில் இருத்தல்; மாதவிடாயாதல்.
**விலங்கரசு** – அரிமா.
**விலங்கரம்** – ஒரு வாளரவகை.
**விலங்கல்** – குறுக்காக வளர்ந்திருத்தல்; மலை; கலங்கனீர்; சுவரிதத்தை அடுத்த அனுதாத் தங்களைச் சேர்த்துக் கூறும்போது உள்ள சுரம்; பண்மாறி நரம்பிசைக்கை.
**விலங்கி** – வேலி.
**விலங்கினர்** – பகைவர்.
**விலங்கு** – குறுக்கானது; மாவும் புள்ளும்; மான்; கைகால்களில் மாட்டப்படுந் தளை; வேறுபாடு; தடை; உயிர்மெய்யெழுத்துகளில் இ, ஈ, உ, ஊ முதலிய உயிர்களைக் குறிக்கும் அடையாளமாக மேலும்கீழும் உள்ள வளைவு; குன்று; உடல்.
**விலங்குதல்** – குறுக்கிடுதல்; மாறுபடுதல்; நீங்குதல்; பின்னிடுதல்; ஒதுங்குதல்; இடம்விட்டுப் பெயர்தல்; பிரிதல்; ஒழுங்கு தவறுதல்; ஒளிவிடுதல்; தடுத்தல்; களைதல்; கொல்லுதல்; அழித்தல்; எறிதல்; செலவிடுதல்.
**விலங்குநர்** – விலகியிருப்பவர்; விலக்குபவர்.
**விலங்குபாய்தல்** – குறுக்குப்பாய்தல்.
**விலங்குபோடுதல்** – கைகால்களில் தளையிடுதல்.
**விலங்கூண்** – விலங்குகட்கு உணவிடும் அறச்செயல்.
**விலட்சணம்** – சிறப்பியல்பு; மேன்மை; இலட்சணத்தோடு கூடாமை.
**விலட்சணன்** – பேரழகன்.
**விலம்** – அகில்; குகை; பள்ளம்; துளை; பொந்து.
**விலம்பம், விலம்பனம்** – தாமதம்; இலயவகை.
**விலயம்** – அழிவு; உலகின் முடிவு.
**விலர்** – மரவகை.
**விலவிலத்தல்** – அச்சத்தால் நடுங்குதல்; மிகவும் வலியிழத்தல்; நெருக்கமின்றியிருத்தல்.
**விலவு, வில** – மார்பின் பக்கம்; காண்க: **விலா வெலும்பு.**

**விலாக்கொடி** – விலாவெலும்பு.
**விலாங்கு** – ஒரு மீன்வகை.
**விலாசம்** – முகவரி, கடிதம் பெற்றுக்கொள்பவரின் பெயர், இருப்பிடம் முதலிய குறிப்பு; அழகு; காமக்குறிப்போடு கூடிய செய்கை; கூச்சம்; நாடகநூல்; வணிகர்களால் பண்டங்களிற் குறிக்கப்படும் விலைக்குறியீடு; அகலம்; வாழை; ஒரு நூல்வகை; மரவகை.
**விலாசனை** – மகளிர் விளையாட்டு.
**விலாசி** – காமன்; சந்திரன்; சிவன்; திருமால்; பாம்பு; தீ.
**விலாசினி** – பெண்; கெட்ட நடத்தை யுடையவள்; விலைமகள்.
**விலாசுதல்** – அழகுற அணிதல்; முற்றுந் தோல்வியுறச் செய்தல்; வலுவாக அடித்தல்.
**விலாடித்தல்** – எண்ணைப் பிரித்தல்; இரட்டைவரி கொடுத்தல்; பலமடங்கு கொடுத்தல்.
**விலாத்தோரணம்** – காண்க: **விலாவெலும்பு.**
**விலாப்புடை** – காண்க: **விலாப்புறம்.**
**விலாப்புடைத்தல்** – உண்ட உணவின் நிறைவால் இருபக்க விலாப்புறமும் வீங்குகை.
**விலாப்புறம்** – மார்பின் பக்கம்.
**விலாபம்** – தூக்கத்தில் அழுதல்; அழுதல்.
**விலாமிச்சை** – ஒரு நறுமணப் புல்வகை.
**விலாய்** – சிரமம்; சண்டை.
**விலாவணை, விலாவம்** – அழுகை.
**விலாவலக்கு** – காண்க: **விலாவெலும்பு.**
**விலாவித்தல்** – அழுதல்.
**விலாவெலும்பு** – மார்பின் பக்கவெலும்பு.
**விலாவொடி** – விலாப்பக்கம் ஒடியும்படி சிரிக்குஞ் சிரிப்பு.
**விலாழி** – குதிரை வாய்நுரை; யானைத் துதிக்கை உமிழ்நீர்.
**விலாளம்** – பூனை; ஆண்பூனை.
**விலை** – விற்பனைத்தொகை; விற்கை; மதிப்பு.
**விலைக்கணிகை, விலைக்காமர்** – காண்க: **விலைமகள்.**
**விலைகட்டுதல்** – பெறுமானத் தொகையை உறுதிப்படுத்துதல்.
**விலைகுறித்தல்** – விலைமதித்தல்.
**விலைகூறுதல்** – பண்டத்தின் விலையைச் சொல்லுதல்; விலையைப் பலமுறையுஞ் சொல்லுதல்.
**விலைகொடுத்துயிர்காத்தல்** – கொல்லப்படும் உயிர்களைப் பணங்கொடுத்து உயிர்மீட்கும் அறச்செயல்.
**விலைகொள்ளுதல்** – விலைக்கு வாங்குதல்; அதிக விலையுடையதாதல்.
**விலைகோள்** – கிரயமதிப்புப் பெறுகை; சிப்பி முத்தின் குணங்களுள் ஒன்று.
**விலைச்சரக்கு** – விலைப்படுத்த வைத்திருக்கும் பண்டம்.
**விலைச்சேரி** – பலபண்டம் விற்குமிடம்.
**விலைசவுத்தல்** – விலைகுறைதல்.
**விலைத்தீட்டு** – விலையாவணம்.
**விலைதீர்த்தல்** – விலையை உறுதிப்படுத்தல்.
**விலைதீர்தல்** – விலை உறுதியாதல்.
**விலைநலப்பெண்டிர்** – பரத்தையர்.
**விலைப்பட்டி** – விற்ற பண்டங்களின் விலைக் குறிப்பு; விற்பனைக் கணக்கு.
**விலைப்படுதல்** – விற்கப்படுதல்.
**விலைப்பண்டம்** – காண்க: **விலைச்சரக்கு.**
**விலைப்பலி** – பயன்கருதித் தெய்வங்கட்கிடும் பலி.
**விலைபெறுதல்** – காண்க: **விலைபோதல்;** மதிப்பு மேம்படுதல்.
**விலைபோதல்** – விலைப்படல்.
**விலைமகள், விலைமாது** – தாசி, பொதுமகள்.
**விலையாட்டி** – பண்டம் விற்பவள்.
**விலையாள்** – அடிமை.
**விலையாளன்** – பண்டம் விற்போன்.
**விலையிடுதல்** – விற்பனைத்தொகை குறித்தல்.
**விலைவன்** – கூலியின்பொருட்டாக ஒன்றைச் செய்பவன்.
**விலைவாசி** – கிரயவளவு.
**விலைவிழுதல்** – கிரயத்தொகை குறைதல்.
**விலைவைத்தல்** – காண்க: **விலைகுறித்தல்.**
**விலோசனம்** – கண்; பார்வை; உட்கருத்து.
**விலோதம்** – பெண்மயிர்; மயிர்க்குழற்சி; துகிற் பெருங்கொடி.
**விலோதனம்** – பெருங்கொடி; துகிற்கொடி; கண்.
**விலோபனம்** – அழிவு; இழுத்தல்; கலக்குதல்; புகழ்ச்சி; மயக்கம்.
**விலோமன்** – வருணன்.
**விவகரித்தல்** – நியாயஞ் சொல்லுதல்; விரித்துக் கூறுதல்; வாதஞ்செய்தல்.
**விவகாரம்** – நியாயத்தல வழக்கு; வாதஞ் செய்தல்; நடத்தை; நியாயத்தல வழக்குச் சம்பந்தமான அறநூற் பகுதி.
**விவகாரி** – நியாயத்தலத்தில் வழக்காடுவோன்; செய்திகளை நன்றாய் அறிந்து பேசுபவன்.
**விவகாரிகம்** – விவகார சம்பந்தமுடையது; வழக்கம்.
**விவசம்** – தன்வயமிழத்தல்; ஆன்மாவின் விடுதலைநிலை.
**விவசாயம்** – வேளாண்மை; வாணிகம்; தொழில்; முயற்சி.

**விவட்சை** – பேசவேண்டுமென்ற விருப்பம்; கருத்து.

**விவத்து** – காண்க: **விபத்து.**

**விவத்தை** – ஆபத்து; முடிவு; ஒழுங்குமுறை.

**விவதானம்** – மறைப்பு; தடை.

**விவர்த்தம்** – சுற்றிவருதல்; ஆடுதல்; ஒரு பொருள் தன் வடிவத்தை விடாமல் வேறு வடிவத்தைக் காண்பிக்கை.

**விவர்த்தனம்** – சுழலல்.

**விவரணம்** – விவரமான குறிப்பு.

**விவரம்** – பகுத்தறிவு; மலைக்குகை; துளை; இடைவெளி; வரலாற்றுக் குறிப்பு.

**விவரித்தல்** – விரித்துக்கூறுதல்.

**விவா** – பெருமை; இரவு.

**விவாகம்** – திருமணம்.

**விவாதம்** – தருக்கம்; நியாயத்தல வழக்கு.

**விவிதம்** – பலவிதம்.

**விவிலியமதம்** – கிறித்தவ சமயம்.

**விவேகபருவம்** – பகுத்தறியும் பருவம்.

**விவேகம்** – பகுத்தறிவு; புத்திக்கூர்மை; பாயிரம்.

**விவேகி** – பகுத்தறிவுள்ளவன்.

**விவேகித்தல்** – பகுத்தறிதல்.

**விவேசனம்** – பகுத்தறிவு.

**விழ** – காண்க: **விழா.**

**விழத்தட்டுதல்** – கீழே விழும்படி தள்ளுதல்; பிறன் கையிலுள்ளதைத் தட்டி வீழ்த்துதல்.

**விழம்பு** – சோறு.

**விழல்** – விழுதல்; பயனின்மை; ஒரு புல்வகை; காண்க: **இலாமிச்சு(சை).**

**விழலன்** – பயனற்றவன்.

**விழலாண்டி** – சோம்பித்திரியும் வீணன்.

**விழலி** – ஒன்றுக்கும் உதவாதவள்.

**விழலுக்கிறைத்தல்** – வீண்பாடுபடுதல்.

**விழவணி** – நற்காலங்களில் அணியும் அலங்காரம்.

**விழவர்** – விழாக் கொண்டாடுவோர்.

**விழவாற்றுப்படுத்தல்** – விழாவை முடிவுசெய்தல்.

**விழவு** – காண்க: **விழா;** விளையாட்டு; அவா; மிதுனராசி.

**விழவெடுத்தல்** – புத்தகத்தைத் திருடிக் கொள்ளுதல்.

**விழற்கட்டு** – புல்வீடு.

**விழற்கிறைத்தல்** – காண்க: **விழலுக்கிறைத்தல்.**

**விழா** – திருவிழா; திருமணக் கொண்டாட்டம்; மங்கலச் சடங்கு.

**விழாக்கடி** – திருநாட்காட்சி.

**விழாக்கால்கோள்** – திருவிழாத் தொடக்கம்.

**விழாக்கொள்ளுதல், விழாக்கோள்** } – திருவிழா நடத்துதல்.

**விழாக்கோளாளர்** – அரசர் முதலியோர் ஆணைப் படி திருவிழா நடத்துவோர்.

**விழாவணி** – திருவிழாச் சிறப்பு; வீரர் போர்க் கோலம்; காண்க: **விழவணி.**

**விழி** – கண்; அறிவு; மிண்டை.

**விழிகண்குருடு** – வெளித்தோற்றத்தில் விழியில் மாறுபாடின்றியே கண்தெரியாமை.

**விழிச்சி** – காதுக்குள் வெடிக்கும் கட்டி.

**விழித்தல்** – கண்திறத்தல்; தூக்கம் தெளிதல்; எச்சரிக்கையாயிருத்தல்; கவனித்து நோக்குதல்; மருண்டு நோக்குதல்; ஒளிர்தல்; தெளிவாதல்; உயிர்வாழ்தல்.

**விழிதுறை** – நீர்த்துறை; இறங்குதுறை.

**விழிப்பு** – விழிக்கை; எச்சரிக்கை; செய்வது தெரியாமல் திகைத்தல்; சிறந்து விளங்குகை.

**விழிபிதுங்குதல்** – வேலை மிகுதியால் வருந்துதல்.

**விழியன்** – பெருங்கண்ணுடையவன்; பிதுங்கிய விழியுடையவன்.

**விழிவாதம்** – இமைகளையாட்டும் கண்ணோய் வகை.

**விழு** – சிறந்த; துன்பமான; பகல் இரவுகள் நாழிகை அளவில் ஒத்தநாள்.

**விழுக்காடிடுதல்** – கூறிடுதல்.

**விழுக்காடு** – வீதம்; வீழ்கை; கீழ்நோக்கான பாய்ச்சல்; பங்கு; தற்செயல்; மேல்வருவது; பொருளின்றிக் கூட்டியுரைக்கப்படுஞ் சொல்; அருத்தாபத்தி.

**விழுக்கு** – மெல்லாது உட்கொள்ளுதல்; ஊன் விசேடம்; எண்ணெய்ப் பிசுக்கு.

**விழுங்குதல்** – மெல்லாது உட்கொள்ளுதல்; கவளீகரித்தல்; தெளிவின்றிப் பேசுதல்; வெல்லுதல்; சொற்களை மழுப்புதல்; கவர்தல்; பரவுதல்; கொல்லுதல்.

**விழுங்கும்பாம்பு** – மதிற்பொறிவகை.

**விழுச்சிறை** – சீரிய சிறைவாழ்க்கை.

**விழுச்செல்வம்** – பெருஞ்செல்வம்.

**விழுசுமை** – பெரும்பாரம்.

**விழுத்தகை** – பிறருக்கில்லாத சிறப்பு.

**விழுத்தண்டு** – பெரிய ஊன்றுகோல்.

**விழுத்தம்** – காண்க: **கருஞ்சீரகம்.**

**விழுத்தல்** – விழச்செய்தல்; சாகச்செய்தல்; களைதல்.

**விழுத்திணை** – உயர்குடி.

**விழுத்து** – இலக்கு.

**விழுத்துதல்** – காண்க: **விழுத்தல்.**

**விழுதல்** – கீழ்நோக்கி யிழிதல்; நிலம்படியச் சாய்தல்; நோய்வாய்ப்பட்டுக் கிடத்தல்; தோற்றுப் போதல்; தாழ்தல்; கெடுதல்; சாதல்; தங்குதல்; மறைதல்; திரண்டு கூடுதல்; கிடைத்தல்; பதிதல்; வெளித்தோன்றுதல்; நேர்தல்; கழிதல்; விருப்பங்கொள்ளுதல்; சொல் முதலியன வெளிப்படுதல்; பிரிவுபடுதல்;கீழ்நோக்கிப் பாய்தல்; ஆறு முதலியன கடலிற் கலத்தல்; தொங்குதல்; சினங்கொள்ளுதல்; முகம் வாடுதல்; பணம் முடங்கிக்கிடத்தல்.

**விழுதி** – மருந்துச் செடிவகை.

**விழுது** – ஆலமரம் முதலியவற்றின் கிளைகளினின்று இறங்கும் வேர்த்தொகுதி; தலைமயிர்ச் சடையின் ஒரு கால்; இறுகிக் கட்டின நெய்; வெண்ணெய்; கொழுப்பு; நீர்விட்டு அரைத்துத் திரட்டியது.

**விழுந்துபோதல்** – கீழே விழுதல்; இறத்தல்; குறுக்குவழியில் செல்லுதல்.

**விழுப்பகை** – சீரிய பகை.

**விழுப்பம்** – சிறப்பு; நன்மை; குலம்; இடும்பை.

**விழுப்பாதராயன்** – தமிழரசருக்குக் கீழ்ப்பட்ட தலைவருள் ஒரு சாராரின் பட்டப்பெயர்; கோயிலில் சாமி திருமுன்பு கணக்குப் படிக்கும் உரிமை மரபினன்.

**விழுப்பிணி** – தீராத முற்றிய நோய்.

**விழுப்பு** – கழிக்கப்படுவது; நீராடும்முன் உள்ள தூய்மைகெட்ட நிலை; சிறப்பு; குலம்; இடும்பை.

**விழுப்புண்** – போரில் முகத்திலும் மார்பிலும் பட்ட புண்; இடும்பைதரும் புண்.

**விழுப்பொருள்** – மேலான பொருள்.

**விழுமம்** – சிறப்பு; சீர்மை; தூய்மை; இடும்பை, துன்பம்.

**விழுமிய** – சிறந்த.

**விழுமியதுபயத்தல்** – நூலழகு பத்தனுள் சீரிய பொருளை உணர்த்தலாகிய அழகு.

**விழுமிய(யோ)ர்** – சிறந்தோர்.

**விழுமுறுதல்** – துன்புறுதல்.

**விழுவிழெனல்** – வழுவழுப்பாயிருத்தற்குறிப்பு; பசைபிடித்தற்குறிப்பு.

**விழைச்சி** – இன்பநுகர்வு; புணர்ச்சி.

**விழைச்சு** – இளமை; புணர்ச்சி.

**விழைதல்** – மிக விரும்புதல்; மதித்தல்; நெருங்கிப் பழகுதல்.

**விழைந்தோன்** – நண்பன்; கணவன்.

**விழைய** – ஓர் உவமவாய்பாடு.

**விழையார்** – பகைவர்.

**விழைவு** – விருப்பம்; யாழின் உள்ளோசை; புணர்ச்சி.

**விள்கை** – விட்டகலுகை.

**விள்ளல்** – பிரிவு; மலர்கை; கட்டித்தழுவல்; மரவகை.

**விள்ளுதல்** – மலர்தல்; உடைதல்; வெடித்தல்; பிளத்தல்; பகைத்தல்; மாறுபடுதல்; தெளிவாதல்; நீங்குதல்; சொல்லுதல்; வெளிப்படுத்துதல்; வாய் முதலியன திறத்தல்; புதிர் முதலியன விடுத்தல்.

**விள** – நிலம் முதலியவற்றின் பிளப்பு; இளமை; மரவகை.

**விளக்கங்காணுதல்** – ஆராய்ந்தறிதல்.

**விளக்கணம்** – பொடிவைத்துப் பொருத்துகை; பற்றுப்பொடி.

**விளக்கணி** – ஒரு சொல் ஓரிடத்தில் நின்று பலவிடத்தும் சென்று பொருள்தரும் அணிவகை.

**விளக்கம்** – தெளிவான பொருள்; தெளிவு; ஒளி; சந்திரகலை; மோதிரம்; புகழ்; விசாரணை; நீதிமன்றம்; அதிகம்; விளக்கு.

**விளக்கிடுகல்யாணம்** – கார்காத்த வேளாளரில் மணம்புரியாத பெண்களுக்கு ஏழு அல்லது பதினொரு வயதில் செய்யப்படுஞ் சடங்குவகை.

**விளக்கிடுதல்** – விளங்கச்செய்தல்; விளக்கேற்றுதல்; கோயிலில் திருவிளக்கு ஏற்றிவைத்தல்.

**விளக்கீடு** – மார்கழித் திருக்கார்த்திகையன்று விளக்கேற்றுகை.

**விளக்கு** – ஒளிதருங் கருவி; ஒளிப்பிழம்பு; ஒளிபெறச் செய்கை; சோதிநாள்.

**விளக்குக்கூண்டு** – காண்க: **கலங்கரைவிளக்கம்;** விளக்கை உள்வைத்து வானத்துச் செல்லவிடுக்கும் கூண்டு.

**விளக்குத்தண்டு** – விளக்குத் தகழியைத் தாங்கும் தண்டு.

**விளக்குதல்** – தெளிவாக்குதல்; பரிமாறுதல்; பிரசித்தப்படுத்துதல்; தூய்மையாக்குதல்; துலக்குதல்; துடைப்பத்தாற் பெருக்குதல்; பொடியிட்டுப் பற்றவைத்தல்.

**விளக்குநிலை** – அரசனது கோலோடு விளக்கும் ஒன்றுபட்டோங்குவதைக் கூறும் புறத்துறை; வலமாகத் திரியாநிற்கும் விளக்கு அரசனது வெற்றியைக் காட்டுவதாகக் கூறும் புறத்துறை; ஒரு நூல்; காண்க: **விளக்குத்தண்டு.**

**விளக்குப்பாதம்** – விளக்குத்தண்டு; விளக்குத் தண்டின் அடிப்பாகம்.

**விளக்குப்புறம்** – கோயிலில் விளக்கிடுவதற்கு விடப்பட்ட இறையிலிநிலம்.

**விளக்குப்போடுதல்** – விளக்கேற்றுதல்; கட் குடித்தல்.

**விளக்குமாடம்** – விளக்கு வைப்பதற்கான சுவர்ப்புரை; திருவிளக்கிடும் கோயிலிடம்.

**விளக்குமாற்றுக்கட்டை** – தேய்ந்த துடைப்பம்; ஒரு பழிச்சொல்.

**விளக்குமாறு** – துடைப்பம்.
**விளக்குறுத்தல்** – ஒளிபெறச் செய்தல்.
**விளக்கெண்ணெய்** – விளக்கிடுவதற்கு உதவும் ஆமணக்கெண்ணெய்; மருந்தாக உதவும் ஆமணக்கெண்ணெய்; வேப்பெண்ணெய்.
**விளக்கேற்றிவைத்தல்** – விளக்கேற்றுதல்; கலியாணஞ் செய்துவைத்தல்; நிலைநிறுத்துதல்.
**விளக்கைக்குளிரவைத்தல்** – விளக்கணைத்தல்.
**விளங்கவைத்தல்** – தெளிவாக்குதல்; விளக்கேற்றி வைத்தல்; புகழ்பெறச் செய்தல்.
**விளங்கு** – அரத்தைவகை.
**விளங்குதல்** – ஒளிர்தல்; தெளிவாதல்; விளக்கமாதல்; பளபளப்பாதல்; பெருகுதல்; மிகுதல்; அறிதல்.
**விளங்குதிங்கள்** – சுக்கிரன்.
**விளங்குபொன்** – உலோகத்தாற் செய்த கண்ணாடி.
**விளங்கொளி** – அருகன்.
**விளத்தம்** – விவரம்.
**விளத்தாரு** – வெண்கடம்பு.
**விளத்துதல்** – விவரித்தல்; விலக்குதல்.
**விளப்பு** – சொல்லுகை; புகழாதல்.
**விளம்** – அடம்; அகங்காரம்; விளாமரம்; இயற்சீரின் இறுதி நிரை வாய்பாடு.
**விளம்பம்** – தாமதம்; இலயவகை.
**விளம்பரம்** – அறிக்கை.
**விளம்பனம்** – பழங்கால மக்களின் பழக்கத்தைப் பாடியும் ஆடியும் காட்டுதல்.
**விளம்பி** – கள்; அறுபதாண்டுக் கணக்கில் முப்பத்திரண்டாம் ஆண்டு.
**விளம்பிதம்** – காண்க: **விளம்பம்.**
**விளம்பு** – சொல்.
**விளம்புதல்** – சொல்லுதல்; வெளிப்படக் கூறுதல்; பரப்புதல்; பரிமாறுதல்; விசாரித்தல்; பழகுதற்காகப் பிள்ளைகள் எழுத்தின்மேல் எழுதுதல்.
**விளர்** – வெண்மை; நிணம்; முற்றாதது; நேர்மை; பெருஞ்சினம்; வெறுப்பு; கொழுமை; இளமை.
**விளர்த்தல்** – வெளுத்தல்; வெட்குதல்; நிறம் வேறுபடுதல்.
**விளர்தல்** – வெளுத்தல்; முதிராதிருத்தல்; கூப்பிடுதல்.
**விளர்ப்பு** – வெளுப்பு.
**விளரி** – இளமை; வேட்கைப்பெருக்கம்; மிகுதி; நெய்தல்நிலத்து யாழ்; விளாமரம்; ஏழிசையுள் ஒன்று.
**விளவு** – காண்க: **அகில்;** விளாமரம்; நிலப்பிளவு; இளமை.
**விளவுதல்** – கலத்தல்; தழுவிக்கொள்ளுதல்; அடித்தல்; மனத்தில் உறுத்தப் பேசுதல்.
**விளா** – விளாமரம்; உழவில்வருஞ் சுற்று.
**விளாக்குலைகொள்ளுதல்** – பரவுதல்; உட்கொள்ளுதல்.
**விளாக்கைத்தல்** – உழுதல்.
**விளாக்கொள்ளுதல்** – பரவுதல்.
**விளாகம்** – போர்க்களம்; சூழ்ந்தவிடம்.
**விளாசுதல்** – அடித்தல்; மனத்தில் உறுத்தப் பேசுதல்.
**விளாப்பு** – பிறர்க்குப் பங்கில்லாதது.
**விளாப்பூசை** – சிவன்கோயிலில் விடியற்காலத்தில் நடக்கும் பூசை.
**விளாம்பூச்சு** – சித்திரப்பூச்சுவகை.
**விளாவுதல்** – கலத்தல்; தழுவிக்கொள்ளுதல்; சுற்றுதல்; சுற்றிச்சுற்றி வருதல்; காண்க: **விளாசுதல்.**
**விளி** – ஓசை; இசைப்பாட்டு; கொக்கரிப்பு; சொல்; அழைப்பு; எட்டாம் வேற்றுமை.
**விளிக்கூத்து** – சீழ்க்கைக்கூத்து.
**விளித்தல்** – அழைத்தல்; சொல்லுதல்; பாடுதல்; அழித்தல்; கொல்லுதல்; பேராரவாரஞ் செய்தல்.
**விளிதல்** – இறத்தல்; அழிதல்; குறைதல்; கழிதல்; ஒய்தல்; சினத்தல்; நாணமடைதல்; அவமானமடைதல்; வருத்தப்படல்; மறிதல்; சொல்லுதல்.
**விளிந்தார்** – இறந்தார்.
**விளிப்பு** – ஓசை; சத்தமிடுகை.
**விளிம்பு** – ஓரம்; கரை; கண்ணிமை; எயிறு.
**விளிவித்தல்** – அழைப்பித்தல்; கொல்லல்.
**விளிவு** – சாவு; கேடு; உறக்கம்; இடையறவு; நாணம்; கடுஞ்சினம்; வீரர் ஆர்ப்பு.
**விளை** – விளைகை; விளைபொருள்; புன்செய்க்காடு; நுகர்வு; நீர் ஏறாத மேட்டுநிலம்; நகர்சூழ் காவற்காடு; காக்கட்டான்; நரம்பு; மீன்வகை.
**விளைகரி** – நிலக்கரி.
**விளைச்சல்** – விளைபொருள்; முற்றிவரும் பயிர்; விளைகை; இளமையில் முதிர்ந்த அறிவு.
**விளைஞர்** – மருதநில மக்கள்.
**விளைத்தல்** – பயிர் முதலியன வளரச்செய்தல்; உண்டாக்குதல்; புரிதல்.
**விளைதல்** – தானியம் முதலியன உற்பத்தியாதல்; பயன்தருதல்; உண்டாதல்; முதிர்தல்; நிகழ்தல்.
**விளைநிலம்** – பயிரிடக்கூடிய நிலம்.
**விளைநீர்** – பாசனத்துக்குரிய நீர்.
**விளைபுலம்** – காண்க: **விளைநிலம்.**

**விளைபொருள்** – நிலத்திலுண்டாகும் பொருள்.

**விளையவைத்தல்** – முதிரச்செய்தல்; பயன்படச் செய்தல்; விளைவுண்டாகச் செய்தல்; இறுகக் கட்டியாகும்படி செய்தல்; அவுரிச்சரக்கை அழுகவைத்தல்; பிணஞ்சுட நெருப்பு மூட்டுதல்.

**விளையாட்டம்** – காண்க: **விளையாட்டு; விளைநிலம்.**

**விளையாட்டம்மை** – மணல்வாரியம்மை; சின்னம்மை.

**விளையாட்டு** – பொழுதுபோக்குக்குரிய மகிழ்ச்சிச் செயல்; எளிதாகச் செய்யுந் தொழில்; வேடிக்கை; காதல்விளையாட்டு; பாட நினைத்த வண்ணத்திற் சந்தத்தை விடுகை.

**விளையாட்டுக்காட்டுதல்** – குழந்தைகட்குப் போக்குக்காட்டுதல்; வேடிக்கைகாட்டுதல்; சாலவித்தை முதலியன காட்டுதல்.

**விளையாட்டுப்பிள்ளை** – சிறுபிள்ளை; அறிவீனமாய் நடப்பவர்; கவலையின்றி இருப்பவர்.

**விளையாடுதல்** – பொழுதுபோக்குதல்; துள்ளிக் குதித்தல்; உடற்பயிற்சி செய்தல்; வேடிக்கையாகச் செய்தல்; ஏளனம் செய்தல்.

**விளையாநிலம்** – களர்நிலம், பயிர்விளையாத நிலம்.

**விளையுங்காலம்** – அறுவடைக்காலம்.

**விளையுள்** – விளைச்சல்; முதிர்கை; வயல்; உள்ளம்.

**விளைவித்தல்** – விளையச்செய்தல்; செயற்கை வழியாகப் பயிர் முதலியன வளர்த்தல்; பயன் தருதல்.

**விளைவு** – நிகழ்ச்சி; விளைகை; முதுமை; விளைபொருள்; பழம்; பயன்; கைகூடுகை; ஆக்கம்; விளையுமிடம்; வயல்; மேகம்; நாடகச்சந்தி ஐந்தனுள் ஒன்று.

**விளைவுகாலம்** – தானியம் வளர்ந்திருக்கும் காலம்; காண்க: **விளையுங்காலம்.**

**விற்காரன்** – விற்றொழிலில் வல்லவன்.

**விற்கிடை** – நான்குமுழ அளவு.

**விற்குன்று** – சிவபிரானது வில்லான மேருமலை.

**விற்கோடி** – தனுஷ்கோடி; ஒரு பேரெண்வகை.

**விற்படை** – வில்லாயுதம்; காண்க: **விற்றானை;** அம்பு.

**விற்பத்தி** – கல்விவன்மை; மொழிப்பொருட் காரணம்.

**விற்பத்திமான்** – கல்வியிற் சிறந்தோன்.

**விற்பன்னம்** – காண்க: **விற்பனம்.**

**விற்பன்னன்** – கல்வியிற் சிறந்தோன்; புலவன்; புதுமைச் செயல்புரியும் ஆற்றலுள்ளவன்.

**விற்பன்னித்தல்** – சிறப்பித்தல்; விளக்குதல்.

**விற்பனம்** – கல்வி; அறிவு; அறிவுக்கூர்மை; புதுமை; நுட்பம்; விந்தை; சொற்பொழிவு.

**விற்பனவு, விற்பனை** } – விற்றல்.

**விற்பனைப்பத்திரம்** – விலையாவணம், கிரயப் பத்திரம்.

**விற்பாட்டு** – வில்லுப்பாட்டு.

**விற்பிடி** – வில்லைப் பிடிக்குங் கையினுள்ளளவு; அபிநயவகை.

**விற்பிடித்தல்** – வில்வித்தை பயிலத் தொடங்குதல்.

**விற்பிடிமாணிக்கம்** – சிறந்த மாணிக்கம்.

**விற்புட்டில்** – விரலுறை.

**விற்பூட்டு** – காண்க: **பூட்டுவிற்பொருள்கோள்;** கத்தரிவகை.

**விற்பொறி** – சேரவரசரது வில்லிலாஞ்சனை.

**விற்றல்** – பண்டங்களை விலைக்குக் கொடுத்தல்.

**விற்றானை** – படைகளுள் வில்வீரர்களாலான படை.

**விற்றூண்** – விற்று உண்ணற்குரிய சில்லறைப் பண்டங்கள்.

**விறகாள்** – விறகுசுமந்து விற்போன்.

**விறகு** – எரிக்கும் கட்டை; காண்க: **சமிதை.**

**விறகுகட்டு** – கட்டிய விறகின் தொகுதி.

**விறகுகட்டை** – எரிக்க உதவும் மரத்துண்டு.

**விறகுகாடு** – விறகின் தொகுதி; விறகுக்காக ஒதுக்கப்பட்ட காடு.

**விறகுதலையன்** – விறகுசுமந்து விற்போன்; காண்க: **விறகுவெட்டி;** மூடன்.

**விறகுவெட்டி** – விறகு தறிப்பவன்.

**விறத்தல்** – செறிதல்; மிகுதல்; வெற்றிபெறுதல்; போர்செய்தல்; வெருவுதல்.

**விறப்ப** – ஓர் உவமவாய்பாடு.

**விறப்பு** – செறிவு; பெருக்கம்; வலிமை; வெற்றி; போர்; அச்சம்.

**விறல்** – வெற்றி; பெருமை; வலிமை; வீரம்; சிறப்பு; உடல்வேறுபாடு.

**விறல்கோளணி** – பகை அல்லது அதன் துணையின்மேற் செலுத்தும் பேராற்றலைக் கூறும் அணிவகை.

**விறல்வென்றி** – போர்வீரத்தா லுண்டாகிய வெற்றி.

**விறலி** – உள்ளக்குறிப்புப் புறத்து வெளிப்பட ஆடுபவள்; பாணர்குலப் பெண்; பதினாறு அகவைப் பெண்.

**விறலுதல்** – சினத்தோடு எதிர்த்துச் செல்லுதல்.

**விறலோன்** – திண்ணியன்; வீரன்; அருகன்.

**விறாட்டி** – காண்க: **வறட்டி.**

**விறாண்டுதல்** – காண்க: **பிறாண்டுதல்.**

**விறாய்** – செருக்கு.

**விறிசு** – ஒரு வாணவகை.

**விறிசுவிடுதல்** – விறிசுவாணத்தை மேலெழ விடுதல்; பொய்யுரைகட்டிப் பேசுதல்.

**விறுவிறுத்தல்** – மேற்பூச்சு உலர்ந்ததனால் விறுவிறென் றிழுத்தல்; காரம் உறைத்தல்; சினம் பொங்குதல்; விரைதல்; புண் குத்தெடுத்தல்.

**விறுவிறுப்பு** – மேற்பூச்சு உலர்ந்ததனால் விறுவிறுவென்று இழுக்கை; மிகுசினம்; சுறுசுறுப்பு; உறைப்பு; புண் முதலியன குத்தெடுக்கை.

**விறுவிறெனல்** – விறுவிறென்றிழுத்தற்குறிப்பு; உறைத்தற்குறிப்பு; குத்தற்குறிப்பு; சினத்தற் குறிப்பு; விரைவுக்குறிப்பு.

**விறைத்தல்** – மரத்துப்போதல்; குளிர் முதலியவற்றால் நடுங்குதல்; திகைத்தல்; திமிர்கொள்ளல்.

**விறைப்பு** – விறைத்துப்போகை; நடுக்கம்; திகைப்பு; செருக்குக்காட்டுகை.

**வின்மை** – விற்றொழில்; வில்வன்மை.

**வின்னப்படுதல்** – சிதைதல்; காயப்படுதல்; பின்னப்படுதல்.

**வின்னம்** – மாறுபாடு; வேறுபாடு; சிதைவு; பிளவு; உறுப்புக்கோணல்; தடை; கேடு.

**வின்னாண்** – வில்லை வளைத்துப் பூட்டுங் கயிறு.

**வின்னியாசம்** – வைக்கை; பேச்சுத்திறமை; அம்புதொடுக்கை.

**வினகம்** – சேங்கொட்டைமரம்.

**வினயம்** – செய்தொழில்; வஞ்சகம்; வஞ்சக வேலைப்பாடு; சூழ்ச்சி; கொடுஞ்செயல்; வணக்கவொடுக்கம்; அடக்கம்; காண்க: **தேவபாணி**.

**வினவுதல்** – உசாவுதல்; விசாரணை செய்தல்; பிறர்சொல்லக் கேட்டல்; கேள்விப்படுதல்; நினைதல்.

**வினவுநர்** – உசாவுவோர்; செவியேற்பவர்.

**வினா** – கேள்வி; சொல்; விவேகம்; நினைவு; கவனிப்பு; அன்றி; இலக்கண நூல்களில் கூறப்படும் கேள்விகள்.

**வினாசம்** – கேடு.

**வினாதல்** – காண்க: **வினவுதல்**.

**வினாதலிறை** – வினாவடிவமான பதில்.

**வினாப்பெயர்** – வினாவெழுத்தினடியாகப் பிறந்த பெயர்ச்சொல்.

**வினாபூதகற்பனை** – தெளிவில்லாத நீதி வாக்கியம்.

**வினாயகத்தாளம்** – நாட்டியத் தொடக்கத்தில் விநாயகர்துதி பாடற்குக் கொட்டும் தாள விசேடம்.

**வினாவழு** – வினாவைப் பொருளியைபில்லாத படி வழங்குகை.

**வினாவழுவமைதி** – வினாவழுவை ஆமென்று அமைத்துக்கொள்வது.

**வினாவறிதல்** – அறியுந்திறமை உண்டாதல்.

**வினாவிடை** – வினாவடிவான விடைவகை; கேள்வியும் பதிலும்; வினாவும் விடையுமாக அமைந்த நூல்.

**வினாவுதல்** – காண்க: **வினவுதல்**.

**வினாவுள்ளவன்** – நிதானபுத்தியுள்ளவன்.

**வினாவெழுத்து** – சொல்லின் முதலில் அல்லது இறுதியில் வந்து வினாப்பொருள் தரும் எழுத்துகளான எ, யா, ஆ, ஓ, ஏ என்பன.

**வினிதை** – அயோத்தி.

**வினியோகக்காரன்** – கொடையாளன்.

**வினியோகம்** - செலவிடுகை; பகிர்ந்துகொடுத்தல்; பயன்பாடு; ஆலயத்தில் பிரசாதம் வழங்குகை.

**வினை** – தொழில்; நல்வினை தீவினை என இருவகைப்பட்ட முன்னைவினை; வினைச்சொல்; செய்தற்குரியது; பரிகாரச்செயல்; முயற்சி; போர்; வஞ்சகம்; தந்திரம்; கருத்து; தொந்தரவு; சீழ்; இரண்டைக் குறிக்கும் குழூஉக் குறி.

**வினைக்கட்டு** – கன்மபந்தம்.

**வினைக்களம்** – போர்க்களம்.

**வினைக்கீடு** – செய்த வினையின் பயன்.

**வினைக்குறிப்பு** – குறிப்புவினை.

**வினைக்குறிப்புமுற்று** – குறிப்புவினைமுற்றாய் வருவது.

**வினைக்கேடன்** – முன்னை வினையை ஒழிப்பவன்; வேலையைத் தடைசெய்து கெடுப்போன்.

**வினைக்கேடு** – வீணானது; செயலறுகை; தாமதம்.

**வினைச்செவ்வெண்** – தொடர்ந்துவரும் வினையெச்சங்களில் எண்ணிடைச்சொல் தொக்கு வருவது.

**வினைச்சொல்** – பொருளின் புடைபெயர்ச்சியைத் தெரிவிக்கும் சொல்.

**வினைசெயல்வகை** – வினையைச் செய்யுந் திறம்.

**வினைஞர்** – தொழில் செய்வோர்; மருதநில மக்கள்; கம்மாளர்; கூத்தர்; வணிகர்; வேளாளர்.

**வினைத்தலை** – போர்க்களம்.

**வினைத்திட்பம்** – தொழில்செய்வதில் மனவலிமை.

**வினைத்திரிசொல்** – திரிந்த வினைச்சொல்; வழக்கிலின்றி அரிதிற் பொருளுணர்தற்குரிய வினைச்சொல்.

**வினைத்தூய்மை** – செயலின் தூய்மை.

**வினைத்தொகை** – காலங்கரந்த பெயரெச்சத் தொடர்.

**வினைத்தொடர்ச்சி** – தீவினையின் பயன்.
**வினைதீயோர்** – தீவினையோர்.
**வினைதீர்த்தல்** – முன்னை வினையைப் போக்குதல்; இடையூறு நீக்குதல்.
**வினைதீர்த்தான்** – விநாயகன்.
**வினைநர்** – தொழில்வல்லோர்.
**வினைப்பகாப்பதம்** – 'செய்'யென்னும் வாய்பாட்டால் வரும் முதனிலை.
**வினைப்பகுதி** – பகுபதத்தில் வினைச்சொல்லாகிய பகுதி; செயற்கூறு.
**வினைப்பகுபதம்** – பகுதி முதலிய உறுப்புகளாகப் பிரிக்கத்தக்க வினைச்சொல்.
**வினைப்பயன்** – முன்வினைப்படி வந்த பலன்.
**வினைப்பெயர்** – தொழிற்பெயர்; காண்க: **வினையாலணையும்பெயர்**; செய்தொழிலினால் ஒருவனுக்கு வரும் பெயர்.
**வினைமாற்று** – முன்சொன்ன தொழில் ஒழிய இனி வேறொன்று என்பதைக் காட்டுவதாகிய பொருண்மை.
**வினைமுதல்** – கருத்தா.
**வினைமுதற்றொழில்** – செயப்படுபொருள்.
**வினைமுளுதல்** – ஊழ்வினை முதிர்ந்து பயன் தரும் நிலையில் அமைதல்.
**வினையம்** – செய்தொழில்; முன்னை வினை; சூழ்ச்சி; வஞ்சகம்; வஞ்சக வேலைப்பாடு; நிகழ்ச்சி; கொடுஞ்செயல்.
**வினையன்** – தொழில் செய்பவன்; வஞ்சகன்.
**வினையாட்டி** – ஏவல்வேலை செய்பவள்; தீவினையுடையவள்.
**வினையாண்மை** – தொழிலைச் செய்துமுடிக்குந் திறமை.
**வினையாலணையும்பெயர்** – வினைமுற்றுப் பெயர்த்தன்மை பெற்றுவருவது.
**வினையாள், வினையாளன்** – ஏவல்செய்வோன்; தொழில் இயற்றுவோன்; தீவினையுடையவன்.
**வினையிடைச்சொல்** – வினைத்தன்மை பெற்று வரும் இடைச்சொல்வகை.
**வினையியற்சொல்** – உலகவழக்கிலுள்ள வினைச்சொல்.
**வினையிலி** – கடவுள்.
**வினையின்மை** – வினைப்பயன் இன்மையாகிய குணம்.
**வினையுருபு** – வினைச்சொல்லின் உறுப்பான இடைநிலை, விகுதி முதலியன.
**வினையுரைப்போர்** – தூதர்.
**வினையுவமம், வினையுவமை** – தொழில்பற்றி வரும் ஒப்புமை.
**வினையெச்சக்குறிப்பு** – காண்க: **குறிப்புவினையெச்சம்.**
**வினையெச்சம்** – வினையைக்கொண்டு முடியும் குறைவினை.
**வினையெஞ்சணி** – வினை எஞ்சி நிற்பதாகிய ஓரணி.
**வினையெஞ்சுகிளவி** – காண்க: **வினையெச்சம்.**
**வினைவயிற்பிரிதல்** – தலைவன் தலைவியை நீங்கி வேந்தன் ஆணையாற் பகைமேற் பிரியும் பிரிவைக் கூறும் அகத்துறை.
**வினைவர்** – தொழிலினர்; சந்து செய்விப்பவர்; அமைச்சர்.
**வினைவலம்படுத்தல்** – எடுத்துக்கொண்ட செயலை வெற்றிபெறச் செய்தல்.
**வினைவலர்** – பிறர் சொன்ன செயல்களைச் செய்வோர்; தொழில்செய்வதில் வல்லமையுள்ளோர்.
**வினைவலி** – செய்யக் கருதும் தொழிலின் வலிமை; காண்க: **வினைத்திட்பம்**; ஊழ்வினையின் வலிமை.
**வினைவளர்த்தல்** – பகைவிளைத்தல்.
**வினைவாங்குதல்** – செயலைப் புலப்படுத்தல்.
**வினைவிநாசன்** – தீவினையை ஒழிப்பவனாகிய கடவுள்.
**வினைவிளைத்தல்** – பொல்லாங்கு செய்தல்.
**வினோதக்கூத்து** – அரசர்முன்பு நடிக்கும் வெற்றிக் கொண்டாட்டக் கூத்து.
**வினோதம்** – அவா; இயற்கைக்கு மாறானது; விநோதம்.
**வினோதன், வினோதி** – ஒன்றில் ஈடுபட்டு அதிலேயே பொழுது கழிப்போன்; உற்சாகி.
**வினோதித்தல்** – விளையாடுதல்.

## வீ

**வீ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (வ்+ஈ); அழிவு; சாவு; நீக்கம்; மடிவு; மலர்; பூந்தாது; பறவை.
**வீக்கம்** – உடலுறுப்பு வீங்குதல்; புண் முதலியவற்றின் புடைப்பு; நீர்ச்சுரப்பால் உடல் வீங்கும் நோய்; தோல் முதலியன பூரிக்கை; மிகுதி; பெருமை; கூட்டம்; செருக்கு; ஆசை; கட்டு; இடையூறு; மூடுகை; இறுக்கம்; வேகம்.
**வீக்கமிறங்குதல்** – உடலின் மேற்பகுதியிலிருந்த வீக்கங் குறைந்து மெல்லமெல்லக் கீழ்நோக்கி இறங்குகை.

**வீக்கு** – கட்டுகை; இறுகுகை; அடிக்கை; பெருமை; மிகுதி; ஒரு கணிதமுறை.

**வீக்குதல்** – கட்டுதல்; அடக்குதல்; தடுத்தல்; அடித்தல்; நிறைத்தல்; வேகமுறச் செலுத்துதல்; உயிரைப் போக்குதல்; அழித்தல்.

**வீகம்** – மோதிரம்; பூட்டு; விரைவு; காற்று; பறவை.

**வீங்கல்** – மிகுதி; பொருளைப் பெறும்பொருட்டு ஏக்கங்கொள்ளுதல்; இளைத்திருப்பவர்; காண்க: **வீங்கி**; தூங்குதல்.

**வீங்கி** – ஒன்றன்மீது ஏக்கங்கொண்டிருப்பவர்; மரவகை.

**வீங்குதல்** – பருத்தல்; பூரித்தல்; வீக்கமுறுதல்; வளர்தல்; மிகுதல்; நெருங்குதல்; இறுகுதல்; விறைப்பாய் நிற்றல்; மேனோக்கிச் செல்லுதல்; மெலிதல்; ஏக்கங்கொள்ளுதல்; தூங்குதல்.

**வீங்கை** – ஆடல்வகை; குதிரைநடை; ஒருவகை அசைவு.

**வீச்சம்** – தீநாற்றம்.

**வீச்சாட்டம்** – இடப்பரப்பு; நன்னிலைமை; நீளம்.

**வீச்சு** – எறிதல்; சிறகடிக்கை; அடி; ஆட்டுகை; நீளம்; வேகம்; ஓட்டம்; நோய்வகை; வலிமை; வீண்பேச்சு; ஆந்தை முதலியவற்றின் சத்தம்; விளைவு.

**வீச்சுக்காரன்** – செலவுகாரன்; பெருமை பேசுவோன்.

**வீச்சுக்காரி** – செலவுகாரி; பெருமை பேசுவோள்; விலைமகள்.

**வீசகணிதம்** – காண்க: **பீசகணிதம்.**

**வீசகரி** – வேங்கைமரம்.

**வீசம்** – 1/16 பங்காகிய மாகாணி; விதை; மூலம்; முளை; சுக்கிலம்; மூளை; காண்க: **பீசகணிதம்; பீசாட்சரம்**; நெல்லெடைப் பொன்.

**வீசல்** – எறிதல்; வரையாது கொடுத்தல்.

**வீசனம்** – சிற்றாலவட்டம்; விசிறி; நூல் சுற்றுங் கருவி.

**வீசாட்சரம்** – காண்க: **பீசாட்சரம்.**

**வீசி** – அலை; இன்பம்; புல்லிது.

**வீசிக்கட்டுதல்** – விரிவாகக் கட்டுதல்.

**வீசிநடத்தல்** – காலை யெட்டிவைத்து வேகமாக நடத்தல்; வெகுதொலைவு செல்லுதல்.

**வீசிமாலி** – கடல்.

**வீசிவில்லிடுதல்** – தேர் முதலியவற்றை நெம்பத் தடிபோடுதல்.

**வீசுகாலேணி** – தாங்குகால்கள் இரண்டுள்ள ஏணிவகை.

**வீசுதல்** – எறிதல்; சிறகடித்தல்; ஆட்டுதல்; இரட்டுதல்; சுழற்றுதல்; அடித்தல்; விரித்து நீட்டுதல்; மிகுத்திடுதல்; வரையாது கொடுத்தல்; சிந்துதல்; சிதறுதல்; களைதல்; செய்யாதொழிதல்; காற்று முதலியன அடித்தல்; பரவுதல்; தீநாற்றம் அடித்தல்.

**வீசுவில்** – துறப்பணம் இழுக்க உதவும் வில்.

**வீசுவிற்குடம்** – துறப்பணக் கூடு.

**வீசேறுதல்** – மேலேறுதல்.

**வீசை** – நாற்பது பலங்கொண்ட எடுத்தலளவை; உதட்டின் மேற்புறத்து மயிர்.

**வீஞ்சுதல்** – சொல்வதற்கு ஒவ்வாமல் போதல்; மிகுந்தவிலை கேட்டல்.

**வீட்சணம், வீட்சணை** – பார்வை.

**வீட்டாள்** – மனைவி.

**வீட்டிறப்பு** – மேற்கூரையின் தாழ்ந்த பக்கம்.

**வீட்டுக்காரர்** – கணவர்.

**வீட்டுக்காரன்** – வீட்டுக்குரியவன்; கணவன்.

**வீட்டுக்காரி** – வீட்டுக்குடையவள்; மனைவி.

**வீட்டுக்காரியம்** – குடும்பவேலை.

**வீட்டுக்குடையவன்** – வீட்டுக்குரியவன்; குடும்பத் தலைவன்; இராசிக்குரிய அதிபதி.

**வீட்டுக்குத்தூரம், வீட்டுக்குவிலக்கு** – மகளிர் மாதவிடாய்.

**வீட்டுத்தெய்வம்** – குடும்பதேவதை; காண்க: **மங்கலியப்பெண்டுகள்.**

**வீட்டுதல்** – கொல்லுதல்; அழித்தல்; நீக்குதல்; தள்ளுதல்.

**வீட்டுநெறி** – வீடுபேற்றுக்குரிய வழி.

**வீட்டுப்பெண்** – குடும்பத்திலே பிறந்த பெண்; மகன் மனைவி, மருமகள்.

**வீட்டுமம்** – மனவுறுதி; அச்சம்.

**வீட்டுலகம்** – மேலுலகம்.

**வீட்டுவாசல்** – வீட்டின் முன்புற வாயில்.

**வீட்டுவீரன்** – வீட்டிலிருந்து வீரம்பேசி வெளியில் அஞ்சுவோன்.

**வீட்டுவேலை** – குடும்பவேலை; வீடுகட்டுந் தொழில்; வீட்டில் செய்து கொணருமாறு இடப்படும் வேலை.

**வீடடைத்தல்** – சாவு முதலியவற்றால் மரபற்று வீடு மூடிக்கிடக்கை.

**வீடல்** – காண்க: **வீடுதல்.**

**வீடறுத்தல்** – வழக்கு முதலியன தீர்த்தல்.

**வீடாரம்** – பாசறை; வீடு.

**வீடாவழி** – வீடுவீடாக.

**வீடி** – தாம்பூலம்; காண்க: **கொற்றான்.**

**வீடிகை** – வெற்றிலை; வெற்றிலைச்சுருள்.

**வீடு** – மனை; விடுகை; விடுதலை; வினை நீக்கம்; முடிவு; அழித்தல்; படைப்பு; வீடுபேறு; துறக்கம்; இராசி; சதுரங்கத்தில் காய்கள் இருத்தற்குரிய இடம்; தேற்றாமரம்; ஒன்றைக் குறிக்கும் குழூஉக்குறி.

**வீடுகொள்ளுதல்** – மீண்டும் பெறுதல்.

**வீடுசெய்தல்** – துறத்தல்; விடுதலைசெய்தல்; வரி முதலியன விட்டுக்கொடுத்தல்; படைத்தல்.

**வீடுசேர்தல்** – அழிதல்.

**வீடுதல்** – கெடுதல்; ஒழிதல்; சாதல்; விடுதல்.

**வீடுதூங்கி** – பிறனை அடுத்து மதிப்பிழந்து வாழ்வோன்.

**வீடுநர்** – இறப்பவர்.

**வீடுபெயர்தல்** – இருப்பிடம் விட்டு வேறிடஞ் செல்லுதல்.

**வீடுபேறு** – முத்திநிலை.

**வீடுவாசல்** – வீடும் அதைச் சார்ந்த பொருளும்.

**வீடுவித்தல்** – அழிவுசெய்தல்.

**வீடெடுத்தல்** – வீடுகட்டுதல்.

**வீண்** – பயனின்மை; பயனற்றது; தேவையற்றது.

**வீண்காரியம்** – பயனற்ற செயல்.

**வீண்காலம்** – பயனின்றிப் போக்குங் காலம்.

**வீண்செயல்** – காண்க: **வீண்காரியம்.**

**வீண்செலவு** – பயனற்ற பணச்செலவு.

**வீண்சொல்** – பயனில்சொல்.

**வீண்டம்பம்** – பயனற்ற பகட்டு.

**வீண்நியாயம்** – சாக்கு; பயனற்ற விவாதம்.

**வீண்பாடு** – பயனற்ற வேலை; பயனற்ற முயற்சி.

**வீண்பொழுதுபோக்குதல்** – காலத்தை வீணே கழித்தல்.

**வீண்வம்பு** – தகாத பேச்சு அல்லது செயல்; பயனற்ற வம்பளப்பு.

**வீணன்** – சோம்பேறி; பயனற்றவன்; தீநெறி நடப்போன்.

**வீணாகரணம்** – வீணைவாசித்தல்.

**வீணாத்தண்டு** – வீணைக்காம்பு.

**வீணாதண்டம்** – காண்க: **வீணாத்தண்டு**; முதுகெலும்பு.

**வீணாவாதன்** – வீணைவாசிப்போன்.

**வீணை** – இருபத்திரண்டு வகையுள்ள யாழ் போன்ற நரம்புக் கருவிவகை.

**வீணைமீட்டுதல்** – நரம்பை நயமுணர்ந்து சுருதி சேர்த்தல்.

**வீணையியக்கல்** – வீணையிலே பாடுதல்.

**வீணைவல்லவர், வீணைவல்லோர்** – வீணைவாசிப்பதில் வல்லவர்; கந்தருவர்.

**வீணைவலிக்கட்டு** – யாழின் வார்க்கட்டு.

**வீத்து** – அடிக்கை; நீளம்.

**வீதசோகம்** – அசோகமரம்.

**வீதம்** – அளவுமுறை; பங்கு; விடுகை; விடப்பட்டது; விழுக்காடு; அமைதி.

**வீதராகம்** – பற்றின்மை.

**வீதராகன்** – பற்றற்றவன்.

**வீதல்** – வறுமை; சாதல்.

**வீதன்** – சாந்தன்.

**வீதா** – பயனின்மை.

**வீதாசாரம்** – பங்கு.

**வீதி** – தெரு; கடைவீதி; சூரியன் முதலிய கோள்கள் செல்லும் வழி; வழி; முறை; ஒழுங்கு; நாடகவகை; அகலம்; நேரோட்டம்; காண்க: **வையாளிவீதி**; ஒளி; மேடை; அச்சம்; குதிரை.

**வீதிகுத்துதல்** – தீமை பயக்குமாறு தெருவுக்கு நேராக வீடு அமைந்திருக்கும் நிலை.

**வீதிகோத்திரம்** – அக்கினி.

**வீதித்தல்** – பங்கிடுதல்; பகுத்து ஆராய்தல்.

**வீதிப்போக்கு** – இசையின் நேர்செலவு.

**வீதியிலேவிடுதல்** – குழந்தை முதலியவற்றைத் திக்கற்ற நிலையில் விட்டுவிடுதல்.

**வீதிவண்ணச்சேலை** – ஒரு புடைவைவகை.

**வீப்பகழி** – காமனின் மலரம்பு.

**வீபணி** – கடைவீதி, அங்காடி.

**வீபத்து** – சந்திரன்.

**வீம்பன்** – வீண்பெருமைக்காரன்; செருக்குடையோன்; பிடிவாதக்காரன்.

**வீம்பு** – வீண்பெருமை; தற்புகழ்ச்சி; பிடிவாதம்.

**வீம்புப்பேச்சு** – தற்புகழ்ச்சி.

**வீமம்** – அச்சம்; அச்சந்தருவது; நரகவகை; பருமன்.

**வீயம்** – வித்து; அரிசி.

**வீர்வீரெனல்** – கத்துதற்குறிப்பு.

**வீரக்கல்** – காண்க: **நடுகல்.**

**வீரக்கழல்** – வீரர்கள் காலில் அணியும் அணி, கொடையாலும் வீரத்தாலும் கட்டும் கழல்.

**வீரக்குட்டி** – வீரரிற் சிறந்தோன்.

**வீரக்குழல்** – முன்கையில் அணியும் இருப்புக் கவசம்.

**வீரக்கொடி** – வெற்றிக்கொடி.

**வீரக்கொம்பு** – படையெழுச்சியில் ஊதுங் கொம்பு.

**வீரகடகம்** – வீரர் அணியும் கைவளை.

**வீரகண்டாமணி** – வீரக்குறியாக அணியும் மணி கட்டிய கழல்.

**வீரகத்தி** – வீரரைக் கொன்ற பழி.

**வீரகவசம்** – வீரர் அணியும் காப்புச்சட்டை.

**வீரகேயூரம்** – வீரர் அணிவதற்குரிய இருப்புத் தோளணி.

**வீரங்காட்டுதல்** – சூரங்காண்பித்தல், தன் வலிமை காட்டுதல்.

**வீரச்சங்கிலி** – வீரத்திற்கு அறிகுறியாகக் கையிலணியும் பொன்னணி; மகளிர் கழுத்தணி வகை.

**வீரச்சலங்கை** – வீரர் காலிலணியும் பொற் சலங்கை.

**வீரச்சுவை** – வீரத்தை விளக்கும் சுவை.

**வீரச்செல்வி** – கொற்றவை.

**வீரசயந்திகை** – போர்; போர்வீரரது கூத்துவகை.

**வீரசயனம்** – திருமாலின் படுக்கைநிலைவகை.

**வீரசாசனம்** – வீரர்க்குக் கொடுக்கும் நிலம் முதலியன.

**வீரசிங்காசனம்** – வீரர்கள் இருத்தற்குரிய அரியணை.

**வீரசின்னம்** – வீரர் விருதுகளுள் ஒன்றான ஊது கொம்பு.

**வீரசுவர்க்கம்** – இறந்த வீரர் அடையும் துறக்கப் பதவி.

**வீரசூரம்** – பேராண்மை.

**வீரசூரன்** – அதிவீரன்; பேராண்மையுடையோன்.

**வீரசைவன்** – இலிங்கதாரிகளாகிய வீரசைவ மதத்தினன்.

**வீரட்டம், வீரட்டானம்** – சிவபிரானது வீரம் விளங்கிய தலம்; கூத்துவகை.

**வீரணம்** – காண்க: **இலாமிச்சு(சை).**

**வீரணன்** – வீரமுள்ளவன்.

**வீரணி** – மிளகு; காண்க: **இலாமிச்சு(சை).**

**வீரத்துவம்** – வீரத்தன்மை.

**வீரதச்சுவன்** – மன்மதன்.

**வீரதத்துவம்** – காண்க: **வீரத்துவம்.**

**வீரதரன்** – வீரருள் மிக்கான்.

**வீரதீரன்** – துணிவுமிக்க வீரன்; ஒன்பதுவகை வீரருள் ஒருவன்.

**வீரதுரந்தரன்** – வீரருள் தலைவன்; பேராற்ற லுள்ள வீரன்.

**வீரதை** – வீரம்; வலிமை.

**வீரப்பட்டயம்** – வெற்றிபெற்ற வீரர் நெற்றியில் அணியும் பொற்றகடு.

**வீரப்பாடு** – வெற்றி; பேராண்மை.

**வீரப்பேர்** – வீரம்பற்றிப் புனையும் பெயர்.

**வீரப்போர்** – வீரர்களின் நெறிதவறாத சண்டை.

**வீரபட்டம்** – காண்க: **வீரப்பட்டயம்**; தெய்வ மூர்த்தங்கட்கு அணியும் நெற்றியணிவகை.

**வீரபட்டிகை** – காண்க: **வீரப்பட்டயம்.**

**வீரபத்திரம்** – அசுவமேதக் குதிரை.

**வீரபத்திரன்** – உருத்திரமூர்த்திகளுள் ஒருவன்.

**வீரபத்தினி** – மறக் கற்புடையாள்; வீரனின் மனைவி.

**வீரபானம்** – வீரர் அருந்தும் மது.

**வீரம்** – பேராண்மை; பெருஞ்செயல்; பெருமிதச் சுவை; வலிமை; மேன்மை; வரிக்கூத்துவகை; சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று; காண்க: **வீராசனம்**; மிளகு; கஞ்சி; அத்திவகை; முதுகு; மலை; சவ்வீரம்; மருந்துவகை; இஞ்சி.

**வீரம்பேசுதல்** – தன் வல்லமையைத் தானே புகழ்தல்; ஆண்மைத்திறங் கூறுதல்.

**வீரமகரம்** – கடல் கடந்து பகைவர் ஊரைக் கைப் பற்றிய தேர்வேந்தர் முன்பாகப் பிடிக்கும் விருது; கோயில்மூர்த்தியின்முன் எடுக்கும் விருதுவகை.

**வீரமகள், வீரமங்கை** – காண்க: **வீரலட்சுமி.**

**வீரமந்திரம்** – வேண்டும்போது நிற்கவும் பறந்து செல்லவும் குதிரையின் காதில் ஓதும் மந்திரம்.

**வீரமாகாளன்** – ஐயனாரின் படைத்தலைவரான ஊர்த்தேவதை.

**வீரமாகாளி** – துர்க்காதேவி.

**வீரமார்த்தாண்டன்** – பெருவீரன்; ஒன்பான் வீரருள் ஒருவன்.

**வீரமாலை** – வீரனைப் பாடும் பாடல்வகை; வெற்றிமாலை.

**வீரமுடி** – வீரர் அணியும் அணிவகை.

**வீரமுந்திரிகை** – காலின் நடுவிரலணி.

**வீரமுரசு** – மும்முரசுகளுள் வீரத்தின் அறிகுறி யாக முழக்கும் முரசு.

**வீரமுழவு** – முரசு, நிசானம், துடுமை, திமிலை என நால்வகையான போர்ப்பறை.

**வீரமொழி** – வீரர் உரத்துக் கூறும் ஆண்மைப் பேச்சு.

**வீரரசம்** – வீரத்தை விளக்கும் சுவை.

**வீரலட்சுமி** – வெற்றிக்குரிய தெய்வம்; வீரத்திற் குரிய தெய்வம்; வீரமாகிய செல்வம்.

**வீரவளை** – வீரர் அணியும் கடகம்.

**வீரவாதம்** – காண்க: **வீரமொழி.**

**வீரவாரம்** – வீரர் அணியும் வெட்சிமாலை; பேராரவாரம்.

**வீரவிரதம்** – வீரன் பயிலுங் கொடிய நோன்பு.

**வீரவிருட்சம்** – ஒரு மரவகை.

**வீரவெண்டயம்** – காண்க: **வீரக்கழல்**; திருவாரூர்த் தியாகராசரது பட்டாக்கத்தி.

**வீரவெறி** – வீரத்தாலான மதர்ப்பு.

**வீரன்** – வீரமுள்ளவன்; திண்ணியன்; காண்க: **வீரபத்திரன்**; அருகன்; படைத்தலைவன்; வீடுமன்; தீ; ஓர் ஊர்த்தேவதை; ஓமாக்கினி; கூத்தாடி.

**வீராகரன்** – வீரமிக்கோன்.

**வீராங்கனை** – மறத்தி, வீரப்பெண்.

**வீராசனம்** – யோகாசனவகை; போர்க்களம்.

**வீராணம்** – ஒரு பெரும்பறைவகை.

**வீராதனம்** – காண்க: **வீராசனம்.**

**வீராதிவீரன்** – வீரருள் சிறந்த வீரன்.

**வீராப்பு** – காண்க: **வீறாப்பு.**

**வீராவளி, வீராவேசம்** – காண்க: **வீரவெறி.**

**வீரி** – வீரமுடையவள்; காளி; துர்க்கை; ஓர் ஊர்த்தேவதை; காண்க: **அரிவாள்முனைப் பூண்டு.**

**வீரிடுதல்** – திடீரெனக் கத்துதல்.

**வீரியம்** – வலிமை; வீரம்; பெருமை; சுக்கிலம்; மருந்தின் சத்தி; ஒளி; தற்பெருமை; பறை.

**வீரியவான்** – வீரியமுடையோன்.

**வீரியவொழிவு** – சுக்கிலம் வீணாதல்; சுக்கிலம் வீணாகும் நோய்வகை.

**வீரியாந்தராயம்** – உடல்வலி மனவலிகளைப் பயன்படாமல் தடைசெய்யும் ஊழ்வினை.

**வீருதம்** – மிடைதூறு.

**வீரெனல்** – திடீரெனக் கத்தும் ஒலிக்குறிப்பு.

**வீரை** – கடல்; துன்பம்; ஒரு மரவகை; நெல்லி மரம்; திராட்சை; வாழை; காண்க: **வட்டத் திருப்பி; மயிர்மாணிக்கம்;** மனைவி; தாய்.

**வீரோத்துங்கன்** – வீரத்தாற் சிறந்தவன்.

**வீவு** – அழிவு; சாவு; கெடுதி; முடிவு; குற்றம்; இடையீடு.

**வீழ்** – மரவிழுது; தாலிநாண்; காண்க: **வீழ.**

**வீழ்க்காடு** – வீழ்ச்சி; வீதம்.

**வீழ்க்கை** – சுவாதிநாள்.

**வீழ்கதி** – நரகம்.

**வீழ்ச்சி** – காண்க: **வீழ்வு.**

**வீழ்த்தல்** – விழச்செய்தல்; வீணாகக் கழித்தல்; தாழவிருத்தல்.

**வீழ்தல்** – ஆசை; ஆசைப்பெருக்கம்; மேவல்; வீழுதல்; காண்க: **விழுதல்;** நீங்குதல்.

**வீழ்ந்தாடல்** – துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை என ஐவகைப்பட்ட கூத்துவகை.

**வீழ்நாள்** – பயனற்ற நாள்.

**வீழ்பிடி** – குறைவு; வெறுப்பு.

**வீழ்பு** – சுள்ளி.

**வீழ்மீன்** – விண்வீழ்கொள்ளி.

**வீழ்வு** – விழுதல்; பாய்ச்சல்; விருப்பம்.

**வீழ** – ஓர் உவமவுருபு.

**வீழி** – மருந்துச்செடிவகை; திருவீழிமிழலை என்னும் ஊர்.

**வீளை** – சீழ்க்கை; சிள்ளென்ற ஓசை; சத்தம்.

**வீற்றம்** – வேறுபடுகை.

**வீற்றாதல்** – பிரிவுபடுதல்.

**வீற்றிருக்கை** – அரசிருக்கை.

**வீற்றிருத்தல்** – சிறப்போடிருத்தல்; வேறுபாடு தோன்ற இருத்தல்; இறுமாந்திருத்தல்; தனிமையாயிருத்தல்; கவலையற்றிருத்தல்.

**வீற்று** – வேறுபடுகை; துண்டு; கூறு; தனிமை; விளைவு.

**வீற்றுத்தெய்வம்** – உடலிலமர்ந்து காட்சி யின்பத்தை உண்டாக்கும் தெய்வம்.

**வீற்றும்** – மற்றும்.

**வீற்றுவளம்** – பிற நாட்டுக்கில்லாத செல்வம்.

**வீற்றுவீற்று** – வெவ்வேறு.

**வீறல்** – வெடிப்பு.

**வீறாப்பு** – இறுமாப்பு.

**வீறிடுதல்** – காண்க: **வீரிடுதல்.**

**வீறு** – தனிப்பட்ட சிறப்பு; வெற்றி; வேறொன் றற்கில்லா அழகு; பொலிவு; பெருமை; மிகுதி; நல்வினை; மருந்து முதலியவற்றின் ஆற்றல்; செருக்கு; வெறுப்பு; ஒளி; வேறு; தனிமை; அடி.

**வீறுதல்** – மேம்படுதல்; மிகுதல்; கீறுதல்; வெட்டுதல்; அடித்தல்.

**வீறுவாதம்** – உண்மையில் நோக்கமின்றி வெற்றியே வேண்டுவோன் செய்யும் வாத வகை.

# வெ

**வெ** – ஓர் உயிர்மெய்யெழுத்து (வ் + எ).

**வெஃகல்** – மிகு விருப்பம்; பேராசை.

**வெஃகா** – காஞ்சிபுரத்தருகில் ஓடும் வேகவதி ஆறு; திருமால் திருப்பதிகளுள் ஒன்று.

**வெஃகாமை** – அவாவின்மை; பிறர் பொருளைக் கவர்ந்துகொள்ள விரும்பாமை; வெறுப்பு.

**வெஃகுதல்** – மிக விரும்புதல்; பிறர் பொருளை இச்சித்தல்.

**வெக்கடுப்பு** – கடுகடுப்பு; கண்ணோய்வகை.

**வெக்காளம்** – மழையில்லாக் காலம்; புழுக்கம்; துயரம்.

**வெக்காளித்தல்** – வானந் தெளிதல்; மனத்துயர்ப் படுதல்.

**வெக்கை** – மிகுந்த வெப்பம்; புழுக்கம்; வெப்ப நோய்; மாட்டுநோய்வகை; கடாவிடு களம்; வெப்பப் பகுதியினின்றும் வீசும் அனல்.

**வெக்கைதட்டுதல்** – சூடு உண்டாதல்; வெட்டை நோயால் வருந்துதல்.

**வெக்கைநோய்** – அம்மைநோய்வகை; மாட்டு நோய்வகை; நோய்வகை.

**வெகிர்முகம்** – வெளிமுகம்.

**வெகு** – மிகுதியான; அநேகமான.

**வெகுச்சுரு** – மிகுந்த கேள்வி; பரந்த கல்வி.
**வெகுசனம்** – மக்கட்கூட்டம்.
**வெகுசு** – மிகுதி.
**வெகுசுருதம்** – காண்க: வெகுச்சுரு; சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று.
**வெகுட்சி** – சினம்.
**வெகுண்டம்** – கரும்பு.
**வெகுத்தம், வெகுத்துவம்** – அநேகம்; மிகுதி; பெருமை.
**வெகுதான்(னி)ய** – அறுபதாண்டுக் கணக்கில் பன்னிரண்டாம் ஆண்டு.
**வெகுநாயகம்** – பலருடைய ஆட்சி.
**வெகுபத்திரி** – செடிவகை; மரவகை.
**வெகுபுத்திரி** – செடிவகை; காண்க: **கீழாநெல்லி**; துளசி.
**வெகுமஞ்சரி** – துளசி.
**வெகுமதி** – நன்கொடை.
**வெகுமாரி** – மிகுமழை; மிகுதி.
**வெகுமானம்** – நன்கொடை; பெருமதிப்பு; போற்றுகை; பாசாங்கு.
**வெகுமூலம்** – முருங்கைமரம்.
**வெகுர்** – வேர்க்குரு.
**வெகுரசம்** – கரும்பு.
**வெகுரூபன்** – பச்சோந்தி; சிவபிரான்; திருமால்; பிரமன்; மன்மதன்.
**வெகுவாய்** – மிகுதி; பெரும்பாலும்.
**வெகுவாய்ச்சொல்லுதல்** – அதிகமாகச் சொல்லுதல்; வற்புறுத்திக் கூறுதல்.
**வெகுள்வு** – காண்க: **வெகுட்சி.**
**வெகுளாமை** – சினவாமை.
**வெகுளி** – சினம்; வெறுப்பு; கபடமற்றவர்.
**வெகுளிப்பு** – சினம்.
**வெகுளுதல்** – சினத்தல்; பகைத்தல்.
**வெங்கண்** – அழலெழ விழிக்கும் கண்; கொடுமை; பொறாமை; பகைமை; கண்ணூறு.
**வெங்கணன்** – கொடியவன்.
**வெங்கதிர், வெங்கதிர்ச்செல்வன், வெங்கதிரோன்** – சூரியன்.
**வெங்கம்** – மிக்க வறுமை.
**வெங்கள்** – கடுக மயக்குங் கள்.
**வெங்களம்** – போர்க்களம்.
**வெங்கன்** – வறிஞன்.
**வெங்காயம்** – பூடுவகை; உள்ளி.
**வெங்கார்** – வெப்பம்; நெல்வகை.
**வெங்கார்நாற்றம்** – தலைப்பெயல் மழையால் காய்ந்த மண்ணினின்று எழும் ஆவிநாற்றம்.
**வெங்கார்மண்** – சூரியவெப்பத்தாற் சூடேறிய மண்.
**வெங்காரம்** – மருந்துச்சரக்குவகை; புண்ணுக்கிடுங் காரம்.
**வெங்கான்வெளி** – நீரற்ற பகுதி.
**வெங்கிணாத்தி** – பெரிய மலைப்பாம்புவகை.
**வெங்குரு** – சீகாழி; யமன்.
**வெங்கோல்** – காண்க: **வெங்கோன்மை.**
**வெங்கோலன்** – கொடுங்கோலையுடைய மன்னன்.
**வெங்கோன்மை** – கொடுங்கோல்.
**வெச்சம்** – மாணிக்கக் குற்றவகை.
**வெச்சமுது** – சமைத்த உணவு.
**வெச்செனல்** – வெப்பமாதல்; கடுமையாதல்.
**வெச்செனவு** – சூடு.
**வெஞ்சம்** – வஞ்சம்; பழி; சினம்.
**வெஞ்சமம்** – பாலைநிலப் பண்; கடும்போர்.
**வெஞ்சமன்** – யமன்.
**வெஞ்சனம்** – கறிக்குதவும் பண்டம்; மெய்யெழுத்து; குழம்பு; சமைத்த கறியுணவு.
**வெஞ்சிலைச்செல்வன்** – வீரபத்திரன்.
**வெஞ்சுடர்** – சூரியன்.
**வெஞ்சொல்** – கடுஞ்சொல்.
**வெஞ்சோறு** – சுடுசோறு; கறி சேர்க்கப்படாத சோறு.
**வெட்கக்கேடு** – நாணமில்லாமை; அவமானம்.
**வெட்கங்கெட்டவன்** – மானமற்றவன்.
**வெட்கப்படுத்துதல்** – மானமிழக்கச்செய்தல்.
**வெட்கப்படுதல்** – நாணமடைதல்; கூச்சப்படுதல்.
**வெட்கம்** – நாணம்; அவமானம்; கூச்சம்.
**வெட்குதல்** – கூச்சப்படுதல்; அஞ்சுதல்.
**வெட்சி** – வெட்சிச்செடி; பகைவர் ஆனிரையைக் கவர்தலைக் கூறும் புறத்துறை.
**வெட்சிக்கரந்தை** – பகைவர் கவர்ந்துகொண்ட ஆனிரையை மீட்பதைக் கூறும் புறத்துறை.
**வெட்சிமறவர்** – பகைவரின் ஆனிரையைக் கவரச் செல்லும் மறவர்.
**வெட்சியரவம்** – பகைமுனையிடத்து நிரை கவரப் போக்குங்கால் உண்டாகும் ஆரவாரத்தைக் கூறும் புறத்துறை.
**வெட்ட** – அதிகமான; தெளிவான.
**வெட்டல்** – காண்க: **வெட்டுதல்.**
**வெட்டவழி** – பலர் செல்லும் நெறி.
**வெட்டவிடி** – அதிகாலை.
**வெட்டவெடித்தல்** – அதிகச் சினங்கொள்ளுதல்.
**வெட்டவெளி** – திறந்தவெளியிடம்; சூனியமான இடம்.
**வெட்டவெளிச்சம்** – பேரொளி; வெளிப்படையானது.
**வெட்டறாமுளி** – காண்க: **நத்தைச்சூரி.**
**வெட்டனவு** – கடுமை; கெட்டியாயிருக்கை; வலாற்காரம்; வெடுக்குத்தனம்.

**வெட்டாட்டம்** – தாய ஆட்டவகை.
**வெட்டாந்தரை** – காய்ந்திறுகிய நிலம்.
**வெட்டி** – மண்வெட்டி; புல்வகை; வழி; பயனின்மை; ஊர்ப்பணியாளன்; பிணஞ் சுடுவான்.
**வெட்டிச்சாய்த்தல்** – மரம் முதலியன முறித்து வீழ்த்துதல்; கொல்லுதல்; பெருங்காரியங் களைச் செய்தல்; தாராளமாகக் கொடுத்தல்; உதவுதல்.
**வெட்டிச்சோறு** – தண்டச்சோறு; பழைய வரி வகை.
**வெட்டிது** – கடுமையானது.
**வெட்டிநிலம்** – தரிசுநிலம்.
**வெட்டிப்பயல்** – பயனற்றவன்.
**வெட்டிப்பேச்சு** – வீண்பேச்சு.
**வெட்டிப்பேசுதல்** – கண்டித்துப் பேசுதல்; எதிர்த் துப் பேசுதல்; கடுமையாகப் பேசுதல்.
**வெட்டிமை** – கடுமை; சினம்; வெட்டியான் தொழில்; கடுஞ்சொல்.
**வெட்டியான்** – பிணஞ்சுடுவோன்; ஊர் ஊழியக் காரன்; பூச்சிவகை.
**வெட்டிரும்பு** – இரும்பை வெட்டும் உளி.
**வெட்டிவேர்** – இலாமிச்ச வேர்; புல்வகை.
**வெட்டிவேலை** – பயனற்ற வேலை.
**வெட்டு** – வெட்டுதலால் உண்டாகும் புண் முதலியன; எழுத்து முதலியன பொறிக்கை; மயிர்வெட்டுகை; தையல்துணி வெட்டுகை; துண்டிப்பு; பகட்டு; வஞ்சனை.
**வெட்டுக்காயம்** – வெட்டினால் உண்டாம் புண்.
**வெட்டுக்கிளி** – பூச்சிவகை.
**வெட்டுக்குத்து** – கத்தி முதலிய கூரான ஆயுதங் களைக்கொண்டு செய்யுஞ் சண்டை.
**வெட்டுக்குளம்பு** – கால்நடையின் பிளந்துள்ள பாதம்.
**வெட்டுச்சட்டை** – பெண்கள் அணியும் ஓர் அங்கி வகை.
**வெட்டுண்ணுதல்** – முறிபடுதல்.
**வெட்டுணி** – கீழ்ப்படியாத பிள்ளை; முரடன்.
**வெட்டுத்தட்டு** – பறையின் வாய்வார்.
**வெட்டுத்தாக்கு** – மண்ணெடுத்த குழி.
**வெட்டுதல்** – வாள் முதலியவற்றால் பிளவுபட எறிதல்; எழுத்து முதலியன பொறித்தல்; தானிய அளவில் தலை வழித்தல்; தோண்டு தல்; தலைமயிரைக் கழித்தல்; துணி முதலியன துண்டித்தல்; ஆட்டக்காயைப் பயனற்றதாக நீக்குதல்; அழித்தல்; கடிந்து பேசுதல்; கடுமை யாதல்; பளிச்சென மின்னுதல்; உண்டியல் கிழித்தல்.
**வெட்டுப்படுதல்** – முறிபடுதல்.
**வெட்டுப்படை** – வாட்படை.
**வெட்டுப்பழி** – தீராப்பகை.
**வெட்டுமருந்து** – வெட்டுக்காயங்களுக்குப் பயன் படுத்தும் மருந்து.
**வெட்டுரைப்பணம்** – கள்ள நாணயம்.
**வெட்டுவாய்** – அறுபட்ட புண்வாய்; பொருத்து.
**வெட்டுவாள்** – வெட்டுக்கத்திவகை.
**வெட்டெனல்** – கடுமைக்குறிப்பு; மௌனமாய் இசைதற்குறிப்பு.
**வெட்டெனவு** – கடுமை; வன்மை; வன்மை யானது.
**வெட்டை** – வெப்பம்; சூடு; நிலக்கொதி; காம இச்சை; நோய்வகை; வெறுமை; பயனின்மை; கேடு; கடினத்தன்மை; வெளி காய்ந்து இறுகிய நிலம்.
**வெட்பாடம்** – வாய்ப்பாடம்.
**வெட்பாலை** – ஒரு மரவகை.
**வெட்புகார்** – மழைநீரற்ற மேகம்.
**வெட்புலம்** – வெற்றிடம்.
**வெடி** – வேட்டு; ஓசை; இடி; துப்பாக்கி; வெடி யுப்பு; வாணம்; சிற்றேலம்; பிளவு; பகை; கேடு; அச்சம்; நிமிர்ந்தெழுகை; தாவுகை; நறும்புகை; நறுமணம்; தீநாற்றம்; கள்; கவறாட்டத்து வழங்கும் ஒரு குழூஉக்குறி; பொய்; விடிவெள்ளி; வெளி.
**வெடிகுரல்** – இயல்பு மாறிய குரல்; இசைக்கு மாறுபட்ட ஓசை.
**வெடிகொள்ளுதல்** – மேலேழுதல்; வெடித்தல்; துப்பாக்கியாற் சுடப்படுதல்.
**வெடிச்சிரிப்பு** – பெருஞ்சிரிப்பு.
**வெடித்தகுரல்** – இயல்பு மாறிய குரல்; உரத்த குரல்.
**வெடித்தசொல்** – வெடுவெடுப்பான பேச்சு.
**வெடித்தல்** – பிளவுபடுதல்; ஓசையெழப் பிளத் தல்; வெளிக்கிளம்புதல்; வெடியோசை உண் டாதல்; மலர்தல்; விறைத்து மேலே கிளம்பு தல்; பொறாமையால் துடித்தல்; எறிதல்.
**வெடிநாற்றம்** – தீநாற்றம்; வெடிமருந்து சுட்ட மணம்.
**வெடிப்பு** – ஓசையோடு வெடித்து எழுகை; பிளப்பு; அழிவு; தீநாற்றம்; வெறுப்பு; குற்ற மான சொல்; கண்டிப்பு; சிறப்பு.
**வெடிபடுதல்** – அஞ்சுதல்; பேரோசையுண்டா தல்; சிதறுதல்.
**வெடிபோடுதல்** – குண்டுபோடுதல்.
**வெடிமருந்து** – வெடிப்பதாற் குண்டு முதலிய வற்றை வெளிக்கிளப்பும் வாணமருந்து.
**வெடியல்** – விடியற்காலம்; ஓசை.
**வெடியுப்பு** – வெடிமருந்துக்குதவும் உப்புவகை.

**வெடில்** – தீநாற்றம்; ஓசை.

**வெடிவு** – விடிகை; நற்காலம் வருகை; விடியற் காலம்.

**வெடிவைத்தல்** – துப்பாக்கியாற் சுடுதல்; கெடுக்கப் பார்த்தல்; திகைக்கும்படி பொய்ச் சொல் சொல்லுதல்; சண்டைமூட்டுதல்.

**வெடுக்கன்** – கோபி; கடுகடுப்புள்ளவன்.

**வெடுக்கு** – கடுமைக்குறிப்பு; காண்க: வெட்டெனவு.

**வெடுக்கெனல்** – கடுமைக்குறிப்பு; திடீரெனற் குறிப்பு; ஒடிதலின் ஓசைக்குறிப்பு; பேச்சில் கடுகடுப்பாயிருத்தற் குறிப்பு; விரைவுக் குறிப்பு; குத்துநோவுக் குறிப்பு.

**வெடுவெடுத்தல்** – கடுமையாகப் பேசுதல்; சினத்தாற் படபடத்தல்.

**வெடுவெடுப்பு** – கடுகடுப்பு.

**வெடுவெடெனல்** – சினக்குறிப்பு; நடுக்கக்குறிப்பு; விரைவுக்குறிப்பு; ஒல்லியாயிருத்தற் குறிப்பு; பெருஞ்சிரிப்பின் ஒலிக்குறிப்பு.

**வெண்கடல்** – காண்க: பாற்கடல்.

**வெண்கடுகு** – கடுகுவகை.

**வெண்கதிர்** – காண்க: **வெண்கதிரோன்**; கருக்கல்.

**வெண்கதிரோன்** – திங்கள்.

**வெண்கமலம்** – வெண்டாமரைவகை; நரகவகை.

**வெண்கமலை** – கலைமகள்.

**வெண்கரு** – முட்டையின் வெள்ளைச்சத்து.

**வெண்கலம்** – செம்பும் வெள்ளீயமும் கலந்து உருக்கியுண்டாக்கும் கலப்பு உலோகம்; நாள்.

**வெண்கலி, வெண்கலிப்பா** – வெண்டளை பெற்றுவரும் கலிப்பாவகை.

**வெண்கவி** – பொருளாழம் இல்லாத பாட்டு; காண்க: வெண்பா.

**வெண்களமர்** – மருதநில மக்கள்; வேளாளர்.

**வெண்களிற்றரசு** – ஐராவத யானை.

**வெண்கன்னான்** – வெண்கலவேலை செய்யும் கன்னான்.

**வெண்காசம்** – கண்ணோயுள் ஒன்று.

**வெண்காந்தள்** – கோடல், ஒரு செடிவகை.

**வெண்காயம்** – உள்ளி; பூண்டுவகை.

**வெண்காரம்** – மருந்துச்சரக்கு.

**வெண்காரை** – அரைத்த சுண்ணாம்பு.

**வெண்கால்** – யானைத் தந்தத்தாற் செய்த கட்டில் முதலியவற்றின் கால்.

**வெண்காவல்** – காண்க: வெறுங்காவல்.

**வெண்காழ்** – மரத்தின் உள்ளீடு; முயலெறியுந் தடிவகை.

**வெண்கிடை** – நெட்டிவகை.

**வெண்கிழமை** – வெள்ளிக்கிழமை.

**வெண்கிளுவை** – முள்ளில்லாத கிளுவை மர வகை.

**வெண்குட்டம்** – உடலில் வெள்ளையாகப் படரும் குட்டநோய்.

**வெண்குடை** – அரசனது வெற்றிகுறிக்கும் வெண்ணிறக்குடை.

**வெண்குமுதம்** – ஆம்பல்வகை.

**வெண்குன்று** – சுவாமிமலை.

**வெண்கூதாளம்** – தாளிவகை.

**வெண்கை** – தொழில் செய்து பழகாத கை; சங்குவளை அணிந்த கை; அபிநயஞ் செய்யாது தாளத்திற்கு இசைவிடும் கை; வெள்ளிய கைப் பிடி.

**வெண்கொடி** – வெற்றிக்கொடி; கலைமகள்.

**வெண்கொல்** – வெள்ளி.

**வெண்கொற்றக்குடை** – வெற்றிக்கு அடையாள மான வெண்ணிறக்குடை.

**வெண்கோட்டம்** – ஓமாலிகை முப்பத்திரண்ட னுள் ஒன்றான நறும்பண்டம்; செடிவகை.

**வெண்கோடல்** – காண்க: வெண்காந்தள்.

**வெண்சாரணை** – ஒரு மருந்துப் பூடுவகை.

**வெண்சலசமுற்றாள்** – கலைமகள்.

**வெண்சாமரம், வெண்சாமரை** – கவரிமானின் மயிர்க்கற்றை யாகிய அரச சின்னம்.

**வெண்சீர்வெண்டளை** – வெண்பாவுரிச்சீர்முன் நேர்வந்து ஒன்றுந் தளைவகை.

**வெண்சுடர்** – காண்க: **வெண்கதிரோன்.**

**வெண்சுதைக்குன்று** – செய்குன்றுவகை.

**வெண்செந்துறை** – இரண்டடிகள் தம்முள் அளவொத்துவருஞ் செய்யுள்வகை.

**வெண்சோறு** – வெள்ளரிசியாற் சமைத்த வெறும் அன்னம்.

**வெண்டயம்** – காண்க: வெண்டையம்.

**வெண்டலை** – தசை நீங்கி எலும்பு மட்டுமான தலை; தலையோடு; காண்க: வெண்ணிலை.

**வெண்டளை** – வெண்பாவிற்குரிய தளையான இயற்சீர்வெண்டளை வெண்சீர்வெண்டளை.

**வெண்டாது** – வெள்ளி; திருநீறு.

**வெண்டாமரை** – வெள்ளை நிறமுடைய தாமரைப்பூ.

**வெண்டாமரைமகள், வெண்டாமரையாள்** – நாமகள்.

**வெண்டாவி** – பட்டினிகிடந்து பின் உண்கை யால் உண்டாகும் அன்னக்களை.

**வெண்டிரை** – கடல்.

**வெண்டு** – உட்டுளை; மரங்களின் உள்ளீட்டைப் போக்கும் நோய்வகை; கரும்பு; கடுக்கன்புரி; கிடேச்சு.

**வெண்டுகில்** – வெள்ளைத்துணி.

**வெண்டுத்தம்** – காண்க: மயிற்றுத்தம்.

**வெண்டுறை** – மூன்றடி முதல் ஏழடி ஈறாக அடிகளைப் பெற்றுச் சீர் குறைந்தும் மிக்கும் வருதலையுடைய வெண்பாவின்வகை; ஆடற்குரிய பாட்டு.

**வெண்டேர்** – கானல்நீர்.

**வெண்டை** - செடிவகை.

**வெண்டையம்** – வீரர் காலணி; குதிரை முதலியவற்றின் காற்சலங்கை; கட்டைவிரல் மோதிரம்.

**வெண்டொழுநோய்** – காண்க: **வெண்குட்டம்.**

**வெண்டோடு** – பனந்தோடு.

**வெண்டோன்றி** – ஒரு செடிவகை.

**வெண்ணகை** – வெள்ளிய பல்; புன்னகை.

**வெண்ணஞ்சு** – நிணம்; ஊன் விசேடம்.

**வெண்ணரி** – நரிவகை.

**வெண்ணாங்கு** – மரவகை.

**வெண்ணாயுருவி** – ஒரு செடிவகை.

**வெண்ணாரை** – ஒரு கொக்குவகை.

**வெண்ணாவல்** – ஒரு நாவல்மரவகை.

**வெண்ணிலம்** – வெறுந்தரை; மணல்தரை.

**வெண்ணிலவு** – நிலாக்கதிர்.

**வெண்ணிலை, வெண்ணிலைக்கடன்** – ஈடுகாட்டாது வாங்கும் கடன்.

**வெண்ணீர்** – சுக்கிலம்.

**வெண்ணீறு** – திருநீறு.

**வெண்ணெய்** – தயிரிலிருந்து எடுக்கப்படுவது; தைலமருந்து காய்ச்சும் பக்குவவகை.

**வெண்ணெய்த்தாழி** – வெண்ணெய் வைக்குஞ் சட்டி; கண்ணபிரான் வெண்ணெய் திருடியது குறித்து நடத்தப்பெறும் கோயில் திருவிழா.

**வெண்ணெய்வெட்டி** – கூர்மழுங்கியது; பயனற்றவன்; துணிவில்லாதவன்.

**வெண்ணொச்சி** – மரவகை.

**வெண்பட்டு** – வெள்ளை நிறமுள்ள பட்டு.

**வெண்படலிகை** – வெள்ளித்தட்டு.

**வெண்படை** – நெய்தற்குரிய நூற்பா.

**வெண்பதம்** – இளம்பதம்.

**வெண்பலி** – சாம்பல்.

**வெண்பா** – நால்வகைப் பாக்களுள் ஒன்று.

**வெண்பாசி** – பாசிமணிவகை.

**வெண்பாட்டம்** – கோடைமழை; முன்பணமின்றி விடுங் குத்தகை.

**வெண்பாட்டு** – காண்க: **வெண்பா.**

**வெண்பாவை** – நாமகள்.

**வெண்பிறப்பு** – மக்கட்பிறப்பு.

**வெண்பிறை** – வெள்ளிய பிறைச்சந்திரன்.

**வெண்புழுக்(ங்)கல்** – இளம்புழுக்கல்; இளம் புழுக்கலரிசி; காண்க: **வெண்சோறு.**

**வெண்பூம்பட்டு** – வெண்பட்டாடைவகை.

**வெண்பூமான்** – கலைமகள்.

**வெண்பொங்கல்** – பருப்பு, நெய் முதலியன சேர்த்துச் செய்த சோற்றுக்கலவை.

**வெண்பொடி** – திருநீறு.

**வெண்பொத்தி** – துகில்வகை.

**வெண்பொன்** – வெள்ளி; சுக்கிரன்.

**வெண்மண்டை** – பிச்சைக்காரர் கைக்கொள்ளும் உண்கலவகை.

**வெண்மணி** – முத்து; கருவிழியைச் சூழ்ந்துள்ள வெள்ளைவட்டம்.

**வெண்மதி** – சந்திரன்; காண்க: **வெள்ளைச்சேம்பு.**

**வெண்மயிர்** – நரைமயிர்; காண்க: **வெண்சாமரை.**

**வெண்மலை** – கைலைமலை.

**வெண்மழை** – மழைபெய்யும் நிலையை அடையாத வெற்றுமேகம்.

**வெண்மீன்** – சுக்கிரன்.

**வெண்முகில்** – காண்க: **வெண்மழை.**

**வெண்மை** – வெண்ணிறம்; தூய்மை; ஒளி; இளமை; மனக்கவடின்மை; அறிவின்மை; புல்லறிவுடைமை.

**வெதரி** – இலந்தைமரம்.

**வெதிர்** – நடுக்கம்; மூங்கில்; விரிமலர்; செவிடு.

**வெதிர்ங்கோல்** – மூங்கிற்கோல்.

**வெதிர்த்தல்** – நடுங்குதல்.

**வெதிர்ப்பு** – அச்சம்; கலக்கம்; நடுக்கம்; சினக் குறிப்பு.

**வெதிரம்** – மூங்கில்.

**வெதிரன்** – செவிடன்.

**வெதிரேகம்** – வேறுபாடு; பரிணாமம்; எதிர் மறை.

**வெதுக்கலன்** – துயரம் முதலியவற்றால் உடலிளைத்தவன்.

**வெதுப்படக்கி** – ஒரு மருந்துச் செடிவகை.

**வெதுப்பம்** – இளஞ்சூடு; சூட்டினால் உண்டாகும் வயிற்றுப்போக்கு.

**வெதுப்பு** – சுரநோய்வகை; மாட்டுநோய்வகை; காண்க: **வெதுப்பம்.**

**வெதும்புதல்** – இளஞ்சூடாதல்; சிறிது வாடுதல்; வெம்மையாதல்; கொதித்தல்; சினங்கொள்ளுதல்; மனங்கலங்குதல்.

**வெதுவெதுப்பு** – இளஞ்சூடு.

**வெந்** – முதுகு.

**வெந்தயம்** –செடிவகை; வெந்தயஅரிசி.

**வெந்தழல்** – சிவந்தெரியும் தீ.

**வெந்தித்தல்** – சினத்தல்; சூடாதல்; ஒற்றுமையாதல்; கட்டுதல்.

**வெந்திப்பு** – கொதிப்பு; சினம்; கட்டு.

**வெந்திறல், வெந்துப்பு** – மிகுவலிமை.

வெந்துளி – துயரக்கண்ணீர்.
வெந்தை – நீராவியிலேயே புழுங்கியது; பிட்டு.
வெந்தையம் – காண்க: வெந்தயம்.
வெந்நிடுதல் – புறங்காட்டுதல்.
வெந்நீர் – சுடுநீர்.
வெப்பசாரம் – மனத்துயர்; சினம்; பொறாமை.
வெப்பம் – வெம்மை; கடுமை; சுரநோய்; பொறாமை; ஆசை; சினம்; துயர்; ஒரு நரகம்.
வெப்பர் – காண்க: வெப்பம்; சூடான உணவு.
வெப்பித்தல் – சூடாக்குதல்; மனக்கொதிப்பு உண்டாக்குதல்.
வெப்பிராளம் – மனக்குழப்பம்.
வெப்பு – வெம்மை; சுரநோய்; சுரதேவதை; சுர நட்சத்திரம்; தாபம்; சினம்; பொறாமை; துயர்; ஆசை; கொடுமை; தொழுநோய்.
வெப்புக்கட்டி – நாட்பட்ட சுரத்தினால் வயிற்றில் உண்டாகும் கட்டிவகை.
வெப்புநோய் – சுரத்தால் உண்டாகும் சூடு; தொழுநோய்.
வெப்புள் – வெம்மை.
வெம்பகல் – நடுப்பகல்.
வெம்பல் – மிகு வெப்பம்; சினம்; வாடலானது; பிஞ்சிற் பழுத்துக்கெட்ட காய்.
வெம்பளிக்கை – இறுமாப்பு.
வெம்பறவை – எண்காற்புள்.
வெம்பா – மூடுபனி.
வெம்பிளிக்கை – இறுமாப்பு; பொருட்படுத்தாமை.
வெம்புதல் – மிகச் சூடாதல்; வாடுதல்; முதிராது கனிதல்; சினத்தல்; மனம்புழுங்குதல்; விரும்புதல்; ஒலித்தல்.
வெம்மை – வெப்பம்; கடுமை; சினம்; விருப்பம்; வீரம்.
வெய்து – வெப்பமுடையது; வெப்பம்; துயரம்; வெப்பமுள்ள பொருளாலிடும் ஒற்றடம்.
வெய்துயிர்த்தல் – வெப்பமாக மூச்சுவிடுதல்; துன்பத்தால் மூச்சுவிடுதல்.
வெய்துயிர்ப்பு – வெப்பமூச்சு; பெருமூச்சு.
வெய்துரை – கடுஞ்சொல்.
வெய்துறுதல் – துன்புறுதல்; மனங்கலங்குதல்; சினத்தல்.
வெய்தெனல் – விரைவுக்குறிப்பு; வெம்மைக் குறிப்பு; கொடுமைக்குறிப்பு.
வெய்ய – வெப்பமான; கொடிய; விரும்புதற்குரிய.
வெய்யது – சூடானது; கொடியது; தாங்க முடியாதது.
வெய்யவன், வெய்யன் – கொடியவன்; சூரியன்; விருப்பமுள்ளவன்; தீக் கடவுள்.

வெய்யில் – காண்க: வெயில்.
வெய்யோன் – காண்க: வெய்யவன்; மூக்கின் வலப் பக்கத் துளை; மிருகசீரிடநாள்.
வெயர் – வேர்வைநீர்.
வெயர்த்தல் – வேர்வை நீருண்டாதல்; சினத்தல்.
வெயர்ப்பு – வேர்வைநீர்; வேர்வையுண்டாகை; சினம்.
வெயர்வை – காண்க: வெயர்.
வெயில் – சூரிய வெளிச்சம்; சூரிய வெப்பம்; கதிரவன்; ஒளி.
வெயில்நீக்கி – குடை.
வெயிலடித்தல் – சூரியன் ஒளிவீசல்; சூரியக்கதிர் வெப்பமாயிருக்கை.
வெயிலுறைத்தல் – சூரியஒளி வெப்பமாயிருக்கை.
வெயிலெறித்தல் – காண்க: வெயிலடித்தல்.
வெயிலோன் – சூரியன்.
வெயிற்குளித்தல் – வெயிலிற் காய்தல்; குளிர் காயச் சூரியவெப்பத்தி லிருத்தல்.
வெயின்மறை – வெயிலை மறைக்கும் கருவி.
வெரிந் – முதுகு.
வெரு – அச்சம்.
வெருக்குவிடை – காட்டுப்பூனையின் ஆண்.
வெருக்கொள்ளுதல் – அஞ்சுதல்.
வெருக்கோள் – அச்சங்கொள்ளுகை.
வெருகடிப்பிரமாணம் – மூன்றுவிரலாற் கிள்ளும் அளவு.
வெருகம் – வாலின் கீழிடம்.
வெருகு – ஆண்பூனை; காட்டுப்பூனை; மரநாய்; செடிவகை; வெண்கிடை; மெருகு.
வெருட்சி – அச்சம்; மருட்சி; மருளுகை.
வெருட்டி – வெருட்டுவது.
வெருட்டுதல் – அச்சுறுத்துதல்; திகைக்கச் செய்தல்; விலங்கு முதலியவற்றை ஓட்டுதல்; விரைவாகச் செல்லத் தூண்டுதல்.
வெருப்பறை – போர்முரசு.
வெருவந்தம் – அச்சம்.
வெருவரல், வெருவருதல் – அச்சந்தருதல்; அஞ்சுதல்.
வெருவருநிலை – பகைவர் அம்பு தன் மார்பைப் பிளப்பவும் பூமியில் விழாமல் நின்ற வீரனது நிலையைக் கூறும் புறத்துறை.
வெருவலர் – பகைவர்.
வெருவாமை – அஞ்சாமை.
வெருவு – அச்சம்.
வெருவுதல், வெருவெருத்தல் – அஞ்சுதல்.
வெருள் – அச்சம்; மனக்கலக்கம்; அஞ்சத்தக்கது.
வெருளார்த்தல் – திகைத்தல்; மயங்குதல்.
வெருளி – செல்வச்செருக்கு; வெருட்சி; வெருளச் செய்யும் புல்லுரு முதலியன.
வெருளிப்பிணை – பெண்மான்வகை.

**வெருளுதல்** – மருளுதல்; அஞ்சுதல்; குதிரை முதலியன மருளுதல்.
**வெரூஉ** – அச்சம்.
**வெரூஉதல்** – மருண்டஞ்சுகை.
**வெல்புகழ்** – போர்க்கண் வெற்றியால் உண்டாம் கீர்த்தி.
**வெல்லப்பாகு** – கருப்பஞ்சாற்றைக் காய்ச்சி உண்டாக்குங் குழம்பு.
**வெல்லம்** – கருப்பஞ்சாற்றுக்கட்டி.
**வெல்லல்** – வெற்றியடைதல்; வாயுவிளங்கம்.
**வெல்லவட்டு** – வெல்லத்தைக் காய்ச்சிச் சக்கரமாக ஊற்றிய துண்டு.
**வெல்லி** – சிறநேலம்; வல்லவர்.
**வெல்லுதல்** – வெற்றிபெறுதல்; ஒத்தல்; ஒழித்தல்; மேம்படுதல்.
**வெல்லுமா** – புலி.
**வெல்லை** – வெள்ளைநிறம்.
**வெல்வி** – வெற்றி.
**வெலவெலத்தல்** – களைத்தல்; கைகால் உதறுதல்; வியத்தல்.
**வெலிகம்** – கற்றாழை.
**வெலிகாரம்** – மருந்துச்சரக்கு.
**வெலீஇயோன்** – வெல்வித்தோன்.
**வெவ்வர்** – வெம்மை.
**வெவ்விடாய்** – கடுந்தாகம்.
**வெவ்விது** – சூடானது; கொடியது.
**வெவ்வினை** – போர்; கொடிய வினை.
**வெவ்வுயிர்த்தல்** – வெப்பமாக மூச்சுவிடுதல்.
**வெவ்வுரை** – கடுஞ்சொல்.
**வெவ்வுழவு** – மேலுழவு.
**வெவ்வெஞ்செல்வன்** – வெம்மையுடையதும் விரும்பப்படுவதுமாகிய இளஞாயிறு.
**வெவ்வேகம்** – கொடிய நஞ்சு.
**வெவ்வேறு** – வேறுவேறு; தனித்தனி.
**வெள்** – வெண்மையான; உள்ளீடற்ற; கலப்பில்லாத; ஒளிபொருந்திய; கூர்மை.
**வெள்குதல்** – வெட்குதல்; அஞ்சுதல்; கூச்சப்படுதல்; மனங்குலைதல்.
**வெள்யாடு** – காண்க: வெள்ளாடு.
**வெள்வரகு** – வரகுவகை.
**வெள்வரி** – பலகறை; கண்ணோய்வகை; காண்க: வெள்ளரி.
**வெள்வரைத்தல், வெள்வரைப்பு** – கிழக்கு வெளுத்தல்.
**வெள்வளையார்** – மகளிர்.
**வெள்வாடை** – இளந்தென்றல்.
**வெள்வாள்** – ஒளியுள்ள வாள்.
**வெள்விழி** – வெள்ளை விழி.
**வெள்விளர்த்தல்** – மிக வெண்மையாதல்.
**வெள்வீச்சு** – வெற்றுப்பேச்சு.
**வெள்வெங்காயம்** – காண்க: வெங்காயம்; வெள்ளைப்பூண்டு.
**வெள்வெடி** – வெற்றுத்தோட்டா; காண்க: வெள்வீச்சு; வெருட்டு.
**வெள்வேல்** – வேலமரவகை.
**வெள்ளக்காடு** – பெருவெள்ளம்; நீரால் நிலப்பரப்பு நிறைகை.
**வெள்ளக்கால்** – வெள்ளநீர்.
**வெள்ளக்கேடு, வெள்ளச்சாவி** – வெள்ளமிகுதியால் நேரும் பயிர்க்கேடு.
**வெள்ளடி** – வெளிப்படை; உள்ளீடின்மை; பொது; பொதுவானது; வெறுங்கால்; வெண்பாவுக்குரிய அடி; வெருட்டு.
**வெள்ளடிச்சேவல்** – காலின் முள் செதுக்கப்படாத சண்டைச்சேவல்.
**வெள்ளடை** – வெற்றிலை; பரமாகாசம்; ஒரு சிவதலம்.
**வெள்ளணி** – பிறந்தநாள் ஒப்பனை; வெள்ளிய ஆடை; அரசன் பிறந்தநாள் விழா.
**வெள்ளப்பாடு** – வெள்ளமிகுதியால் வருமழிவு; பள்ளமான வயல்நிலம்.
**வெள்ளப்பாழ்** – காண்க: வெள்ளக்கேடு.
**வெள்ளம்** – நீர்ப்பெருக்கு; பெருக்கம்; கடல்; கடலலை; நீர்; ஈரம்; மிகுதி; ஒரு பேரெண்; உண்மை.
**வெள்ளர்** – வெண்ணிறமுடையார்; கபடமற்றவர்.
**வெள்ளரணை** – காண்க: சீலைப்பேன்.
**வெள்ளரி** – ஒரு கொடிவகை.
**வெள்ளலரி** – ஒரு பூச்செடிவகை.
**வெள்ளவிளர்த்தல்** – மிக வெண்மையாதல்.
**வெள்ளவெளி** – பரமன் உறையும் ஞானாகாசம்.
**வெள்ளறிவு** – அறிவுக்குறைவு.
**வெள்ளறுகு** – அறுகம்புல்வகை; புல்வகை.
**வெள்ளறுவை** – வெள்ளைஆடை.
**வெள்ளாட்டி** – பணிப்பெண்; வைப்பாட்டி.
**வெள்ளாடு** – ஓர் ஆட்டுவகை.
**வெள்ளாண்மை** – பயிர்த்தொழில்; வேளாண்மை.
**வெள்ளாம்பல்** – ஆம்பல்வகை.
**வெள்ளாமை** – கடலாமைவகை; காண்க: வேளாண்மை; பறையாமை.
**வெள்ளாவி** – ஆடை வெளுக்க உதவும் நீராவி.
**வெள்ளாவிகட்டுதல், வெள்ளாவிவைத்தல்** – வெளுத்தற்குரிய ஆடைகளை நீராவியிலிடுதல்; நன்றாக அடித்தல்.
**வெள்ளாழ(ள)ன்** – வேளாள மரபினன்.
**வெள்ளாறு** – சோழ பாண்டிய நாட்டு எல்லையாக உள்ள ஓர் ஆறு.
**வெள்ளானை** – இந்திரனது ஐராவதம், வெள்ளை யானை; வாலைரசம்.
**வெள்ளானையுள்ளோன்** – ஐயனார்.

**வெள்ளானையூர்ந்தோன்** – இந்திரன்.
**வெள்ளி** – வெண்மை; வெண்ணிறமுள்ள உலோகவகை; நாணயவகை; சுக்கிரன்; வெள்ளிக்கிழமை; விண்மீன்; அறிவுக்குறைவு; விந்து; ஒரு புலவர்; அசுர குருவாகிய சுக்கிரன்.
**வெள்ளிக்கிழமை** – வாரத்தில் ஆறாம்நாள்.
**வெள்ளிக்கோல்** – துலாக்கோல்வகை.
**வெள்ளிச்சரிகை** – வெள்ளியால் இழைத்த சரிகை.
**வெள்ளிடம்** – இடைவெளி.
**வெள்ளிடி** – கோடையில் மழை பெய்யாது இடிக்கும் இடி; எதிர்பாராது திடீரென வரும் இடுக்கண்.
**வெள்ளிடை** – வெளியிடம்; வானம்; இடைவெளி; தெளிவு.
**வெள்ளிடைமலை** – யாவரும் அறியும்படி தெளிவாயிருப்பது.
**வெள்ளிது** – வெளிப்படையானது.
**வெள்ளிநிலை** – துயர்தீரச் சுக்கிரன் மழைபெய்வித்தலைக் கூறும் புறத்துறை.
**வெள்ளிமலை** – கயிலைமலை; ஒரு மலை.
**வெள்ளிமன்றம்** – காண்க: வெள்ளியம்பலம்.
**வெள்ளிமாடம்** – அரண்மனைவகை.
**வெள்ளிமீன்** – சுக்கிரன்.
**வெள்ளிமுலாம்** – வெள்ளிப்பூச்சு.
**வெள்ளியம்பலம்** – மதுரைக் கோயிலில் கூத்தப்பிரான் கால்மாறியாடிய மன்றம்.
**வெள்ளியார்** – வெண்ணிறமுடையவர்; நற்குணமுள்ளவர்; சுக்கிரன்; சிவபிரான்.
**வெள்ளியுயிர்** – மக்கட்பிறப்பு.
**வெள்ளியெழுதல்** – வெள்ளிமுளைத்தல்.
**வெள்ளில்** – விளாமரம்; விளாம்பழம்; பாடை.
**வெள்ளிலங்காடு** – சுடுகாடு.
**வெள்ளிலை** – வெற்றிலை; ஆயுதங்களின் அலகு; வெள்ளிமடந்தைச்செடி.
**வெள்ளிலைப்பற்று** – வெற்றிலைக் கவளி.
**வெள்ளிலோத்திரம்** – வெண்பூவுள்ள மரவகை; விளாமரம்; விளாம்பட்டை.
**வெள்ளிவரைகாப்போன்** – நந்தி.
**வெள்ளிவள்ளி** – மகளிரணியும் வெள்ளித்தோள்வளை.
**வெள்ளிவிழா** – இருபத்தைந்தாம் ஆண்டு நிறைவுக் கூட்டம்.
**வெள்ளிவேர்** – சல்லிவேர்.
**வெள்ளிழுது** – வெண்ணெய்.
**வெள்ளீயம்** – ஓர் ஈயவகை.
**வெள்ளீரல்** – மணிக்குடர்.
**வெள்ளுப்பு** – வெண்மைநிறமான உப்பு.
**வெள்ளுயிர்** – சுத்தான்மா.
**வெள்ளுவரி** – நல்ல நீர்.
**வெள்ளுவா** – வெள்ளையானை.
**வெள்ளுள்ளி** – வெள்ளைப்பூண்டு.
**வெள்ளெருக்கு** – எருக்குவகை.
**வெள்ளெலி** – ஒரு வெள்ளை எலிவகை.
**வெள்ளெலும்பு** – தசை கழிந்த எலும்பு.
**வெள்ளெழுத்து** – எழுத்துப் பார்வைக்குறை.
**வெள்ளென** – அதிகாலையில்; குறித்த காலத்திற்கு முன்னமே.
**வெள்ளெனல்** – வெண்மையாதல்; தெளிவாதல்; பொழுதுவிடிதல்.
**வெள்ளேடு** – வெற்றேடு.
**வெள்ளை** – வெண்மை; பலராமன்; சுண்ணாம்பு; வெள்ளிநாணயவகை; வயிரம்; மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்று; சங்கு; கள்; வேங்கைமரம்; வெள்ளைத்துணி; வெளுப்பு; வெள்ளைமாடு; வெள்ளாடு; கபடமற்றவர்; கபடமற்றது; கருத்தாழமில்லாதது; பொருள் வெளிப்படையானது; வெண்பா; இசையில் உண்டாம் வெளிற்றோசை; புல்லிது.
**வெள்ளைக்கரு** – முட்டையின் வெள்ளைச்சத்து.
**வெள்ளைக்கவி** – வெண்பா; பொருளாழமற்ற கவி; புன்மொழிகளால் கவிபாடுவோன்; பிறரைத் தொடங்கச்செய்து கவிபாடுவோன்.
**வெள்ளைக்காக்கணம்** – கொடிவகை.
**வெள்ளைக்காகிதம்** – வெண்மையான கடுதாசி; எழுதாத தாள்.
**வெள்ளைக்காரன்** – ஐரோப்பிய இனத்தவன்.
**வெள்ளைக்குதிரை** – வெண்ணிறக் குதிரை; கள்; சீலைப்பேன்.
**வெள்ளைக்குந்துருக்கம்** – நீண்ட மரவகை.
**வெள்ளைக்குப்போடுதல்** – அழுக்காடைகளை வெளுக்கப்போடுதல்.
**வெள்ளைக்குன்றி** – அதிமதுரக்கொடி.
**வெள்ளைக்கொம்பு** – நரைமயிர்.
**வெள்ளைக்கோட்டி** – பயனிலபேசும் அறிவிலார் கூட்டம்.
**வெள்ளைச்சுரிதகம்** – வெண்டளையில் வரும் கலிப்பாவின் இறுதியுறுப்புவகை.
**வெள்ளைச்சேம்பு** – சேம்புவகை.
**வெள்ளைசாத்துதல்** – காண்க: வெள்ளைபூணுதல்.
**வெள்ளைத்தமிழ்** – எளிய நடையில் அமைந்த தமிழ்.
**வெள்ளைத்தனம்** – கபடமின்மை.
**வெள்ளைத்தாள்** – சோளப்பயிர் நோயுள் ஒன்று; வெள்ளைக் கடுதாசி.
**வெள்ளைநாகர்** – பலதேவர்.
**வெள்ளைநாவல்** – ஒரு நாவல்மரவகை.
**வெள்ளைநிறத்தாள்** – கலைமகள்.
**வெள்ளைநோக்கு** – கள்ளமற்ற பார்வை.

**வெள்ளைப்புத்தி** – அறியாமை; அறிவுக்குறைவு.
**வெள்ளைப்பூச்சு** – வெள்ளையடிக்கை; தவறு முதலியவற்றை மழுப்பி மறைக்கை.
**வெள்ளைப்பூண்டு** – ஒரு பூண்டுவகை.
**வெள்ளைப்பேச்சு** – வெளிப்படையான சொல்; கபடமில்லாத பேச்சு.
**வெள்ளைபூசுதல்** – சுண்ணாம்படித்தல்; தவறு முதலியவற்றை மழுப்புதல்; வீட்டுக்கு மெருகு சுண்ணாம்பு பூசுதல்.
**வெள்ளைபூணுதல்** – வெள்ளையுடை தரித்தல்.
**வெள்ளைமகன்** – மூடன்.
**வெள்ளைமயிர்** – நரைமயிர்.
**வெள்ளைமழை** – குறைந்த மழை.
**வெள்ளைமனம்** – கபடமற்ற தூயமனம்.
**வெள்ளைமனிதன்** – காண்க: **வெள்ளைக்காரன்;** கபடமற்றவன்.
**வெள்ளைமிளகு** – மிளகுவகை; மரவகை.
**வெள்ளைமூர்த்தி** – தூயவடிவன்; பலதேவன்.
**வெள்ளைமெய்யாள், வெள்ளைமேனியாள்** – கலைமகள்.
**வெள்ளைமை** – அறிவின்மை.
**வெள்ளையடித்தல்** – சுண்ணாம்படித்தல்; தவறு முதலியவற்றை மழுப்புதல்.
**வெள்ளையப்பன்** – வெள்ளிநாணயம்; செல்வம்.
**வெள்ளையன்** – வெண்ணிறத்தினன்; காண்க: **வெள்ளைக்காரன்; வெள்ளையப்பன்.**
**வெள்ளையாடை** – கைம்பெண்டிர் உடுக்கும் வெள்ளைப்புடைவை; வெண்மையான ஆடை.
**வெள்ளையானை** – வெண்ணிறமுள்ள யானை; கீழ்த்திசையானை; காண்க: **ஐராவதம்;** அதிகச் செலவு பிடிக்கக்கூடியது.
**வெள்ளையானையூர்தி** – இந்திரன்; ஐயனார்.
**வெள்ளையும்சள்ளையும்** – வெண்மையான ஆடை.
**வெள்ளையுருவாள்** – காண்க: **வெள்ளைமேனியாள்.**
**வெள்ளைவாயன்** – இரகசியத்தை மறைக்க முடியாது வெளியிடுபவன்.
**வெள்ளைவாரணன்** – இந்திரன்.
**வெள்ளைவிழி** – கண்ணில் வெண்மையாயுள்ள பாகம்.
**வெள்ளைவெளுத்தல்** – ஆடையழுக் ககற்றல்.
**வெள்ளைவெளேரெனல்** – மிகுவெள்ளைக்குறிப்பு.
**வெள்ளொக்கலர்** – குற்றமரபினர்; செல்வந்தர்களை உறவினர்களாக உடையவர்; மாசற்ற சுற்றத்தினை உடையவர்.
**வெள்ளொத்தாழிசை** – வெண்பாவின் இனம்.
**வெள்ளோசை** – வெண்பாவுக்குரிய ஓசை; பாடும்போது தோன்றும் வெடித்த குரலாகிய இசைக் குற்றம்; பாடுகையில் தோன்றும் வெடித்த குரல்.
**வெள்ளோட்டம்** – ஆய்வுக்காக முதன்முதலாகத் தேர், மரக்கலம் முதலியவற்றை ஓடச்செய்தல்; ஒன்றனைப் பயன்படுத்துதற்குமுன் செய்துபார்க்கும் ஆய்வு; ஒருவன் நோக்கத்தை அறிய முன்னால் செய்யும் செயல்.
**வெள்ளோலை** – எழுதப்படாத ஓலை; முத்திரையிடப்படாத ஓலை.
**வெளி** – புறம்; வெளிப்பக்கம்; வானம்; இடைவெளி; வெளிப்படை; வெட்டவெளி; மைதானம்; தூய்மை; வெண்பா; மேற்பார்வைக்குக் காணும் காட்சி.
**வெளிக்கட்டு** – வீட்டின் முன்பாகம்.
**வெளிக்காட்சி** – காண்க: **வெளித்தோற்றம்.**
**வெளிக்குப்போதல்** – மலங்கழித்தல்.
**வெளிக்குவருதல்** – வெளிப்படையாதல்; மலங்கழிக்க உணர்வு உண்டாதல்.
**வெளிகொடுவெளியே** – வெளிப்படையாய்.
**வெளிச்சங்காட்டுதல்** – வழிதெரிய விளக்கின் மூலம் ஒளி காட்டுதல்; வெளிக்குப் பகட்டாய்த் தோன்றுதல்; ஒளி செய்தல்; பகட்டுச் சொல்லால் மழுப்புதல்; ஒளியால் கப்பல் முதலியவற்றுக்கு அடையாளம் தெரிவித்தல்.
**வெளிச்சம்** – ஒளி; விளக்கு; தெளிவு; பகட்டு.
**வெளிச்சம்போடுதல்** – வாணிகப் பொருள்களை ஒளிபெறச்செய்தல்; விளக்கேற்றுதல்; உள்ளதை மறைத்துப் பொய்த்தோற்றம் காட்டுதல்.
**வெளிச்சமாதல்** – விடிதல்; விளங்குதல்.
**வெளிச்சாடை** – வெளிப்பகட்டு; மேற்பார்வைக்குக் காணும் காட்சி.
**வெளிச்செண்ணெய்** – தேங்காயெண்ணெய்.
**வெளிசம்** – தூண்டில்.
**வெளித்தல்** – வெளிப்படையாதல்; சூழ்ச்சி வெளியாதல்; விடிதல்; தெளிவாதல்; வெண்ணிறங் கொள்ளுதல்; பயனிலதாதல்; வெறிதாதல்.
**வெளித்தோற்றம்** – மேற்பார்வைக்குக் காணுங் காட்சி; உற்பத்தி; நேர்காட்சி; உருவெளித் தோற்றம்.
**வெளிதிறத்தல்** – வெளியிடுதல்; வெளிப்படையாதல்; காண்க: **வெளிர்த்துக்காட்டுதல்.**
**வெளிது** – வெண்மையானது; வெள்ளிய ஆடை.
**வெளிநாட்டம்** – தீநெறி ஒழுகுகை.
**வெளிநாடு** – அயல்நாடு; வெளியுலகம்.
**வெளிநாடுதல்** – வெளியிற் காணப்படுதல்; தீநெறியில் ஒழுகுதல்.
**வெளிப்பகட்டு** – காண்க: **வெளிமயக்கு.**
**வெளிப்படுத்தல், வெளிப்படுத்துதல்** – பலர் அறியத் தெரிவித்தல்; காட்டுதல்; வெளியே வரச்செய்தல்; புத்தகம் பதிப்பித்தல்; வெளியே போகச்செய்தல்.

**வெளிப்படுதல்** – வெளியே வருதல்; வெளிப்படத் தோற்றுதல்; பெருள் விளக்கமாதல்; பதிப்பிக்கப்படுதல்.

**வெளிப்படை** – தெளிவானது; மேற்பார்வையில் தோன்றுவது; அணிவகை.

**வெளிப்படைச்சொல்** – இயல்பாகப் பொருள் விளங்கி நிற்கும் மொழி.

**வெளிப்படையுவமம்** – குறிப்பால் அன்றித் தெளிவாக அறியப்படும் உவமம்.

**வெளிப்பயன்** – வெளிப்படத் தெரியக்கூடிய இலாபம்; தெளிவாய் அறியப்படும் பொருள்.

**வெளிப்பாடு** – வெளிப்படை; காணிக்கை.

**வெளிப்பு** – வெளியிடம்; வெளிப்புறம்; தெளிவு.

**வெளிப்பேச்சு** – நாட்டுச்செய்தி; உண்மையற்ற பேச்சு.

**வெளிமடை** – கோயில் புறம்பேயுள்ள சிறு தெய்வங்களுக்குப் படைக்கும் பலி; குளம் முதலியவற்றிலிருந்து வெளியே நீர் செல்லும் மதகு.

**வெளிமயக்கு** – வெளித்தோற்றத்தால் உண்டாம் மதிமயக்கம்.

**வெளிமான்** – மான்வகை; பெண்மான்; சங்க காலத்துத் தலைவருள் ஒருவன்.

**வெளிமுகடு** – வானத்தின் புறவெல்லை.

**வெளிமுற்றம்** – வீட்டின் வெளிப்புறத்துள்ள திறந்தவெளி.

**வெளியடை** – திரைச்சீலை.

**வெளியரங்கம்** – தெளிவானது.

**வெளியாக்குதல்** – காண்க: **வெளிப்படுத்துதல்.**

**வெளியாடை** – தோரணம்; புறவுடை.

**வெளியாதல்** – காண்க: **வெளிப்படுதல்.**

**வெளியார்** – அறிவிலார்; புறம்பானவர்.

**வெளியிடுதல்** – காண்க: **வெளிப்படுத்துதல்; வெளிவாங்குதல்.**

**வெளியீடு** – நூல் முதலியவற்றின் பதிப்பு; நூற் பதிப்பு.

**வெளியேற்றுதல்** – வெளியே போகச்செய்தல்; நாடு கடத்துதல்; காண்க: **வெளிப்படுத்துதல்.**

**வெளியேறுதல்** – வெளியே போதல்; வீட்டை விட்டு ஓடிப்போதல்; வெளியூருக்குப் போதல்; கேட்டினின்றும் தப்பித்துவருதல்.

**வெளிர்த்துக்காட்டுதல்** – மழை நின்றபின் வானம் வெளுத்தல்; வெளிறின நிறமாகத் தோன்றுதல்.

**வெளில்** – யானைகட்டுந் தூண்; தயிர்கடையும் மத்து; கம்பம்; அணில்.

**வெளிவருதல்** – பலராலும் அறியப்படுதல்; பலருக்குங் கிடைக்குமாறு பதிப்பிக்கப்படுதல்.

**வெளிவாங்குதல்** – மழை பெய்தபின் மேகங் கலைந்து வெளிச்சமாதல்.

**வெளிவாசல்** – கட்டடத்தின் வெளியிலிருக்கும் வாசல்; வீட்டின் முகப்பிலுள்ள முற்றம்.

**வெளிவாய்ப்படுகை** – ஆறு குளங்களை அடுத்துப் புறம்பாக உள்ள நிலம்.

**வெளிவிடுதல்** – வெளிப்படுத்துதல்; பலரறியச் செய்தல்.

**வெளிவேடம்** – தன்னுருவைப் பிறர் அறியாதபடி மறைக்கை; வெளித்தோற்றம்; கபடம்.

**வெளிற்றுப்பனை** – வயிரமற்ற பனை.

**வெளிற்றுமரம்** – காண்க: **அலிமரம்;** மரவகை.

**வெளிற்றுரை** – பயனில் சொல்.

**வெளிறன்** – அறிவில்லாதவன்; கீழ்மகன்.

**வெளிறு** – வெண்மை; நிறக்கேடு; வெளிச்சம்; வெளிப்படுகை; பயனின்மை; அறியாமை; இளமை; திண்மையற்றது; குற்றம்; வயிரமின்மை; மரவகை; காண்க: **அலிமரம்.**

**வெளிறுதல்** – வெண்மையாதல்; நிறங்கெடுதல்.

**வெளுத்தல்** – காண்க: **வெளிறுதல்;** உண்மைநிலை வெளிப்படுதல்; ஆடை வெளுத்தல்; புடைத்தல்.

**வெளுத்துவாங்குதல்** – மிக நன்றாகச் செய்தல்; நிறம் கெடுதல்.

**வெளுப்பு** – வெண்மை; ஆடைவெளுத்தல்; நோயால் உடல் வெளிறுகை; புடைக்கை.

**வெளேரெனல்** – வெண்மையாதற்குறிப்பு; நிறம் வெளிறுதற்குறிப்பு.

**வெற்பன்** – குறிஞ்சிநிலத் தலைவன்.

**வெற்பு** – மலை; பக்கமலை.

**வெற்றம்** – வெற்றி; வீரம்.

**வெற்றர்** – ஏழைகள்; பயனற்றார்.

**வெற்றரையவர்** – சமணர்.

**வெற்றல்** – வெற்றி.

**வெற்றவெறிது** – பயன் சிறிதுமின்மை.

**வெற்றாள்** – தனியாயிருப்பவர்; வேலை இல்லாத ஆள்; பயனற்றவர்.

**வெற்றி** – வென்றி; வாகைசூடுதல்.

**வெற்றிக்கொடி** – வெற்றியைக் குறிக்க எடுக்கும் கொடி.

**வெற்றிடம்** – வெறுமையான இடம்.

**வெற்றித்தண்டை** – வீரத்துக்கு அறிகுறியாகக் காலில் அணியும் தண்டை.

**வெற்றிப்பாடு** – வெற்றியாற் பெற்ற பெருமை.

**வெற்றிப்புகழ்** – வெற்றியால் உண்டாம் கீர்த்தி; போரிலடைந்த வெற்றியைப் புகழ்தல்.

**வெற்றிப்பூ** – வெற்றிக்கறிகுறியாக அணியும் பூ.

**வெற்றிமகள், வெற்றிமடந்தை** – வீரத்திருமகள்.

**வெற்றிமாலை** – போர் வென்றோர் சூடும் மாலை.

**வெற்றிமுரசு** – வெற்றிக்கறிகுறியாக முழங்கப் படும் பேரிகை.

**வெற்றிமை** – வெற்றியாகிய தன்மை; மேம்பாடு; வெறுமை.

**வெற்றிலை** – கொடிவகை; வெற்றிலைக் கொடியின் இலை.

**வெற்றிலைக்கால்** – காண்க; வெற்றிலைத் தோட்டம்.

**வெற்றிலைச்சுருள்** – வெற்றிலையில் பாக்கு வைத்துக் கட்டிய சுருள்.

**வெற்றிலைச்செல்லம்** – காண்க: வெற்றிலைப் பெட்டி.

**வெற்றிலைத்தோட்டம்** – வெற்றிலைக்கொடி பயிர்செய்யும் தோட்டம்.

**வெற்றிலைப்பட்டி** – காண்க: வெற்றிலைச்சுருள்.

**வெற்றிலைப்படலிகை** – வெற்றிலை வைக்குங் கூடை.

**வெற்றிலைப்பெட்டி** – வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு முதலியன வைக்குஞ் சிறுபெட்டி.

**வெற்றிலைப்பை** – வெற்றிலை பாக்கு சுண் ணாம்பு முதலியன வைக்கும் பை.

**வெற்றிலைபாக்கு** – தாம்பூலம்.

**வெற்றிலைவைத்தல்** – தாம்பூலம் வைத்துத் திருமணம் முதலியவற்றுக்கு உறவினர் நண்பர் முதலியோரை அழைத்தல்.

**வெற்றிவாகை** – போர் வென்றோர் சூடும் மாலை.

**வெற்றுடல்** – பிணம்; வெறிதாய உடம்பு.

**வெற்றுரை** – பொருளற்றசொல்.

**வெற்றெனத்தொடுத்தல்** – நூற்குற்றம் பத்தனுள் ஒன்றான பயனில் சொற்றொடர்படக் கூறுவது.

**வெற்றெனல்** – வெறுமையாதற்குறிப்பு.

**வெற்றொழிப்பு** – அணிவகை.

**வெற்றோலை** – எழுதப்படாத ஓலை; மகளிரணி யும் பனையோலைச் சுருளால் ஆன காதணி.

**வெறி** – பயித்தியம்; மதம்; சினம்; கலக்கம்; ஒழுங்கு; வட்டம்; கள்; குடிமயக்கம்; விரைவு; மணம்; காண்க: வெறியாட்டு; வெறிப்பாட்டு; மூர்க்கத்தனம்; பேய்; தெய்வம்; ஆடு; பேதமை; அச்சம்; நோய்; ஆள்களின்றி வெறுமையாகை.

**வெறிக்கப்பார்த்தல்** – இமையாது வெகுண்டு நோக்குதல்.

**வெறிக்களம்** – வெறியாட்டு ஆடும் களம்.

**வெறிக்கூத்து** – வேலனாடல்; களியாட்டம்.

**வெறிகொள்ளுதல்** – மயக்கங்கொள்ளுதல்; பயித்தியங் கொள்ளுதல்; கடுமையாதல்.

**வெறிகோள்** – காண்க: வெறியாட்டு, வெறிக் கூத்து.

**வெறிச்சு** – ஆள்களின்றி வெறுமையாகை.

**வெறிச்செனல்** – ஆள்களின்றி வெறுமையாதற் குறிப்பு.

**வெறித்தல்** – குடியால் மயங்குதல்; பயித்தியம் பிடித்தல்; மதங்கொள்ளுதல்; திகைத்தல்; கடுமையாதல்; வெருவுதல்; விலங்கு முதலியன வெருளுதல்; ஆவலோடு பார்த்தல்; விறைத்து நிற்றல்; ஆள்களின்றி வெறுமையாதல்; வானம்தெளிதல்.

**வெறிதல்** – செறிதல்.

**வெறிது** – அறிவின்மை; ஒன்றுமின்மை; பயனின்மை.

**வெறிநாய்** – பைத்தியம் பிடித்த நாய்.

**வெறிநாற்றம்** – புணர்ச்சிக்குப்பின் பிறக்கும் நாற்றம்.

**வெறிப்பாட்டு** – வெறியாட்டில் நிகழும் பாடல்.

**வெறிப்பு** – மதுமயக்கம்; ஏக்கறவு; அச்சம்; கண் கூச்சம்; பஞ்சம்.

**வெறிபிடித்தல்** – காண்க: வெறிகொள்ளுதல்.

**வெறிமலர்** – மணமுள்ள பூ; தெய்வத்துக்குரிய பூ.

**வெறியயர்தல்** – வெறியாட்டுதல்.

**வெறியன்** – பைத்தியக்காரன்; குடிவெறியுள்ள வன்; கடுமையானவன்; யாதுமற்றவன்.

**வெறியாட்டாளன்** – வெறியாடல் புரியும் வேலன்.

**வெறியாட்டு, வெறியாடல்** – வேலன் ஆடுதல்; களி யாட்டம்.

**வெறியாள்** – காண்க: வெறியாட்டாளன்.

**வெறியெடுத்தல்** – வெறியாட்டு நிகழ்த்துதல்.

**வெறியோடுதல்** – ஒளிமிகுதியாற் கண்வெறித்துப் போதல்; ஆற்றாமையுறுதல்.

**வெறுக்கை** – அருவருப்பு; வெறுப்பு; மிகுதி; செல்வம்; பொன்; வாழ்வின் ஆதாரமா யுள்ளது; கையுறை; கனவு.

**வெறுக்கைக்கிழவன்** – செல்வத்துக்குரிய குபேரன்.

**வெறுங்காவல்** – வேலை வாங்காமல் அடைத்து வைத்திருக்கும் சிறை.

**வெறுங்கை** – வறுமை.

**வெறுங்கோது** – பயனற்றது; ஒன்றுக்கும் உதவாதவர்.

**வெறுஞ்சோறு** – கறிவகையில்லாத அன்னம்.

**வெறுத்தகுதல்** – செறிதல்.

**வெறுத்தல்** – அருவருத்தல்; பகைத்தல்; சினத் தல்; விரும்பாதிருத்தல்; பற்றுவிடுதல்; மிகுதல்; துன்புறுதல்.

**வெறுத்தார்** – வெறுப்புற்றவர்; பற்றற்றோர்.

**வெறுத்திசை, வெறுத்திசைப்பு** – யாப்பின் ஓசைக்குற்றவகை.

**வெறுந்தரை** – விரிப்பு முதலியன இல்லாத தரை; கட்டாந்தரை; பயனில்லாப் பொருள்.

**வெறுநரையோர்** – முழுநரையுள்ள முதியவர்.
**வெறுநுகம்** – சோதிநாள்.
**வெறுப்பு** – அருவருப்பு; சினம்; பகைமை; விருப்பமின்மை; துன்பம்; கலக்கம்; அச்சம்; செறிவு.
**வெறும்பிலுக்கு** – வீண்பகட்டு.
**வெறும்புறங்கூற்று** – அலர்மொழி.
**வெறும்புறங்கூறல்** – கோள்சொல்லுதல்; அலர் தூற்றுதல்.
**வெறும்புறம்** – ஒன்றுமில்லாதிருக்கை; காரணமின்மை.
**வெறுமன்** – வீண்.
**வெறுமனே(னை)** – வீணாக; வேலையின்றி.
**வெறுமை** – பயனின்மை; அறியாமை; வறுமை; கலப்பின்மை.
**வெறுமொருவன்** – தனித்த ஒருவன்.
**வெறுமொன்று** – தனித்த ஒன்று.
**வெறுவாய்க்கிலைகெட்டவன்** – ஒன்றுமில்லாத வறியவன்.
**வெறுவாயலட்டுதல்** – வீண்பேச்சுப் பேசுதல்; தற்பெருமை பேசுதல்; பிதற்றுதல்.
**வெறுவியர்** – பயனற்றவர்.
**வெறுவிலி** – ஒன்றுமில்லாத வறியவன்.
**வென்** – வெற்றி; முதுகு.
**வென்றவன்** – வெற்றிபெற்றவன்; பற்றற்றுச் சித்தி பெற்றவன்; அருகக்கடவுள்.
**வென்றி** – வெற்றி.
**வென்றிக்கூத்து** – மாற்றான் ஒடுக்கமும் மன்னன் உயர்ச்சியும் காட்டும் கூத்து.
**வென்றிமாலை** – போர்வென்றோர் சூடும் மாலை; வெற்றியொழுங்கு.
**வென்றியன்** – காண்க: வென்றவ்ன்.
**வென்றோன்** – வெற்றியடைந்தோன்; புலனடங்கப்பெற்றோன்; அருகக்கடவுள்.

# வே

**வே** – ஓர் உயிர்மெய்யெழுத்து (வ் + ஏ); ஒற்று.
**வேக்காடு** – கொதிக்கும் நீர் முதலியவற்றில் வேகுதல்; எறிதல்; அழற்சி; வெப்பம்; பொறாமை.
**வேக்காளம்** – காண்க: **வேக்காடு**; சினம்; மனத்துயர்; வெட்கம்.
**வேகடம்** – மணியின் அழுக்குப் போக்கல்; விசித்திர வேலை; இளந்தன்மை; மீன்வகை.
**வேகடன்** – காண்க: **வேகடி**; இளைஞன்.
**வேகடி(டை)** – மணியின் அழுக்குப் போக்குவோன்; காண்க: **வேகடம்.**
**வேகடைத்தாள்** – காண்க: **குருநாத்தகடு.**
**வேகப்புள்** – கருடன்.
**வேகம்** – விரைவு; விரைந்த நடை; விசை; வலிமை; சினம்; மனக்கலக்கம்; கடுமை; மலம், சிறுநீர் முதலியவற்றின் உணர்வு; சுக்கிலம்; நஞ்சு; காண்க: **நாற்றம்; அடம்பு**; வெள்ளப்பெருக்கு; கீழ்; பரவுகை; உடம்பு.
**வேகர்** – தூதுவர்.
**வேகரம்** – கடுமை; உறைப்பு.
**வேகவதி** – மதுரையிலுள்ள வையையாறு; காஞ்சியிலுள்ள ஆறு.
**வேகவைத்தல்** – சூட்டாற் பக்குவப்படுத்துதல்.
**வேகாளம்** – காங்கை; வேக்காடு; சினம்.
**வேகி** – வேகமுடையவர்; சினமுடையவர்; வஞ்சகமுடையவர்.
**வேகித்தல்** – விரைதல்; சினத்தல்.
**வேங்கடம்** – திருப்பதி; திருப்பதிமலை, வடமலை.
**வேங்கியம்** – குறிப்பு; வெட்கம்.
**வேங்கை** – புலிவகை; மரவகை; ஒரு மலை; ஒரு நாடு; பொன்.
**வேசகம்** – யானை வால்நுனி; வால்; குதிரையின் பிடரிமயிர்; வீடு.
**வேசதாரி** – மாறுவேடம் பூண்டவர்; வஞ்சகமுடையவர்.
**வேசம்** – உடை முதலியவற்றால் கொள்ளும் வேற்று வடிவம்; வாயில்; வீடு; சம்பளம்; வேசையர் தெரு; கடுமை; காதணிவகை.
**வேசரம்** – ஒட்டகம்; ஒரு தெலுங்குமொழி; மனச்சோர்வு; சிற்பவகை.
**வேசரி** – கழுதை; கோவேறு கழுதை.
**வேசறவு, வேசறிக்கை** – மனச்சோர்வு; துயரம்.
**வேசனம்** – மருதநிலத்தூர்; வீடு; வாயில்.
**வேசா** – விலைமகள்.
**வேசாடல்** – மனக்கலக்கம்.
**வேசாறல்** – சோர்தல்; துயரம்; ஆறுகை; களைப்பாறுகை.
**வேசாறுதல்** – களைப்பாறுதல்; மனஞ்சோர்தல்; ஆறுதல்; துன்பம் அடைதல்.
**வேசி** – பரத்தை.
**வேசிக்கள்ளன்** – வேசியுறவுள்ளவன்.
**வேசித்தனம்** – பரத்தமை; பிலுக்கு.
**வேசியாடுதல்** – கற்பொழுக்கந்தவறி நடத்தல்.

**வேட்கை** – பற்றுள்ளம்; காமவிருப்பம்.
**வேட்கைநீர்** – தாகந்தணிக்கும் நீர்.
**வேட்கைநோய்** – காண்க: **வேட்கை;** கருப்ப காலத்து ஏற்படும் மசக்கைநோய்.
**வேட்கைப்பெருக்கம்** – பேராசை.
**வேட்கைமுந்துறுத்தல்** – தலைவி தன் விருப் பத்தைத் தலைவன்முன் கூறும் துறை.
**வேட்கைமை** – காண்க: **வேட்கை.**
**வேட்கோ, வேட்கோப(வ)ன்** – குயவன்.
**வேட்சி** – காண்க: **வேட்கை.**
**வேட்டக்குடி** – வேட்டுவர் வீடு.
**வேட்டகம்** – மனைவி பிறந்த வீடு; தலைப்பாகை.
**வேட்டம்** – வேட்டை; கொலை; விருப்பம்; விரும்பிய பொருள்; பிசின்; சாரம்.
**வேட்டல்** – வேள்விசெய்தல்; திருமணம்; விரும்பு தல்; ஏற்குதல்.
**வேட்டாள்** – மனைவி; மணம்புரிந்தவள்.
**வேட்டான்** – நண்பன்; திருமணமானோன்; கணவன்; விரும்புபவன்.
**வேட்டி** – ஆடவர் அரையில் உடுத்தும் ஆடை.
**வேட்டிதம்** – சூழ்கை; சூழப்பெற்றது; தடை; கூத்தின் விகற்பம்; மடிப்பு.
**வேட்டு** – வேட்கைத்தொழில்; வெடி.
**வேட்டுவன்** – பாலைநிலத்திற் குரியவன்; வேட்டைக்குச் செல்வோன்; குறிஞ்சிநிலத் தலைவன்; குளவி; மகநாள்.
**வேட்டுவாளி** – குளவி.
**வேட்டுவிச்சி** – குறிஞ்சிநிலப் பெண்.
**வேட்டை** – வேட்டையில் கிடைக்கும் பொருள்; கொலை; இளைப்பு; துன்பம்.
**வேட்டைகட்டுதல்** – வேட்டைமேற் செல்லுதல்.
**வேட்டைநாய்** – வேட்டையாடப் பழகிய நாய்; கடிக்கும் நாய்.
**வேட்டையாடுதல்** – கொல்லுதற்கேனும் பிடித் தற்கேனும் காட்டிலுள்ள விலங்கு முதலிய வற்றைத் துரத்திச் செல்லுதல்.
**வேட்டைவாளி** – காண்க: **வேட்டுவாளி.**
**வேட்டோன்** – காண்க: **வேட்டான்.**
**வேட்பாளர்** – தேர்தலுக்கு நிற்க விரும்புவோர்.
**வேட்பித்தல்** – வேள்விசெய்தல்.
**வேட்பு** – விருப்பம்.
**வேடகம்** – காதணிவகை.
**வேடங்காட்டுதல்** – போலியாக நடித்தல்.
**வேடச்சி** – வேடர்குலப் பெண்.
**வேடச்சேரி** – வேடரூர்.
**வேடதாரி** – மாறுவேடம் பூண்டவர்; வஞ்சக முடையோர்.
**வேடம்** – உடை முதலியவற்றால் கொள்ளும் வேற்றுவடிவம்; உடை; விருப்பம்.
**வேடன்** – வேட்டுவன்; பாலைநிலத்துக்குரிய வன்; காண்க: **வேடதாரி.**
**வேடிக்கை** – விநோதம்; அலங்காரம்; விநோதக் காட்சி; விளையாட்டு.
**வேடிக்கைக்காரன்** – விநோதஞ் செய்பவன்.
**வேடிக்கைகாட்டுதல்** – விநோதச்செயல் செய்தல்.
**வேடிக்கைப்பேச்சு** – சிரிப்பாகப் பேசுதல்.
**வேடிச்சி** – காண்க: **வேடச்சி.**
**வேடிதம்** – மருந்து நாற்றம்.
**வேடு** – வேடர்தொழில்; வேடச்சாதி; வேடன்; வரிக்கூத்துவகை; பாண்டத்தின் வாயை மூடிக் கட்டும் துணி; மூடுகை; வடிகட்டுஞ்சீலை; பொட்டணம்.
**வேடுபறி** – வழிப்பறி; திருமங்கை மன்னன் திருமாலை வழிப்பறிக்கவும் சுந்தரரிடம் வேடர்கள் வழிப்பறிக்கவும் முயன்றதைக் கொண்டாடும் திருவிழா.
**வேடுவன்** – வேடன்; குளவி.
**வேடை** – வேட்கை; காமநோய்; மரக்கலம்; வெப்பம்; மழையில்லாக்காலம்; கோடைக் காலம்.
**வேண்டல்** – விரும்புதல்; விண்ணப்பம்.
**வேண்டலன்** – பகைவன்.
**வேண்டற்பாடு** – விருப்பம்; தேவை; பெருமை; செருக்கு.
**வேண்டாத்தலையன்** – அஞ்சாதவன்; முரடன்.
**வேண்டாத்தனம்** – தவறு; வேண்டாப் பொறுப் பின்மை.
**வேண்டாதகாரியம்** – தேவையில்லாத செயல்.
**வேண்டாதவன்** – விருப்பப்படாதவன்; பகைவன்.
**வேண்டாதார்** – காண்க: **வேண்டார்.**
**வேண்டாமை** – வெறுப்பு; அவாவின்மை.
**வேண்டார்** – விரும்பாதவர்; பகைவர்.
**வேண்டாவெறுப்பு** – விருப்பில்லாமை.
**வேண்டிக்கொள்ளுதல்** – குறைநீக்க வேண்டுதல்.
**வேண்டியது** – இன்றியமையாதது; தேவை யானது; போதுமானது; மிகுதியானது; மனத்துத் தோன்றியது.
**வேண்டியமட்டும்** – தேவையான அளவு; போது மான அளவு.
**வேண்டியவன்** – நட்புக்குரியவன்; பிரியமுள்ள வன்; ஒருவன் நன்மையை நாடுபவன்.
**வேண்டியிருத்தல்** – இன்றியமையாததா யிருத்தல்.
**வேண்டுகோள்** – நேர்தல்.
**வேண்டுதல்** – விரும்புதல்; விரும்பிக்கேட்டல்; விலைக்கு வாங்குதல்; இன்றியமையாத தாதல்.

**வேண்டுமென்று** – முழுமனத்தோடு; பிடிவாதமாய்.
**வேண்மாள்** – வேளிர்குலப் பெண்.
**வேண்மான்** – வேளிர்குல மகன்.
**வேண** – வேண்டிய; மிகுதியான; போதுமான; இன்றியமையாத.
**வேணகை** – சுற்றுமதில்.
**வேணது** – இன்றியமையாதது; தேவையானது; போதுமானது; மிகுதியானது; மனத்துத் தோன்றியது.
**வேணவா** – வேட்கைப்பெருக்கம்.
**வேணாடு** – செந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் ஒன்று.
**வேணி** – சடை; பின்னிய மயிர்; மரவேர்; வசம்பு; ஆறு; நீர்ப்பெருக்கு; தெரு; சேரி; வானம்; வெளி.
**வேணிகை** – பின்னிய மயிர்.
**வேணினர்** – விரும்புபவர்.
**வேணீர்** – நீர்வேட்கை நீங்க உண்ணும் நீர்.
**வேணு** – மூங்கில்; இசைக்குழல்; புல்லாங்குழல்; வில்; தனுசு ராசி; வாள்.
**வேணுகம்** – யானைத்தோட்டி.
**வேணுகானம்** – வேய்ங்குழல் இசை.
**வேணுகோபாலன்** – புல்லாங்குழல் ஊதும் கண்ணபிரான்.
**வேணுசம்** – மூங்கிலரிசி.
**வேணுநாதன்** – குழல் இசைப்போன்.
**வேணுபலம்** – காண்க: **வேணுசம்.**
**வேணுபுரம்** – சீகாழி.
**வேத்தவை** – அரசவை.
**வேத்தன்** – அறிந்தவன்; அறியத்தக்கவன்.
**வேத்தியம்** – அறியத்தக்கது; அடையாளம்.
**வேத்தியல்** – அரசர்க்காடுங் கூத்து; வேந்தனது தன்மை; காண்க: **வேத்தியன்மலிபு.**
**வேத்தியன்** – அறியத்தக்கவன்.
**வேத்தியன்மண்டபம்** – அரசனது அரசவை மண்டபம்.
**வேத்தியன்மலிபு** – வீரமிக்க மன்னனது மேம்பாட்டினை வீரர் சொல்லுதலைக் கூறும் புறத்துறை.
**வேத்திரகரன்** – பிரம்பைக் கையில்கொண்ட நந்திதேவன்.
**வேத்திரத்தாள்** – பிரப்பங்கிழங்கு.
**வேத்திரதரன்** – வாயில்காப்போன்; கட்டியக்காரன்; நந்திதேவன்.
**வேத்திரப்படை** – பிரம்பாகிய ஆயுதம்.
**வேத்திரம்** – பிரம்பு; அம்பு; இலந்தைமரம்.
**வேத்திராசனம்** – பிரப்பம்பாய்.
**வேதகப்பொன்** – புடமிட்ட பொன்.
**வேதகம்** – வேறுபடுத்துகை; வேறுபாடு; பகைமை; இரண்டகம்; புடமிடுகை; புடமிட்ட பொன்; இரும்பு முதலிய உலோகங்களைப் பொன்னாக்கும் பண்டம்; சிறுதுகில்; கருப்பூரம்; தானியம்; வெளிப்படுத்துகை.
**வேதகன்** – ஒன்றின் தன்மையை வேறுபடுத்துவோன்; அறிவிப்பவன்.
**வேதகீதன்** – வேதத்தினாற் புகழ்ந்து பாடப்படுவோனாகிய கடவுள்.
**வேதங்கம்** – ஓர் ஆடைவகை.
**வேதசம்** – பிரம்புவகை; நாணற்புல்; பெருவிரலடி.
**வேதசாரம்** – வேதத்தின் சத்து; நாணற்புல்; உபநிடதம்.
**வேதஞ்ஞன்** – மறையை அறிந்தவன்.
**வேதண்டம்** – மலை; கைலாயம்; பொதியமலை; யானை.
**வேதத்துவம்** – வேதத்தின் மெய்ப்பொருள்.
**வேதநாதன், வேதநாயகன்** – வேதங்களுக்குத் தலைவனான கடவுள்.
**வேதநாயகி** – பார்வதி; திருமகள்.
**வேதநீயம்** – இன்பதுன்பங்களை நுகர்விக்கும் வினைப்பயன்.
**வேதநெறி** – காண்க: **வேதமார்க்கம்.**
**வேதப்பிரான்** – காண்க: **வேதநாயகன்.**
**வேதபாரகன்** – வேதத்தை நன்கு கற்றவனான பார்ப்பனன்; யூதவேதத்தை விளக்குபவன்.
**வேதபாராயணம்** – வேதங்களை ஓதல்.
**வேதம்** – இந்து சமயிகளுக்குரிய சுருதி; சமய முதனூல்; சமணாகமம்; விவிலியநூல்; சாத்திரம்; மறை அறிவு; ஆழம்; விவரிக்கை; செடிவகை.
**வேதமார்க்கம்** – வேதத்தில் சொல்லப்பட்ட மதம்.
**வேதமுதல்வன்** – கடவுள்; பிரமன்.
**வேதமுதல்வி** – கலைமகள்; மலைமகள்; அலைமகள்.
**வேதரஞ்சகன்** – நான்முகன்.
**வேதவனம்** – காண்க: **வேதாரணியம்.**
**வேதவாணன்** – பார்ப்பனன்.
**வேதவித்தகன், வேதவித்து** – வேதங்களை நன்கு அறிந்தவன்; கடவுள்.
**வேதவிருத்தி** – வேதமோதுதற்காக விடப்படும் இறையிலிநிலம்.
**வேதவேத்தன், வேதவேத்தியன்** – வேதத்தினாலே அறியக்கூடிய கடவுள்.
**வேதவேதாந்தன்** – கடவுள்.
**வேதன்** – கடவுள்; பிரமன்; வியாழன்; கடுக்காய்.

**வேதனம்** – அறிவு; வேதம்; உணர்ச்சி; வேதனை; பொன்; துளைத்தல்; கூலி; கூலியாகக் கொடுக்கக்கூடிய சம்பளம்.

**வேதனை** – வருத்தம்; நோய்; உணர்ச்சி; நுகர்ச்சி; காண்க: வேதநீயம்.

**வேதா** – கடவுள்; பிரமன்; சூரியன்.

**வேதாகமம்** – வேதமும் ஆகமமும்; விவிலியநூல்.

**வேதாங்கம்** – சிட்சை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தசு, சோதிடம் என அறுவகைப் பட்ட வேதப்பொருளை உணர்தற்குரிய கருவி.

**வேதாத்தியயனம்** – வேதம் ஓதுதல்.

**வேதாதி** – வேதத் தொடக்கத்திலுள்ள பிரணவம்.

**வேதாதிவண்ணன்** – ஓங்கார வடிவினனாகிய கடவுள்.

**வேதாந்தம்** – உபநிடதம்; வேதாந்த மீமாஞ்சை மதம்; வேதமுடிவு; காண்க: அத்துவைதம்.

**வேதாந்தன்** – கடவுள்; அருகன்.

**வேதாந்தி** – வேதாந்தக்கொள்கையினன்; உலகப் பற்றற்றவர்; அத்துவைதி; நஞ்சீயர்.

**வேதார்த்தன்** – வேதத்திற்குப் பொருளாகவுள்ள கடவுள்.

**வேதாரணியம்** – திருமறைக்காடு.

**வேதாளம்** – பேய்வகை; பிசாசு.

**வேதாளி** – காளி.

**வேதாளிக(ய)ர்** – அரசரைப் புகழ்ந்து பாடுவோர்.

**வேதி** – அறிந்தவன்; பிரமன்; பண்டிதன்; மணம் முதலிய சடங்கு நிகழ்த்தும் மேடை; திண்ணை; மதில்; காலுள்ள பீடம்; ஓமகுண்டம்; கேட்டைநாள்: தாழ்ந்தவற்றை உயர்பொருளாக மாற்றுகை; ஆயுதம்.

**வேதிகை** – திண்ணை; மணமேடை; காலுள்ள பீடம்; பலிபீடம்; பூசைமேடை; பலகை; தெரு; வேறுபடுத்துகை; கேடகம்; அம்பு.

**வேதித்தல்** – வேறுபடுத்துதல்; தாழ்ந்த உலோகங்களை உயர்ந்த உலோகங்களாக மாற்றுதல்; பகையுண்டாக்குதல்; நலிதல்; தீற்றுதல்.

**வேதித்தார்** – பகைவர்.

**வேதிதம்** – துளைத்தல்; துளையுடைப்பொருள்.

**வேதியன்** – பார்ப்பான்; பிரமன்; வேதத்தினால் அறியக்கூடிய கடவுள்; சீனக்காரம்.

**வேதினம்** – ஈர்வாள், கருக்கரிவாள்.

**வேது** – வெம்மை; சூடான ஒற்றடம்; கார மருந்து; வேறுபாடு; வேதனை.

**வேதுகொள்ளுதல், வேதுசெய்தல், வேதுபிடித்தல்** – ஆவி, புகை முதலிய வற்றால் உடலை வெம்மைசெய்தல்; ஒற் றடங்கொடுத்தல்; நீராவியால் உடலை வேர்க்கச்செய்தல்.

**வேதை** – துன்பம்; இரேகை; இரசவாதம்; துளைத்தல்; கலியாணப்பொருத்தம் பத்தனுள் ஒன்று.

**வேதைசிந்தூரம்** – உலோகங்களைப் பொன்னாக் கும் மருந்து.

**வேந்தவை** – காண்க: வேத்தவை.

**வேந்தன்** – எல்லா ஆற்றலும் பெற்ற அரசன்; இந்திரன்; சந்திரன்; சூரியன்; வியாழன்.

**வேந்து** – அரசபதவி; ஆட்சி; மன்னன்; இந்திரன்.

**வேந்துரு** – ஏழாந் தலைமுறையில் தந்தைவழி முன்னோன்.

**வேப்பநெய்** – காண்க: வேப்பெண்ணெய்.

**வேப்பலகு** – வேப்பிலையின் ஈர்க்கு.

**வேப்பெண்ணெய்** – வேப்பங் கொட்டையினின்று எடுக்கும் நெய்.

**வேபம்** – அசைவு, புடைபெயர்ச்சி.

**வேபனம்** – நடுக்கம்; அச்சம்.

**வேபாக்கு** – வேகுதல்.

**வேபித்தல்** – நடுங்குதல்.

**வேம்பன்** – வேப்பம்பூ மாலையை உடைய பாண்டியன்.

**வேம்பனம்** – கள்.

**வேம்பாதல்** – கசப்பாதல்; வெறுப்புக்குரிய தாதல்.

**வேம்பின்தாரோன்** – காண்க: வேம்பன்.

**வேம்பு** – வேப்பமரம்; கசப்பு; வெறுப்பு.

**வேமம், வேமா** – நெசவுத்தறி.

**வேமானியர்** – விமானத்திற் செல்வோரான தேவர்.

**வேய்** – மூங்கில்; மூங்கிற்கோல்; உட்டுளைப் பொருள்; புனர்பூசநாள்; வேய்கை; மாடம்; வினை; குறளைச்சொல்; யாழ்; கவனஞ் செய்கை; ஒற்றன்; ஒற்றினைத் தெரிந்து கொண்ட கூறுபாட்டினைக் கூறும் புறத்துறை.

**வேய்க்கண்** – மூங்கிற்கணு.

**வேய்ங்குழல்** – புல்லாங்குழல்.

**வேய்த்தல்** – ஏய்த்தல்; ஒற்றரால் செய்தி அறிதல்.

**வேய்தல்** – சூடுதல்; மூடுதல்; மலர்தல்; சூழ்தல்; பதித்தல்; பொருந்துதல்; கூரையால் மூடப் பட்ட வீடு; ஒற்று; துளைபோடுதல்; துளை.

**வேய்ந்துணி** – ஊதுகுழல்.

**வேய்வனம்** – திருநெல்வேலி.

**வேய்வு** – மூடுதல்; ஏய்ப்பு.

**வேய்வை** – யாழ்நரம்புக் குற்றவகை.

**வேயர்** – ஒற்றர்; சிறுமூங்கில்; பார்ப்பனக் குடிவகை.

**வேயல்** – சிறுமூங்கில்.

**வேயாமாடம்** – நிலாமுற்றம்.

**வேயுள்** – மூடுகை; மலர்கை; வேய்ந்த மாடம்; மேல்மாடி; மாடம்.

**வேர்** – மரஞ்செடி கொடிகளை மண்ணின்மேல் நிலைநிற்கச் செய்வதும் அவை உணவேற்க உதவுவதுமான அடிப்பகுதி; மரவேர்; மூங்கில்; திப்பிலிவேர்; வேர்போன்றது; அடிப்படை; காரணம்; வியர்வை; சினம்.

**வேர்க்கடலை** – நிலக்கடலை.

**வேர்க்குரு** – வேர்வையால் உண்டாகும் சிறு பரு.

**வேர்க்கொம்பு** – இஞ்சி; சுக்கு.

**வேர்கல்லுதல்** – அடியோடு அழித்தல்.

**வேர்த்தல்** – வியர்த்தல்; சினத்தல்; அஞ்சுதல்.

**வேர்த்துக்கொட்டுதல்** – அதிகமாக வேர்வைநீர் வடிதல்.

**வேர்ப்படலம்** – கண்ணோயுள் ஒன்று.

**வேர்ப்பலா** – வேரில் காய்க்கும் பலாமரம்.

**வேர்ப்பு** – வியர்த்தல்; சினம்.

**வேர்ப்பூச்சி** – வேரிலிருந்தபடி அதனைத் தின்று செடியைக் கெடுக்கும் பூச்சிவகை.

**வேர்பொடித்தல்** – வேர்வைநீர் அரும்புதல்.

**வேர்வாசம்** – இலாமிச்சை.

**வேர்வு** – காண்க: **வேர்ப்பு**.

**வேர்வை** – வியர்வை.

**வேரகம்** – கருப்பூரம்.

**வேரம்** – வெகுளி; மஞ்சள்; காண்க: **அடப்பங்கொடி**; சேம்பு; செய்குன்று; கோபுரம்; மேகக்கூட்டம்.

**வேரல்** – சிறுமூங்கில்; மரவகை; மூங்கிலரிசி; வேர்க்கை.

**வேரறுத்தல்** – அறக்கெடுத்தல்.

**வேரி** – தேன்; கள்; மணம்; காண்க: **இலாமிச்சு(சை)**; ஓமாலிகை முப்பத்திரண்டனுள் ஒன்று.

**வேரித்தண்டு** – தேன்வைக்குங் குழாய்.

**வேரூன்றுதல்** – வேர்பதிதல்; உறுதியாய்த் தொடங்கப்பெறுதல்

**வேரோடுதல்** – காண்க: **வேரூன்றுதல்**.

**வேல்** – நுனிக்கூர்மையுடைய ஆயுதவகை; திரிசூலம்; ஆயுதப்பொது; ஆயுதவகை; முருகன்வேல்; வெல்லுகை; பகை; மரவகை; வெள்வேல்; உடை; மூங்கில்.

**வேலசம்** – மிளகு.

**வேலம்** – தோட்டம்.

**வேலம்பாசி** – பாசிவகை.

**வேலன்** – முருகன்; முருகபூசை செய்பவன்; வேல்காரன்.

**வேலனாடல்** – வேலன் ஆடும் கூத்து.

**வேலாயுதன்** – முருகன்.

**வேலாவலயம்** – கடல்; பூமி.

**வேலாழி** – கடல்.

**வேலி** – விலங்குகள் பயிரை அழிக்காதபடி முள் முதலியவற்றால் அமைக்கும் பாதுகாப்பு; மதில்; காவல்; நிலம்; வயல்; ஒரு நிலஅளவை; பசுக்கொட்டில்; ஊர்; காண்க: **முள்ளிலவு**; ஓசை; காற்று; கொடிவகை.

**வேலிப்பருத்தி** – உத்தாமணிக்கொடி.

**வேலிபோடுதல்** – கழி, கல் முதலியவற்றால் இடத்தைச் சூழத்தடுத்து வரம்பிடுதல்.

**வேலியழித்தல்** – காவலடைப்பை அழித்தல்; வரம்புகடத்தல்.

**வேலிறை** – முருகக்கடவுள்.

**வேலேறு** – வேல்தைத்த புண்.

**வேலை** – தொழில்; செயல்; வேலைப்பாடு; காண்க: **வேலைத்திறன்**; உத்தியோகம்; காலம்; கடற்கரை; கடல்; அலை; கானல்; கரும்பு; வெண்காரம்.

**வேலைக்காரன்** – ஊழியன்; தொழிலாளி; தொழில் வல்லவன்; தந்திரம்பண்ணுபவன்; வைக்கோல் தள்ளும் தடி.

**வேலைக்காரி** – பணிப்பெண்.

**வேலைசெய்தல்** – தொழிலில் ஈடுபடுதல்; குறும்பு பண்ணுதல்; சவரஞ்செய்தல்; தந்திரஞ் செய்தல்.

**வேலைத்தனம்** – காண்க: **வேலைத்திறன்**.

**வேலைத்தனம்பண்ணுதல்** – வேலையில் திறமை காட்டுதல்; குறும்புபண்ணுதல்; விரகு செய்தல்.

**வேலைத்திறன்** – தொழில் செய்வதில் வல்லமை; குறும்புச்செயல்.

**வேலைநாணயம்** – வேலையில் நேர்மை; செய்யப்படும் வேலையின் மேம்பாடு.

**வேலைநாள்** – வேலையுள்ள நாள்.

**வேலைநிறுத்தம்** – வேலையின்றி இருத்தல்; தொழிலாளர் கூடிப்பேசி வேலையை ஒரே காலத்தில் நிறுத்துகை.

**வேலைநேரம்** – வேலை செய்வதற்குரிய காலம்; வேலை செய்கின்ற வேளை.

**வேலைப்பாடு** – காண்க: **வேலைத்திறன்**.

**வேலைமறியல்** – ஒருவனை வேலை செய்யவொட்டாமல் தடுத்தல்; தொழிலாளர் கூடிப் பேசி வேலையை ஒரே காலத்தில் நிறுத்தல்.

**வேலையாள்** – கூலிக்கு வேலைசெய்பவன்.

**வேலையிற்றுயின்றோன்** – பாற்கடலில் பள்ளி கொண்ட திருமால்.

**வேலைவளர்த்தல்** – வேலையை நீட்டித்தல்.

**வேலைவாங்குதல்** – பிறனை ஏவி வேலை செய்யும்படி செய்தல்.

**வேலைவைத்தல்** – வீண் வேலையிடுதல்; ஒருவனைக் காணுதல் முதலியவற்றிற்கு நேரம் குறிப்பிடுதல்.

**வேவம்** – தனிமை; துன்பம்.

**வேவாள், வேவுகாரன்** – ஒற்றன்.

**வேவை** – வெந்தது.

**வேழக்கரும்பு** – காண்க: பேய்க்கரும்பு.

**வேழக்கோது** – சாறு நீங்கிய கரும்புச்சக்கை.

**வேழக்கோல்** – பேய்க்கருப்பந்தட்டை.

**வேழம்** – கரும்பு; வேழக்கரும்பு; கொறுக்கைப் புல்; மூங்கில்; பீர்க்கு; நாணல்; இசை; யானை; மேடராசி; பணிநாள்; விளாம் பழத்துக்கு வருவதொரு நோய்; ஒரு பூச்சி வகை.

**வேழம்பம்** – வஞ்சகம்; ஏளனம்.

**வேழம்பர்** – கழைக்கூத்தர்; நகைவிளைப்பவர்; கேலிசெய்வோர்.

**வேழவெந்தீ** – யானைத்தீ நோய்.

**வேள்** – கலியாணம்; விருப்பம்; மன்மதன்; முருகன்; வேளிர்குலத்தான்; சளுக்க வேந்தன்; சிற்றரசன்; சிறந்த ஆண்மகன்; மண்.

**வேள்புலம்** – சாளுக்கியரது நாடு.

**வேள்வி** – யாகம்; ஓமகுண்டம்; பூசனை; கலியாணம்; ஈகை; புண்ணியம்; காண்க: களவேள்வி; மகநாள்.

**வேள்விக்கபிலை** – யாகத்துக்குரிய பால் முதலிய வற்றை உதவும் பசு.

**வேள்விக்குண்டம்** – ஓமகுண்டம்.

**வேள்விக்குவேந்தன்** – இந்திரன்.

**வேள்விச்சாலை** – யாகசாலை.

**வேள்விநாயகன்** – காண்க: வேள்விக்குவேந்தன்.

**வேள்விநிலை** – அரசன் வேள்விசெய்த பெருமையைப் புகழ்ந்துகூறும் புறத்துறை; தலைவன் சேதாவினை நாட்காலையிற் கொடுக்குங் கொடைச் சிறப்பினைக் கூறும் புறத்துறை.

**வேள்விமுதல்வன்** – யாகத்தலைவன்; காண்க: வேள்விக்குவேந்தன்.

**வேள்வியாசன்** – யாகஞ்செய்விக்கும் புரோகிதன்.

**வேள்வியாளன்** – பார்ப்பான்; கொடையாளன்.

**வேள்வியின்பதி** – திருமால்.

**வேள்வு** – யாகம்; மணவரிசைப்பண்டம்; அரும் பண்டம்.

**வேளம்** – சோழரால் சிறைபிடிக்கப்பட்ட உயர் குல மகளிர் வாழுதற்கமைத்த அரணிடம்; வாழிடம்.

**வேளன்** – காண்க: வேளான்.

**வேளாட்டி** – ஏவற்பெண்.

**வேளாண்மாந்தர்** – வேளாளர்.

**வேளாண்மை** – பயிர்த்தொழில்; உதவிபுரிதல்; கொடை; உண்மை.

**வேளாண்வாகை** – வேளாளன் செய்தற்குரிய கடமைகளை நிறைவேற்றலைக் கூறும் புறத் துறை.

**வேளாண்வேதம்** – நாலடியார்.

**வேளாவளி** – ஒரு பண்; செவ்வழிக்குப் புறமான பண்திறவகை.

**வேளாவேளை** – உரிய காலத்தில்; சிற்சில சமயத்தில்.

**வேளாளன்** – பிறர்க்கு உதவிசெய்பவன்; ஒரு குலத்தான்; வணிகன்.

**வேளான்** – வேளாளரில் ஒரு பகுதியான்; குயவர்குலப் பட்டப்பெயர்.

**வேளிர்** – ஒருசார் அரசகுலத்தார்; தமிழ்நாட்டுப் பழங்குடி மக்களாகிய குறுநில மன்னர்; சளுக்கவேந்தர்.

**வேளை** – காலம்; கருமவினை; நாய்வேளைப் பூடு; தைவேளைப்பூடு.

**வேளைபார்த்தல்** – நன்னாள் பார்த்தல்; சமயம் பார்த்தல்.

**வேற்கோட்டம்** – வேல் நிலைபெற்ற முருகன் கோயில்.

**வேற்றலம்** – காற்று.

**வேற்றவன்** – பகைவன்; அயலான்.

**வேற்றாள்** – அயலார்; பறை.

**வேற்றான்** – காண்க: வேற்றவன்.

**வேற்றுக்குரல்** – மாற்றுக்குரல்; அயலார் குரல்.

**வேற்றுத்தாய்** – நற்றாயல்லாத மாற்றாந்தாய்.

**வேற்றுநர்** – மாறுவடிவங்கொண்டவர்.

**வேற்றுநிலைமயக்கு, வேற்றுநிலைமெய்ம்மயக்கு** – கசதப ஒழிந்த மெய்கள் ஒன்றோடொன்று மயங்கி வருவது.

**வேற்றுப்புலம்** – பகையிடம்; தனக்கு அயலான விடம்.

**வேற்றுமனிதன்** – அயலான்.

**வேற்றுமுகம்** – அயல்முகம்; வெறுப்பைக் காட்டும் மாறுமுகம்.

**வேற்றுமுனை** – பகைப்படை.

**வேற்றுமை** – வேறுபாடு; பகைமை; ஒப்புமை யின்மை; செயப்படுபொருள் முதலாயின வாகப் பெயர்ப்பொருளை வேறுபடுத்துவது; காண்க: வேற்றுமையுருபு; வேற்றுமைப்புணர்ச்சி; வேற்றுமையணி.

**வேற்றுமைகாட்டுதல்** – மாறுபாடு காட்டுதல்.

**வேற்றுமைத்தொகை** – எழுவாயும் விளியும் ஒழிந்த ஆறு வேற்றுமையுருபுகள் தொக்கு நிற்பது.

**வேற்றுமைநயம்** – வேறுபடுத்திப் பார்க்கும் முறை.

**வேற்றுமைப்புணர்ச்சி** – எழுவாயும் விளியும் அல்லாத ஆறு வேற்றுமை உருபு விரிந்தேனும் தொக்கேனும் புணர்வது.

**வேற்றுமைமயக்கம்** – ஒரு வேற்றுமை உருபு பிறிதொரு வேற்றுமைப் பொருளில் வருகை.

**வேற்றுமையணி** – உவமான உவமேயங்களுள் ஒன்றைச் சிறப்பித்துச் சொல்லுதல்.

**வேற்றுமையுருபு** – பெயர்ச்சொல்லின் பொருளை வேறுபடுத்தும் உருபு.

**வேற்றுரு** – மாற்றுருவம்.

**வேற்றுவன்** – அயலான்; பிறன்.

**வேற்றோன்** – காண்க: **வேற்றுவன்.**

**வேறல்** – வெல்லுதல்; வெற்றிகொள்ளல்.

**வேறாதல்** – பிரிதல்; மாறுபடுதல்; மனம் மாறுபடுதல்; முன்னைய தன்மை குலைதல்; சிறப்புடையதாதல்; ஒதுக்காதல்; தனியாதல்.

**வேறிடம்** – தனியிடம்.

**வேறு** – பிறிது; பிரிந்தது; கூறுபாடு; பகைமை; எதிரிடையானது; புதிது; தீங்கு; சிறப்புடையது; தனி; செய்யுள் வேறுபாட்டினைக் குறிப்பதற்கு இடும் தலைப்புச் சொல்.

**வேறுகொள்ளுதல்** – தனியிடம் செல்லல்; சிறப்புடையதாக மதித்தல்; மாறாகக் கொள்ளுதல்.

**வேறுசெய்தல்** – பகை விளைத்தல்; சிறப்புடையதாக மதித்தல்.

**வேறுநினைத்தல்** – மாறுபாடாக நினைத்தல்; உதவி செய்தவனுக்குத் தீயவை செய்ய நினைத்தல்.

**வேறுபடுத்தல்** – பிரித்தல்; மாற்றுதல்; நட்புக் கெடுத்தல்.

**வேறுபடுதல்** – காண்க: **வேறாதல்.**

**வேறுபாடு** – மனவேறுபாடு; பகைமை.

**வேன்** – மிகுதி.

**வேன்மகன்** – முருகபூசை செய்பவன்.

**வேனல்** – வெப்பம்; வேனிற்காலம்; சினம்.

**வேனில்** – கோடைக்காலம்; இளவேனில்; வெப்பம்; கானல்; ஒப்பனை; பொலிவு; அழகு.

**வேனிலாளி(ன்)** – மன்மதன்.

**வேனிற்காலம்** – கோடைக்காலம்.

**வேனிற்பள்ளி** – நிலாமுற்றம்.

**வேனிற்பாசறை** – போர்மேற் சென்ற அரசன் வேனிற்காலத்துத் தங்கும் படைவீடு.

**வேனின்மாலை** – வேனிற்காலத்தைச் சிறப்பித்துப் பாடும் நூல்வகை.

## வை

**வை** – ஓர் உயிர்மெய்யெழுத்து (வ்+ஐ); கூர்மை; வைக்கோல்; புல்; தொழிற்பெயர் விகுதியுள் ஒன்று.

**வைக்க(கோ)ல்** – நெற்பயிரின் உலர்ந்த தாள்.

**வைக்கோற்போர்** – வைக்கோற்குவியல்.

**வைகடிகன்** – மணிகளைச் சாணைபிடிப்பவன்.

**வைகல்** – தங்குதல்; கழிகை; விடியற்காலம்; நாள்; கழிவுநாள்; வேளை.

**வைகல்லியம்** – குறைவு; தகுதியின்மை; சூனியம்.

**வைகலும்** – நாள்தோறும்.

**வைகறை** – விடியற்காலம்; காண்க: **வைகறையாமம்.**

**வைகறைப்பாணி** – விடியற்காலை வாத்தியவொலி.

**வைகறையாமம்** – விடியுமுன்னுள்ள யாமம்.

**வைகாசம்** – வைகாசி மாதம்; விடியற்காலம்; வைணவாகமம் இரண்டனுள் ஒன்று; இல்லறத்தார் கடமை கூறும் நூல்.

**வைகாசி** – தமிழ்மாதங்களுள் இரண்டாம் மாதம்; விசாகநாள்.

**வைகாப்பு** – இடையறாத ஆரவாரம்.

**வைகாலம்** – சாயுங்காலம்.

**வைகானசன்** – வைகானச ஆகமப்படி ஒழுகுபவன்; வனவாசி.

**வைகிருள்** – விடியற்காலத்திருள்.

**வைகுசுடர்** – விடியும்வரை எரியும் விளக்கு.

**வைகுண்டநாதன்** – திருமால்.

**வைகுண்டம்** – காண்க: **வைகுந்தம்;** தும்பை.

**வைகுண்டன்** – காண்க: **வைகுந்தநாதன்.**

**வைகுண்ணியம்** – குணமின்மை; குறை.

**வைகுதல்** – தங்குதல்; போதுகழிதல்; வற்றுதல்; விடிதல்; புணர்தல்.

**வைகுந்தநாதன்** – திருமால்.

**வைகுந்தம்** – திருமாலுக்குரிய உலகம்.

**வைகுபுலர்விடியல்** – அருணோதய காலம்.

**வைகுல்லியம்** – எதிரிடை.

**வைகுறு** – காண்க: **வைகறை; வைகறையாமம்.**

**வைகுறுமீன்** – விடிவெள்ளி.

**வைகுறுவிடியல்** – அருணோதயத்துக்கு முந்தைய காலம்.

**வைகை** – காண்க: **வையை.**

**வைங்கியாரம்** – பகை.

**வைச்சமாநிதி** – சேமித்துவைக்கப்பட்ட பொருட்குவை.

**வைச்சிரவணன்** – குபேரன்; இராவணன்.

**வைச்சுதன்** – சனி; கதிர்மகன்; முடவன்.

**வைசகி** – காண்க: **வைகாசி.**

**வைசத்தியம்** – தூய்மை; உண்மை.

**வைசயந்தம்** – இந்திரன் மாளிகை; இந்திரன் கொடி.

**வைசயந்தி** – திருமால் அணியும் மாலை; மாளிகை முன் கட்டடம்; தழுதாழை; முன்னை; ஒரு நகரம்.

**வைசயந்திகை** – கொடி.

**வைசாகம்** – சாந்திரமான மாதத்துள் இரண்டாவதான வைகாசி; கூத்துநிலையுள் ஒன்று.

**வைசித்திரி** – புதுமை.

**வைசியன்** – வணிகன்; தனவைசியர் அல்லது வணிகர், பூவைசியர் அல்லது உழவர், கோவைசியர் அல்லது இடையர் என்னும் மூன்று வகுப்பினர்.

**வைசூரி** – அம்மைநோய்.

**வைசேடிகம்** – கணாதரால் நிறுவப்பட்ட மதம்.

**வைடம்மியம்** – பகை; மாறுபாடு.

**வைடாலம்** – பூனை; மாய்மாலம்.

**வைடூரியம்** – ஒன்பதுவகை மணியுள் ஒன்று.

**வைணவம்** – ஒரு சமயம்; மாலியம், திருமாலை வழிபடும் சமயம்; பதினெண் புராணத்துள் ஒன்று; மூங்கிலரிசி; புல்லாங்குழல்.

**வைணவர்** – திருமாலை வழிபடுஞ் சமயத்தினர்.

**வைணவி** – அன்னையர் எழுவருள் ஒருத்தி; மூங்கிற்குழல்.

**வைணவிகன்** – வீணை வாசிப்போன்; வேய்ங்குழலூதுவோன்.

**வைணிகன்** – வீணை வாசிப்போன்.

**வைணுகம்** – யானைத்தோட்டி.

**வைத்தல்** – இடுதல்; அளித்தல்; இருக்கச் செய்தல்; பள்ளிக்கு அனுப்புதல்; வேலை முதலியவற்றில் அமர்த்துதல்; சேமித்தல்; பாதுகாத்தல்; தனியாக ஒதுக்குதல்; சிறையிவிடுதல்; உடைத்தாயிருத்தல்; அமைதல்; வைப்பாட்டியாகக் கொள்ளுதல்; தயாரித்தல்; நடத்துதல்; மதித்துப் போற்றுதல்; வரையறுத்தல்; எடுத்துச் சொல்லுதல்; மனத்திற் கொள்ளுதல்; தியானித்தல்; உண்மை என்று கொள்ளுதல்; நிலை மாறாதபடி செய்தல்.

**வைத்தியசாலை** – மருத்துவமனை.

**வைத்தியநாதன்** – சிவபிரான்; ஒரு நூலாசிரியர்.

**வைத்தியம்** – மருத்துவம்.

**வைத்தியன்** – மருத்துவன்; வேதப்பயிற்சி செய்பவன்.

**வைத்து** – ஓர் அசைச்சொல்.

**வைத்துக்கொள்ளுதல்** – உரிமையாகக் கொள்ளுதல்; வைப்பாட்டியாகக் கொள்ளுதல்; மணவிலக்குக்காக உண்மைபோல ஒப்புக்கொள்ளுதல்.

**வைத்தூறு** – வைக்கோற்போர்.

**வைதருப்பநெறி, வைதருப்பம்** – செறிவு, தெளிவு முதலிய பத்துக் குணங்களும் அமையப் பாடுமுறை.

**வைதல்** – திட்டல், சபித்தல்; வஞ்சித்தல்; பழித்துரைத்தல்.

**வைதவியம்** – கைம்மை.

**வைதனிகம்** – அற்றைக்கூலி.

**வைதாளி** – புகழ்ந்து பாடும் பாட்டு.

**வைதாளிகர், வைதாளியாடுவார்** – அரசரைப் புகழ்ந்து பாடுவோர்.

**வைதிகச்சொல்** – வேத வழக்கான சொல்.

**வைதிகசைவம்** – வேதநெறிப்பட்ட சைவமதம்.

**வைதிகம்** – வேதநெறிப்பட்டது; காலத்தோடு ஒத்த நாகரிகமற்றது; சமயவொழுக்கங்களை அக்கறையோடு கடைப்பிடித்தொழுகுதல்.

**வைதிகமார்க்கம்** – வேதநெறிப்பட்ட சமயம்.

**வைதிகன்** – வேதமுணர்ந்த பார்ப்பான்; வேத நெறியில் நடப்பவன்; காலத்தோடு ஒத்த நாகரிகமற்றவன்.

**வைதேகி** – காண்க: வைதேவி; திப்பிலி.

**வைதேயம்** – அறிவின்மை.

**வைதேயன்** – அறிவற்றவன்.

**வைதேவி** – சீதாதேவி.

**வைந்தவம்** – குதிரை; சுத்தமாயை.

**வைந்நுதி** – கூரிய நுனி.

**வைப்பகம்** – வங்கி; நகை முதலானவற்றைக் காப்பாக வைக்குமிடம்.

**வைப்பாட்டி** – கூத்தியாள்.

**வைப்பிடம்** – பண்டம் முதலியன வைக்குமிடம்.

**வைப்பிருக்கை** – பண்டசாலை.

**வைப்பு** – வைக்கை; பாதுகாப்பு நிதி; புதையல்; இடம்; நிலப்பகுதி; ஊர்; உலகம்; செயற்கையானது; செயற்கைச் சரக்கு; வைப்பாட்டி; கலிப்பாவகையின் இறுதியுறுப்பு.

**வைப்புக்கட்டு** – பொய்க்கதை.

**வைப்புச்சரக்கு** – செயற்கை மருந்து.

**வைப்புச்செப்பு** – பண்டங்கள் வைக்குமிடம்; நகை, பாண்டம் முதலிய உடைமைகள்.

**வைப்புமுத்து** – செயற்கை முத்து.

**வைப்புவைத்தல்** – சூனியம் வைத்தல்; வைப்பாட்டியாக ஒருத்தியைக் கொள்ளுதல்.

**வைப்புழி** – பொருள் முதலியன சேமித்து வைக்கும் இடம்.

**வைபவம்** – பெருமை; பெரியோர் வரலாறு.

**வைபோகம்** – மகிழ்ச்சி; அறிவுக்கூர்மை; சிற்றின்பக் களிப்பு; சீர்மை; வயணம்.

**வைபோகி** – விவேகி.

**வைமாத்திரேயன்** – சக்களத்தி மகன்.

**வைமானிகர்** – விமானத்திற் செல்லும் தேவர்.

**வையகம்** – மண்ணுலகம்; விலங்கு இழுக்கும் வண்டி; கூடாரவண்டி; சிவிகை; ஊர்தி; உரோகிணிநாள்.

**வையம்** – பூமி; குதிரை இழுக்கும் வண்டி; தேர்; ஊர்தி; கூடாரவண்டி; சிவிகை; எருது; உரோகிணிநாள்; விளக்கு; யாழ்.

**வையமகள்** – நிலமகள்.

**வையாகரணன்** – இலக்கணம்வல்லவன்.

**வையாபுரி** – பழனிமலை.

**வையாளி** – குதிரை செல்லும் வழி; குதிரையேற்றம்.

**வையாளிவீதி** – குதிரை செலுத்தும் வீதி.

**வையை** – மதுரையில் உள்ள ஆறு.

**வையைத்துறைவன்** – பாண்டியன்.

**வைரக்கடுக்கன்** – வயிரமணியிட்டமைந்த காதணி.

**வைரக்கல்** – வயிரமணி.

**வைரம்** – ஒன்பதுவகை மணியுள் ஒன்று; கடினமானது; மரக்காழ்; செற்றம்; பகை; **வீரத்தின்** தன்மை; வாச்சியப்பொது.

**வைரவனூர்தி** – நாய்.

**வைராக்கியஞ்சொல்லுதல்** – தான் துறவுபூணத் துணிந்துள்ளதை ஆசிரியன்முன் தெரிவித்துக் கொள்ளுதல்.

**வைராக்கியம்** – விடாப்பிடி; வெறுப்பு; உலகப் பற்றின்மை; மதவெறி; பகை.

**வைராகம்** – பற்றின்மை.

**வைராகி(வி)** – மனவுறுதியுள்ளவன்; துறவி.

**வைரி** – பகைவன்; மனவுறுதியுள்ளவன்.

**வைரியம்** – வீரியம்; வெறுப்பு; பகை.

**வைரியர்** – கூத்தர்; பாணர்.

**வைரோசனன்** – விரோசனன் மகனாகிய மாவலி; கதிரவன்; வாலி.

**வைலட்சணம்** – அழகற்றது.

**வைவு** – ஏச்சு; இகழ்வு; சாபம்.

**வைனதேயன்,**
**வைனன்** } – கருடன்.

# வௌ

**வௌவால்** – ஒரு பறவைவகை.

**வௌவானத்தி** – மண்டபத்தின் மேல்முகடு.

**வௌவியம்** – அரைத்த மஞ்சள்.

**வௌவுதல்** – கைப்பற்றுதல்; ஆறலைத்தல்; திருடுதல்; கவர்தல்; பாவம், பேய் முதலியன பற்றிக்கொள்ளுதல்; மேற்கொள்ளுதல்.

# கால அடைவில் அகரமுதலிகள்

| | | |
|---|---|---|
| 1732 | சதுரகராதி | வீரமாமுனிவர் |
| 1919 1924 | ,, அச்சு | ,, |
| 1779 | பெப்ரிசியசு அகராதி | பெப்ரிசியசு |
| 1834 2837 1839 1841 | ராட்லர் தமிழ் அகராதி (4 பாகங்கள்) | ராட்லர் |
| 1842 | மானிப்பாய் அகராதி | யாழ்ப்பாணம், சந்திரசேகர பண்டிதர் & சரவணமுத்துப்பிள்ளை |
| 1843 | நிகண்டு - வேதகிரியார் சூடாமணி | களத்தூர் வேதகிரி முதலியார் |
| 1850 | சொற்பொருள் விளக்கம் | அண்ணாசாமிப் பிள்ளை |
| 1862 | வின்சுலோ-தமிழ் அகராதி | வின்சுலோ |
| 1869 | போப்புத் தமிழ் அகராதி | ஜி. யு. போப்பு |
| 1883 | அகராதிச்சுருக்கம் | விஜயரங்க முதலியார் |
| 1893 | பேரகராதி | காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு |
| 1897 | தரங்கம்பாடி அகராதி | பெப்ரிசியசு அகராதியின் விரிவு |
| 1899 | தமிழ்ப் பேரகராதி (வித்தியா ரத்நாகர அச்சியந்திரசாலை) | நா. கதிரைவேற் பிள்ளை, யாழ்ப்பாணம் |
| 1901 | தமிழ்ப் பேரகராதி (நிரஞ்சன விலாச அச்சியந்திர சாலை) | ,, |
| 1904 | தமிழ்ச் சொல்லகராதி (அகரம் மட்டும்) | கு. கதிரைவேற் பிள்ளை, யாழ்ப்பாணம் |
| 1908 | சிறப்புப் பெயர் அகராதி | ஈக்காடு இரத்தினவேலு முதலியார் |
| 1909 | இருபதாம் நூற்றாண்டுத் தமிழகராதி | பி. ஆர். இராமநாதன் |
| 1910 | அபிதான சிந்தாமணி | ஆ. சிங்காரவேலு முதலியார் |
| 1910 1912 1923 | தமிழ்ச் சொல்லகராதி- மூன்று தொகுதிகள் (மதுரைத் தமிழ்ச்சங்க வெளியீடு) | கு. கதிரைவேற்பிள்ளை |
| 1911 | தமிழ்மொழி அகராதி | காஞ்சி நாகலிங்க முனிவர் |
| 1914 | இலக்கியச் சொல்லகராதி | அ. குமாரசுவாமிப் பிள்ளை, சுன்னாகம் |
| 1921 | மாணவர் தமிழ் அகராதி | எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை |
| 1924 | சொற்பொருள் விளக்கம் என்னும் தமிழகராதி | ச. சுப்பிரமணிய சாஸ்திரி |
| 1925 | தற்காலத் தமிழ்ச்சொல் அகராதி | ச. பவானந்தம் பிள்ளை |
| 1928 | இளைஞர் தமிழ்க் கையகராதி | மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை |
| 1935 | ஜூபிலி தமிழ் அகராதி | எஸ். சங்கரலிங்க முதலியார் |
| 1935 | ஆனந்தவிகடன் அகராதி | ஆனந்தவிகடன் ஆசிரியர் குழு |
| 1935 | நவீன தமிழ் அகராதி | சி. கிருஷ்ணசாமிப் பிள்ளை |

| | | |
|---|---|---|
| 1937 | மதுரைத் தமிழ்ப் பேரகராதி | பண்டிதர் பலர்—இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனார் வெளியீடு |
| 1938 | சொற்பிறப்பு ஒப்பியல் தமிழ் அகராதி | ரெ. எஸ். சுவாமி ஞானப்பிரகாசம் |
| 1939 | தமிழறிஞர் அகராதி | சி. கிருஷ்ணசாமிப் பிள்ளை |
| 1939 | தமிழமிழ்த அகராதி | ,, |
| 1939 | விக்டோரியா தமிழ் அகராதி | எஸ். குப்புஸ்வாமி |
| 1926 } 1939 } | தமிழ் லெக்சிகன் | சென்னைப் பல்கலைக்கழகம் |
| 1940 | கழகத் தமிழ்க் கையகராதி | சேலை சகதேவ முதலியார் & காழி சிவகண்ணுசாமிப்பிள்ளை |
| 1950 | செந்தமிழ் அகராதி | ந. சி. கந்தையாப் பிள்ளை |
| 1951 | கம்பர் தமிழ் அகராதி | வே. இராமச்சந்திர சர்மா |
| 1955 | சுருக்கத் தமிழ் அகராதி | கலைமகள் ஆபீஸ் |
| 1955 | கோனார் தமிழ்க் கையகராதி | ஐயன்பெருமாள் கோனார் |
| 1957 | தமிழ் இலக்கிய அகராதி | பாலூர் து. கண்ணப்ப முதலியார் |
| 1964 | கழகத் தமிழ் அகராதி | கழகப் புலவர் குழு—சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| 1969 | லிப்கோ தமிழ்-தமிழ் அகராதி | லிப்கோ நிறுவனம் |
| 1979 | மணிமேகலைத் தமிழகராதி | மணிமேகலைப் பிரசுரம் |
| 1980 | தமிழ்ச் சுருக்கெழுத்து அகராதி | அனந்தநாராயணன் |
| 1984 | தமிழ்-தமிழ் அகரமுதலி | மு. சண்முகம்பிள்ளை (தொகுப்பாசிரியர்) |
| 1984 | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி | ஞா. தேவநேயப் பாவாணர் |

# பார்வை

## கால அடைவில் நிகண்டு நூல்கள்

| காலம் | | நூல் | ஆசிரியர் |
|---|---|---|---|
| கி.பி. 8ஆம் நூற்றாண்டு | | திவாகரம் | திவாகரர் |
| 9 | ,, | பிங்கலம் (பிங்கலந்தை) | பிங்கலர் |
| 11 | ,, | உரிச்சொல் நிகண்டு | காங்கேயர் |
| 15 | ,, | கயாதரம் | கயாதரர் |
| 15 | ,, | பாரதி தீபம் | திருவேங்கடபாரதி |
| 16 | ,, | சூடாமணி நிகண்டு | மண்டலபுருடர் |
| 1594 | | அகராதி நிகண்டு (சூத்திரவகராதி) | இரேவணசித்தர் |
| 16ஆம் நூற்றாண்டு | | கைலாச நிகண்டு சூளாமணி | கைலாசம் |
| 17 | ,, | ஆசிரிய நிகண்டு | ஆண்டிப்புலவர் |
| 1700 | | பல்பொருட் சூடாமணி (வடமலை நிகண்டு) | ஈசுர பாரதியார் |
| 1732 | | சதுரகராதி | வீரமாமுனிவர் |
| 1769 | | அரும்பொருள் விளக்க நிகண்டு | அருமருந்தைய தேசிகர் |
| 18ஆம் நூற்றாண்டு | | உசிதசூடாமணி | சிதம்பரக் கவிராயர் |
| 18 | ,, | பொதிகை நிகண்டு | சாமிநாத கவிராயர் |
| 19ஆம் நூற்றாண்டு | | நாமதீப நிகண்டு | சிவசுப்பிரமணியக் கவிராயர் |
| 19 | ,, | பொருட்டொகை நிகண்டு | சுப்பிரமணிய பாரதி |
| 1850 | | நாநார்த்த தீபிகை | முத்துசாமிப் பிள்ளை |
| 1844 | | கந்தசுவாமியம்<br>தொகைப் பெயர் விளக்கம்<br>இலக்கத் திறவுகோல்<br>அகராதி மோனைக்<br>ககராதி யெதுகை | சுப்பிரமணிய தீட்சிதர்<br>வேதகிரி முதலியார் |
| 1874 | | சிந்தாமணி நிகண்டு | வைத்தியலிங்கம் பிள்ளை |
| 1878 | | அபிதானத் தனிச்செய்யுள் நிகண்டு | கோபாலசாமி நாயக்கர் |
| 19ஆம் நூற்றாண்டு | | விரிவு நிகண்டு | அருணாசல நாவலர் |
| 20 | ,, | நவமணிக்காரிகை நிகண்டு | அரசஞ் சண்முகனார் |
| 20 | ,, | தமிழுரிச்சொற் பனுவல் | கவிராச பண்டிதர்<br>இராமசுப்பிரமணிய நாவலர் |